**accentua'tion**, *n.* = accent[1].
**accept'**, *v.* ஏற்றுக்கொள் ; ஒப்புக்கொள், உடன்படு ; நம்பு ; மேற்கொள்ள இணங்கு.
**accept'able**, *a.* ஏற்றுக்கொள்ளத்தக்க, விரும்பத்தக்க ; மகிழ்ச்சி விளைவிப்பதான.
**acceptabil'ity**, *n.* ஏற்றுக்கொள்ளத்தக்க தன்மை.
**accept'ance**, *n.* ஏற்றுக்கொள்ளுதல் ; ஏற்பு ; உடன்பாடு ; ஒப்புதல்பட்டி ; நம்பிக்கை.
**accepta'tion**, *n.* ஏற்புடைப் பொருள் ; ஒரு சொல்லுக்குப் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட பொருள்.
**accept'or**, *n.* ஒப்பந்தச் சிட்டை ஏற்றுக்கொள்பவர், மாற்றுண்டியலை ஒப்புக்கொள்பவர்.
**ac'cess**, *n.* நுழைவு, நுழைவுரிமை ; செவ்வி ; வழி ; வாய்ப்பு ; நோயின் திடீர்த்தோற்றம், நோய் திடீரெனத் தாக்குதல்.
**access'ary, ac'cessary**, *n.* தூண்டுபவர் ; உதவியாளர் ; துணைப்பொருள், துணைக்கருவி ; *a.* துணையான, குற்றம் செய்ய உதவுகிற.
**accessibil'ity**, *n.* எளிவரல், காட்சிக்கு எளிமை, எளிதில் அணுகத்தக்க தன்மை.
**access'ible**, *a.* அணுகத்தக்க, செவ்வியுடைய.
**acce'ssion**, *n.* இணக்கம் ; பதவியேற்றல் ; கூடுதல் ; கூட்டு ; (சட்.) மேலிட்டம், உடைமையின் மேல் ஈட்டிய பொருள்.
**access'ories, ac'cessories**, *n. pl.* துணைப் பொருள்கள்.
**access'ory, ac'cessory**, *n.* துணைப்பொருள் ; குற்றம் செய்யத் துணையாயிருப்பவர் ; *a.* துணையான, குற்றம் செய்ய உதவுகிற.
**ac'cidence**, *n.* சொல்லிலக்கணம் ; அடிப்படைக் கருத்துக்கள்.
**ac'cident**, *n.* எதிர்பாராத நிகழ்ச்சி, கருதிச் செய்யப்படாத செயல் ; விபத்து.
**acciden'tal**, *a.* தற்செயலாய் நிகழ்வதான ; அவசியமற்ற, இன்றியமையக் கூடிய.
**accident'alism**, *n.* (மெய்.) இயல்புக்கோட்பாடு, காரணமின்றிச் செயல்கள் நிகழ்கின்றன என்னும் கோட்பாடு ; (மரு.) குறிமுறை, காரணத்தின் அடிப்படையில்லாமல் அறிகுறிகளைத் தழுவிய முறை.
**accinge'**, *v.* இறுக்கிக்கட்டு.
**accip'itral, accip'itrine**, *a.* வல்லூறு போன்ற, பெருந்தீனி கொள்ளுகிற ; கூரிய பார்வையுடைய.
**accite'**, *v.* சான்றுகாட்டு ; சான்றுக்கு அழை.
**acclaim'**, *n.* பாராட்டுப் பேரொலி ; *v.* பாராட்டு ; ஆர்ப்பரி ; இசைவினைத் தெரிவி.
**acclama'tion**, *n.* பாராட்டுப் பேரொலி ; பேரொலியோடு இசைவு தெரிவித்தல்.
**acclam'atory**, *a.* பாராட்டும் தன்மையுள்ள.
**acclimata'tion, acclima'tion, acclimatisa'tion, acclimatiza'tion**, *n.* இணக்கப்பாடு, புதிய தட்பவெப்ப நிலைக்கு ஏற்பப் பழக்கப்படுத்திக் கொள்ளுதல் ; புதிய தட்பவெப்ப நிலைக்கு ஒப்பப் பழகுதல் ; வேற்றிட வயமாதல்.
**accli'matise, acclim'atize**, *v.* இணக்குவி, புதிய தட்பவெப்ப நிலைக்குப் பழக்கு.
**accliv'ity**, *n.* சாய்வான ஏற்றம், மேல் நோக்கிய சரிவு.
**accolade'**, *n.* வீரத்திருத்தகை (knight) என்ற பட்டம் அளிக்கும்போது அணைத்தல் முத்துதல் அல்லது தோளில் வாட்புறத்தால் தட்டுதல் ; (இசை.) இடையிணைப்புக் கோடு.
**accomm'odate**, *v.* இசைவுபடுத்திக்கொள் ; இணக்குவி ; இடங்கண்டு கொடு ; கடன் கொடுத்துதவு ; இணங்கு ; உதவி செய் ; இணங்கிப் போ.
**accomm'odating**, *a.* உதவும் மனப்பான்மை உடைய.
**accommoda'tion**, *n.* இசைவுபடுத்துதல் ; இட உதவி ; இடவசதி ; குடியிருப்பு, இடம் ; கடனுதவி ; (தொ.) accommodation bill, கடனுதவி உண்டியல் ; accommodation unit, குடியிருப்பிடக் கூறுபாடு.
**accomm'odative**, *a.* உதவும் போக்குடைய ; ஒத்துப்போகும் இயல்புடைய.
**accom'panier**, *n.* துணைக்கருவி.
**accom'paniment**, *n.* உடன்போதல் ; பின்தொடரல் ; (இசை.) துணைக்கருவி.
**accom'panist**, *n.* பக்கவாத்தியக்காரர்.
**accom'pany**, *v.* உடனேகு ; பின்தொடர் ; சேர், இணை ; (இசை.) இணையாகு.
**accom'plice**, *n.* உள்ளாள், உடந்தையாய் இருப்பவர்.
**accom'plish**, *v.* முடித்துவிடு, நிறைவேற்று ; பலதிறப் பண்புகளால் நிறைவாக்கு.
**accom'plished**, *a.* பல்வகைப்பண்புகள் நிறைந்த.
**accom'plishment**, *n.* முடித்தல் ; நிறைவேற்றல் ; நிறைவேற்றிய செயல் ; சிறப்புத் திறமை ; சமூக வாழ்வில் ஒருவர்க்கு நிறைவுதரும் சீர் ; வித்தகம்.
**accord'**, *n.* இசைவு, ஒப்பந்தம் ; பொருத்தம் ; *v.* பொருந்து ; பொருத்துவி ; (தொ.) according to, பின்பற்றி, பொருந்துமாறு ; முன்னிட்டு, எடுத்துச் சொல்கிறபடி ; of one's own accord, இயல்பாக, தானாக ; with one accord, ஒருமனப்பட்டு.
**accord'ance**, *n.* பொருத்தம் ; ஒத்த உயரம் ; (தொ.) in accordance with, பொருந்துமாறு.
**accord'ancy**, *n.* = accordance.
**accord'ant**, *a.* பொருந்துகிற.
**accord'ing**, *adv.* இசைய, ஏற்ப, ஒப்ப ; (தொ.) according as, ஒத்திசைய.
**accord'ingly**, *adv.* சொல்லப்பட்டதற்கு இயைய ; கூறியாங்கு ; ஆதலால்.
**accord'ion**, *n.* இசைக்கருவி வகை.
**accost'**, *n.* திறப்புச்சொல் ; கைகூப்புரை ; வணக்க மொழி ; அழைப்பு ; *v.* அணுகி அழை ; முதலில் பேசு ; கைதட்டி அழை, கைகாட்டிக் கூப்பிடு.
*accouchement*, (பிர.) *n.* பிள்ளைப்பேறு, பிரசவம்.
*accoucheur*, (பிர.) *n.* பேறுகால மருத்துவன்.
*accoucheuse*, (பிர.) *n.* பேறுகால மருத்துவச்சி.
**account'**, *n.* எண்ணுதல் ; கணிப்பு ; கணக்கு ; மதிப்பு ; விவரம் ; விவரமான அறிக்கை ; *v.* எண்ணு ; கணக்கிடு ; மதி ; (தொ.) account for, கணக்குக் கொடு ; காரணங்கூறு, பதில் சொல் ; on account of, பொருட்டு, காரணமாக ; on no account, எக்காரணத்தாலும் இல்லாது ; bring to account, call to account, விளக்கந்தரப் பணி, பொறுப்புக் காட்டச்சொல் ; குற்றங்காட்டு ; go to one's long account, கடைநாள் தீர்ப்புக்கு ஏகு ; இற, மாள்வுறு ; hold to account, பொறுப்புடையவராக்கு ; take into account, கவனத்திற்கு எடுத்துக்கொள், கருத்துக்கு எடுத்துக்கொள் ; take no account of, புறக்கணி ; turn to good account, பயனுடைய தாக்கிக்கொள்.
**accoun'table**, *a.* பதில் சொல்லும் பொறுப்புடைய.
**account'ably**, *adv.* காரண காரிய முறைப்படி.
**accoun'tancy**, *n.* கணக்கர் வேலை ; கணக்கர் பதவி ; கணக்கர் துறை.
**accoun'tant**, *n.* கணக்கர், கணக்கு வைப்பவர் ; கணக்கில் தேர்ச்சியுடையவர்.
**account'ing**, *n.* கணக்குவைப்பு முறை.
**accou'tre**, *v.* போர்க்கோலப்படுத்து.
**accou'trement**, *n.* போரணி, போர்க்கோலம்.
**accred'it**, *v.* மதிப்பேற்று ; சான்றிதழோடு அனுப்பு ; சான்றளி.
**accred'ited**, *a.* முறைப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட, பொது ஒப்புதல் பெற்ற ; ஏற்கப்பட்ட.
**accresc'ence**, *n.* வளர்ச்சி, திரட்சி, பெருக்கம்.
**accresc'ent**, *a.* மேன்மேலும் வளர்ந்துகொண்டிருக்கிற.

accrete', *a.* (தாவ.) சேர்ந்து ஒன்ருய் வளர்ந்த; *v.* சென்றுசேர் ; திரள், திரண்டு உருவாகு ; ஒன்ருக்கு.

accre'tion, *n.* பெருக்கம் ; அடர்வளர்ச்சி, திரள்படுவளர்ச்சி ; புறவொட்டு ; (சட்.) சொத்தின் இயல்பு வளர்ச்சி ; விருப்ப ஆவணப் பங்கின் கூடுதற் பொருள்.

accre'tive, *a.* புறவொட்டான ; கூடுதலாகும் இயல்புடைய.

accru'al, *n.* இயல்பாகச் சேர்தல் ; தொகை ஏற்றம்.

accrue', *v.* தொகு ; சிறுகச்சிறுகச் சேர் ; உரிமையாகு.

accum'ulate, *a.* திரண்ட ; குவிக்கப்பட்ட ; *v.* திரள் ; குவி ; சேர் ; ஒருங்குகூடு ; திரட்டு, தொகு ; அடுக்கடுக்கான பட்டங்களை ஒரேகாலத்திற் பெறு.

accumula'tion, *n.* திரட்டுதல்; குவித்தல்; திரளுதல்; குவிதல்; குவியல் ; திரட்சி ; தொகுதி ; குவிந்துகிடத்தல்.

accum'ulative, *a.* குவிகிற ; குவிக்கிற ; சிறுகச்சிறுகச் சேருகிற, திரண்டுருவான.

accum'ulator, *n.* குவிப்பவர், திரட்டுபவர் ; பணம் பெருக்குபவர் ; அடுக்கடுக்கான பட்டங்களை ஒருசேர எடுப்பவர் ; மின் சேமகலம், மின்னாற்றலைத் தொகுத்து வைத்தற்குரிய கருவி.

acc'uracy, *n.* திட்பநுட்பம் ; வழுவாமை, திருத்தமாயிருத்தல்.

acc'urate, *a.* திட்பநுட்பமான ; குறிதவருத ; உண்மைக் கொத்த ; அளவுக்கியைந்த ; வழுவாத, திருத்தமான, செம்மையான.

accurse', *v.* சாபமிடு, தெறுமொழி கூறு.

accurs'ed, accurst', *a.* சபிக்கப்பட்ட ; தெறுமொழி பெற்ற ; வெறுப்புக்குரிய.

accus'al, accusa'tion, *n.* குற்றச்சாட்டு ; குற்றப்பத்திரம் படித்தல்.

accus'ative, *n.* இரண்டாம் வேற்றுமை ; இரண்டாம் வேற்றுமைச்சொல் ; *a.* இரண்டாம் வேற்றுமைக்குரிய ; குற்றம் சாட்டுகிற.

accusator'ial, *a.* குற்றம் சாட்டும் முறையை ஒட்டிய

accus'atory, *a.* குற்றச்சாட்டடங்கிய.

accuse', *v.* குற்றம்சாட்டு ; பழிகூறு ; குற்றம் சுமத்து.

accused', *n.* குற்றம் சாட்டப்பட்டவர்; *a.* குற்றம் சாட்டப்பட்ட.

accus'tom, *v.* பழக்கமாக்கு ; பயிற்று ; (தொ.) accustom oneself to, பழகிக்கொள்.

accus'tomary, *a.* பழக்கமான இயல்புடைய.

ace, *n.* (கவருடல் முதலியவற்றில்) பகடைப்புள்ளி ஒன்று ; கெலிப்புச் சிற்றெண் ; சிறு துகள் ; மயிரிழை அளவு ; அருந்திறல் பெற்றவர் ; பல எதிரிவிமானங்களைச் சுட்டு வீழ்த்தியவர் ; சீட்டுக்கட்டில் உயர்வகை ; பிரிட்டனின் தானியங்கிக் கணக்கிட்டு இயந்திரத்தில் அணுச்சக்தி மூலம் செயலாற்றும் கணக்குப் பொறிக்கருவி.

ace'dia, *n.* கவனமின்மை; உணர்ச்சியின்மை; மடிமை; மலைப்பு.

aceph'alous, *a.* தலையற்ற.

acerb', *a.* கசப்பும் புளிப்புமான; கடும்புளிப்பான ; மிக வெறுப்பான.

a'cerbate, *v.* கைம்புளிப்பாக்கு ; கடும்புளிப்பாக்கு ; எரிச்சல் உண்டாக்கு.

acerb'ity, *n.* கசப்பான புளிப்பு ; கடுஞ்சுவை ; கடுகடுப்பு, சிடுசிடுப்பு.

ac'erose, *a.* (தாவ.) ஊசி போன்ற முனையுடைய.

ace'rous, *a.* கொம்பற்ற ; உணர் இழையற்ற, உணர்கொம்பு அற்ற ; கொடுங்கையற்ற.

acerv'ate, *a.* குவிந்த ; கொத்தாக வளருகிற.

acesc'ence, acesc'ency, *n.* புளித்தல் ; பால் உறைதல்.

aces'cent, *a.* புளித்த ; உறையூட்டப் பெற்ற.

acetab'ulum, *n.* தொடையெலும்பின் பந்துக்கிண்ண மூட்டு பொருந்துகிற குழிவு ; (*pl.*) acetab'ula.

ac'etal, *n.* உயிரகம் ஊட்டப்பட்ட வெறியநீர்.

acet'ic, *a.* புளிங்காடி சார்ந்த; (தொ.) acetic acid, புளிங்காடி.

acet'ify, *v.* புளிங்காடியாக மாற்று ; புளிங்காடியாக மாறு ; புளிப்பாக்கு.

a'cetone, *n.* உயிரியக்கச் சேர்மங்களுடன் கலந்து கரைசலாகும் இயல்புடைய நிறமற்ற படிக நீர்மம்.

acetose', a'cetous, *a.* புளிங்காடி போன்ற ; புளிப்பான.

acet'ylene, *n.* ஒள்வளி, சுண்ணக்கரியகையும் நீரும் சேர்தலால் உண்டாகும் ஒளியுடை வளி.

*acharnement*, (பிர.) *n.* ஆவேசம், எழுச்சியார்வம்.

ache, *n.* நோவு, வலி ; *v.* நோ; தொடர்ந்து நோவுறு.

achieve', *v.* செய்துமுடி ; எய்தப்பெறு ; முயன்று அடை.

achieve'ment, *n.* செயல்வெற்றி காணல், செய்து முடித்தல், சாதனை ; வெற்றிக் கேடயம்.

Achille'an, *a.* அக்கிலிஸ் (Achilles) போன்ற ; அக்கிலிஸைச் சார்ந்த.

Achill'es, *n.* கிரேக்கப் பெருங்காப்பிய வீரன் ; (தொ.) Achilles tendon, குதிகால் தசைநார்.

achil'ous, *a.* (தாவ.) இதழ் இல்லாத.

achlamyd'eous, *a.* (தாவ.) அலர் இதழ் அற்ற, சுற்றுறை இல்லாத.

achromat'ic, *a.* வண்ணம் இல்லாத, நிறம் காட்டாத.

achro'matin, *n.* வண்ணம் ஏற்காத உயிரணுவின் கூறு.

achro'matise, *v.* நிறம் நீங்கச் செய்.

achrom'atism, *n.* நிறங்காட்டாத நிலை

achrom'atize, *v.* = achromatise.

acic'ular, *a.* ஊசி வடிவான.

acic'ulate, *a.* ஊசியால் கீறியது போன்ற.

a'cid, *n.* காடிப்பொருள், திராவகம் ; *a.* காரமான ; காடிப் புளிப்பான ; கடுங்காரமான ; (தொ.) acid test, தங்கத்தைத் திராவகத்தால் சோதித்தல் ; கடுந்தேர்வு.

acidifi'able, *a.* காடி ஆகத்தக்க.

acid'ify, *v.* காடியாக்கு.

acidim'eter, *n.* காடிமானி, காடிப் பொருள்களின் ஆற்றலை அளக்கும் கருவி.

acid'ity, *n.* காடித்தன்மை ; காடித் தன்மையளவு ; புளிப்பு.

acidos'is, *n.* (மரு.) இரத்தத்தில் அளவுக்கு மேல் காடிப் பொருள் இருத்தல்.

acid'ulated, *a.* இளம் புளிப்பாக்கப்பட்ட.

acid'ulous, *a.* இளம்புளிப்பான.

ac'ierage, *n.* இரும்புப் பூச்சு.

ac'ierate, *v.* எஃகாக்கு.

acina'ceous, *a.* சதைப்பற்றுடைய ; வித்துக்கள் நிறைந்த ; பருப்புள்ள ; கொத்தான.

a'cinus, *n.* குலையிலுள்ள சிறு தனிக்காய் அல்லது பழம் ; திராட்சை விதை ; பேரி விதை.

ack'-ack', *a.* பகைவர் விமானத்தை எதிர்த்துத் தாக்குகிற.

acknowl'edge, *v.* உண்மையென்று ஏற்றுக்கொள் ; 'எனது' என்று ஒப்புக்கொள்; நன்றியோடு ஏற்றுக்கொள் ; பெற்றுக்கொண்டதைத் தெரிவி ; பிறர் உடைமையை அல்லது உரிமையை ஒப்புக்கொள் ; சட்ட முறைப்படி ஒப்புக்கொள்.

acknowl'edgeable, *a.* ஒப்புக்கொள்ளத்தக்க.

acknowl'edgement, acknowl'edgment, *n.* ஏற்றுக் கோடல், ஒப்புக்கொள்ளுதல் ; நன்றி ; ரசீது.

aclin'ic, *a.* சரிவில்லாத.

ac'me, *n.* முடி, உச்சி, முகடு ; நிறைவெய்திய நிலை.

ac'ne, *n.* முகப்பரு.

acock', *adv.* சரிய நிலையில் ; தூக்கிய நிலையில் ; எதிர்ப்பாக ; பொருநிலையில்.

ac'olyte, *n.* திருக்கோயில் ஏவலர்.

ac'onite, *n.* நச்சுச் செடிவகை ; நஞ்சு.

ac'orn, *n.* கருவாலிக் கொட்டை.

acos'mism, *n.* நித்திய உலகில் நம்பாமை ; இறைமையின் வேருன நிலைபேறுடைய உலகத்தில் நம்பிக்கை கொள்ளாமை.

acotyled'on, *n.* (தாவ.) விதைப் பருப்பற்ற பூவாச் செடி வகை.

acou'chy, *n.* சீமைப் பெருச்சாளி போன்ற கொறிக்கும் உயிரின வகை.

acous'tic, acous'tical, *a.* ஓசைப் புலனைச் சார்ந்த.

acoust'ics, *n. pl.* ஓசை ஆய்வியல் துறை ; செவிப்புலன் இயைபு.

acquaint', *v.* தெரிவி ; பழக்கப்படுத்து, அறிமுகமாக்கு.

acquain'tance, *n.* அறிமுகம் ; பரிச்சயம் ; அறிமுகமானவர்.

acquest', *n.* அடையப்பட்ட பொருள் ; (சட்.) தாயப்பொருள் அல்லாத ஈட்டம்.

acquiesce', *v.* எதிர்ப்பு உணர்ச்சியின்றி இணங்கு, இசை.

acquiesc'ence, *n.* தடைச்சொல்லின்றி உடன்படுதல்.

acquiesc'ent, *n.* தங்குதடையின்றி இணங்குபவர் ; *a.* எதிர்ப் பேச்சின்றி இசையும் இயல்புடைய.

acquire', *v.* தேடிப் பெறு, முயன்று பெறு ; அடை.

acquired', *a.* முயன்று பெற்ற, இயல்பாய் அமையப் பெறுத.

acquire'ment, *n.* தேட்டம் ; முயன்று பெறப்பட்ட பொருள் ; பண்புப்பேறு ; கைப்பற்றுதல்.

acquisi'tion, *n.* ஈட்டப்பட்ட பொருள் ; கைப்பற்றப்பட்ட பொருள் ; கைப்பற்றுதல்.

acquis'itive, *a.* கைப்பற்றும் ஆர்வமுடைய, பிறர் பொருளை வெஃகுகின்ற.

acquit', *v.* விடுவி ; கடனாற்று ; நிறைவேற்று ; குற்றமின்மை அறிவி.

acquitt'al, *n.* குற்றவிடுதலை ; கடன்விடுதலை.

acquitt'ance, *n.* கடன் தீர்த்தல் ; பெறுகைச்சீட்டு, ரசீது.

acrawl', *adv.* நகர்ந்துகொண்டு, ஊர்ந்துகொண்டு.

a'cre, *n.* நில அளவுக்கூறு, 4,840 சதுர கெஜம் கொண்ட நில அளவு, 1–1/3 காணி நில அளவை ; சாகுபடி நிலப்பகுதி ; அடைப்பு நிலப்பகுதி ; (*pl.*) நிலபுலங்கள்.

a'creage, *n.* நிலப்பரப்பளவு ; நில அளவுக் கூற்றின் எண்ணிக்கை.

a'cred, *a.* நிலம் உடைய.

ac'rid, *a.* கசப்பான ; உறைப்பான, கார்ப்பான; கடுகடுப்பான.

ac'ridin, ac'ridine, *n.* கீல்எண்ணெயிலிருந்து எடுக்கப்படும் சாயச் சரக்கு அல்லது மருந்துச் சரக்கு ; திறலுடை நச்சரி.

acrid'ity, *n.* கடுங்கார்ப்பு, உறைப்பு ; கைஞ்சுவை.

Ac'rilan, *n.* செயற்கைக் கம்பளிவகைக்கு இடப்பட்ட பெயர்.

acrimon'ious, *a.* எரிச்சலான.

ac'rimony, *n.* எரிச்சல் ; காரம், உறைப்பு ; மனக்கசப்பு.

Ac'rita, *n. pl.* (வில.) தெளிவான நரம்பு அமைப்பற்ற விலங்கினம்.

acroamat'ic, acroamat'ical, *a.* வாய்மொழியான, எழுத்தில் வராத ; மறையுரையான.

ac'robat, *n.* கழைக்கூத்தாடி, வேழம்பர் ; அரசியல் செப்பிடு வித்தையாளர்.

acrobat'ic, *a.* கழைக் கூத்தாடிக்குரிய ; குட்டிக்கரணம் இடுகிற.

acrobat'ics, *n. pl.* செப்பிடு வித்தை ; களரி விளையாட்டுக்கள்.

ac'robatism, *n.* சிலம்பக் கலை ; கழைக்கூத்தாடி வித்தை.

ac'rogen, *n.* (தாவ.) நுனியில் வளர்முகமுடைய குறிமறை இனம்.

ac'rolith, *n.* கற்பூண் இட்ட சிலை, தலை கைகால்கள் மட்டும் கல்லாலான கலையுருவம்

acron'ycal, acron'ychal, *a.* மாலை அல்லது முன்னிரவுக் குரிய, கங்குலின் முற்பகுதியில் எழுகிற அல்லது விழுகிற.

ac'ronym, *n.* தலைப்பெழுத்துச்சொல், சொற்களின் முதலெழுத்துக்களைத் தொகுத்து உருவாக்கப்படும் புதுச்சொல்.

acrop'etal, *a.* (தாவ.) முகடு நோக்கிய.

acroph'ony, *n.* முதலொலி எழுத்துமுறை, சொற்களின் முதல் அசை அல்லது எழுத்து அல்லது ஒலி படக்குறியீடுகளால் குறிக்கப்படும் முறை.

acrop'olis, *n.* நகரின் உள்ளரண் ; ஆதென்ஸ் (Athens) நகரத்தின் உள்ளரண்.

across', *adv., prep.* குறுக்காக ; கடந்து.

acros'tic, *n.* கரந்துறை பாட்டு, வரிகளின் முதலெழுத்தை அல்லது கடையெழுத்தைக் கூட்டுதலால் சொல்லுண்டாகும் பாட்டுவகை அல்லது புதிர்வகை.

ac'rotism, *n.* நாடித் துடிப்பின்மை.

act, *n.* செயல் ; வினை ; நாடகக் காட்சி, வேடிக்கைக் காட்சி ; காட்சிப் பகுதி ; அங்கம் ; சட்டம் ; சிறு பிரார்த்தனை ; *v.* செய், செயல்புரி ; நடி ; விளைவு உண்டாக்கு ; பதிலாக வேலைசெய், மாற்ருள் வேலைபார் ; (தொ.) act of God, தெய்வச்செயல், மனித ஆற்றல் கடந்த எதிர்பாரா இயற்கை நிகழ்ச்சி ; act on, செல்வாக்குக் கொள்; செயல்விளைவு உண்டு பண்ணு ; இணங்க நட ; act up to, கொள்கைக்கு ஏற்பச் செயற்படு ; நிறைவேற்று.

ac'ting, *n.* செய்தல் ; நடிப்புக்கலை ; பாசாங்கு செய்தல் ; மாற்ருள் வேலைபார்த்தல் ; *a.* மாற்ருள் வேலைபார்க்கிற ; தற்பொழுதைக்குப் பணியாற்றுகிற.

Actin'ia, *n.* (தாவ.) கடற்பஞ்சு இனம்.

actin'ic, *a.* வேதியியல் விளைவுதரும் ஒளிக்கதிர்களை ஒட்டிய.

ac'tinism, *n.* ஒளிக்கதிரினுல் ஏற்படும் வேதியியல் விளைவு.

actin'ium, *n.* கதிரியக்கமுடைய உலோகப் பொருள்களில் ஒன்று, அணு எண் 89 கொண்ட தனிப்பொருள்.

actinom'eter, *n.* ஒளிக்கதிர் வேதியியல் விளைவுமானி ; ஞாயிற்றுக் கதிரின் நேர்வெப்ப மானி, ஒளி - வெப்ப மானி

actinothe'rapy, *n.* ஒளி மருத்துவமுறை, ஒளிக்கதிர் பாய்ச்சி நோய்தீர்க்கும் முறை.

ac'tion, *n.* செயல் ; செயற்படுமுறை ; வினையாற்றுதல் ; நடவடிக்கை ; போர்வினை ; வழக்கு நடவடிக்கை ; நாடகம் புதினம் முதலியவற்றின் நிகழ்ச்சிப் போக்கு ; (தொ.) action committee, action group, நேரடி நடவடிக்கைக் குழு, கட்சி சாராதவர்களைக் கூட்டுறவுகளிலிருந்து ஒழிப்பதற்கான செயற்குழு ; action station, போரில் ஈடுபடுவதற்கு முன் படைத்துறையினர் மேற்கொள்ளும் வாய்ப்பான இடம்.

ac'tionable, *a.* வழக்குக்கு இடங்கொடுக்கிற, வழக்காடத்தக்க.

ac'tivate, *v.* சுறுசுறுப்பாக்கு ; செயற்படுத்து ; தூண்டு ; கதிரியக்கம் உண்டுபண்ணு.

activa'tion, *n.* செயற்படுத்துதல் ; தூண்டுதல்.

ac'tive, *a.* செயற்படுத்துகிற ; சுறுசுறுப்பான ; செயல் திறமுடைய ; (இலக்.) செய்வினை வடிவான.

ac'tivism, *n.* மனத்திட்பமே வினைத்திட்பம் என்னும் ருடால்ப் யூகன் (Rudolf Eucken) என்ற மெய்ஞ்ஞானியின் கோட்பாடு; விறுவிறுப்பாகச் செயலாற்றும் முறை.

ac'tivist, *n.* வினைத்திட்பக் கோட்பாடு உடையவர் ; விறுவிறுப்பாகச் செயலாற்றுபவர் ; தமது உற்பத்தியளவினை அல்லது தம் குழுவின் உற்பத்தியளவினைப் பெருக்கி வெற்றி காணும் பொதுவுடைமைக் கட்சி உழைப்பாளர்.

activ'ity, *n.* சுறுசுறுப்பாயிருத்தல் ; செயல், நடவடிக்கை.

ac'ton, *n.* கவச உள்ளுறை, போர்க்கவசத்திற்கு உள்ளே அணியப்படும் பஞ்சூட்டிய சட்டை.

ac'tor, *n.* நடிகன்.

ac'tress, *n.* நடிகை.

ac'tual, *a.* உண்மையாக உள்ள, உண்மையான ; நடைமுறையில் உள்ள.

**ac'tualise**, *v.* எய்தப் பெறு ; மெய்யாக்கு ; மெய்யெனத் தோற்றும்படி விரித்துக்கூறு.

**ac'tualist**, *n.* செயலிலே குறியாயிருப்பவர்.

**actual'ities**, *n. pl.* நடப்பு நிலைகள்.

**actual'ity**, *n.* மெய்ம்மை ; நடந்துவிட்ட நிகழ்ச்சி, மெய்ந் நடப்பு.

**ac'tualize**, *v.* = actualise.

**ac'tuary**, *n.* காப்பீட்டுக் கணிப்பாளர் ; பதிவாளர், பத்திரச் சான்றாளர்.

**ac'tuate**, *v.* தூண்டு; ஏவு ; உந்து.

**acu'ity**, *n.* கூர்மை, நுண்மை, கடுப்பு.

**acul'eate, acu'leated**, *a.* கூரிய ; குத்துகிற, கொட்டுகிற ; (வில.) கொடுக்கினை உடைய ; (தாவ.) முள் நிறைந்த.

**acul'eus**, *n.* (வில.) கொடுக்கு ; (தாவ.) முள்.

**acum'en**, *n.* மதிக்கூர்மை, நுழைபுலம்.

**acum'inate**, *a.* குவிந்து முனையிற்சென்று முடிகிற ; *v.* கூராக்கு.

**acupress'ure**, *n.* ஊசியழுத்த முறை, ஊசியால் குருதி நாளத்தை அழுத்தி இரத்தப்போக்கைத் தடுத்தல்.

**acupunc'ture**, *n.* துளையிட்டு மருத்துவமுறை, நோக்காட்டைக் குறைக்க ஊசியால் துளைத்தல்.

**acu'shla**, *n.* ஆருயிர், கண்மணி.

**acute'**, *n.* எடுப்போசை; *a.* கூர்மையான, மதி நுட்பமுடைய ; முனைப்பான; கடுமையான ; எடுப்போசையுடைய ; செங்கோணத்திற் குறைந்த ; (தொ.) acute angle, கூர்ங்கோணம்.

**acy'clic**, *a.* திரும்பத்திரும்ப வராத ; மண்டலிக்காத ; (தாவ.) சுழன்று வராத ; (வேதி.) திறந்த சங்கிலிப்பாங்கான; சுற்றி மீண்டுவராத.

**ad'age**, *n.* முதுமொழி.

*adag'io*, (இத்.) *n.* (இசை.) மென்னடை ; *a.* மெதுவாய்ச் செல்லுகிற ; *adv.* மெதுவாக ; அடங்கிய குரலில்.

**Ad'am**, *n.* விவிலிய மரபுக்குரிய முதல் மனிதன் ; பண்படா மனித இயல்பு ; (தொ.) Adam's apple, குரல்வளை.

**ad'amant**, *n.* வைரம், வைரக்கல் ; வைரம் போன்ற திண் பொருள் : காழ், காழ்ப்பு ; (தொ.) be adamant, பிறர் வேண்டுகோள்களைப் பிடிவாதமாக மறுத்துவிடு, வளையாதிரு.

**adaman'tine**, *a.* வைரத்தைப் போன்ற : வைரத்தாலான ; உடைக்க முடியாத ; துளைத்தலாகாத ; வளையாத.

**Ad'amite**, *n.* ஆதம் (Adam) மரபினர், மனித இனத்தவர் ; உடையின்றித் திரிபவர்.

**adapt'**, *v.* பொருத்தமாக்கு ; மாற்றி அமை, வேறுபடுத்தி அமை ; தழுவி எழுது.

**adaptabil'ity**, *n.* நெகிழ்வுத்திறன், மாற்றி அமைத்துக் கொள்ளக்கூடிய திறன்.

**adapt'able**, *a.* மாற்றியமைத்துக் கொள்ளத்தக்க ; நிலைமைக் குத் தக்கபடி தன்னை வேறுபடுத்திக் கொள்ளக்கூடிய.

**adapta'tion**, *n.* வேறுபடுத்தி அமைத்தல் ; மாற்றி அமைக்கப்பட்டது ; தழுவல்.

**adapt'er**, *n.* மாற்றி அமைத்துக்கொள்பவர் ; மாற்றி அமைக்க உதவுவது ; ஒரு கருவியை வேறொரு விதத்திற் பயன்படுத்து தற்கு உதவும் துணைப்பொறி.

**adapt'ive**, *a.* மாற்றி அமைக்க இடங்கொடுக்கிற, மாற்றி அமைக்கத்தக்க.

**adapt'or**, *n.* = adapter.

**adax'ial**, *a.* ஊடச்சு அடுத்த ; ஊடச்சு நோக்கிய.

*ad captan'dum, ad captan'dum vul'gus*, (ல.) *a.* மக்கட் குழாத்தின் விருப்பார்வத்துக்கு உகந்த ; *adv.* மக்கட் குழாத்தின் விருப்பார்வத்துக்கு இசைவாக அமைவுற்ற முறையில்.

**add**, *v.* சேர், இணை ; தொகை கணக்கிடு ; தொடர்ந்து கூறு ; மிகு.

**add'ax**, *n.* நீண்ட முறுக்கிய கொம்புகளையுடைய ஆப்பிரிக்க மான்.

**adden'dum**, *n.* பின் இணைப்பு; *pl.* adden'da.

**add'er**[1], *n.* கூட்டல் கணிப்பவர் ; கூட்டல் பொறி.

**add'er**[2], *n.* விரியன் பாம்பு.

**add'ict**[1], *n.* கெட்ட பழக்கத்திற்கு அடிமை.

**addict'**[2], *v.* கெட்ட பழக்கத்திற்கு அடிமையாக்கு.

**addic'tion**, *n.* கெட்ட பழக்கத்திற்கு அடிமையாதல்.

**Add'ison's disease'**, *n.* வரவரத் தளர்ச்சியூட்டும் குருதிச் சோர்வுடன் மேனியில் ஊதாநிறம் படர்விக்கும் நோய்வகை.

**addi'tion**, *n.* கூட்டல் ; கூட்டல் கணக்கு ; சேர்ப்பு.

**addi'tional**, *a.* கூடுதலான ; கூட்டப்பட்ட ; துணைச் சேர்க்கையான.

**add'itive**, *a.* கூட்டப்படுகிற ; கூட்டல் கணக்கைச் சார்ந்த.

**ad'dle**, *n.* நீர்க்கசடு, சேறு ; *a.* அழுகிய ; வெறுமையான ; வீணான ; குழம்பிய ; *v.* குழப்பு ; சேருகு.

**add'le-brained**, *a.* மூளை குழம்பிய.

**ad'dled**, *a.* குழப்பமான.

**address'**, *n.* முகவரி ; பேருரை ; அளவளாவும் முறை ; கப்பலை அனுப்பும் செய்கை ; *v.* முகவரி எழுது ; பேருரையாற்று ; கண்டுபேசு ; ஈடுபடுத்திக்கொள் ; குறிவை.

**addressee'**, *n.* முகவரியாளர்.

**address'er, address'or**, *n.* முகவரி எழுதுபவர் ; பேருரையாளர்.

**address'es**, *n. pl.* காதல் நயவுரை.

**adduce'**, *v.* சான்றாகக் கூறு ; குறிப்பிடு ; எடுத்துச்சொல்.

**adduce'able**, *a.* எடுத்துக்காட்டத்தக்க.

**addu'cent**, *a.* (உட.) சுரித்த, மையம்நோக்கி இழுக்கப்படுகிற.

**adduc'ible**, *n.* =adduceable.

**adduct'**, *v.* மையம் நோக்கி இழு.

**adduc'tion**, *n.* மேற்கோள் காட்டுதல் ; சுரித்தல்.

**adduc'tive**, *a.* முன் இழுக்கும் இயல்புடைய.

**adduc'tor**, *n.* முன் இழுக்கும் இயல்புடைய தசைநார்.

**adeem'**, *v.* (சட்.) விருப்பஆவணப் பொருளை விற்றுவது அழித்தாவது ஆவணத்தை வறிதாக்கு.

**adem'ption**, *n.* (சட்.) விருப்பஆவணப் பொருளை விற்றுவது அழித்தாவது ஆவணத்தை வறிதாக்கல்.

**adeni'tis**, *n.* கழலை வீக்கம், சுரப்பி அழற்சி.

**ad'enoid**, *a.* கழலைக்குரிய ; சுரப்பி போன்ற.

**ad'enoids**, *n. pl* முக்கடியான், மூக்கடிச் சதை வளர்ச்சி.

**adeno'ma**, *n.* சுரப்பி போன்ற கட்டி, கழலைக்கட்டி ; *pl.* adeno'mas, adeno'mata.

**adept'**, *n.* கைவல்லார், திறமுடையார் ; *a.* கைதேர்ந்த, முழுத் தேர்ச்சியடைந்த.

**ad'equacy**, *n.* நிறைவு ; ஏற்ற அளவு ; தகுதி.

**ad'equate**, *a.* போதிய ; ஒத்த ; தகுதியான.

**ades'pota**, *n. pl.* ஆக்கியோன் பெயர் உணர்த்தப்படாதவை; ஆசிரியர் எவராலும் தமதென்று உரிமை கோரப்படாத ஏடுகள்.

*ad eun'dem*, (ல.) *adv.* அந்தப் பட்டத்திற்கே பிறிதொரு பல்கலைக் கழகத்தால் சேர்த்துக்கொள்ளப்பட்டு.

*a deux*, (பிர.) *a., adv.* இரண்டிற்கான ; இரண்டினிடையே.

**adhere'**, *v.* ஒட்டிக்கொண்டிரு ; நிலையாயிரு ; பற்றுசை கொள் ; கடைப்பிடி.

**adher'ence**, *n.* ஒட்டிக்கொண்டிருத்தல், பற்று.

**adher'ent**, *n.* பற்றாளர், பின்பற்றுபவர், ஆதரவாளர் ; *a.* பற்றிக்கொண்டிருக்கிற.

**adhe'sion**, *n.* பற்றியிருத்தல்; ஒட்டுப்பண்பு; (இயற்.) பிறிதின் பற்று, அயற்பரப்பொட்டு, ஒரு பொருளின் பரப்பிலுள்ள அணுக்கள் பிறிதொரு பொருளின் பரப்பிலுள்ள அணுக்களுடன் மிகுதியாக ஒட்டிக்கொள்ளும் தன்மை; (மரு.) வீங்கிய உறுப்புக்களின் இயற்கைக்கு மாறுபட்ட இணைப்பு; பிளவுற்ற பரப்பு இணைவு; (தாவ.) இருவேறு உறுப்பிணைவு.

**adhes'ive**, *n.* பசை; *a.* பசையான, ஒட்டிக்கொள்கிற; (தொ.) adhesive tape, (மரு.) கட்டுக்களை நழுவாமல் பாதுகாக்கும் பசைநாடா.

**adhib'it**, *v.* மருந்துபோடு; ஒற்று.

***ad hoc***, (ல.) *a.* தனிப்பட அமைந்த; குறிப்பிட்ட ஒரே பணிக்குரிய.

**adiabat'ic**, *a.* மாரு வெப்ப நிலை சார்ந்த; வெப்பம் புகாத; வெப்பத்தை வெளியே விடாத

**adian'tum**, *n.* சூரல் வகை, நனையாத பெரணி வகை.

**adiaph'ora**, *n. pl.* சிறப்பில் கொள்கைகள்.

**adiaph'orism**, *n.* இறைநூலில் சிறப்பில்லாச் செய்திகளைப் பற்றி உன்னிப்பாய் இல்லாமை, கடவுள்நூல் பற்றிய சில்லறைச் செய்திகளைத் தாங்கிக்கொள்ளும் மனப்பான்மை.

**adiaph'orist**, *n.* இறைநூல் பற்றிய சிறு திறன்களில் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை உடையவர்.

**adieu'**, *n.* பிரிவுரை; *int.* போய்வருக!

***ad infinit'um***, (ல.) *adv.* எல்லையின்றி; என்றென்றைக்கும்.

***ad in'terim***, (ல.) *a.* இடைப்பட்ட காலத்துக்குரிய; *adv.* இடைப்பட்ட காலத்தில்.

**adip'ic**, *a.* கொழுப்பைச் சார்ந்த.

**ad'ipocere**, *n.* அழுகல் இழுது, நீரில் அழுகிய பிணத்தின்மீது உண்டாகும் கொழுப்புப் பொருள்.

**ad'ipose**, *n.* உயிரினக் கொழுப்பு; *a.* கொழுப்புக்குரிய; கொழுவிய, கொழுத்த.

**adipos'ity**, *n.* கொழுப்புடைமை.

**ad'it**, *n.* அணுகுதல்; சுரங்க வாயில், சுரங்க வழி.

**adja'cency**, *n.* அண்மையில் இருத்தல், பக்கத்தில் அமைதல்.

**adja'cent**, *a.* அருகில் உள்ள, பக்கத்தில் உள்ள; (தொ.) adjacent angle, (வடி.) புடைக்கோணம், பக்கம் இணைந்த கோணம்.

**adj'ective**, *n.* (இலக்.) பெயரடை, பெயரைத் தழுவுகின்ற சொல்; *a.* அடுத்துள்ள, சார்ந்த, துணையான, சாயப் பற்றொட்டுத் தேவைப்படுகிற.

**adjectiv'al**, *a.* பெயரடையான.

**adjoin'**, *v.* அடுத்திரு, சார்ந்திரு; இணை, ஒன்றுசேர்.

**adjoin'ing**, *a.* அடுத்துள்ள; சேர்ந்துள்ள.

**adjourn'**, *v.* வேறொரு நாளிற்குத் தள்ளிவை, ஒத்திவை; வேறொரு இடத்திற்கு மாற்று; இடை நிறுத்திவை; (தொ.) adjourn *sine die*, நாள் குறியாமல் ஒத்திவை.

**adjourn'ment**, *n.* தள்ளிவைத்தல், ஒத்திவைப்பு; (தொ.) adjournment motion, ஒத்திவைப்புக் கோரிக்கை, ஒத்திவைப்புத் தீர்மானம்.

**adjudge'**, *v.* முடிவு செய், தீர்ப்புக்கூறு; ஒதுக்கிக் கொடு.

**adjudge'ment, adjudg'ment**, *n.* முடிவு கூறுதல், தீர்ப்பு.

**adjud'icate**, *v.* வழக்குத் தீர்ப்பளி, தீர்ப்பளி.

**adjudica'tion**, *n.* வழக்குத் தீர்ப்பு.

**adjud'icator**, *n.* தீர்ப்பளிப்பவர்.

**adj'unct**, *n.* இணைக்கப்பட்ட பொருள், துணைப்பொருள்; உதவியாளர்; (இலக்.) தழுவுசொல்; தழுவுதொடர்; (அள.) துணைப்பண்பு; சிறப்பில்லா அடை; *a.* உடன் இணைந்த.

**adjunc'tion**, *n.* இணைத்தல்; இணைப்புப் பொருள்.

**adjunc'tive**, *a.* ஒட்டான, இணைப்பான.

**adjura'tion**, *n.* ஆணை வழிப்படுத்துதல், சூளுரைத்து ஏவுதல்.

**adjur'atory**, *a.* சூளுரை ஏவல் தாங்கிய.

**adjure'**, *v.* ஆணை வழிப்படுத்து, சூளிட்டு ஏவு; ஆர்வத்துடன் வேண்டிக்கொள்.

**adjust'**, *v.* ஒழுங்காக்கு, சரிப்படுத்து; பொருத்திக்கொள், தக்கவாறு அமைத்துக்கொள்.

**adjust'able**, *a.* தக்கவாறு அமைத்துக்கொள்ளக்கூடிய.

**adjust'ment**, *n.* சரிப்படுத்திக் கொள்ளுதல்; பொருத்துவாய்; இசைவிப்பு; சீரமைவு.

**adjust'or**, *n.* சீராக்கி, வெளித்தூண்டுதலுக்கேற்ப நடக்கையைச் சீராக்கும் கருவி அல்லது ஆற்றல்.

**adju'tage**, *n.* செயற்கை ஊற்றின் மடைவாய்.

**adj'utancy**, *n.* துணைமை, உதவியாளர் நிலை.

**adj'utant**, *n.* துணைவர், உதவியாளர்; புதா, பெருநாரை; (படை.) துணைத்தளபதி, துணைப்படைத் தலைவர்; *a.* துணைமையான.

**ad'juvancy**, *n.* உதவியாயிருத்தல்.

**adj'uvant**, *n.* உதவிசெய்பவர்; துணையாவது; (மரு.) துணை மருந்துச் சரக்கு; *a.* துணையான, உதவிசெய்கிற.

***ad lib'itum***, (ல.) *adv.* விருப்பம்போல; வேண்டுமட்டும்.

**ad'-mass, ad'mass**, *n.* தொலைபேசி தொலைகாணி ஆகிய வற்றில் விளம்பரக்காரர்கள் நாடும் மக்கள்திரள்.

**admeas'ure**, *v.* அளந்துகொடு; பங்கிட்டுக் கொடு.

**admeas'urement**, *n.* அளந்துகொடுத்தல், அளவிடு; அளவை, பரிமாணம்; ஒப்பீடு.

**admin'icle**, *n.* துணைப்பொருள்; (சட்.) துணைச்சான்று, வலியுறுத்தும் சான்று.

**adminic'ular**, *a.* துணையான, துணைச்சான்றான.

**adminic'ulate**, *v.* வலியுறுத்து; சான்றுகாண்பி.

**admin'ister**, *v.* ஆட்சிசெய்; நிருவகி; நடைமுறை ஆட்சி செலுத்து; வழங்கு; முறைசெய்; செயல்முறை நடாத்து; செயற்படுத்து; மருந்து இடு; உதவு.

**administra'tion**, *n.* நடைமுறை ஆட்சி; ஆட்சிமுறை; வழங்குதல்; நிருவாகம்; செயலாட்சி; ஆட்சியினர்; (தொ.) letters of administration, (சட்.)(விருப்ப ஆவண) நிருவாகப் பத்திரம், பரிபாலன உரிமைப்பத்திரம்.

**admin'istrative**, *a.* ஆட்சிமுறை சார்ந்த.

**admin'istrator**, *n.* செயலாட்சியர்; நிருவாகி; ஆட்சிப் பொறுப்பாளர்.

**admin'istratrix**, *n.* செயலாட்சித் தலைவி.

**ad'mirable**, *a.* அரிய, மெச்சத்தக்க; போற்றும்படியான.

**ad'miral**, *n.* கடற்படைத் தலைவர்.

**ad'miralty**, *n.* கடற்படைத் தலைவர் நிலை; கடற்படை ஆட்சிக்குழு; கடற்படை ஆட்சி நிலையம்; (தொ.) Court of Admiralty, கப்பல்துறை நீதி மன்றம்.

**admira'tion**, *n.* வியந்து பாராட்டுதல், மெச்சுதல், போற்றுதல்; ஆர்வப்பாராட்டு; நலம்பாராட்டி மகிழ்தல்.

**admire'**, *v.* போற்று, வியந்து பாராட்டு; நற்பண்புகளைக் கண்டு மனம் குழை.

**admir'er**, *n.* ஆர்வலர், வியந்து பாராட்டுபவர்; பின்பற்றுபவர்; காதலர்.

**admir'ing**, *a.* வியந்து பாராட்டுகிற.

**admissibil'ity**, *n.* ஏற்றுக்கொள்ளத்தக்க தன்மை.

**admiss'ible**, *a.* ஏற்றுக்கொள்ளத்தக்க.

**admi'ssion**, *n.* நுழைவு; ஏற்றுக்கொள்ளுதல், ஒப்புக்கொள்ளுதல்; ஏற்றுக்கொள்ளப்பட்ட செய்தி.

**admiss'ive**, *a.* ஏற்றுக்கொள்கிற.

**admit'**, *v.* நுழையவிடு; ஏற்றுக்கொள், ஒப்புக்கொள்; இடங்கொடு.

**admitt'able**, *a.* நுழைவுபெறத்தக்க; ஏற்றுக்கொள்ளத்தக்க.

**admitt'ance**, *n.* நுழையவிடுதல் ; நுழைவுபெறுதல் ; ஏற்றுக் கொள்ளுதல்.
**admitt'ed**, *a.* ஏற்றுக்கொள்ளப்பட்ட ; வர. இசைவளிக்கப் பட்ட.
**admitt'edly**, *adv.* யாவரும் ஒப்ப, மறுப்புக்கிடமின்றி.
**admix'**, *v.* கூட்டிக் கலப்புச் செய் ; கலந்து ஒன்றுகு.
**admix'ture**, *n.* சேர்த்துக் கலத்தல் ; கூட்டுக்கலவை ; கலவைக் கூறு ; துணைச் சேர்க்கைப் பொருள்.
**admon'ish**, *v.* எச்சரிப்புச்செய் ; நன்னெறிப்படுத்து, நல்லறி வூட்டு ; நயமாகக் கண்டி ; நினைப்பூட்டு.
**admon'ishment**, *n.* எச்சரிக்கை ; அறிவுறுத்துதல்.
**admoni'tion**, *n.* நல்லறிவு புகட்டுதல் ; நயமான கண்டிப்பு ; கடிந்துரை ; எச்சரிப்புரை.
**admon'itive**, *a.* கண்டிக்கிற.
**admon'itor**, *n.* அறவுரை பகருநர், நீதிபோதகர்.
**admon'itory**, *a.* நன்னெறி காட்டுகிற.
*ad naus'eam*, (ல.) *adv.* வெறுப்பு உண்டாக்கும் வகையில்.
**adnom'inal**, *a.* பெயர்ச்சொல் சார்ந்த ; பெயர் குறித்த ; தழுவுசொல் சார்ந்த.
**ad'noun**, *n.* (இலக்.) பெயர் தழுவிய சொல், பெயர் அடை ; பெயர்குறிக்கும் பெயர் அடை.
**ado'**, *n.* அமளி, வெறும் ஆரவாரம் ; ஆகுலம் ; தொந்தரவு, இடர்.
**adob'e**, *n.* உணக்கிய செங்கல், வெயிலில் காய்வுற்ற பச்சைச் செங்கல் ; உணக்கிய செங்கல் கட்டிடம் ; *a.* உணக்கிய செங்கல்லால் ஆன ; உணக்கிய செங்கல்லுக்குரிய.
**adoles'cence, adoles'cency**, *n.* வளரிளமை, புதுமலர்ச்சிப் பருவம்.
**adoles'cent**, *n.* மழவன், மழ இளைஞன் ; மட மங்கை ; வளர் இளம் பருவத்தினர் ; *a.* வளரும் இளமைப் பருவத்தைச் சார்ந்த.
**Adon'is**, *n.* அஃப்ரோடைட் (Aphrodite) என்னும் தேவ மாதினுல் காதலிக்கப்பட்ட அழகிளங்குமரன் ; வீண் பெருமை யுடையான்.
**ad'onise, ad'onize**, *v.* அழகுபடுத்து.
**adopt'**, *v.* தத்து எடு, பிள்ளை கூட்டு ; தேர்ந்தெடு ; தனதாக ஏற்றுக்கொள் ; மேற்கொள்.
**adop'tion**, *n.* பிள்ளைகூட்டு, மகவேற்பு ; மேற்கொள்ளுதல் ; ஏற்பு ; தனதாகக் கொள்ளுதல் ; ஏற்பிசைவு ; தெரிவு ; தேர்வு ; (மெய்.) மீட்கப்பட்ட உயிர்களுக்குக் கடவுளின் புதல்வருக் குரிய உரிமைகளை வழங்கும் திருவருட்செயல்.
**adop'tive**, *a.* தனதாக ஏற்ற ; தனதாக ஏற்கப்பட்ட.
**ador'able**, *a.* வழிபடத்தக்க, பூசைக்குரிய ; போற்றுதலுக் குரிய.
**adora'tion**, *n.* வழிபாடு, வணக்கம், வந்தனை ; ஆன்ற மதிப்பு.
**adore'**, *v.* போற்று, பூசி, வழிபடு ; நலம் பாராட்டு ; மிகு நேசம் கொள்.
**ador'er**, *n.* போற்றுபவர் ; ஆர்வலர் ; காதலர்.
**ador'ing**, *a.* மெச்சுகிற, போற்றுகிற.
**adorn'**, *v.* கோலஞ்செய், ஒப்பனை செய், அழகூட்டு, அணி செய் ; வண்ணஞ் செய்.
**adorn'ment**, *n.* ஒப்பனை, அலங்காரம்.
**adown'**, *adv.*, *prep.* கீழே, தாழ.
**adpress'**, *v.* சேர்த்து அழுத்து.
*ad rem*, (ல.) *adv.* சுற்றி வளைக்காமல், நேரே.
**adren'al**, *n.* குண்டிக்காய் அடுத்த சுரப்பி ; *a.* குண்டிக்காய் அடுத்த.
**adren'alin**, *n.* குண்டிக்காய்ச் சுரப்பியிலிருந்து ஊறும் இயக்குநீர்.
**adrift'**, *adv.* மிதந்து ; அலைப்புண்டு.
**adroit'**, *a.* சதுரப்பாடுடைய, முன்திறமை வாய்ந்த.

**adry'**, *adv.* வறண்ட நிலையில், நீர்வேட்கையோடு, தாகம் நிரம்பி.
**adsciti'tious**, *a.* மிகுதியான ; உத்தேசிக்கப்பட்ட.
**ad'script**, *n.* பண்ணையாள், படியாள் ; *a.* நிலத்தோடு இணைக் கப்பட்ட ; பின்னர் எழுதப்பட்ட.
*adscrip'tus gleb'ae*, (ல.) *a.* நிலத்தோடு ஒட்டிய.
**adsorb'**, *v.* ஆவியை உறிஞ்சு.
*ad'sum*, (ல.) *v.* இதோ, இங்கே இருக்கிறேன் !
**ad'ulate**, *v.* இச்சகம் பேசு, முகமன் கூறு.
**adula'tion**, *n.* இச்சகம் பேசுதல்.
**ad'ulator**, *n.* முகமன் உரைப்போர், அடிவருடி, வேதாளிகர்.
**ad'ulatory**, *a.* முகமன் உரைக்கிற, பல்லைக் காட்டுகிற, நச்சுகிற.
**ad'ult** [1], *n.* வயதுவந்தவர், முதிர்வயதுடையவர்.
**adult'** [2], *a.* வயதுவந்த, முழுவளர்ச்சி யடைந்த ; (தொ.) adult education, வயதடைந்தவர்களுக்கான கல்வி ; adult suffrage, வயதுவந்தவர் வாக்குரிமை.
**adul'terant**, *n.* கலப்புச் செய்ய உதவும் பொருள் ; கலப்படம் செய்பவர் ; *a.* கலப்படம் செய்கிற ; கலப்படம் செய்ய உதவுகிற.
**adul'terate**, *a.* கலக்கப்பெற்ற, கலப்படமான ; போலியான ; கீழ்த்தரமான ; *v.* கலப்புச் செய் ; கீழ்த்தரம் ஆக்கு ; குழப்பு.
**adultera'tion**, *n.* குழப்புதல் ; கலப்படம் ; கலப்பட நிலை.
**adul'terator**, *n.* கலப்புச் செய்பவர், கலப்படம் செய்பவர்.
**adul'terer**, *n.* ஒழுக்கங் கெட்டவன், பிறர்மனை நயப்பவன் ; *fem.* adul'teress.
**adul'terine**, *n.* தகாவழிப் பிறந்த மகவு ; *a.* தகாவழிப் பிறந்த, முறைகேடாகப் பிறந்த ; போலியான ; சட்டத்திற்கு மாறுன.
**adul'terous**, *a.* ஒழுக்கங்கெட்ட, முறைகேடான.
**adul'tery**, *n.* கூடா ஒழுக்கம், பிறர்மனை நயத்தல்.
**adum'bral**, *a.* நிழல் ஆர்ந்த, நிழல் கவிந்த.
**ad'umbrate**, *v.* சிறு சாயை காட்டு, உருவரை தோற்றுவி ; அரைகுறையாக உருவமை ; இனங்குறி ; முன் அறிவி ; நிழல் கவி, நிழல்படர்வி.
**adumbra'tion**, *n.* நிழலடிப்பு.
**adum'brative**, *a.* நிழல் உருக்காட்டுகிற ; முன் அறிகுறியான.
*ad ung'uem*, (ல.) *a.* முற்றும் செய்து தீர்ந்த.
**ad'urol**, *n.* நிழற்படத் தெளிவுதரு வேதிப்பொருள்.
**adust'**, *a.* தீய்ந்த, வாடி வதங்கிய, கன்றிய, கரிந்த.
*ad valor'em*, (ல.) *a.* மதிப்பீட்டின்படி உரிய ; *adv.* விலை மதிப்பின்படி, மதிப்பீட்டின்படி.
**advance'**, *n.* முன்னேற்றம், வளர்ச்சி, அபிவிருத்தி, மேம்பாடு, உயர்வு, ஏற்றம் ; முன்பணம், அச்சாரம் ; கடன் ; நாடி நணுகுதல் ; நட்பு நாட்டம் ; *a.* முன்னணியிலுள்ள, முன் னீடான ; *v.* முனை ; முந்து ; முன்னேறு ; முன்னேற்றமடை, உயர்வுபெறு, மதிப்படை ; முன்னிடு ; உயர்த்து ; ஊக்கு ; முன் கொணர், முன்னதாக வழங்கு ; முன்பணம் கொடு ; கடன் உதவு.
**advanced'**, *a.* முற்போக்கான ; நாகரிகத்தில் மேம்பட்ட ; உயர்தரமான.
**advance'ment**, *n.* உயர்வு, மேம்பாடு, வளர்ச்சி ; அபிவிருத்தி ; ஊக்குவித்தல்.
**advan'tage**, *n.* நன்மை ; மேன்மை ; அனுகூலம் ; இலாபம், பெறுதி ; முன்வாய்ப்பு ; *v.* நலஞ்செய், பயன்கொடு ; (தொ.) have the advantage of, இயல்பான மேல்நலம் பெற்றிரு ; to take advantage of, பயனுடையதாக்கிக்கொள் ; மெட்டுக் கடந்து பயன்படுத்திக்கொள் ; take at advantage, ஒருவ ருடைய இனிய நிலைகளையே எதிராக்கு ; எதிர்பாராது செய லாற்றி அதிர்ச்சி ஊட்டு.
**advanta'geous**, *a.* மேன்மையான ; அனுகூலமான ; பயன் தருகிற.

advene', *v.* சேர்ந்துமிகு.
ad'vent, *n.* வருகை; வந்தடை கை.
Ad'vent, *n.* இயேசுநாதரின் திருவருகை.
Ad'ventist, *n.* இயேசுநாதரின் இரண்டாவது வருகையில் நம்பிக்கை உள்ளவர்; இயேசுநாதரின் திரு ஆயிர ஆண்டுக் கால நேரிடை ஆட்சிக் கோட்பாட்டில் நம்பிக்கை உள்ளவர்.
adventi'tious, *a.* புறமிருந்து வருகிற, புறவளர்ச்சியான; இடைநிகழ்வதான; கூடுதலான; (சட்.) நேர் மரபுரிமையின்றி எதிர்பாராது வந்த.
advent'ive, *n.* வெளியாள்; வெளிப்பொருள்; *a.* புறமிருந்து வருகிற; (தாவ.) நன்கு நிலைபெறாத.
adven'ture, *n.* துணிவான செயல், வீரச்செயல்; அபாயம், இடர்; எதிர்பாரா நிகழ்ச்சி; துணிச்சல் வாணிபம்; செயல் வேட்டம்; முயற்சி ஆர்வம்; *v.* துணிவுச் செயலில் இறங்கு, துணிந்துசெய்; செய்துபார்; இடர்மேற்கொண்டு செய்.
adven'turer, *n.* துணிச்சல் வீரன்; வெற்றி வேட்டையாளன்; துணிச்சல் வாணிபம் செய்வோன்; ஆபத்தான முயற்சிகளை மேற்கொள்வோன்.
adven'turesome, *a.* துணிச்சல் வீரமுடைய; முயற்சியுள்ள; இடர்மேற்கொள்ளச் சித்தமாய் இருக்கிற.
adven'turess, *n.* துணிச்சலான பெண்; கொள்கையின்றித் தன் சாமர்த்தியத்தினுல் வாழ்பவள்.
adven'turous, *a.* = adventuresome.
ad'verb, *n.* வினையடை, வினை தழுவுசொல்.
adverb'ial, *a.* வினையடைக்குரிய; வினை தழுவுகிற.
*ad verb'um*, (ல.) *a.* சொல்லுக்குச் சொல்லான; *adv.* சொல்லுக்குச் சொல்லாக.
ad'versary, *n.* எதிரி, பகைவர்.
advers'ative, *a.* எதிரான, மாறுன.
ad'verse, *a.* எதிரான, மாறுகச் செயலாற்றுகிற; பகையான, தீங்கு விளைவிக்கிற, கேடான; பிரதிகூலமான.
ad'versely, *adv.* மாறுக, எதிராக.
advers'ity, *n.* இன்னல், துன்பம்; அல்லற்காலம், காலக்கேடு; துரதிர்ஷ்டம்.
advert', *v.* கவனம் திருப்பு; குறிப்பிடு.
advert'ence, advert'ency, *n.* கவனம், விழிப்பு.
advert'ent, *a.* கவனமுள்ள, விழிப்பான.
ad'vertise, *v.* அறிவி, தெரிவி; விளம்பரப்படுத்து; முன்னறிவி; விளம்பரப்படுத்திக்கொள்.
advert'isement, *n.* பொது அறிவிப்பு, விளம்பரம்; விளம்பரப்படுத்துதல்; வசை விளம்பரம்.
ad'vertiser, *n.* விளம்பரம் செய்பவர், பொது அறிவிப்புச் செய்பவர்.
advice', *n.* ஆலோசனை, கருத்துரை, அறிவுரை; அறவுரை, நல்லுரை; அறிவிப்பு.
advice's, *n. pl.* செய்தி, தகவல்.
advis'able, *a.* பிறர் நல்லதென்று சொல்லத்தக்க; பொருத்தமான, உசிதமான; பரிந்துரைக்கத்தக்க, ஆதரிக்கத்தக்க.
advise', *v.* ஆலோசனை கூறு, தெளிவுரை கூறு; பரிந்துரை பகர்; தெரிவி, அறிவி; கலந்தாலோசி.
advised', *a.* நன்கு ஆலோசிக்கப்பட்ட; தெரிவிக்கப்பட்ட; அறிவுரைக்கு இணங்குகிற; நெஞ்சறிந்த; முன்னெச்சரிக்கையான.
advised'ly, *adv.* நன்கு ஆலோசித்து, போதிய ஆலோசனையுடன்; அறிவுரைக்கிணங்கி; நெஞ்சறிந்து, வேண்டுமென்று.
advis'er, advis'or, *n.* ஆலோசகர், உறுபொருள் உரைப்போர்.
advis'ory, *a.* ஆலோசனை கூறுகிற; அறிவுரை அடங்கிய.
*ad vit'am aut cul'pam*, (ல.) *adv.* வாழ்நாள்முழுதும் அல்லது குற்றம் மெய்ப்பிக்கப்படும் வரையில்.
ad'vocacy, *n.* வழக்கறிஞர் தொழில்; ஆதரித்து வாதாடுதல், ஒட்டி வழக்காடுதல்; காத்துக்கோடல்.
ad'vocate, *n.* வழக்கறிஞர்; ஆதரித்து வாதாடுபவர், காத்துப் பேசுவோர்; *v.* ஆதரித்து வாதாடு; வெளிப்படையாகப் பரிந்துரை.
ad'vocator, *n.* பரிந்து வாதாடுபவர்.
advows'on, *n.* திருக்கோயில் பதவிகளுக்கு ஆள் அமர்த்தும் உரிமை.
adynam'ia, *n.* உயிராற்றலின் அழிவு; ஏலாமை; படுகிடை நிலை.
ad'ytum, *n.* கோயில் கருவறை, கர்ப்பக்கிருகம், மூலக் கோயில்; *pl.* ad'yta.
adz, adze, *n.* வாய்ச்சி, மரத்தைச் சீவ உதவும் கருவி; *v.* வாய்ச்சி கொண்டு சீவு.
aecid'iospore, *n.* காளான் வகையின் சிதல் விதை.
aecid'ium, *n.* காளான் குடை; *pl.* aecid'ia.
aed'ile, *n.* மேல்காப்பாளர், பண்டைய ரோமர் (Roman) ஆட்சியிற் காவல் பொதுக்கூடம் கேளிக்கை ஆகியவற்றை மேற்பார்க்கும் அலுவலர்.
*ae'ger*, (ல.) *n.* நோய்ச்சான்று; பல்கலைக்கழக மாணவரின் நோய்நிலைக்குரிய மருத்துவர் சான்றிதழ்.
ae'gis, *n.* கிரேக்கப் பெருந்தெய்வத்தின் கேடயம்; ஆதரவு, சார்பு.
*aegrot'at*, (ல.) *n.* மருத்துவச்சான்று, பல்கலைக்கழகங்களில் மாணவர் தேர்வுக்கு அல்லது வகுப்பிற்கு வரமுடியாத நிலையில் நோயுற்றிருக்கிறரென்ற சான்று.
Ae'neid, *n.* வர்ஜில் (Virgil) என்ற பண்டை ரோமக் (Roman) கவிஞர் இயற்றிய பெருங்காப்பியம்.
Aeol'ian, *n.* இயோலியாவைச் (Aeolia) சார்ந்த கிரேக்கர்; *a.* இயோலியா அல்லது மேலை ஆசியாவைச் சார்ந்த; காற்றுக்குரிய; காற்றுல் இயக்கப்படுகிற; காற்றுவெளியூடான; (தொ.) Aeolian harp, இயோலியா அல்லது மேலை ஆசியாவைச் சார்ந்த யாழ்வகை; Aeolian mode, பண்டைக் கிரேக்கரின் இசைத்திற வகை; Aeolian rocks, (மண்.) காற்றின் செயலால் உருவாகும் மணல் போன்ற பாறைவகை.
Aeol'ic, *n.* கிரேக்க மொழியின் இயோலியக் கிளைவழக்கு.
ae'olipile, ae'olipyle, *n.* ஆவிவேக மானி.
aeolot'ropy, *n.* நிலைமாற்றத்தால் ஏற்படும் இயற்பியல் மாறுபாடு.
ae'on, *n.* ஊழி, பேரூழி, யுகம், கற்பம், எல்லையற்ற காலம்; பிளேட்டோவின் (Plato) கோட்பாடு வகையில் அனாதி காலந் தொட்டு நிலைபேறுடைய கடவுட்கூறுன தத்துவம்.
a'erate, *v.* காற்றூட்டு.
a'erated, *a.* வளியுடன் கலந்த; காற்றூட்டப்பட்ட; (தொ.) aerated waters, காற்றூட்டப்பட்ட பானங்கள்.
aera'tion, *n.* காற்றூட்டல்; வளிகலத்தல்; வளிசெறித்தல்; காற்றுடவிடல்; உயிர்ப்புமூலம் குருதியுடன் உயிர்வளி கலக்கவிடல்.
a'erator, *n.* காற்றூட்டுக் கலம்.
aer'ial, *n.* வான்கம்பி; உணர்கொம்பு; *a.* காற்றைச் சார்ந்த, காற்றுவெளிக்குரிய, காற்றூடான; வளிமண்டலத்துக்குரிய; காற்றேட்டமுள்ள; கற்பனையான; உயர்ந்த; விமானத் தொடர்புடைய; ஆவிவடிவான; காற்றுப்போன்ற; இலேசான.
a'erie, a'ery, *n.* வேட்டப்பறவையின் கூண்டு; மலைமுகட்டு அரண், மலைமேல் மனை; கொடும்பறவைக் குஞ்சுகளின் தொகுதி; கொடிய வமிசம்.
a'eriform, *a.* ஆவி வடிவான; போலியான.
a'ero, *n.* வான ஊர்தி, விமானம்; *a.* விமானம் சார்ந்த.

aerobat'ics, *n.* வான ஊர்திக்கலை, விமான வித்தை.
a'erobe, *n.* தனி உயிர்வளியில் உயிர்க்கும் அணுவுயிர்.
aerob'ian, aerob'ic, *a.* உயிர்ப்பதற்குத் தனி உயிர்வளி வேண்டுகிற.
aero-biol'ogy, *n.* காற்றிற் கலந்து மிதக்கும் நுண்ணணு உயிரிகள் நுண்ணணுச் சிதல்கள் ஆகியவற்றைப் பற்றிய உயிர்நூல்துறை.
aerobio'sis, *n.* உயிர்வளியில் உயிர்வாழ்வு.
a'erobomb, *n.* வான்வழிக்குண்டு, விமான வீச்சுக்குண்டு.
a'erobus, *n.* வான்வழிப்பேருந்து, பெரிய விமானம்.
a'erodart, *n.* விமான எறிபடை.
aer'odrome, *n.* வான்கப்பல் நிலையம், விமான நிலையம்.
aerodynam'ic, aerodynam'ical, *a.* வளியியக்கம் சார்ந்த.
aerodyn'amicist, *n.* பொருள்களின் காற்றூடான இயக்கம் பற்றி ஆராய்பவர்.
aerodynam'ics, *n.* வளியியக்கம் சார்ந்த இயற்பியல்.
a'erodyne, *n.* காற்றினும் எடைமிக்க வான்கலம்.
aeroelastic'ian, *n.* மிகுவிசை வான்கலத்தின் அதிர்வியக்கம் ஆராய்பவர்.
aeroem'bolism, *n.* வானில் ஏற்ற இறக்க வேறுபாட்டினால் விமானத்தாருக்கு ஏற்படும் நோய்நிலை.
a'erofoil, *n.* விமானத்தின் காற்றழுத்தத் தளம்.
a'erogram, *n.* கம்பியில்லாத்தந்திச் செய்தி ; விமானத்தந்திச் செய்தி.
aerohy'droplane, *n.* விமானப்படகு ; பறக்கும் படகு.
a'erolite, a'erolith, *n.* விண்வீழ் கல்.
aerolithol'ogy, *n.* விண்வீழ் கல் பற்றிய ஆய்வு நூல்.
aerolit'ic, *a.* விண்வீழ் கல் சார்ந்த.
aerolog'ical, *a.* வளிமண்டல ஆய்வு நூலுக்குரிய.
aerol'ogist, *n.* வளிமண்டல ஆராய்ச்சியாளர்.
aerol'ogy, *n.* வளிமண்டல ஆய்வு நூல்.
a'eromancy, *n.* வானிலைகொண்டு வரும்பொருள் உரைத்தல் ; வானிலை முன்னறிவிப்பு.
aerom'eter, *n.* வாயுமானி, காற்றின் அல்லது வளிகளின் எடையை அல்லது செறிவை அளவிடும் கருவி.
aeromet'ric, *a.* காற்றுமண்டல அளவையைச் சார்ந்த.
aerom'etry, *n.* காற்றுமண்டல அளவு நூல்.
a'eromotor, *n.* விமான இயந்திரம், வானூர்தி விசைப்பொறி.
a'eronaut, *n.* விண்செலவுடையோர், வானோடி.
aeronaut'ic, aeronaut'ical, *a.* வான்செலவு சார்ந்த.
aeronaut'ics, *n.* வான்செலவுத் துறை, விண்செலவு பற்றிய ஆய்வுநூல்.
aeropho'bia, *n.* கடுங்காற்றச்சம்.
a'erophyte, *n.* ஒட்டுயிர்ச் செடிவகை.
aer'oplane, *n.* வானூர்தி, வான்கலம், விமானம்.
aero-plank'ton, *n.* காற்றில் கலந்து மிதக்கும் நுண்ணணு உயிரிகளின் தொகுதி.
aerosid'erite, *n.* இரும்பு கலந்த விண்வீழ்கல்.
a'erosol, *n.* தூசிப்படலம்.
a'erostat, *n.* காற்றைவிடப் பளு குறைந்த வான்கலம், வான் கூண்டு ; வான்கூண்டு செலுத்துபவர் ; (வில.) காற்றுப்பை.
aerostat'ic, *a.* காற்றிலும் எடை குறைந்த வான்கலம் சார்ந்த.
aerostat'ics, *n.* வளிச்சூழல் சமநிலையியல், வளியின் அமைதி நிலை பற்றிய இயற்பியல் ; வான்கூண்டு செலுத்தும் கலை.
aerosta'tion, *n.* வான் கூண்டு செலுத்துதல்.
aerotac'tic, *a.* உயிர்வளியிலிருந்து அல்லது உயிர்வளி நோக்கிச் செல்லுகிற.
aerotax'is, *n.* உயிர்வளியிலிருந்து அல்லது உயிர்வளி நோக்கிச் செல்லும் இயக்கம்.
aerotrop'ic, *a.* (தாவ.) உயிர்வளிச் செறிவின் பயனாக வளைந்து செல்லுகிற.
aerot'ropism, *n.* (தாவ.) உயிர்வளிச் செறிவினால் வளைந்து செல்லும் போக்கு.
aeru'ginous, *a.* செம்பின் களிம்பிற்குரிய ; செம்பின் களிம்பு போன்ற.
Aesculap'ian, *a.* ஈஸ்குலாப்பியஸ் (Aesculapius) என்னும் ரோம (Roman) மருத்துவக் கடவுட்குரிய ; மருத்துவக் கலைக்குரிய.
Aesculap'ius, *n.* ரோம (Roman) மருத்துவக் கடவுள் ; மருத்துவர்.
aes'culin, *n.* வாதுமையின மரவகையின் பட்டையிலிருந்து கிடைக்கும் முந்திரி வெல்லச்சத்து.
aes'thete, *n.* அழகுணர்ச்சியுடையவர், கலைநயமுடையவர் ; போலிக் கலைப்பெருமை கொள்பவர்.
aesthet'ic, aesthet'ical, *a.* அழகுணர்ச்சி சார்ந்த, கலை உணர்ச்சி யுடைய ; சுவைநலஞ் சான்ற.
aestheti'cian, *n.* அழகுக் கலைஞர்.
aesthet'icise, *v.* கலைச்சுவை உடையதாக்கு, அழகுணர்ச்சி யூட்டு.
aesthet'icism, *n.* கலைப்பண்பின் இலக்கணம் ; அழகுக் கோட்பாடு.
aesthet'icist, *n.* அழகுக் கலை ஆய்வாளர்.
aesthet'ics, *n.* அழகுணர்ச்சி, சுவைநலம், சுவைமை ; நுண் கலை இலக்கணம், கவின்கலைத் தத்துவம் ; அழகியல், அழகுக் கலை.
aes'tival, *a.* வேனிலுக்குரிய ; வேனிற் பருவத்தில் தோன்று கிற.
aes'tivate, *v.* கோடைக்காலத்தைக் கழி ; (வில.) கோடைக் காலத்தில் செறிதுயில் கொள்ளு.
aestiva'tion, *n.* கோடைக் காலத்தைக் கழித்தல் ; (தாவ.) அரும்பு நிலை, குருத்து நிலை ; (வில.) கோடைக் காலத்திய செறிதுயில்நிலை.
*aetat'is, aet'at., aet.,* (ல.) *a.* வயதுடைய.
ae'ther, *n.* = ether.
ae'thrioscope, *n.* வானிலைமானி, வானிலை காரணமாக ஏற் படும் வெப்பநிலைகளை நுட்பமாக அளவிடும் கருவி.
aetiolo'gical, *a.* சற்காரியவாதம் சார்ந்த ; காரண காரிய விளக்கமான.
aetiol'ogy, *n.* காரணகாரிய ஆராய்ச்சித்துறை ; காரணகாரிய விளக்கக் கோட்பாடு, சற்காரிய வாதம், தோற்றமூலம் பற்றிய ஆய்வு ; (மரு.) நோய்க் காரணம் பற்றிய ஆய்வு நூல்.
afar', *adv.* தொலைவிலிருந்து, தூரத்தில், தொலை இடத்திற்கு ; (தொ.) afar off, from afar, தூரத்திலிருந்து.
affabil'ity, *n.* இன்சொல்லுடைமை; இணக்கநயம் ; அன் பிணைப்பு.
aff'able, *a.* பேசுஞ் செவ்வியுடைய, இன்சொல்லுடைய; சுமுக மான, அன்பாதரவான, ஒப்புரவுடைய.
affair', *n.* செய்கை, காரியம் ; விவகாரம் ; அலுவல், வேலை; சிறுசெய்தி; போர் நிகழ்ச்சி.
*affaire, affaire de coeur,* (பிர.) *n.* காதல் விஷயம்.
affairs', *n. pl.* வாழ்க்கைத் தொழில்கள் ; நடவடிக்கைகள்.
aff'ect[1], *n.* (உள.) செயல் தூண்டும் உணர்ச்சி ; உணர்ச்சி யின் இன்ப துன்ப நிலை.
affect'[2], *v.* செயல்விளைவு உண்டுபண்ணு ; நிலைமாற்று ; பாதித்தல் செய் ; பற்றி நில் ; குறித்து நிகழ் ; தாக்கு ; பற்று; தொடு ; உணர்ச்சி உண்டுபண்ணு ; பற்றுதல் காட்டு; விருப்பங்கொள் ; பகட்டிக்கொள், போலியாக நடி ; நாடிநில் , பயின்றணி, வழக்கமாக அணி.

**affecta'tion**, *n.* பாசாங்கு ; செயற்கை நடிப்பு, போலிப் பகட்டு, பகட்டு நடை.

**affec'ted**, *a.* செயல் பற்றப்பட்ட, பாதிக்கப்பட்ட ; செயற்கை யான ; பாவனையான, நடிப்பான ; பகட்டான ; உணர்ச்சிக்கு ஆளான.

**affect'ing**, *a.* உருக்கமான, உளங்கனியச் செய்கிற.

**affec'tion**, *n.* பற்றுசை, பாசம், உள்ளன்பு, நேசம், விருப்பம் ; மனப்போக்கு, மனநிலை ; உணர்ச்சி ; தாக்குதல், பீடித்தல் ; நோய் ; பண்பு ; நிலை.

**affec'tional**, *a.* உணர்ச்சி சார்ந்த ; உடல்நிலை பாதிக்கப் பட்ட ; விருப்பஞ் சார்ந்த.

**affec'tionate**, *a.* உள்ளன்புள்ள, பாசமுடைய, பற்றார்வமிக்க.

**affec'tive**, *a.* உணர்ச்சி சார்ந்த.

**affeer'**, *v.* மதிப்பீடு செய் ; குறிப்பிட்ட தொகை யளவிற்குக் கொண்டுவா.

**aff'erent**, *a.* அகமுக, மையம் நோக்கிய ; (உள்.) நரம்பு மையங்களுக்கு உணர்ச்சிகளைக் கொண்டு சேர்க்கிற.

*affettuo'so*, (இத்.) *a.* (இசை.) மெல்லிய ; *adv.* உருக்கமாக.

**affi'ance**, *n.* நேச ஒப்பந்தம் ; மண இசைவு ; பற்றுறுதி ; *v.* மணங்குறி, மணம் பேசிவை.

**affi'anced**, *a.* மணங் குறிக்கப்பட்ட.

*affiche*, (பிர.) *n.* சுவரொட்டி, விளம்பரம்.

**affidav'it**, *n.* உறுதிமொழித்தாள், ஆணைப்பத்திரம்.

**affil'iate**, *v.* புதல்வனாக ஏற்றுக்கொள் ; உறுப்பினராக ஏற்றுக் கொள் ; உறுப்பாக இணை ; பெற்றோர் இன்னாரென்று காட்டு ; (சட்.) வளர்ப்புப் பொறுப்பை முன்னிட்டுத் தந்தை இன்னாரென்று குறிப்பிடு ; ஆக்கியோன் யாரென்று முடிவு செய் ; மூலம் காண்.

**affilia'tion**, *n.* சேர்த்தல் ; இணைப்பு ; மூலம் காண்டல் ; (சட்.) முறையற்ற வகையிற் பிறந்த குழந்தையைத் தந்தையிடம் சேர்த்தல்.

**affine'**, **affined'**, *a.* தொடர்புள்ள, உறவுடைய, பிணைப் புடைய.

**affin'itive**, *a.* உறவுடைய, இனவொற்றுமையுள்ள.

**affin'ity**, *n.* இன உறவு, உறவு, சுற்றம், திருமண மூலமான உறவு ; இன மொழிகளிடையே காணப்படும் அடிப்படை அமைப்பு ஒப்புமை ; பண்பின் ஒருமைப்பாடு ; குடும்பப் பொதுச் சாயல் ; விருப்பம் ; கவர்ச்சி ; (வேதி.) நாட்டம், இணைப்பீர்ப்பு, தனிமங்கள் வேறு சில தனிமங்களுடன் இணையும் பாங்கு.

**affirm'**, *v.* வலியுறுத்திக் கூறு ; உறுதிசெய், முறைப்படி அறிவி ; பிடிவாதமாகச் சொல் ; (அள., இலக்.) உடன் பாட்டு வகையால் கூறு ; (சட்.) நெடுமொழியின்றி உறுதி கூறு ; உறுதிப்படுத்து ; முறைப்படி இசைவு அளி.

**affirm'ant**, *n.* உறுதிகூறுபவர் ; *a.* வலியுறுத்திச் சொல்லு கிற.

**affirma'tion**, *n.* வலியுறுத்திக் கூறுதல் ; வலியுறுத்தப் பட்ட செய்தி ; வாய்மையுரை ; சபதமின்றி உறுதிகூறுதல்.

**affirm'ative**, *n.* ஆம் என்பது ; அழுத்தமாகச் சொல்லுதல் ; (அள., இலக்.) உடன்பாடு; *a.* உடன்பாடான ; ஒப்புதலான ; தன்கோள் நிறுவுகிற.

**affirm'atory**, *a.* உறுதிப்படுத்துகிற.

**aff'ix**[1], *n.* ஒட்டு, இணைப்பு ; சாரியை, ஒட்டிடைச் சொல்.

**affix'**[2], *v.* ஒட்டவை ; எழுதிச்சேர் ; பொருத்து ; பின்சேர் ; இறுக்கு ; அழுத்து ; பதியவை.

**affix'ture**, *n.* ஒட்டவைத்தல்.

**affla'ted**, *a.* அக எழுச்சி உடைய, உள்ளிருந்து ஊக்குவிக்கப் பெற்ற.

**afflat'us**, *n.* அக எழுச்சி ; ஆவேசம் ; அருளூக்கம்.

**afflict'**, *v.* அல்லற்படுத்து, துயருறுத்து, இடுக்கண்படுத்து ; தொல்லைப்படுத்து ; நச்சரி ; எரிச்சலூட்டு ; (விவி.) தாழ்த்து.

**afflict'ed**, *a.* அலக்கணுற்ற.

**afflic'tion**, *n.* நோவு ; பேரிடர் ; இன்னல், வேதனை.

**afflic'tive**, *a.* துயருறுத்துகிற.

**aff'luence**, *n.* செழுமை ; பெருஞ்செல்வம்.

**aff'luent**, *n.* வரவுகால் ; துணையாறு ; *a.* வளமான ; ஏராள மான ; செல்வமிக்க ; உள்நிறைகிற.

**aff'lux**, **afflux'ion**, *n.* உள்நிறைதல் ; மீவரவு.

**afford'**, *v.* விளைவி ; வளம் அளி ; வாய்ப்பளி ; உதவு ; வாய்ப்பமைவோடிரு ; விற்க அல்லது செலவுசெய்ய அல்லது செலவைத் தாங்கிக்கொள்ளத் தகுதியோடிரு.

**affo'rest**, *v.* காடு வளர் ; வேட்டைக்காடாக மாற்று.

**afforesta'tion**, *n.* காடு வளர்ப்பு ; காடாக மாற்றுதல்.

**affran'chise**, *v.* அடிமைத்தளை நீக்கு ; கட்டறு ; கடமையி லிருந்து விடுவி.

**affray'**, *n.* தெருச் சண்டை ; கலவரம் ; அமளி, அமைதிக் குலைவு ; *v.* அச்சுறுத்து ; அமைதிகுலை.

**affreight'ment**, *n.* கப்பலை வாடகைக்கு எடுத்தல்.

**aff'ricate**, *n.* (ஒலி.) தடையுறழ்வொலி, தடையாகத் தொடங்கி உறழ்வாக முடிவுறும் மெய்யொலி.

**affright'**[1], *n.* கிலி, திகில்.

**affright'**[2], **affright'en**, *v.* அச்சுறுத்து.

**affront'**, *n.* நேர்முக அவமதிப்பு ; இகழ்ச்சி ; மரியாதைக் குறைவாக நடத்துதல் ; *v.* எதிர்ப்படு ; முகத்தெதிரே அவமதி ; நாணவை ; பெண்மைக்கு ஊறுசெய் ; தன் மதிப்புக்குக் கேடு விளைவி.

**affu'sion**, *n.* நீர் சொரிதல், ஞானத் திருமுழுக்கின்போது உடலின்மேல் நீர் ஊற்றுதல் ; (மரு.) காய்ச்சல் உடையவன் மீது நீர்வார்த்தல்.

**Af'ghan**, *n.* ஆப்கனிஸ்தான் நாட்டவர் ; ஆப்கனிஸ்தான் நாட்டுமொழி ; *a.* ஆப்கனிஸ்தான் நாட்டுக்குரிய.

**af'ghan**, *n.* பின்னப்பட்ட கம்பளி மெத்தை உறை.

**afield'**, *adv.* கழனியில் ; களரியில் ; களத்தில் ; களத்தை நோக்கி ; தொலைவில்.

**afire'**, *adv.* எரிந்துகொண்டு, கனலெழ ; வீக்கம் கண்டு.

**aflame'**, *adv.* கொழுந்துவிட்டு எரிகிற நிலையில், அழன்று, சுடர்விட்டு, ஒளிப்பிழம்பு வீசி.

**afloat'**, *adv.* மிதக்கும் நிலையில் ; கடலில் ; கப்பலில் ; கடற் படைப் பணியில் ; நீர்நிரம்பி ; காற்றில் மிதந்துகொண்டு ; நிலையற்று ; செலாவணியில் ; நடப்பில் ; கடனில் மூழ்காமல் ; தன்னைக் கட்டிக்கொண்டு போகிறநிலையில் ; தன் செலவுக்கு வேண்டிய அளவு வரவுடன் ; முழு வேகத்தில் இயக்கப் பெற்று.

*a fond*, (பிர.) *adv.* முற்ற, முழுக்க, அடிவரையில்.

**afoot'**, *adv.* தொடங்கி ; ஆயத்தமாகி ; விழிப்புற்று ; எழுந்து ; நடந்துகொண்டு ; நடப்பில், நடைமுறையில் ; பணியில் இயங்கிக்கொண்டு.

**afore'**, *adv.* ஏற்கெனவே, முன்னதாக ; *prep.* முன்பாக, முன்னால்.

**afore'cited**, *a.* முன்குறித்த.

**afore'going**, *a.* முந்திய.

**afore'mentioned**, *a.* முன்குறிப்பிட்ட.

**afore'named**, *a.* மேலே பெயர்கூறப்பட்ட.

**afore'said**, *a.* மேற்சொன்ன.

**afore'thought**, *n.* முன்நினைவு ; *a.* முன் கருதப்பட்ட, முன்பே திட்டமிடப்பட்ட.

**afore'time**, *a.* முன் நாளைய ; *adv.* பண்டு, முன்னாட்களில்.

*a fortior'i*, (ல.) *adv.* மேலும் வலிய காரணத்தால்.

**afoul'**, *a.* சிக்கிய ; *adv.* சிக்கி ; மோதி.

**afraid'**, *a.* அச்சமுற்ற; அஞ்சிய; எண்ணுவதற்கு வருந்திய; ஆர்வங் குன்றிய.

**af'reet**, *n.* இஸ்லாமிய சமய வழக்கில் அலகை.

**afresh'**, *adv.* புதிதாக ; மறுபடியும்.

**Af'rican**, *n.* ஆப்பிரிக்கா கண்டத்தினர் ; *a.* ஆப்பிரிக்கா கண்டத்திற்கு உரிய.

**African'der, African'er**, *n.* வெள்ளையருக்குப் பிறந்த தென்னாப்பிரிக்கக் குடியினர்.

**Af'ricanism**, *n.* ஆப்பிரிக்கச் சிறப்பியல்பு.

**Afrikaans'**, *n.* தென்னாப்பிரிக்க டச்சுமொழி ; தென்னாப்பிரிக்க டச்சு மரபினர்.

**Afrikan'der, Afrikan'er**, *n.* = Africander.

**aft**, *adv.* (கப்.) பின்னோக்கி ; பின்பகுதி அருகே.

**af'ter**[1], *a.* பிந்திய ; பின்புறமான ; (கப்.) கப்பலின் பின்புறத்துக்கு அருகிலுள்ள ; மிக்கதான.

**af'ter**[2], *adv., prep.* பின்னர், பின்பு, பிற்பாடு, பிறகு ; *conj.* பின்னுல், பின்புறத்தில் ; நாடி, பின்தொடர்ந்து; தேடிக்கொண்டு ; பார்த்துப் பின்பற்றி ; அடுத்து ; இணங்க ; குறித்து, குறிப்பிட்டு ; தக்கவாறு, ஒத்திசைய ; நினைவாக, பாராட்டாக.

**af'terbirth**, *n.* பேறுகால இளங்கொடி ; பின்பிறப்பு; கருவிலே தந்தையை இழந்த பிறவி.

**af'ter-care**, *n.* நோய்தீர்வுக்குப் பின்னுள்ள கவனிப்பு, பிற்பாதுகாப்பு.

**af'ter-clap**, *n.* புறனடை, முடிந்துவிட்டதென்று கருதப்பட்ட பிறகு ஏற்படும் எதிர்பாராப் பின்விளைவு.

**af'ter-crop**, *n.* மறுபோகம்.

**af'terdamp**, *n.* சுரங்க நச்சுவளி, சுரங்க வெடிவிபத்துக்குப் பின்னுல் உண்டாகும் நச்சுவளி.

**after-dinn'er**, *n.* உணவுக்குப்பிற்பட்ட வேளை ; *a.* உணவுக்குப் பிற்பட்ட வேளையில் அமைந்த.

**aft'er-effect**, *n.* பின்விளைவு.

**aft'ergame**, *n.* மறிநிலை ஆட்டம், முதல் ஆட்டத்தின் முடிவை மாற்றும் நோக்கத்துடன் ஆடப்படும் மறு ஆட்டம் ; முதல் விளைவிற்குப்பின் மேற்கொள்ளப்படும் முறை, மறுமுறை முயற்சி.

**af'terglow**, *n.* பின்னொளி, ஞாயிறு படிந்தபின் காணப்படும் ஒளிப்பிழம்பு.

**af'ter-grass**, *n.* தாள்புல், புல் அறுத்தபின் தாளில் உண்டாகும் மறுவளர்ச்சி.

**af'tergrowth**, *n.* பின்வளர்ச்சி ; பின்விளைவு.

**af'ter-guard**, *n.* (கப்.) பின்தளக் காவலாள் ; கீழ்த்தரப் பணியாள் ; வாணிகக் கப்பற் பணியாளர்.

**af'ter-image**, *n.* பின்தோற்றம், ஒரு பொருளைப் பார்த்த பிறகு மனத்திற் சிறிதுநேரம் பதிந்திருக்கும் உருவம்.

**aft'erings**, *n. pl.* கடைப்பால், கறவையின்போது இறுதியாகக் கறந்த பால்.

**aft'erlife**, *n.* உம்மை, மறுமை, வரும்பிறப்பு ; பிற்கால வாழ்வு.

**af'ter-light**, *n.* பின்னொளி; பின்னறிவு; பின்விளக்கம்.

**af'termath**, *n.* தாள்புல், இரண்டாம் அறுவடை; பின்விளைவு; தீங்கான பின்விளைவு, கெடு விளைவு.

**af'termost**, *a.* எல்லாவற்றிற்கும் பிந்திய, கடையான ; (கப்.) கப்பலின் பின்புறத்துக்கு மிக அண்மையான.

**afternoon'**, *n.* பிற்பகல் ; *a.* பிற்பகலுக்குரிய.

**af'terpains**, *n. pl.* பின்வயா, பிள்ளைப்பேற்றுக்குப் பிற்பட்ட நோவு.

**af'terpiece**, *n.* நாடக முடிவில் காட்டப்படும் துணைக்காட்சி, 'பிற்காட்சி'.

**aft'ers**, *n. pl.* உணவின் பின்படைப்பு ; நண்பகல் உணவின் பின்படையல்.

**aft'ershaft**, *n.* இறகடித் துய், இறகின் தூரில் முளைக்கும் துய்.

**aft'er-taste**, *n.* துழாவுசுவை, எஞ்சிய சுவை ; பின்சுவை.

**af'terthought**, *n.* பின்யோசனை, துணிந்தபின் எண்ணுகை பின்விளக்கம், பின்யுக்தி.

**aft'ertime**, *n.* வருங்காலம்.

**aft'erward, af'terwards**, *adv.* பிற்பாடு, பின்னர்.

**aft'erword**, *n.* பின்னுரை.

**again'**, *adv.* மறுபடியும், மீண்டும், திரும்பவும் ; மறுமொழியாக, எதிராக ; மேலும், அன்றியும் ; மாருக.

**against'**, *prep.* எதிராக ; மாருக, எதிரிடையாக ; எதிர்நோக்கி, முன்னிட்டு ; மீதுபட்டு, மீதாக, மேல்மோதி ; பதிலாக.

**ag'ama**, *n.* பல்லி வகை.

**ag'ami**, *n.* நாரைபோன்ற தென் அமெரிக்கப் பறவை வகை.

**agam'ic**, *a.* (உயி.) பால்கலப்பின்றி அமைந்த, ஆண் பெண் கருத்தொடர்பின்றி உண்டான.

**agamogen'esis**, *n.* விலங்கு புல்லினங்களின் பால்கலப்பற்ற இனப்பெருக்கம்.

**agamogenet'ic**, *a.* பால் கலப்பின்றி இனம் பெருக்குகிற.

**ag'amous**, *a.* பால்காட்டும் உறுப்பில்லாத; (தாவ.) கண்ணுக்குப் புலப்படும் பூக்கள் இல்லாத.

**Aganipp'e**, *n.* கலைத்தேவியருக்கு உகந்த ஹெலிகன் (Helican) மலைக்குவட்டில் உள்ள ஊற்று ; கவிதை எழுச்சி.

**ag'ape**[1], *n.* முற்காலக் கிறித்தவர்கள் கொண்டாடிய அன்பு விருந்து ; *pl.* ag'apae.

**agape'**[2], *adv.* அங்காந்து, வாய்பிளந்த நிலையில்.

**ag'ar, ag'ar-ag'ar**, *n.* கடற்கோரை வகை ; கடற்கோரை வகைகளிலிருந்து செய்யப்படும் கூழ்.

**ag'aric**, *n.* காளான் வகை ; *a.* காளான் வகைக்குரிய.

**agas'tric**, *a.* (வில.) உணவுக்குழல் அற்ற.

**ag'ate**[1], *n.* மணிவகை, இரத்தினங்களில் ஒன்று ; பொற்கம்பிக்கு மெருகேற்றும் கருவி ; அச்செழுத்து வகை.

**agate'**[2], *adv.* நடந்துகொண்டு ; எழுந்து ; வழிதவறி.

**Agav'e**, *n.* (தாவ.) அமெரிக்கக் கற்ருழைவகை.

**agaze'**, *adv.* வெறித்து நோக்கி.

**age**, *n.* வாழ்நாள், ஆயுள் ; வயது, பருவம்; முதிர்ச்சி, சரியான வயது, உரிமை வயது ; முதுமை ; காலப்பிரிவு, யுகம், ஊழி ; தலைமுறை ; *v.* முதுமையுறு ; முதுமைப் படுத்து ; முதுமையாகத் தோற்று ; முதிர்ச்சி அடை.

**ag'ed**, *a.* வயதேறிய, வயது முதிர்ந்த, முதிய ; நெடுங்காலமாக இருக்கிற.

**age'ing**, *n.* முதுமைப்படுதல் ; முதுமைப் பண்பு வளர்ச்சி ; முதிர்ச்சி ; (இயற்கை வெப்பம் குளிர்ச்சி காரணமாக சில உலோகங்களில்) காலப்போக்கில் ஏற்படும் மாறுபாடு.

**age'less**, *a.* என்றும் இளைய ; மூவாத ; காலங்கடந்த, காலத்தின் சுவடு படியாத.

**a'gency**, *n.* செயலாண்மை, செயற்பாடு ; காரகம், செயல் துணை ; செயல்முதல் ; அரசாங்கப் பேராளின் ஆட்சி வட்டாரம் ; முகவர் நிலை ; முகவர் தொழில், பதிலாண்மை ; வாணிகத் துறை நிறுவனம்.

**agen'da**, *n.* நிகழ்ச்சிநிரல், செயற்பாலன; நினைவுக் குறிப்பேடு.

**a'gene**, *n.* மாவை வெண்மையாக்கக் கையாளப்படும் வேதியியல் பொருள், வெடிய உப்பாசிகை.

**a'gent**, *n.* இயக்கி ; செயல் முதல்வர் ; செயல்முதல், செயலி ; காரகி, சடப்பொருள் மேல் தொழிற்படுகிற இயற்கை ஆற்றல்; முகவர், காரகர், ஒருவருக்காகச் செயலாற்றுபவர் ; பொருளக மேலாள் ; பதிலாள் ; அரசியற் பேராள், அரசாங்கத்தின் பிரதிநிதி.

***agent provocateur***, (பிர.) *n.* உள் உளவாள், குற்றவாளிகளுடன் உறவாடி அவர்களைக் கண்டுபிடிக்க அமர்த்தப்படும் ஆள்.

**agg'er**, *n.* செயற்கை அரண், மணமேட்டு அரண்; மர அரண்; செய்குன்று.

**agglom'erate**[1], *n.* (மண்.) வெந்திரள் பாறை, எரிமலை வெப்பத்திடையே உருவான பல்திரட்பாறை; *a.* திரண்ட, சேர்ந்த, செறிந்த; (தாவ.) கொத்தான.

**agglom'erate**[2], *v.* உருட்டு, திரட்டு, பந்தாக்கு, உருண்டையாக்கு; சேர்ந்து திரள்.

**agglom'erated**, *a.* பல்திரட்டான.

**agglomera'tion**, *n.* உருட்சி, திரட்சி, பல்கூட்டு.

**agglom'erative**, *a.* திரண்டு உருவான.

**agglut'inant**, *a.* ஒன்றுக்குகிற, ஒட்டவைக்கிற.

**agglut'inate**, *a.* சேர்த்து ஒட்டப்பட்ட; (மொழி.) ஒட்டியலான, சொல்லுடன்சொல் பகுதிநிலையிலேயே மாறுமல் இடையிட்டின் உதவியின்றி இணையும் இயல்புடைய; *v.* சேர்த்து ஒட்டு, சேர்த்து ஒன்றுபடுத்து; பொருந்தச்செய்; பொருந்து, ஒன்றுபடு; கூழாக்கு; கூழாகு; சொற்பகுதிகளை நேரடியாகச் சேர்.

**agglutina'tion**, *n.* ஒட்டுதல், ஒட்டி உருவான திரட்சி; (உயி.) அணு உயிர் ஒட்டுத் திரள்; குருதியணு ஒட்டுத் திரள்.

**agglut'inative**, *a.* நேரடியாக ஒட்டும் இயல்புடைய; (மொழி.) சொற்கள் பகுதியுருவிலேயே நேரடியாக ஒட்டும் இயல்புடைய.

**agg'randise**, *v.* மிகைப்படுத்து, பெருக்கு, ஆற்றல் பெருக்கு; செல்வம் திரட்டு; தரம் உயர்த்து; புனைந்து பெருக்கமாக்கு.

**aggran'disement**, *n.* பெருக்குதல்; செல்வாக்கு வளர்த்துக் கொள்ளுதல்.

**agg'randize**, *v.* = aggrandise.

**aggran'dizement**, *n.* = aggrandisement.

**agg'ravate**, *v.* மேலும் கேடாக்கு, தீங்கு பெருக்கு; சினமூட்டு.

**agg'ravating**, *a.* எரிச்சலூட்டுகிற.

**aggrava'tion**, *n.* தீங்கு பெருக்குதல்; சினமூட்டுதல்.

**agg'regate**, *n.* திரள், கூட்டு, கும்பு; முழுமொத்தம்; திண்காரை, பசை மண்ணோடு பிற பொருள் கலந்து உருவாக்கப்படும் நீற்றுமண்; (இய.) ஓரினத்தொகை, ஒரே இயல்புள்ள அணுக்களின் திரட்சி; *a.* வகை தொகைப்பட்ட, ஒருங்கு திரண்ட, ஒருங்கிணைத்த, ஒரே மொத்தமான; கூட்டாக வாழ்கிற, கொத்தாக வளர்கிற, ஒரே பூங்கருவிலிருந்து தொகுதியாக வளர்கிற; *v.* ஒருங்கு திரட்டு, மொத்தமாக்கு, உறுப்பாக இணை; கொண்டு கூட்டு, ஒன்றுசேர்த்து இணை, திரள்; மொத்தமாகு.

**aggrega'tion**, *n.* ஒருங்கிணைத்தல்; ஒன்றுசேர்தல், மொத்தமாதல், மொத்தம்; திரட்சி.

**agg'regative**, *a.* சேர்ந்து திரளும் இயல்புடைய.

**aggress'**, *v.* வலியச் சண்டைக்குப் போ.

**aggress'ion**, *n.* பகைமைத் தொடக்கம், வலியத் தீங்கு செய்தல், வலுச்சண்டைக்குப் போதல்.

**aggress'ive**, *n.* வலியத்தாக்கும் தன்மை, மீச்செலவு; *a.* தாக்குதல் தொடங்குகிற, வலியச்சண்டை செய்ய முனைகிற.

**aggress'or**, *n.* வம்புச்சண்டைக்காரர், வலுச்சண்டைக்குச் செல்பவர்.

**aggrieve'**, *v.* துன்புறுத்து, இன்னு செய்.

**aggrieved'**, *a.* பொல்லாங்குக்கு ஆளான, தீங்கிழைக்கப்பட்ட; மனக்குறையுடைய.

**aghast'**, *adv.* திகைத்து, திகிலுண்டு.

**ag'ila**, *n.* அகில் மரம்.

**a'gile**, *a.* விரை திறமுடைய, விரைவெளிமையுடைய, விரைவு ஒசிவுடைய, விரை நெளிவான.

**agil'ity**, *n.* விரைவூக்கம், விரைவியக்கம்.

**ag'ing**, *n.* = ageing.

**a'gio**, *n.* வட்டம், நாணயம் மாற்றி வருவதற்காகக் கொடுக்கும் கூலி; வாசி, நாணயத் தேய்மான ஈடு; இடைவட்டம், இரு நாணய முறைகளுக்கு இடையிலுள்ள சொற்ப வேறுபாடு; வெளிநாட்டு மாற்றுமுறிக்குரிய கழிமானம்; நாணய மாற்றுத் தொழில்.

**a'giotage**, *n.* நாணயமாற்றுத்துறை; பங்கு மாற்றுத்துறை; பங்குக்களவேட்டை; பங்கு வாணிகத்தொழில்.

**agist'**, *v.* கூலிக்காக மேய்ச்சலுக்குக் கொண்டுசெல்; தீர்வை விதி.

**agist'er**, *n.* கால்நடை மேய்ச்சல் அலுவலர்.

**agist'ment**, *n.* மேய்ச்சலுக்குக் கொண்டு செல்லுதல்; தீர்வை விதித்தல்; மேய்ச்சற் கூலி; தீர்வை.

**agist'or**, *n.* = agister.

**a'gitate**, *v.* ஆட்டு; அசை; அமைதிகலை; கலக்கு, உணர்ச்சி கிளறு, இயக்கம் உண்டுபண்ணு, கிளர்ச்சி செய்; சூழ், சூழ்ந்து ஆய்வுசெய்; விவாதி.

**agita'tion**, *n.* கலக்கம், குழப்பம், கலவரம், கிளர்ச்சி; விவாதம்; எழுச்சி.

**ag'itative**, *a.* கிளர்ச்சி செய்யும் இயல்புடைய.

*agita'to*, (இத்.) *adv.* (இசை.) நடுங்கிசையாக.

**a'gitator**, *n.* கிளர்ச்சிக்காரர்; கலக்கி, கலக்குவதற்கான கருவி.

**ag'let**, *n.* பின்னல் வாரிழையின் உலோகப்பிடி; தொங்கட்டம்; உடையின் பகுதியான உலோகப்பூண்; தோள் உடையணி; மரவகைகளின் குஞ்சம்.

**aglow'**, *a.* கடுஞ்சூடான; *adv.* ஒளி திகழ்ந்து, ஒளிவிட்டு.

**ag'nail**, *n.* விரல்சுற்றி, உகிர்ச்சுற்று, நகச்சுற்று, நகத்தடியில் உரிந்த தோல்; தசைக்காழ்ப்பு.

**ag'nate**, *n.* ஞாதி, பங்காளி, ஆண்வழி உறவினர்; உறவினர், ஒரு குலத்தவர்; *a.* தந்தைவழி உறவுடைய, ஆண்வழி உறவுடைய, ஆண்வழித்தொடர்புடைய; ஒருகுலஞ் சார்ந்த, ஒரே குலமுதல்வன் வழிவந்த.

**agna'tion**, *n.* ஓரின உறவு.

**agnom'en**, *n.* பண்டை ரோமாபுரியினர் (Roman) மேற்கொண்ட நான்காவது பெயர்; பட்டப்பெயர், செல்லப்பெயர்.

**agnos'tic**, *n.* உலோகாயத வாதி; அறியொணுமைக் கொள்கையினர், காணுப்பொருளை அறியமுடியாது என்பவர்; *a.* உலோகாயதம் சார்ந்த.

**agnos'ticism**, *n.* உலோகாயத வாதம்; கடவுள் உண்டு என்பதைக் கண்டறிய முடியாது என்னும் கொள்கை.

*Ag'nus Cas'tus*, (ல.) *n.* கற்புமரம், கற்பைக் காப்பதாக முன்னுட்களில் கருதப்பட்ட மரம்.

**ago'**, *adv.* முற்பட்டு, முன்னுள், முந்தி.

**agog'**, *adv.* ஆவலுடன், ஆர்வத்துடன்; எதிர்நோக்கி.

**agone'**, *adv.* = ago.

**agon'ic**, *a.* கோணம்படாத.

**ag'onise**, *v.* சித்திரவதை செய், வேதனைப்படுத்து; வாதனைப்படு, வெந்துயரில் இனை; மல்லாடு, அரங்கத்திற் போராடு; கடுமுயற்சி செய்.

**ag'onist**, *n.* பொதுப்பந்தய விளையாட்டுக்களில் போட்டியிடுபவர்.

**agonis'tic, agonis'tical**, *a.* வீரப்போட்டிகளுக்குரிய, மல்லாட்டம் சார்ந்த.

**agonist'ics**, *n.* வீரப் போட்டிப்பந்தய விளையாட்டுக்கலை.

**ag'onize**, *v.* = agonise.

**ag'ony**, *n.* சாத்துயர், மரணவேதனை; இயேசுநாதரின் திருவாதனை; கடுந்துயர், வாதனை; மனவேதனை; ஆனந்தக் களிப்பு; கடும்போராட்டம், உயிர்ப்போராட்டம்; (தொ.) agony column, காணுமற்போனவர் பற்றிய செய்தி முதலியவை தாங்கிய பத்திரிகை விளம்பரப்பகுதி.

ag'ora, *n.* பேரவை, மன்றம் ; மன்றம் கூடுமிடம், அம்பலம் ; சந்தைக்களம்.
agoraphob'ia, *n.* திடல் மருட்சி, பொது இடங்களைத் தாண்டுதலில் அச்சம்.
agou'ti, agou'ty, *n.* சீமைப்பெருச்சாளி போன்ற கொறிக்கும் உயிரினம்.
agraph'ia, *n.* எழுத்தாளர் விசிப்பு, மூளைநோய் அல்லது படுகாயம் காரணமாக எழுதும் ஆற்றலை இழத்தல்.
agrar'ian, *n.* நில உடைமையை மறுபங்கீடு செய்ய வேண்டுமென்ற கோட்பாடுடையவர் ; *a.* நில உடைமை சார்ந்த, சாகுபடி நிலம் பற்றிய.
agrar'ianism, *n.* நிலநியாயப் பங்கீட்டுக் கோட்பாடு ; நில உடைமைமுறை மாறவேண்டுமென்று விரும்பும் அரசியல் இயக்கம்.
agree', *v.* ஒருமனப்படு ; பிடித்தமாயிரு ; உடன்படு, ஒப்புக்கொள், இணங்கு, ஒப்புதல் அளி, இசைவு தெரிவி ; ஒரு வழிநில் ; பொருந்து, ஒத்துப்போ, இணங்கிப்போ ; தீர்மானி; துணி ; (இலக்.) ஒத்திசை, இயைபாய் இரு.
agree'able, *a.* மனத்துக்குகந்த, பிடித்தமான ; இணங்குகிற, ஒத்துக்கொள்கிற ; ஒத்த, இசைந்த.
agree'ably, *adv.* இணக்கமாக ; ஒத்து, இசைவாக, இணங்க.
agree'ment, *n.* ஒப்பந்தம், உடன்படிக்கை ; கருத்தொற்றுமை ; இசைவு, இணக்கம், பொருத்தம் ; ஒப்புமை ; (இலக்.) ஒத்திசைவு, இயைபு.
*agrements,* (பிர.) *n. pl.* இணக்கப்பண்புகள், உகந்த சூழல்கள்.
agres'tic, *a.* வயல்களுக்குரிய ; நாட்டுப்புறமான, பண்படாத, திருந்தாத.
agricul'tural, *a.* வேளாண்மைக்குரிய ; உழவு சார்ந்த.
ag'riculture, *n.* உழவு, வேளாண்மை, விவசாயம்.
agricul'turist, *n.* வேளாண்மை செய்பவர், உழவர், விவசாயி.
ag'rimony, *n.* ரோசாச்செடியினம்.
ag'rimotor, *n.* இயந்திரக்கலப்பை.
agronom'ic, agronom'ical, *a.* நாட்டுப்புறப் பொருளியல் சார்ந்த, கிராமப் பொருளாதாரத்துக்கு ஒத்த.
agronom'ics, *n.* கிராமப்பொருளாதார நூல் ; நாட்டுப்புறப் பொருளியல் துறை.
agronom'ist, *n.* நாட்டுப்புறப் பொருளியல் மாணவர் ; கிராமப் பொருளாதார நூலார்.
agron'omy, *n.* நாட்டுப்புறப் பொருளியல் வாழ்வு ; கிராமப் பொருளாதாரம் ; உழவு வாழ்க்கை.
agrostol'ogy, *n.* புல்லின ஆராய்ச்சி.
aground', *adv.* கீழே, நிலத்தின் மேல் ; (கப்.) கடலில் ஆழங் குறைந்த அடிநிலத்தின்மீது.
agrox'one, *n.* களைகொல்லும் இபக்குநீர்க் கலவைச்சரக்கின் வாணிகப் பெயர்.
ag'ue, *n.* குளிர்காய்ச்சல், முறைக்காய்ச்சல், மலம்பனி; வலிப்பு.
ag'ued, a'guish, *a.* முறைக்காய்ச்சலால் பீடிக்கப்பட்ட ; நடுக்குகிற, மிகு குளிரான.
ah, *int.* ஆ ! ஓ !
aha', *int.* ஆகா ! அடடா !
ahead', *adv.* மேலும் ; முன்னுடி ; முந்தி ; நேராக ; தொடர்ந்து ; துணிந்து, ஊக்கமாக.
aheap', *adv.* ஒரே குவியலாக.
ahem', *int.* 'ஊ-கூம்' போன்ற கனைப்பொலி ; பேச்சிடையே நேரம் பெற எழுப்பப்படும் குரலிசைப்பு.
ahigh', *adv.* உயர, மேலே.
ahim'sa, *n.* (ச.) இன்னு செய்யாமை.
ahoy', *int.* (கப்.) அகவுதல் ; கூவியழைக்க உதவும் குரலிசைப்பு.
Ah'riman, *n.* (பண்டைப் பாரசிக சமயக் கோட்பாட்டின்படி) கேடுசூழ் தேவதை.
*a huis clos,* (பிர.) *adv.* கதவை மூடிக்கொண்டு ; தனிமையில்.
ahull', *adv.* (கப்.) பாயை மடக்கிக்கொண்டு.
ahun'gered, ahun'gry, *adv.* பசி வேதனைக்கு ஆளாகி.
a'i, *n.* தென்னமெரிக்கத் தேவாங்கு வகை.
aid, *n.* உதவி, உறுதுணை, ஒத்தாசை, சகாயம் ; உதவுபவர் ; உதவும் பொருள், கருவி ; துணைவன் ; துணைக்காரணம் ; துணைக்கலங்கள் ; துணைவரி ; இறைதிறை ; பொருளாயக் கடன், அரசருக்குக் கொடுக்கும் பண உதவி ; (சட்.) உரிமை ; உதவி ; *v.* உதவு, கைகொடு, துணையளி, ஆவன செய்து ஆதரி.
aid'ance, *n.* துணை, ஆதரவு.
aid'ed, *a.* உதவிபெற்ற, ஆதரவுபெற்ற.
aide'-de-camp, *n.* களத்துணைவர், அரசருடைய அல்லது ஆட்சியாளருடைய மெய்க்காப்பாளர் ; *pl.* *aides'-de-camp.*
aig'let, *n.* = aglet.
aig'rette, *n.* நாரைவகை ; நாரை இறகு ; இறகு ; குஞ்சம் ; கனித்துய் ; கனித்துய் போன்ற அணிகலன் வகை.
aig'uille, *n.* ஊசிப்பாறை; தொளைக்கருவி வகை; தொளைஊசி.
aiguillesque', *a.* ஊசிப்பாறை போன்ற.
aiguillette', *n.* = aglet.
ail, *n.* நோவு ; தொந்தரவு ; *v.* தொந்தரவு கொடு, துன்புறுத்து, தொல்லைக்காளாக்கு ; நோய்ப்பட்டிரு.
ail'eron, *n.* விமானச்சிறையின் ஓர மடக்கு ; கட்டிடச் சாய்விறக்கியின் அணைசுவர்.
ail'ing, *a.* நோய்வாய்ப்பட்ட ; உடல் நலிவுற்ற.
ail'ment, *n.* நோவு ; உடல் நலிவு ; நோய், பிணி.
aim, *n.* இலக்கு, குறி ; நோக்கம், குறிக்கோள் ; செயல் நோக்கம் ; உள்ளெண்ணம், உட்கோள் ; *v.* இலக்குவை, குறிபார் ; நாடு, நோக்கமாகக் கொள் ; குறியாகக் கொள் ; நாடி எறி, குறித்த திசையில் வீசு ; நாடித்திட்டமிடு, பெற எண்ணு ; அடைய முயற்சிசெய்.
aim'less, *a.* இலக்கற்ற, குறிக்கோளில்லாத.
*aine,* (பிர.) *n.* மூத்த மகன்.
air, *n.* காற்றுமண்டலம், காற்றுவெளி, வளிமண்டலம் ; சிறுகாற்று, காற்றுவீச்சு ; வாடை ; சூழ்வளி ; சூழ்திறன் ; தோற்றம் ; நடையியல்பு, நடையுடைத்தோற்றம் ; பாவனை; இறுமாப்பு; வெளியீடு, விளம்பரம்; இசைத்திறம், பண் நயம்; *v.* காற்றில் உலரவிடு ; காற்றுப் புகவிடு ; பகட்டாகக் காட்டு, பலரறிய அணி ; விளம்பரப்படுத்து ; உலாவச் செல் ; (தொ.) in the air, தெளிவற்ற நிலையில் ; உருவாகா நிலையில் ; on the air, ஒலி பரப்பிக்கொண்டு ; take air, பரவு ; take the air, காற்று வாங்கு.
air'-arm, *n.* படைத்துறையின் விமானக்கிளை, விமானப் படைத்துறை.
air'-ball, air'-balloon, *n.* சிறுவர் விளையாட்டுக்குரிய காற்றூட்டிய ஊதல் பை.
air'-base, *n.* விமானத்தளம், விமானத்துறை மூலதளம்.
air'-bath, *n.* வளி முழுக்கு, காற்றுூட இருத்தல் ; தனியழுத்தக் காற்றுப் பேழை, தனிப்பட்ட அழுத்தம் மிக்கதாகவோ அழுத்தங் குறைந்ததாகவோ அமைக்கப்படும் காற்றறை.
air'-bed, *n.* காற்றூட்டப்பட்ட மெத்தை, காற்று மெத்தை.
air'-bends, *n.* = aeroembolism.
air'-bladder, *n.* ஊதல் பை ; காற்றுப்பை ; மீனின் உள்ளுறுப்பு, மிதவைப்பை.
air'-borne, *a.* காற்றினுல் ஈர்த்துச் செல்லப்படுகிற ; காற்று வெளியில் உயரப்பறக்கிற ; காற்றூடான.

**air'brake,** *n.* அழுத்தம்பெற்ற காற்றினால் இயக்கப்படும் முட்டுக்கட்டை, விமான வேகத்தடைக்கருவி.

**air'-brick,** *n.* காற்றோட்டத்திற்கான இடைவெளியுடைய கற்செதுக்கம்.

**air'-bridge,** *n.* விமானப்பாதை இடையிணைப்பு.

**air'-brush,** *n.* அழுத்தம்பெற்ற காற்றினால் துளிசிதறி வண்ணம் தெளிக்கும் கருவி.

**air'-built,** *a.* காற்றுவெளியில் கட்டப்பட்ட, அடிப்படை இல்லாத; கற்பனையான.

**air'-bump,** *n.* விமானத்திற்கு அதிர்ச்சிதரும் காற்றின் செறிதிரள்; செறிதிரள் அதிர்ச்சி.

**air'-cavity, air'-cell,** *n.* (தாவ.) உயிரணுக்களின் இடையிலுள்ள காற்று இடைவெளி.

**air'-chamber,** *n.* நீர்விசைப்பொறிகளின் சம அழுத்தத்திற்குரிய காற்றறை.

**air'-chief-mar'shal,** *n.* விமான முதன்மைத் தளவாய்.

**air'-comm'odore,** *n.* விமானத் தானைமுதல்வர்.

**air'-condi'tioned,** *a.* காற்று வரைகாப்புடைய, விரும்பிய அளவுக்கேற்பத் தூய்மை வெப்பம் ஈரம் உடையதாகக் கட்டுப்படுத்தப்பட்ட காற்றையுடைய.

**air'-condi'tioning,** *n.* காற்றுக் கட்டுப்பாடு.

**air'-cooled,** *a.* காற்றில் ஆறிய.

**air'-cooling,** *n.* காற்றால் அமைந்த குளிர்ச்சி; காற்றில் ஆறுதல்.

**air'craft,** *n.* வான்கலம், வானில் இயங்கும் பல்வகை ஊர்திப் பொது; விமானங்கள்.

**air'craft-ca'rrier,** *n.* விமானம் தூக்குக்கப்பல், விமானத் தளக்கப்பல்.

**air'craftman, air'craftsman,** *n.* விமானப்படை கீழ்நிலை அலுவலர்.

**air'-cushion,** *n.* காற்றூட்டப்பட்ட மெத்தை, காற்று மெத்தை.

**air'-drawn,** *a.* கற்பனையான.

**air'-drop,** *n.* (படை.) வான்குடை மூலம் ஆட்கள் அல்லது சரக்குகள் நிலத்தில் வந்திறங்குதல்.

**Aire'dale,** *n.* வேட்டைநாய் வகை.

**air'-engine,** *n.* வெப்பம் அல்லது அழுத்தம் ஊட்டப்பட்ட காற்றினால் இயங்கும் விசைப்பொறி, காற்று இயந்திரம்.

**air'er,** *n.* உலாவுகிறவர்; துணி உலர்த்து சட்டம்.

**air'field,** *n.* விமானத்திடல்.

**air'-force,** *n.* விமானப்படை.

**air'-gap,** *n.* காந்த வட்டணையில் இடைவெளி; காற்றிடைவெளி.

**air'-gas,** *n.* ஒண்காற்று வளி, காற்றுடன் கல்லெண்ணெய் ஆவி அல்லது வேறு நீர்க்கரியப்பொருள் ஊட்டப்பெற்று ஒளிகாலும் காற்று வளி.

**air'graph,** *n.* விமான வழி அனுப்புவதற்காகச் சிற்றுருவில் நிழற்படமாக்கப்பட்ட கடிதம்.

**air'-grating,** *n.* காற்றோட்டக் கிராதி.

**air'-gun,** *n.* அழுத்தம் பெற்ற காற்றின் உந்து விசையால் இயக்கப்படும் துப்பாக்கி.

**air'hole,** *n.* காலதர், காற்றுப்புகும் புழைவாய்; பனிக்கட்டியின் பரப்பில் உயிர்கள் வந்து மூச்சுவிடுவதற்கு உதவும் புழைவாய்; வான் இடையிறக்க மண்டலம், இடையே காற்றின் அழுத்தக் குறைவாலோ கீழோட்டத்தாலோ விமானம் இறங்கிச் செல்லவேண்டி வருகிற காற்று மண்டலம்.

**air'-hostess,** *n.* விமானப்பாங்கி.

**air'ily,** *adv.* காற்றுப்போல; நுண்ணிதாக; ஊகமாக; திட்பமின்றி; விரைவூக்கமாக; கவலையின்றி; தொட்டுந் தொடாமல்.

**air'iness,** *n.* காற்றோட்டம்; காற்றுப்போன்ற தன்மை; நுண்மை; மென்மை; பளுவின்மை; ஆவிநிலை; விரைவியக்கம்; கவலையற்ற தன்மை; தொட்டுந்தொடாத நிலை.

**air'ing,** *n.* காற்றூடவிடல்; காயவைத்தல்; பொதுப்பார்வையில் வைத்தல்; உலாப்போதல்.

**air'-jacket,** *n.* வெப்பம் குறைவதை அல்லது கூடுவதைத் தடுக்கவோ நீரில் மிதக்கும்படி பளுக்குறைக்கவோ அணியப்படும் காற்றுறைச் சட்டை.

**air'less,** *a.* காற்றில்லாத; காற்றோட்டமில்லாத; காற்று அகற்றப்பட்ட; காற்று வெளித்தொடர்பற்ற; காற்று இறுக்கமான.

**air'-lift,** *n.* காற்றியக்க மூலம் தடையைக் கடக்கச் செய்யும் அமைப்பு; விமானத்தூக்கல், நிலவழி அடைபட்ட நிலையில் பிரயாணிகளையும் பொருள்களையும் விமானமூலம் எடுத்துச் செல்லும் முறை.

**air'line,** *n.* வானெறி, விமானப்பாதை.

**air'liner,** *n.* பெரிய பயணவிமானம்; வானெறிப்போக்குவரத்து விமானம்

**air'-lock,** *n.* காற்றழுத்தத்தைக் கூட்டவும் குறைக்கவும் வாய்ப்புடைய காற்றுப்பேழை; குழாயில் நீர்ம ஓட்டத்தைத் தடுக்கும் குமிழி.

**air'mail,** *n.* விமான அஞ்சல்.

**air'man,** *n.* விமானி; பறந்து செல்லும் மனிதர்.

**air'manship,** *n.* விமானம் செலுத்தும் கலை.

**air'-mar'shal,** *n.* விமானப்படைத் தளவாய்.

**air'-mechan'ic,** *n.* விமானம் பழுது பார்ப்பவர், விமானப் பொறி அலுவலர்.

**air'-minded,** *a.* வான்செலவு விருப்புடைய, விண்ணிவர் ஆர்வமுடைய.

**air'officer,** *n.* விமான அதிகாரி.

**air'plane,** *n.* விமானம், வானூர்தி.

**air'plant,** *n.* ஒட்டுயிராய் இராமலே செடிமீது வளரும் செடி.

**air'-pocket,** *n.* காற்றழுத்தக் குறைவினாலோ காற்றின் கீழோட்டத்தினாலோ விமானம் சட்டென்று இறங்க நேரும் காற்று வெறுமை.

**air'-power,** *n.* விமானப்படைவலிமை.

**air'-pump,** *n.* காற்றுவாங்கி; காற்றூட்டி.

**air'-raid,** *n.* விமானத்தாக்குதல்.

**air'-sac,** *n.* புற நுரையீரல், உடலின் பளு குறைக்கவும் மூச்சுவிடவும் இருவழியிலும் பயன்படுகிற பறவைகளின் நுரையீரலின் வெளிப்புடைப்பு; பூச்சி இனத்தின் குரல்வளை விரிவு.

**air'-screw,** *n.* விமானத்தின் உந்துவிசை.

**air'-shaft,** *n.* காற்றுப்புழை, சுரங்கத்தினுள் காற்று செல்லுதற்குரிய வழி.

**air'ship,** *n.* இயந்திர விசையால் செலுத்தப்படும் வான்கூண்டு, பறவைக்கப்பல்.

**air'sick,** *a.* விமானப் பயணக் குமட்டலுடைய.

**air'-sickness,** *n.* விமானப்பயணக் குமட்டல்.

**air'-space,** *n.* காற்றின் பரும அளவு, மூச்சு விடுவதற்கு உரிய காற்றின் கன அளவு; (தாவ.) உயிரணுக்களின் இடையிலுள்ள காற்று இடைவெளி.

**air'-stop,** *n.* முகட்டு விமான நிலையம்.

**air'-strip,** *n.* தற்காலிகமாக விமானம் இறங்கப் பயன்படும் திட்டு.

**air'-thermom'eter,** *n.* பாதரசத்திற்குப் பதிலாகக் காற்று வழங்கப்படும் வெப்பமானி.

**air'-threads,** *n.* நூலாம்படை, சிலம்பி நூல்.

**air'-tight**, *a.* காற்று இறுக்கமான, காற்றுப்புகாத; எதிரியின் தாக்குதலுக்கு இடங்கொடாத.
**air-to-air**, *a.* வானூர்தியிலிருந்து வானூர்திக்கு மாறுகிற; *adv.* வானூர்தியிலிருந்து வானூர்திக்கு.
**air'-trap**, *n.* நச்சுக்காற்று வெளிச்செல்லாமல் காக்கும் அமைவு.
**air'-truck**, *n.* சரக்குத்தூக்கி விமானம்.
**air'vice-mar'shal**, *n.* விமானத் துணைத்தளவாய்.
**air'ward**, **air'wards**, *adv.* மேல் மண்டலத்தில்.
**air'way**, *n.* சுரங்கத்தில் காற்றுச் செல்லும் வழி, காற்று வாங்கி; வானெறி, விமானப்பாதை.
**air'ways**, *n. pl.* வானெறிக்குழுப்பெயர்.
**air'-woman**, *n.* பெண் விமானி.
**air'worthy**, *a.* பறக்கத் தகுதி வாய்ந்த.
**air'y**, *a.* காற்றுலான; காற்றடங்கிய; காற்றுச்சார்பான; காற்றுப் போன்ற; காற்றோட்டமான; பொருண்மையற்ற; ஆவிபோன்ற; விரை துடிப்புடைய; கவலையற்ற; தொட்டுந் தொடாத; உயர்ச்சிமிக்க; மெல்லிதான; மென்னடை வாய்ந்த; மென்னயமான; நுண்ணயமான; மேற்போக்கான; சிறுபிள்ளைத்தனமான.
**aisle**, *n.* கோயிலின் திருச்சிறை, பக்கச்சிறை, பிரகாரம்; இடைகழி.
**ait**, *n.* சிறுதீவு, ஆற்றின் சிறு துருத்தி.
**aitch'bone**, *n.* பிட்ட எலும்பு, மாட்டின் பிட்டதசைக்கறி.
**ajar'**, *adv.* சிறிது திறந்து; செவிக்கு அருவருப்பாக.
**aju'tage**, *n.* = adjutage.
**akim'bo**, *adv.* கைமுட்டு மடக்கி இடுப்பில் வைத்த நிலையில்.
**akin'**, *adv.* குருதித்தொடர்புகொண்டு; அணிமை உறவு தாங்கி; ஒத்த இயல்புற்று.
**a'la**, *n.* (தாவ.) காய்கனியின் மேல்தாள் வளர்ச்சி; பயற்றினத்தில் பக்க இதழ்; காம்பலகு; (வில.) எலும்பின் இறகு போன்ற புற வளர்ச்சி.
**al'abaster**, *n.* வெண்சலவைக்கல், நிலாக்காந்தக்கல்; *a.* வெண்சலவைக்கல்லாலான; வெண்சலவைக்கல் போன்ற; வெண்ணிறமான; வழவழப்பான.
***a la carte***, (பிர.) *adv.* உணவுப்பட்டியலின்படி.
**alack'**, *int.* அந்தோ! ஐயோ!
**alack'-a-day**, *int.* அந்தோ என்ன காலம்! அந்தோ காலம் இருந்தவாறு என்னே!
**alac'rity**, *n.* சுறுசுறுப்பு; முந்தார்வம்.
**Aladd'in's lamp**, *n.* வேண்டுவதளிக்கும் மந்திரச் செப்பு.
**ala'lia**, *n.* நாத்தடை, பேச்சாற்றல் இழத்தல்.
**a'lamode**, *n.* பளபளப்பான மெல்லிய கரும்பட்டு வகை; *a.* புத்தம் புதுப்பாணியிலுள்ள; (தொ.) alamode beef, காய்கறிகளுடன் சேர்த்து அளிக்கப்படும் மாட்டிறைச்சித் துண்டுகள்.
***a la mode***, (பிர.) *a.* புது நாகரிகமான; *adv.* காலத்திற்கேற்ற புதுமைப்போக்கில்.
**alamort'**, *a.* குற்றுயிரான; மனம் நொந்த, கிளர்ச்சியற்ற.
**aland'**, *adv.* நிலத்தின்மீது, கரைமீது.
**a'lang-a'lang**, *n.* கோரைப்புல்வகை.
**al'ar**, *a.* சிறகு சார்ந்த; சிறகுபோன்ற; சிறகு வடிவமைந்த.
**alarm'**, *n.* போரெழுச்சிக்கான ஆர்ப்பொலி, போர் முரசு, செருப் பறை; அபாய அறிவிப்பொலி; எச்சரிக்கை; பீதி, கிலி; சிலம்பத் துறையில் ஒருகால் முன்னெடுத்துவைத்து நிலத்தில் அறைதல்; *v.* அதிர்ச்சியெழுப்பு; போரெழுச்சிக்கான அழைப்பாணை யிடு; அபாயம் உணர்த்தும் ஆர்ப்பொலி செய்; இடர் உணர்த்தி விழிப்பூட்டு; கிலியூட்டு; அச்சுறுத்திக் கலக்கமுண்டாக்கு; கிளறு.

**alarm'-bell**, *n.* எச்சரிக்கை மணி; ஆராய்ச்சி மணி.
**alarm'-clock**, *n.* அதிரல் கடிகாரம், விழிப்பு மணி அமைப்புடைய கடிகாரம்.
**alarmed'**, *a.* குழப்பமடைந்த, கலவரமடைந்த.
**alarm'ing**, *a.* அச்சந்தருகிற, கவலைக்கிடமான.
**alarm'ist**, *n.* பொய் அரவம் எழுப்புபவர்; வீண் பீதி பரப்புபவர்; *a.* பீதி பரப்புகிற.
**alarm'-post**, *n.* போரார்ப்பு வேளையில் படைவீரர் வந்து கூடவேண்டிய இடம், போரரவக் குறியிடம்.
**ala'rum**, *n.* கடிகாரத்தின் அதிர்மணியோசை; எச்சரிக்கை.
**al'ary**, *a.* =alar.
**alas'**, *int.* 'அந்தோ!' 'அச்சோ!' 'ஐயகோ!' போன்ற வியப்பிடைச்சொல்.
**Alas'tor**, *n.* பழிவாங்கும் தெய்வம்; பழிக்குப்பழி.
**alas'trim**, *n.* சின்னம்மை நோய் வகை.
**al'ate**, **al'ated**, *a.* சிறகுடைய; சிறகு வடிவ எலும்பமைப்புடைய.
**alb**, *n.* கால்வரை நீண்ட வெள்ளை அங்கி.
**al'bacore**, *n.* பெருங்கடல் உணவு மீன்வகை.
**Alban'ian**, *n.* ஸ்காத்லாந்து (Scotland) நாட்டுக்குடிமகன்; *a.* அந்நாட்டைச் சார்ந்த.
**Al'bany**, *n.* பிரிட்டனின் பழைய பெயர்.
**albat'a**, *n.* வெள்ளி உலோகவகை, 'செர்மன் வெள்ளி' வகை.
**al'batross**, *n.* பறக்கும் பேராற்றலுடைய கடல்வாழ் பறவை வகை.
**albe'do**, *n.* வெண்மை; கோள்களின் வாங்கொளி விகிதம்; ஒளி திருப்பும் திறன்.
**albe'it**, *conj.* இருந்தபோதிலும், எனினும்.
**al'bert**, **Al'bert chain**, *n.* கைக்கடிகாரச் சிறுசங்கிலி.
**Albert Hall**, *n.* இங்கிலாந்தில் கென்சிங்டன் (Kensington) பகுதியிலுள்ள இசைத்திற விளக்க மண்டபம்.
**albesc'ence**, *n.* வெண்மையாதல்.
**albes'cent**, *a.* வெண்மையாகிற; வெளிறிய.
**Albigen'ses**, *n. pl.* தென் பிரான்சில் 12—14-ஆம் நூற்றூண்டுகளில் நிலவிய முரண்சமயக்குழுவினர்.
**albi'ness**, *n.* பாண்டு நோய்க்காட்பட்டவள்.
**albi'no**, *n.* பாண்டு நோய்க்காளானவர்; பாண்டு நோய்க்காட்பட்ட உயிரினம்; வெளிறிய செடி; *pl.* albi'nos.
**albinot'ic**, *a.* பாண்டுநோயுடைய; பாண்டு நோய் சார்ந்த.
**Al'bion**, *n.* பண்டைக்காலத்திற் பிரிட்டனுக்கு வழங்கிய பெயர்.
**al'bite**, *n.* வெண்ணிறமுடைய அல்லது வண்ணக் கலப்புடைய களிமப்பாறை வகை.
**albugin'eous**, *a.* முட்டையின் வெண்கருப்போன்ற.
**al'bum**, *n.* வெள்ளேடு, சேகர ஏடு, நிழற்படங்கள் கையெழுத்துக்கள் மேற்கோள்கள் அஞ்சல்தலைகள் முதலியவற்றைச் சேர்த்து வைப்பதற்குரிய செருகேடு.
**album'en**, *n.* முட்டை வெண்கரு; (வில.) உயர்தர உயிரினங்களின் முட்டையில் மஞ்சட்கருவைச் சுற்றியுள்ள புரதங்கலந்த உணவுப்பொருள்; (தாவ.) விதைகளில் கருமுளையைச் சுற்றியுள்ள உணவுப்பொருள்.
**album'enise**, **album'enize**, *v.* (நி.ப.) வெண்கரு அல்லது வெண்கருக்கலவையின் கரைசல் பூசு; வெண்கருக்கலவை தோய்.
**albu'min**, *n.* கருப் புரதம், நீரில் கரையக்கூடியதும் கரைந்து வெப்பத்தால் கட்டியாகக் கூடியதுமான புரதவகை.

**albu'minate,** *n.* கருப் புரதத்திலடங்கிய காரச்சேர்மானம்.

**album'inoid,** *n.* ஊன்செய் புரதவகை ; *a.* வெண்கருப் போன்ற.

**albu'minous,** *a.* வெண்கரு அல்லது கருப் புரதம் போன்ற ; வெண்கரு அல்லது கருப் புரதம் அடங்கிய ; உப்புச்சப்பற்ற.

**albuminur'ia,** *n.* வெண்ணீர் நோய், சிறுநீரில் கருப் புரதம் இருக்கும் நோய்.

**alburn'ous,** *a.* மென்மரம் சார்ந்த.

**alburn'um,** *n.* உள்மரப்பட்டைக்கும் உட்காழுக்கும் இடையிலுள்ள மென்மரம்.

**al'cahest,** *n.* = alkahest.

**Alca'ic,** *a.* அல்கேயஸ் (கி. மு. 600) என்ற கிரேக்க கவிஞருக்குரிய ; அல்கேயஸ் படைத்த பாவகையைச்சார்ந்த.

**Alca'ics,** *n.* அல்கேயஸ் பாவகை.

**alchem'ic, alchem'ical,** *a.* இரசவாதம் சார்ந்த.

**al'chemise, al'chemize,** *v.* இரசவாதம் செய், பொன் மாற்றுச்செய், மட்ட உலோகங்களைப் பொன்னுக்கு ; மட்டமான பொருளை உயர்தரப் பொருளாக மாற்று.

**al'chemist,** *n.* இரசவாதி, பொன்மாற்றுச்சித்தர்.

**alchemis'tic, alchemis'tical,** *a.* = alchemic.

**al'chemy,** *n.* இரசவாதம் ; மட்ட உலோகங்களைப் பொன்னுக்கும் முயற்சி ; இடைப்படு காலத்திய வேதியியல்.

**al'cohol,** *n.* வெறியம், சாராயச்சத்து, சர்க்கரைக் கலவைகளிலிருந்து வடித்தெடுக்கப்பட்ட வெறியச்சத்து; சாராய வகை ; நீர்க்கரிமக் கலவைவகை.

**alcohol'ic,** *n.* மட்டுமிஞ்சிய குடிக்கு ஆட்பட்டவர் ; *a.* வெறியம் சார்ந்த ; வெறியம் கலந்த ; வெறிக்குடிவகை சார்ந்த ; வெறிக்குடிவகை காரணமான, மட்டுமிஞ்சிய குடிக்கு ஆட்பட்ட.

**alcoholisa'tion,** *n.* வெறியமாக மாற்றுதல் ; வெறியம் செறிவித்தல் ; வடித்துத் தூய்மையாக்கல்.

**al'coholise,** *v.* வெறியமாக மாற்று ; வெறியம்தோய் ; வடித்துத் தூய்மைப்படுத்து.

**al'coholism,** *n.* வெறிய விளைவு, வெறிய நச்சுத்தன்மை.

**al'coholist,** *n.* வெறிக்குடி ஆதரவாளர் ; வெறிக்குடியர்.

**alcoholiza'tion,** *n.* = alcoholisation.

**al'coholize,** *v.* = alcoholise.

**alcoholom'eter,** *n.* வெறியமானி, வெறியக்கலவையில் வெறியவிகிதம் அளக்கும் கருவி, மதுவகைகளில் வெறியச் செறிவை மதிப்பிடுவதற்கான கருவி.

**alcoholom'etry,** *n.* வெறியச் செறிவின் அளவு.

**al'cove,** *n.* அறையின் ஒதுப்புறம் ; கவிகைமாடம், மாடக்குழி ; பள்ளியறை ; வேனிலகம்.

**al'dehyde,** *n.* உயிரகம் ஊட்டப்படுவதால் இருநீரக அணுக்கள் குறைவுபட்ட வெறியம் ; எளிதில் ஆவியாய்ப்போகிற நெடிவீசும் நீர்மம்.

**al'der,** *n.* பூர்ச்சமரம் போன்ற மரவகை.

**al'derman,** *n.* நகரத்தந்தை, மூப்பர், நகராட்சிக்குழு உறுப்பினர் ; சாத்து முதல்வர் ; வணிகக்குழுத் தலைவர் ; *pl.* al'dermen.

**al'dermanic,** *a.* நகரத்தந்தைக்குரிய.

**al'dermanlike, al'dermanly,** *a.* ஆரவாரமான; பீடுடைய.

**al'dermanry,** *n.* நகரத்தந்தை ஆட்சிவட்டாரம் ; நகரத்தந்தையின் படிநிலை.

**Al'dine,** *a.* 16-ஆம் நூற்றாண்டில் ஆல்டஸ் (Aldus) என்ற வெனிஸ் நகரத்தவர் பெயரால் வழங்கிய அச்சுருப் படிவம் சார்ந்த.

**ale,** *n.* மாவடி, கோதுமை வாற்கோதுமை முதலியவற்றின் மா ஊறலிலிருந்து வடித்தெடுக்கப்படும் மதுவகை.

**al'eatory,** *a.* குருட்டாம்போக்கான ; சூதாட்டப்பாங்கான ; வருநிலைப்போக்கினைச் சார்ந்த.

**ale'bench,** *n.* மதுக்கடையிலுள்ள அமர்பலகை.

**ale'-berry,** *n.* அப்பத்துண்டுகளிட்டுச் சுவையூட்டப்பட்ட மாவடித் தேறல்.

**ale'-conner,** *n.* மதுவின் தர ஆய்வாளர்.

**alecost,** *n.* மாவடித் தேறலைச் சுவையூட்ட வழங்கப்படும் மணப்பூண்டு வகை.

**alee',** *adv.* (கப்.) காற்றுக்கொதுங்கிய பக்கத்தில் ; காற்றின் திசையில் ; காற்றுச் செல்கிற திசையில்.

**aleft',** *adv.* இடதுபுறத்தில் ; இடதுபுறம் நோக்கி.

**al'egar,** *n.* புளிப்பு மாவடிக்காடி.

**ale'hoof,** *n.* நிலம்படர்க்கொடி வகை.

**ale'-house,** *n.* மதுக்கடை.

**Alemann'ic,** *n.* தென் செர்மனி நாட்டுமொழி வகை ; *a.* தென்மேற்கு செர்மனியிலுள்ள பண்டைமொழிக் குழுவினரைச் சார்ந்த.

**alem'bic,** *n.* பழங்கால வடிகலம்.

**alerce',** *n.* சாந்தரக்கு மரக்கட்டை.

*alerion, allerion,* (பிர.) *n.* (கட்.) காலும் அலகும் இன்றிக் காட்டப்படும் பருந்து வடிவம்.

**alert',** *n.* இடையரு விழிப்பு ; எச்சரிக்கை ஒலி, எச்சரிக்கை அறிவிப்பு, திடீர்த்தாக்கு, அதிர்ச்சி ; விமானத் தாக்குதல் எச்சரிக்கை ; விமானத்தாக்கு எச்சரிப்புக்குரிய இடர்நேரம் ; *a.* விழிப்பான, உன்னிப்பான ; சுறுசுறுப்பான ; *v.* எச்சரிப் பூட்டு, விழிப்புடன் இருக்கச்செய்.

**ale'-taster,** *n.* = ale-conner.

**aleur'on, aleur'one,** *n.* சிலவகை விதைகளில் காணப்படும் புரதவகை.

**ale'-wife,** *n.* மது விற்பனை செய்யும் பெண் ; வட அமெரிக்க மீன்வகை ; *pl.* ale'wives.

**Alexan'drian,** *a.* எகிப்து தேசத்து (Egyptian) அலெக்ஸாண்டிரியா நகரத்திற்குரிய ; கி. பி. தொடக்க நூற்றாண்டுகளுக்குரிய எகிப்திய நாகரிகம் சார்ந்த; அலெக்ஸாண்டிரியா நகரத்திற்குரிய பிற்கால கிரேக்க நாகரிகம் சார்ந்த.

**Alexan'drine, alexan'drine,** *n.* அடிக்குப் பன்னிரண்டு அசைகொண்ட பாவகை ; *a.* அடிக்குப் பன்னிரண்டு அசை கொண்ட பாவகையைச் சார்ந்த.

**alexan'drite,** *n.* பச்சைக்கல்வகை.

**alex'ia,** *n.* வாசிக்க இயலாமை ; சொற்குருடு, பார்க்கும் சொற்களை உணர்ந்து வாசிக்க முடியாத மூளைநோய் நிலை.

**alex'in,** *n.* குருதியில் நோயணுக்களை அழிக்கும் திறனுடைய புரதவகை.

**alexiphar'mic,** *n.* நஞ்சுக்கு மாற்றுமருந்து ; *a.* நஞ்சுக்கு மாற்று மருந்தான.

**alfal'fa,** *n.* மணப்புல் வகை.

**alfres'co,** *a.* திறந்தவெளியிலுள்ள ; *adv.* ஈரச்சாந்தில் ; திறந்த குளிர்காற்று வெளியில்.

**al'ga,** *n.* கடற்பாசி வகை ; பாசி வகை ; *pl.* al'gae.

**al'gal,** *a.* கடற்பாசிக்குரிய.

**al'gebra,** *n.* குறிக்கணக்கியல், இயற்கணிதம், எண்களுக்குப் பதிலாகக் குறியீடுகளை வழங்கும் கணக்கியல்துறை.

**algebra'ic, algebra'ical,** *a.* குறிக்கணக்கியல் சார்ந்த.

**algebra'ist,** *n.* குறிக்கணக்கியலாளர், இயற்கணிதர்.

**al'gid,** *a.* குளிருற்ற, சன்னியுற்ற.

**algid'ity,** *n.* குளிர், சன்னி.

**algolag'nia,** *n.* துன்புறுத்தி அல்லது துன்பமேற்றுப் பெறப்படும் சிற்றின்ப நுகர்ச்சி, பெருந்திணை மகிழ்ச்சி.

**algol'ogy,** *n.* கடற்பாசி ஆய்வுத்துறை.

**al'gorism, al'gorithm,** *n.* அராபிய பதின்முறை இலக்கமானம் ; கணக்கு.

**al'gum,** *n.* அகில்.

**Alham'bra,** *n.* ஸ்பெயினைச் சார்ந்த கிரானடா (Granada) நாட்டு இஸ்லாமிய மன்னர் அரண்மனை.

**Al'hambraic, Alhambresque',** *a.* சித்திர வேலைப்பாடமைந்த ; அல்ஹம்பிராவின் சிற்ப மரபுக்குரிய.

**al'ias,** *n.* புனைபெயர், மறுபெயர்; *adv.* மாற்றாக, மறுபெயராக.

**al'iases,** *n. pl.* மறுபெயர்கள்.

**al'ibi,** *n.* (சட்.) பிறிதிடமிருப்புவாதம், வேற்றிட வாதம், குற்றஞ்சாட்டப்பட்டவர் குற்றம் நிகழ்ந்த இடத்திற்குத் தொலைவிலுள்ள பிறிதோரிடத்தில் இருந்தார் என்று காட்டப்படும் வாதம் ; பிறிதோரிடம் ; *adv.* பிறிதோரிடத்தில்.

**alicyc'lic,** *a.* (வேதி.) கொழுப்புச் சேர்மானம் மண்டலச் சேர்மானம் ஆகிய இரண்டின் பண்புகளும் இணைந்த.

**al'idad, al'idade,** *n.* உயரமானியிலும் கோணமானியிலும் அளவெண் காட்டும் முள்.

**al'ien,** *n.* அயலார், வெளியார், பிற இடங்களிலிருந்து கொண்டு வரப்பட்டு நிலைபெற்ற செடி அல்லது உயிரினம், வெளிவரவினம் ; *a.* பிறிதொன்றிற்குரிய ; புறம்பான, வெளியிடத்திற்குரிய ; விருப்பத்திற்கு ஒவ்வாத ; சூழலுக்கு உகவாத ; ஒத்திசைவற்ற ; இசைவு அறுபட்ட ; தனக்குரியதல்லாத ; புற ஆட்சிக்குரிய; முரணியல்பான; விலக்கப்பட்ட; *v.* அயலாக்கு, அன்னியமாக்கு, தொடர்பறு ; (சட்.) உடைமைமாற்று.

**alienabil'ity,** *n.* மாற்றிக்கொடுக்கப்படும் இயல்பு; அயலாகும் தன்மை.

**al'ienable,** *a.* உடைமை மாறுபடத்தக்க, கைமாற்றத்தக்க ; விலக்கத்தக்க ; துண்டாடத்தக்க.

**a'lienage,** *n.* அயலாக்குதல், அன்னியமாயிருத்தல்.

**al'ienate,** *a.* மனமுறிவுகொண்ட ; *v.* உடைமை மாற்று ; உறவு தொலைவாக்கு ; மனமுறிவுகொள்.

**aliena'tion,** *n.* உடைமை மாற்றம் ; பராதீனம் ; நட்புப் பிரிவு ; வேறு காரியத்திற்குப் பயன்படுத்துதல்.

**al'ienator,** *n.* உடைமை மாற்றுபவர் ; வேறுபாடு செய்பவர் ; பயன் திருப்பிவிடுபவர்.

**alienee',** *n.* உடைமை மாற்றிக் கொடுக்கப் பெறுபவர்.

**al'ienism,** *n.* அயன்மை ; மனப்பிணி ஆராய்ச்சி ; மனப்பிணி மருத்துவம்.

**al'ienist,** *n.* மனப்பிணி மருத்துவர் ; மனப்பிணி ஆராய்ச்சியாளர்.

**a'lienor,** *n.* உடைமை மாற்றிக்கொடுப்பவர்.

**al'iform,** *a.* சிறகு வடிவமுடைய.

**alight'** [1], *v.* இறங்கு, வானிலிருந்து இழி, வந்துவிழு ; தற்செயலாக வரப்பெறு.

**alight'** [2], *adv.* தீ வைக்கப்பட்டு ; ஒளியேற்றப்பட்டு, சுடர்விட்டு.

**align',** *v.* வரிசைப்படுத்து, ஒழுங்குபடுத்து ; வரிசையுடன் சேர், ஒரு நிலைப்படுத்து ; ஒழுங்குபடு, வரிசைப்படு.

**align'ment,** *n.* ஒழுங்குபடுத்துதல், வரிசைப் படுத்துதல் ; வரிசையில் சேர்த்தல், இணைப்பு ; வரிசை, ஒழுங்கு ; பாதைக்கோ இருப்புப் பாதைக்கோ உரிய நிலவரைத் திட்டம்.

**alike',** *a.* போன்ற, ஒத்த ; *adv.* அதுபோலவே ; சரியொப்பாகவே ; ஒத்த நிலையில் ; ஒருங்கே.

**al'iment,** *n.* உணவு, ஊட்டம் ; வாழ்வதற்கு வேண்டிய ஆதரவு ; *v.* உணவளி, ஊட்டு ; தாங்கு, ஆதரவளி, பேணு.

**alimen'tal,** *a.* உணவளிக்கிற ; இயற்கை வளர்ச்சிக்கு உதவுகிற.

**alimen'tary,** *a.* ஊட்டமளிக்கிற ; உணவூட்டம் சார்ந்த ; வாழ்க்கை ஆதாரம் வழங்குகிற.

**alimenta'tion,** *n.* உணவு வழங்கல், ஊட்டமளித்தல்; ஊட்டி வளர்த்தல்.

**aliment'ative,** *a.* உணவு சார்ந்த; உணவு விருப்பம் சார்ந்த.

**al'imony,** *n.* ஊட்டம் ; வளர்ப்பு ; (சட்.) வாழ்க்கைப்படி, பிரிந்துபோகிற அல்லது பிரிக்கப்பட்டுவிட்ட மனைவியின் சீவனாம்சம்.

**aline',** *v.* = align.

**aline'ment,** *n.* = alignment.

**al'iped,** *n.* காலோடு இணைந்த சிறகுடைய உயிரினம், வௌவால் ; *a.* காலோடு இணைந்த சிறகுடைய.

**aliphat'ic,** *a.* (வேதி.) கொழுப்புசார்ந்த ; மண்டலிக்காத, திறந்த தொடரினம் சார்ந்த ; உயிர்ச்சேர்மான வகைக்குரிய.

**al'iquant,** *a.* (கண.) சரி ஈவாகாத, மீதத்துடனேயே வகுக்கிற ; சரி நேர் கூறாகாத (எ-டு: 12-க்கு 5:-5 ஈவாகாத எண்).

**al'iquot,** *a.* (கண.) சரி ஈவான, மீதமில்லாமல் வகுக்கிற, சரி நேர்கூறான (எ-டு : 12-க்கு 3:-3 சரி ஈவான எண்).

**alit',** *v.* alight என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**alive',** *adv.* உயிருடன், உயிரோடு, வாழ்கிற நிலையில் ; ஊக்கத்துடன், செயல் விரைவுடன், உயிர்த்துடிப்புடன் ; உணர்வூக்கத்துடன், முழு விழிப்புடன் ; நிறைந்து.

**aliza'ri,** *n.* செஞ்சாயத்துக்கு உதவும் கிழங்கு, மஞ்சிட்டி வேர்.

**aliz'arin,** *n.* செஞ்சாயப்பொருள்.

**al'kahest,** *n.* எல்லாவகைப் பொருட்களையும் கரைக்கக்கூடியதென்று பொன்மாற்றுச் சித்தர் கருதிய நீர்மம், 'அரச நீர்மம்'.

**alkales'cence, alkales'cency,** *n.* இலேசாகக் காரப்பொருளாகும் இயல்பு.

**alkales'cent,** *n.* இலேசாகக் காரமாகும் பொருள் ; *a.* இலேசாகக் காரமாகத்தக்க.

**al'kali,** *n.* (வேதி.) காரப்பொருள், காடித்தன்மையை எதிர்நின்று சமப்படுத்தும் பொருள் ; செடியினம் சார்ந்த மஞ்சள் நிறத்தை ஊதாவாகவும் சிவப்பு நிறத்தை நீலமாகவும் கருஞ்சிவப்பைப் பச்சையாகவும் மாற்றுந்தன்மையுள்ள சேர்மான வகை.

**al'kalify,** *v.* காரப்பொருளாக்கு.

**alkalim'etry,** *n.* காரமானம், பொருளின் காரத்தன்மையை மதிப்பிடுதல்.

**al'kaline,** *a.* காரத்தன்மையுடைய.

**alkalin'ity,** *n.* கார எல்லை ; காரத்தன்மை.

**al'kaloid,** *n.* வெடியக் கலப்புடைய வேதியியல் மூலப்பொருள் வகை.

**al'kanet,** *n.* செஞ்சாய வகை ; செஞ்சாயம் தரும் வேரையுடைய செடி வகை.

**all,** *n.* முழுமை ; எல்லோரும் ; எல்லாம் ; தொகுதி ; பொருளுலகு ; *a.* முழுமையான ; எல்லா, அனைத்து ; விலக்கில்லாத ; முழு அளவான ; *adv.* முற்றிலும், முழுவதும், தீர ; எல்லாப் பக்கங்களிலும் ; எல்லா வகைகளிலும் ; தங்குதடையின்றி ; (தொ.) after all, மொத்தத்தில் ; அனைத்திற்கும் மாறாக, எப்படியிருந்தாலும் ; all along, தொடக்க முதல் முடிவுவரை, எப்போதும் ; all at once, திடுமென ; all but, கிட்டத்தட்ட ; all in, முழுதும் சோர்வுற்று ; எல்லாம் அடங்கலாக ; all in all, முழு நிறைவான ; முழுதும் ஈடுபட்டு ஆழ்ந்துள்ள பொருள் ; all out, முழு வேகத்துடன் ; முழுதும் சோர்வுற்று ; all over, எங்கும், முழுப்பரப்பிலும் ; முழுதும் ; முழு மயமாக ; all over with, தீர்ந்துபோன, முடிவுற்ற, முடிவெய்திய; all there, தெள்ளத் தெளிந்த அறிவோடிருக்கிற, முழுதும் விழிப்பான ; all up with, கடந்துபோன நிலையில் ; for all, இருந்தபோதிலும் ; for good and all, முடிவாக ; once for all, ஒரேயடியாக; முடிவாக ; when all is said and done, எல்லாவற்றையும் கருத்தூன்றிப்பார்த்தால் ; மொத்தத்தில்.

**All'ah,** *n.* (இஸ்லாமிய வழக்குப்படி) முழுமுதற் கடவுள்.

**allanto'ic, allan'toid,** *n.* உயிரகப் பை ; *a.* உயிரகப் பை சார்ந்த ; சிறு குழல் உருவான.

**allay'**, *n.* குறைப்பு, தணிப்பு, மட்டுப்படுத்துதல் ; மட்டமான உலோகக் கலவை, மட்ட உலோகம் ; *v.* அடக்கு ; அமைதிப் படுத்து ; தணி ; குறை, மட்டமாக்கு ; நலங்கெடு ; இழிவு படுத்து ; கலப்படஞ்செய், மட்ட உலோகத்தைக் கல.

**all-cheer'ing**, *a.* மகிழ்ச்சியளிக்கிற.

**all'-day**, *a.* நாள் முழுதும் நடைபெறுகிற.

**all-dread'ed**, *a.* எல்லோராலும் அஞ்சப்படுகிற.

**allega'tion**, *n.* சாட்டியுரைத்தல், குறிப்பிடுதல் ; சாட்டுரை, உறுதிப்படுத்தப்படாத கூற்று, சுட்டுரை, குறிப்பீடு ; சாட்டப்பட்ட செய்தி, இடுவந்தி.

**allege'**, *v.* வாதத்திற் குறிப்பிடு ; அடித்துப்பேசு ; சாட்டியுரை ; வாதிடு.

**alleged'**, *a.* சாட்டியுரைக்கப்பட்ட, குறிப்பிடப்பட்ட.

**alleg'edly**, *adv.* சாட்டியுரைத்தபடியே, குறித்த முறையில்.

**alle'giance**, *n.* கடப்பாடு, பற்றுறுதி.

**allego'ric, allego'rical**, *a.* தொடர் உருவகமான.

**all'egorise, all'egorize**, *v.* தொடர் உருவக வடிவிற்கூறு ; மறைபொருளுடன் உரை.

**all'egorist**, *n.* உருவக வகையாற் பேசுபவர், பிசியாளர்.

**all'egory**, *n.* தொடர் உருவகம் ; உருவகக்கதை.

***allegrett'o***, (இத்.) *a.* (இசை.) ஓரளவு விரைவான ; *adv.* ஓரளவு விரைவாக.

***alleg'ro***, (இத்.) *n.* (இசை.) விரைவிசையுடைய பாடல் ; *a.* விரைந்த இயக்கமுடைய ; *adv.* விரைந்த இயக்கமுடன்.

**allele', allel'omorph**, *n.* மெண்டல் (Mendel) என்ற அறிவியல் ஆய்வாளர் கருத்துப்படி உயிர்களின் மரபுவழியில் தொடரும் இரட்டைப் பண்புக் கூறுகளில் ஒன்று, 'இணை இனக்கீற்'றில் ஒன்று.

**allelu'ia, allelu'iah**, *n.* கடவுட் புகழ்மாலை.

**all'emande**, *n.* மெல்லியக்கமுடைய நடுத்தர வேக இசை ; செர்மனி நாட்டு ஆடல்வகை.

**aller'gic**, *a.* (மரு.) உடலில் அயற்பொருள் நுழைவின் எதிர்விளைவாக வீக்கம் இழைம அழிவு ஆகியவை ஏற்படுகிற.

**all'ergy**, *n.* (மரு.) மிகு நுட்ப ஊறுணர்வு ; உடலில் அயற்பொருள் நுழைவின் எதிர்விளைவு ; ஊறுபொருள் அல்லது உயிர்க்காப்பு மூலம் பொருள்வகையில் ஏற்படும் கூருணர்வு நிலை.

**allev'iate**, *v.* எளிதாக்கு, இலேசாக்கு, மட்டுப்படுத்து ; துன்பம் தணி.

**allevia'tion**, *n.* மட்டுப்பாடு, துயர்தணிப்பு.

**allev'iative**, *a.* மட்டுப்படுத்தும் இயல்புடைய.

**allev'iator**, *n.* துன்பம் குறைப்பவர் ; மட்டுப்படுத்த உதவும் பொருள்.

**allev'iatory**, *a.* துன்பம் தணிக்க உதவுகிற.

**all'ey[1]**, *n.* தோட்டப்பாதை ; சந்து ; குறுந்தெரு ; பந்துகள் கழங்குகள் வைக்க உதவும் நீண்டொடுங்கிய இடம் ; (தொ.) blind-alley, முடுக்குத்தெரு, முட்டுச்சந்து.

**all'ey[2], alley-taw', alley-tor'**, *n.* உயர்ந்த கோலிவகை, கழங்கு.

**all'eyed**, *a.* பக்கச்சந்துகளுடைய ; சந்துவடிவான.

**all'eyway**, *n.* சந்துவழி ; இடைகழி.

**All'-father**, *n.* கடவுள் ; பரமபிதா ; கிரேக்கப் பெருந்தெய்வம் சியூஸ் (Zeus); டியூடானியப் பெருந்தெய்வம் ஓடன் (Woden).

**all-good'**, *a.* மிகவும் நல்ல, முழுநலம் வாய்ந்த.

**all-hail'**, *n.* வணக்க வாழ்த்துமுறை ; *v.* வாழி வாழி என்று வணங்கி வாழ்த்து ; *int.* வாழி வாழி !

**all-hid'**, *n.* கண்ணுமூய்ச்சி ஆட்டம்.

**allia'ceous**, *a.* வெள்ளைப்பூண்டு போன்ற.

**alli'ance**, *n.* நட்புத்தொடர்பு ; இணக்கநிலை ; நேச நாடு ; திருமண உறவு ; உறவு ; ஒப்பந்தம்.

**all'igate**, *v.* பிணை, சேர்த்திணை, கட்டு ; இணைப்புச்செய்.

**alliga'tion**, *n.* இணைத்துக்கட்டுதல் ; இணைப்பு ; (கண.) கலவைகளில் மதிப்புக்கூறுகளைக் கணித்தல்.

**all'igator**, *n.* முதலைவகை, பெரிய அலகுடைய முதலை.

**allit'erate**, *v.* மோனைப்படுத்து, முதலெழுத்தை ஒன்றுபடுத்து.

**allitera'tion**, *n.* மோனை, முதலெழுத்து ஒன்றிவரும் தொடையமைப்பு.

**allit'erative**, *a.* முதலெழுத்து அடுக்கிவருகிற, ஒலியொத்து இசைகிற, மோனையுடைய.

**all'-night**, *a.* இரவு முழுதும் நிலவுகிற.

**all'ocarpy**, *a.* (தாவ.) இருபால் கலப்பின்பின் காய்க்கிற.

**all'ocate**, *v.* இடங்குறி ; இடத்தில் வை ; இடம் ஒதுக்கிக் கொடு ; பங்கீடு செய்.

**alloca'tion**, *n.* இடக்குறிப்பீடு ; இட ஒதுக்கீடு ; பங்கு ; ஒதுக்கி வைத்த தொகை, மானியம்.

**allocu'tion**, *n.* பேருரை, செவியறிவுறூஉ ; கத்தோலிக்க உலகத் திருத்தந்தை தம் தலைமைத் தூதர்களிடையே ஆற்றும் பொது உரை.

**allod'ial**, *a.* நிலப்பண்ணைமுறை சாராத, பண்ணைக்குக் கட்டுப்படாத.

**allod'ium**, *n.* பண்ணைக்கு உட்படாத தனியுரிமை நில வுடைமை.

**allog'amous**, *a.* (தாவ.) வேறு இனக்கலப்புடைய, மாற்றுக் கலப்புடைய.

**allog'amy**, *n.* (தாவ.) அயலினக்கலப்பு, மாற்றுக்கலப்பு, ஒரு செடியின் மலர்த்துகள் மற்றொரு செடியின் மலர்க் கருவகத்துடன் இணைந்து இனம்பெருக்கும் முறை.

**all'ograph**, *n.* அயல் எழுத்து மானம், ஒருவர் சார்பில் மற்றொருவர் எழுதுவது.

**all'opath**, *n.* 'எதிர்முறை' மருத்துவர்.

**allopath'ic**, *a.* 'எதிர்முறை' மருத்துவம் சார்ந்த, எதிர் முறையான, நோய்க்குறிகளுக்கு எதிர்ப்பண்புகள் ஊட்டுவதன் மூலம் நோயைக் குணப்படுத்த நாடும் மருத்துவ முறையைச் சார்ந்த.

**allop'athist**, *n.* 'எதிர்முறை' மருத்துவர் ; 'எதிர் முறை' மருத்துவத்தில் நம்பிக்கையுடையவர்.

**allop'athy**, *n.* 'எதிர்முறை' மருத்துவம், நோய்க் கூறுகளுக்கு எதிர்க்கூறுகளை ஊட்டுவதன் மூலம் நோய் தீர்க்க நாடும் மருத்துவ முறை.

**allophyl'ian**, *n.* ஆரிய செமித்திய (Semitic) இனங்கள் சாரா மொழிக்குரியவர் ; *a.* ஆரிய செமித்திய இனங்கள் சாராத.

**allot'**, *v.* பங்கிட்டளி ; கூறுகளாகப் பிரி ; ஒதுக்கிக்கொடு ; திருவுளச்சீட்டையொட்டிப் பிரித்துக்கொடு.

**all'otheism**, *n.* விசித்திரமான தெய்வங்களின் வழிபாட்டு முறை, அயல் வழிபாட்டு முறை.

**allot'ment**, *n.* பங்கிடுதல், பிரித்துக்கொடுத்தல், பங்கீடு ; பங்கு, பிரித்துக் கொடுக்கப்பட்ட கூறு.

**allotriomor'phic**, *a.* 'அகமணியுருவான', புற அமைப்பில் மணியுருப்பெருமல் அக அமைப்பில்மட்டும் பெறுகிற.

**all'otrope**, *n.* பொருண்மை மாருமல் அணு அமைப்பு மட்டும் மாறும் மறுவடிவம்.

**allotrop'ic**, *a.* அணுத்திரிபுள்ள.

**allot'ropous**, *a.* (தாவ.) எல்லாவகைப் பூச்சி இனங்களும் எளிதில் வந்தணுகி அடைவதற்குரிய தேனையுடைய ; தேனுக்காகச் சில மலர்களை மட்டும் அணுகத்தக்க குட்டையான நாவுடைய.

**allot'ropy**, *n.* தனிப்பொருள்கள் ஒன்றுக்கு மேற்பட்ட வடிவங்களில் அணுக்களையுடையனவாய் இருக்கும் தன்மை.

**allott'ed**, *a.* குறிக்கப்பட்ட ; வரையறுக்கப்பட்ட ; ஒதுக்கப்பட்ட ; விதிக்கப்பட்ட.

**allottee'**, *n.* பங்கினர், வகுக்கப்பட்ட பங்கிடு பெறுபவர்.

**allow'**, *v.* ஒத்துக்கொள்; இசைவுகொடு; தடுக்காமல் விடு, இடமளி; கொஞ்சம் கொஞ்சமாக வழங்கு; கொடுத்துதவு; சலுகையளி; ஈடுசெய், சரிக்கட்டு; சேர்த்துக்கொள்ள இணங்கு; புகவிடு.

**allow'able**, *a.* ஒத்துக்கொள்ளத்தக்க; பெருங்கேடற்ற, மோசமல்லாத; பொறுத்தமையக்கூடிய; மன்னிக்கக்கூடிய.

**allow'ance**, *n.* இசைவு, இணக்கம்; உதவித்தொகை, படி, செலவுத்தொகை; சலுகை, கழிவுரிமை; பொறுப்பமைதி; சரியீடு; *v.* உதவித்தொகையளி; குறிப்பிட்ட அளவில் கொடுத்துதவு.

**alloy'**, *n.* உலோகக்கலப்பு, மட்ட உலோகக்கலவை, மட்ட உலோகம்; பொன் வெள்ளி மாற்று; *v.* உலோகம் கல; மட்ட உலோகத்துடன் கல, தரங்குறை; கலந்து மதிப்புக் குறை; மட்டாக்கு, மிதப்படுத்து; பண்பு சிறிதுமாற்று; மட்டக் கலவையாகு.

**all'seed**, *n.* விதைப்பெருக்கமுள்ள செடியினப்பெயர்.

**all'spice**, *n.* வால்மிளகு, பன்மணப் பொருள் தரும் செடியினம்.

**allude'**, *v.* மறைமுகமாகக் குறிப்பிடு, குறிப்பாகத் தெரிவி; இயல்பான இணைக்கருத்துகள் தோன்றவை; குறிப்பிடு.

**allure,'** *n.* கவர்ச்சி, மருட்சிப்பொருள்; *v.* மயக்கு, கவர்ச்சி செய்; மருட்டு, மருட்சியூட்டு; வயப்படுத்து, சிக்கவை.

**allure'ment**, *n.* மயக்குதல், மருட்டுதல்; கவர்ச்சி; மருட்சி.

**allur'ing**, *a.* கவர்ச்சிவாய்ந்த, மயக்குகிற.

**allu'sion**, *n.* மறை குறிப்பு, சுட்டு, குறிப்பீடு.

**allus'ive**, *a.* மறைமுகமாகக் குறிப்பிடுகிற; சாடையாகத் தெரிவிக்கிற; புதையுரையான.

**alluv'ion**, *n.* கடல் ஆறு ஆகியவற்றின் கரை அரிப்பு; வெள்ளம், நீர்ப்பெருக்கு; வண்டல்; (சட்.) நீரின் செயலால் புதுவதாக நிலம் உருவாதல்.

**alluv'ial**, *a.* வண்டலாலான, வண்டல் சார்ந்த.

**alluv'ium**, *n.* வண்டல்மண், ஆறிடு மண்.

**ally'**, *n.* நட்புநாடு; நண்பர்; *v.* ஒன்று கூடு.

**al'ma**, *n.* எகிப்திய ஆடலணங்கு.

**al'magest**, *n.* கி. பி. 150-இல் வாழ்ந்த டாலமி (Ptolemy) என்ற அலெக்சாண்டிரிய அறிஞர் இயற்றிய வானநூல் ஏடு; அறிவுப் பேரேடு.

**al'mah**, *n.* = alma.

***al'ma mat'er***, (ல.) *n.* அருளன்னை, அற்புத்தாய்; பயின்ற பல்கலைக் கழகம் அல்லது கலைக்கூடம்.

**al'manac**, *n.* பஞ்சாங்கம், ஐந்தொகுதி.

**al'mandine**, *n.* சிவப்பு மணிக்கல்வகை.

**almi'ghty**, *a.* எல்லாம் வல்ல; தடுக்க முடியாத; வெல்ல முடியாத; (தொ.) the Almighty, கடவுள்; the Almighty dollar, வெள்ளையப்பர்.

***almir'ah***, (போர்.) *n.* அலமாரி, நிலையடுக்கு.

**alm'ond**, *n.* வாதுமை மரம்; வாதுமைக் கொட்டை; வாதுமைப் பருப்பு; வாதுமைக் கொட்டை வடிவப்பொருள்.

**al'moner**, *n.* ஐயமிடுபவர், அற்றார்க்கு வழங்குபவர்; இரவலர்க்கு உதவுவதற்குரிய அரசியல் பணியாளர்; மருத்துவமனை நோயாளிகள் செலுத்தவேண்டிய தொகையை வரையறுக்கும் பணியாளர்.

**al'monry**, *n.* ஈதல் மனை, ஐயம் இடும் இடம்.

**al'most**, *adv.* பெரும்பாலும், சற்றேகுறைய.

**alms**, *n.* இரவலர்க்கு வழங்கும் பொருள், பிச்சை, நன்கொடை.

**alms'-house**, *n.* ஏழையர் காப்பு மனை.

**alms'man**, *n.* இரவலன், பிச்சைக்காரன்.

**alms'woman**, *n.* பிச்சைக்காரி.

**al'mug**, *n.* அகில்.

**alod'ium**, *n.* = allodium.

**al'oe**, *n.* சோற்றுக்கற்றாழை.

**al'oed**, *a.* கற்றாழை நடப்பட்ட; கற்றாழை நிழலுடைய.

**al'oes-wood**, *n.* காழகில், மூசாம்பரம்.

**aloet'ic**, *n.* கற்றாழையிலிருந்து செய்யப்பட்ட மருந்து வகை; *a.* கற்றாழைசார்ந்த.

**aloft'**, *adv.* உயரத்தில், தலைக்குமேலே; மேலாக; உச்சியில்; பாய்மரத்தின் மேற்பகுதியில்; வானில்; வான் நோக்கி.

**alog'ical**, *a.* தருக்க நூலுக்குப் புறம்பான.

**alone'**, *adv.* தன்னந்தனியாக, தனியாக; துணையின்றி; தனிப்பட்ட நிலையில்; ஒப்புயர்வில்லாமல்; மட்டும்.

**along'**, *adv.* நெடுக; நெடுநீளமாக; முழுவதும்; முன்னேறி; உடனுடனாக; துணையோடு; *prep.* ஊடாக; நெடுகிலும்; பக்கமாக, ஓரமாக; மூலமாக.

**along'shore**, *a.* கரையோரப்பகுதி சார்ந்த.

**alongshore'man**, *n.* கரையோரப்பகுதிக் காவலன்.

**along'side**, *adv.*, *prep.* பக்கத்துக்குப் பக்கமாக; ஒருங்கே, ஓரத்தின் அருகாக; கப்பலின் பக்கமாக.

**aloof'**, **aloof'ly**, *adv.* துண்டாக; தனியாக; அப்பால், தள்ளி, தொலைவில்; வேருக; பற்றின்றி; தற்பெருமையுடன் விலகிநின்று, ஒட்டாமல்.

**aloof'ness**, *n.* தனிநிலை; ஒட்டிலாமை.

**alope'cia**, *n.* (மரு.) தலைவழுக்கை.

**alope'coid**, *a.* குள்ளநரிபோன்ற.

**aloud'**, *adv.* உரக்க, நன்கு கேட்கும்படி.

**alow'**, *adv.* (கப்.) தாழ, கீழே.

**alp**, *n.* மலை முகடு, மலை; மலைச்சாரல், மேய்ச்சல் நிலம்.

**alpac'a**, *n.* ஒட்டக இனத்தைச் சார்ந்த தென் அமெரிக்க விலங்கு வகை; ஒட்டக இன விலங்குவகையின் மயிராற் செய்யப்பட்ட பட்டாடைவகை.

**alp'enhorn**, *n.* ஆல்ப்ஸ் மலைப்பகுதியிலுள்ள ஆயர் ஊது குழல்.

**al'penstock**, *n.* மலைவாணரது நீண்ட ஊன்றுகோல்.

**al'pha**, *n.* கிரேக்க நெடுங்கணக்கில் முதலெழுத்து; நட்சத்திர மண்டலத்தின் ஒளிமிக்க விண்மீன்; தொடக்கம்; (தொ.) alpha and omega, தொடக்கமும் இறுதியும்; alpha particle, கதிரியக்கப் பொருள்களிலிருந்து வெளியேற்றப்படும் அணு நுண்மம்; alpha plus, ஏற்றுயர்படியில் நல்ல, உச்ச அளவில் நல்ல; alpha rays, கதிரியக்கப் பொருள்களிலிருந்து வெளிவரும் அணு நுண்ம வரிசைகள்.

**al'phabet**, *n.* நெடுங்கணக்கு, மொழியின் எழுத்துத் தொகுதி; அடிப்படை அறிவுக்கூறுகள்; *v.* நெடுங்கணக்கு முறையில் வரிசைப்படுத்து.

**alphabeta'rian**, *n.* நெடுங்கணக்குப் படிக்கத் தொடங்குபவர், தொடக்கநிலை மாணவர்.

**alphabet'ic**, **alphabet'ical**, *a.* நெடுங்கணக்குச் சார்ந்த; நெடுங்கணக்கு வரிசை முறையான.

**alphabet'ically**, *adv.* நெடுங்கணக்கு வரிசையாக.

**alphabet'iform**, *a.* எழுத்துக்கள் போன்ற உருவமுடைய.

**al'phabetise**, *v.* நெடுங்கணக்கு முறையில் ஒழுங்குபடுத்து.

**Alphon'sine**, *a.* காஸ்டைல் (Castile) நாட்டரசன் பத்தாம் அல்பான்சோவுக்கு (Alphonso X) உரிய; (வான.) 1252-இல் பத்தாம் அல்பான்சோ முடிவு செய்த கோள் அமைவு சார்ந்த.

**Al'pine**, **al'pine**, *n.* ஆல்ப்ஸ் போன்ற உயர் மலைப்பகுதிக்குரிய செடி இனம்; ஆல்ப்ஸ் பகுதி சார்ந்த மனித இனத்தவர், வெள்ளை இனத்தின் ஒரு பகுதியினர்; *a.* ஆல்ப்ஸ் மலைநிலத்திற்குரிய; மலை உச்சியில் வளர்கிற; மலைப்பகுதி சார்ந்த.

**Alpi'ni**, *n. pl.* இத்தாலிய மலைப்போர்ப்படை.

**alp'inism**, *n.* மலையேற்றக்கலை; மலையேற்றப் பயிற்சி.

**Al'pinist, al'pinist,** *n.* மலையேற்றக் கலைஞர்; மலையேற்றப் பயிற்சியாளர்.

**Alpi'no,** *n.* இத்தாலிய மலைப்போர்வீரர்.

**alread'y,** *adv.* ஏற்கெனவே, முன்னதாகவே.

**Alsat'ia,** *n.* செர்மனிக்கும் பிரான்சுக்கும் இடையே அடிக்கடி மாறி வந்துள்ள ஒரு மாவட்டப்பெயர்; இலண்டனில் முன்பு (1697 வரை) கடனாளிகளுக்கும் குற்றவாளிகளுக்கும் அடைக்கலம் அளித்துவந்த ஒயிட் பிரயர்ஸ் (White Friars) என்ற இடத்தின் புனைபெயர்.

**Alsa'tian,** *n.* அல்சேஷியாவுக்குரிய ஓநாய் போன்ற வளர்ப்பின நாய் வகை; *a.* அல்சேஷிய மாவட்டத்திற்குரிய.

**al'sike,** *n.* நறுமணப்புல் வகை.

**al'so,** *adv.* கூட, கூடுதலாக, தவிர, அதுவன்றி; மேலும்.

**alt,** *n.* (இசை.) உச்சக்குரல், உறுமேற்பாலை; உயர்ந்த மனப்பாங்கு.

**al'tar,** *n.* பலிபீடம்; வழிபாட்டுத் திருவினைக்குரிய இடம்; வணங்குதற்குரிய இடம்; மண மேடை; நீர் வாங்கும் இரேவு மதிலிலுள்ள ஏந்துபலகை.

**alt'arage,** *n.* பலிபீடப் படையல்.

**al'tar-cloth,** *n.* பலிபீட விரிப்பு.

**al'tar-piece,** *n.* பலிபீடத்தின் பின்னணிக்கலை வேலைப்பாடு.

**alt'ar-rails,** *n.* பலிபீட வேலி.

**alt'ar-stone,** *n.* பலிபீடக்கல்; பலிபீட நடுக்கல்.

**al'tar-tomb,** *n.* பலிபீட மாடம்.

**al'tarwise,** *adv.* பலிபீட நிலையில், வடக்கு தெற்காக.

**altaz'imuth,** *n.* வான கோளங்களின் அகடு முகடு மதிப்பிடுதற்குரிய கருவி, அகட்டு முகட்டுமானி.

**al'ter,** *v.* மாற்று; நிலை மாறச் செய்; திருத்தி அமை; மாறுபடு.

**alterabil'ity,** *n.* மாற்றியமைக்கக்கூடிய தன்மை.

**al'terable,** *a.* மாற்றக்கூடிய; மாறுபடும் தன்மையுடைய.

**al'terant,** *n.* அடிப்படை உயிரியக்கங்களில் மாறுதலை உண்டு பண்ணத்தக்க மருந்து; *a.* மாற்றக்கூடிய; மாறுபடும் தன்மையுடைய.

**altera'tion,** *n.* மாற்றம்; திருத்தியமைப்பு.

**al'terative,** *n.*=alterant.

**al'tercate,** *v.* பூசலிடு; சொல்லெதிர் சொல்லு; சண்டையிடு.

**alterca'tion,** *n.* வாய்ச்சண்டை.

**al'tercative,** *a.* ஓயாது வாய்ச்சண்டையிடுகிற.

***al'ter eg'o,*** (ல.) *n.* ஆளின் மறுபடிவம், தன்மாற்று வடிவம்; ஒருயிரும் ஈருடலுமாக இயங்கும் உற்ற நண்பர்.

**alter'ity,** *n.* மற்றொன்றாய் இருக்கும் தன்மை.

**altern'ant,** *n.* மாறிமாறி வரும் அளவை, ஒன்றுவிட்டு ஒன்றாக வரும் எண்; *a.* ஒன்றுவிட்ட, ஒன்று விட்டடுத்த; ஒற்றை மாற்றான.

**altern'ate[1],** *a.* மாறிமாறி வருகிற; ஒன்றுவிட்டு ஒன்றான, பொழிப்புத் தொடையான, மாறி மாறி அமைத்த; (தாவ.) கணுத்தோறும் எதிரெதிர்ப்பக்கமான இலைகளையுடைய; வரிசை தோறும் முன் வரிசையில் இடைவெளி நிரப்பும் மலர்க் கொத்துக்களையுடைய; (உயி.) பால் இனப்பெருக்கம் தளிர் இனப்பெருக்கம் ஆகிய இரண்டும் மாறி மாறி வரும் தலைமுறைகளையுடைய; (வடி.) மாறெதிரான, கோட்டின் இரு கோடியிலும் எதிரெதிர்ப் பக்கமான.

**al'ternate[2],** *n.* மாற்றுப்பதிலாள், மாற்றுப்பெயராள்; *a.* பிரதிநிதிக்கு மாற்றியலான, மாற்றுளான.

**al'ternate[3],** *v.* மாறி மாறி நிகழ்; ஒன்று விட்டு ஒன்றாக அமை; மாறி மாறித் தொடர்.

**altern'ately,** *adv.* மாறி மாறி, ஒன்றுவிட்டு ஒன்றாக; பொழிப்பாக.

**al'ternating,** *a.* முதலில் ஒன்றும் பின் மற்றொன்றுமாக மாறி மாறி வருகிற; (தொ.) alternating current (A.C.), மாற்று மின்னோட்டம்.

**alterna'tion,** *n.* மாறி மாறி வருதல்; ஒன்றுவிட்டு ஒன்றாக அமைதல்; மாறி மாறித் தொடர்தல்; மாறி மாறி வாசித்தல்; மாறி மாறிப் பாடுதல்; கொடுக்கல் வாங்கல் உறவு.

**altern'ative,** *n.* இரண்டில் ஒன்றன் தேர்வு, இரண்டில் ஒன்று; இணைக்குழுவில் ஒன்றன் தேர்வு; இணைக்குழுவில் ஒன்று; இரண்டில் மீந்த ஒன்று; ஒன்று அல்லது மற்றொன்று என்ற நிலையிலுள்ள இணை; *a.* இரண்டில் ஒன்றாக நடைபெறக்கூடிய; இரண்டில் ஒன்று உறுதியான; (தொ.) alternative vote, ஒற்றைமாற்று வாக்கு.

**altern'atively,** *adv.* இரண்டில் ஒன்றாக, ஒற்றை மாற்றாக; இன்னொரு வகையாக; மாற்று வகையாக.

**Al'thing,** *n.* ஐஸ்லாந்தின் (Iceland) சட்ட மன்றம்.

**although',** *conj.* போதிலும், என்றாலும்.

**altim'eter,** *n.* உயரமானி, உயரத்தை மதிப்பிடும் அழுத்தமானி.

**altis'simo,** *a.* (இசை.) மீ உயர்வான; (தொ.) in altissimo, உச்ச உயர்நிலையில்.

**al'titude,** *n.* உயரம்; குத்துயரம், ஏற்றக்கோணம், ஆழம்; (வான.) அடிவானத்திற்கு மேலெழும் கோண அளவு; (வடி.) கோணம் முக்கோணம் ஆகியவற்றின் செவ்வுயர அளவு; உயர்வு, பெருமை, உயர்நிலை.

**al'titudes,** *n. pl.* உயர்ந்த மனவெழுச்சிகள், உயரிய உணர்ச்சி, பீடுநடை, மேன்மை.

**altitud'inal,** *a.* உயரம் சார்ந்த; செவ்வுயர அளவு சார்ந்த.

**altitudina'rian,** *n.* உயர்வுள்ளலுடையவர்.

**altitud'inous,** *a.* உயரமுள்ள, மேடான.

**al'to,** *n.* (இசை.) உச்ச ஆண்குரல்.

**altogeth'er,** *n.* முழுமை; *adv.* ஒருங்கு சேர்த்து; என்றென்றும்; மொத்தமாக; முற்றிலும்; விலக்கின்றி.

***al'to-reliev'o,*** (இத்.) *n.* உருவில் பாதி கனம் முனைப்பாக வெளித் தெரியும்படி செதுக்கப்பட்ட உருவம்.

**al'truism,** *n.* பிறர்க்கென வாழுந் தகைமை, பொதுநலப்பண்பு.

**al'truist,** *n.* பிறர்க்கென வாழும் பெற்றியாளர்.

**altruis'tic,** *a.* பிறர்க்கென உழைக்கும் கோட்பாட்டினை உடைய.

**al'udel,** *n.* திடப்பொருளை நேராக ஆவியாய் மாற்ற உதவும் கலயம்.

**al'ula,** *n.* போலி இறகு, இறகு போன்ற அமைப்பு.

**al'um,** *n.* படிக்காரம்.

**alum'ina,** *n.* அலுமினிய உயிரகை.

**alumin'ium, alumi'num,** *n.* அலுமினியம்.

**alum'inous,** *a.* படிக்காரத்தின் இயல்புடைய; அலுமினிய உயிரகை சார்ந்த.

**alum'na,** *n.* மாணவி, பழைய மாணவி.

**alum'nae,** *n. pl.* மாணவியர், பழைய மாணவியர்.

**alum'ni,** *n. pl.* பழைய மாணவர், கல்லூரியில் முன் படித்துப் பட்டம்பெற்ற மாணவர்.

**alum'nus,** *n.* மாணவன், பழைய மாணவன்.

**al'veary,** *n.* தேன்கூடு; பலர் உழைப்பின் தொகுதி; சொல்லகராதி; (உள்.) குறும்பியடையும் புறச்செவி.

**alve'olar,** *n.* (ஒலி.) பல்லடி ஒலி; *a.* (ஒலி.) அண்பல் நாவுறப் பிறந்த; குழிந்த, குழிவு குழிவான, குழி நிறைந்த.

**alve'olate,** *a.* குழிந்த, குழிவுகுழிவான; குழிவாயில் பொருந்திய.

**alve'olus,** *n.* குழி; சிறுபள்ளம்; பல்பொருந்து குழி; ஈரல் கண்ணறை; *pl.* alve'oli.

**al'vine,** *a.* வயிறு சார்ந்த.

al'way, *adv*. (செய்.)=always.
al'ways, *adv*. எப்போதும், எல்லாக்காலங்களிலும்; எல்லாத் தறுவாய்களிலும்; என்றென்றைக்கும்; தொடர்ச்சியாக, இடைவிடாது; எப்படியும், எல்லா வழிகளிலும்.
am, *v*. be என்பதன் தன்மை ஒருமை வடிவம்.
amadavat', *n*. தூக்கணங்குருவியினம் சார்ந்த பாடும் இந்தியப் பறவை வகை.
am'adou, *n*. கடற்பஞ்சு போன்ற சிக்கிமுக்கிப் பொருள்.
a'mah, *n*. பால் கொடுக்கும் செவிலி, ஆயா; தாதி.
amain', *adv*. வல்லாற்றலுடன், முழு வேகமாக, மிகவும்.
amal'gam, *n*. இரசக்கட்டு, இரசக்கலவை, பாதரசமும் மற்றொரு உலோகமும் சேர்ந்த கலவை; குழைவுடைய மென் கலவை; பற்பல தனிமங்களின் கூட்டு; கலப்பு உலோகத்தின் சேர்க்கைப் பொருள்களில் ஒன்று.
amal'gamate, *a*. ஒருங்கிணைந்த; பல மொழிகள் கலந்த; *v*. ஒன்றுபடு; கல; பாதரசத்துடன் சேர்.
amalgama'tion, *n*. கூட்டு, சேர்ப்பு, இணைப்பு, கலவை.
amal'gamative, *a*. இணையும் பாங்குள்ள.
aman'dine, *n*. வாதுமைப் புரதம்; வாதுமையிலிருந்து செய்யப்படும் பாலேடு கலந்த ஒருவகை இனிப்புத் தின்பண்டம்.
Amani'ta, *n*. நச்சுக்காளான் இனம்.
amanuen'sis, *n*. கற்றுச்சொல்லி; சொல்வதை எழுதுபவர், படியெடுக்கும் செயலாளர்; *pl*. amanuen'ses.
am'arant, am'aranth, *n*. வாடா மலர்; கீரைத்தண்டு வகை.
amaran'tine, *a*. வாடாத; அழியாத; கீரைத்தண்டு வகையைச் சார்ந்த.
amaryll'is, *n*. இலையுதிர் காலத்தில் மலரும் ஒருவகைப் பூண்டு.
amass', *v*. பேரளவில் சேர், பெருந்திரளாகக் குவி.
amass'ment, *n*. திரட்டல், குவித்தல்.
am'ateur, *n*. பொழுதுபோக்குக் கலைஞன், அருங்கலை விநோதன்.
amateur'ish, *a*. நிறைவற்ற, குறைபாடுடைய.
am'ative, *a*. காதல் பாங்குள்ள.
am'atol, *n*. விசையாற்றல் மிக்க வெடிமருந்து வகை
am'atory, *a*. காதலுக்குரிய; காதல் விளைக்கிற; காதலருக்குரிய.
amauros'is, *n*. பார்வை நரம்புக்கோளாற்றினால் உண்டாகும் குருட்டுத்தன்மை, கண்ணின் புறத்தோற்றத்தினால் மாறுதல் தோன்றாத குருட்டுத்தன்மை.
amaurot'ic, *a*. கண்ணின் புறவுறுப்புச் சரியாயிருந்தும் முழுக்குருடாயிருக்கிற.
amaze', *v*. திகைக்கவை, வியப்படையச் செய்.
amaz'edly, *adv*. மலைப்புடன்.
amaz'edness, amaze'ment, *n*. திகைப்பு, வியப்பு.
amaz'ing, *a*. வியப்புக்கேதுவான.
amaz'ingly, *adv*.=amazedly.
Am'azon, *n*. சூர்மகள்; ஆண்டகைப் பெண்; கதைகளில் வரும் வீராங்கனை; சண்டை போடும் இயல்புள்ளவள்; தென் அமெரிக்கப் பேரியாறு.
Amazon'ian, *a*. சூர்மகளுக்குரிய; ஆண் தன்மையுள்ள; சண்டை போடும் இயல்புடைய.
amba'ges, *n*. *pl*. சுரிவழி, சுற்றுவழி.
amba'gious, *a*. சுற்றி வளைந்த.
am'ban, *n*. சீனப் பேரரசின் புறமாகாண நிலைப்பேராள்.
ambass'ador, *n*. நிலைத்தூதர், ஒருநாட்டின் சார்பாக வேற்று நாட்டு அரசவையில் நிலையாக இருக்கிற பிரதிநிதி; அரசாங்கச் செய்தியாள், அரசு ஓலையாள்.
ambassador'ial, *a*. அரசுத்தூதருக்குரிய.
ambass'adress, *n*. அரசியல் தூதணங்கு, அரசுத்தூதரின் மனைவி, அரசுப்பெண்தூதுவர்.
am'ber, *n*. ஓர்க்கோலை, அம்பர், நிமிளை.
am'bergris, *n*. மீனம்பர்; வெப்பமண்டலக்கடல்களில் மிதப்பதும் ஒருவகைத் திமிங்கிலத்தின் குடலில் காணப்படுவதுமான மெழுகுப்பொருள்.
am'bery, *a*. அம்பரின் இயல்புடைய.
am'biance, *n*. கலைத்துறையில் துணைப்பொருட் பின்னணி; துணைப்பொருள் அமைவு.
ambidex'ter, *n*. இரு கைகளையும் ஒரேவகையாக ஆளக்கூடியவர்; இரு வேறு செயலுடையவர்; பித்தலாட்டஞ் செய்பவர்; *a*. இரு கைகளையும் ஒரேவிதமாகப் பயன்படுத்தக்கூடிய; இரண்டகமான.
ambidexte'rity, *n*. இரு கைகளையும் ஒப்பப் பயன்படுத்தும் ஆற்றல்.
ambidex'terous, ambidex'tral, ambidex'trous, *a*. இரு கைகளையும் ஒரே வகையாகப் பயன்படுத்தக்கூடிய.
am'bience, *n*. சூழல்; சூழ்விளைவு; சுற்றுப்புறத் தோற்றம்.
am'bient, *n*. சுற்றியிருப்பது; காற்று; வானம்; *a*. சுற்றிச் செல்லுகிற, சூழ்ந்துள்ள; எம்மருங்கும் வளைந்துள்ள.
ambigu'ity, *n*. இரு பொருள்; பல பொருள்களுக்கிடந்தரும் சொல்; பொருள் தெளிவின்மை.
ambig'uous, *a*. ஐயப்பாடான; தெளிவற்ற; உறுதியற்ற; இரட்டுற மொழிதலான.
am'bit, *n*. வளைவு, சுற்று; சுற்றெல்லை; புறவெல்லை; சுற்றுப்பரப்பு எல்லை.
ambi'tion, *n*. உயரவா, பேராவல்; புகழார்வம், சிறப்புடைய விருப்பம்; அடைய விரும்பும் குறிக்கோள்.
ambi'tious, *a*. பேராவலுடைய; ஆர்வம் நிரம்பிய, பெரு விருப்பத்தைக் காட்டுகிற; ஒன்றைப்பெறும் அவாவுடைய; பகட்டான.
ambiv'alence, ambiv'alency, *n*. இருமுக உணர்ச்சிப் போக்கு, இருமனப்போக்கு.
ambiv'alent, *a*. இருமுக உணர்ச்சிப்போக்குடைய; இருமுகப் போக்கில் ஒன்றுடைய.
am'bivert, *n*. உள்முக உணர்ச்சிக்கும் புறமுக உணர்ச்சிக்கும் இடைநிலைப்பட்டவர்.
am'ble, *n*. ஒருசிறை இருகால் தூக்கி ஆடி வருகிற குதிரையின் நடை; கவலையற்ற நடை; *v*. கெச்சை மிதிமிதித்து நட; கெச்சைக் குதிரையிவர்ந்து செல்; குதிரையைத் தன் போக்கில் போகவிட்டு அதன்மேல் ஏறிச்செல்; கெச்சை மிதிமிதித்துப் போகும் குதிரையைப்போல் நட.
amblop'ia, *n*. பார்வை மந்தம்.
amblyop'ic, *a*. பார்வை மந்தமுடைய.
am'bo, *n*. தொடக்ககாலக் கிறித்தவக் கோயில்களின் சொற்பொழிவு மேடை.
amboy'na, amboy'nawood, *n*. ஆசியாக்கண்டத்து வண்ண மரக்கட்டை வகை.
ambro'sia, *n*. சாவா மருந்து, அமிழ்தம், நறுஞ்சுவைப் பொருள்; தேறல்; மகரந்தம்.
ambro'sial, *a*. நறுஞ்சுவையுடைய; இறவாத இனிய மணமுள்ள; விண்ணிற்குரிய.
ambro'sian, *a*. அமிழ்தத்துக்குரிய; நான்காம் நூற்றாண்டில் மிலானில் (Milan) இருந்த சமயத்தலைவர் அம்புரோசு (St. Ambrose) என்பவரோடு தொடர்புடைய.
am'bry, *n*. திருக்கலமாடம், கிறித்தவக் கோவில் சுவர்களில் வழிபாட்டுக் கலங்களை வைப்பதற்காக அமைந்துள்ள மாடம்.
ambs-ac'e, *n*. இரண்டு பகடைப் புள்ளிகள்; இரு தாயம்; மிகக் குறைந்த எண்ணிக்கை தரும் பகடை வீச்சு, துரதிர்ஷ்டம்; பயனற்ற தன்மை.

**am'bulance**, *n*. இயங்கு மருந்தகம், நோயாளி வண்டி, படையைப் பின்பற்றிச் செல்லுகிற மருந்து வண்டி; காயமடைந்தோரைப் போர்க்களத்தினின்றும் எடுத்துச் செல்வதற்கான பெரிய வண்டி; *a*. இயங்கு மருந்தகமாயிருக்கிற.

**am'bulant**, *a*. நடக்கிற, இடம்விட்டுப் பெயர்கிற.

**am'bulatory**, *n*. உலாவிடம்; நடைப்பாதை, வேய்சாலை; *a*. நடப்பதற்குரிய, நடப்பதற்கென அமைக்கப்பட்ட; இயங்குகிற; நிலையற்ற, மாறுகிற.

**am'bury**, *n*. குதிரையின் உடலிலுள்ள குருதிநிறப் புடைப்பு; கிழங்கு வகைகளின் வேர் நோய்.

**ambuscade'**, *v*.=ambush.

**am'bush**, *n*. பாயப் பதுங்குதல்; பதுங்கிடம்; பதுங்கிப் பாய்வோர்; *v*. தாக்குதற்காகப் பதுங்கியிரு; படைவீரர்களை ஒளித்துவை; ஒளிந்து காத்திரு; வழிப்பறி செய்.

*ame damnee*, (பிர.) *n*. கையாள், கைப்பாவையாயிருப்பவர், ஒருவர் விருப்பத்திற்கேற்பக் குருட்டுத்தனமாய் நடப்பவர்.

**ameer'**, *n*. முஸ்லிம் இளவரசர் சிலரது பட்டம்.

**amel'iorate**, *v*. சீர்ப்படுத்து, நல்லதாக்கு, உயர்ந்ததாக்கு; சீர்ப்படு.

**ameliora'tion**, *n*. நலப்படுத்துதல்; உயர்வாக்குதல்; சீர்ப்பாடு.

**amel'iorative**, *a*. செம்மைப்படுத்தும் இயல்புடைய, மேன்மைப்படுத்தும் தன்மையுடைய.

**amen'**, *int*. அங்ஙனமே ஆகுக; *v*. சரியென்று சொல்; மனப்பூர்வமாய் உறுதிப்படுத்து.

**amen'able**, *a*. கட்டுப்பட்ட; உட்பட்ட; பொறுப்பாளராயுள்ள; இணங்கத்தக்க, வழிக்குக் கொண்டுவரக்கூடிய, எளிதில் ஆளாக்கத்தக்க.

**amenabil'ity**, **amen'ableness**, *n*. கட்டுப்படுந்தன்மை, எளிதில் இணங்குந்தன்மை.

**amend'**, *v*. தீமையகற்று; பிழை திருத்து; திருத்தம் செய்; சீர்ப்படுத்து; சீர்ப்படு.

**amend'able**, **amend'atory**, *a*. திருத்தஞ் செய்கிற.

*amende*, (பிர.) *n*. அபராதம், நட்ட ஈடு.

*amende honorable*, (பிர.) *n*. தீங்கிழைக்கப்பட்டவர் மானத்துக்கு மாறுபடாதவகையில் குற்றத்தினை ஒப்புக்கொள்ளுதல்.

**amend'ment**, *n*. திருத்தம், சீர்மை; கூட்டத்தில் கொண்டுவரப்படும் பதில் திட்டம்; மாற்றுத் தீர்மானம்.

**amends'**, *n*. ஈடு, கழுவாய், பரிகாரம்.

**amen'ities**, *n*. *pl*. வசதிகள்; இனிய சிறப்பியல்புகள்.

**amen'ity**, *n*. வசதி, இன்பச் செவ்வி; இனிய வாய்ப்பு; இனிமை; குடிமை; பாடறிதல்.

**amenorrhoe'a**, *n*. மாதவிடாய் தோன்றாமை.

*a men'sa et to'ro*, (ல.) *adv*. உணவு பாயல் முதலாக.

**a'ment[1]**, **ament'**, *n*. வளர்ச்சி குன்றிய மனத்தை உடையவர்.

**a'ment[2]**, *n*. நெருக்கமான பூங்கொத்து; *pl*. amen'ta.

**amenta'ceous**, **amen'tal**, *a*. வளைமலர்க் கொம்புக்குரிய.

**amen'tia**, *n*. மனவளர்ச்சியிற் குறைபாடு.

**amentif'erous**, *a*. பூங்கொத்துத் தோற்றுவிக்கிற.

**amen'tiform**, *a*. பூங்கொத்தின் வடிவுடைய.

**amen'tum**, *n*.=ament.

**amerce'**, *v*. அபராதமிடு; ஒறு; இழக்கப்பண்ணு.

**amer'ciable**, *a*. தண்டிக்கத்தக்க.

**amerce'ment**, **amer'ciament**, *n*. அபராதம் விதித்தல்; அபராதம்.

**Ame'rican**, *n*. ஐரோப்பியர் வழிவந்த அமெரிக்க நாட்டவர்; அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடி; *a*. அமெரிக்கக் கண்டத்தைச் சேர்ந்த; அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்குரிய.

**Amer'icanise**, *v*. அமெரிக்கக் குடியாக்கு; அமெரிக்க இயல்புடையவராக்கு; அமெரிக்கப் பாங்குடையவராகு; அமெரிக்க மொழி நடையைப் பின்பற்று.

**Ame'ricanism**, *n*. அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கேயுரிய சொல் அல்லது சொற்றொடர்; அமெரிக்க ஐக்கிய நாடுகளிடம் பற்று; அமெரிக்கக் குடிமகனுக்குரிய நிலை.

**Ame'ricanize**, *v*.=Americanise.

**ameri'cium**, *n*. யூரேனியத்தைவிட முனைப்பான கதிரியக்கமுடைய உலோகத் தனிமம்.

**ames-ac'e**, *n*. =ambs-ace.

**am'ethyst**, *n*. செவ்வந்திக்கல்.

**amethys'tine**, *a*. செவ்வந்திக்கல்லுக் குரிய.

**am'iable**, *a*. கேண்மைப்பாங்குள்ள; அன்பு கொள்ளத்தக்க, மனத்துக்கினிய.

**amiabil'ity**, **am'iableness**, *n*. கேண்மைப்பாங்கு, அன்பு கெழுநிலைமை.

**amian'thus**, **amian'tus**, *n*. இழையாகப் பிரியக்கூடிய மிக நேர்த்தியான கல்நார் வகை; இழைவான பச்சைக்கல் வகை.

**am'ic**, *a*. (வேதி.) நவச்சார ஆவிக்குரிய.

**am'icable**, *a*. நட்பிணக்கமான; நட்பு முறையான; நட்புப் பாங்குடன் செய்யப்பட்ட.

**amicabil'ity**, **am'icableness**, *n*. நட்பாங்கிழமை.

**amice**, *n*. ரோமன் கத்தோலிக்கக் குருக்கள் கோயிற் சடங்குகளின்போது தலையில் அல்லது தோளில் அணியும் சதுரச் சல்லாத்துணி; கிறித்தவக் குருமாரது தொப்பி அல்லது தலைச்சீரா அல்லது கழுத்துப்பட்டை; பிரான்சிலுள்ள கிறித்தவக் குருக்கள் இடக்கையிலணியும் வில்லை.

*amic'us cur'iae*, (லத்.) *n*. (சட்.) நீதிமன்றத்தில் நீதியை எடுத்துக்கூறும் நடுநிலை அறிவுரையாளர்.

**amid'**, *prep*. இடையில்; இடைநிகழ்வாக.

**am'ide**, *n*. (வேதி.) நவச்சாரச் சேர்மான வகை.

**am'idin**, *n*. மாச்சத்தின் கரையத்தக்க கூறு; கரைசல் நிலையிலுள்ள மாச்சத்து.

**am'idol**, *n*. நிழற்படத்தை உருப்படுத்தும் கருவி.

**amid'ships**, *adv*. கப்பல் நடுவில்.

**amidst'**, *prep*.=amid.

**aminobu'tene**, *n*. நோவு தணிக்கும் மருந்து வகை.

**ami'r**, *n*.=ameer.

**amiss'**, *adv*. எதிர்பார்த்த அளவிற் குறைந்து; ஒழுங்கு மீறி; தவறாக; இசைவு கேடாக.

**am'ity**, *n*. நட்பு; நட்புறவு; நல்லெண்ணம்.

**am'meter**, *n*. மின்னாற்றல்மானி.

**am'monia**, *n*. நவச்சார ஆவி; நவச்சார ஆவிக்கரைசல்; (வேதி.) நவச்சார ஆவியை ஒத்த சேர்மம்.

**ammon'iac**, **ammoni'acal**, *a*. நவச்சார ஆவித்தன்மை வாய்ந்த; நவச்சார ஆவிக்குரிய.

**ammon'iated**, *a*. நவச்சார ஆவிகலந்துள்ள.

**amm'onite**, *a*. மரபிறந்துபோன புதைபடிவ நத்தை வகையின் தோடு.

**ammon'ium**, *n*. நவச்சியம்.

**ammuni'tion**, *n*. படைத்தளவாடம், சிறப்பாக வெடிமருந்து குண்டு முதலியன.

**amnes'ia**, *n*. நினைவிழப்பு, மறதி.

**am'nesty**, *n*. அரசியல் குற்ற மன்னிப்பு; கண்டுங்காணாதது போலிருத்தல்; மறதி; *v*. பொது மன்னிப்பு அளி.

**am'nion**, *n*. பிறப்பதற்குமுன் கருவை அடுத்துச் சுற்றியுள்ள சவ்வு; *pl*. am'nia.

**amoeb'a**, *n*. வயிற்றுடலி, ஒழுகுடலுடைய அணு உயிரினம்; *pl*. amoeb'ae.

**amoebae'an**, *a*. இடையிட்ட விடைமுறையான.

**amoeb'iform**, *a.* வயிற்றுடலி வடிவமுள்ள.
**amoeb'oid**, *a.* வயிற்றுடலி போன்ற.
**amok'**, *adv.* பித்துப் பிடித்து.
**among'**, **amongst'**, *prep.* உள், இல், இடையில், சூழப் பட்டு ; குழுவிற்பட்டு ; தொகுதியில் இணைந்து.
**Amontilla'do**, *n.* இனிய குடி வகை.
**amo'ral**, *a.* ஒழுக்கத்துறைச் சார்பற்ற ; ஒழுக்கஞ் சாராத.
**amorce'**, *n.* வெடிமருந்து திணிப்பு ; விளையாட்டுத் துப்பாக்கி யின் அமுக்க வாயுறை.
**am'orist**, *n.* காதலர் ; நவநாகரிகர் ; காதல் எழுத்தாளர் ; பெண் வேட்டையாளர்.
**am'orous**, *a.* காதலிக்கும் பாங்குள்ள ; மோகங்கொண்டுள்ள ; காதலுக்குரிய.
**amorph'ism**, *n.* வடிவற்ற நிலை ; மணி உருப்பெறு நிலை.
**amorph'ous**, *a.* வடிவமற்ற ; ஒழுங்கற்ற ; (வேதி.) மணி உருவற்ற.
**amortisa'tion**, *n.* கடன்தீர்நிதி மூலமாகக் கடன் குறைத்தல்.
**amort'ise**, *v.* பின்னும் மாற்ற முடியாத நிலையில் சொத்துரிமையை மாற்று ; கடன்தீர்நிதி மூலமாகக் கடனைத்தீர்.
**amortiza'tion**, *n.*=amortisation.
**amort'ize**, *v.*=amortise.
**amount'**, *n.* மொத்தம், தொகை ; முழு மதிப்பு ; அளவு ; *v.* மொத்தமாகு ; தொகையாகு ; சரியாகு.
**amour'**, *n.* காதற்செயல் ; காதல் விளையாட்டு ; மறை காதல் தொடர்பு.
**amourette'**, *n.* சிறு காதல் நிகழ்ச்சி.
***amour-propre***, (பிர.) *n.* தன்மதிப்பு.
**ampelop'sis**, *n.* முந்திரிக் கொடி வகை.
**am'pere**, *n.* (மின்.) மின்னோட்ட அலகு, ஒரு மின் ஏகம் ஓர் 'ஓம்' மூலமாகச் செலுத்தக்கூடிய மின்னோட்டம்.
**ampersand'**, *n.* உம்மைக் குறி (&).
**Amphib'ia**, *n.* *pl.* நீர் நில வாழுயிர், தவளைகள்போல் நிலம் நீர் இரண்டிலும் வாழும் இயல்புடைய உயிரினங்கள் ; படிமுறை வளர்ச்சியில் ஊர்வனவற்றிற்கும் மீன் வகைகளுக்கும் இடைப்பட்ட முதுகந்தண்டுடைய பிராணிகள்.
**amphib'ian**, *n.* நில நீர்வாழ் உயிரினம் ; நிலநீர் இரண்டிலும் இயங்கவல்ல போர்க்கலம் ; *a.* நில நீர்வாழ் உயிரினம் சார்ந்த ; நீர்நிலம் இரண்டிலும் இயங்கவல்ல.
**amphibiol'ogy**, *n.* விலங்கு நூலில் நில நீர்வாழ் உயிர்களைப் பற்றிய பிரிவு.
**amphib'ious**, *a.* நிலத்திலும் நீரிலும் வாழ்கிற ; நில நீர்த் தொடர்புடைய ; இரண்டு வகுப்புக்களோடு தொடர்பு கொண்டிருக்கிற ; இருவேறு வாழ்வுடைய.
**am'phibole**, *n.* தகட்டியல் கனிப்பொருள் வகை.
**amphib'olite**, *n.* தகட்டியல் கனிப்பொருட் பாறைவகை.
**amphibolo'gical**, *a.* சொற்பிறழ்வான.
**amphibol'ogy**, *n.* சிலேடை ; இரட்டுற மொழிதல் ; தெளிவற்ற உரை.
**am'phibrach**, *n.* (இலக்.) குறில் நெடில் குறில் என இணைந்த மூவசைச்சீர்.
**amphictyon'ic**, *a.* பண்டைக் கிரேக்க அரசுகளின் கூட்டவைப் பிரதிநிதிகளுக்குரிய.
**amphic'tyons**, *n.* *pl.* பண்டைக் கிரேக்க அரசுகளின் கூட்டவைக்குச் செல்லும் பிரதிநிதிகள்
**am'phigam**, *n.* (தாவ.) தெளிவான பாலுறுப்புக்களற்ற செடி.
**am'phigory**, **amphigour'i**, *n.* போலி ஏடு ; பிதற்றுரை ஏடு.
**amphimix'is**, *n.* (உயி.) பாலணுக்கலப்பு ; பால் சார்ந்த இனப்பெருக்கம் ; தாய்தந்தையருடைய பண்புக் கூறுகளின் கலப்பு.
**amphiox'us**, *n.* முதுகெலும்பின் கருமூலத்தடங்களையுடைய முதுகெலும்பில்லாத மீனினவகை.
**am'phipod**, *n.* நீரருகே வாழும் நண்டு போன்ற உயிரினம் ; *pl.* am'phipoda.
**amphip'rostyle**, *a.* இரு முனைகளிலும் நுழைமாடமுள்ள.
**amphisbaen'a**, *n.* கதைகளில் வரும் இருதலைப்பாம்பு ; (வில.) பாம்பு போன்ற அமெரிக்கப் பல்லியினம்.
**am'phitheatre**, *n.* சுற்றுமாளிகையரங்கம், திறந்தவெளியான நடுவிடத்தைச் சுற்றி ஒன்றன்பின் ஒன்றாக எழும் இருக்கைகளைக் கொண்ட வட்டமான அல்லது நீள்வட்டமான கட்டிடம் ; பொது விளையாட்டரங்கு ; பொதுக்காட்சிக் கூடம் ; வட்டரங்கம் ; அரங்கின் பகுதி ; வடிவத்தில் பொது விளையாட்டரங்கினை யொத்த ஓரிடம் ; படியடுக்கான மலைவார இயற்கைக் காட்சி ; போட்டி நடத்துமிடம்.
**amphithe'atral**, **amphitheat'rical**, *a.* சுற்றுமாளிகையரங்கத்தைச் சார்ந்த ; வட்டரங்கம் போன்ற.
**Amphit'ryon**, *n.* விருந்தினர்க்கு இன்முகங்காட்டி மகிழ்விப்பவர்.
**am'pholyte**, *n.* இருவழி மின்பிரி, மின் கூறுபாட்டில் காடிப் பொருளாகவோ அடிமூலப் பொருளாகவோ அல்லது நேர்மின் எதிர்மின்னாகவோ எவ்வழியும் செயலாற்ற வல்ல மின்பிரி பொருள்.
**am'phora**, *n.* இரண்டு கைப்பிடிகளுள்ள ரோம அல்லது கிரேக்க கலம் ; *pl.* am'phorae, am'phoras.
**ampho'ric**, *a.* (மரு.) குப்பிக்குட் பேசுவதனால் உண்டாகும் ஒலியைப் போன்ற.
**amphoter'ic**, *a.* இருவழியிலும் அமைந்த ; இருவழிமின் செயலுடைய, மின் கூறுபாட்டில் காடிப்பொருளாகவோ அடிமுதல் பொருளாகவோ நேர்மின் எதிர்மின்னாகவோ இருவழியும் செயலாற்ற வல்ல.
**am'ple**, *a.* இடமகன்ற, அகலமான ; தாராளமான, மிகுதியான ; பெரிய ; மொத்தையான ; போதிய ; நெடு நீளமான.
**am'pliative**, *a.* (அள.) நுண்ணியல் கருத்தினை விரித்து அகலமாக்குகிற.
**amplifica'tion**, *n.* விரிவு, பெருக்கம்.
**amplifi'catory**, *a.* பெருக்குந்தன்மையுள்ள.
**am'plifier**, *n.* அதிகப்படுத்துபவர் ; பார்வைபடியும் பரப்பினை அதிகப்படுத்தும் கண்ணாடி வில்லை ; (மின்.) ஒலி அல்லது மின் தாக்குதலின் ஆற்றலை அதிகப்படுத்தும் கருவி ; ஒலி பெருக்கி.
**am'plify**, *v.* அதிகமாக்கு ; பெருக்கு ; விரிவாக விளக்கு.
**am'plitude**, *n.* அகலம், நிறைவு, பெரும் பரப்பு ; வீச்சு ; வளமை ; மதிப்பு ; மேன்மை ; அதிர்வின் உச்ச இழிபெல்லை வேறுபாட்டளவு ; (வான்.) கோளங்கள் எழுகிற இடத்துக்கும் அடைகிற இடத்துக்கும் நேர்கிழக்கு மேற்கிலிருந்து ஏற்படும் தூரம் ; (இய.) அதிர்வு அலையின் வீச்சு ; ஊசல் குண்டின் வீச்சு ; (தொ.) amplitude modulation, வீச்சின் ஏற்ற இறக்கம்.
**am'poule**, *n.* தோலினுக்குள் செலுத்தப்படும் ஊசி மருந்தினை உடைய கண்ணாடிச் சிமிழ்.
**ampull'a**, *n.* இரண்டு கைப்பிடிகளுடைய குண்டிகை ; வழிபாட்டுச் செயல்களுக்காகப் பயன்படுத்தப்படுங் கலம் ; (உயி.) ஒரு விலங்கின் உடலிலுள்ள குழாய் அல்லது பையின் விரிந்த கடைப்பகுதி ; *pl.* ampull'ae.
**am'putate**, *v.* வெட்டியெடு ; துண்டி.
**amputa'tion**, *n.* உறுப்பினை அறுத்து எடுத்துவிடல்.
**am'putator**, *n.* துண்டிப்பவர்.
**amputee'**, *n.* உறுப்புத் துண்டிக்கப்பெற்றவர்.

**am'track**, *n.* நீர் நிலம் இரண்டிலும் இயங்கும் சுற்றுருளை யிட்ட மோட்டார் இறங்கு கலம்.

**amuck'**, *adv.* பித்துப்பிடித்து; (தொ.) run amuck, குருதி வெறிகொண்டு இங்குமங்கும் ஓடு.

**am'ulet**, *n.* தாயத்து.

**amus'able**, *a.* மகிழ்ச்சியூட்டத்தக்க.

**amuse'**, *v.* கடுஞ்செயலிலிருந்து திருப்பு; வேடிக்கை காட்டு; மனக்கற்பிதங்களைத் தொட்டெழுப்பு.

**amuse'ment**, *n.* பொழுதுபோக்கு; விளையாட்டு; மனத்துக்கினிய மாற்றுச் செயல்; சிரிப்பூட்டும் கிளர்ச்சி; வேடிக்கை.

**amus'ing**, *a.* வேடிக்கையான; மகிழ்ச்சியூட்டுகிற.

**amus'ive**, *a.* மகிழ்ச்சியூட்டும் ஆற்றலுடைய.

**amygdal'ic**, *a.* வாதுமை சார்ந்த.

**amyg'dalin**, *n.* வாதுமை முதலிய கொட்டைகளிலிருந்து எடுக்கப்படும் வெல்லச்சத்து.

**amyg'daloid**, *n.* 'வாதுமைப்பாறை', வாதுமை வடிவுடைய உட்புழையிடங்களில் கனிப்பொருட்கள் செறிந்துள்ள அனற் பாறை வகை; *a.* வாதுமை வடிவுள்ள.

**amyg'dule**, *n.* எரிபாறைக்குழம்பில் கனிப்பொருள் நிறைந்த ஆவிக்குமிழியிடம்.

**am'yl**, *n.* (வேதி.) வெறிய வடிப்பில் சிறிதளவில் கிடைக்கும் நச்சுச் சத்து வகை.

**amyla'ceous**, *a.* மாச்சத்துக்குரிய; மாச்சத்துப்போன்ற; மாச்சத்துக்கொண்ட.

**am'yloid**, *n.* மாச்சத்து உணவு; *a.* மாச்சத்துக்கொண்ட.

**amylop'sin**, *n.* மாச்சத்தைச் சர்க்கரையாக்கும் கணைய நீர்.

**an**, *art.* ஓர்.

**an'a**, *n.* வாய்மொழித் தொகுதி, ஒருவர் உரையாடல்கள் நிகழ்ச்சிக்குறிப்புக்கள் முதலியவற்றின் தொகுதி.

**anabaptise'**, *v.* சமய மறுஇணைவு வினையாற்று.

**anabap'tism**, *n.* மறு ஞானஸ்நானக் கோட்பாடு, வயது வந்தபின் சமய இணைவு வினையாற்றுவதே நேர்மை என்றும் குழந்தைப் பருவத்தில் பெயரீட்டு விழாவையொட்டி அவ்வினை நிகழ்ந்திருந்தாலும் வயதுவந்தபின் திரும்பவும் அவ்வினை நிகழ்த்தியே ஆகவேண்டும் என்றும் கொள்ளுங் கோட்பாடு.

**anabap'tist**, *n.* மறு ஞானஸ்நானக் கோட்பாட்டாளர், குழந்தைப் பருவத்தில் சமய தீக்கை ஆற்றி இருந்தாலும் வயதுவந்தபின் மறு தீக்கை ஆற்றியே ஆகவேண்டுமென்னும் கோட்பாட்டாளர்.

**anabaptist'ic, anabaptis'tical**, *a.* சமய மறு தீக்கைக் கோட்பாடு சார்ந்த.

**an'abas**, *n.* செதில்களால் மரமேறும் மீன்.

**anab'asis**, *n.* மேலே போதல்; பகைவர் அக எல்லைக்குள் மேற்செலவு; பாரசிகப் பேரரசன் சைரஸ் (Cyrus) ஆசியப் படையெழுச்சி பற்றிக் கிரேக்க வரலாற்றாசிரியர் செனொபன் (Xenophon) எழுதிய ஏடு.

**anabat'ic**, *a.* மேலெழுந்து செல்கிற.

**An'ableps**, *n.* நீரிலும் காற்றுவெளியிலும் பார்க்கத்தக்க கண்ணமைப்பும் உயிர்ப்புப்பையும் உடைய மீனினம்.

**anabol'ic**, *a.* உயிர்ப்பொருள் கட்டமைப்புச் சார்ந்த, உயிர்ச் சத்து அடிப்படையாக உயிர்ப்பொருள் கட்டமைவதற்குரிய, உயிர்ப்பொருள் ஆக்குதற்கு உரிய.

**anab'olism**, *n.* (உயி.) உயிர்ச்சத்தை அடிப்படையாகக் கொண்ட சேர்மான வகைகள் வேதியியல் முறையில் உருவாதல், உயிர்ப்பொருள் கட்டமைப்பு.

**an'abranch**, *n.* ஆற்றிலிருந்து பிரிந்து ஆற்றிலேயே திரும்ப வந்து விழும் ஓடை.

**anacathar'sis**, *n.* வாந்தி எடுத்தல்.

**anacathar'tic**, *n.* வாந்தி மருந்து; *a.* குமட்டுகிற, வாந்தி எடுக்கத் தூண்டுகிற.

**anachron'ic**, *a.* கால வரிசைக்கு ஒத்துவராத; பழமைப் பட்டுப்போன.

**anach'ronism**, *n.* காலக்கணிப்பு வழு; கால இட முரண்பாடு; பிற்காலப் பண்புகளை முற்காலத்திற்கும் முற்காலப் பண்புகளைப் பிற்காலத்திற்கும் தவறாக ஏற்றிக் குழப்புதல்; காலக் குளறுபடி; பழமைப்பட்டுப்போன பொருள்; காலங் கடந்து விட்ட செய்தி; தற்காலத்திற்கு ஒவ்வாத ஒன்று.

**anachronis'tic, anach'ronous**, *a.* கால வரிசைக்கு ஒவ்வாத, கால முரண்பாடான.

**anaclas'tic**, *a.* ஒளிக்கோட்டம் சார்ந்த, பட்டுத்தெறிக்கிற.

**anacolu'thia**, *n.* சொல் தொடரியைபின்மை, வாக்கிய வழு, வாக்கியம் முன்பின் ஒத்திசையாமை.

**anacoluth'on**, *n.* ஒத்தியையாது பிழைபட்ட வாக்கியம்; *pl.* anacolu'tha.

**anacon'da**, *n.* மாசுணம், மலைப்பாம்பு வகை, பெரிய விலங்குகளையும் உடலை வரிந்து இறுக்கிக் கொல்லத்தக்க பாம்பு வகை.

**anacreon'tic**, *n.* கி. மு. 6-ஆம் நூற்றாண்டில் கிரேக்க நாட்டில் வாழ்ந்த அனக்கிரியான் (Anacreon) என்ற கவிஞன் வழங்கிய பா வகை; *a.* அனக்கிரியானைப் பின்பற்றிய; காதற்சுவை செறிந்த; களியாட்டப் பண்புடைய.

**anacru'sis**, *n.* பாட்டின் தொடக்கத்தில் வரும் அழுத்தமில்லாத அசை; *pl.* anacru'ses.

**anacrus'tic**, *a.* பாடலின் முதலில் அழுத்தமில்லாத அசை வருகிற.

**an'adem**, *n.* தலைமாலை, கண்ணி.

**anad'romous**, *a.* முட்டையிட ஆற்றேட்டத்தை எதிர்த்துச் செல்லுகிற.

**anaem'ia**, *n.* (மரு.) இரத்தச்சோகை, குருதியின்மை, இரத்தத்தில் சிவந்த நுண்மங்கள் குறைபடுதல்; வெளிறிய தோற்றம்.

**anaem'ic**, *a.* குருதிச் சோர்வுடைய; இரத்தச்சோகை உள்ள; வெளிறிய தோற்றமுடைய, நலிந்த, கிளர்ச்சியற்ற, தளர்ந்த.

**ana'erobe**, *n.* நேரடியாக உயிர்வளியில்லாமல் வாழத்தக்க உயிர்வகை.

**anaerob'ian, anaerob'ic**, *a.* நேரடியாக உயிர்வளியில்லாமல் வாழ்கிற; உயிர்வளியில்லாமல் வாழும் உயிர்வகைகளின் செயல் விளைவான, உயிர் மாற்றியலான; உயிர்வளியில்லாமல் வாழும் உயிரினத்தின் செயல் சார்ந்த.

**anaerobio'sis**, *n.* உயிர்வளியில்லா உயிர் வாழ்வு.

**anaesthe'sia, anaesthe'sis**, *n.* உணர்விழப்பு, உணர்ச்சி மயக்கம்; உணர்ச்சியின்மை, நோவுணராமை.

**anaesthet'ic**, *n.* மயக்க மருந்து, உணர்வின்மை ஊட்டும் பொருள்; *a.* உணர்ச்சி மயக்கமூட்டுகிற; உணர்ச்சியின்மை சார்ந்த.

**anaes'thetise**, *v.* மயக்க மருந்து கொடு; மருந்து கொடுத்து மயக்கம் உண்டுபண்ணு; உணர்ச்சியில்லாது ஆக்கு.

**anaes'thetist**, *n.* மயக்க மருந்து கொடுப்பவர்.

**anaes'thetize**, *v.* = anaesthetise.

**an'aglyph**, *n.* பள்ளம்படச் செதுக்கப் பட்ட அணிமணி வகை; விழித்திரை வேற்றுமை விம்பங்கள், எதிர் நிரப்பு இணை வண்ணக் கண்ணாடிமூலம் ஒரே படமாகப் பார்க்கத்தக்க இரு படப் படிவங்கள், ஈரிணை வண்ணப்படம்.

**anaglyph'ic, anaglyp'tic**, *a.* ஈரிணை வண்ணமான, ஈரிணை வண்ணப்படம் சார்ந்த.

**anagno'risis**, *n.* ஆளடையாளம் அறிதல் மூலம் நாடகம் நடுச் செறிவு தளரப்பெற்று முன்னேறுதல்.

**anago'ge**, *n.* மறை நிலைப்பொருள்கோள், ஆன்மிக விளக்கம், உருவக உட்பொருள் விரித்தல்.

**anago'gic, anago'gical**, *a.* மறை உட்பொருள் விளக்குகிற.

an'agogy, *n*. = anagoge.

an'agram, *n*. கரந்துறை மொழி, ஒரு சொல்லின் எழுத்துக் களை மாற்றியமைத்து ஆக்கப்படும் வேறொரு சொல்; *v*. சொற் சிதைத்துக்கூட்டு, சொல்லின் எழுத்துமுறை மாற்றிப் புதுச் சொல்லாக்கு.

anagrammat'ic, anagrammat'ical, *a*. மற்றொரு சொல் லின் முறை மாறிய எழுத்துக்களால் ஆன.

anagramm'atise, *v*. சொற் சிதைத்துக் கூட்டு, சொல்லின் எழுத்து முறை மாற்றிப் புதுச்சொல்லாக்கு.

anagramm'atism, *n*. சொல்லின் எழுத்து மாற்றியமைக்கும் முறை.

anagramm'atist, *n*. சொல்லின் எழுத்துக்களை மாற்றி அமைப்பவர், ஒரு சொல்லின் எழுத்து முறையை மாற்றிப் புதுச்சொல் ஆக்குபவர்.

anagramm'atize, *v*. = anagrammatise.

an'al, *a*. எருவாய்க்கு உரிய, ஆசனவாயை அடுத்த.

anal'cime, anal'cite, *n*. (மண்.) பாறை வகை, கல் வகை.

analec'ta, *n*. *pl*. இலக்கியத் துணுக்குகளின் தொகுப்பு.

analec'tic, *a*. இலக்கியத் தொகுப்பான.

an'alects, *n*. = analecta.

analep'tic, *n*. நலமூட்டும் மருந்து, ஊக்க மருந்து; *a*. நலி வகற்றுகிற, நலமூட்டுகிற; ஆறுதலளிக்கிற.

analges'ia, *n*. நோவின்மை, உணர்ச்சியின்மை.

analges'ic, *n*. நோவகற்றும் மருந்து; *a*. உணர்ச்சியின்மை உண்டுபண்ணுகிற.

analo'gic, *a*. ஒப்புமை சார்ந்த.

analo'gical, *a*. ஒப்புமையுடைய; ஒப்பான.

anal'ogise, *v*. ஒப்புமைப்படுத்திக் காட்டு; ஒப்புமை மூலம் விளக்கு; உவமை பயன்படுத்து; ஒப்பாயிரு, ஒத்திசை.

anal'ogist, *n*. ஒப்புமை காண்பவர்; உவமையைப் பயன் படுத்துபவர்; ஒப்புமை நாடுபவர்; சொற்களில் பொருள் ஒப்பு நாடுபவர்.

anal'ogize, *v*. = analogise.

anal'ogous, *a*. ஒத்த, ஒப்புமையுடைய, ஒத்திசைவான; இனமொத்த; ஒத்த தோற்றமுடைய, போன்றிருக்கிற; வெப்பத்தால் நேர்மின் ஊட்டப்பட்ட.

an'alogue, *n*. ஒத்த சொல்; ஒப்புடைய பொருள்; (உயி.) ஒத்த செயல்வகையுடைய உறுப்பு, இனச்சினை.

anal'ogy, *n*. ஒப்பு, ஒத்திசைவு; இணையொப்பு, ஒத்த உறவு; (கண.) ஒப்புமை, ஒப்புடைமை.

anal'phabet, anal'phabete, *n*. எழுத்தறிவற்றவர்; *a*. நெடுங்கணக்கை அறியாத, எழுத்தறிவற்ற.

analphabet'ic, *a*. நெடுங்கணக்குச் சாராத; அகர வரிசை முறையில் இல்லாத; முற்றிலும் எழுத்தறிவற்ற.

an'alysable, *a*. பிரித்தாராயத்தக்க; கூறுபடுத்தக்கூடிய.

an'alyse, *v*. கூர்ந்து ஆய், நுணுகி ஆராய்; கூறுபடுத்தி ஆராய்; பகுத்து ஆய்; கருமெய்மை காண்; மூலம் காண்; (இலக்.) பாகுபடுத்து; (வேதி.) தனிப்பொருள்களாகக் கூறுபடுத்து.

analys'er, *n*. பகுத்தாய்பவர்; ஒளிக்கருவியில் ஒளி முனைப் படுத்தும் இணைப்பட்டை.

anal'ysis, *n*. பகுப்பு, கூறுபாடு; கருமூலம் காண்டல், பொது மெய்ம்மை ஆய்ந்து தேர்தல்; (வேதி.) பகுப்பாய்வு, கூறு பாட்டாராய்ச்சி; தனிப்பொருள் தேட்டம், ஆக்கக்கூறுகளைத் தேர்ந்தாராய்தல், தேர்வாராய்ச்சி; (கண.) தொகை கூறு படுத்தல்; (இலக்.) வாக்கிய உறுப்பாராய்வு, வாக்கிய உறுப்பிலக்கணம்; *pl*. anal'yses.

an'alyst, *n*. மாற்றியல் தேர்வாராய்ச்சியாளர்.

analyt'ic, *a*. பகுப்பாராய்ச்சி சார்ந்த; பகுத்தாய்கிற; மூல மெய்ம்மைகள் காண்கிற.

analyt'ical, *a*. பகுப்பாராய்ச்சி முறையைப் பின்பற்றுகிற; (மொழி.) உருபுகளுக்குப் பதில் சொற்களை ஆளுகிற.

analyt'ics, *n*. ஆராய்ச்சிமுறை நூல்; தேர்வாராய்ச்சி முறைத் தருக்கநூல்; பகுப்பாராய்ச்சி முறை வடிவியல்.

anamnes'is, *n*. முன் நினைவு, இறந்தகாலம் பற்றி எண்ணங் கள்; மறதியில் ஆழ்ந்துவிட்ட முன்னைய செய்திகளின் மறு நினைவு; நோயாளியின் பழைய நினைவு; பிளேட்டோவின் (Plato) கருத்துப்படி நினைவின் மூல முதற்படிவம்.

anamor'phic, *a*. போகப்போகச் சிக்கல் பெரிதாகுகிற.

anamorph'osis, *n*. குறிப்பிட்ட கோணிய பார்வையில் நேராகத் தெரியும் கோணல்மாணலான வடிவம், நேர் திரி வடிவம்; (தாவ.) நேர் மரபு திறம்பிய மாறுபாடு.

anamor'phous, *a*. திரிபு வடிவமுடைய; நேர் மரபு திறம்பி மாறுபடுகிற.

an'ana, anan'as, *n*. அன்னாசிப்பழம்.

anan'drous, *a*. (தாவ.) பூவிழையற்ற.

an'apaest, *n*. (யாப்.) இரு குறிலசைகளும் ஒரு நெடிலசையும் கொண்ட சீர், குறிலிணை நெடிற்சீர்.

anapaes'tic, anapaes'tical, *a*. குறிலிணை நெடிற்சீரான.

an'aphase, *n*. இனமுனைப்புப்படி, இனக்கீற்றுக்கள் இரு கூறுகப் பிரிந்து குவிவுறும் நிலை.

anaph'ora, *n*. அந்தாதித் தொடை.

anaphrodis'iac, *n*. பாலுணர்ச்சி மட்டுப்படுத்தும் மருந்து; *a*. பாலுணர்ச்சி மட்டுப்படுத்த உதவுகிற.

anaphylax'is, anaphylax'y, *n*. அயற்பொருளைத் தாங்கிக் கொள்ளக்கூடிய வலிவு, வெளியிலுள்ள புரதம் அல்லது வேறு பொருள் குத்தி ஏற்றப்படும்போது அதேபொருள் முன்னரே இருப்பதனுல் தாங்கிக்கொள்ளக்கூடிய ஆற்றல்.

an'aplasty, *n*. உயிர்க்கூறொட்டுமுறை, அருகிலுள்ள நல்ல கூறுகளை ஒட்டி மேலீடான சிறு காயங்களைக் குணப் படுத்தும் மருத்துவ முறை.

anaptyc'tic, *a*. (ஒலி.) மெய்யொலிகளிடையே தோற்றுகிற உயிரொலியைச் சார்ந்த.

anaptyx'is, *n*. (ஒலி.) மெய்யொலிகளிடையே ஓர் உயிரொலி தோன்றுதல்.

an'arak, *n*. = anorak.

an'arch, *n*. குழப்பம் விளைவிப்பவர்; புரட்சித் தலைவர்.

anarc'hic, anarc'hical, *a*. அரசழிந்த; குழப்பமான; சட்ட ஒழுங்கற்ற.

an'archism, *n*. ஆட்சி வேண்டாக் கொள்கை, அரசு இல்லாச் சமுதாய நிலையே மேம்பட்டதென்னும் கோட்பாடு.

an'archist, *n*. அரசிலிக் கோட்பாட்டாளர், ஆட்சியில்லா நிலையே சிறந்ததென்ற கருத்துடையவர்; ஆட்சி கவிழ்ப்பவர்; அரசழிப்பவர்; *a*. அரசிலாக்கோட்பாடுடைய; ஆட்சி கவிழ்க்கிற; கிளர்ச்சி தூண்டுகிற.

anarchist'ic, *a*. அரசிலாக்கோட்பாடுடைய; ஆட்சி கவிழ்க் கிற, கிளர்ச்சி தூண்டுகிற.

an'archy, *n*. அரசிலா நிலை, ஆட்சியில்லா நிலை; அரசழிவு; சட்டமில்லா நிலை, ஒழுங்கின்மை; அமைதிக்கேடு, குழப்பம்.

anar'throus, *a*. (உட.) கணுவற்ற, இணைப்பற்ற; (இலக்.) சார்படையற்ற.

anasar'ca, *n*. தோலடி நீர்க்கோவை.

anasar'cous, *a*. தோலடி நீர்க்கோவையுள்ள.

anas'tasis, *n*. துருக்கியக்கலையில் நரக வேதனைக்காட்சி; நோய் நீங்கி உடல்நலம் தேறுதல், உடல்நல மீட்பு.

anastat'ic, *a*. உறு முனைப்பான, புடைப்புருவான.

anastig'mat, *n*. கதிர்முனைப்புக் கோளாறற்ற கண்ணடிச் சில்லு.

anastigmat'ic, *a*. கதிர் முனைப்புக் கேடற்ற.

anas'tomose, *v*. குறுக்காக இணை; பின்னி இணை.

anastomos'is, *n.* குருதி நாளங்கள் அல்லது மரக்கிளைகள் அல்லது ஆறுகள் ஆகியவை பின்னி ஒன்றுபடல்; *pl.* anastomos'es.

anas'trophe, *n.* (சொல்.) தலைகீழ்மாற்றம்.

anath'ema, *n.* திருச்சபைப் பழிப்பு; சாபம்; பழிப்புரை; பழிகேடர்; பழிகேடு; சாபப்பொருள்; வெறுக்கத்தக்க பொருள்.

anathemat'ical, *a.* வெறுப்புக்குரிய; பழிக்கத்தக்க.

anathematisa'tion, *n.* சாபமிடுதல்; பழித்தல்.

anath'ematise, anath'ematize, *v.* சாபமிடு; பழிபகர்.

anatom'ic, anatom'ical, *a.* உறுப்பியல் சார்ந்த; உடற் கூற்றமைப்புச் சார்ந்த; அமைப்பியலான.

anat'omise, *v.* அறு, கூறுபடுத்து; பகுத்துப்பார்.

anat'omist, *n.* உறுப்பியல் ஆராய்ச்சியாளர், பகுத்தாய்நர்.

anat'omize, *v.*=anatomise.

anat'omy, *n.* அறுத்தல், பிளந்து பார்த்தல், பகுத்தாராய்தல், கூறுபடுத்துதல்; உள்ளமைப்பியல்; உடல் உறுப்புக்களின் அமைப்பியல்; கங்காளம்; சேம உடலம், பதனப்படுத்தப் பட்ட உயிரற்ற உடல், வற்றல் உருவம்.

anat'ta, anat'to, *n.* ஆரஞ்சு சிவப்புச் சாயம்.

an'bury, *n.* குதிரையின் உடலிலுள்ள குருதிநிறப் புடைப்பு; கிழங்கு வகைகளின் வேர்நோய்.

an'cestor, *n.* முன்னோன், மூதாதை, குலமுதல்வர்.

ancesto'rial, *a.*=ancestral.

ances'tral, *a.* முன்னோருக்குரிய; மூதாதையர்களுக்குச் சொந்த மான; முன்னோர் மரபில் வந்த; மூதாதையர் வழியுரிமையான.

an'cestress, *n.* முன்னோள், குலமுதல்வி.

an'cestry, *n.* மூதாதையர் மரபு, ஊங்கணோர் வழி, முன்னோர் வழி; வழி மரபு, குல மரபு.

anc'hithere, *n.* (உயி.) குதிரையின் முன்னோடியென்று கருதப்படும் மிகச் சிறிய மட்டக்குதிரை போன்ற புதையுயிர்ப் படிவ விலங்கு, 'முன்குதிரை'.

anc'hor, *n.* நங்கூரம்; ஆதாரம், பற்றுக்கோடு; *v.* நங்கூர மிடு; நங்கூரமிட்டுக் கப்பலை நிறுத்து; நிலைநிறுத்து; தங்கு, ஓய்வுகொள்; (தொ.) at anchor, நங்கூரமிட்டு; weigh anchor, நங்கூரம் உயர்த்து.

anc'horage [1], *n.* நங்கூரமிட்டு நிற்றல்; நங்கூரமிட்டுத் தங்கு மிடம்; ஆதாரம்; உறுதிக்கடைப்பிடி; கப்பல் தங்குவதற் கான தீர்வை.

anch'orage [2], *n.* துறவியின் குடிசை.

anc'horess, *n.* பெண் துறவி; உலக வாழ்க்கையிலிருந்து ஒதுங்கி வாழ்பவள்.

anc'horet, *n.*=anchorite.

anchoret'ic, anchoret'ical, *a.* துறவிக்குரிய.

anch'or-hold, *n.* நங்கூரத்தின் பிடி; விடாப்பிடி, உறுதிப் பிடி; சேமக்காப்பு.

anch'or-ice', *n.* நிலத்தளப் பனிக்கட்டி.

anc'horite, *n.* துறவி; உலக வாழ்க்கையிலிருந்து ஒதுங்கி யிருப்பவர்.

anc'hor-plate, *n.* தொங்குபாலத்தின் வடக்கம்பிகளுக்கான ஆதாரக்கட்டை.

anch'or-ring, *n.* நங்கூர வளையம்.

anch'or-stock, *n.* நங்கூர அச்சு.

anchov'y, *n.* நெய்த்தோலி போன்ற மீன்வகை.

anchus'a, *n.* மயிரிழை போன்ற தண்டுடைய செடியினம்.

anc'hylose, *v.* மூட்டுக்கள் விறைத்துப் போ; எலும்புகள் பொருத்தப் பெறு.

anchylos'is, *n.* கணுக்கள் திமிர் கொள்ளுதல்; மூட்டுக்களின் விறைப்பு.

anchylostomi'asis, *n.* கொக்கிப்புழு நோய், கொக்கிப்புழு போன்ற புழுவால் ஏற்படும் குருதிச்சோர்வு.

*ancien regime*, (பிர.) *n.* பிரெஞ்சுப் புரட்சி (1789) நிகழ்வ தற்கு முற்பட்ட காலம்.

an'cient [1], *n.* கிழவன், முதியவன்; மூத்தவர், உயர்ந்தவர்; *a.* பண்டைய, தொன்மையான, நெடுநீள் மரபுடைய; ரோமாபுரிப் பேரரசின் வீழ்ச்சிக்கு (கி. பி. 476-க்கு) முற்பட்ட.

an'cient [2], *n.* கொடி; கொடி பிடிப்பவர்.

an'cientry, *n.* மிகு பழமை; பழம்பாணி.

an'cients, *n. pl.* பண்டையர், பண்டைக் காலத்தவர்; கிரேக்கர்; ரோமர்.

ancill'ary, *a.* குற்றேவல் செய்கிற; துணைமையான.

an'cle, *n.* கணுக்கால்.

an'con, *n.* (உட.) முழங்கை, கைமுட்டு; குறுங்கால் ஆட்டு வகை; (க. க.) அழகுக்காகச் சுவர் அல்லது வளைவுகளின் பக்கங்களை ஒட்டி ஆதாரத்தட்டுப் போல அமைக்கப்படும் சிற்ப உறுப்பு; *pl.* anco'nes.

Anco'na, *n.* நடுநிலக்கடலகம் (Mediterranean) சார்ந்த புள்ளிகளையுடைய கோழியினம்.

anc'ress, *n.*=anchoress.

and, *conj.* உம், மற்றும்.

Andalu'sian, *n.* ஸ்பெயின் (Spain) நாட்டிலுள்ள அண்ட லூஷியாவுக்கு உரியவர்; கோழி இனத்தின் வகை; *a.* அண்டலூஷியாவுக்கு உரிய; கோழி இனத்தின் வகை சார்ந்த.

*andan'te*, (இத்.) *n.* (இசை.) இடைநடைச் செலவு; மட்ட மான மென்னடைப் பாட்டு; *adv.* இடைநடைச் செலவில்; மட்டமான மென்னடையில்.

*andanti'no*, (இத்.) *n.* (இசை.) மட்டமான மெல்லிசை நடை; *adv.* மிதமான மெல்லிசை நடையுடன்.

An'derson shel'ter, *n.* விமானத் தாக்குக்கு மாறாக தூக்கிச் செல்லக்கூடிய எஃகுப் பாதுகாப்பு.

an'diron, *n.* விறகுதாங்கி, அடுப்பணைகோல், அடுப்பில் விறகுகளை ஏந்தி வைப்பதற்குரிய இருப்புச்சட்டம்.

androceph'alous, *a.* மனிதத் தலையையுடைய.

androe'cium, *n.* (தாவ.) பூவிழைத் தொகுதி.

an'drogen, *n.* ஆண்பால் இயக்குநீர்மம், ஆண்பால் மரபுக் கூறுகளை வளர்த்துப் பேணவல்ல பொருள்.

androgen'ic, *a.* ஆண்பால் இயக்குநீர்மம் சார்ந்த.

androg'ynous, *a.* இருபால் கூறுகளுடைய; பால் வேறு பாடற்ற; (தாவ.) ஆண் பெண் இருவகைப் பூக்களும் ஒரே மலர்க்கொத்தில் உடைய.

androg'yny, *n.* இருபால் கூறுகளும் ஒருங்கே உடைமை; (தாவ.) ஒரு மலரிலேயே அல்லது ஒரு செடியிலேயே பூவிழை யும் கருவகமும் உடன்கொண்டு இயலும் செடியினம்.

Androm'eda, *n.* குறும்புதர்க் காட்டுச் செடியினத்தின் வகை; வடமீன் குழுக்களுள் ஒன்று.

androm'edotox'in, *n.* குருதியமுக்கத்துக்கு மருந்தாய் உதவும் தாவரச் சரக்கு.

anear', *v.* அணுகு; *adv.* அருகே; ஏறத்தாழ; *prep.* அருகில்.

an'ecdota, *n. pl.* வெளியிடப்படாத வரலாற்று நுணுக் கங்கள்.

an'ecdotage, *n.* நொடிக்கதைத் தொகுதி, துணுக்குத் தொகுதி; கதையளக்கும் கிழவயது.

an'ecdotal, *a.* இடை நிகழ்வான; துண்டுத் துணுக்கான; நொடிக்கதை உருவான.

an'ecdote, *n.* வாழ்க்கை நிகழ்ச்சிக் குறிப்பு; நொடிக்கதை; இடை நிகழ்ச்சி; துண்டுத் துணுக்கு; செய்தித் துணுக்கு.

anecdot'ic, anecdot'ical, *a.*=anecdotal.

an'ecdotist, *n.* வாழ்க்கைக் குறிப்பாளர்; நொடிக்கதையாளர்.

anecho'ic, *a*. எதிரொலியற்ற.

anem'ogram, *n*. காற்றளவைக் குறிப்பு.

anem'ograph, *n*. காற்றின் திசையையும் வேகத்தையும் மதிப்பிட்டளக்கும் கருவி.

anemograph'ic, *a*. காற்றின் திசையையும் வேகத்தையும் அளக்கிற.

anemol'ogy, *n*. காற்றுக்கள் பற்றிய ஆய்வு நூல்.

anemom'eter, *n*. காற்று வேகமானி; கருவியில் காற்றழுத்தம் காட்டும் அமைவு.

anemomet'ric, *a*. காற்று வேகம் அளக்கிற.

anemom'etry, *n*. காற்றின் வேக அளவை.

anem'one, *n*. மலர்ச்செடியினங்களின் வகை; கடற்பஞ்சு; ஆழ்கடலிலுள்ள மணியுருக்கள் போன்ற உயிரினங்களின் வகை.

anemoph'ilous, *a*. காற்றினுல் இனப்பொலிவு பெறுகிற.

anemoph'ily, *n*. காற்றினுல் பெறும் இனப்பொலிவு.

anent', *prep*. பற்றி; குறித்து; தொடர்பாக; நோக்கி.

an'eroid, *n*. நீர்மம் வழங்காத காற்றின் அழுத்தமானி; *a*. நீர்மம் வழங்காத.

an'eurin, aneu'rin, *n*. நரப்பூட்டச்சத்து, சத்துக்குறை பாட்டால் நரம்புகள் சீர்கெடாதபடி தடுக்கும் ஒருவகை ஊட்டம்.

an'eurism, *n*.=aneurysm.

aneuris'mal, *a*.=aneurysmal.

an'eurysm, *n*. (மரு.) குருதிநாள அழற்சி; இயற்கை மீறிய வீக்கம்.

aneurys'mal, *a*. குருதிநாள அழற்சியுடைய; இயற்கை மீறி வீங்கிய.

anew', *adv*. மறுபடியும்; இன்னெரு வகையாக, புதிதாக.

anfractuos'ity, *n*. சுற்று வளைவு; கோணல்மாணல்; சிக்கற் சுற்று மண்டிலம்.

anfract'uous, *a*. சுற்றி வளைந்த; சிக்கலான.

ang'ary, *n*. (சட்.) போரிடும் அரசுகளின் பற்றுரிமை, நடுநிலை தாங்குபவருடைய உடைமைகளைப் பின்னுல் இழப்பீடு செய்யும் எண்ணத்துடன் போரிலீடுபடுபவர் பயன்படுத்து தற்குரிய உரிமை.

an'gel, *n*. தேவதூதர், சம்மனசு; ஆதரவு தரும் தெய்வம்; துணையாளி; மென்மையும் தூய்மையும் உடையவர், களங்க மற்றவர்; அழகுரு; தூதர்; பழங்கால ஆங்கில நாட்டு நாணயவகை.

an'gel-cake, *n*. முட்டையின் வெண்கரு மாவு சர்க்கரை ஆகியவை கலந்து செய்யப்படும் அப்ப வகை.

an'gel-fish, *n*. சுரு மீன் வகை.

an'gel-food, *n*. = angel-cake. .

an'gelhood, *n*. திப்பியம், தேவ்தூதரின் இயல்பு.

angel'ic, *a*. தேவதூதருக்குரிய; தேவதைகளுக்குரிய; தேவதை போன்ற, திப்பியமான.

angel'ica, *n*. சமையலுக்கும் மருந்துக்கும் பயன்படும் ஒரு வகை வாசனைச் செடி.

angel'ical, *a*. = angelic.

angelol'atry, *n*. தேவதை வழிபாடு, திப்பிய வணக்கமுறை.

angelol'ogy, *n*. தேவதூதர் பற்றிய கோட்பாடு.

angeloph'any, *n*. மனிதர்முன் தேவதூதர் வெளிப்படத் தோன்றுதல், தேவதை பிரத்தியட்சம்.

an'gelus, *n*. கன்னித்தாய் மேரி பற்றிய வணக்கப் பாடல்; ரோமன் கத்தோலிக்கக் கோயில்களில் காலை நண்பகல் மாலை வழிபாட்டுக்கு அழைக்கும் மணி.

ang'er, *n*. கோபம், கடுஞ்சினம், சீற்றம்; எரிச்சல், கடு வெறுப்பு; *v*. கோபமூட்டு; எரிச்சலுண்டாக்கு.

an'gico, *n*. தென் அமெரிக்கப் பிசின் மர வகை; அம்மரப் பிசின்.

angin'a, *n*. தொண்டை வீக்கம்; (தொ.) angina pectoris, இடது மார்பு வேதனை தரும் இதயநோய்.

angiocar'pous, *a*. உறையினுள் காயுடைய; சிதல் தளத்தை உறையினுள் கொண்ட.

angio'ma, *n*. குருதிக்கட்டி; *pl*. angio'mata.

an'giosperm, *n*. மூடுவிதைச் செடியினம்; *pl*. angiosperm'ae.

ang'le[1], *n*. மூலை; வடிவின் புறமுனைப்பு, கூம்பு; சாய்வு; நோக்கின் சாய்வு; (கண.) கோணம், முடக்கு, சமதள வரை மீதுள்ள கோட்டின் சாய்வளவு, இரு தளங்களின் இடை வெளிச் சாய்வளவு, தளச் சாய்வளவு.

ang'le[2], *n*. தூண்டில்; *v*. தூண்டிலிட்டு மீன் பிடி; வசப் படுத்திப் பிடிப்பதற்காகத் தேடித்திரி, கைப்பற்ற நாடு; மருட்டு; பொறியில் பெற முயலு; மாறுபட்ட உள்ளெண் ணத்துடன் செய்தி வெளியிடு.

Ang'le, *n. pl*. ஆங்கிலேயரின் முன்னோரான செர்மானிய இனத் தின் கிளையினத்தைச் சேர்ந்தவர், 'ஆங்கிள்' மரபினர்.

ang'led, *a*. கோணத்தை உடைய.

ang'ler, *n*. தூண்டிலிட்டு மீன் பிடிப்பவர், மீன் நாடித் தூண்டிலுடன் திரிபவர்.

ang'lewise, *adv*. கோணமாக, சாய்வாக.

ang'le-worm, *n*. தூண்டிற் புழு.

Ang'lian, *n*. ஆங்கிலேயர் முன்னோர் உட்பட்ட செர்மானிய இனத்தவர், 'ஆங்கிள்' மரபினர்; 'ஆங்கிள்' மரபுக்குரிய கிளைமொழி; 'ஆங்கிள்' மரபின் பேச்சு வழக்கு; *a*. 'ஆங்கிள்' மரபுக்குரிய.

Ang'lican, *n*. ஆங்கில நாட்டுத் திருச்சபை மரபு ஏற்பவர்; கிறித்தவ சமயத்தில் ஆங்கில நாட்டு உரிமைக்கிளை சார்ந்த வர்; *a*. ஆங்கில நாட்டுத் திருச்சபை மரபு சார்ந்த; கிறித்தவ சமயத்தின் ஆங்கில நாட்டு உரிமைக்கிளை சார்ந்த.

Ang'licanism, *n*. ஆங்கில நாட்டுத் திருச்சபை மரபுக்குரிய கோட்பாடு; கிறித்தவ சமயத்தின் ஆங்கில நாட்டு உரிமைக் கிளை; ஆங்கில நாட்டு மரபுச் சார்பு.

*Ang'lice*, (ல.) *adv*. ஆங்கிலத்தில்.

Ang'licise, *v*. ஆங்கில மரபுப்படுத்து, ஆங்கில மயமாக்கு; ஆங்கில மரபுக்கு இணக்கு, ஆங்கிலப் பண்புக்கிசைய மாற்றி யமை; ஆங்கில மயமாகு.

Ang'licism, *n*. ஆங்கில மரபு; ஆங்கிலப்பண்பு; ஆங்கில நாட்டுக்குரிய தனிச்சிறப்புக்கூறு; ஆங்கிலச் சார்பு; ஆங்கில நாட்டுச் சார்பான கோட்பாடு.

Ang'licize, *v*. = Anglicise.

ang'lify, *v*. ஆங்கிலமாக்கு.

ang'list, *n*. ஆங்கில மொழியையும் இலக்கியத்தையும் பண் பாட்டையும் பற்றித் தேர்ந்த அறிவுடையவர்.

anglist'ic, *n*. ஆங்கில மொழியையும் இலக்கியத்தையும் பண் பாட்டையும் பற்றிய ஆராய்ச்சித்துறை.

Ang'lo-Amer'ican, *n*. ஆங்கிலோ அமெரிக்கர், ஆங்கில நாட்டுப் பிறப்பு அல்லது மரபுரிமையுடன் அமெரிக்க நாட்டுக் குடி வாழ்க்கை அல்லது குடியுரிமை உடையவர்; *a*. ஆங்கில நாட்டுப் பிறப்பு அல்லது மரபுரிமையுடன் அமெரிக்க நாட்டுக் குடி வாழ்க்கை அல்லது குடியுரிமையுடைய; ஒரு கூறு ஆங்கிலச் சார்பாகவும் மறுகூறு அமெரிக்கச் சார்பாகவும் உள்ள.

Ang'lo-Cath'olic, *n*. ஆங்கிலோ கத்தோலிக்கர், ஆங்கில நாட்டுத் திருச்சபை மரபு கத்தோலிக்க நெறி அளாவியதே என்று வற்புறுத்தும் கட்சியாளர்; ஆங்கில நாட்டு மரபுக் குரிய கத்தோலிக்கரெனத் தம்மைக் கருதுபவர்; குரு மரபை ஆதரிக்கும் கட்சி சார்ந்த ஆங்கில நாட்டுத் திருச்சபை மரபினர்; *a*. ஆங்கிலநாட்டு மரபுக்குரிய கத்தோலிக்கரெனத் தம்மைக் கருதுகிற.

**Ang'lo-French'**, *n.* ஆங்கிலோ பிரஞ்சுமொழி, முன்பு ஆங்கில நாட்டில் பேசப்பட்ட பிரஞ்சு மொழி ; *a.* இங்கிலாந்து பிரான்சு ஆகிய இரு நாடுகளுக்கும் உரிய ; ஆங்கிலநாடு பிரான்சு ஆகிய இரு நாடுகளுக்கும் இடையேயுள்ள.

**Ang'lo-In'dian**, *n.* ஆங்கிலோ இந்தியர், இந்தியாவின் நீடித்துக் குடிவாழும் ஆங்கிலேயர் ; ஐரோப்பிய இந்தியக் கலப்பினத்தவர் ; *a.* இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் உரிய ; இந்தியாவில் பேசப்படுவது போன்ற ஆங்கில மொழி சார்ந்த ; ஐரோப்பிய இந்தியக் கலப்பினஞ் சார்ந்த.

**Ang'lo-I'rish**, *n.* அயர்லாந்தில் பேசப்படுவது போன்ற ஆங்கில மொழி ; ஆங்கில மரபில் வந்த ஐரிஷ் மக்கள் ; ஆங்கில ஐரிஷ் கலப்பினத்தவர் ; *a.* இங்கிலாந்துக்கும் அயர்லாந்துக்கும் உரிய ; அயர்லாந்தில் பேசப்படுவது போன்ற ஆங்கில மொழி சார்ந்த ; ஆங்கில ஐரிஷ் கலப்பினஞ் சார்ந்த.

**Ang'lo-Is'raelite**, *n.* அசிரியர்களால் (Assyrians) கி. மு. 721-இல் கொண்டு செல்லப்பட்டுத் தவறிப்போன இஸ்ரவேலர் குலங்களின் மரபினரே ஆங்கிலேயர் என்னும் கோட்பாட்டாளர்.

**Angloman'ia**, *n.* ஆங்கில வெறியார்வம், ஆங்கில மோகம்.

**Angloma'niac**, *n.* ஆங்கில வெறியர்.

**Ang'lo-Nor'man**, *n.* இங்கிலாந்திலுள்ள நார்மானியர் வழக்கிலுள்ள பிரஞ்சு (French) மொழி ; *a.* இங்கிலாந்திலுள்ள நார்மானியருக்குரிய.

**Ang'lophil, Ang'lophile**, *n.* ஆங்கிலப் பண்பார்வலர் ; *a.* ஆங்கிலப் பண்பார்வமிக்க.

**Ang'lophobe**, *n.* ஆங்கிலச் சார்பு வெறுப்பவர் ; ஆங்கிலச் சார்பினை அஞ்சுபவர் ; *a.* ஆங்கிலச் சார்பு வெறுக்கிற, ஆங்கிலச் சார்பு அஞ்சுகிற.

**Anglophob'ia**, *n.* ஆங்கிலச் சார்பு வெறுப்பு.

**Anglophob'iac, Anglophob'ic**, *a.* ஆங்கிலச் சார்பு பற்றி வெறுப்புடைய.

**Ang'lo-Sax'on**, *n.* பழங்கால ஆங்கில மொழி ; ஆங்கிலேயரின் முன்னோரான செர்மானிய இனத்தவர் ; ஆங்கிலேயரின் மூதாதையர் ; ஆங்கில மொழி பேசுபவர் ; ஆங்கில இன மரபினர் ; *a.* பழங்கால ஆங்கில மொழி சார்ந்த ; ஆங்கிலேயரின் மூதாதையரினம் சார்ந்த ; ஆங்கில மொழி மரபு சார்ந்த.

**Ang'lo-Sax'ondom**, *n.* ஆங்கில மொழி பேசப்படும் உலகப் பரப்பு.

**Ang'lo-Sax'onism**, *n.* ஆங்கிலமொழி மரபின் தனி உரிமைக் கோரிக்கைகள் பற்றிய நம்பிக்கை.

**angol'a, angor'a**, *n.* துருக்கி நாட்டு ஆட்டு வகை ; பட்டுப் போன்ற மெல்லிய கம்பளி வகை ; கம்பளி ஆடை வகை ; பட்டுப் போன்ற மென்மயிரை உடைய சிறு விலங்கு வகை.

**angostur'a**, *n.* காய்ச்சலுக்கு மருந்தாயுதவும் தென் அமெரிக்க மரப்பட்டை வகை ; (தொ.) angostura bitters, அங்கோஸ்துரா மரப்பட்டையின் குடிநீர்.

**ang'ry**, *a.* கோபமான, சீற்றமுள்ள, கடுஞ் சினங்கொண்ட ; கடு வெறுப்புடைய ; சீறுகிற.

**Ang'strom un'it**, *n.* ஒளி அலைகளின் நீளத்தை அளந்து மதிப்பிடுவதற்குரிய நுண்ணளவைக்கூறு.

**ang'uifauna**, *n.* திணைக்குரிய பாம்பினத் தொகுதி.

**ang'uiform**, *a.* பாம்புருவான.

**Anguill'a**, *n.* விலாங்கினம், மலங்கினம்.

**ang'uine**, *a.* பாம்பு போன்ற ; பாம்பிற்கு உரிய.

**ang'uiped, ang'uipede**, *a.* பாம்பு வடிவான கால்களுடைய.

**Ang'uis**, *n.* நிலப்புழுவினம் ; நாங்கூழ்.

**ang'uish**, *n.* உடல் நோவு ; பொறுக்கமாட்டாத வலி ; சாத்துயர் ; மனநோய் ; கடுந்துயரம் ; *v.* வேதனைப்படுத்து ; கடுந்துயருறு.

**ang'ular**, *a.* கோணத்தின் உருவான, முடக்கான ; கோணத்தை உட்கொண்ட ; கோணங்களையுடைய ; கோண வடிவான முக்குடைய ; சாய்வான ; கோணத்தின் அளவான ; ஒடுங்கிய உடலுடைய ; எலும்பும் தோலுமான, உருட்சி திரட்சியற்ற ; நடை நயமற்ற ; விறைப்பு நடையான.

**angula'rity**, *n.* கோணத்தின் இயல்பு, முடங்கிய தன்மை ; தனி இயல்பு, சமூகத்துக்கு ஒவ்வா முரண்பாடு.

**ang'ulate**, *a.* மூலை முடுக்குக்களோடு கூடிய ; முக்கோண வடிவமான ; *v.* கோணத்தின் வடிவமாக்கு.

**ang'ulated**, *a.* மூலை முடுக்குக்களோடு கூடிய ; முக்கோண வடிவான.

**angula'tion**, *n.* கோணமாக உருவாதல் ; முடக்காக்குதல் ; கோண வடிவான முக்கு.

**angus'ti-foliate**, *a.* ஒடுங்கிய இலைகளையுடைய.

**angus'ti-rostrate**, *a.* ஒடுங்கிய அலகுடைய.

**angustura'**, *n.* = angostura.

**anharmon'ic**, *a.* இசைவில்லா ; முரணிசையான.

**anhela'tion**, *n.* குறு மூச்சு, மூச்சுத் திணறல்.

**anhy'dride**, *n.* (வேதி.) நீர் நீக்கப்பட்ட காடி.

**anhy'drite**, *n.* (வேதி.) கனிப்பொருள்களில் ஒன்று, நீர் வாங்கப்பெற்ற சுண்ணக்கந்தகி.

**anhyd'rous**, *a.* (வேதி.) மணியுருநிலையின் நீர் வாங்கப்பட்ட.

**anicon'ic**, *a.* மனித அல்லது விலங்கு உருவில் அமையாத.

**ani'conism**, *n.* பொருளைக் கடவுளின் உருவமாகக் கருதாது குறிக்கும் குறியாக மட்டுமே கருதி வழிபடும் முறை.

**ani'conist**, *n.* குறியை உருவமாகக் கொள்ளாது கடவுளை நினைவூட்டும் கருத்துக்குறிப்பாக மட்டும் கொள்பவர்.

**an'icut**, (தமி.) *n.* அணைக்கட்டு.

**anigh'**, *adv.*, *prep.* அருகே.

**an'il**, *n.* அவுரிச்செடி ; அவுரிச் சாயம், நீலச்சாயம்.

**an'ile**, *a.* கிழவியின் நிலையுடைய, கிழடு தட்டிய, தளர்வுற்ற.

**an'iline**, *n.* பண்டு அவுரியிலிருந்தும் இப்போது கீலெண்ணெயிலிருந்தும் கிடைக்கும் சாயப்பொருள் ; *a.* சாயப்பொருள் சார்ந்த.

**anil'ity**, *n.* கிழவிநிலை, கிழத்தனம், முதுமைத்தளர்ச்சி.

**animadver'sion**, *n.* குறைகூறல், கடிந்துரை, இடித்துரை, கண்டித்தல்.

**animadvert'**, *v.* கருத்தில் பதிவு செய்துகொள் ; திறனாய்ந்து உரை ; குறை சொல் ; இடித்துரை ; குறித்துக்கொள்.

**an'imal**, *n.* விலங்கு, இயங்கும் உயிரினம், பிராணி, உயிர்மை ; நாற்கால் உயிரினம் ; மாக்களில் வைத்து எண்ணப்படுவர் ; புலனுகர்ச்சியில் தோய்ந்தமைபவர் ; *a.* விலங்கு சார்ந்த ; விலங்கு போன்ற ; கீழ்நிலை உயிரினத்துக்குரிய ; இழிந்த, கீழான ; உடலின்பம் நாடுகிற ; உயிர்த்துடிப்புடைய, உயிரியக்கமுடைய ; இயங்கும் உயிரினம் சார்ந்த.

**animal'cule**, *n.* குறுவிலங்கு; சிற்றுயிரினம் ; நுணுக்க உயிரி ; கண்ணுக்குப் புலப்படாத உயிரினம்.

**animal'culism**, *n.* உடலின் செயல்கள் யாவும் நுண் உயிரினங்களின் செயல்விளைவே என்ற கோட்பாடு.

**animal'culist**, *n.* உடலியக்கத்துக்கு நுண் உயிரினங்களே காரணம் என்ற கோட்பாட்டாளர்.

**an'imalise**, *v.* விலங்கின் உருவங்கொடு ; விலங்கின் வடிவிற் கருத்துருவங்கொள் ; உயிரின் பண்பேற்று ; உயிர்ப்பொருளாக மாற்று ; விலங்கியற்படுத்து ; புலனுகர்ச்சிப்படுத்து.

**an'imalism**, *n.* விலங்கியல் வாழ்க்கை ; புலனுகர்வு இயல்பு ; மனிதர் விலங்கினத்துட்பட்டவர் என்ற கோட்பாடு.

**an'imalist**, *n.* புலனுகர்ச்சி வாழ்க்கை வாழ்பவர் ; புலனுகர்ச்சி வாழ்க்கைக் கோட்பாட்டாளர் ; விலங்குகளைப்பற்றிய கதை எழுத்தாளர் ; விலங்குகளின் ஓவியம் வரைபவர் ; விலங்குகளின் உருவம் செதுக்குபவர்.

**ap'othegm**, *n.*=apophthegm.

**apotheos'is**, *n.* தெய்வமாக்கல்; புகழ்ந்து போற்றுதல்; கடவுள்மங்கலம்; பிரதிட்டை; அடியவர் குழாத்தில் சேர்த்தல்; கொள்கை வழிபாடு.

**apoth'eosize**, *v.* தெய்வமாக்கு.

**apotropa'ic**, *a.* தீங்கு விலக்குகிற; தீமை விலக்கத்தக்க.

**ap'ozem**, *n.* வடிசாறு, கியாழம்.

**appal'**, *v.* திகைக்கவை, அச்சுறுத்து.

**appall'ing**, *a.* திகைக்க வைக்கிற.

**app'anage**, *n.*=apanage.

**apparat'us**, *n.* ஆய்கருவி, செய்கருவி, கருவிகலம், இயல் நூல் செய்ம்முறைகள் முதலியவற்றிற்கு வேண்டிய கருவி கரணங்களின் அமைவு; இயற்கை உறுப்பமைவு; ஆராய்ச்சிக்கு வேண்டும் சாதனங்கள்.

**appa'rel**, *n.* கிறித்தவ சமயக்குருக்கள் அங்கியிலுள்ள சித்திரப் பூவேலைப்பாடுகள்; ஆடை, உடை; *v.* அணிவி; ஒப்பனை செய்.

**appar'ency**, *n.* வெளிப்படைத் தெளிவு; சட்டப்படி உறுதியான பின்னுரிமை.

**appa'rent**, *a.* தோற்றமான; வெளிப்படையான; எளிதில் உணரத்தக்க; மேலீடாகத் தோன்றுகிற; காட்சி மூலம் உணரப்பட்ட; உறுதிப்படுத்தப்பெறுத; (தொ.) heir apparent, சட்டப்படி உறுதியான பின்னுரிமையுடையவர்.

**appari'tion**, *n.* பொய்த்தோற்றம்; இறந்தவர்களின் உருவத் தோற்றம்; ஆவியுரு, பேய்.

**appa'ritor**, *n.* ரோமக் (Roman) குற்றஇயல் நடுவரின் ஏவலர்; பொது நீதிமன்றத்தின் அல்லது சமயத்துறை நீதிமன்றத்தின் அதிகாரி; கட்டியக்காரன், வாயிலோன்.

**appeal'**, *n.* மேல் முறையீடு, மேல் வழக்கு; மேல் வழக்காடும் உரிமை; வேண்டுகோள்; *v.* மேல் வழக்காடு; வேண்டுகோள் விடு; அழை; கவனிக்கும்படி செய்; நோக்கிச் செயலாற்று; கவர்ச்சியூட்டு; (தொ.) appeal to the country, பொதுத்தேர்தலின் மூலம் மக்கள் கருத்திசைவு நாடு.

**appeal'able**, *a.* மேல் வழக்காடத்தக்க; வேண்டுகோள் விடுத்தற்குரிய.

**appeal'ing**, *a.* கவர்ச்சியூட்டுகிற.

**appear'**, *v.* கண்ணுக்குத் தோன்று, முறைப்படி முன்னிலைப்படு; பலர்முன் காட்சியளி; பிரதிநிதியாகச் செயலாற்று; வெளிப்படு; வெளிப்படையாகப் புலப்படு; போன்று தோற்றமளி.

**appear'ance**, *n.* தோன்றுதல்; வந்திருத்தல்; தோற்றம்; வெளித்தோற்றம்; வெளிப்பகட்டு; பொய்த்தோற்றம்; உரு வெளித் தோற்றம்; வெளிவரல்; (தொ.) keep up appearances, ஒப்புக்காகப் புறத்தோற்றத்தைக் கைவிடாமலிரு; put in an appearance, நேரில்வந்து தோன்று; to all appearances, வெளியே தெரிகிற வரையில்.

**appeas'able**, *a.* ஆற்றத்தக்க, அமைதிப்படுத்தத்தக்க.

**appease'**, *v.* ஆற்று; தணி; சமாதானப்படுத்து, அமைதிப்படுத்து, இன்மொழி கூறிச் சாந்தப்படுத்து; திருப்திப்படுத்து; பணம் கொடுத்துச் சரிப்படுத்து; விட்டுக்கொடுத்து இணக்குவி; ஆவல் நிறைவேற்று.

**appease'ment**, *n.* ஆற்றுதல், தணித்தல், திருப்திப்படுத்துதல்; தணிக்கப்பெற்றநிலை.

**appell'ant**, *n.* மேல் வழக்காடி, கீழ்நீதிமன்றத் தீர்ப்பை எதிர்த்து மேல்நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்பவர்; *a.* வேண்டுகோள் செய்கிற; (சட்.) மேல்வழக்குத் தொடர்பான.

**appell'ate**, *a.* மேல்வழக்குச் சார்ந்த; மேல்முறையீடுகளை ஏற்று ஆராய்கிற.

**appella'tion**, *n.* பெயர்; தனி மனிதருக்கு இட்டழைக்கும் குறிச்சொல்; பட்டப்பெயர், இடு பெயர்.

**appell'ative**, *n.* பொதுப்பெயர்; ஒரு குழுவினத்தைச் சார்ந்த ஒவ்வொருவருக்கும் அல்லது ஒவ்வொன்றுக்கும் வழங்கத்தக்க பெயர்; இடு பெயர்; *a.* ஒரு வகுப்பைக் குறிப்பிடுகிற, பொதுவான பெயரீட்டுக்குரிய.

**append'**, *v.* ஒட்டு; ஒட்டித் தொங்கவிடு; இணை.

**appen'dage**, *n.* இணைப்பு, பின் ஒட்டு; தொங்கல், தொங்குபவர்; பின்சேர்ப்பு; துணையுறுப்பு, சினை; புடை வளர்ச்சி; மிகை ஒட்டுப் பொருள், துணைப்பொருள், சார்பொருள்.

**appen'dant**, *n.* அண்டியிருப்பவர்; அடுத்துள்ள பொருள்; துணைப்பண்பு, இயல்பு.

**appendicec'tomy**, *n.* குடல்முளை அகற்றுதல்.

**appendicit'is**, *n.* குடல்முளை அழற்சி.

**append'icle**, *n.* சிறுதுணையுறுப்பு.

**appendic'ular**, *a.* துணையுறுப்புச் சார்ந்த.

**appen'dix**, *n.* பிற்சேர்க்கை, இணைப்பு, அனுபந்தம்; (உள்.) முனை, முளை, ஓர் உறுப்பின் மேற்புறத்தினின்று தோன்றும் சிறுமுளை; குடல்முளை; *pl.* appen'dices, appen'dixes.

**apperceive'**, *v.* பொறியுணர்வை உளங்கொண்டு புலனுணர்வாக்கு.

**appercep'tion**, *n.* மனத்தில் தன்னுணர்வு, உள்நோக்கு; உட்புலன் உணர்ச்சி; புலன் உணர்வு, முன்னறிவோடு புணர்த்தல்.

**appercep'tive**, **appercip'ient**, *a.* பொறிவுணர்வை வாங்கிப் புலனுணர்வாக்கும் இயல்புள்ள, புதிய பொறியுணர்வைப் பழைய உணர்வுகளுடன் இணைக்கும் திறமுள்ள.

**appertain'**, *v.* உரித்தாயிரு, சார்ந்திரு; பொருத்தமாயிரு; தொடர்புடையதாயிரு.

**app'etence**, **app'etency**, *n.* வேட்கை, ஆவல், விருப்பம்; நாட்டம்.

**app'etent**, *a.* ஆர்வங்கொண்ட, பெருவிருப்புடைய.

**app'etite**, *n.* விருப்பம், நாட்டம், இயல்பான தேவைகளைத் தீர்த்துக் கொள்ளும் ஆவல்; பசி; பசியார்வம்; நுகர்ச்சி வேட்கை; இன்சுவைக்கவர்ச்சி.

**appet'itive**, *a.* பசியைத்தூண்டும் இயல்புடைய; ஆவலெழுப்புகிற.

**app'etize**, *v.* பசியுண்டாக்கு; ஆராயத்தூண்டு.

**app'etizer**, *n.* பசிச்சுவை பெருக்கும் பொருள்.

**app'etizing**, *a.* பசிச்சுவை உண்டுபண்ணுகிற.

**applaud'**, *v.* கைதட்டுவது மூலமாய் உடன்பாட்டினை உரக்கத் தெரிவி; ஆதரவு தெரிவி; மெச்சு; பாராட்டு; புகழ்.

**applause'**, *n.* கைகொட்டி ஆர்ப்பரித்தல்; உரக்கத்தெரிவிக்கப்பட்ட ஒப்புதல்; ஆரவாரப்பாராட்டு.

**applaus'ive**, *a.* பாராட்டி ஆர்ப்பரிக்கிற.

**ap'ple**, *n.* ஆப்பிள் பழம்; (தொ.) apple of discord, பகைமை-போட்டி இவற்றிற்குக் காரணமாயுள்ள பொருள்; apple of Sodom, Dead Sea apple, பார்ப்பதற்கு அழகாயிருந்து தொட்டால் சாம்பலாக உதிர்ந்துவிடும் பழம்; அழகாயிருந்து ஏமாற்றந்தரும் பொருள்; apple of the eye, கண்மணி, விழிப்பாவை; அருமையாக வைத்திருக்கும் பொருள்; upset the apple-cart, திட்டங்களைப் பாழாக்கு.

**ap'ple-brandy**, *n.* புளிப்பேறிய ஆப்பிள் சாற்றிலிருந்து வடிக்கப்படும் சாராயம்.

**ap'ple-butter**, *n.* புளிப்பேறிய ஆப்பிள் சாற்றில் வதக்கிய ஆப்பிள் சுவைச் சத்து.

**ap'ple-cheese**, *n.* அழுத்தப்பட்ட ஆப்பிள் பழச்சக்கை.

**ap'ple-jack**, *n.* ஆப்பிள் சாராயத்தின் அமெரிக்கப்பெயர்.

**ap'ple-john**, *n.* வாடியும் கெடாமலிருக்கும் ஆப்பிள் வகை.

**ap'ple-pie**, *n.* ஆப்பிள் பணியாரம்.
**ap'ple-pomace**, *n.* சாறு பிழிந்தெடுக்கப்பட்ட ஆப்பிள் பழச்சக்கை.
**appli'able**, *a.*=applicable.
**appli'ance**, *n.* பயன்படுத்தல் ; துணைக்கருவி, சாதனம்.
**app'licable**, *a.* பயன்படத்தக்க ; பொருத்திக் காட்டக்கூடிய, இயைபுள்ள.
**app'licant**, *n.* குறையிரப்போர், மனுதாரர், விண்ணப்பம் செய்துகொள்பவர்.
**applica'tion**, *n.* வேண்டுகோள் ; விண்ணப்பம் ; மேலே பூசுதல், செயற்படுத்தல், பயன்படுத்துதல்; பூசப்படும் சாந்து தைலம் முதலியன, பற்று, பூச்சு ; பொருந்தவைத்தல் ; பொருத்தம் ; இடைவிடா முயற்சி.
**app'licative**, *a.* செயல்முறையான.
**app'licatory**, *a.* பயன்படுத்தக்கூடிய.
**applied'**, *a.* செயல்முறை சார்ந்த ; (தொ.) applied science, செயல்முறை விஞ்ஞானம்.
**applique'**, *n.* மேலடைப்பணி, ஒரு பொருளினின்று வெட்டப் பட்டு மற்றொன்றின் மேல் பொருத்தப்படும் ஒப்பனை வேலைப்பாடு அல்லது அணிகலன்.
**apply'**, *v.* இடு, அருகே வை ; மேல் வை ; கருத்தூன்று ; பயன்படுத்து ; தொடர்புடையதாகச் செய், பொருந்து ; ஈடுபடுத்திக்கொள் ; நன்கு கவனி ; குறையிரந்து கேள் ; விண்ணப்பம் செய்துகொள் ; வேண்டுகோள் விடு.
*appoggiatur'a*, (இத்.) *n.* (இசை.) முன்வரும் துணைச்சுரம்.
**appoint'**, *v.* காலங்குறி ; உறுதி செய் ; நியமி ; இடத்தில் அமர்த்து ; விதித்துக்கொடு ; உடைமை முதலியவை சேரிடம் அறிவி.
**appointee'**, *n.* நியமிக்கப்பெற்றவர்.
**appoint'ment**, *n.* வேலையில் அமர்த்தல், நியமனம், பணி, குறிப்பிடுதல், உறுதி செய்தல் ; சந்திப்புத்திட்டம் ; விதித்துக் கொடுத்தல் ; தீர்ப்பு ; அவசரச்சட்டம்.
**apport'**, *n.* கண்காணு ஆற்றலால் கொண்டுவந்து காட்டப் படும் பருப்பொருள்.
**appor'tion**, *v.* பகுத்துக் கொடு, பங்கிடு செய், பிரித்துக் கொடு.
**appor'tionment**, *n.* பங்கிடு, பகுத்துக் கொடுத்தல், பாதீடு.
**appose'**, *v.* ஒன்றன்மேல் மற்றொன்றைப் பொருந்த வை ; ஆவணத்தின்மேல் முத்திரை வை ; ஒன்றன் பக்கத்தில் ஒன்றாக வை ; எதிர்நில்.
**app'osite**, *a.* நன்கமைந்த, இசைவான, தகுதியான, பொருத்தமான.
**apposi'tion**, *n.* முத்திரை பொறிப்பு ; புடை வைப்பு, அருகமைவு ; (இலக்.) நேரியைவு, ஒரே தொடர்புற வைத்தல்.
**apposi'tional, appos'itive**, *a.* அடுத்தடுத்து வைக்கப் பட்ட, நேரியைபான.
**apprais'able**, *a.* மதிப்பிடக்கூடிய.
**apprais'al**, *n.* = appraisement.
**appraise'**, *v.* விலைகுறி, மதிப்பிடு, தரம் குறி.
**appraise'ment**, *n.* மதிப்பீடு, மதிப்பிடுதல், தர மதிப்பு.
**apprais'er**, *n.* சொத்து மதிப்பாளர், தரம் கணிப்பவர்.
**appre'ciable**, *a.* மதிப்பிடத்தக்க, உணரத்தக்க, புலன்களுக்குத் தெரியக்கூடிய, கணிசமான.
**appre'ciate**, *v.* மதிப்பிடு, சரியாகக் கணி ; உணர், உணர்ந்து நுகர் ; பாராட்டு ; மதிப்பை உயர்த்து ; மதிப்பில் உயர்.
**apprecia'tion**, *n.* மதிப்பீடு, நடுநிலை முடிபு ; உண்மை யுணர்ந்து போற்றுதல் ; நுகர்வுணர்வு ; பாராட்டு, குண நலன்களைத் தக்கவாறு ஒப்புக் கொள்ளல் ; மதிப்புயர்வு ; திறனாய்வுரை, திறனாய்வுக்கட்டுரை.
**appre'ciative**, *a.* உண்மையுணரும் இயல்புடைய, பாராட்டுதல் தெரிவிக்கிற.
**appre'ciator**, *n.* பாராட்டுபவர், சரியாக மதிப்பிடுபவர்.
**appre'ciatory**, *a.* = appreciative.
**apprehend'**, *v.* கைப்பற்று ; கைதுசெய் ; புலன்கொள், பொருளறி, உணர் ; அறி, எதிர்நோக்கி அஞ்சு, ஐயுற்று அஞ்சு.
**apprehensibil'ity**, *n.* மனங்கொள்ளும் தன்மை ; புலனுணர் வாற்றல்.
**apprehen'sible**, *a.* உளங்கொள்ளத்தக்க.
**apprehen'sion**, *n.* கைப்பற்றல் ; கைது செய்தல் ; மனத்தில் வாங்கிக் கொள்ளுதல்; கருத்து புரிந்து கொள்ளுதல்; அச்சம்.
**apprehen'sive**, *a.* புலன்களால் பற்றுதற்குரிய ; மனத்தால் வாங்குதற்குரிய ; கருத்துடைய, உணர்கிற, அறிவுக்கூர்மை யுள்ள ; ஐயுற்றஞ்சுகிற ; அச்சங்கொள்கிற.
**appren'tice**, *n.* பணிபயில்பவர் ; மற்றொருவருக்குக் கட்டுப் பட்டு வேலை கற்றுக்கொள்பவர், புது வேலையாள், கற்றுக் குட்டி ; *v.* பணிபயில்வோராகப் பிணைப்படுத்து.
**appren'ticeship**, *n.* தொழில் பயில்வோர் நிலை, தொழிற் பயிற்சி ; செயல்முறைப் பயிற்சிக் காலம் ; பயிற்சிப் பருவம்.
**apprise'**, *v.* அறிவி, தெரிவி.
**apprize'**, *v.* மதிப்பிடு, தரமுணர், நலங்கண்டு பாராட்டு ; கடன் தீர்க்க விற்பனை செய்.
**approach'**, *n.* அணுகுதல் ; ஏறத்தாழ ஒத்திருத்தல் ; அணுகு நெறி, நோக்கு ; செல்வழி ; பாதை ; *v.* அணுகு, இயல்பு முதலியனவற்றில் ஏறத்தாழ ஒத்திரு ; கண்டுபேசு ; (படை.) தாக்குக் குறியை அடைவதற்குக் குழிகள்வெட்டிச் சாலைகள் போடு.
**approachabil'ity**, *n.* அணுகக்கூடிய நிலை.
**approach'able**, *a.* கிட்டிச் செல்லத்தக்க, நெருங்கக்கூடிய.
**approach'es**, *n. pl.* (படை.) முற்றுகையிடுபவர்கள் தாக்குக் குறியை அடைவதற்கு வெட்டுக் குழிகள் போடும் பாதைகள் முதலியன.
**app'robate**, *v.* ஒப்புறுதியளி, அதிகார பூர்வமாக ஏற்றுக் கொள்.
**approba'tion**, *n.* பாராட்டு, ஏற்றுக்கோடல், அங்கீகாரம்.
**app'robative, app'robatory**, *a.* பாராட்டுகிற, ஏற்றுக் கொள்கிற.
**approof'**, *n.* தேர்வு, தெளிவு, ஏற்பிசைவு.
**approp'riate**, *a.* உரிய, ஒன்றுக்கே சிறப்பான, தகுதியுள்ள, சரியான, பொருத்தமான, ஒன்றுக்கென ஒதுக்கி வைக்கப் பட்ட ; *v.* உரிமைப்படுத்திக்கொள் ; தனதாக்கிக்கொள் ; குறிப்பிட்ட காரியங்களுக்குப் பயன்படுத்து அல்லது ஒதுக்கிவை.
**appropria'tion**, *n.* கைப்பற்றல் ; ஒதுக்கிவைத்தல் ; (தொ.) appropriation bill, ஒதுக்கு மசோதா, பண ஒதுக்கி வைப்பு மசோதா.
**approp'riative**, *a.* தன் சொந்த உடைமையாக்கிக் கொள் கிற ; ஒன்றனுக்கென ஒதுக்கி வைக்கிற.
**approv'able**, *a.* ஒப்புக்கொள்ளத்தக்க, ஏற்கக்கூடிய.
**approv'al**, *n.* ஏற்றல், ஒப்புறுதி, அங்கீகாரம்.
**approve'**, *v.* ஏற்றுக்கொள், நற்சான்றளி ; மெய்ப்பித்துக் காட்டு ; உறுதிப்படுத்து ; பாராட்டு.
**approve'd**, *a.* அங்கீகாரம்பெற்ற ; (தொ.) approved school, அரசாங்கம் நடத்துகிற இளங்குற்றவாளிச் சீர்திருத்தப் பள்ளி.
**approv'er**, *n.* ஒப்புக்கொள்பவர் ; (சட்.) குற்ற உடந்தைச் சாட்சி, குற்றத்துக்கு உடந்தையாயிருந்து பிறகு குற்ற வாளிக்கு எதிராகச் சான்று கூற அனுமதிக்கப்பட்ட ஒருவர்.
**approx'imate**, *a.* மிக்க அண்மையில் உள்ள, பெரிதும் ஒத் திருக்கிற ; ஏறத்தாழச் சரியாயிருக்கிற ; *v.* பெரிதும் ஒத்திருக்கச் செய் ; அணுகு.

**approxima'tion**, *n.* ஒத்திருத்தல்; அணுகுதல்; (கண.) நெருங்கிய அளவீடு; ஒரு கணக்குக்கு முழுதும் சரியாய் இரா விட்டாலும் குறிப்பிட்ட ஒரு காரியத்துக்குப் போதுமான அளவிற்கு ஏறத்தாழச் சரியாய் இருக்கிற விடை.

**approx'imative**, *a.* அணித்தான.

**appui'**, *n.* (படை.) துணைவலி, துணை, அண்டைக்கட்டு; *v.* தாங்கு, காப்புப்படைவரிசையில் ஆற்றல் மிக்க இடத் தண்டை நிறுத்து.

**appurt'enance**, *n.* உடைமை; சேர்மானம்; துணைப்பொருள்; (சட்.) உடைமைக்கு உரிமை.

**appurt'enant**, *n.* உடைமை; *a.* உடைமையான; இணைந் துள்ள; தொடர்பான.

**ap'ricot**, *n.* வாதுமை போன்ற கொட்டைப் பழவகை, சீமை வாதுமைப்பழம்; சீமை வாதுமை நிறம்; சீமை வாதுமை மரம்.

**Ap'ril**, *n.* ஆங்கில ஆண்டில் நான்காவது மாதம்.

**Ap'ril-fish**, *n.* ஏப்ரல் மாதம் முதல் நாளன்று ஒருவரை ஏமாற்றுதற்காக அவருக்கிடும் பயனற்ற வேலை.

**Ap'ril-fool**, *n.* ஏப்ரல் மாதம் முதல் நாளன்று ஏமாற்றலாக பயனற்ற வேலைக்கு ஏவப்படும் ஒருவர்.

**April'ian, A'prilish**, *a.* ஏப்ரல் மாதத்துக்குரிய; ஏப்ரல் மாத இயல்புள்ள.

***a prior'i***, (ல.) *a.* காரண காரிய முறையான, விதி தரு முறையில் அமைந்த; *adv.* மூலத்திலிருந்து விளைவு காணும் முறையில், காரண காரியமாக.

**aprio'rism**, *n.* காரண காரிய வாதம்.

**aprio'rist**, *n.* காண்ட் (Kant) என்ற செர்மானியத் தத்துவப் பேராசிரியர் கொள்கையைப் பின்பற்றுபவர், நுகர்ச்சி சாராத மனக்கோட்பாடுகளிலிருந்து மெய்ம்முடிவு களுக்கு வரவேண்டுமென்னும் கொள்கையினர்.

**aprio'rity**, *n.*=apriorism.

**ap'ron**, *n.* முன்றானை, தூசிதாங்கி, உள்ளாடைகளுக்குப் பாதுகாப்பாக முன்புறத்தில் அணியப்படும் முரட்டுத்துணி அல்லது தோல்; சமய நிலைகளுக்குரிய உடுப்பு; திறந்த வண்டியில் கால்களுக்குப் பாதுகாப்பான தோல் போர்வை; வாத்தின் வயிற்றுப்புறத்தின் மேலுள்ள கொழுப்படர்ந்த தோல்; கப்பலின் முன்புறத்துக்குப் பின்னுள்ள மரக்கட்டை; அரங்க மேடையில் முதல்திரைக்கு முன்னுள்ள பகுதி; வண்டிகள் விமானங்கள் முதலியவை தங்கிடத்தின் நுழை வாயிலில் உள்ள கடுந்தரைப்பரப்பு; *v.* முன்றானை போன்ற தைக்கொண்டு மூடு அல்லது போர்த்து.

**ap'roned**, *a.* முன்றானை பொருத்தப்பட்டுள்ள.

**ap'ron-string**, *n.* முன்றானையை உடம்போடு சேர்த்துக் கட்டும் கயிறு; (தொ.) tied to apron-strings of, மனைவி தாய் முதலியோரின் அளவுக்கு மீறிய கட்டுப்பாட்டுக்குட் பட்டிருக்கிற.

**apropos'**, *n.* பொருத்தம்; *a.* பொருத்தமான; தொடர்பான; காலத்துக்கேற்ற; ஏற்புடைய; *adv.* பொருட்டாக, நிமித்த மாக; பொருத்தமாக.

**apse**, *n.* திருக்கோயில் கவிகைக் கூரையுள்ள அரை வட்ட ஒதுக்கிடம்; பல பக்கங்களுள்ள வளைவு ஒதுக்கிடம்.

**ap'sidal**, *a.* திருக்கோயிலில் உள்ள ஒதுக்கிடத்தின் வடி வுள்ள; கிரகத்தின் ஞாயிற்றுச்சேணுக்குரிய அல்லது அண்மைக்குரிய; நிலவுலகத்தின் திங்கள் சேணுக்குரிய அல்லது அண்மைக்குரிய.

**ap'sis**, *n.* ஞாயிற்றின் நெடுஞ்சேய்மையில் அல்லது மிக அண்மையில் அமைந்த கிரகத்தின் இடம்; திங்கள் நிலவுல குக்கு நெடுஞ்சேய்மையாக அல்லது மிக அண்மையாக இருக்கும் நிலை; *pl.* ap'sides.

**apt**, *a.* தகுதியுள்ள, பொருத்தமான; பாங்குடைய; ஒரு துறையில் அறிவுக்கூர்மையுள்ள.

**apte'rium**, *n.* பறவைகளின் இறகுகளுக்கு இடைப்பட்ட வெறும் இடம்; *pl.* apte'ria.

**ap'terous**, *a.* சிறகற்ற; (தாவ.) மென்தோல் நீட்டிப்பு இல்லாத.

**ap'teryx**, *n.* நியூசிலாந்தில் (New Zealand) காணப்படும் வாலற்றதும் பறக்காததுமான ஒருவகைப் பறவை.

**ap'titude**, *n.* தகுதி; இயற்கைப் பாங்கு, போக்கு, நாட்டம், திறமை; கற்றுக்கொள்ளும் ஆர்வம்.

**ap'tote**, *n.* வேற்றுமையுருபு ஏற்கமாட்டாத பெயர்ச்சொல்.

**aptot'ic**, *a.* வேற்றுமை ஏற்கமாட்டாத.

**apyrex'ia**, *n.* காய்ச்சல் நின்றிருத்தல்; காய்ச்சல் இல்லாமை.

**a'qua**, *n.* (வேதி.) நீர்; நீர்மம், நீரியற்பொருள், கரைசல்.

**aqua-for'tis**, *n.* வெடியக்காடி; வெடியக்காடியைக் கொண்டு செதுக்குதல்.

**aquafort'ist**, *n.* வெடியக்காடியைக்கொண்டு செதுக்கு வேலை செய்பவர்.

**a'qualung**, *n.* மூழ்க உதவும் அமைவு, நீர்மூழ்குபவர் கொண்டு செல்லும் உயிர்ப்புக்குழாய்க்கலம்.

**aquamarine'**, *n.* கடல் வண்ணக்கல்; *a.* நீர்ப்பச்சை நிற முடைய.

**a'qua-mirab'ilis**, *n.* இலவங்கம் சாதிக்காய் இஞ்சி மதுச் சாரம் இவற்றிலிருந்து வடித்திறக்கப்படும் சாறு.

**a'quaplane**, *n.* விரைவோடத்திற்குப் பின் இழுக்கப்படும் பலகை; *v.* விரைவோடப் பலகைமீது ஏறு.

**a'qua-re'gia**, *n.* அரச நீர்மம், பொன்னையும் விழுப்பொன்னை யும் (Platinum) கரைக்கக்கூடிய வெடியக்காடியும் நீர்ப்பாசிக் காடியும் சேர்ந்த கலவைநீர்.

**aquarelle'**, *n.* நீர்வண்ண ஓவியம், நீர்வண்ணப்படம்.

**aqua'rian**, *n.* நீர்வாழ் பொருட்காட்சிச்சாலை வைத்திருப்பவர்; *a.* நீர்வாழ் பொருட்காட்சிச்சாலைக்கு உரிய.

**aqua'riist, aqua'rist**, *n.* நீர்வாழ் பொருட்காட்சிச்சாலை வைத்திருப்பவர்.

**aquar'ium**, *n.* நீர்வாழ் பொருட்காட்சிச்சாலை; *pl.* aqua'ria, aquar'iums.

**Aquar'ius**, *n.* கும்பராசி, 11-வது வான்மனை, கும்பராசி யடுத்த விண்மீன் குழு.

**aquat'ic**, *n.* நீர்வாழ் செடி; நீர்வாழ் உயிரினம்; நீர்விளை யாட்டுக்காரர்; *a.* நீரில் வளர்கிற; நீருக்கருகில் வளர்கிற; நீரில் வாழ்கிற; நீரில் நிகழ்கிற; நீர்மேல் நடத்தப்படுகிற.

**aquat'ics**, *n. pl.* நீர்விளையாட்டுக்கள்.

**a'quatint**, *n.* காடிச் செதுக்குமுறை, பிசினையும் வெடியக் காடியையும் கொண்டு செம்பின்மேல் செதுக்குவேலை இழைக் கப்படும் முறை; *v.* செம்பில் பிசினும் காடியும்கொண்டு செதுக்கு.

**a'qua Tofana**, *n.* 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த டொபானு (Tofana) என்ற மாது உண்டுபண்ணிய நச்சுப்பொருள்.

**a'qua-vit'ae**, *n.* வெறியம், சாராயம், வெறிநீர் வகை.

**a'queduct**, *n.* கட்டுக்கால்வாய்; கால்வாய்ப்பாலம்; உயர் தளத்தின் ஊடாகச் செல்லும் நீர்க்குழாய்; சாலகம்; (உட.) பாலுண்ணிகளின் தலையில் அல்லது உடலில் உள்ள சிறுகுழாய்.

**a'queous**, *a.* நீர் சார்ந்த, நீர்கலந்த, நீர்த்த; (மண்.) நீரினால் படியவிடப்பட்ட; (தொ.) aqueous humour, முன் கண்நீர், விழிமுன் தோலுக்கும் விழிச்சில்லுக்கும் இடையிலுள்ள நீர்; aqueous rocks, (மண்.) நீரினால் உண்டாக்கப்பட்ட பாறை கள், நீர்ப்பாறை.

**aquifolia'ceous**, *a.* பசுமை மாறாத; இலையுதிராத.

**Aq'uila**, *n.* பொன்னிறக் கழுகினம்; கழுகு வடிவான விண்மீன் குழு.

**aquos'ity**, *n.* நீர்த்தன்மை.

**A'rab**, *n.* அராபிய நாட்டவர்; அராபிய இனத்தவர்; அராபியக்குதிரை, அநாதைச் சிறுவர்; *a.* அராபிய, அராபியர்களுக்குரிய.

**ara'ba**, *n.* மூடாக்கு வண்டி, கட்டை வண்டி.

**arabesque'** [1], *n.* அராபிய வண்ணச்சித்திர வேலை; தொடர் வண்ண இசைப்பாட்டு, ஆடல் நிலைவகை, உடலையும் ஒரு காலையும் நிலத்தளத்துக்கு இணையாக்கி ஒருகாலில் நிற்கும் நிலை.

**arabesque'** [2], **arabesqued'**, *a.* அராபியமுறை சார்ந்த; விசித்திரமான; விசித்திரப் பூப்பின்னல் வேலைப்பாட்டினால் ஒப்பனை செய்யப்பட்ட.

**Arab'ian**, *n.* அராபியர்; *a.* அராபியாவுக்குரிய; அராபிய இனத்தவருக்குரிய.

**A'rabic**, *n.* அரபுமொழி; *a.* அராபியாவுக்குரிய; அரபுமொழித் தொடர்பான; (தொ.) arabic numerals, அரபு எண்மானம், தற்கால இலக்கமுறை.

**ar'abin**, *n.* பிசினம், வேல் இன மரப்பிசினில் உள்ள அடிப் படைப்பொருள்.

**Ar'abis**, *n.* (தாவ.) கடுகுச் செடியினம்.

**Ar'abism**, *n.* அரபுமொழி மரபு, அரபு மரபுவழக்கு.

**A'rabist**, *n.* அரபுமொழி இலக்கியங்களில் வல்லவர்.

**a'rable**, *n.* சாகுபடி நிலம், உழுது பயிரிடத்தக்க நிலம்; *a.* உழுது பயிரிடத்தக்க.

**arac'hnid**, *n.* (வில.) சிலந்திப்பேரினம், சிலந்தி தேள் ஆகிய வற்றை உள்ளடக்கிய பூச்சியினப் பிரிவு.

**arac'hnoid**, *n.* சிலந்திநூல் போன்ற சவ்வு; *a.* நூலாம்படை போன்ற; (தாவ.) சிலந்திநூல் போன்ற நீள் மயிரால் மூடப் பட்டுள்ள.

**arachnol'ogist**, *n.* சிலந்திப் பேரின ஆராய்ச்சியாளர்.

**arachnol'ogy**, *n.* சிலந்திப் பேரின ஆய்வுத்துறை.

**araeom'eter**, *n.* செறிவுமானி, செறிவெண் இன்னதெனக் காட்டும் கருவி; நீர்மச் செறிவுமானி.

**araeom'etry**, *n.* செறிவு அளத்தல்.

**arae'ostyle**, *n.* (க-க.) நாலலகுத் தூண்வரிசை.

**araeosys'tyle**, *n.* (க-க.) நாலலகு ஈரலகுத் தூண் வரிசை.

**Ara'lia**, *n.* ஒப்பனைக்குரிய கொடியின வகை.

**Arama'ic**, *n.* மேலை ஆசியாவிலுள்ள மொழி வகை; *a.* அரமியா (Aramaea) நாட்டுக்குரிய; அரமிய மொழி சார்ந்த.

**Arama'ism**, *n.* அரமிய மொழிமரபு; அரமிய மரபுவழக்கு.

**ara'neid**, *n.* சிலந்தி.

**Arane'idan**, *a.* சிலந்தியினத்தைச் சார்ந்த.

**arapai'ma**, *n.* நன்னீரில் வாழும் தென் அமெரிக்க உணவு மீன்வகை.

**ar'ar**, *n.* பிசின்வகை தரும் 'சாந்தரக்கு' மரம்.

**araro'ba**, *n.* கோவாப் பொடி.

**Araucar'ia**, *n.* தென் அமெரிக்காவிலும் ஆஸ்திரேலியாவிலு முள்ள விதை மூடா முள்ளிலை மரம்.

**arb'alest**, *n.* குறுக்குவில், கணை அல்லது கல் எறிவதற்காக இடைக் காலத்திற் கையாண்ட வில் போன்ற படைக்கலன்; குறுக்கு நிலைதாங்கி, நில அளவை செய்வோர் கையாளும் கருவி.

**ar'balester**, *n.* குறுக்கு வில்லாளர்.

**arb'iter**, *n.* நடுவர், நீதிபதி; காரணிகர், மத்தியஸ்தர்; முழு ஆளுகை உடையவர்; (தொ.) arbiter elegantiarum, சுவை நயத் தீர்ப்பாளர்.

**ar'bitrable**, *a.* நடுவர் தீர்ப்புக்கு உரிய.

**arb'itrage**, *n.* மத்தியஸ்தம்; பற்பல சந்தைகளில் நிலவும் வெவ்வேறு விலைகளினால் ஆக்கம் பெறுவதற்காக உண்டியல் களில் அல்லது பங்குகளில் நடத்தும் வாணிகம், விலை வேற்றுமை வாணிபம்.

**arb'itral**, *a.* காரணிகத்துக்கு உரிய.

**arbit'rament**, **arbit'rement**, *n.* மத்தியஸ்தத்தால் முடிவு செய்தல்; நடுவர் தீர்ப்பு, அதிகாரத்தோடு ஒட்டிய தீர்ப்பு.

**arb'itrary**, *a.* விதிக்கட்டின்றி, மனப்போக்கான; கொடுங் கோன்மையான; (சட்.) விருப்பப்படியான.

**arb'itrate**, *v.* நடுவராயிருந்து தீர்ப்புக்கூறு; மத்தியஸ்தத் திற்கு விடு; காரணிகராய் இரு.

**arbitra'tion**, *n.* நடுவர் தீர்ப்பு; நடுவர் தீர்ப்புக்கு விடுதல்; (தொ.) arbitration of exchange, இரண்டு நாணயச் செலாவணிகளுக்கிடையில் மறைமுக மாற்றுவீதத்தை நிச்சயித்தல்.

**arb'itrator**, *n.* (சட்.) நடுவர், காரணிகர்; *fem.* ar'bitratrix.

**arb'itress**, *n.* பெண் மத்தியஸ்தர், பெண் காரணிகர்.

**arb'last**, *n.* = arbalest.

**arb'laster**, *n.* = arbalester.

**arb'or**, *n.* மரம்; பொறியின் முதன்மையான ஆதாரம்; சக்கரம் சுழலும் இருசு அல்லது கதிர்; காம்பு; உத்திரம்; (தொ.) Arbor Day, மரம்நடுவிழா நாள், வனமகோற்சவ நாள்; arbor vitae, வாடாச்செடி, இலையுதிராத பலவித மரங் களுக்கு வழங்கும் பொதுப் பெயர்; மனிதர்களின் சிறுமூளை குறுக்கீடாக வெட்டப்படும்போது காணப்படும் மரம் போன்ற தோற்றம்.

**arbora'ceous**, *a.* மரம் போன்ற; மரங்கள் நிறைந்த.

**arbor'eal**, *a.* மரங்களுக்குரிய; மரங்களில் வாழ்கிற; மரங் களுக்குத் தொடர்புடைய.

**arbor'eous**, *a.* மரங்கள் நிறைந்த; மரங்களின் தன்மை வாய்ந்த; மரம் போன்ற தோற்றமுடைய.

**arbores'cence**, *n.* மரம் போன்ற வளர்ச்சி.

**arbores'cent**, *a.* மரம் போல் வளர்கிற; மரம் போன்ற தோற்ற முடைய.

**arboret'um**, *n.* பயிர்நூல் முறைப்படி அமைந்துள்ள தோட்டம்; *pl.* arboret'a.

**arboricul'tural**, *a.* மரங்களை வளர்ப்பதற்கு உரிய.

**arb'oriculture**, *n.* காடுகள் பேணும் கலை; மரங்களையும் புதர்களையும் சிறப்பாகத் தேக்கு மரங்களையும் வளர்த்தல்; மரவேளாண்மை.

**arboricul'turist**, *n.* மர ஆய்வாளர்.

**ar'borist**, *n.* = arboriculturist.

**arboriza'tion**, *n.* மரம் போன்ற தோற்றம்.

**arb'our**, *n.* பொதும்பர், கொடிவீடு.

**arb'oured**, *a.* இளமரக்கா அமைந்துள்ள.

**arc**, *n.* வில், வட்டவரையின் அல்லது வளைவரையின் பாகம்; (மின்.) தனித்தனியான இரண்டு கரிய துருவங்களுக்கிடையில் தோன்றும் ஒளி வட்டப் பகுதி.

**arcade'**, *n.* வில் வளைவு விமானப்பாதை, நடை வரனப்பந்தல்; (க-க.) ஒரே மட்டத்தில் உள்ள மேல்வளைவுத் தொகுதி.

**arcad'ed**, *a.* வில்வளைவு விதானம் அமைந்த.

*Arcades am'bo*, (ல.) இருவரும் கயவர்கள்.

**Arcad'ia**, *n.* நாட்டுப்புறப் பொழில்.

**Arcad'ian**, *n.* நாட்டுப்புறத்தான்; *a.* நாட்டுப்புறஞ்சார்ந்த; கள்ளங்கபடற்ற, அப்பாவியான.

**arcad'ing**, *n.* வில்வளைவு விதானங்களை அலங்காரமாய் அமைத்தல்.

**Arc'ady**, *n.* கிரீஸ் (Greece) தேசத்து மாவட்டம் ஒன்று; நாட்டுப்புற இலட்சிய மோக்கம், விண்ணுலகு.

**arcan'um**, *n.* மறைபொருள், இரகசியம்; மாமருந்து, சஞ்சீவி; *pl.* arcan'a.

**arch**, *n.* மேல்வளைவு, வில்வளைவு, கவான்; பாலம் தளம் முதலியவற்றைத் தாங்கும் வளைவுக் கட்டுக்கோப்பு; வில் வளைவைப் போன்ற வடிவமுள்ள பொருள்; வில்வளைவான கூரை; மேலே கவான் அமைந்த நடை வழி; *a.* முதன்மை யான, விளங்கித் தோன்றுகிற; தந்திரமுள்ள; சதுரப் பாடுடைய; வேடிக்கைக்காகக் குறும்பு செய்கிற; *v.* வில் வளைவு அமை; கவான் ஆக்கு; மேல்வளைவு கட்டு; கரைக்குக் கரை கவான் நீட்டிக் கட்டு; வில் போல் வளை.

**archae'an**, *a.* மண் நூலில் பேசப்பட்ட முதல் ஊழியைச் சார்ந்த.

**archaeolo'gic, archaeolo'gical**, *a.* மனிதனின் பழமைச் செய்திகள் பற்றிய அறிவியல் ஆய்வு சார்ந்த.

**archaeol'ogist**, *n.* மனித குலத்தின் தொன்மைச் செய்திகள் பற்றிய அறிவியல் ஆய்வாளர், தொல்பொருள் ஆராய்ச்சி யாளர்.

**archaeol'ogy**, *n.* தொல்பொருள் ஆராய்ச்சி, மனிதனின் பழ மைச் செய்திகள் பற்றிய அறிவியல் ஆய்வு.

**archaeop'teryx**, *n.* தெரிந்த வரையில் மிகப் பழமையானதும் பறப்பனவற்றிற்கும் ஊர்வனவற்றிற்கும் இடைப்பட்டதுமான பறவை.

**Archaeorni'thes**, *n.* ஊர்வன போன்ற பண்டைக்காலப் பறவைகள்.

**archa'ic**, *a.* பழைய, தொன்மையான; இப்போது வழக்கில் இல்லாத.

**archa'icism**, *n.* = archaism.

**arc'haism**, *n.* மொழியிலும் கலையிலும் பழமையையும் வழக் கற்றவைகளையும் வைத்துக் கொள்ளுதலும் பின்பற்றுதலும்; அத்தகைய மனப்பாங்கு; தொல்சொல்.

**arc'haist**, *n.* தொல்வழக்குகளைக் கையாள்பவர்.

**archais'tic**, *a.* தொல்வழக்குகளைப் பின்பற்றுபவர்போல் காட்டிக் கொள்கிற; பண்டை வழக்குகளைக் கடைப்பிடிக்கிற.

**arc'haize**, *v.* பண்டைய வழக்கைப் பின்பற்று; தொல்வழக் கைக் கடைப்பிடிப்பதாகக் காட்டிக்கொள்; தொல்வழக் குடையதாகச் செய்.

**arc'hangel**, *n.* தலைமைத் தேவதூதன்; பெரிய இலைகளையும் மலர்க் கொத்துக்களையுமுடைய தோட்டச் செடிவகை; வறட்டு முட்செடிவகை; ஒருவகைப் புரு.

**arch'bish'op**, *n.* தலைமைக்குரு, அதிமேற்றிராணியார்; தலை மைக் கண்காணியார்.

**archbish'opric**, *n.* தலைமைக் கண்காணியாரின் ஆட்சிக்கு உட்பட்ட மாவட்டம்; அதிமேற்றிராசனம்.

**arch'-build'er**, *n.* புகழ்வாய்ந்த கட்டிடச் சிற்பி.

**arch'deac'on**, *n.* மேற்றிராணியார், கண்காணியாருக்கு அடுத்த பெரிய அதிகாரி.

**archdi'ocese**, *n.* அதிமேற்றிராசனம்.

**arch'duch'ess**, *n.* பெரிய கோமகனின் மனைவி; ஆஸ்டிரியப் பேரரசரின் மகள்.

**arch'duch'y**, *n.* கோமகளின் அல்லது கோமகனின் ஆட்சிப் பரப்பு.

**arch'duke**, *n.* பெரிய கோமகன்; ஆஸ்டிரியப் பேரரசரின் மகன்.

**arch'duke'dom**, *n.* = archduchy.

**arched**, *a.* கவான் வடிவமான; வில்வளைவு கவிந்துள்ள.

**arch'-en'emy**, *n.* பெரும்பகைவன், முதல் எதிரி; சாத்தான்.

**archen'teron**, *n.* (வில.) கருமுளையில் முதலில் தோன்றும் குடல்.

**arch'er**, *n.* வில்லாளர், தனுசு இராசி.

**arch'eress**, *n.* விற்றொழில் கைவந்த பெண்.

**arch'ery**, *n.* வில்லாண்மை; விற்றொழில் கலை; வில்லாளர் களின் ஈட்டம்.

**arc'hetypal**, *a.* மூலப்பிரதியான.

**arc'hetype**, *n.* மூலப்படிவம், முன்மாதிரி.

**arch'-fiend'**, *n.* பெரும் பிசாசு; சாத்தான்.

**arch'ibald**, *n.* விமான எதிர்ப்புப் பீரங்கி.

**archidiac'onal**, *a.* மேற்றிராணியாருக்கு உரிய.

**arch'ie**, *n.* = archibald.

**archiepis'copacy**, *n.* தலைமைக் கண்காணியாரின் மதிப்பு அல்லது ஆட்சிப் பரப்பு.

**archiepis'copal**, *a.* அதிமேற்றிராணியாருக்குரிய.

**archiepis'copate**, *n.* = archiepiscopacy.

**arch'il**, *n.* பலவகைப் பாசிகளிலிருந்து செய்யப்படுகிற சிவப்பு அல்லது ஊதா நிறச் சாயப் பொருள்; பாசி வகைகள்.

**ar'chimage**, *n.* தலைமை மந்திரவாதி.

**archiman'drite**, *n.* கிரேக்கத் திருச்சபைத் துறவிகள் மடத் தின் முதல்வர்.

**Archimed'ean**, *a.* ஆர்க்கிமிடீஸ் (Archimedes) (கி. மு. 287-212) என்ற கிரேக்கக் கணிதநூற் புலவர் தொடர்பான; (தொ.) Archimedean screw, ஆர்க்கிமிடீசின் திருகாணி, தண்ணீரை உயர்த்துவதற்கான பொறி; Archimedean spiral, ஆர்க்கிமிடீசின் சுருளி.

**arch'-impos'ter**, *n.* பெரிய ஆள்மாருட்டக்காரன்; பெரிய எத்தன்.

**archipelag'ic**, *a.* தீவுகள் செறிந்த கடல் சார்ந்த; தீவுக் கூட்டத்தின் இயல்புடைய.

**Archipel'ago**, *n.* ஈஜியக்கடல் (Aegean Sea).

**archipel'ago**, *n.* தீவுகள் செறிந்த கடல்; தீவுக்கூட்டம்; *pl.* archipel'agos.

**arc'hitect**, *n.* சிற்பி, கட்டிடக்கலைஞர்; இயற்றுபவர்; உலகைத் தோற்றுவித்த கடவுள்; எண்ணியாங்கு எய்து பவர்.

**architecton'ic, architecton'ical**, *a.* சிற்பக்கலை சார்ந்த, சிற்பிகளைப் பற்றிய; ஆக்குந்திறனுள்ள; கட்டுப்படுத்துகிற; கட்டளையிடுகிற; அறிவுக் கூறுகளை ஒழுங்காயமைப்பது பற்றிய.

**architecton'ics**, *n.* சிற்பக்கலை நூல்; அறிவுக்கூறுகளின் ஒழுங்கமைப்பு நூல்.

**architec'tural**, *a.* சிற்பக்கலை சார்ந்த.

**arc'hitecture**, *n.* கட்டிடக்கலை நூல்; சிற்பக்கலை நூல்; கட்டப்பட்ட பொருள், கட்டுக் கோப்பு, கட்டிடப்பாங்கு; கட்டுதல்.

**arc'hitrave**, *n.* தூணின் உச்சியிலுள்ள பரற்கட்டையின் மீது தங்கியிருக்கும் முதன்மையான தூலம்; வாயிற்படி அல்லது ஜன்னலைச் சுற்றியுள்ள பல்வேறு பாகங்கள்; கவா னின் வெளிப்புறத்தைச் சுற்றியுள்ள அச்சுரு.

**arch'itraved**, *a.* சித்திர வேலைப்பாடமைந்த அச்சுரு அமைக் கப்பெற்ற.

**archiv'al**, *a.* சுவடிக்கூடம் சார்ந்த.

**arc'hive**, *n.* சுவடிக்கூடம்; பொது ஆவணக்களரி; பொதுப் பத்திரங்கள்; *pl.* arc'hives.

**arc'hivist**, *n.* சுவடிக்கூடம் காப்பவர்; சுவடிகளைக் காப்பவர்.

**arc'hivolt**, *n.* கவானின் உள்வளைவு, கவானின் உள்வளைவை அழகு செய்யும் அச்சுருக்கள்.

**arch'-knave**, *n.* பெயர்போன போக்கிரி.

**arch'let**, *n.* சிறிய வில்வளைவு.

**arch'-liar**, *n.* பெரும்புளுகன்.

**arch'lute**, *n.* பெரிய இரட்டைக்கழுத்து யாழ்வகை.

**arch'ly**, *adv.* கவான்போல் வளைந்திருக்கும் நிலையில்; போக் கிரித்தனமாக.

**arch'-mock**, *n.* கேலிக்கூத்தின் உச்சநிலை.
**arch'ness**, *n.* வளைவாயிருக்கும் தன்மை, போக்கிரித்தனம்.
**arc'hon**, *n.* பண்டைய ஆதன்ஸ் (Athens) நகரில் இருந்த முதன்மையான ஒன்பது குற்ற நடுவர்களில் ஒருவர் ; ஆளுநர் ; தலைவர்.
**arc'honship**, *n.* குற்றநடுவர் நிலை.
**arch'ontate**, *n.* ஆளுநரின் ஆட்சிக்காலம்.
**archont'ic**, *a.* ஆட்சியாளருக்குரிய.
**arch'-pi'rate**, *n.* கடற்கொள்ளைக்காரத் தலைவன்.
**arch'-priest'**, *n.* தலைமைப்புரோகிதன், குருக்களில் முதல்வர்.
**arch'-rogue'**, *n.* பெரிய திருடன் ; பெரும்போக்கிரி.
**arch'-trait'or**, *n.* பெருந்துரோகி ; நாட்டைக் காட்டிக் கொடுப்பவர்களில் முன்னணியிலிருப்பவன் ; சாத்தான், இயேசுநாதரைக் காட்டிக்கொடுத்த யூதாஸ் (Judas) என்ற சீடன்.
**arch'-vill'ain**, *n.* அறக்கொடியவன்.
**arch'way**, *n.* வில்வளைவான விதானம் கவிந்துள்ள வழி.
**arch'wise**, *adv.* வில்வளைவு போன்ற நிலையில்.
**arc-lamp, arc-light**, *n.* பிறைவிளக்கு, வட்டை விளக்கு.
**Arc'tic**, *a.* வடதுருவத்துக்குரிய ; வடக்கிலுள்ள ; (தொ.) Arctic Circle, வடதுருவத்திலிருந்து சுமார் 23½ பாகையிலுள்ள சிறு வட்டம்.
**arc'tic**, *a.* மிக்க குளிர்ச்சி பொருந்திய.
**Arctii'dae**, *n. pl.* ஒருவகைப் பட்டுப்பூச்சி இனம்.
**Arctogae'a**, *n.* நிலவுலகின் வடதுருவப்பகுதிகள்.
**arc'toid**, *a.* கரடி போன்ற.
**Arctur'us**, *n.* சோதி, சுவாதி, விண்மீன் குழு ஒன்றிலுள்ள ஒளிமிக்க விண்மீன்.
**arc'uate, arc'uated**, *a.* வில்போல் வளைந்த, கவான் வடிவான.
**ar'cubalist**, *n.* = arbalest.
*arc'us senil'is*, (ல.) *n.* மூப்புப்படலம், வயது ஆக ஆக கருவிழியைச் சுற்றி உருவாகும் வெளிறிய மஞ்சள் வளையம்.
**Ar'dea**, *n.* நாரையை உள்ளடக்கிய பறவை வகை.
**ard'ency**, *n.* வெப்பு ; ஆர்வம், உணர்வறி முனைப்பு.
**ard'ent**, *a.* வெப்பமான, அளவான ; சூடேறிச் சிவந்த, கனல்கக்குகிற ; எளிதில் தீப்பற்றிக்கொள்ளத்தக்க, ஆர்வமிக்க ; (தொ.) ardent spirits, வடிநீர்க் குடிவகைகள்.
**ard'our**, *n.* கடுவெப்பம் ; பாச உணர்ச்சி ; ஆவல் ; ஆர்வ முனைப்பு.
**ard'uous**, *a.* செங்குத்தான ; வரமுடியாத ; எளிதில் செய்ய இயலாத, கடினமான ; சுறுசுறுப்புள்ள ; வலிமையுடைய.
*are*[1], (பிர.) *n.* பிரெஞ்சு முறைப் பரப்பளவைக் கூறு (நூறு சதுர மீட்டர்).
**are**[2], *v.* be என்பதன் நிகழ்காலப் பன்மை வடிவம்.
**ar'ea**, *n.* பரப்பு ; நிலப்பரப்பு ; பரப்பளவு ; வெற்றிடம் ; மேற்பரப்பு, மேற்பரப்பின் பகுதி ; பரப்பெல்லை ; ஆட்சி எல்லை, புற எல்லை ; அடித்தள அகழ்வாய், நிலத்தளத்தின் அடியறைகளின் வாயில் ; பலகணி முகப்புகளுக்கு ஒளியோ காற்றோ செல்லவிடும் குழிவான அணவாயில்.
**a'real**, *a.* வெற்றிடத்துக்கு உரிய ; நிலப்பகுதிக்கு மேலுள்ள ; நிலப்பகுதிக்கு உரிய.
**a'rea-sneak'**, *n.* பதுங்கித் திருடுபவர்.
**a'reca**, *n.* கமுகு இனம்.
**a'reca-nut**, *n.* பாக்கு, அடைக்காய்.
**aren'a**, *n.* களரி, வட்டரங்கு, செயற்களம், செயற்றுறை ; மணற்பரப்பு.
**arena'ceous**, *a.* மணல் போன்ற; மணற்பாங்கான; மணலில் வளர்கிற ; மணலாலான, மணற்பாறையான.
**arena'tion**, *n.* மணல் மருத்துவ முறை.
**arenic'olous**, *a.* மணலில் வாழ்கிற.
**arenose'**, *a.* மணல் நிறைந்த.
**areog'raphy**, *n.* செவ்வாய்க்கோளின் பரப்பாய்வு.
**are'ola**, *n.* சிறுபரப்பு, சிற்றிடைவெளி; இழைம இடைவெளி; மார்பின் காம்பைச் சுற்றியுள்ள முகட்டு வட்டம்; கருமணியை அடுத்த பாவையோரம் ; *pl.* are'olae.
**are'olar, are'olate, are'olated**, *a.* சிறுசிறு பரப்புக்களாகப் பிரிக்கப்பட்ட.
**areola'tion**, *n.* சிறுசிறு பரப்புக்களாகப் பிரித்தல்.
**Areop'agite**, *n.* கிரேக்க மீயுயர் நீதிமன்ற உறுப்பினர்.
**Areopagit'ic**, *a.* கிரேக்க மீயுயர் நீதிமன்றத்துக்கு உரிய.
**Areop'agus**, *n.* கிரேக்க மீயுயர் நீதிமன்றம் கூடிய குன்று ; உயர்நீதிமன்றம்.
*arete'*, (பிர.) *n.* செங்குத்தான மலைச்சரிவு.
**ar'gala**, *n.* புதா, பெருநாரை.
**ar'gali**, *n.* மலையாடு.
**ar'gan**, *n.* எண்ணெய்விதை வகை ; எண்ணெய் விதைதரும் மொராக்கோ (Morocco) நாட்டுக் கட்டுமான மரவகை.
**ar'gand**, *n.* வட்டமாகக் கொழுந்துவிட்டெரியும் ஆவி விளக்கு வகை ; *a.* ஆவி மூலம் எரியும் குழல் திரியுடைய.
**argemo'ne**, *n.* முள்ளிலையுடைய கசகசா வகை.
**ar'gent**, *n.* வெள்ளி ; வெண்பொன்நிறம் ; *a.* வெள்ளி நிறமான, வெண்மையான.
**argentif'erous**, *a.* வெள்ளி விளைகிற; வெள்ளியை உடைய.
**ar'gentine**, *n.* வெள்ளிப்போலி, வெள்ளிப் பூச்சுடைய வெண்ணிற உலோகம் ; மீன்செதிளின் வெண்தோடு ; (வில.) சிறு மீன் இனம் ; (கனி.) கற்பலகைப் பாளம் ; *a.* வெள்ளிக்குரிய, வெள்ளிபோன்ற ; வெள்ளியைப்போல் ஒளிர்கிற.
**Ar'gentine**, *n.* தென்அமெரிக்காவில் உள்ள ஆர்ஜெண்டினு (Argentina) நாட்டைச் சேர்ந்தவர் ; *a.* ஆர்ஜெண்டினு நாட்டுக்கு உரிய.
**ar'ghan**, *n.* நுண்ணயமான நார்வகை ; நார் தரும் செடிவகை.
**ar'gil**, *n.* பாண்டஞ் செய்வதற்குரிய களிமண்.
**argilla'ceous**, *a.* களிமண்ணுல் ஆன.
**ar'gillite**, *n.* திண்ணிதாக்கப்பட்ட களிமண் பாறை.
**Ar'give**, *n.* கிரேக்கர் ; *a.* கிரேக்கர்களைச் சார்ந்த.
**ar'gle-bar'gle**, *n.* சொற்போர், வாதம்.
**ar'gol**, *n.* கொடி முந்திரித்தோலிலிருந்து படிந்து இறுகும் உப்பு வகை, மண்டிகம்.
**ar'gon**, *n.* வளிமண்டலத்தின் அணுஎடை எண் 18 உடைய இயக்கத்திறனற்ற வளிக்கூறு, 'மடியம்'.
**Ar'gonaut**, *n.* பொன் கம்பளி தேடி 'ஆர்கோ' (Argo) என்ற கலத்தில் சென்றதாகக் கூறப்படும் பண்டைக் கிரேக்க புராண வீரர்.
**ar'gonaut**, *n.* ஒருவகை நத்தை இனம்.
**argonaut'ic**, *a.* ஆர்கோ (Argo) என்ற கப்பலில் சென்றதாகப் பழங்கிரேக்க புராணக் கதைகளில் கூறப்படும் வீரர்களுக்குரிய.
**ar'gosy**, *n.* மிகப் பெரிய முற்கால வாணிகக் கப்பல் ; கப்பல் ; துணிவுச் செயல்.
**ar'got**, *n.* குழூஉமொழி, திருடர் நாடோடிகள் போன்றவர் வழக்கு ; கொச்சை மொழி.
**ar'guable**, *a.* வாதாடுதற்குரிய ; நிலைநாட்டக்கூடிய.
**ar'gue**, *v.* சொல்லாடு, வாதிடு ; காரணங்காட்டி நிலைநாட்டு, மெய்ப்பி ; முடிவு சுட்டிக்காட்டு ; விரித்துரை ; விளக்கி எழுது ; வாதமூலம் தூண்டுதல் அளி.

**ar'gument,** *n.* வாதாடல், வாதம்; சான்று, ஆதாரம், எடுத்துக் காட்டப்படும் காரணம்; காரண காரிய விளக்கம்; விவாதப் பொருள்; நூற்பொருள் சுருக்கம்; (அள.) மும்மடி முடிவில் இடைப்படு கூற்று; (கண.) சார்பளவைச் சுட்டு; (வான்.) முறைப்படும் ஊடச்சுடன் வரையளவைக்குரிய கோளம்.

**argumenta'tion,** *n.* முறைப்படி வாதித்தல்; சொற்போர், விவாதம்.

**argumen'tative,** *a.* அளவை முறையை ஒட்டிய; வாதிக்கும் ஆர்வமுள்ள; விவாதத்துக்கு இடமான.

**Ar'gus,** *n.* நூறுகண்களை உடையவனென்று பண்டைக் கிரேக்கக் கதைகளில் கூறப்படும் மனிதன்; விழிப்பாய்க் கவனிப்பவன்; கண்கொட்டாக் காவலன்; சிறகுகளில் கண் போன்ற புள்ளிகளையுடைய பட்டுப் பூச்சிவகை.

**Ar'gus-eyed',** *a.* விழிப்பாய் இருக்கிற.

**ar'gus-shell',** *n.* கண்போன்ற புள்ளிகளையுடைய பீங்கான் ஓடு.

**argute',** *a.* அறிவுக்கூர்மையான; நுழைபுலமுள்ள; கீச் சென்ற, காதைத் துளைக்கிற.

**argyran'thous,** *a.* வெள்ளி போன்ற மலர்களையுடைய.

**argy'ria,** *n.* வெள்ளி நச்சூட்டு; வெள்ளி கலந்த பொருள் உட்கொண்டதால் ஏற்படும் மேனி நிறமாற்றம்.

**argyrophyll'ous,** *a.* வெள்ளிபோன்ற இலைகளையுடைய.

**ar'ia,** *n.* (இசை.) மூன்று பகுதிகளாகப் பிரித்து விரிவாகப் பாடப்படும் பாடல்வகை.

**Ar'ian,** *n.* கி. பி. 4-ஆம் நூற்றுண்டில் அலெக்ஸாண்ட்ரியாவில் (Alexandria) வாழ்ந்த ஏரியஸ் (Arius) என்பவரின் கொள்கையினைக் கடைப்பிடிப்பவர்; கடவுள் மூவர் அல்லர் ஒரு முழுமுதற் பெரும் பொருளே என்னுங் கொள்கையினர்; *a.* ஏரியஸ் கொள்கையைச் சார்ந்த; ஏரியஸைப் பின் பற்றுகிற.

**Ar'ianism,** *n.* ஏரியஸின் கொள்கை; இயேசுநாதர் கடவுளின் திருமகனுர் என்பதை மறுக்குங் கொள்கை.

**Ar'ianize,** *v.* ஏரியஸ் கொள்கையைப் பின்பற்று; ஏரியஸ் கொள்கைக்கு மாற்று.

**a'rid,** *a.* உலர்ந்த, வறண்ட; ஒன்றும் விளையாத, வெறுமையான.

**arid'ity,** *n.* வறட்சி, பாழ்நிலை.

**Ar'iel,** *n.* விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் மனிதனின் பெயர்; நீர்வாழ் ஆவி; தேவதூதன்; ஷேக்ஸ்பியர் "பெரும் புயல்" நாடகத்தில் வரும் ஆவி மனிதன்.

**ar'iel,** *n.* மேலை ஆசிய மான் வகை; பறவையினங்களின் வகை.

**Ar'ies,** *n.* மேட இராசி, தகர்மனை.

**aright',** *adv.* நேராக, சரியான முறையில்.

**a'ril,** *n.* செடி விதைகளின் பொதிவுத்தாள், விதையலகு.

**ar'illary, ar'illate, ar'illated,** *a.* தாள்பொதிவுடைய.

**ar'illode,** *n.* விதைமுடி, விதையலகுப்போலி.

**ario'so,** *n.* இன்னிசைப்பாடல்; *a.* இன்னிசையான; *adv.* இன்னிசையாக.

**ari'ot,** *adv.* கலாம் விளைத்து, குழப்பமாக.

**aripp'le,** *adv.* சிற்றலைகளாக.

**arise',** *v.* எழு; எழுந்திரு; மேலெழுந்து வளர்; தோன்று; உண்டாகு; மனத்தில் தோன்று, காட்சியில் புலப்படு; செயலில் முனை; விளைவாகு; எதிர்ப்படு.

**aris'en,** *v.* arise என்பதன் முடிவெச்சம்.

**aris'ta,** *n.* சூகம், கூலக்கதிர், புல்வார்; *pl.* aris'tae.

**Ar'istarch,** *n.* கண்டிப்பான நுண்ணாய்வாளர்.

**aris'tate,** *a.* சூகமுடைய.

**aristoc'racy,** *n.* உயர்குடிஞர் ஆட்சி; உயர்குடியாட்சி நாடு; உயர் பண்பாட்சி, தனி உரிமை பெற்றவர்களின் மேட்டிமை; சிலர் ஆட்சி; மேற்குடி ஆட்சிக்குழு; ஆட்சி வகுப்பு, மேற்குடி மக்கள்; பண்பாளர், சான்ருேர்.

**a'ristocrat,** *n.* ஆட்சி வகுப்பினர்; மேற்குடியாளர்; இறுமாப் புடையவர்; சிறந்தோர்; மேம்பட்ட ஒன்று.

**aristocrat'ic, aristocrat'ical,** *a.* மேற்குடி ஆட்சிக்குரிய; மேற்குடித் தொடர்புடைய; உயர்குடி இயல்புடைய; மேட்டிமையான; நாகரிகமான; பகட்டான, ஆரவார முறையில் அமைந்த.

**aristoc'ratism,** *n.* உயர் குடியாட்சிக் கோட்பாடு; மேற்குடியாட்சி நம்பிக்கை.

**Aristolo'chia,** *n.* ஆடுதின்னுப்பாளையை உள்ளடக்கிய செடியினம்.

**aristol'ogy,** *n.* உணவுக்கலை, உணவு ஆய்வு நூல்.

**Aristophan'ic,** *a.* அரிஸ்டொபனிஸ் (Aristophanes) என்னும் கிரேக்க நாடகாசிரியருக்கு உரித்தான.

**Aristotele'an,** *n., a.* = Aristotelian.

**Aristotel'ian,** *n.* அரிஸ்டாட்டில் (Aristotle) என்னும் கிரேக்க மெய்ந்நூலாசிரியரைப் பின்பற்றுபவர்; *a.* அரிஸ்டாட்டிலுக்கு அல்லது அவரது மெய்ந்நூல் கொள்கைக்குத் தொடர்புடைய.

**Aristote'lianism, Aristot'elism,** *n.* அரிஸ்டாட்டிலின் முறை அல்லது கொள்கை; (தொ.) Aristotle's lantern, கடல் வாழ் சிற்றுயிர் வகைகளின் இரை மெல்லும் வாயுறுப்புக்கள்.

**arith'metic**[1], *n.* கணக்கு, எண்கணக்கியல்; எண்ணளவை; கணக்கறிவு; கணிப்புத்திறம்; கணக்கீடு, கணிப்பியல்.

**arithmet'ic**[2], **arithmet'ical,** *a.* கணக்குச் சார்ந்த; எண் கணிதத் தொடர்புடைய, எண்கணிப்பு முறையான; (தொ.) arithmetical progression, அளவு வளர்ச்சி, ஒரே அளவில் பெருகிக்கொண்டு அல்லது குறைந்துகொண்டு செல்லும் எண்வளர்ச்சி.

**arithmeti'cian,** *n.* கணக்காளன்; எண்கணிப்பியலாளர்.

**arithmom'eter,** *n.* கணிப்புமானி.

**ark,** *n.* பெட்டி, பேழை; (விவி.) யூதர்களின் திருமுறைக் கட்டளைகள் அடங்கிய மரப் பெட்டகம்; உலகப் பெரு வெள்ளத்தின் போது நோவா (Noah) என்பவருக்குப் புகல் அளித்த பெரிய தோணி; நோவாவினது தோணி போன்ற பொம்மை வடிவம்; *v.* பெட்டியில் வை.

**ark'ite,** *n.* நோவாவினது தோணியில் இருந்தவர்களில் ஒருவர்; *a.* நோவாவின் தோணிக்குரிய; நோவா தோணியோடு தொடர்புடைய.

**arkose',** *n.* களிம நுண்பொடிகள் மிகுதியான மணற்பாறை வகை.

**ark'-shell,** *n.* பெட்டி போன்ற கிளிஞ்சல் வகை.

**arles,** *n. pl.* அச்சாரம், ஒப்பந்தம் அல்லது நம்பிக்கைக்காக பணி ஏற்பினடையாளமாக அளிக்கப்படும் முன்பணம்.

**arm,** *n.* மேற்கை, புயம், தோள்; விலங்கின் முன் சினை; உணர்கொம்பு; மரத்தின் பெருங்கிளை; சட்டைக்கை; கை போன்ற பொருள், கிளை, பக்கம், கூறு; துணை; நீண்டொடுங்கிய இடம், நிலக்கோடு, கடற்கூம்பு; ஆற்றல்; படைப்பிரிவு; போர்க்கலங்கள்; படைக்கல அணிகள்; *v.* படைக்கலங்கள் பூட்டு, போர்க்கோலங் கொள்ளுவி; மேற் கொள்ளுவி; கருவி பொருத்து; கவசம் போர்த்து; காந்தத்துக்கு விசைக்கை இணை; (தொ.) coat of arms, மேலங்கியில் பொறிக்கப்பட்ட மரபுச் சின்னங்கள்; at arm's length, தோழமைக்கு இடம் கொடாமல்; bear arms, படைத்துணைத் தொண்டாற்று; படை மரபுச்சின்னம் தாங்கு; in arms, படைகொண்டு; (கட்.) நான்கு கூறுபாடாக்கி; right arm, உறுதுணை; lay down one's arms, சரணடை, படைக்கலம் தவிர்; take up arms, போர்க்கெழு; up in arms, எதிர்க்கத் தயாராக.

**armad'a**, *n.* கப்பற்படைத் தொகுதி, போர்க்கப்பல்களின் கூட்டம்; (தொ.) the Armada, the Invincible Armada, 1588-இல் ஸ்பெயின் மன்னர் இரண்டாவது பிலிப் (Philip II) இங்கிலாந்தைத் தாக்குதற்கு அனுப்பிய கப்பற்படை.

**armadill'o**, *n.* கிழறுக்கும் இயல்புடைய தென் அமெரிக்க விலங்கு; *pl.* armadill'os.

**Armagedd'on**, *n.* (விவி.) ஆக்க அழிவுச் சக்திகளுக்கு உரிய இறுதிப் போராட்டக்களம்.

**arm'ament**, *n.* போர் எழுச்சிப்படை; கடற்போர்ப்படை, போர்க்கப்பல் தொகுதி; போர்த்தளவாடங்கள்; போர்க் கப்பலின் தற்காப்புப் படைக்கலங்கள்; போர் ஏற்பாடு, போருக்கு உரிய பொருள்களைச் செப்பனிடும் செயல்முறை.

**arm'ature**, *n.* படைக்கலங்கள்; கவசம்; விலங்கு செடிகளின் பாதுகாப்புத் தோடு; காந்த விசைக்கை; சுழலுஞ் சுருள், மின் ஆக்கப் பொறியின் கருப்பகுதி.

**arm'band**, *n.* சட்டைக் கைப்பட்டி, கைநுனியைச் சுற்றி அணியப்படும் துணிப்பட்டை.

**arm'chair'**, *n.* கை நாற்காலி; *a.* ஆர்வ ஈடுபாடுடைய, கலை விநோதமான; வெளியறிவற்ற, செயல் தொடர்பற்ற.

*arme blanche'*, (பிர.) *n.* குதிரைப்படையின் வாள் அல்லது ஈட்டி; இவுளிப்படை.

**armed**, *a.* கைகள் உடைய; படைக்கலம் பூண்ட; முழு படைக்கலக் காப்புடைய.

**Armen'ian**, *n.* மேற்கு ஆசியாவிலுள்ள ஆர்மீனியாவைச் சேர்ந்தவர்; ஆர்மீனியக் கிறித்தவ சமயக் கிளையினர்; ஆர்மீனியர்களின் மொழி; *a.* ஆர்மீனியாவுக்குரிய.

**ar'met** *n.* 15-ஆம் நூற்றாண்டுக்கு உரிய கவசத் தலையணி வகை.

**arm'ful**, *n.* சிரங்கை, அங்கை அளவு, பிடிக்கக்கூடிய அளவு, குவியல்.

**arm'hole**, *n.* சட்டையில் கைவிடுவதற்கென்று அமைந்துள்ள துளை.

**armi'ger**, *n.* கேடயமேந்தி, கொடிவழிப் படைக்கலங்களை அணியத் தகுதி பெற்றவர்.

**armi'geral**, *a.* கேடயமேந்திகளுக்கு உரிய.

**armi'gerous**, *a.* கொடிவழிப் படைக்கலங்களை அணியத் தகுதியுடைய.

**ar'mil**, *n.* கைவளை; கடகம்.

**armill'a**, *n.* கைவளை; (தாவ.) காளான் தண்டின் மேல் உள்ள குஞ்சம்.

**armill'ary**, *a.* கைவளைகள் சார்ந்த; (தொ.) armillary sphere, வானகோளங்களின் இயக்கங் காட்டுதற்குரிய உலோகப் பட்டைகளாலான மாதிரிக்கோளக வகை.

**arm'-in-arm'**, *adv.* கையுடன் கை கோத்துக்கொண்டு.

**Armin'ian**, *n.* ஆலந்து (Holland) நாட்டைச் சேர்ந்த சீர் திருத்தக்கிளைச் சமயத்தவராகிய ஆர்மீனியஸ் (Arminius) என்பவரின் கொள்கையைக் கடைப்பிடிப்பவர்; *a.* ஆர்மீனியக் கொள்கை சார்ந்த.

**Armin'ianism**, *n.* ஆலந்து (Holland) நாட்டைச் சேர்ந்த ஆர்மீனியஸ் (Arminius) என்பவரது கோட்பாடு.

**armip'otent**, *a.* படைக்கல ஆற்றலுடைய.

**arm'istice**, *n.* தற்பொழுதைய போர் நிறுத்தம், போர் ஓய்வு; (தொ.) Armistice Day, போர் நிறுத்த நாள், 1918 முதல் ஆண்டுதோறும் முதலாவது உலகப்போர் நிறுத்தம் கொண்டாடப்பட்டுவரும் நாள் (நவம்பர்–11).

**arm'less**, *a.* கையில்லாத; கிளையற்ற; படைக்கலம் ஏந்தாத, வெறுங் கையரான.

**arm'let**, *n.* காப்புவளை, கையைச் சுற்றி அணியும் பட்டை; குடாக்கடல்; கிளையாறு; சிறுகை.

**armor'ial**, *n.* கட்டியக்காரர் படைக்கலச் சுவடி; *a.* கட்டியக் காரர் படைக்கலங்களைப் பற்றிய; (தொ.) armorial bearings, மரபுவழிச் சின்னங்களில் உள்ள கோலங்கள்.

**Armor'ic**, *n.* பிரான்சிலுள்ள பிரிட்டனி (Brittany) மாகாணத் துக்குரிய மொழி; *a.* பிரிட்டனி மாகாணத்துக்குரிய.

**ar'morist**, *n.* கட்டியம் வல்லுநர்.

**arm'ory**, *n.* கட்டியம்.

**arm'our**, *n.* போர்க்கவசம்; போர்க்கப்பல்களின் புற உலோகத் தகடு; இயங்கு அரண்மேற்காப்பு; விசைவண்டிகளின் மேற் காப்பு; கவச வண்டித்தொகுதி; மேல்தோடு; மரபு வழிச் சின்னங்கள்; *v.* காப்புக் கவசம் இடு.

**ar'mour-bearer**, *n.* பரிசையர்.

**ar'mour-clad'**, *a.* கவசம் பூண்ட.

**ar'moured**, *a.* கவசப் பாதுகாப்புடைய.

**arm'ourer**, *n.* படைக்கலவினைஞர்; படைக்கலக் கொட்டில் முதல்வர்.

**ar'mour-plate**, *n.* கப்பல் இயங்கரண் முதலியவற்றிற்கான காப்புத் தகடு.

**ar'mour-plat'ed**, *a.* கவசத்தகடு பொருத்தப்பெற்ற.

**arm'oury**, *n.* படைக்கலக் கொட்டில்; படைக்கலங்கள்.

**arm'pit**, *n.* அக்குள்.

**arm'y**, *n.* படை, தானை; மக்கள் தொகுதி; தொண்டர் அணி; ஊழியர் குழு; தொகுதி, ஈட்டம், பெருந்திரள்; படைத்துறை.

**arm'y-corps**, *n.* படைத்துறையின் எல்லாப் பிரிவுகளையுங் கொண்ட சிறு தொகுதி.

**arm'y-list'**, *n.* படைத்துறைப் பணியாளர்களின் பெயர்ப் பட்டியல்.

**arm'y-worm**, *n.* பருத்திச்செடிகளை அழிக்கும் பூச்சியின் முட்டைப் புழு.

**arn'ica**, *n.* காயங்களுக்குப் போடுவதற்காக மலைப்புகையிலை யிலிருந்து வடித்திறக்கப்படும் மருந்துவகை.

**arom'a**, *n.* நறுமணம்; இன்நறுஞ்சுவை, மனங்கவர் நுண்ணிய பண்பு; *pl.* arom'as.

**aromat'ic**, *n.* நறுஞ்சுவை மணமருந்துப்பொருள்; *a.* நறு மணமுள்ள; இன்சுவையான; (வேதி.) மூடுதொடர்க்குழுச் சார்ந்த, நீர்க்கரியக் குழுவில் ஒன்றன் கலப்புடைய.

**aro'matize**, *v.* நறுமணம் ஊட்டு.

**arose**, *v.* arise என்பதன் இறந்தகாலம்.

**around'**, *adv.* எல்லாப் பக்கங்களிலும்; ஒவ்வொரு திசை யிலும்; சுற்றி, வட்டமாக; வளைந்து; திரும்பி; அருகு; எழுச்சியுற்று; *prep.* எல்லாப் பக்கங்களிலும், சூழ, சுற்றிலும்; மேற் பொதிவாக; இங்குமங்குமாக; நெடுக; ஏறத்தாழ.

**arous'al**, *n.* எழுப்புதல்.

**arouse'**, *n.* எழுப்புதல்; எச்சரிக்கைக்குரல்; *v.* எழுப்பு; எழுச்சியுறப்பண்ணு, செயற்படுத்து.

**arow'**, *adv.* வரிசையாக, நிரலாய்.

*arpe'ggio*, (இத்.) *n.* அடுத்தடுத்து விரைவாக இசைக்கருவி நரம்பினை ஏற்றி மிழற்றுதல்; ஏற்றிசையில் மிழற்றப்படும் நரம்பு.

**ar'pent**, *n.* பழைய பிரெஞ்சு நிலப்பரப்பளவை.

**ar'quebus**, *n.* பழைய மாதிரியான துப்பாக்கி வகை.

**arquebusade'**, *n.* துப்பாக்கிக்குண்டுகளினால் ஏற்படும் காயங்களுக்கான மருந்து நீர்.

**arquebusier'**, *n.* பழைய மாதிரியான கைத்துப்பாக்கி தாங்கிய வீரன்.

**arracach'a**, *n.* உணவுக்குரிய கிழங்குவகை தரும் தென் அமெரிக்கச் செடிவகை.

**a'rrack**, *n.* பட்டைச் சாராயம், தென்னை பனை அரிசி வெல்லம் முதலியவற்றிலிருந்து வடிக்கப்படும் புளிப்பேறிய மதுவகை.

**a'rrah**, *int.* உணர்ச்சி வியப்பு வாதமறுப்பு முதலியவற்றை உணர்த்தும் ஆங்கிலோ-அயர்லாந்து நாட்டு வழக்கான இடைச்சொல்.

**arraign'**, *v.* நீதிமன்றத்துக்குமுன் குற்றம் சாட்டு ; வெளிப்படையாகப் பழிசுமத்து ; குற்றம் காண் ; மறுத்துக்கூறு ; விளக்கம் தரும்படி கேள்.

**arraign'ment**, *n.* குற்றச்சாட்டு ; கண்டனம்.

**arrange'**, *v.* சீராக அமை, சரிப்படுத்து ; ஒழுங்குபண்ணு, வரிசைப்படுத்து ; தீர்த்துவை, இணக்குவி ; ஏற்பாடு செய் ; வழிவகைபண்ணு ; முன்கூட்டித் திட்டப்படுத்து ; செயற்கட்டளையிடு.

**arrange'ment**, *n.* ஒழுங்கு செய்தல் ; ஒழுங்கு, சீர் ; சீரமைக்கப்பட்ட பொருள் ; வழக்கு முதலியவற்றிற்குத் தீர்வு காணல், தீர்வு ; ஒத்திசைவு.

**arrange'ments**, *n. pl.* ஏற்பாடுகள், திட்டங்கள்.

**a'rrant**, *a.* அறக்கொடிய, அவச்சொல்லுக்கு ஆளான ; படுகேடான, தீர்ந்த ; முழுமோசமான.

**a'rras**, *n.* ஓவியத்திரை ; சுவர்மறைப்புத்திரை, அலங்காரச்சீலை.

**arr'ased**, *a.* ஓவியத்திரையினால் மூடப்பட்ட.

**arr'asene**, *n.* பூப்பின்னல் வேலைக்குரிய கம்பளி அல்லது பட்டு.

**array'**, *n.* வரிசை, படையணி, மக்களின் அணிவகுப்பு ; பரிவாரம், அணிகலன்கள் ; (சட்.) முறைகாண் ஆயத்தாரை (jury) வந்தமரச் செய்யும் நிரல்முறை ; *v.* ஒழுங்குபடுத்து ; அணிவகு ; பகட்டாக உடுத்து, ஒப்பனை செய் ; தேவையானவற்றை ஏற்படுத்திக் கொடு ; (சட்.) முறைகாண் ஆயத்தாரை அமர்த்து.

**arrear'**, *n.* (சட்.) ஊர்வல வரிசையின் பின்பகுதி ; நிலுவை.

**arrear'age**, *n.* பிற்பட்டிருத்தல் ; செலுத்தப்படாத எச்சத்தொகை.

**arrear'ages**, *n. pl.* கடன்கள்.

**arrears'**, *n. pl.* நிலுவை ; தொகை செலுத்துவதில் தாமதம் ; செய்யப்படாமலிருக்கிற செயல் ; பிற்பட்டிருத்தல் ; (தொ.) in arrears, முழுதும் கொடுபடாமல், பிற்பட்டு.

**arrect'**, *a.* நெட்டுக்குத்தான ; விழிப்புள்ள.

**arrest'**, *n.* நிறுத்தல், பிடித்தல், கவனப்பிணிப்பு ; *v.* நிறுத்து, தடைசெய் ; (சட்.) நடவடிக்கைகளை நிறுத்து ; பிடி, ஆளைக்காட்டிக் கைப்பற்று ; கருத்தைக்கவர்.

**arresta'tion**, *n.* நிறுத்துதல் ; பிடியாணைகொண்டு பிடித்தல்.

**arrestee'**, *n.* பற்றுகைக்குட்பட்ட சொத்தினை வைத்திருப்பவர்.

**arrest'er**, *n.* சிறைபிடிப்பவர் ; தடுத்து நிறுத்தும்பொருள்.

**arrest'ergear**, *n.* பற்றுவடம், விமானந்தூக்கிக் கப்பலில் இறங்கும் விமானங்களின் அதிர்ச்சி தடுப்புக்குரிய கம்பிவட அமைவு.

**arrest'ing**, *a.* கருத்தை ஈர்க்கிற.

**arrest'ive**, *a.* கருத்தைக்கவரும் பாங்குள்ள ; (இலக்.) பொருள் எல்லையைக் குறுக்குகிற.

**arrest'ment**, *n.* தடுத்தல், நிறுத்தல், நிறுத்திவைத்தல் ; (சட்.) தடுப்புக்காவல், கைது செய்யப்பட்டவர் பிணையத்தின் பேரிலோ ஈடுகாட்டுவதன்பேரிலோ விடுவிக்கப்படும் வரையில் அவரை மறியல் செய்துவைத்தல்.

***arret'***, (பிர.) *n.* நீதிமன்றத்தீர்ப்பு, தீர்ப்பு, முடிவு.

***a'rriere-ban***, (பிர.) *n.* முற்கால பிரான்சு நாட்டு அரசர் போருக்குப் படைத்துறைக் கடமையாற்றும்படி உயர் குடியாளருக்குப் பிறப்பிக்கும் அழைப்பாணை ; பெருங்குடி மக்கள் கடமைப் போர்ப்படை ; மேற்குடிமக்கள்.

***arriere-pensee'***, (பிர.) *n.* உள்நோக்கம், மறைவான எண்ணம்.

**a'rris**, *n.* இணைவிளிம்பு வரை.

**arriv'al**, *n.* பயண முடிவு ; வந்துசேர்கை ; வந்து தோன்றுதல் ; வருகையர், வந்துசேர்ந்தவர் ; வருபொருள், வரவினம் ; புதுக் குழந்தை ; கப்பல் வந்ததும் ஒப்புவிக்கப்பட வேண்டிய சரக்கு.

**arrive'**, *v.* சென்றுசேர் ; வந்தமை ; முடிவிடம்சேர் ; முன் தோன்று ; முடிவுறு ; புகழ் இலக்கு அடை ; கொணரப்பெறு ; வந்து பொருந்து ; நிகழ், நேர், அமைவுறு.

***arriviste'***, (பிர.) *n.* தன்னலவேட்டையர், திடுமென முன்னுக்கு வரமுயல்பவர்.

**a'rrogance**, *n.* இறுமாப்பு, அகந்தை, திமிர்.

**a'rrogancy**, *n.* தான்தோன்றித்தனம், தன்முனைப்பு.

**a'rrogant**, *a.* தருக்கு நிறைந்த, வீம்பு மிக்க, தன்முனைப்பான.

**a'rrogate**, *v.* பொருந்தாத உரிமை பேசு ; உரிமை கற்பி.

**arroga'tion**, *n.* தகாத உரிமை ; தருக்குதல் ; உரிமை கற்பித்தல்.

***arrondissement'***, (பிர.) *n.* பிரெஞ்சு ஆட்சித்துறையின் உட்பிரிவு.

**a'rrow**, *n.* அம்பு, கணை, வாளி ; அம்பு வடிவுடைய பொருள் ; சுட்டிக்காட்டும் முள் ; அம்புக்குறி ; செடியின் நடுக்குருத்து, கரும்பின் பூத்தண்டு.

**arr'ow-grass**, *n.* பொதியுறை வெடித்தபின் அம்புத்தலை போன்றிருக்கும் சதுப்புநிலச் செடியினம்.

**arr'ow-head**, *n.* அம்புத்தலை, பகழிமுனை ; அம்பு போன்ற இலைகளையுடைய நீர்ச்செடிவகை.

**arr'ow-headed**, *a.* அம்புத்தலை வடிவுடைய.

**arr'ow-root**, *n.* கூவைக்கிழங்கு, சத்துள்ள மாப்பண்டம் செய்வதற்கு ஏதுவாயுள்ள கிழங்கு வகை.

**arr'ow-shot**, *n.* அம்பு பாயும் தூரம்.

**arr'owy**, *a.* அம்புகளுக்கு உரிய ; அம்புகள் போன்ற.

**ars'enal**, *n.* படைக்கலச்சாலை, படைக் கொட்டில்.

**ars'enic**, *n.* உள்ளியம், அரிதார நஞ்சு ; *a.* அரிதார நஞ்சு சார்ந்த ; அரிதார நஞ்சு கலந்த.

**arsen'ical**, *a.* உள்ளியம் சார்ந்த ; உள்ளியம் அடங்கிய ; ஐமடி இணை திறத்துடன் உள்ளியம் கலந்துள்ள.

**arsen'ious**, *a.* உள்ளியம் சார்ந்த ; அரிதார நஞ்சு அடங்கிய ; மும்மடி இணை திறத்துடன் உள்ளியங் கலந்துள்ள.

**arsenopyri'tes**, *n.* இரும்பு உள்ளியம் கந்தகம் கொண்ட கனியம்.

**ars'es**, *n. pl.* arsis என்பதன் பன்மை.

**arsine'**, *n.* உள்ளிய நீரதை.

**ars'is**, *n.* (இசை.) சந்த எடுப்பு, ஆங்கில அலகீட்டில் ஒலி அழுத்தம் பெற்ற அசை ; அளபெடை.

**ars'on**, *n.* தீக்கோள், எரியூட்டல், தீயால் அழிவு செய்யும் கொடுங்குற்றம்.

**ars'onist, ar'sonite**, *n.* தீக்கொளுத்தி.

**art**, *n.* கலை ; கலைத்திறன் ; கலைத்திறன் அமைந்த வேலைப்பாடு, கலைப்பொருள் ; அறிவார்ந்த திறமை, செயல்துறை நூலறிவு ; விஞ்ஞானத் தொழில்துறை ; தொழில், கைவினை ; கைவினைக்காரர்களின் கழகம் ; சூழ்ச்சி, சூழ்திறம், சதுரப்பாடு ; தந்திரம் ; மந்திரசாலம் ; செய்முறை ; பேச்சுநயம், நடைநயம் ; கரவு, இரண்டகம் ; (தொ.) fine arts, கவின் கலைகள், கற்பனைத்திறனை ஈடுபடுத்தும் கலைகள் ; applied arts, தொழிற்கலைகள் ; உடற்கும் கைக்கும் உரிய கலைகள் ; arts and parts, (சட்.) கோட்பாடு நடப்பு ஆகிய இரண்டும் ஒத்த நிலையில் ; பணிப் பங்கு கொண்டு.

**art'efact**, *n.* கலைத்தொழில் வேலைப்பாடமைந்த பொருள்.

**artel'**, *n.* ரஷ்யத்தொழிலாளர் கழகம்.

**arter'ial**, *a.* நாடிக்கு உரிய ; நாடியின் இயல்புடைய ; நாடியைப் போன்ற ; (தொ.) arterial road, உயிர்நாடி போன்ற சாலை, பெருவழி.

**arter'ialize**, *v.* நாடியின் இயல்புள்ளதாக்கு, நுரையீரலில் உயிரகம்பட விடுவதனால் நரம்பு நாணுக்கு நாடியியல் பூட்டு.

**arte'riole**, *n.* நுண்நாடி, குறுநாடி.

**arterioscleros'is**, *n.* நாடிகளின் இறுக்கம்.

**arteriot'omy**, *n.* குருதி வடிப்பு, நாடியை வெட்டிக் குருதி வடியவிடல்.

**arteri'tis**, *n.* நாடி அழற்சி.

**art'ery**, *n.* நாடி, குருதிக்குழாய்; பாய்குழாய்; உயிர்நாடி போன்ற நாட்டின்பெருவழி.

**arte'sian**, *a.* வடபிரான்சிலுள்ள (North France) ஆர்ட்டாய் (Artois) என்னும் இடத்துக்குரிய; நீர்கொப்புளிக்கிற; (தொ.) artesian well, பொங்கு கேணி.

**art'ful**, *a.* தந்திரமான, சூழ்ச்சித்திறமுடைய, வஞ்சிக்கிற; கலைத்திறம் வாய்ந்த.

**arthrit'ic**, *n.* கீல்வாத நோயாளி; *a.* மூட்டுக்குரிய; மூட்டுக்கு அண்மையிலுள்ள; மூட்டுவீக்கத்துக்குரிய, கீல்வாதத்தின் இயல்புள்ள.

**arthrit'is**, *n.* மூட்டுவீக்கம்.

**ar'thromere**, *n.* இணைப்புடலி வகை சார்ந்த உயிரினத்தின் உடற்கூறு.

**arthrop'athy**, *n.* சூலை, கணுக்களில் நோவுதரும் பிணி.

**ar'thropod**, *n.* ஒட்டுத்தோடுடைய இணைப்புடலி உயிரினங்களின் வகை; *pl.* Arthrop'oda.

**arthros'is**, *n.* மூட்டிணைப்பு; தெளிவொலி எழுப்புதல்.

**ar'throspore**, *n.* உதிர்சிதல்.

**Arthu'rian**, *a.* பிரிட்டனின் பழங்கதை மன்னன் ஆர்தருக்கு உரிய, ஆர்தர் கதைக்காப்பியங்களைச் சார்ந்த.

**art'ichoke**, *n.* உண்ணத்தக்க கிழங்குகளையுடைய முள்ளியினச்செடி.

**art'icle**, *n.* எண்ணத்தக்க பொருள், பண்டம், இனம், உருப்படி; சரக்கு; விவரம்; சட்டம் உடன்படிக்கை முதலியவற்றின் வாசகம்; விதி; ஒழுங்கு; பிரிவுக்கூறு, உறுப்பு, மூடப்பட்ட பகுதி; வேளை; இணைப்பு; கட்டுரை; (இலக்.) சார்படை; *v.* கூறுகளாகப் பிரித்துக்காட்டு; குற்றம் சாட்டு; பணிபயில் ஒப்பந்த விதிகளினால் பிணைப்படுத்து; நிபந்தனை கூறு; (தொ.) articles of association, சங்க அமைப்பு விதிகள்; articles of faith, குறிப்பிட்ட சமயத்தினரால் வகுத்துக்கொள்ளப்பட்ட கொள்கைக் கூறுகள்.

**ar'ticled**, *a.* பணி பயில்வோராகப் பிணைக்கப்பட்ட, வகுக்கப்பட்ட; குறிக்கப்பட்ட.

**art'icles**, *n. pl.* பொதுவிதிகள் அல்லது திட்டங்கள்.

**artic'ulable**, *a.* இணைக்கக்கூடிய.

**artic'ular**, *a.* மூட்டுகளுக்குரிய; மூட்டினருகில் உள்ள.

**Articula'ta**, *n. pl.* இணைப்புடலி உயிரின வகுப்பு.

**artic'ulate**, *n.* (வில.) இணைப்பு உறுப்புக்கள் கொண்ட உயிரினம்; *a.* இணைக்கப்பட்ட; தனித்தனி கூறுகளால் பகுதிகளாகப் பொருத்தப்பட்ட; பிரித்து வைக்கக்கூடிய; தெளிவாகக் காணக்கூடிய; தெளிவாகக் கேட்கக்கூடிய ஒலிகளால் ஆன; தெளிவாய்ப் பேசக்கூடிய; *v.* மூட்டினால் இணை; பல மூட்டுக்களைக் கொண்டு சேர்; தெளிவான ஒலிகளாக அமை, தெளிவாகப்பேசு.

**artic'ulated**, *a.* மூட்டுக்களால் இணைக்கப்பட்ட.

**articula'tion**, *n.* இணைத்தல்; இணைக்கும் விதம்; இணைப்பு; துண்டம்; தெளிவான ஒலி, தெளிவான பேச்சு; மெய்யெழுத்து.

**artic'ulator**, *n.* தெளிவாக உச்சரிப்பவர்; எலும்புகளைக் கோத்து எலும்புக்கூடுகளை உருவாக்குபவர்.

**artic'ulatory**, *a.* ஒலிகளைத் தெளிவாக உச்சரிப்பதற்குரிய.

**ar'tifact**, *n.*=**artefact.**

**art'ifice**, *n.* கருவி, சாதனம், பொறியமைப்பு; கைத்திறன்; கைவேலைப்பாடு; சதுரப்பாடு, சூழ்ச்சி, தந்திரம்; ஆள்வினைத் திறம்.

**artif'icer**, *n.* கைவினைஞர், பொறிவலர்; புதிதுபுனைபவர்.

**artifi'cial**, *a.* செயற்கையான; மனிதனால் செய்யப்பட்ட, பொய்யான; போலியான; தொகுக்கப்பட்ட; கற்பனையான; போலிப்பகட்டுடைய.

**artificial'ity**, *n.* செயற்கையாயுள்ள தன்மை; இயல்பு அற்ற நிலை.

**artifici'alize**, *v.* செயற்கையாக்கு, இயல்பல்லாததாக்கு.

**artill'erist**, *n.* பீரங்கிகளைக் கையாள்வதில் வல்லவர்; பீரங்கி இயக்குபவர்.

**artill'ery**, *n.* பீரங்கித்தொகுதி; பீரங்கிப்படை.

**artill'eryman**, *n.* பீரங்கிப்படைவீரன்.

**artill'ery-plant**, *n.* மலர்த்துகளை வெடித்து வீசும் அமெரிக்க முட்செடிவகை.

**artiodac'tyl**, *n.* இரட்டைப்படைக் கால்விரல்களுள்ள விலங்கு; *a.* இரட்டைப்படைக் கால்விரல்களுள்ள.

**artisan'**, *n.* கம்மியர், கைவினைஞர்.

**art'ist**, *n.* கவின்கலைஞர்; ஓவியர்; கலைஞர்; கற்பனை உளத்தர், சுவைஞர்.

**artiste'**, *n.* கலைத்தொழிலர்; கைவினை முற்றியோர்.

**artis'tic, artis'tical**, *a.* கலைஞர்களைச் சார்ந்த; கலைக்குரிய, கலைத்திறனோடு செய்யப்பட்ட; கலைச்சுவையுள்ள.

**art'istry**, *n.* கலைநாட்டம்; கலை வேலைப்பாடு; கலைத்திறன்.

**art'less**, *a.* திறமையற்ற, பண்பாடில்லாத; ஒழுங்கற்ற; இயல்பான; கபடற்ற, பேதைமையான.

**Artocar'pus**, *n.* பலாவினக்காய்; பலாவினப்பழம்.

**arts**, *n. pl.* கலைத்துறை.

**arts'man**, *n.* கலைப்பயிற்சி கொள்பவர்.

**art'y**, *a.* (பே-வ.) போலிக்கலை நாட்டம் உடைய.

**art'y-and-craft'y, art'y-craft'y**, *a.* கலைத் தன்முனைப்புடைய; பயனைவிடக் கலைமுனைப்பான.

**a'rum**, *n.* சேம்பையினச்செடி.

**arundina'ceous**, *a.* நாணல் போன்ற; நாணலுக்கு உரிய.

**ar'val**, *a.* உழுநிலத்துக்கு உரிய; (தொ.) Arval Brethren, பண்டைய ரோமரிடையே நிலத்தெய்வங்களுக்குப் பலி கொடுக்கும் குருமார்.

**Arvic'ola**, *n.* நீர் எலியினம்.

**arvic'oline**, *a.* வயல்களில் வசிக்கிற.

**Ar'yan**, *n.* இந்தோ-ஐரோப்பிய இனத்தவர்; இந்தோ-ஐரோப்பிய இனத்தின் ஆசியக்கிளையினர்; இந்தோ-செர்மானிய மொழி, இந்தோ-செர்மானிய இனத்தின் ஆசியக்கிளை மூலமொழி; *a.* இந்தோ-ஐரோப்பிய, இந்தோ-செர்மானிய இனத்தின் ஆசியக்கிளைக்குரிய; இந்தோ-ஐரோப்பிய இனத் தொடர்புடைய.

**Ar'yanize**, *v.* இந்தோ-செர்மானிய மயமாக்கு, கீழை இந்தோ-ஐரோப்பியப் பண்பூட்டு.

**aryball'os**, *n.* கழுத்துடைய உருண்டைக்குடுவை.

**ar'yl**, *n.* நெடி வீசும் தனி இணைத்திறன் வாய்ந்த நீர்க்கரிமக் கலவைக் கூறுவகை.

**arytae'noid, aryte'noid**, *n.* குரல்வளைக் குருத்தெலும்பு, குரல்வளைத்தசை; *a.* குடவடிவுடைய.

**as** [1], *n.* நார்வே நாட்டுத் (Norway) தெய்வத்தின் பெயர்; *pl.* aes'ir.

**as** [2], *n.* பண்டை ரோம எடையளவை; பண்டைச் செப்புக்காசு வகை; *pl.* ass'es.

**as** [3], *n.* (மண்.) படிகரை, பனியடி ஒடுக்கினாலோ சறுக்குப் பனிக்கட்டியினாலோ படியவிடப்படும் மணல் சரளையின் கரை; *pl.* as'ar.

**as**[4], *rel. pron.* பெயரெச்சத்தொடரில் அவன்-அவள்-அவர்கள்-அது-அவைகள் என்ற பெயர் சுட்டிய இடைச்சொல்; *adv.* ஒப்பாக, சரியாக, எந்த அளவிலாயினும்; *rel. adv.* போல, போன்று; அளவில்; படியில்; வேளையில்; காரணமாக; இருந்தபோதிலும்; எடுத்துக்காட்டாக; (தொ.) as for, வகையில்; as for instance, சான்றாக; as if, as though, இருந்தால் எப்படியோ அப்படி; இருந்திருக்கக் கூடுமானால் எப்படியோ அப்படி; இருந்தாற்போன்று; as it were, ஒரு விதத்தில்; as many as, யாரெல்லாம் உண்டோ அவர்கள் எல்லாரும்; as much, அப்படித்தான்; அதையே தான்; அவ்வாறே, அதையே; as regards, அது பற்றி; as well, கூட; சால்புடையதாக; நன்றுதான்; so as to, பயனொடு, விளைவொடு.

**asafoet'ida**, *n.* பெருங்காயம்.

**asbest'iform**, *a.* கல்நார் உருவான, கல்நார் தோற்றமுடைய.

**asbes'tine**, *a.* கல்நாராலான; கல்நார் போன்ற; கல்நார் இயல்புடைய; எரியாத, தீக்கிரையாகாத.

**asbes'tos**, *n.* கல்நார், தீக்கிரையாகா ஆடையாய் நெய்யப் பயன்படுகிற நாரமைவுடைய கனிப்பொருள்வகை.

**as'carid**, *n.* சிறுகுடற்புழு.

**ascend'**, *v.* ஏறு; தாவி ஏறு; உயர்ந்துசெல்; இறந்தகாலம் நோக்கிச் செல்; மரபில் முன்னோக்கிச் செல்.

**ascen'dancy**, *n.* மேம்பாடு, மேலாட்சி, ஆதிக்கம்.

**ascen'dant**, *n.* ஏற்றம், ஏறுசரிவு; மேடு; ஏறுபவர்; உயர்பவர்; முன்மரபினர், முன்னோர்; மேம்பாடு, மேலாட்சி, ஆதிக்கம்; எழுநிலை, உதயம்; *a.* எழுகிற, உயர்கிற, உதிக்கிற; மேலாட்சியுடைய, ஆதிக்கமுடைய.

**ascen'dency**, *n.* = ascendancy.

**ascen'dent**, *n., a.* = ascendant.

**ascend'ible**, *a.* ஏறிச்செல்லக்கூடிய, ஏறத்தக்க.

**ascend'ing**, *a.* ஏறுகிற, உயர்கிற; நிமிர்கிற, உச்சிநோக்கிச் செல்கிற; மேன்மேல் விரைகிற.

**ascen'sion**, *n.* ஏறுதல், எழுந்துசெல்லல்; விண்ணேறுதல்; (தொ.) Ascension Day, இயேசுநாதரின் விண்ணேற்ற நாள், புண்ணிய வியாழன்.

**ascen'sional**, *a.* ஏறுகிற; ஏற்றம் சார்ந்த; ஏற்றமான, மிகு உயர்வான; (இலக்.) செறிவுடைய.

**Ascen'siontide**, *n.* இயேசுநாதரின் விண்ணேற்ற வாரம், புண்ணிய வியாழன் முதல் திருவெண் ஞாயிற்று நாள் வரையுள்ள வாரம்.

**ascen'sive**, *a.* ஏறுகிற; உயர்ந்து செல்கிற; மேற்செல்லும் போக்குடைய, ஏறுபாங்கான.

**ascent'**, *n.* ஏறுதல்; ஏற்றம்; உயர்வு, முன்னேற்றம்; இறந்த காலம் நோக்கிச் செல்லுதல்; முன்மரபு; ஏறு சரிவு, சாய்வு மேடு, மேடு; ஏறுநெறி.

**ascertain'**, *v.* உறுதியாய் அறி, உறுதிப்படுத்து.

**asce'sis**, *n.* தன்னொடுக்கம்.

**ascet'ic**, *n.* கடுந்துறவி, தவசி; கடுநோன்பாளர்; தன் ஒறுப்பாளர்; *a.* கடு நோன்பு நோற்கிற.

**ascet'ical**, *a.* தன்னொறுப்புச் சார்ந்த, ஒதுங்கிவாழ்கிற.

**ascet'icism**, *n.* கடுநோன்பு, தவம், தன்னொறுப்பு, இன்ப மறுப்பு, ஒதுங்கிய துறவு வாழ்வு.

**asc'ian**, *n.* நண்பகலில் நிழல்விழப்பெறாத வெப்பமண்டலத்தில் உறைபவர்.

**ascid'ian**, *n.* தண்டெலும்புகளின் முன்மரபாகக் கருதப்படுகிற அணுத் தண்டுடைய கடல் இப்பிவகை.

**ascid'ium**, *n.* சாடி வடிவ இலை; சாடி வடிவமுடைய இலைப் பகுதி; *pl.* ascid'ia.

**asci'tes**, *n.* மகோதரம், அகட்டுநீர்க்கோவை.

**ascit'ic, ascit'ical**, *a.* மகோதரம் சார்ந்த.

**Asclep'iad**, *n.* அஸ்க்லீப்பியஸ் (Asclepius) என்ற கிரேக்க மருத்துவத் தெய்வத்தின் மைந்தர்; மருத்துவர்; அஸ்க்லீப்பியடிஸ் (Asclepiades) என்ற கிரேக்கக் கவிஞர் வழங்கிய பாவகை.

**Ascle'pius**, *n.* கிரேக்க மருத்துவத் தெய்வம்.

**ascor'bic**, *a.* கரப்பானுக்கு எதிரான; (தொ.) ascorbic acid, 'சி' ஊட்டம்.

**as'cospore**, *n.* உயிர்மச் சிதல், காளான்வகைத் தாவரத்தில் உண்டாகும் சிதல்.

**ascrib'able**, *a.* சார்த்திக் கூறத்தக்க.

**ascribe'**, *v.* ஏற்றிச்சொல், சார்த்திக்கூறு; குறித்துக்காட்டு, உரியதாகக் கருது; சாட்டியுரை; காரணமாகக் குறிப்பிடு.

**ascrip'tion**, *n.* சார்த்துரை, திருக்கோயில் வழிபாட்டுரையிறுதியில் இறைவனுக்குச் சார்த்தும் புகழுரை.

**as'cus**, *n.* (தாவ.) சிதலுயிர்மம், எட்டுச்சிதல்கள் உருவாக இடந்தரும் நீள் உயிர்மம்; *pl.* asc'i.

**As'dic**, *n.* (Allied Submarine Detection Investigation Committee) நீரடிப்புலம், கதழ் ஒலியலைமூலம் எதிரி நீர்மூழ்கிகளின் இயக்கமறிவதற்கான அமைவு.

**ase'ity**, *n.* (மெய்.) படைக்கப்படாநிலை, தற்றோற்றம்.

**asep'alous**, *a.* (தாவ.) புறவிதழ் இல்லாத.

**asep'sis**, *n.* கெடுபுண்ணின்மை, நச்சு நுண்மமின்மை; நச்சரிமுறை, நுண்மத்தடை அறுவை முறை.

**asep'tate**, *a.* இடைவேலியிட்டுப் பிரிக்கப்படாத.

**asep'tic**, *n.* தசையழுகல் தடைப்பொருள்; *a.* கெடுபுண்படாத; தசை யழுகலைத் தடுக்கிற.

**asep'ticism**, *n.* தசையழுகல் தடைமுறை.

**asep'ticize**, *v.* தசையழுகலைத் தடைசெய்.

**asex'ual**, *a.* பால்வேறுபாடற்ற; பாலியக்கமற்ற; பால்சார்பின்றி இனப்பெருக்கம் உடைய.

**asexual'ity**, *n.* பால்வேறுபாடற்ற தன்மை.

**As'gard**, *n.* பண்டை நார்வே நாட்டு (Norway) தெய்வங்களும் திருநிலைபெற்ற வீரரும் வாழ்ந்ததாகக் கருதப்பட்ட துறக்க உலகு, வானவர் உலகு.

**ash**, *n.* அசோக மரம், தேவதாரு இனத்தைச்சார்ந்த கட்டுமானத்துக்குச் சிறந்த மரவகை; தேவதாரு வகையின் கட்டை; தேவதாருவகைக் கட்டையாலான ஈட்டி.

**ashake'**, *adv.* நடுங்கி, குலுங்கி.

**ashamed'**, *a.* வெள்கி, வெட்கமுற்று; குற்றமுணர்ந்து நாணி.

**ash'-bin, ash'-buck'et, ash'-can**, *n.* குப்பைத்தொட்டி, சாம்பற் கலம்.

**ash'en**[1], *a.* அசோக மரத்துக்குரிய; தேவதாருவகை மரத்தாலான.

**ash'en**[2], **ash'en-grey**, *a.* சாம்பல் நிறமான.

**ash'ery**, *n.* சாம்பரும். முத்துநீறும் உண்டுபண்ணும் இடம்.

**ash'es**, *n. pl.* சாம்பல், நீறு; எரிமலைச்சாம்பல், சுடலை நீறு, எரிசாம்பல்.

**ash'et**, *n.* ஸ்காத்லாந்தில் (Scotland) வழங்கும் பெரிய உணவுத்தட்டம், வட்டில்.

**ash'-fire**, *n.* வேதியியல் செய்முறைகளுக்குரிய இள அனல்.

**ash'-fly**, *n.* மீன் தூண்டிலில் பயன்படும் சிற்றுயிர்.

**ash'-furnace**, *n.* வேதியியல் செய்முறைகளுக்குரிய இள நெருப்பு அடுப்பு.

**ash'-grub**, *n.* = ash-fly.

**ash'-heap**, *n.* சாம்பற்களம், குப்பை.

**ash'-hole**, *n.* அடுப்படிச் சாம்பற்குழி.

**ashine'**, *adv.* ஒளிர்ந்து, பளப்பளப்பாக.

**ashiv'er**, *adv.* நடுக்கமுடன், நடுங்கிக்கொண்டு.

Ashkenaz'im, *n. pl.* போலந்து-செர்மனி நாடுகளிலுள்ள யூதர்கள்.

ash'lar, *n.* மேவுகல், செங்கல் போலச் சதுக்கமாகச் செதுக்கப்பட்ட கட்டுமானக்கல்; *a.* மேவு கல்லாலான; *v.* மேவு கல் கட்டி யணைகொடு.

ash'laring, *n.* மேவடை, மோட்டு மச்சின் கோண இடை வெளிகளை அடைத்து மறைக்கும் செங்குத்தான பலகைத் தட்டி.

ash'lar-work, *n.* மேவுகற் கட்டுமானவேலை.

ash'-leach, *n.* காரச்செய்தொட்டி, கட்டைச்சாம்பலைக் கரைத்துக் கார உப்புக்களைப் பிரித்தெடுக்கப் பயன்படுத்தப்படும் தொட்டி.

ash'-leaf, *n.* முன்பருவ விளைச்சலுக்குரிய உருளைக்கிழங்குப் பயிர்.

ashore', *adv.* கரைமீது, கரையில், கரைக்கு, கரைநோக்கி.

ash'-pan, *n.* அடுப்பின் அழித்தட்டிலிருந்து விழும் சாம்பல் படியும் அடித்தட்டு.

ash'-pit, *n.* = ash-hole.

ash'plant, *n.* அசோக மரத்தின் தை, தேவதாரு மரவகையின் இளங் கன்று.

ash'-stand, *n.* படிகலத்தட்டு, புகைச்சுருள் நீறு படிவதற்காக மேசைமீது வைக்கப்படும் தட்டு.

ash'-tray, *n.* = ash-stand.

Ash'-Wednes'day, *n.* கிறித்தவ ஆட்டை நோன்புப் பருவத்தின் முதல் நாள் நீற்றுப் புதன்கிழமை.

ash'y, *a.* சாம்பலுக்குரிய; நீறுபூத்த, சாம்பல் போர்த்த, சாம்பல் படிந்த; சாம்பல் நிறமான.

ash'y-grey, *a.* சாம்பல் நிறமான.

As'ian, *n.* ஆசியாக் கண்டத்தவர்; *a.* ஆசியா கண்டத்துக் குரிய; ஆசிய நாடுகளுக்குரிய; சிறிய ஆசியாவுக்கு (Asia Minor) உரிய; ஆசிய மரபுக்குரிய; பகட்டணி நிறைந்த இலக்கியப் பண்புடைய.

Asian'ic, *a.* ஆசியாக்கண்டத்துக்குரிய; சிறிய ஆசியாவுக்கு (Asia Minor) உரிய; ஆசிய மரபுசார்ந்த; (மொழி.) ஆசியா ஐரோப்பாக் கண்டங்களிலுள்ள இந்தோ-செர்மானிய இனமல்லா மொழிக்குழுவுக்குரிய.

Asiat'ic, *n.* ஆசியாக் கண்டத்தவர்; *a.* ஆசியாக் கண்டத்தைச் சார்ந்த.

Asiat'icism, *n.* ஆசிய நடையுடை மரபுகளைப் பின்பற்றி நடக்கும் பண்பு.

aside', *n.* பிறர் கேளாதபடி மெல்லிய குரலிற் பேசப்படும் சொல்; நடிகர் தனிமொழி; *adv.* விலகி, ஒதுங்கி, ஒரு பக்கமாக, தள்ளி, அப்பால்; மறைவாக, தனிமையில்; (தொ.) set aside, இலதாக்கு.

as'inine, *a.* கழுதைக்கு உரிய; கழுதை போன்ற; அறிவுக் குறைவான.

asinin'ity, *n.* கழுதை போன்ற தன்மை; அறிவு மழுங்கல்; முரண்டு.

ask, *v.* வினவு, விடைகோரு; வேண்டிக்கொள்; உசாவு, செய்தி கேட்டறி; அழை; நாடு; வேண்டு, வேண்டுமென்று கேள்.

askance', *adv.* பக்கமாக, சாய்வாக, ஓரமாக; மறை குறிப்பாக, சாடையாக; (தொ.) look askance at, வெறுப்புத் தெரிவிக்கும் வகையில் நோக்கு; ஐயுறவுகொள்.

askar'i, *n.* ஐரோப்பியரால் பயிற்சிபெற்ற ஆப்பிரிக்கப் படைவீரர்.

askew', *adv.* ஒருச்சாய்த்து, சிறக்கணித்துக்கொண்டு, இமை கொட்டிக் கொண்டு.

aslant', *adv.* சாய்வாக, பக்கம்நோக்கி; *prep.* பக்கச்சாய்வாக; குறுக்கே.

asleep', *adv.* துயில்நிலையில், உறங்கி; உயிரற்று; மரத்துப் போய், செயலற்று.

aslope', *adv.* சாய்வில், சரிவில்; சாய்வாக; குறுக்காக.

asmear', *a.* பூசப்பெற்ற.

aso'cial, *a.* கூடிவாழ விரும்பாத; மன்னுயத்துடன் பழகுவதில் வெறுப்புடைய.

asp [1], *n.* மரவகை, 'காட்டரசு'.

asp [2], *n.* விரியன்பாம்பு வகை.

aspar'agine, *n.* தண்ணீர்விட்டான் கொடியிலிருந்து எடுக்கப்படும் வேதியியற் பொருள்.

aspa'ragus, *n.* தண்ணீர்விட்டான் கொடி.

as'pect, *n.* நோக்கு, பார்வை; பார்க்கும் கோணம், சாய்வு, பக்கத்தோற்றம், எல்லைக்காட்சி, பண்புக்கூறு, வண்ணம்; (இலக்.) வினைவடிவ நுட்பவேறுபாடு.

as'pectable, *a.* காணப்படுகிற; காண்பினிய.

as'pen, *n.* மரவகை, 'காட்டரசு'; *a.* 'காட்டரசு' போலக் காற்றில் அதிர்ந்தாடுகிற; நடுங்குகிற; அஞ்சுகிற.

as'per [1], *n.* பழங்காலத் துருக்கிய நாணயவகை.

as'per [2], *n.* கிரேக்க வல்லுயிர்ப்பு.

as'perate, *v.* கடிதாக்கு, கரடுமுரடாக்கு.

as'pergill, aspergill'um, *n.* புனிதநீர் தெளிக்கும் தூரிகை.

Aspergill'us, *n.* பூஞ்சைக்காளான் இனம், பூசிணை.

asper'ity, *n.* கடுமை, முரட்டுத்தன்மை, உறைப்பு; கடு கடுப்பு, வெடுக்குத்தனம்.

asperse', *v.* தூவு, தெளி, சிதறு; பழிதூற்று, அவதூறு செய், இழிவுரை கூறு.

asper'sion, *n.* பழிதூற்றுதல், அவதூறு.

aspers'ive, *a.* பழிதூற்றும் இயல்புடைய, அவதூறுன.

aspersor'ium, *n.* தீர்த்தபாத்திரம்.

aspers'ory, *n.* நன்னீர்த் தூரிகை; நன்னீர்க் கொள்கலம்; *a.* பழிதூற்றுகிற; அவதூறுன, அவமதிக்கும் தன்மையுடைய.

as'phalt, *n.* புகைக்கீல்; கருங்காரை, சல்லி கூழாங் கற்களுடன் கலந்த புகைக்கீல்; *v.* புகைக்கீல் செறிவி; கருங்காரையிடு; கருங்காரைப்பூச்சுப் பூசு.

asphal'tic, *a.* புகைக்கீல் போன்ற, புகைக்கீல் சார்ந்த, புகைக்கீல் கலந்த; கருங்காரையிட்ட.

as'phodel, *n.* அல்லியினக்கொடி; கிரேக்க புராண மரபின்படி இறந்தவர்கட்குரிய செடியினத்தின் வகை.

asphyx'ia, *n.* நாடி நிறுத்தம்; மூச்சுத் தடைபடல், திணறல்.

asphyx'iant, *n.* மூச்சுத்திணறவைக்கும் திறமுடைய வேதியியற்பொருள்; *a.* மூச்சுத்திணறவைக்கும் திறமுடைய.

asphyx'iate, *v.* மூச்சுத் திணறவை.

asphyxia'tion, *n.* திணறல், மூச்சுத்தடை; திணறடிப்பு.

asphyx'iator, *n.* மூச்சுத்திணறடிப்பவர்.

as'pic [1], *n.* அகலிலையுடைய நறுமணப் பூஞ்செடி வகை.

as'pic [2], *n.* மீன்-முட்டை-இறைச்சி கலந்த நறுஞ்சுவை மசியல்.

as'pic [3], as'pick, *n.* விரியன்பாம்பு வகை.

aspidis'tra, *n.* மனையக அழகுச்செடிவகை.

Aspid'ium, *n.* கேடயவடிவ இலையுடைய சூரல்வகை.

as'pirant, *n.* அவாவுபவர், விழைபவர், நாடுபவர், வேண்மர்.

as'pirate, *n.* மூச்சொலி; மூச்சொலி கலந்த மெய்யொலி அல்லது மெய்யெழுத்து; மூச்சொலிக்குறியீடு; *a.* மூச்சொலியான; *v.* உயிர்ப்புடன் ஒலி; காற்றை உறிஞ்சியிழு.

aspira'tion [1], *n.* வேணவா, பேரார்வம், நாட்டம், விழைவு.

aspira'tion [2], *n.* முழு உயிர்ப்புடன் ஒலித்தல்; மூச்சொலி கலந்த மெய்யொலி; காற்றை உறிஞ்சியிழுத்தல்.

**as'pirator**, *n.* காற்றுறிஞ்சி, வளிவாங்கு கலம், காற்றுறை இடையிலேயுள்ள கலங்கள் வழியாக வரும்படி இருப்பதற் குரிய அமைவு ; (மரு.) உடல்நீர்வாங்கி, உடலில் தங்கியுள்ள நீர்மங்களை வாங்கும் ஆற்றலுடைய மருந்து.

**aspir'atory**, *a.* மூச்சுக்குரிய.

**aspire'**, *v.* அவாவு, விழை, ஆர்வத்துடன் விரும்பு.

**as'pirin**, *n.* வெப்பாற்றி, காய்ச்சலையும் நோய்களையும் அகற்றும் மருந்து.

**aspir'ing**, *a.* அவாவுகிற.

**aspout'**, *adv.* கொப்புளிக்கும் நிலையில், பொங்கி வழிந்து.

**asprawl'**, *adv.* கைகால் பரப்பிக் கொண்டு.

**asprout'**, *adv.* முளைத்து.

**asquat'**, *adv.* உட்கார்ந்துகொண்டு.

**asquint'**, *adv.* சாய்வாக, கடைக்கண் பக்கமாக.

**ass**, *n.* கழுதை ; முட்டாள்.

**ass'agai**, *n.* தென் ஆப்பிரிக்கக் குடிகள் வழங்கும் காழ் மர ஈட்டி, வேல்கம்பு ; *v.* ஈட்டி ஓச்சிக் காயப்படுத்து, வேல் கம்பெறிந்து கொல்லு.

***assa'i*** [1], (இத்.) *adv.* (இசை.) மிக.

**assa'i** [2], *n.* தென் அமெரிக்கப் பனைவகை ; பனைவகையின் காய் ; பனைவகையின் குடிதேறல்.

**assail'**, *v.* எதிர், தாக்கு ; முனைந்து முயல் ; கேள்விகளால் திகைக்கவை.

**assail'able**, *a.* தாக்குதற்கு இடம் தருகிற.

**assail'ant**, *n.* தாக்குபவர், எதிரி.

**assail'ment**, *n.* தாக்குதல்.

**assart'**, *n.* காடுவெட்டி உருவான நிலம், காடு கொன்று நாடாக்குதல் ; *v.* காடு அழித்துப் பாசன நிலமாக்கு.

**assass'in**, *n.* கொலையாளி, கொலைகாரர், மறைந்திருந்து கொலை செய்பவர்.

**assass'inate**, *v.* படுகொலை செய், மறைந்திருந்து தாக்கிக் கொல்லு, வஞ்சகமாகக் கொல்லு.

**assassina'tion**, *n.* படுகொலை, சதிக்கொலை, தாக்கிக் கொல்லுதல்.

**assass'inator**, *n.* படுகொலை செய்பவர், சதிகாரக்கொலைஞர், கொலைகாரர்.

**assault'**, *n.* திடீர்தாக்குதல், மேற்சென்றெதிர்த்தல் ; முற் றுகை ; மோதுதல் ; (சட்.) வலிந்து தாக்குதல், வசைத் தாக்கு ; *v.* தாக்கு ; முற்றுகை செய் ; வலிந்து எதிர் ; வசை கொண்டு தாக்கு ; (தொ.) assault at arms, assault of arms, சிலம்பத்தில் தட்டு மறிப்புக்காட்சி ; இராணுவப் பயிற்சிக் காட்சி.

**assay'**, *n.* தேர்வு, நோட்டம், எடைபண்பு மதிப்பீடு ; தேர்வுக் குரிய உலோகம் ; முயற்சி அனுபவம் ; *v.* ஆராய்ந்து பார், நோட்டம் பார், எடைபண்புநோர், கலவை அளவு மதிப்பிடு ; முயற்சி செய், முயன்றுபார் ; (தொ.) cup of assay, முன் சுவைச் சிறுகலம்.

**assay'able**, *a.* மதிப்பிடக்கூடிய ; முயற்சிக்குரிய.

**assay'er**, *n.* நோட்டக்காரர் ; பொன்காண் கட்டளையர்.

**assay'-master**, *n.* கட்டளை வல்லுநர், நோட்டவல்லுநர்.

**assay'-piece**, *n.* மச்சப்பொன் ; மேன்மைக்கு எடுத்துக் காட்டு.

**ass'egai**, *n.*, *v.*=assagai.

**assem'blage**, *n.* ஒன்றுகூடுதல் ; கூட்டம், மக்கட்குழாம் ; தொகுதி.

**assem'ble** [1], *n.* குழு நடனத்திற் பாய்ச்சல் வகை.

**assem'ble** [2], *v.* ஒன்றுகூட்டு, திரட்டு ; உறுப்புக்களை ஒன்று கூட்டிச்சேர் ; ஒன்றுகூடு.

**assem'bly**, *n.* ஒருங்குகூடுதல்; திரட்டுதல்; சட்டம் இயற்றும் பேரவை, மக்கள் மன்றம்.

**assem'bly-man**, *n.* பேரவை உறுப்பினர்.

**assem'bly-room**, *n.* பொதுநடனக் கூடம்.

**assem'bly-shop**, *n.* இயந்திரக்கருவிகள் இணைத்துப் பூட்டப் படும் இடம்.

**assent'**, *n.* இசைவு ; *v.* இணங்கு, இசைவினைத் தெரிவி.

**assenta'tion**, *n.* பணிந்த இசைவு.

**assent'er**, *n.* இசைபவர், ஏற்பாளர்.

**assent'ient**, *n.* இசைபவர் ; *a.* இசைகிற.

**assent'ingly**, *adv.* ஒத்துக்கொண்டு.

**assent'ive**, *a.* இசைகிற.

**assent'or**, *n.* (சட்.) முன்மொழிபவருக்கும் பின் மொழிபவருக்கும் பின்னர் வேண்மரை ஆதரிப்பவர்.

**assert'**, *v.* உறுதியாகக் கூறு.

**assert'able**, *a.* வலியுறுத்தத்தக்க.

**assert'er**, *n.*=assertor.

**asser'tion**, *n.* வற்புறுத்துதல் ; துணிபுரை.

**assert'ive**, *a.* பிடித்த பிடியை வலியுறுத்துகிற, தன்னுறுதி யுடன் செயலாற்றும் இயல்புடைய.

**assert'ively**, *adv.* உறுதியாக.

**assert'iveness**, *n.* தன்முனைப்பு.

**assert'or**, *n.* வலியுறுத்துபவர்.

**assert'ory**, *a.* வற்புறுத்தும் இயல்புடைய.

**assess'**, *v.* வரிவிதி, விலைமதிப்புக்குறி ; மதிப்பிடு.

**assess'able**, *a.* மதிப்பிடத்தக்க ; வரி மதிப்பீட்டுக்குரிய.

**assess'ment**, *n.* மதிப்பீடு ; வரி.

**assess'or**, *n.* மதிப்பீட்டாளர் ; (தொ.) court of assessors, மதிப்பாளர் மன்றம்.

**assesso'rial**, *a.* மதிப்பாளர் சார்ந்த ; மதிப்பாளர் மன்றத்துக்குரிய.

**assess'orship**, *n.* மதிப்பாண்மை ; மதிப்பாளர் நிலை.

**ass'et**, *n.* சொத்தின் கூறு.

**ass'ets**, *n. pl.* சொத்து, ஆஸ்தி ; (சட்.) செலுத்தவேண்டிய இனங்களைக் கணக்கிடுமுன் உள்ள உடைமை.

**assev'er**, **assev'erate**, *v.* ஆணையிட்டுரை.

**assev'eratingly**, *adv.* ஆணையிட்டு.

**assib'ilate**, *v.* 'சூ' என்றொலி, பாம்புபோல் சீறொலி செய்.

**assibila'tion**, *n.* 'சூ' என்பது போன்ற ஒலி, சீறொலி.

**assidu'ities**, *n. pl.* இடைவிடாக் கவனிப்பு.

**assidu'ity**, *n.* உறுவிழிப்பு, தொடர்ந்த கவனிப்பு.

**assid'uous**, *a.* விடாமுயற்சியுடைய.

**assid'uously**, *adv.* சோம்பல் இல்லாமல்.

**assign'**, *n.* சட்டப்படி உடைமையின் உரிமை மாற்றி வழங்கப் பெற்றவர், பேற்றுரிமையாளர் ; *v.* பங்கிட்டளி, ஒதுக்கிக் கொடு ; சட்டப்படி உடைமை உரிமை மாற்றிக்கொடு, வழங்கு, வகுத்தமை, திட்டமிட்டுக் குறி ; குறி.

**assign'able**, *a.* வகுத்தளிக்கப்படக்கூடிய ; காரணமாகக் குறிப்பிடத்தக்க ; ஒதுக்கித்தரத்தக்க.

***ass'ignat***, *n.* (வர.) பிரெஞ்சுப்புரட்சி அரசாங்கம் (1789) வெளியிட்ட தாள்நாணயம்.

**assigna'tion**, *n.* குறியிடம் ; (சட்.) உடைமையின் உரிமை மாற்றி வழங்குதல்.

**assignee'**, *n.* ஆட்பேர், ஒருவரது பிரதிநிதியாகச் செயலாற்ற அமர்த்தப்பட்டவர் ; நொடிப்புற்ற நிலையத்தினை நடத்த அமர்த்தப்பட்ட மேலாள் ; சட்டப்படி உடைமை உரிமை மாற்றி அளிக்கப்பெற்றவர்.

**assign'ment**, *n.* வகுத்தமைத்தல் ; வகுத்தொதுக்குதல் ; வகுப்பீடு ; ஒப்படைப்பு ; ஒப்படைத்த பகுதி ; ஈடு ; காரணக் குறிப்பீடு ; உடைமை உரிமை யளிப்பதற்கு உரிய பத்திரம்.

assimilabil'ity, *n.* ஒருநிலைப்படும் இயல்பு, செமிக்குந்திறன்.
assim'ilable, *a.* ஒன்றுபட்டிணையும் இயல்புடைய.
assim'ilate, *v.* தன்னியலாக்கு, தன்னோடிணைவி; செமிக்கவை; ஒன்றுபட்டிணை.
assimila'tion, *n.* செமிக்கப்பண்ணுதல், தன்னியற்படுத்துதல்; ஒன்றுபடல்; முழு இணைவு.
assim'ilative, *a.* செமித்தல் சார்ந்த.
assim'ilator, *n.* ஒன்றுபடுத்தி இணைப்பவர், இசைப்பவர்; செமிதிறமுடைய பொருள்.
assim'ilatory, *a.*=assimilative.
assist', *n.* தளக்கட்டுப் பந்தாட்டத்தில் (baseball) உதவியாளர் கெலிப்புக்கூறு; *v.* உதவு, துணைசெய், கைக்கொடு; பங்கு கொள்.
assis'tance, *n.* துணைமை, உதவி.
assist'ant, *n.* துணைவர், உதவியாளர்; *a.* உதவுகிற, துணைமையான.
assize', *n.* விலைக்கட்டுப்பாடு, அளவை வரையறை; ஆணையாளர் விசாரணை முடிபு; மாவட்ட ஆணையாளர் மன்றம்; *v.* விலை கட்டுப்படுத்து; அளவு வரையறை செய்; (தொ.) great assize, இறுதிநாள் தீர்ப்பு.
assiz'er, *n.* அளவைக் கட்டுப்பாட்டாளர்.
associabil'ity, *n.* தோழமை.
asso'ciable, *a.* இணைத்து எண்ணத்தக்க.
asso'ciate, *n.* கூட்டாளி, பங்காளி; துணைவர், தோழர்; உடனுழைப்பாளர்; துணைமையாளர்; நிறைவுரிமையின்றி உறுப்பினராகச் சங்கத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டவர்; தொடர்புடைய பொருள்; *a.* இணைவான, தொடர்புடைய; உடனுழைக்கிற, துணைநிலையுடைய; *v.* சேர்ந்துபழகு, கூடு; இணைத்தெண்ணு, பங்குகொள்.
associa'tion, *n.* கூடுதல், இணைதல், சேர்த்தல்; கூட்டு, சங்கம்; தோழமை, நட்பு; நெருங்கிய பழக்கம்; கருத்துத் தொடர்பு; (தொ.) association of ideas, எண்ண இயைபு.
asso'ciative, *a.* கூடிச்சேரும் இயல்புடைய.
asso'ciator, *n.* கூட்டாளி; இணைபவர்.
asso'ciatory, *a.*=associative.
assoil' [1], *v.* பழி துடை, பாவந்தீர்; மன்னித்து விடு, விடு.
assoil' [2], *v.* அழுக்காக்கு.
ass'onance, *n.* ஒலியியைவு, உயிரொலிகள் மட்டும் இசையும் எதுகை.
ass'onant, assonant'al, *a.* ஒலியியைவுடைய.
ass'onate, *v.* உயிரொலி இயைவுறு; உயிரொலி இயைவி.
assort', *v.* வகைப்படுத்து, ஒழுங்குபடுத்து; தொகுப்பில் சேர்; வகைப்படு; கூடிப்பழகு.
assort'ed, *a.* தேர்ந்து எடுக்கப்பட்ட, பலவிதமாக வகைப்படுத்தப்பட்ட.
assort'ment, *n.* வகைப்படுத்துதல்; வகுப்பமைவு; தொகுதி, வகைதொகைப் படுத்தப்பட்ட கூட்டு; கூறு.
assuage', *v.* மட்டுப்படுத்து, நோவு தணி, உணர்ச்சி அமைதிப்படுத்து, வேட்கைதீர்.
assua'sive, *a.* மட்டுப்படுத்துகிற.
assuefac'tion, *n.* நீள்பழக்கம் ஆக்குதல்.
ass'uetude, *n.* பழக்கப்பட்ட நிலை.
assum'able, *a.* மேற்கொள்ளத்தக்க.
assum'ably, *adv.* ஊகத்தின்படி.
assume', *v.* மேற்கொள், புனைந்துகொள்; பாவனைசெய், ஊகம் செய், கருதிக்கொள், ஆராயாது எண்ணு; செருக்கிக் கொள்; வலிந்து பற்று.
assumed', *a.* தன்னுலேயே புனைந்துகொள்ளப்பட்ட, போலியான, தற்பாவனையான; வலிந்து கொள்ளப்பட்ட.
assum'ing, *a.* தற்செருக்கான, மெட்டுகடந்த, ஆணவமான.
assump'sit, *n.* எதிர்வாதி உறுதி தவறியதாக வாதி சாற்றும் உரை.
assump'tion, *n.* ஊகம், கற்பிதம், தற்கோள், எடுத்துக்கொள்ளுதல், தற்புனைவு, போலிக்கருத்து; தற்செருக்கு; ஏற்பு; (அள.) மும்மடி மெய்ம்மையின் சினைவாசகம்; (தொ.) Assumption of the Virgin, கன்னிமேரியின் விண்ணேற்பு; விண்ணேற்பு விழா நாள்.
assump'tive, *a.* தற்கோளான, ஊகிக்கப்பட்ட; செருக்குடைய.
assur'ance, *n.* உறுதி, நம்பிக்கை, இசைவுறுதி, துடுக்குத்தனம்; காப்புறுதி, வாழ்க்கைக் காப்பீடு.
assure', *v.* உறுதிகூறு, உறுதிப்படுத்து; நம்பிக்கையளி; காப்புறுதியளி.
assured', *a.* உறுதியான; ஐயமற்ற; தன்னம்பிக்கையுடைய; காப்புறுதி பெற்ற.
assur'edly, *adv.* உறுதியாக.
assur'er, *n.* காப்புறுதி செய்பவர்; உறுதியளிப்பவர்.
assur'gency, *n.* எழுச்சி, கிளர்ச்சி.
assur'gent, *a.* பொங்குகிற, கிளர்ந்தெழுகிற; (தாவ.) நிமிர் வளைவான.
Assyriol'ogist, *n.* பண்டை அசீரிய (Assyria) இனப் பழமை ஆய்வாளர்; பண்டை அசீரிய மொழி ஆராய்ச்சியாளர்.
Assyriol'ogy, *n.* பண்டை அசீரிய (Assyria) இனத்துப் பழமை ஆய்வுத்துறை; பண்டை அசீரிய மொழியாராய்ச்சித் துறை.
astare', *adv.* உறுத்து நோக்கிய நிலையில்; திடுமென.
astat'ic, *a.* நிலையற்ற; நில முனைக்கோடிகளின் தாக்குக் குன்றிய.
as'ter, *n.* சாமந்தியினச்செடி.
aste'ria, *n.* மின்மணி, வெட்டுவாயில் விண்மீன்புள்ளிகள் காட்டும் ஒண் மணிவகை.
as'terid, *n.* விண்மீன் வடிவ மீன்வகை.
as'terisk, *n.* விண்மீன் குறி; *v.* விண்மீன் குறியிடு.
as'terism, *n.* நாண்மீன், விண்மீன் குழு; மூவிண்மீன் குறி (* * *); வெட்டுவாயில் விண்மீன் வடிவு காட்டும் திறம், மின் திறம்.
astern', *adv.* (கப்.) பின்புறமாக.
as'teroid, *n.* குறுங்கோள், செவ்வாய்க்கும் வியாழனுக்கு மிடையே கோள்களுடனொத்துக் கதிரவனைச் சுற்றிச் சுற்றிச் செல்லும் நுண்கோள்களுள் ஒன்று; வாணவேடிக்கை; *a.* விண்மீன் வடிவான.
asteroid'al, *a.* விண்மீன் வடிவான.
astheni'a, *n.* தளர்ச்சி, சோகை.
asthen'ic, *n.* வாடிய உடலுடையவர்; *a.* சோகை சார்ந்த, வலுக்கேடான; ஒற்றைநாடியான, நெஞ்சொடுங்கிய.
asth'ma, *n.* காசம், ஈளை, மூச்சுத்தடையுடன் கூடிய இருமல்.
asthmat'ic, asthmat'ical, *a.* காசம் சார்ந்த, ஈளையால் பீடிக்கப்பட்ட.
asthore', *n.* பொன்னே என்பது போன்ற அருமை விளிப்பெயர்.
astigmat'ic, *a.* காட்சி முனைப்பமைதிக் கேடு விளைக்கும் கண்ணுடைய; காட்சி முனைப்பமைதிக் கேடுடைய.
astig'matism, *n.* உருட்சிப்பிழை, கண்பார்வையின் முனைப்பமைதிக்கேடு; கண்ணுடிச் சில்லின் ஒளிமுனைப்பமைதிக் குறைபாடு.
astir', *adv.* இயங்கும் நிலையில்; படுக்கைவிட்டெழுந்து; உயிர்ப்புடன், துடிப்புடன்.
aston'ish, *v.* திகைக்கவை, மலைப்பு உண்டுபண்ணு; கலக்கு.
aston'ishment, *n.* வியப்பு, திகைப்பு; மலைப்பூட்டும் செய்தி.

astoop', *adv.* குனிந்த நிலையில்.

astound', *v.* திகைப்படையச்செய், அதிர்ச்சியூட்டு.

astound'ment, *n.* திகைப்பு, கலக்கம்.

astrad'dle, *adv.* கால்களை அகலப் பரப்பிக்கொண்டு.

as'tragal, *n.* தூண் தலைப்பின் பக்க அணியுறுப்புவகை, வளைதண்டு; பீரங்கி முகப்பு அணிவளை; பலகணிக் கண்ணாடிச் சில்லுகளைத் தாங்கும் கம்பி, கண்ணறைதாங்கி.

as'tragals, *n. pl.* சூதாடு கருவி.

*astrag'alus*, (ல.) *n.* கணைக்கால் எலும்பு, பயற்றினச் செடி.

astrakhan', *n.* சுருள் மயிர் வாய்ந்த ஆட்டுக்குட்டித் தோல் வகை; முரட்டுத் துணிவகை.

as'tral, *a.* விண்மீன்களுக்குரிய; விண்மீன்கள் நிரம்பிய, விண்மீன் மண்டலஞ்சார்ந்த; உயிர்மப்பிளவின் மின் அமைவுருச் சார்ந்த; (பெரு.) விசும்புருவான, ஒளிபோன்ற வானிறை நுண்பொருளாய் இயைந்த, ஆன்மிக; (தொ.) astral body, ஆவியுரு; astral hatch, விமானத்தில் வான் காட்சிக்குரிய கவிமாடப்பலகணி; astral lamp, நிழலிடா முகிழ் விளக்கு.

astrand', *adv.* கரைமீது, அடிநிலமீது.

astray', *adv.* நெறிதிறம்பி, வழிதவறி.

astrict', *v.* கட்டு, இறுக்கு; கட்டுப்படுத்து; மலச்சிக்கலுண்டாக்கு.

astric'tion, *n.* மலச்சிக்கல்; நரம்பிறுக்கம், தசையிறுக்கம்.

astric'tive, *a.* நரம்பிறுக்குகிற, தசையிறுக்குகிற; மலச்சிக்கலுண்டாக்குகிற.

astride', *adv.* நீண்ட நடையொடு; இருமருங்கும் ஒவ்வொரு காலொடு.

astringe', *v.* கட்டி இறுக்கு; செறிவி, அழுத்து; மல இறுக்கம் உண்டுபண்ணு.

astrin'gency, *n.* இறுக்கம்; சுருக்குதல்; செறிவித்தல்; தசைச்சுரிப்பு, நரம்பிறுக்கம்; குருதி உறைவிப்பு; தன்னடக்கம், தற்சிக்கனம்.

astrin'gent, *a.* கட்டுப்படுத்துகிற, இறுக்கமான, உறையச் செய்கிற, சுருக்குகிற, செறிவிக்கிற, துவர்ப்புள்ள, தன்னடக்கமான, தற்சிக்கனமான.

as'trodome, *n.* விமானத்தில் வான்காட்சிக்காக அமைக்கப்பட்ட பளிங்கியல் கவிகை மாடம், விண்மாடம்.

as'troite, *n.* பண்டை உலகின் ஒண்மணிவகை.

as'trolabe, *n.* முற்கால உயர்வுமானி.

astrol'atry, *n.* விண்மீன் வணக்கமுறை.

astrol'oger, *n.* கணியன், சோதிடன்.

astrolo'gic, astrolo'gical, *a.* சோதிடத்துக்குரிய.

astrol'ogy, *n.* கணிநூல், சோதிடம்.

as'tronaut, *n.* புறவெளி வானோடி வாழ்க்கை ஆர்வலர்; வான்புறவெளிச் செலவியல் மாணவர்.

astronaut'ics, *n.* சேணியல், வான்புறவெளிச் செலவு பற்றிய நூல்.

astron'omer, *n.* வானூலார், வான்கணிப்பாளர்.

astronom'ic, astronom'ical, *a.* வானூலுக்குரிய; வானூராய்ச்சி சார்ந்த; பேரளவான.

astron'omize, *v.* வானூல் பயில்.

astron'omy, *n.* வானூல், வான்கோளங்களின் ஆய்வியல்.

astrophys'ical, *a.* வான்கோளங்களின் வேதியியல் இயற்பியற் பண்புகளைச் சார்ந்த.

astrophys'ics, *n.* வான்கோளவியல், வான்கோளங்களின் இயற்பியல் வேதியியல் பண்புகளை ஆயும் ஆராய்ச்சித்துறை.

astrut', *adv.* துருத்திக்கொண்டு, பரப்பிக்கொண்டு, விருப்பாக.

astu'cious, *a.* கூர்ந்தறியும் திறமுடைய, சூழ்ச்சிநுட்பமுடைய.

astu'city, *n.* கூர்மதியுடைமை.

astute', *a.* கூர்மதியுடைய, நுண்புலம் வாய்ந்த; சூழ்ச்சித் திறமுடைய, தந்திர நுட்பமுடைய.

astute'ness, *n.* கூர்மதி, நுழைபுலம்; சூழ்ச்சித்திறம்.

asty'lar, *a.* தூணற்ற.

asudd'en, *adv.* திடுமென, உடனடியாக.

asun'der, *adv.* வேறாக, துண்டாக, ஒதுக்கி.

aswoon', *adv.* உணர்விழந்த நிலையில்.

asyl'um, *n.* புகலிடம், காப்பிடம், அடைக்கலம்; அறக்கோட்டம்; பித்தர் காப்புமனை.

asymmet'ric, asymmet'rical, *a.* செவ்விசைவற்ற, சமச்சீர் அற்ற, உருக்கோட்டம் உடைய.

asymm'etry, *n.* செவ்விசைவின்மை; உருக்கோட்டம்.

as'ymptote, *n.* தொடர்வரை; வளைகோட்டுடன் இணையாது அணுகிக்கொண்டே செல்லும் நேர்க்கோடு.

asyn'chronism, *n.* காலமுரண்; ஒருங்கிசையா நிகழ்ச்சி; இசைவு ஒவ்வாக் காலப்பண்பின் அளவு.

asyn'chronous, *a.* கால இசைவற்ற.

asyn'deton, *n.* இணைப்பிசைச்சொல் தொக்க அணிநிலை; *pl.* asyn'deta.

asyntac'tic, *a.* இசைவின்றித் தொடுத்த, இலக்கணத்துக்கு இயையாத.

asys'tole, *n.* (மரு.) நெஞ்சுப்பையின் சுருக்கக் குறைவு.

at, *prep.* இல், இடத்தில், அருகில், அடியில்; (தொ.) at first, முதலில், தொடக்கத்தில்; at last, இறுதியில், கடைசியில், முடிவில்; at least, குறைந்த தன்மையில், குறைந்த அளவில்; at most, நிறைந்த தன்மையில், உயர்ந்த அளவில்; at once, உடனே, காலதாமதமின்றி; ஒருமிக்க; at sight, கண்டவுடன்.

at'abal, *n.* முழவு வகை, போர்ப்பறை.

atarax'ia, at'araxy, *n.* அமைதிநிலை, இன்பத்தையும் துன்பத்தையும் பொருட்படுத்தாத மனப்பான்மை.

at'avism, *n.* மூதாதையர் பண்பு வெளிப்பாடு; முதுமரபு மீட்சி; சில தலைமுறைகளுக்குப் பின்னர் நோய் மீண்டும் வருதல்.

atavis'tic, *a.* மூதாதையரின் இயல்பு கொண்ட, முதுமரபு மீட்சியுடைய.

atax'ic, *a.* ஒழுங்கின்றி விட்டுவிட்டு நிகழ்கிற.

atax'y, *n.* உடலுறுப்புக்கள் ஒத்தியங்க மாட்டாமை.

ate, *v.* eat என்பதன் இறந்தகாலம்.

ateleio'sis, *n.* உடல் அளவோடு ஒத்த குள்ளத்தன்மை; நிறைவுறாத வளர்ச்சி.

*atelier*, (பிர.) *n.* தொழிற்சாலை; கலைஞனின் பணிமனை.

Athana'sian, *a.* பண்டை அலெக்சாண்டிரியாவின் தலைமைக் குரு அதனேசியஸ் என்பாரைச் சார்ந்த.

athan'asy, *n.* சாவின்மை.

ath'anor, *n.* இரசவாதியின் உலை.

ath'eism, *n.* நாத்திகம்; கடவுள் நம்பிக்கையின்மை.

ath'eist, *n.* நாத்திகர்.

atheis'tic, *a.* கடவுள் கொள்கையற்ற.

atheis'tical, *a.* நாத்திகஞ் சார்ந்த.

ath'eling, *n.* உயர்குடும்பத்தைச் சேர்ந்தவர், அரசிளங்குமரர்.

athenae'um, *n.* இலக்கியக்கழகம்; விஞ்ஞானச் சங்கம்; படிப்பகம்; நூல் நிலையம்; அத்தீனா (Athene) என்ற கிரேக்க பெண்தெய்வத்தின் கோயில்; பண்டைக்காலக் கல்வி நிலையம்; இலக்கியப் பல்கலைக்கழகம்.

Athe'nian, *n.* ஆதன்ஸ் (Athens) நகரத்தின் குடிமகன்.

athirst', *a.* நீர்வேட்கையுடைய; ஆர்வமுள்ள.

**ath'lete**, *n.* உடற்பயிற்சிப் போட்டியாளர் ; உரவோர்.
**athlet'ic**, *a.* உடற்பயிற்சி ஒட்டிய ; உடல் வலிமை நிறைந்த.
**athlet'icism**, *n.* உடல் வலிமைப்பயிற்சி.
**athlet'ics**, *n. pl.* உடற்பயிற்சி விளையாட்டுக்கள்.
**at-home'**, *n.* விருந்தினர்க்கு வீட்டில் வரவேற்பு.
**athrill'**, *adv.* விதிர்விதிர்த்து, நடுநடுங்கி.
**athrob'**, *adv.* துடித்துக்கொண்டு.
**athwart'**, *adv.* பக்கம் நோக்கி, குழம்பி, ஒருசாய்வாய், ஏறுமாறாக, தவறி ; *prep.* குறுக்கே.
**a-tilt'**, *adv.* ஒருக்கணித்து.
**at'imy**, *n.* மானக்கேடு, அவமதிப்பு, குடியுரிமை இழப்பு.
**ating'le**, *adv.* உடல் சிலிர்த்து.
**Atlante'an**, *a.* லிபியா (Libya) விலுள்ள அட்லாஸ் (Atlas) மலையைச் சார்ந்த ; மிகப் பெரிய ; கடல் கொண்ட பண்டை அட்லாண்டிஸ் (Atlantis) மாநிலத்திற்குரிய.
**atlan'tes**, *n. pl.* (க-க.) ஆண் உருவச்சிலை வடிவான தூண்கள்.
**Atlan'tic**, *n.* அட்லாண்டிக் மாகடல் ; *a.* அட்லாண்டிக் மாகடற்பகுதியைச் சார்ந்த ; லிபியாவிலுள்ள அட்லாஸ் (Atlas) மலையைச் சார்ந்த.
**atlan'tosaur'us**, *n.* தொல்பழங்காலப் பெரும் பல்லி உருவான விலங்கு வகை.
**At'las**, *n.* லிபியா(Libya)வின் மலை ; மேல் உலகங்களைத் தாங்குவதாகக் கருதப்பட்ட கிரேக்கப் புராணப் பழந் தெய்வம்.
**at'las**, *n.* நிலப்பட ஏடு ; வரைதாள் அளவு வகை ; (உட.) மண்டை ஓட்டைத் தாங்கும் கழுத்தெலும்புப் பூட்டு.
**At'man**, (ச.) *n.* ஆன்மா, உயிரின் உள்ளொளி.
**atmol'ogy**, *n.* வளிமண்டல நீராவி நிலைநூல்.
**atmol'ysis**, *n.* புகைகளைப் பிரிக்கும் முறை.
**atmom'eter**, *n.* ஆவிமானி.
**at'mosphere**, *n.* வளிமண்டலம், பவனம் ; வளிச்சூழல் ; ஆவியமுக்கம் ; படத்தின் பின்னணித் தொலை உணர்வு ; சூழ்நிலை.
**atmosphe'ric, atmosphe'rical**, *a.* வளிமண்டலம் சார்ந்த ; சூழ்நிலைக்குரிய.
**atmosphe'rics**, *n. pl.* வானொலி-தொலைபேசி ஏற்புக்களைத் தடைப்படுத்தும் இடையோசைகள்.
**ato'cia**, *n.* பெண்மலடு.
**at'ok**, *n.* தீ மணக் கசிவுநீரை வெளிப்படுத்தும் கீரியின விலங்கு வகை.
**at'okous**, *a.* பின்மரபற்ற.
**atoll'**, *n.* காயலைச்சூழ்ந்த பவழத் தீவு, வட்டப்பவழத் திட்டுக்கள்.
**at'om**, *n.* அணு ; பருப்பொருளின் முன்கூறு.
**atom'ic, atom'ical**, *a.* அணுவைச் சார்ந்த ; அணுவினுடைய ; அணு இயக்கத்திற்குரிய ; (தொ.) atomic bomb, அணுக்குண்டு ; atomic clock, அணு இயக்கக் கடிகாரம் ; atomic energy, அணு ஆற்றல் ; Atomic Energy Authority, பிரிட்டனில் (Britain) அணு ஆற்றல் கட்டுப்பாட்டு நிலையம் ; Atomic Energy Commission, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் (U.S.A.) அணு ஆற்றல் கட்டுப்பாட்டு நிலையம் ; atomic pile, அணு ஆற்றலைக் கட்டுப்படுத்தி இயக்கும் பொறி நுட்பம் ; atomic warfare, அணுக் குண்டுப்போர்.
**at'omism**, *n.* அணுவாதம் ; அணு இயக்கக் கோட்பாடு.
**at'omist**, *n.* அணுக்கோட்பாட்டாளர்.
**atomis'tic**, *a.* அணுச் சார்ந்த ; அணுக்கோட்பாட்டிற்குரிய.
**ato'mium**, *n.* அணுவின் உள்ளமைப்புக் காட்டும் குழைகுச்சு அமைவு.
**atomiza'tion**, *n.* அணுவாக்குதல் ; (மரு.) நீர்மங்களை நுண் திவலைகளாக மாற்றுதல்.
**at'omize**, *v.* அணுக்களாகக் குறை.
**at'omizer**, *n.* (மரு.) நீர்மங்களை நுண்திவலைகளாக்கும் கருவி.
**a'tom-smasher**, *n.* அணுத்தகர் பொறி.
**at'omy**[1], *n.* எலும்புக்கூடு ; தேய்ந்த உடல்.
**at'omy**[2], *n.* அணு ; நுணுகிய உயிர்ப்பொருள்.
**aton'al**, *a.* (இசை.) பண்முறையற்ற.
**atone'**, *v.* ஈடுசெய் ; கழுவாய்தேடு ; பொருந்து.
**aton'ic**, *n.* அசையழுத்தம் அற்ற சொல் ; *a.* ஒலியழுத்தம் அற்ற ; உறுதி குன்றிய.
**atop'**, *adv.* உச்சியில் ; மேலிடத்தில்.
**atrabil'ious**, *a.* கடும்பித்தத்திற்கு உள்ளான ; மனச்சோர்வுடைய ; மனக்கசப்பிற்கு உரிய.
**atrip'**, *adv.* (கப்.) நங்கூரம் தரையிலிருந்து உயர்த்தப்பட்ட நிலையில்.
**at'rium**, *n.* பண்டை ரோம நாட்டினர் வீட்டின் முற்றம், முன்றில் ; திருக்கோயிலில் மோடிட்ட வாயில் முகப்பு ; (வில.) துவாரம் ; துளை.
**atro'cious**, *a.* மிகக் கொடிய ; அடாத.
**atro'city**, *n.* அட்டூழியம்.
**at'rophy**, *n.* உடல் மெலிவு ; சத்தின்றித் தேய்ந்து போதல் ; ஆளாமைத் தேய்வு.
**at'ropine**, *n.* நச்சுக்கார வகை.
**attach'**, *v.* பிணை, ஒட்டவை ; பொருத்து, கட்டுப்படுத்து ; உரித்தாக்கு ; (சட்.) பற்றிக்கொள், ஜப்தி செய்.
**attach'able**, *a.* பிணைக்கத்தக்க ; பற்றத்தக்க.
**attache'**, *n.* நிலைத்தூதரின் பிணைச்சு.
**attached'**, *a.* பற்றுதலுள்ள.
**attach'ment**, *n.* பிணைக்குஞ் செயல் ; பொருத்தும் வழி ; அற்புத்தளை ; பற்றுசை ; (சட்.) முறைப்படிப் பற்றிக்கோடல்.
**attack'**, *n.* தாக்குதல் ; அடர்ப்பு, எதிர்ப்பு ; கடுமையான கண்டனம், பழிப்புரை ; *v.* தாக்கு ; சாடு.
**attack'able**, *a.* தாக்குதற்கு உரிய.
**attain'**, *v.* முயற்சியினால் அடை ; நிறைவேற்று.
**attain'able**, *a.* முயன்று அடையக்கூடிய.
**attain'der**, *n.* சாவு தண்டனையின் பின்விளைவுகள் ; (சட்.) பெருந்துரோகத்திற்காகக் குடியுரிமைகளை இழத்தல்.
**attain'ment**, *n.* முயற்சியால் அடைதல் ; பேறு.
**attain'ments**, *n. pl.* கல்வியின் ஈட்டப்பட்டவை, தேர்ச்சிப் பேறுகள்.
**attaint'**, *v.* குற்றவாளியென முடிவுசெய் ; மன்பகைத் தண்டனையாக உரிமை இழக்கும்படி செய் ; இழிவுபடுத்து.
**att'ar**, *n.* ரோசா இதழ்களிலிருந்து இறக்கப்படும் நறுமண நெய், அத்தர்.
**attem'per**, *v.* தக்க அளவில் கல ; தட்பவெப்பநிலையை மட்டுப்படுத்து ; மிதமாக்கு ; சரிப்படுத்து.
**attempt'**, *n.* முயற்சி ; *v.* முயல் ; முயற்சி செய்.
**attend'**, *v.* உற்றுக்கேள், கவனி ; உடன்செல் ; கூட இரு ; இடத்திரு.
**atten'dance**, *n.* வந்திருக்கை, வரவு ; (தொ.) attendance register, வருகைப் பதிவேடு.
**atten'dant**, *n.* ஊழியன் ; *a.* உடன் செல்கிற, உடனிருக்கிற.
**attend'er**, *n.* கையாள், சிற்றெழுத்தர்.
**attend'ment**, *n.* (அரு.) உடனிணைவு ; பக்கமேளம்
**atten'tion**, *n.* கவனம், பார்வை, கருத்து ; (படை.) நிமிர்ந்து நிற்கும் உருவமைதி.

**atten'tive,** *a.* கருத்துள்ள, நினைப்புள்ள, எச்சரிக்கையான, வணக்கமுள்ள.
**attent'ively,** *adv.* கருத்துள்ள நிலையில்.
**attent'iveness,** *n.* கவனிக்கும் தன்மை.
**atten'uate,** *a.* மெல்லிய ; தளர்த்தியான ; *v.* மெல்லிய தாக்கு, குறை.
**attenua'tion,** *n.* மெலிவு, நொய்ம்மை, நுண்மை.
**attest,** *v.* சான்று கூறு ; கையெழுத்திட்டு உறுதியளி.
**attesta'tion,** *n.* அறிசான்று ; சான்று அளித்தல் ; உறுதியளித்தல்.
**attest'ed,** *a.* என்புருக்கி நுண்ம நீக்க உறுதிச்சான்று பெற்ற.
**Att'ic,** *a.* ஆதன்ஸ் அல்லது அட்டிகாவைச் சார்ந்த ; தூய ; (தொ.) Attic salt, நாகரீக நகைச்சுவை.
**att'ic,** *n.* மேன்மாடச் சிறு அறை.
**att'icism,** *n.* ஆதன்ஸ் மொழிநடை ; நவின்றோர்க்கு இனிமை.
**attire',** *n.* உடை ; *v.* உடுத்திக்கொள்.
**att'itude,** *n.* மனப்பான்மை ; உருவமைதி ; சாயல் ; பழக்க நடக்கை.
**attitudina'rian,** *n.* பழகிய நடக்கைகளை ஆராய்ச்சி செய்பவர்.
**attitud'inize,** *v.* போலி நடக்கைகளை மேற்கொள்.
**attoll'ent,** *n.* எழுப்பும் தசை ; *a.* எழுப்புகின்ற.
**attorn',** *v.* (சட்.) மற்றொருவருக்கு மாற்று ; புதிய நிலக்கிழாரைச் சட்டப்படி ஒப்புக்கொள்.
**attorn'ey,** *n.* வழக்குரைஞர் ; மாற்றுரிமையர் ; (தொ.) power of attorney, பகராள் செயலுரிமைப் பத்திரம்.
**Attorney General,** (தொ.) இங்கிலாந்தின் சட்டத்தலைமைப் பணி முதல்வர் ; அமெரிக்கக் குடியரசுத்தலைவர் அமைச்சரவையின் நியாயத்துறை உறுப்பினர் ; சட்டத்துறையின் தலைவர்.
**attorn'ment,** *n.* புதிய நிலக்கிழாரை ஒப்புக்கொள்ளல்.
**attract',** *v.* கவர், ஈர், மயக்கு.
**attract'able,** *a.* கவருகிற, ஈர்க்கின்ற.
**attrac'tion,** *n.* கவர்ச்சி.
**attrac'tive,** *a.* கவர்ச்சியான.
**att'rahent,** *n.* கவரும் பொருள் ; *a.* கவரக்கூடிய, ஈர்க்கத்தக்க.
**attrib'utable,** *a.* உடைமையாக்கத்தக்க ; கற்பித்துக் கூறத்தக்க.
**att'ribute**[1], *n.* இயற்பண்பு, இயல்புக்குணம் ; (இலக்.) அடைமொழி.
**attrib'ute**[2], *v.* கற்பித்துக்கூறு ; உடைமையாகக் கருது.
**attribu'tion,** *n.* கற்பித்துக்கூறுதல், உடைமையாக்கிச் சொல்லப்பட்ட பொருள்.
**attrib'utive,** *n.* அடைமொழி ; *a.* அடைமொழி ஊட்டத்தக்க; அடைமொழி சேர்க்கப்பட்ட.
**attrit'e, attrit'ed,** *a.* உராய்வதால் தேய்ந்துள்ள ; (மெய்.) கடவுள் அன்பினாலன்றித் தண்டனை அச்சத்தினால் செய்ததற்கு இரங்குகிற.
**attri'tion,** *n.* உராய்தல் ; சென்று தேய்ந்திறுதல் ; (மெய்.) பாபத்திற்காக ஓரளவு வருந்துதல்.
**attui'tion,** *n.* பொறியுணர்வுக்கும் புலனுணர்வுக்கும் இடைப்பட்ட மன நிகழ்வு.
**attun'e,** *v.* இசைவி ; பொருத்து.
**attune'ment,** *n.* இசைவித்தல்.
**atyp'ical,** *a.* பொதுமாதிரியல்லாத.
***aubade,*** (பிர.) *n.* வைகறைப்பாடல்.
***auberge,*** (பிர.) *n.* சத்திரம், தங்குமனை.
**aubrie'tia,** *n.* இளவேனிலில் பூக்கும் குத்துச் செடிவகை.
**aub'urn,** *a.* செம்பொன்னிறமான, கோதுமை நிறமுடைய.
***au courant,*** (பிர.) *a.* அறிவது அறிந்த.

**auc'tion,** *n.* ஏலம் ; ஏலச்சீட்டாட்டம் ; *v.* ஏலத்தில் விற்பனை செய்.
**auc'tionary,** *a.* ஏலவிற்பனைக்கு உரிய.
**auc'tioneer',** *n.* ஏலவிற்பனை செய்பவர் ; *v.* ஏலவிற்பனை நடத்து.
**auda'cious,** *a.* துணிச்சலான ; வெட்கங்கெட்ட, துடுக்கான.
**auda'city,** *n.* துடுக்கு.
**audibil'ity,** *n.* கேட்கப்படும் தன்மை ; ஓசைத்தெளிவு.
**aud'ible,** *a.* கேட்கத்தக்க, செவிமடுக்கத்தக்க.
**aud'ience,** *n.* கேட்டல் ; வழக்கு மன்றத்தில் கேட்டல் ; பேட்டி ; கேட்போர் கூட்டம் ; (தொ.) give audience, கூர்ந்து கேள்.
**aud'ile,** *n.* ஒலி உணர்ச்சி வழியாக ஆராய்பவர் ; எஃகு செவியாளர் ; *a.* கேள்விக்குரிய.
**aud'io,** *n.* விமானந்தூக்கிக் கப்பலை நோக்கி விமானம் இறங்குதற்கு உகந்த வேகச் செவ்வியை உணர்த்தும் ஒலி அமைவு ; *a.* ஒலி சார்ந்த, ஒலிபரப்பைச் சார்ந்த.
**aud'io-engineer',** *n.* ஒலிபரப்புப்பொறி இயக்குநர்.
**audiom'eter,** *n.* கேள்விமானி.
**aud'iophil, aud'iophile,** *n.* ஒலிப்பதிவிலும் ஒலிபரப்பிலும் இயற்கைக்குரலே மீட்டெழுப்பப்பட வேண்டுமென்ற ஆர்வமுடையவர்.
**audio-vis'ual,** *a.* காட்சி கேள்விகளை ஒருங்கு சார்ந்த.
**aud'iphone,** *n.* பல்லில் அழுத்தப்படுவதால் காது கேட்க உதவும் கருவி.
**aud'it,** *n.* தணிக்கை, கணக்குப் பரிசோதனை ; *v.* தணிக்கை செய்.
**aud'ition,** *n.* செவிப்புலன் ; கேட்டல் ; கேட்டாய்தல் ; கேட்டல் முறை.
**aud'itive,** *a.*=auditory.
**aud'itor,** *n.* கேட்போர் ; தணிக்கையாளர்.
**auditor'ial,** *a.* தணிக்கையைச் சார்ந்த.
**auditor'ium,** *n.* அவைக்களம், கேட்போர் அமர்ந்திருக்கும் இடம் ; வரவேற்புக்கூடம்.
**aud'itory,** *n.* கேட்போர் ; கேட்குமிடம் ; *a.* கேட்டல் தொடர்புடைய.
**aud'itress,** *n.* பெண் தணிக்கையாளர்.
**auf,** *n.* குறளியின் குழந்தை, சிறுக்கியின் சேய்.
***au fait,*** (பிர.) *a.* நன்குதெரிந்த.
***au fond,*** (பிர.) *adv.* அடித்தலத்தில், அடிப்படையில்.
**Auge'an,** *a.* அழுக்கான, எளிதில் சுத்தம் செய்ய முடியாத.
**aug'er,** *n.* துரப்பணம் ; நிலத்தைத் துளைக்கும் கருவி.
**aught,** *n.* யாதாவது ஒன்று ; சிறிதளவு ; நுண்கூறு.
**aug'ment**[1], *n.* வளர்ச்சி, மிகுதி ; (இலக்.) சாரியை.
**augment'**[2], *v.* பெரிதாக்கு ; வளரச்செய் ; பெரிதாகு, அதிகமாகு.
**augment'able,** *a.* பெரிதாக்கத்தக்க.
**augmenta'tion,** *n.* வளர்ச்சி, அதிகரித்தல்.
**augmen'tative,** *a.* பெருகும் தன்மையுள்ள ; அதிகரிக்கும் ஆற்றல் உடைய ; (இலக்.) பொருட்செறிவு உண்டாக்குகிற.
**augment'er, augment'or,** *n.* பொறியின் செயன்மையைப் பெருகுவிக்கும் நரம்பு.
**aug'ur,** *n.* குறிசொல்பவர் ; கணி ; *v.* குறிசொல் ; வருவது கூறு.
**aug'ural,** *a.* குறி கூறுதலைச் சார்ந்த.
**aug'ury,** *n.* நிமித்தம், புள்வாய்ப்பு, குறி கூறுதல் ; முன்னுணர்வு.

**Aug'ust**, *n.* ஆங்கில ஆண்டின் எட்டாம் மாதம்.
**august'**[1], *a.* மேதக்க, மாண்புறு.
**august'**[2], **auguste'**, *n.* விளையாட்டு வளைவரங்கில் திறமையற்ற விதூடகன்.
**Augus'tan**, *n.* ரோம இலக்கியத்தின் பொற்கால எழுத்தாளர்; *a.* அகஸ்டஸ் சீசரின் (Augustus Caesar) காலத்தைச் சார்ந்த; இலக்கியத்தின் பொற்காலம் சார்ந்த.
**Augustin'ian**, *n.* தூயதிரு. அகஸ்டைனைப் (St. Augustine) பின்பற்றும் கிறித்தவத் துறவி; *a.* தூயதிரு. அகஸ்டைனைச் சார்ந்த.
**auk**, *n.* குட்டையான இறகுகளையுடைய கடல் பறவை.
**au'la**, *n.* மண்டபம்; (தொ.) aula regis, (வர.) முதன்மையான குடிவாரத்தார் அடங்கிய நிலமானியக்குழு; அரசர் நாளவை; மன்னர் நீதிமன்றம்.
**aul'ic**, *a.* மண்டபஞ் சார்ந்த; (தொ.) Aulic Council, பழைய செர்மானிய அத்தாணி மண்டபம்.
**aum'bry**, *n.*=ambry.
**au'mil**, *n.* வரி வசூலிப்பவர், அமில்தாரர்.
*au naturel*, (பிர.) *adv.* மிக எளிமைவாய்ந்த முறையில்.
**aunt**, *n.* பெற்றோருடன் பிறந்தவள்; அத்தை; சிற்றன்னை.
*au pair*, (பிர.) *n.* ஒருவருக்கொருவர் ஊழிய உதவியன்றி வேறுபண இடையீடில்லாத.
*au pied de la lettre*, (பிர.) *adv.* சொல்லின் நேர் பொருளிலேயே.
**aur'a**, *n.* மலர் போன்ற பொருள்களினின்று நுட்பமாக வெளிப்படும் சுரப்பு; (மின்.) ஒரு கூரிய முனையினின்று மின்சாரம் வெளிப்படும்போது உண்டாகும் காற்று மின்னோட்டம்; (மரு.) காக்கை வலிப்புக்கும் நரம்புத் தளர்ச்சிக்கும் முன்னுணர்வான அறிகுறி.
**aur'al**[1], *a.* பொருளினின்று வெளிப்படும் நுட்பமான காற்றைப் பற்றிய.
**aur'al**[2], *a.* காதினைச் சார்ந்த.
**au'rate**, *n.* பொன்னியல் உப்பு.
**au'rated**, *a.* பொன்னிறமான; பொன்னியல் உப்புக் கலந்த.
**au'reate**, *a.* பொன்னிறம் பூசப்பட்ட, பொன் போன்ற; ஒளி பிறங்கிய; பல சொல்லணி வாய்ந்த.
**Aurel'ia**, *n.* இழுதுமீன் வகையில் ஓர் இனம்; புழுக்கூடு.
**aurel'ian**, *n.* பூச்சியின ஆராய்ச்சியர்; *a.* பொன்னிறமான.
**aure'ola**, *n.* உயர்குறிக்கோளுக்காக உயிர் துறந்தவர்களும் தூய்மையான கன்னிப் பெண்களும் வைத்தியர்களும் பெறும் திப்பிய தலையணி.
**aur'eole**, *n.* தலைசூழ் ஒளிவட்டம்.
**au'reoled**, *a.* ஒளிவட்டத்தால் சூழப்பட்ட.
**aureomy'cin**, *n.* நச்சுக் காய்ச்சல் முதலிய நோய்களைத் தடுக்கப் பயன்படும் உயிர் எதிரிப் பொருள்.
*au revoir*, (பிர.) (தொ.) திரும்பச் சந்திக்கும்வரை நலமே விளைக!
**aur'ic**, *a.* பொன்னைச் சார்ந்த; (வேதி.) முத்திற இயல்புடைய தங்கம் அடங்கிய.
**aur'icle**, *n.* விலங்குகளின் காதுமடல்; அடிக்காது போன்ற இலை முதலியவற்றின் மடல், இதயத்தின் மேல் அறைகள் இரண்டனுள் ஒன்று.
**aur'icled**, *a.* காதுபோன்ற பிற்சேர்க்கையுடைய.
**Auric'ula**, *n.* ஆல்ப்ஸ் மலைத்தொடர்களில் உண்டாகும் பன்னிற மலர்ச்செடிவகை; நத்தையினம்.
**auric'ular**, *a.* காதைச் சார்ந்த; காதிற் சொல்லப்பட்ட; காதுமடல் போன்ற.
**auric'ulate**, *a.* காது வடிவுடைய.
**aurif'erous**, *a.* பொன் தருகிற, பொன் விளைகிற.
**aur'ify**, *v.* பொன்னாக்கு.
**aur'iform**, *a.* காதுவடிவு போன்ற.
**Auri'ga**, *n.* வடக்கு இராசி, தேராளன்.
**Aurigna'cian**, *a.* பழங்கற்காலத்துக்கு உரிய.
**aur'ilave**, *n.* காது கழுவு கருவி.
**aur'ist**, *n.* காதுநோய் மருத்துவர்.
**aur'ochs**, *n.* காட்டா, காட்டெருது.
**Auror'a**, *n.* வைகறை; புலரிப் பெண்தெய்வம்.
**auror'a**, *n.* அடர்ந்த மஞ்சட் சிவப்புநிறம், துருவ மின்னொளி.
*auror'a austral'is*, (ல.) *n.* தென்துருவ விண்ணொளி.
*auror'a boreal'is*, (ல.) *n.* வடதுருவ விண்ணொளி, வடமுனை வளரொளி.
**auror'al**, *a.* வைகறையைச் சார்ந்த; ரோஜா நிறமுள்ள; புதிய; அழகான.
**aur'ous**, *a.* ஒருதிறப் பொன்னுடைய.
**aur'um**, *n.* வெடிப்பொன்.
**aus'cultate**, *v.* கேட்டல் மூலம் சோதி.
**ausculta'tion**, *n.* இதயத்தின் அல்லது நுரையீரலின் அசைவினைக் கேட்டல்.
**aus'cultator**, *n.* கேட்டல் வழியே இருதய சோதனை செய்பவர்; இருதயத் துடிப்பைக் கேட்க உதவும் கருவி.
**auscult'atory**, *a.* கேட்டலைச் சார்ந்த.
**Aus'gleich**, *n.* (வர.) பத்தாண்டுகளுக்கு ஒருமுறை புதுப்பிக்கப்படவேண்டிய ஆஸ்திரியா ஹங்கேரி அரசியல் ஒப்பந்தம்.
**aus'picate**, *v.* வருவது காட்டு, தொடங்கு.
**aus'pice**, *n.* புட்குறி, குறி, சகுனம்; முற்குறி.
**aus'pices**, *n. pl.* சார்பு, ஆதரவு.
**auspi'cious**, *a.* நற்குறியுள்ள, சாதகமான; தகுந்த, உகந்த.
**Aus'ter**, *n.* தென்றல்.
**austere'**, *a.* இனிய குணமற்ற, வெடுவெடுப்பான; கொடுமையான; இரக்கமற்ற; கண்டிப்பான; தன்னொழுக்கத்தில் கண்டிப்பான, ஆடம்பரமில்லாத; மிக்க எளிமை வாய்ந்த.
**auste'rity**, *n.* இனிய குணமில்லாதிருத்தல்; கடுமையான பழக்கவழக்கம்; துறவறம்; உடையிலும் பழக்கவழக்கங்களிலும் மிக்க எளிமையோடிருத்தல்.
**aus'tral**, *a.* தெற்கைச் சார்ந்த.
**Australa'sian**, *n.* ஆஸ்திரலேஷியாவின் பழங்குடியினர்; *a.* ஆஸ்திரலேஷியாவைச் சார்ந்த; ஆசியாவின் தென்கிழக்கு நாடுகளைச் சார்ந்த.
**Austral'ian**, *n.* ஆஸ்திரேலியாவின் தொல்குடியார்; ஆஸ்திரேலியக் குடியுரிமையாளர்; *a.* ஆஸ்திரேலியாவைச் சார்ந்த; (தொ.) Australian rules, ஆஸ்திரேலிய காற்பந்து ஆட்டவகை.
**au'stringer**, *n.* பருந்துகளை வளர்ப்பவர்.
**aut'archy**[1], *n.* முழுஅதிகாரம்; தன்னுரிமையாட்சி; வல்லாட்சி.
**aut'archy**[2], *n.*=autarky.
**aut'arky**, *n.* தன்னிறைவு.
**authent'ic**, *a.* உண்மையான, அதிகாரபூர்வமான, நிலைநிறுத்தப்பட்ட, நம்பத்தக்க.
**authen'ticate**, *v.* உறுதிப்படுத்து; உண்மையாக்கு; சட்டபூர்வமாக்கு; ஆக்கியோன் உரிமைக்குச் சான்றுபகர்.
**authenti'city**, *n.* நம்பத்தக்க நிலை.
**auth'or**, *n.* ஆக்கியோன், நூலாசிரியன், படைப்பன்.
**auth'oress**, *n.* நூலாசிரியை.
**author'ial**, *a.* நூலாசிரியரைச் சார்ந்த.
**authoritar'ian**, *a.* ஆட்சியாதிக்கக் கொள்கையுடைய.
**author'itative**, *a.* அதிகாரம் பெற்ற; தகுதியுடைய.

band'-wheel, *n.* இன்னொரு சக்கரத்தோடு பட்டையால் இணைக்கப்பட்டு இயங்குஞ் சக்கரம்.

ban'dy[1], *n.* வளைகோல், முனையில் வளைவுடைய பந்தடிக்கும் கோல்; வளைகோற்பந்தாட்டம்; சிறப்புவகை வரிப்பந் தாட்டம்; பனிக்கட்டிப் பரப்புமீது ஆடப்பெறும் விளையாட்டு வகை; *v.* பந்தடி, பந்தெறி; பந்தைக் கைமாற்றி அனுப்பு; பந்தை இங்குமங்குமாகச் செல்லவிடு; கதைகளை இடத்துக் கிடம் நடமாடவிடு; சொற்களைப் பரிமாறிக்கொள்; பெயர்களை அடிபடவை; அடிகளைக் கொடுத்து வாங்கு; கருத்துக்களைப்பற்றி வாத எதிர்வாதம் செய்; பண்ட மாற்றிக்கொள்.

ban'dy[2], (த.) *n.* வண்டி.

ban'dy[3], *a.* கால்கள் முழங்காற் பகுதியருகில் வளைந்தகன்ற.

ban'dy-ball, *n.* வளைகோற் பந்தாட்டம்.

ban'dy-legged, *a.* வளைகாலுள்ள; கோணற்காலுடைய.

ban'dyman, *n.* வண்டிக்காரன்.

bane, *n.* அழிவுக்காரணம், கேட்டின் கருமூலம்; அழிவு; சாவு; குறும்புச்செயல்; நஞ்சு.

bane'berry, *n.* கருநச்சுக்கொட்டை வகை; நச்சுச்செடி.

bane'ful, *a.* அழிவைத்தரத்தக்க; கேடுவிளைவிக்கிற; நச்சுடைய.

bane'fully, *adv.* பாதகமாக, பழிகேடாக.

bane'fulness, *n.* நிறையழிவுத்தன்மை; பெருங்கேடு.

bang[1], *n.* வெடி ஓசை; பேரொலியடி; துப்பாக்கி வெடி; திடீர்ப்பேரொலி; *v.* பேரொலியுடன் அடி; ஓசையொடு மூடு; வெடியோசை செய்; நையப்புடை; மிகைத்து நில், மேம்படு, சிறந்ததாகு; *adv.* திடீரென, சடுதியில்; முழுதும்; வெடி ஓசையுடன், வெடித்து; (தொ.) go bang, வெடி, வெடிபடு, வெடி ஓசையிடு.

bang[2], *n.* நெற்றி அளவில் சதுரமாக வெட்டப்பட்ட முன் முடி; *v.* நெற்றி அளவில் சதுரமாக முன்முடியை வெட்டு.

banged, *a.* முன்முடி சதுரமாக வெட்டப்பட்டுள்ள.

bang'le, (இ.) *n.* வளையல், காப்பு.

ban'gled, *a.* வளையலுடைய, காப்பணிந்துள்ள.

bang'-tail, *n.* நுனிக்குஞ்சம் சதுரமாக வெட்டப்பட்ட வால்; நுனி சதுரமாக வெட்டப்பட்ட வால் உடைய விலங்கு.

ban'ian[1], *n.* ஆலமரம்.

ban'ian[2], (இ.) *n.* குஜராத்திய வணிகன்; இந்திய வணிகன்; ஐரோப்பிய வணிகரின் இந்தியத் தரகன்; முதலாளி; முதலீடு செய்பவன்; பனியன், உள்சட்டை.

ban'ian-day, *n.* (கப்.) புலாலுணவற்ற நாள்.

ban'ian-hospital, *n.* விலங்குகளுக்கான மருத்துவ நிலையம்.

ban'ian-tree, *n.* = banian[1].

ban'ish, *v.* துரத்து; நாடுகடத்தல் தீர்ப்பளி; அகற்று, புறத்தாக்கு; உள்ளத்திலிருந்து அப்புறப்படுத்து.

ban'ishment, *n.* நாடு கடத்தல்; துரத்தல்.

ban'ister, *n.* படிக்கட்டுக் கைப்பிடிக்கம்பி.

ban'jo, *n.* தம்பூராவில் உள்ளது போன்ற பத்தருடைய ஐந்து நரம்புக் கருவி.

ban'joist, *n.* நரப்பிசைக் கருவி வகையைக் கையாளுபவர்.

bank[1], *n.* மேடு, திட்டு, திடல்; அணைகரை, வரப்பு: ஆற்றங் கரை; ஏரிக்கரை; நீர்நிலை அடித்தளம்; கடல் அடித்தள மேடு; பாதையோர உயர்வரம்பு; உச்சமட்ட மேகத் தொகுதி; உச்சமட்ட பனிக்கட்டித் தொகுதி; பள்ளத்தின் வாய் ஓரம்; நிலக்கரிச் சுரங்க முகப்பு; நீராழமற்ற இடம்; கிளிஞ்சல் படுகை; வானூர்தியின் ஒருபுறச் சாய்வு; *v.* இருபுற வரம்பாக்கு; கரையாய் அமை; கரையெழுப்பு; கரை யாக இரு; ஊர்தி - வானூர்தி வகையில் ஒருசாய்வாகச் செல்; படியவிடு; குவி; சேமித்து வை; அடுக்கி வை; நெருப்பின் எரியளவைக் குறைக்கும்படி மூடி இறுக்கு; மணிப்பொறியின் ஒழுங்குபடுத்தும் கருவியைக் கட்டுப் படுத்து; (தொ.) bank up, பனிக்கட்டிகளைத் தொகுதியாகச் சேர்த்துக் குவி; அடர்த்தியாகு; செறிவாக்கு; from bank to bank, நிலக்கரிச் சுரங்க வேலையாள் சுரங்கக் குழிக்குள் இறங்கி முடிவில் கரையேறும் வரையில்.

bank[2], *n.* பொருளகம், நிதிமனை, பொருள் வைப்பிடம், பணங்கொடுக்கல் வாங்கல் மனை; வட்டிக்கடை, காசுக்கடை; சேமிப்புப் பணப்பெட்டி; பொதுநிதி; சேமநிதி, நிதிநிலுவை, நிலவர மூலதனம், விடுமுதல்; சூதாட்டக்கள மூலதனம்; சூதாட்டக்கள மேசைப்பணம்; எவரும் எடுத்தாள உரிமை உடைய பொதுச் சீட்டுக்குவை; *v.* பொருளகத்தில் பணம் சேமித்து வை; நிதிமனை நடத்து; நிதிக்கணக்கு வை; பண வாணிகம் செய்; பணமாகமாற்று; சூதாட்டக்கள மூலதனம் பெற்றிரு; நம்பியிரு; (தொ.) bank of issue, பணச்சீட்டைத் தானே வெளியிடும் பொருளகம்; break the bank, சூதாட் டத்தில் செயலாட்சியினரின் பணயத்தொகை யனைத்தையும் பெறும்படி வெற்றியடை; joint-stock bank, கூட்டுப் பங்குப் பொருளகம்.

bank[3], *n.* கைதிக்கப்பலில் தண்டுவலிப்பவரின் இருக்கைப் பலகை; துடுப்பு வரிசை, தண்டுத்தொகுதி; இசைக்கருவி முறுக்காணி வரிசை; தொழிற்கள மேசை, பட்டறைப் பலகை; நடுவர் அமரும் நீள் தவிசு; பாண்டத்தொழிற்களம்; அன்னம் முதலிய பறவைகளின் கும்பு.

bank'able, *a.* பொருளகம் ஒப்புக்கொள்ளக்கூடிய.

bank'-bill, *n.* பொருள்கங்களிடையே பரிமாறப்படும் கடன் சீட்டு.

bank'-book, *n.* வாடிக்கைக்காரரின் பொருளகக் கணக்குப் புத்தகம்.

bank'-cheque', *n.* வங்கியாணைச்சீட்டு; காசோலை.

bank'-credit, *n.* பிணையத்தின் மீது பணம் மிகையாக எடுக்கும் நிதிமனை ஏற்பாடு.

bank'er[1], *n.* பொருளக முதல்வர், நிதிமனை நடத்துபவர்; பொருளகப் பங்காளி; பொருளக இயக்குநர்; பொருளக ஆளுநர்; பொருளகத்தொழிலில் இருப்பவர்; சீட்டாட்டத் தில் நிலுவைப்பணம் வைத்திருப்பவர்; பந்தயச்சீட்டாட்ட வகை; குருட்டு யோக ஆட்டங்கள் நடத்துபவர்.

bank'er[2], *n.* கொற்றனின் பணிக்குரிய அடைகல், கொல்லத்து வேலையின் அடிப்பலகை.

bank'er[3], *n.* தொழிலாள்; கரைதாவும் வேட்டைக்குதிரை.

bank'er-mark, *n.* கல்லில் கொற்றன் பொறிப்பு.

bank'et, *n.* பொன்விளையும் தென்னுப்பிரிக்கக் கூழாங்கற் பாறை வகை.

bank'high, *adv.* கரை ததும்பி.

bank'ing[1], *n.* நிதிமனைத்தொழில்; *a.* நிதிமனை சார்ந்த.

bank'ing[2], *n.* கரையமைத்தல்; கடற்கரையில் மீன்பிடித்தல்; வானூர்தி வகையில் ஒரு சாய்வாகப் பறத்தல்.

bank'ing-house, *n.* வணிகத் தொழிலமைப்பின் நிதிமனை.

bank'-note, *n.* பொருளகப் பணமுறி; பொருளகத்தின் பண அளிப்பு வாக்குறுதிச் சீட்டு.

bank'-pap'er, *n.* சுற்றோட்டத்திலுள்ள பொருள்கப் பணமுறி.

bank'-rate, *n.* இங்கிலாந்தின் பொருளகத்துக்குரிய (Bank of England) கழிமான வீதம்.

bank'rupt, *n.* (சட்.) ஒட்டாண்டி; பொருளற்ற கடனாளி, கடன் தீர்க்க வகையில்லார்; வாணிகத்தில் தோல்வி யுற்றவர்; *a.* கடன் தீர்க்க வகையற்ற; பொருளகவகையில் நொடித்த; திறன் இறந்த; *v.* ஒட்டாண்டியாக்கு; கடன் தீர்க்க வகையில்லாமற் செய்; வாணிகத்தில் தோல்வியுறு.

bank'ruptcy, *n.* கடன்தீர்க்க வகையற்ற நிலை; பொருளக முறிவு; நொடிப்பு.

bank'sia, *n.* மலர்ப்புதர்செடி வகை.

banks'man, *n.* சுரங்கக்கரை மேற்பார்வையாளர்.

bank'-stock, *n.* மூலதன முதலீட்டுப் பங்குகள்.

**bann'er,** *n.* கொடி ; படைத்துறைச்சின்னங்களுள்ள சதுரக் கொடி ; படைத்துறையின் கொடி ; ஊர்வலங்களில் கொண்டு செல்லும் துகிற் கொடி ; நாட்டுக்கொடி ; கொள்கைச் சின்னம் ; விளம்பரப் பட்டிகை ; முனைப்பான விளம்பர அறிவிப்பு ; (வர.) ஒரு கொடியின் கீழ் பணிபுரிபவர் ; (தொ.) banner headline, செய்தித்தாள்களில் முழுநீளக் கொட்டைத் தலைப்பு.

**bann'ered,** *a.* கொடிகளுள்ள.

**bann'eret,** *n.* தன்கொடியின்கீழ் துணைவீரர்களைக்கொண்ட போர்வீரன் ; போர்க்களத்திலே வீரப்பட்டம் அளிக்கப் பட்டவர்.

**bann'erol,** *n.* பெரியவர்களின் கல்லறைமீது வைக்கப்படும் இழவு நேர ஊர்வலக்கொடி.

**bann'er-screen,** *n.* கணப்புத்திரை.

**bann'ock,** *n.* புளிப்புரு மாவாற் செய்யப்பட்ட வீட்டு அப்பம்.

**banns,** *n. pl.* திருமண முன்னறிவிப்பு ; திருக்கோயில் மணவினைக்கு முற்பட்ட அறிக்கை.

**banq'uet,** *n.* பெருவிருந்து ; பெருஞ்சோற்று விழா ; பாராட்டுப் பேச்சுக்களுடன் கூடிய விருந்து ; *v.* விருந்தளி ; நிறை விருந்துண், விருந்தாட்டயர் ; அளவு மீறிக் குடி.

**banqueteer', banq'ueter,** *n.* அளவு மீறிக் குடிப்பவர்.

**banq'ueting-hall,** *n.* பெருவிருந்து மண்டபம்.

**banq'ueting-house,** *n.* பெருவிருந்து மாளிகை.

**banquette',** *n.* கோட்டைக் கைப்பிடிச்சுவருக்குப் பின்னுள்ள உயர்பாதை ; வண்டியோட்டுபவன் பின்புறமுள்ள விசுப் பலகை.

**ban'shee,** *n.* அயர்லாந்து ஸ்காத்லாந்து (Ireland and Scotland) நாடுகளில் சாவு அறிகுறியாக ஓலமிடுவதாகக் கருதப்பெறும் தேவதை.

**bant,** *v.* உடலின் கொழுப்பகற்றச் சர்க்கரையையும் மாப் பொருளையும் கொழுப்புப் பொருளையும் உணவில் விலக்கு.

**ban'tam,** *n.* சண்டையிடும் இயல்பு மிக்கதான வீட்டுக்கோழி வகை ; குள்ளமான போர்வீரன்.

**ban'ter,** *n.* நயமான நகைச்சுவை, நட்பார்வமுடைய கேலிப் பேச்சு ; *v.* வேடிக்கையாகப் பேசு ; கேலி செய்.

**bant'erer,** *n.* பரியாசகர், வேடிக்கைப்பேச்சாளர்.

**bant'ering,** *a.* கிண்டலான, கேலியாகப் பேசுகிற.

**ban'thine,** *n.* வயிற்றுப்புண்ணுற்றும் திறமுடைய சேர்மான மருந்துச் சரக்கு.

**ban'ting,** *n.* பருத்த உடலின் தேவையற்ற கொழுப்பு நீக்கும் உணவு முறை.

**ban'tling,** *n.* சிறுகுழவி, மதலை.

**Bantu',** *n.* தெற்கு நடு ஆப்பிரிக்க (South and Central Africa) மொழிக்குழு ; தெற்கு நடு ஆப்பிரிக்க மொழிக் குழுவினர் ; *a.* தெற்கு நடு ஆப்பிரிக்க மொழிக்குழு சார்ந்த ; தெற்கு நடு ஆப்பிரிக்க மொழிக்குழு இனம் சார்ந்த.

**banx'ring,** *n.* சாவகத் (Java) தீவுக்குரிய புழுத்தின்னும் அணில் வகை.

**ban'yan** [1], (இ.) *n.* ஆலமரம்.

**ban'yan** [2], *n.*=banian [2].

**banzai',** *int.* ஜப்பானியர்கள் தம் அரசரைச் சந்திக்கும்போது கூறும் வரவேற்புச் சொல் ; போர்க்கள வீர ஊக்கொலி.

**ba'obab,** *n.* மேற்கு ஆப்பிரிக்காவிலுள்ள பருத்த அடியுடைய மரவகை.

**bap'tism,** *n.* தீக்கை, ஞானஸ்நானம், மெய்யுணர்வு நீராட்டுச் சடங்கு ; பெயரீட்டு விழா ; திருக்கோயில் சமய நுழைவுச் சடங்கு ; (தொ.) baptism of blood, உயிர்த்தியாகம் ; ஞானஸ்நானம் பெறாத கிறித்தவரின் உயிர்த்தியாகம் ; baptism of fire, படைவீரனின் முதற்போர் ; கோயில்மணி-கப்பல் ஆகியவற்றின் பெயரீட்டுவினை ; 'தூய ஆவி' யின் அருட்கொடை ; தீக்குளித்து உயிர்நீத்தல் ; எண்ணெய்க் கொப்பரைத் தேர்வு.

**baptis'mal,** *a.* தீக்கைக்குரிய, தூய நீராட்டுச் சடங்கோடு தொடர்புள்ள ; (தொ.) baptismal name, பெயரீட்டு விழாவில் இட்டு வழங்கிய பெயர், குடிப்பெயருக்கு முன்னிட்டு வழங்கும் கிறித்தவ சமயச் சார்பான பெயர்.

**Bap'tist,** *n.* கிறித்தவ சமயக் கிளைக்குழு வகையினர், இளங் குழந்தைகளின் தீக்கை தவறென்றும் முழுநீராட்டுச்சடங்கு தீக்கைக்கு இன்றியமையாததென்றும் இயேசுநாதரிடம் நம்பிக்கையுடையவர்க்கு மட்டுமே அது உரியதென்றும் கருத்துடைய கிறித்தவ சமய உட்பிரிவினர்.

**bap'tist,** *n.* தீக்கை செய்விப்பவர்.

**bap'tistery, bap'tistry,** *n.* தீக்கையிடம், ஞானஸ்நானச் சடங்குக்குரிய இடம் ; முழுநீராட்டு வினைக்குரிய தொட்டி.

**baptize',** *v.* தீக்கை பெறுவி, திருவினை முழுக்காட்டுச்செய், ஞானஸ்நானம் செய்வி ; பெயரீட்டு விழாவாற்று ; சமய நுழைவுச்சடங்கு செய் ; தூய்மைப்படுத்து ; மேன்மையுறச் செய்.

**bar** [1], *n.* கம்பி, கோல், உலோகங்களாலான சலாகை ; தண்டு ; கட்டை, நீண்ட மரத்துண்டு ; பாளம், வார், சவுக்காரம் முதலியவற்றின் நீள்கட்டி ; தாழ், தாழ்ப்பாள் கட்டை ; தடை, தடைகள், தடங்கல் ; தடைவேலி, தடை வரம்பு ; எல்லை ; இடையீடு, தடுப்பு ; தடை நடவடிக்கை ; முறை மன்றக் கம்பித்தடுப்பு ; தேறல்மனைக் கம்பிஅழி ; தேறல் அருந்தும் அறை ; மணற்கரை, ஆற்று முகத்திடம், துறை முகத்திட்டு ; வழக்கறிஞர் குழாம் ; பதக்கப்பட்டை ; கோடு ; சருகு ; விளிம்பு ; சிறைக்கட்ட ஆட்டம் ; (இசை.) கால அளவு குறிக்கும் நிறுத்தல் வரைக்குறி ; கால அளவு ; படுத்தல் கோடு ; *v.* தடு, தடுத்து நிறுத்து ; வழியடை ; தாழிடு, மூடு, அடை, பூட்டு ; தடை நடவடிக்கை மேற்கொள் ; தவிர்க்கச்செய் ; கம்பிகளாகப் பிரி ; கோடுகளிடு.

**bar** [2], *n.* பெரிய ஐரோப்பியக் கடல்மீன்வகை.

**bar** [3], *n.* (வான்.) இலக்கழுத்தம், சதுர செண்டிமீட்டருக்கு இலட்சநொடி விசைகளுக்கு (dynes) நிகரான வளிமண்டல அழுத்த அளவை ; (வேதி.) 'இலங்கழுத்தம்', சதுர செண்டிமீட்டருக்கு ஒரு நொடி விசைக்கு நிகரான அழுத்தம்.

**barathe'a,** *n.* பருத்தியோ பட்டோ கலந்தும் கலவாமலும் நெய்யப்படும் மென்மையான கம்பளித்துணி வகை.

**ba'rathrum,** *n.* ஆதன்ஸ் (Athens) நகரின் குற்றவாளிக் குழி ; பாதாளம், படுகுழி.

**barb** [1], *n.* தாடிபோன்ற மீனின் தசை இழை ; கன்னித்துறவியின் முக்காட்டு மோவாய்ப் பகுதி ; இறகுத்துய் ; அம்பு நுனி வளைவு ; தூண்டில்முள் ; கொடுக்கு ; *v.* கூர்நுதி யமைவி ; தசையிழை வாய்ப்புறுத்து ; மோவாய் இழை அமைவி ; மழி ; சீவு, சிக்கெடு ; ஒழுங்குசெய், ஒப்பனைசெய் ; துளை, ஊடுருவு ; முள்ளிணை, முள்முனை ; அமைவி.

**barb** [2], *n.* குதிரைமரபின் வகை ; திண்ணிற மாடப்புரு வகை.

**barb'ara,** *n.* நினைவுக்குறிப்பு, அளவையியல் வாய்பாடுகளில் ஒன்று.

**barbar'ian,** *n.* காட்டுமிராண்டி, நாகரிகமில்லாதவர், பண்பற்றவர் ; கிரேக்க வழக்கில் அயல்நாட்டான் ; *a.* காட்டுமிராண்டித்தனமான ; முரட்டுத் தன்மையுடைய.

**barba'ric,** *a.* முரட்டுத்தனமான, காட்டாளான ; பண்பற்ற ; நாகரிகமற்ற தன்மையுடைய ; புறப்பகட்டான ; சுவைகேடான ; காட்டுமிராண்டிப் பண்புடைய.

**barb'arism,** *n.* காட்டுநிலைப்பண்பு ; நாகரிகமற்ற வாழ்க்கை, காட்டுமிராண்டி வாழ்க்கை ; முரட்டுத்தனமான நடத்தை ; தாய்மொழிச் சொல்லை நீக்கி அயல்மொழிச் சொல்லைப் பயன்படுத்துதல்.

**barba'rity,** *n.* நாகரிகமற்ற நிலை ; கொடுமை ; கொடுஞ்செயல், அட்டூழியம் ; பகட்டுச்சுவை கேடு.

**barbariza'tion,** *n.* முரட்டுத்தனமாக்குதல் ; காட்டுமிராண்டித்தனம்.

**barb'arize,** *v.* காட்டுமிராண்டியாக்கு, கரடுமுரடாக்கு ; மொழித்தூய்மையைக் கெடு ; அழுகலாக்கு.

**barb'arous**, *a.* நாகரிகமற்ற ; கொடுமையான ; பண்புக் கேடான, முரடான ; தூய்மையற்ற ; கிரேக்க ரோம வழக்கில் அயுற்பண்பாட்டுக் குரிய.

**bar'barousness**, *n.* நாகரிகமற்ற நிலைமை ; கொடுந்தன்மை, காட்டுமிராண்டித்தனம் ; தூய்மையற்ற தன்மை ; எழுதப் படிக்கத் தெரியாநிலை.

**Barb'ary**, *n.* வட ஆப்பிரிக்கப்பகுதி ; (தொ.) Barbary ape, வாலில்லாக் குரங்கு வகை ; Barbary sheep, வட ஆப்பிரிக்கக் காட்டுச் செம்மறியாடு.

**barb'ate**, *a.* மயிர்க்கொத்துள்ள.

**barb'ated**, *a.* கூர் நுதியுடைய ; தாடிபோன்ற அமைப்பு வாய்ந்த, மயிர்க்கொத்தோடு கூடிய.

**barb'ecue**, *n.* அகப்பைக்கோல், இறைச்சி சுடும் இரும்புச் சட்டம் ; நெருப்பில் வாட்டப்பட்ட முழு விலங்கு இறைச்சி ; காப்பிக்கொட்டை முதலியன காயவைக்கும் தள முற்றம் ; வாரி வழங்கும் மாபெரும் விருந்து; *v.* நெருப்பில் முழுமையாக வாட்டு ; இரும்புச்சட்டத்தில் வைத்து நெருப்பில் சுடு.

**barb'ed**, *a.* அம்பு முனைபோன்ற முனையுடைய.

**bar'bed-wire**, *n.* வரிமுட்கம்பி, குத்துமுள் வரிந்த கம்பி.

**barb'el**, *n.* வாயருகே நார்போன்ற தசையிழை அமைவுடைய மீன் வகை ; தாடிபோன்ற தசையிழை அமைவு.

**bar'-bell**, *n.* உடற்பயிற்சியில் 'வன்பிடி' க்கருவி, இரு புறமும் பளுத்தாங்கிய இரும்புத்துண்டு.

**barb'er**, *n.* அம்பட்டன், முடி ஒப்பனையாளர்; *v.* மயிர் களை ; முடி வெட்டு ; (தொ.) barber's block, பொய்முடிக் குல் லாய் செய்யும் வட்டக்கட்டை ; barber's itch, மழித்தலின் போது தொற்றிக்கொள்வதாகக் கருதப்படும் தோல் நோய் வகை ; barber's pole, முடியழகு நிலையச் சின்னக்கோல்.

**barb'erry, barb'ery**, *n.* மஞ்சள் வண்ணமலரும் செந்நிறப் பழமும் கொண்ட புதர்ச்செடி வகை.

**barb'et**, *n.* அலகடியில் முள்போன்ற மயிர்க் கொத்துடைய பறவை வகை.

**barbette'**, *n.* கோட்டையில் அல்லது போர்க்கப்பலில் நின்று துப்பாக்கி சுடுவதற்குரிய பீரங்கிமேடு.

**barb'ican**, *n.* நகர் அல்லது கோட்டையின் வெளிப்பாதுகாப் பரண் ; தொங்குபால அரண்.

**barb'ital, barb'itone**, *n.* தூக்கமருந்தாகப் பயன்படுத்தப் படும் வெள்ளை உருப்பளிங்குப்பொடி.

**Barb'izon**, *n.* பாண்டனேபுளு (Fontainebleau) வுக்கு அண்மையிலுள்ள கிராமம் ; (தொ.) Barbizon school, உள்ளதை உள்ளவாறே படமெழுதும் பிரெஞ்சு ஓவியர் குழு.

**barbol'a**, *n.* வண்ணப்படிவ மலர்கள்-கனிகள் முதலிய வற்றைப் பதித்துச் செய்யப்படும் சித்திர வேலைப்பாடு.

**barb'ule**, *n.* மிகநுண்ணிய சுணை அல்லது முள்.

**barc'arole, barc'arolle**, *n.* படகோட்டிப் பாட்டு ; வஞ்சிப் பாட்டு போன்ற இசைப்பாடல்.

**bard** [1], *n.* பாணன், கவிஞன்.

**bard** [2], *n.* போர்க்குதிரையின் காப்புக்கவசம்.

**bard'-craft**, *n.* பாணற்குரிய தொழில்.

**bard'ed**, *a.* குதிரைவகையில் போர்க்கவசம் பூட்டப்பட்ட.

**bard'ic**, *a.* பாணர்களுக்குரிய ; பாணர்களின் பாடல்களுக் குரிய.

**bard'ling**, *n.* போலிக்கவிஞர்.

**bare**, *a.* உடையற்ற, வேடம் அற்ற ; பார்வைக்குத் தெரிகிற ; முடியில்லாத, வழுக்கைத் தலையுடைய ; வறிய, தேவைப் பொருள்கள் அமைக்கப்பெறாத ; படைக்கலம் தாங்காத, பாது காப்பற்ற ; சாரமில்லாத ; தேய்ந்துபோன ; உறையினின்றும் எடுக்கப்பட்ட, வெறிய, கோலம் செய்யப்படாத, போதாத ; *v.* அவிழ், நீக்கு ; உறையினின்றும் எடு, வெளிப்படுத்து.

**bare'backed**, *a.* வெறும் முதுகுடைய, குதிரைச்சேணம் இல்லாத.

**bare'faced**, *a.* தாடி முதலியவையற்ற ; முகமூடியில்லாத ; போலியல்லாத ; வெட்கங்கெட்ட ; ஆணவமான.

**bare'foot**, *a.* வெறுங்காலுடைய, காலிற் செருப்பு இல்லாத ; *adv.* வெறுங்காலுடன், செருப்பு முதலியவை இன்றி.

**bare'footed**, *a.* வெறுங்காலுடைய, காலில் செருப்பு இல்லாத.

***barege'***, *n.* பட்டுப் போன்ற சல்லாத்துணி ; *a.* பட்டுப்போன்ற சல்லாத்துணிக்கு உரிய.

**bare'headed**, *a.* தலைவறிதான, தொப்பி இல்லாத.

**bare'legged**, *a.* வெறுங்கால்களையுடைய.

**bare'ly**, *adv.* ஆடையின்றி ; உண்மையான வடிவத்துடன் ; வெளிப்படையாக ; திறந்த மனத்துடன்.

**bare'ness**, *n.* புனையா நிலை, முட்டாக்கின்மை.

**bare'sark**, *n.* நார்வே போர்வீரன் ; *adv.* போர்க்கவசமின்றி.

**bar' ful**, *a.* தடைகள் நிறைந்த.

**barg' ain**, *n.* கொடுத்து வாங்குவது பற்றிய ஒப்பந்தம் ; நலம் பயக்கும் வாணிகம் ; நல்ல கொள்முதல் ; *v.* பேரம் பேசு, விலை பேசு, கொடுத்து வாங்குவது பற்றிய நிபந்தனைகளைப் பற்றி இழுத்துப் பறித்துக்கொண்டு நில் ; (தொ.) bargain and sale, (சட்.) மதிப்புள்ள பொருளை முன்னிட்டு சொத்து ஒப்படைக்கப்படக்கூடிய உரிமைமாற்று முறை ; into the bargain, கண்டிப்பான நிபந்தனைகளுக்கு அப்பால், அன்றி யும் ; strike a bargain, விலைக்கு முடி, ஒப்பந்தத்துக்கு வா ; wet bargain, குடியலொடு முடிந்த பேரம்.

**barg'ainer, bar'gain-hunter**, *n.* பேரம் செய்வதற்காகக் கடைகளுக்குச் செல்பவர்.

**barge**, *n.* படகு, போர்க்கப்பல் அதிகாரிகளின் உபயோகத் துக்கான பெரிய விசைப்படகு ; அரசாங்க விழாக்களின் போது பயன்படுத்துவதற்கான கோலம் செய்யப்பட்ட கப்பல் ; மகிழ்ச்சிச் செலவுக்கான படகு ; *v.* திறங்கெட இயங்கு ; அலங்கோலமாகப் பெயர்த்துச் செல் ; திடுமென இடையே சென்று குதி.

**barge'-board**, *n.* மஞ்சடைப்புத் தூலங்களுக்கு அலங்கார மறைப்பு.

**barge'-coup'le**, *n.* இரட்டை மஞ்சடைப்புத் தூலங்கள்.

**bargee', barge'man**, *n.* படகோட்டி.

**barge'-master**, *n.* படகின் உரிமையாளர்.

**barge'-pole**, *n.* படகின் உந்துகோல்.

**barge'-stones**, *n.* மஞ்சடைப்பின் சரிந்த விளிம்பினைக் கட்டு வதற்கான கற்கள்.

**bar'ghest**, *n.* சாவுக்கு முன்னறிகுறியாகக் கருதப்படும் நாய் வடிவப் பேய் வகை.

**bar'-graph**, *n.* (கண.) அளவைக் கோடுகளில் அளவை யடுக்குகளைக் குறித்துக் காட்டும் உருவகைக் கட்டம்.

**bar'ic**, *a.* வெண்மை உலோகத் தனிமவகையின் தொடர்பான ; வெண்மை உலோகத் தனிமவகை அடங்கிய.

**barill'a**, *n.* கடலோரச் செடிவகை ; கடலோரச் செடிவகை யின் சாம்பலிலிருந்து கிடைக்கும் துப்புரவற்ற உவரக் கரியகை.

**bar'-iron**, *n.* தகடாக்கக்கூடிய இரும்புப்பாளம்.

**bar'ish**, *a.* சிறிது திறந்த, நன்கு மூடப்பட்டிராத.

**bar'itone**, *n.* = barytone.

**bar'ium**, *n.* (வேதி.) பாரியம், 56 அணுஎண் உடைய வெண்மையான உலோகத்தனிமம்.

**bark** [1], *n.* மரப்பட்டை, தோல்பதனிடுவதற்கு உதவும் பட்டை ; காய்ச்சல் மருத்துப்பட்டை, கொயினா ; மேல்தோல் ; *v.* பட்டை உரி ; தோல் உரி; மரத்தைச் சுற்றிலும் பட்டையை அறுப்பது மூலமாக மரத்தை அழி ; உராய்வினால் மேல் தோலிழ ; அசறுகட்டு ; பட்டையாக அமை.

**bark** [2], *n.* மூன்று பாய்மரங்களையுடைய மரக்கலம் ; சிறு கப்பல் ; படகு.

**bark** [3], *n.* நாய் குரைப்பொலி ; நரி ஓநாய்களின் ஊளை ஒலி ; அணிலின் கிறீச்சொலி ; பீரங்கி அதிர்வேட்டு ; இருமல் ஒலி ; *v.* குரை ; உறுமு ; சள்ளென்று விழு ; எரிந்து விழு, சீறு ; அதிகாரமாகப் பேசு ; திட்டு ; நாய்போல் காவல் செய்.

**bark'-bed,** *n.* ஆவாரம்பட்டையின் சக்கை கொட்டப்பட்டுள்ள எருப்பாத்தி.

**bark'-beet'le,** *n.* மரப்பட்டைகளைத் துளைத்து அழிக்கும் வண்டு வகை.

**bark'-bound,** *a.* பட்டை அகலாதிருப்பதனால் உடற்செறிவுற்ற.

**bar'-keeper,** *n.* இன்தேறல் கடைக்காரர்.

**bark'en,** *v.* உலர்ந்து பட்டை போலாகு.

**bark'entine,** *n.* மூன்று பாய்மரங்களுள்ள மரக்கல வகை.

**bark'er,** *n.* கூச்சலிட்டுத் தாக்குபவர்; கடையில் அல்லது ஏலத்தில் வாடிக்கைக்காரர்களைக் கூவி அழைப்பவர் ; நாய், குரைக்கும் நாய் ; காவற்காரர்.

**bark'y,** *a.* பட்டை மூடிய, பட்டை உடைய; பட்டை போன்ற.

**barl'ey,** *n.* வாற்கோதுமை, யவை.

**barl'ey-brake,** *n.* மூன்று இரட்டையர்கள் சேர்ந்து ஆடும் பழைய நாட்டுப்புற விளையாட்டு வகை.

**barl'ey-bree, bar'ley-broo, bar'ley-broth,** *n.* புளித்த வாற்கோதுமைமாத் தேறல்.

**barl'ey-corn,** *n.* வாற்கோதுமை மணி; அங்குலத்தில் மூன்றில் ஒரு பங்கு கொண்ட நுண்ணெல்லை நீட்டலளவை.

**bar'ley-mow,** *n.* வாற்கோதுமைக் குவியல்.

**barl'ey-su'gar,** *n.* உருக்கி ஆறவைத்த சர்க்கரை மிட்டாய்.

**barl'ey-wa'ter,** *n.* நோயாளிகளுக்குக் கொடுப்பதற்குரிய வாற்கோதுமைக் கஞ்சி.

**barl'ow,** *n.* ஒரே அலகுடைய கத்தி.

**barm,** *n.* புளிப்பேறிப் பொங்கும் சாராயம் முதலியவற்றின் நுரை, நொதி.

**bar'-magnet,** *n.* இரும்புப்பாள உருவான நிலைக்காந்தம்.

**bar'maid,** *n.* இன்தேறல்கடையின் பணிப்பெண்.

**bar'man,** *n.* இன்தேறல்கடையின் பணியாளன்.

**barm'brack,** *n.* கொடிமுந்திரிப்பழ வற்றல் அடங்கிய அப்ப வகை.

**Barm'ecide ;** *n.* போலிக்கொடையர், வாய்ப்பந்தல் வீரர் ; *a.* ஏமாற்றுகிற, கற்பனையான, பொய்யான.

**barm'kin,** *n.* கோட்டை மதிற்சுவர் ; குடுமி.

**barm'y,** *a.* புளித்துப் பொங்குகிற, நுரையுள்ள.

**barm'y-brained,** *a.* அறிவற்ற, எண்ணுந்திறனற்ற.

**barn,** *n.* களஞ்சியம், பத்தாப்புரை ; *v.* களஞ்சியத்தில் சேர்த்து வை.

**Barn'aby,** *n.* தூயதிரு. பார்னபஸ் (Saint Barnabas) ; (தொ.) Barnaby Bright, Barnaby Day, Long Barnaby, தூயதிரு. பார்னபஸ் திருநாள் (ஜூன்-11).

**barn'acle** [1], *n.* மாரிக்காலத்தில் பிரிட்டனுக்கு வரும் துருவ மண்டல வாத்துவகை ; பாறைகளிலும் கப்பலின் அடிப்பாகங்களிலும் ஒட்டிக்கொள்ளும் சிப்பி வகை, ஊமைச்சி ; எளிதில் அசைத்துவிட முடியாத தோழன்.

**barn'acle** [2], *n.* இலாடம் அடிக்கையில் குதிரையின் மூக்கி விடும் குறடு.

**bar'nacle-goose,** *n.* காட்டுவாத்து வகை.

**barn'acles,** *n. pl.* (பே-வ.) மூக்குக்கண்ணாடி.

**barn'-dance,** *n.* அமெரிக்கரின் ஆடல்வகை.

**barn'-door,** *n.* களஞ்சியத்தின் கதவு ; மரப்பந்தாட்டத்தில் பந்துவீச்சு ஒவ்வொன்றினையும் தடுக்கும் ஆட்டக்காரர் ; மட்டமான அகல் இலக்கு.

**barn'-owl,** *n.* மேற்பாகம் வைக்கோல்நிறமாயும் கீழ்ப்பாகம் வெண்மையாயுமுள்ள ஆந்தை வகை.

**barn'-storm,** *v.* இடம் பல சென்று நாடகமாடு.

**barn'-stormer,** *n.* பல இடம் பெயர்ந்து நடிப்பவர்.

**barn'yard,** *n.* பண்ணைமுற்றம் ; (தொ.) barnyard fowl, வீட்டுக்கோழி.

**ba'rograph,** *n.* அமுக்க வரைவி.

**barol'ogy,** *n.* எடைமான நூல்.

**barom'eter,** *n.* காற்றழுத்தமானி, பாரமானி, வானிலை முன்னறிதற்கும் கடல்மட்டத்தின் மேல் உயரங்களைக் கண்டறிதற்கும் பயன்படும் கருவி ; மக்கள் கருத்துமாறுதலை மதிப்பிட்டுக் காட்டும் பொருள்.

**baromet'ric, baromet'rical,** *a.* காற்று அழுத்தமானியைச் சார்ந்த.

**barom'etry,** *n.* காற்றழுத்தமானியைக் கொண்டு அளவெடுக்கும் முறை.

**ba'ron,** *n.* பண்ணைநில ஆட்சிக் கோமான் ; குறுநிலக்கோப் பெருங்குடிமகன் ; பெருந்தொழில் முதல்வர் ; அரசமன்ற நடுவரின் பழம் பட்டம்; பழய சட்டமன்ற உறுப்பினர் பட்டம்; பழங்கால ஆங்கிலச் சட்டத்தின்படி கணவர் ; (தொ.) baron of beef, துண்டுபடுத்தப்படாது எலும்போடு இருபுறமும் உள்ள மாட்டின் இரட்டை இடுப்பினிறைச்சி.

**ba'ronage,** *n.* கோமகக்கள் தொகுதி ; பெருங்குடி மக்கள் ; மேற்குடி மக்களின் பட்டியலும் அவர்களைப் பற்றிய செய்திகளும் அடங்கிய ஏடு.

**bar'on-bail'ie,** *n.* பெருமகன் ஆட்சிக்கு உட்பட்ட குற்றஇயல் நடுவர்.

**ba'roness,** *n.* பெருமானின் மனைவி ; கோமகள், பெருங்குடிப் பெண்டு.

**ba'ronet,** *n.* இளங்கோமான், கோமானுக்கு அடுத்தபடி தாழ்ந்த பட்டம் ; *v.* இளங்கோமான் நிலைக்கு உயர்த்து.

**ba'ronetage,** *n.* இளங்கோமக்கள் தொகுதி ; இளங்கோமக்கள் பெயர்ப்பட்டியல் விவரங்கள் அடங்கிய ஏடு.

**ba'ronetcy,** *n.* இளங்கோமான் படிநிலை.

**baronet'ical,** *a.* இளங்கோமானுக்கு உரிய.

**baron'ial,** *a.* பெருங்குடி மக்களுக்குரிய ; பெருமகனுக்குத் தகுதியான.

**ba'rony,** *n.* பெருமகனின் ஆட்சிப்பரப்பு ; பெருமகன் நிலை ; பெருமகன் காணியுரிமை ; ஸ்காத்லாந்தில் பெரிய பண்ணை ; அயர்லாந்தில் நாட்டின் பிரிவு.

**baroque',** *n.* 17-வது 18-வது நூற்றாண்டுகளின் கலைப்பாணி ; *a.* 17-வது 18-வது நூற்றாண்டுகளின் கலைப்பாணிக்குரிய ; சுவைக்கோளாறுடைய; கோணங்கித்தனமான, மனம் போன போக்கான.

**bar'oscope,** *n.* வளிச்செறிவுமானி, வளிமண்டலத்தின் செறிவு நிலையிலுள்ள மாறுபாடுகளைத் தெரிவிக்கும் கருவி.

**barouche',** *n.* மடக்கக்கூடிய விதானமுள்ள நான்கு சக்கர வண்டி.

**bar'-par'lour,** *n.* இன்தேறல் அறை அடுத்த துணையறை.

**barque,** *n.*=bark [2].

**barq'uentine,** *n.*=barkentine.

**ba'rrack,** *n.* போர்வீரர் குடியமைப்பு வரிசை, கட்டுக்குடியிருப்பு ; கவர்ச்சியற்ற நெருக்கிய மட்டக் கட்டிடக் குவை ; *v.* போர்வீரர்களை விடுதிகளில் தங்கவை ; பந்தாட்டத்தில் ஆட்டக்காரர்களை இகழ்ந்து கூச்சலிடு.

**barracoon',** *n.* அடிமைகளுக்கான குச்சுக்குடியிருப்பு ; கைதிகளுக்குரிய கொட்டில் வளைவு.

**barracud'a,** *n.* மேலை இந்தியத் தீவுகளின் கடற்பெருமீன்.

**barr'age,** *n.* அணையிட்டுத் தடுத்தல், குறுக்கணை ; (படை.) இடைத்தடையிடும் திட்டமிட்ட குண்டுமாரி.

**barr'age-fire,** *n.* பகைவர்கள் குறிப்பிட்ட எல்லைக்கோட்டினைக் கடந்து செல்லமாட்டாமல் தடுத்துக் குண்டு போடுதல், குண்டு மாரித் திரை.

**barran'ca, barran'co,** *n.* ஆழமான கெவி, மலைப்பள்ளம்.
**ba'rrater, ba'rrator,** *n.* தீராவழக்காடி, சச்சரவு உண்டு பண்ணுபவர்.
**barr'atrous,** *a.* வீண்வழக்காடுகிற; வீண்வழக்குத் தூண்டுகிற.
**ba'rratry,** *n.* (கடல்துறைச் சட்டம்) கப்பற் சொந்தக்காரர்களுக்குத் தீங்குண்டாகும் வகையில் கப்பல் தலைவர் அல்லது கப்பலோட்டிகள் மோசம் செய்தல் அல்லது கடமை தவறல்; (சட்.) வீண்வழக்காடல்; வீண் வழக்காடத் தூண்டுதல்.
**barred,** *a.* கம்பிபோட்ட; கம்பிகள் உடைய; பாதுகாக்கப்பட்ட; அடைக்கப்பட்ட, மூடப்பட்ட; கம்பியால் அடையாளம் இடப்பட்ட; தடுக்கப்பட்ட; பிரிக்கப்பட்ட; துறைமுக மணல்மேட்டினால் அடைக்கப்பட்ட.
**ba'rrel,** *n.* பீப்பாய், மிடா; உருள்தொட்டி; இயந்திரங்களின் சுழல் உருளை; மிடா அளவு; குதிரை இடுப்புப் பகுதி; உடற்பகுதி; துப்பாக்கிக் குழல்; கொளுவி, பித்தான்; *v.* மிடாவில் வை, பீப்பாயிலிட்டு அடை.
**barr'elage,** *n.* மிடாவினால் அளந்த அளவு, மிடா எண்ணளவு.
**barr'el-bulk,** *n.* மிடா அளவு, ஐந்து கன அடி அளவை.
**barr'elful,** *n.* பீப்பாய் அளவு, மிடா கொள்ளக்கூடிய அளவு; *pl.* barr'elfuls.
**barr'elled,** *a.* மிடாவையுடைய; மிடாவில் அடைக்கப்பட்ட; துப்பாக்கியில் குழல் உடைய.
**ba'rren,** *n.* தரிசு நிலம்; *a.* மலடான, குழவி ஈனாத; பலன் தராத, விளைவு அளிக்காத; வெறுமையான; தரிசான; வளமற்ற, வறண்ட, ஊதியந்தராத; மந்தமான.
**barr'enness,** *n.* மலடு; தரிசுநிலை.
**ba'rret,** *n.* தட்டைத் தொப்பி.
**barricade',** *n.* வழியடைப்பு, தெருமறிப்பு; தடை அரண்; *v.* வழியை அடைத்துத் தடைசெய்; தடை அரணைக் கொண்டு காப்பு அளி.
**ba'rrier,** *n.* தடைவேலி, தடையரண்; இடைவேலி; வழிமறிப்பு, தட்டி; தடை, தடங்கல்; இடையூறு; இடைத்தடுக்கு; எல்லை; சுங்க எல்லை; கம்பி அழி, பழைய வண்டியோட்டப் பந்தயங்களில் புறப்படும் இடம் குறித்த கம்பிச் சட்டம்; *v.* தடையிடு; வேலியிட்டு அடை; (தொ.) barrier cream, புழைவழி அழுக்குப் புகாமல் காக்கும் உடற் பூச்சு மருந்து.
**barr'ier-reef',** *n.* கடற்கரைக்கு அருகிலுள்ள பவளத்திட்டு.
**ba'rriers,** *n. pl.* வேலி, அடைப்பு, போட்டிப் பந்தயக் களத்தின் சூழ்கம்பிவேலி அரண்; பழங்கால வேலெறி போட்டிப் பந்தயத்தில் மையக் கம்பி எல்லை.
**barr'ing,** *prep.* தவிர, விடுத்து, தவிர்த்து, நீங்கலாக, இல்லாமல்.
**barr'ing-out',** *n.* உரிமைகளை வற்புறுத்தப் பள்ளி ஆசிரியரை மாணவர்கள் பள்ளிக்குள் நுழையவிடாமல் தடுக்கும் தடைமுறை.
**ba'rrister, ba'rrister-at-law,** *n.* மாவழக்கறிஞர், மாவழக்கறிஞர் பட்டம் பெற்றவர்; உயர்முறை மன்றங்களில் வழக்காடும் உரிமையுடைய சட்டத்துறை மாணவர்.
**barriste'rial,** *a.* மாவழக்கறிஞருக்குரிய.
**barri'stership,** *n.* மாவழக்கறிஞர் நிலை.
**bar'-room,** *n.* இன்தேறல் வகைகளுள்ள அறை; இன்தேறல் குழாயுள்ள அறை.
**ba'rrow** [1], *n.* குன்று; புதைமேடு; மண்குவியல்; கல்லறை.
**ba'rrow** [2], *n.* கைவண்டி, தள்ளுவண்டி; பிணப்பெட்டி, பாடை; நோயுற்றோரைத் தூக்கிச் செல்வதற்கான நீள்சட்டம்; (தொ.) barrow boy, பழங்கள் விற்கும் தள்ளுவண்டிப் பையன்; குற்றேவற் கையாள்.
**ba'rrow** [3], *n.* குழந்தைகளுக்கான கையற்ற நீண்ட கம்பளிச் சட்டை.
**ba'rrow** [4], *n.* காயடித்த ஆண் பன்றி.
**bar'-tend'er,** *n.* இன்தேறல் கடைக்காரர்.
**bart'er,** *n.* பண்டமாற்று, பரிவர்த்தனை, பண்டமாற்று வாணிகம்; (கண.) ஒரு பண்டத்துக்கு நிகரான மற்றொரு பண்டத்தின் அளவுக் கணக்கீடு; *v.* பண்டமாற்றுச் செய்; சிறு பொருள் பெற்று வீணாகக் கொடுத்திழந்துவிடு.
**bartizan',** *n.* ஞாயில், கோட்டையின் கைப்பிடிச்சுவர்; அரணின் கூடகோபுரத்தின் புறநோக்கு வழி; கோபுர அலங்கம்.
**bartizaned',** *a.* அலங்கம் அமைக்கப்பெற்ற.
**bart'on,** *n.* பண்ணை வெளி.
**Bart's,** *n.* லண்டனில் உள்ள தூயதிரு. பார்த்தலமியூ மருந்தகம் (St. Bartholomew's Hospital) என்பதன் சுருக்க வழக்கு.
**bar'wood,** *n.* ஆப்பிரிக்காவிலிருந்து நீளுருளையாக இறக்குமதி செய்யப்படும் செஞ்சாயக் கட்டை மரவகை.
**barycen'tric,** *a.* ஏணுக்குரிய, பொருளின் எடை மையத்துக்குரிய.
**bar'ysphere,** *n.* நிலவுலகக் கோளகையின் மையத்திலிருப்பதாகக் கருதப்படும் பளுவேறிய உட்கருப் பகுதி.
**baryt'a,** *n.* (வேதி.) பாரிய ஒருயிரகை, மிகுதி நிறையுடைய கார மண் வகை.
**baryt'es,** *n.* (வேதி.) வெண்சாயத்துக்கு வழங்கப்பெறும் இயற்கனிப் பொருளான பாரிய கந்தகை.
**ba'rytone,** *n.* (இசை.) உச்சவகைக் குரலுக்கும் மட்டவகைக் குரலுக்கும் இடைப்பட்ட வீறுர்ந்த ஆண் குரல்; வீறுர்ந்த ஆண் குரலையுடைய பாடகர்; வீறுர்ந்த ஆண் குரலுக்குப் பொருத்தமான இசை; இசைக்குரிய பித்தளையாலான துளைக் கருவி வகை; கடை அசை அழுத்தம் பெறாத சொல்; *a.* உச்ச வகைக் குரலுக்கும் மட்டவகைக் குரலுக்கும் இடைப்பட்ட; கடை அசை அழுத்தம் பெறாத.
**bas'al,** *a.* அடிக்கு உரிய; அடியிலுள்ள; அடியாக அமைகிற; மிகத் தாழ்வாயுள்ள; அடிப்படையான, அடிப்படை சார்ந்த; (தொ.) basal anaesthesia, ஆழ்ந்த பெருமயக்கத்துக்கு அடிப்படையாகச் செயல்புரியும் மயக்கம்; basal plane, கிடை அச்சுக்கு ஒரு போகு ஆகவுள்ள முகம்.
**bas'alt, basalt',** *n.* திண்ணிய பசுமை நிறமுடைய தீக்கல், எரிமலைப்பாறை வகை.
**basal'tic,** *a.* எரிமலைப் பாறையினாலான; தீக்கல் வகை அடங்கிய; எரிமலைப் பாறை போன்ற; திண்ணிய பசுமை நிறத் தீக்கல் வகை சார்ந்த.
**bas'an,** *n.* மரப்பட்டை வகையினால் பதனிடப்பட்ட ஆட்டுத் தோல்.
**bas'anite,** *n.* உரைகல்லாகப் பயன்படுத்தப்படும் எரிமலைப் பாறை வகை.
***bas bleu,*** (பிர.) *n.* நீலக் காலுறை.
**bas'cule,** *n.* எடைக்கட்டு இயக்கக்கருவி, ஒருமுனை ஏறும்போது மறுமுனை தாழுகிற நெம்பு அமைவு; (தொ.) bascule bridge, எடைக்கட்டலினால் உயர்த்தவும் தாழ்த்தவும்படுகிற பால வகை, இயங்குபாலம்.
**base** [1], *n.* அடி, அடிப்பகுதி; அடிவாரம்; ஆதாரம், கடைக்கால், அடித்தளம்; நிலத்தளம்; கேடயத்தின் நிலவரை; அடிப்படை; மூலம், மூலமுதல்; (க-க.) தூணின் அடிக்கட்டு; படைத்துறையின் மூலதளம்; கடற்படைத் தலைமையிடம்; நில அளவையின் பொது மூலவரை; கலவையின் தலைக்கூறு; மருந்தின் மூலக்கூறு, பொதுக்கூறு; உறுப்பின் இணைப்பிடம், தலைப்பு; புறப்படுமிடம்; (வடி.) அடிமூலவரை, அடிமூலத்தளம்; (வேதி.) உப்பு மூலம்; காடியுடனிணைந்து உப்பு வகையாகவல்ல பொருள்; (கண.) கணிப்புமூலம், தான மூலம்; பந்தாட்டங்களின் நிலைத்தளம்; *v.* அடிப்படையாக்கு; அடிப்படை மீதெழுப்பு; மூலமுதலாகக் கொண்டு செயலாற்று; ஆதாரத்தின்மீது செயற்படுத்து; வாதத்துக்கு ஆதாரமாகக்கொள்; நிறுவு.

**base**², *a.* தாழ்ந்த, கிழான ; இழிவான ; கயமைத்தனமுடைய ; ஒழுக்கங்கெட்ட ; குறுகிய தன்னலமுடைய, அற்பத்தனமான; கீழ்நிலைப்பட்ட ; அற்பவிலையுடைய ; பயனற்ற ; போலியான ; வெறுக்கத்தகுந்த ; அடிமையூழியம் செய்கிற ; (சட்.) அடிமைப்பட்ட ; (மொழி.) உயர்தனிச் செம்மொழியாயிராத ; (தொ.) base coin, போலி நாணயம் ; base metals, இழிந்த உலோகங்கள், விலை மதிப்புக் குறைந்த உலோகங்கள், காற்றுப் பட்டால் நிறம் முதலியன மாறும் உலோகங்கள்.

**base'ball**, *n.* தளக்கட்டுப் பந்தாட்டம், பக்கத்துக்கு ஒன்பதின்மராக ஆடும் அமெரிக்க நாட்டுப் பந்து விளையாட்டு ; தளக்கட்டாட்டத்துக்குரிய பந்து.

**base'baller**, *n.* தளக்கட்டுப் பந்தாட்டக்காரர்.

**base'-born**, *a.* கீழ்ப்பிறப்பான ; கீழ்நிலையுடைய ; முறைகேடாகப் பிறந்த.

**base'-court**, *n.* மாளிகை அரணின் வெளிமுற்றம் ; கீழ்நீதி மன்றம்.

**base'less**, *n.* அடிப்படையற்ற ; ஆதாரமற்ற ; காரணமில்லாத.

**base'-line**, *n.* நில அளவை வகையில் முக்கோண நில அளவைக்கு அடிப்படையான அடி மூலவரை ; வரிப்பந்தாட்ட ஆடரங்கின் எல்லையிலுள்ள கோடு ; தளக்கட்டுப் பந்தாட்டத்தில் தளங்களை இணைக்கும் கோடு.

**base'ly**, *adv.* இழிவாக, அற்பத்தனமாக.

**base'man**, *n.* தளப்பந்தாட்டக்காரர், தளக்கட்டுப் பந்தாட்டத்தில் பந்தைப் பிடித்து நிறுத்துவதற்காக தளத்துக்கருகில் நிறுத்திவைக்கப்பட்டுள்ள ஆட்டக்காரர்.

**base'ment**, *n.* அடிப்படை ஆதாரம் ; கட்டிடத்தின் அடித்தளம் ; நில அறை, கீழ் அறை.

**base'mind'ed**, *a.* சிறுமனமுடைய.

**bas'enji**, *n.* மிகுதியும் குரைக்காத இயல்புள்ள சுருட்டை வாலும் நிமிர்காதும் உடைய சிறிய ஆப்பிரிக்க நாய் வகை.

**base'-runner**, *n.* தளக்கட்டுப் பந்தாட்டத்தில் தளங்களைச் சுற்றிவரும் ஆட்டக்காரர்.

**bas'es**, *n.* basis என்பதன் பன்மை.

**bash'**, *n.* நல்ல அடி, தல்லுகை; அடித்துரைத்தல் ; *v.* ஆழ் தழும்புற அடி, உள்ளழுந்த அடி.

**bash'ful**, *a.* நாணமுள்ள, கூச்சமுடைய ; குழப்பமடைந்த ; எளிதில் குழப்பமடைகிற ; தன்னம்பிக்கையற்ற.

**bash'fully**, *adv.* வெட்கத்துடன், நாணிக்கோணி.

**bash'fulness**, *n.* வெட்கம், நாணம், நாணிக்கோணுதல்.

**bashi-bazouk'**, (துரு.) *n.* கொடுமைக்கும் கொள்ளைக்கும் பேர்போன முறையணி சாராக் கூலிப் போர்வீரர் ; கொடிய கொள்ளையிலீடுபடும் படைவீரர்.

**bashi-bazouk'ery**, (துரு.) *n.* துருக்கியக் கூலிப் போர் வீரர் தொழில், கொடுங்கொள்ளை.

**bash'less**, *a.* நாணமற்ற.

**bas'ic**, *a.* அடிப்படையான ; அடிக்கு உரிய ; அடியிலுள்ள ; அடியாக அமைகிற; (வேதி.) உப்பு மூலத்தின் இயல்புடைய, உப்பு மூலம் கொண்ட ; கன்மச்சத்துக் குறைவாகக் கலந்த ; உலோகங்களில் கன்மச்சத்துக் கலவாத முறைப்படி உருவாக்கப்பட்ட ; (தொ.) basic English, எளிய இன்றியமையாத 850 சொற்கள் கொண்ட ஆங்கில மொழிவழக்கு ; basic process, உலோக உயிரகை உட்சூழ்ந்த உலையில் எஃகு உருவாக்கும் முறை ; basic salt, மூல உப்பு ; basic slag, காரச் சிட்டம் ; உரமாகப் பயன்படுத்தப்படும் இரும்புச் சிட்டம்.

**basi'city**, *n.* (வேதி.) காரங்கள் உப்பு மூலங்களுடன் கலக்கும் தர அளவு.

**basid'ial**, *a.* சிதல் நெற்றுக்குரிய; சிதல் நெற்றுடைய.

**basid'iospore**, *n.* (தாவ.) காளான் வகையின் சிதல் நெற்றிலுள்ள சிதல் விதை.

**basid'ium**, *n.* காளான் வகையின் சிதல் நெற்று, சிதல் விதைகளை வெடிக்க வைக்கும் காளான் உறுப்பு; *pl.* basid'ia.

**ba'sifixed**, *a.* அடி ஒட்டிய, அடித்தளத்தால் இணைக்கப்பட்ட.

**basif'ugal**, *a.* அடி அகல்வான, அடித்தளத்திலிருந்து விலகிப் புறநாடிச் செல்கிற.

**bas'il**¹, *n.* துளசியினம் சார்ந்த நறுமணச் செடிவகை.

**bas'il**², *n.* முழுதும் பதனிடப்படாத ஆட்டுத்தோல்.

**bas'il**³, *n.* மணியின் பட்டையிட்ட சாய்கோணப் பக்கம்.

**basil'ic**, *a.* குருதி நாளங்களில் முழங்கையிலிருந்து தொடங்கி அக்குள் நாளத்தில் முடிகிற.

**basil'ica**, *n.* அரைவட்ட ஒதுக்கிடமுடைய தூண் வரிசை வாய்ந்த நீள்சதுர மண்டபம் ; நெடுமாடக்கோயில் ; பண்டை ரோம் நகரில் (Rome) பேரரசர் கான்ஸ்டன்டைன் (Constantine) கட்டிய கோயில்களில் ஒன்று ; பண்டைக் கால அரசுமனை.

**basil'ical**, *a.* அரசுக்குரிய.

**basil'ican**, *a.* பிறை நெடுமாடத்துக்குரிய, அரசுமனைக்குரிய.

**basil'icon, basil'icum**, *n.* உயர்மருந்துக் களிம்பு.

**bas'ilisk**, *n.* திட்டிவிடம், பழங்கதை மரபுக்குரிய நச்சு மூச்சும் நச்சுப் பார்வையுமுடைய பாம்பு வகை ; உச்சிக் கொண்டையுடைய அமெரிக்கப் பல்லி வகை ; பண்டைக் காலப் பித்தளைப் பீரங்கி வகை.

**bas'in**, *n.* தட்டம், வட்டில், கிண்ணம் ; வட்டில் நிறையளவு ; குழிவான பள்ளம் ; நிலங்கவிந்த நீர்நிலை ; நீர்த்தேக்க நீக்க வாய்ப்புடைய கப்பல்துறை ; வடிநிலம் ; ஆற்றுப் பள்ளத்தாக்கு ; நீள்வட்டப் பள்ளத்தாக்கு ; (மண்.) உட்குழிவான நில மடிப்பு உள்ள இடம் ; உள் மடிப்பிட நிலக்கரிப்படிவு ; உள்மடிப்பிடக் கனிப்பொருள் படிவு.

**bas'inet**, *n.* இலேசான உருள் கவிவுடைய எஃகு தலைச்சீரா.

**bas'inful**, *n.* கிண்ணம் கொள்ளும் அளவு ; *pl.* bas'infuls.

**basip'etal**, *a.* (தாவ.) இதழ்கள் வகையில் அடிநோக்கி வளர்கிற.

**bas'is**, *n.* அடிப்படை ; மூலமுதல் ; அடிநிலை, பீடம், மூலச்சரக்கு ; மூலக்கொள்கை, தொடக்கத் தத்துவம் ; உடன் பேச்சுக்குரிய பொது மூலம் ; படைத்தளம்.

**bask**, *v.* குளிர்காய், வெயிலிற் காய், ஒளியில் திளை ; சார்ந்து இன்பந்திளை ; (தொ.) basking shark, மிகப் பெரிய சுறுமீன் வகை.

**bas'ket**, *n.* கூடை ; கூடை கொள்ளும் அளவு ; பெட்டி ; கூடைப் பந்தாட்டத்தில் ஆட்ட இலக்காகப் பயன்படுத்தப்படும் வலை ; அஞ்சல் வண்டியின் பின்புற வெளியிருக்கை ; பிரம்பு வேலை செய்து உருவாக்கப்பட்ட கைப்பிடி ; கூடை வடிவ அமைப்பு ; *v.* கூடையில் வை ; கழிவுக் கூடையில் போடு.

**bas'ket-ball**, *n.* கூடைப்பந்தாட்டம்.

**bas'ket-chair'**, *n.* பிரம்பு நாற்காலி.

**bas'ketful**, *n.* கூடை நிரம்பக்கொள்ளும் அளவு ; *pl.* bas'ketfuls.

**bas'ket-maker**, *n.* கூடை முடைபவர்.

**bas'ket-mak'ing**, *n.* கூடை முடைதல்.

**bas'ketry**, *n.* கூடை முடைதல் ; பிரம்புபின்னிய வேலைப்பாடு.

**bas'ket-work**, *n.* பிரம்பு முதலியவற்றின் பின்னல் வேலைப்பாடு.

**bas'net**, *n.*=basinet.

**bas'on**¹, *n.*=basin.

**bas'on**², *n.* தொப்பிக்குரிய அழுத்தக் கம்பளித்துணியைச் செய்வதற்கான விசிப்பலகை ; *v.* விசிப்பலகையின்மேல் வைத்து அழுத்தித் தொப்பிக்குரிய அழுத்தக் கம்பளித்துணி செய்.

**Basque**, *n.* பிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் இடைப்பட்ட பிரென்னீஸ் (Pyrenees) மலை வட்டாரத்தில் வாழும் பழங்குடியினத்தவர்; மேற்குப் பிரென்னீஸ் பகுதிப் பழங் குடியினர் பேசும் மொழி; *a.* பாஸ்குப் பழங்குடி யினத்துக் குரிய; பாஸ்குப் பழங்குடி மொழி சார்ந்த.

**basque**, *n.* இடுப்பின் கீழதாய கச்சு நீட்டம்.

**basqued**, *a.* கச்சு வகையில் இடுப்பின்கீழ் நீண்ட பகுதி யுடைய.

**basquine'**, *n.* பாஸ்கு (Basque) ஸ்பெயின் (Spain) நாட்டுப் பெண்டிர் கச்சின் மீதணியும் புறச்சட்டை.

**bas-relief'**, *n.* குவி ஓவியம், பின்னணி அரை அகழ்வான புடைப்புருச் செதுக்கோவியம்.

**bass**[1], *n.* கடல்மீன் இனங்களின் வகை.

**bass**[2], *n.* பாய்-கூடை முடையவும் மலர் கட்டவும் பயன் படும் எலுமிச்சை இனமரத்தின் நார்போன்ற உள்பட்டை.

**bass**[3], *n.* உச்சக்குரலுக்கும் மட்டக் குரலுக்கும் இடைப்பட்ட வீறூர்ந்த ஆண்குரல்; படுத்தலோசை, வீறூர்ந்த ஆண் குரலில் பாடுபவர்; *a.* தாழ்வான, படுத்தலோசையுடைய, வீறூர்ந்த; படுத்தலோசைக்குப் பொருத்தமான; *v.* வீறூர்ந்த குரல் எழுப்பு.

**Bass**, *n.* இங்கிலாந்தில் செய்யப்படும் மாத்தேறல் வகை, தோப்பி வகை.

**bass'-bar**, *n.* நரப்பிசைக்கருவியின் சிற்றுறுப்பு, யாழ் நடுக்கட்டை.

**bass'-broom**, *n.* முரட்டுநார்த் துடைப்பம்.

**bass'-clef**, *n.* இசைமானத்தில் இழை வரையில் குறிக்கப் படும் சுருதிக் குறியீட்டு வகை.

**bass'-drum**, *n.* இசைக் குழுவினரின் பெருமுரசு.

**bass'et**[1], *n.* பெரிய வேட்டைநாய் வகை.

**bass'et**[2], *n.* பழங்காலச் சீட்டாட்டம்.

**bass'et**[3], *n.* (மண்.) தெரிபாறை, புறந்தோன்றும் அடிநிலப் பாறை; *v.* வெளித்தோன்று.

**bass'et-horn**, *n.* ஓசை நயமுடைய நாதசுரம்போன்ற துளைக் கருவி.

**bassinet'**, *n.* மூடாக்கமைந்த பிரம்புத் தொட்டில், சிறு பிரம்புத் தள்ளுவண்டி.

**bass'o**, *n.* வீறூர்ந்த ஆண்குரலில் பாடுபவர்.

**bassoon'**, *n.* துளைக்கருவி வகை.

**bassoon'ist**, *n.* துளைக்கருவி வகை வாசிப்பவர்.

***basso-reliev'o***, (இத்.) *n.* பின்னணி அரை அகழ்வான புடைப் புருச் செதுக்கோவியம்; *pl.* *basso-reliev'os.*

**bass-relief'**, *n.*=bas-relief.

**bass'-vi'ol**, *n.* மந்தயாழ், கூட்டிசையில் படுத்தலோசையை எழுப்புவதற்காகப் பயன்படும் நான்கு நரம்புகளுள்ள இசைக்கருவி.

**bass'-wood**, *n.* எலுமிச்சை இனமரம்; எலுமிச்சை இனமரத் தின் கட்டை.

**bast**, *n.* எலுமிச்சை இனமரத்தின் நாரியல் வாய்ந்த உள் பட்டை; உள்மரப்பட்டை, மென்மரம்.

**bas'tard**, *n.* குண்டகன், சோரப்பிள்ளை, வேசிமகன், வேசி மகள்; புறமணப் பிள்ளை, மணவாழ்க்கைக்குப் புறம்பாய்ப் பிறந்தவர், இழிமகார்; *a.* கூடா ஒழுக்கத்தின் விளைவாகப் பிறந்த, மணவாழ்க்கைக்குப் புறம்பாய்ப் பிறந்த; முறை கேடான, கலப்பினத்தைச் சேர்ந்த; பொய்யான, போலியான, தவறுகப் பெயர்தாங்கிய.

**bast'ardism**, *n.* =bastardy.

**bas'tardize**, *v.* முறைகேடனென்று சாற்று; இழிபிறப்பின ரென்று எண்பி.

**bas'tardy**, *n.* தகாவழிப்பிறப்பு; முறைகேடனுயிருக்கும் நிலை; ஒழுக்கக்கேடு; போலித்தன்மை.

**baste**[1], *v.* தைப்பதற்கு முன்னீடாகப் பெருந்தையல் போடு, தளர்த்தியாய் இழையோட்டு.

**baste**[2], *v.* சுட்டிறைச்சி தீய்ந்துபோகா வண்ணம் நெய் வார்; மெழுகுத் திரிக்கான துணியின்மேல் உருக்கியமெழுகு ஊற்று.

**baste**[3], *v.* தடியாலடி, புடை, சிதை.

**Bastille'**, **bastille'**, *n.* அரண்; 1789-இல் அழிக்கப்பட்ட பாரிஸ் (Paris) நகரத்துச் சிறைக்கோட்டம்; கொடுங் கோன்மைச் சின்னமாகவுள்ள சிறை.

**bastinade'**, **bastinad'o**, *n.* உள்ளங்காலில் பிரம்பாலடித் தல்; *v.* உள்ளங்காலில் பிரம்பாலடித்து ஒறு.

**bastinad'oes**, *n.* bastinado என்பதன் பன்மை.

**bas'tion**, *n.* கோட்டை அரணில் முனைப்பான முகப்புடைய பகுதி, பரிகம்; கோட்டைக் காவல், அரண், காப்பு.

**bas'tioned**, *a.* அரண் அமைந்த.

**bat**[1], *n.* வௌவால்.

**bat**[2], *n.* பந்தடிக்கும் கோல்; மரப்பந்தாட்டக்காரர்; கோமாளி யிடமிருக்கும் தட்டுப்பலகை; செங்கல்துண்டு; *v.* மரப் பந்தாட்டத்தில் மட்டையாலடி, மட்டை வீசு.

**bat**[3], *v.* கண் இமை, இமையாடு.

**batat'a**, *n.* சீனிக்கிழங்கு, சர்க்கரைவள்ளிக் கிழங்குவகை

**Batav'ian**, *n.* நெதர்லாந்தில் (Netherlands) உள்ள பண்டை பட்டேவியாவில் வாழ்ந்தவர்; தற்கால ஆலந்தில் (Holland) வாழ்பவர்; ஜாவாவில் உள்ள பட்டேவியா நகரின்கண் (ஜகர்த் தாவில்) வாழ்பவர்; *a.* பண்டை பட்டேவியாவுக்குரிய; தற்கால ஆலந்துக்கு உரிய; ஜாவாவில் உள்ள பட்டேவியா வுக்குரிய.

**batch**, *n.* அப்பங்களின் ஒரு வேக்காட்டளவு, ஓர் ஈடு, தொகுதி; அடுக்கு; கும்பு; *v.* தொகுதிகளாகத் திரட்டு, கும்புகளாகப் பிரி.

**bate**[1], *n.* தோலை மென்பதமாக்குதற்கான காரக்கரைசல்; *v.* தோலைக் காரக்கரைசலில் ஊறவை.

**bate**[2], *v.* அடக்கு; இழ, தளரவிடு; தணி, குறை; வீழ்ச்சியுறு; கழி, தள்ளு; மழுக்கு; (தொ.) with bated breath, மூச்சை அடக்கிக்கொண்டு.

**bateau'**, *n.* பரிசில், இலேசான ஆற்றுப்படகு; *pl.* bateaux'.

**bate'ment**, *n.* குறைத்தல்; (தொ.) batement light, பலகணிச் சட்டச் சாய்வொளி.

**bat'fowling**, *n.* இரவில் ஒளிகாட்டியும் புதர்களைக் கலைத்தும் பறவைகளைப் பிடித்தல்.

**bath**[1], *n.* குளிப்பு, முழுக்கு, நீராட்டு; குளிநீர்; குளிப்புத் தொட்டி; முழுக்கறை, முழுக்குமனை; குளிப்பு முறை மருத்துவ இல்லம்; நீர்-ஆவி-ஒளி ஆகியவற்றில் செறிவு-தோய்வு-அளாவல்; தணல்-மண் பொதிவு; (வேதி.) செறிகலம், பொதிதளம்; *v.* குளிப்பாட்டு, நீராட்டு; தொட்டி நீருள் அமிழ்த்தி முழுக்காட்டு; (தொ.) Order of the Bath, வீரப்பெருந்தகைப் பட்டவரிசை.

**bath**[2], *n.* யூதர் வழங்கிய முகத்தற் பேரெல்லையளவை.

**Bath**, *n.* குளிப்புமுறை மருந்துநீரூற்றுடைய ஆங்கில நகரப் பெயர்.

**bath'-brick**, *n.* மெருகுக்கல், உலோகங்களை மெருகிடுதற்குப் பயன்படும் மண்சத்தடங்கிய சுடப்படாத செங்கல்.

**Bath'-bun'**, *n.* சுவைமிக்க இனிப்புப் பொங்கப்பம்.

**bathe**, *n.* குளிப்பு, நீர்முழுக்கு; நீத்துக்குளிப்பு; *v.* குளி, நீராடு; நீர்மூழ்கு; நீந்திக்குளி; திளை, தோய்; காற்றுடவிடு, ஒளிதோய்வி; நீராட்டு; கழுவு; அலம்பு; நனைவி, நீர்கொட்டு.

**bathet'ic**, *a.* தலைகீழான உணர்ச்சிப்போக்குடைய.

**bath'house**, *n.* குளிப்பகம், நீராட்டுமனை.

**bath'ing-box**, *n.* நீராடுபவர் உடைமாற்றும் அறை.

**bath'ing-cost'ume**, **bath'ing-dress**, *n.* குளியல் உடை.

**bath'ing-machine'**, *n.* நீராட்டுப்பொறி, குளிப்பவரை நீரில் ஆழத்துக்குக் கொண்டு போகக்கூடிய சக்கரங்களுள்ள சிறு வண்டி.

**bath'ing-suit**, *n.*=bathing-costume.

**bath'man**, *n.* உப்புக்கண்டம் போடுபவர்.

**bath'mic**, *a.* வளர்ச்சி ஆற்றலுக்குரிய.

**bath'mism**, *n.* (உயி.) வளர்ச்சி ஆற்றல்.

**bath'olite**, **bath'olith**, *n.* (மண்.) மிக்க ஆழத்திலிருந்து எழும்பிய தீப்பாறைத் திரள்.

**bathom'eter**, *n.* நீராழமானி.

**Bathon'ian**[1], *n.* பாத் (Bath) நகரவாழ்நர்; *a.* பாத் நகருக்குரிய.

**Bathon'ian**[2], *n.* (மண்.) பறவை தோன்றிய ஊழி இடைப்பிரிவு; *a.* (மண்.) பறவை தோன்றிய ஊழி இடைப்பிரிவுக்குரிய.

**bat'horse**, *n.* அதிகாரியின் மூட்டைகளைச் சுமந்து செல்லும் பொதிகுதிரை.

**bath'os**, *n.* சுவை இறக்கம், உணர்ச்சித் தலைதடுமாற்றம்.

**bath'room**, *n.* குளிக்கும் அறை; (தொ.) bath-room ballerina, ஊர்பேர் தெரியாத ஆடல்நங்கை.

**bathyb'ius**, *n.* முன்பு ஊன்ம இயல்புடையதென்று தவறாகக் கருதப்பட்ட கடலடி வண்டற்குழம்பு.

**bathygraph'ical**, *a.* படமூலம் நீராழத்தைக் காட்டுகிற.

**bathym'eter**, *n.*=bathometer.

**bathymet'ric**, **bathymet'rical**, *a.* நீராழமானிக்குரிய.

**bathym'etry**, *n.* கடல்-ஏரி ஆகிய இவற்றின் ஆழங்காண்பது பற்றிய நூல்.

**bathyorograph'ical**, *a.* திணைப்படங்களில் நில உயரத்தையும் நீராழத்தையும் காட்டுகிற.

**bathypelag'ic**, *a.* கடலாழத்தில் காணப்படுகிற.

**bath'yscope**, **bath'ysphere**, *n.* ஆழ்கடற் காட்சிக்கோளகை, ஆழ்கடல் ஆய்வுக்கான பெரிய வலுவான நீர்மூழ்கும் கவிகை மாடம்.

**bat'ik**, *n.* துணியில் சாயம் போட வேண்டியிராத பாகங்களுக்கு மெழுகு பூசி எஞ்சிய பாகங்களில் வண்ணப் படங்களை அச்சிடும் கீழைநாட்டு முறை.

**bat'ing**, *prep.* தவிர.

**batiste'**, *n.* மெல்லிய இழையுள்ள நேர்த்தியான துணி; *a.* மெல்லிய இழையுள்ள, நேர்த்தியான துணிக்குரிய.

**bat'man**, *n.* பொதிகுதிரைப்பாகன்; அதிகாரியின் வேலையாள்.

**batolog'ical**, *a.* முட்செடி ஆய்வுக்குரிய.

**batol'ogist**, *n.* முட்செடி ஆய்வாளர்.

**batol'ogy**, *n.* முட்செடிகளைப் பற்றிய ஆய்வுநூல்.

**bat'on**, *n.* ஊர்க்காவலரின் குறுந்தடி; கட்டியக்கோல்; (கட்.) கேடயத்திலுள்ள குறுந்தடி வடிவம்; (இசை.) இசைக் குழுத்தலைவர் தாளத்தைக் குறிப்பதற்காக அசைக்கும் கோல்; *v.* தடியாலடி; (தொ.) baton sinister, (கட்.) முறைகேடான பிறப்பைக் குறிக்கும் இடமிருந்து வலஞ்சாய்வான குறுந்தடி உருவக்குறிப்பு.

**bat'-pay**, *n.* பொதி சுமப்பதற்கான படி.

**batra'chia**, *n. pl.* நிலநீர்வாழுயிர்கள், தவளை-தேரையினம்.

**batra'chian**, *n.* நிலநீர் வாழுயிர்களில் ஒன்று, செவுள்களையும் வாலையும் உதிர்த்துவிடும் உயிரினங்களில் ஒன்று; *a.* தவளை-தேரையினத்துக்குரிய, நிலநீர்வாழுயிர்களுக்குரிய.

**bats'man**, *n.* மரப்பந்தாட்டக்காரர்.

**bats'wing**, *n.* வாவல் அடுப்பு, வௌவால் இறகு போன்ற வடிவுடைய அழல்காட்டும் பொறி அடுப்பு வகை.

**batt'a**, (த.) *n.* படைத்துறையில் கொடுக்கப்படும் உதவிப்படி; படிச்செலவு, படிப்பணம்; செலவுப்படி; பட்டைச்சோறு.

**battal'ia**, *n.* போரணி; அணிவகுப்புப் படையில் சிறப்புப்பிரிவு.

**battal'ion**, *n.* அணிவகுத்த படை; போர் அணிப்பிரிவு, தானை; காலாட்படை வகுப்பு.

**batt'els**, *n. pl.* ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக மடப்பள்ளிகளிலிருந்து பெறும் பண்டங்களுக்கான கணக்குகள்; கல்லூரிக் கணக்குகளில் காட்டப்படும் செலவுத்தொகைகள்.

**batt'en**[1], *n.* தளம் பாவுதற்குப் பயன்படும் மரப்பலகை; கம்பை, அள்ளு, பற்று; மின் விளக்குகளின் வரிசை; மின் விளக்குகள் பொருத்தப் பெற்றுள்ள மரச்சட்டம்; (கப்.) உராய்தலைத் தடுப்பதற்காக தூலத்தின்மேல் ஆணியடித்துப் பொருத்தப்படும் மரத்துண்டு; *v.* அள்ளுகளைக் கொண்டு வலுப்படுத்து; அள்ளுகள் அமை.

**batt'en**[2], *n.* பட்டுத்தறியில் ஊடுநூலைச் செறிவாகத்தள்ளும் இயங்கு சட்டம்.

**batt'en**[3], *v.* பேருண்கொள்; தின்றுகொழு; கிடந்துதினை.

**batt'ening**, *n.* சுவர் அல்லது சட்டத்தின்பேரில் அள்ளுகள் அமைந்த மரவேலைப்பாடு.

**batt'er**[1], *n.* நீர்மத்தில் சேர்த்துப் பசையாகக் குழைக்கப்படும் பொருள்கள்; ஒட்டுதற்கான பசை; அச்சுரு அல்லது அச்சுருத் தகட்டிலுள்ள வடு; *v.* நை; நொறுக்கு; பீரங்கிகளைக் கொண்டு தாக்கு; கடுமையாக நடத்து; உருக்குலையுமாறு தகர்; அடித்துப் பள்ளமுண்டாக்கு; உபயோகத்தின் மூலம் உருச்சிதை.

**batt'er**[2], *n.* குத்துக்கோட்டிலிருந்து உள்பக்கமான சாய்வு; *v.* உள்பக்கமாகச் சாய், நிலத்தளத்திலிருந்து மேல்நோக்கிச் சாய்.

**batt'er**[3], *n.* பந்தாட்டமட்டை கையாள்பவர், ஆட்டக்காரர்.

**batt'ering-charge**, *n.* பீரங்கியில் செறிக்கத்தக்க வெடி மருந்தின் முழுநிறை அளவு.

**batt'ering-ram**, *n.* மதிற்சுவர்களைத் தகர்ப்பதற்குரிய உலோகப் பூணிட்ட பெருந்தூலம்.

**batt'ering-train**, *n.* முற்றுகை பீரங்கிகளின் தொகுதி.

**batt'ery**, *n.* அடித்தல்; (சட்.) கைத்தாக்குதல், ஆடை பங்க முறக் கைநீட்டல்; அதட்டிக் கையாளுதல்; பீரங்கித்தொகுதி; பீரங்கிப்படை வகுப்பு; பீரங்கிப் படை வீரர்கள்; பீரங்கிகள் நிறுத்தப்பட்டுள்ள இடம்; மின்பொறி அடுக்கு, மின்கலம்; அடுக்குச் சமையற்கலம்; உணவுக்கல அடுக்கு; விரைவளர்ச்சி முறையில் முட்டையிடும் கோழிகளை அடைத்துவைப்பதற்கான கூண்டுப்பெட்டி வரிசை; தளக்கட்டுப்பந்தாட்டத்தில் பந்தெறிபவரும் ஏற்பவரும் கொண்ட தொகுதி; வாத அடுக்குச்சொல், வாத அடுக்கு.

**batt'ing**, *n.* பந்துமட்டையைக் கையாளும் சதுரப்பாடு; மெத்தைகளுக்குரிய திணிப்புப்பொருள்.

**bat'tle**[1], *n.* சண்டை, போர்; மல்லாட்டம்; சூழ்ச்சியாட்டம்; போர்த்திறம், வெற்றி; *v.* சண்டையிடு, போரிடு; எதிரிடு, மல்லாடு.

**bat'tle**[2], *v.* ஞாயில்கள் அமைத்துக்கொடு.

**bat'tle-ax**, **batt'le-axe**, *n.* மழு, போர்க்கோடரி; ஆற்றல் வாய்ந்த மாது.

**bat'tle-cruiser**, *n.* போர்க்கப்பலின் திறங்கள் வாய்ந்த பெரிய காவற்கப்பல்.

**bat'tle-cry**, *n.* போர்க்குரல், போர்க்கூச்சல்; அரசியல் கட்சியின் போராட்டக் குறிக்கோள்.

**bat'tledoor**, **bat'tledore**, *n.* மரத்துடுப்பு; இறகுப்பந்து மட்டை.

**bat'tle-dress**, *n.* போர்வீரர் உடுப்பு.

**bat'tle-field**, *n.* போர்க்களம், பறந்தலை.

**bat'tlemented**, *a.* ஞாயில்கள் அமைந்த.

**bat'tlements**, *n. pl.* பீரங்கியேற்றும் மதில் வாய் இடம் அல்லது கொத்தளம், ஞாயில்.

**bat'tle-piece**, *n.* போர்க்காட்சியின் படம்; போரைப் பற்றிய விரிவுரை.

bat'tle-plane, *n.* பெரிய போர்விமானம்.
bat'tle-scarred, *a.* விழுப்புண்பட்ட, போர் பல கண்ட.
bat'tle-ship, *n.* போர்க்கப்பல்.
bat'tology, *n.* பயனின்றிக் கூறியது கூறல்.
*battue*, (பிர.) *n.* வேட்டைக்காரர்களிருக்கும் இடத்துக்கு விலங்குகளை விரட்டுதல்; விலங்குகளைக் கலைத்து விரட்டச் செல்லும் வேட்டைக்குழு; பெருவாரியான அழிவு வேட்டை, படுகொலை.
bau'ble, *n.* பகட்டான விளையாட்டுப் பொருள்; அற்பப் பொருள், பயனற்ற பண்டம்; அரசவைக் கோமாளிச்சின்னம், கழுதைக் காது பொருந்திய தலையுடைய தடி.
baulk, *n.*=balk.
baus'ond, baus'on-faced, *a.* நெற்றியில் வெள்ளைப்புள்ளி களுடைய; முகத்தின் கீழ்ப்பாகத்தில் வெள்ளைக்கீற்று உடைய.
baux'ite, *n.* (கனி.) அலுமினியம் அகப்படும் இடத்தில் உள்ள மண் வகை.
bav'in, *n.* சுள்ளி விறகுக்கட்டு.
bawd, *n.* பரத்தைத் தரகி; பரத்தைத் தரகர்; கீழ்த்தரப்பேச்சு.
bawd'ry, *n.* பரத்தமைத் தரகு.
bawd'y, *n.* காமப்பேச்சு; *a.* இழிந்த, ஒழுக்கங்கெட்ட.
bawd'y-house, *n.* இழிமனை, பரத்தையில்லம்.
bawl, *n.* பேரொலி, உரத்த கூச்சல்; *v.* இரை, கத்து, கூச்ச லிடு, உரக்கக்கூவு.
bawl'ey, *n.* (பே-வ.) கடற்கரைக்குரிய மீன் பிடிக்கும் சிறு படகு.
bawn, *n.* மாளிகை அரண்முற்றம்; கால்நடைப் பட்டி.
bay[1], *n.* கருஞ்சிவப்புக் குதிரை; *a.* கருஞ்சிவப்பான.
bay[2], *n.* விரிகுடா; கடற்கரையின் உட்பக்க வளைவு; மலைத் தொடரில் ஒதுக்கிடம்.
bay[3], *n.* தூணிடைவெளி; மதிலிடை வளைவு; ஒதுக்கிடம்; தொழுவம்; (படை.) போர்க்காலப் பதுங்கு குழியில் கடந்து செல்லும் இடம்; கிளை இருப்புப்பாதை வளைவு.
bay[4], *n.* புன்னைமரம்; வெற்றித்தழை, புகழ்மாலை; இலக்கியப் புகழ்.
bay[5], *n.* பெரிய நாயின் குரைப்பு; வேட்டை நாய்களின் கூட்டுக் குரைப்பு; வேட்டையாடப்படும் விலங்கு போக்குமுட்டி எதிர்த்து நிற்றல்; கடைசி எதிர்ப்பு நிலை; *v.* குரை, உறுமு; குரைத்துக் கொண்டு துரத்து; வளைத்து மடக்கு, மடக்கி நிறுத்து; (தொ.) hold at bay, keep at bay, போக்கு முட்டச் செய்; stand at bay, போக்கு முட்டி எதிர்த்து நில்.
bay[6], *n.* மான்கொம்பின் இரண்டாவது முனை.
bayadere', *n.* நாட்டிய நங்கை.
bay'-antler, *n.*=bay[6].
Bay'ard, *n.* கருணைமறவன், பண்புசான்ற வீரன்.
bay'ard, *n.* குதிரை; குருட்டுப் போக்கான துணிச்சல்.
bay'-line, *n.* வளைவான கிளை இருப்புப்பாதை.
bay'onet, *n.* துப்பாக்கிமுனை ஈட்டி; சனியன்; படைவலி; சுரிகைத் துப்பாக்கி தாங்கிய வீரர்; *v.* துப்பாக்கி ஈட்டிமுனை யினால் குத்து; துப்பாக்கிமுனை காட்டி வினையை முடித்துக் கொள்.
bay'oneted, *a.* சுரிகைத் துப்பாக்கி தாங்கிய.
bay'onets, *n. pl.* படைவலி.
bay'ou, *n.* வடஅமெரிக்காவின் தென்பகுதியில் ஏரி ஆறு ஆகியவற்றின் சேருர்ந்த கிளை.
bay'-rum, *n.* மேற்கிந்திய மரவகையின் இலைகளிலிருந்து வடித்திறக்கப்படும் நறுமணக் குடிவகை.
bay'-salt, *n.* சொரசொரப்பான உப்பு.
bazaar', (பெர்.) *n.* கடை, கடைத்தெரு, அங்காடி.
baz'an, *n.*=basan.

bazar', *n.*=bazaar.
bazoo'ka, *n.* வேடிக்கையாக வாசிக்கப்படும் துளைக்கருவி வகை; வாணத்திஞல் உந்தப்படும் எறிபடைகளுக்கான துப்பாக்கி.
bdell'ium, *n.* நறுமணப்பிசின் தரும் மரவகை; ஒருவகை மரப்பிசின்.
be, *v.* இரு, உளதாகு, எய்தப்பெறு; வாழ், நிலைகொள், தங்கியிரு, தொடர்ந்து இரு; நிலை எய்து; பண்பு உடையதாய் அமை.
beach, *n.* கடற்கரை; ஏரிக்கரை; அலைகளால் ஏற்பட்ட ஓர மேட்டிடம்; *v.* கரையில் தள்ளி ஏற்று; கரைமீது இழு.
beach'comber, *n.* உருள்பேரலை; பசிபிக் (Pacific) கடற் கரையோரங்களில் ஒண்டித்திரிபவர்; பசிபிக் தீவுகளின் முத்துக்குளிப்புத் தொழிலாளர்.
beached, *a.* கடற்கரை வாய்ந்த; கடற்கரையின்மேல் செலுத் தப்பட்ட.
beach'head, *n.* கடல் முகப்புத்தளம், படை இறங்குதற்காகப் பகைவருடைய கடற்கரையில் கைப்பற்றப்பட்ட நிலப்பரப்பு.
beach-la-mar', *n.* தென் கடற்பகுதிக்குரிய கொச்சை ஆங்கில மொழி, மேற்குப் பசிபிக் வாணிகத்தில்பயிலும் கொச்சை ஆங்கிலம்.
beach'-rescue, *n.* கடலாடிக் காப்பாளர், கடலிற் குளிப்பவர் களில் இடருற்றவர்களைக் காப்பதற்குரிய அதிகாரி.
beach'y, *a.* கூழாங்கற்கள் நிறைந்த.
beac'on, *n.* தொலை அடையாளக்குறி; தீ நா; குன்றின் மேலிட்ட விளக்கு; தீப்பந்தம்; அடையாளக்குறி காட்டும் நிலையம்; முனைப்பாகத் தெரியும் மேடு; கலங்கரை விளக்கம்; எச்சரிக்கை ஒளி; இடர் எச்சரிப்பு; வழிகாட்டி; விமான வழி காட்டி; தெரு அடையாளக் குறி; கப்பல்கள் அல்லது விமா னங்களுக்கு வழிகாட்டுவதற்கான கம்பியில்லாத்தந்தி ஏற் பாடு, *v.* ஒளிகாட்டு; வழிகாட்டு; குறிகாட்டும் விளக்குகளை அமை.
bead, *n.* உருண்மணி, குமிழ்மணி, செபமாலையின் உருமணி; சிறுகுமிழ் வடிவப் பொருள்; நீர்த்துளி; குமிழி; வியர்வைத் துளி; துப்பாக்கி முனைவாய்; (க-க.) மணிவரிசை உருவ அழகு வேலைப்பாடு; சக்கரப்புறத் தோட்டின் குமிழ்புடைப்பு; *v.* குமிழ் மணிகள் அமை; தொடு, கோவைப் படுத்து; உரு மணிகளாக அமை; உருமணிகள் பெருக்கு; (தொ.) draw a bead on, நோக்கிக் குறிபார்; tell one's beads, மந்திர உரு வேற்றி வழிபடு.
bead'ed, *a.* குமிழ்மணி வாய்ந்த; உருள் மணிகளை உடைய; உருள்மணி வடிவமுள்ள.
bead'-house, *n.* ஆன்மநல விடுதி, நிறுவியவரின் ஆன்மநல னுக்காக வேண்டிக்கொள்ளும் கடப்பாடுடைய பிச்சைக் காரர்கள் வாழும் அறநிலையம்.
bead'ing, *n.* மணிகளின் அச்சுரு; மணிகள் கோத்தல்; மணியுரு அமைவு.
bea'dle, *n.* தண்டேந்தி, துணைவேந்தர் மெய்க்காவலர்; தொழிற்குழுக் காவலாளர்; திருக்கோயிற் காவற்பணியாளர்; தண்டகர், சிறு குற்றஞ் செய்தாரைத் தண்டிக்கும் உரிமை யுடைய திருவட்டகைப் பணியாளர்.
bea'dledom, bea'dlehood, *n.* மடமிக்க விரிவான பணி ஆர்வநிலை.
bead'-proof, *a.* குமிழ் நலமுடைய, உயர்குடிவகைகளில் கலகக்கிய பின்னும் குமிழியருதிருக்கும் இயல்புடைய.
bead'-roll, *n.* பெயர்ப்பட்டியல்; தொடர் வரிசை; செப மாலை.
beads'man, *n.* வழிபாட்டுப்பணியாளர், வேண்டுதல் செய் வதற்காக மானியம் பெற்றவர்.
beads'woman, *n.* beadsman என்பதன் பெண்பால் வடிவம்.

**bead'y**, *a.* உருண்மணிபோன்ற ; சுடரொளி வீசுகிற, மின்னி மினுங்குகிற.

**bea'gle**, *n.* முயல் வேட்டை நாய்வகை ; ஒற்றர் ; தலையாரி ; சிறு சுறுமீன் வகை ; *v.* முயல் வேட்டையாடு.

**bea'gler**, *n.* முயல் வேட்டையாளர்.

**bea'gling**, *n.* முயல்வேட்டை, நாய்களைக் கொண்டு வேட்டையாடுதல்.

**beak**, *n.* பறவைகளின் அலகு ; ஆமையின் முகறை ; கொடு மூக்கு ; பண்டைப் போர்க்கப்பலின் தகர்முனை ; கெண்டியின் தூம்பு, கலத்தின் கூர்வளைவான அருகு.

**beaked**, *a.* அலகு உடைய, கூர்வளைவான அருகுடைய.

**beak'er**, *n.* பருகுகலம், கொடுகலம் ; ஆய்களங்களுக்குரிய மூக்குடைய ஊற்றுகலம் ; கல அளவு நீர்மம் ; (தொ.) Beaker Folk, வெண்கலஊழித் தொடக்கத்தில் ஐரோப்பாக் கண்டத்தில் வாழ்ந்த மக்கள்.

**be'-all**, *n.* முழுவாழ்க்கை, முழுப்பொருள்.

**beam**, *n.* உத்தரம், தூலம் ; பாவுநூல் வரிந்து சுற்றப்படும் தறிக்கட்டை ; ஏர்க்கால் ; துலையின் கோல் ; நங்கூரத் தண்டு; இயந்திரத்தின் நெம்புகோல் ; வண்டியின் நெடுங்கட்டை ; கப்பலின் பக்கம் ; மான்கொம்பின் நடுத்தண்டு ; ஒளிக்கதிர் ; மின்கதிர் ; ஒளிக்கோடு, மின்கதிர்க்கற்றை ; அவிரொளி, சூழ்ஒளி ; ஒளி படைத்த நோக்கு ; முறுவல் ; (விவி.) பெருங் குற்றம் ; *v.* ஒளிவீசு, கதிருமிழ் ; முறுவலி ; இலங்கு, தோற்று ; ஒளிக்கதிர் மூலம்தெரிவி ; உத்தரத்தின்மீது வை ; (தொ.) beam system, ஒருதிசையில் மட்டும் ஒலிபரப்பும் கம்பியில்லாத்தந்தி முறை ; fly the beam, ride the beam, வானொலிக் கதிரலையின் திசையில் விமானம் செலுத்து; off the beam, வானொலிக் கதிரலைக் கோட்டிலிருந்து விலகி ; இலக்குத்தவறி ; on the beam, கப்பல் போகும் திசைக்குச் செங்கோணத்தில்; திசைகாட்டும் அடையாளத்தின் துணைகொண்டு ; வானொலிக் கதிரலை காட்டிய நெறியில் ; சரியாக இலக்குமீது.

**beam'-ends'**, *n. pl.* கப்பலின் குறுக்குவிட்ட முனைகள்.

**beam'-en'gine**, *n.* (பொறி.) சக்கரத்துடன் இணைக்கப்பட்ட உந்து தண்டினையுடைய நீராவி இயந்திரம்.

**beam'er**, *n.* தறிக்கட்டையின்மேல் இழை சுற்றுபவர் ; இழை சுற்றுப் பொறி.

**beam'iness**, *n.* ஒளிப்பொலிவு ; தறிக்கட்டை போன்ற அகல் விரிவு.

**beam'ing**, *n.* ஒளிகாலுதல் ; *a.* ஒளிகாலுகிற, முறுவலிக்கிற, மகிழ்ச்சி நிலவுகிற, மலர்ச்சியுடைய.

**beam'ingly**, *adv.* புன்முறுவலுடன்.

**beam'less**, *a.* ஒளியற்ற.

**beams**, *n. pl.* கப்பலின் குறுக்குவிட்டங்கள்.

**beam'-trawl**, *n.* தண்டிமுவை வலை, தண்டினைக் கொண்டு வாய் விரிவாக வைக்கப்பட்டுள்ள இழுவை வலை.

**beam'y**, *a.* ஒளிவீசுகிற, கதிர் உமிழ்கிற ; தறிமரம்போல் பருமனான ; அகன்ற.

**bean**, *n.* பயிற்றினம், அவரை, மொச்சை, அவரையினம் ; கொட்டை, பருப்பு, காப்பிக்கொட்டை ; (தொ.) full of beans, கிளர்ச்சியுடன்; give one beans, கடுமையாக நடத்து.

**bean'-ca'per**, *n.* ஊறுகாய் போட உதவும் மலர் மொக்கு வகை தரும் செடியினம்.

**bean'feast, bean'o**, *n.* முதலாளிகள் பணியாளர்களுக்கு அளிக்கும் ஆண்டு விருந்து ; கொண்டாட்டம், களியாட்டம்.

**bean'-king**, *n.* களியாட்டங்களில் தலைமை வகிப்பவர்.

**bear**[1], *n.* வாற்கோதுமை.

**bear**[2], *n.* கரடி ; பாங்கறியா முரட்டு ஆள் ; பங்குக்களவிலை யிறக்கச் சூதாடி, மலிவு விலையில் வாங்கும் நாட்டத்துடன் பின்விலைக்கு விற்று விலைகுறைப்பவர் ; பங்குக்களவிலை யிறக்கம் ; தொளை போடும் பெரிய பொறி ; (வான்.) விண்மீன் குழுக்கள் இரண்டில் ஒன்று ; *v.* பங்குக்கள விலை யிறக்கம் நாடித் துணிச்சல்சூதாட்ட முறை நடத்து.

**bear**[3], *v.* பெறு, ஈனு ; பெற்றளி ; உண்டுபண்ணு ; விளைவி.

**bear**[4], *v.* எடுத்துச்செல், கொண்டேகு ; சும, தாங்கு ; சுமையாயிரு ; சார்த்து ; சாய்வி ; படு, ஆட்படு, ஏற்றனுபவி ; கொண்டிரு, பெற்றிரு ; உரிமையாகப் பெற்றிரு; மேற்கொள்; அடை, எய்தப்பெறு; ஏற்றுக் கொள், பொறுத்துக்கொள் ; ஒத்துக்கொள், இசைவளி ; ஆதரவளி ; கொள்; கைக்கொள், பிடித்திரு ; உளங்கொள் ; தொடர்புகொள் ; உறவுகொள் ; பொருள்கொள் ; பொருத்த மாயிரு, உகந்ததாயிரு, தகவுடையதாயிரு ; நடத்து ; செலுத்து ; வெற்றிகரமாகக் கடந்துசெல், நிறைவேற்று ; நடந்துகொள் ; அளி, வழங்கு ; பங்குகொள், உடனிடுபடு ; கட்ட ஆட்டத்தின் முடிவில் பலகைதுடைத்துக் காய்களை அப்புறப்படுத்து ; (தொ.) bear a hand, உதவு ; bear down, நெருக்கித்தள்ளு, அழுத்து ; bear out, வெற்றியுடன் மீளு ; எண்பித்துக்காட்டு ; bear upon, சார்ந்ததாயிரு ; bear with, பொறுத்துக்கொள்.

**bear'able**, *a.* பொறுத்துக்கொள்ளக் கூடிய.

**bear'-bait'ing**, *n.* கரடி வெருட்டு, காடிமீது நாய்களை ஏவி விட்டு வேடிக்கைபார்க்கும் விளையாட்டு.

**beard**, *n.* தாடி ; விலங்குகளின் தாடைமயிர் ; சிப்பியின் செவுள்கள் ; கிளிஞ்சில் வகைகளில் ஒட்[illegible]கொண்டிருக்கும் நூல்போன்ற உறுப்பு ; பறவை அ[illegible]ன் பொடிமயிர் ; சுணை, கூர், புல்கதிர் ; தூகம், கூலக் கதிர்த்தோகை ; கொக்கி வளைவுகணையிறகுத்துய் ; *v.* வெளிப்படையாய் எதிர் ; தாடியைப் பிடித்திழு.

**beard'ed**, *a.* தாடியுள்ள ; சுணைபூத்த ; தூகம் உடைய ; இறகுத்துய் வாய்ந்த.

**beard'less**, *a.* தாடியற்ற ; முழுமனிதப் பருவம் அடையாத, இளம்பிள்ளைப் போக்கான, அனுபவமில்லாத.

**bear'er**, *n.* எடுத்துச்செல்பவர் ; எடுத்துச் செல்வது ; பிணம் சுமப்பவர் ; பல்லக்குத் தூக்குபவர் ; குற்றேவல் புரிபவர் ; கையாள் ; செய்தி அல்லது கடிதம் கொண்டுவருபவர் ; பணமுறி கொண்டு வருபவர் ; (தொ.) bearer company, (படை.) போர்க்களத்தில் காயமுற்றோரைக் கவனித்துப் பேணிக் கொணரும் மருத்துவப்படை.

**bear'-garden**, *n.* கரடி வெருட்டுக்கான வளைவு ; அமளி மிக்க அவை, அமர்க்களம்.

**bear'ing**, *n.* நடத்தை, ஒழுகலாறு ; கோலம், நடையுடைத் தோற்றம் ; மரபுவழிச் சின்னக் குறிப்பு ; தொடர்புக் கூறு, நிலை ; திசைக்கூறு, திசைநிலை ; தாங்குதளம் ; *a.* விளைவு தருகிற ; தாங்குகிற.

**bear'ings**, *n. pl.* உராய்தலைத்தாங்கும் பொறியின் உறுப்புக் கள் ; இசையளவுகள்.

**bear'ish**, *a.* கரடிபோல் நடந்துகொள்கிற.

**bear'leader**, *n.* கரடியை வேடிக்கைகாட்டக் கொண்டு வருபவர் ; வெளிநாட்டு உலாவுக்குப் புறப்படும் இளைஞனின் பொறுப்பாசிரியர்.

**bear's-breech**, *n.* கழுதைமுள்ளி.

**bear'skin**, *n.* கரடித்தோல் ; மேலங்கிகளுக்கான முரட்டுக் கம்பளித்துணி ; நீண்டு பரந்த மயிர்த்தொப்பி.

**bear'-ward**, *n.* கரடிகளை வைத்திருப்பவர்.

**beast**, *n.* விலங்கு, நாற்கால்மிருகம் ; கால்நடைகள் ; ஏறிச்செல்லும் விலங்கு ; சுமைவிலங்கு ; இழுப்புவிலங்கு; கொடியவர் ; காட்டாள் ; வெறுப்புக்குரியவர் ; (தொ.) The Beast, இயேசுநாதரின் எதிரி ; the beast, மனிதனுக்கு இருக்கும் விலங்கியல்பு, கீழ்ப்பண்பு.

**beast'-fa'ble**, *n.* விலங்குக்கதை, விலங்குகள் மனிதர்களைப் போலப் பேசும் கட்டுக்கதை.

**beast'hood**, *n.* விலங்குநிலை, விலங்கியல்பு.

**beast'ings**, *n.* = beestings.

**beast'like**, *a.* விலங்கு போன்ற; *adv.* விலங்கினைப்போல.

**beast'liness**, *n.* விலங்கியல்பு, மிருகத்தனம்; பெருந்திண்டி; பெருங்குடிமயக்கம்; பண்புக்கேடு; வெறுக்கத்தக்க நிலை.

**beast'ly**, *a.* விலங்கு போன்ற, விலங்கின் செயல்களுள்ள; மனிதர் பயன்படுத்தத் தகுதியற்ற; விலங்குத்தனமாகச் சிற்றின்ப நாட்டமிக்க; அழுக்கடைந்த; விரும்பத்தகாத; *adv.* மிகக் கேடாக, மோசமாக; வருந்தத்தக்க நிலையில்.

**beat**, *n.* முரசொலி, முரசறைவு, முரசடித்துத் தெரிவிக்கப்படும் அறிவிப்பு; இசைக்குழுத்தலைவரின் கோலசைவு; ஒலி அழுத்தம்; தாளம்; அடிப்பு, துடிப்பு; அடுத்தடுத்து அடிக்கும்போது கேட்கப்படும் ஒலி, மணிப்பொறித் துடிப் பரவம்; காவலர் கடமைச் சுற்று, முறைகாவல்; ஒருவர் வழக்கமாகப் போய்வரும் வழி; வேட்டையாடும் எல்லை; சந்திப்பிடம்; *a.* சோர்ந்துபோன, களைப்படைந்த; மூட்டு வீக்கங் கண்டுள்ள; *v.* அடி; துவை, புடை; தட்டு; ஒழுங்காய் ஓசைபடு, அடுத்தடுத்தடி; மோது; உடை, நைய நொறுக்கு; அடித்து ஊக்கு; ஆட்டு, அலைத்துக் கொள்; தோற்கடி; வெல்; வேட்டைக்காட்டைக் கிளரிக் கலை; கடை, கலக்கு, செய்யமுடியாததாயிரு, ஆற்றல் கடந்ததாயிரு; அடித்துத் தகடாக்கு; தடம்பதியவை; தாளமிடு, கோலால் தாளங்குறி.

**beat'en**, *a.* அடிபட்ட; தோற்ற; தேய்ந்த, அடித்துத் துவைக்கப்பட்ட; சோர்ந்துபோன; இடுக்கணழிந்த; மனம் வெறுத்துப்போன.

**beat'er**, *n.* வேட்டை விலங்குகளைக் கலைத்து வெளிக் கொணர்பவர், அடித்துத் துவைப்பதற்குரிய கருவி.

**beatif'ic, beatif'ical**, *a.* தெய்விகமான; பேரின்பம் தரவல்ல.

**beatifica'tion**, *n.* பேரின்ப நிலை எய்தச்செய்தல்; பேரின்ப நிலை அடைதல்; ரோமன் கத்தோலிக்க சமய குரவர் வரிசையில் சேர்ப்பதில் முதற்படி; இறந்தவர் பேரின்ப நிலையிலிருக்கிறார் என அறிவித்தல்.

**beat'ify**, *v.* இன்பநிலையிலிருக்கச்செய்; ரோமன் கத்தோலிக்கச் சமயமுறைப்படி பரமண்டலத்தில் நிலைபேறுடைய இன்பம் துய்க்கிறாரென அறிவி.

**beat'ing**, *n.* தோல்வி; அடித்தல், மோதுதல், ஒறுத்தல்; துடிப்பு; வேட்டை விலங்குகளைக் கிளப்புதல்; மூளையைச் செலுத்தல்.

**beat'itude**, *n.* விண்ணுலக இன்பம், பேரின்பம்; பழைய முறையிலுள்ள திருக்கோயில்களில் திருச்சபைத் தலைவர்களுக்குக் கொடுக்கப்படும் பட்டம்.

**beat'itudes**, *n. pl.* விவிலிய நூலில் மத்தேயுப் பிரிவில் இயேசுநாதர் வகுத்து உரைத்த திருவருட்பேறுகள்.

**beau**, *n.* பிலுக்கன், பகட்டுக்காரன், ஆகுலநீரன், பெண்களை வட்டமிட்டுத் திரிபவன், காதலன்; *pl.* beaux.

***beau geste***, (பிர.) *n.* பெருந்தகைமை காட்டும் நடவடிக்கை; பெருந்தன்மையான செயல்.

**beau ide'al**, *n.* மூல முன்மாதிரி, எடுத்துக்காட்டாக விளங்குவது, இலட்சியம்; சால்பு.

**beau'ish**, *a.* பகட்டுத்தனமான, பிலுக்கனின் இயல்புள்ள.

***beau monde***, (பிர.) *n.* நாகரிக உலகம், உவ்கையர் உலகு.

**beaumontage', beaumontague'**, இரும்பு-மரவேலைகளில் வெடிப்புகளை நிரப்புவதற்கான சேர்மானப் பொருள்.

**Beaune**, *n.* பிரெஞ்சு தேசத்துப் பர்கண்டியில் (Burgundy) வழங்கும் சிவப்புநிறமான கொடிமுந்திரித் தேறல்வகை.

**beaut'eous**, *a.* (செய்.) கவினுர்ந்த.

**beauti'cian**, *n.* ஒப்பனை செய்பவர், கோலம்செய் நிலையம் வைத்திருப்பவர்.

**beaut'ies**, *n. pl* அழகிய வாசகங்கள், நயமுடைய எடுகுறிப்புக்கள்.

**beautifica'tion**, *n.* அணி செய்வித்தல், ஒப்பனை.

**beau'tifier**, *n.* ஒப்பனை செய்பவர்; அழகளிக்கும் பொருள்.

**beaut'iful**, *a.* அழகிய, கண்ணுக்கினிய, வனப்புள்ள, செவிக்கினிய, சிந்தைக்கினிய; கருத்தைக் கவர்கிற; மன நிறைவுதருகிற.

**beaut'ify**, *v.* அழகுபடுத்து, கோலஞ்செய்.

**beaut'y**, *n.* அழகு, வனப்பு, கண்ணுக்கினிமை, அழகுக்கூறு; விஞ்சிய சிறப்பு, நேர்த்தி; வடிவமைதி, நிற அமைதி; கூட்டிசைவு, செப்பம்; முழுநிற வனப்பு, அழகுப்பிழம்பு; அழகுரு; அழகாரணங்கு; அழகுத்துறை; அழகியர் தொகுதி; மனநிறைவுதரும் அழகுக்கூறு; இனத்தில் நேர்த்திமிக்க ஒன்று; (தொ.) beauty parlour, கோலம்செய் நிலையம், பெண்களுக்குரிய ஒப்பனைமனை; beauty sleep, நள்ளிரவுக்கு முந்திய துயில், புதுக்கிளர்ச்சி விளைக்கும் தூக்கம்; beauty spot, அழகினை எடுத்துக்காட்டுதற்காக முகத்தில் அமையும் மறு அல்லது மச்சம்.

**beau'xite**, *n.* = bauxite.

***beaux yeux***, (பிர.) *n.* கவின் கண்கள்; அழகிய அணங்கு.

**beav'er**[1], *n.* நீர்நாய்; நில நீர்வாழ் எலியுருவ விலங்கு; நீர்நாயின் நுண்மயிர்த்தோலாலான தலைக்கவிகை; நீர் நாயின் நுண்மயிர்த் தோலாலான கையுறை; கனத்த கம்பளித்துணி.

**beav'er**[2], *n.* போர்க்கவச அமைப்பில் முகத்தின் கீழ்ப் பக்கத்தைக் காக்கும் பகுதி.

**beav'er-board**, *n.* கட்டிடங்களுக்குப் பயன்படும் நார் அட்டை.

**beav'ered**, *a.* போர்க்கவசத்தில் முகத்தின் கீழ்ப்பக்கத்தைக் காக்கும் அமைப்புடைய; முகத்தின் கீழ்ப்பகுதி காக்கும் அமைப்புடைய கவசமணிந்த.

**beav'erteen**, *n.* கண்ணிகள் வாய்ந்த ஈரிழைக்குறுக்குப் பின்னலுடைய பருத்தியாடை வகை.

**beav'er-tree, beav'er-wood**, *n.* நீர்நாய் தின்னும் பட்டைகளையுடைய மரவகை.

**beav'ery**, *n.* நில நீர் வாழ் விலங்குவகையை வளர்க்கும் இடம்.

**beblubb'ered**, *a.* அழுது உருக்குலைந்த.

**be'bop**, *n.* கொந்தளிப்பான இசைவகை.

**becall'**, *v.* குறித்துப்பேசு, திட்டு.

**becalm'**, *v.* அமைதிப்படுத்து; காற்றில்லாமல் கப்பலை ஓடாது நிற்கவை.

**becalmed'**, *a.* காற்றின்மையால் அசைவற்று நின்றுபோன.

**became'**, *v.* become என்பதன் இறந்தகால வடிவம்.

**because'**, *adv.*, *conj.* காரணத்தினால், நிமித்தமாக; (தொ.) because of, முன்னிட்டு.

**beccafic'o**, *n.* இத்தாலியர்கள் விரும்பியுண்ணும் சிறிய நாடோடிப் பறவைவகை; *pl.* beccafic'os.

**be'chamel**, *n.* வெண்ணெய் - மாவு - பாலேடு முதலியவை கலந்துள்ள வெள்ளைக்குழம்பு வகை.

**bechance'**, *v.* தற்செயலாக நேர்; *adv.* தற்செயலாய், எதிர்பாராமல்.

**becharm'**, *v.* மயக்கு, மருட்டு.

***beche-de-mer***, (பிர.) *n.* சீனமக்கள் விரும்பியுண்ணும் கடல்வாழ் கம்பளிப்பூச்சி வகை.

**beck**[1], *n.* சிற்றாறு, மலைப்பகுதியிலுள்ள ஓடை.

**beck**[2], *n.* சைகை, தலையசைப்பு; விரல் அசைப்பு; குறிப்பாக உணர்த்தப்படும் ஆணை; *v.* சைகை செய்; தலை அல்லது விரல் அசைத்துக் கூப்பிடு.

**beck'et**, *n.* (கப்.) தளர்ந்த கயிறுகள், பாய்மரக் கயிறுகளைப் பிணித்திருக்குவதற்கான அமைப்பு.

**beck'on**, *v.* அழைக்கும் அடையாளம் காட்டு, தலையை அசை ; ஊமைச்சைகை செய்.

**becloud'**, *v.* மேகங்களினால் மறை ; மங்கவை, நிழலடி.

**become'**, *v.* உண்டாகு ; நேர் ; ஆகத்தொடங்கு; பொருந்து, தகுதியாயிரு ; அணிசெய், நயம்படத்தோன்று.

**becom'ing**, *a.* தக்க, ஏற்ற ; பொருந்துகிற, இசைவான, நன்கு இணங்குகிற.

**Becque'rel rays**, *n. pl.* கதிரியக்க நுண்மங்கள் உமிழும் கதிர்கள்.

**becurl'**, *v.* சுருள்.

**bed'**, *n.* படுக்கை ; கட்டில் ; விலங்குகளின் பாயல் ; படுகை; கடல் ஆறு ஆகியவற்றின் அடிப்பரப்பு ; பாத்தி ; கிளிஞ்சில் ; கோற்பந்தாட்ட அடித்தட்டு ; பீரங்கிவண்டியின் உடற் பகுதி ; (மண்.) நில அடுக்கு, அடை, படலம் ; திருமண இணைவு ; மன்றற்படுக்கை ; மண உரிமைக் கடப்பாடுகள் ; *v.* படுக்கை போடு; படுக்கவை ; பள்ளி கொள் ; கூடிமுயங்கு ; பாத்தியிற் பயிரிடு, நடவுசெய் ; பதித்துவை; இடையீடாக அமை, இடையடுக்காக்கு ; (தொ.) bed of roses, பூம்படுக்கை, இனிய இடம், இன்பப் பணியிடம்; bring to bed, மகப்பேறுறுவி; make a bed, படுக்கை விரிப்புக்களை அமைவுபடுத்து.

**bedab'ble**, *v.* அழுக்குநீர் அல்லது குருதிகொண்டு தெறி, நனைவி ; கறைப்படுத்து.

**bedad'**, *int.* ஆண்டவன் பெயரால், கடவுள் ஆணையாக.

**bedagg'le**, *v.* சேற்றினூடாக இழு, இழுத்து அழுக்காக்கு; சேறுபுரட்டு.

**bedaub'**, *v.* அப்பு ; வண்ணம் பூசு , அழுக்காக்கு ; பகட்டாக உடுத்து.

**bedaze'**, **bedazz'le**, *v.* கண்கூசவை, மேம்பட்ட ஒளியுடன் பகட்டு, மலைக்கவை, ஆற்றல்காட்டி அடக்கு.

**bedazz'lement**, *n.* மலைப்பூட்டுதல்.

**bed'bug**, *n.* மூட்டுப்பூச்சி.

**bed'chamber**, *n.* பள்ளியறை ; (தொ.) Lord of the bed chamber, Lady of the bed chamber, அரண்மனைப் பள்ளியரங்கப் பணிமுதல்வர்.

**bed'-closet**, *n.* பள்ளியறையாகப் பயன்படும் உள்ளறை.

**bed'-clothes**, *n.* படுக்கைக்குரிய உடைகள்.

**bed'cover**, *n.* படுக்கையின் விரிப்பு, படுக்கை விரிப்பவர் ; நாற்று நடுபவர்.

**bedd'er**, *n.* மலர்ப்பாத்தியில் நடுவதற்குரிய நாற்று.

**bedd'ing**, *n.* படுத்தல்; படுக்கை வசதி; படுக்கைப்பொருள்கள்; மெத்தை விரிப்புக்கள் ; கால்நடைகளின் கிடைப்பட்டி ; அடிப்படலம் ; அடியடுக்கு, அடித்தளம் ; (மண்.) அடுக்கமைவு, அடையடுக்கு.

**bedeck'**, *v.* ஒப்பனைசெய், கோலம் பண்ணு, அணிசெய்.

**bed'eguar**, *n.* மலர்ச்செடி வகைகளின் பூச்சி துளைப்பதனால் உண்டாகும் பாசி போன்ற கரணை.

**bed'el**, **bedell**, *n.* ஆக்ஸ்போர்டு (Oxford) கேம்பிரிட்ஜ் (Cambridge) பல்கலைக்கழகங்களில் தண்டகராகப் பணி செய்பவர்.

**bedev'il**, *v.* பேய்த்தனமாக நடத்து, கொடுமைசெய் ; நாய் பேயென்று கூறித்திட்டு ; பேயாட்டம் ஆட்டு ; பேயினின்று விடுபடு ; கெடு, பாழாக்கு; குழப்பு.

**bedev'illed**, *a.* கேடுகெட்ட, பாழான, பேய்பிடித்த, பேய்த்தனமான.

**bedev'ilment**, *n.* பேய்பிடித்தல்; தாங்க முடியாத தொல்லை; பழிகேடு, கலக்கம்.

**bedew'**, *v.* பனித்துளியால் நனை ; துளிசிதறு.

**bed'fast**, *a.* படுக்கையாய்க் கிடக்கிற.

**bed'fellow**, *n.* படுக்கைப் பங்காளி, மிக நெருங்கிய கூட்டாளி.

**bedim'**, *v.* மங்கலாக்கு, நிழலடிப்புச்செய்.

**bediz'en**, *v.* பகட்டாக உடுத்து.

**bediz'ened**, *a.* பகட்டாக உடுத்துள்ள.

**bed'key**, *n.* கட்டில் சட்டங்களைப் பூட்டிக் கழற்றுவதற்கான கருவி.

**bed'lam**, *n.* பித்தர் காப்பகம், உன்மத்தர் மருத்துவமனை ; *a.* பித்தர் விடுதிக்குரிய.

**bed'lamism**, *n.* பைத்தியக்காரத் தன்மை.

**bed'lamite**, *n.* பித்தன், உன்மத்தன் ; *a.* பித்துப்பிடித்த.

**Bed'lington, Bedlington terrier**, *n.* குறுமயிரும் சிறு தலையும் நீளுடலும் உடைய வேகமிக்க வீரக்கேளிக்கைகளுக்குரிய நாய்.

**bed'maker**, *n.* படுக்கையை ஒழுங்கு செய்பவர்.

**bed'-of-hon'our**, *n.* மாண்ட புகழ்வீரர் கல்லறை.

**bed'-of-just'ice**, *n.* பிரான்சு (France) நாட்டு மாமன்றத்தில் உள்ள அரசரின் அரியணை ; அரசர் திருவிருக்கை மேற்கொள்ளும் மாமன்றக்கூட்டம்.

**bed'ouin**, *n. sing., pl.* அராபிய நாடோடி ; *a.* அராபிய இனத்துக்குரிய ; நாடோடியான, கூடாரமடித்து வாழ்கிற.

**bed'pan**, *n.* நோயாளியின் கழிகலம், கனற்சட்டி.

**bed'-plate**, *n.* பொறியின் அடித்தட்டு.

**bed'post**, *n.* கட்டில்கால், படுக்கையின் மூலை உதைவு.

**bedrab'bled**, *a.* மழையாலும் சேற்றாலும் அழுக்கடைந்த.

**bedrag'gle**, *v.* சகதியிலிட்டிழு, உடுப்பு முதலியவற்றைச் சேற்றில் இழுத்து அழுக்காக்கு.

**bedrench'**, *v.* நீரில் நனை, ஈரமாக்கு.

**bed'rid**, **bed'ridden**, *a.* பாயும் படுக்கையுமாய்க் கிடக்கிற; மூப்பினால் தளர்ந்த ; நோயுற்ற ; ஆற்றல் ஒடுங்கிய, இளைத்துப்போன.

**bed'rock'**, *n.* அடிநிலப்பாறை, புறத்தே காணப்படுபவைகளுக்கு அடியிலுள்ள கெட்டியான பாறை ; மூலக்கோட்பாடு ; மிகக்குறைபடு நிலை ; இழிவுநிலை ; *a.* அடித்தளம் சார்ந்த ; எல்லாவற்றிற்கும் அடியிலுள்ள.

**bed'room**, *n.* பள்ளியறை, படுக்குமிடம்.

**bedrop'**, *v.* துளிகளாக விடு ; தெளி.

**bedropped'**, **bedropt'**, *a.* துளிகளாகத் தெளிக்கப்பட்ட, தூவப்பட்ட.

**bed'side**, *n.* படுக்கையின் பக்கம் ; நோயாளியின் படுக்கை மருங்கு ; *a.* படுக்கை அருகான ; படுக்கை இடத்துக்குரிய ; (தொ.) bedside book, துயில்வராத இரவுகளில் படிப்பதற்குத் தகுதியான சுவடி ; bedside manner, நோயாளியின் முன்னிலையில் மருத்துவர் நடந்துகொள்ளும் முறை.

**bed'-sitt'er**, **bed'-sitt'ing-room**, *n.* படுப்பதற்கும் அமர்வதற்குமாகப் பயன்படும் அறை.

**bed'sore**, *n.* படுக்கைப்புண், நீண்டகாலம் நோயுற்றுப் படுக்கையில் கிடப்பதனால் தோன்றும் புண்.

**bed'spread**, *n.* படுக்கைப் பகல்நேர மேல்விரிப்பு.

**bed'-staff**, *n.* படுக்கைச்சட்டம் ; முரட்டுத்தடி; *pl.* bed'-staves.

**bed'-stead**, *n.* கட்டில் ; படுக்கைச் சட்டம்.

**bed'straw**, *n.* முன்பு படுக்கையாகப் பயன்படுத்தப்பட்ட புல்வகை.

**bed'-table**, *n.* படுக்கையிலிருப்பவர் பயன்படுத்துவதற்கான மேசை.

**bed'tick**, *n.* பஞ்சடைப்பதற்குரிய படுக்கை உறை.

**bed'time**, *n.* படுக்கும் வேளை, துயில்கொள்ளும் நேரம்.

**beduck'**, *v.* நீருக்குள் அமிழ்த்து.

**bedung'**, *v.* எருவிடு ; சாணம் பூசி அழுக்காக்கு.

**bedust'**, *v.* புழுதி அளை.

**bed'ward**, **bed'wards**, *adv.* படுக்கை இருக்கும் திசையில் ; படுக்கைநேரம் நோக்கி.

**bedwarf'**, *v.* குள்ளமாக்கு ; குட்டையாக்கு.

**bedye'**, *v.* சாயமிடு ; கறைப்படுத்து.

**bee**, *n.* தேனீ, சுரும்பு, தும்பி, வண்டு ; வண்டுபோன்ற பூச்சி வகை ; கவிஞர் ; சொடியர், சுறுசுறுப்பாக வேலை செய்பவர் ; கூடியுழைப்பவர் ஈட்டம் ; கூட்டுக் களியாட்டக்குழு ; (தொ.) a bee in one's bonnet, ஒன்றைக் குறித்துப் பித்துக்கொள்ளும் மனப்போக்கு.

**bee'-bread**, *n.* மலர்த்துகள், வண்டுணூ.

**beech**, *n.* (தாவ.) புங்கமரம் ; புங்கமரக்கட்டை.

**beech'-drops**, *n.* புங்கமர வேர்களை அழிக்கும் ஒட்டுண்ணிச் செடியினத்தின்வகை.

**beech'en**, *a.* புங்கமரத்தால் செய்யப்பட்ட.

**beech'-fern**, *n.* ஈரச்சுவர் போன்ற இடங்களில் வளரும் சூரல் புதர்வகை.

**beech'-mar'ten**, *n.* வெள்ளை அடிப்பக்கத்தையுடைய கீரி யினத்தின்வகை.

**beech'mast**, *n.* புங்கங்கொட்டை.

**beech'-oil**, *n.* புங்க நெய்.

**bee'-eat'er**, *n.* பஞ்சுவிட்டான், தேனீ போன்ற பூச்சிகளைத் தின்னும் பறவைவகை.

**beef**, *n.* மாட்டிறைச்சி ; குதிரை முதலியவற்றின் இறைச்சி ; இறைச்சிக்காகக் கொழுக்க வைக்கப்பட்ட மாடுகள் ; கொழுக்க வைக்கப்பட்டுள்ள மாடுகளின் உயிரற்ற உடலம் ; தசை ; தசைவலு.

**beef'-brained**, *a.* அறிவற்ற.

**beef'-brew'is**, *n.* மாட்டிறைச்சிச்சாறு.

**beef'eater**, *n.* மாட்டிறைச்சி தின்பவர் ; உண்ணிகளைக் கொத்தித் தின்னும் சிறு பறவைவகை ; மெய்க்காவல் படையினர் ; லண்டன் சிறைக்கோபுரக் (Tower of London) காவலர்.

**beef'-ham'**, *n.* மாட்டிறைச்சி உப்புக்கண்டம், மாட்டிறைச்சி உணங்கல்.

**beef'iness**, *n.* மாட்டிறைச்சி போன்றிருத்தல் ; கொழுமழுப்பு ; திண்ணிய தன்மை ; உணர்ச்சியின்மை.

**bee'-flower**, *n.* தேனீக்களால் மலர்த்துகள் கொண்டுவந்து பொலிவூட்டப்படும் மலர்.

**beef'steak**, *n.* வறுப்பதற்கான பெரிய மாட்டிறைச்சிக் கண்டம்.

**beef'tea'**, *n.* கொதித்து வடிகட்டிய மாட்டிறைச்சிச்சாறு, நோயாளிகட்கு ஊக்கந்தரும் சூப்பி உணவுவகை.

**beef'-witt'ed**, *a.* அறிவுக்கூர்மையற்ற, முட்டாளான.

**beef'-wood**, *n.* சவுக்கு முதலிய மரங்களின் செந்நிறக்கட்டை.

**beef'y**, *a.* மாட்டிறைச்சி போன்ற ; வன்பொருளான, கெட்டியான ; கொழுத்த ; தசைவலிமிக்க ; உணர்ச்சியற்ற.

**bee'-glue**, *n.* தேனீப்பசை, தேனீக்கள் மரங்களினின்றும் திரட்டி ஒட்டுப்பொருளாகவும் மெருகுநெய்யாகவும் பயன்படுத்தும் பசைப்பொருள்.

**bee'hive**, *n.* தேன்கூடு ; தேனீ வளர்க்கும் பெட்டி ; (தொ.) beehive house, பண்டைய குவிமாட வீடு ; beehive tomb, குவிமாட வடிவமுள்ள பழங்காலக் கல்லறை.

**bee'house**, *n.* தேனீ வளர்ப்பிடம்.

**bee'keeper**, *n.* தேனீ வளர்ப்பவர்.

**bee'keeping**, *n.* தேனீ வளர்ப்பு.

**bee'-kite**, *n.* தேனீ - குளவி முதலியனவற்றைத் தின்னும் வல்லூறு போன்ற பெரிய வேட்டைப்பறவை.

**bee'-line**, *n.* நேர்வழி.

**Beel'zebub**, *n.* சாத்தான், பேய்.

**bee'-master**, *n.* தேனீ வளர்ப்பவர்.

**bee'-moth**, *n.* இளந்தேனீக்களைக் கொல்லும் முட்டைப்புழுக்களை ஈனும் அந்துப் பூச்சிவகை.

**been**, *v.* be என்பதன் முடிவெச்சம்.

**Bee'-or'chis**, *n.* தேனீ வடிவமைந்த மலருடைய செடிவகை.

**beer** [1], *n.* வாற்கோதுமைக் கள் ; புளிப்பேறிய குடிவகை ; (தொ.) beer and skittles, குடித்துக் கூத்தடித்தல், சோம்பர் வாழ்வு ; bitter beer, நறுமணம் சுவை ஊட்டப்பெற்ற வாற்கோதுமைக் கள்.

**beer** [2], *n.* பாவு நூல் முடிகளின் கூறு.

**beer'-engine**, *n.* மதுவை மிடாக்களிலிருந்து மேலே எடுப்பதற்கான பொறி.

**beer'-gar'den**, *n.* மதுவகைகளும் சிற்றுண்டிகளும் பரிமாறப்படும் மேசை வரிசைகளையுடைய தோட்டம்.

**beer'-house**, *n.* மதுக்கடை.

**beer'iness**, *n.* கள்ளுண்டநிலை.

**beer'-mon'ey**, *n.* ஏவலாளருக்கு மதுவகைகளுக்குப் பதிலாகக் கொடுக்கும் சம்பளப்படி உதவித்தொகை.

**beer'y**, *a.* கட்குடியால் பாதிக்கப்பட்ட ; வாற்கோதுமைக் கள்ளுக்குரிய.

**bee'-skep**, *n.* வைக்கோலால் ஆன தேனீக்களின் கூடு.

**bees'tings**, *n. pl.* சீம்பால், பசுவின் ஈன்றணிமைப்பால்.

**bees'wax**, *n.* தேன்மெழுகு ; *v.* தேன்மெழுகு கொண்டு மெருகிடு.

**bees'-wing**, *n.* மண்டிகப்படலம், நீடித்த புளிப்பேறிய தேறல்களில் தோன்றும் ஆடை.

**bees'-winged**, *a.* மண்டிகப்படலம் தோன்றச் செய்யும் அளவுக்குப் பழமை வாய்ந்த.

**beet**, *n.* அக்காரக்கிழங்கு, தித்திப்பான சாறுடைய கிழங்கு தரும் செடிவகை.

**beet'-fly**, *n.* அக்காரக்கிழங்குச் செடிகளுக்குக் கேடிழைக்கும் முட்டைப்புழுக்களை ஈனும் ஈ வகை.

**bee'tle** [1], *n.* கொட்டாப்புளி, வல்லிட்டிக்குற்றி ; *v.* கொட்டாப்புளியால் அடி.

**bee'tle** [2], *n.* வண்டு ; விட்டில், கிட்டப்பார்வையுள்ளவர் ; (தொ.) black beetle, கரப்பான்பூச்சி.

**bee'tle** [3], *a.* மயிரடர்ந்த, கவிந்த ; *v.* புடைத்திரு, பிதுங்கியிரு, கவிந்து தொங்கு ; ஊழ்போன்று அழிக்க அற்றம்பார் ; (தொ.) beetle brow, கவிந்த புருவங்கள்.

**bee'tle-brain**, *n.* மடையன்.

**beet'le-browed**, *a.* அடர்ந்து தொங்கும் புருவங்களையுடைய.

**beet'le-crusher**, *n.* பெரிய மிதியடி ; பாரிய காலடி ; ஊர்க்காவலர் ; காலாட்படையினர்.

**beet'le-eyed**, *a.* குருடான.

**bee'tlehead**, *n.* முட்டாள்.

**bee'tleheaded**, *a.* அறிவு குறைந்த.

**beet'ling**, *a.* கவிந்துள்ள, உந்தலான, முன்வந்து தொங்குகிற.

**beet'root**, *n.* அக்காரக்கிழங்கு வகை.

**beet'-sugar**, *n.* அக்காரக்கிழங்கிலிருந்து எடுக்கப்படும் சர்க்கரை.

**beeves**, *n. pl.* கால்நடைகள், எருதுகள்.

**befall'**, *v.* நிகழ், நேர், நேரிடு ; நேர்படு, வந்தெய்து *p. p.* befall'en ; *p. t.* befell'.

**befit'**, *v.* ஏற்புடைத்தாயிரு, தகுதியாகு, பொருந்து ; கடப்பாடு ஆகு ; உரிமை ஆகு.

**befitt'ing**, *a.* பொருந்துகிற.

**befog'**, *v.* மூடுபனியினால் கவி ; மறை.

**befool'**, *v.* முட்டாளாக்கு, ஏமாற்று, மூடன் எனக்கருதி நடத்து.

**before'**, *adv.* முன்னிலையில்; முற்பட, முந்தி; முன்னுட்களில், முன்பு; *rel. adv.* முன்னால், முன்பு; *prep.* எதிரில்; முன்பாக; முந்திக்கொண்டு; முன்னிலையில்; கண்காண; அறிவுடன்கூட, முற்பட்டு; விட, மேம்பட, முன்னுரிமைப்பட; சென்ற காலத்தில்; முன்னுட்களில்; மேம்பட்ட; (தொ.) before Christ (B.C), கிறித்துவுக்கு முன் (கி. மு.)

**before'hand**, *adv.* முன்னரே, முன்னதாக; குறித்தகாலத்துக்கு முன்; எதிர்நோக்கி; முன்னேற்பாடாக; தேவைகளை முன்னதாக நிறைவு செய்துகொண்டு; (தொ.) beforehand with the world, கையில் பணமுடன்.

**before'-men'tioned**, *a.* மேற்குறிப்பிட்ட.

**before'time**, *adv.* முற்காலத்தில்.

**befoul'**, *v.* அழுக்காக்கு, கெடு.

**befriend'**, *v.* உதவு, ஆதரி; நட்புக்காட்டு, நேசங்கொள்.

**befringe'**, *v.* ஓரங்களில் குஞ்சமிட்டு ஒப்பனைசெய்.

**befudd'le**, *v.* வெறிமயக்கமுறச் செய்.

**beg**, *v.* இர, பிச்சைகேள், பிச்சையெடுத்துப் பிழை; வேண்டு, இரந்துகேள்; மன்றாடு; குறையிர; உண்மையென்று வைத்துக்கொள்; (தொ.) beg off, மன்றாடிக்கேட்டு விடுதலை வாங்கிக் கொடு; go a-begging, go begging, மன்றாடித் தண்டம் முதலியவற்றிலிருந்து மன்னிப்புப் பெற்றுக்கொடு.

**begad'**, *int.* கடவுள்மேல் ஆணை!

**began'**, *v.* begin என்பதன் இறந்தகாலம்.

**begem'**, *v.* மணிக்கல் பதிக்கச்செய், இரத்தினக் கற்களைக் கொண்டு ஒப்பனை செய்.

**beget'**, *v.* ஈன்றெடு, பெறு; தோற்றுவி; தோன்ற ஏதுவாயிரு, விளைவி.

**begett'er**, *n.* தோற்றுவிப்பவர்; தந்தை; தோற்றுவிக்கும் நிமித்த காரணம்.

**begg'ar**, *n.* இரவலர், பிச்சைக்காரர்; வறியவர், ஏழை; கீழ்நிலையினர்; சிறியவர்; *v.* வறியராக்கு, இரவலர் நிலைக்குக் கொண்டுவா; வறிதாக்கு, போதாதாக்கு; (தொ.) beggar all description, வருணனை கடந்த பண்புடையதாயிரு.

**begg'ardom**, *n.* பிச்சைக்காரர் உலகு, இரவலர்குழாம்.

**begg'arliness**, *n.* இலம்பாடு, நல்குரவு, இழிதகவு, அற்பத்தனம்.

**begg'arly**, *a.* நல்கூர்ந்த; அறிவுகுறைந்த; இழிந்த, அற்பத்தனமான; கஞ்சத்தனமான; பயனற்ற; *adv.* அற்பத்தனமாக.

**begg'arman**, *n.* இரவலன்.

**begg'ar-my-neigh'bour**, *n.* சீட்டாட்டவகை, ஒருவர் மற்ற எல்லாருடைய சீட்டுக்களையும் தன் கைவசப்படுத்திக் கொள்ளும்வரை ஆடும் ஆட்டம்.

**begg'ary**, *n.* கடுவறுமை.

**begg'ing**, *n.* பிச்சையெடுத்தல், பிச்சைக்காரத் தொழில்; *a.* பிச்சைகேட்கிற.

**begift'**, *v.* பரிசுகள் நல்கு.

**begild'**, *v.* பொன்மெருகிடு; பொன் தகடு போர்த்து, பொன் வேய்.

**begin'**, *v.* தொடங்கிவை, முதற்செயல் நிகழ்த்து; முதற்கண் எடுத்துக்கொள்; புகுமுகஞ்செய், தோற்றுவாய்செய், செயல் தலைப்படு; தொடங்கு, பிறப்புறு, உண்டாகு, தோன்று; தோற்றங்கொள்.

**beginn'er**, *n.* தொடங்குபவர்; பணி பயில்பவர், தொடக்கக் கல்வி கற்பவர்.

**beginn'ing**, *n.* செயலாற்றத் தொடங்குதல்; தோற்றுவாய், தொடக்கம்; தோற்றக்காலம்; கருமுதல், பிறப்பு, மூல வடிவம்; மூலம்.

**beginn'ingless**, *a.* தோற்றுவிக்கப்படாத, தொடக்கமற்ற.

**begird'**, *v.* கச்சைகட்டு; வரிந்து சுற்று; சூழ், வளை.

**begird'ed, begirt'**, *v.* begird என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவங்கள்.

**begloom'**, *v.* சோர்வூட்டு, சோகம் பரப்பு.

**begnaw'**, *v.* கரம்பு அரித்துத்தின்னு.

**begone'**, *int.* போய்விடு, ஒழிந்துபோ, போய்த்தொலை.

**begon'ia**, *n.* அகவிதழ்கள் இன்றி வண்ண அலர்வட்டமுடைய செடிவகை.

**begor'ra, begor'rah**, *int.* கடவுள் ஆணையாக.

**begot'**, *v.* beget என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**begot'ten**, *v.* beget என்பதன் முடிவெச்ச வடிவம்.

**begrime'**, *v.* புழுதி படியவை, மாசுபடுத்து.

**begrudge'**, *v.* கறுவு, பொறுப்பின்மை காட்டு, பொறாமை கொள்.

**beguile'**, *v.* ஏமாற்று; மருட்டு, வசியப்படுத்து, வேடிக்கைக்காகப் பராக்குக்காட்டு.

**beguile'ment**, *n.* வஞ்சித்தல்.

***beguin***, (பிர.) *n.* ***beguine*** என்பதன் ஆண்பால்.

***beguinage***, (பிர.) *n.* நெதர்லாந்தில் (Netherlands) நோன்பு மேற்கொள்ளாத துறவுச்சார்பற்ற கன்னியர் தங்கும் நிலையம்.

***beguine***, (பிர.) *n.* நெதர்லாந்தில் நோன்பு மேற்கொள்ளாத துறவுச்சார்பற்ற கன்னிமாடத்துப் பெண்.

**beg'um**, (உரு.) *n.* முகம்மதிய அரசி; முஸ்லீம் பெருங்குடியணங்கு.

**begun'**, *v.* begin என்பதன் முடிவெச்ச வடிவம் (ஒரோவழி இறந்தகாலம்).

**behalf'**, *n.* சார்பு, நலன், ஆதரவு; நிமித்தம், காரணம், பொருட்டு.

**behave'**, *v.* நடந்துகொள், செயலாற்று, ஒழுகு; நடத்து; நல்லமுறையில் நடந்துகொள்; பணியாற்று.

**behav'iour**, *n.* நடக்கை; ஒழுகலாறு; ஒழுக்கம், நல்லொழுக்கம்; பிறரை நடத்தும் முறை; வாழ்க்கையின் போக்கு; இயங்குகிற முறை, தொழிற்படுகிற வகை.

**behav'iourism**, *n.* ஒழுக்கக்கொள்கை, அகப்பண்புகளுக்குப் புறவாழ்வுக்கூறுகளே காரணம் என்ற கோட்பாடு; (உள.) புறக்கூறுபாடுகளைக் கொண்டும் ஒழுக்கத்தைக் கொண்டும் ஒருவரைப்பற்றி ஆராயும் முறை.

**behav'iourist**, *n.* அகப்பண்புகளுக்குப் புறவாழ்வுக் கூறுகளே காரணம் என்னும் கோட்பாட்டாளர்; (உள.) புறவாழ்வுக் கூறுபாடுகளை ஆராய்ந்து அகத்தின் பண்புகளை உணர முயலுபவர்.

**behead'**, *v.* தலையை வெட்டு, தலைவாங்கும் தண்டனையளி, தூக்கிடு.

**behead'ing**, *n.* தலைவாங்கல், தூக்கிடல்.

**beheld'**, *v.* behold என்பதன் இறந்தகால - முடிவெச்ச வடிவம்.

**behem'oth**, *n.* (விவி.) மிகப்பெரிய பழங்கால விலங்குவகை, நீர்ப்பெரும் பகடு.

**behest'**, *n.* (செய்.) கட்டளை.

**behind'**, *n.* பின்புறம்; பின்பகுதி, பிட்டம்; *adv.* பின்னால், பின்பக்கமாக; பின்னோக்கி; பின்னணியில்; பின்பு, பிற்பட, சென்ற காலத்தில், முந்தி; *prep.* பின்னால், ஆதரவாக; பின்பற்றி, அடுத்து; அப்பால், தொலைப்பக்கத்தில்; பிந்தி; அடுத்தபடியாக; அடுத்த கீழ்ப்படியில்; பின்னிடைந்து; மறைந்து; மீப்பாக, எச்சமாக, சேமிப்பாக, இருப்பாக.

**behind'-door'**, *a.* கரவான, கள்ளத்தனமான.

**behind'-hand**, *a.* பிற்பட்ட, பிந்திய; பிந்துகிற, காலந்தாழ்த்துகிற; காலத்துக்கொவ்வாத, காலநிலைக்குப் பிற்பட்ட, பழமைப்பட்ட; வாய்ப்பு வளமற்ற; பாக்கி வைத்துள்ள; *adv.* காலப்பிற்பாடாக, நிலுவையாக.

**behold'**, *v.* பார், நோக்கித் தெரிந்துகொள்; அறி; கவனி *int.* அதோ பார்!

**behol'den**, *a.* ஒருவருக்குக் கடமைப்பட்ட ; நன்றிக் கடப்பாடுடைய.

**behoof'**, *n.* நலன், பயன், ஆதாயம்.

**behoove'**, *v.*=behove.

**behove'**, *v.* கடமையாயமை, ஏற்புடைத்தாயிரு, இன்றியமையாததாகு.

**behowl'**, *v.* ஊளையிட்டு நையாண்டி செய், ஊளையிட்டு அவமதி.

**beige**, *n.* சாயமிடாத கம்பளித்துணி.

**be'ing**, *n.* இருத்தல், இருப்பு ; மெய்ம்மை, நிலைபேறுடைய ஒன்று ; அமைப்பு ; இயல்பு ; உயிருரு, ஆள் ; பொருண்மை.

**beinked'**, *a.* மைபூசப்பட்ட.

**beje'wel**, *v.* அணிகளால் ஒப்பனை செய்.

**bekiss'**, *v.* நிரம்ப முத்தங்கொடு.

**beknave'**, *v.* கயவனென்று அழை ; கயவனெனக் கருதி நடத்து.

**bel**, *n.* ஒலிகள்-மின்ஓட்டங்கள் முதலியவற்றின் செறிவினை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கான அளவை.

**belab'our**, *v.* நையப்புடை.

**belace'**, *v.* சரிகைதைத்துக் கோலம் செய்.

**belat'ed**, *a.* மிகுநேரம் கழித்து வருகிற ; பிற்பட்ட, காலங் கடந்த, பழம் [illegible]ணியிலுள்ள ; அகாலமாய்விட்ட நிலையிலுள்ள, பயணத்[illegible]ரிடையே இரவாய்விட்ட.

**belaud'**, *v.* போற்றிப்புகழ்.

**belay'**, *n.* கயிற்றை இறுக்கிக் கட்டுவதற்குரிய ஒரு முழுச் சுற்று ; முழுச்[illegible]ற்றுக்குரிய பொருள் ; *v.* இறுக்கிக்கட்டு ; அணிகலன் பூட்டு ; தடு ; முற்றுகை யிடு ; வழிப்பறிசெய் ; *int.* போதும் ! நிறுத்து !

*bel can'to*, (இத்.) *n.* அருந்திறல் உத்தியுடன் ஓசைநயம் நிரம்பப் பாடுதல்.

**belch**, *n.* தேக்கெறிதல் ; ஏப்பம்; பீரங்கி-எரிமலை முதலியவை வெளிப்படுத்தும் ஒலி; அனற்கொழுந்து, கொந்தழல்; *v.* ஏப்பமிடு, தேக்கெறி ; குடித்துவிட்டு வசைக்கூச்சலிடு ; பீரங்கியின் வெடிதீர் ; எரிமலையின் புகையனல் கக்கு.

**bel'cher**, *n.* பலநிறக் கழுத்துக்குட்டை.

**bel'dam, bel'dame**, *n.* பாட்டி, முதியவள்.

**beleag'uer**, *v.* முற்றுகையிடு.

**beleag'uerment**, *n.* முற்றுகை.

**bel'emnite**, *n.* மரபற்றுப்போன கணவாய் மீனின் கூர்முனையுடைய புதைபடிவ எலும்பு.

*bel esprit*, (பிர.) *n.* சொல் வித்தகர்.

**bel'fried**, *a.* மணிக்கூண்டு உடைய.

**bel'fry**, *n.* மணிக்கூண்டு ; திருக்கோயில் கோபுரத்தில் மணி தொங்கவிடுவதற்கான இடம் ; இடைக்காலத்தில் கோட்டைகளைத் தாக்குவதற்குப் பயன்படுத்தப்பட்ட மரத்தினாலான இயங்கு கோபுரம்.

**bel'ga**, *n.* பெல்ஜிய (Belgium) நாட்டு முக்கிய நாணயம்.

**Bel'gian**, *n.* பெல்ஜிய (Belgium) நாட்டைச் சேர்ந்தவர் ; *a.* பெல்ஜியத்துக்கு உரிய.

**Bel'gic**, *a.* நெதர்லாந்துக்கு (Netherlands) உரிய; பண்டைப் பெல்ஜிய இனத்தவருக்குரிய.

**Belgrav'ia**, *n.* லண்டன் நகரைச் சேர்ந்த புதுநாகரிகக் குடியிருப்பிடம்.

**Belgrav'ian**, *a.* லண்டன் நகரைச் சேர்ந்த பெல்கிரேவியா (Belgravia) என்னும் புதுநாகரிகக் குடியிருப்புக்குரிய ; நாகரிக வாழ்வுக்கு உரிய ; ஆரவார முறையில் அமைந்த.

**Bel'ial**, *n.* பேய், தீயவை புரியும் ஆவியுரு.

**belie'**, *v.* பொய்ப்படுத்து, பொய்யாக்கு, பொய்யெனக் காட்டு; ஒன்றைப்பற்றித் தவறான கருத்துத் தெரிவி ; நிறைவேற்றத் தவறு ; தகுதியை இழ ; போலியாக்கு.

**belief'**, *n.* நம்பிக்கை ; கோட்பாடு ; எண்ணம், கருத்து ; உணர்வு ; உண்மையென ஒப்புக்கொள்ளுதல் ; நம்பிக்கை வைத்துள்ள பொருள் ; சமயம்.

**believ'able**, *a.* நம்பத்தகுந்த.

**believe'**, *v.* நம்பு, ஆளிடம் நம்பிக்கைகொள் ; சொல்லில் அல்லது கருத்தில் நம்பிக்கைவை ; உண்மையென ஒப்புக்கொள் ; பயனுள்ளதெனக் கருது ; நிலைபேறுடையதென எண்ணு ; கருத்தில்கொள் ; மதிப்பு நலமுடைமை கருது ; (தொ.) make believe, பாசாங்கு செய்.

**believ'er**, *n.* நம்புபவர் ; சமய ஏற்பாளர் ; மெய்க்கோட்பாட்டாளர்.

**believ'ing**, *a.* நம்புகிற, நம்பிக்கை கொண்டிருக்கிற.

**belike'**, *adv.* ஒருவேளை (ஏளனக்குறிப்பு).

**Belisha' beac'on**, *n.* நடந்து செல்பவர்கள் தெருவைக் கடத்தற்குரிய இடத்தைக் குறிப்பதற்காக உச்சியில் மஞ்சள் கோளத்துடன் அமைக்கப்பட்டுள்ள கம்பம்.

**belit'tle**, *v.* பொருளல்லவென்று கருது ; சிறுமைப்படுத்து, இகழ், புறக்கணி, மதிப்பைக் குறை, சிறிதாகத் தோற்றுவி.

**bell** [1], *n.* மணி ; மணிபோன்ற வடிவுடைய மலரின் அல்லிவட்டம் ; மணியோசை ; தூணின் பொதிகை ; கடல் மூழ்குபவர் வழங்கும் மணிக்கூண்டு; ஆய்கள மணிக்கவிகைச்சாடி; இசைப்பேழைகளின் ஒலிமுகவாய்; மணியோசையின் குறிப்பு; (கப்.) கடிகாரத்தில் மணி - அரைமணி முதலியவற்றைக் காட்டும் மணியடிப்போசை ; *v.* மணி கட்டு ; (தொ.) bear the bell, carry off the bell, முதற்பரிசைத் தட்டிக் கொண்டு போ ; bell the cat, துணிவுச் செயலில் முதன்மை கொள்.

**bell** [2], *n.* ஆண்மான் இணைவிழைச்சுக் கிளர்ச்சியுற்றிருக்கும் போது வெளிப்படுத்தும் ஒலி ; *v.* பாலினக்கிளர்ச்சியுற்றிருக்கும் ஆண்மானைப்போல் ஒலியுண்டாக்கு ; பெருங்கூச்சலிடு ; உக்காரம் போடு, உறுமு.

**bell** [3], *n.* நீர்க்குமிழி.

**belladonn'a**, *n.* கொடிய நச்சுப்பூண்டு வகை ; (மரு.) நச்சுப்பூண்டிலிருந்து எடுக்கப்படும் மருந்து வகை.

**bell'armine**, *n.* தாடியுடைய முகத்தின் உருவம் தீட்டப்பெற்றுள்ள பெருவயிறுடைய குண்டிகை.

**bell'-bottomed**, *a.* கணுக்காலை நோக்கி விரிவடைகிற.

**bell'-boy**, *n.* குற்றேவலன்.

**bell'-buoy**, *n.* எச்சரிக்கை மணிமிதவை, அலை அசைவுகளினால் அடிக்கப்பெறும் மணி பொருத்தப்பெற்றுள்ள கடல் மிதப்புக்கட்டை.

**bell'cote**, *n.* (க-க.) மணிமாடம், கட்டிடச் சுவர்களிலிருந்து புறந்துருத்திய மணிகள் பொருத்தப்பெற்றுள்ள சிறு கட்டுக்கோப்பு.

**bell'-crank**, *n.* இரட்டை நெம்புகொண்டி.

**belle**, *n.* அழகி, அணங்கு ; அழகரசி.

*belles-lettres*, (பிர.) *n.* கவின்கலை நயம் பொருந்திய உயர் நடை இலக்கியம் ; கவின்கலை இலக்கிய எழுத்தாண்மை ; கவின்கலை இலக்கியப் பயிற்சி.

**bell'eter**, *n.* மணிகளை வார்ப்பவர்.

**bellet'rist**, *n.* கவின்கலைப் பேரிலக்கியங்களில் ஈடுபாடுடையவர்.

**belletris'tic, belletris'tical**, *a.* கவின்கலைப் பேரிலக்கியங்கட்குரிய.

**bell'-flower**, *n.* மணிவடிவ மலர்ச்செடிவகை.

**bell'-founder**, *n.* மணிகளை வார்ப்பவர்.

**bell'-glass**, *n.* மணிக்கவிகை, செடிகளை மூடி வைப்பதற்கான மணிவடிவக் கண்ணாடிக்கலம்.

bell'-hanger, *n.* மணிகளைக்கட்டுபவர்; மணிகளைச் செப்பனிடுபவர்.

bell'-heather, *n.* புதர்வெளி, புதர்க்காடு.

bell'icose, *a.* போர்விழைவுள்ள.

bellicos'ity, *n.* போர் விருப்பம்.

bell'ied, *a.* பெருவயிறுடைய, தொந்திசரிந்த, தொப்பை விழுந்த; பிதுங்கியுள்ள, புடைத்திருக்கிற.

belli'gerency, *n.* பொருநிலை, போர்நிலை, போரில் ஈடுபட்ட நிலை.

bell'igerent, *n.* பொருநர், போரிலீடுபட்டவர்; போரிலீடுபட்ட நாடு; *a.* போரிடுகிற; பொருநருக்குரிய.

bell'man, *n.* மணி அடிப்பவர், மணியடித்துப் பொதுச் செய்தி அறிவிப்பவர்; நகரின் தெருக்களில் செய்திகளைக் கூவியறிவிப்பவர்.

bell'-metal, *n.* செம்பும் வெள்ளீயமும் கலந்த மணி செய்வதற்கான கலப்பு உலோகம்.

Bellon'a, *n.* ரோமர்களின் போர்த்தேவதை; வீராங்கனை, கவர்ச்சிகரமான வீரத்தோற்றமுடைய பெண்மணி.

bell'ow, *n.* எருத்தின் உக்காரம்; வயிற்றிலிருந்து எழும் ஆழ்ந்த ஒலி, உறுமல்; அலறல்; முழக்கம்; *v.* உக்காரமிடு; உரக்கக்கூவு; நோவெடுத்து அலறு; சீற்றத்தினால் உரக்கக் கூச்சலிடு; இடி-பீரங்கி போல அதிரொலிசெய், முழங்கு.

bell'ows, *n. pl.* உலைத்துருத்தி, காற்றுஊதுந் துருத்தி; வெறுப்பு-அழுக்காறு முதலிய உணர்ச்சிகளைக் கிளறிவிடும் செய்தி; நுரையீரல்; நிழற்படக்கருவியில் விரிந்துசுருங்கும் பகுதி.

bell'-pull, *n.* மணியடிப்பதற்கு உதவும் கயிறு; மணியடிப்பதற்குரிய கைப்பிடி.

bell'-punch, *n.* இயக்கப்படும்போது மணியடிக்கும் துளைக் கருவி.

bell'push, *n.* மின்விசைமணியை அடிக்க உதவும் விசைக் குமிழ்.

bell'-ringer, *n.* குறிப்பிட்ட காலங்களில் மணியடிப்பவர்; கைமணிகளை அடித்து இசை உண்டுபண்ணுபவர்.

bell'-ringing, *n.* இசைமணிகளை மிழற்றும் கலை.

bell'-rope, *n.* மணியடிக்க உதவுங்கயிறு.

bell'-shaped, *a.* மணி வடிவமுள்ள.

bell'-tent, *n.* மணிவடிவக் கூடாரம்.

bell'-tower, *n.* மணிக்கூண்டு, மணிக்கோபுரம்.

bell'-wether, *n.* கழுத்தில் மணிகட்டிய தலைமை ஆடு; கலாம் விளைப்பவர், கலகத்தலைவர்.

bell'y, *n.* வயிறு; வயிற்றறை; உடம்பில் முன்புறத்தின் கீழ்ப்பாகம்; இரைப்பை; குடல்; உடல்; கடும்பசி; பெருந்தீனி; கருப்பை; துருத்தியுள்ள பகுதி; பிதுக்கம்; முன்புறம்; கீழ்ப்புறம்; உட்புறம்; இலைமேற்புறம்; இசைப்பெட்டியில் ஒலி கொண்டுசெல்லும் பகுதி; நரப்பிசைக் கருவியின் மேற்பரப்பு; *a.* வயிற்றின் பக்கமான; வயிற்றுக்குரிய; உடற்பற்றுள்ள; *v.* உப்பலாகு, ஊது, புடை, பிதுங்கு.

bell'y-ache', *n.* வயிற்றுநோய்.

bell'y-band, *n.* சேணப்பட்டை, குதிரையின் வயிற்றின்கீழ் செலுத்தி வண்டியின் ஏர்க்கால்களுடன் கட்டப்படும் பட்டை அல்லது வார்.

bell'yful, *n.* நிறைவயிற்றளவு; விருப்பநிறை அளவு, **நிறைவு.**

bell'y-god, *n.* வயிற்றுளி, வயிற்றுச்சாமி; பெருந்தீனிக்காரர்.

bell'ying, *n.* உப்பல், உட்புடைத்தல்; *a.* உப்புகிற, புடைப்பார்கிற.

bell'y-landing, *n.* சக்கரங்களைப் பயன்படுத்தாமல் விமானம் இறங்குதல்.

bell'y-laugh, *n.* அடங்காப் பெருஞ்சிரிப்பு.

bell'y-pinched, *a.* வயிறுகாய்ந்த, உணவுக்குத் திண்டாடுகிற.

bell'y-worship, *n.* வயிற்றுச்சாமிபூசை, பேருண்கொள்ளுதல்.

bel'omancy, *n.* அம்புகளைக் கொண்டு குறி கூறுதல்.

belong', *v.* உரிமைப்படு, உரியவராயிரு; உரியதாயிரு; தொடர்புடையராயிரு; தொடர்புள்ளதாயிரு; உடைமையாயிரு; கூருயிரு, இணைபகுதியாயிரு; பிறப்புரிமை கொண்டிரு, வாழ்தொடர்பு கொள்; உறுப்பினராயிரு, இனமுறைப்படு, வகைப்படு; தகுதிப்படு; கடமைப்படு.

belong'ings, *n. pl.* உடைமைகள், மூட்டை முடிச்சுக்கள்; உடனிருப்புக்கள்; துணைப்பொருள்கள்.

belov'ed, *n.* அன்பிற்குரியர், அருமையானவர்; செல்வக் குழந்தை; காதலன்; காதலி; *a.* கண்மணி அனைய, பெரிதும் நேசிக்கப்பட்ட.

below', *adv.* கீழ்ப்புறமாக, தாழ்வாக; உயரம் குறைந்த இடத்தில்; நில உலகின்மீது; நரகத்தில்; கீழ்த்தளத்தில்; நீரோட்டம் செல்லும் திசையில்; கீழ்ப்படியில்; இழிநிலையில்; ஏட்டின் அடிப்பாகத்தில்; நூலில் பின்வரும் பகுதியில்; *prep.* கீழாக, தாழ; கீழ்ப்படியில்; மதிப்புக் குறைவாக, இழிபடியாக, இழிநிலையில்; ஆழ்தொலைவில்; கீழே தொலைவில்; தாழ்ந்த நிலையில்; தகுதி[illegible]ற்று.

below'stairs, *a.* கீழ்த்தளத்திலுள்ள; *adv.* கீழ்த்தளத்தில்.

belt, *n.* அரைக்கச்சை; கோமான் - வீரத்திருத்தகைக்குரிய அரைப்பட்டிகை; மேகலை; வார்; இயந்திர உறுப்புக்களை இணைத்தியக்கும் தோல்பட்டை வார்; [illegible]திணைமண்டலம்; நீள் திட்டு, இடைகழி, இடைநிலப் பகு[illegible]; கவசக்கப்பலில் நீர்வரைக்குக் கீழேயுள்ள கவசத் தகடுகளின் வரிசை; *v.* சுற்றி அரைக்கச்சையிடு; பட்டிகை அணிவி; தோல்பட்டை முதலியவற்றால் கட்டு; நிறம் முதலியவற்றால் பட்டையிடு; அரைக்கச்சுக் கொண்டு நையப்புடை; வளை, சூழ், சுற்று.

bel'tane, *n.* பண்டைக் கெல்டிக் (Celtic) இனத்தவரின் மே முதல்நாள் விழா.

belt'ed, *a.* அரைக்கச்சை அணிந்த; வீரத்திருத்தகைப் பட்டிகை அணியப்பெற்ற; பட்டை போட்டுள்ள.

belt'ing, *n.* வார், வார்ப்பட்டை - தோல்வார்ப்பட்டைகளின் திரள்.

belu'ga, *n.* வெள்ளைத் திமிங்கிலம்.

bel'vedere, *n.* நிலா மேடை, வேனில் மாடம்; முகப்புக் கூடாரம்.

bem'a, *n.* பண்டை ஆதென்ஸ் (Athens) பொதுப்பேரவையில் பேச்சாளர்கள் நின்று பேசிய மேடை.

bemaul', *v.* நையப்புடை.

bemazed', *a.* திகைப்புண்ட, குழப்பமடைந்த.

Bem'bex, *n.* பெருத்த ஒலியெழுப்பும் மணற் குளவிவகை.

bemean', *v.* தாழ்த்து, இழிவுபடுத்து.

bemire', *v.* சேறுபூசு, அழுக்காக்கு; சேற்றில் அமிழ்த்து.

bemoan', *v.* புலம்பு, துயருறு, எண்ணி இரங்கு, வருந்தி ஏங்கு.

bemouth', *v.* தாராளமாகப் புகழ்ந்துரை, கட்டுரை கூறு.

bemudd'le, *v.* முற்றும் குழப்பமடையச்செய்.

bemuse', *v.* உணர்வு மழுங்கச்செய், மனங்குழப்பு.

ben [1], *n.* மலைக்குடுமி.

ben [2], *n.* உள்ளறை; *adv.* உள் அறையை நோக்கி; *prep.* உள்ளறையில்.

ben [3], *n.* முருங்கை மரத்தின் சிறகல்லி விதை.

bename', *v.* பெயரிடு; குறிப்பிடு; துளுரை.

**bench**, *n.* மரத்தினுல் அல்லது கல்லினுல் ஆன நீண்ட இருக்கை; விசிப்பலகை; படகில் உட்காருமிடம்; நடுவர் இருக்கை; நடுவர்நிலை; நீதிமன்றம்; அதிகாரியின் இருக்கை; நடுவர் ஆயம், குற்ற நடுவர் ஆயம்; பாராளுமன்றத்தில் தனிக்குழுவினர்க்கு ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள இருக்கைகள்; தச்சர் முதலியோர் வேலைசெய்யும் மேசை; மதிலின் பிதுக்கம்; நிலப்படிக்கட்டு; *v.* இருக்கையில் அமர்த்து; விசிப்பலகைகள் அமைத்துக்கொடு; நாய்களைக் காட்சிக்கு வை.

**ben'cher**, *n.* இங்கிலாந்து வழக்கறிஞர் மன்றத்தைச் சேர்ந்த மூத்த உறுப்பினர்.

**bench'-mark**, *n.* மட்டக்குறி, நில அளவைக்காரர்கள் தங்கள் அளவைமட்டத்துக்கு மூலக்குறியாகப் பாறை-கல்போன்றவை களின்மீது வெட்டும் அடையாளம்.

**bench'-warr'ant**, *n.* நடுவர் பிறப்பிக்கும் பற்றுணை.

**bend** [1], *n.* வளைத்தல்; வளைவு; வளைந்தபகுதி; கொக்கி; கொளுவி; குனிவு; திருப்பம்; வணக்கம்; *v.* வளையவை; வளை; சாய்வி, சாய்; கோணச்செய்; கோணு; குனி; தளர், தொய்; புருவம் கோட்டு; திருப்பு, திரும்பு; திணி, கீழடங்கு; தாழ்ந்துபோ, அடங்கு; முடிச்சிடு; (தொ.) round the bend, மூளைதிறம்பிய; மூளைதிறம்பி.

**bend** [2], *n.* (கப்.) பல்வேறு வகைப்பட்ட முடிச்சு; (கட்.) குறுக்குச் சாய்வான பட்டைக்கீற்று; மாட்டுத் தோல்களின் பாதனுருவம்; [illegible]முடிச்சைக்கொண்டு பிணை.

**bend'ed**, *a.* பட்[illegible]போட்ட; வளைந்த; (தொ.) on bended knees, முழந்தாளிட்டு.

**bend'ing**, *n.* வளைக்கும் செயல்; *a.* வளைக்கிற.

**bend'let**, *n.* (க[illegible]) அரை அகல வளைவுப் பட்டை.

**bends**, *n. pl.* (பே-வ.) இறுக்கமான காற்றில் வேலைசெய்பவர்களுக்கு வரும் நோய்வகை.

**beneaped'**, *a.* மென்திரையால் கரைமீதிடப்பட்ட.

**beneath'**, *adv.* கீழே, அடியில், அடிப்புறத்தில், தாழ; உட்புறத்தில்; பின்னுல், புறத்தே; *prep.* கீழாக; அடியில்; பெருமைக்குத் தகாதவாறு, தகுதியற்று.

*benedi'cite*, (ல.) *n.* வாழ்த்துமுறை நேர்வு; உணவுக்கு முன்னைய வழிபாட்டுரை; வேண்டப்பட்ட ஆசி; *int.* வாழ்க!

**ben'edick**, *n.* மணமகன்; நீண்டகாலம் மணம்செய்துகொள்ளாமலிருந்து புதிதாக மணம்செய்து கொண்டவர்.

**ben'edict**, *a.* போற்றுதற்குரிய; கருணைவாய்ந்த.

**Benedic'tine**, *n.* தூயதிரு. பெனிடிக்டு (St. Benedict) 529-இல் கண்ட திருமடத்தைச் சேர்ந்த துறவி; நறுமண மது வகை; *a.* தூயதிரு. பெனிடிக்டு கண்ட திருமடத்துக்குரிய.

**benedic'tion**, *n.* வாழ்த்து, திருக்கோயிலில் ரோமன் கத்தோலிக்க வழிபாட்டின் பின்னர் ஆசி வழங்கல்; ஆசி; பேரின்பநிலை

**benedic'tional**, *a.* வாழ்த்து வழங்குவது பற்றிய.

**benedict'ive**, *a.* வாழ்த்தும் பாங்குள்ள.

**benedict'ory**, *a.* வாழ்த்தியலான, ஆசிக்குரிய.

*Benedic'tus*, (ல.) *n.* திருக்கோயில் வழிபாட்டில் பாடப்பெறும் சிறுபாடல்களில் ஒன்று.

**benefac'tion**, *n.* உதவி, நற்செயல்; அறச்செயலுக்கான நன்கொடை; மானியம், நிதிஏற்பாடு.

**ben'efactor**, *n.* கொடையாளர்; நல்லது செய்தவர்; நிலையத்துக்கு நிதிவிட்டுச் செல்பவர்; புரவலர்.

**benefac'tory**, *a.* நன்மைபயக்கிற; நலம் செய்வோருக்குரிய.

**benefac'tress**, *n.* நலம் செய்யும் மாதர்.

**ben'efice**, *n.* திருக்கோயில் மானியம், மானியம்.

**ben'eficed**, *a.* மானியம் பெற்றுள்ள.

**benef'icence**, *n.* நற்செயல், அறச்செயல்; அன்புதவி, நல்லெண்ணக் கொடை.

**benef'icent**, *a.* அன்பு நலமுடைய; நலம் செய்கிற, நன்மை பயக்கிற.

*beneficiaire*, (பிர.) *n.* நிதி ஊதியம் பெறுகிற நடிகர்; நிதி ஊதியத்துக்குரிய மட்டைப் பந்தாட்டக்காரர்.

**benefi'cial**, *a.* பயனுள்ள, நலம் பயக்கிற; (சட்.) சொத்தின் நுகர்வாட்சி உரிமையுள்ள, சொத்தின் நுகர்வாட்சிக்குரிய.

**benefi'ciary**, *n.* (சட்.) அனுபவப் பாத்தியம் உடையவர்; மானியக்காரர்; *a.* அனுபவப் பாத்தியம் சார்ந்த; மானியம் பற்றிய.

**ben'efit**, *n.* நலன், பயன், அனுகூலம்; ஆதரவு; அன்புச் செயல்; படி, ஓய்வு ஊதியம்; உதவிநிதி; நீதிமன்றங்களில் மதிப்புத்தரத்தால் அளிக்கப்படும் விலக்கு; நிதி உதவி ஆட்டம்; நிதி உதவிக் காட்சி; *v.* நலம்செய்; நன்மை அடை; (தொ.) the benefit of the doubt, ஐயநிலையின் சாதகம்.

**bene'fit-association, bene'fit-club**, *n.* = **benefit-society**.

**bene'fit-match**, *n.* உதவிப் போட்டிஆட்டம்.

**bene'fit-night**, *n.* உதவிநிதிக் காட்சிக்குரிய இரவு.

**bene'fit-society**, *n.* நோய் மூப்புக்களிலிருந்து ஒருவருக்கொருவர் காப்பீடு செய்துகொள்வதற்கான கழகம்.

**Ben'elux**, *n.* பெல்ஜியம் (Belgium) நெதர்லாந்து (Netherlands) லக்ஸம்பர்க் (Luxemberg) என்னும் நாடுகளின் கூட்டுப்பெயர்.

**benev'olence**, *n.* அறச்செயல் விருப்பம், இரக்க மனப்பான்மை; அன்புச்செயல்; பணவுதவி; (வர.) கட்டாயக் கடன்.

**benev'olent**, *a.* நற்செயலாற்றும் விருப்பமுள்ள; இரக்க மனப்பான்மை கொண்ட, பரந்த உள்ளமுடைய; இன்முகங் கொண்ட.

**Bengal'ee, Bengal'i**, *n.* வங்கநாட்டவர்; வங்கமொழி; *a.* வங்கம் சார்ந்த.

**Ben'gal-light**, *n.* கப்பல் இடர் அறிவிப்புக்கான வாணவெடி; விழா வாணவெடி.

**benight'**, *v.* இருளில் ஆழ்த்து, இருளில் சிக்கவை; ஏமாற்றிக் கலங்கச் செய்.

**benight'ed**, *a.* இருளில் சிக்கிய, இருளார்ந்த; அறியாமை வயப்பட்ட; பாழ்பட்ட, கேடுற்ற.

**benign'**, *a.* சாதகமான, பெருந்தகைமையுள்ள; அன்பான, கண்ணேட்டமுடைய; நற்பேறுள்ள; நலம் செய்கிற; நோய் வகையில் கடுமையாயிராத, தணிவான, ஏதம் விளைக்காத.

**benig'nancy**, *n.* அருளிரக்கம், பெருந்தகைமை.

**benig'nant**, *a.* அருளுடைய; அன்புடைய; நலம் பயக்கிற.

**benig'nity**, *n.* அருளுடைமை; அன்புடைப் பண்பு, பண்புடைமை; நோயின் தணிநிலை; வானிலை வகையில் ஆக்கந் தரும் சூழ்நிலை.

**ben'ison**, *n.* வாழ்த்து; கடவுள் ஆசி.

**Ben'jamin**, *n.* கடைசிப்பிள்ளை, செல்லப்பிள்ளை; (தொ.) Benjamin's mess, பெரும்பங்கு.

**ben'jamin** [1], *n.* சாம்பிராணி.

**ben'jamin** [2], *n.* பழம்பாணியான புறமேற்சட்டை.

**ben'jamin-tree**, *n.* சாம்பிராணி மரம்; நறுமணப்பட்டையுடைய வடஅமெரிக்கப் பூடுவகை; அத்திமர வகை.

**benn'et** [1], *n.* மஞ்சள் நிற மலர்களையுடைய பூண்டு வகை.

**benn'et** [2], *n.* உலர்ந்த புல்தண்டு.

**ben'-nut**, *n.* முருங்கை விதையின் பருப்பு.

**ben'-oil**, *n.* முருங்கை எண்ணெய்.

**bent** [1], *n.* கம்பிபோன்ற தண்டுடைய நாணற்புல்வகை; புல்லினத்தின் விறைத்த மலர்த்தண்டு, உலர்ந்த பழம்புல், களைப் பூடு வகை; புதர்; வேலியில்லாத புல்தரை; மலைச்சரிவு.

**bent**[2], *n.* வளைவு, நெளிவு, கோணல்; வளைந்த பாகம்; மனப்பாங்கு; மனக்கோட்டம், விருப்பம், இயற்கை அவா; வில்லை வளைக்கக்கூடிய அளவு; இழுவிசையின் அளவு; பொறுத்திருக்கும் ஆற்றல்; *a.* வளைவான, கோட்டமுடைய; ஊன்றிய கருத்துள்ள; உறுதிபூண்ட.

**bent**[3], *v.* bend என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**Ben'thamism**, *n.* மிகப்பெரும்பாலோருக்கு மிகப் பேரளவான இன்பமே குறிக்கோளாகக் கொண்ட ஜெரிமி பெந்தம் (Jeremy Bentham, 1748-1832) என்பாரின் அறமுறைக் கோட்பாடு.

**Ben'thamite**, *n.* மிகப்பெரும்பாலோருக்கு மிகப்பெரிய அளவில் இன்பம் நாடும் அறமுறைக் கோட்பாட்டாளர்.

**ben'thic**, *a.* கடல் அடியிலுள்ள மாவடை மரவடைகளுக்கு உரிய.

**ben'thos**, *n.* கடல் அடியிலுள்ள செடிகொடி உயிரினத் தொகுதி.

**ben'thoscope**, *n.* ஆழ்கடல் உயிர்வாழ்க்கை ஆராய்வுக்குரிய மூழ்க்கத்தக்க கோளகை.

***ben trova'to***, (இத்.) *a.* பொருந்துமாறு புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட; மெய்யன்றாயினும் குறிப்பிடத்தக்க மெய்ப் பண்புடைய.

**bent'wood**, *n.* நாற்காலி முதலியவை செய்வதற்காகச் செயற்கையாய் வளைக்கப்பட்ட மரம்; *a.* செயற்கையாய் வளைக்கப்பட்ட மரத்திலான இயன்ற.

**bent'y**, *a.* வளைவான; விறைத்த அல்லது கம்பியனைய தண்டுள்ள நாணற்புல் போன்ற.

**benumb'**, *v.* மரத்துப்போகச்செய், திமிர் அடையும்படி செய்; உணர்விழக்கச்செய்; ஆற்றலிழக்கப்பண்ணு.

**benumbed'**, *a.* மரத்துப்போன, விறைத்த; உணர்ச்சியிழந்த.

**ben'zal**, *n.* கசப்பு வாதுமை எண்ணெய்.

**ben'zene**, *n.* சாம்பிராணி எண்ணெய், நிலக்கரிக் கீலிலிருந்து பெறப்படும் நறுமண நீர்க்கரிமப்பொருள்.

**ben'zil**, *n.* (வேதி.) சாம்பிராணியை உயிரகை ஆக்குவதனால் உண்டாகும் மஞ்சள்நிற மணிஉருச் சேர்மம்.

**ben'zine**, *n.* நிலஎண்ணெயிலிருந்து பெறப்படுவதும் கொழுப் புக்கறையை நீக்குதற்குப் பயன்படுவதுமான கரிநீர்மக் கலவை.

**ben'zoate**, *n.* சாம்பிராணிக் காடியுப்பு.

**ben'zocaine**, **ben'zocane**, *n.* உடற் கூற்றில் உணர்வகற்று தலிலும் வயிற்றுவீக்கத்திலும் பயன்படுத்தப்படும் மருந்து வகை.

**benzo'ic**, *a.* சாம்பிராணிக்குரிய.

**ben'zoin**, *n.* மர நறுமணப் பிசின் வகை, சாம்பிராணி.

**ben'zol**, **ben'zole**, *n.* விசைவண்டி எண்ணெயாகப் பயன் படும் செப்பமற்ற சாம்பிராணி எண்ணெய்.

**ben'zoline**, *n.*=**ben'zine**.

**ben'zoyl**, *n.* (வேதி.) சேர்க்கையில் மட்டுமே காணப்படும் ஓரணுமுக உறுப்பு வகை.

**benzpy'rene**, *n.* கீலெண்ணெயிலும் புகையிலைப் புகையி லும் உள்ள புற்று உண்டுபண்ணும் நீர்க்கரியக வகை நச்சுப் பொருள்.

**ben'zyl**, *n.* (வேதி.) மரஎண்ணெய் கலந்த சாம்பிராணி எண்ணெயின் நீரகை மூலமாயுள்ள ஓரணுமுக அடிச்சரக்கு வகை.

**bepatched'**, *a.* ஒட்டுப்போட்டுச் செப்பனிடப்பட்ட; முகத்தில் ஒட்டுகள் போட்டு ஒப்பனை செய்துகொண்ட.

**bepepp'er**, *v.* குண்டுமாரியால் தாக்கு; அடித்துத்தள்ளு.

**beplas'ter**, *v.* கனமாக அப்பு, திண்ணமாகப் பூசு.

**beplumed'**, *a.* இறகுகளால் கோலம் செய்யப்பட்ட.

**bequeath'**, *v.* விருப்ப ஆவணம் வாயிலாக விட்டுச்செல்; மரபு உரிமையாகப் பிற்காலத்தினருக்கு அளி ஒப்படை, பொறுப்பில் விடு.

**bequeath'able**, *a.* விருப்ப ஆவண மூலமாய்க் கொடுக்கப் படத்தக்க.

**bequeath'al**, *n.* விருப்ப ஆவண மூலமாய்க் கொடுத்தல்.

**bequest'**, *n.* விருப்ப ஆவணவழிக் கொடுத்தல்; வருங்காலத் தினருக்கு மரபுரிமையாகக் கொடுத்தல்; கொடைப்பொருள்; எச்சம், விருப்ப ஆவணவழிக் கொடை; இறந்தார் விடு பொருள்.

**berate'**, *v.* கண்டி, திட்டு, வசைமாரி அடுக்கு.

**beray'**, *v.* மாசுபடுத்து.

**Berb'er**, *n.* பார்பரி (Barbary) யின் பழங்காலக்குடிகள் உட்படத் தொடர்பான மொழிகள் பேசும் வடஆப்பிரிக்க இனத்தவர்; பெர்பெர்களின் மொழி; *a.* பார்பரியின் பழங் காலக்குடிகள் உள்ளிட்ட வட ஆப்பிரிக்க இனத்தைச் சேர்ந்த.

**ber'berry**, *n.* = **barberry**.

***berceuse***, (பிர.) *n.* தாலாட்டுப்பாடல்; தாலாட்டு மெட்ட மைந்த இசைப்பாடல்.

**bere**, *n.* தலையணை உறை.

**bereave'**, *v.* பறிகொடு; இழக்கச்செய்; தனியாகத் தவிக்க விடு; இறப்பினால் உறவினர் மனைவி முதலியோர் கையற வுற விட்டுச்செல்.

**bereaved'**, *a.* இழப்புக்கு ஆளான.

**bereave'ment**, *n.* இழப்பு, இழந்தநிலை, [illegible]பறுநிலை.

**bereft'**, *a.* இழப்புக்காளான, இழந்த.

**be'ret**, *n.* ஸ்பெயினில் (Spain) உள்[illegible] பாஸ்க் (Basque) இனஞ்சார்ந்த குடியானவர்கள் அணியும் வட்டமான தட்டைத்தொப்பிவகை; ஆடவர் மகளிர் [illegible]விளையாட்டு-விடு முறை உடுப்புகளுடன் அணியும் வட்ட[illegible]தொப்பி; படைத் துறைத் தொப்பி.

**berg**[1], *n.* = **iceberg**.

**berg**[2], *n.* தென் ஆப்பிரிக்காவில் (South Africa) உள்ள குன்று; (தொ.) berg wind, நன்னம்பிக்கை முனையில் மே-ஆகஸ்டு மாதங்களில் வீசும் வெப்பமான வடகாற்று.

**ber'gamask**, *n.* இத்தாலியில் உள்ள பெர்காமோ (Bergamo) வைச் சேர்ந்தவர்; பெர்காமோவுக்குரிய நாட்டுப்புற ஆடல் வகை.

**berg'amot**[1], *n.* எலுமிச்சை—கிச்சிலி இனமரம்; எலுமிச்சை-கிச்சிலி இனப்பழத்திலிருந்து வடித்திறக்கப்படும் நறுமணப் பொருள்; எலுமிச்சை-கிச்சிலியின் நறுமணமுள்ள செடிவகை.

**berg'amot**[2], *n.* பேரிஇனப் பழவகை.

**bergan'der**, *n.* ஒள்ளிய சிறகுடைய காட்டுவாத்து வகை.

**berg'mehl**, *n.* (மண்.) தேய்ப்புப் பொருளாகவும் உறிஞ்சு பொருளாகவும் பயன்படுகிற மாவுபோன்ற சாம்பல் நிற மான கிளிஞ்சில்கள் மக்கி மடிந்த படிவு மண்பாறை.

**berg'schrund**, *n.* மலையேறலில் செங்குத்தான மேற்சரிவி னின்றும் பனிப்படலம் விலகுமிடத்தில் ஏற்படும் பிளவு.

**Bergso'nian**, *n.* ஹென்றி பெர்க்ஸன் (Henri Bergson, 1859-1941) என்னும் மெய்விளக்கியலாரைப் பின்பற்றுபவர்; *a.* பெர்க்ஸனின் படைப்பாக்கமுடைய படிமுறை வளர்ச்சிக் கோட்பாட்டுத் தொடர்புடைய.

**ber'gylt**, *n.* வடகடல் செம்மீன் வகை.

**berhyme'**, *v.* செய்யுளில் விரிவுரை எழுது; வசைக்கவி பாடு; செய்யுள் வடிவில் அமை.

**be'riberi**, *n.* தவிட்டான், ஊட்டச் சத்துக்குறைவால் உண் டாகும் நோய்.

**Berkelei'an**, *n.* சடப்பொருளான உலகத்தின் தனிநிலை மெய்ம்மையை மறுத்த மாவட்டச் சமயமுதல்வர் பெர்க்லி (Bishop Berkeley, 1685-1753) என்பவரை அல்லது அவரது கொள்கையைப் பின்பற்றுபவர்; *a.* பெர்க்லிக்குரிய; பெர்க் லியின் கோட்பாட்டுத் தொடர்புடைய.

brand'y-snap, *n.* பிராந்தியினுல் மணமூட்டப்பட்ட அப்ப வகை.

brang'le, *v.* வாதாடு, சச்சரவிடு.

brang'ling, *n.* வழக்காடுதல், மாறுபடுதல்.

brank [1], *n.* கோதுமை வகை.

brank [2], *v.* துள்ளு ; தலைகால் தெரியாமல் நட.

brank'-urs'ine, *n.* (தாவ.) கழுதைமுள்ளி.

bran'mash', *n.* தவிடும் மாவும் பிசைந்த விலங்குத் தீனி வகை.

bran-new, *a.* = brand-new.

bran'ny, *a.* கூலக்குபபை உடைய ; கரடு முரடான, பண்படாத.

brant'-goose, *n.* = brent-goose.

brase'ro, *n.* பித்தளை வேலைசெய்பவர்; எரியூட்டுத் தண்டனை நிகழ்த்தும் களம்.

brash [1], *n.* கட்பிக்கல், கோணங்கோணமாக அமைந்த அடித்தளப் பாறைத் துண்டு ; உடைந்த பனிக்கட்டித்துண்டு ; வெட்டப்பட்ட வேலி மரக்கிளைகளின் துண்டுத்துணுக்கு.

brash [2], *n.* பித்தவாந்தி ; திடீர் மழை வீழ்ச்சி ; *v.* அமைதி குலை.

brash'y, *a.* துண்டு துண்டான.

bras'ier, *n.* = brazier [2].

brass, *n.* பித்தளை, செம்பும் செம்புடன் நாகமோ வெள்ளியமோ கலந்த உலோகக்கலவை ; துடுக்குப்பேச்சு ; நாணமிலா நடத்தை ; பித்தளைக்கலம் ; கல்லறை மீது பொறிக்கப்பட்ட பித்தளைப் பட்டயம்: *a.* பித்தளையால் செய்யப்பட்ட; (தொ.) brass band, பித்தளை இசைக்கருவிகளை வாசிக்கும் இசைக்குழுவினர் ; brass farthing, செப்புக்காசு ; top brass, பித்தளைத் தொப்பிகள் ; உச்ச உயர் அதிகாரிகள்.

brass'age, *n.* நாணயம் அடிப்பதற்கான கூலி.

brassard', *n.* மேற்கையில் அணியப்படும் வில்லை ; மேற்கைக் கவசம்.

brass'art, *n.* மேற்கைக் கவசப் பகுதி.

brass'-bounder, *n.* கப்பலில் உரிமைப் பயிற்சிப் பணியாளர்.

*brass'erie*, (பிர.) *n.* தேறல் மனை, தேறல் அருந்தும் சோலை.

brass'es, *n. pl.* பித்தளையால் செய்யப்பட்ட துளையிசைக் கருவித் தொகுதி ; துளை இசைக்கருவிப் பயிலுநர் குழு.

brass'et, *n.* = brassart.

brass'founder, *n.* பித்தளை உருப்படிகள் செய்பவர், கன்னான் ; கஞ்சக்காரன்.

brass'ie, *n.* = brassy [1].

brass'iere, *n.* பெண்டிர் மார்புக் கச்சு, உட்கச்சு.

brass'-plate, *n.* வீட்டில் குடியிருப்பவரின் பெயர் பொறித்த தகடு.

brass-tacks, *n.* விலை விவரங்கள் தகடு.

brass'-vis'aged, *a.* வெட்கங்கெட்ட.

brass'y [1], *n.* பித்தளை அடியுடைய குழிப்பந்தாட்டச்செண்டு ; *a.* பித்தளை போன்ற ; வெட்கங்கெட்ட ; நாணயம் இல்லாத ; உணர்ச்சியற்ற ; இரக்கம் இல்லாத ; கடுங்குரல் கொண்ட.

brassy [2], *n.* மீன் வகை.

brat, *n.* மதலை, சிறு குழந்தை பற்றிய மதிப்புக் குறைவான வழக்கு ; தொல்லை தரும் குழவி ; குழந்தையின் தளர்த்தியான அரையாடை ; முரட்டு மேலாடை.

bratch'et, *n.* வேட்டை நாய் ; குட்டி நாய் ; பெட்டை நாய் ; சிறுகுழந்தை பற்றிய மதிப்புக்குறைவான வழக்கு.

brat'ling, *n.* சிறுமதலை, சிறுகுழந்தை பற்றிய மதிப்புக் குறைவான வழக்கு.

bratt'ice [1], *n.* நிலக்கரிச் சுரங்கங்களிலுள்ள மரத்தடுப்பு ; சுரங்கங்களின் காற்றோட்ட அடைதட்டி ; சுரங்க வழியின் பக்கங்களுக்குரிய பலகைப்பொதிவு ; *v.* தட்டியிட்டுத்தடு, அணைதட்டி அமை, பலகை உட்பொதிவு செய்.

bratt'ice [2], *n.* இடைக்கால அரண் முற்றுகை நடவடிக்கைகளுக்குரிய நிலையான மரக்கோபுரம் ; மதில் முகங்காக்கும் அரண் மாளிகையின் காப்பு மேன்மாடம்.

bratt'ice-cloth, *n.* சுரங்கங்களில் பலகை பதிப்பதற்குப் பதில் பயன்படுத்தப்படும் கீல் பூசப்பட்ட துணி ; தார் பூசப்பட்ட சீலை.

bratt'icing, *n.* சுரங்கங்களில் தட்டியிட்டு இடைத்தடுத்தல் ; இடைத்தடுப்பு, தட்டி.

brat'tle, *n.* சடசடவென்னும் ஒலி; பூசல் ; குழப்பம், அமளி ; *v.* சந்தடி உண்டுபண்ணு.

brat'tling, *n.* சடசடவெனும் ஒ[illegible] உண்டுபண்ணுதல் ; சந்தடி ; பூசல் ; அமளி; *a.* சட[illegible]அமளி உண்டுபண்ணுகிற.

brava'do [1], *n.* வீரவெளிப்பா[illegible]ப்பாட்டம் செய்பவர் ; *pl.* brava'does, [illegible]

brava'do [2], *v.* ஆர்ப்பாட்ட[illegible]காட்டு.

brave, *n.* அமெரிக்காக் க[illegible]புசார்ந்த சிவப்பிந்திய வீரன் ; *a.* [illegible]மிக்க, துணிச்சலான ; பகட்டான [illegible]ரும் தன்மையான ; போர்ற[illegible]ன ; *v.* எதிர்த்து நில், வீர[illegible]தாடு தாங்கு.

brav'ery, *n.* ம[illegible]ரம் ; புறப்பகட்டு ; அணி[illegible]

bra'vo [1], *n.* துண[illegible]க்கொலையாளி ; *pl.* bra'voes, bra'v[illegible]

bravo [2], *int.* ஆகா, நன்று, மி[illegible]

*bravur'a*, (இத்.) *n.* (இசை.) அருந்திற[illegible]சப்பு, விரைவும் திறலாண்மையும் தோன்றப் பாடுதல் ; அறிவாற்றல் மிக்க செயல் ; உயர் அவாவுடைய முயற்சி ; வலிந்த செயற்கைத் தோற்றம்.

braw, *a.* நேர்த்தியான, ஒப்பனைமிக்க.

brawl [1], *n.* பூசல், அமளி, சச்சரவு; *v.* பூசலிடு; சந்தடி உண்டு பண்ணு ; சடசடவென்று ஒலிசெய்.

brawl [2], *n.* முற்காலப் பிரஞ்சு நாட்டு நடனவகை ; பிரஞ்சு ஆடற்பண்வகை.

brawl'er, *n.* சச்சரவிடுபவர்.

brawl'ing, *n.* சண்டை, பூசல் ; *a.* பூசலிடுகின்ற ; கூக்குரலிடுகிற.

braw'ly, *a.* நேர்த்தியான பண்புடைய, ஒப்பனை செய்யப்பட்ட.

brawn, *n.* தசைநார் ; மேற்கைப் புறமும் கீழ்க்காற்புறமும் உள்ள கொழுவிய தசைப்பற்று ; கொழுந்தசை; தசையாற்றல்; பன்றி ஏற்றை ; ஆண் பன்றியின் இறைச்சியிட்ட ஊறுகாய்.

brawned, *a.* தசையுள்ள ; வலிமை மிக்க.

brawn'y, *a.* தசைப்பற்றுள்ள ; வலிமைவாய்ந்த.

brax'y, *n.* நுண்மங்காரணமான ஆட்டின் நோய்வகை; நுண்மங்காரணமான நோய்ப்பட்ட ஆடு ; நோய்ப்பட்ட ஆட்டிறைச்சி ; *a.* ஆடுகளில் நுண்மங்காரணமான நோய்க்கு ஆட்பட்ட.

bray [1], *n.* கழுதையின் கனைப்பு ; கொடிய வெறுக்கத்தக்க ஓசை ; *v.* கத்து, கழுதை போலக்கனை ; பறை ஒலிசெய்.

bray [2], *v.* உடை, நொறுக்கு, சிறுதுகளாக்கு ; உரலிலிட்டுக் குற்று.

bray'er [1], *n.* கழுதைபோல் கத்துபவர் ; கனைப்பவர்.

bray'er [2], *n.* அச்சுக்குரிய மை அரைக்கும் பொறி ; அச்சுவேலையில் மையைப் பரப்பும் கருவி.

**bray'ing,** *n.* கழுதைக் கனைப்பு ; கடுஒலி ; *a.* வெறுக்கத் தக்க ஒலியுடைய ; கொடிய ஓசையுடைய.

**braze** [1], *v.* பித்தளைபோல நிறமுண்டாக்கு, பித்தளை வண்ணம் செய்.

**braze** [2], *v.* பித்தளையும் துத்தநாகமும் சேர்ந்த கலவையைப் பற்றுசு வைத்துச்சேர் ; ஒட்டவை ; கடுமையாக்கு, உரமளி.

**braze'less,** *a.* பற்றுசிடப்படாத.

**braz'en,** *a.* பித்தளையாற் செய்யப்பட்ட ; உறுதியான ; மஞ்சள் வண்ணமான; கடுஒலி உடைய ; பித்தளை போன்ற ; நாணமற்ற ; *v.* ஆணவத்தோடு எதிர்த்து நில் ; வெட்கத்தை ஒழி ; (தொ.) brazen age, பொன்னூழி - வெள்ளியூழி- பித்தளையூழி - இருப்பூழி என்ற நாகரிகத்தளர்ச்சி பற்றிய பழைய மரபின்படி மனித அழிவின் மூன்ருவது கட்டம்.

**braz'en-face,** *n.* செருக்குமிக்கவர், நாணிலி.

**braz'en-faced,** *a.* வீம்புத்தனமான ; ஆணவம் நிறைந்த.

**bra'zenness,** [illegible] *n.* நாணம் இல்லாத் துணிவு, நாணம் [illegible]

**bra'zier** [1], [illegible]

**bra'zie**[illegible] [2] [illegible]னல் தட்டு.

**Brazil**[illegible] [illegible]ர் செய்யப் பயன்படும் தென் அமெரி[illegible]

**Brazil'i**[illegible] [illegible]விலுள்ள பிரசீல் (Brazil) நாட்டை[illegible] [illegible]நாட்டைச் சார்ந்த.

**Brazil'**[illegible] [illegible] நாட்டு மரக்கொட்டை வகை[illegible]

**Brazil'-**[illegible]

**breach** [illegible] [illegible]ந்த இடம் ; முறி வுற்றந[illegible] [illegible]டு, இடைவெளி ; மீறுகை, [illegible]கை - ஒப்பந்தம் - வாக்குறுதி ஆகியவற்று[illegible] [illegible]தல்; கடமை தவறுகை ; நட்பு முறிவு ; அ[illegible] [illegible]வு ; ஒரு பொருளின் உடைந்த நிலை ; அலைமோதுகை ; திமிங்கிலம் நீருக்குப் புறமாகப் பாய்தல் ; *v.* பிளவுண்டாக்கு ; இடைவழி உண்டுபண்ணு ; உடைப்பு ஏற்படுத்து ; திமிங்கில வகையில் நீரிலிருந்து மேலே பாய்.

**bread,** *n.* ஊதப்பம், புளிப்புறையூட்டப்பட்ட மாவில் செய்யப் படும் ரொட்டி, அப்பம் ; உணவு ; வாழ்க்கைத்தொழில், பிழைப்புச்சாதனம் ; *a.* வாழ்க்கைத்தொழில் சார்ந்த, பிழைப் புக்குரிய ; உயர் நோக்கமற்ற ; முழுதும் உலகியல் சார்பான ; இயற்பொருள் வாதம் சார்ந்த ; முதிரா இளமைக்கூறுடைய ; உரமற்ற ; (தொ.) bread and butter, வெண்ணெய் தடவிய ரொட்டி ; தேவையான உணவு ; பிழைப்புத்தொழில் ; bread-and-butter letter, விருந்தோம்பலுக்கு நன்றி தெரிவிக் கும் முடங்கல் ; bread and cheese, எளிய உணவு, பொது நிலை உணவு ; வாழ்க்கைப் பிழைப்பு ; bread buttered on both sides, மிக்க செழிப்பான நிலை ; take the bread out of one's mouth, ஒருவர் பிழைப்பைக் கெடு.

**bread'berry,** *n.* சூடான பாலிலூறிய அப்பத்துண்டுகள்.

**bread'-corn,** *n.* அப்பம் செய்யப் பயன்படும் தானியம்.

**bread'-crumb,** *n.* அப்பத்தின் உள்ளீடான பகுதி; சமையலில் பயன்படுத்தப்படும் அப்பத்துண்டு ; *v.* அப்பத்துண்டுகளை மேலிடாகத்தூவு.

**bread'fruit,** *n.* தென்கடல் பகுதியின் மரவகை ; ஈரப்பலா மரம்.

**bread'-line,** *n.* உணவு பெறநிற்கும் ஏழைகளின் அணி வரிசை.

**bread'nut,** *n.* பொரித்தோ வேகவைத்தோ அப்பம்போல உண்ணத்தக்க கனிவகை ; (தொ.) breadnut tree, ஈரப் பலாவினம் சேர்ந்த கனிமரவகை.

**bread'-stud'y,** *n.* பிழைப்புக்காக எடுத்துக்கொண்ட கல்வி, வாழ்க்கைத் தொழிலுக்கான படிப்பு.

**breadth,** *n.* அகலம் ; பரப்பு ; பரந்த மனப்பாங்கு, அகல நோக்கம் ; விரிந்த மனம் ; கலையில் முழுமைக்குக் கீழ்ப் பொருளடங்கி நிற்கும் ஒருமைநிலை.

**breadth'ways, breadth'-wise,** *adv.* அகலப்போக்காக, குறுக்காக.

**bread'-ticket,** *n.* உணவுப் பங்கீட்டுத்தாள்.

**bread'-winner,** *n.* குடும்பத்தில் உணவு ஆதரவுக்குரிய வருவாய் உடையவர், குடும்ப உணவாதரவுக்கு உரியவர்.

**break** [1], *n.* பிளவு, முறிவு, உடைவு, தகர்வு ; தொடர்பறுதல், இடைமுறிவு ; இடைநிறுத்தம் ; இடையீடு, இடைவெளி ; இடை ஓய்வு ; தடை ; விடிவு ; தொடக்கம் ; மாறுபாடு ; குரல் வேறுபாடு ; ஒழுங்கு மீறுகை ; பந்தாட்ட வகைகளில் தொடர்கெலிப்பு ; தொடர்கெலிப்பெண் ; மரப்பந்தாட்டத்தில் பந்தெறிவின் வாட்டவழு ; வாய்ப்பு ; *v.* அறு, முறிவுசெய், பிள ; துண்டுதுண்டாக்கு ; உடை, தகர் ; சிதறடி, நொறுக்கு ; தொடர்பறுவி ; இறு, முறிவுறு, பிளவுறு ; உடைபடு, தகர் வுறு ; சிதறு, நொறுங்கு ; பிரிவுறு, இணைவற்றுப்போ ; விலகு ; இடையிட்டுத் தடு ; ஊடுருவு, துளை ; கிழித்துச் செல், வழி உண்டுபண்ணிக்கொண்டு செல் ; ஆற்றலை முறி ; பழக்கு ; பணியவை, அடக்கு ; ஊக்கம் தகர் ; இடிந்துவிழு, நிலைகுலை ; தளர்த்து ; பழக்கம் தடுத்தாளு ; மீறு ; மீறிச் செல் ; ஒழுங்குகலை ; பயனில்லாததாக்கு ; தள்ளிவை ; கண்டித்து விலக்கு ; விரியவை ; விரி ; மெல்ல எடுத்தியம்பு ; வெடி ; வெடித்துச் செல் ; தெறித்தோடு ; தப்பிச்செல் ; திடீரென்று புறப்படு ; புகுத்து ; தொடங்கு ; விடி ; வாய் விட்டுரை, கொதித்துரை ; திடீரென்று செயலாற்று, வெடி படச் செயலாற்று ; இடைக்கோடிடு ; நீடித்த ஒருநிலை மாற்று, இடையிட்டு மாறுபாடுசெய் ; தோன்று, காட்சியளி ; கருத்திற் புலப்படு ; வெளிப்படுத்து ; வெளிப்படு ; சீறு ; வெடிப்புகள் உண்டாகச் செய் ; கீறலுறு, வெடிப்புக்கள் உண்டாகப்பெறு ; பொருளகம் முறிவுறு ; நிகழ் ; திடுமெனத் திரும்பு ; (இசை.) முடுகிசை மூட்டு ; (மொழி.) தனி உயிரை இணை உயிராக மாற்று ; தனி உயிர் இணையுயிராக மாறுபடு ; (தொ.) break a lance with, எதிராக வாதாடு ; break away, பிரிந்துசெல் ; தெறித்தோடு ; break butterfly on wheel, ஆற்றல் வீணுகச் செலவிடு ; break cover, மறைவினின்றும் வெளிப்படு ; break down, வெட்டி வீழ்த்து, இடித்து அழி ; தகர்ந்து விழு ; ஆற்றலழிந்து வீழ் ; கூறு கூறுக்கு ; கூறுய்வு செய் ; சிதைத்து ஆக்கக் கூறுகளாகப் பிரி ; break even, ஆதாயமோ இழப்போ இல்லாத நிலையை அடை ; break fast, உண்ணுநிலை அகற்று ; break off, திடுமென முடிவுறு ; break open, வெட்டிப்பிள ; துளை ; break out, திடுமெனத்தோன்று ; வாய்விட்டுக் கழறு ; break Priscian's head, இலக்கணம் பிழைபடு ; break the heart, துயரத்தால் அழி ; break the ice, தொடக்கச் சிக்க லகற்று ; முதல் நாணம் நீக்கு ; break through, வழிநெருக்கிச் செல் ; break up, துண்டு துண்டாக்கு ; கலை, கூறு கூறுக்கு.

**break** [2], *n.* குதிரைகளைப் பழக்குவதற்கான கூண்டற்ற அடிக் கட்டை வண்டி ; நீண்ட இன்பப்பயண வண்டிவகை.

**break'able,** *a.* உடையக்கூடிய ; உடைக்கக்கூடிய.

**break'age,** *n.* தொடர்பறுத்தல் ; பிளவு ; உடைவு ; உடை வுற்ற இடம், உடைந்த பகுதி ; உடைத்தலின் விளைவு ; இடையீடு.

**break'away,** *n.* கிளர்ச்சி ; பிரிந்துசெல்லல், பிரிவினை.

**break'back,** *a.* முதுகு நெரிக்கிற, பெரும்பளுவான.

**break'-bone fever,** *n.* குலைக்காய்ச்சல் வகை.

**break'-down,** *n.* முறிவு, நிலைகுலைவு ; இயந்திரப் பொறியின் சீர்க்குலைவு ; நீகிரோவரின் ஆடல்வகை ; (தொ.) break-down gang, எதிர்பாரா இடர் அழிபாடுகளை அகற்றும் பணியாளர்.

**break'er** [1], *n.* உடைதிரை, குமுறும் அலை ; உடைப்பவர் முரட்டுக் குதிரை அடக்குபவர்.

**break'er** [2], *n.* சிறு மிடாக்கலம்.

**break'ers,** *n. pl.* மோதலைவாய் ; பெரிய கடல் அலை.

**break'fast**, *n.* காலையுண்டி ; முதலுண்டி.

**break'-jaw**, *a.* பல்லுடைக்கிற ; உச்சரிப்புக்கடினமான.

**break'neck**, *a.* கழுத்து முறியும்படியான; பேரிடர்தரத்தக்க; பதற்றமான.

**break'through**, *n.* வல் ஊடுவழி, தடை தகர்த்து உண்டாக்கப்பட்ட வழி.

**break'water**, *n.* அலைதாங்கி ; அலைகரை, அணைகரை.

**bream** [1], *n.* நன்னீர்வாழும் மஞ்சள் நிறமுடைய கூன்முதுகு வாய்ந்த மீன்வகை.

**bream** [2], *v.* கடற்பூண்டுகளைக் கொளுத்திக் கப்பலின் அடித்தளத்தைத் தூய்மையாக்கு.

**breast**, *n.* மார்பு ; கொங்கை ; நெஞ்சு ; விலங்குடல் முன்பகுதி ; உடுப்பின் முன்னுடல் மேற்பகுதி ; சாய்குவடு ; மனச்சான்று ; உள்நாட்டம், அன்பு, ஆசை ; உணர்ச்சி ; கருத்து, எண்ணம் ; *v.* எதிர்த்துத்தாங்கு ; ஏறு ஆண்மையோடு எதிர் ; (தொ.) breast stroke, நெஞ்சு நீரில்பட இருகை வீசி நீந்துமுறை ; make a clean breast of, செய்த குற்றங்களை மறையாமல் கூறு, உள்ளதை ஒப்புக்கொள்.

**breast'-deep**, *adv.* மார்பு அளவு ஆழமாக.

**breast'ed**, *a.* மார்பு உடைய.

**breast'-girdle**, *n.* மார்பு எலும்பு வளையம்.

**breast'-high**, *adv.* மார்பு அளவு உயரத்தில்.

**breast'-knot**, *n.* மார்பணி இழை முடி.

**breast'plate**, *n.* மார்புக்கவசம், கவசத்தின் மார்புத்தகடு, மார்போடு ; யூதத் தலைமைக்குருவின் மணிபதித்த மார்புக்கச்சை ; சவப்பெட்டியின் மேலுள்ள பெயர்த்தகடு ; ஆமையின் அடிப்புற ஓடு.

**breast'-plough**, *n.* மார்பு பொருந்தித் தள்ளக்கூடிய குறுக்குச் சட்டமுடைய மண்கிளறிப்பொறி.

**breast'rail**, *n.* மார்பளவுயர்ந்த கட்டுமானத்தின் மேல்வரிச் சலாகை.

**breast'summer**, *n.* கட்டிட முகப்புத்தாங்கும் உத்தரக் கட்டை.

**breast'-wall**, *n.* அணைசுவர்.

**breast'-wheel**, *n.* நீராழி, ஊடச்சு வழிபாயும் நீரால் சுழற்றப்படும் விசை உருளை.

**breast'work**, *n.* அவசர அரண், மார்பளவு உயர மண் மதில்.

**breath**, *n.* மூச்சு, உயிர்ப்பு ; மூச்சோட்டம் ; மூச்சளவு நேரம் ; உயிர்க்கும் ஆற்றல் ; உயிர், ஆவி ; காற்றலை ; இளங்காற்று ; (ஒலி.) அதிர்வற்ற குரல் ; *a.* குரல்நாள அதிர்வற்ற ; (தொ.) breath of life, உயிர்மூச்சு, உயிர்க்காற்று ; out of breath, மூச்சுத்திணறுகிற நிலை உடைய ; take breath, ஓய்வு எடு; நிறுத்து; விட்டாற்றிக்கொள்; with bated breath, பயத்தாலோ பணிவாலோ மூச்சு அடக்கிக்கொண்டு.

**breathe**, *v.* மூச்சுவிடு, மூச்சுவாங்கு ; உயிர்ப்புக்கொள் ; உயிருடன் இயங்கு ; நன்றாக மூச்சுவிடு ; அச்சந்தவிர் ; ஓய்வுகொள் ; தயங்கு, இடையில் ஓய்வு மேற்கொள் ; ஊது, மேல்வீசு ; கறைபடியவிடு ; கலக்கவிடு ; காதுக்குள் சொல் ; வெளியிடு, இயம்பு ; மூச்சுப் பயிற்சிசெய் ; உள்ளேற்று ; தூண்டு ; தளர்வுறுத்து ; பண்பு பரப்பு ; மணம்பரப்பு.

**breathed**, *a.* ஒலியிலா உச்சரிப்பான.

**breath'er**, *n.* உயிர்ப்பவர், வாழ்பவர் ; சிறுநேரப்பயிற்சி ; ஓய்வு.

**breath'ing**, *n.* உயிர்த்தல் ; உள்ளவா, வேண்டுதல், அகநேர்வு ; ஓய்வு ; (இலக்.) கிரேக்கமொழி உயிர்ப்புக்குறி ; *a.* உயிருள்ளது போன்ற.

**breath'ing-space, breath'ing-time**, *n.* ஓய்வு நேரம் ; உயிர்க்கும் நேரம் ; சிறுநேர ஓய்வு.

**breath'ing-while**, *n.* மூச்சு இழுக்கும் நேரம்.

**breath'less**, *a.* உயிரற்ற ; மூச்சற்ற ; மூச்சுவிட முடியாத, திணறுகிற ; உணர்ச்சி வசமான ; ஆர்வத்தில் மூச்சுவிட மறந்த நிலையுடைய ; காற்றலையற்ற, காற்றுவீசாத.

**breath'lessly**, *adv.* மூச்சுவிடாமல் ; உணர்ச்சிவசமாக.

**breath'-taking**, *a.* திகைக்கும்படியான ; அதிர்ச்சியடையும் படியான ; எதிர்பாராத.

**breath'y**, *a.* நாதமின்றிப் பாடுகிற.

**brec'cia**, *n.* சுண்ணக்கூழாங்கற் கலவைப் பாறை.

**brecc'iated**, *a.* சுண்ணக்கூழாங்கற் கலவைப்பாறை சார்ந்த.

**bred**, *v.* **breed** என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**bree**, *n.* வடிசாறு, பொருளை இட்டு கொதிக்கவைக்கப்பட்ட கொதிநீர்ச்சாறு.

**breech**, *n.* உடலின் கீழ்ப்புறப் பின்பகுதி, பிட்டம்; பொருளின் அடிப்புறம் ; துப்பாக்கியின் பிற்பகுதி ; பீரங்கியின் புழைக் குழாயின் பின்பகுதி ; *v.* குறுங்கால்சட்டை அணிவி ; அடி, துன்புறுத்து.

**breech-block**, *n.* குண்டு [illegible] ப்பாக்கியின் பின்வழிஅடைப்பு.

**breeched**, *a.* குறுங்காற் ச[illegible]

**breech'es**, *n. pl.* குறுங்கா[illegible] ழுத்துக் கட்டவல்ல உலாவேளைக் க[illegible] es Bible, 1560-ஆம் ஆண்டுக்குரிய [illegible] ய நூல் ; breeches part, நாடகத்[illegible] நடிக்கும் நடிப்பு ; wear the bree[illegible] செலுத்து.

**breech'es-buoy**, [illegible] யிர்காப்பு மிதவை.

**breech'ing**, *n.* [illegible] ரங்கியைக் கப்பலோடு இ[illegible]

**breech'less**, *a.* கு[illegible]

**breech'-loader**, *n.* பின்வ[illegible] டி அடைக்கும் துப்பாக்கி.

**breech'-loading**, *n.* துப்பாக்கியில[illegible] வழியே மருந்து குண்டு அடைத்தல்.

**breed**, *n.* இனம், குருதி மரபு ; மரபு[illegible]கை, வளர்ப்பினம் ; மரபு, கால் வழி ; மரபுப் பண்பு[illegible] செறிந்த குடி ; கான்முளை, மரபுக் கொழுந்து ; *v.* ஈனு, பெறு, பிறப்பி ; கருத்தரி, கருவில் பேணிவளர் ; உண்டாக்கு, உற்பத்திசெய் ; பயிற்றுவித்துப் புதுவகை உண்டாகச்செய் ; காரணமாயிரு, தூண்டு, உள்விளைவி ; பெருக்கு ; தழைப்பி, பிள்ளைகள் பெற்றுப் பெருகு, இனம்பெருக்கு ; இனப்பெருக்கமுறு.

**breed'er**, *n.* வளர்ப்பவர் ; பயிற்றுவிப்பவர் ; (தொ.) breeder reactor, தொடர்வரிசைக் கருவுள் இயக்கத்தில் உட்கொள்ளும் பொருட்சிதைவுத் திறத்தைவிட மிகுதியாக உண்டுபண்ணும் தொடர்வரிசை.

**breed'ing**, *n.* வளர்ப்பு ; இனப்பெருக்கம் ; பயிற்சிப்பண்பு ; நடைநயம் ; நன்னடத்தை, நல்லொழுங்கு ; (தொ.) breeding in-and-in, மட்டுமீறிய இன உட்கலப்பு, நெருங்கிய உறவினரிடையே மணஞ்செய்துகொள்ளுதல்.

**breeze** [1], *n.* இளங்காற்று, தென்றல் ; மென்காற்றலை ; காற்று ; குழப்பம் ; கலகம் ; சிடுசிடுப்பு ; அடங்கிய அலருரை.

**breeze** [2], *n.* உலைக்கரி, பளுவற்ற இளங்காரை செய்யப் பயன்படுத்தப்படும் எரிந்த நிலக்கரித்துண்டுகள்.

**breeze** [3], *n.* உண்ணிவகை.

**breeze'less**, *a.* காற்றுவீசாத ; காற்று இல்லாத ; அசைவற்ற.

**breez'ily**, *adv.* காற்றோட்டத்தில் ; உற்சாகமுடன்

**breez'iness**, *n.* காற்றோட்டம் ; மகிழ்ச்சி ; உற்சாகம்.

**breez'y**, *a.* காற்றலையின் வீச்சுப்போன்ற ; காற்றோட்டமான ; எழுச்சியுள்ள ; ஒள்ளிய ; களிப்புமிக்க.

**breg'ma**, *n.* மண்டை ஓட்டின் முன்னிணை விலாப்பகுதி எலும்பு ; *pl.* breg'mata.

breg'matic, *a.* மண்டை ஓட்டின் முன்னிணை விலாப்பகுதி எலும்பு பற்றிய.

breloque', *n.* கடிகாரச்சங்கிலியோடு இணைக்கப்பட்டுள்ள அணிவகை.

Bren, *n.*=Bren-gun.

Bren carrier, *n.* துப்பாக்கி குண்டு துளைக்க முடியாத ஊர்தி.

Bren'-gun, *n.* பளு இல்லாத பொறித்துப்பாக்கி.

brent'-goose, *n.* கார்காலத்தில் இங்கிலாந்துக்கு வரும் சிறு காட்டுவாத்து இனம்.

bress'ummer, *n.*=breastsummer.

breth'ren, *n.* *pl.* [illegible] டன்பிறப்புரிமையாளர்கள், தோழர்கள்.

Bret'on, *n.* பிர[illegible]ள்ள பிரிட்டனி (Brittany) மாகாணப் பழங்குடியினர்; [illegible] ணப் பழங்குடிமக்களின் மொழி; *a.* [illegible]னி மாகாணத்துக்குரிய; பிரிட்டனி [illegible] மொழிசார்ந்த.

Bretw[illegible] அரசர்கள் தம் மே[illegible]டம்.

brev[illegible] ளைபிறைக்கோடு, யா[illegible] இசை.) பழங்கால மா[illegible]

brev'et, [illegible] தியத்திற்கும் மே[illegible] பத்திரம்; நன்[illegible] அளி; ம[illegible] ajor, [illegible] et ran[illegible]

brev'[illegible] டோறும் ஓதும் [illegible]

bre'viate, [illegible]; வழக்குரைஞருக் குரிய வ[illegible]

brevier', [illegible]

brev'ity, *n.* சுருக்[illegible]த்தின் குறுகிய அளவு; குறுக்கம்.

brew, *n.* வடிப்பு, வடி[illegible] ஒருதடவை வடிப்பளவு; வடியத்தின் பண்பு, வடிப்பு[illegible]டிப்புமுறை; வடிமான வகை; *v.* நுரைப்பானம் வடி, கா[illegible]ச்சு, மது இறக்கு; கலக்கு; கலந்து உருவாக்கு, இட்டுக்கட்டி உண்டுபண்ணு; உள்ளீடாகச் சதிசெய்; வடிப்பில் உருவாகு; கலந்து உருவாகு, உள்ளூறவிளை.

brew'age, *n.* வடித்திறக்குதல்; வடிக்கப்பட்ட சரக்கு; வடித்துக் கலக்கப்பட்ட குடிவகை.

brew'er, *n.* தேறல் வடிப்பவர், சாராயம் காய்ச்சுபவர்.

brew'ery, brew'-house, *n.* வடிப்பாலை, சாராயக்கிடங்கு.

brew'ing, *n.* இன்தேறல் வடித்தல்.

brew'is, *n.* குழம்பு, மாட்டிறைச்சிச்சாறு.

brew'ster, *n.* சாராயம் காய்ச்சுபவர்; (தொ.) Brewster Sessions, வெறிய வகைகளை விற்பதற்கான தனி இணக்க மளிக்கும் மன்றப் பருவஅமர்வு.

bri'ar, *n.*=brier.

brib'able, *a.* கைக்கூலி கொடுத்து வசப்படுத்தக்கூடிய; கையுறையால் முடிவு மாற்றக்கூடிய.

bribe, *n.* கைக்கூலி, இலஞ்சம்; *v.* கைக்கூலிகொடு, கையுறையால் வசப்படுத்து, பணம் கொடுத்துத் தீர்ப்புப் பிறழச்செய்; பொருள்கொடுத்துத் தகாத ஆதாயமடை.

brib'ery, *n.* கைக்கூலி கொடுத்தல்; இலஞ்ச ஊழல்.

bric'-a-brac, *n.* தொன்மை அரும்பொருள்களின் தொகுதி.

brick, *n.* செங்கல்; செங்கல் வடிவுள்ள பாளம்; குழந்தை விளையாட்டுக் கட்டிடம் கட்டப் பயன்படுத்தும் மரத்துண்டு; செங்கல் வடிவுடைய அப்பப்பாளம், அப்பக்கட்டி; *v.* செங்கல் அடுக்கிக்கட்டு; செங்கல் பாவு; செங்கல் பாவிய தோற்றம் உண்டுபண்ணு.

brick'-bat, *n.* செங்கல் துண்டு, செங்கற்கட்டி.

brick'-clay, *n.* செங்கல் செய்யப் பயன்படும் களிமண்; மணலும் இரும்புச் சத்தும் சேர்ந்த களிமண்.

brick'-dust, *n.* செங்கல் தூள், செங்கற்பொடி; செங்கற் பொடி நிறம்.

brick'en, *a.* செங்கலாலான.

brick'-field, *n.* செங்கற்களம், காளவாய்.

brick'ing, *n.* செங்கல் வேலைப்பாடு; செங்கற் பாவியது போன்ற தோற்றந்தரும் வேலைப்பாடு.

brick'-kiln, *n.* செங்கற்சூளை, செங்கற் காளவாய்.

brick'layer, *n.* கொல்லத்துக்காரன், கொத்தன்.

brick'-laying, *n.* கொத்துவேலை, கொல்லத்துவேலை.

brick'maker, *n.* செங்கல் செய்பவர்.

brick'-nog, brick'-nogging, *n.* மரவேலை இடைப்பட் டிணைக்கும் செங்கல்.

brick'-red, *a.* செங்கல் நிறமான, சிவப்பான.

brick'shaped, *a.* செங்கல் வடிவான.

brick'-tea', *n.* அப்பம் போன்று அழுத்தப்பட்டுள்ள தேயிலை.

brick'work, *n.* செங்கல் வேலைப்பாடு, செங்கற் கட்டுமானம்; செங்கற் கட்டிடம்; கொத்துவேலை; செங்கல் தொழிற்சாலை.

brick'y, *a.* செங்கல்லினால் இயற்றப்பட்ட; செங்கல்போன்ற.

bric'ole, *n.* கல் எறிவதற்கான பழங்காலப்பொறி; வரிப்பந் தாட்டத்தில் பந்து சுவரில் தெறித்து மீளல்; பிறிதுமுகமான பந்தடி; மேசைக்கோற்பந்தாட்டத்தில் சுற்றுமுகமான பந்தடி.

brid'al, *n.* திருமண விருந்து; திருமணம்; *a.* திருமணஞ் சார்ந்த; மணப்பெண்ணைப் பற்றிய.

bride[1], *n.* மணப்பெண்.

bride[2], *n.* பூவேலைப்பாடுகளை இணைக்கும் நுட்பமான வலைப் பின்னல்; மகளிர் அணியும் தொப்பியிலுள்ள கயிறு.

bride'-bed, *n.* மன்றற்படுக்கை, திருமணப்பள்ளி.

bride'cake, *n.* திருமண அப்பம், மணப்பண்ணியம்.

bride'-chamber, *n.* மணமக்கள் பள்ளியறை.

bride'groom, *n.* மணமகன், மணவாளன், மாப்பிள்ளை.

bride'maid, bride'maiden, *n.*=bridesmaid.

bride'man, *n.*=bridesman.

brides'maid, *n.* மணப்பெண் தோழி.

brides'man, *n.* மாப்பிள்ளைத் தோழன்.

bride'well, *n.* திருத்தகம், சிறை.

bridge[1], *n.* பாலம்; யாழ்க்குதிரை, இன்னியங்களின் நரம்பு களைத் தாங்கும் மரத்துண்டு; (கப்.) கப்பல் தலைவன் நிற் பதற்கான மேடை; மூக்குத் தண்டு; மூக்குக் கண்ணாடி யின் இடைஇணைப்புக் கம்பி; *v.* இணை; பாலங்கட்டு; (தொ.) bridge of boats, படகுப்பாலம்; bridge of gold, தோல்வியுற்ற எதிரிகள் எளிதாகப் பின்வாங்க அமைக்கப் பட்ட வழி.

bridge[2], *n.* சீட்டாட்ட வகை.

bridge'board, *n.* ஏணிப்படிகளில் படிப்பலகைகளை ஏற்றி இணைக்கும் செங்குத்தான பலகை.

bridge'-head, *n.* எதிரியின் நாட்டிற்குள் செல்லக்கூடிய குறுகிய வழி; எல்லையாய் அமைந்துள்ள ஆற்றின் குறுக்கே யுள்ள பாலம்.

bridge'less, *a.* பாலம் அற்ற.

bri'dle, *n.* கடிவாளம்; தடை, செறுப்பு; தலையைச் சொடுக்கி யிழுத்தல்; (கப்.) நங்கூரவடம், தளைக்கம்பி வடம்; (உ-ட.) உறுப்பியக்கம் தடுக்கும் தசைநார்; *v.* கடிவாளமிடு; பிடித் திழு; அடக்கு; அடக்கிச்செல்; எதிர்ப்பைத் தெரிவி; முறைப்புக் காட்டு.

**bri'dle-bridge**, *n.* குதிரைக்காரர்களுக்காக அமைந்த வண்டி செல்லாத பாலம்.

**bri'dle-hand**, *n.* இடதுகை, குதிரையில் இவர்ந்து செல்லும் போது கடிவாளத்தைப் பிடித்திழுக்கும் கை.

**bri'dle-path**, *n.* குதிரைக்காரர்களுக்கான வண்டி செல்லாத பாட்டை.

**bri'dler**, *n.* கடிவாளம் இடுவோர் ; அடக்குவோர்.

**bri'dle-rein**, *n.* கடிவாளத்தின் வார்.

**br'idle-road**, *n.* = bridle-path.

**bridoon'**, *n.* படைத்துறை ஈரிணைக் கடிவாளத்தின் மெல் லிணை.

**Brie**, *n.* வெண்ணெய் நீக்கப்படாத பாலேடு.

**brief**, *n.* வழக்குரைஞரிடமுள்ள வழக்காடிகளின் வழக்குக் குறிப்பு, சுருக்க அறிவிப்பு ; வழக்குரைஞரின் பணி ; சிறு பணி ; போப்பாண்டவரின் ஒழுங்குமுறையாணை ; தாள் வடிவளவு ; கையச்சுப்பொறி வீச்சளவு ; வான் படைத்துறையில் வானோடிகட்கு அறிவிக்கப்படும் கட்டளை ; *a.* சுருக்கமான ; சுருங்கிய காலக்கூறுடைய ; செறிவான ; *v.* சுருக்கிக் குறிப்பிடு ; சுருக்கக் குறிப்பெடு ; சுருக்க விவரத்தின்மூலம் அறிவி ; வழக்காட அமர்த்திக்கொள் ; வானூர்திப் பணியாளருக்கு விமானத்தாக்குப் பற்றிக் கட்டளை இடு ; (தொ.) be brief, சுருக்கமாகக்கூறு ; be watching brief, அக்கரையுடன் வழக்காடியின் வழக்கு கவனி ; hold brief for, வாதாட வழக்குரைஞராகத் தொடர்ந்திரு ; ஆதரித்து வாதாடு ; in brief, சுருக்கமாக.

**brief'-bag**, *n.* சிறு தோற்பை.

**brief'less**, *a.* கட்சிக்காரர் இல்லாத ; வேலையற்ற.

**brief'ly**, *adv.* சுருக்கமாக, குறிப்பாக.

**brief'ness**, *n.* சுருக்கம்.

**briefs**, *n. pl.* (பே-வ.) பெண்டிர் குறுங்காற்சட்டை.

**bri'er**, *n.* காட்டுரோசா உட்பட்ட முட்செடிவகை ; புகைக் குழாய் செய்யப் பயன்படும் வேரையுடைய வெண்புதர்ச்செடி ; இவ்வேரால் செய்யப்பட்ட புகைக்குழாய் ; (தொ.) Brier rose, காட்டுரோசா வகை ; Sweet Brier, மணங்கமழும் இலைகளையும் மலர்களையுமுடைய ரோசா வகை.

**bri'ered**, *a.* முட்செறிந்த, முள் நிறைந்த.

**bri'er-root, bri'er-wood**, *n.* புகைக்குழாய் செய்ய உதவும் வேர்வகை.

**brier'y**, *a.* முள்ளார்ந்த, முள்ளடர்ந்த.

**brig**, *n.* இருபாய்மரக்கப்பல்.

**brigade'**, *n.* படை அணிப்பகுதி ; களப்பீரங்கிப் பிரிவுடன் மூன்று காலாட் பிரிவுகளடங்கிய படைவகுப்பு ; கவசப் படைப்பகுதி ; ஒழுங்கும் கட்டுப்பாடுமுள்ள தொண்டர்குழு ; *v.* படைப்பகுதியாக அமை ; படைப்பிரிவுடன் இணை ; படை வகுப்புக்களாக உருவாகு ; ஒழுங்காக அமை.

**brigade'ma'jor**, *n.* படைப்பகுதித் துணைப்பணியாளர்.

**brigadier'**, *n.* படைப்பகுதித் தலைவர், படைப்பணியாளர்.

**Brigadier'-General**, *n.* படைப்பகுதித் தளபதி.

**bring'and**, *n.* கொள்ளைக்காரர், ஆறலைப்போர்.

**bring'andage**, *n.* கொள்ளையடித்தல், வழிப்பறி செய்தல்.

**brig'andish**, *a.* கொள்ளைக்காரனுக்குரிய ; கொள்ளையடிக்கும் இயல்புடைய, கொள்ளைக்காரன் போன்ற.

**brig'andry**, *n.* = brigandage.

**brig'antine**[1], *n.* உடலின் மேற்பகுதியைக் காக்கும் இருப்புக் கவசம்.

**brig'antine**[2], *n.* இருபாய்மரக்கப்பல் வகை.

**bright**, *a.* ஒளிர்கிற ; ஒளிமிக்க ; பளபளப்பான ; விளக்கமான ; முனைப்பான ; தெளிந்த ; மகிழ்ச்சிமிக்க ; அறிவுக் கூர்மை யான, முன்னறிவுடைய ; புகழ்சான்ற ; சிறப்புவாய்ந்த.

**bright'en**, *v.* ஒளிமிகச்செய் ; பொலிவுறச்செய் ; பளபளப் பாக்கு ; ஒளிபெறு ; பொலிவுபெறு ; தெளிவடை.

**bright'ness**, *n.* ஒளி ; பொலிவு ; கிளர்ச்சி ; தெளிவு ; பளபளப்பு ; அறிவுக்கூர்மை.

**Bright's disease'**, *n.* சிறுநீரகத்தில் ஏற்படும் நோய்வகை.

**brigue**, *n.* சச்சரவு, கலகம் ; சூழ்ச்சி ; *v.* சூழ்ச்சிசெய்.

**brig'uing**, *n.* ஆதரவு தேடுதல்.

**brill**, *n.* வெண்புள்ளிகளையுடைய தட்டையான மீன்வகை.

**brill'iance**, *n.* பிறங்கொளி, ஒளி, விளக்கம், மினுமினுக்கம் ; பெருந்திறமை ; பகட்டழகு.

**brill'iancy**, *n.* மின்னொளியுடைமை ; சுடரொளி ; கூரொளி ; மினுமினுப்பு ; பெரும்புகழ், கூரறிவு.

**brill'iant**[1], *n.* பட்டையிட்ட சிறந் [illegible]ம் ; மணியுரு அச்சு.

**brill'iant**[2], *a.* ஒளிமிக் [illegible], சுடர்விடுகின்ற ; புகழ்சான்ற ; சிறப்ப [illegible] முனைப்பான ; திறமிக்க ; மிடுக்கு [illegible]

**brill'iantine**, [illegible] நெய்

**brill'iantness** [illegible]ன்மை மேம்பாடு.

**brim**, *n.* விளிம் [illegible]த்தின் கரைக்கோடு ; [illegible]ரப்பு ; விளிம்பு வ[illegible] பாங்கித் ததும்பு.

**brim'f**[illegible] ; கரை ம[illegible]

**br**[illegible] தல்.

**brim**[illegible]

**brimmed**, [illegible]

**brimm'er**, *n.* [illegible]

**brimm'ing**, *a.* [illegible]

**brim'stone**, *n.* க[illegible] brimstone butterfly, brimston[illegible] வண்ணப் பூச்சி வகை.

**brin'ded**, *a.* பழுப்பு நி[illegible]டைவரிகளை அல்லது புள்ளிகளை உடைய.

**brin'dle**, *n.* பழுப்[illegible]தடையே புள்ளிகள் அல்லது இடைவரிகளுடை[illegible]ம.

**brin'dled**, *a.* = brinded.

**brine**, *n.* உவர்நீர் ; கடல்நீர், கடல் ; கண்ணீர்.

**brine'-pan, brine'-pit**, *n.* உப்புக்காய்ச்சும் இருப்புக்கட்டம் ; உப்புப்பாத்தி, உப்பளம் ; உப்பு ஊற்று.

**brine'-shrimp**, *n.* உவர்நீரில் வாழும் நத்தை இனம்.

**bring**, *v.* கொணர், எடுத்துக்கொண்டு வா ; வருவி ; இணங்குவி, வயப்படுத்து ; எடுத்துச்செல் ; சான்றுகக் காட்டு ; ஈட்டு ; ஏற்படுத்து ; நிறுவு ; தொடங்கிவை ; வழி நடத்து, நடத்திச்செல் ; முன்னேறச்செய் ; (தொ.) bring about, நடைமுறைக்குக் கொண்டுவா ; ஏற்படுத்து ; bring back, நினைவிற்குக் கொண்டுவா ; bring down, வீழ்த்து ; தாழ்த்து ; குறை ; அடக்கு ; சுட்டுத் தள்ளு ; bring down the house, பொதுப்பாராட்டுப் பேரொலி எழுப்பு : bring forth, ஈனு, கருவுயிர், பிறப்பி, பெறு ; உண்டாக்கு ; bring forward, முன் கொணர் ; முன்தொகையைப் பின் கொண்டு வந்திணை ; bring home, மெய்யெனக்காட்டு ; மனத்தில் பதியவை ; bring in, புதிதாகக் கொணர் ; புகுத்து ; விளைவி ; அளி ; bring off, அழைத்துவா ; பாதுகாப்பாகக் கொண்டுவந்துவிடு ; செய்து நிறைவேற்று ; bring on, தூண்டு ; வழிசெய் ; முன்னேறச்செய் ; வாதத்துக்கு வழி வகு ; bring out, விளக்கு, தெளிவுபடுத்து ; முனைப்பாக்கு ; வெளிக்கொணர், வெளியிடு ; bring over, மாற்றியமை ; தன்வயமாக்கு ; bring round, உணர்வு பெறச்செய் ; தன்வயப்படுத்து ; bring to, தன்னுணர்வு

நிலைக்குக் கொண்டுவா ; (கப்.) கொண்டுவந்து நிறுத்து ; நிலைகொள் ; bring under, அடக்கு ; கீழ்ப்படுத்து ; bring up, பேணிவளர்; பயிற்றுவி; தொடர்; சமநிலைக்குக் கொண்டுவா; நினைவிற்குக் கொண்டுவா ; புதிதாகக் கொணர் ; எழச்செய்; மன்றத்தில் எழுந்து பேசச்செய் ; வழக்குத் தொடு ; (கப்.) நங்கூரம் பாய்ச்சு ; bring up the rear, கடைசியாக வா.

**bring'er**, *n.* கொண்டுவருபவர் ; இணங்கச் செய்பவர்.

**bring'ing**, *n.* கொண்டுவருதல் ; இணங்கச் செய்தல் ; ஈட்டல் ; நிறுவல் ; தொடக்கம் ; வழிநடத்தல்.

**brin'ish**, *a.* உவர்நீர்த்தன்மையுடைய ; உப்புபோன்ற.

**brin'jal**, *n.* கத்தரிக்காய்வகை, வழுதுணங்காய்வகை ; கத்தரிச்செடி.

**brink**, *n.* செங்குத் [illegible] ஓரம் ; நீர்நிலையின் முடிவெல்லை ; கரை ; விளிம்பு.

**brink'manship**, *n.* செ[illegible] காரணமாகப் போரின் உட்புகாமல் ஓ[illegible] மை.

**brin'y**, [illegible] ; உப்பான.

*bri'o*, ( [illegible] ம்.

**brioche'**, [illegible] அப்பவகை.

**briquet** [illegible] பகல் வடிவான பாள[illegible]

**brise'-b**[illegible] சிக்கப்பட்ட திரை[illegible]

**brisk**, [illegible] விறு[illegible] கூர[illegible] விரை[illegible]

**brisk'en**, [illegible] வுவிறுப் படை.

**brisk'et**, *n.* [illegible] தி ; மார்புப்பகுதி இறைச்சி.

**brisk'ly**, *adv.* சுறு[illegible] ரவாக.

**brisk'ness**, *n.* சுறுசு[illegible]

**bris'ling**, *n.* நார்வே ந[illegible] ன்வகை.

**bri'stle**, *n.* மயிர் சிலிர்ப்பு ; [illegible] உடல் மயிர் ; விலங்கினத்தின் தடித்த குட்டையா[illegible] மயிர்; மனிதனின் குட்டையாக வெட்டப்பட்ட தாடி ; *v.* சிலிர் ; முள் மயிர் சிலிர்க்கச் செய் ; வெகுளிகாட்டு ; சண்டைக்கு எழு ; துன்பமுண்டாக்கு ; அடர்ந்து நிறைந்திரு.

**Bris'tol**, *n.* கிளாஸ்டர்ஷயரில் (Gloucestershire) உள்ள ஒரு நகரம்; (தொ.) Bristol fashion, (கப்.) எல்லாம் சீராக, முழுதும் நன்முறையில்.

**Bris'tol-board'**, *n.* படம்வரையப் பயன்படும் அட்டைப் பலகை.

**Bris'tol-brick**, *n.* இரும்புத்தொழிற் கருவிகளைத் தேய்த்துத் துப்புரவாக்கப் பயன்படும் மட்பொருள்வகை.

**Bris'tol-di'amond**, *n.* பிரிஸ்டல் நகரத்திற்கருகில் கிடைக்கும் படிகக்கல்வகை.

**Bris'tol-milk'**, *n.* இன்தேறல்வகை.

**bris'ure**, *n.* கோட்டை மதிற்சுவர் அல்லது கைப்பிடிச்சுவரின் முடங்கிய கோணப்பகுதி ; பெருமக்களின் குடும்பச் சின்னங்களில் இனமரபுக் கிளைஉறவுகளைக் காட்டும் வேறுபாடு.

**brit**, *n.* மீன்வகைகளின் குஞ்சு ; சிறுமீன் வகை.

**Brit'ain**, *n.* இங்கிலாந்து - வேல்ஸ் - ஸ்காத்லாந்து ஆகிய நாடுகளின் இணைப்பு ; பிரிட்டனின் ஆட்சிப் பேரரசு.

**Britann'ia**, *n.* பிரிட்டன் நாடு பற்றிய கற்பனை உருவகமான நாட்டன்னை ; (தொ.) Britannia metal, வெள்ளி போன்ற வெள்ளிய நிமிளைக்கலவை உலோகம்.

**Britann'ic**, *a.* பிரிட்டனுக்குரிய; பிரிட்டன் நாட்டன்னை சார்ந்த.

**Brit'icize**, *v.* பிரிட்டனுக்குரியவராகு ; பிரிட்டனுக்குரியவராக்கு ; பிரிட்டனுக்குரியவர் போலாகு ; பிரிட்டனுக்கு உரியவர் போலாக்கு ; பிரிட்டனின் மக்களோடு ஒன்றுபட்டுக் கல ; பிரிட்டனின் பண்புகளுடன் ஒன்றுபடு.

**Brit'ish**, *n.* பண்டைப் பிரிட்டானியர்களின் மொழி ; வெல்ஷ் மொழி; *a.* பிரிட்டன் நாட்டுக்குரிய ; பிரிட்டன் குடிமக்களைப் பற்றிய ; பிரிட்டனின் பேரரசைச் சார்ந்த ; பிரிட்டனுடன் இணைந்த பொதுவரசு நாடுகளைப் பற்றிய ; பண்டைப் பிரிட்டானிய இனம் சார்ந்த ; (தொ.) British gum, பசைப் பொருள்வகை, கோந்துவகை ; British plate, உலோக வகை ; British warm, படைத்துறையினர் மேற்சட்டை வகை.

**Brit'isher**, *n.* பிரிட்டனுக்குரிய குடியுரிமையாளர்.

**Brit'ishism**, *n.* பிரிட்டனில் பேசப்படுகிற ஆங்கிலத்திற்கே உரிய பேச்சுமொழித்தன்மை.

**Brit'on**, *n.* பிரிட்டன் நாட்டிற் பிறந்தவர் ; பிரிட்டனுக்குரிய பேரரசில் பிறந்தவர் ; பிரிட்டன் தீவின் தென்பகுதியில் ரோமர் கண்ட பழங்குடியினர்.

**brit'tle**, *a.* எளிதில் உடையக்கூடிய, எளிதில் நொறுங்கத்தக்க, நொய்ம்மையான.

**brit'tleness**, *n.* உடையும் தன்மை, நொறுங்கும் இயல்பு, நொய்ம்மை.

**britt'le-star**, *n.* விண்மீன்வடிவ மீன்வகை ; நீர்வாழ் சிறு விலங்குவகை.

**brit'zka, britzs'ka**, *n.* ஒரே இருக்கை உள்ள திறந்த நாற்சக்கர வண்டிவகை.

**broach**, *n.* துளைபோடு கருவி ; ஊசி ; அகப்பைக்கோல் ; இறைச்சி சுடும் இரும்புமுள் ; திருக்கோயில் தூபி ; *v.* துளை; திற ; தொடங்கு ; உரையாடல் துவக்கு ; வெளியிடு ; தேறல்வடி ; (கப்.) கப்பலைக் காற்றலைகள் பக்கவாட்டிலடிக்கும்படி திருப்பு.

**broach'er**, *n.* துளைக்கருவி ; ஊசி ; இறைச்சி சுடும் இரும்பு முள்; துளைபோடுபவர் ; திறப்பவர் ; பேச்சுத் தொடங்குபவர்.

**broad**[1], *n.* அகன்றபகுதி ; விரிந்த பக்கம் ; ஆற்றின் விரிந்த பகுதி ; *a.* அகன்ற ; அகல்விரிவான ; தட்டையான, பரந்த ; திறந்த ; பட்டாங்கமான, வெளிப்படையான ; கரடுமுரடான ; கொச்சையான; நயமற்ற ; நுண்ணயமற்ற ; மொட்டையான; விரிந்த மனப்பான்மையுடைய ; பரவுகிற ; குறியிலிருந்து விலகிய, சிதறுகிற ; மொத்தப் பார்வையான ; பொதுத் தன்மையான ; தொனியில் நிறைவகலமான, ஒலிப்பில் அழுத்தந்திருத்தமான ; (தொ.) broad daylight, பட்டப் பகல் ; வெளிச்சம்.

**broad**[2], *n.*=broadpiece.

**broad'-arr'ow**, *n.* அரசாங்கப்பொறிப்பு, அரசாங்கத்தின் பொருள்கள்மேல் இடப்படும் மேல்நோக்கிய அம்புக்குறிப் பொறிப்பு.

**broad'-bean'**, *n.* தட்டை மொச்சைவகை.

**broad'-brim**, *n.* அகன்ற ஓரமுடைய தொப்பி.

**broad'cast**, *n.* ஒலிபரப்புதல்; ஒலிப்பரப்பு; ஒலிபரப்பறிவிப்பு ; வானொலி ; கம்பியில்லாத்தந்தி அறிவிப்பு ; விதை பரப்புதல், விதைத் தெளிப்பு ; *a.* பரவிய ; பரப்பப்பெற்ற ; பரந்து சிதறிய ; பொதுவாக அறிவிக்கப்பட்ட ; பேச்சு-சுற்றறிக்கை-துண்டுவிளம்பரம் - ஒலிபெருக்கி - கம்பியில்லாத்தந்தி ஆகியவற்றில் எங்கும் அறிவிக்கப்பட்ட ; *v.* பரப்பு ; விதைதெளி, விதைதூவு ; ஒலிபரப்பு ; கம்பியில்லாத்தந்தி மூலம் செய்தி பரப்பு ; *adv.* எங்கும், எல்லாத்திசைகளிலும்.

**broad'caster**, *n.* ஒலிபரப்பி, வானொலி ஒலிபரப்புக்கருவி; செய்தி பரப்புபவர் ; விதைபரப்பும் கருவி ; விதை தெளிப்பவர்.

**broad'casting**, *n.* ஒலிபரப்பு ; விதை தெளித்தல் ; வானொலி வாயிலாகச் செய்தி பரப்புதல் ; பரப்பறிவிப்பு.

**broad'cloth**, *n.* ஆடவர் உடைக்குரிய கம்பளித்துணிவகை.

**broad'gauge**, *n.* அகல்படி இருப்புப்பாதை, ஐம்பத்தாறரை அங்குலத்திற்கும் மேலான இடைவெளி உடைய இருப்புப் பாதை.

**broad'-glass**, *n.* பலகணிக்கண்ணடி.

**broad'ish**, *a.* சற்றே அகலமான, சற்று மிகையான விரி வுடைய.

**broad'-leaf**, *a.* அகல் இலையுடைய.

**broad'ly**, *adv.* பொதுவாக ; முழுமையாக ; நிறைவுடன்.

**broad'mind'ed**, *a.* பரந்த உள்ளமுடைய, விரிந்த நோக் குடைய, விரிந்த மனப்பான்மையுடைய, பெரும்போக்குடைய.

**broad'mind'edness**, *n.* பரந்த மனப்பான்மை.

**Broad'moor**, *n.* அறிவு திறம்பிய குற்றவாளிகள் உறையுள்; பைத்தியக்காரக் குற்றவாளிகள் தங்குமனை.

**broad'ness**, *n.* அகல்விரிவு ; பரந்தநிலை, நிறைதன்மை.

**broad'piece**, *n.* 20 வெள்ளிக்கீடான பதினேழாம் நூற்றுண்டின் நாணயவகை.

**broad'sheet**, *n.* ஒருபுறத்திலே மட்டும் அச்சடிக்கப்பட்ட அகன்ற தாள் வெளியீடு.

**broad'side**, *n.* கப்பலின் பக்கம் ; போர்க்கப்பலின் ஒருபக்கத் துப்பாக்கி வரிசை ; கப்பலின் ஒருபக்கத்துத் துப்பாக்கி வரிசையின் மொத்த வேட்டுவெடிப்பு.

**broad'-silk**, *n.* நாடாவாக ஆக்கப்படாத பட்டுத்துணிக் கச்சை.

**broad'sword**, *n.* அகன்ற அலகுடைய வாள் ; அகல் வாளினைத்தாங்கிய விரன்.

**broad'way**, *n.* அகல்வீதி, பெருஞ்சாலை.

**broad'ways, broad'wise**, *adv.* அகலப்போக்காக ; அக லத்தில்.

**Brob'dingnag**, *n.* ஜோனதன் ஸ்விப்ட் (Jonathan Swift) என்ற ஆங்கில ஆசிரியரின் 'கலிவரின் பிரயாணங்கள்' (Gulliver's Travels) என்ற நூலில் கற்பனை செய்துள்ள பேருருவ மனிதர் வாழும் இடம் ; *a.* பேருருவமான ; மிகப் பெரிய.

**Brob'dingnagian**, *a.* பேருருவம் படைத்த ; அரக்கனைப் போன்ற.

**brocade'**, *n.* முனைப்பான சித்திரப்பூவேலை பொறிக்கப்பட்ட பட்டுத்துணிவகை; பொன்-வெள்ளி-சரிகை வேலைப்பாடுடைய துணிவகை ; *v.* துணியில் பூவேலைப்பாடு செய் ; துணியில் சித்திரவேலை செய்.

**brocad'ed**, *a.* சித்திரப்பூவேலைப்பாடுள்ள ; சித்திர வேலைப் பாடுடைய உடையணிந்த.

**broc'ard**, *n.* அடிப்படைச்சட்டம், மூலவிதி.

**broc'coli**, *n.* திண்ணிய பூக்கோசு வகை.

**bro'che**, *n.* முகப்புச்சித்திர அமைப்புடன் நெய்யப்பட்ட பட்டுவகை ; *a.* முகப்புச்சித்திர அமைப்புடன் நெய்யப்பட்ட.

**bro'chure**, *n.* சிற்றேடு, துண்டு வெளியீடு.

**brock**, *n.* தகசு, தவழ்கரடி, கரடியின விலங்குவகை ; முடை நாற்றமுடையவர்.

**brock'et**, *n.* நேர்கொம்புடைய ஈராட்டைப் பருவக்கலைமான்.

**brock'ram**, *n.* கோணச் சல்லிகளாலான பாறை.

**broc'oli**, *n.* =broccoli.

**brod'ekin**, *n.* கணுக்கால்வரை மூடும் பண்டைக்காலப் புதையடி வகை.

**brod'erie Anglaise'**, *n.* வெள்ளை நயநேரியல் துணிமீதுள்ள அகலப்பின்னல் வேலைப்பாடு.

**brod'kin**, *n.* =brodekin.

**brogue**[1], *n.* பதனிடப்படாத தோலில் செய்யப்பட்ட தடித்த செருப்புவகை.

**brogue**[2], *n.* அயர்லாந்து மொழியில் சொல்லழுத்தம்.

**broid'er**, *v.* பின்னல்வேலை செய் ; பூவேலை செய் ; அழகு செய் ; அணிசெய் ; பின்னல்வேலை செய்வி ; அணி செய்வி.

**broid'erer**, *n.* பின்னல் வேலை செய்பவர் ; அணிசெய்பவர்.

**broid'ering**, *n.* பின்னல்வேலை செய்தல் ; பூவேலை செய்தல்.

**broid'ery**, *n.* பின்னல்வேலை ; பூவேலை.

**broil**[1], *n.* பூசல், சண்டை, குழப்பம் ; இடையூறு.

**broil**[2], *n.* வெதுப்பிய இறைச்சி.

**broil**[3], *v.* தணலின்மேல் சமை ; வெதுப்பு ; சூடாகு.

**broil'er**, *n.* வெதுப்புவதற்குச் சித் ... விற்கப்படும் விரை வளர்ச்சியூக்கப்பட்ட இளங்கோ ...

**broke**[1], *n.* குறுந்துய் உ ... பளி உரோமம்.

**broke**[2], *v.* விலை ... க்து.

**broke**[3], *v.* br ...

**broke**[4], *adv.* ... லக்கப் பட்டு.

**brok'en**, *a.* உ ... முறிவுற்ற ; பிளவுற்ற ; து ... டயிட்ட, தொடர்பற் ... றயான ; நொடிக் ... ப்பழிக்கப் ப ... ல்நலம் ... லைமீறிய ; ... கிலம் ; ... நிலம் ; b ... றிவுற்ற மன ... , உண்டு மீந்த ... றுதொகை ; broken num ... roken reed, நட்டாற்று ... சிறுதுணை ; broken time, இ ... டட வேலைநேரம்.

**brok'en-backed**, *a.* ... முதுகுடைய ; கப்பல் வகையில் உறுதியற் ... உடைய.

**brok'en-down**, *a.* ... ; சிதைந்த ; அழிந்த ; ஒழுக்கங்கெட்ட ...

**brok'en-heart** ... ளமுடைந்த ; துன்பத்தால் நைந்த, மனம்புண்பட் ...

**brok'enly**, *adv.* விட்டுவிட்டு, இடையிடைவிட்டு, இடையிட்டு, வெட்டிவெட்டி.

**brok'enness**, *n.* உடைந்த நிலை, உடைந்ததன்மை.

**brok'en-winded**, *a.* குதிரைவகையில் குறுமூச்சுடைய, மூச்சுத்தடைபடுகிற.

**brok'er**, *n.* தரகர், வணிகத்துறை இடையீட்டாளர்.

**brok'erage**, *n.* தரகுத் தொழில் ; தரகுக்கூலி, தரகு.

**brok'ing**, *n.* தரகுத் தொழில்.

**brom'al**, *n.* (வேதி.) சோரியகி வெறியத்தோடு சேருவதால் உண்டான கூட்டுப்பொருள்.

**brom'ate**, *n.* (வேதி.) சோரிகை, சோரியக்காடியின் உப்பு.

**brom'ic**, *a.* (வேதி.) சோரியம் சேர்ந்த ; சோரியத்தை உட் கொண்ட ; (தொ.) bromic acid, சோரிகக்காடி.

**brom'ide**, *n.* (வேதி.) சோரிகை ; சடங்கு முறைப்பேச்சு ; (தொ.) bromide paper, நிழற்படமெடுக்கப் பயன்படும் தாள்.

**bromidro'sis**, *n.* நாற்ற வியர்வை உண்டாதல்.

**bromi'ne**, *n.* (வேதி.) சோரியம்.

**brom'ism**, *n.* (மரு.) சோரியம் மிகுதி உட்கொண்டதனுல் ஏற்படும் உடற்கோளாறு.

**brom'ize**, *v.* (வேதி.) சோரியம்சேர் ; சோரியமாக்கு.

**bro'moform**, *n.* (வேதி.) பாசிகக்கரியம் போன்று மயக்க மருந்தாகப் பயன்படும் சோரியச் சேர்மானம்.

*bronch'i, bronc'hia*, (ல.) *n. pl.* காற்றுக்குழாயின் இரு பிரிவுகள்; மூச்சுக் குழாயின் இரு பிரிவுகள்.

**bronc'hial**, *a.* காற்றுக்குழாய் பற்றிய; காற்றுக்குழாயைச் சார்ந்த.

**bronchit'ic**, *a.* மார்புச்சளி சார்ந்த.

**bronchit'is**, *n.* மார்புச்சளி நோய்.

**bronc'hocele**, *n.* குரல்வளைக்கேடய சுரப்பியின் அழற்சி.

**bron'co**, *n.* அரைகுறையாகப் பழக்கப்பட்ட குதிரை; வட அமெரிக்காவிலுள்ள கலிபோர்னியா (California) வுக்குரிய காட்டுக் குதிரை; *pl.* bron'cos.

**Brontosaur'us**, *n.* நிலவுலகத் தொல்லூழிக்குரிய புதை படிவப் பெருவிலங்கு வகை.

**bronze**, *n.* வெண்கல ... செம்பு வெள்ளீயக்கலவை உலோகம்; வெண்கல வார்ப்படப் ...; வெண்கலத்தால் செய்யப்பட்டது; வெண்கல நிற ... வெட்கமின்மை; துணிச்சல்; ஆணவம்; *a.* ... ப்பட்ட; வெண் கல நிற ... தாக்கு; கடின மாக்கு ... ; வெண் கலம் ... னமாகு.

**bronzed**, ... வெண்கல நிற முடை ... நோய்வகை.

**bronz** ... டைய கனிப் பொ ...

**bronz'y** ... தோற் ...

**broo** ...

**brood**, ... பினம்; ... வகை; ... க் கூட் டம்; ... செய்; குஞ்சுபொரி ... ; நினைந்து நினைந்தேங்கு.

**brood'iness**, *n.* ... ; ஆழ்ந்த சிந்தனை இயல்பு.

**brood'ing**, *a.* அடை ... ஏங்குகிற.

**brood'ingly**, *adv.* தன் ... டன்.

**brood'-pouch**, *n.* முட்டைகளையும ... களையும் வைத்து வளர்ப்பதற்காக உடலிலேயே உள்ள ... அமைப்பு.

**brood'y**, *a.* அடைகாக்கும் அவாவுடைய; கருத்தில் ஆழ்ந்து விடும் இயல்புடைய, சிந்தனையில் தேங்கிய தோற்றமுடைய.

**brook**[1], *n.* ஓடை.

**brook**[2], *v.* பொறு, தாங்கு, ஏற்றமை.

**brook'ite**, *n.* கனிப்பொருள்வகை, இயற்கைப் பொருளாகக் கிடைக்கும் உலோக வகையின் (Titanium) உயிரகை.

**brook'let**, *n.* சிற்றோடை.

**brook'lime**, *n.* (தாவ.) வாய்க்கால் ஓரப் படர்கொடிவகை.

**brool**, *n.* கடுமுணுமுணுப்பு.

**broom**, *n.* மணல் வெளிகளிலுள்ள மஞ்சள் நிறப்பூக்கள் கொண்ட குத்துச் செடிவகை; விளக்குமாறு, வாருகோல், துடைப்பம்; *v.* துடைப்பத்தால் பெருக்கு.

**broom'-corn**, *n.* துடைப்பம் செய்யப் பயன்படும் கூல வகைப் பயிர்.

**broom'rape**, *n.* துடைப்பச்செடியின் வேரில் வாழும் ஒட்டுயிர்ச் செடிவகை.

**broom'staff, broom-stick**, *n.* துடைப்பத்தின் கைப்பிடி.

**broom'y**, *a.* விளக்குமாறு நிறைந்த; துடைப்ப உருவான.

**brose**, *n.* பால் அல்லது கொதிநீர் சேர்க்கப்பட்ட யவை மாவுணவு வகை; (தொ.) Athole brose, தேனும் தேறலும் சேர்ந்த கலவை.

**broth**, *n.* காய்கறிகள்-இறைச்சி முதலியவை வெந்த சாறு.

**broth'el**, *n.* விலைமகளிர் மனை.

**broth'er**, *n.* உடன்பிறப்பாளன், அண்ணன், தம்பி; நெருங்கிய நண்பன்; உறவினன்; உடன்குடி உரிமையாளன்; ஒரே நாட்டினன்; உடன்பிறவாத்தோழன்; இனத்தான்; சமயக் குழுவில் ஓர் உறுப்பினன்; உடன்பணித்துறையாள்; (தொ.) brother german, முழு உடன்பிறப்பாளர், ஒரே தாயையும் தந்தையையும் பொதுவாகக் கொண்ட உடன் பிறப்பாளர்.

**broth'erhood**, *n.* உடன்பிறப்பாளர் நிலை, சகோதரர் என்ற நிலை; பொதுப்பணிக்காகச் சென்று கூடி இருக்கும் நிலை; நட்பு; சமூக ஒற்றுமை உணர்ச்சி.

**broth'er-in-law**, *n.* மைத்துனன், மனைவி உடன்பிறந்தான்; கணவன் உடன்பிறந்தான்; உடன்பிறந்தாள் கணவன்.

**broth'erless**, *a.* உடன்பிறந்தானில்லாத, அண்ணன் தம்பி யற்ற.

**broth'erlike**, *a.* அண்ணன் தம்பி போன்ற; அன்பான; உறவு முறையான; சகோதர பாவமுடைய.

**broth'erliness**, *n.* உடன்பிறப்புப்பாசம், அன்புத் தொடர்பு.

**broth'erly**, *a.* உடன்பிறந்தான் போன்ற, அண்ணன் தம்பி போன்ற; அன்பு நிறைந்த.

**broth'ers**, *n. pl.* உடன்பிறப்பாளர்கள், அண்ணன் தம்பியர்கள்.

**broug'ham**, *n.* ஒற்றைக் குதிரை மூடுவண்டி; மின்வண்டி.

**brought**, *v.* bring என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**brow**[1], *n.* புருவம்; நெற்றி; குன்றின் உச்சி ஓரம், மலையின் எல்லைக் கோடு; முனைப்புப்பகுதி, மேடு; நிலக்கரிச் சுரங்கத்தின் குறுக்குத்தரை வரை; முகத்தோற்றம்.

**brow**[2], *n.* (கப்.) கப்பல் ஏறுவதற்குரிய சாரப்பலகை.

**brow'-ague**, *n.* ஒற்றைத்தலை மண்டையிடி.

**brow'-antler**, *n.* மான்கொம்பின் முதற்கிளை.

**brow'beat**, *v.* கொடுஞ்சொற்களாலும் கொடுநோக்காலும் அதட்டு, கொடுமைப் படுத்திக் கீழடக்கு.

**brow'-bound**, *a.* முடிசூடிய; தலையில் சூட்டிய.

**browed**, *a.* ஓரங்களில் கொண்ட; சூழப்பட்ட; புருவமுடைய; தோற்றமுடைய.

**brow'less**, *a.* புருவமற்ற; தோற்றமில்லாத; வெட்கங் கெட்ட; நாணமற்ற.

**brown**, *n.* காவி நிறம், பழுப்புவண்ணம், கறுத்த ஆரஞ்சு வண்ணம்; *a.* காவி நிறமான, தவிட்டு நிறமான; ஆரஞ்சும் கறுப்பும் கலந்த கூட்டு நிறமான; வெயிலிற் பழுப்பேறிய; *v.* காவி நிறமாக்கு; (தொ.) Brown Bess, பழங்கால வெடிவகை; brown George, கடுமைவாய்ந்த மாப்பண்ட வகை; பழுப்புநிற மட்பாண்டம்; brown owl, பழுப்பு நிற ஆந்தை; பழுப்பு உடை அணிந்த இளம் பெண் சாரணர்களில் ஒரு குழுவின் பொறுப்பாளர்; brown paper, பொட்டணம் சிப்பம் முதலிய கட்ட உதவும் பழுப்பு வண்ண முரட்டுத்தாள் வகை; brown shirt, ஹிட்லரின் செர்மானிய தேசிய பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்தவர்; brown stout, கூலியாள்; brown study, பகற்கனவு; வீண் சிந்தனை; மனக்கோட்டை; ஆழ்ந்த சிந்தனை; brown sugar, பழுப்புச் சர்க்கரை; முற்றிலும் நயம்படுத்தப்படாத சர்க்கரை.

**Brown'ian**, *a.* இயல் நூலறிஞர் ராபர்ட் பிரௌன் (Robert Brown, 1773-1858) என்பவரைச் சார்ந்த; (தொ.) Brownian movement, (இயற்.) ராபர்ட் பிரௌன் முதல்முதலாகக் கண்டுணர்ந்த அணுக்கரைசலின் அணுக்களின் இயலியக்கம்.

**brown'ie**, *n.* நன்மை செய்யும் கூளிவகை; பெண் சிறு சாரணர் படையைச் சேர்ந்தவர்.

**brown'ing**, *n.* பழுப்பு நிறமாக்கல்; மங்குதல்; மாநிறமாகுதல்; பழுப்பு நிறமாக்குவதற்குரிய செய்முறை.

**Brown'ing,** *n.* தானே இயங்கும் துப்பாக்கி.

**brown'ish,** *a.* சற்றே பழுப்பு நிறமான.

**brown'stone,** *n.* பழுப்புநிற மணற்கல், மாநிற மணற்கல்.

**browse,** *n.* இளந்தளிர் உணவு, கிளை தழை, பசுந்தீவனம் ; தழை மேய்தல், புற்கறித்தல் ; *v.* மேய் ; இடைவிட்டுப் படி, மேலெழுந்தவாரியாகப் படி.

**brows'ing,** *n.* செடியின் முளை-தளிர்-இலை முதலியன ; பசுந்தீவனம் ; கறித்தல், கொய்தல், பறித்தல் ; விட்டுவிட்டு வாசித்தல்.

**bruc'ine,** *n.* காஞ்சிரங்காயிலிருந்து கிடைக்கும் காரப் பொருள்வகை.

**bruc'ite,** *n.* வெளிமஉருயிரகை, புரூஸ் (Bruce) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட கனிப்பொருள்வகை.

**Bru'in,** *n.* கரடி, பிரஞ்சு காப்பியத்தில் (Reynard the Fox என்ற நூலில்) வரும் கரடியின் பெயர்.

**bruise,** *n.* கன்றிப்போன காயம்; இரத்தம் கட்டிய நோவிடம்; *v.* அடித்துக்கன்றவை ; வடுப்படுத்து ; புண்படுத்து ; இயலாதாக்கு ; குத்து, நொறுக்கு ; இடி ; சிறுதுகளாக்கு ; கண்மூடிக் குதிரையோட்டிச்செல்.

**bruis'er,** *n.* கன்றும்படி காயப்படுத்தியவர் ; பந்தயச் சண்டை போடுபவர்.

**bruis'ing,** *n.* கன்றிப்போகும்படி அடித்தல் ; நொறுக்குதல் ; புண்படுத்தல் ; *a.* கன்றிப்போக வைக்கிற ; நொறுக்குகிற ; புண்படுத்துகிற.

**bruit,** *n.* ஆரவாரம், இரைச்சல், கம்பலை ; அலர், வதந்தி ; *v.* செய்திபரப்பு ; அறிவி ; புகழ்பரப்பு.

**brum'al,** *a.* குளிர்காலத்திற்குரிய.

**brumb'y,** *n.* பழக்கப்படாத குதிரை.

**brume,** *n.* மூடுபனி.

**Brumm'agem,** *n.* பெர்மிங்ஹாம் (Birmingham) நகரைக் குறிக்கும் வெறுப்பான வழக்குச்சொல் ; *a.* பெர்மிங்ஹாம் நகரைச் சார்ந்த ; பெர்மிங்ஹாம் நகரில் செய்யப்பட்ட ; வெறும் பகட்டான ; போலியான.

**brumm'er,** *n.* வெட்டுக்கிளிகளை அழிக்கும் முட்டைப் புழுக்களையுடைய தென் ஆப்பிரிக்காவிலுள்ள பெரிய ஈ வகை.

**brum'ous,** *a.* மூடுபனியார்ந்த ; குளிர்காலத்திற்குரிய.

**brunch,** *n.* காலை உணவிற்கும் நண்பகல் உண்டிக்கும் இடைப்பட்ட ஊண்.

**brunette',** *n.* கரிய அல்லது மாநிற முடி உடைய மாநிறப் பெண் ; *a.* கரிய அல்லது மாநிறமுடியுடன் மாநிறமேனி யுடைய.

**Bruns'wick,** *n.* செர்மனி நாட்டிலுள்ள ஒரு பகுதி ; (தொ.) (வர.) Brunswick line, முதலாம் ஜார்ஜை முதல்வராகக் கொண்ட பிரன்ஸ்விக் அரசமரபு.

**brunt,** *n.* முதன்மையான தாக்குதல் ; வேகம், தாக்குமுனை ; *v.* தாக்குதலைத் தாங்கு ; பாரத்தைப்பொறு ; (தொ.) at the instant brunt, தொடக்கத்திலேயே, உடனடியாக.

**brush,** *n.* குறுங்காடு, தூறு, செறிகாடு ; முறிவுற்ற சுள்ளிக் கிளைகள் ; புதர்க்குவியல் ; உட்காடு ; தூரிகை, வண்ணந் தீட்டுக்கோல் ; வண்ணம் தீட்டும்முறை ; வண்ண ஓவியர் ; துடைப்பம், வாருகோல் ; வால்நுனிக்குஞ்சம் ; மயிர்முடி, கொண்டை ; கம்பிகளைச் சேர்த்துக் கட்டிய ஒரு கட்டு ; இயங்குகிற இருபரப்புகளை மின்சாரத்தின் மூலம் இணைக்கும் துண்டுத் துணுக்கு, இடையீடு ; மின்னிணைக்கவும் துண்டிக்கவும் இயக்கப்படவல்ல இடைமின்னூடு ; மின் பொறிக்கற்றை ; தூரிகைபோன்ற உருவுடையது ; தூரிகைக் கையாட்சி ; உராய்வு ; சிறுபூசல் ; *v.* தூரிகை கையாளு ; வண்ணந்தீட்டு ; துடைத்துப் பெருக்கு ; தூய்மைப்படுத்து ; சரிசெய் ; உராய் ; தொடு ; தொட்டும் தொடாமலும் செல் ; (தொ.) brush aside, brush away, புறக்கணி ; ஒதுக்கித்தள்ளு ; brush kangaroo, சிறு கங்காரு விலங்கு ; brush over, வண்ணந்தடவு, பூசு ; பட்டும்படாமலும் செல் ; brush turkey, கிழக்கு ஆஸ்திரேலியப் பறவைவகை ; வான்கோழி வகை ; brush up, ஒளியாக்கு ; நினைவுபடுத்திக் கொள்.

**brush'er,** *n.* ஓவியர், வண்ணம் தீட்டுபவர் ; சிறு கங்காரு விலங்கு.

**brush'ing,** *n.* தூரிகையால் வண்ணந்தீட்டல் ; தூய்மையாக்கல் ; *a.* கிளர்ச்சிமிக்க ; உற்சாகமான ; சுறுசுறுப்பான.

**brush'-off,** *n.* (பே-வ.) பண்பு நயமின்றிப் புறக்கணித்துத் தள்ளும் செயல், ஒதுக்கீடு, கண்டனப்புறக்கணிப்பு.

**brush'-pen'cil,** *n.* ஓவியரின் வண்ணக்கோல்.

**brush'wheel,** *n.* சுழலும் தூரிகை; தேய்வு தடுக்கும் தடித்த குற்றிழை நிறைந்த இடை உருளை.

**brush'wood,** *n.* புதர்ச்செடிகளு[illegible] சிறுதூறு ; குத்துச் செடிகளுள்ள சிறுகாடு.

**brush'-work,** *n.* வண்ண[illegible]ான கைத்திறம் ; வண்ண ஓவியரின் செய[illegible]

**brush'y,** *a.* [illegible]ான.

**brusque,** *a*[illegible]றயான ; திடீரென்ற[illegible]

**brusque'ly,** [illegible] நயமின்றி ; மொட்டைய[illegible]

**brusque'ne**[illegible] நிலை.

**Bruss'**[illegible]ல் செய் [illegible] Brussels [illegible]

**br**[illegible]ங்கியல் பு[illegible]லாத ; சின் றின்[illegible]

**brut'ali**[illegible], கொடுமை ; அநாகரிக[illegible]

**brutal'ity,** *n.* [illegible] மனிதப்பண்பற்ற தன்மை ; வேடத்த[illegible]

**brut'aliza'tion,** *n.* [illegible]ாக்குதல் ; கொடுமை யாக்குதல் ; பண்ப[illegible]

**brut'alize,** *n.* [illegible] ; [illegible]ாடுமையாக்கு ; விலங்கு போன்ருக்கு.

**brut'ally,** *ad*[illegible]ட்டுத்தனமாக ; கொடுமையாக.

**brute,** *n.* விலங்கு ; மாக்களினம் ; காட்டுமிராண்டி ; பகுத்தறிவில்லாதவர் ; கொடுமையானவர் ; அறிவிலி ; *a.* விலங்கினத்தைச் சார்ந்த ; பகுத்தறிவுக்கு மாருன, அறிவுக்குப் பொருந்தாத ; அறிவற்ற ; முரட்டுத்தனமான ; நாகரிகமற்ற.

**brute'ness,** *n.* விலங்கியல்பு ; அறிவின்மை ; பண்பற்ற தன்மை ; கொடுமை.

**brut'ify,** *v.* விலங்குபோலாக்கு ; பண்பின்றிச் செயலாற்று ; கொடுமைசெய்.

**brut'ish,** *a.* விலங்கியல்புடைய ; விலங்கு போன்ற.

**brut'ishly,** *adv.* விலங்கியல்பாக ; விலங்கு போன்று.

**brut'um ful'men,** (ல.) *n.* போலிப் பயமுறுத்தல் ; வெற்று வேட்டு.

**Brut'us,** *n.* பத்தொன்பதாம் நூற்றுண்டின் பொய்மயிர்த் தொப்பி.

**bryol'ogical,** *a.* (தாவ.) பாசியைப் பற்றிய, பாசியைச் சார்ந்த.

**bryol'ogist,** *n.* (தாவ.) பாசியைப் பற்றிய ஆராய்ச்சியாளர் ; பாசிக ஆராய்ச்சியாளர்.

**bryol'ogy,** *n.* (தாவ.) பாசிநூல்.

**bry'ony,** *n.* (தாவ.) தொற்றிப்படரும் கொடி இனம், கொடிவகை.

**bry'ophyte,** *n.* பாசி இன வகை.

**carp'ing**, *a.* குறறங்காண்கிற ; கடிந்துரைக்கிற : இடக்குப் பேசுகிற.

**carpol'ogy**, *n.* கனிவகைகள் பற்றிய ஆய்வு நூல்.

**carpoph'agous**, *a.* பழம் தின்கிற.

**carp'ospore**, *n.* (தாவ.) சிவப்புப் பாசிவகைகளில் கருவுற்ற பெண் உறுப்பினின்று தோன்றும் சிதல் விதை.

**carp'us**, *n.* (உள்.) மனிதர்கள் வகையில் மணிக்கட்டு; குதிரை முதலிய விலங்குகள் வகையில் கால் அடிக்கணு ; *pl.* carp'i.

**carr**, *n.* சதுப்பு நிலம் ; சதுப்பு நிலப் புதர்க்காடு.

**carr'ack, carr'act**, *n.* போருக்கும் உரிய பெருஞ்சரக்குக் கப்பல்.

**carrageen', carragheen'**, *n.* வட ஐரோப்பாவில் வழங்கும் உணவுக்குப் பயன்படும் கடல்பூண்டு வகை.

**ca'rriage**, *n.* வண்டி; போக்குவரவு; இருப்பூர்தியின் பிரயாணி வண்டி ; பீரங்கியின் சகடம் ; இறங்கும் விமானத்தைத் தாங்கிக் கொள்ளும் கட்டமைப்பு ; வண்டியின் மேற்பாக மில்லாத சகடச்சட்டம் ; இயந்திரத்தைத் தாங்கி இயக்கும் பாகம் ; கொண்டு போதல், எடுத்துச் செல்லுதல், ஏற்றிச் செல்லுதற்குப் பிடிக்கும் செலவு; செயலாண்மை, செயலாட்சி, நிறைவேற்றம் ; நடக்கை, கோலம், நடையுடை தோற்றம் ; (தொ.) carriage and pair, இரண்டு புரவிகள் பூட்டிய வண்டி.

**ca'rriageable**, *a.* வண்டிகள் செல்லத்தக்க.

**carr'iage-clock**, *n.* தலைமாறி வைத்தாலும் ஒழுங்காய் இயங்கும் கடிகாரம்.

**ca'rriage-com'pany**, *n.* தங்களுக்கென வண்டிகள் அமர்த்திக்கொள்ளவல்ல செல்வர்.

**ca'rriage-dog'**, *n.* புள்ளிகளையுடைய நாய்வகை.

**ca'rriage-drive**, *n.* பூங்கா முதலியவற்றினூடே வண்டிகள் செல்வதற்கான சாலை.

**carr'iage-folk**, *n.*=carriage-company.

**carr'iage-for'ward**, *adv.* வண்டிக்கட்டணம் முன்னதாகச் செலுத்தாமல்.

**carr'iage-free'**, *adv.* கொண்டு செல்வதற்கான கட்டண மின்றி.

**carriage-paid'**, *adv.* வண்டிக் கட்டணம் முன்னதாகச் செலுத்தப்பட்டு.

**carr'iage-way**, *n.* வண்டிப்பாதை, வண்டிகளின் போக்கு வரத்துக்காகவென்று ஒதுக்கப்பட்ட சாலையின் பாகம்.

**ca'rrick-bend**, *n.* (கப்.) இருமடிக்கொளுவி முடிச்சு, இரண்டு கயிறுகளை இணைப்பதற்கான முடிச்சு வகை.

**ca'rrier**, *n.* கொண்டு செல்பவர்; சுமை கூலிக்காரர்; தூதர் ; சிப்பங்கள் முதலியவற்றை வாடகைக்கு எடுத்துச்செல்ல ஒப்புக்கொள்பவர் ; கொண்டு செல்லும் ஏதேனுமொன்று ; தூக்கு கலம்; பொதி ஊர்தி; மிதிவண்டியில் பொருள்களை வைத்துக்கொண்டு செல்வதற்கான பகுதி ; நோய்கடத்தி, தான் நோய்க்குட்படாமல் நோய் நுண்மம் பரப்பும் உயிரினம் ; கம்பியில்லாச் செய்தியில் மின்னலை ஊடகம் ; செய்தி கொண்டு செல்லும் புறா; (தொ.) carrier wave, வானொலி இயக்கியால் அனுப்பப்படும் தொடர்பான மின் காந்த அலை.

**carr'ier-pig'eon**, *n.* முன்னாட்களில் செய்திகள் கொண்டு செல்வதற்காகப் பயன்படுத்தப்பட்ட புறா ; புறாவகை.

**carr'iole**, *n.* ஒரு மனிதன் செல்லத்தக்க சிறு வண்டி வகை ; விரைமூடு வண்டி ; கானடா நாட்டுக்குரிய சறுக்கு வண்டி.

**ca'rrion**, *n.* அழுகும் பிணம் ; ஊழ்த்த இறைச்சி ; இழி பொருள் ; குப்பைகூளம், அழுக்கு ; *a.* அழுகிய, அருவருப்பான, ஊழ்த்த இறைச்சிக்குரிய ; அழுகும் பிணம் தின்கிற.

**ca'rrion-crow'**, *n.* பிணம் தின்னும் காக்கை வகை.

**ca'rrion-flower**, *n.* அழுகிய இறைச்சியின் நாற்றமுள்ள மலர்ச்செடிவகை.

**carriwich'et**, *n.* தெறுமொழி, காரசாரமான சூட்டுரை ; நகைத்துணுக்கு ; சொற்புரட்டு, சிலேடைப் பேச்சு.

**carronade'**, *n.* (வர.) பெருந்துளையுடைய சிறு கப்பல் பீரங்கி.

**carr'on-oil'**, *n.* ஆளிவிதையும் சுண்ணநீரும் கலந்த திப் புண்ணாற்றும் தைலம்.

**ca'rrot**, *n.* சிவப்பு முள்ளங்கிச் செடி ; சிவப்பு முள்ளங்கிக் கிழங்கு.

**ca'rrots**, *n. pl.* (பே-வ.) செம்பட்டை மயிர் ; செம்பட்டை மயிருள்ளவர்.

**ca'rroty**, *a.* தலை மயிர் வகையில் செம்பட்டையான.

**ca'rry**, *n.* வீச்செல்லை ; வேக எல்லை ; குழிப்பந்தாட்டத்தில் அடிக்கப்பட்ட பந்து நிலத்தைத் தொடுவதற்குமுன் செல்லுந் தூரம் ; பீரங்கி முதலியவற்றின் குண்டு பாயுந் தொலை ; சுமப்பு, சுமந்து செல்லுதல் ; சுமந்து செல்லும் அளவு ; படகைச் சுமந்து செல்லுதல்; இரண்டு நீர்நிலைகளுக்கிடையில் படகைச் சுமந்து செல்ல வேண்டிய நிலப்பகுதி ; வாளேந்து நிலை ; வானம், முகிலின் இயக்கம், மேகங்களின் செலவு ; *v.* எடுத்துச்செல், ஏற்றிக்கொண்டுபோ; சும; இட்டுக்கொண்டு போ ; தனி நிலையில் வைத்துக்கொண்டு நட ; மேற்கொள், அணி ; ஏந்திச்செல், கொண்டு செல் ; வலிந்து கைப்பற்று ; (படை.) வாளேந்தி முறைப்படி வணக்கம் செலுத்து; ஆற்று; செய்துமுடி ; பெரும்பான்மை வலத்தால் நிறைவேற்று ; நிகழச்செய் ; வெற்றிபெறு ; தாங்கு, உடன்கொண்டிரு, உடையவராயிரு ; கருவுற்றிரு ; நடத்து, நடந்துகொள் ; தேறுவி ; பண வகையில் காரியத்துக்குப் போதியதாயிரு ; முன் வருதொகையை அடுத்த பத்தியில் கொண்டு போய்ச் சேர் ; பத்திரிகையில் செய்தி வெளியிடு, நிலைக்கூறாக வெளியிடு ; உணர்ச்சி வசப்படுத்து; (தொ.) carry all before one, இடர் தகர்த்து வெற்றிபெறு; carry away, பெறு, உணர்ச்சியூட்டி வசமிழக்கச் செய் ; (கப்.) பாய்மரம் முதலியவற்றை உடைந்து இழக்கப்பெறு ; carry it, நன்கு நடந்துகொள் ; மதிப்புக் கெடுத்துக்கொள்; ஆதாயம் அடை; வெற்றிபெறு; carry off, உயிர் வாங்கு ; கெலி, அடை ; கூட்டத்துடன் கூட்டமாகச் சமாளிக்கவை ; அறைந்து பேசியோ புரட்டிப் பேசியோ சமாளி ; carry on, காரியம் நிறைவேற்றிக்கொள்; முன்னேறு ; தொடர்ந்து செய்துகொண்டு போ ; கொண்டு நடத்து ; மேற் செல்; மட்டுமீறிக் குறைப்படு, இயல்பு கடந்து நட ; மறைவாகக் காதல் நாடகமாடு, பசப்புக்காதல் புரி ; carry one's bat, carry out one's bat, மரப் பந்தாட்டத்தில் ஓர் ஆட்டத்தின் முடிவிலும் ஆட்டம் இழக்காமலிரு ; carry one's point, பிறிதொடுபடாது தன்மதம் நிறுவு, தடைகளைத் துடைத்தொதுக்கித் தன் கருத்து மேலோங்கச் செய் ; carry out, நிறைவேற்று ; carry over, கணக் கேட்டில் மறுபக்கம் கொண்டுசெல் ; கட்சி மாற்றிக்கொணர்; அடுத்த தறுவாய்க்குத் தள்ளிப்போடு ; carry the day, வெற்றிபெறு ; நாளின் செயலில் வெற்றி எய்தப்பெறு ; carry through, இடர்களினூடே தாங்கு, இடர் கடந்து காப்பாகக் கொண்டுவா; எய்தப்பெறு; நிறைவாக்கு; carry too far, மட்டுமீறிச் செல் ; carry up, கட்டிடத்தை மேலும் உயரமாகக் கட்டிக்கொண்டுபோ ; பின்னோக்கிமூலம் காட்டு ; carry weight, மிகுந்த அதிகார வலிமை பெற்றிரு, செல்வாக்குப் பெற்றிரு.

**ca'rry-all**, *n.* பளுவற்ற நான்குசக்கரக் குதிரைவண்டி.

**ca'rry-over**, *n.* பங்குமாற்றுத்துறையில் வருதொகையை மறுபுறம் கொண்டு செல்லும் முறைமை; பங்குமாற்றில் முன் பக்கத்தொகை.

**cart**, *n.* இரட்டைச் சக்கர வண்டி, கட்டை வண்டி ; வில் வண்டி ; *v.* வண்டியில் ஏற்றிச்செல் ; வண்டிக்காரனாகத் தொழில் செய் ; (தொ.) put the cart before the horse, ஒழுங்கு முறையைத் தலைகீழாக்கிவிடு.

**cart'age**, *n.* வண்டியில் ஏற்றிச்செல்லுதல் ; வண்டிக்கூலி.

**carte**[1], *n.* வாட்போர் நிலை வகை, சிலம்ப முறையில் மணிக்கட்டின் நான்காவது அமைவு நிலை.

**carte**[2], *n.* உணவுக் கட்டணப்பட்டியல்; அட்டையில் ஒட்டப் பட்டுள்ள சிறு நிழற்படம்.

**carte-blanche**, (பிர.) *n.* வெண்முறி, முன்னதாகக் கையொப்ப மிடப்பட்ட வெற்றுத்தாள்; முழுச்செயலுரிமை.

**carte-de-visite**, (பிர.) *n.* சிறு அட்டையில் ஒட்டப்பட்டுள்ள நிழற்படம்; மூன்றரைக்கு இரண்டேகால் அங்குல அளவுள்ள நிழற்படம்.

**cart'el**, *v.* மற்போருக்கு அறைகூவற்சீட்டு; சிறைப்பட்டவர்களை மாற்றிக்கொள்ளுதல்; போர்க்கைதிகளை மாற்றிக் கொள்வதற்கான உடன்படிக்கை; எழுதப்பட்டுள்ள அட்டை; அரசியல் கூட்டு நிலை, அரசியல் கட்சிகளின் கூட்டணி; போரிடையே இருதரப்புக்களுக்கும் இடைப்பட்ட கட்டுப்பாடு; போரிடையே பாதுகாப்புக் கட்டுப்பாடுடைய கப்பல்; போட்டியை அழித்து விலைகளை ஏற்றி வைப்பது போன்ற நோக்கங்களுக்கான வணிக நிலையங்களின் கூட்டணி.

**cartelize'**, *v.* பொதுப்பணிக்காக வணிக நிலையங்களின் கூட்டணி உண்டுபண்ணு; வணிகநிலையக் கூட்டணியின் ஆட்சிக்குட்படுத்து; வணிகநிலையக் கூட்டணியாக அமை.

**cart'er**, *n.* வண்டி ஓட்டுபவர்.

**Carte'sian**, *n.* பிரஞ்சு மெய்ந்நூலாசிரியராகிய ரேனே டேகார்ட் (Rene Descartes 1596-1650) என்பவரது மெய் விளக்கத்துறையைப் பின்பற்றுபவர்; டேகார்ட்டேயின் உடனிணைவு முறையை மேற்கொள்பவர்; *a.* பிரஞ்சு மெய்ந் நூலாசிரியராகிய டேகார்ட் என்பவரது மெய்விளக்கத் துறைக்குரிய; டேகார்ட்டின் உடனிணைவு முறைமைக்குரிய; (தொ.) Cartesian bottle-imp, Cartesian devil, Cartesian diver, டேகார்ட்டின் பெயர் வைக்கப்பெற்றுள்ள இயல் நூல் தத்துவ உள்ளூறையுடைய விளையாட்டுப் பொறி, மூடி யமைவுமூலம் அழுத்தமிகுந்தோறும் உள்ளிருக்கும் பொம்மை மிதப்புநிலையிலிருந்து இடைத்தங்கு அமிழ்வுநிலைக்கு மாறும் படி அமைக்கப்பட்ட புட்டி.

**car'thamine**, *n.* குங்குமப் பூவிலிருந்து செய்யப்படும் சாயப் பொருள்.

**cart'-horse**, *n.* வண்டியிழுக்கத்தக்க குதிரை.

**cart'-house**, *n.* வண்டிக் கொட்டில்.

**Carthu'sian**, *n.* தூயதிரு. புருனோ (St. Bruno 1086) என்பவரால் நிறுவப்பட்ட துறவிகளின் அமைப்பைச் சேர்ந்த வர்; கார்த்தூசியத் துறவி மடத்தின் மனையிடத்தில் அமைந்த 'சார்ட்டர் அவுஸ்' (Charter house) என்னும் கல்வி நிலைய மாணவர்; *a.* தூயதிரு. புருனோ என்பவரால் காணப்பட்ட துறவிகளின் அமைப்புக்குரிய; கார்த்தூசியத்துறவி மடத்தின் மனையிடத்தில் அமைவுற்ற 'சார்ட்டர் அவுஸ்' கல்வி நிலையத் துக்குரிய.

**cart'ilage**, *n.* குருத்தெலும்பு.

**cartila'ginoid**, *a.* குருத்தெலும்பு போன்ற.

**cartila'ginous**, *a.* குருத்தெலும்புக்குரிய; குருத்தெலும்பா லான; முள்முனைப்பான; குருத்தெலும்பு போன்று கெட்டிப் புடைய; (உயி.) எலும்புச்சட்ட முழுதும் குருத்தெலும்பாலான.

**cart'-ladder**, *n.* சுமையின் இட அளவைப் பெருக்குவதற் காகப் பக்கவாட்டில் பொருத்தப்படும் சட்டம்.

**cart'-load**, *n.* வண்டிச்சுமை, பார அளவு, ஒரு வண்டிச்சுமை.

**cartograph'ic**, **cartograph'ical**, *a.* நிலப்படத்துக்குரிய, தேசப்படம் வரைதல் பற்றிய.

**cartog'rapy**, *n.* நிலப்படத்துறை; தேசப்படம் வரைதல்.

**cartol'ogy**, *n.* நாட்டுப் படங்கள் மனை விளக்கப்படங்கள் ஆகியவற்றின் ஆய்வுத்துறை.

**cart'omancy**, *n.* ஆட்டச் சீட்டுக்களை வைத்துக் குறி சொல்லும் முறை.

**cart'on**, *n.* எய்குறியின் நடுவில் உள்ள வெள்ளைச்சில்லு; மையச் சில்லின்மேல் படும் வேட்டு; பொருள்கள் வைப்பதற் கான அட்டைப்பெட்டி; பெட்டிகள் செய்வதற்குப் பயன் படும் அட்டை.

**car'tonnage**, *n.* தாள் அட்டை, அட்டைப் பலகை; பதனப் பிணத்தின் மேற்கவிகை.

**car'ton-pierre**, *n.* கல்தோற்றம் அளிக்கும் அட்டைப் பலகை வகை.

**cartoon'**, *n.* வண்ணப்படம் எழுதுதற்கு மாதிரியாகத் தடித்த தாளில் எழுதப்படும் வரைப்படம்; தொடர்ப்பட வரிசையி லிருந்து எடுக்கப்படும் திரைக்காட்சி; அரசியல் வசைக்கேலிச் சித்திரம்; *v.* வசைக்கேலிப்படம் வரை; கேலிப்படம் வரைந்து ஏளனத்துக்குள்ளாக்கு.

**cartoon'ist**, *n.* ஏளன ஓவியம் வரைபவர், வேடிக்கை ஓவியர்.

**cartoph'ily**, *n.* புகைப் பூஞ்சுருள் அட்டைத்திரட்டு, 'சிகரட்' அட்டைச்சேமிப்பு.

**cartouch'**, **cartouche'**, *n.* துப்பாக்கிக்குண்டு - தோட்டா முதலியவைகளுக்கான பெட்டி, வெடி மருந்துப்பெட்டி; (க-க.) சுருள்தாள் போன்ற ஒப்பனை வேலைப்பாடு; (தொல்.) அரசர் பெயர்களையும் தெய்வப் பெயர்களையும் கொண்டுள்ள பழைய எகிப்திய நீள்வட்ட வளையம்.

**cart'ridge**, *n.* வெடிக்கலம், வெடியுறை, தோட்டா, குண்டு கள் செறித்துள்ள பொதியுறை, பீரங்கிக்குரிய வெடிமருந்து உறை.

**car'tridge-belt**, *n.* வெடியுறைகள் செருகி வைப்பதற்குரிய கச்சைவார்.

**cartridge-pa'per**, *n.* கெட்டித்தாள், வரைப்படம் எழுதுதற் கும் திண்ணிய உறைகள் செய்தற்கும் பயன்படும் முரட்டுக் காகிதம்.

**cart'-road**, *n.* வண்டிப் பாதை.

**cart's'-tail**, *n.* வண்டியின் பின் பக்கம்.

**cart'ulary**, *n.* ஆவணத்தொகுதி, பதிவேடு; திருமடத்தின் பதிவேட்டுத் தொகுதி; ஆவணங்கள் வைத்திருப்பவர்; பதி வேடு வைக்கப்படும் இடம், பதிவேடகம்.

**cart'way**, *n.*=cart-road.

**cart'-wheel'**, *n.* வண்டிச்சக்கரம்; ஐந்துவெள்ளிப் பணம் போன்ற பெரிய நாணயம்; பக்கவாட்டுக் கரணம்.

**cart'wright**, *n.* வண்டிகள் செய்யும் தச்சர்.

**car'ucage**, *n.* காணி வரி, ஒரு சோடுமாடு ஒரு பருவத்தில் உழத்தக்க அளவு நிலத்தின் மீது விதிக்கப்பட்ட வரி.

**car'ucate**, *n.* ஏர்ப்பாசன அளவு, நுகத்தில் பூட்டிய ஒருசோடு மாடுகள் விளைச்சல் பருவம் ஒன்றில் உழக்கக்கூடிய நில அளவை.

**ca'runcle**, *n.* வான்கோழி முதலிய பறவைகளின் தலையில் அல்லது கழுத்தில் இருப்பதைப் போன்ற தசைத்திரளை; (தாவ.) விதைமுடி, விதைமுண்டு.

**carun'cular**, *a.* விதைமுடி போன்ற, விதைமுண்டின் இயல்பு வாய்ந்த.

**carun'culate**, *a.* விதைமுண்டு உடைய; தசைத்திரளை வாய்ந்த.

**carun'culous**, *a.*=caruncular.

**car'vacrol**, *n.* துளசியினத்தின் பற்பல பூண்டுகளில் காணப் படும் பல்வலிக்குதவுகிற கெட்டிமை வாய்ந்த எண்ணெய்.

**carve**, *v.* செதுக்கு; செதுக்கி உருவாக்கு; வெட்டியமை, குடைந்து உண்டுபண்ணு; குறுக அரி, கொத்து; செதுக்கி உருமாற்று; உருவங்கள் செதுக்கி ஒப்பனை செய்; மாதிரிப் படங்களைச் செதுக்கு; இறைச்சி வெட்டித் துண்டாக்கு; வெட்டிப் பகிர்; சிற்பத்தொழில் நடத்து, சிற்பவேலை செய்; (தொ.) carve out, வெட்டியுருவாக்கு, நறுக்கியெடு; குடைந்து உண்டுபண்ணு; முயன்று பெறு, தன் முயற்சி யால் அடை; cut and carve, மேன்மைப் படுத்து, நயப் படுத்து.

**carv'el**, *n.*=caravel.

**car'vel-built**, *a.* பலகைகள் ஒன்றின்மீது ஒன்று ஏறுமல் சம மட்டமாயிருக்கும்படிக் கட்டப்பட்ட.

**carv'en,** *a.* செதுக்கப்பட்ட ; செதுக்கி உருவாக்கப்பட்ட.

**carv'er,** *n.* செதுக்குபவர், மரவேலைச் சிற்பி, சிற்பி ; இறைச்சி அறுக்க உதவும் கத்தி.

**carv'ers,** *n. pl.* இறைச்சி அறுக்க உதவும் கத்தியும் கவர் முள்ளும்.

**carv'ing,** *n.* சிற்பவேலை ; மரத்தில் அல்லது தந்தத்தில் இழைக்கப்படும் செதுக்குவேலை ; செதுக்கி அமைக்கப்பட்ட உருவம் ; உணவு மேசையில் இறைச்சி அறுத்தல் ; உணவு மேசையில் இறைச்சி அறுக்கும் கலை.

**carv'ing-knife,** *n.* இறைச்சி அறுக்க உதவும் பெரிய கத்தி.

**caryat'ic,** *a.* தூணுகப் பயன்படும் பெண் உருவச்சிலை பற்றிய.

**caryat'id,** *n.* சிலையுருவத்தூண், தூணுகப் பயன்படும் பெண் உருவச் சிலை ; *pl.* caryat'ides, caryat'ids.

**caryop'sis,** *n.* (தாவ.) உமியுடன் ஒட்டிய தானிய வகை ; முதிரை.

**cas'cabel,** *n.* பீரங்கியின் பின்புறக்குமிழ்.

**cascade',** *n.* அருவி ; அருவித்தொகுதி, நீர்வீழ்ச்சி ; அலையலையாக விழும் பூ வேலைப்பின்னல் முடி ; கருவிகலத் தொகுதியின் இடையிணைப்பு; *v.* அருவியாக விழு; அலையலையாக விழு.

***cascar'a, cascar'a sagra'da,*** (ஸ்பா.) *n.* குடலிளக்கும் நன் மருந்தாகப் பயன்படும் வட அமெரிக்காவின் காலிபோர்னியா நாட்டு மரப்பட்டை வகை.

**cas'co,** *n.* சரக்குகளைக் கொண்டு சென்று கப்பலில் ஏற்றி இறக்கும் பிலிப்பைன் (Philippines) தீவுகளுக்குரிய படகு வகை.

**case¹,** *n.* பை ; கூடு, உறை ; பெட்டி ; தொகுதி ; சுவர் முகப்புப் பொதிவு; புத்தக மேலட்டை; புத்தக மூட்டுப்பகுதி; அச்சகப் பொறுக்குத் தட்டு ; சிதறு வெடியுறைகுண்டு ; *v.* பையில் போடு ; உறையில் வை ; பொதி, போர்த்து, தோலிட்டு மூடு ; (தொ.) lower case, (அச்.) ஆங்கில எழுத்து வடிவின் சிறிய பொதுமுறை உருவம் ; upper case, (அச்.) ஆங்கில எழுத்து வடிவின் பெரிய சிறப்பு முறையான முதன்மை உருவம்.

**case²,** *n.* நிகழ்ச்சி, நேர்ச்சி ; நேர்வு, நிகழ்வுக்கூறு, நிகழ்வினம் ; நேர்வு வகை : செய்தி, காரியம, கேள்விக்குரிய பொருள், ஆராய்ச்சிக்குரிய பொருண்மை ; நிலை, நிலைமை, சூழ்நிலை ; தறுவாய் ; பண்பின் செயல்வடிவ நிகழ்வுக்கூறு ; எடுத்துக்காட்டாகக் கொள்ளத்தக்க கூறு ; தொழில் முறை வாடிக்கைத் தொடர்பு ; ஒரு தரப்பு வாதம் ; வழக்கு ; வாதம், வழக்கு விவரம், வழக்கு விவர விளக்கம், வழக்கு விவர அறிக்கை ; (இலக்.) பெயர்ச்சொல்லின் உருத்திரிபு வேறுபாடு, வேற்றுமை ; (தொ.) in any case, எப்படியும், எது எவ்வாருயினும் ; in case, என்ற நிலை ஏற்படுமாஞல், என்ற நிலை ஏற்படும்பொழுது ; in case to, பொருந்திய நிலையில் ; in the case of, வகையில் ; leading case, பின்வரும் வழக்குகளுக்கு வழிகாட்டியாகக் கொள்ளத்தக்க முன்மாதிரி வழக்கு; make out a case, தக்க ஆதாரத்துடன் வாதம் உருவாக்கு ; put the case, வாதத்தை உருப்படுத்திக்காட்டு ; எடுத்துக்காட்டாகக் கொள் ; கற்பனையில் மெய்ம்மையாக வைத்துப் பார்.

**case³,** *v.* திருட்டை முன்னிட்டுப் புலம் பார்.

**casea'tion** *n.* உறைபாற் கட்டியாக மாறுதல்.

**case'-book,** *n.* மருத்துவரின் தொழில்முறைக் குறிப்பேடு.

**case'-bottle,** *n.* பெட்டியில் குப்பியுடன் குப்பி பொருந்த வைப்பதற்கு வாய்ப்பான சதுரவடிவக் குப்பியுறை

**case'-hard'en,** *v.* பரப்பில் சரியகமூட்டுவதன் மூலம் இரும்பைக் கடும்பதப்படுத்து ; மரத்துப்போகச்செய் ; உணர்ச்சியற்ற நிலை உண்டுபண்ணு.

**case'-hard'en'ing,** *n.* பரப்பில் கரியகமூட்டுவதன் மூலம் இரும்பைக் கடும்பதப்படுத்துதல், இரும்பில் கடும்பதம் ; உணர்ச்சியின்மை.

**case'history,** *n.* முன் மரபு, மருத்துவத்துக்கான தனி வரலாறு - மரபு - சூழல்கள் பற்றிய விளக்கத்தாள்.

**cas'ein,** *n.* பால்புரதம், உறைபாற்கட்டியின் அடிப்படைக் கூறு.

**case'-knife,** *a.* எப்போதும் உறையிலேயே வைக்கப்படும் பெரிய கத்தி வகை, பட்டாக் கத்தி.

**case'-law,** *n.* தீர்ப்புவழிச்சட்டம்; முன்வழக்குத் தீர்ப்புக்களைப் பின்பற்றிவந்த மரபுச்சட்டம்.

**case'-maker,** *n.* புத்தக மேலட்டை செய்பவர்.

**case'-man,** *n.* அச்சுக்கோப்பவர்.

**case'mate,** *n.* அகழி கைப்பற்றியவர்கள்மீது துப்பாக்கி நுழைத்துச் சுடுவதற்கான பக்கத்தொளைகளையுடைய அரண் மதிலகக் கவிகைமாடம், காப்பரண் மாடம் ; போர்க்கப்பல்களில் பீரங்கிகளுக்கான கவசமாடம்.

**case'mated,** *a.* காப்பரண் மாடத்தையுடைய, கவசமாடம் வாய்ந்த ; காப்பரண் பாதுகாப்பை உடைய, கவசமாடக் காப்பினைக்கொண்ட ; காப்பரண் மாடம் போன்ற கட்டுமான முடைய ; கவசமாடம் போன்ற.

**case'ment,** *n.* பலகணிச்சட்டம் ; மடக்கும் பலகணிக்கதவின் திருகுமரையிட்ட மடிப்பு ; (செய்.) பலகணி ; உட்குடைவான செதுக்குமானம்.

**case'ment-cloth,** *n.* பலகணித் திரைக்குப் பயன்படுத்தப்படும் துணிவகை.

**case'ment-curtain,** *n.* பலகணிச் சட்டத்தில் தொங்கவிடப்படும் திரை, பலகணித்திரை.

**case'mented,** *a.* மடங்கு மடிப்புச் சட்டத்தையுடைய.

**case'ment-window,** *n.* மடக்குப் பலகணி.

**cas'eous,** *a.* உறைபாற்கட்டியைச் சார்ந்த ; உறைபாற்கட்டி போன்ற.

**casern', caserne',** *n.* அரணின் படைவீரர் தங்குமனை வரிசை.

**case'-shot,** *n.* சிதறு குண்டாகப் பயன்படுத்தப்படும் இரவைக் குண்டுகளடங்கிய தகர அடைப்பு.

**case'-work,** *n.* சமூகப்பணியிடையே தனிமனிதனைப்பற்றிய கவனிப்புக் கூறு.

**case'-worm,** *n.* ஈ வகையின் நீரில் மிதக்கவிடப்படும் முட்டைப் புழு.

**cash¹,** *n.* (த.) காசு, நாணயம் ; சீன நாட்டுச் செப்பு நாணயம்.

**cash²,** *n.* கெட்டிப்பணம், உடனடிப்பணம், ரொக்கம் ; பொருளகத்துறையில் நாணயப்பணம்; நாணயப்பணமும் பொருளக நாணயத்தாளும் மட்டுமே அடங்கிய தொகை ; *v.* பொருளக நாணயத்தாள் - பொருளகமுறி ஆகியவற்றுக்குரிய நாணயப் பணம் வழங்கு, நாணயப்பணமாக மாற்று ; (தொ.) cash and carry, வாங்குபவரிடம் கொண்டு ஒப்படைப்பதற்குரிய ரொக்க விற்பனை முறை ; cash down, அவ்விடத்திலேயே கொடுக்கப்படும் பணம் ; cash in, பந்தயச்சூதாட்ட முடிவில் நாணய அடையாள வட்டுக்களை நாணயமாக மாற்று ; (பே-வ.) இற ; பயன்படுத்திக்கொள் ; cash in on, தனக்கே பயன்படுத்திக்கொள் ; cash on delivery, உடனடிப் பணங் கட்டி எடுப்பதற்குரிய சரக்கு அனுப்பீடு ; hard cash, spot cash, அப்பழுக்கில்லாத உடனடிக்கெட்டிப்பணம் ; in cash, பணம் கைவசமாக ; பணமுட்டின்றி ; out of cash, பணம் கைவசமின்றி, பணம் முட்டுப்பட்டு.

**cash'-account',** *n.* பணவகைக் கணக்கு, ரொக்கக் கணக்கு ; பொருளகத்தில் சில்லறைக்கடன் வாய்ப்பு அளிப்பதற்கான தனிக் கணக்கேடு.

**cash'-book,** *n.* பண வரவு செலவுக் குறிப்பேடு.

**cash'-cred'it,** *n.* பொருளகத்தில் சில்லறைக் கடன் வாய்ப்பு அளிப்பதற்குரிய தனிக் கணக்கேடு.

**cash'ew,** *n.* முந்திரிமரம், கொல்லா மாமரம்.

**cash'ew-apple**, *n.* முந்திரிப்பழம், கொல்லாமாம்பழம், முந்திரி மரத்தில் பழமாகக் கருதப்படும் சதைப்பற்றுமிக்க விதைக் காம்பு.

**cash'ew-nut**, *n.* முந்திரிக்கொட்டை, அண்டிக்கொட்டை, கொல்லாமாங்கொட்டை.

**cashier'** [1], *n.* காசுக்கணக்கர், பணம் கொடுக்கல் வாங்கல் கணக்குப் பணியாளர்.

**cashier'** [2], *v.* அவமானத்தோடு வெளியேற்று; வேலையிலிருந்து தள்ளு, கண்டித்துப் பதவியிலிருந்து நீக்கு, தள்ளிவை; ஒழி.

**cashier'ment**, *n.* பணி நீக்கம்.

**cash'mere, cash'mere shawl**, *n.* காசுமீரச் சால்வை; மென்மைமிக்க காசுமீர வெள்ளாட்டு மயிராலான கம்பளிப் போர்வை; காசுமீரச் சால்வைப் போலி.

**cash'-pay'ment**, *n.* நாணயப்பணம் கொடுத்தல், பொருளக முறிக்குப் பணம் கொடுத்தல்.

**cash'-price**, *n.* கைப்பண விலை, ரொக்க விலை.

**cash'-rail'way**, *n.* வாணிக நிலையங்களில் வாடிக்கை மேடையிலிருந்து பெட்டியடிக்குப் பணம் சேர்க்கும் பொறி, காசுய்க்கும் பொறி.

**cash'-reg'ister**, *n.* வாணிகக்களங்களின் இடுபணக் கணக்குப் பொறி.

**cas'ing**, *n.* பெட்டியிலடைத்தல், உறையில் செறித்தல்; பொதித்தல்; பொதியுறை, மேலுறை, கவிகை; புறத்தோடு.

**casi'no**, *n.* பொது ஆடரங்கம்; நடனக்கூடம்-ஆட்ட மேசைகள் முதலிய வாய்ப்புக்களையுடைய பொதுமாளிகை; சீட்டாட்ட வகை; *pl.* casi'nos.

**cask**, *n.* மிடா, மரப்பட்டிகைகள் இணைத்து இரும்புப்பட்டைகளால் இறுக்கப்பட்ட தேறல் பேழை; மிடா அளவு குடிவகை; குடிவகை அளவு; *v.* மிடாவில் அடை.

**cask'et**, *n.* பேழை; சிறு மிடா; பெட்டகம், அணிமணிப் பெட்டி.

**Cas'lon, Cas'lon type**, *n.* வில்லியம் காஸ்லான் (William Caslon–மறைவு 1776) என்பவர் உருவாக்கிய அச்சுருப்படிவம்; காஸ்லானின் முறை பின்பற்றிய அச்சுருப்படிவம்.

**casque**, *n.* தலைக்கவசம்.

**Cassan'dra**, *n.* கிரேக்க கதைக்காப்பியங்களில் அப்போலோ (Apollo) என்ற தேவனுல் வருவதுகூறும் திறமும் அதை எவரும் நம்பாத குறையும் ஒருங்கே அளிக்கப்பெற்றவளான திராய் (Troy) அரசன் பிரெயிம் (Priam) என்பவரின் புதல்வி; எவராலும் மதிக்கப் பெருநிலை பெற்ற கணியர்.

**cass'areep, cass'aripe**, *n.* ஆற்றல்சான்ற நச்சரியாகவும் சுவைப்பொருளாகவும் பயன்படும் கசப்பான கூவைக் கிழங்கு வகையின் சாறு.

**cassa'tion**, *n.* துடைத்தழிப்பு, ஒழிப்பு, நீக்கம்; முறைமன்றத் தீர்ப்பு நீக்கம்; (தொ.) court of cassation, உச்ச உயர் முறைமன்றம், தலைமை வழக்குமன்றம்.

**cassa'va**, *n.* கூவைக் கிழங்குவகை, மரவள்ளிக் கிழங்கினத்தின் வகை; கூவைக்கிழங்கு வகையின் மாவு; கிழங்குவகையின் மாச்சத்து; கூவைக்கிழங்கு வகையின் மாவால் செய்யப்பட்ட அப்பம்.

**cass'erole**, *n.* புழுக்குத்தட்டம், கறியுணவு வகைகளின் வேவுகலமாகவும் பரிமாறுகலமாகவும் ஒருங்கே பயன்படும் சூடு கையேறாத மண்கலத் தட்டம்.

**ca'ssia**, *n.* தாழ்ந்ததரக் கருவாய்ப்பட்டைவகை; கருவாமர வகை.

**Cass'ia**, *n.* நிலவாகை, பேதிமருந்தாகப் பயன்படும் இலையுடைய செடி வகை.

**cass'imere**, *n.* மணியிழை நேரியல் கம்பிளி ஆடைவகை.

**cassin'o**, *n.* சீட்டாட்ட வகை.

**cass'ock**, *n.* ஆங்கிலத் திருச்சபைக்குரிய (Anglican Church) குருமார் அணிந்துவந்த நீண்ட இறுக்கமான உள்ளங்கி வகை; ஸ்காத்லாந்து நாட்டுக் குருமார் அணியும் கரும் பட்டு உள்ளுடை.

**cassolette'**, *n.* நறும் புகைக்கலம், தூபக்கலம்; முகடு துளையரிப்பிட்ட மணப்பொருட்பேழை, நறுமணப் பெட்டி.

**cassonade'**, *n.* துப்புரவு ஆக்கப்படாத சர்க்கரை.

**cass'owary**, *n.* நியூகினியிலுள்ள (New Guinea) தீக்கோழி இனத்தின் வகை.

**cassumu'nar**, *n.* கிழக்கிந்தியத் தீவுகளின் இஞ்சி வகை.

**cast** [1], எறிதல், வீச்சு; தூண்டில் எறிவு; எறிபடை வீச்சு, ஆழம் பார்க்கும் குண்டிழை எறிவு; தூண்டில் முனைப்பகுதி; தூண்டிவிடத் தக்க இடம்; எறிதொலை; வார்ப்புரு; வார்ப்புருவின் வார்ப்பட அச்சு; உருவம், வடிவம்; பொறிப்பு; வண்ணம்; நிறத்தின் சாயல்; பண்பு; குற்ற அளவு; நாடக உறுப்பினர் நடிப்புப் பாகுபாடு, நடிப்புப் பாகுபாட்டுத் திட்டம்; நடிகர் நாடகப் பகுதி; நாடக உறுப்பினர் குழு; நாடகக்காட்சி; மாதிரிக்காட்சி; காட்சித்திருப்பம்; வாழ்க்கைப் போக்கின் திருப்பம்; காலத்திருப்பம்; தற்செயல் நேர்ச்சி; சூதாட்டத்தில் குருட்டுயோக எறி, குருட்டு வெற்றி முயற்சி; பார்வை; நோட்டம்; விழிக்கோட்டம்; பறவை எச்சம்; சிற்றுயிர்களின் எச்சம்; வண்டியில் சிறிது தொலை ஏற்றியுதவுதல்; தொகைகூட்டிக் கணித்தல்; பருந்தின் இணை; *a.* வார்த்து உருவாக்கப்பட்ட; எறியப்பெற்ற; விட்டொழிக்கப்பட்ட; ஒதுக்கித்தள்ளப்பட்ட, துறக்கப்பட்ட; வழக்கில் முறியடிக்கப்பட்ட; *v.* எறி; வீசியெறி; விட்டொழி, நீக்கு, அகற்று, துற; வீழச்செய்; விழவிடு, வீழ்த்து; வழக்கில் முறியடி; இடு, போடு, மேலிடு; சீட்டைப்போடு; வாக்குரிமைச் சீட்டிடு; கணி, கூட்டிக்கணக்கிடு; வார்த்து உருக்கொடு; கலைத்துறையில் பண்போவியம் உருவாக்கு; ஒழுங்குபடுத்து; நடிகரை நடிப்புப்பகுதிக்குத் திட்டம் செய்; நடிப்புப்பகுதியை நடிகருக்கு உறுதிசெய்; (தொ.) cast about, சுற்றிப்பார், தேடு, வகை தேடு; cast anchor, நங்கூரமிடு; cast an eye, பார்வை செலுத்து; காணநேரு; cast aside, cast asunder, cast away, cast off, துற, ஒதுக்கித்தள்ளு; வீசியெறி; cast blame, குற்றம் சுமத்து; cast down, வீழ்த்து, தொங்கவிடு, தளர்வூட்டு, துயர்ப்படுத்து; cast horoscope, சாதகம் கணி, சாதகம் உருவாக்கு; வாழ்க்கை வரையறு; cast in one's teeth, குற்றம் எடுத்துரைத்துக் கண்டி; cast loose, தொடர்பறு, கட்டவிழ்த்துவிடு; cast lot, சீட்டுக்குலுக்கிப் போடு; cast net, வலைவீசு; cast out, நீக்கு; cast spell, மயக்கு; cast up, மேலிடு; எறி; கணி.

**cast** [2], *v.* cast [1] என்பதன் இறந்தகால-முடிவெச்சவடிவம்.

**Castal'ia**, *n.* கிரேக்க பழங்கதையில் பர்னஷஸ் (Parnassus) மலையில் செங்கதிர்த்தெய்வமான அப்போலோவுக்கும் (Apollo) கலைத்தெய்வ நங்கையர்க்கும் (Muses) புனிதமான ஊற்று; கவிதையூற்று.

**Castal'ian**, *a.* கிரேக்க பழங்கதையில் பர்னஷஸ் மலையில் செங்கதிர்த்தெய்வமான அப்போலோவுக்கும் கலைத்தெய்வ நங்கையர்க்கும் புனிதமான ஊற்றுக்குரிய; கவிதையூற்றுக்குரிய.

**Cas'taly**, *n.* = Castal'ia.

**cas'tanets**, *n. pl.* காழ்மரம் அல்லது தந்தத்தால் செய்யப்பட்டுக் கிலுக்கிசையுடன் நடனங்களில் கைவிரல்களுக்கிடையே வைத்துப் பயன்படுத்தப்படும் ஒரு கைத்தாளக் கட்டை வகை.

**cast'away**, *n.* புயலால் கரையில் தள்ளப்பட்டவர், உடைகலப் பட்டோர்; சமுதாயத்தில் ஒதுக்கப்பட்டவர்; துணையிலி; பழிகேடன்; *a.* ஒதுக்கப்பட்ட, தள்ளப்பட்ட; பயனற்ற.

**caste**, *n.* சாதி, பிறப்படிப்படையான செயற்கைச் சமுதாயப் பிரிவு; ஒட்டறுத்து வாழவிரும்பும் சமுதாய வகுப்பு, தனி வாழ்வுடைய வகுப்பு; சாதி முறை; சாதிப்படி, சாதி மதிப்பு;

சமுதாயத் திரிபியல் வடிவப் பூச்சியினங்களில் தனி உயிரின் உருவப்படிவம்; (தொ.) lose caste, சாதிப் படியிலிருந்து இழி, சாதி மதிப்பிழ; renounce caste, சாதி துற.

**caste'less**, *a.* சாதியற்ற; சாதியிழந்த.

**cas'tellan**, *n.* அரண்மாடத் தலைவர், அரண்மாளிகை ஆட்சியாளர்.

**cas'tellated**, *a.* அரண்மாடம் போன்ற கட்டமைப்புடைய, அரண்மாளிகைபோலக் கோட்டை கொத்தளக் கூடகோபுரங்களையுடைய.

**cas'tigate**, *v.* தண்டி, கண்டித்துரை, அடித்து ஒறு; திருத்தம் செய், பாட திருத்தம்செய்.

**castiga'tion**, *n.* கண்டித்துத் திருத்தல், கடுந்தண்டனை; கடிந்துரை; காரசாரமான திறனாய்வு.

**cas'tigator**, *n.* கண்டிப்பவர்; கண்டனம் எழுப்புபவர்.

**Castile'**, *n.* ஸ்பெயின் நாட்டின் ஒரு பகுதி; (தொ.) Castile soap, முரட்டுச் சவுக்காரக் கட்டி வகை; தேவதாரு நெய்யும் உவரகையும் கலந்து உண்டுபண்ணப்பட்ட சவுக்காரக் கட்டி.

**castil'ian**, *n.* ஸ்பெயின் நாட்டுப் பகுதியான காஸ்டீலுக்கு (Castile) உரியவர், காஸ்டீல் வாழ்நர்; காஸ்டீல் பகுதிக்குரிய செப்பமிக்க ஸ்பானிய மொழி; *a.* காஸ்டீல் பகுதிக்குரிய.

**cast'ing**, *n.* எறிதல்; இடுதல், போடுதல்; வார்ப்படம், வார்ப்பு; வார்ப்புக்குரிய பொருள்; வார்ப்புரு.

**cast'ing-net**, *n.* எறிவலை, வாய்ப்பக்கம் கீழ்நோக்க எறிந்து மையமூடாக நாற்புறக்கோடியும் இழுக்கப்படத்தக்க வகையில் அமைவுற்ற பெரிய வட்ட வடிவமான வலை.

**cast'ing-vote**, *n.* தீர்வுமொழிச்சீட்டு, முடிவுவாக்கு, சரிசமமான வாக்குகளைப் பெற்ற கட்சியினரிடையே வெற்றி தேர்வு தரத்தக்க மேலுரிமையுடைய மொழிச்சீட்டு.

**cast'ing-weight**, *n.* சாய் எடை; சரிசமநிலையை ஏதேனும் ஒருபுறமாக்கவல்ல மிகை எடை.

**cast'-iron, cast iron**, *n.* வார்ப்பிரும்பு, கரிமம் பசைமம் முதலிய கரிய வகைகளை எஃகில் சேர்ப்பதினும் மிகுதியாகச் சேர்ப்பதால் மீண்டும் வேலைப்பாட்டுக்கு உதவா நிலையுடைய வார்ப்பட இரும்புக் கலவை; வார்ப்படத்தில் உருவாக்கி வார்த்த இரும்பு; *a.* வார்ப்பிரும்பால் ஆக்கப்பட்ட; கடினமான; சோர்வுறாத, உறுதிவாய்ந்த; விறைப்பான; வளைந்து கொடுக்காத, மாற்றியமைக்க முடியாத.

**ca'stle**, *n.* காப்பரண் மாளிகை; காப்பரண், காவற்கோட்டை; அரண் மாளிகையாக முன்பு இருந்த கட்டிடம்; பெருமக்கள் மாளிகை; தற்கால மேலைச் சதுரங்க ஆட்டத்தில் நால்வகைக் காயுருக்களில் ஒன்று (அம்பாரி); யானைமீதுள்ள காப்புக் கூண்டு, அம்பாரி; பெருங்கப்பல், படைநாவாய்; *v.* சதுரங்க ஆட்டத்தில் அம்பாரிக்காயுருவை நோக்கி அரசுக்காயுரு இரு கட்டம் சென்று அது தாண்டிய கடைசிக் கட்டத்துக்கு அம்பாரிக்காயுருவைக் கொண்டுவருமாறு ஆடு; (தொ.) castles in Spain, castles in the air, மனக்கோட்டைகள், பகற்கனவுகள்.

**cas'tle-builder**, *n.* மனக்கோட்டை கட்டுபவர், பகற்கனவாளர், கற்பனைத் திட்டங்களிடுபவர்.

**cas'tle-buil'ding**, *n.* மனக்கோட்டை கட்டுதல், பகற்கனவு காண்டல்.

**ca'stled**, *a.* காப்பரண் மாளிகைகளையுடைய; காவற்கோட்டைகளைக் கொண்ட.

**cas'tle-guard**, *n.* காப்பரண் மாளிகைக் காவலர், மனைக் கோட்டைக் காவலர்.

**cas'tle-nut**, *n.* பொட்டுமரை, இயந்திரத்தில் மற்றோர் உறுப்பின் முனைப்பூசி வந்து பொருந்துவதால் சுழற்சி நிறுத்தப் படும்படியாகச் சுற்றுப்புறத்தில் துளையுடைய முகிழ்.

**cast'-off**, *n.* கழிபொருள், பயனற்றதென ஒதுக்கி எறியப்பட்ட பொருள்; *a.* தூக்கி எறியப்பட்ட, ஒதுக்கப்பட்ட.

**Cas'tor**, *n.* கிரேக்க பழங்கதையில் குதிரை பழக்குதலில் வல்லுநனான லீடா (Leda) வின் இரட்டைப் பிள்ளைகளுள் ஒருவன்; மிதுனமனை வான்மீன்குழுவின் ஒண்மீன்.

**cas'tor**[1], *n.* உழன்றி, உழலை, இருக்கைகளின் கால்களில் பொருந்திய திருகுசுழல் சக்கரம்; தெளிபுட்டில், திவலைகள் கொட்டும் முகடு உடைய கலம்; உணவு மேடையில் துணைச் சுவைப் பொருள்களுக்குரிய கலம்; (தொ.) castor sugar, வெள்ளைத்தூள் சர்க்கரை, சீனி.

**cas'tor**[2], *n.* நீர்நாய் போன்ற கொறிக்கும் விலங்கினம்; விலங்கின வகையின் பிட்டத்தின் சுரப்பி நீரிலிருந்து உண்டு பண்ணப்படும் வன்மண மருந்துப் பொருள் வகை; நீர்வாழ் விலங்கின வகையின் மென் மயிர்த்தோல்; மென் மயிர்த்தோல் தொப்பி.

**cas'tor**[3], *n.* குதிரைக் காலடியில் கல் போன்ற கரணை.

**casto'reum**, *n.* நீர்நாய் வகையின் பிட்ட அடிச்சுரப்பி; நீர்நாய் வகையின் பிட்ட அடிச்சுரப்பியிலிருந்து உண்டுபண்ணப் படும் கூர்மணப்பொருள்.

**cas'tor-oil**, *n.* ஆமணக்கு வகையின் எண்ணெய், குடலிளக்க மருந்தாகவும் மசகெண்ணெயாகவும் வழங்கும் தாவர எண்ணெய் வகை.

**cas'tors**, *n. pl.* உணவு மேடையில் துணைச்சுவைப் பொருள்கள் வைப்பதற்குரிய நிலைச்சட்டம்.

**cast'ory**, *n.* செந்நிறம், நீலச்சாயலார்ந்த செந்நிறம்.

**cas'tral**, *a.* கூடாரத்துக்குரிய.

**castrameta'tion**, *n.* கூடார அமைப்புக்கலை.

**castrate'**, *v.* விதையடி, ஆண்மை போக்கு, இனப்பெருக்க ஆற்றல் அழி; மெலிவி; குறைபடுத்து, அகற்றிக்குறை உண்டுபண்ணு, வெட்டிக்குறை, கத்தரித்துக்குறை; தீமை யகற்று, தூய்மைப்படுத்து.

**cas'trated**, *a.* விதையடிக்கப்பட்ட; தீமை அகற்றப்பட்ட, தூய்மையாக்கப்பட்ட; இடைவெட்டிக் குறைக்கப்பட்ட.

**castra'tion**, *n.* விதையடிப்பு, இனப்பெருக்க ஆற்றலழிப்பு; (உயி.) விதை நீக்க அறுவை; (தாவ.) கருவக நீக்கம், மலரின் பூவிழை நீக்கம்.

**cast'-steel**, *n.* அடித்து உருவாக்கப்படாமல் வார்த்து உருவான எஃகு.

**ca'sual**, *n.* தற்செயல் வருகையாளர், இடைவரவாளர்; நாட்கூலியாள்; ஒரோவொரு சமயம் உதவிநாடும் பஞ்சை; *a.* தற்செயல் வருகையான, இடைவரவான; திட்டமிடப்படாத, காலத்திற்பட்ட, காலப்போக்கிலேற்பட்ட; கைப்போக்கான, முயற்சியற்ற; முறைமைப்படாத; (தொ.) casual labourer, அவ்வப்போது உழைப்பவர், நாட்கூலியாள்; casual leave, நேர்வு விடுப்பு; casual ward, ஏழ்மையுதவி மனையில் இடையுதவிச்சாலை.

**cas'ualism**, *n.* எல்லாம் தற்செயற்பாங்காகவே நடக்கின்றன என்ற கோட்பாடு, காரிய காரண மறுப்புக்கொள்கை.

**ca'sually**, *adv.* தற்செயலாக, எதிர்பாராமல், போகும் போக்கிலே, இடையே.

**cas'ualness**, *n.* தற்செயல் நிகழ்வுப்பண்பு; திட்டமின்மை; இடைநிகழ்வு; தற்போக்கு.

**cas'uals**, *n. pl.* தட்டையான சறுக்குப் புதைமிதி.

**ca'sualties**, *n. pl.* படைத்துறையில் சாவு-காயப்படுதல்-ஓடிப் போதல் முதலியவற்றால் ஏற்படும் இழப்புப்புள்ளி விவரம், சேதப்பாட்டு விவரம்; (தொ.) casualties of superiority, ஸ்காத்லாந்து நாட்டில் பழைய நிலப்பண்ணை முறையில் பண்ணையாளுக்குச் செலுத்த வேண்டிய இடை நிகழ்வுகளுக்குரிய கட்டணங்கள்.

**cas'ualty**, *n.* திடீர் இடையூறு, இடைநேர் இடர், இடை விபத்து; தீ நிகழ்வு; இடைநேர்வு; காயம்பட்டவர்; இடைச்செலவினம், சிறு சில்லறைச் செலவு; (தொ.) casualty ward, மருத்துவமனையின் இடைவிபத்தரங்கம்.

**casuarin'a**, *n.* சவுக்கமரம், காற்றாடிமரம்.

**ca'suist**, *n.* சமய சாத்திரங்களின் தத்துவ ஆதரங்கள் காட்டி மயிரிழை பிளக்கும் வாத எதிர்வாதம் செய்பவர், ஆரவாரச் சொற்போராளர், விதிமுறைவாதி, மயிரிழைவாதி; குதர்க்க வாதி, விதண்டாவாதி; வாதத் திறமையுடையவர், வாய்வலர்.

**casuis'tic**, *a.* தத்துவவாதம் செய்கிற, மயிரிழைவாத இயல்பான; வாயடி வாதம் செய்கிற; நிகழ்ச்சி விளக்க ஆதார முடைய.

**casuis'tical**, *a.* தத்துவவாதம் செய்கிற; மயிரிழைவாத இயல்பான; விதிமுறை வாதக்கோட்பாட்டுக்குரிய; வாயடி வாதம் செய்கிற, ஆரவார வாதத்தால் வாயடைக்கிற.

**ca'suistry**, *n.* வாத இயல்; விதிமுறை வாதக்கோட்பாடு; அறச்சிக்கல் விடுவிப்பு; மயிரிழை நுணுக்க வாதம்; வாயடி வேதாந்தம்.

**cas'us bell'i**, (ல.) *n.* போர்க்காரணம்.

**cat**[1], *n.* பூனை; பூனை இன விலங்கு; வம்புக்காரி; முற்றுகைத் தாக்குதலுக்குரிய காப்பரண் சகடம்; இரு முக்காலி; இரண்டு முக்காலிகளை இணைத்த கோக்காலி; கிட்டிப்புள் போன்ற விளையாட்டு வகையின் கிட்டிக்கட்டை; கிட்டிப்புள் போன்ற விளையாட்டு வகை; ஒன்பது முடிச்சுக்கள் வாய்ந்த சாட்டை வார்; *v.* கப்பல் நங்கூரம் தாங்கித் தூலத்தளவாக நங்கூரம் உயர்த்து; (பே-வ.) வாந்தியெடு; (தொ.) bell the cat, பூனைக்கு மணிகட்டு; ஆபத்தான செயலில் தலைமை மேற்கொள்; care killed a cat, care killed the cat, ஒன்பது உயிர்களிருப்பதாக நம்பப்படும் பூனையைக் கவலைகொன்று விடுமே (ஆதலால் மகிழ்ச்சியோடிரு); catted and fished, (கப்.) நங்கூரம் தாங்கித் தூலம் வரையில் உயர்த்திக்கட்டப் பட்ட; Cheshire cat, இளித்த பல் தோற்றத்துக்குப் பேர்போன பூனை வகை; enough to make a cat laugh, ஈடுபாடற்றவர்களுக்கும் மகிழ்ச்சியூட்டக் கூடிய; Kilkenny cats, ஒருவரை ஒருவர் அழிக்கிறவரையில் சண்டை போடுகிற வர்கள்; raining cats and dogs, அடர்த்தியாக மழை பெய்தல்; room to swing a cat, மிகக் குறைந்த அளவு தேவைப்படும் இடம்; see which way the cat jumps, உறுதி செய்யுமுன் வெற்றி எத்திசை என்பதைக் கவனித்துக் கொள்; turn cat in pan, turn the cat in the pan, திறம் படக் கட்சிமாறு.

**cat**[2], *n.* இங்கிலாந்தின் வடகிழக்குக் கரையில் போக்குவரத்தா யிருக்கிற நிலக்கரி-வெட்டு மரக்கப்பலின் பழைய பெயர்.

**catab'olism**, *n.* அழிவுண்டாக்கும் உயிர்ப்பொருள் வேதியியல் மாறுபாடு.

**catacaus'tic**, *a.* (வடி.) ஒளி முட்டி மீள்வதனல் உண்டாகும் கோட்ட வரைகளுக்குரிய.

**catachres'is**, *n.* பொருள் வழுப்படச் சொல்லை வழங்குதல்; சொற்களைத் தகாவழிப் பெய்துரைத்தல்.

**catachres'tic, catachres'tical**, *a.* பொருள் வழுப்பட வழங்கப்பட்ட, மாறுகொளப் புணர்த்தற்குரிய.

**cat'aclasm**, *n.* சீர்குலைவு, சிதைவு, முறிவு.

**cataclas'mic**, *a.* பெரும் பிளவின் இயல்பினதான; படு வீழ்ச்சிக்குரிய.

**cataclas'tic**, *a.* (மண்.) நொறுக்கப்பட்ட சிறு துணுக்கு களாலான.

**cat'aclysm**, *n.* பிரளயம், ஊழிப்பெருவெள்ளம்; திடீர் மாறு பாடு; அரசியல் கொந்தளிப்பு; சமூகப்புரட்சி.

**cataclys'mal, cataclys'mic**, *a.* ஊழிப் பெருவெள்ளத்துக் குரிய; புரட்சியின் இயல்பு வாய்ந்த.

**cat'acomb**, *n.* அடிநிலக் கல்லறை; சுவடிகள்-மது முதலிய வற்றைத் தொகுத்து வைப்பதற்கான சேமநிலவறை.

**cat'acombs**, *n. pl.* அடிநிலக் கல்லறைத் தொகுதி; கட்டு கற்களுக்காக வெட்டிக் குடையப்பட்ட நிலக்குடைவு.

**catacous'tics**, *n.* (இய.) எதிரொலிகளைப் பற்றிக் கூறும் ஓசையியற் பிரிவு.

**catacum'bal**, *a.* அடிநிலக்கல்லறை போன்ற.

**catad'romous**, *a.* (வில.) முட்டையிடுவதற்காக ஆற்று முகம் அல்லது கடலுக்குப் பருவந்தோறும் செல்கிற.

**catafal'co, cat'afalque**, *n.* பாடை, கல்லறை வடிவில் அமைக்கப்பட்ட பிணங்கொண்டு செல்வதற்குரிய ஊர்தி.

**Cat'alan**, *n.* காடலோனியர்; ஸ்பெயின் நாட்டிலுள்ள காட லோனியா (Catalonia) மாகாணத்தவர்; காடலோனிய மாகா ணத்துக்குரிய மொழி; *a.* காடலோனியாவைச் சேர்ந்த; காடலோனிய மொழிக்குரிய.

**catalec'tic**, *a.* முடிவுறாத; நிறைவற்ற; (இலக்.) கடைக் குறையான, அடியிறுதியில் ஓர் அசை குறைந்த.

**cat'alepsy**, *n.* முடுசன்னி, உணர்ச்சியிழந்து உடம்பு விறைத்துப் போகச் செய்யும் நோய் வகை; விலங்குகள் உயிரிழந்தன போலச் செயலிழந்து கிடக்கும் நிலை, சா விறைப்பு.

**catalep'tic**, *n.* முடுசன்னி நோயாளி; *a.* முடுசன்னிக்குரிய; முடு சன்னி கண்ட; சா விறைப்புச் சார்ந்த.

**catalex'is**, *n.* கடைக்குறை, பாவின் அடியிறுதியில் ஓர் அசை குறைந்திருத்தல்.

**catallac'tic**, *a.* நாணய மாற்றுக்குரிய.

**catallac'tics**, *n.* நாட்டுப் பொருளியல்.

**cat'alogue**, *n.* பெயர்ப்பட்டியல் வரிசை; *v.* பட்டியல் வரிசை தொகு; நூல்கள் முதலியவற்றின் பெயர்களைப் பட்டியலில் சேர்; (தொ.) catalogue raisonne, துறை-கிளைத் துறை விரித்து அடைவு செய்யப்பட்ட பட்டியல்.

**cat'aloguer**, *n.* பட்டியல் தொகுப்பவர்.

**cat'aloguise**, *v.* பட்டியல் அடைவுசெய்.

**catal'pa**, *n.* நெஞ்சுப்பை போன்ற இலைகளையும் ஊதுகொம்பு போன்ற மலர்களையும் உடைய மரவகையின் இனம்.

**cat'alyse**, *v.* (வேதி.) கடுவினைக்கு உட்படுத்து, இயை பியக்கம் ஊக்கு.

**catal'ysis**, *n.* (வேதி.) இயைபியக்கத்தை ஊக்கும் ஆற்றல், தான் மாறுமலேயே மற்றப்பொருள்களில் வேதியியல் மாற்ற முண்டாக்கத் துணைசெய்தல்.

**cat'alyst**, *n.* (வேதி.) கடுவினை ஆக்கி, நுகைப்பான், இயை பியக்கம் ஊக்கி.

**catalyt'ic, catalyt'ical**, *a.* (வேதி.) கடுவினை ஊக்குகிற, இயைபூக்கமான.

**catamaran'**, (த.) *n.* கட்டுமரம், இரட்டுறு படகு, தோணி; பழங்காலக் கப்பல் வகை; வம்புக்காரி.

**catame'nia**, *n. pl.* மாதவிடாய் ஒழுக்கு.

**cat'amite**, *n.* இயற்கைக்கு மாறுபட்ட புணர்ச்சிக்காக வைத் திருக்கப்படும் சிறுவன்.

**cat'amount**, *n.* ஐரோப்பியக் காட்டுப்பூனை.

**catamoun'tain**, *n.* சிறுத்தை; மலைவாழ் முரடர்; *a.* முரட்டுத்தனமான.

**cataphon'ics**, *n.* எதிரொலிகளைப் பற்றிக் கூறும் ஓசையியற் பிரிவு.

**cataphrac'tic**, *a.* முழுப் போர்க்கவசத்துக்குரிய.

**cat'aphyll**, *n.* இலையின் முதன் மூலப்படிவம், இலைமுதல்.

**cat'aplasm**, *n.* வீக்கத்திற்குக் கட்டுகிற மாப்பசை.

**cataplec'tic**, *a.* உணர்வயர்வுக்குரிய; விலங்குகளின் உறக் கம் போன்ற நிலைக்குரிய.

**cat'aplexy**, *n.* உணர்ச்சியால் விளைந்த அசைவற்ற நிலை; விலங்குகளுக்கு இரைப்புப் போன்ற விறைப்புண்டாக்கும் நோய் வகை.

**cat'apult**, *n.* கவண், விசை வில்பொறி, எறிபடை விச்சுப் பொறி; சிறுவர் பறவையடிப்பதற்காகப் பயன்படுத்தும் உண்டைவில்; கப்பல் தளத்திலிருந்து ஆகாய விமானத்தைப் பறக்கச் செய்வதற்கான பொறியமைப்பு; *v.* கவண் எறி; எறிந்து தாக்கு; விசையுடன் பாய்; விமானத்தைப் பறக்க விடு; (தொ.) catapult fruit, விதைகளை விசையுடன் வெளிப்படுத்தும் பழம்.

**catapultier'**, *n.* கவண்கொண்டு எறிபவர்.

**cat'aract**, *n.* நீர்வீழ்ச்சி ; பீற்றுநீர்த் தாரை ; சோனைமாரி, கொட்டும் மழை ; கண்படலம், திமிரம் ; (பொறி.) தண்ணீர் பாய்வதனுல் இயங்கும் நீராவிப் பொறியாட்சி உறுப்பு.

**catarrh'**, *n.* மூக்கடைப்பு, தடுமல், நீர்க்கோப்பு.

**catarrh'al**, *a.* சளிச்சவ்வு அழற்சிக்குரிய, நீர்க்கோப்பினுல் விளைந்த ; நீர்க்கோப்பின் இயல்புடைய.

**cat'arrhine**, *n.* (வில.) குரங்கினத்தையும் மனித இனத்தையும் உட்கொண்ட நிமிர் உடல் உயிரினங்களில் முற்பிரிவாகிய குரங்கினம் ; *a.* குரங்கினம்போல இருமூக்குத் தொளைகளையும் மிக நெருக்கமாகக் கொண்ட.

**catas'ta**, *n.* அடிமைகளின் விலைக்கள மேடை ; குற்றவாளிகளின் சித்திரவதைக் களரி.

**catas'tasis**, *n.* நாடகத்தின் நிகழ்ச்சி உச்சநிலை அடைந்துள்ள கட்டம்.

**catas'trophe**, *n.* தலைதடுமாற்றம், அழிவு, கேடான முடிவு ; திடீரென நேரிடும் விபத்து ; கவிழ்வு ; நாடக முகடு ; கதையின் உச்ச உணர்ச்சிநிலைக் கட்டம் ; (மண்.) பொருள்களின் அமைப்பைத் தலைகீழாக்கும் நிகழ்ச்சி.

**catastroph'ic, catastroph'ical**, *a.* தலைதடுமாற்றமான ; அழிவுக்குரிய ; பெருங்கேட்டின் இயல்பு வாய்ந்த.

**catas'trophism**, *n.* (மண்.) எங்ஙனும் திடீரென நேரிடும் நிகழ்ச்சிகளால் மண்ணியல் மாறுதல் ஏற்படுகிறதென்னும் பழங்கொள்கை.

**catas'trophist**, *n.* திடீர் நிகழ்ச்சிகளால் மண்ணில் மாறுதல் நேரிடுகிறதென்னும் கோட்பாட்டாளர்.

**catato'nia**, *n.* நினைவு சொல் செயல் மாறுட்டக் கோளாறு, அடிக்கடி உணர்விழப்புடன் கூடிய பித்தநோய் வகை.

**cataton'ic**, *a.* அடிக்கடி உணர்விழப்புடன் கூடிய உன்மத்த நோய் சார்ந்த.

**Cataw'ba**, *n.* அமெரிக்கக் கொடிமுந்திரிப் பழவகை ; அமெரிக்கக் கொடிமுந்திரிப் பழவகையினின்றும் செய்யப்படும் சிவப்புநிற இன்தேறல்.

**cat'boat**, *n.* முன்புறம் அமைந்துள்ள ஒரே பாய்மரத்தோடு கூடிய படகு.

**cat'-bur'glar**, *n.* விரைவாக எளிதில் மதிலேறிச்சென்று திருடும் கள்ளன்.

**cat'-call**, *n.* சீழ்க்கை ஒலி ; நாடகம் பார்ப்பவர்கள் தங்கள் வெறுப்பைத் தெரிவிப்பதற்காகப் பயன்படுத்தும் கிறீச்சென்று ஒலிக்கிற கருவி ; *v.* சீழ்க்கையடி ; கிறீச்சென்னும் ஒலிமூலம் எதிர்ப்புத் தெரிவி.

**catch**, *n.* பற்று, பிடிப்பு, பற்றிப்பிடித்தல் ; கவ்வுதல் ; கைப்பற்றுதல் ; மட்டைப்பந்து முதலிய ஆட்டங்களில் பந்தினைப் பிடித்தல் ; பற்றிறுக்கி, பற்றுக்கொளுவி ; பிடிக்கப்பட்ட பொருள் ; பிடிக்கப்பட்ட மீனின் அளவு ; பிடிக்கத்தக்க பொருள் ; திடீரென எய்தப்பெற்ற நன்மை ; மறை இடர், சிக்கல், சிறு தடை ; கொன்னல், திக்கல் ; கதவு முதலிய வற்றின் அசைவை நிறுத்துவதற்கான தடுக்கு அமைப்பு ; தந்திரமான கேள்வி; ஏமாற்றம்; வியப்புத்தரும் செய்தி ; (இசை.) சிலேடைப்பொருள் தோன்றும் வண்ணம் மூவர் பாடுதற்கென அமைக்கப்பட்ட இசைப்பாடல்; *v.* கைப்பற்று ; இயக்கம் தடைசெய்து பிடி, தடுத்துவை, நிறுத்து; மட்டைப் பந்தாட்டத்தில் மட்டைக்காரரால் அடிக்கப்பட்டுத் தரையினைத் தொடுவதற்குமுன் பந்தைப் பிடி ; பந்தைப் பிடித்து மட்டைக்காரரை ஆட்டமிழக்கச் செய் ; அறி; தெரிந்து கொள் ; துரத்திப்பிடி ; சிக்கவை, மயக்கி அகப்படுத்து ; தடைப்படு ; சிக்கு ; வரப்பெறு ; உரிய காலத்தில் எய்தப் பெறு ; மேவு ; நோய்த்தொற்றுக்கு ஆளாக்கு; நோய்போலப் பற்றிக்கொள் ; தொற்றிக்கொள் ; தீப்பற்று ; புலன்களினுல் அல்லது மனத்தினுல் உணர் ; செயல் பின்பற்று ; தவறு செய்கையில் கண்டுபிடி ; (தொ.) catch a likeness, பார்த்தது போல் அமைத்துக் காட்டு ; catch at, சட்டெனப்பறி, எட்டிப்பிடுங்கு ; ஆவலுடன் கைக்கொள் ; catch a Tartar, தொந்தரவுக்கு உள்ளாக்கக்கூடிய ஒருவரை அகப்படுத்து ; தனக்கு மிஞ்சிய ஒருவரோடு தொடர்பு கொள் ; catch away, விரைவாகக் கைப்பற்று ; catch fire, தீப்பிடித்துக்கொள், பற்றியெரி ; உணர்ச்சி கொள் ; ஊக்கங்கொள் ; catch glimpse of, கணநேரக் காட்சி பெறு; catch him, catch me ! ஒரு நாளும் முடியாத காரியம் அது ! ; catch hold of, பிடி, கைப்பற்று ; catch it, திட்டுவாங்கு, அடிவாங்கு ; catch on, புரிந்து கொள் ; எல்லாராலும் விரும்பப்பெறு ; catch one a blow, catch one on the nose, குத்துவிடு, தாக்கிக் குத்து ; catch out, அடிக்கப்பட்ட பந்து நிலத்தைத் தொடுவதற்குள் அதைப்பிடித்து அடித்த மட்டைக்காரரை ஆட்டமிழக்கச்செய் ; தவறு கண்டுபிடி ; catch sight of, காண் ; catch up, தொடர்ந்து சென்று பிடி ; சட்டென்று பிடுங்கு ; இடையிட்டுத் தடு ; மேற்கொள் ; catch up with, தொடர்ந்துசென்று பிடி, விரைந்து சென்று எட்டு.

**catch'-as-catch'-can'**, *n.* எவ்விதமான பிடிக்கும் இசைவளிக்கப்படும் மற்போர் வகை, லங்காஷைர் (Lancashire) மற்போர்ப் பாணி; *a.* லங்காஷைர் மற்போர்ப் பாணி சார்ந்த; *adv.* லங்காஷைர் மற்போர்ப்பாணியின்படி.

**catch'-basin**, *n.* சாக்கடையில் கசடு பிரித்து நிறுத்தும் குழியமைவு.

**catch'-drain**, *n.* மேற்பரப்பிலுள்ள தண்ணீரைப் பிடிப்பதற்கான மலைப்பக்கத்து வடிகால்.

**catch'fly**, *n.* பசைப்பொருள் கசியும் தண்டினையுடைய செடிவகை.

**catch'ing**, *n.* பிடித்தல் ; *a.* பிடிக்கிற ; தொற்றிக் கொள்ளத் தக்க, தொற்றிப் பரவுகிற ; கவர்ச்சியுடைய, மயக்குகிற.

**catch'ment**, *n.* ஆற்றுநீர் வடிகால் அமைப்பு.

**catch'ment-area, catch'ment-basin**, *n.* நீர்வரும் பரப்பு, நீர்வாங்கு தளம்.

**catch'penny**, *n.* வெறும் பகட்டுப் பொருள், விற்பனைக்காக மட்டும் செய்யப்படும் பயனற்ற பொருள் ; *a.* வெறும் பகட்டான.

**catch'phrase**, *n.* கவர்மொழி, சுலோகம்; கருத்தைக் கவரும் சொற்றொடர்.

**catch'pole, catch'-poll**, *n.* ஏவலர், நீதித்துறை அலுவலர்.

**catch-the-ten'**, *n.* துருப்புச் சீட்டின் பத்தினைக் கைப்பற்றுவதே நோக்கமாயுள்ள சீட்டாட்ட வகை.

**catch'-weed**, *n.* முரட்டுத் தண்டினையுடைய செடிவகை.

**catch'word**, *n.* கொளுச்சொல், நடிகரின் தூண்டு சொல் ; அகராதியின் அல்லது கலைக்களஞ்சியத்தின் ஒரு பக்கத்திலுள்ள தலைப்புச் சொல் ; ஒரு பக்கத்தின் அடியில் தந்துள்ள அடுத்த பக்கத்தின் முதற்சொல் ; அரசியல் முதலிய கட்சிகளின் இலக்குச் சொல்.

**catch'y**, *a.* கவர்சியுள்ள ; எளிதில் உளங்கொளத்தக்க ; மருட்சி தருகிற ; விட்டுவிட்டு நடைபெறுகிற.

**catechet'ic, catechet'ical**, *a.* வினுவிடை வடிவமான ; வினுவிடை முறையொன்றை ஒட்டிய ; வினுவிடைமுறை பற்றி நடக்கிற ; வாய்மொழியான, வாய்மொழிப் பாடத்துக்குரிய ; கிறித்தவசமய அடிப்படைக் கொள்கைகளை வாய்மொழியாய்க் கற்பிப்பதற்குரிய.

**catechet'ics**, *n.* வினுவிடையாகப் பாடங் கற்பிக்கும் கலை ; வினுவிடைப் போதனை முறை ; செயல் முறையில் எளிதில் பின்பற்றத் தக்க வினுவிடை வடிவமாயுள்ள சமய சித்தாந்தம்.

**cat'echism**, *n.* வினுவிடையாகக் கற்பிக்கப்படும் பாடம் ; சமயத்துறை வினுவிடை ஏடு; கேட்கப் படும் கேள்வி வரிசை.

**catechis'mal**, *a.*=catechistic.

**cat'echist**, *n.* வினுவிடையாகப் பாடம் கற்பிப்பவர் ; கிறித்தவ சமயம் புக விரும்பும் மாணவர்களுக்குப் பாடங்கற்பிப்பவர் ; சமயப் பரப்புத் திருச்சபையின் உள்ளூர் ஆசிரியர்.

**catechist'ic, cat'echist'ical**, *a.* வினுவிடையாகப் பாடங் கற்பிப்பவருக்குரிய ; வினுவிடைப் பாடமுறை சார்ந்த.

**cat'echize,** *a.* வினவிடையாகப் பாடங்கற்பி ; வினவிடை விளக்க மூலம் மெய்ம்மை புகட்டு ; வினா எழுப்பி விடை விளக்கங்கேள் ; வினவி ஆராய்.

**cat'echu,** *n.* காசிக்கட்டி.

**catechum'en,** *n.* தீக்கைக்குமுன் கிறித்தவ சமயத்தின் அடிப் படை உண்மைகள் கற்பிக்கப் பெறுபவர், இளம் மாணவர்.

**catechumen'ical,** *a.* தீக்கைக்குமுன் கிறித்தவ சமய உண் மைகள் கற்பிக்கப் பெறும் இளம் மாணவருக்குரிய.

**catego'rical,** *a.* உறுதியான, ஐயத்துக்கு இடமற்ற, புறனடை யற்ற ; மறுப்புக் கிடமற்ற, ஆணித்தரமான ; வெளிப்படை யான, நேர்முகமான, ஒளிமறைவில்லாத ; (தொ.) the categorical imperative, ஒழுக்கமுறையில் மேற்போக்கிட மளிக் காத உச்சமுடிவான உளச்சான்றின் கட்டளை.

**categor'ically,** *adv.* கட்டுறுதியாக, மாறுபாட்டுக்கு இட மின்றி, ஆணித்தரமாக.

**cat'egories,** *n. pl.* (மெய்.) மெய்விளக்கியலில் உளங்கொளத் தக்க மெய்ம்மை முழுவதையும் ஒன்றுவிடாமல் உளப்படுத்தி வகுத்துரைத்த பொருள்களின் இனவகைக்கூறுகள் ; காண்ட் (Emmanuel Kant) என்ற செர்மன் மெய்விளக்க அறிஞர் கோட்பாட்டின்படி மெய்ம்மை முழுவதன் மூலக்கூறுகள்.

**cat'egorise,** *v.* தரம் பிரித்திணை ; வகைப்படுத்து.

**cat'egorist,** *n.* வகைப்படுத்துபவர், வகைப்பிரிவு ஆய்வாளர்.

**cat'egory,** *n.* வகையினம், முழுமையின் வகைப்பிரிவுகளில் ஒன்று; கருத்தடிப்படையான பொருள் வகுப்பு, உறுதியுடன் அறியப்பட்ட பண்புக்குழு.

**caten'a,** (ல.) *n.* சங்கிலித்தொடர், இணைந்த தொடர், கோவை; (தொ.) catena patrum, தொடக்கக் காலத்திலிருந்து தொடங்கிய கிறித்தவக் கோட்பாடு பற்றிய விளக்கப் பகுதி களின் கோவை.

**catenar'ian, caten'ary,** *n.* சங்கிலி வளைவு, செங்குத்துக் கோட்டிலமையாத இரண்டு குற்றுக்களிலிருந்து தளர்த்தி யாய்த் தொங்கும் ஒரு சீரான சங்கிலியினால் ஏற்படும் நெளிவு; *a.* சங்கிலி நெளிவு போன்ற ; சங்கிலி நெளிவுக்குரிய.

**cat'enate,** *v.* சங்கிலிபோல் இணை, தொடு ; சங்கிலியால் இணை ; *a.* சங்கிலிபோல் இணைக்கப்பட்ட.

**catena'tion,** *n.* சங்கிலி இணைப்பு, தொடுப்பு.

**cat'er,** *v.* உணவு ஏற்பாடு செய், உணவு வழங்கு ; நேரப் போக்களித்து மகிழ்வி, வேண்டியவற்றைத் தேடிக்கொடு, விரும்புவனவற்றை நிறைவேற்று.

**ca'terer,** *n.* உணவு ஏற்பாடு செய்பவர், உணவு தருவிப்பவர்.

**ca'teress,** *n.* உணவு ஏற்பாடு செய்பவள்.

**ca'tering,** *n.* உணவு தருவிப்பு ; களியாட்டம் ஏற்பாடு செய்தல்.

**cat'erpillar,** *n.* விட்டிற் பூச்சியினத்தின் முட்டைப் புழு ; கம்பளிப் புழு, கம்பளிப்பூச்சி ; உழைக்காமல் உண்பவர் ; உருள்கலங்களின் சுழலுருளை, சக்கரங்கள் பதிந்துருளும் இடையருச் சங்கிலிக் கோவை; (தொ.) caterpillar tractor, நீளச்சங்கிலிகளையுடைய இழுகருவி.

**cat'erwaul,** *n.* பூனையின் அலறல்; *v.* பூனைபோல் கிறிச்செனை ஒலியெழுப்பு ; பூனைகள்போல் சண்டையிடு.

**cat'erwauling,** *n.* பூனையின் அலறல் ஒலி.

**cates,** *n. pl.* அருஞ்சுவைப் பொருள்.

**cat'-eyed,** *a.* பூனைக் கண்களையுடைய, இருளில் பார்க்கவல்ல.

**cat'-fish,** *n.* பூனைபோன்ற அமைப்புடைய மீன்வகை.

**cat'gut,** *n.* விலங்கின் குடல் தசைநாளங்களிலிருந்து இழைக் கப்படும் நரம்பிழை, நரம்புக்கம்பி ; நரப்பிசைக்கருவியின் தந்தி ; முரட்டுவடத் துணிவகை.

**cath'arise,** *v.* முற்றும் துப்புரவுடையதாகச் செய்.

**cathars'is,** *n.* துப்புரவாக்குதல் ; (மரு.) வயிற்றிளக்கம் ; பேதி, குடல் கசடுநீக்கம் ; நாடக முதலியவற்றால் ஏற்படும் உணர்ச்சித்தூய்மை.

**cathart'ic,** *n.* (மரு.) பேதிமருந்து ; *a.* பேதியாகிற, குட லிளக்கம் உண்டுபண்ணுகிற.

**cathar'tical,** *a.*=cathartic.

**cathay',** *n.* (செய்.) சீனதேசம்.

**cat'head,** *n.* நங்கூரம் தாங்கும் கப்பல் துலம்.

**cathed'ral,** *n.* மாவட்டத் தலைமைக் கிறித்தவக்கோயில் ; *a.* மாவட்டத் தலைமைக் கிறித்தவக் கோயிலுக்குரிய; மாவட்டக் கிறித்தவத் திருச்சபைத் தலைவர் பதவிக்குரிய.

**Cath'erine-wheel,** *n.* ஆரங்கள் உள்ள வட்டமான சாளரம்; சக்கரச் சாளர அறை ; சுழல் பூவாணம் ; பக்கவாட்டமாகப் போடப்படும் குட்டிக்கரணம் ; (கட்.) விளிம்பில் பற்களுடன் கூடிய சக்கர வடிவம்.

**cath'eter,** *n.* (மரு.) சிறுநீர் இறக்குங் குழல்; நீர்மம் அல்லது வளிகளை உடற்குழாய்களில் ஏற்றவோ வடியவிடவோ உதவும் குழல்.

**cathetom'eter,** *n.* மட்டமானி, குழல்களில் உள்ள வெவ்வேறு நீர்மங்களின் நுண்ணிய மட்ட வேறுபாடுகளை அளப்பதற் கான கருவி.

**cath'etus,** *n.* (வடி.) செங்கோடு, மற்றொரு நேர்வரைக்கு அல்லது தளத்துக்குச் செங்குத்தாகவுள்ள நேர்வரை.

**cathex'is,** *n.* (உள.) ஒருபொருள் அல்லது கருத்துச் சார்ந்த மன அவா ஆற்றலின் அளவு.

**cath'ode,** *n.* (இய.) எதிர்மின்வாய் ; (தொ.) cathode rays, எதிர்மின் கதிர்கள், மின்வெடி நிகழும் காற்றெழிகுழலின் எதிர்மின்வாயிலிருந்து செல்லும் எதிர்மின் ஆற்றல் செறி வுற்ற துகள்களின் மின்னோட்டம் ; cathode ray tube, எதிர் மின்கதிர்க்கொடியைத் திருப்பி ஒளியியக்கத் திரைமீது விழச் செய்ய உதவும் அமைவு, தொலைகாணியில் பயன்படுத்தப் படும் அமைவு.

**cathod'ograph,** *n.* (இய.) ஊடு கதிர்களைக் கொண்டு எடுக்கப்பட்ட நிழற்படம்.

**cathodog'raphy,** *n.* ஊடுகதிர்களைக் கொண்டு எடுக்கப்படும் நிழற்படக்கலை.

**cat'-hole,** *n.* கப்பலின் பின்புழை வாய்கள் இரண்டில் ஒன்று.

**cath'olic,** *n.* ரோமன் கத்தோலிக்கர், ரோமன் கத்தோலிக்கச் சமயச் சார்புடையவர் ; *a.* எல்லாவற்றையும் அகப்படுத்திய, முழுநிறைவான, அகல்விரிவான, பொதுவான; கிறித்தவர்கள் எல்லோரும் உள்ளிட்ட ; முதுமுறைச்சார்பான ; மரபுறுத, நீண்மரபுத் தொடர்புடைய ; தாராளமான, விரிந்த மனப் பான்மையுள்ள, சமயப் பொறுமைவாய்ந்த, பெருமனம் உடைய; கீழைக் கிறித்தவ சமயத்தவர்க்கும் மேலைக் கிறித்தவ சமயத்தவர்க்கும் உண்டான பெரும் பிளவுக்கு முன்னிருந்த மரபு சார்ந்த; ரோமன் கத்தோலிக்கர்களுக்குரிய ; (தொ.) Catholic and Apostolic, Catholic Apostolic, 1832-இல் நிறுவப்பட்ட கத்தோலிக்க குரவர் அருள்மரபுத் திருச்சபை என்னும் சமயக்குழுவினர்.

**Cathol'icism,** *n.* ரோமன் கத்தோலிக்க சமயக்கோட்பாடுகள்.

**catholi'city,** *n.* எல்லாவற்றையும் அகப்படுத்திய நிலை, விரிந்த உளப்பாங்கு, அகவெறுப்பின்மை, காழ்ப்பின்மை ; கத்தோலிக்க சமயக்கோட்பாட்டில் உடன்பாடு.

**cathol'icize,** *v.* கத்தோலிக்கர் ஆக்கு ; கத்தோலிக்க மய மாக்கு ; கத்தோலிக்கர் ஆகு.

**cathol'icon,** *n.* பலநோய் மருந்து, சஞ்சீவி.

**catilina'rian,** *a.* துணிகரச் சதிகாரத் தன்மையுடைய.

**Cat'iline,** *n.* துணிகரச் சதிகாரன் ; கி. மு. 63-இல் ரோமாபுரி அரசைக் கவிழ்க்க முயன்று தோல்வியுற்ற செர்கியஸ் கேட்டிலின் (Sergius Catilina) என்பவன்.

**cat'kin,** *n.* மஞ்சரி, வளைமலர்க்கொம்பு, ஒருபால் மலரிழைச் சிதற் குஞ்சம்.

**cat'-lap,** *n.* கீழ்த்தர மதுவகை.

**cat'-like,** *a.* பூனைபோல் இயங்குகிற; ஓசையற்ற; திருட்டுத் தனமான.

**cat'ling**, *n.* சிறுபூனை, பூனைக்குட்டி ; நேர்த்தியான நரம்புத் தந்தி ; உறுப்பினை அறுத்தெடுப்பதற்கான கூர்ங்கத்தி.

**cat'mint**, *n.* நீலமலருடைய நறுமணச்செடி.

**cat'-nap**, *n.* சாய்துயில், நாற்காலித்துயில்.

**Cato'nian**, *a.* ரோமாபுரியைச் சார்ந்த சீர்மையர் கேட்டோ (Cato கி. மு. 224-149) அல்லது கேட்டோ உடிசென்சிஸ் (Cato Uticensis கி. மு. 55-46) போன்ற ; வீறுர்ந்த ; கண்டிப்பான, முடிவணங்காத.

**cat-o'-nine-tails**, *n.* பண்டைப் படைத்துறையில் வழங்கப் பட்ட ஒன்பது இழை முடிச்சுக்களுள்ள வார்க்கசை.

**catop'tric**, *a.* பளிங்குக்குரிய ; உருநிழல் சார்ந்த, எதிர் ஒளிக்கோட்டத்துக்குரிய.

**catop'trics**, *n. pl.* நிழலுருவியல், இயற்பியலின் ஒளியியற் கூறான எதிர் ஒளிக்கோட்ட இயல் துறை.

**cat'-rigged**, *a.* (கப்.) கடலமைதி நேரத்துக்குரிய முறையில் முக்கிய கோணப் பாய்வகையை மேலும் கீழும் விரித்துக் கட்டிய.

**cat's'-cradle**, *n.* ஒருவர் கைவிரல்களில் உருவம் அமையும்படி கயிறு கோத்துக்கொண்டு மற்றவருக்கு அதனை மாற்றி மாற்றி ஆடும் குழந்தை விளையாட்டு வகை.

**cat's'-ear**, *n.* மஞ்சள் மலர்களையும் பூனைக்காது போன்ற இலைகளையும் உடைய ஐரோப்பியப் பூண்டு வகை.

**cat's'-eye**, *n.* வைடூரியம் ; சாலை நிலத்தளத்தில் பொருத்தப் பட்டுள்ள ஒளி பிறங்கும் கண்ணாடிச் சில்லு.

**cat's'-foot**, *n.* நிலத்திற் படரும் கொடிவகை.

**cat'-sil'ver**, *n.* வெள்ளிபோன்ற ஒளியுடைய அப்பிரக வகை.

**cat'-sleep**, *n.*=**cat-nap.**

**cat's'-meat**, *n.* பூனைத்தீனிக்காகவென்று விற்கப்படும் குதிரை இறைச்சி முதலியவை.

**cat's'-paw**, *n.* (கப்.) நீரின் மேற்பரப்பில் சிற்றலைகளை எழுப்பும் மென்காற்று ; கொக்கிக்கொளுவுவதற்கு இரண்டு குழைகளை உடைய முடிச்சு வகை ; மற்றொருவர் கைக்கருவி, ஏமாளி.

**cat's'-tail**, *n.* ஒருபால் மலரிழைச் சிதற்குஞ்சம், மஞ்சரி ; நாணல் வகைச் செடிகள்.

**cat'-stick**, *n.* கில்லி போன்ற ஆட்டவகைக் கோல்.

**cats'up**, *n.* காளான்-தக்காளிச் சாறுகளிலிருந்து செய்யப்படும் காரச் சுவையுண்டி.

**cat's'-whisk'er**, *n.* கம்பியில்லா உருமணி ஒலிவாங்கிக் கருவியில் வேண்டும்போல் அமைத்துக்கொள்ளக் கூடிய இழைத்தந்தி.

**catt'ish**, *a.* பூனைபோன்ற ; கறுவுகிற ; புறங்கூறுகிற.

**cat'tle**, *n.* ஆடுமாடுகள், புல்லார்நிரை, கால்நடை, கன்று காலிகள் ; எருது ; குதிரைகள்.

**cat'tle-feed'er**, *n.* கால்நடைத் தீனியின் அளவை முறைப் படுத்தும் இயந்திரம்.

**catt'le-grid**, *n.* பாதை வேலியைக் கடக்குமிடத்தில் கால் நடை செல்லாமல் ஆள் வண்டிப் போக்குவரத்துக்கு வழி செய்யும் கம்பியழிமூடிய கிடங்கு.

**cat'tle-lead'er**, *n.* கால்நடைகளுக்கான மூக்கு வளையம், மூக்கணாங்கொளுவி.

**cat'tle-lift'er**, *n.* நிரை கவர்பவர்.

**cat'tle-lift'ing**, *n.* ஆநிரை கவர்தல், கால்நடைக் களவு.

**catt'le-piece**, *n.* கால்நடைகளின் உருவம் வரையப்பட்டுள்ள படம்.

**catt'le-plague**, *n.* கால்நடைகளின் தொற்று நோய், கோமாரி.

**catt'y**, *n.* சீனக் கல்லெடையளவு.

**cat'-walk**, *n.* பாலங்களில் உள்ள ஒடுங்கு நடைபாதை.

**cat'-witted**, *a.* சிறுமைக்குணமுள்ள ; செருக்குடைய ; கறுவுகிற.

**Cauca'sian**, *n.* மனித உலகின் பேரின வகைப் பிரிவினர், வெள்ளை இனத்தவர் ; இந்தோ-ஐரோப்பியர் ; *a.* ஐரோப்பாவி லுள்ள காக்கசஸ் (Caucasus) மலைத்தொடருக்குரிய ; காக்கசஸ் மலைப்பகுதியைச் சுற்றியுள்ள திணைக்குரிய ; வெள்ளை இனம் சார்ந்த.

**cauc'us**, *n.* எதிரிகளின் ஏளனவழக்கில் உள்ளூர் அரசியல் குழு, தேர்தல் குழு, கட்சி அமைப்பு ; *v.* அரசியல் கட்சிக் கூட்டம் நடத்து ; உள்ளூர் அரசியல்குழு அமை ; அரசியல் கட்சியாற்றலைக் கொண்டு வற்புறுத்து.

**cau'dal**, *a.* வாலுக்குரிய, வால் போன்ற ; வால்பக்கமான.

**cau'date, cau'dated**, *a.* வால் உள்ள.

**cau'dex**, *a.* (தாவ.) மரத்தண்டு ; *pl.* caud'exes, caud'ices.

**cau'dicle**, *n.* (தாவ.) மலர்ச் செடிவகைகளில் உள்ள மகரந்தப் பையின் காம்பு.

**caudill'o**, *n.* ஸ்பானிய மொழி வழங்கும் நாடுகளில் மக்கள் தலைவர் ; அரசுத் தலைவர்.

**cau'dle**, *n.* பெண்டிர் பேறுகாலங்களில் பயன்படுத்தப்படும் கொடிமுந்திரித் தேறல் கலந்த நறுமண இனிப்புப் பான வகை ; *v.* பேறுகாலப் பானவகை கல ; பானவகை அருந்து.

**caught**, *v.* **catch** என்பதன் இறந்தகால-முடிவெச்சம்.

**cauk**, *n.* சீமைச்சுண்ணும்பு ; தட்டப் பலகை வடிவிலுள்ள பாரிய கந்தகை.

**caul'**, *n.* தலைமயிர் முடிக்கும் வலை, தலைக்கு மூடி ; பேற்றின் போது குழந்தை தலையைக் கவிந்துள்ள மென்றோல்.

**caul'dron**, *n.* கொப்பரை, கடாரம்.

**caules'cent**, *a.* (தாவ.) தெளிவான தண்டுறுப்பினை உடைய.

**caul'iflower**, *n.* பூக்கோசு; (தொ.) cauliflower ear, குத்துச் சண்டையின் காயங்களால் நிலையாகத் தடிப்புப் பெற்று விட்ட காது.

**caul'iform**, *a.* (தாவ.) தண்டின் வடிவமுடைய.

**caulig'enous**, *a.* (தாவ.) தண்டின் ஆதாரம் கொண்ட.

**caul'inary, caul'ine**, *a.* (தாவ.) தண்டைச் சார்ந்த ; தண்டின் மேலுள்ள ; தண்டில் தோன்றுகிற.

**cau'lis**, *n.* (தாவ.) செடியின் தண்டு ; (க-க.) கொரிந்திய (Corinthian) பாணியிலுள்ள தூண் தலைப்பில் முதன்மை யான தண்டுகளில் ஒன்று ; *pl.* cau'les.

**caulk**, *v.* (கப்.) பலகை மூட்டுக்களை நீர்க்காப்புடையதாகச் செய், நார்க்கயிறு-உருகிய நிலக்கீல் இவற்றைக் கொண்டு பலகைகளின் சந்திப்பு இடைவெளியை அடை.

**caulk'er**[1], *n.* சந்துகள் அடைத்து நீர் உட்புகாமல் செய்பவர்; எடை அளவுக்கூறு ; பெரும்பொய்.

**caulk'er**[2], *n.* சறுக்காமலிருப்பதற்காகக் குதிரை இலாடத்தில் அமைக்கப் பெறும் கூர்முனைப்பகுதி.

**cau'lome**, *n.* (தாவ.) செடியின் முழுத்தண்டு அமைப்பு.

**caus'al**, *a.* காரணமாயிருக்கிற, விளைவு உண்டாக்குகிற ; காரணத் தொடர்புடைய, காரணகாரிய இயைபுள்ள.

**causal'ity**, *n.* காரணமாகச் செயற்படுதல், மூலமுதல் இயல்பு, காரண காரியத் தொடர்பு ; காரண காரியத் தொடர்புக் கோட்பாடு, சற்காரிய வாதம்.

**causa'tion**, *n.* காரணமாம் நிலை ; விளைவுண்டாக்கும் செயல், காரண காரியத்தொடர்பு ; சற்காரிய வாதம்.

**causa'tionist**, *n.* சற்காரியவாதக் கோட்பாட்டாளர்.

**caus'ative**, *n.* (இலக்.) பிறவினை ; *a.* காரணமாகச் செயற் படுகிற ; விளைவுண்டாக்குகிற ; (இலக்.) செயல் தூண்டுதல் காட்டுகிற.

**cause**, *n.* ஏது, காரணம்; வினைமுதல், நிமித்தம்; ஊக்குவிக்கும் நோக்கம் ; காரண விளக்கம், செயல் முதல் விளக்கம் ; குறிக் கோள், இலக்கு ; சார்புநலம், ஆக்க நலம் ; (சட்.) வழக்காடும் பொருள், வழக்கு முதல் ; வழக்கில் ஒரு திறக்

கட்சி ; வழக்கு ; *v.* தூண்டு, செய்வி ; நிகழ்த்து ; விளைவி, உண்டுபண்ணு ; நிலைபெறச்செய் ; (தொ.) cause of action, வழக்கு மூலம் ; செயல் நோக்கம் ; efficient cause, வலிய காரணம், மேம்படு வினைமுதல்; Final Cause, முழுக்காரணம்; திட்டமுதல், செயல் நோக்கம் ; First Cause, முதற்காரணம்; மூலகாரணர் ; படைப்போன், கடவுள் ; formal cause, கருத் தளவான மூலவடிவம் ; make common cause with, பொது வான குறிக்கோளுக்காக ஒருங்கிணை, ஒருங்கொத்துழை, முழு ஆதரவளி ; material cause, முதற்காரணம், கருமூலம் ; show cause, செயல் விளக்கம் அளி, குற்றச்சாட்டுக்கு எதிரான காப்புரை கூறு.

*cause celebre*, (பிர.) *n.* மக்கள் கவனத்தைக் கிளறிவிடும் நீதிமன்ற வழக்கு.

**cause'less**, *a.* காரணமற்ற, தற்செயல் நிகழ்வான ; நேர்மை யற்ற, நேரிய ஆதாரமற்ற.

**cause'-list**, *n.* (சட்.) விசாரணை செய்யப்படவிருக்கிற வழக்கு களின் பட்டியல், வழக்கு அட்டவணை.

*causerie*, (பிர.) *n.* வறுமொழி, வெட்டிப்பேச்சு ; இலக்கியம் அல்லது சுலை குறித்து அளவளாவுதல்.

*causeuse*, (பிர.) *n.* இருவருக்கான சாய்விருக்கை.

**cause'way, caus'ey**, *n.* கடப்பு வழி, கரைப்பாலம், பள்ளம் படுகை கடக்கும் சிறு மேட்டுப்பாதை ; பால அருகான நடை பாதை ; *v.* கல்பாவு, மேட்டுப்பாதை அமைத்துக்கொடு.

**caus'tic**, *n.* கடுங்காரம், எரிச்சல் தரும் பொருள், உயிர்ப்பொரு ளான இழைமங்களை அரித்துத் தின்னும் பொருள்; (கண.) கோட்ட ஒளிவரி; கோட்ட ஒளித்தளம்; எதிர்நிழல் ஒளிவரை ; எதிர்நிழல் ஒளித்தளம் ; *a.* எரிவந்தம் தருகிற ; அரித்துத்தின்கிற ; வெறுப்புத் தருகிற ; கடுமையான ; உள் ளத்தைப் புண்படுத்துகிற, குத்தலான ; (இய.) நெளிவுப் பரப்பினின்றும் மீளும் அல்லது விலகிச் செல்லும் ஒளிக்கதிர் கள் ஊடறுப்பினுல் உண்டாகிற; (தொ.) caustic ammonia, நவச்சார ஆவி ; நவச்சார நீர்மம் ; caustic lime, உலைச் சுண்ணம் ; caustic potash, சாம்பர நீரகத்தியதை ; caustic soda, உவர நீரகத்தியதை ; common caustic, வெடிய உப்பு, வெள்ளிக்காலகை ; lunar caustic, அறுவை மருத்துவத்துக்குப் பயன்படும் வெள்ளிக் காலகைக்கோல்.

**causti'city**, *n.* கடுகடுப்பு, அரிக்குந்தன்மை ; குத்தலான பேச்சு ; தெறுமொழி.

**cau'ter**, *n.* கடுங்காரத் தீய்வு; சூட்டுக்கோலினுல் சூடு இடுதல்; புண்ணுில் சுடுவதற்கான சூட்டுக்கோல் ; புண் நச்சறுப்பதற் குரிய கடுங்காரப் பொருள்.

**caut'erize**, *v.* சூடுபோடு, சூட்டுக்கோலினுல் சூடிடு; கடுங்காரப் பொருளினுல் புண்ணைச்சுடு ; உணர்ச்சி அறச்செய்.

**cau'tery**, *n.* சூடிடுதல் ; சூட்டுக்கோல்.

**cau'tion**, *n.* முன்மதி, எச்சரிக்கை, முற்காப்புணர்வு, எதிர தாக்காக்கும் அறிவு ; பிணையம் ; *v.* எச்சரிப்புச் செய், முன் னறிவிப்புச் செய் ; எச்சரித்துக்கண்டி ; (தொ.) caution money, பிணைய முன்பணம்.

**cau'tionary**, *a.* எச்சரிப்பான ; முன்னுறுதியாக அளிக்கப் பட்ட.

**cau'tious**, *a.* கவனமுள்ள, எச்சரிக்கையாயிருக்கிற, விழிப் புடைய, முன்மதியுடைய.

**cavalcade'**, *n.* புரவிவீரர் பந்தி ; படை அணிவகுப்பு ; *v.* குதிரைகள்மீது இவர்ந்து பவனிசெல்.

**cavalier'**, *n.* குதிரை வீரன் ; பண்புடைப் பெருந்தகை, வீரத் திருத்தகை, பெண்ணினத்துக்குப் பெருமை தந்து நடப்பவர் ; அணங்கின் உடன்செல் பாங்கர் ; நடனத் துணைவர் ; வீரூப் புக்காரன் ; கோட்டை உயர் மேடை, பதனம் ; *a.* குதிரை வீரன் போன்ற ; வீரப்பண்பார்வமுள்ள ; போர்விருப்புடைய; ஒய்யாரமான ; வீரூப்பான ; கவலையற்ற ; துணிகரமான ; களிகிளர்ச்சி கொண்ட ; *v.* மாதரை மதிப்புடன் அழைத்துச் செல், பெருந்தகையாயிரு. வீரூப்புடன் நடந்துகொள்.

**Cavalier'**, *n.* (வர.) இங்கிலாந்து மன்னர் முதலாம் சார்லஸ் காலத்திய அரசகக்கட்சியினர்.

**cavalier'ish**, *a.* பண்புடைப் பெருந்தகையின் இயல்புள்ள.

**cavalier'ism**, *n.* (வர.) இங்கிலாந்து மன்னர் முதலாம் சார்லஸ் காலத்திய மன்னர் கட்சியினர் கோட்பாடு ; மன்னர் கட்சியினர் மரபு.

**cavalier'ly**, *a.* பெருந்தகைப் பண்புடைய ; பெருமிதமான, வீரூப்பான ; *adv.* பெருந்தகைப்பண்புடன் ; துணிகரமாக ; மட்டுமதிப்பின்றி, தூக்கியெறிந்து.

**cavall'y**, *n.* அமெரிக்கக் கடல்மீன் வகை.

**cav'alry**, *n.* குதிரைப்படை ; இவுளி மறவர்.

*cavati'na*, (இத்.) *n.* சிறு எளிய பாடல் ; இசைக்கருவியில் வாசிக்கப்படும் உணர்ச்சி வாய்ந்த மெல்லிசை மெட்டு.

**cave**, *n.* குகை, கெவி, மலை முழைஞ்சு ; அரசியல் கட்சியில் பிரிந்து செல்ல விரும்பும் உட்குழு ; *v.* குழிவாக்கு ; குகை தோண்டு, பள்ளம் பறி ; குகையில் தங்கியிரு ; அரசியல் உட்பிளவுக் கட்சியை உண்டாக்கு ; (தொ.) cave in, சரிந்து விழு, குழியில் சறுக்கி விழு ; வற்புறுத்தலுக்கு இணங்கு ; விட்டுக்கொடு ; அடங்கிப்போ ; தடைநீக்கு ; அடித்து நொறுக்கு, உருக்குலை ; உள் விழு, இடிந்து விழு.

**cav'eat**, *n.* எச்சரிக்கை, முன்னறிவிப்பு, தடைக்கட்டு ; (சட்.) முன்னெச்சரிப்புப் பதிவு, தற்காலத் தடுப்பு நடவடிக்கை, மனுதாரர்க்கு அறிவிக்காமல் மேல்நடவடிக்கைகள் எதுவும் எடுக்கக் கூடாது என்ற அறிவிப்பின் முறைமன்றப் பதிவு.

*cav'eat emp'tor*, (ல.) (சட்.) 'வாங்குநர் கவனிக்க' என்ற அறிவிப்பு, சொத்து வாங்குபவர் செயலின் பொறுப்பு தனக் கின்மை அறிவிக்கும் எச்சரிக்கை.

**cave'-bear**, *n.* குகைகளில் காணப்படும் மிகப் பெரிய புதை படிவக் கரடிவகை.

**cave'-dweller**, *n.* குகை வாழ்நர், வரலாற்றுக்கு முற்பட்ட கற்காலங்களில் குகைகளில் வாழ்ந்த மனிதர்.

**cave'-earth**, *n.* (மண்.) குகையின் அடித்தளங்களில் படிந்த நுண்ணயமான மண்.

**cave'-man**, *n.* குகை வாழ்நன், வரலாற்றுக்கு முற்பட்ட பழங்கற்கால மனிதன் ; நாகரிகமற்றவன் ; (பே-வ.) பழைய முறைகளைக் கடைப்பிடிப்பவன்.

**cav'endish**, *n.* மென்மைப் பதமாக்கி இனிப்பூட்டிப் பாளங் களாக அமைக்கப்பட்ட புகையிலை.

**cav'ern**, *n.* அடிநிலக்குகை, நிலக்குடைவு, ஆழ்கிடங்கு, மலை முழைஞ்சு ; *v.* ஆழ்கிடங்கில் வை ; குழிவாகத் தோண்டு.

**cav'erned**, *a.* ஆழ்கெவிகள் நிரம்பிய ; குகையில் வாழ்கிற ; குகைபோன்ற.

**cav'ernous**, *a.* குடைவான ; ஆழ்கெவி போன்ற ; பேழ் வாயுடைய ; குழிகள் நிரம்பிய.

**caver'nulous**, *a.* சிறு குழிவுகள் நிரம்பிய.

**cav'eson, cav'esson**, *n.* முரட்டுக் குதிரைகளை அடக்கிப் பழக்குவதற்குப் பயன்படும் மூக்குப்பட்டை வார்.

**caviar', caviare'**, *n.* உப்பிட்டு உலர்த்திய உயர்தர உணவு மீன்வகையின் கருச்சினை ; பொதுநிலை மக்கள் அறிந்து நுகர இயலாத சீரிய பொருள்.

**cav'icorn**, *n.* (வில.) உட்குழிவான கொம்புகளையுடைய அசை போடும் விலங்கு வகை; *a.* அசைபோடும் விலங்கினங் களுக்கு உள்ளதைப்போல் உட்குழிவான கொம்புகளையுடைய.

**cav'ie**, *n.* கோழிக்கூடு.

**cav'il**, *n.* போலி ஆட்சேபம், இடக்கு; *v.* குதர்க்கம் பண்ணு, அற்பத்தடைகள் எழுப்பு.

**cav'ing**, *n.* விட்டுக்கொடுத்தல்.

**cavita'tion**, *n.* திண்பொருளில் குழிவுகள் தோன்றுதல் ; நீர்மத்தில் காற்றுக்குமிழிகள் உண்டாதல் ; வெற்றிடம் ஏற்படுதல்.

**cav'itied**, *a.* குழிவுகள் உள்ள

**cav'ity**, *n.* உட்குடைவு, உட்குழிவு, உட்புழை, திடப் பொருளின் உட்புறத்திலுள்ள பொள்ளல்; வெற்றிடம்; பள்ளம், பொந்து, துளை; இடைப்பிளவு, வாயில்.

**cav'y**, *n.* சீமைப்பெருச்சாளி இனம்; கொறிக்கும் விலங்கினம்.

**caw**, *n.* காக்கையினப் பறவைகளின் கரை குரல்; *v.* காக்கை போல் கத்து, கரை.

**cawk'er**, *n.* குதிரை சறுக்காமலிருக்கும்பொருட்டு அதன் இலாடத்தில் அமைக்கப்பெறும் கூர்முனைப்பாகம்.

**cax'on**, *n.* முற்காலத்தில் அணியப்பட்ட பொய்மயிர்த் தொப்பி வகை.

**Cax'ton**, *n.* இங்கிலாந்தில் முதல் அச்சுத்தொழிலாளரான வில்லியம் காக்ஸ்டன் (1422-1491) என்பவரால் அச்சிடப் பட்ட புத்தகம்; காக்ஸ்டன் பயன்படுத்தியதைப் போன்ற அச்செழுத்துப் படிவம்.

**cay**, *n.* கரையணைந்த சிறு தீவு, மணல் திட்டு; பவளத் தீவு.

**cayenne'**, **cay'enne-pepp'er**, *n.* கடுங்காரமுள்ள சிவப்பு மிளகு.

**cay'man**, *n.* தென் அமெரிக்க முதலை வகை; *pl.* cay'mans.

**cay'use**, *n.* அமெரிக்க இந்தியரின் மட்டக்குதிரை.

**ceanoth'us**, *n.* மலர்களையுடைய புதர்ச்செடியினம்.

**cease**, *n.* முடிவு, இறுதி; *v.* முடிவுறு; நிறுத்து; விட்டுவிடு, தவிர்.

**cease'-fire'**, *n.* துப்பாக்கி முதலியவற்றால் சுடுவதை நிறுத்து வதற்கான ஆணை; போர் நிறுத்த உடன்பாடு; போர் நிறுத்தம்.

**cease'less**, *a.* இடைவிடாத, தொடர்ச்சியான.

**cebadill'a**, *n.* அல்லியரிசி, அல்லியினச் செடிவகையின் விதைகள்.

**cec'ils**, *n. pl.* கொத்திய இறைச்சி-அப்பத்துண்டுகள்-வெங் காயம் முதலியவற்றை உருண்டைகளாகச் செய்து பொரித்த பணியாரம், பொரிக் கறி உருண்டை.

**ce'city**, *n.* குருடு.

**ced'ar**, *n.* (தாவ.) தேவதாரு வகை, செவ்வகில்; *a.* செவ் வகிலினால் செய்யப்பட்ட.

**ce'dar-bird**, *n.* சிறகின்மேல் சிவப்பு அரக்குபோன்ற சிறு நுனிப்பாகங்களையுடைய அமெரிக்கப் பறவை வகை.

**ce'darn**, *a.* (செய்.) செவ்வகில் மரத்துக்குரிய.

**cede**, *v.* கொடு; விட்டுக்கொடு; இணங்கி ஒப்புவி; இசைவளி.

**cedill'a**, *n.* சி (c) என்ற எழுத்தின்கீழ் இடப்படும் ஒலி வேறுபாட்டுக் குறியீடு.

**ce'drate**, *n.* நாரத்தை.

**ce'drine**, *a.* செவ்வகில் மரத்துக்குரிய.

**cee-spring**, *n.* வண்டிச்சட்டத்தைத் தாங்குதற்கான ('C' வடிவுள்ள) வில்.

**ceil**, *v.* உட்கூரை வேய்.

**ceili'dh**, *n.* கதை பாடல்களுடன் பொழுதுபோக்கும் மாலை.

**ceil'ing**, *n.* அறையின் உட்கூரை; விமானம் பறக்கக்கூடிய உயரத்தின் எல்லை; உச்சவரம்பு, மேல்எல்லை.

**cel'adon**, *n.* இளம் பச்சை நிறம்; சீன மட்பாண்ட வகையின் இளம்பச்சை மெருகு; *a.* இளம்பச்சையான.

**cel'andine**, *n.* மஞ்சள் நிற மலருள்ள செடிவகை.

**celanese'**, *n.* செயற்கைப்பட்டு வகை.

**cel'ebrant**, *n.* கொண்டாடுபவர்; வினைவின முதல்வர், விழாக்கோளாளர்.

**cel'ebrate**, *v.* கொண்டாடு, வினைமுறை முற்றுவித்து நடத்து; பலரறிய நடைபெறுவி; பலர் அறியச்செய்; புகழ், பாராட்டு, போற்று.

**cel'ebrated**, *n.* புகழ்வாய்ந்த, பேர்பெற்ற.

**celebra'tion**, *n.* கொண்டாட்டம், விழா, புகழ்தல்.

**cel'ebrator**, *n.* கொண்டாடுபவர், விழாக்கோளாளர்.

**celeb'rity**, *n.* நாடறிந்திருத்தல், புகழ்பெற்றிருத்தல்; புகழ் இசை; நாடறிந்தவர், புகழ்பெற்றவர்.

**cele'riac**, *n.* கிழங்குள்ள தோட்டக் கீரைவகை.

**cele'rity**, *n.* விரைவு, வேகம்.

**cel'ery**, *n.* சமைத்துத் தின்பதற்குரிய வெளிறிய தண்டுகளை யுடைய செடிவகை.

**celeste'**, *n.* வானநீல வண்ணம்; இசைப்பெட்டி வகையில் குரல் மடக்கு; *a.* வானநீல வண்ணமுள்ள.

**celes'tial**, *n.* விண்ணவர்; சீனுக்காரர்; *a.* வானத்திற்குரிய; விண்ணுலக வாசியான, விண்ணுலகம் சார்ந்த; தெய்விக மான, தெய்விக நலம் கொண்ட; தெய்விக அழகு வாய்ந்த; (தொ.) the Celestial Empire, சீனநாடு.

**cel'ibacy**, *n.* மணமாகாத நிலை; மனத்துறவு, மணங் கொள்ளா நோன்பு.

**celibatar'ian**, *n.* மணமாகாதவர், மணங்கொள்ளா நிலை ஆதரவாளர்; *a.* மணமாகா நிலையை ஆதரிக்கிற.

**cel'ibate**, *n.* மணமாகாதவர்; ஒருதனி வாழ்க்கை உரவோர்; *a.* மணமாகாத; மணஞ்செய்யா உறுதிகொண்ட.

**cell**, *n.* சிறைக்கூடத் தனியறை; மடத்தின் ஒதுங்கிய அறை; புறஞ்சார் துறவி மடம்; புறநிலைக் கன்னிமாடம்; தனிமாடம்; குகை; (செய்.) குச்சு, குடிசை; (செய்.) கல்லறை; தேன் கூட்டிலுள்ள கண்ணறை; சிறு உட்குழிவுடைய உறுப்பின் கூறு; (மின்.) மின்கலம்; (உயி.) உயிரணு, உயிர்மம்; பொதுவுடைமைக் கொள்கை பரப்புகிறவர்களின் மைய நிலையம்.

**cell'a**, *n.* கோயிலின் உள்ளறை, கருமனை.

**cell'ar**, *n.* நிலவறை; இன்தேறல்-நிலக்கரி முதலியவற்றைச் சேர்த்து வைப்பதற்கான அடிநிலக்கிடங்கு; இன்தேறலின் சேம அளவு; *v.* நிலவறையில் சேர்த்து வைத்திரு.

**cell'arage**, *n.* நிலவறைத் தொகுதி; நிலவறைகளில் சேர்த்து வைப்பதற்கான கட்டணம்.

**cell'arer**, *n.* நிலவறையின் பொறுப்பு வகிப்பவர்; துறவி மடத்தில் உணவுப்பொருள்களுக்கான ஏற்பாடுகளை மேற் பார்வையிடும் அலுவலர்.

**cell'aret**, *n.* புட்டிகள் வைப்பதற்கான பெட்டி.

**cell'ar-flap**, *n.* நிலவறைப் புழைக்கதவு.

**cell'arman**, *n.* நிலவறைகாப்போன்.

**celled**, *a.* உயிர்மங்களை உடைய; உயிர்மங்களில் அடங்கிய; உயிர்மங்களால் மூடப்பட்ட; கண்ணறைகள் நிரம்பிய.

**cellif'erous**, *a.* உயிர்மங்களை உடைய; உயிர்மங்களை உண்டுபண்ணுகிற.

**cell'o**, **'cell'o**, *n.* வாசிப்பவரின் முழங்கால்களுக்கிடையில் வைத்து வாசிக்கப்படும் நான்கு நரம்புள்ள இசைக்கருவி வகை.

**Cell'ophane**, *n.* மரப்பசைச் சத்தினின்றும் செய்யப்படும் பளிங்குநிறத் தாள்போன்ற பொதிபொருளின் வாணிக உரிமைப் பெயர்.

**cell'ular**, *a.* தனி அறைகளுக்குரிய; உயிர்மங்களாலான; கண்ணறைகளாலான; சிறு குழிகளை உடைய; துளைகளை யுடைய; இழைகள் செறிவாயிராத.

**cellula'rity**, *n.* கண்ணறைகளாலான நிலை.

**cell'ulate**, *n.* கண்ணறைகள் உள்ளதாக்கு; *a.* கண்ணறைகள் உள்ள.

**cell'ule**, *n.* சிறு கண்ணறை.

**cellulif'erous**, *a.* சிறு உயிர்மங்களுள்ள; சிறு கண்ணறை களைத் தோற்றுவிக்கிற.

**celluli'tis**, *n.* புறத்தோலுக்கு அடுத்துக் கீழுள்ள இழைமத் தின் அழற்சி.

**cell'uloid**, *n.* கற்பூரத்தைக் கொண்டும் மரக்கூற்றுக் காலகையைக் கொண்டும் செய்யப்படும் தந்தம் போன்ற நெகிழ்பொருள் ; *a.* உயிரணுக்கள் போன்ற.

**cell'ulose**, *n.* மரக்கூறு, செடியினங்களின் மரக்கட்டைகளுக்கும் பருத்தி போன்ற இழைமங்களுக்கும் உயிர்மங்களின் புறத்தோட்டுக்கும் மூலமான பொருள் ; *a.* கண்ணறைகளுள்ள.

**cellulos'ity**, *n.* மரக்கூற்று இயல்பு.

**cels'itude**, *n.* உயர்வு, வீறுடைமை.

**Cel'sius**, *a.* நூற்றியல் வெப்பமானியை அமைத்த ஆண்டர்ஸ் செல்சியஸ் (Anders Celsius 1701-44) என்பவருக்குரிய ; நூற்றளவையாகப் பகுக்கப்பட்ட; (தொ.) Celsius thermometer, நூற்றளவை வெப்பமானி.

**celt**, *n.* (தொல்.) வரலாற்றுக்கு முந்திய காலத்தில் வழங்கிய கோடரி போன்ற கருவி.

**Celt**, *n.* (வர.) பண்டைப் பிரான்சிலும் பிரிட்டனிலும் வாழ்ந்த பழங்குடியினத்தவர், கெல்ட்டிய இனத்தவர்.

**Celt'ic**, *n.* இந்திய-செர்மானிய மொழிக் குடும்பத்தின் பிரிவு, கெல்ட்டிய இனத்தவர்களின் மொழி ; *a.* கெல்ட்டிய இனத்தவருக்குரிய ; கெல்ட்டிய இன மொழி சார்ந்த ; (தொ.) Celtic cross, மையம் சூழ்ந்த வட்டமுடைய சிலுவை வகை.

**Celt'icism**, *n.* கெல்ட்டிய இனமொழி மரபு ; கெல்ட்டிய இனப் பழக்கவழக்கக் கூறு.

**cel'ticize**, *v.* கெல்ட்டிய மொழிப்படுத்து ; கெல்ட்டிய இனத்தவர்களின் பழக்கவழக்கங்களை மேற்கொள்வி ; கெல்ட்டிய இனமரபு தழுவு.

**celtol'ogist**, *n.* கெல்ட்டிய மொழி இனப்பழமைகளை ஆராய்பவர்.

**Celtoma'nia**, *n.* மட்டிலாக் கெல்ட்டிய இனமரபார்வம்.

**Celtoman'iac**, *n.* கெல்ட்டிய இனமரபுச் சிறப்பை வற்புறுத்தும் போக்குடையவர்.

**cel'tophil**, *n.* கெல்ட்டிய இனமரபார்வலர் ; கெல்ட்டிய இனத்தொடர்பான பொருள்களை விரும்புபவர்.

**cem'balist**, *n.* தந்திகளுள்ள இசைக்கருவி வகையை மிழற்றுபவர்.

**cem'balo**, *n.* தந்திகள் உள்ள இசைக்கருவி வகை.

**cement'**, *n.* பசை மண், சீமைக்காரை, சாந்து, பொருள்களை ஒட்டவைப்பதற்காக மென்பதமாகப் பயன்படுத்தப்படும் பொருள் ; இடைப்பிணைப்பு ; (மரு.) பல்காரை, பல் இருந்து விழுந்த குழிகளை நிரப்புவதற்கான நெகிழ்பொருள் ; பல்லடியின் எலும்புத்தோடு ; *v.* பசைமண் காரையுடன் சேர் ; உறுதியாக இணை ; பசுமண் காரை மேற்பூச்சிடு.

**cementa'tion**, *n.* ஒருங்கிணைத்தல் ; இணைக்கப்பட்ட நிலை ; பொடி தூவிச் சூடாக்குவதன்மூலம் ஒரு பொருளின் மேற்புறத்தில் மற்றொரு பொருளைப் பற்றவைத்தல் ; கடும்பதப்படுத்துதல் ; படிகை.

**cement'-copper**, *n.* படிகைமூலம் பெறப்பட்ட உலோகச் செம்பு.

**cementi'tious**, *a.* பசுமண் காரைக்குரிய.

**cement'-stone**, *n.* பசுமண் காரை செய்வதற்காகப் பயன்படுத்தப்படும் கல்வகை.

**cement'-water**, *n.* செப்புச் சுரங்கங்களிற் காணப்படும் செம்பு உப்புவகைகள் கலந்த நீர்.

**cem'etery**, *n.* இடுகாடு, புதைவெளி, பிணங்களைப் புதைக்குமிடம்.

**cen'obite**, *n.* சமுதாயக் கூட்டுவொழ்வு வாழும் துறவிகளில் ஒருவர்.

**cen'otaph**, *n.* ஒருவர் புதைக்கப்பட்ட இடத்திலன்றி வேறிடத்தில் அவருக்கு எழுப்பப்படும் நினைவுச் சின்னம் ; (தொ.) the Cenotaph, முதல் உலகப் போரில் (1914-18) இறந்தவர்களின் நினைவாக லண்டனில் (London) ஒயிட் ஹால் (Whitehall) கட்டிடத்தில் எழுப்பப்பட்டுள்ள சின்னம்.

**Cenozo'ic**, *n.* (மண்.) ஐந்து ஊழிகளுள் பாலுணிகட்குரிய ஐந்தாவது ஊழி ; *a.* ஐந்தாவது ஊழி சார்ந்த.

**cense**, *v.* நறும்புகையூட்டு, நறும்புகை எழுப்பித் தொழு.

**cen'ser**, *n.* குங்கிலியக்கலயம், தூபகலசம், நறும்பொருள்களை எரித்துத் தூபமெழுப்பும் கலம்.

**cen'sor**, *n.* பண்டை ரோம குற்ற நடுவர் ; நெறிமுறைக் கண்காணி ; ஏடுகள்–செய்தித்தாள்கள்–திரைப்படங்கள்–கடிதங்கள் ஆகியவற்றின் தணிக்கையாளர், சீர்மையர் ; கடித ஆய்வாளர் ; குற்றங்குறை காண்பவர் ; (உள.) அகமனத்திலுள்ள விரும்பத்தகாத உணர்ச்சிச் சிக்கல்கள் உணர்வுத் தளத்தில் தோன்றுதபடி தடுக்கும் உள்ளுணர்வு; பல்கலைக்கழக அலுவலர்கள்; *v.* குற்றங்குறைகள் ஆய்ந்து கண்டி, தணிக்கை செய்.

**censo'rial, censo'rian**, *a.* சீர்மையருக்குரிய; பொதுமக்கள் ஒழுகலாறுகளைச் சீர்படுத்துவதற்குரிய.

**censor'ious**, *a.* குற்றங்கண்டுபிடிக்கிற, குறைகாண்கிற; கண்டிக்கிற.

**cen'sorship**, *n.* சீர்மையர் பதவி; சீர்மையர் நிலையைத் தாங்குகிற காலம் ; (உள.) அகமனத்திலுள்ள விரும்பத்தகாத உணர்ச்சிச் சிக்கல்கள் உணர்வில் தோன்றுதபடி தடுத்தல்.

**cen'surable**, *a.* கண்டிக்கத் தக்க, பழிப்புக்குரிய.

**cen'sure**, *n.* பழிப்பு, கண்டனம், திட்டு ; *v.* கண்டி, திட்டு, பழி.

**cen'sus**, *n.* ஆட்டொகைக் கணக்கு ; குடிமதிப்புப் புள்ளி விவரத் தொகுதி.

**cen'sus-paper**, *n.* குடிமதிப்பு விவரங்களை நிரப்புவதற்காக ஒவ்வொரு வீட்டிலும் கொடுக்கப்படும் தாள் படிவம்.

**cent**, *n.* நூற்றில் ஒன்று ; நூற்றில் ஒரு கூறு மதிப்புள்ள நாணயம் ; (தொ.) per cent, நூற்றுவிழுக்காடு, சதவீதம்.

**cen'tal**, *n.* நூறு இராத்தல் கொண்ட கூலம் அளப்பதற்கான எடை.

**cen'taur**, *n.* குதிரை உடலுடனும் கால்களுடனும் கழுத்திலிருந்து மனித உடலும் கையுமாக அமைந்த கிரேக்க புராண உரு ; கலப்பினப் பிறவி ; இரட்டை இயல்புள்ள மனிதன் ; இரட்டைத் தன்மையுள்ள பொருள் ; திறம்பட்ட குதிரை வலவன்.

**Cen'taur**, *n.* விண்மீன் குழுக்களுள் ஒன்று.

**centau'rian**, *a.* பாதி மனிதவுடலும் பாதி குதிரையுடலும் உள்ள கிரேக்க புராண உருச்சார்ந்த.

**cen'taury**, *n.* செடியினங்களின் வகை.

**centenar'ian**, *n.* நூறு வயதானவர் ; *a.* நூறு வயதான.

**centen'ary**, *n.* நூறு; நூறாண்டுக்காலம், நூறாண்டு நிறைவு விழா ; நூறாண்டு விழாக் கொண்டாட்டம் ; *a.* நூற்றுக்குரிய ; நூறாண்டுகள் நிறைவு கண்ட.

**cen'tenier**, *n.* பண்டை ரோமர் படையில் நூற்றுவர் தலைவர்; ஜெர்சித்தீவில் (Jersey) காவல் துறைப் பணியாளர் ; நூறு கெலித்தவர் ; நூறு என்னும் எண்ணிக்கையை எட்டிப் பிடித்தவர்.

**centenn'ial**, *n.* நூற்றாண்டு நிறைவு விழா ; *a.* நூற்றாண்டுகளுக்கு ஒருமுறை நிகழ்கிற ; நூறாண்டுகளுக்குரிய, நூறாண்டுகள் வாழ்ந்த ; நூறாண்டு நீடித்த ; நூறாண்டுகள் முடித்த ; நூற்றாண்டு விழாவுக்குரிய.

**cen'ter**, *n., v.*=centre.

**cen'tering**, *n.*=centring.

**centes'imal**, *a.* நூறில் ஒரு கூறான ; நூறில் ஒரு பங்காகக் கணக்கிடுகிற ; நூறில் ஒன்றடிப்படையில் கணக்கிடப்பட்ட.

**cen'tiare**, *n.* பிரஞ்சு அளவை முறையில் 1.196 சதுர கெசம்.

**cen'tigrade**, *a.* நூறு கூறுகளுள்ள ; நூறு பாகைகளாகப் பிரிக்கப்பட்ட ; (தொ.) centigrade thermometer, நீர் உறைநிலை 0 பாகையாகவும் கொதிநிலை 100 பாகையாகவும் வகுக்கப்பட்டுள்ள வெப்பமானி.

**cen'tigram, cen'tigramme**, *n.* பிரஞ்சு 'மெட்ரிக்' நிறுத்தல் அளவையில் நூற்றில் ஒரு கூறு, 0.0009 தோலா.

**cen'tilitre**, *n.* 'மெட்ரிக்' முகத்தலளவையில் நூற்றில் ஒரு பகுதி.

**centill'ion**, *n.* ஆங்கில நாட்டு வழக்கில் பத்திலக்கத்தின் மீது நூறன் விசைமடங்கான பேரெண் ; ஒன்றன்பின் அறுநூறு சுன்னங்களுடைய பேரெண் ; பிரஞ்சு-அமெரிக்க வழக்கில் ஆயிரத்தின்மீது நூறன் விசைமடங்கான பேரெண், ஒன்றன்பின் முந்நூறு சுன்னங்கள் உடைய பேரெண்.

*centime*, (பிர.) *n.* பிரஞ்சு நாட்டின் சிறுதிற நாணயம், பிராங்க் (Franc) என்னும் பிரஞ்சு வெள்ளி நாணயத்தில் நூற்றில் ஒரு பங்கு மதிப்புக் கொண்ட காசு.

**cen'timetre**, *n.* கீழ் நூற்றுக்கோல், பிரஞ்சு நாட்டின் நீட்டல் அளவையில் நூற்றில் ஒரு கூறு, 0.39 அங்குலம்.

**cen'tipede**, *n.* பூரான், நூற்றுக்கால் பூச்சி வகை.

**cent'ner**, *n.* செர்மானிய நிறுத்தலளவைக் கூறு, நூற்றுக் கல்லெடை.

**cen'to**, *n.* மூட்டுச்செய்யுள், செய்யுட்குப்பை ; மேற்கோள் மணித்தொடர் ; *pl.* cen'tos.

**cen'tral**, *a.* நடுவான, மையமான; மையத்திலுள்ள; மையத்தை உட்கொண்ட; மையத் தொடர்புடைய; மையத்திலிருந்து செல்கிற ; தலைமையான, முதன்மையான, முக்கியமான ; (தொ.) central conic, கூம்பின் மையமுடைய வெட்டுவாய் வடிவம் ; central forces, ஒரு மையம் நோக்கி அல்லது மையத்திலிருந்து விசைபெறும் ஆற்றல்கள் ; central heating, மையமான தலைவாயிலிருந்து குழாய்களின் மூலம் செல்லும் சுடுநீர் அல்லது நீராவியால் கட்டிடத்திற்குள் வெப்பம் உண்டாக்கும் முறை.

**cen'tralism**, *n.* மைய அதிகார ஒருமிப்புக்கொள்கை.

**cen'tralist**, *n.* மைய அதிகார ஒருமிப்புக் கொள்கையாளர்.

**central'ity**, *n.* மையநிலை, மையத்தன்மை; மையத்திலேயே இருக்கும் அமைப்பு.

**centraliza'tion**, *n.* மையப்படுத்துதல், மையம் நோக்கிய ஆட்சியமைத்தல், அதிகாரங்களை மைய ஆட்சிக்குக்கொண்டு சேர்த்தல், ஒருமுகப்படுத்துதல்.

**cen'tralize**, *v.* மையத்திற்கு மாறு; மையத்துக்குக் கொண்டுவா, ஒரே மையம் நோக்கி ஒருமுகப்படுத்து ; மாகாண ஆட்சிகளை மைய ஆட்சிக்கு உட்படுத்து.

**cen'tre**, *n.* நடு, மையம் ; மையப்புள்ளி ; மைய முளை, முளையாணி ; ஊடச்சு, இருசு ; ஒருமிப்பின் கூடுமுகம் ; புறஞ்செல் போக்கில் பிரிமுகம் ; அணு மையம், உட்கரு; முக்கியஇடம்; இடம் ; தோற்றுவாய் ; அமைப்பாளர் ; தலைவர் ; குறிஇலக்கின் நடுப்புள்ளி, ஆட்டக்கள நடுவிடம்; இடையாட்டக்காரர்; நடுநோக்கிய பந்தடி ; படையின் நடுவணி ; அரசியல் கட்சிகளிடையே நடுநிலை வாதம், மிதவாதம்; ஈர்ப்பு ஆற்றல்இலக்கு; *v.* ஒருமுகப்படுத்து, ஒரிடத்தில் குவி ; மையத்தில் வை ; மையக் குறியிடு; மையத்தைக் கண்டுபிடி; காற்பந்து அல்லது வளைகோல் பந்தாட்டத்தில் பக்கவாட்டிலிருந்து மையத்திற்குப் பந்தடி; (தொ.) centre of attraction, கவர்ச்சி மையம்; centre of buoyancy, centre of displacement, மிதக்கும் பொருளால் தள்ளப்பட்ட நீர்மத்தின் ஈர்ப்பு மையம் ; centre of gravity, ஏண் எடை ஈர்ப்பு மையம் ; centre of inertia, centre of mass, பொருண்மை மையம்; centre of oscillation, ஊசல்குண்டு மையம் ; centre of percussion, தாக்குதள மையம் ; centre of pressure, அமுக்க மையம் ; centre of suspension, தொங்கல் மையம்.

**cen'tre-bit**, *n.* வட்டத்துளை செய்யும் தச்சன் கருவி ; கன்னக்கோல்.

**cen'tre-board**, *n.* கப்பல் பக்கவாட்டில் சாய்வதைத் தடுப்பதற்கான படகின் அடிமட்ட மையப் பலகை.

**cen'tre-piece**, *n.* மேசை மைய அணியொப்பனை உறுப்பு, மச்சின் மைய அணியொப்பனை உறுப்பு.

**cen'tre-rail**, *n.* மலையேற்று இரயிற் பாதையில் பற்றுப் பல்லுள்ள மூன்றாவது இரும்புச் சட்டம்.

**cen'tre-second, cen'tre-seconds**, *n.* கடிகாரத்தின் நொடி காட்டும் மையத் தனிமுள்.

**cen'tric, cen'trical**, *a.* மையம் சார்ந்த ; நடுவிலுள்ள ; மையத்தை உட்கொண்ட ; (தாவ.) நீண்டுருண்டு வழவழப்பாயுள்ள.

**centrif'ugal**, *n.* வெவ்வேறு எடைச்செறிவுள்ள பொருள்களை விரைவேகச் சுழற்சியினால் பிரிக்கும் இயந்திரம்; பாலிலிருந்து பாலேட்டைப் பிரித்தெடுக்கும் இயந்திரம் ; *a.* விரிமையப் போக்குடைய, மையத்திலிருந்து புறநோக்கிச் செல்கிற ; (தாவ.) உச்சியிலிருந்து அடிநோக்கி வளர்ச்சியடைந்து செல்கிற; விரிமைய வளர்ச்சி வலிமையைப் பயன்படுத்துகின்ற ; விரிமைய வளர்ச்சி வலிமையினால் உண்டாகின்ற ; (தொ.) centrifugal force, மையமொன்றைச் சுற்றிச் சுழலும் பொருள்களில் மையத்துக்கு எதிர்த்திசையில் செயற்படும் விசையாற்றல் ; centrifugal machine, வெவ்வேறு எடைச் செறிவுள்ள பொருள்களை விரைவேகச் சுழற்சியினால் பிரிக்கும் இயந்திரம்; பாலிலிருந்து பாலேட்டைப் பிரித்தெடுக்கும் இயந்திரம்.

**centrif'ugalise**, *v.* விரிமையப் போக்குடையதாக்கு.

**centrifuga'tion**, *n.* விரிமைய வளர்ச்சிச் சக்திக்கு உட்படுத்தல்.

**cen'trifuge**, *n.* வெவ்வேறு எடைச் செறிவுள்ள பொருள்களை விரைவேகச் சுழற்சியினால் பிரிக்கும் இயந்திரம் ; பாலிலிருந்து பாலேட்டைப் பிரித்தெடுக்கும் இயந்திரம்.

**cen'tring**, *n.* (க-க.) மேல்வளைவு அல்லது கவிகைமோடு கட்டும்போது பயன்படுத்தப்படும் தற்காலிகமான பொருத்துச்சட்டம்.

**centrip'etal**, *a.* குவிமையப் போக்குடைய, மையத்தை நோக்கிச் செல்கிற ; அடிப்பகுதியிலிருந்து நுனிமுனைக்குப் போகிற; (தொ.) centripetal force, குவிமைய வளர்ச்சிச் சக்தி, மையம் நோக்கிச் செல்லும் ஆற்றல் ; centripetal machine, வெவ்வேறு பிரிவினை வேறுபாடுகளுள்ள பொருள்களைத் தன்னுடைய விரைவுச் சுற்றுதலினால் மையம் நோக்கிக் குவியும்படி செய்யும் இயந்திரம்.

**centrip'etalism**, *n.* குவிமைய வளர்ச்சித் தன்மை, மையம் நோக்கிச் செல்லும் இயல்பு.

**centrobar'ic**, *a.* எடை ஈர்ப்பு மையத் தொடர்புள்ள.

**centrocli'nal**, *a.* (மண்.) பலதிசைகளிலிருந்து மையம் நோக்கிச் சாய்கின்ற.

**cen'trode**, *n.* சுற்றுதலினால் உடனடியாகத் தோன்றிக் கொண்டுவரும் மைய இடமாற்ற இணைவரை.

**cen'trosphere**, *n.* (மண்.) நிலவுலகின் மையக் கருவுள்.

**centum'virate**, *n.* நூற்றுவராட்சி.

**cen'tuple**, *n.* நூறு மடங்கு ; *a.* நூறுமடங்கான ; *v.* நூறு மடங்கு அதிகமாக்கு, நூற்றினால் பெருக்கு.

**centup'licate**, *n.* நூற்றுமடிப் படிகளில் ஒன்று ; *a.* நூறு மடங்கான ; *v.* நூறு மடங்காக்கு.

**centur'ial**, *a.* நூற்றாண்டுக்குரிய ; ரோமப் படைப் பிரிவுக்குரிய.

**centur'ion**, *n.* ரோமப்படையில் நூற்றுவர் தளபதி; நூறெண் கெலித்தவர்.

**cen'tury**, *n.* (வர.) நூறு ரோம வீரர்கள் கொண்ட படைவகுப்பு ; வாக்களிப்பதற்கான அரசியல் பிரிவு ; நூறு கொண்ட எண்ணிக்கை ; மரப்பந்தாட்டத்தில் நூறு ஓட்டங்கள் ; நூறுகல் பயணம் ; நூற்றாண்டு, முதன்மையான ஒரு நிகழ்ச்சியிலிருந்து-சிறப்பாக இயேசுநாதர் பிறந்ததிலிருந்து-கணக்கிடப்பட்ட நூற்றாண்டுக்கால அளவு ; நூற்றாண்டு நிறைவுநாள் ; (தொ.) century plant, அமெரிக்கக் கற்றாழை வகை.

**cephalal'gia**, *n.* தலை நோய்.

**cephalal'gic**, *a.* மண்டையிடிக்குரிய.

**ceph'alate**, *a.* தலையையுடைய.

**cephal'ic**, *n.* தலைநோய் மருந்து ; *a.* தலைக்குரிய ; தலையிலுள்ள ; தலைநோய் தீர்க்கிற ; (தொ.) cephalic index, மண்டையோட்டின் நீளத்துக்கும் அகலத்துக்கும் இடையே உள்ள நூற்றுவீதத் தகவு அளவு.

**cephali'tis**, *n.* மூளை அழற்சி.

**Cephalochor'da**, *n. pl.* முதுகெலும்புக்கு மூலங்கோலும் முதுகெலும்பில்லாத மீன் இன வகை.

**ceph'alopod**, *n.* கால்கள் வாயருகே இழைக்கைகளாக மாறுபட்டுள்ள நத்தையினம்.

**cephalothor'ax**, *n.* சிலந்தி-நண்டு போன்ற உயிரினங்களின் தலையும் மார்பும் ஒருங்கிணைந்த பகுதி.

**cephalot'omy**, *n.* தலையின் பிளப்பாய்வு.

**ceph'alous**, *a.* தலையையுடைய.

**ce'pheid**, *n.* ஒளி உருமாறும் விண்மீன்களில் ஒன்று.

**Ce'pheus**, *n.* வடதிசை விண்மீன் குழுக்களில் ஒன்று.

**cera'ceous**, *a.* மெழுகுபோன்ற.

**ceram'ic**, *a.* மட்பாண்டத் தொழிலுக்குரிய.

**ceram'ics**, *n.* மட்பாண்டத்தொழில், வேட்கோவர் கலை.

**ce'ramist**, *n.* மட்பாண்டங்கள் செய்பவர்; மட்பாண்டங்கள் செய்யக் கற்றுக்கொள்பவர்.

**cer'asin**, *n.* மரவகைப் பிசினின் கரையாக்கூறு.

**ceras'tes**, *n.* கண்களினருகே சிறுகொம்புகள் போன்ற உறுப்புடைய வட ஆப்பிரிக்க விரியன்பாம்பு வகை.

**ceras'tium**, *n.* (தாவ.) கொம்பு போன்ற பொதியுறைகளுள்ள பூண்டு வகை.

**cerati'tis**, *n.* கண் மேற்சவ்வு அழற்சி.

**Cerat'odus**, *n.* செதில் வழியாகவும் உயிர்ப்பீரல் வழியாகவும் மூச்சுவிடும் ஆஸ்திரேலிய மீன்வகை.

**cer'atoid**, *a.* கொம்புள்ள ; கொம்பு போன்ற; கொம்பு வடிவமான.

**cerbe'rian**, *a.* நரகின் நுழைவாயிலைக் காக்கும் மூன்றுதலை நாய் போன்ற.

**Cerb'erus**, *n.* கீழுலகினைப் பாதுகாப்பதாகக் கருதப்படும் மூன்றுதலை நாய்; (தொ.) sop to Cerberus, வாய்க்கரிசி, கைக்கூலி.

**cer'cal**, *a.* வாலுக்குரிய.

**cerca'rian**, *a.* அட்டை வகைகளின் முட்டைப்புழு நிலைக்குரிய.

**cer'cus**, *n.* வால்போன்ற பின்னிணைப்பு.

**cere**, *n.* சில பறவைகளினுடைய அலகின் அடிப்பாகத்தில் காணப்படும் தோல் மூடியிராத மெழுகு போன்ற சவ்வு ; *v.* மெழுகு பூசு.

**cer'eal**, *n.* முதிரை, தானியம், கூலம் ; காலைச் சிற்றுண்டிப் பணியாரம் ; *a.* உண்ணத்தக்க கூலவகைகளுக்குரிய.

**ce'realist**, *n.* கூலத்துறையில் தனி ஆய்வு நடத்துபவர் ; முதிரைகளை உட்கொள்பவர்.

**cerebell'ar, cerebell'ous**, *a.* சிறுமூளைக்குரிய, சிறு மூளை பற்றிய.

**cerebell'um**, (ல.) *n.* தலையின் பின்பக்கத்திலுள்ள சிறு மூளை.

**ce'rebral**, *a.* மூளைக்குரிய ; பெருமூளைப்பகுதி சார்ந்த ; (ஒலி.) நுனிநா அண்ணத்தைத் தொடுவதனால் எழும் மெய்யெழுத்து ஒலிகளுக்குரிய ; (தொ.) cerebral hemispheres, மூளையின் இருபெரும் பிரிவுகள்.

**cer'ebralism**, *n.* மனத்தின் செயல்களெல்லாம் மூளையில் தான் தோன்றுகின்றன என்னுங்கோட்பாடு.

**cerebra'tion**, *n.* மூளை இயக்கம், மூளை செயற்படுதல் ; மனத்தின் தொழிற்பாடு ; எண்ணம் ; (தொ.) unconscious cerebration, உணர்வு நிலையில்லாத மூளையியக்க விளைவு.

**cerebri'tis**, *n.* மூளை அழற்சி.

**ce'rebro-spin'al**, *a.* மூளைக்கும் முதுகந்தண்டு வடத்துக்கும் ஒருங்கே தொடர்புடைய ; (தொ.) cerebro-spinal fever, மூளைப்போர்வை அழற்சி, சன்னி.

**ce'rebrum**, (ல.) *n.* தலையின் முன்பக்கத்திலுள்ள பெருமூளை.

**cere'cloth**, *n.* தண்ணீர் உட்புகவிடாமல் பண்டங்களைச் சுற்றுவதற்காகப் பயன்படும் மெழுகு பூசிய துணி ; பிண மூடாக்கு ; கல்லறை மூடாக்கு.

**cere'ment**, *n.* பிண மூடாக்கு ; கல்லறை மூடாக்கு.

**ceremon'ial**, *n.* சடங்கு முறைமை ; புற ஆசாரம் ; மரபு தழுவு வினை ; சிறப்புக்கால நடைமுறை; ரோமன் கத்தோலிக்கத் திருக்கோயிலின் வினைமுறைக்குறிப்புகள் அடங்கிய சுவடி ; *a.* வினைமுறைகளுடன் கூடிய ; சடங்குகளுக்குரிய ; புற ஆசாரம் பற்றிய.

**ceremon'ialism**, *n.* புற ஆசாரங்களைக் கடைப்பிடித்தல், வினைமுறை வலியுறுத்தும் பண்பு.

**ceremon'ious**, *a.* வினைமுறைகளுக்கு அடிமைப்பட்டுள்ள ; சடங்குகளில் பற்றுள்ளவராகப் பகட்டிக் கொள்ளுகிற ; வினைமுறைகளில் உன்னிப்பான, ஆசாரங்களை நுணுகிப் பின்பற்றுகிற ; சடங்குகள் நிறைந்த.

**ce'remony**, *n.* வினைமுறை, சமயச்சடங்கு, கரணம்; புறவினை, ஒப்புக்குரிய நடைமுறை, மரியாதையான ஒழுகலாறு ; உள்ளீடில்லாத வெறும் ஆசாரம் ; ஆரவாரம், ஆடம்பரம் ; புறச்செயல் முறைமை ; ஆசாரங்களில் மிக்க நுட்பம் பார்க்கிற தன்மை ; (தொ.) master of ceremonies, வினைமுறை முதல்வர், சடங்குகளின் தன்மையையும் வரிசை முறையையும் வகுக்கிற பொது அதிகாரி ; stand on ceremony, stand upon ceremony, மரபு முறைகளை வற்புறுத்து, புற ஆசாரங்களில் மிக்க நுட்பம் பார் ; கலந்துகொள்ளாமல் சற்று விலகியே இரு.

**cer'eous**, *a.* மெழுகு போன்ற.

**cerge**, *n.* வேதிகையின்முன் ஏற்றப்படும் பெரிய மெழுகுத்திரி விளக்கு.

**cer'ic**, *a.* (வேதி.) உலோகவகைத் தனிமத்துக்குரிய, 'சீரிய'த்துக்குரிய.

**cerise'**, *n.* தெளிவான இளஞ்சிவப்பு நிறம் ; *a.* தெளிவான இளஞ்சிவப்பு நிறமுள்ள.

**cer'ium**, *n.* அணு எண் 58 உள்ள உலோகத் தனிமம், சீரியம்.

**cer'nuous**, *a.* (தாவ.) அசைகிற ; கீழ்நோக்கி வளைந்துள்ள, கவிழ்ந்து தொங்குகிற, ஊசலாடுகிற.

**ce'rograph**, *n.* மெழுகின்மேல் எழுதிய எழுத்து ; உருக்கிய மெழுகில் வரைந்த வண்ணப்படம் ; மெழுகு பரப்பியுள்ள தட்டில் செய்யப்பட்ட செதுக்கு வேலை.

**cerograph'ic, cerograph'ical**, *a.* மெழுகின்மேல் எழுதுவதற்குரிய ; மெழுகின்மேல் செதுக்கு வேலை செய்வது பற்றிய.

**cerog'raphy**, *n.* மெழுகில் எழுதும் எழுத்து ; மெழுகைக் கொண்டு எழுதுதல் ; மெழுகின்மீது தீட்டும் செதுக்குக்கலை ; உருக்கிய மெழுகில் வண்ணப்படம் வரைதல்.

**ce'romancy**, *n.* நீரில் உருக்கிய மெழுகை விடுவதனால் உண்டாகும் வடிவங்களைக் கொண்டு வருவதுணர்த்தல்.

**ceroplas'tic**, *a.* மெழுகினால் உருவமைக்கப்பட்ட ; மெழுகில் உருவமைப்பது பற்றிய.

**ceroplas'tics**, *n.* மெழுகில் உருவமைக்கும் கலை.

**cer'ous**, *a.* (வேதி.) சீரியம் கலந்த.

**cer'tain**, *a.* உறுதியான, நம்பகமான ; தவறாத, பிழைபட முடியாத ; முழுமன உறுதிப்பாடு கொண்ட, ஐயத்துக்கு இடமற்ற; வாதத்துக்கிடமில்லாத; முடிந்துபோன, முடிவான, தீர்மானமான ; விலக்கமுடியாத, நடந்து தீரவேண்டிய, கட்டாயமான; நிலையான; ஒழுங்கான; ஏதோ சில; ஏதோ ஒரு; (தொ.) a certain person, எவரோ ஒருவர்; for certain, உறுதியாக, ஐயமின்றி ; in a certain condition, சூலுற்று.

**cer'tainly**, *adv.* கட்டாயமாக ; உறுதியாக ; ஐயமற.

**cer'tainty,** *n.* ஐயுறவிலா உண்மை ; நிகழ்ச்சி உறுதிப்பாடு; தவருத தன்மை ; கட்டாயமாய் நேரிடக்கூடியது.

*certes,* (பிர.) *adv.* நிச்சயமாக ; ஐயமின்றி.

**cer'tifiable,** *a.* சான்று வழங்கத்தக்க.

**certif'icate,** *n.* நற்சான்று, சான்றிதழ், மெய்ம்மைக்கான எழுத்துமூலச் சான்றறிவிப்பு; தகுதிச்சான்று, உறுதிச்சீட்டு; *v.* நற்சான்றுப் பத்திரம் கொடு ; சான்று ஆவணம் கொடு.

**certifica'tion,** *n.* நற்சான்றளித்தல் ; நற்சான்றிதழ்.

**certif'icatory,** *n.* நற்சான்றிதழ் ; *a.* நற்சான்று அளிக்கிற; சான்றிதழ் இயல்பான.

**cer'tified,** *a.* அத்தாட்சி பெற்ற ; (தொ.) certified milk, என்புருக்கி நோய்நுண்மத் தொடர்பற்றதென உறுதிச் சான்றிதழ் அளிக்கப்பட்டுள்ள பால்.

**cer'tify,** *v.* உறுதியென்று தெரியப்படுத்து; அறிவி; எழுத்து மூலம் அறிவி ; பித்தன் என்று சான்று பகர்.

*certiora'ri,* (ல.) *n.* பத்திரத்தைக் கொண்டுவந்து முன்னிலைப் படுத்தக் கீழ்மன்றங்களுக்கு இடப்படும் கட்டளை.

**cert'itude,** *n.* ஐயமிலா நிலை, உறுதியான நம்பிக்கை, உறுதிப்பாடு, உறுதி எனும் உணர்வு.

**ceru'lean,** *a.* வானீலமான ; அடர்ந்த நீல நிறமுடைய, பசுங்கடல் வண்ணமுடைய.

**cerul'ein,** *n.* பழுப்புப் பச்சை வண்ணம் உண்டுபண்ண உதவும் கீல் வண்ணப் பொருள்.

**cerum'en,** *n.* காதுக்குறும்பி.

**ceru'minous,** *a.* காதுக்குறும்பி உடைய.

**cer'use,** *n.* ஈய வெள்ளை, அடியியலான ஈயக்கரியகி, ஒப்பனைக்குரிய வெண்ணிற மைப்பொருள்.

**ce'rusite, ce'russite,** *n.* இயற்பொருளாகக் கிடைக்கும் ஈயக்கரியகை.

**cerv'ical,** *a.* (உட்.) கழுத்தைச் சார்ந்த.

**cerv'ine,** *a.* மானைப்பற்றிய; மானுக்குரிய; மானைப்போன்ற; இளமான் வண்ணமான.

**cer'vix,** *n.* கழுத்து, ஓர் உறுப்பின் கழுத்துப்பகுதி.

**cesa'revitch, cesa'rewitch,** *n.* ருசிய நாட்டுக்குரிய பேரரசரின் முதற் புதல்வர் ; ருசியப் பேரரசின் பட்டத்து இளவரசர் ; இங்கிலாந்து நியூமார்க்கெட்டில் (New Market) ஆண்டுதோறும் நடைபெறும் குதிரைப் பந்தயம்.

**cess,** *n.* வரி, தீர்வை ; *v.* வரி விதி.

**cessa'tion,** *n.* ஒழிவு, தவிர்வு, ஓய்வு ; இடை நிறுத்தம், இடை ஓய்வு.

**cess'er,** *n.* (சட்.) முடிவுறல், நிறுத்தல், இறுதி.

**cess'ion,** *n.* விட்டுக் கொடுத்தல், தவிர்கை.

**ce'ssionary,** *n.* சட்டப்படி உடைமையுரிமை மாற்றி அளிக்கப் பெற்றவர்.

**cess'pit,** *n.* எருக்கிடங்கு, குப்பைக் குழி.

**cess'pool,** *n.* வடிகுட்டை, மலக்குழிக்கழிவின் வண்டல் பிரித்து நீர் உள்வாங்கும் பள்ளம்.

**ces'tode,** *n.* குடலில் வாழும் நாடா வடிவப் புழுவகை.

**ces'toid,** *n.* குடலில் வாழும் நாடாப் போன்ற புழுவகை ; *a.* நாடாப்போன்ற.

**ces'tus** [1], *n.* அரைக்கச்சை, பட்டிகை.

**ces'tus** [2], *n.* குத்துச் சண்டைக் கையுறை, ரோம குத்துச் சண்டையாளர் அணிந்த உலோக உள்ளுறையுடைய கையுறை.

**ceta'cean,** *n.* மீனுருவ நீர்வாழ் பாலுண்ணி இனம் ; *a.* மீனுருவ நீர்வாழ் பாலுண்ணி இனத்தைச் சார்ந்த.

**ceta'ceous,** *a.* மீன் வடிவ நீர்வாழ் பாலுண்ணி இனத்தைச் சார்ந்த.

**ce'tane,** *n.* நிலஎண்ணெயில் கண்டெடுக்கப்படும் மெழுகியலான நீர்க்கரியப் பொருள் ; (தொ.) cetane number, டீஸல் இயந்திர எரிபொருளின் எரிபண்பளவைக் கூற்றெண்.

**Cet'eosaur, Ceteosau'rus,** *n.* மரபற்றுப்போன புதைபடிவப் பேருருவப் பல்லி.

**Cet'erach,** *n.* செதில் உடைய சூரல் இனம், செதில் பெரணி.

*cet'eris pa'ribus* (ல.) *adv.* மற்ற பொருட்கள் சமமாக இருப்ப.

**cetol'ogy,** *n.* திமிங்கிலத்தைப் பற்றிய ஆராய்ச்சித்துறை ; திமிங்கில ஆய்வுநூல்.

**cey'lanite, cey'lonite,** *n.* கனிப்பொருள் வகை, வெளிம இரும்புக்கலவைக் கனி.

**Ceylonese',** *n.* இலங்கை நாட்டவர் ; *a.* இலங்கையைச் சார்ந்த.

**Chab'lis,** *n.* பிரஞ்சு நாட்டில் வடிக்கப்படும் வெண்ணிற இன்தேறல் வகை.

**cha'cha',** *n.* அமெரிக்க மேலைஇந்தியத் (West Indies) தீவுகளுக்குரிய ஆடல் வகை.

**chac'ma,** *n.* பெரிய தென் ஆப்பிரிக்க மனிதக்குரங்கு வகை.

**chad,** *n.* ஆற்றில் எதிர் நோக்கிச் செல்கின்ற மீன்வகை.

**Chad'band,** *n.* நயத்திறம் மிக்க பாசாங்குக்காரன்.

**chae'topod,** *n.* இழைமயிர் போன்ற கால்களின்மூலம் ஊர்ந்து செல்லும் புழு வகை.

**chafe,** *n.* உரசித் தேய்ப்பதால் ஏற்படும் சூடு ; சீற்றம் ; வெவ்வுணர்ச்சி; *v.* உரசித்தேய், தேய்த்துச் சூடுண்டுபண்ணு; தேய்மானம் செய் ; அரி, கரம்பு ; சினமூட்டு, புண்படுத்து ; கரகரப்புண்டாக்கு ; பரபரப்புக்கொள், சினங்கொள்; எரிச்சல் கொள்.

**chaf'er,** *n.* வண்டு வகை.

**chaff,** *n.* உமி ; வைக்கோல் பதர் ; கழிபொருள், குப்பை ; புல் செத்தை ; போலிப் பொருள் ; பயனற்ற பொருள் ; ஏளனப் பேச்சு, கேலிப்பேச்சு ; நொடிப் பேச்சு ; *v.* ஏளனமாகப் பேசு.

**chaff'-cut'ter, chaff'-en'gine,** *n.* வைக்கோலை வெட்டும் இயந்திரம்.

**chaff'er,** *n.* பேரம் ; விலைபற்றிய சச்சரவு ; *v.* பேரம் பேசு, விலைபற்றிய வாக்குவாதம் செய்.

**chaff'erer,** *n.* பேரம் செய்பவர்.

**chaff'ering, chaff'ery,** *n.* வாணிகக் கொடுக்கல் வாங்கல், பேரப் பேச்சு.

**chaff'inch,** *n.* பிரிட்டனில் பொதுவரவாகவுள்ள சிறு பறவை வகை.

**chaf'ing-dish,** *n.* நிலக்கரிமேல் வைத்துச் சூடாக்க உதவும் கலம்.

**chaf'ing-gear,** *n.* கப்பல் மர உராய்வு தடுக்கப் பயன்படும் கந்தல் பொருள் வகை.

**chagrin',** *n.* கடும் ஏமாற்றம், ஆரஞர்த் தன்னெடுக்கம் ; மன உராய்வுத் துன்பம் ; உள அரிப்பு ; *v.* ஏமாற்றமடைவி, மன எரிச்சலூட்டு.

**chai,** *n.* சிறுக்கி.

**chain,** *n.* சங்கிலி ; தொடர் ; வரிசைத் தொகுதி ; நிகழ்ச்சிக் கோவை ; மலைத்தொடர் ; தீவுத்தொடர் ; கட்டுத்தளை ; விலங்கு ; சிறைப்பட்ட நிலை ; தடையாற்றல் ; கழுத்தணி ; அணு இணைப்புத் தொடர்; 66 அடி நீள அளவை ; இடை நிறுத்தம் இல்லாமல் புகைக்கும் சுருட்டு முறை; பாய்மரத்தை வெட்டுவதற்குப் பயன்படுத்தும்படி இரண்டு பந்துகள் அல்லது அரைப்பந்துகளை முனைகளில் கொண்ட சங்குகள் பாய்மரக் கயிறுகளின் சேமக்கட்டு; *v.* கட்டு; தளையிடு; விலங்கிடு, தடைப்படுத்து, கட்டுப்படுத்து; (தொ.) chain reactor, அணு ஆற்றல் எதிர்வு இயக்க அமைவு.

**chain'-arm'our,** *n.* இருப்புக் கவசம்.

chain'-bolt, *n.* சங்கிலி இணைக்கப்பட்ட கப்பலின் தாழ்க் கோல்.

chain'-bridge, *n.* சங்கிலிப்பாலம், தொங்கு பாலம்.

chain'-cable, *n.* இரும்பு வளையங்களாலான வடக்கயிறு.

chain'-coup'ling, *n.* புவைண்டிப் பெட்டிகளைத் தொடுக்கும் மிகைபடியான பாதுகாப்பு இடையிணைப்பு.

chain'-drive, *n.* சங்கிலியின்மூலம் ஆற்றல் தொடுப்பு.

chain'-driven, *a.* இணைப்புச் சங்கிலியின்மூலம் சக்தியை இயக்குவிக்கின்ற.

chained, *a.* விலங்கிடப்பட்ட; கட்டப்பட்ட; சங்கிலியில் மாட்டப்பட்ட.

chain'-gang, *n.* தொடர்சங்கிலியால் இணைக்கப்பட்ட கைதிகள் தொகுதி.

chain'-gear, chain'-gearing, *n.* சுழலும் பற்சக்கரங்கள் மீது சுற்றிச்சுற்றி வரும் சங்கிலி அமைவு.

chain'-less, *a.* விலங்கற்ற, சங்கிலி இல்லாத; தடையற்ற.

chain'let, *n.* சிறு சங்கிலி.

chain'-letter, *n.* பெறுபவர் படியெடுத்து அனுப்புவதன் மூலம் எல்லையற்றுப் பெருகித் தொடர்ந்துசெல்லும் சங்கிலித் தொடர்முறைக் கடிதம்.

chain'-light'ning, *n.* தொடர் வெட்டு மின்னல்; கடுமையான விஸ்கி வகை.

chain'-mould'ing, *n.* (க-க.) சங்கிலி வளைய உருவமைப்பு.

chain'pier, *n.* சங்கிலிக் கடற்பாலம், சங்கிலி அமைப்பாதரவுள்ள அலைதாங்கி.

chain'plates, *n. pl.* கப்பலின் பாய்க்கயிறு கட்டுவதற்குரிய அடித்தகடுகள்.

chain'-pump, *n.* முடிவற்ற சங்கிலியில் இணைத்த நீர் இறைக்கும் குழாய்.

chain'-reac'tion, *n.* செயல் விளைவுத் தொடர்.

chain'-rule, *n.* (கண.) தொடர் தகவுமுறை, தொடர் தகவுக் கணிப்பில் பல கணிப்புக்களை ஒரே இணைதொடர் சமனீடாக்கி மதிப்புக்காணும் முறை.

chain'-shot, *n.* கப்பல் பாய்மரத்தை வெட்ட உதவும் சங்கிலியின் ஓரக்குண்டு.

chain'-stitch, *n.* சங்கிலி வளையத் தையல்.

chain'work, *n.* சங்கிலி இணைப்புப் போன்ற வேலை; வலைப் பின்னல்.

chair, *n.* நாற்காலி; சாய்விருக்கை; பணிமுதல்வர் பீடம்; தலைவர் இருக்கை; தலைவர் பதவி; தலைமை; தலைவர்; பேராசிரியர் பதவி; மாநகர் முதல்வர் பதவி; கூட்டத்தலைவர்பதவி; இருக்கை; தனிமனிதர் இருக்கை ஊர்தி, தூக்கு நாற்காலி, அமர் சிவிகை; தண்டவாளத்தை உரிய இடத்தில் உறுதிப்படுத்தும் எஃகுப்பிடிப்பு; சான்றுப் பெட்டி; சாவுத் தண்டனைக்கான மின்பாய்வு நாற்காலி; *v.* அதிகார இருக்கையில் அமர்வி; வெற்றி ஊர்வலமாகத் தூக்கிச்செல்; கூட்டத் தலைவராக இருந்து நடத்து.

chair'man, *n.* கூட்டத்தலைவர்; தூக்கு நாற்காலியைச் சுமந்து செல்பவர்; *pl.* chair'men.

chair'manship, *n.* தலைமைப் பதவி, தலைமைப் பொறுப்பு.

chair'-or'gan, *n.* திருக்கோயில் பாடகர் குழுவின் இசைப் பெட்டி.

chair'woman, *n.* கூட்டத் தலைவி.

chaise, *n.* ஒருவர் அல்லது இருவர் செல்லும் திறந்த இலேசான வண்டிவகை.

chaise'less, *a.* வண்டி வகை யில்லாத.

chaise'longue, *n.* ஒருபுறச்சாய்வு வசதியுள்ள நீளச் சாய் விருக்கை.

chal, *n.* சிறுக்கன், ஏடன்; ஆள், மனிதர்.

chala'za, *n.* (வில.) பறவையின் முட்டைக் கருவைப் பிடிப்பில் இருக்கும்படி நிறுத்தும் மெல் இழைமம்; (தாவ.) தண்டு முளையின் அடிப்பகுதி.

chalcedon'ic, *a.* படிகக்கல்லைச் சார்ந்த.

chalced'ony, *n.* நீலச்சாயலுடைய வெண்ணிற மணிக்கல் வகை.

chalced'onyx, *n.* வெண்மையும் பழுப்பும் மாறிக்கொண்டு வரும் சாயலுள்ள மணிக்கல் வகை.

chalcog'raphy, *n.* பித்தளை அல்லது செம்பில் செதுக்கும் கலை.

chalcopyr'ite, *n.* செம்புக் கலவை வகை, செம்புக் கந்தகக் கல்.

chal'daism, *n.* பண்டைக் கால்டியா (Chaldaea) நாட்டின் மொழி மரபு.

Chalde'an, Chalde'e, *n.* பண்டைக் கால்டியா அல்லது பாபிலோன் (Babylon) நாட்டின் மொழி; கால்டியா நாட்டுக் குடிமகன்; குறிகாரர், குறிசொல்பவர், சோதிடம் கூறுபவர்; கால்டியா திருக்கோயில் குழுவினர்; *a.* கால்டியாவைச் சார்ந்த.

chald'ron, *n.* நிலக்கரி அளவைக் கூறு.

chal'et, *n.* சுவிட்சர்லாந்தின் மலையிலுள்ள பால் பண்ணைக் குடிசை; சுவிட்சர்லாந்துக் குடியானவரின் மரக்குடிசை; தோட்டம் சூழ்ந்த மரமனை; தெருவிலுள்ள சிறுநீர் கழிப்பிடம்.

chal'ice, *n.* கிண்ணம்; கிறித்தவத் திருக்கோயில் இறை வழிபாட்டு இன்தேறல் குவளை, பூசைப் பாத்திரம்; பூக்குடுவை.

chal'iced, *a.* கிண்ணம் போன்ற.

chalk, *n.* சீமைச் சுண்ணும்பு, வெண்சுதைப்பாறை; சுண்ணக் காம்பு; சுண்ண எழுதுகோல், வண்ண ஓவியக் கோல்; *v.* சுண்ணக்கோலால் எழுது; குறியிடு; வரை திட்டம் இடு; சுண்ணமிட்டுத் தேய்த்துத் துலக்கு; சுண்ண உரமிடு; (தொ.) as like as chalk and cheese, முக்கியமான கூறுகளில் முரண்பட்ட; by a long chalk, மிகு தொலைவாக; chalking the door, ஸ்காத்லாந்தில் குடி அகன்று செல்லும்படி எச்சரிக்கை செய்தல்; chalk out, வரைத் திட்டமிடு; not to know chalk from cheese, ஒரு பொருளைப் பற்றி எதுவும் அறியா நிலை; the Chalk, (மண்.) இங்கிலாந்தில் மண்ணியல் நடு உயிரூழியின் உச்சத்தளப் பார் சார்ந்த சுண்ண நில அமைப்பு.

chalk'-bed, *n.* சீமைச் சுண்ணப்படுகை, சுண்ண நில அடுக்கு.

chalk'iness, *n.* சீமைச் சுண்ணத்தன்மை; சுண்ண வெண்மை; சுண்ணங் கலந்துள்ள நிலை.

chalk'-pit, *n.* சுண்ணச்சுரங்கப் பள்ளம், சுண்ணச் சுதைகுழி.

chalk'-stone, *n.* சுண்ணக்கல்.

chalk'-stones, *n. pl.* கீல்வாதம் அல்லது முடக்கு வாதத்தில் கைகால் எலும்பு இணைப்பைச் சுற்றித் தோன்றும் வெண் கசிவுகள்.

chalk'y, *a.* சுண்ணம் நிறைந்த; சுண்ண வெண்மையான; சுண்ணக் கற்கள் போன்ற; சுண்ணக் கற்களுள்ள.

chall'enge, *n.* அறைகூவல்; எதிர்ப்புத் தெரிவித்தல்; மற் போருக்குரிய அழைப்பு; காவலாளனின் அதிகாரக் குரல்; விளக்கக் கோரிக்கை; பணிமுறைக்கேள்வி; குற்றச்சாட்டு; உரிமைக்கோரிக்கை; *v.* மற்போருக்கழை, போரிட்டு முடிவு செய்ய அழை; குற்றம் சாட்டு; எதிர்த்துரை; மறுதலி, மறுப்பைத் தெரிவி; அதிகாரத்துடன் உசாவு.

chall'engeable, *a.* எதிர்ப்புக்குரிய, எதிர்ப்புக்கு ஆட்படத் தக்க.

chall'enger, *n.* அறைகூவுபவர்; எதிர்ப்பாளர்; வினு எழுப்புபவர், கோரிக்கையாளர்.

chall'enging, *a.* அறைகூவுகின்ற, போரிட அழைக்கின்ற; மறுக்கிற, எதிர்த்துக் கேட்கின்ற.

chall'is, *n.* பெருமாட்டியின் உயரிய உடைத்துணி வகை; பட்டுக் கம்பளித்துணி வகை.

**chal'one**, *n.* செயல் தடுக்கும் உட்கசிவு.

**chalumeau'**, *n.* இசைக் குழல்வகை ; *pl.* chalumeaux'.

**chalyb'eate**, *n.* இரும்புச் சத்துள்ள நீர்; இரும்புக் கலப்புள்ள குடிவகை ; *a.* இரும்புச் சத்துவளம் உடைய.

**cha'lybite**, *n.* இரும்புச் சத்துள்ள விண்வீழ் கல்.

**cham**, *n.* வல்லாளர்.

*chamade*, (பிர.) *n.* சமரசப் பேச்சுக்கழைக்கும் பறையொலி, சரணடையும்படி அழைப்பு விடும் முரசறைவு.

**cham'ber**, *n.* அறை ; அரங்கு; கூடம், அறைவீடு; கூட்டம் கூடும் இடம்; சட்டமன்றப் பிரிவு; நீதி மண்டபம்; வாணிகம் முதலிய தனிநோக்குடன் கூடும் குழாம் ; உட்பிரிவு ; கண்ணறை ; உள்ளிடம், உட்பொள்ளல் ; துப்பாக்கியின் பின்புறப் புழை ; சிறு பீரங்கி ; நீதிமன்றத்திற்குக் கொண்டுவராத வழக்குகளை விசாரணை செய்யும் நடுவர் தனியறை ; *v.* அறையில் வை ; அடைத்து வை ; கட்டற்ற களியாட்டமாடு.

**cham'ber-concert**, *n.* அரங்கிசை நிகழ்ச்சி, துளைக்கருவி களற்ற நரப்பிசையரங்கு நிகழ்ச்சி.

**cham'ber-counsel, cham'ber-counsellor**, *n.* நீதி மன்றத்தில் வாதாடாமல் தனிப்பட்ட முறையில் சட்டக் கருத்து தெரிவிக்கும் வழக்குரைஞர்.

**cham'bered**, *a.* அறைகளையுடைய ; அறைக்குட்பட்ட ; குனிந்த, மேல்வளைவான.

**cham'berer**, *n.* மறை சூழ்ச்சிக்காரர்.

**cham'ber-fellow**, *n.* அறைத் தோழர்.

**cham'bering**, *n.* கட்டற்ற காம ஒழுக்கம்.

**cham'berlain**, *n.* அரண்மனை அகவினைஞர் ; (தொ.) Lord Chamberlain, உள்படு கருமத் தலைவர், கோவள்ளுவர், அரசகுடும்ப அலுவல் உயர் அதிகாரி; Lord Great Chamberlain, பெருங்கோ வள்ளுவர், வெஸ்ட்மின்ஸ்டர் (Westminster) மாளிகை ஆட்சிப்பரம்பரை மேற்பார்வையாளர்.

**cham'berlainship**, *n.* அரண்மனை அகம்படியர் நிலை, கஞ்சுகிப்பதவி.

**cham'ber-maid**, *n.* வழிமனைப் பணிப்பெண்.

**cham'ber-music**, *n.* அரங்கிசை, கொட்டகைக்குரிய துளைக்கருவி துணையற்றத் சிற்றறையின் நரப்பிசை நிகழ்ச்சி.

**cham'ber-organ**, *n.* தனி அறைக்குரிய சிறிய இசைக்கருவி வகை.

**cham'ber-pot**, *n.* படுக்கையறைச் சிறுநீர்க்கலம்.

**cham'ber-prac'tice**, *n.* முறைமன்றத்தில் வாதாடாமல் அறிவுரை கூறும் வழக்குரைஞர் தொழில்.

**Chambertin'**, *n.* புகழ்பெற்ற கொடிமுந்திரித் தோட்டப் பெயர் ; புகழ்பெற்ற செந்நிற இன்தேறல் வகை.

**chamel'eon**, *n.* பச்சோந்தி ; அடிக்கடி மாறுபவர், சந்தர்ப்பவாதி.

**chameleon'ic, chamel'eon-like**, *a.* பச்சோந்திபோன்ற ; அடிக்கடி நிறம் மாறும் இயல்புடைய ; மாறும் பண்புள்ள.

**cham'fer**, *n.* சாய்செதுக்குமூலை, செங்கோணமாக இருந்ததன் ஓரங்களைச்சீவி வளை சரிவாக்குதல் ; குதை, வடு, பள்ளம் ; உழுசால், கால்வாய் ; *v.* சரிவாக வெட்டு ; பள்ளம் செய் ; தூணில் பள்ளக்கீற்றிடு.

**cham'fered**, *a.* சாய்வளைவான ; சரிவுடைய ; பள்ளமான பள்ளம் போன்ற சுருக்கமுடைய.

**cham'frain, cham'fron**, *n.* முகப்பட்டி, போர்க்குதிரையின் முகத்துக்குப் பாதுகாப்பான தோல் அல்லது எஃகுத்தட்டு.

**cham'ois**, *n.* ஆட்டின் இயல்புடைய ஐரோப்பிய வரைமான் வகை ; மென்பதமுடைய தோல் வகை ; *pl.* cham'ois.

**cham'omile**, *n.*=camomile.

**champ** [1], *n.* நெறுநெறு எனும் ஒலி, பற்கடிப்பொலி ; பல்லரைப்பு அரவம்; *v.* ஓசைப்படப் பல்லால் அரை; அதுக்கு, சப்பு ; நெறுநெறு எனக் கடி.

**champ** [2], *n.* (கட்.) கேடயத்தின் மேற்பரப்பு.

**champagn'e**, *n.* கிழக்குப் பிரஞ்சு நாட்டில் (Eastern France) வடிக்கப்படும் ஒள்ளிய வெண்ணிறமுடைய திராட்சை மது வகை ; அம்பர் நிறவகை.

**cham'paign**, *n.* திறந்த சமவெளி ; *a.* சமவெளியான ; திறந்த.

**cham'part**, *n.* பகுதிவரி, விளைவின் கூறாக வரையறுக்கப் பட்ட நிலவரி முறை ; பண்ணை முதல்வர் பங்கு ; பகுதி வரிக்குரிய நிலமானியமுறை.

**cham'pertous**, *a.* (சட்.) வழக்கு வகையில் பங்கு ஊதிய உடன்பாடு சார்ந்த.

**cham'perty**, *a.* (சட்.) வழக்கு வகையில் வெளியார் உதவிக்காகப் பேசப்படும் பங்குபேரம்.

**champign'on**, *n.* உணவுக்குரிய காளான் வகை.

**cham'pion**, *n.* மல்லன் ; பரிந்து செயலாற்றுவோன், வாகையன், வீரமுதல்வன் ; *a.* வீர ஆதரவாளரான ; முதன்மை சான்ற ; *v.* பரிந்து வினையாற்று, ஆதரவு அளி.

**cham'pioness**, *n.* வீர முதல்வி, வாகையள்.

**cham'pionless**, *a.* வீர ஆதரவாளரற்ற ; கடமைப் போராடுவார் அற்ற.

**cham'pionship**, *n.* வீர முதன்மை ; பரிந்து துணையாதல்.

**champ'leve**, *n.* உள்வரி வண்ண மெருகுமுறை, மெருகூட்டலுக்குரிய உலோகப் பரப்பில் உள்வரிப் பள்ளமிட்டு வண்ணப்பொடி நிரப்பி அதன்மீது மெருகுத் தகடு காய்ச்சும் முறை ; *a.* உள்வரி வண்ண மெருகூட்டுமுறை சார்ந்த.

**chance**, *n.* தற்செயல் நிகழ்வு ; எதிர்பாரா நிகழ்ச்சி ; குருட்டிணைவு ; பொறியுடைமை, நற்பேறு, பாக்கியம், நல்வாய்ப்பு; நிகழக்கூடியது, நிகழ்ச்சிப்போக்கு; கூடுதிறம்; இடர் நேர்வு, வரத்தகும் இடர், இடையூறு ; *a.* தற்செயல் நேர்வான, இடைவரவான ; *v.* தற்செயலாக நிகழ், நேர், நேரப்பெறு ; வரத்தகும் இடர் துணிந்து இறங்கு ; *adv.* தற்செயலாக ; (தொ.) by chance, தற்செயலாக ; எதிர்பாராத வகையில் ; even chance, சரிநிகர் வாய்ப்பு ; stand a good chance, வாய்ப்பு நேர்வின காரணத்தோடு எதிர்பார்த்திரு ; take one's chance, நிகழ்வதை ஏற்றுக்கொள் ; the main chance, முக்கிய நோக்கம், செல்வுறுகும் நோக்கம்.

**chance'-com'er**, *n.* எதிர்பாராது வருபவர், தற்செயல் வருகையாளர்.

**chance'ful**, *a.* இடையூறு நிரம்பிய.

**chan'cel**, *n.* திருச்சபைக் குருமார்களுக்கும் பாடற்குழுவினருக்கும் இடையே தட்டியிட்டுத் தனியாகப் பிரிக்கப்பட்ட திருக்கோயிலின் கிழக்குப்பகுதி.

**chance'less**, *a.* நல்வாய்ப்பு இல்லாத.

**chan'cellery**, *n.*=chancellory.

**chan'cellor**, *n.* முக்கிய அமைச்சர், மன்னுய முதல்வர் ; உயர் முறைமன்ற முதல்வர் ; பதிவு மன்ற நடுவர் ; கட்டியத் துறையில் ஏடகத்தலைவர் ; பல்கலைக்கழக வேந்தர் ; (தொ.) Chancellor of a cathedral, மாவட்ட முதன்மைக் கோயிற் கண்காணியார், திருச்சபை மாவட்டத்தின் முத்திரை காப்பு - கல்வி - இசைப்பயிற்சி - மேற்பார்வை ஆகியவற்றைக் கவனிக்கும் பணி முதல்வர் ; Chancellor of a diocese, திருச்சபை மாவட்ட முதல்வரின் சமயத்துறை நடுவர்; Chancellor of the Exchequer, பிரிட்டனில் பொருளியல் அமைச்சர்; Lord Chancellor, Lord High Chancellor, மேல்மன்றத் தலைவர், நீதித்துறையின் முதன்மை நடுவர், பெருமுத்திரை நாயகம்.

**chan'cellorship**, *n.* நீதித்துறை முதல்வரின் பதவி ; மன்னுயமுதல்வர் பதவிக்காலம் ; பல்கலைக்கழக வேந்தர் பதவி ; பல்கலைக்கழக வேந்தர் பதவிக்காலம்.

**cilia'tion,** *n.* மயிர்போன்ற உறுப்பால் இயங்கும் தன்மை.

**cil'ice,** *n.* மயிர்த்துய்யாடை, தன் பழி ஒறுப்புக்குரிய சின்ன மான ஆடை.

**cilic'ious,** *a.* மயிர்த்துய்யாலான.

**cil'iolate,** *a.* மெல்லிய மயிர்களாலான ஓரமுடைய.

**cil'ium,** *n.* cilia என்பதன் ஒருமை வடிவம்.

**cimar',** *n.* திருச்சபை மாவட்ட முதல்வர் மேலங்கி, கையற்ற உடை.

**cime'lia,** *n. pl.* பொருட்குவியல்கள், கருவூலங்கள்.

**cimier',** *n.* தலைக்கவசத்தின் முகடு.

**cim'inite,** *n.* பாறை வகை, நெருப்புக் கற்பாறைக்கும் எரி மலைப் பாறைக்கும் இடைப்பட்ட பாறை வகை.

**Cimme'rian,** *a.* என்றென்றும் இருளிலேயே வாழ்ந்ததாகக் கூறப்படும் 'சிம்மெரி' (Cimmerii) என்ற மரபுக் குழுவைச் சார்ந்த; இருள் கவிந்த; கருமை செறிந்த.

**cim'olite,** *n.* உவர்க்களிமண், களிமண் வகை, அலுமினியச் சிலிகை நீர்மம்.

**cinch,** *n.* மெக்சிகோ (Mexico) வில் வழங்கும் சேணச் சுற்று வார்; (பே-வ.) உறுதியான கருத்து; பாதுகாப்பான பிடிப்பு; *v.* சேணச் சுற்றுவாரை இறுக்கு.

**cinchon'a,** *n.* காய்ச்சல் மருந்துப் பொடிக்குப் பயன்படும் பட்டை, சிங்கோனு பட்டை; காய்ச்சல் பொடிக்குரிய பட்டை தரும் தென் அமெரிக்க மரம்.

**cinchona'ceous,** *a.* காய்ச்சல் மருந்துப் பொடிதரும் பட்டைக்கு உரிய மரத்தினைச் சார்ந்த.

**cinchon'ic,** *a.* சிங்கோனு என்னும் மரப்பட்டையைச் சார்ந்த.

**cinch'onine,** *n.* சிங்கோனு மரப்பட்டையிலிருந்து கிடைக்கும் காரச்சத்து.

**cinchonin'ic,** *a.* சிங்கோனு மரப்பட்டையின் காரச் சத்துச் சார்ந்த.

**cin'chonism,** *n.* பட்டையிலுள்ள காரச்சத்தின் ஆற்றல் அளவு கடந்து செயற்படுவதால் ஏற்படும் கோளாறு.

**cin'chonize,** *v.* சிங்கோனு பட்டையின் காரச்சத்தின் ஆற்றல் செயல்படச் செய்.

**Cincinnat'us,** *n.* ஒதுங்கி வாழ்ந்து நெருக்கடி நேரத்தில் வந்துதவும் இயல்புடைய பெரியார்; உழவு வாழ்விலிருந்து தனி வல்லாட்சிப் பொறுப்பேற்க அழைக்கப்பட்ட ரோம வீரர்.

**cincinn'us,** *n.* (தாவ.) தண்டிலிருந்து ஒரேகிளை ஓரே நுனி மலர்க்கொத்துடன் மாறிமாறி எதிரெதிராகக் கிளைக்கும் செடிவகை.

**cinc'ture,** *a.* அரைக்கச்சை, இடைவார்; சுற்று வளையம்; நெற்றிப் பட்டம், தலைக்கட்டு; தூணின் சுற்றுக்கட்டு; *v.* சுற்றிக்கட்டு; சூழ்.

**cinc'tured,** *a.* அரைக்கச்சையுள்ள; சூழ்பட்டமுடைய.

**cin'der,** *n.* கங்கு, தணல், கனல்; எரிந்துபோன நிலக்கரி; தணல் கரி, கனல்கட்டை; சாம்பல்; தீயால் கரியாக்கப்பட்ட பொருள்; நீராவித்துளைகளுள்ள எரிமலைக்குழம்புத்துண்டு; *pl.* cin'ders.

**cin'der-cone,** *n.* எரிமலைப்பொருள்கள் குவிந்துள்ள குன்று.

**Cinderell'a,** *n.* பாராட்டப்படாத அழகுடையவர்; புறக் கணிக்கப்பட்ட பண்பு உடையவர்; வெறுத்து ஒதுக்கப் பட்டவர்; சமையல் பின்னறைப் பணிப்பெண்.

**Cinderel'la-dance,** *n.* நள்ளிரவில் முடியும் நடன நிகழ்ச்சி.

**cin'der-path,** *n.* கரித்தூள் பாட்டை, தீக்கரிப் பொருள் களால் சமனிடப்பட்ட ஓட்டப்பந்தயப் பாதை.

**cin'der-sifter,** *n.* கரியையும் சாம்பலையும் வேருக்கும் சல்லடைக் கருவி.

**cin'dery,** *a.* கங்கு கரியான, சாம்பரான.

**cin'e-biology,** *n.* திரைப்படப் பதிவுகளின் மூலமான உயிர் நூல் சார்ந்த ஆராய்ச்சி.

**cin'e-camera,** *n.* திரைப்படத்துக்குரிய நிழற்படக் கருவி.

**cin'e-film,** *n.* திரைப்படச் சுருளின் மென்தகடு.

**cin'ema,** *n.* திரைப்படக் கொட்டகை; (தொ.) the cinema, திரைப்படத் துறை.

**cin'ema-or'gan,** *n.* திரைப்படக் கொட்டகையின் இசைக் கருவிப்பெட்டி வகை.

**cin'emascope,** *n.* மூவளவைக் காட்சிதரும் வளைதிரைப்பட முறைக்குரிய வாணிக உரிமைப் பெயர்.

**cinemat'ic,** *a.* திரைப்படக் காட்சியைச் சார்ந்த; திரைப்படத் துறைக்குகந்த; திரைப்படப்பண்பு வாய்ந்த.

**cinemat'ograph,** *n.* திரைப்படக்கருவி; திரைப்படம்; *v.* திரைக்குரிய காட்சிப்படமெடு; திரைப்படம் எடு; திரைப் படம் பயன்படுத்து.

**cinematog'rapher,** *n.* திரைப்படக் காட்சி பிடிக்கும் தொழிலர்.

**cinematograph'ic,** *a.* திரைப்படத்தைச் சார்ந்த.

**cinematog'raphist,** *n.* திரைப்படத் தொழிலர்.

**cinematog'raphy,** *n.* திரைப்படக் கலை, திரைப்படத் துறை.

**cinemicrog'raphy,** *n.* நுண்ணோக்காடியில் தெரியும் உரு மாறுதல்களின் திரைப்படப் பதிவு.

**cinemir'acle,** *n.* = cinemascope.

**cin'eol, cin'eole,** *n.* நச்சுத்தடை மருந்தாகப் பயன்படும் சூடம் போன்ற மணமுடைய தாவரக் கலவைத் தைலம்.

**cin'e-projector,** *n.* திரைப்படம் காட்டும் கருவி.

**cinera'ma,** *n.* = cinemascope.

**cinerar'ia,** *n.* கண்ணாடிக் கலங்களில் வைத்து வளர்க்கப் படுகிற பகட்டு வண்ணமுடைய கொத்துமலர்ச்செடி.

**cinerar'ium,** *n.* எரியூட்டுச் சாம்பற் கலத்தை வைக்கும் ஒதுக்கிடம்.

**cin'erary,** *a.* சாம்பலுக்குரிய; இறந்தவரின் சாம்பலைக் கொண்ட; (தொ.) cinerary urn, எரியூட்டிய சாம்பலைக் கொண்ட தாழி, புதைகலம்.

**cinera'tion,** *n.* சாம்பலாக்கல், எரியூட்டுதல்.

**cinerat'or,** *n.* பிணங்களை எரியூட்டும் உலை.

**cine'rea,** *n.* சாம்பல் நிற நரம்புப் பொருள்.

**cine'real,** *a.* சாம்பல் தன்மையுடைய; இறந்தவரின் எரி யூட்டுச் சாம்பலைக் கொண்ட.

**ciner'eous,** *a.* சாம்பல் நிறமுடைய; சாம்பல் தன்மையுடைய.

**cineri'tious,** *a.* சாம்பல் வண்ணமுடைய; சாம்பல் நிற நரம்புப் பொருளைச் சார்ந்த.

**cin'e-variety,** *n.* திரைப்படக் காட்சியடங்கிய பலவகைக் களியாட்டம்.

***cing'ulum,*** (ல.) *n.* அரைக்கச்சை; வளையம்; சுற்றி வளைந் துள்ள அமைப்பு.

**cinn'abar,** *n.* சிவப்பு நிறமான கனிப்பொருள் வகை, இர சக்கந்தகை; *a.* குருதிச் சிவப்பான; (தொ.) cinnabar moth, பெரிய சிவந்த விட்டில் பூச்சி.

**cinnabar'ic, cinn'abarine,** *a.* இரசக் கந்தகையைச் சார்ந்த; கந்தகையை உட்கொண்ட; இரசக் கந்தகையாலான; இரசக் கந்தகை போன்ற.

**cinn'amate,** *n.* இலவங்கக் காடி உப்பு; இலவங்கக் காடிமம்.

**cinnam'ic, cinnamom'ic,** *a.* = cinnamonic.

**cinn'amon,** *n.* இலவங்கப் பட்டை; இலவங்க மரம்; மென்மை யான மஞ்சள் தவிட்டுநிறம்; *a.* இலவங்கப் பட்டையைச் சார்ந்த; இலவங்க மரத்தைச் சார்ந்த; மென்மையான மஞ்சள் தவிட்டு நிறமுள்ள.

**cinn'amon-bear,** *n.* வட அமெரிக்க மஞ்சள் தவிட்டு நிறக் கரடிவகை.

**cinnamon'ic**, *a.* இலவங்கத்தைச் சார்ந்த; இலவங்கத்திலிருந்து கிடைத்த.

**cinn'amon-stone**, *n.* தவிட்டு நிற அல்லது மஞ்சள் வண்ண மாணிக்கக் கல்வகை.

**cinq**, *n.* ஐந்தெண் கவறு; ஐந்தெண் சீட்டு.

**cinq'foil**, *n.* = cinquefoil.

**cinque**, *n.* = cinq.

**cinquecen'tist**, *n.* மறுமலர்ச்சி சிற்பக் கலைஞர்.

**cinquecen'to**, *n.* பதினாறாவது நூற்றாண்டு மறுமலர்ச்சிக்கு உரிய கலை சிற்ப வகை.

**cinque'foil**, *n.* (கட்.) ஐந்து இதழ்களையுடைய மலர்முகப்பு உருவம்; (க-க.) வாயில் பலகணி வளைவுகளில் ஐயிதழ் அணி உரு; (தாவ.) ஐந்து அலகுகளையுடைய மணப்புல்.

**cinque'-pace**, *n.* ஐயடி ஆடல்கூறு வகை.

**Cinque Ports**, *n. pl.* (வர.) இங்கிலாந்தின் தென்கரையிலுள்ள துறைமுகங்கள்.

**ciph'er**, *n.* சுழி, சுன்னம்; இன்மைக்குறி; தான வெறுமைக் குறி; பயனற்றது; பயனற்றவர், மதிப்பு ஏதுமற்றவர், முக்கியத்துவமற்ற ஆள்; அரபு இலக்கம், அரபுக்குறியீடு; பெயரின் முதலெழுத்துக்களின் இணைப்பு; சொற்குறி; புரியா எழுத்து, மறைகுறியீடு; குறிப்பெழுத்து; மறை திறவு; இசைக் கருவிக் குறைபாட்டினால் தொடர்ந்தெழும் ஒலி; *v.* கணக்குச் செய்; கணக்கிடு, திட்டம் செய்; மறை எழுத்தாக்கு; மறைகுறியீடாக எழுது; கணி, திட்டமிடு; இசைக் கருவி வகையில் மீட்டப்படாமலே தொடர்ந்து ஒலி செய்.

**ci'phering**, *n.* மறைகுறிப்பாக எழுதுதல்.

**ci'pher-key**, *n.* குறியீட்டெழுத்தின் மறை திறவு.

**cip'olin, cipolli'no**, *n.* பச்சைப் பட்டையுடைய இத்தாலிய வெண் சலவைக்கல்வகை, அப்பிரகமும் வெளிம கன்மகியும் இடைமிடைந்த சுண்ணக் கரியகி.

**cipp'us**, *n.* தண்டனைக்காகக் கணைக்காலில் பூட்டப்படும் கால் கட்டை; தூபி; *pl.* cipp'i.

***circ'a***, (ல.) *prep.* ஏறத்தாழ, குத்தாயமாக.

**Circa'ssian**, *n.* ருசியாவிலுள்ள சர்கேசிய பகுதிக்குரிய 'காகேசிய' (Caucasian) மரபுக் குடியினர்; காகேசிய மரபுக் குழுவினரின் மொழி; *a.* காகேசிய மரபுக் குடியினருக்குரிய; காகேசிய மரபுக் குடிவகையின் மொழி சார்ந்த; காகேசிய பகுதியைச் சார்ந்த.

**circa'ssian, circassienne'**, *n.* மென்மையான கம்பளி வகை.

**Cir'ce**, *n.* கிரேக்க புராணப் பெண் மாயாவி; மாயக்காரி, சூனியக்காரி.

**Circe'an**, *a.* கிரேக்க புராணப் பெண் மாயாவியான செர்ஸி (Circe) யைச் சார்ந்த; கீழ்த்தர மாயத்துக்குரிய, சூனியஞ் சார்ந்த.

**cir'cinate**, *a.* வளைய உருவான, மோதிர வடிவுள்ள; (தாவ.) இலைகள் வகையில் அடிநோக்கிச் சுருள்கிற.

***cir'citer***, (ல.) *prep.* = *circa.*

**cir'cle**, *n.* வட்டம்; வட்டச் சுற்றுவரை; வட்டமான பொருள்; வளையம்; கோளினத்தின் சுற்று நெறி; துவங்கிய இடத்தில் முடிவுறும் நிகழ்ச்சிக் கோவை; மாயச்சக்கரம்; வட்டத்திற்குள்ளிருக்கும் பொருள்களின் தொகுதி; ஆளைச் சுற்றியுள்ள தொடர்புகொண்ட குழு; இனக்குழு, கூட்டுக் குழு; வகுப்பு; *v.* சுற்றிச்செல்; வளைந்து செல், சுற்றித் திரும்பு; சூழ், சுற்றி வளை; வட்டமாகச் செல்; வளையமாக அணிவகுத்து நில்; (தொ.) dress circle, திரைப்படம் அல்லது நாடக அரங்கில் அமைந்த உயர்வகுப்பு வட்டம்; great circle, உருளையில் மையமூடு செல்லும் தளவட்டம்; fairy circle, வனதெய்வங்களின் குழு அடங்கிய வட்டம்; reasoning in a circle, வளைத்து வளைத்துக் கூறியதையே கூறி மெய்ப்பிக்க முடியாமல் வாதாடுதல்; small circle, உருளையில் மையமூடாகச் செல்லாத தளவட்டம்.

**cir'cled**, *a.* வட்டவடிவமான; சுற்றி வளைக்கப்பட்ட.

**cir'cler**, *n.* சுற்றிச் செல்பவர்; சுற்றிச் செல்வது.

**cir'cle-rider**, *n.* கால்நடைகளை ஒருங்கிணைத்துச் செலுத்துவதற்காகக் குதிரைமேல் ஏறிச் சுற்றிச்சுற்றிச் செல்பவர்.

**cir'cle-riding**, *n.* கால்நடைகளை ஒருங்கிணைத்துக் கொண்டு போவதற்காகக் குதிரை ஏறிச் சுற்றிச்சுற்றிச் செல்லுதல்.

**circ'let**, *n.* சிறுவட்டம், சிறு வளையம்; சிறு முடி, நெற்றிப் பட்டம்.

**cir'cling**, *n.* வட்டமாகச் செல்லுதல், சுற்றி வருதல், வளைய மிடல்.

**circs**, *n. pl.* (பே-வ.) = circumstances.

**circ'uit**, *n.* சுற்றுப்பயணம், சுற்றுலா; சுற்றிச் செல்லும் பாதை; சுற்றளவு; சுற்றுன பாதை; சுற்றடைப்பு, வேலியிடப்பட்ட நிலப்பகுதி; மின்வலி இயக்கம் செல்லும் நெறி; உலா நடுவர் புடைபெயர்ச்சி; உலாநடுவர் குழு; 'மெதடிஸ்ட்' (Methodist) போதகர்களும் வணிகப் பிரயாணிகளும் சுற்றி வரும் வட்டார எல்லை; வட்டகை, நாடகக் கொட்டகைகள் அல்லது திரைப்படக் கொட்டகைகள் கொண்ட தொகுதி; *v.* சுற்றிச் செல்.

**cir'cuit-breaker**, *n.* மின் ஓட்டத்தைத் தடுக்கும் பொறி அமைப்பு.

**circuiteer'**, *n.* சுற்றுலா நடுவர்.

**circu'itous**, *a.* சுற்று வளைவான.

**circu'itousness**, *n.* சுற்றி வளைந்து செல்லும் இயல்பு.

**cir'cuit-ri'der**, *n.* சுற்றுப் பயணம் செய்யும் சமய போதகர்.

**circu'ity**, *n.* வளைநெறி, சுற்றி வளைத்துச் செல்லும் முறை.

**cir'culable**, *a.* சுற்றிப்பரப்பத்தக்க.

**circ'ular**, *n.* சுற்றறிக்கை; சுற்றோலை; *a.* வட்டமான; வட்டத்தைச் சார்ந்த; சுற்றி வருகிற, மண்டலிக்கிற, தன்னிலே தொடங்கி தன்னிலே முடியும் இயல்பான; சுழற்சியாகத் தொடர்ந்து நிகழ்கின்ற; பலருக்குச் சேர்த்து அனுப்பப்பட்ட; (தொ.) circular function, (கண.) வட்டச்சார்பு செங்கோண முக்கோணப்பக்கத் தகவு; cicular letter, பல படிகளாகப் பலருக்கு ஒரே வேளையில் அனுப்பப்படும் கடிதம்; circular measure, ஆர வட்ட அளவை; வட்டத்தில் ஆர அளவான நாண்வரையுடைய வில் வளைவுக்கோண அளவை; circular note, வழிப்போக்கர் அயலிடப் பொருளகத்தில் பணம் பெறுவதற்குரிய சான்றுரிமைச் சீட்டு.

**circula'rity**, *n.* வட்டமாக உள்ள தன்மை.

**circ'ularize**, *v.* வட்டமாகச் செய்; சுற்றறிக்கை அனுப்பு.

**circ'ularly**, *adv.* வட்டமாக.

**circ'ulate**, *v.* சுற்றிச் செலுத்து, பரப்பு; எங்கும் செல், பரவு; மண்டலி; (கண.) மீண்டும் மீண்டும் இரட்டித்துக் கொண்டுபோ; (தொ.) circulating library, உலா நூலகம், நூல்நிலையப் பங்குவரியாளர்களிடையே நூல்களைப் பரிமாறிக்கொள்ளும் நூலகம்.

**circula'tion**, *n.* சுற்றோட்டம்; காற்று-குருதி ஆகியவற்றின் சுழற்சி; போக்குவரவு இயக்கம், இடையறாப் புடைபெயர்ச்சி; புழக்கம், செயல் வழக்கு; நாணயச் செலாவணிப் பரப்பு; செய்தித்தாள் விற்பனைப் பரப்பு; வாங்குவோரின் எண்ணிக்கை.

**circ'ulative**, *a.* சுற்றோட்டம் ஊக்குகிற; சுற்றியோடுகிற, எங்கும் பரவுகிற.

**circ'ulator**, *n.* பரப்புகிறவர்; செய்தி பரப்புபவர்; தூற்றுபவர்; புரளிக்காரர்; நாணயச் செலாவணியாளர்.

**circ'ulatory**, *a.* சுற்றுகிற; பரவுகிற; சுழல்கிற; குருதியோட்டம் சார்ந்த; தாவர உணவுச் சாற்றின் சுழற்சிக்குரிய.

**circumamba'ges**, *n. pl.* சுற்றி வளைத்த பேச்சு.

**circumam'bience, circumam'biency**, *n.* சுற்றி வளைத்துச் செல்லும் தன்மை; சூழ்வு, சுற்றி வளைத்தல்.

**circumam'bient**, *a.* சுற்றி வளைக்கும் தன்மையுடைய; சுற்றிச் சூழ்ந்துள்ள.

**circumam'bulate**, *v.* சுற்றித்திரி, சுற்றி நட, வளைந்து செல்; பயனில் முயற்சி செய்.

**circumambula'tion**, *n.* சுற்றிச்செல்லல்; வீண்முயற்சி செய்தல்.

**circumba'gious**, *a.* சுற்றி வளைத்துப் பேசுகிற, நேராகப் பேசாத.

**circumben'dibus**, *n.* சுற்றி வளைத்துப் பேசுதல், சுற்றுமுக நடவடிக்கை.

**cir'cumcentre**, *n.* (வடி.) புறநிலை வட்ட மையம், முக்கோணம் முதலிய வடிவுருக்களின் புறக்கோடி தொட்டுச் செல்லும் வட்டத்தின் மையம்.

**circ'umcise**, *v.* யூத-இஸ்லாமிய மரபின்படி சுன்னத்து செய், உறுப்பின் நுனித்தோல் இதழ் அகற்று; தூய்மைப் படுத்து.

**circumci'sion**, *n.* தோல் நுனியிதழ் அகற்றும் வினை, சுன்னத்து வினைமுறை, சுன்னத்து விழா; சுன்னத்துச் செய்துகொள்ளும் நிலை; யூத இனம்.

**circumdenuda'tion**, *n.* (மண்.) சூழ் அரிப்பு, சுற்றுப்புற மண் அரிப்பு; சுற்றியும் மண் அரித்துவிடலால் நடுவில் எஞ்சியுள்ள உயர்ந்த பகுதி, விடு திட்டு, 'சூழரி' மேடு.

**cir'cumduct**, *v.* சுற்றி அழைத்துச் செல்; கற்பனை இருசினைச் சுற்றிச் சுழலச் செய்.

**circum'ference**, *n.* வட்டத்தின் சுற்றுவரை, பரிதி, சுற்றளவு, சுற்றெல்லை.

**circumferen'tial**, *a.* வட்டச் சுற்றுவரை சார்ந்த; வட்டச் சுற்றளவு சார்ந்த.

**circumflect'**, *v.* வட்டமாக வளை; உயிர் அல்லது அசை மீது ஏற்றிறக்க அழுத்தக்குறி (∧) இடு.

**circ'umflex**, *n.* உயிர் அல்லது அசைமீது ஏற்ற இறக்க இணைவாக முன்பு அமைந்திருந்த அழுத்தக் குறியீடு; *a.* ஏற்ற இறக்க அழுத்தக் குறியான; (உள்.) சுற்றி வளைகிற, சுற்றுவளைவான.

**circumfle'xion**, *n.* வட்டமாக வளைதல்; வளைவுக்குறி.

**circum'fluence**, *n.* சுற்றி ஓடுதல்; (உயி.) உணவைச் சூழ்ந்து உட்கொள்ளும் முறை.

**circum'fluent, circumflu'ous**, *a.* சூழ்ந்து செல்கிற; சுற்றி ஓடுகிற.

**circumfuse'**, *v.* நாற்புறமும் தெளி; சுற்றிலும் ஊற்று; சூழ்; அமிழ்த்தி வை, தோய்வி.

**circumfus'ile**, *a.* உருகிய.

**circumfu'sion**, *n.* சுற்றிச் சூழ்தல்; சூழப்பாய்தல்.

**circumgyr'ate**, *v.* வளைந்து திரும்பு; சுற்றுப் பயணம் செய்.

**circumgy'ratory**, *a.* சுற்றிச்செல்கிற; சுழல்கிற; சுற்றுப் பிரயாணம் செய்கிற.

**circumja'cency**, *n.* சுற்றிச் சூழ்ந்து அமைந்துள்ள நிலை, சூழ்வுநிலை.

**circumja'cent**, *a.* சூழ்ந்துள்ள; சுற்றிலுமுள்ள; எல்லாப் பக்கங்களிலும் பரவியுள்ள.

**circumlitt'oral**, *a.* கரையோரமான, கடற்கரைப் பக்கமான.

**circumlocu'tion**, *n.* சுற்றி வளைத்துப் பேசல், மிகுசொல்லாடல்; நெடு நீளச் சொற்றொடர் வழக்கு; தட்டிக் கழிக்கும் பேச்சு.

**circumlocu'tional, circumlocu'tionary**, *a.* சுற்று வளைப்புப் பேச்சுச் சார்ந்த.

**circumloc'utory**, *a.* சுற்றி வளைத்துப் பேசுகிற.

**circum-merid'ian**, *a.* (வான்.) மைவரைக்கு அருகிலுள்ள.

**circumnav'igable**, *a.* கப்பலில் சுற்றிச் செல்லக்கூடிய; கடல்வழி உலகைச் சுற்றிப் பயணம் செய்யத்தக்க.

**circumnav'igate**, *v.* கப்பலில் சுற்றுப் பிரயாணம் செய்; கடலில் உலகு சுற்றிச் செல், சுற்றிக் கப்பலோட்டு.

**circumnaviga'tion**, *n.* முழு வட்டஞ்சுற்றிய கடற்பயணம், கப்பற் சுற்று மண்டலப் பயணம்.

**circumnav'igator**, *n.* கடல்வழி உலகு சுற்றுபவர்.

**circumnut'ate**, *v.* (தாவ.) செடியின் வளரும் நுனி வகையில் ஆடி நுடங்கியபடியே சுற்றித் திருகி இயங்கு.

**circumnu'tatory**, *a.* செடியின் வளரும் நுனியினைப் போன்ற சுழலசைவு கொண்ட.

**circumor'al**, *a.* (உட.) வாயைச் சுற்றி அமைந்துள்ள.

**circumpol'ar**, *a.* (மண்.) நிலக்கோடிகளின் அருகாமையான, துருவங்களைச் சுற்றி அமைந்துள்ள; (வான்.) நாள் முழுவதும் அடிவானத்துக்கு மேலேயே காணப்படுகிற.

**circumpose'**, *v.* சுற்றி வை.

**circumposi'tion**, *n.* சுற்றிவைக்கும் செயல், சூழ வைத்தல்.

**circumsciss'ile**, *a.* (தாவ.) சுற்றுவட்டப் பிளவின்மூலம் திறக்கிற.

**circ'umscribe**, *v.* சுற்றி வட்டமிடு; (வடி.) வெட்டாத் தொடுவரையாகச் சுற்று வட்டமிடு; எல்லைக்குட்படுத்து; கட்டுப்படுத்து; சுருக்கு; வட்ட வரிசையாகக் கையொப்பமிடு.

**circumscrib'er**, *n.* கட்டுப்படுத்துபவர்; கட்டுப்படுத்துவது.

**circumscrip'tion**, *n.* வரையறுப்பு; எல்லைப்படுத்துதல், கட்டுப்படுத்துதல்; கட்டுப்பாடு; வரையறை; கட்டுப்படுத்தும் எல்லை; சுற்றுவட்டமிடுதல்; சுற்றுவட்டம்; கட்டுப்படுத்தப்பட்ட எல்லை; நாணய உள் வட்ட வரைவு.

**circumscrip'tive**, *a.* புறஉருவரை குறிக்கிற; புறத்தோற்றம் குறித்த.

**circumsol'ar**, *a.* கதிரவனைச் சுற்றிச் சுழல்கிற; கதிரவனுக்கு அருகாமையில் உள்ள.

**circ'umspect**, *a.* உறு விழிப்புள்ள, மிக்க எச்சரிக்கையோடு கூடிய; எச்சரிக்கையோடு எல்லாப் பக்கங்களிலும் நோக்குகிற.

**circumspec'tion**, *n.* விழிப்புடைமை, எச்சரிக்கையாயிருத்தல்; கவனம்; பரிசீலனை செய்தல்.

**circ'umspective**, *a.* சுற்றிக் கவனிக்கிற, எச்சரிக்கையுடைய, விழிப்பான, எளிதில் ஏமாற்ற முடியாத.

**circ'umspectly**, *adv.* எச்சரிக்கையாக, விழிப்பாக, கவனமாக.

**circ'umspectness**, *n.* விழிப்போடுள்ள தன்மை, எச்சரிக்கையான நிலை.

**circ'umstance**, *n.* சூழ்நிலை, கால இடச்சூழல்; உடனிகழ்வு; தொடர்புடைய செய்தி; புறநிலைச் செய்தி, புறக் கூறு; நுணுக்க விவரம்; புற ஆரவாரம், ஆசாரம், சடங்கு முறை; *v.* சூழ்நிலையில் கொண்டுவிடு.

**circ'umstanced**, *a.* சூழப்பட்டுள்ள, நிலைமைகளுக்குக் கட்டுப்பட்ட.

**circ'umstances**, *n. pl.* சூழ்நிலைமைகள்; (தொ.) in the circumstances, under the circumstances, தற்போதைய சூழ்நிலையில், நிலைமைகளுக்கு இணங்க.

**circumstan'tial**, *a.* நுணுக்க விவரங்கள் அடங்கிய; தற்செயலான; முக்கியத்துவமில்லாத, சிறுதிற; (தொ.) circumstantial evidence, சூழ்நிலைக்கேற்ற பொருத்தங் காட்டும் சான்று.

**circumstantial'ity**, *n.* தற்செயலான தன்மை; நுணுக்க விவரங்கள் கொண்ட நிலை.

**circumstan'tially**, *adv.* தற்செயலாக; நேர்முகத் தொடர்பில்லாமல்; நுணுக்க விரிவாக; போலிப் புறத்தொடர்புடன்.

**circumstan'tials**, *n. pl.* முக்கியத்துவமற்ற விவர நுணுக்கங்கள், நுணுக்க விவரங்கள்.

**circumstan'tiate**, *v.* சூழ்நிலை வாய்ப்புக்களால் நிலைநிறுத்து; நுணுக்க விவரங்களால் மெய்ப்பி; நுணுக்க விரிவாக விளக்கு.

**circumvall'ate**, *v.* கோட்டை மதில்களால் வளைத்துக் காப்பீடு செய்; சூழ் அரண் காப்புச் செய்.

**circumvalla'tion**, *n.* மதில் சூழுதல், கோட்டைச்சுவர் அமைப்பு; நகரப் பாதுகாவல் அமைப்பு; (வில.) உணவைச் சூழ்ந்து பரவி உட்கொள்ளுதல்.

**circumvent'**, *v.* சுற்றிச்செல், வளைத்துக்கொள்; மேற் சென்று செய்துமுடி; சூழ்ந்து கைப்பற்று, சுற்றி இடைமறி; பொறியுட்படுத்து; ஏமாற்று.

**circumven'tion**, *n.* மேற்செலவு, சூழ்ந்து செயலாற்றுதல்; சூழ்ச்சி.

**circumvent'ive**, *a.* சூழ்ச்சி செய்கிற, வளைத்து ஏமாற்றுகிற.

**circumvolu'tion**, *n.* உருளுதல், புரளுதல், பிறழ்வு; சுருளுதல், நுடங்கி முடங்கிச் செல்லும் இயக்கம்.

**circ'us**, *n.* சுற்றிலும் வட்டடுக்கான இருக்கைமேடைகளையுடைய விளையாட்டு வேடிக்கைக்கான வட்டரங்கு, காட்சிக் கொட்டகை; சுற்றிலும் அடுக்கடுக்கான மலைக்காட்சிகளையுடைய நடுவரங்கப் பள்ளத்தாக்கு; தெருக்கள் நாற்புறமுமிருந்து வந்திணையும் வட்டவடிவான மையக் கூடல்வெளி; வட்டக் கட்டுமனைத்தொகுதி; உலா வரு காட்சிக்குழு.

**cirque**, *n.* வட்டரங்கு; இயற்கைக் காட்சிக் கோட்டம்.

**cirr'ate**, *a.* சுருட்டையான; தளிர்க் கைகள் போன்ற; (வில.) சுருண்ட இழைபோன்ற.

**cirrhos'is**, *n.* ஈரலரிப்பு; உறுப்பின் இழைமம் இற்று இணைமங்கள் மட்டுமீறி வளர்ச்சிகொள்ளும் கோளாறு.

**ci'rriform**, *a.* = cirrate.

**cirr'igrade**, *a.* பற்றிழைகளால் இடம் பெயர்கின்ற.

**ci'rriped, ci'rripede**, *a.* சுருட்டைமயிர் வடிவான கால்களையுடைய சிப்பி இன ஒட்டுயிர்வகை சார்ந்த.

**cirrose'**, *a.* தளிர்க் கைகளை உடைய.

**ci'rrous**, *a.* தளிர்க் கையுடைய; (வில.) சுருண்ட இழையுடைய.

**ci'rrus**, *n.* மென்பஞ்சியல் முகில், அடித்த பஞ்சு போன்ற தோற்றமுள்ள மேகக் கூட்டம்; (தாவ.) தளிர்க் கை; (வில.) சுருண்ட இழை; *pl.* ci'rri.

**cisalp'ine**, *a.* ஆல்ப்ஸ் (Alps) மலைத் தொடரின் அக எல்லைப் புறத்திலுள்ள, ஆல்ப்ஸ் தொடருக்குத் தெற்கிலுள்ள; ரோம் நகருக்கும் ஆல்ப்ஸ் தொடருக்கும் இடைப்பட்ட இடத்துக்குரிய.

**cisatlan'tic**, *a.* அட்லாண்டிக் மாகடலுக்கு அகவெல்லையிலுள்ள, அட்லாண்டிக் மாகடலின் கிழக்கேயுள்ள.

**cise'leur**, *n.* உலோக வேலையில் செதுக்கி ஒப்பனை செய்பவர்.

**cise'lure**, *n.* உலோக வேலைப்பாட்டின்மேல் செதுக்கி ஒப்பனை செய்தல்.

**cismon'tane**, *a.* மலைகளுக்கு இப்பக்கமான; ஆல்ப்ஸ் மலையின் வடக்கிலுள்ள இத்தாலிய எல்லைகடந்த.

**cispa'dane**, *a.* போ (Po) ஆற்றின் இப்பக்கமான, ரோம்நகர் அருகாமையான.

**cispon'tine**, *a.* பாலத்துக்கு இப்பக்கமான; லண்டன் நகரில் தேம்ஸ் (Thames) ஆற்றுக்கு வடக்குப் பக்கமான.

**cist**, *n.* (தொல்.) கற்பலகைகளால் மூடப்பட்ட கல்லறை; வட்டமான வழிபாட்டுக் கலம்.

**cist'ed**, *a.* (தொல்.) வரலாற்றுக்கு முந்திய காலத்திய கல்லறைகள் கொண்ட.

**Cister'cian**, *n.* பிரான்சில் உள்ள 1098-இல் நிறுவப்பட்ட துறவி மடத்தைச் சேர்ந்த துறவிகளில் ஒருவர்; *a.* சிஸ்டெர்சியன் துறவி மடத்துக்குரிய.

**cis'tern**, *n.* நீர்த்தொட்டி; நீர்த்தேக்கம்; நீராவிப்பொறியில் வாலையின் சூழ்புறக்கலம்.

**cist'ic**, *a.* (தொல்.) வரலாற்றுக்கு முந்திய காலத்திய கல்லறை போன்ற.

**Cis'tus**, *n.* (தாவ.) பெரிய வெள்ளை அல்லது சிவப்பு மலர்களையுடைய புதர்ச்செடி வகைகள்.

**cist'vaen**, *n.* தட்டைக் கற்களாலான பெட்டி வடிவமுள்ள கல்லறை.

**cit'able**, *a.* சான்றாகக் காட்டப்படத் தக்க.

**cit'adel**, *n.* நகர் அரண், நகரத்துக்கு அண்மையிலுள்ள கோட்டை; போர்க் கப்பலில் துப்பாக்கிகள் வைக்கப்படும் இடம்; இன்னலுக்காளானவர்களின் கடைசிப் புகலிடம்; தத்தளித்துக் கொண்டிருக்கும் கொள்கைக்கான கடைசிப் பிடிப்பிடம்.

**cit'al**, *n.* வந்து தோன்றுமாறு விடுவிக்கப்படும் அழைப்பு.

**cita'tion**, *n.* வந்து தோன்றுமாறு சட்டமுறைப்படியான அழைப்பு; அழைப்புத் தாங்கியுள்ள ஆவணம்; மேற்கோள் காட்டல்; எடுத்துக் கூறப்பட்ட வாசகம்; குறிப்பிடப்பட்ட பெயர்; அரசாங்கப் பத்திரங்களில் கண்டுள்ள குறிப்பீடு.

**cit'atory**, *a.* தோன்றுமாறு விடுக்கப்படும் அழைப்பின் தன்மையுள்ள; வர அழைப்புவிடும் பழக்கமுடைய.

**cite**, *v.* வரவழை, நீதிமன்றத்தில் வந்து தோன்றுமாறு அழை; மேற்கோள் காட்டு; பெயர் குறிப்பிடு; சான்றாகக் காட்டு; எடுத்துக்காட்டாகக் கூறு.

**cith'ara**, *n.* பண்டைய கிரேக்க இசைக்கருவி வகை.

**cith'er, cith'ern**, *n.* உலோகத் தந்திகளையுடைய இசைக் கருவி வகை.

**citied**, *a.* நகரம் போன்ற; நகரம் ஆக்கப்பட்ட; நகரம் அடங்கிய; நகரங்களை உட்கொண்ட.

**cit'igrade**, *a.* சிலந்தியினங்களின் வகையில் விரைந்த இயக்கமுடைய.

**cit'izen**, *n.* நகர்வாழ்நர், குடி உரிமையாளர்; சுதந்திர உரிமையுடையவர்; படைத்துறை சாராப் பொதுமகன்; நாட்டில் பிறந்தவர், பிறப்புரிமைக் குடிமகன்; ஒரு நாட்டின் குடிமையை ஏற்றுக்கொண்டவர்; *fem.* cit'izeness.

**cit'izenhood**, *n.* குடிமகனாயிருக்கும் நிலை.

**cit'izenise**, *v.* குடிமகன் ஆக்கு.

**cit'izenry**, *n.* குடிமக்கள் ஆயம்; நகரமக்கள் தொகுதி.

**cit'izenship**, *n.* குடிமை உரிமைத்தொகுதி; குடிமகனாயிருக்கும் நிலை.

**citole'**, *n.* இடைநிலைக் காலத்திய தந்தி இசைக்கருவி வகை.

**cit'range**, *n.* நாரத்தையும் ஆரஞ்சும் கலந்து உண்டான பழம்.

**cit'rate**, *n.* நரந்தக் காடியின் உப்பு.

**cit'reous**, *a.* எலுமிச்சை நிறமுள்ள, கரும்பச்சைச் சாயலுடைய; மஞ்சள் வண்ணமுடைய.

**cit'ric**, *a.* (வேதி.) நாரத்தையிலிருந்து வடித்திறக்கிய; (தொ.) citric acid, நரந்தக்காடி.

**cit'rin**, *n.* இழைக்குருதி நாளங்களின் முறிவெளிமைப் பண்பை இயக்குவதாகக் கருதப்பட்டு நீரில் எளிதாகக் கரையும் பண்புடைய எலுமிச்சைப் பழ ஊட்டச் சத்து வகை.

**cit'rine**, *n.* எலுமிச்சை நிறம்; கரும்பச்சை மஞ்சள் நிறமான படிகப் பாறை; *a.* எலுமிச்சை வண்ணமுடைய.

**cit'ron**, *n.* நாரத்தை, துரிஞ்சி; நாரத்தை மரம்; எலுமிச்சை நிறம்.

**citronell'a**, *n.* மிகுவெப்ப மண்டலப் புல்வகை; மிகுவெப்ப மண்டலப் புல் வகையினின்றும் வடித்திறக்கப்படும் நறுமணத் தைலம்.

**Cit'rus**, *n.* நாரத்தை-எலுமிச்சை-கிச்சிலி முதலியவை உள்ளிட்ட மரப்பேரினம்; (தொ.) citrus fruits, நாரத்தம் பழம்-எலுமிச்சம் பழம்-கிச்சிலிப்பழம்-கொடி முந்திரி உள்ளடக்கிய பேரினவகைப் பழங்கள்.

**citt'ern**, *n.* = cither.

**cit'y**, *n.* மாநகரம், பெரிய நகரம், முதன்மைவாய்ந்த பேரூர்; உரிமைப்பட்டயம் பெற்றுருவாக்கப்பட்ட நகரம்; மேல் படித்தரத்திலுள்ள நகரசபைவாய்ந்த பட்டணம்; நகரத்தில் வாணிக மைய இடம்; நகரின் மூலமுதல் பகுதி; (தொ.) Celestial City, பொன்னுலகு, துறக்கம்; City article, செய்தித்தாளில் நிதி அல்லது வாணிகம் பற்றிய கட்டுரை; City Company, லண்டன் மாநகரில் இடைநிலைக்காலத்திய வாணிக சங்கங்களுக்குப் பிரதிநிதியாயுள்ள கூட்டவை; City editor, பத்திரிகைகளில் நிதிச்செய்திகளைப் பற்றி எழுதுபவர்; city fathers, குற்ற நடுவர்கள்; நகர அவை உறுப்பினர்கள்; City man, நகரத்தில் வாணிபத்தில் அல்லது நிதித்துறையில் ஈடுபட்டிருப்பவர்; city manager, நகர நிருவாகத் திற்கெனத் தேர்வுக் குழுவினரால் அமர்த்தப்பட்டவர்; city mission, பெரிய நகரங்களில் ஏழைகளுக்கு விவிலிய போதனை செய்வதற்கான குழு; City of God, விண்ணுலகு, துறக்கம்; city of refuge, (யூதர் சட்டம்) புகலிட நகரம்; City of the Seven Hills, ஏழுமலை நகரம், ரோமாபுரி; city state, தனி உரிமை உடைய நகர அரசு; Eternal City, ரோமாபுரி; Heavenly City, துறக்கம், விண்ணுலகு; Holy City, எருசலம்; the City, மேயர் ஆட்சிக்குட்பட்ட லண்டன் நகரத்தின் நகரப்பகுதி; லண்டன் நகரத்தின் வாணிகப்பகுதி.

**cit'yless**, *a.* நகரம் இல்லாத.

**cit'yward**, *a.* நகரம் நோக்கிய; *adv.* நகரத்தை நோக்கி.

**cit'ywards**, *adv.* நகரத்தை நோக்கி.

**cive**, *n.* வெங்காய வகைச் செடியினம்.

**civ'et**, *n.* புனுகுப் பூனை; புனுகு.

**civ'et-cat**, *n.* புனுகுப் பூனை.

**civ'ic**, *a.* நகரம் சார்ந்த, நகரமக்களுக்குரிய; நகரவைக்குரிய; குடியுரிமைக்குரிய; குடிமக்களுக்குத் தகுந்த; (தொ.) civic centre, பட்டணத்தின் முதன்மையான பொதுக் கட்டிடங்கள் நெருங்கியிருக்குமிடம்; civic crown, குடிமகனொருவனுடைய உயிரைக் காத்ததற்காக ரோம வீரனுக்கு அளிக்கப்பட்ட வெற்றிப் புகழ்மாலை.

**civ'ics**, *n.* குடியியல், குடியுரிமை பற்றிய நூல்.

**civ'il**, *a.* கூடிவாழும் இயல்புடைய; சமுதாயத்துக்குரிய; நடைநயமுடைய; நாகரிகமான; வணக்க இணக்கமான; சமுதாய வரம்பிகவாத; பொதுத்துறை சார்ந்த; படைத்துறை சாராத; சமயச்சார்பற்ற; குற்ற இயல் சாராத; (சட்.) குடிமக்களுக்கிடையிலுள்ள தனிப்பட்ட தொடர்புபற்றிய; தனிப்பட்டவர் வாழ்க்கையினின்றும் எழும் வழக்குகள் சார்ந்த; இயல்பாகவே நல்லொழுக்கம் வாய்ந்த; (தொ.) civil day, பொதுநடைமுறைக் கணித்து வகுக்கப்பட்ட நாள்; civil death, உரிமை அறவு; உரிமைச்சாக்காடு; civil defence, போர்க்கால விமானத் தாக்குதல் இடர்களிலிருந்து பொதுமக்களைக் காப்பதற்கான படைத்துறை சாராப் பாதுகாப்பு ஏற்பாடு; civil disobedience, சட்டமறுப்பு, வரிகொடா இயக்கம்; civil engineer, அமைதிக்கால ஊர்தி-பாலம் முதலியன கட்டும் பொதுத்துறைப் பொறிவலாளர்; civil law, உரிமைச்சட்டம், உரிமை வழக்குச் சட்டம், அமைதிக்காலச் சட்டம்; Civil Law, ரோமன் சட்டம்; civil list, மன்னர் குடும்பச் செலவினப்பட்டி, அரசர்க்கென ஒதுக்கப்பட்ட விடுபொருள்; இந்தியாவில் அரச ஊழியர் அட்டவணை, அரச அலுவலர் பட்டியல்; civil list pensions, அரசர் தண்ணளியால் கொடுக்கப்படும் உதவிச்சம்பளம்; Civil Services, படைத்துறை சாராத அரச அலுவலர்கள், அமைதிக்கால அரச ஊழியர்கள்; civil time, பொது நடைமுறைக்காகக் கணக்கிடப்படும் காலம்; civil war, உள்நாட்டுக் கலகம்; civil year, பொதுக்காரியங்களுக்காகக் கணக்கிடப்படும் ஆண்டு.

**civil'ian**, *n.* பொதுத்துறைச் சட்டப் பேராசிரியர்; பொதுத்துறைச் சட்ட மாணவர்; படைத்துறை சாராத அரசாங்க அலுவலர்; *a.* படைத்துறை சாராத.

**civ'ilist**, *n.* பொது உரிமைத்துறைச் சட்ட வல்லுநர்.

**civil'ity**, *n.* நயநாகரிகம்; பண்புநயம், பண்பட்ட பழக்க வழக்கமுறை; மட்டுமதிப்புப் பண்பு.

**civ'ilizable**, *a.* சீர்ப்படுத்தத்தக்க, நாகரிகப்படுத்தப்படத் தகுந்த.

**civiliza'tion**, *n.* நாகரிகம்; நாகரிகமடைந்துள்ள நிலை; பண்பாடு, பண்பட்டநிலை; சமூக முன்னேற்றத்தில் மேம்பட்டநிலை; நாகரிக உலகு, நாகரிகமடைந்துள்ள நாடுகள்.

**civ'ilize**, *v.* நாகரிகப்படுத்து, சீர்திருத்து, பண்பு பெறப் பழக்கு.

**civ'ilized**, *a.* நாகரிகமக்களுக்குரிய, பண்பு நிறைந்த மக்களின் இயல்புகள் வாய்க்கப்பெற்ற.

**civ'illy**, *adv.* நயமாக.

**civ'ism**, *n.* குடியுரிமைநலம்; (வர.) 1789-ஆம் ஆண்டுக்கு உரிய பிரஞ்சுப்புரட்சியின் அடிப்படைக் கொள்கை பற்றிய ஆதரவு.

**clabb'er**, *n.* சேறு.

**clack**, *n.* கடகடப்பு, சடசடப்பு, கட்டைகளை ஒன்றோடொன்று தட்டும்போது உண்டாவதைப் போன்ற ஓசை; கடகடப்பு ஒலி உண்டுபண்ணும் கருவி; பலருடைய பேச்சரவம்; (பே-வ.) நா; *v.* உரக்கப்பிதற்று; ஓயாது பேசு; மரக்கட்டைகள் கல்லின்மீது உராய்வது போன்ற ஒலியெழுப்பு, சடசட ஓசை உண்டுபண்ணு.

**clack'-box**, *n.* பொறியின் தடுக்கிதழ் கொண்ட பெட்டி.

**clack'-valve**, *n.* இயந்திரங்களில் தடாலெனும் ஒலியுடன் மீளும்படி கீல் பொருத்தப் பெற்றுள்ள தடுக்கிதழ் அமைவு.

**clad**, *a.* உடுப்பு அணிந்த, ஆடை அணிபூட்டப்பட்ட, ஒப்பனை செய்யப்பட்ட.

**cladd'ing**, *n.* உலோகத்துக்குரிய உலோகப்பொதிவு; அணு ஆற்றல் எதிர்வு இயக்க அமைவில் உலோகப் பொதிகாப்பு.

**cladocarp'ous**, *a.* (தாவ.) சிறு பக்கக்கிளைகளில் காய்களை உடைய.

**clad'ode**, *n.* (தாவ.) இலையின் தோற்றமும் செயற்பாடும் கொண்ட கிளை.

**claim**, *n.* உரிமைக் கோரிக்கை; கோரிப்பெறும் தகுதி; கோரிக்கை உரிமை; பெறுவதற்கான உரிமை; கோரிப்பெறும் உரிமை உடைய பொருள்; உரிமை கோரிப் பெறப்பட்டபொருள்; உரிமைப் பொருள்; உரிமைப் பங்கு; சுரங்கத் துறையில் பங்கிட்டு ஒதுக்கீடு செய்யப்பட்ட நிலம்; *v.* உரிமை கோரு; உரிமையாகக் கேள்; உரிமை கொண்டாடு; உரிமைபற்றி வாதாடு; உரிமை வலியுறுத்து; மெய்யென வாதிடு; உண்மையை ஒப்புக்கொள்ளும்படி கேள்; தகுதி உடையதாயிரு; (தொ.) lay claim to, ஒன்றன் மாட்டுள்ள உரிமையை வலியுறுத்திக் கூறு.

**claim'able**, *a.* உரிமை கொண்டாடத்தக்க, உரிமை கோரத் தக்க.

**claim'ant, claim'er**, *n.* உரிமை கொண்டாடுபவர், உரிமை கோருபவர்.

**claim'-jump'er**, *n.* சுரங்கமறுக்க மற்றொருவருக்குள்ள உரிமையைத் தமதாக்கிக் கொள்பவர்.

**clairaud'ience**, *n.* சேணுணர்வு, புலன்கடந்த கேள்வியாற்றல், பொறிகளுக்கு அப்பாற்பட்டவற்றைக் கேட்கும் ஆற்றல்.

**clairaud'ient**, *n.* புலன்கடந்தவற்றைக் கேட்கும் ஆற்றலுடையவர்; *a.* சேணுணர்வுடைய, புலன்கடந்தவற்றைக் கேட்கும் ஆற்றலுடைய, புலன்கடந்த கேள்வி ஆற்றலுக்குரிய.

**clair'schach**, *n.* கெல்டிய இனமக்கள் (Celts) கையாண்ட தந்திக் கம்பிகளுடன் கூடிய பழைய யாழ்வகை.

**clairvoy'ance**, *n.* தொலைவிலுணர்தல், உண்ணோக்கு, புலனுகாதவற்றைக் காணும் ஆற்றல், இயல்பு கடந்த நுண்ணோக்காற்றல்.

**clairvoy'ant**, *n.* கட்புலனுக்கு அகப்படாதவற்றைக் காணும் திறனுடையவர்; *a.* புலனுகாவற்றைக் காணும் திறலுடைய

**clam** [1], *n.* இடுக்கி, இறுக்கிப்பிடிக்கும் கருவி ; எதிர் எதிரா யுள்ள பாகங்கள் திருகாணியினால் இறுக்கப்படத்தக்க அழுத் தக்கருவி ; *v.* பற்று, இடுக்கு; இடைவைத்தழுத்து; (பே-வ.) வாய்மூடு, பேசாதிரு.

**clam** [2], *n.* இரட்டையோட்டுச் சிப்பி வகை ; சிப்பியோடு.

**clam** [3], *n.* ஈரம் ; *v.* தடு ; அடை ; பூசு.

**clam** [4], *n.* கூட்டுமணி ஒலி, இரண்டு அல்லது பல மணிகளை ஒருங்கே இசைப்பதனால் உண்டாகும் ஓசை ; *v.* கூட்டுமணி ஒலி எழுப்பு ; கலகலக்கும் மணியோசை செய்.

**clam'ancy**, *n.* அவசரத்தன்மை, பொறுதியற்ற படபடப்பு.

**clam'ant**, *a.* உரக்கக்கூவுகிற; அவசரமான; வற்புறுத்துகிற.

**clam'-bake**, *n.* சிப்பி வறுவல், சூடேற்றப்பட்ட கற்களின் மேல் சிப்பி மீனைப் போட்டு வறுத்து உருளைக்கிழங்கு மீன் சோளம் முதலியன மேலிட்டு உண்டுபண்ணும் உண்டிவகை; சிப்பி வறுவல் பரிமாறப்படும் புறவெளி விருந்துக் குழு.

**clam'ber**, *n.* இடர்ப்பட்டுத் தவழ்ந்தேறும் முயற்சி ; *v.* தொற்றி ஏறு, தத்தித்தாவு, கைகால்களால் பற்றிக்கொண்டு மேற்செல்.

**clam-chow'der**, *n.* சிப்பிமீன் கலந்து செய்யப்படும் பணியார வகை.

**clamm'y**, *a.* ஒட்டிக்கொள்கிற, பசைபோன்ற ; ஈரமான.

**clam'orous**, *a.* கூச்சலிடுகிற, ஆரவாரம் செய்கிற.

**clam'our**, *n.* ஆரவாரம், சந்தடி ; அமளி, இடைவிடாத உரத்த கூச்சல்; அடுத்தடுத்துக் குறை வற்புறுத்துதல்; ஆர வார வேண்டுகோள் ; *v.* ஆர்ப்பரி, உரக்கக் கேள் ; இடை விடாமல் கூச்சலிடு.

**clam'ourer**, *n.* ஆரவாரம் செய்பவர், கிளர்ச்சிக்காரர்.

**clamp** [1], *n.* பற்றுக்கட்டை, பற்றிரும்பு, அள்ளு, இறுக்கிப் பிடிக்கும் கருவி; பற்றுக்கருவி; *v.* இறுகப்பற்று, பிணைத்து முடுக்கு ; அள்ளுவைக் கொண்டு பிணி.

**clamp** [2], *n.* கால்பளுவுடன் நடத்தல், காலெடுத்து வைத்து நடத்தல் ; *v.* காலை அழுத்திவைத்து நட, நிலம் அதிர நட.

**clamp** [3], *n.* குவியல், போர் ; செங்கற் சூளை ; மூடிவைத்த உருளைக் கிழங்குக் குவியல் ; *v.* போராகக் குவி ; செங்கல்லைச் சூளையில் வைத்துச் சுடு.

**clam'per**, *v.* ஒட்டுப்போட்டுச் சமாளி, போலி வேலை செய்.

**clam'-shell**, *n.* சிப்பி மீனின் தோடு, சிப்பி.

**clan**, *n.* பொதுக்குடி மரபுக்குழு ; ஸ்காத்லாந்து நாட்டு மேட்டுநில மக்களிடையே (Scottish Highlanders) பொது முன்னோனையுடைய கூட்டுக்குழு ; பங்காளிக் கிளை, தந்தை வழியுரிமைச்சுற்றம் ; குலமரபு ; இனம், கிளை மரபு ; குறுகிய தனிப்பற்றுடைய குழு, தனிக்குழு, சிறுகுழு.

**clandes'tine**, *a.* கள்ளத்தனமான, ஒளிவு மறைவான; வஞ்சகமான.

**clang** [1], *n.* உலோகங்கள் அடிபடுவது போன்ற கணீரென்ற பேரொலி; எக்காள ஒலி; பெரிய மணியோசை; நாரை-வாத்து போன்ற பறவைகள் எழுப்பும் உரத்த ஒலி ; *v.* கணீ ரென்ற ஒலி செய்.

**clang** [2], *n.* (இசை.) பல நயங்கள் வாய்ந்த குரல் ; நயத்தரம்.

**clang'ing**, *n.* கணீரென்று ஒலித்தல்; *a.* கணீரென்று ஒலிக்கிற.

**clang'orous**, *a.* அலை அலையாய் ஒலிக்கும் ஓசையுடைய ; உலோகங்கள் அடிபடுவது போன்ற கணீரென்ற ஓசைமிக்க.

**clang'our**, *n.* உரத்த மணியோசை ; *v.* உரத்த மணியோசை எழுப்பு.

**clank**, *n.* கனத்த சங்கிலி சலசலக்கும்போது உண்டாவது போன்ற ஓசை; *v.* சங்கிலி சலசலக்கும்போது உண்டாவது போன்ற ஓசை எழுப்பு.

**clank'less**, *a.* சங்கிலியோசை எழுப்பாத.

**clann'ish**, *a.* குறுகிய இனப்பற்றுள்ள; மற்றவர்களிடமிருந்து பிரிந்து வாழும் இயல்புடைய ; குறுகிய குழுப்பற்றுடைய.

**clann'ishness**, *n.* குறுகிய இனப்பற்றுடைமை, பிற்போக் கான குலமரபு மனப்பான்மை.

**clan'ship**, *n.* ஒரு முதல்வனுக்குட்பட்ட குடும்பங்களின் தொகுதி ; குலமரபுக் கட்டுப்பாட்டுணர்வு ; குலமரபு முறை ; இனப்பிரிவு வேறுபாடு; இனப்பிரிவுகளின் உட்பகை வெறுப்பு ; குழு-உட்குழு இடைப்பட்ட பகைமை வெறுப்பு.

**clans'man**, *n.* குலமரபினன், இனத்தவன்.

**clans'woman**, *n.* குலமரபினள், இனத்தவள்.

**clap** [1], *n.* இடிஒலி ; வெடிப்போசை ; கைதட்டொலி ; தட்டல், கைதட்டும் ஓசை ; கொட்டல், அறை ; *v.* மொத்து, அறை, ஓசையுண்டாகும்படி அடி ; திணி, திடுமென நெக்கித்தள்ளு ; உடனடியாக இறுக்கிக்கட்டு ; ஊக்கந்தரும் வகையில் தட்டு ; அறைந்து தட்டு ; கைகொட்டி ஆர்ப்பரி ; கைகொட்டு ; கைதட்டு ; திடுமென (சிறையில்) அடை ; (தொ.) clap eyes on, காணப்பெறு ; clap hold of, முரட்டுத்தனமாகப் பற்று.

**clap** [2], *n.* மேகநோய், வெட்டை ; *v.* வெட்டை நோய்த் தொற்றுபடர்.

**clap'board**, *n.* சாரல்தடுக்கு, மழைச்சாரல் அடிக்காதபடி கதவின்மீது சாய்வாகப் பொருத்தப்படும் பலகை.

**clap'-bread**, *n.* முரட்டு மாவினால் செய்யப்படும் சூட்டப்ப வகை.

**clap'-net**, *n.* சுருக்கு வலை, கயிற்றை இழுப்பதனால் திடுமென மூடிக்கொள்ளும்படி அமைக்கப்பட்டுள்ள புள் வலை.

**clapp'er** [1], *n.* கை தட்டி ஆதரிப்பவர் ; மணியின் நா ; பறவைகளைத் துரத்துவதற்கான கிலுகிலுப்பை; மாவாலையில் அரிதட்டினைத் தட்டி மா வீழ்த்தும் கட்டை அல்லது உலோக அமைவு.

**clapp'er** [2], *n.* கற்பலகைகளால் அல்லது மரப்பலகைகளால் ஆன கரடு முரடான பாலம்; மேடான நடைபாதை ; முயல்வளை.

**clapp'erclaw**, *v.* பிருண்டித் தாக்கு ; திட்டு ; கறுவுகொள் நெஞ்சொடு குற்றங்காண்.

**clapp'ers**, *n. pl.* விரல்களிடையே வைத்தடிக்கும் நீகிரோ வர்கள் இசைக் கருவியாகப் பயன்படுத்துகிற எலும்புத் துண்டுகள்.

**clapp'ing**, *n.* அடிப்பதனால் எழும் ஓசை ; கைதட்டல்.

**clap'-sill**, *n.* கால்வாய் அணை அடைப்பின் அடிவாய்ச்சட்டம்.

**clap'trap**, *n.* பிறர் மெச்சுவதற்கான போலிச்செயல் ; வெற்றுப்பசப்புரை ; பகட்டு ஆரவாரக் கருத்து ; *a.* பகட்டார வாரமான.

***claque, claqueur***, (பிர.) *n.* கூலிக்குப் புகழ்ந்து கைதட்டும் கூட்டம்.

**cla'rabella**, *n.* இனிய ஓசையெழுப்பும் இசைக்கருவித் துளையின் அழுத்துக்கட்டை.

**cla'rence**, *n.* நால்வர் அமர உட்புறத்திலும் வலவன் அமர வெளிப்புறத்திலும் இருக்கைகள் அமைந்த நான்கு சக்கர வண்டிவகை.

**Cla'renceux, Cla'rencieux**, *n.* (கட்.) இங்கிலாந்தில் முக்கிய கட்டியர் ஐவர்களுள் ஒருவர், இரண்டாம் கட்டியர்.

**cla'rendon**, *n.* கனத்த முகப்புவாய்ந்த அச்செழுத்து வகை ; *a.* கனத்த முகப்பு வாய்ந்த.

**cla'ret**, *n.* பிரான்சிலுள்ள போர்டோவிலிருந்து (Bordeaux) தருவிக்கப்படும் திண்சிவப்பு இன்தேறல் வகை; *a.* திண் சிவப்பு நிறம் வாய்ந்த ; *v.* திண் சிவப்பு இன்தேறல் அருந்து.

**clar'et-cup**, *n.* பனிக்கட்டி-சாராயம்-சர்க்கரை முதலியவை கலந்த திண் சிவப்பு இன்தேறல் கலவை வகை.

**clarifica'tion**, *n.* தெளிவு ; தெளிவாக்கல் ; துப்புரவாக்கல்.

**clar'ifier**, *n.* தெளிவாக்குபவர் ; தெளியச் செய்யும் பொருள்.

**cla'rify**, *v.* தெளிவுறும்படி செய், தெளிவாக்கு, துலக்கி அழுக்கு நீக்கித் துப்புரவாக்கு; பளிங்குபோல் ஆக்கு; வெண்ணெயைத் துப்புரவாக்கி நெய்யாக மாற்று; தெளிவாகு, துலங்கு; தெளிவுபடு, பளிங்கு போலாகு.

**cla'rinet**, *n.* (இசை.) மரத்தினாலான ஊது துளைக்கருவி வகை; இசைப் பெட்டியின் குழலிசைப்பகுதி; (தொ.) the bass clarinet, தாழ் குரல் துளைக்கருவி வகை.

**clarinett'ist**, *n.* துளைக்கருவி வகை வாசிப்பவர்.

**cla'rion**, *n.* சில்லிட்டிசைக்கும் எக்காளம்; எழுச்சியூட்டும் உரத்த ஒலி; எக்காள ஓசை; எக்காளத்தினது போன்ற ஒசை; *a.* தெளிவான; உரத்த.

**cla'rionet**, *n.*=clarinet.

**cla'rity**, *n.* துலக்கம், தெளிவு.

**Clark'ia**, *n.* பகட்டான மலர்களையுடைய செடியினம்.

**clar'y**, *n.* காய்கறித் தோட்டப் பூண்டு வகை.

**clash**, *n.* மோதல் ஒலி; மோதுதல், கைகலப்பு, சச்சரவு; கருத்து வேற்றுமை, முரண்பாடு; *v.* மோதொலி எழுப்பு; எதிர்த்து நில்; முட்டி மோது; முரண்படு, சிக்கற்படு.

**clasp**, *n.* பிடிப்பு, பற்றுதல்; அணைப்பு, தழுவுதல்; கைகுலுக்கல்; கொளுவி, அள்ளு; கச்சு இறுக்கி, ஆடை ஊக்கு; (படை.) பதக்க நாடாவின்மேல் ஒப்பனையாகப் பொருத்தப்படும் வெள்ளிப்பட்டை; *v.* நெருக்கிப்பிடி, பற்றிப் பிடித்துக் கைகுலுக்கு; தழுவு; அள்ளு வைத்துச் செருகு, அள்ளுவைக் கொண்டு பிணை; (தொ.) clasp hands, கைகுலுக்கு; கைகோத்து ஒத்துழை; clasp one's hands, விரல்களுடன் விரல்கள் பிணை.

**clas'per**, *n.* பற்றிப்பிடிப்பவர்; பற்றிப்பிடிக்கும் பொருள்; (தாவ.) செடியின் தளிர்க்கை; (வில.) பற்றிப் பிடிக்கும் உறுப்பு.

**clasp'-knife**, *n.* மடக்குக் கத்தி.

**class**, *n.* பள்ளி வகுப்பு, கல்வி வகுப்பு; ஒரே ஆண்டுப் படியில் பயிலும் மாணவர்குழு; இனவகுப்பு, ஒத்தபொருள்களின் குழு; வகை; உயிர்நூற் பெருங்குழுவின் பிரிவு; சமுதாயப்பிரிவு, ஒத்த பண்புடைய மக்கள் குழு; ஒத்த படிநிலையுடைய சமுதாயக் குழு; 'மெதடிஸ்டு' (Methodist) என்ற சமயக்கிளையின் பிரிவு; படைத்துறை உரிமைப் படிநிலை; உரிமைப் படிநிலைக் குழு; படிநிலை; திறமைப்படி; தேறுதல் தரம்; பண்பின் தரம்; ஊர்தி-நாடகம் முதலியவற்றின் இருக்கைப் படித்தரம்; மேன்மை, உயர்தரம்; *v.* வகு; வகுப்புக்களாக அமை, வகைப்படுத்து; வகைதேர்ந்து இணை, வகுப்பில் இணை, தரப்படுத்திச் சேர்; வகுப்பில் படு, தரக் குழுவில் இடம் பெறு; (தொ.) class legislation, சமுதாய வகுப்பின் நலங்கருதி இயற்றப்படும் சட்டம்; take a class, தேர்வில் சிறப்பு மதிப்பெண்கள் பெற்றுத் தேறு.

**class'able**, *a.* வகைப்படுத்தத்தக்க. வகையுள் சேர்க்கத்தக்க.

**class'-con'scious**, *a.* வகுப்பு உணர்வுள்ள, சமூகத்தில் தாம் ஒரு வகுப்பைச் சேர்ந்தவரென நன்கு அறிந்திருக்கிற.

**class'ic**, *n.* புகழ்சான்ற எழுத்தாளர்; தலைமைசால் கலைஞர்; பண்டைக் கிரேக்க ரோம இலக்கியச் சான்றோர்; பண்டை உயர்தனிச் செம்மொழி இலக்கிய மாணவர்; புகழ்சான்ற ஏடு; பண்டை உயர்தனிச் செம்மொழிப்பாணி பின்பற்றுபவர், செம்மொழி முன்மாதிரி மேற்கொள்ளுபவர்; *a.* முதல் தரமான; ஒப்புக்கொள்ளப்பட்ட மேம்பாடுடைய; பண்டைய கிரேக்க இலத்தீன மொழியின் இலக்கிய ஆசிரியருக்குரிய; பண்டைய கிரேக்க ரோமக் கலை சார்ந்த; பண்டைய கிரேக்க ரோமரின் நாகரிகப் பண்பாடு சார்ந்த; கிரேக்க இலத்தீனப் பழமைக்குரிய; பண்டைக் கிரேக்க ரோமக் கலையின் இன்னெளிமைக் கட்டமைதி வாய்ந்த; பண்டைய கிரேக்க ரோம இலக்கிய காலத் தொடர்புடைய; பண்டை வரலாற்றுத் தொடர்புடைய; (தொ.) classic races, ஆண்டுதோறும் நடக்கும் ஐந்து முதன்மையான உலகக் குதிரைப் பந்தயங்கள்.

**class'ical**, *a.* ஒப்புக்கொள்ளப்பட்ட சிறப்புடைய; முதல் தரமான இலக்கிய நலம் வாய்ந்த; பண்டைய கிரேக்க இலத்தீன ஆசிரியர்களுக்குரிய; பண்டைய கிரேக்க இலத்தீன கலைக்குரிய; பண்டைய கிரேக்க இலத்தீன கலை இலக்கியங்களில் புலமை வாய்ந்த; பண்டைய கிரேக்க இலத்தீன நூல்களை அல்லது கலைகளை அடிப்படையாகக் கொண்ட; பண்டைய கிரேக்க ரோம ஆசிரியர்களின் நடையைப் பின்பற்றிய; தூய இன்னெளிமை நயமும் கட்டமைதியும் வாய்ந்த.

**class'icism**, *n.* பண்டைக் கிரேக்க இலத்தீன மொழிமரபு; பண்டைய கிரேக்க இலத்தீனக்கலை இலக்கிய மரபுப் பண்பு; பண்டைய கிரேக்க இலத்தீன கலைத்துறைப் புலமை; பண்டைய கிரேக்க ரோமமொழிகள் கலை கல்விமுறை ஆதரவு.

**class'icist**, *n.* பண்டைய கிரேக்க இலத்தீன நூல்களின் நடையைப் பின்பற்றுபவர்; பண்டைய கிரேக்க இலத்தீன கலைத்துறைகளில் புலமை பெற்றவர்; பண்டைய கிரேக்க இலத்தீன மொழிக்கல்வியை ஆதரிப்பவர்.

**class'icize**, *v.* முதல்தரமானதாக்கு; பண்டைய கிரேக்க இலத்தீன மொழிப்பாணியைப் பின்பற்று.

**classicol'atry**, *n.* பண்டைய கிரேக்க இலத்தீன மொழிக் கலைத்துறைகளில் ஈடுபாடு.

**class'ics**, *n.* பண்டைய கிரேக்க இலத்தீன மொழிக்கலைத் துறைகளின் தொகுதி, உயர்தனிச் செம்மொழித்துறை.

**class'ifiable**, *a.* வகைப்படுத்தத்தக்க.

**classifica'tion**, *n.* வகைப்படுத்துதல்; வகுப்பு முறை, வகுப் பொழுங்கு.

**class'ified**, *a.* வகைப்படுத்தப்பட்ட; பாட்டைகள் வகையில் அரசியல் பொருள் உதவிக்கு உரிமையுடைய.

**class'ify**, *v.* வகைப்படுத்து, இனவாரியாகப் பிரி; வகுப்பில் இணை; பாதுகாப்பை முன்னிட்டு புதைமறைவாக்கி வை.

**class'-lead'er**, *n.* கிறித்தவ சமய 'மெதடிஸ்ட்' (Methodist) பிரிவினருள் ஒரு வகுப்பின் தலைவர்.

**class'man**, *n.* பல்கலைக்கழகத் தேர்வுகளில் மதிப்பெண் நிரம்பிய வகுப்புப்பெற்றுத் தேறியவர்.

**class'-room**, *n.* வகுப்பு அறை.

**clas'tic**, *a.* (மண்.) பழம் பாறைகளின் உடைந்த துண்டுகளாலான.

**clatt'er**, *n.* கடகட ஒலி; உரத்த பேச்சு; *v.* சடசடவென்று ஒலி; உரத்த ஒலியெழுப்பு; ஓயாது பேசு, பிதற்று.

**claudica'tion**, *n.* நொண்டுதல்.

**clause**, *n.* (இலக்.) தனி எழுவாய் பயனிலையுடைய வாக்கிய உறுப்பு, துணை வாசகம்; சட்ட விதியின் கூறு; உடன்படிக்கை விதியின் கூறு.

**claus'tral**, *a.* துறவி மடத்துக்குரிய; கன்னிமடம் சார்ந்த; குறுகலான; ஒதுக்கிடமான; மூளைக்கோளங்களில் உள்ள சாம்பல் நிறப்பொருளின் மென்படலம் சார்ந்த.

**claustra'tion**, *n.* ஒதுப்புறப்படுத்துதல், ஒதுக்கிடத்தில் தள்ளி அடைத்து வைத்தல்.

**claustrophob'ia**, *n.* ஒதுக்கிடம் என்றாலே அச்சமுண்டாகும் கோளாறு.

**claus'trum**, *n.* மூளைக்கோளங்களில் உள்ள சாம்பல் நிறப் பொருளின் மென்படலம்.

**claus'ular**, *a.* வாக்கியப்பகுதிக்குரிய; விதிமுறை அடங்கிய.

**clav'ate, clav'ated**, *a.* (தாவ.) செண்டு போன்ற, குண்டாந்தடி உருவுடைய.

**clava'tion**, *n.* (தாவ.) தடிபோன்று உருவுள்ள தன்மை; (உள்.) அசையாக்குண்டு குழிப்பொருத்தம்.

**clave**, *v.* cleave[1] என்பதன் முற்கால இறந்தகால வடிவம்; cleave[2] என்பதன் இறந்தகால வடிவங்களுள் ஒன்று.

**clav'ecin**, *n.* இசைக்கருவி வகை, இசைப்பெட்டி வகை.

**clav'ichord**, *n.* இசைப்பெட்டியின் முன்னோடி, இசைக்கருவி வகை.

**clav'icle**, *n.* கழுத்துப்பட்டை எலும்பு.

**clav'icorn**, *n.* வண்டு வகை; *a.* செண்டு வடிவான உணர் இழை உறுப்புக்களையுடைய.

**clavic'ular**, *a.* கழுத்துப்பட்டை எலும்பைச் சார்ந்த.

**clavier'**, *n.* இசைப்பெட்டி வகை; இசைப்பெட்டி வகையின் இசைக் கட்டைப்பகுதி.

**clav'iform**, *a.* செண்டுருவான, குண்டாந்தடி போன்ற வடிவுடைய.

**clav'iger**[1], *n.* தண்டேந்தியவர், செண்டு தாங்கிய வீரர்.

**clav'iger**[2], *n.* திறவுகோல் காப்பவர், கடைகாப்பாளர்.

**clavig'erous**[1], *a.* தண்டேந்திய, செண்டுதாங்கிய.

**clavig'erous**[2], *a.* திறவுகோல் காத்துப் பேணுகிற.

**cla'vis**, *n.* திறவுகோல்; மறைதிறவு, புதைமறை விளக்கக் குறிப்பு; *pl.* cla'ves.

**clav'ulate**, *a.* செண்டுருவின் சாயலுடைய.

**claw**, *n.* விலங்கின் வளை நகம்; பறவையின் கூருகிர்; நண்டின் கொடுக்கு; வண்டு முதலியவற்றின் இடுக்கிக் கால் நுனி; வளைநகம் போன்ற கருவி; (தாவ.) மலரிதழின் குறுகிய அடிப்பகுதி; *v.* நகத்தால் கீறு, பிருண்டு, கிழி, பிள; சுரண்டு; பிடி; பற்றி இழு; முகமன் கூறு, முகப் புகழ்ச்சி செய், நேரடியாகப் புகழ்ந்து பேசு; செல்வமாகக் கொஞ்சு; (கப்.) காற்று முகமாகச் செல்.

**claw'back**, *n.* இச்சகம் பேசிப் பிழைப்பவர், முகமன் வல்லவர்.

**clawed**, *a.* உகிருடைய, வளைநகங்களுடைய; வளைவான இரு பிரிவுகளுள்ள.

**claw'-hammer**, *n.* வார்சுத்தியல், ஆணி பற்றி இழுக்கும் அமைவுடைய சுத்தியல்.

**claw'-hamm'er-coat**, *n.* கருநிற மேல்சட்டையைக் குறிக்கும் ஏளனப்பெயர்.

**claw'less**, *a.* வளைநகமற்ற.

**clay**, *n.* களி, களிமண்; தூய்மையற்ற அலுமினியக் கன்மக் கலவை மண்வகை; மண்; மனித உடல்; புகைக்குழல்; *v.* சர்க்கரை முதலியவற்றைக் களிமண் கொண்டு துப்புரவு செய்; (தொ.) wet one's clay, குடி.

**clay'-cold**, *a.* உயிரற்ற.

**clay'-eater**, *n.* களிமண் தின்னி, பிரேசில் (Brazil) முதலிய நாடுகளில் கொழுப்புள்ள களிமண்ணை மென்றுகொண்டிருக்கும் பழக்கத்திற்கு அடிமையானவர்.

**clayed**, *a.* களிமண் போன்ற.

**clay'ey**, *a.* களிமண்ணுலான; களிமண்ணுல் மூடப்பட்ட; களிமண் போன்ற.

**clay'ish**, *a.* களிமண் இயல்புடைய.

**clay'-marl**, *n.* வெண்ணிறக் களிமண் வகை.

**clay'-mill**, *n.* களிமண் உருவாக்கும் ஆலை.

**claymor'e**, *n.* பண்டைக்கால ஸ்காத்லாந்தில் வழங்கிய இரு புறமும் கூருடைய நீண்ட வாள்.

**clay'-pigeon**, *n.* புரு வடிவுடைய களிமண் எய்குறி.

**clay'-pipe**, *n.* புகை குடிக்கும் மட்குழல், புகைக்குழல்.

**clay'-pit**, *n.* களிமண் தோண்டியதனுல் ஏற்பட்ட குழி.

**clay'-slate**, *n.* திண்ணமான களிமண் பாறை.

**clean**[1], *a.* துப்புரவான; கறைபடியாத, அழுக்குப் போக்கப் பட்ட; உள்ளத் தூய்மையுடைய; களங்கமில்லாத; தவறில்லாத; எழுதப்படாத; தெளிவான; வரையறை செய்யப் பட்ட; முழுமையான; தூண்டில் வகையில் இரைபற்றுத; கதிரியக்கச் சிதறுதல் இல்லாத; *v.* துப்புரவாக்கு, மாசு துடை; மேசை-தட்டம் முதலியவற்றின் மீதிருப்பன அகற்றி வெற்றிடமாக்கு; ஒழுங்குபடுத்து; மெருகேற்று; ஒப்பனை செய்; (தொ.) clean hands, குற்றம் பற்றுநிலை; clean slate, வில்லங்கமற்ற தன்மை; புதுத் தொடக்கம்; show a clean pair of heels, தப்பியோடு.

**clean**[2], *adv.* முழுதும், தீர, ஒட்டற; கலப்பின்றி; வழுவில்லாமல்.

**clean'er**, *n.* தூய்மையாக்குபவர்; தூய்மையாக்கும் பொருள்.

**clean'ing**, *n.* தூய்மையாக்கும் செயல்; *a.* தூய்மையாக்குகின்ற.

**clean'-limbed**, *a.* கட்டமைவுடைய, நேர் ஒழுங்கான, திட்ப நயமுடைய.

**clean'liness**, *n.* உடல் தூய்மை; செயல் துப்புரவு; தூய்மைப் பழக்கவழக்கம்.

**clean'ly**, *a.* தூய்மையான பழக்கமுள்ள; தூய்மைக் கவனமுள்ள; *adv.* தூய்மையான முறையில், துப்புரவாக.

**clean'ness**, *n.* துப்புரவு, தூய்மை.

**cleans'able**, *a.* தூய்மையாக்கப்படத்தக்க.

**cleanse**, *v.* கழுவித் தூய்மையாக்கு; துப்புரவுப்படுத்து; (விவி.) நோய் நீக்கிக் குணப்படுத்து.

**cleans'er**, *n.* தூய்மையாக்குபவர்; தூய்மை செய்யும் பொருள்.

**cleans'ing**, *n.* தூய்மையாக்கும் செயல்.

**clean'-up**, *n.* முழுத்துப்புரவு; தீமை ஒழிப்பு.

**clear**, *a.* தெளிந்த; ஒளி ஊடுருவுகின்ற, பளிங்குபோன்ற; கலங்கலில்லாத, தூசுதும்பற்ற; எளிதான, விளக்கமான, சிக்கலற்ற; சிக்கலுக்கு இடமில்லாத; மங்காத, மறை திரையற்ற; குற்றமற்ற, கறையற்ற; தவறுக்கிடமற்ற; கறைப் படாத; விடுபட்ட; வெட்டவெளியான; இடநெருக்கடியற்ற; தடைப்படாத, தடங்கலற்ற, குந்தகமற்ற; ஈடுபாடற்ற; இடர்ப்பாடற்ற, இடையூறில்லாத; தொடர்பற்ற, அப்பாற் பட்ட; *v.* தெளிவுபடு; தெளிவாக்கு; தடைநீக்கு; வறிதாக்கு, துடைத்தொழி, வெற்றிடமாக்கு; விடுவி; கறைநீக்கு; குற்றமில்லையென்று விளக்கமளி; தாண்டிக் குதி; கடந்து செல்; கடன் வகையில் தீர்; தொழில் வகையில் ஆதாயமாகப்பெறு; (தொ.) clear off, விட்டொழி, விலக்கித்தள்ளு; முடித்துவிடு; கலைந்து சென்றுவிடு; clear out, விலக்கு, ஒழிவு செய், ஒதுக்கித்தள்ளு; (கப்.) துறைமுகத்தைவிட்டு நீங்கு; விலகிச் சென்றுவிடு; clear the air, நிலைமையைத் தெளிவாக்கு, நெருக்கடி நிலையைத் தளர்த்து; clear the way, வழி திறந்துவை; clear up, தெளிவாக்கு; தெளிவாகு; in the clear, ஐயுறவினின்று விலகிய; சிக்கல் நீங்கிய; நிலைய முறிவுக்குரிய நெருக்கடி நிலை கடந்த.

**clear'age**, *n.* பயிரிடுவதற்காக மரம் வெட்டித் திருத்திய நிலப்பகுதி.

**clear'ance**, *n.* தடை ஒழிப்பு; இட ஒழிப்பு, அகற்றுதல், நீக்குதல்; நிலத்திலிருந்து அப்புறப்படுத்துதல்; மரம்வெட்டித் திறந்த வெளியாக்கல்; இடைவெளி; இயங்கும் இயந்திரப் பகுதிகளுள் இரண்டின் இடையில் விடப்படும் இடைவெளி; காசோலை மாற்று மூலமான கணக்குத் தீர்ப்பு; அரசின் அலுவலிலிருந்து விலக இசைவுப்பேறு; சுங்கநிலையத்தில் கப்பல் புறப்பட்டுச் செல்வதற்குரிய இசைவுச்சான்று.

**clear'cole**, *n.* வண்ணந்தீற்றுவதற்கு முன்னீடான முதற் பசை வெள்ளடிப்பு.

**clear'-cut**, *a.* திட்டவட்டமான, தெளிவான.

**clear'-eyed**, *a.* தெளிவான பார்வை உடைய; அறிவுத் தெளிவுடைய.

**clear'-head'ed**, *a.* உணர்வுத் தெளிவுடைய.

**clear'ing**, *n.* அடைசல் அகற்றல்; தடைநீக்கம்; இடஒழிப்பு, காடுவெட்டி வெளியிடம் உண்டுபண்ணுதல்; காடு வெட்டித் திருத்தப்பட்ட நிலம்; பணச்சீட்டு-பணமுறி ஆகியவற்றின் கணக்குத்தீர்வு.

**Clear'ing-House**, *n.* காசோலை-பணச்சீட்டு முதலியவற்றை மாற்றிக் கணக்குத் தீர்வு செய்யும் நிலையம்; இருப்புப்பாதைக் கழகங்கள் அஞ்சற் கூட்டுக்களிடையே கட்டணப் பரிமாற்றக் கணக்குத் தீர்வகம்.

clear'ing-nut, *n.* தேற்றுங்கொட்டை.

clear'ly, *adv.* தெளிவாக; வெளிப்படையாக; எளிதாக; தடையின்றி; ஐயத்துக்கிடமில்லாமல்.

clear'ness, *n.* தெளிவு; மங்கலின்மை; மறைப்பின்மை; ஒளி ஊடுருவும் தன்மை, பளிங்கு இயல்பு; மனத்தெளிவு, அறிவுத் தெளிவு.

clear'-sight'ed, *a.* தெளிவான பார்வையுடைய; அறிவுத் தெளிவுடைய.

clear'-starch'er, *n.* ஆடைவெளுப்பவள், வண்ணகப் பணிப் பெண்.

clear'-starch'ing, *n.* தெளிந்த கஞ்சிப் பசையால் துணிகளை விறைப்பாக்கும் செயல்.

clear'wing, *n.* பளிங்கு போன்ற சிறகுடைய விட்டில் வகை.

cleat, *n.* கப்பல் பாய்மரத்தில் உள்ள ஆப்பு; முளை.

cleav'age, *n.* பிளத்தல்; பிளவு; வேறுபாடு, மனவேறுபாடு; பிரிவினை.

cleave[1], *v.* பிரி, பிள; பிளவுறு; வல்லந்தமாகப் பிரி; கிழித்துச்செல்; ஊடுருவு; துளை; வெட்டு, துண்டுபடுத்து.

cleave[2], *v.* ஒட்டிக்கொள், விடாதுபற்று, தொற்றிக்கொள்.

cleav'er, *n.* இறைச்சிக்கடைக்காரனின் வெட்டுக்கத்தி; பிளப்பவர்; பிளப்பது; பிரிப்பவர்; பிரிப்பது.

cleav'ers, *n.* ஒட்டுப்புல், துணியில் ஒட்டிக்கொள்ளும் கொடி வகை.

clech'e, *a.* (கட்.) முழுதும் உட்குடைந்து ஒடுங்கிய வரம்புடையதாயமைந்த.

cleek, *n.* இரும்புத்தலைப்புடைய குழிப்பந்தாட்டத் தடி.

clef, *n.* இசையொலியின் அதிர்வெல்லையைக் குறிக்கும் மூன்று அடையாளங்களுள் ஒன்று.

cleft[1], *n.* பிளவு, வெடிப்பு.

cleft[2], *v.* cleave[1] என்பதன் இறந்தகால வடிவங்களில் ஒன்று; முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

cleg, *n.* உண்ணி வகை, குதிரை ஈ.

cleistogam'ic, *a.* (தாவ.) திறவாத் தற்கருப் பொலிவுடைய, நிலையாக முடியபடியேயிருந்து தானே கருப்பொலிவுறும் இயல்புகொண்ட.

cleistogam'y, *n.* திறவாமலே தற்கருப்பொலிவுறுதல்.

clei'thral, *a.* முழுதும் மோடு இட்ட, முற்றிலும் கூரை கவிந்த.

clem, *v.* பட்டினிபோடு, பட்டினிகிட.

clem'atis, *n.* தழுவியேறும் கொடிவகை.

clem'ency, *n.* அருளிரக்கம், தயவு; எளிதிற் பிழைபொறுக்கும் தன்மை; மட்டியல்பு, மென்னயப்பு.

clem'ent, *a.* அருளிரக்கமுடைய; இன்னமைதியுடைய.

clench, *n.* விடாப்பிடி, இறுகுபிடி; தீர்முடிவு; முடிவுத் தீர்வு; *v.* கைவிரல்களை இறுக்கிமூடு; பற்களை அழுத்திமூடு; இறுகப் பற்று, இறுக்கிப்பிடி; ஆணி முதலியவற்றின் முளையைப் பக்கவாட்டில் மடக்கியடிப்பதன்மூலம் பிடியிறுக்கு; வாதத்துக்குத் தீர்வான முடிவுகொடு, வலியுறுத்தி முடிவுசெய்; (கப்.) தனி முடிச்சால் கயிற்றின் கட்டிறுக்கு.

clen'cher, *n.*=clincher.

Cleopat'ra's nee'dle, *n.* லண்டனிலுள்ள தேம்ஸ் (Thames) ஆற்றோரத்தில் அமைக்கப்பட்டிருக்கும் எகிப்திய தூபி.

clep'sydra, *n.* பழங்கால நீர்வட்டில் நாழிகைப்பொறி.

clere'story, *n.* திருக்கோயில் சாய்விறக்கிற்கு மேலுள்ள பலகணி வரிசையுடைய மதிற்பகுதி.

cler'gy, *n.* திருச்சபைக் குருமார் தொகுதி; சமய குருமார் மரபு.

cler'gyman, *n.* திருச்சபைச் சமயகுரு, நிலைபெற்ற திருச்சபை அமர்வு பெற்ற திருக்கோயிற்குரு.

cler'gywoman, *n.* திருச்சபைப் பெண்குரு.

cle'ric, *n.* திருச்சபைக்குரு; *a.* திருச்சபைக் குருமரபுக்குரிய; எழுத்தாயருக்குரிய.

cle'rical, *n.* அரசியல் மன்றக் கட்சி வகையினர்; *a.* திருச்சபைக் குருமரபைச் சார்ந்த; எழுத்தாயரைச் சார்ந்த.

cler'icals, *n. pl.* திருச்சபைக் குருமரபினர் உடை.

cler'icate, *n.* திருச்சபைச் சமயகுருவின் பதவி.

cleric'ity, *n.* திருச்சபைச் சமயகுருவின் நிலை.

cle'rihew, *n.* நகைச்சுவையுள்ள துணுக்குப்பாட்டு.

cler'isy, *n.* கற்றோர் குழு.

clerk, *n.* எழுத்தாயர்; பணிமனைத் துணைவர்; பொருளகப் பணியாளர்; படியெடுப்பாளர்; அலுவலகக் கடிதப்போக்குவரவு வரைவாளர்; கணக்கர்; வாணிகச் செயலர், பதிவக அலுவலர்; நகரவைப் பணியாளர்; திருக்கோயில் சமயச் சார்பற்ற பல்பணி முதல்வர்; கற்றோர்; கல்வியறிவுடையவர், புலவர்; திருக்கோயில் சமயகுரு; *v.* எழுத்தராகப் பணிபுரி; (தொ.) clerk of the works, கட்டிடவேலை ஊழியர் மேற்பார்வையாளர்.

clerk'ess, *n.* பெண் எழுத்தர்.

clerk'ish, *a.* எழுத்தாயரின் இயல்புடைய, எழுத்தாளர் போன்ற.

clerk'less, *a.* அறியாமையுள்ள; படிப்பில்லாத.

clerk'-like, *a.* புலமை சான்ற.

cler'omancy, *n.* திருவுளச் சீட்டின் மூலம் வருவதுணர்த்தல்.

cleve, *n.* செங்குத்தான பாறை; குன்றுசூழ் பகுதி.

clev'er, *a.* திறமையுள்ள; கைத்திறம் வாய்ந்த; தேர்ச்சித் திறனுள்ள; சூழ்ச்சி நயம் வாய்ந்த.

clev'erness, *n.* கைத்திறமை; சூழ்ச்சிநயம், மதியுடைமை, செயல்திறம்.

clev'is, *n.* கயிறு கப்பி இணைப்பதற்காக விட்டத்தில் பொருத்தப்பட்டுள்ள இருப்பு வளைகம்பி.

clew, *n.* நூற்கண்டு, பந்தாகக் கட்டப்பட்டுள்ள நூல் திரள்; பழங்கதைகளில் திருகு நெறிகளில் வழிகாட்ட உதவும் கண்டு நூல்; புரியாத மறை செய்தியை விளக்கும் குறிப்பு; கப்பற் பாய் மூலைப்பகுதி, பாய்மர மூலை; கருத்து, எண்ணம்; (கப்.) வலைப்படுக்கையைக் கட்டும் சிறு கயிறு; *v.* நூலைப் பந்துபோல் சுருட்டு; பாய் நுனியை இழுத்துக்கட்டு.

cliche, (பிர.) *n.* வார்ப்புரு, நிலையச்சுப்பதிவுரு; மின்படிப் பெருக்க முறையின் படிவுரு; வழங்கி அடிபட்ட சொற்றொடர், வெறுஞ்சொல் துணுக்கு.

click[1], *n.* 'கிளிக்' என்ற ஒலி; 'கிளிக்' எழுவதற்குக் காரணமாகும் இயந்திரப்பகுதி; குதிரை முன்கால் இலாடமும் பின்கால் இலாடமும் இடித்துக்கொள்ளும் கோளாறு; தென்னாப்பிரிக்க மொழியில் நாவை அண்ணத்தில் அழுத்தித் திடுமெனப் பின்வாங்குவதால் ஏற்படும் ஒலி; கொண்டி, தாழ்ப்பாள்; *v.* 'கிளிக்' என்னும் ஓசை எழுப்பு.

click[2], *v.* ஒத்துறவாடு; காதலில் இழைந்து ஒன்றுபடு.

click'-bee'tle, *n.* சடக்கென்ற அரவத்துடன் குதிக்கும் இயல்புடைய விட்டில் வகை.

click'-clack, *n.* இடைவிடா அரவம்.

click'er, *n.* அச்சுக் கோக்கும் படிவங்களைப் பகிர்ந்தளிக்கும் பணியர்; மிதியடித் தோல்களை வெட்டுபவர்.

click'et, *n.* தாழ்ப்பாள்; *v.* 'கிளிக்' என்ற ஒலி செய்.

cli'ent, *n.* கட்சிக்காரர்; வாடிக்கைக்காரர்; சார்ந்திருக்கிறவர்.

cli'entage, *n.* வாடிக்கை, வாடிக்கைக்காரரின் தொகுதி; முகவருடன் கட்சிக்காரருக்குரிய தொடர்பு.

client'al, *a.* வாடிக்கை சார்ந்த; கட்சிக்காரர் தொடர்பான.

cli'entele, *n.* தொடர்சுற்றம், பரிவாரம்; வாடிக்கைக்குழு; சார்பாளர் தொகுதி; பின்பற்றுபவர் குழாம்.

cliff, *n.* கொடும்பாறை, செங்குத்தான பாறை; மலையின் செங்குத்தான பகுதி; கடல் கவிந்து நோக்கும் செங்குத்தான பாறை.

**cliff'-hanger,** *n.* சிலிர்ப்பு ஊட்டும் திடீர் இடர்நிகழ்ச்சிகள் நிரம்பிய புதுமைக்கதை, திடுக்கிடச்செய்யும் உணர்ச்சி கொண்ட புதினம்; வாசகரை ஊசலாட்டத்தில் கொண்டு நிறுத்தும் முடிவு கட்டம், உணர்ச்சி கிளறிவிடும் கடைசிவரி.

**cliffs'man,** *n.* மலையேறி, பாறைகளில் ஏறுவதில் திறமையுடையவர்.

**clift,** *n.*=cliff.

**clift'ed, clift'y,** *a.* கொடும் பாறைகளாகப் பிளவுற்ற.

**climac'teric,** *n.* வாழ்க்கையின் முக்கிய திருப்புக் கட்டம், உடல் மாறுதல் ஏற்படுவதாகக் கருதப்படும் நெருக்கடிக் கண்டம்; *a.* நெருக்கடி நிலைமையான 45-60 வயதுகளுக்கு இடைப்பட்ட தளர்ச்சிமிக்க பருவத்தில் நிகழ்கிற; (தொ.) grand climacteric, மனித வாழ்க்கையில் நெருக்கடியான 63-ஆவது ஆண்டு.

**climact'ic, climact'ical,** *a.* உணர்ச்சி ஏற்றமுடைய, உணர்ச்சி முகடுசார்ந்த.

**cli'matal, climat'ic, climat'ical,** *a.* தட்பவெப்பநிலை சார்ந்த, சூழமைதிக்குரிய.

**clim'ate,** *n.* தட்பவெப்பநிலை; காலப்போக்கு; சமுதாயச் சூழ்நிலை அமைதி; காலச் சூழ்நிலை அமைதி; பண்பமைதி; (தொ.) climate of opinion, கருத்தமைதிநிலை, ஆய்வு நிலை அமைதி.

**cli'matise,** *v.*=acclimatise.

**climatog'raphy,** *n.* தட்பவெப்ப நிலைகளின் விரிவு விளக்கம்.

**climatol'ogy,** *n.* தட்பவெப்ப நிலைநூல், தட்பவெப்பநிலையின் காரணகாரியத் தொடர்புபற்றிய ஆராய்ச்சித்துறை.

**cli'max,** *n.* ஏறணி, உணர்ச்சி ஏற்றம், நுகர்பவர் உணர்ச்சியைப் படிப்படியாக உயர்த்தும் கலைப்பண்புநயம்; உணர்ச்சி முகடு; *v.* உணர்ச்சியைப் படிப்படியாக ஏற்றிச்செல், உச்சிக்குக் கொண்டுசெல்; படிப்படியாக உயர்ந்துசெல்.

**climb,** *n.* ஏற்றம்; ஏறுதல்; ஏறும் முயற்சி; ஏறவேண்டிய இடம்; *v.* ஏறு; தவழ்ந்தேறு; தாவியேறு; மீதேறு; மேற்செல், உயர்ந்துசெல்; (தொ.) climb down, தோல்வி, நோக்கம் கைவிடுதல்; இறங்கு; பின்வாங்கு; விட்டுக்கொடு; climb up, மேலே செல்.

**cli'mber,** *n.* ஏறுபவர், ஏறிச்செல்பவர்; சமுதாயத்தில் தன் முன்னேற்றங் குறிக்கொண்டவர்; ஏறிச்செல்வது; தழுவு கொடி; ஏறுவதற்கு வாய்ப்பாகக் காலில் முன்னிரண்டு விரல்களையுடைய பறவை வகை.

**climb'ing-iron,** *n.* மரத்தின்மீதோ பனிச்சரிவின்மீதோ ஏறும்போது மிதியடியுடன் இணைக்கப்படத்தக்க கம்பிமுள் அமைவு.

**clime,** *n.* (செய்.) நாடு, தேசம், பல்வேறு தட்பவெப்ப நிலையுடைய நிலப்பரப்பு.

**clina'men,** *n.* சாய்வு, மனக்கோட்டம், மனச்சார்பு, இயற்கை விருப்பப்போக்கு.

**clinch,** *n.* விடாப்பிடி; தீர்முடிவு; முடிவுத்தீர்வு; *v.* ஆணியை அடித்து மடக்கி இறுக்கு; வாதத்துக்குத் தீர்வான முடிவுகொடு, வலியுறுத்தி முடிவுசெய்; (கப்.) தனி முடிச்சால் கயிற்றின் கட்டிறுக்கு; குத்துச்சண்டையில் கை ஓங்க முடியாத அளவில் நெருங்கிப்பிடி.

**clin'cher,** *n.* பற்றிப்பிடிப்பவர்; வலியுறுத்துபவர்; வலியுறுத்தும் முடிவு, தீர்முடிவு.

**clinch'er-built,** *a.*=clinker-built.

**clinch'er-work,** *n.* கப்பலின் பக்கத்தில் கீழிருந்து ஒன்றன் மீதொன்றான பலகைகளின் மேற்கவிவு அமைவு.

**cling,** *n.* ஒட்டுதல், சார்பு; *v.* பற்றிக்கொள், விடாது ஒட்டிக்கொள்; பற்றி உறுதியாயிரு; கொள்கை கடைப்பிடித்து நில்; மரம் உட்சுருங்கு.

**cling'stone,** *n.* சதை கொட்டையுடன் ஒட்டிக்கொள்ளும் இயல்புடைய பழவகை; *a.* கொட்டையுடன் சதை உறுதியாக ஒட்டிக்கொள்ளப்பெற்ற.

**cling'y,** *a.* ஒட்டிக்கொள்கிற.

**clin'ic,** *n.* மருத்துவப் பயிற்சிப் போதனைச்சாலை, நோயாளிகள் படுக்கை அருகிலேயே மருத்துவத்துறை அல்லது அறுவைத் துறைக்குரிய பயிற்சி போதிக்கும் வகுப்பு அல்லது நிலையம்; படுக்கை மருத்துவப் பயிற்சிப்போதனை; தனி மருத்துவமனை, பண்டுவமனை; வெளியுதவி மருத்துவ ஊழியர்மனை; படுக்கை சார்ந்த நோயாளி; தனித்துறை வல்லுநர் குழுக்கூட்டம்; குறுகியகாலச் செறிபயிற்சித் திட்டம்; *a.* நோய்ப்படுக்கை சார்ந்த.

**clin'ical,** *a.* நோய்ப்படுக்கைத் தொடர்புடைய; படுக்கை மருத்துவப் பயிற்சியைச் சார்ந்த; (தொ.) clinical baptism, நோய்ப்படுக்கையாளர்க்கு இறப்பின்முன் அளிக்கப்படும் கிறித்தவ சமயத்தீக்கை; clinical convert, நோய்ப்படுக்கையில் சமயம் மாற்றப்பட்டவர்; clinical lecture, நோயாளிப் படுக்கையருகில் செய்யப்படும் சொற்பொழிவு; clinical medicine, படுக்கை மருத்துவச்சாலையில் கற்பிக்கப்படும் மருத்துவமுறை; clinical surgery, படுக்கை மருத்துவச் சாலையில் கற்பிக்கப்படும் அறுவைமுறை; clinical thermometer, நோயாளிகளின் தட்பவெப்பநிலையை அறியப் பயன்படும் வெப்பமானி.

**clink**[1], *n.* 'கண்கண்' என்ற ஒலி, உலோகம் அல்லது கண்ணாடியில் கொட்டினுல் ஏற்படும் ஒலி; *v.* 'கண்கண்' என்ற ஓசை எழுப்பு; 'கண்கண்' என ஒலி; 'கண்கண்' என்ற ஒலியுடன் இயங்கு.

**clink**[2], *v.* பற்றிப்பிடி; ஆணியை மடக்கி அடித்து இறுக்கு.

**clink'er**[1], *n.* 'கண்கண்' என்று ஒலிப்பது; கடும்பதமான செங்கல்; கடுஞ்சூட்டினுல் மேற்பரப்பு மணிப்பதமாக்கப்பெற்ற செங்கல்; சிவக்கக் காய்ச்சிய இரும்பைச் சம்மட்டியால் அடிப்பதால் கிடைக்கும் கரிய இரும்பு உயிரகைக் கட்டி; கொல்லுலைச் சாம்பற் கட்டி; எரிமலைக் குழம்பின் கரிய ஓடு; பெருஞ்சூட்டினுல் திண்ணிதாக்கப்பெற்ற செங்கல் திரள்; எரிமலைக் குழம்பின் இறுகிய கற்குழம்பின் தொகுதி.

**clink'er**[2], *n.* போற்றத்தக்க ஒன்று, இனத்திற் சிறந்தது.

**clink'er-built,** *a.* (கப்.) கீழுள்ள பலகைகள் மேற்கவிந்து கட்டப்பட்டிருக்கும் பலகைகளாலான.

**clink'-stone,** *n.* 'கண்கண்' என்று ஒலிக்கும் பாறை வகை.

**cli'nochlore,** *n.* பச்சை நிறக் கனிப்பொருள் வகை.

**clinom'eter,** *n.* தளச்சாய்வுமானி, சாய்வு அளக்கும் கருவி.

**Cli'o**[1], *n.* கிரேக்க புராண மரபில் வரலாற்றுக்கலைத்தெய்வம்.

**Cli'o**[2], *n.* சிறகுபோல் விரிந்த சினைகளால் நீந்துகிற ஓடில்லாத நீர்வாழ் இப்பி வகை.

**clip**[1], *n.* கத்திரிப்பு, கத்திரியால் வெட்டுதல்; கத்திரித்த துண்டு; கத்திரிக்கப்பட்ட கம்பளி அளவு; உறைக்கும் அடி; சாட்டை வீச்சு; *v.* கத்திரி, கத்திரியால் வெட்டு; துண்டு படுத்து; மயிர் செடி ஆகியவற்றின் நுனி கத்திரித்து ஒழுங்கு செய்; பயன்படுத்திவிட்டதற்கறிகுறியாகப் பயணச்சீட்டு முனை வெட்டிக்கொடு; ஓரத்தைச் சீவு, நுனி குறை, சுருக்கு; தெளிவில்லாது சுருங்கப் பேசு; விரைவாகச் செல்; (தொ.) clip coin, நாணயத்தின் ஓரத்தைச்சீவு, வெட்டு; clip the wings, இறக்கைகளின் இறகுகளை வெட்டிப் பறப்பதைத் தடு; பேராவல் தடு; மேலேறும் வாய்ப்புக்களைக் கெடு.

**clip**[2], *n.* பற்றுகருவி; பிடிப்பு ஊக்கு; ஆடைமீது செருகி வைக்கும் இணைப்பு ஊக்கு; வெடிமருந்துக் கலங்களின் தொகுதி; *v.* சூழ்; பற்று.

**clip'-hook,** *n.* இடுக்கி இணைகொக்கி.

**clipp'er,** *n.* வெட்டுபவர், கத்திரிப்பவர்; கத்திரிக்கும் கருவி; விரைந்தியங்குவது; விரைபரி; வேகக்கப்பல்; மாகடல் கடக்கும் விரைவு விமானம்; முன்புறம் முன் உந்தியும் பாய்மரம் பின்சாய்ந்தும் உள்ள பாய்க்கப்பல் வகை.

**clipp'ing,** *n.* வெட்டல்; நுனி கத்திரித்தல்; நாணய விளிம்பு வெட்டு; வெட்டப்பட்ட துண்டு; பத்திரிகைத் துணுக்கு; *a.* மிகச் சிறந்த; மிகவிரைவாகச் செல்கிற.

**clique**, *n.* தனிக்குழு, சிறு குழு, கும்பு ; தன்னலக்குழு, குழுவினுள்ளிருந்துகொண்டு தனி நலங்களுக்காகத் தனிச் செயலாற்றும் சிறு உட்குழு.

**cli'quish**, *a.* தன்னலக்குழுவைச் சார்ந்த, குறுகிய குழு நல மனப்பான்மையுள்ள.

**cli'quism**, *n.* சிறுகுழு அமைக்கும் போக்கு, உட்குழுவம், தன்னலக்குழுவின் சார்பு.

**clitell'ar**, *a.* புழுக்கூட்டிழையினை உருவாக்கும் புழுவின் சுரப்பி வளையம் சார்ந்த.

**clitell'um**, *n.* புழுக்கூட்டிழையினை உருவாக்கும் புழுவின் சுரப்பி வளைய அமைப்பு ; *pl.* clitell'a.

**cli'thral**, *a.*=cleithral.

**clit'oris**, *n.* மகளிர் கந்து.

**clit'ter**, *v.* கடகடவென்ற உரத்த ஒலி எழுப்பு ; கடகட ஒலி எழுப்புவி.

**clitt'er-clatt'er**, *n.* வம்பளப்பு, சோம்பேறிப்பேச்சு.

**cliv'ers**, *n.*=cleavers.

*cloa'ca*, (ல.) *n.* பறவைகள்-ஊர்வன முதலியவற்றின் முடைநாற்ற உடலிடுக்குப் பகுதி; தீமை தேங்கிடம், கயமைச் செறிவு ; *pl. cloa'cae.*

**cloa'cal**, *n.* முடைசெறிந்த ; கயமையின் செறிவிடம் சார்ந்த, கயமை செறிந்த.

**cloak**, *n.* தளர் மேலுடுப்பு, தளர்ச்சியான மேலங்கி; மேற்போர்வை ; மறைக்கும் பொருள் ; உருமாற்றம் ; பொய்க்காரணம், சாக்குப்போக்கு, தலைக்கீடு, போலித்தனம், பகட்டு ; *v.* மேலங்கி அணிவி ; மூடு, மறை ; உரு மாற்று.

**cloak'-and-dagg'er**, *a.* சூழ்ச்சி சதித்திட்டங்களின் தொடர்புடைய.

**cloak'-and-sword'**, *a.* போருடனும் புத்தார்வ வீரக்காதலுடனும் தொடர்புடைய.

**cloak'-room**, *n.* மேல் சட்டை-தொப்பி முதலியவற்றை வைப்பதற்கான அறை ; பயண மூட்டைகளை வைப்பதற்கான புகைவண்டி நிலைய அலுவலக அறை.

**cloam**, *n.* மட்கலம், களிமண் பாண்டம் ; *a.* களிமண்ணுலான.

**clobb'er**, *n.* தோற்கீறலை மறைக்கச் செம்மான் பயன்படுத்தும் பசைப் பொருள்.

*cloche*, (பிர.) *n.* மணிவடிவான மகளிர் தொப்பி ; செடிகளைப் பாதுகாக்கும் கண்ணாடி மூடி.

**clock**[1], *n.* மணிப்பொறி, மணியடிக்கும் கடிகாரம், காலக் கணிப்புப் பொறி ; *v.* மணிப்பொறியினால் காலக் கணக்கிடு ; பதிவு மணிப்பொறியால் கால நுட்பத்தை அறுதியிடு ; பந்தய வினையை வரையறைக் காலத்தினுள் செய்துமுடி ; (தொ.) clock in, வருகிற நேரத்தைப் பதிவு செய் ; clock off, வேலை விட்ட நேரத்தைப் பதிவு செய் ; clock on, வேலை தொடங்கு நேரத்தைப் பதிவு செய் ; clock out, செல்கிற காலத்தைப் பதிவு செய் ; know what o'clock it is, முழுவிழிப்பாய் இரு ; உள்ள நிலையை அறி ; 'o clock (=of clock),...மணிக்கு, கடிகாரப்படி......மணிக்கு.

**clock**[2], *n.* அடைகாக்கும் பெட்டைக்கோழியின் கூவல் ; *v.* அடைகா.

**clock**[3], *n.* காலுறை விளிம்பில் பட்டினால் புனையப்படும் துன்னல் ஒப்பனை.

**clocked**, *a.* காலுறை வகையில் விளிம்புத்துன்னல் ஒப்பனை செய்யப்பட்ட.

**clock'er**, *n.* அடைகாத்துக்கூவும் பெட்டைக்கோழி.

**clock'-golf**, *n.* மணிப்பொறி வடிவில் அமைந்த நிலச் சட்டத்தின் மீது ஆடப்படும் குழிப்பந்தாட்ட வகை.

**clock'wise**, *a.* வலஞ்சுழித்த ; *adv.* கடிகார முள் செல்லும் திசையில், வலஞ்சுழித்து, இடமிருந்து வலம் செல்வதாக.

**clock'work**, *n.* கடிகாரத்தின் பொறியமைப்பு ; மணிப்பொறி போன்று தானாகவே ஒழுங்காக இயங்கும் இயந்திர அமைப்பு ; *a.* தானாகவே ஒழுங்குபட இயங்குகிற.

**clod**, *n.* மண்ணாங்கட்டி ; மண்கட்டி, புல்கரண் ; திரள்கட்டி ; நிலம், தரை ; நிலக்கரிச்சுரங்கத்தின் எரிதாங்கு கடுங்களிப் படுகை ; மனித உடல் ; அறிவிலி, மூடன் ; எருதின் சொர சொரப்பான கழுத்துப் பகுதியின் இறைச்சி ; *v.* எறி, வீசு, மண்ணாங்கட்டியால் எறி ; (தொ.) the clod, மண் ; நிலம் ; உயிர்க்கூறில்லாத பருப்பொருள்.

**clodd'ish**, *a.* மண்ணாங்கட்டி போன்ற, மண்ணின் தன்மையுடைய.

**clodd'y**, *a.* மண்ணாங்கட்டி செறிந்த ; மண்ணாலான.

**clod'hopper**, *n.* நாட்டுப்புறத்தான் ; பாங்கறியாதவன் ; அறிவிலி ; வேளாளன்.

**clodhopp'ing**, *a.* முரட்டுத்தனமான, நாகரிகமில்லாத, காட்டுத் தன்மையுள்ள.

**clod'pate, clod'pole, clod'poll**, *n.* பேதை, அறிவிலி.

**cloff**[1], *n.* பிளவு.

**cloff**[2], *n.* மொத்த வாணிகத்தில் வாங்குபவர்க்குரிய தள்ளிக் கணிப்புச்சலுகை.

**clog**, *n.* மரக்கட்டை ; காற்கட்டு ; முட்டுக்கட்டை, தடை, தடங்கல் ; சதுப்புநில மீது நடப்பதற்குரிய கட்டையாலான பெண்டிர் புறமிதியடி ; உலோக விளிம்புடைய கட்டை மிதியடி ; *v.* கட்டைகட்டிவிடு ; முட்டுக்கட்டையிடு ; தடு, தடங்கலிடு ; பளுவினால் இயக்கம் தடு ; திணித்துவை, திணித்துத் திணறவை ; ஒட்டும் பொருள் மூலம் திக்கு முக்காட்டு ; ஒட்டுப்பொருளால் இயக்கம் தடைபடு ; ஒட்டுப் பொருளால் இயக்கம் கெடப்பெறு ; மிதியடியின் அடியில் கட்டையிடு.

**clog'-dance**, *n.* கட்டை மிதியடியின் தாளத்துக்கியைய ஆடும் நடனவகை.

**clogged**, *a.* தடங்கலுக்கு இடமான, தடுப்புக்கு ஆளான.

**clogg'er**, *n.* புறமிதியடிக்கட்டை செய்பவர்.

**clogg'y**, *a.* கட்டிகள் நிரம்பிய, முடிச்சுக்களுள்ள ; ஒட்டிக் கொள்கிற.

**cloi'son**, *n.* இழைப்பட்டைகளைப் பிரித்துக் காட்டும் இடையீடு.

**cloisonnag'e**, *n.* பட்டையிட்ட மெருகு வேலை ; மெருகுப் பட்டை முறை.

*cloisonne enamel*, (பிர.) *n.* உலோக வரைக்கட்டிடங்களில் இடப்படும் பட்டை மெருகுவேலை.

**clois'ter**, *n.* துறவுக்கன்னியர் மாடம், துறவுமடம் ; துறவு மடத்தின் பாதுகாப்பான மூடுபாதை ; சமயவாழ்வுக்கான காப்பிடம் ; ஒதுக்குப்புறமான இடம் ; வளைவு, சுற்றி வேயப் பட்ட இடம் ; துறவு வாழ்க்கை ; *v.* மடத்தில் அடைத்துவை ; மதிலகத்தே கட்டுப்படுத்தி வை.

**clois'tered**, *a.* மடத்தில் வாழ்கின்ற.

**clois'tral**, *a.* மடத்தைச் சேர்ந்த, மடத்தோடு தொடர்புடைய ; ஒதுக்கமான.

**cloke**, *n.*=cloak.

**clomb**, *v.* climb என்பதன் முற்கால இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**clon'al**, *a.* பால்படு பிறப்புடைய ஒரே விதையிலிருந்து பால்படாது பிறந்த செடித்தொகுதி சார்ந்த.

**clone**, *n.* (உயி.) பால்படப்பிறந்த ஒரே விதையிலிருந்து பால்படாது பிறந்த செடிகளின் முழுத்தொகுதி.

**clon'us**, *n.* மாறிமாறிச் சுருக்கமும் தளர்வுமாக வரும் தசைத் துடிப்பு.

**cloop**, *n.* தக்கையை இழுத்துத் திறப்பதால் உண்டாகும் ஓசை ; *v.* தக்கை திறப்பதால் ஏற்படும் ஓசை உண்டுபண்ணு.

**clop**, *n.* சடார் ஒலி, குதிரைக்குளம்படி ஓசை; *v.* சடாரொலியுடன் செல்; சடார் ஒலியுடன் செலுத்து; *adv.* சடாரொலியுடன்.

**close**[1], *n.* அடைப்பு, வளைவு, தனி எல்லை; வேலியிடப்பட்ட விளைநிலம்; குறுகிய தெரு; தலைமைத் திருக்கோயிலின் சுற்றெல்லை; பள்ளிக்கூட விளையாட்டு வெளி; *a.* அடைக்கப்புட்ட; திறப்பில்லாத; காற்று வெளிச்சமில்லாத; திக்கு முக்காடுகிற; குறுகிய; கடுஞ்சிக்கனமான; அண்மையர்ன; அணிமைக்காலத்துக்குரிய; நெருங்கிய; அடக்கமான, இறுக்கமான; நெருக்கமான; மறைக்கப்பட்ட, தனிமறைவான; புதைமறைவான; ஒதுங்கிய; (ஒலி.) உயிர் ஒலிகளில் உதடுகள் குவித்து ஒலிக்கப்படுவதான; *adv.* நெருக்கமாக, நெருங்கி; இறுக்கமாக; அண்மையில்; அடர்த்தியாக; மறைவாக; (தொ.) close corporation, உறுப்பினர் இடங்களை வெளியார் தலையீடின்றி நிறைவு செய்துகொள்ளும் கூட்டுக்கழகம்; close season, close time, சட்டப்படி பறவைகளையும் மீன்களையும் பிடிப்பது தடை செய்யப்பட்ட காலம்; close tennis, வரிப்பந்தாட்டம்.

**close**[2], *n.* முடிவு; முடிவுநேரம்; முடியும் வகை; நிறுத்தம்; இடை நிறுத்தம்; தளர் சந்தம்; இணைப்பிடம், சந்திப்பிடம்; நெருங்கிய போராட்டம்; *v.* மூடு, அடை; வேலைமுற்றுவி, முடி, முடிவுசெய்; சூழ், அடைத்துவை; வேலை நிறுத்திவை; நெருக்கு; நெருங்கு; நெருக்கிப்போட்டியிடு; எல்லையாயிரு; அணுக்கமாகு; ஆர்வ இசைவு தெரிவி; (தொ.) close a bargain, ஒப்பந்தம் முற்றுவி, உடன்பாட்டுக்கு வந்தமை; close down, வேலைநிறுத்து, செயலற்று நில்; கடையை மூடு; close in upon, சூழ்ந்து நெருக்கு; close with, இணங்கு, பற்று, இறுக்கிப்பிடி.

**close'-ban'ded**, *a.* நெருக்கமாக இணைக்கப்பட்ட.

**close'-barred**, *a.* இறுக்கமாக மூடப்பட்ட.

**close'-bod'ied**, *a.* உடலோடு பொருந்திய, உடம்புடன் ஒட்டிஞற்போல.

**closed**, *a.* அடைத்த; முடிவுற்ற; கட்டுப்படுத்தப்பட்ட; தடை செய்யப்பட்ட; (தொ.) closed circuit, வரையறுக்கப்பட்ட பார்வையாளர்களுக்கு மட்டும் உரிய தொலைக்காட்சி முறை; closed shop, பொதுவான தொழிற்சங்க உறுப்பினர்கள் மட்டும் வேலைக்கு ஏற்றுக்கொள்ளப்படும் நிறுவனம்; தனித் தொழிற்சங்க உறுப்பினர் மட்டும் ஏற்றுக்கொள்ளப்படும் நிலையம்; நிறுவனங்களில் தொழிற்சங்க உறுப்பினர் மட்டும் ஏற்றுக்கொள்ளப்படும் கட்டுப்பாடு; தொழிற்சங்கங்களால் ஒதுக்கிவைக்கப்பட்ட நிறுவனம்; closed syllable, சொல்லில் மெய்யெழுத்தை இறுதியாகக் கொண்ட அசை; with closed doors, தனியடக்கமான முறையில், வெளியார் விலக்கப்பட்ட நிலையில்.

**close'-fist'ed, close'-hand'ed**, *a.* கஞ்சத்தனமான, பேராசையுள்ள.

**close'-grained**, *a.* நெருக்கமாக இணைக்கப்பட்ட; அடர்த்தியான.

**close'-hauled**, *a.* காற்றுவாட்டத்தில் கப்பல் புறப்பட ஆயத்தமாயுள்ள.

**close'ly**, *adv.* கட்டுப்பாடாக; கவனமாக, உன்னிப்பாக; அணுக்கமுடன்; மறைவடக்கமாக.

**close'ness**, *n.* நெருக்கம்; அடர்த்தி; ஒடுக்கம்; தனி ஒதுக்கம், தொடர்பின்மை; மறைவடக்கம்; அணிமை.

**clos'er**, *n.* முடிவு செய்பவர்; முடிவாக்கும் பொருள்; செங்கல் அமைப்பின் முடிவை நிறைவு செய்யும் செங்கல் பகுதி.

**close'-reef'ed**, *a.* கப்பற்பாயின் மடிப்புக்கயிறுகள் ஒருங்கே உள்வாங்கப்பட்ட.

**close'-stool**, *n.* பெட்டியில் அடைக்கப்பட்ட கழிப்புக்கலம்.

**clos'et**, *n.* சிறு தனியறை; ஒதுக்கிடம்; அறையில் தனி அடைப்பிடம்; மறைவிடம்; கழிப்பிடம்; அரசனுடைய தனிப் பேட்டி அறை; தனி வழிபாட்டு அறை; *v.* தனி அறையில் இட்டடை; தனி அறைக்கு இட்டுச்செல்; மறை, மூடு.

**clos'et-drama, clos'et-play**, *n.* அறையிலிருந்து வாசிப்பதற்குரிய நாடகம்.

**clos'et-strat'egist**, *n.* போர்முறை வாய்க்கோட்பாட்டாளர்.

**close'-up**, *n.* மிக அருகிலிருந்து எடுக்கப்பட்ட முனைப்புருவ நிழற்படம் அல்லது திரைப்படம்; நுணுகிய விளக்க ஆராய்ச்சி.

**clos'ing**, *n.* சூழ்வு; மூடுதல், முடிவாதல்; உடன்பாடு.

**clo'sure**, *n.* முடிவுசெய்தல்; மூடுதல், முடிவு; சட்டசபை வாதத்தை அதனுடைய தீர்மானத்தின்படி நிறுத்திவிடுதல், வாத நிறுத்தத் தீர்மானம்; *v.* வாத நிறுத்தத் தீர்மானத்தைச் செயற்படுத்து.

**clot**, *n.* உறைகுருதி; உறைகட்டி; பேதை, அறிவிலி; *v.* குருதி உறை; கெட்டிப்படு; (தொ.) clotted cream, கட்டிப்பாலாடை, பாலாடைக் கட்டியால் செய்யும் தின்பண்டம்.

**cloth**, *n.* துணி, துகில்; நெய்யப்பட்ட துண்டு; அழுத்தக் கம்பிளி அறுவை; துணிச்சீட்டி; ஆடை, உடை; பணியுடை; சமயநிலையுடை; மேசை விரிப்புத் துணி; கப்பல்பாய் இரட்டு; நாடக அரங்கின் திரைச்சீலை; (தொ.) cloth of gold, பொன்னுடை, பொன்னிழையாடை, கசவு, சரிகை; cloth of state, மேற்கட்டி, விதானம்; lay the cloth, உணவுக்காக மேசையை ஒழுங்கு செய்; the cloth, திருக்கோயில் குருத்துவத் தொழில்; திருக்கோயில் குருக்களின் தொகுதி.

**clothe**, *v.* ஆடை அணி; ஆடையால் மூடு; மூடு, போர்த்து; (தொ.) clothe in words, சொற்களால் தெரிவி; clothe on, clothe upon, ஆடை உடுத்து; பதவியில் அமர்த்து; மூடு.

**clothes**, *n. pl.* ஆடைகள்; போர்வைகள்; படுக்கை விரிப்புக்கள்.

**clothes'-basket**, *n.* துவைக்கும் துணிகளைக் கொண்டு செல்வதற்குரிய கூடை.

**clothes'-brush**, *n.* ஆடை துடைப்புத்தூரிகை.

**clothes'-horse**, *n.* துணி உலர்த்தும் சட்டம்.

**clothes'-line**, *n.* துணி உலர்த்தும் கொடி.

**clothes'-moth**, *n.* கம்பளி ஆடைகளை அரித்துண்ணும் பூச்சிவகை.

**clothes'-peg, clothes'-pin**, *n.* துணிக்கொக்கி, கொடியில் துணியைப் பிணித்துப் பிடிக்கும் கொளுவி.

**clothes'-pole**, *n.* துணி தொங்கவிடும் கொடி தாங்கும் கம்பு.

**clothes'-press**, *n.* துணி அழுத்து பொறி; துணிகளின் மடிப்புக்கலையாமல் வைத்திருக்கும் பெட்டி.

**clothes'-prop**, *n.* துணி தொங்கவிடும் கொடிதாங்கி.

**cloth'-hall**, *n.* துணி விற்பனைக்களம், அங்காடி.

**cloth'ier**, *n.* துணி செய்பவர்; ஆடை செய்பவர்; துணி விற்பவர்.

**clo'thing**, *n.* ஆடை, உடை; போர்வை, மூடியிருப்பது; புறத்தோல், புறப்பொதிவு.

**cloth'-yard**, *n.* இருமுழமுடைய துணிக்கோல் அளவை; (தொ.) cloth-yard shaft, இருமுழ நீளமுள்ள அம்பு.

**clott'er**, *v.* உறைந்துபோ, கெட்டியாகு, தோய்ந்துபோ.

**clott'iness, clott'ing**, *n.* உறைதல், தோய்ந்துபோதல், தோய்தல், கெட்டியாகுதல்.

***clou***, (பிர.) *n.* கவர்ச்சிமிக்க மையக்கூறு, உயிர்ச்சுவைக்கூறு, கருப்பொருள் குறிப்பு.

**cloud**, *n.* முகில்; பனிப்படலம்; ஆவித்திரள்; புகைமேகம்; நிலையின்றி விரைந்தோடுகிற பொருள்; ஆவி, திட்பமற்ற பொருள்; புகை, ஒளி மங்கலாக்கும் பொருள்; கறை; மங்கலான தன்மை; புழுதிப்படலம்; திவலைத் தொகுதி; நுண்ணுயிர்த்திரள்; பின்விளைவு அறிவிக்கக்கூடிய பொருள்; பறவைக்கூட்டம்; படைத்திரள்; நிழல்; கருநிறம்; மெல்லிய கம்பளியாலான கழுத்துக்குட்டை; மறைப்பு, திரை;

தெளிவற்றநிலை ; மனவருத்தமான நிலைமை ; துன்பம் ; ஐயம்; சிடுசிடுப்பான அல்லது சோர்வு மிகுந்த தோற்றம் ; *v.* வானம் கவி, மூடாக்கிடு ; ஒளிமறை, இருளடையச்செய் ; நற்பெயரைக் கெடு ; கறைப்படுத்து, களங்கமாக்கு ; ஒளி மங்கலாக்கு ; இருளாகு, மங்கலாகு ; தெளிவற்ற நிறப் படலங்களால் பலதிறப்படுத்து ; துயருறு, சோர்வுறு ; (தொ.) in the clouds, மறை பொருளான; அறிவு கடந்த; கற்பனைத் தன்மையுடைய ; under a cloud, துயருட்பட்ட ; பழிப்புக்காட்பட்ட, ஐயுறவுக்காளான ; நல்லாதரவு இழந்த நிலையுடைய.

**cloud'-built,** *a.* மெய்ந்நிலையற்ற.

**cloud'-burst,** *n.* கடுமையான இடிமின்னல் மழை ; சிறுபகுதி மீது பெய்யும் பெருமழை.

**cloud'-capped,** *a.* முகில் சூழ்ந்த உச்சியை உடைய.

**cloud'-castle,** *n.* பகற்கனவு, மனக்கோட்டை; ஆர்வக் கற்பனை நாடு.

**cloud'-chamber,** *n.* உறை ஆவி நீர்த்திவலைகளின் வாயிலாக மின்துகளின் நிலையும் போக்கும் தெரிவிக்கும் அமைவு.

**cloud'-compeller,** *n.* முகிலை ஆளும் தெய்வம், ஜியூஸ் (Zeus) என்ற கிரேக்கப் பெருந்தெய்வம்.

**cloud'-compell'ing,** *a.* முகிலை ஆட்கொள்ளுகிற.

**cloud'-drift,** *n.* இயங்குநிலையிலுள்ள முகில்.

**cloud'ed,** *a.* மேகங்களால் மூடப்பட்ட ; இருளடைந்த ; தெளிவில்லாத ; மங்கலான ; புள்ளிகளால் பலதிறப்படுத்தப் பட்ட.

**cloud'ing,** *n.* மங்கலான தோற்றம்; *a.* மங்கலாகிக்கொண்டு வருகின்ற.

**cloud'less,** *a.* மேகமில்லாத, தெளிவான.

**cloud'let,** *n.* சிறுமுகில்.

**cloud'rack,** *n.* முகில் அடுக்கு.

**cloud'-scape,** *n.* முகில் அணி வரிசைக்காட்சி, முகிலணி ஓவியம்.

**cloud'-topped,** *a.* முகிலால் மூடப்பட்ட ; மேகமளாவிய.

**cloud'y,** *a.* முகில் மூடிய ; முகிலார்ந்த ; மங்கலான, விளக்க மற்ற ; புகைபோன்ற ; இருளார்ந்த ; கரும்புள்ளிகளுடைய.

**clough,** *n.* மலைவிடர், ஆழ்ந்த செங்குத்தான பள்ளத்தாக்கு, ஆறுசெல்லும் மலைப்பிளவு.

**clout,** *n.* ஆணிப்பத்தை, ஒட்டிட்டுத் தைப்பதற்குகந்த துணிக் கண்டம் ; ஒட்டுத்துண்டு ; கந்தை ; செருப்படியில் ஆணி வில்லை ; வில்லாளர் எய்குறி ; வெற்றிகரமான இலக்கெய்வு, குறிதாக்கு ; அடி, கைத்தாக்குதல், குட்டுதல் ; *v.* துணியால் ஒட்டுப்போடு ; செருப்புக்கு வில்லையாணியால் பாதுகாப்புச் செய் ; துணியால் மூடு ; கையால் அடி, குட்டு.

**clout'erly,** *a.* கோமாளித்தனமான.

**clout'-nail,** *n.* செருப்பின் வில்லையாணி.

**clout'-shoe,** *n.* வில்லையாணி பதித்த செருப்பு ; கோமாளி.

**clove**[1], *v.* cleave[1] என்பதன் இறந்தகால வடிவங்களுள் ஒன்று.

**clove**[2], *n.* கிராம்பு, இலவங்கம்.

**clove**[3], *n.* வெள்ளைப்பூண்டு வகையின் கிளைக்கதுப்பு.

**clove**[4], *n.* கம்பளி-பாலடை போன்றவற்றின் பழைய நிறுத்த லளவைக்கூறு (7 முதல் 8 கல் எடைவரை யுடையது.)

**clove'-gill'yflower,** *n.* இலவங்க மணமுள்ள செவ்வண்ண மலர்வகை.

**clove hitch,** *n.* (கப்.) கயிறு அல்லது பொருளுடன் கயிற்றை இறுகக் கட்டுவதற்குரிய முடி வகைகளுள் ஒன்று.

**clove hook,** *n.* துணைக்கொக்கி, பக்கக்கொளுவி.

**clov'en**[1], *v.* cleave[1] என்பதன் முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**clov'en**[2], *a.* பிளந்துள்ள, பிளவுள்ள, பிரிந்துள்ள ; (தொ.) the cloven hoof, தீயவழி உய்க்கிற சைத்தானுடைய செயல்.

**clov'en-foot'ed, clov'en-hoofed,** *a.* பிளவுள்ள குளம் புடைய.

**clove'-pink,** *n.*=clove-gillyflower.

**clov'er,** *n.* கால்நடைத் தீவனமாகப் பயன்படும் மணப்புல் வகை ; (தொ.) be in clover, live in clover, இன்ப வாழ்வில் இரு, சொகுசாக வாழ், மிக்க செல்வத்துடன் வாழ்.

**clov'ered,** *a.* கால்நடை உணவுக்குரிய மணப்புல் வகை நிரம்பிய.

**clov'erleaf,** *n.* பாதையுடன் பாதை நேரே குறுக்கிடாமல் ஒழுங்கு செய்யப்படுகிற போக்குவரத்துப் பாதை அமைப்பு.

**clov'ery,** *a.* கால்நடைத் தீவன மணப்புல் வகை செறிந்த.

**clown,** *n.* நாட்டுப்புறத்தான், காட்டான் ; பண்பாடற்றவன்; கோமாளி ; *v.* கோமாளியாக நடி.

**clown'ery,** *n.* கோமாளிக்கூத்து.

**clown'ish,** *a.* கோமாளிக்குரிய ; கோமாளி போன்ற ; கோமாளித்தனமான.

**clox,** *n.*=clock[3].

**cloy,** *v.* உவட்டு, நிறைவு காரணமாக வெறுப்பூட்டு ; சலிப் பூட்டு ; அருவருப்படையச் செய்; அளவு மீறி உண் ; கொம்பி னால் குத்து ; பீரங்கியை ஆணி அறைந்து செயலற வை ; துளையை அடைத்துவிடு.

**cloy'ing, cloy'some,** *a.* தெவிட்டுகிற, தெவிட்டும் தன்மை யுள்ள.

**club,** *n.* செண்டு, கைத்தண்டு ; குண்டாந்தடி, முனைபருத் துள்ள குறுந்தடி ; குழிப்பந்தாட்ட மட்டை ; (தாவ.) குமி ழடியும் பருத்த முகடும் உள்ள குலை, கொத்து ; ஆட்டச் சீட்டின் நால் வகைகளில் ஒன்று, கரிய முக்கவரிலைக்குறி யுடைய சீட்டு ; பொதுநோக்குள்ள உறுப்பினர்களடங்கிய கூட்டுக்குழு, தனிக்குழு, கழகம் ; கூட்டு, கும்பல் ; கழக மனை ; *v.* தடியாலடி ; துப்பாக்கியடியினால் மோது ; குறுந் தடியாகப் பயன்படுத்து ; ஒருங்கிணை, பொதுநோக்குடன் கூடு ; பொதுவாகச் சேர்ந்து செலவினம் தாங்கு ; (படை.) சிதறடி, குழப்பத்துக்குள்ளாக்கு.

**club'able, clubb'able,** *a.* பழகுந்தன்மையுள்ள, சமூகப் பாங்குடைய

**clubbed,** *a.* குறுந்தடியைப்போல் முனைபருத்துள்ள.

**clubb'ing,** *n.* அடித்தல் ; ஒன்று கூட்டுதல் ; பூச்சிக்கடி யினால் விரல் நுனி பருத்துப்போதல் ; நோய் நுண்மச் செய லால் முட்டைக் கோசுத்தண்டுகள் வீங்குதல்.

**clubb'ish,** *a.* கழகங்களில் ஊடாட்டம் மிக்க.

**clubb'ism,** *n.* கழகமுறைமை.

**clubb'ist,** *n.* கழக உறுப்பினர், கழகத்தொடர்புடையவர்.

**club'-face,** *n.* குழிப்பந்தாட்ட மட்டையின் முகப்புத்தோற்றம்.

**club'-foot,** *n.* கோணக்கால், தொட்டிக்கால்.

**club'haul,** *v.* (கப்.) காற்றோட்டத்துக்கு எதிர்ப்புறமாயுள்ள நங்கூரத்தைத் தாழ்த்திக் கப்பலை திசைமாறிச் செலுத்து.

**club'-head,** *n.* குழிப்பந்தாட்டக்கோலின் தலைப்பு.

**club'-head'ed,** *a.* மட்டியான.

**club'-house,** *n.* கழகமனை ; கூட்டுப் பொழுதுபோக்கு மனை.

**club'-law,** *n.* வல்லவர் ஆட்சிமுறை.

**club'-line,** *n.* பத்தியின் முடிவிலுள்ள குறுகிய கோடு.

**club'-man,** *n.* தண்டேந்தி, குறுந்தடி வைத்திருப்பவர் ; கழக உறுப்பினர் ; கழகங்களுக்கு அடிக்கடி போகிறவர் ; நகர வாழ்வுப் பழக்கமுடையவர்.

**club'-master,** *n.* கழக நடைமுறை மேலாளர், கழகத்திற்கான தட்டு முட்டுப் பொருள்கள் சேகரிப்பவர்.

**clubs,** *n.*=clumps.

**cluck**, *n.* அடைகாக்கும் கோழியின் கொக்கரிப்பு; பெட்டைக் கோழி தன் குஞ்சுகளை அழைக்கும்போது மிடற்றினின்றும் எழுப்பும் ஒலி; *v.* கொக்கரி.

**clue**, *n.* மறைசெய்தியை விளக்கும் குறிப்பு, மறைதிறவு; வழிகாட்டும் குறிப்பு, தடம்; கதைத் தொடர்பு; எண்ணத் தொடர்பு.

**clue'less**, *a.* தடம் அற்ற; துணைக்குறிப்பற்ற.

**clum'ber**, *n.* வேட்டை நாய் வகை.

**clump**, *n.* மரங்களின் அல்லது புதர்ச்செடிகளின் செறிவு, கும்பு; கொத்து; கட்டி; செருப்பில் காலடியுடனிணைந்த மேலடைத் தோல்; பலத்த அடி; *v.* நிலம் அதிர நட; ஒன்றுகக்குவி; கெட்டியாகு; கும்பில்வை; அடி.

**clumps**, *n.* வினுவிடை விளையாட்டு வகை.

**clump'-sole**, *n.* செருப்பில் ஆணியடித்துச் சேர்க்கப்படும் திண்ணிதான அடித்தோல்.

**clump'y**, *a.* உருவமற்ற; கட்டிகள் நிறைந்த; மொத்தையான; பளுவான.

**clum'sy**, *a.* அருவருப்பான; உருவமற்ற; ஏடாகோடமான, அலங்கோலமான; அமைப்புக்கேடான; செயல் நயமற்ற, திறமை நயமில்லாத.

**clunch**, *n.* உறுதிவாய்ந்த களிமண்; உட்செதுக்கு வேலைக்குப் பயன்படும் வெண் சுண்ணக்கல் வகை.

**clung**, *v.* **cling** என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**clu'peoid**, *n.* கடல்வாழ் மீன் வகை.

**clus'ter**, *n.* கொத்து, குலை; கூட்டம்; தொகுதி; *v.* கொத்தாகச் செய்; கொத்தாகத்திரள்; கொத்தாக வளர்; கொத்துகளால் நிரப்பு.

**clus'ter-cup**, *n.* காளான் குடை வகை.

**clus'tered**, *a.* இனமாகச் சேர்க்கப்பட்ட; திரண்ட; கொத்தான; (தொ.) clustered column, (க-க.) தூண்கோவை, தூண் வரிசைக் கட்டமைவு.

**clutch**[1], *n.* இறுக்கமான பிடிப்பு; இரக்கமற்றபிடி; வளைந்த கூர்நகம்; சட்டெனப் பறித்தல்; பாரந்தூக்கியின் பற்று உறுப்பு; (இய.) இயங்குறுப்புக்களை ஓடவும் நிறுத்தவும் செய்யும் பொறியமைப்பு; *v.* ஆவலுடன் பற்று, இறுகப் பிடி; பற்றிப்பிடுங்கு, பற்றிக் கௌவு; சட்டெனப் பறிப்பது போல் கைகுவி.

**clutch**[2], *n.* ஓரீட்டுமுட்டைகளின் தொகுதி; ஓரீட்டுக்குஞ்சுகளின் தொகுதி.

**clutch'es**, *n. pl.* இறுகப்பற்றும் கைகள்; கொடும்பிடி.

**clutt'er**, *n.* ஆரவாரம், இரைச்சல்; கம்பலை, கலவரம்; அமைதிக்கேடு; குழம்பிய திரள்; தாறுமாறுன துப்புரவற்ற நிலை; குப்பைக்கூளம்; *v.* ஆரவாரமாகத் திரி; கும்புகூடு; குப்பையாக்கு.

**Clydes'dale**, *n.* கடுஞ்சுமை இழுக்கவல்ல குதிரை வகை; *a.* பெருஞ்சுமை இழுக்கும் குதிரை இனத்துக்குரிய.

**clyp'eal**, *a.* பூச்சித்தலையின் கேடயம்போன்ற பகுதிக்குரிய.

**clyp'eate, clyp'eiform**, *a.* கேடய வடிவமுள்ள.

**clyp'eus**, *n.* பூச்சித்தலையின் கேடயம்போன்ற பகுதி.

**clys'ter**, *n.* (மரு.) குடல் கழுவு நீர்மம்; *v.* எருவாய்வழி நீர்மம் செலுத்திக் குடல் கழுவு.

**cni'da**, *n.* (வில.) இழுது மீன் முதலிய உயிரினங்களின் கொடுக்கு; *pl.* cni'dae.

**coac'ervate**, *a.* குவிக்கப்பட்ட, திரட்டப்பட்ட; *v.* குவி, கூட்டு, சேர்.

**coach**, *n.* தனிவண்டி; மூடுவண்டி; ஆடம்பரவண்டி; வாடகை வண்டி; இருப்பூர்திப் பெட்டி வண்டி; சுற்றுலாக் காரர்களுக்கான உந்துவண்டி; நெடுந்தூரம் செல்லும் பேருந்து வண்டி; கப்பலின் பின்புற அறை; பயிற்சி ஊக்குவிப்பவர், தனிப்பாடங் கற்பிப்பவர்; தொழில்முறை உடற் பயிற்சியாசிரியர்; விலங்குகளைப் பிடிப்பதற்குப் பயன்படும் விலங்கு; *v.* பெட்டி வண்டியில் ஏற்றிச் செல்; மூடுவண்டியில் ஏறிச்செல்; பாடம் கற்பி; பந்தயத்துக்குப் பயிற்சி அளி; தேர்வுக்குப் பயிற்றுவி; ஆசிரியருதவியுடன் படி.

**coach'-box**, *n.* பெட்டி வண்டியின் வலவன் பீடம்.

**coach'-builder**, *n.* பெட்டி வண்டி செய்பவர்.

**coach'ee**, *n.* வண்டிவலவன்.

**coach'er**, *n.* பயிற்சி அளிப்பவர்; வண்டிக்குதிரை.

**coach'-fellow**, *n.* துணைக்குதிரை; வண்டிக்குதிரைகள் இரண்டிலொன்று; பயிற்சித்தோழன், கூட்டாளி.

**coach'-horn**, *n.* பழங்கால அஞ்சல் வண்டி வலவரின் குழலூத்து.

**coach'ing**, *n.* வண்டியில் ஏறிச்செல்லுதல்; பாடங்கற்பித்தல்; பயிற்சியளிப்பு.

**coach'man**, *n.* வண்டிவலவன், வண்டியோட்டும் பணியாள்.

**coach'-office**, *n.* பழங்கால அஞ்சல் வண்டிக்குப் பயணச் சீட்டுக் கொடுக்குமிடம்.

**coach'-stand**, *n.* வாடகை வண்டி நிற்குமிடம்.

**coach'work**, *n.* உந்து வண்டியின் உடற்பகுதியில் செய்யப்படும் அழகிய வேலைப்பாடு.

**coach'y**, *n.* வண்டி வலவன்; *a.* வண்டிக்குரிய.

**coact'**, *v.* கட்டாயப்படுத்து.

**coadjac'ent**, *a.* ஒட்டணிமையான, அடுத்தூர்கிற.

**coadju'tant**, *n.* பிறருக்கு உதவிசெய்பவர்; *a.* ஒருவர்க்கொருவர் உதவியாயுள்ள.

**coadj'utor**, *n.* துணைவர், கூட்டாளி; திருச்சபை மாவட்ட முதல்வரின் உதவியாளர்.

**coadju'tress, coadju'trix**, *n.* துணைவி, உதவியாயிருப்பவள்.

**coad'unate**, *a.* ஒன்றிய, ஒருங்கிணைந்த; (உட., தாவ.) பிறப்பிலேயே ஒருங்கிணைந்த; *v.* ஒன்றுபடு, ஒருங்கிணை.

**coad'unative**, *a.* ஒருங்கிணைந்த.

**co-a'gency**, *n.* ஒருங்கிணை செயலாண்மை.

**co-a'gent**, *n.* இணைமுகவர்.

**coag'ulant**, *n.* இறுகி உறையச் செய்யும் பொருள்.

**coag'ulate**, *v.* கட்டியாகு, உறை; இறுகு, தயிர்போலாகு; குருதிகட்டு; மீளா மாறுதலுறு; உறுதிப்படு.

**coagula'tion**, *n.* உறைதல்; குருதிக்கட்டு.

**coag'ulum**, *n.* உறையச்செய்யப்பட்ட பொருள்.

**coai'ta**, *n.* சிவந்த முகமுள்ள சிறு தென் அமெரிக்கக் குரங்கு வகை.

**coal**, *n.* கரி; நிலக்கரி; நிலக்கரிப்பாறைத் துணுக்கு; கங்கு; கனல்; *v.* கப்பல் முதலியவைகளில் நிலக்கரியிடு; நிலக்கரி நிரப்பு; பயன்படுத்துவதற்குரிய நிலக்கரியை ஏற்றிக்கொள்; நிலக்கரியாக்கு, கருக்கு; (தொ.) blow the coals, உணர்ச்சியைக் கிளறு, சண்டைக்குத் தூபமிடு; call over the coals, haul over the coals, அதட்டிக்கூறு; carry coals to Newcastle, பொருள் மலிந்திருக்கும் இடத்திற்கு அப்பொருளைக் கொண்டுபோ, கொல்லன் தெருவில் ஊசி விற்பது போன்ற வீண் செயல் செய்; coaling station, நிலக்கரி ஏற்றும் துறைமுகம்; Coal Measures, (மண்.) நிலக்கரி ஊழியின் உச்ச மேற்படிவப்பாறைகள்; heap coals of fire on the head, இன்னுசெய்தார்க்கு இனியவே செய்து சிந்தனைப் பரிவூட்டு.

**coal'ball**, *n.* நிலக்கரியில் காணப்படும் சுண்ணமடங்கிய கணு.

**coal'-bed**, *n.* நிலக்கரி அடுக்கு.

**coal'-black**, *a.* நிலக்கரிபோல் கறுப்பான, மிகு கறுப்பான.

**coal'-brass**, *n.* நிலக்கரியோடு காணப்படும் இரும்புக் கந்தகக்கல்.

**coal'-cutter**, *n.* நிலக்கரி அடுக்கைக் கீழறுப்பதற்கான இயந்திரம்.

coalesce', *v.* ஒன்றுபடு; ஒன்றில் ஒன்று இணை, கலந்து ஒன்ருகு; ஒன்றுபட்டு வளர்; கூட்டாகச்சேர், கூடிக்கல, கூட்டுக்கலவையில் சேர், கூடி ஒன்ருகச்சேர்.

coales'cence, *n.* ஒன்ருேடொன்று பிணைந்து வளர்தல்; ஒருங்கிணைவு, கூடிக்கலப்பு, கூடி ஒன்ருயிணைதல்.

coal-face', *n.* நிலக்கரி முகப்பு, சுரங்கத்தில் கண்ணுக்குத் தெரியும் நிலக்கரிப் பக்கம்.

coal'-field, *n.* நிலக்கரிக்களம், நிலக்கரி அடுக்குகள் உள்ள மாவட்டம்.

coal'-fish, *n.* முதுகுப்புறம் பச்சையான கடல் மீன்வகை.

coal'-flap, *n.* நிலக்கரிச் சுரங்கப் புழைமீது பாதையில் இடப் பட்டுள்ள மூடி.

coal'-gas, *n.* கரி வளி, விளக்குக்கும் வெப்பத்துக்கும் உரிய எரிபொருளாகப் பயன்படுத்தப்படுகிற நிலக்கரி வடிப்பின் இடைவிளைவான வளிக்கலவை.

coal'-heaver, *n.* நிலக்கரி தூக்கிச் செல்லும் தொழிலாளி.

coal'-hole, *n.* சிறு நிலக்கரிக் கீழறை.

coal'ite, *n.* நிலக்கரியை இளஞ்சூட்டில் எரிப்பதனுல் கிடைக்கும் புகைபடா நிலக்கரி.

coali'tion, *n.* கூட்டிணைவு, செயற் கூட்டுறவு, அரசுகளோ கட்சிகளோ தத்தம் கொள்கைகளை விட்டுக்கொடுக்காமலே சில நோக்கங்களுக்காகச் சிறிது காலம் ஒன்ருக இணைதல்; (தொ.) coalition government, கட்சிகள் கூட்டாக இணைந்து நடத்தும் ஆட்சி.

coal'-master, *n.* நிலக்கரி விளைபுலத்தின் உரிமையாளர்; நிலக்கரி விளைபுலத்தின் குத்தகைக்காரர்.

coal'mouse, *n.* கருநிறமுடைய சிறு பறவை வகை.

coal'-owner, *n.* நிலக்கரிச் சுரங்க உரிமையாளர்.

coal'-plate, *n.*=coal-flap.

coal'-scutt'le, *n.* நிலக்கரிக்கூடை; (தொ.) coal-scuttle bonnet, தலைகீழான கரிக்கூடை போன்ற வடிவுள்ள மகளிர் தொப்பி.

coal'-tar, *n.* கீல், கரி எண்ணெய்.

coal'-tit, coal'-tit'mouse, *n.*=coalmouse.

coal'-whipper, *n.* நிலக்கரியைக் கப்பலிலிருந்து படகில் இறக்குபவர்.

coal'y, *a.* நிலக்கரி சார்ந்த; நிலக்கரி போன்ற; நிலக்கரியார்ந்த.

coam'ing, *n.* கப்பல் தளத்தின் புறவாயிலில் தண்ணீர் உட் புகுந்துவிடாதபடி சுற்றி ஓரங்களில் எழுப்பப்படும் மேடான கட்டுமானம்.

coapt', *v.* பொருந்தவை, இணக்கு, சரிப்படுத்திக்கொள்.

coarc'tate, *a.* அழுத்தப்பட்ட, இறுக்கப்பட்ட.

coarse, *a.* கரடுமுரடான, சொரசொரப்பான; இழிந்த; முரட்டுத்தனமான, நாகரிகமற்ற; சொற்கள் வகையில் கீழ்த்தர உணர்ச்சி சார்ந்த; கொச்சையான; பண்பு நயமற்ற; செப்பமற்ற; உருநயமற்ற; பருவெட்டான, பருங்கூறு களாலான; (தொ.) coarse fish, உயர்வகையல்லாத நன்னீர் மீன்வகை; coarse metal, வார்ப்பின்போது ஏற்படும் உலோகக்கழிவு, தாமிரக் கந்தகைக் கலவை.

coarse'-grained, *a.* பருவெட்டான; பண்பு நயமற்ற; முரட்டுத்தனமான.

coars'en, *v.* சொரசொரப்பாக்கு; சொரசொரப்பாகு; கீழ்த்தர மாக்கு; இழிவுறு.

coast, *n.* கடற்கரை, கரை ஓரம்; கீழ்நோக்கிச் சறுக்கிச் செல்வதற்குத் தகுதியான குன்று; மலையில் கீழ்நோக்கிச் சறுக்கிச் செல்லுதல்; *v.* கரை ஓரமாகக் கப்பலில் செல்; கடற்கரையையொட்டிக் கப்பல் செலுத்து; ஒரேகரையில் இரண்டு துறைமுகங்களுக்கிடையில் வாணிகம் செய்; சறுக்கு வண்டியிலேறி மலையிலிருந்து கீழ்நோக்கிச் சறுக்கு; மிதிவண்டியை மிதித்தியக்காமலேயே மலையிலிருந்து கீழ் நோக்கிச் செலுத்து; இயந்திரம் இயக்காமலே உந்து வண்டியை மலையிலிருந்து கீழ்நோக்கிச் செலுத்து; (தொ.) the coast is clear, வழியில் இடர் அல்லது பொல்லாங்கு எதுவுமில்லை.

coast'al, *a.* கடற்கரையோரம் சார்ந்த.

coast'er, *n.* கரையோரமாகச் செல்லும் கப்பல்; மிதிவண்டி யின் முன் சக்கரக் கால்மிதியிடம்; மேசைமேல் பெரிய சாராயப்புட்டி முதலியவை வைப்பதற்கான வெள்ளித்தட்டு.

coast'guard, *n.* கரையோரக் காவல் படை; கரைகாவற் படைஞன்.

coast'-guardman, coast'-guardsman, *n.* கரைகாவற் படைஞன்.

coast'ing, *n.* கரையோரக் கப்பல் செலவு; கரையோரக் கடல் வாணிகம்; வலிந்து பழகுதல்; மேற்சென்று காதலித்தல்; காதல் ஊடாட்டம்; மலையிலிருந்து கீழ்நோக்கிச் சறுக்குதல்; *a.* கரையையொட்டிச் செல்கிற; ஒரே நாட்டின் இரண்டு துறைமுகங்களுக்கிடையில் வாணிகம் செய்கிற.

coast'-line, *n.* கரையோரம், கரையோர எல்லை; கரையோர எல்லைக் கோடு.

coast'wait'er, *n.* கரையோரக் கப்பல் வாணிகம் சார்ந்த சுங்கத் துறை அலுவலர்.

coast'-ward[1], *a.* கரைநாடிய, கரையின் திசையிலுள்ள.

coast'ward[2], coast'wards, *adv.* கடற்கரையை நோக்கி.

coast'wise, *a.* கரை வழியாகச் செல்கிற; *adv.* கரை நெடுக.

coat, *n.* உடுப்பு, மேற்சட்டை, கைகளுடன் கூடிய ஆடவர் புறச்சட்டை; மேல் உடுப்பு; தடித்த பித்தான்களுள்ள மகளிர் மேற்சட்டை; மகளிர் மேலங்கி; மேலுறை, மேற்போர்வை; மூடியிருப்பது; மேல்தோல்; தோடு; விலங்குகளின் மயிர்; புறத்தோல்; சாயத் தோய்வு; கட்டியத்துறையில் மரபுரிமை; *v.* உடுப்பு அணி; போர்த்து, அணி, உடு; வண்ணப்பூச்சுத் தோய்வி; (தொ.) coat of arms, (கட்.) மரபுரிமைச் சின்னந் தாங்கிய மேலங்கி; பெருமகனுரின் குடும்ப மரபுச் சின்னங்கள்; coat of mail, உடலின் மேற்பாகத்துக்கான போர்க்கவசம்; dust one's coat, அடி; trail one's coat-tails, சண்டைக்குத் தொண்டுபிடி; turn one's coat, கொள்கைகளை மாற்றிக் கொள்; கட்சிவிட்டுக் கட்சி மாறு; படையிலிருந்து தப்பி யோடு; wear the king's coat, படைத்துறையில் வேலை செய்.

coat'-arm'our, *n.* (கட்.) மரபு வழிப் படைக்கலச் சின்னங்கள்.

coatee', *n.* பின்புற அடிப்பகுதி குறுகலாயுள்ள இறுக்கமான மேற்சட்டை.

coat'-frock, *n.* மேற்சட்டை அல்லது கச்சு இன்றிப் பயன் படுத்துதற்குரிய உடுப்பு.

coat'-hanger, *n.* சட்டைமாட்டி, மேற்சட்டையை மடிப்புக் கெடாமல் மாட்டி வைக்கப் பயன்படும் கொக்கியுடைய வளைகொம்பு.

coa'ti, coati-mon'di, coati-mun'di, *n.* புனுகுப் பூனை போன்ற புலாலுண்ணும் அமெரிக்க விலங்குவகை.

coat'ing, *n.* வண்ணப்பூச்சு; மேற்படலம்; மேற்சட்டை தைப்பதற்கான துணி.

coat'-style, *a.* உட்சட்டை வகையில் மார்புப்புற நெடுகிலும் குமிழ் மாட்டிகளையுடைய.

coax, *n.* இச்சகம் பேசுபவர்; *v.* நயந்து பேசி இணங்கச் செய், முகமன் கூறித் தூண்டு; சீராட்டு; மயக்கிச் சிக்கவை.

coax'al, coax'ial, *a.* பொது ஊடச்சுடைய, பொது இருசுடைய; (கண.) பொது ஆயமுடைய; (தொ.) coaxial cable, தந்தி தொலைபேசி அறிகுறியீடுகளுடன் தொலை நோக்கிக் குறியீடுகளையும் ஒருங்கே அனுப்பும்படி பொருத்திய தந்தி வட இணைவு.

**cob**[1], *n.* அன்னச் சேவல்; குறுங்காலுடைய பலமிக்க குதிரை; பெரிய மரக்கொட்டை வகை; உருண்டையான நிலக்கரித் துண்டு; உருண்டைத்தலைப்புடைய சூட்டப்ப வகை; உருண்டை வடிவுடைய பொருள்; சோளக்கதிரில் மையக் காம்பு முனை; மீன் வகையின் தலை; (பே-வ.) பெரிய மனிதர்.

**cob**[2], *n.* வைக்களி, சுவர் எழுப்புதற்குப் பயன்படும் களிமண்-சரளை-வைக்கோல் கலவை வகை.

**cob**[3], *n.* விதை விதைப்பவர்கள் பயன்படுத்தும் பிரப்பங் கூடை.

**cob**[4], *v.* பிட்டத்தின்மேல் தட்டு; அடி, மொத்து.

**cob'alt,** *n.* வெண்ணிற உலோக வகை, அணு எண் 27 உடைய தனிம வகை; உலோக வகையிலிருந்து உருவாக்கப் படும் நீல வண்ணப்பொருள் வகை.

**co'balt-blue',** *n.* வெண்ணிற உலோக வகையிலிருந்து உருவாக்கப்படும் நீலவண்ணப்பொருள்; *a.* நீலநிறமுள்ள.

**coba'lt'ic, cobaltif'erous,** *a.* வெண்ணிற உலோக வகை சார்ந்த; வெண்ணிற உலோக வகை உட்கொண்ட.

**cob'ble**[1], *n.* உருளைக்கல், தளம் பாவுவதற்குப் பயன்படும் உருண்டைக்கல்; உருண்டையான நிலக்கரித்துண்டு; *v.* உருளைக் கற்களினால் தளம்பாவு.

**cob'ble**[2], *v.* ஒட்டுப்போடு; அரைகுறையாகப் பொருந்தவை; பருவெட்டாகச் செப்பனிடு; செருப்புப் பழுதுபார்.

**cobb'ler,** *n.* செம்மான், செருப்புச் செப்பனிடுபவர்; திருத்த மற்ற வேலையாள், அரைகுறையாக வேலை செய்பவர்; இன்தேறல்-சர்க்கரை முதலியவை கலந்து வைக்கோல் குழலினால் உறிஞ்சப்படும் மது வகை; (தொ.) cobbler's punch, சர்க்கரை-நறுமணப் பொருள்கள் கலந்த சூடான சாராய வகை.

**cob'bles,** *n. pl.* ஒரே அளவுள்ள நிலக்கரி உருண்டைகள்.

**cob'ble-stone,** *n.* தளம்பாவுவதற்குரிய உருளைக்கல்.

**cobb'y,** *a.* மட்டக்குதிரை போன்ற; தடித்த, செறிவான; துடுக்கான; கிளர்ச்சிகரமான.

**Cob'denism,** *n.* தடையிலா வாணிகம்-அனைத்து நாடுகளின் கூட்டுறவு-சிக்கனம்-அமைதி-பிற அரசுகளில் தலையிடாமை-பேரரசுக்கு எதிர்ப்பு ஆகியவற்றை அடிப்படைக் கொள்கை களாகக் கொண்ட காப்டன் (மறைவு - 1865) என்பாரின் கோட்பாடு.

**Cob'denite,** *n.* காப்டன் கோட்பாட்டாளர், தடையிலா வாணிகக் கொள்கை ஆதரவாளர்.

**co'ble,** *n.* ஸ்காத்லாந்திலும் வடமேற்கு இங்கிலாந்திலும் மீன்பிடிப்பதற்குப் பயன்படும் படகு வகைகள்.

**cob'ra, cob'ra de capell'o,** *n.* நல்ல பாம்பு, நாகப்பாம்பு.

**cob'ric, cob'riform,** *a.* நல்லபாம்பு போன்ற.

**co'burg,** *n.* ஒருபக்கம் வரிப்பின்னலுடைய பருத்தி அல்லது பட்டுக் கலந்த கம்பிளி மென்துகில் வகை.

**cob'-wall,** *n.* களிமண்-சரளை-வைக்கோல் கலவையினால் எழுப்பப்பட்ட சுவர்.

**cob'web,** *n.* நூலாம்படை, ஒட்டடை, சிலந்தி வலை; நொய் தான கட்டமைப்புள்ள பொருள்; நுண்ணிய சூழ்ச்சி நயமிக்க வாதம்; தூசு நிறைந்த குப்பை; மாய வலை; கடுஞ்சிக்கல்; *a.* மெல்லிய, நொய்தான.

**cob'webbery,** *n.* சிலந்திவலைப்பின்னல்; சிலந்தி வலைக்களம்; நூலாம்படைபோன்ற நிலை.

**cob'webby,** *a.* சிலந்தி வலை போன்ற.

**coc'a,** *n.* கிளர்ச்சியூட்டும் பொருளாக மென்று தின்னப்படும் இலைகளையுடைய தென்அமெரிக்கச் செடிவகை; செடி வகையின் கிளர்ச்சியூட்டும் இலை.

**Co'ca-Co'la,** *n.* கரிய வளியூட்டப்பட்ட மென்குடிநீர் வகை.

**cocaine',** *n.* தென் அமெரிக்கச் செடிவகையிலிருந்து உண்டு பண்ணப்பட்டு உடற்பகுதியை உணர்ச்சியிழக்கச் செய்யும் மருந்துச் சரக்கு வகை.

**cocain'ism,** *n.* மரத்துப்போகச் செய்யும் மருந்து வகையை அளவுக்கு மிஞ்சிப் பயன்படுத்துவதனால் உண்டாகும் கோளாறு.

**coc'cagee,** *n.* இனிப்புப் பழவகை; இனிப்புப் பழத்திலிருந்து உண்டுபண்ணப்படும் மதுவகை.

**coccin'eous,** *a.* ஒண் சிவப்பான.

**Cocc'us,** *n.* (வில.) மூட்டுப்பூச்சித் தொடர்புடைய பூச்சி இனம்.

**cocc'us,** *n.* (தாவ.) பழவற்றலில் வெடிக்கும் இயல்புள்ள ஒற்றை விதைப்பகுதி; கோளவடிவ நுண்ம வகை; *pl.* coc'ci.

**coccy'geal,** *a.* குதஎலும்பு சார்ந்த.

**coc'cyx,** *n.* உள்வால் எலும்பு; குத எலும்பு; *pl.* coc'cyges.

**coch'in, coch'in-chin'a,** *n.* வளர்ப்புக்கோழியினத்தின் வகை; *a.* வளர்ப்புக்கோழியினத்தின் வகை சார்ந்த.

**coch'ineal,** *n.* தம்பலப்பூச்சி, இந்திரகோபம், உடலுலர்த்திச் செஞ்சாயமாகப் பயன்படுகிற செந்நிறப் பூச்சி வகை; உலர்ந்த பூச்சி வகையிலிருந்து எடுக்கப்படும் செஞ்சாயப்பொருள்.

**coch'lea,** *n.* சுருள் வடிவப்பொருள்; நத்தைத்தோடு; வளை கொடுங்காயுடைய மணப்புல்வகை; வளைந்து ஏறும் படிக் கட்டு; (உள்.) செவியின் சுருள்வளை; *pl.* coch'leae.

**coch'lear,** *n.* கரண்டி; *a.* (உள்.) செவியின் சுருள்வளை சார்ந்த.

**coch'leate, coch'leated,** *a.* சுருளாக முறுக்கப்பட்ட; கரண்டி போன்ற.

**cock**[1], *n.* பறவைச் சேவல்; சேவற்கோழி; சேவல் கூவும் நேரம்; வைகறை; காற்றுநிலை காட்டி; தன்முனைப் புள்ளவர்; இறுமாந்த நடையுடைய குழுத்தலைவர்; விறைப் பான பொருள்; குழாய்; குழாய் முனை; துப்பாக்கிக் குதிரை; மேல்நோக்கிய வளைவு; மேல்நோக்கிய தொப்பி ஓரம்; துலாக்கோல் முள்; மூக்கின் மேல்நோக்கிய வளைவு; மாறு கண் நோக்கு; *v.* நிமிர்த்திவை; தொப்பி ஓரத்தை மேல் நோக்கி வளைத்து வை; சுடுவதற்காக துப்பாக்கிக் குதிரை யைப் பின்னுக்கிழு; ஒருபக்கமாகச் சாய்; ஒருச்சாய்த்துப் பார், ஏளனமாகப் பார்; அதட்டலாகப் பார்; கேள்விக் குறியுடன் நோக்கு; வேண்டுமென்றே கண்சிமிட்டு; பீடு நடைபோடு, வீம்புடன் கைவீசி நட; (தொ.) cock a snook, ஏளனக்குறியாக பெருவிரலை மூக்கின்மேல் வை; cocked hat, மூன்று மூலைகளையுடைய பழம்பாணியிலுள்ள தொப்பி வகை; மூன்று மூலை வடிவமாக மடிக்கப்பட்ட தாட்குறிப்பு; cock lobster, நண்டுபோன்ற உயிரினவகையில் ஆணினம்; cock of the walk, கும்புத்தலைவர், குழு ஆதிக்கம் வகிப்பவர்; cock salmon, மீன்வகையில் ஆணினம்; knock into a cocked hat, நையப்புடை.

**cock**[2], *n.* வைக்கோல் போர்; சாணம் முதலியவற்றின் சிறு குவியல்; *v.* வைக்கோல் சாணக்கூளம் குவி.

**cockabon'dy,** *n.* தூண்டிற்புழு வகை.

**cockade',** *n.* தொப்பிமீது சின்னமாக அணியப்படும் சூட்டு.

**cock-a-doo'dle, cock-a-doo'dle-doo',** *n.* சேவலின் கூவல்; குழந்தை வழக்கில் சேவல்; *v.* கூவு.

**cock-a-hoop',** *a.* பெருமித உணர்ச்சியுள்ள; *adv.* பெருமித மாக; வீம்புடன், வீறுப்புடன் கூவிக்கொண்டு.

**Cockaigne',** *n.* போகமும் களிப்பும் நிறைந்த கற்பனை உலகம், கற்பனைப் பொன்னாடு.

**cock-a-leek'ie,** *n.*=cocky-leeky.

**cockalor'um,** *n.* தன்முனைப்புள்ள வாலிபன்; பச்சைக் குதிரைபோன்ற பிள்ளைகளின் விளையாட்டுவகை.

**cock'-and-bull',** *a.* பொருந்தாப் புனைவான, நம்ப முடியாத.

**cockateel', cockatiel',** *n.* சிறு சூட்டுடைய ஆஸ்திரேலிய நாட்டுக் கிளி.

**cockatoo',** *n.* பெரிய சூட்டுடைய ஆஸ்திரேலிய நாட்டுக் கிளி; சிறு குடியானவன்.

**cock'atrice**, *n.* நச்சுக்கண் பாம்பு, திட்டிவிடம்; (கட்.) பறவை நாகத்தின் வாலுடைய சேவல்போன்ற அச்சந்தரும் விலங்குருவம்.

**Cockayne'**, *n.*=Cockaigne.

**cock'boat**, *n.* கப்பலைச்சேர்ந்த சிறு படகு; உறுதியான கட்டமைப்பில்லாத சிறு படகு.

**cock'-crow, cock'-crowing**, *n.* சேவல்கள் கூவும் வைகறை நேரம்.

**cocked**, *a.* நிமிர்த்தி வைக்கப்பட்ட; மேல்நோக்கி அல்லது ஒருபக்கம் வளைத்து வைக்கப்பட்ட; குவியல்களாகக் குவிக்கப் பட்ட.

**Cock'er**, *n.* முற்காலக் கணக்காசிரியர் பெயர்; (தொ.) According to Cocker, சரி நுட்பமாக, மயிரிழை பிழைபடாமல்.

**cock'er** [1], *n.* சேவல் சண்டையில் நாட்டமுள்ளவர்; சிறு வேட்டை நாய் வகை.

**cock'er** [2], *v.* மட்டற்ற அன்புகாட்டு, இளக்காரங் கொடு; ஊட்டிக் கொழுக்க வை; கொஞ்சு.

**cock'erel**, *n.* விடைச்சேவல்; தன்முனைப்பான இளைஞன்.

**cock'et**, *n.* (வர.) சுங்கச்சாவடி முத்திரை; சுங்கச் சாவடிச் சான்றுச் சீட்டு.

**cock'-eye**, *n.* ஓரப்பார்வைக் கண்; வண்டியிழுக்கும் விலங்கின வண்டிச்சட்டத்துடன் இணைக்கும் கயிற்றுமுனை வளையம்.

**cock'-eyed**, *a.* ஓரப்பார்வையான; கோணலான, சாய்வாக வைக்கப்பட்ட; சரிமட்டமாயிராத; அறிவற்ற.

**cock'-fight, cock'-fighting**, *n.* கோழிச் சண்டை, சேவல்களுக்கிடையில் நடக்கும் போட்டி; போட்டிச் சண்டை.

**cock-horse'**, *n.* குழந்தையின் பொம்மைக் குதிரை; குதிரையாகப் பாவிக்கப்படும் பொருள்; உயரமான வண்டிக்குதிரை; ஊக்கமிக்க விலங்கு; *a.* துள்ளுகிற; செருக்குடைய; *adv.* குதிரை மீதிவர்ந்து; கால்விரித்துக் கொண்டு; மிக்க மகிழ்ச்சியுடன்.

**coc'kle** [1], *n.* களைவகை; கூலங்களைக் கறுப்பாக மாற்றிவிடும் கோதுமைச் செடியின் நோய்.

**coc'kle** [2], *n.* இரண்டு சிப்பித்தோடுகளையுடைய பெரிய நத்தை வகை; நத்தைச் சிப்பி வகையின் தோடு; இரட்டைச் சிப்பித் தோடு; ஆழமற்ற சிறு படகு; (தொ.) cockles of the heart, நெஞ்சுப்பை, நெஞ்சம்; மன உணர்ச்சிகள்.

**coc'kle** [3], *n.* மடிப்பு, சுருக்கம்; *v.* சுருள்; சுருள்வி; சுருக்கு; சுரிக்கச் செய்.

**coc'kle** [4], *n.* கணப்படுப்பு.

**cock'le-bur**, *n.* ஊமத்தை வகை.

**cock'led**, *a.* நத்தையைப்போல் தோடுடைய.

**cock'le-hat**, *n.* புண்ணியப் பயணம் செய்பவரின் சின்னமாகிய கிளிஞ்சில் செருகப்பட்ட தொப்பி.

**cock'le-shell**, *n.* நத்தையின் தோடு; நொய்தான படகு.

**cock'-loft**, *n.* பரண் கூரைக்கு அடுத்துக் கீழுள்ள அறை.

**cock'ney**, *n.* லண்டன் நகரத்தான்; நகர அனுபவமும் அறிவும் மட்டுமே உள்ளவன்; லண்டன் நகரத்துப்பேச்சு வகை; *a.* லண்டன் நகரில் பிறந்தவர்க்குரிய இயல்புள்ள; (தொ.) the Cockney School, லண்டனைச் சேர்ந்த கவிஞர்களெனக் கருதப்படும் லே ஹண்டு (Leigh Hunt) கீட்சு (Keats) முதலியவர்களுக்கு வழங்கிய பழைய சாட்டுப் பெயர்.

**cock'neydom**, *n.* லண்டன் வாணர்களின் உலகம்.

**cock'neyfy**, *v.* லண்டன் நகரவாசியாக்கு; லண்டன் நகரவாசியைப் போலாக்கு.

**cock'neyism**, *n.* லண்டன் நகர வாணனின் இயல்புகள்-பழக்கவழக்கங்கள்.

**cock-of-the-rock'**, *n.* அழகிய சிறு தென்னமெரிக்கப் பறவை வகை.

**cock'pit**, *n.* சண்டைச் சேவல்கள் போரிடுதற்கான குழி அல்லது அடைப்பிடம்; அடிக்கடி சண்டை நிகழும் களம்; போர் அரங்கம்; போரில் காயமடைந்தவர்களுக்காகப் பயன்படுத்தப்படும் போர்க்கப்பலின் கீழறைகள்; சிறு கப்பலின் மேல் தளத்தில் மறைவிடமாயுள்ள பள்ளம்; விமான உடற் பகுதியில் வலவனுக்கு அல்லது பிரயாணிக்குரிய அறை; பந்தய உந்து வண்டியில் வலவனது இருக்கை.

**cock'roach**, *n.* கரப்பான் பூச்சி.

**cocks'comb, cock's'-comb**, *n.* சேவல் கொண்டை, சேவல் சூட்டு; கோமாளியின் குல்லாய்; சேவல் கொண்டையொத்த உருமணிக் கனிப்பொருள் செறிவு; ஒளிர் சிவப்பு அல்லது மஞ்சள் மலர்த்தொகுதிகளையுடைய தோட்டச் செடிவகை; பசப்பன்; முட்டாள்.

**cocks'-foot**, *n.* மேய்ச்சல் நிலப் புல்வகை.

**cock'shot**, *n.* இலக்கு நோக்கிய வீச்சு.

**cock'-shy**, *n.* இலக்கு நோக்கிய எறிவு; வீசுவதற்கு இலக்காக வைக்கப்படும் பொருள்; இலக்காக அடிப்பதற்கென்று காட்சிக்காரன் அடுக்கிவைக்கும் தேங்காய் முதலிய பொருள்கள்.

**cock-sure'**, *a.* முற்றும் நம்பத்தகுந்த, உறுதியான, நிச்சயமான, ஐயத்துக்கிடமில்லாத.

**cock'swain**, *n.*, *v.*=coxwain.

**cock'sy**, *a.*=coxy.

**cock'tail**, *n.* முழுப்பயிற்சி பெறாத வால்குறுகத்தறிக்கப்பட்ட பந்தயக்குதிரை; பெரிய மனிதரைப்போல் நடிப்பவன்; தேறல் கலவை வகை; வண்டு வகை; *a.* பந்தயத்துக்குரிய தாயிருந்தும் நன்கு வளர்க்கப்படாத.

**cock'tailed**, *a.* நிமிர்ந்த வாலுள்ள, வால் தூக்கிக் கொண்டிருக்கிற.

**cock'-up**, *n.* (அச்சு.) மற்ற எழுத்துக்களைவிட உயர்ந்திருக்கிற முதலெழுத்து; *a.* மேல் வளைந்த; (அச்சு.) மற்ற எழுத்துக்களின் உச்சிகளுக்குமேல் உயர்ந்திருக்கிற; உயர்வான.

**cock'y**, *a.* துடுக்கான, இறுமாப்புள்ள, தன்முனைப்பான.

**cocky-leek'y**, *n.* வெள்ளுள்ளி சேர்த்துச் சேவலை வேகவைத்துச் செய்யப்படும் ஸ்காத்லாந்து நாட்டுச் சாறுணா.

**cockyoll'y bird**, *n.* குழந்தை வழக்கில் பறவையின் செல்லப் பெயர்.

**coc'o, coc'oa** [1], *n.* தென்னை மரம்.

**coc'oa** [2], *n.* கெக்கேயோ (cacao) மரத்தின் விதை; சாக்குலட் (chocolate) செய்யப்படும் கெக்கேயோ விதைத் தூள்; கெக்கேயோ விதையிலிருந்து இறக்கப்படும் பானவகை.

**co'coa-beans'**, *n.* கெக்கேயோ மரத்தின் விதைகள்.

**co'coa-nibs**, *n.* கெக்கேயோ மரத்தின் விதைப் பருப்புகள்.

**coc'oa-nut**, *n.* தேங்காய்.

**cocon'scious**, *a.* இரண்டாவதான துணை உணர்வு நிலையிலுள்ள.

**coc'onut**, *n.*=cocoa-nut.

**coc'o-nut matting**, *n.* தேங்காய் நாரினால் பின்னப்பட்ட பாய்.

**coc'o-nut milk**, *n.* இளநீர், தேங்காயிலுள்ள நீர்.

**cocoon'**, *n.* புழுக்கூடு; பட்டுப்பூச்சிக் கூடு; நாங்கூழ்ப் புழுக்களும் அட்டைகளும் முட்டையிடும் பொதியுறை; *v.* புழுக்கூடு அமை; கூட்டினுள் புகுந்து போர்த்திக் கொள்.

**cocoon'ery**, *n.* பட்டுப்புழு வளர்ப்பிடம்.

**co'co-palm**, *n.*=coco.

***cocotte***, (பிர.) *n.* நடையினிய பரத்தை, ஒழுக்கங்கெட்ட இளம்பெண்; அடுப்பின்மீது வைத்து இறக்கக்கூடிய இரண்டு கைப் பிடிகளுள்ள சிறு வட்டில் வகை.

**coc'tile**, *a.* வேகவைக்கப்பட்ட செங்கல் வகையில் தீயினால் சுட்டுக் கெட்டியாக்கப்பட்ட.

**coc'tion,** *n.* கொதிக்க வைத்தல் ; சமைத்தல்.

**cod**[1], *n.* உணவுக்குப் பெரிதும் பயன்படும் பெரிய கடல் மீன் வகை.

**cod**[2], *n.* அறிவிலி ; கேலி, ஏமாற்றுச்செயல்.

**cod'-bank,** *n.* மீனினம் நாடி அடையும் கடல் கீழ்க்கரை.

**cod'dle,** *n.* கோழை ; *v.* நோயாளியைப்போல் நடத்து ; இடங்கொடுத்துக் கெடு, கொஞ்சு; அரைகுறையாக வேகவை.

**code,** *n.* சட்டத் தொகுப்பேடு ; விதிகளின் அடைவு ; ஓர் இனத்தினரிடையே அல்லது வகுப்பினரிடையே வழங்கி வரும் ஒழுக்கமுறை ; படைத்துறை முதலியவற்றின் குறியீட்டுச் செய்தி முறை ; குழூஉக்குறி ; (தந்தி.) சுருக்கம் அல்லது மறைபொருளைக் குறிப்பதற்கான இலக்கம்-எழுத்து அல்லது சொற்கோவை ; *v.* தொகு ; தொகுப்பு மூலம் வகைப்படுத்து ; குழூஉக்குறியாகச் சொல்லு.

**co-declina'tion,** *n.* (வான்.) சரிவின் நிரப்பி, வடதுருவத்திலிருந்து உள்ள தொலைவு.

**cod'eine,** *n.* தூங்கவைக்கும் மருந்தாகப் பயன்படுத்தப்படும் அபினியிலுள்ள உப்புச்சத்து.

***cod'ex,*** (ல.) *n.* தொகுப்புநூல் ; கையெழுத்துச்சுவடி ; *pl. cod'ices.*

**cod'fish,** *n.* உணவுக்குப் பெரிதும் பயன்படும் பெரிய கடல் மீன் வகை.

**codg'er,** *n.* (பே-வ.) இழிசினன் ; சிறு பயல் ; கிழடு, கிழம்.

**cod'icil,** *n.* விருப்ப ஆவணப் பிற்சேர்க்கை, உயில் அனுபந்தம்.

**cod'ify,** *v.* தொகுத்தமை ; ஒழுங்காக்கு, முறைப்படுத்து ; மனத்திற்கொள்.

**codill'a,** *n.* சணலின் சொரசொரப்பான பாகம்.

**codille',** *n.* சீட்டாட்ட வகையில் கேள்வி கேட்டவர் தோல்வியுறும் நிலை.

**cod'ist,** *n.* தொகுப்பவர் ; தொகுப்பு நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர்.

**cod'lin,** *n.*=codling[2].

**cod'ling**[1], *n.* உணவாகப் பயன்படும் கடல் மீன்வகையின் குஞ்சு.

**cod'ling**[2], *n.* நீண்டு கூம்பிய வடிவுடைய 'ஆப்பிள்' வகை.

**cod'lin-moth,** *n.* முட்டைப்புழு நிலையிலிருக்கும்பொழுது ஆப்பிள் பழங்களைத் துளைத்துச் சேதம் விளைவிக்கும் பூச்சி வகை.

**cod'-liver oil,** *n.* மருந்தாகப் பயன்படும் மீன் ஈரல் எண்ணெய், மீன் எண்ணெய்.

**cod'-piece,** *n.* ஆடவர் குறுங்காற் சட்டையின் முன்புறத் தொங்கற் பை.

**co'-ed',** *n.* (பே-வ.) ஆண்-பெண் இணைக்கல்வி நிலைய மாணவி.

**co-educa'tion,** *n.* ஆண்-பெண் இணைக்கல்வி முறை.

**coeffi'cient,** *n.* (கண., இய.) கெழு, குணகம், துணைக் காரணம்.

**co'ehorn,** *n.* (படை.) குண்டுகளை எறிவதற்கான சிறு பீரங்கி.

**coe'lacanth,** *n.* மிகப் பண்டைக் காலத்தில் வாழ்ந்து அழிந்து போன மீன் இனம்.

**coel'iac,** *a.* (உட.) வயிற்றுக்குரிய.

**coe'lom, coe'lome,** *n.* (உள்., வில.) பவளம் போன்ற பல உயிர்மங்கள் கொண்ட உயிரினங்களுக்கு மேம்பட்ட உயிர் வகைகளின் வயிற்றுக்குழி.

**coe'lostat,** *n.* (வான்.) தொடர்ந்து ஒரே வானப்பகுதியை நிழலிட்டுக் காட்டும்படி நிலவுலக அச்சுக்கியையக் கடிகாரப் பொறியினால் இயக்கப்படும் கண்ணாடி.

**coemp'tion,** *n.* வாணிகத்தில் தனிக் குத்தகையாகச் சரக்கு முழுவதையும் வாங்கிவிடுதல் ; (ரோமன் சட்டம்) ஒருவரை ஒருவர் விற்றுக்கொள்ளும் நடிப்புடன் நடைபெறும் திருமண முறை.

**coenaesthe'sis,** *n.* பொதுநிலை உடலுணர்வு.

**coen'obite,** *n.* சமுதாயக் கூட்டுவாழ்வு வாழும் துறவி.

**coeno'bium,** *n.* துறவர் ஆயம்; (உயி.) ஒரே உயிர்மமுள்ள உயிரினங்கள் வாழுமிடம் ; *pl.* coen'obia.

**coeq'ual,** *n.* ஒத்த தகுதியுடையவர் ; *a.* ஒத்த, சமமான.

**coerce',** *v.* வல்லந்தப்படுத்தித் தடு ; கட்டாயப்படுத்து ; வற்புறுத்தித் தூண்டு.

**coer'cion,** *n.* கட்டாயப்படுத்துதல் ; வல்லந்தத் தடுப்பு ; உரிமைத் தடை ஆட்சி.

**coer'cive,** *a.* வல்லந்தப்படுத்தும் இயல்புடைய, கட்டாயப் படுத்துகிற, வன்கண்மையான.

**coessen'tial,** *n.* உடனொத்த பொருண்மைநிலை கொண்ட ; உடனொத்த உள்ளார்ந்த நிலையுடைய.

**coetan'eous,** *a.* உடனொத்து ஒரே காலத்தில் இயல்கிற ; சமகால வாழ்வுடைய.

**coetern'al,** *a.* சரிசம நித்தியமான, உடனொத்து நிலைத்த.

**coev'al,** *n.* சமகாலத்தவர்; உடனொத்த ஒரே ஊழியைச் சேர்ந்த பொருள் ; *a.* ஒரே ஊழியைச் சேர்ந்த ; சம காலத்தவரான.

**co-exec'utor,** *n.* உடனிணை ஆய முதல்வர், விருப்ப ஆவணத்தை உடனிருந்து நிறைவேற்ற அதிகாரம் பெற்றவர் ; *fem.* co-exec'utrix.

**coexist',** *n.* ஒருங்கிரு ; உடனியலு, உடனொத்து வாழ்வு பெறு.

**coexis'tence,** *n.* உடனிருத்தல், உடனியல்வு; உடனொருங்கு வாழ்தல், கூட்டு வாழ்வு ; (தொ.) peaceful coexistence, நட்பமைதியுடன்கூடிய கூட்டு வாழ்வு.

**co-extend',** *v.* உடனொத்து நீடித்திரு ; உடனொருங்கு பரவியிரு.

**coexten'sive,** *a.* உடனிணைந்து பரவியிருக்கிற ; ஒரேகாலம் வரையில் நீடித்திருக்கிற.

**coff'ee,** *n.* காப்பி, வறுத்திடித்த கொட்டை வகையிலிருந்து உண்டுபண்ணப்படும் இன்குடிநீர் வகை; காப்பிக்கொட்டை; காப்பிக்கொட்டை தரும் செடிவகை; இன்குடிநீருடன் இணைந்த சிற்றுண்டி.

**coff'ee-bean,** *n.* காப்பிக்கொட்டை, காப்பிச்செடியின் விதை.

**coff'ee-berr'y,** *n.* காப்பிக்கொட்டை, காப்பிக்கொட்டைக் குரிய செடியின் பழம்.

**coff'ee-house,** *n.* காப்பிக்கடை, அருந்தகம்,

**coff'ee-mill,** *n.* காப்பிக்கொட்டை அரைப்பதற்கான இயந்திரம்.

**coff'ee-pot,** *n.* காப்பி நீரை இறக்கிப் பரிமாறுவதற்கான கலம்.

**coff'ee-room,** *n.* உண்வகச் சிற்றுண்டி அறை ; அருந்தகப் பொது அறை.

**coff'ee-stall,** *n.* சிற்றுண்டிச் சாவடி, சிற்றுண்டிக்குரிய பெட்டிக்கடை ; இயங்கும் அருந்தகம்.

**coff'er,** *n.* பணப்பேழை ; கருவூலப் பெட்டி ; தள முகட்டின் உட்குழிவான கண்ணறை ; *v.* சேர்த்து வை ; திரட்டி வை.

**coff'er-dam,** *n.* நீருக்கடியில் கடைகால் போட உதவும் நீர் புகாக் கூண்டு அமைவு.

**coff'ered,** *a.* பணப்பெட்டியுள் வைக்கப்பட்ட ; உட்கண்ணறைகள் வாய்ந்த ; சுரங்கத்தின் கசிவுக்காப்பூட்டப்பட்ட.

**coff'in,** *n.* பிணப்பெட்டி, இறந்தவர் உடலை வைத்தடக்கம் செய்ய வழங்கப்படும் பேழை ; கடலுக்கொவ்வாக் கப்பல் ; குதிரைக்குளம்பின் பகுதி ; *v.* சவப்பெட்டியில் வை ; (தொ.) drive a nail in one's coffin, விரைவில் அழிவுறுவதற்குரிய செயல் செய் ; மட்டற்ற குடி-கவலை ஆகியவற்றுக்கு ஆளாகு.

coff'in-bone, *n.* குதிரைக்குளம்படுத்த எலும்பு.

coff'in-joint, *n.* குதிரைக்குளம்படுத்த கணுப்பொருத்து.

coff'in-plate, *n.* பிணப்பெட்டிமீது பதிக்கப்படும் இறந்தவர் பெயர் பொறிக்கப்பட்ட தகடு.

coff'in-ship, *n.* கடலில் ஆரிடர் தரத்தக்க அளவில் பழுதான மரக்கலம்.

coff'le, *n.* அடிமைக்குழு; பயணக்குழுவில் கட்டியிணைக்கப்பட்டுச் செல்லும் அடிமைகள் விலங்குகளின் தொகுதி.

cog[1], *n.* இயக்கவிசை படர்விக்கும் இயந்திரச் சக்கரத்தின் பல்; இயக்கவிசை இணைக்கும் இயந்திரத்தின் முனைப்பான பகுதிகள்; இயந்திரப்பகுதியின் கொளுவி; *v.* சக்கரத்தில் பற்கள் அமை; பற்களுக்குமுன் தடை வைத்துச் சக்கரத்தின் சுழற்சியை நிறுத்து.

cog[2], *n.* போர்க்கப்பல்; சிறுபடகு; வள்ளம், பரிசல்; கப்பலின் சிறு படகு.

cog[3], *n.* ஏமாற்றுதல்; மோசடி; *v.* ஏமாற்று, மோசடி செய்; வஞ்சனை செய்; கெஞ்சிக் காரியமாற்று, இச்சகம் பாடி இணக்குவி; சூதாட்டத்தில் சூழ்ச்சியால் பகடையை விரும்பியபடி விழச்செய்.

co'gence, co'gency, *n.* நம்பவைக்கும் திறம், ஒத்துக்கொள்ள வைக்கும் ஆற்றல்.

co'gent, *a.* நம்பவைக்கும் ஆற்றலுடைய; நம்பத்தக்க.

cogg'le, *n.* மணியாசுக்கல், பாவுவதற்கு வழங்கப்படும் உருளைக்கல்; *v.* நிலையற்றிரு; உறுதியின்றியிரு.

co'gitable, *a.* எண்ணக்கூடிய, சிந்தனை செய்யத்தக்க; அறிவால் பற்றக்கூடிய.

co'gitate, *v.* நினைந்தது நினை, மனனம் செய்; ஆழ்ந்து நினை, நினைந்தாராய்; உளத்தில் வகு; (மெய்.) கருத்துருவாக்கு, கருது.

cogita'tion, *n.* ஆழ்ந்த சிந்தனை, கருத்தாய்வு.

co'gitative, *a.* ஆழ்ந்த சிந்தனையுள்ள, நீடு ஆய்வுக்குரிய.

cogn'ac, *n.* பிரான்சு நாட்டு உயர் சாராய வகை.

cog'nate, *n.* குருதி உறவுடையவர்; ஒரே இனத்தவர்; உறவினர்; ஸ்காத்லாந்து சட்டத்தில் தாய்வழி உறவினர்; *a.* ஒரே இனமான, ஒரே மரபு மூலத்தைச் சேர்ந்த; (தொ.) cognate object, வினையின் பொருட் கூறுகச் செயப்படுபொருள் குன்றிய வினையுடன் செயப்படுபொருள் வடிவில் வரும் சொல், வினையகச் செயப்படுபொருள்.

cogna'tion, *n.* உறவுடைமை, குருதிக்கலப்பு; மொழியிடையே இன உறவு.

cogni'tion, *n.* அறிவு, அறிவுக்கூறு, அறியும் ஆற்றல்; (உள.) புலனுணர்வு உட்பட்ட முழு அறிவாற்றற்கூறு.

cog'nitive, *a.* அறிவாற்றலுடைய, அறியும் ஆற்றலுடைய; புலனுணர்வுடைய.

cog'nizable, *a.* புலனுலுணரக்கூடிய; அடையாளங் கண்டு கொள்ளக்கூடிய; அறிந்துகொள்ளக்கூடிய; நீதிமன்ற ஆட்சி எல்லைக்குட்பட்ட.

cog'nizably, *adv.* அறிந்துகொள்ளக்கூடியதாக; புரியும்படியாக.

cog'nizance, *n.* தெரிதல்; காட்சியறிவெல்லை; கவனம், கவனிப்பு; கவனிப்பெல்லை; காட்சி, புலனுணர்வு; (கட்.) அறிகுறி; (சட்.) செயலாட்சி வரம்பு.

cog'nizant, *a.* அறிவுடைய; எச்சரிப்புள்ள; தெரிந்திருக்கிற; விவரம் உணர்ந்துள்ள; கவனிப்புடைய, கவனம் செலுத்தியுள்ள; (மெய்.) அறிவாற்றல் இயங்குகிற, காட்சியறிவுடைய.

cognize', *v.* அறி, தெரிந்துகொள்; (மெய்.) அறிந்துணர், உணர்விற்கொள்ளு.

cognom'en, *n.* சாட்டுப்பெயர்; அடைபெயர்; பண்டை ரோமர் பெயரின் மூன்றும் கூறுன குடும்பப் பெயர்; பண்டை ரோமர் பெயரின் நான்காம் கூறுன சிறப்புப் பெயர்; சுட்டுப் பெயர்.

cognom'inal, *a.* அடைபெயரைச் சார்ந்த; குடிப்பெயருக்குரிய; சிறப்புப்பெயர்பற்றிய; தன்னொத்த அதே பெயரையுடைய.

cognom'inate, *v.* அடைபெயர் சூட்டு.

*cognoscen'te*, (இத்.) *n.* நுண்ணய அறிஞர், கலைப்பண்பாய்வாளர், நுகர்வுநய வல்லுநர்; *pl. cognoscen'ti.*

cognos'cible, *a.* அறியத்தக்க; தீர்ப்புக் கூறத்தக்க.

*cognov'it*, (ல.) *n.* (சட்.) எதிர்வாதி செலவுப் பொறுப்பிலிருந்து தான் விடுபடுவதற்காக வாதி வழக்கின் நேர்மையை ஏற்றல்.

cog'-wheel, *n.* பற்சக்கரம்

cohab'it, *v.* கணவன் மனைவிபோன்று கூடி வாழ்.

cohabita'tion, *n.* பிறரோடு கூடிவாழ்தல்; கணவன் மனைவி போன்று இணைந்து வாழ்தல்.

coheir', *n.* இணைமரபுரிமையாளன்.

coheir'ess, *n.* இணைமரபுரிமையுடையவள்.

cohere', *v.* ஒட்டி இணை; பொருந்து, இசைவுடையதாயிரு; கூடி இணை, ஒன்றுபடு, உறுப்புக்களாக இணைந்து ஒன்றுபட்டு ஒரு முழு முதலாகு.

coher'ence, *n.* இசைவிணைவு, கூட்டுப்பொருத்தம்.

coher'ency, *n.* இசைவிணைவுத்தன்மை, கூட்டுப்பொருத்த நிலை; முரண்பாடின்மை.

coher'ent, *a.* இசைந்திணைகிற, ஒட்டிணைவான; கூட்டிசைவான; ஒத்திசைவான, முழுதும் ஒத்தியலுகிற; கருத்து சொல் ஒத்த, அகமும் புறமும் ஒத்திருக்கிற.

coher'er, *n.* மின் அலைகளைக் கண்டுபிடிக்கும் கருவி.

cohe'ritor, *n.* = coheir.

cohe'sion, *n.* ஒட்டிணைவாற்றல்; அணுத்திரள் கவர்ச்சி; ஒன்றியிருக்கும் திறம்; வாத இசைவு; காரண காரியத் தொடர்பு; (தாவ.) ஒத்தபகுதிகளின் இணைவளர்ச்சி.

cohes'ive, *a.* ஒட்டக்கூடிய; பிண்டமாக இணையும் தன்மையுள்ள.

cohib'it, *v.* தடுத்து நிறுத்து, அடக்கி வை.

co'hort, *n.* ரோமர் படையின் ஓர் பிரிவு; போர் வீரர் குழு; (தாவ.) பல தாவரக் குடும்பங்களின் தொகுதி; மக்கள் குழு.

cohor'tative, *n.* எபிரேய இலக்கணப்படி தொடர் இறந்த கால வினையின் நீட்டித்த வடிவம்; *a.* ஊக்குவிக்கிற, எழுச்சியூட்டுகிற.

coif, *n.* தலையோடு ஒட்டினாற்போன்று அமைந்துள்ள குல்லாய்; உயர்நிலை வழக்கறிஞரின் பட்டுக்குல்லாய்; மகளிர் தொப்பி வகை; *v.* குல்லாய் மாட்டிவிடு; முடி ஒப்பனைசெய்.

*coiffeur*, (பிர.) *n.* முடி ஒப்பனையாளர்.

*coiffeuse*, (பிர.) *n.* முடி ஒப்பனை மாது.

*coiffure*, (பிர.) *n.* முடி அழகுபடுத்தும் பாணி; குல்லாய் வகை; *v.* முடியழகுசெய்.

coign, coigne, *n.* மூலைக்கல்; மூலை; (தொ.) coign of vantage, வாய்ப்பான காட்சியுடைய இடம், அருவாய்ப்பான இடம்.

coil[1], *n.* கயிற்றுச்சுருள்; கம்பி வளையம்; திருகு வில்; வட்டத்துக்குள் விட்டமான வளைய அமைப்பு; வட்டம், வளையம்; திருகு வளையம்; திருகு சுருள்; மின் இயக்கக் கம்பிச்சுருள்; *v.* திருகு, வளையமாகச் சுற்று; சுருளாக்கு; சுருள் வடிவாக முறுகு; திருகு சுழலாக்கு.

coil[2], *n.* குழப்பம்; சந்தடி, இரைச்சல்; ஆர்ப்பாட்டம், வீண் ஆரவாரம்; (தொ.) mortal coil, மனித வாழ்க்கையாகிய புயல்.

coin, *n.* உலோகப் பணம்; முத்திரை கொண்ட நாணயம்; பணம்; காசு; *v.* தம்பட்டமடி, நாணயம் உண்டு பண்ணு; முத்திரையிட்டு நாணயமாக்கு; புதிது புனை, படைத்துருவாக்கு; (தொ.) coin money, விரைவாகப் பணம் ஈட்டு; pay a man in his coin, பதிலுக்குப் பதில் செய், செய்த பாணியிலேயே திரும்பிச்செய்.

coin'age, *n.* நாணயம் அடித்தல்; நாணயத்தொகுதி; வழக்கிலுள்ள நாணயமுறை; புதுப்புனைவு, புதுப்படைப்பு; புதுப்புனைவான சொல்; புதிதாகப் படைக்கப்பட்டது.

coincide', *v.* மேவு, தற்செயலாக ஒரே இடத்தில் வந்திணை; ஒரே சமயத்தில் சென்று பொருந்து; ஒருங்கு நேரிடு; இசை, ஒன்றுபடு; கருத்தில் ஒத்திரு; இணங்கு.

coin'cidence, *n.* தற்செயல் இணைவு, நிகழ்வுப்பொருத்தம்; நிகழ்ச்சிகள் எதிர்பாராது ஒருங்கொத்து நிகழ்தல்.

coin'cident, *a.* தற்செயலாக ஒருங்கு நிகழ்கிற, ஒத்தியல்கிற; ஒன்றுபடுகிற.

coinciden'tal, *a.* தற்செயல் நிகழ்வான; உடனிகழ்ச்சியான; தற்செயல் பொருத்தமான.

coin'er, *n.* நாணயமடிப்பவர்; புதிதாக உண்டுபண்ணுபவர்; கள்ள நாணயமடிப்பவர்.

co-inher'ence, *n.* ஒன்றுடனொன்று பற்றியிருத்தல், உரிமை இணைவு.

co-inher'itance, *n.* இணைமரபுரிமை, ஒருவருக்கொருவர் பின்மரபுரிமையாளராயிருக்கும் நிலை.

coinstantan'eous, *a.* ஒரே கணத்தில் ஒருங்குநிகழ்கிற.

co-insu'rance, *n.* கூட்டுவாழ்வுக்காப்பீடு.

coir, (ம.) *n.* கயிறு செய்யப் பயன்படும் தென்னை நார்.

coi'tion, *n.* கலவி, மெய்யுறு புணர்ச்சி.

coke, *n.* சுட்ட நிலக்கரி, கல்கரி, எளிதில் எரியும் ஆவிகள் மூட்டத்தில் எரிந்தபின் மீந்த நிலக்கரி; *v.* சுட்ட நிலக்கரியாக்கு.

co'kernut, *n.*=cocoa-nut.

col, *n.* (மண்.) மலைத்தொடரிலுள்ள இடைப்பள்ளம்.

col'a, *n.* வெறியத்திற்கு மாற்று மருந்தாகவும் சுவைப்பொருளாகவும் உடல் வலிமை தரும் மருந்தாகவும் பயன்படும் கொட்டையை உடைய தென் ஆப்பிரிக்க மரவகை.

col'ander, *n.* வடிகட்டி, அரிகலம், சிப்பல்; குண்டுகள் உருக்கி வார்ப்பதற்கான சிப்பல் போன்ற வார்ப்பிரும்பு; *v.* சிப்பலில் அரித்து வடிகட்டு.

co-lat'itude, *n.* நிரப்பு நேர்வரை, நேர்வரை அளவுடன் சேர்ந்து 90 பாகையாகத்தக்க அளவுடைய நேர்வரை.

col'bertine, *n.* பின்னலாடை வகை.

colcann'on, *n.* கோசுக்கீரையும் உருளைக்கிழங்கும் வெண்ணெயோடு புழுக்கப்பட்ட அயர்லாந்து (Irish) நாட்டு உணவு வகை.

Col'chicum, *n.* கீல்வாதம்-முடக்குவாதம் முதலிய வாத நோய்க்குப் பயன்படும் மருந்துப்பூண்டு வகை, இரணிய துத்தம்.

col'cothar, *n.* கண்ணாடியைப் பளபளப்பாக்கப் பயன்படும் செந்நிறமுடைய இரும்பு மீ உயிரகை.

cold, *n.* மிகுகுளிர்ச்சி; கடுங்குளிர், தணுப்பு, குளிர்மிக்க வானிலை; நீர்க்கோப்பு, தடுமல், சளி; *a.* குளிர்மிக்க; வெப்பமிழந்த, வெப்பமற்ற, தண்ணிய; உணர்ச்சியற்ற; கிளர்ச்சியற்ற; நட்பார்வமில்லாத; பாசமற்ற; கருத்தில்லாத; ஒட்டாத; கிளர்ச்சி தரா நிறமுடைய, நீலம் சாம்பல் வண்ணமான; (தொ.) catch cold, தடுமல்கொள்; cold as charity, பாசமில்லாத நிலையில்; cold feet, ஊக்கம் கெடுத்தல்; cold harbour, வழிமனை; cold pig, உறங்குபவனை எழுப்ப நீர் தெளித்தல்; cold rubber, 41 பாகை வெப்பில் உருவாக்கப்படும் செயற்கை தொய்வகம்; cold snap, திடீர்க் குளிர்நிலை; cold steel, குத்துவெட்டுப் படைக்கலங்கள்; cold storage, குளிர்பதனச்சேமம்; cold war, பனிப்போர்; சூழ்ச்சிப்போர்; cold water, தண்ணீர்; cold wave, முடி ஒப்பனையில் இயைபியல் கரைசல்மூலம் உண்டுபண்ணப்படும் செயற்கை அலைச்சுருள்; give the cold shoulder to, புறக்கணிப்புக்காட்டு; in cold blood, உணர்ச்சி வசப்படாமல், மனமார, வேண்டுமென்றே; leave one cold, செய்தியில் நம்பிக்கையூட்டத் தவறு; leave out in the cold, கவனியாது விடு, பராமுகமாயிரு; throw cold water on, ஆர்வமிழக்கச் செய், ஊக்கம் கெடு.

cold'blood'ed, *a.* உணர்ச்சியற்ற, கல்நெஞ்சுடைய; (உயி.) மீனினம்போலச் சூழல் தட்பவெப்பநிலை சார்ந்த குருதி வெப்பநிலையுடைய; உணர்ச்சிவசத்தால் செய்யப்படாத, மனமாரச் செய்யப்பட்ட.

cold'blood'edly, *adv.* வேண்டுமென்று, திட்டமிட்டே, மனமாரத்துணிந்தே.

cold'-chis'el, *n.* அனலிலிடாமலே உலோகங்களை வெட்டும் வல்லுளி வகை.

cold'-cream', *n.* உடலில் கட்டிடுவதற்குரிய குளிர் நறுங் களிம்பு வகை.

cold'-drawn, *a.* அனலிலிடாமலே துளைப்பொறியிலிட்டு இழுத்து நீட்டப்பட்ட; ஆமணக்கு விதை முதலியவற்றிலிருந்து வெப்பூட்டாமலே பிழிந்தெடுக்கப்பட்ட.

cold feet, *n.* கோழை; படையில் முன்னணியில் நிற்க அஞ்சும் தன்மை.

cold'hear'ted, *a.* உணர்ச்சியற்ற; கருத்தில்லாத, பொறுப்பற்ற.

cold'ish, *a.* ஓரளவு கடுங்குளிருடைய.

cold'ly, *adv.* கடுங்குளிருடன்; உணர்ச்சியற்ற தன்மையில்; பாசமின்றி, வெறுப்புடன்.

cold'ness, *n.* கடுங்குளிர்; வெதுவெதுப்பின்மை; விறைப்பு; உணர்ச்சியின்மை; புறக்கணிப்பு; வெறுப்பு.

cold'-pig, *v.* நீர் தெளித்து உறக்கத்தைக் கலை; தூங்குபவனை நீரூற்றி எழுப்பு.

cold'-short, *a.* இரும்பு வகையில் குளிர்ந்த நிலையில் உடையக்கூடிய; எளிதில் தாங்காத மனநிலை சார்ந்த.

cold-shoul'der, *v.* முகஞ்சுளித்து வரவேற்புக்கொடு, பராமுகமாயிரு.

cold-without', *n.* சர்க்கரை இல்லாமல் குளிர்நீர்கலந்த சாராய வகை.

cole, *n.* கோசுக்கீரை வகை.

coleop'teral, coleop'terous, *a.* பறக்கப் பயன்படும் பின் சிறகுகளுக்கு உறையாகக் கடினமான முன் சிறகுகளையுடைய வண்டினத்தைச் சார்ந்த.

cole'-seed, *n.* எண்ணெய் விதைகளையுடைய செடி வகை.

cole'-slaw, *n.* கோசுக்கீரைக்கூட்டு.

col'ic, *n.* கடு வயிற்றுவலி, அடிவயிறு வீக்கத்துடன் கூடிய குடல் நோவு; *a.* பெருங்குடலின் உடற்பகுதி சார்ந்த.

col'icky, *a.* கடு வயிற்று வலிபோன்ற; கடுவயிற்றுவலி உண்டு பண்ணுகிற; வயிற்று வலியால் துன்பப்படுகிற.

colise'um, *n.*=colosseum.

colit'is, *n.* குடலழற்சி, பெருங்குடல் வீக்கம்.

collab'orate, *v.* உடனுழை; புத்தக முதலியவற்றை உடனிணைந்து இயற்று; பகைவனோடு உடந்தையாயிருந்து வேலைசெய்.

collabora'tion, *n.* உடனுழைப்பு.

collab'orator, *n.* உடனுழைப்பாளர்.

collap'sable, *a.* வேண்டும்போது மடக்கி அடக்கக்கூடிய.

collapse', *n.* நொறுங்குதல், தகர்வு; முறிவு; தளர்ந்து வீழ்தல், மடங்கல், வீழ்ச்சி; *v.* சுருங்கு; மூடு; முறிந்து உள்விழு; தகர்ந்துபோ, அழிந்துபோ; மனம் இடிந்துபோ.

collap'sible, *a.*=collapsable.

coll'ar, *n.* கழுத்துப்பட்டை; சட்டையின் கழுத்துப்பகுதி; குதிரை-நாய் முதலியவற்றின் கழுத்துவார்; வளையம்; சுற்றுப்பட்டை; செடியின் தண்டும் வேரும் இணையும் இடம்; *v.* கழுத்துப்பட்டையைப் பற்றிப்பிடி; கழுத்துப்பட்டை அணிவி; உதைபந்து விளையாட்டில் பந்தைப் பிடித்து நிறுத்து.

coll'ar-beam, *n.* சாய்வான இரண்டு உத்தரக்கைகளை இணைக்கும் விட்டம்.

coll'ar-bone, *n.* காறையெலும்பு, சவடியெலும்பு.

**coll'ared,** *a.* கழுத்துப்பட்டை அமையப்பெற்ற; கழுத்துப் பட்டைபோல வளைத்துக் கட்டப்பட்ட; கைப்பற்றப்பட்ட.

**collaret', collarette',** *n.* சிறுகழுத்துப்பட்டை; மகளிர் பூவேலையிட்ட கழுத்துப் பட்டை.

**coll'ar-work,** *n.* கடினமான மேட்டு ஏற்றம்; மிகக் கடுமை யான உழைப்பு.

**collate',** *v.* அருகருகே வை, ஒருங்கு வை; நுணுக்கமாக ஒத்துப்பார்; ஏட்டின் பக்க ஒழுங்கு ஆய்ந்து ஒப்பிட்டுப்பார்; சீர்செய்து ஒழுங்காக அடுக்கு; கோவில் மானியமளி.

**collat'eral,** *n.* ஒன்றுபட்ட கிளை மரபினர், அயல்கிளை வழி பொதுமரபுரிமையாளர்; ஒன்றுபட்ட கிளை மரபுக் குரியது; இணையுறவினர்; சமகாலத்தவர்; சமகாலத்தது; எதிராளி, சரிசமப்போட்டிக்குரியது; *a.* ஒரே மரபின் இரு வேறு கிளையில் தோன்றிய; ஒத்திசைவான; பக்கத்துக்குப் பக்கமான, உடனொத்த, உடனிணைவான; உடனிகழ்ச்சியான; துணைமையான; துணையாதரவான; (தொ.) collateral security, துணை ஈடு, துணைப் பிணையம்.

**colla'tion,** *n.* ஒத்துப்பார்த்தல், சரிபார்த்தல், ஒப்பாய்வு; கோவில் மானிய நன்கொடை, ரோமன் கத்தோலிக்க நோன்பு நாட்களில் மாலை வேளையில் எடுத்துக்கொள்ளும் எளிய சிற்றுண்டி; தனிப்பட்ட வேளைகளில் கொள்ளும் சிற்றுண்டி.

**coll'eague,** *n.* உடன் கூட்டாளி, ஒரே தொழிலகத்தோழர், உடனுழைப்பாளர்.

**colleague',** *v.* கூடி உழை, ஒத்துறவாடு, உடந்தையாக இருந்து சூழ்ச்சிசெய்.

**coll'ect,** *n.* துதிபாடற்றிரட்டின் சிறு வழிபாட்டுப்பகுதி, தனிவாசக உருவான வழிபாடு.

**collect',** *v.* ஒருங்குகூட்டு; திரட்டு; திரள், கூடு; உய்த்தறி, ஊகி; எண்ணங்களை ஒழுங்கமை; உள்ளத்தை ஒருநிலைப் படுத்து; கட்டுப்படுத்தி ஆளு; பணம் பிரி, வரி தண்டு; (பே-வ.) கொணர்.

***collectan'ea,*** (ல.) *n. pl.* பல்கூட்டுத்திரட்டு, சில்லறைத் தொகுப்பு.

**collect'ed,** *a.* சேர்த்த; தொகுத்த; ஆர்ந்தமைந்த; அறிவுத் தெளிவுள்ள.

**collect'ing,** *n.* திரட்டுதல்; *a.* திரட்டுகிற; திரட்டுவதற் கான; (தொ.) collecting box, செடியின நூலறிஞரின் வகை மாதிரிகள் சேர்க்கும் பெட்டி; நன்கொடைப்பணப் பெட்டி.

**collec'tion,** *n.* ஒன்றுசேர்த்தல், திரட்டுதல்; நன்கொடை திரட்டுதல்; திரட்டிய பணம்; கூட்டம்; திரட்டு; திரட்டு நூல்; கல்லூரி ஆண்டுக்கூற்றின் இறுதிக்காலத்தேர்வு; நீரின் திரள் தேக்கம்; குப்பையின் திரள் கூளம்.

**collec'tive,** *n.* கூட்டம், திரள்; திரள்கூட்டு; கூட்டாண்மை முறையின் ஆக்கக்கூறு, கூட்டின் பகுதி; *a.* திரண்ட, முழு மொத்தமான; கூட்டான; தொகுக்கப்பெற்ற; பொது வான; (இலக்.) தொகுதி குறித்த; (தொ.) collective agreement, கூட்டுப்பேரத்தின் பயனாக ஏற்பட்ட ஒப்பந்தம்; collective bargaining, கூட்டுப்பேரம், தொழில் முதல் வருடன் தொழிலாளர் கூட்டாக நடத்தும் பேச்சு வார்த்தை கள்; collective security, கூட்டுப்பிணையம், நல நாட்டமைப் பில் ஒன்று அனைத்துக்கும் அனைத்தும் ஒன்றுக்கும் பிணைய மாயிருக்கும் நிலை.

**collect'ivise,** *v.* பொதுமூலதன அமைப்பு உண்டுபண்ணு, கூட்டாண்மையாக்கு.

**collec'tivism,** *n.* கூட்டாண்மை, தொழில் மூலதனம் பொது வுரிமையால் இருக்க வேண்டுமென்ற கோட்பாடு.

**collec'tivist,** *n.* கூட்டாண்மைக் கோட்பாட்டாளர்; *a.* கூட்டாண்மைக் கோட்பாட்டுக்குரிய.

**collec'tor,** *n.* வரிதண்டலாளர்; இந்தியாவில் மாவட்ட முதல்வர்; திரட்டாளர், அரும்பொருள் மாதிரிகள் சேகரிப் பவர்; சீட்டுத் தண்டுபவர்.

**collec'torate,** *n.* இந்தியாவில் மாவட்ட முதல்வரின் பணி மனை; மாவட்ட முதல்வர் ஆட்சியெல்லை; மாவட்ட ஆட்சி முதல்வரின் பணிநிலை.

**colleen',** *n.* பெண், சிறுமி.

**coll'ege,** *n.* கல்லூரி, பல்கலைக்கழகத்தோடு இணைந்த ஓர் பகுதி; கல்விச்சாலை; கல்லூரிக்கட்டிடம்; கலைக் கழகம், இலக்கிய உரிமைக்குழு; இயல்நூலாராய்ச்சி உரிமைச் சங்கம்; அரசியல் உரிமைக்குழாம்; (தொ.) College of Arms, Herald's College, 1483-இல் அமைந்த கட்டிய உரிமைக்குழு; college of cardinals, போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையாளர் குழு; College of Justice, ஸ்காத்லாந்து நாட் டில் நடுவர்களையும் வழக்கறிஞர்களையும் உட்கொண்ட சட்டஞ்சார்ந்த குழு.

**coll'eger,** *n.* கலைக்கழக உறுப்பினர்; ஈட்டன் (Eton) கல் லூரியின் 70 உதவிநிதி மாணவருள் ஒருவர்.

**colle'gial,** *a.* கல்லூரி சார்ந்த; கலைக்கழகத் தொடர்புடைய; உரிமைக்குழுச் சார்பான; (தொ.) collegial church, உரி மைக் குழுவைக் கொண்ட திருக்கோயில்; ஒன்றுக்கு மேற் பட்ட நல்லாயர்களையுடைய திருக்கோயில்.

**colle'gian,** *n.* கல்லூரி உறுப்பினர்; கலைக்கழகத்தவர்; உரிமைக் குழுவினர்; கல்லூரி வாழ்நர்.

**colle'giate,** *n.* சிறைக்கைதி; *a.* கல்லூரி சார்ந்த; கலைக்குழு வுக்குரிய; உரிமைக்குழுவிற்குரிய, கல்லூரி போன்ற; கல்லூரியையுடைய; கல்லூரி போன்ற அமைப்புக்கொண்ட; ஒரமைப்பாகச் சேர்ந்துள்ள; (தொ.) collegiate church, உரி மைக் குழுவினையுடைய திருக்கோயில், ஒன்றுக்கு மேற்பட்ட நல்லாயர்களையுடைய திருக்கோயில்.

**coll'et,** *n.* வளையம்; மணி பதிக்கும் சூழ் பதியம்.

**collide',** *v.* மோது, இடி; முரண்படு.

**coll'ie,** *n.* ஸ்காத்லாந்து நாட்டில் (Scotland) ஆடுகளின் காவலுக்குப் பயன்படுத்தப்படும் நாய் வகை, நீண்ட உரோம மும் கூர் அறிவுமுள்ள நாய் வகை.

**coll'ier,** *n.* நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளி; நிலக்கரிக் கப்பல்; நிலக்கரிக் கப்பலோட்டி.

**coll'iery,** *n.* நிலக்கரிச் சுரங்கம்.

**coll'igate,** *v.* தொடர்புபடுத்து, பொது விதியின் மூலம் இணைத்துக் காட்டு; ஒன்றுபடுத்து, இணைத்துக்கட்டு.

**colliga'tion,** *n.* இணைப்பு, பொது அமைதியின் கீழ்க் கொண்டு வருதல்.

**coll'imate,** *v.* தொலைநோக்காடி முதலியவற்றில் விழிவரை நோக்குச் சரிசெய்; ஒளிக்கதிர்களை இணைத்தியலுவி.

**collima'tion,** *n.* நேர்வரிப்பாடு, தொலைநோக்காடியின் பார் வைக் கோட்டினை ஒழுங்குபடுத்தல்.

**coll'imator,** *n.* வரி நோக்காடி, இயந்திரக் கருவியை நேர் வரிப்படுத்துவதற்காக அதனுடன் இணைக்கப்படும் சிறு தொலைநோக்காடி; வரிக்குழாய், ஒளிக்கதிர் வண்ணப் பட்டையில் பட்டைமீது நேர் இணைவரிக்கதிர்களை வீசுகிற ஒளிக்குழாய்.

**collin'ear,** *a.* ஒரே நேர்கோட்டிலுள்ள.

**Coll'ins,** *n.* விருந்திற் கலந்துகொண்டபின் அதற்கு நன்றி அறிவிப்புத் தெரிவிக்கும் கடிதம்.

**coll'iquate,** *v.* உருகவை, நலிவி, மெலிவி.

**colliquesc'ence,** *n.* எளிதில் இளகும் தன்மை.

**colli'sion,** *n.* மோதல், கடுமையான இடி; சண்டை; கடுந் தாக்குதல்; எதிர்ப்பு; போர்; முரண்பாடு.

**colli'sion-mat,** *n.* மோதலால் கப்பலில் ஏற்பட்ட துளையை மூடும் பாய்.

**coll'ocate,** *v.* ஒருங்கு வை; ஒழுங்குபடுத்து; சீர் செய், அமைந்த இடத்தில் வை.

**colloca'tion,** *n.* இணைவமைதி, இட ஒழுங்கமைதி; இரட்டைச் சொல்.

**coll'ocutor,** *n.* உடன் பேச்சாளர்.

**colloc'utory**, *a.* உடனிருந்து பேசுகிற.
**collod'ion**, *n.* மரக்கூர் காலகைக் கரைசல்; நிழற்படத் தொழிலிலும் அறுவை மருத்துவத்திலும் பயன்படும் மரக் கூற்று வெடியகக் கரைசல்.
**collogue'**, *v.* மறைவடக்கத்துடன் பேசு, கூடிப்பேசு.
**coll'oid**, *n.* கூழ்நிலைப்பொருள், இழுதுப்பொருள்; (வேதி.) கரைதக்கை, கரைந்த நிலையிலும் சவ்வூடு செல்லுமளவு கலவாப் பொருள்; *a.* கூழான, இழுது நிலையுடைய; கரைதக்கை நிலையுடைய.
**colloid'al**, *a.* கரைதக்கை நிலையுடைய, கரைந்த நிலையிலும் சவ்வூடு செல்லுமளவு ஒன்றுபட்டுக் கலவாத.
**coll'op**, *n.* இறைச்சித் துணுக்கு; பருத்த மனிதர்கள்-விலங்குகளிடத்துக் காணப்படும் சதைமடிப்பு.
**collo'quial**, *a.* பேச்சு வழக்கிலுள்ள; பேச்சோடு தொடர்புடைய.
**collo'quialism**, *a.* பேச்சு வழக்குப் பாங்கு, பேச்சுப்படிவம்.
**coll'oquist**, *n.*=collocutor.
**coll'oquy**, *n.* உரையாடல், பேச்சு; குருசங்கத் திருக்கோயிலின் (Presbyterian Church) நீதி-சட்டமன்றம்.
**coll'otype**, *n.* புத்தகப் படங்கள் விளம்பரங்கள் முதலியவற்றை அச்சிடுவதற்காகக் கதிர் வேதி முறையில் உருவாக்கப்பட்ட மென்தகடு.
**collucta'tion**, *n.* சண்டை, எதிர்ப்பு.
**collude'**, *v.* எதிரிகள் போலப் பாவித்துக் கூடிச்சதிசெய், மோசடிக்கு உடந்தையாயிரு.
**collu'sion**, *n.* கூட்டுச் சதி, ஏமாற்று; வழக்கில் எதிரிகள் போல நடித்து உள்ளாரக் கூடிச் சதிசெய்து ஏமாற்றுதல்; இரகசிய ஏமாற்று உடன்படிக்கை.
**collus'ive**, *a.* மோசடியாக இணைந்து செய்யப்பட்ட; மறை சூழ்ச்சியான.
**collu'vies**, *n.* திரண்ட குப்பைக் கூளம்; வீணர் கூட்டம், ஒழுங்கற்ற கும்பல்.
**coll'y**[1], *n.*=collie.
**coll'y**[2], *v.* நிலக்கரிப் புழுதியில் புரண்டு கரிபூசிக்கொள்.
**colly'rium**, *n.* கண்ணுக்குத் தீட்டும் மை, அஞ்சனம்.
**coll'ywobbles**, *n.* (பே-வ.) வயிற்றில் இரைதல், வயிற்று வலி.
**col'ocynth**, *n.* சுரைக்காய் வகை; சுரைக்காய் வகையிலிருந்து எடுக்கப்படும் பேதிமருந்து.
**co'lon**[1], *n.* நிறுத்தக் குறிகளில் ஒன்று, முக்காற் புள்ளி; தொடர்பொருள் தனிவாசகக் குறியீடு; முரண் குறிப்புக் குறியீடு.
**co'lon**[2], *n.* பெருங்குடல், குடல் வாலிலிருந்து மலக்குடல் வரையுள்ள பெருங்குடற்பகுதி.
**colon'**[3], *n.* எல் சல்வடார் (El Salvador) கோஸ்டா ரீகா (Costa Rica) ஆகிய இடங்களின் பொதுவழக்கு நாணய வகை.
**colon'el**, *n.* படைப்பகுதி முதல்வன்; துணைத்தலைவன்.
**Col'onel-Comm'andant**, *n.* உயர் பணிமுதல்வர், துணைமைத் தலைவர்.
**colon'elcy**, *n.* படைப்பகுதித் தலைவனின் ஆட்சிப் படிமை, துணைத் தளபதி நிலை.
**col'onel-in-chief**, *n.* மதிநிலைத் துணைத்தளபதி.
**col'onelling**, *n.* துணைத்தளபதியாகச் செயலாற்றுதல்.
**colon'ial**, *n.* குடியேற்ற நாட்டினர்; வந்தேறு குடி; *a.* குடியேற்றஞ் சார்ந்த; குடியேற்ற நாட்டைச் சார்ந்த; குடியேற்ற நாட்டின் இயல்பான; (தொ.) colonial animals, உடலிணைந்து ஒருயிர்போல வாழும் பல தனி உயிரிகள்; colonial experience man, ஆஸ்திரேலியாவில் அறிமுகமில்லாத புதுநண்பன்; பழகும் மாணவன்; colonial system, குடியேற்ற நாட்டுக்கொள்கை; குடியேற்ற நாட்டு வளத்தைத் தாய்நாடு பயன்படுத்தும் கொள்கை.
**colon'ialism**, *n.* குடியேற்ற நாட்டு வாழ்க்கை மரபு; குடியேற்ற நாட்டுப் பேச்சு மரபு; குடியேற்றக் கோட்பாடு, குடியேற்ற நாடுகள் தாய்நாட்டு நலத்திற்காகப் பயன்படுத்தப்பட வேண்டியவை என்ற கொள்கை.
**col'onist**, *n.* குடியேற்ற நாட்டவர்; தேர்தல் வேலைக்காக அமர்த்தப்பட்ட வாக்காளர்; (தாவ.) பண்படுத்தப்பட்ட நிலத்துக் களை.
**coloniza'tion**, *n.* குடியேற்றம்; குடியேற்றப்பண்பு, புது நாட்டில் குடியேறல்; குடியேற்ற நிலை.
**col'onize**, *v.* குடியேற்ற நாடு அமை; குடியேற்ற நாடாக்கு; கட்சி நலங்கருதித் தேர்தல் தொகுதிக்குள் வாக்காளர்களை உண்டுபண்ணு; குடியேறுவி, குடியேற்று.
**colonnade'**, *n.* சம இடைவெளிகளில் நிறுத்தப்பட்ட தூண்களின் வரிசை; சாலை மரங்கள் வரிசை.
**col'ony**, *n.* குடியேற்ற நாடு; குடியேற்றம், புதுக்குடியிருப்பு; கடல் கடந்த குடியமைப்பு, நாடு கடந்த குடியினம்; வந்தேறு குடி; நகரின் அயல்நாட்டுக் குடியிருப்பு; தொழிலாளர் தனிக் குடியிருப்பு; தனிக்குடியமைப்பு; குடியமைப்பிடம்; ரோமரின் பாளையக் குடியமைப்பு; கிரேக்கக் கடல்கடந்த இனக்குடிப் பகுதி; (உயி.) இன வாழ்வுக் கூட்டமைவு; (உயி.) அணு உயிர்க்குழு.
**col'ophon**, *n.* ஏடு குறித்த தகவலை உட்கொண்டிருந்த பழங் காலப் புற அணியுரை, பின்னணியுரை; வெளியீட்டாளர் பொறிப்புச்சின்னம்.
**coloph'ony**, *n.* கருப்பூரத் தைலம் வடிக்கும்பொழுது கிடைக்கும் மிகுதிப்பொருள் வண்டலான பிசின் வகை.
**coloquin'tida**, *n.*=colocynth.
**Colora'do bee'tle**, *n.* உருளைக்கிழங்கை அழிக்கும் கறுப்புக் கோடுகள் உள்ள மஞ்சள் நிற அமெரிக்க வண்டு வகை.
**colora'tion**, *n.* வண்ணந்தீட்டும் முறை; வண்ண அமைவொழுங்கு; இயற்கைவண்ண அமைதி; பன்னிற அமைதி.
***coloratur'a***, (இத்.) *n.* (இசை.) வாய்ப்பாட்டின் இன்சந்தப் பகுதிகள்; *a.* பகட்டான; அணிமயமான; (தொ.) *coloratura soprano*, பகட்டான பகுதிகளைப் பாடக்கூடிய உச்சக்குரல்; பகட்டிசை பாடக்கூடிய உச்சக்குரலுடையவர்.
**colorif'ic**, *a.* நிறம் உண்டாக்குகிற; மிகுநிறம் ஊட்டப் பெற்ற.
**colorim'eter**, *n.* நிறமானி, வண்ணத்தை அளக்கும் கருவி.
**coloss'al**, *a.* பேருருவம் படைத்த; பேருருவச்சிலை போன்ற, பிரம்மாண்டமான.
**colosse'um**, *n.* ரோம் நகரத்தின் நடு வட்டரங்கிலுள்ள மிகப் பெரிய கேளிக்கைக் கூடம்; பெரிய கேளிக்கைக் கூடம்.
**coloss'us**, *a.* பேருருவச்சிலை, அரக்க வடிவம்; ரோட்ஸ் (Rhodes) துறைமுக வாயிலில் முன்பு நிறுத்தப்பட்டிருந்த கிரேக்க மாபேருருவச்சிலை.
**colostra'tion**, *n.* குழந்தைநோய் வகை, ஈன்றணிமைக்குழவி அருந்தும் முதற்பாலால் ஏற்படும் நோய்வகை.
**colos'trum**, *n.* குழவி முதலில் உண்ணும் தாய்ப்பால்.
**colot'omy**, *n.* பெருங்குடல் இறுதியில் கீறிச் செயற்கைக் குதம் உண்டாக்குதல்.
**colo'ur**, *n.* நிறம், வண்ணம்; வெண்ணிற ஒளியினின்றும் பிரிக்கப்படக்கூடிய பகுதி; முகத்தில் தோன்றும் குருதிக் கனிவு; ஐரோப்பியரல்லாத மரபினம்; மரபினக்கலப்பு; தோற்றம்; புறக்காட்சி; காரணம்; போலிக்காரணம்; பொன்துகள்; அணியழகு; போலிப்பகட்டு; விளக்கக் காரணம்; போலிவிளக்கம்; சாயல்; ஒளிமறைப்பு; சாயம்; களை, பொலிவு; (இசை.) பண்பு; பண்புவளம்; பல்திற உணர்ச்சி வன்மை; இயல்பு; தொனி; பொருளின் நயம்; அணியழகு நடை; தனிப்பண்பு, தனிக்குறிப்பு விவரம்; படையின் கொடி; *v.* நிறமேற்று; வண்ணந்தீட்டு; கறைப்படுத்து; மிகைப்படுத்து; உருமாறுபடுத்து; முனைப்பாக்கிக்

காட்டு; தவறுக விவரி; வண்ணங்கொள்; சிவப்பாகு; வெட்கப்படு; (தொ.) come off with flying colours, வாகைமுடி, நிறைவேற்றி மகிழ்; come out in one's true colours, உண்மை இயல்போடு தோற்றமளி; false colours, போலிநடிப்பு; fear no colours, எதிரிக்கு அஞ்சாதே; give colours, நம்பக்கூடிய நிலை அளி; high colours, மேனியின் செந்நிறம்; join the colours, படையிற் சேர்; lose colour, வனப்பிழ; nail one's colours to the mast, கட்சியில் ஈடுபடு; செயல் திட்டத்தில் இறங்கு; off colour, வாடிய; மங்கிய; நலமிழந்த; உச்சநிலை கழிந்துவிட்ட, இறங்குமுகமான.

**col'ourable,** *a.* நல்ல தோற்றமுள்ள; நன்கு மறைக்கும்படி அமைந்த.

**coloura'tion,** *n.* = coloration.

**col'our-blind,** *a.* சில நிறங்களைப் பிற நிறங்களினின்றும் பிரித்தறிய இயலாத; சில நிறங்களைக் காண இயலாத.

**col'our-cast,** *n.* வண்ணத் தொலைக்காட்சிப் பரப்பீடு.

**col'oured,** *a.* நிறமுள்ள; வெண்மையல்லாத பிற நிறம் வாய்ந்த; ஐரோப்பிய இனமல்லாத வேறு மரபினத்தைச் சார்ந்த.

**col'our-film,** *n.* வண்ணத் திரைப்படச்சுருள்.

**col'our-filter,** *n.* வேண்டிய சில நிற ஒளிக்கதிர்களை மட்டும் ஊடுருவவிடவல்ல திரைத்தகடு.

**col'ourful,** *a.* வண்ணப்பகட்டான; பல நிறங்களுடைய; முனைப்பான தோற்றமுடைய, விளக்கமாகத் தெரிகிற.

**col'our-hearing,** *n.* வண்ண ஓசைத்தொடர்பிணைவு.

**col'ouring,** *n.* வண்ணப்பொருள்; பொருளின் இயல்பான நிறம், நிற அமைதி; நிறஒழுங்கு; வண்ணந்தீட்டும் முறை; தோற்றம், சாயல்.

**col'ourist,** *n.* வண்ண ஓவியர்; வண்ணத்திறங்களின் வல்லுநர்.

**col'ourless,** *a.* நிறமற்ற; பளிங்கு போன்ற; தெளிவான; வெளிறிய; பொது நிலையான; தனித்தன்மையற்ற.

**col'our-line,** *n.* வெள்ளையர்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையே காட்டப்படும் சமூகச்சார்பான வேறுபாட்டுணர்ச்சி.

**col'our-man,** *n.* வண்ண வணிகர், சாயங்களை விற்பவர்; வண்ணப்பொருள் உண்டுபண்ணுபவர்.

**col'our-music,** *n.* இசை இயல்பின வண்ணங்கள் மூலம் திரையில் காட்டும் கலை.

**col'our-organ,** *n.* இசை இயல்பின வண்ணங்கள் மூலம் திரையில் காட்ட உதவும் கருவி.

**col'our-party,** *n.* பிரிட்டிஷ் படைப் பிரிவின் கொடிக் காவலர்.

**col'ours,** *n. pl.* நிறுவனச்சின்னம்; கொடி.

**col'our-scheme,** *n.* நிற அமைப்பு பற்றிய திட்டம், நிறக் கலப்பமைதித் திட்டம்.

**col'our-screen,** *n.* = colour-filter.

**col'our-ser'geant,** *n.* கொடிப்படைக் காவலன்.

**col'oury,** *a.* வண்ண மிகுதியுடைய.

**col'portage,** *n.* திரிந்து விற்பவர் மூலம் நூல்களின் பரப்புறு விற்பனை.

**colporteur',** *n.* சமய நூல்களைத் திரிந்து விற்பவர்.

**colt,** *n.* குதிரைக்குட்டி; தடுமாற்றமுடையவன்; அனுபவமில்லாத இளைஞன், விளையாட்டுத்துறையில் கற்றுக்குட்டி; ஒட்டகம் அல்லது கழுதைக்குட்டி; (கப்.) தண்டனைக்குரிய சாட்டை வார்; *v.* (கப்.) தண்டனைக்குரிய சாட்டைவாரால் அடி.

**Colt,** *n.* சாமுவேல் கோல்ட் (Samuel Colt 1814-1862) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட கைத்துப்பாக்கி வகை.

**col'ter,** *n.* = coulter.

**colt'ish,** *a.* குதிரைக்குட்டி போன்ற, துள்ளிக் குதிக்கின்ற; குறும்புத்தனமான.

**col'ubrine,** *a.* பாம்பு போன்ற; நஞ்சில்லாப் பாம்பினம் சார்ந்த.

**colu'go,** *n.* பறப்பதுபோலத் தோன்றும்படி தாவும் வாலில்லாக் குரங்கினத்தின் வகை.

**columbar'ium,** *n.* புறாக்கூடு; இறந்தவர்களின் சாம்பல் கொண்ட தாழிகள் வைப்பதற்குரிய புறாக்கூடு போன்ற அமைப்புடைய மாடம்; உத்தரங்களின் நுனி பொருந்துவதற்காகச் சுவரில் உள்ள பள்ளம்.

**col'umbary,** *n.* புறாக்கூடு.

**Colum'bian,** *a.* அமெரிக்காவைச் சார்ந்த; பதினாறு அலகுப் புள்ளி அளவுள்ள அச்செழுத்து வகை.

**col'umbine,** *n.* புறாக்கூட்டமைவுடைய மலர்களைக்கொண்ட செடிவகை; *a.* புறாவினுக்குரிய; புறாப்போன்ற; புறாநிறங் கொண்ட.

**Colum'bine,** *n.* அவிநயக்கூத்திலே விகடனின் காதலியான நடிகை.

**colum'bite,** *n.* கனிப்பொருள் வகை.

**colum'bium,** *n.* (வேதி.) அணு எண் 41 கொண்ட உலோகத் தனிமப்பொருள்.

**col'umel,** *n.* சிறுதூண்; சிறு பத்தி.

**columell'a,** *n.* திருகு சுருளாய் அமைந்த ஒருவழி அடைப்பிதழின் நடு அச்சு; முதுகெலும்புள்ள கீழ்த்தர விலங்குகளின் செவியெலும்பு; பாசியின் சிதல் விதைப்பெட்டியின் நடுக்கோடு; சூலறை வெடித்துத் திறந்தபின் உள்ளே எஞ்சியிருக்கும் நடுப்பகுதி.

**col'umn,** *n.* தூண்; தூபி; படையின் நீளணி; நிமிர்நிலை அணிவரிசை; பக்கத்தின் அகலக்கூறுன பத்தி நிரல்; பத்திரிகை நிரலணி, பத்திரிகைத் தனிப்பகுதி; நரம்பு நாள மையம்; தோட்டச் செடி வகையின் தண்டு.

**column'nal, colum'nar,** *a.* தூணினைச் சார்ந்த; தூண் போன்ற; பத்தியாய் அமைந்த.

**col'umnated, col'umned, colum'niated,** *a.* தூண்களுள்ள; பத்திகளுள்ள.

**columnia'tion,** *n.* தூண்கள் அமைத்தல், தூண்களின் ஒழுங்கமைப்பு.

**col'umnist,** *n.* பத்திரிகையில் குறிப்பிட்ட பத்தியில் தொடர்ந்து எழுதுபவர்.

**colure',** *n.* ஒன்றையொன்று செங்கோணமாக வான துருவங்களில் வெட்டிக் குறுக்கிடும் இரு நிரைவட்டங்களில் ஒன்று.

**col'za,** *n.* = cole-seed.

**com'a** [1], *n.* இயல்பு கடந்த ஆழ்ந்த உறக்கநிலை, எல்லா உணர்ச்சியும் இழந்த முழு மயக்கநிலை; செயலின்மை.

**com'a** [2], *n.* (தாவ.) விதைநுனியின் குஞ்சம்; மரத்தின் உச்சித் தழைக்கொத்து; (வான்.) வால் வெள்ளியின் தலைப் புறத்தில் மேகம் போன்று சூழ்ந்துள்ள உறை; (தொ.) Coma Berenices, வடக்குத் திசையிலுள்ள விண்மீன் குழு.

**co'mal, co'mate,** *a.* (தாவ.) மரஉச்சியின் தழைக்கொத்துச் சார்ந்த; (வான்.) வால் வெள்ளியின் தலைப்புச் சார்ந்த.

**com'atose,** *a.* உணர்விழப்பால் தாக்கப்பட்ட; அரைகுறைத் தூக்கமான; மயக்கமான.

**comb** [1], *n.* சீப்பு; சீப்பு போன்ற கருவி; இழைமங்களைத் துப்புரவுப்படுத்தும் பல்வரிசையுள்ள வார்கருவி; பறவைகளின் கொண்டை; அலைஉச்சி; கூரை அல்லது மலையுச்சி; தேன்கூடு, தேனடை; *v.* சீப்பினுல் ஒழுங்குசெய்; துப்புரவாக்கு; சீவு; வாரு, குதிரையைத் தேய்; முழுதும் தேடிப்பார்; கடுமையாக அலசிப்பார்; தேடி ஒழி; அலசித்திரட்டு; சுருண்டு திரள்; வெண்ணுரையோடு சிதறு.

**comb** [2], *n.* காடார்ந்த ஆழ்ந்த சிறு பள்ளத்தாக்கு; குன்றின் சரிவிலுள்ள குடைவு.

**comb** [3], *n.* முகத்தலளவைக்கூறு (நான்கு மரக்கால்).

**com'bat**, *n.* சண்டை, போர் ; *v.* எதிர் ; போரிடு ; எதிர்த்துப்போராடு ; மல்லாடு ; போட்டியிடு ; எதிர்த்துநில் ; வாதிடு ; சொற்போர் செய் ; உழன்று முயற்சிசெய்.

**com'batable**, *a.* போரிடும் இயல்புள்ள.

**com'batant**, *n.* பொருநர், போரிடுபவர், சண்டையில் ஈடுபடுபவர் ; *a.* போரிடுகிற ; சண்டையில் ஈடுபடுகிற, போர்நாட்டமுள்ள.

**com'bative**, *a.* எதிர்ப்புச் செய்கிற ; சண்டைக்குணமுள்ள, போர் மனப்பான்மையுடைய.

**combe**, *n.*=comb [2].

**com'ber** [1], *n.* கம்பளி சிக்கெடுப்பவர் ; தூய்மையாக்குபவர், வார் கருவி ; சுருள்பேரலை, நுரையுடைய நீண்ட அலை.

**com'ber** [2], *a.* கடல் மீன் வகை ; முள்மீன் இனம்.

**combina'tion**, *n.* இணைதல், ஒன்றுசேர்தல் ; செயற்கூட்டுறவு, தனிப்பொருள்களின் இணைப்பு ; பக்கவண்டி, இணைப்புள்ள இயங்கு மிதிப்பொறி வண்டி; பொதுநோக்கிற்காக ஒன்றுசேர்ந்த குழு ; சேர்மானம்.

**combina'tion-room**, *n.* கேம்பிரிட்ஜ் (Cambridge) பல்கலைக்கழக உறுப்பினர்களின் பொது அறை.

**combina'tions**, *n. pl.* கையில்லாத சட்டையும் குறுங்கால் சட்டையும் இணைந்த முழு உள்ளாடைத்தொகுதி; (கண.) சேர் வகைகள், குறிப்பிட்ட உருக்கள் குறிப்பிட்ட தொகையடுக்காக இணையும் வகைப்படிவங்கள்.

**com'bine** [1], *n.* வணிகச்சங்களின் கூட்டு நிறுவனம் ; பொறுப்பாட்சிக் குழு ; அறுவடைக் கருவியோடு போரடிக்கும் கருவியும் இணைந்த கூட்டுப்பொறி.

**combine'** [2], *v.* ஒருங்கிணை, ஒன்றுசேர் ; திரள், ஒன்றுகூடு ; நெருங்கித் தொடர்புகொள் ; ஒத்துழை ; (வேதி.) இணைத்துருவாக்கு ; இணைந்து உருவாகு.

**combi'ngs**, *n. pl.* சீவப்பட்ட மயிர்க்கூளம், வாரப்பட்ட இழைக்கூளம்.

**comb'-out'**, *n.* தேடிப்பார்த்துத் தேவையற்றதை நீக்கும் முறை ; இராணுவப் பணிக்குத் தகுதியுடையவர்களைத் தேடிப் பிடிக்கும் முறை.

**combur'gess**, *n.* தன்னுட்சி பெற்ற நகரத்தின் உடன் உரிமைக் குடிமகன்.

**combust'**, *n.* சுட்டெரிக்கப்பட்ட பொருள் ; *a.* கதிரவனுல் எரிக்கப்பட்ட; கோள்கள் வகையில் கதிரவனிடமிருந்து வரும் கடுவெப்பு எல்லைக்கு ($8\frac{1}{2}$ பாகை அளவுக்கு) உட்பட்ட.

**combustibil'ity**, *n.* எரியும் தன்மை.

**combus'tible**, *n.* தீப்பற்றி எரியக்கூடியபொருள் ; *a.* தீப்பற்றி எரியக்கூடிய ; எளிதில் தூண்டிவிடப்படத்தக்க.

**combus'tion**, *n.* எரிதல் ; தீயின் எரிப்பாற்றல் ; உள்ளெரிதல்; கருகுதல்; உயிரகக் கலப்பால் மாறுபடல்; குமுறல் ; குழப்பம் ; (தொ.) spontaneous combustion, தன்னிடத்திலேயே எழும் வெப்பத்தினுல் தீப்பற்றிக்கொள்ளும் இயல்பு.

**combust'ive**, *a.* எளிதில் தீப்பற்றும் தன்மையுள்ள, தீப்பற்றத்தக்க.

**come** [1], *v.* வா ; அணுகு ; அணுகிவா ; நிலைக்கு வந்துசேர் ; வெளிப்படு ; வந்தணை ; கொணரப்பெறு ; வந்து விழு ; வந்திறங்கு ; வந்துறு ; நிகழ் ; நேரிடு ; ஆகு ; உண்டாகு ; மொத்தமாகு ; எட்டு, அடை ; ஆகத்தொடங்கு ; உருவாகு ; செயலாற்று ; (தொ.) as they come, இயல்வரவு முறைப்படி, வருந்தோறும் அம்முறையிலேயே ; come about, நிகழ், நேரிடு ; come and go, ஊசலாட்டம், அலைவு ; come at, எட்டு ; அடை ; சேர் ; come back, திரும்பிவா, மீண்டும் மக்கட் செல்வாக்கு பெறு ; come by, நெருங்கு ; கடந்து செல் ; அடை, பெறு ; come down, இறங்கி வா ; இழிநிலை அடை ; come down upon, கடுமையான கண்டனத்துக்கு ஆட்படுத்து, கண்டிப்பாக நடத்து ; come down with, பணம் கட்டிவை, உடனடியாகக் கொடு ; come high, மிகுச் செலவாகு, பெருவிலை பெறு ; come home, தன் வீடு திரும்பு, தன் இடத்துக்குவா ; கருத்தில் அல்லது உணர்ச்சியில் நன்கு பதிவுறு ; (கப்.) நங்கூரத்தின் வகையில் அடிநிலத்திலிருந்து எளிதாக மேலெழு ; come in, நுழை ; பணி, இணங்கு ; விட்டுக்கொடு ; come in for, தன் பங்காகக் கொள்ளும் தகுதி பெறு ; தற்செயலாகப் பெறு ; come into, மரபு வழியாகப் பெறு, மரபுரிமையாளனுகு ; come low, குறைவிலை பெறு; குறைந்து செலவாகு ; come of, மரபில் வா ; மரபுக்கு உரிமை ஆகு ; come of age, உரிய அகவை பெறு, சட்ட நிறைவு வயதடை ; come off, வந்துவிடு ; கழன்றுவிடு ; வெளிவா, விட்டு வெளியேறு ; விடுவிக்கப்பெறு ; நிறைவெய்து ; come on, முன்னேறு ; வந்து தொடங்கு ; வந்து தெரிவி ; எதிர், தாக்கு, எதிர்த்துப்பார் ; come out, வெளிவா, வெளியிடப்பெறு ; விளைவாகு ; தெரியவரலாகு ; சமுதாயத் தொடர்புகொள் ; வெற்றியுடன் மீளு ; வெளிப்படு, காட்சிப்படு ; தோற்றமளி ; வெளியேறு ; come out with, சொல்லு ; உரை; கூவு; உரத்துப்பேசு; come over, நிகழ் ; வந்து நேர்; மனத்தில் தோன்று ; come round, சுற்றுப் பாதையில் வா ; உலாவா, சுற்றிப்பார்க்கச்செல் ; இயல்பாக நிகழ் ; திரும்பச் செய் ; திரும்பு ; மனமாறிச் சாதகமாகு : மயக்கந்தெளிவுறு; come short, தவறு ; தோல்வியடை ; தகுதி குறைபடு ; come short of, பெறமுடியாமல் தவறு, சிறிது குறையால் உரிமையிழ ; come to, பெறு ; தொகையாகு ; திரும்பவும் தெளிநிலை பெறு ; come to grief, கடுந்துன்பத்தை அடை ; come to oneself, இயல்பான தன்னிலைக்குத் திரும்பு ; come to pass, நிகழ், நடைபெறு ; come to stay, நிலையாகிவிடு ; நிலையாயிரு ; come true, மெய்யாகு ; நிறைவேறு ; come under, உட்படு, பாற்படு, சேர்க்கப்படு ; come up, காட்சியளி, தோன்று ; come upon, தாக்கு ; பாதிக்கவை, மீது பொறுப்பு ஏற்று ; கண்ணுறு, சந்தி ; come up with, தொடர்ந்து சென்று எட்டு, உடனொத்துச் சென்றுசேர் ; to come, வருகிற, வருங்காலத்துக்குரிய.

**come** [2], *int.* ஊக்குரை அல்லது எதிர்ப்பு அல்லது கடிதல் அல்லது தடை குறிக்கும் சொல்லசை.

**come'-and-go'**, *n.* போக்குவரவு.

**come-at'-able**, *a.* கிட்டக்கூடிய ; அணுகக்கூடிய.

**come'-back**, *n.* திரும்பிவருதல் ; மீட்டுயிர்ப்பு ; புதுப்பிப்பு ; எதிருரை, தெறியுரை.

**co-medd'le**, *v.* கல, கூடியுறவாடு.

**comed'ian**, *n.* இன்பஇயல் நாடக ஆசிரியன் ; களிநாடக நடிகன்.

**comedienne'**, *n.* இன்பநாடக நடிகை.

**comediett'a**, *n.* நகைச்சுவை சிறுதுணுக்கு.

**com'edist**, *n.* இன்பியல் நாடக ஆசிரியர்.

**com'edo**, *n.* தோலடியில் காணப்படும் கரியமுகடு கொண்ட வெண்ணிறமான சுரப்பி வகை.

**come'down**, *n.* இறக்கம் ; தன் மதிப்புக்கேடு ; இழிவு.

**com'edy**, *n.* நகைச்சுவை நாடகம் ; இன்பியல் நாடகம் ; மகிழ் முடிவுக் கதை ; நகைச்சுவையைக் குறிப்பாகத் தெரிவிக்கும் நிகழ்ச்சி.

**com'ely**, *n.* மகிழ்ச்சி உண்டாக்குகிற ; நயஞ்செறிந்த ; அழகுள்ள ; *adv.* அழகான தன்மையில்.

**come'-off**, *n.* முடிவு ; கடமையினின்று நழுவுதல்.

**come'-o'-will**, *n.* தன்னியல்பாக வருதல் ; முறைகேடாகப் பிறந்த குழந்தை.

**com'er**, *n.* வந்திருப்பவர் ; நம்பிக்கையளிப்பவர்.

**comes'tible**, *a.* தின்னத்தக்க.

**comes'tibles**, *n. pl.* தின்பண்டங்கள்.

**com'et**, *n.* வால்மீன், வால்வெள்ளி.

**com'et-finder**, *n.* வால்வெள்ளி ஆய்வுத் தோலைநோக்கி.

**com'fit**, *n.* இனிப்புத் தின்பண்டம், சர்க்கரையால் சூழப்பட்ட கொட்டை வகை.

**com'fort**, *n.* ஆறுதல், தேறுதல், ஊக்குதவி ; ஓய்வமைதி ; இன்பநலம், வாய்ப்புநலம் ; துணைவர் ; துணை தருவது ; இன்பமளிப்பது ; ஆறுதலளிப்பது ; அன்னவகையின் தூவிகளாலான திண்டு ; *v.* துயராற்று ; நோவு தணி ; ஆறுதலளி ; தளர்வகற்று, ஓய்வமைதி வழங்கு ; இன்ப வாய்ப்பு நல்கு ; மகிழ்ச்சியூட்டு ; (தொ.) cold comfort, மிகச் சிறு நலம் ; வசதிக்குறைவு.

**com'fortable**, *a.* ஆறுதலளிக்கக்கூடிய; மகிழ்ச்சி வாய்ந்த; அமைதியான.

**com'forter**, *n.* ஆறுதலளிப்பவர், அமைதி நல்குபவர் ; தேற்றரவாளர் ; நீண்ட ஒடுக்கமான கம்பளிக் கழுத்துக் குட்டை ; பொய்ப் பாற்காம்பு ; (தொ.) Job's comforter, ஆறுதல்கூறி ஊக்கங்கெடுக்கும் அறிவுரையாளர் ; the Comforter, பரிசுத்த ஆவி.

**com'ic**, *n.* நகுமியல்பு, நகுதிறம் ; நகைச்சுவை நடிகர் ; விகடன் ; நகைச்சுவைப் பத்திரிகை ; *a.* இன்பியல் நாடகம் சார்ந்த ; நகைப்பூட்டுகிற ; வேடிக்கையான.

**com'ical**, *a.* நகைப்புக்கிடமான ; கோமாளித்தனமான, விசித்திரமான.

**Com'inform**, *n.* 1947-ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட உலகப் பொதுவுடைமை மைய நிலையம் (Communist Information Bureau).

**com'ings-in'**, *n.* வருவாய்.

**Com'intern**, *n.* அனைத்து நாட்டுப் பொது உடைமை அமைப்பு, 1947-ஆம் ஆண்டுக்குமுன் இருந்த மூன்றுவது உலகத் தொழிலாளர் பொதுவமைப்பு.

**comique'**, *n.* நகைச்சுவை நடிகர் அல்லது பாடகர்.

**comitadj'i**, *n.* பல்கேரிய (Bulgaria) நாட்டுப் புரட்சிக் குழுவின் உறுப்பினர் ; பல்கேரிய கொள்ளைக்காரர்.

**comita'tus**, *n.* அரசிளங்குமரனின் வழித்துணை, மெய்க்காவலன் ; மாவட்டம், கோட்டம்.

**comit'ia**, *n. pl.* குற்ற நடுவர்களைத் தேர்ந்தெடுப்பது-சட்டங்களை நிறைவேற்றுவது முதலியவற்றைச் செய்யும் ரோம நாட்டுப் பேரவைகள்.

**com'ity**, *n.* மட்டுமதிப்பு, மரியாதை ; பண்பமைதி, பழக்க வழக்க ஒழுங்கமைவு ; (தொ.) comity of nations, அனைத்துநாட்டுச் சட்ட ஒப்புரவுப்பண்பு, கூடுமானவரை ஒரு நாட்டுச்சட்டம் மற்றொரு நாட்டில் செயற்படும் ஒழுங்கமைவு.

**comm'a**, *n.* காற்புள்ளி, கால்மாத்திரை நிறுத்தக்குறி ; மிகச் சிறு இடைவெளி ; சிறு நிறுத்தம் ; சிறிய இடைத்தொடர்பு முறிவு ; (இசை.) நுணுக்க இடையீடு ; (தொ.) comma bacillus, வாந்திபேதி நுண்மம் ; comma butterfly, பின் சிறகில் கால்நிறுத்தப் புள்ளிபோன்ற வெண் குறியுள்ள வண்ணத்துப்பூச்சி ; inverted commas, மேற்கோள் குறிகள்.

**command'**, *n.* ஆணை ; அதிகாரம் ; ஆதிக்கம் ; கட்டுப்பாடு ; கட்டளை ; கட்டளை இடப்பட்ட செய்தி ; *v.* ஆணையிடு, அதிகாரம் செலுத்து ; செயற்படும்படி செய் ; ஆட்சி செலுத்து ; (தொ.) at command, தேவைக்குக் கிடைக்கக் கூடிய ; command paper, அரச ஆணையால் பாராளுமன்றத்தின்முன் வைக்கப்படும் தாள்; command performance, அரச ஆணையால் நடத்தப்படும் செயல், காட்சிச் செயல்.

**commandant'**, *n.* படைத்தலைவன்.

**commandeer'**, *v.* இராணுவ சேவைக்குக் கட்டாயப்படுத்து அல்லது இராணுவ பணிக்குக் கைப்பற்று ; படைத்துறைக்காகக் கைப்பற்று.

**comman'der**, *n.* படைத்தலைவர், ஆணை அதிகாரி ; கப்பற்படையில் மாலுமிக்கு அடுத்த அதிகாரி, மேலாள் ; வீரத் திருவுடையர்; (தொ.)Commander of the Faithful, இஸ்லாமிய நாட்டுத் தலைவர்களின் விருதுப்பெயர், கலிபாக்களின் பட்டப்பெயர்.

**Comman'der-in-Chief**, முதற்பெரும் படைத் தலைவர்.

**command'ery**, *n.* ஆணை அதிகாரியின் மாவட்டம்.

**comman'ding**, *a.* ஆண்மையுடைய, பணியவைக்கத்தக்க ; மனத்தில் பதியவைக்கத்தக்க ; மேம்பட்ட ; முனைப்பான ; விரிந்த சூழ்புலக் காட்சியையுடைய.

**command'ment**, *n.* ஆணை, கட்டளை ; விதி ; (தொ.) the ten commandments, மோசேயினுல் கொடுக்கப்பட்ட பத்துக்கட்டளைகள்.

**comman'do**, *n.* போர்முனைக்கு அனுப்பப்படும் சிறப்புப் படைப்பிரிவு ; (தொ.) on commando, களப்போர்பணி புரிகிற.

**Comman'do**, *n.* இரண்டாம் உலகப்போரில் (1939-1945) பிரிட்டிஷ் பேரரசுத்துறை அதிர்ச்சித் தாக்குதல் படை.

*comme il faut*, (பிர.) *a.* ஒழுங்கான, நயத்தக்க.

**commem'orate**, *v.* நினைவுவிழாக் கொண்டாடு ; நினைவுச் சின்னமாகப் பேருரையாற்று ; நினைவினைப் பேணிக் காப்பாற்று ; நினைவுச் சின்னம் நாட்டு ; எழுத்துருவில் நிலை நிறுத்து.

**commemora'tion**, *n.* நினைவுவிழா ; நினைவுக்காப்பு ; நினைவு வழிபாடு ; வழிபாட்டில் நினைவுக்குறிப்பு ; வழிபாட்டில் புனிதர் பற்றிய நினைவுக் குறிப்பீடு ; ஆக்ஸ்போர்டுப் பல்கலைக் கழகத்தில் நிறுவன முதல்வர் ஆண்டு நினைவு விழா.

**commem'orative, commem'oratory**, *a.* நினைவுக்குரிய, நினைவு வைக்கத்தக்க.

**commence'**, *v.* தொடங்கு ; தோற்றுவி ; புகுமுகம் செய் ; முழுநிறைவான பல்கலைக்கழகப் பட்டம் பெறு.

**commence'ment**, *n.* தொடக்கம் ; பல்கலைக்கழகங்களில் பட்ட நிறைவுரிமையளிப்பு வினைமுறை ; பட்டமேற்பு.

**commend'**, *v.* அடைக்கலமாக ஒப்படை ; தகுதியுடையது என மேவி உரை, நலம் கூறு ; பரிந்துரை, புகழ்ந்துரை ; அணி செய் ; அழகுபடுத்து ; (தொ.) commend me to, அன்போடு நினைவு கூர் ; தகுதி எனக்கருதி அளி.

**commen'dable**, *a.* பாராட்டத்தக்க, போற்றத்தக்க.

**commen'dam**, *n.* தற்காலிகத் திருக்கோயில் மானியம், மதிப்புநிலை மானியம்.

**commenda'tion**, *n.* பாராட்டுதல், மெச்சுதல் ; இறக்கும் தறுவாயிலுள்ளவர்களுக்கு இறைவனின் கருணைகிட்டும்படி பரிந்து இறைஞ்சுதல் ; புகழ்ச்சி ; உயர்வினை அறிவித்தல்.

**commen'datory**, *a.* மெச்சத்தக்க, பாராட்டத்தக்க ; புகழ்ச்சி பொதிந்துள்ள ; பாராட்டல் சார்ந்த; ஆதரவான வரவேற்பில் முன்னிலைப்படுத்தப்பட்ட; மானியத்துட்படுத்தப் பட்ட.

**commen'sal**, *n.* உணவுப்பொழுது நண்பன், உடன் உண்ணும் தோழன் ; கூட்டு வாழ்வு வாழும் உயிரினம் ; *a.* ஒரே மேசையில் உண்ணுகிற ; (உயி.) ஒன்றுக்கொன்று உதவிக் கொண்டு இணைந்து வாழ்கிற.

**commen'surable**, *a.* ஒரே அளவான; பொது அளவுடைய; ஒரே அளவால் சரியாக அளக்கத்தக்க ; சரியான விகிதத்திலுள்ள.

**commen'surate**, *a.* ஒரே அளவான.

**comm'ent**, *n.* விளக்கக் குறிப்பு ; கருத்துரை, குறிப்புரை, குறிப்பீடு ; மதிப்புரை ; *v.* கருத்துரை அல்லது மதிப்புரை கொடு ; விளக்கவுரை அளி ; இடங்காலம் கூறி விளக்கு.

**comm'entary**, *n.* விளக்கவுரை ; கருத்துரை ; குறிப்புக் களடங்கிய நூல்.

**commenta'tion**, *n.* சந்தர்ப்பம் கூறி விளக்கல், இடம் காலம் கூறி விளக்குதல்.

**comm'entator,** *n.* கருத்துரையாளர்; உரையாசிரியர், மதிப்புரைஞர்; விளக்கவுரையாளர்; நடப்பு நிகழ்ச்சியின் விளக்கவுரை ஒலிபரப்பாளர்.

**commentato'rial,** *a.* விளக்கவுரை சார்ந்த, விரிவுரை பற்றிய.

**comm'erce,** *n.* பெரு வாணிகம்; வாணிகத் தொடர்பு; விரிவான கொடுக்கல் வாங்கல் தொடர்பு; போக்கு வரவுத் தொடர்பு; செயல் தொடர்பு; தோழமைத் தொடர்பு; *v.* வாணிகம் செய்; தொடர்புகொள்.

**commer'cial,** *n.* வாணிகப் போக்குவரவாளர், பிரயாணம் செய்யும் வாணிகத்துறைப் பணியாள்: வானொலி-தொலைக் காட்சித் துறைகளில் வணிகத்துறையினர் நடத்தும் நிகழ்ச்சி நிரல், வானொலி-தொலைக்காட்சிகளில் வாணிக விளம்பரச் சார்பான நிகழ்ச்சி; *a.* வாணிகத் தொடர்புடைய, வாணிகஞ் சார்ந்த; (தொ.) commercial room, உணவுச்சாலையில் வணிகப் பயணிகளின் தனி அறை; commercial traveller, வணிகப்பயணி, வணிக நிலையத்தின் உரிமை பெற்றுப் பயணம் செய்யும் பிரதிநிதி.

**commer'cialism,** *n.* வாணிகப்பண்பு, வாணிக மனப் பான்மை; வாணிகத்துறை மொழிவழக்கு.

**commer'cialize,** *v.* வாணிகத்துறையாக்கு; வாணிகப்பண் பூட்டு; வாணிகச் சார்பாக்கு.

**commere',** *n.* compere என்பதன் பெண்பால் வடிவம்.

**commina'tion,** *n.* அச்சுறுத்தல்; பழிப்பு, கண்டனம்; ஆங்கில நாட்டுரிமைத் திருக்கோயிலில் (Anglican Church) சிறப்பு நாட்களில் தொடர்ச்சியாக வாசிக்கப்படும் இறைவனின் அச்சுறுத்தல் தொகுதி.

**comm'inative, comm'inatory,** *a.* தண்டனை பற்றி அச்சுறுத்துகிற.

**commin'gle,** *v.* ஒருங்கு கல, இடைவிரவு, ஒன்றுகச் சேர்.

**comm'inute,** *v.* நுண்துகள்களாகச் செய், பொடியாக்கு; நில உடைமைகளை மிகச்சிறு துண்டுகளாகப் பிரி; (தொ.) comminuted fracture, ஒரே எலும்பில் பல விடத்து ஏற்படும் முறிவு, சிக்கல் முறிவு, பெரும்படி முறிவு.

**Commiph'ora,** *n.* பிசின் வகை தரும் ஆசிய-ஆப்பிரிக்க மரவகை.

**commis'erable,** *a.* இரக்க உணர்ச்சிக்குரிய; இரக்கப்படத் தக்க.

**commis'erate,** *v.* பரிவுகொள், இரக்கம் காட்டு, வருத்தம் தெரிவி.

**commisera'tion,** *n.* பரிவிரக்கம்.

**commis'erative,** *a.* இரக்க உணர்வு செறிந்த; வருத்தம் தெரிவிக்கிற.

**commissar',** *n.* பொறுப்பாளர்; சோவியத் ருசியா ஒன்றியத்தின் (U.S.S.R.) அரசியற் பணியரங்கப் பொறுப்புடைய அமைச்சர்.

**commissar'ial,** *a.* பொறுப்பாளர்க்குரிய; படைத்துறை உணவுப்பொருள் மேலாளைச் சார்ந்த.

**commissar'iat,** *n.* படைத்துறை உணவுத்துறை அரங்கம்; சோவியத் ருசியாவின் (U.S.S.R.) அரசியற் பணியரங்கத் துறை; உணவுத்துறை அரங்கப் பணிமனை; பொறுப்பாளர் குழு; ருசிய அமைச்சர் குழு.

**comm'issary,** *n.* பொறுப்பாளர்; ஆட்பேர்; தனிமன்ற நடுவர்; உயர்நிலைக் காவல்துறைப் பணிமுதல்வர்; சமய வட்டத் தலைவரின் தனிப்பேராள்; படைத்துறை உணவு வள ஆதாரப் பணியரங்கத்தலைவர்; (தொ.) Commissary general, படைத்துறை உணவு அரங்க மா முதல்வர்.

**commi'ssion,** *n.* செயல்துறைப்படுத்திவிடல்; செய்துவிடல்; செய்தல்; செயல்; ஒப்படைத்துவிடல், பொறுப்பளிப்பு; அனுப்பிவைத்தல், செயல் தீர்வு; செயலுரிமையளிப்பு; உரிமைக்கட்டளை, ஆணைப்பத்திரம்; தனிப்பொறுப்பு; பொறுப்பான பணி; பொறுப்பாண்மைக் குழு; விற்பனை முகவர் பங்கு வரி, தரகு; வாணிகக் கட்டளை; வேண்டுதலறிவிப்பு; போர்க்கப்பலின் செயல் ஆயத்த நிலை; பொறுப்புரிமை, பணி ஆணை; இணைந்து பணிசெய்யும் குழுவினரிடம் தற்காலிகமாக அல்லது நிலையாக உரிமையை ஒப்படைத்தல்; *v.* பொறுப்பளி; அதிகாரம் கொடு; அமர்த்து; ஒப்படை; செயற்படுத்து; செயற்படச் செய்.

**commiss'ion-agent,** *n.* தரகு வணிகர், தரகுக்காக வாணிகம் செய்பவர்.

**commissionaire',** *n.* பணிமுறைத் தூதர்; வாயிற்காப்போன்; வாயிற்காப்போராகப் பணியாற்றும் வயது முதிர்ந்த கடல் நிலப் படைவீரர்.

**comm'issioned,** *a.* பொறுப்புரிமை அளிக்கப்பட்ட; தனிக் கட்டளையமர்வு பெற்ற; செயல் நிலைப்படுத்தப்பட்ட; (தொ.) commissioned officer, பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட மேலாளர்.

**commi'ssioner,** *n.* ஆணையர், தனிக் கட்டளைமூலம் பணி ஏற்றவர்; பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர்; பிரதிநிதி, பேராள்; (தொ.) High Commissioner, உயர்தனிப் பேராள்.

**comm'issure,** *n.* இணைப்பு; சந்திப்பின் மேற்பரப்பு; தையல் வாய் விளிம்பு; இருநரம்பு மையங்களை இணைக்கும் நரம்பிழைத் தொகுதி.

**commit',** *v.* பொறுப்பு ஒப்படை; ஓம்படையாக ஒப்புவி; சேர்ப்பி; குற்றவாளியாகு, குற்றம் செய்; குற்றத்துக்கு உட்படுத்து, சிக்கவை; உறுதி செய்; (தொ.) commit oneself to, தன்னை ஒப்படைத்துவிடு, கட்டுப்படுத்தி ஈடுபடுத்த உறுதி கொள்; commit to memory, மனப்பாடம் செய்.

**commit'ment,** *n.* ஒப்படைப்பு, சேர்ப்பித்தல்; சிறைக்குக் குற்றவாளியை அனுப்பும் ஆணை; சிறையில் அடைத்தல்; மேற்கொள்ளப்பட்ட பொறுப்பு, ஈடுபாடு பற்றிய கடப்பாட்டுநிலை.

**committ'al,** *n.* ஒப்படைப்பு; வாக்குறுதி, நேரடியாக அல்லது குறிப்பாக அளிக்கப்பட்ட வாக்குறுதிப் பொறுப்பு.

**committ'ee,** *n.* குழு, வாரியம், பெருங்குழுவிலிருந்து சிறப்பான பணிக்காக அமைக்கப்பட்ட சிறுகுழு; (சட்.) பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட ஒருவர்; பைத்தியக்காரரின் பொறுப்பை ஏற்பவர்; (தொ.) Committee of the whole House, தலைவருடன் தன் உறுப்பினர் அனைவரையுமே சட்டமன்றம் ஒரு குழுவாக்கிக் கொண்ட நிலையிலுள்ள சட்டமன்ற நிறைகுழு; committee stage, சட்டப் பகர்ப்பின் இரண்டாவது மூன்றுவது வாசிப்புக்கு இடைப்பட்ட நுணுக்க விரிவான ஆய்வாராய்வுப்படி; goes into Committee, House resolves itself into a Committee, is in Committee, சட்டமன்ற வகையில் நிறைகுழுவாக இயங்கத்தொடங்கு; in committee, குழுவின் ஆய்வுப்படியில்; Joint Committee, ஒன்றுக்கு மேற்பட்ட பெருங்குழுக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட கூட்டுக்குழு; Standing Committee, நிலைக்குழு.

**commix',** *v.* கல, ஒருமிக்க கல.

**commix'tion, commix'ture,** *n.* ஒருங்கு கலத்தல்; கலக்கும் நிலை; கலவை, கூட்டு; உடலும் ஆவியும் இணைந்த திருமீட்டெழுச்சியின் அடையாளமாகத் திருவுணு அப்பச் சில்லைத் திருக்கலத்திலிடும் கிறித்தவ சமயத் திருவினை.

**commode',** *n.* பக்கச் சுவரில் பதித்துள்ள சிறுபலகை, பக்கப்பலகை; கோக்காலி; இழுப்பறைப் பெட்டி; படுக்கை அறைக் கழிவுக் கலம்; பழங்காலச் சீமாட்டிகளின் உயர் தொப்பி.

**commod'ious,** *a.* இடமகன்ற, இடவாய்ப்பு மிக்க; இன்ப நலவாய்ப்புடைய; தகுதியான, பொருத்தமான.

**commod'iousness,** *n.* இடவசதி, போதிய இட அகற்சி.

**commod'ity,** *n.* பயனுடைய பொருள், சரக்கு; விளை பொருள்.

**comm'odore,** *n.* கடற்படைப் பணிமுதல்வர்; வாணிகக் கப்பற்படையின் முதல்நிலை மீகாமன்; பந்தயப் படகுச் சங்கத் தலைவர்; கடற்படைப் பணிமுதல்வரின் கப்பல்.

**comm'on**, *n*. பொதுநிலம்; பொது வெளி; *a*. பொதுப் படையான, எல்லோருக்குமுரிய; வழக்கமான, அடிக்கடி நிகழ்கிற; பொதுமுறையான, வழக்கமாக நிகழ்கிற; எளிதாகக் கிடைக்கிற; குறைமதிப்புள்ள; நாகரிகமில்லாத; கீழ்த்தரமான; (கண.) பொதுவான, ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களுக்கு ஒருங்கே உரிய; (தொ.) Book of Common Prayer, இங்கிலாந்தின் திருக்கோயிலைச் சார்ந்த பொது வழிபாட்டு நூல்; common chord, (இசை.) மூன்றுவது பெரு நரம்பு சிறுநரம்புகளுடன் ஐந்தாவது முழுநரம்பும் இயைந்த தொனி வகை; common gender, ஆண்பெண் இரண்டும் குறிக்கும் பொதுப்பால்; common ground, பொது வாத ஆதாரம்; common law, இங்கிலாந்து நாட்டின் பண்டைப் பழக்கவழக்க மரபுச்சட்டம்; common market, நாடுகளின் வாணிகக் கூட்டணி அமைப்பு, தங்குதடையற்ற அக இடை வாணிகமும் புறக்காப்பு வரிமுறையும் உடைய நாடுகளின் வாணிகத்துறைக் கூட்டமைப்பு; common measure, (கண.) ஒன்றுக்கு மேற்பட்ட எண்களின் பொது வகுத்தல் மூல எண்; (இசை.) பொதுத் தாளம்; common noun, பொதுப்பெயர், இனஞ்சுட்டும் ஒருமைப் பெயர்; common sense, பொது அறிவு, நல்லறிவு; common stair, பொது மாடிப்படி, வசிக்கும் இடங்கள் பலவற்றிற்குச் செல்வதற்குரிய பொதுவான மாடிப்படி; common time, (இசை.) நான்கு அல்லது இரண்டு அளவையுள்ள தாள வகை; Court of Common Bench, Court of Common Pleas, உயர்நீதிமன்றப் பிரிவுகளில் ஒன்று; in common, பொதுவில்; பிறருடன் ஒப்ப; make common cause with, பிறரோடு ஒத்த நோக்கு உடையவராகு; short commons, மிகக் குறைந்த உணவு; the common, பொதுப்படையானது, இயல்பாயமைவது; the common good, பொதுநலம், பொது நன்மை; இனநலம்; ஸ்காத்லாந்தில் நகரப்பொது உரிமையாளர் உடைமை; the common people, பொதுமக்கள்.

**comm'onable**, *a*. பொதுவுரிமையாகக் கொள்ளப்பட்ட.

**comm'onage**, *n*. பொதுநில மேய்ப்பு உரிமை; பொதுப் பயனீட்டு உரிமை; பொது உரிமை நிலம், பொது நிலம்.

**comm'onalty**, *n*. பொதுமக்கள், பொதுமக்கள் தொகுதி.

**comm'oner**, *n*. பொதுமக்களில் ஒருவர்; பெருமக்கள் தொகுதியில் சேராதவர், பெருமக்கள் மரபுத் தகுதியற்றவர்; பாராளுமன்ற மக்கள் சபை உறுப்பினர்; ஆக்ஸ்போர்டுப் பல்கலைக்கழகத்தில் பணம் கொடுத்து உணவு உண்ணும் மாணவர்.

**comm'oney**, *n*. பொதுநிலையான விளையாட்டுக் கோலி வகை.

**comm'onplace**, *n*. பொதுச்செய்தி; அடிக்கடி அடிபடும் பொருள்; அடிபட்ட தலைப்பு; அடிபட்ட பொருளற்ற வழக்கு; குறித்தெடுக்கத்தக்க சிறப்புடைய ஏட்டுப்பகுதி; *a*. சிறப்பற்ற; வழங்கித் தேய்ந்த, பழமைப்பட்ட; *v*. சிறப்புடைய ஏட்டுப்பகுதி குறித்தெடு; பொதுக்குறிப்புப் புத்தகத்தில் எழுது; பொருளற்ற வழக்குச் சொல் பேசு.

**comm'onplace-book**, *n*. நினைவுக்குறிப்புப் புத்தகம்.

**comm'on-room**, *n*. பொது அறை; கல்வி நிலையப் பொதுக் கூடம்.

**comm'ons**, *n. pl*. பொதுமக்கள்; பொதுமக்கள் பிரதிநிதிகள், பொதுமக்களின் பிரதிநிதித்துவ மன்றம், பிரிட்டனின் சட்டப் பொதுமன்றம்; பொதுநிலம்; ஆக்ஸ்போர்டுப் பல்கலைக்கழகத்தில் பொதுமேசை உணவு; ஆக்ஸ்போர்டுப் பல்கலைக்கழகத்தில் குறிப்பிட்ட விலைக்குப் பரிமாறப்படும் உணவுப் பொருள் பங்கீடு; பொதுவான உணவு, பங்கீட்டு உணவு.

**comm'onweal, comm'onwealth**, *n*. தன்னுரிமையுடைய இனக்குழு; மக்கட் பொதுவுரிமையரசு; பிரிட்டனின் மன்னர் இல்லாக் குடியுரிமைக்கால அரசு (1649-1660); சரிசமத் தனி உரிமையுடைய கூட்டரசு; சரிசம வருவாய்ப்பங்கு கொள்ளும் நடிகர் குழு.

**commo'tion**, *n*. கிளர்ச்சி, குமுறல், குழப்பம், கொந்தளிப்பு; சந்தடி.

**comm'unal**, *a*. நகராட்சி மன்றப் பிரிவைச் சேர்ந்த; சமுதாயத்தைச் சேர்ந்த, சமூகப் பொது உடைமைக்குரிய; சாதிக்குரிய, வகுப்புக்குரிய.

**comm'unalism**, *n*. திணையாட்சி யுரிமைக் கோட்பாடு.

**comm'unalize**, *v*. திணையாட்சியுரிமைப்படுத்து.

**comm'une**[1], *n*. நகராட்சி மன்றம்; தன்னாட்சி நகரப்பகுதி; பிரான்சு முதலிய நாடுகளில் தன்னாட்சியும் மாநகரத் தலைவரும் உள்ள சிறு நில ஆட்சிப்பகுதி.

**comm'une**[2], *n*. பேசுதல், உரையாடல்.

**commune'**[3], *v*. கூடிப்பேசு அல்லது உரையாடு; சமய ஒழுக்கத்திற்குரிய செயல் தொடர்புகொள், ஆன்மிகக் கூட்டுறவுகொள், தூயநற்கருணை பெறு.

**commun'icable**, *a*. தெரிவிக்கக்கூடிய, அறிவிக்கத்தக்க, சொல்லத்தக்க; அன்பான.

**commun'icant**, *n*. தூயநற்கருணையில் பங்குகொள்பவர்.

**commun'icate**, *v*. பங்குகொடு, பகிர்ந்துகொடு; அறிவி, தெரிவி; கற்பி, வெளிப்படுத்து; கொடு, அளி, மற்றொருவரோடு பொதுவாக யாதானும் தொடர்புவைத்துக்கொள்; போக்குவரத்து வைத்துக்கொள், கூட்டுறவுத் தொடர்பு கொள்; தூயநற் கருணையில் பங்குகொள்.

**communica'tion**, *n*. அறிவிப்பு, அறிவிக்கும் செயல்; அறிவிக்கப்பட்ட பொருள், தெரிவிக்கப்பட்ட செய்தி; தொடர்பு; செய்தி இணைப்பு; கடிதப் போக்குவரத்து; அறிவிக்கும் வகைதுறை; இணைப்பு வழி; இணைப்புக் கால்வாய்.

**commun'icative**, *a*. அறிவிக்கும் இயல்புடைய, செய்தி தெரிவிக்கும் குணமுள்ள; தாராளமாகப் பழகுகிற.

**commu'nicatory**, *a*. அறிவு கொடுக்கிற, அறிவூட்டுகிற.

**commun'ion**, *n*. கூடிக் கலந்து பேசுதல், சிந்தனை செய்தல்; ஆன்மிகக் கூட்டுறவு; தோழமை; பொது உரிமை; சமய வழிபாட்டு ஒற்றுமை; சமய வழிபாட்டுக்கு ஒன்றுகூடிய மக்கள் குழு; இயேசுநாதரின் இறுதி விருந்து.

**commun'ionist**, *n*. தூய நற்கருணையிற் பங்கு கொள்பவர்.

*communique*, (பிர.) *n*. பணித்துறை அறிவிப்பு.

**comm'unism**, *n*. பொதுவுடைமைக் கொள்கை; பொதுவுடைமை; பொதுவுடைமை இயக்கம்; பொதுவுடைமைக் கட்சி, தொழிலாளர் இன சர்வாதிகாரத்தின் தேவை வலியுறுத்தும் கட்சி.

**comm'unist**, *n*. பொதுவுடைமைக் கொள்கையர்.

**communitar'ian**, *n*. சமுதாய உறுப்பினர்.

**commun'ity**, *n*. பொதுச் சொத்துரிமை, உடைமைகளைப் பொதுவாகக் கொண்டு அனுபவிக்கும் முறைமை; பொதுச் சொத்துரிமைக் குழு; சமுதாயம், பொது உரிமைநலக் குழுமம்; பொதுக் குடிவாழ்வுக் குழுமம்; பொது அரசியல் அமைப்புக் குழுமம்; நகரவை மக்கட் பொதுக் குழுமம்; சமயக்கூட்டுக் குழு; பொதுவழிபாட்டுக் குழுமம்; தொழிற் கூட்டுக்குழு; பொது மக்கள் குழு; தனிமுறைக் கூட்டுக் குழு; ஒத்த பொதுப் பண்பு, ஒத்த குழுநலம்; தோழமை, பொது உடன்பாடு; (தொ.) community centre, சமூக உறவு மைய நிலையம்; community singing, கூட்டிசை; கோஷ்டி பஜனை.

**comm'unize**, *v*. பொதுவுடைமையாக்கு; பொதுவுடைமையராக்கு.

**commut'able**, *a*. மாற்றீடு செய்யக்கூடிய; இனமாற்றுச் செய்யக்கூடிய; பொருளைக் கொடுத்துச் சமரசமாகத் தீர்க்கக் கூடிய.

**comm'utate**, *v*. மின் ஓட்ட வகையை மாற்று.

**commut'ation**, *n*. இன மாற்றுதல்; தண்டனையைக் குறைத்து மாற்றல்; பண ஈடுசெய்து மாற்றுதல்.

**commut'ative**, *a*. இனமாற்றத்துக்குரிய; பரிமாற்றம் செய்யக்கூடிய.

**comm'utator**, *n*. மின்னோட்ட அலைகளைத் திருப்பிவிடும் கருவி; இனமாற்றம் செய்பவர்.

**commute'**, *v.* மாற்றிப்பெறு, கொடுத்துவாங்கு; கடுமை குறைந்த தண்டனைக்கு மாற்று; தண்டனையைக் குறை; ஒன்றுக்கொன்றாக இனமாற்று; பொருள் கொடுக்கல் வாங்கல் மாற்றீடு செய்; கடமை மாற்றீடு செய்; இருதிசை மின்னோட்டத்தை ஒருதிசை மின்னோட்டமாக்கு அல்லது மாற்றி அமை.

**comose'**, **comous'**, *a.* மரவகையில் உச்சியில் தழையுடைய; விதைகளில் நுனியில் இழைக்கொத்துடைய.

**com'pact**[1], *n.* நெருக்கமான பொருள்; கச்சிதமான பொருள் அல்லது கட்டிடம்; கூட்டு; இணைப்பு; சுண்ணச் சிமிழ்; கைப்பையில் கொண்டுசெல்லக்கூடிய சிறு முக ஒப்பனைச் சுண்ணப்பெட்டி.

**compact'**[2], *a.* நெருக்கமாக வைக்கப்பட்ட; நெருக்கமாக இணைக்கப்பட்ட; அமைக்கப்பட்ட; இயற்றப்பட்ட; உறுதியான; வன்மையான; நெருக்கமான; சுருக்கமான; *v.* இணைப்பாகச் சேர்த்து அழுத்து; திடமாக்கு; வலுப்படுத்து; இணைந்து ஆக்கு.

**com'pact**[3], *n.* உடன்படிக்கை; ஒப்பந்தம், கட்டுப்பாடு; கூட்டுக்குழு.

**compa'ges**, *n.* சட்டம்; கட்டிடம்; சிக்கல் வாய்ந்த அடி அமைப்பு; *pl.* compa'ges.

**compa'ginate**, *v.* இணை, சேர், பொருத்து.

**compan'ion**[1], *n.* தோழன்; உடனிருப்பவன்; நண்பன், கூட்டாளி; உயர்நிலைப்பணியாள்; ஆள்; பயனற்றவன்; ஓர் அமைப்பின் உறுப்பினர்; சோடியில் ஒன்று; *a.* கூடச் செல்கின்ற; தோழன் தன்மையான; *v.* சேர்ந்து செல்; உடனியங்கு.

**compan'ion**[2], *n.* (கப்.) மேல்தளத்தினின்று கீழ்த்தளத்திற்கு வெளிச்சம் அனுப்பும் சாளரச்சட்டம்; பலகணிக் கிராதி; கீழ்த்தளத்திற்கு வர உதவும் ஏணி.

**compan'ionable**, *a.* தோழனாய் இருக்கத்தக்க; மனத்திற்கொத்த; இசைவான.

**compan'ionate**, *a.* தோழமையில் பங்குகொள்கிற; (தொ.) companionate marriage, சட்டப்படி கருத்தடையோடு கூடியதும் திருமண விலக்கிற்கு எளிதாக இடங்கொடுப்பதும் ஆகிய திருமணம்.

**compan'ioned**, *a.* தோழன் உள்ள, நண்பன் உடைய.

**compan'ion-hatch**, *n.* (கப்.) தளத்தில் உள்ள துளையின் அல்லது திறப்பின் மூடி; மரமூடி.

**compan'ion-hatchway**, *n.* (கப்.) தளத்தினின்று அறைக்குச் செல்லும் வழி.

**compan'ion-ladd'er**, *n.* (கப்.) மேல் தளத்தினின்று அறைக்குச் செல்லும் படிக்கட்டு; ஏணி.

**compan'ionship**, *n.* தோழமை; தோழன் நிலை; கூட்டுக்குழு நண்பர் குழாம்.

**compan'ion-way**, *n.*=companion-hatchway.

**com'pany**, *n.* மக்கள் கூட்டம்; சங்கம், கழகம்; பறவை அல்லது விலங்குத் தொகுதி; வாணிகச் சங்கம்; சமூகம்; படைப்பிரிவு; கப்பலோட்டிகள் தொகுப்பு; தோழமை நிலை; சமூகக் கூட்டுறவு; தொடர்பு; *v.* கூடிச்செல்; தொடர்பு கொள்; கூட்டுச்சேர்; கூடி வாழ்; (தொ.) bad company, தோழமைப் பண்புகள் இல்லாத; பழகத்தக்க பண்புகள் இல்லாத; company promoter, கூட்டு முதல் கழகங்களின் ஆதரவாளர்; மேற்பார்வையாளர்; good company, நல்ல தோழமைப்பண்புகள் பொருந்தியுள்ள; தோழமைக் குண இயல்புடைய; keep company, உடனிரு; காதல் வேட்கை தெரிவி; know a man by his company, ஒருவர் நண்பர்களின் குணத்தால் அவர் நடத்தையினைத் தீர்மானி.

**com'parable**, *a.* ஒப்பிடக்கூடிய.

**compa'rative**, *n.* உறழ்படி; *a.* ஒப்புமை செய்கிற; ஒப்பீடு சார்ந்த; பிறவற்றோடு ஒத்துப்பார்த்து உயர்வாகப் போற்றப்பட்ட; நேர் நிலையல்லாத, முழுமையற்ற; (இலக்.) அதிகத்தை அறிவிக்கிற; உறழ்படியான.

**compare'**, *n.* ஒப்பீடு; *v.* ஒத்துப்பார்; ஒப்பிடு; ஒரே மாதிரியானதென்று தெரிவி; ஒத்ததென விவரித்துரை; (இலக்.) ஒப்புப்படிகளைத் தா; ஒப்பீடு செய்; ஒப்புமை காட்டு; ஒப்பாக நில்; போட்டி இடு; போராடு; (தொ.) beyond compare, ஈடு இணையற்ற; ஒப்பாரும் மிக்காருமில்லா.

**compa'rison**, *n.* ஒப்புமை காண்டல்; ஒப்பீடு செய்தல்; ஒப்புக் காணும் அளவு; ஒப்பீடான மதிப்பீடு; ஒப்பிட்டுணர்ந்த மதிப்பீடு; இருபொருட்களை ஒத்துக்காட்டும் உவமை, உவமை அணி; உருவகம்; (இலக்.) தரத்தின் வெவ்வேறு தளங்களைக் காட்டுவதற்காக பெயரடை அல்லது வினையடை அடையும் மாறுதல்.

**compart'**, *v.* தனி அறைகளாகப் பிரி; தனிப் பிரிவுகளாக்கு; பல தடுப்புக்களாகப் பிரி.

**compart'ment**, *n.* தடுத்த தனி இடம்; அறை; பிரிவு; புகை வண்டிப் பெட்டி; ஏதாவதொன்றின் பிரிவு.

**com'pass**, *n.* வட்டம்; சுற்று; இடம்; எல்லை; வரம்பு; குரல் எடுப்பின் பரவெல்லை; சுற்றளவு; வட்டத்தின் சுற்றுக்கோடு; திசையறி கருவி; திசைகாட்டி; *v.* சுற்றிச் செல்; சூழ்ந்துகொள்; சுற்றிக்கொள்; செய்து முடி; நிறைவேற்று; பெறு; திட்டம் செய்; சூழ்ச்சி செய்; சதி செய்; (தொ.) fetch a compass, வட்டமாகச் சுற்றிவா.

**com'passable**, *a.* சுற்றி வளைக்கத்தக்க; கைப்பற்றத்தக்க; வரம்பிற்குட்பட்ட; செய்துமுடிக்கத்தக்க; அறிந்துகொள்ளத்தக்க.

**com'pass-card**, *n.* திசையறிகருவியின் வட்டமான முகப்பு.

**com'passes**, *n. pl.* வட்டம் வரைய உதவும் கருவி, கவராயம்.

**com'passing**, *n.* சூழ்ச்சி முறை; திட்டம்.

**compa'ssion**, *n.* பரிவு, இரக்க உணர்ச்சி; *v.* இரங்கு.

**compass'ionable**, *a.* இரங்கத்தக்க; இரங்கக்கூடிய.

**compass'ionate**, *a.* இரக்க குணமுள்ள, பிறர்துயர் தம் துயர்போல் உணரும் இயல்புடைய; *v.* இரக்கங்கொள்; இரக்கங்காட்டு.

**com'pass-plane**, *n.* வளைந்த மரத்தை மழமழப்பாக்கும் கருவி, கோட்ட இழைப்புளி, குவி மட்டம்.

**com'pass-plant**, *n.* திசையுணர் செடி; உச்சி வெயிலை விலக்குவதற்காக வடக்கு தெற்கு நோக்கி இலைகள்விடும் செடிவகை.

**com'pass-saw**, *n.* வளைவாக வெட்டும் இரம்பம்.

**com'pass-tim'ber**, *n.* கப்பல் கட்டுவது முதலியவற்றிற்குப் பயன்படும் வளைந்த வடிவுடைய மரம்.

**com'pass-win'dow**, *n.* அரைவட்டப் பலகணி.

**compatibil'ity**, *n.* ஒத்தியல்வு, உடனியைவு; தொலைக்காட்சியில் நிறமிலி அமைவு ஒளிநிழல்வண்ணம் மட்டும் ஏற்கும் நிலை.

**compat'ible**, *a.* இணைவொத்த, ஒத்தியலக்கூடிய, ஒன்றுடனொன்று இணையக்கூடிய.

**compat'riot**, *n.* உடனொத்த ஒரே தேசத்தவர், ஒரே நாட்டைச் சேர்ந்தவர்.

**compeer'**, *n.* சரி ஒத்தவர், உடன் துணைவர், தோழர், கூட்டாளி.

**compel'**, *v.* கட்டாயப்படுத்து; வல்லந்தமாக நிறைவேற்று; அன்புரிமையால் வலியுறுத்து; வலிந்து செயற்படுத்து.

**compell'ing**, *a.* வலிந்து கருத்தீர்க்கிற; விலக்கமுடியாக் கவர்ச்சியுடைய; ஆர்வமாகப் பாராட்டித் தீரவேண்டிய.

**com'pend**, *n.*=compendium.

**compen'dious**, *a.* சுருக்கச்செறிவான; பலவற்றை உட்கொண்டுள்ள, எல்லாம் அடங்கிய.

**compen'dium**, *n.* செறிவடக்க ஏடு; பெரிய ஏட்டின் சிறு சுருக்கப் பதிப்பு; மணிச்சுருக்கம், பொழிப்பு; சாரம்; கருத்துரை.

**com'pensate**, *v.* சரியீடு செய்; இழப்பீடு அளி; பயன் அளி, ஊதியம் கொடு.

**compensa'tion,** *n.* சரியீடு செய்தல், இழப்பீடு; சம்பளம், கூலி, ஊதியம்; (இய.) எதிரெதிர் ஆற்றல் இணைவால் ஏற்படும் செயலற்ற தன்மை; (தொ.) compensation balance, தட்பவெப்ப நிலைகளுக்கேற்பச் சரிசெய்யப்பட்ட நிறைகோல்; compensation pendulum, தட்பவெப்பநிலைக் கேற்ப விரிந்து சுருங்கிச் சரிநிலை காத்துக்கொள்ளும் அமைவுடைய ஊசல்குண்டு.

**compensa'tional, compen'sative, compen'satory,** *a.* குறைவு நிரப்புகிற, கூடுதல் குறைவு சரிசெய்கிற; இழப்பீடு செய்கிற.

**com'pere,** *n.* சூத்திரதாரர், காட்சிமேடை அமைப்பாளர், பொழுது போக்குக் கேளிக்கை உருப்படிகளை இணைப்பவர்; களியாட்ட நடிகர்களை அறிமுகப்படுத்துபவர்; *v.* சூத்திர தாரராகச் செயலாற்று.

**compete',** *v.* போட்டியிடு; பரிசிலுக்குரிய போட்டியில் பங்குகொள்; பண்பில் மேம்பாடு நாடு.

**com'petence, com'petency,** *n.* தகுதி, ஆற்றல், திறன்; போதிய அளவு; சட்ட உரிமை; சட்ட இசைவு.

**com'petent,** *a.* தகுதிவாய்ந்த; போதுமான; பொருத்தமான; சட்டப்படி உரிமையுடைய; சட்ட இசைவுடைய; தகை நேர்மையுடைய.

**competit'ion,** *n.* போட்டியிடுதல்; போட்டி; ஒரே குறிக்கோளுக்கான போட்டிப்போராட்டம்; போட்டிப் பந்தயம்; திறமை அறுதிசெய்யும் போட்டித்தேர்வு.

**compet'itive,** *a.* போட்டிக்குரிய; போட்டியால் முடிவு செய்யப்படுகிற.

**compet'itor,** *n.* போட்டியிடுபவர்; எதிரி; எதிராளி.

**compila'tion,** *n.* திரட்டல், தொகுத்தல்; தொகுப்பு, திரட்டு; தொகுப்பு ஏடு, பல ஆசிரியர் ஏட்டுப் பகுதிகளின் திரட்டு.

**compile',** *v.* தொகு, திரட்டு; சேகரித்து ஏடாக இயற்று, சேகர ஏடு உருவாக்கு; ஆட்டக் கெலிப்புக்களைத் தொகையாக்கு.

**compile'ment,** *n.* தொகுத்தல்; தொகுப்பு.

**compil'er,** *n.* தொகுப்பவர்; பல இலக்கியங்களினின்றும் சிறந்தவற்றைத் திரட்டுபவர்.

**compla'cence, compla'cency,** *n.* தன்னிறைவு; அகமகிழ்வு, மனநிறைவமைதி.

**compla'cent,** *a.* உள்ள நிறைவினைத் தெரிவிக்கிற; மனநிறைவினையுடைய; அகமகிழ்வுடைய, தன்மகிழ்வுள்ள.

**complain',** *n.* முறையீடு; *v.* முறையிடு, குறை தெரிவி; வருத்தம் வெளியிடு; குற்றங்கூறு; கண்டி; மனக்குறை உணர்த்து; முணுமுணுத்துக்கொள்; ஏங்கு, நோவுகொண்டு இரங்கு.

**complain'ant,** *n.* முறையீட்டாளர், குறை கூறுபவர்; (சட்.) வாதி, வழக்காடுபவர்.

**complain'er,** *n.* முணுமுணுப்பவர், குறை கூறுபவர்; முறையிடுபவர்; வாதி.

**complaint',** *n.* முறையீடு; குறையீடு, குறை தெரிவிப்பு; குற்றச்சாட்டு, குறை, குற்றம்; நோவு, பிணி; பிணிபற்றிய குறையீடு; வழக்கு, வருத்தமறிவிப்பு; மனக்குறை; இரங்கற்பா, துயர்ப்பாடல்.

**complaisance',** *n.* இன்முகமுடைமை, மகிழ்வூட்டும் பண்பு, துணைமை நயம், விட்டுக் கொடுப்பு மனப்பான்மை.

**complaisant',** *a.* அன்பாதரவான; மகிழ்வூட்டும் விருப்புள்ள; எளிமைத் திறமுள்ள; மன்னிக்கும் பாங்குடைய.

**com'planate,** *a.* தட்டையான.

**complect',** *v.* தழுவு; இணைத்துப்பின்னு.

**com'plement**[1], *n.* நிரப்புக் கூறு; முழுமையாக்குவது; குறைநிரப்புப் பொருள்; இணைநிறைவுப்பொருள்; இணைவளநிறைவு; (வடி.) செங்கோண நிரப்புக்கூறு, நிரப்புக்கோணம், செங்கோண அளவாகிய 90 பாகையில் கோணம் குறைபடும் அளவு; (இலக்.) வினையுடனிணைந்து பயனிலைப்பொருள் நிரப்பும் சொல்; (இசை.) சுர இடையீடு பாலையில் குறைபடும் அளவு; வண்ணத்தை வெண்மையாக மாற்றவல்ல எதிர் வண்ணக்கூறு, எதிர் நிரப்பு வண்ணம்; எண் மடக்கை பத்தில் குறைபடும் அளவு; முழுமை.

**complement'**[2], *v.* நிரப்புக்கூறுயமை; குறைநிரப்பு.

**complement'al,** *a.* முழுமையாக்குகிற; நிரப்புகிற.

**complemen'tary,** *a.* முழுமையாக்குகிற; இணைந்து முழுமையாகவல்ல; இணைந்து செங்கோணமாகவல்ல; இணைந்து வெண்ணிறமாகவல்ல; இணைந்து மடக்கையைப் பத்தாக்கவல்ல; இணைந்து இசையிடையீட்டை ஒருபாலையாக்கவல்ல.

**complete',** *a.* குறைபாடற்ற; முழுநிறைவுடைய, முழுமையான; முடிந்த; நிறைவான; முழுமையும் ஆயத்தமான; நிறைவு செய்யப்பட்ட; நிறைவான; *v.* முடி; முழுமையாக்கு; நிறைவேற்று.

**comple'tion,** *n.* நிறைவுசெய்தல்; நிறைவு; முழுமையான நிலை.

**complet'ive, complet'ory,** *a.* முழுமையாக்குகிற; நிறைவேற்றுகிற.

**com'plex**[1], *n.* சிக்கல் வாய்ந்த முழுமை; பல்திறக்கூட்டொருமை; (உள.) செறிதேக்க உணர்ச்சித் தொகுதி, அடக்கி உணர்வாழத்தின் மறதியில் செறிவிக்கப்பெற்றுக் குமுறும் உணர்ச்சித்தொகுதி; உள்ளுணர்ச்சிச் சிக்கல் நிலை; *a.* பல்கூட்டான, பல்கூட்டுத் தொகுதியான; எளிதற்ற, உட்சிக்கல் வாய்ந்த; கடுமைவாய்ந்த; (இலக்.) உள்ளிணைவான, வாக்கியங்கள் வகையில் சார்பு வாசகங்களை உட்கொண்ட; (தொ.) complex number, (கண.) மெய்ந்நிலை எண்-புனைவியலெண் ஆகியவற்றின் கூட்டுத்தொகை; complex sentence, கலப்பு வாக்கியம், சினைவாசகங்களுடன் ஒரு நேர்வாசகம் உட்கொண்ட வாக்கியம்; inferiority complex, தாழ்வு மனப்பான்மை; superiority complex, உயர்வு மனப்பான்மை.

**complex'**[2], *v.* சிக்கலாக்கு; கடினமாக்கு.

**comple'xion,** *n.* இயல் நிறம்; மேனி வண்ணம்; உடலின் புறத்தோற்றம், முகத்தோற்றம்; தோற்றம்; மனநிலை; குணம், பண்பு; *v.* நிறங்கொடு.

**complex'ional,** *a.* மேனி நிறஞ்சார்ந்த; இயல்நிறம்பற்றிய; முகத்தோற்றத்துக்குரிய.

**complex'ioned,** *a.* நிறம்கொண்ட; தோற்றம் உடைய; பண்புள்ள.

**complex'ionless,** *a.* தனிநிறமற்ற; வெளிறிய.

**complex'ity,** *n.* உட்சிக்கல் நிலை, கடுஞ்சிக்கல்.

**compli'ance, compli'ancy,** *n.* கீழ்ப்படிதல்; இணக்கம்; உடன்பாடு; பணிவிணக்கப் பண்பு.

**compli'ant,** *a.* கீழ்ப்படிகிற; இணங்குகிற; நெகிழ்வுடைய; விட்டுக் கொடுக்கிற.

**com'plicacy,** *n.* சிக்கலான நிலை.

**com'plicate,** *a.* சிக்கலான, சிக்கிக்கிடக்கிற, உள் மடித்துப் பின்னிக்கிடக்கிற; குளறுபடியான; *v.* சிக்கலாக்கு; முறுக்கு, பின்னு; மாட்டவை, சிக்கவை.

**com'plicated,** *a.* சிக்கலான; புரியாத; குழப்பமான; (தொ.) complicated fracture, சிக்கலான எலும்பு முறிவு, புறம்பான வேறு ஊறுபாட்டின் சிக்கலுடைய எலும்பு முறிவு.

**complica'tion,** *n.* சிக்கலான கலப்பு; பின்னல் கோளாறு; (தொ.) complication of diseases, ஒரே சமயத்தில் பல நோய்கள் உடனியலுதல்.

**com'plicative,** *a.* சிக்கலாக்கும் இயல்புடைய.

**complic'ity,** *n.* சிக்கியிருத்தல்; உடந்தைமை, குற்றப் பொறுப்பில் பங்கு; சிக்கல் தன்மை.

**com'pliment**[1], *n.* முகமன், இன்புகழ்ச்சியுரை, நயநாகரிக மொழி ; ஆசாரமொழி, உபசார வார்த்தை ; நுண்ணயம் வாய்ந்த முகப்புகழ்ச்சி ; ஆசாரநடைமுறை ; பரிசு ; (தொ.) compliments of the season, சிறப்பான காலங்களுக்குப் பொருத்தமான வாழ்த்துரைகள், பருவ வாழ்த்துரைகள் ; left-handed compliment, போலிப்பாராட்டுரை, வஞ்சப் புகழ்ச்சி உரை ; pay one's compliments, present one's compliments, வணக்கம் தெரிவி, வாழ்த்துத் தெரிவி.

**compliment'**[2], *v.* இன்புகழ்ச்சி கூறு ; நுண்ணயத்துடன் முகப்புகழ்ச்சி செய் ; நேசமதிப்புத் தெரிவி ; பாராட்டு, மகிழ்ச்சி தெரிவி ; அன்பளிப்புச் செய்.

**compliment'al**, *a.* புகழ்ச்சி தெரிவிக்கிற ; நேசப்புகழ்ச்சியான.

**com'plimentary**, *a.* புகழ்ச்சி தெரிவிக்கிற ; பாராட்டு முறையான ; அன்பளிப்பான ; இலவசமான.

**com'plin, com'pline**, *n.* நாளின் கடைசி ஆராதனை, துயில் கொள்ளும் முன் ஓதும் செபம்.

**comply'**, *v.* பிறர் விருப்பத்திற்கு இணங்கச் செயலாற்று, இசைந்து கொடு, உடன்படு.

**com'po**, *n.* சிமிட்டி கலந்த காரை ; சுவரை அழகு செய்யும் பசைக் கலவைப் பொருள் ; கடன் தீர்க்க வகையற்றவரிடம் கடன்கொடுத்தோர் பெற்றுக்கொள்ளும் நூற்றுவீதம்.

**compon'ent**, *n.* ஆக்கக்கூறு, உள் உறுப்பு, உள்ளடங்கிய பகுதி ; *a.* ஆக்கக்கூறான, பகுதியாயுள்ள, அங்கமான.

**comport'**, *n.* நடத்தை ; *v.* இணங்கு, இசைவுறு ; மதிப்புடன் நடக்கும்படி செய், தகுதியுடன் நடந்துகொள்ளுவி.

**comport'ment**, *n.* நடைநயம், நடந்துகொள்ளும் முறை, நடத்தை.

**compose'**, *v.* இணைந்து ஆக்கு, ஒன்றுபட்டு உருவாக்கு ; சொற்களை இணைத்துப் பாட்டியற்று, யாப்பமைதிப்படுத்து ; பண் புனைந்து உருப்படுத்து, பாட்டிசைப்படுத்து ; கருத்துருவாக்கு, சொல்லமைதிப்படுத்து ; அச்சுக்கோத்திணை ; அச்சுருப்படுத்து ; இணக்கமாக்கு ; பிணக்குத்தீர்த்துவை ; அமைதிப்படுத்து, தணியச்செய் ; கலை ஒழுங்குபடுத்து ; சரிப்படுத்து, முன்னேற்பாடு செய்தமை.

**composed'**, *a.* தணிந்த ; தீர்ந்துபோன ; அமைந்த ; அமைதியான.

**compos'er**, *n.* இசைப்பாடல் ஆக்குவோர், பண்ணமைப்பாளர் ; எழுத்தாசிரியர் ; ஏட்டாசிரியர்.

**compos'ing-stick**, *n.* அச்சுக்கட்டை, பெட்டி போன்ற அச்சுக்கோப்புக் கருவி.

**com'posite**, *n.* பல சேர்ந்தமைந்த பொருள் ; சூரியகாந்திக் குடும்பத்தைச் சேர்ந்த செடி ; *a.* பலவின் ஆக்கம் சார்ந்த, பல்வகை தொக்க; (க-க.) கட்டிடக் கலைப்பாணிகள் மிடைந்து மிளிர்கிற ; (தாவ.) தனி மலர் வடிவான கொத்துமலர் சார்ந்த ; (தொ.) composite carriage, பல வகுப்புகளுள்ள புகைவண்டிப் பெட்டி ; composite portrait, பல படங்களின் இணைப்போவியம்; பலர்பட எதிர்படிவ இணைப்பச்சு வடிவம்; ஒரே மனிதரின் பலபடிவ இணைப்பச்சு வடிவம்.

**composi'tion**, *n.* இணைப்பாக்கம் ; கூட்டமைவு ; ஆக்க அமைவு ; ஆக்க இசைவுப்பொருத்தம், உறுப்பளவமைதி, கூறமைதி ; கலவை ; கட்டுரை ; இசைப்பாட்டு ; இசைப் பாட்டுருப்படி ; கலைப்படைப்பு ; கட்டுரையாக்கம், கட்டுரை யாக்கக் கலை ; கூட்டமைதி ஒப்பந்தம் ; விட்டுக்கொடுப்பு ; இருதிசைக்கலப்பு இணைப்பாலேற்படும் ஒருமை, சமரசம் ; வகையற்றவர்களின் கடன்காரர் பெறும் பங்குவீதம் ; (கண.) பல்திற ஆற்றல் வேகங்களின் ஒருமுகச் செயல்திற இணைவு ; (தொ.) composition of felony, கொடுங் குற்றத்திற்கான வழக்கைத் தொடராமலிருத்தல்.

**compos'itive**, *a.* இணைகிற, சேருகிற.

**compos'itor**, *n.* அச்சுக்கோப்பவர்.

***com'pos men'tis***, (ல.) *a.* நலமார்ந்த உள்ளத்துடன்கூடிய, அறிவுக்கோளாறற்ற மனநிலையில் உள்ள.

**composs'ible**, *a.* ஒரேசமயத்தில் ஒருங்கு உடனொத்து இருக்கக்கூடிய, மற்றொன்றோடு உடனிணைவாய் இயலத்தக்க.

**com'post**, *n.* கலப்பு உரம் ; இணைப்பு, கலவை ; *v.* கலப்பு உரமிடு ; கூட்டு உரம் உண்டுபண்ணு.

**compo'sure**, *n.* தன்னிறைவமைதி, சமநிலையமைதி, அமைவடக்கம்.

**com'pot**, *n.* தேம்பாகில் பதனம் செய்யப்பட்ட பழம்.

**compota'tion**, *n.* கூட்டமாக மதுக்குடித்தல்.

**com'potator**, *n.* குடிகாரத் தோழன்.

**com'pote**, *n.* = compot.

**com'pound**[1], *n.* பல்சினைப்பொருள், பல கூறுகளடங்கிய திரள் ; பல் பொருட் கூட்டு ; (வேதி.) சேர்மானம், ஆக்கக் கூறுகள் தம் இயல்மீறிய புதுப்பண்புகளையுடைய புதுப் பொருளாகும் நிலையுடைய கலவை ; சொற்கூட்டு, தொகை மொழி ; (மரு.) கூட்டுச்சரக்கு ; *a.* பலகூறுகளால் ஆக்கப்பட்ட ; பல பகுதிகளைக் கொண்ட ; கலப்பினமான ; (கண.) கூட்டு நிலையான, பல் கவரான ; (மரு.) சிக்கல் வாய்ந்த ; (வேதி.) கூட்டான, ஆக்கக்கூறுகள் தம் இயல்மீறிய புதுப் பண்புகளையுடைய புதுப்பொருளாகும்படியான இணைவு, சார்ந்த ; (தொ.) compound animal, உடல்கள் ஒன்றுபட்டிணைந்த உயிர்களின் தொகுதி ; compound engine, ஒரே நீராவி உருளையால் இயக்கப்படும் இயந்திரத்தொகுதி ; compound fracture, தோல்சதைக் காயங்களுடனிணைந்த சிக்கலான எலும்பு முறிவு ; compound householder, வாடகைப் பணத்துடன் வரியையும் சேர்த்து வீட்டுக்காரரிடம் கட்டும் நிலைக் குடிக்கூலிக்காரர்; compound interest, கூட்டு வட்டி ; compound leaf, பல்லலகிலை, நடுநரம்புவரை முழுதும் பிளவுபட்டுத் தனிச் சிற்றிலைகள் போலமைந்துள்ள பகுதிகளையுடைய இலை ; compound quantity, (கண.) கலப்பினக் கூட்டளவெண் ; compound ratio, தொடர் தகவெண், ஒன்றுக்கு மேற்பட்ட தகவுகளின் சினைப்பெருக்க எண்களின் தகவெண் ; compound sentence, கூட்டு வாக்கியம், துணை வாசகங்களுடனோ அவை இல்லாமலோ தலைவாசகங்கள் ஒன்றுக்கு மேற்பட்டன இணைந்துவரும் வாக்கியம் ; compound time, (இசை.) கூட்டுத்தாளக் குறி.

**compound'**[2], *v.* கலந்து இணை ; சேர்த்து ஒன்றுபடுத்து ; இருதரப்பும் ஒருங்கொத்து முடிவுகாண் ; குற்றச்சாட்டு வழக்கை ஏதேனும் நலம்பெற்றுப் பின்வாங்க இணங்கு ; சமரசத்துக்கு ஒத்துப்போ, உடன்பாட்டுக்கு இசை ; மொத்தப் பேரம் செய்.

**com'pound**[3], *n.* வளாகம், வீட்டைச்சுற்றிய மதிலக வளைவு.

**compound'er**, *n.* மருந்துகலப்பவர்.

**comprador', compradore'**, *n.* சீன வணிகருடன் வாணிகம் செய்ய ஐரோப்பிய வாணிகக் கழகங்கள் பயன்படுத்தும் இடையாள் ; ஐரோப்பிய வாணிகக் கழகங்களின் சீன வேலையாள்.

**comprehend'**, *v.* மனத்தால் பற்று, தெரிந்துகொள், புரிந்துகொள், அறி ; உட்கொள், தன்னகம்படக் கொள்

**comprehen'sible**, *a.* புரிந்துகொள்ளக்கூடிய, அறிந்துகொள்ளத்தக்க ; உட்கொள்ளத்தக்க.

**comprehen'sion**, *n.* உணர்வாற்றல், புரிந்துகொள்ளும் திறன் ; பிறவற்றை அகங்கொண்டியலும் நிலை; இங்கிலாந்து நாட்டுத் திருச்சபையினுள் (Church of England) அதற்குப் புறம்பானவர்களையும் அகங்கொள்ளுதல் ; சொல்லின் பொருள்கவிவு ஆற்றல் ; (அள.) பதப்பொருளிலடங்கிய பண்புக் குறிப்புத் தொகுதி.

**comprehen'sive**, *a.* உணர்வாற்றல் சார்ந்த ; புரிந்துகொள்ளும் திறனுள்ள ; கவிவாற்றல் மிக்க, விரிபொருள் அகப்படுத்தவல்ல ; அகல் விரிவான ; அகல் பெருந்தொகுதியான ; (தொ.) comprehensive school, பல்வகைப் பயிற்சிகளை உடைய உயர்நிலைப் பள்ளிக்கூடம்.

**com'press**[1], *n.* உறுப்புகட்கு அழுத்தந்தரப் பயன்படுத்தப்படும் பஞ்சு திணித்த கட்டுத்துணி ; வீக்கமடக்கக் கட்டும் நீர் தடையிட்டுப் பொதியப்பட்ட ஈரத்துணி.

compress'[2], *v.* நெருக்கி அழுத்து; சிறு இடத்திற்குள் திணித்துச் செலுத்து; சுருக்கு; திட்பம் மிகுவி, செறிவி, அடர்த்தியாக்கு.

compressed', *a.* சேர்த்து அழுத்தப்பட்ட; நெருக்கமாக அமைக்கப்பட்ட; (உயி.) பக்கவாட்டில் தட்டையாக்கப் பட்ட, ஒடுக்கப்பட்ட.

compressibil'ity, compress'ibleness, *n.* அழுத்தத்தினால் பரும அளவு குறையும் தன்மை; பரும அளவுக்கு அழுத்த எடையின் அழுத்த வீதம்.

compress'ible, *a.* அழுத்தக்கூடிய; சுருக்கக்கூடிய.

compress'ion, *n.* அழுத்துதல்; அழுத்தம்; அழுத்தப்படும் நிலை; அமுக்கம், அடர்த்தி, நெருக்கம்; சுருக்கம்; அழுத்தத்தால் ஏற்படும் உருத்திரிவு; தட்டையாதல்; உள்வெப்பாலையில் வளி அமுக்கும் இயக்கம்.

compress'ive, *a.* அழுத்தக்கூடிய; அடர்த்தியாக்குகிற; நெருக்கித் தட்டையாக்கக்கூடிய.

compress'or, *n.* அழுத்தும் கருவி, அமுக்கம் பெருக்கும் இயந்திரப் பகுதி; அழுத்தும் தசைநார்.

compris'al, *n.* உட்கொண்டிருத்தல், உள்ளடக்கமாகக் கொள்ளுதல், பாகமாகப் பெற்றிருத்தல்.

comprise', *v.* உட்கொண்டிரு, உள்ளடக்கமாகக் கொண்டிரு, உட்கூறுகக் கொண்டிரு; ஆக்கக் கூறுக்கு.

com'promise, *n.* சமரச இணக்கம், இருபுற விட்டுக்கொடுப்புடன் ஏற்படும் உடன்பாடு; சமரச விட்டுக்கொடுப்பு, இளக்காரச்சலுகை; இடைநிலைப்பாடான ஒன்று, இரண்டுங்கெட்ட நிலையுடைய செய்தி; *v.* இருதிறமும் விட்டுக்கொடுக்கச் செய்து உடன்பாடு உண்டுபண்ணு; உடன்படு, ஒப்பந்தம் செய்; விட்டுக்கொடு; கவர் நிலைக்கு ஆளாக்கு, ஐயுறவு நிலைக்கு உட்படுத்து.

comprovin'cial, *n.* சமயவட்டத்தலைவர் வகையில் அதே மாகாணத்தைச் சேர்ந்தவர்.

comptroll', *n.* = control.

comptroll'er, *n.* கணக்குத் தணிக்கையாளர், தம்பட்ட சாலையிலும் கடற்படையிலும் செலவுக் கட்டுப்பாட்டாளர்.

compulse', *v.* கட்டாயம்பண்ணு.

compul'sion, *n.* வலுக்கட்டாயம், வல்லந்தம், நிர்ப்பந்தம்.

compul'sionist, *n.* வலுக்கட்டாயம் செய்வதில் நம்பிக்கையுள்ளவர்.

compul'sitor, *n.* (சட்.) கட்டாயம் செய்யும் வகைதுறை.

compul'sive, *a.* வலுக்கட்டாயம் வாய்ந்த; கட்டாயப்படுத்தும் ஆற்றலுள்ள.

compul'sory, *a.* வலுக்கட்டாயமான, வல்லந்தமான; பெருங் கட்டுப்பாடுடைய.

compunc'tion, *n.* மனச்சான்றின் உறுத்தல், உள்ளுறுத்தல்; கழிவிரக்கம், வருத்தம்; உணர்ச்சித் தயக்கம்.

compunc'tious, *a.* மனச்சான்றின் உறுத்தலுடைய; குத்தலுணர்ச்சியுடைய, உணர்ச்சித் தடையுடைய; கழிவிரக்கமுடைய.

compurga'tion, *n.* குற்றச்சாட்டு நீக்கம், குற்றவாளிக்குச் சார்பான சான்றுளர் சான்று முடிவு.

com'purgator, *n.* மற்றொருவருடைய குற்றமற்ற தன்மைக்கு உறுதிச் சான்றளிப்பவர்.

comput'able, *a.* கணிக்கத்தக்க, கணக்கிடத்தக்க; அளவிட்டு மதிப்பிடக்கூடிய.

com'putant, *n.* கணக்கிடுபவர்.

computa'tion, *n.* கணக்கிடுதல், மதிப்பிடுதல், எண்ணி அளவிடுதல், கணிப்பு.

com'putative, *a.* கணக்கிடும் இயல்புடைய.

com'putator, *n.* = computant.

compute', *v.* கணக்கிடு, எண்ணி அளவிடு, கணி, மதிப்பிடு.

comput'er, *n.* கணக்கிடுபவர்; கணக்கிடும் பெரிய பொறி.

com'putist, *n.* = computant.

com'rade, *n.* தோழன், ஏடன்; நெருங்கிய துணைவன், உற்ற நண்பன்; பொதுவுடைமை பொதுவறச் சூழல்களில் தனி மனிதர் குறித்த மதிப்படைமொழி.

Com'stockery, *n.* கலை இலக்கியத் துறையில் ஆன்டனி காம்ஸ்டாக் (Anthony Comstock 1844-1915) என்ற அமெரிக்கர் எழுப்பிய பட்டாங்க மெய்ம்மைப்பாங்கெதிர்ப்பு.

Comti'sm, *n.* அகஸ்ட் காம்டே (Auguste Comte 1798.1857) தோற்றுவித்த நேர்க்காட்சி வாதம் (Positivism).

con[1], *v.* கவனத்தோடு படி; மேலோட்டமாகப் பார்; மனப்பாடம் செய்.

con[2], *n.* விமான முதலியவற்றை ஓட்டுதற்கு வழிகாட்டுதல்; விமான முதலியவற்றை ஓட்டுபவர்க்குரிய வழிகாட்டு நிலையம்; *v.* விமான முதலியவற்றை ஓட்டுபவருக்கு வழிகாட்டு.

con[3], *n.* எதிராக உள்ளது; *prep.* எதிராக; (தொ.) pros and cons, ஆதரவாகவும் எதிராகவும் உள்ளவை, சாதக பாதகங்கள்.

con[4], *n.* நம்பிக்கையார்வம்; *v.* நம்பிக்கைமோசம் செய்; ஏமாற்று; (தொ.) con game, நம்பிக்கை மோசடி.

con'acre, corn'acre, *n.* அயர்லாந்து (Ireland) நாட்டில் நிலக்கிளைக் குத்தகைமுறை; *v.* கீழ்க்குத்தகைக்கு விடு.

*con amor'e*, (இத்.) *adv.* ஆர்வத்தோடு; பற்றவாவுடன்.

cona'tion, *n.* செயல் துணிவாற்றல், விருப்பு வெறுப்புணர்ச்சிகளைச் செயல்படத்தூண்டும் மன ஆற்றல்.

cona'tus, *n.* முயற்சி; உள் தூண்டுகை; போக்கு, சார்பு.

concat'enate, *v.* தொடராக இணை; தொடர்புபடுத்து, சங்கிலிபோல் தொடு, கோவைப்படுத்து.

concatena'tion, *n.* கண்ணிகளின் தொகுதி, சங்கிலித் தொடர்கோவை; ஒன்றோடொன்று சார்பு கொண்டுள்ள பொருட்களின் தொடர்வரிசை.

con'cave, *n.* உட்குழிவான வடிவம், குழிவு, பள்ளம்; மேல் வளைவு, வான வளைவு, நிலவறை வளைவு மாடம்; *a.* உட்குழிவான, பள்ளமான; *v.* உட்குழிவாக்கு; பள்ளமாக்கு.

concav'ity, *n.* உட்குழிவு நிலை; பள்ளம்.

conca'vo-con'cave, *a.* இருபக்கங்களும் உட்குழிவான.

conca'vo-con'vex, *a.* ஒருபுறம் உட்குழிந்து மறுபுறம் வெளிக்குவிவான.

conceal', *v.* முழுதும் மறை; நன்கு மறைத்துவை; மறைவடக்கமாக வைத்திரு; மாற்றுருக்கொள்; வெளியிடாதிரு, மறையடக்கு.

conceal'ment, *n.* மறைத்தல்; மறைவடக்கம், ஒளிவு மறைவு; மாற்றுருவம்; மறைவிடம், பதுங்கிடம்.

concede', *v.* எதிர்ப்பின்றி விட்டுக்கொடு; சலுகையளி; அட்டியில்லாமல் ஏற்றுக்கொள், ஒத்துக்கொள்.

conceit', *n.* இறுமாப்பு, போலித் தற்பெருமை, தற்செருக்கு; கருத்துப் படிவம்; கற்பனை, தற்புனைவு; சொல்திறம், திறம்பட்ட கருத்து; வீணெண்ணம்; போலிக் கருத்து; செயற்கைக் கற்பனை; போலிப் புனைவு; செயற்கை அணி, போலி நயம்; மதிப்பீடு, பாவனை; *v.* புனைந்து கற்பி, இல்லாததை உள்ளதாகத் தன்னையே நம்ப வை; (தொ.) out of conceit with, வெறுப்புடன்.

conceit'ed, *a.* போலித் தற்பெருமையுடைய, செருக்குள்ள, இறுமாப்புடைய; தன்முனைப்புள்ள, ஆணவமுடைய.

conceit'y, *a.* இறுமாப்பு வாய்ந்த.

conceiv'able, *a.* கருதத்தக்க, எண்ணிப்பார்க்கக் கூடிய, மனத்தால் பாவிக்கவல்ல.

conceive', *v.* கருக்கொள், சூலுறு; கருது, கருத்தில் உருவாக்கு; பாவனை செய், எண்ணிப்பார்; உணர், புரிந்துகொள்; கருத்துப்பற்றிக்கொள்; சொல்லுருவில் கருத்துக் குறிப்பிடு.

concel'ebrate, *v.* ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையில் சமய மாவட்ட முதல்வரால் புதிதாக அமர்வுபெற்ற சமயகுரு வகையில் அமர்வு செய்த முதல்வருடனிருந்து திருவுணு வினை முறை நிகழ்த்து.

concent', *n.* பல்குரல் இசைவு.

concent'er, *v.*=concentre.

con'centrate [1], *n.* மனம் ஒருமுகப்படுத்துவதன் விளைபயன்; *v.* பொதுமைய நோக்கி இயக்கு; பொதுமையம் நோக்கிச் செல்; கருத்தை ஒருமுகப்படுத்து, எண்ணங்களை ஒரு பொருள் நோக்கிச் செலுத்து, முழுக் கவனத்தையும் ஒருங்கே ஒருதிசையில் செலுத்து; ஒருமுகப்படு, ஒருமுக நோக்கு; கெட்டியாக்கு, முழுச்செறிவூட்டு; குறிப்பிட்ட பருமனளவுக்கு அணுத்திரள்வீத மிகுதியாக்கு.

concen'trate [2], *a.* பொது மையமுடைய; கெட்டியான; செறிவான.

concentra'tion, *n.* ஒருமுகப்படுத்துதல்; ஒருமுகப்படல்; ஒருமுகச் சிந்தனை; கூர் நோக்கு; கருத்தூன்றல், ஒருமித்த கவனம்; கெட்டியாக்குதல்; திட்பம், அடர்த்தி, செறிவு; பிழம்பளவில் அணுத்திரளின் மிகு வீதம்; (தொ.) concentration camp, அரசினருக்கு எதிர்ப்பானவர்களை ஒதுக்கி வைக்கும் குடியேற்றப் பகுதி.

con'centrative, *a.* ஒருமுகப்படுத்தும் தன்மை வாய்ந்த.

con'centrator, *n.* கரைசல்களைக் கெட்டியாக்கும் கருவி; சுரங்க உலோகக் கலவையிலிருந்து கனிப்பொருள்களைப் பிரித்து எடுக்கும் கருவி.

concent're, *v.* பொதுமையத்தில் கூடு; பொதுமைய நோக்கிச் செல்; ஒரே மையம் கொண்டிரு; பொது மையத்தை நோக்கி இயக்கு.

concen'tric, concen'trical, *a.* ஒரே மையமுள்ள, பொது மையம் கொண்டுள்ள.

con'cept, *n.* கருத்துப்படிவம்; பொதுக்கருத்து; ஓரினப் பொருளைச் சுட்டும் கருத்து; கருதப்பட்ட ஒன்று.

concep'tacle, *n.* வைக்குமிடம், கொள்ளுமிடம்; கருக்குழி.

concep'tion, *n.* கருக்கொள்ளுதல்; மலர்த்துகள் பொலிவுறுதல்; கருதுதல், கருத்துருவாக்கல்; எண்ணம், கருத்து; கருத்தாற்றல்; கற்பனையாற்றல்; திட்டப்புனைவாற்றல்; கருத்துருவம், திட்டம்.

concept'ive, *a.* எண்ணங்களுக்குரிய; கருத்தரித்தல் தொடர்பான.

concep'tual, *a.* பொதுக்கருத்துத் தொடர்பான; கருக் கொள்ளுதல் சார்ந்த.

concep'tualism, *n.* பொதுமைக் கருத்துக்கள் மனத்தில் தான் உள்ளன என்னும் மெய்விளக்கியல் கோட்பாடு.

concern', *n.* சார்புடையது; தொடர்பு, சார்பு; அக்கறை; கவலை; மதிப்பு; கவனம்; தொழில் நிறுவனம், அமைப்பு; *v.* தொடர்புடையதாயிரு, சார்புடையதாயிரு, பற்றியதாயிரு, உரியதாயிரு; நலந்தீங்குகளுக்கு உரித்தாயிரு; பாதிப்பதாயிரு; தொழில் கடமை அல்லது நலங்கள் சார்ந்ததாயிரு; ஈடுபாடு கொண்டிரு; தொடர்புபடுத்து, சார்பு படுத்து; அக்கறை யூட்டு; மன அமைதி கலை, கவலையுண்டு பண்ணு; (தொ.) as concerns, பற்றி, சார்பாக, வகையில்.

concern'ancy, *n.* தொடர்பு, பொருத்தம்.

concerned', *a.* தொடர்பு கொண்ட, சார்புடைய; அக்கறையுள்ள; கவலையுடைய; ஈடுபட்டுள்ள; துன்பப்படுகிற.

concern'ing, *prep.* பற்றி, குறித்து; சார்பாக, வகையில்.

concern'ment, *n.* முக்கியத்துவம்; ஈடுபட்டுள்ள செய்தி, தொழிலீடுபாடு.

con'cert [1], *n.* ஒற்றுமை, இசைவு, உடன்பாடு; ஒத்திசைவு; இசைத்திற இயல்பு; இசையரங்கு நிகழ்ச்சி; (தொ.) concert pitch, இசையரங்க முழக்கதிர்வெல்லையின் கட்டளைப் பொது அளவு.

concert' [2], *v.* ஒன்றுசேர்ந்து திட்டமிடு; ஏற்பாடு செய்; சரி செய்.

concert'ed, *a.* பலர் சேர்ந்து ஒன்றுபட்டுத் திட்டமிட்ட; (இசை.) பகுதி பகுதியாக வகை செய்யப்பட்ட.

con'cert-goer, *n.* இசை நிகழ்ச்சிகளுக்கு வழக்கமாகச் செல்பவர்.

con'cert-grand, *n.* இசை நிகழ்ச்சிகளுக்கேற்ற பேரிசைப் பெட்டி.

concerti'na, *n.* துருத்திபோன்ற இசைக்கருவி வகை; *v.* இசைக்கருவி வகையில் மடங்கிச் சுருக்கப்பெறு.

concerti'no, *n.* தனி இசைக்கருவிக்காக அமைக்கப்பட்ட சிறு பாடல்.

concer'to, *n.* தனி இசைக்கருவிக்கும் பல்லியத்திற்கும் பயன்படும்படி அமைக்கப்பட்ட பாடல்; *pl.* concer'tos.

concessi'on, *n.* விட்டுக் கொடுத்தல்; விட்டுக்கொடுப்பு; சலுகை; கொடைப்பொருள், பொருளுதவி; சலுகை உரிமைக் கொடை, தனியாள்-குழு அல்லது அரசினர் பயன்படுத்திக் கொள்ளும்படி நிலப்பகுதி விட்டுக்கொடுக்கப்படுதல்.

concessionaire', *n.* கொடைப்பொருள் பெற்றவர்; சலுகைக் கொடை உரிமை பெற்றவர்.

concess'ive, *a.* விட்டுக்கொடுக்கும் இயல்புள்ள; விட்டுக் கொடுக்கும் குறிப்புடைய; சலுகையான.

concett'ism, *n.* செயற்கைச் சொல்லடுக்குகளைப் பயன்படுத்தல்.

conch, *n.* சங்கு; கிளிஞ்சல் சிப்பி வகை; ஊது சங்கு; (க-க.) வளைவுமாடத்தின் அரையுருளை முகடு; அரைவட்ட வளைவு மாடம்; புறச்செவி; புறச்செவி மையம்.

conch'a, *n.* அரைவட்ட வளைவுமாடம்; வளைவுமாடத்தின் அரையுருளை முகடு; புறச்செவி; புறச்செவி மையம்.

conch'ate, conch'iform, *a.* கிளிஞ்சல் வடிவான; சிப்பி போன்ற அமைப்புள்ள.

conchif'erous, *a.* தோடுள்ள; மேலோடுடைய.

conchol'ogy, *n.* சிப்பி-சிப்பியோட்டாய்வு நூல்.

*concierge*, (பிர.) *n.* பாதுகாவலர்; சிறைச்சாலை-மாணவர் விடுதி இவற்றின் மேலாள்; வாயில் காப்போன்; வாயில் காக்கும் பெண்.

concil'iar, *a.* மன்றம் சார்ந்த, திருச்சபை குழாத்துக்குரிய.

concil'iate, *v.* இணக்கப்படுத்து, சந்து செய்வி; சரி செய்திணை; தன் வயப்படுத்திக்கொள், நட்பினராக்கு; நன்மதிப்புப் பெறு; நட்பாடு.

concilia'tion, *n.* இணக்கப்படுத்தல், சந்து செய்வித்தல்; ஒப்புரவிணக்கம், சமரசம்.

concinn'ity, *n.* இலக்கிய அழகுநயம்; இசைவிணக்கம்; பொருத்தம்; நடை நயம்; நேர்த்தி.

concinn'ous, *a.* அழகு செறிந்த; இசைவிணக்கமுடைய; நேர்த்தியான.

concise', *a.* சுருக்கமான, பொழிப்பான, அடக்கமான.

concise'ness, *n.* சுருக்கம், அடக்கம், திட்பம்.

conci'sion, *n.* வெட்டுகை; உறுப்பழிவு; சுன்னத்து; சுருக்கம்; பொழிப்பு.

conclama'tion, *n.* பலர் சேர்ந்து எழுப்பும் பேரொலி.

con'clave, *n.* போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்கக் கத்தோலிக்க கருதினல்மார் (cardinals) கூடியிருக்கும் அறை; போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையுடைய கருதினல்மார் குழு; தனிக் கூட்டுக்குழு.

con'clavist, *n.* போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்கக் கூடும் கருதினல்மார் குழுவின் ஊழியன்.

conclude', *v.* முடிவுறு; முடிவுக்குக் கொண்டுவா; ஏற்பாடு முற்றுவி, செய்து முடி; முடிவு செய்; தீர்மானி; ஆய்ந்து முடிவுகாண், முடிவுக்கு வா, முடிவு உருவாக்கு; (சட்.) நோக்கம் தெரிவி.

conclud'ed, *a.* முடிந்த; தீர்க்கப்பட்ட.

conclud'ing, *a.* முடிவான; இறுதியான.

**conclu'sion**, *n.* முடிவு செய்தல் ; முடிவு ; முடிபு, தீர்மானம் ; முடிவுரை, முடிவுப் பகுதி ; வாத முடிபு ; ஆய் முடிபு ; (தொ.) in conclusion, இறுதியாக, முடிவாக ; to try conclusion, சோதனை செய் ; போட்டி அல்லது போரில் ஈடுபடு.

**conclu'sive, conclu'sory**, *a.* இறுதியான ; முடிவான ; நம்பவைக்கிற ; மெய்ப்பிக்கிற.

**concoct'**, *v.* சேர்த்து வடித்திறு ; இணைத்து உருவாக்கு ; புனைந்தியற்று, கற்பனை செய், இட்டுக்கட்டு ; திட்டமிடு ; சதி செய் ; உண்டுபண்ணு, குதிர வை, பாகம்பண்ணு ; செரிமானம் செய்.

**concoc'tion**, *n.* கலந்து வடித்திறுத்தல்; வடிசாறு; மருந்துக் கலவை; பொய்புனைதல் ; புனைசுருட்டு, கட்டுக்கதை; முதிர்வு, குதிர்வு.

**con'color, concol'rate, concol'orous**, *a.* ஒரு சீர் வண்ணம் கொண்ட.

**concom'itance, concom'itancy**, *n.* இணை நிலை ; ஒருங் கிணைந்து இயலும் தன்மை.

**concom'itant**, *n.* உடனிணை துணைவர் ; உடனிணை துணை; இணைந்தியலும் பொருள் ; *a.* உடனியங்குகிற, இணைந்த, ஒன்றுசேர்ந்த.

**conc'ord** [1], *n.* உடன்பாடு, இசைவு, இணக்கம், ஒருமனப் பாடு ; ஒப்பந்தம் ; (இசை.) செவிக்கின்பந்தரும் ஒலிகளின் சேர்க்கை, செவ்விசைவு ; (இலக்.) சொற்களுக்கிடையே பால்-எண்-இடம் பற்றிய ஒத்திசைவு.

**concord'** [2], *v.* உடன்படு, இணங்கு, இசைவுறு.

**concord'ance**, *n.* ஒத்திசைவு ; ஏட்டின் சொல்தொகுதி விளக்கப்பட்டியல்.

**concord'ant**, *a.* ஒத்திருக்கிற, இணக்கமான, இசைவான ; ஒருமனப்பட்ட, ஒருமைப்பட்ட ; (இசை.) செவ்விசைவான, ஒத்திசைவான.

**concord'at**, *n.* திரு உடம்படிக்கை, போப்பாண்டவருக்கும் சமயச்சார்பற்ற ஓர் அரசுக்கும் ஏற்பட்டுள்ள உடன்படிக்கை.

**concor'dial**, *a.* இசைவிணக்கமான.

**conc'ourse**, *n.* கூட்டம் ; பெருந்திரள் ; ஒருங்கிணைவு ; சந்திப்பு ; இணையியக்கம், ஒருங்கிணைந்து செல்லும் திரள் ; பெரிய மண்டபம்; சாலைச் சந்திப்புவெளி; இருப்பூர்திநிலையப் பொது வெளியிடம்.

**concres'cence**, *n.* (உயி.) இணைதிரட்சி, திரள்வளர்ச்சி.

**conc'rete** [1], *n.* பருப்பொருள் ; திரள் பிழம்பு ; திரள்வளர்ச்சி ; காரைக்கட்டு, திண்காரை, பசைமண் கூழாங்கற்கலவைப் பிழம்பு ; *a.* பருப்பொருளான, பிழம்புருவான ; திண்ணிய, பொருளியலான, புலனீடான ; மெய்யான ; காரைக்கட்டான ; (தொ.) concrete steel, எஃகுக்கம்பிகொண்டு வலுவாக்கப் பட்ட திண்காரை.

**concrete'** [2], *v.* காரைக்கட்டாகக் கட்டியெழுப்பு ; திரண்டுரு வாகச்செய் ; கெட்டிப்படுத்து ; கடினமாகு.

**concre'tion**, *n.* ஒன்றுசேர்தல் ; திரட்சி, திரண்ட பிண்டம் ; (மரு.) உடற்கட்டி ; (மண்.) திரள்துகள் கணு, சிறுதுகள் சேர்ந்திறுகுவதால் அமைந்த பாறையின் உட்கணு.

**concre'tionary**, *a.* பாறையுள் திரள்துகள் கணு இயல்பான.

**concret'ive**, *a.* கெட்டியாகத் திரளும் ஆற்றலுடைய.

**concub'inage**, *n.* காமக்கிழத்தியர் கூட்டுறவு, திருமண மாகாத ஆணும் பெண்ணும் கூடிவாழ்தல் ; வைப்பாட்டி யைக் கொண்டிருத்தல் ; வைப்பாட்டியாயிருத்தல்.

**concub'inary**, *n.* திருமணமாகாமல் கூடிவாழும் ஆண் பெண்களில் ஒருவர் ; *a.* திருமணமாகாமல் கூடிவாழ்கிற ; சட்டத்துக்குப் புறம்பான ஆண்பெண் கூட்டுறவுக்குரிய ; சட்டப்புறம்பான கூட்டுறவிலிருந்து தோன்றிய.

**conc'ubine**, *n.* காமக்கிழத்தி, வைப்பாட்டி, மனைவியாயிரா மல் ஒருவருடன் கூடிவாழ்பவள் ; (பன்மனைவியர் கொள்ளும் மக்களிடையே) துணைமை நிலையான மனைவி.

**concu'bitancy**, *n.* திருமணம் செய்துகொள்வதற்குக் கட மைப்பட்டிருக்கும் பழக்கம் ; முறைக்கட்டுநிலை.

**concu'bitant**, *n.* முறைமணத் துணைவர், முறைப்பெண் ; முறைமாப்பிள்ளை.

**concup'iscence**, *n.* இணைவிழைவு, பால்வகைச்சேர்க்கை விருப்பம் ; மட்டுமீறிய சிற்றின்ப வேட்கை ; (விவி.) உலகி யல் பற்று, உலகப் பொருள்கள்பால் தோன்றும் அவா.

**concup'iscent**, *a.* சிற்றின்ப வேட்கையுள்ள ; பேரவா வுடைய.

**concur'**, *v.* உடனிகழ், முற்றும்பொருந்து ; ஓரிடத்தில்கூடு ; இசைவுறு, கூடிச் செயலாற்று; கருத்தில் ஒன்றுபடு, உடன் படு.

**concu'rrence, concurr'ency**, *n.* ஒருமுனை, கோடுகள் ஒரு புள்ளிமுனையில் சென்றிணைதல் ; ஒருங்கு நடைபெறுதல், உடனிகழ்வு ; முழுதுறழ் இசைவு, முற்றும் பொருந்துதல் ; கூட்டுச்செயல் ; உடன்பாடு ; போட்டி.

**concu'rrent**, *n.* உடன்படுபவர், இசைபவர் ; போட்டியிடு பவர் ; ஒரு புள்ளியில்சென்று கூடுகிற கோடு ; நாட்டாண் மைக்காரரின் அலுவலருடன் சான்றுளராகச் செல்பவர் ; *a.* ஒரே புள்ளியில் கூடுகிற ; உடன் இருக்கிற ; உடன் நிகழ்கிற ; உடன் இயங்குகிற ; முற்றும் பொருந்துகிற.

**concu'rrently**, *adv.* ஒருங்கிணைவாக, ஒரேசமயத்தில் நிகழ் வதாக.

**concurr'ing**, *a.* இசைகிற, உடன்படுகிற.

**concuss'**, *v.* கலக்கு, அதிர்ச்சியுறும்படி குலுக்கு ; அச் சுறுத்து ; வல்லந்தப்படுத்து, வலுக்கட்டாயப்படுத்து.

**concu'ssion**, *n.* தாக்குதல், மோதல் ; தலைமீது பேரடி ; அதிர்ச்சி, கலக்கம் ; வலுக்கட்டாயப்படுத்துதல், நெருக்கடி உண்டுபண்ணுதல்.

**concuss'ive**, *a.* மோதும் ஆற்றலுடைய ; அதிர்ச்சி விளை விக்கும் இயல்புடைய.

**condemn'**, *v.* பழித்துரை, கண்டி ; எதிராகத் தீர்ப்புக் கொடு ; குற்றத் தீர்ப்பளி ; எதிர்வாக முடிவுசெய், பாதக மாக முடிவுகட்டு ; முன்கூட்டி முடிவுக்கு வா ; தீதறிவி.

**condem'nable**, *a.* பழிப்புக்கிடமான.

**condemna'tion**, *n.* கண்டனம், சட்டமன்றக் குற்றத்தீர்ப்பு ; கண்டிப்பதற்கான காரணம் ; கண்டிக்கப்பட்ட நிலை.

**condem'natory**, *a.* கண்டனம் தெரிவிக்கிற, பழிப்பு இயல் பான.

**condemned'**, *a.* பழிக்கப்பட்ட ; குற்றவாளி என்று முடிவு செய்யப்பட்ட ; தீர்த்தொதுக்கப்பட்டுவிட்ட ; கைவிடப்பட்டு விட்ட ; குற்றத் தண்டனை அளிக்கப்பட்டவருக்குரிய ; தீய தென்று அறிவிக்கப்பட்ட.

**condens'able**, *a.* சுருக்கத்தக்க; அடக்கப்படக்கூடிய ; செறி விக்கக்கூடிய ; உறையக்கூடிய ; நீர்மமாக வடிக்கப்படக் கூடிய.

**condens'ate**, *n.* சுருக்கிச் செறிவாக்கப்பட்ட பொருள் ; உறைபொருள் ; வடிமானம் ; *v.* சுருக்கு, செறிவாக்கு ; சுருங்கு ; செறிவாகு.

**condensa'tion**, *n.* சுருக்குதல் ; அடக்குதல் ; செறிவித்தல் ; செறிவு ; உறைவித்தல் ; உறைவு ; வடித்தல் ; வடிபடல் ; சுருங்கிய பொருள், சுருக்கம், அடக்கம், செறிமானம்; செறி பொருள் ; உறைமானம், உறைபொருள் ; வடிமானம் ; வடி பொருள்; சேர்மானத்தில் இடைநீர்மம் நீக்கப்பெற்ற இணைவு, எடைமிகும் சேர்மானம்.

**condense'**, *v.* சுருக்கு ; சுருக்கிக்கூறு ; சுருங்கு ; செறிவி, நீர்மத்தை உறைவி, வளிப்பொருளை வடித்தெடு ; செறி ; உறை, வடிமானமாக உருவாகு ; கெட்டிப்படுத்து ; ஒருமுகப் படுத்து ; மின்வீறு பெருக்கு ; நீர்மநீக்கித் திண்மைப்படுத்து.

**condensed'**, *a.* உறைவிக்கப்பட்ட, நீர்வற்றச் செய்த, உறைந்த ; சுருக்கப்பட்ட ; சுருங்கிய ; (தொ.) condensed milk, கட்டிப்பால், உறைபால் ; condensed type, குறுகிய முகப்பினையுடைய அச்செழுத்து.

**condens'er**, *n.* வடிகலம், வாலை, நீராவிப்பொறியில் ஆவியை நீர்ப் பொருளாக மாற்றுவதற்கான அமைவு ; (இய.) ஒளிக்கதிர்களை ஒருமுகப்படுத்தும் குவிமுகவில்லை; மின்விசையேற்றி, மின் ஆற்றலின் வீறுபெருக்குவதற்கான அமைவு.

**conden'sery**, *n.* உறைபால் தொழிற்சாலை.

**condescend'**, *v.* திருவுளங்கொள், எளிமைதோன்ற இறங்கிவந்தருள்செய், அருள்பாலி, அளிசெய் ; பெருமிதநிலையினை விட்டுக்கொடுத்துச் செயலாற்று, வீறுதுறந்து செயல்முனை ; இரங்கியருள், கருணை நயம்படச் செயலாற்று, பணிவு நயம்பட நட ; தகாதன செய் ; விட்டுக்கொடு, பணிந்துபோ ; உடம்படு, இசை.

**condescend'ence**, *n.* இணக்கம், அமைவு ; (சட்.) ஸ்காத்லாந்தில் முறைமன்ற அழைப்பாணையுடன் இணைக்கப்படும் குற்றச்சாட்டு விவரப்பட்டியல்.

**condescend'ing**, *a.* அருள்பாலிக்கிற ; ஆதரவு நல்குகிற ; கீழோரிடத்துக் கருணை காட்டுகிற ; புண்படுத்துமுறையில் ஆரவார இரக்கம் காட்டுகிற.

**condescen'sion**, *n.* கீழோரிடத்து அன்புடைமை ; அருள்பாலிக்கும் பண்பு.

**condign'**, *a.* ஏற்ற, உரிய ; போதிய ; தகுதிவாய்ந்த.

**con'diment**, *n.* சுவையூட்டுப் பொருள் ; *v.* சுவையூட்டு.

**condi'tion**, *n.* நிலைமை ; நன்னிலை, தகுதி ; முறைமை ; பண்பு ; படிநிலை, தரம் ; உயர்நிலை ; மனநிலை, உணர்ச்சிநிலை ; ஒப்பந்த விதியின் வரையறைக்கூறு, கட்டுப்பாடு ; முன்னீடு, செயலுக்கு முன்பே பெற்றிருக்கவேண்டிய இன்றியமையாக்கூறு ; (அள.) காரியத்துக்குரிய காரணக்கூறுன இன்றியமையா முன்னிகழ்ச்சி ; (சட்.) கடப்பாட்டுக்குரிய முன்வரையறை ; (இலக்.) முன்வரையறைக் குறிப்பு, முன்வரையறை வாசகம் ; *v.* கட்டுப்பாடு விதி ; வரையறைமீது ஒப்புக்கொள் ; தக்க சூழலில் வை, வேண்டும் சூழ்நிலையமை ; தகுதியுடையதாக்கு ; கட்டுப்படுத்து; வரையறு; உறுதிசெய்; வாணிகச்சரக்கின் நிலையை ஆராய்ந்து பார்.

**condi'tional**, *n.* (இலக்.) வாக்கியத்தின் சார்புநிலைவாசகம் ; சார்புநிலைக் குறிப்புச்சொல், சார்புநிலை இணை இடை ; சார்புநிலை குறித்த வினைப்பாங்கு ; *a.* கட்டுப்பாடு தெரிவிக்கிற ; வரையறைமீது நிகழ்கிற, கட்டுப்பாடு சார்ந்த ; சார்புநிலை குறித்த.

**condi'tionally**, *adv.* துணிபின்றி, சார்புநிலையில் ; வரையறையுடன், கட்டுப்பாட்டின்மீது.

**condi'tionate**, *v.* கட்டுப்பாடு விதி, நிபந்தனை கூறு ; வரையறு.

**condi'tioned**, *a.* வரையறுக்கப்பட்ட, கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட ; ஒருநிலைப்படுத்தப்பட்ட ; சூழ்நிலைக்கு உட்பட்ட, சூழல் சார்பான ; சார்புடைய ; தொடர்புடைய ; நிலையுடைய, பாங்குடைய ; (தொ.) conditioned reflex, வழக்கமான நிகழ்ச்சித் தொடர்பு காரணமாக முன் அனுபவத்தை ஒட்டி உள்மனத்தில் இயல்பாக ஏற்படும் எதிர்த்தூண்டுதல் குறிப்பு.

**condi'tioner**, *n.* பண்படுத்துமுறைக்கு முன்னீடாக நிலத்தைப் பக்குவப்படுத்தவல்ல பொருள் வகை.

**condi'tioning**, *n.* தக்க சூழ்நிலையமைப்பு ; *a.* தக்கசூழ்நிலையமைக்கிற ; வரையறுக்கிற ; (தொ.) conditioning house, வாணிபப் பண்டங்களின் எடை-அளவு-பண்புகள் விஞ்ஞான முறைப்படி நிச்சயிக்கப்படும் நிலையம்.

**condi'tions**, *n. pl.* சூழ்நிலைகள் ; வாழ்க்கைச்சூழற் பண்புகள்.

**condol'atory**, *a.* வருத்தம் தெரிவிக்கிற, ஒத்துணர்வு வெளிப்படுத்துகிற.

**condole'**, *v.* வருத்தந்தெரிவி ; ஒத்துணர்வு அறிவி, மற்றொருவருடன் சேர்ந்து துயரப்படு.

**condole'ment, condol'ence**, *n.* மற்றொருவர் துயரத்துக்காக வருத்தந் தெரிவித்தல்.

**con'dom**, *n.* கருத்தடை உறை.

***condomin'ium***, (ல.) *n.* கூட்டுத்தலைமை ஆட்சி, ஓர் அரசின் ஆட்சியில் இருவேறு அரசுகள் சரிபங்கு பெற்றிருக்கும் நிலை.

**condona'tion**, *n.* குற்றம் பொறுத்தல், மன்னிப்பு ; (சட்.) கணவன் அல்லது மனைவி மணவொழுக்கந்தவறி மணமுறிவு கோரும்போது குற்றத்தினுல் பாதிக்கப்பட்டவர்களால் முதல் தடவையாக அளிக்கப்படும் மன்னிப்பு.

**condone'**, *v.* குற்றத்தைப் பாராட்டாமல் பொறுத்தருள், மன்னித்துவிடு ; கழுவாய் தேடு.

**con'dor**, *n.* பெரிய தென் அமெரிக்கக் கழுகுவகை.

***condottier'e***, (இத்.) *n.* கூலிப்படைத்தலைவர் ; *pl.* ***condottie'ri***.

**conduce'**, *v.* செயல் துணையாயிரு, நிறைவேற்றத்துக்கு உதவு ; விளைபயனுக்கு உகந்ததாயிரு.

**conduc'ible, condu'cive**, *a.* செயல்துணையான, உகந்த ; மேம்பட உதவுகிற ; நன்மை பயக்கவல்ல, சாதகமான.

**con'duct**[1], *n.* நடத்தை, ஒழுகலாறு; வழித்துணை, காப்புதவி; தொழிலின் நடைமுறையாட்சி, செயலாட்சி ; கலைத்துறைக் கையாட்சி, கைந்நலம்.

**conduct'**[2], *v.* வழிகாட்டு; வழியாக இட்டுச்செல்; வழியாயமை; குழாய் முதலியவற்றின் வகையில் நீர் முதலியன கொண்டுசெல் ; ஏற்றிச்செல் ; படை-இசைக்குழு முதலியவற்றை நடாத்து ; நிலையம் இயக்கு ; தொழில் நடத்து ; நடைமுறைப்படுத்து, ஒழுகுவி; நடக்கும்படிசெய் ; (இய.) வெப்பம் ஊடுசெல்லவிடு ; மின்வலி ஊடுகடத்து.

**con'duct**[3], *n.* ஈடன் (Eton) நிறுவனச் சமயகுரு.

**conduct'ance**, *n.* (இய.) மின்னூடு கடத்தியின் மின் கடத்தாற்றல்.

**conduc'tible**, *a.* சூடு முதலியவற்றைக் கடத்தக்கூடிய ; நடத்திச் செல்லப்படத்தக்க ; கொண்டு செல்லப்படக்கூடிய ; கடத்தப்படத்தக்க.

**conduc'tion**, *n.* (இய.) இகைப்பு ; குழாய் முதலியவை மூலமாக நீர்மத்தைக் கொண்டுசெல்லுதல் ; இகைப்பாற்றல், கொண்டுசெல்லும் ஆற்றல்.

**conduct'ive**, *a.* கடத்தும் இயல்புள்ள ; கொண்டுசெல்லும் ஆற்றலுடைய.

**conductiv'ity**, *n.* ஊடுகடத்தும் ஆற்றல், இகைப்புத் திறன்.

**conduc'tor**, *n.* வழிகாட்டி, வழித்துணை ; செயல்முதல்வர், தொழில் ஆட்சியாளர் ; இசைக்குழு இயக்குநர் ; ஊர்தி வழித்துணைவர், நெறி காப்பாளர் ; படைத்துறைத் தடைகாவலர் ; (இய.) வெப்ப ஊடியக்கி ; மின் ஊடுகடத்தி.

**conduc'tress**, *n.* வழித்துணை மாது ; ஊர்தி நெறிகாப்பு நங்கை.

**con'duit**, *n.* நீர்செல்குழாய் ; குழாய்க்கால்வாய் ; மின் கம்பிகளின் காப்புக்குழாய், ஊர்ப்பொது ஊற்றுநீர்க்குழாய், பொது ஊருணி.

**condup'licate**, *a.* (தாவ.) நீளவாட்டில் நடுவே மடிக்கப்பட்ட.

**Con'dy**, *n.* = Condy's fluid.

**con'dyle**, *n.* (உள்.) எலும்புமுனை முண்டுப்பொருத்து.

**condylo'ma**, *n.* (மரு.) சளிவரும் வழிகளுக்கருகில் கரணை போன்ற தோலின் புறவளர்ச்சி ; *pl.* condylo'mata.

**Con'dy's fluid**, *n.* நச்சுத்தடை மருந்தாகப் பயன்படும் உவர பரமங்கனிகைக் கரையம்.

**cone**, *n.* கூம்பு, குவிகை வடிவு, கூர்ங்குடை உரு ; தேவதாரு வகையின் குவி செதிற்கூடு ; கடற்கிளிஞ்சில் வகை ; கூம்பு வடிவப் பொருள்; வானிலை அறிவிப்புக்கருவி ; இயந்திரத்தின் குவி முகடு ; எரிமலைக்குன்று ; சரிவினடியில் அல்லது ஏரி முகப்பில் ஆற்றில்படிந்து பரவும் வண்டல் நிலம்; கண்திரைப் பகுதி ; குளிர்பாலேட்டுக் குவளை ; *v.* கூம்பு வடிவாக்கு ; வானில் எதிரி விமானத்தை நீடொளிவிளக்கக் கீற்றுக்களால் கண்டுபிடி ; விமானமீது நீடொளி விளக்கம் காட்டு.

cone'-in-cone', *a.* (மண்.) பாறைகள் வகையில் கூம்பினுள் கூம்பாய் அமைந்துள்ள.

cones, *n.* அப்பக்காரர் மாப்பிசையும் கலத்தில் தூவுவதற்குப் பயன்படுத்தும் நேர்த்தியான மாவு.

cone'-shell, *n.* கூம்புவடிவத் தோடுடைய நத்தை வகை.

cone'-wheat, *n.* துய்ம்முடியுடைய கோதுமை வகை.

con'ey, *n.* குழிமுயல்; குழிமுயல் தோல்; சிறுகுழிமுயல் போன்ற நாற்கால் பாலுணி விலங்கின வகை.

confab', confab'ulate, *v.* கூடிப்பேசு, உரையாடு, அளவளாவு.

con'fect[1], *n.* சர்க்கரை சேர்த்துச் செய்யப்பட்ட தின்பண்டம்.

confect'[2], *v.* உண்டுபண்ணு; பதனம் செய், கெடாமல் வைத்திரு.

confec'tion, *n.* கலத்தல், சேர்த்தல், கலவை; மருந்துக் கலவை; பதனம் செய்யப்பட்ட பொருள்; தின்பண்டம்; தைத்து வைக்கப்பட்டுள்ள மகளிர் உடுப்பு; *v.* தின்பண்டம் செய்.

confec'tionary, *n.* தின்பண்டம் செய்பவர்; மிட்டாய் விற்பவர்; தின்பண்டம், இனிப்புப்பண்டம்; தின்பண்டம் செய்யுமிடம்; தின்பண்டசாலை; தின்பண்டக்கடை; *a.* தின்பண்டவகைகளுக்குரிய; தித்திப்புப்பண்ட வகைகளின் தன்மையுள்ள.

confec'tioner, *n.* தின்பண்டம் செய்பவர், தின்பண்டம் விற்பவர்.

confec'tionery, *n.* தின்பண்டத்தொழில்; தின்பண்டத் தொகுதி; தின்பண்டக் குவை.

confed'eracy, *n.* அரசியற்கூட்டு, நாடுகளின் இணைவு; கூட்டுக்குழு, இணைவுறவு; நேச ஒப்பந்தம்; கூட்டு; சதிக்குழு, சதி.

Confed'eracy, *n.* (வர.) அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்நாட்டுப் போரில் விலகிப்போன பதினொரு நாடுகளின் கூட்டமைவு.

confed'erate, *n.* கூட்டாளி, குற்ற உடந்தையாள், உட்கையாள், சதியின் உள்ளாள்; *a.* இணைவுறவுகொண்ட, நேசக்குழுவில் இணைந்த; *v.* நேசக்கூட்டுறவில் சேர்; நேசக் கூட்டுறவு அமை.

confedera'tion, *n.* நேசக்குழு, கூட்டுக்குழு; நேசக்கூட்டமைவு.

confed'erative, *a.* நேச இணைக்குழு சார்ந்த.

*con'fer*[1], (ல.) *v.* (சுருக்கக்குறிப்பு *cf.*) ஒப்பிட்டுப்பார்க்க.

confer'[2], *v.* அளி, கொடு; உரையாடு; அறிவுரைகோரு, கலந்தாய்.

conferee', *n.* அறிவுரை கோரப்பெறுபவர், கலந்தாய்வதற்குரியவர்.

con'ference, *n.* சேர்ந்து உரையாடல், கலந்தாய்வு; கலந்தாய்வுக் கூட்டம், மாநாடு; மெதடிஸ்ட் திருச்சபையினரின் (Methodist Church) ஆண்டுக்கூட்டம்.

confer'ment, *n.* அளித்தல், அளிப்பு, வழங்கல்; வழங்கப்பட்ட பொருள்.

confess', *v.* குற்றத்தை ஒத்துக்கொள், முழுமையும் வெளிப்படத் தெரிவித்துவிடு, தானாக ஏற்றுக்கொள்; செய்த பாவங்களைச் சமயகுருமாரிடம் முறைபடத் தெரிவித்துவிடு; சமயகுருமார்வகையில் பாவ அறிவிப்பை ஏற்றுக்கொள்; (தொ.) confess to, ஒப்புக்கொள், ஏற்புத் தெரிவி.

confessed', *a.* ஒப்புக்கொள்ளப்பட்ட; உறுதியான; தெளிவான, வெளிப்படையான; (தொ.) stand confessed, வெளிப்படையாகத் தெரியப்பெறு.

confe'ssion, *n.* குற்றத்தை ஒப்புக்கொள்ளுகை; குறை ஏற்பு; ஒப்புக்கொள்ளப்பட்ட செய்தி; வெளியிடப்பட்ட மறை மெய்ம்மை; சமயகுருமாரிடம் பழிபாவங்களை வெளியிட்டுரைக்கை; சமயக்கோட்பாட்டு அறிவிப்பு; பொது சமய நம்பிக்கைக்குரிய கோட்பாட்டுத் தொகுப்பு; (தொ.) confession of faith, சமயப்பிரிவினரின் கோட்பாடுகள் அடங்கிய ஏடு.

confess'ional, *n.* பாவமன்னிப்புக் கேட்கும் இருக்கை; சமய குரவரின் பாவமன்னிப்பறை; பாவமன்னிப்பு முறைமை; *a.* பாவமன்னிப்புப் பற்றிய.

confe'ssionary, *n.* சமயகுரவர் பாவமன்னிப்புக் கேட்கும் இருக்கை; *a.* பாவமன்னிப்புக் குறித்த.

confe'ssionist, *n.* வரையறுக்கப்பட்ட சமயக்கொள்கையைக் கடைப்பிடிப்பவர்; மார்ட்டின் லூதர் (Martin Luther) கோட்பாடு பின்பற்றுபவர்.

confess'or, *n.* பாவங்களை ஒப்புக்கொள்பவர்; பாவச்செய்திகளைக் கேட்டு மன்னிப்பு வழங்கும் குரவர்; இடர்கள் தாங்கித் தம் சமயத்தை நிலைநாட்டுபவர்; (தொ.) The Confessor, எட்வர்ட் தி கன்பெசர் (Edward the Confessor 1042-1066) என்னும் முற்கால இங்கிலாந்து நாட்டின் மன்னர்.

confest', *a.*=confessed.

confett'i, *n. pl.* தித்திப்புப்பண்டம்; தித்திப்புப்பண்டம் போலச் செய்யப்பட்ட குழைமவண்ணத் துணுக்குகள்; திருமணக்காலங்களில் மணமக்கள்மீது வேடிக்கையாய் எறியப்படும் வண்ணத்தாள் துண்டுகள்.

confidant', *n.* நம்பகமானவன், அணுக்கத் துணைவன்; காதல் துணைவன்; பாங்கன்; *fem.* confidant'e.

confide', *v.* நம்பிக்கை வை, முழுவதும் நம்பு, நம்பியிரு, நம்பிச் செயலாற்று; நம்பிக்கையாகத் தெரிவி; நம்பி ஒப்படை.

con'fidence, *n.* உறுதியான நம்பிக்கை; நம்பகத்தன்மை; பற்றுறுதி; தன்னம்பிக்கை; ஆர்வ நம்பிக்கை; துணிவார்வம்; தன் முனைப்பு; மறை செய்தி; இரகசிய காரியங்களை அறியும் தனியுரிமை; (தொ.) confidence trick, நம்பவைத்து மோசம் செய்தல், மோசடி.

con'fident, *n.* நம்பிக்கைக்குரிய நண்பர், அந்தரங்கத் தோழர்; *a.* உறுதியாக நம்புகிற, ஆர்வத்துடன் எதிர்பார்க்கிற; துணிவார்வமிக்க; மிகு முனைப்பான.

confiden'tial, *a.* நம்பிக்கைக்குரிய, நம்பகமான; இரகசியப் பணி ஒப்புவிக்கப்பட்ட; இரகசியமாக அறிவிக்கப்பட்ட; அந்தரங்கமான; தனிமனிதருக்குரிய; தனிப்பட்ட காரியங்களுக்குரிய, மறைவடக்கமான.

confid'er, *n.* நம்பிக்கை வைப்பவர்; இரகசியம் சொல்லி வைப்பவர்.

confid'ing, *a.* நம்பியிருக்கும் இயல்புடைய, ஆர்வ நம்பிக்கையுடைய.

config'urate, *v.* உருவங்கொடு, உருவாக்கு.

configura'tion, *n.* கோலம், வடிவமைதி, ஒழுங்கமைதி; புறவடிவமைதி, வெளித்தோற்றம்; உருவரை; (வான்.) கோள்நிலை அமைதி; (வேதி.) அணுத்திரளில் அணு அமைதி.

config'ure, *v.* உருவங்கொடு, உருவாக்கு.

con'fine[1], *n.*=confines.

confine'[2], *n.* கட்டுப்பாடு; சிறை; *v.* எல்லைக்குட்படுத்து, கட்டுப்படுத்து, வரையறு; அடை, சுற்றி வளை; சிறைப்படுத்து; உடனிணை; அடுத்துள்ளதாக்கு.

confined', *a.* வரையறுக்கப்பட்ட; கட்டுப்படுத்தப்பட்ட; சிறைப்படுத்தப்பட்ட; குறுகலான; (தொ.) be confined, பெண்டிர் வகையில் பிள்ளைப்பேற்றுக்குரிய படுக்கையில் கிடக்கப்பெறு.

confine'ment, *n.* கட்டுப்பாடு, வரையறை; சிறைப்பட்ட நிலை; நோய் காரணமாக வெளியே போகமுடியாத நிலை; பிள்ளைப்பேற்று நிலையிலிருத்தல்.

confin'er, *n.* எல்லைக்குட்பட்டு வசிப்பவர்.

con'fines, *n. pl.* எல்லைப்பகுதி; இடைநிலம், இடைவரம்புப் பகுதி; இடைநிலைப்பண்பு.

**confin'ing**, *a.* எல்லையருகிலமைந்துள்ள ; வரையறுக்கிற, கட்டுப்படுத்துகிற.

**confirm'**, *v.* உறுதிசெய், வலியுறுத்து ; நிலைநாட்டு, உறுதிப்படுத்து ; தொடர்ந்து ஊக்கு, நிலைப்படுத்து, திடப்படுத்து ; மெய்ப்பி, மேற்கொண்டு வலியுறவு செய் ; முறை முற்றுவி, நிறைவேற்றுவி ; தீக்கைமுறை முற்றுவி.

**confirma'tion**, *n.* நிலைநாட்டுதல் ; வலுப்படுத்தல் ; உறுதிப்பாடு ; சான்றுகொண்டு மெய்ப்பித்தல்; வலியுறுத்தும் சான்று ; திருக்கோயிலில் ஒருவருக்குச் செய்யப்படும் தீக்கைச் சடங்கு.

**confirm'ative**, *a.* நிலைநாட்டக்கூடிய, உறுதிப்படுத்தத்தக்க.

**confirm'atory**, *a.* மேற்கொண்டு வலிமையான சான்று தருகிற, உறுதிப்படுத்துகிற.

**confirmed'**, *a.* நன்கு ஊன்றிய, ஊன்றி உறைத்துப்போன.

**confirmee'**, *a.* தீக்கைச் சடங்கு செய்யப்பெறுபவர்.

**con'fiscate**, *a.* பறிமுதலாக்கப்பட்ட ; *v.* பறிமுதல் செய் ; தண்டத் தொகையாக அரசுக்கு உரிமையாக்கு ; அதிகாரத்தைக் கொண்டு கைப்பற்று.

**confisca'tion**, *n.* பறிமுதல் செய்தல் ; பறிமுதல் ; அதிகாரங் கொண்டு கைப்பற்றல் ; (பே-வ.) ஆட்சியினரின் அனுமதியுடன் சட்டப்படி கொள்ளையடித்தல்.

**con'fiscator**, *n.* பறிமுதல் செய்பவர்.

**con'fiscatory**, *a.* பறிமுதல்செய்யும் தன்மையுள்ள.

***confit'eor***, (ல.) *n.* திருக்கோயில் பாவமன்னிப்புத் தொடர்புடைய செபம்.

**con'flagrate**, *v.* எரித்தழி.

**conflagra'tion**, *n.* பெருந் தீ, காட்டுத் தீ, பேரழிவுசெய்யும் நெருப்புப் பிழம்பு, ஊழித்தீ.

**conflate'**, *v.* பற்றவை ; கலந்திணைவி, இரண்டு பாட பேதங்களை ஒருங்கிணை.

**confla'tion**, *n.* பற்றவைத்தல் ; வெவ்வேறான இரண்டு பாட பேதங்களை ஒருங்கிணைத்தல்.

**con'flict** [1], *n.* சண்டை, சச்சரவு, பிணக்கு; மனப்போராட்டம்; மோதல்; முரண்பாடு.

**conflict'** [2], *v.* சண்டையிடு, மோது ; எதிர்த்து நில் ; முரண்படு, ஒன்றுடனொன்று ஒவ்வாதிரு.

**conflict'ing**, *a.* போராடுகிற, மோதுகிற ; ஒன்றுக்கொன்றுவ்வாத, முரண்பாடான.

**conflict'ive**, *a.* முரணும் பாங்குள்ள.

**con'fluence**, *n.* கூடல், சங்கமம், ஆற்றுச் சந்திப்பு ; கூடுமிடம்.

**con'fluent**, *n.* இணையாறு, ஆற்றுடன் கூடிக்கலக்கும் ஆறு; *a.* இணைந்து பாய்கிற, இணைந்துசென்று கலக்கிற, கூடி ஒன்றுபடுகிற.

**con'flux**, *n.* ஒன்றாகப் பாய்தல், இணைகூட்டு, சந்திப்பு.

**conform'**, *v.* உருவொத்த படிவமாக்கு, ஒத்திருக்கச் செய் ; முன்மாதிரியாகப் பின்பற்று ; ஒத்திரு ; இணக்குவித்துச் சரிசெய் ; இணங்கு, ஒத்துப்போ ; கீழ்ப்படி.

**conformabil'ity**, *n.* ஒப்புரவு, பொருந்து நிலை.

**conform'able**, *a.* ஒத்திருக்கிற ; தொடர்தகவுடைய ; பொருத்தமான; இணக்கமான, வழிக்குக் கொண்டுவரத்தக்க; (மண்.) அடிநிலப்பாறை வகையில் ஒரே இடையறுத் தொடர் நிலையுடைய.

**conforma'tion**, *n.* வடிவமைதி, கட்டமைப்பு ; இணக்க இசைவு.

**conform'ist**, *n.* இங்கிலாந்துநாட்டுத் திருக்கோயிற் பிரிவின் பழக்க வழக்கங்களைக் கடைப்பிடிப்பவர்.

**conform'ity**, *n.* ஒத்துப்போதல்; ஒப்பு, பொருத்தம், இணக்கம் ; (மண்.) அடிநிலப்பாறையின் இடைவிடாத தொடர் நிலை ; (தொ.) in conformity with, இணங்க, இசைவாக.

**confound'**, *v.* தோல்வியுறச் செய்; அவமாக்கு; கலை, சீர்குலை, அலங்கோலமாக்கு ; குழப்பு, திகைப்பூட்டு, பிரித்துணர முடியாமல் மயக்கமூட்டு; வியப்படைவி; வாதத்தில் தோல்வியடையச் செய் ; *int.* பாழ்படுக (மென்பழிமொழி) ; (தொ.) confound you, (தெறுமொழி) அட கெடுவாய் !

**confound'ed**, *a.* குழப்பமடைந்த ; திகைப்புற்ற ; (பே-வ.) முதல்தரமான, மிகச்சிறந்த.

**confound'edly**, *adv.* (பே-வ.) மிக மோசமாக, பழிகேடாக, வெட்கக் கேடாக.

**confound'ingly**, *adv.* வியக்கத்தக்க முறையில்.

**confratern'ity**, *n.* தோழமைக் கூட்டுறவு, உடன்பிறப்புரிமைக் குழாம்; உடன்பிறப்புரிமை; குலம், குடியுரிமைக் குழு.

***confrere***, (பிர.) *n.* தொழிற்கூட்டாளி, கலைக்குழுத்தோழர்.

**confront'**, *v.* எதிர்முகமாக நில், எதிரெதிராயிரு ; எதிர்ப்படு, சந்தி ; நேர் எதிர்ப்புறமாயிரு ; எதிர்த்து நில் ; முரணு ; நேருக்குநேர் நிறுத்து, எதிர்முகப்படுத்து ; ஒப்பிட்டு நோக்கு.

**confronta'tion**, *n.* நேருக்குநேர் சந்திக்கச் செய்தல் ; எதிர்ப்படுதல்.

**confront'e**, *a.* நேருக்கு நேரான.

**confront'ment**, *n.*=confrontation.

**Confu'cian**, *n.* பண்டைச் சீனநாட்டு மெய்விளக்கியலாரான கன்பூசியசை (Confucius) பின்பற்றுபவர்; *a.* கன்பூசியஸ் என்ற பண்டைச் சீன மெய்விளக்கியலாரைச் சார்ந்த.

**Confu'cianism**, *n.* கன்பூசியசின் மெய்விளக்கியல், கன்பூசியசின் கோட்பாடு, கன்பூசியஸ் நெறி.

**Confu'cianist**, *n.* சீனநாட்டு மெய்விளக்கியலாரான கன்பூசியசைப் பின்பற்றுபவர்.

**confuse'**, *v.* தாறுமாறுக்கு, அலங்கோலமாக்கு ; மனத்தைக் குழப்பு ; மலைப்பூட்டு, வெட்கச்செய்.

**confused'**, *a.* குழப்பமான, அலங்கோலமான ; மலைப்புற்ற.

**confus'edly**, *adv.* குழம்பிய நிலையில் ; தாறுமாறாக.

**confus'edness**, *n.* குழம்பிய நிலை ; சீர்குலைவு.

**confu'sion**, *n.* குழப்புதல்; குழப்பம், குழம்பிய நிலை; சந்தடி; மனக்குழப்பம் ; வெட்கம் ; திகைப்பு ; கலக்கம் ; குலைவு.

**confut'ative**, *a.* மறுக்கும் நோக்கமுடைய.

**confute'**, *v.* தவறு எண்பித்துக்காட்டு ; வாதம் தவறென்று தெளிவுபடுத்து, மறுத்துரை.

***conge***, (பிர.) *n.* தலைதாழ்த்தல், வணக்கந் தெரிவித்தல் ; விடையளிப்பு ; உபசரிப்பின்றி அனுப்பிவைத்தல்; *v.* தலை தாழ்த்து, வணக்கம் செய் ; விடைபெறு.

**congeal'**, *v.* உறையச்செய், குளிரால் கெட்டியாக்கு ; குருதி கட்டுவி ; குளிரினால் கெட்டியாகு, உறை, இறுகு ; குருதி கட்டு.

**congeal'ment**, *n.*=congelation.

***conge d'elire***, (பிர.) *n.* தேர்ந்தெடுக்க அனுமதி ; மாவட்டச் சமய முதல்வரைத் தேர்ந்தெடுப்பதற்கான அரசரின் இசைவு.

**con'gee**, *n.*, *v.*=*conge*.

**congela'tion**, *n.* உறைதல் ; உறையவைத்தல் ; உறைந்த நிலை ; உறைந்த பொருள்.

**con'gener**, *n.* ஒரே வகைப்பட்டவர், ஒரே தன்மையுடையவர்; ஒரே வகைப்பட்டது, ஒரே தன்மையுடையது; ஓரினப்பொருள்; *a.* ஒரேவகைப்பட்ட, இனத்தொடர்புடைய.

**congene'ric, congene'rical**, *a.* ஒரே இனத்தைச் சேர்ந்த, ஒரே இனமரபுடைய ; ஒரேவகைப்பட்ட ; தன்மையில் ஒத்த.

**congen'erous**, *a.* ஒரே இனத்தைச் சார்ந்த ; ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ; ஒரேவகையைச் சேர்ந்த ; ஒரே செயற்பண்பில் ஈடுபட்ட.

**congenet'ic**, *a.* மூலத்தில் ஒத்த, ஒரே தோற்ற மூலத்தை உடைய.

**congen'ial**, *a.* இன அமைவுடைய, உறவமைதி வாய்ந்த, ஒத்துணர்வுள்ள, மனதுக்கொத்த, உகந்த, இசைவான.

**contradic'tory**, *a.* நேர்மாறான, பொதுநிலை எதிர்மறையான, உடன்பட்டது நீங்கலாக மற்ற யாவும் மறுக்கிற; எதிர்மறையானதை வற்புறுத்துகின்ற; முரண்பாடான, ஒவ்வாத; மறுக்கும் இயல்புடைய.

**contradistinc'tion**, *n.* வேறுபடுத்திக்காட்டும் தனிச்சிறப்பு, மாறுபட்ட தனிப்பண்பு.

**contradistinct'ive**, *a.* நேர் எதிர்ப் பண்புகள்மூலம் தனித்தறியக்கூடிய.

**contradisting'uish**, *v.* மாறுபாட்டால் உணர், வேறுபாட்டின்மூலம் பிரித்தறி.

**contral'to**, *n.* பெண்களின் குறைந்த இசை ஒலி; பெண்மைத் தாழ் இசைப்பொலியாளர்; பெண்மைத் தாழ் இசைக்குரிய பாடற்பகுதி; *pl.* contral'tos; *a.* பெண்மைத் தாழ் இசைப் பொலியுடைய.

**contraposi'tion**, *n.* நேர்மாறானநிலை, எதிர்மறைநிலை; (அள.) எதிர்மறுப்பு, கருவாசகத்தின் உருமாற்ற வகை, பயனிலையின் எதிர்மறை எழுவாயாகி மறுக்கப்படும் உருமாற்றம்.

**con'traprop**, *n.* அச்சில் எதிர்ப்புறமாகச் சுழலும் வானூர்தி விசிறி.

**contrap'tion**, *n.* (பே-வ.) போலித்தனமான சமாளிப்புக் கருவி, விசித்திரக் கட்டமைப்புடைய பொறி.

**contrapun'tal**, *a.* (இசை.) சுர இணைப்புச் சார்ந்த.

**contrapun'tist**, *n.* சுர இணைப்பு வல்லுநர்.

**contrar'iant**, *a.* எதிரிடையான.

**contrari'ety**, *n.* எதிர்மாறியல்பு; முரண்பாடு; இசையாமை, ஒவ்வாமை; செயல்முரண்; பண்பு முரண்; ஏறுமாறான குணம்.

**contrar'ious**, *a.* முரண்பாடு காட்டுகின்ற; வெறுப்பைத் தருகின்ற; எதிரான, முற்றிலும் மாறான.

**con'trariwise**, *adv.* முற்றிலும் மாறான வழியில்; எதிர்ப்புறத்தில்; நேர்மாறாக.

**con'trary**, *n.* தொலை எதிர்நிலை, முனைப்பான நேர் எதிர்மறை; (அள.) இரண்டும் பொய்யாகினும் இரண்டும் ஒத்து மெய்யாக முடியாத நிலையிலுள்ள கருவாசகம்; *a.* முனைப்பாக நேர் எதிர்மறையான; முரண்பாடான; வேண்டுமென்றே தவறான வழியில் செல்கிற; *v.* எதிர்த்துநில்; மறுத்துப் பேசு; தொந்தரவு செய்; (தொ.) on the contrary, முற்றிலும் மாறாக; to the contrary, நேர் எதிரிடையான; எதிர்பார்ப்பதற்கு நேர் மாறாக.

**con'trast**[1], *n.* ஒப்பீட்டடிப்படையில் வேறுபாடு; மாறுபட்ட தன்மை; வேறுபடும் பண்பு; மாறுபடும்பொருள்; வேறுபாட்டு முனைப்பு, வேறுபாடுகளின் காட்சி, மாறுபட்ட இயல்புகளை அருகருகே காட்டல்.

**contrast'**[2], *v.* மாறுபடு, வேறுபடு; வேறுபடுத்திக்காட்டு; வேறுபட அமை.

**contras'ty**, *a.* முனைப்பான வேறுபாடுகளைக் காட்டுகின்ற.

**con'trate**, *a.* சக்கரத்தில் தளத்துக்குச் செங்குத்தான பற்களுள்ள, அச்சுடன் இணைவான பல்லமைவுகளுடைய.

**contravalla'tion**, *n.* முற்றுகை செய்யப்பட்ட இடத்தைச் சுற்றி முற்றுகையாளர்கள் கட்டும் தற்காலிக அரண் வரிசைகள்.

**contravene'**, *v.* ஒப்பந்தத்தை மீறி நட, சட்டத்துக்கு எதிராகச் செயலாற்று; முரண்படு.

**contraven'tion**, *n.* மீறுகை, எதிரிடை நடப்பு; (தொ.) in contravention of, மீறி, எதிராக.

***contretemps***, (பிர.) *n.* அவகேடு, எதிர்பாரா இடையூறு; இடக்கு, சிக்கல், மலைப்பு.

**contrib'ute**, *v.* கொடு, பங்காகக்கொடு, பொதுப்பணிக்கு உதவு, பொதுநிதிக்கு வழங்கு; பத்திரிகைக்குக் கட்டுரை முதலியன அளி; முயற்சியில் பங்குகொண்டுதவு, உடனுதவியளி.

**contribu'tion**, *n.* பங்களிப்பு, பொதுநிதிக்குப் பங்களித்து உதவுதல்; துணைப்பணி, துணையுதவி, முயற்சியில் பங்கு கொண்டுதவுதல்; பங்குவரி, பங்குக் கட்டணமாகப் பிரிக்கப்படுவது; வழங்கிய பங்கு, அளித்த உதவி; கடப்பாடு; பத்திரிகைக்கு எழுத்து வழங்குதல்; பத்திரிகைக்கு வழங்கிய மாற்றம்; படைத்துறைப் பங்குக் கட்டணம்.

**contrib'utor**, *n.* நன்கொடைப் பங்காளர்; பங்கு முயற்சியாளர்; துணையுதவியாளர்; பத்திரிகைக்கு எழுத்து வழங்குபவர்.

**contrib'utory**, *n.* கூட்டுக்கழக முறிவின்போது கடன் தீர்ப்புப் பொறுப்பில் பங்குக் கடப்பாட்டாளர்; *a.* பங்களித்துதவுகிற; துணையுதவி செய்கிற.

**con'trite**, *a.* பழியுணர்ந்து மனமழுங்குகிற, பாவத்தை எண்ணி உளநைவுறுகிற; தன்னுறுத்தலுடைய.

**contri'tion**, *n.* தன்மறுக்கம், செய்ததற்கிரங்கி உளைதல்.

**contriv'able**, *a.* முனைந்து திட்டமிடக்கூடிய; புனைந்து உண்டுபண்ணத்தக்க; சூழ்ச்சியால் முற்றுவிக்கத்தக்க.

**contriv'ance**, *n.* திட்டமிடல், கண்டுபிடித்தல், செயற்படுத்துதல்; கண்டுபிடிக்கப்பட்ட பொருள்; கண்டுபிடிப்பு; பொறி அமைவு; சூழ்ச்சி; வஞ்சகம்; உள் எண்ணம்; தந்திரம்.

**contrive'**, *v.* திட்டமிடு; முயன்று கண்டுபிடி; புனைந்து தோற்றுவி; முனைந்து செயற்படுத்து; வெற்றியாகச் செய்து முடி; சதிசெய், சூழ்ச்சிசெய்.

**contriv'er**, *n.* சூழ்ச்சியாளர்; திட்டமிடுபவர்; செயலாட்சியாளர்.

**control'**, *n.* கட்டுப்பாடு; கட்டுப்படுத்தும் ஆற்றல், ஆட்சியாற்றல்; கட்டுப்பாட்டு ஒழுங்கு, விதி; ஆட்சி அதிகாரம், தலைமையுரிமை; தடுப்பாற்றல், தடுத்து நிறுத்தும் திறம், தடுத்தியக்கும் ஆற்றல்; தடுக்கும்பொருள், தடைப்பண்பு; கட்டுப்படுத்தும் கருவி; சோதனைக்கருவி; கட்டுப்பாட்டு நிலையம், சோதனை நிலையம்; கட்டுப்படுத்தும் செயல், செய்முறைக்கட்டுப்பாடு; கட்டளைச் சட்டம்; ஒப்பீட்டு மதிப்பீட்டுக்குரிய கட்டளை அளவு; போக்குவரவுக்கட்டுப்பாட்டு விதிகள் செயற்படுவதற்குரிய பாதைப்பகுதி; போக்குவரவுச் சாதனங்களின் கட்டுமானத் துப்புரவு இடைநிலையம்; விமான உறுப்புக்களைப் புறநின்றியக்கும் விமானம்; ஆவியுலக ஊடு ஆள்மூலம் இயக்குவதாகக் கருதப்படும் உடலற்ற ஆவி; வானூர்தி இயக்கத்தைக் கட்டுப்படுத்தும் நெம்புகோல்; *a.* கட்டுப்பாட்டைச் சார்ந்த; *v.* கட்டுப்படுத்து; தடுத்து நிறுத்து; தடுத்தாள்; இயக்கு, செயலாட்சி செய்; அடக்கி ஆள், ஆதிக்கம் செலுத்து.

**controll'able**, *a.* கட்டுப்படுத்தக்கூடிய, தடை செய்து நிறுத்தத்தக்க; அடக்கத்தக்க.

**controll'er**, *n.* கணக்குத் தணிக்கையாளர்; செயல்துறைக் கட்டுப்பாட்டு அதிகாரி; அரசியல் அரங்கச் செயல்துறைக் கட்டுப்பாட்டாளர், செயல் ஒழுங்குபடுத்துபவர்; சமநிலைப் பொறி, காலமாறுதலுக்கியைய மணிப்பொறி - இயந்திர முதலியவற்றில் சரியீடு செய்யும் அமைவு.

**control'ment**, *n.* கட்டுப்பாடு; கட்டுப்படுத்தும் செயல்; கட்டுப்பாட்டுரிமை; கட்டுப்படுத்தப்படும் நிலை.

**control'-tower**, *n.* வானூர்தி ஏற்ற இறக்கப் பயிற்சி அளிப்பிற்குரிய வானூர்தி நிலையக் கட்டிடம்.

**controver'sial**, *a.* வாத எதிர்வாதத்துக்குரிய, கருத்து மாறுபாட்டுக்குரிய, வாதத்துக்கிடமான.

**controver'sialist**, *n.* வாத எதிர்வாதக்காரர், கருத்து மாறுபாட்டாளர்.

**con'troversy**, *n.* வாத எதிர்வாதம், சொற்போராட்டம், கருத்து மாறுபாடு.

**con'trovert**, *v.* எதிர்த்து வாதிடு; மறுத்துரை; கருத்து வேறுபாடு தெரிவி.

**contuma'cious**, *a.* சட்டப்படியமைந்த அதிகாரியைப் பழிக்கிற; பிடி முரண்டான, விடாப்பிடியான.

con'tumacy, *n.* கீழ்ப்படியாமை ; பிடி முரணான எதிர்ப்பு.
contumel'ious, *a.* ஆணவம் மிகுந்த ; அவமதிப்பான.
con'tumely, *n.* ஆணவமிக்க நடத்தை, தான்தோன்றித் தனமான பேச்சு, அவமதிப்பு.
contus'e, *v.* அடி, இடி.
contu'sion, *n.* அடிபட்ட காயம்.
contu'sive, *a.* கன்னத்தக்க, புண்ணுகத்தக்க.
conun'drum, *n.* விடுகதை, நொடி, புதிர்.
conurba'tion, *n.* நகரங்களின் தொகுதி.
convalesce', *v.* மீண்டும் உடல்நலம் பெறு, நோய் நீங்கி உடல் தேறுதல் அடை.
convales'cence, convales'cency, *n.* உடல்நல மீட்டாக்கம், நோய் நீங்கியபின் படிப்படியாக உடல்தேறி நலம் பெறு நிலை.
convales'cent, *n.* நோய் நீங்கி உடல்நலம் மீளப்பெற்று வருபவர் ; *a.* படிப்படியாக உடல்நல மீட்பைப் பெறுகின்ற ; நோய் நீங்கி நலம்பெறுகின்ற.
convec'tion, *n.* உகைப்பு, வெப்ப மின்னாற்றல்கள் தம்மால் இயக்கப்படும் அணுக்களின் இயக்கத்திஞலே பரவுதல் ; *a.* உகைப்பியக்கம் சார்ந்த.
convec'tor, *n.* உகைப்பியக்கத்தால் வெப்பமூட்டும் கருவி, வெதுவெதுப்பான காற்ரேட்டமியக்கும் கருவி.
*convenance, convenances*, (பிர.) *n.* தகைமை, மரபு வழக்குத் தகுதி, சமுதாய ஆசாரம்.
convene', *v.* ஒன்றுசேர், கூட்டு; அவைகூட்ட அழைப்புவிடு; அழை ; கூடு.
conven'er, *n.* அவைகூட்டுநர், குழுத்தலைவர்.
conven'ience, *n.* தகை நலம், சூழலிசைவு, வாய்ப்பு ; இட வசதி; வேளை இசைவு ; இன்னலம், வாய்ப்பு நலம்; அலம்பு மனை, கழிப்பிடம்.
conven'iences, *n. pl.* வாழ்க்கை நலங்கள், வாய்ப்பு நலங்கள்.
conven'iency, *n.*=convenience.
conven'ient, *a.* தக்க, தகுதியான , பொருத்தமான; எளிமை இசைவான, ஏற்ற ; வசதியான ; கைவாக்கான, கைப்பழக்க முள்ள.
con'vent, *n.* கன்னிமாடம், பெண் துறவியர் மடம்.
conven'ticle, *n.* சட்டமீறிய மறைவொதுக்கமான சமயக் குழு ; அரசியல் ஒவ்வாத புறச்சமயக் குழு ; புறச்சமயக் குழுக்கூடும் இடம் ; *v.* புறச்சமயக் குழுக்கூட்டம் கூட்டு.
conven'tion, *n.* அவை கூட்டுகை ; பேராண்மைப் பேரவை, பிரதிநிதிகள் கூட்டாய்வுக் கழகம் ; தனி முறைச் சிறப்புப் பேரவை ; பொதுப்பிரதிநிதி வேட்பாளர் தேர்வுக்கான கட்சிப் பெருங்குழு ; அரசியலமைப்பாண்மைச் சிறப்புக் குழு ; (வர.) பிரிட்டனில் 1660-இலும் 1668-இலும் நடைபெற்ற மன்னர் அழைப்புப் பெருத சட்டமன்றக் கூட்டம் ; பொது இணக்க ஒப்பந்தம் ; தற்காலிக உடன்படிக்கை; ஒப்பந்த மரபு வழக்கு; எழுதாச் சட்டம், புலனெறி வழக்கம், வழக்கு முறைமை ; நடைமுறை மரபு, நாண்முறைமை ; சீட்டாட்ட வழக்கு நடைமுறை.
conven'tional, *a.* மரபொழுங்கு சார்ந்த, வழக்காற்றுத் தொடர்புள்ள ; புலனெறி வழக்கார்ந்த, மரபொழுங்கின் வயப்பட்ட ; வழக்கமான ; இயல்பற்ற, கட்டுப்பட்ட ; செயற்கையான ; பொது இணக்க ஒப்பந்தப் பயனை ; குண்டுகள் வகையில் அணுகுண்டல்லாத.
conven'tionalism, *n.* நீளியல் மரபு முறைமை, புலனெறி வழக்கப்பண்பு.
conven'tionalist, *n.* மரபொழுங்கைப் பின்பற்றுபவர் ; மர பொழுங்கில் இழைபவர்.
conventional'ity, *n.* மரபொழுங்கு தழுவும் நிலைமை ; நீடித்த பழமைக் கட்டு.
conven'tionalize, *v.* மரபொழுங்குப்படுத்து, பொதுமரபின் பாற்படுத்து ; இயற்பண்படக்கு, தற்பண்பற்றதாக்கு.
conven'tionary, *n.* ஒப்பந்தப்படியான நடைமுறை; ஒப்பந்த உரிமைக் குடியாண்மையாளர் ; *a.* ஒப்பந்தத்தின்படி செய லாற்றுகின்ற.
conven'tual, *n.* கன்னிமாடப் பெண் துறவி ; பிரான்சிஸ்கன் (Franciscan) என்ற கத்தோலிக்கத் துறவு நிலயத்தின் தளர் விதிப்பிரிவைச் சார்ந்த உறுப்பினர் ; *a.* கன்னிமாடத் தைச் சேர்ந்த, பிரான்சிஸ்கன் என்ற கத்தோலிக்கத் துறவி நிலயத்தின் தளர்விதிப் பிரிவைச் சார்ந்த.
converge', *v.* குவி ; வரைகள் வகையில் ஒரு புள்ளியில் சென்று கூடு ; மையத்தை நாடு ; ஒருமுகப்படு ; நெருங்கு ; இணைவுறு ; பண்பு ஒப்புமை கொண்டணுகு ; குவியச்செய் ; கூடுவி, இணைவி.
conver'gence, *n.* குவிவு, கூடுகை.
conver'gent, *a.* குவிகிற, ஒருங்கு கூடுகிற, நெருங்குகிற ; குவிவு காரணமான ; குவிதலியல்புடைய.
conver'ging, *a.* ஒரு புள்ளியில் இணைகிற, சந்திக்கிற ; நெருங்கி அணுகுகிற ; (தாவ.) படிப்படியாக அணுகும் முனைகளையுடைய.
convers'able, *a.* உரையாடும் விருப்புடைய, கலந்து பேசும் இயல்புடைய; பழகும் தன்மையுள்ள, இனிது அளவளாவுகிற.
con'versance, con'versancy, *n.* பழக்கப்பட்ட நிலை, நன்கறியப்பட்ட தன்மை ; நடப்புணர்வு, அறிமுக நிலை ; பழக்கம்.
con'versant, *a.* பரவலாக அறிந்துள்ள ; கற்றுணர்ந்த, படித்துத் தெரிந்துகொண்ட ; பழகியறிந்த, நன்கு பழக்கப் பட்ட, அறிமுகமான ; ஈடுபாடுள்ள, அக்கறை கொண்ட.
conversa'tion, *n.* உரையாடல் ; பேச்சு ; பழக்கம் ; பாலுறவு, முயக்கம்.
conversa'tional, *a.* உடையாடல் சார்ந்த ; பேச்சு வழக்குக் குரிய ; உரையாடல் வல்ல ; உரையாட்டு அவாவுடைய.
conversa'tionalist, *n.* உரையாடல் வல்லுநர்.
conversa'tionism, *n.* பேச்சு வழக்குத்தன்மை.
conversa'tionist, *n.*=conversationalist.
conver'sative, *a.* பேசும் செயல் விரைவுள்ள.
conversazion'e, *n.* உரையாட்டவைக் குழாம்.
con'verse[1], *n.* தோழமைத் தொடர்பு; உரையாடல்.
converse'[2], *v.* கலந்து பேசு, உரையாடு; கூடியுறவாடு, ஒருங்கு பழகு.
con'verse[3], *n.* மறுதலை, தலைமாறிய ஒன்று ; (கண.) முடிவு தரவாகத் தரவு முடிவாக மாறிய விதி ; (அள.) மறிவாசகம், சொல் தலைமாறிய கருவாசகம் ; *a.* எதிர்நிலையான, நேர் மாருன ; தலைமாறிய, வரிசை திருப்பப்பட்ட.
conver'sion, *n.* தலைமாற்றுதல் ; தலைமறிவு ; நிலைமாற்றம் ; கருத்துமாற்றம் ; கொள்கை மாறுபாடு ; சமயமாற்றம் ; பயன்மாறுபாடு ; உருத்திரிபு, பங்கு முறி-கடன்முறி முதலிய வற்றை ஒன்று மற்றென்ருக மாற்றுதல் ; (அள.) கருவாசகச் சினை மாறுபாடு, தலைமறிப்பு.
con'vert[1], *n.* சமயம் மாறியவர் ; கொள்கை மாறியவர்.
convert'[2], *v.* திரிபுறுத்து ; நிலைமாற்று ; உருமாற்று ; கொள்கை மாற்று ; சமயமாற்று ; கட்சி மாற்று ; மாற்றிக் கொள்ளும்படி செய்; பொருளைத் திரிபுறுத்தி வேறென்ருக்கு; இரும்பை உருக்காக்கு ; பொருள்முறி வகைகளை இனமாற்று ; பணமுறியைக் காசாக்கு ; பண்புமாறுபடுவி ; பயன் வேறு படுத்து ; தனிப்பயனுக்கு ஈடுபடுத்து ; (அள.) தலைமறி வாசகமாக்கு.
con'vertend, *n.* மாற்றியமைக்க வேண்டிய வாசகம்.
convert'er, *n.* மாற்றியமைப்பவர் ; சமயமாற்றுபவர் ; மாற்றியமைப்பது ; இரும்பை எஃகாக மாற்ற உதவும் கலம், திரி கலம் ; மின்னேட்டத்தை மாற்றியமைக்கும் பொறி, மின் மறி.

convert'ible, *a.* மாற்றிக்கொள்ளக்கூடிய ; சொற்கள் வகையில் ஒரே பொருள் கொண்ட ; நாணய வகையில் தங்கமாகவோ அமெரிக்க வெள்ளியாகவோ நிலையான விலைக்கு மாற்றக்கூடிய சம மதிப்புள்ள ; வேளாண்மை வகையில் பருவப்பயிர் மாற்றிக் கொள்ளக்கூடிய.

con'vertite, *n.* சமயம் மாறியவர் ; கொள்கை மாறியவர் ; சீர்திருந்திய பெண்பாலர்.

conver'tor, *n.* மின்னோட்டத்தை மாற்றியமைக்க உதவும் பொறி, மின்மறி.

con'vex, *n.* குவிந்த உரு, புறக்குவிவுரு; குவடு, மேற்குவிவான பகுதி ; புறவளைவான பொருள் ; வான்முகடு ; *a.* குவடான, புறங்குவிந்த, வெளி வளைவான, புறங்கவிந்த.

convexed', *a.* புறங்குவிவாக்கப்பட்ட, புறங்கவியும்படி செய்யப்பட்ட.

convex'ity, *n.* புறங்குவிவு ; புற உருட்சி ; கவிந்த பகுதி ; கவிந்த உருவம்.

convex'o-con'cave, *a.* ஒருபுறம் புறங்குவிந்தும் மறுபுறம் உட்கவிந்துமுள்ள.

convex'o-con'vex, *a.* இருபுறமும் புறங்குவிந்துள்ள.

convey', *v.* ஏற்றிச்செல் ; கொண்டு செல் ; செய்தியை அனுப்பு; கொண்டு சென்று தெரிவி; அறிவி; சொல் வகையில் கருத்து அல்லது பொருளை உடையதாயிரு, சுட்டித்தெரிவி ; வழங்கு, அளி ; சட்டப்படி ஒப்படை ; திருட்டுத்தனமாகக் கொண்டுபோ.

convey'ance, *n.* கொண்டு செல்லுதல்; அனுப்புதல்; கொண்டு செல்லும் கருவி ; பொருள் சுட்டுதல், கருத்துக் குறிப்பீடு ; செல்கலம், வண்டி, ஊர்தி ; (சட்.) உடைமை மாற்றம் ; உரிமை மாற்றுப் பத்திரம் ; தந்திரம், மோசடி.

convey'ancer, *n.* உடைமை மாற்றுப் பத்திரம் உருவாக்கும் வழக்கறிஞர்.

convey'ancing, *n.* உடைமை மாற்றுப் பத்திரம் உருவாக்குதல்.

convey'er, convey'or, *n.* கொண்டு செல்பவர் ; கொண்டு செல்வது ; வழங்குபவர் ; வழங்குவது ; பொருள் சுட்டுபவர் ; பொருள் சுட்டுவது ; தொழிலகத்தில் தொழிற்படும் பொருள்களைக் கொண்டுசெல்லும் கருவி.

con'vict [1], *n.* கடு ஊழியத்தண்டனையை மேற்கொண்டுள்ள குற்றவாளி, தண்டக் கைதி.

convict' [2], *v.* குற்றவாளியெனத் தீர்ப்பளி ; குற்றமெய்ப்பி, குற்றமென்று ஏற்கச் செய், குற்றத்தை உள்ளத்தில் உறைப்பி.

convic'tion, *n.* குற்றத்தீர்ப்பு, குற்றவாளியென முடிவு செய்தல் ; குற்ற எண்பிப்பு, குற்றவாளியெனத் தெளிவு படுத்துதல் ; மெய்ப்பிப்பு ; மெய்ம்மை காணும்படி செய்தல் ; உள்ளத்தின் உறைப்பு ; மெய்ம்மையில் பற்றுறுதி, பற்றுக் கோள்; (தொ.) carry conviction, மறுக்கமுடியாத உண்மை என்னும் முத்திரையிடு.

con'victism, *n.* குற்றத்தண்டனை முறைமை.

convic'tive, *a.* மெய்ப்பிக்கும் ஆற்றலுடைய ; குற்றவாளியெனத் தண்டிக்கும் திறனுடைய.

convince', *v.* நம்பவை, பற்றுறுதியூட்டு ; மெய்ப்பித்துக் காட்டு, சான்றுமூலம் மனமேற்கும்படி செய் ; பொய்ம்மை மெய்ம்மை உறைப்பி ; தன் குற்றம் தானே ஏற்கச் செய்.

convin'cible, *a.* தவறு கண்டால் ஏற்றுக்கொள்ளக் கூடிய, பிறர் கருத்தேற்க மறுக்காத, திறந்த மனமுடைய.

convinc'ing, *a.* நம்பத்தக்க ; நம்பவைக்கிற ; உறுதிப் பாடான.

conviv'ial, *a.* விருந்தைச் சார்ந்த ; விருந்துக்குத் தக்கதான ; கூட்டமாக விருந்துண்கிற; மது அருந்துகிற; கூடி மகிழ்கிற, மகிழ்ச்சியான.

conviv'ialist, *n.* மது அருந்துபவர் ; களியாட்டக்காரர்.

convoca'tion, *n.* ஒருங்கழைப்பு ; கூட்டவை, பேரவை ; பல்கலைக்கழகப் பட்டமளிப்புப் பேரவை ; ஆக்ஸ்போர்டு (Oxford) முதலிய பல்கலைக்கழகங்களின் சட்டமன்றம் ; பிரிட்டனில் காண்டர்பெரி (Canterbury) யார்க் (York) ஆகிய மாகாணங்களின் சமயகுருமார் திருக்கூட்டம்.

convoke', *v.* ஒருமிக்க அழை, கூட்டத்திற்கு அழைப்பு விடு.

con'volute, *n.* சுருள்; *a.* சுருண்ட; முறுக்கிய; உள் மடிந்த; (தாவ.) பக்கவாட்டில் சுருண்ட, மலர்-அரும்பு வகையில் திருகிய ; சங்கு-சிப்பி வகையில் உள் திருகு மறைவுற்றுப் புறங்கவிந்து சுருண்ட.

con'voluted, *a.* (வில.) சுருண்ட, முறுக்கிய; முறுக்கப்பட்ட.

convolu'tion, *n.* சுருளல், முறுக்கு ; மடிப்பு, மூளை மேற் பரப்பின் நெளிவு மடிப்பு.

convolve', *v.* ஒன்று சேர்த்துச் சுருட்டு, மடித்துச் சுருட்டு.

convol'vulus, *n.* படர்ந்தேறி அல்லது தொங்கலாக நீண்டு சுற்றிக் கொள்ளும் செடியினத்தின் வகை.

con'voy [1], *n.* வழித்துணைக்காப்பு, பயணப்பாதுகாப்பு ; பாதுகாப்புத்துணை ; மெய்க்காப்பு ; துணைக்காப்புக் குழு, பாதுகாப்புடன் செல்லும் கூட்டம் ; காவலுடன் செல்லும் படைத்துறை வண்டித்தொடர் ; உணவுச் சாதனத் திரள் ; பாதுகாப்புடன் கூடிய வாணிகக் கப்பற் குழாம் ; பாதுகாப்புத் திறன் வாய்ந்த வாணிகக் கப்பற் கூட்டம்.

convoy' [2], *v.* கப்பலுக்குப் பாதுகாப்பாக உடன்செல் ; படைக்கலமேந்தி வழித்துணை செல் ; விருந்தினர்களுக்கு மெய்க்காப்பளி.

convulse', *v.* அதிரவை, நடுக்குறுத்து, அஞ்சி நடுங்கவை ; துடிதுடிக்கவை ; பிடித்தாட்டு ; சிரிப்பு முதலிய உணர்ச்சிகளில் மும்மரமாகக் குதித்தாடவை.

convul'sible, *a.* நடுக்கத்திற்கு ஆளாகத்தக்க, துடிதுடிக்கத் தக்க.

convul'sion, *n.* வலிப்பு, உடல் நடுக்கம் ; குழப்பம் ; சமுதாய அமளி ; வெறியாட்டம் ; குமுறல் ; குலைவு.

convul'sional, *a.* வலிப்பு சார்ந்த, நடுக்கம் உடைய ; குழப்பம் உண்டுபண்ணுகிற.

convul'sionary, *n.* வெறியாட்டக்காரர் ; 1730-ஆம் ஆண்டில் பிரான்சில் தோன்றிய வெறிகொள்கைக் குழுவினைச் சார்ந்தவர் ; *a.* வெறியாட்டம் சார்ந்த ; குழப்பம் உண்டு பண்ணுகிற.

convul'sionist, *n.* சமயவெறியாட்டாளர் ; மண்ணியல் வரலாற்றில் நிலக் குமுறல்களின் முக்கியத்துவத்தில் பெரு நம்பிக்கை கொண்டவர்.

convul'sions, *n. pl.* சிரிப்பினுல் ஏற்படும் உடல் குலுக்கம் ; குழந்தைகளின் இசிப்பு நோய்.

convul'sive, *a.* வலிப்போடு கூடிய ; அதிர்வு உடைய.

con'y, *n.* முயல் ; முயல் தோல் ; (விவி.) பழங்காலத்தின் தோலுடைய சிறு மலைப்புற விலங்கு வகை.

con'y-burr'ow, *n.* முயல் வளை.

con'y-catcher, *n.* ஏமாற்றுபவர்.

con'y-wool, *n.* முயலின் மென்மயிர்; மென்மயிருள்ள முயலின் தோல்.

coo, *n.* புறாவின் ஒலி, கூவுமொலி ; *v.* புறாவின் ஒலி செய்; கூவு ; குலவு, செல்லம் கொஞ்சு ; மெல்லுரை பயில், சிங்காரமாகப் பசப்பிப் பேசு ; (தொ.) bill and coo, கொஞ்சிக் குலவு, காதல்மொழி பயில்.

coo'ee, coo'ey, *n.* ஆஸ்திரேலிய சைகை அழைப்பொலி ; *v.* சைகை ஒலி எழுப்பு, சைகை ஒலியால் பேசு.

cook [1], *n.* சமையல் செய்பவர், மடைத்தொழிலாளர், சமையற்காரர் ; சமையற்காரி ; சூடுபடுத்து முறை வகை ; சதுரங்க ஆட்டத்தில் ஆட்ட நலங்கெடுக்கும் எதிர்பாரா மாற்று முறை ; *v.* உணவு சமை, சமையல் செய் ; சமையற்கலை பயில் ; பக்குவமாகு, சமையல் செய்யப்பெறு ; பொய்க்

கணக்கு முதலியவற்றை வலிந்து புனை; சூழ்ச்சியுடன் இயற்று, புனைந்து போலியாக உருவாக்கு; சதுரங்க ஆட்டத்தில் மாற்றுவழியின்மூலம் ஆட்டநலங்கெடு; ஏற்பாடாகு, நடைபெறு.

**cook** [2], *v.* குயில்போன்று கூவு.

**cook'er**, *n.* பொறியடுப்பு; சூட்டடுப்பு; சமைகலம், சமையல் துணைக்கருவித் தொகுதி; சமையலுக்குரிய தனிவகைப் பொருள்; சமையலுக்கு மிகவும் உகந்த காய்கனி; பொய்க் கணக்கு உருவாக்குபவர், வலிந்து உருவாக்குபவர்.

**cook'ery**, *n.* சமையற்கலை, சமையல் வேலை.

**cook'ery-book**, *n.* சமையற்கலை ஏடு, பாக நூல், சமையல் தொழில்முறை விளக்க நூல்.

**cook'-gen'eral**, *n.* சமையல் வேலையும் பொது வேலையும் செய்யும் பணியாள்.

**cook'-house**, *n.* மடைப்பள்ளி, சமையல் அறை.

**cook'-house'maid**, *n.*=cook-general.

**cook'ie**, *n.* தேநீருடன் உண்ணும் இனிப்பு அப்பவகை.

**cook'ing-apples**, *n.* சமையல் செய்வதற்கேற்ற ஆப்பிள் பழவகை.

**cook'ing-range**, *n.* பலவகை உணவுகளை ஒரே சமயத்தில் சமைப்பதற்கு ஏற்றவாறு அமைக்கப்பட்ட சூட்டடுப்பு.

**cook'maid**, *n.* சமையற் பணிப்பெண், சமையற்காரரின் உதவிப் பணிப்பெண்.

**cook'-room**, *n.* சமையல் அறை, அடிசிற்களம்.

**cook'shop**, *n.* உணவு விடுதி.

**cool**, *n.* குளிர் நலம், சில்லென்ற தன்மை; குளிர் நலமுடையது; குளிர் வானிலை, குளிர்ந்த காற்று; குளிர்ச்சிதரும் இடம்; *a.* இளங்குளிரான, மட்டான குளிர்ச்சி வாய்ந்த; பரபரப்பற்ற, அடங்கிய, அமைதியான; கிளர்ச்சியற்ற, ஆர்வமற்ற; அசட்டையான, மதிப்புக்கேடான; ஆணவமான; *v.* குளிர்ச்சியாக்கு; சூடு தணி, சூடு ஆற்று; குளிர்ச்சியாகு; சூடு ஆறு; மட்டுப்படுத்து; அமைதியூட்டு; மிதமாகு, அமைதியுறு; கிளர்ச்சி குன்றவை; ஆர்வமிழ; (தொ.) cool one's heels, காத்துக்கொண்டு இரு.

**cool'ant**, *n.* வெப்பாற்றி; வெட்டுபொருள்களின் விளிம்பில் உராய்வு வெப்புத்தணிப்பதற்கான நீர்.

**cool'er**, *n.* குளிர்ச்சியாக்கும் பொருள்; குளிர் கலம், பொருள்களைக் குளிரவைப்பதற்குரிய கலம்.

**cool'-head'ed**, *a.* எளிதில் உணர்ச்சி வசப்படாத, அமைதியோடு செயலாற்றக்கூடிய, ஆர்ந்தமர்ந்த.

**cool'-house**, *n.* செடி கொடிகளைக் குளிர்ந்த நிலையில் வைத்து வளர்க்கும் கண்ணாடி மனை.

**cool'ie**, (த.) *n.* கூலியாள்; இந்திய அல்லது சீன ஒப்பந்த வேலையாள்.

**cool'ish**, *a.* ஓரளவு குளிர்ந்த.

**cool'ness**, *n.* குளிர்பதம், மிதக் குளிர்ச்சி; புறக்கணிப்பு, கவனக்குறைவு; நட்புத்தளர்ச்சி; ஆர்வமற்ற தன்மை.

**cool'-tankard**, *n.* குளிர் இன்தேறல் கலவை வகை; நீல மலர்ச் செடிவகை.

**cool'y**, *n.*=coolie.

**coomb** [1], *n.*=comb [2].

**coomb** [2], *n.* முகத்தலளவைக் கூறு (4 புஷல் அல்லது 32 காலன் அளவு).

**coon**, *n.* அமெரிக்கக் கரடி இனவகை; தந்திரக்காரன்; நீகிரோ இனத்தவர்; (தொ.) a gone coon, மோசமான நிலைமையில் இருப்பவர்.

**coon'-can'**, *n.* சீட்டுக்களை வரிசைப்படுத்தி இருவராடும் சீட்டாட்ட வகை.

**coon'-song**, *n.* நீகிரோ இனத்தவரின் பாட்டு.

**coop**, *n.* பிரம்புக்கூடை; கோழிக் கூண்டு; மீன் கூடை; சிறு விலங்குகளை அடைக்கும் பட்டி; சிறை; *v.* கூண்டில் அடை, சிறைப்படுத்து.

**coop'er** [1], *n.* கூடைமுடைபவர்; மிடா வனைப்பவர்; பெட்டி-தொட்டி செய்பவர்; கப்பலில் மிடாக்கள் பழுது பார்ப்பவர்; மதுச்சுவை தேர்பவர்; மதுவைப் புட்டிகளில் அடைப்பவர்; மதுவைச் சில்லறையாக விற்பவர்; இன்தேறல் கலவை வகை; *v.* கூடை திருத்து; மிடாப் பழுது பார்; மிடாவில் அடை; சரி செய்து வை, ஒட்டுப்போடு; (தொ.) dry cooper, ஈரச் சார்பற்ற பொருள்களுக்கான மிடாச் செய்பவர்; wet cooper, ஈரப்பொருள்களுக்கான மிடாச் செய்பவர்; white cooper, வாளி-தொட்டி செய்பவர்.

**coop'er** [2], *n.*=coper.

**coop'erage**, *n.* மிடா முதலியன செய்பவரின் பணி; மிடா முதலியன செய்பவரின் பணிமனை; மிடாச் செய்பவருக்குரிய கூலி.

**co-op'erant**, *a.* ஒன்றுக வேலை செய்கிற.

**co-op'erate**, *v.* பிறருடன் கூடியுழை; வேலையில் ஒத்துழை; பயன் நாடி உடன் பணிபுரி; பயன் நோக்கி ஒத்துச் செயலாற்று, கூடி விளைவி.

**co-op'erating**, *a.* ஒத்துழைக்கிற; ஒத்தியல்கிற; (தொ.) co-operating grace, இறைவன் விருப்பாற்றலும் மனித விருப்பமும் ஒத்தியல்வதே திருவருட்பேறு என்ற ரோமன் கத்தோலிக்கர் முதலிய சமய மரபுகளின் கோட்பாடு.

**co-opera'tion**, *n.* கூட்டுறவு, உடனுழைத்தல்; ஒத்துழைப்பு, கூட்டு வேலை; கூட்டுறவுச் சங்கப் பண்பு, கூட்டு நடைமுறை.

**co-op'erative**, *n.* கூட்டுறவு நிலையம்; *a.* கூட்டுறவு சார்ந்த; ஒத்துழைக்கிற; கூட்டுறவுக்குகந்த, கூட்டுறவு நோக்கிய; (தொ.) co-operative society, கூட்டுறவுச் சங்கம்; co-operative store, கூட்டுறவுப் பண்டசாலை, களஞ்சியம்.

**co-op'erator**, *n.* கூட்டுறவாளர், ஒத்துழைப்பவர்; உதவியாக வேலை செய்பவர்; கூட்டுறவுச் சங்க உறுப்பினர்.

**co-opt'**, *v.* அமைப்பின் உறுப்பினர்களை உறுப்பினர்கள் உரிமை மொழிகளாலேயே தேர்ந்தெடு, ஒத்துத் தேர்ந்தெடு.

**co-or'dinance**, *n.* கூட்டொழுங்கு முறை, கூட்டுக் கட்டளை.

**co-ord'inate**, *n.* இனமொத்த பொருள், நேரிணைப் பொருள்; சமவரிசைப்பட்டது, ஒத்த தரமுடையது; (வேதி.) ஒரே வரிசை எண் கொண்ட தனிமம்; (கண.) ஆயத்தொலை, கட்ட நிலை அளவையின் ஒரு கூற்றளவை; *a.* இனமொத்த, வகையொத்த; சமவரிசையுடைய, ஒத்த தரமுடைய; நிரைவைப்பமைதி சார்ந்த, நிரற்பாடுடைய; (இலக்.) உறுப்பு வாசகங்களில் சமநிலைப்பாடுடைய; *v.* ஓரினப்படுத்து, ஒரு தரப்படுத்து; ஒத்திசைவி, இணக்கி ஒரு நிலைப்படுத்து; (தொ.) co-ordinate geometry, ஆயத் தொலைவைப் பயன்படுத்தும் வடிவியல்.

**co-or'dinative**, *a.* நேரிணைப்படுத்துகிற; ஒத்திசைவாக்கப்பட்ட; இனப்பொருத்தம் காட்டுகின்ற.

**coot**, *n.* உச்சியில் வெண்சுட்டியும் குறுவாலுமுள்ள வாத்தின நீர்ப்பறவை வகை.

**cop**, *n.* உச்சி, தலைப்பு; நூற்கும் கதிரில் சுற்றப்பட்ட குவி வடிவ நூற்பந்து.

**copai'ba**, *n.* தென்னமெரிக்க மரத்திலிருந்து பெறப்படும் நறுமணப் பிசின் மருந்து வகை.

**copai'va**, *n.*=copaiba.

**co'pal**, *n.* வெப்ப மண்டல மரவகைகளின் பிசினிலிருந்தும் புதைபடிவமாகவும் கிடைக்கும் கடினமான குங்கிலிய வகை.

**copar'cenary**, *n.* கூட்டுடைமையின் மரபுரிமையில் இணையுரிமையாளர்; *a.* கூட்டுடைமையின் மரபுரிமையில் இணையுரிமை பெற்ற.

**copar'cener**, *n.* கூட்டுடைமையுரிமையின் இன மரபுரிமையாளர்.

**copar'cenery**, *n.*, *a.*=coparcenary.

**copart'ner**, *n.* உடன் பங்காளி; உடனொத்த தோழர்; உடனொத்துப் பங்கு கொள்பவர்.

**copart'nery**, *n.* கூட்டுப்பங்கு நிலை.

**cope[1]**, *n.* மேலுறை, மூடி; குல்லாய்; மேற்கட்டி; வில் வளைவு, கவிகை; மதிலின் முகட்டுறுப்பு, முகட்டுக் கவிகை; குருமாரின் தலைமுடியோடு கூடிய நீள் அரைவிட்டமான பின் தோற்றமும் கையற்ற திறந்த முகப்பும் உடைய மேலங்கி; *v.* மூடியிடு; கவிகையை மேலிட்டணை; மதிலுக்கு முகட்டுத் தளமிணை.

**cope[2]**, *v.* பண்டமாற்றுச் செய், கொடுத்து வாங்கு.

**cope[3]**, *v.* எதிர்த்துச் சமாளி, முயன்று வெற்றிபெறு; சரி சமநிலையில் செயலாற்று; ஈடு செலுத்து.

**cop'eck**, *n.* ருசிய நாட்டின் ரூபிள் (rouble) நாணயத்தில் நூற்றில் ஒரு பகுதி, ருசியச் செப்புக் காசு.

**cop'er**, *n.* ஆழ்கடல் பரதவருக்குக் கள்ளத்தனமாகக் கடுமையான இன்தேறலை வழங்க உதவும் கப்பல்; *v.* ஆழ்கடல் மீனவருக்குக் கள்ளத்தனமாகக் கடுந்தேறலை வழங்கு.

**Copern'ican**, *a.* புகழ்பெற்ற பிரசிய (Prussian) வானநூல் வல்லுநராகிய கப்பர்னிக்கஸ் (Copernicus 1473-1543) என்பவருக்குரிய; கதிரவனை நிலவுலகு சுற்றி வருகிறதென்னும் கப்பர்னிக்கஸின் கொள்கையைச் சார்ந்த.

**cope'-stone**, *n.* மதிலின் முகட்டுக்கல்.

**cop'ier**, *n.* பார்த்துப் பகர்த்தெழுதுபவர், படி எடுப்பவர்; பார்த்துச் செய்பவர்; குருட்டுத்தனமாகப் பின்பற்றுபவர்.

**co'-pilot**, *n.* உடன் வலவர், கூட்டு வானூர்தி ஓட்டி.

**cop'ing**, *n.* மதிலின் சாய்வான மேல் முகடு.

**cop'ing-stone**, *n.*=cope-stone.

**cop'ious**, *a.* வளமான, ஏராளமான, செழித்த; பொங்கி வழிகின்ற; சொல் வளமுள்ள; விளக்கமிக்க.

**copp'er**, *n.* செம்பு, தாமிரம்; செப்பு நாணயம், செப்புக் காசு; செப்புக்கலம்; துணி வெளுப்பதற்குரிய வெள்ளாவிக் கலம், வேம்பா; *a.* செம்பாலான; செம்பு நிறமுள்ள; *v.* கப்பலடியைச் செப்புத் தகட்டால் மூடு, செம்பு பொதி; (தொ.) Copper Age, செப்புக் காலம், வெண்கல ஊழிக்கு முற்பட்ட ஊழி; hot coppers, குடியாட்டு விருந்திற்குப் பின் உள்ள தொண்டை நாவறட்சி.

**copp'eras**, *n.* இரும்புக் கந்தகை, அன்னபேதி.

**copp'er-beech'**, *n.* செம்புநிற இலைகளுடைய மரவகை.

**copp'er-bott'omed**, *a.* அடிப்புறம் செப்புத்தகடு பொதிந்த; பொருள்துறை உறுதிப்பாடுடைய; ஊறுபாட்டுக்கு இடமற்ற.

**copp'er-cap'tain**, *n.* தன்னை மீகான் என்று தவறாகக் கூறித் திரிபவர்.

**copp'er-faced**, *a.* அச்சுரு முதலியவற்றில் செப்பு முகப்புடைய.

**copp'er-fas'tened**, *a.* செப்புத்தாழிட்டு உறுதி செய்யப்பட்ட.

**copp'er-glance'**, *n.* செம்புக் கந்தகை வகை.

**copp'erhead**, *n.* அமெரிக்க நச்சுப் பாம்பு வகை.

**copp'ering**, *n.* செம்பினால் உறையிடுதல்; செம்பு பொதிதல்.

**copp'erish**, *a.* சிறிதளவு செம்பு போன்ற.

**copp'er-nick'el**, *n.* செந்நிறக் கனிப்பொருள் வகை; நிக்கல்-சவ்வீரச் சேர்மானம்.

**copp'er-nose**, *n.* செந்நிற மூக்கு.

**copp'erplate**, *n.* பட்டயம் செதுக்குவதற்குரிய மெருகிட்ட செப்புத்தகடு; செப்புத்தகட்டுப் பதிவடிவம்; செப்பமிக்க கையெழுத்து.

**copp'er-pyri'tes**, *n.* மஞ்சள்நிறமான செம்பு, இரும்பு கலந்த இருமடிக் கந்தகை.

**copp'er-skin**, *n.* அமெரிக்கச் செவ்விந்தியர்.

**copp'er-smith**, *n.* கன்னான்; செம்பு வேலைப்பாடு.

**copp'er-work**, *n.* செம்பு வேலைப்பாட்டிடம்; கன்னான் பட்டறை.

**copp'er-worm**, *n.* கப்பற் புழு.

**copp'ery**, *a.* செம்பு போன்ற.

**copp'ice**, *n.* சிறு காடு, புதர்க்காடு; வெட்டப்பட்ட முளைகளுள்ள குறுங்காடு; *v.* சிறுகாடாக்கு, சிறு புதர்களால் மூடிவை.

**copp'in**, *n.*=cop.

**cop'ra**, *n.* கொப்பரைத் தேங்காய்.

**co-pres'ence**, *n.* உடனமைவு; உடன் இருப்பு; ஒன்றாக இருத்தல்.

**cop'rolite**, *n.* புதைபடிவச் சாணி; எரியப்பொருள்களின் செறிபடிவம்.

**cop'rology**, *n.* கலை இலக்கியக் கசடு.

**coproph'agan**, *n.* சாணி வண்டு.

**coproph'agist**, *n.* சாணம் தின்னி.

**cop'rophagous**, *a.* சாணம் தின்கிற.

**coprophil'ia**, *n.* சாணம் அல்லது அழுக்கில் மகிழ்ந்திணையும் பண்பு.

**coproph'ilous**, *a.* சாணம் அல்லது அழுக்கில் மகிழ்ச்சி கொள்கிற; சாணத்தினால் வாழ்கிற; சாணத்தில் வளர்கிற.

**copros'terol**, *n.* பித்த சுரப்பியின் நெருக்கத்தினால் குடலில் தோன்றும் சேர்மானப் பொருள் வகை.

**copse**, **copse'wood**, *n.*=coppice.

**Copt**, *n.* பண்டை எகிப்திய மரபினரான கிறித்தவர்.

**Cop'tic**, *n.* பண்டை எகிப்திய மொழியின் இறுதிக் காலத் திரிபு வகை.

**cop'ula**, *n.* இணைப்பு; இணைக்கும் பொருள், இணைப்பது; உடற் புணர்ச்சி; எழுவாய் பயனிலை ஒப்பிணைப்பு வினை.

**cop'ulate**, *v.* சிற்றின்பப் புணர்ச்சியில் ஈடுபடு.

**copula'tion**, *n.* கலவி; இலக்கணத் தொடர்பு; அளவை இயல் தொடர்பு.

**cop'ulative**, *n.* (இல.) இணையிடை; *a.* ஒன்று சேர்க்கிற; இணைப்பைக் குறிக்கிற; எழுவாய் பயனிலை ஒப்பிணைப்புச் செய்கிற.

**cop'y**, *n.* சரிபடிவம், ஒத்த வடிவம்; படி, பகர்ப்பு, நகல்; மேல்வரிச்சட்டம், கட்டளை; முன்மாதிரி, பின்பற்றத்தக்கது; அச்சுக்கான எழுத்துப் படி; ஏட்டின் கைப்படி; ஏட்டின் ஒரு புத்தகப்படி; தாள் அளவை மாதிரி (16×20 அங்குலம்); (சட்.) நிலப்பண்ணைப் பேரேட்டுப் பகுதிப் பகர்ப்புப்படி; *v.* பகர்த்து, பார்த்தெழுது; பார்த்துப் பின்பற்று; மாணவர் வகையில் திருட்டுத்தனமாக அடுத்தவனைப் பார்த்து எழுதிவிடு; (தொ.) copy of verses, கல்லூரி மாணவர் பயிற்சிக்குரிய செய்யுள் தொகுதி.

**cop'y-book**, *n.* கையெழுத்துச் சட்ட ஏடு, மேல் வரிச்சட்ட ஏடு.

**cop'yhold**, *n.* படியுரிமை நிலம், படியுரிமை.

**cop'yholder**, *n.* படியுரிமை நிலத்தவர்; அச்சுத் திருத்துபவருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவர்.

**cop'ying-ink'**, *n.* பதிப்புப் படியெடுக்க உதவும் மை.

**cop'ying-ink-pencil**, **cop'ying-pencil**, *n.* படியெடுக்க உதவும் வரைகோல்.

**cop'ying-press**, *n.* கடிதங்களை அழுத்திப் படியச்சு எடுக்கும் பொறி.

**cop'yism**, *n.* குருட்டுத்தனமாகப் பார்த்துப் பின்பற்றும் பண்பு.

**cop'yist,** *n.* படி எடுப்போர், பார்த்து எழுதுபவர்; தற்பண்பற்றுப் பிறரைப் பின்பற்றும் எழுத்தாளர்.

**cop'yright,** *n.* பதிப்புரிமை, தனிப்பயனீட்டுரிமை, ஏடு-படம்-பாடல்-நாடகம் முதலியவற்றை ஆக்கிய மூல முதல்வருக்கு அல்லது அவர் ஆட்பேருக்கு அதை அச்சிட்டு வெளியிட்டு விற்பனை செய்யவோ பாடவோ ஒலிப்பதிவு செய்யவோ நடிக்கவோ திரைப்படமாக்கவோ குறிப்பிட்ட ஆண்டு அளவுக்குச் சட்டம் அளிக்கும் தனியுரிமை; *a.* பதிப்புரிமை பெற்ற, தனிப்பயனீட்டுரிமைக் காப்புடைய; *v.* பதிப்புரிமை பெறு.

**cop'y-wri'ter,** *n.* அச்சகத்தில் பகர்ப்பெழுத்தாளர்; விளம்பரங்களின் படியெழுத்தாளர்.

**coque,** *n.* இழைக்கச்சையின் சிறு கண்ணி, நாடாவின் வளை முடி.

**coquet',** *v.* பொய்க் காதல் புரி, பசப்புக் காதல் புரி; பொழுது போக்காக விளையாடு.

**coq'uetry,** *n.* போலிக்காதல் விளையாட்டு; பசப்பி ஏய்ப்பு; பகட்டு மினுக்கு; இழைவு குழைவு நயம்.

**coquette',** *n.* தற்பெருமையுடன் மயக்கித் திரிபவள், மேனுமினுக்கி, பிலுக்குக்காரி, பகடி, பசப்புக்காரி; தலைச்சூட்டுடைய பாடும் பறவை வகை; *v.* பொய்க்காதலாடு, போலிக் காதல் புரி; பசப்பி ஏய்; பிணங்கி ஊடாடு, பிகுவுச் செய்.

**coquett'ish,** *a.* நடிப்புக் காதல் புரிகிற; பசப்புக்காரிக்கு இயல்பான.

**coqui'to,** *n.* சிலி நாட்டின் (Chilean) அழகான பனைவகை.

**cor,** *n.* ஏறத்தாழ 11 மரக்கால் கொண்ட எபிரேய (Hebrew) முகத்தலளவை.

**co'racle,** *n.* பரிசல், தோல் அல்லது மெழுகுத் துணி மூடிய கூடைவரிசலாலான நீள் வட்டமான சிறு படகு வகை.

**co'racoid,** *n.* (உட.) முன்கை எலும்புடனிணையும் தோள்பட்டை எலும்போடிணைந்த எலும்பு.

**co'ral,** *n.* பவழம்; பவழப்பாறை, கடலுயிர் வகையின் தோட்டின் செறிவடுக்கால் வளரும் பாறை; கடலுயிர் வகை; கடலுயிர் வகையின் குடியிருப்புத் தொகுதி; பல் வளரும் குழந்தைக்குரிய பவழத்தாலான விளையாட்டுப் பொருள்; நண்டின் பொலிவுரு முட்டைத் தொகுதி; *a.* பவழத்தாலான; பவழம் போன்ற; செக்கச் சிவந்த.

**cor'al-berr'y,** *n.* பவழ நிறக் கொட்டையுடைய் அமெரிக்கப் புதர்ச் செடி வகை.

**cor'al-fish,** *n.* கடற்பாறைப் பவழத் தொடர்ப் பகுதியிலுள்ள மீன் வகை.

**coralla'ceous,** *a.* பவழம் போன்ற, பவழத்தின் குணங்களுள்ள.

**Coral'lian,** *n.* (மண்.) பவழத்தொடர் அமைப்பு.

**corallif'erous,** *a.* பவழமுள்ள, பவழத்தைக் கொண்டுள்ள.

**coral'liform,** *a.* பவழம் போன்ற, பவழ உருவுள்ள.

**corallig'enous,** *a.* பவழம் உண்டாக்குகின்ற.

**co'ralline,** *n.* செந்நிறச் சார்புள்ள கடற்பாசி; பவழம் போன்ற பொருள்; பவழம் போன்ற உயிரினம்; *a.* பவழம் சார்ந்த; பவழம் போன்ற; பவழம் உள்ள, பவழத்தைக் கொண்டுள்ள; (தொ.) Coralline Crag, (மண்.) ஆங்கில மண்ணியல் ஊழிக்கூற்றுக்குரிய புதைபடிவப் பவழமுடைய சிப்பி மணல் திரள் பாறை.

**co'rallite,** *n.* கிண்ண உருவான பவழத்தின் தனிச் சிப்பி; புதைபடிவப் பவழம்; பவழநிறச் சலவைக்கல்.

**coralloid, coralloid'al,** *n.* பவழம் போன்ற உயிரினம்; பவழத்துடன் தொடர்புடைய உயிரினம்; *a.* பவழ உருவியுள்ள; பவழம் போன்ற.

**coral'lum,** *n.* பவழத்தொகுதியின் எலும்புக்கூடு; *pl.* corall'a.

**co'ral-rag,** *n.* கரடுமுரடான பவழச் சுண்ணப்பாறை.

**co'ral-reef,** *n.* பவழப்பாறை; பவழப்பாறை வரிசை; பவழக்கரை.

**cor'al-rock',** *n.* பவழச் சுண்ணப்பாறை, பவழத்தாலான சுண்ணக்கல்.

**cor'al-root',** *n.* பவழம் போன்ற கிழங்குள்ள மலர்ச் செடியினம்.

**cor'al-snake,** *n.* சிறிய அமெரிக்க நச்சுப் பாம்பு வகை, பவழப் பாம்பு.

**cor'al-tree,** *n.* பவழம் போன்ற செந்நிற மலர்களுள்ள வெப்பமண்டல மரஇனம், பவழ மரம்.

**cor'al-wort,** *n.* பவழ வேர்; பவழம் போன்ற செந்நிறவேர்.

***cor'am,*** (ல.) *prep.* முன்னிலையில்; (தொ.) *coram judice,* நடுவர் முன்னிலையில்; *coram populo,* பொதுமக்கள் முன்னிலையில்.

**cor ang'lais,** *n.* (இசை.) வல்லொலித் துளைக்கருவி வகை.

**corb'el,** *n.* (க-க.) தண்டையக்கட்டு, பொருள்களை வைப்பதற்காக அல்லது பளுத்தாங்குவதற்காகச் சுவரில் ஏந்தலாக வைத்திணைக்கப்பட்ட கல் அல்லது கட்டை.

**cor'bel-block,** *n.* (க-க.) உத்தரத்தின் கீழ் நீட்டுத் தாங்கலாக அமைந்த தண்டயக்கட்டு.

**corb'el-table,** *n.* தண்டயக்கட்டு வரிசைமீதமைந்த மதிற் கட்டுமானம்.

**corb'ie,** *n.* பிணந்தின்னி காக்கை; அண்டங்காக்கை, காகம்.

**cor'bie-steps,** *n.* முக்கோண மோட்டுச் சுவரின் படி போன்ற சாய்தளக் கோணங்கள்.

**cord,** *n.* நூல்கயிறு, மணிக்கயிறு; கட்டுதளை, கட்டிழை; (உள்.) திண்ணிய நாளம்; 128 கனஅடி கொண்ட வெட்டுமர அளவை; மணியிழை, துணியில் தளமுனைப்பான திண்ணிய இழை; சுவடிக் கட்டிடத்தின் மூட்டு நூல் கயிறு; *v.* கட்டுதளை ஏற்பாடு செய்துகொடு; வரிந்து கட்டு.

**cord'age,** *n.* கப்பல் கட்டுதளைத்தொகுதி.

**cord'ate,** *a.* நெஞ்சுக்குலை வடிவான, இதய உருவான; (தாவ.) இலையின் காம்படியில் உள்வளைவான விளிம்புடைய.

**cord'ed,** *a.* கயிறுகளால் கட்டப்பட்ட; கயிறுகள் அடுக்கிய; கிளைநரம்புகள் ஓடிய, பக்கவாட்டில் வரிவரியாயமைந்த; (கட்.) கயிறுகளால் வரிந்து சுற்றப்பட்ட.

**Cordelier',** *n.* கடுமையான கட்டுப்பாட்டுக்குட்பட்ட பிரான்சிஸ்கன் (Franciscan) மடத்தின் பிரிவைச் சேர்ந்த கிறித்தவத் துறவி.

**cordeliers',** *n. pl.* கடுந்துறவி மடத்தில் கூடிய பிரஞ்சு புரட்சியாளர்களின் (French Revolutionaries) குழாம்.

**cord'-grass,** *n.* கயிறு செய்யப்பயன்படும் சேற்றுநிலப் புல் வகை.

**cor'dial,** *n.* இதயக்கிளர்ச்சி தரும் மருந்து; கிளர்ச்சியூட்டும் குடிவகை; ஊக்கம் தரும் உணவுவகை; மணமும் இனிமையும் ஊட்டப்பட்ட சாராயச்சத்துவகை; *a.* மனமார்ந்த, உள்ளுணர்ச்சியுடன் கூடிய; ஆர்வமிக்க; கபடற்ற; அன்பு நிறைந்த, உளங்கனிந்த; கிளர்ச்சி யூட்டுகிற.

**cor'dialise,** *v.* மகிழ்ச்சிகொள், இணக்கமாயிரு; தோழமை உணர்ச்சிகொள், மகிழ்வுடன் உறவாடு.

***cordiller'a,*** (ஸ்பா.) *n.* இணைவரிசையான மலையடுக்குத் தொடரில் ஒருவரிசை.

**cord'ing,** *n.* வரிந்துகட்டுதல்; கப்பல் பாய்மரக் கயிற்றுத் தொகுதி.

**cord'ite,** *n.* கயிறுவடிவான புகையற்ற வெடிப்பொருள்.

**cor'doba,** *n.* நிகராகுவா (Nicaragua) நாட்டின் மூல அளவை நாணயம்.

**cord'on,** *n.* கோட்டை மதில்மீதுள்ள குத்துக்கல் வரிசை; இராணுவ அரண் தளவரிசை; காவல்துறையினர் தடுப்பெல்லை வேலி; உடல்நலத்துறையினர் தொற்றெல்லை ஒதுக்கீட்டு வேலி; தடைவேலி ஆள் அணிவரிசை; கத்தரித்து ஒற்றைத்தடியாக வளர்க்கப்படும் பழமரவகை; அழகொப்பனைக்கான கயிற்றுவட வடிவம்.

cord'ovan, *n.* ஸ்பெயின நாட்டிலுள்ள கார்டோவா (Cordova) விலிருந்து முன்னுள் வந்த ஆட்டுத்தோல் வகை; *a.* கார்டோவாவைச் சார்ந்த.

cord'uroy, *n.* சொரசொரப்பான பஞ்சுத்துணி வகை; *a.* சொரசொப்பான துணி வகையாலான; (தொ.) corduroy road, சதுப்பு நிலத்தின்மீது மரத்தடிகளால் அமைக்கப்பட்ட பாதை.

cord'uroys, *n. pl.* சொரசொரப்பான பஞ்சுத்துணி வகையாலான காற்சட்டை.

cord'wainer, *n.* புதைமிதி செய்பவர்.

cord'wood, *n.* 128 கன அடி அளவாகத் துண்டிக்கப்பட்டு அடுக்கிய வெட்டுமரத் தொகுதி.

core[1], *n.* கொட்டை, பழத்தின் நடுப்பகுதியிலுள்ள கடுவிதை உறை; சுரங்கம் வைப்பதற்குரிய முதற் குடைவுக்குழி; மின்காந்த விசைச்சுருளின் மையத்திலுள்ள தேனிரும்புச்சலாகை; வார்ப்படத்தில் உருச் செறிவுக்குரிய உள்ளிடப் பொள்ளல்; கயிற்றின் மைய உட்புரி; உள்மையப்பகுதி, கருவுள்; இதயம்; உள்ளிடம்; ஆட்டுக்காய்ப்பு நோய்; *v.* கொட்டை எடு; உள்ளீடகற்று.

core[2], *n.* தனிக்குழு, உட்பிரிவு; நேரமாற்று வேலை வகுப்பு.

cored, *a.* நடுப்பகுதி நீக்கப்பட்ட; நடுப்பகுதியை உடைய; வார்ப்பட உட்பொள்ளலிடத்தில் வார்த்து உருவாக்கப்பட்ட.

co-re'gent, *n.* கூட்டுப் பகர ஆட்சியாளர், அரசருக்குப் பதிலாக ஆட்சி செய்பவரோடு உடனிணைந்து ஆட்சிசெய்பவர்.

co-rela'tion, *n.*=correlation.

co-rela'tive, *n.*, *a.*=correlative.

core'less, *a.* நடுப்பகுதி இல்லாத; உள்ளீடில்லாத, பொள்ளலான.

co-reli'gionist, *n.* சமயப்பங்காளி, உடன்சமயத்தோழர், ஒரே சமயத்தைச் சேர்ந்த இருவரில் ஒருவர்.

coreop'sis, *n.* வட்டவடிவான மஞ்சள் மலருடைய செடி வகை.

cor'er, *n.* உள்ளீடு அகற்றும் கருவி.

co-respon'dent, *n.* (சட்.) மணவிடுதலை வழக்கில் எதிர்வாதியின் உடன் கூட்டாளி, கூட்டு எதிர்வாதி.

corf, *n.* நிலக்கரிச் சுரங்கத்தொழிலாளரின் கூடை; கூண்டு இல்லாத பார வண்டி; மீன் அல்லது நண்டின் வகையைப் பிடிக்கும் கூடு; உயிருடன் மீன் வைத்திடும் கூடை.

cor'gi, cor'gy, *n.* வேல்ஸ் நாட்டுச் சிறுநாய்.

coria'ceous, *a.* தோல் போன்ற.

corian'der, *n.* கொத்துமல்லிச் செடி; (தொ.) coriander seed, கொத்துமல்லி.

Corin'thian, *n.* கிரீஸ் (Greece) நாட்டிலுள்ள கோரிந்து (Corinth) நகரத்தவர்; காலவண்ணப் புதுமையில் மிதப்பவர், புதுமைப் பாங்காளர்; விருப்பார்வ கேளிக்கையாளர்; இன்பவாணர்; ஒழுக்கங்கெட்டவர்; *a.* கிரீஸ் நாட்டிலுள்ள கோரிந்து நகரத்தைச் சார்ந்த; மணிவடிவத் தூண் தலைப்புடைய, கிரேக்க அணிவண்ணச் சிற்ப வகை சார்ந்த; பகட்டழகான இலக்கிய நடையுடைய; ஒழுக்கவரம்பு கெட்ட; (தொ.) Corinthian brass, Corinthian bronze, கோரிந்து நகரில் செய்யப்பட்ட உலோகக் கலவை; தன் ஆணவம், தன்மூப்பு; துடுக்குப் பேச்சு.

corinth'ianise, *v.* ஒழுக்க வரம்பற்று நட.

cork, *n.* தக்கை, நெட்டி; நெட்டிமரத்தின் பட்டை, தெற்கு ஐரோப்பா-வடக்கு ஆப்பிரிக்கா முதலிய இடங்களிலுள்ள நெட்டிமர வகை; தக்கையால் செய்யப்பட்ட அடைப்பான்; மூடி, அடைப்பு வகை; (தாவ.) மர மென்பட்டை, வெளிப்பட்டையை உருவாக்கும் தடித்த உயிரணுச் சுவருள்ள நெருக்கமான இழைமம்; நீர்காப்புடைய அடைப்பு; வளிகாப்புடைய மூடி; தக்கைத் துண்டு; தக்கை மிதவை; *a.* தக்கையாலான, தக்கையால் செய்யப்பட்ட; *v.* தக்கையால் அடை; மூடு; மூடி வழியடைத்துவிடு; தக்கைக் கரியால் கருமையாக்கு.

cork'age, *n.* தக்கையால் மூடுதல்; மூடி திறத்தல்; தக்கை திறப்புக்கான கட்டணம்.

cork'-borer, *n.* தக்கைகளில் துளையிடும் கருவி.

cork'-cam'bium, *n.* பட்டையாக்குபடை, மரப்பட்டையை ஆக்கி வளர்க்கவல்ல உயிர்மங்களைக்கொண்ட மென்மரப் பட்டைக்கூறு.

cork'-car'pet, *n.* தக்கையும் தொய்வகமும் ஆளியெண்ணெயும் கலந்து செய்யப்படும் நிலத்தள விரிப்பு.

cork'-cutter, *n.* தக்கை வெட்டும் கருவி; தக்கை வெட்டுபவர்.

corked, *a.* தக்கையால் அடைக்கப்பட்ட; மதுவகையில் தக்கையால் கறைப்படுத்தப்பட்ட, பழுதாக்கப்பட்ட; தக்கைக் கரியால் கருமையாக்கப்பட்ட.

cork'er, *n.* முடிவுக்குக் கொண்டுவருபவர்; முடிவுசெய்வது; தனி மேம்பாடு உடையவர்; தனி மேம்பாடு உடையது.

cork'-heel', *n.* தக்கையாலான புதைமிதியடியின் குதிகால் பகுதி.

cork'-heeled', *a.* புதைமிதியடி வகையில் தக்கையாலான குதிகால் பகுதியுடைய; வேண்டுமென்ற, அழிவழக்கான.

cork'ing-pin, *n.* மிகப்பெரிய ஊசி, முளை.

cork'-jack'et, *n.* தக்கை மேலங்கி, நீந்துவதற்கு உதவியாக உட்புறம் தக்கை வைத்துத் தைக்கப்பட்ட மேல் சட்டை.

cork'-leg, *n.* செயற்கைக் கால்.

cork'-lino'leum, cork'-mat, *n.*=cork-carpet.

cork'-oak, *n.* ஸ்பெயின்-போர்ச்சுகல் நாடுகள் வணிகத்திற்கு வேண்டிய தக்கை தரும் மர வகை.

cork'-screw, *n.* தக்கை திருகி, தக்கைவாங்கி; *a.* தக்கைத் திருகி போன்ற உருவுடைய; *v.* திருகலாக இயங்கு; வலிந்து பிடுங்கு; வலிந்து தகவல் பெறு.

cork'-sole', *n.* புதைமிதியடியின் தக்கையாலான உள்ளடித் தோல்.

cork'-tree, *n.* தக்கை மரம்; தக்கை மரவகை.

cork'wing, *n.* ஐரோப்பிய தென் அமெரிக்கக் கரையோரங்களுக்குரிய முள் மீன் வகை.

cork'wood, *n.* மிக இலேசான கட்டை தரும் மரவகை.

cork'y, *a.* தக்கை போன்ற, நெட்டி போன்ற.

corm, *n.* குமிழ்வடிவான அடிநிலத்தண்டு வளர்ச்சி; தண்டுக் கிழங்கு.

corm'ophyte, *n.* வேர்-அடிமரம்-இலை என்று வேறுபடுத்தப்படும் செடிவகை.

corm'orant, *n.* பெருந்தீனி தின்கிற வாத்தின் காலடியுடைய கடற்பறவை இனம்; பெருந்தீனிக்காரன்.

corn[1], *n.* பருப்பு; கொட்டை; பயிர்; விதை; தானியம், கதிர்மணி; கூலத்தொகுதி, மக்காச்சோளம்; *a.* கூலத்துக்குரிய; கூலத்திற்கான; கூலத்தினால் செய்யப்பட்ட; பயிர்களிடையே வளர்கிற; கூலத்தை உணவாகக் கொள்கிற; நுண்மணிகளாலான; *v.* நுண்மணிகள் போலாக்கு; உப்புத்துணுக்குகளைத் தூவு; உப்பிட்டுக் கெடாமல் வைத்திரு; கூலமாய் உருவாகு; விதையாகு; (தொ.) corn in Egypt, பொங்கு வளம்.

corn[2], *n.* காய்ப்பு, காலடியிலோ கால்விரலிலோ மிகு உராய்வு அல்லது மட்டுமீறிய அழுத்தத்தால் ஏற்படும் மேல்தோல் தடிப்பு; (தொ.) tread on one's corns, ஒருவர் உணர்ச்சியைப் புண்படுத்து.

corn'age, *n.* (வர.) கால்நடைகளின் எண்ணிக்கைக்குத் தக்கவாறு அறுதி செய்யப்படும் நிலமானியப்பணி; கணிப்பறுதியிடப்பட்ட நிலமானிய வாரம்.

corn'-ba'by, *n.* முற்கால நிலவளத் தெய்வமரபில் அறுவடை இறுதியில் எடுக்கப்படும் கூலமணிகளாலான பொம்மை வடிவம்.

**corn'-beef**, *n.* உப்பிட்டுப் பதனம் செய்யப்பட்ட மாட்டிறைச்சி.

**corn'-bin**, *n.* கூலப்பத்தாயம்.

**corn'-borer**, *n.* மக்காச்சோளப் பயிரை அழிக்கும் முட்டைப் புழுவை ஈனும் அந்துப் பூச்சி வகை.

**corn'brake'**, *n.* மக்காச்சோளப் பண்ணை.

**corn'-bran'dy**, *n.* கூலங்களிலிருந்து செய்யப்படும் சாராய வகை.

**corn'brash**, *n.* (மண்.) முன்னுளைய முட்டை மீன்கருச்செறிவினுல் உண்டாகிக் கூலம் வளர்வதற்கு நல்ல செழிப்பளிக்கும் சுண்ணும்புக்கல் வகை.

**corn'-chandler**, *n.* சில்லறைக் கூலவாணிகர்.

**corn'-cob**, *n.* மக்காச்சோளக் கதிரின் கெட்டிக்காம்பு; கெட்டிக் கதிர்க் காம்புகொண்டு செய்யப்படும் புகையிலைக் குழல்.

**corn'cockle**, *n.* கூலவயலில் விளையும் நெட்டையான அழகிய களைப்பூண்டு வகை.

**corn'crake**, *n.* வயல்களில் வாழும் சிற்றலகுடைய ஐரோப்பியப் பறவை வகை.

**corn'-cure**, *n.* கால் காய்ப்புக்குரிய மருந்து.

**corn'-cutter**, *n.* காலில் தோன்றும் காய்ப்புகளை வெட்டி அகற்றுபவர், கால் மருத்துவர்.

**corn'-dealer**, *n.* கூலவாணிகர்.

**corn'ea**, *n.* விழி முன்தோல், விழிவெண்படலம்.

**corned**, *a.* நுண்மணிகளாய் அமைந்த; உப்பிட்ட; (தொ.) corned beef, உப்பிட்டுப் பதனம் செய்யப்பட்ட மாட்டிறைச்சி.

**cor'nel**, *n.* தென் ஐரோப்பாவைச் சேர்ந்த சிறு மரவகை.

**cornel'ian**, *n.* மங்கிய சிவப்பு நிறமுள்ள நேர்த்தியான மணிக்கல் வகை.

**corn'eous**, *a.* கொம்பு போன்ற செறிவுள்ள; கொம்பையொத்த; கடினமான; காய்ப்புள்ள.

**corn'er**, *n.* மூலை, இடுக்கு; கோணம், குவிவரைச் சந்திப்பு, தளச்சந்திப்பு இடுக்கு; முனங்கு, முனைப்பான கூம்பு; ஒடுங்கிய உள்வளைவிடம்; மறைவிடம், தனியிடம்; வளைவு, அடைப்பு; தொலைவிடம்; இக்கட்டு நிலை, திக்குமுக்காடச் செய்யும் நிலை; சாய்பந்தெறிவு; வாணிகக் களத்தில் சரக்கு முற்றும் வாங்கிவிடும் குத்தகை; குத்தகைக் கூட்டு; *v.* மூலை முக்கு அமை; மூலையில் வை; இக்கட்டுக்கு உட்படுத்து; வலிந்து பணியவை; சரக்கு முழுவதையும் வாங்கி வாணிகக் கள ஆதிக்கம் செய்; பிறவாணிகருக்கெதிராகக் குத்தகைக் கூட்டில் சேர்; குத்தகைக் கூட்டு அமை; (தொ.) turn the corner, மூலையைக் கடந்து திசைதிரும்பிச் செல்; நெருக்கடிக் கட்டத்தைக் கடந்துவிடு; within the four corners of, உள்ளாக, உள்ளடங்கி.

**corn'er-boy**, *n.* தெருவீணன், சந்திக்குறும்பன்.

**cor'nered**, *a.* மூலைகளையுடைய; இக்கட்டான நிலையில் சிக்கவைக்கப்பட்ட, போக்குமுட்டிய.

**corn'er-man**, *n.* நீகிரோ பாடகர் வரிசையில் கடைக்கோடியிலுள்ள பாண்மகன்.

**corn'er-stone**, *n.* மூலைக்கல், ஆதாரக்கல், கட்டிட அடிப்படையின் சேமக்கல்; இன்றியமையாத மூல முதன்மையுடைய செய்தி; சேம அடிப்படை.

**cor'ner-teeth**, *n. pl.* குதிரையின் தாடைப் பக்கத்திலுள்ள வெட்டுப் பற்கள்.

**cor'nerwise**, *adv.* மூலை நோக்கி; மூலைவிட்டமாக.

**corn'et** [1], *n.* எக்காளம் போன்ற பித்தளை இசைக்கருவி வகை; மளிகைச் சரக்குகளை வைப்பதற்காக கூம்பு வடிவமாய்ச் சுருட்டப்பட்ட தாள்; குளிர் பாலேடு நிறைந்த கூம்பு வடிவத் தாள்பில்லை.

**corn'et** [2], *n.* பக்கத் தொங்கல்களுடன் கூடிய மாதர்களின் பழைய தொப்பி வகை; மாதர்களின் பழைய தொப்பி வகையின் பக்கத் தொங்கல்; புரவிப்படை அதிகாரி; புரவிப்படை அணிவகுப்பின்போது கொடி தாங்கிச் செல்பவர்.

**cor'net** [3], *n.* = coronet.

*cornet-a-piston, 'cornet-a-pistons*, (பிர.) *n.* = cornet[1].

**cor'netcy**, *n.* புரவிப்படை அதிகாரியின் ஆணைப்பத்திரம்; புரவிப்படை அதிகாரியின் படிநிலை.

**corn'etist**, *n.* எக்காளம் போன்ற பித்தளை இசைக்கருவி வகையை வாசிப்பவர்.

**corn'-exchange'**, *n.* கூலவாணிகக் களம்.

**corn'-factor**, *n.* கூலவாணிகர்.

**corn'-fed**, *a.* கூல உணவு ஊட்டப் பெற்ற; நல்ல ஊட்டம் பெற்ற.

**corn'field**, *n.* கூல வகைகள் விளையும் வயல்.

**corn'flag**, *n.* கத்தி வடிவமைந்த இலைகளையுடைய செடி வகை.

**corn'-flour**, *n.* கூலமாவு; மக்காச்சோள மாவு.

**corn'flower**, *n.* கூலப்பயிர்களிடையே விளையும் அழகிய நீலமலர்களையுடைய களை வகை.

**corn'-fly**, *n.* கோதுமைப்பயிர் முதலியவற்றின் தண்டினைத் துளைத்து நோயுண்டாக்கும் முட்டைப்புழுவை ஈனும் ஈ வகை.

**corn'husker**, *n.* கூல வகைகளின் உமி நீக்குபவர்; கூல வகைகளின் உமி நீக்கும் இயந்திரம்.

**corn'ice**, *n.* (க-க.) கட்டிட உச்சியின் சிற்பவேலைப்பாடு அமைந்த பிதுக்கம்; எழுதகம், அறைச்சுவர் உச்சி நெடுக கூரைக்கு அடுத்துக் கீழ் உள்ள அச்சுருவச் சிற்ப வேலைப்பாடு; படங்களுள்ள சுவடிகளைத் தாங்குவதற்கான ஒப்பனைச் சட்டம்; மலையேறல் வகையில் மேற்கவிந்துள்ள பனிமுகடு; *v.* கட்டிட உச்சியில் சிற்ப வேலைப்பாடமைந்த பிதுக்கம் அமை; அச்சுருவ எழுதகம் அமை.

**cor'nice-hook**, *n.* படமாட்டிக் கொளுவி; திரை மாட்டி.

**cor'nice-pole**, *n.* படங்கள்-திரைச்சீலைகள் முதலியவற்றைத் தொங்கவிடுவதற்கான கழி.

**cor'nice-rail**, *n.* படங்கள்-திரைச்சீலைகள் முதலியவற்றைத் தொங்கவிடுவதற்கான இருப்புச் சலாகை.

**cor'nice-ring**, *n.* பழங்காலப் பீரங்கியில் வாய் வளையத்தை அடுத்துப் பின்னுள்ள ஒப்பனை அச்சுரு வளையம்.

**corn'icle**, *n.* சிறு கொம்பு; கொம்பு போன்ற அமைவு; ஈ வகையின் மெழுகு சுரப்பிக்கும் குழல்களில் ஒன்று.

**cornic'ulate**, *a.* கொம்புள்ள; கொம்பு வடிவமைந்த.

**cornic'ulum**, *n.* = cornicle.

**cornif'erous**, *a.* (மண்.) எளிதில் நொறுங்கும் பாறை வகையை உண்டாக்குகிற; பாறை வகை அடங்கியுள்ள; (தொ.) corniferous limestone, (மண்.) கனுக்களுள்ள பவழச் சுண்ணகக்கல் வகை.

**corn'iform**, *a.* கொம்பினையொத்த வடிவமைந்த.

**cornig'erous**, *a.* கொம்புடைய.

**corn'ing-house**, *n.* துப்பாக்கி மருந்து நுண்மணிகளாக வார்க்கப்படுமிடம்.

**corn'ist**, *n.* துளை இசைக்கருவி வகையை வாசிப்பவர்.

**corn'land**, *n.* கூல வகைகளைப் பயிர்செய்வதற்குத் தகுந்த நிலம்.

**corn'-law**, **corn'-laws**, *n.* (வர.) பிரிட்டனில் 1846 வரை இருந்த கூல இறக்குமதிக் கட்டுப்பாட்டுச் சட்டம்.

**corn'loft**, *n.* கூலக் களஞ்சியம், பத்தாயம்.

**corn'-maiden**, *n.* = corn-baby.

**corn'-mar'igold**, *n.* கூல வயல்களில் விளையும் மஞ்சள் நிற மலர்ச் செடி வகை.

**corn'-merchant**, *n.* கூல வாணிகர்.

**corn'-mill**, *n.* மாவாலை.

**corn'-moth**, *n.* கூல வகைகளைத் தின்னும் முட்டைப் புழுக்களை ஈனும் அந்துப்பூச்சி வகை.

**cor'no**, *n.* பிரஞ்சு துளை இசைக்கருவி வகை.

***corno di basset'to***, (இத்.) *n.* மிக்க நயமும் மெல்லோசையும் உடைய துளை இசைக்கருவி வகை; இசைக்கருவித் துளையின் அழுத்துகட்டை.

**cornop'ean**, *n.* = cornet[1].

**corn'pipe**, *n.* கூலப்பயிர் வகைகளின் காம்பிலிருந்து செய்யப்படும் இசைக்கருவி வகை.

**corn'-plaster**, *n.* காலில் தோன்றும் காய்ப்புகளுக்கு மேற்பூச்சு மருந்து.

**corn'-popper**, *n.* கூல வகைகளைப் பொரிப்பதற்கான இரும்பு அடுப்புத்தட்டம்.

**corn'-rent**, *n.* பணமாக அல்லாமல் தானியமாகச் செலுத்தப்படும் வாரம்.

**corn'-sal'ad**, *n.* சிறு சதைப்பற்றுடைய ஐரோப்பியப் பூண்டு வகை.

**corn'-snow**, *n.* நுண்மணி உறைபனி.

**corn'-spirit**, *n.* கூலப்பயிர்ச் சிறு தெய்வம்.

**corn'stalk**, *n.* கூலச்செடியின் காம்பு; நீண்டுயர்ந்த மெல்லிய மனிதர்; நியூ சௌத் வேல்ஸில் (New South Wales) பிறந்தவர்.

**corn'starch**, *n.* களிவகைகள் செய்வதற்கான மக்காச் சோள மாவு.

**corn'stone**, *n.* கூலப்பயிருக்கு ஊட்டந்தரும் கன்மச் சத்து அடங்கியுள்ள சுண்ணகக்கல்.

**corn'-thrips**, *n.* கூலச்சத்தினை உறிஞ்சும் மிக நுண்ணிய பூச்சி வகை.

**cor'nu**, *n.* கொம்பு; கொம்பு போன்ற உறுப்பு; எலும்பு முனை; *pl.* cor'nua.

**cornucop'ia**, *n.* வளமார் கொம்பு; வளங்காட்டும் சின்னம், மலர்-கனி-பயிர்வளம் பொங்கி வழிவதாகக் கலைத்துறையில் காட்டப்படும் கொம்பு; வளமார் கொம்பு வடிவாகப் புனையப் பட்ட அழகுக்கலம்; பொங்கு மாவளம்.

**cornute', cornut'ed**, *a.* கொம்புடைய; கொம்பு போன்ற; கொம்பினையொத்த பிதுக்கங்களுள்ள.

**corn'-weevil**, *n.* தானியக் களஞ்சியங்களில் அழிவு விளைக்கும் சிறு அந்துப்பூச்சி வகை.

**corn'-whisky**, *n.* மக்காச் சோளத்திலிருந்து செய்யப்படும் அமெரிக்கத் தேறல் வகை.

**corn'worm**, *n.* தானியக் களஞ்சிய அந்துப்பூச்சி வகை; அந்துப்பூச்சி வகையின் முட்டைப்புழு.

**corn'y**[1], *a.* கூலம் போன்ற; கூலத்தினின்றும் உண்டாக்கப்பட்ட; கூலத்திற்குரிய; கூலம் மலிந்த.

**cor'ny**[2], *a.* காலில் தோன்றும் காய்ப்புக்குரிய; காலில் காய்ப்பு நோயுடைய.

**coroll'a**, *n.* (தாவ.) பூவிதழ் வட்டம், அல்லி வட்டம்.

**coroll'ary**, *n.* பின்தொடர்பு, தொடர் முடிபு; தெளியப் பட்ட முடிபிலிருந்து எளிதில் உய்த்தறியப்படும் உண்மை; துணை முடிபு, கிளை முடிபு, தெளியப்பட்ட முடிபடிப்படையாக ஏற்படும் முடிபு; இயல் விளைவு, பின்விளைவு, தொடர் பயன்.

**coron'a**[1], *n.* மகுடம்போன்ற அமைவு; கதிரவனையோ வெண்ணிலாவையோ சுற்றியுள்ள செல் விளிம்புடைய ஒளி வட்டம், பரிவேடம்; வில் ஒளிவட்டம், கதிரவனுக்கெதிராக உறைபனியிலும் முகிலிலும் தோன்றும் விளிம்பொளி வளையம்; வீரொளி வளையம், கதிரவனின் முழு மறைவின் போது வெண்ணிலாவைச் சுற்றிலும் காணப்படும் வெள்ளொளி வட்டம்; நிலமுனை வளரொளிக் கதிர்களின் குவியம்; தொங்கல் சரவிளக்கு வட்டம்; (க-க.) தூணின் அகல் நெடுந் தலைப்பு; (உட.) பல் முதலிய உறுப்புக்களின் கூர்ங்குவடு; (தாவ.) அகவிதழ்க்கேசம், மலரின் இதழ் வட்டத்தினுட்புறத் துணை இதழ் வட்டம்; (இய.) மயிர்க்குச்சுப் போன்ற மின் உமிழ்வு; *pl.* coro'nae; coro'nas.

**coron'a**[2], *n.* ஹவானா (Havana) நாட்டுச் சுருட்டு வகை.

**co'ronach**, *n.* ஒப்பாரி, புலம்பல்பாட்டு, இரங்கற் பா.

**co'ronal**[1], *n.* அணி முடி, பொன்முடி, மணி முடி, சிறு மகுடம்; தலைமாலை, கண்ணி.

**coron'al**[2], *a.* மகுடத்துக்குரிய; மகுடம் போன்ற; தலை உச்சிக்குரிய; (தாவ.) மலரில் அகவிதழ்க்கேசத்துக்குரிய; (தொ.) coronal bone, தலை ஓட்டின் முன் முகட்டு எலும்பு; coronal suture, தலை ஓட்டின் முன் முகட்டெலும்பையும் பின் முகட்டெலும்பையும் இணைக்கும் பொருத்து வரை.

**cor'onary**, *a.* மகுடத்துக்குரிய; தலை உச்சிக்குரிய; (தாவ.) அகவிதழ்க்கேசத்துக்குரிய; மகுடம் போன்ற; மகுடம் போலச் சுற்றியுள்ள; (உள்.) ஓர் உறுப்பைச் சுற்றியுள்ள; (தொ.) coronary arteries, (உள்.) நெஞ்சுப்பைச் சுவரின் தசைக்குக் குருதி வழங்கும் நாடி; coronary circulation, நெஞ்சுப்பை சுற்றிய குருதியோட்டம்.

**co'ronate, co'ronated**, *a.* (தாவ.) அகவிதழ்க்கேசமுள்ள; (வில.) மகுடம் போன்ற உறுப்புடைய.

**corona'tion**, *n.* முடிசூட்டுதல், முடிசூட்டு விழா.

**corona'tion-oath**, *n.* அரசரின் அல்லது அரசியின் முடிசூட்டு விழாச் சூளுரை.

**co'roner**, *n.* பிண ஆய்வாளர், கொலைநிகழ்ச்சி-இடர் ஆகியவை பற்றிய ஆராய்ச்சி நடத்துபவர்; புதையல் எடுப்பு ஆய்வுப்பணியாளர்; (தொ.) coroner's inquest, பிண ஆய்வாளர் பொது விசாரணை.

**co'ronet**, *n.* சிறு மகுடம், சிறு மணிமுடி; ஒப்பனை மிக்க தலையணி; மாலை; (உள்.) குதிரைக் குளம்பின் மேற்பகுதி.

**co'roneted**, *a.* சிறு மகுடம் அணிந்துள்ள.

**coro'nium**, *n.* ஞாயிற்றின் ஒளி வட்டத்திலிருப்பதாக முன்பு தவறாகக் கருதப்பட்ட கற்பனைத் தனிமம்.

**coron'oid**, *a.* (உள்.) எலும்புப் பகுதிகளில் காக்கையின் அலகுபோல் வளைந்த.

**coroz'o-nut**, *n.* தாவர தந்தம் தரும் தென் அமெரிக்கப் பனை இன மரவகையின் கொட்டை.

**corp'oral**[1], *n.* படைத்துறைச் சிற்றலுவலர்; கப்பல் காவல் துறைச் சிற்றலுவலர்; சுரங்கத் தொழிலாளர் குழுத் தலைவர்.

**corp'oral**[2], *n.* கிறித்தவத் திருவிருந்தின் (Eucharist) போது அப்பத்தையும் தேறலையும் வைப்பதற்குப் பயன்படும் துணி.

**corp'oral**[3], *a.* மனித உடம்புக்கடுத்த; உடலுக்குரிய; உடம்பினை உடைய; தனிமனிதருக்குரிய; சடமான, சித்து அல்லாத, ஆன்மா சாராத; (தொ.) corporal punishment, உடல் ஒறுப்பு, கசையடிபோன்ற உடல் சார்ந்த தண்டனை.

**corporal'ities**, *n. pl.* உடம்பு பற்றிய செய்திகள்; உடம்பு பற்றிய தேவைகள்.

**corporal'ity**, *n.* உடல் வாழ்வு; உடம்பு.

**corp'orate**, *a.* சட்டப்படி ஒன்றுபட இணைக்கப்பட்ட; ஒரு முழு நிறுவனமாய் இயங்குகிற, உறுப்பினர் நிறைகூட்டான; கூட்டுரிமையுடைய; நகரவைத் தன்னாட்சியுரிமையுடைய; கூட்டான; கூட்டுக் குழுவுக்குரிய; கூட்டாண்மைக்குரிய.

**corpora'tion**, *n.* மாநகராண்மைக் கழகம்; கூட்டுரிமைக் குழு, அரசியலுரிமைப் பத்திரமூலம் அமர்வு பெற்ற குழு; அரசியல் தனியுரிமை பெற்றவர்; (தொ.) corporation aggregate, பலரடங்கிய இணைக்கழகம்; corporation sole, தனியுரிமை பெற்றவர்; municipal corporation, மாநகராண்மைக் குழு, மாநகராண்மை.

**corp'orative**, *a.* சட்டப்படி உண்டாக்கப்பட்ட இணைக் கழகம் சார்ந்த.

corp'orator, *n.* கூட்டுரிமைக்குழு உறுப்பினர்.

corpor'eal, *a.* உடல் சார்ந்த; உடம்பினையுடைய; சடப் பொருளான; (சட்.) உருப்படியான.

corpo'realism, *n.* உலோகாயதம்.

corpore'ity, *n.* பரு உடம்பியல்பு; பரு உடல் பெற்றிருத்தல்; பரு உடலின் பொருண்மை.

corporifica'tion, *n.* உருவாக்கம்; திட்பமுறுவித்தல்.

corpo'rify, *v.* பிழம்புருவாக்கு; உருவங்கொடு.

corp'osant, *n.* புயலடிக்கும்போது சில சமயம் கப்பலின் மேல் காணப்படும் ஒளி உருண்டை.

corps, *n.* படைப்பிரிவு; படைத்துறைப்பணி வகுப்பு; படை அரங்க வகுப்பு; ஒழுங்கமைக்கப்பட்ட குழு; செர்மன் மாணவர் கழகம்; தொழில் துறை அமைப்புக் குழு; *pl.* corps.

corpse, *n.* உயிரற்ற மனித உடல், பிணம்.

corpse'-can'dle, *n.* சாவின் முன்னறிவிப்பாக இடுகாட்டிற் காணப்படும் தீக்கொழுந்து.

corpse'-gate, *n.* இடுகாட்டில் பாடையை இறக்கி வைப் பதற்கான கூரையிட்ட நுழைவாயில்.

corp'ulence, corp'ulency, *n.* ஊழற்சதையுடையவரா யிருத்தல், மிதமிஞ்சிய கொழுப்புடைமை, உடல் பருத் திருத்தல்.

corp'ulent, *a.* பருத்த, கொழுத்த.

corp'us, *n.* உடம்பு; பிணம்; (உட.) உடம்பில் தனி இயல்பு வாய்ந்த கட்டமைப்பு; இலக்கியத் தொகுப்பு; சட்டத் தொகுதி; (தொ.) Corpus Christi, இயேசுநாதரின் திரு உணவு விழா; corpus delicti, சட்டமீறின செயல்களின் தொகுதி; corpus vile, பயனற்ற பொருள்.

corp'uscle, *n.* நுண் துகள்; (உட.) குருதிக்கணம்; நுண் குழு, குருதியில் உள்ள நுண் அணுவுடலி; (இய.) மின்னணு.

corpus'cular, *a.* நுண்துகள் சார்ந்த; மின்னணுக்களுக் குரிய; குருதி நுண்குழுச் சார்ந்த; (தொ.) corpuscular theory of light, பருப்பொருள் துகள்களின் வெளியேற்றமே ஒளியாகும் என்ற நியூட்டனின் (Newton) கோட்பாடு.

corpuscula'rian, *n.* பருப்பொருள் துகள்களின் வெளி யேற்றமே ஒளியாகுமென்னும் நியூட்டன் கோட்பாட்டாளர்; *a.* நுண்துகள் சார்ந்த.

corpus'cule, *n.*=corpuscle.

corral', *n.* கால்நடைப் பட்டி; வேட்டை விலங்குகளைத் துரத்திப் பிடிப்பதற்கான அடைப்பிடம்; படைவீட்டில் வண்டித் திரையால் அடைக்கும் அடைப்பு அரண்; *v.* தொழு வத்தில் அடை; அடை; பாதுகாப்பினிமித்தம் வண்டிகளின் வளைவான நிரல் அமை.

correct', *a.* சரியான, சரி நுட்பமான; திருத்தமான, வழு வற்ற; படியளவைக்கொத்த; ஒப்புக்கொள்ளப்பட்ட அள வுக்குச் சரியான; மெய்யான; தக்க, ஏற்புடைய; *v.* சரிப் படுத்து, திருத்து; தவறு நீக்கிச் சரி செய்; பிழைதிருத்தம் செய், பிழை குறி; கண்டி, தவறு எடுத்துரை; குறையகற்று; சரியீடு செய்; நேரளவுக்குக் கொண்டு வா.

correc'tion, *n.* திருத்துதல்; திருத்தம்; திருத்தப்பாடு; திருத்தப்படுதல்; திருத்தப்பட்ட வடிவம்; திருத்த மாறுபாடு; கண்டனம்; தண்டனை; மெய்யுறும் ஒறுப்பு; சரியீடு; சரிநிலை பெறுதற்குரிய பிழை நீக்க அளவு; (தொ.) under correction, மேலுரிமையாளர் திருத்தத்துக்குக் கட்டுப்பட்ட நிலையில்.

correc'titude, *n.* சரி திட்பம், பிழைபடாமை, தவறில்லா நடத்தை.

correc'tive, *n.* திருத்துவது; தீங்கினைத் தவிர்க்கும் பொருள்; தீமையினை எதிர்த்தியங்கும் பாங்குடைய பொருள்; *a.* தீங்கினைத் தவிர்க்கிற; தீமை எதிர்க்கப் பயன்படுகிற; திருத்துகிற; திருத்தும் இயல்புடைய; (தொ.) corrective training, விடாது தொடர்ந்து குற்றத்திலீடுபடும் 21 அல்லது மேற்பட்ட வயதுடைய இளைஞர்களுக்கு இரண்டு முதல் நான்கு ஆண்டுகள் வரை நடத்தப்படும் திருத்தச் சிறைவீடு.

correc'tor, *n.* திருத்துபவர்; திருத்தும் பொருள்; சீர்மையர்; திறனாய்வாளர், குற்றங்காண்பவர்; ஒறுப்பவர்; இயக்குநர்; பார்வைப் படித்தாள் திருத்துபவர்.

correct'ory, *a.* சீர்ப்படுத்தும் பாங்குடைய; ஈடு செய்யும் இயல்புடைய.

co'rrelate, *n.* எதிரிணையான பொருள், ஒன்றற்கொன்று தொடர்புடைய எதிரிணையான பொருள்களில் ஒன்று; *v.* ஒன்றற்கொன்று தொடர்புடையதாக்கு; ஒன்றற்கொன்று தொடர்புடையதாய் இணைவுறு, எதிரிணையாயிரு; தொடர் புடைமை காட்டு; இடை ஒப்புமை நாட்டு.

correla'tion, *n.* தொடர்புபடுத்துதல்; இடைத்தொடர்பு.

correl'ative, *n.* ஒருவருடன் ஒப்புமைத் தொடர்புடைய மற் றொருவர்; ஒன்றுடன் ஒப்புமைத் தொடர்புடைய மற்றொன்று; *a.* ஒன்றற்கொன்று தொடர்புடைய; ஒருவருக்கொருவர் தொடர்புடைய; இருதிற ஒருங்கொப்புமையுடைய; (சொல் இலக்கணம்) இணையாட்சியுடைய, எதிரிணையான.

cor'reli'gionist, *n.*=co-religionist.

correspond', *v.* சரி ஒப்பாயிரு; இயைந்துடன்படு; பொருந்து, ஒத்திசைந்திரு; ஒத்திரு; ஒப்புமை கொண்டிரு; அளவொத் திரு, நிலையொத்திரு; கடிதப் பரிமாற்றத் தொடர்புகொள், கடிதப்போக்குவரவு நடத்து.

correspon'dence, *n.* பொருத்தம்; இயைபுடன்பாடு; இடை ஒப்புமை; ஒத்திசைவு; நட்புத் தொடர்பு; கடிதத்தொடர்பு; கடிதங்கள்; (தொ.) correspondence course, அஞ்சல் கடிதங்கள்மூலமாக நடத்தப்படும் பாடப்பயிற்சி; correspondence school, அஞ்சல் கடிதங்கள்மூலமாகப் பாடங்கற்பிக்கும் பள்ளி; doctrine of correspondences, இயற்கைப்பொருள் ஒவ்வொன்றுக்கும் நிகரான சித்துருவ மாதிரிப் படிவமூலம் இருக்கிறதென்றும் இதற்கான மறை விளக்கம் திருநூலில் இருக்கிறதென்றும் கொண்ட ஸ்வீடன் போர்க் (Swedenborg) என்பாரின் கோட்பாடு.

correspon'dency, *n.*=correspondence.

correspon'dent, *n.* கடிதம் எழுதுபவர்; கடிதத் தொடர்பு கொள்பவர்; பத்திரிகை நிருபர், இதழகத் தனி எழுத்தாளர்; நிறுவனத்தின் அயல்நாட்டுத் தொழிலாண்மைப் பேராளர்; நிறுவனத்தின் எழுத்தாண்மைப் பேராளர்; எழுத்தாண் மைத் தொழிற் பேராளர்; *a.* சரி ஒத்த; ஏற்புடைய; தக்க; உடன்பாடான.

correspond'ing, *a.* ஒத்திசைவான; ஏற்புடைய; பொருந்து கிற, தகுதியாயிருக்கிற; கடிதத்தொடர்பு கொண்டிருக்கிற; (தொ.) corresponding member, சேய்மையில் வாழ்ந்து கொண்டு கழகத்தின் ஆட்சியில் பங்குகொள்ளாமலேயே அதனுடன் கடிதத்தொடர்பு கொள்ளும் உறுப்பினர்.

correspon'sive, *a.* ஒத்துள்ள, பொருந்துகிற, ஏற்புடைய.

co'rridor, *n.* இரண்டறைகளுக்கு இடையேயுள்ள நடைக் கூடம்; புகையூர்தியில் இரண்டு வளைவுகளுக்கிடையிலுள்ள இடைவழி; ஒரு நாட்டுக்குரியதாயிருந்து மற்றொரு நாட்டின் ஊடே சென்று கடல்-துறைமுகம் முதலியவற்றைச் சென்றடைவதற்குரிய இடைவழி நிலம்.

corr'idor-carr'iage, *n.* ஓர் அறை வளைவிலிருந்து மற்றோர் அறை வளைவுக்குச் செல்லும் வழியுள்ள வண்டி.

corr'idor-train, *n.* ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரை செல்ல குறுகலான இடைவழியுள்ள இருப்பூர்தித் தொடர்.

co'rrie, *n.* மலைச்சரிவிலுள்ள மட்டமான பள்ளம்.

corrigen'da, *n. pl.* அச்சிட்ட புத்தகத்தில் பிழைதிருத் தங்கள்.

corrigen'dum, *n.* திருத்தப்படவேண்டிய தவறு.

corr'igent, *n., a.*=corrective.

corr'igible, *a.* திருத்தப்படத்தக்க; வழிக்குக் கொண்டுவரக் கூடிய; திருத்தக்கூடிய; படிமானமுடைய.

**corriv'al**, *n.* போட்டியிடுபவர், எதிராளி, ஒத்த தகுதியுடையவர்; *a.* போட்டியிடுகிற, எதிராளியான; *v.* போட்டியிடு, எதிர்த்து வெல்ல முயல், விஞ்ச முயற்சி செய்.

**corrob'orant**, *n.* வலிமைதரும் மருந்து; உறுதிப்படுத்தும் செய்தி; *a.* வலிமை தருகிற; உறுதிப்படுத்துகிற.

**corrob'orate**, *a.* வலியுறுத்தப்பட்ட; *v.* முறைப்படி உறுதிப்படுத்து; நிலைநிறுத்து, சான்று காட்டி வலியுறுத்து.

**corrobora'tion**, *n.* உறுதிப்பாடு, நிலைபடுத்தல்; கூடுதலான சான்றுகளினால் வலியுறுத்தல்.

**corrob'orative**, *n.* வலியுறுத்தும் செய்தி, உறுதிப்படுத்தும் சான்று; *a.* வலியுறுத்தும் பாங்குடைய.

**corrob'oratory**, *a.* வலியுறுத்தும் பாங்குடைய.

**corrob'oree**, *n.* ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களின் நாட்டு ஆடல் வகை; ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களின் ஆடலுக்கான பாடல் வகை; ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களின் விழாக்கூட்டம்; *v.* ஆஸ்திரேலிய நாட்டு ஆடல் வகை நடத்து.

**corrode'**, *v.* கரம்பு, பையப் பைய அரித்துத்தின்னு; கரை, சிதை; அழிவுறு.

**corrod'ent**, *n.* கரம்புவது, அரித்து அழிக்கும் பொருள்; *a.* அரித்துச் சிதைக்கவல்ல.

**Corroden'tia**, *n. pl.* புத்தகப்பேன் போன்ற சிறு பூச்சியினம்.

**corro'sion**, *n.* அரித்தல், கரைத்தழித்தல்; கரைதல்; துருப்பிடித்து வீணுதல்.

**corros'ive**, *n.* அரித்துத் தின்னவல்ல பொருள்; *a.* கரைத்துச் சிதைக்கவல்ல; (தொ.) corrosive sublimate, (வேதி.) விரம், இரசகப்பாசிதை, இரசங்கலந்த உறைப்பான கொடிய நஞ்சு.

**co'rrugate**, *v.* தாள்-இரும்பு முதலியவற்றைத் திரைக்கச் செய்; வளைத்து நெளி; மடித்துத் திட்பமாக்கு; மடிப்புக் குறியிடு, மடிப்பிட்டு வளை.

**co'rrugated**, *a.* நெளிவுள்ள, திரைந்த; (தொ.) corrugated iron, வலிவு மிகும்பொருட்டு நெளிநெளியாக வளைக்கப்பட்ட இரும்புத்தகடு; corrugated paper, அட்டைத்தாளாகப் பயன்படும் மடிப்புச் சுருக்கம் விழுந்த தாள்.

**corruga'tion**, *n.* மடிப்புகளாகச் சுருக்குதல்; திரை விழுந்த நிலை; திரை, சுரிப்பு.

**co'rrugator**, *n.* (உள்.) முகம் சுளிக்கும்போது புருவத்தைச் சுருக்கும் தசை.

**corrupt'**, *a.* அழுகின, ஊழலான; ஊசிப்போன; இழிந்த, பழிகேடுற்ற, சீரழிந்த; மாசுபட்ட; தூய்மைகெட்ட; ஒழுக்கங்கெட்ட; கைக்கூலி வாங்கும் இயல்புடைய, இலஞ்ச ஊழல் மலிந்த; இலஞ்சத்தால் வசப்படுத்தத்தக்க; போலியான, மோசமான, செல்லுபடியாகாத; உண்மையற்ற; பிழை மலிந்த; *v.* அழுகலாக்கு; ஊழ்த்துப்போ; கெடு; கறைப்படுத்து; நச்சுப்பரப்பு; தொற்றூட்டு; மொழித்தூய்மை கெடு; கைக்கூலி கொடுத்து வசப்படுத்து, இலஞ்ச ஊழலால் கெடு; இழிவுபடுத்து; கெட்டுப்போ, சீரழிந்து போ.

**corrup'tible**, *a.* கைக்கூலியினுல் வசப்படுத்தத்தக்க; அழிவுறக்கூடிய; ஒழுக்கக்கேடுறத்தக்க.

**corrup'tion**, *n.* அழுகல், ஊழ்த்தல்; அழுகற் பொருள்; கட்டழிவு, பொருள் சிதைவு; துப்புரவுக்கேடு; இலஞ்ச ஊழல் பழக்கவழக்கத் தொகுதி; ஒழுக்கக்கேடு; மொழிச் சிதைவு, நடைச்சீரழிவு; (தொ.) corruption of blood, (சட்.) கொலைத்தீர்ப்பு அல்லது நாடு கடத்தலுக்கு ஆட்பட்டவர் சொத்துரிமை-பட்டம்-மதிப்பு முதலியவற்றின் தன்னுரிமையுடன் அவற்றை அளித்தல்-மரபுரிமையாக விட்டுச் செல்லல் ஆகிய உரிமைகள் யாவும் இழக்கும் நிலை.

**corrup'tionist**, *n.* கைக்கூலி கொடுப்பவர்; கைக்கூலி வாங்குபவர்; இலஞ்சப் பழக்கத்தை ஆதரிப்பவர்.

**corrupt'ive**, *a.* சீரழிக்கும் இயல்புள்ள, கெடுக்கும் பண்புள்ள.

**cors'ac**, *n.* இளமஞ்சள் நிறமும் குச்சுவாலுமுடைய குள்ள நரி வகை.

**cors'age**, *n.* மகளிர் கச்சு; கச்சணி மலர்க் குஞ்சம்.

**cors'air**, *n.* பகைவர் கப்பலைக் கொள்ளையிடும் போர்க் கப்பல் தலைவன்; கடற்கொள்ளைக்காரன்; சூறைக்கப்பல்.

**cors'ak**, *n.* = corsac.

**cors'elet**, *n.* = corslet.

**cors'et**, *n.* மகளிரின் இறுக்கமுடைய விறைப்பான மார்புக் கச்சு; *v.* கச்சு அணிவி.

**cors'let**, *n.* கவச உடற்பகுதி; பெண்டிரின் கை நீங்கலான இறுக்கமான மார்புச் சட்டை; (வில.) பூச்சியின் தலைக்கும் வயிற்றுக்கும் இடைப்பட்ட மார்புக்கூறு.

*cortege*, (பிர.) *n.* பரிவாரம், பின்செல்லும் ஊழியர் வரிசை; ஊர்வலம்; இழவு ஊர்வலம்.

*cor'tes*, (ஸ்பா.) *n. pl.* ஸ்பெயின் அல்லது போர்ச்சுக்கல் நாட்டின் இருசட்டமன்றங்களுமடங்கிய பேரவை.

**cort'ex**, *n.* உள்ளுரி, செடியினத்தின் உள்மரப்பட்டை; மேலுறை; மூளைமேலுள்ள சாம்பல் நிறப்பொருள்; சிறுநீர்ப்பையின் புறப்பகுதி; *pl.* cor'tices.

**cort'ical**, *a.* (தாவ.) உள்ளுரியைச் சார்ந்த; (வில.) உடலின் புறம் சார்ந்த; உறுப்பின் புறப்பகுதி சார்ந்த.

**cort'icate, cort'icated**, *a.* மேல்தோலையுடைய; புறத்தோடு போன்ற.

**corun'dum**, (த.) *n.* குருந்தம், வைரத்திற்கடுத்தபடி கடினம் வாய்ந்த கனிப்பொருள் வகை.

**corus'cant**, *a.* ஒளி வீசுகிற, மின்னுகிற.

**co'ruscate**, *v.* மின்னு, பளிச்சென ஒளிவிடு.

**corusca'tion**, *n.* மின்னுதல், பளபளப்பாக ஒளிவீசுதல்; திடீரென வீசும் ஒளி.

**corvee'**, *n.* நிலப்பண்ணையாட்சி முறையில் ஊழியக்கடமை, கூலியில்லா வேலை.

**corvette'**, *n.* வழித்துணைக் கப்பல், கூட்டத்தை நீர் மூழ்கிக் கப்பலின் தாக்குதலினின்றும் பாதுகாத்துச் செல்லும் வேகமுடைய சிறிய கப்பல்.

**corv'ine**, *a.* காக்காய்-பருந்து இனத்தைச் சார்ந்த.

**Co'rybant**, *n.* சிபீலி (Cybele) என்ற பண்டைக் கிரேக்க பெண் தெய்வத்தின் ஆடலார்ப்பரிப்பு வாய்ந்த வழிபாட்டுக்கு உரிய சமய குரு; *pl.* Co'rybants.

**Coryban'tic**, *a.* முரட்டுத்தனமிக்க உணர்ச்சிப் பெருக்குள்ள.

**Co'rydon**, *n.* நாட்டுப்புறத்தானைச் சுட்டிய குறிப்புப்பெயர்.

**co'rymb**, *n.* (தாவ.) சரிமட்ட முகட்டையுடைய மலர்க் கொத்து.

**corym'bus**, *n.* பெண்ணின் உச்சிக்கொண்டை, 'பிச்சோடா'.

**cor'ypha**, *n.* வெப்ப மண்டலப் பெரும் பனைவகை.

**coryphae'us**, *n.* இசைக்குழு முதல்வர்; *pl.* coryphae'i.

**co'ryphee**, *n.* நடனக்குழுவின் தலைமை நடிகை.

**coryz'a**, *n.* மண்டைச்சளி; தடுமல்.

**cos** [1], *n.* கோசு, நீண்ட இலையுடைய கீரை வகை.

**cos** [2], *n.* cosine என்பதன் சுருங்கிய வடிவம்.

*cosaque*, (பிர.) *n.* சீனவெடி, பட்டாசு.

**cose**, *v.* வாய்ப்பமைதிகொள், வாக்காக அமர்ந்துகொள்.

**cosec'ant**, *n.* (கண.) கோணத்தின் எதிர்நெடுக்கை, செங்கோண முக்கோணத்தில் கோணத்துக்கெதிரான நிலைவரை மீது சாய்வரை கொள்ளும் சார்பளவு.

**coseis'mal**, *n.* நில நடுக்க உடனதிர்வு எல்லைக்கோடு; *a.* நிலநடுக்கத்தில் ஒரே சமயத்தில் உடனதிர்கிற.

**cosh**, *n.* குண்டாந்தடி, செண்டு; *v.* குண்டாந்தடியாலடி; (தொ.) cosh boy, தடியேந்திய இளைஞன்; செண்டேந்திய மனிதர்.

**cosh'er** [1], *v.* இடங்கொடுத்துக் கெடு, இளக்காரம் கொடு, செல்லம் கொஞ்சு.

**cosh'er** [2], *a.* தூய்மையான, மாசற்ற; யூதர்கள் சட்டத்தின்படி தூய்மையாக்கப்பட்ட.

**cosh'er** [3], *v.* சார்ந்தவர்களைப் பற்றிவாழ்.

**cosh'ering, cosh'ery,** *n.* அயர்லாந்தின் நிலக்கிழார் தம் உரிமை ஏவலாளருடன் குடிவாரக்காரனிடம் தங்குவதற்குள்ள பண்டைய உரிமை.

**co-sig'natory,** *n.* கூட்டொப்பக்காரர், பலருடன் கையெழுத் திடுபவர்; *a.* பலருடன் சேர்ந்து கையெழுத்திடுகிற.

**co-signif'icative,** *a.* உடனொத்த உட்குறிப்புடைய.

**co'sine,** *n.* (கண.) கோணத்தின் கிடக்கை, செங்கோண முக்கோணத்தில் சாய்வரைமீது கோணமடுத்த அடிவரை கொள்ளும் சார்பளவு.

**cos'lettize,** *v.* துருத்தடைக் காப்புமுறை கையாளு; மிதி வண்டி உருளையின் குறுக்குக் கம்பிகளுக்குத் துருக்காப்பீடு முறை செய்.

**cosmet'ic,** *n.* ஒப்பனைப்பொருள், சிங்காரிப்புப் பொருள்; *a.* ஒப்பனைக்குரிய; முடிசிங்காரிப்பு-வண்ணவடிவொப்பனை ஆகியவற்றுக்குரிய.

**cos'mic,** *a.* இயலுலகொடு சார்ந்த; இயலுலக அண்டத் துக்குரிய; சீர்பெற அமைந்த இயலமைவுக்குரிய; ஒழுங்கு முறையான; (தொ.) cosmic rays, மின்காந்த நுண்ணலை கள், 1925-இல் டாக்டர் ஆர். ஏ. மில்லிகன் (Dr. R. A. Millikan) என்பவரால் கண்டுணரப்பட்டு அண்டவெளியில் விண்மீன் களின் இடையிலிருந்து வருவதாகக் கருதப்பட்ட மின்காந்தச் சிற்றலைகள்.

**cos'mical,** *a.* இயலுலக அண்டத்துக்குரிய; (வான்.) கதிர வன் எழும்போது நிகழ்கிற; கதிரவனுடன் எழுகிற; (தொ.) cosmical constant, அண்ட அமைப்பிற்கு இன்றியமையாத தாக எண்ணப்படும் அடிப்படை எண் (தற்போதைய மதிப்பில் $10^{78}$).

**cos'mism,** *n.* இயலுலக அண்டம் தானே தோன்றி நிலை பெற்றுள்ள முழுமைப் பொருள் என்னும் கோட்பாடு.

**cos'mist,** *n.* சமயச்சார்பற்ற கோட்பாட்டினர், உலோகா யதர்.

**cos'mocrat,** *n.* இயலுலகாள்பவர்.

**cosmog'eny,** *n.* இயலுலகத் தோற்றம்.

**cosmogon'ic, cosmogon'ical,** *a.* அண்டத் தோற்றம் சார்ந்த, இயலுலகப் படைப்புப்பற்றிய.

**cosmog'onist,** *n.* அண்டத்தோற்ற ஆய்வாளர், இயலுலகப் படைப்புக் குறித்து ஆழ்ந்து ஆராய்பவர்.

**cosmog'ony,** *n.* அண்டப்பிறப்புக் கோட்பாடு, இயலுலகத் தோற்றம் பற்றிய கொள்கை.

**cosmog'raphy,** *n.* இயலுலக விளக்க விரிவுரை; அண்ட அமைப்பியல்.

**cosmol'atry,** *n.* இயலுலக வழிபாட்டாளர், அண்ட வழி பாடு செய்பவர்.

**cosmol'ogy,** *n.* அண்ட முழுமை இயல்; அண்டப் படைப்புக் கோட்பாடு.

**cos'monaut,** *n.* விண்வெளிச் செலவினர்.

**cosmoplas'tic,** *a.* அண்டத்தை உருவாக்குகிற, உலகினை உருவாக்குகிற.

**cosmop'olis,** *n.* அகலுலகத் தொடர்பு கொண்ட நகரம்.

**cosmopol'itan,** *n.* அகலுலகக்குடிமகார்; உலகப் பொதுப் பற்றுளர்; பிறநாட்டில் பொதுவுடைமையரல்லாதவரிடமும் ஒத்துணர்வு காட்டும் பொதுவுடைமையாளர்; *a.* உலகத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் தொடர்பான; தனிச்சார்பற்ற.

**cosmopol'itics,** *n.* உலக அரசியல்.

**cosmora'ma,** *n.* பல்வண்ண உலகக் காட்சிக்கோவை, கண் ணாடி வில்லைகள்மூலம் இணைத்துக் காட்டப்படும் உலகளா விய வண்ணக் காட்சித் தொகுதி.

**cos'mos,** *n.* இயலுலகு, அண்டம்; ஒழுங்கமைதி வாய்ந்த முழுமைப்பொருள் உலகு, சீர்பெற அமைந்த உலகம்; ஒழுங் கமைதி.

**cos'mosphere,** *n.* நிலைமாறு விண்மீன் மண்டலத்துடன் நிலவுலகின் காலப் புடைபெயர்ச்சி மாறுபாட்டை நேர்முகப் படுத்திக் காட்ட உதவும் கருவி அமைவு.

**cosmothe'ism,** *n.* இயலுலகையும் இறைவனையும் ஒன்று படக்கொள்ளும் கோட்பாடு, அத்துவைதம்.

**cosmothet'ic, cosmothet'ical,** *a.* புறவுலகு உண்டு என் பதை ஏற்றுக்கொள்கிற.

**Coss'ack,** *n.* தென்கிழக்கு ருசியாவிலுள்ள (South Eastern Russia) மக்கட் பிரிவினர்; ருசிய விரை குதிரைப்படை வீரர்; (தொ.) Cossack boots, ருசியப் புதைமிதியடி; Cossack post, எல்லைக் காவலிலுள்ள சிறு குதிரைப்படைப் பகுதி.

**coss'et,** *n.* அன்பாக வளர்க்கப்படும் ஆட்டுக்குட்டி; செல்வ மாக வளர்க்கப்படும் உயிரினம்; *v.* செல்லங்கொஞ்சு, சீராட்டி வளர்.

**cost** [1], *n.* விலை; செலவு; செலவுத்தொகை; விலையாகக் கொடுக்கப்பட்ட பணம்; *v.* விலைபெறு; விலை பிடி; செல வாகு; (தொ.) at all costs, cost what may, எது எப்படி யானாலும்; என்ன விலையானாலும்; cost of living, பொது நிலைக் கணிப்பீட்டின்படியான வாழ்க்கைச் செலவு; cost of living index, வாழ்க்கைச் செலவுக் குறியீட்டெண், கணிப்பு மூலமாகக்கொள்ளப்படும் மற்றோர் ஆண்டுக்காலத்தின் அளவை அடிப்படையாகக் கொண்டு பணித்துறையாளரால் ஒப்பிட்டு உருவாக்கப்பட்ட நடைமுறை ஆண்டுக் காலத்திய வாழ்க்கைச் செலவு ஏற்ற இறக்கநிலை எண்; cost price, கொள்விலை, வணிகர் வாங்கும் விலை; prime cost, ஆதாயம் செலவு சேர்க்காத பொருள் ஆக்க விலை.

**cost** [2], *v.* cost [1] என்பதன் இறந்தகால முற்றெச்ச வடிவம்.

**cos'ta,** *n.* விலா எலும்பு; விலா எலும்பு போன்ற அமைப்பு; வடிகுழாய்; நாளம்; மலைத்தொடர்; வண்டின் சிறகின் முன்விளிம்பு; வண்டின் சிறகு விளிம்பினுக்கருகில் உள்ள வலிவூட்டும் இலை நரம்பு போன்ற அமைவு.

**cos'tal,** *n.* வண்டு சிறகின் விளிம்பினுக்கு வலிவூட்டும் இலை நரம்புபோன்ற அமைப்பு; *a.* விலா எலும்பைச் சார்ந்த; உடலின் பக்கத்திலுள்ள.

**cos'tard,** *n.* பெரிய ஆப்பிள் பழவகை.

**cos'tard-monger,** *n.* ஆப்பிள் முதலிய பழவகை விற்பனை யாளர்; தள்ளுவண்டியில் பழம் விற்பவர்.

**cos'tate, cos'tated,** *a.* விலா எலும்புள்ள; விலா எலும்பு போன்ற தோற்றமுள்ள.

**costean', costeen',** *v.* சுரங்க வளம் ஆராயக் கனிப்பாறை யின் போக்கறியக் குழியெடு.

**cos'ter, cos'termonger,** *n.* = costard-monger.

**cos'tive,** *a.* மலச்சிக்கலுள்ள; கைக்கடிப்பான, கஞ்சத்தன முடைய.

**cost'ly,** *a.* விலையேறிய; பெருமதிப்புள்ள; பெருஞ்செலவு பிடிக்கிற.

**cost'mary,** *n.* நறுமண இலைகளுக்காகத் தென் ஐரோப்பாவில் வளர்க்கப்படும் மலர்ச் செடிவகை.

**costs,** *n. pl.* நீதிமன்ற வழக்குச் செலவுகள்.

**cos'tume,** *n.* ஆடை; அங்கி; மாதர் புற உடை; பகட்டணி உடை; உடையின் பாணி; உடையின் புதுமை நயம்; விசித்திரமான உடை; வேடிக்கை நடிப்பு உடை; *v.* உடை வழங்கு; உடையணிவி, உடுத்து; (தொ.) costume jewellery, செயற்கை அணிமணி, ஒப்பனைப் போலி நகைநட்டு.

**costum'er, costum'ier,** *n.* உடை உருவாக்குபவர்; உடை விற்பனையாளர்.

**cos'y,** *n.* தேநீர்க்கல மேல்மூடி; வேகவைத்த முட்டையினைச் சூடாக வைத்திருக்கும் மூடி; *a.* சொகுசான, வாய்ப்பாக இன்பநலகுகிற.

**cot** [1], *n.* சிற்றில், குச்சில்; (செய்.) குடில்.

**cot**², (இ.) *n.* கட்டில், சிறு படுக்கை ; தொட்டில் ; (கப்.) கித்தானுலான ஊசற்படுக்கை ; மருத்துவமனைப் படுக்கை.

**cot**³, *n.* cotangent என்பதன் சுருக்கக் குறிப்பு.

**cotan'gent**, *n.* (கண.) கோணத்தின் எதிரிருக்கை, செங்கோண முக்கோணத்தில் சாய்வரைமீது கோணத்தையடுத்த அடிவரை கொள்ளும் சார்பளவு.

**cote**, *n.* கொட்டில், தொழு ; தங்கிடம் ; கட்டில்.

**co-tem'porary**, *n.*, *a.* = contemporary.

**co-ten'ant**, *n.* உடன் குடிக்கூலியாளர்.

**cot'erie**, *n.* தனிக்குழு ; தனிப்பட்ட இலக்கியக் குழாம் ; தனி வாழ்க்கைக் குழு ; சிறப்புக்குழுமம்.

**co'thurn, cothurn'us**, *n.* துன்பியல் நடிகர் அணியும் உயர் புதை மிதி.

**co-tid'al**, *a.* கடலின் வேலி ஏற்ற நேர ஒருமைப்பாடுடைய.

**cotill'ion, coti'llon**, *n.* நாட்டு நடன வகை ; நடனப் பண்.

**cotoneas'ter**, *n.* முள்ளுள்ள சிறு மரவகை.

**cott'a**, *n.* சமய குருவின் பணித்துறைச் சார்பான குறுகலான வெண்ணிற அங்கி.

**cott'age**, *n.* சிற்றில், குச்சில், குடில், குடிசை ; நாட்டுப்புற மனை ; (தொ.) cottage hospital, எளிய சிறு மருத்துவ மனை, குடிசை வீட்டிலமைந்த மருந்தகம் ; cottage loaf, பெரிய அப்பத்தின்மீதுள்ள சிறு அப்பக்கட்டி ; cottage piano, சிறு இன்னிசைக் கருவி வகை.

**cott'aged**, *a.* குடிசைகள் நிரம்பிய ; குடியானவர் இல்லங்கள் செறிந்த.

**cott'ager**, *n.* குடிசை வாழ்நர் ; தொழிலாளர்.

**cott'ar**, *n.* பண்ணையிலேயே குடிலில் வாழ்ந்து வரையறுக்கப் பட்ட கூலிக்கு வேண்டும்போதெல்லாம் உழைக்கும் கடப்பாடுடையவர், பண்ணைக் கூலிக்குடியாள்.

**cott'ed**, *a.* குடிசை வரிசைகளுள்ள.

**cott'er**¹, *n.* = cottar.

**cott'er**², *n.* இயந்திரப் பகுதிகளை இறுக்கும் கவர்முள் கொளுவி.

**cott'ier**, *n.* குடில்வாழ்நர் ; அயர்லாந்தில் ஏலக்குத்தகைக் குடியானவர் ; (தொ.) cottier tenure, பண்ணை ஏலக் குத்தகைக் குடிமை முறை.

**cott'ierism**, *n.* அயர்லாந்தில் பண்ணை ஏலக்குத்தகைக் குடியாண்மை முறை.

**cott'on**, *n.* பருத்திப்பயிர் ; பருத்திச்செடி ; பஞ்சு ; பருத்தி நூல் ; பருத்தி ஆடை ; *a.* பருத்தியாலான ; *v.* பஞ்சு இணை ; இணங்கு ; ஒத்து இயை ; ஒன்றி இரு ; பற்றுக்கொள் ; பற்றுக்கொண்டு இணக்கமாயிரு ; நட்பாடு.

**cottonade'**, *n.* மட்டமான பருத்தித்துணி.

**cott'on-boll**, *n.* பருத்தி நெற்று.

**cott'on-gin**, *n.* பஞ்சு கடையும்பொறி ; பஞ்சு வேறு கொட்டை வேருக்கும் பொறி அல்லது இயந்திரம்.

**cott'on-grass**, *n.* கருவகஞ் சூழ மென்துய்யுடைய கோரைப் புல் வகை.

**cott'on-lord**, *n.* பருத்தி வாணிகப் பெருஞ்செல்வர்.

**cott'on-mill**, *n.* பஞ்சாலை, பருத்தி நூற்பு நெசவுத் தொழிற் சாலை.

**cott'on-mouth**, *n.* உள்வாய் வெண்ணிறமான நச்சுநீர்ப் பாம்பு வகை.

**cottonoc'racy**, *n.* பருத்திப் பண்ணை அதிபர் தொகுதி ; பருத்தித் தொழிலதிபர் தொகுதி.

**cott'on-plant**, *n.* பருத்திச்செடி, பஞ்சுதரும் செடியினத்தின் வகை.

**cott'on-press**, *n.* பருத்தியைச் சிப்பமாக அழுத்திக் கட்டும் இயந்திரம்.

**cott'on-seed**, *n.* எண்ணெய் வகை தரும் பருத்திவிதை.

**cott'on-spinner**, *n.* பருத்திநூல் நூற்பவர் ; பருத்திநூல் நூற்புத் தொழில் முதல்வர்.

**cott'on-tail**, *n.* ஐக்கிய அமெரிக்காவிலுள்ள குழிமுயல் வகை.

**cott'on-thistle**, *n.* பஞ்சு போன்ற மென்மையுடைய முட்செடி வகை.

**cott'on-tree**, *n.* அமெரிக்க மரவகை, முள் இலவம்.

**cott'on-waste**, *n.* பஞ்சாலைகளிலிருந்து வெளியே தள்ளப் படும் கழிவுப்பஞ்சு ; இயந்திரங்களைத் துடைக்க உதவும் கழிவுப்பஞ்சு.

**cott'on-weed**, *n.* பஞ்சுபோன்ற கடலோரக் களைச்செடி வகை.

**cott'on-wood**, *n.* மெல்லிய வளையத்தக்க கிளைகளுள்ள அமெரிக்க மரவகை.

**cott'on-wool'**, *n.* பதம் செய்யப்படாத பஞ்சு.

**cott'on-worm**, *n.* அமெரிக்கப் பருத்திச் செடிகளை அழிக்கும் கம்பளிப்புழு வகை.

**cott'ony**, *a.* பஞ்சுபோன்ற ; மென்மையான ; பஞ்சியலான.

**cot'-town**, *n.* குடிசைத் தொகுதி.

**Cott'us**, *n.* பெரிய தட்டையான தலையினைக் கொண்ட சிறு ஆற்று மீன் இனம்.

**cot'yle**, *n.* பண்டைய கிரேக்க குவளை, குடி கிண்ணம் ; (வில.) கிண்ணம்போன்ற பள்ளம் அல்லது குழி ; *pl.* cot'ylae, cot'yles.

**cotyled'on**, *n.* (தாவ.) விதை இலை ; விதையிலுள்ள இலைப் பருப்பு ; கதுப்பு ; (வில.) அசைபோடும் விலங்கினங்களின் நஞ்சுக் கொடியிலுள்ள மெல்லிய மயிர்க்கொத்துப் போன்ற அமைப்பு.

**cotyle'donary, cotyled'onous**, *a.* (தாவ.) விதை இலை சார்ந்த ; கதுப்புச் சார்ந்த.

**cotyl'iform**, *a.* (தாவ.) உயர்ந்த விளிம்புடைய கிண்ணம் போன்ற.

**cot'yloid**, *a.* கிண்ணம்போன்ற.

**couch**, *n.* துயிலிடம், படுக்கை, பாயல், சேக்கை, மஞ்சம் ; ஓய்விருக்கை, சாய்வுக்கட்டில் ; காட்டு விலங்கின் தூறு, குகை, அடுக்கு ; பரப்புவதற்குரிய இடம், தளம் ; *v.* கிடத்து, படுக்கவை ; பக்கத்துக்குப் பக்கமாகக் கிடக்க விடு, அருகில் வை ; கீழிடு ; தாழ்த்திப்பிடி, ஏந்து ; பதுங்கு, கூனிக்குறுகு ; ஒளிந்திரு, பதியம்போடு ; பரப்பு, நிரப்பு ; முளை யூறவைத்துப் பரப்பு ; உட்பொருள் பொதிய வை ; கண்படலமகற்று ; படலமகற்றக் கண்ணைப் பக்குவமாக்கு ; (தொ.) couch a spear, கவசத்தருகே ஈட்டியை ஏந்தலாகப் பிடித்திரு.

**couch'ant**, *a.* படுத்துள்ள, படுக்கையான ; (கட்.) விலங்குகள் வகையில் தலை தூக்கிப்படுத்துள்ள.

**Cou'eism**, *n.* எமிலி குவே (Emile Coue, 1862-1926) என்பவரால் மேற்கொள்ளப்பட்ட மருத்துவ முறை, நோயாளி தன் உள்ளார்வ எண்ண அலை எழுப்பும்படி செய்வதன்மூலமே நோய் நீக்க நாடும் முறை.

**coug'ar, cou'guar**, *n.* பெரிய பூனையின அமெரிக்கக் கொடு விலங்கு வகை.

**cough**, *n.* இருமல் ; இருமல் நோய் ; இருமலொலி ; *v.* இருமு ; (தொ.) cough down, இருமிப் பேச்சை அடக்கு.

**cough'-drop', cough'-loz'enge**, *n.* இருமல் தணிக்கும் இனிப்பு மாத்திரை.

**could**, *v.* can என்பதன் இறந்தகால வடிவம்.

***couleur de rose***, (பிர.) *n.* ரோசா நிறம் ; *a.* ரோசா நிறமான.

**coulisse'**, *n.* நாடக அரங்கின் திரைத்தட்டி சறுக்கிச் செல்வதற்குரிய பள்ள வரை வாய்ந்த மரக்கட்டு.

**coulisse's**, *n. pl.* நாடக அரங்கப் பக்கச் சிறகம் ; இரு சிறகங்களின் இடைவெளி.

**couloir,** (பிர.) *n.* செங்குத்தான மலைவிடர், அருவியால் தோண்டப்பட்ட மலைப்பள்ளம்.

**coulomb',** *n.* ஒரு நொடியில் ஒரு மின்னலகால் ஈர்க்கப்படும் மின் ஆற்றலலகு.

**coul'ter,** *n.* ஏர்க்கொழுவின்முன் அமைக்கப்பட்டுள்ள வெட்டிரும்புத் தகடு.

**coum'arin,** *n.* செடிகொடி வகைகளிலிருந்து கிடைக்கும் படிக உருவ மணப்பொருள் வகை.

**coun'cil,** *n.* மன்றம்; ஆய்வராய்வுக் கழகம்; அறிவுரைக் குழாம்; ஆட்சிமுறைப் பேரவை; சட்ட மன்றம்; மன்ற உறுப்பினர் குழு; நகரவை; மாவட்ட ஆட்சி மன்றம்; திருச்சபைக் கொள்கை நடைமுறை வகுப்புப் பேரவை; சமயச் சீரமைப்புக் குழு; பல்கலைக் கழக ஆட்சிக்குழு; சங்க ஒழுங்கு முறைக்குழு; (தொ.) Council of Europe, ஐரோப்பா மாமன்றக் கருமுதலாகக் கருதப்பட்ட 1949-இல் கூடிய ஐரோப்பிய நாடுகள் மன்றம்; Council of States, இந்திய அரசியல் மேல்மன்றம்; Council of War, படைத்துறைப் போர் ஆய்வுக் கூட்டம்; general council, திருச்சபைப் பொதுக்கூட்டம்; in council, மன்றக்கூட்டத்தில்; கலந்தாராய்ந்து; legislative council, சட்டசபை, மாநிலத் தலைவருக்கு உதவியாகச் சட்டமியற்றும் குழு.

**coun'cil-board,** *n.* மன்ற மேடை; மன்ற உறுப்பினர் சூழ அமர்வதற்குரிய நடு மேசை

**coun'cil-cham'ber,** *n.* ஆய்வு மன்றக் கூடம், அவைக்களம்.

**coun'cil-house,** *n.* மன்ற மாளிகை, அவைக்கட்டிடம்; நகராண்மைக் கழகம் கட்டிய வீடு.

**coun'cillor,** *n.* மன்ற உறுப்பினர்.

**coun'cilman,** *n.* நகராட்சிக் கழக உறுப்பினர்.

**coun'cil-school,** *n.* நகராட்சிக் கழகம் அல்லது மாவட்ட ஆட்சிக் கழகத்தாரால் நடத்தப்படும் பள்ளி.

**coun'sel,** *n.* கலந்தாய்வு; கலந்து பேசுதல்; அறிவுரை, கருத்துரை; கட்டளை; திட்டம்; நோக்கம்; தனி மறைவான செய்தி; வழக்குரைஞர்; வழக்குரைஞர் குழு; *v.* அறிவுரை கூறு; பரிந்துரை நல்கு; எச்சரிக்கை செய்; (தொ.) counsel of perfection, முழுநிறைவுப்பண்பு பெறுவதற்கான அறிவுரைக் கட்டளை; keep counsel, மறை காப்பாற்று, இரகசியம் பேணு; King's Counsel, Queen's Counsel, அரச ஆணையால் நியமிக்கப்பட்ட நன்மதிப்பு வழக்குரைஞர்.

**coun'sellable,** *a.* அறிவுரை பகர்தற்குரிய; ஆலோசனைக்குரிய.

**coun'sellor,** *n.* அறிவுரை கூறுபவர்; வழக்குரைஞர்.

**count** [1], *n.* (வர.) ரோமாபுரிப் பேரரசின் உயர் பணியாளர்; கோமான், உயர் குடிமகன், பெருமகன்.

**count** [2], *n.* கணக்கிடு, கணிப்பு; தொகைப்படுத்துதல்; எண்ணிக்கை; எண்ணிய எண்; நூலிழைத் தரக் குறிப்பெண்; குத்துச்சண்டையில் விழுந்தவன் எழுந்து போர் தொடர்வதற்கு வரையளவான நொடி நேர எண்ணிக்கை; மதிப்பு; சலுகையளவு; குற்றச்சாட்டின் குற்றக்கணிப்புக் கூறு; வரையளவில்லாமை முன்னிட்ட மன்ற ஒத்திவைப்பு; *v.* எண்ணு; எண்ணப்படு; கணக்கிடு; மொத்தம் கணி; வரிசை முறையில் எண் அடுக்கிக் கூறு; கணக்கில் எடுத்துக் கொள்; கவனத்துக்குக் கொண்டுவா; முக்கியமுடையதெனக் கருது; கருது; மதிப்பிடு; குறிப்பிடு; குறிப்பிட்ட செய்தியின் விளைவாகக் குறிப்பிடு; (தொ.) count out, கூட்டத்திற்கு வேண்டிய குறைந்த அளவு உறுப்பினர் இல்லை என்று குறிப்பிட்டுக் கூட்டத்தைக் கலை; சிறுவர் விளையாட்டில் பாட்டைத் திரும்பத் திரும்பச் சொல்லி எண்ணிக்கைப்படி ஒவ்வொருவராக ஆட்டத்திலிருந்து அகற்று; குத்துச் சண்டையில் விநாடிகளைக் கணக்கிட்டுத் தோல்வியை முடிவுசெய்; out for the count, உணர்விழந்து மயக்கமடைந்துள்ள, மிகக் களைப்படைந்துள்ள.

**count'able,** *a.* கணக்கிடத்தக்க; எண்ணவேண்டிய; எண்ணப்பட்ட; பொறுப்புள்ள; காரணமாகத்தக்க.

**count'-down,** *n.* இறங்குமுகக் கணிப்பு; குறித்த நேரச்செயல் நடைமுறையில் செயல் நேரம் இன்மை எண் (0) ஆக வரவரக் குறையும்படி இடைநேரமமைத்தல்.

**count'ed,** *a.* கணக்கிடப்பட்ட; மதிப்பிடப் பெற்ற; கணிக்கப்பட்ட.

**count'enance,** *n.* முகம்; முகத்தோற்றம்; முகபாவம்; முக அமைதி; விருப்பு வெறுப்புக் குறிப்பு நிலை; உவப்புவர்ப்புத் தோற்றம்; இசைவுக் குறிப்பு; ஒப்புதல் குறிப்பு; *v.* ஆதரவு காட்டு, உடன்பாடு தெரிவி; (தொ.) change countenance, முகத்தோற்றத்தை மாற்று; in countenance, நாணமற்ற, வெட்கப்படாத; keep in countenance, அமைதி குலையாதிரு; keep one's countenance, முக அமைதி காத்துக்கொள்; சிரிப்படக்கிக்கொள்; out of countenance, ஆர்வங்கெடும்படிச் செய்யப்பட்ட; புண்பட்ட; put out of countenance, புண்படச் செய்.

**coun'ter** [1], *n.* எண்ணுபவர்; கணக்கிடுபவர்; கணக்கிடும் பொறி; எண்குரு, எண்காட்டி; குறிவில்லை, நாணயக் கணக்கீட்டுக்குப் பயன்படும் நாணயப் போலிவட்டு; பொருளக வினைமுகப்பு; பணம் எண்ணிக் கொடுக்கல் வாங்கல் செய்யப்படும் மேடை; வாணிகக்களத் தொழிலிட முகப்பு, பொருள் கொடுக்கல் வாங்கல் மேடை; (வர.) முற்காலச் சிறைக்கூட வகையின் பெயர்; (தொ.) under the counter, வாடிக்கைக்காரர்களின் பார்வையினின்று மறைந்த நிலையில்.

**coun'ter** [2], *n.* குதிரையின் தோளுக்கும் கழுத்தடிக்கும் இடைப்பட்ட மார்புப் பகுதி.

**coun'ter** [3], *n.* (கப்.) நீர்வரைக்கு மேற்பட்ட பின்பக்கத்தின் உள்வாங்கிய பகுதி.

**coun'ter** [4], *n.* வாட்போரில் கை சுற்றுமல் வாள் சுற்றித் தாக்குதல், சுழற்றுத்தாக்கு.

**coun'ter** [5], *n.* மிதியடி அல்லது புதைமிதியில் குதிகால் சூழ்ந்த பின்பகுதி.

**coun'ter** [6], *n.* பனிச்சறுக்காட்டத்தில் உள்வளைவியக்க மாறிப் புறவளைவாகத் திரும்பு முறை.

**coun'ter** [7], *n.* எதிரிடையானது, மாறுனது; (இசை.) பண்ணுக்கு முரணிசைவான குரற்பகுதி; *a.* எதிரான, மாறுன, முரணுன; *v.* எதிர்; மறுதலி; எதிராயிரு; முரணு; சதுரங்கத்தில் எதிர்த்தரப்பு எதிர்ப்புக்கு ஆளாகு; குத்துச்சண்டையில் எதிர்த்தாக்குதலைத் தடுத்த வண்ணம் எதிர்த்துத் தாக்கு; *adv.* எதிர்வழியாக, எதிர்ப்பக்கமாக, எதிர்த் திசையில்; எதிர்த்து.

**counteract',** *v.* எதிரிடையாகச் செய், மாறு செய்; எதிர்த்துத் தடைசெய்; தோல்வியடையச் செய்; சமப்படுத்து; மட்டுப்படுத்து, முனைப்பழி.

**counterac'tive,** *n.* எதிரிடையாகச் செய்வது; மாறு செய்பவர்; தடை செய்பவர்; *a.* எதிரிடையாகச் செய்யும் இயல்புடைய; மாறு செய்யும் குணமுடைய.

**counter-a'gent,** *n.* எதிரிடையாகச் செய்யும் ஆற்றலுடைய பொருள்; எதிரிடையாக்குபவர்.

**coun'ter-approach,** *n.* முற்றுகை இடுபவர்களைத் தடை செய்வதற்காக அரண்காப்பாளர்கள் அரணின் வெளிப்புறத்தில் அமைக்கும் கட்டுமானம்.

**coun'ter-attack',** *n.* எதிர்த்தாக்குதல்; *v.* தாக்குதலை எதிர்த்துத் தாக்கு, புறம் போந்து தாக்கு.

**coun'ter-attrac'tion,** *n.* எதிர்க்கவர்ச்சி, போட்டியான கவர்ச்சிக் கூறு.

**coun'terbal'ance,** *n.* சரிசம எதிர் எடை; சரிசம எதிர் ஆற்றல்; *v.* சரிசம எதிர் எடையிடு; சரிசம வலிமை காட்டு; ஒத்த எதிர்ச்செல்வாக்கு நிறுவு; சரி ஈடு செய்.

**coun'ter-base,** *n.* = contrabass.

**coun'ter-batt'ery,** *n.* (படை.) எதிர்த்தாக்குப் பீரங்கி வரிசை.

**coun'terblast,** *n.* எதிர் முழக்கம்; எதிர்ப் பழிப்பு.

**coun'terblow,** *n.* எதிரடி, எதிர்த்தாக்கு அதிர்ச்சி.

**coun'terbond**, *n.* பிணைமுறி இழப்பீட்டு உத்தரவாதச் சீட்டு.

**coun'ter-brace**, *n.* (கப்.) முன்பாய்மர உச்சிப் பற்றிறுக்கி; *v.* (கப்.) எதிரெதிராக இறுக்கிக் கட்டு.

**coun'terbuff**, *n.* தடைத்தாக்குதல், இயக்கத்தை நிறுத்தவல்ல தாக்குதல்; எதிர்த்தாக்குதல், இயக்கத்தைப் பின்னிடைய வைக்கும் தாக்குதல்; எதிரடி; எதிர்த்தாக்கதிர்ச்சி, தோல்வி; *v.* எதிர்த்தாக்கு செய்; தடை செய்.

**coun'ter-ceiling**, *n.* மேல்தள அடுக்குகளுக்கிடையில் வைக்கப்படும் உலர் பொருள்.

**counterchange'**, *v.* பரிமாற்றம் செய், தலைமாற்று; குறுக்குக்கட்டமிடு; இடமாற்று; கூறுமாற்று.

**coun'ter-changed'**, *a.* பரிமாற்றம் செய்யப்பட்ட; குறுக்குக் கட்டமிடப்பட்ட; வண்ணங்கள் மாற்றப்பட்ட; நிறம் ஒன்றுக்கு ஒன்றாக மாற்றப்பட்ட.

**coun'tercharge**, *n.* எதிர்க் குற்றச்சாட்டு.

**coun'tercharm**, *n.* எதிர் மாயம், எதிர்ச் சூனியம், கவர்ச்சி மாற்று; *v.* எதிர்மாயம் செய்; மாயம் கெடு, எதிர்க் கவர்ச்சி செய்; கவர்ச்சி முறி.

**coun'tercheck**, *n.* தடையெதிர்ப்பு, தடுப்பு, எதிரீடு; இடையூறு, தடங்கல்; கண்டனம், அதட்டல்; *v.* இடையூறுகளால் தடைசெய்; திட்டு; கண்டி, அதட்டு.

**coun'ter-claim**, *n.* எதிர் உரிமைக் கோரிக்கை, எதிர்வழக்கீடு.

**counter-clock'wise**, *a.* இடஞ்சுழித்த; *adv.* இடஞ்சுழியாக.

**coun'ter-curr'ent**, *n.* எதிர் நீரோட்டம்; எதிரொழுக்கு; எதிர்ப்பாய்ச்சல்.

**coun'ter-drain**, *n.* பக்க வடிகால், கால்வாயின் அருகாக அதன் ஊறல் கசிவு நீரை அப்புறப்படுத்தும் வடிநீர் வாய்க்கால்.

**coun'terdraw**, *v.* நெய்மத்தாள்மீது உருவரைப்படியெடு.

**coun'ter-es'pionage**, *n.* எதிர் வேவு, எதிர் ஒற்று, எதிரிகளின் ஒற்றர் அமைப்பினை வேவு பார்த்தல்.

**coun'ter-ev'idence**, *n.* எதிர்ச்சான்று, சாட்சிக்கு எதிரான சாட்சி.

**coun'ter-feisance**, *n.* போலிச் செயல்; கள்ளத்தனம்; ஏமாற்றும் தொழில்; பொய்க் கையெழுத்திடுதல்.

**coun'terfeit**, *n.* போலியானவர்; எத்தர், மோசடிக்காரர்; போலியானது; போலி நடிப்பு; கள்ளச்சரக்கு; போலி ஏடு; போலி நாணயம்; *a.* திருட்டுத்தனமாகப் பார்த்துப் பின்பற்றப்பட்ட; போலியான, மோசடியான, கள்ளத்தனமான; *v.* கள்ளத்தனமாகப் பார்த்துப் பின்பற்று; உரிமையின்றி மேற்கொள்; பொய்புனை; மோசடி செய்; போலி நடிப்பு நடி; மிகவும் உரு ஒத்திரு.

**coun'terfeiter**, *n.* போலி நடிப்புக்காரர்; பொய்க் கையெழுத்திடுபவர்.

**coun'terfeitly**, *adv.* போலியாக; கள்ளத்தனமாக.

**counter-fleu'ry, counter-flo'ry, counter-flow'ered**, *a.* மலர்கள் எதிர்நிலையான தன்மையில் வைக்கப்பட்ட.

**coun'terfoil**, *n.* அடிச்சீட்டு, எதிரிடைப்படி, காசோலை-அஞ்சல்-ஆணை நுழைவுச்சீட்டு முதலியவற்றின் கையிருப்புச் சரிநேர்படி.

**coun'ter-force**, *n.* எதிராற்றல், எதிர்க்கும் ஆற்றல்.

**coun'terfort**, *n.* அணைசுவர், உதை மதில்; மோட்டு உதை தாங்கி.

**coun'ter-gauge**, *n.* தச்சரின் அளவை நெகிழ்வுடைய நுண் அளவைக் கருவி வகை.

**coun'ter-guard**, *n.* இணை மதிலுடைய பாதுகாப்பரண்.

**coun'ter-in'fluence**, *n.* எதிரிடையான செல்வாக்கு.

**counter-i'rritant**, *n.* உடலெரிவுமூலம் நோய்த்தீர்வு நாடும் மருந்து வகை.

**coun'ter-jumper, coun'ter-skipp'er**, *n.* கடைக்காரனைக் குறிக்கும் வெறுப்பான சொற்கள்.

**coun'terlight**, *n.* வண்ணம் வகையில் எதிரொளி, பொருளின் மீது செல்லும் ஒளியின் அமைவு குலைக்கும் பிறிதோர் ஒளி.

**countermand'**, *n.* எதிர்க்கட்டளை; மாற்று உத்தரவு; *v.* எதிர்க்கட்டளை இடு; உத்தரவை மாற்று.

**coun'termarch**, *n.* படையணி எதிர்ச் செலவு, அணி திருப்பம்; படைத்துறைப் பயிற்சிமுறையில் அணிமாறுத் திசைத் திருப்பம்; *v.* அணிவகுத்துப் பின்திரும்பிச் செல், அணி திரும்பு.

**coun'termark**, *n.* கூட்டுச் சிப்பத்தில் தனிக்குறிகளுக்கு மேற்பட்ட குழுவின் சிறப்புப்பொறிப்பு; மேலும் பாதுகாப்பை உறுதி செய்வதற்குரிய மேற்பொறிப்பு; ஆக்குவோர்க் குறியீட்டுக்குப் புறம்பான தரச் சான்றுக்குறி; குதிரை வயதை மறைக்கப் பற்களில் இடப்படும் பள்ளக் குறி.

**coun'termine**, *n.* எதிர்ச் சுரங்கம், முற்றுகையாளர்களின் சுரங்கத்தைத் தடுத்தழிப்பதற்காகச் செய்யப்படும் சுரங்கம்; எதிர்ச் சதி, எதிர்ச் செயல் வகை; *v.* எதிராகச் சுரங்கம் அமை; எதிர்ச்சுரங்கம் அமைத்து எதிர்த்து நில்; எதிர்ச் சூழ்ச்சிச் செயலால் தடு.

**coun'ter-mo'tion**, *n.* எதிர் இயக்கம், எதிர்ப் போக்கு, எதிர்ச்செயல்.

**coun'ter-move**, *n.* எதிர்ச் செயல்முறை, எதிர்ப்புத் திட்டம்.

**coun'ter-move'ment**, *n.* எதிரிடை இயக்கம்.

**coun'termure**[1], *n.* பின்னணிக் காப்பரண் மதில், மதிலை வலுப்படுத்தப் பின்எழுப்பப்படும் மதில்; முற்றுகையாளர் எதிர் மதிலரண்.

**coun'ter-mure'**[2], *v.* பின்னணி மதிலெழுப்பிப் பாதுகாப்புச் செய்.

**coun'ter-offen'sive**, *n.* எதிர்த்து மேற்சென்று தாக்குதல்; எதிர்த்து அரண்புறம் சென்று தாக்குதல்.

**coun'ter-o'pening**, *n.* எதிர்ப்புறத்தில் அமைந்த புழை வாயில்; வேறு இடத்திலுள்ள வாய்வழி.

**coun'ter-pace**, *n.* எதிர்ப்பக்கப் போக்கின் ஒருபடி, எதிரான செயல், எதிர் நடவடிக்கை.

**coun'ter-paled**, *a.* (கட்.) குலமரபுக் கேடயத்தின் இரு பகுதிகளும் வண்ணம் மாறுபட்டு ஒன்றில் நிமிர்வரையும் மற்றொன்றில் நேர்வரைக் கோடுகளும் நிரம்பிய.

**coun'terpane**, *n.* படுக்கை விரிப்பு.

**coun'ter-parole'**, *n.* துணையடையாள வாசகம், போர் நிலவரத்திடையே பகை பிரித்தறிய உதவும் அடையாள மொழியுடன் பயன்படுத்தப்படும் துணைமொழி.

**coun'terpart**, *n.* எதிரிணை, சரி எதிர்ப்பகுதி; சரி நிரப்புக் கூறு; குறை ஈடு செய்யும் கூட்டாளி; மறுபடிவம், சரிநேர் படிவம்; சரிநேர் அலுவர்.

**coun'ter-pass'ant**, *a.* (கட்.) எதிர்ப்புறமாக ஒருவரையொருவர் கடந்து செல்கிற.

**coun'terplea**, *n.* வழக்கில் எதிர்வாதம்; எதிர்க்குறையீடு; வேண்டுகோளுக்கு மறு வேண்டுகோள்.

**counterplead'**, *v.* எதிர்மாறாக வழக்காடு.

**coun'terplot**, *n.* எதிர்ச் சதி, எதிர்ச் சூழ்ச்சி; *v.* சூழ்ச்சி அழிக்க எதிர்ச் சூழ்ச்சி செய்; எதிர்ச் சூழ்ச்சி செய்தழி.

**coun'terpoint**, *n.* (இசை.) பண்ணிசைவுத்திறம்; உடன் துணைப்பண்திறம்; விதிமுறையான பண்மிசைப் பண்.

**coun'terpoise**, *n.* சமன்படுத்தும் எதிர் எடை; சரி எதிராற்றல்; சரி சமநிலை, சரி ஒப்புநிலை; *v.* சரி எதிர் எடையிடு; சரிசம ஆற்றலுடன் எதிர்ப்புச் செய்; சமநிறையாக்கு; குறைபாடு ஈடு செய்; சரி ஒப்பு நிலைக்குக் கொண்டுவா.

**coun'ter-poison**, *n.* நச்சுமாற்று, நஞ்சு முறிவு.

**coun'ter-pressure**, *n.* எதிர் அழுத்தம்.

**coun'ter-proof,** *n.* புதிதாக அச்சிட்ட படியின் தலைகீழான எதிரழுத்தப்படி.
**Coun'ter-Reforma'tion,** *n.* (வர.) எதிர்ச் சீர் திருத்த இயக்கம், 'புராடஸ்டண்டு' சமயத்தின் (Protestantism) சீர்திருத்தப்புரட்சிக் கெதிராகக் கத்தோலிக்க சமயத்துக்குள் எழுந்த சீர்திருத்த இயக்கம்.
**coun'ter-revolu'tion,** *n.* புரட்சிக்கு எதிரான மறுபுரட்சி, முதல் புரட்சியின் விளைவுகளுக்கு எதிராகச் செயல்படும் அடுத்த புரட்சி.
**coun'ter-roll,** *n.* எதிர்ப் பதிவேடு, மேல்வழக்குப் பொது ஆய்வுப் பத்திரப் பதிவுகளைத் தணிக்கை செய்ய உதவும் எதிர்க் காப்பேடு.
**coun'ter-round,** *n.* சுற்றிப் பார்வையிடும் கண்காணிப்பாளர் குழு.
**coun'ter-sa'lient,** *a.* (கட்.) எதிர்த்திசைகளில் கோணம போன்று முனைப்பாகவுள்ள.
**coun'terscarp,** *n.* முற்றுகையாளர் பக்கமுள்ள அகழியின் புறக்கரை.
**count'er-secur'ity,** *n.* மறுபிணை, பிணை ஆளாக உள்ள வருக்குக் கொடுக்கப்பட்ட பிணை.
**coun'ter-sense,** *n.* திரிபொருள், உண்மைப் பொருளுக்கு எதிராக உள்ள விளக்கப் பொருள்.
**coun'tershaft,** *n.* இயந்திரசாலையில் தலைமையான சுழல் அச்சினால் ஒட்டப்படும் இடைச்சுழல் அச்சு.
**coun'tersign,** *n.* காவலாளர்களுக்கு நுழைவு அனுமதிப்பதற் காகக் கொடுக்கப்படும் அடையாளச் சொல்; ஆள் அடையாளம் காட்டும் குறி; *v.* கையொப்பமிட்ட ஆவணத்தில் மேற் கையொப்பமிடு; உறுதி செய், உறுதிக் கையொப்பமிடு.
**coun'ter-sig'nal,** *n.* பதில் சைகை.
**coun'ter-sig'nature,** *n.* மேற் கையொப்பம், எழுத்திற்கு உறுதியளிக்கும் முறையில் இடப்படும் கையொப்பம்.
**coun'tersink,** *v.* திருகாணித்தலைப்புப் பதியும்படி துளையின் விளிம்பினைச் சுற்றிச் சரிவாகப் பள்ளம் செய்.
**coun'ter-stand,** *n.* எதிர்ப்பு; தடை.
**coun'ter-state'ment,** *n.* எதிர் அறிக்கை, பதில் அறிவிப்பு.
**coun'ter-tall'y,** *n.* எதிர்கணிப்புக் குறி, கணிப்புக்குறி சரி பார்க்க உதவும் மறு குறி.
**counter-ten'or,** *n.* (இசை.) ஆணின் உச்சக்குரல்.
**coun'ter-time,** *n.* தடை; எதிர்ப்பு; குதிரை தனக்குச் சொல் லிக் கொடுத்தது போல் அடிபோடாமல் எதிர்த்து நிற்றல்.
**coun'terturn,** *n.* நாடகத்தில் எதிர்பாராத் திருப்பம்.
**countervail',** *v.* எதிரீடு செய்ய உதவு; சரிசம வலுவுடன் எதிர்ச் செயலாற்று; சரிசம மதிப்புடையதாயிரு.
**coun'ter-view,** *n.* எதிரிடை நோக்கு; எதிரெதிர் நோக்கும் நிலை அமைதி; எதிரீடு, மாறுபாடு.
**counter-vote',** *v.* எதிராக மொழிச்சீட்டு இடு, எதிர் வாக்களி.
**counter-weigh',** *v.* எதிராக நிறு; சம நிறையிடு, சரியீடு செய்.
**coun'terweight,** *n.* எதிரிடையான எடை, சரி எதிரெடை.
**coun'ter-wheel,** *v.* எதிர்த்திசையில் சுழலு, நேரெதிர்த் திசை திரும்பு.
**coun'terwork,** *n.* எதிர்ப் பணி; எதிரிக்கு எதிரிடையான கட்டுமானம்; *v.* மாறு செய், எதிர்ச் செயல் செய்; எதிர்த்தழி.
**coun'tess,** *n.* கோமாட்டி, கோமகள், உயர்குடிப் பெருமாட்டி; உச்சஉயர்குடிமகனின் மனைவி.
**coun'ting-house, coun'ting-room,** *n.* வணிகரின் அலுவ லறை; வணிகக் கணக்கு மனை.
**count'less,** *a.* எண்ண முடியாத, எண்ணற்ற, மிக மிகப் பல.
**coun'try,** *n.* நாடு; நாட்டரசு; நிலப்பகுதி; நாட்டுப்புறம்; பிறந்த நாடு; தாயகம்; குடியுரிமை நாடு; வேட்டை நாய்த் தொகுதியின் வேட்டை எல்லை வட்டம்; கனிப்பொருட் படுகையைச் சூழ்ந்துள்ள பாறை; *a.* நாட்டைச் சார்ந்த; நாட்டுப்புறமான; நயநாகரிகமற்ற; திருந்தாத; (தொ.) country gentleman, நாட்டுப்புறப்பண்ணையில் வாழும் பெரு நிலக்கிழார்; go to the country, பொதுத்தேர்தல் மூலம் வாக்காளரிடம் ஆதரவு நாடு.
**coun'try-box,** *n.* சிறு நாட்டுப்புற வீடு, குடில்.
**coun'try cousin,** *n.* நாகரிகம் பழகாத நாட்டுப்புற உறவினர், நகரப் பழக்கவழக்கங்கள் தெரியாத நாட்டுப்புறவாசி.
**coun'try-dance,** *n.* நாட்டுப்புற நடனம்; இரு வரிசைகளில் வரையறையில்லாது இருவரிருவராகச் சேர்ந்து ஆடத்தக்க ஆடல்.
**coun'tryfied,** *a.* நாட்டுப்புறஞ் சார்ந்த; நாட்டுபுறத் தோற்ற முடைய; நாட்டுப்புறப் பழக்கவழக்கமுள்ள.
**coun'try-folk,** *n. pl.* நாட்டுப்புற மக்கள்; ஒரு நாட்டு மக்கள்.
**coun'try-house, coun'try-seat,** *n.* உயர்குடியாளரின் நாட்டுப்புற மாளிகை.
**coun'tryman,** *n.* நாட்டுப்புறவாசி; உழவன்; உடனொத்த நாட்டவர், ஒரே நாட்டில் உடனொத்து வாழ்பவர்.
**country party,** *n.* (வர.) அரசர் அவைக்குழுவுக்கு எதிரான கட்சி.
**coun'tryside,** *n.* நாட்டுப்புறம், நாட்டுப்புறச் சூழிடம்.
**country town,** *n.* நாட்டுப்புற மாவட்டத்திலுள்ள சிறு நகரம்.
**countrywide',** *a.* நாடெங்கும் பரவிய, தேசமளாவிய.
**coun'try-woman,** *n.* நாட்டுப்புற மகள்; உடனொத்த நாட் டைச் சார்ந்தவள்.
**count'ship,** *n.* கோமகனின் படி நிலை; கோமகனின் ஆட்சி வட்டாரம்.
**count'-wheel,** *n.* மணியாழி, மணிப்பொறி, மணியடிப் பதைக் கட்டுப்படுத்தியாளும் சூழ் பல்லுடைய சக்கரப்பொறி.
**coun'ty,** *n.* பிரிட்டனின் மாவட்டம்; பிரிட்டிஷ் பொதுவரசு நாட்டின் கோட்டம்; நாட்டின் உட்பட்ட அரசியல் பெரும் பிரிவெல்லை; *a.* மாநிலப் பகுதிச் சார்ந்த; பெருமகனின் குடும்பத்தைச் சார்ந்த; (தொ.) county council, மாவட்ட மன்றம்; county court, மாவட்ட உயர்நீதி மன்றம்; county cricket, மாவட்டப் போட்டி மரப்பந்தாட்டம்; county family, நாட்டுப்புறத்தில் சொத்தும் மாளிகையு முடைய உயர்குடியினர்; county school, மாவட்ட மன்ற ஆட்சியிலுள்ள பள்ளிக்கூடம்; county town, கோட்டத் தலைநகர்; வரலாற்றுச் சிறப்புடைய கோட்ட முதல் நகர்.
**coup,** *n.* வலங்கொண்ட வீச்சு, வல்லடி; வெற்றிகரமான முயற்சி; மேடைக்கோற் பந்தாட்டத்தில் பையில் பந்தின் வெற்றிகரமான நேரடி வீழ்ச்சி; (தொ.) coup de grace, இறுதி வீச்சு, முடிவாக்கும் செயல்; coup de main, எதிர் பாராக் கடுந்தாக்குதல்; coup d'etat, சட்டமீறிய வலிந்த அரசியல் மாறுபாடு, திடீர் அரசியல் புரட்சி; coup de theatre, நாடகத்தில் திடீர் உணர்ச்சி நடிப்பு; coup d'oeil, விரிவான நோக்கு, விரைந்த சுற்றுப்பார்வை பலவற்றை உட்கொண் டுள்ள கணநேரப் பார்வை.
**coup'e,** *n.* வலவனல்லாது உள்ளே இருவருக்கு இடமுள்ள நாலு சக்கர வண்டி; ஒரே பக்க இருக்கையுள்ள புகையூர்தி யின் இறுதி அரைப்பெட்டி வண்டி; பிரஞ்சு அஞ்சல் வண்டி யின் முன் பகுதி; இருவர்க்கு இருக்கையுடைய உந்து கலம்; *a.* (கட்.) விலங்கு வகையில் தலைநேர் வேறுபட்ட; கைகால் நேர் துணிக்கப்பெற்ற.
**couped,** *a.*=coupe.
**cou'ple,** *n.* இருவர், துணைவர்; இரண்டு; துணையிணை, சோடி; மணத்துணைவர், தம்பதிகள்; ஆடல் துணைவர்; ஒரு வாரில் கட்டப்பட்ட வேட்டை நாய் இணை; மோட்டின் இணைவிட்டம்; இரண்டின் இணைப்பு; (இய.) ஒரே பொருளில் எதிரெதிராய் இயங்கும் இரண்டு ஆற்றல்களின் இணைவு; *v.* இரண்டு ஒன்றாய் இணை; சோடியாக்கு; மணவினையால் இணை; வேட்டை நாய்களை இணைத்துக் கட்டு; ஊர்திப் பெட்டிகளைத் தொகுத்திணை; இரு கருத்துக்களை ஒருங்கு தொடர்புபடுத்து, கருத்துடன் கருத்து இணை.

coup'lement, *n.* இணைப்பு ; இரட்டை ; இணை.

coup'ler, *n.* இணைப்பவர் ; இணைக்கும் பொருள் ; ஒன்றுக்கொன்று இணைந்தியக்கும் இசைப்பொறி அமைப்பு.

coup'let, *n.* சோடி, இணை, இரட்டைகள் ; இரட்டையர் ; ஈரடிச் செய்யுள், குறளடிப்பா.

coup'ling, *n.* இணைத்தல் ; இயந்திரத்தில் இயக்கத் தொடர்பு உண்டுபண்ணும் இணைவமைவு ; புகையூர்திப் பெட்டிகளின் இணைப்பு.

coup'ling-box, *n.* இயந்திரச் சுழல் அச்சுக்களின் கோடிகளை இணைக்கும் இருப்பு வளையம் ; சுழலச்சுக்களை இணைக்கும் இருப்புப் பெட்டி.

coup'on, *n.* அடையாளச்சீட்டு, கைச்சீட்டு, சீட்டின் கைம்முறி எதிர் நறுக்கு ; பற்றுரிமைச் சீட்டு ; பணமோ பணியுதவியோ தவணையாக அல்லது நிலவர வழக்காகப் பெறும் உரிமைச் சான்றுச் சீட்டு ; சலுகைச் சீட்டு ; தனிச்சலுகை அல்லது உரிமை பெறுவதற்காக வாணிக விளம்பரம் முதலியவற்றிலிருந்து வெட்டி எடுத்துக்கொள்ளவேண்டிய துண்டு ; தேர்வுத்தொகுதி வாக்காளர்களின் ஆதரவுக்காகத் தேர்தல் வேட்பாளருக்குக் கட்சித் தலைவர் அளிக்கும் தேர்தல் ஆதரவுச் சின்னச் சீட்டு.

cou'rage, *n.* வீரம், துணிவு; ஆண்மை; மன உரம் ; int. வீரத்தோடிரு, துணிவாயிரு; Dutch courage, குடியினால் தூண்டப்பட்ட போலி வீரம்; pluck up courage, மன உறுதிப்படுத்திக்கொள், துணிவு கொள் ; the courage of one's convictions, கொள்கை உரம் ; கொள்கை மாறாத்துணிவு ; கொள்கையைச் செயற்படுத்தும் வீரம்.

coura'geous, *a.* வீரஞ்செறிந்த ; ஆண்மையுள்ள, அஞ்சா நெஞ்சுடைய.

cou'rier, *n.* ஓடுபவர் ; விரை தூதர், ஓடிச்சென்று தூது உரைப்பவர் ; அரசியல் தூதுவர் ; பயணத்துணை ஊழியர், தொலை நாடுகளில் பயண வசதிகளை முன்சென்று ஏற்பாடு செய்ய அனுப்பப்படும் பணியாளர்.

cour'lan, *n.* சோகமான உரத்த கூக்குரலிடும் நீளலகுடைய நீரில் நடக்கும் அமெரிக்க வெப்பமண்டலப் பறவை வகை.

course, *n.* ஓட்டம் ; செல்வழி ; பந்தய நிலம் ; குழிப்பந்து விளையாட்டிடம் ; நீர்நிலையின் ஒழுக்கு ; செல்லும் திசை ; பயணம் ; ஓட்டப்பந்தயம் ; போக்கு, படிப்படியான முன்னேற்றம் ; வாழ்க்கைப்போக்கு ; தொழில் நிலைப்போக்கு ; நடவடிக்கை, வழக்கமான நடைமுறை; வரிசை முறை, தொடர் கோவை ; நீடித்த பயிற்சி ; தொடர்ந்த மருத்துவப் பண்டுவ முறை ; மாவட்டத் தலைக்கோயிலூழியர்களிடையே கடமை வரிசை மாற்று ; பருகு முறை ; உணவு முறைத் தொகுதி, வட்டிப்பு முறை : நடத்தை ; அடுக்கு வரிசை, தளவரிசை ; கப்பற்பாய்த் தொகுதி ; செலாவணி மாற்றுவீத நிலை ; *v.* பின்தொடர்ந்து செல் ; வேட்டையாடித் தொடர்; துரத்திச் செல்; ஓடு, விரைந்துசெல், விரைந்தொழுகு ; குதிரையை விரைந்து ஓட்டு ; விரைந்து வேட்டைமேற் செல் ; (தொ.) by course of, பொதுமுறைச் செயல்வகைப்படி ; in course, ஒழுங்கு முறையில் ; in due course, இயல்பான முறைப்படி, காலக்கிரமத்தில் ; in the course of, எல்லையில், நிகழ்வின்போது; matter of course, இயற்கையான நிகழ்ச்சி; of course, இயல்பாக ; ஐயத்துக்கிடமின்றி.

cours'er, *n.* ஓடுபவர் ; அஞ்சல் கொண்டோடுபவர் ; தூதர் ; பந்தயக் குதிரை; (செய்.) வாம்பரி, வேகக் குதிரை; வேட்டையாடுபவர் ; துரத்துபவர் ; வேகமாக ஓடும் பறவை வகை.

cours'es, *n. pl.* பெண்டிர் மாதவிடாய்.

cours'ing, *n.* வேட்டை நாயுடன் வேட்டையாடுதல்.

cours'ing-joint, *n.* இரு வரிசை செங்கல்களுக்கிடையேயுள்ள இணைப்பு.

court, *n.* வழக்கு மன்றம் ; நீதிபதிகள் குழாம் ; முறைநடுவர் குழு இருக்கை; வழக்கு மன்றக் கூட்டம் ; முற்றம் ; மதில் சூழ்ந்த அகவெளி ; கட்டிடங்கள் சூழ்ந்த சதுக்கக் கூடம் ; பல்கலைக் கழகத்தில் கல்லூரிச் சதுக்கம் ; காட்சியரங்கக் கூடம் ; காட்சிச் சாலைப்பிரிவு ; தெருப்பக்க அகக்கூடம் ; நகரில் தெருப்பக்க வாயிலுடைய சுற்றுக் கட்டிடமுள்ள அக வளைவு ; விளையாட்டுக்கூடம் ; கரண் பந்தாட்ட ஆட்ட வரையறை எல்லை வெளி ; அரண்மனை ; அரசவை ; மன்னவைக்குழாம் ; மன்னர் பரிவாரம் ; கொலுவிருக்கை ; மன்னர் திருமுன் பேட்டி, அரசவைத் திருக்காட்சி ; வணக்க இணக்க முறை, முகமன் முறை, நயநாகரிகப் புகழ்ச்சிமுறை ; காதல் ஊடாட்டம் ; *v.* காதல் நாடி ஊடாடு ; ஆதரவு வேண்டி அணுகு ; மதிப்புக்காட்டு, வணக்க இணக்கத்துடன் நடந்து கொள் ; நயந்துகொள் ; நாடு, தேடு ; வரவழை, நாடிப் பெறு ; பசப்பி வசப்படுத்த முயற்சி செய் ; (தொ.) court tennis, வரிப்பந்தாட்டத்தின் முற்கால மூலமுதல் வடிவமான வளைப்பந்தாட்டம் ; out of court, கவனிக்கப்படுவதற்கே உரிமையற்ற.

court'-bar'on, *n.* பண்ணை ஆட்சிமுறையில் பெருமகன் கீழுள்ள தனியுரிமை நிலக்கிழார்களின் கூட்டம்.

court'-craft, *n.* அரசவைப் பண்பு ; தன்னல மறைசூழ்ச்சி முறை.

court'-day, *n.* நீதிமன்றம் அமரும் நாள்.

court'-dress, *n.* அரசவை நாட்களில் அணியும் தனிச்சிறப்புடைய ஆடை.

court'-dress'er, *n.* முகப்புகழ்ச்சியாளர்.

Courtelle', *n.* செயற்கை இழை அல்லது துகிலுக்குரிய வாணிக உரிமைப் பெயர்.

court'eous, *a.* இணக்கவணக்கமான ; அடக்கமான ; அன்பாதரவான ; விட்டுக்கொடுக்கும் பண்புடைய ; பண்புடைய பழக்க வழக்கம் செறிந்த ; கடமை மனப்பாங்குடைய.

courtesan', *n.* அரசவையணங்கு ; விலைமகள் ; பரத்தை.

court'esy, *n.* நயநாகரிக நடை, இணக்க நயப்பண்பு, வணக்க வரிசை முறை ; நயநாகரிகச் செயல் ; மதிப்பு நயச் செயல் ; வணக்க முறை ; அன்புரிமைச் சலுகை ; (சட்.) இறந்த மனைவியின் சொத்தில் கணவனுக்குரிய ஆயுட்கால உரிமை ; *v.* வணக்கம் செலுத்து.

courtesy title, *n.* சட்ட உரிமையற்ற சமுதாய வழக்குப் பட்டம்.

courtezan', *n.*=courtesan.

court'-fool, *n.* அரசவைக் கோமாளி, மன்னவை விகடன் ; கேலிக்கூத்தன்.

court'-guide, *n.* அரசவை அறிமுகம் பெற்றவர் பட்டியல் ஏடு, நகரப் பெருமக்களின் பெயர்-முகவரி கொண்ட தகவல் திரட்டு.

court'-hand, *n.* முற்காலங்களில் (16-18-ஆம் நூற்றாண்டுகளில்) பிரிட்டனின் வழக்கு மன்றங்களில் வழங்கிய நார்மனியர் (Normans) காலக் கையெழுத்துத் திரிபு.

court'-house, *n.* வழக்கு மன்ற மாளிகை.

court'ier, *n.* அரசவையினர் ; மன்னர் பரிவாரத்தினர் ; புகழ்ச்சி செய்பவர், பசப்பர்.

court'ierism, *n.* அரசவையினர் பண்பு ; இச்சகம் பேசும் தன்மை

court'ing, *n.* காதல் புரிதல், காதலீடுபாடு ; மணம் நாடி ஊடாடுதல்.

court'let, *n.* சிறு நீதி மன்றம்.

court'like, *a.* அரசவைக்குரிய ; இணக்க வணக்கமுடைய.

court'ling, *n.* அரசவையைச் சார்ந்திருப்பவர்.

court'ly, *a.* அரசவைக்குரிய பழக்கவழக்கமுடைய, வன்மை வக்கணை மிக்க ; நயநாகரிகத்துடன் வீறமைதியுடைய ; இன்முகப்புகழ்ச்சி கூறுகிற, உரைநயமார்ந்த.

court'-mar'tial, *n.* படைத்துறை முறைமன்றம் ; சிறப்புப் படை மன்றம்; *v.* படைத்துறை முறைமன்றத்தைக்கொண்டு விசாரணைசெய்.

court'-plas'ter, *n.* முற்கால அரசவை மகளிர் வழங்கிய பட்டாலான காய ஒட்டுப்பசைத் துணி.

**cried,** *v.* cry என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**cri'er,** *n.* அழுபவர், கூச்சலிடுபவர்; முரசறைவோர்.

**crime,** *n.* குற்றம், சட்டப்படி தண்டிக்கப்படத்தக்க செயல்; குற்றச் செயல்களின் தொகுதி; குற்றத்துறை; தீச்செயல், பழி, பாவம்; *v.* படைத்துறைக் குற்றம் செய்தாரெனச் சாட்டு, படைத்துறைக் குற்றத் தீர்ப்பளி.

**crime'ful,** *a.* குற்றமுடைய.

**crime'less,** *a.* குற்றமற்ற, தீங்கற்ற.

***crime passionel,*** (பிர.) *n.* புலத்தல் காரணமாகச் செய்யப்படும் குற்றம்.

**crime'-sheet,** *n.* படைவீரர் செய்த குற்றங்களின் பதிவுப் பட்டியல்.

**crim'inal,** *n.* குற்றம் செய்தவர், குற்றவாளி; *a.* குற்ற இயல்புள்ள; குற்றத்தொடர்பான: குற்றத் தண்டனைக்குரிய; சட்டத்தை மீறுகிற; (தொ.) criminal connexion, criminal conversation, கூடாவொழுக்கம், பிறர்மனை நயத்தல்.

**crim'inalist,** *n.* குற்றத்தொடர்பான சட்ட வல்லுநர்.

**criminal'ity,** *n.* குற்றப் பழியுடைமை.

**crim'inate,** *v.* குற்றம் சாட்டு; கண்டி; குற்றவாளியென எண்பி.

**crimina'tion,** *n.* குற்றம் சாட்டல்; குற்றச்சாட்டு, குற்றவாளியென எண்பித்தல்.

**crim'inative, crim'inatory,** *a.* குற்றச்சாட்டுக்கு வழி வகுக்கிற.

**criminol'ogy,** *n.* குற்றவியல் நூல், குற்றம்-குற்றவாளிகள் பற்றிக்கூறும் மானிட நூல் பிரிவு.

**crim'inous,** *a.* குற்றம் செய்திருக்கிற.

**crimp**[1], *n.* படைக்கு வலையிட்டு ஆள் பிடிப்பவர்; கப்பலோட்டியாக வலையிட்டு ஆள் பிடிப்பவர்; *v.* படைக்கு ஆள் பிடி; கப்பலோட்டியாக ஆள்சேர்.

**crimp**[2], *a.* பொருபொருப்பாக்கப்பட்ட; மொறுமொறுப்பாக்கப்பட்ட; *v.* சுரிக்கவை, திரையவிடு, சுருக்கங்கள் உண்டு பண்ணு; மடிப்புவை, கொய்சகம் வை; குஞ்சமிணை; முடை, பின்னு; ஆழமாக வெட்டு; மீனின் தசையைச் சிதைத்துச் சுருக்கு; ஆள்பிடி; அகப்படுத்து; வளைத்து மடி; சுருளுவி, விரும்பிய உருவில் வளை.

**crimp'ing-iron,** *n.* தலைமயிர் சுருள்விக்கும் இருப்புக்கருவி.

**crimp'ing-machine',** *n.* குஞ்சங்களின்மேல் மடிப்புக்கள் அல்லது சுருள்கள் உண்டாக்குவதற்கான இயந்திரம்.

**crimp'le,** *v.* சுருக்கு; ஒருங்கு இழுத்துக்கொள்; மடிப்புகளாகச் செய்; சுருள்வி.

**crim'son,** *n.* செந்நிறம்; சிறிது நீலங்கலந்த திண் சிவப்பு நிறம்; *a.* திண் சிவப்பான; *v.* திண் சிவப்பாக்கு; செவ்வண்ணம் தோய்வி; திண் சிவப்பாகு; முகஞ்சிவப்புறு, நாணங்கொள்.

**cringe,** *n.* இச்சக நடத்தை, கெஞ்சுதல்; பணிவு; *v.* அஞ்சி ஒடுங்கு; தாழ்ந்து வணங்கு; கீழ்ப்படி; கெஞ்சு; இச்சகம் பேசு, புகழ்ந்து பசப்பு.

**cring'ing,** *a.* கெஞ்சுகிற; கெஞ்சுதலான.

**crin'gingly,** *adv.* கெஞ்சுதலாக.

**cring'le,** *n.* கப்பல் கயிற்றுச் சுருக்கு வளையம்; கப்பலின் பாய்க்கயிற்றுத் துளையில் செல்லும் கயிறு; கயிற்று வளையத்தில் கோத்த கயிறு.

**crin'ite**[1], *a.* மயிர்முடியுள்ள; (தாவ.) மயிர்க்குஞ்சம் போன்ற.

**crin'ite**[2], *n.* முள் நிறைந்த முட்டை வடிவத் தோட்டுக் கடல்வாழுயிர்களின் புதைபடிவம்.

**crink'le,** *n.* திரை, சுருக்கம்; கொய்சகம்; திருக்கு, சுருள்வு; *v.* முறுக்கு, சுருக்கு, திரை; மொறுமொறுப்பாக்கு; சுருங்கு, சுருள்.

**crink'ly,** *a.* சுருக்கங்கள் நிறைந்த.

**crink'um-crank'um,** *n.* கோணல்மாணலான பொருள்; *a.* கோணல்மாணலான.

**crin'oid,** *n.* (வில.) புதைபடிவக் கல்லுருவில் காணப்படும் கொடி போன்ற காம்பிலிணைக்கப்பட்ட அல்லி வடிவக் கடுந்தோட்டுக் கடல் வாழ் உயிரினம்; *a.* அல்லிமலர் வடிவுடைய.

**Crinoid'ea,** *n. pl.* (வில.) முட்டைவடிவத் தோட்டினுள் வாழும் அல்லி வடிவக் கடல் வாழ் உயிர்ப்பேரினம்.

**crinolette',** *n.* மகளிர் ஆடையின் பின்புறம் நீண்டு விரிந்திருக்கச் செய்யும் அமைவு.

**crin'oline,** *n.* குதிரை மயிராலும் சணலாலும் செய்யப்பட்ட விறைப்பான பழங்காலத் துணிவகை; விறைப்பாக்கப்பட்ட பெண்டிர் ஆடை; சுற்றிலும் கம்பிளியால் ஏந்தலாக்கப்பட்ட மகளிர் உட்சட்டை; நீர்மூழ்கித் தாக்குதலுக்கெதிரான கப்பலின் காப்புச் சூழ்வலை.

**cri'o-sphinx,** *n.* ஆட்டுத்தலைச் சீயாங்கனை, சிங்க உடல்மீது ஆட்டுத்தலை அமைந்த உரு.

**crip'ple,** *n.* நொண்டி; சாளரங்களைத் துப்புரவாக்குவதற்கான சாரம்; *a.* நொண்டியான; *v.* நொண்டியாக்கு; ஆற்றல் கெடு, பழுதுபடுத்து; நொண்டிநட.

**cripp'ling,** *n.* கட்டிடத்தின் பக்கத்துக்கு இடப்படும் முட்டு.

**cris'is,** *n.* திரும்புகட்டம், கண்டம்; அரசியல் திருப்புமையம்; வாணிக நெருக்கடி; *pl.* cris'es.

**crisp,** *n.* முறுகுவறுவல், முறுகலாக வறுக்கப்பட்ட காய் கிழங்குச்சீவல்; *a.* முறுகலான, பொருபொருப்பான, மொறுமொறுப்பான; உரமூட்டுகிற, ஊக்கம் தருகிற, உறுதியளிக்கிற; செயல் விரைவுடைய, விரைந்து முடிக்கிற, சுறுசுறுப்பான; எளிதில் நொறுங்குகிற; குறுகலான; சிறுசிறுதுண்டான; சுருட்டையான; சுருண்டு நெளிகிற, அலையலையான; *v.* சுருட்டையாக்கு; சுருட்டையாகு; அலையலையாக நெளிவி; அலையலையாகச்செல்.

**cris'pate, cris'pated,** *a.* சுருள் சுருளான-அலையலையான தோற்றமுடைய; (தாவ., வில.) அலையலையான விளிம்பினை உடைய.

**crispa'tion,** *n.* சுருள்களாகச் செய்தல்; சுருள்வு; அலை அலையான தோற்றம்; அலையலையான இயக்கம்; சுருங்குதல், சுரிப்பு.

**crisp'ature,** *n.* சுருள்வு.

**crisp'ing-i'ron, crisp'ing-pin,** *n.* சுருள்களாகச் செய்வதற்கான இரும்புக்கருவி.

**crisps,** *n. pl.* முறுகிய உருளைக்கிழங்கு வறுவல்; முறுகலாக வறுக்கப்பட்டுச் சிப்பமாக விற்கப்படும் உருளைக்கிழங்குச் சீவல்.

**crisp'y,** *a.* சுருள்களாக உள்ள; மொரமொரப்பான, எளிதில் நொறுங்குகிற; சுறுசுறுப்பான.

**criss'-cross,** *n.* அரிச்சுவடியின் தொடக்கத்திலுள்ள சிலுவைக் குறி; குறுக்குக்கோடு; குறுக்குக்கோடாக வெட்டிச் செல்லும் இயக்கம்; கையெழுத்திடத் தெரியாதவர் இடும் குறுக்கு வெட்டுக்குறி அடையாளம்; குறுக்கு மறுக்குக் கட்டம்; குறுக்கு வலைப்பின்னல் படிவம்; அடுத்தடுத்த குறுக்கீட்டுத் தொடர்ச்சி; ஆட்டவகை; மாறுமாறான குறிக்கோள்களால் வரும் தடுமாற்றம்; *a.* குறுக்கு மறுக்கான; குறுக்கு வெட்டுக் கோடுகளாலான; சிடுசிடுப்பான; *v.* குறுக்குமறுக்காகச் செல்; குறுக்குமறுக்குக் கட்டப்படிவத்தில் இழை; அடிக்கடி குறுக்கிட்டுச் செல்; *adv.* குறுக்கு மறுக்காக; நோக்க முரண்பாட்டுடன், மாறுபட்ட குறிக்கோள்களுடன்.

**cris'ta,** *n.* தலைச்சூட்டு, கொண்டை.

**cris'tate,** *a.* (வில., தாவ.) தலைச்சூட்டினையுடைய.

**criter'ion,** *n.* அளவைக்கட்டளை, மூலப்பிரமாணம், ஒப்பளவு முதல்; கட்டளைவிதி, பிரமாணசூத்திரம், அடிப்படைத் தத்துவம்; தேர்வுமுறை; சோதனை; *pl.* criter'ia.

**crit'ic,** *n.* திறனாய்வாளர்; தேர்வறிஞர்; நடுநிலையறிஞர், பத்திரிகை மதிப்புரை எழுதுபவர்; ஏட்டாராய்ச்சியாளர், பாடபேத ஆய்வாளர்; குறைகாண்பவர்; கண்டிப்பவர்.

**crit'ical,** *a.* திரும்புகட்டம் சார்ந்த ; தீர்வுகட்டமான ; நெருக்கடியான, இடரார்ந்த ; திறனாய்வு சார்ந்த ; நுண்ணாய்வுடைய; நடுநிலை மதிப்பீட்டாற்றலுடைய, குற்றங்காண்கிற, கண்டிக்கிற ; (கண., இய.) மாறுகட்டம் குறித்த ; மாறுநிலையிலுள்ள ; (தொ.) critical angle, மாறுநிலைக் கோணம், ஒளிக்கதிர் கோடு நிலையிலிருந்து திரிநிலைக்கு மாறும் கோணம், மிகக் குறைந்த திரிநிலைக்கோணம் ; critical philosophy, அறிவின் ஆதாரம் தேடும் இம்மானுவல் காண்ட் (Immanuel Kant 1724-1804) என்பாரின் அறிவுக் கோட்பாடு ; critical temperature, முட்டுபதன், அழுத்தத்தால் மட்டும் நீர்மமாக்க முடியாத நிலையுடைய வளியின் தட்பவெப்ப நிலையளவு.

**crit'icaster,** *n.* கீழ்த்தரத் திறனாய்வாளர்.

**crit'icism,** *n.* திறனாய்வு, நடுநிலைமதிப்பீடு, இலக்கிய ஆராய்ச்சித்துறை ; கவின்கலை ஆராய்ச்சி ; திறனாய்வுக் கட்டுரை ; (தொ.) higher criticism, historical criticism, வரலாற்றுமுறை ஆய்வு ஆராய்ச்சி, விவிலிய நூல் சுவடிகளின் அமைவு-காலம்-வாய்மை ஆகியவற்றை வரலாற்று-இலக்கியக் கண் கொண்டு ஆய்தல் ; textual criticism, verbal criticism, நூலின் சொற்கள் அல்லது வாசகம் பற்றிய ஆராய்ச்சி.

**crit'icize,** *v.* குணங்குறை விளக்கங் கண்டு மதிப்பிடு ; நுண்ணிதின் ஆய்ந்து வாதாடு ; குற்றங்காண், குறைகூறு, கண்டி.

**critique',** *n.* தனி ஏடு பற்றிய திறனாய்வுக் கட்டுரை ; ஆராய்ச்சிக் கட்டுரை ; திறனாய்வுக் குறிப்பு ; அறிவாராய்ச்சிக் கலை.

**croak,** *n.* கரகரப்பான ஒலி ; தவளை கத்தும் ஓசை ; அண்டங் காக்கைக் கரைவு ; *v.* தவளையின் கத்தும் ஓசை எழுப்பு ; அண்டங் காக்கையின் கரைவொலி எழுப்பு ; கரகரப்பான ஒலிசெய் ; அடித்தொண்டையில் பேசு ; புலம்பு ; முணுமுணுப்புச்செய் ; கேட்டின் முன்னறிகுறி காட்டு.

**croak'er,** *n.* கரகர ஒலி எழுப்புபவர் ; கத்துவது ; முணுமுணுப்பவர் ; கேட்டினை முன்னறிவிப்பவர்.

**Cro'at,** *n.* குரோஷியா (Croatia) இனத்தவர்.

**cro'ceate, cro'ceous,** *a.* செம்மஞ்சள் நிறமான.

**cro'chet,** *n.* கொக்கி ஊசியைக்கொண்டு இழைக்கண்ணிகள் இட்டுச் செய்யப்படும் வலைப்பின்னல் வேலை ; கொக்கி ஊசியைக்கொண்டு பின்னப்படும் பொருள் ; *v.* கொக்கி ஊசியைக்கொண்டு இழைவலைப்பின்னல் பின்னு ; கொக்கி ஊசியைக்கொண்டு சால்வை பின்னு.

**cro'cidolite,** *n.* நீலக் கல்நார் ; தென் ஆப்பிரிக்காவிலுள்ள நீலக் கல்நாரின் மஞ்சள்நிற உருத்திரிபு வகை.

**crock**[1]**,** *n.* மண்குடம், சாடி ; ஓட்டுச்சில்லு ; பூத்தொட்டியிலுள்ள துளையை மூடுவதற்காகப் பயன்படும் உடைந்த மட்பாண்டத் துண்டு ; (பே-வ.) உலோகக் கலம்.

**crock**[2]**,** *n.* அழுக்கு, கறை ; *v.* மாசுபடுத்து, கறையாக்கு.

**crock**[3]**,** *n.* கிழக் குதிரை ; கிழப் பெட்டைச் செம்மறியாடு ; திறமையற்றவர் ; தளர்ந்துபோனவர், ஏலாதவர், செயல் அற்றுப்போனவர் ; *v.* செயலற்றுப்போ ; ஆற்றல்கெடு.

**crock'ery,** *n.* மட்பாண்டத் தொகுதி ; சுட்ட களிமண் கலங்களின் தொகுதி.

**crock'et,** *n.* (க-க.) கோபுரம் போன்ற கட்டுமானச் சரிவில் செய்யப்படும் இலை-பூச்சுருள் ஒப்பனை வேலைப்பாடு.

**croc'odile,** *n.* முதலை; முதலை இன விலங்கு வகை; பதனிட்ட முதலைத் தோல்; பள்ளி மாணவர் இரண்டிரண்டுபேராக நடந்து போகும் அணி ; (தொ.) crocodile bird, முதலைமேல் அமர்ந்து கொத்தும் ஆப்பிரிக்கப் பறவை வகை ; crocodile tears, முதலைக்கண்ணீர், நீலிக்கண்ணீர், போலி அழுகை.

**Crocodil'ia,** *n.* (வில.) முதலைகளும் அவைபோன்ற மரபற்றுப்போன உயிர்களும் உள்ளிட்ட ஊரும் விலங்குப் பேரினம்.

**crocodil'ity,** *n.* (அள.) குற்றங்காணும் நோக்குடன் வாதிடல்.

**Crocodi'lus,** *n.* (வில.) முதலைகள் உள்ளிட்ட ஊரும் விலங்கினம்.

**croc'us,** *n.* (தாவ.) மஞ்சள் அல்லது ஊதா நிற மலர்களையுடைய சிறு பூண்டுச்செடி வகை ; மஞ்சள் அல்லது சிவப்பு நிறமுள்ள பழங்கால வேதியியல் தூள்வகை.

**Croes'us,** *n.* பெரும் பணக்காரர்.

**croft,** *n.* குடியிருப்படுத்த சிறுவிளை நிலம் ; சிறுபண்ணை, அடைப்பிட்ட நிலம்.

**crof'ter,** *n.* சிறு விளைநிலத்தைக் குத்தகைக்கு எடுத்து அதில் தங்கி உழைக்கும் குத்தகை உழவன்.

**Cro-Magn'on,** *n.* பிரான்சிலுள்ள குரோமன்யான் குகை ; *a.* குரோமன்யான் குகையில் கண்டெடுக்கப்பட்ட வரலாற்றுக்கு முற்பட்டகால மனித எலும்புக் கூட்டுப் பகுதிக்குரிய நெட்டையான நீள்மண்டையோட்டு ஐரோப்பிய இனம் சார்ந்த.

**crom'lech,** *n.* குத்துக்கல் வட்டம் ; வரலாற்றுக்கு முற்பட்ட காலத்துப் பெருங்கல் வட்டக் கல்லறைமாடம்.

**cromorn'a, cromorne',** *n.* துளை இசைக்கருவியின் அழுத்து கட்டை ; குழலிசைக்கருவி.

**crone,** *n.* கிழவி ; கிழடான பெட்டையாடு.

**cron'y,** *n.* நெருங்கிய பழைய நண்பன்.

**crook,** *n.* இடையர் வளைகோல் ; மாவட்டச் சமய முதல்வர் வளைதடி ; கொக்கி ; வளைந்தபொருள் ; வளைவு ; குனிதல் ; உடல் வளைத்து வணங்குதல் ; குனிவு, கூன் ; துளையிசைக் கருவியின் ஓசை அதிர்வு குறைப்பதற்குரிய வளைகுழாய் ; ஏமாற்று, சூழ்ச்சி, தந்திரம் ; *a.* வளைந்த ; *v.* கொக்கியாக்கு; கொக்கியாகு ; வளை ; வளைவுறு ; நேர்வழியிலிருந்து திறம்பு; (தொ.) a crook in the lot, அனுபவங்களிடையே நேர்ந்த சோதனை ; by hook or by crook, எப்படியேனும், நல்லவழி கெட்டவழி எதனாலேனும் ; on the crook, நேர்மையின்றி, வஞ்சித்து.

**crook'back,** *n.* கூனல், கூன்முதுகு.

**crook'backed,** *a.* கூனலான, கூன்முதுகுள்ள.

**crook'ed,** *a.* நேராயிராத, வளைந்த ; திருகிய, முறுக்கிய ; உருக்கோணலான; மூப்பினால் கூனி வளைந்த; நேர்மையற்ற, வேண்டுமென்றே நெறிபிறழ்கிற ; கபடமான, அழும்பான ; தடி வகையில் குறுக்குக் கைப்பிடியுள்ள, ஏந்து கவடுள்ள.

**Crookes,** *n.* ஆங்கில விஞ்ஞானியாகிய சர் வில்லியம் குருக்ஸ் (Sir William Crookes, இறப்பு 1919) என்பாரின் பெயர் ; (தொ.) Crookes rays, எதிர் மின்வாய்க் கதிர்கள் ; Crookes's tube, (இய.) ஒளிக்கதிர் உயர்கோட்ட நிலையை எடுத்துக் காட்டுவதற்கான காற்றில்லாக் கண்ணாடிக் குழல் ; Crookes's vacuum, முனைப்பான வளிநீக்க இடைவெளி.

**croon,** *n.* எருத்தின் தாழ்குரல் முழக்கம் ; *v.* எருதுபோல் உறுமு ; தாழ்குரலில் முனங்கு ; அடிக்குரலில் பாடு ; முணுமுணு ; முணுமுணுத்துப் புலம்பு ; உணர்ச்சி மேலிடத் தாழ்குரலில் பாடு.

**croon'er,** *n.* உணர்ச்சி முனைப்பான பாடல்களை மெல்லப் பாடுபவர்.

**crop,** *n.* பறவைகளின் தொண்டைப் பை ; சாட்டைக்கோல், சாட்டைக் கைப்பிடி ; வாருக்குப் பதிலாகக் கண்ணி பொருத்தப் பட்டுள்ள சிறு சாட்டைக்கோல் ; பயிர், கூலவிளைவு, விளைச்சல், மேனி, பருவத்தின் மொத்த விளைச்சல்; பதனிட்ட முழு மாட்டுத்தோல் ; மயிர் வெட்டுதல் ; மயிரைக்குறுக வெட்டிக்கொள்ளும் பாணி ; வெட்டியெடுக்கப்பட்ட முனை ; இறைச்சி வெட்டும் வகை முறைப் பாணி ; தெரிபாறை, நிலப்பரப்பில் முனைப்பான பாறை ; (க-க.) மோட்டுமுளைத்தழை உருவ ஒப்பனை ; உச்சி ; தளிர் ; கிளை ; மரங்களின் தழைமுகடு ; *v.* வெட்டு ; நுனியைக் கத்தரி ; விளிம்பைத் தறி ; குறுகத் தறி ; ஏட்டின் ஓரம்வெட்டு ; நுனிப்பகுதியைக் கறித்துத் தின் ; அறுவடை செய், அறுத்துக்குவி ; விதை, நடவு

செய் ; பயிர்விளை ; முளை, மேலிட்டு எழு ; (மண்.) மேற் பரப்புக்கடந்து எழுந்து தோன்று ; திடீரென்று தோன்று ; எதிர்பாராது பேச்சிடையே எழு ; (தொ.) neck and crop, தலைகீழாக, அடியோடு.

**crop'-bound'**, *a.* (வில., மரு.) தொண்டைப்பை இறுக்கத்தினால் துன்பமுழல்கிற.

**crop'-comb**, *n.* அரைமதிவடிவச் சீப்பு.

**crop'-ear**, *n.* காது தறிக்கப்பட்டவர் ; காது தறிக்கப்பட்ட குதிரை ; காது தறிக்கப்பட்ட நாய்.

**crop'-eared**, *a.* குறுகத் தறித்த காதுகளையுடைய; காதுகள் தெரியும்படி மயிர் கத்தரிக்கப் பெற்ற.

**crop'ful**, *n.* இரைப்பை கொள்ளும் அளவு ; *pl.* crop'fuls.

**cropp'er**, *n.* வெட்டுபவர் ; கத்தரிக்கும் பொருள் ; பெரிய தொண்டைப் பையுடைய புறு ; நல் விளைச்சல் தரும் பயிர்வகை ; பங்குபெற்றுப் பயிர் செய்பவர் ; சிறு அச்சு இயந்திரவகை ; வீழ்ச்சி ; தோல்வி ; (தொ.) come a cropper, வீழ்ச்சியுறு.

**cropp'ing**, *n.* வெட்டுதல், கத்தரித்தல் ; பயிர் செய்தல் ; (மண்.) தெரிபாறை, நிலப்பரப்பில் புறம்வந்து தோன்றும் முனைப்பான பாறை.

**cropp'y**, *n.* குறுகத்தறித்த தலைமயிருடையவர்; (வர.) ஐரிஷ் கலகக்காரர் ; 1798 பிரஞ்சுப் புரட்சி ஆதரவாளர்.

**crop'-sick**, *a.* மீதூண் அல்லது பெருங்குடியின் விளைவாக வரும் நோய்க் கோளாறுடைய.

**croq'uet**, *n.* புல்வெளி மரப்பந்தாட்டம், நீண்ட காம்புடைய மரக் கொட்டாப்புளிகளினால் மரப்பந்துகளை அடித்துச் செலுத்தும் விளையாட்டு ; நீண்ட காம்புடைய மரக்கொட்டாப்புளியினால் மரப்பந்தினை அடித்துச் செலுத்துதல் ; *v.* புல்வெளி மரப்பந்தாட்டத்தில் தன் பந்தடித்து எதிராளி பந்தினைச் செலுத்து.

**croquette'**, *n.* அரிசி மா-இறைச்சி-உருளைக்கிழங்கு முதலியவை கலந்து சுவையூட்டி வறுத்துச் செய்யப்படும் பணியார உருண்டை.

**crore**, (இ.) *n.* கோடி, நூறு இலட்சம்.

**cro'sier**, *a.* மாவட்டச் சமய முதல்வரின் அல்லது மடத்தலைவரின் அருளாட்சிக்கோல் ; மடாதிபதியின் சிலுவைக்கோல்.

**cross**, *n.* கொலைத்தண்டனைக்குரிய பண்டைய ரோமரின் கழுமரம் ; இயேசுநாதர் அறைந்து கொல்லப்பட்ட சிலுவை ; கிறித்தவ சமயச் சின்னம் ; கிறித்தவசமயப் புனிதப்போராட்டச் சின்னம் ; வலக்கையால் இடப்படும் சிலுவை அடையாளம் ; ஊர்வலங்களில் குருமார்முன் கொண்டுசெல்லப்படும் சிலுவைத் தலைப்பையுடைய நீண்ட கோல்; சிலுவைவடிவான நினைவுச் சின்னம்; சிலுவை இருந்த இடம் ; சிலுவையமைந்த நகர மைய வெளி ; சிலுவை வடிவப் பதக்கம் ; கழுத்தில் தொங்கவிடப்படும் சிலுவை வில்லை ; கிறித்தவ சமயத்துக்குரிய பாவக்கழுவாய்க் கோட்பாடு ; கிறித்தவ சமயம் ; சிலுவை உருவம்; சிலுவைக்குறி; நங்கூர அடிப்பகுதி ; நில அளவை ஆராய்ச்சியாளரின் குறுக்கைக் கோல் ; குறுக்கிடு ; குறுக்குவழி ; முரண்படு நிகழ்ச்சி, இடையூறு, இன்னல், தொல்லை, துன்பம், சோதனை ; இனக்கலப்பு; கலவைப் பிறவி, கலப்பினம் ; இடைப்படு நிலை, இரண்டு நிலைக்கு இடைப்பட்ட தன்மை; கெடுவழக்கு; நேர்மைக் கேடு, ஆட்டங்களில் தன் தோல்விக்கு வழிசெய்து கொள்ளும் இரண்டகமுறை ; ஆள்மோதுதலால் நேர்ந்த ஆட்ட வெற்றி இழப்பு ; *a.* பக்கத்துக்குப்பக்கமாகக் கிடக்கிற, குறுக்கான ; குறுக்கு வாட்டான ; குறுக்குவெட்டான ; குறுக்கிடுகிற ; குறுக்குச் சாய்வான ; எதிரெதிராகப் பின்னிய, பின்னி இணைந்த, பின்னிக் குறுக்கிட்ட ; தலைமாறிய ; இனக் கலப்பான ; முரணான, எதிரான ; சிடுசிடுப்பான ; இரண்டகமான ; நேர்மையற்ற ; *v.* சிலுவைக் குறியிடு ; சிலுவை வடிவாக அமை ; பக்தியுடன் சிலுவை வடிவம் மேற்கொள் ; குறுக்குக்கோடிடு ; குறுக்காகவை ; எழுதியதைக் குறுக்காகக்கோடிட்டு அடித்துவெட்டு; பக்கத்துக்குப் பக்கமாகச்செல், குறுக்கே கட ; தாண்டிச்செல், தாவு ; குறுக்காக வெட்டு, வெட்டிச்செல் ; குறுக்காக அமை ; முழு அகலமளாவு; இனம் பின்னிக்கலப்புச் செய் ; பின்னிக்கலப்புறு ; காசோலையில் நிலைய வரையறை குறித்து இடது மேற்புறத்தில் இணை குறுக்குக் கோடுகளிடு : குறுக்காக எழுது ; தடைசெய் ; விருப்பம் கெடு; மீறிநட ; சந்தி ; எதிரெதிராகக் கடந்துபோ; குதிரை முதலியவற்றின்மீது கால்விரித்தமர் ; (தொ.) cross as two sticks, பெரிதளவில் ஏறுமாறான ; தனிப்பட ஒருவர்மீதொருவர் வெறுப்புக்கொண்ட; cross one's fingers, keep one's fingers crossed, நல்ல யோகத்தை வரவழைக்க எண்ணி விரலை விரல்மேல் விரலாகக் கொக்கிபோல் வளைத்துவை ; cross one's mind, மனத்தில் பளிச்செனத் தோன்று ; cross one's palm, ஒருவர் கையில் பணம் வை ; cross one's path, ஒருவர் போக்கில் குறுக்கிடு, குறுக்கிட்டுக் கெடு. இடையூறுசெய் ; on the cross, மூலைவிட்டமாக, சாய்விட்டமாக.

**'cross**, *adv.*=across.

**cross'-ac'tion**, *n.* (சட்.) எதிர்வாதியால் வாதிமீது வழக்கின் எதிர்நடவடிக்கையாகக் கொண்டுவரப்படும் எதிர் வழக்கு.

**cross'-and-pile'**, *n.* பூவா பொறியா என்று போட்டுப்பார்த்தல், நாணயம் சுண்டியிடல் ; தற்செயல் நிகழ்வு வாய்ப்பு.

**cross'-armed**, *a.* கைகளை மாறுகக் குறுக்காக வைத்துக் கொண்டிருக்கிற.

**cross'band**, *n.* கப்பலின் சட்டம் சரிநிலையிலிருக்கும் பொருட்டு அதன் உடற்பகுதிக்குக் குறுக்கே ஆணியடித்துச் செருகப்படும் சாதிக்காய் மரப்பலகை.

**cross'-band'ed**, *a.* மேற்பரப்புக்கு மாறுபட்ட மேலீட்டு வண்ணத்தின் நுண்ணிழைம வரிப்போக்குடைய.

**cross'-bar**, *n.* குறுக்குக் கம்பி ; நெம்புகோல் வகை.

**cross'beam**, *n.* பெரிய உத்திரக்கட்டை.

**cross'-bearer**, *n.* சிலுவை ஏந்தி, ஊர்வலங்களில் சிலுவை தாங்கிக் கொண்டு செல்பவர்.

**cross'-bedd'ing**, *n.* (மண்.) பொது அடுக்கமைவுக்கு மாறுகச் செல்லும் ஒழுங்கற்ற சிறு அடுக்கு.

**cross'belt**, *n.* தோள்கச்சை, குறுக்குப்பட்டை, வெடியுறை முதலியன தொங்கவிடுவதற்காகத் தோளிலிருந்து எதிர்ப்புறமுள்ள இடுப்புப் பக்கமாக அணியும் கச்சை.

**cross'-bench**, *n.* குறுக்காகப் போடப்பட்டுள்ள விசிப்பலகை; கட்சிச் சார்பற்ற மாமன்ற உறுப்பினர்கள் உட்காரும் இருக்கை ; *a.* கட்சிச்சார்பற்ற ; காய்தலுவத்தலில்லாத, நடுநிலையான.

**cross'bill**[1], *n.* அலகு முனைகள் வளைந்து ஒன்றையொன்று கவிந்து குறுக்கிடும் அமைவுடைய பறவை வகை.

**cross'bill**[2], *n.* (சட்.) உயர்தர முறைமன்ற வழக்கில் வாதியின்மேல் பிரதிவாதி கொணரும் குற்றச்சாட்டு.

**cross'-birth**, *n.* (மரு.) கருப்பையில் குழந்தை குறுக்காகக் கிடக்கும் மகப்பேறுநிலை.

**cross'-bones**, *n. pl.* சாவு அல்லது கடற்கொள்ளை குறித்த சின்னத்தில் தலையோட்டுடன் இடம்பெறும் ஒன்றற்கொன்று குறுக்காகக் கிடக்கிற இரண்டு துடையெலும்புகள் வடிவம்.

**cross'-bow**, *n.* குறுக்குவில், கணை அல்லது கல் எறிவதற்காக இடைக்காலத்திற் கையாண்ட வில் போன்ற படைக்கலப் பொறி.

**cross'-bower, cross-bow'man**, *n.* குறுக்குவில் ஏந்திய வீரர்.

**cross'-breed**, *n.* கலப்பினம் ; இனக்கலப்பினால் தோன்றிய கான்முளை.

**cross'-bun**, *n.* கிறித்தவர் விழாநாளாகிய புதுவெள்ளிக் கிழமையன்று உட்கொள்ளப்படும் சிலுவைக்குறியுடைய வட்டப் பொங்கப்பம்.

**cross'-butt'ock**, *n.* மற்போர்வீரர் இடுப்புப் பிடிவகை.

**cross-correspon'dence**, *n.* உளவியல் புத்தாய்வுத்துறையில் தனித்தனி பொருளற்ற ஆவி உலகச் செய்திகளை இசைவித்துப் பொருள்கொள்ளும் முறை.

**cross'-coun'ter**, *n.* குத்துச்சண்டையில் எதிரியின் முதல் தாக்குதலைத் தடுக்க எதிரியின் இடதுகைப்புறமாக வலக்கையும் வலதுகைப்புறமாக இடக்கையும் எதிரெதிர் குறுக்கிடும்படித் தாக்கும் எதிர்த்தாக்கு முறை.

**cross'-coun'try**, *a.* பாட்டையிலிருந்து விலகி வயல்களின் ஊடாகச் செல்கிற; *adv.* பாட்டையிலிருந்து விலகி வயல்களினூடாக.

**cross'-cross'let**, *n.* நான்கு முனைகளிலும் நான்கு உட்சிலுவைகள் கொண்டுள்ள சிலுவை.

**cross'-cut**[1], *n.* குறுக்குவெட்டு; குறுக்கு வழி; *a.* குறுக்கு வெட்டுக்காகச் செய்யப்பட்டுள்ள அல்லது பயன்படுத்தப்படுகிற.

**cross-cut'**[2], *v.* குறுக்காக வெட்டு.

**cross'cut-saw**, *n.* உத்தரங்களைக் குறுக்காக வெட்டுவதற்கான பெரிய இரம்பம்.

**cross'-divi'sion**, *n.* ஒன்றின்மீது ஒன்று கவிந்து மேற்செல்கிற பிரிவுகளாகப் பிரித்தல்.

**crosse**, *n.* கனேடியப் (Canadian) பந்து விளையாட்டு வகையில் பந்தைச் செலுத்துவதற்குப் பயன்படுத்தப்படும் வலையுடைய வளை தடி.

**crossed**, *a.* குறுக்காக வைக்கப்பட்டுள்ள; சிலுவைக்குறி போட்டுள்ள; குறுக்கிட்டுக் கெடுக்கப்பட்ட.

**cross-examina'tion**, *n.* (சட்.) குறுக்கு விசாரணை, குறுக்குக் கேள்வி.

**cross-exam'ine**, *v.* (சட்.) குறுக்கு விசாரணைசெய், குறுக்குக் கேள்வி கேள், மறை செய்திகளை வெளிப்படுத்துவதற்காக நுணுக்க விவரமாகக் கேள்; எதிர்த்தரப்புமீது கேள்வி எழுப்பு.

**cross'-eyed**, *a.* ஓரக்கண் பார்வையுள்ள.

**cross'-fertiliza'tion**, *n.* (தாவ.) அயல்கருவுறுதல், மாற்றுக் கருவுயிர்ப்பு.

**cross'-fire**, *n.* (படை.) இரண்டு அல்லது பல முனைகளிலிருந்து செலுத்தப்படும் பீரங்கிக் குண்டுவீச்சு.

**cross'fish**, *n.* நட்சத்திர மீன், ஐந்து அல்லது ஐந்துக்கு மேற்பட்ட கை போன்ற உடலுறுப்புக்களையுடைய கடல்வாழ் உயிரினம்.

**cross'-garnet**, *n.* மேல்கீழ்த் திருகுமுனையுடைய கதவுக்கீல்.

**cross'-grain**, *n.* நுண் இழைவரிக்கெதிரான நுண் இழைவரி.

**cross'-grained**, *a.* மரப்பலகை முதலியவற்றில் குறுக்கீடான இழை வரிகளையுடைய; தாறுமாறான இழை வரிகளையுடைய; வேண்டுமென்றே நெறிபிறழ்வான; வழிக்குக் கொண்டுவர முடியாத; முரண்டுபிடிக்கிற; *adv.* காழ்ப்பு வரிக்குக் குறுக்கே; வேண்டுமென்றே நெறி பிறழ்வாக, அழும்பாக.

**cross'-guard**, *n.* (படை.) வாள்பிடியில் தாக்குக் காப்பான குறுக்குமுளை, பிடிகாப்பு.

**cross'-hatch**, *v.* ஓவியத்தில் வலைக்கோடுகளிட்டு நிழற்சாயல் காட்டு.

**cross'-hatch'ing**, *n.* ஓவியத்தில் நிழற்சாயல் காட்டும் வலைக் கோட்டுப் பின்னல்.

**cross'-head**[1], *n.* குறுக்குத்தலைப்பு, செய்தித்தாளில் பத்தியில் வருபொருளைச் சுருக்கமாக உணர்த்தும் இடைத்தலைப்பு.

**cross'-head**[2], *n.* நீராவிப்பொறி போன்றவற்றில் முகட்டுக் குறுக்கு விட்டக்கோல்.

**cross'-heading**, *n.*=cross-head[1].

**cross'ing**, *n.* சிலுவைக்குறி போடுதல்; குறுக்கே செல்லுதல்; பாதைகள் குறுக்கிடுமிடம்; திருக்கோயில் குறுக்கிடைகழி; தெருக்கடப்பதற்குரிய இடம்; குறுக்கிட்டுப் பாழாக்குதல்; இருவேறு இனங்களைக் கலக்கச்செய்தல்; (தொ.) level crossing, பாட்டையும் இருப்புப்பாதையும் ஒரே மட்டத்தில் கடக்குமிடம்.

**cross'ing-o'ver**, *n.* (உயி.) இனக்கீற்றுக்கள் இணைகூடி மீண்டும் பிரியும்போது அவற்றின் உறுப்புக்கள் ஒன்றற்கொன்று மாறிப்போதல்.

**cross'ing-sweeper**, *n.* கடவுபெருக்குபவர், தெரு கடக்கப்படும் இடத்தைப் பெருக்குபவர்.

**cross'-jack**, *n.* (கப்.) சதுரப் பாய்மரவகை.

**cross'leaved**, *a.* எதிரெதிர் குறுக்காக அமைந்துள்ள நான்கு இலை வரிசைகளையுடைய.

**cross'-legged**, *a.* சப்பணம் போட்டுத் தரையில் அமர்ந்திருக்கிற; கால்மேல் கால் போட்டு நாற்காலியில் அமர்ந்திருக்கிற.

**cross'let**, *n.* சிறு சிலுவை.

**cross'-light**, *n.* ஒளிக்கோடு ஒன்றினைக் குறுக்கிட்டுச் செல்லும் மற்றோர் ஒளிவிளக்கம்; மற்றொரு கோணத்திலிருந்து பொருளை விளக்குதல்.

**cross'-or-pile**, *n.*=cross-and-pile.

**cross'-over**, *n.* மேற்கவிபாதை, பாதைமேலாகச் செல்லும் பாட்டை.

**cross'-patch'**, *n.* சுடுமூஞ்சிக்காரர், சிடுசிடுப்பானவர்.

**cross'-piece**, *n.* மற்றொன்றுடன் குறுக்காகப் பொருத்தப் பெற்றுள்ள துண்டு; கப்பலின் முன்பக்கத்திலிருந்து நீண்டுள்ள மரச்சட்டத்தைத் தாங்கும் செங்குத்தான இரண்டு மரக்கட்டைகளை இணைக்கும் கம்பி.

**cross'-pollina'tion**, *n.* (தாவ.) அயல்மலர்ப் பூந்துகள் சேர்க்கை, ஒருமலரின் சூலகமுகட்டில் மற்றொரு மலரின் பூந்துகள் ஒட்டிப் பொலிவுண்டாதல்.

**cross'-pur'pose**, *n.* மாறுபட்ட நோக்கம், நோக்கமுரண்; முரண்பட்ட நடவடிக்கை; முரண்பாடான அமைவு.

**cross purposes**, *n. pl.* வினாக்களின் விடைகள் வேறு வினாக்களுக்கு மாற்றப்படுகிற விளையாட்டுவகை; பிறழ உணர்வதனால் சொல்லாடலில் நேரும் குழப்பம்; (தொ.) be at cross purposes, ஒருவரை ஒருவர் பிறழ உணரப்பெறு, ஒரே காரியத்தில் தம்முள் முரண்பாடான திட்டங்களைக் கொண்டிரு.

**cross'-quar'ters**, *n.* கல்லில் செதுக்கிய சிலுவை வடிவ மலர்ப் பொறிப்பு.

**cross question**, *n.* குறுக்குக்கேள்வி, குறுக்கு விசாரணையில் கேட்கப்படும் கேள்வி.

**cross-ques'tion**, *v.* குறுக்குக்கேள்வி கேள்; நுணுக்க விவரங் குறித்த கிளைக்கேள்வி கேள்; நுட்பதிட்ப முடிவு செய்வதற்குரிய துணை வினா எழுப்பு.

**cross-ra'tio**, *n.* (கண.) குறுக்கு விகிதம், சமநிலையமைதி அற்ற விழுக்காடு.

**cross-ref'erence**, *n.* குறுக்குக் குறிப்பு, சுவடியில் மற்றொரு தலைப்பு அல்லது வாசகம் பற்றி எழுதப்படும் குறிப்பு.

**cross'-road**, *n.* முக்கியபாட்டையின் குறுக்கே செல்லும் பாதை; பக்கப்பாதை; இரண்டு பெரிய பாட்டைகளை இணைக்கும் இடைநெறி; பாதைகள் குறுக்கிடுமிடம்.

**cross'-roads**, *n. pl.* முக்கியமான தீர்மானம் செய்யவேண்டிய கட்டம்; ஒருவர் வாழ்க்கையில் இடர்ப்பாடான திருப்ப மையம்; (தொ.) at the cross-roads, இடர்ப்பாடு மிக்க முக்கியமான திருப்பகட்டத்தில்.

**cross'-row**, *n.* நெடுங்கணக்கு.

**cross'-ruff**, *n.* சீட்டாட்ட வகையில் ஒருபக்கத்தைச் சேர்ந்தவர்கள் ஒருவர்விட்டொருவர் துருப்புச் சொல்லி ஆடுதல்; *v.* ஒருவர்விட்டொருவர் துருப்புச் சொல்லும் சீட்டாட்டம் ஆடு.

**cross'-saddle**, *n.* இருபுறமும் கால் விரித்துக் குதிரையேறிச் செல்வதற்கேற்ற சேணம்.

**cross'-sea**, *n.* (கப்.) காற்றின் திசை மாறுவதனால் வெவ்வேறு திசைகளில் அலைவீசும் கடல், காற்றின் திசைக்கு மாறுபட்ட சாய்வுப் போக்குடைய கடல்.

**cross'-sec'tion**, *n.* குறுக்குவெட்டு; குறுக்கு வெட்டின்வாய்; முனைமுகம்; முழுநிறை மாதிரி, எல்லா வகையிலும் பண்புகளின் பிரதிநிதியாக அமைந்துள்ள உருப்படி; *v.* குறுக்கு வெட்டாக வெட்டு.

**cross'-sill**, *n.* இருப்புப்பாதையின் குறுக்குப் படுக்கைக் கட்டை.

**cross'-spring'er**, *n.* (க-க.) பல்கவிகைமாடத்தில் கவிகைகளுக்கிடைப்பட்ட கோண விளிம்பு.

**cross'-staff**, *n.* நிலஅளவையாளர் குறுக்கு மட்டக்கோல்.

**cross'-stitch**, *n.* பின்னு தையல், குறுக்குத்தையல்.

**cross'-stone**, *n.* புள்ளடித்தடங்களை உடைய கனிப்பொருள் பாறை வகைகளில் ஒன்று.

**cross'-talk'**, *n.* தொலைபேசி உரையாடலில் குறுக்கீடு; எதிர்ப்புரை, எதிர்மறுத்துக்கூறுதல்.

**cross'-tie**, *n.* ஆதாரக்கட்டு; இருப்பூர்திக்கம்பிகளைத் தாங்கும் படுக்கைமரம்.

**cross'-tin'ing**, *n.* குறுக்காகப் பரம்படிக்கும் முறை.

**cross'tree**, *n.* கப்பல் பாய்மரத்தின் மேல்முனைக்கருகே அமைக்கப்பட்டுள்ள மரம் அல்லது உலோகத்தாலான குறுக்குக்கை.

**cross'-vault'ing**, *n.* (க-க.) ஒன்றற்கொன்று குறுக்காக உள்ள கவிகைகளினால் அமைந்த இணைகவிகை மாட அமைப்பு.

**cross'-way**, *n.* குறுக்கிடும் பாதை; இணைக்கும் பாதை.

**cross'-wind**, *n.* குறுக்காக வீசும் காற்று; பாதகமான காற்று.

**cross'wise**, *adv.* சிலுவை வடிவத்தில்; குறுக்காக.

**cross'-word, cross'-word puzzle**, *n.* குறுக்கெழுத்துப் போட்டி, சதுரக்கட்டங்களில் தரப்படும் குறிப்புகளைக் கொண்டு செங்குத்தாகவும் கிடைநிலையாகவும் வெற்றிடங்களில் தக்க எழுத்திடுவதன்மூலம் சொற்களை நிரப்ப வேண்டிய புதிர் முறை.

**cross'wort**, *n.* ஒன்றற்கொன்று குறுக்கான இலையமைப்புக் கொண்ட செடி வகை.

**crotch**, *n.* மரக்கவடு; இருகிளை பிரியும் இடம்; மனித உடலின் காற்கவடு.

**crotch'et**, *n.* கொளுவி, கொக்கி; இசையின் கால அளவைக் கூறு, அரை மாத்திரை; நெறிபிறழ்ந்த அவா; திடீரென மாறும் மனப்பாங்கு, திடீரெனத் தோன்றும் எண்ணம்; தனிப்போக்கு, தனிப்பட்ட தன்மை; தற்பெருமை.

**crotcheteer'**, *n.* தனித்தன்மை கொண்டவர்; விசித்திர எண்ணம் கொண்டவர்; திடீரென மாறும் நிலையற்ற மனப்பாங்காளர்.

**crotch'ety**, *a.* விசித்திர எண்ணங்கள் நிறைந்த; திடீரென மாறும் மனப்பாங்குள்ள.

**crot'on**, *n.* அழகுக்காக வளர்க்கப்படும் தோட்டச் செடி இனம்; தோட்டச் செடி வகை; (தொ.) croton oil, தோட்டச் செடிவகையினின்று எடுக்கப்படும் ஆற்றல் வாய்ந்த பேதி மருந்து.

**crouch**, *n.* குனிதல்; பதுங்குதல்; கெஞ்சும் நிலை; *v.* குனி; பதுங்கு; கெஞ்சு; கெஞ்சி ஆதரவை நாடு.

**croup** [1], *n.* கொடிய இருமலோடு கூடிய குழந்தைகளின் காற்றுக்குழல் அழற்சி நோய் வகை; தொண்டையில் உண்டாகும் கரகரத்த ஒலி; *v.* கரகரத்த ஒலியோடு பேசு; தவளை போலக் கத்து.

**croup** [2], *n.* குதிரையின் பிட்டம்; சேணத்திற்குப் பின்னுள்ள பாகம்.

**croupe**, *n.* = croup [2].

**croup'ier**, *n.* பொது விருந்தில் மேசையின் கீழ்ப்பகுதியில் உட்காரும் துணைத்தலைவர்; சூதாட்ட மேசையில் பணம் திரட்டிக் கெலித்தவர்களுக்குப் பணம் கொடுத்துப் பணியாற்றுபவர்.

**crouton**, (பிர.) *n.* சூப்பியுடன் வழங்கப்படும் பொரித்த சிறு அப்பத்துண்டு.

**crow**, *n.* காக்கை; காக இனப்பறவை; மட்ட நிலக்கரி; சேவலின் கூவல்; வெற்றிக் குரலொலி; குழந்தையின் மகிழ்வொலி; கடப்பாரை, பாரைக்கோல்; *v.* காகம் போல் கரை, கத்து; பெருமை அடித்துக்கொள், வீம்பு பேசு; வெற்றி வீறுப்புக்கொள்; மகிழ்ச்சி எக்களிப்புக்கொள்; (தொ.) as the crow flies, in a crow line, ஓரே நேர்க்கோட்டில், சரிநேராக; Carrion Crow, பெருங்காக வகை, பிணந்தின்னிக் காகம்; eat crow, eat boiled crow, செய்யத்தகாததைச் செய்யும்படி வற்புறுத்தப்படு, தன்மதிப்பிழ, தன்னையே தாழ்த்திக் கொள்; have a crow to pluck with, குறை காண்; மனக்குறைப்படு; கண்டித்துப் பாடம் தர வழி காண்; Royston crow, கொண்டைக் காகம்; white crow, அரும்பொருள்; அருஞ்செய்தி.

**crow'-bar**, *n.* கடப்பாரை, நெம்புகோலாகப் பயன்படும் கடை வளைந்த இரும்புக் கம்பி.

**crow'berry**, *n.* சதுப்பு நிலப் படர் குத்துச் செடிகளில் உண்டாகும் சிறு கறுப்புப் பழ வகை.

**crow'-bill**, *n.* காயங்களிலிருந்து துப்பாக்கிக் குண்டுகளை எடுக்கும் மருத்துவச் சாமணம்.

**crowd**, *n.* மக்கள் திரள், கூட்டம், ஒழுங்குமுறையற்ற ஆட்களின் தொகுதி; கும்பல்; திரள், நெருங்கிய பொருள்களின் தொகுதி; பொது மக்கள் தொகுதி; நெருங்கிய தொகுதி; *v.* ஒருங்கு கூட்டு, திரட்டு; ஒருங்கு கூடு, கூட்டமாகச் சேர்; கும்பலாக்கு; திரள்; திணித்து நிரப்பு; நெருக்கு; நெருங்கு, மொய்; (தொ.) crowd of sail, ஒருங்கு உயர்த்தப்பட்ட பல கப்பற்பாய்கள்; crowd sail, வேகம் பெருக்குவதற்காகப் பல கப்பற் பாய்களை ஒருங்கே உயர்த்து.

**crow'foot**, *n.* திண்ணிய மஞ்சள் வண்ணமுள்ள மலர்ச் செடியினங்களின் வகை; படைத்துறையில் பகைவர்க்கு ஊறு விளைப்பதற்காக எப்போதும் ஒரு முள் மேல்நோக்கிக் கிடக்கும்படி அமைந்த நாற்கவர் முள்; (கப்.) மேறகட்டி தொங்கவைப்பதற்குரிய இழைக்கயிற்றுத் தொகுதி; *pl.* crow'-foots.

**crown**, *n.* அணிமுடி, மகுடம்; பொன்மணிகளால் அணி செய்யப்பட்ட அரசர் அரசியரின் கிரீடம்; மன்னுரிமைத் தலைக்கவிகை; முடியரசு, முடியாட்சி; முடியுரிமை, அரசுரிமை; முடியரசர், மன்னர்; ஆட்சியுரிமை; பூமுடி, வெற்றி குறித்த வாகை மலர்முடி; முடிவடிவான அணிமணி; தலைசிறந்த பூணணி; முகடு, உச்சி; தலையுச்சி, மண்டை; தொப்பியின் மேற்பகுதி; மரத்தின் தழை நிறைந்த உயர் பகுதி; மலைக்குவடு, சிகரம்; கட்டுமான மேன்முகப்பு; வளைவின் மேற்கூம்பு; மணிக்கல்லின் பட்டை முகப்பு; பல்லில் காணத்தகும் மேற்குவடு; குப்பியின் பற்றிக் கொள்ளும் உலோகத்தாலான அழுத்து மூடி; மான் கொம்பின் தலைக்கூம்பு; தண்டு-வேர்ச்சந்திப்பு; தண்டங்கிழங்கு; ஐந்து வெள்ளி கொண்ட பிரிட்டனின் பழைய நாணயம், 15-க்கு 20 அங்குல அளவுள்ள தாள்; உயர்தகைமை; நன்முடிபு, இன்ப நிறைவேற்றம், முத்தாய்ப்பு; *v.* முடி கவி, முடி சூட்டு; அரசபதவி ஏற்று; தலைமீது வை; உச்சிமீது அமை; கட்ட ஆட்ட வகையில் வெறுங்காய்மீது மற்றொரு காய் வைத்து அரசுக்காயாக்கு; அரிசுக்குரிய மதிப்பளி; மேன்மைப்படுத்து; அழகு செய்; நிறைவு செய்; மகிழ்வான முடிவுக்குக் கொண்டுவா; வெற்றிகரமாக முடி; (தொ.) crown and anchor, பகடையாட்ட வகை; Crown Colony, நேர் தாயக ஆட்சிக்குட்பட்ட குடியேற்ற நாடு; crown Derby, பிரிட்டனில் டெர்பி (Derby) என்னும் இடத்தில் முடிச் சின்னத்துடன் செய்யப்பட்ட மங்குப் பாண்டம்; crown living, அரசரால் வழங்கத்தக்க திருக்கோயில் மானியம்; crown octavo, 5-க்கு $7\frac{1}{2}$ அங்குல நீளமுள்ள எட்டாய் மடிக்கத்தக்க அளவுத்தாள்; Crown office, பிரிட்டனின் உயர்நீதி மன்ற அரசுப் பிரிவின் அலுவலகம்; அரச முத்திரை வைக்கும் அலுவலிடம்; crown of the causeway, தெரு மையம்; Crown prince, அடுத்த நேர் உரிமையுள்ள இளவரசர், வேறு புதுப்பிறப்புக்களால் பாதிக்கப்பட முடியாத

உரிமையுடைய அரசிளஞ் செல்வர் ; crown witness, குற்றச் சாட்டு வழக்கில் அரசாங்கச் சார்பில் ஏற்படுத்தப்பட்ட சாட்சி; to crown all, எல்லாவற்றுக்கும் மேற்பட்ட மகுடமாக.

crown'-ag'ent, *n.* ஸ்காத்லாந்தில் குற்றவியல் சார்ந்த அரசியல் குற்றச்சாட்டுக்களைத் தயாரிக்கும் வழக்கறிஞர்.

crown'-ant'ler, *n.* மான் கொம்பின் உச்சிப்பகுதி.

crown'-bark', *n.* கொயினா மரப்பட்டை வகை.

crown'-cap, *n.* குப்பியில் முத்திரையிட்டு மூடுவதற்குரிய உள்வரியிட்ட உலோகமூடி.

crowned, *a.* முடியணிந்த ; முடி கவிக்கப்பெற்ற ; அரசுரிமை பெற்ற ; (தொ.) crowned head, அரசர், மன்னர்.

crown'et, *n.* பெருமக்கள் அணிமுடி.

crown'-gall', *n.* நுண்மங்களால் ஏற்படும் கட்டிபோன்ற தாவர நோய்வகை.

crown'-glass, *n.* கார சுண்ணகக் கண்ணாடி ; வட்டச் சில்லு களாக உள்ள பலகணிக் கண்ணாடி.

crown'-graft', *n.* மரத்திற்கும் பட்டைக்கும் இடையில் இளந் தளிர் நுழைத்து ஒட்டிணைத்தல்.

crown'-green, *n.* பந்தாட்டத்துக்குரிய கவிவான புல் நிலத்தளம்.

crown'-head', *n.* கட்ட ஆட்டத்தில் பின் வரிசைக் கட்டம்.

crown'-impe'rial, *n.* அல்லியினச் செடி வகை.

crown'-jew'el, *n.* மகுடமணி ; அரசருக்குரிய அணிமணி.

crown'-land, *n.* மன்னர் தனியுரிமை நிலம்.

crown'-law, *n.* குற்றச்சட்டம்.

crown'-law'yer, *n.* குற்ற வழக்குகளில் அரசர் தரப்பில் வாதாடும் வழக்கறிஞர்.

crown'let, *n.* சிறு மணிமுடி.

crown'-piece, *n.* ஐந்து வெள்ளி கொண்ட பிரிட்டிஷ் நாணயம்.

crown'-post, *n.* விட்டத்திலிருந்து மோட்டுமுகடு தாங்கும் செங்குத்தான ஆதார விட்டம்.

crown'-saw, *n.* வாய்முகப்பில் பல்வரிசையுள்ள குழல் வடிவான வாள்.

crown'-wheel, *n.* தன் தளத்திற்குச் செங்குத்தான பல் வரிசைகள் உள்ள சக்கரம்.

crown'-work, *n.* இரு காவலரண்களின் புறமுகடுகளுக்கு இடைப்பட்ட உள்வளைவு.

crow'-quill, *n.* காக்கை இறகு ; முற்கால மைக்கோல்.

crow's'-bill, *n.*=crow-bill.

crow's'-foot, *n.* முதியவர்களின் கடை விழியருகில் தோன் றிப் படரும் சுருக்கம் ; படைத்துறையில் பகைவர்களுக்கு ஊறு விளைப்பதற்காக எப்போதும் ஒரு முள் மேல் நோக்கிக் கிடக்கும்படி அமைந்த நாற்கவர் முள்.

crow's'-footed, *a.* காகக் காற்குறியுடைய.

crow'-shrike, *n.* சர சரவென அரவமிடும் கருமை வெண்மை இடை கலந்த நிறமுடைய ஆஸ்திரேலியக் காக இனப் பறவை வகை.

crow's'-nest, *n.* (கப்.) சுற்றுக்காட்சி காவற்பணியாளர் களுக்குரிய உயர்மேடை.

crow'-steps, *n. pl.* முக்கோணச் சுவர் முகட்டின் மீதுள்ள படிகள் போன்ற அமைப்பு.

cru'cial, *a.* கடுஞ்சோதனையான, சிக்கல் மையமான; முடிவுக் கட்டமான, தீர்வுக்குரிய, முடிவைத் தீர்மானிக்கிற ; நெருக் கடியான ; மிகு முக்கியமான ; சிலுவை போன்ற, சிலுவை உருவுள்ள.

cru'cian, *n.* தாடி போன்ற அமைப்பற்ற குளத்து மீன் வகை.

cru'ciate, *a.* (வில., தாவ.) சிலுவை வடிவான; *v.* வேதனைப் படுத்து, துன்புறுத்து.

cru'cible, *n.* மூசை, புடக்குகை, உலோகங்கள் உருகவைக்கும் மட்கலம் ; கடுஞ்சோதனை.

cru'cifer, *n.* சிலுவைதாங்கி, ஊர்வலத்தில் சிலுவை தாங்கிச் செல்பவர் ; சிலுவை போன்ற மலர்ச் செடிவகை.

crucif'erous, *a.* சிலுவை தாங்குகிற ; சிலுவை அணிந்த ; சிலுவை மேற்கொண்ட ; சிலுவையால் அணி செய்யப்பட்ட ; சிலுவை அடையாளமிடப்பட்ட ; சிலுவைபோன்ற நான்கு இதழ்களுடைய; சிலுவைபோன்ற மலரையுடைய செடி இனத்தைச் சார்ந்த.

cru'cifier, *n.* சிலுவையில் அறைபவர் ; துன்புறுத்துபவர், கொடுமைப் படுத்துபவர்.

cru'cifix, *n.* சிலுவையில் அறையப்பட்ட இயேசுநாதரின் உருவம்.

crucifi'xion, *n.* சிலுவையேற்றம் ; இயேசுநாதரின் சிலுவை ஏற்றப் படம் ; (தொ.) the Crucifixion, இயேசுநாதரின் சிலுவையேற்றம்.

cru'ciform, *a.* சிலுவை உருவுடைய.

cru'cify, *v.* சிலுவையில் அறைந்து கொலை செய் ; சிலுவையில் அறைந்து பங்கப்படுத்து ; போர்க்களத்தில் சக் கரத்தில் அல்லது சக்கரம் போன்ற பொருளில் கட்டித் தண்டி; முழுதும் கீழ்ப்படுத்து ; செயலடக்கு; துன்புறுத்து, வேதனை செய் ; கொடுமைப்படுத்து ; அவாக் கொல்லு ; பழிபாவம் ஒறு ; தசையுடலைத் துன்பத்துக்குள்ளாக்கு, கடுநோன்புக் குள்ளாக்கு.

cru'cigerous, *a.* சிலுவை தாங்கியுள்ள.

crude, *a.* இயற்கை மேனியான; முதிரா முதல் நிலையிலுள்ள, உருவாக்கப்படாத, செப்பமுறாத, பட்டையிடப்படாத, மெரு கிடப்பெறாத ; செப்பமற்ற, பண்பற்ற ; கரடு முரடான, முரட்டுத்தனமான ; கலைநயமற்ற ; பக்குவமுறாத ; முடிவுறாத ; செரிமானமுறாத ; மனத்தால் பற்றமுடியாத ; ஒழுங்கமைதி அற்ற.

crud'ity, *n.* பக்குவமடையா நிலை ; அனுபவமற்ற தன்மை ; செயல் முற்றுப்பெறா நிலை; பண்படாமை; கரடு முரடானது ; திருத்தம் பெறாதது.

cru'el, *a.* கொடுமையான ; துன்புறுத்துகிற ; துன்புறுத்தி மகிழ்ச்சியடைகிற ; உணர்ச்சியற்ற ; இரக்கமற்ற ; நாகரிகம் அற்ற ; கடுமையான ; கடுங்கண்டிப்பான ; வேதனைதருகிற.

cru'el-heart'ed, *a.* கொடுமையில் மகிழ்ச்சி காண்கிற, கடின சித்தமுள்ள, இரக்கமற்ற.

cru'ells, cru'els, *n.* கண்டமாலை நோய்.

cru'et, *n.* உணவு மேசையில் வைக்கும் ஊறுகாய்க் கலம் ; சுவைப்பொருள் சாடி; திருக்கோயில் நீர்க்குடுவை; திருநெய்க் குவளை ; தேறல் கலம்.

cru'et-stand, *n.* திருக்கலவடை, சமயச் சடங்குகளுக்கான இன்தேறல்-எண்ணெய் முதலியவை கொண்ட கலங்களைத் தாங்கும் சட்டம்.

cruise, *n.* கடல் உலா, கப்பற் சுற்றுப்பயணம் ; சுற்றுலா ; *v.* அங்கும் இங்கும் கப்பலில் செல் ; உச்சநிலைக்குக் குறைந்த சிக்கன எல்லை வேகத்துடன் விமானத்தில் பறந்து திரி ; தேடித்திரி.

cruis'er, *n.* கடலில் திரிபவர் ; விரை போர்க்கப்பல் ; தாக்குத லுரிமைபெற்ற தனிமனிதர் விரைகப்பல் ; காவற் கப்பல் ; வேவு கலம் ; இன்ப உலாப்படகு.

cruis'er-weight, *n.* கனத்த எடைக்கும் மைய எடைக்கும் இடைப்பட்ட கனமுள்ள குத்துச் சண்டைக்காரர், இலேசான கன எடை குத்துச் சண்டைக்காரர்.

crumb, *n.* அப்பத்துண்டு ; சிறு துணுக்கு, பொருக்கு, சிறு பகுதி ; அப்பத்தின் மென்மையான உட்பகுதி ; *v.* சிறு துணுக்குகளாக்கு; இடி, பொடி; அப்பத்துண்டுகளை உள்ளிடு; அப்பத்துணுக்குகளை மேலீடாகத் தூவு ; துண்டுத்துகள் தூவிக் கெட்டிப்படுத்து; தூள்படு, பொடியாகு, நொறுங்கு; துண்டுத் துணுக்குகளைத் துடைத்தகற்று.

**crumb'-brush**, *n.* மேசையினின்று அப்பத்துணுக்குகளை நீக்கும் துடைப்பம்.

**crumb'-cloth**, *n.* அப்பத் துணுக்குகள் தளவிரிப்புமீது சிந்தாமல் இருப்பதற்காக மேசை அடியில் போடப்படும் துணி; முரட்டு அழுத்தக் கம்பளித் துணிவகை.

**crum'ble**, *n.* துகள், துணுக்கு; அப்பத்துண்டு; எளிதில் தூளாகும் பொருள்; *v.* துண்டுகளாக நொறுக்கு, பொடியாக்கு; தூளாகு, பொடிந்து விழு; அழிவுறு.

**crum'bly**, *a.* நொறுங்கத்தக்க, பொடியாகக்கூடிய.

**crumb'-tray**, *n.* மேசையினின்று நீக்கப்பட்ட அப்பத் துணுக்குகளை இட்டுவைக்கும் தட்டு.

**crumb'y**, *a.* துண்டுதுண்டான; மென்மையான.

**crumm'y** [1], *n.* முடங்கித் திருகிய கொம்புள்ள பசு.

**crum'my** [2], *a.* சிறு தூள்களான; மென்மையான.

**crump** [1], *n.* வலிமை வாய்ந்த அடி; கடு வீழ்ச்சி; *v.* (பே.வ.) மரப்பந்தாட்டத்தில் பந்தினை ஓங்கி அடி.

**crump** [2], *a.* வளைந்த; சுருக்கங்களுள்ள.

**crum'pet**, *n.* மாவும் முட்டையும் பாலும் கலந்த தோசை போன்ற பண்ணிய வகை, ஊத்தப்ப வகை.

**crum'ple**, *v.* மடக்கிச் சுருட்டு, சுருட்டிக் கசக்கு; மடிப்பு உண்டுபடுத்து, சுருக்கம் விழச்செய்; இடிந்து விழச்செய்; இடிந்து விழு; சுளி, சுருக்கம் விழப்பெறு.

**crunch**, *n.* பல்லரைப்பொலி; மெல்லுதல், பல்லரைப்பு; *v.* ஓசைபட மெல்லு, பல்லாலரை; மிதித்துத் துவை; சரளை மீது நெரித்து நட; கசக்கு.

**crupp'er**, *n.* சேணத்தினுடன் இணைக்கப்பட்ட குதிரையின் வாலடி வார்; குதிரையின் பின்புறப் பகுதி.

**crur'al**, *a.* கால் சார்ந்த; கால் போன்ற.

**crusade'**, *n.* சிலுவைப் போர், கிறித்தவ சமயப்போர், துருக்கியர்களிடமிருந்து தங்கள் புதை இடத்தைப் பெறக் கிறித்தவர்கள் ஆற்றிய போராட்டங்களில் ஒன்று; அறப்போர்; பொது வாழ்வில் ஊழல்களை எதிர்த்த துணிகரப் போராட்டம்.

**crusad'er**, *n.* சிலுவைப்போர் வீரர்; அறப்போர் வீரர்; உயர் குறிக்கோளுக்காகப் போராடுபவர்.

***crusad'o***, (போர்ச்.) *n.* சிலுவைக் குறியுள்ள போர்ச்சுகீசிய நாணய வகை.

**cruse**, *n.* மட்கலம், குவளை, சாடி.

**crush**, *n.* கசக்குதல், நெருக்குதல், பிழிதல்; பிழிவு, சாறு; பழச்சாறு; பொருள்களின் செறிவு; ஆட்கூட்ட நெருக்கடி; கால்நடைகளை ஒன்றொன்றாக நெருக்கித் தள்ளிவிடும் குவிந்து செல்லும் அடைப்பு; *v.* நொறுக்கு; கசக்கு; நெருக்கு, நெரி; பிழி; அடக்கு, கீழ்ப்படுத்து; துன்பப்படுத்து; அழி; (தொ.) crush a cup, கிண்ணத்தை வெறுமையாக்கு; முழுதும் குடி, விடாது பருகு.

**crush'-barr'ier**, *n.* கூட்டத் தடை வேலி, கூட்ட நெருக்கடியைத் தடுக்கும் அமைப்பு.

**crushed**, *a.* பிழியப்பட்ட; (தொ.) crushed strawberry, பிழியப்பட்ட பழத்தின் இளரோசா நிறமுடைய.

**crush'er**, *a.* நசுக்குபவர், பிழிபவர்; நசுக்குவது, பிழிவது; அடக்குபவர்.

**crush'-hat**, *n.* இசைநாடகத் தொப்பி வகை.

**crush'-room**, *n.* கேளிக்கை இடைவேளையில் பார்வையாளர் உலாவும் அறை.

**cru'sian**, *n.*=crucian.

**crust**, *n.* மேல் ஓடு, மேல் தோல், பட்டை; அப்பப் பொருக்கு; அப்பத்தின் புறப்பகுதி; நிலவுலகின் புறத்தோடு; *v.* மேலோட்டினால் மூடு; பொருக்காகத் திரள்.

**crus'ta**, *n.* உள்வரியாய் இடுவதற்குச் சித்தம் செய்யப்பட்ட துணி; கெட்டி மேற்பூச்சு; சர்க்கரை உறைந்த விளிம்புடைய கண்ணடிக் கலத்தில் ஊற்றப்பட்ட தேறல் கலவை வகை.

***Crusta'cea***, (ல.) *n. pl.* நண்டு-நத்தை உள்ளடக்கிய கடலுயிர் இனப்பெரும் பிரிவு.

**crusta'cean**, *n.* நண்டு-நத்தை போன்ற கெட்டி மேல் தோடுடைய கடலுயிரினஞ் சார்ந்த ஒன்று; *a.* நண்டு-நத்தை போன்ற கெட்டி மேல் தோடுடைய.

**crusta'ceous**, *a.* மேல் தோடுடைய.

**crustal**, *a.* மேல்தோடு சார்ந்த.

**crust'ate, crustat'ed**, *a.* மேல்தோட்டால் மூடப்பட்ட.

**crusta'tion**, *n.* ஒட்டிக்கொண்டிருக்கும் மேல்தோடு.

**crus'ted**, *a.* தோட்டினை உடைய; பொருக்கினை உடைய; மதுவகையில் பொருக்குப் படியவிட்டுள்ள; மிகப் பழங் காலத்திய; காலங்கடந்த; பழமை சான்ற மதிப்புடைய.

**crus'ty**, *a.* மேல்தோடுடைய; பொருக்குடைய; மேல்தோட்டின் இயல்புடைய; பொருக்குப்போன்ற; கடினமான மேற்பகுதியுள்ள; கடும் புறத்தோற்றமுள்ள; சிடுசிடுப்பான; நறுக்கென்ற, வெடுக்கென்ற.

**crutch**, *n.* முடவன் கோல், கவட்டுக் கட்டை; ஆதாரம்; உதை கட்டையாகப் பயன்படும் மரக்கவடு; இரு கிளை பிரியும் கவடு; மனித உடலின் கவட்டுக் கூறு; குதிரைச் சேணத்தில் கால் வைப்பதற்குரிய கவட்டுப்படி; (கண.) கணிப்பில் கொண்டுசெல்லும் எண்ணைக் காட்டுவதற்காக இடப்படும் உள்ளீட்டு உரு; *v.* தாங்கு; முட்டுக்கொடு; ஊன்று கட்டைகளின் உதவியால் செல்.

**crutched**, *a.* சிலுவை அடையாளமுள்ள; சிலுவையணிந்த.

**Crutch'ed Fri'ars**, *n.* சிலுவை அடையாளம் அணிந்துள்ள கிறித்தவத் துறவிகளின் பிரிவு.

**crux**, *n.* சிலுவை; கடும்புதிர், கடுஞ்சிக்கல்; இன்னல் அல்லது குழப்பம் உண்டாக்கும் பொருள்; முடிவுத் தீர்வுக்குரிய திருப்பம், அறுதி செய்ய உதவும் கூறு, சிக்கலின் உயிர்க் கூறு; *pl.* cru'xes, cru'ces.

**crwth**, *n.* வேல்ஸ் நாட்டுப் பண்டைய நரப்பிசைக் கருவி வகை.

**cry**, *n.* கூக்குரல், கூவிளி, கூப்பாடு; கூப்பிடுகை, அழைப்புக் குரல்; அழுகை, புலம்பல்; கூச்சல், ஆரவாரம்; பேரொலி; உரத்துக் கூவுதல், முழக்கம்; அலறல், கத்துதல், கதறல்; விலங்கொலி, புட்குரல்; மக்கட் குரல்; கரைதல்; பொதுச் செய்தி, வதந்தி; வேண்டுகோள், கோரிக்கை; போர்க்குரல்; போராட்டக்குரல்; சமிக்கைக் குரல்; விற்பனையாளர் கூக்குரல்; தகரங்களின் சலசலப்பு; வேட்டைநாய்த் தொகுதி; *v.* கூவு; அழு; புலம்பு, கூக்குரலிட்டழு; கத்து, கதறு, அலறு; கூச்சலிடு, ஆரவாரம் செய்; முழக்கமிட்டுக் கூறு; சாற்று, பொதுவில் அறிவி; விற்பனை கூறு, கூலி விலை கூறு; விலங்கு-புள் வகையில் குரலெழுப்பு, கரைவுறு; வேட்டைநாய் வகையில் முழக்கமிடு; (தொ.) a far cry, நெடுந்தொலைவு; cry against, எதிர்த்துக் கண்டனம் தெரிவி; cry down, குற்றங்காணு, கண்டி; இழித்துரை, பழிதூற்று; cry for, வேண்டு, வேண்டியழு; cry off, உடன்படிக்கையினின்று விலகு, ஒப்பந்தத்தினின்று பின்வாங்கு; cry on, பெயர்கூறி அழை, அழைப்பிடு; cry out, உரத்துக் கூக்குரலிடு; cry over spilt milk, நிகழ்ந்ததைக் குறித்து வருந்திக் காலத்தை வீணக்கு; ஈடுசெய்யமுடியாததை எண்ணி வருந்து; cry quits, சரி செய்யப்பட்டு விட்டதாக அறிவி; cry shame upon, எதிர்த்துக் கண்டி; cry stinking fish, தன் சரக்கைத் தானே பழித்துக் கூறு; cry up, தூக்கிப் புகழ்ந்துரை, மிகைபடப் புகழ்; great cry and little wool, ஒன்றுமில்லாததற்குச் செய்யப்படும் பேரமளி, வீண் ஆர்ப்பாட்டம்; hue and cry, துரத்திப் பிடிப்பதற்குரிய திரண்ட கூக்குரல்; வேட்டை ஆரவாரம்; குற்றவாளியைப் பிடிப்பதற்குரிய பொது விளம்பரம்; ஆள்பிடி வேட்டை; ஆரவாரம்; in full cry, வேட்டை நாய்களின் தொகுதி வகையில் முழுவேட்டை ஆற்றலுடன்; முழு முயற்சியோடு; out of cry, மாறுபாட்டிற்கு இடமின்றி; within cry of, கூப்பிடு தொலைவில்.

**cry'-baby**, *n.* சிறுபிள்ளைத்தனமாக அழுபவர்.

**cry'ing,** *n.* உரத்து அழைத்தல்; அழுதல்; *a.* உரத்து அழைக்கிற; கவனிக்கப் படவேண்டிய, மிக முக்கியமான; மிக மோசமான.

**cryoc'onite,** *n.* துருவப் பனிப்பரப்பின்மீது காணப்படும் தூசி.

**cry'ogen,** *n.* (வேதி.) உறை கலவை; குறைந்த தட்பவெப்ப நிலை ஏற்படுத்த உதவும் பொருள்.

**cryogen'ics,** *n.* தாழ்ந்த தட்பவெப்ப நிலைபற்றிய இயற் பியலின் கிளைத்துறை.

**cryog'eny,** *n.* குளிர்முறை பாதுகாப்பு; தாழ்ந்த தட்பவெப்ப நிலை உண்டுபண்ணும் முறைகள் பற்றிய ஆய்வு.

**cry'olite,** *n.* பனிக்கல், கிரீன்லாந்தில் (Greenland) எடுக் கப்படும் தொழில் துறைக்குப் பெரிதும் பயனுடைய படிகக்கல் வகை.

**cryom'eter,** *n.* தாழ்நிலை தட்பவெப்பமானி.

**cryoph'orus,** *n.* ஆவியாதலால் நீரின் தட்பவெப்பநிலை குறைவதை அளவிட்டுக் காட்டும் கருவி.

**cry'oscope,** *n.* உறை நிலையை அறுதியிட்டு வரையறுக்க உதவும் கருவி.

**cryos'copy,** *n.* கரைபொருள்களால் கரைநீர்களின் உறை நிலைகளில் ஏற்படும் மாறுபாட்டைப் பற்றிய ஆய்வாராய்வு.

**cry'ostat,** *n.* ஆவியாதல்மூலம் குளிர்ச்சியடைதலை விளக்கிக் காட்டும் கருவி; ஆவியாக்குவதன்மூலம் தாழ்ந்த தட்ப வெப்ப நிலையை ஏற்படுத்தும் கருவி.

**cry'otron,** *n.* நிறைநேர் இன்மைக்குறிக்குச் சற்றே மேற்பட்ட தட்பவெப்பநிலையுடைய நீரியல் கதிர நிறைநீரமிழ் கலத்தில் இயங்கும் சிறுதிற மின்ம இயக்கக் குமிழ்.

**crypt,** *n.* நிலவறை; திருக்கோயில்களுக்கடியிலுள்ள புதை இடம்; (வில.) சிறு பள்ளம்; குழாய்ச் சுரப்பி.

**crypta'dia,** *n. pl.* மறைவடக்கமாக வைக்கப்படவேண்டிய செய்திகள்.

**cryptaesthes'ia,** *n.* புலன்கடந்த பேருணர்வு, தொலைவில் உணர்தல், பிறிதிடக்காட்சி.

**cryp'tal,** *a.* கீழறை சார்ந்த; நிலவறைபோன்ற; பிணம் புதைக்கும் நிலவறை இயல்பான.

**cryp'tic, cryp'tical,** *a.* மறைவான; கட்புலப்படாத; புதைவான, மறைபுதிரான; (வில.) மறைகாப்பான, பாது காப்புக்காக மறைவான.

**cryp'to, cryp'to-communist,** *n.* அரசியல் கோட்பாட்டு டன் மறைமுக ஈடுபாடுடையவர்; பொதுவுடைமைக் கட்சி அரசியல் கோட்பாட்டுடன் மறைமுக ஈடுபாடுடையவர்.

**cryptocryst'alline,** *n.* உருப்பெருக்கிக் கண்ணாடியில் மட்டுமே மணி உருவுடையதாகத் தெரிகிற பொருள்.

**cryp'togam,** *n.* குறிமறையினச் செடி, பூவில்லாச் செடி இனத்தைச் சார்ந்த செடி.

**cryp'togram, cryp'tograph,** *n.* குழூஉக்குறியில் ஆன எழுத்து.

**cryptol'ogy,** *n.* மறைமொழி, பிறரறியாத் தனிக்குழுமொழி.

**cryptomer'ia,** *n.* ஜப்பானிய தேவதாரு மரவகை.

**cryp'tonym,** *n.* மறைபெயர், பிறரறியாப் பெயர்.

**crys'tal,** *n.* பளிங்கு, படிகக்கல்; படிகக் கற்பாறை; மணி உரு, படிகஉரு, மணிப்பளிங்கு; மறை வெளிக்காட்சி காணப் பயன்படும் படிகக் கற்பாறைக் கோளம்; ஒண்பொருள், ஒளி ஊடுருவும் பொருள்; கண்ணாடி போன்ற பொருள்; உயர் கண்ணாடி வகை; பட்டையிடப்பட்ட கண்ணாடிக்கல்; மணிப் பொறிக் கண்ணாடிச் சில்லு; *a.* படிகத்தாலான; படிகம் போன்ற; கண்ணாடி போன்ற, ஒளி ஓட்டமுடைய; களங்க மற்ற, தெளிவான; (தொ.) crystal glass, படிகக் கண்ணாடி, ஒளி முழுதும் ஊடுருவவல்ல கண்ணாடி; crystal set, கம்பி களில்லா எளிய வானொலிக் குரல்வாங்கி.

**crys'tal-gazing,** *n.* பளிங்குக் கோளத்தின்மூலம் மறை நிலைத் துறையினர் காணும் மறைவெளிக்காட்சி.

**crys'talline,** *n.* பளிங்கு; பளிங்கு இயல்புடைய பொருள்; பட்டாலும் கம்பளியாலும் ஆன பளபளப்பான துணி வகை; *a.* பளிங்குபோன்ற; படிகம் போன்ற; பளிங்கியலான; மாசுமறுவற்ற; படிகம்போன்ற அமைப்புடைய; பளிங்கா லான; பளிங்குப் பகுதிகளையுடைய, படிகப் பகுதிகள் கொண்ட; (தொ.) crystalline heaven, crystalline sphere, நிலையான விண்மீன்களுக்கும் வெளியிலுள்ள சுற்றுக்கோளங் களுக்கும் இடையிலுள்ளதாக முற்காலத்தில் கருதப்பட்ட கோளம்; crystalline lens, ஒளி எளிதில் ஊடுருவும் கண்முகப்புக் குமிழ்.

**crys'tallite,** *n.* சரியாக உருவாகாத படிகம், தொடக்க நிலைப்படிகம்; கண்ணாடி போன்ற அழற் பாறையில் உள்ள நுண் துகட்கூறு.

**crystalli'tis,** *n.* கண் முகப்புக் குமிழின் அழற்சி.

**crys'tallize,** *v.* படிகங்களாகு; பளிங்காகு; மணி உருப் படுத்து; மணி உருப்பெறு; உறுதிப் பெறு, இறுகு; உறுதி யாக்கு, கெட்டியாக்கு; உருப்படுத்து; உருப்படு, நிலையான உருப்பெறு.

**crystallogen'esis,** *n.* படிகங்களின் தோற்றம், படிகப் பிறப்பு.

**crystallog'raphy,** *n.* படிக அமைப்பாய்வியல், படிகத்தின் அமைப்பு-வடிவம்-பண்பு ஆகியவற்றைப் பற்றிய விளக்க ஆராய்ச்சித்துறை.

**crys'talloid,** *n.* படிக அமைப்புடைய பொருள்; படிகம் போன்ற பொருள்; கரைசலாகிச் சவ்வுகளை ஊடுருவிச் செல்லக் கூடிய நிலையிலுள்ள பொருள்; (தாவ.) புரதத்திலுள்ள நுண்படிகத் துகள்; *a.* படிகம் போன்ற; படிக நிலைப் பொருளின் இயல்புடைய.

**crys'tallomancy,** *n.* பளிங்கு போன்ற பொருள்கள்மூலம் வருவது குறித்தல்.

**ctene,** *n.* கடல் வாழுயிர் வகையின் சீப்புப் போன்ற நீந்தும் அமைவு.

**cten'iform, cten'oid,** *n.* சீப்புப் போன்ற செதிள்களுடைய மீன்வகை; சீப்புப் போன்ற பல்வரிசையுடைய மீன்வகை; *a.* சீப்புப் போன்ற வடிவுடைய.

**Ctenoph'ora,** *n.* சீப்புப் போன்ற செதிளுறுப்புக்களால் நீந்தித் திரிகின்ற கடல் வாழுயிர்வகை.

**cub**[1], *n.* குருளை, நாய் இன விலங்கினங்களின் குட்டி; குட்டி நரி; சிங்கக் குட்டி; கரடிக் குட்டி; ஓநாய்க் குருளை; சிறுவர்; சிறுமி; குறும்பர், பண்படாச் சிறுவர்; பயிற்சிச் சாரணச் சிறுவன்; அனுபவம் அடையாத செய்தித்தாளின் செய்தி அறிவிப்பாளர்; *v.* குட்டி ஈனு; குட்டி நரிகளை வேட்டையாடு.

**cub**[2], *n.* கால்நடைக் கொட்டில்; பெட்டி.

**cub'age, cu'bature,** *n.* கன அளவு; கன அளவுகாணல்.

**Cu'ban,** *n.* கியூபா நாட்டான்; கியூபா நாட்டுக் குடிமகன்; *a.* கியூபா நாட்டைச் சார்ந்த; கியூபா நாட்டு மக்களைச் சார்ந்த; (தொ.) Cuban heel, மிதியடி வகையின் வளைவற்ற உயர்ந்த குதிகால் பகுதி.

**cubb'ing,** *n.*=cub-hunting.

**cubb'ish,** *a.* விலங்கின் குட்டி போன்ற; அருவருப்பான; நடத்தை கெட்ட; குறும்பான.

**cubb'y, cubb'y-hole,** *n.* சுற்றுக்கட்டான இன்ப வாய்ப் பிடம்.

**cube,** *n.* சரிசமத் திண்மம், கனசதுரம், ஆறு சமசதுர முகங் களையுடைய பிழம்புரு; மும்மடிப் பெருக்கம், மூவிசைப் பெருக்க எண்; *v.* மும்மடிப் பெருக்கமாக்கு; (தொ.) cube root, கனமூலம், மும்மடிப் பெருக்கமூலம்.

**cub'eb,** *n.* உணவுக்கும் மருந்துக்கும் பயன்படும் மிளகுச் செடி வகையின் காய்.

**cub'-hunting,** *n.* ஓநாய்க் குட்டிகளை வேட்டையாடுதல்.

**cub'ic,** *a.* கனசதுர வடிவான; கனசதுரஞ் சார்ந்த; கன அளவைக்குரிய, மூவளவைக் கூறுடைய; மும்மடிப் பெருக்கஞ் சார்ந்த, மூவிசைப் பெருக்க எண்ணுக்குரிய.

**cu'bica**, *n.* ஆடையின் உள்வரித் துணியாகப் பயன்படும் முறுக்கிய மென் கம்பள நூல்.

**cub'ical**, *a.*=cubic.

**cub'icle**, *n.* படுக்கையறை; தட்டியிட்டுத் தடுக்கப்பட்ட படுக்கைக் கூடத்தின் தனியறைப் பகுதி; பள்ளிக்கூடத்தின் துயிலறை; தனி அறை.

**cub'ism**, *n.* புதுமுறை ஓவியப் பாணி; கன வடிவங்களின் அடிப்படையில் பொருள்களின் பல்வேறு கூறுகளை ஒருங்கே ஒருமித்துக் காட்ட முற்படும் புதுமைச் சித்திரக் கோட்பாட்டு முறை.

**cub'it**, *n.* கைம் முழம்; முழக்கோல்; முழம், பதினெட்டு முதல் இருபத்திரண்டு அங்குலம் வரையுள்ள அளவை.

**cub'ital**, *a.* முழ அளவு கொண்ட; விலங்கின் முன்காலின் முன்பகுதிக்குரிய.

**cub'oid**, *n.* இணைவகத் திண்மம், ஆறு இணைவக முகப்புக்களை உடைய திண்ம உரு; *a.* கனசதுர வடிவொத்த.

**cuboid'al**, *a.* கனசதுர வடிவொத்த.

**cub'-report'er**, *n.* செய்தித்தாளின் அனுபவம் பெறாத செய்தி அறிவிப்பாளர்.

**cuck'ing-stool**, *n.* (வர.) தண்டமணை, சச்சரவுக்காரப் பெண்டிரை வைத்து நீரில் அமுக்கியெடுக்க முற்காலங்களில் பயன்படுத்தப்பட்ட நாற்காலி; சமுதாய எதிரிகளை அவர்கள் வீட்டு எதிரிலேயே கல்லால் அடிப்பதற்காக உட்கார வைக்கும் சாய்விலா நாற்காலி.

**cuck'old**, *n.* மனைசோரவிட்ட கணவன்; மறைநடைப் பெண்டிரின் கணவன்; *v.* கணவனை ஏய்த்து நட.

**cuck'oldom, cuck'oldry**, *n.* ஒழுக்கமிழந்த மனைவியை உடையவனின் நிலை; கணவனை ஏய்த்தொழுகுதல்.

**cu'ckoo**, *n.* குயில் வகை; மட்டி, பேதை.

**cu'ckoo-clock**, *n.* மணியடிப்பதற்குப் பதில் குயில் கூவுதல் போன்ற அமைப்புடைய மணிப்பொறி.

**cu'ckoo-flower**, *n.* மலர் வகை; சிவந்த மலருள்ள காட்டுச் செடி வகை.

**cuck'oo-fly**, *n.* பொன்வண்டு, தேனீக்கள் கூட்டிலும் குளவிகள் கூட்டிலும் முட்டையிடும் வண்டு வகை.

**cu'ckoo-pint**, *n.* புள்ளிகளுள்ள மலர்ச் செடிவகை.

**cu'ckoo-spit, cuck'oo-spitt'le**, *n.* பூச்சி வகையின் முட்டைப்புழுக்களும் புழுக்கூடுகளும் சூழப்பரப்பும் நாற்றக் காப்பு நுரைத்தடம்.

**cuc'ullate, cuc'ullated**, *a.* முகமூடி வடிவான; தலைமுடி அணிந்த; முக்காடிட்ட.

**cuc'umber**, *n.* வெள்ளரிக்கொடி; வெள்ளரிக்காய்; கக்கரிக் காய்; (தொ.) cool as a cucumber, ஆர்ந்தமர்ந்த நிலையில், முழுநிறை அமைதியுடன்.

**cu'cumber-tree**, *n.* விறுவிறுப்பான புளிப்புள்ள காய் கொடுக்கும் கிழக்கிந்திய மரவகை.

**cucurb'it**, *n.* சுரைக்காய் வடிவுள்ள வடிகலம், வாலைக்குடுவை.

**cucurbita'ceous, cucur'bital**, *a.* சுரைக்காய் இனக் குடும்பத்தைச் சார்ந்த; சுரைக்காய் போன்ற.

**cud**, *n.* அசை ஊண்; அசைபோடுதல்; அசைபோட்டு வாங்கும் உணவுக் கூறு; (தொ.) chew the cud, ஆய்ந்து நினை; உள்ளாராய்.

**cud'bear**, *n.* காளான் வகைகளினின்று எடுக்கப்பட்ட கருஞ் சிவப்பு அல்லது செந்நீல ஊதாநிறச் சாயப் பொருள்; காளான் வகை.

**cud'dle**, *n.* அரவணைப்பு, ஆர்வத் தழுவல்; *v.* அணை, தழுவு; செல்லங் கொஞ்சு; சீராட்டு; அரவணைத்துக்கிட.

**cudd'y** [1], *n.* கப்பற் சிறு அறை; கப்பற் சமையல் அறை; பெருங் கலங்களில் மேலாளின் தனி அறை.

**cudd'y** [2], *n.* கழுதை; பேதை, அறிவிலி; மீன் வகையில் குஞ்சு; பாறைகளை உயர்த்த உதவும் முக்காலிமீதமைந்த நெம்புகோல்.

**cudd'y** [3], *n.* பண்ணைக் கீழ்வாரத்தாரிடமிருந்து களியாட்டம் பெற மேலாளாரின் உரிமை; பண்ணை நிலவர்.

**cud'gel**, *n.* குண்டாந்தடி, குறுந்தடி, கைத்தடி; *v.* கைத் தடியாலடி, குண்டாந்தடியாலடி; (தொ.) cudgel one's brains for, சிந்திக்க முயற்சி எடுத்துக்கொள்; take up the cudgels, பாதுகாப்பில் முனை.

**cudg'el-proof**, *a.* அடித்தலுக்கு மசியாத.

**cud'weed**, *n.* மலர்களைச் சுற்றிச் செதிள்களையுடைய செடி வகை.

**cue** [1], *n.* நாடகத்தில் நினைப்பூட்டும் இறுதிச் சொல்; நடிகர் நடிப்புத் தூண்டுதற் குறிப்பு; நடிகர்க்குரிய நடிப்புப் பகுதி; பின்பாடகருக்கு நினைப்பூட்டும் இறுதிச் சொல்; வழிகாட்டும் குறிப்பு; சரிநேர்வழி.

**cue** [2], *n.* தலைப்பின்னல், சடை; மேடைக் கோற்பந்தாட்டத்தின் (Billiards) கோல்; *v.* பின்னல் முறுக்கிவிடு.

**cue'-ball**, *n.* மேடைக் கோற்பந்தாட்டத்தில் கோலால் அடிக்கப்பட்ட பந்து; கோலடிபட்ட பந்து.

**cue'ist**, *n.* மேடைக் கோற்பந்தாட்டக்காரர்.

**cuff** [1], *n.* அறை, கைவீச்சடி; *v.* திறந்த கையால் அடி; அறை.

**cuff** [2], *n.* மணிக்கட்டருகிலுள்ள சட்டையின் முன்கைப்பகுதி; மணிக்கட்டின் வரிக்கச்சை; கைவிலங்கு; (தொ.) off the cuff, பணிமுறை கவனியாது உடனடிச் செயலாக.

**cuff'in**, *n.* மனிதன், ஆள்; (தொ.) queer cuffin, அமைதியைப் பாதுகாக்கும் நடுவர்; கீழ்மகன்.

**Cuf'ic**, *n.* பழங் கல்வெட்டுக்களிலும்-நாணயங்களிலும்-பழைய குரான் கைப்படிகளிலும் காணப்படும் முற்கால அராபிய எழுத்துமுறை; *a.* கூபா (Cufa) நகரைச் சார்ந்த; பழைய அராபிய எழுத்துமுறை சார்ந்த.

*cui bon'o?*, (ல.) யார் அதனால் ஆதாயம் பெற்றனர்? யார் நலனுக்காக?

**cuirass'**, *n.* உடற்கவசம்; மார்புக்கவசம்; பெண்டிர் கையற்ற உட்சட்டை; *v.* உடற்கவசமளி.

**cuirassier'**, *n.* மார்புக்கவசமணிந்த குதிரைவீரன்.

**cuish, cuisse**, *n.* துடைக்கவசம்.

**cuisine'**, *n.* சமையலறை, அடிசிற்களம்; சமையல்துறை; சமையற்கலை; சமையலறை ஏற்பாடுகள்; சமையல் பாணி.

**cuisin'ier**, *n.* சமையற்காரர்.

**Cul'dee**, *n.* ஸ்காத்லாந்தில் எட்டாம் நூற்றாண்டிலிருந்து உடன்பிறப்புக் குழுவாக இணைந்து வாழ்கிற துறவிக் குழுவினர்.

*cul-de-four*, (பிர.) *n.* (க-க.) தாழ்ந்து உருண்டை வடிவான நிலவறை.

*cul-de-lampe*, (பிர.) *n.* புத்தகத்தில் வெற்றிடங்களை நிரப்புதற்கான அழகுடைய ஓவிய உருவரை.

*cul-de-sac*, (பிர.) *n.* மொட்டைச் சந்து, ஒரு வாயிற் சந்து; (உட.) ஒருபுற வழியுள்ள குழாய்.

**cul'inary**, *a.* சமையலறையைச் சார்ந்த; சமையற்கலை பற்றிய; சமையலறையில் பயன்படுத்தப்படுகிற; சமைக்கத்தக்க.

**cull** [1], *n.*=cully.

**cull** [2], *n.* மந்தையிலிருந்து விலக்கப்பட்ட தகுதியற்ற விலங்கு; *v.* பொறுக்கி எடு; தேர்ந்தெடு.

**cull'ender**, *n.* வடிகட்டி, அரிப்பு, சல்லடை.

**cull'et**, *n.* புதுப்பொருளோடு மீண்டும் உருக்கப்படத்தக்க கழிவுக் கண்ணாடி.

**cull'y**, *n.* இழிந்த பேதை; முட்டாள்; ஆள்; தோழன்; மனிதன்; *v.* இழிவாக ஏமாற்று; வஞ்சி.

**cull'yism**, *n.* பேதையான நிலை; ஏமாறுபவனாக உள்ள நிலை.

**culm**[1], *n.* நிலக்கரித்தூள் ; கல் கரிப்புழுதி ; கல் நிலக்கரி ; மேலை ஐரோப்பாவின் நிலக்கரியார்ந்த அடிநிலப் பாறை அடுக்கு ; (தொ.) Culm Measures, மேலை ஐரோப்பாவின் நிலக்கரியார்ந்த அடிநிலப்பாறை அடுக்கு.

**culm**[2], *n.* (தாவ.) தண்டு ; புல்லின் தண்டு ; கோரையினத் தண்டு ; *v.* தண்டாக உருவாகு.

**cul'men**, *n.* உச்ச உயர்நிலை, மீ நிலை ; பறவை அலகின் முகட்டுவரை.

**culmif'erous**[1], *a.* தண்டினையுடைய.

**culmif'erous**[2], *a.* நிலக்கரித் துகள் உருவாக்குகிற ; கல் நிலக்கரிப் புழுதியுண்டாக்குகிற.

**cul'minant**, *a.* உச்ச உயர்நிலையிலுள்ள, உச்சமுகடான.

**cul'minate**, *v.* (வான்.) உச்சத்தையடை ; நடுநிரைக் கோடெய்து ; மீ உயர்நிலைக்குச் செல் ; உச்சநிலைக்குக் கொண்டுவா.

**culmina'tion**, *n.* உச்சநிலை அடைதல் ; உச்சநிலை, முகடு ; உச்சநிலைப்புள்ளி ; (வான்.) வானுச்சம்; வானிலை உச்சத்தைக் கடக்கும் நிலை.

**culpabil'ity, cul'pableness**, *n.* குறைகூறத்தக்க நிலை.

**cul'pable**, *a.* குற்றமுடைய ; குற்றத்துக்குரிய ; குறைகூறத் தக்க.

**cul'patory**, *a.* குற்றச்சாட்டுத் தெரிவிக்கிற.

**cul'prit**, *n.* குற்றவாளி ; தவறிழைத்தவர் ; குற்றஞ் சாட்டப் பட்டு விசாரிக்கப்படாமலிருப்பவர்.

**cult**, *n.* வழிபாட்டு மரபு ; சமயக் கோட்பாட்டுமுறை ; வெறி ஈடுபாடு, பற்றீடுபாடு.

**cul'tivable, cultivat'able**, *a.* பயிர் செய்யத்தக்க ; பண் படுத்துவதற்குரிய.

**cul'tivate**, *v.* பயிர் செய் ; பயிர்களுக்காக நிலத்தைப் பண் படுத்து ; கவனம் செலுத்திப் பேணு ; நாகரிகப்படுத்து, நயமாக்கு, திருத்து, பேணி வளர்த்து உருவாக்கு; மேன்மைப் படுத்து ; (தொ.) cultivate one's friendship, நட்புரிமை யைப் பெற முயற்சி செய், நட்பைப் பேணி வளர்.

**cultiva'tion**, *n.* பயிர் செய்தல் ; பயிர்த்தொழில், வேளாண்மை ; நிலத்தைப் பண்படுத்தும் கலை ; நாகரிகம், திருத்தம், நய மேம்பாடு.

**cul'tivator**, *n.* பயிரிடுபவர், உழவர் ; பண்படுத்துபவர் ; நிலங்கிளறிக் களையகற்றும் வேளாண்மைக் கருவி.

**cul'ture**, *n.* பயிர் செய்தல், பண்படுத்துதல் ; பண்படு நிலை ; பண்பட்ட நிலை ; உடற் பயிற்சியாலேற்படும் பண்பு வளம் ; மனப்பயிற்சியால் விளையும் திருத்த வளம் ; அறிவு வளர்ச்சி ; நாகரிகமான தன்மை, நாகரிகத்தின் பயனுன நயம், மேன்மை; நாகரிக வகை, நாகரிகப் படிவம் ; செய்முறை சார்ந்து வளர்க் கப்பட்ட நுண்மத் தொகுதி ; *v.* பயிர் செய், பண்படுத்து ; சீர் திருத்து.

**cul'tured**, *a.* பண்பட்ட ; கல்வியால் மேம்பட்ட ; நாகரிக நயமுள்ள, மேன்மையாக்கப்பட்ட.

**cult'us**, *n.* சமயக் கொள்கை அமைப்பு ; கோட்பாடு ; வழி பாடு ; செயற்கைப் பற்றுவெறி.

**cul'ver**, *n.* மாடப்புரு வகை.

**cul'verin**, *n.* (வர.) 18 பவுண்டு குண்டு வெடிக்கும் நீளமான பழைய பீரங்கி வகை ; சிறு வெடிகலத் தொகுதி.

**cul'ver-key**, *n.* காட்டுமலர்ச் செடிவகை ; தேக்கு இன மரத் தின் இறகுடைய பழவகை.

**cul'vert**, *n.* பாலம் ; கால்வாயின் கீழ்ச்செல்லும் மதகு ; மின் கம்பி வடத்துக்குரிய நெறி.

**cul'vertage**, *n.* பண்ணையாளை அடிமையாகும்படி இழிவு படுத்துதல்.

*cum*, (ல.) *prep.* உடனுக, கூட, உடன்கலந்து ; (தொ.) *cum dividend*, தரப்படவிருக்கும் ஊதியப்பங்குடன் கூட ; *cum grano, cum grano salis*, முன் எச்சரிக்கையுடன், நன்கு ஆர்ந்தமர்ந்து சிந்தித்து.

**cum'ber**, *n.* வீண்சுமை ; வில்லங்கம் ; தடை, தொந்தரவு ; *v.* வீண்சுமையாயிரு ; குறுக்கிடு ; வழியடை, தடங்கலாயிரு, முட்டுக்கட்டை இடு.

**cum'bered**, *a.* தடைப்படுத்தப்பட்ட, காற்கட்டுண்ட, வில்லங்கப்பட்ட.

**cum'ber-ground**, *n.* பயனற்ற பொருள்.

**cum'berless**, *a.* தடையில்லாத, இடையூறற்ற, வில்லங்க மற்ற ; பளுவில்லாத.

**cum'bersome**, *a.* பெரும் பளுவான, இடைஞ்சலான, எளிதில் கையாள முடியாத, வாக்குப்போக்குக் கெட்ட.

**cum'brance**, *n.* வில்லங்கம், தொந்தரவு, சுமை, தடை.

**cum'brous**, *a.* பெருஞ்சுமையான, முட்டுக்கட்டையாயுள்ள ; தடைப் படுத்துகின்ற ; எளிதில் கையாள முடியாத, இசைவு கெட்ட.

**cum'in**, *n.* சீரகச்செடி.

**cumm'er**, *n.* பெண், சிறுமி ; வாயாடி ; தோழி, துணைவி.

**cumm'erbund**, *n.* இடைக்கச்சை, அரைப்பட்டிகை.

**cum'min**, *n.* = cumin.

**cum'quat**, *n.* ஊறுகாய்க்குரிய சிறு கிச்சிலிப்பழ வகை.

**cum'shaw**, *n.* நன்கொடை, சிறு கையுறை, சிறு கைக்கூலி.

**cum'ulate**, *a.* ஒன்ருகக் குவிக்கப்பட்ட, திரளாகச் சேர்க்கப் பட்ட ; *v.* திரளாகச்சேர் ; ஒன்ருகக் குவி, அடுக்கு ; படிப்படியாகச் சேகரி.

**cum'ulated**, *a.* = cumulate.

**cumula'tion**, *n.* ஒன்றுதிரட்டல் ; குவித்தல் ; திரட்சி ; குவிப்பு.

**cum'ulative**, *a.* அடுக்கடுக்காகச் சேர்க்கப்பட்டு வளர்கிற, படிப்படியாகத் திரண்டு வளர்கிற; (தொ.) cumulative vote, வேட்பாளர் அனைவர்க்குரிய வாக்குகளையும் வாக்காளர் ஒரு வருக்கே அளிக்க இடந்தரும் தேர்தல் முறை.

**cu'mulo-stra'tus**, *n.* திரள்குவிவும் படியடுக்கும் கலந்த நிலையிலுள்ள முகிற்படிவம்.

**cum'ulus**, *n.* திரள் குவியல், திரளாகக் குவிந்து கறுத்த அடித்தளம் கொண்ட முகிற்படிவம்.

**cu'neal, cu'neate**, *a.* ஆப்பு வடிவமுடைய.

**cuneat'ic**, *a.* ஆப்பு வடிவுடைய.

**cun'eiform**, *n.* ஹிட்டைட் (Hittite) பாபிலோனிய (Babylonian) அசீரிய (Assyrian) பாரசீக (Persian) மக்களின் ஆப்பு வடிவமுள்ள எழுத்துமூறை ; *a.* எழுத் துக்கள் வகையில் ஆப்பு வடிவமுள்ள.

**cunette'**, *n.* அகழியின் நடுவூடான நீர்வாரிக் கால்வாய்.

**cunn'er**, *n.* அமெரிக்க மீன்வகை.

**cunn'ing**, *n.* சூழ்ச்சி, தந்திரம் ; வஞ்சகம் ; திறமை ; கைத் திறம் ; அறிவு ; *a.* சூழ்ச்சித் திறமுடைய, தந்திரமுடைய ; இரண்டகமுடைய, வஞ்சகமான ; திறமையுடைய, கைத்திற மிக்க ; அறிவார்ந்த.

**cunn'ingness**, *n.* தந்திரமுள்ள தன்மை ; சூழ்ச்சிக் குணம், வஞ்சகக் குணம் ; சூதுள்ள தன்மை.

**cup**, *n.* குடிகலம், கிண்ணம், குவளை ; பரிசுக்கலம் ; குழிவு, பள்ளம் ; கிண்ணம் போன்ற அமைவு, குழிவுடைய பகுதி ; குவளை நிறை அளவு ; கிண்ண நீர்மம், குடிகலத்திலுள்ள பொருள் ; குடிகலவை ; ஊழின் பங்கு, வரற்பாலது ; இன்ப அளவு ; துன்ப அளவு ; *v.* கிண்ணம் போலக் குழிவாக்கு ; குவளையில் வை ; குழிவுறிஞ்சியினுல் குருதி உறிஞ்சவை ; குழிவாகு ; (தொ.) in his cups, மது மயக்கத்தில், குடி வெறியில் ; there's many a slip 'twixt the cup and the lip, எந்த நேரத்திலும் தவறுதல் ஏற்பட வழி உண்டு, கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமற் போகும்.

**cup'-and-ball**, *n.* குதைகுழிப் பொருத்து; பிணிப்புற்ற பந்தைக் கழியின் நுனியிலுள்ள குழிவில் பிடிக்கும் விளையாட்டுவகை.

**cup'-and-ring'**, *n.* பாறைகளில் கிண்ணவடிவைச்சுற்றி வளையங்களாக அமைந்த வரலாற்றுக்கு முற்பட்ட குறி.

**cup'bear'er**, *n.* விருந்தில் குடிகலம் பரிமாறுபவர்.

**cupb'oard**, *n.* அடுக்குப்பலகை, அடுக்களைத் தட்டுமுட்டுக்களை வைக்க உதவும் நிலையடுக்கு; *v.* சேமித்து வை; (தொ.) cry cupboard, உணவிற்காக அழு.

**cup'board-faith**, *n.* பொருளியல் நோக்குடைய சமயப்பற்று.

**cup'board-love**, *n.* பொருளியல் நோக்குடைய பற்று.

**cup'-cor'al**, *n.* கிண்ண வடிவமுள்ள பவளம்.

**cup'el**, *n.* மூசை, பொற்கொல்லர் மாற்றுப்பார்க்கப் பயன்படுத்தும் சிறுகலம்; புடைபெயர்க்கத் தக்கதாய்ப் புடமிடப் பயன்படுத்தப்படும் எறிகனல் அடுப்பு; *v.* எறிகனல் அடுப்பு மூலம் மாற்றுப்பார்.

**cupella'tion**, *n.* புடமிட்டு மாற்றுப்பார்ப்பதன் மூலமே உயர் உலோகங்களை மீட்டுப்பெறுதல்.

**cup'ful**, *n.* கிண்ண நிறையளவு; *pl.* cup'fuls.

**cup'-gall**, *n.* மரவகையின் இலைகளில் கிண்ண வடிவமுள்ள புடைப்புக் கோளாறு.

**cup'head**, *n.* பாதி உருண்டை வடிவமுள்ள தாழின் சுரைத் தலை; குமிழ் வடிவ ஆணித்தலை.

**Cup'id**, *n.* மேலையுலகின் வேள்மதன், ரோமரின் காதல் தெய்வம்; (தொ.) Cupid's bow, மேலுதட்டின் விளிம்பு.

**cupid'inous**, *a.* சின்றின்ப அவா நிரம்பிய.

**cupid'ity**, *n.* ஆதாய ஆர்வம், பொருட் பேரவா, பிறர் பொருள் கவரும் ஆசை.

**cup-li'chen**, *n.* கிண்ணம் போன்ற அமைப்புடைய காளான் வகை.

**cup'man**, *n.* மனத்திற்குகந்த தோழன்.

**cup'-mark**, *n.* வரலாற்றுக்கு முற்பட்ட காலத்துக்குரிய கிண்ண வடிவான குகைப்பாறைப் பள்ள அடையாளம்.

**cup'-moss**, *n.* = cup-lichen.

**cup'ola**, *n.* தூபி மாடம், வில்மச்சு மண்டபம்; குவி மாடத்தின் உட்பகுதி; குவி மாடம்; தூங்கானை மாடவிளக்கு; துப்பாக்கி வைக்கும் பாதுகாப்பு மாடம்; இரும்பு வார்ப்படத் தொழிற் சாலை அடுப்பு; *v.* வளைமாடம் அமை, காப்புமாடம் நிறுவு.

**cupp'er**, *n.* விருந்தில் குடிகலம் பரிமாறும் பணியாள்; குழிவுறிஞ்சிமூலம் குருதி வாங்குபவர்.

**cupp'ing**, *n.* காற்று நீக்கப்பட்ட கண்ணுடிக்குமிழ் உதவியால் குருதி வாங்குதல்.

**cupp'ing-glass**, *n.* குருதி உறிஞ்சு கருவி, காற்று நீக்கப் பட்ட கண்ணுடிக் குமிழ்மூலம் குருதி உறிஞ்சும் அமைவு.

**cup'reous**, *a.* செம்புக்குரிய; செம்பு அடங்கிய; தாமிரம் போன்ற; ஓரிணைதிறத் தாமிரத்துக்குரிய; ஓரிணைதிறத் தாமிரம் அடங்கிய.

**cup'ric**, *a.* ஈரிணைதிறச் செம்பாலான; ஈரிணைதிறச் செம்பைச் சார்ந்த.

**cuprif'erous**, *a.* செம்பு விளைவிக்கின்ற, செம்பு தருகின்ற.

**cu'prite**, *n.* சிவந்த செம்பு கனி உலோகக்கலவை; செம்பியல் உயிரகை.

**cu'pro-nick'el**, *n.* செம்பும் நிக்கலும் சேர்ந்த கலவை.

**cup'-shake**, *n.* வெட்டு மரத்தில் இருவளையங்களினிடையே காணப்படும் பிளவு.

**cup'-tie**, *n.* பரிசுக்கோப்பை ஆட்டம், பரிசுக்கோப்பைப் போட்டியில் வெற்றி பெறுபவர்களைத் தீர்மானிப்பதற்கான தொடர் ஆட்டங்களில் ஒன்று.

**cu'pular, cu'pulate**, *a.* கிண்ணம் போன்ற; கிண்ண வடிவக் காய் வகைகளின் உறை சார்ந்த; தனிச் செடியாக வளரும் சிறு இலைமொட்டைச் சார்ந்த.

**cup'ule**, *n.* (தாவ., வில.) கிண்ண வடிவ உறுப்பு; கல்லீரல் நோய்களுக்குப் பயன்படுத்தப்படும் செடிவகையின் இலையில் உள்ள தனிச் செடியாக வளரத்தக்க கிண்ண வடிவ மொட்டு; காய் வகைகளின் கிண்ணம் போன்ற மேலுறை.

**cupulif'erous**, *a.* கிண்ணவடிவ மேலுறையையுடைய கனிகளேந்திய மர இனப்பிரிவு சார்ந்த.

**cur**, *n.* கீழின நாய்; வெறுக்கத் தகுந்த கயவன், இழிஞன்; போக்கிரி.

**cur'acao, cur'acoa**, *n.* கசப்பு ஆரஞ்சுத் தோலினுல் மண மூட்டப்பட்ட தேறல்.

**cur'acy**, *n.* சிற்றூர்த் துணைமைநிலைச் சமயகுரு நிலை; துணைநிலைச் சமயகுருவின் வேலை; துணைநிலைச் சமயகுருவின் மானியம்.

**cura'ra, curar'e, curar'i**, *n.* அரளி போன்ற தென் அமெரிக்க செடியின் வேர் வகையிலிருந்து எடுக்கப்படும் ஊக்க அழிவு செய்யும் நஞ்சுவகை.

**cur'arine**, *n.* வேர்வகையிலிருந்து எடுத்து அறுவை மருத்துவத்தில் தசைகளுக்கு அயர்வு அகற்றப் பயன்படுத்தப்படும் கொடிய நச்சு மருந்து.

**cur'assow**, *n.* வான்கோழி இனப் பறவை.

**cur'ate**, *n.* ஆன்ம மருத்துவர், சிற்றூர்த் துணைநிலைச் சமயகுரு; அப்பம் வைக்கும் நிலைதாங்கி; (தொ.) curate's egg, ஒரொரு பகுதி மட்டிலும் சிறப்பாயுள்ள பொருள்.

**cur'ateship**, *n.* = curacy.

**cur'ative**, *a.* நோய் குணப்படுத்தும் இயல்புடைய; நிவாரணமான.

**curat'or**, *n.* பொறுப்பாளர், காப்பாளர், மேற்பார்வையாளர்; காட்சிச்சாலையின் காப்பாட்சியாளர்; பாதுகாவலராகச் சட்டப்படி நியமிக்கப்பட்டவர்; பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் முதலியோரைத் தேர்ந்தெடுக்கும் குழுவின் உறுப்பினர்; சொத்துப் பாதுகாப்புக்குழுவின் உறுப்பினர்.

**cur'atory**, *a.* = curative.

**curb**, *n.* கடிவாள வார்; கடிவாளச் சங்கிலி; அடுப்பில் சாம்பலைத் தடுத்து வைக்கும் முன்தட்டு; தள விளிம்பு வரிசைக்கல்; விளிம்புக் கட்டை, ஓரப்பலகை; நடைபாதைக் கடை; தடை, தடைகாப்பு; குதிரைக் கால்காய்ப்பு நோய்; கிணற்றுத் தோவளம்; மரம் அல்லது இரும்பாலான வட்ட அழி; *v.* தடு, தடுத்து நிறுத்து; கடிவாளமிடு; கடிவாளமிட்டு இயக்கு.

**curb'-roof**, *n.* இருபக்கச் சரிவுகளிலும் மேல்பகுதிச் சாய்வை விடக் கீழ்ப்பகுதிச் சாய்வு கீழ்நோக்கிச் செங்குத்தாகச் சரிந்திருக்கும்படி அமைக்கப்பட்ட மோடு.

**curb'stone**, *n.* விளிம்பு வரம்புக்கல், தள ஓரங்களைப் பாதுகாக்கும் செங்குத்தான கல்.

**curc'uma**, *n.* மஞ்சள்; மஞ்சள் செடி.

**curd**, *n.* தயிர்; பாலேட்டில் பாலடைக்கட்டிப்பகுதி; தயிரைப் போன்ற பொருள்; சவுக்காரத் தொழிலில் காரக் கரைசலில் மிதக்கும் மணிச்சக்கை; மீன்வகையின் தசைச்சுளைகளுக்கிடையிலுள்ள கொழுப்புப் பொருள்.

**cur'dle**, *v.* தயிராகு; உறை, கெட்டியாகு.

**curd'y**, *a.* தயிர் போன்ற; கெட்டியான; தயிர் நிறைந்த.

**cure** [1], *n.* குணமடைவு; பிணிநீக்கம், நலிவு நீக்கம்; நோய் நீக்க மருந்து; பிணி நீக்கும் பொருள்; பிணிநீக்கு முறை; பண்டுவம்; மருத்துவக் கவனிப்பு; நிவாரணம், தீங்கு தவிர்க்கு முறை; தணிக்குமுறை; ஆன்மநலக்காப்பு; பதன முறை; பதனம் செய்யப்பட்ட மொத்த அளவு; வன்கந்தக ஆக்கமுறை; *v.* குணப்படுத்து; நோய் நீக்கு; பண்டுவம் செய்; குணப்படுத்துமுறை மேற்கொள்; ஆன்மநலம் செய்; பதனப்படுத்து; கந்தகத்தை வன்கந்தகமாக்கி வலிவூட்டு.

*cure* [2], (பிர.) *n.* பிரஞ்சுநாட்டில் வட்டார மதகுரு.

**cure'-all**, *n.* சஞ்சீவி, குறுமருந்து, அனைத்துநோய்மருந்து, முப்பூ.

**cure'less**, *a.* குணமாக்க முடியாத, தீராத.
**cur'er**, *n.* குணமாக்குபவர், நோய் நீக்குநர், மருத்துவர்.
**curette'**, *n.* அறுவை மருத்துவரின் சுரண்டும் சிறுகருவி; *v.* இக்கருவியால் சுரண்டு.
**curf'ew**, *n.* இடைநிலைக் காலத்தில் நடைமுறையிலிருந்த மாலைநேர விளக்கணைப்புக் கட்டுப்பாடு; விளக்கணைப்புக் கட்டுப்பாட்டு நேரம்; பொது அறிவிப்பு மணி; மாலைநேர மணி; பொதுக்கட்டுப்பாட்டு முறை; ஊரடங்கு ஆணை.
**cur'ia**, *n.* ரோமரின் குலமரபுகள் மூன்றன் பத்துக் கிளைக் குலமரபுகளுள் ஒன்று; கிளைக்குலமரபின் தொழுகை இடம்; ரோமர் ஆட்சிமன்றக் கூடம்; பண்டை இத்தாலிய நகர ஆட்சிமன்றம்; மாகாண ஆட்சிமன்றம்; சட்ட முறை மன்றம்; நீதி மன்றம்; போப்பாண்டவரின் தனி ஆட்சி மன்றம்.
**cu'ria reg'is**, *n.* மன்னர் உயர் பேரவை; மன்னுரிமை உயர் முறைமன்றம்; பண்ணைநில முகவர் பேரவை.
**cur'ing-house**, *n.* பொருள்களைப் பதப்படுத்திப் பாதுகாக்கும் இடம்; மேலை இந்தியத் தீவுகளில் சர்க்கரையை வடித் தெடுக்கும் கட்டிடம்.
**cur'io**, *n.* விந்தைப்பொருள், அருங்கலைப்பொருள்; *pl.* cur'ios.
**curios'ity**, *n.* அறிய ஆர்வமுள்ள இயல்பு; பிறர் காரியங் களில் தலையிடுகிற குணம்; புதுமையான அல்லது அவாவைத் தூண்டுகிற பொருள்; அரும்பொருள்; வழக்கத்திற்கு மாறான பொருள்.
**cur'ious**, *a.* அறிய ஆர்வமுள்ள, அறிவார்வ மிக்க; கூரிய நுண்ணுணர்வுள்ள; பிறர் காரியங்களில் தலையிடுகிற; மிகு அக்கறையுள்ள; அரிய வேலைப்பாடுடைய, தனித்திறம் வாய்ந்த; அரிதான; நடை நயமற்ற; (தொ.) curious arts, மாய வித்தைகள்.
**curl**, *n.* சுருளுதல்; சுருள்வு; சுருண்ட நிலை; அலை வளைவு; சுழி, சுழல்; திருகு சுருள், சுரிகுழல்; சுரிமயிர்க்குழல், பனிச்சை; இலைகள் சுருள வைக்கும் செடிநோய் வகை; உருளைக்கிழங்குச்செடி நோய்வகை; *v.* சுரிமயிர்க் குழலாக்கு; திருக்கு; சுருட்டு; வளைந்துசெல்லச் செய்; அலையதிர்வுறுத்து; சுரி, சுருண்டு சுருங்கு; நெளி; அலையதிர்வுறு; சுழி, சுழல்; பனித்தளத்தில் கற் சறுக்காட்டமாடு.
**curl'er**, *n.* சுருட்டுபவர்; சுருட்டுவது; சுருளுவது; பனிப் பரப்பில் வழவழப்பான கற்களை நழுவவிடும் விளையாட்டில் ஈடுபடுபவர்.
**curl'ew**, *n.* அழுகுரலெழுப்பும் வளைமூக்குள்ள பறவை வகை.
**curl'icue**, *n.* வேடிக்கை விசித்திரமான சுருள்.
**curl'ing**, *n.* பனிக்கல் சறுக்காட்டம், ஸ்காத்லாந்தில் பனிப்பரப்பில் வழவழப்பான கற்களை நழுவவிடும் விளையாட்டு வகை.
**curl'ing-i'rons**, *n. pl.* தலைமுடியைச் சுருட்டையாக்கும் இருப்புக் கருவி.
**curl'ing-pins**, *n.* கொண்டை ஊசி, சுருளாக்கப்பட்ட முடி யைப் பாதுகாக்கும் ஊக்கு.
**curl'ing-pond**, *n.* பனிப்பரப்பில் வழவழப்பான கற்களை நழுவவிடும் விளையாட்டுக்குரிய நீர் நிலை.
**curl'ing-stone**, *n.* பனிப்பரப்பில் நழுவவிட்டு விளையாடுவ தற்கான கைப்பிடியுள்ள கனத்த கல்.
**curl'ing-tongs**, *n. pl.*=curling-irons.
**curl'-pa'per**, *n.* முடியைச் சுருட்டுவதற்காக முறுக்கி முடிக் குள் செலுத்தப்பட்ட தாள்.
**curl'y**, *a.* சுருளுள்ள, சுருள் சுருளான, சுருள் நிறைந்த.
**curl'y-greens'**, *n.* சுருண்ட இலைகளுள்ள கோசுக்கீரை வகை.
**curmudg'eon**, *n.* கஞ்சன், கருமி, உலோபி; பேராவற் காரன்; சிடுசிடுப்புடையவன்.
**curmurr'ing**, *n.* குமுறல்; வயிற்றிரைச்சல், வயிற்றுப் பொருமல்.
**curn'ey, curn'y**, *a.* சிறு துணுக்குகளாகவுள்ள; சிறுமணிக ளாகவுள்ள.
**cu'rrach, curr'agh**[1], *n.* பரிசல், ஓடம், சிறு படகு.
**cu'rragh**[2], *n.* தரிசான சதுப்பு நிலம்.
**cu'rrant**, *n.* விதையற்ற உலர்ந்த கருமுந்திரிப்பழம்.
**curr'ant-bread'**, *n.* உலர்ந்த முந்திரிப்பழம் உள்ளீடாய் அமைந்த அப்பம்.
**currant-bun'**, *n.* உலர்ந்த முந்திரிப்பழங்கள் நிரம்பச் சேர்க் கப்பட்ட மணமுள்ள கருநிற மெல்லப்ப வகை.
**curr'ant-cake'**, *n.* உலர் முந்திரிப்பழம் உள்ளீடாக வைக்கப் பட்ட மென் மாவடை.
**curr'ant-jell'y**, *n.* உலர்ந்த சிவப்பு அல்லது கறுப்பு முந்திரிப் பழப் பாகு.
**currant-loaf'**, *n.*=currant-bun.
**curr'anty**, *a.* முந்திரிப்பழங்கள் நிறைந்துள்ள.
**cu'rrency**, *n.* நடப்பு நாணயம், செலாவணி; செலாவணியி லுள்ள பணம், செலாவணியிலுள்ள தாள் நாணயம்; நடப்பு, நடைமுறைப் போக்கு, சுற்றோட்டம்; கருத்து நிலவரத்தி லிருத்தல்; சொல் வழக்காறுடைமை; செய்தி ஊடாட்ட நிலையிலிருத்தல்; (தொ.) currency note, தாள் நாணயம்.
**cu'rrent**, *n.* ஒழுக்கு; நடப்பு; போக்கு; நிலவரம்; நீரோட்டம்; காற்றுவீச்சு; மின்னோட்டம்; *a.* ஓடுகிற; வழக்காற்றி லுள்ள, நிகழ்கிற; நடப்பிலுள்ள, நடைமுறைக்குரிய; நிகழ் காலத்துக்குரிய, இன்றைய; நாளது; மக்களிடையே ஊடாடு கிற, உலவுகிற, பலராலும் ஏற்கப்படுகிற, ஏற்றமைந்ததான; (தொ.) current account, நடப்புக்கணக்கு, நடப்புச் செல வினங்களுக்கான பொருளக இருப்புக் கணக்கு; pass current, உண்மையென்று ஏற்றுக்கொள்ளப்படு.
**curr'ent-bedding**, *n.* (மண்.) பொய்ப்படுகை.
**cu'rricle**, *n.* இரு சக்கரங்களும் இரு குதிரைகளுமுள்ள திறந்த வண்டி, இரதம், தேர்.
**curric'ulum**, *n.* பல்கலைக்கழகப் பாடத்தொகுதி; பாடத் திட்டம்; *pl.* curric'ula.
**cu'rrier**, *n.* பதப்படுத்தப்பட்ட தோலை நிறமூட்டி ஒழுங்கு செய்பவர்.
**cur'rish**, *a.* இழிந்த நாய் போன்ற; வெடுவெடுப்பான, உறுமுகிற; அற்பகுணமுள்ள; இழிந்த உணர்ச்சியுள்ள.
**cu'rry**[1], (த.) *n.* கறி-குழம்பு-கூட்டுவகை, துணை உணவு; *v.* கறி கூட்டு, குழம்புப்பொடி கலந்து சுவையூட்டு; துணை உணவு ஆக்கு.
**cu'rry**[2], *v.* தோலைத் தேய்த்து வாரு; ஒழுங்கு செய்; குதிரை யைத் தேய்; அடி, பிராண்டு, கீறு; (தொ.) curry favour, தயவைப்பெறு, நல்லெண்ணத்தைப் பெறு.
**cu'rry-comb**, *n.* குதிரைச் சீப்பு, குதிரையைத் தேய்த்துத் துப்புரவாக்க உதவும் இரும்புக்கருவி.
**curr'y-leaf**, *n.* கருவேப்பிலை.
**cu'rry-paste, cu'rry-pow'der**, *n.* கறிகளுக்கு இடும் கூட்டு அரைப்பு.
**curse**, *n.* தெறுமொழி, வசைமொழி; பழிப்பாணை, சாபம்; சாப விளைவு; வெம்பழி, தீம்பு; வேதனை, படுதுயர்; சமூக விலக்கீடு, சமுதாயக் கட்டு; பழிக்கப்பட்ட பொருள்; தெய் வப் பழிப்பு; *v.* தெறுமொழி கூறு; பழிப்புக்கு ஆட்படும்படி வேண்டுதல் செய்; மீளாப்பழிக்கு உரிமைப்படுத்து; கட்டுச் செய், விலக்கீடு செய்; தெய்வம் பழி; பழிப்பின் வேதனைக் குட்படுத்து; (தொ.) curse of Scotland, சீட்டாட்டத்தில் மணி வடிவம் பொறித்த ஒன்பதாம் எண்ணுள்ள சீட்டு.
**curs'ed**[1], *v.* curse என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.
**curs'ed**[2], *a.* பழிப்புரைக்கு ஆட்பட்ட; தெறுமொழியால் அழிக்கப்பட்ட; பழிப்புக்குரிய; வெறுக்கத்தக்க.
**cur'sive**, *a.* கையெழுத்து வகையில் எளிதாக ஓடும் போக் குடைய, நேரொழுக்கான; ஒழுகலான.

**curs'or,** *n.* கருவியின் சறுக்குறுப்பு ; கணிப்பளவுகோலின் கணிப்புக் கூருக நுண்ணிழை வரையிட்ட பளிங்கியலான சறுக்குச் சட்டம்.

**curso'res,** *n. pl.* ஓடும் பறவைகள்.

**cursor'ial,** *a.* ஓடுவதற்கு ஏற்றதாக அமைக்கப்பட்ட ; ஓடும் செயலுக்கேற்ற உறுப்புள்ள.

**curs'ory,** *a.* மேலோட்டமான ; மிகு விரைந்தியன்ற ; நன்கு ஆராயாத ; ஆழமில்லாத, மேலீடான.

**curt,** *a.* சுருக்கமான ; குறுகலான ; சுருக்கென்ற, மட்டுமதிப் பற்ற முறையில் வெடுக்கென்ற.

**curtail',** *v.* வெட்டிக்குறை, குறுகலாக்கு, சுருக்கு ; உரிமை இழக்கச்செய்.

**curt'ail-step,** *n.* விளிம்புகள் வட்டமாக வளைவாக்கப்பட்ட ஏணிப்படிக்கட்டின் கடைசிக் கீழ்ப்படி.

**curt'ain,** *n.* திரை, திரைச்சீலை ; துணியாலான மறைப்பு ; பலகணித் திரை ; படுக்கையைச் சுற்றித் தொங்கும் மூடு திரை ; ஞாயில்களின் இடைமதில் ; மேற்கூரையற்ற இடைச் சுவர் ; நாடக மறைப்புத்திரை ; தீப்பாதுக்காப்புக்கான நாடக இரும்புத்தட்டி ; திரை விழ்ச்சி ; காட்சிமுடிவு ; அனல் கக்கும் பீரங்கிகளாலான தடைகாப்பு வேலி ; *v.* திரை மறைப்பு அமை ; திரையால் மூடு ; திரையிட்டுத் தடு ; (தொ.) bamboo curtain, காட்சியாளர்க்கும் தகவல் நாடுவோர்க்கும் நுழைந்து தொடர்புகொள்ள முடியாது தடுக்கும் சீன அல்லது ஆசியத் தடைமுறைத் திட்டம் ; behind the curtain, பொதுமக்கள் பார்வைக்கு அப்பாற்பட்ட ; draw the curtain, திரை நீக்கு ; திரை இடு ; iron curtain, இரும்புத்திரை, காட்சியாளர்களுக்கும் தகவல் நாடுவோர்க்கும் நுழைந்து தொடர்புகொள்ள முடியாது தடுக்கும் ருசிய நாட்டுத் தடை முறைத்திட்டம்.

**cur'tain-call',** *n.* காட்சி முடிவில் மேடையில் தோன்றும்படி அவையோரின் அழைப்பு.

**cur'tain-lec'ture,** *n.* தலையணைமந்திரம், பள்ளியறையில் கணவனிடம் மனைவியின் பேச்சு, மனைவியின் படுக்கையறை இடித்துரை.

**curt'ain-raiser,** *n.* முக்கிய நாடக ஆட்டத்திற்குமுன் நிகழ்த் தப்படும் சிறு நாடகம்.

**cur'tain-speech,** *n.* நடிகரோ நாடக நூலாசிரியரோ மேலாளரோ திரைக்குமுன் வந்து நின்று நிகழ்த்தும் உரை.

**cur'tain-wall,** *n.* இடநிரப்புச்சுவர்.

**curta'na,** *n.* முடிசூட்டு விழாவில் கருணைப்பண்பின் அறிகுறி யாகக் கொண்டு செல்லப்படும் முனையற்ற வாள்.

**curt'ate,** *a.* குறுக்கப்பட்ட ; குறைக்கப்பட்ட ; நிலவுலகம் அல்லது கதிரவனிடமிருந்து கோளுக்குள்ள தொலைவு வகையில் கோளெறிமீது படிவான.

**curt'ilage,** *n.* மனையளாவிய வெளிநிலம்.

**curt'sey, curt'sy,** *n.* வணக்கம், முழங்காலை வளைத்து பெண்கள் செய்யும் வணக்கம் ; *v.* முழங்காலைத் தாழ்த்தி வணக்கம் செய்.

**cur'ule,** *a.* வளைகாலுள்ள முக்காலி போன்ற ; ரோம உயர்நீதி நடுவரின் வளைநாற்காலி இருக்கைக்குரிய.

**cur'vate, cur'vated,** *a.* ஒழுங்காக வளைந்துள்ள, ஒழுங்காக வளைவாக்கப்பட்ட.

**curv'ature,** *n.* வளைவு ; தொய்வு ; நேர்க்கோட்டிலிருந்து கோடிய கோட்டம் ; தொய்வின் நேர்நிலை திறம்பிய அளவு ; வட்டத்தின் ஆர எதிர் கூற்றளவு.

**curve,** *n.* வளைவு ; வளைகோடு ; வளைபொருள் ; வளைவடிவம் ; வளைபரப்பு ; (க-க.) வளைமுகடு ; மாறுபாடு அல்லது இயக்கப் போக்குக் காட்டும் அளவு கட்டச் சாய்வரை ; சமநிலைக் குறிக் கோடு ; *v.* வளைவாக்கு ; வளைவாகு ; வளைந்து செல் ; வளை.

**curved,** *a.* வளைந்த.

**curve'some,** *a.* வடிவழகுடைய ; வளைவுகளையுடைய.

**curvet',** *n.* குதிரையின் மென் பாய்ச்சல், முன்கால்கள் முதலிலும் அவை நிலம் பாவுமுன் பின் கால்களும் ஒருங்கு தாவும் இயக்கம் ; துள்ளிக் குதித்தல், குதியாட்டம் ; *v.* துள்ளிப் பாய் ; குதித்து மகிழ்.

**curvicau'date,** *a.* கோணலான வாலுள்ள, வளைந்த வாலுடைய.

**curvicos'tate,** *a.* வளைந்த விலா எலும்புகளுள்ள.

**curviden'tate,** *a.* வளை பல்லுள்ள.

**curvifo'liate,** *a.* வளைந்த இலைகளையுடைய.

**cur'viform,** *a.* வளை வடிவுள்ள.

**curvilin'eal, curvilin'ear,** *a.* வளை கோடுகளை வரம்புகளாகக் கொண்ட ; கோணல் வரைகளைக் கொண்ட.

**curviner'vate,** *a.* இலைகளில் கிளைநரம்புகள் நடு நரம்பிலிருந்து பிரிவுற்று ஓரத்தை நோக்கிக் குவிந்து செல்கிற.

**curviros'tral,** *a.* கீழ்நோக்கி வளைந்த அலகுள்ள.

**cur'vital,** *a.* வளைவு சார்ந்த.

**cur'vity,** *n.* வளைவுநிலை.

**cus'cus** [1], *n.* கசகசா, ஆப்பிரிக்கத் தினைவகையின் கூலமணி.

**cus'-cus** [2], *n.* (வில.) மலேயாத் தீவக்கூட்டத்திலுள்ள (Malay Archipelago) பையில் குட்டிகளைக் கொண்டு செல்லும் சிறு விலங்கின வகை.

**cus'cus** [3], *n.* வெட்டி வேர்.

**cu'sec,** *n.* நொடிக்கு ஒரு கன அடி வீதம் ஓடும் நீரளவு அலகு.

**cush'at,** *n.* மாடப்புறு வகை.

**cu'shion,** *n.* மெத்தை ; திண்டு ; தலையணை ; பஞ்சு திணித்த இருக்கை ; வில் வைத்த இருக்கை ; பஞ்சடை கைத்திண்டு ; திண்டுறை ; துள்ளல் பஞ்சுறை ; செதுக்குவேலை அடித் திண்டு ; மின்பொறியின் தொய்வகக் காப்பு ; பெண்டிர் மயிர் ஒப்பனை வட்டு ; பெண்டிர் பாவாடை புடைக்கட்டு ; மேடைக் கோற்பந்தாட்ட மேசை உள்வரிக் கட்டு ; வளைவு மையக் கட்டு ; நீராவிப் பொறியில் உந்துகோலுக்கு அணையுறையாக விடப்படும் நீராவி எச்சம் ; அடிதாங்கும் தடையுறை ; பன்றி முதலிய விலங்குகளின் பிட்டப்பக்கச் சதைப்பற்று ; குதிரைக் கால்குளம்புச் சதை ; மென்பஞ்சு போன்ற தின்பண்ட வகை ; மிதிவண்டிச் சக்கரத்தின் புறவுறை ; *v.* பஞ்சுறை இணை ; மெத்தைமீது அமர்த்து ; திண்டுறைமீது வை ; மெல்லணையாய் உதவு ; மோதல் தடுத்துதவு.

**cush'ioned,** *a.* மெத்தையுடன் கூடிய ; பஞ்சு திணிக்கப்பட்ட ; மெல்லணை வாய்ந்த ; தடையுறை குழாய்ப் பட்டை உள்ள.

**cush'ionet,** *n.* சிறு மெத்தை ; சிறிய திண்டு.

**cush'ion-plant,** *n.* நீர் ஆவியாகப் போவதைக் குறைக்கும் முறையில் மெத்தை போன்ற வடிவமைப்புடைய செடிவகை.

**cush'ion-tire, cush'ion-tyre,** *n.* மிதிவண்டிச் சக்கரங்களுக்குரிய தொய்வகம் திணிக்கப்பட்ட தொய்வகக் குழாய்.

**cush'iony,** *a.* மெத்தை போன்ற ; திண்டு போன்ற ; மெத்தென்ற.

**cusp,** *n.* முனை ; முகடு ; முளை ; பிறைக் கதுப்பு, இளந் திங்களின் கொம்பு ; பற்குவடு, பற்கிளை ; (க-க.) பல் போன்ற அணி அமைவு, வளை விடை முனை ; (கண.) முனைப்பட ஒன்றுபடும் இருவளைவு, சாய்முகடு ; இலைநுனி, இலைக் கதுப்பு.

**cus'pidal, cus'pidate, cus'pidated,** *a.* உறுதியான முளையோடு கூடிய ; முகட்டுக்குரிய ; கதுப்பு வடிவான ; கொம்பு போன்ற.

**cus'pidor,** *n.* எச்சிற் படிக்கம்.

**cuss,** *n.* பேர்வழி.

**cuss'ed,** *a.* பாழாய்ப்போன, பழித்துரைக்கப்பட்ட ; பிடிமுரண்டுடைய.

**cuss'edness,** *n.* தன்முரம்பு.

**cus'tard,** *n.* முட்டையும் பாலும் சேர்ந்த தின்பண்ட வகை; முட்டையும் பாலும் சேர்ந்த இன்குழம்பு வகை.

**cus'tard-apple,** *n.* சீத்தாப்பழம், மேலை இந்தியக் கனி வகை.

**cus'tode,** *n.*=custodian.

**custod'ial,** *a.* பாதுகாவலனைச் சார்ந்த; சிறைகாப்பைச் சார்ந்த.

**custod'ian, custod'ier, cus'tos,** *n.* காவலர், பாதுகாவலர்; பொதுக்கட்டிடப் பொறுப்பாளர்; பொதுநிலையப் பொறுப்பாளர்.

**cus'tody,** *n.* முதுகணுண்மை, பாதுகாப்புப் பொறுப்பு; சிறைகாப்பு, சிறைகாவல்; பாதுகாப்பு, கவனிப்பு.

**cus'tom,** *n.* வழக்கம்; சட்ட மதிப்புடைய வழக்கம்; வாடிக்கை; மரபு, செயல் வழக்காறு, அடிப்பட்ட வழக்காறு; பொருள்மீதுள்ள வரி, சுங்க வரி, தீர்வை.

**cus'tomable,** *a.* வழக்கமான, மரபு வழக்கான; பொதுவரி விதிக்கத்தக்க.

**cus'tomary,** *n.* பண்ணை வழக்கங்களின் தொகுதி; பண்ணை வழக்கங்களின் தொகுதி ஏடு; சமய சமூகத்தினரின் சடங்குப் புத்தகம்; *a.* மரபு வழக்கான, வழக்கமான; பழக்கமான, இயல்பான, வழக்கமாகக் கொண்டுள்ள; நிலவுரிமை மரபுப் பத்திரமுள்ள.

**cus'tomed,** *a.* பழக்கப்பட்ட; வழக்கமான, இயல்பான.

**cus'tomer,** *n.* வாடிக்கைக்காரர்; வாங்குபவர்.

**cus'tom-house,** *n.* சுங்கச் சாவடி, ஏற்றுமதி - இறக்குமதி வரி நிலையம், தீர்வை வரி பிரிக்குமிடம்.

**cus'toms,** *n. pl.* ஏற்றுமதி-இறக்குமதி வரி; தீர்வை பிரிக்கும் அலுவல் துறையினர்; (தொ.) customs union, சுங்க வரி நோக்கங்களுக்காக மட்டும் ஒன்று சேர்க்கப்பட்ட பல நாடுகளின் இணைப்பு; the Customs, சுங்கவரி விதிக்கும் பொதுப் பணித்துறைப் பிரிவு.

**cus'tos,** (ல.) *n.* பாதுகாப்பாளர், காப்பாளர்; (தொ.) *custos rotulorum*, பெயர்ப்பட்டியல்களின் காப்பாளர், மாவட்டத்தலைமை அமைதி நடுவர்.

**cut,** *n.* தறிப்பு, வெட்டு, கத்தரிப்பு; பிளவு, பிரிவு; அடி, வீச்சு, அறை; கத்திக்குத்து; வாள் எறிவு; சாட்டையடி; ஊறுபாடு, வெட்டுக்காயம்; துணிப்பு, துண்டிப்பு; துண்டு; வெட்டப்பட்ட துண்டுகளின் தொகுதி; வெட்டும்பாணி; உருமாதிரி, தினுசு, வகைத்தரம்; விளையாட்டுக்களில் வீச்சடி, சாய்வெறிவு; சுழற்றடி; அடியினால் ஏற்படும் பந்தின் சுழற்சி; மரப்பந்தாட்டத்தில் பக்க வெட்டடி; கழிப்பு, குறைப்பு; பகுதிநீக்கம், அகற்றுகை; பாதைக்கான அகழ்வு, இருப்புப்பாதைக்கான வெட்டுப்பள்ளம்; நாடக அரங்கில் காட்சித்தட்டிகளை இயக்குவதற்குரிய நில இடுக்குப்பள்ளம்; குறுக்குப்பாதை; கடுஞ்செயல், கொடுமை; முகமுறிப்பு; துணி நீள அளவு வகை; இழை நீள அளவு வகை; செதுக்குச் சித்திரப்பாளம்; செதுக்குப் பாளத்திலிருந்து உருவாக்கப்பட்ட படம்; *v.* வெட்டு, தறி, கத்தரி, அறு; புத்தக ஓரந்தறி; அறுபடு; துளை; ஊடுருவிச்செல்; பிளவுசெய், பகு, பிரிவினை செய்; துண்டுபடுத்து; அரி, அறுவடைசெய்; வெட்டி உருவாக்கு; செதுக்கு, குடை, அகழ்; குறுக்கிட்டுச் செல், குறுக்காக ஊடுருவு; சீட்டுக் கட்டினை வெட்டி எடு; வெட்டிய சீட்டினை எடுத்துக்காட்டு; பந்து விளையாட்டில் வீசியடி, சாய்த்தடி, சுழற்றியடி; நடனத்தில் கால்களை வேகமாகச் சுழற்றியாடு; சாய்வாகச் செல்; பாய், விரைந்துசெல்; ஊறுபடுத்து, காயப்படுத்து; குறை, வெட்டிக் குறுக்கு; சுருக்கு; பட எடுப்பை நிறுத்து; முகமுறிப்புச்செய், வேண்டுமென்றே வணக்கம் காட்டாது செல்; உளந்தொடு, உணர்ச்சியைத் தூண்டு; கைவிடு, ஒழி, துற, நீக்கு; விலகியிரு; விதையடி; கரண முதலியவற்றினைச் செய்து காட்டு; (தொ.) a cut above, தனி முறையில் மேம்பாடுடைய பொருள்; cut a dash, cut a figure, பகட்டாகத் தோற்றம் கொள்; cut and come again, தடையின்றி வேண்டுமளவு எடுத்துக்கொள்ளத்தக்க பெருவளம் உறு; cut and cover, பள்ள நெறி வெட்டிக் கவித்து மூடிச் சுரங்கமாக்கும் முறை செய்; cut and dried, cut and dry, முன்னேற்பாடாகச் செய்யப்பட்டுள்ள, முன்னமேயே அமைக்கப்பட்ட, நிலைப்படுத்தப்பட்ட; cut and run, விரைவாக ஓடிவிடு; cut back, செடி கொடிகளைத் தண்டினை ஒட்டிக் கத்தரி; முன்காட்சிக்குத் திரும்பிச் செல்; cut dead, கண்டு கொள்ள மறு, அடையாளம் அறியாதது போலிருந்துவிடு; cut down, தூக்கிலிடப்பட்ட பிறகு கயிற்றை வெட்டிக் கீழே இறக்கு; வெட்டி வீழ்த்து; வெட்டிக்குறை, சுருக்கு; cut in, இடையிட்டுப் பேசு; குறுக்கிடு, தடைசெய்; நடனக் கூட்டாளியைக் கவர்ந்துகொள்; தொலைபேசியின்மூலமாக மறை ஒற்றுக்கேள்; வண்டிப்போக்குவரத்து வரிசை முறையினின்று விலகி முன்வண்டி தாண்டிச் சென்று முன்னின்று தடு; குறுக்குச் சீட்டைக் கைப்பற்றி ஆட்டத்தில் இடம் பெறு; cut it fine, மட்டுமீறிய கணிப்பால் தன்னை இடர் நேர்வுக்கு உள்ளாக்கிக்கொள்; cut it out, முடிவு செய்துவிடு, விட்டுவிடு; cut it too fat, அளவு மீறிச்செய்; cut off, பிரித்துவிடு, துண்டி, வேருக்கு; அழி, முடிவுக்கு ஆளாக்கு; காலமின்றி இறக்கும்படி செய்; தலையிட்டுத் தடு; நுழைவு தடைசெய்; மரபுரிமை இழக்கச்செய்; cut off with a shilling, பெயருக்கு ஒரு வெள்ளி கொடுத்து மரபுரிமைச் செல்வம் இழக்கச்செய்; cut one's coat according to one's cloth, வரவுக்கேற்ற செலவு செய்; காலத்துக்கேற்ற கோலம் மேற்கொள்ளு, காலத்திற்கேற்றவாறு நட, சூழ்நிலையோடு ஒட்ட ஒழுகு; cut one's losses, பயனற்ற காரியத்தை ஒழித்துவிடு; cut one's stick, புறப்பட்டுச்சென்றுவிடு, விட்டுச்செல்; cut out, வெட்டி அகற்று; செயல் நிறுத்து; கையாளுவதை ஒரு முடிவுக்குக் கொண்டுவா; உருவாக்கு, முனைந்து செய்து முடி; உரிமை தள்ளுபடி செய்; விஞ்சு; வஞ்சனையால் மற்றொருவர் இடம் கைக்கொள்ளு; மந்தையிலிருந்து தனிப்படுத்து; கூட்டிலிருந்து பிரித்து வேருக்கு; கரை அணுகு முன் தடுத்து எதிரிக் கப்பலைக் கைப்பற்று; முன்செல்வதற்காக வரிசை முறையை மீறிப் போக்குவரத்து வண்டிகளின் ஒழுங்கினின்று விலகு; cut out for, இயல்பாகப் பொருந்திய, ஒன்றற்கென்று அமைந்த; cut short, சுருக்கு, வெட்டிச் சிறிதாக்கு; குறுக்கிட்டு வாயடைக்கச் செய்; cut the teeth, பல்முளைக்கப்பெறு; cut up, குறுக அரி, துண்டுதுண்டாக்கு; கடுமையாகக் குற்றங்காண்; பகுதிகளாகப் பிரிப்பதால் நன்மை தீமை பட்டாங்கமாகப் பெறு; ஆழ்ந்த துயருட்படுத்து; cut up rough, தவருகப் புரிந்துகொள்; near cut, short cut, குறுக்கு வழி, சுருக்கு வழி.

**cutan'eous,** *a.* தோலைச் சார்ந்த, மெய்த்தோலைச் சார்ந்த.

**cut'-away,** *n.* முன்புறத்தில் வளைவாக வெட்டப்பட்ட மேல் சட்டை.

**cut'back,** *n.* நாடகத்தில் முன்நிகழ்ச்சிகளுக்குத் திரும்பிச் செல்லல்.

**cutch'a,** *a.* பக்குவமுருத, செயல் முதிராத; செங்கல் வகையில் உலர்ந்த களிமண்ணுலான.

**cutche'rry, cutch'ery,** *n.* குற்றநடுவரின் முறைமன்றம்; கொலுவிலிருக்கை; பொதுநிலையம்; பண்ணை முதல்வர் மன்றம்.

**cute,** *a.* கூரறிவுடைய, அறிவுத் திறமிக்க; கவர்ச்சி வாய்ந்த.

**cut'ey,** *n.*=cutie.

**cut'-glass,** *n.* சக்கிமுக்கிக் கல்லை அரைத்து உருவாக்கப்பட்ட கண்ணடிக் கலம்.

**cut'icle,** *n.* தோலின் மேலீடான புறத்தோல், மென்தோல்; (தாவ.) புறத்தொலி; வளிபுகா உறை, செடிகளின் மேல் தோலடுத்த மெழுகு அல்லது நெட்டி போன்ற பகுதி.

**cut'ie,** *n.* சுறுசுறுப்பான இளம் பெண்.

**cut'is,** *n.* தோலின் மேலீடான பகுதி கடந்த அகத்தோல், மெய்த்தோல்.

**cut'lass,** *n.* கடலோடிகள் பயன்படுத்தும் அகல் அலகுடைய வளைந்த குறுவாள்.

**cut'-leaved,** *a.* ஆழ்பிளவுற்ற இலைகளையுடைய.

**cut'ler**, *n.* கத்தி முதலிய இருப்புக் கலன்கள் செய்பவர்; இருப்புக் கருவி விற்பனையாளர்.

**cut'lery**, *n.* வெட்டுக் கருவிகளின் தொகுதி; இருப்புக்கருவித் தொழில்; இருப்புக் கருவி வாணிகம்.

**cut'let**, *n.* ஆட்டு விலா இறைச்சிக் கறி; கன்றுக்குட்டி விலா இறைச்சிக்கறி; விலா இறைச்சிக்கறி போன்ற பிற கறி.

**cut'-off**, *n.* வெட்டிக் குறுக்குவது; பாதை வளைவுகளில் குறுக்காக வெட்டிச் செல்லும் நேர்வழி; ஆற்றின் திருப்பத்துக்குக் குறுக்கே வெட்டப்பட்ட குறுக்குக்கால்வாய்; குறுக்கு நேர்நெறியால் அறுத்துச் செல்லப்படும் வளைவு; நீர்-நீராவி-ஒளி-மின்ஆற்றல் ஆகியவற்றின் தடைப்பொறி அமைவு; சுழல்துப்பாக்கி அடுத்தடுத்துச் சுடாதபடி தோட்டாவை நிறுத்திவிடுவதற்கான பொறியமைப்பு.

**cut'purse**, *n.* திருடன், முடிச்சுமாறி, அரைக்கச்சையிலுள்ள பணப்பையைக் கத்தரித்துக் களவாடுபவன்.

**cutt'er**, *n.* வெட்டுபவர்; வெட்டுவது, வெட்டுக்கருவி; துணி அளந்து வெட்டும் தையற்காரர்; போர்க்கப்பலைச் சேர்ந்த படகு; ஒற்றைப் பாய்மரக் கப்பல்வகை; ஆழ நீர்கலம்; வெட்டப்படக்கூடிய உயர்செங்கல் வகை; முன்வாய் வெட்டுப்பல்.

**cut'throat**, *n.* கொலைகாரன்; போக்கிரி, முரடன், கொடியவன்; சீட்டாட்டத்தில் மூன்றுபேர் தத்தமக்கெனத் தனிப்பட ஆடும் சீட்டாட்டவகை; திறந்த அம்பட்டக்கத்தி; *a.* கொலைகாரத்தனமான; பாழ்படுத்துகிற.

**cutt'ing**, *n.* பிரித்தல்; வெட்டுதல்; கூர்ங்கருவியால் செதுக்குதல்; செதுக்கிய துண்டு; வெட்டுவாய்; பிளவு; பத்திரிகைத் துண்டு; பதியம், வேரோரிடத்தில் பதியம் வைத்து வளர்ப்பதற்காக வெட்டப்பட்ட செடியின் கிளை; சாலை அல்லது இருப்புப் பாதைக்காக வெட்டப்பட்ட அகழ்வு.

**cut'tle**, *n.* கணவாய் மீன், துரத்தப்பட்டால் கறுப்பு நீர்மத்தை வெளிப்படுத்தும் சிப்பிமீன் வகை.

**cutt'le-bone**, *n.* பற்பொடி செய்தற்கும் உலோகங்களுக்கு மெருகிடுதற்கும் பயன்படும் கணவாய் மீனின் உள்தோடு.

**cutt'y**, *n.* புகைபிடிக்கும் சிறு களிமண் குழல்; தடித்த குள்ளமான சிறுமி; குறும்புக்காரி, துடுக்கான பெண்.

**cutt'y-stool**, *n.* ஸ்காத்லாந்து திருக்கோயில்களில் ஒழுக்கங் கெட்ட பெண்கள் ஊரார் கண்டனத்துக்காக அமர்த்துவிக்கப்படும் இருக்கை.

**cut'water**, *n.* தண்ணீரைக் கிழித்துச் செல்லும் கப்பலின் முன்புற முகப்பு; பாலத்தின் அலைதாங்கி முன்விளிம்பு.

**cut'worm**, *n.* நிலத்தள அருகிலேயே செடிகளின் தண்டுகளை அறுக்கும் அந்துப்பூச்சி இனத்தின் முட்டைப்புழுவகை.

**cyan'ic**, *a.* நீல நிறமான; (வேதி.) கரிய வெடியச் சேர்ம வகைக்குரிய; (தொ.) cyanic acid, (வேதி.) கரிய வெடியச் சேர்மவகையின் காடி, சயனிகக்காடி.

**cy'anide**, *n.* (வேதி.) கரிய வெடியச் சேர்ம வகையுடன் உலோகம் சேர்ந்த நேர்சேர்மம்; *v.* கரிய வெடியச் சேர்ம வகையுடன் உலோகம் சேர்ந்த நேர் சேர்மத்தால் செயற்படுத்து.

**cyan'ogen**, *n.* (வேதி.) கரியமும் வெடியமும் கொண்ட சேர்மான வகை.

**cyanom'eter**, *n.* வானத்தின் அல்லது கடலின் நீல நிறத்தை அளந்து மதிப்பிடுவதற்கான கருவி.

**cyanos'is**, *n.* (மரு.) உயிரகம் சரிவர ஊட்டப்பெறுத குருதி சுழல்வதனுல் தோல் நீல நிறமாகக் காணப்படும் நோய்வகை.

**cyan'otype**, *n.* நீல அச்சுப்படிமம், நீலத்தில் வெண் கோடாக உருவப் படிவுறும் நிழற்படமுறை அச்சு.

**cy'cad**, *n.* (தாவ.) பனைபோன்ற செடிவகை.

**cyc'lamen**, *n.* (தாவ.) தொடக்கத்திலேயே தோன்றும் மலர்களுக்காகவென்று பயிரிடப்படும் செடிவகை.

**cy'cle**, *n.* ஊழி, காலவட்டம்; திரும்பத் திரும்ப வரவல்ல பெருங்காலப் பிரிவு; முழுநிலை மாறுதல் தொகுதி, மண்டலம், முழுநிலைத் தொடர் வரிசை; சுழற்சியாக வரும் நிகழ்ச்சி; வானெறிச் சுற்றுவட்டம்; பாடல் தொகை, ஒரு பொருள் பற்றிய பாடல் தொகுதி; இருசக்கர மிதிவண்டி; முச்சக்கர மிதிவண்டி; *v.* வட்டமாகச் சுழல்; மிதிவண்டி ஏறிச்செல்.

**cy'cle-car**, *n.* எளிய அமைப்புடைய சிறு உந்துவண்டி.

**cyc'lic, cyc'lical**, *a.* மீண்டும் மீண்டும் சுழன்று வருகிற, மண்டலிக்கிற; காலவரன்முறை வட்டத்துக்குரிய; செய்யுள் தொகைநிலைத் தொடருக்குரிய; (தாவ.) மலர்கள் வகையில் வரிசைச் சுற்றுகளான அமைவுள்ள உறுப்புக்களையுடைய, வளைய அமைப்புடைய; (வேதி.) வளையத்தொகுதிகளாக அமைந்துள்ள.

**cyc'list**, *n.* மிதிவண்டி ஏறிச்செல்பவர்.

**cy'clograph**, *n.* வட்டம்-வளைவுகள் வரைவதற்கான கருவி.

**cyc'loid**, *n.* வட்டப்புள்ளி நெறி வளைவு, வட்டத்தின் மீதோ எல்லையிலோ உள்ளோ உள்ள புள்ளிவட்டம் நேர்வரைமீது உருளும்போது செல்லும் நெறிவட்டம்; *a.* வட்டப்புள்ளி நெறிவளைவின் வடிவான; (வில.) ஒரு சீரான விளிம்புடைய செதிள்களைக் கொண்ட.

**cycloid'ian**, *n.* (வில.) ஒரு சீராக மடிந்த விளிம்புள்ள செதிள்களையுடைய மீன்வகை.

**cyclom'eter**, *n.* வட்டைகளை அளப்பதற்கான கருவி; மிதிவண்டி ஓடிய தொலைவைப் பதிவு செய்வதற்காக அதன் சக்கரத்துடன் இணைக்கப்பட்டுள்ள அமைவு.

**cyc'lone**, *n.* சுழல்காற்று, சூறை, புயல், குறையளவு காற்றழுத்தமிக்க இடத்தைச் சுற்றியெழும் சிறுதிறப் பரப்பின் வன்றிறற் சூறுவளி; சுழற்சியால் பொருள் பிரித்தெடுக்கும் அமைவு, சக்கரச்சுளகு.

**cyclopaed'ia**, *n.* பல்பொருட்களஞ்சியம்.

**Cyclope'an**, *a.* கிரேக்க புராணக் கதைக்குரிய ஒற்றை நெற்றிக் கண் அரக்கனுக்குரிய; ஒற்றை நெற்றிக்கண் அரக்கன் போன்ற; மிகப்பெரிய உருவுடைய; (க-க.) செப்பமுறாப் பெருங்கற்களைக் கொண்டு வரலாற்றுக்கு முற்பட்ட மிகப் பழங்காலத்தில் கட்டப்பட்ட கட்டிடப் பாணிக்குரிய.

**cyclopro'pane**, *n.* (வேதி.) பொதுநிலை நோவுத்தடை மயக்க மருந்தாகப் பயன்படும் நீர்க்கரிம வகை ($C_3H_6$).

**Cyc'lops**, *n.* ஒற்றை நெற்றிக்கண்ணுடைய அரக்கன்; ஒற்றைக் கண்ணுடையவர்; (வில.) முன்புறம் ஒரு கண்ணுடைய நுண்ணிய நன்னீர் நத்தையினம்.

**cyclora'ma**, *n.* சுற்றுவட்ட அடுக்கணிக்காட்சி, சுற்றணிக் காட்சித்தொகுதி; நாடக அரங்கிலும் திரைப்படத்திலுமுள்ள வளைவான காட்சித் திரைப்பின்னணி.

**cyc'lostyle**, *n.* கையெழுத்துக்குப் படிகள் எடுப்பதற்கான அமைவு; *v.* கையெழுத்துப் படியெடுக்கும் அமைவினுல் படிகள் எடு.

**cyc'lotron**, *n.* (இய.) அணுப்பிளப்பிலும் செயற்கைக் கதிரியக்க ஆக்கத்திலும் பயன்படுத்தப்படும் மின்காந்த விரைவூக்கக் கருவி.

**cyg'net**, *n.* அன்னப்பறவையின் குஞ்சு.

**cyl'inder**, *n.* வட்டுரு, நீள் உருளை, இருகோடிகளும் இடை வெட்டுப்பரப்புக்களும் வட்டமாகவோ ஒழுங்குடைய பிற வளைவாகவோ அமையும் நீள்தடி உரு; குழல்வடிவப் பொருள்; இயந்திர உருளை; அச்சியந்திர உருளை; நீராவி இயந்திரத்தின் உந்து தண்டு இயங்கும் குழல்வடிவ உருளை; தொல்பொருள் ஆய்வுத்துறையில் பாபிலோனிய (Babylonian) அசீரிய (Assyrian) கோயில்களில் காணப்படும் ஆப்புவடிவ எழுத்துக்கள் நிரம்பிய சுட்ட களிமண் உருளை; பண்டை அசீரிய மக்கள் பயன்படுத்திய கல்லுருளை முத்திரை.

**cyl'inder-block**, *n.* உள்வெப்பாலை உருளைகள் அடங்கி உள்ள உறை.

**cyl'inder-head**, *n.* உள்வெப்பாலை உருளையின் மேல்மூடிப் பகுதி.

**cyl'inder-seal'**, *n.* பண்டைய அசீரியர்கள் (Assyrians) களிமண்மீது பொறிக்கும் முத்திரையாகப் பயன்படுத்திய உருளை வடிவக்கல்.

**cylin'dric, cylin'drical**, *a.* வட்டுருவான, நீள் உருளை வடிவான.

**cylin'driform**, *a.* நீள் உருளை வடிவத்திலுள்ள.

**cylin'drite**, *n.* நீள் உருளைச்சார்புடைய தகரம்-ஈயம்-நீலாஞ்சனம்-கந்தகம் ஆகியவற்றின் கலவை.

**cyl'indroid**, *n.* நீள் உருளைபோன்ற உரு; *a.* வட்டுருப் போன்ற.

**cyl'ix**, *n.* இரண்டு கைப்பிடிகளை உடைய அகன்ற பருகு கிண்ணம்.

**cym'a**, *n.* (க-க.) பாம்பு வளைவுடைய முகட்டுச் சிற்ப உறுப்பு; (தொ.) cyma recta, உள்வளைவில் மேலே தொடங்கும் பாம்பு வளைவுடைய முகட்டுச் சிற்ப உறுப்பு ; cyma reversa, புறவளைவில் மேலே தொடங்கும் பாம்பு வளைவுடைய முகட்டுச் சிற்ப உறுப்பு.

**cymar'**, *n.* மகளிரது தளர்த்தியான எளிய உட்சட்டை ; மாவட்ட முதல்வரின் கையற்ற உட்சட்டை.

**cym'bal**, *n.* தாளம்.

**cym'balo, cym'balon**, *n.* தந்திகளுள்ள இசைக்கருவி வகை.

**cym'biform**, *a.* (உள்., தாவ.) படகு வடிவமுள்ள.

**cymbocephal'ic**, *a.* படகு வடிவமான மண்டையோட்டை உடைய.

**cyme**, *n.* இளந்தளிர் முளை ; (தாவ.) குவிவடிவ மலர்க் கொத்து, பூங்குலை.

**cy'mograph**, *n.* கட்டிட உறுப்புக்களின் புறவரை பதிவு செய்வதற்கான கருவி.

**Cym'ric**, *a.* வேல்ஸ் (Wales) நாட்டுக்குரிய.

**Cyn'ic**, *n.* கலை இன்பச் செல்வங்களைக் கண்டித்து வெறுத் தொதுக்கும்படி போதித்த ஆதென்ஸ் (Athens) என்ற கிரேக்க நகரத்தில் வாழ்ந்த ஆன்டிஸ்தெனிஸ் (Antisthenes, பிறப்பு 444 கி. மு.) என்பார் நிறுவிய கோட்பாட்டுக் குழுவினர்.

**cyn'ic**, *n.* எரிந்து விழுபவர்; இன்பம்வெறுப்பவர், வெறுப்பு வேதாந்தி ; ஓயாது குற்றங்காண்பவர் ; *a.* நாய் போன்ற, சீறிவிழுகிற, சிடுசிடுப்புடைய ; நன்மையை நம்பி ஏற்க மறுக்கிற.

**cyn'ical**, *a.* நாய்க்குணம் படைத்த, எரிந்து விழுகிற; குற்றம் நாடுகிற ; நன்மையை விரும்பி ஏற்காத, நன்மையில் நம்பிக்கையற்ற.

**cyn'icism**, *n.* நலத்தின்கண் நாரின்மை ; மனிதப்பண்பு வெறுப்பு ; அழுகை வேதாந்தம், வெறுப்பு மனப்பான்மை.

**Cynoceph'alus**, *n.* நாய்த்தலையுடைய புராணக்கதை மனிதன் ; (வில.) நாய் முகமுள்ள பெரிய குரங்கு வகை.

**cynophob'ia**, *n.* நாயினிடத்து அச்சம்.

**cyn'osure**, *n.* வடமீன் ; வடமீன் உள்ளிட்ட விண்மீன்குழு ; வழிகாட்டும் வான்பொருள் ; கவர்ச்சிக்குரிய மையப்பொருள்; வியப்பினிய நடுவிடம்.

**Cypera'ceae**, *n.* (தாவ.) தாள்புல் உள்ளிட்ட வெப்ப மண்டலக் கோரைப்புல் பேரினம்.

**cypera'ceous**, *a.* (தாவ.) கோரைப்புல் வகைக்குரிய ; கோரைப்புல் வகைச் செடிகள் போன்ற.

**Cype'rus**, *n.* (தாவ.) வெப்பமண்டலக் கோரைப்புல் இனம்.

**cyph'er**, *n.*, *v.*=cipher.

**cy pres'**, *n.* (சட்.) ஒன்று செயற்பட முடியாதபோது ஏற்கப் படவேண்டிய அதற்கு மிக அணித்தான நிலை; *a.* மிக அணித்தான நிலையுடைய ; *adv.* மிக அணித்தான நிலையில்.

**cyp'ress**[1], *n.* கெட்டியான கட்டையும் திண்பச்சை இலைகளுமுள்ள குவிந்த காய் மரம் ; இழவுத்துயர்க் குறியான இம் மரத்தின் கிளை.

**cyp'ress**[2], *n.* கண்ணாடி போன்ற மெல்லிய கறுப்புப்பட்டு அல்லது பருத்தித்துணி வகை ; *a.* மென் கறுப்புப்பட்டு வகையாலான.

**Cyp'rian**, *n.* சைப்ரஸ் (Cyprus) தீவில் வாழ்பவர், சைப்ரஸ் நாட்டினர் ; ஒழுக்கவரம்பற்றவர் ; காமவெறிபிடித்த பெண் ; *a.* சைப்ரஸ் தீவுக்குரிய ; ஒழுக்கவரம்பற்ற ; காமவெறி பிடித்த.

**Cyp'riot, Cyp'riote**, *n.* சைப்ரஸ் தீவில் வாழ்பவர், சைப்ரஸ் நாட்டினர் ; *a.* சைப்ரஸ் தீவுக்குரிய.

**Cyrena'ic**, *n.* பண்டைய ஆப்பிரிக்காவிலிருந்த சைரீன் (Cyrene) நகரத்தைச் சேர்ந்த அரிஸ்டிப்பஸ் (Aristippus) என்னும் மெய்விளக்கியலாரின் இன்பக் கோட்பாட்டைக் கடைப்பிடிப்பவர் ; *a.* பண்டைய ஆப்பிரிக்காவிலிருந்த சைரீன் நகரத்துக்குரிய ; சைரீன் நகரத்தைச் சேர்ந்த அரிஸ்டிப்பஸ் என்னும் மெய்விளக்கியலாரின் இன்பக் கோட்பாட்டுக்குரிய.

**Cyrill'ic**, *a.* ஒன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த தூய திரு. சிரில் (St. Cyril) அமைத்த கீழைத்திருச்சபைக்குரிய ஸ்லேவானிய (Slavonic) நெடுங்கணக்கு வகைக்குரிய.

**cyst**, *n.* (உயி.) விலங்குகளில் அல்லது செடிகளில் சுரக்கும் நீர்மம் கொண்டுள்ள உட்குழிவான பை ; (மரு.) கெட்ட நீர்-ஒட்டுயிரிகளின் முட்டைப்புழுக்கள் முதலியவை கொண்டுள்ள குடுவை ; கரு-முளை முதலியவற்றை உட்கொண்டுள்ள உயிர்மம்.

**cys'tic**, *a.* சிறுநீர்ப்பைக்குரிய ; பித்தப்பைக்குரிய ; உடலில் உள்ள கழிவுநீர்ப் பைபோன்ற உறுப்பின் இயல்பு வாய்ந்த.

**cystit'is**, *n.* (மரு.) சிறுநீர்ப்பை அழற்சி.

**cys'tocele**, *n.* (மரு.) சிறுநீர்ப்பையின் சரிவு.

**cyst'oscope**, *n.* சிறுநீர்ப்பையின் உட்புறத்தை ஆய்வதற்கான கருவி.

**cystot'omy**, *n.* சிறுநீர்ப்பைக்குள் செய்யப்படும் அறுவை மருத்துவம்.

**cytol'ogy**, *n.* (உயி.) உயிர்மங்களைப் பற்றி ஆயும் உயிர் நூற்பிரிவு.

**cytol'ysis**, *n.* (உட.) உயிர்மங்களின் கூறுபாடு.

**czar**, *n.* ருசியப் பேரரசர்.

**cza'revitch, cza'rewich**, *n.* ருசியப் பேரரசரின் மகன்.

**czarev'na**, *n.* ருசியப் பேரரசரின் மகள்.

**czarin'a**, *n.* ருசியப் பேரரசரின் மனைவி, ருசியப்பேரரசி.

*czarit'za*, (ருசிய.) *n.* ருசியப் பேரரசி.

**Czech**, *n.* ஸ்லேவானிக் இனத்தின் (Slavonic) மேலைக்கிளை ஒன்றினைச் சார்ந்தவர் ; ஸ்லேவானிக் மேலைக்கிளையினத்தின் மொழி ; *a.* ஸ்லேவானிக் இனத்தின் மேலைக் கிளை ஒன்றனுக்குரிய.

**Czech'ic**, *a.* ஸ்லேவானிக் இனத்தின் மேலைக்கிளை ஒன்றனுக்குரிய.

**Czechoslov'ak**, *n.* செக்கோஸ்லேவாக்கிய (Czechoslovakia) நாட்டவர் ; *a.* செக்கோஸ்லேவாக்கிய நாட்டுக்குரிய

Da, *n.*=dad.

dab[1], *n.* மென்மையான அடி, இலேசான தட்டு; மென்மை அல்லது ஈரப்பசையுள்ள சிறு திரள், கட்டி; பஞ்சு ஒற்றுகை; கைக்குட்டையால் மெல்லிய துடைப்பு; *v.* மெல்ல அடி, மெதுவாகத் தட்டு; கொஞ்சலாகக் கொத்து; இலேசாக ஒற்று.

dab[2], *n.* தட்டையான மீன்வகை.

dabb'er, *n.* மரக்கட்டை அல்லது தகடுகளின்மீது மை அப்பும் மெல்லுறை.

dab'ble, *n.* நீரில் குதித்தாடுதல்; சிறுபிள்ளைத்தனமாகச் செய்தல்; பொழுதுபோக்கான செய்கை; *v.* நீரில் அளை; ஈரமாக்கு; சிறுதிறமாகச் செயலாற்று, சிறுபிள்ளைத்தனமாக விளையாடு.

dab'chick, *n.* நன்னீர்ப் பறவை வகை, குட்டையான இறகுகளுள்ள வாலற்ற நீர்மூழ்கிப் பறவை.

dab'ster, *n.* கலைத்திறமையில்லாமல் தாறுமாறாக வண்ணங்களை அப்புபவர்.

*da ca'po*, (இத்.) *v.* (இசை.) முதலிலிருந்து திருப்பிப்பாடு.

dace, *n.* சிறு ஆற்று மீன்வகை.

*dachs'hund*, (செர்.) *n.* மிகக் குட்டையான கால்களும் நீண்ட உடலுமுள்ள நாய் வகை, வளைதோண்டி வாழும் உயிரினத்தை வெளியே இழுக்கும் செர்மானிய நாய் வகை.

dacoit', (இ.) *n.* படைக்கலமேந்திய கொள்ளைக் கூட்டக்காரன்.

dacoit'age, dacoit'y, *n.* கூட்டுக்குழுவினரின் கொள்ளை, வழிப்பறி.

dac'tyl, *n.* (வில.) விரல், கால் விரல்; (யாப்.) முதலில் நீளசைகொண்ட மூவசைச்சீர்.

dactyl'ic, *n.* (யாப்.) முதலது நீண்ட மூவசைச்சீராலான பா; *a.* முதலது நீண்ட மூவசையுடைய; முதலது நீண்ட மூவசைச் சீர் சார்ந்த.

dad, *n.* (பே-வ.) தந்தை.

dad'a, *n.*=dad.

dadd'y, *n.*=dad.

dadd'y-long'legs, *n.* நீண்ட காலுள்ள ஈ வகை.

dad'o, *n.* சிலை உருவின் பீடத்தினுடைய இடைக்கட்டுப் பகுதி; மரமிழைத்த அல்லது மாற்று நிறமான அறைச் சுவரடி; *pl.* dad'oes, dad'os.

dae'dal, dae'dale, Daeda'lian, *a.* கலைத்திறம் வாய்ந்த வடிவுடைய; கலைப்பண்பின் திறன் காட்டுகின்ற; கலை நுணுக்கமிகுந்த; பல்திறக் கவர்ச்சிவாய்ந்த.

dae'mon, *n.* தெய்வங்களுக்கும் மனிதர்களுக்கும் இடைநிலையிலுள்ள ஆவி உரு.

daemon'ic, *a.* இயற்கை கடந்த, மனித இயல்புக்கு அப்பாற்பட்ட.

daff, *v.* ஒதுக்கித்தள்ளு, அப்புறப்படுத்து, அகற்று.

daff'odil, daffodill'y, *n.* இளமஞ்சள் வண்ணமலர்; இளமஞ்சள் நிறம்; *a.* இளமஞ்சள் நிறமான.

daft, *a.* மடத்தனமான; மடத்துணிச்சல் மிக்க; கிறுக்கான.

dagg'er, *n.* பட்டாக்கத்தி, குத்துவாள், உடைவாள்; நீள் சிலுவையுருவ அச்சுத்துறை அடையாளக் குறி; (தொ.) at daggers drawn, போர்செய் நிலையில்; பகைமை நிலையில்; double dagger, (அச்சு.) அடிக் குறிப்பின் இரட்டைக் கூரச் சுக்குறி; அச்சுத்துறையில் மேல் கீழ் எதிர் எதிரான இரண்டு நெடுஞ்சிலுவை வடிவான அடையாளக் குறியீடு; look daggers, குத்திவிடுபவர்போல நோக்கு.

dag'o, *n.* ஸ்பெயினின் நாட்டினர் (Spaniard) போர்ச்சுகீசியர் (Portuguese) அல்லது இத்தாலியர் (Italian) ஆகியோரைக் குறிக்கும் இகழ்ச்சிச்சொல்; *pl.* dag'oes.

da'goba, *n.* இலங்கைப் புத்த தூபி.

dague'rreotype, *n.* பாதரச ஆவி மூலம் நிழற்படமெடுக்கும் முறை; பாதரச ஆவி முறையில் எடுக்கப்பட்ட நிழற்படம்; *v.* பாதரச ஆவி முறையில் நிழற்படமெடு.

dah, *n.* பர்மிய (Burmese) பட்டாக்கத்தி வகை.

*dahabee'ah, dahabi'yah, dahabi'yeh*, (அரா.) *n.* நைல் (Nile) ஆற்றிற் செல்லும் படகு வகை.

Dahl'ia, *n.* பன்னிற மலர்களையுடைய தோட்டச் செடிவகை.

dai, (இ.) *n.* பால் கொடுக்கும் செவிலித்தாய்.

Dail, Dail Ei'reann, *n.* அயர்லாந்துக் குடியரசின் (Irish Republic) மாமன்ற மக்கள் சபை.

dail'y, *n.* நாளிதழ், தினசரி; வேலைசெய்துவிட்டுப் போகும் வேலைக்காரப்பெண்; *a.* நாண்முறையான, நாள்தோறும் வருகிற; ஒவ்வொரு நாளும் நிகழ்கிற; நாள்தவறாது செய்யப்படுகிற; இடைவிடாது நிகழ்கிற; அடிக்கடி நடைபெறுகிற, பொது நிகழ்வான; *adv.* நாள்தோறும், ஒவ்வொரு நாளும், நாள் முறையாக, நாள் தவறாது; அடிக்கடி.

*dai'mio*, (ஜப்.) *n.* முற்கால ஜப்பானிய (Japanese) நில மானிய முறையில் அரசர்கீழ் நேருரிமையுடைய உயர் குடியினர்.

dain'ty, *n.* அருஞ்சுவையுண்டி; அருஞ்சுவைக்கூறு; அரும் பெறற்பொருள்; நறுஞ்சுவைத்துணுக்கு; *a.* தேர்ந்தெடுத்த அருஞ்சுவையுடைய, சுவை நயமிக்க; மாசுமறுவற்ற, தூநலமிக்க; நேர்த்தியான, நாகரிகம் வாய்ந்த; ஒயிலான, சிங்காரமான; இன்பத்திலிழைகிற; சுவைநயந்தெரிந்த, நுண்சுவை உணர்வுடைய; மயிரிழை வழுவினைக்கூடப் பொறாத, நயத்தின் கூருணர்வுமிக்க.

dair'y, *n.* பால் பண்ணை, பால் சேமித்துப் பாலேடு-வெண்ணெய் முதலியவற்றை ஆக்கிப் பேணுமிடம்.

dais, *n.* மேடை, மேடையரங்கம்; அமரும் இடமும் மேற்கட்டியுமுள்ள மேட்டிருக்கை; உணவுக்கூடத்தில் உணவு மேடைக்குரிய மேட்டுத்தளம்; பலிமேடைமீதுள்ள மேற்கட்டி.

daisi'ed, *a.* சிறுமலர் வகைகள் பரவிக்கிடக்கிற, மலர்வகைகளால் நிரப்பப்பெற்ற.

dais'y, *n.* பசும்புல்வெளிகளிலுள்ள சிறுமலர் வகை, காட்டு மலர்வகை; பாராட்டுரைப்போலி.

dais'y-chain, *n.* சிறு மென்மலர் வகையால் தொடுத்த சரம்.

dais'y-cutter, *n.* காலை அதிகம் உயர்த்தாமல் விரைந்து செல்லும் குதிரை; மரப்பந்தாட்டத்தில் நிலமட்டத்தோடு படிந்து செல்லும் பந்து.

dak, (இ.) *n.* அஞ்சல் மாற்று, பயணக்குதிரை இடைமாற்று; தூதின் இடையிடை ஆள்மாற்று; அஞ்சல் பயணம்; இந்தியாவில் அஞ்சல் துறை; (தொ.) dak bungalow, இந்தியாவில் பிரயாணிகள் தங்குமனை; dak runner, அஞ்சல்காரன்; அஞ்சல் கொண்டு செல்லும் குதிரை வீரன்.

dal, *n.* துவரை, துவரம் பருப்பு; பயற்றின வகை.

dale, *n.* பள்ளத்தாக்கு; ஆற்று இடைவெளி.

dales'man, *n.* பள்ளத்தாக்கு வாழ்நர்; பிரிட்டனின் மேலைப் பகுதியிலுள்ள ஏரி மாவட்டவாணர்.

dall'iance, *n.* களியாட்டம், நேரப்போக்கு விளையாட்டு; வீண் நேரப்போக்கு; தாமதம், காலந்தாழ்த்தல்; கொஞ்சித் தழுவி விளையாடுதல்.

dall'ier, *n.* சிறுபிள்ளைத்தனமாக நடப்பவர், களியாட்டக்காரர்; நேரத்தை வீணாக்குபவர், வீண்காலங் கடத்துபவர்.

dall'y, *v.* இன்பக்கேளிக்கையாடு; காதல் விளையாட்டு விளையாடு, அணைத்து மகிழ்ந்தாடு; ஆடிப்பாடி மயக்கு; சிறுபிள்ளைத்தனமாக விளையாடு; சோம்பேறித்தனமாக நேரத்தை வீணாக்கு; வறிதே காலங்கடத்து; தாமதம் செய்; தட்டிக்கழி, பசப்பி ஏமாற்று, ஏய்த்து விளையாடு.

Dalma'tian, *n.* டால்மேஷிய நாய்; *a.* டால்மேஷியாவைச் (Dalmatia) சார்ந்த.

**dalmat'ic**, *n.* திருக்கோயில் குருமார் சிறப்பு நிகழ்ச்சிகளின் போது அணியும் திறந்த விலாப்பக்கங்களையும் அகன்ற கைப்பகுதிகளையும் உடைய நீண்ட தளர் சட்டை.

*dal segn'o*, (இத்.) *n.* குறிப்பிட்ட இடத்திலிருந்து திரும்பப் பாடுக என்னும் இசைத்துறைக் கட்டளை.

**dalt'onism**[1], *n.* நிறமயக்கம், பச்சையையும் சிவப்பையும் வேறு பிரித்தறிய இயலாக் கோளாறு நிலை.

**Dal'tonism**[2], *n.* டால்டன் (Dalton) கல்வித்திட்டம், மாதந் தோறும் தவணைகளாகப் பாடப்பகுதிகளைப்பிரித்துக் கொண்டு ஒவ்வொரு மாணவனும் தனித்தனியாக முறைப்படிக் கல்வி பயிலும் முறை.

**dam**[1], *n.* அணை; அணையால் தடுத்துத் தேக்கப்பட்ட நீர்; சதுப்பு நில அணைகரைப்பாதை; *v.* அணையால் நீரைத் தேக்கு, அணையிட்டுத் தடு, தடுத்து நிறுத்து.

**dam**[2], *n.* தள்ளை, வெறுப்பான வழக்கில் விலங்கின் தாய்; (தொ.) the devil and his dam, தீயசக்திகள்.

**dam'age**, *n.* தீங்கு; இன்னல், ஊறுபாடு; பயன்சிதைவு, மதிப்பிழப்பு; இழப்பின் மதிப்பு, இழப்பீடு; *v.* துன்புறுத்து; அழிவுண்டாக்கு; காயம் ஏற்படுத்து; மதிப்பிழக்கச் செய், பெயர்கெடு; (தொ.) damage feasant, சேதம் உண்டாக்கு கிற, கால்நடை விலங்குகள் வகையில் மீறிச்சென்றழிக்கிற.

**dam'ages**, *n. pl.* (சட்.) இழப்பீடு, மற்றொருவர் குற்றத்தாலோ கவனக் குறைவாலோ ஒருவர்க்கு ஏற்படும் இழப்பு அல்லது தீங்குக்குரிய பொருளியல் சரியீடு; (தொ.) direct damages, general damages, ஊறுபாட்டின் உடனடி விளைவு நோக்கிய இழப்பீடு; indirect damages, special damages, ஊறுபாட்டின் தொலைமுக விளைவு நோக்கிய இழப்பீடு.

**dam'asceene, damascene'**, *n.* டமாஸ்கஸ் (Damascus) நகரத்தில் செய்யப்பட்ட வாள்; செதுக்கு வேலைப்பாட்டில் உள்ளீடாகத் தங்கம்-வெள்ளி பதிக்கப்பட்ட அல்லது மேல் வண்ணப்பூச்சுடன் அணி செய்யப்பட்ட வாள்; நீர்வரை படிவித் தணி செய்யப்பட்ட வாள்; எஃகுமீது செதுக்கீடான உள்ளீடாகத் தங்கம்-வெள்ளி பதிக்கப்படல்; டமாஸ்கஸ் எஃகுப் பொருளின் தோற்றம்; முட்டைவடிவ ஊதாநிறப் பழ வகை; *v.* எஃகுப் பொருளின் செதுக்கு வேலைப்பாட்டில் உள்ளீடாகத் தங்கம் வெள்ளி பதி; எஃகுமீது மேற்பூச்சிட்டு அணி செய்வி; எஃகுமீது இலைவடிவ நீர்வரை படிவித்தணிசெய்.

**dam'ascening**, *n.* எஃகுமீது செதுக்கு வேலைப்பாட்டுடன் உள்ளீடாகத் தங்கம் அல்லது வெள்ளி பதித்து இழைத்தல்; அலைபோன்ற நீர்க்குறிவரை அமைப்பு உண்டாக்கல்.

**dam'ask**, *n.* பட்டினாலோ பருத்தியாலோ மென் சணலாலோ நெசவிலேயே வடிவுருக்கள் வருவிக்கப்பட்ட துகில் வகை; சிரியா நாட்டு டமாஸ்கஸ் நகரத்தில் செய்யப்பட்ட எஃகுப் பொருள்; டமாஸ்கஸ் நகரத்து எஃகுப்பொருள்களின் பளபளப்பு; ரோசா மலர்வகையின் செந்நிறம்; *a.* ரோசா வகையின் செந்நிறமுடைய; டமாஸ்கஸ் எஃகிலான; டமாஸ்கஸ் எஃகுப்பொருள் போன்ற; வடிவுரு வேலைப் பாடுடைய துகிலாலான; வடிவுரு வேலைப்பாடுடைய துகில் போன்ற; *v.* துகிலில் நெசவு மூலமே வெவ்வேறு நிறமுடைய மலர் வடிவங்கள் உருவாக்கு; செதுக்கு வேலைப்பாட்டுடன் தங்கம் அல்லது வெள்ளியை உள்ளீடாகப் பதித்து அழகு செய்; பூச்சு வண்ணங்களால் அணி செய்; டமாஸ்கஸ் எஃகுப் பொருளில் உள்ளதுபோன்ற நீரொளி வரை படிவி.

**damaskeen'**, *v.*=damascene.

**dam'ask-plum**, *n.* கரு ஊதா நிறமுள்ள பழவகை.

**dam'ask-rose**, *n.* இளஞ்சிவப்பு வண்ண ரோசா மலர் வகை.

**dam'ask-steel**, *n.* நீர்க்குறி அல்லது அலைபோன்ற புறத் தோற்றமுள்ள எஃகுப்பொருள்.

**dame**, *n.* இல்லத் தலைவி; பேரிளம் பெண்; அன்னை, தாய்; பெருமாட்டி; வீரமகள்; சீமாட்டி; பெருமகனுரின் மனைவி; உயர்குடி மாது; அவிநயக்கூத்தில் வரும் இழிகுணக்கிழவி; ஈட்டன் (Eton) கல்வி நிலையத்தின் இல்லத்தலைவர்; திருவாட்டி (மாதர் பெயர் முன்வரும் அடை).

**dame'-school**, *n.* சிறுவர்களுக்காகப் பெண்பாலராலேயே நடத்தப்படும் பள்ளிக்கூடம்.

**damm'ar**, *n.* ஊசியிலை மரங்களினின்று எடுக்கப்பட்டுச் சாய எண்ணெய் உருவாக்கப் பயன்படும் கெட்டிப்பிசின்.

**damn**, *n.* சூளுரை, சபதம்; தெறுமொழி, வஞ்சினம், சாபம்; மிகச் சிறு அளவு; அறவும் சிறிய அளவு; *v.* கண்டி; மீளாத்தண்டனைத் தீர்ப்பளி; நரகத்துக்கு உரியதாக்கு; தெறுமொழி கூறு; பழி; சாபமிடு.

**dam'nable**, *a.* பழி கூறத்தக்க; கண்டிக்கத் தகுந்த; வெறுக்கத்தக்க; நரகதண்டனைக்குரிய; நிலையான தண்டனைக்குரிய; தொந்தரவுக்குரிய, நச்சுத்தொல்லை தரக்கூடிய.

**damna'tion**, *n.* மீளா நரகு; நீங்காப் பழி; நிலையான தண்டனை; நாடகத்தை உணர்ச்சியின்றிப் பார்த்தல்; நாடகத்தைப் பின்வாங்குவித்தல்; *int.* பாழாய்ப்போக!

**dam'natory**, *a.* நரக தண்டனை தரக்கூடிய; வெறுப்பு உண்டாக்குகிற.

**dam'ned**, *a.* மீளாத் தண்டனைக்குரிய; கடு வெறுப்புக்குரிய; மட்டற்ற; (தொ.) the damned, நரகத்திலுள்ள உயிர்கள்.

**dam'nification**, *n.* பாழ்படுத்துதல், பேரழிவுக்கு ஆளாக்குதல்; பேரிழப்பு உண்டாக்குதல்.

**dam'nify**, *v.* பேரிழப்புக்காளாக்கு, அழிமதி செய்.

**damn'ing**, *n.* மீளாப்பழிக்கு ஆட்படுத்துதல்; பழிப்பு; கண்டிப்பு; *a.* பழிகேட்டிற்கு ஆளாக்குகிற; வெறுப்பிற்கு உட்படுத்துகிற; கண்டனத்திற்கு ஆளாக்குகிற.

*damnos'a hereditas*, (ல.) *n.* ஆதாயத்தைவிடச் சுமையைத் தரும் மரபுரிமைச் செல்வம்.

**Damocle'an**, *a.* ஒற்றைமயிரில் தொங்கவிடப்பட்ட வாளடியில் விருந்தளிக்கப்பட்டு டயானிஷஸ் (Dionysius) என்ற பண்டைக் கிரேக்க அரசனுல் அரச வாழ்வின் நிலையாமைப் படிப்பினையளிக்கப்பட்ட அவ்வரசனின் இன்பத் தோழனை டமோக்ளிஸ் (Damocles) என்பவனைப் போன்ற.

**Dam'ocles**, *n.* டயானிஷஸ் என்ற கிரேக்க அரசனின் இன்பத்தோழனின் பெயர்; (தொ.) the sword of Damocles, அரசவாழ்வின் நிலையாமை அறிவுறுத்த டயானிஷஸினுல் டமோக்ளிஸுக்கு அரச விருந்தளித்து விருந்தின்போது அவன் தலைமீது ஒற்றை மயிரில் தொங்கவிடப்பட்ட வாள்; இன்பத்திடைப் பேரிடர் நிலை.

**Dam'on and Pyth'ias**, *n.* கிரேக்கப் பழங்கதையில் வரும் இரு பற்றுறுதியுடைய நண்பர்கள்; இணைபிரியாத் தோழர்கள்; *a.* பற்றுறுதியுடைய கிரேக்கப் பழங்கதை நண்பர்களைப் போன்ற, இணைபிரியாத.

**damp**, *n.* ஆவி, பனி, ஈரஞ்செறிந்த காற்றுத்தெளி; நீர்த்தோய்வு, புழுக்கம், ஈரம் ததும்புநிலை; உணர்ச்சியின்மை, கிளர்ச்சியின்மை, சோர்வு, ஊக்கக்கேடு; சுரங்க நச்சாவி; *a.* பனிப்படலம் போர்த்த; ஈரம் நிரம்பிய, ஓதம் தோய்ந்த; *v.* சிறிது ஈரமாக்கு; ஊக்கங்கெடு; தடு; எழுச்சியடக்கு; ஆற்றல் தணிவி, வீச்சினைக்குறை.

**damp'en**, *v.* ஈரமாக்கு, நனை; ஈரமாகு; திணறடி; திக்குமுக்காடு; தளர்த்து, எழுச்சி அடக்கு, ஊக்கங்கெடு; தளர்ச்சியடை, மனம் சோர்வுறு, ஆர்வம் குன்று.

**damp'er**, *n.* ஈரமாக்குபவர்; ஈரமாக்குவது, அஞ்சல்தலை தாள்போன்றவற்றை நனைப்பதற்குரிய சாதனம்; ஊதைக் காற்றைத் தடுக்கும் கதவு; நேர் காற்றைத் தளர்த்தும் கதவின் அழிப்பலகை; ஆர்வம் கெடுப்பவர்; எழுச்சி கெடுக்கும் பொருள்; ஊக்கம் கெடுக்கும் ஆற்றல்; தளர்வூட்டும் செய்தி; அதிர்வு-சுழற்சி ஆகியவற்றின் வீச்சினைக் குறைக்கும் அமைவு; (இசை.) இசைக்கருவிகளில் ஒலியை அடக்கும் இடுக்கி அல்லது திண்டு போன்ற பொருள்; மின்கம்பி உருகி விடாமற் காக்கும் உலோகத் தகட்டுக் காப்புறை.

**damp'-proof**, *a.* ஈரம்புகாத; ஈரக்கசிவு அல்லது ஈரக்காற்று ஊடுருவ முடியாத.

**damp'y**, *a.* (செய்.) ஈரமான; ஈரக்கசிவுடைய.

**dam'sel**, *n.* மணமாகா அழகிய இளநங்கை, மங்கை, மடந்தை.

**dam'son**, *n.* சிறு கருஊதா நிறமுடைய பழவகை; (தொ.) damson cheese, சிறு கரு ஊதாநிறமுடைய பழங்களையும் சர்க்கரையையும் கொண்டு செய்யப்பட்ட கெட்டிப்பண்டம்; damson plum, பெரிய கரு ஊதாப் பழவகை.

**Dan** [1], *n.* பெருமதிப்புப் பட்டம்; வீரப்பெருந்தகைக்கு ஒப்பாக மடத்துறவியருக்கு வழங்கப்பட்ட பட்டம்; பெருங்கவிஞர் களுக்குக் கவிஞர்கள் அளிக்கும் பட்டம்.

**dan** [2], **dan buoy**, *n.* ஆழ் கடல் மீன்பிடிப்பில் அடையாளக் குறியாகப் பயன்படும் சிறு மிதவை; கடலில் கடற்கண்ணி அகற்றப்பட்ட பரப்பின் வரம்பு காட்டும் நீண்ட அடையாளக் கொடிக்கம்பம் உடைய சிறு எஃகுப் பெட்டி.

**dance**, *n.* நடனம்; கூத்து, ஆடல்; ஒருவர் அல்லது பலர் ஆடும் ஆட்டம்; ஆடல் போன்ற இயக்கம், துள்ளிக் குதிப்பு, அழகான அசைவு; நடன இசை; நடன இசைப்படிவம்; நடனத்திற்கான கூட்டம்; *v.* கூத்தாடு, நடனமாடு; இசைக்கேற்ப நடனமாடு; துள்ளு, குதி; ஆடவை, குதிக்கச் செய்; நடனம் நிகழ்த்து; (தொ.) dance attendance, விழிப் புடன் காத்திருந்து ஊழியம் செய்; Dance of Death, Dance of Macabre, கங்காள உருவில் சாவுக்குரிய தெய்வத்தினைத் தீட்டி அதன் ஆற்றலைப் குறிக்கும் தொடருருவக ஓவியங்கள்; dance to one's pipe or tune, ஒருவர் தலைமையைப் பின்பற்று; dance upon nothing, தூக்கிலிடப்பெறு; lead one a dance, தொடர்ந்த ஏமாற்றங்களுக்கும் குழப்பங்களுக்கும் உட்படுத்து.

**dance'music**, *n.* நடன இசை.

**dan'cer**, *n.* நடனமாடுபவர்; ஆடல் தொழிலர்; (தொ.) merry dancers, புலர்காலை ஒளி; வடமுனை வளரொளி.

**dan'delion**, *n.* அகன்ற ஓரப்பற்களையுடைய இலைகளையும் மஞ்சள் மலரையும் உடைய செடிவகை.

**Dan'die Din'mont**, *n.* சிறுநாய் வகை.

**dan'dle**, *v.* கொஞ்சு, சீராட்டு, கோதாட்டு.

**dan'driff, dan'druff**, *n.* தலைப்பொடுகு, அசறு.

**dan'dy** [1], *n.* பிலுக்கன், பகட்டித்திரிபவன், ஒய்யாரமாக உடை அணிபவன்; குள்ளக் கோழிவகை; தாளில் நீர்வரை பதிக்க உதவும் கம்பி வலை உருளை; *a.* ஆடை அணி ஒப்பனையில் நாட்டமுள்ள, பகட்டான, ஒய்யாரமான; சீராக ஆடை யணிந்த, நற்கோலமுடைய; முதல் தரமான, சிறந்த.

**dan'dy** [2], *n.* தூக்கு தொட்டில், தொட்டிற் சிவிகை.

**dan'dy** [3], *n.* முடக்குக் காய்ச்சல்.

**dan'dy-cart**, *n.* எளிய அமைப்புள்ள வில்வண்டி.

**dan'dy-cock**, *n.* சண்டைக்கோழி; சண்டையிடும் இயல்பு மிக்கதான வீட்டுக் கோழி வகை.

**dan'dy-fe'ver**, *n.* முடக்குக் காய்ச்சல்.

**dan'dy-hen**, *n.* சண்டைக்கோழி; சண்டையிடும் இயல்பு மிக்கதான வீட்டுப் பெடைக் கோழிவகை.

**dan'dy-roll**, *n.* தாள் செய்யுந் தொழிலில் நீரெழுத்துப் பதியச் செய்யும் உருளை.

**Dane**, *n.* டென்மார்க் (Denmark) நாட்டவர்; (வர.) இங்கிலாந்துமீது படையெடுத்து வந்த டேனியர்; குறுமயி ருள்ள ஆற்றல் மிக்க பெரிய நாய் வகை; குறுமயிருள்ள ஆற்றல் மிக்க சிறிய நாய் வகை; (தொ.) great Dane, குறுமயிருள்ள ஆற்றல் மிக்க பெரிய நாய் வகை; lesser Dane, குறுமயிருள்ள ஆற்றல் மிக்க சிறிய நாய் வகை.

**dan'ger**, *n.* இடர், ஆபத்து; பாதுகாப்பற்ற தன்மை; இடையூறு விளக்கும் செய்தி; இடர் எச்சரிப்பு; (தொ.) danger line, அபாய எல்லை, காப்பு நிலைக்கும் இடர் நிலைக்கும் இடையேயுள்ள நிலை.

**dan'gerous**, *a.* இடருடைய, ஆபத்தான; பாதுகாப்பற்ற.

**dan'gerously**, *adv.* பேரிடர் உற்ற நிலையில்.

**dang'le**, *v.* ஊசலாடு, தொங்கிய நிலையில் முன்னும் பின்னும் அசைந்தாடு; தளர்த்தியாய் ஆடவிட்டுக்கொண்டு எடுத்துச் செல்; ஆசை காட்டு; பின்பற்றிச் சுற்றித் திரி, பின் தொடர்ந்து காதலூடாட்டமாடித் திரி.

**dang'ler**, *n.* பெண்களைச் சுற்றித்திரிபவர்.

**Dan'iel**, *n.* நேர்மையான நடுவர், கேடில் மதியுடையவர்.

**Dan'ish**, *n.* டென்மார்க் (Denmark) நாட்டவர் மொழி; *a.* டென்மார்க் நாட்டுத் தொடர்பான.

**dank**, *a.* நீர்த்தோய்வான, ஈரக்கசிவான, வெறுப்புத்தரும் அளவுக்கு ஈரமாயிருக்கிற.

**Dante'an**, *n.* தாந்தே (Dante) என்னும் கவிஞரின் நூல்களைப் பயிலும் மாணவர்; *a.* கவிஞர் தாந்தேயைப் போன்ற; தாந்தேயின் கவிதையைப் போன்ற; தாந்தேயின் கவிதை நடையை ஒத்த; தாந்தேயின் வருணனைகளை நினைவூட்டுகிற; வீறுர்ந்த, வீறமைதி மிக்க.

**Dantesque'**, *a.* தாந்தேயின் கவிதையைப் போன்ற; தாந்தேயின் கவிதை நடையை ஒத்த; வீறுர்ந்த, வீறமைதி மிக்க.

**Dan'tist**, *n.* கவிஞர் தாந்தேயின் (Dante) நூல்களில் வல்லுநர்.

**dap**, *n.* துள்ளல், உந்தியெழல், பந்தின் துள்ளலெழுச்சி; மெல்ல நீரில் இடப்படும் தூண்டிலிரை; *v.* பந்துபோல் நிலந்தாக்கி எழச்செய்; உந்தி உயர்; துள்ளிக் குதி; மெல்லத் தூண்டிலிடு; தூண்டிலிரை நீரில் அமிழ்ந்தெழச் செய்; மெல்ல அமிழ்த்து.

**daph'ne**, *n.* மலர்களையுடைய புதர்ச்செடிகளின் இனம்.

**dapp'er**, *a.* விரைவியக்கமுடைய; மிடுக்கான தோற்ற முடைய, நேர்த்திமிக்க.

**dapp'erling**, *n.* சுறுசுறுப்பான சிறுவன்.

**dapp'le**, *n.* புள்ளியிட்ட தோற்றம்; *a.* நிறவேறுபாடுடைய புள்ளிகளமையப்பெற்ற; *v.* புள்ளியிட்டு உரு வேறுபாடு செய்; பல நிறப் பட்டைகளுடைய தாக்கு; பல நிறங்களுள்ள தாக்கு; பல வகைப்படுத்து.

**dapp'le-bay'**, *a.* வேறுநிறப் புள்ளிகளுடன் கருஞ்சிவப்பு உடல் நிறமுள்ள; வேறு நிறப் பத்தைகளோடு கருஞ்சிவப்பு உடல் நிறம் உடைய.

**dare** [1], *n.* துணிகரச் செயல்; போருக்கழைப்பு; *v.* துணி, துணிவுகொள்; திடங்கொள்; முனைந்து முயற்சி செய்; இடர் நோக்காது தலையிடு; எதிர்த்துநில், போருக்கழை, அறைகூவு; (தொ.) I dare say, நான் இவ்வாறு கருது கிறேன்.

**dare** [2], *n.* கண்ணாடிகளைக் கொண்டு வானம்பாடிகளை மயக்கு வதற்கான அமைவு.

**dare** [3], *n.* கயல் இனத்தைச் சேர்ந்த சிறு ஆற்றுமீன் வகை.

**dare'devil**, *n.* முரட்டு ஆள்; *a.* மடத்துணிச்சலுள்ள.

**dar'i**, *n.* தினைபோன்ற கூலவகை.

**dar'ing**, *n.* துணிவு, முனைப்பு; வீரம், அஞ்சாமை; *a.* துணிச்சலுள்ள, துணிந்திறங்குகிற; தைரியமான, அஞ்சாத; எதிர்த்து நிற்கிற; மல்லுக்கிழுக்கிற.

**dark**, *n.* இருள், ஒளியின்மை, மருள் ஒளி, இரா நேரத் தொடக்கம்; கருமை, இருட்சாயல்; அறியாநிலை; *a.* ஒளி யற்ற; இருட்சாயலான; இருண்ட; கருநிறமான; கருநிற மேனியுடைய; திண்ணிய; மருளார்ந்த; துயரார்ந்த, சோகமான; கிளர்ச்சியற்ற; புரியாத, விளக்கமற்ற, சிக்கல் வாய்ந்த; அறியப்படாத; மறை நிலையான, இரகசியமான; கடுகடுப்பான தோற்றமுடைய; கொடிய; அறியாமையுட் பட்ட; தீமைவாய்ந்த, தீங்கான; (தொ.) the dark ages, ஐரோப்பாவில் அறிவு விளக்கம் குன்றியிருந்த கி. பி. 395-க்கும் கி. பி. 10-ஆம் நூற்றாண்டு முடிவுக்கும் இடைப் பட்ட இருண்ட காலம்; the Dark Continent, ஆப்பிரிக்கா; dark horse, எத்துணை ஆற்றலுடையதென்று மற்றவர் களுக்குத் தெரிந்திராத பந்தயக் குதிரை; எவ்வளவு திறமை யுடையவரென்று மற்றவர்களுக்குத் தெரிந்திராத ஆள்; keep dark, பேசாதிரு, இரகசியமாயிரு; keep it dark, மறைத்து வை.

**dark'en**, *v.* இருட்டாக்கு, இருள்படியவை; இருட்டை மிகுதியாக்கு; இருள், இருளாகு; இருள் மிகுதியாகு; அறியாமைக்கு உட்படுத்து; கறைப்படுத்து; (தொ.) darken one's door, ஒருவர் வீட்டுக்குள் நுழை, ஒருவரைச் சென்று பார்.

**dark'-lant'ern**, *n.* மறைத்துவிடக்கூடிய ஒளியையுடைய விளக்கு.

**dark'le**, *v.* இருள், இருளாகு; மறைந்திரு.

**dark'ling**, *a.* இருட்டான; *adv.* இருட்டில்.

**dark'ness**, *n.* இருட்டு; இரவு; (தொ.) prince of darkness, நரகத்தலைவன்.

**dark'-room**, *n.* நிழற்படத்துக்குரிய இருட்டறை, நிழற்படத் தகடுகளைக் கெடுக்கவல்ல ஒளி தடுத்து நீக்கப்பட்ட அறை.

**dark'some**, *a.* இருண்ட; (செய்.) துயரார்ந்த, வருத்தமிக்க.

**darl'ing**, *n.* அருமைக்குரியவர், ஆர்வ அன்புக்குரியவர், கண்ணனவர்; ஆசைக்குரியது, கண்ணனது; தனிப்பற்றுக்குரியவர்; தனிப்பற்றுக்குரியது; *a.* அருமைக்குரிய, ஆர்வ அன்புக்குப் பாத்திரமான, கண்ணன; தனிப்பற்றுக்குரிய.

**darn**, *n.* இழையிட்டுத் தைத்த இடம்; *v.* இழையிட்டுச் செப்பனிடு; பொத்தல்களை மூடுவதற்காகப் போடப்படும் தையல்களைக் கொண்டு பின்னற் பூவேலை செய்.

**darn'el**, *n.* கூலப்பயிர்களினூடே களையாக விளையும் புல் வகை.

**dart[1]**, *n.* கைவேல், ஏவுகணை, எறிபடை; கட்ட எறிவு விளையாட்டுக்குரிய எறிமுட்கோல்; திடீர் விசை இயக்கம்; எறிபடை வீச்சு; பூச்சியினத்தின் கொடுக்கு; (வில.) சில நத்தைகளில் பாலினப் புணர்ச்சிக்குத் தூண்டுதலாய்ப் பயன்படுத்தப்படுவதாகக் கருதப்படும் ஊசி போன்ற உறுப்பு; முன்சிறகில் வேல் போன்ற குறியுள்ள பட்டுப்பூச்சி வகை; *v.* எறி, வீசு; எறிபடை ஓச்சு, வேல் ஏவு; விரைந்து ஒரு திசையிற் பாய்.

**dart[2]**, *n.* சிறு ஆற்று மீன்வகை.

**dart'-board**, *n.* கட்ட எறி விளையாட்டில் எறிமுட்கோலின் இலக்காகப் பயன்படுத்தப்படும் கட்டப்பலகை.

**dart'er**, *n.* எறிபவர்; எறியும் பொருள்; நன்னீரில் மூழ்கி இரை தேடும் நாரையினத்தைச் சேர்ந்த தோலடிப் பறவை வகை; மீன் வகை.

**dart'ers**, *n. pl.* மீன்கொத்தி முதலியவற்றை உள்ளிட்ட பறவையினம்; மீன் இனப்பிரிவு.

**dar'tle**, *v.* படைக்கலம் எறிந்துகொண்டேயிரு.

**Dart'moor**, *n.* இங்கிலாந்தின் பேர்போன சிறைச்சாலையாகிய டார்ட்மோர் சிறைச்சாலை.

**dart'-moth**, *n.* முன்சிறகில் வேல் போன்ற குறியுடைய பட்டுப்பூச்சி வகை.

**Dart'mouth**, *n.* இங்கிலாந்தில் டார்ட்மத் நகரத்து அரசாங்கக் கப்பற் படைக் கல்லூரி.

**dar'tre**, *n.* (மரு.) தோல் நோய்வகை.

**darts**, *n.* எறிமுட்கோல்கள் பலகையை நோக்கி எறியப்படும் உட்கூட விளையாட்டு வகை.

**Darwin'ian**, *n.* சார்லஸ் டார்வினைப் (Charles Darwin 1809-82) பின்பற்றுபவர், டார்வினின் உயிர்மலர்ச்சிக் கோட்பாட்டை ஏற்பவர்; *a.* சார்லஸ் டார்வினுக்குரிய.

**Dar'winism**, *n.* கூர்தல் வாதம், சார்லஸ் டார்வின் (Charles Darwin 1809-82) ஆய்ந்து நிறுவிய உயிரினத் தோற்றக் கோட்பாடு, உயிர்மலர்ச்சிக் கோட்பாடு.

**dash**, *n.* மோதல்; பாய்ச்சல், பாய்வு; திடீர் மேற்செலவு, தாக்குதல்; தகர்வு; அடி; வீச்சு; நீர்மோதும் ஒலி; விசி எறிந்ததால் ஏற்படும் அகல் கறை, அடை, பத்தை; எழுதுகோல் தொட்டிழுப்புக் குறி; கருத்துத் தடையை அல்லது தனிநிலைத் தொடரைக் காட்டும் இடைக்கோடு, கீற்று; இசைத்துறையில் விட்டொலிப்புக் காட்டும் கோடு; உருக் கணக்கில் உரு எழுத்துமீது குறிக்கப்படும் சாய் செங்கோட்டு வடிவான திரிபுக்குறி; தந்தியில் 'கட' என்ற ஒலிக்குறிப்புக் கோடு; ஆர்வ எழுச்சி; பகட்டு, ஒய்யாரம்; சிறிதளவு கலப்பு; குதிரை வண்டியில் சேற்றுத் தடைக்கட்டை; விமானக் கருவிகள் வைக்கும் பலகை; 'கெடுக' என்ற பழிமொழியின் இடக்கரடக்கல் வழக்கு; *v.* விசி எறி, தூக்கி வீசு; தள்ளு, மோது, சென்று முட்டு; வேகமாக எழுதித்தள்ளு; விரைவாக ஓட்டு; பாய், தாவிச்செல்; மோதி நொறுக்கு; தெளி, சிதறடி; தெறித்து அப்பு, கறைப்படுத்து; ஊக்கம் குறை; ஏமாறச்செய்; திக்குமுக்காட வை, குழப்பு; சிறிது கலந்து இணை; கீழ்க்கோடிடு; ஊக்கம்கொள், எழுச்சியுடன் நட; ஒய்யாரமாகத் திரி; (தொ.) dash off, வேகமாக எறி; விரைவாகத் தோற்றுவி; திடீரென விட்டுச்செல்; dash out, மோதித் தள்ளு.

**dash'board**, *n.* சேற்றுக்காப்பு, குதிரை வண்டி வலவனுக்கெதிரில் குதிரைக் குளம்புகளால் தெறிக்கப்படும் மண் முதலியவற்றைத் தடுப்பதற்காக அமைந்துள்ள பலகை அல்லது திரை; கருவித்தட்டு, உந்து வண்டியில் அல்லது வான ஊர்தியில் கருவிகளை எடுத்துச் செல்வதற்கான பலகை.

**dash'er**, *n.* மோதுபவர்; மோதுவது; விரைந்து செல்பவர்; விரைந்து செல்வது; பகட்டுக்காரன்; வெண்ணெய் கடையும் மத்து.

**dash'ing**, *a.* ஊக்கமுள்ள; பகட்டான; நவநாகரிகத் தோற்றமுடைய.

**dash'-pot**, *n.* (இயங்.) நீர்கொண்ட பெருங்குழாய் அலம்புருமல் தடுக்கும் உந்துகட்டை அமைவு.

**dash'-wheel**, *n.* சாயத்தொழிலில் மிடா வடிவான அலம்பு பொறி.

**das'tard**, *n.* கோழை; கீழ்மகன், எத்துவேலைக்காரன்; தன்னை இடருக்குட்படுத்திக்கொள்ளாமல் கொடுஞ்செயல் புரிபவன்; *a.* இடரினின்றும் ஒதுங்குகிற, கோழைத்தனமான.

**da'syure**, *n.* குட்டிகளுக்கான வயிற்றுப்பையுடைய ஆஸ்திரேலியாவிலுள்ள ஊனுணி விலங்கின வகை.

**dat'a**, *n. pl.* தரப்பட்டவை, வாத ஆதாரக் கூறுகள், தெரிபொருட்கூறுகள், உய்த்துணர உதவும் மூலகாரணப் பகுதிகள்; மெய்ச் செய்திகள்; செய்திக் குறிப்புகள்.

**dat'aller**, *n.* நாட்கூலியாள்.

**date[1]**, *n.* பேரீச்ச மரம்; பேரீச்சம் பழம்.

**date[2]**, *n.* தேதி; நாள்; நிகழ்வுக்காலம்; நடைமுறைக் காலம்; வாழ்வுக்காலம்; காலவரையறை; காலக்குறிப்பு, கடிதம்-பத்திரம்-ஏட்டுவெளியீடு ஆகியவற்றில் கால-இட விவரக் குறிப்பு; *v.* தேதியிடு; காலங்குறி; கால வரையறை செய், காலமதிப்பீடு செய்; காலங்குறிப்பிடு; குறிப்பிட்ட காலத்துக்குரிய பண்புடையதாயிரு; தொடங்கு; காலங்கடந்துபோ, வழக்கற்றுப் போ; (பே-வ.) சந்திப்பு நேரத்திட்டம் குறி; (தொ.) out of date, காலங்கடந்துவிட்ட, வழக்கற்றுப் போய்விட்ட; up to date, காலத்துக்கொத்த, காலத்தோடொட்டிய வளர்ச்சியுடைய, புத்தம் புதிய முன்னேற்றத்துடன் கூடிய, புதுப்பாணியிலமைந்த.

**date'less**, *a.* தேதியற்ற; கால எல்லையற்ற; முடிவில்லாத; தொல்பழமையான; நாள் ஈடுபாடுகளில்லாத.

**date'-line**, *n.* தேதி எல்லை, தேதிக்கோடு, உலக ஒப்பந்தப்படி ஏறத்தாழ 180° நிரை கோட்டினூடாகச் செல்லுகிற நாள் கணிப்புத் தொடக்கக் கோடு.

**date'-palm**, *n.* பேரீச்ச மரம்.

**date'-plum**, *n.* கருங்காலி இன மரத்தின் பழம்.

**dat'er**, *n.* தேதி குறிப்பவர்; தேதி பொறிக்கும் முத்திரை.

**date'-shell**, *n.* சுண்ணக்கல் பாறையைத் துளைத்து வாழும் உயிரினத்தின் பேரீச்சம் பழ வடிவுள்ள தோடு.

**dat'ive**, *n.* (இலக்.) கொடைப்பொருள் வேற்றுமை, நான்காம் வேற்றுமை; நான்கனுருபு ஏற்ற சொல்; *a.* கொடுக்கப்பெற்ற; நியமிக்கப்பெற்ற; (இலக்.) மறைமுகச் செயப்படு பொருளைக் குறிப்பிடுகிற, நான்காம் வேற்றுமைக்குரிய.

**dat'um**, *n.* தெரிந்திருக்கிற அல்லது ஒப்புக்கொள்ளப்பட்ட செய்தி, பிறவற்றை ஊகித்தறிவதற்கிடந்தருமாறு கொடுக்கப்பட்ட செய்தி, தரவு; அளவுகோல் முதலியவற்றின் நிலையான தொடக்கப்புள்ளி; மெய்ச்செய்திகள் தொகுதி; செய்திக் குறிப்புகளின் தொகுதி.

**datur'a**, *n.* (தாவ.) ஊமத்தை.

**datu'rine**, *n.* ஊமத்தைச் சத்து, செடிவகையிலிருந்து கிடைக்கும் வெடியக் கலப்புடைய நஞ்சு வகை.

**daub**, *n.* சரவையான வண்ணப்பூச்சு; பூசப்படும் பொருள்; *v.* களிமண் முதலியவை கொண்டு பூசு; நீறு பூசு; மெழுகு போன்ற பொருளை மேலே அப்பி அடையவை; அழுக்காக்கு; கறைப்படுத்து; பரும்படியாக வண்ணம் பூசு.

**daub'er**, *n.* பூசிமெழுகுபவர்; சரவையாக வண்ணம் பூசுபவர், கலைப்பண்பற்ற ஓவியர்.

**daub'ery**, *n.* பூச்சுமானம்; போலிவேலை; பொறிச்சூழ்ச்சி; போலிப்பகட்டு.

**daught'er**, *n.* மகள், புதல்வி; பெண் குழந்தை; பெண்பால் மரபு வழித்தோன்றல்; குடும்பப் பெண் உறுப்பினர், குலத்தின் பெண் உறுப்பினர்; பெண்பாலர், அணங்கு; ஒருவரின் அறிவுரிமைக்கொழுந்தான செல்வி; ஒருவரின் ஆன்மிக வாழ்வின் விளைவான மாது; ஒன்றன் அறிவால் விளைவான அணங்கு; வருவிளைவின் உருவகம்; *a.* (உயி.) வழித் தோன்றிய, வழிஉருவான.

**daugh'ter-in-law**, *n.* மகன் மனைவி, மருமகள், மருகி; *pl.* daught'ers-in-law.

**daugh'terling**, *n.* சிறுமகள்.

**daugh'terly**, *a.* மகள்போன்ற; மகளுக்கு உரித்தான.

**daunt**, *v.* ஊக்கமிழக்கச் செய்; அச்சுறுத்து; அடக்கு; உணவுக்குரிய மீன் வகையை மிடாவில் வைத்து அழுத்து.

**daunt'less**, *a.* இடுக்கணழியாத; அஞ்சாத; விடாமுயற்சியுடைய.

**dauph'in**, *n.* பிரான்ஸ் நாட்டு மன்னரின் மூத்த மகன்.

**dauph'iness**, *n.* பிரான்ஸ் நாட்டு மன்னரின் மூத்தமகனுடைய மனைவி.

**dav'enport**, *n.* எழுதுவதற்குதவும் ஒப்பனை வேலைப்பாடுள்ள சிறு சாய்வு மேசை.

**dav'enport-trick**, *n.* சுற்றிக்கட்டியுள்ள கயிறுகளினின்றும் விடுவித்துக்கொள்ளும் வகைமுறை.

**Dav'id and Jon'athan**, *n.* பற்றுறுதி கொண்டுள்ள இரு நண்பர்கள், இணைபிரியாத ஈடுபாடுடைய இரு தோழர்கள்.

**dav'it**, *n.* நங்கூரத்தை மேலே தூக்குவதற்காகக் கப்பலின் முன்புறத்தில் அமைந்துள்ள பாரந்தூக்கிப்பொறி; கப்பலின் படகை இறக்குவதற்கான பாரந்தூக்கிகள் இரண்டிலொன்று.

**Dav'y, Dav'y lamp**, *n.* நிலக்கரிச் சுரங்கத்தினுள் வேலை செய்பவர்களுக்குரிய கம்பி வலையுள்ள காப்பு விளக்கு.

**Da'vy Jones'**, *n.* கப்பலோட்டிகள் வழக்கில் கடலின் பேயாற்றல்; (தொ.) Davy Jones's locker, கடலில் மூழ்கியவர்களின் கல்லறையாகிய ஆழ்கடல்.

**daw**, *n.* காக்கையினப் பறவை வகை.

**daw'dle**, *n.* மடியன், சோம்பித்திரிபவன்; *v.* பயனற்ற செயல்களில் காலத்தை வீணாக்கு; சோம்பித்திரி.

**dawn**, *n.* விடியல், புலரி; விடியலொளி; தொடக்க ஒளி; முதல் தோற்றம், தொடக்கம்; *v.* பொழுது புலர்வுறு; பகலொளி தொடங்கு; ஒளிவளரத் துவங்கு; தோற்றத் தொடங்கு; (தொ.) dawn on, dawn upon, முதல் முதலாகத் தெளிவுபடு, விளக்கமாகப் புலப்படத் தொடங்கு.

**dawn'-man**, *n.* தொடக்கக் காலத்தியதென்று முன்பு கருதப்பட்ட புதைபடிவ மனிதன்.

**day**, *n.* நாள், நள்ளிரவிலிருந்து அடுத்த நள்ளிரவு வரையுள்ள குத்துமதிப்பான 24 மணிநேரம், நிலவுலகம் தன் அச்சின்மேல் ஒருமுறை சுழல்வதற்குப் பிடிக்கும் நேரம்; பகல், எழுஞாயிற்றுப்போது தொடங்கி விழுஞாயிற்று வேளை வரையுள்ள ஓரளவு இடத்துக்கிடம் ஏற்றத்தாழ்வான 12 மணி நேரம்; நாள்வேலை நேரம்; வாழ்நாள்; வாழ்நாள் காலம் நடப்புக்குரிய காலம்; செல்வாக்கு வேளை; வெற்றிநாள்; வெற்றி; விருந்தினர்க்காக ஒதுக்கிவைக்கப்பட்ட நாள்; காலம், காலப்பகுதி; பகலொளி; பலகணி நிலக்கம்பிகளின் இடைவெளி; சுரங்கமீதுள்ள நிலத்தளப்பரப்பு; (தொ.) call it a day, ஒருவர் ஒருநாள் வேலை செய்து விட்டாரெனக் கருது; நிறுத்தல் முடிவு தெரிவு; day by day, நாடோறும்; வைகலும்; day in day out, தொடர்ந்து பல நாட்களாக; day off, விடுமுறைநாள்; day out, வேலையாள் வேலை செய்ய வேண்டியிராத நாள்; days of grace, சலுகை நாட்கள், கெடுக் கடந்தும் உண்டி முதலியவைகளுக்குப் பணம் கொடுக்க இசைவளிக்கப்பட்ட காலம், அருளிசைவுக் காலம்; know the time of day, முழு விழிப்புடனிரு, விவரமறிந்திரு; one of these days, அண்மையில், வருங்காலத்திலே ஏதோ ஒரு சமயத்தில்; see daylight, ஒருவகையில் தீர்வுகாண்; ஒரு மட்டில் விளக்கம் காண்; காட்சிப்பட வந்தமை; the day, குறிப்பிடப்பட்ட காலம்; எதிர்பார்த்த காலம்; the day after the fair, காலங்கடந்து; the other day, கொஞ்ச காலத்துக்கு முன்; the time of day, கடிகாரப்படியான மணி நேரக்குறிப்பு; win the day, வெற்றியடை.

**day'-blind'ness**, *n.* மங்கலான ஒளியிலேயே பொருள்களை நன்றாகப் பார்க்க இயலும் பார்வைக்கோளாறு.

**day'-board'er**, *n.* பள்ளியில் துயில் கொள்ளாமல் உணவு மட்டும் கொள்ளும் மாணவன்.

**day'-book**, *n.* நாட்குறிப்பேடு.

**day'-boy**, *n.* வீட்டில் தங்கிக்கொண்டு பள்ளி வந்து படிக்கும் மாணவன்.

**day'break**, *n.* புலர்காலை.

**day'-coal**, *n.* நிலக்கரியின் மேல் அடுக்கு.

**day'-fly**, *n.* மே மாதத்தில் தோன்றிச் சின்னாள் வாழும் பூச்சி வகை.

**day'girl**, *n.* வீட்டில் தங்கிப் பள்ளி வந்து படிக்கும் மாணவி.

**day'-la'bour**, *n.* நாட்கூலி.

**day'-la'bourer**, *n.* நாட்கூலியாள்.

**day'-level**, *n.* சுரங்கத்தில் மேற்பரப்பிலிருந்து கீழே அழுத்தப்பட்ட தளம்.

**day'light**, *n.* பகல் வெளிச்சம்; பட்டாங்கநிலை, பலரறியும் தன்மை; விடியற்போது; வெற்றிடம்; இடைவெளி.

**day'light-sav'ing**, *n.* விளக்குகள் ஏற்ற வேண்டிய அவசியமிராதவாறு கோடை காலத்தில் கடிகாரமுள்ளைத் தக்கபடி முன்னும் பின்னும் மாற்றிக் கற்பனை மணி நேரத்தின் மூலம் பகலொளியைப் பயன்படுத்திக்கொள்ளுதல்.

**day'-lil'y**, *n.* ஒருநாள் மட்டும் விரிந்து பின்னர் வாடிவிடும் மலர்களையுடைய அல்லி வகைச்செடி.

**day'long**, *a.* நாள்முழுவதும் நீடித்திருக்கிற; *adv.* நாள் முழுவதும்.

**day'mark**, *n.* ஒளியேற்றிக் காட்டப்பெறாத கடல் அறிகுறி.

**day'-nettle**, *n.* முட்செடி வகை.

**day'-old**, *a.* ஒரு நாள் சென்ற; ஒருநாள் வாழ்ந்துள்ள.

**day'-scholar**, *n.* வீட்டில் தங்கிப் பள்ளிசென்று பயிலும் மாணவர்.

**day'-school**, *n.* நாள்முறைப்பள்ளி, இரவுப்பள்ளியாகவோ தங்கல் விடுதிப் பள்ளியாகவோ நடத்தப்பெறுமல் பகற்பொழுதிற்குள்ளாக மட்டும் நடைபெறும் பொதுமுறைப் பள்ளி.

**day'-sight**, *n.* (மரு.) மாலைக்கண், அந்திமாலை.

**days'man**, *n.* வழக்கை விசாரிப்பதற்கு நாள் குறிப்பவர்.

**day'spring**, *n.* விடியற்காலம்.

**day'star**, *n.* விடிவெள்ளி.

**day'time**, *n.* பகற்பொழுது.

**daze**, *n.* குழப்பம், திகைப்பு, மனக்கலக்கம், பெருவியப்பு; *v.* உணர்வு மழுங்கச்செய், உணர்ச்சியறச்செய்; திகைப் பூட்டு; கண்கூசச்செய்.

**daz'zle**, *n.* மினுமினுப்பு, பகட்டு; பளபளப்பு; கண்கூசப் பண்ணும் பொருள்; *v.* ஒளிமிகுதியால் கண்கூசச்செய்; மேம்பாடு காட்டிப் பகட்டு, திறமையால் குழப்பு; அழகுத் தோற்றத்தால் மிரட்சியுறச்செய்; பெருமையால் திகைக்கவை; அளவினுல் பொறி கலங்கவை; dazzle paint, கப்பலின் மாதிரி-போக்கு முதலியவற்றை எதிரிகள் அறியாவண்ணம் கப்பலுக்குச் செய்யப்பட்ட வண்ணப்பூச்சு.

**daz'zlement**, *n.* மிக்கொளியால் கண்ணெளி மயங்கச் செய்தல்; திகைப்பூட்டல்.

**dazz'le-paint'ing**, *n.* மாருட்ட வண்ணப்பூச்சு; உருமறைத் துப் பிறிதுருக்காட்டுதற்காக முரண் புனைவாக வண்ணம் பூசுதல்.

**D-Day**, *n.* இரண்டாம் உலகப் போரில் பிரிட்டிஷ்-அமெரிக்க இணைப்புப் படைகள் வடக்கு பிரான்ஸ் மீது படையெடுத்த நாளாகிய 1944 சூன் 6-ஆம் நாள்; முக்கிய திரும்பு கட்ட நிகழ்ச்சிக்குரிய நாள்.

**deac'on**, *n.* உதவிக்குரு; திருக்கோயில் மணியக்காரர்; ஸ்காத்லாந்து நாட்டில் வரைநிலைக்குழும முதல்வர்; *fem.* deac'oness.

**dead**, *n.* மாண்டவர், இறந்துபோனவர்; முழு அமைதிநேரம்; *a.* மாண்ட, உயிர்வாழ்வு முடிந்துபோன, உயிரற்ற; பட்டுப் போன; சாவுநிலை ஒத்த; உயிர்ப்பற்ற; செயலற்ற; புல் பூண்டு வளர்ச்சியற்ற; மரத்துப்போன, உணர்ச்சியிழந்த; கவனத்தில் கொள்ளாத, ஏற்காத; கடிதவகையில் ஏற்கப் பெருத; தணுப்புற்ற; கிளர்ச்சியற்ற; சோர்வுமிக்க; குரல் வகையில் அடங்கிய; ஆற்றலற்றுப் போன; வளைவு நெளி வற்ற; மீளாத; வழக்கற்றுப் போன, வழங்காத, மரபற்றுப்போன; முழுநிறைவான, மிகுதியான; மிக மோசமான; திடீரென்ற; பிழைபடாத, துல்லியமான; தவருத; பந்துவகையில் விளையாடப்படாமல் நிலையா யிருக்கிற; குழிப்பந்தாட்டப் பந்து வகையில் குழியில் எக்கணமும் விழுந்துவிடக் கூடிய நிலையில் குழிக்கு மிக அணிமையிலிருக்கிற; *v.* மழுங்கச் செய், ஆற்றலிழக்கச் செய்; மரத்துப்போகச்செய்; ஆற்றலிழ; மரத்துப்போ; *adv.* முழுதும், முற்றிலும், தீர, நன்ருக; மாறுபாட்டுக்கு இட மின்றி; இயந்திர வகையில் எதிர்செயல் இல்லாமல்; இறந்து போனமாதிரியாக; (தொ.) dead against, முற்றும் மாருக; dead arch, போலி வளைவு, வளைவு போன்ற தோற்றமுடைய மதிலமைவு; dead as a door nail, dead as a herring, முற்றிலும் இறந்துபோன; dead colour, முதலிலிடும் நொய்ம்மையான நிறச்சாயல்; dead gold, மெருகிடாப் பொன்; dead language, பேச்சு வழக்கற்ற மொழி, வழக் கொழிந்த மொழி; dead man's fingers, dead men's fingers, நண்டு போன்ற உயிரினங்களில் செவுளில் உள்ள விரலொத்த பிரிவுகள்; dead men's bells, கையுறையணிந்த விரல்களைப் போன்ற மலர்களையுடைய செடிவகை; dead men's shoes, இறந்துபோனவருக்குப்பின் அடையத்தக்க அவர் உடைமை; Dead Sea apple, Dead Sea fruit, பார்ப்பதற்கு அழகா யிருந்து தொட்டால் சாம்பலாக உதிர்ந்துவிடுவதாகக் கருதப் படும் பழம்; அழகாயிருந்து ஏமாற்றந்தரும் பொருள்; dead set against, முற்றும் எதிர்க்கிற நிலையில், நேர்முரணுக.

**dead'-alive', dead'-and-alive'**, *a.* எழுச்சியற்ற, சோம்பி யிருக்கிற, செயலற்ற.

**dead'-beat**, *a.* முற்றிலும் தோல்வியுற்ற; தீரக்களைத்த.

**dead'-born**, *a.* இறந்து பிறந்த.

**dead'-cart**, *n.* கொள்ளை நோயினுல் இறந்தவர்களின் சடலங் களைச் சேர்த்து எடுத்துக்கொண்டு போவதற்கான வண்டி.

**dead'-clothes**, *n. pl.* இறந்த சடலங்களுக்கு அணிவிக்கப் பட்டிருக்கும் ஆடைகள், பிணக்கோடி.

**dead'col'ouring**, *n.* படம் எழுதுவதில் பரவலான தொடக்க உருவரைச் சட்டம்.

**dead'-deal**, *n.* பிணம் கிடத்தப்படும் பலகை.

**dead'-drunk'**, *a.* வெறிக்கக் குடித்துள்ள, தீரக் குடித்து வெறிமயக்கமுற்ற.

**dead'en**, *v.* உயிர்ப்பு அகற்று; ஆற்றல் அடக்கு; ஒளி மழுக்கு; ஒளி ஊடுருவாதபடி செய்; உணர்ச்சி குன்றச்செய்; உயிர்ப்பு இழ; ஆற்றல் சோரு; ஒளிமழுங்கு; உணர்ச்சி இழ; மரத்துப்போகச்செய்.

**dead'-end**, *n.* ஒரு முனை அடைக்கப்பட்டுவிட்ட குழாய்; ஒரு முக அடைப்பு வழி; முட்டுச்சந்து.

**dead'-eye**, *n.* (கப்.) தளைவட்டு, பாய்க்கயிறு புகுத்திக்கட்டு வதற்காக மூன்று துளைகள் போடப்பட்டிருப்பதும் சுற்றிலும் கயிற்றுப்பட்டை அல்லது இரும்புப்பட்டையைக் கொண் டிருப்பதுமான வட்டத்தட்டையான மரக்கட்டை.

**dead'-fall**, *n.* முட்டுப்பொறி, முட்டு அகற்றப்பட்டதும் விலங்கின்மேல் விழுந்து அதனைக் கொல்லுகிற அல்லது முடமாக்குகிற பளுவுடைய பொறி.

**dead'-fire**, *n.* சாவின் முன்னறிவிப்பெனக் கருதப்படுகிற தீயின் தோற்றம்.

**dead'-freight**, *n.* (கப். வாணிபம்) தெண்டச்சத்தம், கப்பலை வாடகைக்கு எடுத்துக்கொண்டு அதன் நிறைய சரக்கு போடாதவர் அதன் வெற்றிடத்துக்காகச் செலுத்தும் பணம்.

**dead'-ground**, *n.* படைத்துறையில் பீரங்கி வேட்டுப்பட முடியாத இட எல்லை.

**dead'-hand**, *n.* கோயிலக மானியம், மறுபடியும் பிறர்க்கு உரிமையாக்கலாகா உடைமை மாற்றம்.

**dead'-head**, *n.* உரிமையின்றித் துய்ப்பவர்; நுழைவுக் கட்டணம் செலுத்தாமல் நாடகங்கள் முதலியவற்றிற்குச் செல்பவர்; சத்தம் செலுத்தாமல் பயணம் செய்பவர்; உலோகம் உருகிக் குவைக்குச் செல்லும் வழி; குவையில் உருகி இறுகிய உலோகம்.

**dead'-heat'**, *n.* போட்டியிடுபவர்கள் சமநிலை எய்தியிருக்கிற பந்தய ஆட்டம்; போட்டிப் பந்தயச் சமநிலையடைவு.

**dead'-house**, *n.* புதைப்பதற்குமுன் பிணங்களை வைத்திருக்கு மிடம், சாவுக்கிடங்கு.

**dead'lett'er**, *n.* உரியவரிடம் ஒப்புவிக்கப்படாது அஞ்சல் நிலையத்தில் கேட்பாரற்றுக்கிடக்கும் கடிதம்; நடைமுறைப் படுத்தப்படாத சட்டம்.

**dead'-lev'el**, *n.* மேடுபள்ளமற்ற நெடுநிலப்பரப்பு; பாழ் மட்டம், வேறுபாடற்ற மட்ட நிலை.

**dead'-lift**, *n.* பாழும்பளு, நெம்புகோல் முதலிய இயந்திரத் துணையின்றித் தூக்கும் முயற்சி; ஊக்கம் கெடுக்கும் கடுமுயற்சி.

**dead'-light**, *n.* கப்பல் பக்கத்தொளைக்கு வெளியே வெளிச்சம் தெரியாதபடி அதன் உட்புறத்திலுள்ள பலகணிக்கதவு.

**dead'-lights**, *n. pl.* கப்பல் அறையில் புயல் வீசாதபடி தடுக்கும் பலகணிக்கதவுகள்.

**dead'-line**, *n.* படைத்துறைச் சிறைச்சாலையில் கைதி கடந்து சென்ருல் சுட்டுவீழ்த்துவதற்குரிய கோடு.

**dead'lock**, *n.* முட்டுக்கட்டைநிலை, முட்டுநிலை, முடக்கம்.

**dead'-loss'**, *n.* பாழ் இழப்பு, ஈடு அற்ற இழப்பு.

**dead'ly**, *a.* சாவுக்கு வழிவகுக்கிற, உயிரிழப்பில் கொண்டு விடுகிற, நச்சுத்தன்மையுடைய; கொடிய; சாத்துயர் அளிக்கிற; பாழான; சாவொத்த; தப்ப முடியாத; கழி மிகுதியான; *adv.* இறந்தாற்போன்று; கழிமிகுதியாக; (தொ.) deadly sin, வெம்பழி, கொடிய பாவம்.

**dead'ly-night'shade**, *n.* கொடிய நச்சுப் பூண்டு வகை.

**dead'-march'**, *n.* படைவீரர்களின் சாவு ஊர்வல இசை.

**dead'-meat**, *n.* விற்பனைக்களத்துக்கு ஆயத்தமாயிருக்கும் விலங்கிறைச்சி.

**dead'-men**, *n. pl.* மிகுதிக் குடிக்குப் பிறகு எஞ்சியுள்ள வெற்றுப்புட்டிகள்.

**dead'-nett'le**, *n.* முள் இல்லாத முட்செடி போன்ற செடி வகை.

**dead'-pan**, *n.* உணர்ச்சியற்ற முகத்தோற்றம்; உணர்ச்சி அற்ற முகத்தோற்றமுடையவர்; உணர்ச்சியற்ற முகத் தோற்றம் மேற்கொள்பவர்; *a.* முகபாவமற்ற; உணர்ச்சி யற்ற முகபாவ மேற்கொள்கிற; விருப்பான முகத்தோற்ற முடைய; கேலி விருப்புத்தோற்றமுடைய; *v.* உணர்ச்சியற்ற தோற்றம் கொண்டிரு; விருப்புடனிரு; கேலிவிருப்பு மேற்கொள்.

**dead'-pay**, *n.* இறந்துபோனவர்களின் பெயரால் தவருக ஏமாற்றி வாங்கப்படும் சம்பளம்.

**dead'-point**, *n.* முட்டுநிலை, இயந்திரத்துறையில் தாக்கு செலுத்தப்பட்டும் திருப்பமுடியாத வளைவு திருகின்நிலை, மீட்டும் இயக்கினலன்றி இயங்காது முட்டுப்பட்டு நிற்கும்நிலை.

**dead'-pull**, *n.* நெம்புகோல் முதலிய இயந்திரத்துணையின்றி இழுத்தல்; ஊக்கங்கெடுக்கும் நிலையிலும் செய்யப்படும் முயற்சி.

**dead'-reck'oning**, *n.* கணிப்புச்சுட்டு, பதிவேட்டின் துணைக் கொண்டு மட்டும் கப்பலிருக்குமிடத்தை மதிப்பிட்டறிதல்.

**dead'-rope**, *n.* (கப்.) கப்பி வட்டினூடே செல்லாத கயிறு.

**dead'-set'**, *n.* குத்துநோக்கு, வேட்டை இரையைக் கண்ட வேட்டை விலங்கு அதனை நோக்கி அசையாது கண் குத்திட்டு நிற்கும்நிலை; தாக்குறுதி, சிறைபிடித்துவிடும் நோக்கத் துடன் நீடித்த உறுதியான தாக்கு.

**dead'-shot**, *n.* குறிதவருது சுடுபவர்.

**dead'-stroke**, *a.* இயந்திரங்களில் இயங்கும்போது பின்னுதைப்பற்ற.

**dead'-wall**, *n.* (க-க.) பலகணிகள்-வாயில் முதலிய புழை இல்லாத சுவர்.

**dead'-wa'ter**, *n.* தேங்கி நிற்கும் நீர்; கப்பல் செல்லும்போது அதன் பின்புறத்தில் நெருங்கிச் சுழலிடும் நீர்.

**dead'-weight**, *n.* பாழும் பளு, துணை உயிர்த்திறமற்ற பாரம், தாங்க முடியாத சுமை; (கப்.) நிறைபாரத்துக்கும் குறை பாரத்துக்கும் இடையேயுள்ள கப்பல் அமிழ்வு வேற்றுமை.

**dead'-wind**, *n.* புயல்காற்றின் நடுவிலுள்ள காற்றமைதிநிலை.

**dead'wood**, *n.* கப்பல் அடிக்கட்டையின் முனையில் மேற்புறம் பொருத்தப்படும் கட்டைத்துண்டுகள்; பயனற்ற பொருள்.

**dead'-work**, *n.* நேர் விளைவு தராத முன்னீடான வேலைப் பகுதி, தொடக்க முயற்சியில் கழிவுறும் வேலை.

**deaf**, *a.* செவிடான, காதுமந்தமான; கேளாத, செவி கொடாத; கேட்க விருப்பமில்லாத; கவனிக்காத; கருத் தில்லாத; இசைவற்ற; இசைநுட்பங்களில் கேள்வித் திறமற்ற; தாளச்சந்த வகைகளில் ஈடுபாடற்ற; கொட்டை வகையில் உட்பருப்பற்ற; (தொ.) turn a deaf ear to, காதில் வாங்கிக் கொள்ளாதிரு.

**deaf'-aid**, *n.* செவித்துணைக்கருவி, காது கேட்பதற்குத் துணைபுரியும் கருவி.

**deaf'-and-dumb**, *a.* செவிட்டுமரான; செவிட்டுமர்களுக்குரிய; (தொ.) deaf-and-dumb alphabet, deaf-and-dumb language, செவிட்டுமைகள் கருத்தைத் தெரிவிப்பதற்கான அடையாளக் குறியீட்டுத் தொகுதி.

**deaf'en**, *v.* கூச்சலினல் காதடைக்கச்செய், கூக்குரலிட்டுக் காது கேட்காதபடிசெய்; செவிடுபட முழங்கு; மற்ற இசை கேளாதபடி பேரொலி செய்; செவி அதிரவை; ஓசை ஊடுருவாதபடி செய்; தள முதலியவற்றின் வகையில் ஒலித் தடைப்படுத்து.

**deaf'ening**, *n.* (க-க.) ஒலித்தடைப்பொருள், தளத்திலும் குறுக்குச் சுவர்களிலும் ஒலி ஊடுருவாதபடி அவற்றினுள் திணித்தடைக்கப்படும் பொருள்; *a.* செவிடுபடுத்துகிற, காதடைக்கிற.

**deaf'-mute'**, *n.* செவிட்டுமை, செவிட்டுமர்.

**deal**[1], *n.* தேவதாருமர வகைகளின் வரையளவைப்பட்ட அறுவைப் பட்டிகை (6 அடி நீளம், 7 அல்லது 9 அங்குல அகலம், 3 அங்குலத்துக்குக் குறைந்த திட்பம் உடையது), தேவதாரு வகை மரம்; வெட்டுமரக் கட்டை; *a.* தேவதாருமர வகையாலான.

**deal**[2], *n.* பங்கு, பகுதி; அளவு, கூறு; சீட்டுப் பகுப்பு; சீட்டுப் பங்கீடு; பேரம்; சீட்டு ஆட்டப் பங்கு, பங்கு முறை, (பே-வ.) செயல் தொடர்பு; *v.* பகுத்தளி, பாத்தீடு செய்; சீட்டுப் பங்கிட்டு விளம்பு; சீட்டுக்கூறு அளி; செயல் தொடர்புகொள்; வாணிகத் தொடர்புகொள், வாணிக முறை யில் ஈடுபடு; வாணிகம் செய்; நடந்துகொள்; நடவடிக்கை மேற்கோள்; கூடி வாதிடு, கூடிப் போராடு; (தொ.) New Deal, 1932-இலும் அதற்குப் பின்னரும் ரூசுவெல்ட்டின் (Roosevelt) ஆட்சிக் குழுவினரால் திட்டமிடப்பட்ட சமூக-பொருளாதார ஏற்பாடு.

**deal'bate**, *a.* வெண்மையாக்கப்பட்ட.

**deal'er**, *n.* வாணிகம் செய்பவர்; ஆட்டச் சீட்டுகளைப் பங்கிடு பவர்; ஆட்டச் சீட்டுகளைப் பங்கிடும் முறையிலுள்ளவர்.

**deal'fish**, *n.* ஓலைவாளை இனத்தைச் சேர்ந்த ஆழ்கடல் மீன் வகை.

**deal'ing**, *n.* செயல் தொடர்பு, நடைமுறைத் தொடர்பு; வாணிகத் தொடர்பு.

**dealt**, *v.* deal என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**deambula'tion**, *n.* நடத்தல்.

**deam'bulatory**, *n.* உலாவிடம்; கோயில் திருச்சுற்று மாளிகை; *a.* இங்குமங்கும் போகிற, திரிகிற.

**dean**[1], *n.* கோயில் குரு; கல்வி நிலையத் தலைவர்; பல்கலைக் கழகத் துறை முதல்வர்; கல்லூரியின் ஆட்சி-ஒழுக்கக் கட்டுப் பாட்டு அலுவல்கள் வாய்க்கப்பெற்று அங்கேயே வசிக்கும் கல்லூரி உறுப்பினர்; கூட்டுக் குழுவின் மூத்த உறுப்பினர்; திருக்கோயில் மேல்முறையீட்டு நீதிமன்றத்தின் தலைமை நடுவர்; வணிகச் சங்கத் தலைவர்; (தொ.) rural dean, சில திருவட்டகைகளில் மாவட்டச் சமய முதல்வருக்குட்பட்டு சமயக் குருமார் நலனைக் கவனித்துக்கொள்பவர்.

**dean**[2], *n.* சிறு பள்ளத்தாக்கு.

**dean'ery**, *n.* சமயகுரு பதவி; சமயகுருவின் வீடு; சமய குருவுக்குட்பட்ட திருவட்டகைகளின் தொகுதி.

**dean'ship**, *n.* சமயகுருவின் பதவி; சமயகுருவுக்குரிய மதிப்புத் தரம்.

**dear**, *n.* அருமையானவர், அன்புக்குரியவர்; காதலன்; காதலி; *a.* மிகவும் நேசிக்கிற, அருமையான, அன்புள்ள; அதிக விலையுள்ள; விலையேறிய, இயல்பாகவே அக விலையுள்ள; கிடைத்தற்கரிய; பெருமதிப்புள்ள; *adv.* அகவிலையில்; *int.* வியப்பு-துன்பம்-இரக்கம் முதலியவற்றை வெளிப்படுத் தும் வியப்பிடைச் சொல்.

**dear'ie**, *n.* விளி வழக்கில் அன்புக்குரியவர்.

**dear'ness**, *n.* அன்புக்குரியதாக்கும் இயல்பு; அன்பு; விலை யேறியுள்ள நிலை; (தொ.) dearness allowance, அக விலைப்படி, பஞ்சப்படி.

**dearth**, *n.* இன்மை; பஞ்சம்; உணவுப் பஞ்சம்; ஏதாகிலும் ஒன்று போதிய அளவு கிடைக்காமை; அகவிலை; தரிசு நிலை.

**dear'y**, *n.* அருமையானவர்.

**death**, *n.* சாதல், மாள்வு, சாவு, இறப்பு; உயிரற்ற நிலை; வேட்டையில் உயிர்க்கொலை; சா முறை, சாகும் வகைமுறை; இறப்பின் காரணம்; சாகும் தன்மை; அழிவு; உயிருக்கு இறுதி; மரபழிவு; ஆன்மிக அழிவு; கூற்றம், சாவின் உருவகக் குறிப்பு; செத்த தோற்றம்; (தொ.) at death's door, இறக்குந்தறுவாயில்; be death on, ஒன்றின் சாவுக்கு ஏதுவாயிரு; ஒன்றைப்பற்றி அவாக் கொண்டிரு; ஒன்றைச் செய்வதில் திறமை பெற்றிரு; death knell, சாவுமணி; gates of death, jaws of death, சாவின் வாயில், மாளும் தறுவாய்; in at the death, வேட்டை நாய்கள் விலங்கினைக்

கொல்லும்போது அதனருகில்; நிகழ்ச்சி முடிவுறுந் தறுவாயில் உடனுயிருக்கும் நிலையில்; to death, கடைசிப் படிவரை, இறுதி வரை; ஓயும் வரை.

death'-ag'ony, *n.* சாத்துயர், மரண வேதனை.

death'-bed, *n.* இறுதிப்படுக்கை; சாவுக்குரிய இறுதி நோய்; (தொ.) deathbed repentance, காலங் கடந்த மனமாற்றம்.

death'-bell, *n.* சாவு நேர மணி.

death'-blow, *n.* சாவினை உண்டாக்கவல்ல அடி, கொல்லுவதற்குரிய கொடு வீச்சு; அழிவுண்டாக்கும் செயல்.

death'-cup, *n.* நச்சுக்காளான் வகை.

death'-damp, *n.* இறப்புக்குமுன் தோன்றும் குளிர் வியர்வை.

death'-duties, *n. pl.* சாவு வரி, உடைமையை உரிமை வழியாய் அடையும்போது செலுத்தப்படும் வரி.

death'-fire, *n.* சாவினை முன்னறிவிப்பதாகக் கருதப்படும் ஒளி.

death'ful, *a.* கொலைக்காரணமான; அழிவுண்டாக்கத்தக்க; இறக்குமியல்புள்ள; சாவினைப் போன்ற.

death'less, *a.* இறவாத; எக்காலத்துமுள்ள.

death'like, *a.* சாவுக்குரிய; சாவினைப் போன்ற.

death'ly, *a.* கொலைக்குரிய, உயிர் போக்குவதற்குரிய; சாவினைப் போன்ற.

death'-marked, *a.* இறப்பதற்கெனக் குறித்துவிடப்பட்ட; சாவதென்று விதிக்கப்பட்ட, இறந்தே தீரவேண்டிய.

death'-mask, *n.* இறந்தவர் முகத்தினின்றெடுக்கப்பட்ட சுதை அடைவுரு.

death'-rate, *n.* மரண விகிதம், மக்கள்தொகை மொத்தத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை விழுக்காடு.

death'-ratt'le, *n.* சாகும்வேளைக்குரிய தொண்டை இரைச்சல், சிலேட்டும நடப்பு.

death'-ray, *n.* சாக்கதிர், முற்படும் உயிர்களனைத்தையும் அழித்துவிடக்கூடிய ஆற்றலுடையதென்று கருதப்படும் அழிவுக் கருவியான ஒளிக்கதிர்.

death'roll, *n.* இறந்தவர் பட்டியல்.

death's-head, *n.* மனித மண்டையோடு; மனித மண்டையோட்டு உருவம்; மண்டையோட்டின் உருவமைந்த கைவிரல் மோதிரம்; (தொ.) death's-head moth, மார்புக்கூட்டின் பின்புறத்தில் மண்டையோட்டைப் போன்ற அடையாளமுள்ள மிகப் பெரிய ஐரோப்பிய விட்டில்பூச்சி வகை.

death'-song, *n.* இறப்பதற்குமுன் பாடப்படும் பாடல் வகை.

death'-stroke, *n.* சாகடிக்கும் அடி.

death'-throe, *n.* சாத்துடிப்பு, மரண வேதனை.

death'-trap, *n.* சாப்பொறி, பாதுகாப்பதாகத் தோற்றினாலும் உயிருக்குப் பேரிடர் விளைக்கக்கூடிய இடம்.

death'-warrant, *n.* மரண தண்டனை நிறைவேற்றுவதற்குரிய ஆணை.

death'-watch, *n.* இறக்குந் தறுவாயிலிருப்பவரின் பக்கத்தமர்ந்து விழிப்போடு பார்த்துக் கொள்ளல்; 'டிக், டிக்' கென்றொலி செய்யும் வண்டு போன்ற பூச்சி வகை.

death'-wound, *n.* சாவுக் காயம், மரணம் உண்டுபண்ணத்தக்க புண்.

*debacle*, (பிர.) *n.* ஆற்றில் பனிக்கட்டி உடைபாடு; இடிவு தகர்வு, நெருக்கடி நெரிசல்; கூட்டத்தின் வேக மிதித்தடிப்புப் போக்கு, நெரித்து மிதித்துத் தள்ளிக்கொண்டு போதல்; அரசியல் தகர்வு; படுவீழ்ச்சி; (மண்.) பாறைகளையும் சிதைகூளங்களையும் வாரி அடித்துக்கொண்டு வரும் பெருநீர்ப் பெருக்கு.

debar', *v.* விலக்கித்தடு; வெளியே தடுத்து நிறுத்து; வாயிலில் தடை கம்பியிட்டுத் தடு; தடங்கல் செய்.

debark', *v.* கப்பலிலிருந்து இறக்கு; கரையில் இறங்கு.

debarr'ass, *v.* மலைவகற்று; சிக்கலினின்றும் விடுவி; தடைவிலக்கு.

debase', *v.* மதிப்பில் தாழ்த்து; தரத்தில் குறைவுபடுத்து; ஒழுக்கத்தில் இழிவுபடுத்து; நாணயத்தைக் கலப்படம் செய்து மதிப்புக் கெடு.

debased', *a.* தாழ்ந்த, இழிந்த, பதமிழந்த; (கட்.) தலை மறிக்கப்பட்ட.

debase'ment, *n.* தாழ்த்துதல்; தாழ்வு, இழிவு; சிறுமை.

debat'able, *a.* வாதத்துக்கிடமான, வாதத்துக்குரிய, இரு தரப்பிலிருந்து விவாதிக்கப்படத்தக்க, மறுத்துரைக்கத்தக்க; (தொ.) debatable ground, இருதிறத்தார் தமதெனப் போராடும் எல்லை நிலப்பகுதி; ஐயப்பாட்டுக்குரிய இடை எல்லைப்பகுதி.

debate', *n.* வாதம், சொற்போர்; வாய்ச்சண்டை, வாக்குவாதம்; வாதாட்டம், பலதிசைக் கருத்துமோதல், சர்ச்சை, பொது விவாதம்; *v.* வாதிடு, தருக்கம் செய்; வாதாடு, வாய்ச்சண்டையிடு; வாதாட்டத்தில் கலந்துகொள்; எதிர்த்துக் கூறு; கலந்தாராய்; ஆழ்ந்து சிந்தி, ஆமைந்தாய்வு செய்.

debat'er, *n.* தர்க்கம் செய்பவர்; வாதத்திறமையுடையவர்.

debauch', *n.* மட்டற்ற குடிவெறி; ஓயாக் குடிப்பழக்கம்; புலனுகர்ச்சி வெறி, காமவெறி; ஒழுக்கக்கேடு; *v.* நெறிபிறழச் செய், கடமை திறம்பச்செய்; ஒழுக்கங் கெடச்செய்; இழிந்த புலனுகர்ச்சியில் தோய்வி, சிற்றின்பத்தில் புரளுவி, கீழ்மைப் படுத்து, இழிவுக்கு; குடிப்பழக்கமூட்டு; கற்பழி; மட்டு மீறிய புலனுகர்ச்சி மேற்கொள்.

debauched', *a.* சிற்றின்பத்தில் அழுந்திய, ஒழுக்கங்கெட்ட, வரம்பிகந்த நடையுடைய.

debauchee', *n.* பரத்தன்; பரத்தை.

debauch'ery, *n.* வரம்பு மீறிய ஒழுக்கக்கேடு, சிற்றின்பத் தோய்வு; மட்டுமீறிய குடிப்பழக்கம்.

deben'ture, *n.* கடனீட்டுப் பத்திரம், கடனாகப் பெற்றுக் கொண்ட தொகையைத் திருப்பிக் கொடுக்குமளவும் வட்டி செலுத்துவதாகக்கண்டு வணிகநிலையம் முதலியவை தம்முடைய முத்திரையிட்டுக் கொடுக்கும் ஆவணம்; அரசு நிலையங்கட்கு வழங்கிய சரக்குக்கீடான பண உரிமைச்சீட்டு; சுங்கத்துறையினரிடமிருந்து ஏற்றுமதிக்கெதிராப் பெறும் பற்றுமுறி.

debent'ured, *a.* கடனீட்டுப் பத்திர உரிமையுடைய; பண ஈட்டுரிமையுடைய.

debil'itate, *v.* தளர்வூட்டு, வலுக்கெடு, சோர்வுறச்செய்.

debil'ity, *n.* நரம்புச் சோர்வு; தளர்ச்சி, ஊக்கக் கேடு.

deb'it, *n.* பெறு கடன், கொடுக்கப்பட வேண்டிய ஒன்று; பற்று, கொடுக்கப்படவேண்டிய தொகையைக் காட்டும் கணக்குப் பதிவு; கணக்கில் பற்றுப் பதிவுகள் எழுதப்படுகிற இடதுபக்கம்; *v.* பெறு கடனாக எழுது; பற்று வை, பற்றாக எழுது.

deb'lai, *n.* கோட்டை கொத்தளங்களில் அணைசுவர் எழுப்புதற்காக அகழியினின்றும் தோண்டியெடுக்கப்பட்ட மண்.

debonair', debonnaire', *a.* நயப்புடைய, முகமினிய, மரியாதையுடைய; இன்புடைய.

debouch', *v.* படையணி வகையில் இடுங்கிய கணவாயிலிருந்து வெளிப்பட்டு பரவு; நீர் ஒழுக்குவகையில் இடுங்கிய பாதை கடந்து வெளியே ஒழுகு.

debouche', *n.* வெளிச்செல் வழி, புறப்போக்குக் குழாய்.

debouch'ment, *n.* கணவாய் கடந்து புறப்படல், இடுங்கிய வழியினின்று வெளியேறுதல்; புலப்படுமிடம்; ஆற்றுவாய்.

debouchure', *n.* ஆற்றுவாய்; கடற்கால் தொடங்குமிடம்.

beb'ris, *n.* சிதைவு, சிதை கூளம்; கழிபொருள்.

debruised', *a.* (கட்.) மரபு வழக்கான உருவங்களின் மேலீட்டால் அரைகுறையாக மறைக்கப்பட்ட.

debt, *n.* கடன்; பொறுப்பு, கடப்பாடு; கடமை; (விவி.) பாவம்; (தொ.) bad debt, வாராக்கடன்; debt of honour, சட்டத்தால் ஏற்றுக்கொள்ளப்படாத கடன், சூதாட்டக்கடன்;

debt of nature, சாவு; floating debt, அரசியலாரின் பல்திறப் பட்ட பொதுப்படைக்கடன், நிதிநிலவரக் கடனுக்கப்படாத கருவூலமுறிகள் போன்ற சில்லறைக்கடன்; in one's debt, பணக்கடன் கொடுக்கக் கடமைப்பட்ட; கடமைப்பட்ட.

**debt'ee,** *n.* கடன் கொடுப்பவர்.

**debt'or,** *n.* கடன் வாங்குபவர், வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கக் கடமைப்பட்டவர், கடன்பட்டவர்.

**debunk',** *v.* (பே-வ.) உணர்ச்சித்திரை கிழி, பாசாங்கை அம்பலப்படுத்து; மேற்பூச்சகற்று, போலி மதிப்பை அழித்து மெய்த்தோற்றத்தை வெளிப்படுத்து; செயற்கைப் புகழ்ப் பீடத்திலிருந்து வீழ்த்து.

**debus',** *v.* (பே-வ.) உந்து வண்டியிலிருந்து இறங்கு; உந்தகத்திலிருந்து ஆட்களை இறக்குவி; பேருந்துவிலிருந்து சரக்குகளை இறக்கு.

***debut,*** (பிர.) *n.* அரங்கேற்றம், முதல் முயற்சி, பொது விடத்தில் முதன்முறையாகத் தோற்றமளித்தல்.

***debutant,*** (பிர.) *n.* அரங்கேறுபவன், முதன் முறையாகத் தோற்றம் அளிப்பவன்; *fem. debutante.*

**de'cachord,** *n.* பத்து நரம்புகளுள்ள பழங்கால இசைக்கருவி.

**dec'ad, dec'ade,** *n.* பத்து; பத்தான தொகுதி; பதிகம்; பத்தாண்டு.

**dec'adence, dec'adency,** *n.* நிலைதளர்வு, நலிவு, சோர்வு, தரங்கெட்டழிந்த நிலை; கலை இலக்கியத்துறைகளின் வளர்ச்சியில் உச்சநிலை திரிந்த இறங்குமுகப் பருவம்; பிரஞ்சு இலக்கியத்தில் 19-ஆம் நூற்றாண்டில் நிலவிய மறைகுறியீட்டுக்குழுவினர் (symbolists) பண்பு.

**dec'adent,** *n.* இழிபுற்றவர், தரங்கெட்டவர், சீர்கேடுற்றவர்; இலக்கியத் தளர்ச்சி எழுத்தாளர், கலைத்தரங்கெட்ட நிலைமை உற்றவர்; பிரஞ்சு மறைகுறி மரபின் எழுத்தாளர்; *a.* நிலையிழிபுற்ற, தரங்கெட்ட, சீர்கேடுற்ற, நலிவுற்ற, சோர்ந்த; அழிகிற; அழுகிய; உடலுரமற்ற; மனஉரமிழந்த; மறைகுறி மரபு சார்ந்த.

**dec'agon,** *n.* பதின் கோணம், பத்துக் கோணங்களும் பத்துப் பக்கங்களும் கொண்ட நேர்கட்ட வடிவம்.

**decal'cify,** *v.* எலும்பிலிருந்து சுண்ணத்தை நீக்கு; சுண்ணம்புச் சத்தினைப் போக்கு.

**decal'ogist,** *n.* பத்துக் கட்டளைகளை விளக்கிக் கூறுபவர்.

**dec'alogue,** *n.* பத்துக் கட்டளை.

**Decam'eron,** *n.* பத்து நாட்களில் கூறப்பட்டதாகக் கருதப் படும் பொக்காசியோ (Boccaccio) என்ற இத்தாலிய எழுத்தாளர் எழுதிய நூறு கதைகள்.

**decamp',** *v.* திருட்டுத்தனமாகச் சென்றுவிடு, திடீரென்று ஓடிவிடு; தங்கல் கலைத்து விடு; கூட்டுக் கலைந்து செல்.

**decan'al,** *a.* சமய வட்டத் துணைத்தலைவரைச் சார்ந்த; வட்டத் துணைத்தலைவருடைய ஆட்சி வரம்பைச் சார்ந்த; வட்டத்துணைத்தலைவர் திருக்கோயிலில் அமரும் தென் சிறைப் பகுதி சார்ந்த.

**decant',** *v.* தெளிய வைத்து இறு, வடித்திறு; கலத்தினின்று மற்றொரு கலத்திற்கு ஊற்று; மதுவைப் புட்டியிலிருந்து வடி குவளைக்கு ஊற்று.

**decan'ter,** *n.* வடிகலம், மேசையினிடமாக மது ஊற்றிக் கொண்டு வருவதற்குரிய அழகிய குப்பி.

**decap'itate,** *v.* தலையை வெட்டு, தலை துணித்துத் தண்டி; தலை துண்டித்து வேருக்கு; நுனி தறித்து வேருக்கு.

**dec'apod,** *n.* பத்துக் கால்களை உடைய நண்டை உட் கொண்ட தோடுடைய உயர் உயிரின வகை; *a.* பத்துக் கால்களையுடைய உயிரினத்தைச் சார்ந்த.

**Decap'oda,** *n. pl.* பத்துக் கால்களுள்ள நண்டு-இருல் முதலியவற்றை உள்ளடக்கிய உயிரினம்.

**decar'bonate, decarb'onize, decar'burise,** *v.* கரியம் அகற்று; கரிய ஈருயிரகை வெளியை நீக்கு.

**deca'sualize,** *v.* அன்றுடக் கூலியாளை நீக்கு.

**decasyllab'ic,** *a.* பத்து அசைகளைக் கொண்ட.

**decasyll'able,** *n.* பத்து அசைகள் கொண்ட பாவின் அடி.

**decathol'icize,** *v.* பொதுமைப் பண்பைப் பிரித்தகற்று; கத்தோலிக்கப் பண்பை மாற்று.

**decay',** *n.* வீழ்ச்சி, பதனழிவு, சிதைவு; அழுகிப்போதல்; தேய்வு, உடற்சீர்கேடு; அழுகிய கூறு; கதிரியக்கத் திற முடைய பொருளின் காலச் சிதைவு; *v.* அழிவுறு, அழுகிக் கெடு; தரங்கெடு; தரங்கெடச்செய்; நலமழி; செப்பமிழ; பண்பு இழ; உரங்கெடு; ஊக்கமழி; செல்வச் சீர்கேடுறு; தேய்வுறு, நலிவுறு.

**decease',** *n.* சாவு, உயிர்ப் பிரிவு; *v.* இற, மாள்வுறு.

**deceased',** *n.* அணிமையில் மாள்வுற்றவர்; *a.* இறந்து போன; அணிமையில் மாள்வுற்ற.

**deceit',** *n.* வஞ்சகம், ஏய்ப்பு; இரண்டகம், சூது; எத்து மானம், ஏமாற்று, வேண்டுமென்றே தவரூன வழி காட்டுதல்; புரட்டு, புனைசுருட்டு, புரளி, பொய்ம்மை; போலித் தோற்றம்.

**deceit'ful,** *a.* சூழ்ச்சி மிக்க, வஞ்சகம் நிறைந்த, போலிப் புனைவான; ஏமாற்றுகிற; வஞ்சிக்கும் இயல்புடைய; இரண்டகமான, உள்ளொன்று புறமொன்ரூன.

**deceiv'able,** *a.* ஏமாற்றப்படக்கூடிய, எளிதில் வஞ்சனைக்கு உட்படத்தக்க.

**deceive',** *v.* தப்பு வழிகாட்டு; தவறிழைக்கச் செய்; ஏய், ஏமாற்று; ஏமாற்றமடையச் செய்.

**decel'erate,** *v.* வேகந்தணி, மெதுவாக்கு, தாமதப்படுத்து.

**Decem'ber,** *n.* ஆங்கில ஆண்டின் பன்னிரண்டாவது மாதம்.

**Decem'brist,** *n.* ருசியாவில் 1825-ஆம் ஆண்டில் நடந்த புரட்சி இயக்க உறுப்பினர்.

**decem'vir,** *n.* பதின் குழுவினர்; பண்டை ரோமாபுரியில் பன்னிரண்டு கட்டளைகளை (451 B. C.) உருவாக்க அமர்வு பெற்ற பதின்மருள் ஒருவர்; முற்கால வெனிஸ் (Venice) மாநகரில் ஆட்சிக் குழுவினர் பதின்மருள் ஒருவர்.

**decem'virate,** *n.* பதின்மர் குழு; பதின்மர் ஆட்சிக்குழு; பதின்மர் ஆட்சிக்காலம்.

**de'cency,** *n.* தகைமை, நடைமுறைத் தகுதி; நாகரிக நுண்ணயக் கூறு, சுவை நலம்; பண்பு நலம்; இழி சொல்லும் இழி நடைத் தோற்றமும் விலக்கிப் பிறர்க்கின்னு நேராமற் காக்கும் பெருமிதச் சால்பு; மதிப்புடைமை, ஒப்புரவுடைமை; (தொ.) the decencies, நாகரிக முறைகள், உயர்வாழ்க்கைத் தகுதிக் கூறுகள்.

**decenn'ary,** *n.* பத்தாண்டுகள் கொண்ட காலக்கூறு; *a.* பத்தாண்டுக் காலத்துக்குரிய.

**decenn'iad,** *n.* பத்தாண்டுக் காலம்.

**decenn'ial,** *a.* பத்தாண்டுகள் கொண்ட; பத்தாண்டுகளுக் கொருமுறை நிகழ்கிற.

**decenn'ium,** *n.* =decenniad.

**de'cent,** *a.* ஏற்புடைய; பண்பார்ந்த; மட்டான; நடுத் தரமான, வரம்பு மீருத, பாங்குடைய.

**decen'tralize,** *v.* நடுவாட்சி வலுத்தளர்த்து; ஆட்சி உரிமை பன்முகப்படுத்து; கிளையாட்சி வலுப்படுத்து.

**decept'ible,** *a.* ஏமாற்றப்படத்தக்க, வஞ்சிக்கப்படக்கூடிய.

**decep'tion,** *n.* ஏமாற்றுதல், மோசடி, வஞ்சனை; சூழ்ச்சிப் பொறி, தந்திரம்; ஏமாற்றப்பட்ட நிலை; ஏமாற்றுமுறை; ஏமாற்றப்பட்டதால் விளையும் தவறு.

**decep'tive,** *a.* ஏமாற்றும் இயல்புடைய; மாயமான; ஏமாற்றக்கூடிய; மயங்கவைக்கிற.

**decep'tory,** *a.* ஏமாற்றும் இயல்புடைய.

**dechris'tianize,** *v.* கிறித்தவ சமயத்தினின்றும் மாற்று; கிறித்தவ சமயப் பண்பைக் குறையச் செய்.

**decid'able**, *a.* தீர்மானிக்கப்படத்தக்க, அறுதியிடக்கூடிய.

**decide'**, *v.* முடிவு செய், தீர்மானி, உறுதிகொள், அறுதி இடு; முடிவுக்கு வா; தீர்ப்பளி.

**decid'ed**, *a.* உறுதியான; தெளிவான, ஐயத்துக்கு இடமற்ற; வரையறைப்பட்ட; தயக்கத்துக்கு இடம் தராத; மறுகேள்வி யற்ற, உறுதிப்பாடான.

**decid'er**, *n.* உறுதி செய்பவர்; உறுதி செய்வது; பந்தயத்தில் தயக்க நிலை முறித்து ஆட்டம் மீட்டும் தொடங்கப்படும் நிலை.

**decid'ua**, *n.* குழந்தைப் பேற்றிற்குப் பிறகு வெளிப்படும் மெல்லிய கருச்சவ்வு.

**decid'uous**, *a.* குறிப்பிட்ட பருவத்தில் உதிரக்கூடிய; தாவர வகையில் ஆண்டுதோறும் பருவத்தில் இலை உதிர்க்கக்கூடிய; எறும்பு முதலிய உயிரின வகையில் இணை பருவத்தின்பின் இறகு கொட்டிவிடுகிற; பற்கள் வகையில் பருவத்தில் விழத் தக்க; கொம்புகள் வகையில் கழன்று விழக்கூடிய; நிலை யற்ற; மாறுபடக்கூடிய.

**dec'igramme**, *n.* பிரஞ்சு மெட்ரிக் முறையில் எடையளவைக் கூறு, 'கிராமி'ல் (gramme) பத்தில் ஒரு கூறு.

**dec'ilitre**, *n.* பிரஞ்சு மெட்ரிக் முறையில் முகத்தலளவைக் கூறு, 'லிட்டரி'ல் (litre) பத்தில் ஒன்று.

**decill'ion**, *n.* பத்திலக்கத்தின் பத்தடுக்கிய விசை மடங்கு, ஒன்றன்பின் அறுபது சுன்னங்கள் இணைத்த பேரெண்; அமெரிக்க பிரஞ்சு வழக்கில் ஆயிரத்தின் பதினொன்றடுக்கிய விசை மடங்கு.

**de'cimal**, *n.* பதின்கூற்றுக் கீழ்வாய் எண், பதின்முறைப் பின்னம்; *a.* பதின்மானமான, எண்மான முறையில் பத்தடுக்கு வரிசையான, பதின்கூறுன, கீழ்வாய் எண் முறையில் பதின்கூற்றடுக்கான; (தொ.) decimal fraction, பதின்கூற்றுப் பின்னம்; decimal notation, பதின்மான இலக்கம்; decimal system, பதின்மான முறை.

**dec'imalism**, *n.* பதின்மான முறை வழக்காறு; பதின் கூற்று முறை ஆதரவு.

**de'cimalize**, *v.* பதின்மான முறையாக்கு; பதின்கூருக்கு.

**de'cimate**, *v.* பத்தில் ஒரு பங்கு அகற்று; பத்துப்பேரில் ஒருவனைக் கொலைசெய்து தண்டி; பெரும்பகுதியைக் கொன்றழி, பெரும்பகுதி அழிவு செய்; பேரளவில் குறை.

**dec'imetre**, *n.* பிரஞ்சு மெட்ரிக் முறையில் நீட்டல் அளவைக் கூறு, கோலின் (metre) பத்தில் ஒன்று.

**de'cimo-sex'to**, *n.* பதினாறு மடி, பதினாருக மடிக்கப்பட்ட தாள்; பதினாறு மடிப்பு; பதினாறு மடிப்பாக உருவான ஏடு.

**de'cimus**, *n.* பத்தாமவர், பத்தாவது ஆள்.

**deciph'er**, *n.* மறைகுறியெழுத்துமூலத்தின் பொருள் விளக்கம்; *v.* மறைகுறியீட்டின் குறிப்புக் கண்டுணர்; மறை குறி யீட்டின் குறிப்புக் கண்டு பொது எழுத்து முறைப்பட எடுத் தெழுது; மறைகண்டுணர்; அடையாளம் அறி; பொருள் கண்டுபிடி.

**deci'sion**, *n.* தீர்மானித்தல்; முடிவு, தீர்மானம்; தீர்வு; தீர்ப்பு; உறுதிப்பாடு; உறுதிப்பாட்டுப் பண்பு, மன உறுதி.

**decis'ive**, **decis'ory**, *a.* தீர்மானிக்கும் ஆற்றலுள்ள; முடிவான, தீர்வான, அறுதி செய்து முடிக்கிற; இறுதி யான; உறுதியான; ஐயமற்ற; தெளிவான.

**deciv'ilize**, *v.* நாகரிகப்பண்பகற்று; பண்பாட்டு நிலையி னின்று தாழ்த்து.

**deck**, *n.* கப்பல் தளம், கப்பலில் பக்கத்துக்குப் பக்கமாகச் சென்று தளமாகப் பயன்படும் தட்டடுக்கு; கப்பல் தள மேடை; மேல் கட்டு; பேருந்துவில் தள அடுக்கு; பாலத்தின் அடுக்கத்தளம்; பொருட் குவியல்களின் அடுக்கு; சீட்டாட்ட வகையில் சீட்டுக்கட்டு; சீட்டாட்ட வகையில் எடுக்காது கிடக்கும் கட்டு; *v.* அழகு செய், ஒப்பனை செய்; ஆடை அணி பூட்டு; மேற்கவிந்து மூடு; கப்பலுக்கு மேல் தளம் அமை; தளமேடைமீது ஒழுங்குபட அடுக்கு.

**deck'-bridge**, *n.* சாலை செல்லும் மேற்பகுதியுடைய பாலம்.

**deck'-car'go**, *n.* கப்பலில் மேல்தளத்தில் பாதுகாப்பாக அடுக்கி வைக்கப்படும் சரக்கு.

**deck'-chair**, *n.* எளிதாக எடுத்துச்செல்லக்கூடிய நீள் மடக்கு நாற்காலி.

**deck'er**, *n.* அழகு செய்பவர்; ஒப்பனைப் பொருள்; தள அடுக்கு கொண்ட கப்பல் அல்லது ஊர்தி.

**deck'-hand**, *n.* கப்பல்தளத் தொழிலாளி; பொதுநிலைக் கடலோடி.

**deck'-house**, *n.* கப்பல் மேல்தள அறை.

**deck'ing**, *n.* அழகொப்பனை; மேடை.

**dec'kle**, *n.* தாள் செய்யும் தொழிலில் தாளின் அகலத்தை உறுதி செய்ய உதவும் அமைப்பு; கைமுறைத்தாளின் செப்ப மற்ற ஓரம்; திருந்தா ஓரம்; செப்பமற்ற ஓரப்போலி.

**deck'le-edge**, *n.* வெட்டப்படாத செப்பமற்ற தாள் விளிம்பு.

**deck'-load**, *n.* கப்பலின் மேல் தளத்திலுள்ள சரக்குமூடை.

**deck'-passage**, *n.* அறைத் தங்கல் வசதியின்றி மேல்தளத் திலே மட்டும் பயணம் செய்யும் உரிமை.

**deck'-quoits**, *n.* கப்பல் தளத்தில் கயிறு கட்டி ஆடப்படும் முளைவளைய ஆட்ட வகை.

**deck'-tenn'is**, *n.* கப்பல் தளத்தில் விளையாடப்படும் வரிப் பந்தாட்ட வகை.

**declaim'**, *v.* முழக்கமிட்டுப் பேசு, தாக்கிப்பேசு; உணர்ச்சி யுடன் முழங்கு; பேருரை பயிலு.

**declama'tion**, *n.* கலைத்திறன் வாய்ந்த சொற்பொழிவு; பகட்டான பேருரை; கட்டமைவான மேடைப்பேச்சு.

**declam'atory**, *a.* உணர்ச்சி வசப்படுத்துகிற; உரத்துப் பேசுகிற; சொற்பகட்டு வாய்ந்த.

**declar'able**, *a.* அறிவிக்கத்தக்க; விளம்பரப்படுத்தும் திற முடைய; மெய்ப்பிக்கப்படவல்ல.

**declar'ant**, *n.* வாக்குமூலம் கொடுப்பவர்; உறுதி கூறுபவர்.

**declara'tion**, *n.* சாற்றுதல், அறிவித்தல்; அறிவிக்கப்பட்ட அறிக்கை; விளம்பரம்; உறுதிமொழி; எழுத்துமூல அறிவிப்பு; உறுதி ஆவணம்; (சட்.) ஸ்காத்லாந்து முறை மன்றத்தில் கைதி குற்றநடுவர்முன் கொடுக்கும் வாக்குமூல அறிக்கை; (சட்.) வாதி எதிர்வாதிமீது சாட்டும் வழக்கு விவர அறிவிப்பு.

**declar'atory**, *a.* விளக்கமான; விரிவான; (தொ.) declaratory act, தெளிவில்லாத அல்லது சச்சரவுக்குரிய சட்டப்பகுதியை விளக்குவதற்கான சட்டம்.

**declare'**, *v.* சாற்று, அறிவி, தெரிவி, பலரறியக் கூறு; விளம்பரப்படுத்து; வலியுறுத்திக் கூறு, உறுதியாகக் கூறு; முழு விவரம் அறிவி; சீட்டாட்ட வகைகளில் கையிருப்புக் காட்டி வெற்றி அறிவி; துருப்புத் தெரிவி, துருப்பிலா ஆட்டங்கூறு; அறிவிப்புச் செய்; முடிவு தெரிவி; உளச் சார்பு வெளிப்படக் கிளந்துரை; மரப்பந்தாட்டத்தில் பத்துப் பேரின் முழு ஒழிவின் முன்பே தானாக ஆட்டத்தை முடி; (தொ.) declare off, கைவிடு, துற; பின்வாங்கு; திரும்பப் பெற்றுக்கொள்.

**declared'**, *a.* முன்பே உறுதி கூறப்பட்ட; ஒத்துக்கொள்ளப் பட்ட.

**decla'redly**, *adv.* கூறப்பட்ட உறுதிப்படியே.

**declar'er**, *n.* விளம்பரம் செய்பவர்; அறிவிப்பாளர்; உறுதி கூறுபவர்; சீட்டாட்டத்தில் வெற்றிகோருபவர்.

*declasse*, (பிர.) *a.* தரமிழந்த, படியிறக்கமுற்ற; சாதிகெட்ட; *fem. declassee.*

**declen'sion**, *n.* நேர்நிலையினின்றும் பிறழ்ச்சி, சாய்வு, சரிவு, கோட்டம்; வீழ்ச்சி, இறக்கம்; (இலக்.) வேற்றுமைப் பாகுபாடு, வேற்றுமையுருபேற்கும் ஒரேவகைச் சொற்கள், வேற்றுமை வரிசை.

**declin'able**, *a.* வேற்றுமைகளை ஏற்றுச் சொல் மாறுபடக் கூடிய; வேற்றுமையுருபுகளை ஏற்றுத் திரிபுறுகிற.

**declin'al**, *a.* கீழ்நோக்கி வளைவான, கீழ்நோக்கிச் சரிகிற.

**dec'linant**, *a.* (கட்.) வால்பக்கம் கீழே தொங்குகிற.

**declina'tion**, *n.* கீழ்நோக்கிச் சரிதல்; கீழ்நோக்கிய சரிவு; நெறி விலகுதல், பிறழ்ச்சி, கோட்டம்; கவராயத்தின் முனைப் பிறழ்ச்சிக் கோண அளவு; (வான்.) வான் கோள நடுநேர் வரையிலிருந்து விண்மீனுக்குரிய கோணத் தொலைவு, வான் கோள நேர் வரை.

**decline'**, *n.* இறக்கச்சரிவு; பிறழ்வு, விலகுதல்; நலிவு, தேய்வு, படிப்படியான குறைபாடு; அழிவு, நல அழிவு, தரங்கெடல்; உடல்நலக்கேடு; தளர்ச்சி, ஊக்கங்கெடல்; ஈரல் காசம், எலும்புருக்கி நோய்; விலையிறக்கம்; கதிரவன் சாய்வு; வாழ்வின் மாலைப்போது; *v.* கீழ்நோக்கிச் சரியச்செய்; சாய், சரிவிறக்கமுறு; வளைவுறு, நொய்வாகு; தளர்வுறு, நலிவுறு; முடிவை அணுகு; குறைவுறு, தேய்வுறு; ஊக்கமிழ, மன உரங்கெடு; விட்டுவிலகு; திரும்பு; மறு, ஏற்க முடியாதென்று தெரிவி; (இலக்.) வேற்றுமை உருத்திரிபுகள் எடுத்துரை; வேற்றுமையில் உருத்திரிபுறு.

**declinom'eter**, *n.* மெய்யான நேர்வடக்கிலிருந்து திசை காட்டியிலுள்ள ஊசியின் சரிவுக் கோணத்தை அளக்கும் கருவி.

**decliv'ity**, *n.* கீழ்நோக்கிய சரிவு.

**decliv'ous**, *a.* கீழ்நோக்கிச் சரிவான.

**declutch'**, *v.* பொறியை ஓட்டவும் நிறுத்தவும் செய்யும் இணைப்புக் கொளுவியை அகற்று.

**deco'ction**, *n.* காய்ச்சி இறக்கப்பட்டது, கஷாயம், வடிநீர்.

**decode'**, *v.* குழூஉக்குறிகளை மறைவிடுத்து எழுது.

**decoll'ate**, *v.* தலையை வெட்டு, கழுத்தை அறு.

**decolla'tion**, *n.* கழுத்தறுத்தல், தலையற்ற முண்டமாக்கும் செயல்.

*decolletage*, (பிர.) *n.* இரவிக்கை.

**decollete'**, *a.* கழுத்து மூடப்படாத; இறக்கமாக வெட்டப்பட்ட சட்டைக் கழுத்துப் பகுதியையுடைய.

**decol'ourization**, *n.* நிறம் நீக்குதல், சாயம் போக்குதல்.

**decol'ourize**, *v.* நிறம் இழக்கச்செய், நிறம் நீக்கு.

**dec'omplex**, *a.* இருமடிப் பல்கலப்பான, பல்கலப்புப் பகுதி உட்கொண்ட, பல்கலப்புடைய.

**decompose'**, *v.* ஆக்கக்கூறுகளாகப் பிரி; தனிக்கூறுகளாகச் சிதறு; சிதை; கெடு; அழுகு; கூறுய்வுசெய், பகுத்தாராய்.

**decom'posite**, *n.* மீக்கூட்டுப்பொருள், பொருள்களின் கூட்டுடன் மேலும் தனிப்பொருள் சேர்ந்த மறுகூட்டு; மீத்தொகை, சொற்களின் தொகையுடன் பிறிதும் சொல் இணைந்த மறுதொகை; *a.* மீக்கூட்டான, முதற்கூட்டின் மீது தனிப்பொருள் சேர்ந்த மறுகூட்டான.

**decomposi'tion**[1], *n.* ஆக்கக்கூறுகளாகப் பிரித்தல்; தனிப் பொருட்களாக்கல்; கூருக்கச் சிதைவு; சிதைதல், அழுகுதல்.

**decomposi'tion**[2], *n.* இருமடிச் சேர்மானம்; சேர்மானமாயுள்ளவை இணைந்து மீட்டும் மீச்சேர்மானமாக்கப் பெறுதல்.

**dec'ompound**, *n.* மீக்கூட்டு, கூட்டுடன் தனிப்பொருள் மேலும் சேர்ந்த மறுகூட்டு; (தாவ.) மீக்கொத்து, மலர்க் கொத்துடன் மேலும் மலர்சேர்ந்த பெருங்கொத்து; *a.* மீக்கூட்டான; மீக்கொத்தான.

**decompress'**, *v.* அழுத்தம் தளர்த்து; காற்றுப்புகாப் பேழை மூலம் நீரடியிலும் பிற இடங்களிலும் உழைப்பவர்களுக்கு நேரும் அழுத்தமிகுதியைத் தடு.

**decompress'or**, *n.* உந்துகலத்தின் பொறியில் அழுத்தந் தளர்த்துவதற்கான அமைவு.

**decon'secrate**, *v.* திருநிலை நீக்கு, உலகியல் சார்பாக்கு.

**decontam'inate**, *v.* தீட்டகற்று; நச்சுத் தொடர்பின் விளைவகற்று, நச்சுவளிமூலம் இடம்-ஆடை முதலியவற்றுக் கேற்படத்தக்க நச்சுச் சார்பு நீக்கு.

**decontrol'**, *n.* கட்டுப்பாடு நீக்கம்; *v.* சரக்குகள்மீது போர்க்கால அரசாங்கக் கட்டுப்பாட்டை விலக்கு.

*decor*, (பிர.) *n.* திரை அரங்கொப்பனை; அரங்க அமைப்பு, செயற்கை அறை அமைப்பு, திரை ஓவிய அமைதி.

**dec'orate**, *v.* புனைந்தொப்பனை செய், அணியலங்காரம் புரி; நன்மதிப்புப் பதக்கம் அணிவி, சிறப்புமதிப்பளி.

**deco'rated**, *a.* அணிசெய்யப்பட்ட; (தொ.) Decorated style, (க-க.) 14-ஆம் நூற்றாண்டின் இறுதிவரை பரவியிருந்த சித்திர அணி ஒப்பனை வாய்ந்த காதிக் (Gothic) மரபுக் கட்டிடக் கலைப்பாணி.

**decora'tion**, *n.* அணிசெய்தல், ஒப்பனை செய்தல்; அணி; ஒப்பனை; நன்மதிப்புச்சின்னம்; சிறப்புப் பதக்கம்.

**dec'orative**, *a.* அணியான, ஒப்பனையான.

**dec'orator**, *n.* அணிசெய்பவர்; ஒப்பனையாளர்; வீட்டினை அழகுசெய்பவர்.

**de'corous**, *a.* சுவைநலம் பிழையாத; தகுதிவாய்ந்த, மதிப்பமைதியுடைய; மெருகு குறையாத, மெட்டான.

**deco'rum**, *n.* சீரொழுங்கு, மரபமைதி, நயநாகரிக அமைதி; தகுதி.

**decoy'**, *n.* பொறிக்குள் சிக்கவைக்க உதவும் பொருள்; காட்டுத் தாராக்களைப் பழகிய தாராக்களின் துணையால் செலுத்திச் சிக்கவைக்கும் வலை; புட்குலங்களை அகப்படுத்த உடந்தையாயிருக்கும் பறவை, பார்வை மிருகம்; ஏமாற்றுக்காரனுக்கு உடந்தையாய் இருப்பவர், உள்ளாள், கையாள்; தூண்டிற் பொருள்; மருட்டுக்கருவி; *v.* வசப்படுத்திப்பிடி; பொறியுள் ஏய்த்துச்செலுத்து; பழக்கிய பறவையுதவியால் காட்டுத் தாராவை வலையுட்படுத்து மருட்டிச் சிக்கவை.

**decoy'-duck**, *n.* காட்டுத்தாராக்களை மயக்கி வலைக்குள் விழவைப்பதற்காகப் பழக்கப்படுத்திப் பயன்படுத்தப்படும் காட்டுத்தாரா; பிடிக்குள் பிறரை வீழ்த்துவதற்காகப் பயன்படுத்தப்படுபவர்.

**decrass'ify**, *v.* அடர்த்தியைக் குறை; மடமையைத் தளர்த்து.

**dec'rease**[1], *n.* குறைபடுதல்; குறைபாடு, குறைவு; நட்டம், இழப்பு.

**decrease'**[2], *v.* குறை, குறைவாக்கு; குறைவுறு.

**decree'**, *n.* ஆணை, கட்டளை, ஆணைப்பத்திரம், சட்டம்; நடுவர் முடிவு, தீர்ப்பு, கடல்துறை-மணவிலக்கு முதலியவை சார்ந்த வழக்குமன்றங்களின் முடிவு; இயற்கையின் நியதி, கடவுளின் கட்டளை, ஊழ்வரு முடிவு; *v.* ஆணை பிறப்பி, கட்டளையிடு; விதிசெய், முடிவுசெய், தீர்ப்பளி; (தொ.) decree nisi, வரையறைத் தீர்ப்பு, குறிப்பிட்ட கால எல்லைக்குள்ளாகத் தடுக்க விரும்புபவர் தக்க காரணம் கூறுவிட்டால் நடைமுறைக்கு வரத்தக்க முறைமன்ற ஆணை; மணவிலக்கு வழக்கில் தவணைக்குள் மறுப்புக்காரணம் காட்டாதபோது நடைமுறைக்கு வந்துவிடத்தக்க மணவிலக்காணை.

**dec'rement**, *n.* குறைவு, குறைமானம்; இழப்பளவு, சேதாரம்.

**decrep'it**, *a.* சிதைந்துபோன, முதுமைத் தளர்ச்சியுற்ற; இறுதிக் கட்டத்திலுள்ள.

**decrep'itate**, *v.* உப்பு வகைகளில் பற்றியவிடத்தில் சூட்டினால் வெடித்துச் சிதறு; உப்பு அல்லது கனிப்பொருள்கள் வகையில் சுட்டு நீருக்கு; வெந்து நீருகு.

**decrep'itude**, *n.* முதுமைத் தளர்ச்சி.

**decres'cent**, *a.* தேய்கிற, படிப்படியாகக் குறைகிற.

**decre'tal**, *n.* போப்பாண்டவரின் கட்டளை.

**decre'tals**, *n. pl.* போப்பாண்டவரின் கட்டளைத் தொகுப்பேடு.

**decry'**, *v.* இகழ்ந்துரை; குறைகூறு; கண்டி.

**dec'uman**, *n.* பேரலை; *a.* மிகப்பெரிய, அலைகள் வகையில் தலைமையான.

**decum'bence, decum'bency**, *n.* கிடக்கும் நிலை.

**decum'bent,** *a.* படுத்த நிலையிலுள்ள; (வில., தாவ.) நிலத்தின்மீது படிந்து கிடக்கிற: (வில.) உடல்மீது நெடுக்காகக் கிடக்கிற; (தாவ.) கிளைமீது படிந்துகிடக்கிற.

**dec'uple,** *n.* பத்து மடங்கு; *a.* பதின்மடங்கான; *v.* பத்து மடங்காக்கு.

**decu'ria,** *n.* பதின்மர் குழு; பத்துப் பேர்கள் அல்லது மேற்பட்டோர் கொண்ட குழு.

**decuss'ate,** *a.* குறுக்குமறுக்கான; ஒன்றையொன்று வெட்டுகிற; சொற்றொடரில் பின்னுள்ள தொடரை எதிரிணையாகக் கொண்ட அணிநயமுடைய; (தாவ.) குறுக்குமறுக்கான, எதிரிணை இலைகள் கொண்ட; *v.* குறுக்குக்கோடிடு; குறுக்குவெட்டாக வெட்டு.

**dedans',** *n.* வரிப்பந்தாட்டத்தில் ஆட்டக்களத்தின் பந்தேறு பகுதிக் கோடியிலுள்ள திறந்த அடுக்குமேடை வரிசை; ஆட்டப் பார்வையாளர் குழாம்.

**ded'icate,** *v.* நேர்ந்தளி, அர்ப்பணஞ்செய், ஒப்படைத்துவிடு.

**dedicatee',** *n.* நேர்ந்தளிப்பை ஏற்பவர்.

**dedica'tion,** *n.* உரிமை ஒப்படைப்பு, நிவந்தம்; உரிமையுரை.

**deduce',** *v.* உய்த்துணர், ஊகி; தெரிந்த முடிபுகளிலிருந்து புது முடிபாக வருவி; மரபு தொடர்புபடுத்திக் காட்டு; குறிப்பிட்ட காலத்திலிருந்து தொடர்புபடுத்திக் குறிப்பிட்ட காலம் வரைக் கொண்டுவந்து இணை.

**deduc'ible,** *a.* உய்த்துணரத்தக்க, ஊகிக்கத்தக்க.

**deduct',** *v.* எடு, தள்ளு, கழி, குறை.

**deduc'tion,** *n.* உய்த்துணர்தல்; உய்த்துணரப்படுவது, ஊகிக்கப்படுவது, அனுமானம்; (அள.) விதிதருமுறை, பொதுக் கருத்தினின்று தனிப்பட்ட உண்மையைப் பிரித்தெடுக்கும் முறை; கழித்தல், கழிவு.

**deduct'ive,** *a.* விதிதருமுறையான, ஒப்புக்கொள்ளப்பட்ட மெய்ம்மையினின்றும் வருவிக்கப்படுவனவற்றைச் சார்ந்த.

**deed,** *n.* செயல்; மெய்ந்நிகழ்ச்சி, நடைமுறைச்செய்தி; துணிவுச்செய்கை; பத்திரம், ஆவணம்; சட்டமுறை ஒப்பந்தம்; (தொ.) in deed, உண்மையில்; உண்மையாக, மெய்யாக.

**deed'poll,** *n.* ஒரு கூற்றினரால் எழுதப்பட்டு நிறைவேற்றப்பட்ட பத்திரம்.

**deem,** *v.* மதி, கணி; எண்ணு, நினை; நம்பு; கருது.

**deem'ster,** *n.* மேன் தீவிலுள்ள (Isle of man) இரு நடுவர்களில் ஒருவர்.

**deep,** *n.* ஆழ்தடம்; கடல்; நெருக்கமிக்க கூறு; எய்த முடியாதது; உணரமுடியாதது, உணர்வுகடந்த ஒன்று; மரப்பந்தாட்டத்தில் எல்லையடுத்த ஆட்டக்காரர் இடம்; *a.* ஆழமிக்க, முகட்டிலிருந்து நெடுந்தொலை இறக்கமான, மேற்பரப்புக்கு நெடுந்தொலை கீழான; மதிப்பிட்டுரைக்க முடியாத ஆழமுடைய; ஆழ்ந்த புலமைவாய்ந்த; நுழைபுலம் வாய்ந்த; மிகத் தாழ்வாக உள்ள; மிக உள்ளார்ந்த; ஆழ்ந்து உட்குழிந்த; ஆழ்ந்து மிகுதொலை உட்சென்றுள்ள; நடுமையம் அளாவியுள்ள; சூழ்ச்சிவாய்ந்த; கடுஞ்சிக்கலான; கவனத்தை மிகவும் ஈர்க்கிற; முழு ஈடுபாடுடைய; மீளமுடியாத அளவு படிவுற்ற; அருமறைவான, இரகசிய மிக்க; திண்ணிய, அடர்த்திமிக்க, முனைப்பான; வரம்பு மீறிய, எல்லையற்ற; உளமார்ந்த; ஓசையில் தாழ்விசையுடைய; குரலில் முழுநிறைவுடைய; குரல் மூச்சு வகைகளில் உள்ஆழத்திலிருந்து எழுகிற; செறிந்த; மணற்பாங்கான; மரப்பந்தாட்டத்தில் இலக்கைவிட்டுத் தொலைவில் எல்லைக்கோட்டுக்குப் புறம்பான; *adv.* ஆழமாக; நெடுந்தொலை உள்ளார்ந்து, ஆழ்ந்து தோய்ந்து; அறிய முடியா நிலையில்; (தொ.) deep field, மரப்பந்தாட்டத்தில் பந்து வீசுபவருக்குப் பின்னால் எல்லைக்கோட்டில் உள்ள பந்து தடுப்பவர் நிற்குமிடம்; deep litter, ஒளிவாய்ப்புடைய பட்டியில் முட்டையிடும் பெட்டைக்கோழியை அடைத்து வைப்பதன் மூலம் முட்டை வளம் பெருக்கும் முறை; deep therapy, ஊடுகதிர் அல்லது நுழைகதிர் மூலம் நடத்தப்படும் மருத்துவமுறை; go in off the deep end, தங்கு தடையற்ற முறையில் உணர்ச்சியோடு பேசு; deep water, துன்பநிலை, இக்கட்டுகள் உள்ள நிலை; two deep, three deep, இரண்டு அல்லது மூன்று அடுக்கு வரிசையாக.

**deep'-browed,** *a.* மிகுந்த அறிவாற்றல் திறங்கள் நிரம்பிய.

**deep'-draw'ing,** *a.* (கப்.) மிதப்பதற்கு மிகுந்த ஆழம் தேவைப்படுகிற அளவுடைய.

**deep'-dyed,** *a.* வெறித்தபோக்குடைய, மிகமோசமான அளவில் கடுநிலைவாய்ந்த; இம்மியும் விடா நிறைவு வேண்டுகிற.

**deep'en,** *v.* ஆழமிகுதியாக்கு; மிகுதியாக்கு, பெருக்கு; செறிவூட்டு; ஆழமிகுதியுடையதாகு; செறிவாகு.

**deep'-felt,** *a.* உணர்ச்சியின் ஆழ்தடத்திலிருந்து எழுந்த, உள்ளார்ந்த உணர்ச்சியுடைய.

**deep'-freeze',** *n.* தாழ் தட்பவெப்பநிலையில் அழிதக்க உணவுப்பொருள்களைப் பதனம் செய்யும் முறை; *v.* தாழ் தட்பவெப்பநிலையில் அழிதக்க உணவுப்பொருள்களைப் பதனம் செய்.

**deep'ing,** *n.* மீன்வலையின் குறுக்களவான ஆறு அடி ஆழம்.

**deep'-laid,** *a.* ஆழ்ந்து அடிகோலப்பட்ட, உறுதிவாய்ந்த அடிப்படையுடைய.

**deep'most,** *a.* மிகுந்த ஆழமுள்ள.

**deep'-read,** *a.* கற்றுத் தேர்ந்த, புலமைவாய்ந்த.

**deeps,** *n. pl.* கடலின் ஆழ்பகுதிகள்; ஆழ்தடம், படுபாதாள ஆழ்தடம், கோரப்பள்ளம்; உணர்ச்சியின் மறை அகடு; அறிவின் தொலைமுகடு.

**deep'-sea,** *a.* ஆழ்கடற்பகுதிகளைச் சார்ந்த.

**deep'-seat'ed,** *a.* உள்ளார்ந்த, மேற்போக்கல்லாத, ஆழ்ந்த தன்மையுள்ள.

**deer,** *n.* மான்; மான் வகை; *pl.* deer.

**deer'-forest,** *n.* வேட்டை மான்களுக்கென ஒதுக்கி வைக்கப்பட்ட காட்டு நிலப்பரப்பு.

**deer'-hound,** *n.* பெரிய வேட்டை நாய் வகை.

**deer'let,** *n.* மான் போன்ற சிறு விலங்கு வகை, எலிமான்.

**deer'-lick,** *n.* மான் நாவால் நக்கும் பழக்கமுடைய களர் நிலப்பகுதி.

**deer'-neck,** *n.* குதிரைகள் வகையில் மெலிந்த வடிவமைதி அற்ற கழுத்து.

**deer'skin,** *n.* மான் தோல்.

**deer'stalker,** *n.* சந்தடியின்றித் தொடர்ந்து சென்று மான் வேட்டையாடுபவர்; ஆட்டக்காரரின் தலைக்கவசம் போன்ற குல்லாய்.

**deface',** *v.* உருக்கெடு, தோற்றங்கெடு, அழகைக்கெடு; துடைத்தழி; தெளிவற்றதாக்கு; மதிப்புக்கெடு, பெயர் கெடு.

**deface'ment,** *n.* உருவழித்தல், தோற்றத்தைக் கெடுத்தல், அழகைக் கெடுத்தல்; புரியாதாக்குதல்; துடைத்தழிப்பு; அழகை அழிப்பது.

**de fac'to,** (ல.) *a.* மெய்யான, சட்டப்படி எவ்வாறாயினும் நடப்பின்படி உண்மையான; *adv.* சட்ட உரிமையின்படி எப்படியாயினும் மெய்ந்நடப்பில்.

**def'alcate,** *v.* பணத்தைக் கையாடல்செய்; சொத்தினை லஞ்ச வழிப்படுத்து.

**defalca'tion,** *n.* பணக்கையாடல்; பணக்குறைவு, பொறுப்பில் ஒப்படைக்கப்பட்ட பணம் பொறுப்பாளர் வரம்பு மீறிய செயலால் குறைதல்; கையாடப்பட்ட பணம்.

**defama'tion,** *n.* அவதூறு, பழித்துரைத்தல், நற்பெயரைக் கெடுத்தல், இகழுரை, பழி.

**defam'atory,** *a.* அவதூறான, நற்பெயரைக் கெடுக்கிற, பெருமை குலைக்கிற, பழிப்புரை சார்ந்த.

**defame'**, *v.* நற்பெயரைக் கெடு ; புகழ் அழி ; அவமதிப்புக் காட்டு, பழித்துக் கூறு ; பொய்யாகக் குற்றம் சாட்டு.

**default'**, *n.* குறை ; தவறு ; கடமை திறம்புகை ; சட்டப்படி நடக்கத் தவறுகை ; பணம் செலுத்தத் தவறுதல் ; தவணை தவறுதல் ; கணக்குக் கொடுக்கத் தவறுதல் ; *v.* கடமை தவறிய குற்றம் செய் ; அழைப்பு விடுக்கப்பட்டபோது வழக்குமன்றத்துக்கு வராதிரு ; செயல் தவறு ; பணம் செலுத்தத் தவறு, தவணை தவறு ; (தொ.) judgment by default, நீதிமன்றத்தில் தோன்றத் தவறியவர்மீது அளிக்கப் படும் தீர்ப்பு ; வழக்காடத் தவறியவர்மீது அளிக்கப்படும் தீர்ப்பு.

**default'er**, *n.* நீதிமன்றத்தில் தோன்றத் தவறியவர் ; ஒப்படைக்கப்பட்ட பணத்திற்குக் கணக்குக் கொடுக்கத் தவறியவர் ; தன்மதிப்புக்காக்க முன்னாட்களில் நடத்தப்பட்ட போராட்டக் கடமையில் தவறியவர் ; படைத்துறைக் குற்றம் செய்தவர் ; (தொ.) defaulter sheet, படைத்துறைக் குற்றப் பட்டியல்

**defeas'ance**, *n.* இலதாக்குதல் ; அழிவு.

**defeas'ible**, *a.* செல்லுகையழிவுபட்ட ; பறிமுதல் செய்யப் படத்தக்க.

**defeat'**, *n.* தோல்வி, கைகலப்பில் முறிவு ; திட்டத்தகர்வு, முயற்சிச் சிதைவு ; உளமுறிவு ; ஆட்ட இழப்பு ; பந்தயத் தோல்வி ; (சட்.) தள்ளுபடி, செய்லொழிப்பு ; *v.* போரில் தோற்கடி, சண்டையில் முறியடி, ஆட்டத்தில் இழக்கச் செய், பந்தயத்தில் வீழ்த்து ; திட்டம் தகர் ; நோக்கம் கெடு, முயற்சி சிதை ; பயனழி ; (சட்.) செல்லுபடியாகாமற் செய், நடப்பொழி.

**defeat'ism**, *n.* தோல்வி மனப்பான்மை, தோல்வியை ஏற்கும் பண்பியல்பு ; தோல்விக்குகந்த சூழலியல்பு ; தோல்வியைப் பணிந்தேற்கச் செய்யும்படி படைத்துறை சாராப் பொது மக்களிடையே ஏற்படுத்தப்படும் கருத்து நிலை.

**defea'ture**, *v.* உருக்குலை.

**def'ecate**, *v.* வண்டலகற்று ; மாசு நீக்கு, தூய்மைப்படுத்து.

**defect'**, *n.* வழு, குற்றம், மாசு ; ஊனம், குறைபாடு ; ஊறுபாடு, உருக்குறை ; முழுமைநிலை கெடுக்கவல்ல உயிர்ப் பண்புக்கூற்றின் குறைநிலை ; (தொ.) the defects of one's qualities, மட்டுமீறிய அளவு நற்குணங்களோடு தோன்றக் கூடிய குறைபாடுகள்.

**defect'ible**, *a.* நிறைவெய்தாத, குறைபாடுள்ள.

**defec'tion**, *n.* கடமை தவறுதல், கடமை வழு ; தலைமை மீறுகை ; கட்சித்துறப்பு ; கொள்கை கைநெகிழ்வு ; சமயம் கைவிடுகை ; விலகுதல், விட்டேகுதல்.

**defence'**, *n.* பாதுகாப்பு ; அரண்காப்பு ; மரப்பந்தாட்டத்தில் எதிராட்டம் ஆடுதல் ; தாக்குதலை எதிர்த்த தற்காப்புப்போர் ; மரப்பந்தாட்டத்தில் இலக்குக் காப்பு ; குற்றச்சாட்டுக் கெதிரான தன்னிலை விளக்கம் ; உரிமை மெய்ப்பிப்பு ; எதிர்வாதி பக்கத்து வாதவிளக்கம் ; எதிர்வாதி பக்க வழக்கு நடவடிக்கை ; (தொ.) defence in depth, அடுக்கடுக்கான பல பாதுகாப்பு எல்லைத்தொகுதி அமைப்பு ; defence mechanism, (உள.) விரும்பாத செய்திகளை உணர்வுத் தளத்திலிருந்தே தடுத்து அகற்ற வல்லதாகப் பெரும்பாலும் உணர்வு கடந்த தளத்திலேயே அமைவுறும் மன ஒழுங் கமைவு நிலை.

**defen'ces**, *n. pl.* பாதுகாப்பு அரண்கள் ; அரண்காப்பு முறைகள்.

**defend'**, *v.* பாதுகாப்புச் செய், காவல் செய் ; தாக்குதலை எதிர்த்து நில் ; படைக்கலத்தாக்குதலை எதிர்த்து விலக்கு ; தீமை எதிர்த்துப் போராடு ; இன்னல் தடுத்தாதரி, காப்பாற்று ; (சட்.) அழிவழக்காளருக்கெதிராக உரிமை காத்து நில் ; குற்றச்சாட்டுக்கு எதிர் விளக்கமளித்து வழக் காடு, எதிர்வழக்காடு ; வழக்குரைஞர் வகையில் எதிர்வாதி பக்கம் வாதாடு, எதிர்வாதிசார்பில் வழக்கு நடத்து.

**defend'ant**, *n.* பாதுகாப்பவர் ; (சட்.) எதிர்வாதி, பிரதிவாதி.

**defend'ed**, *a.* பாதுகாக்கப்பட்ட ; காவல் செய்யப்பட்ட ; அரண்காப்புச் செய்யப்பட்ட ; தாக்குதலுக்கு எதிராகத் தக்க பாதுகாப்பு ஏற்பாடுகள் முற்றுவிக்கப்பட்ட.

**defend'er**, *n.* பாதுகாப்பாளர், ஆதரவாளர் ; பெற்ற வாகை வீரப் பதவியை இழந்துவிடாமல் காப்பவர் ; (தொ.) Defender of the Faith, எட்டாம் ஹென்றி (Henry VIII) கால முதல் (1521-இலிருந்து) பிரிட்டனின் ஆங்கில அரசர்க்கு வழங்கப் பட்டுவரும் 'சமயப் பாதுகாவலர்' என்ற பட்டம்.

**defer'** [1], *v.* தள்ளிவை, ஒத்திப்போடு ; காலங்கடத்து, காலந் தாழ்த்து ; தயக்கங்காட்டு ; (தொ.) deferred annuity, குறிப்பிட்ட ஆண்டுகளுக்குப்பிறகே தொடங்கப்படும் ஆண்டளிப்புத் தொகை ; deferred pay, படைவீரர் சம்ப ளத்தில் ஒதுக்கிவைக்கப்பட்டுப் பதவி விலகும்போதோ இறப்பின்போதோ அளிக்கப்படும் சம்பளம் ; அரசாங்கப் பணியாளரின் ஓய்வு ஊதியம் ; deferred shares, குறிப்பிட்ட காலம் அல்லது நிகழ்ச்சி வரையில் ஆதாயப்பங்கில்லாமலோ குறைந்த ஆதாயப் பங்குடனோ அமையத்தக்க முதலீட்டுப் பங்குகள்.

**defer'** [2], *v.* கீழ்ப்படி ; விட்டுக்கொடு, இணங்கிப்போ.

**def'erence**, *n.* பணிவிணக்கம், மேலோர்க்குக் காட்டும் வணக்கத்தோடு கூடிய நன்மதிப்பு ; மேலோர் கருத்துக்குக் காட்டப்படும் பணிவிசைவு ; பண்பிணக்கம் ; விட்டுக் கொடுத்தல்.

**def'erent**, *n.* உடலில் வெளிநோக்கிச் செல்லும் குருதி நாளம் ; *a.* கொண்டு செல்கிற ; புறநோக்கிச் செல்கிற ; பணிவிணக்க முடைய, இணக்க வணக்கம் காட்டுகிற.

**deferen'tial**, *a.* பணிவிணக்கம் காட்டுகிற.

**defer'ment**, *n.* தள்ளிப்போடுதல்.

**deferr'er**, *n.* காலந்தாழ்த்துபவர், காலங்கடத்துபவர் ; ஒத்திப் போடுபவர்.

**defervesc'ence, defervesc'ency**, *n.* வெப்பத் தணிவு ; குளிர்ச்சி ; காய்ச்சலின் அறிகுறிகள் தளர்வுறுதல்.

**defeu'dalize**, *v.* நிலமானியத்திற்குரிய பண்பிலிருந்து விலக்கு.

**defi'ance**, *n.* எதிர்ப்பு, அறைகூவல் ; எதிர்த்து நிற்றல், எதிர்ப்பறிவிப்பு ; வலிந்து தாக்குதல், மீச்செலவு ; பகை புறக்கணிப்பு ; பணிய மறுத்தல், மீறுகை.

**defi'ant**, *a.* எதிர்க்கிற ; ஏற்க மறுக்கிற ; ஐயப்படுகிற.

**defic'ience, defi'ciency**, *n.* குறைபாடு, குறைவு ; (தொ.) deficiency disease, பற்றுக்குறைநோய், தேவையான சத்துப் பொருள்கள் உணவில் இல்லாமையால் தோன்றும் பிணி.

**defi'cient**, *n.* குறைபாடுற்றவர், உடல் திறக் கூறுகளிலோ உளத்திறக் கூறுகளிலோ குறைபட்டவர் ; *a.* குறை பாடுடைய.

**def'icit**, *n.* பற்றுக்குறை, செலவினத்திற்குக் குறைந்த வரவின்நிலை.

***de fid'e***, (ல.) *a.* சமயப் பற்றுக்கோடாகக் கொள்ளவேண்டிய.

**defied'**, *v.* defy என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**defi'er**, *n.* எதிர்ப்பவர்.

**defilade'**, *n.* வேட்டணிக்காப்பு நடவடிக்கை, பீரங்கி அணி வரிசைத் தாக்குக்குப் பாதுகாப்பான அரணுக்குரிய முன்னேற் பாட்டு நடவடிக்கை ; *v.* பீரங்கிக் குண்டுகளின் அணிவரிசைத் தாக்கிலிருந்து அரணுக்குக் காப்பீடு அளி.

**def'ile** [1], *n.* நீண்ட ஒடுக்கமான வழி, படைகள் நெடுநீள் அணியாக மட்டும் செல்லத்தக்க இடுங்கிய இடைவழி ; கணவாய், கெவி.

**defile'** [2], *v.* ஒருவர் பின் ஒருவராக அணிவகுத்துச் செல், இடுங்கிய அணிவரிசையில் செல்.

**defile'** [3], *v.* கெடு ; கறைப்படுத்து, தூய்மை கெடு ; கற்பழி ; தெய்விகத் தன்மையை இழிவுசெய், மேன்மை குலை ; ஆசாரம் கெடு.

**defile'ment**, *n.* கறைப்படுத்துதல்; தூய்மைக் கேடு; புனிதத்தன்மையைக் கெடுத்தல்; சீர்குலைப்பு; பழிப்பு; இழிதகவு, கீழ்மை.

**define'**, *v.* வரையறு; எல்லை தெளிவுபடுத்து; கருப்பொருள் தொகுத்துரை; பொருள் வரையறை செய்.

**def'inite**, *a.* வரையறுக்கப்பட்ட; உறுதிசெய்யப்பட்ட; தெளிவான எல்லையுடைய; நிலையான, உறுதியான; தெளிவான, ஐயமற்ற; (தாவ.) உள்முதிர்க்கொத்தான, இணைத் தண்டுடைய.

**defi'nitely**, *adv.* உறுதியாக.

**defini'tion**, *n.* பொருள் வரையறை; சொற்பொருள் விளக்கம்; பொருளின் பண்பு விளக்கம்.

**defin'itive**, *n.* (இலக்.) வரைநிலை அடைமொழி; *a.* வரையறை செய்கிற, வரம்பிட்டுக் காட்டுகிற, கட்டுப்படுத்துகிற; உறுதி செய்கிற.

**defin'itude**, *n.* உறுதிப்பாடு.

**de'flagrate**, *v.* கொழுந்துவிட்டு எரித்துச் சாம்பராக்கு, சடசடவென்று எரித்துப் பொசுக்கு.

**deflate'**, *v.* உள்ளடைத்த காற்றை வெளிவிடு; புடைப்புத் தளர்வுறு; (நிதி.) பணப்பெருக்கத்தைக் குறைவுபடுத்து; பணப் புழக்கத் தளர்வுக் கொள்கையைப் பின்பற்று.

**defla'tion**, *n.* புடைப்புத்தளர்வு, உள்ளடைத்த காற்றின் வெளியீடு; நாணயச் செலாவணித் தளர்வு நிலை; பணப் புழக்கத் தளர்த்தல் முறை; தூசகல்வு, காற்றின் ஆற்றலால் நொய்மைமிக்க கூறுகள் போக்குதல்.

**defla'tionist**, *n.* பணப்புழக்கத் தளர்வுக் கொள்கையை ஆதரிப்பவர்.

**deflect'**, *v.* ஒரு பக்கமாகத் திருப்பு; கீழ்நோக்கி வளை; நேர் வழியிலிருந்து விலகிச் செல்; நேர்க்கோட்டிலிருந்து விலகு, பிறழ்வுறு.

**deflect'ed**, *a.* (தாவ.) திடுமெனக் கீழ்நோக்கி வளைந்துள்ள.

**deflec'tion**, *n.* முனை மடங்கியுள்ள நிலை; கீழ்நோக்காக வளைந்துள்ள நிலை; கோட்டம்; திருப்பம்.

**deflec'tive**, *a.* வளைவாக்குகின்ற; கோட்டமுண்டுபண்ணுகிற.

**deflec'tor**, *n.* தீக்கொழுந்தை ஒருபக்கமாகத் திருப்பும் பொறி அமைவு.

**defle'xion**, *n.*=deflection.

**deflo'rate**, *a.* மலர்ச்சிப் பருவம் கடந்த; பூந்தாது கழித்துவிட்ட; *v.* பூக்கழி; இளநலங்குலை.

**deflora'tion**, *n.* பூவுதிர்வு; நலங்குலைத்தல்.

**deflow'er**, *v.* மலர்களை அகற்று; இளநலங்குலை; அழகு கெடு; கன்னிமையழி; கற்பழி.

**de'fluent**, *n.* பனிப்பாறைச் சறுக்கலின் அடிப்பகுதி; *a.* கீழ்நோக்கி ஒழுகுகின்ற; (தாவ.) அடிநோக்கிப் பரவுகின்ற, தண்டில் தொடர்ந்திறங்குகின்ற.

**defo'rest**, *v.* காட்டை அழி, காட்டின் மரங்களை வெட்டி அகற்று.

**deform'**, *v.* உருச்சிதை, அருவருப்பான தோற்றமுடையதாக்கு; அழகு பாழ்படுத்து.

**deforma'tion**, *n.* உருத்திரிபு; சீர்குலைவு, அழகுக்கேடு; சொற் சிதைவு; (இய.) வடிவ மாறுபாடு.

**deformed'**, *a.* உருத்திரிபுற்ற; அருவருப்பான வடிவுடைய; தவறான வடிவம் அமைந்துள்ள.

**deform'ity**, *n.* அருவருப்பான தோற்றம்; உருத்திரிபு; அழகைப் பாழ்படுத்தும் கூறு; மோசமான பண்பு.

**defraud'**, *v.* ஏமாற்று, வஞ்சனையால் பறிபோகச் செய்.

**defray'**, *v.* பணங்கட்டு, கொடுத்துத்தீர்.

**defrock'**, *v.* மேலங்கியை அகற்றுவி, மேல் சட்டையை நீக்கு.

**deft**, *a.* கைவந்த, செய்திறமிக்க.

**deft'ly**, *adv.* சாமர்த்தியமாக.

**defunct'**, *a.* செயலற்றுப்போன; இறந்த.

**defy'**, *v.* போருக்கழை; போட்டிக்கு அறைகூவல் விடு, எதிர்த்து நில்.

*degage*, (பிர.) *a.* எளிமை நலம் வாய்ந்த, தளையில்லாத.

**degauss'**, *v.* காந்த ஈர்ப்பகற்றும் அமைப்பின் மூலம் கடற் கண்ணியிலிருந்து கப்பலுக்குப் பாதுகாப்பு அளி.

**degen'eracy**, *n.* பாடழிவு, சீர்க்குலைவு, இனப்பண்புக்கேடு; பண்புச் சிதைவு, இழிநிலை, தாழ்வு.

**degen'erate**, *n.* சீர்க்கேடுற்றவர், இனப்பண்பழிந்த விலங்கு; *a.* பாடழிந்த. இனத்திறம்கெட்ட, முன்னை மேம்பாடிழந்த, (உயி.) கீழ்நிலைப்படிக்கு மடங்கிச் சென்றுள்ள; *v.* சீர்க்கேடுறு, தாழ்நிலைக்கேகு.

**degenera'tion**, *n.* இனச்சிதைவு, கீழ்நிலை நோக்கிய போக்கு.

**degluti'tion**, *n.* விழுங்குதல்; விழுங்குமாற்றல்.

**degrada'tion**, *n.* படியிறக்கம், தரக்குறைவு; அவமதிப்பு, இழிவு.

**degrade'**, *v.* தரங்குறை, கீழ்ப்படிக்குக் கொண்டுபோ; இழிவுபடுத்து, பணித்துறைகளில் தண்டனையாகப் படி இறக்கு; அடுக்குத் திறங்களில் அடுக்கு விசை குறை.

**degrad'ed**, *a.* படி இறக்கம்பெற்ற; தரங்குறைந்த; இழிந்த, கீழான, பண்பிழந்த; (கட்.) படிகளில் அமைந்த.

**degrad'ing**, *a.* இழிவுபடுத்துகிற, தாழ்வு தருகிற, மதிப்புக் கேடான.

**degree'**, *n.* படி, தரம்; சிறு கூறு, சிற்றளவு; சிறு தொலை, போக்கின் நுண்படி; அளவு; சமுதாயப் படிநிலை, மதிப்புப் படி; உறவின் அணுக்கத் தொலைவளவுக்கூறு; மரபுவழியின் தலைமுறைப்படி; மதிப்பின் அளவுப்படி; குற்ற அளவுத் தரம்; கணிப்பளவைச்சட்டத்தின் நுண் கூறு; பல்கலைக் கழகப் பட்டம்; சிறப்புப்பட்டம்; பதவி, பணித்துறைத் தரம்; பாகை, கோணத்தின் அலகுக்கூறு; வட்டச் சுற்றில் 360-இல் ஒரு பங்கு; நிலவுலக வட்டத்தில் 60 கல் தொலை அளவு; தட்ப வெப்பமானியின் பாகைக்கூறு; (இலக்.) பெயரடை வினையடைகளின் ஒப்பீட்டுப்படி; (கண.) தொடரளவையில் அளவுருவின் உச்ச விசை எண்; (தொ.) by degrees, சிறிது சிறிதாக, படிப்படியாக; forbidden degrees, மணத்தொடர்புக்குத் தகா உறவுப்படிமைகள்; third degree, குற்றஞ்சாட்டப்பட்டவரைக் கொடுமைப்படுத்திக் குற்றஞ் செய்ததாக ஒப்புக்கொள்ளச் செய்யும் முறை.

**degre'ssion**, *n.* கீழ்நோக்கிய போக்கு, இறக்கம்; குறிப்பிட்ட வரம்புக்குக் கீழுள்ள தொகைகள்மீது வரிக் குறைப்பு வீதம்.

*de haut en bas*, (பிர.) *adv.* அருளிப்பாட்டுணர்ச்சியுடன், அனுக்கிரகிப்பதுபோல.

**dehisce'**, *v.* (தாவ.) கூம்பவிழ், வாயைப்பிள.

**dehort'**, *v.* எதிராகத் தூண்டிவிடு.

**dehort'ative**, *a.* எதிராக வற்புறுத்துகிற.

**dehum'anize**, *v.* மனிதத் தன்மையைப் போக்கு, மனிதனின் சிறப்பியல்புகளை இழக்கும்படி செய்.

**dehyd'rate**, *v.* (வேதி.) நீரை அகற்று, நீர்க்கூறகற்று.

**dehyp'notize**, *v.* வசியமயக்கநிலையிலிருந்து விடுவி, ஏவு துயிலிலிருந்து எழுப்பு.

**de-ice'**, *v.* வானூர்திகளின்மீது படிந்துள்ள பனிக்கட்டியை அகற்று; வானூர்திமீது பனிக்கட்டி உறைவதைத் தடுக்கும் ஏற்பாடு செய்.

**de-i'cer**, *n.* பனிக்கட்டி உறைவதைத் தடுக்கும் கருவி; பனிக்கட்டி உறையைத் தவிர்க்கும் மின் அமைவு; பனிக்கட்டிகள் விமானச்சிறகுகளில் உருவாகாமல் தடுக்கப் பயன்படுத்தப்படும் கூட்டுக்கலவை.

**de'icide**, *n.* தேவ வதை; தேவக் கொலைஞன்.

**deic'tic**, *a.* (மொழி., இலக்.) சுட்டிக்காட்டுகின்ற, சுட்டியலான.

**deif'ic, deif'ical**, *a.* தெய்வத்தன்மையுள்ள ; தெய்வத்தன்மையளிக்கிற.

**deifica'tion**, *n.* தெய்வமாக்கும் செயல் ; தெய்மாக்கப்பட்ட திருவுரு.

**de'iform**, *a.* தெய்வ உருவுடைய ; தெய்வ இயல்புடைய.

**de'ify**, *v.* தெய்வமாக்கு ; கடவுள் மங்கலஞ் செய்.

**deign**, *v.* தகுதி ஏற்றருள் ; அருளிச்செய் ; அருளியுரை.

*de'i gra'tia*, (ல.) *adv.* இறைவன் அருளால், தெய்வத்தின் கருணையால்.

*de in'tegro*, (ல.) *adv.* புதிதாக, மறுபடியும்.

**de'ism**, *n.* இயற்கைச் சமயம், கடவுளே நேரில்வந்து அருளுதலை மட்டும் ஏற்காத இறையுண்மைக் கோட்பாடு.

**de'ist**, *n.* இயற்கைச் சமயவாதி, அருள்வெளிப்பாட்டை ஏற்காத இறையுண்மைக் கோட்பாட்டாளர்.

**de'ity**, *n.* தெய்வத்தன்மை; இறைமை; தெய்வநிலை; தெய்வப் பண்பு ; தெய்வம் ; தேவன் ; தேவி ; (தொ.) the Deity, பரம்பொருள், கடவுள், இறைவன்.

**deject'**, *v.* சோர்வூட்டு, வாட்டமுறுவி.

**dejec'ta**, *n. pl.* மலம், சாணம்.

**deject'ed**, *a.* சோர்வுற்ற.

**dejec'tion**, *n.* கிளர்ச்சியற்ற நிலை, உளச்சோர்வு ; (மரு.) குடற்கழிவு, மலம்.

**deject'ory**, *a.* மலக்கழிவை எளிதில் வெளியேற்றும் இயல்புடைய.

*dejeuner*, (பிர.) *n.* காலை உணவு ; நண்பகல் உண்டி.

*de jur'e*, (ல.) *a.* உரிமையான; *adv.* உரிமைப்படி, சட்டப்படி.

**delaine'**, *n.* மெல்லிழைத் துகிற்பொருள் வகை.

**delate'**, *v.* குற்றப்படுத்திக்கூறு, குற்றஞ்சாட்டு, எதிர்த்துக் குற்றச்சாட்டுத் தெரிவி ; குற்றச்சாட்டு நடவடிக்கை எடு.

**delay'**, *n.* காலதாமதம், சுணக்கம் ; காலங்கடத்தல் ; செயல் நீட்டிப்பு ; தடங்கல் ; *v.* காலந்தாழ்த்து, சுணக்கம் செய் ; நேரங்கடத்து ; தடங்கல் செய்.

*del cred'ere*, (இத்.) *n.* வாணிகத்துறையில் வாங்குபவர் வகையில் முகவர் அளிக்கும் பிணையம் ; *a.* வாங்குபவர் சார்பில் பிணையம் அளிக்கிற; முகவர் பிணையத்துடன் கூடிய; *adv.* வாங்குபவர் வகையில் முகவர் பிணையத்துடன்.

**del'e**, *v.* அச்சகத்திருத்தத் துறை ஓரக் கட்டளை அடையாள வகையில் அடித்துவிடு, ஒழி, எடுத்துவிடு.

**delect'able**, *a.* மகிழ்ச்சி தருகிற, இன்பமான, மனநிறைவு தருகின்ற.

**delecta'tion**, *n.* மகிழ்ச்சி.

**delec'tus**, *n.* பாடத்திரட்டு.

**del'egacy**, *n.* ஆணைப்பேராண்மை முறை ; ஆணைப் பேராண்மை அமர்விப்பு ; ஆணைப்பேராண்மை, ஆணைப் பேராளர் குழு ; ஆணைப்பேராளரின் அதிகாரம்.

**del'egate**, *n.* ஆணைப்பேராள் ; கட்டளைத் தூதர், ஆட்பேர் ; தேர்ந்தெடுக்கப்பட்ட மாநாட்டுப் பிரதிநிதி ; *a.* ஆணைப் பேராளராக அமர்வுபெற்ற, கட்டளைப் பேராண்மை பெற்ற; *v.* பேராளாக அனுப்பு, ஆட்பேர் உரிமை தந்து அனுப்பு, அதிகாரம் கொடு; ஒப்படை ; (தொ.) delegated legislation, சட்ட வலிமையுடைய ஆணைகளையும்-கட்டளை-விதிகளையும் பிறப்பிக்கும்படி அமைச்சர்களுக்குச் சட்ட மாமன்றம் சட்ட மூலம் அளிக்கும் அதிகாரம்.

**delega'tion**, *n.* அதிகார ஒப்படைப்பு ; ஆணைப்பேராண்மை, உரிமைப் பேராளர் குழு ; அமெரிக்க ஐக்கிய அரசில் ஓரரசின் கட்டளைப் பேராளர் குழு ; (வர.) ஆஸ்திரிய-ஹங்கேரிய (Austria Hungary) மாமன்றங்களால் பொதுப்பேரரச காரியங்களை நடத்த அமர்த்தப்பட்ட இரு குழுக்களில் ஒன்று.

**delete'**, *v.* அடித்துவிடு, ஒழி, நீக்கு.

**deleter'ious**, *a.* தீங்கான, உடல் நலனுக்குக் கேடான ; ஒழுக்கத்துறையில் தீங்கு தருகிற.

**delf, delft**, *n.* ஹாலண்டு (Holland) நாட்டில் 'டெல்ப்' (Delf) என்ற இடத்தில் செய்யப்பட்ட பளபளப்பான மட்பாண்ட வகை.

**delib'erate**, *a.* வேண்டுமென்றே செய்யப்பெற்ற ; திடீரெழுச்சியினுல் செய்யப்படாத, குறிக்கொண்டு சூழப்பட்ட, கருத்தூன்றிச் செய்யப்பட்ட ; திட்டநோக்குடைய ; முன் கருதலுடனமைந்த, செயலூன்றிய, ஆர்ந்தமர்ந்து முடிவு செய்யப்பட்ட ; உளமார்ந்த உணர்ச்சியுடன் கூடிய ; விரைவில்லாத, மெல்லமைவான ; *v.* ஆழ்ந்து ஆராய், சிந்தனை செய் ; சார்பு எதிர்வு இருபுறமும் ஒப்ப எண்ணிப்பார் ; அமைந்து நினை, தொடர்ந்து சிந்தித்துப்பார் ; கலந்தாராய், கூடிக்கலந்து வாதிடு.

**delibera'tion**, *n.* ஆழ்ந்தாராய்வு, முதிர் சிந்தனை ; அமைதியான தன்மை, அமைதி நிலை.

**delib'erative**, *a.* ஆராய்ந்து தீர்மானிக்கிற, ஆழ்ந்தாராய்கிற, கலந்தாலோசனை செய்கிற.

**del'icacy**, *n.* நுண்ணயம், மென்னயம், பண்பு நயம், நயநாகரிகத்தன்மை ; அருஞ்சுவைப் பொருள் ; நேர்த்தி ; நடைநயம் ; உணர்ச்சி நயம் ; கூருணர்வு நலம் ; நுண்ணுணர்வுத்திறம் ; கருவிகலங்கள் வகையில் நுண்கூறுபாடுகளைக் காட்டும் அருந்திறம் ; மட்டுமீறிய கூருணர்வு ; மிகச்சிறு ஊறுபாடும் தாங்க முடியாத நொய்மை ; பிணி சிறிதும் தாங்கப்படா நிலை ; பாதுகாக்கத்தக்க அரு நுண்ணலம்.

**del'icate**, *a.* இன்சுவையுடைய, சுவைநலமிக்க; புலன்களுக்கு இனிய ; இன்பத்தில் இழைகிற ; நொய்தின் நொய்மை வாய்ந்த ; ஊறுபாடு பொருத ; கூருணர்வுடைய ; கண்டிப்பான சுவையுணர்வுடைய; கருவிகலவகையில் நுண் கூறுபாடு காண உதவுகிற ; மிக நுண்ணிய, காணரிய; அருவேலைப் பாட்டுத் திறம் வாய்ந்த.

**delicatess'en**, *n. pl.* வாணிகத்துறையில் மேசை உணவிற்கான இன்சுவைப் பொருள்கள்.

**deli'cious**, *a.* புலன்களுக்கு மிக்க மகிழ்ச்சி தருகிற ; சுவைமிக்க.

**delict'**, *n.* சட்டமீறுகை, பழிவினை.

**delight'**, *n.* பெருமகிழ்ச்சி, உவகை ; பெரு மகிழ்ச்சி தரும் பொருள் ; *v.* களிப்பூட்டு, மகிழ்வி.

**delight'ed**, *a.* அகமகிழ்வுடைய.

**delight'ful**, *a.* மகிழ்ச்சி நிரம்பிய.

**Delil'ah**, *n.* மாயக்காரி.

**delim'it, delim'itate**, *v.* வரையறு, எல்லைகுறி, கட்டுப்படுத்து, வரம்பிடு.

**delin'eate**, *v.* வரை, உருவப் படமெழுது ; விரித்துரை.

**delinea'tion**, *n.* வரைதல், சித்திரிப்பு ; உருமாதிரி, ஓவிய உருவம் ; வருணனை.

*delineaver'unt*, (del. சுருக்கக் குறிப்பு) (ல.) *v. pl.* "இன்னின்னர் இதை எழுதினர்கள்".

*delineav'it*, (del. சுருக்கக்குறிப்பு) (ல.) *v.* "இன்னர் இதை எழுதினர்".

**delinq'uency**, *n.* கடமை வழு, விட்ட கேடு ; தீச்செயல்.

**delinq'uent**, *n.* கடமை தவறுபவர் ; கடமைப் புறக்கணிப்புக் குற்றத்துக்காளானவர் ; குற்றவாளி ; சமுதாயப் பண்பற்றவர் ; *a.* கடமையில் தவறுகிற.

**deliquesce'**, *v.* ஈரமுறிஞ்சி நீரியலாகி நெகிழ்வுறு, உப்புப் போலக் கசிவுறு ; கசிவுற்றுக் கரைந்து போ, உருகி நைவுறு.

**deliques'cent**, *a.* காற்றுவெளியில் ஈரமுறிஞ்சிக் கசிவுறுகிற.

**deli'rious**, *a.* சன்னி சார்ந்த, மனத்தடுமாற்றமுள்ள, மூளைக் கோளாறினுல் மயக்க வெறிகொண்ட ; அறிவுதிறம்பிய.

**deli'rium**, *n.* சன்னி, வெறிப்பிதற்றலான நிலை; (தொ.) delirium tremens, மட்டற்ற குடியினால் ஏற்படுகிற வலிப்பு அல்லது நடுக்கத்தோடு கூடிய வெறிப்பிதற்றலுள்ள மூளைக் கோளாறு.

**delites'cence**, *n.* மறைந்துள்ள நிலை.

**delites'cent**, *a.* உள்ளுறைவாக மறைந்திருக்கிற.

**deliv'er**, *v.* விடுவி; தீங்கினின்றும் தப்புவி, இடர்நீக்கிக் காப்பாற்று; அச்சத்திலிருந்து தவிர்த்தாளு; பிள்ளைபெறு; சுமை இறக்கிவிடு; வழங்கு; அஞ்சல் வகையில் எங்கும் சென்றுகொடு; பொருளை ஒப்புவி; கணக்குத் தீர்த்துக்கொடு; முறைப்படி ஒப்படைத்துவிடு; செலுத்து; தீர்ப்பை வெளியிடு; கருத்தைத் தெரிவி; பேருரையினை வழங்கு.

**deliv'erance**, *n.* விடுதலை, மீட்பு, காப்பு; பிள்ளைப்பேறு; தீர்ப்புத் தெரிவிப்பு, அதிகாரமுறையான அறிவிப்பு.

**deliv'erer**, *n.* காப்பவர், மீட்பவர், விடுவிப்பவர்.

**deliv'ery**, *n.* பிள்ளைப்பேறு; ஒப்படைப்பு; அஞ்சல் வகையில் எங்கும் சென்று வழங்குதல்; அஞ்சல்காரரின் வாடிக்கைச் சுற்றுவட்டச் செலவு; பந்தெறி; குண்டுவீச்சு; நீரின் வெளியோட்டம்; எறிமுறை, வீச்சு முறை; பேருரை முழக்கம்; பேச்சு முறை, ஒலிப்பு முறை; வார்ப்பிலிருந்து அச்சின் பிரிப்பு; (சட்.) முறைமை வாய்ந்த பொருள் ஒப்படைப்பு; (தொ.) general delivery, முகவரியாளர்களுக்கு அஞ்சல் நிலையத்திலேயே அஞ்சல் கடிதங்கள் வழங்கப்படுதல்.

**dell**, *n.* ஆழ்ந்த பள்ளம்.

**Dell'a Crus'can**, *n.* பிளாரென்ஸிலுள்ள (Florence) முற்கால இத்தாலிய கலை இலக்கியக் குழு உறுப்பினர்; *a.* இத்தாலியக் கலை இலக்கியக் குழுவினுக்குரிய.

**delouse'**, *v.* பேனை ஒழி; நிலவெடிகுண்டுகளை முற்றிலும் அகற்று.

**Del'phian, Del'phic**, *a.* பண்டைக் கிரேக்கரின் பேர்போன 'டெல்பி' (Delphi) என்ற இடத்துக்குரிய; வருவதுரைக்கும் 'டெல்பி' பாவைக்குரிய; பொருள் விளக்கமில்லாத, புதிரான, இருபொருள் தருகிற.

**Del'phin**, *a.* பிரஞ்சு நாட்டு அரசரின் மூத்தமகனைச் சார்ந்த; பிரஞ்சு இளவரசருக்காக 1674–1730-இல் 64 ஏட்டுப்பிரிவுகளுடன் வெளியான இலத்தீன் பேரிலக்கியப் பதிப்பைச் சார்ந்த.

**del'phinine**, *n.* (வேதி.) நச்சுப்பு மருந்து வகை.

**delphin'ium**, *n.* மஞ்சள்நிறக் கிண்ணவடிவுள்ள மலர்ச் செடிகளின் இனம்.

**del'phinoid**, *n.* கடல்வாழ் இயல்புடைய பாலுணி உயிரினக் குடும்பம்; *a.* கடல்வாழ் இயல்புடைய பாலுணி உயிரினக் குடும்பம் சார்ந்த.

**del'ta**, *n.* ஆற்றின் கழிமுக நடுவரங்கம்; கிரேக்க நெடுங்கணக்கில் முக்கோண வரிவடிவமுடைய நான்காவது எழுத்து; (தொ.) delta metal, செம்பு-துத்தநாகம்-இரும்பு மங்கனிகம் அடங்கிய கலவை.

**delta'ic**, *a.* ஆற்றின் கழிமுக அரங்கத்தைச் சார்ந்த.

**del'toid**, *a.* முக்கோண வடிவுடைய; (தொ.) deltoid muscle, தோள்பட்டையிலுள்ள முக்கோண வடிவுடைய தசை.

**delude'**, *v.* ஏமாற்று; மயக்கு.

**del'uge**, *n.* பெருவெள்ளம்; ஊழி வெள்ளம், ஊழி இறுதிக் காலத்தில் பேரழிவுதரும் நீரெழுச்சி; *v.* பெருவெள்ளத்தில் ஆழ்த்து.

**delu'sion**, *n.* மருட்சி, மயக்கம்; ஏமாற்றம்.

**delu'sional**, *a.* மருட்சிக்குரிய; மாயத்தோற்றங்கட்கு இரையான.

**delus'ive, delu'sory**, *a.* மயக்கும் இயல்புடைய, ஏமாறச் செய்கிற; உண்மையல்லாத.

**delve**, *n.* பள்ளம்; குழி, சுரிப்புவரை; *v.* தோண்டு, குடை, கிண்டு; பத்திரங்கள் முதலியவற்றில் உண்மையை நாடி ஆராய்ச்சிசெய்; பாதைகள் வகையில் திடுமென அமிழ்ந்து செல்.

**demag'netize**, *v.* காந்த வலிமையைப் போக்கு.

**dem'agogue**, *n.* மக்கள் ஆர்வத்தலைவர்; கிளர்ச்சித்தலைவர்; மக்கள் உணர்ச்சிகளைக் கிளறிப் பயன்படுத்துபவர்; கட்சி வாதச் சொற்பொழிவாளர்.

**demand'**, *n.* உரிமைக்கோரிக்கை; கோரிக்கை, வேண்டுகோள்; கோரிக்கைப்பொருள்; பொருள்கள் பற்றிய தேவை, வேண்டுகை; விசாரணை; *v.* வேண்டு, உரிமைகோரு, உரிமையுடன் கேள்; அதிகாரத்துடன் கோரிக்கை செய்; வற்புறுத்திக் கேள்; வினவு, விசாரி, எதிர்த்துக் கேள்; வேண்டுமென்று கோரு; (தொ.) in great demand, மிகத் தேவைப்படுகிற.

**demand'able**, *a.* வற்புறுத்திக் கேட்கப்படத்தக்க.

**demand'ant**, *n.* வற்புறுத்திக் கேட்பவர்; வாதி, வழக்காடி.

**de'marcate**, *v.* எல்லைவரையறு.

**demarca'tion**, *n.* எல்லை குறித்தல்; எல்லை வரையறை; எல்லைப்பிரிவினை.

*demarche*, (பிர.) *n.* அரசியல் நடவடிக்கை, அரசியல் முயற்சி.

**demater'ialize**, *v.* பருப்பொருள் தன்மையை நீக்கு, உடல் வாழ்க்கையை ஒட்டிய தன்மைகளை விட்டுப்பிரி, ஆன்மிகமாக்கு.

**deme**, *n.* பண்டைய கிரேக்க நாட்டின் அரசான அட்டிகாவில் (Attica) உட்பிரிவு; தற்கால கிரேக்க நாட்டில் நகரவட்டம்; (உயி.) வகை பிரிவுறுத படிஉயிர்மங்களின் தொகுதி.

**demean'**, *v.* தாழ்த்திக்கொள், மதிப்பைக் குறைத்துக்கொள்.

**demean'our**, *n.* நடத்தை, நடந்துகொள்ளும் முறை, புறத்தோற்றம் சார்ந்த ஒழுகலாறு.

**dement'**, *v.* பைத்தியமாக்கு, கிறுக்காக்கு.

**dement'ed**, *a.* பைத்தியம் பிடித்த, மூளைத்தளர்ச்சியால் அறிவு குழம்பிய.

*dementi*, (பிர.) *n.* மறுப்பு, அதிகாரமுறை வதந்தி மறுப்பு.

**demen'tia**, *n.* (மரு.) மனத்தளர்ச்சியினால் ஏற்படும் பைத்தியம்.

**demerar'a**, *n.* பழுப்புநிறச் சர்க்கரைக்கட்டி வகை.

**deme'rit**, *n.* குற்றம், குறை.

**demesne'**, *n.* பண்ணைமனை சார்ந்த நிலம்; பண்ணைமனையும் குடிவாரத்தில் விடப்படாத அதைச் சார்ந்த நிலங்களும் சேர்ந்த தொகுதி.

**dem'igod**, *n.* அரைத் தெய்வ உரு; தெய்வமாகக் கருதத் தக்கவர்; தெய்வத்தோடொத்தவர்; தெய்வத்துக்கும் மனிதருக்கும் இடைப் பிறந்தவராகக் கருதப்பட்ட முற்காலப் பெருவீரர்; *fem.* dem'i-godd'ess.

**dem'ijohn**, *n.* புதிலிப்புட்டி, பிரப்பங்கூடையால் சூழப்பட்ட குறுகிய கழுத்தும் பரு உடலுமுள்ள கண்ணாடிக் குப்பி.

**dem'ilune**, *n.* கோட்டையின் பிறை வடிவப்பகுதி.

*demi-mondaine*, (பிர.) *n.* பரத்தை.

*demi-monde*, (பிர.) *n.* நிறைநிலைப் பெண்டிர் வகுப்பு.

**dem'i-rep**, *n.* ஒழுக்கம் நிரம்பாத பெண்.

**demise'**, *n.* உடைமை மாற்றம், இறுதி விருப்பப் பத்திரத்தாலோ ஈட்டுப் பத்திரத்தாலோ உடைமையை மற்றொருவருக்கு மாற்றிக் கொடுத்தல்; அரசுரிமை மாற்றம், அரசு உயிர் துறப்பினாலோ முடி துறப்பினாலோ ஏற்படும் பதவி மாற்றம்; அரசு உயிர்நீப்பு; மறைவு; *v.* இறுதிப் பத்திரத்தால் உடைமை மாற்றிக்கொடு; ஈட்டுப் பத்திரத்தால் உரிமைமாற்றம் அளி; மரபுரிமையாக அரசுரிமை விட்டுச் செல், அரசுரிமை மாற்றிக்கொடு.

**demiss'ion**, *n.* உரிமை துறத்தல், பதவி துறப்பு.

**demit'**, *v.* முடிதுற, பதவி விலகு.

**dem'iurge**, *n.* பிளேட்டோ (Plato) வின் மெய்விளக்க இயலில் உலகப்படைப்பு முதல்வர்; கிறித்தவக் கோட்பாட்டின்படி படைப்புத் துணைகளுடன்கூடிய படைப்பு முதல்வர்.

**demob'**, *v.* படைக்கலைப்புச் செய் ; தனி வீரரைப் படைக் கலைப்பின்போது படையமைப்பிலிருந்து விடுவி.

**demob'ilize**, *v.* படைக்கலைப்புச் செய்; படையமைப்பிலிருந்து தனிவீரரை விடுவி ; படைத்துறை அமைப்பிலிருந்து படைப் பிரிவுகளைப் பிரி.

**democ'racy**, *n.* குடியாட்சி, மக்களாட்சி, குடியாட்சியரசு ; பொதுமக்கள் ; அரசியல் முறையில் உரிமைபெறு வகுப்பு.

**dem'ocrat**, *n.* மக்களாட்சிக் கோட்பாட்டாளர், குடியாட்சிப் பற்றுளர்.

**democrat'ic, democrat'ical**, *a.* மக்களாட்சியைச் சார்ந்த; எல்லோருக்கும் சம உரிமைகள் வேண்டுமென்று வற்புறுத்து கின்ற ; (தொ.) Democratic party, அமெரிக்காவில் மைய ஆட்சி வலிமையைவிட உறுப்பரசுகளின் உரிமைகளையும் காப்புவரி நீக்கத்தால் தனி மனித உரிமைப்பெருக்கங்களையும் வலியுறுத்தும் கட்சி.

**democ'ratist**, *n.* மக்களாட்சிக் கொள்கையர்.

**democ'ratize**, *v.* மக்களாட்சிக் கொள்கை உடையதாக்கு.

**Democ'rite'an**, *a.* டெமாக்கிரிட்டஸ் (Democritus) என்னும் கிரேக்க மெய்விளக்க அறிவரைச் சார்ந்த; டெமாக்கிரிட்டசின் நகைத்திறம் சார்ந்த ; டெமாக்கிரிட்டசுக்குரிய அணுவாதம் சார்ந்த.

***demode***, (பிர.) *a.* காலவண்ணத்திற்குப் புறம்பான; செவ்வி யிழந்த.

**Demogorg'on**, *n.* பாதாள தேவதை.

**demog'raphy**, *n.* பிறப்பு-நோய் முதலிய சமுதாய நிலைப் புள்ளி விவர ஆய்வு.

**dem'oiselle'**, *n.* வட ஆப்பிரிக்க நாரை வகை.

**demol'ish**, *v.* அழி, சிதை, பாழாக்கு; கோட்பாட்டை எதிர்த்துத் தகர்த்துவிடு ; நிறுவனத்தை எதிர்த்தழி ; தின்றெழி.

**demoli'tion**, *n.* தகர்ப்பு ; வீழ்ச்சியடையும்படி செய்தல்.

**dem'on**, *n.* ஆரஞர்த் தெய்வம் ; பேயுருவம், தீய ஆவி ; சிறு தெய்வம் ; நரக ஆவி ; கொடியவன், பழிகாரன், வெறுப்புக்குரியவன் ; பாவவுரு.

**demo'netize**, *v.* பணத்தின் மதிப்பைக் குறை.

**demon'iac**, *n.* பேய் பிடித்தவர், அணங்கேறியவர் ; *a.* பேய் பிடித்த ; கொடிய ஆவியின் இயல்புடைய ; வெறிபிடித்த ; சீற்றமிக்க.

**demoni'acal**, *a.* பேய்த்தனமான.

**demon'ic**, *a.* தெய்வமுற்ற, அருளிப்பாடுடைய.

**dem'onism**, *n.* பேய்களின் ஆற்றலில் நம்பிக்கை.

**dem'onize**, *v.* பேயாக்கு; பேய்போல் ஆக்கு; பேயாக மாற்று.

**dem'onology**, *n.* பேய்நிலை ஆய்வு விளக்கம், பேய்களின் வகை களையும் அவற்றின் செயல் திறங்களையும்பற்றி விரிவாக ஆய்ந்து விளக்கும் அறிவுத்துறை.

**demon'strable**, *a.* விளக்கிக் காட்டக்கூடிய, மெய்ப்பிக்கத் தக்க.

**dem'onstrate**, *v.* செய்ம்முறைகள் மூலம் மெய்ப்பித்துக் காட்டு, செயல் விளக்கமளி ; எடுத்துக்காட்டுக்கள் மூலம் தெளிவுபடுத்து ; வாதமூலம் மெய்ப்பி ; மெய்ம்மை உறுதிப் படுத்து ; தெளிவுபடுத்திக்காட்டு ; கண்கூடாகக்காட்டு ; உணர்ச்சிகளை வெளிப்படுத்திக்காட்டு ; படைத்துறை அணி வகுப்பு நடத்திக்காட்டு ; ஊர்வலம் பொதுக்கூட்டம் முதலிய பொது ஆரவார முறைகளில் கலந்துகொள்ளு ; சரக்குகளைப் பகட்டாகக் காட்டி விளம்பரப்படுத்து.

**demonstra'tion**, *n.* சான்று விளக்கம்; கண்கூடான தெளிவு, உள்ளுணர்ச்சிகளை உருப்படுத்திக்காட்டல் ; உணர்ச்சியை வெளிப்படுத்துதல் ; உணர்ச்சி வெளிப்படுத்தும் பொது ஆர்ப் பாட்ட நிகழ்ச்சி, ஊர்வலம், பொதுக்கூட்டம், விளம்பர நடவடிக்கை ; செய்ம்முறைப்பாடம், சான்று விளக்கக் கல்வி முறை ; போர்பற்றிய நினைவு தூண்டுதற்குரிய படைத் துறை நடவடிக்கை ; எதிரிகளை அச்சுறுத்துதற்குரிய படைத்துறைச் செயல்முறை ; மாருட்ட நடவடிக்கை, எதிரிகள் கருத்தில் தம் நோக்கம் பிறிதாகப்படும் எண்ணத் துடன் மேற்கொள்ளப்படும் போர்த்துறை ஏமாற்று நட வடிக்கை ; பகட்டாரவாரம் ; விளம்பரக்காட்சி ; கண்காட்சி ; சுட்டிக்காட்டல், சுட்டுதல்.

**demon'strative**, *n.* சுட்டுச்சொல்; சுட்டியல் மறுபெயர் ; சுட்டியல் பெயரடை ; சுட்டியல் வினையடை ; *a.* சுட்டுகிற, சுட்டிக்காட்டுகிற ; தெளிவுபடுத்துகிற ; விளக்கிக்காட்டும் இயல்புடைய ; வாதமுறையில் முடிவான ; சான்று விளக்கத் திறமுடைய, மெய்ப்பிக்கும் இயல்புடைய, உணர்ச்சிகளை உருப்படுத்திக் காட்டுந் தன்மை வாய்ந்த, வெளிப்படக் காட்டும் இயல்புடைய.

**dem'onstrator**, *n.* செய்ம்முறை ஆசிரியர், ஐயந்திரிபற மெய்ப் பிப்பவர்; கண்கூடாகக் காட்டுபவர், ஆய்வுக்களத்துணைவர்; வாணிகச் சரக்குகளின் சுற்றுலா விளம்பரக்காரர், பொருள் களைக் காட்டிப் பயனும் சிறப்பும் விளக்கி வாணிக ஆதரவு நாடுபவர் ; பொது ஆர்ப்பாட்டத்தில் பங்குகொள்பவர்.

**demoraliza'tion**, *n.* ஒழுக்கக் சிதைவு ; நெறிபிறழ்வு, கட்டழிவு.

**demo'ralize**, *v.* கட்டழி, ஒழுங்கு குலை, உள உரங்குலை ; கட்டுப்பாட்டுணர்ச்சி சிதை ; ஊழற்படுத்து.

***de mort'uis nil nis'i bon'um***, (ல.) இறந்தவர்களைப்பற்றி நல்லதைத்தவிர வேறொன்றும் பேசக்கூடாது.

**Dem'os**, *n.* பொதுமக்கள்.

**Demosthen'ic**, *a.* டெமாஸ்தெனிஸ் (Demosthenes) என்ற பண்டைக் கிரேக்க நாட்டுச் சொற்பொழிவாளரைச் சார்ந்த ; டெமாஸ்தெனிசைப் போன்ற ; டெமாஸ்தெனிசின் சொற் பொழிவு நடைக்குரிய பண்புகள் வாய்ந்த, நாட்டுப்பற்றும் சொல்வளமும் உணர்ச்சிக் கொந்தளிப்பும் மிக்க.

**demote'**, *v.* படியிறக்கு, பதவியில் கீழ்நிலைக்குத் தாழ்த்து.

**demot'ic**, *a.* மக்களைச் சார்ந்த ; மக்கள் பேச்சுவழக்கான ; மக்கள் விருப்புக்குரிய.

**demul'cent**, *n.* நோயைத் தணிக்கும் மருந்து ; *a.* நோயை ஆற்றுகிற.

**demur'**, *n.* தடை, தயக்கம் ; ஆட்சேபம் ; *v.* உறுதியற்ற தன்மையாலோ செயற் கடுமையாலோ தயக்கங் காட்டு, சுணங்கு, மறுப்புரை கிளப்பு, தடை கூறு.

**demure'**, *a.* அமைதியான, அடக்கமான ; பொறுமையான ; நடிப்பு நாணமுடைய.

**demu'rrable**, *a.* மறுத்துரைக்கக்கூடிய.

**demu'rrage**, *n.* கப்பலிலோ புகைவண்டியிலோ ஏற்படும் தகாக்கால நீட்டிப்பு ; சரக்கிடக் குத்தகைக்காரர் சரக்கேற்றத் திலோ இறக்கத்திலோ புரியும் தாமதத்துக்கீடான கட்டண விகிதம் ; தங்கக் கட்டிகளுக்கு மாற்றாக நாணயமோ நாணயத்தாளோ கொடுக்கப் பொருளகத்தார் விதிக்கும் கட்டணம்.

**demu'rrer**, *n.* மறுத்துரைப்பவர் ; தடங்கல் செய்பவர் ; (சட்.) தடங்கல் செல்லாதென்ற எதிர்ப்புரை ; கால நீட்டிப்பு நடவடிக்கைக்குத் தடையெழுப்பல்.

**demy'**, *n.* $17\frac{1}{2}$-க்கு $22\frac{1}{2}$அங்குல அளவான அச்சுத்தாள்; $15\frac{1}{2}$-க்கு 20 அங்குல அளவுடைய எழுதுந் தாள் ; ஆக்ஸ்போர்டுப் பல்கலைக்கழகம் சார்ந்த மகதலன் கல்லூரியில் (Magdalen College) உபகாரச் சம்பளம் பெறுபவர் ; *pl.* demies'.

**den**, *n.* குகை ; திருடர் பதுங்கிடம் ; வாழத் தகுதியற்ற இடுக்கறை ; தனிமையறை.

***denar'ius***, (ல.) *n.* பண்டைய ரோம வெள்ளி நாணயம் ; *pl. denar'ii.*

**den'ary**, *n.* பத்தின் தொகுதி ; பத்து ; *a.* பத்துச் சார்ந்த ; பதின்மானமான.

**dena'tionalize,** *v.* நாடு தன் மதிப்புப்படியினை இழக்கும்படி செய்; நாட்டிலிருந்து அதன் தனிப் பண்புகளை நீக்கு; நாட்டின் குடியுரிமையிலிருந்து ஒருவரை விலக்கிவை; நாட்டின் பொதுப் பண்புகளிலிருந்து ஒருவரை விலக்கிவை; நாட்டுப் பொதுவுடைமையான ஒன்றின் பொதுவுரிமை நீக்கித் தனியுரிமைப்படுத்து.

**dena'turalize,** *v.* இயல்பு நீக்கு, இயல்பு மீறியதாக்கு; குடியுரிமை நீக்கு, நாட்டுரிமை இழக்கச்செய்.

**dena'turant,** *n.* பொருளின் இயல்பை மாற்றி விளைவற்றதாக்கப் பயன்படுத்தப்படும் பிறிதொரு பொருள்.

**dena'ture,** *v.* இயற்கைத் தன்மையைச் சிதை, இயல்பான பண்புகளை மாற்று; வெறியம் அல்லது சாராயத்தைக் குடிப்பதற்குத் தகுதியற்றதாக்கு.

**den'driform,** *a.* மரம் போன்ற, மரவடிவுடைய.

**den'drite,** *n.* மரம் போன்ற வரைத்தடங்களையுடைய படிஅடுக்கியற் பாறை; மரம் போன்ற வரைத்தடங்கொண்ட கல்.

**dendrit'ic, dendrit'ical,** *a.* மர வளர்ச்சிபோன்ற வரைத்தடம் உடைய; மரக்கிளைகள் போன்ற உருவுடைய தடங்களைக் கொண்ட.

**den'droid,** *a.* மரம் போன்ற; மரவடிவுடைய.

**dendrol'atry,** *n.* மர வழிபாடு.

**dendrol'ogy,** *n.* மரங்களைப் பற்றிய ஆய்வுரைத் தனிநூல்; மரங்களின் வளர்ச்சிமுறை வரலாறு.

**dendrom'eter,** *n.* மரமானி, மரங்களை அளக்கும் கருவி.

**dene** [1], *v.* சிறு பள்ளத்தாக்கு.

**dene** [2], *n.* மணல்வெளி; மணற்பரப்பு, மணற்குன்று; தேரி.

**denega'tion,** *n.* மறுப்பு.

**dene'-hole,** *n.* பழம்பொருளாய்வுத்துறைக்குரிய வரலாற்றிற்கு முற்பட்ட காலத்தைச் சார்ந்த சுண்ணும்புப்பாறை நிலத்திலுள்ள செயற்கைக் குகை.

**deng'ue,** *n.* கணுத்தோறும் கடுநோவு உண்டுபண்ணும் கொள்ளைக் காய்ச்சல் வகை.

**deni'able,** *a.* மறுத்துரைக்கத்தக்க, மறுதலிக்கக்கூடிய, மறுப்புக்குரிய.

**deni'al,** *n.* மறுப்பு; வேண்டுகோளை மறுத்தல்; உண்மை ஏற்க மறுத்தல், இன்மை வலியுறுத்தல்; தலைவரை ஏற்க மறுத்தல், தலைமை மறுப்பு.

**deni'er,** *n.* மறுத்துரைப்பவர், மறுதலிப்பவர்.

**den'igrate,** *v.* கருமை பூசு, பெருமை குலை.

**den'im,** *n.* முழு மேலங்கி தைக்கப் பயன்படும் சாய்வரி வண்ணப் பருத்தித் துணிவகை.

**denit'rate, denit'rify,** *v.* வெடியகக்கூறு நீக்கு.

**denitrifica'tion,** *n.* வெடியகக்கூறு நீக்கம்.

**den'izen,** *n.* குடிவாழ்நர், தங்கியிருப்பவர்; நாட்டுக்குடியுரிமை பெற்றவர்; நாட்டில் வந்தமைவுற்றவர்; தங்கிவாழும் விலங்கு; சூழலிசைவுற்ற உயிரினம்; சூழலிசைவமைதி பெற்ற செடியினம்; *a.* குடிவாழ்வு சார்ந்த; *v.* குடிவாழ்வுரிமையளி; தங்கி வாழ்வி; தங்கி வாழுமிடமாக்கு, வாழுநர் குடிபரப்பு; தங்கிவாழ்.

**denomin'ate,** *v.* பெயரிடு; அழை; பெயர் குறித்து விவரங்கூறு.

**denomina'tion,** *n.* பெயரிடுதல்; பட்டப்பெயர்; இடுபெயர்; குழுப்பெயர், தொகுதிப்பெயர்; வகுப்புப் பெயர்; சமயக் கிளைப்பெயர்; படிநிலைப்பெயர், தர வகுப்புப் பெயர்.

**denomina'tional,** *a.* சமயக்கிளையினைச் சார்ந்த; இனப் பிரிவினைத் தழுவிய.

**denomina'tionalism,** *n.* சமய வகுப்புணர்ச்சி; சமயக் கிளையின் கொள்கை; மதப்பிரிவின் சார்பான குழுநல ஈடுபாடு.

**denom'inative,** *a.* பட்டப்பெயராகப் பயன்படுகிற; சமயக் குழுப்பெயரின் இயல்புடைய; குழுப்பெயர் வழங்குகிற.

**denom'inator,** *n.* தரநிலைப்பெயர் சூட்டுபவர்; வகைப் பெயர் சூட்டுவது; (கண.) தொகுதிக்கூற்று எண், பின்னத்தின் அடியெண் கூறு; வகையீட்டெண், வகுக்கும் எண்; (தொ.) common denominator, பொதுத் தொகுதிக் கூற்றெண்; பொதுப் பகுவெண்; அடிப்படைப் பொது இணைவெண்; அடிப்படைப் பொது உடன்பாட்டுக் கூறு; பொது உடன்பாட்டுக்கு உதவுபவர், பொது உடன்பாட்டுக்கு உதவுவது.

**de'notate,** *v.* பொருள்குறி, உருச்சுட்டு.

**denota'tion,** *n.* பொருட்குறி, சுட்டு, குறிப்பீடு; (அள.) சொல்லின் புறப்பொருட் சுட்டு, சொல் சுட்டும் புறப்பொருட் பரப்பெல்லை.

**denote',** *v.* சுட்டிக்காட்டு; குறித்துக்காட்டு; வேறு பிரித்துக் காண்பி; குறியீடாய் அமை; பொருள் தெரிவி.

**denoue'ment,** *n.* கதை நாடகம் காவியம் முதலியவற்றில் முடிவமைதி நோக்கிய நிகழ்ச்சி முறுக்கவிழ்வு; முடிவுமைதி.

**denounce',** *v.* வெளிப்படையாகக் கண்டனம் தெரிவி, பலரறியப் பழித்துரை; குற்றத்தை வெளிப்படக் கூறு, மறை வெளிப்படுத்து; ஒப்பந்த முறிவு தெரிவி, வரும்பழி கூறி இடித்துரை.

**denounce'ment,** *n.* பலரறியப் பழித்துரைத்தல்; படுபழிச் சாட்டு, வெளிப்படைக் கண்டனம்.

***de nouveau,*** (பிர.), ***de nov'o,*** (ல.) *adv.* புதிதாக, மறுபடியும் தொடக்கத்திலிருந்து, மீண்டும் அடியிலிருந்து தொடங்கி.

**dense,** *a.* நெருக்கமான, அடர்த்தியான, இடைவெளியில்லாத, ஒரு சேர்வான; தடித்த, மூளையற்ற, மந்தபுத்தியுள்ள.

**densim'eter,** *n.* செறிவுமானி, செறிவு ஒப்பீட்டளவைக்கருவி.

**dens'ity,** *n.* அடர்த்தி, நெருக்கம்; செறிவு; கழிமடமை; (இய.) செறிமானம், பரும அளவுடன் எடைமானத்துக்குள்ள விகிதம்.

**dent',** *n.* வடு, பள்ளம்; அடியின் தழும்பு; *v.* வடுப்படுத்து, தடம் செறிவி.

**den'tal,** *n.* பல் அண்ண ஒலி; *a.* பல்லுக்குரிய; பல் மருத்துவஞ் சார்ந்த; ஒலி வகையில் பல் அணவி எழுகிற.

**den'tate, dent'ated,** *a.* பல்லுள்ள; பல்லுருவ வடுக்கள் கொண்ட; பல்வரிசை போன்று அமைந்துள்ள.

**denta'tion,** *n.* பல்லமைதி, பற்கள் உள்ள நிலை; பற்கள் போன்ற அமைப்புடைய தன்மை; பல்போன்ற முனைப்பு.

**dent'icle,** *n.* சிறு பல்; பல் போன்ற முனைப்பு.

**dentic'ulate, dentic'ulated,** *a.* பற்கள் போன்ற முனைப்புடைய.

**dent'iform,** *a.* பற்கள் போன்ற அமைப்புடைய.

**dent'ifrice,** *n.* பல் துலக்க உதவும் பொருள், பற்பசை; பற்பொடி.

**den'til,** *n.* பல்போன்ற சிற்றமைவு; தூண்முகட்டு மேல் தட்டின் சூழ்வரையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ள செவ்வகப் பாளம்.

**dentilin'gual,** *n.* பல்லுநாவொலி, பல்லிற்கும் நாவிற்கும் இடையில் தோன்றும் மெய் ஒலி; *a.* பல்லிற்கும் நாவிற்கும் இடையில் தோன்றுகிற.

**dent'ine,** *n.* பற்காழ், பல்லின் பெரும்பகுதியான காழ்க்கூறு.

**dent'ist,** *n.* பல்நோய் மருத்துவர்.

**dent'istry,** *n.* பல் மருத்துவம்.

**dent'ition,** *n.* பல் முளைப்பு; விலங்கு வகைகளின் பற்களது எண்ணிக்கை; பல்வரிசை அமைப்பு.

**dent'ure,** *n.* பல் தொகுதி; செயற்கைப்பல் தொகுதி.

**denuda'tion,** *n.* ஆடை நீக்குதல், அம்மணமாக்குதல்; (மண்.) மேற்பரப்புப் பாறை நீக்கம்.

**denude',** *v.* உடை அகற்று; உடல் வறிதாக்கு; மேலுறை போக்கு; பண்பிழக்கச் செய்; (மண்.) பாறையின் மேற் கவிந்த கூறுகளை நீக்கி வெறுமையாக்கு.

denuncia'tion, *n.* பலரறி பழிப்புரை, பொதுமன்றக் குற்றச் சாட்டு ; கண்டனம், இடித்துரை ; கண்டன அறிவிப்பு.

denun'ciator, *n.* இடித்துரைப்பவர் ; பலரறியப் பழிகூறு பவர் ; குற்றங் கூறுபவர் ; கண்டனம் எழுப்புபவர்.

denun'ciatory, *a.* பழிப்புரையான ; கண்டனம் தெரிவிக்கிற; வசைமாரியான ; அச்சுறுத்துகிற ; கண்டன அறிவிப்புச் சார்ந்த.

deny', *v.* மறு, கொடுக்கமாட்டேனென்று கூறு, பேட்டி யாளருக்கு நுழைவுரிமையளிக்க மறு ; ஒப்புக்கொள்ள மறுத்துவிடு ; உண்மையன்றென்று அறிவி ; மறுப்புத் தெரிவி ; மறுதலி, கூறியது இல்லையென்று கூறு ; தொடர்பு மறு ; கைதுறந்துவிடு ; (தொ.) deny oneself, மனநிறைவு கொள்ள மறு ; தன்னலமறு, தன்னலந்துற.

de'odand, *n.* (வர.) மனித உயிரின் அழிவுக்குக் காரணமான தாகப் பறிமுதல் செய்யப்பட்டு அறநிலைப்படுத்தப்பட்ட பொருள்.

de'odar, (ச.) *n.* தேவதாரு மரம்.

deod'orize, *v.* மணம் அகற்று.

deontol'ogy, *n.* கடமை இயல் ; ஒழுக்க நூல், அறநூல்.

*De'o op'timo max'imo,* (ல.) சிறப்பும் உயர்வும் மிக்க இறை வனுக்கு.

*De'o volen'te,* (ல.) *adv.* இறைவன் விரும்பினுல் ; வேறு ஏதும் தடுக்காதிருந்தால்.

depart', *v.* புறப்படு, விட்டு நீங்கு ; வழி விலகிச்செல், வேறு வழியிற் செல் ; பிறழ்வுறு, நெறி திறம்பு ; மாள்வுறு, இறப்பு மூலம் பிரிவுறு ; விடைகொண்டு செல்.

depart'ed, *a.* இறந்துபட்ட, மாண்ட ; காலஞ்சென்ற ; (தொ.) the departed, மாண்டவர் ; மாண்டவர்கள்.

depart'ment, *n.* துறை, இலாகா ; பணியரங்கம், தொழிற் களப்பகுதி; செயலரங்கக் கூறுபாடு; பிரஞ்சு நாட்டு ஆட்சித் துறை வட்டாரம்.

depar'ture, *n.* புறப்பாடு ; வெளிச்செல்லுதல் ; செயல்முறை, முயற்சி ; கருத்தீடுபாடு ; அறிவு முயற்சி ; பிறழ்வு, மெய்ம் மையிலிருந்து விலகுதல், நேரளவிலிருந்து திறம்புதல் ; நில வுலக நிரைகோட்டளவில் கப்பல் கிழக்கு மேற்காக விலகும் தொலைவளவு ; (தொ.) new departure, புதிய வழி, புதுக் கருத்து மாற்றம் ; புதுச்செயல்முறை.

depa'sture, *v.* புல்லைக் கறி, மேய் ; கால்நடைகளை மேயவிடு; மேய்ச்சலளி ; நிலவகையில் மேய்ச்சலிடமாய் உதவு.

depau'perate, *a.* வறுமையான ; ஒன்றுமற்ற ; *v.* ஊக்கங் குறை, வளர்ச்சி தடைசெய், பண்பு இழிவுறுத்து ; ஏழ்மைப் படுத்து ; வறிதாக்கு.

depau'perize, *v.* ஏழ்மை நிலையினின்று நீக்கு ; வறுமை நிலை யினின்று உயர்த்து.

depend', *v.* தொங்கு ; சார்ந்திரு ; நம்பு ; நம்பியிரு ; முயற்சியை எதிர்பார்த்திரு ; வருவாயை நம்பிவாழ் ; வரு நிலைகளைப் பொறுத்ததாயிரு; தீர்வு எதிர்நோக்கிக் காத்திரு ; (இலக்.) தழுவுசொல் அவாவி நில்.

depen'dable, *a.* நம்பத்தக்க, பொறுப்புக்குரிய.

depen'dant, *n.* சார்ந்து வாழ்பவர், ஆதரவில் இருப்பவர் ; உழையர், பணியாள்.

depen'dence, *n.* சார்ந்துள்ள நிலை ; சார்பு ; துணைமைநிலை, மற்றொன்றுக்குக் கீழ்ப்பட்ட நிலை, மற்றொன்றன் ஆதரவை எதிர்நோக்கிய நிலை ; சார்புநிலை; பிறரை எதிர்நோக்கிய வாழ்வு ; நம்பிக்கை, பொறுப்பு அளிப்பதற்குரிய தகுதி ; நம்பிக்கைக்குரிய செய்தி ; அடுத்து நிகழவிருக்கும் மற்போர்.

depend'ency, *n.* சார்பு நிலையுடையது; சார்பரசு; தன்னுரிமை யாட்சியற்ற நாடு, சார்புநிலை நாடு ; சார்புநிலை ஆட்சிப் பகுதி, துணைநிலை மண்டலம்.

depen'dent [1], *n.* =dependant.

depen'dent [2], *a.* சார்ந்திருக்கிற ; துணைமையான, கீழ்ப்பட் டிருக்கிற ; சூழல் சார்ந்த ; ஆதரவை எதிர்பார்த்து வாழ்கிற.

dephos'phorize, *v.* எரியத்தை நீக்கு, பாஸ்வரம் இல்லாமற் செய்.

depict', *v.* தீட்டிக்காட்டு, வரைந்து காட்டு ; படமாக்கித் தெளிவுபடுத்து ; வண்ண ஓவியப்படுத்து ; கருத்து உருப் படுத்திக்காட்டு ; சொற்கள் மூலம் விரித்துரை, நுட்பமாக விளக்கிக்காட்டு ; உருவமைதி உண்டுபண்ணு.

depic'ture, *n.* படம் வரைந்து காட்டல் ; விரித்துரைத்தல் ; *v.* படம் வரைந்து காட்டு ; விரித்துரை.

dep'ilate, *v.* மயிர்நீக்கு, முடிகளை.

depila'tion, *n.* மயிர்நீக்கம்.

depil'atory, *n.* மயிர் நீக்கும் மருந்து ; *a.* மயிர் களையும் குணமுள்ள.

deplane', *v.* வானூர்தியினின்று இறங்கு.

deplen'ish, *v.* வெறுமையாக்கு, உள் ஒழி ; கையிருப்பை அழி.

deplete', *v.* வெறுமையாக்கு, உள்ளீடற்றதாக்கு ; செறிவு தளர்த்து, ஆற்றல் குறை.

deple'tion, *n.* வெறுமையாக்குதல் ; ஊக்கம் குறைத்தல் ; (மரு.) குருதி வெளியேற்றிக் குருதி நெருக்கத்தைக் குறைத்தல்.

deplor'able, *a.* வருந்தத்தக்க ; இரங்கத்தக்க ; துயரந் தரத் தக்க.

deplore', *v.* வருத்தந் தெரிவி, பரிதாபங்கொள் ; புலம்பு.

deploy', *n.* மடிப்பவிழ்வு, விரிவு ; அணிவரிசை விரிவு ; *v.* மடிப்பவிழ், விரிவுறுத்து ; அணி வகுப்பை விரிவரிசைப் படுத்து.

deplume', *v.* இறகுகளை நீக்கு ; இறகுகளைப் பறி.

depol'arize, *v.* ஒளிக்கதிர் அலைமுகப்பின் திசையை மாற்று ; மின்காந்த முனைப்பியக்கம் அகற்று ; ஆராயா நம்பிக்கை களைக் குலை ; ஊன்றிய கருத்துக்களின் உறுதி குலைவி.

depo'nent, *n.* சான்றுரைஞர், ஆணையிட்டு வாக்குமூலம் கொடுப் பவர் ; எழுத்து மூலச் சான்றறிக்கை அளிப்பவர் ; லத்தீன் (Latin) கிரேக்க (Greek) இலக்கணங்களிற் செய்வினைப் பொருளில் வழங்கும் செயப்பாட்டு வினை; *a.* (இலக்.) வினைச் சொற்களில் செய்வினைப்பொருளில் செயப்பாட்டுவினை உருவான.

depop'ulate, *v.* மக்கள் தொகையைக் குறைவாக்கு ; மக்கள் தொகை குறையப்பெறு; குடியிருப்பவர்களை இல்லாமற் செய்; *a.* மக்கள் தொகை குறைக்கப்பட்ட ; மக்கள் தொகை அருகிய ; குடியழிந்த.

depopula'tion, *n.* மக்கள் தொகைக் குறைப்பு ; குடியழிவு.

deport' [1], *v.* நாடுகடத்து ; வெளியேற்று.

deport' [2], *v.* நடந்துகொள்.

deport'ment, *n.* நடையுடைபோக்கு, ஒழுகலாறு ; இயங்கும் பாங்கு, பொருளின் இயற்பாங்கு.

depose', *v.* தவிசிலிருந்து அகற்று ; பணியிலிருந்து விலக்கு ; உயர்நிலையிலிருந்து இறக்கு ; படியிறக்கு ; ஆணையுறுதிமீது சான்று தெரிவி ; எழுத்துப்பதிவு செய் ; சான்றுரை.

depos'it, *n.* சேமிப்பு ; ஏமவைப்பு, கையடைப்பொருள் ; பணையம் ; ஈடு, அடைமானம் ; வண்டல், படிவுப்பொருள் ; *v.* வை, கிடத்து ; முட்டையிடு ; சேர்த்துவை, சேமித்துவை ; பாதுகாப்புக்காக ஒப்படை ; பணையமாக வை ; படிய விடு ; வண்டலிடு ; படுகையமைவி.

depos'itary, *n.* ஏமவைப்பின் காப்பாளர், ஒப்படைப் பொருளை ஏற்பவர்.

deposi'tion [1], *n.* தவிசிறக்கம் ; பதவி நீக்கம், பணிவிலக்கு ; நிலையிறக்கம் ; இயேசுநாதரைச் சிலுவையிலிருந்து இறக்கும் காட்சிப் படம்; அதிகார முறையான சான்றறிக்கை; ஆணைச் சான்றறிவிப்பு ; குற்றச்சாட்டறிவிப்பு.

deposi'tion [2], *n.* படியவிடல் ; படிவு, வண்டல் ; சேமிப்பு.

depos'itory, *n.* களஞ்சியம், சேமிக்குமிடம்.

**dep'ot** [1], *n*. சேமிப்பிடம், கிடங்கு, படைத்துறைக்களஞ்சியம்; படைப்பிரிவின் மைய மேலிடம்; புதுப்படைவீரர் பயிற்சி நிலையம்; வெளிநாட்டுச் சேவையிலீடுபடாத படைப்பிரிவின் பகுதி.

**de'pot** [2], *n*. புகைவண்டி நிலையம்; உந்தூர்திகள் சேம இடம்; மின்னூர்தி வைப்பிடம்.

**deprava'tion**, *n*. சீரழிவு; கீழ்நிலை; ஒழுக்கக்கேடு.

**deprave'**, *v*. சீர்கெடு, சீரழி; ஒழுக்கம் கெடு; நடத்தை மோசமாக்கு.

**depraved'**, *a*. கீழான, மோசமான, நடத்தை கெட்ட.

**deprav'ity**, *n*. நடத்தைக்கேடு, ஒழுக்கச் சீர்க்கேடு, படுமோசமான இயல்பு; மனித இனத்தின் உள்ளார்ந்த பழிசூழ்வுநிலை.

**depre'cate**, *v*. வேண்டாமென்று வாதிட்டுத்தடு; விருப்பமின்மை தெரிவி, ஒவ்வாமை அறிவி.

**depreca'tion**, *n*. விட்டுவிட வேண்டுதல்; ஒழிப்பு மனு.

**depre'ciate**, *v*. விலைமதிப்பைக் குறை; மதிப்பிற் குறைபடு; நாணய முதலியவற்றின் வகையில் மதிப்புக் குறைபடு; விலையைத்தணி; சிறுமைப்படுத்து, இகழ்.

**deprecia'tion**, *n*. விலையிறக்கம்; மதிப்பிறக்கம்; குறைக் கணிப்பு; அவமதிப்பு, மதிப்புக்குறைவு.

**depre'ciative, depre'ciatory**, *a*. குறைவாக மதிக்கிற; இகழும் தன்மையுள்ள.

**depreda'tion**, *n*. கொள்ளை, சூறையாட்டு; கொள்ளையிடப்பட்ட நிலை, அழிமதி, அட்டூழியம்.

**dep'redator**, *n*. சூறையாடுபவர், கொள்ளையடிப்பவர்; பாழாக்குபவர்; அழிப்பவர்.

**depress'**, *v*. அமுக்கு; தாழ்த்து; கீழ்ப்படுத்து, பணிய வை; ஊக்கங்குறை, சோர்வூட்டு; வாணிக முதலியவற்றை மந்தமாக்கு; குரல் தணிவி.

**depress'ant**, *n*. ஊக்கமழிப்பது, சுறுசுறுப்பைக் குறைப்பது; வலியை ஆற்றுகிற அல்லது தணிக்கிற மருந்து; மிதவைக் கலத்தில் கனிப்பொருளைக் கீழே அமிழச்செய்யும் வேதிப்பொருள்; *a*. அமிழ்த்துகிற; நோவாற்றுகிற.

**depressed'**, *a*. அழுத்தப்பட்ட; தாழ்த்தப்பட்ட; ஊக்கம் அழிக்கப்பட்ட; சோர்வுடைய; தட்டையாக்கப்பட்ட அல்லது சிறிது பள்ளமாக்கப்பட்ட; கிளர்ச்சியற்ற; மகிழ்ச்சியற்ற.

**depress'ing**, *a*. சோர்வடையச் செய்கிற; அழுத்துகிற; தாழ்த்துகிற; ஊக்கங்கெடுக்கிற, கிளர்ச்சியற்ற.

**depre'ssion**, *n*. அமிழ்வு, தாழ்வு; பள்ளம், குழிவு, தொய்வு; குரல் தாழ்வு; கிளர்ச்சியின்மை, சோர்வு, வாட்டம்; காற்றழுத்த இழிபு, காற்றழுத்த இழிபு மையம்; விழிவரை இறக்கக் கோணம்; அடிவான்கோட்டின்கீழ் இழிகோணம்.

**depress'ive**, *a*. சோர்வூட்டுகிற; அழுத்துகிற; தளர்ச்சியுண்டாக்குகிற.

**depress'or**, *n*. கொடுமையாளர்; செயல்விரைவைக் குறைப்பது; கீழே இழுக்கும் தசை; கீழே அழுத்திப்பிடிக்கும் அறுவை மருத்துவக் கருவி.

**depriva'tion**, *n*. இழக்கச் செய்தல்; இழப்பு, கையறு நிலை; பிரிவாற்றாமை; இடர்ப்பாடு, கட்டநட்டம்; பதவியிழப்பு; திருக்கோயிற் பணியிழப்பு.

**deprive'**, *v*. இழக்கச்செய், இல்லாதாக்கு; பறி, கவர்ந்துகொள்; நுகர்வினின்று விலக்கு; பதவியிலிருந்து அகற்று; திருக்கோயிற் பணியிலிருந்து நீக்கு; பிரிவுத்துயர் அடையச் செய்.

*de profund'is*, (ல.) *n*. துயருற்ற நெஞ்சின் உள்ளாழத்திலிருந்து வரும் குரல்; *adv*. ஆழத்திலிருந்து.

**depth**, *n*. ஆழம்; ஆழமாயிருத்தல்; ஆழ அளவு; மேல்கீழ் தொலைவளவு; உள்ளாழ்வளவு; அகழ்வளவு; உள்ளாழம்; ஆழ்தடம்; ஆழ்கசம்; ஆழமுடைய நீர்நிலை; உள்ளிடம்; நடுப்பகுதி; திட்பம், செறிவு, முனைப்பு; மறை புதிர்மை; கருத்தாழம்; ஆழ் உணர்வு; (தொ.) out of one's depth, நிலைகொள்ளா ஆழத்திற் சிக்கி; ஆற்றலுக்கு அப்பாற்பட்ட எல்லை சென்று; புரியாச்செய்தியில்; the depths, கழிபேரிடுக்கண் எல்லை.

**depth'-bomb, depth'-charge**, *n*. நீர்மூழ்கிமீது சென்று தாக்கும்படி நீருக்கடியில் குறிப்பிட்ட ஆழம்வரை சென்று வெடிக்கும் வலிமைவாய்ந்த வெடிகுண்டு.

**de'purate**, *v*. தூய்மைக்கேடகற்று; மாசினின்று விடுபடு.

**deputa'tion**, *n*. தூதுக்குழு; பேராண்மைக்குழு; பிரதிநிதிக் குழுவாக அனுப்புதல்; பிரதிநிதிகளாக அமர்த்தப்படும் குழுமம்; ஒருவர் சார்பில் செயலாற்றும் உரிமை பெற்றவர்; செயலாற்றும் அதிகாரம் பெற்ற குழு; தனியுரிமை வேட்டை நிலத்தில் வேட்டைச்சலுகை பெற்ற குழு; தனிவேட்டைச் சலுகைப்பத்திரம்.

**depute'**, *v*. ஆட்பேருரிமையளி, பிரதிநிதியாக அனுப்பு; தனி அதிகாரத்தோடு அனுப்பு; தனது ஆட்பேராக அனுப்பு.

**dep'utize**, *v*. ஆட்பேராக நியமனம் செய்; பிரதிநிதியாகச் செயலாற்று; இசைவாணரின் ஆட்பேராகப் பணிசெய்.

**dep'uty**, *n*. ஆட்பேர், அதிகாரம் பெற்ற பிரதிநிதி; தூதுக்குழு உறுப்பினர்; சட்டமன்ற உறுப்பினர்; தங்கல்விடுதி மேலாள்; நிலக்கரிச் சுரங்கத்திற் பாதுகாப்பு ஏற்பாடுகளைக் கண்காணிப்பவர்; பகர உரிமை பெற்றவர்.

**derac'inate**, *v*. வேரோடு எடுத்தெறி, நிர்மூலமாக்கு.

**derail'**, *v*. தண்டவாளத்தை விட்டு விலகச்செய்; தண்டவாளத்தை விட்டு விலகு.

**derange'**, *v*. ஒழுங்குகுலை, சீர்கேடாக்கு; மூளைகுழப்பு, அறிவு திறம்புவி.

**derange'ment**, *n*. ஒழுங்குகுலைவு, கோளாறு; மூளைத்திரிவு, கிறுக்கு.

**derate'**, *v*. தொழில்நிலத் துறைக்குரிய வரியினின்று அளவொத்த விகிதம் தள்ளிக்கொடு.

**der'ation**, *v*. பங்கீட்டு முறையினின்று விடுவி; உணவுப் பொருள் வகையில் பங்கீட்டுத் திட்டத்திலிருந்து விலக்கு.

**der'by** [1], *n*. தொப்பிவகை; வலிமை வாய்ந்த புதைமிதி வகை.

**Der'by** [2], *n*. டெர்பி என்னுமிடத்திற் செய்யப்படும் மங்குக்கலம், பீங்கான் வகை; 'எப்ஸம்' என்னுமிடத்தில் நடைபெறும் குதிரைப்பந்தயம்; (தொ.) Derby dog, குதிரைப்பந்தய மைதானத்தில் வழிதவறி அலையும் நாய்; தவறான சமயத்தில் தலையிட்டுத் தொல்லை தருபவர்.

**Der'byshire**, *n*. இங்கிலாந்து நாட்டின் மாவட்டங்களில் ஒன்று; (தொ.) Derbyshire neck, குரல்வளைச் சுரப்பி வீக்க வகை; Derbyshire spar, டெர்பிஷையர் என்னுமிடத்திற் கிடைக்கும் பல நிறங்கொண்ட ஒளிவிடும் கனிப்பொருள் படிகம்.

*de regle*, (பிர.) *a*. விதிக்கேற்ற, தகுதியான; வழக்கமான.

**der'elict**, *n*. துணையிலி; சமுதாயத்தால் கைதுறக்கப்பட்டவர்; கைவிடப்பட்ட கப்பல்; கைவிடப்பட்டது; *a*. துணையற்ற; கைவிடப்பட்ட.

**derelic'tion**, *n*. கைவிடுகை; கைவிடப்பட்ட நிலை; கடமைத் தவறு, கடமையில் கவனமின்மை; புதுநிலம் தோற்றுவித்துக் கடல் பின்வாங்குதல்; கடற்கரையெல்லை மாற்றத்தால் ஏற்படும் புது நிலப்பகுதி.

**deride'**, *v*. எள்ளி நகையாடு, ஏளனம் செய்.

*de rigueur*, (பிர.) *a*. ஆசார முறைக்குகந்தபடியான.

**deri'sion**, *n*. ஏளனம், கேலிக்கூத்து; எள்ளப்படும் பொருள்.

**deris'ive**, *a*. ஏளனம் செய்கிற, நையாண்டி காட்டுகிற.

**deris'ory**, *a*. ஏளனம் செய்கிற, நையாண்டி காட்டுகிற; கேலிக்குரிய, சிறுபிள்ளைத்தனமான.

**deriva'tion**, *n*. மூலத்திலிருந்து வருவிப்பு, மரபு தருவிப்பு; மரபுமூல வரலாறு, மரபு வரவு, கால்வழிமரபு; சொல் மூலத்தினடிப்படையான சொல்லாக்கம்; சொல்லாக்க விளக்கம்; சொல்மரபு விளக்கம்; படி வளர்ச்சிக் கோட்பாடு.

**deriv'ative**, *n*. ஒரு சொல்லின் அடியாகப் பிறந்த மற்றொரு சொல்; ஒன்றிலிருந்து வருவிக்கப்பட்டது; *a*. ஒன்றிலிருந்து ஒன்று வருவிக்கப்பட்ட, மரபு மூலத்திலிருந்து தோன்றிய; தனி மூலமல்லாத, மரபுமுதலல்லாத.

**derive'**, *v.* மூலத்திலிருந்து பெறுவி; மரபுத்தொடர்புபடுத்து; மற்றொன்றிலிருந்து தருவி; வருவித்து உருவாக்கு; மற்றொன்றிலிருந்து உய்த்துணர்; மற்றொரு மெய்ம்மை வழி வருவி; தகவல் வரப்பெறு.

**derm, der'ma**, *n.* மெய்த்தோல், தோலின் அடித்தொலி.

**der'mal, dermat'ic, der'mic**, *a.* தோலைச் சார்ந்த; தோலாலான.

**dermatit'is**, *n.* தோல் அழற்சி.

**dermat'ogen**, *n.* (தாவ.) மரத்தின் உட்கட்டையின் வளரும் நுனியிலிருந்து மென்மரப்பகுதி உருவாகும் தள அடுக்கு.

**dermatog'raphy**, *n.* தோலின் உட்கூற்றியல் பற்றிய ஆய்வுத்துறை.

**der'matoid**, *a.* தோல் போன்ற; தோலின் உருவான.

**dermatol'ogy**, *n.* தோலைப்பற்றிய இயல்நூற் பிரிவு.

*dernier ressort*, (பிர.) *n.* இறுதிப்போக்கிடம், போக்கு முட்டிய புகலிடம்.

**de'rogate**, *v.* மதிப்புக் குறைத்துவிடு, தகுதி குறை; தரத்தில் இழி, இழிவானசெயல் செய்.

**deroga'tion**, *n.* குறைப்பு; மதிப்புக்குறைவு; விலைமதிப்புக் கழிவு, சேதாரம்; தர இழிவு, படியழிவு; மதிப்புக் கேடு; அதிகாரத்துக்கு ஊறுபாடு; சட்ட மதிப்புத்தாழ்வு.

**derog'atory**, *a.* இழுக்கான; தீங்கான; மதிப்புக் குறைக்கிற; பெருமை குலைக்கிற, சிறுமைப்படுத்துகிற; தாழ்த்துகிற.

**de'rrick**, *n.* பாரந்தூக்கு பொறி, பளு நகர்த்துவதற்கும் ஏற்றி இறக்குவதற்கும் உரிய வாய்ப்பு வன்மைகளைக் கொண்ட அமைவு; எண்ணெய்க்கிணறுமீதுள்ள கூர்ங் கோபுரச் சட்டம்; குழாய்க் கிணறுவகைகள்மீதுள்ள கூம்புச் சட்டம்.

**de'rring-do'**, *n.* கண்மூடித் துணிச்சல்.

**derr'inger**, *n.* குட்டையான அமெரிக்கக் குழல் கைத் துப்பாக்கி.

**der'vish**, *n.* இஸ்லாமியரிடையே கடுநோன்புடைய துறவி.

**des'cant** [1], *n.* (செய்.) இன்னிசைப்பாட்டு, இன்னிசை; பல தலைப்பு வாத ஆய்வாராய்வு; (இசை.) குரலுக்கு மேற்பட்டுக் குரலுடன் ஒத்திசைவுடைய கருவியிசை.

**descant'** [2], *v.* விரிவாக விளக்கம் செய்; சொற்பொழிவாற்று; விளக்கவுரை கூறு.

**descend'**, *v.* இறங்கு; மேலிருந்து கீழே செல்; வீழ், தாழ்; இழிவுறு; சாய், சரி; மரபுவழியில் இயலு; மரபிற் பெறு, சொல்மரபு வகையிற் சார்ந்து தோன்று, மாறித் திரிபுறு, மூலமாகக்கொண்டு தோன்று; மேல்விழுந்து தாக்கு, திடுமெனத் தாக்கு; கதையில் முற்பட்ட காலத்திலிருந்து பின் தொடர்காலம் நோக்கி ஒழுகு; (கண.) பெரிதிலிருந்து சிறிது நோக்கி இயலு; பொதுவிலிருந்து சிறப்பு நோக்கி இயங்கு; இறங்கிவந்தருள்.

**descen'dable, descen'dible**, *a.* மரபுரிமையாக இறங்கிச் செல்லத்தக்க, கால்வழியுரிமையாக வரக்கூடிய; இறங்கத் தக்க, இறங்கிவரத்தக்க.

**descen'dant**, *n.* மரபினர் வழித்தோன்றல்.

**descen'ded**, *a.* வழிவந்த, மரபில் வந்த, வழித்தோன்றிய.

**descend'ent**, *a.* கீழிறங்குகிற; கீழ்நோக்கிச் செல்கிற; வழித்தோன்றிய.

**descent'**, *n.* இறங்குதல்; இறக்கம், கீழ்நோக்கிய செலவு; கீழ்நோக்கிய சாய்வு, சரிவு; கால்வழி, மரபுவழி வருகை; மரபுக்கொடி வழியில் ஒருபடி; உடைமையின் மரபுவழிவரும் உரிமை; பண்பின் மரபுவழி வருகை; பட்டத்தின் கொடிவழி வருகை; ஆற்றின் ஒழுக்குவழிப் போக்கு; கடல்வழித் திடீர்த்தாக்குதல்; வீழ்ச்சி; தாழ்வு; நலிவு; தர இழிவு; அளவில் குறைபடுகை; (தொ.) descent from the cross, இயேசுநாதர் சிலுவையிலிருந்து இறக்கப்பெறும் தோற்ற ஓவியம்.

**describe'**, *v.* விரித்துரை; விளக்கியுரை, முழு விவரம் கூறு; பண்புகளை எடுத்துரை; சொற்களால் வருணி; பண்பேற்றியுரை, குறித்துரை; வரைந்து காட்டு, வரைவடிவம் கொடு.

**descrip'tion**, *n.* விரித்துரைத்தல்; குறித்துரைத்தல்; விரிவுரை, வருணனை, விளக்கவுரை; குறித்துரை, சாட்டுரை; வரைந்துகாட்டுதல், வரைவடிவளிப்பு; சொல்விளக்கம்; பண்புரு, வகை, மாதிரி, இனம்.

**descrip'tive**, *a.* விளக்கமான, விரிவான; விளக்கத்தக்க; விரித்துரைக்கும் பண்பு வாய்ந்த, வருணனை ஆர்வமுடைய.

**descry'**, *n.* கண்டுபிடிப்பு; *v.* நோக்கியறி, கண்டுணர்; தொலைவிலுள்ளதைப் பார்த்தறி.

**des'ecrate**, *v.* தூய்மை கெடு; தெய்விகப் பண்புக்கு மாறுகப் பயன்படுத்து; தெய்வீகத் தன்மையை அவமதிப்புச் செய்.

**desecra'tion**, *n.* தெய்விகத் தன்மையைக் கெடுத்தல்; தூய்மை கெடுத்தல்; தூய்மைக்கேடு, பழிகேடு.

**desen'sitize**, *v.* கூர் உணர்ச்சியைக் குறை, நிழற்படக் கருவியின் நுட்பத்திறம் கெடு.

**des'ert** [1], *n.* பாலைவனம், நீரில்லாப் பாழ்நிலம், மரங்களற்ற பொட்டற்காடு, மக்கள் வாழ்க்கைக்கொவ்வாத் தரிசு நிலம்; கவர்ச்சியற்ற பரப்பு; உவர்ப்பூட்டும் செய்தி; சுவைத்திற மற்ற ஊழி; *a.* மக்கள் வாழாத, மனித நடமாட்டமற்ற; பாழான, மரபற்ற, புல் பூண்டற்ற, விளைச்சலற்ற, தரிசான, வெட்டையான; (தொ.) desert pea, ஊதா நிறப் புள்ளிகள் கொண்ட மலர்களையுடைய ஆஸ்திரேலிய நாட்டுப் பட்டாணிச் செடிவகை; desert rat, இரண்டாம் உலகப் போரில் வட ஆப்பிரிக்க அரங்கத்தில் சேவை செய்த (1941-2) பிரிட்டிஷ் 7-வது கவசப்படை வீரர்.

**desert'** [2], *n.* தகுதிப்பாடு, தகுதிக்கேற்ற தரம்; பண்புத் தகுதி, மதிப்புரிமை; ஊதியத்துக்குரிய மெய்யுரிமை.

**desert'** [3], *v.* விட்டுநீங்கு; படைத்துறைச் சேவையிலிருந்து இசைவுபெருமல் தப்பியோடு; பொறுப்பைத் துறந்துவிடு; பொருளைக் கைவிடு; கொள்கை துற, கட்சி துற.

**desert'er**, *n.* கைவிடுபவர்; பொறுப்பை விட்டோடுபவர்; படைத்துறை விட்டோடுபவர்; கொள்கை துறப்பவர், கட்சி விட்டேகுபவர்.

**deser'tion**, *n.* கைவிடுதல்; கைவிடப்பட்ட நிலை; சட்ட பூர்வமான பொறுப்பு விட்டேகுதல்; கடமையை மனமறிந்து கைதவற விடுதல்.

**desert'less**, *a.* தகுதியற்ற, மதிப்புரிமையற்ற.

**deserve'**, *v.* உரிமையுடையவராயிரு; பரிசுக்கு ஏற்றவராயிரு; தகுதியுற்றிரு; இசைவு உடையவராயிரு, இயைபு உடையதாயிரு.

**deserv'ing**, *a.* தகுதியுடைய, தக்க, ஏற்ற; வாய்ப்புக் கிசைந்த, தறுவாய்க்குப் பொருத்தமான.

**deserv'ingly**, *adv.* தகுதிக்கு ஏற்றவாறாக; நேர்மைக் கிணங்க.

*deshabille*, (பிர.) *n.* =dishabille.

**des'iccant**, *n.* உலர்த்துவதற்கு உதவும் துணைப்பொருள்; *a.* உலர்த்துகிற; உலர்த்துவிக்கும் திறமுடைய.

**des'iccate**, *v.* உலர்த்து, ஈரம் போக்கு; உலர்பதனம் செய்; காய்ந்து போ.

**des'icc'ation**, *n.* உலர்த்துதல்; உலர்ந்த நிலை; காய்வு, வறட்சி.

**desicca'tive**, *n.*, *a.* =desiccant.

**des'iccator**, *n.* உலர்த்துகருவி.

**desiderat'a**, *n.* desideratum என்பதன் பன்மை.

**desid'erate**, *v.* தேவையுணர், இல்லாமை கண்டிரங்கு, கழிமிகு நாட்டங்கொள்.

**desidera'tion**, *n.* மிகு நாட்டம்; இன்றியமையாதது, வேண்டப்படும் பொருள்.

desid'erative, *a.* மிகு விருப்புக்குரிய ; (இலக்.) விருப்பம் குறிக்கிற.

desidera'tum, *n.* மிக விரும்பப்படுவது, இன்றியமையாதது, தேவைப்படுவது.

deside'rium, *n.* வேணவா, மிகு விருப்பம் ; கழிவிரக்கம்.

design', *n.* உருவரை முன்மாதிரி, முதனிலைத் திட்ட உருவரைப்படம் ; வகைமாதிரி, வண்ணமாதிரி, தினுசு ; பின்னணி வண்ண உருவரைச்சட்டம் ; திட்ட அமைப்பு, பொதுமை முழுநிலை அமைதி, கதை நிகழ்ச்சியமைப்பு ; உள் எண்ணம், உள்நோக்கம், குறிக்கொண்ட தனி இலக்கு ; சதி நோக்கம் ; தாக்குதலுக்கான வகைதுறை அமைப்பு, செயல் திட்டம் ; *v.* முதனிலை உருமாதிரி தீட்டு ; கட்டிடத் துக்கான அமைப்பாண்மை மாதிரி வகு ; தொழில் துறைக் குரிய பொறியமைப்புத் திட்டம் அமை ; காவிய வகையில் அமைப்புத் திட்டம் வகு ; திட்டமிடு, செயலுக்கான வகைதுறைகள் உருப்படுத்து ; உள்ளார எண்ணமிடு, குறிக்கொண்டு முன்னேற்பாடுகள் செய் ; ஆளுக்கெனப் பொருளை ஒதுக்கீடு செய்துவை ; சேவைக்கென ஆளைக் குறித்துவை ; (தொ.) argument from design, படைப்புத் திட்டத்தினடிப்படியாகக் கடவுளுண்மை வலியுறவு செய்யும் வாதம் ; design engineer, வரைவுப்படப் பொறியர்.

des'ignate [1], *a.* பணியமர்வு குறிக்கப்பட்டு இன்னும் பொறுப் பேற்காத, நியமனம் செய்யப்பட்டுள்ள.

des'ignate [2], *v.* பெயர் குறிப்பிட்டு அமர்வுசெய், நியமனம் செய் ; தனிப்படக் குறிப்பிடு ; குறிப்பிட்டுத் தெரிவி ; குறித்துக் காட்டு ; பெயர் குறிப்பிட்டுச் சுட்டு ; பெயரால் சுட்டி வழங்கு, பெயரால் குறித்துரை ; பெயராயமை, தனிக் குறிப்புச் சுட்டாய் இலங்கு.

designa'tion, *n.* அமர்வு செய்தல் ; பணிமனை நியமனம் ; பணிமனைப் பதவிப்பெயர் ; பெயர்க்குறிப்பு, சிறப்புப்பெயர் ; சுட்டிக் குறிப்பிடுதல், சுட்டுப்பெயர்.

design'edly, *adv.* திட்டப்படி, முன்னேற்பாட்டின்படி ; வேண்டுமென்றே.

design'er, *n.* திட்டமிடுபவர் ; மாதிரிப்படம் வரைவோர் ; ஓவியக் குறிப்பு வரைபவர் ; சதிசெய்பவர், சூழ்ச்சியாளர்.

design'ful, *a.* திட்டங்கள் நிறைந்த ; சூழ்ச்சி செறிந்த.

design'ing, *n.* மாதிரிப்படம் வரையும் கலை ; உருவரைப்படம் வரையும் கலை ; *a.* சூழ்ச்சித் திறமுள்ள ; குறும்பு சூழ்கிற ; திட்டமிடுகிற ; தன்னலத்திற்காகக் கரவடமாக வேலை செய்கிற.

design'ment, *n.* வேலையின் மாதிரித் திட்டம்.

desil'ver, desil'verize, *v.* வெள்ளியை நீக்கு, வெள்ளி யைப் பிரித்தெடு.

desip'ience, *n.* சிறுபிள்ளைத்தனம், விளையாட்டுத்தன்மை, சிற்றறிவு.

desip'ient, *a.* முட்டாளாக நடிக்கிற ; சிறு திறமான, சிறு பிள்ளைத்தனமான.

desir'able, *n.* விரும்பத்தக்க பொருள் ; விரும்பத்தக்கவர் ; *a.* விரும்பத்தக்க ; ஏற்றமையத்தகுந்த ; மகிழ்ச்சியூட்டுகிற ; கேள் ; வலியுறுத்திக் கேள்,மனத்துக்குகந்த.

desire', *n.* விருப்பம் ; ஆசை, ஆர்வ வேட்கை ; வேண்டுதல் ஆர்வக் கோரிக்கை ; அவாவிய பொருள் ; சிற்றின்பம், இச்சை ; *v.* விரும்பு, அவாவு ; ஆசைப்படு ; வேண்டுமென்று கட்டளையிடு.

desir'ous, *a.* ஆவலுள்ள ; விருப்பமிக்க ; அவா நிறை வுடைய.

desist', *v.* விலகியிரு, ஒதுங்கியிரு, தவிர்த்திரு.

desk, *n.* சாய்வு மேசை ; மூடக்கூடிய எழுத்துப்பெட்டி ; எழுதுமேசை ; சொற்பொழிவு மேடை.

desk'-work, *n.* சாய்வு மேசையிலிருந்து செய்யும் வேலை ; எழுத்தர் வேலை, எழுத்துழைப்பு.

des'man, *n.* நீண்ட முகமும் புனுகுச் சுரப்பிகளும் கொண்ட புழுப்பூச்சியுண்ணும் சிறிய நீர்வாழ் விலங்கு வகை.

des'olate, *a.* தனிமையில் விடப்பட்ட ; துணையற்ற ; மனித வாடையற்ற, மக்கட் குடியிருப்பில்லாத ; கவர்ச்சியற்ற, பாலைவனம் போன்ற ; பாழான, தரிசான ; ஆறுதலற்ற ; *v.* தனிமைப்படுத்து, துணையற்ற நிலை உண்டுபண்ணு ; மகிழ்ச்சியில்லாதாக்கு ; வாழ்குடி மக்களை அப்புறப்படுத்து ; பாழாக்கு, தரிசாக்கு.

desola'tion, *n.* பாழ்படுத்துதல் ; பாழ்நிலை, பாடழிவு ; தரிசு நிலம் ; மக்கள் நடமாட்டமில்லா இடம்.

despair', *n.* மனக்கசப்பு, மன முறிவு, நம்பிக்கை இழப்பு ; விருப்ப முறிவு பற்றிய ஏமாற்றம் ; மனக்கசப்புக்குக் காரணமான செய்தி ; *v.* நம்பிக்கை இழ, ஆர்வக்கேடு அடை, மனக் கசப்புறு, மன முறிவுகொள்.

despair'ing, *a.* நம்பிக்கை இழக்கும் இயல்புடைய ; முழுதும் நம்பிக்கையற்ற, மன முறிவுற்ற.

despatch', *n.*, *v.*=dispatch.

despatch'es, *n. pl.*=dispatches.

despera'do, *n.* சாவுக்குத் துணிந்தவர், இடரிற் குதிப்பவர், அஞ்சா நெஞ்சர் ; *pl.* despera'does, despera'dos.

des'perate, *a.* நம்பிக்கையற்ற நிலையிலுள்ள, நம்பிக்கை யிழந்த ; அவாவிழந்த, மனக்கசப்புற்ற ; துணிந்து இறுதிக் கட்டத்தில் போராடுகின்ற ; வெறிகொண்ட ; முரட்டுத் துணிச்சலுள்ள, மூர்க்கமான ; கடைகெட்ட, மிக மோசமான.

des'perateness, despera'tion, *n.* நம்பிக்கை இழந்த நிலை ; இடர் பொருட்படுத்தாத தன்மை ; மூர்க்கத்தனம், வெறித்த நிலை.

des'picable, *a.* வெறுக்கத் தக்க ; இகழத் தக்க ; புறக் கணிக்கக் கூடிய ; பயனற்ற.

despis'al, *n.* இழிவாகக் கருதுதல் ; இகழ்ச்சி, புறக்கணிப்பு, ஏளன வெறுப்பு.

despise', *v.* இழிவாகக் கருது, இகழ்ச்சிசெய்.

despite', *n.* மனமார்ந்த அவமதிப்பு; கடும் பழிப்பு, தீம்பு ; ஏளன இகழ்ச்சி ; கடுப்பு, காழ்ப்பு, வன்மம் ; பகைமை ; கடு வெறுப்பு ; எதிர்ப்பு, மாறு, முரண் ; *prep.* எதிர்ப்பைப் பொருட்படுத்தா நிலையில், எதிர்மாறாகவே.

despoil', *v.* முழுதும் கொள்ளையடி ; அழி ; பறி, இழக்கச்செய், கவர் ; கிழித்தெடு ; உரி ; இழந்து தவிக்கச் செய்.

despond', *v.* நம்பிக்கை இழ ; சோர்வுறு, வாட்டமாயிரு ; மனந்தளர்வுறு.

despond'ency, *n.* சோர்வு, வாட்டம், மனத்தளர்ச்சி.

des'pot, *n.* வல்லாட்சியாளர் ; கொடுங்கோலர்.

des'potism, *n.* கொடுங்கோன்மை, தன்னிச்சையாய் ஆளுதல்.

des'quamate, *v.* செதிளுதிர் ; செதிளுதிர்வி, செதிளுரி.

dessert', *n.* சாப்பாட்டிற்குப் பிறகு உண்ணும் பழவகை ; உணவின்பின் இனிப்பு அருந்துகை; உணவின்பின் பண்ணிய வகை உண்டி.

destina'tion, *n.* சேரிடம், பயண இலக்கு.

des'tine, *v.* குறிப்பிட்ட பயன்நோக்கி ஒதுக்கிவை ; கட்டுறுதி செய் ; முடிவுசெய்து வை ; முன்னமே தீர்வுசெய்து வை, ஊழ்க்கூறு வகுத்தமை.

des'tiny, *n.* ஊழ், விதி ; விலக்க முடியா முடிவு ; மாற்ற முடியா அமைவு ; முன்பே வகுத்தமைக்கப்பட்ட நிகழ்ச்சிக் கோவை ; நடந்தே தீரவேண்டிய வகுப்பமைவு ; அமைவு நோக்கம் ; ஊழின் வகுப்பமைவுக்கூறு.

des'titute, *a.* துணையற்ற ; கைவிடப்பட்ட ; வகையற்ற, தேவைக்கு அலந்த.

des'trier, *n.* (வர.) போர்க்குதிரை.

destroy', *v.* அழி, நிலைகுலை ; தகர், இடித்துத்தள்ளு ; பயனற்றதாக்கு ; இல்லாதாக்கு, ஒழி ; செல்லுபடி இல்லா தாக்கு ; கொல்லு.

**destroy'er**, *n.* அழிப்பவர், அழிப்பது ; கப்பல்களை உடைக்கத் தக்க வெடிகுண்டைத் தாங்கிச் செல்லும் நீர்மூழ்கிப் படகு.

**destruc'tible**, *a.* அழிக்கத்தக்க.

**destruc'tion**, *n.* அழித்தல் ; அழிவு ; பாழ் ; உடற்சிதைவு, பொருட்சிதைவு ; கேடு, பொருளழிவு ; ஒழுக்கக்குலைவு; சாவு, கொலை ; அழிவு செய்யும் பொருள்.

**destruc'tionist**, *n.* அழிவுத்தொழிலில் ஈடுபடுபவர், மீட்பு அற்றவர்கள் அடியோடு அழிந்துபடுவார்கள் என்ற கொள்கை உடையவர்.

**destruc'tive**, *n.* அழிவுக்கருவி, அழிவு செய்யும் பொருள் ; அழிவு செய்பவர் ; *a.* அழிவு உண்டாக்கக்கூடிய, அழிவு செய்கிற, அழிவுடன் தொடர்புடைய ; தீங்கான, கேடு தருகிற, பழிகேடான ; ஆக்கக் கேடான, நிலைகுலைவான.

**destruc'tor**, *n.* அழிப்பது ; அழிப்பவர் , கழிவுப்பொருளை எரிக்கும் உலை.

**des'uetude**, *n.* வழங்காநிலை, வழக்காற்றொழிவு.

**desul'phur, desul'phurate, desul'phurize**, *v.* கந்தகத்தைப் பிரித்தெடு, கந்தகமில்லாதாக்கு.

**des'ultory**, *a.* ஒரு பொருளிலிருந்து இன்னொரு பொருளுக்குத் தாவிச் செல்கிற ; தொடர்பற்ற ; முறையற்ற ; காரணகாரிய இணைப்பற்ற ; துண்டுத்துணுக்கான ; இடையிடை விட்ட ; மேலீடாகத் தொட்டுத் தொட்டு ஓடுகிற.

**desynon'ymize**, *v.* இருபொருளொருசொல் வகையில் பொருள் வேறுபடுத்திச் சுட்டிக்காட்டு.

**detach'**, *v.* பற்றறு, தொடர்பறு ; இடையறு, இணைப் பகற்று, கட்டவிழ் ; விலக்கு, நீக்கு; பிரித்தெடு; பின்வாங்கிக் கொள் ; படைத்துறையில் பிரித்தனுப்பு, சிறப்புப் பணிக்காக அனுப்பு.

**detach'ment**, *n.* கட்டவிழ்த்துவிடுதல் ; தனிநிலை, பிரிநிலை ; சூழல் தொடர்பற்ற தன்மை, ஒதுங்கிய நிலை ; தனிக்கருத்து நிலை ; நடு உணர்வுநிலை ; துண்டுபட்ட பகுதி, தனிக்கூறு ; சிறப்புப் பணிக்குரிய படைப் பிரிவு.

**detail'**, *n.* விவரம், தனிச் சிறுகூறு ; வகைநுணுக்கம் ; கட்டிடத்தில் அல்லது ஓவியத்தில் அமைந்த சிறு வேலைப்பாடு; படைத்துறையில் நாட்கட்டளைப் பங்கீட்டுக் கூறுபாடு; படைத்துறையில் சிறப்புப் பணிக்காக ஒதுக்கிவைக்கப்பட்டுள்ள பிரிவு ; *v.* இனம் இனமாகக் கூறு, நுணுக்க விவரமாகக் குறிப்பிடு, வரிசைப்படுத்திக்கூறு, எடுத்துரை ; வகை நுணுக்கம் விரித்துரை, முழு விவரம் கூறு ; படைத் துறையில் தனிப் பணிக்கெனக் கூறு ஒதுக்கிவிடு ; (தொ.) in detail, இனம் இனமாக, கூறுகூறுக, விவரம் விவரமாக ; முழுவிவரத்துடன் ; படை வகையில் பல சிறுசிறு கள நிகழ்ச்சிகளாக.

**detain'**, *v.* கட்டுப்படுத்து, காவலில் வை ; தங்கவைத்துக் கொள், தடுத்து நிறுத்து, பின்தங்கச் செய், தாமதமூட்டு; தடங்கல் செய், செயலில் இறங்காது நிறுத்து ; கொடாமல் வைத்துக்கொள்.

**detain'er**, *n.* தடுத்து நிறுத்துபவர் ; (சட்.) இன்னொருவருக்குச் சொந்தமான பொருளைக் கொடாது வைத்திருத்தல்; ஆளைக் கட்டாயப்படுத்திக் காவலில் வைத்திருத்தல் ; சிறையில் இருப்பவரைத் தொடர்ந்து காவலில் வைத்திருப்பதற்குரிய ஆணை.

**detect'**, *v.* நுணுகிக்காண், கூர்ந்து கண்டுணர், மறைகண்டுபிடி, தடங்கண்டுபிடி ; குற்றவாளிபற்றித் துப்பறி, குற்றம் பற்றிய உளவு கண்டுபிடி.

**detec'tive**, *n.* துப்பறிபவர் ; காவல்துறையில் துப்பறியும் அரங்கத்தில் குற்றவாளியின் உளவறியும் வேலையில் ஈடுபட்டவர், குற்றத்தடம் காண்பவர் ; தனிப்பட்ட முறையில் துப்பறியும் வேலையில் ஈடுபட்டவர் ; மறை ஒற்றர், ஐயப்பாடுடையவர்களின் நடவடிக்கைகளைக் கண்காணிப்பவர் ; *a.* துப்பறிகிற, துப்பறி தொழிலில் ஈடுபட்டுள்ள ; துப்பறி தொழிலுடன் தொடர்புடைய ; துப்பறியும் செய்திபற்றிய ; (தொ.) detective story, துப்பறியும் கதை, குற்றச் செயல்களின் புதிரீடும் துப்பறியும் திறமும் புனைந்து கூறும் கதையேடு.

**detec'tor**, *n.* மறை நுணுக்கம் கண்டுபிடிப்பவர் ; துப்பறிபவர் ; இயந்திரப் பகுதிகளின் மறைநுணுக்கம் கண்டுணர உதவும் பொறியமைவு ; பூட்டுத் திறப்பது போன்ற மறைச் செயல்களை வெளிப்படுத்தும் அமைவு ; மின்னழுத்த மிகுதியைத் தெரிவிக்கும் அமைவு ; மின் அலைகளைத் தடங்கண்டு காட்டும் கருவி.

**detent'**, *n.* இயக்கத்தைத் தடுப்பது ; இயக்கம் தடுக்கும் கொளுவி ; மணிப்பொறியில் மணியடிப்பதை ஒழுங்கு படுத்தும் கொளுவியமைவு.

***detente***, (பிர.) *n.* நாடுகளிடையே நிலவுகின்ற மனக்கசப்பினை நீக்கும் முடிவமைதி.

**deten'tion**, *n.* தடைப்படுத்தி வைத்தல்; தடைப்படுத்தி வைக்கப்பட்ட நிலை ; தடுப்புக்காவல்; கட்டாயச் சுணக்கம், வலுக்கட்டாயமாக மாணவரை உரிய நேரங்கடந்துந் தண்டனையாகத் தங்கவைத்தல் ; அரசியலிலும் படைத்துறையிலும் குற்றவாளிக்குத் தரப்படும் தன்னுரிமைக் கட்டுக்காவல் முறை ; (தொ.) detention centre, 14-20 வயதுக் குட்பட்ட இளங்குற்றவாளிகளை 6 மாதம்வரைக் கட்டுக் காப்புச் செய்யுமிடம்.

**detenu'**, *n.* தடுப்புக்காவல் கைதி.

**deter'**, *v.* அச்சமூட்டிச் செயலூக்கங் கெடு, தொல்லைகளைச் சாக்குக் காட்டித் தயங்கும்படி செய், பின்னடையும்படி செய், தயக்கமுண்டுபண்ணித் தடு.

**deter'gent**, *n.* துப்புரவு செய்வது ; துடைத்துத் துப்புரவு செய்வது, உராய்பொருள் ; (வேதி.) துப்புரவு செய்யும் பொருள், மாசு கரைத்துக் கலந்து வேறுபடுத்தும் திறமுடைய பொருள், கலவை திரித்து வேறுபடுத்தும் பொருள்; *a.* தூய்மையாக்குகிற, மலமகற்றுகிற.

**deter'iorate**, *v.* அழிகேடாக்கு ; படுமோசம் ஆகு ; படிப்படியான தரக்குறைவு உண்டாக்கு.

**determ'inant**, *n.* தீர்வுப்பொருள், தீர்மானிக்கப் பயன்படுவது, முடிவு செய்ய உதவும் கூறு ; இருபொருள் ஒரு சொல்லில் திரிபு சுட்டிப் பொருள் வரையறுக்கும் அடைமொழி ; உயிரணு வளர்ச்சியின் போக்கை அறுதியிடுவதாகக் கருதப்படும் கூறு; (கண.) துணிகோவை; *a.* முடிவு செய்ய உதவுகிற, வரையறுக்கப் பயன்படுகிற.

**deter'minate**, *a.* தீர்மானிக்கப்பட்ட ; வரையறுக்கப்பட்ட ; உறுதியான, நிலைப்படுத்தப்பட்ட ; முடிவான ; (தாவ.) வளரா நுனியுடைய, நடுத்தண்டின் உச்சியில் மலருடைய.

**determina'tion**, *n.* உறுதி செய்தல், தீர்மானித்தல் ; முடிவு செய்யப்படுதல் ; உறுதி, தீர்மானம் ; நோக்க உறுதி, கருத்து உறுதி ; மன உறுதிப்பண்பு ; முடிவை நோக்கிய நாட்டம் ; கருத்துத் திட்பம் ; தெளிவான ஒருபுறச் சாய்வு உறுதி, திண்ணிய சார்பு ; தொகை அறுதிப்பாடு ; கால அறுதிப்பாடு ; அறுதி ; வரையறை ; வழக்கு அறுதி ; வாத முடிபு ; (சட்.) உடைமை உரிமை முடிவுறல்.

**deter'minative**, *n.* பண்டை உரு எழுத்துமுறையில் பொருள் விளக்கத்திற்கான துணைக்குறி ; *a.* அறுதி செய்கிற, எல்லைவரையறுக்கிற, எல்லை விளக்குகிற.

**determ'ine**, *v.* முடிவுசெய், உறுதிசெய் ; தீர்மானஞ்செய்வி; முடிவு தெரிவி ; உறுதியாகத் தெரிந்துகொள் ; வரையறு, கட்டுப்படுத்து, எல்லை உறுதிசெய் ; உரு வரையறை செய் ; முடிவுக்கு வா ; (சட்.) அறுதிக்கு வந்துசேர் ; வரையறை செய்யும் கூறாய் உதவு ; கால அறுதிசெய், முன்கூட்டி வேளைகுறி ; வாத முடிவுசெய் ; செயலுறுதி கொள் ; செய்வதென்று துணி ; செயலுக்கான ஆள் உறுதிப்படுத்து ; நோக்கமளி, இயக்கு, தூண்டு.

**determ'ined**, *a.* கண்டறியப்பட்ட ; உறுதிப்படுத்தப்பட்ட , நிலையான ; வளைந்துகொடாத, அசையா உறுதியுடைய ; முன்பே வரையறுக்கப்பட்ட ; கருத்துறுதி உடைய, தீர்மானமான ; அறுதி செய்யப்பட்ட.

**determ'inism,** *n.* நியதிவாதம், மனிதச்செயல் துணிபாற்றல் உள்ளடங்கலாக எல்லாச் செய்திகளும் புறப்பொருள் தூண்டுதலாற்றல்களாலேயே துணியப்படுகின்றன என்னும் கோட்பாடு.

**deters'ive,** *n.* துப்பரவு செய்யும் பொருள்; *a.* தூய்மைப் படுத்துகிற.

**detest,** *v.* வெறுத்தொதுக்கு, அறவே வெறு, முனைப்பாக வெறுப்புக்கொள்.

**detesta'tion,** *n.* அறவே வெறுத்தொதுக்குதல்; முழு வெறுப்பு.

**dethron'e,** *v.* தவிசிறக்கு, அரசுரிமையிலிருந்து தள்ளு; உயர்நிலையினின்று அகற்று.

**det'inue,** *n.* (சட்.) சொத்தைத் தவருகத் தடைப்படுத்தி வைத்தல்; (தொ.) action of detinue, தவருகத் தடைப் படுத்தி வைக்கப்பட்ட சொத்தை மீட்பதற்கான நடவடிக்கை.

**det'onate,** *v.* அதிர்வேட்டுப் போடு, முழக்கத்துடன் வெடிக்கச் செய், உள்வெப்பாலே இயந்திரத்தின்வகையில் சுத்தி ஓசை போன்ற அதிர்வுடன் வெடிக்கச் செய்.

**det'onator,** *n.* ஓசையுடன் வெடிக்கும் பொருள்; வெடிப் பைத் தூண்டிவிடும் வெடிப்புப் பொருள்; வெடிகுண்டில் வெடிப்பைத் தூண்டும் கருவி; புகைவண்டியின் மூடுபனி அறிவிப்பு அடையாள ஒலி.

**detour',** *n.* சுற்றுவழி, வளைந்து வளைந்து செல்லும் வழி; இடைச்சுற்று வழி, மற்ருென்று விரித்தல்.

**detract',** *v.* குறைவுபடுத்து, குறைவுபடச் செய்; இழிவு படுத்து, பெருமைகுலை; நற்பெயரைக் கெடு, பழித்துக்கூறு; தரம் குறை; அளவிற் குறைபடு.

**detrain',** *v.* புகைவண்டியிலிருந்து இறங்கு.

**det'riment,** *n.* தீங்கு, கெடுதல்; நட்டம், சேதம்; குறைவு.

**detriment'al,** *n.* விரும்பத்தகாத குற்றங் குறைபாடுடைய காதல் வேட்பாளர்; உடனிருப்பதால் மண இணைப்பு வாய்ப் பைக் குறைக்கத்தக்கவர்; தீங்கு தரத்தக்கவர்; நட்ட முண்டாக்கக்கூடியவர்; *a.* தீங்கு தரத்தக்க, நட்டமுண் டாக்கக்கூடிய.

**detrit'ed,** *a.* (மண்.) ஒரே பாளம் சிதைந்துருவான, சிதறித் துண்டு துணுக்குகளான.

**detri'tion,** *n.* உராய்வினல் வரும் நாட்படு தேய்வு.

**detrit'us,** *n.* பிழம்புருவிலிருந்து தேய்ந்து உருவான பொருள்; பாறை முதலியவற்றிலிருந்து தகர்வுற்றுருவான துண்டுத் துணுக்குகளின் திரள்; சரளை மணல் வண்டல் முதலிய திரள் பொருள்; சிதைவுகூளம்.

***de trop,*** (பிர.) *a.* வேண்டப்படாத, தேவையற்ற.

**deuce**[1], *n.* இரண்டு எண்ணுள்ள சீட்டு, பகடையில் இரண்டு; வரிப்பந்தாட்டத்தில் இரு கட்சிகளும் 40 எண்ணிக்கை பெற்ருலன்றி எக்கட்சியும் வெற்றிபெற முடியாநிலை, ஆட்டச் சரிதயக்கநிலை.

**deuce**[2], *n.* தீங்கு; அஞர்த்தெய்வம்; கொள்ளைநோய்.

**Deuce,** *n.* மின்னணுவியக்கக் கணக்குமானி.

**deuce'-ace,** *n.* பகடையில் இரண்டும் ஒன்றும் தொடர்ந்து விழுதல்; பேரவப் பேறு, மிக மோசமான வாய்ப்புக்கேடு.

**deu'ced,** *a.* பேய்த்தனமான; பாழாய்ப்போன; மிகப் பெரிய; மிகுதியான; *adv.* பாழான முறையில்; மோசமாக; மிகுதியாக.

***de'us exmac'hina,*** (ல.) *n.* தெய்வக் குறுக்கீட்டுமுறை, காவியத்திலும் நாடகத்திலும் கதையிலும் நல்ல கட்டத்தில் தெய்வக் குறுக்கீட்டால் நெருக்கடி தீரவைக்கும் முறை.

***De'us misereat'ur,*** (ல.) ஆண்டவனே அருள்செய் எனத் தொடங்கும் சிறுபாடல்.

**deuteragon'ist,** *n.* நாடகத்தில் முதல்வருக்கு அடுத்த முக்கி யத்துவமுடையவர்.

**deuter'ium,** *n.* நீரகத்தின் இருமடித் திரிபெடைப் பொருள்.

**Deuteron'omist,** *n.* விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் முதல் ஐந்தேட்டுத் தொகுதியில் ஐந்தாம் ஏட்டுப் பிரிவை எழு தியவர்; விவிலிய ஏட்டின் ஐந்தாம் பிரிவுக்குரிய கூட்டாசிரி யருள் ஒருவர்; விவிலிய ஏட்டின் ஐந்தாம் பிரிவைத் தொகுத் தவர்.

**Deuteron'omy,** *n.* விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் மோசெசுக்கு (Moses) உரிமைப்படுத்தப்பட்டுள்ள முதல் ஐந்தேட்டுத் தொகுதியுள் ஐந்தாவது ஏட்டுப்பிரிவு.

**deut'zia,** *n.* வெண்பூவையுடைய புதர்ச் செடிவகை.

***deux-temps,*** (பிர.) *n.* விரை ஒத்திசை நடனவகை.

**dev'astate,** *v.* பாழாக்கு; சூறையாடு.

**devel'op,** *v.* மடிப்புவிரி, வளரச்செய், முதிர்ச்சியடையச் செய்; வளர், முதிர்ச்சியுறு, உள்விளைவுறச் செய்; உள் முதிர்வுறு; முகையவிழச்செய், மலர்ச்சியுறுவி; மலர்ச்சியுறு; உள்ளார்ந்த பண்புகளை வெளிக்கொணர்; உருமலர்ச்சியுறு; கருவியல்புகள் ஒன்றன்பின் ஒன்ருக வெளிவரப்பெறு; படிப் படியாகத்தோற்றுவி; புறந் தோற்றுவி, வெளிக்கொணர்ந்து காட்டு, தோன்று, வெளிப்படு; தளை நீக்கி வெளிக்கொணர்; சமதளப்படுத்து; விளக்கியுரை; பெரிதாக்கு; பெரிதாகு; நிறைவு பெறுவி, நிறைவு பெறு; புது உபயோகத்துக்குக் கொண்டுவா, எளிதாகக் கிடைக்கச் செய்; மேம்படுத்து, படிப்படியாக உயர்நிலையடைவி, எளிய படியிலிருந்து படிப் படியாகப் பன்மடிச் சிக்கற் படிகளுக்குக் கொண்டு செல்; மேம்படு, உயர்நிலை பெறு, உயர்படிமையுறு; புதுநெறி கண்டு வளமுறுத்து; புதுவளம்பெறு, புதுவழிப்பட்டு விரி வுறு; நிலத்தை இயற்கைவளம் பெருக்கி வளப்பமுறுவி; இயல்வளமுறு; படைத்துறையில் தாக்குதல் உருவாக்கு; சதுரங்கத்தில் தாக்குதலில் முனை; நிழற்படச் சில்லை உரு விளக்கப்படுத்து; (கண.) பெருக்க விளக்கப்படுத்து.

**devel'opment,** *n.* வளர்ச்சி, பெருக்கம், விரிவு; முன் னேற்றம்; வெளிப்படுத்துதல்; புதுவளம்; வளர்ச்சி உண்டு பண்ணுதல்; படிப்படியாக: வளர்தல்; சிறிது சிறிதாக வெளிப்படுதல்; (கண.) தொடர் உருவத்தின் செயல் விளக்கம்; விரிவாக்கம்; புத்தாக்கம்; (இசை.) ஆளத்தி, சுர ஏற்ற இறக்கம்; பின்வரவிருக்கும் புதிய நிலைமை; (தொ.) development area, வேலையில்லாத் திண்டாட்ட மிகுதியாலோ வேலையில்லாத் திண்டாட்டம் மிகுதியாகிவிடும் நிலையாலோ புதிய தொழில்களுக்கு அரசியலாதரவு தரப் படுவதற்காகக் குறிக்கப்பட்ட பகுதி.

**development'al,** *a.* வளர்ச்சி சார்ந்த, பெருக்கத்துக்குரிய; உருமலர்ச்சி சார்ந்த, வளர்ச்சியோடு தொடர்புகொண்டுள்ள.

**de'viate,** *n.* (உள.) பொது நிலையிலிருந்து விலகிய நிலையுடை யவர்; *v.* மாறு; வேறுபட்டுச் செல், மாறுபடு; மதிப்புப்படி யினின்று விலகு; இடைப்பிறிதுபடு, இடைவிலகிச் செல்; தவறிழை; விலகத் தூண்டு.

**devia'tion,** *n.* விலகுதல்; திறம்புதல்; திசையறி கருவியின் ஊசி ஒரு புறமாகத் திரும்புதல்; பிழைபாடு; (தொ.) deviation of the compass, கப்பல்நிலையால் அல்லது சூழற் காரணங்களால் திசைகாட்டும் கருவி கோட்டமுறுதல்; standard deviation, நியமச்சாய்வு, திட்ட அளவுக்குட்பட்ட விலகல்.

**device',** *n.* வழி, உபாயம், திட்டம், ஏற்பாடு; கருவி; சூழ்ச்சித் திறம்; (கட்.) சின்னம், விருது, அடையாளம்; மேற்கோள் வாசகம்.

**Dev'il,** *n.* கூளி, கடவுள் எதிரி; மனித இனத்தை வீழ்ச்சியிற் சிக்கவைக்கும் தீய சக்தி.

**dev'il,** *n.* பிசாசு, தீய ஆவி; குறும்புத்தெய்வம், மனித எல்லைக்கு அப்பாற்பட்ட தீய ஆற்றல்; தீமையின் உருவம், கொடுமையின் வடிவம்; போர்வெறி, மூர்க்கம்; தாக்கு தல் செய்யும் துணிச்சல்; கொடியவர்; ஆணவக் காரர், நற்பேறற்றவர்; அப்பாவி; துயர்ப்பட்டவர்; கெடுவிலங்கு; வியத்தகு திறம்படைத்தவர்; அச்சகப் பையன், எடுபிடியாள்; இலக்கியக் கூலியுழைப்பாளர்; வழக்குரைஞரின் துணைப் பணியாளர்; வாணவெடி; புழுதிப்

புயல், மண்மாரி; சுவையூட்டப்பட்ட அவியலுண்டி வகை; பொருத்து வேலைக்காரர் உலையடுப்பு; கிழித்துச் சிதைக்கும் இயந்திர வகை; சனியன், தொல்லை; *v.* வழக்குரைஞர் துணையாளாகப் பணியாற்று; ஆசிரியரின் சிற்றுளாக உழை; சுவையூட்டி அவியலுண்டியை வேகவை; (தொ.) between the devil and the deep sea, இருதலைக்கொள்ளி எறும்புபோல; devil a bit, devil a one, devil a thing, அறவே இல்லாமல், ஒன்றுகூட இன்றி; devil of a mess, கந்தறுகோலம், பெருங் குழப்பம், சீர்கேடான நிலை; devil's advocate, போப் ஆண்டவரின் நீதிமன்றத்தில் 'புனிதர்கள் பட்டியலில்' சேர்ப்பதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வழக்குரைஞர்; குறைத்துப் பேசுபவர்; devil's books, சீட்டுக்கட்டு; devil's coach-horse, பெரிய கருநிற வண்டு; devil's dozen, பதின்மூன்று; devil's dung, பெருங்காயம்; devil's dust, கந்தல் நூலினால் மறுபடி நெசவு செய்யப்பட்ட ஆடை; devil's snuff-box, பொடிவண்ணச் சிதல்விதை கொண்ட காளானுடைய பழம்; give the devil his due, உள்ள தகுதியை மதித்து நடத்து; go to the devil, அழிந்து போ, போய்த்தொலை, அப்பால் போ; like the devil, பேருக்கத்துடன்; play the devil, பெரிய அளவில் அழிவுசெய், அட்டூழியம் செய்; printer's devil, அச்சகச் சிற்றாள்; the devil! தொந்தரவைத் தெரிவிக்கும் சொல்; வியப்பிடைச்சொல்; the devil among the tailors, குழப்பம், சந்தடி, சச்சரவு; the devil and all, வீண் ஆரவாரம், எல்லாம் கெடுதல்; the devil to pay, துன்பம் முன்னேக்கியுள்ள நிலை.

**dev'il-box,** *n.* (பே-வ.) மின்னணுவியக்கத்தாலான கணிப்பு மானி.

**dev'il-crab,** *n.* வழவழப்பான நண்டு வகை.

**dev'il-dodger,** *n.* தெளிவின்றிப் பல கோயில்களில் உழல்பவர்; சமய போதகர்.

**dev'il-fish,** *n.* தூண்டில் போன்ற இழைமங்களுள்ள பெருந் தீனி மீன்வகை; குருத்தெலும்பும் தகடு போன்ற செவுள்களுமுடைய பேருருவ அமெரிக்க மீன் வகை; கைகால் போன்ற எட்டு உறுப்புக்களையுடைய கடல்வாழ் உயிரினம்.

**dev'il-in-a-bush'** *n.* தோட்டமலர்வகை.

**dev'ilish,** *a.* பேய்த்தன்மையுடைய; வெறுக்கத்தக்க; பழிக்கப்படத்தக்க; தொந்தரைவாய்ந்த; மிக மோசமான; *adv.* (பே-வ.) மிகவும்.

**dev'ilism,** *n.* பேய்க்குணம், தீ நடத்தை; பேய்வழிபாடு.

**dev'il-may-care,** *a.* மடத்துணிச்சல் வாய்ந்த, அடங்காப் போக்குடைய, சிறிதும் கவலையோ பொறுப்போ இல்லாத.

**dev'ilment,** *n.* குறும்புச்செயல், பொல்லாச் சூழ்ச்சி; களிக் கூத்தாட்டம், அடங்கா எழுச்சி; இயற்கை மீறிய செய்தி, பேய்த்தனமான நிகழ்ச்சி.

**dev'ilry, dev'iltry,** *n.* சூனியம், மாயவித்தை, பேயாட்டு; சைத்தான் சேட்டை; இழிகுணம், கொடூரம், மூர்க்கத்தனம், மடத்துணிச்சலுள்ள குறும்புத்தனம்; பொல்லாக் களியாட்டம், எக்களிப்பு; பேயாட்டுக்கலை; பேய்களின் தொகுதி.

**dev'il-worship,** *n.* பேய்வழிபாடு; காகசஸ் (caucasus) பகுதியிலுள்ள சமயப்பிரிவு.

**de'vious,** *a.* தொலைவான, தொடர்பில்லாத; சுற்றான, வளைந்துவளைந்து செல்கிற; தவறான; வழிவிலகிச் செல்கிற.

**devise',** *n.* இறுதிப்பத்திரம் எழுதுதல்; இறுதிப்பத்திரம்; இறுதிப்பத்திரத்தின் உடைமை ஒதுக்கீட்டு வாசகம்; இறுதிப் பத்திர மூலம் வழங்கப்பட்ட உடைமை; *v.* கற்பனை செய்; புதுவது புனை; உருவாக்கு, சேர்த்து அமை; திட்டமிடு; சூழ்ச்சிசெய்; ஆலோசனை செய், இறுதிப்பத்திரம் எழுதி வை; உடைமையை இறுதிப்பத்திரம் மூலம் உரிமையாகக் கொடு.

**devit'alize,** *v.* உயிராற்றல் அற்றதாக்கு; உயிரூட்டமளிக்கும் கூறுகளை அகற்று.

**devit'rify,** *v.* கண்ணாடி போன்ற தன்மை மாற்று; கண்ணாடி முதலியவற்றை அரை ஒளி ஊடுருவும்பொருளாக்கு; கண்ணாடித் தன்மையினிடமாக மணியுருப் பண்பூட்டு.

**devoid',** *a.* சிறிதும் இல்லாத, முற்றிலும் ஒழிந்த, முழுதும் தவிர்தலுடைய.

**dev'oir,** *n.* விழுக்கடன், இயன்ற முழு அளவுக்கடமை; சேவை, தொண்டு.

**dev'olute,** *v.* மாற்று; படிமாற்ற முறையில் உடைமை கைமாற்று; ஆட்பேராக வேலை செய்யும்படி ஏற்பாடுசெய்.

**devolu'tion,** *n.* படிமுறைவருகை, பல மாற்றப்படிகள் கடந்துவந்தடைதல்; உடைமையின் மரபுரிமை வருகை; பயன்படுத்தப்படா உரிமை மூல உரிமையாளருக்கே மீளுகை; உடைமை கைமாறுதல்; அதிகாரமாற்றம், பொறுப்புரிமை ஒப்படைப்பு; சிறிது திரிபுற்ற தன்னாட்சியுரிமை; உயிர் மலர்ச்சியில் பின்னிடைவுப்போக்கு.

**devolv'e,** *v.* முறைப்படி உரிமையாக்கு; உரிமைமாற்றிக் கொடு, அதிகாரம் மாற்றி ஒப்படை; உருட்டித்தள்ளு; மரபுப்படி வந்தடை.

**Devon'ian,** *n.* இங்கிலாந்தில் 'டெவன்ஷயர்' (Devonshire) என்ற மாகாணத்துக் குடிமகன்; மண்ணியல் படிவ அமைப்பு வகை; *a.* 'டெவன்ஷயரை'ச் சேர்ந்த; மண்ணியல் படிவ அமைப்புவகை சார்ந்த.

**devote',** *v.* ஒதுக்கிவை; புனித காரியத்துக்கென நேர்ந்துவிடு; முழுதும் ஈடுபடுத்து, ஒப்படைத்துவிடு; ஊழ்வசம் ஒப்படை.

**devot'ed,** *a.* பக்தியுள்ள, ஈடுபாடு கொண்ட; ஆர்வப் பற்றுக் கொண்ட; நோன்புறுதி கொண்ட; புனித காரியத்துக்கு ஒதுக்கிவிடப்பட்ட; முடிவுத் தீர்ப்பளிக்கப்பட்ட.

**devotee',** *n.* பக்தர், பற்றுறுதியுடையவர்; வழிபாட்டாளர்; முழு ஈடுபாடுடையவர், முனைப்பார்வமுள்ளவர்.

**devo'tion,** *n.* பக்தி, ஒருமுக நோக்குடைய கடவுட்பற்று; முழு ஈடுபாடு; நேர்வு, புனித காரியத்துக்கென ஒதுக்கிவைத்தல்; ஒருமுகப்படுத்தப்பட்ட செயல்; ஆர்வப்பற்று; முனைப்பார்வம்; ஈடுபட்ட சேவை; வழிபாடு.

**devo'tions,** *n. pl.* வணக்க வழிபாடு, வேண்டுதல்கள்.

**devour',** *v.* பேராவலுடன் விழுங்கு; விலங்குகளைப் போலப் பெருந்தீனிகொள்; பேரழிவு செய், கொன்றழி, சூழ்ந்து பாழ்படுத்து; கருத்தூன்றிப்பார், ஊன்றிக் கேள், பேரார்வத்துடன் நுகர்; கருத்தைக் கவர், உளத்தை ஆட்கொள்; விரைந்து கடந்துசெல்.

**devout',** *a.* கடவுட்பற்றுள்ள, சமயப்பற்றுள்ள; வழிபாட்டுணர்ச்சியுள்ள; ஆழ்ந்த பற்றுடைய; கருத்தூன்றிய உள்ளார்வமுடைய; மனமார்ந்த முழு ஈடுபாடுடைய.

**dew,** *n.* பனித்திவலை; பனி போன்ற ஆவி நுண்திவலை; காலைநேரக் கிளர்ச்சி; புத்தூக்கம்; புத்தூக்கந் தரும் திறம்; நுண்ணய ஊக்க ஆற்றல்; நீர்த்துளி; வியர்வைத்துளி; *v.* பனித்துளிபோல் உருவாக்கு; பனி உருவாகு; பனித்துளியால் நனை; ஈரமாக்கு; (தொ.) mountain dew, (பே-வ.) சட்ட வரம்புமீறி வடிக்கப்பட்ட தேறல்வகை.

**dewan',** (அரா.) *n.* முதலமைச்சர்; நிதி அமைச்சர்.

**dew'-berry,** *n.* நீலவண்ணமும் பனித்துளிபோன்ற பளபளப்புமுள்ள பழச்செடி வகை.

**dew'-bow,** *n.* பனிபடர்ந்த பரப்பிற் காணப்படும் வானவில் போன்ற தோற்றம்.

**dew'-claw,** *n.* நாயின் பின்னங்காலில் உள்ள முதிர்வுறு மரபு எச்சச் சின்னமான சிறு விரலமைப்பு.

**dew'fall,** *n.* பனிப்படிவு; பனிபடியும் நேரம்.

**dew'lap,** *n.* அலைதாடி, மாட்டின் கழுத்தடியிலுள்ள தொங்கு மடி; விலங்கு பறவைகளின் தொங்கு தாடை.

**dew'point,** *n.* பனி உருவாகும் தட்பவெப்ப நிலை.

**dew'-pond,** *n.* பனிக்குளம், பனித்துளியால் நிறைந்த பள்ளம்.

**dew'-retting,** *n.* பனியிலும் மழையிலும் நனையவிட்டுச் சணலின் பசைப்பதம் கெடுக்கும் முறை.

**dew'-worm,** *n.* மண்புழு.

dex'ter [1], *n.* உருவடக்கமான பயிற்சியினக் கால்நடை வகை.
dex'ter [2], *a.* வலப்பக்கமான ; வலப்புறமான ; (கட்.) பார்வையாளருக்கு இடப்புறமான.
dexte'rity, *n.* கைத்திறம், கைப்பழக்கம் ; அருந்திறன் ; சாமர்த்தியம் ; வலக்கைப்பழக்கம் ; வலக்கைத்திறம்.
dex'trin, dex'trine, *n.* செயற்கைப் பசைவகை, அஞ்சல் தலை முதலியவற்றில் பயன்படுத்தப்படும் பிசின்வகை.
dex'trose, *n.* பழ வெல்லம், பழச்சர்க்கரை.
dex'trous, *a.* வலக்கைப் பழக்கமுள்ள ; கைத்திறமிக்க ; பயில்திறமிக்க ; அறிவுத்திறமிக்க ; நுண்திறம் வாய்ந்த.
Dey, *n.* (வர.) துருக்கிய காலாட்படைத் தலைவர் ; வடக்கு ஆப்பிரிக்காவிலுள்ள அல்ஜியர்ஸ் (Algiers) மண்டலத் தலைவர்.
dhal, *n.* பருப்பு.
dhar'ma, (ச.) *n.* தருமம், சட்டத்துக்கு அடிப்படையான அறமுறை.
dharmsa'la, (இ.) *n.* அறச்சாலை ; வழிப்போக்கர் தங்கல் மனை.
dhob'i, (இ.) *n.* வண்ணார், சலவைத் தொழிலாளர், துணி வெளுப்பவர்.
dhot'i, (இ.) *n.* அரையாடை, வேட்டி.
dhow, *n.* முக்கோணப் பாய்மரமுள்ள அராபிய மரக்கலம்.
dhu'rrie, (இ.) *n.* நிலவிரிப்புத் துணிவகை, தரைக் கம்பளம்.
diabet'es, *n.* நீரிழிவு நோய் ; (தொ.) diabetes insipidus, குருதியிலும் சிறுநீரிலும் சர்க்கரைச் சத்தில்லாமல் தோன்றும் நீரிழிவு நோய் ; diabetes mellitus, குருதியிலும் சிறுநீரிலும் சர்க்கரைச்சத்து மிகுதியாகத் தோன்றும் நீரிழிவு நோய்.
diabet'ic, *n.* நீரிழிவு நோயாளர் ; *a.* நீரிழிவு நோய் சார்ந்த.
dia'blerie, dia'blery, *n.* மாயமந்திரம், குறளிவித்தை, சூனியம் ; சைத்தான் வேலை ; துணிகர ஆர்ப்பாட்டம், வெறியாட்டம் ; பேய்களைப்பற்றிய ஆய்வறிவு.
diabol'ic, diabol'ical, *a.* பேய் போன்ற; பேய்த்தனமான ; கொடிய.
diab'olism, *n.* சூனியம், பேய்க்குணம், பேய்த்தனம் ; பேய்த்தனமான நடவடிக்கை ; பேய் வழிபாடு ; பேய் நம்பிக்கை.
diab'olize, *v.* பேயாக்கு ; பேயெனப் புனை.
diab'olo, *n.* இருதலைப் பம்பர விளையாட்டு, இருதலைகளையுடைய பம்பரமொன்றையும் இருகுச்சிகள் இணைத்த கயிற்றையும் கொண்டு ஆடும் விளையாட்டு வகை.
diac'hylon, diac'hylum, *n.* ஈயசத்துக் கலந்த பசைப் பற்றெட்டு.
diac'onal, *a.* கிறிஸ்தவக் கோயில் குருவைச் சார்ந்த.
diac'onate, *n.* கிறித்தவக் கோயில் குருவின் பதவி; கிறித்தவக் கோயில் குருமார் தொகுதி.
diacrit'ic, diacrit'ical, *a.* வேறுபிரித்தறிய உதவுகிற, எழுத்துக்களின் ஒலிவேறுபாடுகளைக் குறித்துக் காட்டுகிற.
diactin'ic, *a.* வேதியியல் திறமுடைய கதிர்கள் ஊடுருவிச் செல்கிற.
diadel'phous, *a.* (தாவ.) இருபூவிழை முடியுள்ள, பூவிழைகள் இருமுடிகளாய் இணைந்துள்ள.
di'adem, *n.* மணிமுடி, மகுடம் ; முடியின் கவிவு ; தழைமுடி, மலர்க்கண்ணி, முடி மாலை ; ஆட்சித்தலைமை உரிமை ; (தொ.) diadem spider, மகுட அடையாளத்தைக் கொண்ட தோட்டச் சிலந்தி.
diaer'eses, *n.* diaeresis என்பதன் பன்மை வடிவம்.
diaer'esis, *n.* இணையுயிரெழுத்துக்களில் இரண்டாம் உயிருக்கும் தனி ஒலிப்பு உண்டு என்பதற்காக அதன்மேல் இருபுள்ளியிட்டுக் காட்டும் ஒலிக்குறிப்பு அடையாளம்.
diagnose', *v.* நோய்நாடு.
diagnos'is, *n.* நோய்ஆய்வுறுதி, நோயாளியின் புறக்குறிகளின் உதவியால் நோய் அறுதியிடல் ; நோய் அறுதி விளக்கப் பதிவு ; ஆளின் குணங்குறிவகை விளக்கம் ; *pl.* diagnos'es.
diagnos'tic, *n.* நோய்க்குறி, நோயின் புற அடையாளம் ; *a.* வேறுபடுத்திக் காண உதவுகிற, நோய்க்குறிமூலம் நோயறுதி செய்கிற.
diag'onal, *n.* மூலைவிட்டக் கோடு, வரைகட்டங்களில் நேரிணையல்லாத கோணங்களை இணைக்கும் வரை ; தளக் கட்டங்களில் நேரிணையல்லாத விளிம்புகளை இணைக்கும் ஊடுதளம் ; சதுரங்கக் கட்டத்தில் மூலைச்சாய்வு வரிசைக் கட்டம் ; சாய்கரை ஆடை ; *a.* வரைகட்டங்களில் ஒட்டடுத்தில்லாத கோணங்களை இணைக்கிற ; வரைதளங்களில் நேரிணையல்லாத விளிம்புகளை இணைக்கிற ; மூலைவாட்டான ; சாய்வான ; (தொ.) diagonal scale, மூலைவிட்ட நுண் அளவுகோல்.
di'agram, *n.* விளக்க வரைப்படம் ; எண்பிப்பு வரையுரு ; குறிப்பு விளக்க வளைவு ; தானே இயங்கும் சுட்டுமுள் வரைவுப் பதிவு.
di'agraph, *n.* சித்திரப்படிவுக் கருவி.
di'al, *n.* கதிரவன் நிழற்சாய்வின் மூலம் மணியறி கருவி ; மணிப்பொறியின் முகப்பு ; அளவை சுட்டுமுகப்பு ; சுரங்கத் தொழிலாளரின் திசையறி கருவியுடன் இணைந்த கூர் நோக்காடி ; தொலைபேசியின் எண்வட்டு ; *v.* அளவையிட்டுணர் ; அளவை மதிப்புக்காட்டு ; தொலை பேசியின் சுழல்வட்டு இயக்கு, தொலைபேசிமூலம் பேச்சுத் தொடர்பு கொள்.
di'alect, *n.* பேச்சுவழக்கு வகை; திசை வழக்கு, குழு வழக்கு, தனி வழக்கு ; வழக்கத்துக்கு மாறுபட்ட தனிமுறைப்பேச்சு வகை ; கிளைமொழி.
dialec'tic [1], *n.* புலன்கடந்த மெய்ம்மை முரண்பாட்டு விளக்க ஆய்வுத்துறை.
dialec'tic [2], *n.* வாதமுறை ஆராய்ச்சி வல்லுநர் ; *a.* வாதஞ்சார்ந்த, சொற்போர் முறையான ; பேச்சு வழக்குக்குரிய, திசைவழக்குச் சார்ந்த.
dialec'tical, *a.* வாதஞ்சார்ந்த, சொற்போர் முறையான ; பேச்சு வழக்குக்குரிய, திசைவழக்குச் சார்ந்த ; வாதப் பொருத்தமுடைய, தருக்கமுறைப்பட்ட ; புலன்கடந்த மெய்ம்மை முரண்பாட்டு ஆய்வுத்துறைக்குரிய.
dialec'tics, *n. pl.* வாதமுறைப்படி உண்மையை ஆய்தல், அளவையாய்வு.
dialo'gic, *a.* உரையாடலிலுள்ள, உரையாடலைச் சார்ந்த.
dial'ogist, *n.* உரையாடல் முறையிற் பேசுபவர் ; உரையாடல் முறையில் எழுதுபவர்.
di'alogue, *n.* உரையாடல் ; உரையாடல் வடிவ இலக்கியம்.
di'al-plate, *n.* கடிகாரத்தில் உட்புறக் கருவிகள் ஒருநிலையில் இயங்கத்தக்க தன்மையில் பொருத்தப்பட்டிருக்கும் கவசத் தகடு.
dial'ysis, *n.* (வேதி.) இடைச்சவ்வூடாகப் பரவச்செய்து பொருள்களைப் பிரித்தல் ; கலவைப் பிரிப்பு ; பிரிவினை ; பொருள்களைப் பிரித்தல்; (இலக்.) இணை உயிரின் இரண்டாம் உயிர் தனி ஒலிப்புடையதென்று காட்ட அதன்மீதிடப்படும் இரு புள்ளி அடையாளம்.
dialyt'ic, *a.* (வேதி.) இடைச்சவ்வூடான பிரிவினை சார்ந்த; இடைச்சவ்வூடான பிரிவின் பயனான.
diamagnet'ic, *a.* குறுக்குக்காந்த ஆற்றலுள்ள, காந்த அச்சுக்குக் குறுக்கே கிழக்கு மேற்காக இயங்கும் இயல்புடைய.
diamag'netism, *n.* குறுக்குக்காந்த ஆற்றல், காந்த அச்சுக்குக் குறுக்காகக் கிழக்கு மேற்குத் திசையில் இயங்கும் இயல்புடைய காந்த ஆற்றல் வகை ; குறுக்குக்காந்த இயல்பைக் கூறுந்துறை.

**diamante**, (பிர.) *n.* பளபளப்பான மின்துகள் ஒளிபிறங்கும் துணிவகை; *a.* ஆடைகளில் மின்துகள் சுடர் வீசுகிற.

**diamantif'erous**, *a.* வைரக்கல் விளைவிக்கின்ற.

**diam'eter**, *n.* வட்டத்தின் குறுக்களவு, விட்டம்.

**diam'etral, diam'etric, diam'etrical**, *a.* விட்டத்தின் திசையிலுள்ள; விட்டத்தைச் சார்ந்த; விட்டத்தின் எதிரெதிர் முனைகள் போன்ற.

**di'amond**, *n.* வைரம்; கனிப்பொருள்களில் உறுதிமிக்க வைரக்கல்; மிக உறுதிவாய்ந்த பொருள்; கரியப்படிகம்; சாய் சதுர வடிவம்; சீட்டாட்டத்திற் சாய் சதுரக் குறியுள்ள சீட்டு; ஆங்கில அச்செழுத்தில் 4½ புள்ளிக் குறிப் பருமனுள்ள சிறு எழுத்து வகை; *a.* வைரக்கல் போன்ற; வைரத்தால் செய்யப்பட்ட; சாய் சதுரக் குறியிடப்பட்ட; சாய்சதுர வடிவுடைய; (தொ.) black diamond, கருமாணிக்கம், நிலக்கரி; diamond cut diamond, கூர்மதியார் இருவரின் முட்டுதல்.

**di'amond-drill**, *n.* வைரத்தூளை நுனியில் உடைய துளைக் கருவி.

**di'amond-dust**, *n.* வைரத்தூள்.

**di'amond-field**, *n.* வைரக்கல் விளையும் நிலப்பகுதி.

**di'amond-hitch**, *n.* பளுவான சுமைகளைத் தாங்குகிற கயிற்றினைக் கட்டும் முறை.

**di'amond-ju'bilee**, *n.* மணிவிழா, வைரவிழா, அறுபதாவது ஆண்டுநிறைவு விழா.

**di'amond-point**, *n.* செதுக்கு வேலையில் பயன்படுத்தப்படும் வைரமுனையுள்ள கருவி; கூர்ங்கோணமுனை; இருப்புப் பாதையின் கூர்ங்கோணச் சந்திப்பு.

**di'amond-wheel**, *n.* வைரங்களை மெருகிட்டுப் பளபளப்பாக்குதற்குப் பயன்படும் வைரப்பொடியும் எண்ணெயும் மேற்பரப்பிலிட்ட சக்கரம்.

**Di'an, Dian'a**, *n.* பண்டை ரோமாபுரியில் நிறைக்கும் வேட்டைக்கும் உரிய தெய்வமாகக் கருதப்பட்ட திங்களஞ் செல்வி; வேட்டையாடும் அணங்கு; குதிரைமீதிவர்ந்த மாது; (தொ.) Diana monkey, நீண்ட வாலும் நெற்றியில் வெண்பிறைச் சுட்டியும் உடைய பெரிய மேற்கு ஆப்பிரிக்க குரங்கு வகை; Diana of the Ephesians, செழிப்புக்குக் காரணமாகக் கருதப்பட்ட மேலை ஆசியப் பெண்தெய்வம்; Diana's tree, மரம் போன்ற அமைப்புள்ள வெள்ளிப் படிமானம்.

**diapas'on**, *n.* சுரங்கள் ஏழு கடந்த எட்டன் வட்டம், முழு வட்டப்பாலை; உச்சக்குரலிசைப்பு; குரல் முழு ஏற்றத்தாழ் வளவு; இசைக்கருவியின் முழு ஏற்றத்தாழ்வெல்லை; முழுநிறை சுரங்கள் அடங்கிய ஒத்திசைவமைதி; முழுநிறை இன்னிசை; இசைப்பு எழுச்சியளவை; இசை மேளத்தின் முழுநிறை தடையுறுப்பு; ஆற்றலெல்லை, முழு வீச்செல்லை; நிலையான மதிப்பளவை.

**di'aper**, *n.* மணியுருவப் பூவேலை செய்யப்பட்ட துணி; மேசைத்துகில்; கைத்துண்டு; குழந்தை அணையாடை; சாயம் தோயாத வண்ணப் பின்னல் சித்திரவேலை; உட்செதுக்குச் சித்திரச் சிற்பவேலை; *v.* பல்வண்ணச் சித்திர வேலைப்பாடுசெய்.

**diaphore'sis**, *n.* செயற்கையாகத் தூண்டப்படும் வியர்வை.

**diaphoret'ic**, *n.* செயற்கை வியர்வை முறை; வியர்க்கச் செய்யும் மருந்து; *a.* செயற்கையாக வியர்க்கச் செய்கிற.

**di'aphragm**, *n.* உந்து சவ்வு, ஈரலுக்கும் குடலுக்கும் நடுவேயுள்ள சவ்வு; இடையீட்டுச் சவ்வுத்திரை; சிப்பி செடியினங்களின் இடையீட்டுத்தாள் திரை; ஒளியின் பரவுகதிர் தடுக்கவல்ல மையப்புழையுடைய உலோகத்தகடு; தொலைபேசியிலும் தந்தியில்லாக் கம்பியிலும் பயிலும் இடையீட்டுத் தகடு.

**diaphragmati'tis**, *n.* ஈரல் தாங்கியின் அழற்சி.

**di'archy**, *n.* இரட்டையாட்சி, 1921-இல் நிறுவப்பட்ட இரு வேறு தனி மேலுரிமைகளையுடைய இந்திய ஆட்சிமுறை.

**di'arist**, *n.* நாட்குறிப்பேடு வைத்திருப்பவர்; அன்றாட நிகழ்ச்சிகளைக் குறிப்பவர்.

**di'arize**, *v.* நாட்குறிப்பு வைத்துக்கொள்; நாட்குறிப்பிற் குறி.

**diarrhoe'a**, *n.* வயிற்றுப்போக்கு, பேதி.

**di'ary**, *n.* நாட்குறிப்பு; அன்றாட நிகழ்ச்சிக் குறிப்பேடு; பணிமுறைத் தேதிக் குறிப்பேடு.

**di'asone**, *n.* தொழுநோய் தடுக்கப் பயன்படுத்தும் மருந்து வகை.

**dias'pora**, *n.* யூதர் தாயகத்திலிருந்து வெளியேறி உலகெங்கும் சிதறிப் பரவிய நிகழ்ச்சி.

**di'astase**, *n.* செரிமானத்துக்கு இன்றியமையாது உதவும் முறையில் மாச்சத்தினைச் சர்க்கரையாக்கும் காடிப்பொருள்.

**dias'tasis**, *n.* முறிவின்றி எலும்புகளைப் பிரித்தல்.

**dias'tole**, *n.* நெஞ்சுப்பையின் விரிவியக்கம், குருதிநாள விரிவியக்கம்; அசைநீட்டம், இடைநிறுத்தத்தின் முன்வரும் அசைநீட்சி.

**diatess'aron**, *n.* விவிலிய நூலின் புதிய ஏற்பாட்டின் முதல் நான்கு பிரிவுகளிடையே காணத்தகும் ஒத்திசைவு; நான்கு மருத்துவப் பொருட்கள் கொண்ட கலவை.

**diather'mancy**, *n.* கதிரியக்க வெப்பத்தின் ஊடுருவும் தன்மை.

**diather'manous, diather'mic**, *a.* கதிரியக்க வெப்பம் ஊடுருவிச் செல்லக்கூடிய.

**di'athermy**, *n.* உட்பகுதிகளுக்கு மின் அலைகளால் வெப்பமூட்டல்; மின்னோட்ட இயக்கத்தால் பொருள்களின் உட்பகுதிகளை வெப்பூட்டுதல்.

**diath'esis**, *n.* உடற்கூறு சார்ந்த இயல்பான முற்சார்பு; பழக்கவாசனை, பழக்கங் காரணமான முற்படிவு.

**di'atom**, *n.* புதைபடிவங்களிலும் கடலடியிலும் காணப்படும் ஓர் உயிரணு நுண்பாசி வகை.

**diatom'ic**, *a.* ஈரணு அடங்கிய; விலக்கி இடங்கொள்ளத் தக்கவையாக இரண்டு நீரக அணுக்களை உடைய.

**diaton'ic**, *a.* இசையின் இயற்கை அளவுகோற்படியான ஒலித்தன்மைகளையும் இடைவெளியையும் கொண்டு இயங்குகிற.

**di'atribe**, *n.* தொடர்ச்சியான வாதம்; வசைமாரி, பழியுரை.

**di'atribist**, *n.* வசைமாரி பொழிபவர்; வசை எழுத்தாளர்.

**dib**, *v.* தூண்டிலை நீரிலிடு; கொத்து, தோயவிடு.

**diba'sic**, *a.* (வேதி.) இருகாடி மூலங்களையுடைய; காடி மூலத்தின் இரு அணுக்களையுடைய.

**dibb'er**, *n.* கொத்துக் கருவி.

**dibb'le**, *n.* கொத்துக்கருவி; *v.* நிலங்கொத்து; கொத்துக் கருவியைக் கையாளு; கொத்துக் கருவியினால் துளையிட்டுச் செடிநடு; தோயவிடு.

**dibs**, *n. pl.* ஆட்டின் கணுவெலும்பு கொண்டு ஆடப்படும் குழந்தை விளையாட்டு வகை, கழங்காட்டம்; சீட்டாட்டக் கணிப்புச் சின்னமான வட்டுக்கள்

**dic'ast**, *n.* பண்டை ஏதென்ஸில் வழக்குமுடிபும் தீர்ப்பும் கூறுதற்குரிய சான்றுநடுவர் குழுவில் ஒருவர்.

**dicas'tery**, *n.* பழைய ஏதென்ஸில் வழக்குமுடிபும் தீர்ப்பும் கூறும் சான்றுநடுவர் குழு.

**dice**, *n. pl.* பகடை; சூதாட்டம்; சூதாட்டப் பந்தயத்திலுள்ள இருதலை நிலை; *v.* சூதாடு; பகடை வைத்தாடு; வெட்டிப் பகடையுருவாக்கு; வண்ணம் மாறிமாறி வரும் கட்டங்களாக இடு.

**dice'-box**, *n.* நாழிகை வட்டில் போன்ற வடிவுடைய பகடைப் பெட்டி; (தொ.) dice-box insulator, தந்திக் கம்பிகளைத் தாங்குகிற நாழிகை வட்டில் வடிவான மங்குப்பாளம்.

**dichlamyd'eous**, *a.* (தாவ.) அல்லி வட்டமும் புல்லிவட்டமுமுள்ள.

**dichog'amous**, *a.* (தாவ.) பூவிழைகளும் கருவகமும் வேறு வேறு காலத்திற் பருவமடைகிற.

dichoto'my, *n.* இரண்டாகப் பிரிவுறுதல்; இரு கவர்ப்பிரிவு முறை.

dichro'ic, *a.* இருவண்ணங்கள் காட்டுகிற; இருவண்ண ஒளிக்கோட்டமுடைய.

dichromat'ic, *n.* இருவண்ணங்களை மட்டுமே காணக் கூடியவர்; *a.* இருவண்ணமுள்ள; இனத்தில் இருவேறு வண்ணங்கள் இடை விரவி வருகிற.

dichro'mic, *a.* இருவண்ணங்களே காண்கிற; மூலவண் ணங்கள் மூன்றில் இரண்டே காண்கிற.

dick'ens, *n.* (பே-வ.) பேய்.

dick'er, *v.* பண்டமாற்று வாணிகம் செய்; பேரம் பேசு; பூசலிட்டுப் பேரம் பேசு.

dick'ey, dick'y, *n.* ஒற்றைக் குதிரைவண்டியில் போடப் பட்டுள்ள இருக்கையின் தோல்மேலுறை; வண்டியோட்டியின் இருக்கை; வண்டியின் பின்பகுதியிலுள்ள பணியாள் இருக்கை; பொறி வண்டியின் பிற்பகுதியிலுள்ள மடக்கு இருக்கை; சட்டையின் போலி முன்பகுதி.

dick'y-bird, *n.* சிறுபறவை.

dicotyled'on, *n.* இருகதுப்பு விதையுள்ள பூக்கும் இனச்செடி.

dic'taphone, *n.* ஒலிப்பதிவுப் பொறி.

dictate', *n.* அதிகார ஆணை, கட்டளை; இயக்காணை; ஏவல்; தூண்டுதல்; *v.* ஒப்ப எழுதக் கூறு; அதிகார ஆணையிடு, கட்டளையிடு; திட்டமிட்டுரை, கட்டுறுத்திக் கூறு.

dicta'tion, *n.* ஒப்ப எழுதக் கூறுதல்; கட்டளையிடுதல்; செயல் கட்டுறுத்திக் கூறுதல்; புறத்தூண்டுதல்; அதிகார ஆணை; ஆணவக் கட்டளை.

dicta'tor, *n.* வல்லாட்சியார், சர்வாதிகாரி; தனித்தன்னாட்சி யாளர்; முழு அதிகாரம் பெற்றவர்; தனிச்சிறப்பும் அதிகாரமும் பெற்ற ரோம நாட்டுத் தண்டலாளர்; *fem.* dicta'tress, dicta'trix.

dictato'rial, *a.* சர்வாதிகாரி போன்ற; தனித்தன்னாட்சி யாளருக்குரிய; ஆணவப்போக்குடைய.

dic'tion, *n.* சொல்நடை; சொற்றேர்வு.

dic'tionary, *n.* சொற்களஞ்சியம், சொற்பொருள் தொகுதி; அகராதி.

dic'tograph, *n.* பேசுபவருக்குத் தெரிந்தோ தெரியாமலோ செய்தியை ஓர் அறையினின்று மற்றோர் அறைக்குத் தெரிவிக்கும் தொலைபேசி.

dic'tum, *n.* ஆணை; உறுதிமொழி; வெளியிடப்பட்ட கருத்து; மேற்கோளுரை, மூதுரை; (சட்.) சட்ட வலிவுற்ற நடுவர் கருத்துரை.

did, *v.* do என்பதன் இறந்தகால வடிவம்.

didac'tic, didac'tical, *a.* அறிவுறுத்துகிற, போதனை செய்கிற; கற்பிக்கும் ஆசிரியரின் முறையிலுள்ள.

didac'tics, *n. pl.* கற்பிக்குங் கலை, போதனைமுறை.

di'dapper, *n.* நீரில் முக்குளிக்கும் சிறிய நீர்க்கோழி வகை.

didd'le, *v.* நயந்து பசப்பு, கெஞ்சு; மோசடி செய். ஏமாற்று.

didst, *v.* do என்பதன் பழைய முன்னிலை ஒருமை இறந்தகால வடிவம்.

didym'ium, *n.* 1841-ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்ட அரிய உலோக வகை.

die[1], *n.* பாய்ச்சிகை, பகடை, சூதாடு கருவி; எறிசூதாட்டக் கட்டை; *pl.* dice; (தொ.) the die is cast, செயல் மாற்ற முடியா முடிபு ஏற்பட்டுவிட்டது, சென்றது இனி மீளாது.

die[2], *n.* பொறிப்புக்கட்டை; வார்ப்புருவுக்கான படிவம்; கருவிகள் செய்வதற்குரிய படிவ அச்சு.

die[3], *v.* இற; அழிவுறு; தேய்வுறு; வாடு, பட்டுப்போ; உணர்ச்சியற்றுப்போ, மரத்துப்போ; துன்புறு, வாட்ட முறு; கலந்து ஒன்றுபடு; ஏங்குறு; (தொ.) die away, படிப்படியாக மறை; கொஞ்சம் கொஞ்சமாகச் செவிப்புல னுகாது குறைவுறு; die back, நுனியினின்று கீழே படிப்படி யாக உலர்ந்துபோ; die down, தணி; நிலத்துக்கு மேலுள்ள பகுதிமட்டும் மாளப்பெறு; die game, இறுதிவரையிற் கிளர்ச்சியுடனிரு; die hard, நீடித்துச் சாவினை எதிர்த்துக் கடுமையாகப் போராடு; சாவில் கால நீட்டிப்புக் கொள்.

die'-away', *a.* வாடுகிற, தளர்கிற.

die'-hard, *n.* கடும் பிற்போக்காளர்.

dielec'tric, *n.* மின் அழுத்தத்தைத் தாங்கக்கூடிய பொருள்; *a.* இகைக்குந் திறனற்ற, மின்விசை கடத்தாமல் மின்விசை விளைவுகளை மட்டும் கடத்துகிற.

diesel-elec'tric, *a.* டீசல் பொறியால் இயக்கப்படும் மின்னுக்கப் பொறியின் ஆற்றலைப் பயன்படுத்துகிற.

Dies'el engine, dies'el engine, *n.* டீசல் பொறி, டாக்டர் ஆர். டீசல் (Dr. R. Diesel) என்பவர் புதிதுகண்ட அழுத்த முறை வெப்பூட்டுப்பொறி, வெப்பூட்டிய அழுத்தமிக்க காற்றில் எண்ணெய் காற்றுக் கலந்து செலுத்தப் பெற்று எரியூட்டப்பெறும் பொறி வகை.

die'-sink'ing, *n.* அச்சுவார்ப்புருச் செய்தல்.

*di'es ir'ae*, (ல.) *n.* தீர்ப்பு நாள்.

*di'es non*, (ல.) *n.* சட்டச் சார்வான செயல்கள் நிகழா நாள்; கணக்கில் சேர்க்கக்கூடா நாள்.

di'et[1], *n.* ஊட்டமுறை, திட்ட உணவு; பத்திய உணவு; நோன்புணவு, தண்டமுறை உணவு; வழக்க உணவு; *v.* திட்ட உணவு அருந்துவி; மருத்துமுறை உணவூட்டு; தண்டமுறை உணவு அருந்தச்செய்; நோன்பிரு.

di'et[2], *n.* ஆங்கிலவழக்கில் வெளிநாடுகளைக் குறித்த நாட்டு அரசியல் மன்றம், கூட்டரசு மன்றம்; பலநாட்டுக் கூட்டுறவு மன்றம்; மாநாடு, கலந்தாய்வு மன்றம்; ஸ்காத்லாந்தில் வழி பாட்டுக்குழு; (சட்.) குற்ற அவதூறு வழக்கின் நடவடிக்கை; (தொ.) desert the diet, அவதூறு வழக்கில் குற்றத்துறை சார்ந்த நடவடிக்கைகளைக் கைவிடு.

di'etary, *n.* உணவுப்பட்டியல்; உணவுத்திட்டம்; உணவுத் தரம்; பெரிய நிறுவனங்களில் கொடுக்கப்படும் உணவுப்படி; *a.* உணவுத்திட்டஞ் சார்ந்த, உணவு விதிமுறைகளுக்குரிய.

dietet'ic, dietet'ical, *a.* உணவுமுறை சார்ந்த, பத்திய உணவு பற்றிய.

dietet'ics, *n.* உணவு விதிமுறை.

dietici'an, dietit'ian, *n.* உணவுமுறை வல்லுநர்; உணவு முறையைப் பழக்கமாகப் பின்பற்றுபவர்.

die'-work, *n.* உலோகப் பரப்பில் அச்சிட்டு உருவாக்கும் அழகு வேலைப்பாடு.

diff'er, *v.* வேறுபடு; மாறுபடு; ஒவ்வாதிரு; கருத்துவேறு பாடு கொள்; திரித்துணரத்தக்க பண்புடையதாயிரு; கருத்து மாறுபாடுகொள், பூசலிடு.

diff'erence, *n.* வேறுபாடு; ஒவ்வாமை; மாறுபாடு; வேறு பாட்டுக் கூறு; எண்ணிடையே வேற்றுமையளவு; அளவு வேற்றுமை; கழித்துமீந்த தொகை, மிச்சம்; கருத்து வேறுபாடு; சச்சரவு, பூசல்; தனித்துணர்வதற்குரிய திரி புறுத்தும் பண்பு; வகைதிரிபுப் பண்பு; திரித்துணர்வு; வேறுபாட்டுக் கூறு; தனித்துணர்வதற்குரிய சிறப்புக்குறி; (கட்.) கிளைமரபுக்குறி; *v.* வேறுபாடு உண்டுபண்ணு; வேற்றுமை காண்; (தொ.) difference tone, இரண்டு குரல்கள் ஒன்ருக ஒலிக்கும்பொழுது கேட்கப்படும் இரண்டிடை வேறுபாட்டு அலைவெண்ணுடைய ஒரு குரல்.

diff'erent, *a.* வேறுபட்ட; ஒவ்வாத; வேறுமாதிரியான; உருமாறிய; இயல்புமாறிய; பண்பு வேறுபட்ட; வேருன; தனி வேருன; தனித்தன்மைவாய்ந்த, வேறுபடுத்தி உணரத் தக்க.

differen'tia, *n.* (அள.) வகைதிரிபுப் பண்பு, இனத்தின் ஒருவகையை மற்றவற்றினின்று பிரித்துக்காட்டும் வேறு பட்ட பண்பு; *pl.* differen'tiae.

**differen'tial**, *n.* வேறுபாட்டுநுட்பம்; விலை வேறுபாடு; தொழில்களிடையேயுள்ள கூலி உயர்வுதாழ்வு; ஒரே தொழில் திறமை வாய்த்த அல்லது திறமை வாய்ப்பற்ற தொழிலாளரிடையேயுள்ள கூலி வேறுபாடு; சுழற்சிப் பல் வேறுபாடு; *a.* வேறுபாட்டுக்குரிய; வேறுபாடு உண்டு பண்ணுகிற; வகைதிரிபுப் பண்புக்குரிய; வகைதிரிபுப் பண்பு உண்டுபண்ணுகிற; வேறுபடுத்துகிற; (கண.) வேறு பாட்டு நுட்பத்துக்குரிய; (தொ.) differential coefficient, வகையீட்டுக் குணகம்; differential gear, ஒரே இயக்கத்தை இருவேறு இயக்கமாகப் பிரிந்தியக்குவிக்கும் இயக்க இணைப் பமைவு; differential motion, இயக்கும் இருவிசைகளின் வேறுபாட்டுக்கு ஒப்பான இயக்கமுடைய அமைவு; differential thermometer, வேறுபாட்டளவையியல் தட்ப வெப்பமானி.

**differen'tiate**, *v.* வேறுபடுத்தி உணர், திரித்துணர்; வகை வேறுபாடு காண்; வேறுபடுத்து; வகைப்படுத்து; வேறுபடு கூறுயமை; வேறுபாடு பெருக்கு; வேறுபாடு வளரப் பெறு; வகை வளம்பெருக்கு, உறுப்பு வேறுபாடு பெருக்கு; தனி வகை வளம் காண்; ஒருநிலையில் வேறுபாடு காண்; ஒரு பொருட் சொற்களிடையே நுட்பவேறுபாடு உணர்.

**differentia'tion**, *n.* வேறுபாடு கண்டறிதல்; ஒரு பொருளின் தனிச் சிறப்புப் பண்புகளைக் கூறி விளக்கல்; வரையறை விளக்கம்; பொதுவானது தனிச்சிறப்புடையதாகும் மாற்றம்.

**diff'icile**, (ல.) *a.* இசைவிணக்கமற்ற, பொருந்தாத; எளிதில் வசப்படுத்த முடியாத; உடனடிக்கட்டாயமான.

**diff'icult**, *a.* செய்தற்கரிய, அருமைப்பாடுடைய; கடுமை வாய்ந்த, வருத்தமிக்க, எளிதல்லாத; பெருமுயற்சி தேவைப் படுகிற; எளிதில் மனநிறைவு படுத்த முடியாத; எளிதில் மனந் திரும்பாத; கையாளமுடியாத, மேற்கொள்ள முடியாத; தொல்லை தருகிற, இடரார்ந்த, மலைப்பூட்டுகிற.

**diff'iculty**, *n.* அருமைப்பாடு; முயற்சியருமை; கடுமை, எளி தன்மை; கடுமைவாய்ந்தது, அருமையுடையது; தடங்கல், இடையூறு, முட்டுப்பாடு; இன்னுதது; இடர்ப்பாடு; இடுக்கண், துன்பம்; இக்கட்டு, சிக்கல்; பணமுடை; வேண்டாமை, வெறுப்பு, தடையுரை.

**diff'idence**, *n.* தன்னம்பிக்கையின்மை, ஊக்கக்கேடு; தயக்கம்; செயற்பின்னிடைவு, செயற்கூச்சம்.

**diff'ident**, *a.* தன்னம்பிக்கையற்ற; செயற்கூச்சமுள்ள.

**diff'luence**, *n.* ஒழுகல் நிலை, கசிவு.

**diff'luent**, *a.* ஒழுகுகிற, உருகிவடிகிற, கசிகிற.

**diffract'**, *v.* ஒளிக்கதிர்ச் சிதைவு உண்டுபண்ணு; ஒளிக் கதிர் நிறச்சிதைவு உண்டுபண்ணு; கதிர்ச்சிதைவுக்கு உட் படுத்து; கதிர் நிறச்சிதைவுக்கு உட்படுத்து.

**diffrac'tion**, *n.* ஒளிக்கதிர்ச்சிதைவு, ஒளிக்கதிர் நிறச் சிதைவு.

**diffuse'**, *a.* பரவலான, எங்கும் பரவவிடப்பட்ட; செறி வற்ற, தளர்வான; பொருட் செறிவில்லாத, வெற்று விரிவு மிக்க; *v.* எங்கும் பரப்பு, பரவலாக்கு; சிதறலாக்கு; எல்லாத் திசைகளிலும் செலுத்து; எங்கும் பரவு, சிதற லாகு; செறிவு தளர்த்து; செறிவு தளர்வுறு; (இய.) நீராளமாக்கு; நீர்மத்தில் கலந்து பரப்பு; நீராளமாகு; ஆவியில் கலந்து பரப்பு; ஆவியில் கலந்து பரவு.

**diffu'sion**, *n.* பரப்புதல், சிதறடித்தல்; பரவுதல், சிதறலுறல்; விரிவுறுதல், விரிவகற்சி; கலந்தூடு பரவுதல், விரவிப் பரவுதல், விரவி ஒன்றுபடுதல்.

**diffu'sion-tube**, *n.* வெவ்வேறு ஆவிகள் கலக்கும் வீதத்தை அளக்கும் கருவி.

**diffus'ive**, *a.* பரந்து விரிவுறுகிற, ஊடுபரவுகிற.

**dig**, *n.* தோண்டுதல்; பழம் பொருளாய்வுத்துறைக்கான அகழ்வு; தோண்டிய பகுதி; அகழ்வுப்படியளவு; குடைவு, கிண்டுதல், குத்துதல்; *v.* அகழ், தோண்டு; அகழ்வாராய்ச் சிக்காக நிலங்கீண்டகழ்; அகழ்ந்திடு; அகழ்ந்தெடு; குத்து, கிண்டு, குடை; (தொ.) dig in, தோண்டி மூடு; கடுமை யாக உழை; dig in the ribs, விலாவில் குடை; dig oneself in, அகழிட்டரண் செய்துகொள், தன்னை வலிமைப்படுத்திக் கொள்; dig out, வெட்டியெடு; வெட்டி உருவாக்கு; dig up, வெட்டிப்பிள; வெட்டியெடு.

**digamm'a**, *n.* கிரேக்க நெடுங்கணக்கில் தொடக்கத்தில் பயன்படுத்தப்பட்ட வகர உடம்படுமெய் போன்ற ஒலிப் புடைய ஆறும் எழுத்து (F).

**dig'amy**, *n.* இருதார மணமுறை; இருதார மணவாழ்வு; இரண்டாவது திருமணம்.

**digas'tric**, *n.* கீழ்த்தாடைத் தசைப்பற்று; *a.* இரட்டை வயிறுள்ள; இரு கோடியிலும் தடித்த முனையுடைய.

**di'gest**[1], *n.* சட்டத்தொகுப்பு; சுருக்கம்; முறையாக வகுக் கப்பட்ட தொகுப்பு; செய்திச்சுருள், நடப்புச் செய்திகளின் அவ்வப்போதைய சுருக்கம்; இலக்கிய நடைமுறைச் சுருக்கத் தொகுப்பு.

**digest'**[2], *v.* செரிமானம் செய், உணவின் சாரத்தை வயிற்றினுள் ஈர வெப்பநிலைகளில் தக்கபடி பக்குவப்படுத்து; வயிற்றிற் செரிமானமாகு; பக்குவமாகு; வகைப்படுத்தி ஒழுங்காக்கு; மனத்தில் முறைப்படுத்தி வகைப்படுத்து; நன்கு சிந்தித்து ஒழுங்குசெய்.

**diges'ter**, *n.* செரிமானம் செய்பவர்; ஒழுங்குமுறைப்படுத்து பவர்; மனத்தில் தோயவைப்பவர்; செரிக்கவைக்கும் பொருள்; விலங்கு தாவரப் பொருள்களிலிருந்து சத்தாக வடி சாறு இறக்கும் கலம்.

**digest'ible**, *a.* செரிக்கக்கூடிய; மனத்தில் தோயக்கூடிய.

**digest'ion**, *n.* செரிமானம்; செரிமானத்திறம்; ஒழுங்கு முறைப்பாடு; மெள்ள வெப்ப ஈரச் சூழலிற் புழுக்குதல், வடித் திறக்கல்.

**diges'tive**, *n.* செரிமானமூட்டும் பொருள்; பருவினைப் பழுக்க வைக்கும் தைலம்; *a.* செரிமானம் சார்ந்த; செரிக்கவைக்கிற; செரிமானத்துக்கு உதவுகிற, செரிமானம் ஊக்குகிற.

**digg'er**, *n.* தோண்டுபவர்; தோண்டும் விலங்கு; உலோக நாடித் தோண்டுபவர்; சுரங்கத்தொழிலாளி; தங்கச் சுரங்க வேலையாள்; கிழங்கு நாடி நிலந்தோண்டும் வடஅமெரிக்க இந்தியர்; தோண்டு கருவி; இயந்திரத்தின் அகழ்பொறி.

**digg'ings**, *n. pl.* தங்கச் சுரங்க வேலை நிகழுமிடம், தங்க வயல்.

**dight**, *a.* அணிசெய்யப்பட்ட, அணிகலம் பூட்டப்பட்ட; *v.* அணிசெய், அணிகலம் பொருத்து.

**dig'it**, *n.* விரல்; விரலகலம்; இலக்கம், எண்ணின் வரிவ்டிவக் கூறு, சுன்னமுதல் ஒன்பது வரையுள்ள எண்மான உரு; கதிரவன் அல்லது திங்களின் விட்ட அளவில் பன்னிரண்டில் ஒரு கூறு.

**dig'ital**, *n.* விரல்; இசைக்கருவி வகையின் முறுக்காணி; *a* விரல் சார்ந்த.

**digita'lis**, *n.* விரல்களுக்கு உறைபோடப்பட்டது போன்ற மலர்களுள்ள செடி வகை; செடிவகையிலிருந்து எடுக்கப் படும் மருந்து.

**dig'itate, dig'itated**, *a.* விரல் போன்ற பல பகுதிகள் கொண்ட.

**digita'tion**, *n.* விரல் போன்ற அமைப்பு; விரல் போன்ற பிரிவு.

**dig'itigrade**, *n.* கால்விரல் மீது நடக்கும் விலங்கு; *a.* கால் விரல் மீது நடக்கிற, குதிகால் படாது நடக்கிற.

**diglad'iate**, *v.* வாட் சண்டையிடு; சச்சரவு செய்.

**di'glot**, *a.* இருமொழி பேசுகிற; இருமொழிச்சார்பான.

**dig'nified**, *a.* மதிப்பு வாய்ந்த; பெருமைக்குகந்த; உயர்ந்த; வீறுர்ந்த; தன் மதிப்பு வாய்ந்த; பொறுப்பான; உயர்ந் தோர் வரிசையில் வைக்கப்பட்டுள்ள.

**dig'nify**, *v.* மதிப்புக்கொடு, உயர்வுபடுத்து; மேன்மையுடைய தாக்கு; வீறமைதியளி; பகட்டாரவாரச் சொற்களாற் குறிப்பிடு.

dig'nitary, *n.* உயர்பதவியாளர்; திருக்கோயிலில் உயர் பதவியிலிருப்பவர்.

dig'nity, *n.* தகுதி, உண்மையான மதிப்பு; மேன்மை, உயர் நிலை, உயர்படிமதிப்பு; மதிப்புவாய்ந்த பதவி, உயர்பணி; மேம்பட்ட பட்டம்; மன உயர்வு, பெருந்தன்மை; வீறமைதி, வீறார்ந்தநடை, விழுமிய நடையுடை தோற்றம்; உயர்பதவி யாளர்; (தொ.) stand on one's dignity, மதிப்பை எதிர் பார்த்து நட, மதிப்புக்காகச் செயல்செய்.

di'graph, *n.* ஒருங்கு ஓரொலியுடைய ஈரெழுத்து (ch-ph-ea போன்றவை).

digress', *v.* நேர்நெறி விலகிச்செல்; செய்தியை விட்டு மற்றொன்று விரி; தேவையற்ற செய்திகளை இடையிற் கூறு.

digress'ion, *v.* வழிவிலகிய போக்கு; மற்றொன்று விரித்தல்.

digress'ional, digress'ive, *a.* வழிவிலகுகிற; வேறொன்று விரிக்கிற.

dihe'dral, *a.* இரு சமதள முகங்கள் கொண்ட; இருசமதள முகங்களிடைப்பட்ட.

dike, *n.* அகழி; இயற்கைநீர்க்கால், நீண்டபள்ளம், குழி; அகழியிலிருந்து தோண்டியெறியப்பட்ட மண்மேடு; அணை கரை, வெள்ளப்பெருக்கைத் தடுப்பதற்காக எழுப்பப்பட்ட செய்கரை; ஸ்காத்லாந்து நாட்டில் இடையெல்லைச் சுவர்; கரண் கட்டியாலான சுவர்; முள்வேலி; (மண்.) படிவுப் பொருள்களால் நிரப்பப்பட்ட பாறைப்பிளவு; நிலப்பிளவு களில் படிந்திறுகிய பாறை வகை; இடை மேட்டுப்பாதை; *v.* அணைகட்டு; செய்கரை அமைத்துத் தடைகாப்புச் செய்.

dilap'idate, *v.* கட்டிடத்தை இடித்துத் தகர்; பொருள் களைப் பாழாக்கு; சொத்துக்களைச் சீர்கெடுவி; துணிமணி யைக் கிழித்து உருக்குலை; அக்கு அக்காகப் பிய்த்தெறி.

dilap'idated, *a.* பாழான; இடிந்த.

dilapida'tion, *n.* பாழடைந்த நிலை, சீர்கெட்ட தன்மை; சீர்குலைவு; பணச்சீரழிவு; திருக்கோயில் சொத்துக்களைப் பாழாக்குதல்.

dilapida'tions, *n. pl.* குடிவார காலத்தில் கட்டிடத்திற்கு ஏற்படும் அழிவு, சேதம்; அழிவுகளுக்காகக் குத்தகைதாரர் களிடமிருந்து பிரிக்கப்படும் தொகை.

dilat'able, *a.* விரிக்கக்கூடிய; அகலமாக்கக்கூடிய.

dilate', *v.* விரிவாக்கு; அகலப்படுத்து; பெரிதாக்கு; எல்லாப் பக்கங்களிலும் பரப்பு; விரிவுறு; அகலமாகு; எல்லாப் புறங்களிலும் பரவு; விரித்துரை; விரிவாக எழுது, வருணி.

dilat'ed, *a.* விரிந்த; தட்டையான.

dilat'er, *n.* விளக்கமாகக் கூறுபவர்; விரிவடையச் செய்யும் கருவி; விரிவடையச் செய்யும் தசை.

dila'tion, *n.* விரிவடைதல், அகலுகை, பரத்தல்.

dilat'or, *v.* உறுப்பை விரிவடையச் செய்யும் தசை; விரி வடையச் செய்யும் கருவி.

dil'atory, *a.* காலங்கடத்துகிற; தாமதப்படுத்தும் நோக் குடைய; காலநீட்டிக்கும் இயல்புடைய.

dilemm'a, *n.* இருதலை வாதப்பொறி, கவர்ப்பொறி, இரண்டே முடிபுகளுக்குள் ஒன்றை எதிரி ஏற்கும்படி செய்யும் வாத முறை; இரண்டக நிலை, கவர்நிலை; வேண்டாத இரு வழி களுள் ஒன்றே தேரப்படவேண்டிய நிலை.

dilettan'te, *n.* கவின்கலை ஆர்வலர்; கலையைப் பொழுது போக்காகக் கொள்பவர்; மேற்போக்காகக் கலையில் ஈடு படுபவர்.

dil'igence[1], *n.* ஆள்வினையுடைமை, தளரா ஊக்கம், சுறு சுறுப்பான உழைப்பு; (சட்.) சான்றாணை, சான்றாளர்களையும் சான்றுக்குரிய ஏடுகளையும் கொண்டுவந்து முன்னிலைப் படுத்துவதற்குரிய பற்றாணை; தடைக்கட்டாணை, ஆளையோ பொருளையோ கட்டுப்படுத்திவைக்கும் நடைமுறை.

dil'igence[2], diligence'[3], *n.* பழங்கால ஐரோப்பியத் தரை நிலத்துக்குரிய அஞ்சல் வண்டிவகை.

dil'igent, *a.* ஊக்கந்தளராத, சோரா முயற்சியுள்ள, கடுமை யான உழைப்புடைய.

dill, *n.* உணவாகவும் மருந்தாகவும் பயன்படும் குடைவடிவ மஞ்சள்நிற மலர்க்கொத்துடைய செடிவகை.

dill'y-dall'y, *v.* மனமூசலாடு, தயங்கு; மனமின்றி வேலை செய், கடன்கழிப்பாகச் செய்.

dil'uent, *n.* கலவையின் செறிவு தளர்த்தும் பொருள்; குருதி யில் நீர்பெருகுவிக்கும் பொருள்; *a.* கலவையின் திட்பம் குறைக்கிற; நீர் கலக்கின்ற.

dil'ute[1], *a.* நீராளமான, நீர்கலத்தலால் திட்பம் குறைந்த; நீர்பெருக்கிய, கலவைவகையிற் செறிவு குன்றிய; நிறவகை யில் நீரால் அலம்பப்பட்டுச் சாயல் மங்கிய.

dilute'[2], *v.* நீராளமாக்கு, கலவையில் நீர்கலத்தலால் செறிவு குன்றுவி; நீர்பெருக்கு; கலவையின் திட்பம் தளர்த்து; கலப்படம் செய்; நிறவகையில் சாயல் மங்கவை, வண்ண முனைப்புக்குறை; கருத்து வகையிலும் கொள்கை வகையிலும் முனைப்புக் குறையச்செய்; தொழில் துறையில் ஆடவர்க்குப் பதிலாகப் பெண்டிர்தொகை பெருக்கு; தொழிலில் பயிற்சி பெற்ற திறமைவாய்ந்த தொழிலாளர்க்குப் பதிலாகப் பயிற்சி பெறாத அல்லது திறமையில்லாத தொழிலாளர் தொகையைப் பெருக்கு.

dilu'tee, *n.* திறமை தேவைப்படும் தொழிலில் வேலையில் புகுத்தப்பட்ட திறமையற்ற தொழிலாளி.

dilu'vial, dilu'vian, *a.* வெள்ளப்பெருக்குச் சார்ந்த; விவிலிய ஏட்டின்படி நோவா (Noah) கால ஊழிவெள்ளத்துக் குரிய; உலகப் பேரூழிவெள்ளத்தின் விளைவான; பேரூழி வெள்ளத்தின் செயல்தடமுடைய.

dilu'vialist, *n.* மண்ணியல் நிகழ்ச்சிகளை ஊழிப் பெரு வெள்ளத்தின் விளைவுகளாக விளக்குபவர்.

dim, *a.* மங்கலான; ஒளிகுறைந்த; பார்வை மங்கிய; தெளி வற்ற; *v.* இருட்டாக்கு, தெளிவற்றதாக்கு; புலப்படாது செய்; மங்கலாகு; (தொ.) take a dim view of, (பே-வ.) கிளர்ச்சியில்லாது கருத்துச் சோர்வுடனிருந்து நோக்கு.

dime, *n.* அமெரிக்க வெள்ளிநாணயத்தில் பத்தில் ஒரு பகுதி, பத்து அமெரிக்கக் காசு; (தொ.) dime novel, மலிவான புதினம்.

dimen'sion, *n.* உருவளவை, அளவுக்கூறுகளின் தொகுதி; நீளஅகல உயர அளவுத்தொகுதி; உருவளவைக்கூறு, நீள அகல உயர முதலியவற்றுள் ஒன்று; பருமன், பரும அளவு, பருமானம்; நீள அகல உயரம்; பரப்பு, அகற்சி; நீள அகலம்; தொடரெண் கூறுகளில் தெரிவரா உருக்களின் பெருமடிப் பெருக்கம்; (தொ.) dimension work, வரையள வுக் கற்களினாலான கட்டிடம்; of great dimensions, பாரிய, மிகப்பெரிதான; the three dimensions, மூவளவைக்கூறு கள், நீள அகல உயரங்கள்.

dimen'sional, *a.* உருவளவை சார்ந்த, பரும அளவு குறித்த; அளவுக்கூறுகளுக்குரிய.

dim'erous, *a.* இருபகுதிகள் கொண்ட; (தாவ.) ஒரு சுற்றில் ஈருறுப்புக்களுடைய; (வில.) இரு பொருத்துக் கணைக்காற் பகுதியுடைய.

dim'eter, *n.* இருசந்தச் செய்யுள், சீரிணைப்பு இரண்டு கொண்ட செய்யுள்; *a.* சீரிணைப்பு இரண்டு கொண்ட.

dimet'ric, *a.* மணி உருக்களில் நாற்கோண வடிவமுடைய.

dimid'iate, *a.* இரு பாதிகளாகப் பிரிக்கப்பட்ட, இரு சம கூறுகளாகப் பிளக்கப்பட்ட; பாதிபோன்ற உருவுடைய; ஒரு பாதி மட்டும் வளர்ச்சியுற்ற; ஒருபுறம் பிளவுற்ற; *v.* (கட்.) உருப்பாதி குறி.

dimin'ish, *v.* குறைப்படுத்து, குறைவாக்கு; ஒருகூறு பிரித் தெடுத்துக் குறை; வன்மை குறைவு செய்; தாழ்த்து, தரக் குறைவு உண்டுபண்ணு; குறைபடு; குறுகு, தோற்றத்தில் சிறிதாகு, வலுக்குறைபடு; தணி; தாழ்வுறு; கூம்பி ஒரு முனைப்படு.

**dimin'ished**, *a.* குறைவாக்கப்பட்ட ; சிறிதாக்கப்பட்ட ; தாழ்த்தப்பட்ட ; கீழ்ப்படுத்தப்பட்ட ; செருக்குக் குலைக்கப் பட்ட ; (இசை.) முழுநிறைவற்ற மைய இசையுள்ள.

**dimin'ishing**, *a.* குறைக்கிற ; குறைபடுகிற ; (தொ.) diminishing glass, உருச்சுருக்கி ; பொருட்களைச் சிறிதாகக் காட்டும் கண்ணாடி ; law of diminishing returns, பொருளியல் வகையில் குறைந்துசெல் பயன்முறை.

*dimin'uendo*, (இத்.) *n.* (இசை.) படிப்படியான குரல் தணிவு (சுவ: *dim.*)

**diminu'tion**, *n.* குறைவு ; குறுக்கம் ; இழிவு ; குறைபடும் அளவு.

**dimin'utive**, *n.* (இலக்.) இனத்திற் சிறுமைகுறிக்கும் சொல்; *a.* மிகச்சிறிய ; சுருங்கிய ; இனத்திற் சிறிய.

**dim'issory**, *a.* வேறு ஆட்சி வரம்பிற்கு அனுப்ப இசைவளிக்கிற, ஆட்சியெல்லை கடந்து புறப்பட உத்தரவு கொடுக்கிற.

**dim'ity**, *n.* முனைப்பிழையுடன் சித்திரவேலைப்பாடு கொண்ட வெண்மையான முரட்டுப் பருத்தித்துணி வகை.

**dimm'er**, *n.* ஒளியின் போக்கினை ஒழுங்குபடுத்தும் ஏற்பாடு அல்லது அமைப்பு.

**dimorph'ic**, *a.* இனவகையில் இரு திரிபுருப் படிவங்களை யுடைய ; பொருள் வகையில் இரு மணியுருப் படிவங்களை யுடைய.

**dimorph'ism**, *n.* (உயி.) இனவகையில் இருதிரிபுருப் படிவங் களையுடைமை ; (வேதி.) இரு மணியுருப் படிவங்களை யுடைமை.

**dimorph'ous**, *a.*=**dimorphic.**

**dim'ple**, *n.* கன்னத்தில் விழும் சிறுகுழி ; நீரின் சிறுசுழி, சிற்றலை ; *v.* கன்னத்திற் குழி உண்டாக்கு ; கன்னத்திற் குழைவுகாட்டு.

**din**, *n.* பேரொலி ; இரைச்சல் ; *v.* காது செவிடுபடும்படி ஓசையுண்டாக்கு ; பேரொலியெழுப்பித் தொந்தரை கொடு ; பலவந்தமாகக் காதிற் புகுத்து ; பிடிவாதமாகப் புகுத்து.

**dinar'**, *n.* பழைய அராபிய தங்க நாணயம் ; ஈராக் நாட்டின் நாணய அளவு ; யுகோஸ்லாவியா நாட்டு வெள்ளிக்காசு.

**dine**, *v.* சாப்பிடு ; உண்டிகொள் ; முக்கிய உணவுகொள் ; (தொ.) dine out, வீட்டிலின்றி வெளியே விருந்துண் ; வெளியே எங்காவது உணவு உட்கொள் ; dine with Duke Humphrey, உணவின்றிச் செல்.

**din'er**, *n.* உண்பவர் ; புகைவண்டி உணவறை.

**din'er-out**, *n.* வீட்டுக்குப் புறம்பாக வெளி விருந்துகளுக்கு அடிக்கடி செல்பவர்.

**dinette'**, *n.* அடுக்களையிலோ வேறு அறையிலோ சாப்பாட் டுக்கென ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள தனியிடம்.

**ding'-dong'**, *n.* மணி ஓசை ; அடுக்கெதுகை இசைப்பு ; வேறுபாடில்லா ஒரே தன்மை ஒலிப்பு ; *a.* இரண்டுபட ஒலிக்கும் மணியோசை போன்ற ; இரண்டுபட ஒலிக்கும் சம்மட்டி ஓசை போன்ற ; மாறிமாறி வெற்றிதோல்வி வரத் தக்க சரிசமப் போட்டியான ; *v.* மாறி மாறி மணியடி ; ஓசைசெய் ; வைது தொந்தரை செய் ; *adv.* மணியோசை போன்று ; மாறிமாறி.

**ding'ey, ding'hy**, *n.* சிறு படகு ; இன்பத்தோணி ; விமான மோட்டியின் தொய்வுப்படகு.

**ding'le**, *n.* மரமடர்ந்த ஆழ்ந்த பள்ளத்தாக்கு.

**ding'le-dang'le**, *adv.* இங்குமங்கும் ஊசலாடிக்கொண்டு.

**ding'o**, *n.* ஆஸ்திரேலிய நாட்டு நாய்வகை ; *pl.* ding'oes.

**din'gy**, *a.* மங்கல் நிறமுள்ள ; அழுக்கடைந்த ; கறைபடிந்த.

**din'ing-car**, *n.* சாப்பாட்டறை வண்டி.

**din'kum**, *a.* நேர்மையான, மெய்யான, வாய்மையான ; (தொ.) dinkum oil, திரிபற்ற மெய்ம்மை.

**dink'y**, *a.* (பே-வ.) நேர்த்தி மிக்க தோற்றமுடைய, மிகநல்ல, வனப்பார்ந்த.

**dinn'er**, *n.* சிறப்பூண் ; விருந்து, பாராட்டு விருந்து ; *v.* உண் ; விருந்தளி.

**dinn'er-jack'et**, *n.* வாலற்ற நீண்ட மேலங்கி.

**dinne'r-service, dinn'er-set**, *n.* விருந்திற்கான தட்டு முட்டுக் கலத்தொகுதி.

**dinn'er-wagon**, *n.* சிறப்பூண் தள்ளுவண்டி ; ஈரடுக்கு வரிசைகள் கொண்ட பக்கப் பலகை.

**dino'ceras**, *n.* மண்டையோட்டிலே கொம்புகள் போன்ற மூன்று சோடிப் புடைப்புகளையுடைய புதைபடிவ விலங்கு வகை.

**Dinorn'is**, *n.* தீக்கோழி போன்ற மரபழிந்துபோன பறக்கும் ஆற்றலற்ற பறவை வகை.

**din'osaur**, *n.* மண்ணியல் தொடக்க ஊழிகளில் வாழ்ந்து மறைந்துபோன ஊருமினத்தைச் சேர்ந்த மாபெரு விலங்கு வகை.

**din'othere**, *n.* மண்ணியல் தொடக்க ஊழியில் வாழ்ந்து தும்பிக்கை போன்ற உறுப்புடைய மரபழிந்துபோன மாபெரு விலங்கு வகை.

**dint**, *n.* வடு, தழும்பு, வெட்டுவாய் ; அடி, அறை, தாக்கு ; ஆற்றல், விசை ; *v.* வடுப்படுத்து, தழும்புகள் உண்டுபண்ணு ; (தொ.) by dint of, ஆற்றலின் விளைவாக.

**dio'cesan**, *n.* மாவட்டத் திருச்சபை ஆட்சி முதல்வர் வகையில் திருச்சபை உறுப்பினர் ; மாவட்டத் திருச்சபை உறுப்பினர் வகையில் ஆட்சி முதல்வர் ; *a.* மாவட்டத் திருச்சபை எல்லைக்குரிய.

**di'ocese**, *n.* மாவட்டச் சமய முதல்வரின் அருளாட்சிப் பரப்பு, மேற்றிராசனப் பிரிவு.

**dioe'cious**, *a.* (தாவ.) இருவேறு பாற்கூறுகளும் இரு வேறு செடிகளில் உடைய ; (வில.) இருபாலும் இருவேறு தனி உயிர்களாகக் கொண்ட.

**Dionys'iac, Dionys'ian**, *a.* டயானிசஸ் (Dionysus) என்ற கிரேக்க மதுத் தெய்வத்தைச் சார்ந்த ; டயானிசஸ் வழி பாட்டுக்குரிய.

**diop'ter, diop'tre**, *n.* கண்ணாடி வில்லையின் குவியத் தொலைவுக்கேற்ற கோட்ட அளவைக்கூறு.

**diop'tric**, *n.* கண்ணாடி வில்லையின் குவியத் தொலைவுக்கேற்ற கோட்ட அளவைக்கூறு ; *a.* பார்வைக்கு ஊடுபொருளாகப் பயன்படுகிற ; கோட்டத்தினால் பார்வைக்குத் துணை செய்கிற ; கோட்டத்துக்குரிய ; விலகுகிற ; ஒளிபுகுகிற.

**diop'trics**, *n.* ஒளிக்கோட்டம் பற்றிய ஒளிநூற்பகுதி.

**diora'ma**, *n.* ஒளி-நிழல் வண்ண வரைத்திறங்களின் மூலம் எழுஞாயிறு போன்ற இயற்கை நேர்க் காட்சிப் பண்பு தோன்றத் தீட்டப்படும் ஓவியம்.

**diox'ide**, *n.* (வேதி.) ஈருயிரகை.

**dip**, *n.* நீரில் அமிழ்த்துதல், அமிழ்த்தும் செயல் ; தோய்த்தல் ; கழுவுதல் ; இறக்கம் ; முகத்தல், மொண்டெடுத்தல் ; அமிழ்ந் துள்ள அளவு, மூழ்கியுள்ள கூறு ; முகந்தெடுத்த அளவு ; கடற் குளிப்பு, கடல் முழுக்கு ; மேட்டுக் காட்சியில் புறத் தோற்றத்திற் காணப்படும் தொடுவான் இறக்கம் ; அடிவான் வரை கடந்த காந்த ஊசியின் இறக்கம் ; மண்ணியல் அடுக்கின் கீழ்நோக்கிய சாய்வு ; தொய்வு ; பள்ளம் ; குழி ; வான் வரைத் தொங்கல் ; மெழுகு திரி ; கழுவுதல், முழுக்காட்டுதல் ; கழுவுநீர், ஆடுமாடுகள் குளிப்பாட்டுதற்குரிய நீர் ; *v.* நீரில் அமிழ்த்து, தோய், தோய்த்தெடு ; நீரில் மூழ்குவித்துத் தீக்கை செய் ; சாயத்தில் தோய்வி ; உருகிய கொழுப்பில் திரி தோய்த்து மெழுகுதிரி ஆக்கு ; ஆடுமாடுகளைப் பூச்சி பொட்டழிப்பு மருந்தூட்டிய நீரில் குளிப்பாட்டு ; அகப்பையில் முகந்தெடு ; கரண்டியால் கோரியெடு ; நெல் முதலியவற்றை வாரி எடு ; கீழே சிறிது நேரம் இறக்கு ; (பே-வ.) கடலில் சிக்கவை ; நீராடு, நீரில் மூழ்கி எழு ; இடு, புகவிடு ; வளை, தொய்வாகு ; இறக்கமுறு , கீழ்நோக்கி வளைந்தெழு ; சாய்வுறு, சரிவுறு ; அமிழ் ; கீழ்நோக்கிச் சென்றடை ;

சிறிது புகுந்தெழு; மேலீடாகப் படிந்துசெல்; (தொ.) dip of the horizon, கண்பார்வை மட்டத்துக்குக் கீழே தோன்றும் தொடுவானத்தின் இறக்கம்; dip of the needle, காந்த ஊசியின் கீழ் நோக்கிய சாய்வு.

**diphther'ia, diphtherit'is,** *n.* (மரு.) தொண்டை அழற்சி நோய், காற்றுக்குழல் தோல்போன்ற சவ்வினுல் அடைக்கப்படும் தொண்டைத் தொற்றுநோய் வகை.

**diph'thong,** *n.* (ஒலி.) இணையுயிர், ஓரசையாக ஒலிக்கப்படும் இரண்டு உயிரெழுத்தொலிகள்; ஒரே உயிரொலியையுடைய ஈரெழுத்து; இரண்டு உயிரெழுத்துக்கள் இணைந்த அச்சுரு.

**diplom'a,** *n.* பல்கலைக்கழகப் பட்டச் சான்றிதழ்; கல்லூரிப் பட்டச் சான்றிதழ்; தகுதிப்பத்திரம்; அரசுப்பத்திரம், அரசாங்க ஆவணம்; உரிமைச் சீட்டு, பட்டயம்; *v.* தகுதி ஆவணம் அளி; அரசுப் பட்டயங் கொடு; *pl.* diplom'as.

**diplom'acy,** *n.* அரசியல் செயலாட்சி நயம்; நாடுகளிடைப் பட்ட இயைபிணக்க நயத்திறம், அரசியல்களிடைப்பட்ட செயலாண்மைத்திறம்; சூழ்ச்சித் திறநயம், முறைநயம், செயல் நயம்.

**dip'lomat,** *n.* தானுதிபதி, அரசியல் விரகர்.

**dip'lomate,** *n.* தகுதிப்பத்திரம் வைத்திருப்பவர்; *v.* பட்டயம் அளி.

**diplomat'ic,** *n.* வேற்று நாட்டு அரசவையிலுள்ள நாட்டுப் பேராண்மை அமைச்சர்; *a.* பழம்பட்டய ஆராய்ச்சித்துறை சார்ந்த; உடன்படிக்கைப் பத்திரங்கள் சார்ந்த; அரசியல் செயலாட்சிக்குரிய; அரசியல் செயல்திறமுடைய; கலந்து பேசியே செயலாற்றுகிற; ஏமாற்றுகிற, இரண்டகமான; (தொ.) diplomatic corps, ஒரு நாட்டின் தலைநகரில் வாழும் வேற்று நாட்டு அரசியல் தூதுவர்களின் முழுக்குழு.

**diplomat'ical,** *a.* உடன்படிக்கைப் பத்திரங்கள் சார்ந்த; அரசியல் செயலாட்சிக்குரிய; கலந்து பேசிச் செயலாற்றுகிற; இரண்டகமான.

**diplomat'ics,** *n.* பண்டை வரிவடிவாராய்ச்சித்துறை, பட்டயங்கள் முதலிய தொன்மைக்கால ஆவணங்களை ஆய்ந்து விளக்கும் துறை.

**diplom'atist,** *n.* அரசியல் விரகர், தானுதிபதி.

**diplom'atize,** *v.* அரசியல் வல்லுநராகச் செயலாற்று; சூழ்ச்சி நயத்திறங்களைப் பயன்படுத்து.

**dip'noan,** *n.* (வில.) செவுள்களோடு நுரையீரல்களும் ஒருங்கேயுடைய மீன்வகை; *a.* செவுள்களும் நுரையீரல்களும் ஒருங்கே உடைய.

**dipp'er,** *n.* அமிழ்த்துபவர்; அகப்பை; தூர்வாரியின் வாளி; பெரிய கரண்டி; உந்து வண்டியின் தலை விளக்குகளை மேலுங்கீழும் நகர்த்துவதற்கான பொறியமைப்பு; தீக்கை செய்விப்பவர்; (வில.) முக்குளிப்பான்; பறவை வகை; (வான்.) வடமீன்குழு; நிழற்பட எதிர்மூலப் படிகளை நீரில் அமிழ்த்துவதற்கான அமைவு; (தொ.) the Dipper, வட விண்மீன் குழு.

**dipp'ing-needle,** *n.* தொடுவானத்தினின்றும் காந்த ஊசியினுல் ஏற்படுங் கோணத்தை அளப்பதற்கான கருவி.

**dip'-pipe,** *n.* வளியாக்க மனையின்கண் நீரில் மூழ்கிய வெளிப்போக்கிடமுள்ள குழாய்.

**dipp'y,** *a.* அறிவு மாருட்டமுள்ள.

**dipsoman'ia,** *n.* வெறியத்தின்மீது வேணவா.

**dip'teral,** *a.* (வில.) இரண்டு சிறகுடைய; (க-க.) இரட்டைத் தூண் வரிசையுள்ள.

**dip'terous,** *a.* பூச்சி வகைகளில் இரண்டு சிறகுகளையுடைய; (தாவ.) இரண்டு சிறகு போன்ற இணைப்புக்களையுடைய.

**dip'-trap,** *n.* வளித்தொடர்பு அறுப்பதற்காக நீர்மம் அடங்கிய குழாயிலுள்ள வளைவு.

**dip'tych,** *n.* மெழுகிட்ட உள்மடிப்புள்ள ஈரிதழ் எழுது பட்டிகை; இயேசுநாதரின் இறுதியுணவு விழாவின்போது உரக்கப் படிக்கப்படும் மாவட்டச் சமய முதல்வர்கள்-திருத்தொண்டர்கள் முதலியோர் பற்றிய பதிவேடு; மடிப்புப் பட்டிகைகள் வடிவத்திலுள்ள இரட்டைப்படங்கள்.

**dire,** *a.* கிலியூட்டுகிற, கொடிய, பேரிடர் பயக்கவல்ல.

**direct',** *n.* (இசை.) அடுத்த பக்கத்தின் அல்லது வரியின் முதல் இசைமானம் பற்றிய குறிப்பு; *a.* நேரான, வளைவற்ற, கோடாத; நேர்குறுக்கான, மிகச்சுருக்க நெறியான; சுற்றி வளையாத, வாத வகையில் எடுத்துக்கொண்ட பொருளுக்கு உடனே வருகிற; சாய்குறுக்கான, மூலைவாட்டமான; நிமிர்ந்த, சாயாத; இயக்க வகையில் முன்னேக்கிய, பின்னேக்காத; சரிந்து செல்லாத; நேரடியான; சாயங்களில் நேர்பற்றுன, துணைப் பொருளுடாகப் பற்றுத; உடனடியான, இடையீடில்லாத; தயக்கமற்ற; இடைப்படிகளற்ற; நேர்ச்செயலான; இடையாளற்ற; பேச்சறிவில் நேர்முறையான, உருத்திரிபு அற்ற; கிளைமரபூடு செல்லாத; நேர்மையான, ஒளிவு மறைவற்ற; வாய்மையுடைய, மனமார்ந்த; கபடமற்ற; தெளிவான, ஈரொட்டாயிராத, இரண்டகமற்ற; எளிய, நேர்நடையான; புற ஆசாரப் பொதிவற்ற; (வான்.) நேர்மேற்குக் கிழக்கான போக்குடைய, பின்னிடையாத; வரி முதலியன வகையில் ஆள்மீதே சார்கிற; *v.* இயக்கு, தூண்டு, ஏவு; கட்டளையிடு; கட்டுப்படுத்தி ஆளு, செயலாட்சி செய்; வழிகாட்டு, சுட்டிக்காட்டு, அறிவுரை கூறி உதவு; வழியில் திருப்பு, திசை சுட்டிக்காட்டு; திசையில் செலுத்து, இலக்கு நோக்கிப் பாய்ச்சு; திரைப்பட ஆக்கப்பொறுப்பாளராகச் செயலாற்று; முகவரிக்கு அனுப்பு; ஆளை நோக்கி உரை; ஆளைக்குறித்து எடுத்துரை; முன்னிட்டு எழுது, கருத்திற்கொண்டு குறிப்பிடு; *adv.* நேராக; சுருக்காக, குறுக்காக, மிகக் குறுகிய வழியில்; சுற்றி வளையாமல்; இடையாளின்றி; இடையீடில்லாமல்; ஊடுபொருளில்லாமல்; சாயாமல்; கோணுமல்; (தொ.) direct action, நேரடி நடவடிக்கை; direct current, (சு-வ: d.c.) நேர்மின்னேட்டம், ஒரு திசைப் போக்குடைய மின்னேட்டம்; direct speech, (இலக்.) தற்கூற்று, நேர்முகப் பேச்சு.

**direc'tion,** *n.* இலக்கு; போக்கு, திருப்பம், செல்லும் பக்கம், திசை; வழிகாட்டுதல்; கட்டளை; ஏவுரை, தூண்டுரை, அறிவுரை; செயலாட்சி, மேலாட்சி; பொறுப்புக் குழு ஆட்சி; முகவரி.

**direc'tional,** *a.* பரந்த வெளியில் திசைபற்றிய.

**direc'tion-find'er,** *n.* (வானெலி) ஒலியலைகள் வருகிற திசையைக் காட்டும் கம்பியில்லாக் குரல்வாங்கி.

**direct'ive,** *n.* பொதுக்கட்டளை; *a.* கட்டளையிடும் பாங்குள்ள, ஆணை பிறப்பிக்கும் ஆற்றலுடைய; (தொ.) directive principle, நெறிமுறைக் கோட்பாடு.

**direc'tly,** *adv.* உடனே, தாமதமின்றி, உடனடியாக; நேர்முகமாக, இடையீட்டாளர் இன்றி; *rel. adv.* (பே-வ.) நடந்தவுடனே.

**Direc'toire,** *n.* முதல் பிரஞ்சுக் குடியரசில் (1795-1799) செயலாண்மை அதிகாரம் பெற்றிருந்த ஐவர் குழு; *a.* உடையிலும் மனைப்பொருள்கள் வகையிலும் முதல் பிரஞ்சுக் குடியரசுக் காலப் பாணியிலுள்ள.

**direc'tor,** *n.* இயக்குநர்; கண்காணிப்பவர்; மேலாளர்; வாணிகக் கழகச் செயலாட்சிக்குழு உறுப்பினர்; திரைப்பட ஆக்கப் பொறுப்பாளர், திரைக் காட்சி மேற்பார்வையாளர், பிரஞ்சுப் புரட்சிக்காலப் பொறுப்பாட்சிக்குரிய ஐவர் குழுவின் உறுப்பினர்; அறிவுரையாளர்; நெறிப்படுத்துபவர்; காப்பாளர், முதுகண்ணர்; நற்றந்தை, ஆன்மிக வழிகாட்டி; அறிவுரை கூறும் சமயகுரு; இயந்திரத்தில் இயக்கத்தை நெறிப்படுத்துகிற உறுப்பு; படைத்துறையில் பல துப்பாக்கிகளை ஒருமுகப்படுத்திக் குறிபார்த்து இயக்குவதற்குரிய அமைவு.

**Direct'orate[1],** *n.* முதல் பிரஞ்சுக் குடியரசில் 1795 முதல் 1799 வரை செயலாண்மை அதிகாரம் பெற்றிருந்த ஐவர் குழு.

**direct'orate**[2], *n.* இயக்குநர் பதவி ; இயக்குநர் குழுமம்.

**Direc'tory**[1], *n.* முதல் பிரஞ்சுக் குடியரசில் 1795 முதல் 1799 வரை செயலாண்மை அதிகாரம் பெற்றிருந்த ஐவர் குழு.

**direc'tory**[2], *n.* கட்டளைச்சுவடி, பொது அல்லது தனிமுறை வழிபாட்டுக்கான விதிகளடங்கிய சுவடி ; வழி விவரங்கள் தரும் புத்தகம் ; ஊர் பெயர்கள் குறிப்பு நூல் ; *a.* கட்டளையிடும் பாங்குள்ள, ஆணை பிறப்பிக்கும் ஆற்றலுடைய ; கட்டளைகள் அடங்கிய; சட்டத்துறையில் வகைதுறை அறிவுரை வழங்குகிற.

**direct'ress**, *n.* இயக்குவோள்.

**dire'ful**, *a.* அச்சந் தருகிற, கிலியூட்டுகிற.

**dirge**, *n.* கையறுநிலைப்பாடல், புலம்பற்பாட்டு.

**di'rigible**, *n.* செலுத்தப்படத்தக்க புகைக்கூண்டு, பறவைக் கப்பல் ; *a.* வழிப்படுத்தக்கூடிய, செலுத்தப்படத்தக்க.

*dirigisme*, (பிர.) *n.* சமூகப் பொருளாதாரத் துறைகளில் அரசாங்கக் கட்டுப்பாடுபற்றிய கொள்கை.

**di'riment**, *a.* செல்லாதாக்குகிற.

**dirk**, *n.* ஸ்காத்லாந்து மேட்டுநிலத்தில் கையாளப்படும் குத்துஉடைவாள் வகை ; கப்பலோட்டும் பயிற்சி பெறுபவர்கள் தாங்கும் படைக்கலம் ; *v.* உடை வாளிஞற் குத்து.

**dirn'dl**, *n.* கச்சும் பாவாடையும் கூடிய ஆல்ப்ஸ் பகுதிக்குரிய (Alpine) நாட்டுப்புற மாதர் உடை ; (தொ.) dirndl skirt, அரைக்கச்சையுடன் கூடிய முழுப் பாவாடை.

**dirt**, *n.* அழுக்கு, மலம், மாசு ; சேறு, புழுதி, மண் ; சாணம்; பொருக்கு, புறவடை ; ஒட்டிக்கொண்டிருக்கும் வேற்றுப் பொருள் ; தூய்மையற்ற பொருள், பயனற்ற பொருள் ; அழுக்குப்படிவு; கீழ்த்தரப் பேச்சு; *v.* அழுக்காக்கு ; (தொ.) eat dirt, பணிந்து அவமதிப்பை ஏற்றுக்கொள் ; throw dirt, நற்பெயரைக் கறைப்படுத்து.

**dirt'-bed**, *n.* (மண்.) மட்கிப்போன பழம் புதைமண்.

**dirt'-cheap**, *a.* கொள்ளை மலிவான.

**dirt'-eating**, *n.* பழங்கால மக்களின் மண்ணூண்பழக்கம் ; மண் உண்ணும் நோய்வகை.

**dirt'-pie**, *n.* சிறுவர்விளையாட்டு மண்பணியாரம்.

**dirt'y**, *a.* அழுக்கடைந்த, மாசுற்ற ; கந்தலான ; கீழ்த்தரமான, தாழ்வான, மட்டமான ; தெளிவற்ற, துப்புரவற்ற ; இழிந்த உணர்ச்சி சார்ந்த ; எண்ணத்தில் அல்லது பேச்சில் தூய்மையற்ற ; மோசமான ; வெறுக்கத்தக்க ; நம்பிக்கைக் கேடான ; முறைகேடாகப் பெறப்பட்ட ; கொந்தளிக்கிற ; *v.* அழுக்காக்கு ; கறைப்படுத்து ; மண்படிய வை ; (தொ.) dirty money, இழிந்த வழியில் ஈட்டப்பட்ட பணம் ; இழி பொருள் மூட்டைதூக்குவதற்காகத் துறைமுகக் கூலிகட்குத் தரப்படும் மிகை ஊதியம் ; dirty work, கைகளை அல்லது துணிகளை அழுக்காக்கும் வேலை ; மற்றவர் சார்பாக மேற் கொள்ளப்படும் நேர்மையற்ற செயல்கள் ; மூர்க்கத்தனம், கொலை.

**dirz'i**, (இ.) *n.* தையற்காரர்.

**disabil'ity**, *n.* இயலாமை ; சட்டப்படிக்கான தகுதியின்மை; ஆற்றல்கேடு ; செயலுக்குத் தடங்கலான குறைபாடு.

**disa'ble**, *v.* ஆற்றல்கெடு, தளர்வுறச்செய், முடமாக்கு ; தகுதியற்றதாகச் செய் ; சட்டப்படி தகுதிக்குறைவு உண்டு பண்ணு ; ஆற்றல் அற்றவரென்று தெரிவி ; தடை செய்.

**disabuse'**, *v.* மருள் நீக்கு, ஐயம் அகற்று; தவருன எண்ணத்தைப் போக்கு ; சரிப்படுத்து.

**disaccord'**, *n.* பூசல், மாறுபாடு ; *v.* கருத்து வேறுபாடு கொள் ; மாறுபடு.

**disadvan'tage**, *n.* தீங்கு, எதிரான நிலை, பாதிக்கும் தன்மை; வசதியற்ற சூழல்.

**disad'vanta'geous**, *a.* பாதகமான, எதிர்நிலையான ; தீங்குடன் கூடிய, வசதியற்ற ; தாழ்த்துகிற, அவமதிப்புக் கொணரத்தக்க.

**disaffec'ted**, *a.* நட்புக்கேடுற்ற ; மனக்குறையுடைய ; அரசனிடம் பற்றுறுதியற்ற.

**disaffec'tion**, *n.* அரசியல் அமைதிக்கேடு ; பற்றுறுதியின்மை, நேசப்பாங்கு அற்ற நிலை.

**disaffirm'**, *v.* (சட்.) முன்முடிவினை மாற்றியமை ; மறு, தள்ளிவிடு.

**disaffo'rest**, *v.* காடு பற்றிய சட்டங்களின் ஆட்சி எல்லையினின்றும் அகற்று ; காடு அழி.

**disagree'**, *v.* கருத்து மாறுபடு ; ஒவ்வாதிரு, இசையாதிரு ; இயல்பு வேறுபடு ; வேற்றுமைகொள், பூசலிடு ; உணவு வகையில் ஒத்துக்கொள்ளாதிரு ; வானிலை வகையில் தீய விளைவுகளை உடையதாயிரு.

**disagree'able**, *a.* மனத்துக்கொவ்வாத, வெறுப்புத் தருகிற, அருவருப்பான ; நட்புப்பாங்கற்ற ; மனக்கோட்டமுள்ள, சிடுசிடுப்பான, தொல்லைதருகிற.

**disagree'ables**, *n. pl.* மனக்கசப்புத்தரும் அனுபவங்கள், துன்பங்கள், தொல்லைகள், கவலைகள்.

**disagree'ment**, *n.* உடன்பாடின்மை; வேற்றுமை, பொருத்தமின்மை ; கருத்துவேறுபாடு, பூசல்.

**disallow'**, *v.* ஒப்புறுதியளிக்க மறுத்துவிடு ; நேர்மையானதென்று ஒப்புக்கொள்ள மறுத்துவிடு; ஏற்றுக்கொள்ள உடன்படாதிரு; தள்ளிவிடு, தடைசெய், தடையாணைப் படுத்து.

**disannul'**, *v.* தள்ளுபடி செய், முற்றும் விலக்கு.

**disappear'**, *v.* மறைந்து போ, கண்ணுக்குத் தெரியாமற் போய்விடு ; ஒழி, கெடு.

**disappear'ance**, *n.* மறைவு, ஓடிமறைதல் ; மறைவாகப் பின்வாங்குதல்.

**disappoint'**, *v.* நம்பிக்கை குலை ; ஏமாற வை ; அவா நிறைவேற்றத் தவறு, சந்திப்பு ஏற்பாட்டை முறி ; பொய்ப்பி ; மனம் முறிவுறச் செய், மனக்கசப்பூட்டு.

**disappoint'ed**, *a.* ஏமாற்றப்பட்ட ; நம்பிக்கை குலைந்த ; மனமுறிவுற்ற, மனக்கசப்புற்ற.

**disappoint'ing**, *a.* ஏமாற்றம் விளைக்கிற, நம்பிக்கை கெடுக்கிற ; அவாமுறிவுண்டாக்குகிற.

**disappoint'ment**, *n.* ஏமாற்றம், எண்ணங்கள் நிறைவேருமற் போதல் ; நம்பிக்கைக் குலைவு ; மனமுறிவு ; மனக்கசப்பு, தோல்வியினுல் விளையும் வெறுப்புணர்ச்சி.

**disapproba'tion**, *n.* ஒப்புதலளிக்காமை ; விருப்பமின்மை தெரிவித்தல், மறுப்பு.

**disapprove'**, *v.* ஒவ்வாதிரு, மாருன கருத்துக்கொள் ; மறுப்புத்தெரிவி ; கண்டனம் பண்ணு ; தள்ளுபடி செய்.

**disarm'**, *v.* படைக்கலம் அகற்று, போர்க்கருவியைக் கீழே போடும்படி செய்; படைக்கலம் கையிழக்கச் செய்; காப்பற்றவராக்கு ; தீங்கு செய்யும் ஆற்றலைக் குறை ; பாதுகாப்பு அற்றதாக்கு, காப்பரண் தகர்த்தொழி; படைவலிமை குறை ; படைவலிமையில்லாதாக்கு ; அமைதிகாலப் படைநிலைக்குக் கொண்டு வா ; அமைதிகாலப் படைநிலை மேற்கொள் ; அழிக்கும் ஆற்றலை நீக்கு.

**disarm'ament**, *n.* படைவலிமைக் குறைப்பு ; அழிக்கும் ஆற்றல் நீக்கம்.

**disarrange'**, *v.* நிலைகுலை, சீர்கெடு, தாறுமாருக்கு, குழப்பு ; அமைதி குலை, அலங்கோலப்படுத்து.

**disarray'**, *n.* அலங்கோலம், குழப்பம் ; சிறப்பிலாப் பொது ஆடை ; *v.* குழப்பு, அலங்கோலப்படுத்து ; (செய்.) ஆடைகளை.

**disartic'ulate**, *v.* பூட்டு அகற்று, பொருத்து நெகிழ்வி ; அக்கு அக்காகப் பிரி, வேறுவேறு ஆக்கு ; பிரி.

**disassimila'tion**, *n.* (உட.) செரிமானம் செய்யப்பட்ட பொருள் சிறு கூறுகளாகப் பிரிதல் ; செரிபொருள் கழிவுப் பொருளாகப் பிரிவுறல்.

**disassocia'tion**, *n.* கருத்துக்குரிய இணைவுத்தொடர்பின் குலைவு.

**disas'ter**, *n.* துன்பநிகழ்ச்சி, விபத்து; திடுமென நேரும் பேரிடர், அவப்பேறு, கேடு.

**disas'trous**, *a.* அவலமான, துக்கமான, அழிவுண்டாக்குகிற; வருத்தந்தோய்ந்த; இடரின் முன்னறிவிப்பான.

**disavow'**, *v.* தெரியாதென்று சொல்; ஒப்புக்கொள்ள மறு; மறுப்புத்தெரிவி; கைவிடு; தொடர்பில்லையெனப் பகர்; பொறுப்பைத் தட்டிக்கழி.

**disband'**, *v.* படையணியினைக் கலை, அணிகலைந்து போ.

**disbar'**, *v.* வழக்கறிஞர் கழகத்திலிருந்து வெளியேற்று; சட்டவாணர் நிலையினின்றகற்று.

**disbelieve'**, *v.* அவநம்பிக்கைகொள், நம்பிக்கைகொள்ள மறு; சமயத்துறையில் உறுதியான நம்பிக்கையற்றவராயிரு.

**disbench'**, *v.* வழக்கறிஞர் மன்ற மூத்த உறுப்பினர் நிலையினின்று அகற்று.

**disbranch'**, *v.* கிளைகளை அகற்று.

**disbud'**, *v.* மிகையாகவுள்ள மொக்குகளைக் கிள்ளியெறி.

**disbur'den**, *v.* சுமை நீக்கு; சுமையையிறக்கு; விட்டு ஒழி; வெளியேற்று, அகற்று.

**disburse'**, *v.* செலவழி, செலவுகொடு; பணங்கொடு.

**disburse'ment**, *n.* பணங்கொடுத்தல்; கொடுக்கப்பட்ட பணம்; பிரித்துக்கொடுத்தல்.

**disc**, *n.*=disk.

**discal'ceate**, *n.* வெறுங்காலுடன் போகிற துறவி; மிதியடி மட்டும் அணிந்து செல்கிற துறவி; வெறுங்கால் துறவிப் பெண்; பாதுகையுடன் செல்லும் துறவிப்பெண்; *a.* வெறுங்காலுடன் போகிற; மிதியடி மட்டும் அணிந்துசெல்கிற.

**discal'ceated, discalced'**, *a.*=discalceate.

**dis'card**[1], *n.* சீட்டுக்கழிப்பு; கழித்த சீட்டு; விலக்கீடு, தள்ளுபடி, கழிப்பு, எறிவு.

**discard'**[2], *v.* சீட்டாட்டத்திற் சீட்டுக்கழி; சீட்டுக்களைக் கீழே போடு; எறி, களை; விட்டுவிடு, விலக்கு, நீக்கு; கொள்கையைத் துறந்துவிடு, கைவிடு; தள்ளுபடி செய்; வேலையிலிருந்து தள்ளு.

**discarn'ate**, *a.* பருவுடலிலிருந்து அகன்ற; உடற்சார்பில்லாத.

**discern'**, *v.* தெளிவாக உய்த்துணர்; நுணுகிக்காண்; எண்ணியுணர்; உற்றுப்பார்த்து அறிந்துகொள்; கேட்டுத் துணி; ஆர்ந்தமர்ந்தறி; வேறுபாடறி.

**discern'ing**, *a.* நுழைபுலமுடைய; நோட்டமுடைய, ஊடுருவிக் காண்கிற, பகுத்தறிகிற; நுட்ப வேறுபாட்டறிவுடைய; அறிவுக்கூர்மையுள்ள.

**discern'ment**, *n.* பகுத்தறிதல்; அறிவுக்கூர்மை; உற்றறிவு, ஆய்வுணர்வு; நுண்ணோக்கு; நுழைபுல உணர்வு.

**discerp'tible**, *a.* தனியே கொய்துவிடக்கூடிய, பிரித்தெடுக்கப்படத்தக்க; பிரித்தாலழியக்கூடாத ஒருமைப்பாடு இல்லாத.

**discerp'tion**, *n.* வேருகும்படி கொய்தல், துண்டித்தல்; வேருக்கப்பட்ட துண்டு.

**discharge'**, *n.* கப்பல் சுமையிறக்கம்; வெடிதீர்வு; மின் கலத்திலிருந்து மின்போக்கு; செறிவு தளர்ப்பு; நீர்க் கசிவு; வெளியேற்றம்; பொறுப்பு நிறைவேற்றம்; கடமை நிறைவேற்றம்; செயல் முடிப்பு; குற்றத்தினின்றும் தவிர்ப்பு, சிறைக்கூடத்தினின்றும் விடுவிப்பு; படைத்துறை விடுவிப்பு; வேலையிலிருந்து நீக்கம்; கடன் தீர்ப்பு; கட்டணமளிப்பு; கூலிவழங்கீடு; விலக்குச் சான்றிதழ், விடுவிப்பு உரிமைச்சீட்டு; கொடுத்துத் தீர்க்கப்பட்ட ஒன்று; சாயம் போக்கும் முறை; சாயம் போக்கும் கூறு; *v.* சுமையிறக்கு; பளுக்குறை, பளு எடுத்துவிடு; வெடிதீர்; மின்கலத்திலிருந்து மின்வலி வெளியேற்று; செறிவு தளர்த்து; நீர்வெளியேற்று, பிலிற்று, கசியச்செய்; கொண்டுசென்று கொட்டு; அனுப்பு, வெளியேற்று; பொறுப்பு நிறைவேற்று; கடமை ஆற்று; செயலாற்று, செயல் முடித்துவிடு; குற்றத்தினின்றும் தவிர்ப்பளி; சிறையினின்றும் விடுவி; படைத் துறையினின்றும் விடுவிப்பு அளி; வேலையிலிருந்து நீக்கு; கடன் தீர்; கொடுத்துத்தீர்; கணக்குச் சரிவர ஒப்புவி; கணக்குச் சரிக்கட்டிக்காட்டு; காரணங்கூறி விளக்கமளி; பங்கிட்டளி; வெளியிடு; புறஞ்செல்லவிடு; சரக்கு வகையில் இறக்கப்பெறு; செறிவு தளர்வுறு; ஒழுகு; புறஞ்செல்; சாயமகற்று, துணியின் சாயம்போக்கு; (சட்.) நீதிமன்ற ஆணையைத் தள்ளுபடி செய்.

**discharg'er**, *n.* மின் ஆற்றலை வெளிச்செலுத்துதற்கான அமைவு.

**disci'ple**, *n.* சீடர், மாணாக்கர்; மாணவரென்று உரிமை கோருபவர்; கொள்கை பின்பற்றுபவர், வழிநிற்பவர், பண்பு மேற்கொள்பவர்; இயேசுநாதரின் 'திருமாணாக்கர்'; இயேசுநாதரைப் பின்பற்றிய முற்காலத்தவர்.

**disciplinar'ian**, *n.* கண்டிப்பாளர், கண்டிப்பான ஒழுங்கினைக் கடைப்பிடிக்கச் செய்பவர்.

**dis'ciplinary**, *a.* ஒழுங்கு சார்ந்த, நெறிமுறை வளர்க்கிற; உளப் பயிற்சியின் இயல்புள்ள; (தொ.) disciplinary action, ஒழுங்கு நடவடிக்கை, கட்டுப்பாட்டு நடவடிக்கை.

**dis'cipline**, *n.* கட்டுப்பாடு; ஒழுங்குமுறை; கண்டிப்பு; ஒழுங்காட்சி; விதிமுறைப்பயிற்சி; உளப்பயிற்சி; ஒழுக்கப் பயிற்சி; கடும் பயிற்சி; கடும்பயிற்சிதரும் துன்பம்; தண்டிப்பு; தண்டனைக்கருவி; தன்னொறுப்பு, கடுநோன்பு; தன்னொறுப்புக் கருவி; திருக்கோயில் நடவடிக்கை; ஒழுங்கு முறை; பயிற்சி விளைவாகிய ஒழுங்காற்றல்; *v.* கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவா; அடக்கியாள்; கட்டுப்படுத்து; விதிமுறைப் பயிற்சியளி; ஒழுங்குமுறை படிய வை; கண்டிப்புடன் பயிற்றுவி; தண்டி; பயிற்றுவித்துத் தகுதி யுடையவராக்கு; கண்டித்து ஒறு; கடுநோன்புக்கு உட்படுத்து.

**disclaim'**, *v.* மறுதலி, தெரியாதென்று கைவிரி; ஏற்றுக்கொள்ள மறு; சட்டப்படியான உரிமையைக் கைதுற; ஒப்புதலளிக்க மறுத்துவிடு; பொறுப்பேற்க முடியாதென்று கூறிவிடு; தள்ளுபடி செய்; கைவிடு.

**disclaim'er**, *n.* (சட்.) மறுப்பு; உரிமை கைதுறப்பு; தெரியாதென்ற கூற்று.

**disclama'tion**, *n.* மறுதலித்தல், தொடர்பு மறுப்பு, கைதுறப்பு.

**disclose'**, *n.* திறந்துகாட்டல்; *v.* திறந்துகாட்டு; வெளிப்படுத்து; வெளியிடு; தெரிவி.

**disclo'sure**, *n.* வெளிப்படுத்துதல்; வெளிப்படுத்தப்பட்ட பொருள்; கண்டு விளக்கப்பட்ட செய்தி; தெரிவிக்கப்பட்ட செய்தி; மறை வெளியீடு.

**discob'olus**, *n.* பண்டைக் கிரேக்கரிடையே திகிரி வட்டம் எறிபவர்; திகிரிவட்டம் எறியும் நிலையிலுள்ள சிலை; *pl.* discob'oli.

**disc'oid, discoid'al**, *a.* தட்டு வடிவுள்ள; (தாவ.) மலர்களின் ஓரம் நீங்கலான கொண்டை சார்ந்த.

**discolora'tion**, *n.* நிறம் வேருக்குதல்.

**discol'our**, *v.* நிறம் வேருக்கு, நிறங் கெடு; கறைப்படுத்து, தோற்றம் மாறச்செய், உருவழி; நிறம் வேருகு, கறைப்படு.

**discoloura'tion**, *n.* நிறம் வேருக்கல், கறைப்பட்ட நிலை.

**discom'fit**, *v.* சண்டையில் தோல்வியுறச்செய்; குறுக்கிட்டுக் கெடு; மன உலைவுண்டாக்கு.

**discom'fiture**, *n.* தோல்வி; எண்ணக்குலைவு, ஏமாற்றம்.

**discom'fort**, *n.* உடல்நலமின்மை; மன உலைவு; வாழ்க்கை நலக்குறைவு; *v.* மன உலைவுறச்செய், வசதியிழக்கச்செய்.

**discommode'**, *v.* வாய்ப்புக்கேடு உண்டுபண்ணு, இடுக்கட்படுத்து.

**discomm'on**, *v.* பட்டம் பெறவிருக்கும் கல்லூரி மாணவர்களுடன் வணிகர் தொடர்புகொள்ளாதபடி தடு; (சட்.) பொதுநிலத்தில் வேலியிட்டு அடை.

**discomm'ons**, *v.* பல்கலைக்கழக மாணவரைப் பிறருடன் தொடர்புகொள்ளாமல் விலக்கு ; பிறரைப் பல்கலைக்கழக மாணவருடன் தொடர்புகொள்ளாமல் தடு.

**discompose'**, *v.* மனவமைதியைக் குலை ; குழப்பு, கலக்கு ; சீர்குலை, ஒழுங்கு குலை.

**discompo'sure**, *n.* மனவமைதிக் கேடு.

**disconcert'**, *v.* அலங்கோலப்படுத்து, கெடு, குலை ; மன வுறுதி இழக்கப்பண்ணு ; குழப்பு, கலக்கு.

**disconnect'**, *v.* இணைப்பைப் பிரி, கழற்றிவிடு, பிரித்து வேருக்கு.

**disconnec'ted**, *a.* பிரிக்கப்பட்ட, கழற்றப்பட்ட ; பேச்சு கட்டுரை வகைகளில் தொடர்பற்ற, இணைவுப் பொருத்த மில்லாத.

**disconnec'tion, disconnex'ion**, *n.* கழற்றல், பெயர்த் தெடுத்தல் ; இணைவு முறிவு ; தொடர்பின்மை.

**discon'solate**, *a.* ஆற்றவொண்ணாத, துயர்மிக்க ; திக்கற்ற.

**discontent'**, *n.* மனநிறைவின்மை, மனக்குறை, அதிருப்தி ; *a.* மனநிறைவற்ற ; *v.* மனக்குறை உடையவராக்கு.

**discontent'ed**, *a.* மனநிறைவற்ற, அதிருப்திமிக்க ; மன அமைதி இழந்த.

**discontig'uous**, *a.* ஒட்டணிமையாயிராத, அடுத்து அமை யாத.

**discontin'uance, discontinua'tion**, *n.* தொடர்பு அற் றுப்போதல், நின்றுபோதல்.

**discontin'ue**, *v.* தொடர்ந்து நடைபெறாது இடையறுத்து விடு ; நிறுத்திவிடு ; முடிவுக்குக் கொண்டுவா ; விட்டொழி, தவிர், இடையே நின்றுவிடு.

**discontin'uous**, *a.* தொடர்ச்சியாயிராத ; இடையிடையே விட்ட ; இடையீடுகளையுடைய, இடையிடைத் தடைப்பட்ட ; விட்டுவிட்டு நிகழ்கிற ; பிளவுற்ற ; பிரிவுற்ற.

**dis'cord**[1], *n.* ஒவ்வாமை ; உடன்பாடின்மை ; முரண்பாடு ; மாறுபாடு ; பூசல், பிணக்கு ; கடுமையான ஒலி ; இசைவுக் கேடான ஒலிகளின் சேர்க்கை ; முரணிசை ஓசை, திடீர் இசைமுரண் ; (தொ.) apple of discord, ஆட்களிடையே பொருமை பூசல்களுக்குக் காரணமான பொருள், வேற்றுமை விளைவிப்பதற்குரிய செய்தி.

**discord'**[2], *v.* கருத்துமாறுபாடுகொள் ; பிணங்கு, வேறு படு ; பொருந்தாதிரு, முரண்படு, மோது ; இசைகேடாகு, இசை முறிவாகு ; செவியதிர ஒலியெழுப்பு.

**discord'ant**, *a.* உடன்பாடற்ற, ஒத்திசைவில்லாத, ஒன்றுக் கொன்றுவ்வாத, முரண்படுகிற ; கரகரப்பொலியுள்ள, இசைமுறிவான.

**dis'count**[1], *n.* கழிவு, முன்பணம் அல்லது உடனடிப்பணம் கருதி வாணிகத்துறையில் ஒப்பிக்கொடுக்கப்படும் விலைக் கழி வீடு ; கழிமானம், முன்பணம் கருதி மாற்று முறி வகையில் செய்யப்படும் தள்ளுபடி ; வட்டம், வாசி ; கழிவு வீதம் ; தள்ளிக்கொடுப்பு ; முகப்பு மதிப்பிற் குறைபாடு ; (தொ.) at a discount, முகப்பு மதிப்புக்குக் குறைவாக ; வேண்டப் படாத ; மிகையான ; மதிப்புக் குறைந்த.

**discount'**[2], *v.* கழிவு தள்ளிக்கொடு, வட்டங் கழித்துக் கொள்ளவிடு ; நடப்பு மதிப்புத் தொகையை முன்னதாகக் கொடு ; நடப்பு மதிப்புத்தொகையைப் பெறு ; உடனே கிடைக்குங் குறைந்த விலைக்கு ஒன்றை விற்பனை செய் ; புறக்கணி ; கழிவுவாணிகம் செய் ; செய்தி முதலியவற்றின் விளைவைப் பயன்படுத்திக்கொள் ; செய்தியை முன்னதாக அறிவித்துச் சுவையற்றதாக்கு.

**dis'count-brok'er**, *n.* வட்டம் பெற்றுக்கொண்டு நாணயத் தாள் அல்லது மாற்றுக் காசுமுறியைப் பணமாக மாற்றுபவர்.

**discount'enance**, *n.* முகங்கொடுத்துப் பேசாதிருத்தல், புறக்கணிப்பு ; ஒப்புக்கொள்ள மறுத்தல் ; *v.* முகம் மறு, முகத்திலடி ; ஊக்கங்கெடு, உடன்பாடின்மையைக் காட்டு ; வெட்கமடையச் செய்.

**discou'rage**, *v.* ஊக்கங்கெடு ; தன்னம்பிக்கை இழக்கச் செய் ; மனத்தளர்வுண்டாக்கு, பின்வாங்கச்செய் ; தடை செய் ; முகம் மறு.

**discour'agement**, *n.* ஊக்கங்கெடுத்தல் ; நம்பிக்கையிழக்கச் செய்தல் ; வாட்டம், சோர்வு.

**discour'aging**, *n.* மனவுறுதியிழக்கப் பண்ணுதல் ; *a.* சோர்வடையச் செய்கிற.

**dis'course**[1], *n.* பேச்சு, உரையாடல் ; பேருரை ; ஆராய்ச்சிக் கட்டுரை ; சமயவுரை, போதனையுரை ; ஆய்திறம்.

**discourse'**[2], *v.* பேசு, சொல்லாடு ; ஒரு பொருளைப்பற்றிப் பேசு ; ஒரு பொருள் குறித்து விரிவாக எழுது ; வாதாடு ; இசை முதலியவற்றை முறைப்படி இயக்கு, உருப்படுத்திக் காட்டு.

**discourt'eous**, *a.* நடைநயமில்லாத, பண்புக்குறைவான ; முரட்டுத்தனமான, அவமரியாதையான.

**discourt'esy**, *n.* அவமதிப்பு.

**disco'ver**, *v.* கண்டுபிடி ; கண்டுணர் ; வெளிப்படுத்திக் காட்டு ; திறந்துவை ; திறந்துகாண்பி ; பலரறியக் காட்டு ; வெளிப்படுத்து ; தெரியப்படுத்து.

**discov'erer**, *n.* கண்டுபிடிப்பவர் ; மறைந்திருந்த ஒன்றைக் கண்டுணர்பவர், முன் அறியப்படாததை அறிந்து காட்டுபவர்.

**disco'vert**, *a.* (சட்.) மணமாகாத, கன்னியான ; கைம் பெண்ணுயிருக்கிற.

**disco'very**, *n.* கண்டுபிடித்தல் ; கண்டுபிடிப்பு, கண்டுபிடிக் கப்பட்ட பொருள் ; வெளிப்படுத்துதல் ; தெரியப்படுத்துதல் ; தெரியாததைப்பற்றித் தெரிந்துகொள்ளுதல் ; கதை நிகழ்ச்சி சிக்கறுக்கப்படுதல் ; (தொ.) voyage of discovery, புது நிலத்தேட்டம் கருதிய கடற்பயணம்.

**discred'it**, *n.* கெட்ட பெயர், நற்பெயருக்குக் கேடு, கறை ; கெட்ட பெயருக்குக் காரணமான செய்தி ; நாணயக்கேடு, வாணிக மதிப்புக்கேடு ; நம்பிக்கைக்கேடு, ஐயப்பாடு ; *v.* நம்ப மறு ; அவநம்பிக்கை தெரிவி ; நாணயம் கெடு ; நற் பெயர் கெடு ; இகழ்ச்சி உண்டுபண்ணு.

**discred'itable**, *a.* நம்பமுடியாத ; மதிக்கத்தகாத ; மானக் கேடான, அவமதிப்புத் தருகிற.

**discreet'**, *a.* முன் விழிப்புடைய, கூரிய நோக்குடைய, கால மறிந்து செயலாற்றுகிற, வேண்டாதபோது பேசாத.

**discrep'ancy**, *n.* முன்பின் இசைவின்மை, முரண்பாடு.

**dis'crepant**, *a.* முன்னுக்குப்பின் முரணுகிற, ஒப்பிசைவற்ற.

**dis'crete**, *a.* தனியான, வேருன ; தொடர்ச்சியற்ற ; வெவ் வேறு பாகங்களைக் கொண்ட ; (மெய்.) பண்பியலான, பருப்பொருளாயிராத.

**discre'tion**, *n.* தன்விருப்புரிமை, பொருந்துமாறு அறிதல் ; உசிதம் ; (தொ.) age of discretion, years of discretion, தன்னறிவு வந்த வயது ; at discretion, மனம்போனபடி ; be at one's discretion, ஒருவர் விருப்பத்துக்கு முழுதும் உட்பட்டிரு ; surrender at discretion, தட்டுத்தடங்கலற்றுச் சரணடை.

**discret'ive**, *a.* பிரிக்கிற, வெவ்வேறுக்குகிற ; பிரிநிலையான.

**discrim'inate**, *v.* வேறுபாடு கண்டறி ; வேறுபடுத்தி உணர் ; தனிச்சிறப்புக் காண் ; மற்றவற்றிலிருந்து தேர்ந் தெடு ; கூர்ந்து வேறுபாடு உணர் ; ஓரங்காட்டு, ஒருசார்பா யிரு.

**discrim'inating**, *a.* வேறுபாடு காண்கிற ; திரித்துணர் வுடைய, கூரறிவுடைய, நுழைபுலம் வாய்ந்த ; வேறுபா டுடைய, வேறுபாடு காட்டுகிற.

**discrim'inative**, *a.* வேறுபாடு குறிக்கிற ; சிறப்பியல்பா யமைந்த ; வேறுபாடு காண்கிற.

**discrown'**, *v.* முடியிழக்கச்செய், அரச பதவியிலிருந்து விலக்கு.

**discur'sive,** *a.* மேலோட்டமான, தாவித்தாவிச் செல்கிற; தொடர்ச்சியற்ற, இங்கொன்றும் அங்கொன்றுமான; சுற்றி வளைத்துச் செல்கிற; மற்றொன்று விரிக்கிற; வாதமுறையான, ஆய்வு முறையான.

**dis'cus,** *n.* கனமான திகிரிவட்டம்; சக்கரப்படை.

**discuss',** *v.* ஆய்வுரை நிகழ்த்து; விவாதம் செய்; வாதாடு; வாதிட்டு ஆராய்; (பே-வ.) உணவு-இன்தேறல் முதலியவற்றை மகிழ்ச்சியோடு உட்கொள்.

**discu'ssion,** *n.* ஆய்வுரை, விவாதம்; கலந்தாராய்ச்சி செய்தல்; மகிழ்ச்சியோடு உணவு உட்கொள்ளுதல்; அறுவை மருத்துவத்திற் கட்டியை உடைத்தல்.

**disdain',** *n.* ஏளன இகழ்ச்சி, ஆணவப் புறக்கணிப்பு; *v.* ஏளனமாகக் கருது, வெறுத்தொதுக்கு, ஆணவத்துடன் அவமதி.

**disease',** *n.* நோய், பிணி; நோக்காட்டின் காரணம்; செடியினத்தின் நோய்; மனத்தின் சீரழிந்த நிலை; ஒழுக்கத்தின் சீர்குலைவு.

**diseased',** *a.* நோய்ப்பட்ட, பிணியினுற் பீடிக்கப்பட்ட; கோளாறுற்ற, சீரழிந்த.

**disembark',** *v.* கப்பலிலிருந்து கரையில் இறக்கு; கரையில் இறங்கு.

**disemba'rrass,** *v.* தொல்லைகளிலிருந்து விடுதலை செய், கலக்கம் நீக்கு; விடுவி; சிக்கலகற்று.

**disembod'y,** *v.* ஆவியுருவை உடலினின்றும் அகற்று; உடலினின்றும் பிரி; பருப்பொருளினின்றும் விடுவி; படையினைக் கலை.

**disembogue',** *v.* ஆறு முதலியவற்றின் வகையில் கழிமுகத்திற் சென்று பாய்; ஊற்று, பொழி; பேச்சு முதலியவற்றைக் கொட்டு; மக்கள் திரளைச் சென்று கலக்கவிடு.

**disembos'om,** *v.* நெஞ்சில் உள்ளதை வெளியிடு, மனச்சுமை இறக்கு, மறைவடக்கமான செய்திகளைத் தெரிவி.

**disembow'el,** *v.* குடலைப்பிடுங்கு, குடல் பிதுங்கும்படி கிழி; உட்பிளந்து வெளிப்படுத்து.

**disembroil',** *v.* சிக்கலிலிருந்து விடுவி, குழப்பந்தெளிவி.

**disenchant',** *v.* மயக்கமகற்று, மருள்நீக்கு.

**disencum'ber,** *v.* வில்லங்கம் நீக்கு, சுமையிறக்கு.

**disendow',** *v.* திருக்கோயில் மானியங்களைப் பறி.

**disenfran'chise,** *v.* வாக்குரிமையைப் பறி.

**disengage',** *n.* முட்டுமாற்று, வாட்போரில் எதிரியினுடைய வாளின் ஒரு பக்கத்திலிருந்து வாளின் முனையை மறுபக்கத்துக்கு மாற்றிக்கொள்ளும் முறை; *v.* பிடிதளர்த்திவிடு, பிடிப்பு அகற்று; தொடர்பு விடுவி, பற்று விடுவி; ஈடுபாடு நீக்கு; சிக்கறுத்துவிடு, கட்டறுத்துவிடு; விடுதலை செய்; கழலு, விலகிவந்துவிடு.

**disengaged',** *a.* விடுவிக்கப்பட்ட; பிடி அகற்றப்பெற்ற; ஈடுபாடுகளினின்று விடுபட்ட, வேறு ஈடுபாடற்ற, ஓய்வுடைய.

**disengage'ment,** *n.* விடுவித்தல்; விடுவிப்பு, இணைபிரிப்பு, தொடர்பு நீக்கம்; கட்டுநீக்கம், பற்றின்மை; ஈடுபாடற்ற நிலை, வில்லங்கமின்மை; செயற்கைக் கட்டுப்பாடற்ற தன்மை, இயல்பான எளிய நடைமுறை; மண உறுதிக் கலைப்பு; முட்டுமாற்று, வாட்போரில் எதிரி வாளின் மறுபக்கமாக வாள் முனையை மாற்றும் முறை; போரில் ஒரு குறிப்பிட்ட நிலையில் இரு தரப்பினரும் ஒத்துப் பின்வாங்கும் நடைமுறை; (வேதி.) சேர்மானத்திலிருந்து ஆக்கக் கூற்றின் வேறுபிரிப்பு.

**disentail',** *n.* (சட்.) மரபுரிமைக் கட்டுப்பாட்டினின்றும் விடுவித்தல்; *v.* (சட்.) மரபுரிமைக் கட்டுப்பாட்டினின்றும் விடுவி; உடைமையின்மீதுள்ள மரபுரிமைக் கட்டுப்பாட்டினை முறி.

**disentang'le,** *v.* சிக்கலகற்று; சிக்கல் நிலையினின்றும் விடுவி; குழப்பம் தெளியவை.

**disenthral', disenthrall',** *v.* அடிமைத்தனத்தினின்றும் விடுவி.

**disentomb',** *v.* கல்லறையினின்றும் வெளியே எடு; தோண்டியெடு; புத்தாய்வு செய்து கண்டுபிடி.

**disentwine',** *v.* முறுக்கவிழ், சுற்றவிழ்.

**disequilib'rium,** *n.* சமநிலையின்மை, சரிநிலையிழப்பு; நிலையில்லாமை.

**disestab'lish,** *v.* அமைப்பினைக் குலைவுசெய்; திருக்கோயில் வகையில் அரசாங்கத் தொடர்பினை இழக்கப்பண்ணு; பணித்துறைப் பதவியிலிருந்து நீக்கு.

***diseur,*** (பிர.) *n.* தனியுரைகளையும் பாடல்களையும் பாடி மக்களை மகிழ்விக்கும் பாடற்கலைஞர்; *fem. diseuse.*

**disfav'our,** *n.* தயவின்மை; வெறுப்பு, ஒவ்வாமை; வெறுக்கப்படுதல்; *v.* வெறுத்து நோக்கு; வெறுப்புடன் நடத்து; பாசம் தவிர், ஒத்துக்கொள்ள மறு; எதிர்ப்புக் காட்டு.

**disfea'ture,** *v.* உருக்குலை, விகாரப்படுத்து.

**disfig'ure,** *v.* அழகைக்கெடு, உருக்குலை, அருவருப்பாக்கு, கறைப்படுத்து.

**disfo'rest,** *v.* காடு அழி, காடு பற்றிய சட்டங்கள் செயற்படுதலினின்றும் விடுவி.

**disfran'chise,** *v.* குடிமையுரிமைகளைப் பறி; தேர்தல் தொகுதி வகையில் சட்டமன்றப் பிரதிநிதியை அனுப்பும் உரிமையை மறு; வாக்காளர் வகையில் சட்டமன்றப் பிரதிநிதியைத் தேர்ந்தனுப்பும் உரிமையைப் பறி.

**disfrock',** *v.* திருக்கோயில் அதிகாரியின் உடையையும் நிலையையும் பறி.

**disgorge',** *v.* வாந்தியெடு, கக்கு; பறித்ததைத் திருப்பிக் கொடுத்து விடு; ஆறு முதலியவற்றின் வகையில் கழிமுகத்திற்கொண்டு பாய்ச்சு.

**disgrace',** *n.* தயவிழப்பு; வெறுப்பிகழ்வு; பதவியிலிருந்து வீழ்ச்சி; இகழ், வெட்கக்கேடு; இகழ் உண்டுபண்ணும் செயல், வீழ்ச்சிதரும் செய்தி; பழிகேடர், வெறுப்புக்குரியவர்; பழிகேடு, இகழ்ச்சிக்குரியது; உருக்குலைவு, அலங்கோலம்; *v.* அன்பாதரவு நிலையிலிருந்து அகற்று; பதவியில் இறக்கு; அவமதிப்பூட்டு, இகழ்ச்சி உண்டுபண்ணு; அவக்கேடாயமை.

**disgrace'ful,** *a.* அவமானம் விளைவிக்கிற; அவமதிப்புத் தருகிற; வெட்கக்கேடான, பழிப்புக்கிடமான.

**disgrun'tled,** *a.* மனக்குறை மிகுதியுடைய, உளநிறைவில்லாத; மனச்சோர்வுடைய; வாட்டமிக்க.

**disguise',** *n.* மாறுவேடம், பொய்க்கோலம், மறைந்தொழுகுதற்காக வேற்றுரு வேற்றுடை வேறு நடைகள் கொள்ளுதல்; ஏமாற்றுவதற்காகப் பயன்படுத்தப்படும் உடை; செயற்கை ஒழுகலாறு; ஏமாற்றுதல், ஏமாற்று; *v.* மாறு வேடங்கொள், பொய்க்கோலம் கொள்; மறைந்தொழுகு; உரு மறைத்துக்காட்டு, பொய்த்தோற்றமளி, மறைத்துவை, போர்த்து, மூடு; (தொ.) blessing in disguise, நலக்கேடு போலத் தோன்றும் நலம்.

**disgust',** *n.* அருவருப்பு, கடுவெறுப்பு; குமட்டல்; சீற்றம்; *v.* வெறுப்புணர்ச்சி தூண்டு; அருவருப்படையச்செய்; சீற்றங்கொள்ளச் செய்; குமட்டுதல் உண்டாக்கு.

**disgust'ful,** *a.* வெறுப்பைத் தூண்டுகிற, அருவருப்பைத் தூண்டுகிற; வெறுப்புக்குரிய.

**dish** [1], *n.* வட்டில், தட்டம்; வள்ளம், உண்கலம்; உண்கல நிறைவளவு; தட்ட உணவு; உணவுக்கூறு, உணவுவகை; குடுவை, குழிவு; சக்கரத்தில் உட்குழிவான வடிவம்; நாற்காலிச் சாய்மானத்தில் உள்வளைவான உரு; *v.* வட்டிலிலிடு; தட்டத்தில் வைத்துப் பரிமாறு; குழிவாக்கு; குடுவையாகு; செய்திகளைக் கவர்ச்சியுடையன ஆக்கு; குதிரை வகையில் முன்காலை வளைத்து நட; அரசியலில் எதிரியைச் சூழ்ச்சியில் விஞ்சு; எதிரியின் சூழ்ச்சிமுறையையே கையாண்டு வெற்றிபெறு; (தொ.) dish up, உணவு பரிமாறு; பழைய பண்டங்களையே புதிதாகச் சமைத்துப் பரிமாறு; செய்திகளைக் கவர்ச்சியாக்கி வழங்கு.

**dish** [2], *v.* (அச்சு.) எழுத்துருக்களைப் பகிர்ந்திடு.

**dishabil'itate**, *v.* தகுதியற்றதாகச் செய் ; உரிமையகற்று ; இழிவுபடுத்து ; கறைப்படுத்து.

**dishabille'**, *n.* கவனக்குறைவான உடைச் சீர்க்குலைவு; அரை குறை உடைநிலை ; புற ஆடை அகற்றிய நிலை.

**dishabit'uate**, *v.* படிந்துவிட்ட வழக்கத்திலிருந்து விடுவி.

**disharm'onize**, *v.* பொருத்தமற்றதாக்கு; முரண்பாடாகு.

**dishar'mony**, *n.* ஒவ்வாத தன்மை ; ஒற்றுமைக்கேடு.

**disheart'en**, *v.* ஊக்கம் கெடு, சோர்வூட்டு.

**dishe'rison**, *n.* மரபுச் சொத்துரிமை இல்லாமற் செய்தல்.

**dishev'elled**, *a.* தலைமுடி வகையில் பரட்டையான, கட்டாது தாறுமாறுகத் தொங்குகிற, விரிகோலமான ; பம்பைத் தலையுடைய ; ஒழுங்கற்ற ; திரைத்த, சுருக்கங்கள் கொண்ட, திருந்தாத் தோற்றமுடைய, பண்படாத.

**dishon'est**, *a.* நாணயமற்ற, நேர்மையில்லாத, நேர்மை குறைந்த ; வஞ்சகமான, ஏமாற்றும் நாட்டமுடைய.

**dishon'our**, *n.* மானக்கேடு, அவமதிப்பு, இகழ்ச்சி ; இழி தகைமை, இகழ்ச்சிக்குரிய செய்தி ; பொருள்முறிக்குரிய மதிப்பு மறுப்பு, மாற்று முறிக்குரிய மதிப்பு மறுப்பு ; *v.* அவமதிப்புச்செய் ; இகழ் ; கற்பழி ; பணமுறிக்குப் பணம் கொடுக்க மறு, மாற்று முறிக்குப் பணம் வழங்க மறு.

**dishon'ourable**, *a.* மதிப்புக்கேடான, இகழ்ச்சிக்குரிய, நெறி கேடான, கீழ்த்தரமான, இழிந்த.

**dishorn'**, *v.* கொம்புகளை நீக்கு, கொம்புகளைக் கவர்.

**dishouse'**, *v.* வீடற்றவராக்கு.

**disillu'sion**, *n.* மருட்சி நீக்கம், தெருட்சி, தேற்றம் ; *v.* மயக்கத்திலிருந்து தெளிவி, தெருட்டு.

**disillu'sioned**, *a.* மாயையிலிருந்து மீண்ட ; மயக்கந் தெளிந்த ; அறிவுத் தெளிவுடைய ; பொது நம்பிக்கைகளிலிருந்து விடுபட்ட.

**disillu'sionize**, *v.* மயக்கத்திலிருந்து விடுவி, மருட்சி தெளிவி ; மாயையிலிருந்து மீட்பி.

**disincen'tive**, *n.* பின்வாங்கச் செய்கிற ஒன்று ; ஊக்கக் கேடு, தடை ; முயற்சி செய்வதற்குத் தடை ; *a.* பின்வாங்கச் செய்கிற, ஊக்கம் கெடுக்கிற, தடையான.

**disinclina'tion**, *n.* மனமில்லாமை, விருப்பமில்லாமை.

**disincline'**, *v.* விருப்பமில்லாமற் செய், வெறுப்பு உண்டாகும்படி தூண்டு.

**disinclined'**, *a.* மனமில்லாத, விருப்பமில்லாத, வெறுப்புள்ள.

**disincor'porate**, *v.* கூட்டவை கலை, கூட்டுக்குழு உரிமைகளில்லாதாக்கு.

**disinfect'**, *v.* தொற்றுத் தடைகாப்புச் செய் ; ஆடைகளை நோய் நுண்மங்களிலிருந்து தூய்மையாக்கு ; இடத்தின் தொற்று நீக்கித் துப்புரவாக்கு.

**disinfect'ant**, *n.* தொற்றுத்தடை மருந்து, நச்சுத்தடை காப்புப் பொருள்.

**dis'inflation**, *n.* பணப்பெருக்கத்திலிருந்து திரும்பி ஒழுங்கான நிலைக்கு வருதல்.

**disingen'uous**, *a.* இரண்டகமான, கரவடமுள்ள.

**disinher'it**, *v.* மரபுரிமை இழக்கச் செய் ; மரபுரிமை மறு.

**disin'tegrate**, *v.* ஆக்கக் கூறுகளாகப் பிரி, கூட்டழி, சிதை, கூறுகூறுக்கு ; கூட்டழிவுறு, சிதைவுறு.

**disin'tegrator**, *n.* நொறுக்கிப் பொடிசெய்யும் பொறி.

**disinter'**, *v.* புதைகுழியிலிருந்து எடு ; நிலத்திலிருந்து எடுத்து வெளிப்படுத்து ; புதைமறைவு நிலையிலிருந்து வெளிப்படுத்து.

**disin'terest**, *n.* தன்னலமற்ற தன்மை ; குறைபாடு, குறை ; அக்கறையற்ற தன்மை ; *v.* தனி நலம் அகற்று.

**disint'erested**, *a.* தன்னலமற்ற ; தனிநலச் சார்பற்ற ; அக்கறை கொள்ளாத ; ஒரு சார்பற்ற ; நடுநிலையான ; தாராள நோக்குடைய.

**disinvest'ment**, *n.* வெளிநாட்டு முதலீட்டுச் சேமங்களின் மீட்பு.

***disjec'ta mem'bra***, (ல.) *n. pl.* உடைந்த பகுதிகள், துண்டுத் துணுக்குகள்.

**disjoin'**, *v.* தனித்தனியாகப் பிரி, இணைப்பகற்று.

**disjoint'**, *v.* இணைப்பொழுங்கு குலை, இயலமைதி குலை ; இயைபு கெடு ; பொருத்தமற்றதாக்கு ; ஏறுமாறுக்கு ; இணைப்புப் பிரி, துண்டுதுண்டாக்கு.

**disjoint'ed**, *a.* இயைபற்ற ; பேச்சு வகையில் முன்பின் தொடர்பற்ற ; இனம் இனமாக ஒழுங்குபடப் பிரிக்கப்படாத, தாறுமாறுன.

**disjunc'tion**, *n.* இயைபறுத்தல் ; பிரித்தல் ; இயைபின்மை பிரிநிலை.

**disjunc'tive**, *n.* (இலக்.) பிரிநிலை இடைச்சொல் ; (அள.) பிரிநிலை இணைவாசகம் ; *a.* பிரிவுறுகிற, தனித்தனியான ; (இலக்.) பிரிநிலை இணைவான, பொருள்பிரித்துச் சொல் இணைக்கிற ; (அள.) இரண்டில் ஒன்று தேர்வுக்குரிய.

**disk**, *n.* வட்டு, வட்டத்தகடு ; பண்டைய கிரேக்க உடற் பயிற்சி வல்லுநர்களால் எறிவதற்கு வழங்கப்பட்ட திகிரி வட்டம் ; வட்டச்சில்லு ; நாணயம் போன்ற வட்டவில்லை ; கதிரவன் ஆழிவட்டம் ; திங்கள்வட்டம் ; இசைத்தட்டு ; வட்டவடிவப் பொருள் ; உடலின் தட்டையான வட்ட உறுப்பு ; தண்டெலும்புத் துண்டுகளினிடைப்பட்ட மெல் லெலும்புத்தகடு, செடியினத்தின் தட்டையான வட்டுப் பகுதி ; மலரின் விரிந்த கொள்கலம் ; கூட்டுத்தொகுதிச் செடியினத்தில் காம்பில்லாத் தலைப்பின் உட்பகுதி ; *v.* சாய்வான வட்டத் தகட்டமைவுள்ள பரம்பினால் வயலில் பரம்படி ; (தொ.) disk brake, சக்கரத்தின் வட்டின்மீது நீர்விசையால் அமுக்கப்படும் திண்டுபோன்ற அமைவுமூலம் செயலாற்றும் விசைத்தடுப்புக் கருவி.

**disk'-flor'et, disk'-flower'**, *n.* காம்பில்லாத மலர்க்கொத்திற் புழைவடிவான உள்மலர்.

**disk'-harr'ow, disk'-plough**, *n.* சாய்வான வட்டத் தகடுகளுள்ள இயந்திரக் கலப்பை.

**dislike'**, *n.* விருப்பின்மை, வெறுப்பு ; *v.* வெறு ; வெறுப்புக் கொள் ; அருவருப்புறு.

**dis'locate**, *v.* இடம்பெயர் ; இணைப்பொழுங்கு குலை, இயைபுக் கேடு உண்டுபண்ணு ; சுளுக்கு உண்டுபண்ணு ; குணக்கு ஏற்படுத்து ; இணைவறு, துண்டு துண்டாககு ; (மண்.) தொடர்பற்றதாக்கு.

**disloca'tion**, *n.* இடப்பெயர்வு ; அமைதி குலைவு ; திட்டச் சீர்க்குலைவு ; போக்குவரவுக்குழப்பம் ; நழுவியமூட்டு, இடப் பெயர்வுற்ற கணு ; (மண்.) படுகைக்கோளாறு.

**dislodg'e**, *v.* இடம் பெயரச்செய் ; குடி பெயரச்செய் ; பாதுகாப்பிடத்திலிருந்து துரத்து ; விலகிச்செல், போய்விடு.

**disloy'al**, *a.* மெய்ப்பற்றற்ற, உண்மை ஈடுபாடற்ற ; விசுவாசமற்ற; பற்றுமாறிய, அரசியல் தலைமையினிடம் பற்றுதல் நீங்கிய ; நட்பில் உறுதியில்லாத, மெய்ப்பிடிமானமில்லாத, பற்றுறுதியில் மாறுபடும் தன்மையுள்ள.

**dis'mal**, *n.* சோர்வுற்றவர் ; *a.* சோர்வுற்ற ; துயரார்ந்த ; வருத்தம் தோய்ந்த ; கிளர்ச்சியற்ற ; கிளர்ச்சியூட்டாத ; மகிழ்வற்ற ; சலிப்பூட்டுகிற ; இருளார்ந்த ; (தொ.) the dismal science, பொருளியல் நூல்.

**dis'mals**, *n. pl.* கிளர்ச்சியற்ற நிலை, துயரார்ந்த நிலை.

**disman'tle**, *v.* மேலுறை நீக்கு, போர்வை அகற்று ; கோட்டையின் அரண்காப்பழி ; கப்பலின் மேலுறுப்புக்களைப் போக்கு ; துணைக்கலங்களை அப்புறப்படுத்து ; துணையுறுப்புக்களைப் பிரித்தெடு; தட்டுமுட்டு நீக்கு; பூட்டுப்பொருத்துக் கழற்று ; அரண்களை இடித்துத் தளமட்டமாக்கு ; சின்னு பின்னமாக்கு, இடித்து வீழ்த்து.

**dismast'**, *v.* கப்பலிற் பாய்மரம் அகற்று.

**dismay**, *n.* கலக்கம், திகில், மனக்குழப்பம்; கிலி, ஊக்க மிழப்பு, அச்சத்தினால் வலிமையும் தைரியமும் இழத்தல்; *v.* கிலியூட்டு; திடுக்கிடச்செய்; மலைக்கச்செய்; ஊக்கம் கெடு.

**dismem'ber**, *v.* உறுப்புவெட்டி நீக்கு, இணைவறு; உறுப் புறுப்பாகப் பிரித்தெடு; தனித்தனி பிரி; பேரரசினைச் சிதறச் செய்; நாட்டைத் துண்டாடு.

**dismem'bered**, *a.* (கட்.) உறுப்புக்கள் துண்டிக்கப்பட்ட.

**dismiss'**, *n.* களப்பயிற்சிமுறை முடிவிற் கலைவு; *v.* நீக்கு, வேலையிலிருந்து விலக்கு; தொலைவில் அனுப்பு, அப்புறப் படுத்து; போகவிடு; விடுவி; மனத்திலிருந்து அகற்று; விரைந்து செய்துமுடி; துற, கைநெகிழவிடு; மரப்பந்தாட் டத்தில் பந்தை எல்லைநோக்கி எறி; ஆட்டக்காரனை வெளி யேற்று; (சட்.) வழக்கைத் தள்ளுபடி செய்; வழக்கு மன் றத்திலிருந்து வெளியே அனுப்பு.

**dismiss'al**, *n.* அகற்றுதல்; பதவி நீக்கம்; கலைப்பு.

**dismount'**, *n.* குதிரைமீதிருந்து இறங்குதல்; *v.* குதிரையி லிருந்து இறங்கு; குதிரையிலிருந்து இறக்கு; குதிரை மேலி ருந்து வீழ்த்து; குதிரை வகையில் சேணத்தின்மீதிருந்து தள்ளு; ஊர்தியிலிருந்து இறங்கு; ஊர்தியிலிருந்து இறக்கு; சரக்கைக் கீழே இறக்கு; பீரங்கி முதலியவற்றை இறக்கு; பூட்டவிழ்த்துக் கழற்றி வை.

**disobed'ience**, *n.* பணியாமை, கீழ்ப்படிதலின்மை; தலைமை மீறுகை, சட்டமீறுதல், ஆணைகடத்தல்.

**disobed'ient**, *a.* கீழ்ப்படிய மறுக்கின்ற, அதிகாரம் மீறு கின்ற; கீழ்ப்படியாமல் அசட்டையாயுள்ள, கீழ்ப்படிவதைச் சிறுமையெனத் தள்ளுகின்ற.

**disobe'y**, *v.* கீழ்ப்படிய மறு, அதிகாரம் மீறு; கீழ்ப்படியாமல் அசட்டைசெய், கீழ்ப்படிவதை சிறுமையெனத் தள்ளு; சட்டத்தை உதறித்தள்ளு, ஆணைமறு.

**disoblig'e**, *v.* கடப்பாட்டிலிருந்து விடுவி; விருப்பத்தை மதிக்கத் தவறு; கோரிக்கை மறு; உதவி மறு; உணர்ச்சி புண்படச்செய்.

**disoblig'ing**, *a.* உதவ மறுக்கிற; விருப்பத்தைக் கவனிப் பதில் அக்கறையில்லாத; ஒத்துணர்ந்து செயலாற்றாத; அன்பில்லாத, அன்பாதரவற்ற.

**disord'er**, *n.* சீர்க்குலைவு, ஒழுங்கற்ற நிலை, குழப்பம்; அமைதிக்கேடு, கொந்தளிப்பு; உடல்நிலைக்கோளாறு, நோய்; *v.* ஒழுங்குகெடு; அமைதிகுலை; சமநிலை கெடு; குழப்பு, கோளாறு உண்டாக்கு; தொந்தரவு செய்.

**disor'dered**, *a.* ஒழுங்கு குலைந்த; குழம்பிய; மூளைதிரிந்த, அறிவு திறம்பிய.

**disord'erly**, *n.* ஒழுங்கின்மையாக நடப்பவர்; *a.* ஒழுங்கு கேடான; குழப்பமான; முறைகெட்ட; கட்டுப்பாட்டை மீறிய; சட்டத்துக்குக் கட்டுப்படாத; தாறுமாறான தோற்ற முடைய; கொந்தளிக்கிற; கட்டுக்கடங்காத; பொதுமக்க ளுக்குத் தொந்தரவு தருகிற, பொதுநலத்துக்குக் குந்தக மான; *adv.* சட்டத்துக்குமாறாக; குழப்பமாக; (தொ.) disorderly house, விலைமகளிர் இல்லம்; சூதாடுமிடம்.

**disorg'anize**, *v.* ஒழுங்குமுறையைக் கெடு, தாறுமாறாக்கு; உயிரியல் கூட்டுச் சிதை.

**diso'rient, diso'rientate**, *n.* திருக்கோயில் முதலியவற்றை நேர்கிழக்குமுகமாயிராமல் மாற்று; திசை குழப்பு, திசை தெரியாமற் செய்.

**disown'**, *v.* தனதன்றெனக் கூறி மறு, தனதல்ல எனக் கைவிடு; ஏற்க மறு, மறுதலி; கைதுற, கைவிடு.

**dispa'rage**, *v.* இழித்துரை, பழித்துரை, இகழ்; மதிப்புத் தாழ்த்து, இழிவேற்று; கீழானவற்றுடன் ஒப்பிட்டு மதிப் புக் குறைவுபடுத்து.

**dis'parate**, *a.* மலைமடுப்போன்ற வேற்றுமையுடைய, தொடர்பு படுத்தத் தகாத; முற்றிலும் வேறான, வகைவேறுபட்ட.

**dis'parates**, *n. pl.* முற்றிலும் வேறுபட்டவர்கள்; ஒவ்வாப் பொருள்கள்.

**dispa'rity**, *n.* ஏற்றத்தாழ்வு, ஒவ்வாமை; ஒப்பிசைவின்மை, ஒட்டா வேறுபாடு.

**dispark'**, *v.* பூங்கா நிலத்தை வேறுவழியிற் பயன்படுத்து; பூங்காவியல் கெடுத்துத் திறந்த வெளியாக்கு; பூங்காவி லிருந்து அப்புறப்படுத்து.

**dispart'**, *n.* இலக்கலகு, பீரங்கியின் பின்முக முன்முக வட்டங் களின் ஆர வேறுபாடு; இலக்கலகு வரை, இலக்கலகுக்கு ஈடுசெய்யும் நோக்குவரை; *v.* வேறுவேறு திசையிற் பிரித்துச் செலுத்து; வேறுவேறு திசையிற் பிரிந்துசெல்; ஈவித்துக்கொடு; பாத்தீடு செய்; வேறாகப் பிரி; பிரிந்து செல்.

**dispass'ionate**, *a.* உணர்ச்சிக்கு இடங்கொடாத, உணர்ச்சி வசப்படாத; அமைதியான; நடுநிலை உணர்வுடைய.

**dispatch'**, *n.* விரைவாக அனுப்பிவிடுதல்; அஞ்சல் விடுக்கை, அஞ்சல் அனுப்பிவிடுதல்; விலக்குதல், விலக்கீடு; வேக மாகச் செயலாற்றுதல், விரைசெயல்; விரைவு; விரை செய்தி, தந்திச்செய்தி; ஒழிப்பு, உயிரழிப்பு; *v.* விரைந் தனுப்பு; உலகினின்று அப்புறப்படுத்து; ஒழி, உயிரகற்றி விடு; தீர்வுசெய், செயல்தீர்த்து அமை; தின்றுதீர், உண்டு தீர்த்துவிடு; வேகமாகச் செய்து முடி; விரைந்து செய லாற்று.

**dispatch'-boat**, *n.* தீர்வேடுகளைக் கொண்டுசெல்லும் கலம்.

**dispatch'-box**, *n.* முக்கியமான தாள்கள் அல்லது பத்திரங் கள் வைக்கும் பெட்டி.

**dispatch'es**, *n. pl.* அரசியல் நடவடிக்கைத் தாள்கள்; படைத்துறை நடைமுறை ஏடுகள்.

**dispatch'-rider**, *n.* விரைந்து குதிரையிலோ விசைமிதியிலோ கடிதங்களைக் கொண்டு செல்பவர்.

**dispel'**, *v.* துரத்து; சிதற வை; மறையச்செய்; சிதறு, கொஞ்சங் கொஞ்சமாக மறைந்துபோ.

**dispen'sable**, *a.* இன்றியமையத்தக்க, கட்டாயத் தேவை யில்லாத; சட்டவிதி சூளுரை முதலியவற்றின் வகையில் சிறப்புத் தறுவாய்களில் தளர்த்திவிடக்கூடிய.

**dispens'ary**, *n.* மருந்தகம்; மருத்துவ அறக்கூடம்; வழங்கு மிடம்; மருத்துவச்சாலையில் தங்காத நோயாளிகளுக்கு மருந் தளிக்கும் பகுதி; மருந்து விற்கப்படுமிடம்.

**dispensa'tion**, *n.* பாத்தீடு, பங்கிட்டு வழங்குதல்; வகைமை, வகுத்தமைவாட்சி; இறைமையின் அருள்முறை வகுப் பாட்சி, அருளாட்சி; இயற்கையின் வகைமுறை ஒழுங்கு, முறையாட்சி; தனிக்குழுவிற்குரிய இறைவனின் ஊழ்வகுப்பு; தனி மனிதனுக்குரிய ஆண்டவனின் வகுப்பீடு; குறிப்பிட்ட காலச் சமயநிலை; விலக்குரிமை அமைதி; விலக்கீடு.

**dis'pensator**, *n.* கொடுப்பவர்; பகிர்ந்தளிப்பவர்; செய லாட்சி நடத்துபவர்.

**dispense'**, *n.* செலவு; செலவினம்; வருவளம்; *v.* பங் கிட்டுக்கொடு, பரிமாறு; நீதிமுறை வழங்கு; திருக்கோயில் அருள்முறை வழங்கு; மருந்தளி; விலக்கமைவு அளி; கடப்பாடு தவிர்த்துதவு; இல்லாமற் கழி; துறந்தமைவுறு; (தொ.) dispense with, இல்லாது கழி; குறை ஏற்றமைவுறு; தேவைநிலை ஒழி; இன்றியமையா நிலைதளர்த்து; கட்டுப் பாடு தளர்த்து.

**dispen'ser**, *n.* மருந்து சேர்த்தளிப்பவர்.

**dispeo'ple**, *v.* குடியிருப்பவர்களை அகற்று, மக்களை வெளி யேற்று.

**dispers'al**, *n.* கலைத்தல்; அகலப்பரப்புதல்.

**disperse'**, *v.* சிதறச்செய்; கலையச்செய்; பரவலாக்கு; தூவு, எங்கும் பரப்பு; கலை, கலைந்துசெல்; பரவு; ஒளிக்கதிர் களைச் சிதைத்து ஆக்கக்கூறுகளாகப் பிரி.

**disper'sion**, *n.* கலைத்தல்; சிதற அடித்தல்; பரப்பீடு; கலைவு; பரவுகை; சிதறுகை; சிதறிய நிலை; ஒளிக்கதிர்ச் சிதைவு; வீக்க நீக்கம்; சவ்வூடு செல்லாக் கரைசற் பொருள்; சவ்வூடு செல்லாக் கரைசல்நிலை; குறிக்கணக்கில் உருவின் சராசரியிலிருந்து மதிப்புச் சிதறிப்போதல்.

**dispers'ive**, *a.* சிதறுகிற ; சிதறும் இயல்புடைய.

**dispir'it**, *v.* ஊக்கம் குலை ; ஊக்கம் கெடு, மறைமுகமாகத் தடைசெய்.

**dispir'ited**, *a.* வாட்டமுள்ள, சோர்ந்த, கிளர்ச்சியற்ற ; மந்தமான, வலுக்குறைந்த, அறிவுச்சோர்வுள்ள.

**dispit'eous**, *a.* இரக்கமற்ற.

**displace'**, *v.* புலம் பெயர்த்துவை ; பிறிதொன்றனுக்காக இடம்பெயர வை ; இடம் மாற்றிவை ; பதிலாக இடம் பெறுவி ; பெயர்த்து இடம்பெறு ; பதவியிலிருந்து நீக்கு ; நிலையிலிருந்து தள்ளு ; இடவமைதி குலைவுசெய் ; (தொ.) displaced person, குடியிழந்தவர் ; நாடிழந்தவர் ; நாடு விட்டுச் சிறைப்பட்டவர் ; நாடுவிட்டு ஒப்பந்தத் தொழிலாளரானவர் ; புகலற்றவர், நாடற்றவர்.

**displace'ment**, *n.* இடம் பெயர்த்தல், இடப்பெயர்ச்சி ; புடைபெயர்வு, பிறிதொன்றன் தாக்குதலால் பொருள் இடம் பெயர்ந்த அளவு ; இடக் கவர்வு, நீர்மத்தில் மூழ்கும் பொருள்கள் அல்லது கப்பல்போல அமிழ்வுடன் மிதக்கும் பொருள்கள் நீரில் இடங்கொள்ளும் அளவு ; இடக் கவர்வால் வெளியேற்றப்படும் நீர்ம எடை.

**display'**, *n.* காட்சிமுறை, காட்சியமைவு ; காட்சி வரிசை, காட்சி ஒழுங்கு ; கண்காட்சி, கவர்ச்சிமிக்க காட்சித் தொகுப்பு ; தோற்றப்பகட்டு ; அச்சகத்தில் கவனத்தைக் கவரும்படி வைக்கப்படும் எழுத்துருக்களின் வரிசையணி ; *v.* முனைப்பாகக்காட்டு, காட்சிக்குரியதாக்கு, பலர் அறியத் திறந்து காட்டு, அம்பலப்படுத்து ; பொருட்காட்சியாக வை ; பகட்டாகக்காட்டு, ஆடம்பரஞ் செய் ; வெளிப்படுத்து ; தோற்றும்படி செய், காணவிடு ; அச்சுருக்களை எளிதில் எடுக்கும்படி அடுக்குவரிசைப்படுத்தி வை.

**displease'**, *v.* மகிழ்வமைதி கெடு ; விருப்பக்கேடு உண்டு பண்ணு ; சலிப்புக் கொள்ளச்செய் ; மனக்குறை ஏற்படும்படி நட ; வெறுப்பூட்டு ; சினங்கொள்ளுவி ; நட்பமைதி கெடு, நல்லிணக்க நிலைகுலை ; (தொ.) be displeased, குறைப்படு, மனவருத்தங்கொள், வெறுப்புக்காட்டு, சினமுறு.

**displeas'ing**, *a.* வெறுக்கச் செய்கிற ; சினமூட்டுகிற.

**displea'sure**, *n.* மனக்குறை ; வெறுப்பு ; சினம் ; எரிச்சலூட்டும் செய்தி.

**displume'**, *n.* சிறகுகளை அகற்று ; சிறப்பினை அழி.

**disport'**, *n.* கேளிக்கை, பொழுதுபோக்கு ; *v.* விளையாடி மகிழ்வி, பொழுதுபோக்கில் ஈடுபடுத்து ; களிப்புடன் விளையாடு ; (தொ.) disport oneself, மகிழ்வுடன் ஈடுபடு, விளையாடி மகிழ்.

**dispos'al**, *n.* ஒழுங்கமைவு, வரிசைப்பாடு; செய்ம்முறை, செயலாட்சி; செயல் முடித்தல்; பொறுப்புத்தீர்வு, கைப்பொறுப்பு நீக்கம் ; சரக்குகளின் விற்றுமுதல் தீர்வு ; கடப்பாட்டு நிறைவேற்றம் ; பாத்தீட்டு முறைமை, பங்கிடும் வகைமுறை ; பணம் செலவழித்தல் ; பொருள் பயன்படுத்துதல் ; செலவழிக்கும் உரிமை; பயன்படுத்தும் உரிமை; சேமக் கையிருப்பு, தேவை நேரத்துக்கு உதவும்படியான கையடைவு வாய்ப்பு.

**dispose'**, *n.* ஒழுங்கமைதி ; செயலாட்சி ; நடைமுறை ஒழுங்கு ; மனநிலையமைதி ; *v.* ஒழுங்குபடுத்து ; வை, நிரல்பட வை, வரிசைப்படுத்து ; கடவுள் அல்லது ஊழ்வகையில் ஆணைசெலுத்தி அமைவுறச்செய் ; வாழ்வு வகுத்தமை ; திட்டஞ் செய், திட்டம் நிறைவேற்று ; செயல் முடிவு கட்டு, செய்யவேண்டுவனவற்றைச் செய்துமுடி ; தீர்வு செய் ; செலவு செய் ; தன் விருப்பப்படி கையாளு ; செயலாட்சி செய் ; சரக்குக் கையிருப்பை விற்பனை செய் ; தள்ளிக்கழி, ஒழி, தவிர் ; ஒழித்துக்கட்டு, கொன்றழி ; பகிர்ந்தளி ; நன்கொடை வழங்கு ; மனம் பற்றுவி, விருப்பம் கொள்ளுவி ; நாடுவி ; உள்ளம் முன்னுடியே ஒருதலைப்படச் சாய்வுறுத்து, கருத்து ஓருசார்புறுத்து ; (தொ.) dispose of, முடிபமைதி செய், என்ன செய்வது என்பதை முடிவுகட்டு ; செயல்தீர், செய்ய வேண்டுவனவற்றைச் செய்துமுடி; ஒதுக்கிவை, சேமித்துவை; நீக்கு, விலக்கு ; ஒழித்துக்கட்டு ; விற்பனை செய். செலவழி, பயன்படுத்தித் தீர்.

**disposi'tion**, *n.* ஒழுங்கமைத்தல் ; ஒழுங்கமைதி ; வகுத்தமைத்தல், பகிர்ந்தளிப்பமைதி ; சூழமைதி, சார்புநிலை ; இருப்பு; நிலை; தன்மை; போக்கு ; மனநிலை, செவ்வி ; உளச்சார்பு, மனச்சாய்வு ; திட்டநிலை, முன்னேற்பாட்டமைவு ; செயலுரிமை, செயலாட்சி ; சட்டப்படி பத்திரம் மூலமான உடைமை உரிமையளிப்பு, உடைமை உரிமைமாற்றம்.

**dispossess'**, *v.* உடைமை கவர், சொத்துப்பறி; உறைவிடத்தினின்றும் வெளியேற்று ; பற்றியிருக்கும் பேயினின்றும் விடுவி.

**dispraise'**, *n.* இகழ்ச்சி ; பழிப்பு ; குற்றச்சாட்டு, கடிந்து கூறல், கடிந்துரை ; *v.* இகழ், பழித்துரை ; குற்றஞ்சாட்டு, குறைசொல்லு ; கண்டி.

**disproof'**, *n.* தவறென்று எண்பித்தல் ; வாதமறுப்பு, மறுப்பாராய்ச்சி ; கண்டிப்பு, மறுப்பு.

**dispropor'tion**, *n.* இயைபுப் பொருந்தாமை, இயைவுக் கேடு, ஏறுமாறான தன்மை ; *v.* முரண் பாடு கொள்ளுவி.

**dispropor'tionate**, *a.* அளவொவ்வாத ; உரு ஒப்பில்லாத ; அளவு மீறிப் பெரிதான ; அளவுமீறிச் சிறிதான.

**disprov'e**, *v.* தவறென்று எண்பி ; அன்றென்று மறு.

**dis'putable**, *a.* விவாதத்துக்குரிய, எதிர்வாதத்துக்கிடமான ; கருத்து வேற்றுமையுள்ள ; ஐயத்துக்குரிய.

**disputa'tion**, *n.* வாக்குவாதம், சொற்போராட்டம், நீண்ட வாத எதிர்வாதம்.

**disputa'tious, disput'ative**, *a.* வாதாடும் இயல்புடைய ; மறுத்துப்பேசுகிற.

**dispute'**, *n.* விவாதம், வாதாடல்; ஆராய்ச்சித்துறையில் கருத்து வேறுபாடு; கருத்துவேறுபாட்டுக்குரிய நிலை, ஐயத்துக்குரிய நிலை ; வாய்ச்சண்டை, சொற்பூசல் ; *v.* வாதாடு ; விவாதம்செய் ; ஆய்வு செய் ; வாய்ச்சண்டையிடு ; போராடு ; கேள்வி எழுப்பு ; எதிர்த்துக்கேள் ; மறுத்துரை ; படையெடுப்பை எதிர்த்துத் தடு ; போட்டிக்கு நில் ; வெற்றி நாடிப் போராடு ; (தொ.) beyond dispute, without dispute, ஐயத்துக்கிடமில்லாமல், உறுதியாக.

**disqualifica'tion**, *n.* தகுதியின்மை ; தகுதிக்கேடு செய்யும் கூறு.

**disqual'ify**, *v.* தகுதி கெடு, தகுதியற்றவராக்கு ; சட்டப்படி ஏலா நிலை ஏற்படுத்து, உரிமையைத் தள்ளுபடிசெய் ; தகுதியற்றவரென அறிவி, தகுதி மறு ; தகுதியின்மை காரணமாகத் தடு.

**disqui'et**, *n.* அமைதியின்மை, மன உலைவு ; கவலை, கலக்கம் ; *a.* அமைதியற்ற ; கவலைகொண்ட ; *v.* அமைதிகெடு ; மனங்கலங்கச் செய் ; தொந்தரவுகொடு.

**disquisi'tion**, *n.* ஆய்வாராய்வு, விரிவகலமான நுண்ணுய்வு; வாத எதிர்வாதங்களை விரித்துச் சொல்லும் ஆராய்ச்சிக் கட்டுரை.

**disquisi'tional, disquisi'tionary, disquis'itive, disquis'itory**, *a.* ஆய்வு சார்ந்த ; விளக்கமான ஆராய்ச்சி இயல்புடைய.

**disrate'**, *v.* (கப்.) சிறிய அதிகாரியின் நிலைக்கு இறக்கு, படிதாழ்த்து.

**disregard'**, *n.* கவனியாதிருத்தல், புறக்கணிப்பு ; மதியாமை, அசட்டை மனப்பான்மை ; *v.* புறக்கணி ; மதியாதிரு, அசட்டைசெய் ; அற்பமாகக் கருது.

**disrel'ish**, *n.* சுவைகேடு, உவர்ப்பு ; வெறுப்பு ; *v.* உவர்ப்புக் கொள், வெறு, வெறுப்புணர்ச்சிகொள்.

**disrepair'**, *n.* பழுதுற்ற நிலை, சீர்கேடான தன்மை, பழுது பாரா மோச நிலைமை.

**disrep'utable**, *a.* இழிவான, மானக்கேடான ; ஒழுங்கற்ற ; இழிதோற்றமுடைய, மதிப்பற்ற.

**disrepute'**, *n.* இகழ்ச்சி, பழி ; பெருமையழிவு ; மானக்கேடு.

**disrespect'**, அவமதிப்பு, மதிப்புக்கேடு.

**disrespect'ful**, *a.* அவமதிப்புக் காட்டுகிற ; பணிவிணக்க மில்லாத.

**disrobe'**, *v.* உடை களை, ஆடையகற்று.

**disroot'**, *v.* வேருடன் பிடுங்கு ; மூட்டோடு பெயர், அப்புறப் படுத்து.

**disrupt'**, *v.* உடை, தகர்த்தெறி ; பிள, ஊடறு, தொடர்பு கெடு.

**disrup'tion**[1], *n.* இடிவு, தகர்வு ; பிளவு, உடைப்பு ; நைவு, கிழிவு.

**Disrup'tion**[2], *n.* ஸ்காத்லாந்து நாட்டுத் திருச்சபையில் ஏற்பட்ட பிளவு (1843).

**disrup'tive**, *a.* தகர்க்கிற, பிளவு உண்டாக்குகிற, பிரிக்கிற.

**dissatisfac'tion**, *n.* மனக்குறை, அதிருப்தி ; மனநிறை வின்மை.

**dissat'isfied**, *a.* மனக்குறைவுடைய ; திருப்தியற்ற.

**dissat'isfy**, *v.* மனநிறைவு செய்யத் தவறு ; மனக்குறை யுண்டாக்கு ; வெறுப்படையச்செய்.

**dissave'**, *v.* சேமித்ததை எடுத்துச் செலவுசெய்.

**disseat'**, *v.* இருக்கையினின்று அப்புறப்படுத்து.

**dissect'**, *v.* பிள, வெட்டு, கூறுபடுத்து, துண்டுதுண்டாக்கு; அறுத்து ஆய்வுசெய் ; கூறுகூறுக்கி நுணுகி ஆராய் ; வகுத்தாய்வுசெய்.

**dissec'tion**, *n.* கூருக்குதல் ; பகுத்தாய்வு.

**disseise'**, *v.* இறையிலி நிலத்தின் உடைமை கவர் ; உடைமை பறி ; தவருக வலிந்து கைக்கொள்.

**dsseis'in**, *n.* உடைமை பறிப்பு.

**disseize'**, *v.*=disseise.

**disseiz'in**, *n.*=disseisin.

**dissem'ble**, *v.* உருமாற்று, பொய்வேடமிடு ; கூருதடக்கு, உண்மையினை மறை ; பொய்யாக நடி ; கண்டும் காணுதது போலப் பாசாங்கு செய் ; உள்நோக்கம் வெளிப்படாமற் செயலாற்று.

**dissem'inate**, *v.* பரவலாக விதை, எங்கும் தூவு ; பரப்பு, நாற்றிசையிலும் பரவவிடு ; *a.* சிதறிய, பரவிய ; (தொ.) disseminated sclerosis, நடு நரம்புமண்டல முழுவதும் திட்டுத்திட்டாகத் தடிப்புக்காணும் நோய்வகை.

**dissen'sion**, *n.* கருத்துவேறுபாடு ; கருத்துவேறுபாட்டால் நிகழும் உட்பிளவு ; உட்பூசல்.

**dissent'**, *n.* கருத்துவேறுபாடு ; கருத்துவேறுபாட்டு அறிவிப்பு ; மறுப்பு ; சிறுபான்மையினர் தெரிவிக்கும் கண்டன எதிர்ப்பு ; நிறுவப்பட்ட சமயக்கோட்பாட்டுக்கு மாருன கருத்துவேறுபாடு ; சமய எதிர்ப்பு, சமயக்கோட்பாடு மறுத்துப் பிரிந்து செல்லுதல் ; பிரிவுற்றவர் தொகுதி ; *v.* கருத்துவேறுபடு ; மாறுபாடு தெரிவி ; கொள்கை ஏற்க மறு.

**dissent'er**, *n.* நிறுவப்பட்ட நாட்டுத் திருச்சபையை ஏற்க மறுப்பவர்.

**dissen'tient**, *n.* பெரும்பான்மையருடன் மாறுபாடுடையவர் ; பணிமுறைத் தலைவரின் கருத்தை ஏற்க மறுப்பவர் ; *a.* பெரும்பான்மையருடன் மாறுபட்ட ; அதிகார வர்க்கத்தின் கருத்துக்கு முரண்பட்ட.

**dissepi'ment**, *n.* (தாவ.) மலரின் கருவகத்திலுள்ள இடைத் தடுப்பு ; (வில.) பவளக்குழிசியின் அடிப்பகுதியை அரை குறையாகப் பிரிக்கும் இடையீடு.

**dissert'**, **diss'ertate**, *v.* விளக்கவுரையாற்று, ஆய்வுரை நிகழ்த்து, கழறு.

**disserta'tion**, *n.* விளக்கவுரை ; விளக்க ஆராய்ச்சிக்கட்டுரை, விளக்க ஆராய்ச்சி ஏடு.

**disserve'**, *v.* தீங்கிழை ; உணவுமேடையில் இட ஒழிவு செய்.

**disserv'ice**, *n.* தீங்கு, பொல்லாங்கு.

**dissev'er**, *v.* தொடர்பை அறு, பிணைப்பை நீக்கு, இரண்டாகப் பிரி.

**diss'idence**, *n.* இணக்கமின்மை, கருத்துவேறுபாடு.

**diss'ident**, *n.* நிலைபெற்ற திருச்சபையினின்று பிரிந்தவர், திருச்சபைக் கோட்பாட்டை ஏற்க ஒவ்வாதவர் ; *a.* கருத்து வேறுபடுகிற ; இணக்கமற்ற.

**dissight'**, *n.* பார்க்க அருவருப்பான பொருள்.

**dissim'ilar**, *a.* ஒத்திராத, மாறுபட்ட ; வேறுபாடுடைய.

**dissimilar'ity**, *n.* ஒத்திராமை, வேறுபாடு.

**dissim'ilate**, *v.* ஒவ்வாதிருக்கும்படி செய் ; (மொழி.) ஒலி மாறுபடச்செய்.

**dissimila'tion**, *n.* இயையாமை ; (உயி.) ஊன்மச் சிதைவு, உயிர்ச் சத்தழிவு.

**dissim'ile**, *n.* வேற்றுமையால் ஒப்பிடுதல்.

**dissimil'itude**, *n.* ஒப்பின்மை, வேற்றுமை.

**dissim'ulate**, *v.* பொய்யாக நடி, பாசாங்குசெய் ; பாவனை செய் ; மாய்மாலஞ்செய், உருட்டுப்புரட்டுச்செய் ; உண்மையை மறை.

**dissimula'tion**, *n.* பாசாங்கு, கபடநாடகம், போலி நடிப்பு ; கள்ள வேடம் ; பொய்புரட்டுத்தனம்.

**diss'ipate**, *v.* சிதற அடி, கலை ; தூள்தூளாக்கு, அழிவுசெய்; வீணுக்கு, வீண்செலவு செய், ஊக்கம் அழி, ஊற்றங்கெடு ; சிறுசெயல்களில் ஈடுபடு, கீழ்த்தர இன்பத்தில் அழுந்தித் தன்னிலை கெடு ; மறைவுறு ; அழிவுறு.

**diss'ipated**, *a.* ஒழுக்கக்கேடான ; குடிப்பழக்கமுடைய ; கூடா ஒழுக்கமுடைய.

**dissipa'tion**, *n.* சிதறுதல் ; கலைதல் ; பரவிய நிலை ; சிதறிய கவனம் ; ஒழுக்கங்கெட்ட வாழ்க்கை ; சிற்றின்பம் ; அளவு மீறிப் பணத்தை அழிவுசெய்தல் ; (தொ.) dissipation of energy, ஆற்றல் அழிவு, சக்தியைப் படிப்படியாக இழத்தல்.

**diss'ipative**, *a.* சிதறக்கூடிய ; வீணுகிற ; ஆற்றல் வீணுக அழிவதற்குரிய, சக்தி குலைக்கிற.

**disso'ciable**, *a.* பழகுந்தன்மை இல்லாத, அளவளாவற்ற ; இணங்காத, ஒவ்வாத ; இசைவுகேடான.

**disso'cial**, *a.* சமூகச்சார்பற்ற ; தோழமை கொள்ளாத ; சமூக ஒத்துணர்வற்ற.

**disso'cialize**, *v.* சமூகச் சார்பறச்செய் ; பழக விரும்பாதபடி செய், ஒத்துணர்வகற்று, கூட்டுறவற்றதாக்கு.

**disso'ciate**, *v.* தொடர்பையறு ; கூட்டுறவு பிரி ; பிரிந்து போ ; சேர்க்கையை விலக்கு ; சேர்மானங்களில் கூட்டுச் சிதைவுறு ; அகநிலையில் ஒருவர் உள்ளத்தில் இரண்டு உணர்வு மையங்கள் உண்டாகச் செய்.

**dissocia'tion**, *n.* தொடர்பறுத்தல் ; தொடர்பறுந்த நிலை ; (உள.) ஈருணர்வு மைய ஆக்கம் ; கருத்துத்தொடர்பு நீக்கம் ; குறிப்பிட்ட கருத்துக்களோ அவற்ருேடு தொடர்புகொண்ட உணர்ச்சிகளோ தன்னறிவினின்று துண்டிக்கப்படல் ; (வேதி.) சேர்மானச்சிதைவு.

**disso'ciative**, *a.* தொடர்பறும் போக்குடைய ; பிரியும் இயல்புடைய ; கட்டுச்சிதையும் தன்மைவாய்ந்த.

**diss'oluble**, *a.* கரையுமியல்புடைய ; கூட்டாக்கம் சிதைந்து தனிக்கூறுகளாகப் பிரியும் தன்மைவாய்ந்த ; பிணிப்பவிழ்க் கப்படத்தக்க.

**diss'olute**, *n.* ஒழுக்கங்கெட்டவர் ; *a.* ஒழுக்கக்கேடான, நெறிதவறின, தீயொழுக்கமுள்ள.

**diss'oluteness**, *n.* ஒழுக்கக்கேடு, இழிந்தவாழ்க்கைப்போக்கு.

**dissolu'tion**, *n.* கரைவு ; உருகுதல் ; சேர்மான ஆக்கச் சிதைவு ; பங்காண்மைக் கூட்டுப்பிரிவு ; கட்டவிழ்வு ; மண உறவு முறிப்பு ; நேசஉறவு கலைப்பு ; அவைக்கலைப்பு, பொதுத் தேர்தலுக்கு முற்பட்ட சட்டமன்றக் கலைப்பு.

**dissolv'able**, *a.* கரைக்கத்தக்க ; கரையக்கூடிய ; கரையும் இயல்புடைய.

**dissolve'**, *v.* கரையச்செய், கரை ; பனிக்கட்டி வகையில் உருகச்செய், உருகு ; நீரியலாக்கு, நீரியலாகு ; நீர்பெருக்கு, நீரில் தோய்வுறு ; கூட்டுச்சிதைவி ; சேர்மானம் பிரிவுறு ; அவையினைக்கலை ; அவைகலைவுறு ; தேய்ந்துமறை, படிப் படியாக மறை, மறைவுறு ; முடிவுறு ; தள்ளுபடி செய் ; தளர்வுறச் செய் ; தசைநார்கள் தளர்வுறவிடு.

**dissolv'ent**, *n.* கரைப்பான் ; கரைக்கும் பொருள் ; *a.* கரைக்கும் இயல்புடைய.

**diss'onance, diss'onancy**, *n.* ஒலிமுரண்பாடு ; இசைகேடு, இசைமுரண்பாடு ; முரண்பாடு, ஒவ்வாமை, பொருத்தக்கேடு.

**diss'onant**, *a.* கடுமுரண் ஒலியுடைய, இசையொவ்வாத ; மாறுபட்டுள்ள ; கரடுமுரடான ; பொருந்தாத.

**dissuade'**, *v.* எதிராக அறிவுரை கூறு ; அறிவுரைமூலம் மனம் திருப்பு ; கருத்தைமாற்று ; தூண்டிச் செயல்மாற்று ; எதிர் வாதிட்டுச் செயல்தடு ; செயல்கடிந்துகொள், செயல் ஒப்புதலின்மை தெரிவி.

**dissua'sive**, *n.* மனத்தை மாற்றுவது ; *a.* மனத்தை மாற்றத் தக்க ; அறிவுரை மூலம் தடை செய்யத்தக்க.

**dissyll'able**, *n.*=disyllable.

**dissymmet'rical**, *a.* முற்றொப்பிசைவற்ற, எதிர்முக ஒப் பிசைவுடைய.

**dissymm'etry**, *n.* முற்றொப்பிசைவின்மை, எதிர்முக ஒப்பி சைவு, மெய்பொருந்தவைத்தால் பொருந்தாத இருபுறச் சீர் சமநிலை.

**dis'taff**, *n.* நூற்புக்கழி ; நூற்புக்கதிர் ; பெண்டிர்பணி ; (தொ.) distaff side, குடும்பத்தின் பெண் கிளைவழி.

**dis'tal**, *a.* மையத்தினின்று மிகவும் விலகிய ; இணைவாயி லிருந்து நெடிதகன்ற ; நெடிதுவிலகிய ; புறக்கோடியான ; முனைகோடியான.

**dis'tance**, *n.* தொலைவு ; தொலைவிடம் ; தொலைக்காட்சி ; ஓவியத்தில் தொலைக்காட்சிப்பகுதி ; தொலைவளவு, தூரம் ; இடைத்தொலைவு, இடைவெளித்தொலைவின் அளவு ; நீண்ட கால அளவு ; பழகாது ஒதுங்கிநடக்கும் பண்பு ; பந்தய இடைப்போட்டிகளில் மேல்நடக்கும் பந்தயத்திற் கலப்பதற்கு உரிமையளிக்கும் எல்லையணுகு தொலைவளவு ; *v.* தூரத்தில் வை ; காட்சித்தொலைவுணர்வு உண்டுபண்ணு ; நெடுந் தொலை பிந்தவை, விஞ்சி முன்னேறு ; (தொ.) keep one at a distance, நெருங்கிப் பழகவிடாமல் இரு ; keep one's dis- tance, நெருங்கிப் பழகாது விலகியிரு, ஒதுங்கியிரு.

**dis'tanceless**, *a.* மூடுபனிச்சூழலில் தூரப் பார்வைக்கு இட மில்லாத ; படவகையில் தூர அளவுகாட்டும் வகைமுறை இல்லாத.

**dis'tance-sig'nal**, *n.* தொலைவிலிருந்தே காட்டப்படும் அடையாள அறிகுறி.

**dis'tant**, *a.* தொலைவான ; தூரத்திலுள்ள ; தொலைவள வுடைய ; தூரமிகுதியான ; தொலையளவு மிகுதியுடைய ; இடைத்தொலைவு மிகுதியுடைய ; நெடுங்காலத்துக்கு முற் பட்ட ; நெடுங்காலங் கடந்த ; மிகுதியான கால இடை யீடுடைய ; உறவு வகையில் நெருக்கமில்லாத ; நெருங்கிய ஒப்புமையற்ற ; ஒப்புமை குறைந்த ; உறவாடாது ஒதுங்கி நடக்கிற, நெருங்கிப்பழகாது விலகியிருக்கிற.

**distaste'**, *n.* வெறுப்பு ; விருப்பமின்மை ; சுவையின்மை.

**distaste'ful**, *a.* சுவையற்ற ; விருப்பமற்ற ; வெறுப்பான.

**distem'per** [1], *n.* உடற்கேடு ; மனக்கோளாறு ; நோய்நிலை ; நாய் நோய் ; விலங்கின நோய்வகை ; சிடுசிடுப்பு ; அரசி யற் குழப்பநிலை ; *v.* உடல்நலங்கெடு ; மனக்கோளாறு உண்டுபண்ணு ; மூளை நலங்கெடு.

**distem'per** [2], *n.* உட்சுவர்களிற் சுண்ணப்பரப்பின்மீதும் நீற் றுப்பரப்பின் மீதும் முட்டைக்கருவுடன் கஞ்சிப்பசை கலந்து தீட்டப்படும் வண்ண ஓவியமுறை, பற்றோவியமுறை ; *v.* பற்றோவிய முறையில் வண்ண ஓவியந்தீட்டு.

**distem'pered**, *a.* குழப்பமான ; தாறுமாறான ; மட்டமைதி யற்ற ; சிடுசிடுப்பு வாய்ந்த.

**distend'**, *v.* பரப்பி விரிவுறச்செய், உள்ளிருந்து பருக்கச் செய் ; நீட்டு, பரப்பு ; விரிவுறு, பரப்புறு, வீங்கு.

**distensibil'ity**, *n.* விரியும் இயல்பு, நீளும் இயல்பு.

**disten'sible**, *a.* நீட்டக்கூடிய ; விரிக்கக்கூடிய.

**disten'sile**, *a.* நீட்டக்கூடிய ; விரிக்கக்கூடிய ; பருக்கு மியல்பினைத் தூண்டக்கூடிய.

**disten'sion, disten'tion**, *n.* விரிவுறுத்தல் ; விரித்தல் ; விரிதல் ; விரிவு, பெரிதாகும் நிலை ; விரியுமியல்பு ; விரி வுற்ற நிலை.

**dis'tich**, *n.* ஈரடித்தொகுதி ; ஈரடிச்செய்யுள், குறளடிப்பா ; *pl* distichs ; *a.* (தாவ.) இரு வரிசைகள் கொண்ட, இரு வரிசையாகவுள்ள,

**distil'**, *v.* வடித்திறக்கு, ஆவியாக்கிக் குளிரவைத்து நீர்ம மாகத் திரட்டியெடு ; சாராய வகைகளை வடித்து உண்டு பண்ணு ; வடிகலத்தைக் கையாளு ; வடித்திறக்கப் பெறு ; சூடேறி ஆவியாகுமியல்புடைய கலவைக்கூற்றினை ஆவியாகப் போகவிடு ; சொட்டுச் சொட்டாக விழு ; துளி துளியாக வெளியிடு ; துளியாகக் கசிந்து வடி ; மெல்ல வழிந்தோடு ; திவலைகள் கசிந்து பரவவிடு.

**dis'tillate**, *n.* வடித்திறக்கப்பட்டபொருள், வடிநீர்மம்.

**distilla'tion**, *n.* வடித்திறக்கல் ; வாலைவடித்தல் ; சாராய வகை இறக்குதல்.

**distill'atory**, *a.* வாலைவடிப்பதற்கான ; சாராய வடிப்புக் குரிய.

**distill'er**, *n.* வடித்திறக்குபவர் ; சாராயவகை வடிப்பவர்.

**distill'ery**, *n.* வடிசாலை, வடிமனை, சாராயம் வடிக்கு மிடம்.

**distinct'**, *a.* தெளிவாகத் தெரிகிற, எளிதில் விளங்குகிற, நன்கு வரையறைப்பட்ட ; தனிவேறுபட்ட, தனித்த, வேறான, மாறுபட்ட பண்புகளையுடைய ; மற்றொன்றாகக் கருதப்பட இடமற்ற, மயக்கத்துக்கு இடமற்ற, உறுதிப்பாடான.

**distinc'tion**, *n.* தனித்தன்மை, வேறுபாட்டுப்பண்பு ; தனிச் சிறப்பியல்பு, தனிவேறுபாடு ; தனிச்சிறப்பு, தனிமேம்பாடு, தனிமதிப்பு ; முனைப்பான தனிப்பண்புக்கூறு ; தனிச்சிறப்புக் குறி ; மதிப்புச் சின்னம் ; தனிச்சிறப்புப்பெயர் ; சிறப்புப் பட்டம் ; வேறுபாடு, வேறுபட்டநிலை ; பிரிவு ; பண்புமாறு பாடு ; தனிச்சலுகை, தனி ஒருச்சார்பு.

**distinct'ive**, *a.* வேறுபாட்டைத் தெரிவிக்கிற, தனிமாதிரி யான ; குறிப்பிடத்தக்க.

*distingue*, (பிர.) *a.* மேம்பட்ட தோற்றம்வாய்ந்த, சிறப்புக் குரிய கூறுடைய, மேதக்க நடையுடைய.

**disting'uish**, *v.* வேறுபடுத்திக் கண்டறி ; கேட்டு அடை யாளம் கண்டுபிடி ; அடையாளம் உணர் ; வகை வேறுபாடு காண் ; வேறுபாடு காட்டு, வேறுபடுத்திக்காட்டு ; வகை வேறுபாடாயமை, பண்பு வேற்றுமையாகு ; தனிக் குறி யாகத் திகழ், சிறப்படையாளமாக விளங்கு ; மேம்படுத்திக் காட்டு, சிறப்புக்குரியவராக்கிக்கொள்.

**disting'uishable**, *a.* வேறு பிரித்தறியக்கூடிய.

**disting'uished**, *a.* புகழ்பெற்ற ; சிறந்த ; மேன்மைவாய்ந்த.

**disting'uishing**, *a.* தனிப்பட்ட ; வழக்கத்திற்குமாறான ; தனிச்சிறப்புடைய.

**distort'**, *v.* உருவேறுபடுத்து, உருச்சிதை ; வடிவு அலங் கோலமாக்கு ; வளைமுகக்கண்ணாடி போன்றவற்றின் வகை யில் தோற்றத்தை அருவருப்பானதாக்கு ; கருத்தினைப் புரட்டு, செய்திகளைத் திரித்துக்கூறு ; நோக்க வகையில் மாறுாட்டம் செய் ; மெய்ம்மை திரித்துப் புரளிசெய் ; தவறான வழியில் செலுத்து.

**distor'tion**, *n.* உருத்திரிவு, வடிவச்சிதைவு ; குலைவு, கோட் டம், கோணல் ; நெறிபிறழ்வு ; வானொலியிலும் தந்தியில் லாக் கம்பியிலும் அலைக்கோட்டங்களால் ஏற்படும் ஒலிக் கோளாறு.

distort'ive, *a.* உருத்திரிபை உண்டாக்குகிற ; கோணலாக்குகிற ; தவறான வழியிற் செலுத்துகிற.

distract', *v.* கவனத்தைத் திருப்பு ; வெவ்வேறு திசையில் எண்ணத்தை மாற்று ; உணர்வு குழப்பு, கலக்கமுண்டாக்கு ; தொல்லைகொடு, நச்சரிப்புச் செய், இடைவிடாத தொந்தரவு உண்டுபண்ணு ; பைத்தியமாக்கு.

distrac'tion, *n.* கவனமாற்றம் ; கவனமாற்றத்துக்குரிய செய்தி ; கருத்துமாற்றம், கவலைமாற்றம், ஒருதிசைக் கருத்துச் செறிவின் உளைவகற்றும் பிறிதுபோக்கு ; அழிவுப் பொழுதுபோக்கு ; இடைத்தடங்கல் ; மனஉலைவு, கருத்தொருமைக்கேடு ; மனக்கலக்கம், சித்தக் குழப்பம் ; மூளைக் குழப்பம், பைத்தியம்.

distract'ive, *a.* குழப்பமுண்டாக்குகிற ; தடுமாற்றம் விளைவிக்கிற ; திகைப்பூட்டுகிற.

distrain', *v.* கைப்பற்று, வாடகை அல்லது கடனுக்காக உடைமைகளைப் பறி.

distraint', *n.* கடனுக்காகப் பற்றீடு ; வாடகைக்காகக் கைப்பற்றுதல்.

*distrait*, (பிர.) *a.* கவனம் பிறிதான, தன்னை மறந்த நிலையுடைய.

distress', *n.* கடுந்துன்பம், வேதனை, வருத்தம் ; இக்கட்டு, இன்னல், வருத்தந்தரும் செய்தி ; இடையூறு, இடுக்கண், இடர்ப்பாடு ; பேரிழப்பு; அவலநிலை, கையாறு, அருவாய்ப்புக் கேடு ; நிரப்பு, கொடுவறுமை ; சட்டப்படியான உடைமைக் கைப்பற்றீடு; ஊக்கஅழிவு, கடுந்தளர்வு ; *v.* வேதனை கொடு; துன்புறுத்து ; கடுந்துயரளி ; இடுக்கட்படுத்து ; பெருந் தொல்லை உண்டுபண்ணு ; சட்டப்படி உடைமை கைப்பற்று, நடவடிக்கை எடு.

distressed', *a.* இடுக்கட்பட்ட, இடர்ப்பட்ட, துயருக்காளான; (தொ.) distressed area, பொது மீறிய அளவில் மிகக் கொடுமையான தொழிலில்லாமைக்கு உட்பட்ட பகுதி.

distrib'utable, *a.* பங்கிட்டளிக்கத்தக்க.

distrib'utary, *n.* ஆற்றின் பிரிகிளை, செல்கிளை ; பிரிநிலைத் தொகுதியின் கூறு, பிரிகூறு ; *a.* பிரித்துக்கொடுக்கிற, பிரிந்து பரவுகிற.

distrib'ute, *v.* பகிர்ந்துகொடு ; பிரித்துப்பரப்பு, பல திசைப்படுத்து, சிதறடி ; கூறுகூறாக்கு, வகைப்படுத்து, பிரித்து ஒழுங்குபட வை ; அச்சில் எழுத்துருக்களைப் பிரித்துத் தனித்தனி அறைகளிற் போடு, சிதைத்துப் பிரித்திடு ; (அள.) சுட்டுப்பொருளின் எல்லை முழுவதையும் தனித்தனிக் கூறு கூறாகச் சென்று பரவிக் குறிக்கும்படி சொல்லை வழங்கு.

distribu'tion, *n.* பாத்திடு, எங்கும் பரப்பி வழங்குதல் ; பங்கீடு, பகிர்ந்தளித்தல் ; பரப்பீடு, பரவலாகச் சிதறுதல் ; வகுத்தமைவு, வகைப்படுத்தி ஒழுங்கீடு செய்தல் ; பிரிப்பீடு, அச்சில் எழுத்துருக்களைச் சிதைத்துத் தனித்தனி அறைகளிற் பிரித்திடுதல் ; பரவற் பயனீடு, பயனீட்டாளர்களில் எல்லாத் தனிமனிதரும் வகையினரும் ஒருங்கே பங்கு கொள்ளும்படி செய்பொருள்களைப் பரப்பி வழங்கும் முறைமை ; சொல்லின் பரப்புறழ்வு வழக்கு; (அள.) சுட்டும் எல்லை முழுதும் பொருள் சென்று கூறுகூறாய்த் தனித்தனி பரவி உறழும் முறையிற் சொல்லை வழங்குதல் ; (தொ.) geographical distribution, விலங்கு செடி முதலியவற்றின் வகையில் நில உலகப் பரப்பெங்கும் சிதறிக்கிடக்கும் முறைமை.

distrib'utive, *n.* (இலக்.) தனியுறழ்வுச்சொல் ; குழுமுழுதும் பரவித் தனித்தனி குறிக்கிற சொல் ; *a.* பங்கிடுகிற ; பரவிப் பிரித்துக் காட்டுகிற ; தனித்தனி பரவிச் செல்கிற ; குழுமுழுதும் பரவித் தனித்தனி குறிக்கிற.

dis'trict, *n.* மாவட்டம், ஜில்லா ; கோட்டம், நாட்டின் அரசியற் பிரிவு, மாகாணத்தின் பகுதி ; முறைமன்றத் துறைக்காகவோ கல்வித்துறைக்காகவோ பிற ஆட்சித் துறைகளுக்காகவோ வகுத்தமைக்கப்பட்ட நிலப்பிரிவு ; வட்டாரம், நகர்ப்புற வட்டகை ; தனித்திருக்கோயிலும் திருச்சபைப் பணி முதல்வரும் கொண்ட திருச்சபை வட்டகை ; திட்ட நடவடிக்கைகளுக்காக ஒதுக்கிவிடப்பட்ட எல்லைப் பிரிவு ; பொது இயல்புகளையுடைய திணைவட்டாரம் ; *v.* மாவட்டங்களாகப் பிரி ; (தொ.) district council, மாவட்டக்கழகம், மந்தணம், கோட்டமன்றம்.

distrust', *n.* அவநம்பிக்கை ; ஐயம், ஐயப்பாடு ; *v.* அவநம்பிக்கை கொள் ; நம்பிக்கைகொள்ளத் தயங்கு ; ஐயுறவு கொள்.

distrust'ful, *a.* அவநம்பிக்கையுடைய ; ஐயப்பாடு செறிந்த; ஐயுறுகிற ; ஐயுறும் இயல்புடைய.

disturb', *n.* கலைவு ; *v.* அமைதிகுலை, உலைவுசெய் ; இடையிட்டுத் தடு ; தொல்லைகொடு ; குழப்பு, கலக்கு ; கிளர்ச்சி செய்.

disturb'ance, *n.* குழப்பம், கலக்கம், தடுமாற்றம் ; கொந்தளிப்பு, கிளர்ச்சி ; அமளி, ஆரவாரம் ; தொடர்பு கலைவு, இடைத்தடை, இடையீடு ; அமைதிகுலைவு, உலைவு ; பூசல், சச்சரவு ; தொந்தரவு, தொல்லை ; உடைமை உரிமையில் தலையீடு.

disturb'ant, *n.* அமைதிகுலைப்பவர் ; அமைதி குலைப்பது ; *a.* அமைதி குலைக்கிற.

disun'ion, *n.* ஒற்றுமையின்மை ; பிரிவு ; பொருந்தாமை, இசைவுக்கேடு ; வேற்றுமை.

disunite', *v.* கூட்டிலிருந்து பிரி ; கூட்டுப்பிரி, பிரிவுசெய்; ஒற்றுமை கெடு ; பிரிவுறு, பிளவுறு.

disu'nity, *n.* ஒற்றுமைக்கேடு, ஒற்றுமையின்மை.

disuse', *n.* வழக்கொழிவு ; வழங்காமை, வழக்காறின்மை ; பயனொழிவு, பயிலாமை ; *v.* வழங்காதொழி, வழக்கொழி.

disutil'ity, *n.* இடையூறு, தடங்கல், வாக்குப்போக்குக் கேடு.

disyll'able, *n.* ஈரசைச்சொல் ; ஈரசைச்சீர்.

ditch, *n.* குழி ; பள்ளம் ; அகழ் ; நீர்வடிகால் ; பந்தாடுஞ் சமநிலத்தின் கரை ; *v.* குழி அகழ், பள்ளம் தோண்டு ; அகழியைச் சீர்செய் ; வடிகாலைத் தூய்மையாக்கு ; சூழ அகழிடு ; வடிகாலிட்டு நீர் வடியவை ; வண்டி முதலியவற்றின் வகையில் பள்ளத்தில் மாட்டிக் கொள்ளும்படிச் செய்.

ditch'er, *n.* குழிதோண்டுபவர் ; குழி தோண்டும் கருவி ; பள்ளத்தைத் தூய்மை செய்பவர் ; பள்ளத்தைத் தூய்மை செய்யும் இயந்திரம் ; அகழி செப்பனிடுபவர் ; அகழி செப்பனிடும் பொறி.

ditch'-water, *n.* சாக்கடைநீர் ; கட்டுக்கரை நீர்.

di'theism, *n.* கடவுளர் இருமைக் கோட்பாடு; சமய இருமைக் கோட்பாடு, நன்மை தீமையாற்றல்கள் இரு வேறாகக் கொள்ளும் கோட்பாடு.

dith'er, *n.* நடுங்குநிலை, நடுக்கம் ; நடுக்குவாத வலிப்பு ; உணர்ச்சியார்வம், பரபரப்பு ; துடிதுடிப்பு, மனக் கலக்கம் ; *v.* நடுங்கு, துடிதுடி ; குழப்பமடை, தயங்கு, தடுமாறு.

dith'yramb, *n.* பாக்கஸ் (Bacchus) என்ற கிரேக்கக் கடவுளுக்குரிய துதிப்பாடல் ; கொந்தளிக்கும் களியாட்டப் பாடல் ; ஆரவாரப் புகழ்ப்பாசுரம், தேவபாணி வகை.

dithyram'bic, *n.* ஆரவாரப் புகழ்ப்பாசுரம் ; *a.* பாக்கஸ் (Bacchus) என்ற கடவுளின் பெருமையினைக் கூறும் கிரேக்க துதிப் பாடலைப் போன்ற ; கழிமகிழ்வுடைய ; துதிப்பாடலுக்குரிய ; இசை ஆரவாரமான.

ditt'any, *n.* நெடி பரப்பும் இலைகளுடன் ஆவி நெய் அளிக்கும் பூண்டுவகை, நாரத்தை இனச் செடிவகை.

ditt'o, *n.* (சு. வ: do.) மேற்படி, மேலே கூறப்பட்ட அதே செய்தி ; முன் குறிப்பிட்ட அதேசொல் ; எதிர்மடியான பொருள், மறுபடிவம் ; *a.* மேற்படியான, மேற்குறித்த, முன் குறிப்பிட்ட, முன் குறிப்பிட்டதே போன்ற ; ஒரே வகைப்பட்ட, ஒரே மாதிரியான ; *v.* இருமடியாக்கு, படி இரட்டுறுத்து ; *adv.* முன் போலவே, மேலே கூறியபடியே ; அப்படியே, அதுவே.

**dittog'raphy**, *n.* எழுத்துப்படியெடுக்கும்போது தற்செயலாக ஏற்படும் பிழைபட்ட இரட்டுறு பகர்ப்பு.

**ditt'os**, *n.* ditto என்பதன் பன்மை.

**ditt'y**, *n.* பாட்டு, சிறுபாடல்; *v.* சொற்கள் இணைத்துப் பாடலமை.

**ditt'y-bag, ditt'y-box**, *n.* கடலோடிகளும் மீன் படவர்களும் துண்டுத்துணுக்குப் பொருள்கள் வைத்துக்கொள்ளும் பை.

**diure'sis**, *n.* சிறுநீர்ப்போக்கு; மிகு சிறுநீர்ப்போக்குக் கோளாறு.

**diuret'ic**, *n.* சிறுநீர்க் கழிவினைத் தூண்டும் மருந்துச்சரக்கு; *a.* சிறுநீர்க் கழிவினைத் தூண்டுகிற.

**diurn'al**, *n.* நாட்குறிப்பேடு; நாள் வழிபாட்டு வேளைக் குறிப்பு; *a.* நாண்முறையான; நாளுக்குரிய, நாளினுள் செய்யப்படுகிற; (வான்.) ஒரு நாளளவில் இயங்குகிற, நாளியக்கமுடைய; பகலுக்குரிய.

**div**, *n.* பாரசீகப் புராணகதை மரபுக்குரிய கெட்ட ஆவி, பேய்த்தெய்வம்.

**di'va**, *n.* பேர் சான்ற பாடகி; இசை நாடகத்தில் தலைமை நடிகை.

**di'vagate**, *v.* சுற்றித்திரி, வழிவிலகி அலை.

**div'alent**, *n.* ஈரிணைதிற அணு, ஈரிணைதிறத் தனிமம், இரண்டு நீரக அணுக்களுடனோ அவற்றிற்குச் சரியாக இரு திறங்களுடனோ இணையும் ஆற்றலுடைய தனிமம் அல்லது அணு; இணைதிறமுடைய இருதிற உருப்படிவங்களையுடைய தனிமம்; *a.* ஈரிணை திறமுடைய; இரண்டு நீரக அணுக்களுடனே இணையும் ஆற்றலுடைய; இணைதிறமுடைய இருதிற உருவப்படிவங்கள் வாய்ந்த.

**divan'**, (பெர்.) *n.* உயர் அரசியல்மன்றம்; துருக்கிய அரசியல் மன்றம்; நீதிமன்றம்; பேரவை; மெத்தை வைத்த நீள் இருக்கை உடைய கொலுமண்டபம்; மெத்தை வைத்த நீண்ட இருக்கை; சுவரோரச் சாய்விருக்கை; படுக்கையாகவும் இருக்கையாகவும் பயன்படும் பூந்தவிசிருக்கை; பாடல் திரட்டேடு; புகை குடிக்கும் அறை; புகைச் சுருள் விற்பனைக் கடை; கீழ்த்திசை முதலமைச்சர், கீழ்நாட்டுக் கருவூல அமைச்சர்.

**diva'ricate**, *a.* பெரிதும் விலகிச் செல்கிற, கவர்வழியான; *v.* பிரிந்துசெல், கிளைத்துச்செல், கவர்ப்படு; விலகிச் செல், வேறுபட்டுச் செல்.

**dive**, *n.* முக்குளிப்பு, நீரில் தலைகீழாகப் பாய்ந்து மூழ்குதல்; தலைகீழ்ப்பாய்வு, கழுகுப்பாய்ச்சல்; தலைகீழ் வீழ்ச்சி, தலைகீழ்ச்சரிவு; புகலிடம்; சுருங்கை, அடிநிலப்பாதை; *v.* முக்குளி, நீரில் தலைகீழாகப் பாய்; மூழ்கு; விமான வகையில் காற்றுவெளியில் தலைகுப்புறப் பாய்ந்திறங்கு; நீர்மூழ்கி வகையில் நீரில் அமிழ்; முழுகி மறை, அமிழ்ந்து மறைவுறு; திடீரெனக் காட்சியிலிருந்து மறை; நீரில் கையினை அமுக்கு; பையினுள் கை நுழையவிடு; ஆழ்ந்துசெல்; காடு முதலிய வற்றின் பரப்பில் உள் ஊடுருவிச்செல்; ஆழ்ந்தாராய்; முழுதும் தோய்ந்து ஈடுபடு.

**dive'-bomber**, *n.* வெடிகுண்டு வீசும் கழுகுப்பாய்வு விமானம், தலைகீழாகச் செங்குத்துப் பாய்ச்சலின்போதே குண்டு விடுத்து மேலெழும் தாக்குதல் வானூர்தி.

**div'er**, *n.* முக்குளிப்பவர்; நீரில் முக்குளிக்கும் ஆற்றல் உடையவர்; ஆழ்கடற் குளிப்பாளர்; முத்துக்குளிப்பவர்; நீர்மூழ்கிக் கூண்டினுள்ளிருந்து வேலை செய்யும் ஆழ்கடற் பணியாளர்; நீர்மூழ்கிக் கவசமணிந்து வேலை செய்யும் கடலடிப் பணியாளர்; மூழ்கிய கப்பல்களைச் சென்றுய்பவர்; நீர்மூழ்கிப் பறவை.

**diverge'**, *v.* விலகிச்செல்; இருவேறுபட்டுச் செல்; பிரிந்து செல்; வெவ்வேறு திசைகளில் இயங்கு; வழிதிறம்பு; பொது நிலையில் வேறுபடு; தம்முள் வேற்றுமைப்படு; திசை திருப்பு.

**div'ers**, *a.* சில்லறைப்பட்ட; சிலபல; எவையோ சில.

**diverse'**, *a.* தம்முள் மாறுபட்ட தன்மையுடைய; பல்வேறு வகைப்பட்ட.

**diverse'ly**, *adv.* பல்வேறு வழிகளில்; வெவ்வேருன வகையில்.

**divers'ify**, *v.* பல்வகைப்படுத்து; ஒன்றுக்கொன்று மாறுபட்ட தன்மையுடையதாக்கு.

**diver'sion**, *n.* வேறுவழிச் செலுத்துதல்; கருத்துத் திருப்பம்; மாற்றுக்கவர்ச்சி; பொழுதுபோக்கு, விளையாட்டு, வேடிக்கை; போக்குமாற்றம், திசைமாற்றம்; கவனத்தை வேறுவழியில் திருப்புதல்; போக்குக் காட்டி ஏய்ப்பு, மாருட்டச் சூழ்ச்சி; பாதை பழுதுபட்ட இடத்தில் சுற்றிச் செல்லும் வழி, மாற்று வளை நெறி.

**diver'sionist**, *n.* ஏற்றுக்கொள்ளப்பட்ட நேர்படிக் கோட்பாட்டிலிருந்து மாறுபடும் பொதுவுடைமையாளர்.

**divers'ity**, *n.* ஒத்தியையாமை, மாறுபாடு, வேற்றுமை; பல்வகைமை.

**divert'**, *v.* வேறுவழியிற் செலுத்து; போக்குமாற்று, நெறிமாற்று, திசைமாற்று; கவனத்தை வேறு வழியில் திருப்பு; கருத்தாழ்வு தளர்த்து, மனச்செறிவு மாற்று, போக்குக் காட்டு, பராக்குக் காட்டு; பொழுதுபோக்காக மகிழச்செய்.

***divertissement***, (பிர.) *n.* நாடகக் காட்சிகளுக்கிடையே காட்டப்படும் சிறிய குழுநடனக்காட்சி.

**Div'es**, *n.* பெருஞ்செல்வர், பணக்காரர்; பகட்டு வாழ்வு வாழ்பவர்.

**di'vest**, *v.* ஆடையகற்று; களை, உரி, நீக்கு.

**divide'**[1], *n.* நீர்ப்படுகை; இடைவரம்பு.

**divide'**[2], *v.* பிரிவுறு; பிரிவினைக்கு இடங்கொடு; பிளவுறு; கூறுபடு; வகைப்படு; வேறுபடு; பகுதிகளாகப் பிரி; பிரித்து வரம்புகோலு; பகு, இருபாகமாகப் பிள; கூறுபடுத்து; வகைப்படுத்து; வகுத்துணர், வகைப்படுத்திக் காண்; துண்டுபடுத்து; வேறுபடுத்து; வேறுபடுத்திக் காட்டு; முரண்பாடு உண்டுபண்ணு; பங்கிடு; பங்கீடு செய்; உடன்பங்கு கொள்; எண்வகையில் ஈவுசெய்; தலை எண்ணைக் கீழ் எண்ணுல் வகு; மாமன்ற வாக்கெடுப்பு வகையிற் பிரிவீடுசெய்; வாக்கெடுப்பிற் பிரிவுறு; (இசை.) கூறுபாடு காட்டிப் பகட்டாகப் பாடு.

**div'idend**, *n.* வகுக்கப்படும் எண்; தவணைப்பங்கு; வட்டியாக வரும் பகுதி; ஆதாயப் பங்கு; நொடித்த செல்வ நிலையத்திலிருந்து கடன்வழங்கியவர்கள் பெறும் பங்கு; ஆதாயத்தில் ஒருவர்க்குரிய பங்குவீதம்; (தொ.) declare a dividend, பங்குதாரர்களுக்கு வணிக நிறுவனம் அளிக்கவிருக்கும் நூற்றுவீதத்தை அறிவி.

**div'idend-warr'ant**, *n.* ஆதாயப்பங்கு பெறுதற்குரிய உரிமைச் சான்றுச்சீட்டு.

**divid'er**, *n.* பிரிப்பவர்; பிரிப்பது; பங்கீட்டாளர்; வகுப்பது; கணக்கியலிலும் தச்சிலும் வழங்கும் கவைமுள் கருவி, கவராயம்.

**div'i-div'i**, *n.* சுமிக்கிக்காய், தோல்பதனிடுவதற்கும் சாயமிடுவதற்கும் பயன்படும் கொன்றைக் குடும்பச்செடியின் வளைந்த காய்நெற்று; சுமிக்கி மரம்.

**divid'ual**, *a.* பகுக்கக்கூடிய; பிரிக்கக்கூடிய.

**divina'tion**, *n.* குறிகூறல்; முன்னுணர்தல்; மறைவுணர்தல்; வருவது கூறுதல்; நல்லுாகம்.

**div'inator**, *n.* நிமித்திகன், பூகி, குறிகூறுபவன்; வருவதுரைப்போன்.

**divine'**, *n.* இறைமையியல் வல்லுநர்; சமயத்துறை அறிஞர்; *a.* திப்பியமான; தெய்வத்தன்மை வாய்ந்த; கடவுளிடமிருந்து வருகிற; தெய்வத்துக்குரிய; புனிதமான; உயர்வு சிறந்த; *v.* தெய்வங்கூறு; தெய்விக ஆற்றலால் முன்கூட்டி உணர்; உள்ளாற்றலால் முன்னறி; மந்திர ஆற்றலால் முன்னதாகக் காண்; முன்னறிந்து கூறு; முன்னுணர்வு பயில்.

**div'ing**, *n.* முழுகுதல் ; முக்குளித்தல் ; *a.* முழுகுகிற ; முக்குளிக்கிற.

**div'ing-bell**, *n.* மூழ்கு கூண்டு, ஆழநீர்நிலையில் ஆளை வைத்து அனுப்பத்தக்க வாய்ப்பிசைவுகளையுடைய மணியுருவ அமைவு.

**divin'ing-rod**, *n.* அடிநில நீர் உலோக வளங்களைக் கண்டு பிடிக்க உதவுவதாகக் கருதப்படுங் கோல்.

**divin'ity**, *n.* தெய்வத்தன்மை ; கடவுள் ; தேவதை, தெய்வம் ; தெய்வத்தன்மை வாய்ந்தவர் ; பூசிக்கத் தக்கவர் ; இறைமையியல் ; பல்கலைக்கழகத்தின் இறைமையியல் ஆய்வுத்துறை.

**div'inize**, *v.* தெய்வமாக எண்ணு, கடவுள் ஆற்றலுடையதாகக் கருது.

**divisibil'ity**, *n.* பிரிக்கப்படுந் தன்மை ; பிரித்துணரப்படும் தன்மை ; (கண.) மீதியில்லாமல் வகுபடும் நிலை.

**divis'ible**, *a.* பகுக்கக்கூடிய ; பிரித்துணரவல்ல ; எண் வகையில் மற்றோரெண்ணினுல் மீதமின்றி வகுபடக்கூடிய.

**divi'sion**, *n.* பிரித்தல் ; பிரிவு ; பிரிக்கப்பட்ட நிலை ; பிரிவினை ; ஒற்றுமைக்கேடு, உட்பிளவு, வேற்றுமை ; பங்கிடுதல் ; பங்கீடு ; பங்கு, பாகம் ; பாகுபாடு, கூறுபாடு; பகுதி, கூறு ; வகைப்படுத்தல் ; வகை ; இனப்பிரிவு, கிளை, துறை ; படைப்பிரிவு ; நாட்டுப் பிரிவு, மண்டலம், வட்டாரத் தொகுதி ; சட்ட மாமன்றத்துக்குரிய தேர்தல் தொகுதி ; தர வகுப்பு; வகுப்புப்படி ; இடையெல்லை, இடைவரம்பு ; இடைவேலி ; இடைத்தட்டி ; வாக்கறிவிப்புக்காகச் சட்ட மாமன்றத்தில் மன்றத்தினர் இரண்டாகப் பிரிதல், மாமன்றப் பிரிவீடு ; (கண.) எண்ணை மற்றொரு எண்ணுல் வகுத்தல் ; வகுத்தல்முறை ; (தொ.) division of labour, உழைப்புப் பங்கீடு, வெவ்வேறு தொழில்களை வெவ்வேறு ஆட்களுக்குப் பகுக்கும் முறை.

**divis'or**, *n.* (கண.) வகுக்குமெண் ; வகுக்கப்படும் எண்ணில் மீதமின்றி வகுக்குமெண்.

**divorce'**, *n.* சட்டப்படியான மணவிலக்கு, விவாக ரத்து; பிரிவினை, பிளவீடு ; *v.* திருமண விலக்குச் செய் ; இணைப்பையறு ; மண விலக்குச் செய்து பிரி ; தள்ளிவை, விலக்கு ; மண உறவினைத் தள்ளுபடிசெய் ; இணைபிரி, தொடர்பறு, நீக்கு.

**divorcee'**, *n.* திருமணவிலக்குக்கு ஆளானவர்.

**divorce'ment**, *n.* திருமணவிலக்கு ; பிரிவினை, பிளவு.

**div'ot**, *n.* குழிப்பந்தாட்டத்தில் ஒரே பந்து வீச்சில் அகழ்ந்தெறியப்பட்ட புல்கரண்.

**divulge'**, *v.* மறைவெளியிடு, பலரறியக் கூறு.

**dixi'e, dix'y**, *n.* படைத்துறைச் சமையற்கலம்.

**dizz'iness**, *n.* கிறுகிறுப்பு, மயக்கம், தலைசுற்றல்.

**dizz'y**, *a.* தலைசுற்றுகிற ; மயக்கமான ; குழம்பிய ; தலைசுற்றலுண்டாக்குகிற : *v.* தலைமயக்கமுண்டாக்கு ; குழப்பு.

**djibb'ah**, (அரா.) *n.* ஜிப்பா.

**do**[1], *n.* (இசை.) கேள்வித்தானத்தின் அடிச்சுரம், முதற்சுரம்.

**do**[2], *n.,a.* ditto என்பதன் சுa-வ.

**do**[3], *v.* செய் ; செயல்துறைகள் வகையில் செயல்புரி ; முனைந்து செயலாற்று ; விரைந்து செயல்செய், சுறுசுறுப்பாயிரு ; உழை, தொழிலாற்று, முயற்சிசெய் ; செய்துமுடி ; முடிவுறுத்து ; ஆக்கு, பழுதுபார்க்கும் பணிதீர் ; நடத்து, பிறர் வகையில் நடந்துகொள் ; நட, ஒழுகு, நடைமேற்கொள்; நடிப்புப்பகுதியை நடி ; முன்னேற்பாடு செய் ; சமை ; வேகவை, பொரி ; கட்டு, ஒழுங்குபடுத்து ; அளி, வழங்கு ; அமை, போதியதாயிரு ; தக்கதாயிரு, சூழலுக்குப் பொருந்து; நோக்கத்துக்குப் பயன்படு ; வாழ், ஆக்கநலங்கள் பெறு ; நல்வாழ்வு பெறு ; பயணத்தில் தொலைவு கழி ; சிறையில் நாட்கழி ; சுற்றிச்சென்று காண் ; (தொ.) be done, முடிவுறு ; முடிவாகு ; do away with, அழி, ஒழி, நீக்கு ; do brown, பொன்னிறமாக வறு, கோதுமை நிறமாகப் பொரி ; do by, பாங்கில் நின்று நடத்து, ஒருவரிடம் நடந்துகொள் ; do down, அடக்கு, கீழ்ப்படுத்து ; do in, (பே-வ.) அழி, கொலைசெய் ; do over, திரும்பச்செய் ; வண்ணவகையில் மறுபடியும் தீட்டு ; do to death, கொலைசெய் ; do up, கட்டு, சிப்பத்தைப் பொதிந்து கட்டு ; ஒழுங்காக்கு, சீர்செய்; ஒப்பனைசெய் ; சணலிழை கோது ; மீட்டும் சரிசெய் ; திருத்து ; சோர்வூட்டு, முற்றிலும் களைப்புறச்செய் ; do with, பயன்படுதது ; பொறுத்துக்கொண்டு செல் ; தலையிடு ; do without, இல்லாது கழி ; தவிர்த்துவாழ் ; நீக்கியிரு ; சாராதியங்கு ; have done, முடி ; நிறுத்து ; have to do with தொடர்பு ஏதேனும் கொண்டிரு ; what's to do, என்ன செய்தி ?

**do'ab**, *n.* இடைத்துறைநிலம், கங்கை யமுனைக்கு இடைப்பட்ட நிலம்.

**do'able**, *a.* செய்யக்கூடிய.

**do'-all**, *n.* பலதிற வேலையாள்.

**doat**, *v.*=dote.

**dobb'in**, *n.* பண்ணைவேலை செய்யுங்குதிரை ; வண்டி இழுக்குங் குதிரை.

**doce'tism**, *n.* இயேசுநாதர் திருமேனி தசையுடலன்று என்றும் நுண்ணியலாக்கமுடையதென்றும் கொண்ட 2-ஆம் நூற்றுண்டுக்குரிய சமய முரண்பாட்டுக் கோட்பாடு.

**doce'tist**, *n.* இயேசுநாதர் திருமேனி நுண்ணியலாக்கமுடையதென்று கொண்ட 2-ஆம் நூற்றுண்டுக்குரிய முரண்கிளைக் கிறித்தவ சமயத்தவர்.

**doch'-an-do'rach, doch'-an-do'ris**, *n.* புறப்படுமுன் குதிரைவீரன் குடிக்கும் இன்தேறல் ; பிரிவு நேர மதுக்கலம்.

**doch'miac**, *a.* ஒன்றும் நான்கும் குறிலாகவுள்ள ஐந்தசைச் சீர்களையுடைய.

**doch'miacs**, *n.* ஒன்றும் நான்கும் குறிலான ஐந்தசைச் சீர்களைக் கொண்ட அடிகள்.

**do'cile**, *a.* எளிதில் பயிற்றுவிக்கத்தக்க ; கற்கும் ஆர்வமிக்க; பணிவிணக்கமுள்ள ; எளிதில் வசப்படுத்தத்தக்க ; வசப்படுத்தி நடத்தத்தக்க.

**dock**[1], *n.* முரட்டுக் களைப்பூண்டு வகை.

**dock**[2], *n.* வாலடி, வாலின் தசைப்பற்றுடைய பகுதி ; தறிக்கப்பட்ட வால் ; *v.* குறுகத்தறி ; வாலைத்தறி ; மயிரைக் கட்டையாக வெட்டு ; குறுக்கு ; உடைமை வெட்டிக்குறை ; கட்டுப்படுத்து ; ஆற்றல்குறை ; வளங்குறைபடுத்து.

**dock**[3], *n.* செயற்கைத்துறைமுகம், கப்பல் வந்தொதுங்கி நின்று சரக்கேற்றவும் இறக்கவும் பழுதுபார்க்கவும் வாய்ப்பாக அமைந்த மதகுடைக் கலத்துறை ; நாவாய்க்குறடு, இரேவு, சரக்கேற்றி இறக்கும் மேடை ; கடற்பாலம் ; இருப்புப்பாதை முடிவிடமேடை ; *v.* கப்பல்துறைக்குக் கொண்டு செல் ; கப்பல்துறையில் புகு ; கப்பல்துறைகள் வாய்ப்பமை ; கட்டுதுறையில் விடு.

**dock**[4], *n.* குற்றமுறைமன்றத்தில் கைதிக்கூண்டு ; குற்றஞ் சாட்டப்பட்டவர் கூண்டு ; (தொ.) dock brief, ஏழைக் கைதிக்காகக் காசின்றி வாதாடத் தேர்ந்தெடுக்கப்பட்ட வழக்குரைஞரின் வழக்குவாதம்.

**dock'age**, *n.* கடற்றுறைகளில் கப்பல்கள் தங்குவதற்கு அளிக்கப்படும் இடவாய்ப்பு ; கடற்றுறைக் கட்டணம்.

**dock'-dues**, *n.* கப்பல்துறைக் கட்டணம்.

**dock'er**, *n.* கப்பல்துறையில் வேலைசெய்பவர்.

**dock'et**, *n.* சுருக்கக்குறிப்பு ; உள்ளடக்க அறிவிப்புச்சிட்டை; முகப்புச்சீட்டு ; வழக்குப்பதிவுப்பட்டியல் ஏடு ; நீதிமன்றத் தீர்ப்புக்களின் பதிவுப்புத்தகம் ; சுங்கக் கட்டணப் பற்றுச்சீட்டு ; சரக்கைத்திருப்பிப் பெறுவதற்குரிய பஞ்சு இருப்பு விற்பனைக் களத்தின் பற்றுச்சீட்டு ; கட்டுப்பாடுள்ள அல்லது அருகலான சரக்குகளை வாங்குவதற்குரிய உரிமைச்சீட்டு ; பொருள் வாங்குவதற்குரிய பணித்துறை அதிகாரச்சீட்டு ; *v.* பதிவேட்டிற் பதிவுசெய் ; உள்ளடக்கம் மேற்குறிப்பிடு ; தலைப்புச்சுருக்கக் குறிப்பிடு.

**dock'-glass,** *n.* இன்தேறல் சுவைக்கப் பயன்படுத்தப்பெறும் பெரிய கண்ணாடிக்கோப்பை.

**dock'-master,** *n.* கப்பல்துறையக மேற்பார்வையாளர்.

**docks,** *n.* இரேவுகள் அலுவலகங்கள் அடங்கிய கப்பல்துறை வரிசை.

**dock'-tailed,** *a.* வெட்டப்பட்ட வாலுடைய.

**dock'yard,** *n.* கப்பல் கட்டல் பழுதுபார்த்தல் சாதனங்க ளடங்கிய கப்பல்துறையகம்.

**doc'tor,** *n.* மருத்துவர்; முனைவர், பல்கலைக்கழகத்தின் கலைத் துறை ஒன்றில் மிக உயர்ந்த பட்டம் பெற்ற அறிஞர்; இறைமை நூல் துறைபோன அறிஞர்; திருச்சபைச் சட்ட வல்லுநர்; திருச்சபையில் அறிவார்ந்த திருத்தந்தையார்; பழுதுபார்ப்பவர்; குளிரிளந்தென்றல்; கப்பற் சமையற் காரர்; செய்தொழிற் கோளாறுகளை அகற்றும் அமைவு முறை; கலப்படச்சரக்கு; பழுப்புநிற மதுவகை; போலி நாணயம்; கடல்மீன்வகை; போலித்தூண்டில் ஈ; *v.* முனை வர் பட்டமளி; முனைவர் பட்டமிட்டழை; மருத்துவம் செய், பண்டுவம் பார்; மருத்துவராகப் பணிசெய்; இயந்திரக் கருவிகளைச் சீர்ப்படுத்து; ஒட்ட வை; கலப்படம்செய், போலியாக்கு; (தொ.) Doctor's Commons, இங்கிலாந்தின் முற்காலப் போர்த்துறை சாராச் சட்ட அறிஞர்களின் கல்லூரிக் கூடம், சட்ட அறிஞர் கல்லூரிக்கூட மேசை; doctor's stuff மருந்து.

**doc'torate,** *n.* பேரறிஞர் பட்டம், முனைவர்பட்டம்; *v.* பேரறிஞர் பட்டம் வழங்கு.

**doc'tors,** *n. pl.* உள் எடையிட்ட பகடை.

**doctrinaire',** *n.* வளைவுநெகிழ்வற்ற கோட்பாட்டுக் கண்டிப் பாளர், கால இடச் சூழல்களைக் கவனிக்காமல் வறட்டுக் கோட்பாட்டையே பற்றி நிற்பவர்; *a.* செயல்முறைக்கு ஒவ் வாத கோட்பாடுடைய, வளைவு நெகிழ்வின்றிக் கொள்கைப் பிடிமுரண்டுடைய.

**doctrinair'ism,** *n.* குருட்டுக் கோட்பாட்டுப் போக்கு.

**doc'trinal,** *a.* கொள்கைச் சார்புடைய, கொள்கையை விளக்குகிற.

**doctrinar'ian,** *n., a.*=doctrinaire.

**doctrinar'ianism,** *n.*=doctrinairism.

**doc'trine,** *n.* கோட்பாடு, வகுத்தமைத்த கொள்கை விளக்கம்; போதனைத் தொகுப்பு; சித்தாந்தம், சமயமுடிபு விளக்கக் கோட்பாடு; அறிவியல் விளக்க இணைப்புக் கோட்பாடு; அரசியல் தத்துவக்கோட்பாடு.

**doc'ument,** *n.* ஆவணம், பத்திரம்; ஆதாரமூலம், ஆதாரச் சான்று; *v.* பத்திர ஆதாரம் வழங்கு; ஆதாரமூலம் காட்டு; ஆதார மூலமாக எண்பி.

**documen'tary,** *n.* புனையாமெய்விளக்கத் திரைப்படம், இடையிடைப்பட்ட விளக்கவுரைகளுடன் இயல்நூலையோ பழமையாய்வையோ தொழில்துறையையோ பயணத்தையோ பற்றிய மெய்ந் நிகழ்ச்சிகளை மட்டும் கலப்பின்றிக் காட்டும் இயக்கப்படம்; *a.* ஆவணம் சார்ந்த; பத்திரங்களில் காணப்படுகிற; பத்திர ஆதாரமுடைய; மெய்ந்நிகழ்வு காட்டும் நோக்குடைய.

**documenta'tion,** *n.* ஆவணச்சான்று வழக்காட்சி, பத்திர மேற்கோளாட்சி; மெய்யான எழுத்தாதார வடிவிலமைந்த புனை கதை.

**dodd'er,** *v.* நொய்மையால் நடுங்கு, பதறு, வாதத்தினல் நடுக்குறு, தலையசை.

**dodd'ered,** *a.* உச்சி இழந்த, கிளைகளை இழந்த.

**dodec'agon,** *n.* பன்னிரு கோணங்களும் பக்கங்களும் உடைய மட்டத்தளமான வடிவம்.

**dodecahe'dron,** *n.* பன்னிரண்டு முகப்புடைய பிழம்புரு.

**dodecasyll'able,** *n.* பன்னிரண்டு அசைகள் கொண்ட அடி.

**dodge,** *n.* அடியின் வீச்சிலிருந்து பக்கவாட்டில் விலகித் தப்புதல்; ஏய்ப்பு; காலம் கடத்தும் சூழ்ச்சி; சூழ்ச்சித்திறம், உபாயம்; சொற்புரட்டு; மணி ஓசைப் பிறழ்ச்சி; (பே-வ.) சொற்பொறி; சூழ்ச்சிப்பொறி; *v.* வெட்டி விலகு; தட்டிக் கழி, போக்குக்காட்டு; தட்டுமறி, விளையாட்டுக்காட்டு; சூழ்ச்சிசெய்து ஏமாற்று, ஏய்; காலங்கடத்து; சொற்புரட்டுச் செய், ஏய்த்துப் பசப்பு.

**dodg'er,** *n.* ஏமாற்றுபவர்; (பே-வ.) நீர்த்திவலைகள் படாமல் காக்கும் கப்பற் பாலத் தட்டி.

**do'do,** *n.* வான்கோழி அளவுள்ள பறக்க இயலாத அருவருப் பான தோற்றமுடைய மரபழிந்துபோன மோரிஸ் (Mauritius) தீவுகளுக்குரிய பெரிய பறவை; *pl.* do'dos, do'does.

**doe,** *n.* பெண்மான்; பெண்முயல்.

**do'er,** *n.* செய்பவர், வழக்கமாகச் செய்பவர்; செயல்முதல்வர், செயல்முதல்.

**does,** *v.* do என்பதன் நிகழ்கால ஒருமை வினைவடிவம்.

**doe'-skin,** *n.* பெண்மான் தோல்; நெருக்கமாக நெய்யப் பட்ட வழவழப்பான கம்பளி ஆடை.

**doff,** *v.* தொப்பி ஆடை முதலியவற்றைக் கழற்று; அகற்று.

**dog,** *n.* நாய்; காட்டுநாய்; வேட்டைநாய்; ஆண் நாய்; பயனற்றவன், போக்கிரி, வீணன்; வெறுப்புக்குரியவர், புறக் கணிப்புக்குரியவர்; வான்மீன் குழுவில் பெருநாய் மண்டலம்; அழல்மீன், பெருநாய் மண்டலத்தின் தலைமை விண்மீன்; சிறு நாய் மண்டலத்தின் தலைமை விண்மீன்; இடுக்கு குறடு; கட்டைக் கொளுவி, வெட்டு மரங்களை இணைத்துப்பிடிக்கும் பகர வடிவ வளையிருப்பாணி; விறகுக்கட்டை அணைகோல்; துப்பாக்கியின் குதிரை; மீன்வகை; *v.* நாய்போல் விடாது தொடர், பற்றித்தொடர்; தடங்கண்டு தொடர்ந்து இடை விடாது விழிப்பாகக் கவனி; நாய்களைக் கொண்டு வேட்டை யாடு; இடுக்கு குறட்டினல் பற்றிப்பிடி; (தொ.) die a dog's death, die like a dog, இரங்கத்தக்க நிலையில் இறந்துபோ, வெட்கங்கெட்ட சாவு பெறு; dog in the manger, தனக்குப் பயன்படாதது பிறருக்கும் பயன்பட மறுப் பவர்; give dog ill name and hang him, கெடுபேரிட்டுஅழி; go to the dogs, பாழாய்ப்போ, ஒழி; lead a dog's life, தொல்லைகள் நிரம்பிய வாழ்க்கை வாழ்; lead one a dog's life, நாயாய்ப்படுத்து; let sleeping dogs lie, சும்மாயிருப் பதைக் கிளறிவிடாமல் அப்படியே இருக்கவிடு; not a dog's chance, சிறுவாய்ப்புக்கூட இன்றி; throw to the dogs, give to the dogs, send to the dogs, வீசியெறி, கைவிடு, புறக்கணி.

**dog'ate,** *n.* முற்கால வெனிஸ் (Venice) ஜெனேவா (Genoa) நகரக் குடியரசுகளின் தலைவர் பணிமனை.

**dog'bane,** *n.* நாய்களைக் கொல்லும் நச்சுச்செடி வகை.

**dog'-bee,** *n.* ஆண்தேனீ; சோம்பேறித்தேனீ.

**dog'-belt,** *n.* பிடித்து இழுப்பதற்குரிய நாயின் இடுப்புப் பட்டைத் தோல்வார்.

**dog'berry**[1], *n.* இலையுதிர்காலத்தில் தண்டும் இலையும் சிவப் பாக மாறுகின்ற சிறுமர வகை; ஊதா நிறப் பழவகை.

**Dog'berry**[2], *n.* தற்பெருமை மிக்க நடுவயதினன்.

**dog'cart,** *n.* இருசக்கரமும் முதுகுக்கு முதுகான ஈரிருக் கையுமுடைய குதிரைவண்டி வகை.

**dog'-cheap,** *a.* மிக மலிவான.

**dog'-collar,** *n.* நாயின் கழுத்துப்பட்டை; கோயில் அதிகாரி யின் கழுத்துப்பட்டை; பெண்களின் விறைப்பான கழுத்துப் பட்டை; பெண்டிர் கழுத்தணி.

**dog'days,** *n. pl.* அழல்மீன் நாட்கள், கத்திரிகாலம், அழல் மீன் கதிரவனேடு தோன்றி மறையும் மிகவெப்பமான காலப் பகுதி (ஜுலை 3 முதல் ஆகஸ்டு 11 வரையுள்ள நாட்கள்).

**do'ge,** *n.* முற்கால வெனிஸ் (Venice) ஜெனேவா (Genoa) நகரக் குடியரசுகளின் தலைவர்.

**dog'-ear,** *n.* புத்தக மூலை மடிப்பு; *v.* புத்தகத்தை மூலையில் மடியவிடு.

**dog'-fall,** *n.* மல்லர்கள் வகையில் இருதரப்பினரும் ஒருங்கே தரையில் விழுதல்.

**dog'-fan'cier,** *n.* நாய்வளர்ப்பவர்; நாய் விற்பவர்.

**dog'-fight,** *n.* நாய்ச்சண்டை, குழப்பமிக்க கைகலப்பு.

**dog'fish,** *n.* சிறு சுறாமீன் வகை.

**dog'fox,** *n.* ஆண் நரி.

**dogg'ed,** *a.* வேட்டைநாய்ப் பிடியான, விடாப்பிடியுடைய; சீறிய, சிடுசிடுப்பான.

**dogg'er[1],** *n.* விடாது பின்பற்றுபவர்.

**dogg'er[2],** *n.* ஆலந்து நாட்டு இரட்டைப் பாய்மர மீன் தோணி.

**dogg'er[3],** *n.* செறிதிரள் இருப்புக்கல்; மண்ணியலூழிப் பாறைவகைப் பகுதி.

**dogg'erel,** *n.* நையாண்டிச் செய்யுள்; பயனற்ற கீழ்த்தர மான பாடல்; *a.* சந்த ஒழுங்கற்ற, அற்ப, கீழ்த்தரமான, ஒழுங்கற்ற.

**dogg'ery,** *n.* நாயின் பண்பு; நாயின் செயல்முறை; நாய்த் தொகுதி; கீழ்த்தரக் கும்பல்.

**dogg'ing,** *n.* நாய்களோடு வேட்டையாடுதல்; நாயைப்போல் பின்பற்றிச் செல்லுதல்.

**dogg'ish,** *a.* நாய்போன்ற, நாய் இயல்புடைய; இழிகுண முள்ள; முரட்டுத்தனமான.

**dogg'y,** *a.* நாய்ப்பற்றுடைய, நாய்களின் மீது பற்றுர்வம் மிக்க; நாய்போன்ற; குதித்தாடுகிற; பகட்டி மினுக்கித் திரிகிற.

**dog'hole, dog'hutch,** *n.* நாய்க்கே தகுதியுடைய இடம்; மிக மோசமான குடியிருப்பிடம்.

**dog'-Lat'in,** *n.* பிழைபட்ட கொச்சைக்கலவை லத்தீன் மொழி.

**dog'-lead,** *n.* நாய்க்கயிறு, நாய்ஞாண்.

**dog'leech,** *n.* நாய் நோய் மருத்துவர்.

**dog'-leg, dog'-legged,** *a.* நாயின் பின்கால்போல் வளைந் துள்ள; படிக்கட்டுகளின் வகையில் எதிரெதிர் பக்கங்களில் செல்கின்ற; வேலிவகையில் சிலுவை வடிவமான ஆதாரங் களை இணைக்கும் நீண்ட கழிகளை உடைய.

**dog'-letter,** *n.* உறுமல் ஒலியுடைய (r என்ற) எழுத்து.

**dog'ma,** *n.* உறுதிக்கோட்பாடு; சமயக்கொள்கை; அதிகார பூர்வமாக நிலைநாட்டப்பட்ட கொள்கை; ஆணவப் பிடிவாதக் கருத்துரை; *pl.* dog'mas, dog'mata.

**dogmat'ic, dogmat'ical,** *a.* கொள்கைப்பிடிவாதமான; கோட்பாட்டுறுதி மிக்க; கருத்து வற்புறுத்துகிற; ஆணவ வீறுப்பான.

**dogmat'ics,** *n.* கிறித்தவக் கொள்கைகளின் விளக்கம்; ஒழுங்குபடுத்தப்பட்ட சமய சித்தாந்தம்.

**dog'matism,** *n.* கொள்கையை ஒருதலையாக வற்புறுத்திக் கூறுதல்; உறுதியான கோட்பாடாகக் கூறும் பண்பு; பிடிவாதம்.

**dog'matist,** *n.* கோட்பாட்டை ஒருதலையாக அதிகார முறை யிற் கூறுபவர்.

**dog'matize,** *v.* பிடிவாதமாக வற்புறுத்திக் கூறு; வீறுப் போடு பேசு, முடிந்த முடிபாகக் கூறு.

**dogmatol'ogy,** *n.* பிடிவாதக்கொள்கை இயல், சித்தாந்த இயல்.

**Dog'ra,** *n.* வடமேற்கு இந்தியாவிலுள்ள படைத்துறை இனத்தைச் சேர்ந்தவர்.

**dog'rose,** *n.* காட்டு ரோசா வகை.

**dog's'bane,** *n.*=dogbane.

**dog's'-ear,** *n.*=dog-ear.

**dog's'-fenn'el,** *n.* கெட்ட நாற்றமுள்ள செடிவகை.

**dog'shores,** *n. pl.* கடலில் இறக்குவதற்குமுன் கப்பலைக் கரையில் வைத்திருப்பதற்குப் பயன்படுத்தப்படும் மரக் கட்டைத் துண்டுகள்.

**dog-sick',** *a.* முழுதும் நோயுற்ற, முழுமையும் நோய்ப் பட்டுள்ள.

**dog'sleep,** *n.* மெல்லுறக்கம்.

**dog's'-meat,** *n.* நாயுணவு, நாயின் உணவு என விற்கப்படும் துண்டுத் துணுக்குகள்.

**dog's'-nose,** *n.* இன்தேறல் கலவை வகை.

**Dog'star,** *n.* அழல்மீன்; வானில் பெருநாய் மீன் மண்டலம்; சிறுநாய் மீன் மண்டலம்.

**dog's'-tongue,** *n.* முட்செடி வகை.

**dog'tooth,** *n.* (க-க.) சதுர மோட்டுருவ நுட்பவேலைப் பாடுள்ள நார்மன் (Norman) கட்டிடக் கலையைச் சார்ந்த சித்திர வேலைவகை.

**dog'-trick,** *n.* கீழ்த்தரமான சூழ்ச்சி.

**dog'trot,** *n.* அமைந்த ஓட்ட நடை.

**dog'-watch,** *n.* (கப்.) குறுகிய காவல் நேரம், நான்கு மணிக் குப் பதில் இரண்டு மணியேயுடைய மாலை முன்னிரவுக்காவல் தவணைகளில் ஒன்று.

**dog'wood,** *n.* இலையுதிர் பருவத்தில் தண்டும் இலைகளும் சிவப்பாக மாறவல்ல சிறுமர வகை.

**doh,** *n.* (இசை.) முதல் சுரம்.

**doi'ly,** *n.* உண்கலங்களுக்குமேல் அல்லது அடியில் விரிக்கப் படும் சிங்காரக் கைத்துணி.

**do'ing,** *n.* செய்தல்; செயல்முறைப்படுத்தல்; *a.* செயல் செய்கிற, சுறுசுறுப்பான.

**do'ings,** *n. pl.* செயல்கள்; நிகழ்ச்சிகள்; நேர்ச்சிகள்.

**doit,** *n.* டச்சு நாட்டு சிறுநாணயம்; மிகச்சிறுதொகை; பயனற்ற பொருள், அற்பப்பொருள்.

***dol'ce far nien'te,*** (இத்.) *n.* மகிழ்ச்சியான சோம்பேறித் தனம்; இன்ப ஓய்வு.

**dol'drums,** *n. pl.* (கப்.) எதிரெதிர் காற்று முட்டும் நில நடுக்கோட்டுக்கு அருகிலுள்ள பெருங்கடலில் திணற அடிக் கும் பெருங்காற்று வீசும் பகுதிகள், காற்றுத்தேக்கம்; வெப்பமண்டலப் பகுதி; அமைதி; எழுச்சியற்றநிலை.

**dole[1],** *n.* ஊழ், ஊழ்வகுப்பு; பங்கு; அறமுறைப்பங்கீடு; அறமுறை உணவுப்பங்கு; அறமுறை உடைப்பங்கு; கஞ் சத்தனமான கொடை, கஞ்சத்தனமாக விதித்துக் கொடுத்த பங்கு; துயருதவி, இடருதவி; வேலையில்லாதவர்களுக்கு அளிக்கப்படும் உதவிச்சம்பளம்; சிறுபகுதி, அற்ப அளவு; *v.* சிறுசிறுபகுதிகளாகப் பங்கிட்டுக்கொடு, சிறிதுசிறிதாகக் கொடு.

**dole[2],** *n.* (செய்.) துயரம், கவலை, ஆரிடர்; புலம்பல், அழுகை.

**dole'ful,** *a.* துயரம் மிகுந்த, முகவாட்டமுள்ள, மகிழ்ச்சியற்ற.

**dol'erite,** *n.* சரளைக்கற்களாகப் பெரிதும் பயன்படுத்தப்படும் எரிபாறை.

**dole'some,** *n.* துயரமுள்ள, துயர்குறித்த.

**dolichocephal'ic, dolichoceph'alous,** *a.* நீண்ட தலை யோட்டையுடைய.

**Dol'ichos,** *n.* கொள்ளு மொச்சை அவரை முதலிய செடி யின வகை.

**doll,** *n.* பொம்மை; கைப்பாவை; ஆலி, மனித உருவப் பொம்மை; அளவுக்கு மீறி ஆடையணிந்த அறிவற்ற அழகி; ஒரே ஈற்றுக்குட்டிகளில் மிகச் சிறிய பன்றிக்குட்டி; *v.* மிகை யாக ஆடையணி, மட்டுமீறி ஒப்பனைசெய்.

**doll'ar,** *n.* வெள்ளி, அமெரிக்க வெள்ளிநாணயம்; மெக்ஸிக்கோ (Mexico) ஹாங்காங் (Honkong) ஆகிய இடங்களில் வழங்கும் வெள்ளிநாணயம்; செர்மனிக்கும் (Germany) ஸ்பானிய நாட்டுக்கும் (Spain) உரிய நாணயங்

களின் ஆங்கிலப்பெயர் ; (தொ.) dollar area, அமெரிக்க வெள்ளியுடன் செலாவணியில் இணைக்கப்பட்ட நாடுகளின் தொகுதி ; dollar diplomacy, அரசியல் ஆற்றலை உயர்த்துவதற்காகப் பணத்தைக் கருவியாகப் பயன்படுத்தும் அரசியல் சூழ்ச்சி.

**doll'op**, *n.* புற்கற்றை ; களைத்திரள் ; வயலில் அளவு மீறிச் செழிப்பான பகுதி ; கட்டி ; உணவுமொந்தை.

**doll'y** [1], *n.* தாம்பாளத்தில் மலர் இன்பண்டங்கள் முதலியன வைத்து அன்பளிப்பாகக் கொடுக்கும் தட்டம்.

**doll'y** [2], *n.* பொம்மை (செல்லமான விளி வழக்குச்சொல்).

**doll'y** [3], *n.* சலவைத்தொட்டியைக் கிளறுவதற்கு வழங்கப்படும் துடுப்பு ; கனிப்பொருள் கருப்பாறை அலம்ப உதவும் கருவி ; சுரங்க ஆதாரக்கம்பம் அடித்திருக்கும் பொறி ; இருப்புத்தொளை செய்யும் தொளைக்கருவி ; மெருகிடும் கருவி கலம் ; திருகு முனையின் பிடி ; சக்கரங்களின் மீது உருளும் தட்டைச்சகடம் ; உருளை மீது ஓடும் சகடச்சட்டம் ; *v.* திருகு பிடிக்கருவியைக் கையாளு ; தொளைக் கருவியைப் பயன்படுத்து ; இறுக்கு பொறியால் இறுக்கு ; தட்டைச் சகடத்தை வழங்கு ; தட்டைச்சகட மூலம் பெறுவி.

**doll'y-catch**, *n.* மரப்பந்தாட்டத்தில் எளிய வெற்றி.

**doll'y-shop**, *n.* கடல்துறை சார்ந்த பொருட் கிடங்கு ; அடகு கொள்வினை கொடுப்புவினைக் கடை.

**doll'y-tub**, *n.* சலவைத்தொட்டி ; கனிப்பொருள் கருப்பாறையின் கழுவுதொட்டி.

**Doll'y Vard'en**, *n.* பெண்களுக்குரிய பின்னல் வேலைப்பாடுடைய மெல்லிய துணிவகை ; ஒருபுறமாகக் கீழே வளைக்கப்பட்டுப் பூவேலை ஒப்பனை செய்யப்பட்ட பெரிய குல்லாய் வகை.

**dol'man**, *n.* சிறிய கைப்பகுதியுடன் முன்புறம் திறந்த நிலையிலுள்ள நீண்ட துருக்கிய (Turkish) அங்கி ; கைகள் தொங்கிக் கொண்டிருக்கும்படியாக அணியப்படும் மேலங்கி போன்ற குதிரை வீரனுடைய சட்டை, பெண்ணின் மேலங்கி.

**dol'men**, *n.* கல்மேடை, செதுக்கப்படாத செங்குத்தான இரு கல்லும் அவற்றின்மீதுள்ள தட்டையான கல்லும் கொண்ட வரலாற்றுக்கு முந்திய காலக் கல்லறைப்படிவம்.

**dol'omite**, *n.* சுண்ண வெளிமக் கரியகிகளின் கலப்புடைய பாறை வகை.

**dol'orous**, *a.* (செய்.) துன்பமிக்க ; துயரார்ந்த ; வேதனை குறித்த ; வருத்தஞ் செய்கிற.

**dolose'**, *a.* (சட்.) குற்ற நோக்கங்கொண்ட, மனமார ஏமாற்றும் எண்ணங்கொண்ட.

**dol'our**, *n.* துன்பம், துயரம் ; வேதனை ; துக்கம், கடுந்துயர்.

**dol'phin**, *n.* கடற்பன்றி, திமிங்கில இனம் சார்ந்த எட்டு அல்லது பத்து அடி நீளமுள்ள அலகு போன்ற நீண்ட முன்னுறுப்புடைய கடல் விலங்கு வகை ; மீன்வகை.

**dolt**, *n.* மட்டி, மடையன்.

**dolt'ish**, *a.* மடத்தனமான, அறிவற்ற.

**Dom**, *n.* மேதகை, போர்ச்சுகலிலும் (Portugal) பிரசீலிலும் (Brazil) பெருமக்கட் பெயர் முன்னும் உயர்தர ரோமன் கத்தோலிக்கக் குருமார் பெயர் முன்னும் வழங்கப்படும் நன்மதிப்பு அடைமொழி.

**domain'**, *n.* ஆட்சிப்பரப்பு, மேலாண்மை எல்லைப்பரப்பு ; பண்ணை நிலப்பரப்பு, பண்ணை எல்லைப்பரப்பு ; ஆட்சி எல்லை, அதிகார எல்லை ; செயல் எல்லை, செயற்களம் ; பண்புரிமை எல்லை ; அரங்கம், துறை, பெருங்கூறு ; உலகநாடுகளின் சட்டத்துறையில் நில எல்லையில் உடைமை உரிமை முழு மேலாண்மை நிலை.

**dome**, *n.* கவிகைமாடம், தூங்கானை மாடம், கவிகைமாடத் தூபி; மாடக்கோயில்; வான்மோடு; காமரக்கவிகை; மலையின் வளைமுகட்டுச்சி ; கவிகை உருவுடைய பொருள் ; மண்டை ; இயந்திரக் கவிகைமுடி ; உந்து வண்டி இயந்திர மேலுறை ; வெப்பாலையின் உட்கவிகை ; நடுவரையிலிணைந்து கவியும் ஈரிணை மணியுரு ; பிடிப்பில் பொருந்தும் இறுகலான கொளுவி ; *v.* கவிகையுருவாயமை ; கவிகை வடிவாக்கு ; கவிகையை இணைத்துதவு.

**dom'ed**, *a.* குவிமாடமுள்ள, குவிமாடம் கொண்ட.

**Domes'day, Domes'day Book**, *n.* இங்கிலாந்தில் முதலாம் வில்லியம் காலத்தில் கி. பி. 1086-இல் வகுத்தமைக்கப்பட்ட பெருநில அளவாய்வுத் திட்டம், நிலவுடைமைப் பேராய்வுக் கணிப்பேடு.

**domes'tic**, *n.* வீட்டு வேலைக்காரர் ; *a.* வீட்டுக்குரிய ; குடும்பத்தைச் சார்ந்த ; உயிர்கள் வகையில் வீட்டில் வைத்து வளர்க்கப்படுவதற்குரிய, மனைப்பழக்கமுடைய, பழகிய ; மிகுதியும் இல்லுறைவான, மனையை விட்டகலாத; வீட்டார்வமிக்க ; குடும்பப்பற்று மிகுதியான ; பொதுவல்லாத, தனி ஒதுக்கமான, தனிமுறையான ; தாயகத்துக்குரிய, தாய்நிலத்துக்குரிய ; உள்நாட்டுக்குரிய ; அயல்நாடு சாராத ; உள்நாட்டிற் செய்யப்பட்ட, சுதேசியான; (தொ.) domestic architecture, குடியிருப்புக் கட்டிடக்கலை; domestic economy, குடும்பநிர்வாகக் கலை ; domestic science, குடும்பநூல், குடும்பத்துக்குரிய உடல் உணவு உடை ஆகியவை சார்ந்த கலைத் தொழில்கள் பற்றிய அறிவுத்துறைத் தொகுதி.

**domes'ticate**, *v.* வீட்டுவாழ்க்கையில் பற்றுக்கொள்ளச் செய் ; குடும்பப்பற்று உண்டுபண்ணு ; நாகரிகப்படுத்து, மூர்க்கத்தன்மை குறை; வசப்படுத்து ; மனைப்பண்பூட்டு, வீட்டுச் சூழலில் பழக்கு ; பயிற்றுவி ; நாட்டுச் சூழலுடன் இயைவி ; தாய்நிலச் சூழலுடன் இணக்குவி.

**domes'ticated**, *a.* பழக்கப்பட்ட, பயிற்றப்பட்ட, மூர்க்கத்தன்மை குறைந்த.

**domesti'cities**, *n. pl.* மனைசார்ந்த செய்திகள் ; இற்பழக்கப் பண்பாடுகள்.

**domesti'city**, *n.* மனைவாழ்க்கை இயல்பு, குடும்பப்பண்பு ; குடும்ப வாழ்வுக்குரிய தனி ஒதுக்கநிலை ; இயலெளிமை, வீட்டு வாழ்விலுள்ள இயற்கையான தன்மை.

**domes'tics**, *n. pl.* வீட்டு வேலைக்காரர்கள் ; உள்நாட்டுச் செய்பொருள்கள், சுதேசிச்சரக்குகள் ; தாய்நாட்டு ஆடைகள், சுதேசித் துணிகள்.

**dom'ett**, *n.* கம்பளியும் பருத்தியும் கலந்து நெய்யப்பட்ட துணிவகை ; பிணம்போர்த்தப் பயன்படுத்தப்படும் ஆடை வகை.

**dom'icile**, *n.* உறையுள், உறைவிடம் ; வாழ்வகம் ; சட்டப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட நிலவரக் குடியிருப்புநிலை ; சட்டப்படியான நிலவர உரிமை வாழ்விடம் ; மாற்று முறிக்குப் பணம் பெறத்தக்க இடம் ; *v.* நிலவரமாகக் குடியிருத்து ; நிலவரமாகக் குடியிரு ; குறிப்பிட்ட இடத்தில் மாற்று முறியைப் பணமாக்கக் கூடியதாகச் செய்.

**domicil'iary**, *a.* இருப்பிடத்தைச் சார்ந்த ; (தொ.) domiciliary nurse, நோயாளிகளின் வீடுகளுக்குச் சென்று பார்க்கும் செவிலி ; domiciliary visit, அதிகாரிகள் உரிமையுடன் தனி வீடுகளுக்குச் சென்று மேற்பார்த்தல் ; உரிமை பெற்ற அதிகாரிகளின் வீட்டுச்சோதனைமுறை

**domicil'iate**, *v.* நிலையாகக் குடியிருத்து ; நிலவரப்படுத்து.

**dom'inance, dom'inancy**, *n.* முதன்மைநிலை, உச்சநிலை, ஆதிக்கம் ; மேலாட்சிநிலை, மேலாண்மை, மேலுரிமை ; மேல்நிலை, ஏற்றம், மேம்பாடு ; விஞ்சுநிலை, முனைப்பு.

**dom'inant**, *n.* இசையில் ஐந்தாவது சுரம் ; திருச்சபை ஓது முறையின் அடிச்சுரம் ; மரபாய்வியலில் விஞ்சுமரபுக்கூறு, கலப்பின முதல் தலைமுறையில் மேம்பட்டு நிற்கும் ஒருவழிப் பெற்றோர் பண்புக்கூறு ; செடியினத்தில் மேம்பட்டு நிலையுறும் வகை ; மரக்கூட்டில் உயர்மரம் ; *a.* ஆதிக்கம் வகிக்கிற, ஆட்சியிலுள்ள ; முதன்மையான, மேம்பட்ட, விஞ்சிய ஆற்றலுடைய; முனைப்பான, விஞ்சிநிற்கிற, கவித்த; நடப்பாட்சியிலுள்ள, ஆட்சிவழக்கிலுள்ள, பெருவழக் காறுடைய ; கலப்பினங்களின் இருவழிமூல இனப்பண்புக் கூறுகளிடையே முதல் தலைமுறையிலேயே முந்துறத் தோற்றுகிற.

**dom'inate**, *n.* வெளிப்பட வல்லாட்சியாய் உருவான பிற் கால ரோமப் பேரரசு ; *v.* ஆதிக்கம் செலுத்து ; மேலாட்சி கொள் ; முதன்மையாயிரு, முனைப்பாக அமை ; மேலுயர்ந் தோங்கு, விஞ்சு, மேம்பட்டுநில் ; வென்று நிலைபெறு ; செல் வாக்கு மிக்கதாயிரு ; நடப்பாட்சியில் பரவி வெற்றியுடன் நிலைபெறு; சூழ்புலமடக்கியாளும் வாய்ப்பு வலிமையுடையதா யிரு ; சூழ்புலப்பெரும்பரப்பின் காட்சி வாய்ப்புடையதாயமை.

**domina'tion**, *n.* ஆட்சி; மேலாட்சி; மேலாண்மை, ஆதிக்கம் ; மேம்பட்ட செல்வாக்கு ; வல்லாட்சி ; கொடுங் கோன்மை.

**domina'tions**, *n. pl.* தேவதூதர்களின் படிவரிசைகள் ஒன்பதில் நான்காம் படிவரிசைக்குரிய தேவதூதர் கணத் தினர்.

**domineer'**, *v.* கொடுங்கோன்மையாக நட, ஆணவத்துடன் அதிகாரம் செலுத்து ; வீருப்புக்காட்டு ; அடக்குமுறை ஆரவாரம் செய்.

**domineer'ing**, *a.* வீருப்புக்காட்டுகின்ற, ஆணவத்துடன் அதிகாரம் செலுத்துகின்ற.

**domin'ical**, *a.* இயேசுநாதருக்குரிய; இயேசுநாதரின் சிறப்பு நாளாகிய ஞாயிற்றுக்கிழமை சார்ந்த; (தொ.) dominical letter, ஆங்கில நெடுங்கணக்கின் முதல் ஏழு எழுத்துக்களில் ஒன்று, ஆண்டுக் குறிப்பேட்டில் ஞாயிற்றுக்கிழமைகளுக்கு இடப்படும் கணிதமுறைக் குறியீட்டெழுத்து.

**Domin'ican**, *n.* செயிண்ட் டாமினிக் (St. Dominic) என்ற அருட்பெரியாரால் 1215-இல் நிறுவப்பட்ட கருநிற உடை யணிந்த துறவியர் குழுவினர் ; *a.* செயிண்ட் டாமினிக் என்ற அருட்பெரியாரைச் சார்ந்த; செயிண்ட் டாமினிக் என்பாரின் துறவியர் குழுவினுக்குரிய.

**domin'ion**, *n.* ஆட்சி, மேலாட்சி; ஆட்சியுரிமை, மேலாதிக்க உரிமை ; தனியாணை ஆட்சியுரிமை ; ஆட்சிப்பகுதி ; பண்ணைத் தனியாட்சிப்பகுதி ; ஆள்வோர் நேருரிமையாட்சிப் பகுதி ; மன்னர் நேராட்சிப்பகுதி ; தன்னாட்சியுரிமையுடைய குடியேற்றநில நாடு, தாயகத்துடன் தோழமையுரிமை கொண்ட தனிமாநிலம் ; சட்டப்படியான உடைமையாட்சி யுரிமை ; (தொ.) Dominion Day, கனடா (Canada) வின் ஐக்கிய நாள் விழா, கனடாவிலுள்ள மாகாணங்கள் ஒன்று சேர்ந்த 1867-ஆம் ஆண்டு ஜூலை முதல் நாள் விழா.

**domin'ions**, *n. pl.* தேவதூதர்களின் ஒருகணம் சார்ந்த தெய்விக ஆவிகள்.

**dom'ino**, *n.* முகமூடியுடன் கூடிய புறவுடைப்போர்வை ; மாறுவேட முகமூடி அங்கி ; முகமூடி அங்கி அணிந்தவர் ; விளையாட்டு வகையின் கருநிற ஆட்டக்காய் வகை.

**dom'inoes**, *n. pl.* சதுரங்கம் போன்ற ஆட்டவகை.

**Don** [1], *n.* ஸ்பானிய நாட்டு மக்கட் பெயர்முன் இட்டழைக்கும் மதிப்புக்குறிப்பு.

**don** [2], *n.* ஸ்பெயின் (Spain) நாட்டுப் பெருமகன் ; ஸ்பெயின் நாட்டார் ; சிறப்புக்குரியவர், தனித்திறலாளர் ; கல்லூரி ஆயர், பயிற்சித்துணைவர் ; கல்லூரி முதல்வர் ; கல்லூரி ஆட்சியுறுப்பினர்.

**don** [3], *v.* ஆடையினை அணி, உடையணிகளை மாட்டிக் கொள்.

**donate'**, *v.* கொடு, நன்கொடையளி.

**dona'tion**, *n.* நன்கொடை கொடுத்தல் ; நன்கொடை ; நன் கொடைப்பொருள் ; (சட்.) சொத்துரிமை மாற்றீடு.

**don'ative**, *n.* பணித்துறைப் பற்றூதியம், பரிசுக்கொடை, நன்கொடை, அன்பளிப்பு ; சமய அறத்துறையில் நேருரிமை மானியம் ; *a.* நன்கொடையான, நேர்பரிசான, பற்றூதிய மான, நேருரிமை மானியமான.

**don'atory**, *n.* நன்கொடை ஏற்பவர், பரிசிலர்.

**done** [1], *v.* do என்பதன் முடிவெச்சம்.

**done** [2], *a.* முடிந்த ; களைப்புற்ற ; (தொ.) done brown, ஏமாற்றப்பெற்ற ; done for, done up, களைத்துப்போன.

**donee'**, *n.* நன்கொடை பெற்றவர், நன்கொடையளிக்கப் பட்டவர்.

**dong'a**, *n.* விடர், அருவியால் தோண்டப்பட்ட பள்ளம்.

**don'jon**, *n.* பண்டைக்காலக் கோட்டைகளில் வலிமையான மைய அரண், கடுமையாகத் தாக்கப்படும்போது கோட்டைப் படையினர் பின்வாங்கிச் சென்றடையும் வலிமையான மைய அரண்.

**donk'ey**, *n.* கழுதை ; முட்டாள், பேதை ; (தொ.) donkey's years, நீண்ட காலம்.

**don'key-en'gine**, *n.* கப்பலின் மேல்தட்டில் பாரம் இழுப் பதற்கும் ஏற்றுவதற்கும் பயன்படுத்தப்படும் நீராவி இயந் திரம்.

**don'key-man**, *n.* துணையான சிறு இயந்திரத்தின் பொறுப் பாளர்.

**don'key-pump**, *n.* மிகையான நீராவிக்குழாய்ப்பொறி.

**don'key-work**, *n.* கீழ்த்தரமான கடுமையான ஊழியம்.

*Donn'a*, (இத்.) *n.* இத்தாலி ஸ்பெயின் போர்ச்சுகல் (Italy, Spain, Portugal) போன்ற நாடுகளின் உயர்குடி மாது.

**Donn'ybrook, Donn'ybrook Fair**, *n.* ஆரவாரக் களரி, அமர்க்களம், அடிதடிச்சண்டை.

**do'nor**, *n.* கொடையாளி, நன்கொடையாளர் ; மருத்துவத் துறையில் குருதிக் கொடையாளர்.

**don't**, *v.*=do not.

**dood'le**, *n.* பொருளற்ற கிறுக்குவரை; *v.* பொருளற்ற தன்மையில் கிறுக்கி எழுது, கருத்தில்லாமல் கிறுக்கு.

**dood'lebug**, *n.* வண்டுவகை ; வண்டுவகையில் முட்டைப் புழு ; கனிப்பொருள்கள் உள்ள இடத்தை ஊகிக்க உதவிய பழங்கருவி.

**dool'ie, dool'y**, *n.* நோயாளி பல்லக்கு, 'டோலி'.

**doom**, *n.* ஊழ், விதி ; தீர்ப்பு ; குற்றத்தீர்ப்பு, தண்டனைத் தீர்ப்பு ; இறுதி, சாவு, அழிவு ; கடைநாள் தீர்ப்பு ; கடை நாள் தீர்ப்புக்காட்சிப் படம் ; *v.* எதிராகத் தீர்ப்புக்கூறு, தண்டி ; கண்டி ; ஊழ்வழிப் பழிகேட்டுக்கு ஆளாக்கு, முன் கூட்டி அழிவுக்குரிய முடிவுசெய் ; முன்கூட்டிக் கேட்டுக் குரியதாக ஒதுக்கிவை ; (தொ.) crack of doom, கடைசித் துருப்பு.

**doomed**, *a.* தண்டனை விதிக்கப்பட்ட; கேட்டுக்கு முன்கூட்டி ஒதுக்கிவைக்கப்பட்ட, ஊழ்வழி உந்தப்பட்ட.

**dooms'day**, *n.* தீர்ப்புநாள், இறுதித்தீர்ப்பு ; (தொ.) till doomsday, என்றென்றைக்கும்.

**dooms'man**, *n.* தீர்ப்பளிப்பவர், தண்டனை கொடுப்பவர் ; தண்ட நடுவர்.

**doom'ster**, *n.* நடுவர்.

**door**, *n.* கதவு, வாயில் ; புகுமுகம், நுழைவழி ; (தொ.) lay at the door of, குற்றம் சுமத்து ; lie at the door of, குற்றம் சுமத்தக்கூடியதாக அமை ; next door to, அடுத்த வீட்டிலுள்ள, அருகிலுள்ள, அடுத்து ; மிகவும் நெருக்க மான தன்மையில்; out of doors, வெளியே; வெளிப்புறத்தில்; திறந்த வெளியில் ; show one the door, வீட்டை விட்டு வெளியே விரட்டு ; within doors, வீட்டில், வீட்டிற்குள்.

**door'bell**, *n.* வெளிப்புறக் கைப்பிடி அல்லது விசைக்குமி ழின் மூலம் வீட்டிற்குள் அடிக்கக்கூடிய மணி.

**door'-keeper**, *n.* வாயிலோன்.

**door'-mat**, *n.* வாயிலருகே கால் துடைத்துக்கொள்வதற் குரிய பாய்வகை ; (பே-வ.) பிறர் காலடியில் மிதிபடுபவர்.

**door'-money**, *n.* பொழுதுபோக்கு அல்லது களியாட்ட இடத்தின் வாயிலில் வாங்கும் பணம்.

**door'nail**, *n.* கதவாணி, கதவுக்குமிழ்.

**door'-plate**, *n.* கதவிற் பதிக்கப்பட்ட பெயர்த்தகடு.

**door'-post**, *n.* கதவின் சார்புக்கால், சாரக்கால், கதவுச் சட்டம், கதவுநிலை.

**door'sill**, *n.* வாயில் நிலை.
**door'-stead**, *n.* நுழைவாயில்.
**door'-step**, *n.* வாயிற்படி.
**door'-way**, *n.* கடைவாயில்.
**dop**[1], *n.* மலிந்த தென் ஆப்பிரிக்க குடிவகை; வெட்ட அல்லது மெருகிட்டுப் பளபளப்பாக்க உதவும் மணிக்கல் பதித்த செப்புக்குவளை போன்ற கருவி.
**dop**[2], *v.* முக்கு, அமுக்கு, தோய்; துள்ளு, மேலெழும்பிக் குதி.
**dope**, *n.* கெட்டி நீர்மம்; களிம்பு; எண்ணெய்ப்பசை; மசக்கெண்ணெய்; விமானப்பூச்சுக்குரிய வண்ணமெருகு; உறிஞ்சுபொருள்; ஆற்றல் பெருக்கும் சரக்கு; மயக்க மருந்து; அபின்; பந்தயக்குதிரைகளுக்கும் வேட்டை நாய்களுக்கும் வெற்றிபெறும் ஆற்றல் பெறுவதற்காக அளிக்கப்படும் மருந்து; அறிவை மழுங்கவைக்கும் செய்தி; மனச்சான்றை மழுங்கவைப்பது; உள்ளுணர்ச்சியை மழுங்க வைப்பது; தகவல்; கம்பியில்லாத் தந்திச்செய்தி; *v.* மயக்க மருந்து கொடு; மயக்கமூட்டு; மயக்கமருந்தை உண்.
***dopp'el-gang'er***, (செர்.) *n.* பேயுரு; உயிரோடு இருப்பவரின் ஆவித்தோற்றம்.
**Dopp'er**, *n.* ஆலந்து நாட்டு முனைத்த சீர்திருத்தத் திருச்சபையுடன் இணைந்த தென் ஆப்பிரிக்காவின் திருச்சபையைச் சார்ந்தவர்.
**dop'y, dope'y**, *a.* மயக்கம் தருகிற; உணர்வுமழுங்கப்பட்ட; மனச்சான்று மங்கிய.
**dor**, *n.* சாணி எருவில் வாழும் விட்டில்வகை.
**Do'ra**, *n.* போர்க்காலக் கட்டுப்பாட்டுச்சட்டம்.
**dora'do**, *n.* அழகிய வண்ணமுள்ள கடல்மீன் வகை; அமெரிக்க பொன்வண்ண மீன்வகை.
**Dorc'as, Dorcas society**, *n.* ஏழைகளுக்கு உடைகள் தைத்து வழங்கும் பெண்கள் கூட்டம்.
**Dor'ian**, *n.* பண்டைக் கிரேக்கநாட்டில் டோரிஸ் (Doris) என்ற பகுதி சார்ந்தவர்; கிரேக்க இனத்தின் முப்பெரும் பிரிவில் ஒன்றைச் சார்ந்தவர்; *a.* டோரிஸ் பகுதியைச் சார்ந்த; கிரேக்க இனத்தின் முப்பெருங்கிளையில் ஒன்றைச் சார்ந்த; (தொ.) Dorian mode, பண்டைய கிரேக்க இசை முறை; பழைய திருக்கோயில் இசைமுறை.
**Do'ric**, *n.* பண்டைக் கிரேக்கரின் முப்பெரும் பிரிவினுள் ஒன்றினுக்குரிய கிளைத்திசைமொழி; நாட்டுப்புற ஆங்கிலத் திசைமொழி; நாட்டுப்புற ஸ்காத்லாந்து வழக்கு மொழி; *a.* கட்டிடக் கலையில் பண்டைய கிரேக்க மரபு வகைக்குரிய; டோரிஸ் பகுதிக்குரிய; கிரேக்க திசைவழக்குக்குரிய; கிரேக்க இனத்தின் முப்பெரும் பிரிவுகளில் ஒன்றற்குரிய.
**Dork'ing**, *n.* கோழி வளர்ப்பினவகை; பலவண்ணங்களும் ஒவ்வொரு காலில் ஐந்து நகங்களும் கொண்ட சதுர உடலமைப்புள்ள கோழிவகை.
**dorm'ant**, *n.* குறுக்குவிட்டம்; பாவுகட்டை; *a.* உறங்குகின்ற; செயலற்ற, செயலடங்கியிருக்கிற, செயல் நிறுத்தி வைத்திருக்கிற; செடியின உயிரின வகைகளில் செறிதுயில் நிலையிலுள்ள, இயக்கம் ஒடுங்கிக் கிடக்கிற; பழக்கத்தில் இல்லாத; வழக்கற்ற; (கட்.) தூங்கும் தோற்றமுடைய, முன்கால்கள்மீது தலைசாய்த்திருக்கிற.
**dorm'er, dorm'er-win'dow**, *n.* சாய்கூரையில் செங்குத்தாக உந்திக்கொண்டிருக்கும் பலகணி.
**dormeuse'**, *n.* பயண உறக்கவண்டி, சாய்படுக்கை வகை.
**dor'mice**, *a.* **dormouse** என்பதன் பன்மை.
**dorm'itory**, *n.* பலபடுக்கைகள் கொண்ட பெரிய துயிற்கூடம்; நகர்ப்புற ஓய்வுக்குடியிருப்புப் பகுதி.
**dorm'ouse**, *n.* குளிர்கால முழுதும் சுருண்டு செறிதுயில் நிலையில் அடங்கிக்கிடக்கும் அணில் வடிவ எலியின உயிர் வகை.
**dor'my**, *a.* குழிப்பந்தாட்டத்தில் மேற்கொண்டு ஆடவேண்டிய ஆட்டங்களுக்குச் சரியான குழிகளையுடைய.
**do'rothy bag**, *n.* பெண்களின் திறந்தகன்ற வாயுடைய கைத்தொங்கற் பை.
**Do'rothy Perk'ins**, *n.* இரட்டை நீலச்சிவப்பு மலர்களுள்ள ரோசா இனத்தழுவு கொடி.
**dorp**, *n.* ஆலந்து நாட்டிலும் தென் ஆப்பிரிக்காவிலும் சிற்றூர்; நகர்வட்டம்.
**dor'sal**, *n.* மீனின் முதுகுத் துடுப்பு; முதுகுத்தண்டிலுள்ள முள்ளெலும்பு; திருக்கோயில் பலிபீடத்தின் பின்புறம் தொங்கும் துணி; திருக்கோயில் கிழக்குச் சிறகின் பக்கத்திரைச் சீலை; *a.* பின்புறத்தைச்சார்ந்த, முதுகைச்சார்ந்த, கூர் விளிம்பு வரையுடைய.
**dor'sigrade**, *a.* கால்விரல்களின் பின்பகுதியால் நடக்கின்ற.
**dort'er, dort'our**, *n.* படுக்கையறை, கிறித்தவத் துறவி மடத்தின் படுக்கையறைக் கூடம்.
**dor'y**[1], *n.* உணவுக்கு உதவும் பொன்மஞ்சள் வண்ண மீன் வகை.
**dor'y**[2], *n.* அலைமீது செல்லத்தக்க அகன்ற அடித்தளமுள்ள சிறுபடகு.
**dos'age**, *n.* மருந்தளவு; வேளாவேளைக்கு மருந்து கொடுத்தல்; வேளாவேளைப்பழக்கம்; *v.* மருந்துகொடு; கல; வேளை அளவுகளாகக் கொடு; வேளையளவுகளாகக் கொடுக்கும்படி கட்டளையிடு.
**dose**, *n.* ஒருவேளை மருந்து; ஒரே நேரத்தில் வழங்கப்படும் மின்விசை; நுண் அலை ஒளிக்கதிர் முதலியவற்றின் அளவு; சிறிதளவு; மென்புகழ்ச்சிக்கூறு; படிப்படியாக அடுக்கப்படும் தண்டனையின் கூறு; அளவிட்டுக் கொடுக்கப்பட்ட கூறு; அளந்து சேர்க்கப்பட்ட பகுதி; உட்கொள்ள வேண்டிய வெறுப்பூட்டும் மருந்து, விரும்பாத பொருள்.
**doss**, *n.* தூக்கம்; *v.* தூங்கு, படுக்கைக்குச் செல், பொது உறைவிட விடுதியில் தூங்கு.
**doss'al, doss'el**, *n.* திருக்கோயில் பலிபிட மேடையின் பின்புறம் தொங்கும் திரைச்சீலை; திருக்கோயில் கிழக்குப் பக்கத் திரைத்துணி.
**doss'er**, *n.* மிக மலிவான தங்கிடத்தில் வசிப்பவர்.
**doss'-house**, *n.* மிக மலிவான தங்கிடம்.
**doss'ier**, *n.* ஆவணத்தொகுதி; ஒருவரது சென்றகால வரலாற்றுப் பத்திரங்கள்.
**dost**, *v.* **do** என்பதன் முன்னைய நிகழ்கால முன்னிலை ஒருமை வினைச்சொல்லின் வடிவம்.
**dot**[1], *n.* புள்ளி; சிறுதுகள்; மாசு; மைக்கோலின் வட்ட வடிவப்பதிதடம்; முற்றுப்புள்ளி; எழுத்துக்களின் மீதிடும் ஒற்று; எழுத்தின் ஒலிமாறுபாடு குறிக்கும் புள்ளிக்குறி; இசைமானப் புள்ளிக்குறி; தந்திக்குறியீட்டில் புள்ளிக்குறி; நுண்பொருள்; சிறு குழந்தை; *v.* புள்ளி அடையாளமிடு; எழுத்தின்மீது புள்ளியிடு; புள்ளிகளாற் பலதிறப்படுத்து; குறிப்பு வைத்துக்கொள்; புள்ளி சிதறச் செய்; புள்ளி நிரப்பு; புள்ளிகள் போடு; புள்ளியுருவாகு; நொண்டு; (தொ.) dot and carry, கல்வித்துறைக் கணக்கில் ஒருதானம் கட்டியிட்டபின் மறுதானத்துக்குரிய தொகையைக் குறித்துக் கொண்டு மறுதானத்தில் கொண்டுசேர்; dot the is and cross the ts, விவரம் நிரப்பு, பொருளைத் தெளிவுபடுத்து.
***dot***[2], (பிர.) *n.* சீதனம்.
**dot'age**, *n.* மிகையான அன்புகாட்டுதல்; மிகையான பற்று, அளவு கடந்த அன்பு; முதுமையால் ஏற்படும் சிறுபிள்ளைத்தனம்; முதுமையால் தோன்றும் மனத்தளர்ச்சி.
**do'tal**, *a.* சீதனத்தைச் சார்ந்த.
**dot'-and-dash'**, *n.* தந்திக் குறியீட்டுத் தொகுதியில் புள்ளி-கீற்றுக்களைப் பயன்படுத்தும் முறை.
**dot'ard**, *n.* மட்டுமீறிய பற்றுக் காட்டுபவர்; முதுமைத் தளர்ச்சியுடையவர்.

விரட்டு, அடித்து வெருட்டு; கால்நடைகளை நடத்திச் செல்; காட்டுச் சட்டப்படி உடைமை உரிமை உறுதிப்பாட்டுக்காகக் கால்நடைகளை மந்தை விரட்டுக்குத் துரத்து; வேட்டை விலங்குகளைக் கலைத்து விரட்டு; ஊர்தியினைச் செலுத்து; வண்டியோட்டியாகச் செயலாற்று; ஏறிச்செல்; இட்டுச்செல்; உடன்கொண்டு செல்; பொறியினை இயக்கு; இயங்கும் ஆற்றல் அளி; இயங்குவி; ஆற்றலுக்கு உட்பட்டு இயங்கு, இயக்கப்பெறு, செலுத்தப்பெறு; குறிகொண்டு செல்; விரைவுபடுத்து; ஊக்கு, தூண்டு; தாக்கு; வேகமாகத் தள்ளு; பந்தினை வீசி எறி, முன்னேறிச் செல்லுவி; வாதத்தை ஆற்றல்படப் பயன்படுத்து; எழுதுகோல் முதலிய கருவிகளைக் கையாளு; வாளை வீசியெறி; தொழிலை நடத்து; ஆணி முதலியவற்றை அடித்திறுக்கு; பாய்ச்சு; பாய், குதி; விரை, விரைந்து செயலாற்று; கடுமையாக வேலைசெய்; (தொ.) drive at, நாடு, செயல் நோக்கமாகக் கொள்; let drive, குறிபார்த்து எறி.

**driv'el**, *n.* சாளை, கோழை, சொள்ளு; பிதற்றல்; *v.* குழந்தை போலச் சொள்ளு வடியவிடு; வீணுகச் சிதறு; பேதையெனப் பிதற்று; மூடனுயிரு.

**driv'er**, *n.* ஓட்டுபவர்; வண்டியோட்டி; ஊர்தி வலவர்; குழிப்பந்தாட்டத்தில் தொடக்க இடத்திலிருந்து பந்தெறிவ தற்குப் பயன்படுத்தப்படும் கைத்தடி; (இயந்.) நேர்முக மாகத் திறனைப் பெறுகிற சக்கரம்; விசை ஆக்கத்துடன் இணைந்த உறுப்பு.

**drive'way**, *n.* வண்டிப்பாதை; வேட்டை விலங்குகளைத் துரத்துவதற்கான வழி.

**driv'ing-wheel**, *n.* இயந்திரத்தின் பிற உறுப்புக்களை இயங்கவைக்கும் சக்கரம்; இருப்புப்பாதை நீராவி இயந்திரத் தின் பெரிய சக்கரம்; நேரடியாக இயக்கப்படுகிற மிதி வண்டிச் சக்கரம்.

**driz'zle**, *n.* மழைத்தூறல், நெருக்கமான நுண் திவலைகளாக மழை பெய்தல்; *v.* சிறு தூறலாகப் பெய்.

**dro'gher**, *n.* கரையோரமாகச் செல்லும் கப்பல்; மெது வாய்ச் செல்லும் கன எடை மரக்கலம்.

**drogue**, *n.* திமிங்கில வேட்டைக்குப் பயன்படும் ஈட்டிக் கயிற்றின் முனையிலுள்ள மிதவைக்கட்டை; கடல் நங்கூரம், படகின் ஆட்டத்தைச் சமப்படுத்தி அதன் வேகத்தை மட்டுப் படுத்துதற்குப் பயன்படுத்தப்படும் பைபோன்ற அமைவு.

**droit**, *n.* சட்டப்படியான உரிமை; சட்டப்படியான உரிமைப் பொருள்; கப்பற்படைத் தளபதிக்குரிய சட்டப்படியான மேல்வருவாய் இனம்.

**droll**, *n.* வேழம்பர், கோமாளி; *a.* குறும்பான, நகைப்பூட்டு கிற, அரைக்கிறுக்கான, இயல் முரணிய, வியப்பூட்டுகிற; *v.* கேலி செய், கோமாளித்தனம் புரி.

**droll'ery**, *n.* கோமாளித்தனம்; களியாட்டமிக்க கலைப் படைப்பு; இழிதிற நகைச்சுவை; கேலிக்கூத்தான காட்சி; பொம்மலாட்டம்.

**drome**, *n.* (பே-வ.) வானூர்தி நிலையம்.

**drom'edary**, *n.* ஏறிச்செல்லுவதற்கேற்ற நிறை இனமரபுப் பயிற்சியுடைய அராபிய ஒற்றைத் திமில் ஒட்டகம்.

**drom'ond**, *n.* (வர.) இடைக்காலப் போர்க்கப்பல்; வாணிகக்கப்பல்.

**drone**, *n.* வேலை செய்யாத ஆண் தேனீ, சோம்பேறித்தேனீ; சோம்பேறி; பிறர் உழைப்பில் வாழ்பவர்; பொம்மென்ற இரைச்சல் ஒலி; சலிப்புத்தரும் பேச்சு; சலிப்பு உண்டு பண்ணும்படி பேசுபவர்; தோற்பை இசைக்கருவி வகையின் படுத்தலோசைக்குழல்; இசைக்கருவி வகையின் படுத்த லோசைக் குழலினின்றும் வெளிவரும் ஒத்தூதல் போன்ற மாறுநிலையுடைய ஓசை; *v.* தேனீப்போல இரைச்சலிடு, இரைந்து முரலு; சலிப்புத் தோன்றும்படி பேசு.

**droop**, *n.* குனிவு; கீழ்நோக்கிய சாய்வு; தளர்வு; ஊக்கக் கேடு; குரல் கம்மிய நிலை, தொனியிறக்கம்; *v.* குனி, வாடி வளை, தொங்கு; சாய்வுறு; தொங்கவிடு; கீழ்நோக்கிப் பார்; கதிரவன் வகையில் அடிவானில் ஆழ்; சோர்வடை, ஊக்கமிழ, நலிவுறு.

**drop**, *n.* துளி, நீர்-கண்ணீர்-வியர்வை-குருதி-மழை-பனி போன்ற நீர்மங்களின் ஒரு சொட்டு; சிறிதளவு நீர்; சிறி தளவு நீரியலான மருந்து; சிறிதளவு; வீழ்துளியுருவப் பொருள்; தொங்கல் மணி, பதக்கம், தொங்கட்டம்; மணி யுருளை வடிவான தின்பண்ட வகை; வீழ்ச்சி; செங்குத் தான பள்ளம்; மிகப்பெரிய அளவான திடீர் ஏற்றத்தாழ்வு; விடுதிரை; திரை வீழ்ச்சி; தூக்குமரப் பொறித்தட்டு; பொறித்தட்டு விழத்தகும் ஆழ எல்லை, வீழ்ச்சியளவெல்லை; கப்பல் தளத்தில் சரக்குகளை இறக்கி வைப்பதற்கான அமைவு; அதிர்ச்சியூட்டும் திடீர் நிகழ்ச்சி; சமுதாயத் தளத்திற் படியிறக்கம்; விலையிறக்கம்; வெப்பதட்பநிலை வீழ்ச்சி; கடுந்தேறல் சிறுகல அளவு; *v.* துளிதுளியாக வடியவிடு; துளி சிதறவிடு; திவலை சிதறி உலர்வுறு; சொட்டுச்சொட்டாக விழு; திடுமெனக் கீழே விழு; செங் குத்தாக விழு; செங்குத்தான இறக்கமுடையதாயிரு; மெல்லக் கீழ விழும்படி விடு, விழச்செய், கீழே விடு; இலக்கிற் சென்று விழும்படி பந்தெறி; வை, இடு, போடு; இறக்கிவிடு; விட்டுச்செல்; சாய், கீழ்நோக்கு; இற, அழி, இல்லாதுபோ; நின்றுவிடு, தொடர்பறுந்து போ; தாழ், அமிழ்; நிலத்தில் விழு, வேட்டைநாய் வகையில் வேட்டைக் குரிய விலங்கைக்கண்டு பதியமிடு; தாழ்த்து, கிடத்து; கைவிடு, துற; கூறுதுவிடு, குறியாமல் விட்டுவிடு; பெற்று விடு, பிறப்பி; தற்செயலாக வந்துசேர்; தற்செயலாக வாய்விட்டுக் கூறு; வாய்தவறி வெளியிடப்பெறு; இயல் பாகத் தூக்கத்துக்கு ஆளாகு; வழக்கத்துக்கு ஆட்படு; குறைவுறு, அளவில் குறை; குரல்தாழ்த்து; குரல் தணிவுறு; (தொ.) a drop in the bucket, a drop in the ocean, மிகச்சிறிய அளவு; drop a brick, மடச்செயல்புரி; drop a curtsy, வணங்கு; drop astern, (கப்.) நெடுந் தொலை பின்தங்கிவிடு, மிகப்பிந்து; drop away, drop off, ஒவ்வொருவராக வெளியே சென்றுவிடு; drop in, தற் செயலாக நுழை; ஒவ்வொருவராக உட்புகு; எதிர்பாரா வகையாக நேர்; தற்செயலாய் அமை; drop it! போதும் நிறுத்து; drop off, ஒவ்வொருவராக வெளியேறிச்செல்; தூங்கிப்போ; drop out, உரிய இடத்திலிருந்து காணுமற் போ, விலகிக்கொள்.

**drop'-cur'tain**, *n.* நாடக மேடையில் காட்சிகளுக்கிடையே விடப்படும் திரை.

**drop'-forging**, *n.* வார்ப்புக்குழியில் உருகிய நிலையில் உலோகத்தை ஊற்றி அடித்திறுக்கி உருவாக்கும் வார்ப்பட முறை.

**drop'-hamm'er**, *n.* காய்ச்சியடித்து வார்ப்படம் உரு வாக்கும் பொறி.

**drop'let**, *n.* சிறு துளி.

**dropp'ing**, *n.* கீழே போடப்படுவது.

**dropp'ings**, *n. pl.* கீழே விழுந்த பொருள்கள்; துளிகளாக விழுந்த பொருள்; மெழுகுதிரிகளினின்றும் வழிந்த மெழுகு; விலங்குகளின் சாணம்; பறவைகளின் எச்சம்.

**drop'-press**, *n.*=drop-hammer.

**drops**, *n.* துளி மருந்து, துளிகளாகப் பயன்படுத்தப்பட வேண்டிய மருந்து.

**drop'-scene**, *n.*=drop-curtain.

**drop'sy**, *n.* (மரு.) நீர்க்கோவை, மகோதரம், உடலின் புழை யிடங்கள் தோறும் நீர்திரண்டு தேங்குவிக்கும் நோய்.

**drosh'ky, dros'ky**, *n.* ருசிய நாட்டுக்குரிய தாழ்வான நான்கு சக்கர வண்டி வகை; செர்மனி நாட்டின் நான்கு சக்கர வாடகை வண்டி.

**dross**, *n.* உருக்கிய உலோகக்கழிவு; மாசு, களிம்பு, துரு, கசடு, கழிவுப்பொருள்; கலப்படத்தில் கலக்கப்பட்ட அயற் பொருட்கூறு; சக்கை, சவறு; தீயவழியில் ஈட்டிய பணம்.

**dross'y**, *a.* கசடு போன்ற; தூய்மையற்ற; பயனற்ற.

**drought**, *n.* வறட்சி, கருப்பு, நீடித்த பஞ்சநிலை; மழையின்மை; நீரின்மை; காய்வு, வெப்பு, நீர்வேட்கை.

**drought'y**, *a.* மிகுவறட்சியுள்ள, மழையற்ற, நீர்வேட்கையுள்ள.

**drove**[1], *v.* drive என்பதன் இறந்தகால வடிவம்.

**drove**[2], *n.* மேய்ச்சல் மந்தை; மீன்திரள்; கும்பு, கூட்டம்; கல்தச்சனது அகன்ற உளி.

**drove**[3], *v.* கால்நடை மந்தைகளை ஓட்டிச்செல்; கால்நடை வணிகராகத் தொழில்புரி.

**droved**, *v.* drove[3] என்பதன் இறந்தகால வடிவம்.

**drov'er**, *n.* கால்நடை மந்தைகளைச் சந்தைக்கு ஓட்டிச் செல்பவர்; கால்நடை வணிகர்.

**drown**, *v.* மூழ்கடி; மூழ்கடித்து மாளச்செய்; நீரினுள் அமிழ்த்தி மூச்சு முட்டவைத்துக் கொல்லு; நீர்ப்பெருக்கு வகையில் அமிழ்வி; அமிழ்வித்து மூச்சுமுட்டி இறக்கும்படி செய்; வெள்ளம் வகையில் மேற்கவிந்து சென்றழி; நீரில் தோய்வி; குடி முதலியவற்றால் துன்பத்தை மறக்கடி; குடி முதலியவற்றின் வகையில் துன்பத்தை மறக்கும்படி செய்; மேற்கவிந்து மறை; பேரொலி வகையில் பிற சிறிய ஒலிகள் கேளாமல் அடக்கிவிடு.

**drowse**, *n.* அரைத்தூக்க நிலை; *v.* தூங்கிவிழு, தூங்கிவழி; சோம்பியிரு, மந்தித்திரு; தூங்கிவிழச்செய், உணர்வு மழுங்கச் செய்; தூங்கி விழுந்து காலங்கழி.

**drows'y**, *a.* அரைத்தூக்க நிலையிலுள்ள, உறங்கிவழிகின்ற; மந்தமான, சோம்பியிருக்கிற; தூக்கம் வருவிக்கிற.

**drub**, *v.* மொத்து; தடியால் அடி; நையப்புடை; சண்டையில் தோல்வியுறச்செய்; கருத்தை அறைந்துசெலுத்து.

**drubb'ing**, *n.* தடியாலடித்தல்.

**drudge**, *n.* ஊழியவேலை, அடிமைவேலை; கொத்தடிமை; தொண்டுழிய வேலையாள், குறைந்த கூலிக்கு நிறைந்த வேலைசெய்து காலந்தள்ளுபவர்; *v.* அடிமைவேலை செய்; குற்றேவல்புரி, தொண்டுழியம் செய்.

**drudg'ery, drudg'ism**, *n.* அடிமைவேலை, மட்டுமீறிய உழைப்பு, சுவையற்ற வேலை, கடுந்தொழில்.

**drug**, *n.* மருந்துச் சரக்கு, வெறிமயக்கப்பொருள்; விலை போகாப்பண்டம்; *v.* வெறிமயக்க மருந்து சேர்த்துக் கலப்படம் செய்; வெறிமயக்கமருந்தூட்டு; மருந்து கொடு, மயக்கப் பொருள்களை வழக்கமாய் மிகுதியாக உட்கொள்ளுவி; அருவருப்பூட்டு, உவர்ப்பூட்டு.

**drugg'et**, *n.* முரட்டுக்கம்பளித்துணி, நிலத்தளத்திற் பரப்புதற்கான இரட்டுத்துணி; மேசைத்துணி.

**drugg'ist**, *n.* மருந்துக்கடைக்காரர் மருந்துச் சரக்குகளில் வாணிகம் செய்பவர்; மருந்து செய்து விற்பவர்.

**Dru'id**, *n.* பண்டைய கெல்டிக் (Celts) இனத்தவரின் குரு வகுப்பினர்; கெல்டிய மந்திரவாதி: கெல்டிக் இனக் குறிகாரர்; வேல்ஸ் (Wales) நாட்டு மாமன்றப்பணியாளர்.

**dru'idism**, *n.* கெல்டிக் இனக் குருமார் கற்பித்த கோட்பாடுகள்; கெல்டிக் இனக் குருமார் கையாண்ட வினை முறைகள்.

**drum**[1], *n.* முரசு; முரசொலி; முரசடிப்பவர், முரசொலி போன்ற நாரையினக் கூக்குரல்; முரசொலி போன்ற ஒலி எழுப்பும் அமெரிக்க மீன்வகை; உட்செவியுறுப்பு, காதுக்குருதது; ஊளையிடும் குரங்கினத்தின் உண்ணுக்கெலும்பு; முரசு வடிவப் பொருள்; மிடா; இயந்திரத்தின் சுழல் வட்டுருளை; இழைகளைச் சுற்றிவைக்கப்பயன்படும் குழல் வட்டு; மாலை அல்லது பிற்பகல் தேநீர் விருந்து; (க-க.) கவிகைமாடத்தின் செங்குத்தான பகுதி; கொரிந்திய (Corinthian) பாணித் தூண் தலையுறுப்பின் கெட்டியான பகுதி; *v.* முரசு முழக்கு; முரசொலி எழுப்பு; கைவிரல்களால் தாளங்கொட்டு; காலால் மேளங்கொட்டு; முரசொலிப்புப் போன்று இரை; இடைவிடாதடி, தட்டு, கொட்டு; பறவைகள் பூச்சிகள் வகையில் முரசடிப்பதுபோல இறக்கைகளை அடித்து ஒலியெழுப்பு; முரசு முழக்கி வெளியேற்று; முரசொலி மூலம் அழைப்புவிடு; அடித்தடித்து உருவேற்று; அடுத்தடுத்துச் சொல்லிப் புகட்டு; விடாது செய்து வெறுப்பூட்டு; (தொ.) beat the drum, முரசடி; பறைசாற்றிக்கொள், தற்புகழ்ச்சிசெய்.

**drum**[2], *n.* குறுகிய நீள்மலைப் பாறை; (மண்.) பனிப்படலத்தின்கீழ் உருவான பனி ஊழிக்குரிய நீள்முட்டை வடிவப் பாறை.

**drum'fire**, *n.* காலாட்படைத்தாக்குதலுக்கு முன் நிகழ்த்தப்படும் பீரங்கிகளின் முழங்கொலி வேட்டுத் தீர்வு.

**drum'fish**, *n.* பறையடிப்பது போன்ற ஒலியெழுப்பவல்ல அமெரிக்க மீன் வகை.

**drum'head**, *n.* முரசுத்தோல்; செவிப்பறைச்சவ்வு; பாரஞ்சாம்பியின் வட்டத்தலையுறுப்பு; (தொ.) drumhead court-martial, (படை.) போர்க்களத்திலேயே அல்லது படைப் பெயர்ச்சியின்போதே குற்றங்களை ஆய்வதற்காகச் சுருக்கு வகையாய் நடத்தப்படும் படைத்துறை முறைமன்றம்.

**drum'lin**, *n.* =drum[2].

**drum'-ma'jor**, *n.* முரசு அணியின் இளம்படித்தலைவர்.

**drumm'er**, *n.* முரசடிப்பவர்.

**drumm'ond-light**, *n.* காப்டன் டி. டிரம்மண்ட் (Captain T. Drummond 1797-1840) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட வெள்ளொளி அல்லது உயிரக-நீரக ஒளி.

**drum'-stick**, *n.* முரசுகொட்டுதற்கான குமிழ் நுனியுடைய கோல்; சமைத்த கோழிக்காலின் கீழ்முட்டு; முருங்கைக்காய்.

**drunk**[1], *v.* drink என்பதன் முடிவெச்ச வடிவம், முற்கால இறந்தகால வடிவம்.

**drunk**[2], *n.* குடிவெறி, குடித்தல்; (காவல்துறைக்குற்றத்தாள்) குடிவழக்கு; குடித்ததாகக் குற்றம் சாட்டப்பட்டவர்; கள் முதலியன குடித்தவர்; *a.* வெறியுண்ட; கட்குடியில் மூழ்கியிருக்கிற; பொங்கும் உணர்ச்சியில் மூழ்கிய.

**drunk'ard**, *n.* குடிகாரர்; குடிப்பழக்கமுள்ளவர்; போதையேறக் குடிப்பவர்.

**drunk'en**, *a.* குடிபோதையிலிருக்கிற; அறிவுமயங்கிய; குடிப்பழக்கமுள்ள; குடிபோதையின் விளைவான; குடிபோதையிலிருப்பதைக் காட்டுகிற; பயனற்ற.

**drunk'enness**, *n.* குடிபோதை; வழக்கமாகக் குடிபோதையிலிருத்தல்.

**drupa'ceous**, *a.* (தாவ.) உட்கொட்டை சூழ இன்சதைச் சாறு உடைய கனிகளை விளைவிக்கிற.

**drupe**, *n.* (தாவ.) கொட்டையுடைய இன்தசைச்சாறு கொண்ட கனி.

**drup'el, drupe'let**, *n.* (தாவ.) பல்சுளைக் கொட்டைகளையுடைய கனியின் ஒருசுளைக் கொட்டை.

**druse**[1], *n.* பாறைக்குழிவின் உட்புறத்தைப் போர்த்துள்ள மணியுறைவுத்தோடு; மணியுறைவுத்தோட்டினுல் உட்புறம் போர்த்தப்பெற்றுள்ள பாறைக்குழிவு.

**Druse**[2], *n.* சிரியா (Syria) வில் உள்ள லெபனுன் மலைகளில் (Lebanon mountains) வாழும் மகம்மதிய சமயம் சார்ந்த அரசியல்-சமயப் பிரிவினர்.

**dry**, *n.* மதுவிலக்குக் கோட்பாட்டாளர்; *a.* வறண்ட; வற்றிப்போன; நீர்ப்பசையற்ற, ஈரமில்லாத; ஈரம் குறைவான; வடிகால் மூலம் நீர்வடிக்கப்பெற்ற; சாறு இல்லாத; சாறு குறைவான; மழையில்லாத; மழைகுறைவான; நீர்வேட்கையுள்ள; நில வகையில் புன்செயான; பயிர் வகையில் புன்செய் வகை சார்ந்த; மழையின்றி உலர்ந்த; நீர்நிலையினின்றும் தொலைவான; நீர் வராத; கால்நடை வகையில் பால் தராத; கெட்டிப் பொருளான; பழத்தில் சதைப்பற்றில்லாத; நீர்ப்பொருளாயிராத; நீரியலல்லாப் பொருள்களை அளப்பதற்குரிய; பசுமையற்ற; சாரமற்ற; அப்பவகையில் வெண்ணெய் தடவப்பெறாத; சாவு வகையில் நீரினுல் அல்லது குருதி சிந்தப்பெற்று வராத; காசவகையில் கபமற்ற; மது வகைகளில் இனிப்போ பழத்துக்குரிய நறுமணமோ அற்ற; நாடு-நாட்டுப்பகுதி முதலியவற்றின்

வகையில் மதுபான வாணிகத்தைச் சட்டப்படி தடை செய்கிற; மதுவிலக்கினைச் செயலாற்றுகிற; மதுவிலக்குக்கு உட்பட்ட; எழுச்சியற்ற, கவர்ச்சியற்ற, சுவையற்ற; பயனற்ற; அன்பற்ற, உணர்ச்சியற்ற; கண்டிப்பான, கடுமையான; ஒத்துணர்வற்ற; கனிவற்ற; பராமுகமான; கரிசனையற்ற; வெறுமையான; புனையப்படாத; காய்தலுவத்தலில்லாத; சிறப்பற்ற, பொதுப்படையான; *v.* உலர்த்து; நீர்ப்பசையறச்செய்; வறு; வறட்டு; வாட்டு; வற்றலாக்கு; வறட்டுப்பசுவாக்கு; உலர்வுறு, நீர்ப்பசையறு, வறள், வாடு, வற்று; (தொ.) cut and dried, cut and dry, முன்னரே செயல் முற்றுவித்து வைக்கப்பட்டுள்ள; உடனடியாகப் பயன்படுத்தத்தக்க; முன்னரே வரையறுக்கப்பட்டு விட்ட; dry farming, புன்செய் வேளாண்மை, புழுதிப் பயிர்; dry light, காட்சி மயக்கம் தரா ஒளி; காய்தலுவத்தலகற்றிய கருத்து; dry measure, கூலம் முதலிய பண்டங்களை அளப்பதற்கான முகத்தலளவை முறை; dry steam, நீர்த்துளிகள் கலவாத நீராவி; dry up, முற்றும் உலர்த்து; (ஈரம்) முழுவதும் வற்றிப்போ; வற்றவை; (கிணறு முதலியவை) வறண்டு போ; (பே-வ.) பேசாதிரு; சும்மா இரு; நாடக நடிகர் வகையில் நடிப்பு வாசகத்தை மறந்துவிடு; go dry, மதுவிலக்கு ஏற்பாட்டினை மேற்கொள்; high and dry, (கப்பல்) அலைவாயிலிருந்து தொலைவாகக் கரைமேட்டில்; நடைமுறை நிகழ்ச்சிகளுடன் தொடர்பற்ற.

**dry'ad**, *n.* அணங்கு, நீரரமகள், வனதேவதை; காட்டு மரம்; *pl.* dry'ads, dry'ades.

**Dry'asdust**[1], *n.* கவர்ச்சியற்ற முறையில் கடும் உழைப்புச் செய்து ஆராயும் பழம்பொருளாய்வாளர்; சுவர்ச்சியில்லாத வரலாற்றாசிரியர்.

**dry'asdust**[2], *a.* சிறிதும் கவர்ச்சியற்ற, சாரமற்ற, சுவைத் திறமற்ற.

**dry'cell**, *n.* மின்பகுவுறுப்பு நீர்ப்பொருளாயிராமல் பசையாயிருக்கிற மின்கலம்.

**dry'-clean**, *v.* உலர்வுச் சலவைசெய், நீரிற் கழுவாமல் சாராயச் சத்து முதலியவற்றால் தூய்மையாக்கு.

**dry'-cure'**, *v.*=dry-salt.

**dry'-dock**, *n.* நீரின்றி வெற்றிடமாக்கப்படக்கூடிய கப்பல் துறை; *v.* நீர் வெளியேற்றப்பட்ட துறையில் நிறுவு.

**dry'er**, *n.*=drier[1].

**dry'-fist**, *n.* கஞ்சத்தனமானவர்.

**dry-fist'ed**, *a.* ஊதியம் கிடைத்தால் பணம் பெற்றுக் கொண்டு இழப்பு நேர்ந்தால் பணம் கொடுக்கிற; *adv.* ஊதியம் கிடைத்தால் பணம் பெற்றுக்கொண்டு இழப்பு நேர்ந்தால் பணம் கொடுத்து.

**dry'-fly**, *a.* நீரில் அமிழாத செயற்கை இரை வாய்ந்த தூண்டில் முள்ளையுடைய; *v.* நீரில் அமிழாத செயற்கை இரையுடன் தூண்டிலிட்டு மீன்பிடி.

**dry'-goods**, *n. pl.* நீர்ப்பொருளாயிராத கூலம்போன்ற பண்டங்கள்.

**dry'ice**, *n.* குளிர்பதனமுறையிலும் பொறியாண்மையிலும் பனிக்கட்டிக்கு மாற்றாகப் பயன்படுத்தப்படும் உறை கரியீருயிரகைப்பாளம்.

**dry'-nurse**, *n.* தானே பாலூட்டாமல் குழந்தையை வளர்க்கிற தாதி; *v.* தானே பாலூட்டாமல் குழந்தையைப் பேணி வளர்.

**dry'-plate**, *n.* (நி-ப.) முன்னதாக வேதி நீர்மங்களில் தோய்க்காமல் படம் எடுக்கக்கூடிய கூருணர்ச்சியுடைய நிழற்பட அட்டை.

**dry'-point**, *n.* காடிக்காரம் இல்லாமலே செப்புத்தகட்டில் செதுக்கு வேலை செய்வதற்கான கூரிய ஊசி; கூரிய ஊசியினால் செதுக்கப்படும் தகடு; கூரிய ஊசியினால் தகட்டில் செய்யப்பட்ட செதுக்கு வேலை; *v.* காடி வகைகளைப் பயன்படுத்தாமல் கூரிய ஊசியைக்கொண்டு செப்புத்தகட்டில் உருவந்தோண்டும் முறையைக் கையாளு.

**dry'-rot**, *n.* உளுப்பு, காளான் வகைகளினால் வெட்டு மரத்துக்குப் புறந்தோன்றாமல் உள்ளீடாகச் சிதைவு ஏற்படுத்தும் நோய் வகை; உள்ளீடான சிதைவு, பண்புச் சீர்கேடு.

**dry'-salt'**, *v.* நீர்ப்பொருளில் ஊறவையாமலே உப்பிட்டுப் பதனப்படுத்து.

**dry'-salter**, *n.* மருந்துச்சரக்குகள்-சாயங்கள்-பதனச்சரக்குகள் ஆகியவற்றில் வாணிகம் செய்பவர்.

**dry'-saltery**, *n.* மருந்துச்சரக்குகள்-சாயங்கள்-பதனச்சரக்குகளின் வாணிகம்; மருந்துச்சரக்குகள்-சாயங்கள்-பதனச்சரக்குகள் விற்கும் கடை.

**dry'-shod**, *a.* செருப்பு நனையாத; கால்கள் நனையாத; *adv.* செருப்பு நனையாமல்; கால்கள் நனையாமல்.

**dry'-stone**, *a.* காரையின்றிக் கல்லினால் கட்டப்பட்ட.

**dry'-wall'er**, *n.* காரையின்றிச் சுவர்கள் எழுப்புகிறவர்.

**du'ad**, *n.*=dyad.

**du'al**, *n.* (இலக்.) மொழிகள் சிலவற்றில் காணப்படும் ஒருமை பன்மை எண்களுக்கு இடைப்பட்ட இரட்டைப் பொருள்களைக் குறிக்கும் இருமை எண்; இருமை எண் சார்ந்த சொல்; சொல்லில் இருமை எண் சார்ந்த வேற்றுமைத் திரிபுவடிவம்; *a.* இரண்டுக்குரிய; இரண்டுகொண்ட; இருமடியான; இரண்டாகப் பகுபட்ட; இரட்டையான; (தொ.) dual control, கூட்டுக்கட்டுப்பாடு; இணைக்கட்டுப்பாடு; dual monarchy, இணையரசு, கூட்டரசு; ஒரே அரசருக்குட்பட்ட இரண்டு தன்னுரிமை நாடுகள்; the Dual Monarchy, 1918-க்கு முற்பட்ட ஆஸ்ட்ரிய-அங்கரிப் பேரரசு (Austro-Hungarian Empire).

**du'alin**, *n.* (வேதி.) வாள்தூள் வெடியுப்பு முதலிய பொருள்கள் கலந்த ஆற்றல்மிக்க வெடிமருந்து வகை

**du'alism**, *n.* இருமை; இருமை எண் வழக்காறு; (மெய்.) இருபொருள்வாதம், துவைதம், நன்மை தீமை இருவேறு தத்துவங்களாகக் கொள்ளும் கோட்பாடு; பருப்பொருள் உயிர் இருவேறெனக் கொள்ளும் கோட்பாடு.

**du'alist**, *n.* (மெய்.) இருபொருளுண்மைக் கோட்பாட்டாளர், இருபொருள்வாதி, துவைதி.

**dualis'tic**, *a.* இரண்டுகொண்ட; (மெய்.) இருபொருள் வாதத்துக்குரிய.

**dual'ity**, *n.* இருமை, இரட்டைத்தன்மை; இரட்டையாயுள்ள நிலை.

**dub**[1], *n.* ஆற்றின் சிறுமடு, குட்டை, சேற்றுக்குழி, சேறு.

**dub**[2], *v.* வாளின் மொட்டைப்பக்கத்தால் தோளில் தட்டும் வினைமுறை மூலம் முற்கால வழக்கப்படி வீரப்பெருந்தகை (knight) என்ற பட்டஞ் சூட்டு; புது நன்மதிப்புப்பட்டம் அளி, சிறப்புப்பெயர் புனைவி; நன்மதிப்பு நயம்படச் சாட்டுப் பெயரிட்டழை; வாய்ச்சியினால் இழைத்து மென்னயப்படுத்து; கத்தரித்து ஒழுங்குசெய்; புள்ளினங்களின் சூட்டும் தொங்கு சதையும் துண்டித்தகற்று; தோல் முதலிய வற்றின்மீது நீர்க்காப்பான மென்னயமூட்டும் கலவையைத் தோய்வி; தூண்டிலிற் போலி ஈ வடிவ இரைபொருத்திவை.

**dub**[3], *v.* திரைப்படத்திற்கு வேறு மொழியிற் புதிய ஒலிப் பதிவை இணை; இயக்கத்திரைப்படத்துடன் ஒலி இசைப் பதிவு இணை.

**dubb'ing**, *n.* வீரப் பெருந்தகையெனப் பெயரிடுஞ் செயல், வாளின் பட்டையால் தோளைத் தட்டும் வினைமுறை; தோலை மென்மைப்படுத்தும் பசைப்பொருள்.

**dubi'ety**, *n.* ஐயப்பாட்டுணர்வு; சந்தேகத்துக்குரிய செய்தி.

**dub'ious**, *a.* ஐயுறவுக்குரிய, இரண்டகமான விளைவுக்குரிய; சந்தேகம் கொள்ளுதற்குரிய, ஐயப்பாடுகொள்ள இடந்தருகிற; ஐயுறுகிற, தயங்குகிற, ஊசலாட்டமான; நம்பகமற்ற, நம்பும் தகுதியில்லாத; தெளிவற்ற, இனந்தெரியாத; இரண்டகமான, புதிரான.

**du'bitation**, *n.* ஐயம்; தயக்கம்.

**dub'itative,** *a.* ஐயத்துக்குரிய ; ஐயுறவான ; ஐயுறவு தெரிவிக்கிற ; தயக்கத்துக்குரிய ; தயக்கமுடைய ; தயக்கம் தெரிவிக்கிற.

**duc'al,** *a.* கோமகனைச் சார்ந்த ; கோமகனைப்போன்ற ; கோமகன் நிலைக்குரிய ; கோமகன் பட்டத்துக்குகந்த.

**duc'at,** *n.* முற்கால ஐரோப்பிய பொன்நாணய வகை, பழம் பொற்காசு ; நாணயம்.

**duc'ats,** *n. pl.* நாணயங்கள் ; பணம்.

**du'ce,** *n.* தலைவர், இத்தாலிய வல்லாட்சியாளர், முசோலினி (Mussolini) யால் மேற்கொள்ளப்பட்ட தலைவர் பட்டம்.

**duch'ess,** *n.* கோமாட்டி ; கோமகனுடைய மனைவி ; மாண்ட கோமகனின் மனைவி.

**duchesse',** *n.* மேசை மையத்துணியாகப் பயன்படுத்தப்படும் மென்பட்டு வகை ; மேசை மையத்துணி ; (தொ.) duchesse lace, தலையணைவிளிம்புப் பூவேலை வகை.

**duch'y,** *n.* கோமகனுடைய ஆட்சிப்பகுதி.

**duck[1],** *n.* கப்பற்பாயும் பைகளும் செய்ய உதவும் முரட்டுத் துணி வகை.

**duck[2],** *n.* முக்குளிப்பு, குளிக்கும்போது நீரில் ஒருதடவை மூழ்கி எழுதல் ; தலையை நீரில் அமிழ்வித்தெடுத்தல் ; சட்டெனக் குனிந்து நிமிர்தல் ; *v.* நீரில் மூழ்கி எழு ; தலையை நீரில் அமிழ்த்தி எடு ; நீரிற் சிறிதுநேரம் அமிழ்த்திவை ; திடுமெனக் குனிந்து தலைதாழ்த்து ; தலைதாழ்த்து.

**duck[3],** *n.* நிலத்திலும் நீரிலும் இறங்கவல்ல வான்கலம் ; சரக்கேற்றிச் செல்லும் நில நீரியக்கமுடைய படைத்துறைக் கலம்.

**duck[4],** *n.* தாரா, குள்ளவாத்து ; தாராக்கள், தாராக்களின் தொகுதி ; பெட்டைத்தாரா ; மரப்பந்தாட்டத்தில் ஆட்டக்காரரின் கெலிப்பு மதிப்பு எதுவும் இல்லா நிலை, இன்மைப் புள்ளி ; அன்புக்குரியவர், அருமைச் செல்வம், செல்லக் காதலர் ; பங்குக்களத்தில் தவணை தவறியவர், நொடித்தவர் ; (தொ.) Bombay duck, சிறுமீன் வகை ; break one's duck, மட்டைப்பந்தாட்டத்தில் முதலில் ஓர் 'ஓட்டம்' எடுத்தல் ; lame duck, பங்குக்களத்தவணை தவறியவர் ; நொடித்தவர் ; ஏலாதவர், ஏலாதது ; like a dying duck, சோர்வடைகின்ற ; make ducks and drakes, play ducks and drakes, நீர்ப்பரப்பின்மீது தட்டைக் கற்சில்லுகளை வீசித் தத்திக் குதித்துச் செல்லும்படி செய்து விளையாடு ; வீண்செலவு செய், பாழாக்கு ; பாழாகப் பயன்படுத்து.

**duck'bill,** *n.* வாத்துப் போன்ற அலகும் காலுமுள்ள ஆஸ்திரேலிய நீர்வாழ் உயிரின வகை ; செங்கோதுமை வகை.

**duck'-billed,** *a.* வாத்தினைப்போன்ற அலகுடைய.

**duck'-board,** *n.* அகழி கடக்க உதவும் மரக்கட்டைப்பாதை ; சேற்றினூடாக ஒடுங்கிய மரக்கட்டை வழி.

**duck'er[1],** *n.* மூழ்குபவர் ; நீர்மூழ்கிப்பறவை வகை.

**duck'er[2],** *n.* வாத்துக்களைப் பேணி வளர்ப்பவர்.

**duck'-hawk,** *n.* சதுப்புநிலச் சிறுநாய் வகை.

**duck'ing,** *n.* வாத்துவேட்டை.

**duck'ing-stool,** *n.* குற்றவாளியை நீரில் மூழ்கடிக்க உதவும் நீள் கழியுடன் இணைத்த இருக்கை.

**duck'ling,** *n.* வாத்துக்குஞ்சு.

**duck'mole,** *n.* வாத்துப்போன்ற அலகும் காலுமுள்ள ஆஸ்திரேலிய நீர்வாழ் விலங்கு வகை.

**ducks,** *n. pl.* முரட்டுத்துணிவகையாலான காற்சட்டை.

**duck'-shot,** *n.* காட்டுவாத்துக்களைச் சுடுவதற்குரிய துப்பாக்கிக் குண்டு.

**duck'weed,** *n.* அமைந்த நீர்ப்பரப்பை மூடிமறைத்துப் படரும் பாசியின வகை.

**duct,** *n.* கசிவுநீர் கொண்டுசெல்லும் உயிரின உடலின் இழைநாளம் ; நீரும் காற்றும் உட்கொண்டிருக்கும் செடியினத்தின் நுண்புழை ; மின்கம்பிவடக் குழாய் ; வளி செல்வழி.

**duc'tile,** *a.* உலோகங்களின் வகையில் வேலைப்பாடுகளில் அடித்துருவாக்கத்தக்க இயல்புடைய ; கம்பியாக இழுத்து நீட்டக்கூடிய ; களிமண்போன்று குழைவான ; எளிதில் இணங்கிப்போகும் பண்புடைய ; எடுப்பார் கைப்பிள்ளை போன்ற, எளிதில் திருத்தி உருவாக்கத்தக்க ; வளைந்து கொடுக்கும் இயல்புடைய.

**ductil'ity,** *n.* ஒசிவு, மசிவு, உடையாமல் கம்பிகளாக இழுக்கப்படும் ஆற்றல்.

**duct'less,** *a.* இழைநாளமற்ற ; (தொ.) ductless glands, நாளமற்ற சுரப்பிகள், இழைநாளமில்லாமலே நேரடியாகக் குருதிக்குள் கசிவுநீர் பரப்பும் சுரப்பிகள்.

**dud,** *n.* கொல்லைப்பொம்மை ; மதிப்பு மறுக்கப்பட்ட பொருளகப் பணமுறி ; சோழிசிப்பி ; போலிப்பொருள் ; பயனற்ற பொருள் ; பயனற்ற திட்டம் ; பயனற்ற ஆள் ; தோற்று முறிவுற்றவர் ; *a.* போலியான ; பயனற்ற ; மோசமான.

**dude,** *n.* பகட்டன், ஒய்யாரக்காரன் ; பகட்டுக் கலையார் வலன் ; போலித்துரைமகன், ஆங்கிலேய நடையுடை பாவனைகளைப் போலியாகப் பின்பற்றித் திரிபவன்.

**dudeen',** *n.* சிறிய களிமண் புகையிலைக்குழாய்.

**dudg'eon[1],** *n.* கடுஞ்சினம், சீற்றம்.

**dudg'eon[2],** *n.* உடைவாளின் கைப்பிடி ; சிறு குத்துவாள்.

**dudheen',** *n.*=dudeen.

**duds,** *n. pl.* துணிகள், கந்தல் துண்டுகள்.

**due,** *n.* மதிப்புரிமை, பிறர் காட்டக் கடமைப்பட்டுள்ள தகுதியுரிமை ; தகையார்ந்த மதிப்பு ; கடன் ; கடப்பாடு ; கடமை, வரி, தீர்வை, சுங்கம் ; நிலைய வரி ; *a.* கடன்வகையில் கொடுக்கப்படவேண்டிய, பாக்கியான ; வரி தீர்வை முதலிய வற்றின் வகையில் செலுத்தப்படவேண்டிய ; உரிய, கடமைப் பட்ட ; தக்க, தகுதியாகக் காட்டப்படவேண்டிய ; நேரிய, நேர்மையாக அளிக்கப்படவேண்டிய ; காலவகையில் குறிக்கப்பட்ட, திட்டம் செய்யப்பட்ட, எதிர்பார்க்கப்பட்ட ; சரியான, சரிநுட்பமான, ஏற்ற அளவான, விளைவான, காரணமாகக் கொண்ட ; வரவேண்டிய, செல்லவேண்டிய, எதிர்பார்க்கப்படவேண்டிய ; *adv.* செவ்வாக, சரிநேராக, அப்புறம் இப்புறம் விலகாமல் ; (தொ.) due to, காரணமாக, விளைவாக ; for a full due, (கப்.) முடிவாக, முழுநிறைவாக ; give the devil his due, பொல்லார்க்கும் நேர்மை வழங்கு ; in due course, காலப்போக்கில், நாளடைவில்.

**du'el,** *n.* மற்போர், மானமதிப்புக்காப்பை முன்னிட்டு முற்காலங்களில் திட்டவரையறைகளுக்குட்பட்டு நடத்தப்பட்ட இருவர் போராட்டம் ; சச்சரவு தீர்த்துவைக்க இருவரிடையே நிகழ்த்தப்படும் போராட்டம் ; எதிரெதிராக மனிதர் விலங்கு புள் உயிரினங்களிடையே நிகழ்த்தப்படும் காட்சிச்சண்டை ; கட்சிப்போராட்டம், கொள்கைப் போராட்டம் ; இருபக்க மோதல் ; *v.* மற்போரிடு, இருவர் போராட்டத்தில் ஈடுபடு ; சண்டையிடு ; சச்சரவிடு ; (தொ.) the duel, வரையறைச் சட்டங்களுடன் கூடிய இருவர் போராட்டம்.

**duenn'a,** *n.* செவிலி, ஆயமும் காவலும் ஆனவள்.

**dues,** *n. pl.* கடன், கடன்தொகைகள் ; கொடுக்கவேண்டிய கடன்பாக்கி ; கடமை ; வரி, தீர்வை, சுங்கம் ; நிலையவரி.

**duet', duett',** *n.* உறழ்பாடல், இருவர் பாடுதற்குரிய இசைப் பாடல்.

**duff,** *v.* போலிப்புதுமைத் தோற்றம் அளி ; கால்நடைகளைத் திருடிச் சூடிட்ட அடையாள மாற்று ; குழிப்பந்தாட்டத்தில் அடிதவறு, வீச்சுத்தவறு.

**duff'el,** *n.* முரட்டுக்கம்பளித்துணி வகை ; ஆட்டக்காரரின் கூடார மாற்றுடை.

**duff'er,** *n.* திறமையற்றவர், பயிற்சித்திறன் இல்லாதவர் ; பயனற்றவர் ; ஏலா முதியவர் ; போலி நாணயம் ; விளைவிலாச் சுரங்கம் ; போலிச் சரக்கு ; போலி ஓவியச்சரக்கு ; போலிப்பொருட்கள் செய்பவர் ; திரிந்து விற்பவர் ; பயனற்ற பழைய பொருட்களைப் புதுக்கித் திருட்டுச் சரக்கென்றோ கள்ளவாணிகச் சரக்கென்றோ கூறி ஏமாற்றி விற்பவர் ; கால்நடை கவர்பவர்.

**duf'fle**, *n.*=duffel.

**dug** [1], *n.* விலங்கின் பால்சுரக்கும் மடி.

**dug** [2], *v.* dig என்பதன் இறந்தகால முடிவெச்சவடிவம்.

**du'gong**, *n.* தழையுண்ணும் கடல்வாழ் பால்குடி விலங்குவகை.

**dug'out**, *n.* அடிமரத்தைக் குடைந்து செய்யப்பட்ட படகு; அகழியிற் குடைந்து அமைக்கப்பட்ட மறைவிடம்; நிலச் சரிவிற் குடைந்தமைக்கப்பட்ட மனை; மீண்டும் வேலைக்குக் கொண்டுவரப்பட்ட முதியவர்.

**dui'ker**, *n.* தென்னாப்பிரிக்க மான்வகை.

**duke**, *n.* கோமகன், அரசகுடும்ப எல்லைக்குப் புறமாக உச்ச உயர்குடியினர் பட்டப்பெயர்; கோமான், தனியுரிமை யுடைய சிறு நிலச் சிற்றரசன்; குலமரபுக்குழுவின் முதல்வன்; (வர.) பண்டை ரோமாபுரியின் பிற்பட்ட காலப் பேரரசரின் கீழுள்ள மாகாணப் படைத்தள முதல்வர்; பழவகை; (தொ.) royal duke, மன்னுரிமைக் கோமகன், இளவரசர்களுக்குள் அரசபதவிக்கு முன்னுரிமையுடையவர்.

**duke'dom**, *n.* கோமகன் நிலை; கோமகன் பட்டம்; கோமகன் ஆட்சியெல்லை.

**duk'ery**, *n.* கோமகன் நிலை; கோமகன் ஆட்சிப்பகுதி; (தொ.) the Dukeries, நாட்டிங்காம் (Nottinghamshire) என்னும் இங்கிலாந்து மாவட்டத்தைச் சேர்ந்த கோமக்கள் ஆட்சிப்பகுதிகள் கொண்ட தொகுதி.

**dul'cet**, *a.* செவிக்கின்பமான, மகிழ்வூட்டுகிற.

**dul'cify**, *v.* இனிமையாக்கு, செவிக்கின்பமூட்டு.

**dul'cimer**, *n.* பல்வேறு நீளமான தந்திகளுள்ள இசைக் கருவி வகை; யூதரின் பையிசைக்கருவி.

**Dulcine'a**, *n.* இலட்சியக் காதலி, தன்னேரில்லாத் தலைமகள்.

**dull'** *a.* ஊக்கமற்ற, எழுச்சியற்ற; சோர்ந்த தோற்ற முடைய; தூங்கி வழிகிற, அரையுறக்க நிலையுடைய; சுறு சுறுப்பற்ற; சோம்பிய; துயரார்ந்த; கேள்வியுணர்வு குன்றிய; புலனுணர்வு மழுங்கிய; அறிவாற்றல் குறைந்த, கூரறிவற்ற; மக்கான; கூரற்ற, மழுங்கலான; சுவை யற்ற, உவர்ப்பான; விரைவற்ற, தேங்கலான; வாணிகத் துறையில் தொழில் மந்தமான; சலிப்புத்தருகிற, ஒரே மட்ட மான; இடைமாறுபாடற்ற; ஓவிய வகையில் உயிரோட்ட மற்ற; நிறவகையில் மங்கலான, முனைப்பற்ற; ஒலிவகை யில் தெளிவாகக் கேட்காத; வானிலை வகையில் மூடாக்கான; இருள்மண்டிய நிலையிலுள்ள; *v.* மழுங்கலாக்கு; கூர் மழுக்கு; புலனுணர்வு மழுங்கவை; ஓசைமந்தப்படுத்து; உணர்ச்சிகுன்றச்செய்; முனைப்புக் குறை; அறிவாற்றல் மங்கவை; சுறுசுறுப்புத்தடு; கவிந்து இருளாட வை; ஊக்கங்கெடு; கிளர்ச்சிகுலை.

**dull'ard**, *n.* அறிவற்றவன், மட்டி.

**dull'ness**, *n.* மந்தம்; மழுக்கம்; முனைப்பற்ற தன்மை; கவர்ச்சியின்மை; சோர்வு.

**dull'y**, *a.* ஒருவாறு மந்தமான; *adv.* மந்தமாக.

**dul'ness**, *n.*=dullness.

**dulse**, *n.* உணவுக்குரிய கடற்பாசி வகை.

**dul'y**, *adv.* சரியாக; சரியான நேரத்தில்; நேர்மையாக; தகுதிப்படி; போதிய அளவில்.

**du'ma**, *n.* ருசியா (Russia) நாட்டில் 1906-1917 ஆண்டுகளில் இயங்கிய சட்ட மாமன்றம்.

**dumb**, *a.* ஊமையான; வாய்விடாத, பேச்சாற்றலற்ற; பேச இயலாத; பேசாத; பேச்சுரிமையற்ற; எதிர்த்துக் கேட்கும் உரிமையில்லாத; ஒலியற்ற; ஓசைபடாத; நாணத்தால் வாய்திறவாத; அதிர்ச்சியினால் பேச்சடங்கிய; இயல்பாக அமைதியான, வாயாடாத; மௌனமான; கூத்து முதலியவற்றின் வகையில் வாய்ப்பேச்சில்லாத, இயந்திர அமைப்புக்கள் வகையில் மனிதருக்குப் பதில் செயற் படுகிற; செயற்படாத, எதிர்பார்க்கப்படும் செயற்பாடில் லாத; *v.* ஊமையாக்கு, வாயடை; (தொ.) strike dumb, திகைப்பாற் பேசமுடியாமற் செய், வாயடங்கச்செய்.

**dumb'-barg'e**, *n.* பாய்மரங்கள் இல்லாத தெப்பம், பொறி யியக்கம் அற்ற மரக்கலம்.

**dumb'-bell**, *n.* தசை வளர்ச்சிக்காகக் கைகளாற் பிடித்து உடற்பயிற்சி செய்ய உதவும் இருமுனைப் பளுக் கருவி.

**dumb'-craft**, *n.*=dumb-barge.

**dumbfound'**, *v.* ஊமையாக்கு, குழப்பு, திகைக்க வை.

**dum'bledore**, *n.* உரத்து முரலும் ஓசையுடைய பெரிய வண்டுவகை.

**dumb'-pia'no**, *n.* இசையில்லாத விசையமைவு.

**dumb'-show'**, *n.* ஊமைக்கூத்து.

**dumb'-wait'er**, *n.* உணவுக்கலங்களையுடைய நகரும் மேடை; உணவுக்குப்பின் உண்ணும் பழவகை முதலியவற்றை வைக்கும் சுழலுச்சியுடைய நிலைதாங்கி; பரிமாறுபவன் தேவை இல்லாமல் உணவு படைக்க உதவும் சுழல்நிலைப்பெட்டி.

**dumb'-well**, *n.* மேற்பரப்பு வடிநீரைக் கீழேகொண்டு செல்லும் கிணறு போன்ற ஆழ்குழி.

**du'mdum**, *n.* கிழிப்புக்குண்டு.

**dumm'y**, *n.* வாய்பேசாத உருவம்; மட்டி, பேதை; போலி ஆள்; செயல் செய்யாத ஆள்; போலிப்பகட்டு உருவம்; வைக்கோல் உருவம்; கைப்பாவை; கைக்கருவி; போலிப் பொருள்; பொம்மைப்போலி உரு, ஆடையணி தாங்கும் விளம்பரப்பொம்மை; சுடுவதற்கான பொம்மை இலக்கு; குழந்தைக்குப் பாலூட்டுவதற்கான குமிழ்கலம்; அச்சிடாப் போலி வெள்ளேடு; சீட்டாட்ட வகையில் திறந்த சீட்டுக் களுக்குரிய கற்பனை ஆட்டக்காரர்; சீட்டுக்கள் திறந்து வைக்கப்படும் சீட்டாட்ட வகை; திறந்த சீட்டுக்களை எடுத் தாடும் முறையுடைய துணையாட்டக்காரர்; உதைபந்தாட்ட வகையில் பந்துவீசுவதாகக் காட்டிக்கொள்ளும் போலிப் பாவனை; *a.* ஊமையான, மௌனமான, பேசாத, போலியான, பாசாங்கான; (தொ.) sell the dummy, உதைபந்தாட்ட வகையில் பந்தை வேறொருவருக்கு அனுப்பப்போவதாகப் பாசாங்கு செய்து எதிர்த்தரப்பு ஆட்டக்காரரை ஏமாற்று.

**dump** [1], *n.* தடித்த குறுகிய வடிவமுடைய பொருள்; ஆட்டக் கெலிப்பின் மதிப்புக்குறியான போலி ஈயவட்டு; சிறுநாணய வகை; கப்பல் கட்டுமானத்தில் குமிழ் இறுக்காணி; கப்பலில் ஆடப்படும் விளையாட்டுவகையில் எறியும் கயிற்றுக் கண்ணி வளையம்; தடித்துக் குறுகிய ஆள்; ஆட்டவகையின் எறி கழல்; இனிப்புத் தின்பண்டவகை; ஆட்டவகைக்குரிய குற்றிக்கோல்.

**dump** [2], *n.* தொப்பென விழும் அடி; மெத்தென விழும் ஒலி, குப்பைக் குவியல்; குப்பைகொட்டுமிடம்; சேமிப்பு; படைத் துறையின் தற்காலிக வெடிமருந்துச் சேமிப்புச்சாலை; *v.* தொப்பெனக் கீழிடு; கீழே கொட்டு; தடாலென விழும்படி வீசியெறி; வாணிகத்துறையில் உள்நாட்டில் உயாவிலைக்கு விலைபோகமுடியாத பொருள்களை ஆக்க விலைக்குக் கீழாக வெளிநாட்டில் குவித்துப் புதுவிலைக்களம் கைப்பற்று; நாடு கடந்து அயல் நாட்டில் ஆட்களைப் பேரளவில் குவித்திறக்கு.

**dump** [3], *n.* மடு; சிறுகுட்டை; ஆற்றுப்படுகையில் ஆழமான பள்ளம்.

**dump'ling**, *n.* வேகவைத்த அல்லது சுடப்பட்ட பிசைந்தமாக் கொழுக்கட்டை; சீமை இலந்தைப்பழம் முதலியவை உள் ளடக்கிய பிசைந்த மாவாற் செய்யப்பட்ட பணியாரம்.

**dumps**, *n. pl.* முகவாட்டம்; மனச்சோர்வு.

**dum'py**, *n.* குட்டையான தடித்த மனிதன் அல்லது விலங்கு; ஸ்காத்லாந்தின் (Scotland) சிறுகால் பயிற்சியினக்கோழி வகை; குட்டையான சிறு குடை; *a.* சிறுத்துத் தடித்த.

**dump'y-lev'el**, *n.* தொலைநோக்கியுடன் மட்டத்தொடர்பில் இணைக்கப்பட்ட அளவாய்வாளரின் காட்சித்தள மட்டம்.

**dun** [1], *n.* மங்கலான பழுப்புச்சாம்பல் நிறம், சுண்டெலிநிறம், கழுதைநிறம்; புகைநிறக் குதிரை, மீன்தூண்டிலுக்குரிய செயற்கை ஈ வகை; *a.* சாம்பல்வண்ணப்பழுப்பு நிறமான; புகை நிறமான; மாசுபடிந்த தோற்றமுடைய; *v.* சாம்பல் வண்ணமாகு.

**dun**[2], *n.* கொடுத்த கடனைக் கேட்டு நெருக்குபவர்; கடன் தண்டுபவர், கடன் தண்டற் பணியாளர்; கடனடைப்புக் கோரிக்கை, கொடுத்த கடனைத் திருப்பிக்கேட்டல்; *v.* கொடுத்த கடனுக்காக நெருக்கு; தொல்லைகொடு.

**dun**[3], *n.* குன்று; திட்டு, திடல்; அரண்காப்புடைய மேடு.

**dun'-bird**, *n.* நீரில் மூழ்கும் செந்தலையுள்ள வாத்துவகையின் பெண்.

**dunce**, *n.* மடையன்.

**dun'derhead**, *n.* முட்டாள், மூடன்.

**dun'der-headed**, *a.* அறிவற்ற, முட்டாளான, மூடத் தன்மையுள்ள.

**dun'-div'er**, *n.* நீர்மூழ்கும் வாத்து இனப் பெடை; வாத்து வகை இள ஆண்.

**Dundrear'y**, *n.* தாடியில்லாத நீண்ட சிலிர்ப்பான மீசை, கிருதாமீசை; *a.* நீண்ட சிலிர்ப்பான.

**dune**, *n.* தேரி, மணற்குன்று.

**dung**, *n.* சாணம், விலங்குகளின் மலம்; உரம், எரு; மாசு, அருவருப்புப்பொருள்; ஒழுக்கக்கேடு, இழிநிலை; *v.* சாணத் தினல் உரமிடு.

**dung'aree**, *n.* முரட்டுக் காலிக்கோத் துணி.

**dung'arees**, *n. pl.* முரட்டுக் காலிக்கோத் துணியால் செய்யப் பட்ட நிறைகொள் படுக்கைக்கட்டு.

**dung'-bee'tle**, *n.* முட்டைப்புழுவைச் சாணத்தில் வளரவிடும் வண்டு வகை.

**dun'geon**, *n.* சிறைக்கிடங்கு; கோட்டையின் உள்ளிடத் தலைமை அரண்; காற்றேட்டமற்ற இடம்; இருட்டறை; *v.* நிலவறையில் இட்டடை; அரண்காப்பான நிலவறையிற் சிறைப்படுத்திவை.

**dung'-fork**, *n.* குதிரை இலாயத்திலுள்ள எருவை அகற்று வதற்குப் பயன்படுத்தப்படும் கவட்டைக் கொம்பு.

**dung'-heap, dung'hill**, *n.* சாணக்குவியல்; பண்ணை நிலத்தின் கழிவுப்பொருள், இழிந்த நிலை.

**dunk**, *v.* உணவின் போது அப்பத்துண்டைக் குடிநீர்மத்தில் அல்லது சாற்றில் அமுக்கி எடு.

**Dunkirk', Dun'kirk**, *n.* இரண்டாம் உலகப்போரில் (1939–1945) டன்கர்க்கிலிருந்து (1940 மே) பிரிட்டிஷார் நடத்திய துணிகரப் படைத்துறை வெளியேற்றம்; முழு நிறைநிலை துறப்பு, இடம் விட்டுக்கொடுப்பு; விரைந்த பின்வாங்கல்; துணிகரப் பின்வாங்கல் நடவடிக்கை.

**dun'lin**, *n.* செந்நிற முதுகும் நீண்ட அலகும் உடைய சதுப்பு நிலப் பறவை வகை.

**dunn'age**, *n.* கப்பல் மூட்டைகளின்கீழ் ஈரக்காப்பாக இடப் படும் பாய் கட்டை கம்பிக்கூளங்கள்; மூட்டை இடைச் செருகு கட்டை; கப்பல் மூட்டை.

**dunn'ish**, *a.* மங்கிய, சாம்பல் நிறமுள்ள.

**dunn'ock**, *n.* வேலிக்குருவி.

**dunt**, *n.* திடீரென வரும் செங்குத்துக் காற்றசைவினுல் வானூர்திக்கு ஏற்படும் பேரடி.

**du'o**, *n.* இசை இரட்டையர்.

**duode'cimal**, *n.* பன்னிரண்டின் பகுதியான எண்மானம்; *a.* பன்னிரண்டின் பகுதியான, பன்னிரண்டின் கூறுன.

**duode'cimals**, *n. pl.* அடி அங்குலம் முதலிய பன்னிரண்டு மான அளவை ஆய்வாளர் பயன்படுத்தும் குறுக்குப் பெருக்கக் கணிப்பு முறை.

**duode'cimo**, *n.* பன்னிரண்டாக மடிக்கப்பட்ட தாள் மடிப்பு (சு-வ: 12 mo.); பன்னிரண்டான தாள் மடிப்பளவுள்ள புத்தகம்; சிற்றளவான பொருள்; சிற்றளவான மனிதன்; *a.* பன்னிரண்டு தாள் மடிப்புக் கொண்ட.

**duoden'ary**, *a.* பன்னிரண்டு மடக்கான.

**duodeni'tis**, *n.* சிறுகுடல் முகப்பு வீக்கம்.

**duoden'um**, *n.* (உள்.) சிறுகுடலின் முதற்கூறு.

**du'ologue**, *n.* நாடகத்தில் இருவர் உரையாடல், இரு நடிகர்க ளுள்ள நாடகம்.

***duom'o***, (இத்.) *n.* இத்தாலிய மாவட்டத் தலைமையிடத் திருக்கோயில்; *pl.* duom'os.

**dupe**, *n.* ஏமாற்றப்பட்டவன்; ஏமாளி, எளிதில் ஏமாறுபவன்; *v.* ஏமாற்று, மோசம் செய், மடையனுக்கு.

**du'pery**, *n.* ஏமாற்று வித்தை.

**du'ple**, *a.* இரட்டையான; இசைமானத்தில் கோட்டுக்கு இரு கொட்டு உள்ள.

**dup'lex**, *a.* இரட்டையான; இருமடியான; இருதிசை இயக்கம் ஒருங்கேயுடைய; (தொ.) duplex gas-burner, இருபீற்றின் ஒரு சுடரான வளி விளக்கு; duplex lamp, இருதிரி விளக்கு; duplex telegraphy, ஒரே சமயத்தில் இருபுறமும் ஒரு கம்பியின்மூலம் செய்தி அனுப்பப்பெறும் தந்தி அமைப்பு.

**dup'licate**, *n.* இருமடிப் பகர்ப்பின் மறுபடிவம்; பார்த் தெழுதிய எதிர்ப்படி; இருமடிப்படிவக் கட்டுப்பாடு, இருமடித் தொகுதி; *a.* இரட்டிப்பான; இருமடங்கான; முதலது போன்ற, நிகர் ஒத்த, ஒற்றை மாற்றுன; *v.* இரண்டுபடுத்து, இரட்டிப்பாக்கு; மடி; இரண்டாற் பெருக்கு; இருமடியாக்கு; இருபடியெடு; படியெடு; (தொ.) in duplicate, இரண்டு படிகளில், மூலத்தோடு கூடிய படியில்.

**du'plicator**, *n.* படியெடுப்புப் பொறி.

**dupli'city**, *n.* வஞ்சகம், உள்ளொன்று வைத்துப் புற மொன்று பேசுதல்; இரண்டகம்.

**dur'able**, *a.* நிலைத்து நிற்கக்கூடிய, நீடித்து உழைக்கக் கூடிய; தேய்மானத்தை எதிர்த்து நிற்கிற, சேதாரத்தைத் தடைசெய்கிற.

**dural'umin, duralumin'ium**, *n.* வலிவலுமினியம், வானூர்தி முதலியவற்றிற்குப் பயன்படுத்தப்படும் வலிமையும் கடினமும் உள்ள அலுமினியக் கலவைப் பொருள்.

***du'ra mat'er***, (ல.) *n.* (உள்.) மூளையையும் முதுகுத் தண்டையும் சூழ்ந்துகொண்டிருக்கும் உறுதியான மேல் சவ்வு.

**duram'en**, *n.* காழ்மரம், மரவகையின் வைரம் பாய்ந்த உட்பகுதி.

**dur'ance**, *n.* சிறைவைப்பு, சிறைக்காவல்.

**dura'tion**, *n.* காலத்தொடர்ச்சி, கால நீட்சி; கால வரை யறை; வரையறைப்படாக்காலம்; தொடர்ந்திருக்கும் ஆற்றல்.

**durb'ar**, (பெர்.) *n.* கொலுவிருக்கை; ஓலக்கம், அரசுப் பேரவை கூடும் மண்டபம்; வரவேற்புக் கூடம்; வரவேற்பு விழா.

**dur'ess, dur'esse**, *n.* கட்டாயச் சிறை வைப்பு, வலுக் கட்டாயம்; கட்டாயப்படுத்துதல்; வற்புறுத்தல்.

**dur'ian**, *n.* கெட்ட நாற்றமும் நறுஞ்சுவையுமுள்ள பழவகை; பழமரவகை.

**dur'ing**, *prep.* நேரத்தினிடையே, நேரமுழுதும் தொடர்ந்து.

**durm'ast**, *n.* சிந்துர மரவகை.

**durn**, *v.*=darn.

**du'rra**, *n.* தினை, சாமை.

**durst**, *v.* dare என்பதன் இறந்தகால வினைவடிவங்களில் ஒன்று.

**dusk**, *n.* அரையிருள், ஒளிமறைவு, படர்நிழல்; சந்தி, பொழுதுமயங்குவேளை; *a.* இருளார்ந்த; *v.* அரையிருளாகு; நிழலாகு, ஒளிமங்கு.

**dusk'y**, *a.* மங்கலான, தெளிவில்லாத; கருநிறமான; துயர மான, சோர்வான.

**dust**, *n.* துகள், பொடி, அணு; தூசி; மலர்த்துகள்; தூளிப்படலம்; தூள், தூசு; மண், நிலம்; கல்லறை; இறந்தோர் உடல்; மனித உடல்; மனிதன்; மாசு; குப்பை; இழிவு; தாழ்நிலை; பொன்துகள்; பணம்; விரைவு; சச்சரவு, குழப்பம்; *v.* தூசிதுடை; தூசியடித்து

நீக்கு ; தூசி துடைத்துத் துலக்கு ; தூள்தூவு ; தூசியை மேலேதூவிக்கொள் ; தூசியில் முழுகு ; தூசி படிய வை ; (தொ.) bite the dust, தாழ்வுறு ; காயமுற்று வீழ் ; இற ; dust one's jacket, நன்கு அடி கொடு ; dust the eyes of, ஏமாற்று ; kick up a dust, குழப்பத்தை உண்டாக்கு ; throw dust in one's eyes, ஏமாற்று.

dust'-bin, n. குப்பைத்தொட்டி.

dust'-bowl, n. புயல்காற்று தாக்கும் பஞ்சப்பகுதி ; வறட்சியாலும் நீடித்த பயிர்விளைவின் வளக்கேட்டினாலும் தரிசு பட்டுப் புழுதிக்காடான பாலைநிலம்.

dust'-brand, n. பயிர்நோய் வகை.

dust'-cover, n. புத்தக மேலட்டை.

dust'-devil, n. தூசியெழுப்பும் புயற்காற்று.

dust'er, n. தூசி துடைக்கும் துணி ; துடைப்பத் தூரிகை.

dust'-hole, n. குப்பைத்தொட்டி, குப்பைக்குழி.

dust'-jack'et, புத்தக மேலட்டையுறை.

dust'-man, n. குப்பைக்காரர், குப்பை அகற்றுபவர்.

dust'-proof, a. தூசியால் மாசுருத, தூசி படியாத.

dust'-shot, n. இரவைக்குண்டு, மிகச்சிறிய துப்பாக்கிக் குண்டு.

dust'y, a. தூசியால் மூடப்பட்ட ; தூசி தெளிக்கப்பட்ட ; தூசி போன்ற ; கவர்ச்சியற்ற, உவர்ப்பூட்டுகிற ; தெளிவற்ற, உறுதியற்ற.

Dutch, n. ஆலந்து (Holland) அல்லது நெதர்லாந்துப் பகுதிக்கு (Netherlands) உரிய மொழி ; பரந்துபட்ட செர்மன் (Germany) நிலப்பரப்பின் மொழிப் பொதுப்பெயர் ; a. ஆலந்து நாட்டுக்குரிய ; ஆலந்து நாட்டவர் பற்றிய ; ஆலந்து நாட்டு மொழிசார்ந்த ; ஆலந்து நாட்டிலிருந்து வருகிற ; ஆலந்து நாட்டவரால் செய்யப்பட்ட ; ஆலந்து நாட்டவரால் புத்தமைக்கப்பட்ட ; ஆலந்து நாட்டவரின் சிறப்பியல்பான ; நெதர்லாந்து உள்ளிட்ட செர்மன் நிலப்பரப்புக்குரிய ; மந்தமான ; செப்பமற்ற ; (தொ.) double Dutch, புரியாச் சலசலப்புப்பேச்சு ; Dutch auction, விற்பனையாளர் அதிக விலையில் தொடங்கி படிப்படியாக விலையைக் குறைக்கும் போலி ஏலவகை ; Dutch courage, மதுக்குடியினுல் தூண்டப்பட்ட போலித்துணிவு ; Dutch hoe, மண்வெட்டியிலுள்ளதைப்போல் அலகு பொருத்தப்பெற்றுள்ள களைக்கொட்டுவகை ; Dutch oven, கங்கினுள் வைத்துச் சமைக்குங்கலம்; வெளியிடத்தழல் மேலிட்டு வறுப்பதற்குள்ள தட்டம், திறந்த பக்கம் நெருப்பின் பக்கமாக்கி வறுக்கவல்ல உலோகப்பேழை ; Dutch treat, ஒவ்வொருவரும் தமது பங்கினைக் கொணரும் அல்லது அதற்காகப் பணம் கொடுக்கும் விருந்து ; Dutch wife, படுக்கும்போது கைகால்களைக் கிடத்துவதற்கான பிரம்புச்சட்டம் ; High Dutch, தென் செர்மானிய மொழி ; Low Dutch, ஆலந்து மக்கள் உட்படக் கடற்கரையில் வாழும் வட செர்மானியர் பேசும்மொழி; talk like a Dutch uncle, திட்டு, கண்டி ; the Dutch, ஆலந்து நாட்டவர்கள்.

Dutch'-built, a. செப்பமின்றி அமைக்கப்பட்ட.

dutch'man, n. ஆலந்து (Holland) நாட்டவன் ; ஆலந்துக் குடிமகன் ; ஆலந்துக்காரர் கால்வழியில் தோன்றிய தென்னுப்பிரிக்கவாணன் ; (கப்.) ஆலந்துநாட்டுக் கப்பல் ; pl. dutch'men.

dutch'woman, n. dutchman என்பதன் பெண்பால் ; pl. dutch'women.

dut'eous, a. கடமையுணர்ச்சியுள்ள, கடமையறிந்த, கடமையில் நாட்டமுடைய, கீழ்ப்படிதலான.

dut'iable, a. சுங்கம் தீர்வைகள் முதலிய வரிகள் விதிக்கப் பெறுவதற்குட்பட்ட.

du'tied, a. சுங்கங்களும் தீர்வைகளும் விதிக்கப்பெற்ற.

dut'iful, a. கடமையில் நாட்டமுடைய ; கடமையுணர்ச்சி காட்டுகிற ; மதிப்புக்காட்டுகிற ; மகிழ்ந்து பணி செய்கிற ; ஒழுங்கு தவருமல் கீழ்ப்படிகிற.

dut'y, n. கடமை ; மேலோர்க்குக் காட்டதகும் மட்டுமதிப்பு ; பணிவிணக்கம் ; அறமுறைக்கடப்பாடு ; சட்டக்கட்டுப்பாட்டுணர்ச்சி ; நேர்மைப் பற்றுணர்வு ; பணித்துறை அலுவல் ; பணிஈடுபாடு ; தொழில்துறைச் செயல்முறை ; திருக்கோயில் நடைமுறை ; தீர்வைவரி, சரக்கின்மீது செலுத்தப்படவேண்டிய இறைமுறைக்கடன் ; சுங்கவரி ; இயந்திரத்தின் பொருள் செலவழிவுக்கியைந்த ஆக்க ஆற்றல் அளவை விழுக்காடு ; (தொ.) do duty for, பகரமாகப் பயன்படு ; duty call, விரும்பாவிடினும் செய்துதீரவேண்டிய பணி ; off duty, அலுவல் விடுபாடுடைய ; on duty, அலுவல் ஈடுபாடு சார்ந்த.

du'ty-free, a. இறையிலியான, வரி-தீர்வை முதலியவற்றினின்றும் விலக்களிக்கப்பெற்ற.

du'ty-paid, a. தீர்வை செலுத்தப்பெற்ற, சுங்கம் செலுத்தப்பட்ட.

duum'vir, n. சரிசமநிலையுடைய இருவரடங்கிய குழுமத்தின் உறுப்பினர்.

duum'virate, n. ஒரு பதவியில் இருவர் இணையமர்வு ; இருமை ஆட்சி, சம அதிகாரமுள்ள இரண்டு அலுவலர்கள் நடத்தும் ஆட்சி.

duum'viri, duum'virs, n. duumvir என்பதன் பன்மை வடிவங்கள்.

*duvet*, (பிர.) n. கடல்வாத்து வகையின் அல்லது அன்னத்தின் தூவியினுல் நிரப்பப்பட்ட மெத்தை.

dux, n. சட்டாம்பிள்ளை, பள்ளியில் அல்லது வகுப்பில் தலை மாணவன் அல்லது மாணவி ; முதல்வர்.

duy'ker, n.=duiker.

dwarf, n. குள்ளன், விலங்கில் கூழை ; செடிமர இனத்தில் தன்னளவில் குறுகிய வளர்ச்சியுடையது ; குள்ளத் தெய்வதம், கூளி, குறளி, வளர்ச்சிகுன்றியவர் ; வளர்ச்சி குன்றியது ; தன் இனத்தில் சிறியது ; உயர் எடைமானத்துடன் தாழ் ஒளிர்வுடைய விண்மீன் ; a. மிகச்சிறிய ; குட்டையான ; தடைப்பட்ட வளர்ச்சியுடைய ; v. வளர்ச்சியைத் தடு ; வளர்ச்சிகுறுக்கு ; ஒப்பீட்டால் சிறிதுபடுத்து ; தொலைவால் மிகச் சிறியதாகத் தோன்றும்படி செய்.

dwarfed, a. வளர்ச்சி தடைப்படுத்தப்பட்ட, கூழையான ; (தொ.) dwarfed trees, சீன-ஜப்பானிய வீடுகளிலும் தோட்டங்களிலும் பூந்தொட்டிகளில் வளரும் சிறுமரங்கள்.

dwarf'ish, a. குள்ளனைப்போன்ற ; மிகச்சிறிய ; வெறுக்கத்தக்க, இகழ்ச்சிப்பொருளான.

dwell, n. இடைத்தயக்கம் ; இயந்திரத்தின் நொடிநேர இடைநிறுத்தம் ; v. தங்கு ; தங்கிவாழ் ; குடியிரு ; மெல்ல இயங்கு ; ஊன்றிநினை ; கருத்தூன்றி நீடித்துப்பேசு ; நினைவூன்றி விரித்தெழுது ; காலநீட்டிப்புச்செய் ; (குதிரை) மெதுவாகக் கால்களைத் தூக்கு ; தடை வேலியைத் தாண்டுமுன் தயங்கு.

dwell'er, n. குடியிருப்பவர், தங்கிவாழ்பவர் ; தடைவேலியண்டைத் தயங்கிநிற்கும் குதிரை.

dwell'ing, n. தங்குதல், குடியிருத்தல் ; குடியிருப்பிடம், வீடு ; நீடிப்பு, நிலைப்பாடு.

dwell'ing-house, n. குடியிருப்பு வீடு.

dwell'ing-place, n. குடியிருப்பிடம்.

dwin'dle, n. நலிவு ; v. ஒடுங்கு, சுருங்கு ; குன்று, மெலி ; குறை ; சீர்கேடுறு, சிதைவுறு ; முதன்மை குறைவுறு ; தரத்தில் இழிவுறு.

dy'ad, n. இரண்டன் தொகுதி ; இணை, இரட்டை, சோடி ; (வேதி.) நீரக ஈரணுவுடன் இயையும் தனிம அணு ; நீரக ஈரணுவுடன் இயையும் மூலப்பொருள் அணு.

Dy'ak, n. போர்னியோத் தீவின் (Borneo) தொல்குடியினர்.

dye, n. வண்ணச்சாயம் ; சாயப்பொருள் ; சாயநீர் ; வண்ணம் ; சாயல் ; v. சாயந்தோய்வி ; வண்ணந்தீட்டு ; நிறங்கொடு ; வண்ணக் கறைப்படுத்து ; வண்ணம் பெறு ; நிறம் எளிதில் தோயப்பெறு.

**dy'er**, *n.* சாயந்தோய்ப்பவர், சாயத்தொழிலாளி.

**dy'er's-broom, dy'er's-green'weed**, *n.* மஞ்சள் சாயப் பொருள் தரும் அவரைப்பூவுருவுடைய புதர்ச்செடிவகை.

**dye'-stuff**, *n.* சாயப்பொருள்.

**dye'-wood**, *n.* சாயமிடுதற்குரிய பொருள் கிடைக்கப்பெறும் கட்டை வகை.

**dye'-works**, *n.* சாய நிறுவனம், சாயச்சாலை.

**dy'ing**, *n.* சாவு, இறத்தல்; *a.* இறக்க வேண்டிய; இறக்குந் தன்மையுள்ள; சிதைவுறுகிற; தளர்வுறுகிற; சாவுக்குரிய; சாவேளையடுத்த, சாவு நேரத்துக்குரிய; (தொ.) dying declaration, (சட்.) இறக்கும் நேர வாக்கு மூலம், இறக்குந் தறுவாயிலிருப்பவர் தெரிவிக்கும் கூற்று.

**dyke**, *n.*, *v.*=dike.

**dynam'ic**, *n.* இயக்காற்றல்; (இய.) விசையியக்க ஆற்றல்; *a.* விசையியக்க இயல் சார்ந்த; இயற்கையாற்றல் விளைவுகளுக்குரிய; இயக்கம் சார்ந்த; இயங்குபொருள் சார்ந்த; ஆற்றல் வாய்ந்த; செயல் விரைவுடைய, விசையார்ந்த; உரமிக்க, ஊக்கமிக்க; ஊக்கு மூலமான, காரணமான; (மெய்.) இயல் ஆற்றல் மூலக்கோட்பாடு சார்ந்த; (மரு.) செயல் திறத்துக்குரிய.

**dynam'ical**, *a.* விசையியக்க இயல் சார்ந்த; இயங்காற்றலுக்குரிய; இயந்திர ஆற்றல் பற்றிய; (இறை.) இயற்கை இயங்காற்றல் கடந்த தெய்விக ஆற்றலால் தூண்டப்பட்ட; (மெய்.) இயல் ஆற்றல் மூலக்கோட்பாடு சார்ந்த.

**dynam'ics**, *n.* விசையியக்கவியல், இயக்க ஆற்றல்-இயக்கத் தாக்கு ஆற்றல் ஆகியவற்றை ஆயும் இயற்பியலின் இயக்கவியல் சார்ந்த துறை.

**dyn'amism**, *n.* இயல் ஆற்றல் மூலக் கோட்பாடு, பிறபொருள்களைப்போலவே மனமும் இயற்கையாற்றல்களின் விளைவே என்று கருதும் கொள்கை; ஆற்றல் செயல்படுமுறைமை.

**dyn'amist**, *n.* இயல் ஆற்றல் மூலக்கோட்பாட்டாளர்.

**dyn'amitard**, *n.* அரசியல் புரட்சிகளுக்காக வெடிமருந்தினைப் பயன்படுத்துபவர்.

**dyn'amite**, *n.* சுரங்கவெடி, பேராற்றல் வாய்ந்த வெடிமருந்துவகை; *v.* சுரங்கவெடியைக்கொண்டு தகர்த்தெறி.

**dyn'amiter**, *n.*=dynamitard.

**dyn'amo**, *n.* (மின்.) மின் ஆக்கப்பொறி, காந்தச் சூழுறவில் செப்புக்கம்பிகளைச் சுழற்றுவதன் மூலம் இயக்க ஆற்றலை மின் ஆற்றலாக மாற்றும் இயந்திரக் கருவி; *pl.* dyn'amos.

**dynamom'eter**, *n.* திறன்மானி, உறுப்பாற்றல்களை அளந்து கணிக்கும் கருவி; பெருக்கு திறன்மானி, தொலைநோக்கிப் பெருக்காற்றல் மானி.

**dyn'ast**, *n.* ஆளுநர், மன்னர்; அரசகுலத்தவர்.

**dynas'tic**, *a.* அரசர் குலத்துக்குரிய.

**dyn'asty**, *n.* அரசர்குலம்; மன்னர்களின் வழிவழி மரபு.

**dyne**, *n.* (இய.) நொடி விசையழுத்தம், ஒரு கிராம் எடைமானத்தை ஒரு நொடியில் நொடிக்கு ஒரு சென்டிமீட்டர் விழுக்காடு செலுத்தவல்ல அளவுடைய விசை ஆற்றல் அலகு.

**dys'entery**, *n.* வயிற்று அளைச்சல், சீதபேதி.

**dysgen'ic**, *a.* இனவளர்ச்சிக்கு உகந்ததாயிராத.

**dyslogis'tic**, *a.* மறுக்கிற, கண்டிக்கிற, இழிவுதருகிற.

**dyspep'sia, dyspep'sy**, *n.* (மரு.) வயிற்று மந்தம், உணவு செரியாமை.

**dyspep'tic**, *n.* வயிற்றுமந்த நோயாளி; *a.* வயிற்று மந்தமுடைய; செரிமானக்கேடு சார்ந்த.

**dyspnoe'a**, *n.* (மரு.) மூச்சுவிடுவதில் இடர்ப்பாடு.

**dysu'ria, dys'ury**, *n.* (மரு.) சூடுபிடிப்பு, சிறுநீர்கழிக்கும் போது நோவு ஏற்படும் கோளாறு.

**Each**, *pron.* இருவரில் ஒருவர்; ஒவ்வொருவர்; தனித் தனியாக ஒவ்வொருவரும்; இரண்டில் ஒன்று; ஒவ்வொன்று; தனித்தனியாக ஒவ்வொன்றும்; *a.* ஒவ்வொரு; (தொ.) each other, ஒருவரோடொருவர்.

**eag'er**, *a.* ஆவலுள்ள, மிகு விருப்பமுடைய; ஆர்வமிக்க; கூரவாவுடைய; அடக்கமுடியாத ஆர்வத்தால் தூண்டப்பட்ட.

**ea'gle**, *n.* கழுகு; ரோமாபுரி அல்லது பிரஞ்சுப் (French) படையின் கழுகுக்கொடிச் சின்னம்; கழுகுபோன்ற உருவ முடைய திருக்கோயில் சாய்வுமேடை; குழிப்பந்தாட்டத்தில் இரண்டு அடியில் ஆட்ட நிறைவுறும் குழி; 10 வெள்ளி மதிப்புடைய அமெரிக்க நாணயம்; (தொ.) Double eagle, இருபது வெள்ளி மதிப்புள்ள அமெரிக்க நாணயம்.

**ea'gle-eyed**, *a.* கூர்மையான பார்வையுடைய; ஊடுருவிப் பார்க்கும் திறனுடைய, தெளிவாக அறிகிற, கூர்ந்துணர்கிற.

**eag'le-owl**, *n.* ஐரோப்பிய நாடுகளிலுள்ள மிகப்பெரிய ஆந்தை வகை.

**eag'let**, *n.* கழுகுக்குஞ்சு.

**ea'glewood**, *n.* அகில்மரம்.

**ea'gre**, *n.* வேலியேற்ற ஆற்றெதிரெழுச்சி அலை.

**ear** [1], *n.* காது, புறச்செவி; செவிப்புலம்; இசைநுட்பம் உணரும் திறம்; செவிகொடுப்பு, கவனம்; இலை முதலிய வற்றின் காதுவடிவ விளிம்புப்பகுதி; துருத்திநிற்கும் ஆதாரம்; புற ஒட்டுப்படி.

**ear** [2], *n.* கூலக்கதிர்.

**ear'ache**, *n.* காதுவலி.

**eared**, *a.* கதிர்களுள்ள; காதுள்ள.

**ear'ing**, *n.* (கப்.) பாய்மரத்தின் மேல்மூலையைக் கட்டும் சிறு கயிறுகளில் ஒன்று.

**earl**, *n.* கோமான், இங்கிலாந்தில் உள்ள பெருங்குடிமரபுப் பட்டங்களில் ஒன்று; (தொ.) Earl Marshal, இங்கிலாந்தில் 'ஹெரால்ட்ஸ்' கல்லூரித் (Heralds' College) தலைவர்.

**ear'lap**, *n.* காதின் நுனி; காதுமூடிக் குல்லாய்.

**ear'less**, *a.* காதுகளற்ற, புறச்செவியற்ற.

**ear'lier**, *a., adv.* early என்பதன் உறழ்படி வடிவம்.

**ear'lierise**, *v.* திட்டம் செய்யப்பட்ட காலத்திற்கு முந்திய நாளில் செய்.

**ear'liest**, *a., adv.* early என்பதன் ஏற்றுயர்படி வடிவம்.

**ear'lock**, *n.* காதின் அருகில் முன்னாட்களில் வளர்க்கப்பட்ட சுருள்முடி.

**earl'y**, *a.* தொடக்க நேரத்துக்குரிய; தொடக்கக் காலத்துக் குரிய; தொடக்கத்தை அடுத்த; முற்பகுதி சார்ந்த; முந்தி வந்த; முற்பட்ட; முந்துற எழுந்த; முன்கூட்டிச் சித்தமான; முற்காலத்திய, தொலை இறந்தகாலத்திய; அணிமை வருங் காலத்திய; *adv.* குறித்த காலத்துக்கு முன், முன்கூட்டி; சரியான நேரத்தில்; விரைவில்; முந்தி, முற்பட; தொடக் கத்தில், தொடக்கத்தை அடுத்து; முற்பகுதியில்; காலை நேரத்தில், விடியற்காலத்தில்; (தொ.) earlier on, இதற்கு முன்னதாக, முந்தியதொரு கட்டத்தில்; early and late, எக்காலத்தும், எந்த நேரத்திலும்; early bird, வைகறைத் துயிலெழுபவர்; early closing, வாரத்தில் அரைநாள் விடு முறை விடுதல்; முன்னிரவு நேரத்தில் மூடிவிடுதல்; early door, நாடகக் கொட்டகைக்குள் குறிப்பிட்ட காலத்திற்கு முன்னமேயே மிகுதியான கட்டணம் கொடுத்துச் செல்லும் தனிவாயில்; Early English, இடைப்பட்ட காலத்தின் (1150–1500) முற்பட்ட காலத்திய ஆங்கிலமொழி; (க-க.) காதிக் (Gothic) வளைமுகட்டு முறையில் 12, 13-ஆம் நூற்றாண்டுகளில் (1189-1272) நிலவிய மைய முனைப்பாணி; Early Victorian, விக்டோரியா அரசியார் (1837-1901) ஆட்சியின் முற்காலத்துக்குரிய எழுத்தாளர் அல்லது கலைஞர்; விக்டோரியா ஆட்சியின் முற்காலத்துக்குரிய; விக்டோரியா ஆட்சி முற்காலப் பாணியிலுள்ள; பழமைப் பட்ட; keep early hours, முன் தூங்கி முன்னெழு.

**ear'mark**, *n.* விலங்கின் காதில் பொறிக்கப்படும் உரிமை யாளரின் அடையாளம்; தனிப்பட்ட உரிமைக்குறி, அடை யாள முத்திரை; *v.* தனிப்பட்ட அடையாளமிடு; குறிப்பிட்ட நோக்கத்திற்காக ஒதுக்கி வை.

**earn**, *v.* ஈட்டு, உழைத்துப் பொருள் சம்பாதி; முயற்சியினால் பெறு; தகுதியினால் அடை; பெற்றுக்கொடு.

**earn'est** [1], **ear'nest-money**, **ear'nest-penny**, *n.* அச்சாரம், உறுதிப்பணம், பேர உறுதிக்காக அளிக்கப்படும் முன் தவணைக்கூறு; அக்கறைச் சான்று; சான்றீடு; முதல் விளைவு; முன்னறிகுறி; முன்சுவை, முனிமுகம்.

**earn'est** [2], *n.* மெய்யார்வம், விளையாட்டற்ற தன்மை; மெய் யுறுதிப்பாடு; *a.* அக்கறையுள்ள; உள்ளார்வமிக்க, மன மார்ந்த வினைமையுடைய, விளையாட்டல்லாத; வேணவா வுடைய, முனைப்பார்வமுள்ள; (தொ.) in earnest, விளை யாட்டாக அல்லாமல், மனமார.

**earn'ings**, *n. pl.* ஈட்டியபொருள்; ஊதியம், வருவாய்.

**ear'-phone**, *n.* தொலைபேசியில் செவியுடன் பொருந்தவைத்து ஒலி வாங்கும் கருவி.

**ear'ring**, *n.* காதணி, கடுக்கன், கம்மல்.

**ear'shot**, *n.* காதுகேட்கும் தொலைவு, கூப்பிடுதூரம்.

**earth**, *n.* நிலவுலகம், தற்கால வானூலில் கதிரவனையடுத்துச் சுழலும் மூன்றாவது கோள்; பூவுலகக் கோளத்தின் மேல் தோடு; பூவுலகின் நிலப்பரப்பு; உலகம்; மண்ணுலகு; உலகுவாழ் உயிர்த்தொகுதி; உலகமக்கள் தொகுதி; நிலம்; தரை, நிலத்தளம்; மண்; மண் புழுதி, மண்கட்டி; நிலவளை; சடப்பொருள்; மனித உடல்; மின் ஒட்ட நிலத்தொடர்பு; உலோக வகைகளின் துரு; *v.* வேர்களை மண் குவித்தணை; மண் கொண்டு அணை; மண்ணால் மூடு; மண்பூசு; மண் கொண்டு தடு; மண்ணிற் புதை; மறைத்துவை; வளை தோண்டு; வளைக்குட்செல்; மின்னோட்டத்துக்கு நிலத் தொடர்பு உண்டாக்கு.

**earth'-bag**, *n.* அரணமைப்பில் பயன்படும் மண் நிறைந்த கோணிப்பை.

**earth'-bath**, *n.* மண்ணாட்டு, மண்ணில் படிவுறும் குளிப்பு முறை; மண் வைப்பு, மண்ணிடை வைக்கும் முறை.

**earth'-board**, *n.* நிலனுழுபடையின் உறுப்பு வகை, கலப் பைக் கொழுவின் பக்க உறுப்பு.

**earth'-born**, *a.* நில உலகில் தோன்றிய, மண்ணுலகுக்குரிய; மண்ணில் தோன்றிய.

**earth'-bound**, *a.* நிலவுலகத் தொடர்புடைய, உலகியல் வாழ்வில் சிக்குண்ட.

**earth'-bred**, *a.* மண்ணில் தோன்றி வளர்ந்த; நிலமீது பிறந்து வளர்ந்த; கீழான, வெறுக்கத்தக்க.

**earth'-closet**, *n.* மண் மலக்கழிவிடம்.

**earth'en**, *a.* மண்ணால் செய்யப்பட்ட; சுட்ட களிமண்ணால் ஆன; மண்ணுக்குரிய.

**earth'enware**, *n.* மண்பாண்டங்களின் தொகுதி, மட் கலங்கள்.

**earth'-fall**, *n.* நிலச்சரிவு.

**earth'fast**, *a.* நிலத்தில் உறுதியாகப் பதிக்கப்பெற்ற.

**earth'-fed**, *a.* உலகியல் பொருள்களில் அழுந்தி மனநிறைவு பெற்ற.

**earth'-flax**, *n.* கல்நார்.

**earth'-hog**, *n.* எறும்புதின்னும் தென் ஆப்பிரிக்க விலங்கு வகை.

**earth'house**, *n.* நிலத்திற்கு அடியிலுள்ள பண்டைக் காலத்திய மனை, பழங்காலக் களஞ்சியம்.

**earth'-hunger**, *n.* மண்ணாசை, நிலவேட்கை.

**earth'ing tires**, *n. pl.* நிலத்தில் இறங்கியவுடனே நிலையியல் மின்னாற்றலை வெளியேற்றும் தன்மை வாய்ந்த வானூர்தி உருளைகளின் தொய்வகப்பட்டைகள்.

**earth'ling**, *n.* நிலவுலகில் வாழ்பவர்; உலகியல் வாழ்வில் பற்றுமிக்கவர்.

**earth'ly**, *a.* நிலவுலகுக்குரிய; மனித வாழ்க்கை சார்ந்த; உலகியல் பற்றுடைய; கீழான, இழிந்த; நிலவுலகில் நிகழக் கூடிய; மனிதரால் பெறத்தக்க; உலகில் உள்ள.

**earth'ly-minded**, *a.* உலகியற் பொருள்களில் ஈடுபாடுடைய.

**earth'-movement**, *n.* நில மடிப்பு, நிலப்பரப்பின் மேடு பள்ள மாறுபாடு.

**earth'-nut**, *n.* தின்பதற்குரிய கிழங்கினையுடைய கோரைப் புல் வகை; தின்னத்தக்க கிழங்குவகை; பயற்றினச் செடி வகை.

**earth'-pea**, *n.* பயற்றினச் செடிவகை.

**earth'-pillar**, *n.* நில அரிப்பிடையே மேலேயுள்ள கல்லால் பாதுகாக்கப்பட்டு அமையும் தூண் போன்ற மென்னில அமைப்பு.

**earth'-plate**, *n.* நிலத்தில் புதையுண்டு மின்தாங்கியையோ தந்திக்கம்பியையோ நிலத்துடன் பிணைக்கும் உலோகத்தகடு.

**earth'quake**, *n.* நில அதிர்ச்சி, நில நடுக்கம்; நில எழுச்சி தாழ்ச்சி இயக்கம், பூகம்பம்.

**earth'quaked**, *a.* நில நடுக்கத்துக்கு உட்பட்ட, நில அசைவால் பாதிக்கப்பட்ட; நில அதிர்ச்சியால் அழிந்த; நில நடுக்கத்தால் ஆட்டங்கொண்ட.

**earth'-shine**, *n.* நிலநிழல்படியும் திங்களின் மங்கலான பகுதி.

**earth'-smoke**, *n.* கரப்பான் நோய்க்கு மருந்தாகப் பயன் படுத்தப்பட்ட செடிவகை.

**earth'-star**, *n.* காளான்வகை, நாய்க்குடை வகை.

**earth'-table**, *n.* நிலவரிசைத்தளம், நிலத்தளத்துக்குச் சற்றே மேற்படத் தெரியும் தளக் கட்டுமானம்.

**earth'-tremor**, *n.* சிறு நிலநடுக்கம்.

**earth'ward**, *a.* நிலம் நோக்கிய; *adv.* மண்ணை நோக்கி.

**earth'wax**, *n.* அரைகுறையாக ஒளி ஊடுருவிச் செல்லும் மெழுகுக்கூட்டுவகை.

**earth'wolf**, *n.* ஓநாய் போன்ற தென் ஆப்பிரிக்க ஊனுணி விலங்குவகை.

**earth'work**, *n.* நிலவரண்; மண் கோட்டை; அணைகரை; அகழ்ந்தணைத்த பள்ளமேடு.

**earth'-worm**, *n.* மண்புழு; சிற்றுயிர்; இழிஞர், கடையர்.

**earth'y**, *a.* மண்ணுலான; மண்ணுக்குரிய; மண் போன்ற; நிலவுலகில் வாழ்கிற; நிலத்துக்குரிய; கீழான, பருவியலான, திருத்தமற்ற.

**ear'-trum'pet**, *n.* காதுமந்தமானவர் கேட்க உதவும் குழாய்க் கருவி.

**ear'wax**, *n.* காதுகுரும்பி.

**ear'wig**, *n.* செவிப்பாம்பு; காதுகளில் புகத்தக்கதென்று கருதப்பட்ட புழுவகை; முகப்புகழ்ச்சியாளர்; *v.* மறைதக வல்களால் தன்வயப்படுத்திக்கொள்; ஒருசார்புபடுத்து, தன் சார்பு படுத்திக்கொள்; ஓயாத தகவல்களால் தொல்லையூட்டு.

**ear'-witness**, *n.* நேர்கேள்விச் சான்றுளர்.

**ease**, *n.* இயலமைதி, நோவின்மை; நோவினின்று விடுபாடு, குணநலம்; இயல்நலம், இன்னலம், தொல்லையின்மை; இன்ப அமைதி; இயல் எளிமை, இயல் தளர்வுநிலை, சிக்க லின்மை; எளிமை; *v.* நோவு தவிர்; தொல்லை நீக்கு, இன் னமைதி அளி; மன அமைதி வழங்கு; சிக்கல் நிலை அகற்று; கட்டுத்தளர்த்து, இணைப்பவிழ்; உடற் சோர்வகற்று, முயற்சிநிலை தளர்த்து; நாடி நரம்புகளை நெகிழவிடு; நெகிழ் வுறு; (தொ.) ease her, இயந்திரத்தின் வேகத்தைக் குறை; ease off, பளுக் குறைவாகு; ease oneself, மலங்கழி; தெளி; ill at ease, இயல் அமைதியில்லாத நிலையில்; stand at ease, கால்களை அகற்றி இயல்தளர்வான நிலையில் நில்; take one's ease, இன்ப அமைதியுடன் இரு.

**ease'ful**, *a.* நோவாற்றுகிற; இன்ப வாய்ப்பளிக்கிற; ஓய் வளிக்கிற, தொய்வான, அமைதி வாய்ந்த; இயல்பான சோம்பல் குணமுள்ள.

**eas'el**, *n.* ஓவியர் பயன்படுத்தும் நிலைச்சட்டம்.

**ease'ment**, *n.* (சட்.) மற்றொருவருடைய நிலத்தின்மீது செல்லும் வழியுரிமை; துணைவிரிவுக் கட்டுமானம்; நோவு நிலைத் தளர்வு; நெருக்கடி தளர்வு.

**east**, *n.* கிழக்குத்திசை; கிழக்குப்பக்கம்; கிழக்குப் பகுதி; கொண்டல், கீழ்க்காற்று; கீழையுலகம், கீழ்நாடுகளின் தொகுதி; *a.* கிழக்குத்திசையிலுள்ள; கிழக்குப்பக்கமான; கிழக்கு நோக்கிய; கிழக்கிலிருந்து வீசுகிற; *v.* கிழக்காக இயங்கு; கிழக்குமுகமாகத் திரும்பு; *adv.* கிழக்குத் திசை யில்; கிழக்குநோக்கி; கிழக்குப்பக்கமாக; (தொ.) East End, லண்டன் நகரின் கிழக்குப்பகுதி; Far East, சீனா ஜப்பான் முதலிய தொலைகிழக்கு நாடுகள்; Middle East, எகிப்தி லிருந்து ஈரான் வரையிலுள்ள நடுக்கிழக்கு நாடுகள்; Near East, மேலையுலகுக்கு அணித்தான துருக்கிபோன்ற அண்மைக் கிழக்கு நாடுகள்; to the east, கிழக்குத்திசை நோக்கி.

**Eas'ter**, *n.* இயேசுநாதர் மறைந்தபின் உயிர்த்தெழுந்ததைக் குறிக்கும் திருவிழா.

**eas'terly**, *a.* கிழக்குப் பக்கத்திலுள்ள; கிழக்குத் திசை யான; கிழக்கிலிருந்து வருகின்ற; *adv.* கிழக்குத் திசையில்.

**eas'tern**, *n.* கீழ்த்திசையில் வாழ்பவர்; கீழ்த்திசைத் திருச் சபை சார்ந்தவர்; *a.* கீழ்த்திசையுலகில் வாழ்கிற; கீழ்த் திசை உலகுக்குரிய; கிழக்குத்திசை நோக்கியிருக்கிற; (தொ.) Eastern Church, கிரேக்கமரபுத் திருச்சபை; Eastern Question, துருக்கிபோன்ற கீழை ஐரோப்பியப் பகுதிக்குரிய அரசியல் செய்தி.

**eas'y**, *n.* சிறிதுநேர ஓய்வு; *a.* எளிதான, முயற்சி எளிமை யுடைய, கடுமையில்லாத; இயலமைதி வாய்ந்த, கவலை யற்ற; தொல்லைகளிலிருந்து நீங்கிய; இயல் நலமார்ந்த, நோவற்ற; வேதனையிலிருந்து விடுபட்ட; இயலெளிமை வாய்ந்த, சிக்கலற்ற; இயல்பான, செயற்கை நடை முரணில்லாத; உடற் சோர்வற்ற, நாடிநரம்பு நெகிழவிடப் பெற்ற, தொய்வான; எளிவந்த, எளிதாக அணுகத்தக்க; எளிதில் வசப்படுத்தத்தக்க, எளிதாக விட்டுக்கொடுக்கிற; முனைப்பாகத் தேவைப்படாத; கிராக்கியற்ற; *adv.* இயல் பாக, இயலமைதியுடன்; மெள்ள; (தொ.) easy chair, தொய்வான சாய்நாற்காலி; easy circumstances, செழிப் பான வாழ்க்கை நிலை, நலம் பலவுள்ள சூழ்நிலை; easy money, எளிதாக ஈட்டிய பொருள்; easy street, இன்பவாய்ப்பு நிலைமை, செழிப்பான நிலைமை, வாழ்க்கைநலத் தன்மை; honours easy, (சீட்டாட்டம் முதலியவற்றில்) வெற்றி தோல்வியில்லாத சரிசமமான நிலைமை; stand easy, (படை வீரர்கள் வகையில்) மிகவும் எளிதான தளர்வு நிலையில் நில்; take it easy, முயற்சி செய்வதைத் தவிர், பரபரப்படையாமல் இரு, விரைவுபடுத்தாமல் இரு, தளர்வான நிலையில் இரு.

**eas'y-go'ing**, *a.* எளிதான நடைபாணியுள்ள; சொகுசான வாழ்க்கையை விரும்புகிற, சோம்பலான, வேலையில் விருப்ப மில்லாத.

**eat**, *v.* தின்; உண்; மென்று தின், பல்லால் அரைத்து உட் கொள்; விழுங்கு; அரித்தழி; அழித்தொழி; படிப்படி யாக அழி; தொல்லைப்படுத்து; தின்னப்பெறு; (தொ.) eat away, அரித்துத் தின்னு; படிப்படியாக அழி; eat humble pie, ஆணவம் அடங்கப் பெறு; eat in, உள்ளூர அழி; eat one's hat, ஆகாதது என்று சுட்டி ஆவதானல் செய்யாதது செய்வதாகக் குறிப்பிட்டுக் கூறு; eat one's head off, தன்மதிப்புக்கு மேற்பட்ட செலவுக்குக் காரணமா யிரு; eat one's heart out, ஓயாது நினைந்து நினைந்து மிகவும் கடுமையாகத் துன்பப்படு; eat one's terms, eat one's dinners, உயர் வழக்கறிஞர் தொழிலுக்குப் படித்துக் கொண்டிரு; eat one's words, சொன்ன சொல்லுக்கு மன மாரத் தவறென்று ஒப்புக்கொண்டு கேட்டுப் பின்வாங்கிக் கொள்; eat out, தின்றுமுடி; வரம்புகடந்து பிறர் உரிமை கவர்; eat up, முழுவதும் விழுங்கு.

**eat'able**, *a.* தின்னத்தக்க.

**eat'ables**, *n. pl.* உணவுப்பொருள்கள்.

**eat'er**, *n.* உண்ணுபவர்; தின்னுவது.

**eat'ing**, *n.* தின்னுதல், உண்ணல்; *a.* பக்குவம் செய்யாமல் உண்ணத் தகுந்த.

*eau*, (பிர.) *n.* நீர்; (தொ.) *eau-de-Cologne*, 'கலான்' (*Cologne*) என்னும் செர்மன் நகரில் உருவாக்கப்படும் நறுமண நீர்மவகை; *eau-de-Nil*, நைல் ஆற்றுக்குரியதாகக் கருதப்பட்ட பச்சைச் சாயல் வண்ணம்; *eau-de-vie*, உயிர்நீர், இன்தேறல் வகை; *eau sucree*, பாகு, சர்க்கரைநீர்.

**eaves**, *n.* இறப்பு, இறவாரம்.

**eaves'drop**, *v.* இறவாரத்தடியில் நின்று உற்றுக்கேள்; ஒற்றுக்கேள், ஒளிந்து மறைபேச்சுக் கவனி.

**eaves'dropper**, *n.* மறைந்திருந்து ஒற்றுக் கேட்பவர்.

**ebb**, *n.* வேலி இறக்கம்; எழுச்சி தணிவு, வடிதல்; தளர்வு, நலிவு, தாழ்வு, பின்னிடைவு; *v.* எழுச்சி தணி, வடிந் திறங்கு, தணிவுறு, தாழ்வுறு, பின்செல்.

**E'-boat**, *n.* எதிரியின் விரைதாக்கு நீர்மூழ்கிப்படகு.

**eb'on**, *a.* (செய்.) கருங்காலி மரத்தாலான, கருங்காலி போன்று கருநிறமுள்ள.

**eb'onite**, *n.* வன்கந்தகம், தொய்வகம் கலந்த கந்தகக் கலவை.

**eb'ony**, *n.* கருங்காலிமரம், கருங்காலிக்கட்டை; *a.* கருங் காலி மரத்தாலான; கருங்காலி போன்று கருநிறமுடைய.

**ebri'ety**, *n.* குடிபோதை, மதுமயக்கம், குடிவெறி.

**e'briose, eb'rious**, *a.* மதுவுண்ட, மதுவெறியுள்ள; மது வெறியைச் சார்ந்த; மதுவெறிப் பழக்கத்துக்கு ஆட்பட்ட.

**ebull'ient**, *a.* கொதித்து எழுகிற, பொங்குகிற; எழுச்சி யார்வமிகக, உணர்ச்சி கொந்தளிக்கிற.

**ebulli'tion**, *n.* பொங்கழற்சி; நுரையெழுச்சி, நுரை தழைப்பு; எதிர்பாராக் கிளர்ச்சி, திடீர் எழுச்சி.

**ecar'te**, *n.* கழிப்பாட்டம், இருவர் சீட்டாட்டவகை.

**Ec'ce Hom'o**, *n.* முள்முடி தரித்த இயேசுநாதரின் படம்.

**eccen'tric**, *n.* உறழ்வட்டம், மையத்தை வேருகக்கொண்ட வட்டம்; சுழலியக்கத்தை முன்பின் அல்லது மேல்கீழான நேர் வரை இயக்கமாக மாற்றும் இயந்திர அமைவு; இயற்கைக்கு மாறுபட்டவர், விசித்திரமானவர், கோட்டிக்காரர்; *a.* உறழ் வட்டமான, வட்டங்கள் வகையில் மைய வேறுபாடுடைய; மையத்தினின்றும் விலகிய; மையநிலையிலிருந்து விலகிய ஊடச்சுடைய; கோணெறி வகையில் உறழ்வட்டமான; கோள் வகையில் வட்டந்திரிந்த பாதையில் செல்கிற; இயற் கைக்கு மாறுபட்ட, இயல்பு திரிந்த, விசித்திரமான; பொது முறை விதிகளுக்குக் கட்டுப்படாத, தனிப்போக்குடைய.

**eccentric'ity**, *n.* மைய உறழ்வு; உறழ்மையமுடைமை; பொதுவிலிருந்து விலகிய நடத்தை; தனிப்போக்கு, விசிதிரப்பாங்கு.

**eccles'ia**, *n.* பண்டைக் கிரேக்க நாட்டில் ஆதென்ஸ் நகருக் குரிய (Athenian) குடிமக்களின் பொது அவை; யூதர் பொதுப்பேரவை.

**eccles'iast**, *n.* பண்டைக் கிரேக்க நாட்டில் ஆதென்ஸ் நகருக் குரிய (Athenian) குடிமக்களின் பொதுச்சபை உறுப்பினர்; சமய உரையாற்றுபவர்; மதகுரு; இஸ்ரவேல் (Israel) மன்னராகிய சாலமன் (Solomon).

**Ecclesias'tes**, *n.* பழைய ஏற்பாட்டுச் சுவடிகளில் ஒன்று

**ecclesias'tic**, *n.* மதகுரு, திருச்சபைக்குத் தம் வாழ்வை ஒப்படைத்துள்ளவர், சமய உரையாற்றுபவர்; *a.* திருக் கோயில் தொடர்பான; மதகுருசார்ந்த.

**ecclesias'tical**, *a.* திருக்கோயில்தொடர்பான; மதகுருசார்ந்த.

**Ecclesias'ticus**, *n.* கிறித்தவத் திருமறைத் தொகுதிகளி லிருந்து பிரித்தொதுக்கப்பட்ட ஏடுகளில் ஒன்று.

**ecclesiol'ogy**, *n.* திருக்கோயில் கட்டிடம்-ஒப்பனை ஆகிய வற்றைப் பற்றிய நூல்.

**ec'dysis**, *n.* மேந்தோல்கழிப்பு; உரிசட்டை, இற்று அகலும் மேல்தோடு; பழக்கவழக்கக் கழிப்பு; *pl.* ec'dyses.

**e'chelon**, *n.* ஏறுபடியணி, ஒவ்வொரு படைவீரர் முன்னும் முகப்பு வரை தடையற்றிருக்கும்படி அமைந்த ஏறுபடி போன்ற படைத்துறை அணிவகுப்பு; படைக் கப்பல்களின் ஏறுபடி வரிசை வகுப்பு.

**echid'na**, *n.* முள்ளெலி போன்ற குழிபறிக்கும் பல்லில்லாத ஆஸ்திரேலிய (Australian) விலங்கினம்.

**echid'nine**, *n.* பாம்பின் நஞ்சு.

**e'chinite**, *n.* முட்டைவடிவமான முள்செறிந்த கூட்டினை யுடைய புதை படிவக் கடல் உயிர் வகை.

**echi'noderm**, *n.* முட்கள் செறிந்த முட்டை வடிவமான கூட்டினையுடைய பேரினம் சார்ந்த உயிர் வகை.

**echin'us**, *n.* முட்களுள்ள முட்டை வடிவமான கூட்டினை யுடைய கடல் உயிர் வகை; (க-க.) தூண் தலைப்பின் மேல் மட்டத்தைத் தாங்கும் புறங்கவிவான அடிப்பகுதி.

**ec'ho**[1], *n.* எதிரொலி; மீள்ஒலி; எதிரலை, எதிரதிர்வு; பின் அடுக்கொலி; கூறியதுகூறல்; செய்ததுசெய்தல்; எதிர் நினைவு; பின்தொடர்வு, பின்தொடுப்பு; பாட்டில் அடி இறுதி ஒலி இயையு; பேரிசைப்பேழையில் எதிரொலிக்கும் சிற்றமைவு; சீட்டாட்ட வகையில் சீட்டுக்களைப் பற்றிக் கூட்டாளிகளுக்குத் தெரிவிக்கப்படும் குழூஉக் குறிப்பு; அனுக்கப்போலி, மிகஒத்திருப்பது; குருட்டுத்தனமாகப் பின் பற்றுபவர், தலையாட்டி இசைபவர், சொல்வதைத் திரும்பச் சொல்பவர்; *pl.* ec'hoes; *v.* எதிரொலி எழுப்பு; ஒலி மீளச் செய்; எதிரொலியாக எழு; ஒலிமீள்வுறு; கூறியது கூறு; மற்றொருவர் சொற்களையே வழங்கு; போலிசெய்; குருட்டுத் தனமாகப் பின்பற்று; தலையாட்டி இசைவளி; சீட்டாட் டத்தில் குழூஉக் குறிப்புக் காட்டி ஆடு; (தொ.) cheer to the echo, மனமாரக் கைகொட்டிப் பாராட்டு.

**Ec'ho**[2], *n.* கிரேக்கபுராணக்கதையில் வரும் அரமகள்; எதி ரொலியின் உருவகம்.

**ech'ogram**, *n.* எதிரொலி மூலம் கப்பல் அடிக்குக் கீழுள்ள கடலாழத்தைக் கணித்துக் காட்டும் கருவிப்பதிவு.

**echo'ic**, *a.* எதிரொலியின் இயல்புள்ள; (மொழி.) ஒலிகளைப் போல் சொற்கள் அமைந்துள்ள, ஒலி அனுகரணம் சார்ந்த.

**ec'hoism**, *n.* ஒலிகளைப்போல் சொற்கள் அமையும் பண்பு, சொல்லொலியிசைவு.

**ech'oless**, *a.* எதிரொலிக்காத; உணர்ந்து செயல் ஆற்றுத.

**ech'o-sounder**, *n.* கப்பலடிக்குக் கீழ் உள்ள கடலாழத்தை எதிரொலிப் பண்புமூலம் கணித்துக்காட்டும் கருவி.

**ec'lair**, *n.* குளிர் பாற்கட்டி நிரப்பிச் செய்யப்படும் சிறு விரல் வடிவப் பண்ணியம்.

*eclaircissement*, (பிர.) *n.* தெளிவாக்கல், விளக்கங்கூறல்.

**eclamp'sia, eclamp'sy**, *n.* (மரு.) சூலுற்றிருக்கையில் அல்லது மகப்பேற்றின்போது பெண்களுக்குத் திடீரெனத் தோன்றும் வலிப்புநோய், பேறுகாலச்சன்னி.

*eclat*, (பிர.) *n.* பகட்டான வெற்றி, மிகுசீர்த்தி; சமூகச் சிறப்பு; தனிமுனைப்பான இகழ்.

**eclec'tic**, *n.* பன்னலத்திரட்டாளர், பல கோட்பாட்டுக்குழுக் களின் கருத்துக்களையும் தேர்ந்து இசைந்தேற்றுக்கொள்ளும் இயல்புடைய பண்டை மெய்விளக்க அறிஞர்; பல்திறப்பட்ட மூலங்களிலிருந்தும் குறுகிய உவப்புவர்ப்புக் கட்டுப் பாடின்றித் தாராளமாகக் கருத்துக்களை வரவேற்பவர்; *a.* மெய்விளக்கத்துறையில் பல கோட்பாடுகளின் கருத்துக் களையும் தேர்ந்தெடுத்து இணைத்துக்கொள்கிற; பன்னலக் கூட்டான, பல்திரட்டான; விரிந்த மனப்பாங்குடைய, குறுகிய கொள்கை வரம்புணர்ச்சிக் கட்டுப்பாடற்ற.

**eclec'ticism**, *n.* நற்கூறுகளைத் தேர்ந்தெடுத்துக்கொள்பவர் செயல்; கி. மு. இரண்டாவது முதலாவது நூற்றாண்டுகளில் வாழ்ந்த கிரேக்க மெய்விளக்க அறிஞர்களின் கோட்பாடு; பல்வேறுன நற்கூறுகளைத் தேர்ந்து திரட்டி உருவாக்கும் பாங்கு.

**eclec'tics,** *n. pl.* கி. மு. இரண்டாவது முதலாவது நூற்ரூண்டுகளில் வாழ்ந்த கிரேக்க மெய்விளக்க அறிஞர்களின் குழு.

**eclipse',** *n.* வானகோளங்களின் ஒளிமறைப்பு; இடைத்தடுப்பு; நிழலடிப்பு; ஒளிமறைவு; ஒளிமழுக்கம்; மறுக்கம்; கீழடிப்பு; கலங்கரை விள்க்க ஒளியின் இடையிடை நிழலடிப்பு; இருட்டடிப்பு; *v.* வானகோளங்களின் ஒளியை மறை; ஒளிவட்டத்தை இடைநின்றுதடு; கோள்வட்டமீது நிழலடி; கலங்கரை விளக்க ஒளியை இடையிட்டு நின்று மறை; ஒளிமழுங்குவி; ஒளிமங்கவை; விஞ்சிஒளிவீசு; கடந்துமேம்பாடுறு; புகழ்விஞ்சு; வென்றுமேலிடு.

**eclip'tic,** *n.* ஞாயிறு செல்வதாகத் தோன்றும் நெறி, கதிர்வீதி; *a.* கதிர்வீதிக்குரிய; வான்கோள மறைப்புச் சார்ந்த.

**ec'logue,** *n.* சிறுஅளவான முல்லைப்பாட்டு, ஆயர் உரையாடற் பாட்டு.

**ecol'ogy,** *n.* உயிரின வாழ்க்கைச்சூழல் ஆய்வுநூல்.

**econom'ic,** *a.* பொருளியல் சார்ந்த; சிக்கனமான; வீண்செலவின்றிச் செட்டான; ஆதாயவண்மையுடைய; பயன்வளம்வாய்ந்த; கணித்துநோக்குகிற; செலவு கட்டிக்கொண்டுபோகிற; பயன்கருதிய, பணம் கருதிய; தொழில் துறைத்தொடர்பான.

**econom'ical,** *a.* சிக்கனமான, வீணழிவு அற்ற; மிச்சப்படுத்துகிற, பொருளியல் நூல் சார்ந்த; நாட்டுப்பொருளியல் பற்றிய.

**econom'ically,** *adv.* சிக்கனமாக; சிக்கனத்தை முன்னிட்டுப் பார்க்கையில்.

**econom'ics,** *n.* பொருளாக்கவியல், பொருளியல்; பொருள்வளநிலை; பொருளாட்சி; நாட்டுப்பொருளியல்; செல்வத்தின் ஆக்கத்தையும் பங்கீட்டையும் பற்றிய செயல்முறை நூல்.

**economi'ser,** *n.* சிக்கனமாயிருப்பவர்; வெப்பம்-எரிபொருள் முதலியவற்றை மிச்சப்படுத்துவதற்கான இயந்திர அமைவு.

**econ'omist,** *n.* பொருளியல் ஆய்வாளர்; பொருளியல் நூலாசிரியர்; நாட்டுப்பொருளியல் ஏடு ஆக்கியோர்; சிக்கனக்காரர்; செல்வத்துறை நடைமுறை மேலாட்சியாளர்.

**economiza'tion,** *n.* சிக்கனமுறைக் கடைப்பிடிப்பு.

**econ'omize,** *v.* சிக்கனமாயிரு; பணத்தைச் செட்டாகச் செலவழி; செலவுகளைக் குறை, மிச்சப்படுத்து; அரிதாகப் பயன்படுத்து; பயன்தரு வகையில் நடத்திக்கொண்டு போ.

**econ'omy,** *n.* குடும்பநடைமுறையாட்சி; குடும்பப் பொருளாட்சி; சிக்கனம்; சிக்கனச்செயல், செட்டாகச் செலவிடல்; மிச்சப்படுத்தல்; மட்டு, செட்டு; ஒழுங்கமைவு, ஒழுங்குபட்ட நடைமுறை; ஒழுங்கமைந்த சமூகம்; சமய நடைமுறை ஒழுங்கு; கோட்பாட்டு ஒழுங்குமுறைத் திட்டம்; இயற்கையின் ஒழுங்காட்சி; (தொ.) Political Economy, நாட்டுப் பொருளியல், நாட்டுச் செல்வத்தின் ஆக்கத்தையும் பங்கீட்டையும் பற்றிய கோட்பாட்டுநூல்.

**ecru',** *n.* வெளுக்கப்படாத சணல்நார்; வெளுக்கப்படாத சணல் நாரின் நிறம்; *a.* வெளுக்கப்படாத சணல் நார் போன்ற.

**ec'stasize,** *v.* களிபெருவகைக்காளாக்கு; மிகு களிப்புக்கொள்.

**ec'stasy,** *n.* மெய்மறந்த மகிழ்ச்சி, களிவெறி, ஆனந்த பரவசம்; கவிதை வெறி, கற்பனைவெறி; (மரு.) ஒருமைவெறி, நரம்புகளின் நோய்ப்பட்ட தன்மையினுல் மனம் ஒன்றிலேயே நாட்டம் செலுத்தும் நிலை; *v.* மிகுகளிப்பில் ஆழ்த்து.

**ecstat'ic,** *n.* மிகு களிப்புக்கொள்ளும் பாங்குள்ளவர்; மெய்மறந்த நிலையில் வெளியாகும் பேச்சு; *a.* களிமகிழ்வுக்குரிய; பேருவகைக்குட்பட்ட; மிகுகளிப்புண்டாக்குகிற; பரவசமாகிற.

**ecumen'ic, ecumen'ical,** *a.* கிறித்தவ உலக முழுமைக்கும் உரிய; கிறித்தவத் திருச்சபை முழுமையும் சார்ந்த; பொதுப்படையான, பரவலான, முழுமொத்தமான; எல்லாவற்றையும் உட்படுத்திய.

**ec'zema,** *n.* தோல் தடிப்பு நோய்வகை, கரப்பன் புண், பற்று, படை.

**eda'cious,** *a.* உண்டி சார்ந்த; பெருந்தீனிகொள்கிற; பேரவாவுள்ள.

**Ed'am,** *n.* உருண்டைவடிவ ஆலந்து நாட்டுப் பால்கட்டி.

**Edd'a,** *n.* பழங்கால ஐஸ்லாந்துநாட்டு இலக்கியத்திரட்டு.

**edd'y,** *n.* சிறுநீர்ச்சுழி; சுழல்காற்று; நீர்ச்சுழல்போல் இயங்கும் மூடுபனித்திரை, புகையின் சுழலலை; *v.* சுழன்று சுழன்று இயங்கு.

**ed'elweiss,** *n.* ஆல்ப்ஸ் மலைகளில் பாறைப்பாங்கான இடங்களில் வளரும் வெள்ளைமலருடைய செடிவகை.

**Ed'en,** *n.* கிறித்தவசமயக் கொள்கைப்படி படைப்புக் காலத் தொடக்கத்தில் ஆதம்-ஏவா வாழ்ந்த பூங்கா; மகிழ்விருக்கை; பொன்னுலகு, இன்ப உலகு.

**eden'tate,** *n.* (வில.)முன்வாய் வெட்டுப் பற்களும் கோரைப் பற்களும் இல்லாத விலங்கு; பற்களில்லாத விலங்கு; *a.* முன்வாய் வெட்டுப் பற்களும் கோரைப் பற்களும் இல்லாத; பற்கள் இல்லாத.

**edge,** *n.* விளிம்பு, வக்கு; முனை; கோடி; ஓரம், அருகு; கருவியின் கூரியபக்கம், கூர்; கூர்மை; காயப்படுத்தும் கருவி முனை; பாறையின் முனைவிளிம்பு; முகடு; பிழம்புருவில் இருபரப்புக்களின் சந்திப்புவரை; பரப்பின் எல்லைக்கோடு; மதிக்கூர்மை; உணர்ச்சிக்கூர்மை; கூரிய சுவையுணர்ச்சி; உள்ளக்கூர்மை; சிடுசிடுப்பு, எளிதில் எரிச்சலூட்டும் நிலை; *v.* தீட்டு, கூராக்கு; விளிம்பாக அமை; ஓரங்கட்டு, கரை அமை; கரை இணை; உணர்ச்சி கூர்மைப்படுத்து; நகர்த்து; சிறிதுசிறிதாக மெல்ல நகர்; மெல்லப் புகுத்து; தூண்டு; சாட்டிக் கூறு, மறைமுகமாகக் குறிப்பிடு; கூர்விளிம்பால் தாக்கு; (தொ.) be on edge, படபடப்புறு, பொறுதியிழ; கூரார்வம்கொள்; edge in a word, ஒரு சொல்லினை இடர்ப்பட்டு இடைச்செருகு; edge one on, தூண்டு; inside edge, சறுக்குக்கட்டையின் உட்புற விளிம்பில் இருந்துகொண்டு பனிமீது சறுக்குதல்; outside edge, சறுக்குக்கட்டையின் வெளிப்புற விளிம்பில் இருந்துகொண்டு பனிமீது சறுக்குதல்; set on edge, ஊக்கு, தூண்டு, கிளர்ச்சியூட்டு; set one's teeth on edge, நடுக்கமுறச்செய், வெறுப்படையச்செய்.

**edge'-bone,** *n.* பிட்ட எலும்பு; மாட்டின் பிட்டத்தசைக்கறி.

**edge'less,** *a.* கூர்அற்ற, மழுங்கிய.

**edge'-tool,** *n.* கூர்விளிம்புடைய கருவி, வெட்டுக்கருவி.

**edge'ways, edge'wise,** *adv.* கூர்விளிம்புமுன்னாக; கூர்விளிம்பு மேலாக; பக்கவாட்டாக; விளிம்போடு விளிம்பு சேர; (தொ.) get a word in edgeways, பேச்சு இடை ஓய்ந்த நேரத்தில் பேச வாய்ப்புப்பெறு.

**edg'iness,** *n.* கோணமுடைமை; வரைக்கோடு மிகத் தெளிவாயிருத்தல்; கூருணர்வுநிலை.

**edg'ing,** *n.* கரைக்கட்டு, கரை; விளிம்புத்தொங்கல்; விளிம்பமைத்தல்.

**edg'y,** *a.* கூர்விளிம்புடைய, கூர்மையான; (வண்ணம் பூசுதல்) திட்டவட்டமான எல்லைவரையறைப் பாங்குள்ள; எளிதில் சினமுட்டப்பெறத்தக்க.

**edibil'ity,** *n.* உணவாகக்கொள்ளும் தகுதியுடைமை.

**ed'ible,** *n.* உணவாகக்கொள்ளத்தக்க பொருள்; தின்றி; *a.* தின்னற்குரிய, உண்ணத்தக்க.

**ed'ict,** *n.* அரச ஆணை; விளம்பரம், அதிகாரத்தைக் கொண்டு அறிவிக்கப்படும் செய்தி.

**edifica'tion,** *n.* செவியறிவுறூஉ, நல்லறிவுறுத்தல், வாழ்க்கை மேம்பாட்டுக்குரிய நல்லொழுக்கப்போதனை.

**edif'icatory,** *a.* ஒழுக்க மேம்பாடுறச் செய்யத்தக்க.

**ed'ifice,** *n.* பெரிய கட்டிடம், மாளிகை; பெருஞ்செயற் கட்டமைவு.

**ed'ify,** *v.* ஆன்மிகத்துறையில் பயனடையச்செய்; ஒழுக்கத்தில் மேம்படச்செய்; சமயத்தில் பற்றுக்கொள்ளச்செய்; ஆறுதலளி, மகிழ்வி.

**ed'ifying,** *a.* அறிவுறுத்துகிற; மேம்பாடுறச்செய்கிற.

**ed'it,** *v.* பதிப்பி; பதிப்புக்கு வேண்டிய முறையில் ஏட்டை உருவாக்கு; வகுத்துத் தொகுத்தமை; தேர்ந்து திரட்டியமை; திருத்தியமை; பத்திரிகைப் பதிப்பாசிரியராயிருந்து பணியாற்று.

**edi'tion,** *n.* பதிப்பு, மாறுதலின்றி ஒருதடவை வெளியிடப்பட்ட ஏட்டுப்படிகளின் தொகுதி; ஒரே அளவில் வெளியிடப்பட்ட தொகுதி; ஒரேசமயத்தில் ஒரேமுறையில் வெளியிடப்பட்ட பத்திரிகைப்படிகளின் தொகுதி; ஒருதடவை கோத்து அச்சிட்ட படிகளின் தொகுதி; ஒரே ஏட்டின் பல படிவங்களில் ஒன்று; பதிப்பாசிரியரளித்த மூல எழுத்தாண்மை வடிவம்; ஒத்த மறுபடிவம்.

***edition de luxe,*** (பிர.) *n.* உயர்விலைப்பதிப்பு; அழகிய பதிப்பு.

***editio prin'ceps,*** (ல.) *n.* ஏட்டின் அச்சிட்ட முதல்பதிப்பு.

**ed'itor,** *n.* பதிப்பாசிரியர்; இதழாசிரியர், செய்தித்தாள் முதலியவற்றை அல்லது அவற்றின் ஒரு பிரிவினை நடத்துபவர்.

**editor'ial,** *n.* தலையங்கம், தலையங்கக் கட்டுரை, செய்தித்தாளில் அதன் ஆசிரியரால் அல்லது அவர்தம் பொறுப்பில் வேறொருவரால் எழுதப்படும் கட்டுரை; *a.* பதிப்பாசிரியருக்குரிய; இதழாசிரியருக்குரிய.

**ed'itress,** *n. fem.* பதிப்பாசிரியை; இதழாசிரியை.

**ed'ucate,** *v.* பேணிப்பயிற்றுவித்து வளர்; அறிவொழுக்கப் பயிற்சியளி; அறிவுபுகட்டு, கல்வியளி; பள்ளியில் பயிற்றுவி; பயிற்றுவித்துப்பழக்கு, செயலுக்குப் பழக்கப்படுத்து; பழக்கு; பண்பூட்டு.

**educa'tion,** *n.* கல்விப்பயிற்சியளித்தல்; கல்விப்பயிற்சி; கல்விப்பயிற்சித் திட்டம்: வளர்ப்புப்பயிற்சி; மனப்பண்புப் பயிற்சி; விலங்குகளின் பயிற்றுவிப்பு; பழக்குவிப்பு.

**educa'tionalist, educa'tionist,** *n.* கல்வித்துறை வித்தகர், கல்விபுகட்டு முறைகளில் தனித்திறமை பெற்றவர், கல்வி வளர்ப்பவர்.

**ed'ucative,** *a.* கல்விசார்ந்த, கல்விக்குரிய; அறிவுறுத்துகிற, கல்விபுகட்டவல்ல.

**educe',** *v.* உள்ளார்ந்த பண்புகளை வெளிக்கொணர், புறமலர்ச்சியுறச்செய்; தருகூறுகளிலிருந்து முடிவு தருவி, புதுமெய்ம்மை உறுவி; உய்த்துணர்; (வேதி.) பொருட் கூட்டிலிருந்து பிரித்தெடு, வேறுபிரித்துக்காட்டு.

**ed'uct,** *n.* உய்த்துணர் மெய்ம்மை, வருவிக்கப்பட்ட முடிபு; (வேதி.) பிரித்தெடுக்கப்பட்ட பொருள்.

**educ'tion,** *n.* வெளிக்கொணர்தல், புறமலர்ச்சி; இயந்திரங்களின் நீராவி முதலியவற்றின் வெளிப்போக்குக் குழாய்.

**educ'tor,** *n.* வெளிப்படுத்துபவர், தோன்றச் செய்பவர்; வெளிப்படுத்துவது, தோன்றச் செய்வது.

**edul'corate,** *v.* கடுஞ்சுவை நீக்கு, இனிக்கச் செய்; கரையத்தக்க கூறுகளகற்றித் துப்புரவுபடுத்து, தூய்மையாக்கு.

**eel,** *n.* மலங்கு, விலாங்கு மீன், முரல், எளிதில் பிடிகொடாத மனிதர், ஓயாது தட்டிக்கழிப்பவர்; (தொ.) electric eel, stand eel, மலங்கு வகைகள்.

**eel'fare,** *n.* இளவிலாங்கு மீன்கள் புடைபெயர்ந்து செல்லும் பாதை; விலாங்கு மீனின் ஓரீற்று இளமீன் தொகுதி; இள விலாங்கு மீன்.

**eel'grass,** *n.* கோரைப்புல் போன்ற கடற்பாசி வகை.

**eel'-pout,** *n.* நன்னீர் மீன்வகை; குட்டியீனுகின்ற மீன் வகை.

**eel'-set,** *n.* விலாங்குமீன் பிடிப்பதற்காக ஆற்றின் குறுக்கே இடப்பட்ட வலை.

**eel'-worm,** *n.* வளையப்புழு.

**eel'wrack,** *n.*=eelgrass.

**eer'ie, eer'y,** *a.* முன்பின் எதிர்பாராத, இன்னதென்றறியப்படா அச்சம் விளைவிக்கிற; பேயச்சமூட்டுகிற, இயற்கை மீறிய மாய உணர்ச்சியால் தாக்குண்ட; துணுக்குறச் செய்யக்கூடிய, மயிர்க்கூச்செறிய வைக்கிற, நடுக்குறுவிக்கிற.

**efface',** *v.* துடைத்தழி, தடங்கெட வை, மேற்பரப்பின் உரு வழி; ஒளிமறைப்புச் செய், மங்க வை, விஞ்சி ஒளிவிடு; முனைப்பு அழி, உரு மறைத்துவிடு, சிறப்புக் குன்றவை; (தொ.) efface oneself, தன்முனைப்பழி, தன்னைச் சிறப்பற்றவராக்கிக் கொள், பொதுமைப்படுத்திவிடு.

**effect',** *n.* பலன், விளைவு, விளைபயன்; பண்புவிளைவு, உளத்தில் ஏற்படும் மாறுதல், முகத்தோற்ற மாறுதல், முகபாவனை மாறுதல்; மெய்ந்நிலை, மெய்ப்பாடு; செயல் திட்பம், பயனுரம்; உட்கருத்து; சாயல் நுட்பம், தோற்றச்செவ்வி; *v.* செயலுருப்படுத்து, செயல் வெற்றி காண், செய்து முடி, செயலுருவாக்கு, தோற்றுவி; (தொ.) cause and effect, காரண காரியம்; for effect, விளைபயனை முன்னிட்டு, பயன் மிகுத்துக்காட்டலை எதிர்பார்த்து; general effect, மொத்தத் தோற்றத்தால் காட்சியில் ஏற்படும் திறம்; give effect to, செயலில் நிறைவேற்று, செயற்படுத்திக்காட்டு; in effect, மெய்யாக, உருப்படியாக, செயல் முறையளவில்; take effect, செயல் கருக்கொள், செயல் பயனுறத் தொடங்கு.

**effec'tible,** *a.* செய்து முடிக்கத்தக்க.

**effec'tive,** *n.* போருக்கு ஆயத்த நிலையிலுள்ள படைவீரன்; போர்முனைப்பு நிலையிலுள்ள படைப்பிரிவு; *a.* செயல் விளைவுடைய, பயனுறுதியுள்ள; செயலூக்கமுடைய, விளைபயன் திட்பம் வாய்ந்த; செயலுரமிக்க, ஆற்றல் வாய்ந்த; விளைவின் வலிமை முழுதுமுடைய; பயன்முனைப்பான; பயனுடைய; சேவைக்கு ஆயத்த நிலையிலுள்ள; மெய்யான; நடப்பிலுள்ள.

**effect'less,** *a.* செயல்விளைவில்லாத; விளை பயனற்ற.

**effect'or,** *n.* (உயி.) உயிரினங்களில் புறத்தூண்டுதலுக்கு எதிரான அக்வுணர்வு புறங்காட்டும் உறுப்பு.

**effects',** *n. pl.* உடைமைகள், உடைமை உரிமைகள்; (தொ.) leave no effects, பின்மரபுக்கு உடைமை எதுவும் விட்டுச் செல்லாதிரு, இறுதிப்பத்திரம் எழுதி வைப்பதற்குரிய எதுவுமில்லாமல் போ; personal effects, மரபுரிமையாகச் செல்லாத தனியுரிமை உடைமைகள்.

**effec'tual,** *a.* விரும்பிய பயன் விளைவித்தலில் வெற்றியுள்ள; திட்ப உறுதியான, முடிவான பயனுடைய; நேர் பயனுடைய; (தொ.) effectual calling, தேர்ந்தாய்வுற்ற சால்புடையவர்க்கு இயேசுநாதரிடம் வருவதற்கான திருஅழைப்பு.

**effec'tuate,** *v.* செயல் நிறைவுறுத்து, செய்து முடி.

**effem'inacy,** *n.* பெண்தன்மை, மெல்லியல்பு, ஆண்மைக் கேடு, வலிவின்மை; ஆணின் தன்னிலை கெட்ட இன்பத் தோய்வு.

**effem'inate,** *n.* ஆண்தன்மை இல்லாதவன், பேடி; *a.* ஆண்மையில்லாத; பெண்தன்மையுள்ள; வலிவற்ற; மென்மைமிக்க; சிற்றின்ப ஈடுபாடுள்ள; *v.* பெண்தன்மையாக்கு, மெலியச் செய், ஆண்மை குலையச்செய்.

**effen'di,** *n.* துருக்கியில் அரசியற்பணியாளர்களுக்கும் கல்வித்துறை முதல்வர்களுக்கும் 1934-வரை உரித்தாக வழங்கப்பட்ட பட்டப்பெயர்.

**eff'erent,** *a.* (உட.) நாடிநரம்புகளில் வெளிநோக்கிச் செல்கின்ற, கொண்டு செலுத்துகின்ற.

**effervesce',** *v.* கொதி, சூவென்ற ஒலியுடன் குமிழியிட்டுப் பொங்கியெழு; நுரைத்தெழு.

**effervesc'ent,** *a.* ஆவிவெளிவருவதனல் பொங்குகிற, ஆவி வெளியேற்றுவதனுல் நுரைத்தெழுகின்ற.

**effete',** *a.* முற்றிலும் களைத்துப்போன, தளர்ந்துநலிந்த; வலுவிழந்த; உரமழிந்த, ஊக்கங் குலைந்த.

**effic'acious,** *a.* கருதிய பயனைக் கட்டாயமாகத் தரத்தக்க, பயனுரமுடைய.

**efficac'ity, eff'icacy,** *n.* செயற்படுத்தும் திறன், பயனிறைவுடைமை; நற்றிறம்.

**effi'cience,** *n.* திறமையான செயல்; திறன்நிறைவு.

**effi'ciency,** *n.* பயனுறுதி, குறிப்பிட்ட பயனை நிறைவேற்றும் ஆற்றல்; தகைதிறம், தேவைக்குப்போதுமான தகுதி; இயக்குதிறம், இயந்திரத்தின் இயக்காற்றல்மீது விளைவாற்றலுக்குரிய விழுக்காடு.

**effi'cient,** *n.* பயன்விளைவிப்பவர்; பயன் விளைவிக்கும் பொருள்; *a.* தகை திறமுடைய, நிறைவேற்றும் ஆற்றலுடைய; பயனுறுதியுடைய.

**eff'igy,** *n.* சிறிய உருவப்படம்; மாதிரி உருவம்; நாணயத்தில் பொறிக்கப்பட்ட உரு, தலையுருப்பொறிப்பு; (தொ.) burn in effigy, வெறுப்புணர்ச்சியின் விளைவால் ஒருவரின் உருவப்படத்தைக் கொளுத்து.

**effloresce',** *v.* பூத்துக்குலுங்கு; பொங்குமாவளமுறு, மலர்ச்சியுறு; பொடியார்ந்த தோட்டால் மூடப்பெறு; பொடியார்ந்த தோடாக உருப்பெறு; (வேதி.) பொருட்களின் மணி உருவகையில் திறந்த வெளிக்காற்றுப்பட்டுப் பொடிப்பொடியாகு; உப்புக்கள் வகையில் கலவையின் மேற்பரப்புக்கு வந்து மணிஉருப்பெறு; நிலஞ்சுவர்ப்பரப்புக்கள் வகையில் உப்புப் பொலிவுறு.

**effioresc'ence,** *n.* மலர்ச்சி; மலர்ச்சிப்பருவம்; உடலின் மேந்தோல் பெறும் செந்நிறத்தன்மை; பொடியார்ந்த மேல்தோடு; பொடியார்ந்த மேல்தோடு உருவாதல்.

**eff'luence,** *n.* வழிந்தோடுதல்; மற்றொன்றினின்று வெளிப்படுதல்; ஒளியின் புறஎழுச்சி; மின்வலியின் புறஒழுக்கு; புறஞ்செல்வது.

**eff'luent,** *n.* ஏரியிலிருந்து வெளிச்செல்லும் ஆறு, மறிகால்; மற்றோர் ஆற்றிலிருந்து பிரிந்தோடும் கிளையாறு; புறக்கிளைக் கால்வாய்; புறக்கிளை ஓடை; கழிவுநீர்த் தொட்டியிலிருந்து வெளிச்செல்லும் வடிகால்; கழிவுநீர்த் தேக்கத் துப்புரவு நீர்க்கால்; தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் நீரியற் கழிவு; *a.* புறஞ்செல்கின்ற; வழிந்தோடுகிற.

**efflu'vium,** *n.* பொருளிலிருந்து வெளிப்படும் நுண்ணிய அணுக்கள்; அழுகிய பொருள்களிலிருந்து வெளிப்படுகின்ற உடல் நலத்துக்கு ஒவ்வா வாடையுடைய தீயாவி; காந்தத்தால் வெளியிடப்படுவதாகக் கருதப்பட்ட நுண் துகள் திரள்.

**eff'lux, efflux'ion,** *n.* நீரியல் ஆவியியல் பொருள்கள் வகையில் புறநோக்கிய ஒழுக்கு; கடத்தல்; புறவொழுக்கு.

**eff'ort,** *n.* ஊக்கம், முயற்சி; ஆற்றலை ஈடுபடுத்திய செயல்; அருஞ்செயல், தொடர்ந்த உழைப்பு; முயற்சியின் பயனுய் விளைந்த செய்தி, அருஞ்செயல் விளைவு.

**eff'ortless,** *a.* முயற்சியற்ற, எளிதான; முயற்சி எடுத்துக்கொள்ளாத, செயல்முனைப்பற்ற, தன்முயற்சியற்ற, ஏனே தானே என்றிருக்கின்ற.

**effront'ery,** *n.* வெட்கமில் ஆணவம்; நாணழிவு; அகந்தை.

**effulge',** *v.* ஒளிதுலங்கு; ஒளிபெறு.

**efful'gence,** *n.* ஒளிர்வு.

**efful'gent,** *a.* சோதியான, பேரொளி விடுகிற.

**effuse',** *a.* (தாவ.) வழிந்து போன; *v.* ஊற்று; வெளிப்படுத்து; சிந்து; கொட்டு; இறை; வழி.

**effu'sion,** *n.* ஊற்றுதல், வழிதல்; சிந்துதல்; கொந்தளிப்புரை.

**effu'sive,** *a.* அதிக அளவில் சொரிந்த; பீறிடுகின்ற; எரிமலைக்குரிய உருக்குப்பொருள் வெளிக்கொட்டிய; உறுதிப்படுத்தும் வகையில் அதிக உணர்ச்சி காட்டுகின்ற.

**eft,** *n.* பல்லி வகை.

**egad',** *int.* 'அட! கடவுளே!' என்னும் வியப்பு மொழி.

**Ege'ria,** *n.* பெண் ஆலோசகர்; ஒரு குலதெய்வம்.

**egg,** *n.* முட்டை; கரு; உயிரணு; ஈருயிரின்பச் சேர்க்கையின் உயர்விளைவு; கோழிமுட்டை போன்ற பொருள்; *v.* தூண்டு, விரைவுபடுத்து; (தொ.) put all one's eggs into one basket, ஒரே அருவினையில் அனைத்தையும் வைத்து அபாய முயற்சிசெய்; take eggs for money, தருவதாக வாக்குறுதி தரப்பட்ட பணத்தில் திருப்தியடை; teach your grandmother to suck eggs, உன்னைக்காட்டிலும் அனுபவம் உடையவர்க்குப் புத்தி கூறு; tread upon eggs, விழிப்போடு நட.

**egg'-and-anch'or,** *n.* நங்கூரத்தின் அல்லது அம்புகளின் இடையே வார்ப்படத்தாலான முட்டைவடிவப் பொருள்களை ஒன்றையடுத்து ஒன்றாகப் பதித்தமைத்த அணிவகை.

**egg'-binding,** *n.* முட்டையை வெளிப்படுத்த முடியாமை.

**egg'-bird,** *n.* கரிய கடற்பறவை வகை.

**egg'-capsule,** *n.* சிலவகை விலங்குகளின் முட்டைமேல் மூடியிருக்கும் காப்புறைத் தோல்.

**egg'-cosy,** *n.* வேகவைத்தெடுத்த முட்டை சூடு கெடாதவாறு வைக்கப்படுகின்ற மேலுறை.

**egg'-dance,** *n.* முட்டைகளினிடையே கண்களைக் கட்டியவாறு ஆடப்பெறும் நடனம்.

**egg'er,** *n.* காட்டுக் கோழிமுட்டைகளைத் திரட்டுபவர்; முட்டைபோன்று கூடுகட்டும் பூச்சி வகை.

**egg'ery,** *n.* முட்டையிடும் இடம்.

**egg'-flip,** *n.* முட்டையோடு புளித்தமாநீர் திராட்சைச் சாறு வெறியம் பால் முதலியவற்றைச் சேர்த்துச் சர்க்கரையிட்டுச் செய்த குடிவகை.

**egg'-fruit,** *n.* முட்டை வடிவப் பழவகை.

**egg'-glass,** *n.* முட்டைகள் வேகும் நேரத்தைக் கணக்கிடும் சிறு மணல்வட்டில்.

**egg'ler,** *n.* முட்டை வாணிகர்.

**egg'-nog,** *n.* முட்டையுடன் சாராயங் கலந்து செய்யப்படும் குடிவகை.

**egg'-plant,** *n.* கத்தரிச்செடி.

**egg'-shell,** *n.* முட்டையின் வெண்தோடு, மேலோடு; மெல்லிய பீங்கான்வகை.

**egg'-slice,** *n.* பொரித்த முட்டையை எடுப்பதற்கான கரண்டி.

**egg'-tooth,** *n.* முட்டையினின்று வெளிப்படாத குஞ்சு முட்டையோட்டையுடைப்பதற்கான அலகுமுனைப்பகுதி.

**egg'y,** *a.* முட்டைகள் நிறைந்த; அண்மையில் முட்டையிட்ட அல்லது முட்டையிடப் போகின்ற; முட்டைச்சுவையுடைய.

**eg'lantine,** *n.* முட்செடி வகை.

**e'go,** *n.* 'நான்' என்னும் முனைப்பு.

**egocen'tric,** *a.* தன்முனைப்புள்ள.

**e'goism,** *n.* (மெய்.) தன்னல வாழ்வைத்தவிர வேறொன்றும் இல்லை என்ற கோட்பாடு, தான் என்ற எண்ணம்; தன்னல வேட்கை நெறி; தன்னலம்; தன்னைத்தானே புகழ்ந்து பேசுதல்.

**e'goist,** *n.* தற்புகழ்ச்சியாளர்; தன்முனைப்பாளர்.

**egoist'ic, egoist'ical,** *a.* தன்னலம்பற்றிய ஆணவம் வெளிப்படுகின்ற.

**egothe'ism,** *n.* நானே கடவுளெனல்.

**e'gotism,** *n.* 'நான்' என்ற முனைப்புச் சொல்லை அடிக்கடி பயன்படுத்துதல்; தற்பெருமை கூறுதல்.

**e'gotist,** *n.* தற்பெருமையாளர்.

**egotist'ic, egotist'ical,** *a.* தற்பெருமை காட்டுகின்ற; இறுமாப்பான.

**e'gotize,** *v.* தன்னை மிகுத்துப்பேசு.

**egre'gious,** *a.* அதிர்ச்சியுண்டாக்குகிற.

**e'gress,** *n.* வெளிப்போதல்; புறப்பாடு; வெளியே செல்லும் வழி; வெளியேறும் உரிமை; (வான்.) கோள்மறைவின் முடிவு.

**egress'ion,** *n.* வெளியேறுதல்.

**e'gret,** *n.* நாரையினம்; கொக்கு.

**Egyp'tian**, *n.* எகிப்தியர், எகிப்திய நாட்டார்; நாடோடி; *a.* எகிப்திய; பழமையான.

**Egyptol'ogy**, *n.* எகிப்திய பழமை ஆய்வுநூல்.

**eh**, *int.* வியப்பிடைச் சொல்.

**eid'er**, *n.* வடதுருவக் கடல் வாத்து.

**eid'er-down**, *n.* வாத்தின் மென்மையான இறகு, மெத்தையில் திணிக்கப் பயன்படும் தூவி.

**eid'ograph**, *n.* படங்களைப் படியெடுப்பதற்கான கருவி.

**eidol'on**, *n.* உருவம்; கற்பனை வடிவம்; ஆவித்தோற்றம்.

**eight**, *n.* எட்டு; எண்மர்; எட்டுப்பொருள்கள்; நண்பகலுக்கு அல்லது நள்ளிரவுக்கு அடுத்த எட்டாவது மணி; *a.* எட்டாவதான; (தொ.) an eight days, வாரம்; figure of eight, சறுக்கு விளையாட்டு முதலிய ஆடல்களால் ஏற்பட்ட 8 என்னும் எண்ணைப் போன்ற வடிவப் பதிவு; the eights, ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தின் கல்லூரி மாணவர்களிடையே ஆண்டுக்கொருமுறை கோடைக்காலத்தில் நடத்தப்படும் படகுப் பந்தயங்கள்.

**eight'-day**, *a.* எட்டு நாளளவும் நீடிக்கின்ற.

**eighteen'**, *n.* பதினெட்டு; பதினெட்டன் குறி; *a.* பதினெட்டான.

**eigh'teenth**, *n.* பதினெட்டில் ஒரு பகுதி; *a.* பதினெட்டாவதான, பதினெட்டாம், பதினெட்டில் ஒரு பகுதியான.

**eight'foil**, *n.* எட்டிதழ்களுள்ள மலர்.

**eight'fold**, *a.* எண்வகுப்பான; எட்டு மடங்கான; *adv.* எண்பகுப்பாக; எண்மடங்காக.

**eight'-foot**, *a.* எட்டடி அளவான, எட்டடி அளவுள்ள இசைக் கருவியின் எடுப்பொலி பெறுகின்ற அல்லது அக்கருவியின் தாழ்ந்த குறிப்பொலி பெறுகின்ற; *adv.* எட்டடி அளவில்.

**eighth**, *a.* எட்டாம்; எட்டாவதான; எட்டில் ஒரு பகுதியான, அரைக்காலான; (இசை.) எட்டாஞ்சுரமான.

**eighth'ly**, *adv.* எட்டாம் இடத்தில், எட்டாவதாக.

**eight'ies**, *n. pl.* எண்பதிலிருந்து எண்பத்தொன்பது வரையுள்ள எண்கள்; வாழ்க்கையில் அல்லது நூற்றாண்டில் எண்பது முதல் எண்பத்தொன்பது வரையுள்ள எண்களைக் கொண்டு முடியும் ஆண்டுகள்.

**eigh'tieth**, *n.* எண்பதில் ஒரு பங்கு; *a.* எண்பதாவதான; எண்பதாம்; எண்பதில் ஒரு பகுதியான.

**eight'-oar**, *n.* எட்டுத் துடுப்புடைய பந்தயப் படகு; *a.* எட்டுத் துடுப்புடைய.

**eight'-score**, *n.* நூற்றறுபது, எண்மடங்கான இருபது; *a.* நூற்றறுபதான.

**eights'man**, *n.* படகோட்டிகள் எண்மருள் ஒருவர்.

**eight'some**, *n.* எண்மர் தொகுதி; எண்மர் கூட்டு; எண்மர் சேர்ந்து ஆடும் நடனம்; *a.* எண்மர் தொகுதியான; எண்மர் கூட்டான; எண்மர் சேர்ந்து ஆடுகிற.

**eight'y**, *n.* எண்பது; *a.* எண்பதான.

**eiren'icon**, *n.* அமைதிக்கான திட்டம்; போர்நிறுத்தம் செய்வதற்கான சமாதானப்பேச்சு.

**eistedd'fod**, *n.* வேல்ஸ் நாட்டுப் புலவர் சங்கம்; வேல்ஸ் நாட்டுக்குரிய பாண்புலவர் குழாம்; இசைப்போட்டிக்கென்று சூழ்ந்திருக்கும் இசைவாணர் குழாம்.

**eis wool**, *n.* ஈரிழைக் கம்பளி வகை.

**ei'ther**, *pron.* யாதேனுமொன்று, இரண்டிலொன்று; இரண்டில் ஒவ்வொன்றும்; *a.* இரண்டில் ஒவ்வொன்றுமான; *adv.* இரண்டிலொன்ருக; *conj.* அல்லது.

**ejac'ulate**, *v.* விட்டெறி; திடீரெனச் சாற்று.

**ejacula'tion**, *n.* வெளிப்படுத்துதல்; திடீரெனத் தோன்றும் வழிபாட்டு மொழி.

**ej'ect** [1], *n.* ஊகித்து அறியப்படுவது.

**eject'** [2], *v.* வெளிப்படுத்து; விலக்கு; நீக்கு; வெளியே துரத்து.

**eject'a, ejectament'a**, *n. pl.* எரிமலையால் எறியப்பட்ட பொருள்கள்.

**ejec'tion**, *n.* வெளிப்படுத்துதல், வெளியேற்றம்; வெளிப்படுத்தப்பட்டநிலை; வாந்தியெடுத்தல்; வெளியேற்றப்பட்ட பொருள்.

**ejec'tive**, *a.* வெளியேற்றும் பாங்குள்ள.

**eke** [1], *v.* குறை நிரப்பு; வாழ்க்கை வகை தேடு.

**eke** [2], *adv.* மேலும்; போன்று.

**ekk'a**, (இ.) *n.* சிறிய ஒற்றைக் குதிரைவண்டி.

**elab'orate**, *a.* நுட்பமாகச் செய்யப்பட்ட, அக்கறையோடு செய்யப்பட்ட; *v.* உழைப்பினுல் உண்டாக்கு, சிந்தித்து விளக்கமாகச் செய்; பொருட்களைப் பொருட் கூறுகளிலிருந்து உண்டாக்கு.

**elabora'tion**, *n.* விரிவுபடுத்துதல்.

**elaeome'ter**, *n.* எண்ணெய்களின் தூய்மையைச் சோதிக்கும் கருவி.

*elan*, (பிர.) *n.* திடீர்வேகம்.

**el'and**, *n.* தென்னுப்பிரிக்க மானினம்.

**elapse'**, *n.* கடந்துவிடுகை, கழிவு; *v.* கழிந்துவிடு.

**elastic'**, *n.* தொய்வு நாடா, தொய்வுக் கயிறு; *a.* நெகிழுந் தன்மையுள்ள.

**elasti'city**, *n.* நெகிழ்திறம்.

**elate'**, *a.* வீண் பெருமிதம் கொள்கிற; *v.* ஊக்கப்படுத்து; செருக்குப்படுத்து.

**ela'tion**, *n,* வெற்றிச் செருக்கு.

**el'bow**, *n.* முழங்கை; கைமுட்டு; வளைவு அல்லது திருப்புமுனை; *v.* முழங்கையால் தள்ளு; நெருக்கித்தள்ளு; (தொ.) at one's elbow, கைக்கெட்டும் வகையில்; up to the elbows, முழுதும் ஈடுபட்டு.

**el'bow-grease**, *n.* வன்மையாகத் துடைத்தல்; கடுமையான வேலை.

**el'bow-room**, *n.* இயங்குதற்குப் போதிய இடம்; சுயேச்சை வாய்ப்பு.

**el'chee**, *n.* அரசியல் தூதுவர்.

**eld**, *n.* முதுமை; தொன்மை.

**el'der** [1], *n.* உறவினரில் மூத்தவர்; இருவரில் மூப்பானவர்; நிறுவனங்களில் சிறப்புயர்வுடைய உறுப்பினர் குழாத்தில் ஒருவர்; மூப்புக்காரணமாக உயர்பதவிபெற்றவர்; முதியவர்; மேலவை உறுப்பினர்; தொடக்ககாலக் கிறித்தவத் திருச்சபைப் பணியாளர்; திருச்சபை வகையில் பணியாளர்; *a.* உறவினர்களில் மூத்த; இருவரில் வயது முதிர்ந்த; நீண்டகாலம் வாழ்ந்த; முன்பிறந்த, முன்தோன்றிய; (தொ.) Elder Brethren, நிறுவன வகையின் குழுவில் சிறப்புச் செயலுறுப்பினர்கள்; elder hand, சீட்டாட்டத்தில் முதலில் சீட்டு இறக்கும் ஆட்டக்காரர்.

**el'der** [2], *n.* வெள்ளை மலருடைய உயரக்குறைவான மரவகை.

**eld'er-berry**, *n.* வெள்ளை மலருடைய உயரக்குறைவான மரவகையின் புளிப்பான கருஞ்சிவப்புப்பழம்.

**eld'erly**, *a.* வயதாகிக்கொண்டு வருகிற.

**eld'ership**, *n.* மூத்தவராயிருக்கும் நிலை; பிரிஸ்பிடீரியப் பிரிவுத் திருக்கோயில் (Presbyterian Church) அலுவலர் பதவி.

**eld'er-wine**, *n.* வெள்ளை மலருடைய உயரமில்லாத மரவகையின் பழங்களிலிருந்து இறக்கப்படும் இன்தேறல்.

**el'dest**, *a.* முதற்பிறந்த; இருப்பவர்களில் மூத்த; எல்லாரிலும் மூத்த.

**El Dorad'o**, *n.* கற்பனைப்பொன்னுடு, சுவர்ணபூமி; *pl.* El Dorad'os.

**elecampane'**, *n.* கசப்புச்சுவையும் நறுமணமும் உள்ள இலைகளையும் வேரினையும் உடைய செடிவகை; செடிவகையினுல் நறுமணம் ஊட்டப்பெற்ற தின்பண்டம்.

**elect′**, *n.* தேர்ந்தெடுக்கப்பெற்றவர்; தனிப்படத் தேர்ந்தெடுத்து அமர்த்தப் பெற்றவர்; *a.* தேர்ந்தெடுக்கப்பட்ட; மிகவுயர்ந்த; வீடுபேற்றுக்கெனக் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட ; பதவி முதலியவற்றிற்குத் தெரிந்தெடுக்கப்பட்டும் பதவி யேற்காத ; *v.* தெரிந்தெடு, வாக்கு மூலமாய்த் தேர்ந்தெடு ; (கடவுள்) வீடுபேற்றுக்கெனப் பொதுநீக்கிச் சிலரைத் தேர்ந்தெடு.

**elec′tion**, *n.* வாக்கு மூலம் தெரிந்தெடுத்தல்; தேர்தல்; தங்கு தடையற்ற விருப்பம்; சிலருக்கு வீடுபேறளிப்பதென முன்னரே கடவுள் கொண்ட திருவுளப்பற்றுதல்.

**electioneer′**, *n.* ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு உழைப்பவர் ; *v.* ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவதற்குப் பாடுபடு ; அரசியல் தேர்தல்களில் ஈடுபடு.

**elec′tive**, *a.* தேர்ந்தெடுப்புக்குரிய ; தேர்தலைப் பொறுத்திருக்கிற ; தேர்தல் அதிகாரத்தைச் செலுத்துகிற ; தேர்ந்தெடுக்கும் அதிகாரமுடைய ; தேர்தலினுல் அமர்த்தப்படுகிற, தேர்ந்து நிரப்பப்படத்தக்க.

**elec′tor**, *n.* வாக்காளர், தேர்ந்தெடுப்பவர் ; தேர்ந்தெடுக்கும் உரிமையுள்ளவர் ; (வர.) முன்பு செர்மன் பேரரசின் தேர்தலில் பங்குகொள்ள உரிமை பெற்றிருந்த இளவரசர்.

**elect′oral**, *a.* தேர்தலுக்குரிய ; வாக்காளர் தொடர்பான ; வாக்காளர்களைக் கொண்ட.

**elec′torate**, *n.* வாக்காளர் தொகுதி, தேர்தல் தொகுதி ; (வர.) முன்பு செர்மன் (German) பேரரசின் தேர்தலில் பங்கு கொள்ள உரிமை பெற்றிருந்த இளவரசரின் பதவி ; செர்மன் பேரரசுத் தேர்தல் உரிமையுடைய இளவரசர் ஆட்சியெல்லை.

**elect′oress**, *n. fem.* பெண்வாக்காளர்.

**elec′tress**, *n. fem.* பெண்வாக்காளர் ; (வர.) முன்பு செர்மன் பேரரசின் தேர்தலில் பங்குகொள்ள உரிமை பெற்றிருந்த இளவரசரின் மனைவி.

**elec′tric**, *n.* உரசித்தேய்ப்பதனுல் ஆற்றல் எழுப்பக்கூடிய பொருள் ; *a.* மின்ஆற்றலுக்குரிய, மின்வலி ஏற்றப்பட்டுள்ள, மின்ஆற்றல் பெருக்கக்கூடிய ; மின்ஆற்றல் உண்டாக்குகிற ; மின்ஆற்றலால் விளைகிற ; மின்ஆற்றலைக் கொண்டு செல்லுகிற ; மின்ஆற்றலால் இயக்கப்படுகிற ; மின்ஆற்றலைப் பயன்படுத்துகிற ; மேனி சிலிர்க்கச்செய்கிற ; திடீரென அதிர்ச்சியுண்டாக்குகிற ; மின்வெட்டுப்போன்ற, நிலையற்ற ; (தொ.) electric arc, மின்வில், மின்வாய்களுக்கிடையே மின் ஓட்டம் பாயும்போது உண்டாகும் ஒளி இடைவெளி ; electric battery, மின்கல அடுக்கு, electric blue, பைஞ்ஞீலம், உருக்கு நீலநிறமுடைய ; electric chair, உயிர்த் தண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளியை மின்செலுத்தி மாள்விப்பதற்கான இருக்கை ; electric charge, மின் ஊட்டம், மின்கலத்திலுள்ள மின்செறிவு ; electric eel, மின்மலங்கு, மின்அதிர்வு கொடுக்கவல்ல விலாங்குமீன் வகை ; electric hare, மின்பொறியினுல் இயக்கப்பட்டு வேட்டை நாய்களுக்கு முன்னுல் பந்தய வளைவைச் சுற்றி வரும் முயலின் பொம்மையுரு ; electric ray, மின்மீன், மின் தாக்கு எறியும் மீன் வகை ; electric shock, மின் பேரதிர்வு; மின்தாக்குப் போன்ற அதிர்ச்சி ; electric storm, மின்புயல், வளிமண்டலத்தின் மின் நிலையில் ஏற்படும் குலைவு.

**elec′trical**, *a.* மின் ஆற்றலுக்குரிய.

**electri′cian**, *n.* மின்னல் ஆய்வாளர் ; மின்னியல் வல்லுநர்; மின் அமைவுகளைச் செய்பவர் ; மின்அமைவு நிறுவுபவர்; மின் அமைவு செப்பனிடுபவர்.

**electri′city**, *n.* மின் ஆற்றல், மின்வலி, மின் அணுக்களின் இயக்கம்பற்றிய ஆய்வுத்துறை.

**electrifica′tion**, *n.* மின் ஊட்டம்; நீராவிவண்டித் தொடரை மின்வண்டித் தொடராக மாற்றுதல்.

**elec′trify**, *v.* மின் ஊட்டு ; மின் அதிர்வுக்கு உள்ளாக்கு ; இருப்புப்பாதை-போக்குவரத்து-செய்தொழில் முதலியவை களை மின்சாரத்தினுல் இயங்குமாறு மாற்றியமை ; கிளர்ச்சி யூட்டு, திடுக்கிடச்செய்.

**elec′trize**, *v.*=electrify.

**elec′trobio′logy**, *n.* உயிர்ப்பொருள்களில் தோன்றும் மின் நிகழ்வுகளைப் பற்றிய ஆய்வுநூல்.

**elec′trochem′istry**, *n.* வேதியியல் சார்ந்த மின்னுய்வுத் துறை.

**elec′trocul′ture**, *n.* மின் ஆற்றலைச் செலுத்திச் செடிகளைப் பயிரிடுதல்.

**elec′trocute**, *n.* மின் ஆற்றல் செலுத்தி மாய்வி.

**electrocu′tion**, *n.* மின் ஆற்றல் செலுத்திக் கொலைத் தண்டனை விதித்தல் ; மின்திற மரணதண்டனை ; எவ்விதமாகவேனும் மின் ஆற்றல் தாக்கி ஏற்படும் மாய்வு.

**elec′trode**, *n.* மின்வாய், வெற்றுக்கல மின்னேட்டத்தில் இருகோடி முனைகளில் ஒன்று.

**elec′trodynam′ics**, *n.* மின்விசையியக்கவியல்.

**elec′tro-gild′ing**, *n.* மின்வலி, உதவியாற் செய்யப்படும் பூச்சுமான வேலை.

**elec′trograph**, *n.* கணிப்புப் பதிவுசெய்யும் மின்மானி.

**elec′tro-kinet′ics**, *n.* மின் இயக்கவியல்.

**electrolier′**, *n.* கொத்தான மின்விளக்குகளின் தொகுதி.

**electrol′ogy**, *n.* மின் இயல் ; மின் இயல் மருத்துவமுறை.

**elec′trolyse**, *v.* மின்செலுத்திக் கூறுபடுத்து.

**electrol′ysis**, *n.* மின்பகுக்கை ; மின்பகுப்பியல்.

**elec′trolyte**, *n.* மின்பிரி, மின்பகுப்புக்கு உதவும் நீர்மப் பொருள், மின்னேட்டத்தால் பாதிக்கப்படும் கரைசல் நீர்மம்.

**elec′tro-mag′net**, *n.* மின்காந்தம், சுற்றிவரியப்பட்ட மின்னேட்டமுடைய கம்பிச்சுழலால் காந்தமாக்கப்பட்ட தேனிரும்புப் பிழம்பு.

**elec′tro-magnet′ic**, *a.* மின்காந்த இயல்புடைய, மின் விளைவும் காந்த விளைவும் ஒருங்கே கொண்ட.

**elec′tro-mag′netism**, *n.* மின் ஆற்றலால் உண்டுபண்ணப்படும் காந்த ஆற்றல் ; காந்த ஆற்றலுடன் மின்னுற்றலின் தொடர்புபற்றிய ஆய்வுப்பிரிவு.

**electromechan′ical**, *a.* மின்வலியைப் பயன்படுத்த வேண்டியுள்ள இயந்திர வேலை முறைக்குரிய.

**electromechan′ics**, *n.* மின் ஓட்டம் பற்றிய பொறித்துறை.

**electrom′eter**, *n.* மின்மானி.

**electromo′tion**, *n.* மின் ஓட்ட இயக்கம் ; மின் ஆற்றலால் தோன்றும் இயக்கம்.

**electromo′tive**, *a.* மின் இயக்கம் உண்டுபண்ணுகிற ; மின் இயக்கம் தூண்டுகிற ; மின் இயக்கத்துக்குரிய ; மின் இயக்க விதிகளுக்குரிய.

**electromo′tor**, *n.* மின்வலியை இயக்க ஆற்றலாகப் பயன்படுத்தும் அமைவு.

**elec′tron**, *n.* மின்னணு, எதிர்மின்மம், எதிர்மின் ஆற்றலுடன் அணுவின் கருவுளைச் சுற்றிச் சுழலும் உள்ளணுத் துகள்களில் ஒன்று; பண்டைக்காலத்தவரால் பயன்படுத்தப்பட்ட இயல்பான பொன் வெள்ளிக்கலவை ; (தொ.) electron pair, ஒருமின்மத்தைப் பொதுவாகக் கொண்ட அணு இணை.

**electroneg′ative**, *a.* எதிர்மின் ஆற்றல் ஊட்டப்பெற்றுள்ள.

**electron′ic**, *a.* மின்மம் சார்ந்த ; மின்ம இயக்கத்துக்குரிய ; (தொ.) electronic brain, மின்னியக்கக் கணிப்புப்பொறி ; electronic flash, நிழற்படத்துறையில் பயன்படுத்தப்படும் மின்வெட்டுப் போன்ற வளிக்குழாய் மின்னேட்ட ஒளி.

**electron′ics**, *n.* மின்மங்கள் போன்ற அணுவுள் துகள்களைப் பற்றிக் கூறும் இயற்பியல் பிரிவு.

**electrop′athy**, *n.* மின் ஆற்றலைப் பயன்படுத்தும் மருத்துவ முறை.

**electroph′ore, electroph′orus**, *n.* அணுக்கத்தால் நிலை மின் ஆற்றல் உண்டுபண்ணும் பொறி அமைவு.

**elec′troplate**, *n.* மின்பிரிப்பூச்சுமானம் ; *v.* மின்பிரி முறையினுல் பூச்சுமானம் செய்.

**elec'tropo'lar**, *a.* மின்கடத்தி போன்று ஒருமுனை நேர்க் காந்தக் கோடியும் மறுமுனை எதிர்க்காந்தக்கோடியும் உடைய.

**electropos'itive**, *a.* நேர்மின் ஆற்றல் ஊட்டப்பெற்றுள்ள.

**elec'troscope**, *n.* மின்காட்டி, பொருளில் மின்னாற்றல் இருப்பதையும் அதன் இயல்பையும் காட்டும் கருவி.

**electrostat'ics**, *n.* நிலைமின் இயல்.

**electrotech'nics**, *n.* மின்னாற்றல் தொழில் நுணுக்கத் துறை.

**electrotherapeu'tics, electrother'apy**, *n.* மின் ஆற்றல் செலுத்தி நோய்தீர்க்கும் முறை.

**electrotherm'al, electrotherm'ic**, *a.* மின்னாற்றலால் பெறப்படும் சூடுசார்ந்த.

**electrot'onus**, *n.* (உட.) மின்பாய்வுக்குட்பட்ட உணர்ச்சி நரம்பின் நிலை.

**elec'trotype**, *n.* மின் அச்சு, மின்பகுக்கை முறையினால் அச்சுருவின்மீது செம்பு பூசிச்செய்யப்படும் அச்சுத்தகடு ; *v.* மின் அச்சினால் படியெடு.

**elec'trum**, *n.* பண்டைக்காலத்தவரால் பயன்படுத்தப்பட்ட இயல்பான பொன்வெள்ளிக்கலவை.

**elec'tuary**, *n.* தேனுடன் அல்லது இன்குழம்புடன் கலந்த மருந்துத்தூள்.

**eleemos'ynary**, *a.* இரவலர்க்களிப்பது பற்றிய ; ஈகையைப் பொறுத்த ; உதவிசெய்கிற ; இலவசமான, கைம்மாறு கருதாத.

**el'egance, el'egancy**, *n.* நயநாகரிகம் ; நேர்த்தி, அழகு ; தகவு, செம்மை ; பண்புடைமை ; சான்றொழுங்கு.

**el'egant**, *n.* நயநாகரிகர் ; நாகரிகப்பகட்டாளர், சுவைநயப் பகட்டர் ; *a.* நடையினிய, நடைநயம்வாய்ந்த ; நாகரிகத் தோற்றமுடைய, காண்பினிய ; சுவைநயம் வாய்ந்த ; நுட்ப நயமுடைய, நேர்த்தியான ; பண்பட்ட நயநாகரிகமுடைய ; மதிப்பு நலமார்ந்த; இன்பநலம்வாய்ந்த; ஒழுங்கு நலமுடைய.

**elegi'ac**, *n.* புலம்பற்பாட்டு ; *a.* புலம்பற்பாட்டுக்குரிய ; துயர் தருகிற ; நெடில் இணைகுறில் ஆன மூவகைச்சீர் ஆறு அல்லது ஐந்து கொண்ட அடியாலான.

**elegi'acs**, *n. pl.* புலம்பற்பாட்டுக்கள் ; நெடில் இணைக்குறில் ஆன மூவகைச்சீர் ஆறு அல்லது ஐந்துகொண்ட யாப்புச் சார்ந்த பாடல்.

**el'egize**, *v.* கையறு நிலையாக எழுது, துயரமனப்பான்மை காட்டி எழுது, புலம்பற்பாடல் எழுது.

**el'egist**, *n.* புலம்பற்பாட்டுக்கள் எழுதுபவர்.

**el'egy**, *n.* புலம்பற்பாட்டு, கையறுநிலைப்பாடல் ; சரமகவி ; ஆழ்ந்த சிந்தனை அல்லது துயரத்தைக் குறிக்கும் செய்யுள் ; புலம்பற்பாட்டின் சீர் உடைய செய்யுள்.

**el'ement**, *n.* தனிமம், தனிப்பொருள், மூலப்பொருள் ; ஆக்கக்கூறு ; மூலதத்துவம் ; மூலதத்துவங்களாக முற் காலங்களில் கருதப்பட்ட மண்-நீர்-காற்று-அனல் ஆகிய நாற்பெரும் பூதங்களில் ஒன்று ; கடல் ; வான் ; வான கோளகை ; வளிமண்டல இயற்கை ஆற்றல் கூறுகளில் ஒன்று ; அறுதிசெய்யும் கூறு ; மின்அடுப்பிலுள்ள தடுப்புக் கம்பி; மின்வாய்; அடிப்படைக்கூறு; இயல்பான வாழ்விடம்; இயல்பான சூழல் ; இயற்கையான இயக்க ஊடுபொருள்.

**element'al**, *n.* பூதங்களின் பின்னணித்தெய்வம், இயற்கை யாற்றலின் அதிதேவதை ; ஆவித்தெய்வம் ; *a.* நாற்பெரும் பூதங்களுக்குரிய ; இயற்கை ஆற்றல்களுக்குரிய ; மா பேராற்றல் வாய்ந்த, இயற்கை ஆற்றல்களோடு வைத்து எண்ணத்தக்க; இன்றியமையாத; கலவையாயிராத, தனித்த.

**element'alism**, *n.* நாற்பெரும் பூதங்களுக்குரிய அதி தேவதைகளின் வழிபாடு.

**elemen'tary**, *a.* மூலக்கோட்பாடுகளுக்குரிய ; மூலதத்துவ மான ; அடிப்படையான, ஆதாரமான, தொடக்கமான ; (வேதி.) பகுதிகளாகப் பிரிக்கமுடியாத ; ஒரே தனிமத்துக் குரிய; கலவையாயிராத; மண்-வளி முதலிய பூதங்களுக்குரிய.

**el'ements**, *n. pl.* நாற்பெரும் பூதங்கள் ; அடிப்படைக் கல்விக்கூறுகள்; அடிப்படைக்கலைக்கூறுகள்; திருக்கோயில் இறுதி உணவுத் திருவினைக்குரிய திரு அப்பத் திருத்தேறல் கூறுகள்.

**el'emi**, *n.* களிம்பு-மெருகெண்ணெய் முதலியவற்றில் பயன் படுத்தப்படும் நறுமணப்பிசின் வகை.

**elen'chus**, *n.* வாதமறுப்பு, வாத மூலம் தவறென்று காட்டுதல்.

**elenc'tic**, *a.* வாதமறுப்புவாய்ந்த, குறுக்குக்கேள்விகள் கேட்டுமடக்கும் பாங்குள்ள.

**el'ephant**, *n.* யானை ; 28 அங்குலநீளமும் 23 அங்குல அகலமும் உள்ள தாள் அளவு ; (தொ.) a white elephant, தாங்கமுடியாத பெருஞ்செலவு பிடிக்கும் உடைமை ; தண்டத்தீனி கொள்வது ; தண்டத்தீனி கொள்பவர் ; double elephant, 40 அங்குலநீளமும் 26½ அங்குல அகலமுமுள்ள தாள் அளவு.

**el'ephant-fo'lio**, *n.* மிகப்பெரிய அளவுள்ள மடிப்புத்தாள்

**el'ephant-grass'**, *n.* நாணற் செடிவகை ; யானைப்புல்.

**elephanti'asis**, *n.* யானைக்கால் நோய்.

**elephan'tine**, *a.* யானைக்குரிய ; யானைபோன்ற ; மிகப் பெரிய ; அழகற்ற, அருவருப்பான ; (தொ.) elephantine epoch, நிலவுலகெங்கும் யானையின விலங்குகள் மலிவுற் றிருந்த முற்பட்டகால மண்ணியலூழி.

**elephant'oid**, *a.* யானைபோன்ற.

**el'ephant-seal**, *n.* ஆணினம் ஏறத்தாழ இருபதடி நீளமுள்ள மிகப்பெரிய நீர்நாய்வகை.

**Eleusin'ian**, *a.* அட்டிக்காவிலுள்ள (Attica) எலூசிஸ் (Eleusis) என்னும் பண்டை நகரத்துக்குரிய ; (தொ.) Eleusinian mysteries, எலூசிஸ் என்னும் பண்டை நகரத்தில் கொண்டாடப்பட்ட டெமிட்டர் (Demeter) என்னும் கிரேக்க உழவுக்கடவுள் பற்றிய மறைச்செய்திகள்.

**eleuthe'rian**, *a.* விடுதலை வழங்குகிற.

**eleuth'eroman'ia**, *n.* விடுதலையார்வவெறி.

**eleuth'erophyll'ous**, *a.* திட்டவட்டமாய் இலைகளையுடைய.

**el'evate**, *a.* வீறூர்ந்த, மதுமாந்தி எழுச்சியுற்ற ; *v.* உயர்த்து ; ஏற்று ; தூக்கு ; மேன்மைப்படுத்து, சிறப்பி ; பண்பு உயர்வுபடுத்து ; போற்று ; மகிழச்செய், எழுச்சி யூட்டு.

**el'evated**, *a.* உயர்ந்த, மேடான ; மேம்பட்ட ; வீறூர்ந்த மதுமூலம் எழுச்சியுற்ற.

**eleva'tion**, *n.* உயர்த்துதல் ; உயர்த்தப்பெறுதல் ; உயர்வு ; உயரம் ; உயர்நிலை, மேம்பட்ட பதவி ; மேம்பாடு ; மேடு ; ஏற்றம், ஏறுசரிவு ; கட்டிடமுகப்புத்தோற்றம் ; கலையில் காட்சியிசைவற்ற சரிதள அளவைச் சித்திரிப்பு; அடிவானின் மேல் உயரம் ; அடிவானத்துக்கு மேலுள்ள மீகோணம் ; குழுநடனத்தில் அந்தரத்தில் மிதப்பது போன்ற தோற்றந் தரும் குதியாட்டுமுறை.

**el'evator**, *n.* உயர்த்துபவர் ; உயர்த்துவது ; உயர்த்தும் தசை ; கூலந்தூக்கிப்பொறி; கூலக்களஞ்சியம்; மின் ஏற்ற மாடம் ; விமானத்தின் பின்புற ஏற்ற இறக்கத்தட்டு.

**el'evatory**, *a.* உயர்த்தவல்ல, உயர்த்தும் பாங்குள்ள.

**elev'en**, *n.* பதினொன்று ; மரப்பந்தாட்டம்-கால்பந்தாட்டம் முதலியவை வகையில் பதினொருவர் கொண்ட குழு ; பகல் அல்லது இரவுக்குரிய பதினோராவது மணி ; *a.* பதினொரு, பதினொன்று சார்ந்த.

**elev'enth**, *n.* பதினோராமவர் ; பதினோராவது ; பதினொன் றாகப் பகுக்கப்பட்ட பகுப்பின் கூறு, பதினொன்றிலொன்று ; *a.* பதினோராவதான; பதினொன்றிலொருபகுதியான; (தொ.) eleventh hour, கடைசி நேரம்.

**elf**, *n.* கூளி, சிறு குள்ளத்தெய்வதம் ; சிறுகுறும்புத் தெய்வம் ; வனதெய்வம் ; குள்ளர், கூழையர் ; சிற்றுரு வினர், சிறுகுழந்தை ; இழிசினர்.

**elf'-arrow, elf'-bolt,** *n.* தீக்கல்லால் ஆன அம்புத்தலை.

**elf'in,** *n.* சிறுகூளி ; குள்ளர் ; குழந்தை ; *a.* கூளிகள் சார்ந்த ; கூளிகள் போன்ற.

**elf'ish,** *a.* கூளிபோன்ற ; குறும்பு செய்கிற ; தந்திரமான ; மனக்குழப்பமடைந்த ; அடம்பிடிக்கிற.

**elf'-lock,** *n.* சடை, சிக்கல் தலைமயிர்க்கற்றை.

**elf'-struck,** *a.* சூனியத்துக்கு ஆட்பட்ட.

**eli'cit,** *v.* மறைகருத்தினை வெளிப்படுத்து ; உள் மெய்ம்மை வெளியிடுவி ; தூண்டி வெளியிடச் செய் ; உட்கரந்த பண்பை வெளிக்கொணர் ; மெய்ம்மையினை வருவி.

**elide',** *v.* ஒலிப்பிடையே உயிரொலி கெடுவி ; அசையை ஒலிக்காது விட்டுவிடு.

**eligibil'ity,** *n.* தேர்வுத்தகவு, நுழைவுத்தகுதி, தகுதிப் பொருத்தம்.

**el'igible,** *a.* தெரிந்தெடுக்கப்படத் தகுதியுள்ள ; முறைப்படி தகுதிபெற்ற ; விரும்பத்தக்க ; பொருத்தமான.

**elim'inate,** *v.* நீக்கு, விட்டொழி ; வெளியேற்று, கழித் தகற்று ; விட்டுவிடு ; விலக்கியமை ; பிரித்துப்புறமாக்கு.

**elimina'tion,** *n.* நீக்குதல் ; விலக்கீடு, அகற்றீடு ; விட் டொழிப்பு.

**elim'inative,** *a.* விலக்கி ஒழிக்கிற.

**elim'inator,** *n.* பிரித்தகற்றுபவர் ; அகற்றும் பொருள் ; மின்னாற்றல் பயன்படுத்தும் கம்பியில்லாத் தந்திக்குரிய கருவி வகை.

**eli'sion,** *n.* ஒலிப்பில் உயிரொலி கெடுதல் ; சொல்லில் அசை கெட்டு மறைதல்.

***elite,*** (பிர.) *n.* மிகச்சிறந்ததாகத் தெரிந்தெடுக்கப்பட்ட கூறு; இனக்கொழுந்து ; உயர்ந்தோர் குழாம்.

**elix'ir,** *n.* அமுதம், உயிர்நீர், இறந்தவர்க்கு உயிர்தரவும் ஏனை உலோகங்களைப் பொன்னாக மாற்றவும் வல்லதெனக் கருதப்பட்ட மருந்து நீர்மம் ; உள்ளுயிர்க்கூறு ; ஊக்கந் தரும் பொருள் ; கற்பம், சஞ்சீவி ; அருமருந்து ; வடிநீர் ; (தொ.) elixir of lite, கற்பம், வாணாளை நீட்டிக்கவல்ல மருந்து.

**Elizabeth'an,** *n.* முதலாவது எலிசபெத் அரசியின் காலத்தவர்; முதலாவது எலிசபெத் அரசிகாலத்து எழுத்தாளர் ; *a.* முதலாவது எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்துக்குரிய.

**elk,** *n.* மரை, காட்டுமான் இனப் பெருவிலங்கு வகை.

**elk'-hound,** *n.* முரட்டு மயிருள்ள பெரிய வேட்டைநாய் வகை

**ell,** *n.* ஏறத்தாழ 45 அங்குலத்துக்குச் சரியான நீட்டலளவைக் கூறு ; (தொ.) give him an inch and he'll take an ell, இடங்கொடுத்தால் மடம் பிடிப்பான்.

**ellipse'** [1], *n.* முட்டை வடிவம், நீள்வட்டம்.

**ellipse'** [2], *n.*=ellipsis.

**ellip'ses,** *n. pl.* ellipse [2], ellipsis என்பவைகளின் பன்மை வடிவம்.

**ellip'sis,** *n.* (இலக்.) அவாய்நிலை, வாக்கியச் சொல்லெச்சம், கருத்தை முடிப்பதற்கு வேண்டிய சொற்கள் வாக்கியத்தில் அவாய்நிலையாதல்.

**ellip'soid,** *n.* ஓரைவட்டக்கட்டி; குறுக்குவெட்டுக்கள் ஓர் ஊடச்சு நெடுக நீள் வட்டமாகவும் மற்ற ஊடச்சு வழி நீள்வட்டமாகவும், வட்டமாகவும் அமைகின்ற பிழம்புரு.

**ellip'tic, ellip'tical** [1], *a.* முட்டைவடிவமான, நீள்வட்ட மான, ஓரைவட்டத்துக்குரிய.

**ellip'tical** [2], *a.* (இலக்.) சொல்லெச்சத்துக்குரிய ; உய்த் துணரவேண்டிய உறுப்பினையுடைய.

**elliptic'ity,** *n.* வட்டவடிவத்தினின்றும் அல்லது கோள வடிவத்தினின்றும் வேறுதல் ; நிலவுலகக்கோளத்தில் நடு வரைப்பகுதி விட்டத்துக்கும் துருவ ஊடுவிட்டத்துக்கும் உள்ள வேறுபாடு.

**elm,** *n.* இரட்டை அரம்பப்பல் விளிம்புடைய இலைகளும் சிறு மலர்க்கொத்துகளும் உள்ள மரவகை ; *a.* இந்த மரவகைக் குரிய.

**elm'y,** *a.* இரட்டை அரம்பப்பல் விளிம்புடைய இலைகளும் சிறுமலர்க்கொத்துக்களும் உள்ள மரவகைகள் நிரம்பியுள்ள.

**elocu'tion,** *n.* பேச்சுக்கலை ; பேசும்பாணி ; நாவன்மை, பேச்சுவளம்.

**elocu'tionist,** *n.* நாவன்மை தேர்ந்தவர் ; நாவன்மை பயிற்றுவிப்பவர் ; பாடம் ஓதுபவர், ஒப்பிப்பவர்.

***eloge,*** (பிர.) *n.* இறந்தவர் பற்றிய பாராட்டுரை ; பிரஞ்சு மொழிக்கழகத்தின் மறைந்த உறுப்பினரைப்பற்றிய மற்றோர் உறுப்பினரது பாராட்டுரை.

**Elo'hist,** *n.* விவிலிய ஏட்டின் பழைய ஏற்பாட்டில் இறைவனை எலோஹிம் (Elohim) என்று சுட்டும் பகுதிகளை இயற்றியவர்.

**el'ongate,** *a.* நீண்டொடுங்கிய ; நீண்டு கூரான ; *v.* நீட்டு, நீளச்செய் ; நீளு, நீடு ; நீண்டொடுங்கியதாயிரு ; நீளத்தை மிகுதியாக்கு, தொடர்ந்து நீட்டு.

**elonga'tion,** *n.* நீட்டுதல் ; நீள்தல் ; நீட்சி ; நீட்டப்பெற்ற பகுதி, தொடர்ந்த நீளம், கவிந்த நீட்சி ; தொலைவு, தூரம் ; கதிரவனிடமிருந்து திங்கள் அல்லது கோள் விலகியுள்ள கோணத்தூரம்.

**elope',** *v.* காதலனுடன் உடன்போக்குச் செய் ; வீட்டை விட்டேகு ; கணவனை விட்டேகு ; மறைந்தோடு, ஓடிமறை.

**elope'ment,** *n.* உடன்போக்கு.

**el'oquence,** *n.* நாநலம், பேச்சுநயம், பேச்சுத்திறன், சொல்வன்மை, சொல்லாற்றல் ; சொற்பெருக்கு, சொற் பொழிவு ; சொற்கோப்புக்கலை.

**el'oquent,** *a.* நாநலம் வாய்ந்த ; சொல்திறமிக்க ; ஆற்றல் முனைப்பார்ந்த ; கருத்தியக்கும் ஆற்றலுடைய.

**else,** *adv.* அதுவன்றியும், அதோடு கூட ; வேறு, மற்று ; மற்றப்படி, அஃதின்றேல்.

**elsewhere',** *adv.* வேறோரிடத்தில், வேறேதாவது இடத்தில், வேறெவ்விடத்திலும் ; பிறிதோரிடத்துக்கு, பிறிதேதாவது இடத்துக்கு, பிறிதோரிடத்துக்கும்.

**elu'cidate,** *v.* விளங்கச்செய், தெளிவாக்கு ; மேற்கோள் காட்டி விளக்கு.

**elucida'tion,** *n.* தெளிவாக்கல் ; விளக்கம்.

**elu'cidative, elu'cidatory,** *a.* விளங்கவைக்கிற, தெளி வாக்குகிற ; விரித்துரைக்கிற.

**elude',** *v.* திறம்படத் தப்பித்துக்கொள், சட்டம் முதலியவை களுக்குப் பிடிகொடாமல் ஏய் ; புரியாதபடி திகைக்கச்செய்.

**elu'sion,** *n.* தப்பித்துக்கொள்ளுதல், பிடிகொடுக்காம லிருத்தல், மழுப்புதல்.

**elu'sive,** *a.* நழுவித் தப்பித்துக்கொள்கிற, மழுப்புகிற, பிடி படாமலிருக்கிற ; மாயமான, மருட்சிதருகிற.

**elu'sory,** *a.* நழுவிச்செல்லும் பாங்குடைய; ஏமாற்றக்கூடிய; பிடிகொடுக்காமலிருக்கிற ; ஏமாற்றுகிற.

**el'van,** *n.* கடுமை வாய்ந்த அனற்பாறை வகை ; பிளப்பில் உறைந்த கடினமான அழற்பாறை.

**el'ver,** *n.* விலாங்குமீன் குஞ்சு.

**elv'ish,** *a.*=elfish.

**Elysee',** *n.* பிரஞ்சுத்தலைவரின் அலுவலக இருப்பிடம்.

**Elys'ium,** *n.* கிரேக்க புராண கதைகளின்படி புண்ணியஞ் செய்தவர் இறந்தபின் வாழுமிடம், துறக்கம், சுவர்க்கம்.

**el'ytra,** *n. pl.* elytron என்பதன் பன்மை.

**el'ytron, el'ytrum,** *n.* (வில.) வண்டினது பின்சிறகுக்கு உறைபோல் அமைந்துள்ள உறுதியான முன்சிறகு ; அல்குல் வாய்.

**El'zevir**, *n.* ஆலந்திலுள்ள எல்ஸிவியர் (Elzivier) குடும்பத்தாரால் அச்சிடப்பட்ட சுவடி ; அச்சு வடிவ வகை ; *a.* ஆலந்திலுள்ள எல்ஸிவியர் குடும்பத்தாரால் அச்சிடப்பட்ட.

**em**, *n.* அச்சு வரி நீளத்துக்குரிய அலகுகளில் பெரும்படி அலகுக்கூறு.

**ema'ciate**, *a.* மெலிந்த ; *v.* மெலியச்செய் ; பாழாக்கு, வலுக்குறையச்செய் ; மெலி, இளை, பாழாகு.

**ema'ciated**, *a.* மெலிந்த, இளைத்த.

**emacia'tion**, *n.* மெலிதல், மெலிவு, இளைத்த நிலை.

**em'anate**, *v.* வெளிப்படு ; தோன்று ; எழு ; சுர, ஊற்றெடு, பெருகு, எழுந்து பரவு.

**emana'tion**, *n.* வெளிப்படுதல் ; பொங்கியெழுதல் ; புறஒழுக்கு ; புறமலர்ச்சி, வெளிப்படும் தோற்றம் ; பண்பு மலர்ச்சி ; தெய்வ ஆற்றலினின்றெழும் தோற்றம் ; தெய்வக் கூறானவர் ; தெய்வக்கூறு ; இயற்கை மலர்ச்சி, படைப்பு இயக்கம் ; இயலொளி உலோகங்களிலிருந்து அலை எழும் கதிரியக்க வளி.

**eman'cipate**, *v.* சிறைநீக்கி விடுதலை செய் ; கட்டறுத்து விடுவி ; அடிமைத்தளையகற்றி விடுதலை உரிமையளி ; குறைநீக்கியுதவு.

**emancipa'tion**, *n.* விடுதலை செய்தல் ; விடுதலை ; அடிமை ஒழிப்பு ; சட்டத்தடைநீக்கம் ; வீடுபேறுற்ற நிலை ; வீடுபேறு.

**emancipa'tionist**, *n.* அடிமைகளை விடுதலைசெய்யவேண்டுமென்னும் கோட்பாடுடையவர்.

**eman'cipist**, *n.* சிறைத்தண்டனையை அனுபவித்து முடித்தபின் விடுவிக்கப்பட்ட குற்றக்கைதி.

**emas'culate**, *a.* காயடிக்கப்பெற்ற ; ஆண்மையற்ற ; *v.* விதையடி ; கோழையாக்கு, ஆண்மையகற்று ; மெலிவுறச்செய், நலிவுறப்பண்ணு ; மொழியின் ஆற்றல் கெடு, பகுதிகளை வெட்டியெடுத்து இலக்கியக்கட்டுரை முதலியவற்றை வலுவிழக்கப்பண்ணு.

**embalm'**, *v.* பிணத்தை நறுமணமூட்டிப் பேணிவை ; குருதி நாளங்களில் ஊசியிட்டு உயிரற்ற உடலைப்பாதுகாத்துவை ; மறதியுட்படாமல் நினைவில் வைத்துப்பேணு ; நறுமணந்தோய்வி.

**embank'**, *v.* கரையணை, அணையிடு ; வரம்புகட்டு, அரண்செய்.

**embank'ment**, *n.* அணையிடல், அணை, வரப்பு ; கரை ; தாழ்நிலத்தில் பாதை அல்லது இருப்புப்பாதை செல்வதற்காகக் கட்டப்பட்ட மண்மேடு.

**embarg'o**, *n.* தடையாணை, நிறுத்திவைப்புக் கட்டளை ; அயல்நாட்டுக் கப்பல் போக்குவரவு வகையில் இடப்படும் தடைநடவடிக்கைக் கட்டளை ; தற்காலிகமான வாணிகத் தடைநடவடிக்கை ; *v.* கப்பல்களைத் தடையாணைசெய் ; வாணிகம் தடுத்து நிறுத்து ; கப்பல்களை அல்லது சரக்குகளை அரசியல் பயனீட்டுக்காகக் கைப்பற்று.

**embark'**, *v.* குறித்த இடம் நாடிக் கப்பலேறிப் புறப்பட்டுச்செல் ; குறித்த இடத்துக்குக் கப்பலேற்றி அனுப்பு ; கப்பலேறு ; புறப்படு ; தலைப்படு, புதுச்செயலிற் புகு ; புதுப்பணியில் புகுத்து ; புதுத்துறையில் முதலிடு ; புதுத்துறையில் ஈடுபடுத்து.

**embarka'tion**, *n.* கப்பலில் ஏற்றல்; கப்பலேறிச் செல்லுதல்; கப்பலிலேற்றப்பட்ட சரக்கு.

***embarras de choix***, (பிர.) *n.* பலவற்றுள் எதைத் தெரிந்தெடுப்பதென்னும் மலைப்பு.

***embarras de richesse***, (பிர.) *n.* இத்துணைச் செல்வங்களை வைத்து என்ன செய்வதென்னும் தடுமாற்றம்.

**emba'rrass**, *v.* முட்டுக்கட்டையிடு, தடங்கல் செய், தொல்லைகொடு ; திக்குமுக்காடச்செய், குழப்பமூட்டு, சிக்கலாக்கு.

**embarr'assed**, *a.* திகைப்புற்ற, மலைப்புக்காட்பட்ட ; வன்செயலுக்குட்படுத்தப்பட்ட ; கடன் தொல்லைக்கு ஆட்பட்ட.

**embarr'assment**, *n.* குழப்பம், தடுமாற்றம், மன உளைவு ; பணமுடை, பொருள்வகை இடர்ப்பாடு.

**em'bassy**, *n.* அரசியல் தூதுவரின் அலுவல் ; அரசியல் தூதுவர் அலுவலகம் ; அரசியல் தூதுவர் வாழுமிடம் ; மன்னர் முதலியோரிடம் செல்லும் தூதுக்குழு.

**embat'tle [1]**, *v.* படையைப் போர் அணியில் அமைத்து நிறுத்து.

**embat'tle [2]**, *v.* கட்டிட மதில்களுக்கு ஞாயில் அமை.

**embay'**, *v.* கப்பலை விரிகுடாவில் கொண்டுநிறுத்து ; காற்றுவகையில் கப்பலை விரிகுடாவுக்குள் செலுத்து ; நாலாபக்கமும் சூழ், சுற்றி வளைத்துக்கொள்.

**embed'**, *v.* சூழ்ந்தணைத்துக்கொள் ; பதித்துவை ; கிடத்து

**embedd'ed**, *a.* பதிக்கப்பெற்ற.

**embell'ish**, *v.* ஒப்பனைசெய், அழகுபடுத்து, நுணுக்க நயமுடையதாக்கு ; கற்பனை இணைத்துச் சுவைபெருக்கு.

**embell'ishment**, *n.* அழகுடையதாக்கல்; நுண்நய ஒப்பனை; அணி, அணிகலன்.

**em'ber**, *n.* தணல், கங்கு ; கணப்பு, கொதி சாம்பல் ; வெந்தழல் நீறு.

**Em'ber-days**, *n. pl.* நோன்பு வழிபாட்டுக்குரிய கிறித்தவப் பெருநாட்கள்.

**em'ber-goose**, *n.* வடமாகடற்பகுதிக்குரிய பெரிய நீர்மூழ்கிப் புள்வகை.

**em'bers**, *n. pl.* கணப்பு, கங்குகனல், எரிதழற்சாம்பல்.

**Emb'er-week**, *n.* உண்ணாநோன்பிலிருந்து வழிபாடு மேற்கொள்ளப்படும் மூன்று கிறித்தவப் பெருநாட்கள் வருகிற வாரம்.

**embez'zle**, *v.* பணத்தைத் தகாத முறையில் கையாடு ; பொதுப்பணத்தைத் தனி நலனுக்குப் பயன்படுத்தி மோசடி செய்.

**embezz'lement**, *n.* ஒப்புவிக்கப்பட்ட உடைமையை மோசடியாகக் கையாடல்.

**embitt'er**, *v.* புண்படுத்து, கசப்பூட்டு, பகைமையுண்டுபண்ணு.

**embitt'ered**, *a.* மனக்கசப்புற்ற, புண்பட்ட, உளமுறிவுற்ற, வாழ்வில் வெறுப்புற்ற, நலங்களில் நம்பிக்கையிழந்த.

**emblaz'on**, *v.* (கட்.) மரபுவழிக்கேடயத்தில் முனைப்பாகத் தீட்டிக்காட்டு ; மரபுவழிச்சின்னங்கள் தீட்டு ; பகட்டாக வரைந்துகாட்டு ; பறைசாற்று, புகழ் பரப்பு, கொண்டாடு, பாராட்டு.

**emblaz'onment**, *n.* (கட்.) மரபுரிமையான உருவங்களால் ஒப்பனை செய்தல் ; புகழ்ந்து பேசுதல்.

**emblaz'onry**, *n.* (கட்.) வீரமரபுச்சின்னங்கள் தீட்டுங்கலை கேடயத்திலுள்ள வீரமரபுச் சின்னங்கள்.

**em'blem**, *n.* தனிக்குறி, மரபுச்சின்னம், சிறப்பு அடையாளம்; மாதிரியுரு ; வகைமாதிரி ; உருமாதிரி, பண்புக்குரிய சின்னமாகக் கருதத்தக்கவர் ; பண்புக் குறியீடாகக் கருதத்தக்கது ; மரபுரிமைச் சின்னம் ; *v.* சின்னமாகக் குறித்துக்காட்டு, அடையாளமாயமை.

**emblemat'ic, emblemat'ical**, *a.* சின்னங்களுக்குரிய ; சின்னங்களைக்கொண்ட ; சின்னமாயமைந்த, உருப்படுத்திக் காட்டுகிற, வகைமாதிரியான ; பண்புருச்சின்னமான.

**emblem'atist**, *n.* சின்னங்களை அமைப்பவர் ; அடையாளச் சின்னங்களைப் புனைந்துருவாக்குபவர் ; பண்புருவகம் தீட்டுபவர்.

**emblem'atize**, *v.* சின்னமாயிரு, அடையாளமாக அமை, குறித்துக்காட்டு ; அடையாளச் சின்னமூலம் உருமாதிரி காட்டு.

**embod'iment**, *n.* உடம்பொடு தோன்றுதல், மூர்த்தீகரிப்பு ; உடம்பொடு கூடிய உருவம், பிழம்புருவம் ; கருத்துருவம், கருத்தின் புறவடிவம் ; கண்கூடான உருவம் ; பண்புருவம் ; பண்புகளை அங்கமாகக் கொண்ட உரு, திரளுரு.

**embod'y**, *v.* உடலுருக்கொடு, மூர்த்தீகரி; அகப்பண்புகளுக்குப் புறவுருவம் கொடு; பிழம்புருவம் கொடு; கொள்கை கோட்பாடுகளைச் செயலுருப்படுத்து; கருத்தின் புறவுருவாகத் திகழ், பயனுருவாக இலங்கு; உடம்படு, உடலொடு தோன்று; உள்ளடக்கு, அங்கமாகக் கொள்.

**embog'**, *v.* சேற்றில் அமிழ்த்து, அளறில் சிக்கவை; மூழ்கச் செய், அழுந்துவி.

**embol'den**, *v.* துணிவளி, திடங்கொள்ளச்செய், ஊக்கு.

**em'bolism**, *n.* (மரு.) குருதிக்குழாயடைப்பு, பக்கவாதத்துக்குரிய நிலையில் குருதிக்குழாய்களில் குருதிக்கட்டி வழியடைத்தல்.

*embonpoint'*, (பிர.) *n.* கொம்மை; கொங்கை; *a.* கொழுகொழுப்பான.

**mbos'om**, *v.* தழுவு, அணை; அன்புடன் போற்று; நெஞ்சில் பதியவை; சூழ்ந்திரு, வளைத்தகங்கொள்.

**embos'omed**, *a.* சூழப்பெற்ற, இடைநடுவே அமைந்த.

**emboss'**, *v.* புடைப்புருப்படச்செதுக்கு; மேல்வந்து முனைப்பாயிருக்கச்செய்; துருத்திநிற்கச் செய், உந்துவி.

**emboss'ment**, *n.* முகிழ் முனைப்பு; புடைப்பகழ்வுச் சித்திர வேலைப்பாடு.

*embouchure*, (பிர.) *n.* ஆற்றுவாய்; பள்ளத்தாக்கின் வாயில்; துளை இசைக்கருவியை வாயுடன் இணைக்கும் உறுப்பு; துளை இசைக்கருவி உறுப்புடன் வாயிணைப்பு.

**embow'el**, *v.* குடலெடு, குடர்பிடுங்கு; உள்வைத்து மூடு.

**embow'er**, *v.* கொடிவீட்டில் இருத்து; நிழலில் வை; புகலிடமளி; புகலிடங்கொள்.

**embrace'**, *n.* தழுவல், ஆர்வ அணைப்பு; புணர்ச்சி, இணைவிழைச்சு; *v.* தழுவு, கையால் அணை; மார்போடு சேர்த்துக்கொள்; ஆர்வமாக ஏற்றுக்கொள், விரும்பி வரவேற்றுக்கொள்; மேற்கொள், பின்பற்று; உள்ளடக்கமாகக்கொள்.

**embrac'es**, *n. pl.* புணர்ச்சி, இணைவிழைச்சு.

**embranch'ment**, *n.* ஆறு முதலியவற்றின் வகையில் கிளைத்தல், கிளைகளாகப் பிரிந்துசெல்லல்.

**embrang'le**, *v.* சிக்கவை, குழப்பு.

**embra'sure, embra'zure**, *n.* மதிலிடைப்புழை, பீரங்கிச் சாலகம், ஏப்புழை; கதவுப்புறச்சுவரின் உள்வாய்ச்சரிவு; பலகணிப்புற மதிலின் உட்புறச் சாய்வு.

**em'brocate**, *v.* மருந்துநீர் பூசித் தேய், மருந்து நீர்மத்தால் கழுவு.

**embroca'tion**, *n.* தடவு மருந்து, நோயுற்ற உறுப்பின்மீது பூசித் தேய்ப்பதற்குப் பயன்படும் நீர்மம்; பூசித் தேய்த்தல்.

**embroid'er**, *v.* தையல் பூவேலைசெய், பின்னல் ஒப்பனை வேலை செய்; கற்பனைச் செய்திகளைக்கொண்டு கதை முதலியவற்றை அழகுபடுத்து,

**embroid'ery**, *n.* பூத்தையல்வேலை, சித்திரத் துன்னல் வேலைப்பாடு; சித்திரப்பின்னல் வேலைப்பாடுடைய துணிவகை; பல்வகை வேறுபாடுடைய ஒப்பனை வேலைப்பாடு; நுணுக்க நய வேலைப்பாடு; செயற்கை ஒப்பனை; மிகுபுனைவுக் கலப்பு, இட்டுக்கட்டு விரிவு; கற்பனை நுணுக்கம்.

**embroil'**, *v.* குழப்பத்தில் சிக்கவை; சச்சரவில் சிக்கச்செய்; மனக்குழப்பமூட்டு, மலைப்பு உண்டுபண்ணு.

**embroil'ment**, *n.* குழப்பம், சிக்கல்; கலவரம்.

**embrown'**, *v.* தவிட்டுநிறமாக்கு; மங்கலாக்கு; இருண்ட தோற்றமளி.

**em'bryo**, *n.* கருமுளை; முட்டைக்கருவுயிர்; முதிர்வுருக் கருவுயிர்; தொடக்கநிலை; *a.* தொடக்கநிலையிலுள்ள, முதிராத.

**embryoc'tony**, *n.* (மரு.) கருவழிவு, கருவிலேயே உயிரழிவுறுதல்.

**embryogen'esis**, *n.* கரு உருவாதல், கருவாக்கம்.

**embryol'ogy**, *n.* கருவியல் நூல், கரு உருவாகி வளர்ச்சியடைவது பற்றிய ஆய்வு நூல்.

**embryon'ic**, *a.* முதிரா நிலையில் உள்ள; தொடக்க நிலையிலுள்ள; முதிராநிலைக்குரிய; முதிராநிலைத் தொடர்பான.

**embryot'omy**, *n.* (மரு.) கருவுயிர்க்கூறுபாடு, வயிற்றினுள் கருவை வெட்டியெடுத்தல்.

**embus'**, *v.* படைத்துறை வீரர்களையோ சரக்குகளையோ பேருந்து வண்டியில் ஏற்று; பேருந்து வண்டியில் ஏறு.

*embusque*, (பிர.) *n.* களச்சேவை தட்டிக்கழிப்பவர், உள்நாட்டிலோ மூலதளத்திலோ வேலைதேடிக்கொள்வதன் மூலம் களமுன்னணிச் சேவையிலிருந்து தப்பித்துக்கொள்பவர்.

**emend'**, *v.* மூலபாடத்திலுள்ள குற்றங் களை, குறைபாடுகளை அகற்று; திருத்து, சீர்ப்படுத்து.

**emenda'tion**, *n.* பிழையினைக் களைதல்; பாடதிருத்தம்.

**em'endator**, *n.* சுவடிகளிற் பிழைகள் திருத்துபவர்; சீர்ப்படுத்துபவர்.

**emen'datory**, *a.* செப்பனிடுகிற; திருத்தஞ் செய்கிற.

**em'erald**, *n.* பச்சைக்கல், மரகதம்; மரகத நிறம்; அச்செழுத்துரு அளவு வகை; (தொ.) Emerald Isle, அயர்லாந்து.

**emerge'**, *v.* நீர்மத்தினின்றும் மேலெழு; கிளம்பு; வெளிப்பட்டுத்தோன்று; வெளிப்படு, மீள், விட்டு வெளியேறு; ஆய்வின் விளைவாகத் தெளிவுபடு.

**emer'gence**, *n.* வெளிப்படல்; திடுமெனத்தோன்றுதல்.

**emer'gency**, *n.* உடனடித்தேவை, திடீர்த்தேவை; நெருக்கடி நிலை; எதிர்பாரா நிகழ்ச்சி; சேமப்பகரப் பொருள்; சேமப்பகர ஆள்; *a.* நெருக்கடி நிலை எதிர்நோக்கிய.

**emer'gent**, *a.* வெளிப்படுகிற; திடுமெனத்தோன்றுகிற; எதிர்பாராமல் கிளம்புகிற; அவசரமான; இயல்மலர்ச்சிவழி இயல்பாகத் தோன்றுகிற.

**eme'ritus**, *n.* பொதுப்பணியிலிருந்து மாண்புடன் விடுவிக்கப்பட்டவர்; *pl.* emer'iti; *a.* பொதுப்பணியினின்றும் மாண்புடன் விடுவிக்கப்பட்ட; (தொ.) emeritus professor, ஓய்வுபெற்ற பேராசிரியர்.

**em'erods**, *n. pl.* மூலநோய்.

**emer'sion**, *n.* தோன்றுதல்; மீளல்; (வான்.) ஞாயிறு-திங்கள்-விண்மீன் ஆகியவற்றின் வகையில் ஒளி மறைப்புக்குப் பின்னர் மீளத்தோன்றுதல்.

**em'ery**, *n.* குருந்தக்கல், சாணைபிடிப்பதற்குப் பயன்படும் மிகக் கடினமான கனிப்பொருள்வகை; *v.* குருந்தக்கல் பொடியினால் தேய்; குருந்தக்கல் பொடியை மேற்பரப்பில் பொருத்து.

**em'ery-cloth**, *n.* தேய்ப்புத் துணி, பட்டறைச்சீலை.

**em'ery-pa'per**, *n.* தேய்ப்புத்தாள், உப்புத்தாள்.

**em'ery-wheel**, *n.* சாணைக்கல், சாணைபிடிப்பதற்காகக் குருந்தக்கல் பொடி ஒட்டப்பெற்ற சக்கரம்.

**emet'ic**, *n.* (மரு.) வாந்தி மருந்து; *a.* வாந்தியுண்டாக்குகிற.

*emeute*, (பிர.) *n.* பொதுமக்கள் கிளர்ச்சி, கலகம், அமளி.

**em'igrant**, *n.* நாடுவிட்டுக் குடிபெயர்ந்து செல்பவர், வெளியேறிப்போகிறவர்; *a.* நாடுவிட்டுக் குடிபெயர்ந்து செல்கிற; குடிபெயர்ந்த.

**em'igrate**, *v.* நாடுவிட்டுப் பிறநாட்டிற் சென்று குடியேறு; குடியேறுதற்கு உதவு; (பே-வ.) இருப்பிடம் மாற்று.

*emigre*, (பிர.) *n.* பிரஞ்சுப் புரட்சியின்போது பிரான்சிலிருந்து வெளியேறிக் குடியேறியவர், பிரான்சிலிருந்து வெளியேறிய பிரஞ்சுமன்னர் சார்புக்கட்சியினர்.

**em'inence [1]**, *n.* மேடு, மேட்டுத்திடல்; உயர்வு, மேம்பாடு, சிறப்பு; சமுதாய மதிப்புக்குரிய உயர்நிலை.

**Em'inence [2]**, *n.* போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமைக்குழுவில் ஒருவரான கத்தோலிக்க திருத்துணைவரது பட்டப்பெயர்; கார்டினலது பட்டம்.

*eminence grise*, (பிர.) *n.* அந்தரங்க முகவர், பணித்துறை தொடர்பற்ற முறையில் அதிகாரம் செலுத்துபவர்.

**em'inent**, *a.* மேம்பட்ட, சிறந்த, உயர்வான; மாண்புமிக்க, குறிப்பிடத்தக்க பண்புயர்வுடைய; (தொ.) eminent domain, பொதுநலப்பயன் வகையில் தனியார் உடைமைகளைப் பறிமுதல் செய்யும் அரசின் தனிமுதல் மேலுரிமை.

**emir'**, *n.* அராபிய இளவரசர்; இஸ்லாமிய வழக்கில் ஆளுநர்; முகம்மது நபியின் வழித்தோன்றல்.

**em'issary**, *n.* தூதுச்செய்தியாளர்; ஒற்றர்; *a.* வெளியே செல்கின்ற.

**emi'ssion**, *n.* வெளிப்படுத்துதல்; வெளிப்படுத்தப்படும் பொருள்; (தொ.) emission theory, ஒளிவிடு பொருள்களின் நுண்ணிய பகுதிகளிலிருந்து ஒளிவெளிப்பாடு.

**emiss'ive**, *a.* வெளிப்படுத்துகின்ற.

**emit'**, *v.* வெளிப்படுத்து.

**emm'et**, *n.* எறும்புவகை.

**emollesc'ence**, *n.* ஒருமிப்பு.

**emoll'iate**, *v.* மெலிவடையச்செய்.

**emoll'ient**, *n.* கட்டி வீக்கம் முதலிய நோய்களுக்கிடும் இளக்கு மருந்து, விலங்குகளின் தோற்புண்ணையாற்றுதற்கான மருந்து; *a.* இளகுந்தன்மையுள்ள; குழையச் செய்கின்ற.

**emolli'tion**, *n.* இளகல்; நெகிழ்தல், தளர்தல்.

**emol'ument**, *n.* ஊதியம், ஆதாயம்.

**emo'tion**, *n.* மனக்கிளர்ச்சி, உணர்ச்சிவேகம்.

**emo'tional**, *a.* உணர்ச்சிவயப்பட்ட.

**emo'tionalism**, *n.* மனக்கிளர்ச்சியைத் தூண்டிவிடும் போக்கு.

**emo'tive**, *a.* மனக்கிளர்ச்சியைத் தூண்டிவிடுகிற.

**empan'el**, *v.* வரிசைப்பட்டியலில் சேர்.

**em'pathy**, *n.* (உள.) மற்றொருவரின் ஆளுமையிற் புகுந்து கற்பனையாக மற்றொருவரின் அனுபவத்தை அனுபவித்தல்.

**em'perise**, *v.* பேரரசனாக நடி.

**em'peror**, *n.* பேரரசன்; மன்னர்மன்னன்; *fem.* em'press; (தொ.) purple emperor, வண்ணத்துப்பூச்சி வகை.

**em'pery**, *n.* பேரரசு, வல்லரசு.

**em'phasis**, *n.* உரம்பெறச்செய்தல், அசையழுத்தம்; உணர்ச்சிப்பெருக்கில் விடாப்பிடியாகப் பேசுதல்; சொல்வன்மை; குறிப்பிட்ட பொருளுக்கு இன்றியமையாமை தந்து நிற்றல்; முதன்மை.

**em'phasize**, *v.* வற்புறுத்து; அசையழுத்தத்தோடு பேசு; அழுத்தமாகக் கூறு.

**emphat'ic, emphat'ical**, *a.* அழுத்தமான; உறுதியான; அசையழுத்தம் பொருந்திய.

**emphysem'a**, *n.* தொடர் இழைமங்களில் காற்றின் இருப்பு; சீழ்க்கட்டி.

**em'pire**, *n.* பேரரசு; வல்லரசு; பேரரசு ஆணைக்குட்பட்ட நிலவெல்லை; (தொ.) empire city, "நியூயார்க்கு" மாநிலம்; empire day, பேரரசி விக்டோரியா பிறந்த நாளான மேத்திங்கள் 24-ஆம் நாள்.

**empi'ric**, *n.* செயன்முறையில் நம்பிக்கையுள்ளவர், வெறும் சொல்லில் நம்பாதவர்; அரைகுறை அனுபவ வைத்தியர்; *a.* பயிற்சிக்குட்பட்ட; அனுபவ மருத்துவம் செய்கிற.

**empir'ical**, *a.* செயலறிவால் தெரிந்துகொள்ளப்படுகிற, அனுபவத்தால் அறியப்படுகிற.

**empir'icism**, *n.* அனுபவத்திலேயே நம்பிக்கைவைக்கும் முறை; அனுபவ வைத்தியம்.

**empir'icist**, *n.* அனுபவப் பயிற்சியாளர்.

**emplace'**, *v.* பீரங்கி மேடை அமை; வை.

**emplace'ment**, *n.* நிலைமை; வைத்தல்; பீரங்கிமேடை.

**emplane'**, *v.* விமானத்திற் செல்லு, வானூர்தி மூலம் எடுத்துச்செல்.

**employ'**, *n.* பணி; *v.* தொழில்கொடு; பயன்படுத்து; சுறுசுறுப்பாயிரு.

**employ'able**, *a.* வேலையில் ஈடுபடுத்தத்தக்க, பயன்படுத்தத்தக்க.

**employe', employee'**, *n.* வேலையில் உள்ளவர், காசுக்கு வேலைசெய்பவர்.

**employed'**, *a.* வேலை பெற்றுள்ள.

**employ'ment**, *n.* வேலை, தொழில்; பயன்படுத்துதல்.

**empois'on**, *v.* நஞ்சிடு; மாசுபடுத்து; அறிவுகெடச்செய்; வெறுப்புக்கொள்ளச்செய், பேதமையாக்கு.

**empor'ium**, *n.* பண்டப்பெருநிலையம், வாணிக மையம்.

**empow'er**, *v.* உரிமைகொடு, அதிகாரமளி.

*empressement*, (பிர.) *n.* பேரன்புப்பகட்டு.

**emp'tiness**, *n.* வெறுமைநிலை; திருப்தியற்றநிலை, பைத்தியம்.

**emp'ty**, *n.* வெறுமை; இன்மை; வறிதான நிலை; பொருளற்ற நிலை; முயற்சியின்மை; ஒன்றும் இல்லாத கலம்; *a.* வறிதான, பொருளற்ற; *v.* வெறுமையாக்கு; வறிதாக்கு; மாற்று; வடி; வெறுமையாகு; (தொ.) come away empty, ஏதும் பெற்றுக்கொள்ளாமல் திரும்பு.

**emp'ty-hand'ed**, *a.* ஒன்றும் கொண்டுவராத.

**emp'ty-head'ed**, *a.* அறிவற்ற; வேடிக்கைத்தனமான.

**empur'ple**, *v.* ஊதாநிறமாக்கு; ஊதாநிறச்சாயம் தோய்.

**empyre'al**, *a.* எரியில் உருவான; ஒளியில் தோன்றிய; வானுலகத்தைப் பற்றிய; விழுமிய.

**empyre'an**, *n.* ஒண்சுடர் உலகு, இறையுலகு; *a.* இறையுலகைச் சார்ந்த.

**em'u, em'eu**, *n.* ஆஸ்திரேலிய நாட்டுப் பெரும் பறவை வகை.

**em'ulate**, *v.* மேம்படும் முயற்சிகொள்; போட்டியிடு; முன்மாதிரியாகக்கொள்.

**emula'tion**, *n.* முன்மாதிரியாகக் கொள்ளுதல்; போட்டி.

**em'ulative**, *a.* போட்டியிடும் பான்மைவாய்ந்த.

**em'ulous**, *a.* போட்டியிடவிரும்புகிற; மற்றவர்போல் மேம்படும் முயற்சியிலீடுபடுகிற.

**emul'sifier**, *n.* குழம்பாகச் செய்யப் பயன்படும் துணைக்கருவி.

**emul'sify**, *v.* குழம்பாக மாற்று, நீர்மப் பொருளாக்கு.

**emul'sion**, *n.* பிசின்துகள் ஊடே கிடக்கும் பால்மம், நெய்ப்புப்பிடித்த பால்மம்; பசைக்குழம்பு; நிழற்படத் தகடுகளுக்கும் படச்சுருளுக்கும் பயன்படும் வெள்ளி உப்புக் கலவை வகை.

**emunc'tory**, *n.* மூக்குச்சளி சிந்துதல், கழிவுப்பொருள்களை வெளிப்படுத்தும் உறுப்பு; *a.* மூக்குச்சளி சிந்துகின்ற, கழிவுப்பொருள்களை வெளிப்படுத்துகின்ற.

**en**, *n.* அச்சுக்கோப்பதில் உள்ள ஓர் அகல அளவு.

**ena'ble**, *v.* இயலச்செய்; அதிகாரம் கொடு; (தொ.) enabling act, enabling bill, நடத்துவதற்கு உரிமைதருஞ் சட்டம் அல்லது சட்ட வரைவு.

**enact'**, *v.* ஆணையிடு; சட்டம் இயற்று; நாடகம் நடத்து.

**enact'ment**, *n.* சட்டமியற்றுதல், சட்டம்.

**enam'el**, *n.* பூச்சுவேலை; இனாமல் பொருள்; இனாமல் பூச்சு; பற்களின் பளபளப்பு; *v.* பூசு; மேற்பூச்சுப்பூசு, பளபளப்பாக்கு.

**enam'our**, *v.* மகிழச்செய்; மயங்கவை.

**enantiop'athy**, *n.* நோயின் குணத்துக்கு எதிரான குணமுள்ள மருந்தைப் பயன்படுத்தும் மேலைநாட்டு மருத்துவ முறை.

**enarthros'is**, *n.* உடலின் உரலாணி மூட்டு, பந்துக்கிண்ண மூட்டு.

*en bloc*, (பிர.) *adv.* தொகுதியாக, மொத்தமாக.

**encaen'ia**, *n.* உரிமையுறுதி அளிக்கும் விழா, ஆக்ஸ் போர்டில் சமர்ப்பணவிழா.
**encage'**, *v.* கூண்டில் அடை.
**encamp'** *v.* கூடாரம் அமை; கூடாரம் அடித்துத்தங்கு.
**encamp'ment**, *n.* படைஞர் தங்கிடம்; கூடாரத்தில் தங்குதல்.
**encase'**, *v.* உறையிலிடு; பெட்டகத்து வை.
**encash'**, *v.* பணமாக மாற்று.
**encaus'tic**, *n.* சூளையிலிட்டு வண்ணம் பாய்ச்சுதல்; *a.* சூட்டுவண்ணமுள்ள.
*enceinte*, (பிர.) *n.* அடைப்பு, அரண்; *a.* கருக்கொண்ட.
**encephal'ic**, *a.* மூளையைச் சார்ந்த.
**encephali'tis**, *n.* மூளைவீக்கம்.
**enchain'**, *v.* விலங்கிடு, சங்கிலியால் கட்டு; நன்ருகப் பிடித்துக்கொள்.
**enchain'ment**, *n.* சங்கிலியால் பிணைத்தல்; சங்கிலித் தொடர்.
**enchant'**, *v.* வயப்படுத்து, மயக்கு, கவரச்செய்; மகிழ்ச்சி யூட்டு.
**enchant'er**, *n.* மயக்குந்திறன் வாய்த்தவர், மாந்திரீகன்.
**enchant'ingly**, *adv.* கவரும் திறமையோடு.
**enchant'ment**, *n.* வசியம், மாந்திரீகம் செய்தல்; மயக்க நிலை; மயக்கும் பொருள்.
**enchant'ress**, *n.* மயங்க வைப்பவள்.
**enchirid'ion**, *n.* கைச்சுவடி, துணை நூல்.
**encir'cle**, *v.* வளை; வட்டவடிவமாகச்சூழ்.
**enclasp'**, *n.* அணைத்துப்பிடி; தழுவு.
**enclave'**, *n.* வேற்றுநாட்டினர் எல்லைக்குட்பட்ட நிலப்பகுதி.
**enclit'ic**, *n.* சொல்லைச் சேர்ந்திருக்கிற துணைக்கூறு.
**enclose'**, *v.* வேலிபோடு; உறையிலடக்கு; அடைத்துவை; சூழ்.
**enclo'sure**, *n.* வேலியடைப்பு, அடைப்பு; முடங்கலை உறையி லிட்டு மூடுதல், உள்ளடக்கம்.
**enclothe'**, *v.* உடுத்து.
**encloud'**, *v.* முகிலால் மூடு.
**encom'iast**, *n.* புகழ்மாலை சூட்டுபவர்; முகமன் கூறுபவர்.
**encom'ium**, *n.* புகழ்மாலை, போற்றுதல்.
**encom'pass**, *v.* சூழ்ந்துகொள்.
**encore'**, *n.* "இன்னும் ஒருமுறை" என்னும் குறிப்புமொழி; *v.* மீண்டும் பாடும்படி கேள்; *int.* இன்னொரு முறை!
**encoun'ter**, *n.* எதிர்ப்படுதல்; *v.* எதிர்பாராத முறையில் எதிர்ப்படு; பகைமையோடு எதிர்த்து நில், போராடு.
**encou'rage**, *v.* துணிவூட்டு; ஊக்கமூட்டு; தூண்டு; உதவியாயிரு.
**encour'agement**, *n.* ஊக்குதல்.
**En'cratite**, *n.* முற்காலத்தில் கள்-புலால்-திருமணம் ஆகிய வற்றை விலக்கிய கிறித்தவக்குழு உறுப்பினர்.
**encrim'son**, *v.* செந்நிறம் தீட்டு; சிவப்பாக்கு.
**encroach'**, *v.* தடம் மீறு, மற்றவர் ஆட்சியெல்லைக்குள் அடாத முறையில் நுழை.
**encroach'ment**, *n.* அளவு கடப்பு, அத்துமீறுகை.
**encrust'**, *v.* கெட்டிப்படுத்து, கெட்டிப்பூச்சுப் பூசு.
**encum'ber**, *v.* தடைசெய்; கடன்சுமத்து; நிரப்பு.
**encum'brance**, *n.* சுமை; தொந்தரவு; தடை; வில்லங்கம்.
**encum'brancer**, *n.* மற்றவர் சொத்தின்மேல் தடை யுடையவர்.
**encyc'lical**, *n.* போப்பாண்டவரின் சுற்றுக்கடிதம்; *a.* சுற்றறிக்கையான; பலர் பார்வையிடுதற்குரிய.
**encyclopaed'ia**, *n.* கலைக்களஞ்சியம்; பல்பொருள் விளக்கம்.
**encyclopae'dian**, *a.* எல்லாக் கலைகளையும் தழுவியிருக்கிற.
**encyclopae'dic, encyclopae'dical**, *a.* பல்பொருள் அறிவு நிரம்பிய.
**encyclopae'dism**, *n.* பல்பொருள் அறிவு.
**encyst'**, *v.* பையில் அடை.
**end**, *n.* முடிவு; கடைசி; எல்லை; வரையறை; இறுதிநிலை; அழிவு; இறப்பு; விளைவு; நோக்கம்; மெழுகுத்திரிக் கடை; துண்டு; ஒரு மூலையிலிருந்து ஆடிய விளையாட்டின் ஒரு பகுதி; மூலை; *v.* அழி; முடி; முடிந்திடச்செய்; (தொ.) at a loose end, செய்வதற்கொன்றும் இல்லாத நிலையில்; at loose end, குழப்பத்தில்; at the end of one's tether, மேற் கொண்டு வகையில்லாமல்; end for end, தலைகீழாய் முடிந்த நிலையில்; get hold of the wrong end of the stick, தவருகப் புரிந்துகொள்; keep one's end up, தன் பாகத்தைச் செய லாற்று; make both ends meet, தன் வருமானத்துக்குள் வாழ்; on end, நிமிர்ந்து.
**endan'ger**, *v.* இடருண்டாக்கு.
**endear'**, *v.* விருப்புடையராக்கு, பிரியமுடையதாக்கு.
**endeared'**, *a.* பேரன்புபட்ட, பிரியமுற்ற.
**endear'ing**, *a.* நேயமான.
**endear'ment**, *n.* நேயம், பெருவிருப்பு.
**endeav'our**, *n.* பெருமுயற்சி; *v.* பெருமுயற்சிகொள்.
**endem'ic**, *n.* திணையின முறைப்பட்ட நோய்; *a.* நோய் வகையில் திணையின முறைப்பட்ட, குறிப்பிட்ட சில இடச் சூழல்கள் மக்கட்சூழல்கள் சார்ந்து முறையாகக் குறிப்பிட்ட காலங்களில் தோன்றுகின்ற.
**enderm'ic**, *n.* தோல்மீது தாக்குதல் விளைவிக்கிற.
**end'ing**, *n.* முடிவு; இறுதி, கடைப்பகுதி; சொல்லின் விகுதி.
**en'dive**, *n.* இனிய குடிநீர்மம் செய்யப் பயன்படும் சுருள் இலைச் செடிவகை.
**end'less**, *a.* முடிவற்ற; ஓய்வற்ற; எல்லையில்லாத; இடை விடாத; தொடர்ச்சியான.
**end'ocardit'is**, *n.* குலையணைச் சவ்வின் வீக்கம்.
**en'docard'ium**, *n.* குலையணைச் சவ்வு, நெஞ்சுப்பையின் உள்வரி மென்தோல்.
**en'docarp**, *n.* விதைத்தோட்டின் கடைசி உள்ளேடு.
**en'docrane**, *n.* மண்டையோட்டின் உட்பரப்பு.
**en'docrine**, *a.* சுரப்பி வகையில் உள்ளூரச்சுரக்கிற, செல் நரம்பிழையின்றி நேரே குருதியுள் கசிவு செலுத்துகிற.
**en'doderm**, *n.* அரும்பு மேற்கவிவின் உள்தாள்; கருவுயிர் உறையின் உள்வரிச்சவ்வு.
**endog'amous**, *a.* குலப்பிரிவில் அகமண உறவுக்கட்டுடைய, புறமணத்தடையுள்ள.
**endog'amy**, *n.* குலப்பிரிவில் அகமண உறவுக்கட்டு, புற மணத்தடை முறை.
**en'dogen**, *n.* தண்டில் அகவளர்ச்சியுடைய மரவகை, புறக் காழ்ப் புல்லினவகை.
**en'dogenous**, *a.* தண்டக வளர்ச்சியுடைய, உள்ளீடான தண்டு வளர்பகுதி வாய்ந்த,
**en'dolymph**, *n.* காதின் உள்நீர்மம், செவி நிணநீர்.
**endometrit'is**, *n.* கருப்பை உட்புறச் சவ்வின் வீக்கம்.
**endomet'rium**, *n.* கருப்பையின் உள்வரிச் சவ்வு.
**en'domorph**, *n.* கனிப்பொருளின் உள்ளீடாயுள்ள கனிப் பொருள்.
**endopa'rasite**, *n.* உடலக ஒட்டுயிர்.
**en'doplasm**, *n.* ஊன்ம உள் தொலி, உயிர்ச்சத்தின் உள்வரிச் சவ்வு.

**endorse'**, *v.* பத்திரத்தின் பின்புறம் எழுது; பொருள் முறியில் புறவரியாகப் பெயர் எழுது; விளக்கக் குறிப்பெழுது, புறவுரை குறி; வலியுறவு செய்; ஆதரவுக் கருத்துக்குறி; ஆதரி; (தொ.) endorse over, உரிமைகளை வேறொருவருக்கு மாற்றி ஒப்படை.

**endorse'ment**, *n.* புறவரி எழுதுதல்; புறக்குறிப்பு; ஏற்பிசைவு.

**en'dosarc**, *n.*=endoplasm.

**en'doscope**, *n.* உடலின் உட்புறங் காண உதவும் கருவி.

**endoskel'eton**, *n.* முதுகெலும்புள்ள விலங்குகளின் உள் அமைப்புருவம்.

**en'dosmose, endosmos'is**, *n.* சவ்வுத்திரையூடு கடந்த கசிவு.

**en'dosperm**, *n.* முட்டையில் வெண்கரு; கருவில் முளை சூழ்தசை; விதையில் முளை சூழ்ந்த அரிசிப்பகுதி.

**en'dospore**, *n.* சிதல் விதையின் உள்முடித்தோல்; தாய் உயிர்மத்தினுள் உருவான உயிர்மக்கரு.

**endothel'ium**, *n.* குருதிக்குழாயில் உயிர்மச்செறிவால் ஆன உள்வரித்தாள் சவ்வு.

**endow'**, *v.* சீதனமாக வழங்கு; உரிமையாக விட்டுச்செல், உரித்தாக்கு; நிலவர உடைமையாக வழங்கு; மானியமாக அளி; நிலையான ஊதியக் கட்டளை வகுத்தளி; பரிசளி, அறக்கொடை வழங்கு; இயல்புத்திறமாக விட்டுச்செல்; இயற்பண்பாக அமைவி.

**endow'ment**, *n.* உரிமை வழங்குதல்; மானிய அளிப்பு; மானியம்; அறக்கொடை; (தொ.) endowment insurance, குறிப்பிட்ட தேதியிற் குறிப்பிட்ட தொகை பெறுதற்கான காப்புறுதிக் கட்டணத்திட்டம்.

**endue'**, *v.* ஆடை முதலியன அணிவி; ஆடை முதலியன அணி; பண்பு முதலியவற்றின் வளமளி.

**endur'ance**, *n.* பொறை; துன்பம் தாங்கும் ஆற்றல்; உழைப்பாற்றல்; நீடித்துழைக்கும் திறம்.

**endure'** *v.* நீடித்திரு, நிலைத்திரு; நீடித்துழை; தாங்கு, பொறு; துன்பத்தை ஏற்றமைவுறு; பணிவுடன் மேற்கொள்ளு.

**end'ways, end'wise**, *adv.* விளிம்பு முனைப்பாக; முனை மேலாக; ஓரம் முன்னாக; விளிம்புடன் விளிம்பாக.

**en'ema**, *n.* குதவாய் வழியே குடல் கழுவுதல்; குடல் கழுவும் அழுத்தக் குழாய்க் கருவி, நீரேற்றி.

**en'emy**, *n.* எதிரி, பகை; எதிர்ப்புப்படையினன்; பகைமை நாட்டினன்; எதிர்ப்புப்படை அல்லது கப்பல்; *a.* எதிரியைச் சார்ந்த, எதிரியினுடைய; (தொ.) the Enemy, the old enemy, சைத்தான், நரக முதல்வன்.

**energet'ic**, *a.* ஊக்கமுள்ள; ஆற்றலுடைய; வலுவான; வலிமையுடன் செயலாற்றுகின்ற; விடாமுயற்சியோடு கூடிய; சுறுசுறுப்புள்ள.

**energet'ics**, *n. pl.* ஆற்றல் ஆய்வியல் துறை.

**en'ergize**, *v.* ஊக்கமூட்டு, முனைப்பாக்கு, தீவிரப்படுத்து; விரைசெயற்படுத்து, சுறுசுறுப்பாக்கு; புதுவலுப் பெறு; விரை.

**energum'en**, *n.* பேய் பிடித்தவர்; வெறியர்; மீதார்வலர்.

**en'ergy**, *n.* ஊக்கம், ஆற்றல்; வலிமை, உரம், வீரியம்.

**enerv'ate**[1], *a.* ஊக்கம் குறைந்த, உரமிழந்த.

**en'ervate**[2], *v.* வலுவிழக்கச்செய், நலிவுறுவி.

**enface'**, *v.* விலைப்பட்டி முகப்புவரி எழுது; முகப்புவரி பொறி; முகப்பு வரி அச்சிடு; முகப்புவரி நிரப்பு.

***en famille***, (பிர.) *adv.* தன்மனையில், குடும்பத்திடையே.

***enfant terrible***, (பிர.) *n.* அருவருப்பான கேள்விகளைக் கேட்கும் குழந்தை, கேட்டதைத் திருப்பிச் சொல்லும் குழந்தை.

**enfee'ble**, *v.* தளர்த்து, நலிவி, வலுக்குறைவாக்கு.

**enfeoff'**, *v.* மானியம் அளி; அளி, ஒப்படை.

**enfeoff'ment**, *n.* மானியம் அளித்தல்; மானியம் அளிக்கும் பத்திரம், மானியம்.

***en fete***, (பிர.) *a.* விழாக்கோலம் பூண்ட; *adv.* விழாக்கோலம் பூண்டு.

**enfett'er**, *v.* விலங்கிடு; அடிமைப்படுத்து.

**enfilade'**, *n.* அணிவரிசைவேட்டு, கோடியிலிருந்து கோடியாகப் படையணியை அழிக்கும் வேட்டு; அரண்வரிசை வேட்டு; நேரணியான வாயில்களைக் கொண்ட அறை வரிசை; இழைவரிசைத் தொகுதியான பொருள்கள்; *v.* வரிசைவேட்டாகச் சுட்டுத்தள்ளு, வரிசை வேட்டாகச் சுட்டழி.

**enfold'**, *v.* பொதி; சுற்றிப் போர்த்து; தழுவு, கட்டியணை; மடி, மடிப்புறுவி.

**enforce'**, *v.* வலியுறுத்தி நடைமுறைப்படுத்து; வலிந்து செயற்படுத்து; வன்முறையிற் சுமத்து; கட்டாயப்படுத்து; செயலாக்கு; ஏற்கும்படிசெய்.

**enframe'**, *v.* சட்டத்தில் இணை, சட்டம் போடு; கட்டிடமாய் அமை.

**enfran'chise**, *v.* தன்னுரிமையளி, அடிமை நிலையினின்று விடுதலை வழங்கு; குடியுரிமை அளி; தேர்தல் உரிமை வழங்கு; வாக்குரிமை கொடு.

**enfran'chisement**, *n.* தன்னுரிமையளித்தல்; அடிமை நிலையினின்று விடுவிப்பு; குடியுரிமை; தேர்தலுரிமை; அரசியலுரிமை.

**engage'**, *v.* மணக்கட்டுச்செய், திருமண வாக்குறுதி செய்துவை, திருமண ஒப்பந்தம் செய்துகொடு; கட்டுப்படுத்து, வாக்குறுதி செய்வி; ஒன்றை ஒன்று பிணி, இறுகப்பிணை; கடப்பாட்டில் ஈடுபடுத்து; வாடகைக்கெடு; இடம் ஒதுக்கீடு செய்; கோரிக்கை பதிவு செய்; வேலையிலமர்த்து; வண்டி முதலியன அமர்த்திக்கொள்; ஈடுபடுத்திக்கொள்; ஈடுபடுவி, நேரம் போக்கிக்கொண்டிரு, போக்குக்காட்டிக்கொண்டிரு; கவனத்தைக்கவர்; பண்பிணக்கம் காட்டு; பயன்படுத்து; செயல்தொடர்புபடுத்து; போரில் ஈடுபடுத்து; ஈடுபடு; செயலில் இறங்கு; போரில் கைகலப்புச் செய்; எதிரெதிராக மோது; தூணைச்சுவரினுள் பதிவி.

**engaged'**, *a.* கட்டுப்பட்ட; ஈடுபாடு கொள்ளப்பட்ட; வாக்குறுதியளிக்கப்பட்ட, திருமணம் செய்துகொள்வதாக ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்ட; மிகவும் ஆழ்ந்த கவனம் கொண்டுள்ள.

**engage'ment**, *n.* ஈடுபடுதல்; தொழில் தேர்வு, ஈடுபாடு; ஈடுபட்ட நிலை, கடப்பாடு; ஈடுபாடுடைய செய்தி; மண உறுதி; மணக்கட்டு ஒப்பந்தம்; வாக்குறுதி; வேலையமர் வீடுபாடு; பணிக்கடப்பாடு; கைகலப்பு, போர் நடவடிக்கை.

**engage'ment-ring**, *n.* மண வொப்பந்தம் செய்யப்பட்டதற்கு அறிகுறியான மோதிரம்.

***en garcon***, (பிர.) *a.* மணமாகாத ஆடவர் நிலையிலுள்ள; *adv.* மணமாகா ஆடவர் நிலையில்.

**engarl'and**, *v.* மாலையிடு; மாலை தொடு.

**engen'der**, *v.* தோற்றுவி, உண்டுபண்ணு, தோன்றக் காரணமாயிரு.

**en'gine**, *n.* பொறி, இயந்திரம், பல்வேறு பகுதிகளுள்ள இயந்திர அமைப்பு; போர்க்கருவி; கருவி, துணைக்கலம்; வகைதுறை; சூழ்ச்சிப்பொறி; சூழ்ச்சி; திறமை; உள ஆற்றல்; *v.* கப்பல் முதலியவற்றுக்கு இயந்திர அமைப்புப் பொருத்து; வகைதுறை காண்.

**engineer'**, *n.* பொறிவலாளர், இயந்திரப் பொறியமைப்புத் திட்டம் வகுப்பவர்; பொறியமைப்பாளர், இயந்திரப் பொறிகளை அமைத்து நிறுவுபவர்; படைத்துறைக் கட்டுமான வேலைகளைத் திட்டமிட்டு வகுத்தமைப்பவர்; படைத்துறைப் பொறியமைப்பாண்மைப் பிரிவினர்; கப்பலின் இயந்திரப் பொறி மேற்பார்வையாளர்; கட்டாண்மை வல்லுநர், பாதை அணை கால்வாய் பாலம் வடிகால் இருப்புப்பாதை துறைமுகம்

முதலிய பொதுத்துறைக் கட்டுமான அரங்கப்பணி மேலாளர்; விசைப்பொறி இயக்குநர்; *v.* பொறிவலாளராகச் செயலாற்று; கட்டமை, திட்டமிட்டியற்று, வகுத்தமை; சூழ்ந்தமை, திறம்படச் செயலாற்று; வகுத்துருவாக்கு.

**en'ginery,** *n.* இயந்திரப்பொறித் தொகுதி; இயந்திரப் பொறியமைப்பு; இயந்திரப்பொறித்தொழில்.

**engir'dle,** *v.* சூழ அமை, சூழ்ந்திரு, சுற்றி வளை.

**Eng'lish**[1], *n.* ஆங்கிலமொழி; அச்சுரு அளவைவகை; *a.* இங்கிலாந்து நாட்டுக்குரிய; ஆங்கில மக்களுக்குரிய; ஆங்கில மரபு சார்ந்த; ஆங்கிலமொழிக்குரிய; (தொ.) the English, ஆங்கில மக்கள்.

**eng'lish**[2], *v.* ஆங்கிலமொழிப்படுத்து, ஆங்கிலத்தில் மொழி பெயர்; ஆங்கிலமாக்கு.

**engorge',** *v.* பேராவலுடன் விழுங்கு; திணி, செறிவி; குருதி செறிவி.

**engraft',** *v.* ஒட்டினம் உண்டுபண்ணு, முதிர்கிளையுடன் இளங்கன்றிணை, இரண்டு இனங்களை ஒட்டி இணை; சேர்த் திணை, ஒன்றுபட இணை; உள்ளத்திற் பண்பு ஊன்றுவி.

**engrail',** *v.* ஓரத்திற் பற்களாக வெட்டு; வாள்போல் பற்க ளமைந்த தோற்றம் கொடு.

**engrain',** *v.* (வண்ணச்சாயம் முதலியன) ஆழமாகப் பதியும்படி செய்வி.

**engrained',** *a.* உள்ளூறித்தோய்ந்த, உள்ளூன்றிய, செறிந்த.

**engrave',** *v.* செதுக்கு; உட்செதுக்கு வேலைப்பாட்டால் ஒப்பனைசெய்; செதுக்குருவம் தீட்டு; அச்சுக்குரிய உரு வரைப்பாளம் செதுக்கு; மனத்தில் நன்கு பதியவை.

**engrav'ing,** *n.* செதுக்கு வேலைப்பாடு செய்தல்; செதுக்கு வரிவேலை செய்யப்பட்ட அச்சுப்பாளத்தின்மூலம் அச்சிடப் பட்ட படம்.

**engross',** *v.* பத்திரமுதலியவற்றைப் பெரிய எழுத்தில் எழுது; சட்ட உருவில் எடுத்துக்குறிப்பிடு; விற்பனையில் தனி முழு உரிமை ஏற்படும்படி இருப்பு முழுவதையும் வாங்கி விடு; உரையாடலை முற்றிலும் தன்வயமாக்கு; கவனத்தை முழுவதும் கவர்; நேரத்தை முழுவதும் தனதாக்கிக்கொள்.

**engulf',** *v.* விழுங்கு, வளைந்து சூழ், உள் அமிழ்த்திக்கொள்; விழுங்குவி, அமிழ்த்துவி.

**enhance',** *v.* உயர்த்து, விலை மிகுதிப்படுத்து, மேம்படுத்து, உயர்வுபடுத்து; மதிப்பேற்று, மிகைபடுத்து; கூடுத லாக்கு, பெருக்கு; முனைப்பாக்கு; மிகுதிப்படு; கூடு; விலையுயர்வுறு.

**en'iac,** *n.* வெற்றிடம்-வளி-மின்கடவாப் பொருள் ஆகிய வற்றில் மின்வலி இயக்கநிலைகளைக் கணிக்கும் அமெரிக்க அளவைப்பொறி.

**enig'ma,** *n.* புதிர், ஊகிக்கவேண்டிய மறைபொருளுடைய தொடர்; விடுகதை; பொருள் விளங்காதது, புரியாதது; புரியமுடியாதவர், விசித்திரப் பண்புடையவர்.

**enisle',** *v.* (செய்.) தீவாக்கு; தீவில் வை; தனிப்படுத்து, துண்டி.

**enjamb'ment,** *n.* யாப்பியலில் ஈரடித்தொடர்புநிலைச் செய்யுளில் இரண்டாம் அடி கடந்தும் வாக்கியம் நீண்டு செல்லுதல்.

**enjoin',** *v.* கட்டளையிடு, ஆணை விதி; வரையறை செய், கட்டுப்படுத்து; வற்புறுத்திக்கூறு, அழுத்தமாக வேண்டிக் கொள்.

**enjoy',** *v.* துய்த்து மகிழ்; மகிழ்வுடன் நுகர்; கண்டுமகிழ்; கேட்டு மகிழ்; உணர்ந்து மகிழ்.

**enkin'dle.** *v.* நெருப்பு அழன்றெழுவி; போர்கிளர்ந்தெழுவி; உணர்ச்சியைத் தூண்டியெழச்செய்; உணர்வு கொளுத்து.

**enlace',** *v.* சூழ்; சூழ்ந்திருக்கு, வரிந்து சுற்று; சுற்றிப்பிணை, முறுகு; அணை, தழுவு; சிக்கவை; பின்னு; வலைபடர்வி; பின்னல் வேலைப்பாடு மேவுவி.

**enlarge',** *v.* பெரிதாக்கு; பரப்புப் பெரிதாக்கு; அகலப் படுத்து; மனம் விரியச்செய்; எண்ணம் விரிவடையச்செய்; இதயம் பெரிதாக்கு; அளவுபெருக்கு; தொகை மிகுதியாக்கு; நிழற்படம் விரிவுறுத்து; விரிவுறும் தகுதியுடையதாயிரு; பெரியதாக வளர்; விரித்துரை, பாரித்துரை; விரிவாகப் பேசு; சிறைவிடுவி.

**enlarge'ment,** *n.* பெரிதாக்குதல்; பெரிதாக்கப் பெறுதல்; மிகை; பரப்பீடு; அளவுப்பெருக்கம்; உரைப்பெருக்கம், சொற் பரந்துபடல்; பெரிதாக்கப்பட்ட நிழற்படம்; விடுவிப்பு; (இலக்.) சொற்பொருள் விரிவுத்தொடர், பண்புவிரி.

**enlar'ger,** *n.* புகைப்படத்தைப் பெரிதாக்கும் கருவியமைப்பு; நிழற்பட எதிர்ப்படிவத்தைப் பெரிது சிறிதாக்கும் கருவி.

**enlight'en,** *v.* ஒளியூட்டு; அறிவுறுத்து, அறிவுகொளுத்து; கற்பி, தெரிவி; ஐயந்தெளிவி, தப்பெண்ணம் அகற்று; மூடநம்பிக்கையிலிருந்து விடுவி.

**enlink',** *v.* சேர்த்து இணை; பொருத்து; கொக்கியால் பிணை.

**enlist',** *v.* படையில் சேர்த்திடு; படையில் இடம்பெறு; பட்டியலில் இணைத்துக்கொள்; சேர், இணைவுறு; ஆள்சேர், படைக்கு வீரர் திரட்டு; துணையாகப்பெறு; எய்தப்பெறு; பயன்படுத்து; ஈடுபடுத்து; புகுந்தீடுபடு.

**enlist'ment,** *n.* படையில் சேர்த்தல்; படையில் சேர்க்கப் படல்; படை திரட்டு; ஈடுபடுத்தல், பயன்படுத்தல்.

**enliv'en,** *v.* உணர்ச்சியூட்டு, எழுச்சியூட்டு; ஒளிர்வுடைய தாக்கு, மகிழ்ச்சியுள்ளதாக்கு; படத்துக்கு உயிர்த்துடிப்பூட்டு; உயிர்த்தூண்டுதலளி.

*en masse,* (பிர.) *adv.* மொத்தமாக, திரளாக, ஒரேகூட்டாக.

**enmesh',** *v.* கண்ணியில் சிக்கவை, வலையில் அகப்பட்டது போலச் சிக்கச்செய்.

**en'mity,** *n.* பகைவர்நிலை; பகைமை; எதிர்ப்பு; வெறுப்பு; பகை எண்ணம்; நட்புக்கேடு.

**enn'ead,** *n.* ஒன்பதன் தொகுதி, ஒன்பது ஏடுகளின் திரள், ஒன்பது செய்திகளின் கோவை, ஒன்பது சொற்பொழிவு களின் திரட்டு, ஒன்பது புள்ளிகளின் இணைவு.

**enno'ble,** *v.* உயர்வுபடுத்து, மேம்படுத்து; மேன்மக்கள் நிலைக்கு உயர்த்து, பெருமகார் ஆக்கு; உயர்தரமாக்கு, உயர் தகுதியுடையதாக்கு; உயர்வு தூண்டு; மேன்மையுறச்செய்.

**enn'ui,** *n.* முசிவு, சடைவு, வேலையற்றிருப்பதால் ஏற்படும் மனச்சோர்வு, எதிலும் கருத்தீடுபாடு இல்லாததால் ஏற்படும் கிளர்ச்சிக்கேடு.

**enorm'ity,** *n.* வெங்கொடுமை, மாபெருங்குற்றம்.

**enorm'ous,** *a.* மிகப்பெரிய, மாபேரளவுடைய.

**en'osis,** *n.* கிரீஸ் சைப்ரஸ் இணைப்பு; பிரிட்டனின் ஆட்சியி லிருந்து பிரிந்து சைப்ரஸ்தீவு கிரீஸ் நாட்டுடன் சேரவேண்டு மென்ற கிளர்ச்சிக்குரல்.

**enough',** *n.* போதுமான அளவு; தேவையளவு; மன நிறை வளவு; *a.* போதுமான; தேவையளவான; மனநிறை வளவான; *adv.* போதுமான அளவில்.

**enounce',** *v.* விளங்கக்கூறு; தெளிவுபடக்கூறு; சொற்களை ஒலி, உச்சரி.

**enow',** *a., adv.* (செய்.)=enough.

*en passant,* (பிர.) *adv.* இதற்கிடையில், தற்செயலாக; போகிறபோக்கில், வழியே செல்லுகையில்.

*en prise,* (பிர.) *adv.* (சதுரங்க ஆட்டத்தில் பகடைக்காய்) எடுக்கும் நிலையில்,

**enquire',** *v.* உசாவு, விசாரணைசெய்; விவரம் கேள், நாடி ஆராய்; தகவல் வினவு; இயல்பாராய், தேர்ந்தாய்வுசெய்; வேண்டிக்கேள்.

**enquir'y,** *n.* விசாரணை.

**enrage',** *n.* சீற்றமூட்டு, சினமூட்டு, மூர்க்கமாகும்படி செய்.

*en rapport,* (பிர.) *adv.* தொடர்புவிடாத நிலையில், இணைப்புத்தொடர்ந்துள்ள நிலையில்.

**enrap'ture,** *v.* களிப்பூட்டு, உவகையூட்டு, கழிமகிழ்வளி.

**enre'giment**, *v.* படையணிப் பிரிவாக வகு; பயிற்சி யளித்துக் கட்டுப்பாடு உண்டுபண்ணு.

*en regle*, (பிர.) *adv.* முறைப்படி, ஏற்றவாறு, உரியபடி.

**enrich'**, *v.* செல்வம்பெறச்செய்; செல்வராக்கு; செல்வம் பெருக்கு; வளமூட்டு, செழிப்பாக்கு; ஏடு-தொகுப்பு-காட்சிச் சாலை முதலியவற்றில் வளம் பெருக்கு; பயன்பெருக்கு; சுவைமிகுதிப்படுத்து; மதிப்புயர்த்து; ஆக்கப்பொருள்களில் மதிப்பேறிய கூறுகளின் வீத அளவு பெருக்கு.

**enrobe'**, *v.* உடைமேற்கொள்வி, ஆடையணிவி.

**enrol'**, **enroll'**, *v.* பட்டியில் சேர்; படையணியில் சேர்; கழகத்தில் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்; நீதிமன்றத்தின் பதிவேட்டில் பதிவுசெய்; மதிப்புப் பட்டியில் பதிவுசெய், புகழ்ப்பதிவுசெய்; பதிவுசெய்யப்பெறு.

*en route*, (பிர.) *adv.* போகிறவழியில், வழிப்பாதையில்; இடையில்.

**ens**, *n.* மெய்ம்மைக்கூறு, கருத்துப்படிவம், தத்துவம்; *pl.* en'tia.

**En'sa**, *n.* படைகள் முதலியவற்றிற்குப் பொழுதுபோக்கு ஏற்பாடு செய்யும் அமைப்பு.

**ensam'ple**, *n.*=example.

**ensang'uined**, *a.* குருதிக்கறையுள்ள, குருதிதோய்ந்த, கொலைகாரத்தனமான.

**ensconce'**, *v.* நிலைபெறுவி, பாதுகாப்பான இடத்தில் தங்கவை.

*ensemble*, (பிர.) *n.* பொதுததோற்றம், மொத்த மதிப்பு; இசைக்குழுவில் மொத்த ஒத்திசைவு.

**enshrine'**, *v.* கோயில் கொள்ளுவி, போற்றிவைத்துப் பேணு, காத்துப் பொதிந்துவை; தன்னகமாகக் கொண்டு பேணு, பேணுமிடமாக அமை.

**enshroud'**, *v.* முழுதும் மறை; மூடுதிரையாயமை; போர்த்தி மூடு.

**en'siform**, *a.* வாளுருவான.

**en'sign**, *n.* சின்னம்; படையின் கொடி; கொடியைத் தாங்கும் வீரன்.

**en'silage**, *n.* பசுந்தீவனத்தை உலராமல் பாதுகாக்கும் காற்றுப்புகாக் குழிபதனமுறை; குழிபதனமுறையில் பாது காக்கப்பட்ட பசுந்தீவனம்; *v.* குழிபதனமுறையால் பசுந் தீவனத்தைப் பாதுகாத்து வை.

**ensile'**, *v.* தீவனத்தைப் பசும்பதனக்குழியிலிடு, குழிபதனம் செய்.

**enslave'**, *v.* அடிமைப்படுத்து, அடிமையாக்கு.

**enslav'er**, *n.* அடிமைப்படுத்துபவர்; தன் வனப்பினுல் மனிதனை அடிமையாக்கும் அழகி.

**ensnare'**, *v.* சிக்கவை, பொறியில் அகப்படுத்து, கண்ணியில் மாட்டிக் கொள்ளும்படிசெய்.

**ensoul'**, *v.* ஆன்மநிலையூட்டு, உயிர்முதல் வழங்கு.

**ensphere'**, *v.* சுற்றிவளை, சூழ்; கோளத்தில் வை; கோள உருவம் கொடு.

**ensue'**, *v.* விளைவுறு; பின்நிகழ்வாகு; நிகழ்வுறு.

**ensure'**, *v.* உறுதிப்படுத்து; இடரிலிருந்து தடைகாப்புச் செய், இடையூறு வராமல் காப்புறுதிசெய்; காப்பாக வைத்திரு, பாதுகாப்பில் வை.

**enswathe'**, *v.* வரிந்துகட்டு, கட்டிப்பொதி, சுற்றிக்கட்டிடு.

**entab'lature**, *n.* தூண் தலைப்பு அமைவு.

**enta'blement**, *n.* சிலைதாங்கு பட்டிகை.

**entail'**, *n.* மரபுரிமைக் கட்டுப்பாடு, தலைமுறைகளின் மரபுரி மையைக் கட்டுப்படுத்தும் முதலேற்பாடு; மரபுரிமைக் கட்டுப் பாட்டுப் பத்திரம்; மரபுரிமை கட்டுப்பட்ட உடைமை; மாறு மரபுரிமைப்பண்பு; *v.* மரபுரிமைக் கட்டுப்பாடு செய்; நீங்கா உடைமையாக வழங்கு; மேற்சுமத்து; இன்றியமை யாததாக்கு, தவிர்க்கமுடியாதபடியாக்கு.

**entang'le**, *n.* எதிரிமுன்னேற்றம் தடுக்கும் தடைவேலி அரண், முட்கம்பி வேலி; *v.* சிக்கவை; இடர்களில் தொடர்பு படுத்து; சிக்கலாக்கு, புரியாததாக்கு.

**en'tasis**, *n.* தூணின் மிகச் சிறிதளவான மையப்புடைப்பு முறை.

**entel'echy**, *n.* (மெய்.) பொருளின் நிறைநிலை, பொருண்மை.

**entell'us**, *n.* தெய்வத்துக்குரிய திருநிலையுடையதாகக் கருதப் படும் இந்தியக் குரங்கு வகை.

*entente*, (பிர.) *n.* நாடுகளிடையே நட்புறவொப்பந்தம்; நட்புறவுக்குழு.

**enter**, *v.* புகு, நுழை, உட்செல்; ஊடுருவு, துளை; தொடங்கு, மேற்கொள்; மேடையில் வந்துதோன்று; பெயரைப் பதிவுசெய்; குறிப்பிடு, எழுது; எழுதுவி, பதிவு செய்வி; குழுவில் சேர்த்துக்கொள்; குழுவில் சேர்; போட்டியில் இடம்பெறு; தொடர்புகொள், ஈடுபடு; ஆழ்ந்துசெல்; உள்ளுணர்வுகொள், உள்ளீடுபாடுகொள்; நாய்ப்பயிற்று; குதிரை பழக்கு; (தொ.) enter an appearance, கூட்டம் முதலியவற்றில் தோற்றமளி, காணப்படு; enter a protest, எதிர்ப்பைத் தெரிவி, கண்டனத்தைப் பதிவுசெய்; enter on, தொடங்கு, ஈடுபடு; உடைமையின் உரிமை மேற்கொள்; கடமை மேற்கொள்; enter up, கணக்குப் பதிவு முடித்துவிடு.

**ente'ric**, *n.* குடற்காய்ச்சல்; *a.* குடல் சார்ந்த.

**en'terprise**, *n.* துணிவுவினை, கடுஞ்செயல்; இடர்நிறைந்த முயற்சி; துணிவாண்மை, தறுகண்மை, வினைத்திட்பம்.

**en'terprising**, *a.* துணிந்து வினை செய்யத்தயங்காத, ஊக் கெழுச்சியுடைய.

**entertain'**, *v.* மேற்கொள், மேற்கொண்டு நடத்து, கொண்டு செலுத்து; மனங்கொள், ஏற்றுக்கொள், ஏற்று முடிவாய்வுக்கு எடுத்துக்கொள்; மகிழ்வி, பொழுதுபோக்குவி; வரவேற்பளி; விருந்தோம்பு, விருந்தில் அன்பு பாராட்டு.

**entertain'ing**, *a.* மகிழ்விக்கிற; நேரம்போக்குகிற.

**entertain'ment**, *n.* விருந்தோம்பல்; மனமகிழச் செய்தல்; விருந்தளிப்பு, விருந்து; பொழுதுபோக்கு; பொழுது போக்குக் காட்சி, பொதுநாடக ஆட்டம்.

**enthal'py**, *n.* எடைமான வீதமான வெப்பக் கூற்றளவு; செயற்குதவும் பொருளின் வெப்பியக்க உள்ஆற்றல் அடக்கம்.

**enthral'**, **enthrall'**, *v.* அடிமைப்படுத்து; மயக்கு, வசப் படுத்து; கவர்ச்சியால் கட்டுப்படுத்து.

**enthrone'**, *v.* அரியணையிலமர்த்து, தவிசேற்று.

**enthroniza'tion**, *n.* அரியணையிலேற்றல்; தவிசேற்றப் படுதல்; உயர்த்தல், பெருமைப்படுத்தல், தவிசேற்றம்; உயர்வு.

**enthuse'**, *v.* (பே-வ.) ஆர்வங்கொள், உணர்ச்சிக் கனிவுறு.

**enthu'siasm**, *n.* ஆர்வம், உணர்ச்சிக்கனிவு; விருவிருப்பு, கிளர்ச்சி.

**enthu'siast**, *n.* பற்றுர்வலர், உணர்ச்சியார்வம் மிகுந்தவர், கிளர்ச்சி மிக்கவர்; கனவுக்காட்சியாளர்; தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்பவர்.

**entice'**, *v.* கவர்ச்சியூட்டியிழு, மயக்கிச் சிக்கவை; மருட்சி யூட்டு, ஆவலுட்டி ஏய்.

**entire'**, *n.* முழுமை, மொத்தம்; மதுக்கலவை; விதை யடிக்கப்பெருத விலங்கு, பொலிமா; *a.* முழுமையான; சிதைவுபடாத; குறைவற்ற, நிறைவான; கலப்பற்ற; விதையடிக்கப்பெருத; (உயி.) பல்வளைவுகளற்ற ஓரத்தை யுடைய.

**entire'ly**, *adv.* முழுவதும், முழுமையும், நிறைவுள்ளதாக, தீர.

**entire'ty**, *n.* முழுமை, முழுநிறைவு; கூட்டுமொத்தம்.

**enti'tle**, *v.* பெயர் அளி; பட்டம் சூட்டு; மதிப்புப்பெயர் வழங்கு; உரிமையளி; தகுதியளி.

en'tity, *n.* உளதாந்தன்மை ; உள்பொருள்.
entomb', *v.* கல்லறையில் இடு ; கல்லறையாகு.
entom'ic, *a.* பூச்சி புழு இனத்தைச்சார்ந்த.
entomol'ogy, *n.* பூச்சிநூல்.
entomoph'agous, *a.* பூச்சிகளைத் தின்கிற.
entomoph'ily, *n.* பூச்சிகளால் மகரந்தம் பரவுதல்.
*entourage*, (பிர.) *n.* சுற்றுப்புறம் ; ஆயம்.
*en-tout-cas*, (பிர.) *n.* வெயில் மறைப்புக்கு உதவும் குடை.
*entr'acte*, (பிர.) *n.* நாடகக்காட்சிகளின் இடைநிகழ்ச்சி.
en'trails, *n. pl.* குடல்கள் ; பூமியின் உள்ளிடங்கள்.
entrain', *v.* தொடர்வண்டியில் அமர்த்து, தொடர் வண்டியில் ஏறு.
entramm'el, *v.* சிக்கவை ; இடையூறுசெய்.
en'trance, *n.* நுழைவு ; மேடைக்கு வருதல் ; நுழைவுரிமை ; வாயில் ; புகுவழி ; தொடக்கம் ; *v.* பரவசப்படுத்து, பெரு மகிழ்ச்சிக்குள்ளாக்கு ; மெய்மறக்கச்செய்.
entranc'ing, *a.* மயக்குகின்ற ; தன்வயப்படுத்துகின்ற.
en'trant, *n.* நுழைபவர் ; தொழிற்படுபவர்.
entrap', *v.* பொறியிலகப்படுத்து ; சிக்கவை ; வஞ்சனைசெய் ; ஏமாற்று.
entreat', *v.* பரிந்துகேள், கெஞ்சிக்கேள்.
entreat'ive, *a.* கெஞ்சுகின்ற.
entreat'y, *n.* கெஞ்சுதல் ; பரிவோடு வினவுதல்.
*entrechat*, (பிர.) *n.* நடனத்தில் துள்ளிக் குதிக்கும்பொழுது குதிகால்களை இணைத்துப் பன்முறையும் அடித்தல்.
*entrecote*, (பிர.) *n.* விலா எலும்புப்பகுதியிலிருந்து எடுத்த இறைச்சித்துண்டு.
en'tree, *n.* நுழைவுரிமை, நுழைவதற்கான தனிச்சலுகை, விருந்தில் முறையாகப் பரிமாறும் துணையுணவு ; (இசை.) பாடுவதற்கு முன்னே இழுக்கப்படும் ராகம், சுதி கூட்டுதல்.
*entremets*, (பிர.) துணைக்கறி.
entrench', *v.* அகழிதோண்டிக்கொள் ; வலிதாக்கிக்கொள்.
entrench'ment, *n.* அகழிசூழ்ந்த கோட்டை ; வலிய காப்பிடம்.
*entre nous*, (பிர.) *adv.* உனக்கும் எனக்கும் இடையே.
*entrepot*, (பிர.) *n.* பொருள் சேமிப்பிடம், களஞ்சியம் ; பண்டகசாலை.
*entrepreneur*, (பிர.) *n.* தொழிற்றுறை உரிமையாளர் ; குத்தகையாளர், இசைநிகழ்ச்சி அல்லது பொழுதுபோக்கு நிகழ்ச்சியின் அமைப்பாளர்.
*entresol*, (பிர.) *n.* அடித்தளத்திற்கும் முதல்மாடிக்கும் இடைப்பட்ட பத்திமாடம்.
entrust', *v.* காக்கும் பொறுப்பை ஒப்படை ; நம்பிக்கையாக வை.
en'try, *n.* நுழைதல் ; புகுவழி ; தலைவாயில் ; (சட்.) உடைமை கொள்ளல் ; பதிவுசெய்தல் ; பதிவுக்குறிப்பு ; போட்டியிடுவோரின் பெயர் வரிசை ; வீடுகளுக்கிடையே உள்ள வழிச்சந்து ; மேடைமீது வருதல் ; இசைக்கருவி உள்ளே வருதல் அல்லது இசைக்கருவி வாசிப்பவர் உள்ளே வருதல்.
entwine', *v.* கோத்துப்பின்னு.
entwist', *v.* முறுக்கிப்பிடி.
enuc'leate, *v.* விளக்கிக்கூறு ; தெளிவாக்கு ; (மரு.) மேற் பகுதியிலிருந்து கட்டி முதலியவற்றைப் பிரித்தெடு.
enum'erate, *v.* கணக்கிடு ; எண்ணிக்கையிடு.
enumera'tion, *n.* கணக்கீடு ; விவரக்குறிப்பு.
enun'ciable, *a.* தெளிவுபடக்கூறப்படத்தக்க.
enun'ciate, *v.* விளங்கக்கூறு ; தெளிவுபடக்கூறு.
enuncia'tion, *n.* விளக்கக்கூற்று ; கருத்தைச் சொல்லும் வழிமுறை, தனிச்சிறப்பான அறிவிப்பு ; திருத்தமான பேச்சு.
enun'ciator, *n.* விளங்கக்கூறுபவர், தெளிவாகப் பேசுபவர்.
enun'ciatory, *a.* தெளிவான கூற்றுக்குரிய ; உறுதி கூறு தற்குரிய.
enure', *v.* பழக்கு ; பயிற்று ; வழக்கத்தில் கொண்டுவா ; இயங்கச்செய்.
enures'is, *n.* சிறுநீர் அடக்கமுடியாமை.
envel'op, *v.* மூடு ; மறையச்செய் ; சூழ்ந்துகொள் ; உறையி லிடு.
en'velope, *n.* உறை, கடித உறை.
enven'om, *v.* நஞ்சிடு ; மணங்கெடு ; உள்ளப் பகைமை உண்டாக்கு.
en'viable, *a.* பொறாமையுறத்தக்க.
en'vious, *a.* பொறாமை நிறைந்த ; பொறாமையுடைய.
envir'on, *v.* சுற்றிவளை ; சூழ்ந்துகொள்.
envi'ronment, *n.* சூழல், சுற்றுப்புறம், சூழ்நிலைகள்.
environs, *n. pl.* சுற்றுப்புற இடங்கள் ; நகர்ப்புறம் ; அயலிடம்.
envi'sage, *v.* எதிர்நோக்கு ; எதிர்பார்த்திரு, கருது.
en'voy, *n.* தூதுவர் ; அரசியல் பேராள்.
en'vy, *n.* பொறாமை ; *v.* பொறாமைப்படு ; எரிச்சல்கொள்.
enwind', *v.* சுற்றிக்கொள்.
enwomb', *v.* கருக்கொள்ளச்செய்.
enwrap', *v.* பொதிந்துவை.
enwreathe', *v.* கோதைசூழ், முறுக்கிப்பின்னு.
enzoot'ic, *n.* கால்நடைகளுக்கு வரும்நோய் ; *a.* கால்நடை நோய் பற்றிய.
en'zyme, *n.* செரிமானப்பொருள்வகை.
eolith'ic, *a.* பழங்கற்காலத்துக்கு முற்பட்ட காலப்பகுதி யான.
eon, *n.* ஊழி.
e'osin, *n.* சிவப்பூதாநிறச் சாயப்பொருள்.
ep'act, *n.* சனவரி முதல்தேதியில் திங்களின் வயசு, சந்திர மானத்திற்கு மேற்பட்ட சௌரமான மிகை.
ep'arch, *n.* கிரேக்க நாட்டரசின் மாகாணத்தலைவர், சமய வட்டத்தலைவர்.
ep'archy, *n.* இக்காலக் கிரேக்க நாட்டரசின் உட்பிரிவு, ருசிய-கிரேக்க நாட்டுத் திருச்சபையிலுள்ள சமய ஆட்சிப் பகுதி.
epaule'ment, *n.* பீரங்கிப்படைகளுக்கான காப்பீட்டுத் தொழில்.
ep'aulet, ep'aulette, *n.* படைவீரர் தலைவரின் தோளில் அணியும் சின்னம் ; தோள்கச்சை ; பெண்ணின் தோட் சட்டையணி.
epee', *n.* வாட்போர்ப்பயிற்சிக்காகக் கூர்மை மழுங்கச் செய்து பயன்படுத்தப்படும் போர்வாள்.
epergne', *n.* மேசையின் நடுவே வைக்கப்படும் பூக்கிளையணி.
epexeges'is, *n.* பொருள் விளக்கத்திற்காகக் கூட்டி யுரைக்கும் சொற்கள்.
ephebe', *n.* பதினெட்டிலிருந்து இருபதுக்குட்பட்ட வயதுடைய குடிமகன்.
ephem'era, ephem'eron, *n.* ஒரேநாள் உயிர்வாழும் பூச்சி புழுவினம் ; குறுகியகால வாழ்வுடைய பொருள் ; *pl.* ephem'eras, ephem'erons.
ephem'eral, *a.* ஒருநாள் மட்டும் நிலைத்திருக்கிற, சில நாட்கள் நிலைத்திருக்கிற ; நிலையில்லாத.
ephem'eris, *n.* நாள் நடைமுறைக் குறிப்பு ; நாளேடு ; வானியற் பஞ்சாங்கம்.

**ex'ecrative**, *a.* சபிக்கிற ; பழிக்கிற ; பழிப்புச்சார்ந்த.

**exec'utable**, *a.* நிறைவேற்றப்படக்கூடிய, செய்து முடிக்கக் கூடிய.

**exec'utancy**, *n.* இசைக்கலைத் துறை நுட்பம்.

**exec'utant**, *n.* செய்து முடிப்பவர், செயல் வல்லுநர் ; கலை நுட்பம் தேர்ந்த இசை இயக்குநர்.

**ex'ecute**, *v.* செயலாற்று ; செய்துமுடி ; செயல் முற்றுவி ; திட்டத்தை நிறைவேற்று ; கையொப்பமிட்டு முத்திரை வைத்துப் பத்திரத்தை முற்றுப்பெறுவி ; ஆணையை நடைமுறைப்படுத்து; தீர்ப்பிணைக் கொண்டுசெலுத்து; சட்டத்தைச் செயற்படுத்து ; உடைமை உரிமை மாற்றிக்கொடு ; கடமை நிறைவுறுத்து, பணிதீர் ; இசை இயக்கு ; தூக்கிலிடு.

**execu'tion**, *n.* செய்துமுடித்தல்; நிறைவேற்றம் ; செயல் முறை, செயற்பாங்கு ; இசை இயக்குதிறம் ; படைக்கலத்தின் அழிவாற்றல் திறம், செப்ப அழிதிறம் ; தூக்குத்தண்டனை ; உடைமைக் கைப்பற்றீடு ; கடன்பட்டவர் கைப்பற்றீடு ; வேலைப்பாட்டுத் திறம், கைத்திறம்.

**execu'tioner**, *n.* தூக்கிலிடுபவர்.

**exec'utive**, *n.* சட்டநிறைவேற்ற ஆட்சித்துறை ; தீர்ப்பு நிறைவேற்றத்துறை ; செயல் நிறைவேற்றத்துறை, செயலாட்சித்துறை ; செயலாட்சிக்குழு ; நிறைவேற்றக்குழு ; செயற்குழு ; செயல் ஆட்சித்துறையினர் ; செயற்குழுவினர் ; செயலாட்சித் தலைவர் ; *a.* செயலாட்சித்துறை சார்ந்த ; நிறைவேற்றத்துறைக்குரிய ; ஆட்சியரங்கத்துறை சார்ந்த ; செயல் திறமைக்குகந்த ; செயல்சார்ந்த ; செயலாட்சித் தொடர்புடைய ; செயல் புரிகிற ; செயலாட்சி செய்கிற ; நிறைவேற்றுகிற ; சட்டத்தைச் செயற்படுத்தும் தகுதியுடைய ; சட்டநிறைவேற்றத் தொடர்புடைய.

**ex'ecutor** [1], *n.* நிறைவேற்றுபவர், செய்பவர்.

**exec'utor** [2], *n.* விருப்ப ஆவணம் நிறைவேற்றப் பத்திர முதல்வரால் அமர்த்தப்படுபவர் ; (தொ.) literary executor, எழுத்தாளர் வெளியிடாது விட்டுச்செல்பவற்றின் பொறுப்பு ஒப்படைக்கப்பெறுபவர்.

**exec'utress**, *n.* executor [1], executor [2], என்பவற்றின் பெண்பால் வடிவங்களுள் ஒன்று.

**executri'ces**, *n. pl.* executrix என்பதன் பன்மை.

**exec'utrix**, *n.* executor [1], executor [2] என்பவற்றின் பெண்பால் வடிவங்களுள் ஒன்று.

**exeges'is**, *n.* விவிலியத் திரு ஏட்டுவிளக்கம் ; பொருளுரை விளக்கம்; விரிவுரை.

**exeget'ic, exeget'ical**, *a.* பொருள் விளக்கம் சார்ந்த ; விளக்கங்கூறுகிற.

**exeget'ics**, *n. pl.* விவிலிய விளக்க ஆய்வுநூல்.

**exeget'ist**, *n.* விவிலிய ஏட்டு விளக்க ஆய்வாளர்.

**exem'plar**, *n.* முன்மாதிரி, மேற்காட்டு; பின்பற்றத்தக்கவர்; வகைமாதிரிப்படிவம் ; வகையின் எடுத்துக்காட்டு ; மாதிரி உரு, ஒத்திசைபடிவம் ; சுவடியின் சரிநேர்படி.

**exemplar'ity**, *n.* முன்மாதிரியான நடத்தை.

**exem'plary**, *a.* பின்பற்றத்தக்க ; மாதிரிப்படிவமாய் அமைந்த ; விளக்குகிற ; எச்சரிக்கையாகப் பயன்படுகிற.

**exemplifica'tion**, *n.* எடுத்துக்காட்டு மூலமாக விளக்குதல் ; எடுத்துக்காட்டுதல்; எடுத்துக்காட்டு; சரிநேர்படி, சரிபகர்ப்பு.

**exem'plify**, *v.* எடுத்துக்காட்டு மூலமாக விளக்கு ; முன் மாதிரியாயிரு ; அலுவலக முத்திரையிட்டு ஆவணத்துக்குச் சான்றுப்படியெடு ; சான்றுப்படியைக் காட்டி மெய்ப்பி.

**exempt'**, *n.* தனி விலக்குரிமையளிக்கப் பெற்றவர் ; வரி செலுத்துவதனின்றும் விலக்களிக்கப் பெற்றவர் ; நாட்டுக் காவற்படைவீரர்களைத் தலைமை வகித்து நடத்தும் நான்கு பணியாளருள் ஒருவர் ; மேலாளர் இல்லாவிடத்து ஆட்சி புரிந்ததனால் தம் கடமையிலிருந்து விலக்குரிமை பெற்றவர் ; *a.* விலக்களிக்கப்பெற்ற, வரிக்கு உட்படாத ; கட்டுப்பாடுகளுக்கு உட்படாத ; *v.* விலக்களி, நீக்கு, தவிர்; விடுவி.

**exemp'tion**, *n.* விலக்கு, விலக்களித்தல் ; விலக்களிக்கப் பெற்ற நிலை ; சிறப்பு விலக்குரிமை ; பணி-கடமை-பொறுப்பு முதலியவற்றினின்றும் விடுதலை, விடுபாடு.

**exen'terate**, *a.* உள்ளீடு பிடுங்கியெடுக்கப்பெற்ற ; *v.* உள்ளீட்டைப் பிடுங்கியெடு.

**exequat'ur**, *n.* தூதாளரின் நாட்டு வேற்று அரசியல் ஏற்பமைவு ; போப்பாண்டவர் கட்டளைகளுக்கு ஆட்சியாளர் ஏற்பிசைவு ; போப்பாண்டவரால் அமர்த்தப்படும் மாவட்ட முதல்வர்கட்கு ஆட்சியினர் ஏற்பிணக்கம்.

**ex'equies**, *n. pl.* இறுதி வினைகள் ; பிண ஊர்வலம்.

**ex'equy**, *n.* exequies என்பதன் ஒருமை.

**ex'ercise**, *n.* உறுப்பின் பயனுட்சி, ஆற்றலின் கையாட்சி, உரிமையின் நடைமுறையாட்சி, பண்புத்திறங்களின் செயலாட்சி ; பண்புகளின் பயின்முறை ; தொழிற்கடமைகளின் செயலீடுபாடு ; அறவினைகளின் நடைமுறை ஈடுபாடு ; உடற்பயிற்சி ; மனப்பயிற்சிமுறை ; பயிற்சிக்குரிய பகுதி ; பயிற்சிப்பாடம் ; பல்கலைக்கழகப் பட்டத்துக்கு முற்பட்ட பயிற்சி மேடையுரை ; கிறித்தவசமயக் கிளைவகையின் வழிபாட்டு மேடை வகுப்புமுறை உரை ; கிறித்தவ சமயக்கிளை வகையின் வழிபாட்டு மேடையுரைக் கூட்டம் ; கிறித்தவ சமயக்கிளை வகை ; *v.* கையாளு ; செயலில் பயன்படுத்து ; செயலாட்சி செய் ; உரிமை வகையில் பயனுட்சி செய் ; நடைமுறைப்படுத்து ; பழக்குவி, பயிற்றுவி ; பயிற்சிமேற்கொள்; பழகிப்பயில்; உழைக்கவை; முயற்சியிலீடுபடுத்து ; தொல்லைகொடு.

**ex'ercise-book**, *n.* பள்ளிப்பாடங்களை எழுதுவதற்கான சுவடி.

**ex'ercises**, *n. pl.* உடற்பயிற்சிப்பயில்முறைகள் ; படைத்துறை அணிவகுப்புப் பயிற்சிமுறைகள்.

**exercita'tion**, *n.* செயற்பழக்கம் ; பயிற்சி ; இலக்கியப் பயிற்சி ; சொற்பொழிவுக்கலைப் பயிற்சி.

**ex'ergue**, *n.* நாணயத்தின் அல்லது பதக்கத்தின் பின்புறத்தில் தலைமைப் பொறிப்புக்குக் கீழுள்ள சிறுவெற்றிடம் ; பொறிப்புக்குக் கீழுள்ள எழுத்துவரைவு.

**exert'**, *v.* முயற்சியில் ஈடுபடுத்து, முயன்று உண்டுபண்ணு ; முயற்சியில் ஊக்கு, செயலில் முனைவி.

**exer'tion**, *n.* கடுமுயற்சி ; முனைத்த நடைமுறை, விரைசெயல்.

**ex'eunt**, (ல.) *v.* (நாடகமேடைக்குறிப்பு) நடிகர்கள் மேடையை விட்டுச் செல்கிறார்கள் ; (தொ.) *exeunt omnes*, நடிகர்கள் எல்லாரும் மேடையைவிட்டுச் செல்கிறார்கள்.

**exfol'iate**, *v.* எலும்பு தோல் கனிப்பொருள்கள் வகையில் சிம்பு சிம்பாக உதிர்ந்துவிழு ; மரங்களின் பட்டைவகையில் அடை அடையாக உரிந்துவிடு.

**exhala'tion**, *n.* ஆவியாய்ப்போதல் ; வெளியே விடப்படும் மூச்சு, புற உயிர்ப்புவீச்சு ; சீற்றம் முதலிய பண்புகள் வகையில் திடீர் உணர்ச்சி வெளிப்பாடு ; புகைபோன்ற ஆவி, மூடுபனி ; மணம், வாடை, நாற்றம்.

**exhale'**, *v.* ஆவிவடிவத்தில் வெளியிடு ; வாடை வீசச்செய் ; ஆவிவடிவத்தில் வெளிப்படுத்தப்பெறு ; ஆவியாய்ப்போ ; மூச்சுவிடு ; உடலின் நீர்மங்கள் வகையில் குருதியுடன் சிறிது சிறிதாகக் கசிந்தொழுகு ; ஊதித்தள்ளு, ஒழித்துக்கட்டு.

**exhaust'**, *n.* புறம்போக்கி, கழிவுநீர் ஆவி வளி முதலிய வற்றை வெளியேற்றும் இயந்திரப்பொறியமைவு ; உள்வெப்பாலை வெளியேற்றமைவு ; வெளிச்செல் நீர்மம் ; நீர்மம் வெளிச்செல்வதற்குரிய நேர அளவு ; புறஞ்செல்காற்றோட்டம்; புறஞ்செல் வளியொழுக்கமைவு ; ஆய்கல வளிவெளியேற்றுமுறை ; *v.* காற்று வளி நீர்மங்களை வெளிவாங்கு ; ஆய்கல முதலியவற்றை வெறுமையாக்கு ; தேக்கம் வடித்துத் தீர் ; செலவு செய்தழி, பயன்படுத்தித் தீர் ; பணம் கரையவை ; உரம் அழியச்செய் ; முற்றிலும் சோர்வுறுத்து ; சொல்வன யாவும் சொல்லித்தீர், செய்திகள் யாவும் தீர் ; தெரிந்து

கொள்ளவேண்டுவன எல்லாம் சொல்லு ; தெரிந்துகொள்ள வேண்டுவன எல்லாம் கண்டுபிடி ; ஆற்றல் இழக்கச்செய் ; வளம் வறக்கப்பண்ணு ; சோர்வடைவி.

exhaust'ed, *a.* செலவாய்விட்ட ; வடியப்பெற்ற ; வெளியேற்றித தீர்ந்த ; வெறுமையாக்கப்பெற்ற ; முழுமையும் பயன்படுத்தப்பட்ட ; முழுதும் ஊக்கமழிந்த ; முற்றும் சோர்வடைந்த ; நாடு வகையில் வலிமையிழந்த, வளமிழந்த.

exhaust'ible, *a.* செலவுசெய்துதீரக்கூடிய, வெறுமையாக்கப் பெறத்தக்க.

exhaus'tion, *n.* முழுச்சோர்வு; முற்றும் வெறுமையாக்குதல்; முழுவதும் பயன்படுத்துதல்; முற்றும் வெறுமையாக்கப் பெற்ற நிலை; வாதங்களில் ஒற்றைமாற்றுகள் யாவும் தீர்வுறல்.

exhaus'tive, *a.* ஒரு பொருளைப்பற்றித் தீர ஆயும் பாங்குடைய, தீர்வாய்வான ; ஒன்றுவிடாமல் யாவுமளாவிய, நுணுக்கம்விடா அகல்விரிவான.

exhaust'less, *a.* எடுக்க எடுக்கக் குறையாத, வற்றாத.

exhaust'-pipe', *n.* வளிபோக்கிக்குழல்.

exhib'it, *n.* (சட்.) சான்றுவணம் ; சான்றாக நீதிமன்றத்தில் கொண்டுவைத்துக் காட்டப்படும் பொருள் ; பொருட்காட்சியிலுள்ள காட்சிப்பொருள் ; பகட்டுக்காட்சி, ஆரவாரப்பகட்டு; *v.* பொருட்காட்சியில் வை ; பொதுவிடத்தில் காட்சிக்கு வை ; ஆய்வுக்காக முன் வை ; திறந்துகாட்டு, பகட்டாகக் காட்டு ; பண்பினை எடுத்துக்காட்டு, இயல்பினைத் தெளிவாகக் காட்டு ; குறித்துக்காட்டு.

exhibi'tion, *n.* பார்வைக்கு வைத்தல்; பொருட்காட்சி ; புறப்பகட்டு, விளம்பரம் ; காட்சிக்கு வைக்கப்பட்ட பொருள்; பள்ளி ஆண்டின் இறுதியில் நடைபெறும் பொது ஆடல்-பாடல்-நாடகக்காட்சி ; கொடை, பொருளுதவி ; பல்கலைக் கழகப் புலவர்களுக்கு ஆதரவாகக் கொடுக்கப்படும் படி ; (மரு.) தீங்கு மாற்றுமுறை செயல் ; (தொ.) make an exhibition of oneself, பிறர் ஏளனத்துக்கிடமாக மடத்தனமாய் நடந்துகொள்.

exhibi'tioner, *n.* பல்கலைக்கழகத்தில் ஆதரவுப்படியைப் பெற்று வருபவர்.

exhibi'tionism, *n.* பகட்டாரவாரப்பாங்கு ; மிகைபட்ட நடத்தைப்பண்பு ; (மரு.) அம்மணமாகத் திரியும் சித்தக் கோளாறுநிலை.

exhib'itory, *a.* காட்டிக்கொள்ளுகிற, பகட்டிக்கொள்ளும் பாங்குடைய.

exhil'arant, *n.* ஊக்கந்தரும் மருந்து ; *a.* உணர்ச்சியூட்டுகிற, ஊக்குகிற, மகிழ்விக்கிற.

exhil'arate, *v.* மகிழ்வி, ஊக்கு, உயிர்ப்பூட்டு.

exhil'arating, *a.* மகிழ்விக்கிற, கிளர்ச்சியூட்டுகிற.

exhilara'tion, *n.* கிளர்ச்சியுற்றநிலை, மகிழ்வு, பூரிப்பு, களிப்பு.

exhort', *v.* வற்புறுத்து, ஆர்வமாகத்தூண்டு, நற்செயலுக் கேவு ; அறிவுரை கூறு ; பரிந்து பேசு.

exhorta'tion, *n.* நன்மதிகூறல்; செவியறிவுறூஉ, அறிவு கொளுத்தும் உரை ; சமயச்சொற்பொழிவு.

exhort'ative, exhort'atory, *a.* நன்மதிகூறும் பாங்குடைய ; நலந்தூண்டுகிற.

ex'humate, exhume', *v.* தோண்டியெடு, புதைத்த பிணத்தை வெளியிலெடு ; மறைவிலிருந்து வெளிப்படுத்து.

ex'igence, ex'igency, *n.* அவசரத்தேவை ; நெருக்கடிநிலை; பெருந்துயரம்.

ex'igent, *a.* அவசரமான, உடனடியாகச் செயலாற்ற வேண்டிய, உடனே கவனிக்கவேண்டிய ; நெருக்கடியான ; தொல்லைமிக்க; கொடுமைப்படுத்துகிற.

ex'igible, *a.* கேட்கப்படக்கூடிய; கொடுமைசெய்து வாங்கப் படக்கூடிய.

exig'uous, *a.* குறைவான, போதாத.

ex'ile, *n.* நாடு கடத்தும் தண்டனை; நாடு கடத்தப்பெற்றவர்; நீடித்த தாயக நீத்த வாழ்வு, தொலைவயல்நாட்டுவாழ்வு ; *v.* நாடுகடத்துந் தண்டனை அளி, நாடு கடத்து.

exil'ian, exil'ic, *a.* பாபிலனில் (Babylon) யூதர்கள் நாடு கடத்தப்பட்டமை சார்ந்த.

exil'ity, *n.* மென்மை, நொய்ம்மை, நன்மை, நயம்.

exist', *v.* உளதாகு, உளதாயிரு ; வாழ், வாழ்ந்திரு ; குறிப்பிட்ட சூழ்நிலையில் அமைவுறு, தோன்று, காணப்பெறு.

exis'tence, *n.* உளதாயிருத்தல்; வாழ்தல்; உளதாம் தன்மை ; வாழ்வு ; வாழ்க்கைவழி, பிழைப்பு ; வாழும்முறை; உள்பொருள் ; வாழுயிர் ; உள்பொருள் உலக முழுமை, இயலுலகு.

exist'ent, *a.* உளதாயிருக்கிற ; வாழ்கிற ; உண்மையான ; நடைமுறையிலுள்ள தான.

existen'tial, *a.* உளதாந்தன்மை சார்ந்த ; புறநிலை உண்மை நிலை வலியுறுத்துகிற.

existen'tialism, *n.* புறமெய்ம்மை மறுத்த வாழ்வியல் மெய்ம்மைக் கோட்பாடு.

ex'it [1], *n.* மேடையிலிருந்து நடிகர் வெளியேறுதல்; புறப்பாடு, போதல், கடந்து செல்லுதல் ; வெளியேறும் உரிமை ; வெளிச்செல்லும் வழி ; புறப்பட்டுப்போகும்வழி, உலகமாகிய மேடையைவிட்டு வெளியேறல், இறப்பு.

*ex'it* [2], (ல.) *v.* (நாடகமேடைக் குறிப்பு) நடிகர் மேடையை விட்டுச் செல்கிறார்.

ex-lib'ris, *n.* புத்தக உடைமை உரிமையாளரின் பெயர் சின்ன முதலிய விவரங்களடங்கிய முகப்புப்பொறிப்புச் சீட்டு.

exoder'm, *n.* (தாவ.) அரும்பின் புறத்தோல் மேல்தாள்.

ex'odus [1], *n.* புறப்பாடு, குடியெழுந்துசெல்லும் குழுவின் வெளியேற்றம்; எகிப்திலிருந்து இஸ்ரவேலர்கள் (Israelites) மேற்கொண்ட செலவு.

Ex'odus [2], *n.* (விவி.) பழைய ஏற்பாட்டில் எகிப்திலிருந்து யூதர் வெளியேற்றம்பற்றிக் கூறும் பகுதி.

*ex offi'cio*, (ல.) *a.* பதவிமுறைப்பட்ட, அலுவல் சார்பான ; *adv.* பதவிமுறையில்.

exogam'ic, exog'amous, *a.* ஒருவன் தனது இனத்துக்குப் புறம்பேதான் மணம் செய்துகொள்ளவேண்டுமென்னும் கட்டுப்பாடு உடைய.

exog'amy, *n.* ஒருவன் தனது இனத்துக்குப் புறம்பேதான் மணம் செய்துகொள்ளவேண்டுமென்று கட்டுப்படுத்தும் வழக்க மரபு.

ex'ogen, *n.* (தாவ.) தண்டின் புறவளர்ச்சியுடைய இருகதுப்பு விதைச்செடியினம்.

exog'enous, *a.* (தாவ.) தண்டின் புறவளர்ச்சியுடைய இருகதுப்பு விதைச் செடியினம் சார்ந்த.

ex'on, *n.* நாடுகாவல் படைவீரர்களின் நாற்பெருந்தலைவருள் ஒருவர்.

exon'erate, *v.* குற்றச்சாட்டிலிருந்து விடுதலை செய் ; குற்றமில்லையென்று தெளிவுபடுத்து ; பொறுப்பிலிருந்து விடுவி.

exonera'tion, *n.* பழிதுடைத்தல், குற்றம் இல்லையென்று தெளிவுபடுத்தல், பொறுப்பு விடுவிப்பு.

exon'erative, *a.* கடப்பாட்டினின்றும் விடுவிக்கிற, பொறுப்பிலிருந்து தவிர்க்கிற.

exopath'ic, *a.* நோய்வகையில் உடம்புக்கு வெளியேயிருந்து தோன்றுகிற.

exoph'agous, *a.* மனிதர்களை உண்ணும் மனிதர்களிடையே தம் இனத்தவர்களல்லாத மற்றவர்களை மட்டும் உண்ணும் வழக்கத்தையுடைய.

exoph'agy, *n.* மனிதர்களை உண்ணும் மனிதர்களிடையே தம் இனத்தவர்களல்லாத மற்றவர்களை மட்டும் உண்ணும் வழக்கம்.

**exophthal'mia, exophthal'mos, exophthal'mus,** *n.* (மரு.) இயல்புக்கு மீறிக் கண்விழி பிதுங்கியிருத்தல்.

**ex'oplasm,** *n.* உயிர்ச்சத்தின் புறப்படலம்.

**exor'bitance, exor'bitancy,** *n.* வரம்புகடந்த அளவு, மட்டுமீறிய தன்மை.

**exorb'itant,** *a.* வரம்பிகந்த, அளவுகடந்த, முறையற்ற.

**ex'orcism,** *n.* பேயோட்டுதல்; பேயோட்டும் வினைமுறை வகை; பேயோட்டுதற்கான மந்திரம்.

**ex'orcist,** *n.* பேயோட்டி.

**ex'orcize,** *v.* மந்திரித்துப் பேயோட்டு; பேய்நடமாட்டம் இல்லாமற்செய்.

**exor'dial,** *a.* முகப்புரையான.

**exord'ium,** *n.* தொடக்கப்பகுதி, முகப்புரை; *pl.* exor'dia, exor'diums.

**exoskel'eton,** *n.* (வில.) எலும்பாகவோ தோலாகவோ உள்ள உடலின் புறத்தோடு.

**exote'ric,** *a.* வெளியரங்கமான; கொள்கை கோட்பாடுகள் வகையில் புறத்தார்க்கும் தெளிவாகத் தெரியத்தக்க; மாணவர்கள் வகையில் உள்வட்டப்போதனைக்குச் சேர்த்துக் கொள்ளப்படாத; மிகப்பொதுப்படையான; சாதாரணமான.

**exote'rics,** *n. pl.* எல்லாருக்கும் தெரிவிக்கப்படத்தக்க பொதுக்கொள்கை முறைகளின் தொகுதி, கோட்பாட்டு முறை.

**exot'ic,** *n.* வேற்றுத் திணைச்செடி வகை; சூழலுக்கு ஒவ்வா அயல் வரவுப்பொருள்; *a.* வேற்றுநாட்டிலிருந்து கொணரப்பட்ட; அயற்பண்புடைய; தாய்நிலத்துக்குப் புதிதான; திணைப்புறம்பான.

**expand',** *v.* பரப்பு; பரவுறு; விரித்துரை, விளக்கு, விரிவுபடுத்தி எழுது; பருமையாக்கு, விரிவாக்கு; விரி, அகலமாகு, பெரிதாகு; பெருகு, விரிவடை, பருமை மிகு, உருவாகிவளர்; பழகுநலம் உடையவராகு, தனிப்பட ஒதுங்கியிருப்பதை விட்டொழி; (தொ.) expanded metal, வெட்டிக் காரைக் கட்டுமான உள்ளீடாகப் பயன்படும் பின்னல் சட்டமாக விரிவாக்கப்படுகிற உலோகத்தகடு.

**expanse',** *n.* விரிவு; அகல்பரப்பு, அகலிடம்; அகல்வெளி; வானவெளி; பரப்பின் அளவு.

**expan'sible,** *a.* விரிவாக்கப்படத்தக்க, விரிவுறக்கூடிய.

**expan'sile,** *a.* விரியக்கூடிய.

**expan'sion,** *n.* விரிவடைதல்; விரிவடைந்தநிலை; விரிவு; பரப்பு; படர்ச்சி; பெருக்கம்; விரிவாக்கப்பட்ட ஒன்று; வாணிகக் கொடுக்கல்வாங்கல் பெருக்கம்; விரிவாக்கப்பட்ட அளவு; ஆட்சிப்பரப்பின் விரிவு.

**expan'sionism,** *n.* ஆட்சிஎல்லை விரிவுக்கொள்கை.

**expan'sionist,** *n.* நாட்டின் ஆட்சிப்பரப்பினை விரிவாக்க வேண்டுமென்னும் கோட்பாடுடையவர்.

**expan'sive,** *a.* நாலாபக்கமும் பரவுகிற; பெரிதும் விரிவாக்கப்பட்ட; விரிவான; அணுத்தையும் உள்ளடக்குகிற, விரிவகற்சியுறும் இயல்புடைய; வளரும் ஆற்றலுடைய; விரிவான; பரந்தகன்ற; ஆட்கள் வகையில் தாராளமாகப் பேசிப்பழகுகிற; உணர்ச்சிவகையில் கனிவு எழுச்சியுடைய; பேச்சு வகையில் சொல்வளமுடைய.

***ex parte,*** (ல.) *a.* (சட்.) ஒருதலையான, ஒருபக்கச்சார்பான; *adv.* ஒருதலையாக.

**expa'tiate,** *v.* வளம்பட உரை; விரிவாக எழுது; கட்டற்றுச் சுற்றிச்செல்.

**expa'tiative, expa'tiatory,** *a.* எல்லைகடந்து விரிந்து செல்கிற.

**expat'riate,** *v.* நாடுகடத்து; குடிபெயர்த்து வெளியேற்று; குடிமை உரிமையைத்துற.

**expatria'tion,** *n.* நாடுகடத்தல்; நாட்டைவிட்டு வெளியேறப்பெறல்; தாயகத்துறப்பு.

**expect',** *v.* எதிர்பார், காத்திரு, வரவு நோக்கு, எதிர்நோக்கு, நடக்கக்கூடுமெனக்கருது; இன்னபடி நடக்கவேண்டுமென நினை.

**expec'tance, expec'tancy,** *n.* எதிர்நோக்கியுள்ள நிலை; கருதியிருக்கை; எதிர்கால வாய்ப்புவளம்; எதிர்பார்க்கப்படுவது; அவாநம்பிக்கை.

**expec'tant,** *n.* எதிர்நோக்கியிருப்பவர்; பதவி முதலியவற்றுக்கான வேண்மர்; *a.* எதிர்நோக்குகிற, காத்திருக்கிற; உடைமைபெறும் வாய்ப்பு எதிர்நோக்கியுள்ள; பதவி வாய்ப்பு எதிர்நோக்குகிற; (தொ.) expectant mother, கருக்கொண்டுள்ள மாது.

**expecta'tion,** *n.* எதிர்நோக்கியிருத்தல், காத்திருத்தல்; எதிர்பார்த்திருப்பதற்குரிய செய்தி; எதிர்பார்க்கத்தக்கது; எதிர்பார்க்கத்தக்க அளவு; எதிர்பார்க்கப்படுவதன் மதிப்பு.

**expecta'tions,** *n. pl.* மரபுவழி வந்துசேரத்தக்க உடைமை வாய்ப்புக்கள்; எதிர்பார்க்கப்பட்ட செய்திகளின் தொகுதி; வருநிலை வாய்ப்பு வளங்கள்; வருநிலை நேர்வுவளங்கள்.

**expec'tative,** *n.* ஒழிவாகுமுன்பே முற்பட எதிர்நோக்கி வழங்கப்படும் மானியம்; எதிர்பார்க்கப்படும் பொருள்; *a.* எதிர்பார்க்கப்படுகிற; எதிர்பார்க்கப்படும் பொருள் சார்ந்த; மானிய வகையில் கொடுப்பவர்க்கே மீள்கிற; மானிய மீட்சி சார்ந்த.

**expect'ing,** *a.* (பே-வ.) சூலுற்ற.

**expec'torant,** *n.* கபம் வெளிக்கொணரும் மருந்து; *a.* கபம் வெளிக்கொணர உதவுகிற.

**expec'torate,** *v.* கபம் வெளியேற்று; இருமிக் கபத்தை வெளிக்கொணர்.

**expectora'tion,** *n.* இருமிச் சளி வெளிப்படுத்துதல்; கபம் உமிழ்வு.

**exped'ience, exped'iency,** *n.* சூழலுக்கேற்ற தகுதி; வேளைக்கேற்ற பொருத்தமுடைமை; விரும்பத்தக்கநிலை; தனி நலவாய்ப்புடைமை.

**exped'ient,** *n.* தகுமுறை, வழிதுறை, கருவி; *a.* தக்க, சூழ்நிலைக்கிசைந்த; உகந்த, விரும்பத்தகுந்த; நலமளிக்கிற.

**ex'pedite,** *a.* தடங்கலற்ற; விரைவான, உடனடியான; *v.* தடைநீக்கு; ஊக்கிவிடு, விரைவுபடுத்து; போக்கு, விரைந்தனுப்பு.

**expedi'tion,** *n.* விரைவு; படையெழுச்சி; தனிநோக்கத்துக்கு உட்பட்ட சுற்றுப்பயணம்.

**expedi'tionary,** *a.* படையெழுச்சிசார்ந்த; படையெழுச்சியின் இயல்புடைய; சுற்றுப்பயணம் சார்ந்த; சுற்றுப்பயணத்தின் தன்மையுடைய.

**expedi'tious,** *a.* செயல் விரைவுடைய, உடனடியாகச் செய்கிற; விரைவார்ந்த, விரைவாகச் செய்யப்பட்ட; முறுகிய, விரைசெயலாற்றுவதற்குத்தக்க.

**expel',** *v.* ஓட்டு, துரத்து; நீக்கு, அகற்று; புறந்தள்ளு, வெளியேற்று; வீசியெறி; நாடுகடத்து.

**expend',** *v.* செலவிடு; பயன்படுத்திக்கொள்; செலவழி, பயன்படுத்தித்தீர்; ஈடுபடுத்தி இழவி.

**expend'able,** *a.* செலவிடத்தக்க; குறிக்கோளுக்காக இழந்துவிடத்தக்க.

**expen'diture,** *n.* செலவிடுதல்; பயன்படுத்தித் தீர்த்தல், செலவழிவு; செலவினம், செலவிடப்பட்ட தொகை.

**expense',** *n.* செலவு; செலவழிவு, செலவழிந்த தொகை; கைச்செலவு, நடைமுறைச் செலவினம்; கட்டணச் செலவு; ஆக்கவினைப் பொருளாக்கச் செலவினம்; கைம்முதல் செலவு, முதலீடாகவேண்டிய தொகை; (தொ.) at one's expense, ஒருவரது செலவில்; ஒருவரது ஆதாய இழப்புப் பொறுப்பில்.

**expen'ses,** *n. pl.* குறிப்பிட்ட வேலைக்காகத் தேவைப்படும் கைப்பணம்; செலவு செய்த தொகை; (சட்.) வழக்காடுதற்குப் பிடிக்கும் செலவு.

**expen'sive**, *a.* மிகுவிலையுள்ள ; பெருஞ்செலவு பிடிக்கிற ; ஊதாரித்தனமான.

**exper'ience**, *n.* அனுபவம், நேருணர்வு, செயலீடுபாடு ; அனுபவ அறிவு, நேர்க்காட்சியுணர்வு ; பட்டறிவு, தேர்வறிவு ; நுகர்வு ; நீடுபல்காட்சியுணர்வு ; வாழ்க்கைப்புற நிகழ்ச்சி ; புறநிகழ்ச்சியின் அகநேர்ச்சி, உள்ளனுபவம் ; பொறியுணர்வு ; புலனுணர்வு, அகக்காட்சியுணர்வு ; தனி ஈடுபாட்டுணர்வு ; *v.* நுகர் ; துய்த்துணர் ; படு, தாங்கிக்கொள் ; புலனுணர்வுகொள், அகஉணர்வுகொள் ; புறநிகழ்வுணர் ; பட்டறி, தேர்ந்துணர் ; செயலீடுபாடுகொள் ; கண்கூடாயறி, நேர்காட்சியாலுணர், நேர்காண் ; (தொ.) experience table, காப்புறுதித்துறையில் அனுபவ அடிப்படையாக உருவாக்கப்பட்ட வயதுக்குழுவுக்கான வருவாழ்வு வள நேர்ச்சிப்பட்டியல்.

**exper'ienced**, *a.* தேர்ந்த ; பட்டறிந்துகொண்ட; தேர்ச்சித் திறமை வாய்ந்த.

**exper'iences**, *n. pl.* சமய அகவுணர்வு நிலைகள்.

**experien'tial**, *a.* பட்டறிவு சார்ந்த ; அனுபவத்தினுல் பெற்ற.

**experien'tialism**, *n.* எல்லா அறிவும் புறக்காட்சியுணர்வினின்றே கிடைக்கிறதென்னும் கோட்பாடு.

**expe'riment**, *n.* செய்முறை, தேர்முறை ; தேர்வாய்வு ; சோதனை, செயல்தேர்வு, முடிவுகாண்பதற்குரிய தற்காலிக முயற்சி ; *v.* தேர்முறையாற்று, செய்முறையால் தேர்ந்து பார் ; சோதனைசெய், செய்துபார், பலதடவை விழுந்தெழுந்து முயல்.

**experimen'tal**, *a.* அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட ; இயற்றிப்பார்த்ததை அடிப்படையாகக் கொண்ட ஆய்நிலையான; சோதனைகளில் பயன்படுத்தப்படுகிற; ஊகம் மேற்கொண்டு செய்யப்படுகிற, செய்துசெய்து பார்க்கும் நிலை உடைய.

**experimen'talism**, *n.* தேர்வாய்வுமுறை, தேர்வாய்வு மீது நம்பிக்கை.

**exper'imenter, exper'imentist**, *n.* தேர்வாய்வு செய்பவர்.

**ex'pert**[1], *n.* வல்லுநர், நிபுணர், ஒருதுறையில் தனித்திறமை பெற்றவர்.

**expert'**[2], *a.* கைதேர்ந்த, பலமுறைசெய்து பழக்கமேறிய ; திறமை வாய்ந்த.

**ex'pertise**, *n.* தனித்துறைச் சிறப்பறிவுத்திறம் ; சிறப்புத் திறமை ; சிறப்பறிவாளர் ஆய்வுரை.

***expert'o cred'e***, (ல.) (தொ.) தேர்ந்தறிந்தவர் அனுப்பும் இதை நம்புக ; (சான்றுக்குறிப்பு).

**ex'piable**, *a.* கழுவாய் செய்யத்தக்க, பரிகரிக்கத்தக்க.

**ex'piate**, *v.* கழுவாய் செய், பரிகரி, ஈடுபண்ணு.

**expia'tion**, *n.* கழுவாய் செய்தல் ; ஈடுசெய்யும் முறை ; ஈடுதீர்வு, நிவர்த்திப்பு, பரிகாரம்.

**expira'tion**, *n.* மூச்சு வெளிவிடுதல் ; காலஞ்செல்லாதல், கால எல்லை கடப்பு, அவதிமுடிவு.

**expir'atory**, *a.* மூச்சு வெளிவிடுவது சார்ந்த, வெளி உயிர்ப்புக்குரிய.

**expire'**, *v.* மூச்சுவெளிவிடு ; இற ; அணைந்துபோ ; முடிவுறு ; கால அவதியாகு ; அவதிகடந்து செல்லாததாகிவிடு ; மரபு அற்றுப்போ.

**expired'**, *a.* இறந்த ; மரபற்றுப்போன ; காலாவதியான ; வழக்கற்றுப்போன.

**expi'ring**, *a.* இறந்துகொண்டிருக்கிற ; சாகும் காலத்துக்குரிய ; சாகுந்தறுவாயில் சொல்லப்பட்ட.

**expir'y**, *n.* காலஅவதி, காலஎல்லைகடப்பு ; காலக்கழிவு ; முடிவு.

**expis'cate**, *v.* நுழைந்தாய்வு செய்து கண்டுபிடி ; தீர்ந்த தேர்வினுல் கண்டுணர்.

**explain'**, *v.* விளக்கு, புரியும்படி சொல் ; புதிர்அகற்று, எளிதாக்கு ; நுணுக்க விரிவாகத் தெரிவி ; காரணங்கூறி விளக்கம் செய் ; காரணவிளக்கம் கூறு ; செயல்நோக்க விளக்கம் அளி ; கூறத்தகாதனவற்றை விலக்கியடக்கப் பிறிதுற விளக்கியுரை ; (தொ.) explain away, காரணங்கூறி பேச்சின் வேகத்தைக் குறை ; explain oneself, நோக்கம் தெளிவுபடுத்து, கருத்து விளக்கு.

**explana'tion**, *n.* விளக்குதல் ; விளக்கம் ; பிணக்குத்தீர்ப்பு, சமரச முயற்சி ; விளங்கவைக்கும் அறிக்கை, சமாதானம்.

**explan'atory**, *a.* விளங்கவைக்கிற ; விளக்கக்கருதுகிற.

**ex'pletive**, *n.* சாரியை ; அசைநிலை ; யாப்புநிரப்பு அசை ; பொருளற்ற இடநிரப்புச்சொல் ; தூளுரையில் வரும் வெற்றுரை ; *a.* செய்யுள் இசை நிரப்புவதற்குப் பயன்படுகிற ; ஓசைநிரப்புதற்குமட்டுமே சேர்க்கப்படுகிற ; இடநிரப்பியலான.

**ex'plicable**, *a.* விரித்துரைக்கத்தக்க, விளங்கவைக்கக் கூடிய.

**ex'plicate**, *v.* விரித்துரை, விளக்கு, தெளிவாக வெளிப்படுத்து.

**explica'tion**, *n.* விரித்துரைத்தல், விளக்குதல், விளக்கம்.

**ex'plicative, ex'plicatory**, *a.* விரித்துரைக்கிற, விளங்கவைக்கிற, விளங்க உதவுகிற.

**expli'cit**[1], *a.* தெளிவான , விளக்கமான, வெளிப்படையான; ஐயத்துக்கிடமற்ற, உய்த்துணரவைக்காத ; விரிவாகச் சொல்லப்பட்ட ; திட்டவட்டமான ; மனம்விட்டுப் பேசுகிற ; முழுதுறத் தெரிந்து செயற்படுகிற.

***ex'plicit***[2], (ல.) *v.* முற்றிற்று (ஏட்டிறுதியில் எழுதப்பட்டு வந்துள்ள குறிப்பு).

**explode'**, *v.* படீரென வெடி ; உரத்த ஒலியுடன் வெடிக்கச்செய் ; தவறெனக்காட்டி மறு ; இகழுக்கு உள்ளாக்கிவிடு ; காட்சிமேடை நடிகர்மீது உரத்த குரலில் கண்டனம் தெரிவி, எதிர்த்துப் பழிதூற்று.

**explo'ded**, *a.* தகர்த்தெறியப்பட்ட ; தள்ளிவிடப்பட்ட, ஒதுக்கப்பட்ட.

**ex'ploit**[1], *n.* வீரச்செயல், துணிசெயல் ; அருஞ்செயல், செயற்கரிய செயல்.

**exploit'**[2], *v.* இயற்கைவளத்தை உழைத்துப் பயன்படுத்திக்கொள் ; சுரண்டிப்பிழை, பிறரைத் தன் நலங்களுக்குப் பயனுடையதாக்கிக்கொள்.

**exploit'age, exploita'tion**, *n.* இயற்கை மூலப்பொருளை உழைத்துப் பயன்படுத்துதல், சுரண்டுதல், தன்னலத் தேட்டம்.

**explora'tion**, *n.* முற்றாய்தல் ; ஆய்வுப்பயணம், புதிய நிலப்பகுதி முதலியவற்றைக் கண்டறிதற்காக மேற்கொள்ளப்படும் பயணம்.

**explor'ative, explor'atory**, *a.* ஆய்தற்குப் பயன்படுகிற; புதிதாய்வு செய்கிற ; நிலங்தேடி ஆய்கிற.

**explore'**, *v.* ஆய்வுப்பயணம் செய், நாடிப்புறப்படு ; நாடியறி, புத்தாய்வு செய் ; (மரு.) காயத்தைத் தொட்டுப் பரிசோதனை செய்.

**explo'sion**, *n.* படீரென வெடித்தல் ; வெடிப்பொலி ; சீற்றம் முதலிய உணர்ச்சிகளின் திடீர் எழுச்சி.

**explos'ive**, *n.* வெடிமருந்து, வெடிக்கவைக்கும் பொருள் ; தடை வெடிப்பொலி எழுத்து, ஒலிக்கும்போது மூச்சுவருவது முற்றும் தடைபடச்செய்யும் மெய்யெழுத்து ; *a.* உரத்த ஒலியுடன் வெளித்தள்ளும் பாங்குடைய, வெடிக்கும் இயல்புடைய ; வெடிக்கவைக்கிற ; (மெய்யெழுத்து) மூச்சுத் தடைப்பட்டு ஒலிக்கப்படுகிற ; (தொ.) explosive rivet, புறத்தே தட்டியடிப்பதன் மூலம் எட்டா இடத்தில் உள் வெடிப்பமைப்பு வழியாக கொழுச்செருகி இறுக்கும் இயல்புடைய தாழ்ப்பாள் ; high explosive, செலுத்தப்பட்ட பின் குண்டு முதலியவற்றினுள்ளிருந்து வெடிக்கிற மூனைத்தவெடி மருந்துப் பொருள்.

**expon'ent**, *n.* விளக்குபவர்; விளக்கும்பொருள்; இசை முதலியவற்றில் நுட்பத்திறமைமிக்கவர்; வகை; மாதிரி; (கண.) விசைக்குறி எண்.

**ex'port** [1], *n.* ஏற்றுமதிப்பண்டம், ஏற்றுஞ்சரக்கு, ஏற்றுமதி.

**export'** [2], *v.* ஏற்றுமதிசெய், சரக்கேற்றியனுப்பு.

**ex'ports**, *n. pl.* ஏற்றுமதி அளவு, ஏற்றியனுப்பப்பட்ட சரக்கின் அளவு.

***expose*** [1], (பிர.) *n.* முறைப்பட்ட நிகழ்ச்சிகள் பற்றிய அறிக்கை; இடக்கர் வெளிப்பாடு, இகழத்தக்க செய்திகளை வெளிப்படுத்தல்.

**expose'** [2], *v.* காட்சிப்படுத்து, வெளிப்படவை; மறைவெளியிடு, வெளிப்படுத்து; மேலுறையகற்று, மறையகற்று, திறந்து காட்டு; வறிதாக்கு, வெறுமையாக்கு; பாதுகாப்பு அகற்று, இடருக்குள்ளாக்கு; குழந்தையைப் பாதுகாப்பின்றி வெளியே துரத்திக் கைதுறந்துவிடு; திறந்த வெளியில் உடை முதலிய பாதுகாப்பின்றிவிடு; ஒளி காற்றுப்படவிடு; நிழற்படத் துறையில் ஒளி செயலாற்றவிடு, உலரவிடு, காற்றூடவிடு; பொதுவில் வை; காட்சிக்கு வை; விற்பனைக்கு வை; விளக்கிக்காட்டு; நேர்முகப்படுத்து; குற்றம் வெளிப்படுத்திக் காட்டு.

**exposed'**, *a.* காப்பற்ற, புகலிடமற்ற, திறந்த.

**expos'edness**, *n.* காப்பற்றநிலை.

**exposi'tion**, *n.* விளக்கிக்காட்டுதல்; விளக்கம்; விரித்துரைத்தல்; விரிவுரை, பண்டங்கள் முதலியவற்றைக் காட்சிக்கு வைத்தல்.

**expos'itive**, *a.* விரிவுரையாயமைந்துள்ள; விளக்குகிற.

**expos'itor**, *n.* விரித்துரைப்பவர்; தெளிவாக்குவது; பொருள் விளக்குபவர்; *fem.* expos'itress.

**expos'itory**, *a.* விளக்குகிற; விளக்கமாயமைந்துள்ள, விளக்க உதவுகிற.

***ex post fac'to***, (ல.) *a.* பின்னோக்கிச் சென்ற காலத்தையும் உட்படுத்துகிற.

**expos'tulate**, *v.* நட்புமுறையில் அறிவுறுத்து; இடித்துரை.

**expost'ulative, expost'ulatory**, *a.* அறிவுறுத்தல் அடங்கியுள்ள.

**expo'sure**, *n.* இடர்காப்பின்மை; தடைகாப்பின்மை; திறந்த நிலை; மறைப்பற்றநிலை; திரைநீக்கம்; மேலுறைநீக்கம்; தடைநீக்கம்; மறைநீக்கம்; மறைவெளியீடு; மறை குற்றம் வெளிப்படுத்துதல்; தீமை வெளிப்படுத்துதல்; நேர்எதிர் நிலை, நேர்முகநிலை; படுநிலை, சூழ்வளாவுநிலை; நிழற்படத் துறை நேரொளிவாய்ப்பு; ஒளிபடர்நேரம்; தோற்ற முகப்பு; குழந்தையின் கைதுறப்பு; பொதுக்காட்சிவைப்பு, விற்பனைக் காட்சி வைப்பு.

**expound'**, *v.* விவரமாக எடுத்துக்கூறு; விளக்கு, பொருள் கூறு.

**express'**, *n.* விரைவூர்தி, விரைவுத்தொடர்வண்டி; தனிமுறைத் தூதர்; அணிமையிலிருந்து சுடுவதற்கேற்ற தொடக்க உயர் விசையுடைய வேட்டைச்சுழல் துப்பாக்கிவகை; *a.* விரைந்து செல்கிற; தனிமுறையில் அனுப்பப்பட்ட, தனிநோக்குத் துடன் இயற்றப்பட்ட; ஒப்புவகையில் இம்மியும் மாறுபடாத; திட்டவட்டமான; வெளிப்படையாகக் கூறப்பட்ட; தெளிவான, உய்த்துணர்வுக்கு இடமில்லாத; நேரடியாகத் தெரிவிக்கப்பட்ட, மறைவுக் குறிப்பு எதுவுமற்ற; *v.* வெளியிட்டுரை, சொல்லுருவிற் கூறு; வெளிப்படையாகக் கூறு; கருத்து வெளிப்படுத்து; உணர்ச்சி தெரியக்காட்டு; பண்பு குறித்துக்காட்டு; ஒப்புமை மூலம் உருப்படுத்திக் காட்டு; குறிப்பால் தெரிவி; அடையாளப்படுத்தி அறிவி; பிழிந்து சாறு வெளியேற்று; புறங்கசியவிடு; வெளியே பரவவிடு; (கண.) பிறிது வகைப்படுத்திப் பெயர்த்துக்கூறு, வகை பெயர்த்துரை; *adv.* விரைவுபட; விரை செலவாக; விரை ஊர்திவழியே; தனிமுறைத் தூதர் மூலமாக; (தொ.) express delivery, தனிமுறைத் தூதுவர் கைவழியான உடனடிச் சேர்ப்பு; express oneself, உள்ளக்கருத்தைத் தெரிவி; express rifle, பெரியவேட்டை விலங்கினை அண்மையிலிருந்து சுடுவதற்கான சுழல் துப்பாக்கி; express train, சில இடங்களில் மட்டும் நின்று விரைவாகச் செல்லும் இருப்பூர்தித் தொடர்வண்டி.

**expre'ssion**, *n.* சொல்லுதல், தெரிவித்தல்; சொல்லமைப்பு; சொல் உணர்ச்சி முனைப்புப்பாங்கு; சொல்திறம், மொழி நடை; சொல்; சொற்றொடர்; தோற்றம், முகபாவம்; தொனி; (இசை.) உயிர்ப்பண்பு, பாட்டின் உணர்ச்சி வெளிப்படுமாறு பாடும் பாங்கு; (கண.) எண்ணுருக் கோவை, ஓர் அளவைத் தெரிவிக்கும் குறியீடுகளின் தொகுதி சாறெடுப்பு; அழுத்தித்தள்ளுதல்; (தொ.) expression mark, expression stop, தொனிபாவக்குறி; இசைப்பெட்டியின் தொனியழுத்தக்கட்டை.

**expre'ssional**, *a.* சொல்லமைப்புக்குரிய; முகத்தோற்றத்துக் குரிய; கலைத்தொனிபாவம் சார்ந்த, உணர்ச்சி வெளிப் பாட்டுக்குரிய.

**expre'ssionism**, *n.* அகத்திறப்பாங்கு; இயல்வாய்மையை அடக்கிக் கலைஞரின் அல்லது நாடக பாத்திரத்தின் உள்ளனுபவத்தை வெளிப்படுத்தும் வகையில் ஓவியர்கள்-நாடகாசிரியர்கள் முதலியோர் கடைப்பிடிக்கும் தற்காலப்போக்கு.

**express'ive**, *a.* வெளியிடுகிற; சொல்திறம் சார்ந்த; குறிப்புத்தெரிவிக்கிற; உணர்ச்சி விளக்கமான; பண்பு வலியுறுத்துகிற; பொருள் பொதிந்த.

**express'ly**, *adv.* தெளிவாக; வெளிப்படையாக; குறிப்பிட்ட நோக்கத்துக்காக; திட்டவட்டமாக.

**express'ure**, *n.* பிழிந்தெடுத்தல்.

**exprobra'tion**, *n.* கண்டனம், கடிந்துரை.

**exprop'riate**, *v.* பறி, உடைமைகவர்; உடைமையிலிருந்து வெளியேற்று.

**expul'sion**, *n.* வெளியே துரத்துதல்; நாடுகடத்தல்.

**expul'sive**, *a.* புறந்தள்ளவல்ல; வெளியேற்ற உதவுகிற; வெளியே துரத்துகிற.

**expunge'**, *v.* அடித்துவிடு; அடித்துவிடும்படி குறியீட்டால் தெரிவி; துடைத்தழி; எடுத்துவிடு, எடுத்தகற்று.

**ex'purgate**, *v.* வேண்டாதன விலக்கித் தூய்மைப்படுத்து; வேண்டாதன அகற்று.

**ex'quisite**, *n.* ஒய்யாரன், பகட்டுக்காரன்; *a.* சீரிய, மிகு நேர்த்தியான; எழில் நலம் வாய்ந்த; நயநுணுக்கமிக்க; கூர்மதி வாய்ந்த.

**exsang'uinate**, *v.* குருதியை வடித்தொழி, குருதியை வற்றச் செய்.

**exsang'uine**, *a.* குருதிச்சோகையுற்ற, குருதிக்குறைபாடுடைய.

**exscind'**, *v.* வெட்டு; செதுக்கியெடு, நறுக்கு.

**exsert'**, *v.* (உயி.) முந்துற நீட்டு, உந்துவி, முன்துருத்து.

**ex-serv'ice**, *a.* போர்த்துறைப் பணியிலிருந்து விலகியிருக்கிற.

**ex'siccate**, *v.* உணக்கு, உலர்த்து; ஈரம் புலரும்படி வடி.

**ex'tant**, *a.* ஆவண வகையில் இன்னும் இருந்து வருகிற; உளதான, நடப்பிலுள்ள, இருப்பிலுள்ள.

**ex'tasy**, *n.*=ecstasy.

**extem'pore**, *a.* முன்னேற்பாடின்றி ஆற்றப்படுகிற, முயற்சியின்றி இயல்கிற, உடனடியாகச் செய்யப்படுகிற.

**extem'porize**, *v.* முன்முயற்சியின்றி ஆற்று; துடுமென்று பேசு.

**extend'**, *v.* நீட்டு, நீட்டிப்பிடி, ஏந்து, நீடு; நீண்டு நிற்கச் செய், நீட்டிக்கிடத்து; பரப்பு; விரிவுபடுத்து, அகலப்படுத்து, எல்லை விரிவாக்கு, நேராக நிமிர்த்து; மலர்த்து; சென்றெட்டுவி; கால நீட்டிப்புச்செய்; தொடர்ந்து இயங்குவி; நீள், நீண்டிரு, நீண்டுகிட; பரந்துகிட; விரிவுறு, அகலப்படு, எல்லை

விரிவாகு; நேராக நிமிர்வுறு; அலர்வுறு; சென்றெட்டு; நீடி; தொடர்ந்து இயல்வுறு; விளைவு பரவலாக்கு, பயன் பரவுவி; வழங்கு; (சட்.) கடனுக்காக உடைமை கைப்பற்று; வரி யளவை மதிப்பிடு; படையணியைப் பரவலாக விரிவுபடுத்து.

**exten'sile**, *a.* நீட்டக்கூடிய, விரிவுபடுத்தக்கூடிய.

**exten'sion**, *n.* நீட்டுதல், பரப்புதல், விரிவுபடுத்தல்; நீளல், பரவுதல், விரிவுறுதல்; நீட்டித்த நிலை, நீட்சி, நீட்டிப்பு; பரப்பு; விரிவு; பொருள்களின் இடங்கொளற்பண்பு; நீட்டித்த பகுதி; விரிவுபடுத்தப்பட்ட ஒன்று; புதுமிகை, பழைய கட்டிடத்தின் தொடர்பான புதிய கட்டிடப்பகுதி; புதுவிரிவு, பழைய ஒன்றன் தொடர்விரிவான புதிய ஒன்று; தொடர்ச்சி; தொடர் பகுதி; கால நீட்டிப்பு; எல்லை நீட்டிப்பு; எல்லை விரிவு; (அள.) சொல்லின் சுட்டுப்பரப்பு; (இலக்.) எழுவாய்-பயனிலை முதலிய வாசக உறுப்புக்களின் அடைவிரி; (தொ.) University Extension, மாணவராகச் சேர்ந்து பயிலமுடியாத வர்களுக்காகப் பல்கலைக்கழகம் அளிக்கும் பயிற்சி முறை, நேரடி மாணவர்களுக்கல்லாத அறிவுப்பரப்பு வாய்ப்பு முறை.

**exten'sive**, *a.* விரிவான; பரந்தகன்ற; பல இடங்களிலும் படர்ந்த; பரவலான; பெரிய; மிகுதியான; தொலைவளாவிய; நெடுங்காலப் பரப்புடைய; விரிவடங்கலான; விரிவகற்சி சார்ந்த; சொற்சுட்டுப்பரப்புச் சார்ந்த; விரிதிற இயலான, வேளாண்மை வகையில் நிலப்பரப்பு மிகுதி மூலமே விளைவு பெருக்கும் இயல்புடைய.

**exten'sor**, *n.* நீட்டத் தசைப்பற்று, உடற்பகுதியினை நிமிர்த் தும் தசை.

**extent'**, *n.* பரவெல்லை, பரப்பு; பரப்பளவு; அளவு; (சட்.) நில மதிப்பீடு; நிலக் கைப்பற்றல்; கைப்பற்றலுக்கான கட்டளை.

**exten'uate**, *v.* குறைத்துக்காட்டு, தணித்துக்காட்டு; குறைவாக மதிப்பிடு; குறை; தளர்வுறச்செய்; மன்னித்துக் குற்றத்தைக் குறைவாக்கு.

**exter'ior**, *n.* புறம், வெளிப்பக்கம்; புறத்தோற்றம்; புறத் தோற்ற நடுநிலை இயக்க இயல்பு; *a.* புறஞ்சார்ந்த; வெளிப் பக்கமிருக்கிற; வெளிவரவான; அயலான; (தொ.) exterior angle, புறக்கோணம், கோணத்துக்கு அல்லது வரைவுருவுக்கு வெளியேயுள்ள கோணம்.

**exter'iorize**, *v.* புறத்தோற்ற வடிவமாக உள்ளத்தில் படிவப் படுத்தி உணர்; புறமெய்ம்மை உளதாகக் குறி.

**exter'iors**, *n. pl.* வெளிப்பகுதி.

**exterm'inate**, *v.* பூண்டோடழி, அடியோடு களை, தட மில்லாமல் துடைத்தொழி.

**extern'al**, *n.* வெளிப்புறம்; *a.* புறவியலான; புறத்தேயுள்ள; வெளியிலிருந்து வருகிற, புறம்பான; புறவுடல் சார்ந்த; புறநோக்கிய; புறவினைகளாலான, செயல் சார்ந்த; புறப் பொருளுலகு சார்ந்த, அகநிலை உணர்வுக்குப் புறம்பான; புறக்காட்சிக்குரிய, காணத்தக்க; கருமெய்ம்மை சாராத, சிறுதிறக்கூறான, தற்செயல் ஒட்டான; அயலான; சான்று கள் வகையில் புறமிருந்து வலியுறவு தருகிற, தொடர்பற்ற புதுத்தெளிவு தருகிற.

**extern'alize**, *v.* புறவடிவம் கொடு; பண்புருக்கற்பி.

**extern'als**, *n. pl.* புறக் கூறுகள்; புறப்பண்புக்கூறுகள், கருமெய்ம்மை சாராத செய்திகள், முக்கியத்துவம் இல்லாத சிறுதிறப் பண்புகள்.

**exterritor'ial**, *a.* ஆட்சி எல்லைக்கு அப்பாற்பட்ட; ஆட்சிக்குப் புறம்பான எல்லை சார்ந்த; தூதுவர் வகையில் பணிநில ஆட்சிக் கட்டுப்பாட்டிலிருந்து விலக்குரிமை பெற்ற.

**exterritor'iality**, *n.* வாழ்நில ஆட்சியெல்லைக்குப் புறம்பே இருக்கத்தக்க உரிமை.

**extinct'**, *a.* குடும்பம் இனம் ஆகியவற்றின் வகையில் மரபற் றழிந்த; உரிமைகள் வகையில் தகுதி வாய்ந்த கோரிக்கை யாளரின்மையால் தொடர்பற்றுப்போன; நிலையம் முதலிய வற்றின் வகையில் வழக்காறொழிந்த; நெருப்பு வகையில் தணலவிந்த; எரிமலை வகையில் எழுச்சியடங்கிய, துஞ்சு நிலையுற்ற; வாழ்க்கை அவாவகையில் தணிந்தாறிப்போன; மாண்ட, உயிர்ப்படங்கிய; நடப்பிலிருந்து மறைந்த.

**extinc'tion**, *n.* தீநொதுப்பு, அணைவு; மரபழிவு; உயிர்ப் படக்கம்; எழுச்சி ஓய்வு; வழக்கொழிவு; தொடர்பறவு; கடன் அறுதி; மாள்வு; மறைவு.

**exting'uish**, *v.* அணை, அவி; தணிவி, ஆற்றல் அழி, மேம்பட்ட ஒளியின்முன் மங்கச்செய்; மறைவி; எதிரியை வாயடக்கு; அழி; கடன் முழுதும் தீர்; ஒழி, துடைத்தழி.

**exting'uisher**, *n.* அணைப்பவர், அழிப்பவர்; அணைப்பது, அழிப்பது; விளக்கொளி அணைக்கும் கருவி; தீயணைப்புப் பொறி; அணைப்புக்கருவி போன்ற குவிகுவட்டு வடிவக் கட்டமைப்பு.

**ex'tirpate**, *v.* வேரோடு பிடுங்கியெறி; அடியோடழி, பூண் டோடகற்று.

**extol'**, *v.* மெச்சு, மிக உயர்வாகப் புகழ், ஆர்வமாகப் பாராட்டு.

**extort'**, *v.* அச்சுறுத்திக் கைப்பற்று, வலிந்து பறி; வாக் குறுதியை விடாப்பிடியாய் வற்புறுத்திப்பெறு; சொற்களி லிருந்து வலிந்து பொருள் தருவி, மூல ஆதாரங்களிலிருந்து வாரா முடிபு வருவி; பிழிந்தெடு, கசக்கித்தருவி.

**extor'tion**, *n.* அச்சுறுத்திப் பணம் பறித்தல்; வலிந்து பெறுதல்; சட்டத்திற்குப் புறம்பான பணம் பறிப்பு.

**extor'tionate**, *a.* சட்டத்திற்குப் புறம்பாகப் பணம் பறிக்கிற; வலிந்து கொள்ளைகொள்ளும் பழக்கமுடைய; விலைவகையில் மட்டுமீறிய; கொடிய.

**ex'tra**, *n.* மிகைப்படியானவர்; மிகைப்படியானது; தனி மிகைக்கட்டணத்துக்குரிய கூறு; பாடதிட்டத்துக்குப் புறம்பான பகுதி; விலைப்பட்டியிலடங்காத தனி உருப்படி; பத்திரிகையின் வெளியீட்டுக்குப்பின் அச்சிடப்பட்ட தனி மிகையான படி; மரப்பந்தாட்டத்தில் நேரடிப் பந்தெறி யின்றிப் பிறிது வழியில் பெறப்பட்ட கெலிப்புப் புள்ளி; திரைப்படத்துறையில் சிறுதிற நடிப்புக்குரிய குழு நடிகருள் ஒருவர்; *a.* தனி மிகையான, மிகைப்படியான; இயன்மிகை யான, இயல்பான வகையைவிடப் பேரளவான; மேம்பட்ட பண்புடைய; *adv.* மிகைப்படியாக, தனிமிகையாக; இயன் மிகையாக, வழக்க மீறி மேம்பட்ட நிலையில்.

**ex'tra-atmosphe'ric**, *n.* வளி மண்டலத்திற்கப்பாற்பட்ட இயல் வெளி.

**ex'tracos'mical**, *a.* அண்டத்திற்கப்பால் செயற்படுகிற.

**ex'tracra'nial**, *a.* மண்டையோட்டுக்குப் புறம்பே உள்ள.

**ex'tract**[1], *n.* உறைசத்து, பொருளினை நீர்மத்தில் கரைத்து ஆவியாகும்படி விட்டபின் உறைந்த பசைக்களிம்புக் கூறு; கருச்சத்து, பொருளின் கருநிலை ஆற்றல் கூறுகளைச் செறி வடிவில் கொண்ட செய்முறை விளைவான சரக்கு; வடிசாறு, சத்து; புத்தகத்தினின்று எடுக்கப்பட்ட பகுதி.

**extract'**[2], *v.* புத்தகத்திலிருந்து பகுதி பிரித்தெடு; பகுதி பிரித்தெடுத்துப் பகர்த்து; படியெடு; பல் முதலியன வகையில் வலிந்து பிடுங்கு; வன்கண்மையாகப் பிடித்திழுத்தெடு; வல்லந்தப்படுத்திப்பறி; விருப்பத்துக்கெதிராக வல்லந்தப் படுத்திப் பணம் பெறு; வலுக்கட்டாயப்படுத்தி ஏற்பு ஒப்புதல் பெறு; சாறு முதலியவற்றைப் பிழிந்தெடு; உறிஞ்சிப் பெறு; வடித்தெடுத்து வெறுமையாக்கு; தேர்ந்தெடு; கண்டுபிடி; கடுமுயற்சியினால் விளைவித்துப்பெறு; வருவி, தருவி; தத்துவம் முதலியவற்றை உய்த்துணர்வித்துப்பெறு; (கண.) எண்ணின் விசைமூலம் கணித்துக்காண்.

**extrac'tion**, *n.* பிரித்தெடுத்தல்; பிழிந்தெடுத்தல்; வலிந்து பிடுங்குதல்; வடித்திறக்குதல்; பிறப்பு மரபு, இனக்கூறு; (தொ.) extraction rate, மாவுமானம், கோதுமையின் மொத்த எடையில் உமிதவிடு நீங்கலாக மாவாகத்தேறிய பகுதியின் விழுக்காடு.

**extrac'tive**, *a.* பிழிவினியல்புடைய, சாரத்தின் தன்மை வாய்ந்த; வடிக்கக்கூடிய, வடித்திறக்க இடந்தருகிற.

**extradit'able**, *a.* குற்ற வகையில் நாடுகடத்தப்பட்டு அயல் நாட்டுக்கு வந்தவரைத் தாயகத்துக்கே மீட்டும் அனுப்புதற் குரிய; தாயக மீட்டனுப்பும் கட்டுரிமை உடைய.

**ex'tradite,** *v.* கடத்தல் மீட்டொப்படைப்பு, நாடுகடத்தப் பட்டு வந்த குற்றவாளியை நாடுகடத்தப்பட்டு வந்தவரின் தாயகத்தின் ஆட்சியாளரிடமே மீட்டும் ஒப்படை.

**extradi'tion,** *n.* கடத்தல் மீட்டொப்படை, நாடுகடத்தப் பட்டு வந்தடைந்த குற்றவாளியை அவர் தாயகத்து ஆட்சியாளரிடமே மீண்டும் ஒப்படைத்தல்.

**extrad'os,** *n.* வளைமுகட்டின் வெளிப்புற வளைவு.

**ex'tra-essen'tial,** *a.* கருநிலைப்பண்புகளுட்படாத, உள்ளார்ந்த பண்புத்திறங்கட்குப் புறம்பான.

**ext'ra-judi'cial,** *a.* முறைமன்ற நேரடி வழக்குடன் தொடர் பற்ற; சட்ட முறைப்படியான உரிமை சாராத; குற்ற ஏற்பு ஒப்புதல் வகையில் முறைமன்றத்தில் செய்யப்படாத.

**ex'tramun'dane,** *a.* உலகியலுக்கப்பாற்பட்ட; அண்டத் துக்குப் புறம்பான.

**extramur'al,** *a.* நகர மதிலெல்லைக்குப் புறம்பான; சொற் பொழிவு வகையில் பல்கலைக்கழகத்திற்கு வெளியே நிகழ்த்தப் படுகிற.

**extran'eous,** *a.* அயலினப்பிறப்புடைய, அயலினவரவான; அயலான; புறம்பான; தொடர்பற்ற, பிறிதின் சார்பான, வகை வேறுபட்ட உள்ளார்ந்த பண்புகள் சாராத, புறச்சார் பான, முக்கியத்துவமற்ற.

**extra-offi'cial,** *a.* பணிமனை சாராத, அலுவலகச் சார்பற்ற.

**extraord'inaries,** *n. pl.* படைத்துறை மிகை ஊதியப் படிகள்; பொதுவழக்கான வகைதுறை வரிசைகளை மீறிய செய்திகள்.

**extraord'inary,** *a.* வழக்கமீறிய; பொதுநிலை கடந்த; தனிப்பட்ட, பொது முறை விலக்கான; பொது அளவு கடந்த, மாபெரிய; வியத்தக்க; பணியாளர் வகையில் பொது மிகையான, துணை மிகையான, துணையிணைப்பான; (தொ.) envoy extraordinary, உதவி அமைச்சர், தூதுவருக் கடுத்தபடி உயர்பதவியாளர்.

**extraparoch'ial,** *a.* திருக்கோயில் வட்டத்துக்குப் புறம் பான.

**extraphys'ical,** *a.* இயற்கையின் இயற்பொருள் நியதி களுக்கு உட்படாத.

**extra-sen'sory,** *a.* பொதுநிலைப் புலனுணர்வுக்கப்பாற் பட்ட, உண்ணோக்கு-தொலைவிலுணர்தல் ஆகியவற்றின் வகையில் பயன்படுத்தப்படும் உணர்வு சாராத.

**extraspec'tral,** *a.* கண்ணுக்குப் புலப்படக்கூடிய நிறப் பட்டைக்கு வெளியேயுள்ள.

**extraterres'trial,** *a.* நில உலகுக்குப் புறம்பான; நில உலக வளிமண்டலத்துக்கு அப்பாற்பட்ட.

**extraterritor'ial,** *a.*=exterritorial.

**extrav'agance,** *n.* ஊதாரித்தனம், வீணழிவு; வீண்மிகை, கழிமிகுதி, தாராளம்; மட்டுமீறிய தன்மை; விலைவகையில் வரம்பு கடந்த உயர்வு; பகுத்தறிவுக்கொவ்வாமை, நம்பத் தகாத தன்மை; பொருத்தமற்ற செய்தி; இசைவுக்கேடான செய்கை

**extrav'agant,** *a.* ஊதாரித்தனமான, வரம்பு மீறிச் செலவு செய்கிற; வீண் அழிவு செய்கிற; விலைவகையில் மட்டுமீறி உயர்ந்த; மட்டுமீறிய அளவான, தாராளமான; எல்லை கடந்த, அளவுகடந்த; நம்பத்தகாத, பகுத்தறிவுக்கொவ்வாத.

**extravagan'za,** *n.* மிகு கற்பனை இலக்கியம்; வரம்பற்ற கற்பனை மொழிநடை.

**extrav'agate,** *v.* தகுதி வரம்புகட; நெறிதவறி அலை.

**extrav'asate,** *v.* கலத்தினின்றும் நீர்மத்தை வன்மையுடன் வெளியேற்று; வெளியே பாய்ந்து வடி.

**extreme',** *n.* முனைக்கோடி; புறக்கோடி; முகட்டுக்கூறு; உச்சமுனை; உச்ச எல்லை, உச்ச அளவு; (கண.) முதலும் இறுதியுமான இருதிசைக் கோடிகளில் ஒன்று; (அள.) கருவாசகத்தின் எழுவாய் பயனிலைகளுள் ஒன்று; பெரும்பதம் சிறுபதமாகிய ஈரெல்லைப் பதங்களில் ஒன்று; *a.* புறக்கோடியான; மையத்தினின்றும் மிகுதொலை விலகிய; இரு புறக் கோடிகளிலும் அமைந்துள்ள; உச்ச அளவான, உச்ச நிலையான; மிகுதியான, கடந்த நிலையான; கடைசியான; வாழ்க்கை இறுதிவேளைக்குரிய; கடு முனைப் பான; நெடுந்தொலை முனைந்து செல்கிற; கண்டிப்பான; மட்டில்லாத; விசையெழுச்சிமிக்க; (தொ.) extreme unction, இறக்கும் தறுவாயிலுள்ளவர்களுக்குக் கிறித்தவ குருமார் கொடுக்கும் இறுதி எண்ணெய்ப்பூச்சு; go to extremes, கடுமையான நடவடிக்கை எடு; மட்டுமீறித் தீவிரமாக முனைந்துசெல்; in the extreme, உச்ச அளவில்.

**extrem'ity,** *n.* இறுதி முனை; கடைசி; அறுதி; எல்லை; கெடுதி; இடர்; மனக்கலக்கம்; துயர்; தொல்லை; (தொ.) the extremities, கைகால் பகுதிகள்; the last extremity, காலக்கேட்டின் உச்சநிலை; சாவு.

**ex'tricate,** *v.* சிக்கலிலிருந்து விடுவி; சிக்கல் அகற்று; இக் கட்டிலிருந்து காத்து வெளியேற்று; இடரிலிருந்து வெளிக் கொணர்; (வேதி.) சேர்மானத்திலிருந்து இயைபியலாற்றல் மூலம் வளிபிரிந்து செல்லவிடு.

**extrin'sic,** *a.* புறம்பேயுள்ள, புறம்பேயிருந்து வருகிற; புறம்பேயிருந்து இயக்குகிற; அயல்வரவான, அயற்பண் பான; உரியதல்லாத, உள்ளார்ந்ததல்லாத; முக்கியத்துவ மற்ற, சிறுதிறமான; தசைப்பற்றுக்கள் வகையில் உடல் முதலிலிருந்து கிளையை அல்லது அரை வளையத்தை நோக்கிச் செல்கிற.

**extrorse',** *a.* (தாவ.) மகரந்தப்பை வெளிப்புறம் திரும்பி யுள்ள.

**ex'trovert,** *n.* வெளியுலக ஈடுபாட்டாளர்; *v.* புறமுகமாகத் திருப்பு.

**extrude',** *v.* வெளியே தள்ளு; புறத்தே உந்துவி; வெளி நீட்டு; புறந்துருத்து, உந்து.

**exub'erance, exu'berancy,** *n.* வளங்கொழிப்பு, பொங்கு வளம்; களி கிளர்ச்சி; மொழி வகையில் சொல்வளம், நடைவகையில் அணிவளம்; உணர்ச்சிப் பொங்கல்; திடீர் உணர்ச்சி எழுச்சி; கூறியது கூறல், வீண்மிகை.

**exub'erant,** *a.* வளங்கொழிக்கிற; செழித்து வளர்கிற; பொங்கி வழிகிற; ஏராளமான; உணர்ச்சி பொங்குகிற; களி கிளர்ச்சியுடைய; மொழிவகையில் சொல்வளமிக்க; மொழிநடை வகையில் அணிவகை மலிந்த; செயல் வகையில் தாராளமான.

**exub'erate,** *v.* மல்கு, பொங்கி வழி; தடையின்றி நுகர்வி லாழ்.

**exude',** *v.* கசி; கசியவிடு, வெளிவிடு; வடி; புழுங்கு, ஈர ஆவி வெளிப்படுத்து.

**exult',** *v.* மகிழ்ச்சியில் திளை, களி மகிழ்வுகொள்.

**exuv'iae,** *n. pl.* மேலோட்டுக்கழிப்புப் பொருள்கள், விலங் கினுல் களையப்பட்ட தோல் ஓடு முதலியவை; புதைபடிவ மேலோட்டுப்பகுதி.

**exuv'iate,** *v.* தோலுரி, ஓடு களை; சட்டை கழற்று.

**ex vot'o,** (ல.) *n.* நேர்ச்சிக்கடன் படையல்; *adv.* நேர்ச்சிக் கடனுக.

**ey'as,** *n.* பருந்தின் இளங்குஞ்சு; பயிற்றுவதற்காகக் கூட்டி லிருந்து எடுக்கப்பட்ட பருந்தின் குஞ்சு.

**eye,** *n.* கண்; கண்விழி, கண்ணுருளை; கட்பகுதி, கண்குழி விடம்; விழித்திரை, விழி முகப்பு; பார்வை; பார்க்கும் ஆற்றல்; நோக்கு; இலக்கு; கவனம்; புலனுற்றல், உணருந்திறம்; கண்ணிறமுடையது, மயில் இறகுக்கண்; மையப்புள்ளி; கண்போன்ற குழிவுடையது; ஊசியின்காது; வட்டத்துளை; காலதர், புழைவாயில்; முடப்பந்தில் முடக்கு நுழைப்புக்குரிய புழை; சுரங்க வாய்வழி; நீரூற்றுக்கண்; கொக்கியின் கம்பியிழைக்கண்ணி; கொக்கியின் வளையம்; உருளைக்கிழங்கிலுள்ள விதைமுளை; முட்டை மீதுள்ள பொட்டு; மூக்குக்கண்ணுடிவில்லை; *v.* நோக்கு, கூர்ந்து பார்; கவனி; (தொ.) be all eyes, முழுக்கவனம் செலுத்து, அயராது கூர்ந்து கவனி; be a sheet in the wind's eye,

வெறிகொள் ; cry one's eyes out, மிகு கண்ணீர்விடு, நிரம்ப அழு ; eye of day, பகலவன், கதிரவன் ; give an eye to, கவனி ; have an eye to, நோக்கமாகக்கொண்டிரு ; in the eye of, மதிப்பில் ; கருத்தின்படி ; in the eye of law, சட்டத்தின்படி, சட்டத்துறையின் கோணத்திலிருந்து பார்த்தால் ; in the mind's eye, கற்பனையில் ; எதிர்நோக்கி ; in the wind's eye, காற்றுக்கெதிரே ; keep one's eye on, keep an eye on, கூர்ந்து கவனி ; கவனித்துப்பார் ; காவல் செய் ; keep one's eye skinned, மிக்க விழிப்புடனிரு ; make eyes at, காதற்பார்வை பார், கடைக்கண் பார்வை பார் ; make one open one's eyes, வியப்படையச்செய், வியப்பால் விழிக்கச்செய் ; my eye! வியப்புக்குறித் தொடர் ; put a finger in the eye, அழு, கண்ணீர் விடு ; put a person's eye out, குருடாக்கு ; ஒருவர் பெறும் ஆதரவை அகற்றி அவ்விடம் பற்றிக்கொள் ; see eye to eye, முற்றிலும் ஒத்த கருத்துக்கொள் ; see with half an eye, எளிதிற்கண்டுகொள் ; throw sheep's eyes at, கண்ணெசிந்து பார் ; turn a blind eye on, காணாததுபோற் பாசாங்குசெய், கண்டுங்காணாதது போலிரு ; under the eye of, கவனிப்பில், பராமரிப்பில் ; up to the eyes, முழுதும் ஆழ்ந்து ஈடுபட்டு.

eye'-ball, *n.* கண்விழி.

eye'-bath, *n.* கண் கழுவுதற்குரிய கண்ணாடி நீர்க்கலம்.

eye'-beam, *n.* கண் நோக்கு, நொடி நோக்கு.

eye'bright, *n.* கண்நோய் தீர்க்கப் பயன்படுத்தப்பட்ட மலர்ச்செடி வகை.

eye'brow, *n.* புருவம்.

eye'-flap, *n.* குதிரையின் சேணத்திற் பொருத்தப்பட்டுள்ள கண்மறைப்பு.

eye'-glass, *n.* மங்கல் பார்வையாளர் பார்க்கப் பயன்படுத்தும் கண்ணாடிவில்லை; மூக்குக்கண்ணாடி.

eye'hole, *n.* கட்குழி ; பார்க்க உதவும் புழை.

eye'lash, *n.* கண்ணிமையின் மயிர் வரிசை.

eye'let, *n.* கப்பற்பாயின் கயிற்றுத்துளை ; இழை பின்னுவதற்கான நுண் புழை ; பார்ப்பதற்கான சிறு புழை ; சுரங்கம் வெடிப்பதற்கான சிறு குழி ; சிறு கண்.

eye'lid, *n.* கண்ணிமை.

eye'-opener, *n.* தெளிவு தரும் செய்தி ; வியப்பூட்டும் செய்தி.

eye'piece, *n.* தொலைநோக்காடியின் கண் வில்லை.

eye'-rhyme, *n.* எதுகைப்போலி.

eyes, *n. pl.* கப்பல் முகப்பின் முன்புறம் ; முகப்பு முன்புறத்தில் கயிறு வடம் புகுத்துதற்குரிய கண்கள் போன்ற புழைகள் ; கட்பகுதி, கண்ணிருக்கும் முகத்தின் பகுதி.

eye'-servant, *n.* கண் துடைப்பு வேலையாள், மேலாளின் கண்பார்வையில் மட்டும் வேலை செய்பவர்.

eye'-service, *n.* கண் துடைப்பு வேலை.

eye'shot, *n.* கண் எட்டும் தூரம் ; விரை நோக்கு.

eye'sight, *n.* பார்வையாற்றல் ; காட்சித்திறம்.

eye'sore, *n.* கண்ணருவி.

eye'-splice, *n.* கயிற்றில் நுனி முறுக்குச் சுருக்கு, மடித்து அடிமுறுக்கின் புரிகளுடன் முறுக்கப்பட்ட கயிற்றின் கண்ணி.

eye'-spot, *n.* கண்போன்ற பொட்டு ; கண்போன்று பார்ப்பதற்கு உதவும் முதிராக்கருநிலை உறுப்பு.

eye'-string, *n.* கண்ணிமைக் கதுப்பினை இயக்க உதவும் தசைப்பற்று, கண்ணிமை நரம்பு.

eye'-tooth, *n.* கோரப்பல், கண்ணிற்குக் கீழே மேல்தாடையிலுள்ள கூரிய பல்.

eye'wash, *n.* கண் கழுவு மருந்து ; கண் துடைப்பு வேலை.

eye'water, *n.* கண்ணீர் ; கண்ணருகே சுரக்கும் நீர்மக்கூறு ; கண்கழுவும் நீர்.

eyot, *n.*=ait.

eyre, *n.* (வர.) சுற்றுப்பயணம் ; சுற்றுலா நீதிமன்றம்.

eyr'ie, eyr'y, *n.*=aerie.

**F**a, *n.* மேலை இசைமானத்தில் நான்காம் சுரம்.

**Fab'ian,** *n.* இங்கிலாந்தில் 1884-இல் நிறுவப்பட்ட ஃபேபியன் கழகத்தில் உறுப்பினர் ; *a.* போரில் நேரிடைக் கைகலப்புக் கிடங்கொடாமல் பதுங்கித்திரிந்து காலம் நீட்டித்து எதிரியைத் தளர்வூட்டும் முறையைப் பின்பற்றுகிற; படிப்படியாகச் சமதர்மத்தைப் புகுத்திப் பரப்புதலைக் கோட்பாடாகவுடைய.

**fa'ble,** *n.* கட்டுக்கதை ; பழங்கதை, பழம்பாட்டி கதை ; புராணக்கதைத்தொகுதி, இயற்கை கடந்த நிகழ்ச்சி கூறும் கதைத்திரட்டு ; புள்-விலங்குக்கதை ; நொடிக்கதை ; விளக்கக் கதை ; நீதிக்கதை ; கதை நிகழ்ச்சி ; கற்பனைச் செய்தி ; பொய், புரளி ; பயனிலாப் பேச்சு ; *v.* கதை கட்டு ; கட்டுக் கதை கூறு; கற்பனையான கதைகளைச் சொல்; கற்பனையாகக் கூறு.

**fa'bled,** *a.* பழங்கதைகளில் கூறப்பட்ட ; புராணப்புகழ் பெற்ற ; பழம்புகழ் வாய்ந்த.

**fab'liau,** *n.* செய்யுள் வடிவான முற்காலத்திய பிரஞ்சுப் பழங்கதை ; *pl.* fab'liaux.

**fab'ric,** *n.* மாளிகை, கட்டிடம் ; கட்டுமானம் ; கட்டிணைப்புப் பொருள், யாப்புறுத்தப்பட்ட ஒன்று ; சட்டம், அமைப்பு ; நெய்யப்பட்ட துணி வகை ; நெசவுமானம் ; இழைமானம் ; நெசவு மூலப்பொருள்.

**fab'ricate,** *v.* கட்டமை, கட்டியுருவாக்கு ; செய், சமை, படை, உண்டுபண்ணு ; புனைந்துகட்டு ; பொய்யாக அமை ; கள்ளக் கையொப்பமிட்டுப் பத்திரங்களை உருவாக்கு.

**fabrica'tion,** *n.* கட்டுதல், கட்டுமானம் ; செய்துருவாக்குதல், படைப்பாக்கம் ; கட்டுக்கதை ; பொய், புனைசுருட்டு ; பொய்ப்பத்திரம்.

**fab'ulist,** *n.* கட்டுக்கதையாளர் ; நீதிக்கதை இயற்றுபவர் ; பொய்யர்.

**fab'ulous,** *a.* கட்டுக்கதை கூறுகிற; கட்டுக்கதையில் கொண்டாடப்பட்ட, பழம் புகழ் உடைய ; வரலாற்றுக்கு மாறான ; நம்பத்தகாத ; புனை சுருட்டான ; அறிவுக்குப் பொருந்தாத ; மிகைப்படுத்தப்பட்ட.

**facade',** *n.* கட்டிடத்தின் முகப்பு, முன்பக்கம் ; முகப்புத் தோற்றம், புறத்தோற்றம்.

**face,** *n.* முகம் ; முகத்தோற்றம் ; முகமாறுபாடு ; முகபாவம் ; பார்வை ; முகப்பு ; முன்புறம் ; முன்பகுதி ; மணிப்பொறி முகப்பு ; பாறை பிளப்பு முகம் ; ஆட்டச்சீட்டில் படமுள்ள புறம் ; சுரங்கவாயில் ; வெட்டுவாய் ; வெட்டுக் கருவியின் முனை ; மணிக்கல்லின் பட்டைமுகம் ; குழிப்பந்தாட்ட மட்டையின் அடிக்கும் பக்கம் ; புற அமைப்பு ; புறத் தோற்றம் ; பரப்பு, மேற்பரப்பு ; பிழம்புருவின் பக்கத்தளம் ; அச்சுருவின் எழுத்து வடிவப்பாணி ; துணிச்சல் ; துடுக்குத் தனம் ; *v.* முன்னிலைப்படு ; எதிர்ப்படு, சந்தி ; பார் ; எதிராக நில் ; தடுத்து நில் ; வீரத்துடன் தாங்கு ; உறுதியாயிரு, திறமையுடன் நின்று சமாளி ; முகம் திருப்பு ; முகம் திரும்பு ; நோக்கியிரு ; நோக்கித்திருப்பு ; நோக்கித்திரும்பு ; நேராயிரு, எதிர்ப்புறமாயிரு; சீட்டு வகையில் முகம் மேலாகக் காட்டு; முன்னே திரையாயமை; முகப்பாயமை; மேலுறையிடு; மேற்பூச்சிடு ; பரப்புமீது ஒப்பனை செய் ; விளிம்புசித்தரி ; விளிம்பு இணை ; (தொ.) face down, எதிர்த்தடக்கு, அச்சுறுத்திக் கீழடங்கச்செய் ; face off, ஆட்ட வகைகளில் காய்களை எதிரெதிராக வைத்துத் தொடங்கு ; face out, முழுதும் நடத்திச்செல் ; face to face, நேருக்கு நேரான ; எதிரெதிராக ; face to face with, முன்னிலையில் ; fly in the face of, வெளிப்படையாகக் கீழ்ப்படிய மறு, நேரடியாக எதிர்த்து நில் ; have the face, வெட்கத்தை உதிர்த்து நில்; in face of, எதிராக ; in face of, in the face of, இருந்த போதிலும், அச்சூழல் எதிர்த்து ; lose face, மதிப்பிழ ; தாழ்வுறு ; நற்பெயரை இழ ; look one in the face, நேருக்கு நேராக நின்று நோக்கு ; make a face, முகத்தைச் சுளித்துக்காட்டு, 'அழகு' காட்டு ; on the face of it, வெளித்தோற்றத்தைக் கொண்டு மதிப்பிடும்போது ; pull a long face, wear a long face, முகத்தைச் சுண்ட வைத்துக் கொண்டிரு, சோர்வுற்றிரு, துயரார்ந்திரு ; put a good face on matter, put a bold face on matter, தளராமல் உறுதியாகக் காட்சியளி, தீரமான தோற்றமளி; put a new face on, தோற்றத்தை முழுதும் மாற்று ; save one's face, மானத்தைக் காப்பாற்றிக்கொள், அவமானப்படுத்துவதிலிருந்து தந்திரமாகத் தப்பித்துக்கொள் ; set one's face against, உறுதியாக எதிர்த்து நில் ; show one's face, தோற்றமளி, தோன்று, காட்சியளி ; to one's face, முன்னிலையில், நேரிடையாகவே.

**face'-ache,** *n.* முகத்தின் நரம்பு வலி.

**face'-card,** *n.* சீட்டாட்டத்தில் அரசன்-அரசி-அடிமை முகப் படமுள்ள சீட்டு.

**face'-lifting,** *n.* முகச்சுருக்கத்தை நீக்கி இளமைத் தோற்றத்தை அளிக்கும் அறுவைச் செயல்.

**fa'cer,** *n.* முகத்தில் அடிக்கும் அடி ; திடீரென நிகழ்கிற பெரிய இக்கட்டு.

**fa'cet,** *n.* வைரத்தின் பட்டை ; பட்டையிட்ட பரப்பின் ஒரு முகப்புக் கூறு ; கருத்துக் கூறு.

**face'tiae,** *n. pl.* வேடிக்கைப் பேச்சுக்கள், நொடிப்பேச்சுக்கள், கேலித்துணுக்குகள் ; நகைச்சுவை ஏடுகள், கேலித்துணுக்கு ஏட்டுப்பட்டியல் ; மறைக்கத்தக்க பொருள்கள்பற்றிய ஏட்டுத்தொகுதி.

**face'tious,** *a.* விளையாட்டுப் பேச்சுக்களில் ஈடுபட்டுள்ள, கிண்டலான, நகையாட்டான, நொடிபேசுகிற, குறும்புத் தன்மையுடைய.

**fa'cia,** *n.* கடைமுகப்புப் பெயர்த்தகடு.

**fa'cial,** *n.* முகத்தசை பிடித்துவிடல்; *a.* முகம் சார்ந்த; (தொ.) facial angle, காது - மூக்கு - நெற்றிவரைகளிடையேயுள்ள கோண அளவு.

**fa'cile,** *a.* எளிதான ; எளிதாகச் செய்யக்கூடிய ; எளிதில் பெறத்தக்க ; எளிமை நயமுடைய, வாய்ப்பு நயம் வாய்ந்த ; ஒழுகு நயமுடைய, இழைவான ; தட்டுத்தடையின்றிப் பேசுகிற ; தங்குதடையற்ற சொல்லொழுக்குடைய ; நடை நயமுடைய ; இணக்க நயமுடைய, இசைவார்ந்த ; வளைந்து கொடுக்கிற ; கடுமையற்ற பண்புடைய, குண அமைதியுடைய, அமைந்த போக்குடைய.

***fa'cile prin'ceps,*** (ல.) *a.* எளிதில் முதன்மையான.

**facil'itate,** *v.* எளிதாக்கு, துணை தந்து ஊக்கு, முன்னேற உதவு.

**facil'ities,** *n. pl.* வாய்ப்புநலங்கள் ; துணைநலங்கள் ; துணை நலவாய்ப்புப் பொருள்கள்.

**facil'ity,** *n.* எளிமை ; இக்கட்டின்மை ; தட்டுத்தடங்கலின்மை ; விரைந்தியங்கும் திறம் ; எளிமை நயம், முயற்சியற்ற உடனடிச் செயல்திறம் ; இழைவு, ஒழுகு நயம் ; இணக்க நயம் ; வாய்ப்பு நலம் ; துணை நலம் ; துணைநலப் பொருள்.

**fa'cing,** *n.* எதிர்நிலை ;. சந்திப்பு ; சமாளிப்பு ; பக்க நோக்கிய திருப்பம்; முகப்பு; பாதுகாப்பான முகப்பு மறைப்பு; ஒப்பனை மறைப்பு ; சுவரில் முகப்புக்கல்; விளிம்பு அமைப்பு ; மேற்பூச்சு ; மேலீடு.

**fa'cings,** *n. pl.* சட்டையின் வண்ண வேறுபாடுடைய முன்கை முகப்பு ; வண்ணவேறுபாடுடைய கழுத்துப்பட்டை விளிம்பு ; திருப்பத்திசை முகங்கள், வாழ்க்கைப்போக்கு மாறுதல்கள் ; (தொ.) go through one's facings, குண இயல்புகள் பற்றிய சோதனைகளுக்கு உட்படு ; put person through his facings, ஒருவருடைய குண இயல்புகளைச் சோதனை செய்து பார்.

**facsim'ile,** *n.* உருவ நேர்படி, எழுத்து மட்டுமன்றி வரி வடிவின் தோற்றமும் நிழற்படுத்திக் காட்டும் நேர்படி உருப் பகர்ப்பு; படத்தின் நேர்படி உருமாதிரி; *v.* சரி மாதிரி செய், உருவநேர்படி எடு.

**fact,** *n.* செய்தி, நடந்த செயல்; நிகழ்ச்சி; கண்கூடான நிகழ்ச்சி; மெய்ந்நிகழ்வு; அனுபவச் செய்தி, அறிவாதார மான அனுபவம்; வாத ஆதாரச் செய்தி; மெய்ம்மை, இயன்மை; (தொ.) as a matter of fact, மெய்யாக; உய்த்துணர்வு எதுவுமில்லாமலே; facts of life, வாழ்வில் இனப் பெருக்கம்பற்றிய விளக்க விவரங்கள்; ஊக அடிப்படைகள்; in fact, in point of fact, மெய்யாகவே; the fact of the matter, வாதத்திற்குரிய பொருள் வகையில் தெளிவான உண்மை.

**fac'tion,** *n.* தன்னலக் கும்பல்; உட்கலகம்; உட்கட்சி வேறுபாடு.

**facti'tious,** *a.* இயற்கைக்கு மாறான, செயற்கையான; போலியான.

**fac'titive,** *a.* பிறவினைப்படுத்துகிற; (தொ.) factitive verb, செயப்படுபொருளுடன் பயன்நிரப்பு அடையினையும் ஒருங்கே ஏற்கிற வினைச்சொல்.

**fac'tor,** *n.* வாணிகத்துறை ஆட்பேர், உரிமைப்பேராள்; தரகு வணிகர்; காரணக்கூறு; ஆக்கக்கூறு; துணையாக்கக் கூறு, துணைக்கூறு; (கண.) அளவைக் கூற்றெண், காரண எண்; (தொ.) factor cost, ஆக்கச்செலவு, அடக்கவிலை; factor of safety, உறுதிப்பாட்டுக்கும் உயர்வெல்லைப் பாரத்துக்கும் இடையேயுள்ள வீத அளவு.

**fac'torage,** *n.* தரகர் ஊதியம், தரகுக்கழிவு; வணிகப்பேராள் ஊதியம்.

**factor'ial,** *n.* படிவரிசைப் பெருக்கப் பேரெண், வரிசை முறைப்படியுள்ள எண்களின் பெருக்கம்; படியிறக்கப் பெருக்கப் பேரெண், முழு எண்ணை இறங்கு வரிசையில் அவ்வெண்ணடுத்து ஒன்றுவரையுள்ள எல்லா முழு எண்களாலும் பெருக்கிய தொகை; *a.* காரண எண் சார்ந்த.

**fac'tory,** *n.* அயல்நாடுகளிலுள்ள வாணிகக் கழகத்தின் வாணிகக்களம்; தொழிற்சாலை, ஆக்கத்தொழிலகம்; பண்டக சாலை.

**factot'um,** *n.* பல்பணி ஒருவர்.

**fac'tual,** *a.* மெய்ந்நிகழ்ச்சியைச் சார்ந்த, உண்மை நிகழ்ச்சியோடு தொடர்புகொண்ட, உள்ளது உள்ளவாறான.

**fac'tum,** *n.* செய்திப்பட்டியல்; வாதக்குறிப்புத் தொகுதி; நினைவுக்குறிப்பேடு.

**fac'ultative,** *a.* இசைவு தருகிற; விருப்பத்துக்குரிய, தேர்வுரிமையுள்ள; மேலே நேரிடத்தக்க; கலைத்திறக் குழு வினைச் சார்ந்த.

**fac'ulty,** *n.* வினைத்திறம்; இயற்கை உளச்சார்பு, இயல்பு வலிமை; பல்கலைக்கழகக் கலையியற்குழு; மேலாணை அடிப்படையான தனிமுறை அதிகாரம்; தொழில்முறைப் பணியாளர் தொகுதி; தனிப்பட்ட நுட்பத்திறமை; செயலுரிமை.

**fad,** *n.* ஆர்வக்கொள்கை, பித்து, போலி விளக்கக்கூறு.

**fade,** *v.* வாடு, வதங்கு; பட்டுப்போ; தளர்வுறு, சோர்வுறு; வரவர மெலிவுறு, படிப்படியாகத் தேய்வுறு; ஓசை வகையில் வரவரக் குறைவுறு; மங்கு, மங்கலாகு; தெளிவு குறைவுறு; நிறம் வெளிறு; மலர்ச்சி இழ, பொலிவு குன்று; வலுவிழ; மாள்வுறு; மறை, படிப்படியாக மறைவுறு.

**fae'ces,** *n. pl.* வண்டல், மண்டி; மலம்.

**Fa'erie, Fa'ery,** *n.* மாய உலகு, வனதெய்வ உலகு; வன தெய்வம்; *a.* கனவுத் தோற்றமான, மாயத்தோற்றமான; கற்பனையான.

**fag,** *n.* தொழும்பு; வேண்டா வேலை; களைப்பு, அசதி; கட்டாய ஊழியத்துக்கு உட்படுத்தப்படும் பள்ளிநிலையக் கீழ்நிலை மாணவர்; *v.* தொழும்படிமையாயிரு; களைப்பூட்டு, அயர்வு கொள்ளுவி; மேல்நிலை மாணவர்களுக்குத் தொண்டுழியம் செய்; களைப்புறு, அயர்வுறு.

**fag'-end,** *n.* பயனற்ற மிச்சத்துண்டு, தரங்குறைந்த கடைசித் துணுக்கு; தொங்கல் விளிம்பிழை; கயிற்றின் முறுக்குருத் தும்புப்புரி; எறிந்துவிட்ட பூஞ்சுருட்டுக் கட்டை.

**fagg'ot, fag'ot,** *n.* விறகுக்கட்டு; குழிதூர்க்கவும் கரை யணைக்கவும் பயன்படுத்தப்படும் புதர்க்கட்டு; எஃகுக் கம்பிகளின் கற்றை; கட்டு, மூட்டை; கல்லீரலைக் குறுகத் தறித்துப் பொரித்த கூட்டு; *v.* விறகுக்கட்டாகக் கட்டு, கற்றையாகக் கட்டு.

**fagg'ot-vote,** *n.* தகுதிபெற்றிராதவருக்குப் போதுமான அளவு சொத்தை மாற்றி உண்டாக்கப்படும் வாக்குரிமை.

**Fahr'enheit,** *a.* 'பாரென்ஹீட்' வகை வெப்பமானியைச் சார்ந்த; (தொ.) Fahrenheit thermometer, உறைநிலை 32 பாகையாகவும் கொதிநிலை 212 பாகையாகவும் கொண்ட 'பாரென்ஹீட்' வகை வெப்பமானி.

**fa'ience,** *n.* ஒப்பனை மண்பாண்டத் தொகுதி; சித்திர வேலைப் பீங்கான் தொகுதி.

**fail,** *v.* குறைபடு; போதாதிரு; ஆற்றல் கெடப்பெறு; தளர்வுறு; தரங்குறைபட்டுச் செல்; தவறு; செயற்சோர்வுறு; செய்யாதொழி; கைவிடு; தவணை தப்புதலுறு; நட்புக்கேடு செய்; உதவி மறு; ஏமாற்றமூட்டு; உதவாதிரு; பெருது போ; தோல்வியடை; தேர்வுக்குரிய வேட்பாளர் வாய்ப்பு இழ; ஏலாது போ; ஏலாநிலையுறு; நொடித்துப்போ; குறிபிசகு; வராதுபோ; இல்லாதுபோ; மரபற்றுப்போ; மறைவுறு; அழிவுறு; (தொ.) without fail, தப்பாமல், கட்டாயமாக, உறுதியாக.

**fail'ing,** *n.* குறைபாடு, குறை, வழு, தவறுதல்; *prep.* இல்லாவிட்டால்; தவிர்த்து.

**faille,** *n.* பளபளப்பில்லாத மெல்லிய பட்டாடைத் துணி வகை.

**fail'ure,** *n.* தோல்வி, வெற்றிபெருமை; வெற்றிபெருதவர், தோல்வியுறுபவர்; குறைபாடு; தளர்வு; சோர்வு; அழிவு; நொடிப்பு; செயலொழிவு; நிகழாமை; தொடர்பறவு; வராமை; கடனிறுக்க மாட்டாமை.

**fain,** *adv.* மகிழ்வுடன்; வேறு மாற்று வழியில்லாத நிலையில்.

***faineant,*** (பிர.) *n.* சோம்பேறி; *a.* சோம்பருடைய.

**faint,** *n.* உணர்விழப்பு, மயக்கம்; *a.* மங்கலான; ஒளி குறைந்த; பார்வை மங்கிய; தெளிவற்ற; வெளிறிய; மந்தமான; தளர்வான; மெலிந்த; வலுவற்ற; மெல்லியல்பு வாய்ந்த; திடமற்ற, உள்ளுரமற்ற; துணிவற்ற, கோழைத் தனமுடைய; தலைசுற்றுதலுடைய; அச்சத்தாற் செயலிழந்த; புழுக்கமிக்க; திணற வைக்கும் கடுமணமுடைய; நோக்காடு உண்டுபண்ணுகிற; *v.* உணர்வு இழ, மயக்கம் அடை; வலு இழ, தளர்வுறு; மங்கு; மந்தமாகு; மறை; துணிவு இழ.

**faints,** *n. pl.* வடித்திறக்கும்போது தொடக்கத்திலும் இறுதியிலும் எழுகிற துப்புரவு கெட்ட சாராயச் சத்து.

**fair**[1], *n.* சந்தை, வாணிகக்கூட்டம்; விழாக்காட்சி; அறநோக்கக் காட்சி விழா; (தொ.) a day after the fair, காலங்கடந்து, வேளை தவறி.

**fair**[2], *a.* அழகான; செவ்விய தோற்றமுடைய; ஒளிர்வுடைய, ஒளியார்ந்த; ஒளிவண்ணமார்ந்த; மழை மப்பு மந்தாரமற்ற; தூய, மாசற்ற; கறையற்ற; தெளிவான; செவ்வான, நேரான, ஒழுங்குடைய, நெறிமுறை திறம்பாத; நடுநிலையுடைய; சட்டத்துக்கு முரண்படாத; நலம் எதிர்பார்க்கத்தக்க; நம்பிக்கைக்குரிய; விரும்பத்தக்க; மகிழ்வூட்டுகிற; நடுத்தரம் வாய்ந்த; மட்டான; கேடற்ற; அறிவுக்குகந்த; நல்லாதரவான; நல்ல; நலமிக்க; செல்வ வளமுடைய; *v.* நற்படி பகர்த்தெடு; காலநிலை வகையில் ஒழுங்குபடு; நலமாகு; கப்பல்கட்டுமான வகையில் நேரி தாக்கு; வழவழப்பாக்கு; *adv.* பகர்ப்புப்படி வகையில் நேரொழுங்குபட, வழுவின்றி, மாறுபாடில்லாமல்; நடுநிலை தவருமல், ஒழுங்குமுறைப்படி, விதிமுறை வழுவாமல்; நய இணக்கம்பட, நயநாகரிகப்பண்புடன்; நன்கு, நல்லாதரவாக, நன்னம்பிக்கையுடன்; நேராக, குறிதவருது; தகுதியாக; ஒருசீராக, மென்னயம்பட, அமைதியாக; (தொ.) by fair means, நேரான வழிமுறையில்; fair copy, துப்புரவுப் படி; fair field and no favour, தனி அன்பிரக்க

உணர்ச்சிகளற்ற நேர்மை ; fair play, நடுவுநிலை கோடாமை; fair trade, இருபுறமொத்த நலமுடைய தங்குதடையற்ற வாணிகத் தொடர்பு ; fair weather, விரும்பத்தக்க காலநிலை; வாழ்க்கை நலமுடைய காலம் ; in a fair way to succeed, வெற்றிக்குரியதென நம்பத்தகுந்த நல்ல வழியாக.

**fair'-and-square'**, *a.* நேர்மையான ; *adv.* நேர்மையாக.

**fair'ing**[1], *n.* சந்தையில் வாங்கிய நன்கொடைப் பொருள்.

**fair'ing**[2], *n.* வானூர்திக்குரிய மேற்பரப்பின் மழமழப்பான நேரொழுங்கமைதி ; நேரொழுங்கமைதிப்படுத்த இணைக்கப் படும் பளுவற்ற புறக்கட்டமைப்புப் பகுதி.

**Fair Isle**, *n.* ஸ்காத்லாந்தின் வடகிழக்கிலுள்ள 'ஷெட்லாந்து' (Shetland) தீவுத் தொகுதிகளில் ஒன்று ; பின்னல் சட்டை வகை.

**fair'ly**, *adv.* அழகாக ; ஒழுங்காக ; துப்புரவாக ; நேர்மை யாக ; மட்டான அளவில் ; கேடிலா முறையில் ; விரும்பத் தக்க அளவில் ; நன்முறையில் ; நம்பத்தக்க வகையில் ; எதிர்பார்க்கத் தக்கதாக ; பேரளவில் ; முற்றிலும் ; அறி வுக்குப் பொருந்திய நிலையில்.

**fair'way**, *n.* கப்பல் போக்குவரவுக்குரிய கால்வாய், கப்பலின் ஒழுங்கு முறையான வழி ; குழிப்பந்தாட்டத்தின் ஒழுங்கு செய்யப்பட்ட ஆட்டக்களப்பகுதி.

**fair'y**, *n.* வனதெய்வம், மாயச் சிறுதெய்வம் ; *a.* வன தெய்வங்களுக்குரிய ; மாய மருட்சியுடைய, கற்பனையான ; மாயக்கவர்ச்சியுடைய ; கட்டுக்கதையான ; (தொ.) fairy ring, காளான் படர்வால் ஏற்படும் கருநிறப் புல்வட்டம்.

**fair'y-tale**, *n.* வனதெய்வங்களைப்பற்றிய கதை ; நம்பத் தகாத கதை, பொய்க்கதை ; பொய் ; வியப்பு.

*fait accompli*, (பிர.) *n.* செய்து முடிக்கப்பட்ட வினை.

**faith**, *n.* திடநம்பிக்கை ; கடவுட்பற்று ; சமய உணர்ச்சி, மதத்தில் ஊன்றிய உறைப்பு ; பற்றுறுதி ; பக்தி, விசு வாசம், பற்றார்வம் ; வாய்மை, மாறா மெய்ம்மை ; நம்பிக் கைக்குரிய தன்மை, பொறுப்புணர்ச்சி, நாணயப் பண்பு ; சொல்லுறுதி ; உறுதிச்சொல், வாக்குறுதி ; வாக்குறுதி காக்கும் பண்பு.

**faith'ful**, *a.* திடப்பற்றுடைய ; நம்பத்தகுந்த, நம்பிக்கைக் குரிய ; சமயப்பற்றுடைய ; மாறாத, உறுதியுள்ள, உண்மை யான ; நேர்மையான, மனச்சான்றுக்குக் கட்டுப்பட்ட ; சரி ஒப்பான, மூலத்துக்கு மாறுபடாத.

**faith'fully**, *adv.* மனமார, அழுத்தமாக, உண்மையாக ; கடமையுணர்ச்சியுடன் ; பற்றுறுதியுடன் ; மாறாமல் ; மாறுபாடின்றி.

**faith'less**, *a.* நம்பிக்கையற்ற ; அவநம்பிக்கையுடைய ; நம்பிக்கைக்கேடான ; நம்பிக்கை மோசம் செய்கிற ; வஞ்சக மான ; நம்பிக்கை வைக்கத்தகாத ; வாக்குறுதிகளைப் பொய்ப்பிக்கிற.

**fake**[1], *n.* (கப்.) கயிற்றுச்சுருள் ; கயிற்றுச்சுருளின் ஒரு சுற்று ; *v.* சுருளாக்கு, சுருட்டு.

**fake**[2], *n.* போலித்தனம், போலி ஒட்டுப்புனைவு ; போலியாகப் புனையப்பட்ட பொருள் ; ஏய்ப்பு, கடத்தும் சூழ்ச்சி, மோசடி ; சோடிப்பு அறிக்கை ; *v.* போலியாகச்செய், பொய்யாக உருவாக்கு, சோடித்துக்காட்டு.

**fakir'**, *n.* (அரா.) பக்கிரி, ஆண்டி.

**Falan'gist**, *n.* ஸ்பெயின் நாட்டில் 1939-ஆம் ஆண்டிற்குப் பிறகு தோன்றிய வல்லாண்மைக் கட்சியின் உறுப்பினர்.

**fal'bala**, *n.* மாதர்களின் சட்டைத் தொங்கல்.

**fal'cate**, *a.* கொக்கி வடிவான ; அரிவாள் வடிவுடைய.

**fal'chion**, *n.* கொடுவாள், குத்துவாள்.

**fal'ciform**, *a.* (உள்.) அரிவாள் வடிவான.

**fal'con**, *n.* வல்லூறு, இராசாளி.

**falc'oner**, *n.* வல்லூறு வளர்ப்பவர்.

**falc'onet**, *n.* முட்களின்மீது புழுக்களையும் சிறு பறவைகளையும் குத்திவைத்துண்ணும் பறவை வகை ; முற்காலச் சிறு பீரங்கி வகை.

**falc'onry**, *n.* வல்லூறு வளர்ப்பு.

**falderal'**, *n.* பகட்டுச் சிறுபொருள், அற்பப்பொருள் ; பாட்டிற் பயனில் சொல்.

**fald'stool**, *n.* கையில்லா நாற்காலி ; முழங்காற்படியிடுவதற் குரிய அசைவியக்கமுள்ள சாய்வு மேசை ; வழிபாட்டு அறவுரையாளர்க்குரிய சாய்வு மேசை.

**Falern'ian**, *n.* முற்காலப் புகழ்பெற்ற இன்தேறல் வகை.

**fall**, *n.* விழ்ச்சி ; நீர்வீழ்ச்சி ; மழைபெயல் அளவு ; இலையுதிர்வு ; இலையுதிர்ப் பருவம் ; ஆட்டின் ஈற்றெண்ணிக்கை ; இறக்கம் ; இறக்க அளவு ; தாழ்ச்சி ; தாழ்ச்சியளவு ; மற்போர் ; மற்போரில் தள்ளப்பட்டு விழுதல் ; மீன்பிடி வலைக்கயிறு ; வெட்டி வீழ்த்தப்பட்ட கட்டைஅளவு ; ஒழுக்கநிலை வீழ்ச்சி ; *v.* விழு ; தவறிக் கீழே இடப்பெறு ; கீழ்நோக்கி வீழ்வுறு ; கீழ்நோக்கிச் செல் ; கீழே வீழ்வுறு ; கீழே இறக்கப்பெறு ; தடையின்றிக் கீழே இறங்கு ; நிலத்தின்மீது படிந்து கிட ; கீழே படிவுறு ; நிலைதடுமாறு ; இடறி விழு ; சரி, சாய் ; கீழ்நோக்கிச் சாய்வுறு ; கீழ்நோக்கி ஒழுகு ; ஒழுகிச் சென்று விழு ; பாய் ; தொங்கு, தொங்க லாகக்கிட ; முறிவுறு, தகர் ; முறிந்து விழு, அற்றுவிழு ; உதிர்ந்து விழு ; போரில் மடிவுறு ; மாள் ; சிறைப்படுத்தப் பெறு ; தோல்வியெய்து ; அழிவெய்து ; மேன்மட்டத்தி லிருந்து கீழ்மட்டம் செல், இறக்கமடை ; தாழ் ; அமிழ், உள்ளடங்கு ; உயரம் குறை, அளவில் குறை ; குறைபடு ; மட்டமாகு ; பணி, வளை, குனி ; தணி ; தளர்வுறு ; மலைவுத் தோற்றமளி ; படிப்படியாகக் குறைவுறு ; பதவி இழ ; புகழ் இழ, மதிப்பிழ ; வீழ்ச்சியுறு ; இழிவடை ; ஒழுக்கந்தவறு, நெறி பிறழ் ; கற்புநிலை தவறு ; ஒழுக்கங்கெடு ; தரத்தில் இழி ; எதிர்பாராது நடைபெறு ; நிகழ் ; விளைவுறு ; உண்டாகு ; உரியதாகு ; பங்காக உரிமையாக்கப் பெறு ; கடமையாக அமை ; இடங்கொள் ; இடத்தில் அமைவுறு ; படு, வந்தடை ; தோய்வுறு ; ஈடுபடு ; தலைப்படு ; மருட்சிக்கு ஆட்படு ; சிக்குறு ; காலக்கெடு தீர்ந்துவிடப்பெறு ; முடிவுறு ; மீள்வுறு ; வீழ்த்து ; விழவிடு ; (தொ.) fall out, சண்டை யிடு ; fall through, தோல்வியடை ; வீணுகு ; fall upon, தாக்கு ; தற்செயலாக நிகழ்வுறு ; try a fall, மற்போரில் ஈடுபடு.

**fall'acy**, *n.* தவருன வாதம், போலிவாதம் ; வாத வழு ; மருட்சித்தோற்றம் ; மயக்க வழு, தவறு, குற்றம், குறைவு ; குறைபாடு.

**fal-lal'**, *n.* ஆடம்பர உடுப்புவகை, பகட்டலங்காரம்.

**fall'ible**, *a.* தவறும் இயல்புள்ள.

**Fallop'ian**, *a.* இத்தாலிய உடற்கூற்றுநூல் அறிஞர் பாலோபியஸ் (Fallopius) என்பாருக்குரிய ; (தொ.) Fallopian tubes, மனிதக்கருப்பையிலிருந்து கரு வெளியேறும் குழாய்.

**fall'-out**, *n.* அணுக்குண்டு அல்லது நீர்வளிக்குண்டு அமைப்பு அல்லது வெடிப்பிலிருந்து வெளியாகிக் காற்றில் மிதந்து செல்லும் கதிரியக்கத் தூள்.

**fall'ow**[1], *n.* தரிசு நிலம், உழுது பரம்படிக்கப்பட்டபின் ஓர் ஆண்டு பயிரிடப்படாத நிலம் ; *a.* பயிரிடப்படாத ; உழுது பரம்படிக்கப்பட்டபின் ஓராண்டு பயிரிடப்படாது விடப்பட் டுள்ள ; *v.* விதைப்பதற்கு நிலத்தை உழுது கிளறு, விதைக்குமுன் களையழிப்பதற்காக உழு.

**fall'ow**[2], *a.* மங்கல் தவிட்டு நிறமுடைய, சிவப்புக் கலந்த மஞ்சள் நிறமுடைய.

**false**, *a.* பொய்யான ; தவருன ; ஆதாரமற்ற ; நாணய மில்லாத ; ஏமாற்றுகின்ற, நம்பிக்கைக்கேடான ; நேர்மையற்ற ; போலியான, உண்மையல்லாத ; பாசாங்கான ; கள்ளத்தன மான ; செயற்கையான, இயற்கையல்லாத ; *adv.* தவருக, பொய்யாக ; வஞ்சகமாக ; போலியாக ; வாய்மை மீறி ; (தொ.) play one false, நம்பிக்கை மோசம்செய் ; put in a false position, தப்பெண்ணம் கொள்ளும்படியான நிலையில் கொண்டு வை.

**false'-face**, *n.* முகமூடி, பொய்முகம்.

**false'hood**, *n.* பொய்ம்மை; பொய், பொய்யுரை; போலித் தன்மை, உண்மையல்லாதது.

**falsett'o**, *n.* உச்சக்குரல்.

**fal'sify**, *v.* கள்ளப்பத்திரம் உருவாக்கு, மாற்றி மோசடி செய்; தவருகத்திரித்து அமை; மாருட்டம் செய்; பாசாங்கு பண்ணு; ஏமாற்றம் விளை.

**fal'ter**, *v.* இடறு, தடுமாறு; தள்ளாடி நட; நடுக்கம் கொள்; கொன்னு, திக்கிப்பேசு; தடுமாற்றத்துடன் பேசு; துணிவிழ, தயங்கு, பின்வாங்கு, அஞ்சிநில்.

**fame**, *n.* புகழ், இசை, மதிப்பு; வதந்தி; *v.* புகழ்ப்படுத்து.

**famil'iar**, *n.* துணைவர், தோழர்; போப்பாண்டவர் அணுக்கத் தொண்டர்; *a.* நெருங்கிய பழக்கமுள்ள, பழகிய நட்புடைய; பழக்கப்பட்ட; அறியப்பட்ட; நன்கு தெரிந்த; பொதுவான, பொதுப்படையான; நடப்பிலுள்ள, வழக்கமாக நிகழ்கிற; ஆசாரக் கட்டுப்பாடு இல்லாத; தாராளமாகப் பழகுகிற.

**familiar'ities**, *n. pl.* காதற் கொஞ்சுதல் முதலியன; நடைமுறை ஆசாரமின்மை, மேலோர்-கீழோர் வேறுபாடு மதிக்காமை.

**familiar'ity**, *n.* நெருங்கிய நட்பு; கட்டுப்பாடின்மை.

**famil'iarize**, *v.* பழக்கப்படுத்து.

**fam'ily**, *n.* குடும்பம், பெற்ருேர்-குழந்தைகள்-பணியாட்கள் உட்பட்ட குடும்ப உறுப்பினர் தொகுதி; ஒருவருக்குரிய குழந்தைகளின் தொகுதி; ஒருவருடைய குழந்தைகள்; குடும்பங்கள் ஒருங்கிணைந்து வாழும் சமுதாயம்; முனைத்த பொதுப்பண்புகளைக் கொண்ட தனிச்சிறப்புக் குழு; இனம்; நேசத்தொடர்புகொண்ட இனத்தொகுதி; (தொ.) family tree, குடும்ப மரபுக்கிளைவழி விளக்கப்படம்; in a family way, பழக்கப்பட்ட இயல்பான நிலையில்; in the family way, கருத்தரித்த நிலையில்.

**fam'ine**, *n.* பஞ்சம், வறட்சி, வற்கடம்; முடை, குறைபாடு; கருப்பு, உணவுப்பஞ்சம்; பசி, பட்டினி.

**fam'ish**, *v.* கடும்பசிநிலைக்குத் தாழ்த்து; கடும்பசி விடாய் களினுல் அவதியுறு; உணவு நீரின்றி மடி.

**fam'ous**, *a.* புகழ்பெற்ற, பலரறிந்த; குறிப்பிடத்தக்க, முதன்மையான, மிகச்சிறந்த.

**fam'ulus**, *n.* செப்பிடுவித்தைக்காரரின் வேலையாள்; *pl.* fam'uli.

**fan¹**, *n.* விசிறி; சுழல் விசிறி, காற்ருேட்டச் சுற்றுப்பொறி; வீசு முறம்; பொலிகளத்தில் பதர் தூற்றும் கருவி; விசிறி போன்று பரவலான வடிவுடைய பொருள்; வண்டல் படிவிடம்; கப்பலைக் காற்ருேட்டத் திசைப்படுத்தும் சிறுபாய்; திமிங்கில வால்சிறையலகு; வானூர்திச் சுழல் விசிறி அலகு; சுழல் விசிறிப் பொறியால் ஏற்படும் காற்றியக்கம்; விசிறி வடிவச் சிற்ப அணிவேலை; புள்வாலிறகு; இறக்கை; விசிறிவடிவ இலை; நிலக்கரி இயக்கும் பணியாளரின் நீர் ஊருத அகலமான பின் விளிம்புள்ள குல்லாய்; *v.* பதர் தூற்று, புடை, பொலிகளம் தூற்று; விசிறு, விசிறியால் வீசு; முறத்தால் தூற்று, தூற்றித்தள்ளு; மென் காற்றுப்பட வீசு; வீசிக்குளிர்ச்சியாக்கு; காற்றுவகையில் மெல்ல வீசு; விசிறி அழலெழத்தூண்டு; விசிறி வடிவில் பரவலாக்கு; விசிறிபோல் பரவலாகச்செல்.

**fan²**, *n.* ஆர்வலர்; பற்று வெறியர்.

**fanat'ic**, *n.* வெறியர், கொள்கை விடாப்பிடியர், அளவு மீறிய தவருன உணர்ச்சியார்வம் மிகுந்தவர்; மதவெறியர்; *a.* வெறியார்ந்த; சமயவெறி கொண்ட; கொள்கை விடாப்பிடியுடைய; மட்டுமீறிய உணர்ச்சியார்வம் வாய்ந்த.

**fan'cier**, *n.* வளர்ப்பார்வலர், நுண்திறப்பண்புகளை நோக்கி இனம்பயிற்றுவித்து உருவாக்குபவர்.

**fan'ciful**, *a.* மனம்போன போக்குடைய; தன்போக்காய் நடக்கிற; கட்டற்ற கற்பனைகளில் ஈடுபடுகிற; பொருந்தாப் புனைவுகளுக்கு இடங்கொடுக்கிற; முரண்புனைவான சித்திர வேலைப்பாடுடைய; சித்திர அமைப்புள்ள; விசித்திரமான, முரண்புதுமை வாய்ந்த; இயல்முரணிய, உண்மையல்லாத, கற்பனையில் மட்டுமுள்ள.

**fan'cy**, *n.* கற்பனை, மனத்திற்பாவிக்கும் திறம்; தற்புனைவு, பாவனை; கருத்தில் தோன்றும் படிவம்; மனத் தோற்றம்; போலித்தோற்றம், மயக்கக்காட்சி; போலிப்புனைவு, மருட்சிப்புனைவு; கட்டற்ற விருப்பம், மனம்போன போக்கு; ஆதாரமற்ற நம்பிக்கை; தனி விருப்பு; விருப்பார்வம்; காதல் ஈடுபாடு; விருப்பார்வப் பொழுதுபோக்கு; விருப்பார்வத்துறை ஆதரவாண்மை, விருப்பார்வத்துறை ஈடுபாடு; *a.* புனைவுருவான; விரும்பிய உருவுடைய, கற்பனுகாரமான; மனத்துக்குகந்த, கண்ணைக்கவர்கிற, இன்பார்ந்த; அழகுநயமிக்க, சித்திர வேலைப்பாடுடைய; கட்டற்ற, மனம்போனபோக்கான; பொதுநிலை கடந்த; பல்வண்ணமார்ந்த; நம்பமுடியாத; பொருந்தாப் பெருவிலையுடைய; *v.* கருத்திற் புனைவு செய், கற்பனைசெய்; கருத்துருவாக்கிக்காண், மனத்திற் பாவனை செய்; ஆர்வத்துடன் நம்பு; எளிதாக எண்ணு; ஆராயாது கருது; ஆர்வத்துடன் விரும்பு; மகிழ்வார்வம் கொள்; செருக்கி மகிழ்; மரபுக் கட்டுதிட்டங்களை மனத்திற் கொண்டு பயிற்றுவித்து வளர்த்து இனம் உருவாக்கு.

**fan'cy-dress**, *n.* விருப்பார்வ உடை; (தொ.) fancy-dress competition, விருப்பார்வ வேடப்போட்டி.

**fan'cy-fair**, *n.* விருப்பார்வச் சந்தை.

**fan'cy-work**, *n.* சித்திரத் துன்னல்.

**fandang'le**, *n.* பித்துக்கொள்ளி அணிகலன், கேலி விளையாட்டு.

**fandang'o**, *n.* விறுவிறுப்பான ஸ்பானிய ஆடல் வகை; ஸ்பானிய ஆடல் இசை வகை.

**fane**, *n.* (செய்.) கோயில்.

**fan'fare**, *n.* எக்காள முழக்கம், ஊதுகொம்புகளின் அதிர்வு.

**fanfaronade'**, *n.* செருக்குரை, தற்புகழ்வு.

**fang**, *n.* பாம்பின் நச்சுப்பல்; கூரியபல்; பல்வேரின் அலகுக் கூறு; இயந்திரக்கருவியின் பல்; *v.* குழாயில் தண்ணீர் ஊற்றி இயக்கு.

**fan'-tan**, *n.* கிண்ணத்தின்கீழ் மறைத்துவைக்கப்பட்ட நாணயங்கள் முதலியவற்றின் எண்ணிக்கையை ஊகித்துச் சொல்லவைக்கும் சீன சூதாட்டம்; சீட்டுச் சூதாட்டம்.

**fanta'sia**, *n.* விதிக்கு இயையாச் செய்யுள் வகை, இசையமைதிக் கட்டளைக்குட்படாது புனைவியற் போக்கிற் செல்லும் பாட்டு.

**fan'tast**, *n.* பகற்கனவினர்.

**fantas'tic**, *a.* எல்லையில் கற்பனை சார்ந்த, பித்துக்கொள்ளித் தனமான, இயல்முரணிய; நம்பமுடியாத; இயல் திரிபான; மனம்போனபோக்கிற் செல்கிற; விசித்திரப் பாணியில் அமைந்த.

**fan'tasy**, *n.* உருவுபடைக்குந்திறம், கனவுருப் புனைவாற்றல்; மனக்கண் வடிவம்; கழியார்வ வரைவடிவு.

**Fan'tee**, *n.* கோல்டு கோஸ்ட் (Gold Coast) என்னும் ஆப்பிரிக்க மாநில நீக்ரோ வகுப்பு மக்கள் அல்லது மொழி; (தொ.) go Fantee, நீக்ரோ வகுப்பினரின் பழக்கவழக்கங்களுக்கு ஒத்தியலு.

*fantocci'ni*, (இத்.) *n. pl.* சூத்திரப் பாவைக்கூத்து, நாண் பாவையாட்டம்.

**faquir'**, *n.*=fakir.

**far**, *n.* தொலைவிடம்; *a.* தொலைவான; நெடுந்தொலை கடந்துள்ள; அப்பாலுள்ள; முனைத்த; நெடுங்காலங்கடந்த; *adv.* தூரத்தில்; தொலைவிடத்துக்கு; நெடுந்தொலை கடந்து; முனைப்பாக வளர்ந்துள்ள நிலையில்; முனைத்த நிலைநோக்கி; தீவிர நிலை தாண்டி; மிகவும் ஒவ்வாத நிலையில், மிகுதொலை வேறுபட்டு; மிகுந்த அளவில்; பலபடி கடந்து, தீவிரமாக; நீடித்தகாலமாக, நீடித்த காலங் கடந்து; மிகவிலகி, தொடர்பு சிறிதுமின்றி; உரியதல்லாமல், கூடியதல்லாமல்; அளவில் முனைத்து, அளவில்

முனைப்பாக; (தொ.) by far, பெரிய அளவில்; far and near, எங்கும், எல்லா இடத்திலும் பரவி; far be it from me to do, நான் ஒருபோதும் செய்யேன்; far between, அருமையாக; far gone, மிகவும் நோயுற்ற; வெறிபிடித்த; பைத்தியம் பிடித்த; குடித்துள்ள; மிகு கடனிலுள்ள; far off, மிகு தொலைவான; go far, நிறையச்செய்; how far, எந்த அளவுக்கு; in so far as, பொறுத்த அளவில்.

**far'-away,** *a.* காலத்தால் மிகவும் முந்திய; தன்னை மறந்த, மனக்கோட்டையில் ஆழ்ந்த.

**farce,** *n.* கேலிக்கூத்து; நகைச்சுவை நாடகம்; பயனில் நிகழ்ச்சி; ஏமாற்றுவினை.

***farceur,*** (பிர.) *n.* மறைபுதிர்வாளர்.

**far'cy,** *n.* குதிரைத் தொற்றுநோய் வகை.

**far'cy-bud, far'cy-button,** *n.* குதிரைத் தொற்றுநோயில் வரும் சிறு கட்டி.

**fard'el,** *n.* மூட்டை, சுமை.

**fare,** *n.* பயணச்செலவு; வாடகை வண்டியில் பயணம் செய்பவர்; உணவு; *v.* பயணஞ்செய்; நடைபெறு, நிகழ்; காலங்கழி, நாள் தள்ளு; உணவுகொள்.

**farewell',** *n.* வழியனுப்பு, பிரியாவிடை; பிரிந்துசெல்லு நேர நல்வாழ்த்து; *int.* போய்வருக!

**far'-famed,** *a.* திசையெங்கும் இசையுடைய, புகழ்மண்டிய.

**far'-fetched,** *a.* வலிந்து பெறப்பட்ட.

**farin'a,** *n.* கூலமாவு; மாச் சத்துள்ள வேர்த்தூள்; மாவியல் கொட்டையின் தூள்: தூள்படிவப்பொருள்; (தாவ.) பூந்தாது; (வேதி.) மாச்சத்து.

**fa'rinose,** *a.* மாப்போன்ற; மாவு தூவப்பெற்ற.

**farm,** *n.* பண்ணை, தனி மனிதன் மேலாட்சியிலுள்ள விளை நிலப்பரப்பு; விளைநிலம் மேய்ச்சல் குடியிருப்புக் கட்டிடங்கள் உட்கொண்ட பண்ணைவளாகம்; விலங்கு-புள்-மீனினங்கள் வளர்ப்புப்பண்ணை; குழந்தைகளின் பொறுப்பாண்மைப் பேணகம்; வரி வாடகைக் கட்டணங்களைத் திரட்டும் உரிமைக்கீடான குத்தகைப்பணம்; குறிப்பிட்ட தொகைக்கீடாக வரி வாடகைக்கட்டணம் பிரித்துக்கொள்ளும் குத்தகை உரிமை; செயல்தீர்வகம், பொருள்களைத் திரட்டி வைத்துப் பேணிச் செய்ய வேண்டுவனசெய்து பயன் முற்றுவிப்பதற்கான நிலையம்; *v.* வரிவாடகைக் கட்டணக் குத்தகைவிடு; வரிவாடகைக் கட்டணக் குத்தகையெடு; ஆள்வேலையை வாடகைக்கு விடு; குழந்தைபேணும் உரிமையைக் குத்தகையாக ஒப்படை; உழு, பயிரிடு, நிலத்தைப் பண்படுத்து, வேளாண்மை செய்; (தொ.) farm out, குறிப்பிட்ட தொகைக்கீடாக வரி வாடகைக் கட்டண உரிமையளிக்கும் குத்தகையில்விடு; home farm, பண்ணைக்காரருக்காக ஒதுக்கப்பட்டு அவரே பயிரிடும் நிலம்.

**farm'er,** *n.* உழவர்; பண்ணைக் குடியானவர்; வரி வாடகைக் கட்டணக் குத்தகை உரிமைக்காரர்.

**farm'ery,** *n.* பண்ணைக்கட்டிடங்கள்.

**farm'-house,** *n.* பண்ணைவீடு, விளைநிலத்திற்கருகாமையிலுள்ள கொல்லை வீடு.

**farm'place, farm'stead, farm'steading,** *n.* கட்டிடங்களுடன் இணைந்த பண்ணை வீடு.

**farmyard',** *n.* பண்ணை வெளி.

**far'o,** *n.* சூதாட்டச் சீட்டு விளையாட்டு.

***farouche,*** (பிர.) *a.* நாணமுள்ள; சிடுசிடுத்த.

**farra'go,** *n.* கதம்பம்.

**far'-reach'ing,** *a.* பரந்த செயல்விளைவுடைய.

**fa'rrier,** *n.* குதிரைக்கு இலாடமடிப்பவர்; குதிரை மருத்துவர்; குதிரைப்படைகளின் காவற் பொறுப்புடைய துணை முதல்வர்.

**fa'rrow,** *n.* ஓரீற்றுப் பன்றிக்குட்டிகள்; *v.* பன்றிக்குட்டிகளை ஈனு; குட்டியிடு.

**far'-see'ing, far'-sighted,** *a.* வருவதுணர்கிற, வருங்காலக் கூர்நோக்குடைய.

**fart,** *n.* வாயு பறிதல்; *v.* வாயுபறியவிடு.

**farth'er,** *a.* மிகுதொலைவிலுள்ள; மிகுதூரம் கடந்த; *adv.* மிகுதொலைவில்; நெடுந்தூரம் கடந்து; முந்தி முனைப்பாக.

**farth'est,** *a.* ஏற்றுயர் தொலைவிலுள்ள; உச்ச உயர் அளவான; மீயுயர்படியான; *adv.* ஏற்றுயர் தொலைவில்; உச்ச உயர்தொலைவிடத்துக்கு; மீயுயர்படியில்.

**farth'ing,** *n.* ஏறத்தாழ ஒன்றரைப் புதுக்காசு மதிப்புள்ள சிறு செப்புத்துட்டு.

**farth'ingale,** *n.* குடைப்பாவாடை, முன்னாட்களில் பாவாடையைக் குடைபோல விரித்து நிறுத்துவதற்குரிய திமிங்கில முள்.

**fas'ces,** *n. pl.* பண்டை ரோமாபுரியில் உயர்நடுவர்முன் கொண்டு செல்லப்பட்ட கோடரி நடுவே வைத்த சலாகைக் கட்டுச்சின்னம்; மேலாண்மை உரிமையின் விருதுச் சின்னம்.

**fa'scia,** *n.* மதில் உச்சியிலுள்ள பட்டைச் சிற்பப்பகுதி; (உள்.) தசைநார் சூழ்தசைப்பட்டை; பட்டிகை, கச்சை, நாடா; உந்துவண்டியில் கருவித்தட்டி.

**fa'scia-board,** *n.* உந்துவண்டியில் கருவித்தட்டி.

**fa'sciated,** *a.* (தாவ.) நெருக்கமாக அழுத்தப்பட்டுள்ள; ஒன்றாக வளர்ந்துள்ள; வரியுடைய, கோடுகளைக் கொண்ட.

**fas'cicle, fas'cicule, fascic'ulus,** *n.* (தாவ.) கொத்து, திரள்.

**fascicula'tion,** *n.* தவணைகளாக வெளியிடப்பட்ட புத்தகத்தின் ஒரு பகுதி.

**fas'cinate,** *v.* கவர்ச்சியுட்படுத்து, ஈர்த்துப்பற்று, தப்ப முடியாமல் பார்வையாலே ஈர்த்துப்பிடி.

**fascine',** *n.* அகழி தூர்ப்பதற்கும் போர்க்காலப் பதுங்கு குழிகளுக்கு உள்ளீடாக வைப்பதற்குமான சுள்ளிக்கட்டு.

**Fas'cism, Fasci'smo,** *n.* பொதுவுடைமை எதிர்ப்புக்கட்சி; இத்தாலிய வல்லாண்மைக்கட்சி (1922-1943); நாட்டுரிமைச் சமதர்மக்கட்சி; ஆட்சி வல்லாண்மை முறைமை.

**fa'shion,** *n.* வடிவமைதி முறை, அமைப்புமுறை; படிவம், பாணி; காலவண்ணம், நாண்மரபு வழக்கு; நடப்பு வழக்கு; புறத்தோற்றம்; பண்பாளர் குழாம், உயர்சமுதாயம்; *v.* உருவாக்கு, புனை, வனை; படிவமாக அமை; இசைய அமைத்துக்கொள்; (தொ.) after a fashion, in a fashion, ஒரு வகையாக, ஓரளவிற்கு; in the fashion, நாண் மரபு வழக்குக்கிசைவான, புத்தம் புதுப்பாணியான, பண்பாளர் குழாத்தில் உயர்வாக மதிக்கப்படுகிற.

**fa'shionable,** *n.* காலத்துக்கேற்ற புதுநடைப்பாணியுடையவர், புத்தம் புதிய நடையுடை முறை மேற்கொள்பவர்; *a.* காலத்துக்கேற்ற புதுநடைப்பாணியுடைய; காலநடை முறைக்கேற்ற, புதுத்தினுசான, நவநாகரிகமான; நடப்பிலுள்ள, எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்படுகிற; புதுப் பாணியாகப் பின்பற்றப்படுகிற.

**fa'shion-plate,** *n.* உடையில் நாண்மரபுத் தினுசுகளைக் காட்டுஞ் சித்திரம்; பகட்டழகாக உடையுடுத்துபவர்.

**fast**[1], *n.* நோன்பு, உணவுமறுப்பு, உண்ணாநிலை; நோன்புப் பருவம்; நோன்புநாள்; உணவு உண்ணாமை; *v.* நோன்பிரு, உணவு மறு; குறிப்பிட்ட உணவுப்பகுதி விலக்கு; சமய வினை காரணமாக நோன்பாற்று; துயரங்கொண்டாடும் முறையில் உணவு நீக்கியிரு; உணவின்றியிரு, பட்டினிகிட.

**fast**[2], *a.* உறுதியான, திடமான; நட்பு வகையில் நெருக்கம் வாய்ந்த, வேரூன்றிய; வலிமைவாய்ந்த; அரண் செய்யப்பட்ட; இறுக்கமான, அசையாத, ஊன்றிய; நிலையான, மாறாத; வண்ண வகையில் கெட்டியான, உறுதியாகப்பற்றுகிற, அழியாத; தூக்கவகையில் ஆழ்ந்த, எளிதிற் கலையாத; நெருக்கமான, அணித்தான; விரைவான, வேகமான; வேகமாகச் செல்கிற, விரைந்து செல்லும் திறம்வாய்ந்த; விரைவு உண்டுபண்ணுகிற; விரைந்து செல்கிற, ஊதாரியான;

துணிச்சல் வாய்ந்த; படபடப்பான, பரபரப்பு விரும்புகிற; *adv.* உறுதியாக; தயங்காமல்; முழுநிறை அமைதியுடன்; இறுக, பிடிவிடாமல்; வலிவுடன், பாதுகாப்பாக; நிலையாக; மாறாமல்; வேகமாக; அடுத்தடுத்து விரைவாக; ஊதாரித்தனமாக; (தொ.) fast by, நெருக்கமாக, அருகில், அண்மையில், அடுத்து; live fast, ஆற்றல் குறைத்து வாழ்; நிறைந்த ஆற்றலைக் குறுகிய காலத்தில் வீணாக்கு; play fast and loose, நம்பிக்கைக்குரிய பொறுப்பிழந்து நட.

fa'sten, *v.* இறுக்கு, கெட்டியாக்கு; கட்டு; பொருத்து, இணைவி; தாழிடு, பூட்டு, கொளுவிமாட்டு; ஊன்று, பதியவை; கூர்ந்து நோக்கு; கட்ட வை; மேற்கொள்; தெரிந்தெடு; பற்று, பிடி; இறுகு; பொருந்து; தாக்குதல் தொடங்கு; (தொ.) fasten quarrel upon, சண்டை பிடி.

fa'stening, *n.* கட்டுதல்; இறுக்குதல்; கட்டுவது; இறுக்குவது; ஊன்றி நோக்குதல்; ஊன்றிய பார்வை; சாட்டுப் பெயர்; சாட்டுப்பெயர் இணைப்பு.

fast'-hand'ed, *a.* கஞ்சத்தனமான.

*fas'ti*, (ல.) *n. pl.* காலவரிசைப்படுத்தப்பட்ட நிகழ்ச்சிப் பதிவேடு, வரலாற்றுப் பதிவேடு.

fastid'ious, *a.* நுணுக்க நயம் எதிர்பார்க்கிற, எளிதில் மனநிறைவு செய்யமுடியாத, கூர்ங்சுவையுடைய.

fasti'giate, *a.* (தாவ.) குவிந்து செல்லும் வடிவுடைய.

fast'ness[1], *n.* கோட்டை, அரண்காப்பு; உறுதி.

fast'ness[2], *n.* விரைவு.

fat, *n.* கொழுப்பு, நிணம்; விலங்கு-தாவரங்களின் நெய்ப்பசையுள்ள கூறு; தாவர நெய்; விலங்குயிர்களின் கொழுப்பு நெய்; கொழுப்புநிறைந்த வேதியியற் பொருள்; பொருளின் செழும்பகுதி; ஆதாயம் தரும் தொழிற்பகுதி; நடிகர் திறமையை வெளிப்படுத்திக் காட்டும் எழுத்துப்பகுதி; *a.* கொழுத்த; இறைச்சிக்காகக் கொழுக்க வைக்கப்பட்ட; தின்று கொழுத்த; உருட்சி திரட்சியுடைய; பெருத்த, தடித்த; அச்சுரு வகையில் திண்ணிய; கொழுப்பு நிறைந்த, கொழுப்புக்கூறு மிகுதியாகவுடைய; நெய்போன்ற, பசையான; களிமண் வகையில் பசைமிக்க; நிலவகையில் வளமான, செழித்த; ஆதாயமிகுதி தருகிற; கனிக்கூறுவகையில் வளநிரம்பிய; முழுநிறைவான; நிலக்கரி வகையில் நிலக்கீல் ததும்புகிற; அறிவுமந்தமான, சுறுசுறுப்பற்ற, மக்கான; *v.* கொழுக்கவை; கொழுப்புடையதாகு; பெருக்கமுறு; (தொ.) fat lime, தூய சுண்ணம்பு; fat stock, விற்பனைக்காகக் கொழுக்கவைக்கப்படும் விலங்குகள்; the fat is in the fire, ஒரு வெடிப்பு ஏற்படும்; ஒரு நடுக்கம் விளையும்.

fat'al, *a.* சாவுக்குரிய, உயிர்போக்கிவிடத்தக்க; சாவு தருகிற, அழிவார்ந்த; இறுதிக்கட்டமான; காலக்கேடான, இடரார்ந்த, கேடார்ந்த; ஊழால் வகுக்கப்பட்ட, முடிவான; விதிவசமான; ஊழ்முடிவை முன்னறிவிக்கிற; ஊழ்போன்ற, தவிர்க்கமுடியாத; முக்கியமான; (தொ.) fatal shears, சாவு; fatal sisters, பண்டைக் கிரேக்க புராணத்தில் பிறப்பு-வாழ்க்கை-இறப்பு ஆகிய ஊழின் முக்கூறுகளையும் வரையறுக்கும் மூன்று பெண் தெய்வங்கள்; fatal thread, வாழ்நாள், ஆயுட்காலம்.

fat'alism, *n.* ஊழ்வலிக் கோட்பாடு; விதிவசம் என்ற நம்பிக்கை; விட்டவழி என்றிருக்கும் மனப்பான்மை; மாறா ஊழ்வகுப்பு நம்பிக்கை காரணமான முயற்சியற்ற தன்மை.

fatal'ity, *n.* ஊழ் நியதி, விதியின் கட்டளை; விலக்க முடியா நிகழ்வு; விதிவசமான முடிவு; இடும்பை, இயல்பான இடர் நேர்ச்சி; உயிரிழப்பு, இயற்சாவு நேர்வு.

fat'alize, *v.* ஊழ்வகுப்புக் கோட்பாட்டில் நம்பிக்கை கொள்ளு; ஊழின் ஆட்சிக்கு உட்படுத்து.

*fa'ta morga'na*, (இத்.) *n.* மெசினா (Messina) கடல் இடைக்கழியில் தோன்றும் கானல்.

fate, *n.* ஊழாற்றல், விதி, நேர்வு நிகழ்வுகளனைத்தின் எல்லையில் வகுப்பமைப்பு; கிரேக்க ஊழணங்குகள் மூவருள் ஒருவர்; விலக்கமுடியா நேர்வு; வகுத்த வகுப்பளவு, அமைத்த அமைப்பு; வரையறுக்கப்பட்ட கால எல்லை; கால இறுதி, வாழ்க்கை முடிவு; சாவு, அழிவு; இறுதி விளைவு; கேடுகாலம்; நடக்க இருப்பது; நிகழ வேண்டியது; *v.* ஊழாக வகுத்தமை.

fate'ful, *a.* ஊழ் செறிந்த, விதிவசமான, கேடு குறித்த; பெரு நிகழ்ச்சிக்குரிய, காலப்போக்கை மாற்றியமைக்கத்தக்க, முக்கியமான; ஊழால் இயக்கப்படுகிற, ஊழாற்றல் காட்டுகிற.

fat'-guts, *n.* தடித்த ஆள்.

fat'-head, *n.* அறிவு மந்தமானவர்.

fat'-hen, *n.* தடித்த இலையுள்ள செடிவகை.

fa'ther, *n.* தந்தை; முதாதை, முன்னோன்; ஊங்கணோர்; முதுகுரவர், பாதுகாவலர்; தோற்றுவித்தவர்; மூல முதல்வர்; முதல் முதல் திட்டமிட்டவர்; முதல் தலைவர்; தொடக்ககாலத் தலைவர்; ஏடு ஆக்கியோன்; மக்களின் போற்றுதலுக்கும் வழிபாட்டுக்கும் உரியவர்; பொதுநல உரிமைக்கு உழைத்த முன்னோன்; கடவுள்; கிறித்தவக் கோட்பாட்டின்படி இறைவன் முக்கூற்று வடிவின் முதற்கூறு; கிறித்தவ ஊழியின் முந்திய நூற்றுண்டுகளில் வாழ்ந்த சமய எழுத்தாளர்களில் ஒருவர்; பாவமன்னிப்புச் செய்பவர்; சமயகுரு; மடத்துத் தலைவர்; போப்பாண்டவர்; சமய மாவட்ட முதல்வர்; ஆட்சிக் குழுவினர்; நகரவை மூப்பர், மன்ற மூப்பர், சட்ட மன்றங்களில் நெடுநீள்காலம் தொடர்ந்திருந்து தொண்டாற்றுபவர்; மூலமுதல் கருத்து; மூல முதற்படிவம்; *v.* மகவாகப் பெற்றெடு; தந்தையாக விளங்கு; தந்தைமை ஒப்புக்கொள்; தந்தையென்று நடப்பில் வழங்கப்பெறு; தோற்றுவி; ஏட்டினை ஆக்கு; ஏட்டின் ஆசிரியநிலை ஏற்று ஒப்புக்கொள்; ஏட்டின் ஆசிரியனென்று பொதுவில் வழங்கப்பெறு; தந்தைபோலிருந்து அன்பாட்சி செய்; குழந்தையின் தந்தைமை உரிமை அறுதி செய்; ஏட்டின் ஆசிரியநிலை உரிமை அறுதி செய்; (தொ.) be gathered to one's fathers, மாள்வுறு, இறந்து புதைக்கப்பெறு; The Holy Father, போப்பாண்டவர், கிறித்தவசமயத் தலைவர்.

fa'ther-figure, *n.* மூப்பனுபவமும் மேலாண்மையுமுடைய நம்பிக்கைக்குரிய தலைவர்.

fa'ther-in-law, *n.* மாமனார், மனைவியின் தந்தை; கணவனின் தந்தை; *pl.* fa'thers-in-law.

fa'therland, *n.* தந்தையர்நாடு; தாய்நாடு, பிறந்த நாடு; செர்மனிநாடு.

fa'therless, *a.* தந்தையற்ற; ஆக்கியோன் அறியப்பெறாத.

fa'therly, *a.* தந்தையொத்த; தந்தைக்குரிய.

fath'om, *n.* இருகைப் பாவு அகலம், நான்குமுழம், ஆறு அடியளவு; ஆறு அடி சமசதுரக் குறுக்குமுகமுடைய நீள்தடி; எட்டும் அளவு, பிடி அளவு; உள்ளத்தின் அறிவாழம், அறிவுத்திற அளவு; *pl.* fath'om, fath'oms; *v.* இருகைகளால் வளைத்துப்பிடி; ஆழம் பார், கடலாழம் கண்டுபிடி; ஆழ்ந்தறி.

fatid'ical, *a.* வருவதுணர்த்தும் ஆற்றல் வாய்ந்த.

fatigue', *n.* களைப்பு, சோர்வு, அயர்ச்சி; திரும்பத்திரும்ப அடிக்கும் அடியினால் உலோகங்களில் ஏற்படும் மெலிவு; களைப்படையச் செய்யும் வேலை; படைவீரரின் போர்சாரா வேலை; போர்சாரா வேலைக்கு அனுப்பப்படும் படைவீரர் தொகுதி; *v.* களைப்படையச் செய், சோர்வுறச் செய்.

fat'ling, *n.* கொழுங்கன்று, இறைச்சிக்காகக் கொழுக்க வைத்த இளங்கன்று.

fatt'en, *v.* கொழுக்க வளர்; இறைச்சிக்காகக் கொழுக்க வை; செழிப்புடையதாக்கு.

fatt'y, *n.* சதைப்பற்றுள்ள குழந்தை, குண்டான குழந்தை; *a.* கொழுப்புப்போன்ற; கொழுப்புள்ள; பிசுக்குள்ள; நோய் காரணமாக உடல்பெருத்த; (தொ.) fatty degeneration, நோய்த்தன்மையான கொழுப்புப் படிவு; fatty heart, நெஞ்சுப்பைக் கொழுப்புக் கோளாறு.

fat'uous, *a.* மடத்தனமான; பயனற்ற.

*faubourg*, (பிர.) *n.* புறநகர்ப்பகுதி, புறஞ்சேரி; பாரிஸ் நகர்ப்புறப் பகுதி.

**fau'cal,** *n.* (ஒலி.) ஆழ்மிடற்றொலி ; *a.* மிடற்றிற்குரிய, மிடற்றொலி சார்ந்த.

**fau'ces,** (ல.) *n. pl.* (உள்.) வாயின் பின்பக்கப் புழை.

**fau'cet,** *n.* மிடாவின் திறப்படைப்புக் குழாய்.

**faugh,** *int.* அலுப்புக் குறிப்பு.

**fault,** *n.* குற்றம், குறை ; குறைபாடு ; கறை ; அமைப்புக் கோளாறு ; பண்புக்கேடு; தோற்றக்கேடு; தவறு, தவறுகை ; மீறுகை ; குற்றச்செயல் ; தவறான செய்கை ; குற்றப் பொறுப்பு ; தீங்கின் காரணமான குறைபாடு ; வரிப் பந்தாட்டத்தில் பந்து சரியான இடத்தில் விழாமற் செய்யும் பிழைபட்ட பந்தடி ; வேட்டை மோப்பக்கேடு, மோப்பக் கேட்டால் ஏற்படும் தடை ; தந்தி இணைப்பில் மின்தடை யூடாக ஏற்படும் இடைக்கசிவு வழு ; (மண்.) பாறைத் தளங்களில் இடைமுறிவு ; *v.* குற்றங்காண் ; தவறிழை ; குறைபடு ; (மண்.) இடைமுறிவு உண்டுபண்ணு ; (தொ.) at fault, வேட்டை மோப்பம் தவறி; மலைப்புற்று; find fault with, குற்றங்கண்டுரை, குறைகூறு, குற்றஞ்சாட்டு ; in fault, குற்றஞ்செய் தவராய், பழிப்புக்குள்ளாகி; to a fault, மட்டுமீறி, அளவு கடந்து.

**fault'y,** *a.* குறையுடைய ; குற்றமுடைய ; குற்றங் கூறத்தக்க.

**faun,** *n.* கொம்பும் வாலும் கொண்ட பண்டை ரோமாபுரிச் சிறு தெய்வம்.

**faun'a,** *n.* மாவடை, திணைநிலத்துக்குரிய உயிரினத்தொகுதி; திணை மாவடை ஆய்வுரை ; *pl.* faun'ae, faun'as.

**fauteuil,** (பிர.) *n.* கை நாற்காலி, நாடகக் கொட்டகையில் ஒதுக்கப்பட்டுள்ள நாற்காலி வரிசை.

**faux pas,** (பிர.) *n.* சொல்லிழுக்கு ; செயலிழுக்கு, புகழ் கெடுக்கும் செயல் ; பெண்பாலரின் நற்பெயருக்கு இழுக்கந் தருஞ் செய்கை.

**fav'our,** *n.* நட்பாதரவு ; நல்லெண்ணம் ; தயவு, கருணை ; அன்பாதரவு ; நலம், அனுகூலம் ; துணையாதரவு, உதவி ; மன்னிப்பு, விட்டுக்கொடுத்தல், சலுகை; ஒரு சார்பு, ஓர வுணர்வு ; நட்புநோக்கு ; தயவுக்குறிப்பு ; ஒப்புதல் குறிப்பு ; அன்புச் செயல், ஆதரவுச்செயல் ; அன்புச்சின்னம், ஆதரவு அறிகுறி; திருமண ஆர்வக் குறிப்பான இழைக்கச்சைப் பட்டை; நேர்வாதரவுக் குறிப்புப் பட்டை ; *v.* நல்லெண்ணம் காட்டு; கண்ணோட்டம் செய், அன்புடன் நோக்கு; அன்புடன் நடத்து ; ஆதரவு காட்டு ; சாதகமாயிரு ; சார்பாகத் தெளிவு கொடு ; கோட்பாட்டுக்கு வலியுறவு அளி ; செயல்முறைக்குத் துணையூக்கம் வழங்கு ; உதவு, ஆதரி ; நடுநிலை பிறழ்ந்து ஒருசார்பு காட்டு, சலுகையளி ; நலம் வழங்கு ; விரும்பு, விருப்பம் தெரிவி, விருப்பத்தேர்வு செய் ; ஆடை வகையில் மேற்கொள்ள விரும்பு ; தோற்றத்தில் ஒத்திரு ; (தொ.) in favour of, பக்கமாக ; சார்பில்.

**fav'ourable,** *a.* நட்பான ; உகந்த, தகுந்த, தக்க ; நல் லாதரவான, பரிந்துரைக்கிற, சார்வான ; ஊக்குகிற ; நம்பிக்கையளிக்கிற ; உதவியான.

**fav'oured,** *a.* அன்பாதரவுபெற்ற ; தனிச்சலுகைக்குரிய ; ஆதரவுச்சின்னம் அணிந்த ; தோற்றநிலையுடைய.

**fav'ourite,** *n.* விருப்பத்துக்கு உகந்தவர், தனிப்பாசத்துக் குரியவர் ; சலுகைக்குரியவர் ; தனிப்பற்றுக்குரியது ; பொது ஆர்வப்பற்றுக்குரியவர் ; பந்தயத்தில் வெற்றி பெறுபவ ரென்று ஆர்வமாக எதிர்பார்க்கப்படுபவர்; மன்னர் அணுக்க ஆர்வ அன்பர் ; மேலவர் நேசச்சலுகைக்குரியவர் ; 18-ஆம் நூற்றாண்டில் பெண்டிர் விரும்பி மேற்கொண்ட புரிகுழல் சுருள்வகை ; *a.* பெருவிருப்பான, தனிநேசத்துக்குரிய ; தனிச்சலுகைக்குரிய ; சிறப்பு மதிப்புக்குரிய.

**fawn¹,** *n.* மறி, இளமான் கன்று ; *a.* இளமஞ்சள் நிறமான; *v.* மான் கன்று ஈனு.

**fawn²,** *v.* வாலைக்குழை ; பணிந்து அன்பைக்காட்டு ; அடிமை போல நட, கெஞ்சிப்பசப்பு ; இச்சகம் பேசு, கெஞ்சி ஆதரவைப் பெறு.

**fay,** *n.* (செய்.) வனதெய்வம்.

**fe'alty,** *n.* பண்ணை மேலாண்மையிடம் காட்ட வேண்டிய உரிமைக் கடப்பாடு ; நிறைமை.

**fear,** *n.* அச்சம், பயம் ; நடுக்கம், கலக்கம் ; திகில் ; கவலை ; அச்சம் காரணமான தயக்கம் ; அச்சமதிப்பு, பயபக்தி ; அச்சக்காரணம் ; கவலைக்குரிய செய்தி ; *v.* அஞ்சு, பயப்படு; அச்சங்கொள் ; மதிப்புக்கொள் ; பயபக்தி காட்டு ; அஞ்சி நட ; கவலைகொள் ; கவலையுடன் ஐயுறு ; தயக்கங்காட்டு ; தயங்கிப் பின்னடை; மேல்வரு நிலைகள்பற்றி மன உலைவுறு ; (தொ.) never fear, எவ்வகை இடரும் இல்லை, கவலை வேண்டா.

**fear'ful,** *a.* அச்சந்தருகிற; தொல்லையூட்டுகிற ; அஞ்சியஞ்சி நடுங்குகிற, பயங்கொண்ட ; எளிதில் பயபக்தி கொள்கிற ; கவலைப்படுகிற, மன உலைவுறுகிற ; தயங்குகிற, பின்னடைகிற.

**fear'nought,** *n.* கப்பலில் உடையாகவும் பக்கப்புழைகளின் அடைப்பாகவும் பயன்படும் தடித்த கம்பளித்துணி வகை.

**fear'some,** *a.* நடுக்கந்தருகிற, அஞ்சவரும் தோற்றமுடைய.

**feas'ible,** *a.* செயல்கூடிய, செய்தக்க ; நடைமுறைப்படுத்தக் கூடிய ; சமாளிக்கக்கூடிய ; செயலெளிமையுள்ள ; வாய்ப் பெளிமையுடைய; பயனெளிமை வாய்ந்த; நடைபெறக்கூடிய.

**feast,** *n.* விருந்து ; பொதுவிருந்து ; கூடியிருந்து உண்ணும் நிறைவள உணவு ; விருந்துசாப்பாடு; வளநிறை புலநுகர்வு; உளநிறைகளின் மகிழ்வு ; விழா விருந்து, விழாக் கொண்டாட்டம் ; விழாநாள் ; நினைவு விழா ; *v.* விருந்து செய், விருந்தளி, விருந்து நடத்து ; விருந்தயர், விருந்தில் கலந்து கொள் ; நிறையுணவு கொள் ; நிறைவள நுகர்ந்து மகிழ் ; தோய்ந்து மகிழ்வி ; விருந்தில் கழி ; (தொ.) feast of reason, அறிவுவிருந்து, அறிஞர் புணர்கூட்டு நுகர்வு ; immovable feast, நாள் வரையறை விழா ; movable feast, நாள் மாறி வரத்தக்க விழா.

**feat,** *n.* அருஞ்செயல் ; குறிப்பிடத்தக்க வீரச்செயல் ; வியப் பூட்டும் அருந்திறச் செயற்பாடு.

**feath'er,** *n.* இறகு, பறவையினச்சிறகின் தூவி; இறகமைதி, இறகு வண்ணம் ; பண்பமைதிநிலை ; வேட்டைக்குரிய புள்ளினம் ; அம்பின் இருபுறமுள்ள இழைமுள் ; கணையின் பின்புறம் ; தொப்பிமீதுள்ள இறகுச்சூட்டு ; இலேசான பொருள் ; சிறப்பற்ற சிறு செய்தி ; முனைத்து மேலெழுந்து நிற்கும் நீள்வரை விளிம்பு ; அலையின் நுரைவரை விளிம்பு ; இறகணி, நிமிர்மயிர் வரிசை அணி ஒப்பனை ; மணிக்கல்லின் வரைவிளிம்புக்கறை ; இறகின் அலைப்பொத்த படகின் மிதப் பியக்கம் ; ஆப்புவடிவான பலகைக் கூர்முனை ; *v.* இறகிணை; இறகுகளால் மூடு ; இறகு உள்வரியிடு ; கணைக்கு இழைமுள் இறகு இணை ; இறகுபோன்ற ஒப்பனைசெய் ; இறகுச் சூட்டணிவி; இறகுபோல்மிதக்கவிடு, இறகுபோல் இயங்குவி; இறகுபோல் அலை ; காற்றோட்டத்தில் தடைப்படாமல் துடுப்பை விளிம்புமுகமாகத் திருப்பு ; பறவையைக் கொல்லா மல் இறகுகளைக் கீழே வீழ்த்து ; மோப்பம் நாடி உடலையும் வாலையும் விதிர் விதிர்க்கச் செய்; (தொ.) a feather in one's cap, பெருமை கொள்ளுதற்குரிய ஒரு தனிச்சிறப்பு ; birds of a feather, ஓரினக்குழு; crop one's feathers, மதிப்புக் குறை, இழிவுபடுத்து ; feather one's nest, தன்வளம் பெருக்கிக் கொள்; fur and feather, வேட்டைக்குரிய விலங்கு புள்ளினங்கள்; in full feather, in high feather, கிளர்ச்சியாக, பெருமகிழ்ச்சியுடன் ; show the white feather, கோழைத் தனம் காட்டு.

**feath'er-bed,** *n.* மென்தூவிகள் நிறைக்கப்பெற்ற மெத்தை ; *v.* மிகு சலுகையளித்துக்கெடு ; மிக எளிய செயலாக்கிவிடு.

**feath'er-brain,** *n.* விளையாட்டுத்தனமானவர் ; அறிவு குறைந்தவர்.

**feath'ered,** *a.* இறகுகளால் மூடப்பட்ட ; இறகுகளை உடைய ; இறகுகள் இணைக்கப்பட்ட ; இறகுபோன்ற ; பறவைகள் போலப் பறக்கிற, வேகமான ; இறகுகளால் மென்மையாக்கப்பட்ட ; மென்மையூட்டப்பட்ட.

**feath'er-edge,** *n.* ஆப்புவடிவமான பலகையின் கூர்முனை.

**feath'er-head**, *n.* = feather-brain.

**feath'ering**, *n.* இறகுத்தொகுதி; இறகிணைப்பு; இறகினைப் போன்ற தோற்றம்; கணையின் இறகமைப்பு; விலங்குடலின் இறகமைதி வாய்ந்த மேற்புறம்; மலரில் இறகமைதித் தோற்றம்; இறகமைதி தோன்ற வளைவினுள் வளைவாக அமைந்த சிற்ப அமைவு.

**feath'er-pate**, *n.* = feather-brain.

**feath'er-stitch**, *n.* அழகுக்காக வளைந்து வளைந்து செல்லும் படி தைக்கப்படும் தையல்.

**feath'er-weight**, *n.* மிக இலேசான பொருள்; கனமில்லாத மனிதர்; பளுக்குறைந்த (63 கல் எடைக்குக் குறைவான) பந்தயக் குதிரை ஓட்டி; கனங்குறைந்த (126 கல் எடைக்குக் குறைவான) குத்துச்சண்டைக்காரர்.

**feath'ery**, *a.* இறகு சார்ந்த; இறகு போன்ற; இறகுகளால் மூடப்பட்ட; இறகிணைப்போன்ற தோற்றமுடைய.

**fea'ture**, *n.* தோற்றம்; வடிவம்; உருவம்; தனிச்சிறப்பு; தெளிவான முனைப்புக்கூறு; கண்ணையும் கருத்தையும் கவரும் பகுதி; செய்தித்தாளின் தனிச்சிறப்புக்கூறு, முனைப்பான கவர்ச்சிக்கூறு; *v.* முக்கிய பகுதியாய் வகுத்தமை, தனி முதன்மைப்படுத்திக் காட்டு; இன்றியமையாத முனைப்பான உறுப்புக்களை வரைந்து உருப்படுத்திக்காட்டு; படத் திரையில் காட்டு; (தொ.) feature film, feature picture, நீள் திரைப்படம்.

**fea'tured**, *a.* தெளிவாக அமைந்த சிறப்புக் கூறுகளுள்ள.

**fea'tureless**, *a.* தனிச்சிறப்புக் கூறுகளற்ற.

**feat'urely**, *a.* அழகான.

**fea'tures**, *n. pl.* முகத்தோற்றக் கூறுகள், முகத்தோற்றம்.

**feb'rifuge**, *n.* காய்ச்சல் தணிக்கும் மருந்து.

**feb'rile**, *a.* காய்ச்சல் சார்ந்த; காய்ச்சலின் தன்மையுடைய.

**Feb'ruary**, *n.* ஆங்கில ஆண்டின் இரண்டாம் மாதம்.

***fe'cit***, (ல.) *v. sing.*, ***fecer'unt***, (ல.) *v. pl.* இதனை வரைந்தவர் (கலைப்படங்களின்கீழே கலைஞர் கையெழுத்துடன் தரப்படும் குறிப்பு).

**feck'less**, *a.* பயனற்ற, திறனற்ற, வீணான.

**fec'ulent**, *a.* கலக்கமான; கூழான; தீய வாடையுள்ள.

**fec'und**, *a.* இனப்பெருக்க வளமுள்ள; செழிப்பான; வளமூட்டுகிற.

**fec'undate**, *v.* வளமாக்கு, செழிப்புறச்செய், பலன் கொடுக்கச்செய்; சினைப்படுத்து, பொலிவூட்டு.

**fecun'dity**, *n.* இனப்பெருக்க வளம், விளைவளம், பயனிறைவு.

**fed**, *v.* feed என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்; (தொ.) fed up with, பழகி உவர்ப்புக்கொண்டுவிட்ட.

**fed'eral**, *n.* கூட்டரசுக் கோட்பாட்டின் ஆதரவாளர்; (வர.) அமெரிக்க உள்நாட்டுப்போரில் கூட்டிணைப்பை ஆதரித்த வட அரசுகளின் படைவீரர்; *a.* கூட்டரசு அமைப்பு முறை சார்ந்த; கூட்டரசின் மைய அமைப்புக்குரிய.

**fed'erate**, *v.* பொதுக்குறிக்கோளுக்காகக் கூட்டுக்குழுவாகச் சேர்; கூட்டாட்சி அடிப்படை அமைப்பு உருவாக்கு.

**federa'tion**, *n.* கூட்டாக இணைதல்; கூட்டிணைப்பு; கூட்டுச்சமுதாயம்; கூட்டிணை கழகம்; கூட்டுப்பேராட்சி; கூட்டரசு, சமஷ்டி.

**fee**, *n.* நிலப்பண்ணையுரிமை முறையில் மானியம்; மரபுரிமையாகப் பெற்ற பண்ணை; உடைமை; பொதுப்பணியாளருக்கு அளிக்கப்படும் சம்பளம்; வழக்கறிஞருக்குரிய ஊதியம்; மருத்துவருக்குக் கொடுக்கப்படும் தொழிலூதியம்; தேர்வு நுழைவுக் கட்டணம்; சங்கக்கட்டணம்; பள்ளிக்கூடக் கட்டணம்; கூலி; *v.* ஊதியமளி; கூலிக்கு அமர்த்து; (தொ.) hold in fee simple, hold in fee, கட்டுப்பாடற்ற முழுச் சொத்துரிமையாகப் பெற்றிரு.

**fee'ble**, *n.* வாட்போர்த்துறையில் வாளின் மையங்கடந்த முனைப்பக்கப்பகுதி; *a.* வலுக்குறைந்த, மெலிந்த; ஆற்றலற்ற, தளர்ந்த; பயன் குன்றிய, உரமற்ற; மங்கலான; தெளிவற்ற; அறிவுத்திறம் குறைந்த, மதிமந்தமான; பண்பு முனைப்பற்ற, நொய்ம்மையான.

**fee'ble-mind'ed**, *a.* மன உறுதியற்ற; அறிவு தளர்ந்த.

**feed**[1], *n.* அருத்துகை, உண்பித்தல்; தீனி கொள்வித்தல்; மேய்த்தல், மேய்ப்பு; ஊண்; தீனி; மேய்ச்சல்; ஊட்டு, ஒரு தடவை உண்ணும் உணவு, ஒரு முறைத்தீனி; புல் லுணவு, தழையுணவு; குதிரைக்கு அளிக்கப்படும் உணவுப் பொருள் அளவு; இயந்திரத்துக்குரிய எரிபொருள்; துப்பாக்கிக்குரிய மருந்து; நடிகருக்கு நடிப்பு வாய்ப்பு அளிப்பவர்; *v.* உணவளி; தீனியளி, அருத்து, உண்பி, ஊட்டு; மேயவிடு; உண்ணு, உணவுகொள்; மேய்; குழந்தைக்குப் பாலூட்டு; உணவாகப்பயன்படு; ஊட்டமளி; பேணி வளர்; கொழுக்க வை; இயந்திரங்களுக்கு எரிபொருளூட்டு; தீக்கு விறகூட்டிக்கொண்டிரு; தலைமை நடிகருக்கு நடிப்புத் தூண்டுதல் பகுதி நினைவூட்டு; உதை பந்தாட்டத்தில் பந்து கைமாறிக் கொடு; மனநிறைவூட்டு, அவா நிறைவுபடுத்து; தற்பெருமைக்கு நிறைவளி; அவா ஆர்வத்தைத் தளராமற் பேணு; (தொ.) at one feed, ஒரு முறைத் தீனியிலே; feed on, தின்று வளர்; தின்றழி; feed up, தின்று கொழு; தெவிட்டுமளவு தின்; off one's feed, பசியின்றி; உண்ண விரும்பாமல்; on the feed, மீன் வகையில் உண்கின்ற, உணவை நாடி நிற்கின்ற; out at feed, மேய்ப்புதற்காக வெளியே திரியவிடப்பட்ட.

**feed**[2], *v.* fee என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**feed'er**, *n.* ஊட்டுபவர்; ஊட்டுவது; உண்பவர்; குழந்தையின் பால்புட்டி; குழந்தையின் மார்பாடை, அணையாடை; தலையாற்றில் விழும் கிளையாறு; அடிப்பவரிடம் பந்தினைச் செலுத்தும் ஆட்டக்காரர்; இயந்திரத்திற்குத் தேவையான பொருட்களை நிரப்பும் கருவி; (தொ.) feeder line, feeder railway, வெளிப்புற மாவட்டங்களைப் பெரிய இருப்புப்பாதையோடிணைக்கும் கிளை இருப்புப்பாதை.

**feed'-head**, *n.* கொதிகலத்திற்கு நீரூற்றும் தொட்டி.

**feed'ing**, *n.* ஊட்டல்; தீற்றுதல்; உண்ணல்; எரிபொருளூட்டுதல்; அவா நிறைவேற்றுதல்; மேய்ச்சல் தீனி; உணவு; அச்சுக்கு ஆயத்தமாக ஒழுங்கு நிலையுடன் வைத்துள்ள தாள்; (தொ.) feeding storm, வளர்ந்துகொண்டே வரும் புயல்.

**feed'ing-bott'le**, *n.* குழந்தையின் பால் புட்டி.

**feed'-pipe**, *n.* ஊட்டக்குழாய், இயந்திரத்துக்கு வேண்டுவன கொண்டுசெல்லும் குழாய்.

**feed'-pump**, *n.* கொதிகல நீரேற்றி; கொதிகலத்திற்கான நீரை மேலேற்றும் நீர்க்குழாய்.

**feed'-tank, feed'-trough**, *n.* நீராவி இயந்திரத்திற்குத் தேவையான நீரைச் சேமித்து வைக்கும் தொட்டி.

**fee-faw-fum'**, *n.*, *int.* குழந்தைகளை அச்சுறுத்தும் பொருளற்ற சொல்.

**feel**, *n.* தொட்டறியும் உணர்வு; தொட்டுத் தேர்வு, தொட்டுத்தேர்வுணர்வு; நுண்ணிய உணர்வு, இனமறியா உள்ளுணர்ச்சி; *v.* தொட்டுணர், உணர்வுகொள்; பட்டுணர், நுகர்ந்தறி; தொட்டுப்பார்; தடவிப்பார்; தொட்டுத்தேர்ந்து பார்; உள்ளத்தில் உணர்; உடலுணர்ச்சி கொள்; மதவுணர்ச்சி கொள்; உள்ளுணர்வுகொள்; இனமறியா உள்ளுணர்ச்சிகொள்; இன்பதுன்ப நுகர்; படு; உணர்வு பெறு, உணர்வுநிலைகொள்; நினை, எண்ணு; எண்ணிப் பார்; இரங்கு; (தொ.) feel after, feel for, தேடு; feel like doing, செய்ய விருப்பங்கொள்; feel one's legs, feel one's feet, உறுதியாக நிற்கும் நிலைபெறு; இயலெளிமை உணர்ச்சி கொள்; feel one's way, எச்சரிக்கையுடன் முன்செல்; தடவிக்

கண்டுபிடி ; feel quite oneself, தன்னம்பிக்கை பெறு, செயலாயத்த நிலைபெறு, திடப்படு ; feel the pulse of, நாடி நிலை பார் ; மெல்ல ஆளின் உள்ளப்போக்கு நிலைகளைக் கவனித்துப் பார்.

**feel'er**, *n.* உணரிழை, வழியுணவு தேர்ந்துணர்வதற்குரிய உயிரினங்களின் உறுப்பு ; முன்னீடான சோதனை முயற்சி ; முன்னணி வேவுப்படைஞர் ; எதிராளின் மனநிலை தேர்ந்துணர்தற்காகத் தேர்வு முறையாகக் கூறப்படும் கருத்துரை.

**feel'ing** *n.* உறுதலுணர்ச்சி, தொட்டறி உணர்ச்சி ; உடலுணர்வு ; உள் எழுச்சி, எண்ணம் ; மன உணர்ச்சி ; உள்ளுணர்வான நம்பிக்கை ; *a.* கூருணர்ச்சியுடைய ; நுண்ணுணர்ச்சியுடைய ; உணர்ச்சியை வெளிக்காட்டுகிற ; இரக்க உணர்வுள்ள ; உளமார்ந்த.

**feel'ings**, *n. pl.* உள்ளுணர்ச்சிகள் ; உள்ளெண்ணங்கள் ; விருப்புவெறுப்பு அலைகள் ; (தொ.) good feelings, நல்லெண்ணம், நல்லுணர்ச்சி ; அன்புடைமை.

**fee'-sim'ple**, *n.* வரையற்ற மரபுரிமையுடைமை.

**fee'-tail**, *n.* மரபுரிமை வரையறைகொண்ட உடைமை, மரபுரிமைத் தொடர்பு அறுந்துவிட்டால் முன்னுரிமையாளருக்கே செல்லும் உடைமை.

**feign**, *v.* பாசாங்கு செய் ; போலி நடிப்புப்பழகு ; மாருட்டம் செய் ; இல்லதை இருப்பதாகப் பாவனை செய் ; இட்டுக்கட்டு, புனைந்துரை; தவருன குற்றச்சாட்டு உருவாக்கு, பொய்யாக இணைத்து உண்டுபண்ணு ; கள்ளப்பத்திரம் உருவாக்கு ; படை.

**feint**[1], *n.* எதிரியின் கருத்தைத் திருப்புதற்கான போலித் தாக்குதல் ; ஏய்ப்பு நடவடிக்கை, மாருட்ட நடைமுறை ; போலித்தனம் ; ஏமாற்று நடிப்பு, பாசாங்குத் தோற்றம் ; *v.* போலியாகத் தாக்கு ; ஏய்ப்பாக நடி ; மாருட்டம் செய், ஏமாற்று.

**feint**[2], *a.*=faint.

**feld'spar**, *n.*=felspar.

**fel'ibrist**, *n.* பிரஞ்சு நாட்டுப் புரோவென்சு (Provence) மண்டலத்தின் "பெலிபிரிஜ்" (Felibrige) என்ற கவி எழுத்தாளர் குழுவினர்.

**fel'icide**, *n.* பூனைக்கொலை.

**felicif'ic**, *a.* இன்பவாழ்வு நோக்கிய.

**feli'citate**, *v.* மகிழ்ச்சி தெரிவி ; பாராட்டு.

**feli'citous**, *a.* இடவேளைச் சூழல்களுக்குகந்த ; இசைத் திறமிக்க ; இன்னயம் ஆர்ந்த.

**feli'city**, *n.* சுழிபேரின்பம் ; வாழ்நலம், இன்னல ஆக்கம் ; நல்வாய்ப்புக் கூறு ; பாக்கியம் ; சொல்லாட்சித் தகவு ; இசைவு நயம் ; நயத்திறம்.

**fel'id**, *n.* பூனையினம் சார்ந்த உயிர் வகை.

**fel'ine**, *a.* பூனை போன்ற ; பூனை சார்ந்த ; பூனை இனத்துக்கு உரிய.

**fell**[1], *n.* உரோமத்தோடு கூடிய விலங்கின் தோல் ; உரோமத்தோடு கூடிய மனிதத்தோல் ; தடித்த மயிர்க்கற்றை ; தடித்த கம்பளிக் கற்றை ; தடித்த ஆட்டுமயிர்க் கற்றை.

**fell**[2], *n.* குன்று ; வட இங்கிலாந்தின் சதுப்பு நிலப்பரப்பு.

**fell**[3], *a.* (செய்.) அடல் வாய்ந்த, மூர்க்கமான, கொடிய, அச்சுறுத்துகிற ; அழிக்கும் தன்மையுடைய, பழியார்ந்த.

**fell**[4], *n.* (மரம்.) வெட்டப்பட்ட மரக்கட்டை அளவு ; முனை யடக்கத் தையல் ; *v.* வெட்டி வீழ்த்து ; மரத்தை வெட்டிச் சாய்.

**fell**[5], *v.* fall என்பதன் இறந்தகாலம்.

**fell'ah**, *n.* எகிப்து நாட்டு உழவர் ; *pl.* fell'aheen, fell'ahs.

**fell'oe**, *n.* சக்கரத்தின் புறச்சுற்று வட்டம் ; ஆரைகளால் இணைக்கப்பட்ட சக்கரத்தின் புறவட்டப்பகுதி.

**fell'ow**, *n.* தோழர், கூட்டாளி, ஏடன் ; சரிநிகரானவர் ; சரியிணையானது ; நேர் எதிரிணையானவர், இணையான இருவரில் மற்றவர் ; நேர் எதிரிணை, இணையான இரண்டில் மற்றது ; ஓரினத்தவர் ; ஓரினத்தது ; ஒரே காலத்தவர் ; ஒரே காலத்தது ; பண்பொத்தவர் ; பண்பொத்தது ; ஒப்புடையவர் ; ஒப்பானது ; பல்கலைக்கழக ஆட்சி உறுப்பினர் ; ஆட்சியில் கூட்டிணைவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பட்டதாரி ; சில ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட திட்ட ஆதரவூதிய உரிமைபெற்ற புத்தாய்வு மாணவர் ; உயர் கலைக்கழக உறுப்பினர் ; ஆள் ; சிறுவர் ; பேர்வழி ; பையல்.

**fell'ow-cit'izen**, *n.* உடனிணை குடிமகன், ஒரே நகரத்தைச் சேர்ந்தவர்.

**fell'ow-comm'oner**, *n.* கல்லூரிக்கழக உறுப்பினரோடு அமர்ந்து உண்ணும் உரிமையுடைய பட்டம்பெரு மாணவர்.

**fell'ow-coun'tryman**, *n.* உடனிணை நாட்டவர், ஒரே நாட்டினைச் சேர்ந்தவர்.

**fell'ow-crea'ture**, *n.* உடனிணை படைப்பான உயிர், உடன் படைக்கப்பட்ட உயிர்.

**fell'ow-feel'ing**, *n.* இனப்பாசம், ஒப்புரவுணர்ச்சி, ஒத்துணர்வு, இரக்கம்.

**fell'ow-man'**, *n.* உடனொத்த மனிதர், தன்னைப் போலவே கடவுளால் படைக்கப்பட்ட மனிதர்.

**fell'ow-mem'ber**, *n.* உடனொத்த உறுப்பினர், ஒரே குழுவின் உறுப்பினர்.

**fell'ow-serv'ant**, *n.* உடனொத்த பணியாளர், ஒரே தலைவனையுடைய வேலைக்காரர்.

**fell'owship**, *n.* தோழமை, கூட்டுறவு, நட்பு ; நட்புக்கலப்பு, கூட்டிணக்க வாழ்வு, கூட்டிணைவு ; சமவுரிமைக்குழு ; சங்கம், தோழமைக்கழகம் ; தொழிற்சங்கம் ; கூட்டிணைப்புக்குழு ; பட்டதாரிகள் ஆதரவூதியத்திட்டம் ; புத்தாய்வு மாணவரான பட்டதாரியின் ஆதரவூதியம் ; புத்தாய்வு மாணவர் நிலை ; புத்தாய்வு மாணவரின் வருவாய் ; பங்காளிகளின் ஆதாயப் பகுப்பு விழுக்காட்டுமுறைத் திட்டம் ; (தொ.) good fellowship, நல்ல தோழமைப்பாங்கு ; right hand of fellowship, ஒருவர் சேர்த்துக்கொள்ளப்பட்டார் என்பதற்கடையாளமாக அவருக்கு வலக்கை கொடுத்தல்.

**fell'ow-towns'man**, *n.* ஒரே நகரில் வாழ்பவர்.

**fell'ow-trav'eller**, *n.* உடன் பயணம் செய்பவர், ஒரே வண்டியில் பயணம் செய்பவர் ; கட்சி அனுதாபி.

**fell'y**, *n.*=felloe.

***fel'o de se***, (ல.) *n.* தற்கொலை ; தற்கொலை செய்து கொள்பவர்.

**fel'on**[1], *n.* பெருங்குற்றம் செய்தவன், பாதகன் ; *a.* (செய்.) கொடிய, படுபாதகமான, கொலைத்தன்மை வாய்ந்த.

**fel'on**[2], *n.* உகிர்ச்சுற்று.

**felon'ious**, *a.* குற்றத்தண்டனைக்குரிய ; தண்டிப்பதற்குரிய குற்றம் சார்ந்த ; தண்டிப்பதற்குரிய குற்றத்தை உட்கொண்ட.

**fel'onry**, *n.* கடுங்குற்றம் செய்தவர்களின் தொகுதி.

**fel'ony**, *n.* பெருங்குற்றம், அடாப்பழி.

**fel'spar**, *n.* களிமம், பாறையின் பெரும்பான்மைக் கூறு.

**fel'stone**, *n.* படிகக் கட்டமைப்புப் பெருத பாறைத்தொகுதிகளில் காணப்படும் செறிவான களிமம்.

**felt**[1], *n.* ஒட்டுக்கம்பளம், பசை அல்லது தேறல் மண்டியிட்டு இறுக்கம்பெற்ற அழுத்தக் கம்பளத்துணி ; *v.* ஒட்டுக்கம்பளம் ஆக்கு ; ஒட்டுக்கம்பளத்தினுல் பொதி ; ஒட்டுக்கம்பளமாகு ; ஒட்டித்திரைவுறு, சடையாகப் பற்று.

**felt**[2], *v.* feel என்பதன் இறந்தகால-முடிவெச்சம்.

**fel'teric**, *n.* குதிரை நோய் வகை.

**felucc'a**, *n.* துடுப்புக்களையும் பாய்களையும் கொண்டு நடுநிலக் கடலோரம் செல்லும் சிறு மரக்கலவகை.

**fem'ale**, *n.* பெண்பால், பெண்; பெடை விலங்கு; *a.* பெண்பாலுக்குரிய; தாவரங்களில் பயன்தரும் பால்வகைக் குரிய; சூலகத்தையுடைய; கருவிளைவுக் கூற்றினை ஏற்கிற, பெண்பாலாருக்குரிய; குறைந்த ஆற்றல் வாய்ந்த; செறிவு குறைந்த; கருவியின் புறமுனைப்பான பகுதிக்கு ஏற்பிசைவாக உட்குழிவாய் அமைந்துள்ள; (தொ.) female screw, புரியாணிமரை, திருகாணி செல்வதற்கிசைவான புழை.

**feme co'vert**, *n.* (சட்.) மணமான பெண்.

**feme sole**, *n.* (சட்.) மணமாகாத மாது; கைம்பெண்; கணவனின் வேருகச் சட்டப்படி தனிச் சொத்துரிமையுடைய மணமான பெண்.

**feminal'ity**, *n.* பெண்ணின் இயல்பு; பெண்பாலரின் தனிச் சிறப்புத் தன்மை; சித்திர ஆடை; சிங்காரப்பொருள்; சிறுதிறப் பகட்டுப் பொருள்.

**femine'ity**, *n.* பெட்பு, பெண்மை; ஆண்மையின்மை.

**fem'inine**, *n.* பெண்பால்; பெண்ணியல்பு; பெண்பாற் சொல்; *a.* பெண்டிருக்குரிய; பெண்ணியல்பான; பெண்களுக்கேயுரிய; பெண்களுக்குகந்த; பெண்பாலருக்கிசைந்த; (இலக்.) பெண்பால் குறித்த; எதுகையில் இரண்டசையுடன் இரண்டாம் அசை அழுத்தமற்றதாயமைந்த; யாப்பு முடிவில் ஈற்றயல் அழுத்தமுடைய; இடைநிறுத்த வகையில் உடனடியாக அழுத்தந் தொடராத.

**fem'ininism**, *n.* பெண்பாலுக்குச் சிறப்பியல்பான சொற் பண்புக்கூறு; பெண்பாலருக்குத் தனி இயல்பான மொழி நடைக்கூறு; பெண்பாலரைப் பின்பற்றிய பாங்கு.

**femin'inity**, *n.* =feminality.

**fem'inism**, *n.* பெண் உரிமை ஏற்புக்கோட்பாடு; பெண்ணுரிமை ஆதரவு.

**fem'inist**, *n.* பெண் உரிமைகளுக்காகப் பரிந்து பேசுபவர்; பெண் இயல்புகளை ஆயும் மாணவர்.

**femin'ity**, *n.* = feminality.

**fem'inize**, *v.* பெண்தன்மை கொள்ளச்செய்; பெண்தன்மை கொள்.

***femme de chambre***, (பிர.) *n.* பெருமாட்டியின் தோழி, பள்ளியறைப்பாங்கி.

**fem'oral**, *a.* துடை சார்ந்த; (தொ.) femoral artery, துடையின் முதன்மைவாய்ந்த குருதிக்குழாய்.

**fem'ur**, *n.* துடையெலும்பு; பூச்சிகளின் கால்துடைப்பகுதி; *pl.* fem'ora, fem'urs.

**fen**, *n.* படுகர், தாழ்ந்த சேற்று நிலம், நீர் செறிந்த சதுப்பு நிலம்.

**fen'-berry**, *n.* கொட்டணைக்காய்.

**fence**, *n.* வாள்பயில் கலை; வாள் பயிலுதல்; வேலி, சுவர்; கம்பிவேலி; இயந்திரக் காப்புப்பகுதி; இயந்திர நெறி செலுத்து கருவி; இயந்திர அளவைக்கருவி; கள்ளச்சரக்குகளைப் பெற்றுக்கொள்பவர்; கள்ளச்சரக்குகள் பெற்றுக் கொள்ளப்படுமிடம்; *v.* வாள் ஓச்சும் கலைபயில்; நூலியலுக்கிணங்க வாளோச்சு; மறை; கா, அரண் செய்; விலக்கு, தள்ளிவை; சுற்றிவேலியிடு, அடை, சூழ், அரணமை; குதிரைவகையில் வேலிகளைத் தாண்டு; கள்ளச் சரக்குகளில் வாணிகம் செய்; இரட்டுற மொழிந்து உண்மையை மறை; பட்டும் படாததுமாக மறுமொழி கூறு; (தொ.) sit on the fence, எதிலும்பட்டுக்கொள்ளாதிரு; செயலற்ற நடுவுநிலைமை வகி; sunk fence, அகழியின் அடியைச் சுற்றி இடப்பட்ட வேலி.

**fenced**, *a.* வேலியினுல் அடைக்கப்பட்ட.

**fence'less**, *a.* அடைக்கப்படாத; (செய்.) அரணற்ற, காப்பற்ற.

**fen'cer**, *n.* வாள்சிலம்பம் பயில்பவர்.

**fen'cible**, *n.* (வர.) உள்நாட்டில்மட்டும் போர்ப்பணி செய்யத் தக்க வீரன்; *a.* வேலியிடத்தக்க, அரண் அமைக்கத் தக்க.

**fen'cing**, *n.* காத்தல்; சலாகையடைப்பு, சலாகை அணி; வேலியடைப்பு, வேலிகள் அமைப்பதற்கான பொருள்; *a.* தற்காப்புச் செய்கிற; தடுத்துக்காப்பதற்குரிய.

**fenc'ing-master**, *n.* வாள்சிலம்பக்கலை பயில்விக்கும் ஆசிரியர்.

**fen'-crick'et**, *n.* அகழ்வண்டு, பிள்ளைப்பூச்சி.

**fend**, *n.* தன்னுதவி, தற்சார்பு; *v.* தவிர், தட்டி விலக்கு, தடைசெய், தள்ளிவை; வேண்டுவன காத்தமை, தேவைக்கு ஏற்பாடு செய்.

**fen'der**, *n.* தடைவிலக்கு, தடுப்புக்காப்புப் பொருள்; தீத் தாங்கி, கங்கு வெளிவராமல் தடுக்கும் அணைகாப்பு.

**fen'der-stool**, *n.* தீத்தாங்கிப் பக்கத்திலுள்ள நீண்ட கோக்காலி.

**fenestell'a**, *n.* திருக்கோயிலில் திருக்கலங்களைக் கழுவின நீர் ஊற்றி வைக்கப்படுவதற்குரிய பலிபீடத்துக்குச் சற்றுத் தெற்கிலுள்ள மாடக் குழி.

**fenes'trate**, **fenes'trated**, *a.* சிறுசாளரத்தையொத்த தொளைகளையுடைய.

**fenestra'tion**, *n.* கட்டிடத்தில் சாளரங்களின் ஒழுங்கமைப்பு; (தாவ., வில.) பலகணியொத்த சிறு தொளையுடைமை.

**fen'-fire**, *n.* சதுப்புநில நச்சாவி, கொள்ளிவாய்ப்பேய் ஒளி.

**Fen'ian**, *n.* அயர்லாந்தில் ஆங்கில ஆட்சியை ஒழிப்பதற்காக அமெரிக்காவில் நிறுவப்பட்ட ஐரிஷ்காரர் கழக உறுப்பினர்; *a.* அமெரிக்க ஐரிஷ்காரர் கழகத்தைச் சார்ந்த.

**fenks**, *n. pl.* திமிங்கிலக் கொழுப்பின் நார்க்கற்றை; உருக்கிய கொழுப்பின் மண்டி.

**fen'-man**, *n.* சதுப்புநிலத்தில் வாழ்பவர்.

**fenn'ec**, *n.* பெரிய காதுகளையுடைய சிறு ஆப்பிரிக்க நரி வகை.

**fenn'el**, *n.* சதகுப்பை, குழம்பு வகையில் பயன்படுத்தப்படும் குடைப்பூக்கொத்து மஞ்சள் மலருடைய நறுமணப் பூண்டு வகை; (தொ.) giant fennel, குடைப்பூக்கொத்துச் செடி வகை.

**fen'ugreek**, *n.* வெந்தயம், குதிரை மருத்துவத்தில் பயன் படுத்தப்படும் பயற்றினச் செடிவகை.

**feoff**, *n.* நிலமானியம், படை முதலிய துறை ஊழியவகையில் ஊழியத்துக்கீடாக அளிக்கப்படும் நிலவுரிமை; *v.* ஊழியத் துக்கீடாக நிலமானியம் வழங்கு.

**feoffee'**, *n.* ஊழியத்துக்கீடாக நிலமானியம் வழங்கப் பெற்றவர்.

**feoff'er**, *n.* ஊழியத்துக்கீடாக நிலமானியம் வழங்குபவர்.

**feoff'ment**, *n.* ஊழியமானியக்கொடை, பட்டய நிலவுரிமை வழங்கப்பட்ட முறைமை.

**feoff'or**, *n.* = feoffer.

***fer'ae natur'ae***, (ல.) *a.* இல்வளம்படாத, காட்டில் வாழ்கிற.

**fer'al** [1], *a.* இயற்கை நிலையிலுள்ள; பழக்கப்படாத, பண் படாத, காட்டுநிலையில் உள்ள, விலங்கியல்புள்ள.

**fer'al** [2], *a.* இழவுக்குரிய; உயிருக்கு ஊறுவிளைவிக்கக்கூடிய.

**fer de lance'**, *n.* தென் அமெரிக்க மிகு வெப்பமண்டலத்தைச் சேர்ந்த பெரிய நச்சுப்பாம்பு வகை.

**fe'retory**, *n.* திருத்தொண்டரின் நினைவுச் சின்னங்களுக்கான கோயில், பள்ளிப்படை.

**fer'ial**, *a.* விடுமுறைநாளுக்குரிய; விழா நோன்பு தவிர்த்த நாளுக்கு உரிய.

**fer'ine**, *a.* = feral [1].

**Fering'hee, Fering'hi,** *n.* இந்தியர்கள் வழக்கில் ஐரோப்பியர்; இந்தியாவில் பிறந்த போர்ச்சுக்கீசியர், பறங்கியர்.

**ferm'ent[1],** *n.* புளிப்பு; புளிப்பு மா; புளிக்கச்செய்யும் பொருள்; புளித்தல்; பொங்குதல்; கிளர்ச்சி; கொதிப்பு; கலகம்.

**ferment'[2],** *v.* புளித்துப்பொங்கு; புளித்துப் பொங்கவை; நுரைத்தெழு; நுரைத்தெழச்செய்; கலக்கு, கிளறு; வேதிடு, ஒத்தடங்கொடு.

**ferment'able,** *a.* புளிப்பேறத்தக்க.

**fermenta'tion,** *n.* புளித்தல், புளித்தெழும்புதல்; பொங்குதல்; மனக்கலக்கம்; கிளர்ச்சி.

**ferment'ative,** *a.* நுரைகொள்விக்கிற; புளிப்பேறச் செய்கிற; புளிப்பேறியதனுல் உண்டான; புளித்துக் கொண்டிருக்கிற.

**fern,** *n.* சூரல், பெரணி, சிற்றிலைப் படர்செடியினம்.

**fern'ery,** *n.* சூரல் பாத்தி, பெரணிவகைகளைப் பேணி வளர்க்கும் இடம்.

**fern'-owl,** *n.* குருவி வகை; குறுங்காதுடைய ஆந்தை வகை.

**fern'shaw,** *n.* சூரல் புதர், பெரணிச் செடிகளின் தூறு.

**fero'cious,** *a.* அச்சந்தருகிற; முரட்டுக்குணமுள்ள; கொடிய.

**fero'city,** *n.* முரட்டுக்குணம்; இரக்கமற்ற கொடுஞ்செயல்.

**fe'rox,** *n.* பெரிய ஏரி வரால்மீன் வகை.

**fe'rrate,** *n.* இரும்புசார்ந்த உப்புவகை.

**fe'rreous,** *a.* இரும்புக்குரிய; இரும்பு அடங்கிய.

**fe'rret[1],** *n.* முயல்களை வளைகளினின்றும் துரத்திப்பிடிப்பதற்கும் எலிகளைக் கொல்வதற்கும் பழக்கிப் பயன்படுத்தப்படும் மரநாய் வகை; தேடுபவர்; துப்பறிபவர்; *v.* மரநாய் வகைகளைக் கொண்டு வேட்டையாடு; துரத்து; வளைகளிலிருந்து அகற்று; தந்திரமாகத் தேடு; தேடிப்பிடி; கிளறித் தேடு; மறைவிடம் தேடி வெளிப்படுத்து.

**fe'rret[2],** *n.* தடித்த இழைக்கச்சை.

**ferr'ety,** *a.* மரநாய் வகை போன்ற.

**fe'rriage,** *n.* ஓடத்தில் ஏற்றிச்செல்லுதல்; ஓடக்கூலி.

**fe'rric,** *a.* இரும்பு சார்ந்த; மூவிணை இரும்பு அடங்கிய; (தொ.) ferric acid, இரும்பகக்காடி.

**ferrif'erous,** *a.* இரும்புபடுகிற, இரும்பு அடங்கிய; இரும்பு விளைவிக்கிற.

**Fe'rris wheel,** *n.* பொருட்காட்சிகள் முதலியவற்றில் மக்கள் கருத்தைக் கவரும் வகையில் தன் சுற்றுவட்டவரையில் மக்கள் அமர்வதற்கான இருக்கைகளைத் தாங்கிக் கொண்டு செங்குத்தாகச் சுழலும் மாபெரும் சக்கரம்.

**ferro-conc'rete,** *n.* எஃகு உட்காப்புக்கொண்ட திண்காரை.

**ferro-magnet'ic,** *a.* நேர்காந்தத் திறம் கொண்ட; நேர்காந்த ஆற்றல் சார்ந்த.

**ferr'o-print,** *n.* இரும்பக உப்பு வகைகளைக்கொண்டு எடுக்கப்படும் நிழற்படம்.

**fe'rrotype,** *n.* மெல்லிய இரும்புத்தகட்டின்மீது நேர்படியாக எடுக்கப்படும் முற்கால நிழற்பட முறை.

**fe'rrous,** *a.* ஈரிணைதிற இரும்பு கொண்ட; இரும்பு அடங்கிய.

**ferrugin'eous, ferru'ginous,** *a.* இரும்பின் துருச்சார்ந்த; இரும்பின் துருக்கலந்த; இரும்புக் கலவை சார்ந்த; துரு இரும்பின் நிறமான, செம்பழுப்பு நிறமான.

**fe'rrule,** *n.* பிரம்புகளின் உலோகப்பூண்; குழாய் முகப்புப் பூண்; இணைப்புச்சுரை.

**fe'rry,** *n.* தோணித்துறை; படகுப் பயணப்பாதை; பயணப்படகு; படகுப்பயணக்கூலி; படகேற்றிச்சென்று சுங்கம் பிரிக்கும் உரிமை; *v.* தோணியிலேற்றிச்செல்; தோணியில் கடத்து; தோணி செலுத்து; படகு வகையில் நீர் வழியில் போக்குவரத்துச் செய்; தொழிற்சாலையிலிருந்து வானவூர்தியை அதன் ஆற்றலையே பயன்படுத்தி வாணிக வினைக்களத்துக்குப் பறக்கவிட்டனுப்பு.

**fe'rry-bridge,** *n.* புகைவண்டித் தொடர் கரையிலிருந்து கரைக்குக் கடந்து செல்ல இடையே பாலம் போல நின்றுதவும் நீண்ட படகு.

**ferr'y-house,** *n.* ஓடக்காரனது வீடு; ஓடத்துறையில் தங்கு மிடம்; ஓடத்துறைச் சிற்றுண்டிச்சாலை.

**fe'rryman,** *n.* பயணப் படகோட்டி.

**fe'rrypilot,** *n.* தொழிற்சாலையிலிருந்து வான ஊர்தியை வாணிக வினைக்களத்துக்குப் பறக்கவிட்டுச் செல்லும் விமான மோட்டி.

**fert'ile,** *a.* செழிப்பான, வளமான; நிறைவினையுடைய; இனப்பெருக்கமிக்க; செயல்வகைமுறைகளில் நிறைதிறமுடைய; புதுப்புனைவு வளமிக்க.

**fertil'ity,** *n.* செழுமை, வளப்பம்; நிறைவு, வளச்செறிவு; பொலிவு, கருவளம்.

**fertiliza'tion,** *n.* கருவுறல்; கருக்கொள்ளச் செய்தல்; சினைப்படுத்தும் முறை; உரமூட்டல், உரவளம்.

**fert'ilize,** *v.* வளப்படுத்து, செழிப்பாக்கு; உரமூட்டு; சினைப்படுத்து, பொலிவி; (தாவ.) மகரந்தக் கலப்பு ஏற்படச்செய்.

**fer'tilizer,** *n.* கருக்கொள்ளச் செய்பவர்; சினைப்படுத்தும் பொருள்; நல்வள உரம், எரு.

**Fe'rula[1],** *n.* (தாவ.) குடைப்பூக்கொத்துச் செடிவகை.

**fe'rula[2],** *n.* ஒறுத்தற்கான கழி, பிரம்பு; ஆணைக்கோல்.

**fe'rule,** *n.* ஒறுத்தற்கான பிரம்பு அல்லது கழி; *v.* கோல் கொண்டு அடி, அடித்து ஒறு.

**ferv'ency,** *n.* வெப்பம்; ஆவல், ஆர்வம், உணர்ச்சி மிகுதியால் எழும் அன்பு; மிகு உணர்ச்சி, விதிர்விதிர்ப்பு.

**ferv'ent,** *a.* வெப்பமான; சுடர்விட்டு ஒளிர்கிற; தணியாப் பற்றுள்ள, ஆர்வமிகுந்த; செறிவார்ந்த.

**ferv'id,** *a.* மிகுவெப்பமான; சுடர்விட்டொளிர்கிற; கனன்றெழும் ஆவலுடைய; அழன்றெழும் உணர்ச்சி வாய்ந்த; பற்றுர்வமிக்க.

**ferv'our,** *n.* சுடர்விட்டொளிரும் நிலை; மிகுவெப்பம்; வெறியார்வம், உணர்ச்சி வேகம், தணியாப்பாசம்.

**Fes'cennine,** *a.* கீழ்த்தரமான வசை நிரம்பிய; (தொ.) Fescennine verses, வசைப்பாடல்கள்.

**fes'cue,** *n.* சிறுகழி; சுட்டிக்காட்டுவதற்காக ஆசிரியர் பயன்படுத்தும் கோல்; புல்வகை.

**fess, fesse,** *n.* (கட்.) கேடயத்தின் நடுப்பாகத்தின் குறுக்கே பட்டைபோன்று அமைந்துள்ள இரண்டு கிடைக்கோடுகள்.

**fesse'-point,** *n.* கேடயத்தின் மையம்.

**fes'tal,** *n.* விழா, கொண்டாட்டம்; *a.* விருந்துக்குரிய; பண்டிகைநாள் கொண்டாடுகிற; மகிழ்வார்ந்த.

**fes'ter,** *n.* நச்சு நீர் வடிக்கும் புண்; புரைத்துச் சீக்கொண்ட நிலை; *v.* (புண்–சிரங்கு) புரைத்துச்சீக்கொள், புண்ணகு, கொதி, நீர்வடி; சீக்கட்டு; சீறிக்கொள்; மனம் புண்ணுகு; அழுகு; புண்ணுக்கு.

**fes'tival,** *n.* விழா; விழாநாள்; விழாக்கொண்டாட்டம்; மகிழ்ச்சியில் திளைத்தல்; பருவகாலச் சிறப்பு இசை நிகழ்ச்சிகள்; *a.* விழாச் சார்ந்த; விழா நாளுக்குரிய.

**fes'tive,** *a.* விருந்துக்குரிய; விருந்தில் நாட்டமுள்ள; மகிழ்ச்சி நிரம்பிய, களிப்பான; உவகை கொந்தளிக்கிற.

**festiv'ities,** *n. pl.* விழாநடைமுறைகள்.

**festiv'ity,** *n.* களியாட்டு, கொண்டாட்டம், விழா.

**festoon',** *n.* தோரணம் பூத்தொங்கல், பிறைவடிவமாகத் தூக்கிய மாலை; *v.* தோரணங்கட்டு, தோரணங்களால் ஒப்பனை செய்; தோரணங்களாக அமை.

**fetch[1],** *n.* கொணர்தல்; தட்டிக்கழிப்பு; சூழ்ச்சி முறைச் செயல்; விரிகுடா முதலியவற்றின் வகையில் தொடர்வரை நீளம்; நெடுந்தொலை முயற்சி, சுற்று முயற்சி; *v.* சென்று கொணர்; போய் மீட்டுக்கொண்டுவா; இங்குமங்கும் கொண்டு

செல்; தருவி; விலையாகத் தருவி; கொண்டு கொடு; எடு; வருவி; வெளிக்கொணர்; மெய்ப்பாடுகளைத் தோற்றுவி; மகிழ்வு உண்டுபண்ணு; குருதி கசியவிடு; மூச்சுவெளி வரச்செய்; படுவி, அடி முதலியவற்றை ஏற்கச்செய்; மயக் கத்தினின்றும் மீள்வி; செய், செய்து முடி; செய்து காட்டு; பெறுவி; முயன்று பெறு; நெடுமூச்சுவெளிவிடு; சென் றடை, செல்; திரும்படச் செயலாற்று; (தொ.) fetch a circuit, fetch a compass, சுற்றி வளைத்துக்கொண்டுபோ; fetch and carry, குற்றேவல் செய்; fetch a pump, குழாய் தண்ணீர் இழுக்கும்படி செய்யும்பொருட்டு அதன் மேல்முனையில் நீர் ஊற்று; fetch off, இடர் அல்லது இன்னலினின்று மீட்டுக் கொண்டு வா; fetch out, வெளியே இழு; வளரச்செய்; fetch up, இயக்கந்தடுத்து நில்; வாந்தியெடு.

**fetch**[2], *n.* உயிருடனிருப்பவரது ஆவி இரட்டை, மறு ஆவி வடிவம்.

**fetch'ing**, *a.* கண்ணைக்கவர்கிற.

**fete**, *n.* விழா, பெருவிருந்து, களியாட்டம்; விடுமுறைநாள்; குழந்தைக்கு வைத்துள்ள பெயரையுடைய திருத்தொண்டரது விழாநாள்; *v.* விருந்தூட்டி மகிழ்வி; விழாக்கொண்டாடிச் சிறப்பி.

***fete champetre***, (பிர.) *n.* திறந்த வெளியில் நடைபெறும் விருந்து விழாக்கொண்டாட்டம்.

**fe'tial**, *n.* அரசியல் தூதர்களாகப் பணிசெய்த ரோமாபுரிச் சமயகுருமார்குழுவினர்; *a.* அரசியல் தூதர்களாகப் பணி செய்த ரோமாபுரிச் சமயகுருமார் குழுவுக்குரிய; அரசியல் தூதர் சார்ந்த, தூதாண்மை நிலைக்குரிய.

**fet'ich, fet'iche**, *n.*=fetish.

**fet'ichism**, *n.*=fetishism.

**fet'id**, *a.* முடைநாற்றமுடைய, புழுங்கி வாடைவீசுகிற.

**fet'ish**, *n.* உயிரற்ற போலி வழிபாட்டுப்பொருள்; மூடபக்தி, மூடநம்பிக்கை.

**fet'ishism**, *n.* உயிரிலாப் போலி உருவ வழிபாடு; தாயத்து முதலியவைகளில் நம்பிக்கை.

**fet'lock**, *n.* குதிரைக்காலடிக் குழைச்சு; குதிரைக்காலடி, குதிரைக்குளம்பின் மேல் மயிர்க்குச்சமுள்ள பகுதி.

**fet'or**, *n.* முடைநாற்றம்.

**fett'er**, *n.* கால்விலங்கு; தளை; தடை, தடங்கல்; *v.* கால் விலங்குகளாற் பிணை; தடு, தடங்கல் செய்.

**fett'ers**, *n. pl.* சிறைக்கட்டு, விலங்கிடு.

**fet'tle**, *n.* நிலைமை, ஒழுங்கு, முறை; *v.* ஆயத்தம் செய், ஒழுங்குபடுத்து, ஏற்பாடுபண்ணு; இங்குமங்கும் சுற்றித்திரி.

**fet'us**, *n.*=foetus.

**fet'wa**, (அரா.) *n.* இஸ்லாமிய வழக்கில் நீதிபதியின் தீர்ப்பு.

**feud**[1], *n.* குடிமரபுப்பகை, வழிவழிப்பகை; ஓயாச் சண்டை சச்சரவு நிலை; (தொ.) right of feud, தன்னையும் தன் உறவினர்களையும் பாதுகாத்துக்கொண்டு தீங்கிழைத்த வர்களை ஒறுப்பதற்கான உரிமை.

**feud**[2], *n.* நிலமானியம், படைத்துறை முதலியவற்றில் ஊழிய ஊதியத்துக்கீடான நிலவுரிமை முறை; ஊழிய மானிய நிலம்.

**feud'al**, *a.* ஊழியமானியத்துக்குரிய; மானிய நிலம் சார்ந்த; நிலப்பண்ணைமுறை சார்ந்த; (தொ.) feudal system, பண்ணை நிலவுரிமை முறை, குடியாட்கள் மேலாளர்களுக்குப் பணிந்து படைப்பணி புரிய வேண்டுமென்னும் கட்டுப் பாட்டின்பேரில் நிலவாரம் அமையும் முறை.

**feud'alism**, *n.* நிலப்பண்ணை உரிமை முறை.

**feudal'ity**, *n.* நிலப்பண்ணை முறை; நிலப்பண்ணை முறைக் கோட்பாடு; நிலப்பண்ணை முறையிற் கொள்ளப்பட்ட நிலம்.

**feud'ary, feud'atory**, *n.* பண்ணைநிலக் குடியுரிமையாளர், குடியானவர்; *a.* பண்ணைக்குடியுரிமையுடைய, கீழ் உரிமைப் பட்ட.

***feu de joie***, (பிர.) *n.* சிறப்புக் கொண்டாட்டங்களின்போது வணக்க முறையாக முழக்கப்படும் வேட்டுக்கள்.

***feuilleton***, (பிர.) *n.* புனை கதை-திறனாய்வு-எளிய கட்டுரைகள் முதலியவைகளுக்கெனச் செய்தித்தாள்களின் அடியில் கோடிட்டு ஒதுக்கப்படும் பகுதி.

**fev'er**, *n.* காய்ச்சல், சுரம், வெப்புக் காய்ச்சல் வகை; உணர்ச்சிப் பரபரப்பு; நரம்புத் துடிதுடிப்பு; மனக்கலக்கம்; நடுநடுக்கம்; கடுங்கவலை; *v.* காய்ச்சலுக்குட்படுத்து; காய்ச்சலுக்காளாகு.

**fe'vered**, *a.* காய்ச்சல் கண்டுள்ள; மனக்கொந்தளிப்புடைய.

**fev'erfew**, *n.* முன்னாட்களில் மருந்தாகப் பயன்படுத்தப்பட்டு வந்த பூண்டு வகை.

**fe'ver-heat**, *n.* சுரவெப்பம்; உடலின் கடுவெப்பு; கடுமையான மனக்கலக்கம்.

**fev'erish**, *a.* காய்ச்சல் குறிகளுள்ள; காய்ச்சலின் அடையாள மான; ஒரு சிறிது சுரமுடைய; மனக்கொந்தளிப்புடைய; அமைதியற்ற, பரபரப்பு மிக்க; அவாப்படபடப்புடைய; ஏங்கித் துடிக்கிற; இடவகையில் காய்ச்சல் பரவியுள்ள; சுரம் பரவத்தக்க.

**fev'erous**, *a.* காய்ச்சல் பரவியுள்ள; சுரம் உண்டாக்கவல்ல; சமநிலையற்ற, திடீர் மாறுபாடுகளைக் கொண்ட.

**few**, *a.* குறைவான, சில; பலரல்லாத; (தொ.) a few, ஒன் றல்லாத; சிலர்; ஒருவரல்லாத; a good few, quite a few, ஓரளவு நிரம்பிய எண்ணிக்கையுடைய; ஓரளவு போதிய எண் ணிக்கையுடையவர்கள்; every few days, சிலநாட்களுக்கு ஒரு முறையாக; in few, in few words, சில சொற்களில், சுருக்கமாக; not a few, பல; பலர்; some few, குறைந்த எண்ணிக்கையுடைய சிலர்; the few, சிறுபான்மையோர்; தேர்ந்தெடுக்கப்பட்ட சிலர்.

**few'ness**, *n.* எண்ணிக்கையின் சிறுமை.

**fez**, *n.* துருக்கிக் குல்லாய்.

**fi'acre**, *n.* பிரஞ்சு நாட்டு நான்கு சக்கர வாடகை வண்டி வகை.

***fiance***, (பிர.) *n.* மண உறுதிசெய்யப்பட்ட ஆண்.

***fiancee***, (பிர.) *n.* மண உறுதிசெய்யப்பட்ட பெண்.

**Fi'anna Fail**, *n.* ஐரிஷ் குடியரசுக் கட்சி.

**fias'co**, *n.* பெருந்தோல்வி; முறிவு; பழிப்புக்கிடமான இறுதி விளைவு.

**fi'at**, *n.* கட்டளை, ஆணை, தீர்ப்பு; உரிமையளிப்பு; உரிமைப் பத்திரம்; *v.* அதிகாரங்கொடு; ஒப்புறுதி அளி; (தொ.) fiat money, அரசியல் ஆணையினால் நாணயமாக்கப்பட்டுள்ள மாற்றமுடியாத தாள் பணம்.

**fib**[1], *n.* புளுகு, மன்னிக்கக்கூடிய சிறுதிறப் பொய்; *v.* சிறு புளுகு அள.

**fib**[2], *n.* மற்போரிற் குத்து, அடி; *v.* அடிகொடு, குத்துவிடு.

**fi'bre**, *n.* சிம்பு நாருரி; நார்ப்பொருள்; விலங்கு செடியினப் பகுதியான நாரியற்பொருள்; நூலிழை அமைப்பு; இழைம வகை, இழையமைதித் திறம்; சிறு வேர்த்துய்; சல்லிக் கிளைச்சுள்ளி.

**fi'bre-board**, *n.* கட்டிடத்திற் பயன்படுத்தப்படும் செயற்கை நார் அட்டை.

**fi'bre-glass**, *n.* கண்ணாடி நுண்ணிழையாலான இழைமப் பொருள்.

**fib'ril**, *n.* சிறுநாரியற்பொருள்; நாரின் நுண்ணிழைக்கிளை; வேரின் துய்; தசைநார் இழைத்துய்.

**fib'rin**, *n.* விலங்கு-தாவரம் ஆகியவற்றில் கட்டியாக உறையக்கூடிய கசிவு ஊனீர்.

**fib'roid**, *n.* நாரியல் அமைப்புடைய கருப்பைப் பரு; *a.* நாரியல் அமைப்புடைய; இழைநார்த்தோற்றம் வாய்ந்த.

**fib'roin**, *n.* நுண்ணிழைமப் பொருள், பட்டிழை-சிலந்திநூல் போன்றவற்றின் அடிப்படை ஆக்கப்பொருள்.

**fibrom'a**, *n.* நரப்புச்சிலந்தி, நரப்புக்கட்டி.

**fibrosit'is**, *n.* கீல்வாதச் சார்பான தசைநாரின் வீக்கம்.

**fib'ula,** *n.* காலின் வெளிப்புறத்திலுள்ள சிம்பு எலும்பு.

**ficelle',** *a.* நூலின் நிறத்தைக்கொண்ட.

**fi'chu,** *n.* பெண்டிர் தோளிலணியும் முக்கோணச் சவுக்கம்.

**fic'kle,** *a.* அடிக்கடி மாறும் இயல்புள்ள, நிலையற்ற; எளிதில் பேதுறுகிற.

**fic'tile,** *a.* களிமண்ணால் செய்யப்பட்ட; குயவன் தொழிலைச் சார்ந்த; மட்கலங்களைச் சார்ந்த.

**fic'tion,** *n.* போலி, புனைவு; போலிப்பொருள்; கற்பனைப் பொருள், புனை கூற்று; புனைகதை; புதினம், நாவல்; போலி நம்பிக்கை; தவறான கருத்து; கற்பனைக்கதை இலக்கியம்; (சட்) வழக்குகளில் எதிர்க்கட்சி மறுப்புக்கிடமளிக்கப் படாமலே நடக்கக்கூடியதென்று வாதிட இசைவளிக்கப்படும் செய்தி.

**ficti'tious,** *a.* போலியான, உண்மையல்லாத, புனைந்து கொள்ளப்பட்ட, பாவனையான; பொய்சார்ந்த; மரபொழுங்காக உண்மையென்று கொள்ளப்பட்ட.

**fic'tive,** *a.* கற்பனையால் உருவாக்கப்படுகின்ற, புனைந்துருவாக்கப்பட்ட.

**fid,** *n.* (கப்.) கூருருளையான மர முளை; பாய்மர உச்சியைத் தாங்கும் மரத்தினால் அல்லது இரும்பினால் ஆன சதுரச் சட்டம்; தடித்த ஆப்பு.

**fid'dle,** *n.* 'பிடில்', நரப்பிசைக்கருவி வகை; (கப்.) மேசை மீதிருந்து பொருள்கள் உருண்டு விழாமலிருப்பதற்கான தடுப்பு அமைவு; *v.* நரப்பிசைக் கருவிவகையை மீட்டு; வீண்காலம் போக்கு, சோம்பேறியாயிரு; விளையாட்டுத் தனமாக இரு; குறிக்கோளில்லாமல் இயங்கு; *int.* மண்ணாங்கட்டி! (தொ.) face as long as a fiddle, துயரார்ந்த முகம்; fit as a fiddle, செயலுக்குகந்த நன்முறுக்கு நிலையில்; play first fiddle, செயலில் முதன்மைப் பங்குபெறு; play second fiddle, செயலில் கீழ்ப்பட்ட பங்கு பெறு; play the fiddle, யாழ்வகை வாசி; சோம்பேறியாகப் பொழுதுபோக்கு.

**fid'dle-bow,** *n.* குதிரை முடியால் புனையப்பட்ட யாழ்வகை நாண்வில்.

**fid'dle-de-dee',** *int.* மண்ணாங்கட்டி! வீணட்டம்! (வெறுப்புக்குறிப்பு).

**fid'dle-faddle,** *n.* அற்பப்பொருள்; சிறு செய்தி; சோம்பேறி; *a.* அற்பமான, சிறுதிறமான; *v.* வேடிக்கை விளையாட்டுச் செய்; வீணாரவாரம் செய்; *int.* முட்டாள்தனம்!

**fid'dle-head,** *n.* கப்பலின் முகப்பிலுள்ள யாழ்வகை அணியொப்பனைப்பகுதி.

**fid'dler,** *n.* யாழ்வகை வாசிப்பவர்; கூலிக்காக யாழ்வகை மீட்டுபவர்; சிறு நண்டுவகை; (தொ.) Fiddler's Green, கடலோடிகளின் ஆர்வக் கனவுக்குரிய இன்பநிலம்.

**fid'dlestick,** *n.* யாழ்வகை மீட்டும் வில்; அற்பப்பொருள்.

**fid'dle-sticks,** *int.* மண்ணாங்கட்டி!

**fidd'ley,** *n.* நீராவிக் கப்பலின் விறகெரி பகுதியில் எஃகுப் பொதிவு; கப்பலின் சரக்கெறி புழையின் இருப்புச்சட்டம்.

**fidd'ling,** *a.* யாழ்வாசிக்கிற; சிறுதிறமான; வீணாகப் பொழுது போக்குகின்ற; அற்பசொற்பத்திற்காகப் பரபரப்புக் காட்டுகிற.

**fidel'ity,** *n.* மெய்ப்பற்று, அன்புறுதி; கடமைதவறாமை; கணவன் மனைவியர் பற்றுமாறா உறுதிப்பாடு; விசுவாசம்; மெய்ம்மையின் மாறுபடாநிலை; மூலத்துக்கு மாறுபடா முற்றிசைவு.

**fidg'et,** *n.* படபடப்பு, துடிதுடிப்பு, உடலின் அமைதியற்ற நிலை; சஞ்சலம்; உள்ளப் பரபரப்புநிலை; பரபரப்பாளர்; *v.* படபடப்புறு; மிகுகவலைப்படு; தொந்தரைப்படு; தொல்லை கொடு, அமைதி இழக்கும்படி செய்.

**fid'ibus,** *n.* பற்றுகுச்சு, மெழுகுதிரி-புகைக்குழாய் போன்றவற்றில் நெருப்புப் பற்றவைப்பதற்காக வழங்கப்படும் தாள் துணுக்கு.

**Fid'o,** *n.* ஓடுபாதையை மறைக்கும் பனிப்படலத்தை நெய்யாவி எரியூட்டின் மூலம் நீக்கி வானூர்திகள் இறங்குவதற்கு உதவும் அமைவு

**fidu'cial,** *a.* கணக்கிடுவதற்கு அடிப்படையாகப் பயன்படுகிற; நம்பிக்கை காட்டுகிற; பொறுப்பின் தன்மைவாய்ந்த.

**fidu'ciary,** *n.* பொறுப்பாளர், தர்மகர்த்தா; *a.* பொறுப்பாண்மை சார்ந்த; பொறுப்புக்குரிய; பொறுப்பாகக் கொண்ட; பொறுப்பாகக் கொடுக்கப்பட்ட; தாள் நாணய வகையில் பொதுமக்களின் நம்பிக்கை அல்லது பிணைப்பத்திரங்கள்மீது மதிப்புச் சார்ந்துள்ள.

***fid'us Acha'tes,*** (ல.) *n.* பற்றுறுதியுடைய சீடன், அணுக்கத் தொண்டன.

**fie,** *int.* சீ! சீ! கேவலம்!

**fief,** *n.* நிலமானியம், படை முதலிய துறை ஊழிய வகையில் சம்பள ஊதியத்துக்கீடாக அளிக்கப்படும் நிலவுரிமை.

**fie'-fie,** *a.* தகாத, ஒழுங்கற்ற, பழிப்புக்குரிய.

**field,** *n.* வயல், விளைநிலப்பரப்பு; வேலியால் சூழப்பட்ட மேய்ச்சல்நிலம்; கனிபொருள் வளம்தரும் பரப்பு; போர்க்களம், போர் நடைபெறும் இடம்; போர்க்காட்சியிடம்; போர்நடவடிக்கை; செயற்களம்; செயல் எல்லை; நடவடிக்கை எல்லை; ஆற்றல் எல்லை, செல்வாக்கெல்லை; மின்காந்த ஆற்றல்களம்; சூழ்காட்சியெல்லை; தொலைநோக்காடி நுண்ணோக்காடி காட்சிப்பரப்பெல்லை; சந்திப்பிடம்; விளையாட்டுக்களம்; ஆடுபவர் நீங்கலான கள ஆட்டக்காரர் தொகுதி; ஆட்டக்களநிலை; வேட்டையில் கலந்துகொள்பவர் தொகுதி; கேடயமுகப்பு; கேடயப்பரப்பின்தொகுதி; படம்-நாணயம்-கொடி ஆகியவற்றின் பின்னணித்தளப் பரப்பு; அகல்வெளி, கடல்-வான்-பனிப்பாறை போன்றவற்றின் பரந்த அகலிடம்; *v.* பந்தாட்ட வகைகளில் பந்தைத் தடுத்துத் திருப்பி அனுப்பு; பந்தை எடுத்துக்கொண்டு மீண்டோடு; தடுக்கும்நிலையில் நில்; பிடிக்கும் நிலையில் நில்; கள ஆட்டக்காரராகச் செயலாற்று; களத்தில் இறக்கு; கள ஆட்டக்காரர் நீங்கலாகப் பிறர் பக்கமாகப் பந்தயம் வை; (தொ.) field dressing, போர்க்களக் காயக்கட்டுக்குரிய தளவாடங்களின் தொகுதி; field events, பயிற்சிக்களரியின் திட்ட நிகழ்ச்சிகள்; field of view, field of vision, ஒரே நேரத்தில் காணப்படும் காட்சி எல்லை; keep the field, தன்னிலை விடாது காத்துக்கொண்டிரு; போர்முடிந்துவிடாமல் தொடர்வி; take the field, போராட்டந்தொடங்கு.

**field'-allow'ance,** *n.* களப்படி.

**field'-artill'ery,** *n.* பளுவற்ற களப்பீரங்கி; களப்பீரங்கித் தொகுதி.

**field'-batt'ery,** *n.* களத்திலுள்ள பீரங்கி அடுக்கு.

**field'-book,** *n.* நில அளவையாளர் களக்குறிப்பேடு.

**field'-cor'net,** *n.* தென் ஆப்பிரிக்க நகரக் குற்ற நடுவர்.

**fiel l'-day,** *n.* கள அணி வகுப்புநாள்; பெருநாள், அருஞ்சிறப்புக்குரிய நாள்; மன்றத்தில் முக்கிய விவாத நாள்.

**field'er,** *n.* பந்தாட்ட வகைகளில் பந்தைத் தடுத்து நிறுத்தித் திருப்பி அனுப்பும் ஆட்டக்காரர்.

**field'fare** *n.* மாரிக்காலத்தைப் பிரிட்டனில் கழிக்கும் இன்னிசைப் பறவை வகை.

**field'-glass,** *n.* வெளியே கொண்டுசெல்லத்தக்க தொலைநோக்காடி.

**field'-gun,** *n.* வண்டியில் பொருத்தப்பட்ட பளுவற்ற பீரங்கி.

**field'-hand,** *n.* உழவுப்பண்ணையின் புறவெளிப்பணியர்.

**field'-hos'pital,** *n.* தற்காலிகப் போர்க்கள மருத்துவ நிலையம், இயங்கு மருத்துவக்கூடம்.

**field'-ice,** *n.* பனிக்கட்டிப் பரப்பு.

**field'ing,** *n.* மட்டைப் பந்தாட்டத்தில் பந்தடிப்பவர்க்கெதிரான கள ஆட்டம்.

**field'-mar'shal,** *n.* படைத்துறை உயர்தரப்பணியாளர்.

**field'-mouse,** *n.* வயல்வெளி எலி.

**field'-night,** *n.* சிறப்பு நிகழ்ச்சிக்குரிய இரவு, அருஞ்சிறப்புக் குரிய இரவு நேர நிகழ்ச்சி.

**field'-notes,** *n. pl.* செயற்களக் குறிப்புக்கள்; புறவெளிக் குறிப்புக்கள்.

**field'-off'icer,** *n.* தளபதிக்கு அடுத்த உயர்படைத்துறைப் பணியாளர்.

**field'piece,** *n.* பளுவற்ற களப்பீரங்கி.

**field'-preach'er,** *n.* புறவெளிப் பேச்சாளர்.

**fields'man,** *n.* = fielder.

**field'-sports,** *n.* மதிற்புற விளையாட்டுகள், அகல்வெளிக் கேளிக்கைகள்.

**field'ward, field'wards,** *adv.* போர்க்களத்தை நோக்கி, போர்க்களத்திசையில்

**field'-work,** *n.* வயல்வெளிவேலை, உழவுத்தொழில்; ஆய்வுக் களத்துக்கு வெளியிலுள்ள இயல்வெளிக்கள ஆய்வுப்பணி; களவீரர் எழுப்பும் தற்காலிகப் பாதுகாப்பு அரண்.

**field'-works,** *n. pl.* படைவீரர் எழுப்பும் தற்காலிகப் பாதுகாப்பரண் வரிசை.

**fiend,** *n.* பேயிறை, சைத்தான்; பேயுரு, கூளி; மனித எல்லை மீறிய கொடுமைக்காரர், சண்டாளர்; குடிமுதலிய பழக்கங்களுக்கு அடிமைப்பட்டவர்; மட்டுமீறிப் பழக்க வழக்கங்களுக்கு அடிமைப்பட்ட வெறியர்; பொல்லாத பேர் வழி.

**fiend'ish, fiend'like,** *a.* பேயுருப்போன்ற; பேய்க்குண முள்ள, கொடூரமான.

**fierce,** *a.* மூர்க்கமான, கொடிய, கோரமான; கொடும் பகைமை வாய்ந்த; முரட்டுப்பாய்ச்சலுள்ள; கடுஞ்சீற்ற முடைய; வெறியார்வமுள்ள.

**fier'y,** *a.* தீப்போன்ற; தீ உட்கொண்ட; நெருப்புமிழ்கின்ற, அனல் கக்குகிற; செந்தீவண்ணமான, அழற்சிவப்பான; தீ வெப்பமான; எரியூட்டுகிற, காந்துகிற; கண்கள் வகையில் சுடரிடுகின்ற; பொறிபறக்கிற; அழன்றெழுகின்ற, கொழுந்துவிட்டெரிகின்ற; எளிதில் தீப்பற்றக்கூடிய; எளிதில் வெடிக்கத்தக்க; குதிரைவகையில் அடங்காத, துடிதுடிப்புடைய; மட்டற்ற அவாவெறியுடைய; உணர்ச்சிப் படபடப்புடைய; மனக்கொந்தளிப்புடைய; கடுகடுப்புமிக்க, வெடுவெடுப்புடைய, எளிதில் சீறியெழுகின்ற; விளையாட்டுக் களத்தின் நிலவகையில் கட்டாந்தரையான, கரடுமுரடான; பந்தெறிவகையில் ஆபத்தான உயரத்துக்குப் பந்தைச் செலுத்துகிற; (தொ.) fiery cross, (வர) ஸ்காத்லாந்து நாட்டில் போருக்கழைப்பாக முன்பு சுற்றியனுப்பப்பட்ட குருதிதோய்ந்த சிலுவை; fiery taste, காந்துதல்.

**fi'esta,** *n.* விழா, பண்டிகை நாள், விருந்து விழாக்கொண்டாட்டம்.

**fife,** *n.* படைத்துறை இசைக்குழல்வகை; *v.* படைத்துறை இசைக்குழல்வாசி; இசைக்குழலில் பண்திறம் இயக்கு.

**fif'er,** *n.* படைத்திற இசைக்குழல் வாசிப்பவர்.

**fife'-rail,** *n.* (கப்.) கயிறு கட்டுவதற்குள்ள முளைகளுடன் கூடிய முக்கியமான பாய்மரத்தைச் சுற்றியுள்ள தண்டவாளச் சலாகை.

**fifteen',** *n.* பதினைந்து; கால்பந்தாட்ட வகையில் 15 ஆட்டக் காரர்களடங்கிய குழு.

**fifteen'er,** *n.* பதினைந்து அசைச் செய்யுள்.

**fifth,** *n.* ஐந்தாவது; ஐந்தில் ஒருகூறு; (இசை.) ஐந்து மாத்திரை இடைவெளி; *a.* ஐந்தாவதான; ஐந்திலொன்றான; வேவுபார்க்கின்ற; (தொ.) fifth column, ஐந்தாம் படை, எதிரிக்கு உதவியான உள்நாட்டு மறைபகைவர்; பகை ஒற்றர்.

**fifth'ly,** *adv.* ஐந்தாவதாக, ஐந்தாவது இடத்தில்.

**fifths,** *n. pl.* ஐந்தாந்தரப் பொருள்கள், மிகமோசமான சரக்குகள்.

**fif'ties,** *n. pl.* ஒருவர் வாழ்க்கையில் அல்லது நூற்றாண்டில் 50-59-ஆம் ஆண்டுகட்கிடைப்பட்ட காலப்பகுதி.

**fif'tieth,** *n.* ஐம்பதாவது; ஐம்பதில் ஒருகூறு; *a.* ஐம்பதாவதான; ஐம்பதில் ஒன்றான.

**fif'ty,** *n.* ஐம்பது; ஐம்பது ஆட்களின் தொகுதி; ஐம்பது பொருள்களின் தொகுதி; *a.* ஐம்பது எண்ணிக்கையுடைய; பல; (தொ.) have fifty things to tell you, எவ்வளவோ பேசவேண்டியிருக்கிறது.

**fif'ty-fif'ty,** *n.* சரிசம இருபாதிப் பிரிவினை; சரிசம இருபாதி நிலை; *a.* பாதிபாதியான, சரிசம இருபாதியான; *adv.* பாதிபாதியாக, சரிசம இருபாதியாக.

**fig**[1], *n.* அத்திமரம்; அத்திப்பழம்; பயனற்ற சிறுபொருள்; ஒருசிறிது; (தொ.) do not care a fig for, ஒருசிறிது கூடப் பொருட்படுத்தவில்லை.

**fig**[2], *n.* உடை, தளவாடம்; நிலைமை, தோற்றம்; *v.* உடுத்து, ஒப்பனை செய், பகட்டான ஆடையணிவி; குதிரையைத் தட்டிவிடு, ஊக்கு.

**fight,** *n.* போர்; கைகலப்பு; சச்சரவு, பூசல், கலகம்; விலங்குபுள் வகைகளின் சண்டை; போட்டி; போர் ஆர்வம்; எதிர்ப்பு உணர்ச்சி; போர் ஆற்றல்; எதிர்ப்பாற்றல்; செயலுரம், செயல்முறுக்கு; *v.* போரிடு; போரிலீடுபடு; சண்டை செய்; போர் நடவடிக்கையிலீடுபடுத்து; விலங்கு-புட்களைச் சண்டைக்கேவு; தனித்து ஒருவருடன் மல்லாடு; சச்சரவிடு; போட்டியிடு; எதிர்த்து நில்; போராடு, கடுமுயற்சி செய்; எதிர்த்துச் சமாளி, முயன்று தடு; குறிக்கோளுக்காக நீடித்து உழை; வாதாடு; வழக்காடு; (தொ.) fight off, முயற்சியோடு எதிர்த்து விலக்கு; fight one's way, போரிட்டு முன்னேறு; fight out, முடிவுவரை போராடு, போராடி ஒரு முடிவுகாண்; fight shy of, நம்பிக்கையின்றி விலகி ஒதுங்கு; running fight, ஓடிக்கொண்டே நடத்தும் போர்; sham fight, பயிற்சிப்போர், பகட்டுப்போர்; காட்சியணிப் போர்; show fight, செயலூக்கமிழவாதிரு; எதிர்ப்பாற்றல் நீங்கப் பெறுதிரு; stand-up fight, வெளிப்படையான ஒழுங்கு முறைப்படியுள்ள போர்.

**fight'ing-cock,** *n.* பந்தயப் போர்க்கோழி; சண்டையில் ஆர்வமுள்ளவர்; (தொ.) live like fighting-cocks, சிறந்த இறைச்சியும் இன்தேறலும் பெறு.

**fig'-leaf,** *n.* அத்தியிலை; உருவச்சிலை அல்லது படத்தில் மறைவிடத்தை மூடும் அத்தியிலைத்தோற்றம்; மூடிமறைக்கும் வகை; போதா உடை; பாசாங்கு ஒழுக்கமுடைய மழுப்புதல்; சமாளிப்புமுறை.

**fig'ment,** *n.* புனைசுருட்டு, வெறுங்கற்பனைச்செய்தி.

*figurant,* (பிர.) *n.* குழுநிலையாட்ட நடிகன்; *fem. figurante.*

**figura'tion,** *n.* உருவங்கொடுத்தல், வடிவ அறுதிசெய்தல்; உருவ அமைதி, அறுதிசெய்த வடிவம்; தோற்றம், அமைப்பு; உருவரையமைதி; பண்புருவக அமைப்பு; உருவரை அணி ஒப்பனை வேலைப்பாடு; பூவேலைப்பாடு; (இசை.) முனைப்பான அணிச்சந்தம்.

**fig'urative,** *a.* உருவமைப்புச்சார்ந்த; உருவப்படுத்திக் காட்டுகிற; வடிவக்கலைசார்ந்த; உருமாதிரியான; உவம உருவகமான; அணிவளஞ்செறிந்த; அணிவகைகளை நிரம்ப வழங்குகிற; குறித்துக்காட்டுகிற, குறிப்பில் தெரிவிக்கிற; சுட்டிக்காட்டுகிற, ஒன்றுகூறி மற்றொன்று உய்த்துணர வைக்கிற.

**fig'ure,** *n.* புறவுரு, உருவம்; வடிவம், தோற்றம்; உடலுரு அமைதி, அங்கவடிவமைப்பு; ஆள்வடிவம்; ஆள்; கருத்துருவம், பண்புருவம்; சிறப்பியல்பு; சிறப்புத் தன்மை; உருவப்படிவம், சிலை; சித்திரம்; உருமாதிரி; மாதிரிச்சின்னம்; உருவரைப்படிவம்; உருவரைப்படிமம்; உருவரைப்படம்; விளக்கப்படம்; பிறப்புப்பட்டி, சாதகம்; எண் இலக்கம்; ஒப்பனைப் படிவம்; உவம உருவக அணிவகை; பேச்சுத் திற அணி; சொற்சித்திரம்; (இசை.) சுரவரிசைச் சித்திர அணி; ஆடல்முறை வகுப்பணி; பனிச்சறுக்காட்ட வகையில்

மையநோக்கிய அணி இயக்கப்போக்கு; (அள.) வாய்பாட்டுத் தலைச்சொல் அமைதி ; *v.* உருவப்படுத்திக்காட்டு ; கருத்தில் உருப்படுத்திக்காண் ; கற்பனைசெய், புனைந்துருவாக்கிக் காட்டு ; சின்னமாயமை, உருமாதிரியாயமை ; உருவமைதி வேலைப்பாட்டுடன் ஒப்பனைசெய் ; எண் இலக்கமிடு, விலை குறிப்பிடு ; கணி, கணக்கிடு ; தொகைப்படுத்து ; தோன்று ; முனைப்பாகக் காட்சியளி, உருக்கொண்டு இயலு ; பண்போவிய உருக்கொண்டு நடி; (தொ.) at a high figure, மிகு விலைக்கு ; at a low figure, மலிவாக ; cut a brilliant figure, make a brilliant figure, சிறந்த தோற்றமளி ; மிகுபகழுடன் விளங்கு; cut a figure, முனைப்பான தோற்றம் உண்டுபண்ணு ; முனைப்பாகத் தோற்றமளி ; cut a poor figure, make a poor figure, இரங்கத்தக்க தோற்றமளி, மோசமான தோற்றமளி ; figure as, வேறுவகையில் தோற்றமளி, குணவியல்பை மேற்கொள், பாவனையை மேற்கொள் ; figure of speech, சொல்லணி, இலக்கிய அணி ; figure out, கணக்கிட்டுத் தொகைகாண் ; தொகைபடு ; figure up, கணக்கிடு, தொகையை மதிப்பிடு ; income of five figures, 10,000-க்கும் 1,00,000-க்கும் இடையிலுள்ள வருவாய் ; keep one's figure, உடல் பருமனுகாமற் பேணு ; person of figure, புகழ்பெற்றவர், தனிச்சிறப்புடையவர் ; reach three figures, மரப்பந்தாட்டத்தில் நூறு ஓட்டங்கள் எடு.

**fig'ure-dance,** *n.* தெளிவான பகுதிகளுடன் வகுத்தமைத்த அணிநடனக் காட்சி.

**fig'ure-dancer,** *n.* வகுத்தமைத்த அணிநடனம் ஆடுபவர்.

**fig'ure-head,** *n.* கப்பலின் முகப்பிலுள்ள உருவத்தலை ; பெயரளவில் மட்டும் தலைமை ஏற்கும் பொம்மைத்தலைவர், உரிமையற்ற தலைவர் ; செயலற்ற போலித்தலைவர்.

**figurine',** *n.* சிறு உருவச்சிலை.

**fig'urist,** *n.* உருவங்களைக் கொண்டு விளக்குபவர், உருவங்களைப் பயன்படுத்துபவர்.

**fig'-wort,** *n.* முன்னர் மூலநோயைத் தீர்ப்பதாகக் கருதப் பட்ட மூலிகைச் செடி வகை.

**fil'agree,** *n.*=filigree.

**fil'ament,** *n.* இழை ; நார்வடிப் பொருள் ; (தாவ., உயி.) நூல் போன்ற உறுப்பு ; உருகாது அழலொளிவிடும் மின் குமிழ் இழை ; நீரோட்டத் துகள் வரிசையில் கற்பனையாகக் காணப்படும் வரியிழை ; தூசிழை வரி.

**filament'ary,** *a.* இழை போன்ற.

**fil'atory,** *n.* நூல் உருவாக்கும் அல்லது பின்னும் இயந்திரம், நூற் பொறி.

**fil'ature,** *n.* புழுக்கூட்டிலிருந்து பட்டுநூலை உருளையில் சுற்றுதல் ; பட்டு இழை சுற்றுவதற்கான அமைப்பு.

**fil'bert,** *n.* பண்படுத்தப்பட்ட பழுப்பு நீல நிறமுள்ள கொட்டைவகை ; கொட்டைவகை தரும் மரம்.

**filch,** *v.* களவு செய் ; சிறு அளவில் திருடு.

**file[1],** *n.* அரம், அராவுவதற்குரிய எஃகுக்கருவி ; பளபளப் பாக்கும் வகைமுறை; செப்பமிக்க இலக்கிய நடை அமைக்கும் வழிமுறை ; ஆழ்ந்த சூழ்ச்சித்திறமுள்ளவர் ; ஏமாற்றுபவர், ஏய்ப்பவர் ; ஆள் ; திருட்டுப் பேர்வழி ; *v.* அராவு ; அராவி மழமழப்பாக்கு ; சமப்படுத்து ; தேய்த்துக்குறை ; அராவிக் குறுக்கு ; இலக்கியநடையைச் செப்பமாக்கு ; (தொ.) bite file, gnaw file, வீண்வேலையில் ஈடுபட்டு முயற்சிசெய் ; file away, மேடுபள்ளமகற்றிச் சமப்படுத்து, கரடுமுரடான பகுதிகளை அராவியகற்று.

**file[2],** *n.* கோப்பு, இணைத்தொகுப்பு ; பதிவுமூலங்களைக் கோத்திணைத்துப் பேணுவதற்கான திண்கம்பி ; வேண்டும் போது எளிதாகப் பார்ப்பதற்காக ஒழுங்குபடுத்தப்பட்ட தகவல்தாள் சேகரம் ; சட்டப்பதிவுத் தொகுப்பு ; பத்திரிகை வரிசைத் தொகுப்பு; பெயர்வரிசை, பட்டியல்; *v.* கோத்திணை; தகவல் தாள்களை ஒழுங்காக வரிசையில் வை ; பொது ஆவணங்களிடையே சேர்த்து வை ; பதிவு செய் ; வழக்கு மன்றத்திற் கொண்டு வை.

**file[3],** *n.* படையின் முகப்பு வீரனுக்குப் பின்னுள்ள ஒற்றை அணிவரிசை ; ஒருவர்பின் ஒருவரான ஒற்றை ஆள்வரிசை ; சதுரங்கப் பலகையில் இடைநீளத்திலுள்ள ஒற்றைக்கட்ட வரிசை ; *v.* அணிவரிசையாகச் செல் ; அணிவரிசையில் செல்லும்படி கட்டளையிடு ; (தொ.) file off, file away, வரிசையாகச் செல் ; வரிசையாகச் செல்லும்படி கட்டளையிடு ; Indian file, single file, ஒருவர்பின் ஒருவரான ஒற்றை அணிவரிசை.

**fil'emot,** *n.* சருகிலை நிறம் ; *a.* சருகிலை நிறமுள்ள, தவிட்டு நிறத்தோடு கூடிய மஞ்சள் நிறமுள்ள.

**fil'et,** *n.* சதுரக் கண்ணுள்ள வலை வகை.

**fil'ial,** *a.* மகவுரிமை சார்ந்த, மகன் அல்லது மகளுக்குரிய ; புதல்வர் புதல்வியரிடமிருந்து எதிர்பார்க்கத்தக்க.

**filia'tion,** *n.* மகவுத் தொடர்பு ; நேர்மரபுவழி உறவு ; கிளை விரித்தல் ; மொழி இனக் கிளைத்தோற்றம் ; மக்கள் இனக் கிளைவழித்தோற்றம் ; மரபுக்கொடித் தொடர்பு ; மரபுக்கொடி ஒழுங்கு.

**fil'ibuster,** *n.* அயல்நாட்டோடு தன்நாட்டுச் சட்ட உரிமை யில்லாமலே சண்டையில் ஈடுபடுபவர் ; நாடுகடந்து கொள்ளை யிடும் படைவீரர்; சட்டமன்றத்தில் முட்டுக்கட்டை யிடுபவர்; *v.* அயல்நாட்டுடன் நாட்டுரிமையில்லாமலே போரில் ஈடுபடு ; சட்டமன்றத்தில் முட்டுக்கட்டையிடு.

**fil'ibusterer,** *n.* அயல்நாட்டோடு சட்டப்படி உரிமையற்ற சண்டையில் ஈடுபடுபவர்; சட்டமன்றத்தில் முட்டுக்கட்டை யிடுபவர்.

**fil'igree,** *n.* சரிகைச் சித்திரவேலை, கசவுப்பூவேலை; நொய்ம்மை யான மினுக்கு வேலைப்பாடு.

**fil'ing,** *n.* அராவுதல்.

**fil'ings,** *n.* அராவல் தூள் ; துண்டுத்துணுக்குப் பொடித் திரள்.

**fill,** *n.* உணவு குடிவகையில் நிறையளவு ; மன நிறை வளிக்கும் அளவு ; வள நிறைவு, ஏராளம் ; ஒருதடவை செறி நிறை அளவு ; *v.* நிரப்பு ; நிரம்பு ; திணித்து இடத்தை அடை ; விட்ட இடத்தை இட்டு நிரப்பு ; பூர்த்தி செய் ; குறை நிரப்பு ; பள்ளம் நிரப்பு, குளங் குட்டைகளைத் தூர்த்து விடு ; நிறைத்து இடங்கொள், இடம் நிரம்பியிரு ; இடங் கொளப் பரப்பு ; பரவி இடங்கொள் ; விரிவுறு, திரண்டு வளர் ; நிறை வளர்ச்சியுறு ; நிறையச் சேமித்து வை ; நிறைவூட்டு ; தெவிட்டுதலுறு ; மன நிறைவுபடுத்து ; பதவி நிரப்பு ; பதவியில் இடம் பெற்றமர்ந்திரு ; கடமை நிறை வேற்று ; கட்டளை நிறைவேற்று ; ஓய்வு வேளையைப் பயன் படுத்தி நிறைவு செய் ; பருத்தித் துணிகளில் இடைப்பிறி திட்டு நிரப்பிக் கலப்படம் செய் ; (தொ.) fill in, இட்டு நிரப்பு, வேண்டுவன பெய்து சரிசெய் ; fill out, ஏற்ற அளவுக்கு விரிவாக்கு ; முழு அளவில் விரிவுறு ; fill the bill, முக்கிய கூருயமை ; வேண்டிய யாவும் செய்தமை ; போதியதாயிரு ; fill up, முழுதும் நிறை ; வெற்றிடம் நிரப்பு; தூர்த்துவிடு ; sails fill, பாய்கள் காற்றினால் விரிக்கப் படுகின்றன.

***fille de chambre,*** (பிர.) *n.* மனைப்பணிப்பெண்.

***fille de joie,*** (பிர.) *n.* பொதுமகள், விலைமகள்.

**fill'et,** *n.* தலைப்பட்டி ; மயிர்க்கொடி ; தலைமுடிகட்டும் இழைக்கச்சை ; நாடா ; கட்டு ; பட்டை ; மேடான இடை விளிம்பு ; ஏட்டு மேலுறையின் பட்டைக்கோடு ; மெல்லிய நாடாப்போன்ற பொருள் ; விலா இறைச்சித் துண்டு ; இடுப் பின் எலும்படி இறைச்சித்துண்டு ; எலும்பு நீக்கிய கன்றின் காலிறைச்சிச் சுருணை ; மாட்டிறைச்சிச் சுருணை ; மீனிறைச்சிச் சுருணை ; கொழுமீன் கண்டம் ; (கட்.) கேடய முகட்டின் அடித் தளக் காற்கூறு ; (க-க.) கட்டுமான உருவின் இடைப்பட்டை ; *v.* தலைப்பட்டி வரிந்துகட்டு ; தலைப்பட்டியால் ஒப்பனை செய் ; இழைக்கச்சையால் கட்டு ; இழைக்கச்சை கட்டி அணிசெய் ; மீனைக் கண்டமாகத் துண்டுபடுத்து.

**fill'ing,** *n.* நிரப்புவதற்கோ தொளையடைப்பதற்கோ நிறைவு செய்வதற்கோ பயன்படும் ஒன்று ; வழங்குதல்.

**fil'lip,** *n.* சொடக்கு, விரல் நொடிப்பு; சுண்டியடித்த அடி, சுண்டுகை; சிட்டிகையளவு; சிறு துணுக்கு; தூண்டுதல்; *v.* சுண்டி அடி; விரல்களால் தெறித்து எறி; தூண்டுதல் கொடு, கிளறி ஊக்குவி; சொடக்கிடு, விரல் நொடி.

**fill'ister,** *n.* பலகணிக்கண்ணாடியின் சறுக்குச் சட்டம்.

**fill'y,** *n.* பெண் குதிரைக்குட்டி; துடுக்கான இளஞ்சிறுமி.

**film,** *n.* மென்தாள்; மெல்லிய சவ்வு; மென்தோல்; மென் படலம்; மென்பூச்சு; நீரில் மிதக்கும் மென்புரை; கண்ணை மறைக்கும் மென்திரை, பார்வை மங்கல்; மென்திரை முகமூடி; மெல்லிழை; மென்பசை பூசப்பட்ட நிழற்படத்தகடு; திரைப் படச் சுருள் தகடு; (தொ.) film star, திரைப்பட நட்சத்திரம், சிறந்த நடிகர்; film test, நடிகராகப் போகின்றவரின் நிழற் படச்சோதனை; the films, திரைப்படக் காட்சி.

**film'-fan,** *n.* திரைப்பட ஆர்வலர்.

**fil'my,** *a.* மென்புரைபோன்ற; மென்புரையாலான; மென் புரை மூடிய; வலைபோன்ற; மங்கலான; ஒளிமறைக்கிற.

**fil'oselle,** *n.* கழிவுப்பட்டு.

***fils,*** (பிர.) *n.* புதல்வர்.

**fil'ter,** *n.* வடிகட்டும் அமைவு, கசடகற்றி நீர்மம் கடந்து செல்லவிடும் மணல்-கரிப்படுகையமைவு; *v.* வடிகட்டு; ஊறிச்செல், ஊடாகச்செல்; துப்புரவாக்கு; தூய்மையாக்கு; செய்தி முதலியவற்றின் வகையில் கசிவுறு; வெளிப்படு.

**fil'ter-bed,** *n.* வடிகட்டு தளம்; மிகுதியாக நீர் வடிகட்டு தற்கான மணற்படுகை.

**fil'ter-paper,** *n.* வடிகட்டுதாள்.

**filth,** *n.* அருவருப்பான அழுக்கு; மாசு; கழிவுப்பொருள்; குப்பை; அழுக்குடைமை; தீட்டுடையது; தகாத நடை; இழி ஒழுக்கம்; கீழ்மக்கள் மொழி, கொச்சை மொழி.

**fil'trate,** *n.* வடிகட்டிய நீர்மம்; *v.* வடிகட்டு; ஊறிச்செல்.

**filtra'tion,** *n.* வடிகட்டுதல்; வடிகட்டுமுறை.

**fim'briate, fim'briated,** *a.* (தாவ., வில.) விளிம்பில் மயி ரிழையுடைய.

**fin,** *n.* துடுப்பு, மீனின் உகைப்பியக்க உறுப்பு; துடுப்புப் போன்ற உறுப்பு; வானூர்திப் பின்புறத்தின் நிமிர் நேர் விளிம்பு; நிமிர் நேர் விளிம்புடைய தகடு.

**fin'al,** *n.* இறுதி ஆட்டம், வெற்றி தோல்வி தீர்மானிக்கும் கடைசி விளையாட்டு; சொல்லின் இறுதி எழுத்து; இறுதி ஒலிக்குறி; இசையில் பண்ணின் முக்கிய சுரம்; கல்வித் தேர்வு வரிசையில் கடைசி ஆண்டிறுதித்தேர்வு; *a.* இறுதியான, கடைசியான, முடிவான; ஐயத்திற்கு இட மற்ற, அறுதியான, மாற்றமுடியாத; நோக்கம் சார்ந்த, முடிவுடன் தொடர்புடைய; (தொ.) final cause, அறுதி செய்யும் காரணக்கூறு; final clause, நோக்கம் குறிக்கும் உறுப்பு வாசகம்.

**fina'le,** *n.* நாடக இறுதி, கடைக்காப்பு; இசைநிகழ்வின் முடிப்பு, மங்களம்; முத்தாய்ப்பு, இறுதி மகுடம்.

**fin'alist,** *n.* கடை ஆட்ட உறுப்பினர், இறுதி ஆட்டத்தில் பங்குகொள்ளும் விளையாட்டுக்காரர்.

**final'ity,** *n.* முடிந்த முடிவு, கடைமுடிவு, மேல் தொடர்புக்கு இடமில்லாத முடிவு; ஐயத்துக்கிடமில்லா நிலை, அறுதி முடிவு; இறுதி நிகழ்ச்சி; அறுதிசெய்யும் மூலகாரணம்.

**fin'alize,** *v.* நிறைவேற்று, முடிவுக்குக்கொண்டுவா.

**fin'als,** *n. pl.* தேர்வு வரிசையில் கடைசி, இறுதித்தேர்வு; ஆண்டிறுதித் தேர்வு.

**finance',** *n.* பொதுநிதி; ஆட்சியாளரின் பண வருமானத் துறை; நாட்டுப் பொருள்வருவாய்த் துறை; பொதுநிதி ஆட்சி, பொதுச்செல்வ ஆட்சிமுறை; *v.* நிதி ஆட்சி செய்; பண விவகாரங்களில் ஈடுபடு; பணங்கொடு; பணமளித் துதவு, பணப்பொறுப்பு ஏற்றுக்கொள்; முதலீடு உதவு.

**finan'cial,** *a.* பொருள் பற்றிய, வருவாய் சார்ந்த, நிதிநிலைக் குரிய; (தொ.) financial year, நிதியாண்டு, பொதுக் கணக்குகளுக்குரிய வரையறுக்கப்பட்ட ஆண்டுக்காலம்.

**finan'cier[1],** *n.* பொருளியல் ஆட்சி வல்லுநர், நிதிவிவகாரங் களில் திறமையுடையவர்; பொது வருமானத்துறை ஆட்சி யாளர்.

**financier'[2],** *v.* பணங்கொடுக்கல் வாங்கல் செய்; பணத்தை மோசடி செய்.

**finch,** *n.* குருவி வகை.

**find,** *n.* கண்டுபிடிப்பு; கண்டுபிடித்த பொருள்; புதையல்; கனிப்பொருள் முதலியவற்றின் அடிநிலத்தடக்காட்சி; வேட்டையில் நரி இருக்கும் இடம் கண்டுபிடித்தல்; *v.* கண்டு பிடி, தேடி எடு, முயன்று காண்; கண்டுணர், ஆய்ந்து முடிவுசெய்; நேரிட்டறி; பட்டறி, கண்டுகொள்; எதிருறு, கண்ணுறு, நேர்பட்டுக்காண்; காண்; அடை; எய்தப் பெறு; தேடிக்கொடு; அறியப்பெறு, தெரியப்பெறு; (தொ.) find one's account in, போதிய ஆதாய நலம் கிடைக்கப்பெறு; find oneself, தன் சிறப்பு வாழ்க்கைத்துறை கண்டறி, தன் தேவைகளுக்குத் தானே வேண்டும் ஏற்பாடு செய்துகொள்; find one's feet, கால் நிற்கும் உறுதி அடையப் பெறு; புதிய சூழ்நிலையைச் சமாளிக்கும் ஆற்றல் கைவரப் பெறு; find out, கண்டுபிடி; தீர், வழிகண்டுபிடி; உளவறி; sure find, தேடும் பொருள் கட்டாயம் காணத்தக்க இடம்.

**fin'der,** *n.* இலக்கடைவுக்கருவி, பெரிய தொலைநோக்காடி யைப் பொருள்மீது பொருத்த உதவும்படி அதனுள் அமைந்த சிறு தொலைநோக்காடி; உருப்பெருக்கியின் குறியடைவு அமைவு; நிழற்படக்கருவியின் இலக்கடைவு அமைவு.

***fin de siecle,*** (பிர.) *a.* பத்தொன்பதாம் நூற்றுண்டு இறுதி யின் தனிப்பட்ட இயல்புடைய; முன்னேற்றமான; தற்காலத் திற்குரிய; புதுமையான; சரிகிற.

**fine[1],** *n.* இறுதி; தண்ட வரி; தண்டனைக்கீடான கட்டணம்; அபராதம்; வினைமுறை ஈடான சிறப்பு வேலைக்கட்டணம்; மரபுரிமைக் கட்டுப்பாட்டிலிருந்து தப்புவதற்கான போலி வழக்கு நடவடிக்கை; *v.* தண்டனைத் தீர்ப்புச் செய்; தண்டனைக் கீடான வரிசுமத்து; அபராதம்விதி; பதவி உரிமைகளுக் கீடான கட்டணம் செலுத்து; (தொ.) in fine, முடிவாக; சுருக்கமாக.

**fine[2],** *a.* நேர்த்தியான; செப்பமுடைய, அழகு வாய்ந்த; உயர்ந்த, மேன்மையான; பண்படுத்தப்பட்ட, சீர் செய்யப் பெற்ற; தெளிவான; தூய்மைமிக்க, கலப்பற்ற; தங்க வகையில் ஒன்பதரை மாற்றுடைய; வெள்ளி வகையில் உயர் தூய்மைப்படியுடைய; மற்ற பொருள்கள் வகையில் ஆயிரவீதக் கணக்கில் உயர் தூய்மை நயமுடைய; சுவை நயமுடைய; நுண்ணயமுடைய; நுண் துகளான; மிக நுண் துகளடங்கிய; மிக நொய்தான, மிக மெல்லிய; கூர்மை யான; உயர்ந்த உணர்ச்சியுடைய; ஆர்வஞ் செறிந்த; கூருணர்ச்சியுடைய, நுண்ணய உணர்வுடைய; மட்டுமீறிய மிகு நுணுக்க உயர்வுடைய; பகட்டழகு வாய்ந்த, பகட்டாக அழகுசெய்துகொள்கிற; குறிப்பிடத்தக்க; முனைப்பான; *v.* தேறலைத் தெளியவை; தெளிவுபடு; நேர்த்தியான தாக்கு; நுண்துகளாக்கு; மிக நுண்படிகளில் சிறுகச் சிறுக மாற்றியமை; தூய்மையாக்கு, புடமிடு; (தொ.) fine arts, நுண்கலைகள், கவின் கலைகள், அழகுணர்ச்சி அல்லது கலையுணர்ச்சியைத் தூண்டும்கலைகள்; fine chemicals, சிறு அளவில் தூய்மையான நிலையில் பயன்படுத்தப்படும் வேதிப் பொருள்கள்; fine gentleman, fine lady, நாகரிக மானவர்; சோம்பேறித்தன மானவர்; வேலை செய்தல் இழுக் கென எண்ணுபவர்.

***fine champagne,*** (பிர.) *n.* உயர்தர பிராந்தி வகை; மேன்மை யான இன்தேறல் வகை.

**fine'-draw,** *v.* கண்ணுக்குப் புலப்படா வகையில் இரண்டு துண்டுத் துணிகளைச் சேர்த்துத் தைத்திணை.

**fine'-drawn,** *a.* மிக மென்மையான; நுட்பமான; அளவு கடந்து மெல்லிய.

**fine'ish, fin'ish[1],** *a.* ஓரளவு சிறந்த; சிறிதே உயர்ந்த.

**fin'ery[1],** *n.* பகட்டணிமணி; பகட்டாடை ஒப்பனை; அணி யலங்காரத் தோற்றம்; புதுப்பாணி நடையுடை.

**fin'ery**[2], *n.* துப்புரவுச்சாலை; வார்ப்பிரும்பைத் தேனிரும்பாக்கும் ஆலை, தேனிரும்பிலிருந்து எஃகு உருவாக்கும் உலைக்களம்.

**fine'-spok'en**, *a.* அழகுத் தொடர்களைப் பயன்படுத்துகிற.

**fine'-spun**, *a.* மிக நொய்தான, மிக மெல்லியதாக நூற்கப்பட்ட; மட்டுமீறிய நுட்பம் வாய்ந்த; செயலுக்கு ஒத்துவராத.

**finesse'**, *n.* சூழ்ச்சி நுண்ணயம், தந்திர நுட்பம்; நய நுணுக்கத் திறம், நுட்ப வேறுபாடு பிரித்தறியும் ஆற்றல்; நய நுட்பச் சூழ்ச்சி; சீட்டாட்டத்தில் மேற்சீட்டைக் கையில் வைத்துக்கொண்டே சீட்டிறக்கி எதிரியின் உச்சச் சீட்டை ஒதுக்கிவிட எண்ணும் துணிச்சலான சூழ்ச்சிநய முயற்சி; *v.* நுணுக்க நயங்காட்டிச் சூழ்ச்சியாகப் பொறியில் விழ்த்து; சீட்டாட்டத்தில் எதிர்த் துருப்பினை இறக்கச் செய்யும் சூழ்ச்சி முறையைக்கொள்.

**fing'er**, *n.* விரல்; கட்டை விரலல்லாத மற்ற நான்கு விரல்களுள் ஒன்று; கையுறையின் விரற்பகுதி; விரல் வடிவான பொருள்; விரலகலம்; ஊறுணர்ச்சி; காலுறை செய்வதற்குரிய தடித்த கம்பளி நூல் வகை; *v.* விரலால் தொடு; விரலால் தடவிப்பார், விரலால் உருட்டிப்பார்; இசைக்கருவி மீட்டு; இசைமானத்தில் மீட்டுதற்குரிய விரலைக்குறியிட்டுக் காட்டு; கையாடு, மோசடிசெய்; கைக்கூலியாகப்பெறு; (தொ.) burn one's fingers, தலையிட்டுத் தீங்குக்கு ஆளாகு, துடுக்குத்தனத்தின் பயனைக் கண்டுகொள்; have a finger in the pie, செயற்பொறுப்பில் பங்குகொள்; have one's fingers all thumbs, அருவருப்பாகச் செயலாற்று, நயமின்றிக் கையாளு.

**fing'er-al'phabet, fing'er-language**, *n.* செவிடர்கள் உணர்தற்குரிய கைச்சைகைக் குறியீட்டுத் தொகுதி.

**fing'er-board**, *n.* இசைக்கருவியில் விரல்களை அழுத்துவதற்குரிய கட்டை.

**fing'er-bowl**, *n.* மேசையில் விரல்களைக் கழுவிக்கொள்வதற்காக வைக்கப்படும் நீர்க்கலம்.

**fing'er-breadth**, *n.* விரலகலம், முக்கால் அங்குலம்.

**fing'ered**, *a.* விரல்களுள்ள; விரல்போன்ற அமைப்புள்ள.

**fing'er-fern**, *n.* மண்ணீரல் நோய்களுக்கு மருந்தாகப் பயன்பட்டு வந்த சூரல்வகைச் செடி.

**fing'er-fish**, *n.* விண்மீன் போன்ற அமைப்புக்கொண்ட கடலுயிர் வகை.

**fing'er-glass**, *n.*=finger-bowl.

**fing'ering**[1], *n.* விரலால் தொடும் முறை அல்லது செயல்; இசைக்கருவியினை மீட்ட ஏற்ற விரல்களைத் தேர்ந்தெடுத்தல்.

**fing'ering**[2], *n.* காலுறைகளுக்குரிய முரட்டுக்கம்பளி இழை.

**fing'erling**, *n.* சிறு கடல் மீன்வகை; மிகச்சிறு உரு அல்லது உயிர்.

**fing'er-mark**, *n.* விரற் குறி; விரலால் ஏற்பட்ட அழுக்குக் கறை.

**fing'er-plate**, *n.* விரலழுக்குப்படாமல் கதவினைக் காக்குத் தகடு.

**fing'er-post**, *n.* வழிகாட்டும் கம்பம், கைகாட்டுமரம்.

**fing'er-print**, *n.* விரல் அடையாளம், கைநாட்டுக்குறி.

**fing'er's-breadth**, *n.*=finger-breadth.

**fing'er-stall**, *n.* விரலுறை.

**fin'ial**, *n.* (க-க.) கூரைமுகட்டொப்பனை வேலைப்பாடு; தூபி முகட்டின் இலைக்கொத்தணி ஒப்பனை.

**fin'ical**, *a.* அளவுமீறிய செயற்கை நேர்த்திவாய்ந்த; பகட்டாரவாரமான, போலிச்செப்பமுடைய; செயற்கைத் தன்மை வாய்ந்த; போலிப்பகட்டான.

**fin'icking, fin'ikin**, *a.* முக்கியமற்ற செய்திகளில் அதிக கருத்துச் செலுத்துகிற; போலியாகப் பகட்டுகிற; பொய் ஆசாரமுடைய.

**fin'is**, *n.* இறுதி, முடிந்த முடிவு.

**fin'ish**[2], *n.* இறுதிக்கட்டம்; நரிவேட்டையின் இறுதிப்படி; முடிவு; முடிவுற்றநிலை; முழுநிறைவு, நிறைதிட்பம்; செயல் தீர்ந்த செப்பம்; நிறைவளிப்பது, நிறைவளிக்கும் கூறு; *v.* முடித்துவிடு; முடிவுக்குக் கொண்டுவா; அழி; செய்து முடி; முடிவுறு; நிறைவுசெய், செய்துதீர்; நிறைவூட்டு; இறுதிவரை தீட்டு; கடைசிப்பூச்சுக்கொடு; முடிதிறம்கூட்டு; பயிற்சி முற்றுவி, முத்தாய்ப்பளி; முடிவடை; தொடர்பறு, நின்றுவிடு, ஓய்ந்துவிடு; முடிவாக நிகழ்வுறு; முடிவாகு; (தொ.) fight to a finish, ஒருதிறத்தவர் முற்றிலும் தோல்வியுறும்வரை போராடு.

**fin'isher**, *n.* செய்தொழிலில் முடிவான செயல் தீர்வாக்கும் தொழிலாளர்; செயல்தீர்வு முற்றுவிக்கும் இயந்திரம்; கடுந்தாக்கு; தோல்வியுறச்செய்யும் பொருள்; உறுபேரடி, அழுத்தி வீழ்த்துகின்ற பேரடி; அழுத்தும் மாத்துயர்.

**fin'ite**, *a.* முடிவுடைய; எல்லையுடைய; வரையறைக்குட்பட்ட; அளவிற்குட்பட்ட; (கண.) எண்வகையில் வரைநிலையான; (இலக்.) வினைவகையில் முற்றான.

**Finn**, *n.* பின்லாந்து நாட்டு இனமக்களில் ஒருவர்.

**finn'an, finn'an haddock**, *n.* புகையூட்டுப் பதனமுறையில் பக்குவபபடுத்தப்பட்ட மீன் இனவகை.

**finn'er**, *n.* முதுகுத் துடுப்புடைய திமிங்கில வகை.

**Finn'ic**, *a.* பின்லாந்து நாட்டு மக்களினத் தொகுதியைச் சார்ந்த.

**Finn'ish**, *n.* பின்லாந்துமக்கள் மொழி; *a.* பின்லாந்து மொழியைச் சார்ந்த; பின்லாந்து மக்களைச் சார்ந்த; பின்லாந்து நாட்டுமக்கள் இனத் தொகுதிசேர்ந்த.

**finn'y**, *a.* துடுப்புகள் கொண்ட; மீன்துடுப்புப்போன்ற; மீனைச் சார்ந்த; மீன்கள் நிறைந்து காணப்படுகிற.

**Fin'sen light**, *n.* கட்புலப்படா ஊதா மேற்கதிர் உண்டாக்கும் கருவி.

**fiord**, *n.* நார்வே நாட்டில் செங்குத்தான மலைப்பாறைகளுக்கிடையேயுள்ள இடுக்கமான கடற்கால்களில் ஒன்று; இடுங்கு விடர்கழி.

**fi'orin**, *n.* வளைகொடிப் புல் வகை.

**fir, fir'-tree**, *n.* கனங்குறைந்த உயர்தரக் கட்டைதரும் குளிர் மண்டல ஊசியிலை மரவகை.

**fir'-apple, fir'-ball, fir'-cone**, *n.* ஊசி இலை மரவகையின் காய்.

**fire**, *n.* தீ; நெருப்பின் அழல்; தீநா, தணற்கொழுந்து; சுடர்; அனற்பொறி; எரிதல்; அடுப்புக்கனல்; உலை நெருப்பு; காட்டுப்பெருந்தீ; அழிவுப்பெருந்தீ; (செய்.) மின்னல்; எரிமலை அககனல்; வெப்பம்; வெப்பு; காய்ச்சல்; அழன்றெழும் உணர்ச்சி; எழுச்சி; சினம்; கொதிகிளர்ச்சி; ஆர்வக்கனல்; உயிர்த்துடிப்பு; கற்பனை; கவிதையெழுச்சி; வேட்டு; வேட்டுத் தீர்வு; வேட்டுத்தொகுதி; தாக்குரை; கண்டனத்தொகுதி; எதிர்ப்பு; *v.* தீவை; வெடி முதலியவை வகையில் நெருப்புப் பற்றவை; வெடி-சுரங்க வகைகளில் தீப்பற்றிக்கொள்; வெடிக்கவை; வேட்டுத்தகர்; வணக்கமுறை வேட்டிடு; வெடி தீர்வுறு; வெப்பமூட்டு; தீயில் வாட்டு; மட்கல முதலியன சுட்டு வேகவை; செங்கல் சுடு; சூடிடு; செயற்கை வெப்பத்தால் புகையிலை-தேயிலை முதலியவற்றைப் பதனம் செய்; வெப்பமடை; சிவப்பாக்கு; விறகிடு; எரிபொருளூட்டு; சுட்டுத் தள்ளு; வெடித்து வீசியெறி; தள்ளு; வெளியேற்று; கற்பனை தூண்டு; ஊக்கமூட்டு; கிளர்ச்சியூட்டு; உணர்ச்சியூட்டு; சினமூட்டு; கிளர்ந்தெழு; சினந்தெழு; (தொ.) catch fire, take fire, தீப்பற்றிக்கொள்; எரியத் தொடங்கு; தூண்டுதல் பெற்று எழுச்சிகொள், ஊக்குதல் பெற்றுக் கிளர்ந்தெழு; fire and brimstone, நரகம்; கடுஞ்சின வெறுப்புக்குறிப்பு; fire and sword, பேரழிவு; fire away, சுடத்தொடங்கு; முன்னேறு; போய்விடு; துப்பாக்கியிலிருந்து எறிபடையை இயக்கு; fire broadside, கப்பலின் ஒரு பக்கத்திலுள்ள பீரங்கிகளைச் சுடு; fire off, சுடு, வேட்டுத்தீர்; வெடிதீர்; தொடர்ந்து விடாமல் வினுக்களை எழுப்பு; விடாமல் தொடர்ச்சி

யாகப் பேசு ; fire out, மனிதர்களை வெளியேற்று ; பதவி நீக்கு ; தள்ளு ; fire salute, குண்டுவெடித்து வணக்கமுறை காட்டு ; fire up, வெப்புற்றெழு ; திடீரென்று சீறியெழு ; on fire, கொழுந்துவிட்டு எரியும் நிலையில்; உணர்ச்சிக்கொந்தளிப்புற்று ; set fire to, set on fire, தீக்கொளுத்து, எரியூட்டு ; தீப்பற்று ; set Thames on fire, குறிப்பிடத்தக்க பெருங்காரியம் செய்; strike fire, உராய்ந்து பொறி பறக்கச் செய் ; சூடுபிடி ; under fire, எதிரியின் குண்டுகளுக்கு இலக்கான நிலையில்.

**fire'-alarm**, *n.* நெருப்பு பற்றியதை அறிவிக்கும் தானியங்கிக் கருவி.

**fire'-arms**, *n. pl.* சுடுபடைக்கலங்கள், வேட்டுப்படைக் கருவிகள், வெடிக்கும் போர்க்கருவிகள்.

**fire'back**, *n.* சுமத்திரா தீவுக்குரிய சிவந்த முதுகினைக் கொண்ட வேட்டைப் பறவை வகை ; அடுப்பின் பின்சுவர் ; பின்சுவர் அணியிருப்புத்தகடு.

**fire'-ball** *n.* பெரிய விண்வீழ் எரிகோளம்; கோளவடிவமான மின்னல் ; எரிபொருள்கள் நிறைக்கப்பட்ட பந்து வடிவமான போர்க்கருவி.

**fire'-balloon'**, *n.* வெப்பாவிக்கூண்டு, வெடிப்புமூலம் வெப்பூட்டிப் பளுவற்றதாக்கப்பட்ட ஆவிக்கூண்டு.

**fire'-bird**, *n.* தேனீயை உண்ணும் பறவை வகை.

**fire'-blast**, *n.* செடியினந் தாக்கும் நோய்வகை.

**fire'-blight**, *n.* கனிமரங்களுக்குக் கரிந்த தோற்றத்தைத் தரும் காளான் நோய்வகை.

**fire'-box**, *n.* நீராவி இயந்திரத்திலுள்ள நெருப்பறை.

**fire'-brand**, *n.* எரிகொள்ளி, எரியும் மரத்துண்டு ; சச்சரவினைத் தூண்டுபவர் ; கலகக்காரர்.

**fire'-brick**, *n.* தீக்காப்புடைய செங்கல்.

**fire'-brigade'**, *n.* தீயணைப்புப்படை.

**fire'-clay**, *n.* சுடு செங்கலுக்குரிய களிமண்.

**fire'-control'**, *n.* கப்பல்-கோட்டைப் பீரங்கிகளின் வேட்டுக் கட்டுப்பாட்டமைவு.

**fired**, *a.* நெருப்பால் தாக்கப்பட்ட; சுடப்பட்ட; வெந்துபோன தோற்றம்கொண்ட ; தீக்கொளுத்தப்பட்ட ; பீரங்கியால் சுடப்பட்ட ; தூண்டப்பட்ட.

**fire'-damp**, *n.* சுரங்க எரியாவி, நிலக்கரிச் சுரங்கத்தில் காற்றுடன் கலக்கும் சமயம் வெடிவிபத்து விளைவிக்கும் கரியநீரகைவளி.

**fire'-dog**, *n.* அடுப்புக்கட்டை, விறகு அணைகோல்.

**fire'-drake**, *n.* விண்வீழ் கல்; செர்மானிய பழங்கதை மரபில் தீயுமிழ் வேதாளம் ; கம்பவெடி.

**fire'-drill**, *n.* குச்சியைச் சுழற்றி அல்லது முறுக்கித் தீயுண்டாக்கும் பண்டைய கருவி ; ஞெலிகோல்.

**fire'-eat'er**, *n.* மாயச்செப்பிடு வித்தைக்காரர் ; பயங்கர மற்போர் வீரர் ; கலகக்காரர் , சண்டைப்பிரியர்.

**fire'-engine**, *n.* தீயணைக்கும் இயந்திரம்.

**fire'-escape'**, *n.* எரியும் கட்டிடத்திலிருந்து ஆட்களை மீட்டுக் கொண்டு வருதற்குரிய கருவி.

**fire'-extinguisher**, *n.* தீயணைக்குங் கருவி ; வேதிப்பொருள்களை வெளிச்சிதறித் தீயணைக்கும் அமைவு.

**fire'-eyed**, *a.* (செய்.) ஒளிவீசும் கண்களையுடைய.

**fire'fly**, *n.* மின்மினி.

**fire'-grate**, *n.* அழல்தாங்கி, அடுப்பில் நெருப்பினைத் தாங்கி நிற்கும் இருப்பு வலைச்சட்டம்.

**fire'-guard**, *n.* கணப்படுப்புத் தீயிற்குப் பாதுகாப்பான இருப்பு வலைச்சட்டம்.

**fire'-hose**, *n.* தீயணைக்கும் வளைநீள் குழாய்.

**fire'-insu'rance**, *n.* நெருப்பிடர்க் காப்பீடு, தீயழிவுக்கு ஈடு செய்யும் கூட்டமைப்பு முறை.

**fire'-irons**, *n. pl.* அடுப்படி இருப்புக் கருவிகள்.

**fire'-light**, *n.* அடுப்பின் நெருப்பொளி.

**fire'-lighter**, *n.* அடுப்பிலிட ஆயத்தநிலையிலுள்ள எரிநெருப்பு.

**fire'lock**, *n.* முற்காலத் துப்பாக்கி வகை.

**fire'man**, *n.* தீயணைக்கும் படைவீரர்.; இயந்திர உலை காப்போர் ; சுரங்கத்தொழிலாளர் நலங்காப்போர் ; சுரங்கவெடி வைப்பவர்.

**fire'-mark**, *n.* நெருப்புக்காப்பீட்டுறுதி செய்யப்பட்ட கட்டிடத்தில் காப்பீட்டு நிலயத்தார் பொறிக்கும் உலோகத்தகடு.

**fire'-new**, *a.* புத்தம்புதிய ; சூடு ஆறாத.

**fire'-office**, *n.* நெருப்புக்காப்பீட்டுறுதிப் பணிமனை.

**fire'-opal**, *n.* தீ வண்ணம் நிழலாடும் மணிக்கல் வகை.

**fire'-pan**, *n.* நெருப்புச்சட்டி, தணல்தட்டு.

**fire'-place**, *n.* கணப்படுப்பு, அடுப்படி.

**fire'-plug**, *n.* அடிநில மூல நீர்க்குழாயில் தீயணைப்பு வளை குழாய் பொருத்துதற்குரிய இணைப்பு.

**fire'-policy**, *n.* நெருப்புக்காப்புறுதி எழுத்துப் பத்திரம்.

**fire'proof**, *a.* தீத்தடைகாப்புடைய, தீயாலழியாத ; நெருப்பினுற் பாதிக்கப்படாத ; எரியாத ; தீப்பற்றாத ; *v.* தீத்தடைகாப்புச் செய்.

**fir'er**, *n.* தீயிடுபவர் ; எரியூட்டுபவர் ; இயக்கும் பொறிக்கு எரியூட்டுபவர் ; துப்பாக்கி-பீரங்கி முதலாயின சுடுபவர் ; இடையே மருந்தடைக்காமலே குறிப்பிட்ட தடவைகள் சுடவல்ல துப்பாக்கி.

**fire'-raiser**, *n.* தீக்கொளுத்தி எரியூட்டுபவர்.

**fire'-raising**, *n.* தீக்கொளுத்தல், எரித்துப் பொசுக்கும் அழிவுவேலை ; வேண்டுமென்றே பிறர் வீடு அல்லது சொத்திற்குத் தீயிடல் ; காப்பீடு செய்யப்பட்ட தன் பொருளுக்கே தீயிடும் வினை.

**fire'-screen**, *n.* தீயின் வெப்பத்தைத் தடுக்கும் திரை, நெருபபுத் தடைகாப்புத்தட்டி.

**fire'-ship**, *n.* தீக்கலம், எதிரிகளின் கப்பல்களுக்கிடையே செலுத்தப்படும் எரிபொருள்கள் நிறைந்த கப்பல்.

**fire'-shovel**, *n.* தழல்வாரி.

**fire'side**, *n.* அடுப்படி, கணப்படி; அடுக்களை; குடும்பவாழ்வு; குடும்பவாழ்விடம் ; *a.* பழக்கமான வீடு சார்ந்த.

**fire'-step**, *n.* அகழ் அரணில் வீரர்கள் சுடுவதற்காக நிற்கும் குறுஞ்சுவர் மேடு ; குறுஞ்சுவரின்பின் வீரர்நின்று வெடிப்பதற்குரிய படிச்சுவர்.

**fire'-stick**, *n.* ஞெலிகோல், தீக்கடைகோல்.

**fire'-stone**, *n.* உலைகளிற் பயன்படுத்தப்படும் வெப்பத்தைத் தாங்கக்கூடிய கல் வகை.

**fire'-teazer**, *n.* இயந்திரங்களுக்கு எரிபொருளூட்டுவோர்.

**fire'-trap**, *n.* தீப்பிடித்தால் தப்பி வெளியேறத்தக்க வழியற்ற கட்டிடம்.

**fire'-walk, fire'-walking**, *n.* தீ மிதித்தல்.

**fire'-war'den**, *n.* தீத்தடுப்பதற்கும் அணைப்பதற்கும் உரிய பணிப் பொறுப்பாளர்.

**fire'-watch'er**, *n.* தீவிபத்து ஏற்படாமல் கண்காணிப்பவர்; குண்டுத்தாக்குதல் ஏற்பட்ட இடத்தில் நெருப்பெழாமல் காப்பவர் ; கணப்படுப்பு நெருப்புக்குப் பாதுகாப்பான வலைச்சட்டம்.

**fire'-wa'ter**, *n.* காரமான சாராயச்சத்து.

**fire'wood**, *n.* விறகுக்கட்டை.

**fire'work**, *n.* வாணவெடி, கம்பவேடிக்கை.

**fire'-works**, *n. pl.* செயற்கைத் திறமை காட்டும் காட்சி முறைகள் ; இசையிலும் பேச்சிலும் காட்டப்படும் வாணவேடிக்கைப் பண்புத்திறம்.

**fire'worm**, *n.* மின்மினி.

**fire'-wor'ship**, *n.* தீவழிபாடு, தீயைக் கடவுள் சின்னமாக மதித்துப் பூசிக்கும் முறை.

**fir'ing**, *n.* கொளுத்துதல்; தீயூட்டல்; துப்பாக்கி-பீரங்கி வேட்டு; பன்மணிக் கலகலப்போசை; எரிபொருளூட்டல்; சூடுபோடுதல்; விறகுக்கட்டை; எரிபொருள்; வெப்பூட்டுதல்; கொதிக்கவைத்தல்; வேகவைத்தல்; மிகுவெப்புக்காயம்.

**fir'ing-line**, *n.* பீரங்கி சுடும் வரம்பெல்லை; எதிரி பீரங்கி வேட்டெல்லைக்கு உட்பட்ட படைப்பகுதி.

**fir'ing-par'ty**, *n.* கைதியைச் சுடும்படி கட்டளையிடப்பட்ட படைப்பகுதி; படைத்துறைப் பிண அடக்க வேளையில் வணக்கமுறை வேட்டு இடப் பணிக்கப்பட்ட படைவீரர் பிரிவு.

**fir'ing-point**, *n.* தீக்கொள்நிலை, எண்ணெய் தீப்பற்றிக் கொள்ளுதற்கு வேண்டிய வெப்பநிலை.

**firk'in**, *n.* மீன்-வெண்ணெய்-இன்தேறல்வகை முதலியவற்றிற் கான சிறு மிடா; முகத்தல் அளவைக்கூறு.

**firm** [1], *n.* கூட்டுவாணிக நிலயம், தொழிற்கூட்டு.

**firm** [2], *a.* உறுதியான; கெட்டியான; நிலையான; அசையாத; மாறாத; நிலைநிறுத்தப்பட்ட; மாற்றமுடியாத; ஏற்றுக் கொண்ட பிறகு தள்ளுபடி செய்யமுடியாத; ஒழிக்க முடியாத; பற்றில் உறுதியுடைய, மனவுறுதியுடன் நிற்கிற; வாணிகப்பொருள்கள் வகையில் விலையும் மதிப்பும் குறையாது ஒரே படியில் நிற்கிற; *v.* வெண்ணெய் வகையில் கெட்டியாக்கு; கெட்டியாகு; நடவின்பின் நிலத்தை உறுதிப்படுத்து; உறுதிப்படு.

**firm'ament**, *n.* வானமண்டலம், முகில்-மீன்களுக்கிடமாகக் கருதப்பட்ட விண்வலயம்.

**firm'an**, (பெர்.) *n.* அரசராணைப் பத்திரம்; நன்கொடை மானியம் தனியுரிமை வழியுரிமை அளிக்கும் அரசர் கட்டளைச் சீட்டு.

**fir'-needle**, *n.* ஊசியிலை மரவகையின் இலை.

**firr'y**, *a.* ஊசியிலை மரவகை சார்ந்த.

**first**, *n.* முதலாவது; முதன்மையானது; முதல்வர்; வரிசையில் முதன்மையானவர்; முதல்வரிசை சார்ந்தவர்; தேர்வில் முதல் வகுப்பிடம், உச்சநிலைவரிசை வகுப்பு; போட்டியில் முதலிடத்தவர்; காலத் தொடக்கம்; வரிசையில் தொடக்கம்; *a.* முதலாவதான; காலத்தால் மிக முந்திய; வரிசையில் முதன்மையான, மிக முற்பட்ட; தலைமைச் சிறப்புடைய; அனைவரிலும் முதன்மை வாய்ந்த, அனைத்திலும் முந்திய; தொடக்கத்தைச் சார்ந்த; மேம்பட்ட; அடிப்படையான, மூலாதாரமான; (இலக்.) பேசுபவரைக் குறித்த, தன்மை இடத்துக்குரிய; *adv.* முதலில், முதலாவதாக; எல்லாவற்றுக்கும் முன்னதாக; முந்தி, முற்பட; குறித்த காலத்துக்கு முற்பட்டு; மற்றொன்றினைக் காட்டிலும் முற்பட சிறப்பு முறையாக; (தொ.) at first, முதலில்; தொடக்கத்தில்; at first hand, நேரடியாக, இடையீடின்றி; at first blush, at first sight, at first view, பார்த்தவுடன்; முதல் தோற்றத்திலேயே; come in first, பந்தயத்தில் வெற்றிபெறு; first and last, மொத்தத்தில் ஒன்றோடொன்று கூட்டிப் பார்த்தால்; First Cause, முதற்காரணம்; கடவுள்; first coat, முதல் மேல்வண்ணப்பூச்சு; முதற்பூச்சு; first cost, இலாபம் சேராத விலை மதிப்பு; கொள்முதல் செலவு மதிப்பு; First Lord of the Admiralty, சட்ட மாமன்றத்துறை சார்ந்த கடற்படைத் தலைவர்; First Lord of the Treasury, நிதியரங்க முதல்வர்; first name, கிறித்தவர்களின் முதற்பெயர், கிறித்தவர் பெயரின் முதற் சொற்பகுதி; first or last, முன்னுயிலும் பின்னுயிலும் எப்படியும் விரைவில்; First Sea Lord, பணிமுறைக் கப்பற்படைத் தலைவர்; from first to last, முழுவதும், தொடக்கமுதல் இறுதிவரை; from the first, தொடக்கத்திலிருந்து, முதலிலிருந்து; in the first place, முதன்முதலாக; the First, முதலில் குறிப்பிடப்பட்டவர்; முதலில் குறிப்பிடப்பட்ட பொருள்; the First, 'கௌதாரி' வேட்டைத் தொடக்க நாள் (செப்டம்பர் முதல் நாள்).

**first'aid'**, *n.* முதலுதவிச் சிகிச்சை, மருத்துவர் வருதற்கு முன் காயப்பட்டவருக்கு அளிக்கப்படும் மருத்துவ உதவி.

**first'-begott'en**, *a.* முதற் பிறந்த; மூத்த; தலைமூத்த.

**first'-born**, *n.* முதற் குழந்தை, தலைச்சன் பிள்ளை; *a.* முதற் பிறந்த; தலையீற்றுன.

**first'-class'**, *a.* தொடர்வண்டியில் முதல்வகுப்புச் சார்ந்த; தேர்வுப் பட்டியலில் முதல்வரிசையிலுள்ள; முதல்தரமான; மிகச்சிறந்த; *adv.* முதல்வகுப்பு வண்டியில்; முதல்வகுப்பாக.

**first'-day**, *n.* ஞாயிறு, வாரத்தின் தலைநாள்.

**first'-floor'**, *n.* கட்டிடத்தின் முதல் மாடி, நிலத்தளத்துக்கு மேற்பட்ட முதல்மாடித் தளம்; அமெரிக்க வழக்கில் நிலத் தளம்.

**first'-fruits**, *n. pl.* பருவத்தின் முதல்விளைவு; கடவுளுக்கான பருவ முதல்விளைவுப் படையல்; முதற்பணி ஊதியம், தொழில் தொடக்க ஆதாயம்; முற்காலப் பண்ணை மேலாளர்க்கு அளிக்கப்பட்ட புதுப்பணித் தொடக்கக் காணிக்கை.

**first'-hand** [1], *a.* நேரடியான, இடையீடின்றிப் பெறப்பட்ட.

**first-hand'** [2], *adv.* நேரடியாக, இடையீடின்றி.

**first'ling**, *n.* முதற்பயன்; முதல்விளைவு; பருவ முதற் பலன்; பருவ முதற் பழங்களின் தொகுதி; முதற்குழந்தை, தலைச்சன்; முதலீற்றுக்குட்டி.

**first'ly**, *adv.* முதலாவதாக, முதன்முதலாக.

**first'-night**, *n.* நாடகத்தின் முதலிரவுக் காட்சி.

**first'-night'er**, *n.* நாடகங்களை முதல்நாளே வழக்கமாகக் காண்பவர்.

**first'-offend'er**, *n.* முதன்முறைக் குற்றவாளி.

**first'-rate** [1], *n.* முதல்தரப் போர்க்கப்பல்; *a.* முதல்தரமான, உச்ச உயர் வகையான, முதல்தரப் பண்புடைய, உச்சநிலை நய நேர்த்தியுடைய; (தொ.) the first-rate Powers, முதல் தர மதிப்புடைய வல்லரசுகள்.

**first-rate'** [2], *adv.* மிகச் சிறப்பாக, மிக்க நயநேர்த்தியுடன்.

**firsts**, *n. pl.* மா-வெண்ணெய் வகைகளில் முதல்தரத்துக்குரிய வகைகள்.

**firth**, *n.* கடற்கழி; ஆற்றின் கழிமுகம்.

**fisc**, *n.* பண்டைய ரோமநாட்டின் கருவூலம்; ரோமப் பேரரசரின் தனிப்பட்ட முறைநிதிச் சேமம்.

**fis'cal**, *n.* சில நாடுகளில் சட்டத்துறைப் பணியாளர்; *a.* அரசிறை வரும்படிக்குரிய, நாட்டின் வருமானத்திற்குரிய.

**fish** [1], *n.* மீன்; மீன் இறைச்சி; மீனினம்; கடல்வாழ் உயிர்; சூழ்ச்சி வலையில் அகப்படுத்துதற்காக நாடப்பெறும் மனிதர்; மீன் வகை; (பே-வ.) பேர்வழி; *v.* மீன்பிடி; நீருக்கடியில் தேடு; மறைமுக வழிகளில் தேடு; நீரினின்று வெளியே எடு; குளம் குட்டைகளில் மீன்பிடி; துருவித்தேடு; தூண்டிலிடு; கொக்கியால் பிடித்தெடு; சிறிது சிறிதாக வெளிப்படுத்து, மெல்ல வெளிப்படுத்து; மறைவிடத்தினின்று வெளிக் கொணர்; (தொ.) drink like a fish, அளவுமீறிக் குடி; feed the fishes, நீரில் மூழ்கிப் போ; கடல் பழக்கமில்லாக் குமட்டல் நோயினுல் துன்பப்படு; fish in troubled waters, குழப்பமான சூழ்நிலையைப் பயன்படுத்தித் தன் நலனைப் பெருக்கிக் கொள்; fish out, நீர்நிலையில் மீன்களை எல்லாம் பிடித்து வெறுமையாக்கு; fish out of water, ஒவ்வாத சூழ்நிலையில் சிக்கித் தவிப்பவர்; fish the anchor, நங்கூரக் கொக்கி கப்பல்விளிம்புமட்டத்துக்கு வரும்படி தூக்கிவை; have other fish to fry, கருத்துச்செலுத்த வேறு முக்கிய செய்திகள் பெற்றிரு; make fish of one and flesh of another, மனக்கசப்பு உண்டுபண்ணக்கூடிய வேறுபாட்டைக் காட்டு, நச்சுத்தன்மையான வேற்றுமை உண்டுபடுத்து; neither fish nor flesh nor good red herring, neither fish, flesh, nor fowl, வரையறை இல்லாததொன்று; pretty kettle of fish, குழப்பம், தாறுமாறான நிலை; queer fish, விநோத பழக்கவழக்கமுடையவர்; the Fish, the Fishes, மீன இராசி மண்டலம்.

**fish** [2], *n.* (கப்.) பாய்மரத்தை உறுதியாக்குதற்கு வைக்கப் படும் சிறு பிறைவடிவ மரத்துண்டு; விட்டப்பகுதிகளை இணைக்கும் தட்டையான இரும்பு அல்லது மரப்பாலம்; ஆட்டங்களில் மேசைப் பணச்சின்னமாகப் பயன்படுத்தப்படும் தந்த வட்டுக்கள்; *v.* மரத்துண்டால் அணை; இடைப்பாலத் தால் உறுதிப்படுத்து.

**fish'-carv'er**, *n.* மீனைத்துண்டிக்க உதவுங் கருவி.

**fish'er**, *n.* பொழுதுபோக்கிற்காக அல்லது இலாபத்திற்காக மீன்பிடிப்பவர்; கீரியினவகை விலங்கு.

**fish'erman**, *n.* மீன்பிடிப்பவன், வலைஞன், செம்படவன்.

**fish'ery**, *n.* மீன்பண்ணை; மீன்பிடிப்புத் தொழில்; மீன் தொழில் துறை; மீன்பிடிக்குமிடம்; மீன்பிடிக்கும் உரிமை.

**fish'-fag**, *n.* மீன் விற்பவள், மீன்விலையாட்டி.

**fish'ful**, *a.* மீன்வளமிக்க, மீன் நிறைந்த.

**fish'globe**, *n.* பொன்மீன் முதலிய அழகிய சிறுமீன்களை விட்டு வளர்க்கும் கண்ணாடிக்கூண்டு.

**fish'-glue**, *n.* மீன்பசை, மீன்வகைகளினின்று கிடைக்கிற பசை செய்யவுதவும் வெண்மையான நுங்கு போன்ற பொருள்.

**fish'-hatch'ery**, *n.* செயற்கைமுறையில் மீன்வளர்க்கும் நிலையம்.

**fish'-hawk**, *n.* மீன்கொத்தி; கடற்பருந்து.

**fish'-hook**, *n.* தூண்டில்; தூண்டில்முள், மீன்பிடிக்கும் இரும்புக்கொக்கி.

**fish'ing**, *n.* மீன்பிடிக்குந்தொழில்; மீன்பிடிப்புக்கலை; *a.* மீன்பிடிப்புத்தொழிலிற் பயன்படுத்தப்படுகிற.

**fish'ing-rod**, *n.* தூண்டிற்கோல், தூண்டில் முள் இணைக்கப் பட்ட நீண்ட கொம்பு.

**fish'ing-tack'le**, *n.* வலை-தூண்டில் முதலிய மீன்பிடிக்குங் கருவித்தொகுதி.

**fish'-kett'le**, *n.* மீன்சமைக்கும் குடுவை.

**fish'-knife**, *n.* மீன் தின்னப் பயன்படும் கத்தி.

**fish'-manure'**, *n.* மீன் எரு.

**fish'-monger**, *n.* மீன் விற்பவர், நுளையர்.

**fish'-oil**, *n.* மீன் எண்ணெய்.

**fish'-plate**, *n.* தண்டவாளங்களை இணைக்கும் இருப்புக் கட்டை.

**fish'-pond**, *n.* மீன்களை வளர்ப்பதற்காக விட்டுவைக்கும் குளம்.

**fish'-pot**, *n.* விலாங்கு-நண்டு முதலியன பிடிக்கப் பயன்படும் பிரம்புவலைக் கூடை.

**fish'-sound**, *n.* நீந்துவதில் மீனுக்கு உதவும் உள்ளீடான காற்றுப்பை.

**fish'-tail**, *a.* மீன்வால் போன்ற வடிவுடைய; மீனின் வால் துடிப்புப் போன்ற அமைப்புடைய.

**fish'-torpe'do**, *n.* தானே இயங்கும் நீர்மூழ்கிக்குண்டு.

**fish'wife**, **fish'-woman**, *n.* மீன் நொடையள்.

**fish'y**, *a.* மீன் நிறைந்த; மீனுலான, மீன்போன்ற மணச் சுவையுடைய; மீன்வடிவான; ஐயுறவான; உறுதியற்ற; இருபொருளுடைய; (தொ.) fishy eye, ஒளியற்ற பார்வை; கருத்திலா நோக்கு.

**fisk**, *n.*=fisc.

**fissidac'tyl**, *a.* பிளவுண்ட விரல்களையுடைய.

**fiss'ile**, *a.* பிளவுபடக்கூடிய; பிளக்கும் இயல்புடைய.

**fissiling'ual**, *a.* பிளவுபட்ட நாக்குடைய, இருபிளவான நாக்கு கொண்ட.

**fissil'ity**, *n.* பிளவுபடுந் தன்மை.

**fi'ssion**, *n.* (உயி.) புது உயிரணுக்களின் தோற்றத்திற்காக உயிரணுக்களைப் பிளத்தல்; இனப்பெருக்கத்துக்காக உயிரணு வெடித்தல்; அணுப்பிளப்பு, அணுவின் கருவுள் பிளப்பு.

**fissip'arous**, *a.* பிளவுற்று இனம்பெருக்குகிற; பிளவுண் டாக்குகிற.

**fissiros'tral**, *a.* ஆழ்ந்த பிளவுடை அலகுடைய.

**fi'ssure**, *n.* பிளவு; வெடிப்பு; பிளவினாலும் பாகங்களின் பிரிவினாலும் ஏற்படும் இடைச்சந்து பிளப்பு; மூளைச் சுருக்கங் களிலுள்ள நெடும்பள்ளம், மூளை இடைச்சந்து; *v.* பிளவு படுத்து; பிளவுறு.

**fiss'ured**, *a.* பிளவுபடுத்தப்பட்ட; பிரிக்கப்பட்ட.

**fist**, *n.* கைமுட்டி; குத்துச்சண்டை போடுதற்கேற்றுற்போல் அமைந்த கைமுட்டு; *v.* கைமுட்டியால் குத்து; (தொ.) fist law, வல்லான் வகுத்தது.

**fis'ticuffs**, *n. pl.* கைக்குத்துச்சண்டை, முட்டிப்போர்.

**fis'tula**, *n.* புண்புரை, குறுகிய வாயுடைய புரையோடிய புண்; திமிங்கிலப் பீற்றுக்குழல்; வண்டுவகையின் பற்றுகுழல் உறுப்பு.

**fit** [1], *n.* வலிப்பு, இசிப்பு; நோயின் திடீர்த்தாக்குதல் அலை; வலிப்பு முதலிய நோய் வகைகளின் திடீர் எழுச்சியலை; சிறிது நேர உணர்விழப்பு; சிறிது நேரச் செயலிழப்பு; சிறிது நேரத் தனிமை; திடீர் உணர்வுநிலை; திடீர் நகையலை; திடீர் எழுச்சியலை; நீடித்திராத மனநிலை; காரணமில்லா உணர்ச்சிப் போக்கு; (தொ.) beat one into fits, give one fits, எளிதாகத் தோற்கடி; by fits and starts, விட்டுவிட்டு, திடீர் எழுச்சி தளர்ச்சிகளுடன்; give one a fit, வியப்படையச்செய்; சின மடையச்செய்.

**fit** [2], *n.* உடைப்பொருத்தநிலை; இசைவுப்பாங்கு, வாய்ப்புமுறை; *a.* இசைவான, பொருத்தமான, ஏற்ற; தகுதிவாய்ந்த; தக்க திறமையுடனிருக்கிற; தகுதிபெற்ற; வாய்ப்பான, நன்னிலை யில் இருக்கிற, உடல்நலம் குன்றாதிருக்கிற; *v.* இசைவாக்கு, பொருத்து; இசைவாயிரு, பொருந்து; சரிசெய்; அள வொத்திரு; வடிவொத்திரு; கூறொத்திரு; ஏற்றதாயிரு; தகுதியாக்கு; தகுதியுடையதாயிரு; துணைக்கலம் பூட்டு, வேண்டிய தளவாட வாய்ப்புச்செய்; ஒட்டியிணை, சேர்த்துப் பொருந்தவை; (தொ.) fit for, தகுதியான; fit in, பொருந்து; fit into, சரியாயிரு, உள்ளேசென்று பொருந்தத்தக்க சரி யளவாயிரு; fit in with, முற்றிலும் இசைவாயிரு; fit on, போட்டுச்சரிபார், அணிவித்துப் பொருத்தம் பார்; fit out, தேவையான தளவாடம் பொருத்தி உருவாக்கு, வேண்டும் துணைக்கலம் இணைத்துச் செயலுக்குச் சித்தமாக்கியனுப்பு; fit up, தேவையான கருவிகளைப் பொருத்து.

**fit** [3], *n.* பாடல் ஏட்டுப்பகுதி.

**fitch**, *n.* விலங்குவகை வால்மயிராற் செய்யப்பட்ட தூரிகை.

**fitch'ew**, *n.* மரநாய் ஒத்த ஊனுண்ணும் விலங்குவகை.

**fit'ful**, *a.* திடீர்ச்செயலான; விட்டுவிட்டு இயங்குகிற; இடை யிடையே முயலுகிற.

**fit'ment**, *n.* தட்டுமுட்டுப்பொருள், துணைக்கருவி.

**fit'ness**, *n.* பொருத்தம்; தகுதி, ஏற்றமைவு; பொருத்தும் நேர்மை; ஏற்பமைதி; ஒழுக்கநலம்; (தொ.) the fitness of things, தக்கது, ஏற்புடையது, பொருத்தத்தக்க அமைதி.

**fit'-out**, *n.* ஆடையணிமணித் தொகுதி; தளவாடம், கருவி கலத் தொகுதி.

**fitt'er**, *n.* பொருத்துவது; பொருத்துபவர்; இணைப்பது; இணைப்பவர்; பொறியின் பகுதிகளை இணைப்போர்; இசை விப்போர்; துணிகளை ஏற்றவாறு வெட்டுவதையும் பொருத்து வதையும் மேற்பார்வை செய்பவர்.

**fitt'ing**, *a.* பொருத்தமான, இசைவான; ஏற்ற, தக்க, சரியான.

**fitt'ing-out**, *n.* பொருத்தமானதும் தேவையானதுமான பொருள்களைச் சேகரம் செய்து அளித்தல்.

**fitt'ings**, *n. pl.* துணைக்கருவிகள், கருவிகலத்தொகுதி; தளவாடங்கள், தட்டுமுட்டுப் பொருள்களின் தொகுதி; இணைப்பொருத்தக் கட்டுமானம்; பொருத்தமான வேலை யாளின் பணித்துறை.

**fitt'ing-shop**, *n.* பொறியின் பகுதிகளை இசைவித்துப் பொருத் தும் பட்டறை.

**fit'-up**, *n.* நாடக அரங்க வகையில் தற்காலிகமான மேடையமைப்பு; எடுத்துச்செல்லக்கூடிய ஒப்பனைக்கருவிகளை உடன்கொண்ட மேடையமைப்பு; ஊர் ஊராகக் கொண்டு செல்லக்கூடிய தற்காலிகச் சிறு திரை ஓவியங்கள்.

**five**, *n.* ஐந்து; ஐந்துகொண்ட தொகுதி; ஐந்து என்ற எண் கொண்ட சீட்டு; ஐந்து எண்ணுடைய ஆட்டக்கட்டை; ஆட்டத்தில் எடுத்த ஐந்து வெற்றிக்குறி மதிப்புக்கள்.

**five'-day week**, *n.* ஐந்து வேலைநாள்களைக்கொண்ட வாரம்.

**five'-finger**, *a.* இசைக்கருவியில் ஐந்து விரல்களுக்கும் பயிற்சி கொடுக்கிற; ஐந்து விரல்களும் வகுத்துக் குறிக்கப்பட்ட இடத்திலேயே எப்போதும் வைத்திருக்கவேண்டிய பயிற்சி முறை சார்ந்த.

**five'fold**, *a.* ஐந்துமடங்கான; ஐந்து பிரிவுகள்கொண்ட; ஐந்துமுறை மடித்த பருமனுள்ள; *adv.* ஐந்துமடங்காக.

**fives**, *n. pl.* ஐந்தாவது தரத்துக்குரிய புதைமிதித்தொகுதி; ஐந்தாவதுதரக் கையுறைத்தொகுதி; ஐந்து நூற்றுமான விழுக்காடுடைய பங்குகள்; பந்தாட்டவகை.

**fix**, *n.* இக்கட்டுநிலை, சிக்கல்நிலை; வான்கோள்-வானூர்தி ஆகியவற்றின் இயக்கநிலைப் பதிவுக்குறிப்பீடு; *v.* பதியவை; ஒட்டு; அடித்திறுக்கு; கட்டியிறுக்கு; இணை, பொருத்து; நிலைநாட்டு; அசையாது நிலைநிறுத்து; உறுதிப்படுத்து; இடவுறுதி செய்; திட்பமாக்கு; கால அறுதிசெய்; நிலவரமாககு; நிலைத்திருக்கச்செய்; மாறாதிருக்கச்செய்; மாறுதல் தடுத்து நிறுத்து; முடிவு செய்; மனத்தில் ஊன்றவை; நிழற்பட உருநிறம் நிலைப்படுத்து; கெட்டியாக்கு; உறையவை, இறுகவை; கட்டி வை; முகத்தோற்றம் ஒருநிலைப்படுத்து; விறைப்பாக்கு; முறைக்க வை; பார்வை நேராகப் பதியவை; பார்வையால் தனிப்படக் குறித்தொதுக்கு; கவர்ச்சிசெய்து நிறுத்திவை, மயக்கி நிறுத்து; ஒழுங்குபடுத்தி அமை, ஏற்பாடுசெய்; நிழற்படம் எடுக்கச் சித்தமாக அமைப்பைத் திட்டப்படுத்திவை; திருத்து, சீர்ப்படுத்து; (தொ.) fix on, தனியாகப் பிரித்துக் குறி; fix up, ஏற்பாடு செய்; radio fix, வானொலியின்மூலம் கண்டுபிடிக்கப்பட்ட வானூர்தி-கப்பல் முதலியவற்றின் இடநிலை அல்லது நிலையிடம்.

**fixa'tion**, *n.* பொருத்துதல்; பொருத்தப்படல்; கெட்டியாகும்படி செய்தல்; இறுகுதல், உறைவு; உறுதிப்பாடு; அறுதி; நிலைப்பு, மாறாநிலை; திடப்பொருளோடு வளிப்பொருளை இணைக்கும் முறைமை; ஆவியாகா நிலை; வளிமண்டல வெடியம் கலந்த மாற்ற மெய்ம்முறை; மனவளர்ச்சி தடைப்பட்ட நிலை, வளர்ச்சிதடைப்பட்டு முதிராநிலை, இயல் உணர்ச்சி வழிச்செல்லும் நிலை.

**fix'ative**, *n.* சாயங்கள் நிலையாக இருக்கும்படி செய்யும் பொருள்; *a.* பொருந்தும்படி செய்கின்ற; நிலைப்படுத்துகின்ற.

**fix'ature**, *n.* தலைமுடியைப் படியவைக்கின்ற பசைப்பொருள்.

**fixed**, *a.* நிலையான, உறுதியான; நிலைப்பட்ட, திடமான; (தொ.) fixed acid, சிதைவின்றி ஆவியாகாத காடி; fixed capital, இயந்திரம்-தளவாடம் முதலிய முதலீடு; fixed idea, பைத்தியமாக்கும் இயல்புடைய ஒரே ஊன்றிய கருத்து; fixed oil, சிதைவின்றி ஆவியாகாத எண்ணெய்; fixed point, ஊர்க்காவலர் நிலையாகத் தங்குமிடம்; fixed property, நிலைப்பொருள் உடைமை, நிலமும் வீடுகளும்; fixed star, நிலைபெயரா விண்மீன்.

**fix'edly**, *adv.* நிலையான தன்மையில்; ஆவலுடன், கவனமுடன், கருத்துடன், கூர்நோக்குடன்.

**fix'edness**, *n.* உறுதிநிலை; அசைக்க முடியாத தன்மை; நிலையான இயல்பு; பற்றுறுதியுள்ள பாங்கு.

**fix'er**, *n.* இறுக்கு கருவி.

**fix'ings**, *n. pl.* செயற்களக்கருவி, துணைக்கருவித் தொகுதி, தளவாடம், துணைச்சாதனம்; உடையின் சிங்காரிப்பு, பின் சேர்ப்புகள், புற ஒட்டுகள்.

**fix'ity**, *n.* இயங்கா நிலை; அசையாது பொருத்தப்பட்ட நிலை; உறுதிமாறா நிலை; நிலைத்த தன்மை, நிலைபேறான தன்மை.

**fix'ture**, *n.* இட உறுதிப்பாடு; ஓரிடத்திற் பொருத்தப்பட்ட பொருள்; இணைத்துக் கட்டப்பட்ட பொருள்; ஓர் எல்லைப்பட்ட ஆள்; எல்லைக்குட்படுத்தப்பட்ட பொருள்; நிலை நாட்டப்பட்டுள்ளவர்; கேளிக்கையாளர் கூட்டுச்சந்திப்பு; பந்தய ஆட்ட ஏற்பாடு; கேளிக்கையாளர் கூட்டுச் சந்திப்புக்குரிய நாள்; பந்தயத்திட்டம் செய்யப்பட்டுள்ள காலம்.

**fiz'gig, fis'gig**, *n.* காதலாட்டம் ஆடித்திரியும் பெண்; ஈர மருந்துப்பொடியால் இயக்கப்படும் வாணவெடி வகை; சீன வெடி; சிறுதிறப் பொறி; அற்பப்பொருள்; லெத்துன்னல் வேலைப்பாடு; திமிங்கிலமெறியும் வேல்; *a.* நிலையற்ற துடிப்புப் போக்குடைய, உறுதியற்ற, படபடப்பான.

**fizz**, *n.* உயர்ந்த தேறல் வகை; சீறி நுரைத்தெழும் ஒலி; *v.* 'உசு' என்று ஒலிசெய்; கடகடவென்றிரை.

**fizz'er**, *n.* 'உசு' என்று ஒலிசெய்கின்ற பொருள்; மிகச் சிறந்த பொருள்; மிகவிரைவாகச் செல்லும் பந்து.

**fiz'zle**, *n.* மென்மையான 'உசு' என்ற ஒலி; திக்கிப்பேசும் ஒலி; குளறுபடி; தோல்வி; *v.* மென்மையாக 'உசு' என்ற ஒலிசெய், மென்மையாகத் திக்கிப்பேசு, தெற்றிப்பேசு; (தொ.) fizzle out, உருகிப்போ; சென்று தேய்ந்திறு; நற்பயனளிக்கத் தவறு; ஒன்றுமில்லா நிலைக்கு வா; தோல்வியுறு; புசுபுசுத்துப்போ, 'கழுதை தேய்ந்து கட்டெறும்பாகு'.

**fjord**, *n.* = fiord.

**flabb'ergast**, *v.* திடுக்கிடச்செய், வியப்புறச்செய், வியப்பினால் செயலற்றுப்போகும்படி செய், திகைப்பினால் ஊமையாக்கு.

**flabb'y**, *a.* தளதளப்பாகத் தொங்குகிற, சுருக்கம் விழுந்த; உரமற்ற; கெட்டியில்லாத; மனத்திட்பமில்லாத; மொழிநடை முதலியவற்றின் வகையில் வலிவற்ற; தளர்ந்த.

**flabell'ate, flabell'iform**, *a.* (வில., தாவ.) விசிறி வடிவான.

**flac'cid**, *a.* தொங்கு சதையுடைய; தளர்வுற்றுத் தொங்குகிற; சுருக்கம் விழுந்த; நெகிழ்வான; சோர்வுற்ற; வலிமையற்ற, உரமற்ற; நரம்புத் தளர்ச்சியுடைய; கெட்டியில்லாத.

**flag** [1], *n.* துகிற்கொடி; படைச்சிறப்புக்கொடி; விருதுக் கொடி; அழகொப்பனைக்கொடி; விளம்பரக்கொடி; குறிப்படையாளக்கொடி; கொடிக்கப்பல்; நாய்வகையில் சடை நிறைந்த வால்; *v.* கொடிகளால் ஒப்பனை செய்; கொடியை முகட்டிற் கட்டு; கொடி அடையாளவழியே செய்தி அறிவி; குறிப்படையாளக் கொடிச்சின்னம் நாட்டு; (தொ.) black flag, கடற்கொள்ளைக்காரரின் கொடி; குற்றவாளியைத் தூக்கிலிடுதற்கு அறிகுறியாகச் சிறைக்கு வெளியில் உயர்த்தப்படும் கொடி; Black Flags, ஒழுங்கான படையைச் சேராத சீனப்படை வீரர்கள்; flag of convenience, தாயக வரிக்கடமை கட்டுப்பாடுகளிலிருந்து தப்புதற்காகத் தாயக வாணிகக் கழகம் அயல்நாட்டுக் கப்பல்களிற் சரக்குகளைப் பதிப்பித்துக்கொள்ளுவதற்குரிய கொடி; flag of truce, எதிரியுடன் பேரம் பேசும் அவாவைக் காட்டும் வெண்கொடி; hoist one s flag, பணித்தலைமையை ஏற்றுக்கொள்; lower one's flag, strike one's flag, வணக்கத்திற்கு அறிகுறியாகக் கொடியை இறக்கு; சரணடைவதற்கு அறிகுறியாகக் கொடியை இறக்கு; white flag, தற்காலிகப்போர் நிறுத்த அறிகுறியான வெண்கொடி; yellow flag, கப்பலில் தொற்றுநோய் உள்ளதாக அறிவிக்குங் கொடி.

**flag** [2], *n.* பாவு கல், தட்டையான தளவரிசைக்கல்; *v.* தளவரிசைக் கற்களாற் பாவு.

**flag** [3], *n.* பறவைச் சிறகின் இறகினாலான எழுதுகோல்.

**flag** [4], *n.* நீண்டு அலகுபோன்ற சொரசொரப்பான இலைகளையுடைய செடிவகை; செடிவகையின் நீண்ட அலகுபோன்ற சொரசொரப்பான இலை; நீண்டு அலகுபோன்ற சொரசொரப்பான இலைகளையுடைய செடிகளின் தொகுதி.

**flag**[5], *v.* தொங்கலாகக் கிட, தொய்வாகத்தொங்கு; தொங்கி ஆடு; வாடு, வதங்கு; பின் தங்கு, தாமதம் செய், சோர்வுறு; ஊக்கம் குன்று; வலிமை இழக்கப்பெறு; அக்கறை குறையப் பெறு.

**flag'-boat**, *n.* நீர்விளையாட்டுப் படகுப் போட்டியில் அடையாளமாக வைக்கப்படும் கொடிப்படகு.

**flag'-cap'tain**, *n.* கொடிக்கப்பலின் மீகாமன்.

**flag'-day**, *n.* பொதுநலக் காரியங்களுக்கான நன்கொடைச் சின்னக் கொடிகள் விற்கப்படும் நாள்.

**flagell'ant**, *n.* தன்னைத்தானே கசையால் அடித்துக் கொள்பவர், கசை நோன்பாளர்; *a.* கசையால் அடிக்கும் இயல்புடைய.

**fla'gellate**, *v.* கசையால் அடி, அடித்துநொறுக்கு, கசையடித் தண்டனையளி.

**flagell'um**, *n.* கசை; (தாவ.) தாவுகொடி, வேர்விட்டுக் கொண்டே நீண்டு தாவிப்படரும் கொடி; (உள்.) கசை போன்ற உறுப்பு; *pl.* flagell'a.

**flageolet'**[1], *n.* அடிப்புறத்திலிருந்து ஊதப்பெறும் சிறு புல்லாங்குழல்.

**flageolet'**[2], *n.* அவரையின வகை, மொச்சைவகை.

**flagi'tious**, *a.* அட்டூழியம் வாய்ந்த; பழிக்குற்றம் வாய்ந்த; மாபெருங்குற்றத்துக்கு ஆளான.

**flag'-lieuten'ant**, *n.* கப்பல் தளபதியின் மெய்க்காவல் துணைவர்.

**flag'list**, *n.* உயர்தரக் கப்பல் அதிகாரிகள் பட்டியல்.

**flag'man**, *n.* பந்தய ஓட்டங்களில் அடையாளக் குறி கொடி காட்டுபவர்.

**flag'on**, *n* குடுவை, கமண்டலம், கைப்பிடியும் மேல்மூடியும் மூக்கு வாயும் உடைய பெரிய இன்தேறல் மேசைக்கலம்; இயேசுநாதரின் இறுதி உணவுவிழாக் குவளை; வடிதேறல் இரு புட்டிகள் கொள்ளத்தக்க தட்டையான உருளை வடிவான கண்ணாடிக்கலம்.

**flag'-rank**, *n.* கொடிக்கப்பல் தளபதியர்களின் பதவி.

**flag'rant**, *a.* இகழ்முனைப்பாகத் தெரிகிற; படுமோசமான.

**flags**[1], *n.* பாவு கற்களால் பாவப்பட்ட தளவரிசை.

**flags**[2], *n. pl.* நீண்டு மெல்லிய அலகு போன்ற சொரசொரப்பான இலைகளையுடைய செடிகளின் தொகுதி.

**flag'-ship**, *n.* கப்பல் தளபதி இவர்ந்துசெல்லும் கொடிக் கப்பல்.

**flag'staff**, *n.* கொடிக்கம்பம்.

**flag'-station**, *n.* கொடி அடையாளம் காட்டினால் மட்டும் வண்டிகள் நிற்கும் புகைவண்டி நிலையம்.

**flag'-waver**, *n.* கிளர்ச்சியாளர்.

**flail**, *n.* சூடடிக்கும் கோல், நுனியில் சிறிய பளுவான கழி தொங்கிக்கொண்டிருக்கும் மரத்தடி; முற்காலச் சணல் வெட்டும் கருவி.

**flair**, *n.* இயல்புதிறம்; சிறந்ததைத் தெரிந்தெடுக்கும் நுட்பத் திறம், உள்ளார்ந்த நுண்ணியல் தேர்வாற்றல்.

**flak**, *n.* செர்மானியாது வழக்கில் விமான எதிர்ப்புப் பீரங்கி வேட்டு; (தொ.) flak ship, வானூர்திகளை எதிர்த்துச் சுடுதற்கான செர்மானியக் கப்பல்.

**flake**[1], *n.* சூட்டப்பம் முதலியவற்றைச் சேமித்து வைப்பதற்கான அடுக்குநிலை; மீன் முதலியவற்றைக் காயப் போடுதற்கான மேடைச்சட்டம்; வாட்போர்முறையில் பயன்படும் இயங்கு தட்டித் தடைச்சட்டம்; விளிம்படைப்பு முதலியன வைப்பதற்காகக் கப்பல் பக்கங்களில் தொங்கவிடப்படும் சட்டம்.

**flake**[2], *n.* காற்றில் மிதந்தலைபடும் பஞ்சுத்துணுக்கு; வீசி எறியப்பட்டுக் காற்றில் மிதக்கும் எரிதழல் இணுக்கு; சீவல் துணுக்கு, உரித்தெடுக்கப்பட்ட மெல்லிய பரந்த சிம்புப்பகுதி; சிறு விரல்போன்ற துண்டு; மிதவைத் துய்; மீனிறைச்சியின் இயற்கைப்பாளம்; அடை அடுக்கு; செந்நிறத் தோட்ட மலர் வகையில் கோடுடைய இதழ் கொண்டவை; *v.* பனி வகையில் இணுக்கு இணுக்காக விழு, துணுக்குத் துணுக்காகத் தூற்றலுறு; அடையடையாக உரித்தெடு; சிம்பு சிம்பாக உரிந்துபடு.

**flake'-white**, *n.* ஈயங்கலந்த வெண்கலவையிலிருந்து எடுக்கப்படும் வண்ணப்பொருட்கூறு.

**flam**, *n.* பொய்க்கதை; சூழ்ச்சிப்பொறி, ஏமாற்றுமுறை.

**flam'beau**, *n.* சுளுந்து, மெழுகுதிரிகளை இணைத்துக்கட்டிய தீப்பந்தம்.

**flamboy'ant**, *n.* தீக்கொழுந்து நிறமுள்ள மலர்வகைகளில் ஒன்று; *a.* அலையெழுந்து வீசியெறியும் தீக்கொழுந்து போன்ற; (க-க.) அலைத்தெழும் தழல்போன்ற தோற்றம் வாய்ந்த வேலைப்பாடுடைய; அழல்வண்ணப் பூம்பகட்டு ஒப்பனையுடைய; வண்ணப்பகட்டான, வீணாரவாரமிக்க, ஆர்ப்பாட்டமான.

**flame**, *n.* அனற்கொழுந்து, தீநாக்கு, எரிதல் ஆவி; ஒளிப் பிழம்பு; சுடரொளி; ஒளிவண்ணம்; ஆர்வக்கனல்; பற்றார்வம்; கருத்துவேகம்; சீற்றம், கடுஞ்சினம்; முனைத்தெழும் காதல்; ஆர்வக்காதலர்; அந்துப்பூச்சி வகைகளில் ஒன்று; *v.* கொழுந்துவிட்டெரி; அழன்றெழு; சுடரொளி வீசு; அனற் பிழம்பாக வீசு; தழலாகப் பரவு; எரிதழல் ஒளிச்சின்ன வழியாகச் செய்தி அறிவி; எரிதழல் வெப்பத்துக்கு உட்படுத்து; உணர்ச்சிகொந்தளித்தெழு; சினந்தெழு; எழுச்சியூட்டு; சினமூட்டு; காதல் வெறியூட்டு; (தொ.) fan the flame, எரிநெருப்பைத் தூண்டிவிடு; உணர்ச்சியை மிகுதியாக்கு; ஆர்வம் பெருக்கு; வெறியூட்டு.

**flam'en**, *n.* பண்டைய ரோமாபுரித் தெய்வத்துக்குரிய சமய குரு.

**flam'ing**, *a.* கொழுந்துவிட்டெரிகிற; கடுவெப்பமான, மிகு சூடான; ஒளிநிறமுடைய; உருத்தெழும் வண்ணமுடைய; உயர்வு நவிற்சியான, அளவுக்கு மீறிய புகழ்ச்சியான; (தொ.) flaming onions, நெருப்புப் பந்துகளின் சங்கிலி போன்ற விமான எதிர்ப்புக் குண்டுவீச்சு.

**flaming'o**, *n.* மராளம், நாரைபோன்ற பெரிய செந்நிறப் பறவை வகை.

*flamm'enwerfer*, (செர்.) *n.* போரில் நெருப்புக்குழம்பைப் பீறிட்டு வெளிப்படுத்தும் இயந்திரப்பொறி.

**flan**, *n.* பழம் முதலியனவுள்ள பணியார வகை.

*flanerie*, (பிர.) *n.* சோம்பேறித்தனமாயிருத்தல், காலத்தை வீணாக்குதல்.

*flaneur*, (பிர.) *n.* சோம்பேறி, வீணாகச் சுற்றித்திரிபவன்.

**flange**, *n.* தட்டையான விளிம்பு; நீட்டிக்கொண்டுள்ள கழுத்துப் பட்டை வகை; விலாவெலும்பு; *v.* நீட்டிக்கொண்டுள்ள கழுத்துப்பட்டை வகையை அணி.

**flank**, *n.* விலா எலும்புகளுக்கும் இடுப்புக்கும் இடைப்பட்ட சதைப்பற்று மிக்க பாகம்; மலையின் பக்கச்சிறை; கட்டடத்தின் புடைச்சிறை; படையின் புடையணி; சிறகம், புடைச்சிறை; *v.* படைவகுப்பின் பக்க அணியாய் அமை; புடையணி காத்துநில்; சிறையணியில் அமைவுறு; பக்க அணியில் இடம்பெறு; பக்கச்சிறையில் தாக்கு; பக்கவாட்டில் இடர் வருவி, புடைப்பகுதியை அச்சுறுத்து.

**flank'er**, *n.* பக்கவாட்டுக் காப்பரண்; சிறையணிவகுப்பு, பக்கச்சிறைப்பகுதி.

**flank'ers**, *n. pl.* பக்க அணி தாக்குபவர்கள், படையின் புடைச் சிறைக்குத் தாக்குதல் தொல்லை தருபவர்கள்.

**flann'el**, *n.* நாரியல் சணல் துணி; நாரியல் சணல் துணியாலான உள்ளுடை.

**flannelette'**, *n.* பருத்தியாலான நாரியல் மென்சணலாடைப் போலி.

**flann'els**, *n. pl.* நாரியல் மென்சணல் துணிவகைகள்; நாரியல் மென்சணல் துணியாலான உள்ளுடைகள்; மென் சணல் துணிக்கட்டுகள்.

**flap**, *n.* மொத்துதல், தட்டல்; சிறகடிப்பு; திண்வார்த் தொங்கல்; ஆடல்விளிம்பு, தொங்கற்பகுதி; சட்டைப் பையின் மூடு விளிம்பு; தொப்பியின் கவிகைவிளிம்பு; பொறிக்கதவம்; ஒருபுற அடைப்பிதழ், தடுக்கிதழ்; அறுவையில் தளரவிட்ட தோல் தொங்கல்; காளான் குடையின் திறந்த மேற்பகுதி; (பே-வ.) கொந்தளிப்பு நிலை; *v.* சிறகடித்துக்கொள்; சிறகுபோன்ற அகல் தொங்கல் பகுதியை அடித்துக்கொள்; படபட என்று அடி; மேலும் கீழும் ஆட்டு; முன்பின் ஊசலாட்டு; படபட என்று அடிக்கப் பெறு; ஆடு, ஊசலாடு.

**flapdoo'dle**, *n.* பித்தலாட்டம், வெறும்புரட்டு; மட்டமான முகப்புகழ்ச்சி.

**flap'jack**, *n.* மாவிற் சுட்ட எண்ணெய்ப் பணியாரவகை; முகப்பூச்சுமா வைக்கும் தட்டையான சிங்காரப்பெட்டி.

**flapp'er**, *n.* ஈக்களைக் கொல்லும் தட்டையான கருவி; கிளிகடி கருவி, தட்டை, பறவைகளை அச்சுறுத்தி விரட்டும் கிலுகிலுப்பை; காட்டு வாத்துக்குஞ்சு; கவுதாரிக்குஞ்சு; கீலிற் பொருத்தப்பட்ட தொங்குமடல்; தொங்கல், மடி; அகலமான மீன்துடுப்பு; மேலோடுள்ள உயிரின வகையின் வால; நினைவில் ஓயாது ஊடாடுபவர்; ஓயாது நினைவில் ஊடாடும் பொருள்; துடுக்கான பெண்.

**flare**, *n.* கிளரொளி, முரண் கதிரொளி; திடீர் அழல்வீச்சு, பட்டொளி; கடலின் அடையாள ஒளிவீச்சு; தீப்பந்தம்; இலக்கொளிப்படுத்த வானூர்தியிலிருந்து எறியப்படும் கிளரொளி வெடிகுண்டு; பகட்டாரவாரம்; கப்பற் பக்கங்களின் மேல்நோக்கிய புடைப்பு; பாவாடை முதலியவற்றின் அகன்று செல்லும் புடைப்புப் பகுதி; மணியின் கூண்டுபோன்ற விரிவு; *v.* சுடர்விட்டெரி; மின்னிடு; கூரொளிவீசு; கொழுந்துவிட்டெரி; உணர்ச்சி கிளர்ந்தெழு, சீறியெழு; பகட்டாகக்காட்டு; பாவு, பாவாடைபோல் பரப்பு; மணியின் கூண்டுபோல் அகல்விரிவாகு; அலைந்தாடு; (தொ.) flare up, திடீரெனக் கொழுந்துவிட்டெரி; திடீரெனச் சினங்கொண்டு சீறு.

**flare'-path**, *n.* வானூர்தி ஓடி வான் ஏற அல்லது இறங்கி ஓட உதவும் ஒளிவிளக்கம் செய்யப்பட்ட நிலப்பாதை.

**flare'-up'**, *n.* திடீர் அழல் எழுச்சி; திடீர்ப்புகழ்; மிகக் குறுகிய காலத் திடீர்விளம்பரம்; திடீர்ச்சீற்றம்; ஆர்ப்பாட்டக் களியாட்டம்.

**flash**, *n.* திடீரொளி, மின்வெட்டொளி; கணநேர அழற் பாய்ச்சல்; கணநேரம், நொடிப்போது; வெளிப்பகட்டு, புற ஆரவாரம்; திடீருணர்ச்சி; மின்விடும் கருத்துப்பாய்ச்சல்; திரைப்படத்தில் கணநேரக்காட்சி; கணநேர முன்காட்சிப் பதிவு; சுருக்கமான தந்திச்செய்தி; சாராயச் சத்துக்களுக்கு வண்ணமூட்டும் கலவைக்கூறு; படைத்துறைப் பிரிவுகளின் அடையாளமான வண்ணப்பட்டை; முழந்தாளுக்குக் கீழ்த் தெரியும்படி விடப்படும் படைத்துறை அடையாளக் காலுறைப் பகுதி; முழந்தாளுக்குக்கீழ் விடப்பட்ட அடையாள இழைக்கச்சை; ஆழம் குறைந்த இடத்தைப் படகு கடப்பதற்காக மதகுவாயிலிருந்து திறந்து விடப்படும் நீரோட்ட ஒழுக்கு; ஆழம் குறைந்த இடத்தைப் படகு கடப்பதற்காகச் செய்யப்படும் துறை; நீரை ஆழமாக்குதற்கான பலகை அணைப்பு; கருதிய திசையில் நீரை ஓடச்செய்தற்கான அணைப்பலகை; திருடர்களின் கொச்சை வழக்குக் குழுஉக் குறி; *a.* பகட்டான; பொய்யான, போலியான, பொய் வேடமான; கீழ்த்தரமான; கொச்சையான; திருடர்களைச் சார்ந்த; திருடர்களின் கொச்சை வழக்கு சார்ந்த; *v.* திடீரெனச் சுடரிட்டு ஒளிவீசு; பொறி சிதறி அழன்றெழு; பளிச்சிடு, மின்னிட்டு மறை; எதிரொளியிடு, மினுங்கு; மின்னொளிபோலத் தெறி; மின்வெட்டுப்போல விரைந்தனுப்பு; திடீர்ப்பாய்ச்சல்கள் மூலமாகச் செலுத்து; விரைந்துசெல்; பாய்வுறு; மின்னிட வை; திடுமெனத் தோன்று; திடீரென்று கருத்தில் தோன்று; கூசவை; தந்தி மூலம் அனுப்பு; கண்ணாடிவார்ப்பில் உருக்கிய குழம்பை மெல்லிய தகடாகப் பரப்பிப்பாய்ச்சு; மெல்லிய தகடாகப் பரவிப்பாய்வுறு; கண்ணாடிப் பாளத்தின்மீது வண்ண மென்படலம் பரப்பு; நீர்வகையில் வேகமாகப்பாய்; எழுந்துபாய்; பாய்ந்து நிரப்பு; பாய்ந்துபெருகு; பாய்ந்து பொங்குவி; (தொ.) flash in the pan, பகட்டான தொடக்கத்திற்குப் பிறகு தோல்வியுறு; flash out, flash up, ஒளிவீசச்செய்; திடீரென உணர்ச்சியைக் காட்டு.

**flash'back**, *n.* திரைக்காட்சியிடையே முன்னிகழ்ச்சியின் இடைப்பதிவு.

**flash'-board**, *n.* நீரோடையை ஆழமாக்குதற்கு இருபுறங்களிலும் பதிக்கப்படும் பலகைகளில் ஒன்று.

**flash'er**, *n.* புறப்பகட்டாளர்; விளம்பரக் காட்சியணியில் ஒளி தோன்றித்தோன்றி மறையச் செய்வதற்கான அமைவு.

**flash'-house**, *n.* விலைமகளிர் இல்லம்.

**flash'ing**[1], *n.* கொழுந்துவிட்டெரிதல்; விளம்பரப்படுத்துதல்; திடீரென நீர் உடைப்பெடுத்துப் பெருகுதல்; *a.* ஒளிக் கதிர்களை உமிழ்கின்ற; மின்னுகிற; பளபளப்பான, பளிச்சென ஒளிவிடுகிற.

**flash'ing**[2], *n.* கூடல்தகடு, மழைநீர் உள்ளே ஊறுமல் விலக்குதற்காக மோட்டின் கூடல்வாய்களிற் பொருத்தப்படும் உலோகத் தகடு.

**flash'ing-point**, *n.*=flash-point.

**flash'-light**, *n.* மின்பொறிக் கைவிளக்கு; கைப்பந்தம்; கலங்கரை விளக்க ஒளி, அடையாளக் குறியீடான விளக்கொளி; நிழற்படமெடுப்பதற்குரிய கூரொளி.

**flash'-pipe**, *n.* ஆவி விளக்கில் வரித்துளைகளுள்ள மிகைப் படியான குழாய்.

**flash'-point**, *n.* தீயை அருகிற் கொண்டுசென்றால் உடனே தீப்பற்றிக்கொள்ளக்கூடிய நீர்மத்தின் வெப்பநிலை.

**flash'y**, *a.* கணநேரத்தோற்றமுடைய; தோன்றிமறைகிற; புறப்பகட்டான; பகட்டித்திரிகிற; உள்ளீடற்ற, போலியான; மலிவுச்சரக்கான; அற்பமான.

**flask**, *n.* குடுவை; எண்ணெய்க்குடுவை; வேட்டைப்பையுறை, தோல் அல்லது உலோகத்தாலான வேட்டைக்காரரின் வெடிமருந்துக்குரிய பெட்டி; பிரம்பினால் வரிந்து பின்னப்பட்ட குறுகிய கழுத்தையுடைய எண்ணெய்க்கு அல்லது தேறலுக்கு உரிய இத்தாலியப் புட்டி வகை; பயணக்குடுக்கை, பயணம் செல்பவர்கள் தேறல்-சாராய வகைகள் கொண்டுசெல்லும் உலோகத்தாலான அல்லது தோலுறையுடன் கூடிய கண்ணாடியாலான புட்டி; (தொ.) Thermos flask, தட்ப வெப்ப நிலைக்காப்புக்கலம்.

**flask'et**, *n.* துணிக்கூடை; சிறிய குப்பி.

**flat**[1], *n.* அறைக்கட்டு, குடியிருப்புத்தட்டு, குடிவாழ்வுக்கு அமைந்த பல அறைகளின் தொகுதி; கடற்படை சார்ந்த கப்பலில் அறைமுகப்புக்களுடன் இணைந்த தட்டுக்கூடம்.

**flat**[2], *n.* தட்டையான பொருள்; தட்டையான பகுதி; சமதள நிலம்; தாழ்நிலம்; ஆழமற்ற நீர்நிலைப்பகுதி, சதுப்பு நிலம்; தட்டையான அடித்தளமுள்ள படகு; அகல் விரிவான உள் ஆழமற்ற கூடை; அகழ்வு புடைப்புக் காட்டாத சமதளக்கலை; நாடக மேடையில் இடையே ஏற்றி இறக்கப்படும் காட்சி ஓவியத்திரை; அரைத்தொனியளவு குறைக்கப்பட்ட இசைமானம்; அரைத்தொனியளவு குறைக்கப்படுவதற்கான இசைமானக் குறியீடு; *a.* தட்டையான, சமதளமான; புடைப்பகழ்வற்ற, வழவழப்பான; பரவலான, அகன்ற; முழுநீளத்தில் நிலம் படிந்து கிடக்கிற; முனைப்பற்ற; கவனத்தை ஈர்க்கும் கூறுகளற்ற; கவர்ச்சியற்ற; ஒரே மாதிரியான; சலிப்பைத் தருகிற, உவர்ப்பூட்டுகிற; அக்கறையூட்டாத; கிளர்ச்சியூட்டாத; உருக்கமற்ற, கனிவற்ற, மனங்கொள்ளாத; ஊக்கமற்ற, உயிர்ப்பற்ற, துடிப்பற்ற; மந்தபுத்தியுள்ள; வாட்டமுள்ள; சோர்ந்த; தீர்ந்த, மோசமான, கடைப்பட்ட; காலடி வகையில் சப்பையான; ஒலிகள் வகையில் மென்மைவாய்ந்த; *v.* தட்டையாக்கு, தளமட்டமாக்கு; *adv.* தட்டையாக, சம தளமாக; நிலம் படிந்து; உணர்ச்சியின்றி; மந்தமாக; கவர்ச்சியின்றி; தொனியில் மிகமட்டமாக; தாழ்வாக; உயர்வின்றி, சிறப்பின்றி; தகுதிகெட்டு; (தொ.) fall flat, தோல்வியுறு;

பாராட்டுப்பெறத் தவறு; கவர்ச்சியற்றிரு; flat beer, நுரைத்துப் பொங்கும் தன்மையை இழந்த சாராய வகை, சுவையற்ற சாராயவகை; flat rate, ஒரே வீதம்; sharps and flats, இசைப்பெட்டியில் கருநிற ஓசைக்கட்டைகள்; that's flat, இதைப்பற்றி ஐயமே வேண்டாம்.

flat'-boat, *n.* தட்டைப்படகு.

flat'-fish, *n.* தட்டைக் கடல்மீன் வகை.

flat'-foot, *n.* உட்குழிவுப்பகுதி தட்டையாகவுள்ள காலடி.

flat'-iron, *n.* துணித்தேய்ப்புப்பெட்டி.

flatt'en, *v.* தட்டையாக்கு; தட்டையாகு; (தொ.) flatten out, வானூர்தியைச் சமதள மட்டமாகக் கொண்டு வா.

flatt'er, *v.* முகப்புகழ்ச்சிசெய்; இச்சகம் பேசு, பொய்யாகப் புகழ்ந்துபசப்பு; கெஞ்சி ஆதரவைப்பெறு; மட்டுமீறி முகமனுரை; அளவுமீறிப் புகழ்; பெருமைப்படுத்திப் பேசு; வீணான நம்பிக்கையைத் தோற்றுவி; தற்பெருமை உணர்ச்சிக்கு நிறைவளி; மனநிறைவுசெய், மகிழச்செய்; கலைப் பண்பை மிகைபடப்பாராட்டு; கலைஞரை அளவுகடந்து பாராட்டிப்பேசு, மிகைபடப் பாராட்டுக்கூறு.

flatt'ery, *n.* முகப்புகழ்ச்சி; தகாப்பாராட்டுரை, மட்டுமீறிய புகழ்ச்சி; போலிப்புகழ்ச்சி.

flatt'ish, *a.* ஓரளவு தட்டையான.

flat'ulence, *n.* வயிற்றுப்பொருமல்.

flat'ulent, *a.* உணவுக்குழாயில் வாயுவைப் பிறப்பிக்கின்ற; உணவுக்குழாயின் வாயுவால் விளைவுற்ற; பொருமலுக்கு ஆட்பட்ட, வயிற்றில் பொருமலுள்ள; உப்பலான; செருக்குமிக்க, வீம்புடைய; காற்றுப்பிரிகிற; வெறுமையான, பயனற்ற; பகட்டான.

*flat'us*, (ல.) *n.* வாய்வு, வயிற்றுவளி, குடல்வளி.

flat'ways, flat'wise, *adv.* தட்டையான பகுதியில், தட்டைப் பகுதியின் போக்கில்.

flat'-worm, *n.* குடற்புழு.

flaunt, *n.* வீம்படிப்பு, வீறுப்பு, பகட்டாரவார ஆர்ப்பாட்டம்; *v.* தன்மிகைப்புக்கொள்; ஆர்ப்பரி.

flaut'ist, *n.* குழலோர்.

flaves'cent, *a.* மஞ்சளாக மாறுகிற; மஞ்சள் சாயலுள்ள; சிறிது மஞ்சளான.

flav'in, fla'vine, *n.* மரப்பட்டை வகையிலிருந்து எடுக்கப்பட்டு அறுவை மருத்துவ நச்சுக்காப்பாகப் பயன்படும் மஞ்சள் சாய வகை.

flav'our, *n.* நறுமணச்சுவை; தனிச்சுவைத்திறம்; *v.* நறுஞ்சுவையூட்டு; பக்குவப்படுத்து.

flaw[1], *n.* வடு; வெடிப்பு, பிளவு; கோட்டம், பழுது; குறைபாடு; ஆவணமோ நடைமுறையோ சான்றுகளோ சட்டமுறைப்படி செல்லுபடியாகாமல் தடைசெய்யத்தக்க வழு; *v.* பிள; வெடிப்புறு; கெடு, பழுதுண்டாக்கு; கேடடை, பழுதுபடு.

flaw[2], *n.* திடீர்ப்புயல்; சிறுநேரச் சண்டமாருதம்.

flax, *n.* ஆளிவிதைச்செடி, மென்னயச்சணல் தரும் நீலமலர்ச் செடி வகை; (தொ.) cloth of flax, மென்சணல்துணி.

flax'-comb, *n.* சணல் சிக்ககற்றும் சீப்புப்போன்ற கருவி.

flax'en, *a.* சணலாலான, சணல்சார்ந்த; தலைமயிர்வகையில் செம்மை செய்யப்பட்ட சணல் போன்ற நிறமுடைய; இலேசான பழுப்பு மஞ்சள் வண்ணமான.

flax'-seed, *n.* ஆளிவிதை.

flax'y, *a.* சணல்போன்ற; சணலின் வண்ணச்சாயலுடைய.

flay, *v.* தோலுரி; கடுமையாகக் கண்டனம் செய்; கொள்ளையடி; பாழாக்கு; குதிரைப்பந்தய வெளிப்புல் நிலவகையில் ஓரத்தைக் கத்தரி.

flay'-flint, *n.* பணம் பிடுங்கி; கஞ்சன்.

flea, *n.* தெள்ளுப்பூச்சி; உண்ணி; வெறுக்கத்தக்க இழிவான சிறிய உயிரினம்; (தொ.) a flea in one's ear, மூக்கறுபடல்.

flea'-bite, *n.* தெள்ளுப்பூச்சிக்கடி; தெள்ளுப்பூச்சிக்கடியாலான சிறு வடு; அற்பப்பொருள்; அற்பச்செய்தி; மிகச்சிறிய தொந்தரை; மிகச்சிறு செலவு; விலங்கு வண்ணத்திற் சிறிய செந்நிறச் சாயலுள்ள கறை.

flea'-bitten, *a.* தெள்ளுப்பூச்சிகளால் கடிக்கப்பட்ட; கஞ்சத்தனமான, இழிந்த; விலங்குகளின் மங்கல்நிற மேனிமீது சிறிய செந்நிறச் சாயலுள்ள கறைகள் படிந்த.

fleam, *n.* அறுவைக் கூர்ங்கத்தி.

*fleche*, (பிர.) *n.* திருக்கோயிலின் இருபுற மாடத்திற்கும் இடையேயுள்ள மெல்லிய தூபி.

fleck, *n.* மறு, மச்சம்; தோலிலுள்ள புள்ளி; வடு; வண்ணக்கீற்று; ஒளிக்கீற்று; சிறுதுகள்; புள்ளி; *v.* புள்ளிகளிடு; மறுப்படுத்து; வெவ்வேறான நிறங்களாக்கு.

flecked, *a.* புள்ளிகளுள்ள.

fleck'er, *v.* புள்ளிகளிடு; பல்வேறு நிறங்களாக்கு; பட்டைபட்டையாகச் சிதறடித்துவை.

fled, *v.* flee என்பதன் இறந்தகாலம்.

fledge, *v.* சிறகுடையதாக்கு, இறகளி; இறகுகளால் அணிசெய்; பறப்பதற்குரிய சிறகுகளை எய்தப்பெறு.

fledge'ling, fledg'ling, *n.* சிறுபறவை; புதிதாகச் சிறகு முளைத்த பறவைக்குஞ்சு; உலக அனுபவமற்றவர்.

flee, *v.* ஓடிப்போ; தப்பி ஓடு; மறைந்துபோ; அணுகாதிரு, தொலைவாக்கி வை; தவிர், விலக்கு, நீக்கு.

fleece, *n.* கம்பளியாட்டுமயிர்; கம்பளியாட்டு மயிர்போலப் பயன்படும் பிற விலங்குமயிர்; ஓர் ஆட்டில் ஒருதடவை கத்தரித்த கம்பளி அளவு; கம்பளிபோன்ற முறமுறப்பான வளமான தலைமயிர்; கம்பளிபோன்ற பொருள்; முகிற்கற்றை; பனிக்கீற்று; பஞ்சுக்கற்றை; கம்பளிக்கற்றை; *v.* கம்பளி மயிரினைக் கத்தரி; மயிர்கத்தரித்து ஆட்டின் உடலை வெறுமையாக்கு; பணம்பறி; உடைமை கைப்பற்று; கம்பளிபோல மூடிமறை, மூடாக்கிடு.

fleeced, *a.* கம்பளிமயிர் போர்த்த.

fleec'er, *n.* ஆட்டு உரோமம் கத்தரிப்பவர்; கொள்ளையடிப்பவர்.

flee'cy, *a.* கம்பளிபோன்ற, ஆட்டுரோமம்போன்ற.

fleer, *n.* ஏளனப்பார்வை; ஏளனப்பேச்சு; *v.* எள்ளி நகையாடு; குத்தலாகப்பேசு; கிண்டல்செய்.

fleet[1], *n.* கப்பற்படை; ஒரு தலைமையின் கீழுள்ள போர்க்கப்பல்களின் எண்ணிக்கை; இணைந்துசெல்லும் கப்பல்களின் தொகுதி; கூட்டாகச்செல்லும் படகுகளின் குழு; வானூர்திகளின் குழு; (தொ.) Fleet Air Arm, கப்பற்படையின் வானூர்திப்பிரிவு; fleet of cabs, fleet of taxis, ஒரே உரிமையாளருக்குட்பட்ட வாடகை உந்துவண்டிகளின் தொகுதி; the fleet, கடற்படை.

fleet[2], *n.* சிறுகடற்கழி, ஓடை, உட்குடா; *a.* ஆழமில்லாத; *adv.* ஆழம் நிறைய இல்லாத இடத்தில்; (தொ.) Fleet marriage, கள்ளத்தனமாக நடத்தப்படும் திருமணம்; Fleet parson, கடனுக்காகச் சிறையிலடைக்கப்பட்ட சமய போதகர்; Fleet Street, பத்திரிகை உலகம், லண்டன் நகர்ப் பத்திரிகைத் தொழில் உலகம், The Fleet, லண்டன் நகரிலுள்ள தேம்ஸ் ஆற்றிற் கலக்கும் வடிகால் கழிநீர் ஓடை; ஓடை மருங்குள்ள சிறை.

fleet[3], *a.* விரைவான; எளிதில் இயங்குகிற; *v.* வழுக்கிச் செல்; மறைந்துபோ; கணநேரம் தோன்றிமறை; வேகமாகக் கடந்துசெல், நழுவிச்செல்; விரை; பறந்தோடு.

fleet'ing, *a.* விரைவிற் செல்கின்ற; தற்பொழுதைக்கான.

Flem'ing, *n.* பிளாண்டர்ஸ் (Flanders) நாட்டுக் குடிமகன்.

Flem'ish[1], *n.* பிளாண்டர்ஸ் (Flanders) மாநிலமொழி; *a.* பிளாண்டர்ஸ் மாநிலஞ் சேர்ந்த.

flem'ish[2], *v.* வேட்டைநாய்வகையில் மோப்பம் பிடிக்கும் வேளையில் வாலையும் உடலையும் உலுக்கு.

**flench**, **flense**, *v.* திமிங்கிலத்தை வெட்டு, திமிங்கிலத்தைத் துண்டுபோடு ; கடல்நாயைத் தோலுரி.

**flesh**, *n.* தசை ; உடலின் ஊன்முழுத்தொகுதி ; விலங்கின் எலும்பைச் சுற்றியுள்ள மென்தசைப்பொருள் ; இறைச்சி, மாமிச உணவு ; விலங்கின் உடல் ; உடம்பு, பருவுடல் ; விலங்கு ; விலங்கியல்பு, விலங்குக்கூறு ; மனிதனின் உடல் சார்ந்த இயல்பு ; மனித இனம் ; உடலுறவு, உறவினர் பாசம் ; உடல்சார்ந்த ஆசைகளின் தொகுதி ; பழத்தின் சதைப்பற்று ; தின்னும் சுளைப்பகுதி ; கொழுப்பு, தசை வளம் ; உடலோடு கூடிய உயிர் ; தோலின் தசைப்பக்கம் ; *v.* வேட்டைநாயைக் குருதிச்சுவைமூலம் தூண்டி வெறியூட்டு ; குருதி சிந்தும் முறையில் பழக்கிவிடு ; வெற்றியின் முன்சுவைகாட்டிக் கிளர்ந்தெழச்செய் ; வாளை முதன்முதலாகத் தசைமீது பதம்பார் ; அறிவுத்திறத்தை வழங்கித் தொடக்கப்பதம்பார் ; மைக்கோலை வழங்கிப் பதம்பார் ; தசை பரிசாக வழங்கு ; பழகித்தேறும்படி செய் ; திணி ; கொழுக்கவை ; தசையூட்டி அவா நிரப்பு ; தசைகொழுக்கவை ; தசையைச் சுரண்டி எடு ; (தொ.) after the flesh, உடல் சார்ந்து, உடலியல்பு பின்பற்றி ; flesh and blood, உடல் ; தசைப்பொருள் ; மனித இனம் ; உணர்ச்சிகளும் குறைபாடுகளும் உள்ள மனித இனவியல்பு ; உயிரோடு கூடிய, கற்பனையல்லாத ; flesh and fell, முழு உடலும் ; முழுவதும் ; flesh side, விலங்கின் சதையோடு சேர்ந்திருந்த தோலின் பகுதி ; flesh tights, உடலமைப்போடு நெருங்கி இயற்கையான தோலின் நிறத்தோடு கூடி இணைந்த உடை ; flesh tints, ஓவியர் படத்தில் அமைக்கும் தோலின் நிறம் ; in flesh, பருத்த, தடித்த ; in the flesh, உடலுருவில் ; வாழ்க்கையில் ; lose flesh, இளைத்துப்போ ; make one's flesh creep, இயற்கை கடந்தவற்றைப் பற்றிய அச்சத்தைக் கிளப்பிக் கிலியூட்டு ; one flesh, ஒருவரே போன்ற ஒருமைப் பாடுடையவர் ; one's own flesh and blood, ஒருவருடைய நெருங்கிய உறவினர் ; பின்மரபினர் ; proud flesh, புண்ணின் மீது முளைத்தெழுகின்ற சிறுமணிகள் போன்ற அளவுமீறிய வளர்ச்சி ; put on flesh, தடிப்பாகு, பருமனுகு, சதை வைக்கப்பெறு.

**flesh'-brush**, *n.* குருதி ஓட்டத்தைத் தூண்டி விரைவுபடுத்தும் மயிர்க்குச்சு வாய்ந்த தூரிகை.

**flesh'-colour**, *n.* தசைநிறம், மஞ்சள் சார்புகொண்ட இளஞ் சிவப்புநிறம்.

**flesh'-coloured**, *a.* தசைநிறமான, மஞ்சள் சாயல்கொண்ட இளஞ்சிவப்பு நிறமான.

**flesh'-fly**, *n.* இறந்த உடற்சதையில் முட்டையிட்டு முட்டைப் புழுக்களை வளரவிடும் ஈ வகை.

**flesh'-glove**, *n.* குருதி ஓட்டத்தைத் தூண்டி விரைவுபடுத்தும் மயிர்க்குச்சு வாய்ந்த கையுறை.

**flesh'ings**, *n. pl.* உடலமைப்போடு நெருக்கி இயற்கையான தோலின் நிறத்தோடு கூடி இணைந்த உடை.

**flesh'ly**, *a.* தசைக்குரிய ; உடல்சார்ந்த ; உடல்வாழ்க்கையோடொட்டிய ; மனித இயல்புக்குரிய ; புலனுணர்ச்சியின்பங்களில் தோய்ந்த ; சிற்றின்பம் சார்ந்த ; உலகியல் பற்றுடைய ; தெய்வத்தன்மையில்லாத ; மேலுலகப் பற்றற்ற ; ஆன்மிகமல்லாத.

**flesh'-pot**, *n.* இறைச்சி சமைக்கப்படும் கலம் ; இறைச்சிவளம் ; இன்பநிறை உயிர்வாழ்க்கை.

**flesh'-wound**, *n.* எலும்பு அல்லது உயிர்நிலையான உறுப்பை எட்டாத காயம்.

**flesh'y**, *a.* கொழுப்புள்ள, தசைப்பற்றுள்ள ; கொழுத்த, உருண்டு திரண்ட, பருமனுன ; சதைசார்ந்த, எலும்பில்லாத ; பழவகையில் சதைப்பற்றுள்ள ; சதைபோன்ற.

**fleur'-de-lis'**, *n.* பகட்டான மலர்வகை ; கட்டிய மரபில் அல்லிமலர் ; பிரான்சு நாட்டரசரின் அரசுச்சின்னம் ; பிரான்சு நாட்டின் அரசகுடும்பம் ; பிரான்சு.

**fleur'et**, *n.* சிறுமலர்போன்ற அணிகலன்.

***fleuron***, (பிர.) *n.* மலர் வடிவமான சிற்ப அணியொப்பனை.

**fleur'y**, *a.* (க. க.) பகட்டான அல்லிமலர் வகையினுல் ஒப்பனை செய்யப்பட்ட.

**flew**, *v.* fly என்பதன் இறந்தகாலம்.

**flews**, *n. pl.* வேட்டைநாய் முதலியவற்றின் தொங்கு தாடைகள்.

**flex**, *n.* மின்விளக்குப் போடுவதில் பயன்படுத்தப்படும் காப்பிட்ட துவள்கம்பி ; *v.* வளையச்செய் ; உறுப்புக்களை வளை ; பாறைகளை மடியச்செய்.

**flex'ible**, *a.* உடையாமல் வளைகிற ; வளையத்தக்க, துவள்கிற, நெகிழ்வான ; எளிதில் கையாளத்தக்க ; எளிதில் பின்பற்றுகிற ; இசைவிணக்கமுடைய ; எளிதில் வழிக்குக் கொண்டுவரத்தக்க ; எளிதில் இசைந்துகொடுக்கிற ; பலதிறப் பயிற்சியுள்ள.

**flex'ile**, *a.* எளிதில் இசைந்துகொடுக்கிற, இழைவான, குழைவான ; எளிதில் இயங்குகிற ; எளிதிற் பழகக்கூடிய, எளிதில் வசப்படுத்தத்தக்க.

**fle'xion**, *n.* வளைவு ; நெளிவு ; வளைந்த நிலை ; உறுப்பு வளைவு ; வளைந்த பகுதி ; (இலக்.) இலக்கணக்கூற்றின் பலதிறப் பாங்கு.

**flex'or**, **flexor muscle**, **flexor tendon**, *n.* மடக்கி, வசிநரம்பு, மூட்டுமடங்கச்செய்யும் தசை.

**flex'uose**, *a.* (தாவ.) வளைந்து வளைந்து செல்கிற, அலையாடிச் செல்கிற.

**flex'uous**, *a.* வளைவுகள் நிரம்பிய, வளைந்து வளைந்து செல்கிற.

**fle'xure**, *n.* வளைவு, நெளிவு, வளைந்த நிலை ; திருப்பம் ; கோணல்.

**flibb'ertigibb'et**, *n.* வாயாடி ; அவதூற்ருளர்.

**flick**, *n.* சவுக்குச்சொடுக்கு, சுண்டியிழுத்தல் ; சுண்டுதல், சொடுக்கிடல் ; சடாரென்ற வெடிப்பொலி ; *v.* கசைக் கயிற்றினுல் சொடுக்கி அடி ; விரலினுற் சுண்டு ; உதறியடி.

**flick'er** [1], *n.* சுடர்நடுக்கம் ; மினுக்குமினுக்கென ஒளிவிடுதல் ; *v.* நடுங்கு ; துடி ; அதிர்வுறு ; ஊசலாடு ; சிறகுவகையில் படபடவென்றடித்துக்கொள் ; சுடர்வகையில் இமைத்திமைத்து ஒளிகால்.

**flick'er** [2], *n.* அமெரிக்க மரங்கொத்தி பறவைவகை.

**fli'er**, *n.*=flyer.

**flies**, *n. pl.* நாடகமேடை முகப்பின் மேற்பகுதி.

**flight** [1], *n.* பறத்தல் ; பறக்கும் முறை ; பறக்கும் ஆற்றல் ; வானிற் பறத்தல், வான்செலவு ; பருந்தின் வான்மீச்செலவு ; பறவையைப் பின்பற்றி வேட்டையாடுதல் ; குடிபெயர்ச்சி ; குடிபெயர்குழு ; புலம்பெயர் பறவைக்கூட்டம் ; இடம்பெயர் பூச்சியினத் தொகுதி ; புறம்பெயர்வு ; எறிபடைகளின் விரைவியக்கம் ; காலத்தின் விரைசெலவு ; எட்டா அவா உயர்வு ; மட்டுமீறிய எண்ண உயர்வு ; வரம்புகடந்த சிந்தனை உயர்வு ; எண்ணவேகம் ; கற்பனைவேகம் ; நகைத்திற வேகம் ; பறவை பறக்கும் தொலைவெல்லை ; விமானம் பறக்கும் தூர அளவு ; எறிபடை செல்லும் தொலைவெல்லை ; படிக்கட்டின் திசை திரும்பாக் கூறு ; பந்தயத் தடைவேலித் தொகுதிக்கூறு ; அம்புப் படலம் ; எறிபடைத்தொகுதி ; குண்டுத்தொகுதி ; விமானப் படைப்பிரிவு ; ஒரே பருவத்தில் தோன்றிய பறவைகளின் தொகுதி ; *v.* காட்டுக்கோழியை இலக்குவைத்து எய் ; காட்டுக்கோழிமீது வேட்டிடு ; பறக்கும்போது இலக்குவைத்து எய் ; பறக்கும்போது வேட்டிடு ; மரப்பந்தாட்டத்தில் பந்து வேகத்தையும் செல்பாதை வளைவையும் மாற்றியமை ; (தொ.) in the first flight, in the top flight, முதன்மை இடம்பெற்ற நிலையில்.

**flight** [2], *n.* ஓடிப்போதல், ஓட்டம் ; ஓடியொளித்தல், விரைந்து பின் வாங்குதல் ; (தொ.) take flight, take to flight, betake oneself to flight, ஓடிப்போ ; put to flight, துரத்து, கலைத்து வெருட்டு.

**flight'-deck**, *n.* விமானந்தூக்குங் கப்பலில் விமானத்தளம்.

**flight'-feather**, *n.* பறக்க உதவும் இறகு.

**flight'less**, *a.* பறக்கும் ஆற்றலற்ற.

**flight'-lieutenant**, *a.* விமானப்படைத் துணைத்தலைவர்.

**foot'plate,** *n.* இயந்திரத்தில் ஆள்நிற்கும் மேடை.

**foot'-pound,** *n.* ஒரு கல் எடையுள்ள பொருளை ஓரடி உயர்த்துவதற்குத் தேவையான ஆற்றல் அலகு.

**foot'-pump,** *n.* காலால் இயக்கப்படும் விசைக்குழாய்.

**foot'-race,** *n.* ஓட்டப் பந்தயம்.

**foot'rest,** *n.* அடிதாங்கி.

**foot'rot,** *n.* ஆடு மாடுகளின் காற்புண் வகை.

**foot'-rule,** *n.* அடிநீள நேர் உருளைக்கட்டளை; அடிக்கோல்.

**foot'-soldier,** *n.* காலாட்படை வீரன்.

**foot'sore,** *a.* நடப்பதனால் புண்பட்ட காலையுடைய, நடந்து அலுத்துப்போன.

**foot'stalk,** *n.* இலைக்காம்பு; மலர்க்காம்பு; கப்பலில் ஒட்டிக் கொள்ளும் சோழிக் கொத்தின் அடிக்கூறு.

**foot'-stall,** *n.* குதிரை ஏறும் படித்தட்டு.

**foot'step,** *n.* அடியீடு; காலடியோசை; நடக்கும் முறை; தடம், அடிச்சுவடு; படிக்கட்டை; முன்மாதிரி; (தொ.) follow in one's footsteps, செயல் பின்பற்றி நட.

**foot'-stone,** *n.* அடிக்கல்; கல்லறையின் அடிப்புறக் கல்.

**foot'stool,** *n.* கால்மணை.

**foot'-warm'er,** *n.* கால் வெப்ப அமைவு.

**foot'way,** *n.* நடைப்பாதை; ஏணிப்படிகள் கொண்ட சுரங்கவழி.

**foot'wear,** *n.* =foot-gear.

**foo'zle,** *n.* குழிப்பந்தாட்டத்திற் கைக்கேடான தோல்வி; *v.* இசைவுக் கேடாகச் செய்; அரைகுறையாகச் செய், போலிச் செயலாற்று, குழப்பியடி.

**fop,** *n.* குலுக்கித் திரிபவன், பகட்டன்.

**fop'ling,** *n.* தற்பெருமையாளர், பாவனை செய்பவர், பாசாங்கு செய்பவர்.

**fopp'ery,** *n.* பல்வண்ண உடை மினுக்கு ஒப்பனை; தற்பெருமை, இடம்பம்; பாசாங்குத்தனம்; போலி நடை; மடமை.

**fopp'ish,** *a.* ஆடை அணிவதிற் பகட்டும் வீண்பெருமையும் கொண்ட; செயற்கை ஆடம்பரம் மேற்கொள்கிற; போலித் தனமான.

**for,** *prep.* ஆக, வேண்டி; பொருட்டு, காரணமாக; முன்னிட்டு; பயன் கருதி; நலங்கருதி; சார்பாக; ஆதரவாக; பெயரால்; வகையில்; குறித்து; இடத்தில், பதிலாக; தகுதியாக; உரித்தாக; ஒப்பு நோக்க, சூழல் கருதினால்; ஒப்பாக; சரியாக; என்பது கருதினால்; நாடி, நோக்கி; என, என்ற நிலையில்; அடைய; பெறுவதற்காகக் கூட; கால எல்லையில்; இட எல்லையில்; *conj.* ஏனென்றால்; எப்படியென்றால்; (தொ.) as for, வகையில்; பற்றிய வரையில், சம்பந்தப்பட்டவரையில்; be in for it, be for it, வேண்டாதது ஏதோ வரப்போகிற தென்று எதிர்நோக்கியிரு; for all that, இவை ஒருபுறமிருக்க, இருந்தபோதிலும்; nothing for it but, தவிர வேறு வழியில்லை; once for all, பலமுறை திரும்பச் சொல்லாமல் கடைசித் தடவையாக; take my word for it, ஐயுறவு வேண்டாம், உறுதியாகக்கொள்.

**fo'rage,** *n.* கால்நடைத் தீவனம்; தீனி, போர்க்குதிரைக்குரிய தீனி; சூறையாட்டு; மேய்ச்சல் தேட்டம்; *v.* கொள்ளையடி, சூறையாடு; மேய்ச்சல் தேடு; எங்குந் தேடு.

**fo'rage-cap,** *n.* காலாட்படைவீரர் பொது நேரத்தில் அணியும் குல்லாய்.

**foram'en,** *n.* புழை; ஊடுசெல் வழி; *pl.* foram'ina.

**foram'inated, foram'inous,** *a.* சிறு தொளைகள் கொண்ட; நுண் தொளைகள் உடைய.

**forasmuch' as,** *conj.* என்ற காரணத்தினால்.

**fo'ray,** *n.* தாக்கெழுச்சி; கொள்ளையடிப்பு; *v.* தாக்கு; கொள்ளையடி; சூறையாடு

**forbad, forbade,** *v.* forbid என்பதன் இறந்தகால வடிவங்கள்.

**forb'ear, forbear'[1],** *n.* முன்னோர், மூதாதை.

**forbear'[2],** *v.* பொறுத்துக்கொண்டிரு; உணர்ச்சியை அடக்கிக்கொண்டிரு; தவிர்த்திரு, விலக்கியிரு; பயன்படுத்தாதிரு; கூறாதிரு.

**forbear'ance,** *n.* பொறுமை; வெகுளியை அடக்கியாளுதல்; அருளிரக்கம்.

**forbear'ant, forbear'ing,** *a.* நீண்டகாலம் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிற; பொறுமையோடிருக்கிற.

**forbid',** *v.* தடையாணையிடு; செயல்தடுத்து உத்தரவிடு; இசைவுமறு; உரிமைமறு; விலக்கு, தவிர், தடுத்து நிறுத்து.

**forbidd'en[1],** *v.* forbid என்பதன் முடிவெச்சம்.

**forbidd'en[2],** *a.* தடுக்கப்பட்ட; தடை விதிக்கப்பட்ட; சட்ட விரோதமான; (தொ.) forbidden fruit, விலக்கப்பட்டதால் விரும்பப்படும் பொருள்; எலுமிச்சையினப் பழம்; பற்குறி போன்ற அடையாளங்களையுடைய பழவகை.

**forbidd'ing,** *a.* கவர்ச்சியற்ற, அவாவூட்டாத; கொடிய தோற்றமுள்ள; அச்சுறுத்துகின்ற; அருவருப்பான; தீமை குறித்த.

**force[1],** *n.* வலிமை, பலம்; உடல்வலு; பொருளின் ஆற்றல்; இயற்கை ஆற்றல்; விசை, வேகம்; இயக்குந்திறம்; உந்துவலி; ஒருமுக ஆற்றல், முனைத்த முயற்சி; தாக்காற்றல்; மோதுவலி; படை வலிமை; படைவீரர் குழு, படைப்பிரிவு; படை; காவலர் தொகுதி; மனவுறுதி; உளத்திட்பம்; ஆட்சித்திறம்; துணைவலி, சூழல்வலி; பயன்நிறைவுத் திறம்; கலைவண்ண முனைப்பு; வாதவலிமை; நேர்மை வலு; சட்ட உரிமை வன்மை; நடைமுறைத்திறம், நடப்புநிலை; உயிர்க்கூறு, உட்கோள்; இயற்கை ஆற்றல்கூறு; இயற்பண்பாற்றல்; இயல்திறம்; விசைத்திறம்; *v.* வற்புறுத்து, கட்டாயப்படுத்து; கற்பழி; வலிந்து செயற்படுத்து; வலிந்து வழி உண்டு பண்ணிச் செல்; திணி, வலிந்து புகுத்து; முழு வலுக்கொண்டு இழு; முழு ஆற்றலுடன் தள்ளு; எதிரித்தள்ளு, தடைமீறிச் செல்; உரிமை மீறு; வலிமையால் தகர்த்தெறி; முழு ஊக்கம் செலுத்தி உழைக்கச் செய்; மட்டுமீறி உழைக்கச் செய்; மட்டுமீறி விரைவுபடுத்து; செயற்கையாகக் கனிவி: விருப்பத்துக்கெதிராகச் செயலாற்றச் செய்; சொல் வகையில் வலிந்து பொருள்கொள்; சீட்டாட்டத்தில் வலிந்து துருப்புச்சீட்டு வெளியிடும்படி செய்; வன்கண்மையால் வெற்றிபெறு; வேறு வழியில்லாதாக்கு, நிர்ப்பந்தப்படுத்து; போக்கு முட்டச்செய்; அடக்கியாளு, வன்முறைப்படுத்து; (தொ.) force an analogy, உவமைக்கு வலிந்து பொருள்கொண்டு அதன் பொருளையழி; force a passage, force one's way, வலிந்து வழியுண்டாக்கிக்கொண்டு செல்; force a smile, வலிந்து புன்முறுவல் வருவி; வேண்டுமென்றே புன்முறுவல் கொள்; force one's voice, இயல்பான குரல்கடந்து ஒலி யெழுப்ப முயற்சி செய்; force the game, ஆட்ட எண்களை விரைவிற் பெறுவதற்கு வேண்டுமென்றே இடர்களில் துணிந்து இறங்கி ஆடு; force the pace, force the running, ஓட்டப் பந்தயத்தில் எதிரி விரைவில் களைப்புறுமளவிற்கு உச்ச விரைவான ஓட்டத்தை மேற்கொள்.

**force[2],** *n.* நீர்வீழ்ச்சி, அருவி.

**for'ced,** *a.* மிக்க கடுமுயற்சி வாய்ந்த; செயற்கையான; போலியான; வலிந்து கனிவிக்கப்பட்ட; (தொ.) forced landing, வானூர்தியின் வலிந்த நில இறக்கம்; forced march, கடுமுயற்சியோடுகூடிய விரை படையணிச்செலவு.

**force'ful,** *a.* ஆற்றல் வாய்ந்த; ஊக்கமிக்க; ஆற்றலுடன் இயக்கப் பெறுகிற.

***force majeure,*** (பிர.) *n.* தடுக்கமுடியாத வலுக்கட்டாய நிலை; ஒப்பந்தம் நிறைவேற்றாமைக்குச் சாக்குப்போக்காகக் கூறப்படும் விலக்கமுடியாத இடையூறு, கட்டுப்படுத்த முடியாத இடையீடுகளால் ஏற்படும் இக்கட்டு.

**force'-meat**, *n.* பூரணம் வைப்பதற்காகக் குறுகத்தறித்து அரிந்து பக்குவப்படுத்தப்பட்ட இறைச்சி.

**for'ceps**, *n.* பற்று குறடு; சாமணம் போன்ற இடுக்கி உறுப்பு.

**for'ces**, *n. pl.* படை வகுப்புக்கள், படைகள்.

**for'cible**, *a.* வலுக்கட்டாயமான, வலிந்து செய்யப்பட்ட; மனத்திற் பதியும்படியான; ஏற்கச்செய்யும் ஆற்றலுடைய; ஈர்க்கக்கூடிய.

**for'cible-feeble**, *a.* வலிமைக் குறைவினை வீறுப்பினுல் மறைக்கிற.

**ford**, *n.* கடவுத்துறை, ஆறு முதலியவற்றில் நடந்து கடக்கக் கூடிய ஆழமில்லாப் பகுதி; *v.* நடந்து ஆறு முதலிய வற்றைக் கடந்துசெல்.

**fordid'**, *v.* fordo என்பதன் இறந்தகாலம்.

**fordo'**, *v.* சோர்வுறுத்து.

**fordone'**, *v.* fordo என்பதன் முடிவெச்சம்.

**fore**[1], *n.* முற்பகுதி; கப்பலின் முன்புறம்; *a.* முன்புறமுள்ள; *adv.* முன்னுல்; முன்னிலையில்; (தொ.) at the fore, (கப்.) பாய்மரத் தலைப்பகுதியின் முன்புறத்தில்; கப்பலின் முன் புறத்துக் கம்பத்தின்மீது காட்சியளிக்கிற; come to the fore, முன்னுக்கு வா; தலைமை வாய்ந்த பங்குகொள்; fore and aft, கப்பலின் முன்புறத்திலும் பின்புறத்திலும்; கப்பலின் நீட்டுப் போக்காக, கப்பல் முழுமையும்; fore and aft cap, முன் புறமும் பின்புறமும் குவடு உடைய தொப்பி; fore and aft rigged, நீட்டுப்போக்காகக் கட்டப்பட்ட பாய் மரங்களுடைய; to the fore, அதே இடத்தில்; எளிதிற் கிடைக்கக்கூடிய; கைக்கு எட்டுகிற; சுறுசுறுப்பான; முனைப்பான; பகட்டாகத் தெரிகிற.

**fore**[2], *n.* குழிப்பந்தாட்டத்தில் பந்தடிப்பவருக்கு எதிரிலுள்ள வர்களை எச்சரிக்கும் சொல்.

**fore**[3], *prep.* முன்னிலையில், சான்ருக.

**fore'arm**[1], *n.* முன் கை, முழங்கை முதல் மணிக்கட்டு அல்லது விரல் நுனிவரையுள்ள பகுதி; விலங்கின் முன்கால்; பறவையின் சிறகு.

**forearm'**[2], *v.* முன்னரே படைக்கலம் பூண்டிரு; முன்னெச்ச ரிக்கையாயிரு, முன்னேற்பாடாயிரு.

**fore'bear**, *n.*=forbear[1].

**forebode'**, *v.* பொல்லாங்கு முன்னறிவித்துக் காட்டு, தீமை குறித்துக்காட்டு, தீக்குறியாயமை; பின்வரு தீமையின் முன்குறி காண்.

**forebod'ing**, *n.* தீமை முன்னறிகுறி; தீக்குறி; இடர் முன் னுணர்வு.

**fore'-cabin**, *n.* இரண்டாவது உயர்வகுப்புப் பிரயாணிக ளிருக்கும் கப்பலின் முன்புற அறை.

**fore'carriage**, *n.* முன்சக்கரங்கள் தனித்தியங்கும் இயல்புடன் அமைக்கப்பட்ட வண்டியின் முன்பகுதி.

**fore'cast**[1], *n.* முன் மதிப்பீடு; முன்ஆய்வு; உய்த்துமுன் னுணர்வு; வானிலை முன் கணிப்பு.

**forecast'**[2], *v.* குறிசொல்; முன்னரே குறி, முன்னரே உய்த் துணர்ந்து கூறு; தட்பவெப்பநிலையினை முன்னுய்ந்து ஊக மதிப்பிடு குறி.

**fore'castle**, *n.* (வர.) போர்க் கப்பலில் முன்புறமுள்ள சிறு உயர்மேடை; வாணிகக்கப்பல்களில் தளத்திற்குக்கீழே கப்ப லோட்டிகள் தங்கும் முன்பகுதியிடம்.

**foreclose'**, *v.* தடைசெய், தவிர், விலக்கு; அனுபவ உரிமை யைத் தடைசெய்; அடைமான மீட்புரிமையைத் தடைசெய்; பணம் செலுத்தாமைக்காக அடைமான மீட்புரிமை ஒழி; மீட் புரிமையை அகற்று; வேற்றுமைக்கிடமான உரிமையை முன்சென்று கைப்பற்றிவிடு.

**fore'court**, *n.* முன்கட்டு, கட்டிடத்தின் முன்புறத்துள்ள சுற்றுக்கட்டுள்ள முற்றம்.

**fore'edge**, *n.* புத்தக முன்விளிம்பு, ஏட்டின் வெளியோரம்.

**fore'fathers**, *n. pl.* முன்னோர், மூதாதையர்.

**fore'finger**, *n.* ஆட்காட்டி விரல், சுட்டு விரல்.

**fore'foot**, *n.* விலங்கின் முன்னங்கால்களிலொன்று; (கப்.) கப்பல் அடிக்கட்டையின் முன்னுலுள்ள துண்டுப் பகுதி.

**fore'front**, *n.* முன்னிடம்; முற்புறப்பகுதி; முன்னணி.

**foregath'er**, *v.*=forgather.

**fore'gift**, *n.* (சட்.) குத்தகைக்கான முன்தவணைக் கட்டணம்.

**fore'gleam**, *n.* வருங்காலத்தின் கணநேரத் தோற்றம்.

**forego'**[1], *v.*=forgo.

**forego'**[2], *v.* முன்செல்; முந்து.

**forego'er**, *n.* முன்னிருந்தவர்; முற்பதவியாளர்.

**foregone'**, *v.* forego[2] என்பதன் முடிவெச்சம்.

**fore'ground**, *n.* படத்தின் முன்புறத் தோற்றம்; மிகத்தெளி வாகத் தெரிகிற இடம்.

**fore'hand**, *n.* குதிரையின் முன் பகுதி; *a.* வரிப்பந்தாட்டத் தில் வெளியே களப்புறம் நோக்கிய.

**fo'rehead**, *n.* நெற்றி, நுதல்.

**fo'reign**, *a.* அயல்நாட்டுக்குரிய, அன்னியமான; வெளி நாட்டுச் சார்பான, உள்நாடு சாராத; வேற்றுநாட்டுவரவான; தாய்நாட்டுக்கு அப்பாலுள்ள, வேற்று மாவட்டத்துக்குரிய; வேற்றுச் சமயத்தலைமை வட்டாரத்துக்குரிய; இருப்பூர்தி வகையில் வேற்று வாணிகக்கழகத்துக்கு உரியதான; புறம் பான, உடல் அல்லது பொருள் எல்லைக்கு வெளியிலுள்ள; சமுதாயத்துக்குப் புறம்பான; வெளியிலிருந்து வருகிற; வேறு பட்ட; ஒவ்வாத, இசையாத, அயலான, இனப்பண்பு சாராத; பண்பு ஒவ்வாத, சூழலொவ்வாத; (தொ.) foreign letter-paper, அஞ்சல் செலவினைக் குறைப்பதற்கான மெல்லிய கடிதத் தாள்; Foreign Office, அயல் நாட்டு அலுவலகம்.

**for'eigner**, *n.* அயல்நாட்டார்; வெளிநாட்டிற் பிறந்தவர்; பிறநாட்டுமொழி பேசுபவர்; அயல்நாட்டுக் கப்பல்; வெளி நாட்டு வரவான உயிரினம்; வெளிநாட்டுச் சரக்கு.

**forejudge'**, *v.* சான்றுகளை ஆராய்வதற்கு முன்பே தீர்ப்பளி, ஆய்வுக்கு முன்பே முடிவுசெய்.

**foreknow'**, *v.* முன்னறிந்திரு, முன்னுணர்.

**foreknowl'edge**, *n.* முன்னறிவு.

**fo'rel**, *n.* கணக்குப் புத்தகங்களுக்கு மேலுறையாகப் போடப் படும் தோல் தாள்.

**fore'land**, *n.* நிலக்கோடி, நில முனை; நிலக்கோடு; முற்புற நிலப்பரப்பு, முற்புற நிலக்கூறு.

**fore'leg**, *n.* விலங்கினங்களின் முன்னங்கால்.

**fore'lock**[1], *n.* நெற்றிமயிர், முன்குடுமி; (தொ.) take time by the forelock, சமயத்தை நழுவவிடாமல் முன்கூட்டிப் பயன்படுத்திக்கொள்.

**fore'lock**[2], *n.* தாழ்ப்பாள் தடையாணி; *v.* தாழ்ப்பாள் தடையாணியிடு.

**fore'man**, *n.* முறைகாண் ஆயத்தின் முகவர்; தொழிலாளர் மேன்முறையாள்; (தொ.) working foreman, வேலை செய்து கொண்டே பிற தொழிலாளர்களைக் கண்காணிப்பவர்.

**fore'mast**, *n.* கப்பலின் சிறிய முன் பாய்மரம்; (தொ.) foremast man, foremast seaman, foremast hand, சிறுதரக் கப்பல் பணியாளர்.

**fore'most**, *a.* எல்லாவற்றிற்கும் முற்பட்ட, முன்னணி முதன் மையான; மிக முக்கியமான; மிகச் சிறந்த; *adv.* முதன் முதலாக, முதலிற் குறிப்பிடத்தக்கதாக, எல்லாவற்றிற்கும் முற்பட்டதாக.

**fore'name**, *n.* முதற்பெயர், கிறித்தவப் பெயர்.

**fore'-named**, *a.* முன்னரே பெயர் குறிப்பிடப்பட்ட, முன்னரே கூறப்பட்ட.

**fore'noon**, *n.* முற்பகல்.

foren'sic, *a.* சட்டஞ் சார்ந்த, வழக்குமன்றத் தொடர்புடைய; (தொ.) forensic medicine, மருத்துவச் சார்பான சட்ட ஆய்வுத்துறை.

foreordain', *v.* முன்னரே அறுதியிடு; முன்னரே குறித்து அமை.

fore'peak, *n.* கப்பலின் முன்புறத்திற்கருகிலுள்ள குவிந்த சரக்கு வைக்கும் பகுதியின் முனை.

foreplan', *v.* முன்னதாகத் திட்டமிடு, முன்னரே ஏற்பாடு செய்.

fore'plane, *n.* முதல்படி இழைப்புளி, வெட்டியபின் அல்லது அறுத்தபின் முதல்தளமட்டம் செய்யப் பயன்படும் கருவி.

fore-ran', *v.* fore-run [1] என்பதன் இறந்தகாலம்.

fore-reach', *v.* முந்துறத்தாண்டி வேட்டெறி; (கப்.) காற்றில் முந்துறத் தவழ்ந்துசெல்; தாண்டிச்செல்; கடந்து செல்.

fore-run' [1], *v.* முன்னோடியாயிரு, முன்தூண்டு முதலாயிரு; முன்குறித்துக் காட்டு.

fore-run' [2], *v.* fore-run [1] என்பதன் முடிவெச்சம்.

fore-runn'er, *n.* முன்னோடி; முன்தூண்டுதல்; முன்னறி குறி; முன்னோடித்தூதர்; வருவதுரைப்பவர், குறி கூறு பவர்.

fore'sail, *n.* முன் பாய்மரத்தின் முக்கிய பாய்த்திரை, சதுர அடிமரப் பாய்; துருத்துக்கட்டைமீதுள்ள முக்கோணப்பாய்.

foresaw', *v.* foresee என்பதன் இறந்தகாலம்.

foresee', *v.* முன்னுணர், முன்னறி; முன்னரே காண்.

foreseen', *v.* foresee என்பதன் முடிவெச்சம்.

foreshadow, *v.* முன்நிழலிடு, முன்குறித்துக்காட்டு.

fore'-sheets, *n. pl.* துடுப்பு வலிப்பவர்களுக்கான படகின் முன்புற உட்பகுதிக் கம்பியழி வேலி.

fore'ship, *n.* கப்பலின் முன்பகுதி.

fore'shore, *n.* கரை முனங்கு, உச்ச உயர்வுதாழ்வு நீர் மட்டங்களுக்கிடைப்பட்ட கரைப்பகுதி; நீர்வரைக்கும் பண் படுத்தப்பட்ட நிலத்துக்கும் இடைப்பட்ட கரைக்கூறு; நீர் வரைக்கும் மனைக்கட்டு வரைக்கும் இடைப்பட்ட இடைகரை.

foreshort'en, *v.* தொலைக் காட்சியினால் குறுக்கப்பட்டது போன்று தோற்றுவி; தொலைக்குறுக்க நோக்குப்பட வரை.

foreshow', *v.* முன்னுறத் தெரிவி, முன்னுணர்ந்து கூறு; முன் குறித்துக் காட்டு; முற்படப் படிவம் குறித்துக் காட்டு.

foreshown', *v.* foreshow என்பதன் முடிவெச்சம்.

fore'sight, *n.* முன்னோக்கு; முன்னறிதிறம், முன்னறிவு; துப்பாக்கியின் முகப்புத்தோற்றம்.

fore'skin, *n.* குய்ய நுனித்தோல்.

fo'rest, *n.* காடு; புதர்மரப் பரப்பு; இயற்கைப் பெருவளம்; இயல்பான பெருந்திரள்; மேய்ச்சற்காடு; வேட்டைக்காடு; (சட்.) காவற்காடு; *a.* காட்டுக்குரிய; *v.* காடாக்கு.

forestall', *v.* முன்னதாகச் செயலாற்று; முந்துற ஏற்பாடு செய்; முன்னுணர்ந்து தடு; உரிய காலத்துக்கு முன்னரே செய்து முடி; (வர.) உயர்விலைக்கால ஆதாயம் நாடிச் சரக்குகளை வாங்கிவைத்துச் சேமி.

fore'stay, *n.* முன்தலைப்பு வடம், பாய்மரத்தின் முற்பகுதி யைத் தாங்குதற்காகத் தலைப்பிலிருந்து அடிவரை செல்லும் பாய்மரக் கயிறு.

fo'rester, *n.* காடு பாதுகாவலர்; வளர் மரங்களைக் கவனிப் பவர்; காடு வாழ்நர் சங்கம் என்ற முற்கால நிறுவன உறுப் பினர்; காட்டில் வாழ்பவர்; காட்டில் வாழ்வது; இங்கிலாந்தி லுள்ள மட்டக்குதிரை; விட்டில் வகை.

fo'restry, *n.* காடுகளின் தொகுதி; காட்டு நிலம்; மரங்க ளுள்ள பரப்பு; காட்டியல், காடு வளர்க்கும் கலை.

fo'rest-tree, *n.* காட்டிற்கேற்ற பெரு வளர்ச்சியுள்ள மரம்.

fore'taste [1], *n.* முன்னுகர்வு; முன்னனுபவம்.

foretaste' [2], *v.* முன்பே சுவைத்துப்பார், முன்கூட்டி நுகர்ந் துணர்; நுகர்வை எதிர்நோக்கி மகிழ்.

foretell', *v.* வருவதுரை, முன்னறிந்து கூறு; முன்னறிவி, முன்னறிகுறி காட்டு; முன்னோடியாயிரு; முன்னோடு தூதரா யமை.

fore'thought, *n.* முன்னறிவு, முன்னெண்ணம், முன்னாய்வு; முன்னேற்பாட்டுக்குரிய அக்கறை, சேமநலக் கவனம்.

fore'time, *n.* கடந்த காலம், முந்தைய நாட்கள்; பண்டைக் காலம்.

fore'token [1], *n.* முன்குறிப்பு, முன்னறிகுறி, முன் அடை யாளம்.

foretok'en [2], *v.* முன் குறிப்பிடு; முன்னறிகுறி காட்டு.

fore'top, *n.* முன் பாய்மர உச்சி; முன் பாய்மர உச்சியி லுள்ள மேடை.

fore-top-gall'ant mast, *n.* பாய்மர உச்சியின்மேலுள்ள பாய்மரம்.

fore-topgall'ant-sail, *n.* கப்பல் பாய்மரத்தின் உச்சியி லுள்ள பாய்.

fore-top'-mast, *n.* முன்னணிப் பாய்மரத் தலைப்பிற் பொருத் தப்பட்ட பாய்மரம்.

fore-top'sail, *n.* கப்பலில் முன் பாய்மரத்தின் முக்கிய பாய்க்கு மேலுள்ள பாய்.

fore'type, *n.* வரப்போகும் பொருளின் முன் உருமாதிரி.

forev'er, *adv.* என்றென்றைக்கும், எல்லாக் காலத்துக்கும்.

forev'er-more', *adv.* இனிமேல் எப்போதும்.

forewarn', *v.* முன்கூட்டி எச்சரிக்கை செய்.

fore'woman, *n.* முறைகாண் அரிவையர் ஆயத் தலைவி; பணியாளர் மேற்பார்வை முதல்வி.

fore'word, *n.* முன்னுரை, புறவுரை; பாயிரம், ஆசிரிய ரல்லாத பிறரால் எழுதப்படும் தொடக்க உரை.

fore'yard, *n.* பாய்மரத்தின் மிகத்தாழ்ந்த பகுதி.

forf'eit, *n.* பறிமுதலான பொருள்; பறிமுதலானது; உரிமை பறிபோன பொருள்; தண்டவரி, ஒப்பந்தம் மீறியதற்கான தண்டம்; கடமை தவறியதற்காகச் செலுத்தப்படும் தண்டத் தொகை; ஆட்டக் கழகங்களில் விதி மீறுகைக்கான ஒறுப்புத் தொகை; ஆட்டவகையில் தண்டப்பணிகள் செய்து மீட்கப்பட வேண்டிய பறிமுதற் பொருள்; பறிமுதல்; *a.* பறிமுதலான; *v.* இழ; உரிமை இழக்கப்பெறு; தண்டவரி விதிக்கப்பெறு; தண்டத்தொகை செலுத்து; ஒறுப்புத்தொகை கொடு; விட்டுக்கொடு.

forfend', *v.* தவிர், விலக்கு; வேறுபக்கமாகத் திருப்பு.

forf'icate, *a.* (வில.) கத்திரிக்கோல் வடிவுள்ள.

forgath'er, *v.* கூடு; ஒன்றுசேர்; திரட்டு; உரையாடு; கூடிப்பேசு.

forgave', *v.* forgive என்பதன் இறந்தகாலம்.

forge [1], *n.* கொல்லுலை; கொல்லனின் துருத்திகளுள்ள உலைக் களம்; உலோகங்களை உருக்கி அடிக்கும் உலை; *v.* உலோ கங்களைக் காய்ச்சி அடித்து உருவாக்கு; பொய்யாகக் கற்பனை செய்; போலியாக இட்டுக்கட்டு; கள்ளப் பத்திர மெழுது; மோசடியான போலிப் பொருள்கள் உண்டாக்கு.

forge [2], *v.* படிப்படியாக முன்னேறு; உழன்று முன்னேற்ற மடை; (தொ.) forge ahead, பந்தயத்தில் முதன்மையான இடம்பெறு; திடீரென்று புறப்படு.

for'gery, *n.* கள்ளப்பத்திரம் எழுதுதல்; போலிப் பத்திரம் உண்டாக்கல்; பத்திரத்தில் போலிக் கையெழுத்திடல்; போலி ஆவணம்; பொய்க் கையெழுத்து.

**forget′**, *v.* மற ; புறக்கணி ; கவனக்குறைவால் தவறு ; தவறுதலால் குறிப்பிடாமலிருந்து விடு ; நினைவின்றிச் செயல் தவறு ; உணர்விழ ; மனத்தினின்று அகற்று ; நினைக்காமலிரு ; அவமதி ; அசட்டை செய் ; (தொ.) forget oneself, தன் நலங்களைப் புறக்கணி ; தகாத முறையில் நட ; நினைவிழ, உணர்விழ.

**forget′ful**, *a.* மறதியுடைய, மறக்கும் இயல்புடைய ; கவனமற்ற, ஓராத.

**forget′-me-not**, *n.* மஞ்சள்நிற மையமுடைய நீல மலர்களை உடைய செடி வகை ; (தொ.) forget-me-not blue, நீல வண்ண மலர்ச்செடி வகை.

**forgiv′able**, *a.* மன்னிக்கத்தக்க, மன்னிக்கப்படக்கூடிய.

**forgive′**, *v.* பொறுத்தருள் ; மன்னித்துவிடு ; கடன் விட்டுக்கொடு ; கடமை தவிர்த்தருள் ; குறை கவனியாது விடு ; பொறுக்கும் பண்புடையராயிரு.

**forgive′ness**, *n.* பிழை பொறுத்தல்; மன்னிப்பு, மன்னிக்கும் மனநிலை ; கடன் விட்டுக்கொடுப்பு ; குறை கவனியாது விட்டுவிடும் பண்பு.

**forgiv′ing**, *a.* பிழைபொறுக்கிற; உடனடியாக மன்னிக்கிற, எளிதில் மன்னித்துவிடும் இயல்புடைய ; அருளிரக்கம் வாய்ந்த, இரக்கச் சிந்தையுள்ள.

**forgo′**, *v.* துற, கைவிடு ; விலக்கிவாழ், இல்லாமற் கழி ; விட்டுவிலகு.

**fork**, *n.* கவைமுள் ; கவைக்கோல் ; கவடு, கவர்படு பிளவு ; பிளவுபடும் இடம் ; கவர், கிளை ; மண்வாரி, மண்ணைத் தோண்டவும் வாரி எறியவும் பயன்படும் உழவர் கருவி ; இசைச்சுரம் எழுப்பும் கோல் ; கவைபடும் அம்புமுனை ; முந்திரிக்கொடிக்குத் தாங்கலாகப் பயன்படுத்தப்படும் கவருடைய உதைகோல் ; மிதிவண்டிச் சட்டத்தில் சக்கரம் இணைக்கப்படும் இடம் ; சுரங்கத்தில் நீர்மம் படும் பள்ளத்தின் அடிப்பகுதி ; கிளையிடை வளைவு ; பாதைப் பிளவு ; ஆற்றுப் பிரிவு ; மின்வீச்சு ; *v.* கவடுபடு ; கவர்பட்டுக் கிளைவிடு ; மண்வாரி எடுத்துக்கொண்டு செல் ; கிளைவழித் திரும்பிச் செல் ; கவட்டுக்கோல் கொண்டு இயக்கு ; கவைமுள்கொண்டு குத்து; படுபள்ள நீர்வாங்கி வற்றவை; சதுரங்க ஆட்டத்தில் ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பக்கங்களிலிருந்து நெருக்கு ; (தொ.) tuning fork, தட்டினுல் குறிப்பிட்ட இசையொலியெழுப்பும் எஃகு கவைக்கருவி.

**forked**, *a.* கவர்முள் வடிவுடைய ; கவடுபட்ட ; கவைத்த, பிளவுபட்ட; வேறுவேறுபட்டுச் செல்கிற; இரு கால்களுடைய.

**forlorn′**, *a.* கைவிடப்பட்ட; துணையற்ற; நம்பிக்கையிழந்த; கையற்ற; இரங்கத்தக்க தோற்றமுடைய, துயரார்ந்த.

**forlorn′ hope**, *n.* வேளைப்படை, துணிவுத்தாக்குதல் படை ; அரைகுறை நம்பிக்கை.

**form**, *n.* உருவம் ; வடிவம் ; உருப்படிவம் ; தோற்றம் ; இனம் தெளியவராத ஆள் உருவம் ; இனந்தெளியப்படா விலங்கு உரு ; இனம் தெளியவராத் தோற்றம் ; தோற்ற வகை ; வகை வடிவம் ; உருவகை ; வகுப்பு, பள்ளிப்படிவம்; நீள் மணையிருக்கை ; அமைப்பு ; உடலமைப்பு ; உறுப்பமைதி ; முறை ; முறைமை ; உருவமைதி ; ஒழுங்கு ; மொழி நடை அமைதி ; கலைவடிவமைப்பு ; இலக்கியக் கட்டுக்கோப்பமைதி ; வக்கணை, சொல்வகுப்புக் கட்டளை ; வினைமுறை, சடங்கு ; மாதிரிச்சட்டம் ; முன்மாதிரி ; அச்சுப் பதிப்புச் சட்டம் ; மணியுருப்படிக நிரலின் திரள் தொகுதி ; தகுதி நிலை ; உடல் நன்னிலை ; சொல்லின் புறவுரு ; ஒலிவடிவம் ; எழுத்துமுறை வடிவம் ; வேற்றுமை வடிவம் ; திரிபுவகை வடிவம் ; அகப் படிவம், பொருள் பற்றிய கருத்துப்படிவம்; பொருண்மை, பொருளின் உள்ளார்ந்த இயல்பு ; முயல் வளையின் கிடக்கைப் படிவு ; *v.* குறிப்பிட்ட வடிவம் கொடு; வகுத்தமை, அமைப்பாக உருவாக்கு ; திட்டமாக அமை, கட்டமை ; நிறுவனஞ் செய் ; கூட்டுக் கழகமாக அமை ; சொல்லை ஒலியுருவப்படுத்து, சொல்லாக்கு ; சொல் மூலத்திலிருந்து வருவி ; வேற்றுமை வடிவம் கொள்வி ; கருத்துருவாக்கு ; கற்பனைசெய் ; ஒப்பந்தம் வகு ; பயிற்றுவித்து உருப்படுத்து; பண்புருவாக்கு; அணிவகு; உருவாகு; வடிவம் மேற்கொள் ; அணிவகுப்பாக அமைவுறு ; சொல்லாக உருப்படு ; திட்பப் பொருளாகப் படிவுறு ; படிக உரு ஆகு ; செய்பொருள் ஆக்கு ; மூலப்பொருளாய் உதவு ; மூலப்பொருளின் கூருய் அமை ; செய்பொருள் முற்றுவிக்க உதவு ; (தொ.) bad form, நடைமுறைக்கு இயையாத முரண்பாடான முறை ; good form, நடைமுறைக்கு இயைந்த ஒழுங்குமுறை; in form, செயல் தகுதிக்குரிய நன்னிலையில் ; out of form, செயல் தகுதிக்கு ஒவ்வாத நிலையில்.

**form** [2], *n.* = forme.

**form′al**, *a.* புற வடிவம் சார்ந்த ; புற அமைதி சார்ந்த ; புறப் பண்புகளுக்குரிய ; இயல்துறைகளில் முறைமைச் சார்புடைய, பொருண்மைச்சார்பு இல்லாத ; விதிமுறைக்குரிய ; முறையான ; ஒழுங்கு முறைக்குரிய ; ஒழுங்குமுறை தவருத; சரியான ; பொருத்தமான ; வினைமுறைச் சார்பான, சடங்கியல்பு வாய்ந்த; மரபொத்த; நாகரிக ஒழுங்குமுறை சார்ந்த, நடைமுறை ஆசாரமான; புற ஆசாரமான, சம்பிரதாயமான, உள்ளுணர்ச்சியற்ற ; விதிமுறை பின்பற்றுகிற ; விதிமுறை வகையில் மிகு கண்டிப்பான; நெகிழ்வற்ற, நெளிவிழைவற்ற; மரச்சட்டப்பண்புடைய ; நடைவிறைப்பான.

**form′alism**, *n.* வினைமுறை வழாப் பண்பு ; வினைமுறை மட்டுமீறி முனைப்பான சமயப்பண்பு; விதிமுறைக் கண்டிப்பு; நெளிவிழைவின்மை; முறைப்பான நடை; மரச்சட்டம் போன்ற பண்பு.

**form′alist**, *n.* வினைமுறையாளர், மட்டுமீறி விதிமுறைகளைப் பின்பற்றுபவர் ; மரபுவழி வலியுறுத்துபவர்.

**formal′ity**, *n.* சட்ட விதிமுறை ஒழுங்கு ; சம்பிரதாயம் ; மரபொழுங்கு, ஆசாரம் ; வினைமுறை, சடங்கு, நயநாகரிக முறை ; புற ஆசாரத்தன்மை ; மரச்சட்டம் போன்ற நடைமுறைப் பண்பு.

**form′alize**, *v.* சட்ட உருக்கொடு ; விதிமுறைப்படுத்து ; ஆசாரமாக்கு; வழுவிலா ஒழுங்கமைதி அளி; நெளிவு இழைவு அற்றதாக்கு.

***format***, (பிர.) *n.* புத்தகத்தின் வடிவமும் அளவும்.

**form′ate** [1], *n.* கரிசக்காடி உப்பு, எறும்பின் கசிவில் அடங்கிய காடியிலிருந்து எடுக்கப்படும் உப்புவகை.

**form′ate** [2], *v.* விமானங்கள் வகையில் போர்நிலைத் தொகுதியமைவாக உருவாகு.

**forma′tion**, *n.* உருவாக்குதல் ; உருவாதல் ; வகுத்தமைப்பு; செயலாக்கம், உற்பத்தி ; ஆக்க அமைவு, உரு அமைவு ; கட்டமைவு ; உறுப்பொழுங்கமைவு ; படை அணிவகுப்பு ; அணிவகுப்பமைதி ; போர்நிலை விமானத் தொகுதிநிலை அமைவு; (மண்.) பாறை அடுக்கமைவு; (தாவ.) செடியினக் குழு.

**form′ative**, *n.* உருவாக்கி வளர்க்க உதவும் கூறு ; ஆக்கச் சொல் ; *a.* உருவாக்கம் சார்ந்த ; வளர்ச்சிக்குரிய ; உரு வரையறை செய்கிற ; உருவாக்க உதவுகிற ; வளர்ச்சிக்கு உதவுகிற ; உருவாகிற, உருப்பெற்று வளர்கிற ; வளரத்தக்க ; வளரும் பருவத்துக்குரிய ; (இலக்.) சொல்லாக்கத்துக்குக் கூருய் உதவுகிற, பகுதி சாராத.

**forme**, *n.* அச்சகப்பதிப்புப் படிவம், அச்சிடுவதற்காகத் தளைச் சட்டத்தில் முறையாக வைத்து இறுக்கப்பட்ட அச்சுருப் படிவம்.

**form′er**, *pron.* முந்தியது, இரண்டில் முதலாவதாகச் சொல்லப்பட்டது ; *a.* சென்ற காலத்துக்குரிய ; முந்திய காலம் சார்ந்த ; முந்திய, இரண்டில் முன்கூறப்பட்ட.

**form′erly**, *adv.* முற்காலங்களில், முன்னுளில்.

**form′ic**, *a.* எறும்புகள் சார்ந்த; (தொ.) formic acid, கரிசக்காடி, எறும்புகளால் வெளிவிடப்பட்ட கசிவில் அடங்கிய காடிவகை.

**formica′tion**, *n.* தோலின்மேல் எறும்பு ஊர்வது போன்ற அரிப்புணர்ச்சி.

**form'idable**, *a.* அஞ்சவரு தோற்றமுடைய ; கடுமிடல் வாய்ந்த, வல்லமைமிக்க ; வெல்ல முடியாத ; தடுக்க முடியாத ; எதிர்த்து நிற்கமுடியாத.

**form'less**, *a.* உருவற்ற ; திட்டமான வடிவமில்லாத ; ஒழுங்கான தோற்றமற்ற.

**form'ula**, *n.* வாய்பாடு; சுருக்க விதிமுறை; விளக்க நூற்பா; கட்டளைச் சொல், வக்கணை வாசகம்; குறிப்புச்சொல்; நினைவுக் குறிப்பு ; மருந்துமுறைப் பட்டியல்குறிப்பு; வகை முறைமை; சமயமரபு முறை; குருட்டு விதிமுறை; கொள்கை முறை வகுப்பு ; (கண.) கட்டளை விதி ; *pl.* form'ulae, form'ulas.

**form'ulary**, *n.* வாய்பாடுகளின் தொகுதி ; மரபுமுறைகள் அடங்கிய சுவடி ; வினைமுறைக் கட்டளை ஏடு ; *a.* வாய்பாடுகள் வடிவிலுள்ள ; வாய்பாடுகள் சார்ந்த ; வினைமுறைகளுக்குரிய ; விதிக்கப்பட்ட.

**form'ulate, form'ulize**, *v.* வாய்பாடு வடிவமாக்கு ; வாய்பாடாகச் சொல் ; முறைப்படுத்து, ஒழுங்குமுறையாக எடுத்துக்காட்டு.

**fornica'tion**, *n.* மணமாகா ஆண் பெண் கலவி.

**fo'rrel**, *n.* கணக்குச் சுவடிகளுக்கு உறைபோடுதற்கான தோல் போன்ற தாள்.

**forsake'**, *v.* கைவிடு, துற, விட்டுவிடு ; நீக்கு, விலக்கு ; புறக்கணி ; துணை மறுத்தொதுக்கு ; உதவி மறு.

**forsak'en**[1], *a.* கைவிடப்பட்ட.

**forsak'en**[2], *v.* forsake என்பதன் முடிவெச்சம்.

**forsook'**, *v.* forsake என்பதன் இறந்தகாலம்.

**forsooth'**, *adv.* உண்மையாக, உண்மையைச் சொல்லப் போனால்; திண்ணமாக, ஐயமின்றி.

**forswear'**, *v.* சூளிட்டுத் துற ; ஆணையிட்டுக் கொள்கை கைவிடு ; பொய் ஆணையிடு ; (தொ.) forswear oneself, பொய் ஆணையிடு.

**forswore'**, *v.* forswear என்பதன் இறந்தகாலம்.

**forsworn'**[1], *a.* பொய் ஆணையிட்ட.

**forsworn**[2], *v.* forswear என்பதன் முடிவெச்சம்.

**forsyth'ia**, *n.* முனைப்பான மஞ்சள் நிற மலர்களையுடைய அழகுச் செடிவகை.

**fort**, *n.* கோட்டை ; அரண் காப்பிடம் ; கோட்டையமைந்த முற்கால வாணிகத்தளம் ; *v.* அரண்செய்.

**fort'alice**, *n.* (செய்.) சிறு கோட்டை; கோட்டைப்புற அரண் காப்பிடம் ; படைத்துறை அரண்.

**forte**[1], *n.* வன்மைக்கூறு, ஆளின் தனிவன்மைச் சார்புடைய திறம் ; வாளடி, வாளின் கைப்பிடியிலிருந்து நடுப்பகுதி வரையுள்ள பகுதி.

***fort'e***[2], (இத்.) *n.* (இசை.) உரத்த இசைப்பாடல்; *a.* உரத்த ; *adv.* உரக்க ; (தொ.) *forte forte*, மிக உரத்து.

***forte pia'no***, (இத்.) *n.* தொடக்ககால இசைப்பெட்டி; *a.* (இசை.) உரத்த ஓசையையடுத்த மெல்லோசையான ; *adv.* (இசை.) எடுத்தும் படுத்தும்.

**forth**, *adv.* முன் ; முன்னால்; காலத்தில் முன்னோக்கி ; புறத்தே ; தொலைவாக ; மிகுதியாக ; (தொ.) and so forth, இவைபோலப் பிற.

**forthcom'ing**, *a.* வரவிருக்கிற, அணுகி வருகிற, அடுத்துள்ள ; வேண்டும்போது கொணரக்கூடிய நிலையிலிருக்கிற.

**forth'right**[1], *n.* நேரான பாதை ; *a.* நேராகச் செல்கிற ; அஞ்சாமற் பேசுகிற; ஒளிவுமறைவின்றிப் பேசுகிற; சாயாத, உறுதியான ; முடிவான ; கைத்திறம் வாய்ந்த.

**forthright'**[2], *adv.* நேரே ; உடனே ; நேர்மையாக.

**forthwith'**, *adv.* உடனே, காலந்தாழ்த்தாமல்.

**for'ties**, *n. pl.* 40-ஆம் ஆண்டுக்கும் 49-ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட பத்தாண்டுக் காலப் பகுதி ; (தொ.) Hungry Forties, இங்கிலாந்து மக்களிடையே பெரு வறுமை நடமாடிய 1840-க்கும் 1849-க்கும் இடைப்பட்ட ஆண்டுக்காலம் ; roaring forties, நிலவுலகத் தென் நேர்கோடு 40 பாகைக்குத் தெற்கே மேற்குப் புயற்காற்று வீசும் கடற்பகுதி; the Forties, ஸ்காத்லாந்து நாட்டின் வடகிழக்குக் கரைக்கும் நார்வே நாட்டுத் தென்மேற்குக்கரைக்கும் இடைப்பட்ட 40 பாகை ஆழத்துக்கு மேற்பட்ட கடற்பகுதி.

**fort'ieth**, *n.* நாற்பது சமகூறுகளில் ஒன்று ; *a.* நாற்பதாவது ; நாற்பது சமகூறுகளில் ஒன்றை ஒத்த.

**fortifica'tion**, *n.* அரணமைத்தல் ; அரண்காப்புக்கலை ; அரணமைப்பு ஆய்வுநூல்; வலுப்படுத்துதல்; வெறியம் சேர்த்து இன்தேறலுக்குச் செறிவூட்டுதல்.

**fortifica'tions**, *n. pl.* அலங்கம், காப்பரண் கட்டுமானங்கள் ; மண்கோட்டை ; அரண்காப்பு மதில் ; காப்புக் கூட கோபுரம்.

**fort'ify**, *v.* கோட்டை கொத்தளங்கள் எழுப்பி வலுப்படுத்து; அரண்காப்புக்களால் நகரை வலிமைப்படுத்து ; படையைக் காவலரண் செய்து வலுப்படுத்து ; தற்காப்புச் செய்து முற்றுவி ; கட்டுமானத்துக்கு வலுவூட்டு ; உடலை வலிமைப் படுத்து; உரமூட்டு; மனத்துக்குத் திடமூட்டு; ஊக்கமூட்டு; ஊட்டச்சத்துக்களால் உணவை வளப்படுத்து, குடிவகைகளுக்கு வெறியச்சத்தூட்டி வீரியப்படுத்து ; செய்தியை வலியுறுத்து; சான்று தெளிவுகள் வழங்கிப் பின்னும் உறுதிப் படுத்து.

***fortiss'imo***, (இத்.) *a.* (இசை.) உச்ச அளவில் உரத்த ; *adv.* உச்ச அளவில் உரத்து.

***fort'iter***, (ல.) *adv.* உறுதியாக.

**fort'itude**, *n.* மனவுரம், உள வலிமை, இடுக்கணழியாமை.

**fort'night**, *n.* இரண்டு வார காலம், பதினான்குநாளெல்லை.

**fort'nightly**, *a.* இரண்டுவாரங்களுக்கொருமுறை நிகழ்கிற ; *adv.* இரண்டுவாரங்களுக்கொரு முறையாக.

**fort'ress**, *n.* படையரண், பெரும்படை வைத்திருத்தற்குரிய வலிய அரணமைந்த நகர்.

**fortu'itism**, *n.* இயன்மூலத் திட்டமின்மை வாதம், இயற்கை மாறுதல்கள் தற்செயலாகவோ இயல்பான காரண விளைவுகளாலோ நிகழ்வனவன்றி மூலத்திட்டத்தின் பயனாகவல்ல என்ற கோட்பாடு.

**fortu'itist**, *n.* இயன்மூலத் திட்ட மின்மை வாதி, இயற்கை மாறுதல்கள் தற்செயலாகவோ இயல்பான காரண விளைவுகளாலோ நிகழ்வனவன்றி மூலத்திட்டத்தின் பயனாகவல்ல என்ற கோட்பாடுடையவர்.

**fortu'itous**, *a.* தற்செயலான, எதிர்பாராமல் நிகழ்கிற.

**fortu'ity**, *n.* தற்செயல் நிகழ்வு ; இடையுறுநிகழ்ச்சி ; தானறியாது தோற்றும் பண்போவியம்; முயற்சியின்றி வெளிப்படும் பண்புடையுரு.

**fort'unate**, *a.* நல்வாய்ப்புடைய, நற்பேறுடைய, பாக்கியஞ் செய்த, செல்வ வளமுடைய; மங்கலமான, நன்னிமித்தமான; அனுகூலமான, நல்லாதரவான.

**fort'unately**, *adv.* நல்ல காலமாக ; வெற்றியாக.

**fort'une**[1], *n.* ஆகூழ், தற்செயல் வாய்ப்பு ; வருவளம், எதிர்கால நிலை ; நல்வாய்ப்பு, நற்பேறு ; வளம், செல்வவளம் ; செல்வம் ; சொத்து ; (தொ.) make one's fortune, செல்வனாகு ; marry a fortune, பெருஞ் சொத்துக்குரிய பெண்ணை மணந்துகொள் ; spend a small fortune on it, பெருந்தொகை செலவுசெய் ; tell fortunes, குறி சொல்லு.

**Fort'une**[2], *n.* ஆகூழ் ; பாக்கிய தேவதை.

**for'tune-hunter**, *n.* செல்வமிக்க மனைவியை நாடுபவர்.

**for'tuneless**, *a.* சொத்தில்லாத ; பாக்கியங்கெட்ட.

**for'tune-teller**, *n.* குறி சொல்பவர், வருவதுரைப்போர்.

**fort'y**, *n.* நாற்பது ; நாற்பது வயது ; *a.* நாற்பது ; (தொ.) forty winks, சாப்பாட்டிற்குப் பிறகு கொள்ளப்படும் சிறு துயில்; the Forty-five, 1745-ஆம் ஆண்டின் "ஜாக்கோபைட்" கிளர்ச்சி (Jacobite rebellion).

**for'um**, *n.* பண்டைய ரோமாபுரியின் பொது அங்காடி; பொதுவிடம்; நீதிமன்றம்; கருத்தரங்கு; சொற்போர் நடக்கும் பொதுவிடம்.

**for'ward**, *n.* பந்தாட்டங்களில் முன்வரிசை ஆட்டக்காரர்களில் ஒருவர்; *a.* முன்னேக்கிய; முந்திச் செல்கிற; முன்னேற்றம் வாய்ந்த; முன்னேற்றம் நாடிய; முற்போக்குடைய; முனைத்த கருத்துடைய; கப்பலின் முற்பகுதி சார்ந்த, முற்பகுதி அருகிலுள்ள; முந்தி வளர்கிற; முந்தி நிறைவுபெறு இருக்கிற; காலத்தில் முந்துற்ற, முன்னதாக வந்துற்ற; செயல் முனைப்பான; செயலார்வமுடைய; ஆர்வத்துடிப்பான; துடுக்குத்தனமிக்க; முந்து முதிர்வுற்ற; பருவத்துக்கு மேற்பட்ட அறிவுடைய; வாணிகத்துறையில் வருங்கால விளைவை அடிப்படையாகக் கொண்ட; *v.* பேணி முன்னேற்றுவி, ஆதரவுகாட்டி வளர்; முன்னேற்றத்துக்குத் துணைசெய், வளர்ச்சியை ஊக்கு; கடிதம் முதலியவற்றை உரிய இடத்துக்கு அனுப்பிவை; சரக்குகளை அனுப்பு; *adv.* முன்னேக்கி; மேன்மேலும், தொடர்ந்து முன்னேறிக்கொண்டு; முன்னதாக, முன்கூட்டி; முன்னாக; தனி முனைப்பாக; வருங்காலத்தில், இனிமேலெல்லாம்; கப்பல் முன்பக்கத்தில்; முன்பக்கம் நோக்கி; முன்பகுதிக்கு; (தொ.) forward contract, வாணிகத்துறையில் இனிவரும் விளைச்சலை அடிப்படையாகக் கொண்ட ஒப்பந்தம்; from this time forward, இச்சமய முதலாக; look forward, தொலைதூரம் முன்னாக நோக்கு, எதிர்பார்த்திரு.

**for'wards**, *adv.* முன்னேக்கி.

**forwent'**, *v.* forgo என்பதன் இறந்தகாலம்.

**fosse**, *n.* குழி, பள்ளம்; நீண்டு குறுகிய அகழ்வு; கால்வாய்; கோட்டை அகழி; (உள்.) குழி, குழிவு, பள்ளம்.

**fossette'**, *n.* (உள்.) சிறு குழி, பள்ளம்.

**foss'ick**, *v.* கிளறித்தேடு, இங்குமங்கும் தேடு.

**foss'il**, *n.* (மண்.) புதைபடிவம், மரபற்றுப்போனவற்றின் பழஞ்சின்னம்; பழமைப்பட்டவர், காலத்துக்கு ஒவ்வாப் பழம் பாணியினர்; வழக்கிலில்லாப் பழம்பொருள்; *a.* புதைபடிவ நிலையிலுள்ள; பழமைப்பட்ட; காலத்துக்கு ஒவ்வாப் பழம் பாணியிலுள்ள; மேற்கொண்டு வளர்ச்சியடையுந் திறனற்ற.

**fossilif'erous**, *a.* புதைபடிவங்கள் கொண்ட.

**foss'ilize**, *v.* புதைபடிவமாக்கு; புதைபடிவமாகு.

**fossor'ial**, *a.* (வில.) வளைதோண்டுகிற; வளைதோண்டுதற்குப் பயன்படுத்தப்படுகிற.

**fos'ter**, *v.* அன்பாக வளர், ஊட்டிவளர், சீராட்டு, நெஞ்சில் அணைத்தாதரித்துப் பேணு; வளர்ச்சிக்குத் துணைசெய்; ஆதரித்து இடமளி; மனத்தில் வைத்துப்பேணு; சாதகமாயுதவு, அனுகூலமாயுதவு.

**fos'terage**, *n.* ஊட்டி வளர்த்தல்; செவிலித்தாயர்களை அமர்த்தும் வழக்காறு.

**fos'ter-brother**, *n.* வேறு பெற்றோர்களுக்குப் பிறந்து உடன் வளர்க்கப்பட்ட ஆண்குழந்தை.

**fos'ter-child**, *n.* வளர்ப்புக்குழந்தை.

**fos'ter-father**, *n.* வளர்ப்புத்தந்தை.

**fos'terling**, *n.* வளர்ப்புக்குழந்தை.

**fos'ter-mother**, *n.* செவிலித்தாய், வளர்ப்புத்தாய்; கோழிக் குஞ்சுகளை முட்டைபொரித்து வளர்ப்பதற்கான கருவி.

**fos'ter-sister**, *n.* வேறு பெற்றோர்களுக்குப் பிறந்து உடன் வளர்க்கப்பட்ட பெண்குழந்தை.

**fougade'**, **fougasse'**, *n.* (படை.) கற்கள் செறிக்கப்பெற்றுள்ள சிறு சுரங்கவெடி.

**fought**, *v.* fight என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**foul**, *n.* வெறுக்கத்தக்க செய்தி; தீமை; மோதல்; முறை தவறிய ஆட்டம்; *a.* அருவருக்கத்தக்க, புலன்களுக்கு வெறுப்புத்தருகிற; கடுவெறுப்பூட்டுகிற; உருக்குலைவான; முடைநாற்றம் வாய்ந்த; துப்புரவு கெட்ட; காற்று-நீர்ச் சூழல் வகையில் நச்சுப்பட்ட; அழுக்கடைந்த; கறைபடிந்த; சேரூர்ந்த; குப்பையடைந்த; வண்டலார்ந்த; கப்பலடி வகையில் சிப்பிகூளமடைந்த; அடைப்புண்ட; சிக்கலான; முடிச்சுவகையில் தாறுமாறான; புயலார்ந்த; மழைமலிந்த; ஓயாத்தூறலான; கேடார்ந்த; பாதகமான; மிகமோசமான; வெட்கக்கேடான; கீழ்த்தரமான; கீழ்த்தர உணர்ச்சி சார்ந்த; கொச்சையான; நேர்மைக்கேடான; ஆட்ட வகையில் முறை தவறான; மோதலான; பயனற்ற; அற்பமான; *v.* அழுக்காக்கு; மாசுபடு, கறைபடு; அடைப்புண்டு தடைப்படு; புகை வண்டிப்பாதைப் போக்குவரத்துத் தடைப்படு; நங்கூரத்தைக் கம்பிவடங்களிற் சிக்க வை; சிக்குறு; மோது; குற்றப்படுத்து; இகழ் உண்டுபண்ணு; புகழ் கெடு; *adv.* ஆட்ட வகையில் முறை தவறி; மேல் மோதலாக; நேர்மைக் கேடாக; நம்பிக்கைக்கேடாக; (தொ.) claim a foul, விதியை மீறியவர் தண்டனை அடைய வேண்டுமென்று வற்புறுத்து; fall foul of, சண்டை பிடி; தாக்கு; மோதிக்கொள்; play foul, முறை தவறி ஆடு; ஏமாற்று; through foul and fair, நன்மை தீமைகள் எல்லாவற்றிலும்.

**foul'ard**, *n.* நெகிழ்வுடைய மென்மையான பட்டுத்துணிவகை; பட்டுத்துணி வகையினாலான கைக்குட்டை.

**foule**, (பிர.) *n.* பளபளப்பான மேற்பரப்புடைய மெல்லிய கம்பளி ஆடை.

**foul'ly**, *adv.* வெறுப்புண்டாக்கும் வகையில்; கொடுமையாக, இரக்கமின்றி; பொருந்தா அவமானத்தோடு.

**foul'-mouthed**, *a.* இழிசொற்களையே பேசும் வழக்கமுள்ள.

**foul'ness**, *n.* அழுக்குற்ற நிலை; அருவருப்பான பொருள்; வெறுப்புண்டாக்கும் கொடுமை.

**foul'-play'**, *n.* முறைதவறான ஆட்டம்; வாய்மையற்ற செயல், வஞ்சனை; வன்செயல், கொலை.

**foum'art**, *n.* மரநாய் வகை.

**found** [1], *v.* find என்பதன் இறந்தகால முடிவெச்சவடிவம்.

**found** [2], *v.* கட்டிடம் முதலியவை வகையில் அடிப்படையிடு; நிறுவுதல் செய்; ஏற்படுத்து, நிறுவு, தோற்றுவி, தொடங்கிவை; கட்டு, அடிப்படைமீதமை; ஆதாரமாகக்கொள்.

**found** [3], *v.* உலோகம்-கண்ணாடி ஆகியவற்றை உருக்கி வார்த்தல் செய்; வார்ப்பு உருவஞ் செய்.

**founda'tion**, *n.* நிறுவுதல்; நிதியேற்பாட்டு நிறுவனம்; நிதியேற்பாட்டு நிறுவனத்தின் வருமானம்; கடைக்கால்; அடிப்படை, அஸ்திவாரம்; ஆதாரம்; அடித்தளம்; அடிப்படை அமைப்பு; மூலதத்துவம், அடிப்படைக் கோட்பாடு; பின்னல் வேலையில் பின்னணித்தையல்; (தொ.) foundation garment, பெண்டிர் அரையிறுக்க உள்ளாடை அணிகலன்.

**founda'tioner**, *n.* நிறுவனத்தின் நிதிகளிலிருந்து ஆதரிக்கப் பெறுபவர்.

**founda'tion-mus'lin**, **founda'tion-net**, *n.* உடுப்புகளையும் பெண்டிர் அணியுங் குல்லாய்களையும் விறைப்பாக்குவதற்காகப் பசையிட்டு ஒட்டவைத்த துணிவகைகள்.

**founda'tion-school**, *n.* நிதியேற்பாட்டுத் திட்ட உதவி மீதமைந்த பள்ளி.

**founda'tion-stone**, *n.* கடைக்கால், அடிக்கல்.

**found'er** [1], *n.* நிறுவுபவர், அமைப்பவர், தோற்றுவிப்பவர்; அறக்கொடை அளிப்பவர்.

**foun'der** [2], *n.* உருக்கி உருவாக்குபவர், வார்ப்புவேலை செய்பவர்.

**foun'der** [3], *n.* தகர்வு, மட்டுமீறிய வேலையினால் குதிரைக் காலில் காணும் வீக்கம்; குதிரைகளின் மார்புத்தசைப்பற்றுக்களில் வாதநோவு; *v.* நிலவகையில் உள்ளிழு, கீழிருந்துவிடு, அமர்ந்து அமிழ்ந்துவிடு; கட்டிட வகையில் இடிவுறு, தகர்வுறு; இடிந்துவிழு; குதிரைவகையில் வலுவிழந்து வீழ்; இடறு, கால் ஒடிந்து விழு; சேற்றில் அழுந்து; மிகு உழைப்பால் குதிரைகளைப்புற்று விழச்செய்; கப்பல்வகையில் நீர் உட்கொண்டு அமிழ்வுறு; கப்பலை நீர் உட்கொண்டு அமிழும்படி செய்; குழிப்பந்தாட்டத்தில் பந்தை அடித்து நிலத்தினுள் செலுத்து.

found'ling, *n.* எடுப்புப் பிள்ளை, கேட்பாரற்றுக் கண்டெடுக்கப்பட்ட குழந்தை.

found'ry, *n.* வார்ப்புக்கலை ; வார்ப்படக்களம், வார்ப்படச் சாலை.

fount¹, *n.* (செய்.) ஊற்று, மூலம், ஆதாரம் ; விளக்கின் எண்ணெய்ச் சேமிப்பிடம் ; ஊற்றுப்பேனாவின் மைகொள் பகுதி.

fount², *n.* அச்செழுத்துப்பந்தி, முகப்பிலும் அளவிலும் ஒரு சீரான அச்சுருப்படிவங்களின் தொகுதி.

foun'tain, *n.* நீர் ஊற்று ; ஆறு முதலியவற்றின் மூலம் ; பீறிட்டடிக்கும்படி செய்யும் நீர்த்தாரை, தாரை நீரூற்றுக்கான அழகிய கட்டுக்கோப்பு ; பொதுக் குடிதண்ணீர் ஊற்று ; விளக்கின் எண்ணெய்ச் சேமிப்பிடம் ; அச்சகங்களில் மை வழங்கும் கொள்கலம்.

fount'ain-head, *n.* மூலாதாரம்; மூலத் தோற்றுவாய்; மூலத் தொடக்கம்.

fount'ain-pen, *n.* ஊற்றுப்பேனா.

four, *n.* நான்கு; நான்கு என்னும் இலக்கம்; நால்வர் ; நான்கு பொருள்கள்கொண்ட தொகுதி ; ஆட்டம் முதலியவைகளில் நான்குகொண்ட கெலிப்புப் புள்ளிகள் ; நான்கு துடுப்புள்ள படகு ; நீள் உருளைகள் நான்குள்ள இயந்திரம் ; நான்கு உருளைகளையுடைய விசைவண்டி ; 'நான்கு' என்னும் குறி அளவுள்ள மிதியடி ; குறி அளவு நான்காகவுள்ள பொருள் ; நான்கு புள்ளிகளையுடைய அட்டை ; நாலுகெலிப்புப் புள்ளித் தொகுதி ; நண்பகல் அல்லது நள்ளிரவுக்குப் பின்னர் நான்காவது மணி ; *a.* நான்கு என்னும் எண்ணுக்குரிய ; (தொ.) four-stroke cycle, உள்வெப்பாலை வகையில் நான்கு முழுச் செயற்பாடுகளுள்ள வட்டம் ; the Four Freedoms, 1941-இல் அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைவர் ரூஸ்வெல்ட் (Roosevelt) வகுத்த பேச்சுரிமை - வழிபாட்டுரிமை - வறுமை காப்புரிமை - அச்சக்காப்புரிமை ஆகிய நான்கு உரிமைகள் ; the four hundred, திணை நிலத்தின் தனித்தொதுங்கி வாழும் சமுதாயப் பகுதி; the four seas, பிரிட்டனைச் சுற்றியுள்ள கடல்கள்.

four'-ball, *n.* குழிப்பந்தாட்ட வகையில் நான்கு பந்துகளை வைத்துக்கொண்டு இருவருக்கெதிராக இருவர் ஆடும் ஆட்ட வகை.

four'-eyes, *n. sing.* நீரிலிருக்கும்போதும் நீருக்கு வெளியிலிருக்கும்போதும் பார்ப்பதற்காக இரண்டு பிரிவுகளாயுள்ள கண்களையுடைய மீன்வகை.

four'-figure, *n.* 1,000 முதல் 9999 வரையுள்ள எண்களில் ஒன்று.

four'-flush', *n.* சீட்டாட்ட வகையில் ஒரே இனத்தைச்சேர்ந்த நான்கு சீட்டுக்களைப் பெற்றிருக்கும் ஆட்டக்காரர் ; *a.* ஏய்ப்பான, உண்மையல்லாத; *v.* சீட்டாட்டவகையில் ஏமாற்று.

four'-fold, *a.* நான்காக மடிக்கப்பட்ட ; நான்கு மடங்கான ; *adv.* நான்கு பிரிவுகளாக.

four'-foot, *a.* அளந்தால் நான்கடியுள்ள; (தொ.) four-foot way, இருப்பூர்திகளில் கம்பிகளுக்கிடையில் 4 அடி $8\frac{1}{2}$ அங்குல அகலம் உள்ள பாதை.

four'-foot'ed, *a.* நான்கு கால்களுள்ள.

four'-hand'ed, *a.* சீட்டாட்ட வகையில் நான்கு ஆட்டக்காரர்களால் ஆடப்படுகிற; குரங்குகள் வகையில் நான்கு கைகளுள்ள.

four'-horse, four'-horsed, *a.* நான்கு குதிரைகளால் இழுக்கப்படுகிற.

four'-in-hand, *n.* ஒரே வலவனுல் செலுத்தப்படும் நான்கு குதிரைகள் பூட்டிய வண்டி ; ஒரே வலவன் செலுத்தும் நாற்கால் வண்டிக் குதிரைகள் ; அசைந்தாடுமாறு கட்டப்படும் கழுத்துப்பட்டை ; *a.* நான்கு குதிரைகள் பூட்டிய ; *adv.* நான்கு குதிரைகள் பூட்டிக்கொண்டு.

four'-leaved, *a.* நான்கு சிற்றிலை உறுப்புக்களையுடைய.

four'-oar, *n.* நான்கு துடுப்புக்களைக்கொண்டு செலுத்தப்படும் படகு.

four'-o' clock, *n.* அந்திமந்தாரை, பிற்பகலில் பூக்கும் மலர்ச் செடிவகை.

four'-part, four-part'ed, *a.* நான்கு பாகங்களுடைய; இசைத்துறையில் நால்வர் பாடுவதற்கென அமைக்கப்பட்ட.

four'pence, *n.* நான்கு பென்னி (penny) களின் விலை மதிப்பு.

four'penny, *n.* நான்கு பென்னி மதிப்புடைய பழைய வெள்ளி நாணயம்.

four'-post, *a.* கட்டில் வகையில் நான்கு திரைக்கம்பங்களையுடைய.

four'-post'er, *n.* நான்கு திரைக்கம்பங்களையுடைய பெரிய கட்டில் ; நான்கு பாய்மரங்களையுடைய கப்பல்.

four'-pound'er, *n.* நான்கு கல் எடையுள்ள குண்டெறியும் பீரங்கி ; நான்கு கல் எடையுள்ள அப்பம்.

fours, *n. pl.* படைத்துறையில் நான்கு வரிசைகொண்ட அணி வகுப்பு ; நான்கு மணிக்குக் கொள்ளப்படும் சிற்றுண்டி ; நான்கு முனைக்கோடிகள் ; நான்கு துடுப்புடைய படகின் பந்தயம் ; (தொ.) on all fours, கைகள்-முழங்கால்கள் கொண்டு தவழ்கிற ; முற்றும் ஒத்திருக்கிற, முழுவதும் ஒப்பிடத்தகுந்த.

four'score, *n.* எண்பது; *a.* எண்பது வயதான.

four'some, *n.* நால்வர்கொண்ட தொகுதி; பக்கத்துக்கு இருவராக நால்வர் ஈடுபடும் குழிப்பந்தாட்டம் ; *a.* நான்கு கொண்ட ; நால்வர் பங்குபெறவேண்டிய.

four'square', *a.* சதுரவடிவுள்ள ; திண்ணமாகவும் உறுதியாகவும் நிலைபெற்ற.

fourteen', *n.* பதினான்கு ; *a.* பதினான்கான.

fourteen'er, *n.* பதினான்கு அசைகளுள்ள செய்யுள் வரி.

fourteenth', *n.* பதினான்கிலொன்று ; *a.* பதினான்காவதான; பதினான்கு சம பாகங்களில் ஒன்றுக்குச் சமமான.

fourth, *n.* கால், நான்கு சம பாகங்களில் ஒன்று; மாதத்தின் நான்காம் நாள் ; *a.* நான்காவதான; நான்கு சம கூறுகளில் ஒன்றுக்குச் சமமான ; (தொ.) Fourth Estate, பத்திரிகைத் துறை, பத்திரிகை உலகம்.

fourth'ly, *adv.* நான்காவதாக ; நான்காமிடத்தில்.

fourths, *n. pl.* நான்காந்தரப் பொருள்கள்.

four'-wheel'er, *n.* நான்கு சக்கர வண்டி.

fowl, *n.* கோழி; கோழிக்கறி; பறவை; *v.* காட்டுக்கோழியை வேட்டையாடு ; காட்டுக்கோழிமீது வேட்டிடு ; காட்டுக்கோழியைக் கண்ணியிற்படுத்து ; காட்டுக்கோழியைப்பிடி.

fowl'er, *n.* காட்டுக்கோழி பிடிப்பவர்.

fowl'ing-net, *n.* பறவைகளைப் பிடிப்பதற்கான வலை.

fowl'ing-piece, *n.* காட்டுக்கோழி வேட்டையில் பயன்படுத்தப்படும் துப்பாக்கி வகை.

fox, *n.* நரி ; சூழ்ச்சிக்காரன், கபடி ; வடக்கு விண்மீன் குழுவினுள் ஒன்று; *v.* தந்திரமாகச் செயலாற்று, கபடம் பண்ணு, ஏமாற்று ; சுவடிப்பக்கங்கள் முதலியவற்றில் சாம்பல் நிறப் புள்ளிகளிட்டு நிறத்தோற்றமாற்று ; (தொ.) fox and geese, பலகையின்மேல் காய்கள் வைத்து ஆடும் ஆட்டவகை.

fox'-brush, *n.* நரியின் வால்.

fox'-earth, *n.* நரி வளை.

foxed, *a.* சுவடிகள் வகையில் உருவழிந்த, புள்ளிகள் விழுந்த; மதுமயக்கமுள்ள.

fox'glove, *n.* கையுறை போன்ற நீண்ட ஊதா அல்லது வெண்ணிற மலர்களையுடைய செடி வகை.

fox'hole, *n.* (படை.) வேட்டுக்களிடுவதற்கோ வேட்டுக்களிலிருந்து தப்புவதற்கோ மறைவாகப் பயன்படுத்தப்படும் குழி.

fox'hound, *n.* நரிகளைத் துரத்திப் பிடிப்பதற்குப் பயன்படும் வேட்டைநாய் வகை.

fox'-hunt, *n.* நரிவேட்டை ; *v.* நரிவேட்டையாடு.

**fox'iness**, *n.* தந்திரம்; சீரழிவு; உறைப்பான புளிப்புச் சுவை; சுவடிகளில் புள்ளி விழுந்தநிலை.

**fox'ing**, *n.* கபடியின் செயல்.

**fox'tail**, *n.* நரியின் வால்; நரிவால் போன்ற நுனிப்பகுதியுடைய புல் வகை.

**fox'terrier**, *n.* நரிகளை வளைகளிலிருந்து வெளிப்படுத்துவதற்குப் பயிற்றுவிக்கப்படும் அகழ் நாய்வகை; வளர்ப்பு நாய்வகை.

**fox'trot**, *n.* குதிரையின் குறுநடைக்கதி; அமெரிக்க ஆடல் வகை.

**fox'y**, *a.* நரிபோன்ற; நரிகளுக்குரிய; தந்திரமான; செம்பழுப்பு நிறமான; பூஞ்சணம் முதலியவற்றால் சேதப்படுத்தப்பட்ட.

***foyer***, (பிர.) *n.* நாடக அரங்குகளில் இடைவேளையில் அவையினர் பயன்படுத்துவதற்கான பெரிய அறை.

**Fra'**, *n.* துறவியின் பெயருக்குமுன் இடப்படும் பட்டம்.

**frac'as**, *n.* அமளி, சண்டை, சந்தடி, குழப்பம், கலகம்; *pl.* frac'as.

**frac'tion**, *n.* கீழ்வாய் எண், பின்னம்; கூறு, பகுதி; சிறு துண்டு, சிறிதளவு; சிறுசில்லு; இயேசுநாதரின் அப்பப் பகிர்வுத் திருநிகழ்ச்சி; வடித்தல்மூலமாகப் பிரிக்கப்பட்ட கூறு; (தொ.) decimal fraction, பதின்மானக் கீழ்வாய், தசாம்சப் பின்னம்; improper fraction, தகாப்பின்னம்; proper fraction, தகு பின்னம்; vulgar fraction, பொதுநிலைப்பின்னம், மேல் கீழ்க் கூறுகள் கொண்ட கீழ்வாய்.

**frac'tional**, *a.* பின்னத்துக்குரிய; பின்னத்தின் இயல்பு வாய்ந்த; (தொ.) fractional distillation, வடித்துப் பிரித்தல், படிப்படியாகச் சூடேற்றுவதுமூலமாக வெவ்வேறு கொதிநிலைகளையுடைய நீர்மங்களைப் பிரித்தல்.

**frac'tionary**, *a.* பின்னத்தின் இயல்புவாய்ந்த; துண்டுப் பகுதியான.

**frac'tionate**, *v.* வாலைவடித்தல் முதலிய முறைகளினால் சேர்மானத்தை வெவ்வேறு இயல்புகளுள்ள கூறுகளாகப் பிரி.

**frac'tionize**, *v.* பின்னங்களாகப் பிரி; கூறுகளாகப் பிரி.

**frac'tious**, *a.* சண்டைக்கு ஆயத்தமாயிருக்கிற; சிடுசிடுக்கிற, வெடுவெடுப்பான; அடங்காத, கலசலான.

**frac'ture**, *n.* உடைவு, முறிவு; எலும்புமுறிவு; கனிப்பொருளின் உடைந்த விளிம்புப்பகுதி; அடுத்துவரும் மெய்யெழுத்தினால் பாதிக்கப்பட்டு உயிரெழுத்துக்குப் பதிலாக இணையுயிர் அமைதல்; (ஒலி.) உயிரெழுத்துக்குப் பதிலாக அமையும் இணையுயிர்; *v.* முறிவு உண்டாக்கு; தொடர்ச்சியிணக்கெடு; பிள, வெடிப்புறு; (தொ.) compound fracture, தாறுமாறான எலும்புமுறிவு; தோல் - சதைகளில் எலும்பின் கூறுகள் சென்று சிக்கும் எலும்பு முறிவு; simple fracture, வெறு முறிவு, பொதுநிலை முறிவு, தோல் கிழிபடாமல் எலும்பு முறிதல்.

**fraen'um**, *n.* (உள்., வில.) உறுப்பின் இயக்கத்தைத் தடுக்கும் சிறு நரம்பு; *pl.* fraen'a.

**fra'gile**, *a.* எளிதில் முறிகிற; எளிதில் உடைகிற; அழியத்தக்க; வலுவற்ற; வலுக்கேடான கட்டமைப்புடைய.

**fragil'ity**, *n.* எளிதில் உடையும் நிலை; வலுவற்ற இயல்பு.

**frag'ment**, *n.* முறிந்த துண்டு; பிரிந்துவந்துவிட்ட துணுக்கு; முழுமையற்ற கூறு; மீந்த பகுதி, எச்சக்கூறு; முடியாத பகுதி, அரைகுறையாக விடப்பட்ட பகுதி.

**fragment'al**, *a.* பழம் பாறையின் துணுக்குகள் கொண்ட; துண்டுகளாயுள்ள.

**frag'mentary**, *a.* துண்டுத்துணுக்குகள் கொண்ட; முறிந்துபோன, உடைந்த.

**fragmenta'tion**, *n.* சிறு கூறுகளாகப் பிரித்தல்; கூறுபாடு; உயிரணுக் கூறுபாட்டுக்குரிய படிவளர்ச்சிகளில்லாமலே பிரிவுறுதல்; (தொ.) fragmentation bomb, வெடிக்கும்போது சிறு துணுக்குகளாக உடைந்து சிதறும் வெடிகுண்டு.

**fragment'ed**, *a.*=fragmentary.

**fra'grance, fra'grancy**, *n.* நறுமணம்; இனிமைத்திறம்.

**frag'rant**, *a.* நறுமணமுள்ள.

**frail** [1], *n.* அத்திப்பழம்-உலர்ந்த கொடிமுந்திரிப்பழம் முதலியவற்றைச் சிப்பங் கட்டுவதற்குரிய நாணற்புல்லினால் செய்யப்பட்ட கூடை; நாணற் புல்.

**frail** [2], *a.* எளிதில் உடைகிற, நொய்தான; நிலையற்ற, நிலையாத் தன்மையுடைய; நலிந்த; உடல்நலிவுடைய; ஒழுக்க உறுதியற்ற; அவாமருட்சி அடக்கும் ஆற்றலில்லாத; பெண்கள் வகையில் கற்பொழுக்கமற்ற.

**frail'ness, frail'ty**, *n.* தவறிழைக்கும் பாங்கு; அவாமருட்சிக்குட்படுமியல்பு; குறைபாடு, இழுக்கம்; வலுவின்மை, நொய்ம்மை, நலிவு.

**fraise** [1], *n.* கோட்டையமைப்பு வகையில் மதிலின் பிதுக்கத்தைச் சுற்றியுள்ள கிடையான கம்பிவேலி; *v.* மதிற்பிதுக்கஞ் சுற்றிக் கம்பிவேலியிட்டு அடை.

**fraise** [2], *n.* வட்டத்தொளையைப் பெரிதாக்குவதற்கான கருவி; கடிகாரச் சக்கரங்களில் பற்கள் வெட்டுவதற்கான கருவி; 16-ஆம் நூற்றாண்டைய கழுத்தணி வகை.

**framboes'ia**, *n.* நீகிரோவர்கள் இனத்திடையே நிகழும் தோல்சார்ந்த தொற்றுக் கொள்ளைநோய் வகை.

**frame**, *n.* கட்டுமானம்; அமைப்பு, கட்டமைதி; நிலவர ஒழுங்குமுறைச் சட்டம்; அடிப்படைத் திட்டம்; முறைமை; மனத்தின் தற்கால நிலை; கட்டமைந்த உரு; உடலமைப்பு; உறுப்பிணைவமைதி; என்புச்சட்டம், இணைவரிக்கூடு; கட்டிட உருவரைச்சட்டம்; உள்ளுறைச் சட்டம், அடிப்படைச்சட்டம்; ஆதார அடிப்படை; புறவரிச்சட்டம்; சித்திரவேலைத் துணை வரிச்சட்டம்; துன்னல் வேலைப் பொறிச்சட்டம்; செயற்கைத் தேன்கூட்டுச் சட்டம்; தோட்டச் செடிகளின் குளிர்காப்புப் பெட்டிச் சட்டம்; சுரங்க மூலப்பொருளை அலம்புவதற்குரிய சாய்வுப்பலகை; ஆட்டவகை; ஆட்டக் காய்களின் முக்கோண வடிவ அடுக்குச் சட்டம்; அடுக்கிலுள்ள காய்கள் தொகுதி; திரைத்தகட்டு ஒற்றைத்தனிப்படம்; தொலைக் காட்சியில் ஒரே உருப்படிவத்துக்குரிய வரைத்தொகுதி; *v.* உருவாக்கு; வடிவம்கொடு; இணை; திட்டமிடு; இசைவி; பொருத்து; இணைத்தமை, வகுத்தமை; கலந்து உருவாக்கு; திட்டமிட்டு இயற்று; ஒலி உருப்படுத்து; இயக்கு; நடத்து; சட்டமிடு, சட்டத்தில் அமை; சட்டத்துக்கு உட்படுத்தி அமை; பொறிச்சட்டத்தில் மாட்டுவி; வழிவகுத்துச்செல்; நாடிச்செல்; இடம்பெயர்வுறு; முன்னேற்றத்துக்குரிய குறிகாட்டு; சூழ்ந்துருவாக்கு, திறங்கொண்டியற்று; புனைந்துருவாக்கு, பாவனைசெய்; (தொ.) frame aerial, திசையேற்புக்கெனக் கட்டக் கம்பி அமைவுகளுடைய வானலைவாங்கி; frame up, புனைந்து உருவாக்கு.

**frame'-house**, *n.* பலகைகளிட்டு அடைக்கத்தக்க மரச் சட்டங்களால் அமைந்த வீடு.

**frame'-maker**, *n.* படச்சட்டங்கள் செய்பவர்.

**fram'er**, *n.* உருவாக்குபவர்; கட்டுபவர்; படங்கள் முதலியவற்றிற்குச் சட்டம் போடுபவர்.

**frame'work**, *n.* பணிச்சட்டம், வரைச்சட்டம்.

**fram'ing**, *n.* கட்டுதல், நிர்மாணித்தல், அமைத்தல்; சட்டம், கட்டமைப்பு.

**franc**, *n.* பிரஞ்சு நாணயச் செலாவணியில் அலகு நாணயம்; *1914–18*-ஆம் ஆண்டுகளின் போருக்குமுன் ஏறத்தாழ 9½ பென்னி மதிப்புள்ள வெள்ளி நாணயம்; பெல்ஜியம்-ஸ்விட்சர்லாந்து நாடுகளுக்குரிய நாணயம்.

**fran'chise**, *n.* வாக்குரிமை; வாக்களிக்கும் தகுதி; குடிமை உரிமை; உரிமைக்குழுமத்தின் முழு உறுப்பினர் உரிமை; விலக்குரிமை; தனியுரிமை.

**Francis'can**, *n.* தூய திரு. பிரான்சிஸ் (St. Francis of Assisi) என்பவரால் *1209*-இல் நிறுவப்பட்ட நிறுவனத்தைச் சேர்ந்த துறவி; *a.* தூய திரு. பிரான்சிஸின் துறவு மடத்தைச் சேர்ந்த; தூய திரு. பிரான்சிஸின் மடத்துத் துறவிகள் சார்ந்த.

**Franc'o-Ger'man**, *n.* பிரான்சு நாட்டுக்கும் செர்மனி நாட்டுக்கும் உரியவர்; *a.* பிரான்சுக்கும் செர்மனிக்கும் உரிய.

**franc'olin**, *n.* வான்கோழி போன்ற கவுதாரி வகை.

**franc'omania**, *n.* பிரஞ்சு ஒழுகலாறுகளிற் பேராவல்.

**franc'ophil, franc'ophile**, *n.* பிரான்சின் நண்பர்.

**franc'ophobe**, *n.* பிரான்சையும் பிரஞ்சுத் தொடர்பான வற்றையும் வெறுப்பவர் அல்லது அஞ்சுபவர்.

***franc tireur***, (பிர.) *n.* நிலைமுறையற்ற காலாட்படைவீரர், குரங்குப்போர் முறையில் போரிடுபவர்; *pl.* ***francs tireurs***.

**fran'gible**, *a.* எளிதில் உடைந்துவிடுகிற.

**fran'gipane, fran'gipani**, *n.* சிவப்பு மல்லிகை வகை; சிவப்பு மல்லிகை வகையிலிருந்து பெறப்படும் நறுமணப் பொருள்; வாதுமை கலந்த பாலேடுவகை; வாதுமை கலந்த களி வகை.

**Frank**[1], *n.* கி. பி. 6-ஆம் நூற்றுண்டில் பிரான்சு நாட்டை வென்று பரவிய செர்மானிய இனக் குழுவினருள் ஒருவர்; செர்மனியில் பிராங்கோனியா (Franconia) என்ற பகுதியிலுள்ள இனக்கூட்டிணைப்புக் குழுவினருள் ஒருவர்; கீழ்த்திசை வழக்கில் பறங்கியர், மேலை ஐரோப்பியர்.

**frank**[2], *n.* கடிதத்தைச் செலவின்றி அனுப்பும் உரிமை உடையவரது கையெழுத்து; கட்டணமின்றிக் கடிதம் அனுப்பும் உரிமை உடையவரது கையெழுத்துத் தாங்கிய உறை; *v.* கட்டணமின்றி அனுப்பும் உரிமையின்படி கடித மீது கையெழுத்திடு; கடிதத்தைக் கட்டணமின்றி அனுப்பு; கட்டணமின்றி ஊர்தியில் இட்டுச்செல்; மேலே கட்டணம் செலுத்தும் கடமையிலிருந்து விடுவி; தங்குதடையற்ற சமுதாய ஊடாட்ட உரிமை வழங்கு; தாராளமாகப் போகவர வாய்ப்பு வழங்கு.

**frank**[3], *a.* நேர்மையான, கபடற்ற, ஒளிவு மறைவில்லாத; அஞ்சாமற் பேசுகிற; மனம் விட்டுத் தெரிவிக்கிற; வெளிப்படையான.

**Frank'enstein**, *n.* தான் படைத்த பொருளால் தனக்கே தொல்லையும் அழிவும் தேடிக்கொள்பவர்; (தொ.) Frankenstein's monster, ஆக்கியவர்க்கே அழிவுதரும் ஒன்று.

**Frank'fort black**, *n.* செப்புத்தகட்டுச் செதுக்கு வேலையில் பயன்படுத்தப்படும் நேர்த்தியான கறுப்பு நிற மை.

**frank'furt, frank'furter**, *n.* செர்மனியில் முனைத்த காரச் சுவையூட்டப்பட்ட இறைச்சி உணவுவகை.

**frank'incense**, *n.* சாம்பிராணி, குங்கிலியம்.

**frank'lin**, *n.* சிறு நிலக்கிழார்; 14, 15-ஆம் நூற்றுண்டுகளிற் பண்ணை நிலக்குட்படாத சிறு தனி உரிமையாளர்.

**frank'-pledge**, *n.* முற்கால வரிக்கடமையில் பத்துக் குடும்பக் குழுவினர்கள் ஏற்றிருந்த கூட்டுப்பொறுப்பு.

**fran'tic**, *a.* மூர்க்க வெறிகொண்ட; சினங்கொண்டு தன்னை மறந்த; வெறி பிடித்த; துயராற் கொதித்தெழுந்த; கட்டு மீறிய.

**frap**, *v.* (கப்.) இறுக்கிக்கட்டு.

***frappe***, (பிர.) *a.* இன்தேறல் வகையில் பனிக்கட்டியினுல் குளிரவைக்கப்பட்ட.

**frass**, *n.* முட்டைப்புழுக்களின் எச்சம்; துளைக்கும் பூச்சியினங்களின் எச்சம்.

***frat'e***, (இத்.) *n.* துறவி.

**frat'er**[1], *n.* உணவுக்கூடம்.

**frat'er**[2], *n.* துறவி; தோழன், கூட்டாளி.

**fratern'al**, *a.* உடன்பிறப்பாளர் சார்ந்த; உடன்பிறப்பாளர்கள் போன்ற; உடன்பிறந்தாரின் இயல்புக்கு உகந்த.

**fratern'ity**, *n.* தோழமை, உடன்பிறப்பாண்மை; உடன்பிறப்பாளர் பாங்கு, உடன்பிறப்பாளர் நிலை; கல்லூரி அல்லது பல்கலைக்கழக மாணவர் கழகம்; திருச்சபை; வாணிகக் கூட்டுக் குழு; பொதுநோக்கங்கள் கொண்டவர்களின் கழகம்; ஒரே இனத்தவர்கள் அல்லது வகையினர்களின் ஈட்டம்.

**fraterniza'tion**, *n.* உடன்பிறப்பாளர்களைப் போன்று அளவளாவுதல்.

**frat'ernize**, *v.* தோழமைகொள், நெருங்கி அளவளாவு.

**frat'ricide**, *n.* உடன்பிறப்புக் கொலை.

**fr'atry**, *n.*=frater [1].

***frau***, (செர்.) *n.* செர்மன் மொழிவழக்கில் பெண்; திருவாட்டி.

**fraud**, *n.* (சட்.) ஏமாற்றுக் குற்றம்; ஏய்ப்பு, மோசடி; வஞ்சச் சூழ்ச்சி, ஏமாற்றுப் பொறி; போலியான பொருள்; போலியானவர்; (தொ.) in fraud of, to the fraud of, (சட்.) வஞ்சித்துப் பறிக்கும் பொருட்டு, ஏமாற்றும் பொருட்டு; pious fraud, பிறருக்குத் தெரியாது நலத்தையுன்னி ஏமாற்றம் போலச் செய்யும் செயல்.

**fraud'ulent**, *a.* வஞ்சனைக்குரிய; ஏய்க்கும் இயல்புடைய, ஏமாற்றும் பழக்கமுடைய; மோசடியால் விளைந்த.

**fraught**, *n.* சுமை, மூடை; கப்பற்சரக்கு; *a.* சுமையேற்றப்பட்ட; நிரப்பப்பட்ட; ஆர்ந்த, நிரம்பிய, செறிந்த; இடருக்கு வழிவகுக்கிற; மூலகாரணமான; பின்விளைவாகவுடைய; பின்விளைவுபற்றி முனைப்பாக அச்சந்தருகிற; *v.* நிரப்பு, செறித்துவை.

***fraul'ein***, (செர்.) *n.* மணமாகா இளம்பெண், குமாரி.

**Fraun'hofer lines**, *n. pl.* கதிரவன் ஒளிநிறப் பட்டையிற் காணப்படும் கருவரிகள்.

**Fraxinell'a**, *n.* தோட்ட நறுமணச் செடிவகைகள்.

**fray**[1], *n.* சண்டை, அமளி, சச்சரவு; *v.* அச்சுறுத்து.

**fray**[2], *v.* தேய்த்து இறும்படி செய்; முனையில் அல்லது விளிம்பிலுள்ள முறுக்கின் புரியவிழ்; தேய்வினுல் இற்றுப்போ; முளைத்துவரும் கொம்புகளின்மேலுள்ள மென்பட்டுப் போன்ற பரப்பைத் தேய்த்தகற்று.

**frazil'**, *n.* ஆறுகளின் அடித்தலத்திலுள்ள பனிக்கட்டி.

**fraz'zle**, *n.* வழங்கித் தேய்ந்துபோன நிலை; களைப்புற்ற நிலை; *v.* தேய், மாயச்செய்.

**freak**, *n.* இயற்கைப் பிறழ்வு; கண்ணராவி; எண்ணுச் சிறு செயல்; தடுமாற்றம்; விளையாட்டுத்தனத்தின் விளைவு; குறும்புச் செயல்; மனம்போன போக்கு, தான்தோன்றித் தனம்.

**freaked**, *a.* உருக்குலைக்கும் புள்ளிகளையுடைய; கீற்று வரிகளையுடைய.

**freak'ish**, *a.* மனம்போன போக்குடைய; திடுமென மனமாறும் இயல்புடைய, சபலத்தன்மை வாய்ந்த.

**frec'kle**, *n.* தோலில் இலேசான தவிட்டுநிறமுள்ள புள்ளி; பொட்டு; *v.* தோலில் இலேசான தவிட்டுநிறமுள்ள புள்ளிகளாற் கறைப்படுத்து; பொட்டுக்களையுடையதாகு.

**frec'kles**, *n. pl.* உடலில் ஆங்காங்கே வெயில் வெப்பினுல் ஏற்படும் கன்றிய பொட்டுக்கள்.

**free**, *a.* தன்னுரிமையுடைய; அடிமைப்படாத; புறச்சார்பற்ற; அயலாட்சிக்கு உட்படாத; வல்லாட்சிமுறைக்கு உட்படாத; மக்களுரிமையுடைய; முழுநிறை குடியுரிமையுடைய; தன் உரிமைக் கழக உறுப்பினரான; கட்டற்ற; கட்டுப்பாட்டு வரம்புகளற்ற; சமுதாயத்தில் தாராளமாகப் பழகுகிற; சிந்தனையாளர் வகையில் சமயச்சார்பற்ற; சிந்தனை வகையில் திறந்த மனப்பான்மையுடைய; தொழிலாளர் வகையில் தொழிற்குழுத் தொடர்பற்ற; விடுதலை பெற்ற; மொழிநடை வகையில் ஒழுங்குக்கோட்பாட்டு வரம்புகளுக்குக் கட்டுப்படாத; மொழிபெயர்ப்பு வகையில் சொல்லுக்குச்சொல் பெயர்க்கப்படாத; சண்டை முதலிய நிகழ்ச்சிகள் வகையில் எல்லாரும் கலந்துகொள்ளத்தக்க; வரியற்ற; தனி விலக்குரிமையுடைய; சக்கர வகையில் முட்டின்றிச் சுழல்கிற; தன்னியக்கமுடைய; இயந்திரக்கருவி வகையில் தனி இயக்கமுடைய; முற்றிலும் இணைக்கப்பெறுத; வேதியியல் வகையில் சேர்மங்களில் முற்றிலும் இணைவுறுத; ஆற்றல் வகையில் பயனில் ஈடுபடுத்தப்படாத; பயன்படுத்தும்படி கிட்டக்கூடிய; தன்னியல்பான; தனி விருப்பார்ந்த; புறத்தூண்டுதலற்ற; கையெழுத்து வகையில் முயற்சியற்ற; தனி முனைப்பற்ற;

தூண்டப்படாத; வலுக்கட்டாயத்துக்கு உட்படாத; வரையாது கொடுக்கிற; கட்டற்ற வளமுடைய; தாராளமான; ஈட்டப்படாத; விலையற்ற, இலவசமான; மனம் விட்டுத் தெரிவிக்கிற; ஒளிவுமறைவற்ற, அஞ்சாது கூறுகிற; ஆசாரக் கட்டற்ற; துடுக்கான; வரம்புமீறிய; அடக்கமற்ற; மட்டு மதிப்பற்ற; கொச்சையான; *v.* தளையறு, கட்டுநீக்கு; கட்டுப்பாடகற்று; தடைவிலக்கு; விடுவி, விடுதலையளி; அச்சம் முதலியவற்றிலிருந்து விலக்கு; சிக்கல்நிலை அகற்று; சிறைவீடு செய்; வரம்புக் கட்டுப்பாடகற்றி வெளிச்செல்ல விடு; தொடர்பறு, இணைப்பறு; (தொ.) be free with, make free with, வரம்புமீறி உரிமை எடுத்துக்கொள், இல்லாத பழக்க உரிமை கொண்டாடு; Free Church, அரசியல் தொடர்பற்ற திருச்சபை; Free Church of Scotland, நிலை பெற்ற ஸ்காத்லாந்து நாட்டுத் திருச்சபையிலிருந்து 1843-இல் விலகிய தனிக்குழு; free fight, உடனிருப்பவரெல்லாம் சேர்ந்துகொள்ளும் சண்டை; free grace, தகுதிநோக்காது காட்டப்படும்அருள்; free labour, அடிமையல்லாத தொழிலாளிகள் தொகுதி அல்லது சேவை; தொழிற்குழுச் சார்பற்ற தொழிலாளர்கள் தொகுதி அல்லது சேவை; free living, உணவு முதலிய வாய்ப்புக்களின் இன்ப நுகர்வில் மகிழ்ந்து தோய்தல்; free pass, காசில்லா நுழைவுச்சீட்டு; free school, இலவசப்பள்ளி; free trade, சுங்கவரி-காப்புவரி-கட்டுப்பாடு முதலியவையற்ற வாணிகம்; free verse, யாப்பிலக்கணக் கட்டுப்பாடற்ற செய்யுள் வகை; free will, ஊழ்க்கட்டுப்பாடற்ற தன் துணிபாற்றல்; give a free hand, இடம் நேரத்துக்கொத்துத் தன் விருப்பம்போல் செயலாற்றும் உரிமை கொடு; have a free hand, இடம் நேரத்துக்கிசைந்து தன் விருப்பம்போல் செயலாற்றும் உரிமை பெற்றிரு.

**free'-ag'ency,** *n.* தன்னுரிமையோடு இயங்கும் நிலை.

**free'-and-eas'y,** *n.* பண்புடையோர் கட்டுப்பாடற்றுப் புகை பிடிப்பதற்கும் பாடுவதற்கும் உரிய பொதுவிடுதி; *a.* தடைகளற்ற செயலுரிமையுடைய.

**free'-board,** *n.* கப்பல்தளத்திற்கும் நீர்மட்டத்திற்கும் இடையேயுள்ள தூரம்; வேலிக்கு அப்பாலுள்ள துண்டு நிலம்; வேலிக்கு அப்பாலுள்ள துண்டு நிலவுரிமை.

**free'booter,** *n.* கடற் கொள்ளைக்காரர், கடலில் வழிப்பறி செய்பவர்.

**free'born,** *a.* சுதந்திரமாகப் பிறந்த, அடிமையாகப் பிறக்காத, குடியுரிமையையும் தனித்தற்சார்பு உரிமையையும் இயல்பான மரபுரிமையாகப் பெற்ற.

**freed'man,** *n.* விடுதலையளிக்கப்பட்ட அடிமை; *pl.* freed'men.

**free'dom,** *n.* தன்னுரிமை, சுதந்திரம்; தன்னுட்சியுரிமை; குடியாட்சியுரிமை, குடியாண்மை; திணையாட்சியுரிமை; தனிமுறை ஆட்சியுரிமை; உறுப்பினர் உரிமை; வழக்காற்றுரிமை; பயனுரிமை; தனி விலக்குரிமை; தற்சார்பு; புறச்சார்பின்மை; தடையற்ற செயலுரிமை; ஊழ்ச்சார்பின்மை; கட்டாய நிலையின்மை; தடையற்ற பழக்க உரிமை; அஞ்சாமை; பேச்சில் ஒளிவு மறைவு தவிர்ப்பு; சிந்தனைத் துணிவு; தடையற்ற இயக்கம்; சிக்கற்ற செயலிழைவுத் தன்மை; தவிர்ப்புநிலை, சார்பின்மை, தொடர்பின்மை; சிக்கலின்மை, இணைவின்மை; சார்பறவு, தொடர்பறவு; (தொ.) The Four Freedoms, பேச்சுரிமை சமயக்கொள்கையுரிமை அச்சந்தவிர்ப்புரிமை வறுமை தவிர்ப்புரிமை ஆகிய நான்கு அடிப்படை உரிமைகள்.

**free'-hand,** *a.* கருவியின்றி இயல்பாகக் கையினால் வரையப்பட்ட.

**free'-hand'ed,** *a.* தாராளமான, வண்மையுடைய.

**free'hold,** *n.* இறையிலி நிலம்.

**free'holder,** *n.* இறையிலி மானியத்தார்.

**free'lance,** *n.* கட்டுப்பாடற்ற போர்வீரர்; கட்டற்றவர்; எப்பத்திரிகையையும் சாராத பொது எழுத்தாளர்; சார்பற்ற அரசியல் வாதி; பணிமுதல்வரற்ற தன்னிச்சையான தொழிலாளி.

**free'-liv'er,** *n.* தடங்கலின்றி உணவு குடியின்பங்களில் தோய்பவர்.

**free'-love,** *n.* திருமணக் கட்டுப்பாடற்ற காதல் தொடர்பு; குடும்பப் பொறுப்புக் கடப்பாடற்ற காதல் வாழ்வு.

**free'ly,** *adv.* கட்டின்றி, தன்னுரிமையாக; தாராளமாக; இலவசமாக; (கப்.) காற்றுப்பக்கமாகப் பாய்களை மிகுதியாய் இழுக்காமல்.

**free'man,** *n.* கட்டற்ற சுதந்தர மனிதர்; அடிமை வாழ்வற்றவர்; குடியுரிமையுள்ளவர்; கழகத் தனியுரிமை உறுப்பினர்; நகரத் தனியுரிமை உறுப்பினர்.

**free'martin,** *n.* முதிராப் பெண்மை உறுப்புடைய ஆண் கன்று; சேங்கன்றுடன் இரட்டையாகப் பிறந்து புறப் பெண்மையுறுப்புடன் முனைப்பான ஆண் கூறுடைய பெண் விலங்கு.

**free'mason,** *n.* மறை குறியீடுகளும் வினைமுறை வழக்காறுகளும் உடைய பழமை வாய்ந்த கூட்டுரிமைக் கழகத்தின் உறுப்பினர்.

**free'masonry,** *n.* மறைகுறியீடுகளும் வினைமுறை வழக்காறுகளும் உடைய பழமை வாய்ந்த கூட்டுரிமைக்கழக அமைப்பு; கூட்டுரிமைக் கழக நிறுவனம்; ஒத்த பண்புடையாரின் இயலார்ந்த கூட்டுறவு.

**free'-mind'ed,** *a.* கவலையற்ற மனமுடைய.

**free'-port,** *n.* சுங்கமற்ற துறைமுகம்.

**frees'ia,** *n.* தென் ஆப்பிரிக்காவிலுள்ள பகட்டான மலர்களையும் குமிழ் வடிவான தண்டையுமுடைய செடிவகை.

**free'-spok'en,** *a.* கருத்து மறைப்பில்லாமல் பேசும் இயல்புடைய, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத.

**free'stone,** *n.* மாக்கல், பாளம் பாளமாகப் பிளவுறுத வாள் அறுப்பு வேலைப்பாட்டுக்குரிய கல்வகை; *a.* உள்ளீடு எளிதில் பிரியும் இயல்புள்ள கொட்டையையுடைய.

**free'thinker,** *n.* கட்டற்ற பகுத்தறிவாளர், சமய மூட நம்பிக்கைச் சார்புகளற்ற தற்சிந்தனையாளர்.

**free'-thinking, free'-thought,** *n.* கட்டற்ற பகுத்தறிவுச் சிந்தனை, சமய மூடநம்பிக்கைச் சார்பற்ற அறிவாராய்வு.

**free'-trade,** *n.* தங்குதடையற்ற வாணிகம்; சுங்கப் பாதுகாப்புமுறைக் கட்டுப்பாடில்லா வாணிகம்.

**free'-trad'er,** *n.* தங்குதடையற்ற வாணிகத்தில் நம்பிக்கையுடையவர்; தடையற்ற வாணிகமுறைக் கோட்பாடு பரப்புபவர்; தடையற்ற வாணிகம் செய்பவர்; கள்ள வாணிகர், சுங்கக் கட்டுப்பாட்டை மீறி வாணிகம் செய்பவர்; கள்ள வாணிகக் கப்பல்.

**freeze,** *n.* பனி உறையும்நிலை; பனி உறைபருவம்; பனி உறைபருவ வருகை; கூலிவகையில் ஒருநிலை அறுதிப்பாடு; *v.* பனிக்கட்டியாக இறுகச்செய்; உறை, பனிக்கட்டியாகு; பனிக்கட்டியால் மூடப்பெறு; பனிக்கட்டியாக மாறு; குளிரால் இறுகச்செய்; குளிரால் இறுகு; குளிரால்விறைப்பாகு; பனிக்கட்டியால் இறுகு, உறைதட்ப நிலையிலிரு; அச்சத்தால் நடுக்குறுத்து, ஊக்கங்கெடச்செய்; கிளர்ச்சி ஒடுக்கு; செயலறச்செய்; இறைச்சி முதலியவற்றைக் குளிர்பாதுகாப்பு முறையால் கெட்டுப்போகாமல் பாதுகாத்து வை; விலையை ஒருநிலைப்படுத்து; ஊதியத்தை நிலவரப்படுத்து; (தொ.) freeze one's blood, திகிலூட்டு, அச்சுறுத்து; freeze to death, மிகுந்த குளிரினால் இற; தணுப்பினால் இறக்கச்செய்.

**freeze'-out,** *n.* முதலிழந்த உடனே ஒவ்வொரு ஆட்டக்காரராக விலகிவிடும் சீட்டாட்ட வகை.

**freez'er,** *n.* உறையவைக்கும் துணைக்கருவித்தொகுதி; உறையும்பொருள்.

**freez'ing,** *a.* மிகு குளிரான; ஊக்கம் கெடுக்கிற; ஆர்வக் குறைவான; நெருங்கிப்பழகாத; விலகிநடக்கிற.

**freez'ing-mixture,** *n.* பொருள்களை உறையும்படி செய்யும் கலவை.

**freez'ing-point,** *n.* உறைநிலை, பொருள்களின் உறைதட்ப நிலை.

**freight**, *n.* சுமை, கப்பற்சரக்கு, பாரம், சரக்கேற்றிக்கொண்டு செல்லுதல் ; சரக்கேற்றிக்கொண்டு செல்லுதற்காகக் கப்பலை வாடகைக்கு அமர்த்துதல்; *v.* கப்பலிற் சரக்கை ஏற்று; சரக்குகளையும் பிரயாணிகளையும் ஏற்றிச்செல்ல வாடகைக்கு எடு; சரக்குகளையும் ஆட்களையும் ஏற்றிச் செல்லுவதற்காக வாடகைக்கு விடு.

**freight'age**, *n.* கப்பல் சரக்குத்தொகுதி ; கப்பலிற் சரக் கேற்றிச் செல்லுதற்கான கட்டணம்; கப்பலில் சரக்கேற்றுதல்; சரக்கேற்றிச் செல்வதற்காகக் கப்பலை வாடகைக்கு அமர்த்துதல்.

**freight'er**, *n.* கப்பலிற் சரக்கேற்றுபவர் ; சரக்கேற்றுதற் காகக் கப்பலை வாடகை ஒப்பந்தம் செய்பவர் ; உள்நாட்டுக்கு ஏற்றிச்செல்லச் சரக்குகளை வாங்கி அனுப்பும் பொறுப்பேற் பவர்; சரக்கேற்றும் கப்பல்; சரக்கேற்றிச் செல்லும் விமானம்.

**French**, *n.* பிரஞ்சுமொழி ; *a.* பிரான்சுநாடு சார்ந்த ; பிரான்சு நாட்டு மக்களைச்சார்ந்த; பிரான்சுநாட்டு மக்களின் பண்புகளை யுடைய ; (தொ.) French bean, காயாகவும் முதிர்விதை யாகவும் உணவாய்ப் பயன்படுத்தப்படும் அவரை வகை ; French bread, அழகு அப்ப வகை ; French chalk, ஆடைக் குறியாகவும் கறைப்போக்கியாகவும் உடல் மசகாகவும் பயன்படும் கனிப்பொருள் கற்றைவகை ; French drain, நீர் ஊறிச் சென்றுவிடும்படி உடைகல் சில்லுகளிட்ட வடி கால் ; French grey, வெண்மை கருமை சிவப்பு நீலம் கலந்த மங்கலான நிறம் ; French horn, இசைக்குழுவிற் பயன் படுத்தப்படும் எக்காளவகைக்கொம்பு ; French letter, கருத் தடைக்கருவி ; French roof, எல்லாப்பக்கங்களிலும் மேல் சரிவைவிடக் கீழ்ச்சரிவு செங்குத்தாக உள்ள கூரைவகை ; French sash, French window, பலகணியாகவும் கதவாகவும் பயன்படும் மெருகூட்டப்பட்ட மடிப்புக்கதவு ; take French leave, சொல்லிக்கொள்ளாமல் போ, அறிவித்து இசைவு பெறாது செல் ; the French, பிரான்சு நாட்டினர் ; பிரான்சு நாட்டு மக்கள்.

**French'ify**, *v.* பிரான்சுநாட்டின் மொழி-பண்பு ஆகிய வற்றின் உருவங் கொடு ; பிரான்சு நாட்டு மக்கள் போலாகு ; பிரான்சுநாட்டினர்போல் நட; பிரான்சுநாட்டுப் பாணியூட்டு; பிரான்சுநாட்டுப் பாங்கு மேற்கொள்.

**French'less**, *a.* பிரஞ்சுமொழி தெரியாத.

**French'man**, *n.* பிரான்சுநாட்டுக் குடிமகன் ; பிரான்சு நாட்டிற் பிறந்தவன்.

**French'woman**, *n.* பிரான்சு நாட்டுப் பெண்.

**French'y**, *n.* பிரான்சுநாட்டவரைக் குறித்த ஏளனக் குறிப்புச் சொல் ; *a.* மிகைப்பட்ட பிரஞ்சு பாணியையுடைய, பிரஞ்சு பழக்கவழக்கங்களையுடைய.

**frenet'ic**, *a.* வெறியெழுச்சி கொண்ட ; வெறித்த ; கொள்கை முனைப்பான.

**frenum**, *n.* உறுப்புக்களின் இயக்கத்தைத் தடைசெய்யும் தசைநார்.

**fren'zied**, *a.* வெறியூட்டப்பட்ட ; சீற்றங்கொண்ட ; (தொ.) frenzied rage, வெறியாளரின் சினம்.

**fren'zy**, *n.* வெறி; மூளைக்கோளாறு; தற்காலிகப் பைத்தியம்; மிகுசினம், தீவிர ஆத்திரம் ; சன்னியாலான கிளர்ச்சி ; மனம்போன போக்கான மடமை ; தன்னை மறந்த சீற்றம் ; கொந்தளிப்பு ; *v.* வெறியூட்டு ; மிகுசினமூட்டு.

**freq'uency**, *n.* அடுக்குநிகழ்வு, விட்டுவிட்டு அடிக்கடி நிகழும் தன்மை, அடுத்தடுத்து நிகழும் நிலை ; பொதுமுறை நிகழ்வு ; அடுக்கு விரைவெண் ; நாடித்துடிப்பு விசையெண் ; (இய.) அலை அதிர்வெண் ; (தொ.) frequency modulation, பேச்சுக் கும் பாட்டுக்கும் இசைந்த வானொலி அலையதிர்வின் மாறு பாடு; பேச்சுக்கும் பாட்டுக்கும் இசையலையதிர்வில் வேறுபாடு செய்யும் முறை.

**freq'uent**[1], *a.* அடுக்கு நிகழ்வான, அடிக்கடி நிகழ்கிற ; அடுத்தடுத்து நிகழ்கிற, பொதுநிகழ்ச்சியான, பொது நிலை யான; வழக்கமான; அடுத்தடுத்துக் காணப்படுகிற; திரளான, கூட்டமான.

**frequent'**[2], *v.* அடிக்கடி செல் ; அடுத்தடுத்துச் செல் ; வழக்க மாகச்செல், சென்றுபழகு.

**frequenta'tion**, *n.* அடிக்கடி செல்லுதல், அடுத்தடுத்துச் சென்று காணுதல்.

**frequen'tative**, *n.* (இலக்.) திரும்பத்திரும்ப நிகழ்தலைக் கூறும் வினை ; *a.* திரும்பத்திரும்ப நிகழ்தலைக் கூறுகிற ; செயலின் முனைப்பான செறிவைக் குறிக்கிற.

**fres'co**, *n.* சுவர்க்கோல ஓவியம், மேல்மண்டப ஓவியம் ; *v.* சுவர் ஓவியம் வரை, மேல்மண்டப ஓவியம் தீட்டு.

**fresh**, *n.* ஆண்டின் கிளர்ச்சியூட்டும் பருவம்; நாளின் கிளர்ச்சி தரும் வேளை ; வெள்ளம், புதுப்புனல் ; *a.* புதிய, புதுமை குன்றாத ; வாடாத, புதுமலர்ச்சி வாய்ந்த ; மங்காத, புதுப் பகட்டான; நன்னிலையிலுள்ள, கெடாத, ஊசாத; சோர்வற்ற; இளமை நலமுடைய ; வாட்டமுறாத, உடல்நலம் குன்றாத ; ஊக்கம் குன்றாத, புதுக்கிளர்ச்சி வாய்ந்த ; பயன்படுத்தப் படாத, கைபடாத ; கலப்பற்ற, தூய ; மாசுபடாத, துப்புர வான ; நீர்வகையில் குடிக்கத்தக்க ; பழுதுபடாத ; பழகி விடாத ; நாட்படாத ; புதிதாகச் செயல் தீர்ந்த ; தகுதி கெடாத ; கிளர்ச்சியூட்டுகிற, சோர்வகற்றுகிற ; சில்லென்ற, அயர்ச்சி போக்குகிற, ஊக்கம் கெடாத; முன் உணரப்படாத; பழகாத ; அறியப்படாத ; புத்தம்புதிய, மீண்டும் புதுத் தொடக்கமான ; புது நிலையான ; சமைக்கப்படாத ; பக்குவப் படுத்தப்படாத ; பதனிட்டதல்லாத, பச்சைநிலையில் உள்ள ; முதிராத ; அனுபவமற்ற ; பழக்கமற்ற ; செயல் முனைப்பான; துடுக்குத்தனமிக்க ; காதலில் துடுக்குத் துணிச்சலுள்ள ; நாணங்கெட்ட; (தொ.) break fresh ground, பழக்கப்படாத புதிய துறையில் முயற்சிசெய்; fresh complexion, உடல்நலம் இளமைநலம் கெடாத வண்ணத்தோற்றம்.

**fresh'-blown**, *a.* அன்றலர்ந்த, புதிதாக மலர்ந்த.

**fresh'en**, *v.* புதிதாக்கு ; உவர்ப்பை நீக்கு ; புதுவளர்ச்சி பெறு.

**fresh'er**, *n.* பல்கலைக்கழக முதல் ஆண்டு மாணவர்.

**fresh'et**, *n.* புதுப்புனல் வெள்ளம், புதுநீர்ப் பெருக்கு ; நன்னீர் ஓடை ; கடலினுள் நன்னீர் ஒழுக்கு.

**fresh'ly**, *adv.* புதிதாக ; மீண்டும் தொடக்க முதலாக ; புத்தம் புதிய நிலையில்.

**fresh'man**, *n.* பல்கலைக்கழகத்தில் முதல் ஆண்டு மாணவர்; புதிதாக வந்தவர்.

**fresh'-run**, *a.* ஆற்றின் தலைமுதலிற் சென்று முட்டையிடும் இயல்புடைய மீன்வகையில் புதிதாகக் கடலிலிருந்து வந்த.

**fresh'-water**, *a.* நன்னீர் சார்ந்த, உப்பற்ற நீர் சார்ந்த ; நன்னீர்ப் பரப்பில் செல்லும் பழக்கமுடைய ; பக்குவப்படாத, அனுபவமற்ற.

**fret**[1], *n.* பின்னற் பூவேலை ; அரிவரிச் சித்திர வேலைப்பாடு, நேர்வரைச் செங்கோணத் தொடர்புக்கோலமான அறுப்பு வேலைப்பாடு ; *v.* பின்னற் பூவேலை ஒப்பனை செய் ; குறுக்கு நெடுக்கு வரைகளாற் பல்வண்ணப்படுத்து ; மச்சின் அடிப் பகுதியை உள் அறுப்பு அல்லது புடையறுப்பு வேலையால் அணிசெய்.

**fret**[2], *n.* அரிப்பு ; அரிக்கப்பட்ட பகுதி ; நீர்ப்பரப்பின் திரை அலைவு ; மனப்புகைச்சல், மனக்கரிப்பு, எரிச்சல் ; கவலை, தொந்தரை ; கடுப்பு, சிடுசிடுப்பு ; அலைக்கழிவு, அலட்டிப்பு ; *v.* அரித்துத் தின், கரம்பு ; தேய்த்தழி, உராய் ; பல்லைக்கறி, நெறுநெறு என்று கடி ; மனமாய்ச்சல் உண்டுபண்ணு ; அலட்டு, தொந்தரவு செய் ; அலையதிர்வுறச் செய் ; (தொ.) fret and fume, பதட்டங்கொள், படபடத்துத் துடி.

**fret**[3], *n.* நரப்புக்கருவிகளின் விரற்கட்டை.

**fret'ful** *a.* சிடுசிடுப்பான, வெடுவெடுப்பான.

**fret'saw**, *n.* சித்திர அறுப்பு வேலையில் மென்பலகை அட்டை களை அறுக்கப் பயன்படுத்தப்படும் ஒடுங்கிய இழைவாள்.

**fret'work**, *n.* சித்திர அறுப்புவேலை ; வலைப்பின்னல் வேலை ; மரத்தில் ஊடறுத்துச் செய்யப்பட்ட சித்திர வேலைப்பாடு.

**Freud'ian**, *n.* சிக்மண்ட் பிராய்ட் (Sigmund Freud, 1856-1939) என்பவரின் உளப்பாங்காராய்ச்சிக் கொள்கைகளைப் பின்பற்றுபவர்.

**fri'able**, *a.* எளிதில் தகர்ந்து விழக்கூடிய.

**fri'ar**, *n.* சமயத்தொண்டிலீடுபட்ட மடத்துத் துறவி; (தொ.) friar's balsam, சாராயத்தில் கரைக்கப்பட்ட சாம்பிராணி.

**fri'ary**, *n.* துறவி மடம்.

**frib'ble**, *n.* சிறுபிள்ளைத்தனமாக நடப்பவர்; *v.* சிறு பிள்ளைத்தனமாக நட, விளையாட்டுத்தனமாயிரு.

**fric'andeau**, *n.* பொரிக்கப்பட்ட அல்லது வதக்கப்பட்ட குழம்போடுகூடிய இறைச்சித்துண்டு; கன்றின் இறைச்சி; *v.* பொரிக்கப்பட்ட அல்லது வதக்கப்பட்ட இறைச்சித் துண்டுகளாக்கு.

**fricassee'**, *n.* பறவையின் அல்லது சிறு விலங்கின் சுவையூட்டப்பட்டுப் பொரித்த இறைச்சி; *v.* அரிந்து பொரித்த இறைச்சியாக்கு.

**fric'ative**, *n.* உராய்வொலி, உராய்வு மெய்யெழுத்து, நெருக்கமான சந்துவழியாக மூச்சின் அழுத்தம் ஏற்படுவதால் உண்டாகும் மெய்யெழுத்து; *a.* உராய்வதால் உண்டாகிற.

**fric'tion**, *n.* தேய்ப்பு, உராய்வு; மருத்துவத்தேய்ப்புமுறை; பரப்புக்களிடையேயுள்ள இயக்கத்தடையாற்றல்; பண்பு முரண்பாடு; கொள்கைப்பிணக்கு; (தொ.) angle of friction, நழுவிச்செல்லாமல் ஒரு பொருள் மற்றொரு பொருளின்மீது அமைந்திருப்பதற்குரிய அளவான கோணம்.

**fric'tion-ball**, *n.* சக்கர உராய்தலைக் குறைக்கும் உட்கோளத் திரளமைப்பு.

**Frid'ay**, *n.* வெள்ளிக்கிழமை; (தொ.) Black Friday, வெள்ளிக்கிழமையன்று நிகழ்ந்த பல்வேறு கடுந்துன்பங்களைத் தொகுத்துக் குறிக்கும் பெயர்; Good Friday, இயேசுநாதர் சிலுவைப்பாட்டுநாளின் முன்வரும் வெள்ளிக்கிழமை.

**fried**, *v.* fry[2] என்பதன் இறந்தகாலம்.

**friend**, *n.* நண்பர், அன்பர்; துணைவர்; ஒருதுறைத் தோழர்; பழக்கமிகுந்தவர்; நலஞ்செய்பவர்; செல்வாக்கு ஆதரவு தருபவர்; உற்றுழி உதவுபவர்; நல்லெண்ணமுடையவர்; நண்பர்கழக உறுப்பினர்; மான ஈட்டு மற்போரில் ஈடுபடுபவரின் துணை ஆதரவாளர்; பின்பற்றுவோர்; கட்சியாளர், சார்வாளர்; எதிரியல்லாதவர்; எதிர்க்கட்சியல்லாதவர்; நேச மனப்பான்மையுடன் பழகுபவர்; (தொ.) a friend at court, அரசியலவையில் செல்வாக்குப் பயன்படுத்தி உதவக்கூடிய ஒருவர்; be friends with, நல்லுறவோடிரு; my honourable friend, பாராளுமன்றத்தின் உறுப்பினர்பற்றி மற்றோர் உறுப்பினர் குறிப்பிடும் சொற்றொடர்; my learned friend, நீதிமன்றத்தில் வழக்குரைஞர் பற்றி மற்றொரு வழக்குரைஞர் குறிப்பிடும் சொற்றொடர்; Society of Friends, கிறித்தவ சமயப் பிரிவு ஒன்றைச் சேர்ந்த கூட்டத்தினர்.

**friend'ly**, *n.* நட்புரிமையுடைய பழங்குடியினர்; *a.* நட்புரிமையுடைய; நண்பராகச் செயலாற்றுகிற; நண்பராகச் செயலாற்றும் ஆர்வமுடைய; நண்பருக்குகந்த; அன்பு காட்டுகிற; ஆர்வம் வெளிப்படுத்துகிற; அன்பினால் தூண்டப்பட்ட; பகைமையற்ற; நேசமான; அன்புக்கனிவான; சார்வாதரவான; ஏற்குமார்வமுள்ள; உதவும் ஆர்வமுள்ள; பயனளிக்கக்கூடிய; வாய்ப்பான; கால இடச்சூழலுக்கு ஏற்ற நலமுடைய; உற்றுழி உதவுகிற; (தொ.) friendly action, சிக்கற் செய்தியில் முடிவு காண்பதற்காகத் தொடங்கப்படும் விதிமுறை வழக்கு; friendly lead, ஏழையர் உதவிநிதிக்கான பொழுதுபோக்கு நிகழ்ச்சி; friendly match, பரிசு நோக்காது ஆடப்படும் ஆட்டம்; Friendly Society, நோய்-முதுமைத் துன்பத்தை எதிர்ப்பதற்காக ஒன்றுபட்டுக் காப்பீடு செய்யும் சங்கம்.

**friends**, *n. pl.* அணுக்க உறவினர்; பொறுப்பான உறவினர்.

**friend'ship**, *n.* நட்பு; நண்பராயிருக்கும் நிலை; நட்புறவு; அற்புச் செயல்; அன்பான இயல்பு; தோழமை.

**fri'er**, *n.*=fryer.

**Frie'sian**, *n.* ஆலந்து நாட்டிலுள்ள பிரீஸ்லாந்து (Friesland) பகுதிக்குரிய கால்நடை வகை; பிரீஸ்லாந்து நாட்டுக் கால்நடைகளில் ஒன்று; *a.* பிரீஸ்லாந்துநாட்டுக் கால்நடையைச் சார்ந்த.

**frieze**[1], *n.* ஒருபக்கத்தில் மட்டும் மழமழப்பாக இடையிழை கத்தரிக்கப்பட்ட சொரசொரப்பான கம்பளித்துணி வகை.

**frieze**[2], *n.* கட்டிடத்தில் தூணுக்கு மேலுள்ள பகுதியின் உறுப்பு; தளமட்டமான அகன்ற பட்டையுள்ள சிற்பம்; ஒப்பனைப்பட்டை.

**frig'ate**, *n.* ஒருவரிசைப் பீரங்கியுடைய நேர்த்தளப் போர்க்கப்பல்; சிறுபோர்வேவுக்கலம்; சிறு நீர்மூழ்கி எதிர்ப்புப் போர்க்கப்பல், 28 முதல் 60 பீரங்கிகள் வரையுள்ள முற்காலப் போர்க்கப்பல் வகை; வேகப் போர்க்கப்பல் வகை; வெப்ப மண்டலப் பெரும் பறவை வகை.

**fright**, *n.* திகில், கிலி; திடீரச்சம், பேரச்சம்; இயல்பு மீறிய கோர உருவினர்; *v.* (செய்.) அச்சுறுத்து, திகிலுண்டாக்கு.

**fright'en**, *v.* அச்சுறுத்து, திகிலடையச்செய், கிலியுண்டாக்கு; அச்சுறுத்தித் துரத்து; வழக்கமாக அச்சமடையச் செய்.

**fright'ful**, *a.* அச்சம் தருகிற, அச்சுறுத்துகின்ற, கிலியூட்டுகிற, பெருந்திகில் உண்டாக்குகிற; திடுக்கிடச் செய்கிற; வெறுப்பான, அருவருக்கத்தக்க, அழகில்லாத, கோரமான.

**fri'gid**, *a.* கடுங்குளிரான, தணுப்புமிக்க; குளிரால் உறைந்த; விறைப்பான; ஆர்வமற்ற, உணர்ச்சியற்ற; கிளர்ச்சியற்ற; ஊக்கங்குலைக்கிற; அக்கறையற்ற, அசட்டை மனப்பான்மையுடைய; கற்பனையற்ற; உணர்ச்சியைத் தட்டியெழுப்பாத; மரபு வரம்புக்குட்பட்ட; வினைமுறைச் சட்டப்படி நடக்கிற; இயல்பான கனிவு இல்லாத; கவர்ச்சியற்ற, உவர்ப்பான, சப்பென்ற; பெண்டிருடன் பழகாது விறைப்பாக நடக்கிற; (தொ.) frigid zone, நிலவுலக வட தென்கோடிகளிலுள்ள மிகுகுளிர் மண்டலம்.

**frig'idaire'**, *n.* குளிர்சேமப் பேழை.

**frig'idar'ium**, *n.* பண்டை ரோமாபுரியினரின் குளிர்நீர்க் குளிப்பு வாய்ப்புடைய குளிர்காப்புக்கூடம்; குளிர்காப்பறை, தணிப்பு நிலையில் வைத்துப் பேணப்படும் அறை.

**frigid'ity**, *n.* உறைகுளிர்; மந்தகுணம், கிளர்ச்சியின்மை.

**frill**, *n.* தொங்கலிழை, ஓரப்பின்னற் குஞ்சம்; தாள்புனை பூவிழை; மயிர்முடியின் நுனி; இறகுநுனி; செடிகளின் நுனியிழைக்கொத்து; உயிரினங்களின் அடிவயிற்றுப் பின்புறச் சவ்வின் குடலடுத்த பகுதி; நிழற்படத் தகட்டின் ஓரத்திலுள்ள பசைத்தாள் மடிப்பு; *v.* ஓரத்தொங்கல் அமை, குஞ்சம் பின்னு; நிழற்படத் தகட்டின் பசைத்தாள் ஓரம் திரைத்தமை.

**frills**, *n. pl.* செயற்கை அணிமணி; பகட்டுநடை; வெற்றாரவாரம்.

**fringe**, *n.* ஓரம், புற எல்லை, விளிம்பு; நூல்தொங்கல், இழை விளிம்பு, ஓர இழைவரிசை; ஓரப்பட்டை, கரை; தனிக்கரையிணைத்த ஓரம்; சுற்றுக்குடுமி, நெற்றிமீது கவிந்து நிற்கும் விளிம்புக் குறுமயிர் வரிசை; உயிரினங்களின் உறுப்போர மயிர்க்கற்றை; செடியினங்களின் உறுப்புக்கொடிகளிலுள்ள இழைக்கற்றை; முற்றிலும் மழித்து ஓரத்தில் மட்டும் வளர விடப்படும் தாடி; *v.* ஓரத்தைக் குஞ்சங்களினால் அணி செய்; ஓரக்கரை அமை; நூல் தொங்கல் இழை; சுற்றிலும் ஓரம் கட்டு; ஓரப்பட்டை இணை; ஓரமாய் அமைவுறு.

**fripp'ery**, *n.* வீண்பகட்டணிமணி; வெற்றாரவார அணிநடை; பயனற்ற பொருள்கள், சிறுதிறக் குவை; *a.* பயனற்ற; சிறுமைப்பட்ட.

*frisette*, (பிர.) *n.* நெற்றியின்மீது சிறு செயற்கைச் சுருள்களுள்ள பட்டை.

*friseur*, (பிர.) *n.* முடிதிருத்துபவர்.

**Fris'ian**, *n.* பிரீஸ்லாந்து (Friesland) நாட்டுக்குடிமகன்; பிரீஸ்லாந்துநாட்டு மொழி; *a.* பிரீஸ்லாந்தைச் சார்ந்த.

**frisk**, *n.* துள்ளிக்குதித்தல், குதியாட்டம்; *v.* குதி, குதித்து விளையாடு, குதித்து மகிழ், துள்ளு.

**fris'ket**, *n.* அச்சுத்துறையில் தாள் நிலைத்திருக்க உதவும் குறுக்குப்பட்டைகள் வாய்ந்த மெல்லிய இரும்புச்சட்டம்.

**frit**, *n.* கண்ணாடி செய்வதற்குரிய மணலும் சுண்ணமுமுள்ள நீரியற் கலவை; மென்மையான பீங்கான் செய்யும் பளிங்கு போன்ற கலவைப்பொருள்; *v.* கண்ணாடி செய்வதற்குரிய கலவைப்பொருளாக்கு; பீங்கான் செய்வதற்குரிய கலவை யாக்கு; அரைகுறையாக உருகச்செய்; நீரியற் கலவையாக்கு.

**frit'fly**, *n.* கோதுமைப்பயிரை அழிக்கிற சிறு ஈ வகை.

**frith**, *n.* கடற் கூம்பு, கழிமுகம்.

**fritill'ary**, *n.* அல்லிமலர்ச் செடிவகைகள்; வண்ணத்துப் பூச்சி வகைகள்.

**fritt'er**[1], *n.* காய்கறித் துண்டடங்கிய புழுங்கற் குழம்பு.

**fritt'er**[2], *n.* துணுக்கு; *v.* நுணுக்கக் கூறுகளாக்கு; பணத்தை வீணாகச் செலவுசெய்துவிடு; காலத்தை வீணாகக் கழி; ஆற்றலை வீணாக்கிச் சிதறச்செய்; பல்வேறுபட்ட செயல்களிற் சிதறலாக ஈடுபட்டுத் தோல்வி காண்.

**Fritz**, *n.* செர்மானியரைக் குறிக்கும் சாட்டுப்பெயர்.

**friv'ol**, *v.* சிறு காரியங்களில் ஈடுபட்டு நேரம் வீணாக்கு; சிறுபிள்ளைத்தனமாயிரு, விளையாட்டாயிரு; மடத்தனமாகப் பணம் வீணாக்கு; காலத்தைப் பயனற்றதாகக் கழி.

**frivol'ity**, *n.* சிறுமைத்தனம்; அற்பம்.

**friv'olous**, *a.* அற்பப்பொழுதுபோக்கான; விளையாட்டுத் தனமான; சிறுமைப் பகட்டாரவாரமான; விளையாட்டுத் தனமான காரியங்களில் ஈடுபடுகிற, வினையியல் பாங்கற்ற; மடத்தனமான.

**friz, frizz**[1], *n.* சுருண்ட நிலை; சுருள்மயிர், சுரிகுழல் வரிசை; சுருள்மயிர்க் கற்றை.

**frizz**[2], *v.* பொரிக்கும்போது சுஃறென்ற ஒலிசெய்.

**friz'zle**[1], *n.* சுருட்டை முடி; *v.* முடியைச் சுருள்வி; சுருட்டை யாகு.

**friz'zle**[2], *v.* சரசரவென்ற ஓசையுடன் தாளிப்புச் செய்; சுஃறென்று பொரிக்கப்பெறு.

**fro**, *adv.* மீண்டும், திரும்பியும்; (தொ.) to and fro, முன்னும் பின்னும், இருவழியும்.

**frock**, *n.* அகலக் கைப்பகுதியுடைய பெண்டிர் உடுப்பு; வீட்டிற்குள் அணியப்படும் குழந்தை மேலங்கி; தொழிலாளரின் தளர்த்தியான நீண்ட சட்டை; முன்புறம் வெட்டிவிடப் படாத ஆடவர் நீண்ட மேற்சட்டை; படைவீரரின் நீண்ட மேற்சட்டை; தளர்த்தியான கைப்பகுதிகளையுடைய நீண்ட மேலங்கி; நீண்ட மேலங்கியணிந்தவர்; மடத்துத் துறவி; உட்சட்டை; *v.* மடத்துத் துறவியாக முறைப்படி அமர்த்து.

**frock'-coat**, *n.* முன்புறம் வெட்டிவிடப்படாத ஆடவரின் நீண்ட மேற்சட்டை; படைவீரரின் நீண்ட மேற்சட்டை.

**Froe'belism**, *n.* விளையாட்டு முறையை அடிப்படையாகக் கொண்ட இளஞ் சிறுவர்க்குரிய கல்விப்பயிற்சிமுறை.

**frog**[1], *n.* தவளை; தொண்டைவீக்கம்.

**frog**[2], *n.* குதிரைக்காலடி நடுவில் உள்ள கொம்புபோன்ற தன்மையுடைய தொய்வுப்பொருள்.

**frog**[3], *n.* கத்தி-துப்பாக்கி முதலியவற்றைத் தொங்கவிடுவதற்குரிய அரைக்கச்சை இணைப்பு; படைவீரர் சட்டை மாட்டுவதற்குரிய கொக்கி குமிழ்மாட்டித் தொகுதி.

**frog**[4], *n.* இருப்புப்பாதைகள் வந்திணையும் இடங்களிலுள்ள பல்வடுக்களை உடைய இருப்புப்பாளம்.

**frog'-eater**, *n.* பிரஞ்சுக்காரர்.

**frog'-fish**, *n.* மீன் வகை.

**frog-in-the-throat**, *n.* கரகரப்பான குரல், கம்மிய குரல்.

**frog'man**, *n.* போரில் எதிரியின் கப்பல்களுக்கெதிராக அடிநீர் நடவடிக்கைகளில் ஈடுபடுபவர்.

**frog'-march, frog's march**, *n.* தவளைபோன்ற நிலையில் கைதியை முகம் கீழாகக் கைகால்களை நான்குபேர் பிடித்துக் கொண்டு செல்லுதல்.

**frog'-spawn**, *n.* தவளைமுட்டை; நன்னீர்ப்பாசி வகை.

**frol'ic**, *n.* சிறு துள்ளல்மகிழ்ச்சி; குதியாட்டம், கும்மாளம்; குறும்பு; களியாட்டக்குழாம்; *v.* துள்ளி விளையாடு, குதித்தாடு; களிகிளர்ச்சிகொள், களித்தாடு; கேலிக்கூத்தாடு; குறும்புசெய்; குறும்பாட்டமாடு.

**from**, *prep.* இருந்து, இடத்திலிருந்து; முதலாக, தொடங்கி; விட்டு, விலகி; புறப்பட்டு; வெளியே; மாறாக; வேறுபட; இருந்துகொண்டு; மூலமாகக்கொண்டு; முன்மாதிரியாகக் கொண்டு; காரணமாக, ஆதாரமாகக்கொண்டு; (தொ.) from a child, குழந்தைப்போதிலிருந்து; from time to time, சிற்சில வேளைகளில், இடையிடையே.

**frond**, *n.* செடியுயிரினங்களில் இலைபோன்ற உறுப்பு; காய்க்கும் திறமுடைய இலைபோன்ற உறுப்பு; ஓலை, சூரல்-ஒற்றைத் தடி மரங்களின் இலை.

**fron'dage**, *n.* இலைபோன்ற உறுப்புத்தொகுதி, ஓலைத் தொகுதி.

**Fronde**, *n.* பிரான்சு நாட்டில் பதினான்காவது லூயி (Louis XIV) அரசன் இளமைக்காலத்திய எதிர்க்கட்சியின் பெயர்; கிளர்ச்சிக்குழு; தீவிர அரசியல் எதிர்ப்பு.

**front**, *n.* முன்புறம்; முன்பகுதி; முகப்பு; கட்டிட முகப்புத் தோற்றம்; காட்சிக்குரிய பக்கம்; முன்னிணைப்புக் கட்டுமானம்; தலைவாயில்; முனங்கு; நோக்கும் திசை; நெய்தல் நிலப் போக்கிடத்தின் கடல்முகப்பு; முன்னேறிய பகுதி; படை முன்னணி; போர்முனை; இணையணி; முற்போக்கு அணி; செயல்துறை; துறை அரங்கம்; முகம்; நெற்றி; நெற்றிப்பக்கமான பொய்ம்மயிர்ச்சுருள், பொய்ம்மயிர்க் கற்றை; உள்ளுடுப்பின் மார்புப்பகுதி; மார்புப்போலி உள்ளுடைப்பகுதி; வான்வெளி வெப்பதட்பக் காற்றுத் திரள் பிழம்புகளின் இடைப்படு தளம்; நாவிடைப்பகுதி; *a.* முன் பகுதியிலுள்ள; முகப்பருகிலுள்ள; முன்புறத்தில் அமைந்த; முற்பகுதிசார்ந்த; (ஒலி.) நாவிடைப்பகுதியில் ஒலிக்கப்படுகிற; *v.* முகநோக்கியிரு; திசைநோக்கியமை; திசையில் முகப்புடையதாயிரு; திசைநோக்கித் திருப்பு; பக்கமாகத் திருப்பு; எதிர்த்து நில்; எதிர்ப்படு, கண்ணுறு; சந்தி; முகப்பளி; முன்புறம் பதித்துவை; முகப்பமை; முகப்பாயமை; முகப்பில் அமைவுறு; நாவிடை ஒலியாயமை; (தொ.) cold front, குளிர்ந்த வான்வெளிக்காற்றுத் திரட் பாளத்தின் முகப்பெல்லைத்தளம்; come to the front, முனைப்பாகு, தெளிவாகத் தெரிதலுறு; முக்கியத்துவம் அடை; front bench, மாமன்றத்தில் அமைச்சர்களுக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட இடம்; front door, வீட்டின் தலைவாயில்; front page, செய்தித்தாளின் முதற்பக்கம்; முக்கிய செய்திப் பக்கம்; go to the front, போர்முனைக்குப் போ; have the front, முனைப்பாக வெட்கங்கெட்டவராயிரு, ஆணவமாக முன்வந்து நில்; head and front, செய்தியின் முக்கிய கூறு; in front of, முன்னால், எதிரில், முன்னிலையில், எதிராக; warm front, வெப்ப வான்வெளிக்காற்று மண்டலத்தின் முகப்பெல்லைத்தளம்.

**fron'tage**, *n.* முகப்புத்தளம்; தெருமுகப்பு; பாதைமுகப்பு; நீரெல்லைமுகப்பு; முகப்பு அளவு; கட்டிட முகப்பு; படையணி வகுப்பிடம்; பாசறை நிலம்; பாதுகாப்பற்ற பக்கம், திறந்த முகப்பு.

**fron'tal**[1], *n.* திருக்கோயில் பலிமேடை முற்பகுதியை மறைக்கும் பட்டுத்திரை; தெருப்பக்கமுள்ள கட்டிட முகப்பு; திறந்தவெளிப் பக்கமுள்ள கட்டிட முகப்பு; நுதலணி; முகப்புப் பகுதி; *a.* நெற்றியைச் சார்ந்த; முன்பக்கத்தைச் சார்ந்த, முன்பகுதிக்குரிய; முன்னணிக்குரிய; பக்க அணி பின்னணி சாராத; (தொ.) frontal attack, நேரடி முன்னணித் தாக்குதல்.

**fron'tier**, *n.* எல்லைப்பகுதி, நாட்டின் எல்லை; *a.* எல்லைப் புறம் சார்ந்த; எல்லையடுத்த.

**fron'tiersman**, *n.* எல்லைப்புற வாணர், எல்லைப்புறத்தில வாழ்பவர்; நாகரிக உலகின் எல்லைக்கோட்டில் வாழ்பவர்; நாகரிக எல்லைக்கு அப்பால் வசிப்பவர்; *pl.* fron'tiersmen; (தொ.) Legion of Frontiersmen, நாகரிக எல்லைவாழ்வு பற்றிய அனுபவமுடையவர்களின் அமைப்புக்குழு.

**Fron'tignac**, *n.* இனிய மணமுள்ள கொடிமுந்திரிப்பழத் தேறல்வகை.

**fron'tispiece**, *n.* கட்டிடத் தலைவாயில் முகப்பு ; ஒப்பனை செய்யப்பட்ட முகப்பு ; வாயில் முகப்பின் முக்கோண முகட்டணிப்பகுதி ; ஏட்டின் பெயர்முகப்புத் தாளுக்கு எதிர்ப்புறத்துள்ள படம் ; *v.* முகப்புப்படமாய் அமை.

**front'less**, *a.* முகப்பற்ற ; வெட்கமில்லாத, நாணமற்ற.

**front'let**, *n.* நெற்றிப்பட்டம் ; விலங்குகளின் நெற்றி ; பலிபீடத்தின் முன்பகுதி, மேற்புறத்தில் தொங்கும் துணி.

**fron'ton**, *n.* (க-க.) வாயில் முகப்புமீதுள்ள முக்கோண முகடு; வட்ட முகட்டுறுப்பு.

**fronts'man**, *n.* கடையின்முன் இருக்கும் நடைபாதையில் உள்ள விற்பனையாளர்.

**frore**, *a.* (செய்.) உறைந்த, கடுங்குளிரான.

**frost**, *n.* உறைபனி ; உறைவு ; பனியின் உறைநிலை ; நீரின் உறைநிலையில் உள்ள அல்லது உறைநிலைக்குக்கீழ்ப்பட்ட தட்ப நிலை ; குளிர்விக்கும் ஆற்றல் ; ஊக்கங்கெடுக்கும் திறம் ; விறைக்கவைத்துச் சாம்பல் நிறமாக்கும் கூறு ; *v.* உறைபனியால் அழி ; சேதப்படுத்து ; உறைபனியால் மூடு; மிகு குளிரால் உறைபனிபோன்ற வெண்பொடியால் மூடு ; சர்க்கரையை மேலே தூவு ; கண்ணாடி உலோக வகைகளின் மேற்பரப்பைச் சொரசொரப்பாக்கு ; மேற்பரப்பில் நுண்துகளிட்டுப் பரபரப்பாக்கு ; நரைக்கச் செய், முடியை வெண்மையாக்கு ; குதிரையின் இலாடங்கள் கீழே விழாமல் ஆணி அடித்துப் பாதுகாப்புச்செய்; (தொ.) black frost, வெண்மையற்ற உறைபனி ; hoar frost, white frost, வெண்மையான உறைபனி ; Jack Frost, உறைபனியின் உருவகம்.

**frost'-bite**, *n.* பனிக்கடுப்பு, கடுங்குளிரினால் ஏற்படும் பொல்லா வீக்கம்.

**frost'-bitten**, *a.* பனிக்கடுப்பினால் தாக்கப்பட்ட, கடுங்குளிர் வீக்கமுள்ள.

**frost'-bound**, *a.* உறைபனியாற் சூழப்பட்ட ; உறைபனியினுள் மூடப்பட்ட ; உறைபனியினால் கட்டுண்ட.

**frost'less**, *a.* உறைபனியற்ற ; உறைபனித்தொல்லையற்ற.

**frost'-nail**, *n.* உறைபனியில் வழுக்கி விழாதபடி குதிரை இலாடத்தில் அடிக்கப்பட்டு நீட்டிக்கொண்டிருக்கும் ஆணி; *v.* உறைபனி ஆணியடி.

**frost'-work**, *n.* கண்ணாடி முதலியவற்றின்மீது உறைபனியால் உண்டான உருவம்.

**fros'ty**, *a.* உறைபனியால் குளிர்மிக்க ; நடுக்குகிற ; விறைப்பான; உணர்ச்சியார்வமற்ற; குளிர்மிகுந்த; வெண்பனியால் மூடப்பட்ட ; வெண்பனியால் மூடப்பட்ட தோற்றமுடைய.

**froth**, *n.* நுரை; குமிழிகளின் தொகுதி; நீர்மத்திலுள்ள கசடு; பயனற்ற பொருள் ; வெட்டிப்பேச்சு ; *v.* நுரை பொங்கு ; நுரை திரட்டு ; நுரைக்கும்படி செய்.

**froth'-blower**, *n.* சாராய வகை குடிப்பவர்.

**froth'y**, *a.* நுரை நிறைந்த ; நுரை போன்ற ; போலியான ; வெறுமையான ; சாரமற்ற, திடமற்ற ; உறுதியற்ற.

**frou'-frou**, *n.* உடையின் சலசலப்பு.

**frow**, *n.* ஹாலந்து நாட்டுப்பெண்.

**frown**, *n.* முகச்சுளிப்பு; புருவ நெரிப்பு ; கடு நோக்கு; சினக்குறிப்பு ; வெறுப்புக்காட்டும் தோற்றம் ; விருப்பின்மை தெரிவிக்கும் குறிப்பு ; அச்சுறுத்தும் தோற்றம் ; *v.* புருவம் சுரி; முகம் கடுகடுத்துக் காட்டு ; விருப்பின்மைக் குறிப்புக்காட்டு; சினக்குறிப்புக்காட்டு; வெறுப்புக்குறிப்புக் காட்டிக் கண்டித் தடக்கு; பொருள்கள் வகையில் இன்னாத் தோற்றங்கொள்.

**frown'ing**, *a.* அச்சுறுத்துகிற; சினக்குறிப்புடைய; வெறுப்பார்ந்த ; கடுகடுப்பான.

**frowz'y**, *a.* கெடு நாற்றமுள்ள, மட்கிய வாடையுடைய ; புழுக்கமிக்க ; ஊசிய ; பூஞ்சக்காளம் பிடித்த ; அழுக்கடைந்த ; ஒழுங்குபடுத்தப்படாத.

**froze**, *v.* **freeze** என்பதன் இறந்த காலம்.

**froz'en**, *v.* **freeze** என்பதன் முடிவெச்சம்.

**fructif'erous**, *a.* பழந்தருகிற, கனி கொடுக்கிற ; பலன் அளிக்கிற.

**fructifica'tion**, *n.* பலனளித்தல் ; காய்கனி விளைவு ; சூரல் முதலிய செடியினங்களின் இனப்பெருக்க உறுப்புக்களின் தொகுதி.

**fruc'tify**, *v.* காய்கனி கொடு; பலனளி; கருவுறு; பொலிவி, கருவுண்டாக்கு, கரு உயிர்க்கச் செய்.

**fruc'tose**, *n.* பழச்சர்க்கரை, கனிகளிலிருந்து எடுக்கப்படும் சர்க்கரைப்பொருள்.

**fruc'tuary**, *n.* பயனை நுகர்பவர்.

**fructua'tion**, *n.* கனி கொடுத்தல்; பலனளித்தல், நிறைவுறுதல்.

**fruc'tuous**, *a.* கனிகள் நிறைந்த ; கனி கொடுக்கிற ; பலன் அளிக்கிற.

**frug'al**, *a.* செட்டான, சிக்கனமான ; உணவு வகையில் மட்டாகச் செலவிடுகிற ; சிறிதளவாகப் பயன்படுத்தப்பட்ட ; மிகு குறைவாகத் தருவித்துக் கொடுக்கப்பட்ட ; அற்பமான, எளிய, மிகக்குறைந்த விலையுடைய.

**fru'gality**, *n.* சிக்கனம், செட்டு.

**frugif'erous**, *a.* கனி கொடுக்கிற.

**frugiv'orous**, *a.* கனி உண்ணுகிற.

**fruit**, *n.* பழம்; பலன், விளைவு; ஆதாயம் ; பழங்கள்; பழங்களின் தொகுதி ; வழித்தோன்றல் ; செயல் விளைவு, முடிவு, பயன் ; *v.* கனிகளைத் தாங்கு ; பழங்களைத் தாங்கச்செய் ; (தொ.) fruit clipper, பழங்களைத்தாங்கி விரைவாகச் செல்லும் கப்பல்; fruit salad, இன்பழக்கலவை, பழத்துண்டுகளும் பாலேடு முதலியவைகளும் சேர்ந்த இன்கலவை.

**fruitar'ian**, *n.* காய்கனி உணவாளர்.

**fruit'-cake**, *n.* உலர்ந்த முந்திரிப்பழங்களுள்ள அப்பம்.

**fruit'er**, *n.* பழம் ஏற்றிச் செல்லும் கப்பல் ; கனி மரம் ; பழமரம் வளர்ப்பவர்.

**fruit'erer**, *n.* பழ வணிகர், பழ விற்பனையாளர்.

**fruit'ful**, *a.* செழிப்பான ; ஆக்கவளமுடைய ; செயல்வளம் உண்டுபண்ணுகிற ; மகப்பேறளிக்கிற ; இனப்பெருக்க வளமுள்ள ; பயன்தருகிற; ஆதாயமான, நல் ஊதியம் தருகிற ; நற்பயனளிக்கிற.

**frui'tion**, *n.* பயனுகர்வு ; பலனளிப்பு ; பலப்பேறு ; அவா நிறைவேற்றம் ; எண்ணம் நிறைவு பெறுதல்; விரும்பிய பொருட்பேறு.

**fruit'-knife**, *n.* பழக்கத்தி, பழக் காடியினால் கேடடையாத வெள்ளி முதலிய உலோக அலகு கொண்ட கத்தி.

**fruit'less**, *a.* கனிகொடுக்காத ; ஆதாயமற்ற ; பயனற்ற ; பயனளிக்காத ; வீணான ; வெறுமையான; மலடான.

**fruit'-piece**, *n.* கனி ஓவியம்.

**fruits**, *n. pl.* செடிகொடி விளைவு, பயிர் விளைவு; நில விளைவு, நிலந்தரு வளம்; முயற்சியின் பலன், தொழில்வளம்.

**fruit'-sugar**, *n.* பழச்சர்க்கரை.

**fruit'-tree**, *n.* பழமரம், பழங்களுக்காக வளர்க்கப்படும் மரம்.

**fruit'y**, *a.* பழஞ் சார்ந்த; பழச்சுவையுடைய; கொடிமுந்திரிப் பழச்சுவை தருகிற.

**frum'enty**, *n.* கோதுமைப்பாற் பிட்டு, உமி நீக்கப்பட்ட கோதுமையைப் பாலில் கொதிக்கவைத்து இலவங்கப்பட்டை சர்க்கரை முதலியவற்றைச் சேர்த்த பண்ட வகை.

**frump**, *n.* பழைய அருவருப்பான முறையில் உடையணிந்த பெண்.

**frustrate'**, *v.* செயல்குலைவி; இடையிட்டுத்தடு ; பண்பு அழி; எதிர்ச்செயலாற்று, ஏமாறுவி ; மலைக்கச்செய்.

**frustra'tion**, *n.* எண்ணக்குலைவு ; செயல்குலைவு.

**frus'tule**, *n.* இருதடுக்கிதழ்களாலான ஓடுடைய ஓரணுக் கடலடி உயிர்.

**frus'tum,** *n.* அடிக்கண்டம்; அடிநுனி தறித்த இடைக் கண்டம்; *pl.* frus'ta.

**frutes'cent,** *a.* (தாவ.) குத்துச்செடி வகைகளில் மரத்தண்டு உடைய.

**frut'ex,** *n.* மரத்தண்டுடைய குத்துச்செடிவகை.

**frut'icose,** *a.* புதர்ச்செடிபோன்ற; கனிப்பொருள்களில் புதர்ச் செடி போன்ற தோற்றமுடைய.

**fry[1],** *n.* முட்டையிலிருந்து வெளிவந்த மீன்குஞ்சுத் திரள்; இரண்டாவது ஆண்டிலுள்ள கடல்மீன் வகை; தேனீ தவளை போலப் பெருவாரியான இனப்பெருக்கமுள்ள உயிரினங்களின் குஞ்சுகள்; குஞ்சுகுறுவாலிகள் தொகுதி; சிற்றினத்திரள்; சில்லறைப்பொருள் தொகுதி; (தொ.) small fry, மிகச்சிறு திறமான உயிர்கள், அற்ப உயிர்கள், சின்னஞ்சிறு குழந்தைகள்.

**fry[2],** *n.* பொரித்த கறி; வறை; *v.* பொரி, வறு.

**fry'er,** *n.* மீன்பொரிக்குஞ் சட்டி, கலம்; மீன்வறு கலம்; மீன் வறுப்பவர்.

**fry'ing-pan,** *n.* வாணலி, வறுத்தல் பொரித்தலுக்குரிய இருப்புச்சட்டி; (தொ.) out of frying pan into fire, கேட்டி லிருந்து பேரழுருக்கு, மேலுஞ் சீர்கேடான நிலையில்.

**fub'sy,** *a.* தடித்த, பருமனான.

**fuchs'ia,** *n.* நீண்டு தொங்கும் மலர்கள் கொண்ட புதர்ச்செடி வகை.

**fuch'sine,** *n.* ஆழ்ந்த சிவப்புச்சாயமாகும் உப்பு வகை.

**fu'coid,** *a.* கடற்பாசி வகை சார்ந்த; கடற்பாசி போன்ற; (மண்.) பாறைகள் வகையில் கடற்பாசித்தடம் உடைய.

**fuc'us,** *n.* கடற்பாசி வகை.

**fud'dle,** *n.* குடிமயக்கம், போதை; குழப்பம்; *v.* அடிக்கடி குடி, வெறிக்கச்செய்; குழப்பு, உணர்வு மழுங்கச்செய்.

**fudd'ler,** *n.* மிடாக்குடியன்.

**fudge[1],** *n.* பொருளற்ற செய்தி; மடத்தனம்; பத்திரிகையில் கடைசி நேரம் புகுத்தப்பட்ட செய்தி; கடைசி நேரம் புகுத்து வதற்காக விடப்பட்ட இடம்; பால் சர்க்கரை கலந்த மென்மை யான இனிப்புத் தின்பண்ட வகை; *int.* மடத்தனம்! மண்ணாங்கட்டி!

**fudge[2],** *n.* ஒட்டவைத்த பகுதி; *v.* இணைத்துப்பொருத்து; ஒட்டுப்போட்டுச் சீர்ப்படுத்து; நேர்மையற்ற வழியில் உருவாக்கு; நேர்மையற்ற முறைகளைக் கையாளு.

***Fuehr'er,*** (செர்.) *n.* தலைவர், முதல்வர்.

**fu'el,** *n.* விறகு; எரிபொருள்; உணர்ச்சிக்கு ஈடுசெலுத்தும் பொருள்; உணர்ச்சியைப் பெருக்கும் பொருள்; *v.* தீக்கு எரிபொருள் இடு; எரிபொருள் பெறு.

**fug,** *n.* புழுக்கம், மூலைமுடுக்கில் பொதிந்துள்ள தூசி; *v.* புழுக்கமான சூழ்நிலையை இனிதாக நுகர்.

**fuga'cious,** *a.* நிலையற்ற, விரைந்தோடுகிற; எளிதில் மறை கிற, கைக்கொள்ளுதற்கரிய, எளிதில் கிடைத்தற்கு இயலாத.

**fug'al,** *a.* பலவோசை உருப்படி சார்ந்த.

**fu'gitive,** *n.* நாடு கடத்தப்பட்டவர்; நாடோடி; அகதி, நாடு விட்டு நாட்டில் அடைக்கலம் புகுபவர்; தப்பியோடியவர், ஆள்வோர் காப்பிலிருந்தோ தண்டனையிலிருந்தோ பகைமையி லிருந்தோ இடரிலிருந்தோ தப்பி ஒளிந்தோடித் திரிபவர்; *a.* தப்பி ஓடுகிற, பிழைத்தோடி வந்த, ஓடிவிட்ட; கணந் தோறும் மாறுகிற; நிலையற்ற; கணநின்று மறைகிற; விரைந்து பட்டுப்போகிற; இலக்கியவகையில் நிலையுடைப் பயனற்ற; கணநிலைச்சுவையுடைய.

**fu'gle,** *v.* படைத்துறைப்பயிற்சி முன்மாதிரி இயக்குநராகச் செயலாற்று.

**fu'gleman,** *n.* பயிற்சி இயக்குநர், படைப்பிரிவின் பயிற்சி களின் பொது இயக்க முன்மாதிரியாக முன்னின்று இயக்கு பவர்; இயக்குநர், முதல்வர், கருத்துரைப் பேராளர்; அமைப் பாளர்; *pl.* fu'glemen.

**fugue,** *n.* பலவோசை உருப்படி; இடமாற்றத்துடன் ஏற்படும் நினைவிழப்பு; *v.* பலவோசைப்பாடல் இயற்று அல்லது பாடு.

***Fuhr'er,*** (செர்.) *n.=Fuehrer.*

**ful'cra,** *n.* (தாவ.) துணையுறுப்புக்கள், தளிரிழைகள் புடைச் செதிள்கள் போன்ற துணைவளர்ச்சிகள்.

**ful'crum,** *n.* மிண்டு, தாங்குநிலை ஆதாரம்; (இய.) மிண்டிப் பட்டடை, நெம்புகோலின் இயக்க ஆதாரம்; செல்வாக்குக் குரிய ஊடுதுணை, ஆற்றல் இயக்கும் உறுதுணைவர்.

**fulfil',** *v.* நிறைவேற்று; நிறைவுபடுத்து; தீர்வுசெய்; தீர்த்துவை; செய்துமுடி; செயற்படுத்து; விதிகள் கட்டுப் பாடுகள் வகையில் முற்றிலும் இசைவுறச்செயலாற்று; முடிவுக்குக் கொண்டுவா; நிறைவு செய்.

**fulfil'ment,** *n.* நிறைவேற்றம்; நிறைவான முழுவினைமுறை; செயல் முடிவு, செயல் தீர்வு.

**ful'gent,** *a.* (செய்.) ஒளிமிக்க; சுடரிடுகிற.

**ful'gural,** *a.* மின்னல் சார்ந்த.

**fulgura'tion,** *n.* மின்னிடும் ஒளி வீச்சு; மாற்றுத்தெரிவில் திடீரென்று முடிவில் தோன்றும் ஒளி.

**ful'gurite,** *n.* மின்னலினால் உருகிக் கண்ணாடிபோல் ஆக்கப் பட்ட பாறை; மணலினுள் இடிசென்றதால் ஏற்பட்ட குழாய்; வெடிப்பொருள்.

**ful'ham,** *n.* (வர.) மூலைகளில் வலுவாக்கப்பட்ட பகடைக்காய்.

**Ful'ham Pal'ace,** *n.* லண்டன் நகரத்துக் கிறித்தவ சமய வட்டத் தலைவரின் பணிமனைவிடுதி.

**fuli'ginous,** *a.* புகைக்கரி படிந்த; கருநிற, மங்கலான.

**full[1],** *n.* முழுமை; உச்சப்படி நிலை, நிறை அளவு; *a.* நிரம்பிய; நிறைந்த; செறிவுற்று நெருங்கிய; வளமான; நிரம்பப் பெற்ற; முழுமையான; பிரிவுறாத; குறையாத; முழு அள வான; முழுநிறைவான; குறைவற்ற; யாவருமடங்கிய; யாவும் அடங்கிய; பேரளவு உட்கொண்ட; பெரும்பான்மை அடங்கிய; பெயர்க்குரிய பண்பெலாம் நிரம்பிய; சுருக்கப் படாத, விளக்கமான; உருண்டு திரண்ட; புடைபரந்து முனைத்த; விம்மிதமான; பொங்கியெழுந்த; பொங்கித் ததும்பிய; உணர்ச்சி கனிந்த; ஊக்கம் ததும்பிய; முழுதும் ஆழ்ந்திடுபட்ட; விலக்கின்றி முற்றிலும் கவனத்தைக் கவர்ந்த; ஏராளமான; போதிய; தேவைக்கு மேற்பட்ட; முழுதும் பொருத்தமான, மனநிறைவு ஊட்டத்தக்க; கலப் பற்ற; தூய; முழக்கமான; உச்சநிலையான; இயல்பு முற்றிய; *v.* நிரப்பு, திரட்டு; *adv.* நிரம்ப; குறைவற; கணக்காக, சரியாக, குறி தவறாமல்; போதிய அளவில், தாராளமாக; (தொ.) full age, வயது வந்த நிலை, இருபத்தொரு வயதிற்கு மேற்பட்ட நிலை; full brother, full sister, ஒரே தாய்தந்தை யருக்குப் பிறந்த உடன்பிறப்பாளர்; full face, பார்வை யாளரை நேரடியாகத் திரும்பிப் பார்க்கிற நிலை; full moon, உவாமதி; முழு நிலாக்காலம்; பூர்ணிமை; full of himself, full of his subject, full of the news, தன்னை-தன் செய் தியை-செய்திகளையன்றி வேறெதுவும் பேசமுடியாத; full of years, நிறைமுதிர் வயதுடைய; full pitch, full toss, மட்டைப் பந்தாட்டத்தில் முளை வரையில் நிலத்திற் படாமல் வீசப்பட்ட பந்து; full score, (இசை.) இசை நிகழ்ச்சியில் குழுவினர் அனைவருக்கும் தேவைப்படும் முழுக்குறிப்பு; full up, நிரம்பித் ததும்பிய, விளிம்பு அளாவிய; in a full house, பெரும்பான்மையான உறுப்பினர்கள் வந்துள்ள மன்றக் கூட்டத்தில்; in full, முழுமையாக; in full cry, வேட்டையில் ஒன்றுபட்ட முழக்கத்துடன், ஒன்றுபட்ட ஆர்வத்துடன்; in full swing, செயற்றிற உச்ச நிலையில்; of the full blood, தூய்மையான மரபுடைய, கலப்பினம் இல்லாத; to the full, முழுதும்.

**full[2],** *v.* பெட்டிபோடு, தூய்மைசெய்து தடிப்பாக்கு.

**full'age,** *n.* துணிகளுக்குப் பெட்டிபோடக் கட்டணம்.

**full'-aged,** *a.* வயதடைந்த, பருவமெய்திய, உரிமை வயது அடைந்த.

**full'-back,** *n.* கால்பந்தாட்டத்தில் இலக்கெல்லையிலுள்ள பின்புற ஆட்டக்காரர்.

full'-blast, *n.* முழுச்செயற்பாடு ; *adv.* உச்ச அளவு ஆற்றலோடும் விரைவோடும்.

full'-blooded, *a.* இனக் கலப்பற்ற ; ஊக்கமுள்ள, மன மார்ந்த, புலனுணர்ச்சி இன்பங்களில் அவா மிகுந்த.

full'-blown, *a.* முழுதலர்ந்த ; முற்றிலும் பெருக்கமுற்ற.

full'-bodied, *a.* திட்பமான, பொருட்செறிவான, குணம் நிறைந்த.

full'-bottomed, *a.* பொய் மயிர்க்குல்லாய் வகையில் பின்னல் நீண்டு தொங்குகிற.

full'-bound, *a.* அட்டைகளும் பின்புறமும் முற்றிலும் மூடிக் கட்டப்பட்ட.

full'-circle, *adv.* முழு வட்டமாக.

full'dress, *a.* சடங்கு ஆடையுடுத்த.

full'-dress debate, *n.* பாராளுமன்றத்தில் முக்கியமான செய்திகள் குறித்துக் கட்சித்தலைவர்கள் செய்யும் முழுவாதம்.

full'er[1], *n.* ஆடைகளுக்குப் பெட்டிபோடுபவர், வண்ணார் ; (தொ.) fuller's earth, வண்ணான் காரம்.

full'er[2], *n.* இரும்பை உருவாக்கும் பள்ளமுள்ள கருவி ; இரும்பை உருவாக்குங் கருவியால் குதிரை இலாடங்களிற் செய்யப்படும் பள்ளம்; *ஏ.* இரும்பை உருவாக்கும் கருவியைக் குதிரை இலாடத்திற் பதியவை.

full'-face, full'-faced, *a.* பரந்த முகங்கொண்ட ; அச்சு வகையில் பெரிய எழுத்துக்களையுடைய ; பார்வையாளர் பக்கம் முற்றிலும் திரும்பிய.

full'-fash'ioned, *a.* ஆடைகள் காலுறைகள் வகையில் உடலமைப்புடன் பொருந்திய.

full'-fed, *a.* வயிறுர உண்ட, தெவிட்டும்வரை உண்ட.

full'-fledged', *a.* முழுதும் இறக்கை முளைத்த; முழு வளர்ச்சியுற்ற ; முழு உறுப்பினர் நிலையடைந்த.

full'-grown, *a.* முழு வளர்ச்சி பெற்ற, முதிர்வு பெற்ற, பருவம் அடைந்த.

full'-hearted, *a.* ஆழ்ந்த உணர்ச்சிகளால் தூண்டப்பட்ட; ஆர்வமுள்ள, சுறுசுறுப்புள்ள, நம்பிக்கையான, துணிவுடைய, உரமார்ந்த.

full'ing-mill, *n.* கம்பளித்துணி வெளுக்கும் ஆலை.

full'-length', *n.* முழு நீள உருவ அளவுடைய ஓவியம்: *a.* முழு நீள அளவுடைய ; *adv.* முழு அளவாக நீண்டுள்ள நிலையில்.

full'-mouthed, *a.* கால்நடை வகையில் முழு நிறைவான பற்களுள்ள; நாய்கள் வகையில் உரத்துக் குரைக்கிற; முழக்கமான ; உரத்துப்பேசுகிற ; ஊக்கமுள்ள.

full'ness, *n.* நிறைவு; முழுமை, செழிப்பு நிரம்பிய தன்மை ; (தொ.) fullness of time, வரையறுக்கப்பட்ட காலம், உரிய காலம்.

full'-orbed, *a.* முழுநிறை ஒளிவட்ட வடிவுடைய.

full'-page, *a.* முழுப்பக்கமும் நிறைந்த.

full'-speed, full'-split, *adv.* முழு வேகமும் ஊக்கமுங் கொண்டு.

full'-throat'ed, *a.* முழுக் குரலாற்றலொடு பாடுகிற.

full'-tilt, *adv.*=full-speed.

full'-time, *a.* வேலைநேரம் முழுதும் பணியாற்றுகிற.

full'-timer, *n.* பள்ளியில் முழுநேரம் படிக்கும் மாணவர்.

full'-voiced, *a.*=full-throated.

full'y, *adv.* முழுதும், நிறைவாக.

ful'mar, *n.* கடற்பறவை வகை.

ful'minant, *a.* வெடிக்கிற, திடீரென்று தோன்றுகிற.

ful'minate, *v.* மின்னு, மின்னல்போல் ஒளிவிடு ; வெடி, இடி, ஓசையுடன் வெடி ; உரத்துக்கண்டி, கடுமையாகக் கண்டித்து எழுது ; கண்டன ஆணை பிறப்பி.

ful'minating, *a.* ஓசையுடன் வெடிக்கிற.

fulmina'tion, *n.* இடியிடித்தல் ; வெடித்தல் ; கண்டனம் செய்தல்.

ful'mine, *v.* (செய்.) மின்னல் இயக்கு ; இடியியக்கு ; இடி முழக்கஞ் செய் ; முழங்கி ஆரவாரஞ் செய்.

fulmin'ic, *a.* வெடியுப்புக் கலவைவகை சார்ந்த.

fulmin'ic acid, *n.* வெடியுப்புக்காடிக் கலவை வகை.

ful'ness, *n.*=fullness.

ful'some, *a.* உவட்டுகிற, தெவிட்டுகிற.

ful'vous, *a.* (தாவ.) செம்மஞ்சள் நிறமுள்ள, பழுப்பு நிறமான

fumade', *n.* புகையூட்டிப் பக்குவஞ்செய்யப்பட்ட சிறுமீன் வகை.

fum'arole, *n.* எரிமலைக் குவட்டில் ஆவி வெளிப்படும் பிளவு.

fum'ble, *n.* குளறுபடி முயற்சி, தவறான முயற்சி; *ஏ.* தட்டித் தடவு, தேடித்தடுமாறு ; அச்சத்தோடு செய்; நடுக்கத்துடன் கையாளு, தெளிவின்றிப் பேசு ; (தொ.) fumble the ball, பந்தினைத் தடுப்பதில் தடுமாறு.

fume, *n.* ஆவி ; நறுமணப் புகை ; நீரியல் ஆவி, இரைப்பையினின்று மூளைக்குச்செல்வதாகக் கருதப்படும் கெடுதலான ஆவி; கிளர்ச்சி, எழுச்சி; சீற்றம்; மனவெப்பு; மன எழுச்சி மிக்கவர் ; சிறப்பற்ற செய்தி ; போலிப் பெருமை ; *ஏ.* நறுமணப்புகை எழுப்பு ; நறுமணம் ஊட்டு, வேதியியல் இயைபால் புகையெழுப்பு ; புகை வெளிவிடு, ஆவி வெளிவிடு ; எழு ; வெளியிடப்பெறு ; சினங்கொள் ; சிடுசிடுப்புக்கொள்; பொறுமையிழந்து படபடப்புக் காட்டு, துடிதுடி.

fum'igant, *n.* புகையுண்டாக்கும் பொருள்.

fum'igate, *v.* புகையூட்டு, புகையூட்டித் தூய்மைசெய் ; நறுமணப் புகையூட்டு.

fumiga'tion, *n.* புகையூட்டித் தூய்மை செய்தல்.

fumi'gator, *n.* புகையூட்டித் தூய்மை செய்வதற்குரிய கருவி.

fum'itory, *n.* மருந்துகளில் முன்னர்ப் பயன்படுத்தப்பட்ட மூலிகைவகை.

fumos'ity, *n.* புகை வெளிவரும் நிலை; மூச்சு வெளிவிடுதல், உணவு அல்லது குடியினால் உண்டாகும் முடைநாற்ற மூச்சு.

fun, *n.* வேடிக்கை விளையாட்டு ; கேளிக்கை ; விகடம் ; நகையாட்டம்; கோமாளித்தனம்; (தொ.) for fun, in fun, விளையாட்டாக, வேடிக்கையாக; is good fun, is great fun, பெரு வேடிக்கை, மிக்க மகிழ்ச்சிக்குரிய செய்தி; make fun of, poke fun at, ஏளனஞ் செய், இகழ்ந்து நகையாடு.

funam'bulist, *n.* கழைக்கூத்தாடி, கயிற்றின்மேல் நடப்பவர்.

func'tion, *n.* வினை, வினைசெயல்; செய்கடமை, சமய வினைமுறை ; நடைமுறைச்சடங்கு; நிகழ்ச்சிமுறை; (கண.) சார்புமுறை எண், உறுப்பெண் மதிப்பைச் சார்ந்து மாறுபடும் இயல்புடைய எண்தொடர் ; *ஏ.* செயற்படு ; செயலாற்று ; கடனாற்று.

func'tional, *a.* நடைமுறை சார்ந்த; உறுப்புக்களின் இயக்கக் கூறு சார்ந்த ; உறுப்பியக்கத்தைப் பாதிக்கிற ; இயல்பான செயல் முறையுடைய ; (கண.) சார்புமுறை எண்ணுக்குரிய.

func'tionary, *n.* பணித்துறை மேலாள், அதிகாரி; *a.* பணித்துறையைச் சார்ந்த ; கடமையாற்றுகிற.

func'tionate, *v.* செயற்படு ; செயலாற்று ; கடனாற்று.

func'tionless, *a.* தொழிலற்ற, செயல்முறை இல்லாத.

fund, *n.* நிதி, ஏமவைப்பு ; மூல முதல், வேண்டும்போது எடுப்பதற்குரிய மூலநிதிக் குவை; ஒதுக்கு நிதி, குறிப்பிட்ட நோக்கத்துக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட பணக் குவை ; சேமிப்பு நிதி; நிதிவளம்; *ஏ.* நிலவர வைப்புமுதலாக மாற்று; மூலநிதியில் இடு ; அரசியல் சேமநிதியில் முதலீடுசெய் ; சேமி, திரட்டி வை ; (தொ.) sinking fund, பொதுக்கடன் அமைப்பு நிதி, அரசியல் அல்லது கூட்டு நிறுவனத்துக்குரிய பொதுக் கடனைப் படிப்படியாகத் தீர்க்கும்படி ஒதுக்கிச் சேமிக்கப்படும் நிதி; the sinking fund, பொதுக்கடனடைப்பு நிதிக்காக ஒதுக்கப்படும் வருமான மிகை.

fund'able, *a.* சேம நிதியாக அல்லது சேம நிதிப்பத்திரங்களாக மாற்றக்கூடிய.

fun'dament, *n.* பிட்டம்.

**gauge**, *n.* அளவெல்லை ; தரமதிப்பு ; மதிப்பீடு ; மதிப்பீட்டு வகைமுறை அமைவு ; தேர்வு வகைதுறை அமைவு ; தேர்வு மூல அளவை ; கட்டளை அளவை ; முகத்தற் படியளவை ; குண்டின் விட்ட அளவு, வெடிக்குழாயின் உள்வாய்த் தர அளவு ; இருப்புத்தகட்டின் திட்ப வரையளவு ; கம்பிகளின் குறுக்குவிட்ட அளவு; இருப்பூர்திப் பாதையின் அகலத்தரம்; கட்டளைக்கிசையச் சரிசெய்யும் வகைமுறை ; பதிவளவைக் கருவி, மழையளவு வீதத்தையும் காற்றோட்ட நீரோட்ட வேலை ஏற்ற இறக்க வேக ஆற்றல்களையும் அளந்து பதிவுசெய்து காட்டும் நுண்ணளவைப் படிகள் குறித்த கருவிகளில் ஒன்று; தச்சரின் இணைதளச் சறுக்குச் சட்டக் கருவி ; அச்சகத் துறையில் ஓர ஒழுங்குமுறைச் சறுக்குச்சட்டக் கருவி; கொள் கல நீர்ம ஆழங் காட்டும் அமைவு ; திசைத்தொடர்புநிலை, காற்றோட்டம் பிற கப்பல்கள் ஆகியவற்றின் நிலைக்குத் தொடர்பான கப்பலின் சார்பமைவுநிலை ; *v.* சரிநுட்பமாக அளவை மதிப்பெடு ; அளவிட்டுக் காண் ; ஆழக்கோலால் அளவையிட்டுக் கணித்து நீர்மப்பரும அளவு காண்; ஆளின் பண்பாற்றல்களை மதிப்பிட்டறி ; ஒருநிலைப்பட வரிசைப் படுத்து, கட்டளைத்தரப்படுத்து ; கட்டளையுடன் சரிசெய் ; (தொ.) broad gauge, இருப்புப்பாதை வகையில் வரையளவாகிய 56½ அங்குலத்துக்கு மேற்பட்ட இடைவெளியுள்ள ; narrow gauge, இருப்புப்பாதை வகையில் வரையளவாகிய 56½ அங்குலத்துக்குக் குறைவான இடைவெளியுள்ள ; standard gauge, இருப்புப்பாதை வகையில் 56½ அங்குல இடைவெளியுள்ள.

**gauge'able**, *a.* அளவிட்டுக் காணத்தக்க.

**gau'ger**, *n.* அளவெடுப்பவர் ; ஆயத்துறை அலுவலர்.

**gaug'ing**, *n.* ஆயத்தீர்வை விதிக்கப்படத்தக்க சாராய வகைகள் கொண்டுள்ள மிடாக்களை அளத்தல்.

**gaug'ing-rod**, *n.* மிடாக்களில் உள்ள நீர்மங்களின் ஆழப் பரும அளவுகளை அளந்து கணிப்பதற்கான படிக்கோற்கருவி.

**Gaul**, *n.* பண்டைய பிரஞ்சுநாட்டின் பெயர் ; பண்டைய பிரஞ்சு நாட்டில் வசித்தவர்.

***Gau'leiter***, (செர்.) *n.* செர்மனியில் நாசிக் கட்சி (Nazi) ஆட்சிக்காலத்து மாவட்ட அரசியல் தலைவர்.

**Gaul'ish**, *n.* பண்டைய பிரஞ்சுநாட்டு மக்களினத்தின் மொழி; *a.* பண்டைய பிரஞ்சுநாட்டு மக்களினஞ் சார்ந்த.

**Gaull'ist**, *n.* தளபதி டிகால் (General Charles A. J. M. de Gaulle, பிறப்பு 1890) என்ற பிரஞ்சுநாட்டு வல்லாளரைப் பின்பற்றுபவர்.

**gault**, *n.* களிச்சுண்ணக் களிப்பாறைப்படுகை.

**gaunt**, *a.* மெலிந்த, ஒட்டியுலர்ந்த ; ஒற்றைநாடியான ; கடு கடுத்த முகமுடைய.

**gaunt'let**[1], *n.* (வர.) இரும்புக் கையுறை, கவசக் கையுறை ; (தொ.) fling down the gauntlet, throw down the gauntlet, போருக்கழை, மல்லுக்குக் கூவி அழை; pick up the gauntlet, take up the gauntlet, அறைகூவலை ஏற்றுக்கொள்.

**gaunt'let**[2], *n.* ஊடணிவரிசைத் தண்டனை, படைத்துறை கடற்படைத்துறைப் பள்ளிகளில் இருபுறமிருந்தும் கைத் தடியை அல்லது அடிக்கும் வார்வடத்தை ஓச்சியடிக்கும் அணி வரிசையூடு செல்லும்படி ஒருவரைச் செலுத்தும் தண்டனை முறை ; (தொ.) run the gauntlet, ஊடணிவரிசைத் தண்டனை பெறு; அனைவரின் கண்டனத்துக்கும் ஆளாகு.

**gaun'tree, gaun'try**, *n.* மிடாக்களை வைப்பதற்கான நான்கு கால்களுள்ள மரநிலைச் சட்டம் ; இயங்கு பாரந்தூக்கிகள் - இருப்புப்பாதை தொலைவுக்குறிகள் முதலியவற்றைத் தாங்கு வதற்கான கட்டுமானம்.

**gaur**, (இ.) *n.* காட்டெருது.

**gauss**, *n.* காந்த மண்டலத்தின் செறிவலகு ; காந்த ஆற்ற லின் தாவியல் விசையலகு.

**Gauss'ian**, *a.* செர்மன் கணக்கியல் இயற்பியலறிஞரான காரல் காஸ் (Karl Gauss 1777-1855) என்பாரைச் சார்ந்த ; காரல் காஸ் கண்டுபிடித்த.

**gauze**, *n.* மென்துணி வலை ; மென்பட்டு வலை ; மென்கம்பி வலை ; ஒளி ஊடுருவவல்ல மென்பஞ்சியற் பொருள் ; புகை போன்ற தோற்றம்.

**gave**, *v.* give என்பதன் இறந்தகாலம்.

**gav'el**[1], *n.* ஏலமிடுபவர் கைச்சுத்தி ; நடுவர் கைச்சுத்தி ; கூட்டத்தலைவர் கைச்சுத்தி.

**gav'el**[2], *n.* (வர.) கப்பம், திறை.

**gav'elkind**, *n.* (சட்.) ஆங்கிலநாட்டுக் கெண்ட் (Kent) மாவட்டப் பகுதியில் விருப்ப ஆவணம் எழுதிவைக்காமல் இறந்துபோனவரது உடைமையை அவர் மைந்தர்களுக்கெல் லாம் சமமாகப் பங்கிடும் முறை.

**gavotte'**, *n.* நாட்டுப்புற ஆடல்வகை ; நாட்டுப்புற ஆடலுக்கு ஏற்ற இசையமைப்பு.

**gawk**, *n.* மருண்ட நோக்கினர் ; அருவருப்பான நடையுடைப் பாங்கினர்.

**gawk'y**, *n.* மிகு நாணமுடையவர் ; அருவருப்பான நடை யுடைப் பாங்கினர் ; *a.* அருவருப்பான ; மிகு நாணங் கொண்ட.

**gay**, *a.* மகிழ்ச்சி நிரம்பிய, களிப்புடைய ; கிளர்ச்சி வாய்ந்த; கவலையற்ற; விளையாட்டு விருப்பமுள்ள; ஒழுக்கக் கட்டற்ற, ஒழுக்கக்கேடான ; ஒளிர்வுடைய ; வண்ண வனப்புடைய ; பகட்டழகுடைய.

**gay'some**, *a.* மகிழ்ச்சி வாய்ந்த.

**gaze**, *n.* துரித்த நோக்கு, கருத்தூன்றிய பார்வை ; உற்றுப் பார்க்கப்பட்ட பொருள் ; *v.* உற்றுப்பார், கூர்ந்து நோக்கு; (தொ.) at gaze, உற்றுப்பார்க்கும் நிலையில்; stand at gaze, உற்றுப் பார்த்துக்கொண்டு நில்.

**gaze'bo**, *n.* மேற்கட்டி ; மண்டபம்.

**gaze'-hound**, *n.* நோட்டம் வைத்துத் தொடரும் வேட்டை நாய்.

**gazel', gazelle'**, *n.* வனப்பும் மென்னோக்குமுடைய சிறு மான்வகை ; அராபிய நாட்டு மான்.

**gazette'**, *n.* செய்தித்திரட்டுத் தாள் ; அரசினர் செய்தியிதழ் ; பணித்துறை வெளியீடு ; *v.* பணித்துறைச் செய்தித் தாளில் வெளியிடு, அரசியல் செய்தியேட்டிற் பதிவுசெய்.

**gazetteer'**, *n.* கருப்பொருட் களஞ்சியம், விவரத்தொகுப்புச் சுவடி ; *v.* கருப்பொருட் களஞ்சியத்தில் விரித்துரை.

**gaz'ing-stock**, *n.* தூற்றப்படுபவர் ; தூற்றப்படும் பொருள்.

**gaz'ogene**, *n.* கரியீருயிரகி ஊட்டப்பெற்ற குடிநீர் வகைகளை ஆக்குவதற்கான அமைவு.

**gaz'y**, *a.* பரந்த காட்சிக்கு வாய்ப்பளிக்கிற; உற்றுப்பார்க்கும் இயல்புடைய.

**gear**, *n.* இமுவை விலங்குகளின் சேணம் ; துணைக்கலம், துணைப்பொருள்; துணை அமைவு, துணைக்கருவி ; கப்பல் பாய்மரக்கருவிகளின் தொகுதி ; கருவிதளவாடங்களின் குவை ; சக்கரங்கள்-நெம்புகோல்கள் முதலிய தட்டுமுட்டுப் பொருள்களின் தொகுதி ; சக்கர நெம்புகோல் இணைப்பு ; பற்கள் முதலியவற்றால் ஒன்றையொன்று இயக்கும் சக்கரங்கள்; இயந்திரப் பொறியையும் அதன் துணைப்பொறி களையும் இணைக்கும் வகைமுறைகள் ; கப்பல்பாய் இழுப்புக் கயிறுகள் ; வீட்டுத் தட்டுமுட்டுப் பொருள்கள் ; *v.* இழுவை விலங்குக்குச் சேணம் பூட்டு ; இயந்திரம் இயங்குவதற்கு ஆயத்தப்படுத்து ; தளவாடம் பொருத்து ; பற்சக்கரம் வகை யில் சரியாகப் பொருந்து ; தொழில்களில் அல்லது தொழிற் சாலைகளில் ஒன்றை மற்றொன்றுக்குக் கீழ்ப்பட்டதாக்கு அல் லது துணையானதாக்கு; பெருந்திட்டத்தின்கீழ்க் கொண்டுவா; (தொ.) bottom gear, உறுதாழ்விசை இணைப்புத்திறம் ; gear down, இயக்கும் உறுப்பின் வேகத்தைவிட இயக்கப் பெறும் உறுப்பின் வேகத்தைக் குறைவாக்கு ; gear up, இயக்கும் உறுப்பின் வேகத்தைவிட இயக்கப்பெறும் உறுப் பின் வேகத்தை மிகுதிப்படுத்து ; in gear, இயக்கியுடன் இணைக்கப்பட்ட ; செயற்படும் நிலையிலுள்ள, சீரான நிலையி லிருக்கிற : out of gear, இயக்கியின் தொடர்பு நீக்கப்பட்ட;

செயற்படும் நிலையிலிராத, சீர்கெட்ட; three-speed gear, two-speed gear, variable gear, விருப்பம்போல் பொறியமைப்பை மாற்றுவதற்கான கருவி; top gear, உச்ச விசைக்கு நெம்புகை.

gear'ing, *n.* குதிரைச்சேணம்; தொழிற்றுறைக் கருவிகலத் தொகுதி; இயந்திர இயக்கங் கொண்டுசெல்லும் நெம்பிணைப்புக்களின் அமைப்பு; (தொ.) bevelled gearing, (பொறி.) சாய் இயக்க இணைவு, பற்கள் மட்டும் சாய்வாக இணைந்து ஒன்றை ஒன்று இயக்கும்படி அமைக்கப்பட்ட வேறுவேறு தளத்திற் சுழலும் சக்கர அமைவு; multiplying gearing, சுழல் வேகத்தைப் பெருக்கும் பொருட்டுப் பெரிய பற்சக்கரங்கள் சிறிய பற்சக்கரங்களை இயங்குவிக்கும் ஒருங்கிணைவு ஏற்பாடு; straight gearing, இயங்கு தளங்கள் ஒருபோகு ஆக இருக்கும் அமைவு.

geck'o, *n.* வெப்ப வானிலைப்பகுதிகளிற் காணப்படும் வீட்டுப் பல்லி; *pl.* geck'oes, geck'os.

gee[1], *n.* (பே-வ.) குதிரை.

gee[2], *int.*=gee-ho.

gee[3], *int.* துளுரை-கண்டுபிடிப்பு முதலிய தறுவாய்களில் பயன்படுத்தப்படும் வியப்பிடைச்சொல்.

gee'-gee, *n.*=gee[1].

gee'-ho', gee'-hup', *int.* குதிரை முதலியவற்றைத் தூண்டும் குறிப்பிடைச்சொல்; செல்; விரைந்துசெல்!

geese, *n.* goose என்பதன் பன்மை.

gee'-up', gee'-wo', *int.*=gee-ho.

Gehenn'a, *n.* நரகம், அளறு; எரியூட்டுமிடம்; சித்திரவதை செய்யுமிடம்; துன்பத்துக்குரிய இடம்.

Geig'er coun'ter, Geig'er-Mull'er coun'ter, *n.* கதிர் இயக்கத்தைக் கண்டுபிடிப்பதற்கான கருவிவகை.

gei'sha, (ஜப்.) *n.* ஜப்பானிய ஆடல் மகள்.

Geiss'ler tube, *n.* மின்னோட்டம் கடந்துசெல்லும்போது வெள்ளொளி பரப்பும் அழுத்தம் மிகக் குறைக்கப்பட்ட வளிநிரம்பிய குழாய்.

*geist*, (செர்.) *n.* அறிவுணர்வியக்க ஆற்றல்; ஆர்வத்திறம்; ஆர்வப்பாங்கு; ஊக்கமூட்டுந் திறம்; ஆட்கொள்ளும் ஆற்றல்.

gel, *n.* கூழ்ப்போலியான அரைத் திண்மக்கரைசல்; *v.* அரைத் திண்மக் கரைசலாக்கு.

gel'atin, *n.*=gelatine.

gelat'inate, *v.* ஊன்பசையாக்கு; இழுதாகச்செய்.

gel'atine, *n.* ஊன்பசை, எலும்பு தோல்களிலிருந்து எடுக்கப்பட்டு உணவுப்பொருள்துறை - நிழற்படத்தகடு - பசைகள் முதலியவற்றிற் பயன்படும் கூழ்போன்ற பொருள்; (தொ.) blasting gelatine, வெடிக்கும் இயல்புள்ள வெடியக் கரிநீர்ப் பாகுக் கலவை.

gelat'inize, *v.*=gelatinate.

gelat'inous, *a.* ஊன்பசைக்குரிய; ஊன்பசை போன்ற; இழுதுநிலைப்படுத்தப்பட்ட.

gela'tion, *n.* உறைய வைத்துக் கெட்டியாக்குதல்.

geld[1], *n.* (வர.) முற்கால வரி; *v.* வரி விதி.

geld[2], *v.* காயடி, விரையெடு, ஆண்தன்மை நீக்கு; கருப்பை அகற்று; உயிர்க்கூறு அகற்று; வலுக்குறை; நீக்கிக் குறை.

gel'ding, *n.* காயடித்தல்; விரைநீக்கப்பட்ட குதிரை; காய் அடிக்கப்பட்ட விலங்கு.

gel'id, *a.* பனிமயமான, பனிபோல் குளிர்ந்த; குளிரான, குளிர்ச்சிமிக்க.

gel'ignite, *n.* வெடியக் கரிநீர்ப்பாகடங்கிய வெடிமருந்து வகை.

gelt, *v.* geld[2] என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

gem, *n.* மணிக்கல், இரத்தினம்; பட்டையிட்ட மணிக்கல்; உருவம் செதுக்கப்பெற்றுள்ள மணிக்கல்; பெருமதிப்புப் பொருள், அரும்பொருள்; அரும்பொருளின் மிகச் சிறந்த கூறு; *v.* மணி இழை, இரத்தினக் கற்களைக்கொண்டு ஒப்பனைசெய்; குயிற்று.

Gemar'a, *n.* யூதர் திருமுறை நூலின் பிற்பகுதி.

gem'inate, *a.* இரட்டைகளாக இணைந்துள்ள; *v.* இரட்டையாக்கு, இரட்டிப்பாக்கு; திரும்பச்செய்; இரட்டைகளாக ஒழுங்குபடுத்து.

gemina'tion, *n.* இரட்டையாதல்; இரட்டையாக்குதல்.

Gem'ini, *n. pl.* மிதுனராசி, இரட்டை விண்மீன்கள்.

gem'inous, *a.* (தாவ.) இரட்டிப்பான, இரட்டைகளாயுள்ள.

gemm'a, *n.* (தாவ.) தளிர்மொட்டு; பாசி முளையரும்பு; (வில.) தனி உயிரினமாகும் மொக்குப் போன்ற வளர்ச்சி.

gemma'ceous, *a.* மொட்டுப் போன்ற; இலைமொட்டுக்கள் சார்ந்த; மொக்குப் போன்ற வளர்ச்சிக்குரிய.

gemm'ate[1], *a.* மொட்டுக்களையுடைய; மொக்கு விட்டு இனப் பெருக்கமடைகிற.

gemmate'[2], *v.* மொட்டுக்கள் தோற்றுவி; மொட்டுக்கள் விட்டு இனம்பெருக்கு.

gemma'tion, *n.* தளிர்த்தல், மொட்டுவிடுதல்; மொட்டு விடும் முறை; மொட்டுக்களின் ஒழுங்கமைப்பு; மொட்டு விடுதல் மூலமான இனப்பெருக்கம்; தாய்ச்செடியில் அல்லது உயிரில் மொக்குகளாக வளர்ந்து பின் தாய்உருவிலிருந்து பிரிந்து புதிய செடி அல்லது உயிராதல்.

gemm'ative, *a.* உயிர் மொட்டுவிடுதல் சார்ந்த.

gemm'ery, *n.* மணிக்கற்களின் தொகுதி.

gemmif'erous, *a.* மணிக்கற்களைத் தோற்றுவிக்கிற; மொட்டுக்கள் அல்லது தளிர்கள் தாங்கியுள்ள.

gemmip'arous, *a.* மொட்டுக்கள் விட்டு இனம்பெருக்குகிற; முகைவிடுதல் சார்ந்த.

gemmol'ogy, *n.* மணிக்கற்கள்பற்றிய ஆய்வுநூல்.

gemmula'tion, *n.* மரபுக்கூறுகள் தோன்றுதல்.

gemm'ule, *n.* (உயி.) உடலின் பகுதிதோறும் அதனதன் மரபுப் பண்பு பொருந்தப் புத்தாக்கம் பெற்று இனப்பெருக்கம் தூண்டுவதாக டார்வின் கருதிய மரபுக்கூறு.

gemm'y, *a.* மணிக்கல் பதித்த; சுடர்வீசுகிற.

gems'bok, *n.* தென் ஆப்பிரிக்க மான் வகை.

genappe', *n.* மழமழப்பான கம்பளிநூல் வகை.

*gendarme*, (பிர.) *n.* பிரஞ்சுக் காவற்றுறை அலுவல்களில் அமர்த்தப்பட்டுள்ள படைவீரர்; மலையேற்றத் துறையில் மோட்டுவடிவப்பாறைச் சரிவிடையே செங்குத்தாய் எழும் கோபுரம் போன்ற குவடு.

*gendarmerie*, (பிர.) *n.* படைக்கலந் தாங்கிய காவல்துறைப் பிரிவு.

gen'der[1], *n.* (இலக்.) சொல்லின் பால்வகை, ஆண்-பெண் முதலிய பால்களைக் குறிக்கும் சொல்வேறுபாடு.

gen'der[2], *v.* (செய்.) பெறு, பிறப்பி; கல, கூடு, புணர்.

gene, *n.* (உயி.) உயிர்மத்தின் இணைமரபுக் கிற்று.

genealo'gical, *a.* குடிவழிப் பட்டியலுக்குரிய, குடும்ப மரபு மூலங் காட்டுகிற; (தொ.) genealogical tree, வழி விளக்க அட்டவணை.

geneal'ogist, *n.* குடிவழிப் பட்டியல்களை ஆய்பவர்; மரபு வழிகளுக்கு மூலங்காட்டுபவர்.

geneal'ogize, *v.* மரபுவழி மூலங்காட்டு; குடிவழிப் பட்டியல்கள் எழுது.

geneal'ogy, *n.* குடிவழிப் பட்டியல்; மூதாதை மரபு வரலாறு; கால்வழி; உயிர் மலர்ச்சி மரபு விளக்கப்பட்டி; மரபு வரிசை ஆய்வு.

**gen'era**, *n. pl.* genus என்பதன் பன்மை.

**gen'eral**, *n.* படைப்பெருந்தலைவர்; ஆன்மிக வீடுபேற்றுப் படை (Salvation Army) அமைப்பு முதல்வர்; போப்பாண்டவருக்கே பொறுப்புடைய சமயப் பணியமைப்பு முதல்வர்; பொதுமுறைப்பணி முதல்வர்; துறையரங்க முதல்வர்; படைத்தலைமைத் திறமுடையவர்; போர்த்துறை நயத்திறமுடையவர்; செயலாட்சித் திறமுடையவர்; பலவகைக் கிளைகளையுடைய இனக்குழு; *a.* இனம் முழுவதற்கும் உரிய; பல்வேறுவகைகளை உள்ளடக்கிய; தனித்துறை சாராத; வரையறையற்ற; தனிநிலை அற்ற; முழு மொத்தமான; அனைவர்க்குமுரிய; எல்லாவற்றையும் பாதிக்கிற; பெரும்பான்மைக்குரிய; பொதுநிலையான; பொதுப்படையான; பெருவழக்கான; பொது நடைமுறையிலுள்ள; பொது வாழ்வு சார்ந்த; பொதுமக்களுக்குரிய; எங்கும் பரவியுள்ள; விளக்கமற்ற, தெளிவற்ற, ஐயத்துக்கு இடமான; முதன்மையான, மேல்நிலைப்பட்ட; பலதுறைத் தலைமையான; *v.* தலைமை ஏற்று நடத்து, தலைவராகச் செயலாற்று; (தொ.) General Assembly, பொதுப்பேரவை, ஸ்காத்லாந்திலும் அயர்லாந்திலும் அமெரிக்காவிலும் உள்ள பிரிஸ்பிட்டீரிய (Presbyterian) திருச்சபை மீயுயர் நீதிமன்றம்; General Certificate of Education, உயர்தரப் பள்ளிப் பல்பாடப் பொதுத்தேர்ச்சிச் சான்றிதழ்; general dealer, பலவகைச் சரக்கு வணிகர்; general election, பொதுத் தேர்தல்; general epistle, திருச்சபை வாசகர்களுக்கு எழுதப்பட்ட விவிலிய நூல் நிருமுடங்கல்; general hospital, தலைமை மருத்துவமனை; பெரிய படைத்துறை மருத்துவமனை; general post, முதல்தடவைக் கடிதக் கொடுப்பு; உட்கூட விளையாட்டு வகையின் பெயர்; General Post Office, தலைமை அஞ்சல் அலுவலகம்; general practitioner, பொதுத்துறை மருத்துவர்; general principle, பொதுமெய்ம்மை, தன் எல்லைக்குள் விலக்குகளைப் பெற்றிராத கோட்பாடு; general reader, பல்வகை இலக்கியப் படிப்பாளர்; general resemblance, மேலீடான பொது ஒப்புமை; general servant, பல்வகை வீட்டுவேலை ஆள்; in general, பொதுவாக; பொது நடைமுறைகளிலெல்லாம்; பொதுவாகப் பேசுமிடத்து; சில தனிப்பட்ட செய்திகளை நீக்கிப் பார்த்தால்; பெரும்பாலும்.

**general'e**, *n.* பொதுக்கோட்பாடு; *pl.* general'ia.

**generaliss'imo**, *n.* பலதிறப்படை மாபெருந்தலைவர்; கடல் நிலவான்படை இணைப்புப் பெருந்தலைவர்; *pl.* generaliss'imos.

**general'ity**, *n.* பொதுநிலை, பொதுத்தன்மை; எடுத்துக்காட்டுக்களின் முழுமைக்கும் பொருந்தும் நிலை; தெளிவற்ற நிலை; பொதுச்செய்தி, பொதுக்கோட்பாடு, பொதுவிதி, பொது அறிக்கை; முக்கியமான பகுதி, பெரும்பகுதி, பெரும்பான்மை; முழுப் பெரும்பகுதி மக்கள்; முழுப்பெரும்பகுதிச்செய்திகள்; பெரும்பான்மையினர்; பெரும்பான்மையன.

**generaliza'tion**, *n.* பொதுவிதி, பொதுமெய்ம்மை; பொதுக் கருத்து; பொதுமைப்பாடு; விதிவரு முறையினுல் பெறப்பட்ட பொதுக்கருத்து; விதிவரு முறையினுல் பொதுக் கருத்து உருவாக்குதல்.

**gen'eralize**, *v.* பொதுவிதி வடிவத்துக்குக் கொண்டுவா, பொதுக் கருத்தாக உருவாக்கு, பொது இயல்பினை ஏற்று; பொதுப்பெயரிட்டழை; விதிவரு முறையினுல் விதி-முடிவு பெறு; நிகழ்ச்சிச் செய்தி அடிப்படைமீது பொதுக் கோட்பாட்டை அமை; (கண., மெய்.) பொதுவிதி உருவில் அடக்கு; வண்ணப்பட வகையில் சிறப்பியல்புகளை மட்டும் தீட்டிக்காட்டு; ஐயத்துக்கிடமானதாக்கு; பொதுக்கோட்பாடுகள்-விதிகள் முதலியவற்றைக் கையாள்; தெளிவற்ற வகையிற் பேசு; பொது ஆட்சிக்குக் கொண்டுவா.

**gen'erally**, *adv.* பெரும்பாலும், பரவலாக; பொதுப்படையாக; பொதுநிலையில்; விவரங்களைக் கருத்திற் கொள்ளாமல், தனிப்பட்ட முறையிலன்றி; பொது விதியாக; மொத்தத்தில்.

**gen'eralship**, *n.* படைத்தலைவர் பதவி; போர்முறைத்திறம்; நடைமுறைத்திறம்; படைத்துறைத் திறமை; திறமைமிக்க செயலாட்சி, செயல்நயம், வெல்திறம்.

**gen'erant**, *n.* பிறப்பிப்போர், பெற்றோர்; உண்டாக்குவது; (வடி.) வடிவாக்கி, தனது இயக்கத்தினுல் மற்றொரு வடிவத்தை ஆக்கும் வரி-புள்ளி அல்லது உருவம்.

**gen'erate**, *v.* தோற்றுவி, பிறப்பி, உண்டாக்கு; உற்பத்தி செய்; உருவாக்கு; மலர்வி; (கண.) இயக்கத்தால் படியுருவாக்கு.

**genera'tion**, *n.* பிறப்பித்தல்; தோற்றுவித்தல்; உண்டாக்குதல்; இனப்பெருக்கம்; ஈனுதல்; ஈனப்பெறுதல்; இயற்கை அல்லது செயற்கை முறையினுல் உண்டாக்குதல்; தலைமுறை, வழிவழி மரபில் ஒருபடி; தலைமுறையினர்; ஏறத்தாழ ஒரே காலத்தில் பிறந்தவர் அனைவரின் தொகுதி; ஒத்தகாலத்தவர்; தலைமுறைக்காலம், தலைமுறை இடையீட்டுக்காலம், 30 அல்லது 33 ஆண்டுகள்; (தொ.) spontaneous generation, உயிரற்ற பொருளிலிருந்து உயிர்ப்பொருள் தோன்றுதல்.

**gen'erative**, *a.* மகப்பேறு சார்ந்த; உண்டாக்கவல்ல; பயனுடைய; பிறப்புக்குரிய; இனப்பெருக்கத்துக்குரிய.

**gen'erator**, *n.* மகப்பெறுபவர்; ஆவி வகைகளையும் மின் ஆற்றலையும் விளைவிக்கும் அமைவு; மின் ஆக்கி, மின் ஆற்றல் உண்டாக்கும் பொறி, பொறிவிசையை மின்விசையாக்கும் பொறி.

**gene'ric**, *a.* இனப்பொதுவியல்பான; இனத்துக்குரிய; பொதுப்படையான.

**generos'ity**, *n.* பெருந்தகைமை; உயர்குணமுடைமை, தாராள மனப்பான்மை; வண்மை; இயற்கை வளப்பம்.

**gen'erous**, *a.* பெருந்தன்மையுள்ள; பரந்த மனப்பான்மையுடைய; புன்மையற்ற; தப்பெண்ணக் காழ்ப்பேறியிராத; உயர்குணம் வாய்ந்த; இழிகுணமற்ற; ஈகைக்குணமுள்ள, கஞ்சத்தனமற்ற; செழிப்பான; ஏராளமான, மல்கியுள்ள; உணவு-நிறம்-இன்தேறல் வகையில் செழுமையான; நிறைவான.

**gen'erousness**, *n.*=generosity.

**Gene'siac, Gene'siacal**, *a.* விவிலிய நூலில் உலகத் தோற்றம் பற்றிக் கூறும் முதற் பிரிவு சார்ந்த.

**gen'esis** [1], *n.* தோற்றம், மூலம்; உருவாகும் வகை, உண்டாகும் முறை.

**Gen'esis** [2], *n.* விவிலிய நூலில் உலகத் தோற்றம்பற்றிக் கூறும் முதற்பிரிவு.

**Genesit'ic**, *a.*=Genesiac.

**gen'et**, *n.* புனுகுப்பூனை வகை; புனுகுப்பூனை வகையின் மென் மயிர்த்தோல்.

**genet'ic**, *a.* தோற்றம் பற்றிய; பிறப்பு மூலத்துக்குரிய, மரபுவழிப் பண்பியல் சார்ந்த.

**genet'icist**, *n.* மரபுவழிப் பண்பியல் பயிலும் மாணவர்.

**genet'ics**, *n. pl.* மரபுவழிப்பண்பியல், பரம்பரை உள்ளிட்ட உயிர்நூல் ஆராய்ச்சி.

**genev'a** [1], *n.* கூலச் சாராய வகை.

**Genev'a** [2], *n.* ஸ்விட்சர்லாந்து நாட்டுப் பெருநகரம்; சர்வதேச சங்கம் (League of Nations, 1920-1946); சர்வதேச சங்க நடவடிக்கைகள்; உலக நாடுகளிடையே 1865-இல் போர் நடவடிக்கைபற்றி ஏற்பட்ட ஒப்பிணக்க முறைகள்; (தொ.) Geneva bands, குருமார் அணியும் பட்டைச்சின்ன வகை; Geneva Bible, 1560-இல் நாடுகடத்தப்பட்ட ஆங்கிலேயர்களால் ஜெனிவாவில் வகுத்தமைக்கப்பட்ட விவிலிய நூலின் பதிப்பு; Geneva Convention, போர்க்கால நடைமுறைகள் பற்றி 1865-இல் ஏற்பட்ட அனைத்துநாட்டு ஒப்பிணக்க முறைகள்; Geneva cross, போர்க்கால மருத்துவ உதவிப் பணியாளர் அணியும் செஞ்சிலுவைக்குறி; Geneva gown, கால்வின் கோட்பாட்டாளர்களும் (Calvinists) ஆங்கில நாட்டுத் திருச்சபைக் குருமார் சிலரும் அணியும் கறுப்பு மேலங்கி.

**Genev'an**, *n.* ஸ்விட்சர்லாந்து நாட்டில் ஜெனிவா நகரத்தவர்; ஸ்விட்சர்லாந்தில் கால்வின் (Calvin) என்பவரது தீவிரச் சீர்திருத்தச் சமயத்தின் கோட்பாட்டாளர்; *a.* ஜெனிவா நகரம் சார்ந்த; (தொ.) Genevan theology, ஜான் கால்வின் என்பவரின் இறைமைக் கோட்பாடு.

**gen'ial**[1], *a.* வளர்ச்சிக்குகந்த; நலமார்ந்த, நல்லிசைவான; உடல் நலமூட்டுகிற, ஊக்கமளிக்கிற; ஆர்வமான; மகிழ்ச்சி தருகிற; ஆர்வக் கிளர்ச்சியுடைய; அன்பான, ஆதரவான, அன்புடன் பழகுகிற.

**geni'al**[2], *a.* (உள்.) மோவாய் சார்ந்த.

**genial'ity**, *n.* இன்னிணக்கமுடைமை; மகிழ்வுடைமை; அன்பாதரவு, ஆர்வமாகப் பழகும் தன்மை; ஆர்வ ஒத்துணர்வு.

**gen'ialize**, *v.* மகிழ்வி.

**genic'ulate**, *a.* முழங்கால்போன்ற கணுக்களையுடைய, முழங்கால் போல வளைந்த; முண்டுகள்வாய்ந்த; *v.* முண்டுகளாக அமைவி.

**genic'ulated**, *a.* முழங்கால்போன்ற கணுக்களையுடைய, முண்டுகள் வாய்ந்த.

**gen'ie**, *n.* வேதாளம், அரபிக்கதைகளில் வரும் பூதம், பேயுரு.

**gen'ii**, *n. pl.* பூதங்கள், ஆவியுருக்கள், பேயுருக்கள், சிறு தெய்வங்கள்.

**geni'o-hy'oid**, *a.* மோவாய் அடிநா எலும்புகளைச் சார்ந்த.

**genis'ta**, *n.* (தாவ.) மஞ்சள்நிற மலர்களையுடைய புதர்ச் செடியினம்.

**gen'ital**, *a.* பிறப்புக்குரிய.

**genita'lia, gen'itals**, *n. pl.* பிறப்புறுப்புக்கள், ஜனனேந்திரியம்.

**gen'itive**, *n.* (இலக்.) ஆறும் வேற்றுமை; கிழமைப்பொருட் சொல்; *a.* (இலக்.) ஆறும் வேற்றுமைக்குரிய; (தொ.) genitive absolute, பண்டை மொழிகளில் வினைமுதலும் வினையும் ஆறும் வேற்றுமையாகவுள்ள தனித்தொடர்மொழி.

**gen'itor**, *n.* தந்தை, பெற்றோர்; முன்னோர்; ஊங்கணோர்.

**genito-ur'inary**, *a.* பேறு-சிறுநீர் தொடர்பான உறுப்புக்கள் சார்ந்த.

**gen'iture**, *n.* பிறப்பு, மகப்பேறு.

**gen'ius**, *n.* மேதகவு, இயல்பாயமைந்த தனிச்சிறப்புத் தன்மை; கூர்மதி, மாண்புலம்; மேதை, இயல்பாயமைந்த தனிச் சிறப்புத் திறமையுடையவர்; கூர்மதி வாய்ந்தவர், நுண்ணறிவாளர்; தனிச்சுவைச் சார்பு; தனித்திறச் சார்பு; உடனின்றியக்கும் ஆவி; ஆக்க அழிவுக்குரிய செல்வாக்காற்றல் உடையவர்; ஆவியுரு, பேயுரு, பூதம்; சிறு தெய்வம்; பொதுப்போக்கு; நட்புக்கருத்து; பரவலாக நிலவும் பண்பு; இனமாதிரிப் படிவம்; உயிர்க்கூறு; நாட்டின் பண்புத்திறம்; காலத்தின் பண்பமைதி; மொழியின் தனித்திறம்; சட்டத்தின் போக்கு; திணைக்குரிய நினைவு அலைக்கூறுகளின் தொகுதி; (தொ.) genius loci, திணைப்பண்புத் தெய்வம், அதிட்டான தேவதை.

**gen'iuses**, *n. pl.* மேதைகள், கருவில் திருவுடையவர்கள்; கற்பனைப் படைப்பாற்றலுடையவர்கள்.

**Gen'oa**, *n.* இத்தாலி நாட்டு நகரம்; (தொ.) Genoa cake, வாதுமை மாப்பண்டவகை.

**gen'ocide**, *n.* இன அழிவு.

**Genoese'**, *n.* ஜெனோவா (Genoa) நகரத்தவர்; *a.* ஜெனோவா நகர் சார்ந்த.

**gen'otype**, *n.* (உயி.) கால்வழியமைப்பு; மாறுபடாப் பரம்பரையமைப்புக் குழு.

***genre***, (பிர.) *n.* வகை; இலக்கிய நடை, பாணி; வாழ்க்கை நடைமுறைக் காட்சி ஓவியப்பாணி.

**genre-paint'ing**, *n.* வாழ்க்கை நடைமுறைக்காட்சி ஓவியப் பாணி.

**Gen'ro**, *n. pl.* ஜப்பானிய அரசியல் முதுவிரகர்.

***gens***, (ல.) *n.* குலப்பிரிவு.

***gensdarmes***, (பிர.) *n. pl. gendarme* என்பதன் பன்மை வடிவங்களில் ஒன்று.

**gent**, *n.*=gentleman.

**genteel'**, *a.* உயர் வகுப்புத் தனியுரிமையுடைய, உயர்வகுப்புக்குச் சிறப்பியல்பான; நாகரிகப் பாங்குடனொத்த; புதுப்பாணி மேற்கொண்ட; பகட்டு நல்லுடையணிந்த; வீறமைதி வாய்ந்த.

**genteel'ism**, *n.* உயர்மதிப்பு வழக்கு, மதிப்புமிக்க சொல்வழக்காற்றுக் குறிப்பு.

***gen'tes***, (ல.) *n. gens* என்பதன் பன்மை.

**gen'tian**, *n.* மலைப்பாங்கர் நீல மலர்ச்செடி வகை.

**gen'tian-bitter**, *n.* மலைப்பாங்கர் நீலமலர்ச் செடிவகையின் வேர் ஊட்ட நன்மருந்து.

**gen'tile**, *n.* யூதரல்லாதவர், யூதர் வழக்கில் புற இனத்தவர்; *a.* யூதரல்லாத, யூதர் வழக்கில் புற இனம் சார்ந்த; புறச்சமயம் சார்ந்த; குடியினம் குறித்த; சொல் வகையில் இனம் குறித்த.

**gentilesse'**, *n.* பண்பமைதி, மரியாதை.

**gentili'tial**, *a.* பெயர் வகையில் மக்களினம் சார்ந்த, குடியினம் சார்ந்த, குடி சார்ந்த.

**gentil'ity**, *n.* உயர்குடி மரபு; உயர்குடி நடை; உயர்குடிப் பழக்க வழக்கப்பாங்கு; குடியிறுமாப்பு; உயர்குடித்தன்மை; நன்னடத்தை; (தொ.) shabby gentility, உயர்குடித் தோற்றம் பேணிக்காப்பதற்கான கேலிக் கடுமுயற்சி நிலை.

**gen'tle**[1], *n.* தூண்டில் இரை ஈவகையின் முட்டைப்புழு; பயிற்றுவிக்கப்பட்ட பருந்து; கூட்டிலிருந்து எடுத்து வளர்க்கப்பெறுத தொலை மண்டலப் பருந்து.

**gen'tle**[2], *n.* உயர்குடியாளர், நற்குடிப் பிறந்தவர்; *a.* உயர்குடிப்பிறந்த; நற்குடிசார்ந்த; நன்னிலையிலிருக்கிற; உயர்குடிக்குரிய தகுதி வாய்ந்த; மேன்மக்களுக்குரிய; படைக்கலம் தாங்கும் உரிமையுடைய; மதிப்புவாய்ந்த; மேலான; இணக்க வணக்க நடையுடைய; அமைதியான; பண்பார்ந்த, பண்புமிக்க நடையுடைய; கீழ்ப்படிதலுள்ள; எளிதில் வசப்படக்கூடிய; படிமானமுடைய; முரட்டுத்தனமாயிராத; வன்செயல் மேற்கொள்ளாத; மருந்து வகையில் கடுமையாகச் செயற்படாத; கடுவேகமாயிராத; துயராற்றுகிற; கொந்தளிப்பாயிராத; எளிதில் பழகுகிற; அன்புள்ள, கனிவான, இரக்கமுள்ள; தயவான; நட்பிணக்கமான; மட்டமைதியுடைய; படிப்படியான; *v.* மேம்படுத்து, மேன்மையுடைய தாக்கு; பதுக்கமாகக் கையாளு; (தொ.) gentle and simple, உயர்குடியினரும் பொதுக்குடிமக்களும்; gentle craft, தூண்டிலிட்டு மீன்பிடிக்கும் தொழில்; செருப்புத் தைக்கும் தொழில்; gentle reader, 'பண்பமைதியுடைய வாசகர்'; gentle sex, பெண்பாலர்.

**gen'tle**[3], *v.* குதிரையின் மூர்க்கத்தனத்தை அடக்கு; மென்மையுடனும் உறுதியுடனும் குதிரையைக் கையாளு.

**gen'tlefolk, gen'tlefolks**, *n. pl.* நற்குடிமக்கள், மேன்மக்கள்.

**gen'tle-heart'ed**, *a.* இளகிய மனமுள்ள, அருளுள்ளம் வாய்ந்த.

**gen'tlehood**, *n.* நற்குடிப்பிறப்புக்கியைந்த நிலை, நற்குடிக்குரிய இயல்பு.

**gen'tleman**, *n.* நற்குடியாளர், படைக்கல உரிமை பெற்றவர், அரசர் முதன்மக்கள் பரிவார உயர்குடியினர்; வணிகர் உழவர் உழைப்பாளி ஆகியோரல்லாதவர், ஓய்வு வளம்பெற்ற செல்வர்; நாகரிகக் குடிப்பயிற்சிப் பண்பாளர், நாகரிக மரபினர்; நாகரிகர்; பொறுப்புணர்ச்சியுடையவர்; நன்மகன், பண்பாளர், நயமுடையவர்; பெருந்தன்மையர், உணர்ச்சி நயமுடையவர்; நாகரிகமாக விளித்தற்குரியவர்; நயநாகரிகமாகக் குறித்தற்குரிய ஆடவர்; (தொ.) gentleman at large, வேலை எதுவும் இல்லாமலே அரசவைத் தொடர்பு கொண்டுள்ளவர்;

gentleman commoner, ஆக்ஸ்போர்டு கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்களில் தனி உரிமைபெற்ற பட்டம்பெரு மாணவர்; gentleman farmer, நாட்டுப்புற நிலக்கிழார்; gentleman ranker, படைவீரராயிருந்து பின் ஆணைபெற்ற படைத் துறைப் பணி முதல்வரானவர்; gentleman's agreement, மேதகுவாய்ச்சொல் உடன்படிக்கை; gentleman's gentleman, ஏவலர்; gentleman usher, பெருங்குடிமகன் ஏவலர்.

gen'tleman-at-arms, *n.* அரசரது மெய்க்காப்பாளர்களில் ஒருவர்.

gen'tleman-cadet', *n.* படைத்துறைக் கல்லூரி முதிர் மாணவர்.

gen'tlemanhood, *n.* பெருந்தகைமை, நன்மகன் நிலை.

gen'tlemanlike, *a.* நன்மகனுக்குச் சிறப்பியல்பான; நன் மகனுக்குகந்த; பெருந்தன்மையான; பண்பாளருக்குரிய.

gen'tlemanly, *a.* பெருந்தன்மையான; பெருந்தகையாள னுக்குப் பொருத்தமான; நன்முறையில் வளர்க்கப்பட்ட; மதிப்பு வாய்ந்த; தாராள குணமுள்ள; பண்புநயமுடைய; மேன்மக்களுக்கு ஏற்ற.

gen'tlemanship, *n.* பெருந்தகையாளரின் நிலை; நன்மகன் இயல்பு.

gen'tleness, *n.* இரக்கம், கருணை; மென்பண்பு, மென்னயம்; திடீர் ஏற்ற இறக்கமின்மை; சரிவுவகையில் மென்படுகை நிலையான தன்மை; கடுமையின்மை; வன்செயலின்மை.

gen'tlewoman, *n. fem.* நற்பெருமாட்டி; உயர்குடிமங்கை.

gen'tlewomanly, *a.* பண்பார்ந்த பெண்மைநலம் வாய்ந்த.

gen'tly, *adv.* பெருங்குடிமரபில்; அமைதியாக; மட்டாக; மெல்ல, மென்னயமுடன்; மென்படிமையாக, மெல்ல மெல்ல; மெல்லென, விரைவின்றி; கனிவாக, கடுமையின்றி.

gen'try, *n.* நற்குடிமக்கள், இடைநிலை மக்கள்.

gents, *n. pl.* = gentlemen.

gen'ual, *a.* (உள்.) முழங்கால் சார்ந்த.

gen'uflect, *v.* வழிபாடு வணக்க வகையில் முழங்காலிடு, மண்டியிடு.

gen'uine, *a.* மெய்யான, போலியல்லாத; தூய்தான, கலப்பட மில்லாத; தூயமரபில் வந்த; தன்னியல்பான.

gen'us, *n.* (உயி., வில., தாவ.) இனம், ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடைய பலவகைகள் கொண்ட முழுநிறை குழு; (அள.) பலவகைக் கிளைகளாயுள்ள பொருள்களின் தொகுதி.

geocen'tric, geocen'trical, *a.* நிலவுலகையே மையமாகக் கொண்ட; புவி மையமாகக் கருதப்பட்ட; நிலவுலக மையத்தி லிருந்து நோக்குவதாகக் கொள்ளப்பட்ட; (தொ.) geocentric latitude of planet, நிலவுலக மையக் காட்சிக் கோளின் நேர் வரை வட்டம்.

geocen'tricism, *n.* அண்டத்தின் மையம் நிலவுலகு என்ற கோட்பாடு.

geochronol'ogy, *n.* மண்ணியல் ஊழிக்கால அளவை பற்றிய ஆய்வுநூல்.

ge'ode, *n.* (மண்.) படிகப்பொருள்களை அல்லது கனிப் பொருள்களை உள்ளீடாகக் கொண்ட உட்குடைவுப்பள்ளங் களையுடைய அடர்பாறைக்கல்; அடர்பாறைக்கல்லில் படிகப் பொருள் அல்லது கனிப்பொருள்களை உள்ளீடாகக்கொண்ட உட்குடைவுப்பள்ளம்.

geodes'ic, geodes'ical, *a.* புவிப்பெரும்பரப்பளவைக் கணிப் பியல் சார்ந்த; புவிப் பெரும்பரப்பளவைக் கணிப்பினால் வரையறுக்கப்பட்ட; (தொ.) geodesic line, புவியின் மேற் பகுதிக்கோடு, நிலவுலகப் பரப்பின் இருபுள்ளிகளுக்கிடையே யுள்ள குறைந்த தூர அளவு.

geod'esist, *n.* புவிப்பரப்பு அளவைக் கணிப்பு வல்லுநர்.

geod'esy, *n.* புவிப்பெரும்பரப்பளவைக் கணிப்பியல், நில வுலகப் பரப்பளவைக் கணிப்புக்கள் சார்ந்த கணக்கியல் துறை; நிலவுலகக் கோளவளைவுக்கு எதிரீடுசெய்த பெரும் பரப்பளவைக்கணிப்பு.

geodet'ic, geodet'ical, *a.* = geodesic.

geog'nosy, geog'nosis, *n.* நில அமைப்புக் கருவள நூல், நாட்டுப்பிரிவுக்குரிய பாறை நில அமைதி-கருவள ஆராய்ச்சி மண்ணூல் துறை.

geog'ony, *n.* புவித்தோற்றமூல இயல்; புவித்தோற்ற மூலக் கோட்பாடு.

geograph'ic, geograph'ical, *a.* நிலஇயல் சார்ந்த.

geog'raphy, *n.* நில இயல், நில இயல் செய்திகளின் தொகுதி; நில அமைப்பொழுங்கு முறைமை; நில இயல் பற்றிய ஏடு.

geol'atry, *n.* புவி வழிபாடு.

geol'ogize, *v.* மண்ணியல் அமைப்பு ஆராய்ச்சியில் ஈடுபடு; மண்ணியல் அமைப்பு வகையில் இடங்களைத் தேர்ந்தாராய்.

geol'ogy, *n.* மண்ணூல், நிலவுலக மேல்தோட்டின் அடுக்கு வளர்ச்சி மாறுபாடுகள்பற்றிய ஆராய்ச்சித் துறை; மண்ணி யல் ஆராய்ச்சிக் கூறுகள், நாட்டுப்பிரிவுக்குரிய மண்ணியல் கூறுகள்; (தொ.) dynamical geology, இயற்கை மாறுதல் களை விளக்கும் மண்ணூல் துறை; structural geology, அமைப்பியல் மண்ணூல்.

ge'omancy, *n.* மண்குறி நூல், கைப்பிடி மண் எறிந்த தடவரைகளிலிருந்து குறிகூறல்; கைக்குவந்த புள்ளிகளிட்டு வடிவினைத்துக் குறிகூறல்; கூடலிழைப்பு.

geom'eter, *n.* வடிவியலார், நிலக்கணக்கியல் வல்லார்; கம்பளிப்பூச்சி வகை; விட்டில் வகை.

geomet'ric, geomet'rical, *a.* வடிவியல் சார்ந்த, வடி வியலுக்கிணங்கிய உருவுடைய; (தொ.) geometrical progression, பெருக்கவேற்றத்தொடர்பு, ஒரேவீதத்தில் ஏறிச் செல்லும் எண் தொடர்பு; geometrical proportion, உறுப்புக் களுக்குரிய தகவுப்பொருத்தம்; geometrical tracery, வடிவியல் உருவுடைய இடைக்கத்தரிப்பு வெட்டுக்களாலான செதுக்குப்படிவம்.

geom'etrize, *v.* வடிவியல்முறையைப் பயன்படுத்திக் கணி.

geom'etry, *n.* வடிவியல், நிலக்கணக்கியல்.

geomorphol'ogy, *n.* நில உருவாக்கஇயல், நிலவுலகப் பரப்பின் இயற்கூறுகளையும் மண்ணியலமைப்பையும் பற்றி ஆராயும் நில இயல் பிரிவு.

geoph'agism, geoph'agy, *n.* சோகைநோய், மண் தின்னல்.

geophys'ics, *n.* நிலவுலகக்கோளச் சார்பான இயற்பியல் துறை.

geopol'itics, *n.* நிலவியல் அமைப்புக்கூறுகளின் வழியாக வரையறைப்பட்ட அரசியல் நூல்; நிலவியல்சார்ந்த அரசியல்.

geopon'ic, geopon'ical, *a.* வேளாண்மை சார்ந்த.

George, *n.* இங்கிலாந்தின் காப்புப்பெருந்தகையான தூயதிரு ஜார்ஜ் (St. George); தூயதிரு ஜார்ஜ் வேதாளத்தை அடர்த்துக்கொல்லும் சித்திரமமைந்த சிறப்பு விருதுப்பதக்கம்; தானியங்கு வானூர்தியில் பொறி வலவன்; (தொ.) Brown George, பழுப்புநிற மட்கலங்கள்; by George, சூளுரைக் குறிப்புத்தொடர்; வியப்புரைக் குறிப்புத்தொடர்; George Cross, George Medal, பெருவீரர்களுக்கு 1940-ஆம் ஆண்டி லிருந்து வழங்கப்படும் பதக்கம்; St. George's cross, வெண்மையான பின்னணியினையுடைய சிவந்த சிலுவை; St. George's day, ஏப்ரல் மாதம் இருபத்துமூன்றும் நாள்.

georgette', *n.* மென்பட்டுத் துகில்வகை.

Geor'gian[1], *n.* காக்கஸஸ் பகுதியில் ஜார்ஜியாப் பகுதி சார்ந்த குடிமகன்; ஜார்ஜியாப் பகுதிக்குரிய மொழி; *a.* ஜார்ஜியாப் பகுதியைச் சார்ந்த; ஜார்ஜியாப் பகுதியின் மொழியைச் சார்ந்த.

Geor'gian[2], *a.* இங்கிலாந்தில் ஜார்ஜ் என்னும் பெயருடைய ஆறு அரசர்களின் காலத்துக்குரிய.

**Geor'gic,** *n.* உழவுத்தொழிலைப்பற்றி வர்ஜில் (Virgil) என்ற லத்தீன் மொழிக்கவிஞர் எழுதிய நூலின் பிரிவு.

**Geor'gics,** *n.* வர்ஜில் என்ற லத்தீனக் கவிஞர் உழவுத் தொழிலைப்பற்றி இயற்றிய ஏடு.

**geostroph'ic,** *a.* (வானிலை.) புவிச்சுழற்சியைப் பொறுத் துள்ள.

**geot'ropism,** *n.* செடியின வளர்ச்சியில் புவியீர்ப்புத் தொடர்பு; (தொ.) negative geotropism, புவியீர்ப்பு மையத்தினின்று விலகிச்செல்லும் வளர்ச்சி இயல்பு; positive geotropism, புவியீர்ப்பு நோக்கிய வளர்ச்சி இயல்பு.

**geran'ium,** *n.* நாரைஅலகு போன்ற கனியினும் காட்டு மலர்ச்செடி வகை; பகட்டான மலர்களையும் மணமுள்ள இலை களையுமுடைய தோட்டச் செடிவகை; நல்லசிவப்பு மலர் வண்ணம்.

**ger'falcon,** *n.* ஐஸ்லாந்து போன்ற வடபுலங்களிலுள்ள பெரு வடிவ வல்லூறு வகை.

**geriat'ric,** *a.* மூப்பியல் மருத்துவத்துறை சார்ந்த.

**geriat'rics,** *n. pl.* மூப்பியல் மருத்துவத்துறை, மூப்புப் பற்றியும் மூப்புக்குரிய நோய்கள் பற்றியும் ஆராயும் மருத்து வத்துறை.

**germ,** *n.* நுண்மம்; நோய் நுண்மம்; செடி உயிரினங்களின் கருமூல வடிவம்; முதிரா உறுப்பின் செயற்படாத் தொடர்ச் சின்னம்; இளங்கருமுளை; மொக்கு, தளிர், மொட்டு; கரு உயிர்மம்; கரு உயிர்மங்களின் தொகுதி; விதை மூலமான பொருள்; மூல முதல் தோற்றப் பொருள்; *v.* முளை விடு; தளிர்விடு; அரும்பு; (தொ.) in germ, முதிரா நிலையில், கரு விதை நிலையில்.

**germ'an,** *a.* உறவின் முழுநிறை அளவும் உட்கொண்ட, உச்ச அளவு நெருங்கிய உறவுடைய; (தொ.) brother german, brothers german, இருதிசைப் பெற்றோரையும் பொதுவாகக் கொண்ட உடன்பிறந்தார், cousin german, cousins german, இருதிசைப் பெற்றோரையும் பொதுவாகக்கொண்ட உடன் பிறந்தாரின் பிள்ளைகள்.

**Germ'an,** *n.* செர்மன்நாட்டுக் குடிமகன்; செர்மன் நாட்டு மொழி; *a.* செர்மன் நாட்டுக்குரிய; செர்மன் நாட்டு மக்களைச் சார்ந்த; செர்மன் மொழி சார்ந்த; செர்மன் நாடு மொழி பண்பு ஆகியவற்றின் தனிப்பட்ட இயல்பு வாய்ந்த; (தொ.) German flute, தற்காலத்திய புல்லாங்குழல்; German measles, சின்னம்மை போன்ற தொத்துநோய்; German Ocean, இங்கிலாந்துக்கும் செர்மன் நாட்டுக்கும் இடைப் பட்ட வடகடல்; German sausage, பக்குவப்படுத்தப் பட்ட இறைச்சியை உள்ளீடாகக் கொண்ட உணவுப்பண்ட வகை; German silver, செர்மன் வெள்ளி, வெள்ளிரும்பு, துத்த நாகம் செம்பு ஆகியவை (1: 1: 3 வீதத்தில்) கலந்த வெண் கலவை; German text, பழய செர்மன் எழுத்துவடிவம்; High German, மேல்வரைச் செர்மன் மொழி; முன்பு தென் செர்மனியின் மொழிவகையாயிருந்த செர்மன் மொழியின் இலக்கிய நடை; Low German, தாழ்வரைச் செர்மன் மொழி, செர்மானிய திசை மொழி; ஆங்கில டச்சு மொழிகளை உள்ளடக்கிய மேலைச் செர்மானிய மொழிக்குழு.

**Ger'man-band',** *n.* தெருப்பாடகர் தொகுதி.

**german'der,** *n.* வயிற்று நோய் தீர்க்கும் மூலிகைப் பூண்டு.

**germane',** *a.* நெருங்கிய உறவுடைய; தக்க, உகந்த, பொருந் திய, இசைவான.

**Germanesque',** *a.* செர்மானியச் சிறப்புப் பண்புகள் கொண்ட.

**German'ic,** *n.* செர்மானிய இனத்தவரின் பொதுமூல மொழி; *a.* செர்மானிய இனம் சார்ந்த; செர்மானிய இனத்தவரின் முழுமொத்தப் பரப்புடைய; செர்மானிய இனத்தவரின் மொழி சார்ந்த; செர்மன் நாட்டுமக்கள் சார்ந்த; (தொ.) East Germanic, கிழைச் செர்மானியம், வழக்கிழந்துபோன காதிக் (Gothic) மொழியுடன் கிட்டத்தட்டத் தடமற்றழிந்துபோன பர்கண்டியன் (Burgundian) வாண்டல் (Vandal) முதலிய மொழிகள் அடங்கிய செர்மானிய மொழிக்குழு; கிழைச் செர் மானியப் பொதுமூல மொழி; North Germanic, வட செர்மானியம், நார்வீஜிய டேனிய ஸ்வீடிய ஐஸ்லாந்திய (Icelandic) மொழிகள் அடங்கிய செர்மானிய மொழிக்குழு; வட செர்மானிய பொது மூலமொழி; West Germanic, மேலைச் செர்மானியம், செர்மன் மொழியும் ஆங்கிலம் பிரிசியன் (Frisian) டச்சு (Dutch) மொழிகளும் உள்ளடக்கிய செர்மானிய மொழிக்குழு; மேலைச் செர்மானியப் பொதுமூல மொழி.

**Ger'manish,** *a.* ஓரளவு செர்மானிய பண்புடைய.

**Ger'manism,** *n.* செர்மானிய மொழிமரபு; செர்மானிய கருத்துக்கள், செர்மானிய முறைகள்.

**Ger'manist,** *n.* செர்மானிய மொழி நூல் அறிஞர்; செர் மனியைப் பற்றிய செய்திகளில் அறிஞர்.

**Germanis'tic,** *a.* செர்மானிய மொழிக்கல்வியைச் சார்ந்த.

**German'ity,** *n.* செர்மானிய தனிஇயல்பு, செர்மானிய தனிச்சிறப்புப் பண்புக் கூறுகளின் தொகுதி.

**germa'nium,** *n.* எளிதில் முறிவுறும் வெண்ணிற உலோகத் தனிமம்.

**Germ'anize,** *v.* செர்மானியராகு; செர்மானியராக்கு; செர் மானிய பாங்குகளைப் பின்பற்று.

**German'ophil,** *n.* செர்மன் ஆர்வலர்.

**German'ophobe,** *n.* செர்மன் வெறுப்பாளர்.

**germ'-cell,** *n.* கருநிலை உயிர்மம், இனமரபுத்தொடர்ச்சியை முன்னிட்டு உடலின் பிற உயிர்மங்களிலிருந்து தனிப்படுத்தப் பட்டு மறுபாலுயிர்மத்துடன் கலக்கும்வரை முதிராநிலையில் வைக்கப்பட்டிருக்கும் உயிர்மம்; கருஉயிர்மம்; கருவின் உயிரணுக்கூறு.

**germ'en,** *n.* கருமூல விதை, விதையின் கருவடிவம்; கரு வகம், மலரின் பெண்ணுறுப்பு; தண்டுமுளை.

**germ'icide,** *n.* நுண்மக் கொல்லி, நோய் நுண்மமழிக்கும் மருந்து.

**germ'inal,** *a.* முதிரா உயிர்மம் சார்ந்த; முதிரா உறுப்பின் செயற்படாத் தொடர்ச்சின்னம் சார்ந்த, முதிரா நிலையில் உள்ள, கருவிதை நிலையில் உள்ள; முளைபற்றிய; கருவினுக் குரிய; வளர்ச்சித் தொடக்கப்படியில் உள்ள, கருவிலேயே உள்ள.

**germ'inant,** *a.* அரும்புகிற; துளிர்க்கிற; முளைவிடுகிற; வளர்ச்சித் தொடக்கநிலையில் இருக்கிற.

**germ'inate,** *v.* முளைவிடு, அரும்பு, தளிர்; துளிர்க்கச் செய்; வளரத் தொடங்கு; புதிது வளரச்செய்; உண்டுபண்ணு.

**germ'-layer,** *n.* கருவின் மூல அடுக்குக்களில் ஒன்று.

**germ'on,** *n.* நீண்ட துடுப்புக்கள் கொண்ட பெருங்கடல் உணவு மீன் வகை.

**germ'-plasm,** *n.* ஊன்மத்தில் மரபுவழிக்கூறுகளைத் தொடர்ச்சியாகத் தாங்கி நிற்கும் மூலப்பொருள்.

**gerontoc'racy,** *n.* முதியவர் ஆட்சிமுறை; முதியவர் ஆட்சிக்குழு.

**gerontol'ogy,** *n.* மூப்பியல்நூல், மூப்புப்பற்றியும் மூப்புக் குரிய நோய்கள் பற்றியும் ஆராயும் இயல்நூல் துறை.

**gerontotherapeut'ics,** *n.* மூப்பு நோய் சிகிச்சை ஆய்வு நூல் துறை.

**gerryman'der,** *n.* தேர்தலில் கட்சிநலன்நோக்கித் தொகுதி யில் செய்யப்படும் திருகுதாளம்; *v.* தேர்தலில் கட்சிக்குப் பெரும்பான்மை வருவதற்கு நேர்மையற்றமுறையில் சூழ்ச்சிப் பிரிவினை செய்.

**ge'rund,** *n.* லத்தீன் மொழியில் வினையாகவும் செயலாற்றும் தொழிற் பெயர்; ஆங்கில மொழியில் தொழிற்பெயராக இயலும் தொடரெச்சவடிவம்.

**ge'rund-grinder,** *n.* லத்தீன்மொழி ஆசிரியர்; கல்விச் செருக்குடைய ஆசிரியர்.

**gerun'dial,** *a.* லத்தீன் மொழியில் வினையாகவும் செயலாற்றும் தொழில் பெயருக்குரிய; ஆங்கில மொழியில் தொழிற் பெயராக இயலும் தொடரெச்ச வடிவத்துக்குரிய; தொழிற் பெயர்வடிவான, தொழிற்பெயர் போன்ற.

**gerun'dive,** *n.* லத்தீன் மொழியில் தொழிற்பெயரிலிருந்து உருவான பெயரடைவடிவம்; *a.* லத்தீன் மொழியில் வினையாகவும் செயலாற்றும் தொழிற்பெயருக்குரிய; ஆங்கில மொழியில் தொழிற்பெயராக இயலும் தொடரெச்ச வடிவத்துக்குரிய; தொழிற்பெயர் வடிவான, தொழிற்பெயர்போன்ற.

**gess'o,** *n.* வண்ணந்தீட்டலிலும் சிற்பக் கலையிலும் பயன் படுத்தப்படும் உறைகள்.

***Gestalt',*** (செர்.) *n.* (உள.) சினைகடந்த முழுமுதல்; சினைகளின் செயல் எதிர்ச்செயல்கள் மூலம் சினைத்தொகுதி கடந்த பண்பாற்றலுடைய முழுஉரு.

**ges'tant,** *a.* பளுவேற்றப்பட்ட.

***Gestá'po,*** (செர்.) *n.* செர்மன் மறை ஒற்றுக் காவற் படை.

**gesta'tion,** *n.* சூல்நிலை, கருக்கொண்டிருக்கை; கருவில் இருக்கும் நிலை.

**gestator'ial, ges'tatory,** *a.* ஊர்திசார்ந்த.

**gestic'ulate,** *v.* மெய்ப்பாடு தோன்ற உறுப்பசைவுசெய், உறுப்பமைதிகொள், உடலுறுப்பு இயக்கிச் சாடை காட்டு; அவிநயக்குறிப்பால் தெரிவி; பேச்சுடன் சைகை கலந்து தெரிவி.

**gesticula'tion,** *n.* உறுப்பசைவுகள், அங்கச்சேட்டை.

**ges'ture,** *n.* சைகை; குறிப்புணர்த்தும் உடலுறுப்பசை வியக்கம்; மெய்ப்பாட்டசைவு; உணர்ச்சிக்குறிப்பு; மெய்ப் பாடியக்கும் அணிநயத்திறம்; செயல் தூண்டும் செயற் குறிப்பு; கருத்தறிவிக்கும் செயற்குறிப்பு. *v.* உடலுறுப் பியக்கிச் சாடைகாட்டு; அவிநயக்குறிப்பால் தெரிவி; பேச்சுடன் சைகை கலந்து தெரிவி.

**get,** *n.* உழைப்பின் விளைவு; ஈன்றெடுத்த குஞ்சுகுட்டித் தொகுதி; *v.* கொள்; விலைக்குப்பெறு, வாங்கு; விலையாக அடை; அடையும்படி செய்; அடை; ஈட்டு; நாடிப்பெறு; தேடிப்பெறு; பெற்றுக்கொடு; பெற்றெடு; ஊதியமாகப்பெறு; ஆதாயமாய்ப் பெறு; நன்கொடையாகப் பெறு; கொடுக்கப் பெறு; எய்தப்பெறு; நோய்வரப்பெறு; தண்டனையாகப்பெறு; துய்க்கப்பெறு; விளைவாகப் பெறு; கைக்கொள்; பிடி, கைப்பற்று; சென்றுசேர்; சென்றடை; வென்றடை; வென்று கீழ்ப்படுத்து; விஞ்சிமேம்படு; தொல்லைப்படுத்து; திகைக்க வை; உணர்ச்சிமூலம் வசப்படுத்து; கவர்ச்சிக்கு ஆளாக்கு; சுவையுணர்வு கண்டு பயன்படுத்திக்கொள்; புரிந்து கொள்; பொருளுணர்ந்துகொள்; கற்றுணர்; மறவாமல் நினைவில் வைத்துக்கொள்; திடுமென நினைவுபடுத்திக்கொள்; கணித்துக்காண்; காண்; கண்டுணர்; கம்பியில்லாத் தந்தியில் தொடர்பு கண்டுபிடி; தொடர்புகண்டு மேற்கொள்; தொடர்பு ஏற்படுத்திக்கொள்; தூண்டு; இயங்குவி; ஆகுவி; செயல் முற்றுவி; வென்றுகொள்; அமர்வி; ஆகு; பெற்றிரு; கடவதாயிரு, வேண்டியதாயிரு; (தொ.) be getting on for, அணுகிக்கொண்டிரு, நோக்கிச் சென்றுகொண்டிரு; get about, இங்குமங்கும் செல்; நோய்க்குப்பின் நடமாடத் தொடங்கு; செயல் தொடங்கு; பரவு; get abroad, பரவு; தொலைசெல்; வெளிநாடு செல்; get ahead, get along, முன்னேறிச்செல்; முந்து; தொடர்ந்து முன்னேறிக் கொண்டிரு; get at, அடை, சேர்; கிட்டு, எட்டு; get a thing for a person, ஒருவருக்காக ஒருபொருள் பெற்றுக்கொடு; get away with it, முயற்சியில் வெற்றியடை; தண்டனை பெறுமல் தப்பு, பணிவச்சமின்றிச் செய்துமுடி; திண்ணமாகச் செய்; get back, திரும்பி வா; திரும்பிச்செல்; இழந்ததை மீண்டும் பெறு; get by, நிறைவேற்றுவதில் வெற்றியடை; get down, இறங்கு; get in, நுழை; பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப்படு; விளைச்சலை வீட்டிற்குக் கொண்டுவா; கடன் மீட்டுப் பிரி; கொடுத்த காலத்திற்குள் செய்துமுடி; திருப்பி அடிப்பதில் வெற்றிபெறு; get it, தண்டிக்கப் பெறு; get it into one's head, நம்பு; get knowledge of, get wind of, தகவல் உணர்; கேள்விப்படு; செய்தி அறியப்பெறு; get off, தப்பியோடு, தப்பிப்பிழை; மன்னிக்கப் பெறு; குற்றமற்றவ ரென்று தீர்ப்பளிக்கப் பெறு; தண்டனை குறைக்கப் பெறு; புறப்படு; உறக்கங்கொள்; இறங்கு; விடுபடு; விலகிச்செல்; get off with, காதல் தொடர்பு கொள்; காதல் உறவாடு; get on, ஏறு; எழுந்துநில்; முன்னேறு, வெற்றியடை; செழிப்படை; இணங்கு; ஒத்திசை; அணிமணிகளைப் பூட்டு, குமிழ்மாட்டியுடன் கால்புதைமிதிகளை மாட்டு; get one a place, ஒருவருக்கு ஒரு பணியிடம் பெற்றுக்கொடு; get one's hand in, சில செயல்முறைகளில் நன்கு பழக்கமடைந்து விடு; get on one's nerves, எரிச்சலேற்படும்படி செய்; get on the brain, வேறெதிலும் கருத்துச்செல்லாமல் தனிப்பட மறவாமல் எண்ணிக்கொண்டிரு; get on to, எடுத்த காரியங்களில் வெற்றியடை; get out, வெளியேறு; வெளிப்படு; வெளிப் படுத்து; வெற்றிகரமாக வெளிச்செல்; உண்டுபண்ணு; ஆக்கு; சிக்கலிலிருந்து விடுவித்துக்கொள்; get out of hand, கையிலிருந்து நழுவு; கட்டுப்பாட்டினின்று மீறு; வேலையைமுடி; பழக்கத்தை மெல்லக் கைவிடு; செயலைத் தட்டிக்கழித்துவிடு; தகவல் கிளறிப்பெறு; பணம் தட்டிப்பறி; get out of sight, get out of one's depth, மறைந்து போ; நீரில் நிலைகொள்ளா ஆழத்திலிரு; கண்ணிற்குப் புலப்படாது நீருக்கடியில் மறை; get over, ஏறிக் கடந்து செல்; தாண்டு; வெல்; வெற்றிகொள்; விடுபடு, நலம் பெறு; தொல்லைதருஞ் செயலுக்கு முடிவுகட்டிவிடு; get person upon a subject, பொருள்பற்றிப் பேசவை; get possession of, அடை; உடைமையாக அடையப்பெறு; வசப்படுத்திக்கொள்; get round, பசப்பிப்பேசு; தட்டிக்கழி; ஏமாற்று; வஞ்சி; சிக்கவை; இணங்கச் செய்; தூண்டி வயப்படுத்து; பேசி இணங்கச்செய்; get round to, ஒருமட்டில் செய்ய ஒருப்படு; get ship under way, கப்பலை ஓடச்செய்; கப்பல் புறப்படச்செய்; get the best of it, முழு வெற்றியடை; get the upper hand, நலமடை; ஆதாயமடை; விஞ்சு, மேம்படு; வெற்றிபெறு; get the wind up, செயற்கையாக உணர்ச்சி வேகத்தை எழுப்பு; தேர்வுக்காகக் கடுமையாக உழை; get the worst of, மிகு கேடுறு; பெருந்தோல்வியடை; முழு இழப்பும் அடை; get through, முடித்துக் கொள்; இருசட்டமன்றங்களிலும் நிறைவேற்று; இருசட்டமன்றங் களிலும் நிறைவேற்றப்பெறு; நேரம் போக்குவி; தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ள வை; get through with, செயல் வெற்றிபெறு; பொறுத்திருந்து தாங்கி முடிவு காண்; get together, ஒருங்குகூட்டு; ஒருங்கு கூடு; திரட்டு; ஒருங்குகூடிக் கலந்தாய்வுசெய்; ஒருங்குகூடித் திட்டத்துக்கு ஆக்கம்தேடு; get under, தணித்தடக்கு; அடக்கு; get up, எழு; மேலேறு; கிளர்ந்தெழு; அழன்றெழு; ஏற்பாடு செய்; முன்னேற்பாடு முற்றுவி; வேட்டைவிலங்கு புள் வகையில் மறைவிலிருந்து வெளிப்படு; நிகழ்ச்சிக்காக முன்னெருக்கம் செய்துவை; பாடம்செய்; ஏட்டைக் கட்டடமிட்டு அமை; get up stream, இயந்திரத்துக்குப் போதிய நீராவி சேமித்துவை; கோப மீதூரப்பெறு; ஆற்றல் மீதூரப்பெறு; get well, get better, நோய் நீங்கிக் குணம்பெறு; நோயினின்று விடுபடு; get wise to, தெரிந்துகொள்; அறிந்துகொள்; get with child, கருவுறச் செய்; சூலடையச்செய்; have got to do, செய்து தீரவேண்டியதாயிரு.

**get-at'-able,** *a.* எளிதில் காணக்கூடிய; கிட்டக்கூடிய; கிடைக்கக்கூடிய, பெறத்தக்க.

**get'away,** *n.* தப்பியோடல்; தொடக்கம்; புறப்படுகை; மூடியைத் திறத்தல்.

**gett'ing,** *n.* இலாபம், ஆதாயம்; பலன்; பிறப்பித்தல்.

**get'-together,** *n.* தலைக்கூடுதல்; சமுதாயப் பொதுக்கூட்டம்; *v.* கலந்து ஆய்வுசெய்.

**get-up',** *n.* கட்டமைப்புத் தோற்றம்; ஒழுங்கமைதி; இணை வமைதி.

**ge'um,** *n.* ரோசா இனச் செடிவகை.

**gew'gaw,** *n.* பகட்டு விளையாட்டுப் பொருள்; சிங்கார அணிமணி; சிறுபொருள்; பயனற்ற துணுக்கு.

**gey'ser,** *n.* வெந்நீரூற்று; வெந்நீர்க் கொதிகலம்

**gey'serite,** *n.* நீரூற்றுப் படிவுகளால் ஏற்படும் சுண்ணப் பாறை.

**Ghana'ian,** *n.* கானு (Ghana) நாட்டவர்; கானு நாட்டுக் குடியுரிமையாளர்; *a.* கானு நாட்டைச் சார்ந்த, கானு நாட்டுக்குரிய.

**gha'rri, gha'rry,** (இ.) *n.* வாடகைக் குதிரைவண்டி.

**ghast'ly,** *a.* கோரமான; பேய் போன்ற; பேய்த்தன்மை வாய்ந்த; அதிர்ச்சி உண்டுபண்ணுகிற; நடுக்கம் தருகிற; சாவுக் களையுடைய; விளறிய; வெறித்த தோற்றமுடைய; மயிர்க்கூச்சிட வைக்கும் வண்ண வடிவமுடைய; புன்முறுவல் வகையில் போலியாக வருவித்துக்கொள்ளப்பட்ட; *adv.* கோரமாக, வெறிப்பாக.

**ghat, ghaut,** (இ.) *n.* மலைத்தொடர்; மலைக்கணவாய்; ஒடுக்கமான வழி; ஆற்றில் இறங்குதுறை; (தொ.) burning ghat, ஆற்றின் படிமேடையில் இறந்தவர்களை எரிக்குமிடம்.

**Gha'zi,** (அரா.) *n.* இஸ்லாமிய புனிதப் போர்வீரர்; புறச் சமயிகளை எதிர்த்தழிக்கும் இஸ்லாமியர்; இஸ்லாமிய மத வெறியர்; துருக்கிய உயர்மதிப்புப் பட்டம்.

**ghee,** (இ.) *n.* நெய்.

**gherk'in,** *n.* ஊறுகாய் போட உதவும் வெள்ளரிவகைப் பிஞ்சு.

**ghett'o,** *n.* (வர.) நகரத்தில் யூதர்கள் வாழும் பகுதி; *pl.* ghett'os.

**Ghib'elline,** *n.* இத்தாலி நாட்டில் இடைநிலைக்காலத்தில் பேரரசரை ஆதரித்த கட்சிகளுள் ஒன்று; *a.* இடைநிலைக்கால இத்தாலியில் பேரரசரை ஆதரித்த கட்சி சார்ந்த.

**ghost,** *n.* ஆவி, கடவுளின் தூய ஆவி; ஆன்மா; பேய், பேய் உரு, பேய்த்தோற்றம்; நிழலுருவம், பொய்த்தோற்றம்; உருவெளிக்காட்சி; நலிந்து மெலிந்தவர், எலும்புக் கூடு; உள்ளீடற்ற பொருள்; சாரமற்ற பொருள்; வெற்றுரு வரை; நிழற்பண்பு; சாயல், உருவரைத் தடம்; கூலிக் கலைஞர்; தொலை நோக்கிக் கண்ணுடி வில்லையின் கோளாறு காரணமாகத் தோற்றும் ஒளிப்பட்டை அல்லது இரட்டித்த உருவம்; தொலைக் காட்சியில் காலந்தாழ்த்தி அனுப்பப்பட்ட அடையாள அலையுடன் பின் அலை கலப்பதால் ஏற்படும் இரட்டைத் தோற்றக் குளறுபடி; (தொ.) give up the ghost, உயிர்விடு; Holy Ghost, பரிசுத்த ஆவி; lay ghost, பேய்த் தோற்றம் மறையச் செய், பேயொழி; not the ghost of a chance, சிறிதுகூட வாய்ப்பில்லா நிலையில்; raise ghost, பேய் உருத்தோற்றுவி, பேய் வரவழை.

**ghost'ly,** *a.* பேய்த்தோற்றமுள்ள; ஆவி சார்ந்த, உடற் பண்பற்ற; ஆன்மிக; சமயம் சார்ந்த; (தொ.) ghostly adviser, ghostly director, ghostly father, பாவமன்னிப்பு அளிக்கும் குரு; ghostly comfort, ghostly counsel, சமய குருவின் பாவமன்னிப்பு ஆறுதல்; ghostly weapons, சமய வாதங்கள்; திருச்சபை சார்ந்த தண்டனைகள்; our ghostly enemy, பேய்முதல்வன், சைத்தான்.

**ghost'-word,** *n.* எழுத்துப் பிழையாலோ அச்சுப்பிழையாலோ தோன்றி உளதாகப் பாவிக்கப்பட்டு வழக்கிலேற்படும் சொல், போலிச்சொல்.

**ghoul,** *n.* கீழை நாட்டுக் கதைகளில் வரும் பிணந்தின்னும் பேய்.

**ghyll,** *n.*=gill².

***gial'lo anti'co,*** (இத்.) *n.* இத்தாலிய இடிபாடுகளில் காணப் படும் உயர்ந்த செம்மஞ்சள் சலவைக்கல்.

**gi'ant,** *n.* அரக்கர், இராட்சதர்; பேராற்றல் வாய்ந்தவர்; இயல்பு மீறிய உயரமுடையவர்; இயற்கை மீறிய உயர முடைய விலங்கு; மட்டுமீறிய உயரமுடைய மரம்; பெருந் திறலாளர்; *a.* அளவிற்பெரிய பேராற்றல் வாய்ந்த.

**gi'ant-cement,** *n.* உறுதிச் சீமைக்காரை.

**gi'ant-hood, gi'antism,** *n.* அரக்க நிலை; அரக்கத்தன்மை; கதையில் அரக்கர் நிகழ்ச்சியியல்பு; பெரிய அளவு, பேருருவம்.

**giantom'achy,** *n.* தேவாசுரப் போர்.

**gi'ant-powder,** *n.* சுரங்க வெடிமருந்து வகை.

**giant's-stride, gi'ant-stride,** *n.* இராட்சத நடைக்கருவி.

***giaour,*** (பெர்.) *n.* இஸ்லாமிய வழக்கில் புறச்சமயி; கிறித்தவர்.

**gib,** *n.* பொருத்தும் உலோகமுளை; மர ஆப்பு.

**gibb'er,** *n.* புரியாப்பிதற்றல்; குரங்கின் சலசலப்பு ஒலி; *v.* புரியாது பிதற்று, குரங்கின் சலசலப்பு ஒலிசெய்; பிதற்று; உளறு; பரபரப்பாகப் பேசு.

**gibb'erish,** *n.* தெளிவற்ற பேச்சு, புரியா மொழி; பொருளற்ற ஒலி; இலக்கண வழுவுடைய குற்றம் செறிந்த பேச்சு.

**gibb'et,** *n.* கொலைக்கம்பம், தூக்குக் கம்பம்; தூக்கிடு தண்டனை; *v.* தூக்கிலிடு; பொது இகழுக்கும் கண்டனத் துக்கும் ஆளாக்கு.

**gibb'on,** *n.* கிழக்கிந்தியத் தீவுகளிலுள்ள நீண்ட கைகளுள்ள குரங்குவகை.

**gibb'ose, gibb'ous,** *a.* குவிவான; தொங்கலாகப் புடைத்து உந்திக்கொண்டிருக்கிற, தொப்பை போல முன் தள்ளிய; கூனலான, குவிந்து வளைந்த முதுகுடைய; திங்கட்கோளில் அரைவட்ட அளவிற் கவிந்து முழுவட்டத்தில் குறைந்த, ஏற்றத்தாழ்வாய் இருபுறமும் புறங்குவிந்த.

**gibe,** *n.* இகழ்ச்சி, ஏளனம்; *v.* இகழ்ச்சிசெய்; எள்ளிநகையாடு.

**gib'lets,** *n. pl.* வாத்தின் கரள், சமைப்பதற்கு முன் வெட்டி எடுக்கப்படும் வாத்தின் ஈரல் இறக்கை அரைவைப் பை முதலியவற்றின் தொகுதி; (தொ.) giblet soup, வாத்தின் கரள் வடிசாறு.

**gib'us,** *n.* இசைநாடகத்தில் அணியப்படும் தொப்பி; நீள மடிப்புக் குல்லாய்.

**gidd'y,** *a.* கிறுகிறுப்பான, தலைசுற்றுகிற; மயக்கங்கொண்ட, மயங்கிக் கீழே விழத்தக்க, தள்ளாடுகிற; தலைசுற்றவைக்கிற, மயக்கம் ஊட்டுகிற, தடுமாற்றம் தருகிற; தலைசுற்றுகிற வேகத்திற் சுழல்கிற; சுழன்றோடுகிற; இறுமாந்த; தன்னை மறந்த; எளிதில் உணர்ச்சி வசப்படுகிற; முன்னுய்வற்ற, ஆழ்ந்தாய்வற்ற; மனஉறுதியற்ற, ஒருநிலைப்படாத; அடிக்கடி மாறுகிற; சிறுபிள்ளைத்தனமான, விளையாட்டியல்புடைய; *v.* கிறுகிறுக்கப்பண்ணு; மயங்கச்செய்; கிறுகிறுப்புறு, மயங்கு; மனஉலைவு உண்டுபண்ணு.

**gift,** *n.* கொடை; கொடைப்பொருள்; நன்கொடை; பரிசில்; அரும்பெறற் பேறு, அருந்திறம், அரும்பண்பு, அருங்குணம்; அருட்கொடை, வரம்; இயற்கைத்திறம், இயற்பேறு, இயற் பண்பு; பண்புக்கூறு; கையுறைக்கொடை, கைக்கூலி; (சட்.) மனமார்ந்த உடைமை மாற்றம்; *v.* கொடையளி; நன்கொடையாக வழங்கு; பண்புத்திறமாக இயலுவி; (தொ.) at a gift, மனமார்ந்த கொடையாக; free gift, மன மார்ந்த கொடை; gift coupon, விலைச்சரக்குடன் பெறும் நன்கொடைச்சீட்டு; gift of the gab, (பே-வ.) பேச்சுத்திறம்; வம்பளக்கும் இயல்பு; gift of the tongues, அயல் மொழிகள் பேசும் திறம்; முற்காலக் கிறித்தவர்களிடையே தெரியாத மொழிபேசும் அருள்திறம்.

**gift'-book,** *n.* பரிசு ஏடு, பரிசிற் புத்தகம்.

**gif'ted,** *a.* இயற்கைப் பேறுகள் நிரம்ப வாய்க்கப்பெற்ற; இயல்பாகத் திறமையுள்ள.

**gift'-horse,** *n.* பரிசிற் குதிரை, நன்கொடைக் குதிரை; (தொ.) look a gift-horse in the mouth, கொடைப்பொருளில் குற்றங்காண்.

**gig¹,** *n.* இருசக்கர ஒற்றைக் குதிரைவண்டி; கப்பல் பாய்மரங் களும் துடுப்புகளும் வைக்கப் பயன்படும் குறுகிய சிறுபடகு; பந்தயப்படகு.

**gig²,** *n.* மீன் ஈட்டிவகை.

**gig³,** *n.* பம்பரம் சுற்றும்போது தெறித்து வீழ்ந்து தானும் சுற்றும் பம்பரத்தின் மீதுள்ள முகட்டுப்பம்பரம்; துடுக்குப் பெண்.

gigante'an, gigan'tic, *a.* பேருருவம் படைத்த; மிகப்பெரிய; இயற்கை மீறிப் பெரிதான, அரக்கனைப்போன்ற.

gigantesque', *a.* அரக்கனுக்கேற்ற; பெரும்பேருருவத்தைக் குறிக்கிற.

gig'gle, *n.* கொக்கரிப்பு, இளிப்பு, ஒழுங்கு கெட்ட பெண்ணின் பண்பற்ற சிரிப்பு; *v.* இளி; பண்பற்ற சிரிப்புச் சிரி; ஒழுக்கிலிபோல் நகை.

gig'let, gig'lot, *n.* பண்பற்ற பெண்; பண்பின்றி நகைப்பவள்.

gig'man, *n.* இருசக்கர ஒற்றைக் குதிரைவண்டி வைத்திருப்பவர்; ஆன்மிகக் கலையுணர்ச்சியற்ற சமுதாயக் கட்டுப்பாட்டு மதிப்புடைய நடுத்தர வகுப்பின் உறுப்பினர்.

gigman'ity, *n.* ஆன்மிகக் கலை உணர்ச்சியற்ற சமுதாயக் கட்டுப்பாட்டு மதிப்புடைய நடுத்தர வகுப்பு.

gig'mill, *n.* இழைதூக்கும்பொறி, துணியின் பரப்பை உயர்த்தும் பொறி; இழைதூக்கும்பொறியாலை; இழை தூக்கும் பொறியாலைக் கட்டிடம்.

gig'olo, *n.* இணைப்பு ஆண்ஆட்டக்காரர்; *pl.* gig'olos.

gig'ot, *n.* ஆட்டுக்கால் இறைச்சி; (தொ.) gigot sleeve, ஆட்டுக்காலிறைச்சி போன்ற உடுப்பின்கையுறுப்பு.

gilamon'ster, *n.* அமெரிக்காவில் நியூ மெக்சிகோ (New Mexico) அரிசோனு (Arizona) முதலிய பகுதிகளிற் காணப்படும் பெரிய நச்சுப் பல்லிவகை.

gil'bert, *n.* காந்த இயக்க ஆற்றல் அலகு.

Gilbert'ian, *a.* கில்பர்டு சலிவன் (Gilbert & Sullivan) துணைவர்களின் இசை நாடகத்தில் தனிச்சிறப்பாகவுள்ள முரண் நகைச்சுவைக்குரிய.

gild[1], *n.*=guild.

gild[2], *v.* பொன்வேய், மெல்லிய தங்கத்தகடிட்டுப் பொதி; பொன் மெருகிடு, தங்கமுலாம்பூசு; பொன்னிற மூட்டு; பொன் சாயல் கொடு; கட்டுப்பாடுகளுக்குப் பணமுலம் கவர்ச்சியூட்டு; பகட்டுச் சொற்களால் போலிக்கவர்ச்சியூட்டு; புறக்கவர்ச்சியால் பூசி மெழுகு, போலிப் பகட்டுச்செய்; (தொ.) gild pill, கசப்புப் பொருளைப் புறக்கவர்ச்சி உடையதாக்கு.

gild'ed[1], *n.* gild என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

gild'ed[2], *a.* பொன்முலாமிட்ட, தங்க மெருகுபூசிய, பொன் வேய்ந்த; (தொ.) Gilded Chamber, பிரிட்டன் நாட்டு மாமன்றத்தின் மேல் அவை; பெருமக்கள் அவை; gilded spurs, வீர விருதுச் சின்னவகை; gilded youth, புதுநாகரிகப் பாணியுடைய இளைஞர்.

gill[1], *n.* செவுள், மீன் முதலிய நீர்வாழ் உயிர்களின் கன்னத்தினருகேயுள்ள உயிர்ப்பு உறுப்பு; கோழியின உயிர்களின் தொங்குதாடை; காளான் தலைப்பின் அடியிலுள்ள சுற்றுக் கீற்றுத்தொகுதி; மனிதர் காதருகில் தாடையின்கீழுள்ள தசை; *v.* செவுள் அகற்று; நாய்க்குடையின் தலையடிக்கீற்றுத் தொகுதியை வெட்டு; செவுளினைப் பற்றும் வலையையிட்டு மீன்பிடி; (தொ.) rosy about the gills, உடல்நலத் தோற்றமுள்ள.

gill[2], *n.* மரங்களடர்ந்த ஆழ்ந்த மலைப்பள்ளத்தாக்கு; ஒடுங்கிய காணுறு.

gill[3], *n.* சில்லறை நீர்ம முகத்தலளவை வகை.

Gill[4], *n.* பெண், சிறுமி (கதை இலக்கியச் சுட்டுக் குறிப்பு); (தொ.) Jack and Gill, சிறுவனும் சிறுமியும், ஆணும் பெண்ணும்.

gillaroo', *n.* அயர்லாந்து நாட்டில் உணவுக்குரிய நன்னீர் மீன்வகை.

gill'-cover, *n.* செவுள் பொதிந்த எலும்பு, செவுள்முள்.

gill'ie, *n.* ஸ்காத்லாந்து நாட்டில் மேட்டுநிலப் பகுதித் தலைவனின் பணியாள்; ஸ்காத்லாந்தில் வேட்டையாளருடன் செல்லும் துணைவர்; வேட்டைத்துணைச் சிறுவன்.

gill'-net, *n.* மீனைச் செவுள்களின்மூலம் சிக்கவைக்கும் வலை.

gill'yflower, *n.* 'கிராம்பு' மணம் வீசும் மலர் வகை.

gilt[1], *n.* பொன் பூச்சுமானம்; பொன்வண்ணப் பளபளப்பு; *a.* பொன்வேய்ந்த; தங்க மெருகேற்றப்பட்ட; பொன்வண்ணமான; (தொ.) cloth gilt, பொன் எழுத்துப் புத்தகக் கட்டிடம்; gilt spurs, வீர விருதுச் சின்னவகை; take the gilt off the gingerbread, மேற்பூச்சு அகற்று; மேலீட்டுக் கவர்ச்சியை விலக்கிக்காண்.

gilt[2], *n.* பெண் பன்றிக்குட்டி.

gilt[3], *v.* gild என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

gilt'-cup, *n.* மஞ்சள்நிற மலர் வகை.

gilt'-edged, *a.* விளிம்புகள் பொன்வண்ணக் கவர்ச்சியூட்டப்பெற்ற; உச்ச உயர்தரமான; (தொ.) gilt-edged paper, gilt-edged securities, gilt-edged stocks, நிறைகாப்புடைய பத்திரங்கள்.

gim'bals, *n.* கடலில் திசைகாட்டி முதலிய கருவிகளைத் தளமட்டமாக வைத்திருப்பதற்கான இயந்திரக் குழையச்சு அமைவு.

gim'crack, *n.* பயனற்ற பகட்டுப்பொருள்; விளையாட்டு உடைமை; பயனற்ற அணிகலன்; *a.* பகட்டான; போலியான; பயனற்ற.

gim'let, *n.* துறப்பணம், மரவேலைத் துளைப்புக்கருவி.

gim'let-eyed', *a.* மிகக் கூரிய பார்வையுள்ள.

gimp, *n.* கெட்டியான நடுப்பகுதியுள்ள இழை; உள்ளீடான கம்பியுடைய கெட்டி இழை; பூவேலையில் சித்திர விளிம்புக் கெட்டி இழை; கம்பியிணைத்த பட்டுத் தூண்டில் இழை.

gin[1], *n.* கண்ணி, வலை, பொறி; பாரந்தூக்கி; பளுத்தூக்கி; பருத்தியினின்று விதைகளை அகற்றும் பொறி; *v.* கண்ணியில் அல்லது வலையில் சிக்கவை; பஞ்சினின்று விதைகளை இயந்திரத்தினுல் நீக்கு.

gin[2], *n.* சாராய வகை, தானியங்களினின்று அல்லது ஊற வைத்த மாவினின்று இறக்கப்பட்ட கடுந்தேறல் குடிவகை; (தொ.) gin and it, கடுந்தேறலும் இத்தாலிய நாட்டு இன் தேறலும் கலந்த பானம்.

gin[3], *v.* (செய்.) begin.

gin'gal, gin'gall, (இ.) *n.* சுழலச்சின்மீது வைத்துச் சுடப்படும் துப்பாக்கி வகை.

gin'gelly, (இ.) *n.* எள்; நல்லெண்ணெய்.

gin'ger, *n.* இஞ்சி; இஞ்சிக்கிழங்கு; எழுச்சி, கிளர்ச்சி, ஊக்கம், சுறுசுறுப்பு; தூண்டுதல்; மங்கிய செம்மஞ்சள் நிறம்; *a.* மங்கிய செம்மஞ்சள் நிறமான; *v.* இஞ்சியிட்டு மணமும் சுவையுமுண்டாக்கு; இஞ்சிதினி; குதிரையின் மூலத்தில் இஞ்சியிட்டுச் சுறுசுறுப்புக்கொள்ளச்செய்; எழுச்சியூட்டு; (தொ.) black ginger, தோல் நீக்கப்படா இஞ்சி வகை; ginger group, சட்ட மன்றத்தில் அரசியலை விறுவிறுப்பாகச் செயலாற்றும்படி தூண்டும் கட்சிக்குழு; ginger shall be hot in the mouth, இன்பத்தின்மீதுள்ள பற்று அழிவில்லாதது; white ginger, தோல் நீக்கப்பட்ட இஞ்சி வகை.

gingerade', ginger-ale', ginger-beer', ginger-pop', *n.* இஞ்சியின் மணமும் சுவையும் ஊட்டப்பெற்ற கரியுயிரகி கலந்த குடிவகை.

gin'gerbrandy, *n.* உடல் வலிமை தரும் மருந்தாகப் பயன்படும் கடுந்தேறல் வகை.

gin'gerbread, *n.* இஞ்சியப்பம்; இஞ்சியினுல் சுவையும் மணமும் ஊட்டப்பெற்ற வெல்லப் பண்டம்; (தொ.) gingerbread nut, குமிழ்மாட்டி வடிவுடைய சிறுஇஞ்சி அப்பம்; take the gilt off the gingerbread, மேற்பூச்சை நீக்கு; மேலீடான கவர்ச்சிப் பொருளை அகற்று.

gin'gerly, *a.* விழிப்புடன் மெல்லச் செல்கிற; *adv.* முன்னெச்சரிக்கையுடன், மெல்லமெல்ல.

gin'ger-nut, *n.* குமிழ்மாட்டி போன்ற சிறு வடிவுடைய இஞ்சியப்ப வகை.

**gin'gerous**, *a.* இஞ்சிபோன்ற ; இஞ்சிச் சுவையொத்த.

**gin'ger-race**, *n.* இஞ்சிவேர், இஞ்சிக்கிழங்கு.

**gin'ger-snap'**, *n.* இஞ்சியப்ப மாச்சில்லு, இஞ்சிச் சுவையும் மணமும் கொண்ட 'பிஸ்கோத்து'.

**gin'ger-wine'**, *n.* தட்டியிட்ட இஞ்சியும் புளித்த சர்க்கரையும் நீரும் கலந்து உண்டுபண்ணிய பிரித்தானிய இன்தேறல் வகை.

**ging'ham**, *n.* வண்ண இழைகளால் கோடுகள் அல்லது கட்டங்களிட்டு நெய்யப்பட்ட பருத்தி அல்லது மென்சணல் துணி.

**gin'gili**, *n.*=gingelly.

**gingiv'al**, *a.* பல்லெயிறு சார்ந்த.

**gingivi'tis**, *n.* பல்லெயிற்று வீக்கம்.

**ging'ko**, *n.* விசிறி மரவகை.

**gi'nglymus**, *n.* (உள்.) இரு திசைகளில் மட்டும் இயங்கக்கூடிய கீல்மூட்டு.

**gin'-horse**, *n.* ஆலையை இயக்கும் குதிரை.

**gin'-house**, *n.* பஞ்சினின்று கொட்டைகளை அகற்றும் ஆலை, பஞ்சரைக்குமிடம்.

**ginn'er**, *n.* பஞ்சினின்று பருத்திக் கொட்டைகளை நீக்குபவர்.

**ginn'ery**, *n.*=gin-house.

**gin'palace**, *n.* இன்தேறற் பகட்டில்லம்.

**gin'seng**, *n.* மருந்துவேர்.

**gin'-shop**, *n.* இன்தேறல் விடுதி.

**gin'sling**, *n.* நல்மணத் தண் குடிவகை.

**gin'-trap**, *n.* பல்லுடைத் திண் விசைப்பொறி.

**gip'sy**, *n.* நாடோடி இனவகை சார்ந்தவர்; நாடோடி; சூழ்ச்சி மிக்க கயவர் ; குறும்புக்காரர் ; கருநிற உடலுடையவர் ; குறும்புக்காரப் பெண் ; கருநிறப் பெண் ; *a.* நாடோடி இன வகை சார்ந்த; மனைப் புறவாழ்வுப் பண்பு தோய்ந்த; சமுதாயக் கட்டுப்பாடற்ற ; *v.* நாடோடி இனவகையினர்போல மனைப்புற வெளிகளில் அல்லது கூடாரங்களில் தங்கி உண்டாடி வாழ்.

**gip'symoth**, *n.* இலை தழைகளுக்குச் சேதம் விளைக்கும் அந்துப் பூச்சிவகை.

**gip'sywort**, *n.* தோல்நிறம் மாற்றப் பயன்பட்ட செடிவகை.

**giraffe'**, *n.* ஒட்டைச்சிவிங்கி.

**gi'randole**, *n.* சுழல் வாணம், சுழலும் சக்கரத்திலிருந்து வாணங்களை எறியும் வெடியமைவு ; சுழலும் நீர்த்தாரை ; மெழுகுதிரிக் கொத்துவிளக்கு ; சிறுமணிக்கற்களால் சூழப்பட்ட பெரிய மணிக்கற் காதணி ; பெரிய மணிக்கல்லைச் சூழச் சிறுமணிகளையுடைய தொங்கட்டம்.

**gi'rasol, gi'rasole**, *n.* சிவப்பு ஒளிகாலும் நீரகப்படிக்க மணிக்கல் வகை.

**gird** [1], *v.* சுற்றிக்கட்டு, வரிந்து கட்டு; கச்சையினால் இறுக்கிக் கட்டு ; சூழ், வளை ; சுற்றியிரு ; சூழ்எல்லையாய் அமை ; அணி ; பூட்டு ; வலிமையும் ஆற்றலும் அளி ; கச்சையில் வாள் செருகிக்கொள்; கச்சையின்மேல் வாள் முதலியவற்றை வைத்துக்கட்டு ; (தொ.) gird oneself, gird one's loins, ஆடைகளை வரிந்து கட்டிக்கொண்டு புறப்படு, மடிதற்று முந்துறு, செயலாற்ற ஆயத்தமாகு.

**gird** [2], *n.* வசை மொழி ; ஏளனம் ; *v.* ஏளனம் செய், இகழ்.

**gird'er**, *n.* தூலம், தள ஆதாரமாக இடப்படும் பெரிய உத்தரம்; தூலமாகப் பயன்படும் இரும்புப் பாளம் ; பாலங்களுக்கும் மோடுகளுக்கும் ஆதாரமான எஃகுக்கட்டுமானச் சட்டம்.

**gird'ing**, *n.* வட்டமாகச் சூழ்ந்துள்ள பொருள்.

**gir'dle**, *n.* அரைக்கச்சை, அரைஞாண்; ஒட்டியாணம்; கச்சை போல் சூழ்ந்துள்ள பொருள்; (உள்.) கைகால்களைத் தாங்கும் என்புவளையம் ; பட்டை வளையம் ; பட்டை அகற்றுவதனால் மரத்தைச் சுற்றி ஏற்படும் வளையம் ; ஒளிபிறங்கும்படி பட்டை தீட்டப்பட்ட மணிக்கல்லின் விளிம்பு; *v.* கச்சையினால் கட்டு ; வட்டமாகச் சூழ்ந்துகொள் ; மரத்தைச் சுற்றிப் பட்டையகற்றி வளையமிட்டு மரத்தின் புதுவளர்ச்சி ஊக்கு ; (தொ.) hip girdle, pelvic girdle, இடுப்பு அரை சூழ்ந்துள்ள என்புவளையம் ; pectoral girdle, shoulder girdle, தோள் எலும்பு வளையம்.

**girl**, *n.* பெண் மகவு ; மணமாகா இளம்பெண் ; சிறுமி ; பெண் ; காதலி ; வேலைக்காரி; *a.* பெண்பாலரான; (தொ.) Girl Guide, Girl Scout, சாரணப் பெண்கள் படையினர் ; old girl, முன்னாளைய மாணவி ; பெட்டைக் குதிரை.

**girl'hood**, *n.* சிறுமிப் பருவம் ; கன்னித் தன்மை.

**girl'ish**, *a.* சிறுமிக்குரிய ; சிறு பெண் போன்ற ; சிறு பெண்ணின் பண்பு வாய்ந்த.

**Giron'dist**, *n.* பிரஞ்சுப் பேரவையில் 1791 முதல் 1793 வரையிலிருந்த மிதவாதக் குடியரசுக் கட்சி உறுப்பினர் ; பிரஞ்சு மிதவாதக் குடியரசுக் கட்சியின் கொள்கை உடையவர் ; *a.* பிரஞ்சு மிதவாதக் குடியரசுக் கட்சி சார்ந்த ; பிரஞ்சு மிதவாதக் குடியரசுக் கட்சியின் கருத்துக்களையுடைய.

**girt** [1], *n.* முரண்கணிப்பீட்டளவை, தட்டையாயிராத பரப்புக்களில் மேடுபள்ளக் கணிப்புக்களுடன் குறுக்காகவும் சுற்றியும் எடுக்கப்படும் அளவை ; *v.* முரண்கணிப்பீட்டளவை எடு.

**girt** [2], *v.* gird [1] என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**girth**, *n.* சேணக்கச்சு, சேணத்தைக் குதிரையின் உடலுடன் இணைத்துக் கட்டும் துணி அல்லது தோல்வாரினாலான சுற்றுப் பட்டை ; பக்கச் சுற்றளவு, நீள்உருளை ஒத்த வடிவுடைய வற்றின் சுற்றுப்பட்டை அளவு ; *v.* உடலை வட்டமாக அணைந்துகிட ; சேணத்தை இறுகக்கட்டு ; வரிந்து கட்டு ; சுற்றி வளை, சூழ் ; சுற்றுப்பட்டை அளவு எடு.

**gist**, *n.* கருப்பொருள் ; பிண்டப் பொருள், சாரம் ; உயிர்க் கருத்து ; சுருக்கம்.

**gitt'ern**, *n.* தொடக்ககால நரப்பிசைக் கருவி வகை; *v.* நரப்பிசைக் கருவி வகையை மிழற்று.

**give**, *n.* இழைவு, தொய்வு, நீண்டு கொடுத்துச் சுருங்கும் இயல்பு, விட்டுக்கொடுப்பு ; *v.* தா, கொடு ; பரிசாக அளி ; இரவலர்க்கு ஐயம் கொடு ; விலைக்குக் கொடு ; செலவழி ; வீணாக்கு ; மணஞ்செய்து கொடு ; உடைமை வழங்கு ; ஒப்புவி ; துற ; மரபுரிமையாக விட்டுச்செல் ; விளைவித்து உதவு ; பயனாக வழங்கு ; செயல் உதவு ; ஆட்படுத்து ; ஈடுபடுத்து ; தெரிவி ; அறிவி ; இசைவளி ; வாய்ப்பளி ; வசதிசெய்து கொடு ; இணக்கமளி ; சலுகையளி ; தருவித்துக் கொடு ; தேடிக்கொடு ; ஏற்படுத்திக் கொடு ; தோற்றுவி ; காட்டு ; குறித்துக் காட்டு ; செலுத்து ; இடங்கொடு ; விட்டுக்கொடு ; தொய்வுறு ; விழு ; தகர் ; தளர்வுறு, தளர்ந்திறு ; கரை ; சுருங்கு ; திற ; (தொ.) give and take, கொடுத்து வாங்கல் ; பரிமாற்றம் ; ஒருவர்க்கொருவர் விட்டுக்கொடுத்தல்; give away, ஒன்றும் பெற்றுக்கொள்ளாமல் கொடு ; காட்டிக் கொடு ; மணமகளை மணமகனிடம் கைப்பிடித்துக்கொடு; பரிசாக வழங்கு; give back, திருப்பிக்கொடு; பழைய நிலையில் வை; give birth to, பெறு; ஈனு ; தோற்றுவி : give chase, துரத்து ; பின் தொடர்ந்து செல் ; give ear, கேள், செவிசாய் ; give forth, வெளியிடு ; புறந்தள்ளு ; give ground, இடங்கொடு, விட்டுக்கொடு இணங்கு; give head, give line, give rein, இன்னும் மிகுதி உரிமை அளி, மேலும் வாய்ப்புக் கொடு ; give in to, கீழ்ப்படி, விட்டுக்கொடு ; give in to one, (பே-வ.) செம்மையாகத் திட்டு, நன்கு அடி ; give off, வெளியிடு, உமிழ், புறந்தள்ளு; give oneself away, தன்னை அறியாது அல்லது வாய்தவறி மறை செய்தியை வெளியிட்டுவிடு ; give out, வெளியிடு, சொல், தெரிவி; பங்கிடு ; முட்டுப்பாடுறு; முற்றிலும் களைப்படைந்துவிடு ; give over, செயல் நிறுத்து, செய்யாமலிரு; கைவிட்டுவிடு ; தவிர், ஒப்புவி ; give place, give place to, இணங்கு, விட்டுக்கொடு; give rise to, காரணமாகு, விளைவி; give the lie to, ஒருவர் பொய்யரெனப் பலரறியக் குற்றம் சாட்டு; give tongue, வேட்டை நாய் வகையில் மோப்பங் கண்டு குரை ; give up, கைவிடு, விட்டுவிடு ; சரணடை,

கீழ்ப்படி; செயல் தவிர்; தொடர்பினின்றும் விலகிக்கொள், நோய் வகையில் தீராதெனக்கூறு; நம்பிக்கையிழ; give way, பின் தங்கு, பின்வாங்கு, இடங்கொடு, விலகிக்கொள், பெரும்பாரம் தாங்காமல் அறு; பிளந்து இறு; இடிந்து விழு.

gi'ven, *a.* கொடுக்கப்பட்ட; குறிப்பிடப்பட்ட; மனம் பற்றிய நிலையுடைய; பழகி அடிமைப்பட்டுவிட்ட, ஏற்றுக்கொள்ளப் பட்ட; (தொ.) given name, தீக்கை அல்லது ஞான ஸ்நானத்தின்போது சூட்டப்பட்ட பெயர்; given over, தீய நெறிகளுக்கு ஆளாகிவிட்ட.

giv'er, *n.* கொடுப்பவர், கொடையாளி.

giv'ing, *n.* கொடுத்தல்; கொடுக்கப்பட்ட பொருள்; *a.* கொடுக்கிற.

gizz'ard, *n.* பறவைகளின் குடற்பைகளுள் இரண்டாவதான அரைவைப்பை, கற்குடல்; மீன்-பூச்சி-நத்தை வகைகளின் சதைப்பற்றுள்ள இரைப்பை; (தொ.) fret one's gizzard, தேவையின்றி மனதைத் தொல்லைப்படுத்திக் கொள்; stick in one's gizzard, விருப்பமற்றதாயிரு.

glab'rous, *a.* மயிர் அல்லது மென்மயிர் அற்ற, மழமழப்பான தோலுடைய; துய்யில்லாத, சிலிம்பிலாத.

*glace*, (பிர.) *a.* துணி-பதனிட்ட தோல் முதலியவற்றின் வகையில் மழமழப்பான, மெருகிட்ட; பழங்கள் வகையில் சர்க்கரையிட்டுக் குளிர் பதனம் செய்யப்பட்ட.

gla'cial, *a.* பனிக்கட்டிக்குரிய; பனிக்கட்டிமயமான; உறைந்த; இயல்பாய் உறைநிலையிலுள்ள; எளிதில் உறைநிலைப்படுகிற; (வேதி.) மணிஉருப்பட்ட; (மண்.) பனிப்பாளம் பரவிய; பனிப்பாளத்தின் செயலாலான; (தொ.) glacial epoch, glacial era, glacial period, பனிக்கட்டி ஊழி, நிலவுலக வடபாதி முழுதும் பனிக்கட்டியால் மூடப்பட்ட மண்ணியல் ஊழிக்காலம்.

gla'cialist, *n.* மண்ணியல் பனிக்கட்டியூழியின் செயற்பாட்டினை ஆய்பவர்.

glac'iate, *v.* பனிக்கட்டியின் செயலால் மெருகூட்டு; நிலத்தின்மீது சறுக்கும் பனிக்கட்டியின் செயலுக்கு உட்படுத்து.

gla'ciated, *a.* பனிக்கட்டியின் செயலுக்குட்பட்ட வடுவுடைய; பனிக்கட்டியின் செயலால் மெருகிடப்பட்ட; பனிக்கட்டிப் பாளங்களால் மூடப்பட்ட, சறுக்கு பனிக்கட்டித் தேக்கங்களால் மூடப்பட்ட.

gla'cier, *n.* சறுக்கு பனிக்கட்டிப்பாளம், சறுக்கு பனிக்கட்டியாறு; பனிக்கட்டிக்குவியல்.

glaciol'ogist, *n.*=glacialist.

gla'cis, *n.* எதிரிகள் எளிதில் சுடப்படுவதற்கு வாய்ப்பான கோட்டைப் புறவாரச் சரிவு; *pl.* gla'cia, glac'ises.

glad, *a.* மகிழ்ச்சியுடைய; செய்தி வகையில் மகிழ்ச்சி தருகிற; அகமகிழ்வு தெரிவிக்கிற; இயற்கை வகையில் மகிழ் தோற்றமுடைய, இன்பக்காட்சிகள் நிரம்பிய, இன்னொளியார்ந்த; *v.* மகிழ்வூட்டு; (தொ.) glad neck, சட்டைவகையில் முன்புறம் தெரியும்படித் திறந்துகாட்டப்படும் கழுத்து, தாழ்வாகத் தைத்த கழுத்துப் பகுதி.

gladd'en, *v.* உவப்பூட்டு; இன்பங்கொடு; ஊக்கு.

glade, *n.* காட்டினுள் திறந்த வெளி; காட்டுவழிப்பாதை.

glad'iate, *a.* வாள் வடிவமுள்ள.

glad'iator, *n.* பண்டைய ரோமாபுரிக் காட்சியரங்குகளில் வாட்போர் வீரன்; காட்சிச் சண்டை வீரன், மல்லன்; அரசியல் முதலிய துறைகளில் சொற்போர் வல்லுநர்.

glad'iole, *n.*=gladiolus.

gladiol'i, *n. pl.* gladiolus என்பதன் பன்மை வடிவங்களில் ஒன்று.

gladiol'us, *n.* (தாவ.) வாள்போன்ற இலைகளையுடைய செடி வகை; (உள்) மார்பெலும்பின் நடுப்பாகம்; *pl.* gladiol'uses.

glad'some, *a.* மகிழ்ச்சி மிக்க, இன்பந்தருகிற, உவப்பான.

Glad'stone, Glad'stone-bag', *n.* பளுக்குறைவான பயணப்பை வகை.

Glad'stone claret, *n.* மலிவான பிரஞ்சுக் குடிவகை.

glair, *n.* முட்டையின் வெண்கரு; முட்டை வெண்கருவினின்றும் செய்யப்படும் பசைப்பொருள் வகை; முட்டை வெண்கருவையொத்த பசைப்பொருள் வகை; *v.* முட்டைகளின் வெண்கருவினை மேலே பூசு.

glaive, *n.* (செய்.) அகல்வாள், வாள்.

glam'orous, *a.* மருட்டுகிற, மயக்குகிற, ஏமாற்றி மனத்தைக் கவர்கிற.

glam'our, *n.* மயக்கும் அழகு; மாயக் கவர்ச்சி; மந்திர ஆற்றல், வசியத்திறம்; *v.* மயக்கு, மாயவித்தையால் மருட்சி செய்; மாயத்தினால் வசப்படுத்து.

glance[1], *n.* கண்ணோட்டம்; நொடிநேரப்பார்வை; கணநேர நோக்கு; சாய்வியக்கமோதல்; சாய்வியக்கம்; பட்டுத்தெறிப்பு; மின்னொளி; மின்னியக்கம்; மின்னொளி வீச்சு; மின்னியக்க வீச்சு; மட்டையைச் சாய்வானநிலையில்கொண்ட பந்தடி; *v.* பட்டுத் தெறித்தோடு; பட்டுப்படாமல் விரைந்தோடு; மின்னிடு, பளிச்சிடு; மின்வெட்டு; அம்புபோல் பாய்; கதிர் பாய்ச்சு; கண்பார்வை செலுத்து; கணநேரம் நோக்கு; மேலீடாகக் குறிப்பிட்டு விரைந்துசெல்; கவனித்துங் கவனியாதது போல் விரைந்து மேலே செல்; போகிற போக்கில் குறிப்பிடு; ஏளனமாகக் குறிப்பிட்டுச் செல்; குறிப்பாக வாசித்துச் செல், மேலீடாக வாசித்துச்செல்.

glance[2], *n.* ஒளிரும் தனி உலோகக் கலவை வகை.

glance'-coal, *n.* அனல்மலி நிலக்கரி வகை.

gland, *n.* (உட.) சுரப்பி, கழலை; (தாவ.) செடியினத்தின் புறம்பேயுள்ள உயிர்மத் தொகுதி.

glan'dered, *a.* குதிரைச் சயநோயினால் பீடிக்கப்பட்ட.

glan'ders, *n. pl.* குதிரைச் சயம், மனிதரையும் தொற்றிக் கொள்ளும் குதிரைத் தொற்றுநோய் வகை.

glandif'erous, *a.* கொட்டை வகைகளைக் கொண்டுள்ள.

glan'diform, *a.* சுரப்பிபோன்ற; கொட்டை வகை வடிவமுள்ள.

gland'ular, *a.* சுரப்பிகள் கொண்டுள்ள; சுரப்பிகளடங்கிய; சுரப்பிகள் சார்ந்த.

gland'ule, *n.* சிறு சுரப்பி; நுண்கழலை.

gland'ulous, *a.*=glandular.

glare, *n.* கூசொளி; கடுவெயில் வெக்கை, பட்ரொளி வெப்பு; வெறிப்புப் பேரொளி; பளபளக்கும் பனிப்பரப்பு; பளபளக்கும் கண்ணாடிப் பரப்பு; வெறித்த நோக்கு; குத்திட்ட பார்வை; *v.* கூசு பேரொளி வீசு, கண்ணை உறுத்தும் ஒளிகாலு; முனைப்பான காட்சியளி, வெறித்த தோற்றமளி; அச்சந் தோன்றப் பார், குத்திட்டுப் பார்; உறுத்த நோக்கினால் கடுவெறுப்பினைக் காட்டு.

glar'ing, *a.* ஒளிவீசுகிற, பளபளப்பான; கண் கூசச்செய்கிற; வெளிப்படையான, முனைப்பான.

glar'ingly, *adv.* முனைப்பாக.

glass, *n.* பளிங்கு; கண்ணாடி; கண்ணாடி போன்ற பொருள்; கண்ணாடியின் இயல்பும் பண்பும் உடைய பொருள்; மணி உரு அமைப்பற்ற பாறை வகை; மணிஉரு அமைப்பற்ற பாறைத்துண்டு; கண்ணாடியால் செய்யப்பட்ட பொருள்; கண்ணாடிக் குவளை; கண்ணாடிக் குவளை நீர்மஅளவு; கண்ணாடிக் குவளையிலுள்ள குடிவகை; கண்ணாடிக் குவளைப் பானம்; கண்ணாடிக் கலம்; முகக் கண்ணாடி; மூக்குக்கண்ணாடி வில்லை; கடிகார முகப்புவட்டில்; முற்கால நாழிகை வட்டில்; வானிலை வட்டில்; தொலை நோக்காடி; தொலைஆடி; நுண்ணோக்காடி; காற்றழுத்தமானி; வண்டியின் கண்ணாடிப் பலகணி; கண்ணாடிக் கருவிகலத்தொகுதி; பலகணிக் கண்ணாடித்தொகுதி; செடிகளுக்கான காப்புமனைக் கண்ணாடித் தொகுதி; *a.* கண்ணாடியினால் செய்யப்பட்ட; *v.* பளபளப்பாக்கு; மெருகிடு; கண்ணாடியில் மாட்டு, கண்ணாடிக்குள் வைத்தமை; கண்ணாடியின் கீழ்வை; கண்ணாடிக்குப் பின்னால் வை;

கண்ணுடிபோடு; கண்ணுடி அமைத்துக்கொடு; ஒளி கண்ணுடியில்பட்டு மீளச்செய், எதிர் உருக்காட்டு, நிழலிடு; (தொ.) glass wool, வெப்பத் தடையாகவும் கட்டுமான இடையடைப்பாகவும் பஞ்சுபோலப் பயன்படும் நுண்ணிழை வடிவான கண்ணுடி; live in a glass house, தாக்குதலுக்கு அல்லது சுடுசொல்லுக்கு எளிதில் உள்ளாகு; soluble glass, water glass, சாம்பர சிலிகை, உவர சிலிகை.

glass'-blower, *n.* கண்ணுடிப்பொருள்களை உருகுநிலையில் ஊதி உருவாக்குபவர்.

glass'-blowing, *n.* ஊதிக் கண்ணுடிப் பொருள்களை உருவாக்கும் முறை.

glass'-case, *n.* கண்ணுடி மூடுகாப்புப் பேழை.

glass'-cloth, *n.* கண்ணுடிகளைத் துடைத்து உலர்த்துவதற்கான துணி; கண்ணுடி இழைகளைக் கொண்டு நெய்யப்பட்ட பொருள்; தேய்ப்புத் துணி, கண்ணுடித்துகள்கள் தூவப்பட்ட மெருகிடுவதற்கான துணி.

glass'-crab, *n.* பளிங்கனைய நத்தையின முட்டைப்புழு வகை.

glass'-culture, *n.* கண்ணுடிக்காப்பு மூடிகளில் செடியினம் பேணி வளர்க்கும் முறை.

glass'-cutter, *n.* கண்ணுடித்தகடுகளை வெட்டுவதற்கான கருவி; கண்ணுடி வெட்டும் தொழில்செய்பவர்.

glass'-cutting, *n.* கண்ணுடி வெட்டி உருவாக்கும் முறை.

glass'es, *n. pl.* மூக்குக்கண்ணுடி; கண்ணுடிவில்லைகள்; (தொ.) musical glasses, இசைக்கருவி வகை.

glass'-eye, *n.* கண்ணுடிச் செயற்கைக் கண்; குதிரைகளின் பார்வை குருடாக்கும் நோய் வகை.

glass'ful, *n.* கண்ணுடிக்கலம் கொள்ளும் அளவு; *pl.* glass'fuls.

glass'-gall, *n.* உருக்கப்பட்ட கண்ணுடியின்மேல் படியும் அழுக்கேடு.

glass'-house, *n.* கண்ணுடித்தொழிற்சாலை; செடிகளை வளர்ப்பதற்கான கண்ணுடிக் காப்பகம்; கண்ணுடிமோடிட்ட நிழற்படத் தொழில்மனை.

glassine', *n.* பளிங்கு போன்ற தாள்.

glass'ing-jack, *n.* தோல் பதனிடுபொறி.

glass'-man, *n.* கண்ணுடி செய்பவர்; கண்ணுடி விற்பவர்.

glass'-painting, *n.* வேதியியல் முறையில் கறைப்படுத்துவது மூலமாகக் கண்ணுடியின்மேல் படங்கள் எழுதும் கலை.

glass'-paper, *n.* கண்ணுடித்தூள் தூவப்பட்ட தாள்.

glass'-snake, *n.* எளிதில் ஒடிந்துவிடும் வால் உடைய கால் அற்ற தென் அமெரிக்க பல்லி வகை.

glass'-soap, *n.* கண்ணுடி செய்பவர்கள் கண்ணுடியிலிருந்து வேண்டாத நிறத்தை அகற்றுவதற்குப் பயன்படுத்தும் மங்கனிய ஈருயிரகை போன்ற பொருள்.

glass'ware, *n.* கண்ணுடிக் கருவிகலப் பொருள்களின் தொகுதி.

glass'work, *n.* கண்ணுடித் தொழிற்சாலை; கண்ணுடித் தட்டுமுட்டுப் பொருள்கள்; கண்ணுடித் துணைக்கருவிகலங்கள்.

glass'wort, *n.* கண்ணுடி செய்வதில் முன்பு பயன்படுத்தப்பட்ட செடிவகை.

glass'y, *a.* கண்ணுடிபோன்ற, கண்ணுடியின் இயல்புள்ள; கண்வகையில் பார்வை மங்கலான, உணர்ச்சியின் தடமற்ற, துரித்த தோற்றமுடைய; தண்ணீர் வகையில் படிகம் போன்ற, அலையற்ற, அமைதியுடைய, ஒளிர்கிற.

Glaswe'gian, *n.* கிளாஸ்கோ (Glasgow) நகரவாசி; *a.* கிளாஸ்கோ நகரம் சார்ந்த.

glau'berite, *n.* சாம்பல்நிற வெள்ளைக் கனிப்பொருள் வகை, பாறை உப்புவகையில் பெரும்பாலும் காணப்படும் உவர சுதைய கந்தகை.

Glaub'er's salt, Glaub'er's salts, *n.* செர்மன் வேதியியலாரான கிளாபர் (J. R. Glauber 1604–68) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட பளிங்கனைய நீருடை உவரக் கந்தகை.

glaucom'a, *n.* (மரு.) கண்விழி விறைப்புநோய்.

glauc'ous, *a.* கடற்பச்சை நிறமுள்ள, சாம்பல் நிறங்கலந்த நீலவண்ணமுடைய; (தாவ.) கொடிமுந்திரிப் பழங்களைப் போல நேர்த்தியான பசுமை போர்த்த.

glaze, *n.* மட்பாண்டத்தின் மெருகிட்ட பரப்பு; மண்பாண்டத்தை மெருகூட்டுவதற்குரிய பளிங்கியற்பொருள்; துணி தோல் அப்பங்கட்குரிய மேல் மெருகுப் பரப்பு; கண்ணின் ஆடை படர்ந்த தோற்றம்; வண்ணங்கள்மீது தோய்விக்கப்பெறும் பளபளப்பான பளிங்குத்தாள்; பளபளப்பான தோற்றம்; *v.* பலகணிச்சட்டங்களில் கண்ணுடி பதி; படங்களுக்குக் கண்ணுடிப்பலகணிகளமை; மட்பாண்டங்கள்மீது மெருகுப் பரப்பிடு; மட்பாண்டங்கட்கு வண்ணமெருகிடு; வண்ணங்கள் மீது மெருகுத்தாள் பொருத்து; துணிதோல் அப்பங்கள்மீது மெருகுத்தோடு அமை; கண்மீது வெண்படலம் படர்வி; தேய்த்துப் பரப்பைப் பளபளப்பாக்கு.

glaz'en, *a.* கண்ணுடிபோன்ற; பளபளப்பாக்கப்பட்ட.

glaz'er, *n.* மட்பாண்டமெருகிடுபவர்; தாள் மெருகிடுபவர்; பொருள்களைப் பளபளப்பாக்குபவர்.

gla'zier, *n.* சாளரச் சட்டங்களுக்குக் கண்ணுடி பொருத்துபவர்.

glaz'ing, *n.* கண்ணுடி பொருத்துதல்; கண்ணுடி பொருத்தும் கலை; பளிங்குப்பூச்சுப் போர்த்தும் கலை; மெருகிடுவதற்குப் பயன்படுத்தப்படும் பொருள்; சாயங்களின்மீது பொதியப்படும் வண்ணக்கண்ணுடித் தாள்.

gleam, *n.* மினுமினுப்பு, பளிச்சிடுதல்; மெல்லிய ஒளிக்கதிர்க்கற்றை; தடம், சாயல், இடைப்பட்டுத் தோன்றும் பண்பின் மென்கூறு; *v.* மங்கலாக ஒளிவீசு, மின்னு; பளிச்சிடு.

gleam'y, *a.* மங்கலாக மினுங்குகிற, மங்கல் ஒளிக்கதிர்கள் வீசுகிற.

glean, *n.* பொறுக்கிச் சேர்க்கப்பட்ட பொருள்; பொறுக்குதல்; *v.* சிதறிக்கிடக்கும் கூலக்கதிர்களைப் பொறுக்கு, பொறுக்கிச் சேர்; கொந்து, கொய்; சிறு அளவுகளாகத் திரட்டு, தூர்த்துத்துடைத்துச் சேர்; செய்திகளைத் திரட்டித்தொகு.

glebe, *n.* (செய்.) மண்; மண்கட்டி; நிலம்; வயல்; திருக்கோயில் பணியுடன் இணைவுற்ற நிலம்.

glebe'-house, *n.* சமயகுருவின் குடியிருப்பிடம்.

glee, *n.* மகிழ்ச்சி, எக்களிப்பு; பல் குரற் பாட்டு.

gleep, *n.* அணு ஆற்றல் உண்டாக்கவல்ல அமைவு வகை.

gleet, *n.* சீநீர், புண்ணீர்; புறமேகம், வெட்டைநீர்; *v.* சிலைத்து ஒழுகு.

glen, *n.* இடுங்கிய பள்ளத்தாக்கு.

glen'doveer, *n.* கந்தருவர் போன்ற தேவதை.

glenga'rry, *n.* வட ஸ்காத்லாந்து மேட்டு நிலத்தவர் தொப்பி வகை.

Glenliv'et, *n.* ஸ்காத்லாந்து நாட்டுச் சாராய வகை.

glen'oid, glen'oidal, *a.* (உள்.) எலும்பு வகையில் கிண்ணம் போற்குழிவான.

glib, *a.* வழவழப்பான, இயங்கும்வகையில் தங்குதடையற்ற, எளிதாக வழுக்கிச் செல்கிற; பேச்சுவகையில் ஆற்றொழுக்கான, தடைப்படாத, கருத்தின்றிச் சொல்லோட்டமுள்ள; வெறுஞ்சொல் வளமுடைய; *v.* வழவழப்பாக்கு; *adv.* வழவழப்பாக; தங்கு தடையின்றி; பேச்சளவில், வெறுஞ்சொல்லோட்டமுடன்; சொல்வளமாக.

glide, *n.* இழைவியக்கம், தடையின்றி நழுவிச்செல்லும் போக்கு; சுரநிலையிலிருந்து மறுசுரநிலைக்கு இடையறுது இயங்கும் ஒழுகிசை; (ஒலி.) ஒலியுறுப்புக்களில் ஓரிடத்திலிருந்து பிறிதிடத்துக்கு இடைவிடாது படிப்படியாக இயங்கும் இணை இழையொலி; இழைபு நடனஇயக்கம்; மென்சரிவு; மென்

சரிவுச் சறுக்குதளம்; ஒழுகியல் ஆறு; ஆற்றின் ஒழுகியற் பகுதி; மரப்பந்தாட்டத்தில் தடவடி; v. இழைந்துசெல், மிதவலாகத் தடவிச்செல், நழுவிச் செல், சறுக்கு; நீர்வகையில் ஒழுகலாகச் செல்; பறவைவகையில் மிதவலாகச்செல்; பாம்பு வகையில் தவழ்ந்து ஊர்ந்துசெல்; வண்டிவகையில் தடையற்று ஊர்ந்துசெல்; கப்பல்வகையில் மிதந்துசெல்; ஆள்வகையில் மெல்ல நழுவிச்செல்; பனிக்கட்டிமீது சறுக்காடிச்செல்; பொழுதுவகையில் மெல்லக் கடந்துசெல்; விமானவகையில் இயங்குபொறி இல்லாமலே சறுக்கிச் செல்; மறைவாக நழுவு; முன்னேறுவது தெரியாமல் மெல்ல நகர்ந்து செல்; வேறுபாடு தெரியாமல் படிப்படியாக மாறுதலடை; இழைவுபடச் செலுத்து.

glid'er, *n.* இழைந்து செல்பவர்; இழைந்து செல்வது; பொறி அமைப்பில்லாச் சறுக்கு விமானம்; கடல் விமானம்.

glid'ing, *n.* நழுவிச்செல்கை; பொறியற்ற வானவூர்தியிற் பறத்தல்.

glim, *n.* கணநேரத் தோற்றம்.

glimm'er[1], *n.* மினுக்கம், மங்கிய ஒளி; நடுங்கொளி; தொலைச் சிற்றொளி, மினுங்கொளி; தொலைத் தோற்றம்; கணநேரத் தோற்றம், அரைத்தோற்றம்; v. விட்டொளிர்.

glimm'er[2], *n.* அப்பிரகம், காக்காய்ப் பொன்.

glimm'ering, *n.* மங்கல் ஒளி; தொலைத்தோற்றம்.

glimpse, *n.* கணநேரத் தோற்றம்; மங்கலான மினுக்கொளி; அரைகுறைத்தோற்றம்; விட்டுவிட்டுத் தோன்றும் தோற்றம்; தெளிவற்ற காட்சித் துண்டுத் துணுக்கு; v. கணநேரத் தோற்றமாகக் காண்; விட்டுவிட்டுக்காண்; அரைகுறையாகப் பார்; மங்கலாகத் தோன்று; காட்சிக்குப் புலனாகு.

glint, *n.* பாயொளி, மின்னொளி, மினுக்கம், ஒளிர்வு; v. பளிச்சிடு, மின்னு, ஒளிர்; எதிர் ஒளிகாட்டு.

glissade', *n.* சரிவில் கீழ்நோக்கிச் சறுக்கிச் செல்லுதல்; வழுக்கல் நடனம்; v. சரிவில் கீழ்நோக்கிச் சறுக்கு.

glis'ten, *n.* மினுமினுப்பு, மின்னொளிர்வு; v. விட்டுவிட்டு ஒளிர், மினுமினு, பளபள என்று ஒளிகாலு.

glis'ter, *v.* (செய்.) ஒளிர், மின்னு.

glitt'er, *n.* பளபளப்பு, மினுமினுப்பு; சுடரொளி வீச்சு; v. பளபளப்பாக மின்னு, சுடரொளி வீசு, மின்னி மினுமினுப்பாகப் பகட்டு.

gloam'ing, *n.* அந்தி ஒளி, மாலை அரைஒளி.

gloat, *n.* அவல மகிழ்வு; v. அவலமகிழ்வுகொள்; அவலமகிழ்வுடன் நோக்கு; சிற்றின்ப எண்ணத்துடன் நோக்கி மகிழ்வில் திளை; பேராவலுடன் நோக்கி மகிழ்; காழ்ப்புடன் நோக்கி மகிழ்வுறு; சிற்றின்பத்தில் தோய்; பேராவலிற் கிடந்து மகிழ்; தேடிக்கண்டுமகிழ்; வெறுப்பில் ஆழ்ந்து ஈடுபட்டு மகிழ்.

glob'al, *a.* கோள வடிவமான; உலகெங்கும் பரவியுள்ள; மிகப் பரந்த; முழு உலகளாவிய; அனைத்துலகையும் பாதிக்கிற; மக்களனைவரையும் கருத்திற்கொண்ட; இன எல்லை முழுதளாவிய.

glob'ate, glob'ated, *a.* கோளவடிவமான.

globe, *n.* உருண்டை வடிவப்பொருள்; நிலவுலகம்; கோள்; வான் கோளம்; விண்மீன், ஞாயிறு; வான்கோளகை; வான் கோளகை வடிவ விளக்கப்படம்; அரசுச்சின்னமாகிய பொன் உருண்டை; (உள்.) கண்விழி உருளை; உருண்டை வடிவக் கண்ணாடியாலான விளக்குமூடி; உருண்டை வடிவக் கண்ணாடிக் கிண்ணம்; v. உருண்டை வடிவமாக்கு; கோளமாகு.

globed, *a.* உருண்டை வடிவமான; கோளமுடைய.

globe'-fish, *n.* தன் உருவத்தை உருண்டையாகப் பெருக்கிக் கொள்ளக்கூடிய மீன்வகை.

globe'-flower, *n.* வட்டக் கிண்ண வடிவமான மஞ்சள்நிற மலர்ச் செடிவகை.

globe'-trotter, *n.* அண்டசாரணர்.

globe'-trotting, *n.* உலகச்சுற்றுலா வரல்.

glob'ular, *a.* உருண்டையான, கோளவடிவமுள்ள; சிறு கோளங்களாலான.

glob'ule, *n.* சிறு கோளம், உருண்டைத்துகள்; துளி; மாத்திரை, குளிகை.

glob'ulin, *n.* உப்புநீரில் கரையும் இயல்புடன் உயிரினத் தசைக்கூறுகளில் காணப்படும் புரத வகை.

glob'ulite, *n.* பாறை வகைகளில் காணப்படும் மிகநுண்ணிய உருப்பளிங்குக் கோளம்.

glochid'iate, *a.* (தாவ.) நுனியில் சுணையுடைய, முனையில் ஈட்டி முனைபோன்ற கூறுடைய.

glock'enspiel, *n.* மொத்துச்சலாகை இசைக்கருவி, சம்மட்டியால் அடித்து மிழற்றப்படும் உலோகக் கட்டைகளையுடைய இசைக்கருவி வகை.

glom'erate, *a.* (தாவ., உள்.) நெருக்குக் கொத்துக்களாயுள்ள; v. திரட்டு, உருட்டு.

glom'erule, *n.* (தாவ.) சிதல் விதைகள் கொண்ட சிறு உருண்டை; குறுங்காம்புள்ள பூங்கொத்து; சிற்றுயிர்களின் திரள் மொத்தை வடிவம்; நாடி நரம்புகளின் திரள்முடி; தசைக் கூறுகளின் இணைக்குச்சம்.

gloom, *n.* இருள்; தெளிவற்ற நிலை; மனச் சோர்வு; முக வாட்டம்; கையறவு; v. முகவாட்டமாயிரு, சீறிய தோற்றங் கொள்; (வானிலை.) மப்புமந்தாரமாயிரு; குமுறலாயிரு; அச்சுறுத்துவதாயிரு; இருண்டு தோன்று, இருளடைந்திரு; தெளிவற்றதாயிரு; இருள் பரப்பு; துயர் பரப்பு.

gloom'y, *a.* இருண்ட; வெளிச்சமில்லாத; சோர்ந்த தோற்றமுடைய; சிடுசிடுப்பான; துயருற்ற, மனச்சோர்வு தருகிற.

glor'ia, (ல.) *n.* இறை புகழ்ப்பாடல்; தலைசூழ் ஒளிவட்டம்.

glorifica'tion, *n.* மேன்மைப்படுத்துதல்; இறைபுகழ்ப் பாட்டு; இறைபுகழ்ப்பாடல் தொகுதி.

glor'ify, *v.* பெருமைப்படுத்து; புகழொளி சார்த்து; வானளாவப் புகழ்; அருஞ்சிறப்பேற்று; எளிய பொருளுக்குக் கவர்ச்சியூட்டு; புகழ்பாடிப் போற்று.

glor'ious, *a.* புகழ்பெற்ற; மேன்மை பொருந்திய; கீர்த்தி வாய்ந்த; மிகுபுகழ் தருகிற; மதிப்பு வாய்ந்த; சிறந்த; பெருந்தக்க; பேருவப்புத் தருகிற.

glor'iole, *n.* மிகுபுகழ்; தலைசூழ் ஒளிவட்டம்.

glory, *n.* புகழ்; சீர்த்தி; பெருஞ்சிறப்பு; பெருமைப்படுவதற்குரிய செய்தி; பெருமைக்குரிய செய்தி; புகழ் வழிபாடு; நன்றியறிவிப்பு வழிபாடு; செயற் பெருவெற்றி; செயல் வெற்றி முகடு; வெற்றி வீறு; வள நிறைவு; பெருமிதச் செய்தி; பேரணிகலம்; பேரொளி; கதிரொளிப் பிறக்கம்; நிலா வட்டம்; வானவில் வட்டம்; முகிலொளி வட்டம்; புகழ் ஒளி; சூழொளி வட்டம்; இறை ஒளிமாட்சி; வானுலக மாட்சி; பேரெழில்; தனிப்பெருயர்வு; பேரின்பம்; நிலவுலகு காணுக் கற்பனைப் பேரழகு; v. பெருமைகொள், மகிழ்ந்தாடு; (தொ.) be in one's glory, வள உச்ச நிலையிலிரு; glory be, போற்றி! வாழ்க!; glory of the snow, அல்லி இனத்தைச் சேர்ந்த நீலமலர்ச் செடி வகை.

gloss[1], *n.* மேல் மினுக்கு; மாயத் தோற்றம், அழகிய புற வடிவம்; v. மேற்புறத்தைப் பளபளப்பாக்கு; போலிப் புறத் தோற்றம் கொடு; கவர்ச்சி மிகுத்துக் காட்டு; தீங்கு குறைத்துக் காட்டு.

gloss[2], *n.* ஓர விளக்கக் குறிப்பு; வரியிடை விளக்கக் குறிப்பு; உரை விளக்கம், விளக்கவுரை; பொருள் விளக்கம், பொழிப்புரை; திரித்துரைப்பு; அரும்பதவுரை; வரிவரியான இடைமொழி பெயர்ப்பு; குறிப்புரை; v. மூலவாசகத்தில் விளக்கக் குறிப்புகள் செருகு; விரிவுரை எழுது; மறுப்புரை வரை; வேறு பொருள் கண்டுரை; விளக்கங் கூறியமை.

gloss'al, *a.* (உள்.) நாவுக்குரிய.

glossa'rial, *a.* அரும்பதவுரை சார்ந்த; அரும்பதவுரையின் உருவான; விளக்கம் அடங்கிய.

**gloss'arist**, *n.* விளக்கவுரை வரைபவர்.

**gloss'ary**, *n.* அரும்பதவுரைத் தொகுதி, அருஞ்சொல் விளக்கக் கோவை; விளக்கத் திரட்டு; தனித்துறைச் சொல் விளக்கக் களஞ்சியம்; திரிசொல் விளக்கத் தொகுதி; திசைச்சொல் விளக்கக் களஞ்சியம்.

**glossat'or**, *n.* உரையாசிரியர், இடைநிலைக்கால நாட்டுரிமைச் சமய உரிமைச் சட்டத் தொகுதிகளின் விளக்க உரையாளர்.

**Gloss'ic**, *n.* எல்லிஸ் (A. J. Ellis 1814–90) என்பவரால் திட்டமிட்டமைக்கப்பட்ட ஒலிக்குறி நெடுங்கணக்கு வகை.

**glossi'tis**, *n.* (மரு.) நாக்கின் அழற்சி.

**glossog'rapher**, *n.* விளக்கவுரையாளர்.

**glossog'raphy**, *n.* விளக்கவுரை எழுதுதல்.

**glossola'lia**, *n.* இயல்பு மீறிய உளவியல் உணர்வுநிலையில் தெரியாத மொழிகளில் பேசும் ஆற்றல்.

**glossol'ogy**, *n.* துறைச்சொல் தொகுதி.

**gloss'y**, *n.* (பே-வ.) கவர்ச்சிகரமான பெண்டிருக்குரிய இதழ்; *a.* வழுவழுப்பும் பளபளப்பும் வாய்ந்த; மெருகிடப்பட்ட; (தொ.) glossy magazine, பளபளப்பான தாளில் படங்களுடனும் விளம்பரங்களுடனும் வெளியிடப்படும் கவர்ச்சிமிக்க பெண்பாலாருக்குரிய இதழ்.

**glott'al**, *a.* குரல்வளை வாய் சார்ந்த; (தொ.) glottal stop, (ஒலி.) குரல்வளை வெடிப்பொலி.

**glott'ic**, *a.* குரல்வளை வாய்க்குரிய, நாவிற்குரிய; மொழி சார்ந்த.

**glott'is**, *n.* குரல்வளை முகப்பு.

**Glouces'ter**, *n.* பாலடைக்கட்டி வகை.

**glove**, *n.* கையுறை, கைச்சாடு; குத்துச்சண்டைக்கான கைக் கவசம்; *v.* கையுறையிடு; கையுறை வழங்கியுதவு; கையுறை போல் பொதிந்து மூடு; (தொ.) fit like a glove, சரி நுட்பமாகப் பொருந்து; hand and glove, hand in glove, மிக நெருங்கிய பழக்கமுள்ள நிலையில்; நெருங்கிய கூட்டுறவுடன்; take off the gloves, வாதிடும் வகையில் கண்டிப்பாயிரு; எதிர்ப்பில் கண்ணோட்டம் தவிர்; take up the glove, அறைகூவலை ஏற்றுக்கொள்; throw down the glove, அறைகூவி அழை; without the gloves, வாதத்தில் கண்டிப்புடன்; எதிர்ப்பில் கண்ணோட்டம் காட்டாமல்.

**glove'-fight**, *n.* கைகளுக்குத் திண்ணுறையணிந்து செய்யப்படும் குத்துச்சண்டை.

**glove'-money**, *n.* கைக்கூலி, இலஞ்சம்.

**glov'er**, *n.* கையுறை செய்பவர்; கையுறை விற்பவர்.

**glove'-shield**, *n.* அடிகளைத் தவிர்ப்பதற்காக வீரன் இடக் கையுறைமீது அணியும் கேடயம்.

**glove'-stretcher**, *n.* கையுறை விரல்களைப் பெரிதாக்குவதற்கான கத்தரிக்கோல் வடிவமுள்ள கருவி வகை.

**glow**, *n.* கனலொளி, வெந்தழலொளி; பிறங்கொளி; வெப்பு; ஒளிவண்ணம், செந்தழல் வண்ணம்; அழகொளி; ஒளி மிக்க தோற்றம்; சிவப்பு வண்ணம்; முகச் சிவப்பு; எழுச்சி யார்வம், ஆர்வத் தணல்; ஆர்வ உணர்ச்சி; *v.* அழன்றெழு; தீக்கொழுந்தின்றி ஒளியும் வெப்பமும் காலு; கனன்றெரி; நின்றொளிர், தளராது ஒளி வீசு; அழலொளி வீசு; ஒளி வண்ணம் காட்டு; உடலுளங்கொதித்தெழு; உணர்ச்சியுடன் உடல் விதிர்விதிர்ப்புறு; முகஞ்சிவப்புறு; ஆர்வமுறு.

**glow'er**, *n.* வெறித்த நோக்கு, அச்சுறுத்தும் பார்வை; *v.* உறுத்துப் பார்; சினத்தினால் புருவங்களை நெரி, புருவங்களை நெரித்து நோக்கு.

**glow'-lamp**, *n.* மின் விளக்கு.

**glow'-worm**, *n.* மின்மினி.

**Gloxin'ia**, *n.* (தாவ.) மணிவடிவ அமெரிக்க மலர்ச்செடி வகை.

**gloze**, *n.* பொய்த்தோற்றம்; *v.* போலி விளக்கம் கூறியமை; குற்றந் தணித்துக் காட்டு, குற்றங்களை மூடி மழுப்பு; இன்சொல் கூறு, பசப்புரை கூறு; முகமன் உரை, கெஞ்சு, இச்சகம் பேசு.

**glo'zing**, *n.* முகப் புகழ்ச்சி, ஏமாற்று.

**gluci'na**, *n.* வெள்ளை உலோகத் தனிம வகையில் கெட்டி உயிரகை.

**glucin'ium, glucin'um**, *n.* (வேதி.) கடல்வண்ணக் கல்லிலிருந்து பெறப்படும் கெட்டியான வெள்ளை உலோகத் தனிம வகை.

**glu'cose**, *n.* (வேதி.) பழ வெல்லம், கொடிமுந்திரிப்பழச் சர்க்கரை.

**glu'coside**, *n.* காடி-காரங்களின்மூலம் பழவெல்லம் போன்ற பொருள்களைத் தரும் தாவரப் பொருள் வகை.

**glucosu'ria**, *n.*=glycosuria.

**glue**, *n.* பசைப்பொருள், திண்ணிய பசைப்பொருள் வகை; வச்சிரப் பசை; *v.* பசையிட்டு ஒட்டு; பசையிட்டு இணை; நெருக்கமாகச் சேர்; இறுக்கமாக இணை.

**glue'-pot**, *n.* வச்சிரப்பசைக் கலம்; பசபசப்பான இடம்.

**glu'ey**, *a.* வச்சிரப்பசை அடங்கிய; ஒட்டிக்கொள்கிற; பிசுக்குள்ள, களியான.

**glum**, *a.* சூம்படைவான, சோர்வார்ந்த; வாட்டங்கொண்ட; எழுச்சி குன்றிய, கிளர்ச்சியற்ற; சிடுசிடுப்பான.

**gluma'ceous**, *a.* (தாவ.) உமி போன்ற; கதிர்த்தாள் போன்ற.

**glume**, *n.* (தாவ.) உமி; கதிர்த்தாள்.

**glumell'a**, *n.* தவிட்டுத்தாள்; சூலின் செதில்.

**glumps**, *n. pl.* வெறுப்பு காரணமாகப் பராமுகமாயிருக்கும் நிலை.

**glump'y**, *a.* கடுகடுப்பான.

**glut**, *n.* மட்டிலா மிகுதி, தேக்கம்; செறிமிகை, மடுப்பு, திகை மறிவு; தெவிட்டு நிலை; தேவைக்கு மேற்பட்ட வளம்; *v.* பேராவலுடன் விழுங்கு; தெவிட்டுகிற வரையில் ஊட்டு; திகையும் வரையில் நுகர்; தெவிட்டு நிலை எய்து; செம்மு, திணற வை; தேவைக்கு மேற்பட இருப்புக் குவித்து வை.

**glu'ten**, *n.* ஒட்டிக்கொள்ளும் பொருள், பசைப்பொருள்; விலங்குகளிலிருந்து சுரக்கும் பசைப்பொருள்; மாப்பிசின்; மாப்புரதம்.

**glu'tinous**, *a.* ஒட்டிக்கொள்ளுகிற, பசையான, களியான.

**glutt'on**, *n.* பெருந்தீனியர், வயிறுதாரி; சுவடிகளைப் பேராவலுடன் படிப்பவர்; வேலை செய்யும் பெரு வேட்கையுடையவர்; பெருந்தீனிகொள்ளும் கீரியின விலங்குவகை.

**glutt'onish**, *a.* பெருந்தீனி கொள்ளும் இயல்புடைய; பெருந்தீனி கொள்ளும் இயல்புக்குரிய.

**glutt'onize**, *v.* பெருந்தீனி கொள்.

**glutt'onous**, *a.* மீதூண் விரும்புகிற, மீதூண் இயல்புடைய.

**glutt'ony**, *n.* பேருண்டி, மீதூண்.

**gly'cerin**, *n.*=glycerine.

**gly'cerinate**, *v.* கரிநீர்ப்பாகு கலந்து செயலாற்று.

**gly'cerine**, *n.* கரிநீர்ப்பாகு, கொழுப்பிலிருந்து காரம் சேர்ப்பதால் விளைவிக்கப்பட்டு மருந்துக்கும் பூச்சுநெய்க் களிம்புகளுக்கும் வெடிமருந்துக்கும் பயன்படுத்தப்படும் நீர்மப் பொருள்.

**gly'cerol**, *n.*=glycerine.

**glyc'ogen**, *n.* (வேதி.) விலங்கு இழைமங்களில் பழ வெல்லம் விளைவிக்கப் பயன்படும் பொருள்.

**glycogen'ic**, *a.* (வேதி.) விலங்கு இழைமங்களில் பழச்சீனி போன்ற பொருளை உண்டாக்குகிற.

**glyc'ol**, *n.* கொழுப்புவாய்ந்த ஈரணும வெறிய வகைகளில் ஒன்று.

**glycon'ic**, *n.* கிரேக்க லத்தீன் மொழிகளில் நாலுசீர்ப் பாடல் வகை, நெடில் குறில் ஈரசைச்சீர் மூன்றினுடன் பலவகையில் இடைப்பெய்த நெடில் குறில் குறில் மூவசைச்சீர் ஒன்று கொண்ட யாப்பு வகை; *a.* நாற்சீர்ப் பாடல் வகையாலான.

**gly'cose**, *n.* = glucose.

**glycosur'ia**, *n.* (மரு.) சிறுநீரில் இனிப்பு கலந்திருக்கும் நோய் நிலை.

**glyph**, *n.* (க-க.) செங்குத்தான ஒப்பனைச் சால்வரி; சிற்ப வேலைப்பாட்டு அடையாளம்.

**glyphog'raph**, *n.* கடித அச்சு வகை மின்செதுக்குப் புடைப் புருத் தகடு.

**glyphog'raphy**, *n.* கடித அச்சுவகைச் செதுக்குப் புடைப் புருத் தகட்டு மின்முறை.

**glyp'tic**, *a.* மணிக்கற்களின் செதுக்குவேலை பற்றிய.

**glyp'todon**, *n.* மரபற்றுப்போன தென் அமெரிக்க நாற்கால் விலங்கு வகை.

**glyptog'raphy**, *n.* மணிக்கல்லிழைப்புக் கலை.

**gnarl**, *n.* மரத்திலுள்ள கரணை, கணுப்புடைப்பு.

**gnarled, gnarl'y**, *a.* மரவகையில் கரணைகள் வாய்ந்த, கணுப்புடைப்புக்களுடன் திருகிமறுகிய; முண்டு முடிச்சுக் களையுடைய; வளைந்து நெளிந்த.

**gnash**, *v.* பற்களை நெரி, பற்கள் வகையில் கடகடவென்றடித் துக்கொள்.

**gnat**, *n.* ஒலுங்கு, கொசு வகை; மிகவும் சிறிய பொருள்; சிறு தொல்லை; (தொ.) strain at gnat, சிறிதைப் பெரிதாக்கு, சிற்றியற் பொருள்களைக் குறித்துக் குற்றங் காண்.

**gnath'ic**, *a.* தாடைகளைச் சார்ந்த.

**gnat'ling**, *n.* சிறிய கொசு; சாதாரண மனிதர், பொருளல்லவர்; குறிப்பிடத்தகாதவர்.

**gnaw**, *v.* பல்லால் கறி, கரம்பு; பல்லால் கொந்து; பிடிவாத மாக விடாமல் கடி; வெந்துயரால் பல்லைக் கடி; சினத்தால் பற்களை நெரி; அரித்துத்தின்; அரித்தழி; சித்திரவதை செய்.

**gnaw'er**, *n.* பல்லைக் கடிப்பவர்; கொறிக்கும் விலங்கு.

**gneiss**, *n.* படிகம் களிமம் அப்பிரகம் முதலியவை கலந்த அடுக்குப்பாறை வகை.

**gnome** [1], *n.* கூளி, அடிநிலக் கனிச் செல்வங்களைக் காப்ப தாகக் கருதப்படும் குறளித் தெய்வங்களில் ஒன்று.

**gnom'e** [2], *n.* முதுமொழி, மூதுரை; மந்திர வாசகம்; திட்ப நுட்ப வாசகம், பொருள் செறிதொடர், சூத்திரம்; மேற் கோளுரை; நீதிமொழி.

**gnom'ic**, *a.* முதுமொழி சார்ந்த; மூதுரை கொண்ட; நீதி மொழியைப் பயன்படுத்துகிற; பொருட்செறிவுள்ள, திட்ப நுட்பமான; (தொ.) gnomic aorist, (இலக்.) பொதுப்படை யான உண்மைகளைத் தெரிவிப்பதற்குப் பயன்படும் காலம் அற்ற வினை.

**gnom'on**, *n.* கதிர்மணிப்பொறியின் கம்பம், கதிர்நிலைக் காட்சிக் கம்பம்; கடியாரமுள்; இணைவகக்குறை, மூலையில் இணைவகப் பகுதி குறைக்கப்பட்ட இணைவக வடிவம்.

**gnomon'ic, gnomon'ical**, *a.* கதிர்மணிப்பொறிக்கலை சார்ந்த; கணிப்பு வட்டில் சார்ந்த, முகப்புவட்டில் மூலம் கணிப்பறிவிப்புக் கலை சார்ந்த.

**gnomon'ics**, *n.* கதிர்மணிப்பொறிக்கலை, கணிப்பு வட்டிற்கலை.

**gnos'is**, *n.* மறையியல் ஞானம்; முற்பட்டகாலக் கிறித்தவ சமயக் கிளையினர் சமரச மறைஞானக் கோட்பாடு; நம்பிக் கையைவிட மெய்யறிவுதான் வீடுபேறு அடைவதற்குரிய சாதனம் என்னும் முற்கால மறைஞானியர் கோட்பாடு.

**Gnos'tic** [1], *n.* சமரச மறையியல் ஞானக் கோட்பாடுடைய முற்பட்டகாலக் கிறித்தவ சமயக்கிளையினர்.

**gnos'tic** [2], *a.* மறையியல் ஞானம் சார்ந்த; முற்காலக் கிறித்தவ சமயக் கிளையினருக்குரிய; முற்காலக் கிறித்தவ சமயக் கிளை யினர் கோட்பாட்டுக்குரிய

**gnu**, *n.* எருதுபோன்ற தோற்றமுடைய மான் வகை.

**go**, *n.* போக்கு, போதல்; புகல், வழிவகை; செய்தி; தெம்பு, உரம்; ஊக்கம், விசை; வரிசையான செயல் முறை; திருப்ப முயற்சி, முயற்சி; உணவு குடியின் படையல்கூறு; சீட் டாட்ட வகையில் ஆட்ட ஏலாமை முறை; ஏலாமுறைக் குரிய எதிர்ப்பக்க மதிப்பெண்; (பே-வ.) இக்கட்டுநிலை; இயலுந்திறம்; (பே-வ.) இயற்செயல்; (பே-வ.) செயற் பண்பு; இயக்கநிலை; *v.* போ, செல், ஏகு; இடம் மாறு; அப்பாற்செல்; பயணஞ் செல்; புறப்படு; திசைப் படு; கிட; கொண்டு செல்; பரவியிரு; எல்லையளாவியிரு; முன்னேறு, இயங்கு; நடைபெறு, நடப்புறு; நடைமுறையி லிரு; நடைமுறை வழக்கமாயிரு; நடைமுறைப்படு; துறைப் படு; பொதுநிலையாக அமை; மொத்தநிலையாக அமை; காலத்தில் இயங்கு; தொடர்புறு; தொடர்ந்து செல்; காலங்கழிவுறு, செல்லாகு; காலங்கழி; செயல்விரவி நில்; செயற்படு; செயலைக்கொண்டு செல்; செயல் மேற்கொள்; தொழில்நாடு; நாடி மேற்கொள்; செலவு ஆகு; விற்கப் பெறு; பின்பற்று; கடைப்பிடி; சார்; சேர்; இணை; சொல் தொடர்புறு; பொதுக் கருத்துப் போக்குக்கொள்; நடை உடையதாயிரு; ஓசைபெறு; மணி வகையில் அடிக்கப்பெறு; துப்பாக்கி குண்டு வகைகளில் வெடிக்கப்பெறு; வேட்டிடப் பெறு; கணிப்புறு; அழைக்கப்பெறு; தெரியப்பெறு; பரவலாயிரு; எங்கும் பேசப்பெறு; செல்லுபடியாயிரு; கருக்கொண்டிரு; ஆகு, ஆகுநிலைபெறு; சார்பு அமைவுறு; மாறுபட்டமை; விளைவுறு; விளைவில் ஒருகூறுயுதவு; பங்குகொள்; உள்ளடக்கமாகக் கொள்; இயல்வுறு; வழி செய்; பிளவுறு, இறு, தகர்; தளர்; அழி; தோல்வியுறு; ஒழி; இற; எடு; கொள்; புகு; உரியதாகு; உரிமையாகச் செல்; மரபாகச்செல்; சென்றெட்டு; தாவிக்கட; புகு; ஊடுருவிச்செல்; பந்தயம் வை; ஆட்டங்கேள்; (தொ.) be gone, போய்விடு, விலகிச் செல், ஓடிவிடு; far gone, மிகவும் நோயுற்ற; ஆழ்ந்து சிக்கிக் கொண்ட; go about, அங்குமிங்குஞ் செல்; ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்; செய்வதற்கு முயல்; வேலை செய்யத் தொடங்கு; go about one's business, தன் காரி யத்தைப் பார்த்துச் செல்; go abroad, வெளிநாடு செல், வீட்டைவிட்டு வெளியே போ; சுற்று; go against, எதிராகத் திரும்பு; பகையாகு, மிகு வெறுப்பாகு; go ahead, தயக்கமில்லாமல் முன்னேறு, தடையின்றி முன் செல்; go a long way, நீடித்து உழை, நீடித்துப் பயன்படு; பேரளவில் வலிவு தருவதாயிரு; go along with, go with, உடன் செல்; ஒன்றுபடு; பின்பற்று; இணை; இணையாயிரு; go aside, தவறிழை, பின்வாங்கு; விலகு; ஒதுங்கு; go at, தாக்கு, ஊக்கத்துடன் செயலைக் கைக்கொள்; go back from one's word, go back upon one's word, சொல் தவறு; go bail, பிணையமாயிரு; உறுதி கூறு; go behind, மீண்டும் ஆராய்; go better, go one better, எதிரியைப் போட்டியில் தோற்கடி, எதிரியைவிட மிகுதியாக ஏலங்கூறு; எதிரியைவிடச் செயலில் மேம்படு; go black, go brown, go native, கீழ்த்திசை மக்க ளுடைய வாழ்க்கைமுறை பின்பற்று; தாய்நில மக்களின் வாழ்க்கை முறையைப் பின்பற்று; go by, கடந்து செல்; go down, மூழ்கு; தோல்வியுறு; பணிந்திணங்கு; எழுத்திற் பதிவாகு; விழுங்கப்பெறு; ஏற்புப் பெறு, பல்கலைக்கழகத்தை விட்டு நீங்கு; go for, போய்க்கொண்டு வா; தாக்கு; பெறு வதற்காகச் செல்; கைப்பற்ற முயற்சிசெய்; பொருத்தமா யிரு; go for little, go for nothing, பயனற்றதாகக் கருதப் படு; go halves, go shares, சரிசமமாகப் பங்குபிரி, சம நிலை யாகப் பங்கீடு செய்; go hard with, கெடுதலாக முடிவுறு, தீங்காயமை; go hot and cold, சுரத்தால் பீடிக்கப்பெறு; அவமதிப்பு அடை; go in, போட்டியாளராகச் செல்; go in for, நாடி மேற்கொள்; சென்றீடுபடு; பழக்கப்படுத்திக்கொள்; go into, நுழை; பணிபுகு; அடிக்கடி சென்று பழகு; கலந்துகொள்; ஆட்படும்படி செய்துகொள்; தனி உடை அணிந்துகொள்; அலசியாராய், தேர்ந்தாராய்; go it alone, துணையின்றித் தனியாகச் செய்; go off, நீங்கு; தொடங்கு; வெடி; இற; சென்று தேய்ந்திறு; நிலைமை மோசமாகு; தன்னை மற, உணர்ச்சியிழ; விற்பனையின்மூலம் தொலைத்து

விடு, நன்முக வெற்றியுறு; அரைகுறை வெற்றியுறு; go off one's head, தலை திரிவுறு, மூளை பிறழ்வுறு; பித்தங்கொள்; go on, முன்செல்; தொடர்ந்து மேற்செல்; தொடர்ந்து நிகழ், தொடர்ந்து செல்; விடாமுயற்சி செய்; அடுத்தபடிக்குச் செல், அடுத்த முயற்சியில் முன்னேறு; நாடகமேடைமீது தோன்று; மரப்பந்தாட்டத்தில் பந்து வீசுவதைத் தொடங்கு; ஏதாவது செய்வதற்குத் தன்னுடைய முறையை மேற்கொள்; go on the streets, விலைமகளாகு; go out, வெளியேறு; அணிந்து போ; இருவர் வகையில் கைச்சண்டை செய்; கால வண்ணமுறைகளை நீக்கு; கைவிடு; குடியேற்றப் பகுதி முதலிய வற்றிற்குச் செல்; பெண்டிர் வகையில் வீட்டை விட்டு வேலை நாடிச் செல்; சமுதாயத்தோடு கலந்து பழகு; தொழிலாளர் வகையில் வேலை நிறுத்தஞ் செய்; காதலால் விரிவடைந்து நாடு; go over, கட்சிமாறு, மதம் மாறு; நுணுக்க விவரங்களை மேற்பார்வை செய்; ஒத்திகை பார், திருத்தியமை; go over the top, go over the bags, எதிரியைத் தாக்குவதற் காகப் பதுங்கு குழியிலிருந்து வெளியேறு; go round, பொது முறை இயல்பாகப் பார்க்கப் போ; போதுமான அளவு நீள மாக இரு; போதுமானதாயிரு; go sick, படைத்துறையில் நோயாளிகள் பட்டியலிற் பதிவுசெய்துகொள்; go slow policy, எதிர்ப்பக்கத்தாரை வலியுறுத்திச் சலுகை பெறுவதற் காக வேண்டுமென்றே முயற்சி விளைவைக் கட்டுப்படுத்திக் குறைக்கும் கோட்பாடு; go the whole hog, கடைபோகக் காண்; go through, நுணுக்க விவரமாக ஆராய், முழுதும் தேர்ந்தாராய்; துருவி ஆராய்; துருவி உசாவு; முழுதும் முடி; விரைந்து அரைகுறையாக முடித்துவிடு; படு, பொறு, தாங்கு, அனுபவி; நூல் வெளியீட்டு வகையில் பல பதிப்புக்கள் கடந்துவிடு; go through fire and water, எவ்வகை இடர்களை யும் இடையூறுகளையும் பொருட்படுத்தாமல் கடக்கத் துணி; go through with, குறைவற முடி; go to, எரிச்சல் அவநம் பிக்கை தடுப்புரை விளிக்குறிப்பு; go to Canossa, மீறுதலுக்குப் பின் செருக்கைவிட்டுத் தற்பணிவுடன் சரணடை; go to one's heart, மனத்தைத் துயர்ப்படுத்து; கனிவுடையதாக்கு; go to pieces, பிளவுறு; தகர்வுறு; மனமிடிவுறு; நிலை மையை ஏற்று நடத்த ஏலாநிலையுறு; go to the bar, வழக் கறிஞராகு; go to the country, பொதுத்தேர்தல் மூலம் மக்கள் கருத்தை அறிய முனை; go to the wall, புறக்கணிக்கப் படு, கடந்து ஒதுக்கப்படு; go under, அமிழ்; தோல்வியடை; இறந்துபோ, அழிந்துபோ; எதிர்ப்புக் கைவிடு; முயற்சி யிழ, கீழ்ப்படி; go up the line, போர்முனைக்குச் செல்வதற் காக மூல தளத்தை விட்டு நீங்கு; go without, இல்லாமற் கழி; இல்லாமல் குறைப்படு; go without saying, கூறாமல் தானே விளங்கத்தக்கதாயிரு; go with tide, go with times, மற்றவர்களைப் போல நடந்துகொள்; he will go far, தனிச் சிறப்புக்கு உரியராவார்; let go, விடுதலை செய்; பிடி நீக்கு.

**goad**, *n.* தாற்றுக்கோல்; துன்புறுத்தும் பொருள்; தூண்டுதல் அளிக்கும் பொருள்; *v.* தாற்றுக்கோல்கொண்டு குத்து; எரிச்சலூட்டு; தொல்லை தந்து தூண்டுதலளி.

**goads'man, goad'ster**, *n.* தாற்றுக்கோலால் விரைவுபடுத்து பவர்.

**go'-ahead**, *n.* மேல் தொடர்வதற்கான இசைவு; *a.* துணி வான முயற்சியுள்ள.

**goal**, *n.* இலக்கு, குறிக்கோள்; முயற்சி நோக்கம்; உயர் அவா நோக்கம்; பயண எல்லை; பந்தய முடிவெல்லை; ஆட்ட இலக்குக்குறியிடம்; பந்தாட்டத்தில் பந்தைக் குறியிடம்பட அடித்த கெலிப்பெண்; பண்டை ரோமாபுரியில் தேரோட்டப் பந்தயத்தில் திரும்புகட்டக் கம்பம்.

**goal'keeper**, *n.* இலக்குக் காவலர், பந்தாட்ட இலக்குக் குறி யிடப் பாதுகாப்பாளர்.

**goal'-line**, *n.* பந்தாட்டக் குறியிலக்குக் கள எல்லை.

**goal'-posts**, *n.* பந்தாட்டக் குறியிலக்குக் கம்பங்கள்.

**go'-as-you-please'**, *a.* கட்டுப்பாடில்லாமல் செல்லத்தக்க.

**goat**, *n.* வெள்ளாடு; தகர்மனை, மேடராசி; ஒழுக்க வரம் பற்றவர்; (தொ.) get one's goat, எரிச்சலூட்டு; play the giddy goat, முட்டாளாக நட.

**goat'beard**, *n.* புல்வெளிகளில் வளரும் ரோசாக் குடும்ப மலர்ச்செடி வகை.

**goatee'**, *n.* வெள்ளாட்டின் தாடி.

**goat'-fig**, *n.* காட்டு அத்தி வகை; காட்டு அத்திப்பழம்.

**goat'-fish**, *n.* நீளுருளை வடிவான சுவைமிக்க மீன்வகை.

**goat'-god**, *n.* கிரேக்க நாட்டு இயற்கைத் தெய்வம்.

**goat'herd**, *n.* வெள்ளாடு மேய்ப்பவர்.

**goat'ish**, *a.* வெள்ளாடு போன்ற; வெள்ளாட்டின் வாடை யுடைய; சிற்றின்ப விருப்புள்ள; கட்டற்ற, குறும்புத்தன மான.

**goat'ling**, *n.* இரண்டு வயதுக்குட்பட்ட வெள்ளாட்டுக்குட்டி.

**goat's'-hair**, *n.* சுருள் இழைகள் போன்ற மேகக்கூட்டம்.

**goat'skin**, *n.* வெள்ளாட்டுத்தோல்; வெள்ளாட்டுத் தோலாடை; வெள்ளாட்டுத் தோலாலான புட்டி; வெள் ளாட்டுத் தோலாலான தேறல்மிடா.

**goat'sucker**, *n.* ஆட்டுக் குருதியை உறிஞ்சுவதாகத் தவறுகக் கருதப்பட்ட இரவுப் பறவைவகை.

**goat's wool**, *n.* இல்லாப் பொருள்.

**gob**, *n.* உமிழ்ந்த எச்சில்; வாய்; பசைப்பொருள் கூறு; நிலக்கரிச் சுரங்கத்தில் கரிபறித்த குழி; கரி பறித்த குழியில் சேரும் கழிவுப் பொருள்; *v.* துப்பு.

**gobang'**, *n.* கட்டமிட்ட பலகைமீது ஆடும் விளையாட்டு வகை.

**gobb'et**, *n.* கவளம், வாய்நிறை அளவு; வாய்நிறை அளவு உணவு; மொழிபெயர்ப்பிற்கு அல்லது கருத்துரைக்கு அளிக்கப்பட்டுள்ள வாசகப்பகுதி.

**gob'ble**[1], *n.* விரைவாகவும் நேராகவும் குழிக்குள் விழும்படி வீசப்படும் அடி.

**gob'ble**[2], *v.* ஓசையோடு விரைவாக உண்ணு.

**gob'ble**[3], *v.* வான்கோழி போன்று தொண்டையில் களகள வென்று ஒலியெழுப்பு; வெகுளி முதலியவற்றினால் பேசும் பொழுது களகளவென ஒலிசெய்.

**gobb'ler**, *n.* வான்கோழிச் சேவல்.

**Gob'elins, Gob'elin tapestry**, *n.* ஓவியத் திரைச்சீலை வகை.

**gobe'mouche**, *n.* எளிதில் எதையும் நம்பும் தன்மையுள்ள செய்திப் பரப்பாளர்.

**go'between**, *n.* இடையீட்டாளர்; பேரம் செய்பவர், தரகர்.

**gob'let**, *n.* மூடியும் பாதமுமுடைய கைப்பிடியில்லாத குடி கிண்ணம்.

**gob'lin**, *n.* பூதம், அருவருப்பான தோற்றமுடைய குறும்புத் தெய்வம்.

**gob'y**, *n.* வயிற்றுப்புறமாக உணவை உறிஞ்சும் வட்டத் துடுப்புள்ள சிறுமீன்வகை.

**go'-by'**, *n.* கடத்தல், கடப்பு; (தொ.) give the go-by to, தாண்டிச் செல்; பின்னடையச் செய்; நழுவிச் செல், புறக் கணி; ஏளனஞ் செய்; அவமதித்து நடத்து.

**go'cart**, *n.* குழந்தை நடைவண்டி; தள்ளுவண்டி.

**God**[1], *n.* கடவுள், இறைவன், படைப்பாளர், ஆண்டவர்; (தொ.) act of God, கட்டுப்படுத்தமுடியாத இயற்கை நிகழ்ச்சி; by God, கடவுள் ஆணையாக!; God forbid, கடவுள் தடுத்துக் காப்பாராக!; God grant, கடவுள் அருள்பாலிப்பா ராக!; God knows, எனக்குத் தெரியாது; மனித அறிவுக்கு அப்பாற்பட்டது; கடவுள் சான்றாகக் கூறுகிறேன்; God's earth, நிலவுலகம்; God's image, மனித உடல்; God's truth, கலப்பற்ற உண்மை; good God, my God, வியப்பு இரக்கக் குறிப்பு; thank God, மகிழ்ச்சிக் குறிப்பு; under God, உச்ச அளவு மனித முயற்சியால், மனிதமுயற்சி பற்றியமட்டில் முழு அளவும் உறுதியாக.

**god**[2], *n.* தேவர்; தெய்வம், தெய்வ உருவம்; தெய்வத்தன்மை உடைய விலங்கு; வணக்கத்துக்குரிய தெய்வச்சிலை; வணங்கத் தக்கவர், போற்றிப் பணிந்து பாராட்டற்குரியவர்; செல்வாக்

**grub**, *n.* பூச்சிகளின் முட்டைப்புழு; அறிவிலா ஊழியவேலை செய்பவர்; இலக்கிய வகையில் சிறு கூலிக்கு மட்டுமிஞ்சிய உழைப்புச் செய்பவர்; ஒழுங்கற்றவர்; தூய்மையற்றவர்; குறுகிய நோக்கமும் தற்பெருமையுமுடையவர்; மட்டைப் பந்தாட்டத்தில் தரையோடு சேர்ந்தாற்போல் வீசப்படும் பந்து; உணவு; உண்டி; *v.* தோண்டு; மேலீடாகக் கிளறு; நிலத்தினின்று வேர் முதலியவற்றைப் பறித்தெறி; தோண்டியெடு; கிளறித் தேடு; ஓயாது உழை; துன்பப்பட்டு வேலை செய்; உணவளி; உணவு ஏற்பாடு செய்.

**grub'-axe**, *n.* தாளரி கருவி.

**grubb'er**, *n.* கிளறுபவர்; அகழ்ந்து பறிப்பவர்; தாளரி கருவி, களைக்கொட்டு.

**grubb'y**, *a.* அழுக்கான; களிம்பான; ஒழுங்கற்ற; புழு நிரம்பிய; தூய்மையற்ற.

**Grub'-street**, *n.* ஏழைக் கூலி எழுத்தாளர்களின் இருப்பிடம்; கூலி எழுத்தாளர் குழு.

**grudge**, *n.* காழ்ப்பு, பொல்லாப்பு; வன்மம், கறுவுதல், மாற்சரியம்; *v.* கொடுக்கத்தயங்கு; தர விருப்பமில்லாமலிரு; கருமித்தனம்பண்ணு; இசைய மனமொப்பாதிரு; மன வெறுப்புக் காட்டு.

**gru'el**, *n.* புற்கை, பாழ்ங்கூழ், நோயாளிக்கான நீராளக் கஞ்சி; பாற்கஞ்சி; (தொ.) have one's gruel, get one's gruel, தண்டிக்கப்படு; கடுமையாகத் தோற்கடிக்கப்படு; கொல்லப்படு; give one his gruel, தண்டி; தோற்கடி; கொல்லு.

**grue'some**, *a.* அருவருப்பான; கோரமான; அச்சமூட்டுகிற; கொடிய; வெறுப்புத்தரத்தக்க.

**gruff**, *a.* வெடுவெடுப்பான; சீறிவிழுகிற; கண்டிப்பான; மிகச் சுருக்கமான; முரட்டுத்தனமான; பண்பாடற்ற; கரகரத்த ஒலியுடைய.

**grum'ble**, *n.* முணுமுணுப்பு; குறுகுறுத்தல்; குறைபட்டுக் கொள்ளுதல்; *v.* முணுமுணு; இரை; குறைப்படு; குறையுரை.

**Grumbleto'nian**, *n.* (வர.) 17.ஆம் நூற்றுண்டின் இங்கிலாந்து அரசியலில் அரசவைக் கட்சிக்கு மாறுன நாட்டுக் கட்சியினர்.

**grume**, *n.* (மரு.) கட்டிக்குருதி; பசை நீர்மம்.

**grumm'et**[1], *n.* கயிற்றுவட்டு வளையம்; கயிற்றுவிளிம்பு பொருத்தப்பட்ட துளை; ஆணி அடிக்குமுன் அடியில் பொருத்தும் மாப்பசை சணல் விளிம்புடைய வளைவட்டு; இரட்டுக்களின் துணை விளிம்பாகப் பொருத்தப்பட்ட உலோக வட்டு வளையம்; உலோக வட்டு வளையம், சிறு துளை.

**grumm'et**[2], *n.* கப்பலின் பணிப் பையன்.

**grum'ous**, *a.* தடித்த; உறைந்த.

**grum'pish, grum'py**, *a.* முரணியல்புடைய; சிடுசிடுப்புள்ள.

**Grun'dyism**, *n.* போலி ஆசாரம், பிறர் மெச்சுவதற்கான நன்னடத்தை.

**grunt**, *n.* பன்றியின் உறுமல்; உறுமல் ஒலி; மீன்வகை; *v.* உறுமு, முறுமுறுப்புக் காட்டு; உறுமுதல் வாயிலாகக் குறைபட்டுக்கொள்; சலிப்புக்காட்டி உறுமு; சீறியுரை; (தொ.) grunt out, சீறியுரை.

**grun'ter**, *n.* முறுமுறுப்பவர்; பன்றி; மீன் வகை.

**grunt'le**, *n.* உறுமொலி; விலங்கின் நீண்ட மோவாய்; *v.* உறுமு, உறுமிக்கொண்டேயிரு.

**gru'yere**, *n.* சுவிட்சர்லாந்தில் செய்யப்படும் இளமஞ்சள் நிறமுடைய பசும்பாலாடைக் கட்டி.

**grys'bok**, *n.* சிறிய சாம்பல் நிறத் தென்னுப்பிரிக்க மான் வகை; வெள்ளைத்துய் உடைய சிவப்புநிற மரக்கொட்டை வகை.

**g'-suit**, *n.* விசைகாப்பங்கி; பெருவிசையியக்கத்தின்போது மூளையிலிருந்து குருதியிறங்கி உணர்விழப்பு உண்டாகாமல் தடுப்பதற்காக விமானிகளணியும் விரிவாற்றல் கண்ணறைகளையுடைய இறுக்கமான அங்கி.

**guacha'ro**, *n.* எண்ணெய் எடுக்கப்பெறும் தென் அமெரிக்க பறவை வகை.

**guai'ac**, *n.* மருந்து சரக்காகப் பயன்படுத்தப்படும் மேற்கு இந்திய புதர்ச்செடி வகையின் பச்சைப் பழுப்புநிறக்கட்டை; புதர்ச்செடி வகையிலிருந்து கிடைக்கும் பிசின்; புதர்ச்செடி வகையின் பிசினிலிருந்து கிடைக்கும் மருந்து சரக்கு.

**guai'acum**, *n.* மேற்கிந்திய மரவகைகளின் புதர்ச்செடி இனம்; புதர்ச்செடி வகைகளின் பச்சைப் பழுப்புநிறக்கட்டை; புதர்ச்செடி வகைகளிலிருந்து கிடைக்கும் பிசின்; புதர்ச்செடி வகையின் பிசினிலிருந்து கிடைக்கும் மருந்து சரக்கு.

**guan**, *n.* வேட்டையாடுதற்குரிய அமெரிக்க கோழியினப் பறவைவகை.

**gua'na**, *n.* உடும்பு; பெரிய பல்லி வகை.

**guana'co**, *n.* ஒட்டை இனத்தைச் சேர்ந்த செம்பழுப்புக் கம்பிளி மயிரையுடைய தென் அமெரிக்க காட்டு விலங்கு வகை.

**guanazo'lo**, *n.* புற்றுநோயில் புற்றுப் பகுதிகளை வளட்ட மறுத்து ஒழிக்கும் முயற்சிக்குத் தேர்வு முறையான மருந்தாயுதவும் பல்கூட்டுச் சேர்மப்பொருள் வகை.

**gua'nin, gua'nine**, *n.* கடற்கோழி எச்சத்தின் கூறு ஆகிய இளமஞ்சட் பொருள்.

**gua'no**, *n.* உரமாகப் பயன்படுத்தப்படும் கடற்கோழியின் எச்சம்; மீனிலிருந்து செய்யப்படும் செயற்கை உரம்; *pl.* gua'nos; *v.* கடற்கோழி எச்சத்தைக் கொண்டு உரமிடு.

**guarantee'**, *n.* உத்தரவாதம்; பொறுப்புறுதி; உறுதியுரை; ஈடு, பிணையப்பொருள்; உத்தரவாதம் கொடுப்பவர்; பிணையம் நிற்பவர்; ஈடுகட்டுபவர்; செயல் ஒப்பந்தம் செய்பவர்; உத்தரவாதி, செயற் பொறுப்பு ஏற்பவர்; உறுதியுரை கொடுக்கப் பெறுபவர்; *v.* பிணைப்படு; உத்தரவாதம் செய்; ஒப்பந்தப் பொறுப்புறுதி ஏற்றுக்கொள்; நிகழ்ந்தது அல்லது நிகழ இருப்பது பற்றிச் சான்றுறுதி கூறு; செயலுறுதி கூறு; பெற்றுத் தரும் உறுதி கூறு; காப்புறுதி செய்; (தொ.) guarantee association, guarantee company, guarantee society, காப்புறுதிக் கோட்பாட்டின் பேரில் பிணையமாக நிற்கும் கூட்டுப் பங்குக் கழகம்; guarantee fund, பொறுப்புறுதிப்பணம், உத்தரவாதப்பணம்.

**guar'antor**, *n.* உத்தரவாத ஒப்பந்தத்தார், பொறுப்புறுதி அளிப்பவர்.

**gua'ranty**, *n.* உத்தரவாத ஒப்பந்தம்; ஈடு, பிணை; உத்தரவாதம் அளிப்பவர்; உத்தரவாதத் தன்மை.

**guard**, *n.* காவல்; காப்பு; விழிப்புநிலை, எச்சரிக்கைநிலை; குத்துச்சண்டை வாட்போர் முதலியவற்றின் வகையில் தற்காப்புநிலை; தற்காப்பியக்கம்; காவலர்; பாதுகாப்பவர்; மெய்க்காவல் வீரர்; வாயிற்காவலர்; படைக்காவல் வீரர்; காவற்படை; பாதுகாப்புப் படை; இடர்காப்பமைவு; வாளின் கைப்பிடி; சிறு மணிப்பொறியின் சங்கிலி; கரை; ஓரக்குஞ்சம்; ஏட்டில் தாள் படம் கடிதம் முதலியன ஒட்டுவதற்கான விடுதாள் துண்டு; மரப்பந்தாட்டக்காரரது பட்டை மெத்தை; மரப் பந்தாட்டத்தில் இலக்குக் கட்டைகளைக் காப்பதற்கேற்ற மட்டைநிலை; *v.* காவல் செய்; பேணிப்பாதுகாப்புச் செய்; அரண்காப்புச் செய்; சேமக்காப்புச் செய்; வழித்துணையாகச் செல்; காப்பாற்று; விளக்கச் சொற்கள் மூலம் பொருள் மாருட்டமேற்படாமல் தடுத்துப்பேணு; (மரு.) தக்க துணையால் மருந்தின் குணம் பேணு; பேச்சைத் தடுத்தாள்; எண்ணம் உணர்ச்சி ஆகியவற்றை அடக்கியாளு; இடர்தடுத்துக் காத்துக்கொள்; தற்காப்பு நிலை மேற்கொள்; பாதுகாப்பு ஏற்பாடு செய்; காவற்படைகளை அமைத்து வலுப்படுத்து; வழித்துணை செல், வழிக்காவல் செய்; கவனி, விழிப்பாயிரு, முன்னெச்சரிக்கையாயிரு; முன்னேற்பாடு செய், முன் எச்சரிக்கை செய்; கரைகாப்பிடு, ஓரக்குஞ்சமிடு; (தொ.) off one's guard, விழிப்பின்றி, கவனமின்றி, எதிர்பாராத நிலையில்; on one's guard, விழிப்பாக, கவனமாக, எதற்கும் சித்தமாயிருக்கிற நிலையில்; run the guard, காவற்காரரால் கண்டுபிடிக்கப்படாமல் கடந்துசெல்.

**guard'ant,** *a.* (கட்.) பார்ப்பவரை நோக்கி முகப்புப்பக்கம் திருப்பப் பெற்றுள்ள.

**guard'-boat,** *n.* துறைமுகத்தில் காவல் வேலைக்கென விடப் பட்ட படகு.

**guard'-book,** *n.* நெடுந்துண்டுகளுள்ள வெற்றுச் சுவடிச் சட்டம்.

**guard'-cell,** *n.* (தாவ.) செடியினங்களின் பசும்புழை வாயருகிலுள்ள காப்புயிரணு.

**guard'-chain,** *n.* கைம்மணிப்பொறி முதலியவற்றைக் கட்டித் தொங்கவிடும் சங்கிலி.

**guard'ed,** *a.* விழிப்புடைய, எச்சரிக்கையான; விழிப்புடன் அளந்து கூறப்பட்ட; செம்மையாக்கப்பட்ட; கரை இணைக்கப் பட்ட.

**guard'-house,** *n.* படைவீரர்கள் தங்கியிருப்பதற்கான விடுதி; தவறிழைத்தவர்களை அடைத்து வைத்திருப்பதற்கான இடம்.

**guard'ian,** *n.* பாதுகாப்பாளர்; ஆதரவாளர்; (சட்.) முதுகணாளர், சிறுவர்-பித்தர் போன்றவர்களின் பொறுப்பேற்கும் பாதுகாவலர்; இரவலர்சட்டச் செயலாற்றும் குழு உறுப்பினர், பிரான்சிஸ்கன் (Franciscan) துறவிமடத்து முதல்வர்; *a.* ஆதரவாயிருக்கிற; பாதுகாக்கிற; (தொ.) guardian angel, தனி மனிதரின் காவல் தெய்வம்; ஒருவரிடம் நல நாட்டமிக்க பேராதரவாளர்.

**guard'ianship,** *n.* பாதுகாவலர் பதவி; சட்டப்படியான காப்புநிலை; பொறுப்பு, பாதுகாப்பு, காவல்.

**guard'less,** *a.* ஆதரவற்ற; காப்பற்ற; காவலற்ற.

**guard'-rail,** *n.* விழாதபடி தடுக்கும் கைப்பிடிக் கம்பியழி.

**guard'-ring,** *n.* தடை, ஒத்து, விரல் மோதிரம் நழுவாதிருக்கச் செய்யும் காப்புக் கணையாழி.

**guard'room,** *n.*=guard-house.

**guards,** *n. pl.* மன்னரின் மெய்க்காவல் படையினர்; படைப் பிரிவு வகைகள்.

**guard'-ship,** *n.* துறைமுகத்தைக் காப்பதுடன் மாலுமிகள் தங்கள் தங்கள் கப்பல்களில் சென்று சேருகிற வரையில் அவர்களுக்குத் தங்க இடங்கொடுக்கும் போர்க்கப்பல்.

**guards'man,** *n.* மன்னரின் மெய்க்காவல் படையினருள் ஒருவர்.

**guard'-tent,** *n.*=guard-house.

**gua'va,** *n.* கொய்யாமரம்; கொய்யாப்பழம்.

**guayule',** *n.* தொய்வகத்துக்கு மாற்றீடான பொருள்தரும் சாறுடைய மெச்சிகோ (Mexico) நாட்டுச் செடிவகை; மாற்றீட்டுத் தொய்வகம்.

**gu'bernator,** *n.* ஆளுநர்.

**guberna'tion,** *n.* கட்டுப்பாடு, ஆட்சி.

**gubernator'ial,** *a.* ஆளுநரைச் சார்ந்த; ஆளுநருக்குரிய; ஆட்சிக்குரிய.

**gudg'eon**[1], *n.* தூண்டிலில் இரையாகப் பயன்படுத்தப்படும் சிறு நன்னீர் மீன்வகை; ஏமாளி; *a.* அறிவில்லாத, ஏமாளியான; *v.* ஏமாற்று.

**gudg'eon**[2], *n.* உந்து தண்டின் இணைகோல்; இயந்திரச் சுழல் தண்டின் தலைப்பொருத்து; வண்டியிருசின் தலைத்தண்டு; மணியின் உத்திரப் பொருத்து; கதவின் திருகு குடுமி; (கப்.) பயின்கருவியின் திருகு பொருத்து; கற்பாளங்களின் இணைப்புக் கம்பி.

**gudg'eon-pin,** *n.* பொறிவண்டி வகையில் உந்து தண்டின் முளை.

**Gue'ber, Gue'bre,** *n.* பார்சி நெறியாளர், நெருப்பு வழிபாடு செய்பவர்.

**guel'der-rose,** *n.* பனிவெள்ளை நிறமான வட்ட மலர்க் கொத்துச் செடிவகை

**Guelf, Guelph,** *n.* பேரரசருக்கெதிராகப் போப்பாண்டவரை ஆதரித்த இடைநிலைக்கால இத்தாலிய நாட்டின் கட்சி உறுப்பினர்,

**guerd'on,** *n.* பரிசு, பயனூதியம்; *v.* பரிசுகொடு, ஊதியப் பயனளி, உழைப்பீடு செய்.

**gueril'a,** *n.*=guerrilla.

**Guern'sey,** *n.* இங்கிலிஷ் கால்வாயிலுள்ள தீவுகளில் ஒன்று; கேன்சி தீவைச் சேர்ந்த பசுவகை; (தொ.) guernsey, guernsey coat, guernsey frock, guernsey shirt, கப்பலோட்டிகள் அணியும் இறுகலான பின்னல் மேற்சட்டை வகை.

**guerrill'a,** *n.* முறையற்ற போர், சிறுசிறு கும்பல்கள் தனித் தனியாகத் தொடுக்கும் போர்; முறையற்ற போரில் ஈடுபடுபவர்; *a.* போர்வகையில் முறையற்ற, முறையற்ற போர்வகை சார்ந்த.

**guess,** *n.* உய்த்துணர்வு, ஊகம்; குத்துமதிப்பு, பாணிப்பு; வைப்புக்கோள், தற்பொழுதைய முடிபு, மேற்கொள் முடிபு, குருட்டுப்போக்கான குறிப்பு; *v.* ஊகி, உய்த்துணர்; குத்து மதிப்பாகக் கருது; நேரடியாக அறியாமலே மதித்துணர்; இயன்முடிவாகக் கருது; குருட்டுப்போக்காகக் குறிப்பிடு; தற்பொழுதைய முடிபு மேற்கொள்; ஆராய்வின் துணையில்லாமலே கூறத்துணி.

**guess'rope,** *n.*=guest-rope.

**guess'work,** *n.* உய்த்துணர்தல், ஊகித்தல்; ஊக விளைவு.

**guest,** *n.* விருந்தினர்; உணவுவிடுதி முதலியவைகளில் தங்கி இருப்பவர்; விலங்கு தாவர ஒட்டுண்ணி.

**guest'-chamber,** *n.* விருந்தினர் அறை.

**guest'-house,** *n.* விருந்தினர் மாளிகை, உயர்தரத் தங்கல் விடுதி; மடத்து வரவேற்பு மனை, ஆதரவகம்.

**guest'night,** *n.* விருந்திரவு, கழகங்களிலும் கூட்டுப் பந்திக் குழுக்களிலும் கல்வி நிலையங்களிலும் வெளி விருந்தினரை வரவேற்று மகிழும் நாளிரவு.

**guest'-room,** *n.* விருந்தறை, விருந்தினர் தங்கும் பகுதி.

**guest'-rope,** *n.* வால் கயிறு, படகினை நிலைப்படுத்துவதற்காக இணைக்கப்படும் இரண்டாவது கயிறு; தொங்கு கயிறு, கூடவேவரும் படகுக்குப் பிடிகொடுப்பதற்காகக் கப்பலுக்கு வெளியே தொங்கவிடப்படும் கயிறு.

**guest'wise,** *adv.* விருந்தினர் என்னும் முறைமையில்.

**guffaw',** *n.* வெடிப்புச் சிரிப்பு; *v.* உரக்கச்சிரி.

**gugg'le,** *n.*, *v.*=gurgle.

**gui'chet.** *n.* கதவிற் புழைவாயில்; மதில் இடைவழி மாடம்; கம்பியிட்ட பயணச்சீட்டுப் புழைமாடம்.

**guid'ance,** *n.* வழித்துணை; கற்பித்தல், அறிவுரை, போதனை; மேலாண்மையுதவி; தலைமைப் பெறுப்பு.

**guide,** *n.* வழிகாட்டி; வழித்துணைப்பணியாளர், ஊதியம் பெற்றுப் பிரயாணிகளுடன் செல்லுபவர்; ஸ்விட்சர்லாந்து நாட்டில் மலையேறுதலைத் தொழிலாகக் கொண்டவர்கள்; படைத்துறை வேவுப் பணியாளர்; கடற்படைக் கப்பல்கள் இயங்க மூலமாதிரியாயியங்கும் கலம்; முன்மாதிரி; தலைவர்; வாழ்க்கை வழிகாட்டி; அறிவுரையாளர்; ஆசிரியர்; பெண் சாரண இயக்கத்தினர், பெண் சாரணர்; வழிகாட்டுவது; வழிகாட்டும் தத்துவம்; வழிகாட்டும் நூல்; பயண வழி விளக்க நூல்; மூலக் கோட்பாடுகளடங்கிய சுவடி; கையேடு; இயந்திர வகையில் இயக்கும் தண்டு, இயக்கம் தூண்டும் உறுப்பு; குறித்துக்காட்டும் அடையாளம், நிலை சுட்டிக் காட்டும் குறி; *v.* வழிகாட்டு; வழிகாட்டியாகச் செயலாற்று; வழித்துணை செல்; இட்டுக்கொண்டு செல்; முன்செல்; நடத்து; செயற்படுத்து; தூண்டு; முறைப்படுத்து; வழிப்படுத்து; நெறிப்படுத்தும் கோட்பாடாயமை; கடைத்தேற்றும் இலக்காயமை; தூண்டுதற் காரணமாயியங்கு; தலைமை ஏற்று ஆட்சி நடத்து; (தொ.) guided missile, ஏவு படை, வானொலி போன்ற கருவிகளைக் கொண்டு தொலைவிலிருந்தே வேண்டிய நெறியில் செலுத்தப்படக்கூடிய படை.

**guide'-book,** *n.* பயணத் துணைச்சுவடி, வழிகாட்டு ஏடு.

**guide'-post,** *n.* கைகாட்டி மரம், வழிவிளக்கக் கம்பம்,

**guid'er**, *n.* வழிகாட்டுபவர், நெறிப்படுத்துகிறவர்; வழிகாட்டுவதற்கான அமைவு; பெண் சாரணப்படையின் தலைவர்.

**guide'-rail**, *n.* வளைவிலே வண்டிகள் தண்டவாளங்களிலிருந்து விலகாமல் செல்ல உதவும் மிகைத் தண்டவாளம்.

**guide'-rope**, *n.* பாரந்தூக்கியில் பொருள் இயக்க நெறிப்படுத்தும் கயிறு.

**guide'way**, *n.* வழித்தடம்.

**guid'on**, *n.* பறக்கும் முனை கூரியதாயிருக்கும் படைத்துறைத் துகிற்கொடி.

**guild**, *n.* கூட்டுறவுக் குழு, தொழிற் சங்கம், ஒருவர்க்கொருவர் உதவிக்கான சங்கம், பொதுநோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கான கழகம்; (தொ.) Guild Socialism, தொழிற் சங்கப் பொதுவாயம், தொழில் ஒவ்வொன்றினுடைய வளங்களும் முறைகளும் ஆதாயங்களும் அதைச் சேர்ந்தவர்களடங்கிய சபையின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருக்கவேண்டுமென்னும் தொழிற் கூட்டு முறைமை.

**guil'der**, *n.* பழைய ஆலந்து-செர்மன் தங்க நாணயம்; தற்கால ஆலந்து வெள்ளி நாணயம்.

**Guild'-hall**[1], *n.* (வர.) இடைநிலைக் காலத் தொழிற்சங்க மண்டபம்; நகர மாளிகை.

**Guild'hall**[2], *n.* லண்டன் மாநகராட்சி மண்டபம்.

**guile**, *n.* வஞ்சம், மோசம், கபடம், இரண்டகம், சூழ்ச்சித் திறம்.

**guiled**, *a.* வஞ்சனையுள்ள, நம்பிக்கைக்கேடு செய்கிற.

**guile'ful**, *a.* ஏமாற்றுகிற, கபடமுள்ள.

**guile'less**, *a.* கபடமற்ற, வஞ்சனையில்லாத.

**guill'emot**, *n.* கடற்பறவை வகை.

**guilloche'**, *n.* பின்னற்சடை போன்ற சிற்பக்கலை ஒப்பனை; *v.* பின்னற் சடைச் சிற்ப ஒப்பனை செய்.

**guill'otine**, *n.* தலைவெட்டு பொறி, தலைவெட்டுவதற்கான கத்தி அலகுடைய கொலைத்தண்டனை இயந்திரம்; உண்ணாக்கு முதலியவற்றை வெட்டியெடுப்பதற்கான அறுவை மருத்துவக் கருவி; தாள் வெட்டுவதற்கான இயந்திரக் கருவி; வைக்கோல் தறிக்கும் கருவி; சட்டமன்ற நடைமுறை வகையில் விவாதத்தைச் சுருக்கும் பொருட்டுக் கையாளப்படும் கண்டிப்பான நடைமுறை; *v.* தலைவெட்டு பொறியால் தலையை வெட்டு; கண்டிப்பான நடைமுறையைப் பயன்படுத்து; விவாதத்தைச் சுருக்கு.

**guilt**, *n.* குற்றப்பழி, குற்றப் பொறுப்பு, குற்றத்தன்மை; சட்டத்தை மீறியுள்ள நிலை; தண்டனைக்குள்ளாகத்தக்க நிலை.

**guilt'less**, *a.* குற்றமற்ற, பழி பாவமற்ற; பாவம் செய்தறியாத.

**guil'ty**, *a.* குற்றமுடைய, குற்றவாளியான; குற்றத் தண்டனைக்குரிய; குற்றமெனத் தெரிந்திருக்கிற; குற்றம் பொருந்திய எண்ணத்தினால் தூண்டப்பட்ட; குறிப்பிட்ட குற்றம் செய்திருக்கிற; கொடிய; (தொ.) guilty conscience, குற்றமுள்ள நெஞ்சம்.

**guimp**, *n.*=gimp.

**Guin'ea**[1], *n.* ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரைப் பகுதி; (தொ.) Guinea Grains, நறுமணப் பொருளாகவும் மருந்து சரக்காகவும் பயன்படுத்தப்படும் மேற்கு ஆப்பிரிக்க செடி வகையின் விதைகள்.

**guin'ea**[2], *n.* செலாவணியற்றுப்போன 21 வெள்ளி மதிப்புடைய ஆங்கில நாட்டுத் தங்க நாணய வகை; கினி நாணயத்தின் மதிப்பு; *a.* ஒரு கினி விலையுள்ள.

**guin'ea-corn**, *n.* தானிய வகை.

**guin'ea-fowl**, *n.* கினியாக் கோழி, வெள்ளைப் புள்ளிகளுடன் கூடிய சாம்பல் நிறமுள்ள ஆப்பிரிக்க மாநிலப் பறவை வகை.

**guin'ea-grass**, *n.* கின்னிப் புல், தினை இனத்தைச் சேர்ந்த நீண்ட ஆப்பிரிக்க புல் வகை.

**guin'ea-hen**, *n.* கினியாக் கோழியின் பெடை.

**guin'ea-pig**, *n.* சீமைப் பெருச்சாளி, சிறு தென் அமெரிக்க கொறிவிலங்கு வகை; மருத்துவத்துறையில் தேர்வாய்வுக்குத் தம்மை ஒப்படைப்பவர்.

**Guin'ea-worm**, *n.* நரம்புச் சிலந்திப்புழு.

**Guinn'ess**, *n.* இன்தேறல் வகை; இன்தேறல் வகை கொண்ட கண்ணாடிக்கலம்.

***guipure***, (பிர.) சித்திரப் பின்னல் கரை வகை; கயிறு அல்லது கம்பி ஊடே செலுத்தப்பெற்றுள்ள பட்டு-கம்பளி அல்லது பருத்தி நூலிழை வகை.

**guise**, *n.* உடுக்கும் பாணி, உடை; புறத்தோற்றம்; கோலம், மேற்கொண்ட தோற்றம்; புனையுரு, வேடம்; பாவனை, புனைவு.

**guis'er**, *n.* கிறிஸ்துமஸ் விழாவில் மாறுவேடம் பூண்டு ஊமையாட்டம் ஆடுபவர்; மாறுவேடம் புனைந்தவர்.

**guitar'**, *n.* யாழ்வகை, ஆறு நரம்புள்ள இசைக்கருவி வகை; *v.* ஆறு நரம்புள்ள நரப்பிசைக் கருவி வகை வாசி.

**gul'den**, *n.* ஆலந்து ஆஸ்ட்ரியா-அங்கேரி (Austro-Hungarian) நாடுகளில் வழங்கும் வெள்ளி நாணய வகை.

**gules**, *n.* (கட்.) சிவப்பு நிறம்; *a.* சிவப்பு நிறமான.

**gulf**, *n.* (நில.) வளைகுடா; ஆழ்கடற்கயம்; ஆழ்கயம்; படுகுழி; ஆழ்கெவி; பாதாளப்பள்ளம்; நீர்ச்சுழல்; நிரம்பா நெடுநீள் பள்ளம்; பெரும் பிளவு, கடக்க முடியா இடைப்பள்ளம்; பல்கலைக்கழகச் சிறப்புத் தேர்வில் தவறிப் பொதுத் தேர்வுப்பட்டம் பெறுபவர் நிலை; *v.* வளைந்து சூழ்; கவிந்து உட்கொள்; விழுங்கு; பல்கலைக்கழகத்தில் சிறப்புப்பட்டத் தேர்வு எழுதித் தவறியபின் பொதுநிலைத் தேர்ச்சிப் பட்டம் பெறும்நிலை அளி.

**Gulf'-stream**, *n.* மெக்சிகோ வளைகுடாவினின்றும் (Gulf of Mexico) வெளிப்பட்டுச் செல்லும் வெப்பக் கடல்நீரோட்டம்.

**gulf'weed**, *n.* கிளைவிட்டு வளரும் கடற் களைப்பூண்டு வகை.

**gulf'y**, *a.* வளைகுடாக்கள் அல்லது நீர்ச்சுழல்கள் நிறைந்துள்ள.

**gull**[1], *n.* நீள் சிறகும் தோலடியும் உடைய கடற்பறவை வகை.

**gull**[2], *n.* ஏமாளி, பேதை; மோசடி; *v.* மயக்கி ஏய், ஏமாற்று.

**gull'ery**, *n.* வஞ்சனை.

**gull'et**, *n.* உணவுக்குழாய், இரைக்குழல்; தொண்டை, மிடறு; நீர்க்கால்; கடல் இடுக்கு; இடுமுடுக்கு, ஒடுக்கமான வழி.

**gull'ey**, *n.*, *v.*=gully[1].

**gull'ible**, *a.* எளிதில் ஏமாற்றப்படும் இயல்புள்ள.

**gull'y**[1], *n.* நீர் அரித்தோடிய மலை இடுக்கு; ஆழமான செயற்கை நீர்க்கால்; சாக்கடை, வடிகால்; சால்வரி; சால்வரியிட்ட இருப்புப் பாதை; மரப்பந்தாட்ட வகையில் மட்டையாளருக்குப் பின்னால் சற்றுப் பக்கவாட்டத்திலுள்ள ஆட்டக்களம்; *v.* சால்வரி இடு, அரித்தகழ்ந்து நீண்ட இடுக்கப்பள்ள வழி உண்டாக்கு.

**gull'y**[2], *n.* பெரிய கத்தி வகை.

**gull'y-drain**, *n.* வடிகால், சாக்கடைக்கால்.

**gull'y-hole**, *n.* தெருப்பக்கச் சாக்கடைத்தொட்டி.

**gull'y-trap**, *n.* சாக்கடை வளியடைப்பு அமைவு.

**gulos'ity**, *n.* பேருண், கழிபேர் இரை.

**gulp**, *n.* பேராவலோடு விழுங்குதல்; விழுங்க முயலுதல்; பெருங்கவளம்; *v.* அவசரமாக விழுங்கு; பேராவலோடு உண்; பெருமுயற்சி செய்து உட்கொள்; இடர்ப்பட்டு விழுங்கு; மூச்சுத் திணறு, தொண்டை அடைத்துக்கொள்; அடக்கு; (தொ.) gulp down, முயற்சிசெய்து அடக்கு, அடக்கிக்கொள்.

**gum**, *n.* மரப்பிசின், கோந்து; கண்பீளை; இனிப்புத் தின்பண்டம் செய்ய உதவும் பொருபொருப்பான கடும் பிசின் பொருள், அதுக்குவதற்குரிய சவ்வுப் பண்டம்; பிசின் வெளிப்படுத்தும் மரவகை; நோய்ப்பட்ட பழமர வகைகளிலிருந்து கசியும் பிசின்; *v.* பிசின் தடவு; பசை தடவி விறைப்பாக்கு; பசை தடவி ஒட்டு; பசைப்பொருளாகு; பிசின் கசியவிடு.

**gum'-ammo'niac, gum'-ammoni'acum,** *n.* குங்கிலியப் பிசின்.

**gum'-ar'abic,** *n.* வேலம் பிசின்.

**gum'boil,** *n.* பல் ஈறுகளில் தோன்றும் சிறுகட்டி.

**gum'-drag'on,** *n.* முட்புதர்ச்செடிப் பிசின்; முட்புதர்ச்செடி வகை.

**gum'-ju'niper,** *n.* மெருகெண்ணெய் செய்வதற்குப் பயன்படும் குங்கிலியப் பிசின் வகை.

**gum'lah,** (இ.) *n.* நீர் வைப்பதற்கான பெரிய மண்சாடி வகை.

**gumm'a,** *n.* (மரு.) மேகக்கட்டி, பிசின் போன்ற செறிவுள்ள புடைப்பு; *pl.* gumm'as, gumm'ata.

**gumm'atous, gummif'erous,** *a.* பிசின் உண்டாக்குகிற.

**gumm'ing,** *n.* பிசின் கொண்டு ஒட்டுதல்; கல் அச்சு முறை வகையில் கல்லின்மேல் பிசின் நீர் தடவுதல்; செடிகளுக்குக் காணும் நோய்க்கூறு வகையில் உயிர்மச் சுவர்கள் பிசினுக மாறுதல்.

**gummos'ity,** *n.* பிசின் போன்ற நிலை.

**gumm'ous, gumm'y,** *a.* பிசுக்குள்ள, களியான; ஒட்டிக் கொள்ளுகிற; பிசின் மிகுந்துள்ள, பிசின் கசிகிற; கால்-கணைக்கால் வீக்கங் கண்டுள்ள.

**gump'tion,** *n.* (பே-வ.) செயல்துறை அறிவு; அறிவுக் கூர்மை; அறிவுவன்மை, ஊக்கவளம், விரைசெயல் திறம்; வண்ணக்கலப்புக் கலை, படம் எழுதுதற்கான வண்ணப் பொருள்களை ஆயத்தப்படுத்தும் துறை.

**gum'-rash,** *n.* (மரு ) எயிற்றுப்புண்.

**gum'-res'in,** *n.* பிசின் கலந்த குங்கிலியம்.

**gums,** *n. pl.* ஈறு, எயிறு, பல்நிற்கும் தசை.

**gum'-tree,** *n.* பிசின்-குங்கிலிய மரவகை; (தொ.) up a gum-tree, இக்கட்டான நிலையில்.

**gun,** *n.* துப்பாக்கி; சுழல் துப்பாக்கி; பீரங்கி விசைப்பீற்று கருவி; பூச்சிகளைக் கொல்வதற்காகத் தூவப்படும் மருந்து; துப்பாக்கி வேட்டு அடையாளம்; துப்பாக்கி தாங்கிச் செல்பவர்; துப்பாக்கி தாங்கி வேட்டையாடச் செல்பவர்களில் ஒருவர்; *v.* வேட்டிடு; குறிபார்த்துச்சுடு; துப்பாக்கிகளைத் தருவித்துக்கொடு; வெடிதீர்; துப்பாக்கி தாங்கி வேட்டையாடச் செல்; (தொ.) as sure as a gun, உறுதியாக, கட்டாயமாக; மறுப்புக்கிடமின்றி; blow great guns, புயற் காற்று வகையில் வேகமாக வீசு; great gun, சிறப்புப் பொருந்தியவர்; gun moll, கீழோர்களுடன் பழகுபவர்; துப்பாக்கி வீரன் காமக்கிழத்தி; son of a gun, இகழ்ச்சிக் குரியவர், திருட்டுப்பயல்; stand to one's guns, stick to one's guns, கொள்கை-நிலை முதலியவற்றைப் பற்றுறுதியாகக் கடைப்பிடித்து நில்.

**gun'-barrel,** *n.* துப்பாக்கிப் புழை; துப்பாக்கிக் குழல்.

**gun'boat,** *n.* சிறு பீரங்கிப் போர்க்கப்பல்.

**gun'-carriage,** *n.* பீரங்கி வண்டி.

**gun'-cotton,** *n.* வெடிப்பஞ்சு, வெடிப்பாற்றலுள்ள நீர்மங்களில் தோய்ந்த பஞ்சு.

**gun'-fire,** *n.* துப்பாக்கி வெடிப்பு; காலங் காட்டும் வேட்டடையாளம்; புலர்காலைத் தேநீர்.

**gun'-flint,** *n.* துப்பாக்கித் தீக்கல்.

**gun'-harpoon',** *n.* துப்பாக்கி ஈட்டி.

**gun'-house,** *n.* (கப்.) பீரங்கிப் பாதுகாப்புக் கட்டமைவு.

**gun'-lock',** *n.* துப்பாக்கி வெடி தீர்ப்பதற்குரிய பொறி அமைவு.

**gun'-metal,** *n.* கருங்கலம், துப்பாக்கி செய்யப் பயன்படுத்தப் பட்ட செம்பு துத்தநாகம் வெள்ளீயக் கலவை உலோகம்.

**gunn'age,** *n.* போர்க்கப்பல் ஏற்றிச் செல்லும் பீரங்கிகளின் எண்ணிக்கை.

**gunn'el [1],** *n.* விலாங்கு போன்ற சிறு கடல் மீன் வகை.

**gunn'el [2],** *n.*=gunwale.

**gunn'er,** *n.* துப்பாக்கி சுடுபவர்; துப்பாக்கி வீரர்; பீரங்கிப் படைவீரர்; கப்பல் படைக்கலப் பணித்துறையின் பொறுப்பு வகிக்கிற ஆணை பெற்ற அலுவலர்; (தொ.) gunner's daughter, தண்டனைக்காகக் கப்பலோட்டியை வைத்துக் கட்டும் துப்பாக்கி; kiss the gunner's daughter, கசையால் அடிக்கப்படுவதற்காகத் துப்பாக்கியுடன் சேர்த்துக் கட்டப் பெறு.

**gunn'era,** *n.* (தாவ.) நீண்டுயர்ந்த மிகப் பெரிய இலைகளை யுடைய சதுப்புநிலச் செடியினம்.

**gunn'ery,** *n.* பீரங்கி இயக்கும் கலை; பீரங்கி இயற்றும் கலை; பீரங்கிப் பழக்கம்.

**gunn'y,** (இ.) *n.* கோணிப்பை, சாக்கு.

**gun'-pit,** *n.* பீரங்கிப்பள்ளம்; பகைவரது தாக்குதலினின்றும் பீரங்கிகளுக்குக் காப்பளிக்கும் குழி.

**gun'-port,** *n.* பீரங்கி சுடுவதற்கான கப்பலின் பக்கத்துத் துளை.

**gun'powder,** *n.* வெடிமருந்து, துப்பாக்கி மருந்து; நுண் மணிகள் போன்ற நேர்த்தியான பச்சைத் தேயிலைத் தூள் வகை; (தொ.) Gunpowder Plot, (வர.) பிரிட்டனில் பாராளு மன்றத்தைத் தகர்த்தெறிவதற்காக 1605-ஆம் ஆண்டில் நிகழ்ந்த சதி.

**gun'-room,** *n.* போர்க்கப்பலில் பீரங்கிப்படை வீரரும் அவருடைய துணைவர்களும் உணவு கொள்வதற்காகப் பயன் படுத்தும் அறை.

**gun'-runner,** *n.* சார்புநாட்டில் சட்டத்தை மீறி வெடி படைக்கலங்களைக் கொண்டு செல்பவர்.

**gun'-running,** *n.* சார்பு நாட்டில் சட்டத்தை மீறி வெடி படைக் கலங்களைக் கொண்டு செல்லுதல்.

**gun'shot,** *n.* துப்பாக்கிக் குண்டு பாயுந்தூரம்; *a.* துப்பாக்கிக் குண்டு தாக்கியதனால் விளைந்த.

**gun'-shy,** *a.* துப்பாக்கி வேட்டுக்களினால் அச்சங்கொள்ளுகிற.

**gun'smith,** *n.* துப்பாக்கி செய்பவர்; துப்பாக்கி செப்ப னிடுபவர்.

**gun'stick,** *n.* துப்பாக்கியில் மருந்து திணிக்க உதவுங் கோல்.

**gun'stock,** *n.* பீரங்கிக்குழல் ஏற்றப்பெறுவதற்குரிய மரச் சட்டம்.

**gun'ter,** *n.* இரண்டடி நீளமுள்ள மரத்தினாலாய தட்டை அளவு கோல் வகை; கப்பலின் உச்சிப்பாய்மரம்; கப்பலின் உச்சிப்பாய்மரத்துணி; (தொ.) Gunter's chain, அறுபத் தாறடி நீளமுள்ள நில அளவைச் சங்கிலி; Gunter's scale, இரண்டடி நீளத் தட்டை அளவுகோல் வகை.

**gun'wale,** *n.* கப்பலினது அல்லது படகினது பக்கத்தின் மேல்விளிம்பு.

**gun'yah,** *n.* ஆஸ்திரேலிய நாட்டுக் குடிசை.

**gup,** (இ.) *n.* வம்பளப்பு.

**gurgita'tion,** *n.* அலையெழுச்சி; குமிழியிட்டுக் கொந் தளித்தல்; குமிழியிட்டுக் கொந்தளிக்கும் ஒலி.

**gur'gle,** *n.* களகள வென்னும் நீர்பாயுமொலி; *v.* களகள என நீர்பாயும் ஒலியெழுப்பு.

**gur'jun,** *n.* குட்டநோய் களிம்பு தைலம் தரும் கிழக்கிந்திய மர வகை.

**gurn'ard, gurn'et,** *n.* கடல்மீன் வகை, பெரிய தலையும் கவசக்காப்புடைய மூன்று கை போன்ற உறுப்புக்களும் செவுள்களும் கொண்ட கடல்மீன் வகை.

**gu'rrah,** *n.* மட்கலம், சாடி.

**gu'rry,** (இ.) *n.* சிறிய கோட்டை.

**guru,** (ச.) *n.* குரு, ஞான ஆசிரியர்.

**gush,** *n.* பொங்கி வழியும் நீர்த்தாரை; உணர்ச்சியின் எழுச்சி; கிளர்ந்தெழும் கனிவு; பேச்சுநடையில் உணர்ச்சிவளம்; *v.* பொங்கிவழி, பீறிட்டு ஒழுகு; கொப்புளி; பீறிட்டு ஒழுகும்படி செய்; தேனொழுகப் பேசு, இனியது கூறு, அன்பு ததும்பும்படி பேசு.

gush'er, *n.* பொங்கிப் பீறிடும் மண்ணெண்ணெய்க் கிணறு.
gush'y, *a.* மன உணர்ச்சி பொங்குகிற; பொங்கி வெளிப் படுகிற மன உணர்ச்சியுள்ள.

guss'et, *n.* கொளு, அகலப்படுத்தவும் உறுதிப்படுத்தவும் ஆடைகளுக்கு உள்ளே கொடுக்கப்படும் முக்கோண வடிவான துணி; கட்டுமானக் கோணத்தை வலுப்படுத்துவதற்காகக் கொடுக்கப்படும் இரும்பு வளைகொண்டி.

gust[1], *n.* காற்றுவீச்சு, வன்காற்றலை; புயல்வீச்சு, மழை வீச்சலை; வெப்பலை; புகைவீச்சலை; ஒலியலை; உணர்ச்சியின் திடீர்த்தாக்குதல் அலை.

gust[2], *n.* (செய்.) சுவையுணர்வு; சுவை ஆர்வநயம்; நுகர் வார்வம், நுகர்வுநயம்; (தொ.) have a gust of, நலம் பாராட்டு, நயநுகர்ந்து மகிழ்.

gusta'tion, *n.* சுவை நுகர்தல்; சுவையுணர்வு.

gust'ative, gust'atory, *a.* சுவையுணர்வைச் சார்ந்த, சுவையறிகிற.

gust'ful[1], *a.* புயலான, கொந்தளிக்கிற; எரிச்சலூட்டுகிற; எளிதிற் கோபிக்கிற.

gust'ful[2], *a.* சுவையான, சுவையுடைய; மகிழத்தக்க.
gus'to, *n.* சுவைநயம், சுவை ஆர்வம்.
gust'y[1], *a.*=gustful[1].
gust'y[2], *a.* சுவையான, சுவையுடைய, நாவில் நீர் சுரக்கும்படி நறுமணமும் இன்சுவையும் ஊட்டப்பட்ட.

gut, *n.* உணவு செரிமான அடிக்குழாய்; குடற்கூறு, குடல் நாளம்; குடல் நாளங்களால் முறுக்கப்பட்ட யாழ் நரம்பு; பட்டுப்புழுக் கழலையினுல் முறுக்கப்பட்ட இசைக்கருவி நாண்; பட்டுப்புழுக் குடலிலிருந்து இயற்றப்படும் தூண்டிலிழை; இடுங்கிய நீர் ஓடை; கால்வாய்; கடற்கால்; படகுப் பந்தயத்தினிடையிலுள்ள ஆற்று வளைவு; தெருவின் இடுக்குப் பகுதி; *v.* மீனின் குடலெடு, உள்ளீடெடு; மீனைத் துப்புரவு செய்; வீட்டு உள்ளீடழி, வீட்டின் உள்ளமைப்புக்களை அகற்று; ஏட்டின் கருப்பொருளை வாங்கு, சாரத்தை எடு; (தொ.) blind gut, குடல்வால்.

guts, *n. pl.* குடல்; விலங்குடலின் உள்ளீடு; உள்ளீடு; உள்ளார்ந்த தகுதி; வயிறு; உந்தாக்கம், முந்தாற்றல், தாங்குறுதி; (தொ.) has no guts in it, உண்மையான மதிப்பு அற்றது; மெய்யார்ந்த வலிமை இல்லாதது; take out guts of, மீனின் உள்ளீடு எடு, மீனைத் துப்புரவு செய்.

gut'-scrap'er, *n.* நரப்பிசைக்கருவி வாசிப்பவர், நரப்பிசைக் கருவியாளர்.

gutt'a, *n.* (க-க.) கிரேக்கச் சிற்ப வகையில் துளி போன்ற அணி ஒப்பனை; *pl.* gutt'ae.

gutta-perch'a, *n.* கட்டிறுக்க சாம்பல்நிற மரப்பால் பிசின் வகை; *a.* மரப்பால் பிசினுலான.

gutt'ate, gutt'ated, *a.* துளிகள் கொண்டுள்ள; (தாவ.) புள்ளிகள் உள்ள.

gutt'er, *n.* சாக்கடை, தெரு ஓரக்கால்வாய்; வடிநீர்க்கால், நீர்ப்பொருள் வழிந்தோடுவதற்கான திறந்த குழாய்; வாரி நீரோடை, இறப்பிடையில் மழைநீர் ஓடும் பள்ளம்; சால்வரி, நீள்வரிப்பள்ளம்; ஓரவெட்டு வரிப்பள்ளம்; அச்சுத் துறையில் வரிச்சட்டத்தில் பக்கங்களை இடைப்பிரிக்கும் வெட்டு வரிப்பள்ளமிட்ட பட்டிகை; சேரிவாழ்வு; சமுதாய இழிநிலை; *v.* வடிகால் உருவாக்கு; சால்வரியிடு, வரிப்பள்ள மிடு; பள்ளமாக அகழப்பெறு; ஓடையாக ஒழுகு; வடிகால் வழி ஓடு; துளித்துளியாய் விழு; விளக்கில் மெழுகுதிரி உருகிச் சொட்டுக்களாக விழு; (தொ.) gutter journalism, gutter press, இழிசுவைப் பத்திரிகை; take out of gutter, ஏழ்மையான சூழ்நிலைகளினின்று வெளியே கொணர்.

gutt'er-blood, *n.* இழிபிறப்பாளர்; நகர உள்ளூர்வாணர், நகரத்திலேயே பிறந்து வாழ்பவர்.

gutt'er-child, *n.* யாருமிலாக் குழவி, துணையற்ற குழந்தை.

gutt'er-man, gutt'er merchant, *n.* தெருவோரச் சிறு வணிகன்.

gutt'er-snipe, *n.* துணையற்ற குழந்தை, பெற்றோரை இழந்த குழந்தை.

guttif'erous, *a.* துளிகள் புறங்கசிகிற; இருவிதையிலைச் செடி வகை சார்ந்த.

gut'tle, *v.* பேராவலோடு உண்ணு.

gutt'ural, *n.* மிடற்றொலி; *a.* மிடறு சார்ந்த; தொண்டையில் ஒலிக்கின்ற, முதல் நா அண்ணத்தினிடைப் பிறக்கின்ற.

gutt'uralize, *v.* மிடற்றொலி ஆக்கு; தொண்டையில் ஒலி.

gutt'uro-maxill'ary, *a.* மிடற்றையும் தாடைகளையும் சார்ந்த.

gutt'y, *n.* குழிப்பந்தாட்டத்தில் பயன்படுத்தப்படும் கட்டிப் பிசின் பந்து.

guy[1], *n.* சமநிலைப் பிணிப்பு, பாரந்தூக்கி கூடாரம் முதலிய வற்றைச் சமநிலைப்பட இழுத்து நிறுத்தும் கயிறு அல்லது சங்கிலி முதலியவற்றுலான பிணைப்பு; *v.* சமநிலைப் பிணைப்பு மூலம் பிணித்துவை.

guy[2], *n.* நவம்பர் 5-ஆம் நாள்தோறும் கட்டியிழுக்கப்படும் 'கொடும்பாவி உருவம்; விசித்திர ஆடை அணிந்த மனிதன்; கோரமானவர்; ஆள், பேர்வழி; *v.* கொடும்பாவியாக்கிக் காட்டு; (தொ.) do a guy, மறைந்துகொள்; ஒளித்துக் கொள்; காணுமற் போ; give the guy to, தப்பித்துக்கொள்.

Guy's, Guy's Hospital, *n.* லண்டன் மாநகர மருத்துவமனை.

guz'zle, *v.* பேரார்வத்துடன் உண்ணு; பேராவலுடன் குடி; தின்று குடித்துப் பெரும்பணம் அழி.

gwin'iad, gwyn'iad, *n.* வெண்ணிறத் தசையுடைய ஏரி மீன் வகை.

gybe, *v.* கப்பலின் பாயை வெட்டி இழுத்து மாற்று; பாயை வெட்டியிழுத்துக் கப்பல் பாதை மாற்று; கப்பல் பாதை மாறிச் செல்.

gyle, *n.* ஒரு தடவை வடித்த மாத்தேறல் ஈடு; புளியாக்கப் பட்ட மாவூறல் சத்து; புளிப்பாக்க உதவும் மிடா.

gymkha'na, *n.* உடற்பயிற்சிப் போட்டி விளையாட்டுப் பொதுவிடம்; உடற்பயிற்சிப் போட்டி விளையாட்டுக் காட்சி யணி; போட்டி விளையாட்டுக் கூட்டம்.

gymna'siarch, *n.* உடற்பயிற்சிக் களரி முதல்வர்.

gymnas'iast, *n.* உடற்பயிற்சிப்பள்ளி மாணவன்; உடற் பயிற்சி அறிஞர், உடற்பயிற்சி ஆசிரியர்.

gymna'sium, *n.* களரி, உடற்பயிற்சிக்கூடம்; உடற் பயிற்சிக்கான இடம்; உடற்பயிற்சிப் பள்ளி; செர்மன் உயர்தரப்பள்ளி.

gym'nast, *n.* உடற்பயிற்சித்துறை வல்லுநர்.

gymnas'tic, *n.* கட்டுப்பாட்டுப் பயிற்சி அமைப்புமுறை; *a.* உடற்பயிற்சிகள் சார்ந்த.

gymnas'tics, *n. pl.* தசைகளை வலுப்படுத்துவதற்கான உடற் பயிற்சிகள்.

gym'nosoph, gymnos'ophist, *n.* பண்டைக்கால இந்திய திகம்பரத் துறவி; உண்முகச் சிந்தனையாளர், மறையிய லறிஞர்.

gymnosperm'ous, *a.* விதைவகையில் பொதியப்பெருத, திறந்த மேனியான, தோடற்ற.

gymnot'us, *n.* மின் விலாங்கு, மின் அதிர்ச்சி ஆற்றலுடைய மீன்வகை.

gynaece'um, *n.* உவளகம், பண்டைக் கிரேக்க ரோமரிடையே வீட்டில் பெண்டிர் பழகும் பகுதி; (தாவ.) மலரின் பெண் உறுப்புக்கள்.

gynaecoc'racy, gynoc'racy, *n.* பெண் ஆட்சி; பெண்களின் ஆட்சி.

gynaecol'ogy, *n.* பெண்நோய் மருத்துவக்கலை, பெண்களின் நோய்களைப் பற்றிய ஆய்வியல்துறை.

**gynan'drous**, *a.* (தாவ.) மலரில் துய்யும் சூலகமும் ஒரே தண்டில் இணைந்துள்ள.

**gyn'obase**, *n.* (தாவ.) மலரின் பெண் உறுப்புக்களைத் தாங்கும் கொள்கலத்தின் விரிவகற்சி.

**gyn'ophore**, *n.* (தாவ.) மலரின் கருப்பையைத் தாங்கும் சிறுகாம்பு போன்ற பகுதி; (வில.) நீர்வாழ் உயிரின வகையின் புத்துயிர்க்கிளையின் முனை.

**gyp**, *n.* கேம்பிரிட்ஜ் (Cambridge) நகரிலும் டர்ஹாம் (Durham) நகரிலுமுள்ள கல்லூரி வேலையாள்.

**gyp'-room**, *n.* கேம்பிரிட்ஜ் அல்லது டர்ஹாம் நகரிலுள்ள கல்லூரி வேலையாளுக்குரிய சரக்கறை.

**gyps**, *n.*=gypsum.

**gypsoph'ila**, *n.* நூலிழைபோன்ற காம்புகளுடன் நுடங்கியாடும் தோட்டச்செடி வகைகள்.

**gyp'sum**, *n.* கனிக்கல், மருத்துவர் பயன்படுத்தும் கட்டுகாரைக்குரிய மூலக்கனிப்பொருள் வகை.

**gyp'sy**, *n.*=gipsy.

**gyr'ate**[1], *a.* (தாவ.) வளையங்களாயமைந்த, மடிப்புச் சுருள்களாக ஒழுங்குபடுத்தப்பட்ட.

**gyrate'**[2], *v.* திருகு சுருளாகச் சுற்றிச்செல்; விரைவாகச் சுழலு.

**gyra'tion**, *n.* விரைவாகச் சுற்றும் இயக்கம், சுழற்சி; திருகு சுருளின் ஒருவட்டச் சுற்று; சிறுகிளையின் ஒருவரிசைச் சுற்று.

**gyr'atory**, *a.* சுற்றுகிற, சுழலுகிற; போக்குவரத்துவகையில் ஒருவழி முறையாகச் சுற்றி வருகிற.

**gyr'e**, *n.* வட்டம், சுற்று; திருகுசுருளாகச் சுழலுதல், சுற்றுதல்; *v.* சுழலு, சுற்று.

**gyr'o**, *n.*=gyroscope.

**gyr'o-car'**, *n.* சுழல்வேகமானியால் சமநிலைப்படுத்தப்பட்டு ஒரே தண்டவாளத்தில் இயங்கும் பொறியூர்தி அல்லது வண்டி.

**gyr'o-com'pass**, *n.* சுழல்வேகமானியால் இயங்கும் திசைகாட்டி அல்லது திசையறி கருவி, காந்தக் கவர்ச்சியால் இயங்கும் திசைகாட்டி பயனற்றபோது திசையறிவதற்கு உதவும் சுழல் வேகமானி.

**gyr'ograph**, *n.* சுழற்சிகளைப் பதிவுசெய்யும் கருவி.

**gyroid'al**, *a.* திருகு சுருளான, திருகிச் சுழலுகின்ற, சுழற்சியுள்ள, சுழலுகின்ற.

**gyr'omancy**, *n.* வட்டமாகச் சுழன்று சுழன்று சென்று தலைசுற்றி மயக்கமாக விழுந்து வருவதுரைத்தல்.

**gyr'oplane, gyrop'ter**, *n.* தலைக்கு மேலே விரைவாகச் சுற்றும் காற்றுடிப் பொறிகளின் இயக்கத்தால் உயர்ந்து செல்லும் வானூர்தி வகை, செங்குத்தாக மேலெழும் வானூர்தி வகை, மீவான் கலம், நிமிர் வானூர்தி.

**gyr'oscope**, *n.* சுழல் பொருள்களின் இயக்க இயல்பை விளக்குங் கருவி; சுழலாழி விளையாட்டுக் கருவி; ஒரு தண்டூர்தியின் சுழலாழி.

**gyrose'**, *a.* (தாவ.) மடிப்புச் சுருள் பரப்புடைய; அலை குறியடையாளங்களையுடைய.

**gyrostab'iliser**, *n.* கப்பல் ஆடி உருளாமல் காக்கும் சுழல் விசைக் கருவி.

**gyr'ostat**, *n.* சுழல் பொருள்களின் இயக்க இயல்பை விளக்குங் கருவி.

**gyr'us**, *n.* இரு பள்ளங்களிடையேயுள்ள வரை முகடு; மூளையின் மடிப்புச்சுருள்.

**gyve**, *v.* விலங்குமாட்டு, தளையிடு.

**gyves**, *n. pl.* தளை, விலங்கு.

Ha[1], *int.* வியப்பு-மகிழ்ச்சி-ஐயம்-வெற்றி முதலியவற்றைத் தெரிவிக்கும் வியப்பிடைச்சொல், ஆ!

ha[2], *v.* தாழ்ந்த குரலில் முணங்கு அல்லது பாடு, வாயை மூடிக்கொண்டே பாடு; மந்த ஓசை செய், முரலு.

haaf, *n.* ஷெட்லாந்திலும் ஆர்க்னியிலும் (Shetland and Orkney) ஆழ்கடல் மீன்பிடிப்பு நிலப்பகுதி.

hab'eas corp'us, *n.* கைதியைக் கொண்டு வரும்படி நடுவர் இடும் ஆணை, (தொ.) Habeas Corpus Act, ஆட்கொணர் சட்டம்.

hab'erdasher, *n.* சிறுபொருள் விற்போர்.

hab'erdashery, *n.* சில்லறை உடுப்புக்கள்-நாடா போன்ற சாமான்கள் விற்பனை.

hab'ergeon, *n.* (வர.) கையில்லாத இருப்புப் போர்க் கவச மேலங்கி.

hab'ile, *a.* திறமைவாய்ந்த, கைவல்ல.

habil'iment, *n.* தளவாடம்.

habil'iments, *n. pl.* கஞ்சுகம், பணி உடுப்புக்கள்.

habil'itate, *v.* சுரங்கத் தொழிலிற்குச் செயல் மூலதனம் அளி; பல்கலைக்கழகப் பதவிக்குத் தகுதியாகு.

hab'it, *n.* பழக்கம்; மனப்பாங்கு; உடற்பாங்கு; வளரும் வகை அல்லது முறை; மகளிர் குதிரைச் சவாரிஉடுப்பு; சமய நெறியினர் உடுப்பு; *v.* உடையணி, உடுத்திக்கொள்.

hab'itable, *a.* குடியிருக்கத்தக்க, வசிக்கத்தக்க.

hab'itant, *n.* குடியிருப்பவர், வசிப்பவர்; பிரஞ்சு மரபைச் சேர்ந்த கனடா நாட்டினர்.

hab'itat, *n.* தாவரம் அல்லது விலங்கின் இயற்கையான இருப்பு; மனை.

habita'tion, *n.* உறைவிடம்; 'பிரிம்ரோஸ் லீக்' (Primrose League) என்னும் கழகத்தின் கிளைச்சங்கம்.

habit'ual, *a.* பழக்கத்திலுள்ள; தொடர்ச்சியான; அடிக்கடி நிகழ்கிற; குறிப்பிட்ட பழக்கத்துக்கு ஆளாகிவிட்ட.

habit'uate, *v.* பழக்கப்படுத்து.

hab'itude, *n.* மனப்பாங்கு; உடற்பாங்கு; பழக்கம்; போக்கு.

*habitue*, (பிர.) *n.* பழக்கமாக வருபவர் அல்லது தங்குபவர்.

*hachures*, (பிர.) *n. pl.* தரைப்படங்களில் மலைச்சரிவுகளைக் காட்டுவதற்கான கோடுகள்.

*hacien'da*, (ஸ்பா.) *n.* குடியிருப்பு மனையோடு கூடிய தோட்டம்.

hack[1], *n* மண்வெட்டி வகை; சுரங்கத் தொழிலரின் கடப்பாரை; ஆழமான வெட்டு; காயம், புதைமிதியடியின் பெருவிரற் பகுதியால் உதைக்கப்பட்டு விளையும் காயம்; *v.* வெட்டு; அடையாளம் ஏற்படும்படி வெட்டு, கீறு; சம்மட்டியால் அடித்துச் சொரசொரப்பாக்கு; அடித்துக் காயப்படுத்து; காற்பந்தாட்டத்தில் எதிர்த்தரப்பு ஆட்டக்காரரின் கீழ்க்கால் முன்புறத்தின்மீது உதை; காயப்படும்படி அடி; சிறிது சிறிதாக வறட்டு இருமல் இருமு; (தொ.) hacking cough, குறுகுறு வறட்டு இருமல்.

hack[2], *n.* பருந்திறைச்சி பரப்பி வைக்கப்படும் பலகை; செங்கல் காயவைக்கும் சட்டம்; கால்நடைகளுக்குத் தீனி வைக்கப்படும் மரவடைப்பு.

hack[3], *n.* வாடகைக் குதிரை; களைத்த குதிரை; சவாரிக் குதிரை; கடும்வேலை செய்வோன்; *v.* பொதுவாக்கு; வாடகைக்கு விடு; குதிரைச்சவாரி செய், சாதாரண வேகத்தில் சாலை வழியாகச் சவாரி செய்; வாடகைக் குதிரைகளைப் பயன்படுத்து.

hack'ery, *n.* மாட்டு வண்டி.

hac'kle[1], *n.* சணலுக்கான எஃகுச் சீப்பு, சணலைத் துப்புரவு செய்யும் சீப்பு; கோழி முதலிய பறவைகளின் கழுத்திலுள்ள நீண்ட இறகுகள்; சேவலின் கழுத்திறகு; *v.* எஃகுச் சீப்பைக் கொண்டு சணலைச் சிக்குறு, சிக்கெடு.

hac'kle[2], *v.* வெட்டு, நையச்சிதை, உருக்குலை; அடித்துக் காயப்படுத்து.

hack'-log, *n.* இறைச்சி வெட்டும் மரக்கட்டை.

hack'ly, *a.* வெட்டப்பட்டதைப் போன்று சொரசொரப்புடைய; (கனி.) தாறுமாறும் கரடுமுரடும் ஆன.

hack'matack, *n.* அமெரிக்க சவுக்கு மரவகை, அமெரிக்க ஊசியிலை மரவகை.

hack'ney, *n.* சவாரிக்குதிரை; கடும்வேலை செய்பவன்; கூலிக்கு உழைப்பவன்; *a.* வாடகைக்கு விடப்பட்ட; *v.* பொதுவாக்கு; பழகியதாக்கு; சிறுதிறமாக்கு.

hack'ney-carr'iage, hack'ney-coach, *n.* வாடகை வண்டி.

hack'neyed, *a.* பொதுவாகப் பயன்படுத்தப்படுகின்ற, பொதுப்பயனுக்கான; பழகிப்போன; சிறுதிறமான; அதிகமாகப் பயன்படுத்தப்பட்டதால் சலித்துப்போன.

hack'neyman, *n.* வாடகைக் குதிரைக்காரன்; சவாரிக் குதிரைகள் வைத்திருப்பவன்.

hack'-saw, *n.* உலோகப் பொருளை வெட்டும் வாள், உலோக இரம்பம்.

hack'stand, *n.* வாடகை வண்டி நிறுத்துமிடம்.

hack'-work, *n.* நூல் வெளியீட்டார்க்குச் செய்யும் இலக்கியக் கூலிவேலை.

hack'writer, *n.* கூலி எழுத்தர்.

had, *v.* have என்பதன் இறந்தகாலம்.

hadd'ock, *n.* 'ஆடாக்' மீன், 'காட்' (cod) இனத்தைச் சேர்ந்த கடல்மீன்வகை.

hade, *v.* (மண்., சுரங்.) செங்குத்தான நிலையிலிருந்து சாய்ந்திரு.

Had'es, *v.* கிரேக்க புராண வழக்கில் கீழுலகம், பாதாளம், ஆவி உலகம், நரகம்.

Hadj'i, Hajj'i, *n.* மெக்கா சென்று திரும்பிய இஸ்லாமிய யாத்திரிகர் பட்டம்.

haecce'ity, *n.* (மெய்.) இது என்ற தன்மை, தனிப்பண்பு.

haem, *n.* குருதிச்சிவப்பு வண்ணப்பொருள், குருதிச் சிவப்புப் பொருளில் பிசிதம் சேர்ந்த வண்ணம்.

haem'al, *a.* (உள்.) குருதி சார்ந்த; இருதயமும் பெரிய குருதிக் குழாய்களும் உள்ள உடற்பகுதியில் அமைந்திருக்கின்ற.

haeman'thus, *n.* குருதி வண்ண மலர்வகை, தென்னுப்பிரிக்க வேர்ப்பூண்டு மலர்வகை.

haemat'ic, *n.* குருதிவினைமருந்து; *a.* குருதிசார்ந்த; குருதியுள்ள.

hae'matin, *n.* உலர்ந்த குருதியிலிருந்து கிடைக்கும் பழுப்பு நிற இரும்புச் சத்துப்பொருள்.

haem'atite, hem'atite, *n.* சிவந்த அல்லது ஒருவாறு கறுத்த இரும்பு உயிரகைக் கனிப்பொருள்.

hae'matocele, he'matocele, *n.* குருதிக்குழிவு, இரத்தக் குழி, இரத்தவண்டம்.

haematogen'esis, *n.* குருதி உருவாதல்.

haematol'ogy, *n.* குருதியியல்.

haematur'ia, *n.* (மரு.) சிறுநீரில் குருதி உள்ளமை.

haemoglob'in, hemoglob'in, *n.* செந்நிறக் குருதியணு உடலியின் வண்ணப்பொருள்.

haemophil'ia, hemophil'ia, *n.* (மரு.) சிறு காயத்திலிருந்தும் குருதிப்பெருக்கிடும் பரம்பரை நோய்.

haem'orrhage, hem'orrhage, *n.* குருதிக்குழாய்களில் இருந்து இரத்தம் வெளிப்படுதல், இரத்தப்போக்கு.

haem'orrhoids, hem'orrhoids, *n.* மூலநோய்.

hae'mostat, *n.* குருதிப்போக்கினை நிறுத்தும் கருவி.

*ha'fiz*, (அரா.) *n.* திருக்குரானை மனப்பாடம் செய்துள்ள இஸ்லாமியரைக் குறிக்கும் பட்டம்.

haf'nium, *n.* (வேதி.) 1923-ஆம் ஆண்டில் கண்டுபிடிக்கப் பட்ட உலோகத் தனிமம் அல்லது உலோக மூலம்.

haft, *n.* கைப்பிடி; *v.* கைப்பிடி பொருத்து.

hag [1], *n.* அருவருப்புத்தோற்றமுள்ள கிழவி; மந்திரக்காரி, சூனியக்காரி; பெண் பேய்.

hag [2], *n.* சதுப்பு நிலத்தில் மென்மையான நிலப்பகுதி; சதுப்பு நிலத்தில் உறுதியான நிலப்பகுதி.

hag'fish, *n.* விலாங்கு போன்ற மீன்வகை.

*hagga'dah*, *n.* எபிரேய மொழி வழக்கில் யூதர் சட்டப் புராணப் பகுதி.

hagg'ard, *n.* பருந்து, இராசாளி, வல்லூறு; *a.* பருந்து வகையில் வளர்ச்சியுற்ற சிறகமைப்போடு பிடிக்கப்பட்ட; வேட்டைக்குப் பழக்கப்படாத; பயிற்றுவிக்கப்படாத; அருவருப்புத் தோற்றம்உடைய.

hagg'ed, *a.* அருவருப்பான கிழவி போன்ற தோற்றமுடைய, சூனியக்காரி போன்ற தோற்றமுடைய, விகாரமான; சோர்ந்த, நலிவடைந்த தோற்றமுடைய.

hagg'is, *n.* ஆடு முதலியவற்றின் இருதயம்-நுரையீரல்-கல்லீரல் முதலியவற்றைக் கொத்திய இறைச்சிக் கொதிப்புணவு வகை.

hag'gle, *n.* சண்டை, சச்சரவு; *v.* வாதமிடு, சச்சரவு செய்; பிசிர் பேசு.

hag'iarchy, *n.* மெய்ஞ்ஞானிகளின் ஆட்சி; மெய்ஞ்ஞானிகளின் அமைப்பு.

hagioc'racy, *n.* தூய்மையாளர்களின் அரசு.

Hagiog'rapha, *n. pl.* எபிரேய வேத புத்தகங்கள்; விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டில் 'சட்டமும் வருவதுரைப்பவர்களும்' என்ற பகுதியிற் சேர்க்கப்படாத பகுதிகள்.

hagiog'rapher, *n.* விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டுப் பகுதியில் சில நூல்களை எழுதியவர்; திருநிலையான தெய்விக நூல்களை எழுதுபவர்; திருத்தொண்டர் வரலாறு எழுதுபவர்.

hagiog'raphy, *n.* திருத்தொண்டர்களின் வாழ்க்கை வரலாற்றியல்.

hagiol'ater, *n.* திருத்தொண்டர்களை வழிபடுபவர்.

hagiol'atry, *n.* திருத்தொண்டர் வழிபாடு.

hagiol'ogist, *n.* திருத்தொண்டர் புராண எழுத்தாளர்.

hagiol'ogy, *n.* திருத்தொண்டர்களின் வாழ்க்கை வரலாறு புராணம் ஆகியவற்றைப் பற்றிய இலக்கியம்.

hag'ioscope, *n.* உயர் பலிபீடத் தோற்றத்தைக் காணக் கூடிய திருக்கோயிற் சுவரின் கோணல் திறப்பு அல்லது துளை.

hag'ridden, *a.* தீக்கனவுகளால் துன்பப்படுகிற.

hah, *int.*, *v.*=ha [1], [2].

ha ha[1], *int.* ஒலியோடு கூடிய சிரிப்பு.

ha'-ha[2], *n.* பூங்கா அல்லது தோட்டத்தைச் சுற்றியுள்ள கால்வாயிற் பதிந்த வேலி.

ha'ick, ha'ik, ha'ique, hyke, *n.* தலையையும் உடலையும் மூடுவதற்கான அராபியப் புற உடை.

hail [1], *n.* கல் மழை, ஆலங்கட்டி மழை; *v.* கனமாகப்பெய், பொழி.

hail [2], *n.* வணக்கம், முகமன்; *v.* வணங்கு, முகமன்கூறு, வரவேற்பளி; கவனத்தைக் கவரும்படி கூவியழை; *int.* வரவேற்கும் வியப்பிடைச்சொல்; (தொ.) hail from, இடத்திலிருந்து வருகை தா, புறப்பட்டு வா.

hail'-fellow, hail'-fellow-well-met', *a.* எளிதில் அல்லது விரைவில் பழகுகிற அல்லது நண்பராகுகிற.

hail'shot, *n.* ஆலங்கட்டி மழை போன்று பரவி விழும் சிறு குண்டு.

hail'stone, *n.* ஆலங்கட்டி.

hail'storm, *n.* புயற்காற்றோடு கூடிய ஆலங்கட்டி மழை; வசைமாரி; வினு மழை.

hair, *n.* மயிர், முடி; தாவரங்களில் புரணியிலிருந்து வளரும் நீண்ட உயிரணு; மயிர் போன்ற பொருள்; புள்ளி, மயிரிழை அளவு; துப்பாக்கி பீரங்கி முதலியவற்றிலுள்ள பாதுகாப்பு மூடுபொறி; (தொ.) against the hair, விருப்பத்திற்கு மாறாக; a hair of the dog that bit him, தொந்தரவு கொடுத்தவன் மிகச் சிறுபகுதி; do the hair, put up the hair, let down the hair, முடியை அழகுபடுத்து, முடியைத் திருத்து, முடியை ஒப்பனைசெய், முடியைத் தொங்கவிட்டு அழகுபடுத்து; lose one's hair, சினங்கொள்; make one's hair stand on end, மயிர்க்கூச்செறியச் செய்; அச்சமூட்டு; பெருவியப்பூட்டு; not turn a hair, கலக்கமுறாதிரு, குழப்பமடையாதிரு; put up the hair, தலைமுடியைத் தூக்கிக் கொண்டை போடு; split hairs, சிறிதைப் பெரிதாக்கு; to a hair, to the turn of a hair, மயிரிழைகூடப் பிசகாத, சரிநுட்பமாக.

hair'-ball, *n.* இரைப்பையில் தொகுதியாகும் மயிர்.

hair'breadth, hair's'-breadth, *n.* மயிரளவு தொலைவு, மிகக்குறுகிய தொலைவு, மிகச்சிறு தொலைவு; *a.* மிக நெருங்கிய, மிகக்குறுகிய; (தொ.) hairbreadth escape, மயிரிழையில் தப்பிப் பிழைத்தல்.

hair'-brush, *n.* மயிர்க்குச்சு, முடிச்சிக்கல் எடுக்க உதவுங் கருவி.

hair'cloth, *n.* கம்பளம், முழுவதும் அல்லது அரைகுறையாக முடியினுல் செய்யப்படும் துணி.

hair'cut, *n.* முடி திருத்துதல், சிகை வெட்டுதல்.

hair'dresser, *n.* முடியலங்காரர், முடி திருத்துவோர்.

hair'-dressing, *n.* முடி திருத்துதல், முடி அலங்கரித்தல்.

hair'-line, *n.* முடியாலான வரிக்கோடு, மயிரிழைக் கோடு; எழுத்து அச்சு முதலியவற்றில் மிக நுட்பமான வரிக்கோடு; மிக நுண்ணிய கோடுகளிட்ட துணி.

hair'-net, *n.* 'பிச்சோடா' வலை, கொண்டை வலை.

hair'-pen'cil, *n.* மெல்லிய வண்ணத்தூரிகை.

hair'pin, *n.* கொண்டை ஊசி; *a.* சாலையிற் குறுகலான வளைவுடைய.

hair'-rais'er, *n.* பயங்கரக் கதை.

hair'-seal, *n.* கடல் நாய், புறச் செவிகளும் முரட்டு முடிகளும் உடைய கடல் நாய்.

hair'-shirt, *n.* பாவ மன்னிப்புத் தேட்டாளர் அணியும் சுணைச் சட்டை; அந்தரங்கமான வருத்தம், மன நோய்.

hair'space, *n.* அச்சுக்கோப்போர் பயன்படுத்தும் இடைவெளிக்கான மிக மெல்லிய உலோக அச்சு.

hair'-splitt'er, *n.* அறக்கூராய்வாளர்.

hair'-splitt'ing, *n.* நுண்கூர் வேறுபாட்டு அமைப்பு.

hair'spring, *n.* கடிகாரச் சுருள்வில்.

hair'-stroke, *n.* மயிரிழைக்கோடுபோன்று அழகாக எழுதக் கூடிய திறமை, கையெழுத்துத் திறன்.

hair'y, *a.* முடியாலான; முடிபோன்ற; முடியால் மூடிய.

hake [1], *n.* கடல்மீன் வகை, 'காட்' (cod) என்பதைப்போன்ற கடல்மீன் வகை.

hake [2], *n.* செங்கற்களைக் காய வைப்பதற்குப் பயன்படும் மரச்சட்டம்.

hakeem', hakim [1], (அரா.) *n.* மருத்துவர்.

ha'kim [2], *n.* நடுவர், தலைவர், மாநில ஆளுநர்.

hal'ation, *n.* (நி.ப.) எதிர்மூலப்படியில் இயல்பான வரம்பிற்கு அப்பால் ஒளியைப் பரப்புதல்.

hal'berd, hal'bert, *n.* ஈட்டிக்கோடரி.

halberdier', *n.* ஈட்டிக்கோடரிக் கையர்.

**hal'cyon**, *n.* சிச்சிலிப் பறவை ; (தொ.) halcyon days, அமைதியும் மகிழ்ச்சியும் நிறைந்த காலம்.

**hale**[1], *a.* திடமான, உடல் நலமுடைய.

**hale**[2], *v.* வலிந்து இழு.

**half**, *n.* அரை, பாதி, இரு சமக்கூறுகளில் ஒன்று ; அரை யாண்டு காலக் கூறு, அரையாண்டு காலப் பிரிவு ; காற் பந்தாட்டம்-வளைகோற் பந்தாட்டம் முதலியவற்றில் இலக் குப் பகுதியைக் காக்கும் ஆட்டக்காரர்; குழிப்பந்தாட்டத்தில் அரைக்குழி தூர அளவு ; *a.* அரைப்பகுதியான, இரு சமக் கூறுகளில் ஒன்றான அல்லது ஒன்றைக் கொண்ட ; அரை குறையான, முழு நிறைவற்ற ; *adv.* அரையளவில், பாதி யளவில் ; பகுதியாக, அரைகுறையாக; (தொ.) better half, மனைவி, இல்லாள் ; cry halves, சரிசமமாகப் பங்கிடும்படி கேள் ; do a thing by halves, அரைகுறையாகச் செய் ; go halves, சரி சமமாகப் பங்கிடு ; half-way house, இரு பட்டணங்கள் முதலியவற்றிற்கு இடை வழியிலுள்ள தங்கு மிடம்.

**half'-and-half**, *n.* ஒத்த அளவான இரு பொருட்கலவை ; *a.* ஒன்றுக்கு ஒன்றான, ஒத்த அளவுடைய.

**half'-ape**, *n.* மனிதக்குரங்கு ; வாலில்லாக் குரங்கு ; காட்டு மனிதன்.

**half'-back**, *n.* காற்பந்தாட்டம் முதலியவற்றில் முற்புற ஆட்டக்காரர்களுக்குப் பின்னணியிலுள்ள ஆட்டக்காரர் ; 'ரக்பி' (Rugby) ஆட்டத்தில் முற்புற ஆட்டக்காரர்களுக்கும் முக்கால்புற ஆட்டக்காரர்களுக்கும் இணைப்பாகவுள்ள ஆட் டக்காரர்.

**half'-baked**, *a.* அரைகுறையான, அரைகுறையாகச் செய் யப்பட்ட ; அரைவேக்காடான ; முழு நிறைவற்ற ; பண் படாத ; முதிராத, பக்குவமடையாத.

**half'-ball**, *n.* குறிக்கோள் பந்தின் ஓரத்தை நோக்கி ஆட்டப் பந்தைச் செலுத்துதல்.

**half'-baptise'**, *v.* தனியாகவும் விரைவாகவும் ஞானஸ்நானம் செய்வி.

**half'-beak**, *n.* ஈட்டி போன்ற கீழ்த்தாடையுடைய மீன்வகை.

**half'-binding**, *n.* புத்தக மூலையும்முதுகுப்புறமுந் தோலால் அமைந்த கட்டுமானம்.

**half'-blood**, *n.* பெற்றோரில் ஒருவர் பொதுவாக உள்ள உற வுத்தொடர்பு ; இருசாதிப் பெற்றோருக்குப் பிறந்த பிள்ளை, இருதார மகவு.

**half'-blue'**, *n.* ஆக்ஸ்போர்டு அல்லது கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழக ஆட்டக் குழுவில் ஆட்டக்காரரது பதிலாள் ; ஆட்டக் காரர் உடை வகை.

**half'-board**, *n.* (கப்.) பயணம் செல்லும் கப்பல் காற்றை எதிர்த்துச் செல்வதற்குரிய சூழ்ச்சித்திறச் செயல்.

**half'-boot**, *n.* அரை முழங்காலளவுள்ள புதைமிதியடி.

**half'-bound**, *a.* புத்தகத்தின் முதுகுப் புறமும் மூலைகளும் தோலினுற் கட்டுமானஞ் செய்யப்பட்ட.

**half'-bred**, *a.* இழி பிறப்பான, கலப்பட இனமான, நன் னடக்கை அறியாத, கலப்புச் சாதியான, கலப்புச் சாதிக்குப் பிறந்த.

**half'-breed**, *n.* இருசாதிப் பெற்றோருக்குப் பிறந்த பிள்ளை, கலப்பு இனப் பிள்ளை.

**half'-brother, half'-sister**, *n.* ஒன்று விட்ட உடன்பிறந் தார்.

**half'-cap**, *n.* அசட்டையான வணக்கம்.

**half'-caste**, *n.* ஐரோப்பிய-ஆசிய கலப்பு இனப் பெற்றோர்க் குப் பிறந்தவர்.

**half'-close**, *n.* (இசை.) அரைகுறையான சந்த ஒலி.

**half'-cock'**, *n.* சுடுவதற்குமுன் துப்பாக்கிக் குதிரை அரை யளவில் நிற்கும் நிலை ; மட்டைப் பந்தாட்டத்தில் முன்புறம் பாயாமலும் பின்புறம் சாயாமலும் பந்தை அடிக்கும் அடி.

**half'-crown'**, *n.* இரண்டு ஷில்லிங்கும் ஆறு பென்சும் கொண்ட மதிப்புடைய ஆங்கில நாணயம்.

**half'-deck**, *n.* வணிகக் கப்பலில் பயிற்சியாளர்களும் இளம் மாலுமிகளும் வசிக்கும் இடம்.

**half'-doll'ar**, *n.* 50 செண்டுகள் மதிப்புள்ள அமெரிக்க நாணயம்.

**half'-done**, *a.* அரைவேக்காடான; அரைகுறையாகச் செய்யப் பட்ட.

**half'-face**, *n.* பக்கத்தோற்றம்.

**half'-hard'y**, *a.* மழைக்காலம் தவிர்ந்த மற்றக் காலங்களில் திறந்த வெளியில் வளரும் ஆற்றலுடைய.

**half'-heart'ed**, *a.* அரை மனதான, முனைப்பார்வமற்ற, சுறு சுறுப்புக் குறைந்த.

**half'-hitch**, *n.* ஒரு பொருளைச் சுற்றிக் கட்டப்பட்ட சாதா ரண முடிச்சு.

**half'-kir'tle**, *n.* 16-17-ஆம் நூற்றாண்டுகளில் பெண்கள் அணிந்த ஒருவகைச் சிறுசட்டை, அரைக்கச்சு.

**half'-length**, *n.* உடலின் மேற்பகுதியைக் காட்டும் உருவப் படம் ; *a.* முழுநீளத்தில் அரைப் பகுதியான.

**half'-life**, *n.* அணு ஆற்றல் சக்திப்பொருள் இயல்பாக வானிலிருந்து விழும் அளவில் அரைப்பகுதி விழும் கால அளவு.

**half'-light**, *n.* அரைகுறை ஒளி, மங்கலான வெளிச்சம், அந்தி ஒளி.

**half'lin**, *n.* 'பென்னி' என்ற வெள்ளி நாணயத்தில் அரைப் பகுதி; *a.* அரைகுறையாக வளர்ந்த, பாதி அளவில் வளர்ந்த.

**half'-lings, half'-lins**, *a.* அரைப்பகுதி வளர்ந்த ; *adv.* அறைகுறையாக.

**half'-mast'**, *n.* இறந்தவர்களுக்கு மரியாதை காட்டுதற்குக் கொடிமரத்தில் அரைப்பகுதிக்குத் தாழ்த்திக் கொடியைப் பறக்கவிடும் நிலை.

**half'-meas'ure**, *n.* அரைகுறைச்சாதனம்.

**half'-nel'son**, *n.* குத்துச்சண்டையில் ஒருவகைப் பிடிவரிசை; கைக்குள் கையும் கழுத்தின் பின்புறம் ஒரு கையும் கொண்ட பிடிவகை.

**halfp'enny**, *n.* ஆங்கில நாணயமாகிய 'பென்னி'யில் அரைமதிப்புள்ள நாணயம் ; இந்நாணய மதிப்பு ; *pl.* halfp'ence, half-p'ennies.

**halfp'ennyworth, hap'orth**, *n.* அரை 'பென்னி'க்கு விற்கக் கூடிய அளவு, அரை 'பென்னி' நாணய மதிப்புடைய அளவு.

**half'-plate**, *n.* நிழற்பட அரைத்தகடு, $4\frac{3}{4} \times 4\frac{1}{2}$ அங்குல அளவுள்ள நிழற்படத் தகடு.

**half-pound'er**, *n.* அரை 'பவுண்டு' எடையுள்ள மீன் அல்லது வேறு பொருள் ; அரை 'பவுண்டு' எடையுள்ள வெடி குண்டுச் சுடும் பீரங்கி.

**half'-roy'al**, *n.* புத்தகக் கட்டுமானம் செய்வதற்குப் பயன் படும் தடித்த அட்டை வகை அல்லது அட்டைப் பலகை.

**half'-seas-o'ver**, *a.* கடலின் பாதிவழியில்; குடிமயக்கத்தில்.

**half'-shift'**, *n.* யாழ் அல்லது நரம்பிசைக் கருவியை வாசிக்கும்போது அரையொலி கொடுக்கும் கை அமைவு நிலை.

**half'-sword**, *n.* அரைவாள் தூரச் சண்டை.

**half'-text**, *n.* மூல ஏட்டின் அரை அளவுள்ள கையெழுத்து.

**half'-tim'er**, *n.* அரைநேரம் வேலை செய்பவர், பாதிநேரம் பணியாற்றிப் பாதிநேரம் கல்வி பயிலுபவர்.

**half'-ti'tle**, *n.* புத்தகத் தலைப்புப் பக்கத்திற்கு அல்லது புத்தகப் பிரிவுக்கு முன்னுள்ள சிறுதலைப்பு.

**half'-tone**, *n.* நுண்பதிவுப்படம் ; (இசை.) மைய இசை ; *a.* நிழற்படத்தில் ஒளி நிழல் மாறுபாட்டளவுப் புள்ளிகளைக் காட்டுகின்ற.

**half'-truth**, *n.* அரைகுறையான உண்மை.

**half'witt'ed**, *a.* மந்த மதியுள்ள.

**hal'ibut, hol'ibut,** *n.* பெரிய தட்டை உணவுமீன் வகை.

**halieut'ic,** *n.* மீன் பிடித்தல்; *a.* மீன் பிடித்தலைப் பற்றிய.

**halieutics,** *n. pl.* மீன்பிடிக்குங் கலை.

**halitos'is,** *n.* (மரு.) ஊத்தை நாற்றம்.

**hall,** *n.* மன்றம், அரண்மனை முதலியவற்றில் உள்ள நீண்ட பொது அறை; நிலக்கிழாரின் வசிப்பிடம்; ஆங்கிலேயக் கல்லூரிகள் முதலியவற்றிற் பொது உணவிடம்; சங்கக் கட்டிடம்; (தொ.) Liberty Hall, முழுச் சுதந்திர மன்றம், எது வேண்டுமென்றாலும் செய்யும் வாய்ப்புள்ள சுதந்திர மன்றம்; servants' hall, பணியர் உணவறை, வேலைக்காரர் களின் உணவறை.

**hall'-door,** *n.* முகப்பு வாயிற் கதவு.

**hallelu'jah, hallelu'iah,** *n.* தெய்வப்புகழ்ப் பாட்டு.

**hall'iard,** *n.* (கப்.) பாய்மரத்தை உயர்த்தவும் தாழ்த்தவும் பயன்படுங் கயிறு.

**hall'mark,** *n.* அதிகார முத்திரை; தரக்குறியீடு, தூய்மைக் குறி; பொன் அல்லது வெள்ளிப் பொருள்கள்மீது பொற் கொல்லர் மன்றம் பொறிக்கும் முத்திரை.

**hallo', haloa',** *n.* அகவு குரல்; *v.* விளி, கூப்பிடு; *int.* கவனத்தை ஈர்க்கும் வியப்பிடைச்சொல்.

**halloo',** *n.* நாய்களை ஏவிவிடும் கூக்குரல்; *v.* நாய்களைத் தூண்டிக் கூக்குரலிடு; கவனத்தைக் கவரும்படி கூக்குரலிடு; *int.* வேட்டையாடுவதற்கு நாய்களைத் தூண்டும் வியப் பிடைச்சொல்; (தொ.) don't halloo till you're out of the wood, do not halloo until you are out of the wood, பாதுகாப்பான இடஞ்சேரும் வரையில் கூக்குரலிடாதிரு.

**hall'ow[1],** *n.* தூய்மையர், திருத்தொண்டர்; *v.* தூய்மை யாக்கு; தூய்மையெனப் போற்று.

**hall'ow[2],** *v.* கூக்குரல்களுடன் துரத்திச்செல்; கூக்குரலிட்டுத் தூண்டு; நாய்கள் முதலியவற்றை ஏவுதற்காகக் கத்து.

**Hall'statt,** *a.* புராதனக் கற்காலத்தின் நாகரிகப் பகுதியைக் குறிக்கிற.

**hallu'cinate,** *v.* மாயக்காட்சி விளை, மருட்சியுண்டாக்கு, மயங்கச் செய்.

**hallucina'tion,** *n.* மாயக்காட்சி, மருட்சி.

**halm,** *n.* காம்பு, அடிமரம், தண்டு.

**hal'ma,** *n.* சதுரங்க ஆட்ட வகை, 256 சதுர வடிவ கட்டங்கள் உடைய பலகையின்மீது ஆடும் ஆட்டம்.

**hal'o,** *n.* ஒளிவட்டம், அகல்வட்டம்; வட்டம், வளையம்; பிரபை; சீர்த்தி; ஒன்றனிடத்துள்ள கவர்ச்சியாற்றல்; *pl.* hal'oes; *v.* ஒளிவட்டமாகச் சூழ்.

**hal'ogen,** *n.* (வேதி.) உப்பீனி.

**halog'enate,** *v.* உப்பீனியோடு சேர்.

**hal'oid,** *n.* (வேதி.) உப்பினம்; *a.* சாதாரண உப்பினது போன்ற கூட்டுகை உடைய; உப்பினஞ்சார்ந்த.

**halt[1],** *n.* தங்குதல்; நிற்குமிடம்; அசையாநிலை; *v.* அசை வின்றி நில்; சிறிது தங்கு; நிறுத்திவை.

**halt[2],** *n.* நொண்டி நடத்தல்; *a.* நொண்டியான, முடமான, நொண்டுகிற; *v.* தயங்கிநட; நொண்டு; தயங்கு.

**hal'ter,** *n.* ஆடு மாடு குதிரைகளுக்கான கண்ணிக் கயிறு அல்லது தோற்பட்டை வார்; தூக்குக் கயிறு; தூக்குச் சாவு; *v.* கண்ணியுடைய கயிற்றினால் கட்டு; தூக்கிலிடு.

**hal'ter-break',** *v.* கண்ணிக்கயிறு பூட்டிக்கொள்ளக் குதிரை யைப் பழக்கு.

**halve,** *v.* பாதிகளாகப் பிரி; சமமாகப் பங்கிடு; பாதியாகக் குறை; குறுக்குவெட்டு மரம் ஒவ்வொன்றின் கனத்தையும் பாதியாகக் குறைத்து இணை.

**hal'yard,** *n.* கப்பலின் பாயை உயர்த்துதற்கும் இறக்குதற்கும் உரிய கயிறு அல்லது கருவி.

**ham[1],** *n.* தொடையின் பின்புறம், உப்பிட்ட பன்றித்தொடை உணங்கல்.

**ham[2],** *n.* (வர.) நகரம்; கிராமம்.

**hamadry'ad,** *n.* தான் வாழும் மரத்துடனேயே மடியும் வன தேவதை; இந்திய நச்சுப்பாம்பு வகை; அபிசீனியக் குரங்கு வகை.

**Ham'burg,** *n.* கறுப்பு வகைத் திராட்சை; சிறு வீட்டுக் கோழி வகை.

**hames,** *n. pl.* சுமை இழுக்குங் குதிரைக் கழுத்துப்பட்டைச் சட்டங்கள்.

**ham'-fist'ed, ham'-hand'ed,** *a.* செப்பமற்ற.

**Ham'ite[1],** *n.* எகிப்திய அல்லது ஆப்பிரிக்க இனத்தைச் சேர்ந்தவராகிய ஹாம் (Ham) என்பவரின் வழிவழி மரபினர் எனக் கருதப்படுவர்.

**ham'ite[2],** *n.* கொக்கிவடிவத் தோட்டினை உடைய புதை படிவ நத்தையின உயிர்வகை.

**ham'let,** *n.* சிறு கிராமம், திருக்கோயில் இல்லாத சிறு கிராமம், தொட்டி, சிற்றூர்.

**hammam', hamm'um,** *n.* நீராடுதற்கான விடுதி; துருக்கி நாட்டுக் குளிக்கும் அறை.

**hamm'er,** *n.* சுத்தி, சம்மட்டி; கடிகார நரம்பு; இசைப்பெட்டி நரம்பு; சுடும் படைக்கலத்தில் மருந்தினை வெடிக்கவைக்கும் பொறியமைவு; ஏலம் போடுபவர் ஒரு பொருள் விற்கப் பட்டுவிட்டது என்பதை அடித்து அறிவிக்கப்பயன்படுத்தும் மரக்கொட்டாப்புளி; காதில் உள்ள சிறு எலும்பு; *v.* சம்மட்டி யால் அடி, சம்மட்டியால் அடித்துச் செலுத்து; சம்மட்டியால் அடித்து உருவாக்கு; கடுந்தண்டனை கொடு; போரில் அல்லது விளையாட்டில் அடியோடு தோல்வியுறும்படி செய்; பங்கு மாற்ற வகையில் சம்மட்டியால் மூன்று முறை அடித்துத் தவறியவரென்று அறிவி; பண்டத்தின் விலை இறங்கும்படி செய்; விற்றல் வாங்கல்களில் சோர்வூட்டு; (தொ.) bring to the hammer, ஏலத்திற்குக் கொண்டுவந்து விற்க; come under the hammer, ஏல மூலமாக விற்கப்பெறு; hammer and tongs, கடுஞ் சுமையுடன்; hammer out, திட்டஞ்செய்; knight of the hammer, கருமான்; throwing the hammer, கனத்த சம்மட்டியைக் கொண்டு நடத்தப்படும் போட்டிப் பந்தயம்.

**hamm'er-beam,** *n.* (க-க.) முதன்மையான உத்தரத்துக்குக் கீழே சுவரிலிருந்து பிதுங்கி வந்திருக்கும் தூலம்.

**ham'mer-cloth',** *n.* வண்டியில் வலவன் இருக்கையை மூடி இருக்கும் ஒப்பனைத் துணி.

**hamm'er-fish,** *n.* சம்மட்டி போன்ற தலையையுடைய சுறாமீன் வகை.

**hamm'er-head,** *n.* சம்மட்டியின் தலைப்பாகம்; சம்மட்டி போன்ற தலையையுடைய சுறாமீன் வகை; ஆப்பிரிக்க பறவை வகை.

**ham'mer-lock',** *n.* முதுகுக்குப்பின் வளைத்து வைத்துக் கொள்ளும் மல்லன் கைப்பிடி.

**hamm'erman, hamm'er-smith,** *n.* கருமான்.

**hamm'er-toe,** *n.* (மரு.) கால் விரல்களில் ஒன்று நிலையாக மேல் நோக்கி வளைந்து மடிந்திருக்கும் அங்கக்கோணல்.

**hamm'ock,** *n.* கித்தான் அல்லது வலையினாலான ஏணை போன்ற தூங்கு மஞ்சம்; (தொ.) hammock chair, கித் தான் சரிவு நாற்காலி, கித்தான் தொட்டில்.

**ham'per[1],** *n.* சிப்பங்கட்டுதற்கான கூடைப்பெட்டி; பெரிய கூடை; தின்பண்ட அடைப்பை; மதுக்குப்பி அடைப்பை.

**ham'per[2],** *n.* கப்பல் அடைசத் தளவாடம்; *v.* தடுத்து இடர் செய்; இடையூறுக்குள்ளாக்கு.

**Hamp'ton Court,** *n.* தேம்ஸ் ஆற்றின் கரையில் லண்ட னுக்கு அருகே அரசர்களின் அரண்மனையாய் இருந்த கட்டிடம்.

**ham'shackle,** *v.* குதிரை முதலியவற்றின் தலையையும் முன் னங்காலையும் கயிற்றால் பிணைத்துத் தளைபூட்டு; விலங்கிடு; தடைசெய்.

**ham'ster,** *n.* கன்னப்பைகளுள்ள பெரிய எலிபோன்ற கொறி விலங்கு வகை.

**ham'string,** *n.* மனிதர்களின் பின் தொடைத் தசைநார்; நாற்கால் விலங்குகளின் பின்னங்கால் பின் தொடையிலுள்ள பெரிய தசைநார்; *v.* பின் தொடை நரம்புகளை வெட்டி முடமாக்கு.

**ham'ulus,** *n.* (உள்., வில., தாவ.) கொக்கி போன்ற முனைப்பு.

**hand,** *n.* கை; நுதிக்கை; குரங்கின் நான்கு கால்களிலும் நுதிப் பகுதி; நாற்கால் விலங்கின் முன்னங்கால்; மேலாண்மை உரிமை, செயலாட்சி; செயல்முதல்; செயலிற் பங்கு; திரு மண வாக்குறுதி; ஏதாவதொன்றைச் செய்பவர்; ஒன்று வெளிப்படுவதற்கு மூலமாயிருப்பவர் அல்லது மூலமாயிருப் பது; திறமை, வேலைப்பாட்டுத்திறம் அல்லது பாணி; மேடைக்கோற்பந்தாட்டம்-மரப்பந்தாட்டம் முதலிய வை வகையில் வரிசை முறை-ஆவட்டம்; எழுதும் விதம் அல்லது பாணி; கையெழுத்து; கைபோன்ற பொருள்; கடிகாரத்தின் முள் அல்லது ஊசி; வாழைக்குலை சீப்பு; புகையிலைக்கட்டு என்பதுபோல் பல்வேறு பண்டங்களின் குறிப்பிட்ட அளவு; நான்கு அங்குலம் கொண்ட நீட்டலளவை; சீட்டாட்ட வகை யில் ஓர் ஆட்டக்காரருக்குக் கிடைத்த சீட்டுக்கள்; சீட்டுகளை வைத்துக்கொண்டு இறங்க இருப்பவர்; *v.* கையினால் ஒரு வருக்கு உதவி செய், கைகொடுத்து உதவு; (கப்.) பாய் சுருட்டு; கொடு, ஒப்புவி; (தொ.) at first hand, மூலத்தி லிருந்து நேரடியாக; at hand, அருகே; at the hand of, இன் னுருடைய செயலினால்; bear a hand, பங்குகொள்; உதவு; by hand, உடலுழைப்பினால், கையினால் இயக்கப்படும் கருவி களைக்கொண்டு; by the strong hand, வலுக்கட்டாயமாக; come to hand, வந்துசேர்; தோன்று; வரவேற்கப்படு; do a hand's turn, குறுஞ் சிறு முயற்சி செய்; for one's own hand, தனக்காகவே; from hand to mouth, சிக்கனமின்றி; get one's hand in, சீட்டாட்ட வகையில் தனக்குக் கிடைத்த சீட்டுகளை நன்முறையில் பயன்படுத்திக்கொள்ளும் விதத்தில் ஆட்டத்தை வசப்படுத்திக்கொள்; hand and foot, முழுக்க; ஊன்றிய கருத்துடன்; hand and glove, நெருங்கிப்பழகும் முறையில்; hand down, மரபுரிமை வழியாக ஒப்புவி; hand in glove, நெருங்கிய பழக்கத்தோடு; hand in hand, கைகோத்துக்கொண்டு; hand of God, மின்னல்-புயல் ஆகிய வற்றைப்போல் எதிர்பாராத தவிர்க்க முடியாத நிகழ்ச்சி; hand on, மரபு வழக்கமாகக் கொடு அல்லது ஒப்புவி; hand over fist, hand over hand, கயிற்றைப் பிடித்து ஏறும் போது அல்லது நீச்சல் வகையில் செய்வதைப்போல் ஒவ் வொரு கையையும் அடுத்தடுத்து மேலே மேலே வைத்துக் கொண்டு; hand over head, தலைகீழாக, பதற்றமாக; hand to hand, மிக நெருங்கி, கை கலந்து; have one's hand in, தொழில் நடத்திக் கொண்டிரு; வழக்கமாகக் கொண்டிரு; in hand, தயாரிப்பில்; கட்டுக்கடங்கி; lend a hand, கை கொடுத்துதவு, உதவிசெய்; off hand, ஆயத்தமின்றி, உட னுக்குடன்; old hand, அனுபவமுள்ளவர்; on hand, ஆயத் தமாக, எளிதில் கிடைக்கக்கூடியதாக, ஒருவர் உடைமையுட் பட்டதாய்; on the one hand, ஒருசார்; on the other hand, மற்றொரு சார்; out of hand, உடனே, முன் ஆலோசனை யின்றி; கட்டுக்கடங்காமல்; poor hand, திறமையற்றவர்; set one's hand to, ஒன்றில் ஈடுபடு, மேற்கொள்; கையெழுத் திடு; take in hand, மேற்கொள்; take off one's hands, விடுவித்துக்கொள்; to one's hand, ஆயத்தமாக; under one's hand, ஒருவரது சரியான கையெழுத்துடன்; upper hand, அதிகாரம், மேம்பாடு; with a heavy hand, வன்முறை யாக, கொடுமையாக; with a high hand, தைரியமாக, செருக்குடன்.

**hand'-bag,** *n.* மகளிர் கைப்பை.

**hand'-ball,** *n.* எறிந்து பிடிக்கும் பந்து விளையாட்டு.

**hand'bell,** *n.* கைப்பிடி மணி.

**hand'-bill,** *n.* துண்டறிக்கை; மெல்லிய அரிவாள் வகை.

**hand'-book,** *n.* கையேடு, கைச்சுவடி, வழிகாட்டு நூல்.

**hand'breadth,** *n.* கையகலம்.

**hand'craft,** *n.* சிறு கைத்தொழில், கைவினை, கைப்பணி.

**hand'cuff,** *v.* கைவிலங்கு பூட்டு.

**hand'cuffs,** *n. pl.* கைத்தளை.

**hand'ed,** *a.* கைகளை உடைய.

**hand'er,** *n.* கொடுப்பவர்; ஒப்புவிப்பவர்; அனுப்புபவர்; கை மேல் விழும் அடி.

**hand'fast,** *n.* உறுதியான பிடி; காவல்; ஒப்பந்தம்; திரு மண உறுதி; *a.* கட்டுப்பட்ட, ஒப்பந்தம் செய்துகொண்ட; உறுதியான பிடியுள்ள; *v.* திருமண உறுதிசெய்; உறுதி யாகப் பிடித்து இணை.

**hand'fasting,** *n.* திருமண உறுதிப்பாடு.

**handfeeding,** *n.* விலங்குகளுக்குக் கையினால் தீனி ஊட்டுதல்; இயந்திரங்களில் மூலப்பொருள்களைக் கையினாற் செலுத்துதல்.

**hand'ful,** *n.* கைப்பிடி, கைப்பிடியளவு, சிறிதளவு, சிறங்கை; சிற்றெண்ணிக்கை; (பே-வ.) தொல்லைதரும் ஆள் அல்லது வேலை.

**hand'-gall'op,** *n.* கடிவாளப் பிடிப்பிற் செல்லுங் குதிரையின் எளிய பாய்நடை.

**hand'-glass,** *n.* செடிகளின் பாதுகாப்புக்கான கண்ணாடிச் சட்டம்; கைப்பிடியுடன் கூடிய கண்ணாடி; சிறு உருப்பெருக் காடி.

**hand'-grenade',** *n.* கையினால் எறியப்படும் வெடிகுண்டு.

**hand'grip,** *n.* கையினால் இறுகப்பிடித்தல்; கையிற் பிடித்துக் கொள்வதற்கான பொருள்.

**hand'grips,** *n. pl.* நெருங்கிப்பொருதல், கைகலப்பு.

**hand'hold,** *n.* கைப்பிடிப்பு; கையினால் பற்றுறுதியாகப் பிடித்தல்.

**han'dicap,** *n.* போட்டியிடுபவர்களிடையே சமவாய்ப்புக்கு வகை செய்யப் பெற்றுள்ள பந்தயம்-போட்டி; கூடுதலான சுமை; இடையூறு, தடங்கல்; *v.* போட்டியிடுபவர்மேல் தடைவிதி; ஒருவரை வாய்ப்புக் குறைவான நிலையில் இருத்து.

**hand'icapper,** *n.* பந்தயக் குதிரைகள் இன்ன சுமைகளைத் தாங்கிச் செல்ல வேண்டுமென உறுதிசெய்யும் அலுவலர்; கட்டுப்பாட்டுப் பந்தயத்தில் போட்டியிடும் ஆள் அல்லது விலங்கு.

**han'dicraft,** *n.* கைவினை, கைவினைத்திறன்.

**hand'icraftsman,** *n.* கைவினைக் கலைஞன்; *fem.* hand'icraftswoman.

**hand'icuffs,** *n. pl.* குத்துச்சண்டை.

**han'diwork,** *n.* கைவினை, கைவேலைப்பாடு.

**hand'kerchief,** *n.* கைக்குட்டை, சவுக்கம், கழுத்துக்குட்டை; (தொ.) throw the handkerchief, சில விளையாட்டு வகை களில் பின் தொடரும்படி கூப்பிடு; வரிசை முறையை ஏற்கு மாறு அழை.

**han'dle**[1], *n.* பிடி, கைப்பிடி; காம்பு, மிதிவண்டி முதலிய வற்றின் கைப்பிடிக் காம்பு; பகைவனுக்குப் பயன்படும் செய்தி அல்லது நிகழ்ச்சி; (தொ.) a handle to one's name, பட்டம், விருது.

**han'dle**[2], *v.* கையினால் பிடி; கையினால் துழாவு, வழங்கு; கை களினால் தொடு அல்லது உணர்; கையாளு; நடத்து; விவகரி; வாணிகஞ்செய்.

**hand'le-bar,** *n.* மிதிவண்டி முதலியவற்றின் கைப்பிடிக் காம்பு.

**hand'led,** *a.* கைப்பிடி உடைய.

**hand'-line,** *n.* கோல் இல்லாத தூண்டிற் கயிறு.

**hand'list,** *n.* கைச்சிட்டை.

**hand'loom,** *n.* கைத்தறி.

**hand'maid, hand'maiden,** *n.* சேடி, ஏவற்பெண், வேலைக் காரி.

**hand'-me-down'**, *n.* உடன் உடுப்பு ; *a.* உடன் உடுப்பதற்காகச் செய்யப்பட்ட.

**hand'mill**, *n.* ஏந்திரம், திரிகை; கையினல் இயக்கப்படும் சூளை.

**hand'-off**, *n.* உதை பந்தாட்டத்தில் எதிரியை உந்தித் தள்ளும் செயல் அல்லது விதம் ; *v.* உதை பந்தாட்டத்தில் எதிரியை உந்தித் தள்ளு.

**hand'-pa'per**, *n.* கைபோன்ற நீரெழுத்துள்ள தாள் வகை.

**hand'-pick**, *v.* ஒவ்வொருவராகத் தெரிந்தெடு.

**hand'-play**, *n.* கைகலப்புச் சண்டையில் ஒருவரையொருவர் குத்திக்கொள்ளுதல்.

**hand'-post**, *n.* வழிகாட்டிக்கம்பம்.

**hand'rail**, *n.* கைப்பிடிக்கிராதி.

**hands**, *n. pl.* கைகள்; தொழிற்சாலையிற் கைவேலேயர்; (தொ.) change hands, கைமாறிச் செல், வேருெருவர் உடைமையாக மாறு ; clean hands, குற்றமின்மை, தீதற்ற நிலை, மனத்தூய்மை ; good hands, நம்பத்தகுந்த ஆதாரம் ; நல்ல பொறுப்பான இடம், நன்கு நடத்துவார்களென நம்பிக்கை கொள்ளத் தக்கவர்களின் பாதுகாப்பு ; hands off, எட்டிநில்! தொடாதே! hands up, தலைக்குமேல் கைகளை உயர்த்து ; தோல்வியை ஒப்புக்கொள்; lay hands on, கைப்பற்று; பெறு; கண்டுபிடி; முரட்டுத்தனமாக நடத்து ; கையினல் தொட்டு வாழ்த்துரை; laying on of hands, தீக்கையின்போது சமயத் தலைவர் தீண்டுதல்; off one's hands, ஒருவர் பொறுப்புக்கு உட்பட்டிராத நிலையில், கைமீறிப்போய்விட்ட நிலையில் ; on all hands, எல்லாப் படியாலும், எப்படிப் பார்த்தாலும்; அனைவராலும் ; on one's hands, ஒருவரது பாதுகாப்பில் அல்லது பொறுப்பில் ; சுமையாக அல்லது வில்லங்கமாக உள்ள ; show of hands, கைகளைத் தூக்கி அளிக்கப்படும் வாக்கு ; strike hands, ஒப்பந்தம் செய்துகொள் ; take off one's hands, இன்னுரை இன்ன வேலையினின்றும் விடுவி ; wash one's hands, wash one's hands of, பொறுப்பைத் தட்டிக்கழி, கை கழுவிவிடு.

**hand'-screen**, *n.* நெருப்பு அனல் அல்லது வெய்யில் படாதபடி கையில் பிடித்துக்கொள்ளும் மறைப்பு.

**hand'-screw**, *n.* பற்றிறுக்கி ; சுமை உயர்த்து கருவி.

**hand'sel**, *n.* புத்தாண்டுத் தொடக்கத்தில் புதிய முயற்சி மேற்கொள்ளும்போது வழங்கப்படும் பரிசு; அச்சாரப்பணம்; வரப்போவதன் முன் சுவை; முன் உணர்ச்சி; *v.* புத்தாண்டுப் பரிசு கொடு ; போணிசெய் ; தொடங்கி வை ; முயன்று பார்ப்பதில் முதல்வனுயிரு; (தொ.) Handsel Monday, பரிசுகள் வழங்கப்படும் நாளாகிய புத்தாண்டு நாளுக்குப் பின்னர் வரும் முதல் திங்கட்கிழமை.

**hand'shake, hand'shaking**, *n.* கைகுலுக்குதல்.

**hand'some**, *a.* அழகிய வடிவமைந்த ; நேர்த்தியான உருவமைந்த ; தாராள குணமுள்ள, பெருந்தகைமை வாய்ந்த ; மிகுதியான.

**hand'spike**, *n.* நெம்புகோலாகப் பயன்படுத்தப்படும் கோல்.

**hand'staff**, *n.* சாட்டையின் கைப்பிடி ; வேல், ஈட்டி ; தடி ; *pl.* hand'staffs, hand'staves.

**hands'turn**, *n.* சிறு செயல்.

**hand'-to-hand'**, *a.* மிக நெருங்கிய ; *adv.* மிக நெருங்கிய நிலையில்.

**hand'-to-mouth'**, *a.* கஷ்ட சீவனமுடைய, போதும் போதாத ; *adv.* அன்றாடம் தள்ளிக்கொண்டு போகிற நிலையில், போதும் போதாமல்.

**hand'work**, *n.* கைவேலை, கையினல் இயன்ற வேலை.

**hand'writing**, *n.* எழுத்து, கையெழுத்து ; எழுதும்விதம் ; (தொ.) handwriting on the wall, கேட்டின் முன்னறிவிப்பு.

**han'dy**, *a.* எட்டக்கூடிய, அருகிலுள்ள ; வாய்ப்பான, கையாளுவதற்கேற்ற வசதியுள்ள ; கைத்திறமுடைய.

**hand'y-dand'y**, *n.* எந்தக் கையில் பொருள் மறைக்கப்பட்டிருக்கிறதென்பதை ஊகிக்குஞ் சிறுவர் விளையாட்டு வகை.

**han'dywork**, *n.* = handiwork.

**hang**[1], *n.* கீழ்நோக்கிய சரிவு அல்லது வளைவு ; ஒருபொருள் தொங்கும் விதம்; *v.* தொங்கவிடு, தளர்த்தியாக மாட்டிவை; இறைச்சி முதலியவற்றை உலர்த்துவதற்காகத் தொங்கவிடு ; படங்களைச் சுவரில் மாட்டு ; ஒட்டு, பொருத்திவை ; தடையின்றி இயங்கும் வகையில் கதவினை முளையின்மேல் அமர்த்திவை ; தொங்கு, தொங்கவிட்ட நிலையில் இரு ; தொங்கல்களைக் கொண்டு ஒப்பனைசெய்.

**hang**[2], *v.* தூக்கிலிடு; சோர்வுறு; தலைகுனி; (தொ.) get the hang of, தெரிந்துகொள், ஒன்றன் நுண்திறம் அறிந்துகொள்; hang about, சோம்பித்திரி, வட்டமிடு ; hang back, விருப்பமின்மை தெரிவி அல்லது காட்டு ; hang behind, பின்தங்கு ; hang by a thread, உறுதியற்ற நிலைகளைச் சார்ந்திரு ; hang, draw, and quarter, குற்றவாளியைத் தூக்கிலிட்டு உயிரோடிருக்கும்போதே வெட்டிக் குடலைப் பிடுங்கிப் பல இடங்களிற் காட்டுவதற்காகத் துண்டுகளாக வெட்டு ; hang fire, சுடுபடைக்கல வகையில் நேரம் கடந்துவெடி ; செயற்படுவதிற் சுணங்கு ; தயங்கு ; hang heavy, மெது மெதுவாகக் கழி ; hang in the balance, உறுதியற்ற நிலையில் இரு, ஐயத்துக்கிடமாயிரு ; hang off, போகவிடு, தொலைவிலேயே வைத்திரு ; hang on, நெருங்கியிருந்து பாராட்டிக் கொண்டிரு, ஒட்டிக்கொண்டிரு, கொண்டது விடாதிரு ; தயங்கு ; காத்திரு ; அண்டியிரு ; சுமையாயிரு, அழுத்து ; hang one's head, வெட்கப்படு ; hang out, அடையாளமாகக் கட்டி வை ; hang up, தொங்கவிடு, காலந்தாழ்த்து ; hang up one's hat, இருப்பிடம் அமர்த்திக்கொள்.

**hang'able**, *a.* தூக்குத்தண்டனைக்குரிய.

**hang'ar**, *n.* விமானம்-வண்டிகள் முதலியவற்றை விட்டு வைப்பதற்கான கொட்டகை.

**hang'-dog**, *n.* இழிசினன் ; *a.* கள்ளப்பார்வை பார்க்கிற.

**hanged**, *v.* hang[2] என்பதன் இறந்தகால - முற்றெச்ச வடிவம்.

**hang'er**[1], *n.* செங்குத்தான குன்றின் சரிவிலுள்ள காடு.

**han'ger**[2], *n.* தூக்கிலிடுபவர் ; தூக்கிலிடச் செய்பவர் ; கொக்கி ; தூக்குச் சங்கிலி; தூக்குக் கம்பி; சிறுவாள்; எழுத்தில் இரட்டை வளைவுடை வடிவம்.

**hang'er-on'**, *n.* ஒருவரோடு அல்லது ஓரிடத்திலேயே ஒட்டிக் கொண்டிருப்பவர், அட்டை, அண்டி வாழ்பவர்.

**hang'fire**, *n.* சுடுபடைக்கலம் வெடிப்பதில் காலந்தாழ்த்தல்.

**hang'ing**, *n.* தூக்கிலிட்டுக் கொல்லுதல் ; *a.* தொங்குகிற ; தொங்கவிடப்பட்டுள்ள ; சோர்வுற்றிருக்கிற, வாட்டமான ; தூக்கிலிட்டுக் கொல்லப்படத்தக்க, தூக்கிலிட்டுக் கொல்லப்பட இருக்கிற.

**hang'ings**, *n. pl.* தொங்கல் திரைச்சீலைகள் போன்று தொங்கவிடப்படும் பொருள்கள்.

**hang'man**, *n.* கொலையாளி, மரணதண்டனையை நிறைவேற்றும் வகையில் தூக்கிலிட்டுக் கொல்பவர்; *a.* போக்கிரித்தனமான.

**hang'nail**, *n.* நகத்தடியில் உரிந்த தோல்.

**hang'-nest**, *n.* தொங்கும் கூடு கட்டுகிற பொற்குருவி வகை.

**hang'-over**, *n.* எச்சம் ; குடியின் பின் விளைவுகள்.

**hank**, *n.* வட்டநூற்சுருள், சிட்டம், வட்டநூற்கண்ணி, நூற்கழி, நூன்முடி ; பாய்மரக் கயிறுகளைக் கொண்டு பாய்மரங்களைக் கட்டுவதற்கான கயிறு-இரும்பு முதலியவற்றாலான வளையம்; தடைப்படுத்தும் பிடி; *v.* கண்ணிபோட்டுப் பிடி ; கட்டுப்படு, சிக்குறு.

**hank'er**, *n.* மிகுவிருப்பம், ஆவல் ; *v.* வேணவாக்கொள்.

**hank'ie, hank'y**, *n.* (பே-வ.) கைக்குட்டை.

**hank'y-pank'y**, *n.* மாயவித்தை; மறைவான வஞ்சக நடவடிக்கை, கிழறுத்தல்.

**Han'over**, *n.* இங்கிலாந்து வரலாற்றில் ஹானேவர் அரச மரபு, முதலாம் ஜார்ஜ் (George I) முதல் விக்டோரியா வரையுள்ள பிரிட்டிஷ் மன்னர்கள்.

**Hans**, *n.* செர்மானியருக்கு அல்லது ஆலந்து நாட்டவருக்கு வழங்கும் மறுபெயர்.

**Han'sard**, *n.* பிரிட்டிஷ் மாமன்ற நடவடிக்கைகளின் அதிகார பூர்வமான அறிக்கை.

**Han'sardize**, *v.* ஒருவருடைய முந்தைய பதிவான கருத்துக்களை எடுத்துக்காட்டித் திணறவை.

**Hanse**, *n.* (வர.) வாணிகக்குழு; செர்மன் வாணிக நகரங்களின் கூட்டுக்குழு.

**han'som, han'som-cab**, *n.* வலவனுக்காகப் பின்புறம் உயர்ந்த இருக்கையுடன் கூடிய இரண்டு சக்கர வாடகை வண்டிவகை.

**hap**, *n.* தற்செயல் நிகழ்ச்சி, எதிர்பாரா நற்பேறு; *v.* தற்செயலாக நிகழ், நேர்.

***hap'ax legom'enon***, (கிரே.) *n.* ஒரேவொருமுறை ஆளப்பட்ட சொல்.

**haphaz'ard**, *n.* வெறும் தற்செயல் நிகழ்ச்சி; *a.* தற்செயலான; *adv.* தற்செயலாக.

**hap'less**, *a.* ஆகூழ் இல்லாத, மகிழ்ச்சியற்ற.

**haplog'raphy**, *n.* இருமுறை எழுதவேண்டியதை ஒருமுறையே எழுதுவதால் விளையும் தவறு.

**haplol'ogy**, *n.* (மொழி.) அண்மையில் உள்ள ஒலியைப் போன்றதோர் ஒலியை உச்சரிக்காமல் விடுதல்.

**hap'ly**, *adv.* தற்செயலாக, ஒருவேளை.

**happ'en**, *v.* நிகழ், சம்பவி, வாய்; நேர், தற்செயலாக நேரிடு; நற்பேறு உறு; (தொ.) if anything should happen to me, நான் இறந்துபோனுல்.

**happ'enings**, *n. pl.* சம்பவங்கள், நிகழ்ச்சிகள்.

**happ'iness**, *n.* நற்பேறு, அதிர்ஷ்டம், செழுமை, வளமை, நிலைத்த நல்வாழ்வுற்ற நிலை.

**happ'y**, *a.* நல்வாய்ப்புடைய, அதிர்ஷ்டமுடைய, நற்பேறுற்ற; மனநிறைவுடைய; தக்க; நல்வாழ்வுடைய, இன்பமான; (தொ.) happy dispatch, ஜப்பானில் மானங்கெட்டபோது அல்லது மரணதண்டனை விதிக்கப்பட்டபோது குடலைப் பிடுங்கிக்கொண்டு தற்கொலை செய்துகொள்ளுதல்.

**happ'y-go-luck'y**, *a.* சோம்பல் வாழ்வுடைய, வருவது வரட்டும் என்றிருக்கிற; *adv.* விரும்பியவாறு.

***hara-ki'ri***, (ஜப்.) *n.* = happy dispatch.

**har'am**, *n.* = har'em.

**harangue'**, *n.* கும்பல்முன் உயர்குரலுரை; விராவேசப் பேச்சு, வாய்சாலம்; *v.* ஆவேசமாகப் பேசு.

**ha'ras**, *n.* குதிரைப்பண்ணை.

**ha'rass**, *v.* அலைக்கழி, நச்சரி, தொல்லைகொடு, கவலையுண்டாக்கு.

**harb'inger**, *n.* முன்னோடி, குயிலோன், கட்டியக்காரன்; *v.* வரவு அறிவி.

**harb'our**, *n.* துறைமுகம், கப்பல்துறை; புகலிடம், மறைவிடம், காப்பிடம்; *v.* புகலிடம் அளி; இடங்கொடு; தஞ்சம் புகு; துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்சிநில்.

**harb'ourage**, *n.* புகலிடம்.

**har'bour-bar'**, *n.* துறைமுக வாயிலில் உள்ள மணல்மேடு.

**hard**, *n.* கரையோரச் சரிவுச்சாலை; கடினம்; கெட்டியான நிலம்; உறுதியான கடற்கரை; கடின உழைப்பு; *a.* உறுதியான, தொட்டால் நெகிழாத, கெட்டியான; கண்டிப்பான; எளிதாயிராத; உணர்ச்சியற்ற, கொடிய; தகுதிக்கு மிஞ்சிய துன்பம் விளைக்கிற, நேர்மையின்றி இன்னல் பயக்கிற; கஞ்சத்தனமுள்ள; பொறுக்கமுடியாத, முரணிய; கண்ணுக்கோ செவிக்கோ இன்பம் பயவாத; தேறல் வகையில் வெறியூட்டுகிற, சாராயங் கலந்துள்ள; விலைவாசிகள் வகையில் அகவிலையான, எட்டாத; (ஒலி.) வல்லோசையுள்ள; பெருமுயற்சி செய்யவேண்டியுள்ள, உழைத்துத் துன்பப்படுகிற; நீர்வகையில் உப்பு வகைகள் கலந்திருப்பதால் நுரைவிடாத; செய்திகள் வகையில் திட்டவட்டமான, ஆதாரமுள்ள; *adv.* மிக உழைத்து; விடாமுயற்சியுடன், கடுமையாக, மிகுதியாக, காலஇடச்சூழ்நிலை வகையில் சிறிதுகூட அனுகூலமாயிராமல்; முழு அளவுக்கு; (தொ.) a hard bargain, சலுகையற்ற கண்டிப்பான பேரம்; hard and fast, விதிகள் வகையில் கண்டிப்பான; hard by, அருகில்; hard cash, ரொக்க நாணயம்; hard court, நிலக்கீல்-காரை முதலிய வற்றைக்கொண்டு பாவப்பட்ட வரிப்பந்தாட்ட மேடை; hard currency, உலோகப்பணம், மதிப்பு திடீரெனக் குறையாத பணம்; hard drinker, விடாமிடாக்குடியன்; hard facts, மறுக்கொணு உண்மைகள் அல்லது செய்திகள்; hard fight, இடைவிடாச் சண்டை; hard hit, கடுந்துன்பத்துக்காளான; hard labour, சில குற்றவாளிகளுக்குத் தண்டனையாக விதிக்கப்படும் கடும் உழைப்பு; hard life, தாங்கமுடியாத வாழ்க்கை, கஷ்ட சீவனம்; hard lines, துரதிர்ஷ்டம், போகூழ், காலக்கேடு; hard-lying money, அலுவலில் உள்ள இடர்ப்பாடுகளை முன்னிட்டு நீர்மூழ்கிக் கப்பல் முதலியவை தொடர்பான பணிகளில் அமர்ந்திருப்பவர்களுக்குக் கொடுக்கப்படும் கூடுதலான ஊதியம்; hard of hearing, சற்றே செவிடாயுள்ள; hard on, ஒருவரைக் கண்டிப்பதிலோ நடத்துவதிலோ மிகக் கடுமையோடிருத்தல்; hard pad, நாய்க்குட்டிகளின் அடிக்கால்களை மரத்துப்போகவைக்கும் நச்சுநோய் வகை; hard pressed, நெருக்கமாகப் பின்தொடரப்படுகிற; hard put to it, மிக்க இடரான நிலையில்; hard question, விளங்காத அல்லது விளக்க முடியாத கேள்வி; hard row to hoe, கடினமான வேலை; hard set, கெட்டியாக அமைக்கப்பட்ட; முட்டை வகையில் அடைகாக்கப்பட்ட; hard swearing, அடிப்பட்ட சத்தியம்; பொய்க்கரி; hard times, பொல்லாங்கான காலம்; காலக்கேடு; hard up, பணமுடையான, தேவைப்பொருள்களைப் பெற்றிராத; hard water, கனி உப்பு வகைகள் கலந்திருப்பது காரணமாக மண்ணு நீராகப் பயன்படாத நீர்; hard winter, கடுங்குளிர்காலம்; hard words, அரைகுறைப் படிப்புள்ளவருக்கு விளங்காத சொற்கள்; காரமான சொற்கள், சினத்தினுல் மூண்ட சொற்கள்; hold hard, நில், நிறுத்து.

**hard'-a-lee'**, *adv.* காற்றிற்கு மறைவான பகுதிக்கருகில்.

**hard'-bake**, *n.* வாதுமைப் பண்ணிய வகை.

**hard'-baked**, *a.* அப்பம் முதலியவை வகையில் கெட்டியாகிற வரையில் சுடப்பட்ட.

**hard'-billed**, *a.* கெட்டியான அலகுடைய.

**hard'-bitt'en**, *a.* மூர்க்கமாகச் சண்டையிடுகிற.

**hard'board**, *n.* மரக்கழிவிலிருந்து செய்து கட்டைக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் விறைப்பான அட்டைப்பலகை வகை.

**hard'-cured**, *a.* மீனைப்போல் உப்பிட்டு வெயிலில் நன்றாக உலர்த்தப்பட்ட.

**hard'-drawn**, *a.* உலோகக் கம்பி முதலியவை வகையில் வேண்டிய திண்மை பெறும் பொருட்டுக் குளிர்ந்திருக்கும் போதே இழுக்கப்பட்ட.

**hard'-earned**, *a.* வருந்தி ஈட்டிய.

**hard'en**, *v.* கெட்டியாக்கு, கடினமாக்கு; கெட்டியாகு, கடினமாகு, இறுகு, வயிரங்கொள்; உணர்ச்சியறச்செய்; உணர்ச்சியற்றுப் போ; வலிமையுள்ளதாக்கு; வலிமையுள்ளதாகு; தீமை செய்வதில் காழ்ப்பேறு.

**hard'ened**, *a.* கெட்டியாக்கப்பட்ட; உணர்ச்சியற்ற.

**hard'face**, *n.* இரக்கம் சிறிதுமற்றவர்.

**hard'-fav'oured, hard'-feat'ured**, *a.* அருவருப்பான முகத்தோற்றமுடைய.

**hard'-fist'ed**, *a.* உறுதியான அல்லது வலிய முட்டிகள் அல்லது கைகளை உடைய; முடிய முட்டியுடைய; கஞ்சத்தனமான.

**hard'-fought**, *a.* தீவிரமாகப் போட்டியிடப்பட்ட.

**hard'-got, hard'-gotten**, *a.* வருந்தி ஈட்டிய, பாடுபட்டுப் பெற்ற.

**hard'-grained**, *a.* நெருக்கமும் உறுதியும்வாய்ந்த நுண்மணி அமைப்புள்ள; கவர்ச்சியற்ற, அச்சந்தருந் தோற்றமுடைய.

**hard'-hand'ed**, *a.* உறுதியான கைகளையுடைய; மட்டு மதிப்பற்ற, திருத்தமற்ற; கடுமையான.

**hard'-head'ed**, *a.* கூரிய அறிவுள்ள, காரியத்தில் கண்ணு யிருக்கிற, உணர்ச்சி வசப்படாத.

**hard'-heart'ed**, *a.* உணர்ச்சியற்ற, வன்னெஞ்சுடைய, இரக்கமற்ற.

**hard'ihood**, *n.* நெஞ்சுரம், அஞ்சாமை.

**hard'ish**, *a.* சற்றே கடினமான.

**hard'-laid'**, *a.* கயிறு-துணி முதலியவை வகையில் இறுக்கமாக் முறுக்கப்பட்ட அல்லது நெய்யப்பட்ட.

**hard'ly**, *adv.* கடினமாக; கொடுமையாக; இடர்ப்பட்டு; கண்ணற்று; அரிதாக, போதாமல்.

**hard'-mouthed**, *a.* கடிவாளத்தினுல் எளிதிற் கட்டுப்படுத்த முடியாத; எளிதில் மேலாண்மை செய்ய இயலாத.

**hard'ness**, *n.* வன்மை, திண்மை, வன்குணம்; (கனி.) மற்றென்றைக் கீறும் ஆற்றல்; மற்றொன்றின் கீறலைத் தாங்கும் ஆற்றல்.

**hard'-pan**, *n.* மேலீடான மண்ணுக்கு அடிப்படையாயுள்ள கெட்டியான நிலப்படலம்; மிகக்கீழான மட்டம்.

**hard'-paste**, *a.* சீனக் களிமண்ணினுலும் கருங்கற் பொடியினுலும் செய்யப்பட்ட.

**hard'-pressed, hard'pushed**, *a.* இக்கட்டுகளுக்காளான.

**hard'-rid'ing**, *a.* குதிரையேறி விரைந்து செல்லுகிற.

**hard'-run**, *a.* பெரிதும் நெருக்கப்பட்ட, அலக்கண் உற்ற.

**hard'-set**, *a.* இன்னல்களால் நெருக்கப்பட்ட; உறுதியான, வளையாத, முறைப்பான.

**hard'shell**, *a.* கெட்டியான தோட்டினையுடைய; பிடிவாதமாகப் பழமைக்குக் கட்டுப்பட்ட; விடாப்பிடியான.

**hard'ship**, *n.* இன்னல், துன்பம்; வறுமை; படமுடியாத் துயரம்; தீவினைப் பயன்; பொல்லாங்கான சூழல்.

**hard'-vis'aged**, *a.* வெறுப்புணர்ச்சி தூண்டும் அல்லது விகாரமூட்டும் முகத்தோற்றமுடைய.

**hard'ware**, *n.* இரும்பு-செம்பு போன்ற வலிய உலோகங்களாற் செய்யப்பட்ட பொருள்கள், இரும்பு செம்பு வாணிகம்.

**hard'wareman**, *n.* இரும்புச்சாமான் வணிகன்; கன்னுன்.

**hard'-won**, *a.* அரிதிற் பெற்ற.

**hard'wood**, *n.* இலையுதிர்க்கும் மரவகைகளின் வயிரம் பாய்ந்த கட்டை.

**hard'y** [1], *n.* கொல்லன் பட்டடை, உலோகத்தை வெட்டும் போது கீழே ஆதாரமாக வைத்துக்கொள்வதற்கான கெட்டியான இரும்புத் தடை.

**hard'y** [2], *a.* துணிவுள்ள, முனைப்பான, ஆண்டு முழுதும் திறந்த வெளியில் வளரக்கூடிய; (தொ.) half hardy, குளிர் காலத்தில் மட்டும் பாதுகாப்பு வேண்டியுள்ள; hardy annual, திறந்த வெளியில் விதைக்கக்கூடிய ஓராண்டுப் பயிர்; ஆண்டுதோறும் விவாதத்துக்கு வரும் பொருள்.

**hare**, *n.* முயல்; (தொ.) first catch your hare, first catch your hare then cook him, ஒன்றினை என்ன செய்வதென்று யோசிப்பதற்குமுன் அது உனக்குக் கிடைப்பதை உறுதி செய்துகொள்; hold with the hare and run with the hounds, run with the hare and hunt with the hounds, குழந்தையைக் கிள்ளித் தொட்டிலையும் ஆட்டு; பாலுக்குங் காவல் பூனைக்குந் தோழனுயிரு; ஒரே சமயத்தில் எதிரெதிரான இரண்டு கட்சிகளிலும் இரு.

**hare'-and-hounds'**, *n.* சிலர் ஓடிக்கொண்டே காகிதத் துண்டுகளைக் கிழித்தெறிவதும் அவற்றைக்கொண்டு மற்றவர்கள் அவர்களைப் பின்தொடர்வதுமான விளையாட்டு வகை.

**hare'bell**, *n.* நீலமலர் வட்ட இலைப் பூண்டு வகை.

**hare'-brained**, *a.* மயக்கமான; கவலையற்ற; துடுக்கான; வெறிகொண்ட.

**hare'-foot**, *a.* விரைந்த நடையுடைய.

**hare'-lip**, *n.* முயலுக்கிருப்பதைப் போன்ற பிளவுபட்ட மேல் உதடு, ஒறுவாய்.

**har'em**, *n.* அந்தப்புரம், உவளகம், உள்ளில், முஸ்லீம்கள் வீட்டில் பெண்கள் புழங்குமிடம்; முஸ்லீம்களது புனித இடம்; (தொ.) harem skirt, இருபதாம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் வழக்கத்திலிருந்த காற்சட்டை போன்ற அமைப்புடைய பாவாடை வகை.

**hare's'-ear**, *n.* மஞ்சள்மலர்க் குடைப்பூங்கொத்துச் செடி வகை.

**hare's'-foot, hare's-foot tre'foil**, *n.* நீண்ட மெத்தென்ற பஞ்சுபோன்ற நுனிப்பாகங்களையுடைய மணப்புல் வகை.

**ha'ricot**, *n.* ஆட்டிறைச்சியும் மொச்சை முதலிய காய்கறிகளும் சேர்த்து அவித்த உணவு வகை; பிரஞ்சு அவரை; (தொ.) haricot bean, பிரஞ்சு அவரை.

**hark**, *n.* குசுகுசுத்தல்; *v.* உற்றுக்கேள், செவிமடு; உசாவு; தேடிப்புறப்படு; (தொ.) hark away, வேட்டை நாய்களையும் வேட்டைக்காரர்களையும் தூண்டும் வகையில் ஓடு! முன்னேறிச்செல்! hark back, வேட்டை நாய் வகையில் மோப்பம் பற்றுவதற்காகச் சென்ற வழியே திரும்பிவா; முன்சொன்ன பொருளை மீண்டும் குறிப்பிடு; வேட்டைநாய்களைத் திரும்ப அழை; திரும்பிவா!

**harl, harle**, *n.* சணல்-இறகுகள் முதலியவற்றின் நார் அல்லது மெல்லிழை.

**Harlei'an**, *a.* ஆக்ஸ்போர்டு கோமான் ராபர்ட் ஹார்லி (Robert Harley Earl of Oxford 1661-1724) சார்ந்த; ஹார்லியின் நூலகம் சார்ந்த.

**harl'equin**, *n.* இத்தாலிய கேலிக்கூத்தில் ஒரு நாடகப் பாத்திரம்; இங்கிலாந்து ஊமைக்கூத்தில் ஊமைப்பாத்திரம்; கோணங்கி, நகைவேழம்பர்; பலநிறச் சிறகுகளையுடைய கடல் வாத்து வகை; புள்ளிகளையுடைய சிறுநாய் வகை; *v.* கோணங்கிக் கூத்தாடு.

**harlequinade'**, *n.* ஊமைக்கூத்தில் நகைவேழம்பர் முதன்மைப்பங்கு கொள்ளும் பகுதி.

**Harl'ey Street**, *n.* மருத்துவ வல்லுநர் வசிக்கும் லண்டன் தெரு ஒன்று.

**harl'ot**, *n.* விலைமகள், பரத்தை; *a.* இழிந்த; காமவெறி பிடித்த; *v.* வேசித்தொழில் புரி.

**har'lotry**, *n.* பரத்தைமை; ஒழுக்கக்கேடு; போலி.

**harm**, *n.* தீங்கு, பொல்லாங்கு; *v.* தீங்கு செய்.

**harmatt'an**, *n.* மேற்கு ஆப்பிரிக்காவிலுள்ள பாலைவனத்திலிருந்து வீசும் வறண்ட வடகிழக்குப் புழுதிக் காற்று.

**harm'ful**, *a.* புண்படுத்துகிற.

**harm'less**, *a.* தீங்கற்ற, குற்றம் இழைக்காத; தீங்கு செய்யப் பெருத.

**harmon'ic**, *n.* நரப்பிசைக் கருவிகளில் வில்லினை ஒரு நரம்பின் மேல் இலேசாக இழைப்பதன்மூலம் உண்டாக்கப்படும் குழல் ஒலி; *a.* ஒத்திருக்கிற, இணக்கமான; ஒத்திசையான, இன்னிசையான; முரண்பாடில்லாத, சரியான அளவுகளில் உள்ள; (தொ.) harmonic mean, (கண.) மூன்றுறுப்புக் கொண்ட இசைத்தொடரில் நடுத்தொடர்; harmonic minor, (இசை.) சிறுதிறச் சுரவரிசை வகை; harmonic motion, (இய., கண.) வட்டத்தின் சுற்று வரையைச் சுற்றி ஒரு சீராகச் செல்லும் புள்ளியிலிருந்து இறங்கும் குத்துக்கோட்டின் அடித்தலம் அவ்வட்டத்தின் விட்டம் நெடுகச் செல்லும் இயக்கம்; தனியிசை இயக்கம்; harmonic pencil, (கண.) இசைக்கற்றை;

harmonic progression, (கண.) இசை விருத்தி, இசைத் தொடர்; harmonic proportion, (கண.) இசைத்தகவுப் பொருத்தம்; harmonic range, (கண.) இசை வீச்சு; harmonic triad, இசைக்கருவிகளின் பொதுநரம்பு.

**harmon'ica**, *n.* பல்வேறு இசைக்கருவிகளின் பொதுப்பெயர்.

**harmon'icon**, *n.*=harmonica.

**harmon'ics**, *n. pl.* இசை ஒலிகள் பற்றிய கோட்பாடு அல்லது ஆய்வுநூல்; கிளைச்சுரம்.

**harmon'ious**, *a.* இணக்கமான, ஒத்திருக்கிற; பொருத்தமான, மனத்துக்கொத்த; முரண்பாடில்லாத; இன்னிசையான, ஒத்திசையான.

**harmon'iphon, harmon'iphone**, *n.* இசைப்பட்டையுடைய துளைக்கருவி வகை.

**har'monist**[1], *n.* (இசை.) பல பண்திற இசை வல்லுநர்; இசைஞர், பாடகர்; இணக்குவிப்பவர்; முரண்பட்டவைகளை இணக்குவிக்க முயல்பவர்.

**Har'monist**[2], **Har'monite**, *n.* இயேசுநாதரின் இரண்டாவது வருகையில் நம்பிக்கை கொண்டு மணங்கொள்ளா நோன்பினரான சமயப்பிரிவினரில் ஒருவர்.

**harmon'ium**, *n.* ஆணிப்பட்டைகளையுடைய இசைப்பெட்டி வகை; கின்னரப்பெட்டி.

**harm'onize**, *v.* இணக்குவி, இசைவி; இணங்கு, இசை; நேர்படு, பொருந்து; அழகுக்கலை விளைவில் மனதுக்குகந்த தாக்கு; (இசை.) பல பண்திறங்களை இசைவுபடுத்து.

**harmon'ogram**, *n.* அதிர்வுகளின் நெளிவரைகளைப் பதிவிடும் கருவி வரைந்த வளைகோடு.

**harmon'ograph**, *n.* அதிர்வு நெளிவரைகளைப் பதிவிடும் கருவி.

**harmonom'eter**, *n.* ஒலிகளின் இசைவுப்பொருத்தங்களை அளப்பதற்கான கருவி.

**harm'ony**, *n.* இணக்கு, ஒத்திசைவு, இழுமெனல்; இசைவு, பொருத்தம், நேர்படுதல்; (இசை.) பல பண்திறங்களின் ஒருங்கிசைவு; பண்ணோசை, பண்ணிசை; (தொ.) pre-established harmony, உடலும் உயிரும் படைக்கப்படுவதற்கு முன் அவற்றுக்கிடையில் ஏற்பட்டிருந்த தெய்விகத் தொடர்பு.

**harn'ess**, *n.* குதிரைக்கலணை, இழுவை விலங்கின் சேணம்; வேலைத் தளவாடம்; தறியில் பாவு நூலை மாற்றுவதற்கான அமைவு; (வர.) காப்புக் கவசம்; *v.* கலணையிடு, சேணம் பூட்டு; போர்க்கவசம் அணிவி; இயங்காற்றலுக்காக ஆறு-அருவி முதலியவற்றைப் பயன்படுத்திக்கொள்; in harness, ஒருவரது வழக்கமான அன்றாட வேலையில் ஈடுபட்டிருக்கிற; விடுப்புப் பெற்றிராத, வேலையினின்றும் ஓய்வு பெற்றிராத.

**har'ness-cask**, *n.* (கப்.) விளிம்பு முடியுடன் கூடிய உப்புக் கண்டப் பெட்டி.

**harp**, *n.* ஆதியாழ், சுரமண்டலம், வில்யாழ், நரப்பிசைக்கருவி வகை; *v.* யாழைமீட்டு; அலுக்கும்படி பேசு; (தொ.) harp on one string, ஒன்றனைப் பற்றியே இடைவிடாமற் பேசிக் கொண்டிரு.

**harp'er**, *n.* நரப்பிசைக் கருவிவகை வாசிப்பவர்.

**harp'ings**, *n. pl.* கப்பல் முன்புற வரிப்பலகைகளின் முகப்புப் பகுதிகள்.

**harp'ist**, *n.* யாழிசைஞர்.

**harpoon'**, *n.* மண்டா, திமிங்கிலங்கள் முதலியவற்றைப் பிடிப்பதற்காகக் கயிறு கட்டியுள்ள ஈட்டிபோன்ற எறிபடை; *v.* மண்டாவினுற் குத்து.

**harpoon-gun'**, *n.* மண்டா எறிவதற்கான துப்பாக்கி.

**harp'-seal**, *n.* கிரீன்லாந்து (Greenland) மாநிலத்திலுள்ள யாழ் போன்ற வளைவுடைய கடல்நாய்வகை.

**harp-'shell**, *n.* வில்யாழின் நரம்புகளைப் போன்ற விலாப்புறமுடைய சிப்பிவகை.

**harp'sichord**, *n.* தந்திகள் இறகினுல் அல்லது தோல் ஊசிகளால் வருடப்படும் ஆணிப்பட்டையுள்ள முற்கால இசைக் கருவி வகை.

**harp'y**, *n.* கிரேக்க புராணக் கதையில் பறவையின் சிறகுகளும் நகங்களும் உடைய கோரப் பெண்ணுருவ அரக்கியருள் ஒருத்தி; கொடுங்கொள்ளையிடுபவர், சூறையாடி; பெரிய தென்அமெரிக்க கழுகு வகை.

**har'py-ea'gle**, *n.* பெரிய தென் அமெரிக்க கழுகு வகை.

**harq'uebus**, *n.* பழைய மாதிரியான துப்பாக்கி வகை.

**ha'rridan**, *n.* சிடுசிடுப்புவாய்ந்த கிழவி, ஓயாது பூசலிடுங் கிழவி.

**ha'rrier**[1], *n.* பாழாக்குபவர்; கொள்ளைக்காரர்; தொல்லை தருபவர்.

**ha'rrier**[2], *n.* முயல்வேட்டை நாய்; சிறு பறவைகளைத் துரத்தி அழிக்கும் வேட்டைப் பருந்து வகை.

**ha'rriers**, *n. pl.* முயல்வேட்டை நாய்களின் கும்பு; முயல் வேட்டைக் கழகப் பெயர்.

**Ha'rris tweed**, *n.* ஹெப்ரைடிஸ் (Hebrides) தீவுகளில் செய்யப்படும் கம்பளி ஆடை வகை.

**Harrov'ian**, *n.* இங்கிலாந்திலுள்ள ஹாரோ (Harrow) உயர்பள்ளியில் படித்தவர்; ஹாரோ வட்டாரத்தில் வாழ்பவர்; *a.* ஹாரோ உயர்பள்ளிக்குரிய; ஹாரோ வட்டாரம் சார்ந்த.

**ha'rrow**[1], *n.* பரம்பு, பலுகுக்கட்டை, வயலில் மண்கட்டிகளை உடைத்துப் பரப்பாக்குவதற்கான பல கொழுத்தட்டு; *v.* பரம்படி, வயலில் மண்கட்டியுடை; கீறு; புண்படுத்து; மன வருத்தமுண்டாக்கு; (தொ.) under the harrow, பெருந் துயரில் சிக்குண்ட நிலையில்.

**ha'rrow**[2], *v.* கொள்ளையிடு; அழி; தொந்தரவுசெய்.

**harr'owing**, *a.* பெரு மனவேதனை தருகிற.

**ha'rry**, *n.* பாழாக்கு; கொள்ளையடி; சூறையாடு; பறி, தொல்லைப்படுத்து, வதை.

**harsh**, *a.* கரடுமுரடான, கடுப்பான; உறுத்தலான; முருடான, இன்னாத, இனிமையற்ற; கடுப்பூட்டுகிற, வெறுப்பான, உவர்ப்பூட்டுகிற; காதுக்கு அருவருப்பான, கேட்கப் பொறுக்காத, இன்னா ஓசையுடைய; கண்ணுக்கு உறுத்தலான; விரும்பாச் சுவையுடைய; முரண்சுவையுடைய, முரண்பட்ட, இசைவற்ற; கனிவற்ற, கடுகடுத்த; மட்டுமீறிய கண்டிப்பு வாய்ந்த, கடுமையான; கடுமை காட்டுகிற, கடுமையாகச் செயலாற்றுகிற.

**hars'let**, *n.*=haslet.

**hart**, *n.* கலைமான்; செந்நிற மான் கலை; ஐந்து வயதுக்கு மேற்பட்ட ஆண்மான்.

**hart'al**, (இ.) *n.* கடையடைப்பு, அரசியல் எதிர்ப்புக்கு அடையாளமான கண்டன வேலைநிறுத்தமுறை.

**hart'beest, hart'ebeest**, *n.* தென் ஆப்பிரிக்க மான்வகை.

**harts'horn**, *n.* கலைமான் கொம்பு; கலைமான் கொம்புக் கரைசல்; நவச்சாரக் கரைசல்; (தொ.) salt of hartshorn, நவச்சாரம்; spirit of hartshorn நவச்சாரக் கரைசல்.

**hart's'-tongue**, *n.* தோல்வார் வடிவமுள்ள இலைகளையுடைய சூரல்வகை.

**har'um-scar'um**, *n.* மடத்துணிச்சல் உள்ளவர்; மடத்துணிச்சல் உள்ள நடத்தை; *a.* மடத்துணிச்சலுள்ள.

**harv'est**, *n.* கதிரறுப்பு, அறுவடை; அறுவடைப்பருவம்; கூலப்பயிர்; பருவ விளைவு; உழைப்பின் பயன், நல்விளைவு, பெரு வருவாய்; *v.* கதிரறுத்துக்குவி; அறுவடைசெய்; சேர்த்துவை; (தொ.) harvest festival, கதிரறுப்புத் தொடர்ந்த வணக்கவழிபாடு; harvest home, அறுவடை முடிவு; அறுவடை விழா; harvest moon, அறுவடைக்கால எல்லையில் செப்டம்பர் 22, 23க்குள் முடியும் அரைமதிக் காலத்திய நிறை நிலா; harvest mouse, சிறு சுண்டெலி வகை.

**har'vest-bug**, *n.* கதிரறுப்புக் காலத்தில் தொந்தரவு கொடுக்கும் சிறு பூச்சி வகை.

**harv'ester**, *n.* கதிரறுப்பவர்; கதிரறுக்கும் இயந்திரம்; கதிரறுப்புக் காலத்தில் தொந்தரவு கொடுக்கும் சிறு பூச்சி வகை.

**har'vest-la'dy, har'vest-lord**, *n.* அறுவடை செய்பவர்களில் முதன்மையானவர்கள்.

**har'vestman**, *n.* கதிரறுப்பு வேலையில் ஈடுபட்டிருப்பவர்.

**har'vest-queen**, *n.* அறுவடை செய்யப்பட்ட கூலப்பயிரின் கடைசி இணுக்கினால் செய்யப்பட்ட பொம்மை உருவம்; அறுவடைக்காரர்களில் முதன்மையானவர்.

**has**, *v.* have என்பதன் படர்க்கை ஒருமை வடிவம்.

**has'-been**, *n.* (பே- வ.) முன்பிருந்த திறல் இழந்தவர்; முன் திறம் இழந்தது; பழமையாகிவிட்ட பொருள்; *pl.* has'-beens.

**hash**, *n.* கொத்திய இறைச்சிக்கறி; புதிய உருவில் படைக்கப்பட்ட பழஞ்செய்தி; கதம்ப கூளம்; *v.* கொந்து, கொத்து, இறைச்சியினைச் சிறுசிறு துண்டுகளாக வெட்டு; (தொ.) hash up, கொத்து, கொந்து; make a hash of, செய்து கெடு; கையாடிக் கெடு; settle one's hash, தீர்த்துக்கட்டு, முற்றுப் புள்ளி வை.

**hash'eesh, hash'ish**, *n.* கசகசா வகை, சணல் வகைச்செடி; கஞ்சா, அராபியா-எகிப்து-துருக்கி முதலிய நாடுகளில் புகைப்பதற்கு அல்லது மெல்லுவதற்கென உலர்த்தப்படுகிற சணல் செடியின் கொழுந்துகளும் இளம் பகுதிகளும் அடங்கிய சரக்கு.

**has'let**, *n.* வறுத்து உணவாகக் கொள்ளத்தக்க பன்றிக்குடல்.

**hasp**, *n.* கொளுவி, கொண்டி, பூட்டு, கொக்கி; நூற்கும் கதிர்; நூற்கண்டு; நூற்கழி, நூற்சிட்டம்; *v.* கொளுவி மாட்டிப்பூட்டு.

**hass'ock**, *n.* முழந்தாளிட்டு நிற்பதற்கான திண்டு; புற்கற்றை; மென்சுணக்கல் வகை.

**hast**, *v.* have என்பதன் பழங்கால முன்னிலை ஒருமை வடிவம்.

**has'tate, has'tated**, *a.* ஈட்டி வடிவமுள்ள; பின்னோக்கிய கவை முள்ளுடைய.

**haste**, *n.* விரைவு, பரபரப்பு, அவசரம்; ஆத்திரம், பதற்றம்; *v.* அவசரப்படு, பதற்றங்கொள்; விரைந்து செல்; அவசரப்படுத்து, விரைவுபடுத்து, உந்திச் செலுத்து; (தொ.) make haste, விரைந்து செயலாற்று; விரைவாகச் செலுத்து; விரைவுபடுத்து.

**ha'sten**, *v.* அவசரப்படுத்து, விரைவுபடுத்து; தொழில் விரைவு மேற்கொள்; அவசரப்படு, பதற்றங்கொள்; அவசரமாகச் செல்.

**hast'iness**, *n.* விரைவு, பரபரப்பு; துடுக்குச்செயல்; எளிதில் சினமூட்டப் பெறும் இயல்பு.

**has'ty**, *a.* பரபரப்புடைய; விரைவுள்ள; துடுக்கான, எண்ணமல் துணிகிற, முன்பின் பாராத, ஆய்ந்தமைவில்லாத; முன் சினமுள்ள, பதற்றமுடைய.

**hast'y-pudd'ing**, *n.* கொதிக்கும் பால் அல்லது நீரில் மாவைப் போட்டுக் கிளறியெடுத்த களி.

**hast'y-witt'ed**, *a.* துடுக்கான, முன்னாய்வற்ற, ஆய்ந்தோய்ந்து பாராத.

**hat**, *n.* உச்சியும் விளிம்பும் உடைய தொப்பி; போப்பாண்டவரின் திருத்துணைவர் பதவி; *v.* தொப்பியினால் மூடு; தொப்பி தருவித்துக்கொடு; ஒருவருக்கு வணக்கம் செலுத்தும் வகையில் தொப்பியை எடு; (தொ.) as black as my hat, முற்றும் கறுப்பான; hang up one's hat, தங்கிடம் அமைத்துக்கொள்; hat in hand, கெஞ்சுகிற; அடிமைத்தனமான; கெஞ்சிக்கொண்டு; hats off to, சிறப்பெல்லாம் அவருக்கே உரியதாக்குகிறோம்; pass round the hat, send round the hat, பணம் திரட்டும் வேலை மேற்கொள்; நன்கொடை வேண்டிப் பெறு; under one's hat, இரகசியமாக.

**hat'band**, *n.* தொப்பியைச் சுற்றிக் கட்டப்பட்டுள்ள இழைப் பட்டை.

**hat'-block**, *n.* தொப்பியை உருவாக்குவதற்காகக் கீழே வைத்துக்கொள்ளப்படும் மரக்கட்டை.

**hatch** [1], *n.* கீழ்ப்பாதிக்கதவு, இரட்டைக் கதவின் கீழ்ப்பகுதி; திட்டிக்கதவு; கதவின் புழைவாயில்; சுவரின் இடைப் புழைவாய்; மோட்டுப்புழைவாய்; நிலத்தளப்புழைவாய்; கப்பல் தளப் புழைவாயில்; புழைவாயடைப்பு; வெள்ளவாரி, மதகுவாய்; *v.* திட்டிவாயிலை அடை; (தொ.) under hatches, கப்பல் தளத்துக்குக் கீழே; கண்காணுமல்; வேலை செய்ய வேண்டியிராத நிலையில்; கைது செய்யப்பட்டு, காவலில் வைக்கப்பட்டு; தாழ்த்தப்பட்டு; உயிரிழந்து.

**hatch** [2], *n.* குஞ்சு பொரிப்பு; ஓரீட்டு முட்டைக் குஞ்சுகள்; *v.* முட்டை குஞ்சு பொரிக்க வை; அடைகா; குஞ்சு பொரி; சூழ்ச்சிசெய்து உருவாக்கு; (தொ.) count one's chickens before they are hatched, உறுதியற்ற வருங்கால நிகழ்ச்சியை மிகப் பெரிதும் நம்பியிரு; hatches, catches, matches, and dispatches, பிறப்புகள்-மண உறுதி ஒப்பந்தங்கள்-திருமணங்கள்-சாவுகள் பற்றிய செய்தித்தாள் பட்டியல்.

**hatch** [3], *n.* செதுக்கப்பட்ட வரி; *v.* பரப்பின்மேல் நேர்த்தியான ஒருபோகு வரிகளை உருவாக்கு.

**hatch'-boat**, *n.* பாதியளவு தளமிடப்பட்டுள்ள மீன்பிடி படகு வகை.

**hatch'ery**, *n.* முட்டைகளைக் குஞ்சுபொரிக்க வைப்பதற்குரிய இடம்.

**hatch'et**, *n.* கைக்கோடரி; (தொ.) bury the hatchet, போர் ஒழி; throw the hatchet, மிகைப்படுத்திக்கூறு; throw the helve after the hatchet, முன்னரே அடைந்த இழப்புடன் மீண்டும் புது இழப்புக்குள்ளாகு.

**hatch'et-faced**, *a.* இடுக்கமான முகமுடைய.

**hatch'ety**, *a.* கைக்கோடரி போன்ற.

**hatch'ing**, *n.* நேர்த்தியான கோடுகள் மூலம் நிழல் வண்ணங் காட்டுதல்.

**hatch'ment**, *n.* (கட்.) மரபுச்சின்னங்களைத் தாங்கிய கேடயம்; இறந்தவருடைய படைக்கலங்களைக் குறித்த வீட்டு முகப்புத்தகடு.

**hatch'way**, *n.* (கப்.) தளப்புழைவாய், சரக்குகளை இறக்குவதற்காகக் கப்பல் தளத்திலுள்ள புழை; நிலத்தளத்திலுள்ள புகுவாயில்; சுவரிலுள்ள திட்டிவாயில்; மோட்டிலுள்ள புழைவாய்.

**hate**, *n.* வெறுப்பு; பகைமை; *v.* பெருவெறுப்புக்கொள், அருவரு, கறுவு; (தொ.) morning hate, பகைப்புல மீது வாடிக்கையான காலைவேட்டுமுறை.

**hate'ful**, *a.* வெறுப்புணர்ச்சியைத் தூண்டுகிற; அருவருப்பான, வெறுத்தொதுக்கத்தக்க; வெறுப்புக்கொண்டிருக்கிற; வெறுப்பைக் காட்டிக்கொள்ளுகிற.

**hat'ful**, *n.* தொப்பி கொள்ளக்கூடிய அளவு; *pl.* hat'fuls.

**hat'-guard**, *n.* தொப்பி காற்றில் அடித்துக்கொண்டு போகாமற் காக்கும் மென்கயிறு.

**hath**, *v.* have என்பதன் பழையவழக்கு நிகழ்காலப் படர்க்கை ஒருமை வடிவம்.

**hat'-peg**, *n.* தொப்பி மாட்டி.

**hat'pin**, *n.* தொப்பியை மயிரோடு இணைப்பதற்கான நீண்ட ஊசி.

**hat'-plant**, *n.* தொப்பிகள் செய்வதற்குப் பயன்படும் தக்கைச் செடி வகை.

**hat'rack**, *n.* தொப்பி மாட்டும் சட்டம்.

**hat'red**, *n.* பெருவெறுப்பு, பகைமை, வன்மம், காழ்ப்பு.

**hat'stand**, *n.* தொப்பி மாட்டுவதற்கான முளைகளுடன்கூடிய நிலைச் சட்டம்.

**hatt'ed**, *a.* தொப்பியணிந்துள்ள; தொப்பியினால் மூடப்பட்ட.

**hatt'er,** *n.* தொப்பி செய்பவர் ; தொப்பி விற்பனையாளர் ; (தொ.) as mad as a hatter, பைத்தியம் முற்றிய.

***hatt'i, hattisherif',*** (பெர்.) *n.* (வர.) துருக்கி சுல்தானல் கையெழுத்திடப்பட்ட நிலவரக் கட்டளை.

**hat'-trick,** *n.* மாந்திரிகன் தொப்பியை வைத்துக்கொண்டு செய்யும் மாயவித்தை ; மரப்பந்தாட்டத்தில் அடுத்தடுத்து மும்முறை பந்து வீசி இலக்குக்கட்டைகளை வீழ்த்தி வெற்றி பெறுதல் ; விளையாட்டுக்களில் ஒரே ஆட்டக்காரர் மூன்று இலக்கு எடுத்தல்.

**haub'erk,** *n.* போர்க்கவசம், இருப்புக் கவசம்.

**haugh,** *n.* ஆற்றங்கரை வண்டல்நிலச் சமவெளி.

**haught'iness,** *n.* தருக்கு, இறுமாப்பு, மேட்டிமை.

**haught'y,** *a.* செருக்கு வாய்ந்த; ஏளன இறுமாப்புக்கொண்ட, மேட்டிமையுடன் அவமதித்து நடக்கிற.

**haul,** *n.* இழுப்பு ; இழுவை, ஓர் இழுவை வலைப்பட்ட மீன் ; ஆதாயத்தின் அளவு, பேறு; இழுக்கப்பட்ட சுமை; *v.* இழு; வலித்திழு ; வெட்டியிழு ; வண்டி முதலியவற்றில் எடுத்துச் செல் ; கப்பலின் போக்கினைமாற்று ; காற்று வகையில் திசைமாறு ; (தொ.) haul off, haul round, விலக்கிக் கப்பலைத் திருப்பிச் செலுத்து ; haul over the coals, கண்டித் துரை, ஒறு, அதட்டு ; haul up, இழுத்து நிறுத்து ; இயக்கம் தடுத்து நிறுத்துவி ; ஓய் நிலைக்குக் கொண்டு வா ; ஓய்நிலை மேற்கொள்; விளக்கம் கோரு; haul upon the wind, காற்றடிக்கும் திசையை நோக்கிக் கப்பலைப் பின்னும் திருப்பு.

**haul'age,** *n.* இழுப்பு ; இழுவைக் கூலி ; பளுவேறிய சரக்கின் இடமாற்றம்.

**haul'er,** *n.* இழுவைப்பணியாள்.

**haul'ier,** *n.* இழுவைப்பணியாள், நிலக்கரிச் சுரங்கவழியின் அடிப்பாகத்துக்குத் தொட்டிகளை இழுத்துச் செல்பவர் ; கூலிக்கு வண்டியிழுப்பவர்.

**haulm,** *n.* அடித்தண்டு ; பயறு வகைகளின் தாள் ; உருளைக் கிழங்கின் அடித்தண்டு.

**haul'yard,** *n.* =halyard.

**haunch,** *n.* இடுப்பு, கடைசி விலா எலும்புகளுக்கும் தொடைக்கும் இடைப்பட்ட உடற்பகுதி ; பிட்டத்துடன் கூடிய இடுப்பு ; மான் முதலிய விலங்குகளின் கால் துடை இறைச்சி ; (க-க.) வளைவு மாடத்தின் உட்பக்கச் சரிவு ; கீழ்நோக்கிய கையின் எறிவு ; *v.* கையைக் கீழே தாழ்த்தி வீசி எறி.

**haunt,** *n.* பயிலிடம், ஊடாட்டப்பகுதி, நடமாட்டப்பகுதி ; விலங்குகள் வழக்கமாகச் சென்று தீனி கொள்ளும் இடம் ; குற்றவாளிகள் பதுங்கிடம் ; *v.* அடிக்கடி செல், சென்று ஊடாடு, வழக்கமாக நடமாடு ; பயில், பழகி ஊடாடு; விரும்பிக் கலந்து உறவாடு ; வழக்கமாகத் தங்கியிரு ; ஓயாது வந்து தலையிடு ; சுற்றிச்சுற்றி வா ; பேய்வகையில் தங்கியிரு, வட்டமிடு ; எண்ணங்கள் வகையில் அடிக்கடி வந்து தோன்று ; ஓயாது நினைவில் ஊடாடு.

**haunt'ed,** *a.* பேய் தங்கிவாழ்கிற ; பேய்கள் வட்டமிடுகிற ; பேயாட்டம் நிரம்பிய.

**haut'boy,** *n.* நாகசுரம் போன்ற துளை இசைக்கருவி வகை ; துளை இசைக்கருவி வகையின் அழுத்து கட்டை ; உயரமான பழச்செடி வகை.

***haute ecole,*** (பிர.) *n.* மிகக் கடினமான குதிரை ஏற்ற வித்தைகள்.

***hauteur,*** (பிர.) *n.* செருக்கார்ந்த நடத்தை, அகம்பாவம்.

***haut gout,*** (பிர.) *n.* உச்ச உயர் சுவைநலம் ; சிறு கறை.

**Havan'a,** *n.* கியூபா என்னும் தீவில் செய்யப்படும் சுருட்டு வகை.

**have,** *v.* கொள் ; கொண்டிரு ; பெறு ; பெற்றிரு ; முயன்று பெறு ; வைத்திரு ; உடைமையாகக் கொண்டிரு ; உரிமையாகப் பெற்றிரு ; வசமாகக் கொள் ; கைக்கொண்டிரு ; உறவாகக் கொள்; பண்பாகக் கொள்; படு; தாங்கு; பொறுத் துக்கொள் ; அனுபவி, நுகர்பொருளாகக் கொள் ; பட்டறி ; உணர் ; நுகர் ; அறி ; உளங்கொள் ; பொருள் காண், புரிந்து கொள் ; தகவல் பெறு ; கருது ; வெளியிடு ; கூறு ; வலியுறுத்து ; மதி ; கொண்டு வா, கொண்டு செல் ; போகச் செய் ; ஏற்றுக்கொள் ; பிறப்பி, ஈனு ; இன்றியமையா நிலைபெறு ; கடமைப்பட்டிரு ; மேனிலை பெறு, விஞ்சிய நிலை அடை ; சிக்க வை ; ஏமாற்று ; முடித்து விடு ; (தொ.) have an attempt, முயற்சி செய் ; முயன்று பார் ; have at, தாக்கு ; மேல்விழு ; have done, நிறுத்து, முடி ; போதும் ; have it one's own way, விருப்பப்படியே செய் ; have it out, வாதம் முதலியவற்றால் பூசலை முடிவுசெய் ; பல்லைப் பிடுங்கு ; have on, ஆடைகளை அணிந்திரு ; have one up, நீதிமன்றத் திற்குக் கொண்டு வரும்படி செய் ; haves and have-nots, பணக்காரர்களும் ஏழைகளும்.

**hav'en,** *n.* துறைமுகம் ; புகலிடம் ; ஏமம்.

**hav'ersack,** *n.* படைவீரரின் உணவுப்பை.

**hav'ildar,** *n.* படைத்துறை மேலாள்.

**hav'ing,** *n.* உடையவராயிருத்தல் ; உடைமை ; சொத்து.

**hav'ings,** *n. pl.* உடைமைகள்.

**hav'oc,** *n.* பேரழிவு ; சூறை ; *v.* பாழ்படுத்து ; (தொ.) cry havoc, சூறைக்குறிப்பாணை இடு.

**haw** [1], *n.* வேலியாகப் பயன்படும் முட்செடி வகை; முட்செடி வகையின் பழம் ; (வர.) வேலி, வளாகம், அடைப்பு.

**haw** [2], *n.* குதிரை நாய் முதலியவற்றின் மூன்றாவது கண்ணிமைத்திரை ; கண்ணின் உட்கோணத்திலுள்ள குருத் தெலும்பு.

**haw'buck,** *n.* பட்டிக்காட்டான்.

**haw'finch,** *n.* சிறுபறவை வகை.

**haw'-haw',** *n.* வெடிச் சிரிப்பு; செயற்கைப் பெருமிதப்பேச்சு; *a.* பேச்சில் செயற்கைப் பெருமிதமான ; *v.* வெடிச் சிரிப்புச் சிரி ; *int.* பேரொலியுடன் கூடிய பெருஞ்சிரிப்பு.

**hawk** [1], *n.* பருந்து, வேட்டைப்பறவை வகை ; பேராசைக் காரன் ; கொடுங் கொள்ளைக்காரன் ; *v.* பருந்து கொண்டு வேட்டையாடு ; பருந்துப் பாய்ச்சலில் தாக்கு ; பூச்சிகளை வேட்டையாடு ; (தொ.) know a hawk from a handsaw, குறைந்த பொதுநிலை அளவான பிரித்தறியும் ஆற்றலாவது பெற்றிரு.

**hawk** [2], *n.* பூசுதட்டு, காரை பூசுபவரின் கைப்பிடியுள்ள சதுரப்பலகை

**hawk** [3], *v.* விற்பனைக்காக பொருட்களைத் தூக்கித் திரி, கூவி விற்பனை செய்து திரி.

**hawk** [4], *n.* காறி இருமு, தொண்டையைக் கனைத்துக்கொள்.

**hawk'-beaked, hawk'-billed,** *a.* கழுகினது போன்ற கூரிய வளைந்த அலகுடைய.

**hawk'er,** *n.* கூவி விற்பவர், தெருவில் விற்றுத் திரியும் வணிகர்.

**hawk'-eyed,** *a.* கூரிய பார்வையுள்ள.

**hawk'ing,** *n.* பருந்து போன்ற வேட்டைப் பறவைகளை வளர்த்துப் பழக்கும் கலை.

**hawk'-moth,** *n.* ஆப்பிரிக்காவிலுள்ள பெரிய விட்டிற்பூச்சி வகை.

**hawk'-nosed,** *a.* வளைந்த மூக்குடைய ; பருந்தினத்தினது போன்ற மூக்குடைய.

**hawk's-bill,** *n.* ஆமை வகை.

**hawse,** *n.* விலாத்துளையிடம், கப்பலின் பக்கங்களில் நங்கூரக் கம்பிவடத் துளைகளிடப்பட்டுள்ள இடம் ; இணை நங்கூர இடைவெளியமைவு ; கப்பல் தலைப்புக்கும் நங்கூரத்துக்கும் உள்ள இடைவெளி.

**hawse'-hole,** *n.* கப்பலின் நங்கூரக் கம்பிவடத் துளை.

**haws'er,** *n.* நங்கூரக் கம்பிவடம், எஃகினால் ஆன திண்ணிய வடம்.

**haw'thorn**, *n.* வெண்மை சிவப்பு இளரோஜா முதலிய நிறமுடைய மலர்களும் திண்சிவப்பு நிறமுடைய சிறு பழங்களுங் கொண்ட முட்செடி வகை.

**hay**[1], *n.* உலர்புல், கால்நடைத் தீவனத்திற்காக அறுத்து உலர்த்தப்பட்ட புல்; *v.* உலர்புல்லாக்கு, புல் உலர்த்து; நிலத்தை உலர்புற் பயிருக்கு உரியதாக்கு; (தொ.) Burgundian hay, கால்நடைத் தீவனமாகப் பயன்படும் செடிவகை; make hay, வெயிலில் காய்வதற்காகப் புல்லைப் புரட்டு; make hay of, தாறுமாறாகப் போடு; அலங்கோலஞ் செய்; make hay while the sun shines, காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்.

**hay**[2], *n.* நாட்டுப்புற நடனவகை; நாட்டுப்புற ஆடற்கலை.

**hay**[3], *n.* வேலி, அடைப்பு.

**hay**[4], *int.* வாட்போரில் வெற்றி ஏற்படும்பொழுது விளையும் வியப்பொலி.

**hay'-band**, *n.* வைக்கோற்புரி, உலர்ந்த புல்லை முறுக்கிச் செய்த கயிறு.

**hay'-bote**, *n.* வேலிகளையும் அடைப்புக்களையும் சீர்செய்வதற்காக மரத்தை வெட்டுவதற்கான குடிக்கூலிக்காரருக்குள்ள உரிமை.

**hay'-box**, *n.* பதனுணப்பெட்டி, அரைகுறையாக சமைக்கப்பட்ட உணவை வைத்து முற்றிலும் பக்குவமடையச் செய்வதற்காகப் பயன்படுத்தப்படும் உலர்புல்லடைத்த காற்றுப் புகாப் பெட்டி.

**hay'-cock**, *n.* உலர்புல் குவியல், வைக்கோற் போர்.

**hay'-fever**, *n.* தூசியினால் ஏற்படும் வேனிற்காலச் சளிக் காய்ச்சல் வகை.

**hay'-field**, *n.* உலர்புற்களம், புல் உலர்த்துபுலம்.

**hay'-fork**, *n.* உலர்புல் கவர்க்கோல், உலர்புல்லைப் புரட்டப் பயன்படும் நீண்ட பிடியுடைய கவர்முட்கருவி.

**hay'ing**, *n.* உலர்புல் அறுவடை; புல் உலர்த்தல்.

**hay'loft**, *n.* வைக்கோற்பரண், வைக்கோல் வைப்பதற்கான மேலிடம்.

**hay'-maker**, *n.* புல் உலர்த்துபவர், அறுத்த புல்லைக் கிளறிப் பரப்பிக் காய வைப்பவர்; புல் கிளறி உலர்த்துவதற்கான கருவி.

**hay'-mow**, *n.* உலர்புற் கட்டு, உலர்புற்கந்து, களஞ்சியத்தில் சேமித்து வைக்கப்பட்டுள்ள உலர்புல்.

**hay'-rick**, *n.* உலர்புற் கட்டு, உலர்புற் போர்.

**hay'seed**, *n.* உலர்புல்லினின்று உதிரும் புல்விதைகள்.

**hay'sel**, *n.* உலர்புற் பருவம், உலர்புல் விளைவிக்கும் காலம்.

**hay'-ward**, *n.* வேலிகாவலர், ஊர் வட்டத்தினுள் கால்நடைகள் நுழைந்து பாழாக்காதபடி வேலிகளையும் அடைப்புக்களையும் கண்காணிக்கும் பொறுப்பாளர்.

**hay'-wire**, *n.* உலர்புல்லைப் பிணைத்துக்கட்டும் கம்பி; *a.* கோட்டியான; பெருங்குழப்பமான, தாறுமாறான.

**haz'ard**, *n.* சொக்கட்டானில் சிக்கலான குருட்டடி ஆட்ட வகை; குருட்டடி; இடர்துணி முயற்சி; துணிந்த செய்தி; இடையூறு, திங்கு; *v.* இடருக்கு உட்படுத்து; இடர் துணிந்திறங்கு; துணிந்து மேற்கொள்ளு; குருட்டடியான ஊகம் செய்; குருட்டடி ஊகமாக உரை.

**hazard'ous**, *a.* துணிச்சலான; இடரார்ந்த; அபாயமான.

**haze**[1], *n.* ஆவிமூடாக்கு, வெப்பத்தினால் அடிக்கடி நிலவுல கடுத்து வளிமண்டலத்தில் ஏற்படும் மங்கல் நிலை; பனியார்ந்த நிலை; தெளிவின்மை; மனக்குழப்பம்; *v.* மங்கலாக்கு; மனக்குழப்பம் உண்டாக்கு.

**haze**[2], *v.* (கப்.) அதிகப்படியான வேலையால் துன்புறுத்து; எளியாரைக் கொடுமைப்படுத்து, அடக்கி அச்சுறுத்து.

**haz'el**, *n.* கொட்டையுடைய தொய்வொசிவான தண்டு கிளையுடைய குறுமரவகை; குறுமர வகையின் கொட்டை நிறம்; கண்களின் மங்கலான செம்மை கலந்த பழுப்பு நிறம்.

**ha'zel-nut**, *n.* குறுமர வகையின் உணவாகக் கொள்ளத்தக்க செம்பழுப்பு நிறக் கொட்டை.

**haz'y**, *a.* மங்கலான; பனியார்ந்த; தெளிவற்ற; ஐயத்துக் கிடமான; சிறிது குடிமயக்கமுள்ள.

**H-bomb**, *n.* = hydrogen bomb.

**he**[1], *n.* ஆண்; *pron.* அவன், அவர்.

**he**[2], *int.* ஏளனநகைக் குறிப்பு.

**head**, *n.* தலை; மண்டை; முகடு; சிறப்புக்குரிய இடம்; ஆணைக்குரிய இடம்; மேலிடம்; தலைவர்; ஆட்சித் தலைவர்; முதல்வர்; தலைமை ஆசிரியர்; மூளை; அறிவாற்றல்; தன்னடக்க ஆற்றல்; அறிவின் இருப்பிடம்; கற்பனையின் பிறப்பிடம்; தொழிலில் இயற்கைத்திறம்; இயற்சார்புத்திறம்; முன்னேற்றம்; ஆற்றல்முகப்பு, நீர்மங்களின் உயர வேக அழுத்தங்களின் பயனான ஆற்றலளவின் மொத்தம்; வலிமை; கிளர்ச்சியாற்றல்; உச்சி; மேல்பகுதி; உருண்ட மேல்புறம்; தலைப்புறுப்பு; முன்புறம்; உருண்டு திரண்ட முன்பகுதி; முகப்புப்பகுதி; நிலமுனைக்கோடி; படைமுகம்; படையணி முகப்பு; உச்ச உயர்நிலை; முடிநிலை, திரண்ட முடிபு; நெருக்கடிக் கட்டம்; முக்கிய பகுதி; முக்கிய செய்தி; மூலம்; பிறப்பிடம்; ஆற்றுமூலம்; ஏரியில் ஆறு வந்து கலக்கும் பகுதி; உயிர்நிலை, உயிர்; நாணயத் தலை உருவம்; படுக்கைத் தலைப்புறம்; தலைப்பாகை; தலை உடை ஒப்பனை; தேறல் நுரைத்தலை; பாலின் மேலாடை; சீக்கட்டுமுகம்; பருவின் முதிர்ப்பழுப்பு; திரள் மலர்க்கொத்து; தழைக் கொத்து; மரத்தின் கிளைதழைத்தலைப்பு; மயிர்முடி; நரப்புக் கருவி வகையின் சுருள்முனைப் பெட்டி உறுப்பு; முரசின் தோல்முகம்; மிதிவண்டியின் முகப்புக்குழாய்; பொறி அமைவின் உயிர்நிலை உறுப்பு; கால்நடை விலங்குகளில் எண்ணுதற்குரிய ஒன்று; தனித்தனி உருப்படி; தனித்தனி ஆள்; *v.* தலை அமைத்துக் கொடு; உச்சி அமை; தலைப்பு அமை; தலையாய் அமை; உச்சியாய் அமைவுறு; தலைப்பாகு; மரஞ்செடி கொடிகளின் தலைப்பகுதியை வெட்டு; உச்சியை வீழ்த்து; தலைமைதாங்கு, தலைமை தாங்கிச்செல்; நடத்திச் செல்; முந்து, முன்செல்; முன்சென்று திரும்பு; மேம்படு; எதிர்; முன்னேறு; முதிர்வுறு, வளர்ந்து முனைப்பாகு; நோக்கித் திருப்பு, நேர்ப்படு; சுற்றிச் சென்று திருப்பு; உதைபந்தாட்டத்தில் பந்தைத் தலையால் தாங்கி எறி; (கப்.) நோக்கிச்செல்; (தொ.) beat person's head off, செயலில் முற்றிலும் விஞ்சு, முழுதும் வெல்; by head and shoulders, வன்முறையாக; மிக மேம்பட்ட; come to a head, மும்மரமாகு; உச்சநிலை பெறு, உணர்ச்சி முகட்டினை அடை; eat one's head off, தகுதி அல்லது மதிப்பிற்குமேல் உணவுச் செலவு வை; from head to foot, உடல் முழுதும்; give a horse his head, அவன் விருப்பம்போல் போகவிடு; go by the head, தலைகுப்புறக் கீழே சென்று அமிழ்; go to one's head, ஒருவரின் நல்லுணர்ச்சியைக் கெடு; have a head on one's shoulders, திறமையும் மன அமைதியோடு கூடிய சமநிலையும் பெறு; head first, head foremost, தலைகீழாக, தலைகுத்தாக; முன்னுய்வின்றி; head over heels, தலைகீழாக; keep one's head, அமைதியாயிரு, பொறுமையை இழக்காதிரு; keep one's head above water, கடனில் மூழ்காதிரு, கடன் படாதிரு; lay heads together, கூடிக் கலந்தாராய், சேர்ந்து ஆய்ந்துபார்; lose one's head, தலை இழ; அமைதியிழ, குழப்பமடை; make head, விரைவாக முன்னேறு; off one's head, கோட்டியுடைய, கிறுக்குவாய்ந்த; old head on young shoulders, இளமையிலே நல்லறிவு வாய்ந்த; out of one's own head, தனிப்பட்ட கற்பனையிலிருந்தே; over head and ears, முற்றமுழுக்க, முழுதும் ஆழ்ந்து ஈடுபட்ட; over one's head, தலைமேலே, காத்திருக்கிற; put thing in person's head, குறிப்பாகத் தெரிவி, கருத்தைத் தூண்டு; put thing out of one's head, எண்ணத்தை நீக்கு; மறந்துவிடு; put thing out of person's head, மறக்கச்செய்; show one's head, தலைகாட்டு, வெளியே வந்து தோன்று; talk person's head off, பேச்சினால் களைப்படையச் செய்.

**head'ache**, *n.* தலைவலி, மண்டையிடி; (பே-வ.) பெருந் தொல்லைக்கு இடமான செய்தி.

head'achy, *a.* தலைவலியால் துன்பப்படுகிற; தலைவலி உண்டு பண்ணுகிற.

head'-band, *n.* தலைக்கச்சு; தலைப்பட்டி, தலையில் கட்டிய இழைக்கச்சை; தலைப்பகுதிக் கட்டு.

head'-boom, *n.* கப்பலின் பாய்மர விரிவு.

head'borough, *n.* (வர.) சிறு காவலர், காவல்துறைப் பணியாள்.

head'-boy, *n.* பள்ளியில் சட்டாம்பிள்ளை.

head'-dress, *n.* தலைப்பாகை; பெண்டிர் தலையுடைக் கோலம்.

head'ed, *a.* தலையுள்ள; தலைவருள்ள; முதல்வராகக் கொண்ட.

head'er, *n.* நடத்திச் செல்பவர், வழிகாட்டி; தலைகீழாக நீரில் மூழ்குதல்; சுவரின் முன்பகுதிக்குச் செங்கோணத்தில் பொருத்தப்பட்ட கல் அல்லது செங்கல்; தலையிலடிக்கும் அடி; தலை கொடுத்தடிக்கும் உதைபந்து; மிடாக்களுக்கு மூடி செய்து பொருத்துபவர்.

head'-fast, *n.* நங்கூரம் பாய்ச்சி உறுதியாகப் பிணைப்பதற்காகக் கப்பலின் முன்புறத்திலுள்ள திண் கயிறு.

head'gear, *n.* தலையணி; குல்லாய், தொப்பி.

head'-hunt'er, *n.* எதிரிகளின் தலைகளை வெற்றிச் சின்னங்களாகக் கருதிச் சேர்க்கும் காட்டுமிராண்டி.

head'iness, *n.* மடத்துணிச்சல்; அடங்காத துடுக்குத்தனம்; மட்டற்ற வெறியூட்டுந் திறம்.

head'ing, *n.* காற்பந்தாட்ட வகையில் பந்தினைத் தலையால் மோதுதல்; தலைப்பு; பக்கத்தலைப்பு; தலையங்கம்; சுரங்கப் பாதை அல்லது குடைந்து பாதை அமைப்பதற்காக போடப்படும் முதல் தளமட்டப் பாதை; முன்செல்லுதல்; முன்னேறுதல்.

head'land, *n.* கடலில் புகுந்துள்ள மேட்டுநிலப் பகுதி; நிலக் கூம்பு; வயலின் ஒரு மூலையில் உழுது பயன்படுத்தாது விடப்பட்ட பகுதி.

head'light, *n.* முன்விளக்கு, உந்துவண்டி கப்பல் விமானம் ஆகியவற்றின் முகப்பில் பொருத்தப்பட்டுள்ள வெளிச்சம் மிக்க விளக்கு.

head'line, *n.* பத்திரிகைத் தலைப்பு; வானொலியில் முதலிற் கூறப்படும் செய்திச் சுருக்கம்; (தொ.) hit the headlines, பத்திரிகைத்துறையில் முதன்மையான புகழ் விளம்பரம் பெறு.

head-lin'er, *n.* நிகழ்ச்சிநிரலில் முனைப்பான இடம்பெறுபவர்.

head'long, *a.* தலைகுப்புறப் பாய்கிற, தலைகீழான; துணிகரமான; கண்மூடித்தனமான; பதற்றமான; விரைவுடைய; *adv.* தலைகீழாக; பதற்றமாக, மிகுவிரைவாக; முன்யோசனையற்று.

head'-man, *n.* தலைவன், வழிகாட்டி; குலத்தலைவன்.

head'mark, *n.* தனிப்பட்ட தன்மை.

headmas'ter, *n.* பள்ளித்தலைவர், தலைமையாசிரியர்.

headmis'tress, *n.* பள்ளித்தலைவி, தலைமை ஆசிரியை.

head'-money, *n.* தலைவரி.

head'most, *a.* தலைசிறந்த.

head'-note, *n.* தலைப்புக்குரிய குறிப்பு; சட்ட முற்குறிப்பு; மூலப் பதிவேட்டால் தரப்படும் பொதுக்குறிப்பு.

head'-on[1], *a.* தலையோடு தலையான; முகப்புடன் முகப்பான நிலையுடைய; தலைநேரே சென்று மோதும் நிலையுடைய; (தொ.) head-on collision, இருப்பூர்தித் தொடர்வண்டிகள் முதலியவை வகையில் தலையோடு தலைமுட்டிக்கொள்ளுகிற மோதல்.

head-on'[2], *adv.* தலை நேரே சென்று மோதும்படி, தலைநேராக உள்ள நிலையில்.

head'phone, *n.* தலைமேல் அணியப்படும் தொலைபேசிக் கருவியிலுள்ள 'குரல் வாங்கி'.

head'piece, *n.* தலைச்சீரா; இருப்புத்தொப்பி; தொப்பி, குல்லாய்; தலைப்பகுதி; மண்டை ஓடு; மூளை; அறிவாற்றலுடையவர்; உச்சிப்பகுதி; அச்சுத்துறையில் நூலின் அல்லது அதிகாரத்தின் தலைப்பில் அழகுக்குரிய செதுக்கு ஒப்பனைப்பகுதி.

head'quart'ers, *n.* தலைமை அலுவலகம்; செயற்கள மையம்; தளபதி அலுவலகம்.

heads, *n. pl.* நாணயத் தலையுருவப்பக்கம்.

head'-sea, *n.* கப்பல் செல்லும் திசைக்கு நேர் எதிராக ஓடும் கடல்.

head'ship, *n.* தலைவர் நிலை; தலைவர் பணி.

heads'man, *n.* தலைவெட்டுத் தண்டனையாற்றுபவர்; திமிங்கில வேட்டைக் கப்பல் தலைவர்.

head'spring, *n.* தலையூற்று; மூலப் பிறப்பிடம்.

head'-square, *n.* தலைமீது அணியப்படும் சதுரக்குட்டை, தலை மூடப் பயன்படும் சதுரத் துணி, சவுக்கம்.

head'stall, *n.* தலைப்பகுதியில் மாட்டப்படும் சேணத்தின் பகுதி.

head'-stock, *n.* பொறியின் சுழலும் பகுதிகளிலுள்ள உராய்வு தாங்கி உருளைகளின் தொகுதி.

head'stone, *n.* கல்லறைக்கல்; மூலக்கல், அடிப்படைக்கல்.

head'strong, *a.* தன்முப்புள்ள; பிடிமுரண்டான.

head'-tire, *n.* தலையணி, தலைக்கோலம்.

head'-voice, *n.* பேச்சு பாட்டு வகைகளில் உயர்பதிவுக் குரல்.

head'wait'er, *n.* அருந்தகங்களிலுள்ள தலைமைப் பணியாள்.

head'way, *n.* முன்னேற்றம்; (கப்.) செல்லும் விரைவு அளவு; (க-க.) வளைவின் உயரம்.

head'-wind, *n.* எதிர்க்காற்று.

head'-work, *n.* மூளைவேலை, சிந்திக்கும் வேலை.

head'y, *a.* மூளையைத் தாக்குகிற; வெறியூட்டுகிற; அழற்சியுடைய; முரட்டுத்தனமான; பதற்றமான.

heal, *v.* குணப்படுத்து; நோயாளியை மீண்டும் நலம்பெறச் செய், புண் ஆற்று; காயம் ஆறு, குணப்படு.

heal'-all, *n.* சஞ்சீவி, அனைத்து நோய் மருந்து; பூண்டு வகைகளுக்கு வழங்கும் பெயர்.

health, *n.* உடல்நலம், உடல்நிலை; ஆரோக்கியம்; நோயற்ற நிலை; வாழ்த்தொடு அருந்தும் நீர்.

health'ful, *a.* உடல்நலம் ஆர்ந்த; உடல்நலம் உண்டு பண்ணுகிற; உடல்நலம் பேணுகிற; உடல்நலங் குறித்த; உளநலத்துக்கு உகந்த.

health'-officer, *n.* சுகாதார அலுவலர், உடல்நலத்துறைப் பணிமேலாளர்.

health'y, *a.* உடல்நலமுடைய; உடல்நலத்திற்கு உதவுகிற; நலவாழ்விற்குத் துணைபுரிகிற; நலமார்ந்த.

heap, *n.* குவியல்; *v.* குவி, குவியலாக்கு; வண்டியில் சரக்குகளை ஏற்றி நிரப்பு; பண்புகளைச் சேர்த்துத் திரட்டு, ஒருங்கு குவி; (தொ.) knock all of a heap, strike all of a heap, முழுதும் குழப்பு; முற்றிலும் பாழாக்கு.

heap'stead, *n.* சுரங்க வழியைச் சுற்றிலுமுள்ள செயற்களக் கட்டிடங்கள்.

heap'y, *a.* குவியல் நிறைந்த.

hear, *v.* கேள்; கேள்விப்படு; செய்தியுணர், தகவல்பெறு, அறியப்பெறு; காது கொடுத்துக் கவனி; வழக்குக் கேள்வி முறை செய்; வழக்கு வாதத்தைக் கேள்; முறையீட்டுக்குச் செவிசாய்; வேண்டுகோளைக் காதுகொடுத்துக் கவனி; வேண்டுதலுக்கு இணங்கியருள்; (தொ.) hear from, கடிதம் தூது தகவல்கள் மூலம் செய்தி உணர்; hear! hear! பாராட்டுக் குறிப்பு; hear tell of, பேசுவதைக் கேள்விப்படு, கேள்வியால் அறி.

**hear'ing**, *n.* செவிப்புல அறிவு கேள்வி; வழக்குக் கேள்வி முறை; கவனம்; உற்றுக்கேட்டல்; கேட்கும் தொலை, கேட்டுணரும் வாய்ப்பு; (தொ.) give fair hearing, ஒரு தலைச் சாய்வின்றி வழக்குக் கேள்விமுறை செய்; hard of hearing, நன்கு காதுகேளாத, செவிடான; out of hearing, காது கேட்கக்கூடாத தொலைவில், கேட்கும்நிலை கடந்து; within hearing, அண்மை இடத்தில்.

**hear'ing-aid**, *n.* செவிடர் கேட்க உதவும் பொறியமைவு; கேள்விப் புலனை மேம்படுத்தும் பொறியமைவு.

**heark'en**, *v.* உற்றுக்கேள், கவனித்துக்கேள்.

**hear'say**, *n.* கேள்வியறிவு; கேட்டுணர்ந்த செய்தி; பொதுப் பேச்சு, ஊர்ச்செய்தி.

**hearse**, *n.* பாடை; பிண ஊர்தி, இடுகாட்டிற்குச் சவப் பெட்டியை ஏற்றிச்செல்லும் உந்துவண்டி.

**hearse'-cloth**, *n.* பிணச்சீலை.

**heart**, *n.* நெஞ்சுப்பை, இருதயம், குருதி ஓட்டத்தை ஊக்கும் உறுப்பு; நெஞ்சு, நெஞ்சுப்பையை உட்கொண்ட மார்புப் பகுதி; நெஞ்சம், இதயம், உணர்ச்சிகளின் இருப்பிடம்; உள்ளுணர்ச்சி; உணர்ச்சி; ஊக்கம்; வீரம்; அன்பு, கனிவு; காதலின் உறைவிடம்; காதல்; உள்ளிடம்; மையம்; உள்ளார்ந்த பகுதி; முக்கிய பகுதி; முக்கிய உறுப்பு; உயிர்நிலை; மரத்தின்காழ், கடுமரம்; நெஞ்சுப்பை வடிவப் பொருள்; இருதய வடிவக் குறியுடைய சீட்டு; இருதயத்தின் நோயுற்ற நிலை; அருமைவிளி; அருமைவிளிக் குறிப்பு; *v.* கிளர்ச்சியூட்டு; ஊக்கப்படுத்து; திரண்டு உள் முகையாயுருவாகு; (தொ.) after one's heart, after one's own heart, தன் முழு விருப்பப்படி, தன் மனம் போல; at heart, உள்ளார, உள்ளார்ந்த உணர்ச்சியின்படி; break one's heart, ஏமாற்றத்தினாலும் கவலையினாலும் மனமுறிவடை, கவலையினால் மாள்வுறு; by heart, மனப்பாடமாக; cry one's heart out, மனம் விட்டு அழு; கடுமையாக அழுது புலம்பு; eat one's heart out, துன்பத்தால் நலிவுறு, தொல்லைகளால் இளைத்துப்போ, சோர்வடை; find it in one's heart, இடங்கொடு; இணங்கு; இசை; from one's heart, மனமார, வஞ்சகமின்றி; have at heart, மிகுந்த அக்கறைகொள்; have one's heart in one's boots, சோர்வுணர்ச்சி கொள்; have one's heart in one's mouth, அதிர்ச்சியும் கிலியும் கொள்; heart and hand, உள்ளக் கிளர்ச்சியுடன், முழு எழுச்சியுடன்; heart and soul, முழு ஊக்கத்தோடும், முழு ஆற்றலோடும்; heart of oak, பெருமர வகையின் காழ்; ஆண்மை நிறைந்தவர், அஞ்சா நெஞ்சினர்; heart to heart, மனம்விட்டுப் பழகுகிற; மனம் விட்டுப் பழகும் நிலையில்; in heart, நல்ல மனநிலையில், எழுச்சியுடன்; in one's heart, உள்ளார, மனத்துக்குள்; in one's heart of hearts, உள்ளார்ந்த உணர்ச்சிகளின்படி; lay thing to heart, மனத்தில் வைத்துக்கொள்; near one's heart, nearest one's heart, மிக நெருங்கிய பாசத்துக்கு உரிய; out of heart, மகிழ்ச்சியின்றி, மன ஊக்கமில்லாமல்; வறுமையுற்ற நிலையில்; searching of heart, உணர்ச்சி ஆய்வு; smoker's heart, புகை பிடித்தலால் ஏற்பட்டுள்ள இருதயக் கோளாறு; நெஞ்சுப்பை நோய்; take heart of grace, சோர்வகற்று, தைரியம் கொள்; take to heart, மனக்கவலைகொள்; உணர்ச்சி வயப்படு; wear one's heart upon one's sleeve, உணர்ச்சிகளை வெளிப்படையாகக் காட்டு; win the heart of, அன்பு அடையப்பெறு; காதலிக்கப்பெறு, காதலைப்பெறு; with all one's heart, முழு மனதார.

**heart'ache**, *n.* மனநோய்; கடுந்துயர்.

**heart'-beat**, *n.* இதயத் துடிப்பு, நாடித் துடிப்பு; உணர்ச்சி.

**heart'-blood**, *n.* உயிர்க்குருதி, உயிர்.

**heart'break**, *n.* அழிதுயர்.

**heart'-brea'ker**, *n.* காதோரக் குழற்சுருள்; காதற் சின்னமான மயிர்ச்சுருள் கற்றை.

**heart'-break'ing**, *a.* கடுந்துயர் உண்டுபண்ணுகிற.

**heart'-broken**, *a.* கடுந்துயர்க்காட்பட்டு, நெஞ்சமுறிவுற்று.

**heart'burn**, *n.* நெஞ்செரிவு, செரிமானக் குறைவினால் ஏற்படும் நெஞ்சு எரிச்சல்.

**heart'burning**, *n.* மனநிறைவின்மை, ஓயா அலப்பு; பொருமை, மனப்புழுக்கம்.

**heart'-disease**, *n.* நெஞ்சுப்பை நோய்.

**heart'-eas'ing**, *a.* உள்ளத்திற்கு அமைதிகொடுக்கிற.

**heart'en**, *v.* ஊக்கப்படுத்து, கிளர்ச்சியூட்டு; எழுச்சிகொள்.

**heart'-felt**, *a.* மனமார்ந்த, நெஞ்சார்ந்த.

**heart'-grief**, *n.* நெஞ்சுப்புண், ஆழ்ந்த மனவேதனை.

**hearth**, *n.* அடுப்படி, அடுப்பங்கரை; அடுப்பின் அடித்தளம்; அடுக்களை, சமையற்கட்டு; குடும்பம்; குடும்ப வீடு; குடும்பச் சூழல்; உலைக்களத்தின் தாழ்பகுதி; கணப்படுப்பு; கணப் பறை.

**hearth'-brush**, *n.* அடுப்புக்கூட்டும் விளக்குமாறு.

**hearth'-mon'ey**, **hearth'-penn'y**, **hearth'-tax**, *n.* குடும்ப வீட்டின்மீதுள்ள வரி.

**hearth'rug**, *n.* கணப்பு விரிப்பு.

**hearth'stone**, *n.* கணப்பு அடுப்பாகப் பயன்படும் கல்.

**heart'ily**, *adv.* மனமார, நல்லெண்ணத்துடன்; முழு மனத்துடன், மனமுவந்து; மனத் திட்பத்துடன்; பசிச்சுவையுடன், வயிருர, பசிதீர.

**heart'less**, *a.* உணர்ச்சியற்ற; இரக்கமற்ற; வீரமற்ற; மனச்சான்றின் உறுத்தலுக்கு இடமற்ற வகையில் காழ்ப்புடைய.

**heart'let**, *n.* சிறு இருதயம்.

**heart'-quake**, *n.* அச்சம், நடுக்கம்.

**heart'-rending**, *a.* நெஞ்சம் பிளக்கின்ற, வெந்துயரளிக்கின்ற.

**heart'-rot**, *n.* காழ்ச்சிதைவு, மரங்களில் காளான்களால் ஏற்படும் உள் வைரச்சிதைவு.

**heart's'-blood**, *n.*=heart-blood.

**heart'-search'ing**, *n.* தன்னாய்வு, தன் உணர்ச்சியாய்வு.

**hearts'-ease**, *n.* மலர்ச்செடி வகை.

**heart'-shaped**, *a.* இருதய வடிவம்போல் அமைந்துள்ள.

**heart'-sick**, *a.* ஊக்கமிழந்த; தளர்வுற்ற, சோர்வுற்ற.

**heart'some**, *a.* எழுச்சி ஊட்டுகிற; மகிழ்ச்சி விளைவிக்கிற.

**heart'-sore**, *n.* துயரம்; *a.* மனம் புண்பட்ட.

**heart'-spoon**, *n.* மார்பெலும்புக் குழிவு; மார்பெலும்பு.

**heart'-stirr'ing**, *a.* உணர்ச்சி கிளறுகிற, ஆழ்ந்த உணர்ச்சிகளை எழுப்புகிற.

**heart'-strike**, *v.* நெஞ்சுதுடுருவு, கிலியூட்டு, கலங்க வை.

**heart'-strings**, *n. pl.* ஆழ்ந்த அன்புத்தளைகள், ஆழ்ந்த உணர்ச்சிக் கூறுகள்.

**heart'-to-heart'**, *a.* மனந்திறந்த, ஒளிவுமறைவற்ற, உண்மை வாய்ந்த; நெருங்கிய பழக்கமுடைய, நெருங்கிப் பழகும் பண்புடைய.

**heart'-ur'chin**, *n.* (வில.) இருதயவடிவுள்ள கடல்விலங்கு வகை.

**heart'-whole**, *a.* முழு மனமார்ந்த; பிற ஈடுபாடற்ற; உள்ளார்ந்த; கபடமற்ற; கலக்கமற்ற; முழு ஈடுபாடுடைய.

**heart'-wood**, *n.* மரக்காழ், மர வைரம்.

**heart'y**, *n.* மாலுமிகளை விளிக்கும் சொல்; பல்கலைக்கழக வழக்கில் உடற்பயிற்சி விளையாட்டாளர்; *a.* உள்ளார்ந்த; உளங்கனிந்த; ஊக்கமுள்ள; தீவிரமான; ஏராளமான, வளம் நிறைந்த.

**heat**, *n.* சூடு, பொருள்களின் உயர் வெப்பநிலை; வெப்பம், வானிலையின் கொதிப்பு, பொறுக்கமுடியா வெப்பம்; வெப்ப உணர்ச்சி; உடல் வெப்பு; வெக்கை, புழுக்கம்; மிகு வெப்ப நிலை; வெயிலின் உச்சநிலை; வெப்பமிக்க வேளை; வெப்பார்ந்த வானிலை; தோலின் செந்நிறம்; வியர்க்குரு;

கடுங்காரச்சுவை, எரிப்பு; உணர்ச்சியின் உச்சநிலை; உணர்ச்சி வேகம்; எழுச்சி; சீற்றம்; வெகுளி; பரபரப்பு, விறுவிறுப்பு; தீவிர கட்டம்; வேகம், விரைவு; சிற்றின்ப வேகம்; விலங்குப்பெடையின் வேட்கைப் பருவம்; விளையாட்டுக்களில் ஒரு தடவை ஆட்டம்; *v.* சூடாக்கு; குருதிக் கொதிப்பூட்டு; உணர்ச்சி வேகம் உண்டுபண்ணு; சினமூட்டு; சூடாகு; (தொ.) final heat, முடிவான பந்தய ஆட்டம்; heat barrier, உயர்விசை நிலைகளில் விமானங்களுக்கு இடர்நிலை உண்டுபண்ணும் சூழ்வெப்பவெளிப் படலம்; latent heat, மறைநிலை வெப்பு, வெப்பின் அடங்குநிலை; mechanical equivalent of heat, ஒரு வெப்ப அலகு உண்டுபண்ணுவதற்கு வேண்டிய விசை ஆற்றல்; specific heat, பொருளின் பரும அலகின் வெப்பநிலையை ஒரு பாகை உயர்த்துவதற்குத் தேவைப்படும் வெப்ப அலகு எண்.

**heat'-ap'oplexy,** *n.* கடுவெயில் அதிர்ச்சி.

**heat'er,** *n.* சூடேற்றுபவர்; சூடேட்டுங் கருவி; அறையை அல்லது கட்டிடத்தை வெப்பமாக்கும் அமைவு, சலவைத் துணி தேய்க்கும் பெட்டியைச் சூடாக்குங் கருவி.

**heath,** *n.* கரம்பு நிலம்; புதர்க்காடு; புதரடர்ந்த சமவெளி; புதர்ச்செடி வகையின் பெயர்.

**heath'-bell,** *n.* புதர்ச்செடியின் மலர்.

**heath'-berry,** *n.* கரம்பு நிலங்களில் காணப்படும் புதர்ச்செடிகளில் உள்ள கொட்டைக் கனிவகை.

**heath'-cock,** *n.* கறுப்புக் காட்டுச் சேவல்.

**hea'then,** *n.* புறச் சமயத்தினர்; கிறித்தவரோ யூதரோ இஸ்லாமியரோ அல்லாத பிற சமயத்தார்; மத நம்பிக்கையற்றவர்; சமயம் பற்றிய அக்கறையற்றவர்; மெய்விளக்கம் பெறுதவர்; *a.* புறச் சமயத்தைச் சார்ந்த, மெய்விளக்கம் பெறுத, மத நம்பிக்கையற்ற; சமயப் பற்றற்ற.

**heath'endom, heath'enesse, heath'enism, hea'thenry,** *n.* புறச் சமயத்தினர் மத அமைப்பு; சமய நம்பிக்கை இல்லாமை; புறச்சமயத்தைச் சேர்ந்த பண்பு; காட்டுமிராண்டித்தன்மை; புறச்சமயம் நிலவியுள்ள உலகப் பகுதிகள்.

**hea'ther,** *n.* குட்டையான புதர்ச்செடி வகை; (தொ.) set the heather on fire, குழப்பம் உண்டுபண்ணு; take to the heather, நாடு கடத்தப்படு.

**heath'er-ale,** *n.* ஸ்காத்லாந்து நாட்டில் புதர்ச்செடி வகையின் மலர்களினின்று இறக்கப்பட்ட பேர்போன மதுவகை.

**heath'er-bell,** *n.* குட்டையான புதர்ச்செடியின் மலர் வகை.

**heath'er-mix'ture,** *n.* புதர்ச்செடியின் பல்வண்ண மலர்களைப் போன்று பல்வண்ணங்களைக் கொண்ட துணிவகை; *a.* புதர்ச்செடி மலரின் பல்வண்ணங்களைக்கொண்ட.

**heath'y,** *a.* புதர்ச்செடிகள் நிறைந்துள்ள.

**heats,** *n. pl.* விளையாட்டுப்போட்டிப் பந்தய முடிவாட்டத்தில் பங்கு கொள்பவர்களை முடிவு செய்யும் துணைப்பந்தய ஆட்டங்கள்; (தொ.) trial heats, துணைப்பந்தயத் தேர்வு ஆட்டங்கள்.

**heat'-spot,** *n.* வேனிற் கொப்புளம்; வெப்பநிலை அறியும் தோற் பகுதி.

**heat'-stroke,** *n.* கடு வெப்பத்தினால் ஏற்படும் மயக்க நோய்.

**heat'-wave,** *n.* அனற் காற்று, வளி மண்டலத்திலுள்ள கடு வெப்பக் காற்று நிலை.

**heave,** *n.* தூக்கு முயற்சி; எறிவு, வாங்கி வீசும் முயற்சி; அலை எழுச்சி; கடல்நீர் அமிழ்ந்தமிழ்ந்தெழுதல்; பொங்குதல்; மற்போர்ப் பொறித்தட்டு முறைகளில் ஒன்று; (மண்.) படுகைப்பொருள் மாற்றுப் பெயர்ச்சி; கனிப்பாறைப் பொருள் மாற்றுப் பெயர்ச்சி; *v.* வலித்திழு; வலித்திழுத்து உயர்த்து; வலித்திழுத்துத் தூக்கு; தூக்கி எறி, வாங்கி வீசு; ஏங்கு; நெடுமூச்சு விடு; வீங்கு, விரிவுற்றெழு; கடல் வகையில் எழுந்து பொங்கு; அமிழ்ந்தமிழ்ந்தெழு; நெஞ்செழுந்தெழுந்தமிழ்; அலையெழு; குமட்டு, ஓங்காரி; (மண்.) படுகையில் பொருட்பெயர்ச்சி செய்து மாற்று, கனிப்பாறை வகையில் பொருட்பெயர்ச்சி செய்து மாற்று; (தொ.) heave at, பற்றியிழு; heave down, கப்பலைப் புரட்டு, துப்புரவு செய்வதற்காக ஒரு பக்கமாகச் சாய்த்துத் திருப்பு; heave ho, நங்கூரத்தை மேலிழுக்கும்போது மாலுமிகள் இடும் கூச்சல்; heave in sight, கண்ணிற்குப் புலப்படு, காட்சியில் வந்து தோன்று; heave of the sea, கப்பல் செல்லும் பாதையில் கடல் அலை எழுச்சியினுல் ஏற்படும் ஆற்றல்; heave the log, கப்பலின் வேகத்தைக் கண்டுபிடிப்பதற்காக மரக்கட்டையைத் தண்ணீரில் தூக்கி எறி; heave to, நங்கூரம் பாய்ச்சாமலே கப்பலை நிலைக்குக் கொண்டுவா.

**hea'ven,** *n.* பேரின்ப வீடு, இன்ப உலகம்; உம்பருலகம்; வானுலகு, கடவுளும் தேவதூதரும் ஊடாடுமிடம்; பேரின்பம்; இறைவன், ஆண்டவன்; வானுயர்வெளி; முகில் மண்டலம்; மீயுயர்நிலை; (செய்.) வான் முகடு, ஆகாயம்; (தொ.) by heaven! good heavens! வியப்பிடைச் சொல், சூளுரைச் சொல்; seventh heaven, heaven of heavens, யூதர்களால் கடவுளின் இருப்பிடமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட ஏழாவது விசும்புலகம்; tree of heaven, தேவ மரம், ஆசிய மாநில மர வகை.

**hea'ven-born,** *a.* தெய்வத் தன்மையுள்ள; தெய்வப் பிறப்புடைய.

**hea'venly,** *a.* வானுலகத்துக்குரிய; வானவெளி சார்ந்த; தெய்வத் தன்மையுடைய, மனித எல்லை கடந்த மேம்பாடு உடைய, அளப்பருஞ்சிறப்பு வாய்ந்த; (தொ.) heavenly bodies, வானொளிக் கோளங்கள்; heavenly host, தேவ கணங்கள், தேவதூதர் குழு; தேவர்கள்; the Heavenly City, பொன்னுலகு, துறக்கம்; the Heavenly Twins, மிதுனவான் மனை, ஆனி வீடு.

**hea'venly-minded,** *a.* தூய்மையான, திருநிலையான; கடவுட்பற்றுள்ள, சமயப்பற்றுள்ள.

**hea'vens,** *n. pl.* வான்முகடு, ஆகாயம்.

**heaves,** *n. pl.* முட்டடைப்பு, நெஞ்சுப்பைத் தோல் வீக்கத்தால் இருமலுடன் திணறல் ஏற்படும் குதிரைநோய் வகை.

**heav'ier-than-air,** *a.* வானூர்திகளில் காற்றைவிட எடை குறைந்த வளிப்பையினுல் உயர்ந்தியங்காத.

**Hea'viside lay'er,** *n.* வளிமண்டல அலைத்தடை எல்லைத் தளம், வானொலி அலைகளைத் தடுத்தெறிந்து நிலவுலகு சுற்ற வைக்கும் வளிமண்டல எல்லைத்தளம்.

**hea'vy,** *a.* எடைமிக்க; கனமான; பாரமேற்றப்பட்ட; மிகுதியான ஒப்புச் செறிவெண் கொண்ட; அழுத்தும் சுமையுடைய, தாக்குவிசைமிக்க, மோதுவிசையார்ந்த; பொறுப்பான; முக்கியமான; வீறுர்ந்த; கடுகடுப்பான; மொத்தையான; திண்ணிய; மாவகையில் கெட்டியான; அப்பவகையில் பொங்காது கடுந்தோடாயிருக்கிற; உணவு வகையில் எளிதில் செரிக்காத; அலங்கோலமாக ஆடையணிந்த; குரல்வகையில் ஆழ்தொனியுடைய; நிலப்பாதை வகையில் ஒட்டிக்கொள்கிற; கடுநடை வாய்ந்த; துயரார்ந்த; பொறுக்க முடியாத துயரில் அழுத்துகிற; துயர்வகையில் அழுத்துகிற; துயர் குறித்த; எழுச்சியற்ற; கிளர்ச்சியற்ற; சோர்ந்த; முக வாட்டமான; ஊக்கமில்லாத; எளிதில் கிளர்ச்சியூட்ட இயலாத; கடு உழைப்புக்குரிய; கடுமுயற்சி வாய்ந்த; எளிதில் இயங்காத; முயற்சி எளிமையற்ற; படைக்கல வகையில் பாரமிக்க; படைத்துறை வகையில் கனமான படைக்கலந் தாங்கிய; தொழில் வகையில் பெருந்தரமான பொருளாக்கத்தில் ஈடுபட்ட; (தொ.) heavy chemicals, தொழிற்சாலையில் பெரிய அளவில் ஆக்கப்பெறும் வேதிப் பொருள்கள்; heavy hydrogen, இரட்டை எடைமான முடைய நீரக உருமாறகம்; மும்மடங்கு எடைமானமுடைய நீரக உருமாறகம்; heavy in hand, heavy on hand, குதிரை வகையில் கடிவாளத்தால் அடக்கிப் பிடிக்கப்பட்ட; மழுங்கலான; எளிதில் மகிழச்செய்ய இயலாத; heavy marching order, போர்க்களப் பணிக்காக முழு ஏற்பாட்டோடு கூடிய படையணி; heavy metal, ஒப்புச் செறிவெண்மிக்க உலோகம்; பீரங்கிகள் அல்லது பெரிய அளவு குண்டுகள்; மிகுந்த செல்வாக்கு; பேரளவான உரிமையாற்றல்; செல்வாக்கு மிக்கவர்,

முதன்மையானவர்; வெல்லமுடியாத எதிரி; heavy oil, நிலக்கரிக் கீலினின்று வாலைவடித்தல்மூலம் இறக்கப்படும்நீரைவிடப் பளுவுள்ள எண்ணெய்வகை; heavy water, கடுநீர், நீரகத்தினிடமாக இரட்டை எடைமானமுடைய நீரக உருமாறகம் இடம்பெறும் நீர்; heavy wet, கடுந்தேறல், புளித்த மாவடித் தேறலும் முந்திரித் தேறலும் கலந்த கடுமையான குடிவகை; The Heavies, (படை.) கனமான போர்த்தளவாடங்கள் கொண்ட குதிரைப்படை வகை; பெருந்தரப் பீரங்கிப்படை; time hangs heavy, காலம் மிக மெதுவாகக் கழிகிறது.

heav'y-armed, *a.* பருத்த போர்க்கவசத்தைத் தாங்கிய; எடைமிக்க படைக்கலந் தாங்கிய.

heav'y-hand'ed, *a.* அருவருப்பான; தடுமாற்றமுடைய; அமைப்பில் குறைபாடுடைய; அல்லற்படுத்துகிற.

heav'y-head'ed, *a.* பெரிய தலையுடைய, கனத்த தலையுடைய; மடத்தனமான, அறிவற்ற; சோம்பலான; அரை குறைத் தூக்கமுடைய.

heav'y-heart'ed, *a.* மனத்துயரால் வாடுகிற.

heav'y-lad'en, *a.* கனமான சுமையுடைய, பளுவான பாரம் கொண்ட.

heav'y-spar, *n.* பாரியக் கந்தகை.

heav'y-weight, *n.* மட்டான அளவுக்கு மேற்பட்ட கனமுடைய பொருள்; மட்டளவு மீறிய கனமுடையவர்; கேளிக்கைகளில் கனமிக்க வகுப்பினர்; குத்துச்சண்டையில் தொழில் துறையாளரிடையே 175 கல் எடைக்கும் விருப்பத்துறையாளரிடையே 178 கல் எடைக்கும் மேற்பட்ட கனமுடையவர்.

heb'domad, *n.* ஏழன் அடுக்கு; வாரம்; மனித ஆற்றலை மீறிய ஆவிகளின் தொகுதி.

hebdom'adal, *a.* வார முறையான, வாரந்தோறும் நிகழ்கிற; (தொ.) Hebdomadal Council, வாரந்தோறும் கூடுகிற ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக ஆட்சிக்குழு.

hebdom'adary, *n.* திருக்கோயில் அல்லது கன்னிமாடத்து வாரத் தவணைப் பணியாளர்; *a.* வாரஞ் சார்ந்த; வாரந் தோறுங் கூடுகிற.

Heb'e, *n.* கிரேக்க புராண மரபில் தேவர்களுக்கு இன்தேறல் வழங்கும் இளமைப் பருவத்துக்குரிய பெண்தெய்வம்; அருந் தகப் பணிப்பெண்.

heb'etate, *v.* உணர்ச்சி மழுங்கலாக்கு; உணர்ச்சி மழுங்கலாகு.

heb'etude, *n.* மடமை.

Hebra'ic, Hebra'ical, *a.* எபிரேய (Hebrew) மக்களைச் சார்ந்த; எபிரேய மொழியைச் சார்ந்த.

Hebra'ically, *adv.* எபிரேய மொழிமரபைப் பின்பற்றி; எழுத்துவகையில் வலமிருந்து இடமாக.

Heb'raism, *n.* எபிரேயர்களின் பண்பு; எபிரேய சமயம்; ஏபிரேய சமயக் கோட்பாடு; ஏபிரேய மொழிமரபு.

Heb'raist, *n.* எபிரேய மொழிப் புலவர்; எபிரேய சமயப் பற்றுடையார்; யூதர் கருத்துக்களை மேற்கொள்பவர்.

Hebraist'ic, Hebraist'ical, *a.* யூதரைச் சார்ந்த; யூதரைப் போன்ற; எபிரேய மொழி சார்ந்த; எபிரேயமொழி போன்ற.

Heb'raize, *v.* எபிரேயமாக்கு; ஏபிரேய மொழிமரபைப் பயன்படுத்து; எபிரேய வழிகளைப் பின்பற்று.

Heb'rew, *n.* பண்டைய இஸ்ரேயில் (Israel) நாட்டைச் சார்ந்தவர், யூதர்; எபிரேயமொழி, பண்டைக்கால எபிரேய மொழி; விளங்காத மொழி; புரியாத நடை; *a.* எபிரேய மொழியைச் சார்ந்த; யூதர்களைச் சார்ந்த.

Heb'rewess, *n.* யூதப் பெண்.

hec'atomb, *n.* பண்டைக் கிரேக்கரிடையே பெரும் பொதுப் பலியாட்டு, நூறு எருதுகளைப் பலியிடும் பெரும்பலி, படு கொலைத் தொகுதி.

heck, *n.* படல்; ஆறுகளில் மீன்களின் போக்கைத் தடுக்கும் அழிச்சட்டம்.

hec'kle, *n.* சிக்குவாரி, சணல் சிக்கு எடுக்கும் எஃகுச் சீப்பு; *v.* வினாக்களால் திகைக்க வை.

hec'tare, *n.* 2·471 ஏக்கர் கொண்ட பதின்மானமுறை நிலப் பரப்பு அளவை.

hec'tic, *n.* எலும்புருக்கிக் காய்ச்சல், 'உளமாந்தை', எலும்புருக்கி நோயாளி முகஞ்சிவந்த நிலை; *a.* எலும்புருக்கிக் காய்ச்சல் உள்ள; எலும்புருக்கி நோய்க்கு ஆட்பட்ட; நோய் நிலையால் முகஞ்சிவந்த; (தொ.) hectic fever, எலும்புருக்கிக் காய்ச்சல்.

hec'togram, hec'togramme, *n.* நூறு கிராம், 3·527 அவுன்சு கொண்ட எடை அளவை.

hec'tograph, *n.* கைப்படி பெருக்கி, கையெழுத்துப்படி எடுக்கும் கருவி; *v.* கைப்படி பெருக்கியினால் படிகள் எடு.

hec'toliter, hec'tolitre, *n.* நூறு லிட்டர் கொண்ட பதின்மான முகத்தலளவை.

hec'tometer, hec'tometre, *n.* நூறு மீட்டர், 328·089 அடி கொண்ட பதின்மான நீட்டலளவை.

hec'tor, *n.* தற்புகழ்ச்சியாளர்; விம்பு பேசுபவர், எளியவரைக் கொடுமை செய்பவர், கொடுமைக்காரர்; *v.* மெலியாரைக் கொடுமை செய்; வீறுப்புப்பேசு.

hed'dles, *n. pl.* தறியில் ஊடிழை நுழைந்து செல்லும் புழையுடைய கயிறு அல்லது கம்பி.

hedge, *n.* புதர் வேலி; எல்லைக் குறுமர வரிசை; எல்லைக் குத்துக்கல் வரிசை; புல்கரண் எல்லைக்கோடு; எல்லை குறிக்கும் ஆள்வரிசை; எல்லை குறிக்கும் பொருள் வரிசை; எல்லை, வேலி; பந்தயம் சூதாட்ட முதலியவற்றில் இழப்பீட்டுக் கைகாப்புத்துறை; இழப்பீட்டுக் கைகாப்பு ஏற்பாடு; *v.* குறு வேலியிட்டு வளை; சூழ், அடைப்புச் செய்; தடு, இடையிட்டுத் தடையமை; தடுத்து நிறுத்து; காவல் செய்; கைகாப்புத் துறை மூலம் இழப்பிலிருந்து தன்னைக் காத்துக்கொள்; தடைவேலிகள் வகு; பொறுப்பேற்றலைத் தவிர்; (தொ.) dead hedge, கல் கம்பு முதலிய உயிரிலாப் பொருள்களாலமைந்த குறுவேலி; dosen't grow on every hedge, அருமையாகவே கிடைப்பது; quickset hedge, வளரும் உயிர்மர வேலி; வளரும் உயிர்ப்புதர் வேலி.

hedge'hog, *n.* முள்ளெலி; முள்ளமைப்புக் காப்புடைய சிற்றுயிர் வகைகளில் ஒன்று; படைத்துறையில் தடையரண் வேலிகளால் சூழப்பட்ட தனிநிறைவுடைய காப்பிடம்; ஒப்புரவற்றவர், பழகப் பொருந்தாதவர்.

hedge'-priest, *n.* தாழ்நிலையுடைய கல்லாச் சமயகுரு.

hedge'-row, *n.* புதர்வேலி வரிசை, மரவரிசை வேலி.

hedge'-school, *n.* கீழ்த்தரப்பள்ளி; திறந்தவெளிப் பள்ளி.

hedge'spar'row, *n.* வேலிக்குருவி, வேலிகளில் உள்ள இசைப் பறவை வகை.

hedon'ic, *a.* இன்பத்துக்குரிய.

hedon'ics, *n. pl.* அறநூலில் இன்பக் கோட்பாடு; உளநூலில் இன்பவியல்.

hed'onism, *n.* அறநூல் வகையில் இன்பமே சிறந்தநலம் என்னுங் கோட்பாடு.

heed, *n.* கவனம்; முன்னறிவு, எச்சரிப்புணர்வு; கருத்துணர்வு; *v.* கவனத்திற் கொள், கருத்திற் கொள்; அக்கறை கொள், பொருட்படுத்து; கூர்ந்துபார்; கருதிப்பேணு; உற்றுக்கவனி.

heed'ful, *a.* கவனமுள்ள; முன் கருதியிருக்கிற.

hee'-haw', *n.* கழுதையின் கனைப்பு; உரத்த சிரிப்பு; *v.* கழுதைபோலக் கத்து.

heel[1], *n.* குதி, குதிகால்; விலங்கின் குளம்புக்கு மேற்பட்ட பின்பகுதி; குளம்பின் பின்பகுதி; காலடி; விலங்கின் பாதம்; புதையடியின் குதியடிக்கட்டை; காலுறையின் குதிகாற் பகுதி; குதிகால் போன்ற பகுதி, பொருட்களின் அடிப் பகுதியின் பின்புறம்; யாழ் வில்லின் கைப்புற அடி; வளை கோற் பந்தாட்டத்தில் கோலின் அடிவளைவு; கப்பலடிக் கட்டையின் பின்புறம்; குதிகாலிற் பொருந்தும் தார்முள்;

அப்பத்தின் மேன்முளை; அப்ப அடிமுளை; உறைபாற் கட்டியின் புறமுளை; ப. நிலத்தைக் குதிகாலால் தொடு; ஆடலின்போது குதிகால்மீது இயங்கு; புதையடிக்குக் குதி காற் கட்டை இணை; அருகாகப் பின்தொடர், பின்பற்று; உதைபந்தாட்டத்தில் பந்தைக் குதிகாலால் பின்னேக்கி எற்று; வளைகோற் பந்தாட்டத்தில் கோலின் வளைபகுதியால் பந்தடி; போர்க் கோழிகளுக்குக் காலில் குதிமுள் வைத்திணை; குதிகாலைப் பற்றிப்பிடி; (தொ.) at heel, at one's heels, on one's heels, upon one's heels, அடுத்துப் பின்னுக, பின்பற்றி; be carried with heels foremost, குதிகால் முன்னுகப் பிண வடிவில் கொண்டுசெல்லப் பெறு, இற; clap by the heels, lay by the heels, விலங்கிடு, சிறைப்படுத்து; cool one's heels, kick one's heels, காத்திரு; காக்க வைக்கப்பட்டிரு; down at heels, புதையடி வகையில் குதிகாற் பகுதி சிதைந்த நிலையில்; ஆள் வகையில் குதிகாற் பகுதி சிதைந்த புதையடி அணிந்து; have the heels of, தாண்டிச் செல், விஞ்சி விடு, விஞ்சி மேம்படு; head over heels, heels over head, தலை கீழாக, குட்டிக்கரணமிட்டு; heel and toe, இயல்நடை வேகம் கடவாமல்; out at heel, புதை மிதி அல்லது காலுறை வழி குதி தெரியும் நிலையில்; show a clean pair of heels, take to one's heels, தப்பி ஓடு, ஓட்டம் பிடி; turn on one's heels, சட்டெனத் திரும்பு.

**heel**[2], *n.* பார ஏற்றத் தாழ்வாலோ காற்றழுத்தத்தாலோ ஏற்படும் கப்பலின் சாய்நிலை; சரிவு; ப. கப்பல் வகையில் சிறிது சாய்வுறு, சரிவுறு; சாயச்செய், சரிவுறச் செய்.

**hef'ty,** *a.* வலிமை வாய்ந்த, திண்ணிய.

**hegemon'ic,** *a.* தலைமை வாய்ந்த, மேலாட்சி செய்கிற.

**hegem'ony,** *n.* தலைமை; கூட்டாட்சித் தலைமைநிலை; முதன்மையான செல்வாக்கு.

**he'gira,** *n.* முகமதுநபி நாயகம் மக்கா நகரினின்று (Mecca) மதீனு நகர் (Medina) நோக்கிச் சென்ற ஓட்டம்; இஸ்லாமிய சகாப்த தொடக்கம்.

**hei'fer,** *n.* ஈனுப்பெற்றம், கன்றுபோடாத இளம்பசு.

**heigh,** *int.* ஊக்குதற் குறிப்புவிளி; உசாவுதற் குறிப்புவிளி; மகிழ்வுக் குறிப்பு.

**heigh'-ho,** *int.* சோர்வுக்குறிப்பு; மனக்கசப்புக் குறிப்பு.

**height,** *n.* உயரம்; உயர்வு, உயரத்தின் அளவு; தலைக்கு மேலுள்ள தொலை; மேல்நோக்கிய தொலை; மீகோணம்; உயர்ந்த இடம்; உயரத்திலிருக்கும் பொருள்; குன்று; மேடு; ஏற்றம், மேல் நோக்கிய சரிவு; உச்சி; உச்சநிலை; உச்ச அளவு; உயர்சிறப்பு, உயர்தகுதி, மேம்பாடு; (தொ.) at a height, மேட்டில்; at its height, உச்சப் படிநிலையில், உச்ச அளவில்; the height of, முழுநிறை உச்ச நிலையான.

**height'en,** *v.* உயர்வாக்கு; மிகைப்படுத்து.

**hei'nous,** *a.* கடுங்கொடிய.

**heir,** *n.* உரிமையாளர்; மரபுவழி உடைமைக்கு உரியவர்; சட்டமுறை உரிமை உடையவர்; தகுதி உரிமையாளர்; பண்புக்கு உரிமைப்பட்டவர்; பின்தோன்றல்; வழித் தோன்றல்; மைந்தன்; முதல்மகவு; (தொ.) heir apparent, தாய்மருகர், சட்டப்படி உறுதியான பின்னுரிமையுடையவர்; heir in tail, உரிமை வழி மரபில் வகுக்கப்பட்ட நிலையிலுள்ள உரிமையாளர்; heir male, முழுதுற ஆண் வழியே மரபுரிமை பெற்ற ஆண் உரிமையாளர்; heir presumptive, மிக நெருங்கியார் பிறர் பிறக்காவிட்டால் உரியராகும் பெற்றி யினர்.

**heir'ess,** *n.* பெண் உரிமையாளர்; பெருஞ்செல்வத்தை உரிமை யாகப் பெற்றுவிட்ட மாது; பெருஞ்செல்வத்தை உரிமையாகப் பெற இருக்கிற பெண்.

**heir'less,** *a.* பின்னுரிமையாளர் இல்லாத.

**heir'loom,** *n.* சொம்மு, மரபுரிமையாளர் உடைமையுடன் பழக்கப்படி வந்து சேரும் உடைமைப் பொருள்; குடும்ப மரபாய் வரும் உடைமைப் பொருள், வழிவழி உடைமை.

**he'jira,** *n.* = hegira.

**held,** *v.* hold என்பதன் இறந்தகால-முடிவெச்சம்.

**heli'acal,** *a.* கதிரவனைச் சார்ந்த; சூரியனுக்கு அணித்தான; கதிரவன் மண்டலத்தோடியைந்து காணப்பெறுகிற; கதிரவன் மண்டலத்திற்கு மிக அருகாகத் தோற்றுகிற; (தொ.) heliacal rising, நட்சத்திர வகையில் கதிரவனணிமை காரண மான மறைநிலைக்குப் பின்னைய முதன்முதல் தோற்றம்; heliacal setting, நட்சத்திர வகையில் கதிரவனணிமை காரணமான மறைநிலைக்கு முற்பட்ட கடைத்தோற்றம்.

**Helian'thus,** *n.* சூரிய காந்தியை உட்படுத்திய நெருஞ்சிப் பேரினம்.

**hel'ical,** *a.* திருகுசுழலான.

**hel'ices,** *n.* helix என்பதன் பன்மை.

**Hel'icon,** *n.* கிரேக்க கலைத்தெய்வங்களின் இருப்பிடமான மலை; கவிதை அகத்தூண்டுதலின் தலையூற்று.

**Helicon'ian,** *a.* கிரேக்க கலைத்தெய்வங்களின் இருப்பிடமான மலைக்குரிய; கவிதை அகத்தூண்டுதல் தருகிற.

**hel'icopter,** *n.* செங்குத்தாக மேலெழும்பி இறங்கவல்ல திருகு வானூர்தி.

**hel'iocen'tric,** *a.* கதிரவன் மண்டல மையத்திலிருந்து காணும் நிலைப்பட்ட; கதிரவனையே மையமாகக் கொண்ட.

**hel'iochromy,** *n.* இயல்வண்ண நிழற்படப் பதிவுமுறை.

**hel'iogram,** *n.* சூரியன் ஒளிக்கதிர்களை எதிரொளிப்படுத்திக் காட்டி அனுப்பப்படும் அடையாளச் செய்தி.

**hel'iograph,** *n.* ஒளி படிவதால் ஏற்படும் செதுக்குருவம், நிழற்படமுறைச் செதுக்குப்படிவம்; கதிரவனைப் படம்பிடிக்கும் நிழற்படக் கருவியமைவு; கதிரவன் ஒளிக்கதிர்களை எதி ரொளிப்படுத்திக்காட்டி அடையாளச் செய்தி அனுப்பும் முறை; ஒளிச்செறிவுமானி; ப. கதிரவன் ஒளிக்கதிர்களை எதிரொளிப்படுத்திக் காட்டி அடையாளச் செய்தி அனுப்பு; ஞாயிற்றின் ஒளிபடுவதால் ஏற்படும் மாறுபாட்டு மூலம் நிழற்படமெடு.

**hel'iograph'ic,** *a.* கதிர்மண்டல ஆய்வுவிளக்கம் சார்ந்த; ஒளியூடுருவு செதுக்குமானம் பற்றிய; கதிர் எதிரொளிப்பு அடையாளச் செய்தி குறித்த.

**heliog'raphy,** *n.* கதிரவன் மண்டலம் பற்றிய ஆய்வு விளக்கம்; ஒளியூடுருவலால் ஏற்படும் செதுக்குமானம்; கதிரவன் ஒளிக்கதிர்களை எதிரொளிப்படுத்திக்காட்டி அடை யாளச் செய்தி அனுப்புதல்.

**hel'iogravure',** *n.* நிழற்படமுறைச் செதுக்குமானம், நிழற் பட எதிர்ப்படியை உலோகத் தகட்டுக்கு மாற்றி இழைத்த செதுக்குவேலை.

**heliolith'ic,** *a.* பரிதிக்கல் பண்பாடு சார்ந்த, கதிரவன் வழிபாடும் வழிபாட்டுப் பெருங்கல்லும் இடம்பெறும் நாகரிகப் படிக்குரிய.

**heliom'eter,** *n.* குறுக்கைமானி, கதிர்மண்டல விட்டத் தையோ விண்மீன்களிடைத் தொலையையோ அளக்கும் கருவி.

**hel'ioscope,** *n.* கண்ணுக்குக் கேடின்றிக் கதிரவன் மண்ட லத்தைக் காண்பதற்கு உதவும் கருவி.

**helios'is,** *n.* வெயிற்காட்ட நோய்; (தாவ.) கண்ணுடி வழி ஒளிக்கதிர்கள் செறிவுறுவதால் இலைகள்மீது ஏற்படும் கறைப் புள்ளிகள்.

**hel'iothe'rapy,** *n.* கதிர் மருத்துவமுறை, கதிரொளிப்படிவு மூலம் நோய் குணப்படுத்தும் மருத்துமுறை.

**hel'iotrope,** *n.* மணமிக்க கருஞ்சிவப்பு மலர்களையுடைய செடிவகை; கருஞ்சிவப்பு மலர்வகையின் மணம்; குருதிநிற மணிக்கல் வகை.

**hel'iotrop'ic,** *a.* (தாவ.) ஒளி நோக்கிய சாய்வுத்தொடர் பான, ஒளி நோக்கிச் சாய்கிற.

**heliot'ropism,** *n.* தாவரங்களின் ஒளி நோக்கிய சாய்வு.

**hel'iotype,** *n.* பசை ஒளிப்படம், ஒளிபடியும் பசைபூசிய தகட்டினின்று கிடைக்கும் படம்.

**hel'iscoop,** *n.* வானூர்திக் காப்புத் திருகுவலை.

**hel'ium**, *n.* பரிதியம், கதிரவன் மண்டலத்திலிருப்பதாகக் கருதப்பட்ட தனிமவளி, 1868-இல் முதல்முதலாகக் கண்டுணரப்பட்ட தனிமம்.

**hel'ix**, *n.* திருகு சுழல், திருகுசுழல் வட்டம்; புறச்செவி விளிம்பு; நத்தைப் பேரினம்; (க.க.) திருகுசுழல் ஒப்பனைச் சிற்பம்.

**hell**, *n.* நரகம்; பழியாவிகள் தண்டனை நுகரும் உலகம்; வெம்பழி ஆற்றல் தெய்வங்களின் தொகுதி; துன்ப உலகு; இறந்தோர் உலகு; கடுந்துயர் நிலை; பழிநிலை; சூதாடுமனை; ஆட்ட வகைகளில் சிறைகாப்புக் கட்டம்; தையல்மனைக் கூளக்குழி; *int.* வெறுப்புக்குறிப்பு, சீற்றக்குறிப்பு; (தொ.) a hell of a noise, மிக்க பேரொலி; give hell, தாங்கமுடியாத் தொல்லைகொடு; hell for leather, கடு வேகத்தில்.

**hell'-cat**, *n.* குதிரி, அடங்காப் பிடாரி.

**hell'ebore**, *n.* பித்தத்தைக் குணப்படுத்துவதாகப் பண்டு நம்பப்பட்ட செடி வகைகளில் ஒன்று; ரோசா மலர்ச்செடி வகை.

**Hell'ene**, *n.* இனத்தூய்மையுடைய பண்டைக் கிரேக்கர்; தற்கால கிரேக்க நாட்டின் குடியுரிமையினர்.

**Hellen'ic**, *a.* கிரேக்கருக்குரிய, கிரேக்க இனத்துக்குரிய.

**Hell'enism**, *n.* கிரேக்க சொல்மரபு; கிரேக்க இலக்கணத் தொடர்பு மரபு; கிரேக்க இனப் பண்பாடு; கிரேக்க இனத்தைப் பார்த்துப் பின்பற்றிய போலிப்பண்பாடு; கிரேக்க தேசியம்; கிரேக்க மரபுவழி பின்பற்றும் கோட்பாடு; கிரேக்க மொழி பின்பற்றும் பண்பு.

**Hell'enist**, *n.* கிரேக்கமொழி வழங்கும் கிரேக்கரல்லாதவர்; கிரேக்கமொழி வல்லுநர்; கிரேக்கமொழியும் வழியும் பின்பற்றியவர்; கிரேக்கமொழியும் வழியும் பின்பற்றிய யூதர் (Jew).

**Hellenis'tic, Hellenis'tical**, *a.* கிரேக்கரைச் சார்ந்த; அலக்ஸாண்டர் காலத்துக்குப்பின் ஏற்பட்ட அயற்கலப்பு மிகுந்த நிலையுடைய கிரேக்க இனமொழிப் பண்பாடுகளுக்குரிய.

**hell'-hound**, *n.* நரகக் கொடும்பேய்; நரக வேட்டை நாய்.

**hell'ish**, *a.* நரகத்துக்குரிய; நரகம் போன்ற; மிகக்கொடிய; பயங்கரமான.

**hello'**, *n.*, *v.*=hallo.

**hell'ward**, *a.* நரகம் நோக்கிய; *adv.* நரகம் நோக்கி.

**helm**[1], *n.* தலைக்கவசம், கவசத் தலைப்பகுதி; தலைக்கவசம் போன்ற பொருள்; புயலின்போது அல்லது புயலுக்குமுன் மலைமுகட்டில் தவழும் முகில்; வான்கோழித் தலைச்சூட்டு; மலர்களின் மீ உயர் கவிவிதழ்.

**helm**[2], *n.* பயின்கருவிப்பிடி, சுக்கான்பிடி; பயின்கலம், சுக்கான் திருப்புவதற்குரிய இடம்; ஆட்சிப்பிடி, செயலாட்சி, இயக்குமுதன்மை; *v.* தலை நின்றியக்கு; (தொ.) take the helm of, தலைமையிடங் கைக்கொள், ஆட்சி மேற்கொள்.

**helm'-cloud**, *n.* புயலின்போது அல்லது புயலுக்குமுன் மலைமுகட்டின்மீது காணப்படும் முகில்கற்றை.

**hel'met**, *n.* தலைக்கவசம், போர்வீரர் கவசத் தலைப்பகுதி; தீயணைப்புப் படைவீரர் தலைகாப்புக் கவிகை; வேனிற் காப்பான அழுத்தத் தோல்தொப்பி; நெட்டிக்காப்பிட்ட வேனிற் பருவத் தொப்பி; வடிகல முகடு; கிளிஞ்சில் வகையின் சிப்பி; (தாவ.) மலர் வகைகளிற் புறவிதழின் வளைந்த மேன்முகடு.

**hel'minth**, *n.* குடற் புழு.

**helminthi'asis**, *n.* குடற்புழுவினால் ஏற்படும் நோய்.

**helmin'thoid**, *a.* குடற்புழு போன்ற உருவுடைய.

**helminthol'ogy**, *n.* ஒட்டுயிரிகளான குடற்புழு பற்றிய ஆய்வுநூல்.

**helms'man**, *n.* கப்பல் இயக்குநர்.

**hel'ot**, *n.* ஸ்பார்ட்டா (Sparta) என்ற பண்டைக் கிரேக்க நகரிலுள்ள அடிமை வகுப்பினருள் ஒருவர்; அடிமை வகுப்பினர், உரிமையற்றவர்.

**hel'otry**, *n.* அடிமைகளின் தொகுதி; அடிமை வகுப்பினர் குழு.

**help**, *n.* உதவி, துணை, ஆதரவு; துணைவலு, ஊக்காற்றல்; தீர்வு வழி, போக்கு, புகல்; உணவு பரிமாற்றம்; உதவியாளர், ஆதரவாளர்; வீட்டு வேலையாள்; தொழிலாளி; *v.* உதவு, துணையளி, ஆதரவு வழங்கு; வெற்றியில் பங்குகொள்; செயலில் துணைசெய்; வகைதுறை கருவி வழங்கு; தேவையானவை அளித்துதவு; பகுதி கொடுத்துதவு, பங்கு பெற்றளி; பங்கிட்டளி; துயர் நீக்கு, நோவு அகற்று; தணி; தடு; காப்பாற்று; செயல் விலகியிரு; அருள் துணையளி; (தொ.) cannot help it, cannot help doing, செய்யாமலிருக்க முடியவில்லை; lady help, வீட்டுத்தலைவிக்குத் தோழமையுதவியானவள், உடனுதவியாள்; mother's help, உயர்தரச் செவிலி; no help for it, வேறு வழியில்லை.

**help'ful**, *a.* பயனுடைய, உதவியான; உதவி செய்கிற.

**hel'ping**, *n.* உதவுதல்; பரிமாறுகை; பரிமாறிய பகுதி; *a.* உதவுகிற.

**help'less**, *a.* உதவியற்ற; தன் செயலற்ற; உதவி செய்யாத.

**help'mate, help'meet**, *n.* வாழ்க்கைத்துணை; பக்கத் துணைவர்.

**hel'ter-skel'ter**, *n.* சீர்குலைவு, தாறுமாறான நிலை; *a.* தாறுமாறான, குழப்பமுற்ற; *adv.* தாறுமாறாக; அவசர அவசரமாக; முற்றிலும் குழப்பமுற்று.

**helve**, *n.* கோடரியின் காம்பு; கருவியின் கைப்பிடி.

**Helve'tian**, *n.* ஸ்விட்ஸர்லாந்து நாட்டவர்; *a.* ஸ்விட்ஸர்லாந்து நாட்டுக்குரிய.

**hem**[1], *n.* விளிம்பு, துணியின் மடித்த ஓரம்; *v.* ஓரம் உள் மடித்துத் தை; (தொ.) hem in, hem about, சூழ்ந்து வளைத்துக் கொள்.

**hem**[2], *n.* 'ஊம்' ஒலி; கவனிப்புக் குறிப்பு; தயக்கக் குறிப்பு; *v.* 'ஊம்' ஒலி செய்; தொண்டையைக் கனைத்துக்கொள்; பேச்சில் இடைத்தயக்கங் காட்டு, திக்கித் தயங்கு; *int.* ஊம்! கவனிப்புக் குறிப்பு, தயக்கக் குறிப்பு.

**hemat'ic**, *n.*, *a.*=haematic.

**hemianop'sia**, *n.* அரைக் குருடு, அரைப்பார்வை மங்கல்.

**hem'icycle**, *n.* அரைவடிவப் பிறை, அரைமதி வடிவம்.

**hemidemisemiquav'er**, *n.* இசைமானக்கால நுட்பக்கூறு.

**hemihed'ral**, *a.* மணியுருக்களில் முழுநிறைதள எண்ணிக்கையில் பாதியுடைய.

**hemimetab'ola**, *n. pl.* (வில.) முழு அளவில் மெய்யுருமாற்றம் பெறாத பூச்சிகள்.

**hemiple'gia**, *n.* ஒருபுறமாகச் செயலற்ற தன்மையூட்டும் வாத நோய்.

**hem'isphere**, *n.* அரையுருண்டை வடிவம்; நிலவுலக அரைக் கோளம்; நிலவுலக அரைக்கோள மனைப்படம்; வான்கோளகையின் பாதி; மூளையின் இருபாதிகளில் ஒன்று.

**hem'istich**, *n.* செய்யுட் பாதியடி.

**hem'-line**, *n.* உள்மடித்துத் தைத்த பாவாடை விளிம்பு.

**hem'lock**, *n.* நச்சுச்செடி வகை; நச்சுச்செடி வகையிலிருந்து வடித்தெடுத்த நஞ்சுநீர்.

**hem'orrhage**, *n.*=haemorrhage.

**hemp**, *n.* நார்தரும் சணல்செடி வகை; சணல்நார்; சணற் கயிறு.

**hem'-stitch**, *n.* விளிம்பு மடிப்புத் தையல்.

**hen**, *n.* பெட்டைக்கோழி; கோழியினப் பெடை; பறவையினப் பேடு; பெடை; மீன் முதலிய நீர்வாழ் உயிரின் பெண்; பெண்; சிறுமி; கோழை நெஞ்சினர், உரமற்றவர்; (தொ.) hen crab, hen lobster, பெடை நண்டு.

**hen'bane**, *n.* நச்சு மயக்க மருந்து; நச்சு மயக்க மருந்து தரும் செடி வகை.

**hence**, *adv.* இங்கிருந்து ; இதிலிருந்து ; இப்போதிருந்து ; இதனால், இதன் விளைவாக, இதனின்று உய்த்துணர்வாக ; *int.* போய்விடு, இங்கிருந்து அப்பால் செல்; (தொ.) go hence, இற ; hence with, இங்கிருந்து அப்பால் எடுத்துச் செல்.

**henceforth', hencefor'ward**, *adv.* இச்சமயமுதல், இது முதற்கொண்டு.

**hench'man**, *n.* வேலையாள் ; மதிப்புக்குரிய மெய்க்காவற் பணிப் பையன்; தம்பிரான் தோழர்; அரசியல் ஆதரவாளர்; *pl.* hench'men.

**hen'-coop**, *n.* கோழிக்கூடு.

**hendec'agon**, *n.* பதினொருகோணக் கட்டம்.

**hendecasyllab'ic**, *n.* பதினோரசையடிச் செய்யுள் ; *a.* பதினோரசையுடைய.

**hendecasyll'able**, *n.* லத்தீன்மொழியின் பதினோரசைச் செய்யுள் ; முதலிரண்டும் நெடில்-நெடில் அல்லது குறில்-நெடில் அல்லது நெடில்-குறிலாகவும் இறுதி இரண்டும் நெடில்-நெடில் அல்லது குறில்-நெடிலாகவும் இடை ஏழும் நெடில்-குறில்-குறில் நெடில்-குறில்-நெடில்-குறில் எனவும் வரும் பதினோரசை யாப்பு.

**hendi'adys**, *n.* ஒருபொருள் இருமொழி.

**Hen'don**, *n.* இங்கிலாந்தில் மிடில்ஸெக்ஸ் கோட்டத்தில் (Middlesex of England) உள்ள விமானத்துறைப் புகழ் வாய்ந்த நகரம்.

**hen'-harr'ier**, *n.* பருந்து வகை.

**hen'-heart'ed**, *a.* கோழையான, மனவுரமற்ற; அற்பத்தனம் வாய்ந்த.

**Hen'ley**, *n.* ஆண்டுதோறும் இங்கிலாந்தில் தேம்ஸ் (Thames) ஆற்றங்கரையில் ஹென்லி என்ற இடத்தில் நடைபெறும் படகுப் பந்தயம்.

**henn'a**, *n.* மருதோன்றி வகை.

**henn'y**, *n.* பெட்டைக்கோழி போன்ற தோற்றமுடைய சேவல் ; *a* பெட்டைக்கோழி போன்ற.

**hen'otheism**, *n.* தலைக்கடவுட் கோட்பாடு, பிற தெய்வங்களை விலக்காது ஒரு முழுமுதற் கடவுளை நம்பும் கோட்பாடு.

**hen'-pecked**, *a.* மனைவியின் மேலாட்சிக்கு உட்பட்ட, பெண் வழிச் செல்கிற.

**hepat'ic**, *n.* செடி வகை ; கல்லீரலுக்கு நலஞ்செய்யும் மருந்து வகை ; *a.* கல்லீரலுக்குரிய ; கல்லீரலுக்கு நலஞ்செய்கிற ; கல்லீரல் நிறமுடைய.

**hepatit'is**, *n.* கல்லீரல் அழற்சி.

**hepatiza'tion**, *n.* நுரையீரல் முதலிய பகுதிகள் கல்லீரல் போன்ற பொருளாக இறுகிவிடும் நோய்வகை.

**hep'atize**, *v.* நுரையீரல் போன்றவற்றைக் கல்லீரல் போன்ற பொருளாக்கு.

**hepatog'enous**, *a.* கல்லீரலில் தோன்றுகிற.

**Hep'plewhite**, *n.* தட்டுமுட்டுப்பொருள்களுக்குரிய வேலைப் பாட்டுப் பாணிவகையின் பெயர்.

**hep'tachord**, *n.* ஏழ்நரம்பு வீணை ; கிரேக்கரிடை ஏழ்சுர வரிசை.

**hep'tad**, *n.* ஏழன்தொகுதி.

**hep'taglot**, *n.* ஏழு மொழிகளில் வெளியிடப்பட்ட புத்தகம் ; *a.* ஏழு மொழிகளுக்குரிய.

**hep'tagon**, *n.* ஏழுகோணக் கட்டம்.

**heptag'onal**, *a.* ஏழுகோணமுடைய, ஏழுகோணக் கட்டமான.

**hepta-hed'ron**, *n.* ஏழுமுகப் பிழம்புரு, ஏழு முகப்புத் தளங்களையுடைய பிழம்பு வடிவம்.

**hep'tarchy**, *n.* ஏழுவர் ஆட்சி ; (வர.) பண்டை ஆங்கிலோ-சாக்ஸனியரின் (Anglo-Saxons) ஏழரசுத் தொகுதி.

**heptasyllab'ic**, *a.* ஏழசையுடைய.

**hep'tateuch**, *n.* விவிலிய ஏட்டின் முதலேழு பிரிவுகளின் தொகுதி.

**her**[1], *pron.* she என்பதன் எழுவாயல்லா வேற்றுமை வடிவம்.

**her**[2], *pron.* she என்பதன் உடைமைப்பொருள் வேற்றுமை வடிவம்.

**he'rald**, *n.* கட்டியர், வள்ளுவர், அரசவிளம்பரங்கள் பொது அறிவிப்புகள் தெரிவிப்பதையும் கட்டியப் படிமுறை நடைமுறைகளை ஒழுங்குசெய்து தீர்ப்பளிப்பதையும் தூதுச்செய்திகளை அறிவிப்பதையும் கடமையாகக்கொண்ட அரசியல் உயர் பணியாளர் ; தூதர் ; முன்னறிவிப்போர் ; வருகை முன் சென்று தெரிவிப்பவர்; *v.* கட்டியங்கூறு, வருகை முன்னறிவி; வரவேற்று உள்ளே இட்டுவா, வாயில் தந்து இட்டுச்செல் ; (தொ.) Heralds' College, பட்டப்படிகளையும் சின்னங்களையும் பதிவுசெய்து பேணும் குழுமம்.

**heral'dic**, *a.* கட்டியம் சார்ந்த, கட்டியருக்குரிய, கட்டிய இயலுக்குகந்த, கட்டியர் பதவிச்சார்பான.

**he'raldry**, *n.* கட்டியம், கட்டிய இயல், கட்டியர் பதவி ; கட்டிய முறைசார்ந்த குலமரபுச் சின்னங்களின் தொகுதி ; கட்டிய ஆரவார அமைதி ; (தொ.) canting heraldry, அணிந்தவர் பெயர்க் குறிப்பீடு.

**herb**, *n.* பூண்டு ; அகக்காழற்ற செடியினம் ; மருந்தாகவோ உணவாகவோ மணமூட்டும் பொருளாகவோ சுவையூட்டும் பொருளாகவோ உள்ள இலைகளையுடைய செடியினம்.

**herb'age**, *n.* பூண்டுகளின் தொகுதி ; பூண்டுகளின் சாறு கொழுந்தசையுடைய பகுதிகளின் தொகுதி ; (சட்.) பிறர் நிலத்தில் மேய்ச்சல் உரிமை.

**herb'al**, *n.* பூண்டு விளக்க ஏடு, பூண்டுவள இயல்; *a.* பூண்டு சார்ந்த.

**herb'alist**, *n.* பூண்டுகள் பற்றிய அறிவுத் திறமுடையவர் ; முற்காலத் தாவர இயல் எழுத்தாளர் ; மருத்துப்பூண்டு விற்பனையாளர்.

**herbar'ium**, *n.* பூண்டு உணக்கக் கொட்டில்.

**herb'orist**, *n.* செடியின ஆய்வாளர் ; செடியினங்களைச் சேகரித்துத் தொகுப்பவர் ; செடியினங்களைத் தொகுத்து விற்பவர் ; செடியினங்களைத் திரட்டி மருந்தாக வழங்குபவர்; தொடக்கக்காலத் தாவர இயலார்.

**herb'orize**, *v.* செடியினம் சேகரி.

**herb'y**, *a.* பூண்டின் இயல்புடைய ; பூண்டுவளம் வாய்ந்த.

**Hercul'ean**, *a.* பண்டைக் கிரேக்க மாவீரன் ஹெர்க்குலீஸுக்குரிய ; வலிமைமிக்க ; ஹெர்க்குலீஸின் பணிகள்போன்ற முடித்தற்கரிய பெருங் கடுமுயற்சி வாய்ந்த.

**Herc'ules**, *n.* செயற்கருங் கடும்பெரும் பணிகள் பன்னிரண்டு முற்றுவித்த கிரேக்க ரோமப் பழங்கதை மாவீரன் ; வலிமை மிக்கவன் ; வடதிசை வான்மீன் குழுக்களுள் ஒன்று ; (தொ.) Hercules beetle, ஐந்தங்குல நீளமுள்ள அமெரிக்க வண்டு வகை ; Pillars of Hercules, ஜிப்ரால்டர் கடலிடுக்கில் (Straits of Gibraltar) இருபுறமும் உள்ள பாறைகள் ; கடைக் கோடி எல்லை.

**herd**[1], *n.* மந்தை ; மேய்ச்சல் விலங்குகளின் திரள் ; திரியும் கால்நடைக் குழுமம் ; மக்கட் கும்பல் ; கும்பு ; பாமரர் குழு, கல்லாப் பொதுமக்கள் திரள் ; *v.* மந்தையோடு செல் ; குழுவாகச் செல் ; மந்தையுள் அனுப்பு ; மந்தை விலங்காக நடந்து கொள் ; மந்தையை ஓட்டு ; மேய் ; (தொ.) herd instinct, அலைந்து திரிதலும் ஒருவருடனொருவர் நெருங்கிப்பழகிப் பற்றுக் கொள்ளுதலும் உள்ளார்ந்து தோய்ந்த உணர்ச்சியாகக் கொண்டிருத்தல் ; the common herd, the vulgar herd, பாமர மக்கள், கல்லாப் பொதுநிலைமக்கள் கும்பல்.

**herd**[2], *n.* கால்நடை மந்தை வைத்திருப்பவர் ; கால்நடை ஓட்டி, இடையர், ஆயர் ; *v.* மேய்ப்பவனாகச் செயலாற்று.

**herd'-book**, *n.* கால்நடை-வளர்ப்புப் பன்றிகள் ஆகியவற்றின் மரபுக்கொடி விளக்கப் பட்டியல்.

**herds'man**, *n.* மந்தைக்குரியவர்.

**here**, *n.* இந்த இடம் ; *adv.* இங்கே ; இந்த இடத்தில் ; இந்த உலகில் ; இந்தச் சூழலில் ; இவ்வாழ்வில் ; இந்நிலையில் ; வாதத்தின் இந்தக் கட்டத்தில் ; இந்தச் செய்தியில் ; இந்த இடத்துக்கு ; இந்த இடம் நோக்கி ; (பே-வ.) இதோ ! (தொ.) here and there, ஆங்காங்கே, பல்வேறிடத்திலும் ; here goes, (பே-வ.) இதோ பார்! here, there and everywhere, விடாது எங்கும் ; neither here nor there, குறிவராது ; சிறப்பின்றி.

**here'about, hereabouts'**, *adv.* இங்கே எங்காவது, இந்த இடத்துக்குப் பக்கத்தில் எங்காவது.

**hereaf'ter**, *n.* எதிர்காலம் ; வருங்கால உலகு ; இனிவரும் உலகு ; *adv.* வருங்காலத்தில் ; பிற்காலத்தில் ; வருங்கால உலகில் ; இனிவரும் வாழ்வில்.

**hereat'**, *adv.* இதன்மீது, இதுகாரணமாக.

**hereby'**, *adv.* இதனுல், இதன்மூலம் ; இதன் பயனுக.

**hered'itable**, *a.* மரபுரிமையாகப் பெறத்தக்க.

**heredit'ament**, *n.* மரபுரிமையாகப் பெறத்தக்க உடைமை ; நிலஉடைமை ; மரபுரிமைப் பேறு.

**hereditar'ian**, *n.* மரபுத்தொடர்புக் கோட்பாட்டாளர்.

**hered'itariness**, *n.* மரபுரிமைய்யாக வரும் பண்பு.

**hered'itary**, *a.* மரபுரிமையாக வருகிற ; மரபுவழித் தொடர்கிற ; தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வருகிற ; முன்னோர் பண்பொத்த ; வழிவழித் தொடர்கிற, வழிவழித் தொடர்ந்து வந்துள்ள.

**hered'ity**, *n.* பண்பின் மரபுத் தொடர்பு, மரபொப்புத் திறம்.

**He'reford**, *n.* கால்நடைப் பயிற்சியின வகை.

**herein'**, *adv.* இதில் ; இப்புத்தகத்தில்.

**hereinaf'ter**, *adv.* பத்திர எழுத்தில் இனிமேல், இனி இதன் கீழே, இதில் பின்னுல்.

**hereinbefore'**, *adv.* பத்திர எழுத்தில் இதற்குமுன், இதில் முன்னுல்.

**hereof'**, *adv.* இதனுடையதாக, இதைப்பற்றி, இதன் தொடர்பாக.

**heres'iarch**, *n.* சமயமுரண் கோட்பாடு தோற்றுவிப்பவர் ; பாசண்டர், முரண் கோட்பாட்டுத் தலைவர்.

**heresiol'ogist**, *n.* முரண் கோட்பாட்டு மாணவர் ; முரண் கோட்பாடு பற்றிய எழுத்தாளர்.

**he'resy**, *n.* முரண் சமயக் கருத்து, கிறித்தவத் திருச்சபையின் ஏற்பமைதிக்கு மாறுன கருத்து.

**he'retic**, *n.* ஏற்பமைதியில்லாத கோட்பாட்டில் பற்றுடையவர், திருச்சபைக்கு முரணுன கோட்பாடுடையவர்.

**hereto'**, *adv.* இவ்வகைக்கு.

**heretofore'**, *adv.* முன்னுட்களில், சென்றகாலங்களில்; இது வரை.

**hereun'der**, *adv.* இதன்கீழே.

**hereunto'**, *adv.* இதுவரை, இந்நேரம் வரை.

**hereupon'**, *adv.* இதன்மீது; இதன்பின்னர்; இதன் பயனுக.

**herewith'**, *adv.* இதனுடன்.

**he'riot**, *n.* குடியுரிமையாளர் மறைவின்போது பண்ணை மேலாட்கு முன்பு உரிமைப்படி கொடுக்கப்பட்டுவந்த விலங்கு அல்லது கருவிப் பொருட்கொடை.

**he'ritable**, *a.* மரபுரிமையில் செல்லத்தக்க ; இயங்குடைமை அல்லாத ; தந்தையிடமிருந்து மகவுக்குச் செல்லத்தக்க ; மரபுரிமையாகப் பெறத்தக்க.

**he'ritor**, *n.* மரபுரிமை பெறுபவர்.

**herl**, *n.* இறகின் துய்.

**hermaph'rodite**, *n.* பேடு, இருபாற் சின்னங்களும் ஒருங்கே உடையவர் ; இருபாற் சின்னங்களும் உடைய உயிரினம் ; முரண் பண்புகளை ஒருங்கே உடையவர் ; முரண்கூறுகளை ஒருங்குடைய பொருள் ; இரு வேறுவகைக் கலங்களின் தன்மைகள் இயைந்த கப்பல்வகை ; (வில.) இயல்பாக இரு பால்களுக்கும் உரிய உயிரினம் ; (தாவ.) பெண்கூறும் ஆண் கூறும் ஒருங்கே ஒரே பூவிலேயே கொண்ட செடியினம் ; *a.* இருபாற் கூறுகளையும் ஒருங்கேயுடைய; முரண்பண்புகளை ஒருங்கே கொண்ட.

**hermeneut'ic, hermeneut'ical**, *a.* பொருள்கோள் சார்ந்த ; திருமறைப் பொருள்கோள் முறைக்குரிய.

**hermeneut'ics**, *n. pl.* பொருள்கோள் இயல், திருமறைப் பொருள்கோள் முறை ஆய்வியல் துறை.

**Herm'es**, *n.* கிரேக்க பெருந்தெய்வமான சியூஸுக்கும் மேயாவுக்கும் (Zeus and Maia) உரிய புதல்வன் ; தேவர்களின் தூதன் ; அறிவியலுக்கும் உரைத்திறத்துக்கும் உரிய தெய்வம் ; (தொ.) Hermes Trismegistus, 'தாத்' (Thoth) என்ற எகிப்திய தெய்வத்துக்குப் பிற்காலக் கிரேக்கர் வழங்கிய பெயர்.

**hermet'ic**, *a.* பொன் மாற்றியல் சார்ந்த ; இரசவாத ஆற்றலுடைய ; மாயத்திறம் வாய்ந்த ; இயைபுமூலம் காற்றிடை புகாக் காப்புடைய ; கட்டிறுக்கமான.

**hermet'ically**, *adv.* காற்று இடையே புகாமல்.

**hermet'ics**, *n. pl.* இரசவாதம் ; மறைநிலை இயல்.

**herm'it**, *n.* முற்காலக் கிறித்தவத் துறவி ; ஒதுக்கமாக வாழ்பவர், ஒதுங்கியுறைபவர்.

**herm'itage**, *n.* துறவி மாடம் ; தனிமை மனை ; பிரஞ்சு இன்தேறல் வகை.

**herm'it-crab**, *n.* சிப்பிமீன் எறிந்த தோட்டில் பாதுகாப்பற்ற தன் பின்புறம் காத்துத்திரியும் நண்டுவகை.

**hern**, *n.*=heron.

**hern'ia**, *n.* (மரு.) குடலிறக்கம், அண்டவாதம், குமுறலண்டம், முறிவு.

**her'o**, *n.* வீரன், மீளி ; பெரியோன் ; தெய்வ மகன் ; அரைத் தெய்வம் ; புகழ்சான்ற போர்வீரன் ; நாட்டுத்தியாகி ; பெருந் தகை, சான்றோன் ; பெருஞ் செயலாளர் ; பாட்டுடைத் தலைவன் ; கதைத் தலைவன் ; நாடகத் தலைவன் ; பூசிக்கத் தக்கவர் ; பாராட்டத்தக்கவர் ; பின்பற்றத் தக்கவர்.

**hero'ic**, *n.* வீரகாவியப் பாவகை ; *a.* வீரனுக்குகந்த ; வீரனுக்குரிய ; வீரப் பண்புகளையுடைய ; நடைமுறையில் மீயுயர் கற்பனைத் திறம் வாய்ந்த; துணிவான எழுச்சியுடைய; பாரித் துயர்ந்த ; (தொ.) heroic poetry, வீரகாவியம் ; வீர காப்பியக் கவிதை ; heroic verse, வீரகாவியத்துக்குரிய பாவகை ; the heroic age, பண்டைக் கிரேக்கரிடையே திராய்ப் (Troy) பெரும்போர் வீரர் மீட்சிக்கு முற்பட்ட காலம் ; வீரவாழ்வுக் காலம்.

**heroi-com'ic**, *a.* வீர விகடமான.

**hero'ics**, *n. pl.* பகட்டு நடை; அகன்று விரிந்த உணர்ச்சிகள்.

**hero'ify**, *v.* வீரத்தலைவனுக்கு, பேராண்மையாளராக்கு.

**he'roin**, *n.* மயக்க மருந்திலிருந்து உண்டாக்கப்படும் ஒருவகை நன்மருந்து.

**he'roine**, *n.* தலைவி; வீர அணங்கு; தெய்விக ஆற்றலுடைய மாது, அரைத்தெய்வ மகள் ; பாட்டுடைத் தலைவி ; கதையின் நாயகி ; நாடகத் தலைவி.

**he'roism**, *n.* பேராண்மை, பெருஞ்செயல் வீரம்.

**he'roize**, *v.* வீரத்தலைவனுக்கு ; வீரகாவியப் பண்பூட்டு ; தலைமகனுகச் செயலாற்று.

**he'ron**, *n.* கொக்கு வகை, நாரையினப் பறவை.

**he'ronry**, *n.* நாரைவகைப் பறவை முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் இடம்.

**her'o-worship**, *n.* வீரபூசனை ; பண்டை வீரவழிபாடு.

**her'o-worshipper**, *n.* வீரபூசகர், வீரவழிபாட்டாளர் ; பண்டை வீரரைப் பாராட்டிப் போற்றுபவர்.

**herp'es**, *n.* தோல்நோய் வகை, தேமல் வகை, படர்தாமரை.

**herpet'ic**, *a.* படர் தேமல் போன்ற ; படர் தேமலுக்குரிய ; படர்கிற.

**herpetol'ogy**, *n.* ஊர்வனநூல்.

**Herr**, (செர்.) *n.* செர்மனி நாட்டு வழக்கில் திருவாளர்; *pl.* **Herr'en.**

**he'rring**, *n.* உணவுக்குப் பெரிதும் பயன்படும் வட அட்லாண்டிக் மாகடல் மீன்வகை.

**he'rring-bone**, *a.* தையலிலும் கல் செங்கல் ஓடுபாவுதலிலும் தச்சுக் குறுக்குக் கை இணைப்புகளிலும் மீன்வகையின் எலும்புகள்போல எதிரெதிர்ச் சாய்வான வரிசைப்பட அமைந்த; *v.* எதிரெதிர்ச் சாய்வுப் பாணியில் தை; எதிரெதிர்ச் சாய்வுப் படிவத்திற் பாவு.

**Herrn'huter**, *n.* மொரோவிய (Moravian) சமயக் கிளையினைச் சார்ந்த குழுவினர்.

**hers**, *poss. pron.* அவளுடையது.

**herself'**, *pron.* அவளே, அவள்தானே; அவள் தன்னையே; அவள் தனக்கே; அவள் தன்னிடமே.

**Hert'zian waves**, *n. pl.* கம்பியில்லாத் தந்தியில் பயன்படுத்தப்படும் மின் அலைகள்.

**hes'itance, hes'itancy**, *n.* தயக்க நிலை; ஐயப்பாடு; கொன்னல்; ஆடலில் சிறு தடுமாற்றம்; தடுமாற்றப்பாணி ஆடல் வகை.

**hes'itant**, *a.* தயங்குகிற, தயக்கங்காட்டுகிற; மனவுறுதி அற்ற.

**hes'itate**, *v.* தயக்கம் காட்டு, பின்னிடை; செயலில் ஐயுறவு கொண்டு தயங்கு, மனச்சான்றுக் குத்தலால் செயல் மயக்கங் கொள்; மனவுறுதியின்றிப் பேசு; உறுதியின்மை காட்டு; ஐயுறு, துணிவில் பின்னிடை; கொன்னுறு, திக்கு.

**hesita'tion**, *n.* தயக்கம்; இருமனநிலை; ஐயப்பாடு; கொன்னல்; உறுதியற்றநிலை.

**hes'itative**, *a.* தயக்கங் காட்டுகிற.

**Hesper'ian**, (செய்.) *a.* மேற்றிசை சார்ந்த.

**Hes'peris**, *n.* கவின்மலர்ச் செடிப்பேரினம்.

**hesperorn'is**, *n.* மரபற்றுப்போன அமெரிக்க புதைபடிவப் பறவை வகை.

**Hes'perus**, *n.* மாலை வெள்ளி, சுக்கிரன்.

**He'ssian**, *n.* வலிமை வாய்ந்த முரட்டுச் சணல்துணி வகை; *a.* செர்மனி நாட்டிலுள்ள ஹெஸ் நகரத்தைச் சார்ந்த; (தொ.) Hessian boot, உயர்குதி மிதியடி; Hessian fly, கோதுமைப்பயிரை அழிக்கும் முட்டைப் புழுவையுடைய ஈ வகை.

**hest**, *n.* = behest.

**hetaer'a**, *n.* காமக்கிழத்தி.

**hetaer'ism**, *n.* கட்டற்ற காமக்கிழத்தி முறை, மரபுக்குழுவில் சமுதாயப் பொதுமை மணமுறை.

**hetair'a**, *n.* = hetaera.

**hetai'rism**, *n.* = hetaerism.

**heterochrom'ous**, *a.* இனமொவ்வாப் பல்முரண் நிறங்களை உடைய.

**het'eroclite**, *n.* செவ்வொழுங்கு மீறிய வேற்றுமைத் திரிபுடைய பெயர்ச்சொல்; *a.* செவ்வொழுங்கு மீறிய திரிபுடைய.

**heterocy'cle**, *a.* (வேதி.) சேர்மங்களில் ஒரே வளைய அணுத்துகளில் பல்வகை அணுக்களையுடைய.

**het'erodox**, *a.* புறக்கோட்பாடான, வழக்கத்திலுள்ள கொள்கைக்கு மாறான.

**het'erodoxy**, *n.* புறக்கோட்பாடு, பரபக்கம்.

**het'erodyne**, *n.* தந்தியில்லாக் கம்பிவகையில் கேளா உயர் விசை அலையை மற்றோரலையில் போதுவித்து அதிரூட்டிக் கேட்கும் அலையாக மாற்றுவதற்குரிய கருவியமைவு.

**heterog'amous**, *a.* (தாவ.) சூலகமும் பூவிழைகளும் தாறுமாறாக உள்ள.

**heterogen'eous**, *a.* கதம்பப் பண்புகளையுடைய; பல்வேறான முரண் கூறுகளைக்கொண்ட.

**heterogen'esis**, *n.* முரண்பிறப்பு, தன்னொத்த இனப்பெற்றோரிடமிருந்து தோன்றாமை; ஒற்றைமாற்றுருத் தலைமுறையுடைய பிறப்பு; உயிரற்ற பொருளிலிருந்து தன்னியல்பாய் உருவாதல்.

**heterogenet'ic**, *a.* தன்னொத்த இனப்பெற்றோரிடமிருந்து தோன்றாத; ஒற்றைமாற்றுருத் தலைமுறை இனஞ்சார்ந்த; உயிரற்ற பொருளிலிருந்து தன்னியல்பாய் உருவாகிற.

**heterog'raphy**, *n.* தவறான எழுத்துக்கூட்டு முறை; பொருந்தாத எழுத்துக் கூட்டுமுறை.

**heteromorph'ic**, *a.* ஒவ்வா உருவங்களையுடைய.

**heteromorph'ism**, *n.* அளவுருத்திரிபு; உருப்பன்மை.

**heteron'omous**, *a.* பல்வேறுபட்ட சட்ட ஒழுங்குகளுக்கு உட்பட்ட; புறச்சட்டத்துக்குக் கட்டுப்பட்ட, புறவுரிமைப் பட்ட.

**heteron'omy**, *n.* புறச்சட்ட உரிமைநிலை.

**heteropath'ic**, *a.* முரண் செயலூட்டு மருத்துவமுறை சார்ந்த; விளைவு வகையில் வேறுபட்ட.

**heterophyll'ous**, *a.* ஒருசெடிப் பல்லுருவ இலைகளையுடைய.

**het'erosexual**, *n.* இயற்கைப் பால் இணைவுடையவர்; இயற்கைப் பால் இணைவுடையது; *a.* இயற்கையான பால் இணைவுடைய.

**het'erotaxy**, *n.* உறுப்பு மாருட்ட அடுக்கம்.

**heterozyg'ote**, *n.* உயிர்மரபியலின்படி ஒவ்வாப் பாலணு இணைவினால் விளைவுறும் உயிருரு.

**het'man**, *n.* போலந்து நாட்டுப் படைத்துறைத் தலைவர்.

**heuris'tic**, *n.* அளவை இயலில் கண்டுணர்வு முறை; கல்வித் துறையில் கண்டுணரத் தூண்டும் முறை; *a.* கண்டுணர் முயற்சிக்குரிய, மாணவர்கள் எதையும் தாங்களே முயன்று கண்டுணரும்படி செய்யும் கல்விமுறை சார்ந்த.

**heuris'tics**, *n. pl.* மாணவர்கள் எதையும் தாமே கண்டு உணரும்படி செய்யும் கல்வி முறை.

**hew**, *v.* வெட்டு; கோடரியால் துண்டி; வாளால் துணித்துவிடு; கோடரியால் அடி; வாளால் வீக்கு; தாக்கு, வாள் சுழற்றி நின்று தாக்கிப் போராடு; வெட்டி உருவாக்கு; (தொ.) hew among, உட்சென்று தாக்கு; hew at, ஓங்கி வெட்டு, தாக்கு; hew down, hew asunder, hew away, வெட்டித்தள்ளு; hew one's way, வெட்டி வழி உண்டாக்கிச் செல்; வெட்டி வீழ்த்தித் துளைத்துச்செல்.

**hewed**, *v.* hew என்பதன் இறந்தகால வடிவம்; அருகலான முற்றெச்ச வடிவம்.

**hew'er**, *n.* வெட்டுபவர்; நிலக்கரிச் சுரங்கத்தில் நிலக்கரி நரம்புப்பாளங்களில் வெட்டுபவர்; (தொ.) hewers of wood and drawers of water, வெட்டுதல் நீர் இறைத்தல் போன்ற கீழ்த்தர உடலுழைப்பாளர்.

**hewn**, *v.* hew என்பதன் முடிவெச்ச வடிவம்.

**hex'achord**, *n.* ஆறுசுர இசைக்கேள்விப் பாணி.

**hex'ad**, *n.* ஆறன்தொகுதி.

**hex'agon**, *n.* ஆறுகைக் கட்டம், அறுகோணக் கட்டம்.

**hexag'onal**, *a.* அறுகோணமுடைய, ஆறு பக்கங்களை உடைய.

**hex'agram**, *n.* அறுகோண நட்சத்திர வடிவம், அறுகோணத்தை உட்கொண்ட இரு சமபக்க முக்கோணங்களின் இணைப்பு.

**hexahed'ral**, *a.* ஆறு முகப்புத்தளங்களையுடைய.

**hexahed'ron**, *n.* ஆறு முகப்புத்தளங்களையுடைய பிழம்புரு.

**hexam'eter**, *n.* அறுசீர்ச் செய்யுளடி.

**hex'apla**, *n.* பக்கத்துக்குப் பக்கமான பத்திக் கூறுகளில் ஆறு வேறுவேறு மூலபாடங்களை வகுத்துக்காட்டுகிற விவிலிய ஏடு.

**hex'apod**, *n.* அறுகாலி, ஆறு கால்களையுடைய உயிரினம்; *a.* ஆறு கால்களையுடைய.

**hexap'ody**, *n.* அறுசீர்ச் செய்யுளடி.

**hex'astyle**, *n.* அறுகால் வாயில்முகப்பு; *a.* ஆறு கம்பங்களை உடைய.

**hexasyllab'ic**, *a.* ஆறு அசைகளையுடைய.

**hex'ateuch**, *n.* விவிலியமறையில் முதலாறு பிரிவுகளின் தொகுதி.

**hey**, *int.* கவன ஈர்ப்புக் குறிப்பு; மகிழ்ச்சிக் குறிப்பு; வியப்புக் குறிப்பு; கேள்விக் குறிப்பு; (தொ.) hey for, மகிழ்ச்சி ஆரவாரக் குறிப்பு; பாராட்டு ஆர்ப்பரிப்புக் குறிப்பு.

**hey'day[1]**, *n.* பருவ காலம்; விறு நேரம்; முழுமலர்ச்சி வேளை.

**hey'-day[2]**, *int.* மகிழ்ச்சிக் குறிப்பு; வியப்புக் குறிப்பு.

***hey'duck***, *n.* போலந்து நாட்டில் பணிப்பட்டயம் தாங்கிய பணியாள்; குடிஉயர்மதிப்புப்பெற்ற ஹங்கேரி நாட்டுப் படைத்துறை வகுப்பினர்.

**hi**, *int.* கவன ஈர்ப்புக் குறிப்பு.

**hiat'us**, *n.* பிளவு; இடைவாய்; முறிவு; சிறுகோளாறு; வாதத்தொடர்பில் இடைக்குறை; இருவேறிசைகளுக்குரிய இரண்டு உயிரொலிகளுக்கிடையே ஏற்படும் பிளவு.

**hib'ernate**, *v.* விலங்குகள் வகையில் குளிர்கால முழுவதும் செறிதுயில் கொள்ளு; ஆட்கள் வகையில் மிதமண்டலத்தில் ஓய்வு கொள்; செயலற்றிரு.

**Hibern'ian**, *n.* அயர்லாந்து நாட்டவர்; *a.* அயர்லாந்து நாட்டுக்குரிய.

**Hibern'icism**, *n.* அயர்லாந்து மக்களுக்குரிய மரபு; அயர்லாந்து மக்களுக்குரிய மரபுத்தொடர்; இயல்வெடித்தொடர், அயர்லாந்து மக்களிடையே கேட்பவர்களுக்கு அதிர்ச்சி அல்லது நகைப்பு மூட்டும் வகையில் அமையும் சொற்றொடர்.

**hibis'cus**, *n.* பண்படுத்தப்பட்ட தோட்டச்செடிவகை.

**hicc'up**, *n.* விக்கல்; *v.* விக்கு; விக்கல் எடு; விக்கிவிக்கித் தெரிவி.

***hic ja'cet***, (ல.) *n.* "இவ்விடத்து உறைகிறார்" என்னும் கல்லறை வாசகம்.

**hick'ory**, *n.* திண்ணிய பளுவான வெட்டுமரமும் வாதுமை போன்ற கொட்டையும் தரும் வடஅமெரிக்க மரவகை.

**hid**, *v.* hide[2], என்பதன் இறந்தகால வடிவம்; முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**hidal'go**, *n.* ஸ்பானிய நன்மகன்; *pl.* hidal'gos.

**hidd'en**, *v.* hide[2] என்பதன் பெருவழக்கான முடிவெச்ச வடிவம்.

**hide[1]**, *n.* விலங்கின் தோல்; பதனிட்ட தோல்; *v.* தோலுரி; கசையாலடி.

**hide[2]**, *n.* ஒளிவிடம்; கொடுவிலங்குகள்மீது கண்காணிக்கும் காப்பிடம்; பதுக்கிடம், மறைவான சேமிப்பிடம்; *v.* ஒளித்துவை; மறைந்திரு, ஒளிவிரு; ஒளிந்துகொள்; இரகசியமாக வைத்திரு; தெரியாமல் வைத்திரு; கட்புலப்படாமல் மறை; (தொ.) hide one's head, வெட்கத்தால் தலைமறைவாய் இரு.

**hide[3]**, *n.* பழைய ஆங்கிலநாட்டு முறையில் நிலப்பரப்பளவைக் கூறு, வேலையாட்களுடன் ஒரு நிறைவுரிமைக் குடும்பத்துக்குப் போதிய (120 ஏக்கர்) அளவான நிலம்.

**hide'-and-seek**, *n.* கண்ணும்பூச்சி விளையாட்டு, ஒளிந்தோடும் விளையாட்டு.

**hide'-bound**, *a.* உடலொடு தோல் ஒட்டிய; மரவகையில் வளர்ச்சி தடைப்படும்படியான அளவில் மரப்பட்டை மரத்துடன் ஒட்டிய; முரட்டுப் பிடிவாதமான, பிடிமுரண்டான, வெறிப்பற்றுடைய; குறுகிய மனப்போக்குடைய.

**hid'eous**, *a.* வெறுப்பூட்டுகிற; அருவருப்பான; பயங்கரமான.

**hide'-out**, *n.* பதுங்கிடம்.

**hid'ing[1]**, *n.* கசையடி.

**hid'ing[2]**, *n.* ஒளிப்பு; ஒளிவிடம்.

**hid'ing-place**, *n.* மறைவிடம்.

**hie**, *v.* (செய்.) விரை, விரைவுபடுத்து.

**hi'erarch**, *n.* உயர்சமயகுரு, தலைமைப்புரோகிதர்; மண்டலத் திருச்சபைத்தலைவர்.

**hi'erarchy**, *n.* தேவதூதர்களின் முப்பிரிவுகளில் ஒன்று; தேவதூதர்களின் தொகுதி; புரோகித ஆட்சி; படிநிலையாக அமைந்த புரோகிதர் அமைப்பு; படிநிலை அமைப்பு.

**hierat'ic**, *a.* சமயகுருமாருக்குரிய; சமயகுருமாரால் வழங்கப்பட்ட; (தொ.) hieratic art, குருமார் வழக்குக்குரிய சமய மரபுகளைப் பின்பற்றிய எகிப்திய கிரேக்கப் பழங்கலைப்பாணி; hieratic writing, பண்டை எகிப்திய குருமார்க்குரிய எழுத்து முறை.

**hieroc'racy**, *n.* புரோகித ஆட்சி.

**hi'eroglyph**, *n.* எகிப்தியர் போன்ற பண்டை மக்கள் கையாண்ட சொல் அல்லது அசை அல்லது எழுத்துக்குப் பதிலாக நிற்கும் பொருள்வடிவம், புனித எழுத்துமுறை; மறைபொருட் குறியீடு; விளங்காத எழுத்து.

**hieroglyph'ic**, *a.* புனித எழுத்துமுறை சார்ந்த.

**hieroglyph'ics**, *n. pl.* புனித எழுத்துமுறைகள்; மறை பொருட்குறியீடு; விளங்காத எழுத்து.

**hi'erogram**, *n.* புனிதச் செதுக்கு.

**hi'erograph**, *n.* புனிதக்குறியீடு, பரிபாஷை.

**hierol'atry**, *n.* புனிதர் வழிபாடு.

**hierol'ogy**, *n.* புனித இலக்கியம்.

**hi'erophant**, *n.* பண்டைக் கிரேக்கரிடையே திருநிலை வெளிப்படுத்தும் புரோகிதர்; திருநிலைத் தீக்கை செய்பவர்; திருநிலை மறைமெய்ம்மைகளை விளக்குபவர்; தேசிகர்.

**hig'gle**, *v.* பேரச் சச்சரவு செய்.

**hig'-gledy-pig'gledy**, *n.* பெருங்குழப்பம்; *a.* குழம்பிய; *adv.* பெருங்குழப்பமாக.

**high**, *n.* உயரிடம்; உயரெண்சீட்டு; உயர்எண்; *a.* உயரமான; உயர்ந்த; உயரத்தில் உள்ள; நிலமட்டத்துக்கு மேற்பட்ட; கடல்மட்டத்துக்குமேற்பட்ட; மேடான; கடலிலிருந்து நெடுந்தொலை உள்நாட்டுப் பாங்கான; நில நடுக்கோட்டினின்றும் தொலைவான; கப்பல் வகையில் நீரினின்றும் விலகிக் கரைமீதான; உயர்ந்து செல்கிற; உயர்படியான, உயர்தரமான, உயர்தளத்துக்குரிய; உயரிய, உயர்தகுதி வாய்ந்த; பண்பு மேம்பட்ட; உயர்மதிப்புடைய; உயர் வகுப்புக்குரிய; செல்வ வளமுள்ள; இன்பவாழ்க்கைப்பாங்கான; பெருமிதமான, வீறார்ந்த; மிகுந்த, மிகுதியான; அடர்த்திமிக்க; முனைப்பான, தீவிரமான; வெப்பநிலை மிக்க; வேட்டை விலங்குவகையில் பதங்கெட்ட; இறைச்சிவகையில் பதனழிந்த; விலையுயர்ந்த; நேரம் மிகச்சென்ற, மிகப் பிந்திய; சீற்றமிக்க; கிளர்ச்சிமிக்க; துடுக்குமிக்க; பொங்கி எழுகிற; புயலார்ந்த; கடுமைமிக்க; மிகுகண்டிப்பான; அடக்குமுறைவாய்ந்த; முக்கியமான; வாழ்வின் சுழலிலிருந்து விலகிய; *adv.* உயரமாக; மேட்டில்; உச்ச அளவில், உச்ச எல்லையில்; உரத்து, உச்சத்தொனியில்; உயர் விலையில்; உயர்ந்தபந்தயம் வைத்து; உயர்சீட்டை வைத்து; கடல் வகையில் வேலி ஏற்றத்தில் பொங்கியெழுந்து; (தொ.) high altar, முக்கிய வழிபாட்டுமேடை; high command, higher command, மேலிடம், உச்சஉயர் தலைமை, உயர்தர ஆட்சிக்குழு; High Court, உயர்நீதி மன்றம்; high day, விழாநாள்; high explosive, ஆற்றல்மிக்க வெடிப்பொருள்; high farming, உரங்களைப் பரவலாகப் பயன்படுத்திச் செழிப்பு வளர்க்கும் வேளாண்மை முறை; high frequency, பேரளவான விரைவு; high hand, கண்டிப்பு; வன்முறை; தன்முனைப்பு; தன்னுண்மை, வல்லாண்மை; high horse, துடுக்குத்தனமிக்க குதிரை; high jump, உயர் எல்லை தாண்டிக் குதித்தல்; high mass, குருமார்துணைக்குழு உடனிருந்து தூபங்களுடனும் இசையுடனும் செய்யும் சிறப்பு வழிபாடு; high opinion, உயர் மதிப்பு; high priest, முக்கிய புரோகிதர்; high school, உயர்நிலைப்பள்ளி; high seas, கரையிலிருந்து மூன்று கல் கரையூட்சி எல்லைகடந்த திறந்த கடல்பரப்பு; high street, பெருந்தெரு; high tea, இறைச்சி

உணவுடன் வழங்கப்படும் தேநீர் ; high time, மேலும் தாள முடியாத பிற்பட்ட நேரம், கிட்டத்தட்டக் கடைசிக்கணம் ; high Tory, முனைத்த 'டோரி'க் கட்சியினர் ; high treason, உயர்தண்டனைக்குரிய அரசுப்பகைமைக்குற்றம்; high words, சீறி எழுகிற பேச்சு, உரத்த சச்சரவு; play high, உயர்பந்தயம் வைத்தாடு ; உயர்சீட்டை வைத்தாடு ; the Most High, கடவுள்.

high'ball, *n.* நீள்குவளையில் பரிமாறப்படும் விஸ்கி-சோடாக் கலவை.

high'-blower, *n.* சீறுங்குதிரை.

high'-born, *a.* உயர்குடிப் பிறந்த.

high'brow, *n.* சார்பற்ற கலையார்வலர் ; அறிஞர்.

high'-browed, *a.* தனித்தொதுங்கி வாழும் அறிவாளியியல்புடைய.

High Church, *n.* சமயகுருமாருக்கும் சமயஆட்சிக்குழுவினருக்கும் வினைமுறைகளுக்கும் மிகுதிமதிப்பளிக்கும் கோட்பாடு; ஆங்கிலநாட்டுத் திருச்சபையில் ஆட்சிக்குழு வினைமுறைகளுக்கு மதிப்பளிக்கும் கட்சி; *a.* சமயகுருமாருக்கும் சமயஆட்சிக்குழுவினருக்கும் வினைமுறைகளுக்கும் மிகுதி மதிப்பளிக்கிற ; ஆங்கில நாட்டுத் திருச்சபையில் குருமார் ஆட்சி வினைமுறைகளுக்குப் பெருமதிப்பளிக்கிற கட்சி சார்ந்த.

High'-Church'man, *n.* ஆங்கிலநாட்டுத் திருச்சபையில் சமயகுருமாருக்கும் சமய ஆட்சிக்குழுவினருக்கும் வினைமுறைகளுக்கும் பெருமதிப்பளிக்கும் கோட்பாடுடையவர்.

high'-class, *a.* உயர்தரமான.

high-falut'ing, *n.* பகட்டாரவாரப் பேச்சு ; *a.* பகட்டாரவாரப் பேச்சுப் பேசுகிற.

high'flown, *a.* புனைந்துரையான; கடுநடையான.

high'flying, *a.* உயரப்பறக்கிற ; உயர்பேராவலுடைய, மட்டுமீறிய உயர் அவாவுடைய.

high'-geared, *a.* விசையிணைப்பில் மூலச் சக்கரச்சுற்றைவிட விசைச்சக்கரம் பன்மடங்கு மிகுதியாகச் சுற்றும்படி இணைக்கப்பட்ட.

high'-handed, *a.* அடக்குமுறையான, வன்முறையான.

high'-hat, *n.* வீறுப்புடையவர், மட்டுமீறிய தற்பெருமையுடன் நடப்பவர் ; *v.* வீறுப்புக்காட்டு, தற்பெருமை மேற்கொள் ; வீறுப்புடன் ஏளனமாக நடத்து.

high'-jinks, *n.* ஆரவாரக் களியாட்டம்.

High'lander, *n.* ஸ்காத்லாந்தின் வடமேட்டு நிலத்துக்கு உரியவர்.

high'lands, *n. pl.* மேட்டுநிலம்.

high'light, *n.* முனைப்பான பகுதி, சிறப்புக்கூறு ; *v.* முனைப்பான ஒளியால் விளக்கமாகத் தெரியும்படி செய்.

high'lights, *n. pl.* மிகு ஒளிபடும் இடங்கள் ; நன்கு புலப்படும் பகுதிகள்.

high'ly, *adv.* மிகுதியாக, உச்ச அளவாக, உச்சஉயர்படியில் ; உயர்வாக ; உயர்விலையாக ; உயர்மதிப்புடன் ; மிக ஆதரவாக ; மிகவும் சாதகமாக ; உயர்குடி மரபில் ; (தொ.) highly descended, உயர்குடிமரபில் பிறந்த ; speak highly of, பாராட்டிப் பேசு.

high-mind'ed, *a.* பெருந்தன்மையுடைய, தாராள மனப்பான்மைகொண்ட.

high-mind'edness, *n.* பெருந்தன்மை, தாராள மனப்பான்மை.

high'ness,[1] *n.* உயர்வு ; மேம்பாடு ; பதவிமதிப்பு.

High'ness,[2] *n.* அரசர்க்கும் இளவரசர்க்கும் உரிய பட்டம்.

high'-pitched, *a.* ஒலிவகையில் உயர்விசைத் தொனியுடைய; மேடு முதலியவை வகையில் செங்குத்தான ; உயர்பண்பாண்மையுடைய.

high'-souled, *a.* மன உயர்வு வாய்ந்த, மேதக்க, சான்ற.

high'-sound'ing, *a.* பகட்டோசையுடைய.

high'-spi'rited, *a.* வீரமுள்ள, பேராண்மைமிக்க.

high'-stepp'er, *n.* காலை உயரத்தூக்கி நடக்கும் குதிரை ; வீறுார்ந்த தோற்றமுடையவர் ; நாகரிகப் பகட்டாளர்.

high'-strung', *a.* ஊக்கமிக்க ; துடிப்புமிக்க ; கூருணர்ச்சித் திறம்வாய்ந்த ; எளிதில் கோபம் கொள்ளத்தக்க.

hight, *a.* (செய்.) எனப் பெயரிய.

high'-wa'ter mark, *n.* நீரின் உச்ச எழுச்சித்தள அளவு ; உச்ச அளவு எல்லை.

high'way, *n.* அரசபாட்டை, பெருவழி, நெடுஞ்சாலை; நீர்நிலத் தலைமை நெறி; செயல்துறையில் நேர்வழி, பொதுமுறை நேர்பாதை.

high'wayman, *n.* ஆறலைக்கள்வர், வழிப்பறிக்கொள்ளைக்காரர்.

hike, *n.* (பே-வ.) பயிற்சிக்கான நீள்வழிநடை ; இன்ப உலா நடை ; *v.* நெடுவழி நட ; காலுழைக்க நட ; தங்குகூடாரச் சுமைகளைத் தோளில் தாங்கி நட.

hilar'ious, *a.* களிப்புடைய, பெருமகிழ்வான.

hila'rity, *n.* உவகை, கழிமகிழ்வு.

Hil'ary, Hil'ary term, *n.* இங்கிலாந்துநாட்டு நீதிமன்ற ஆண்டிருக்கைக் காலத்தொடக்கம் ; பல்கலைக்கழக ஆண்டிருக்கைத் தொடக்கம்.

hill, *n.* குன்று, சிறுமலை ; பொற்றை, மேடு ; புற்று; குவியல் ; *v.* குன்றுபோல உருவாக்கு; செடிக்கு மண்ணணைப்பிடு; (தொ.) over the hill, உச்சநிலை கடந்து ; தளர்படியில்.

hillo', hilloa', *int.* தொலைவிளிப்புக் குறிப்பு ; சந்திப்பு வியப்புக் குறிப்பு.

hill'ock, *n.* பொற்றை, சிறுகுன்று ; மேடு.

hill'y, *a.* குன்று நிரம்பிய, குன்றூர்ந்த.

hilt, *n.* வாள் முதலிய கருவிகளின் கைப்பிடி ; *v.* கைப்பிடி அமை ; (தொ.) up to the hilt, முழுவதும்.

hil'um, *n.* (தாவ.) விதையின் தாளடித்தழும்பு; (உள்.) நாடிநரம்பு குழாய்கள் உறுப்பினுள் நுழையும் உள்வாய்ப் பள்ளம் ; *pl.* hil'a.

him, *pron.* he என்பதன் எழுவாயல்லாத பிற வேற்றுமைகளின் வடிவம்.

himself', *pron.* அவனே, அவன் தானே, அவன் தன்னையே.

hind[1], *n.* மடமான், பெண்மான் ; செந்நிற மானின் பிணை ; மூன்றாண்டு அல்லது மூன்றாண்டுகட்கு மேற்பட்ட மான் பிணை.

hind[2], *n.* பண்ணைக்குடி வேலையாள், ஸ்காத்லாந்திலும் வட இங்கிலாந்திலும் பண்ணையிலேயே குடும்பத்துடன் குடியிருந்துகொண்டு இரு குதிரைகளின் பொறுப்புடன் பண்ணை வேலை செய்யும் வேலையாள்; பண்ணைச் செயலாளர்; பட்டிக்காட்டான்.

hind[3], *a.* பின்புறத்துக்குரிய, பின்னுலுள்ள.

hind'er[1], *a.* பின்புறமான.

hin'der[2], *v.* தடு, தடங்கல்செய், முட்டுக்கட்டையிடு.

Hin'di, *n.* இந்திமொழி ; *a.* இந்திமொழிக்குரிய.

hind'most, *a.* பின்கோடியிலுள்ள ; மிகத்தொலைவிலுள்ள.

hin'drance, *n.* தடை, தடங்கல்; இடையூறு.

hind'sight, *n.* துப்பாக்கியில் பின்காட்சி; பின்னறிவு; வந்தபின் காப்பு.

Hindu', *n.* இந்துமதத்தைச் சார்ந்தவர் ; *a.* இந்துவுக்குரிய; இந்துக்கள் சார்ந்த.

Hin'duism, *n.* இந்துமதம்.

Hin'duize, *v.* மதத்தில் இந்துவாக்கு ; இந்துப் பழக்க வழக்கங்கள் உடையவராக்கு.

Hindusta'ni, *n.* இந்துஸ்தானத்தவர்; இந்துஸ்தானி மொழி; *a.* இந்துஸ்தானத்துக்கு உரிய.

**hinge**, *n.* கீல், கதவின் மூட்டுவாய்; இயற்கை மூட்டுப் பிணையல்; அடிப்படைக்கொள்கை; *v.* சுழல் திருகு வைத்துப் பொருத்து; குடுமிமீது திருகு; திருகி இயங்கு, சுழன்று திரும்பு; (தொ.) off the hinges, பழுதுற்று, சீர்குலைவுற்று; உடல் கோளாறுற்று; மூளைக்கோளாறுற்று.

**hinn'y**, *n.* பெண்கழுதையினிடமாகப் பொலி குதிரைக்குப் பிறந்த விலங்கு, கோவேறுகழுதை வகை.

**hint**, *n.* சிறு நினைவுக்குறிப்பு, நினைவூட்டுச் செய்தி; பயில், சாடைக்குறிப்பு; *v.* மெல்ல நினைவூட்டு, சிறுநினைவுக் குறிப்பளி; பயில்காட்டு, சாடையாகக் குறி.

***hin'terland***, (செர்.) *n.* ஆற்றின் கரைகளுக்குப் பின்னணியிலுள்ள மண்டலம்; கடற்கரைக்குப் பின்புறமுள்ள நாட்டுப் பகுதி.

**hip**[1], *n.* இடுப்பு, ஒக்கலை; மோட்டு இணைப்புவாரி; *v.* இடுப்புச் சுளுக்கவை; இடுப்பைக் காயப்படுத்து; இடுப்பு மீதாகத் தூக்கியெறி; மோட்டு இணைப்புவாரி வைத்துக்கட்டு; (தொ.) have one on the hip, எக்கச்சக்கமான நிலைப்படுத்தி வை, தனக்குச் சாதகமான நிலையில் வைத்தாட்டு; smite hip and thigh, நன்றாக அடித்து நொறுக்கு.

**hip**[2], *n.* காட்டு ரோசாச் செடியின் காய்.

**hip**[3], *n.* மனவாட்டநோய், சூம்படைவுக் கோளாறு; *v.* சோர்வுறச் செய்.

**hip**[4], *int.* குழு மகிழ்ச்சி அழைப்புக் குறிப்பு.

**hip'bath**, *n.* குந்து தொட்டிக்குளிப்பு.

**hip'-disease**, *n.* இடுப்புநோய், இடுப்புச் சந்தில் காளான் வகை வளர்ச்சியினால் ஏற்படும் கோளாறு.

**hipe**, *n.* மற்போர் எறிவகை; *v.* மற்போர் எறிவகை கையாளு.

**hip'-joint**, *n.* இடுப்புச்சந்து.

**hipp'o**, *n.*=hippopotamus.

**hippocam'pus**, *n.* கடற்குதிரை போன்ற சிறு மீன்களின் இனம்; மூளையின் பின்புறமுள்ள இருமேடுகளில் ஒன்று; *pl.* hippocam'pi.

**hippocen'taur**, *n.* குதிரை உடலுடன் மனித உடற்பகுதியும் கையுமுடைய உருவம்.

**hipp'ocras**, *n.* மணமூட்டப்பட்ட இன்தேறல்.

**Hipp'ocrene**, *n.* பண்டைக் கிரேக்க கலைத்தெய்வங்களுக்கு உரிய மலையின் ஊற்று.

**hipp'odrome**, *n.* பண்டை ரோமாபுரி மக்களின் தேரோட்டப் பந்தயச் சதுக்கம், வையாளிவீதி; விலங்குப் பயிற்சிக்காட்சி வட்டரங்கு; களியாட்டக் கொட்டகைவெளி.

**hipp'ogriph, hipp'ogryph**, *n.* குதிரை உடலுடன்கூடிய கற்பனைக் கொடுவிலங்குருவம்.

**hippoph'agy**, *n.* குதிரைத்தசைதின்னும் வழக்கம்.

**hippopot'amus**, *n.* நீர்யானை.

**hip'-roof**, *n.* கீழ்விளிம்பும் பக்கங்களும் சாய்வான மோடு.

**hir'cine**, *a.* வெள்ளாடு போன்ற.

**hire**, *n.* வாடகை; வாடகை ஏற்பாடு; கூலி; கூலி ஒப்பந்தம்; ஊதியம்; *v.* வாடகைக்குக் கொடு; வாடகைக்கு எடு; கூலிக்கு அமர்த்து; (தொ.) on hire, வாடகைக்கு; வாடகைக்கு விடப்படும் நிலையில்.

**hire'ling**, *n.* கையாள்; கூலிக்கு உழைப்பவர்.

**hire'-purchase**, *n.* தவணைக்கு வாங்கும் முறை, குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய வாடகைத் தவணைகள் கொடுத்தபின் பொருள் வாடகைக்கு எடுத்தவன் உடைமையாகிவிடும் முறை.

**hirs'ute**, *a.* மயிரடர்ந்த, பரட்டையான; பம்பையான, கோதாத.

**his**[1], *pron.* he என்பதன் உடைமை வேற்றுமை வடிவம்.

**his**[2], *poss. pron.* அவனுடையது.

**his'pid**, *a.* (வில.) மயிரடர்ந்த; (தாவ.) முள்ளடர்ந்த.

**hiss**, *n.* 'உசு' என்ற ஒலி; சீறொலி; பாம்பின் சீறல்; தீயணைப்பினால் ஏற்படும் 'சுறீர்' ஒலி; *v.* சீறு; 'உசு' ஒலி எழுப்பு; 'உசு' ஒலியால் மறுப்பு ஏளனக் குறிப்பு எழுப்பு; வெறுப்புத் தெரிவி; ஒலி எழுப்பிக் கண்டனம் தெரிவி; ஒலி எழுப்பித் துரத்து.

**hist**, *int.* கவனி என்ற கவனஈர்ப்புக் குறிப்பு; சும்மா இரு என்ற பேச்சடக்குக் குறிப்பு; நாய் தூண்டும் குறிப்பு.

**histogen'esis**, *n.* உயிர்த்தசைமங்களின் உருவாக்கம்; உயிர்த்தசைக் கூறுகளின் உருத்திரிபு.

**histogenet'ic**, *a.* உயிர்த்தசைமங்களின் உரு ஆக்கத்திரிபு சார்ந்த.

**histog'eny**, *n.*=histogenesis.

**histol'ogy**, *n.* உயிர்த்தசைமங்கள் பற்றிய ஆய்வுநூல்.

**histor'ian**, *n.* வரலாற்றாசிரியர்.

**histor'iated**, *a.* எழுத்துக்கள் வகையில் ஆள் அல்லது விலங்கு உருவத்தால் ஒப்பனை செய்யப்பட்ட.

**histo'ric**, *a.* வரலாற்றுப் புகழ்பெற்ற; (தொ.) historic present, நடந்ததை நடக்கிறதுபோலக் கூறும் கால வழுவமைதி; historic tenses, கடந்த கால நிகழ்ச்சிகளைத் தெரிவிக்க உதவும் காலக் கூறுகள்.

**histo'rical**, *a.* வரலாற்றுச் சார்பான; வரலாற்றுக்குரிய; வரலாற்றுத் தொடர்புடைய; வரலாற்றிலிருந்து பெறப்பட்ட; வரலாற்றைப் பின்பற்றிய; வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட; வரலாற்றுப் பின்னணியுடைய; வரலாற்று நிகழ்ச்சிகள் குறித்த; வரலாற்று வாய்மையுடைய; பழங்கதை சாராத; கற்பனையல்லாத; மெய்யான; வரலாற்றுத் துறைக்குரிய; சென்ற காலத்துக்குரிய; தற்காலஞ் சாராத; (தொ.) historical method, தோற்ற வளர்ச்சி வரலாற்றுமுறை ஆய்வு.

**histori'city**, *n.* வரலாற்று வாய்மை, மெய்ம்மைப்பாடு.

**historiog'rapher**. *n.* வரலாற்றெழுத்தாளர், அரசவைப் பணித்துறை சார்ந்த வரலாற்று எழுத்தாளர்.

**historiograph'ic, historiograph'ical**, *a.* வரலாற்று எழுத்தாண்மை சார்ந்த.

**historiog'raphy**, *n.* வரலாற்று எழுத்தாண்மை.

**his'tory**, *n.* வரலாறு, சென்றகால அறிவு; இனவளர்ச்சி பற்றிய ஆய்வு; மனித உலக வாழ்வு நிகழ்ச்சிகளின் தொடர் கோவை; நிகழ்ச்சிக்கோவை, பொதுமுறை நிகழ்ச்சிகளின் முறைப்பட்ட தொடர்ப் பதிவீடு; இறந்தகாலச் சிறப்பு நிகழ்ச்சிகளின் தொகுதி; நாட்டு நிகழ்ச்சித் தொடர்பு விளக்கம்; மனித வாழ்க்கை நிகழ்ச்சித் தொடர்பு; பொருள் தோற்ற வளர்ச்சித் திரிபு விளக்கம்; இயல்கலைத் தோற்ற வளர்ச்சி விளக்கம்; இயற்கை நிகழ்ச்சிகளின் முறையான விளக்கம்; (தொ.) ancient history, கி. பி. 476 வரையுள்ள வரலாறு; mediaeval history, கி. பி. 476 முதல் கி. பி. 15ஆம் நூற்றுண்டு வரையுள்ள வரலாறு; modern history, கி. பி. 15ஆம் நூற்றுண்டுக்குப் பிற்பட்ட வரலாறு; natural history, விலங்கின் வாழ்வு போன்ற இயற்கை நிகழ்வுகளின் விளக்க ஆய்வு.

**his'trion**, *n.* நாடகமேடை ஆட்டக்காரர்.

**histrion'ic**, *a.* நடிப்புச் சார்ந்த; நடிகர்களுக்குரிய; நாடகப் பாங்கான.

**histrion'ics**, *n. pl.* நாடகமேடைக்கலை; நடிப்புத்திறம்; மேடைக்குரிய பண்பு, நாடகப்பண்புவாய்ந்த செயற்கையான நடை; புறவேடம், பகட்டு.

**his'trionism, histrion'icism**, *n.* நடிப்பு; செயற்கை நடை.

**hit**, *n.* அடி; தட்டு; வெட்டு; குறிதவறாத எறி, வெற்றிகரமான இலக்குப் பிழையாத வேட்டு; வேட்டு எறிதல், அடித்தல்; வேட்டு எறிவாய்ப்பு; வசைத் தாக்குதல்; வாய்ப்பு; நல்வாய்ப்பு, குருட்டடி, யோகம்; வாய்ப்பான திடீர்த் துணுக்கு; உணர்ச்சிக் கௌவுகை, விருப்பம் கப்புதல்; கெலிப்பு; *v.* அடி; வெட்டு; தட்டு; குத்து; இலக்கு வைத்தெய்; குறிநோக்கி வேட்டுச் செலுத்து; குறியில்படும்படி செய், இலக்கு நிறைவேறப் பெறு; தாக்குதலுக்கு

ஆளாக்கு; சென்று மோது; மோதி வீழ்த்து; காயப்படுத்து; புண்படுத்து; திடீர் உணர்வுகொளுத்து; சேதத்துக்குள்ளாக்கு; வசைத்தாக்குதல் செய்; மீதுபடு; சென்றெட்டு; சென்றடை; நேர்வெற்றிபெறு; வாய்ப்பாகப்பெறு; வாய்ப்பாயமை, தகுதியாயிரு, பொருந்துறு; திடீரென்று நினை; சுற்றிவளையாது நேரடியாகக் கருத்தில் தோன்றப்பெறு; (தொ.) hit against, படு, தட்டு; சென்றுமோது; hit below the waist, மற்போரில் விதிமுறை மீறிச் செயலாற்று: தகாமுறைத் தாக்குதல் செய்; hit it, hit the nail on the head, hit the right nail on the head, சரியாக ஊகம் செய்; மெய்ம்மையை அப்படியே கூறு, இம்மி பிசகாமல் உள்ளதை உள்ளபடியே எடுத்துரை; hit it off, உடன்படு, இசைந்துபோ; hit off, முழுதும் இசைவுறு, ஒத்துப்போ; இம்மி பிசகாது முழுதும் ஒத்திருக்கும்படி பார்த்துப் பின்பற்றிவிடு; hit out, வலிமையுடன் வீசியடி; hit up, கெலி; hit upon, படு; தட்டு; சென்று மோது; திடுமென ஊகி; வேண்டியது நேரே வந்தெய்தப் பெறு.

**hitch**, *n*. வெட்டியிழுப்பு; திடீர் உந்தல்; குலுக்கு, திடீர் அதிர்ச்சி; இடைத்தடங்கல், இடக்கு, சிக்கல், முட்டுப்பாடு; தடங்கல் காரணமான இடைத்தாமதம்; வண்டியுடன் வண்டி இடைக்கொளுவுதல், இடையிணைப்பு; நடப்பவர்க்கு இடையே ஊர்திகளில் அளிக்கப்படும் ஏற்றுதவி; (கப்.) முடிச்சுக் கண்ணி வகை; *v*. வெட்டி வெட்டிச் செல், வெட்டியிழுத்துக் கொண்டு செல்; தட்டுத் தடங்கலுறு, பட்டுத்தடைபடு; முடிச்சிட்டு இணை; கொளுவி இணை; இணைக்கப்பெற்றிரு; இடையே ஊர்தியிலேறிச் செல்லும் உதவிபெறு; வெட்டித் தாக்கு; முட்டை முடிச்சுகளுடன் நட; கதையில் இடைச் செருகு; (தொ.) hitch one's waggon to a star, தன்னினும் மிக மேம்பட்ட உயர் இட ஆற்றலைப் பயன்படுத்திக்கொள்; hitch up, வெட்டித்தூக்கு.

**hitch'-hike**, *n*. இடையிடையே ஊர்தி ஏற்ற உதவியுடன் நடத்தும் நடைப் பயணம்; *v*. இடையிடையே ஊர்தி ஏற்ற உதவியுடன் நடந்து பயணம் செய்.

**hith'er**, *a*. இப்பக்கமுள்ள, அருகிலுள்ள; இரண்டில் மிகுதி அணிமையிலுள்ள; *adv*. இவ்விடத்துக்கு; இவ்விடம் நோக்கி.

**hitherto'**, *adv*. இந்நேரம் வரை.

**hith'erward, hith'erwards**, *adv*. இப்பக்கம் நோக்கி.

**Hit'lerism**, *n*. செர்மானிய வல்லாளர் அடால்ப் ஹிட்லர் (Adolf Hitler 1889-1945) பின்பற்றிய கோட்பாடுகளின் தொகுதி.

**hive**, *n*. செயற்கைத் தேன்கூடு; தேனீக்கள் நிரம்பிய கூடு; ஆரவார மொய்ப்பிடம்; மொய்திரள்; *v*. தேனீக்களைக் கூட்டில் வை; கூட்டில் ஒருங்குதிரட்டு; கூட்டில் புகு; தேனீக்கள் போல ஒருங்கு கூடிவாழ்; கூட்டமாகத் தங்கிடம் கொள்; ஆட்களுக்கு வாய்ப்பான தங்கிட வசதிசெய்; திரட்டிக்குவி; சேமித்து வைத்துப் பேணு; (தொ.) hive off, தேசியமய ஆக்கத்திலிருந்து தப்புவதற்காக உற்பத்திப் பகுதியைத் துணை நிலையங்களிடம் ஒதுக்கீடு செய்.

**hives**, *n. pl*. தோல்வீக்கம்; படைநோய்; குடல்வீக்கம்; தொண்டை அழற்சி.

**ho**, *int*. வியப்புக்குறிப்பு; ஆர்வப்பாராட்டுக் குறிப்பு; வெற்றிக் குறிப்பு; ஏளனக்குறிப்பு; கவனஈர்ப்புக் குறிப்பு; (தொ.) what ho, விளுக்குறிப்பு; westward ho, இலக்கின் திசை பற்றிய ஆர்வக்கிளர்ச்சிக் குறிப்பு.

**hoar**, *n*. மூப்பு, நரைமுதிர்தோற்றம்; உறைபனி வெண்திரை; *a*. மூப்பால் நரைத்த; சாம்பற் சாயல் கலந்த வெண்ணிறமான, நரைவெள்ளையான, வெள்ளை பூத்த; காலத்தால் முதுமை வாய்ந்த, மிகப்பெரும் பழமை வாய்ந்த.

**hoar'frost**, *n*. உறைபனி வெண்திரை.

**hoard**, *n*. சேமக்குவை, சேமித்துவைத்திருக்கும் கையிருப்பு; பணக்குவியல், கருவூலம்; அறிவுத்திரட்டு; *v*. திரட்டிச்சேர், குவி; உள்ளத்தில் தேக்கிவை; போர்க்காலத்தில் உணவுப் பொருள் முதலியன சேமித்துவை, சேகரித்துப் பதுக்கிவை.

**hoard'ing**, *n*. சாரக்கட்டு, சாரம், விளம்பரங்கள் ஒட்டப்படுவதற்கான சுவரணை சட்டம்.

**hoar'hound**, *n*.=horehound.

**hoarse**, *a*. குரல்வகையில் கரகரப்பான, கம்மிய; குளிரினால் குரல் கட்டிக்கொண்ட; கரகரத்த குரலையுடைய, தொண்டை கட்டிக்கொண்ட; செவிக்கு நாராசமான, கடுமையான; கேட்க அருவருப்பான.

**hoar'stone**, *n*. மிக்க பழமை வாய்ந்த எல்லைக்கல்.

**hoar'y**, *a*. நரைத்துவெளுத்த; நரையுடைய, மூப்புடைய; முதமைதியுடைய, முதுமை மதிப்புக்குரிய; (தாவ.) வெண் மயிர் போர்த்த; மிகுபழமைவாய்ந்த.

**hoax**, *n*. குறும்புத்தனமான ஏமாற்று, கேலிக்கூத்து; நகைப்புக்கான கட்டுக்கதை; *v*. குறும்புத்தனமாகப் பொறியில் சிக்கவை; கேலிக்கூத்தடி.

**hob**, *n*. அடுப்பருகிலுள்ள கணப்புத்தட்டம்; எறிவட்டாட்ட வகையில் கோல்; நாணய எறியாட்ட வகையில் எறிகோல்; நாணய எறியாட்டம்; சக்கரக்குமிழ்; சக்கரப் பல்வெட்டுங் கருவி; சறுக்கு வண்டியின் கட்டை.

**hob'ble**, *n*. நொண்டுநடை, குதிநடை; அருவருப்பான நிலைமை, சிக்கல்நிலை; காற்கட்டு, முட்டுக்கட்டை; *v*. நொண்டிநட; அருவருப்பாக நட, குதித்துக் குதித்து நட; சந்தமற்று இயங்கு, ஏறுமாறாக இயங்கு; இடைவிட்டுவிட்டுச் செயலாற்று, விட்டுவிட்டுப் பேசு; யாப்பு வகையில் போலி எதுகையுடன் இயங்கு; போலி எதுகையுடன் இயங்குவி; கால் கட்டிடு; முட்டுக்கட்டையிடு; கால்களைக் கட்டு.

**hob'bledehoy'**, *n*. இளமை நிலை கடந்தும் பருவ நிலை பெறாத அருவருப்பான நடையுடைய இளைஞன், வளர்ந்த குழந்தைப்பிள்ளை.

**hob'ble skirt**, *n*. காலடியருகே மிகவும் குறுகலான பாவாடை.

**hobb'y** [1], *n*. விருப்பவேலை, ஓய்வுநேர விருப்பார்வத் தொழில்; வாழ்க்கைக்குரிய தலைத்தொழிலல்லாத விருப்பார்வத்துறை, ஆர்வ ஈடுபாட்டுத்துறை; மட்ட விரைநடைக் குதிரை வகை; முற்கால மிதிவண்டி வகை.

**hobb'y** [2], *n*. சிறு வேட்டப் பருந்துவகை, இராசாளிவகை.

**hobb'y-horse**, *n*. விழாக்காலப் பொய்க்கால் குதிரை; சிறுவர் குதிவிளையாட்டுக்கான குதிரைத் தலையுடைய கோல்; சிறுவர் விளையாட்டு ஆட்டக்குதிரை; விழாக்கால இராட்டினக் குதிரையிருக்கை.

**hob'goblin**, *n*. குறளி, குட்டிச்சாத்தன்; ஆவி, கொல்லைப் பொம்மை; பூச்சாண்டி.

**hob'nail**, *n*. புதைமிதியின் அடியில் தைக்கும் பெருந்தலை ஆணி.

**hob'nailed**, *a*. பெருந்தலையாணிகள் கொண்ட; தலையாணிகள் பதித்த; (தொ.) hobnailed liver, தலையாணிக்குமிழ்கள் போன்ற புடைப்பு வரிசையுடைய கல்லீரல்.

**hob'-nob**, *v*. கூடிக்குடித்து மகிழ்; கூடிக்குலாவி உரையாடு.

**hob'o**, *n*. நாடோடித் தொழிலாளி, வேலை தேடித் திரியும் தொழிலாளி.

**Hob'son's choice**, *n*. எடு அல்லது விடு என்ற வகையில் அமைந்த போலித் தேர்வுப்பொருள்.

**hock** [1], *n*. விலங்கின் பின்னங்கால் முழந்தாள் இறைச்சி.

**hock** [2], *n*. செர்மானிய நாட்டு வெண்ணிற மதுவகை.

**hock'ey**, *n*. வளைகோற்பந்தாட்டம்.

**Hock'-tide**, *n*. (வர.) ஆங்கிலநாட்டுப் பழங்கால விழா.

**hoc'us**, *v*. சூழ்ச்சியில் வீழ்த்து, ஏமாற்று; மருந்துகொடுத்து மயக்கமூட்டு; குடிவகையில் மயக்க மருந்துகல.

**hoc'us-poc'us**, *n*. ஏமாற்று, செப்படிவித்தை; பொதுமுறை மந்திர வாய்பாட்டுமாதிரி; *v*. செப்படி வித்தைசெய்; ஏமாற்று.

**hod**, *n*. கொத்துவேலைச் சாந்து எடுத்துச்செல்லும் தட்டு.

**Hodge**, *n*. உருமாதிரிச் சுட்டுக்குறிப்பில் ஆங்கிலநாட்டுப் பண்ணையாள்.

**hodge'-podge**, *n.* கூட்டவியல், கறிகாய் கலவைக் கூட்டுணவு; சரிசம மதிப்புடன் பங்கிடுவதற்கான உடைமைக் கூட்டுக்கலப்பு; கலவைக் கூளம், கதம்பம்.

**hodiern'al**, *a.* இன்றைய, இற்றை நாளுக்குரிய.

**hod'man**, *n.* கொத்துவேலைக் கையாள்; சாந்துத்தட்டுத் தூக்குபவர்; கைவேலைக்காரன்; கூலி எழுத்தாளன்.

**hodom'eter**, *n.* சகடத்தொலைவுமானி.

**hoe** [1], *n.* மண்கிளறி, மண்ணைக்கிளறும் மண்வெட்டி; களைக்கொட்டு, உழவாரப்படை; *v.* மண்ணைக்கிளறிவிடு; மண்கிளறியைக் கையாளு; களைகொட்டு; தோண்டு; வெட்டி வீழ்த்து, செதுக்கு.

**hoe** [2], *n.* நிலக்கூம்பு, கடற்கூம்புப்பாறை.

**hog**, *n.* பன்றி; இறைச்சிக்காக விதையடித்து வளர்க்கப்படும் ஆண்பன்றி; அழுக்கேறியவன், கீழ்மகன்; நாகரிகமற்றவர், பட்டிக்காட்டான்; பேராவற்காரன்; முதல் கத்திரிப்புக்கு முற்பட்ட ஒரு வயது ஆடு; ஒரு வயது விலங்கு; *v.* முதுகை உயர்த்து; முதுகை வில்போல் வளை; பிடரிமயிரைக் குறுக்கே வெட்டு; பன்றிபோலப்பற்று; பன்றிபோலத் தின்னு; பன்றிபோல நடந்துகொள்; முரட்டுத்தனமாக நடத்து; (தொ.) go the whole hog, முற்ற முழுக்க நிறைவேற்று, கடைபோகக்காண்; hog in armour, அருவருப்பான கட்டைபோன்ற உருவமைதியுடைய மனிதன்; hog's pudding, பலவகைப் பொருள்கள் திணிக்கப்பெற்ற பன்றியின் குடல்கறி.

**hog'back**, *n.* நடுவே முகட்டையுடைய கொடும்பாறை.

**hog'-fish**, *n.* தலையில் பன்றிமுள் போன்ற அமைப்புடைய மீன்வகை.

**hogg'et**, *n.* ஒருவயதான ஆடு.

**hogg'in**, *n.* அரித்தெடுத்த சரளை.

**hogg'ish**, *a.* பன்றிபோன்ற; முரட்டுத்தனமான; அழுக்கடைந்த; தன்னலம்பிடித்த.

**hog'-mane**, *n.* குறுகத்தறித்த குதிரையின் பிடரிமயிர்.

**hog's'-back**, *n.*=hogback.

**hogs'head**, *n.* பெரிய மிடா; முகத்தலளவைக் கூறு; 52½ கேலன் (gallon).

**hog'-wash**, *n.* அடுப்படிச் சாக்கடை.

**hoick** [1], *v.* விமானத்தை வலிந்து நேர்உயரமாகச் செலுத்து; விமானத்தில் நேர்உயரச்செல்லு.

**hoick** [2], **hoicks**, *int.* வேட்டைநாய் ஊக்கு குரல்.

**hoik**, *v.*=hoick [1].

***hoi poll'oi***, (கிரே.) *n.* மிகப்பலர், பெரும்பான்மை மக்கள், பொதுமக்கட்கும்பல்.

**hoist** [1], *n.* உயர்த்துதல்; மேலேதள்ளுதல்: பாய்மர உயரம்; பாய்மரத்தை அடுத்த கொடியின் பகுதி; பாரந்தூக்கி; ஏற்றுமாடம்; *v.* உயரத்தூக்கு; கொடியை உயர்த்து, உயரப் பறக்கவிடு; கயிறு கம்பிகள் மூலம் மேலெழுப்பு; கயிறுகம்பிகள் மூலம் தூக்கு; தூக்கி எறி.

**hoist** [2], *a.* தூக்கி எறியப்பட்ட; (தொ.) hoist with one's own petard, தன் வெடிகுண்டினுல் தானே தகர்த்தெறியப்பட்ட; பிறருக்கெதிரான தன் சதிச் சூழ்ச்சிகளால் தானே அழிவுற்ற.

**hoit'y-toit'y**, *a.* ஆரவாரக் கூச்சலிடுகிற; வீருப்பான; முகங்கோணிக்கொண்டிருக்கிற, கத்திக்கொண்டு பிணங்குகிற; *int.* மட்டுமீறிய தற்பெருமை கண்டு வியப்பும் கண்டனமும் தெரிவிக்கும் குறிப்பு.

**hok'ey-pok'ey**, *n.* செப்படி வித்தை; மந்திரதந்திரம்; ஏமாற்று; தெருவில் விற்கப்படும் கீழ்த்தரக் குளிர்ப்பாலடைக் குழம்பு.

**hok'um**, *n.* சுவைத்திறமற்ற மக்கள் கும்பலுக்கிசைவாகத் திட்டமிடப்படும் கீழ்த்தர நாடகக் கூறுகளின் தொகுதி; கீழ்த்தரத் திரைப்படக்கூறுகளின் தொகுதி.

**hold** [1], *n.* பிடி, பிடிப்பு; பிடிப்பாற்றல்; வாய்ப்பு; பிடிக்குகந்த பொருள்; தனி மனிதனின் வசமான கட்டுப்பாடு; கட்டுப்படுத்திவைக்குமிடம், சிறை; அரண்காப்பிடம்; *v.* பிடி; பிடித்திரு; உறுதியாகக் கையில் பற்று; கைவிடாது வைத்திரு; பிடிப்பில் வைத்திரு; பெற்றிரு; உடைமையாகக் கொண்டிரு; உரிமையைப் பெற்றிரு; வசமாகக்கொண்டிரு; ஆற்றலுக்குள் வைத்திரு; கட்டில் வைத்திரு; சிறைப்படுத்து; வெற்றிகரமாக முற்றுகையிடு; தொடர்ந்து செயலாற்று; தொடர், நீடித்து இயங்கு; தகர்வுருதியங்கு; அடங்காது தொடர்ந்து இயங்கு; உரிமையுடன் வலியுறுத்து; பிடிமுரண்டுகொள், விடாப்பிடிகொள்; கையாளு, கைக்கொண்டு பயன்படுத்து; இடங்கொள்; உட்கொண்டிரு; கவனத்தைத் தன் பக்கமாகக்கொள்; தடைப்படுத்து; தாமதப்படுத்து; நிறுத்து; கொண்டாடு; நடத்து; நடைபெறுவி; கூட்டு, கூட்டிலிணைத்து நடைபெறுவி; கருது; வைத்துக்கொண்டிரு, தாங்கு; பொறு; உறுதியாயிரு; தவருதிரு; பற்றிக்கொண்டிரு, ஒட்டிக்கொண்டிரு; (தொ.) hold aloof, தொடர்புநீக்கி விலகியிரு; hold back, தடுத்துநிறுத்து; தயங்கிநில்; தன்னைக் கட்டுப்படுத்திக்கொள், அடக்கிக்கொள்; செயலை நிறுத்திக்கொள்; hold cheap, மதியாதிரு; ஏளனமாகக் கருது; hold dear, உயர்வாக மதி; போற்று; hold forth, மேடையில் முழக்கமிட்டு விரித்துப்பேசு; விளக்கமாக விரித்துரை; விளக்கமாகக் காட்டு; hold in, கட்டுப்படுத்து; தடுத்துநிறுத்து; தேக்கிவை; அடக்கிவை; hold off, விலகி இரு; தள்ளிவை; தாமதி; hold on, பிடிதொடர்; நிறுத்து; hold one at bay, தயக்கநிலையில் வைத்திரு; திகைக்க வை; hold oneself, கருது; hold one's hand, செயலைநிறுத்து; எண்ணிக்கொள்; நிலை மேற்கொள்; hold one's head down, அவமானத்தால் தலைகுனி; பெருமை இழந்துநில்; பணிந்து நில்; நாணுறு; hold one's head erect, hold one's head high, hold up one's head, நிமிர்ந்துநில், தன்மதிப்புடன் நட; hold one's tongue, hold one's noise, பேசாதிரு, சந்தடி செய்யாதிரு, பேச்சை நிறுத்து; hold out, நீட்டு; ஏந்து; கொடு; ஏந்தி ஆசை காட்டு; தாங்கு; நீடித்து உழை, உறுதியுடன் தொடர்ந்திரு; hold to, பற்றிக்கொள், கட்டுப்படுத்திக்கொள்; hold together, இணைந்திரு; ஒன்றுபட்டிரு; hold up, தாங்கு; ஆதரி; வழிப்பறிக்காக நிறுத்திவை; there is no holding him, அடங்காதவனுயிருக்கிருன்; துடிதுடித்துக்கொண்டிருக்கிருன்.

**hold** [2], *n.* கப்பல் தளத்தடியில் சரக்குகள் சேமிக்கும் பள்ளம்.

**hold'er**, *n.* பிடிப்பவர்; வைத்திருப்பவர்; பதவிபெறுபவர்; பதவியில் தற்காலிகமாக அமர்ந்திருப்பவர்; பட்டம் பெறுபவர்; எழுதுகோலின் கைப்பிடி; பிடிப்புச்சட்டம்.

**hold'ing**, *n.* பிடி; பிடித்தல்; பற்றுதல்; கைப்பற்று நிலம், நில உடைமை; நில உரிமை முறை; கைக்கொண்டுள்ள முதலீட்டுப்பங்கு; செல்வாக்கு; (தொ.) holding company, சார்புநிலையங்களின் பங்குகளை வைத்திருப்பதற்கான நிலையம்.

**hole**, *n.* துளை, புழை; குழி, கிடங்கு; சிறுவிலங்கின் வளை; ஆற்றின் ஆழ்தடம்; ஒடுக்கமான உறைவிடம், ஒட்டுக்குடிசை; ஒளிவிடம்; ஆட்டக்குழி; தப்பிச்செல்லும் புழைவழி; குழிப்பந்தாட்டக் கெலிப்பு; துளையீடு, சல்லடையான துளைப்பு; எக்கச்சக்கமான நிலை, இக்கட்டுநிலை; *v.* துளையிடு; துளையிலிடு; குழிப்பந்தாட்டத்தில் பந்தைக் குழியிலிடு; குழியில் விழு; கப்பல் பக்கங்களைத் துளை; சுருங்கை வழியமை; அடிநிலக்குழாயமை; சுரங்கத்தில் வெட்டுவாயிலிருந்து வெட்டுவாய்க்கு வழிசெய்; (தொ.) a round peg in a square hole, a square peg in a round hole, இடத்துக்கு ஒவ்வாத ஆள்; be in rather a hole, be in rather a devil of a hole, எக்கச்சக்கமான நிலையிலிரு; make a hole in, பெருந்தொகை செலவாக்கிவிடு; pick holes in, குற்றங் காண், குறைகூறு.

**hole'-and-cor'ner**, *a.* மறைவான, புதைவான, இரகசியமான.

**hol'iday**, *n.* விடுமுறை நாள், வேலையில்லாத நாள்.

**hol'idays**, *n. pl.* நீள்விடுமுறைக்காலம்.

hol'ily, *adv.* புனிதமாக, திருநிலையாக.

hol'iness¹, *n.* புனிதத்தன்மை.

Hol'iness², *n.* திருமேனி, போப்பாண்டவரைக் குறித்த மதிப்புக்குறிப்பு ; (தொ.) his Holiness, திருமேனியவர்கள், போப்பாண்டவர் குறித்த மதிப்பு வழக்கு.

hol'ism, *n.* (மெய்.) முழுமைப் படைப்புக் கோட்பாடு, கூறுகளின் தொகுதிக்கு மேம்பட்ட நுண் உயிர் முழுமைகளிலிருந்து உயர் முழுமை நோக்கி வளர்ந்த படிமலர்ச்சியே படைப்பின் அடிப்படை என்னும் கோட்பாடு.

holl'a¹, *v.*=hollo².

holl'a², *int.*=holl'o¹.

Holl'and, *n.* ஆலந்து நாடு, வடக்கு நெதர்லாந்து மாநிலப்பகுதி ; நெதர்லாந்து அரசு ; நார்த்துணிவகை ; (தொ.) brown Holland, வெளுக்கப்படாத நார்த்துணி வகை.

Holl'ander, *n.* ஆலந்துக்காரர்; ஆலந்துக் குடிமகன்; டச்சுக் கப்பல், ஆலந்து நாட்டுக் கப்பல்.

Holl'ands, *n.* கூலத்தினின்றும் செய்யப்படும் தேறல் வகை.

holl'o¹, *n.* தொலைவிலுள்ளோரை அழைக்கும் விளிக்குறிப்பு ; *int.* விளிக்குறிப்பு.

holl'o², holl'oa, *v.* ஆர்ப்பரி, கூவு ; வேட்டைநாய்களைக் கூவிக்கொண்டே துரத்து.

holl'ow¹, *n.* பொள்ளல் ; உட்புழை ; வெறுமை ; குழிவு ; உள்துளை ; பள்ளம் ; பள்ளத்தாக்கு ; வடிநிலம் ; *a.* குழிவான ; பள்ளமான ; புழையுள்ள ; திடமற்ற ; கெட்டியாயிராத ; வெறுமையான ; உள்ளீடில்லாத ; வயிற்றில் ஒன்றுமற்ற, பசியுடைய ; ஒலிவகையில் முழுத்தொனி அமையப்பெற்றிராத ; வஞ்சகமான; வாய்மையற்ற ; போலியான ; பொய்யான ; பொருளற்ற; அறிவற்ற; பண்பற்ற ; *v.* துளையிடு, உட்டுளையுடையதாகச் செய் ; அகழ், குடை, தோண்டு; *adv.* முழுவதும், தீர ; (தொ.) beaten hollow, முற்றத் தோற்கடிக்கப்பட்ட ; hollow out, அகழ், குடை, தோண்டு.

holl'ow², *v.*=hollo².

Holl'oway, *n.* பெண் காவற் கைதிகளுக்கும் கடன் குற்றக் கைதிகளுக்கும் உரிய சிறைக்கூடம்.

holl'ow-eyed, *a.* குழிந்த கண்களையுடைய.

holl'ow-ground, *a.* நாவிதன் கத்தியைப்போல் இரண்டு பக்கமும் குழிவான மேற்பரப்புடைய.

holl'ow-heart'ed, *a.* வாய்மையற்ற மனமுடைய, வஞ்சகமான.

holl'owness, *n.* பொள்ளன்மை, உட்டுளையுடன்கூடிய நிலை; அகழ்வு ; வெறுமை ; பொய்ம்மை, வஞ்சகம்.

holl'ow-ware, *n.* குடம்-கெண்டி போன்ற இருப்புக்கலங்களுக்கு வழங்கும் வாணிகப் பெயர்; உலோக மங்குக் கலங்களின் தொகுதி.

holl'y, *n.* முள் இலைகளையும் பசிய சிறுமலர்களையும் சிவப்புப் பழங்களையும் உடைய இலையுதிர்க்காத புதர்ச்செடி வகை.

holl'yhock, *n.* பலநிறப் பெரிய மலர்களையுடைய நெட்டையான செடிவகை.

Holl'ywood, *n.* அமெரிக்காவில் காலிபோர்னியாவில் உள்ள மாகாணம் ; ஹாலிவுட்டில் உருவாக்கப்படும் அமெரிக்கத் திரைப்படத்துறை.

holm¹, *n.* துருத்தி, அரங்கம், ஆற்றங்கரையில் அமைந்து வெள்ளம் வரும்போது மூழ்கிப்போகும் திட்டு நிலம் ; தலைநிலத்துக்கு அண்மையிலுள்ள தீவு.

holm², *n.* இலையுதிர்க்காத சீமை ஆல்வகை ; சணல் வகை.

holme, *n.*=holm¹.

holm'-oak', *n.* இலையுதிர்க்காத சீமை ஆல்வகை.

hol'ocaust, *n.* முழு அவியூட்டுப்பலி ; பெருங்களப்பலி ; நூழிலாட்டு, படுகொலை, பாடழிவு.

holocrys'talline, *a.* கண்ணாடியின்றி முழுவதும் படிகத்திறலான அமைப்புக்கொண்ட.

hol'ograph, *n.* உரியவர் கையாலேயே முழுவதும் எழுதப்பட்ட ஆவணம் ; *a.* தம் கையாலேயே முழுவதும் எழுதப்பட்ட.

holohed'ral, *a.* மணியுரு வகையில் முழுசெவ்விசைவுக்கு வேண்டிய எல்லாப் பட்டைகளையும் உடைய.

holohe'dron, *n.* பளிங்குவகையில் முழுசெவ்விசைவுக்கு வேண்டிய எல்லாப் பட்டைகளையும் உடைய வடிவம்.

holometab'ola, *n. pl.* (வில.) முழு உருமாற்றமடையும் பூச்சி வகைகள்.

holometab'olism, *n.* (வில.) பூச்சிவகையில் முழு உருமாற்றத்துடன்கூடிய வளர்ச்சி.

hol'ophote, *n.* கலங்கரைவிளக்கத்தில் ஒளிக்கூறு முழுமையையும் வேண்டிய திசையில் வீசுவிப்பதற்கான அமைவு.

holophyt'ic, *a.* பசுஞ்செடியினைப் போலவே ஊட்ட உணவைப் பெறுகிற.

holothurian, *n.* (உயி.) புழுவியல்புடைய வட்டவடிவான கடல்வாழ் உயிர்ப் பேரினம் ; *a.* கடல்வாழ் உயிர்ப் பேரினம் சார்ந்த.

holozo'ic, *a.* (உயி.) விலங்கினம் போலப் பிற உயிரினங்களிலிருந்தே ஊட்டஉணவு பெறுகிற.

hol'ster, *n.* சேணத்தில் அரைக்கச்சில் செருகப்படும் கைத்துப்பாக்கிக்கான தோலுறை.

holt¹, *n.* காடு, புதர்க்காடு ; சோலைமலை ; பழத்தோட்டம்.

holt², *n.* விலங்கு பதுங்குமிடம்; நீர்நாயின் வளை.

hol'us-bol'us, *adv.* ஒருங்கு சேர, எல்லாம் ஒரே மொத்தத் தொகுதியாக.

hol'y, *n.* புனிதப்பொருள் ; திருத்தலம் ; புண்ணிய மூர்த்தி; *a.* புனிதமான, திருநிலையுடைய; தேவாலயம் சார்ந்த; திருப்பணிக்கென ஒதுக்கிவைக்கப்பட்ட ; நிறை சமய வொழுக்கமுடைய ; சீரிய ஒழுக்க மேம்பாடுள்ள ; (தொ.) Holy Alliance, புனிதக் கூட்டுறவு, நெப்போலியன் வீழ்ச்சிக்கு (1815) பிறகு ஆஸ்ட்ரியா ருசியா பிரஷியா (Prussia) ஆகிய மூன்று நாட்டு மன்னர்களும் கூடிச் செய்துகொண்ட உடன்படிக்கை ; Holy City, ஜெருசலம்; ரோமாபுரி; மெக்கா; காசி ; அலகாபாத் ; வானுலகம் ; Holy Cross day, சிலுவை மேம்பாட்டுத் திருவிழா, செப்டம்பர் 14-ஆம் நாள் ; holy day, சமயத் திருவிழா நாள் ; Holy Family, குழந்தை இயேசு யோசேப்பு மேரி முதலியோர் கொண்ட புனிதக் குடும்பம் ; Holy Ghost, தூய ஆவி, கிறித்தவ சமய மும்மைத் திருவுருவின் மூன்றுவது திருவுரு ; Holy grail, இறுதி உணவின்போது இயேசுநாதர் பயன்படுத்திய தட்டம் ; Holy Land, யூதேயா (Judaea), பாலஸ்தீன நாட்டுப்பகுதி ; Holy Office, ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையில் சமயத்தண்டமுறை மன்றம் ; holy of holies, கோயில் மூலக் கருவறை ; holy orders, சமயப் பணிகென ஒதுக்கிவைக்கப்படும் நிறுவனம்; திருச்சபைப்பணி ; Holy Roman Empire, புனித ரோமப் பேரரசு, கி. பி. 962 முதல் 1806 வரையில் செர்மன் பேரரசுக்கு வழங்கிவந்த பெயர் ; Holy Saturday, புனித வாரத்தில் வரும் சனிக்கிழமை ; Holy Spirit, கிறித்தவ சமய மும்மையில் மூன்றுவது திருவுரு; Holy Thursday, இயேசுநாதர் ஆவி நீத்த நாளாகிய புது வெள்ளிக்கிழமைக்கு முன்புள்ள வியாழக்கிழமை ; இயேசுநாதரின் விண்ணேற்ற நாள் ; holy war, புனிதப்போர், சமயப்போர், சிலுவைப் போர் ; holy water, தீர்த்தம் ; Holy Week, புனித வாரம் ; இயேசுநாதர் உயிர்த்தெழுந்த திருநாளுக்கு முன்புள்ள வாரம் ; Holy Willie, புறநீரார், வெளிப் பாசாங்குக்காரர்; holy Writ, விவிலிய நூல், கிறித்தவரின் மறைநூல், திருநூல் தொகுதி.

ho'ly-rood, *n.* இயேசுநாதரின் சிலுவை ; ரோமன் கத்தோலிக்கக் கோயில்களில் பலிபீடத்துக்குப் போகும் நுழைவாயிலுக்கு மேலேயுள்ள சிலுவை ; (தொ.) Holy-rood Day, சிலுவை கண்டுபிடிப்புத் திருநாளாகிய மே திங்கள் 3-ஆம் நாள் ; சிலுவை மேம்பாட்டுத் திருநாளாகிய செப்டெம்பர் 14-ஆம் நாள்.

**hot'-dog'**, *n.* சூடான காரச் சோமாசி வகை.

**hotel'**, *n.* வழித்தங்கல்மனை, வழிப்போக்கர் தங்குவதற்கான விடுதி; அருந்தகம், பணம்பெற்று உணவும் உறையுளும் அளிக்கும் நிறுவனம்.

**hotel'ier**, *n.* உணவகம் வைத்து நடத்துபவர்.

**hot'foot**, *adv.* மிகுவிரைவாக, வேகமாக.

**hot'-gos'peller**, *n.* வலுவூட்டும் உணர்ச்சிமிக்க கிறித்தவ சமயச் சொற்பொழிவாளர்.

**hot'head**, *n.* இறுமாப்பு பிடிமுரண்டுடையவர், மூர்க்கர், முரடர்.

**hot'-headed**, *a.*=hot-brained.

**hot'house**, *n.* சேமச்செடிப் பண்ணை வீடு, பருவந்தப்பியும் குளிர்மண்டலத்திலும் வளரும்படியாக வெப்பநிலையூட்டப் பட்ட நிறைகண்ணுடிக் கட்டிடம்; சூளையில் வைப்பதற்கு முன் பச்சை மட்கலங்கள் வைக்கப்படும் சூடான அறை.

**hot'-mouthed**, *a.* குதிரை வகையில் அடங்காத, கடிவாள ஈர்ப்புப் பொருத.

**hot'pot**, *n.* கொத்தி உருளைக்கிழங்கோடு சூட்டடுப்பிலிட்டுப் பக்குவப்படுத்தப்பட்ட இறைச்சியுள்ள மூடியிறுக்கமுடைய உண்கலம்.

**hot'press**, *n.* துணி தாள் ஆகியவற்றின் மேற்பரப்பை வழவழப்பாக்கும்படி சூடான தகடுகளிடையே வைத்து அழுத்துவதற்குரிய கருவி; *v.* வழவழப்பான மேற்பரப்பை உண்டுபண்ணுவதற்குச் சூடான தகடுகளிடையே அழுத்து.

**hot'-short**, *a.* இரும்பு வகையில் சூடானபோது எளிதில் நொறுங்கத்தக்க.

**hot'spur**, *n.* துடுக்கானவர், முன்பின் பாராதவர், ஆத்திர முள்ளவர்.

**hot'tem'pered**, *a.* முன்கோபமுள்ள.

**Hott'entot**, *n.* மேய்ச்சல்தொழில் கொண்ட தென் ஆப்பிரிக்க நாடோடி இனத்தவர்; நாகரிகப்படியில் தாழ்ந்தவர், அறிவு பண்பாட்டில் முதிர்நிலை பெருதவர்; (தொ.) Hottentot fig, தென் ஆப்பிரிக்க அத்திப்பழ வகை.

**hough**, *n.* விலங்கின் பின்னங்காலின் முழங்காலுக்கும் காற் குழைச்சுக்கும் இடையிலுள்ள இணைப்பு; *v.* முழங்கால் தசைக்கயிற்றை அறு; கால்தசை நாணறுத்து உருக்குறை.

**hound**, *n.* வேட்டைநாய், மோப்ப உணர்ச்சியுடைய நாய் வகை; வெறுக்கத்தக்கவன், அயோக்கியன்; வேட்டையாடு பவர், அடிச்சுவட்டைப் பின்பற்றிச் சென்று வேட்டையாடு பவர், விடாமுயற்சி செய்து தேடுபவர்; துரத்திப்பிடிக்கிற விளையாட்டு வகையில் துரத்துபவர்; மீன்வகை; *v.* வேட்டை நாய் கொண்டு துரத்து, வேட்டை நாயை ஏவு; ஆளை ஏவு; தூண்டு; (தொ.) master of hounds, வேட்டைநாய்த் தொகுதித் தலைவர்; the hounds, குள்ள நரிகளை வேட்டை யாடுவதற்காகப் பழக்கப்பட்ட வேட்டை நாய்களின் தொகுதி.

**hound's'-tongue**, *n.* மயிரிழை போன்ற புற வளர்ச்சியுள்ள இலைகளும் நீல மலர்களும் கொண்ட செடிவகை.

**hour**, *n.* ஒருமணி நேரம், அறுபது நிமிடங்கள் கொண்ட காலக்கூறு; மணிப்பொறி காட்டும் நேரம், மணிநேரம்; (தொ.) at the eleventh hour, கடைசி நேரத்தில், மிகப் பிந்தி; in a good hour, நற்பேருக; நன்னிமித்தத்தில்; in an evil hour, காலக்கேடாக, கெட்ட நேரத்தில்.

**hour'-circle**, *n.* இரு வான்துருவங்களையும் கடந்து செல் லும் பெரிய வான் வட்டம்.

**hour'-glass**, *n.* மணல் நாழிகை வட்டில், மணல் சொரிந்து காலங்காட்டும் கருவி.

**hour'-hand**, *n.* மணிப்பொறியின் சிறு முள், மணி காட்டும் முள்.

**hour'i**, *n.* இஸ்லாமியர்களின் வானுலகுக்குரிய அணங்கு; இன்ப எழிலாரணங்கு.

**hour'ly**, *a.* மணிக்கு மணி நிகழ்கிற; அடிக்கடி நிகழ்கிற; *adv.* மணிதோறும்; அடிக்கடி.

**hour'plate**, *n.* கடிகாரத்தின் முகப்புத் தகடு.

**hours**, *n. pl.* பணியாற்றுவதற்குக் குறிக்கப்பட்ட கால அளவு; வழிபாட்டுக்காகக் குறிக்கப்பட்ட ஏழு வேளைகள்; ஏழுவேளைக் கட்டளைப் பணிகள்; ஏழுவேளைக் கட்டளை ஏடு கள்; கிரேக்கபுராண மரபில் பெரும்பொழுது சிறுபொழுதுத் தெய்வங்கள்; (தொ.) at all hours, காலமில்லா காலத்தில்; பின்னிரவு வேளைகளில்; keep good hours, நேரத்தோடு படுத்து நேரத்தோடு எழு; அமைதியும் ஒழுங்கும் நிறைந்த வாழ்க்கை நடத்து; small hours, குறைந்த இலக்கங்களால் குறிக்கப்படும் மணிநேரங்கள், ஒன்று தொடங்கிய மணி யுடைய காலை பிற்பகல் வேளைகள்.

**house**, *n.* வீடு; குடியிருக்குமிடம்; குடும்பம்; குடும்பமரபுக் குழு; கால்வழி; சுற்றத்தார் குழாம்; கட்டிடம்; வழித் தங்கல்மனை, சாவடி, சத்திரம்; வாணிக நிலையம்; சட்ட சபை கூடுமிடம்; சட்டசபைக்குழு; கன்னிமாடம்; மாணவர் இல்லம், கல்விநிலைய மாணவர் தங்கல்விடுதி; பள்ளிப் பிரிவு; நாடகம் திரைப்படம் முதலியவற்றின் வகையில் காட்சிக்கொட்டகை; அவையோர், காண்போர், கேட்போர்; கூட்டமண்டபம்; கூட்ட நிகழ்ச்சி; விலங்குப் பேணகம்; பண்டங்கள் வைக்கப்படுமிடம்; தொழுகைக் கூடம்; வான் மனை, வானவட்டத்தின் 12-இல் ஒரு கூருன 30 பாகையிடம்; தாளும் எழுதுகோலும் கொண்டு ஆடக்கூடிய குருட்டடி ஆட்ட வகை; *a.* வீட்டுக்குரிய; வீட்டில் பழக்கப்பட்ட; உள்துறை சார்ந்த; *v.* வீடமைத்துக் கொடு, வீடு வாய்ப்பளி; இட வாய்ப்பளி, இட வாய்ப்பாயுதவு; பாதுகாப்பு வழங்கு; தங்கிடம் உதவு; சேமித்துவை, இட்டுவை; தங்கு; புகலிடம் பெறு; இட வாய்ப்பாயமை; தங்கிடமாயமை; சேம இடமாய் உதவு; துப்பாக்கிகளைப் பாதுகாப்பான இடத்தில் வை; பாய்மரங்களைத் தாழ்த்து; குதைகுழியில் பொருத்தி வை; (தொ.) bring down the house, கைத்தட்டல் தூண்டு; மகிழ்ச்சி ஆரவாரம் உண்டுபண்ணு; house of call, ஒருதாத் தெரு வணிகர் தம் வாணிகத் தரகு பெறுவதற்காகச் செல்லும் இடம்; அடிக்கடி செல்வதற்குரிய வீடு; house of correction, சிறை, காவற்கூடம்; House of God, House of Prayer, House of Worship, கோவில், வழிபடுமிடம்; house of ill-fame, பொதுமகளிர் இல்லம், விலைமகளிர் வீடு; House of Lords, House of Peers, பெருமக்கள் அவை; House of Representatives, பிரதிநிதிகள் சபை; House of the People, பொதுமக்கள் அவை, பாராளுமன்றக் கீழ்சபை; Inner House, குற்ற நீதிமன்ற உயர்பகுதி; keep a good house, வளமாக வாழ்; keep house, வீட்டை மேற்பார்த்துப் பேணு, நிலையத்தை நடத்து; keep open house, வருபவர்களுக்கு எல்லாம் உணவுபசாரம் அளி; keep the house, வீட்டி லிரு; வீட்டில் அடைபட்டிரு; வீட்டுக்குப் பொறுப்பேற்று நடத்து; வீட்டைக் காவல் செய்; like a house on fire, like a house afire, வியத்தகு வகையில் விரைவாக, வியப் பூட்டும் வேகத்துடன்; Outer House, குற்ற இயல் நீதி மன்றத்தின் கீழ்ப்பிரிவு.

**house-a'gent**, *n.* வீட்டுத் தரகர், வீடு கொள்வினை விற்பனை வகையில் இடையீட்டாளர்.

**house'-boat**, *n.* தங்கி வாழ்வதற்கான வாய்ப்புக்கள் இணைக்கப்பட்ட படகு.

**house'-bote**, *n.* வீடு சீர்திருத்த மரங்களைப் பயன்படுத்த வாடகைக்காரர் உரிமை.

**house'-break'er**, *n.* துணிகரத் திருடர், பகல் நேரத்தில் வீட்டை உடைத்துத் திருடுபவர்; பழைய வீடுகளை அழிப் பவர்.

**house'craft**, *n.* வீட்டுவேலைத் திறமை, வீட்டு வேலைகளைச் சார்ந்த கைத்திறமை.

**house'-dinner**, *n.* கழகங்களில் உறுப்பினருக்கும் தனி விருந் தினர்க்கும் மட்டும் ஏற்பாடு செய்யப்பட்ட விருந்து.

**house'-dog**, *n.* வீட்டுக் காவல்நாய்.

**house'-flag**, *n.* வாணிகக் கப்பலில் வாணிகக் கழகத்தின் கொடி.

**house'-flannel**, *n.* தளம் துடைக்கும் முரட்டுக் கந்தல்துணி.

house'-fly, *n.* வீட்டு ஈ.

house'hold, *n.* குடும்பத்தினர் ; குடும்ப அமைப்பு; *a.* குடும்பத்தைச் சார்ந்த ; (தொ.) household franchise, household suffrage, விடு உடையவர்கள் மாமன்ற உறுப்பினர்களுக்கு வாக்கு அளிப்பதற்கான உரிமை ; household gods, பற்றுதலுக்குரிய வீட்டுப்பொருள்கள்; household troops, அரசரையும் தலைநகரையும் காக்கும் தனிப்பணிகொண்ட காவற்படைப் பிரிவு ; household word, வீட்டு வழக்கு மொழி, பழஞ்சொல்; குடும்ப வழக்கில் வந்துவிட்ட பெயர்; the Household, அரசர்கள் குடும்பம், அரண்மனை.

house'holder, *n.* தன்வீட்டில் குடியிருக்கும் விட்டுடைமையாளர் ; குடும்பத் தலைவர்.

house'holds, *n. pl.* இரண்டாந்தர மாவு.

house'keeper, *n.* வீட்டைப் பாதுகாப்பதற்காக அமர்த்தப்பட்ட ஆள் ; வீட்டைப் பாதுகாக்கும் பொறுப்புடையவர் ; வீட்டிலேயே பெரிதும் தங்கியிருப்பவர்.

house'keeping, *n.* வீட்டுக் காரியங்களை நடத்தும் பொறுப்பாண்மை ; குடும்பம் நடத்தும் திறமை ; குடும்ப ஆட்சி.

house'leek, *n.* வீட்டுக் கூரைமீது வளரும் கொடி வகை.

house'less, *a.* வீடற்ற, வீடில்லாத, தங்க இடமற்ற.

house'maid, *n.* வீட்டுப் பணிப்பெண், வரவேற்பு படுக்கையமைப்பு முதலியவற்றைக் கவனிப்பவள்; (தொ.) housemaid's knee, பெரும்பாலும் பணிப்பெண்களுக்கு வரும் முழங்கால் அழற்சி நோய்.

house'-mas'ter, *n.* பொதுப் பள்ளிக்கூடத்தோடு இணைந்த மாணவர் விடுதித் தலைவர்.

house'mate, *n.* கூடக் குடியிருப்பவர்.

house'-par'ty, *n.* நாட்டுப்புற வீட்டில் தங்கியிருக்கும் விருந்தினர் குழு.

house'-physi'cian, *n.* = house-surgeon.

house'place, *n.* வீட்டில் பகலில் பயன்படுத்தப்படும் பகுதி.

house'-proud, *a.* வீட்டைப்பேணி அழகுபடுத்துவதில் மிகு ஈடுபாடுடைய ; வீட்டின் நிலைகண்டு பெருமிதம்கொள்கிற.

house'-room, *n.* வீட்டின் இடவசதி ; (தொ.) would not give it house-room, நன்கொடையாகப் பெறுர்.

house'-stew'ard, *n.* பெரிய வீட்டுப்பொறுப்பைக் கவனிக்கும் மேற்பார்வையாளர்.

house'-sur'geon, *n.* மருத்துவ மனையிலேயே தங்கியிருந்து பணிபுரியும் மருத்துவர்.

house'-to-house, *a.* வீட்டுக்கு வீடான, வீடுவீடாகச் சென்று ஆற்றப்படுகிற.

house'-top, *n.* வீட்டுக்கூரை ; (தொ.) proclaim from the house-tops, விளம்பரமாகப் பறைசாற்றிக் கூறு.

house'-warm'ing, *n.* புதுமனை புகுவிழா.

house'wife, *n.* குடும்பத் தலைவி, இல்லாள்; குடும்ப ஆட்சியாளர் ; ஊசி நூல் வைக்கும் உறை.

house'wifery, *n.* குடும்ப ஆட்சி; குடும்பப் பொறுப்பாண்மை.

house'work, *n.* வீட்டுவேலை, வீட்டுக்குரிய பணி.

hous'ing [1], *n.* வீடு, தங்குவதற்கான வசதி, குடியிருப்புவசதி, தங்குமிடம்; வீடளிப்பு, வீட்டு வசதியளிப்பு ஏற்பாடு ; மரத்துண்டு சென்று அடைக்கக்கூடிய துளை ; (தொ.) housing estate, திணையாட்சி நிலையங்களால் கட்டமைக்கப்பட்ட குடியிருப்பு அமைப்புத் தொகுதி; housing scheme, விடு கட்டும் திட்டம்.

hous'ing [2], *n.* குதிரையின்மேல் மறைப்புக்காக அல்லது அழகுக்காகப் போடப்படும் துணி.

hous'ings, *n. pl.* குதிரைச்சேணை அணிமணித் தொகுதி.

Houyh'nhnm, *n.* மனிதப்பண்புள்ளதாகக் கற்பனை செய்யப்படும் குதிரை.

Hov'a, *n.* மடகாஸ்கரில் உள்ள ஆளும் குடிக்குழுவினரில் ஒருவர்.

hove, *v.* heave என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

hov'el, *n.* திறந்த கொட்டில், தொழுவம் ; அழுக்கடைந்த குடில் ; காளவாய் உள்ள கூர்ங்கோணக் கட்டிடம்.

hov'eller, *n.* சட்டப்படி இசைவு பெருத கரையோரப் படகோட்டி ; அரசியல் இணக்கம் பெருது கப்பல் அழிபாட்டை அணுகுபவர் ; சிறு கரையோரப் படகு.

hov'el-post, *n.* தானியக் குவியலைத் தாங்கும் கம்பம்.

hov'er, *n.* அந்தர நிலை, பறவைகளின் சிறகு விரித்து வானில் மிதந்து அமையும் நிலை ; தொங்கல் நிலை ; தயக்க நிலை ; *v.* சிறகு விரித்து வானில் மிதந்தமை, தொங்கல் நிலைகொள்; சுற்றி வட்டமிடு, அருகாக ஊடாடு, சுற்றித் திரி ; தயங்கு, ஊசலாடு.

hov'erplane, *n.* மீவானூர்தி.

how, *n.* செய்வகை, செய்முறை, எவ்வாறவ்வாறு ; *adv.* எப்படி, எவ்வாறு, எவ்வகையில் ; எம்முறையில் ; எவ்வழியாக ; எந்நிலையில் ; எந்த அளவில் ; எந்த அளவுக்கு ; எத்தரத்தில்; *conj.* எப்படி என்று, எவ்வாறவ்வாறு: (தொ.) and how, உறுதியாகவே; உள்ளபடியே; நானும் அவ்வாறே நினைக்கிறேன் ; here's how ! உங்கள் நலத்திற்கு நான் இதை அருந்துகிறேன் ; how are you, how do you do, உங்கள் உடல்நிலை எவ்வாறுள்ளது ; நலந்தானு ; how far, எவ்வளவு தொலை, எதுவரைக்கும்; how is corn ? தானியம் என்ன விலை ; how many, எத்தனை ; how much, எவ்வளவு ; how now, இது என்ன ; ஏன் இவ்வாறு இருக்கிறது ; how so, இப்படி என்று காட்டமுடியுமா ; how's that, (மட்டைப் பந்தாட்டம்) அவர் ஆடலாமா, ஆட்டக்காரர் ஆட்ட உரிமையை இழந்துவிட்டார் என்று தீர்ப்பளிக்கும்படி எதிர்ப்புக்கட்சித் தரப்பினர் நடுவரை வேண்டும் வினுச்சொல் ; the how and the why, காரணமும் வழிவகையும்.

howbe'it, *conj.* எனினும், என்றாலும்.

howda'h, *n.* அம்பாரி, யானைமீது ஒருவர் அல்லது இருவர் உட்காரக்கூடிய மேல்விதானமுள்ள இருக்கை.

howev'er, *adv.* எப்படியாவது, எந்த அளவிலாவது, எவ்வகையிலேனும் ; ஆயினும்.

how'itzer, *n.* குட்டையான பீரங்கிவகை, முற்றுகையிலும் அகழ்ப்போர்களிலும் செங்குத்தான கோணங்களில் தாக்குவதற்குப் பயன்படும் குட்டையான பருத்த துப்பாக்கி வகை.

howl, *n.* ஊளை, நாய் ஓநாய் நரி முதலியவற்றின் கூக்குரல் ; வலி தாங்க முடியாது செய்யும் அலறல்; ஏளனமான கூச்சல்; கம்பியில்லாத் தந்தியில் ஒலி வாங்கும் கருவியில் ஏற்படும் ஓசை ; *v.* ஊளையிடு ; வலியினுல் அலறு ; கூக்குரலிட்டுக் கெக்கலி ; சொற்களை ஊளையிட்டுக்கொண்டே ஒலித்தல் செய்.

howl'er, *n.* தென் அமெரிக்க குரங்கு வகை; (பே-வ.) குதிப்பிடத்தக்க பெரும்பிழை.

howl'et, *n.* (பே-வ.) ஆந்தை, கூகை.

howl'ing, *a.* ஊளையிடுகிற ; அலறுகிற ; கூக்குரலிடுகிற.

howsoev'er, how'soever, *adv.* எவ்வகையான தன்மையிலும், எப்படிப்பட்ட அளவிலாவது.

hoy [1], *n.* குறுந்தொலைப் பாய்மரக் கப்பல் வகை.

hoy [2], *int.* கவனத்தை ஈர்க்கும் விளித்தற்குறிப்பு ; விலங்கு ஊக்குவிளிக்குறிப்பு ; (கப்.) உயர இருப்பவர்களை அழைக்கும் விளிப்புக்குறிப்பு.

hoy'a, *n.* படரும் பல்வண்ண மலர்ச்செடி வகை.

hoy'den, *n.* ஆண்பிள்ளை போல் நடக்கும் பெண், துடுக்காரவாரப் பெண்.

hub [1], *n.* வண்டிச்சக்கரத்தின் குடம் ; சக்கரத்தில் அச்சைப் பொருத்துமிடம் ; முக்கிய மையம், கருத்தீர்க்கும் மையச் செய்தி ; (தொ.) hub of the universe, அமெரிக்காவில் பாஸ்டன் (Boston) நகரம்.

hub [2], *n.* (பே-வ.) கணவர், துணைவர்.

**hub'ble-bubble**, *n.* புகைக்குழாய் வகை ; குமிழி ஒலி ; குழப்பமான பேச்சொலி ; உளறல் பேச்சு.

**hub'-brake**, *n.* குடத்தடுக்குப் பொறி, வண்டிச் சக்கரத்தின் அச்சின் சுழற்சியைத் தடைசெய்யும் சக்கரத்தடுக்கு.

**hubb'ub, hubb'uboo**, *n.* குழப்பம், கலகம், ஆரவாரம் ; போரில் ஏற்படும் குழப்பமான கூக்குரலொலி.

**hubb'y**, *n.* = hub [2].

***hub'ris***, (கிரே.) *n.* அவமதிப்பான தற்பெருமை, துடுக்கான இறுமாப்பு.

**huck'aback**, *n.* மேல்துண்டுகளுக்குப் பயன்படும் தடித்த நார்த்துணி.

**huc'kle**, *n.* இடுப்பு, இடைபிட்டம், தொடை.

**huck'le-back**, *n.* கூன்.

**huck'le-backed**, *a.* கூனிய முதுகுடைய.

**huc'kleberry**, *n.* தென் அமெரிக்க புதர்ச்செடிகளில் காணப் படும் பழ வகை.

**huckle'-bone**, *n.* இடுப்பு எலும்பு ; தொடை எலும்பு ; விலங்குகளின் தொடை எலும்பு.

**huck'ster**, *n.* திரிந்து விற்பவர், கூவி விற்பவர் ; சிறு வணிகர் ; பணமே குறிக்கொண்ட பணியாளர் ; *v.* பேரம் பேசு ; சிறு அளவில் வாணிகம் செய் ; கீழ்த்தரக் கலப்புச் செய் ; கலந்து கெடு, கீழ்த்தரப்படுத்து.

**hud'dle**, *n.* கதம்பக் குவியல் ; குவியற் கூளம் ; குழப்பம் ; ஆரவாரம் ; பரபரப்பு, அவசரம் ; மறைகுழுக் கூட்டம் ; *v.* தாறுமாறாகக் குவி, ஒழுங்கின்றிக் கொட்டு ; அவசரப்படுத்து, பரபரப்புக்காட்டு ; பரபரப்பாகப் பணிசெய் ; அவசர அவசர மாகச் சுருட்டிக்கட்டு ; கும்பலில் குழப்பம் உண்டுபண்ணு ; ஆத்திரமாகத் தூக்கிப்போடு ; சுருட்டி மடக்கிக்கொள் ; அரைகுறையாக வேலைசெய் ; அடர்ந்து நெருங்கி அமர்.

**hudd'led**, *a.* நெருங்கிய ; குவியலான ; ஒழுங்கின்றிச் சேர்ந்த ; தாழக் குனிந்து கெஞ்சுகிற.

**Hudibras'tic**, *a.* பட்லர் (Butler 1612-1680) என்பவரின் ஹ்யூடிப்ராஸ் (Hudibras) என்ற வசைக்காப்பியத்தின் யாப் பமைப்புமுறை சார்ந்த.

**hue** [1], *n.* வண்ணம் ; தோற்றம் ; சாயல் ; நிறக் கலவை ; ஒரு நிறத்தோடு பிறிதொன்றைச் சேர்ப்பதால் ஏற்படும் வேறொரு நிறம்.

**hue** [2], *n.* கூக்குரல், கூப்பாடு ; (தொ.) hue and cry, பின் தொடர்ந்து இடும் ஆரவாரம் ; அச்சத்தாலிடும் கூப்பாடு, எதிரியை அல்லது குற்றவாளியைப் பிடிக்குமாறு எழுப்பும் கூக்குரல்.

**huff**, *n.* கோபநிலை, வெடுவெடுப்பு ; (சதுரங்க ஆட்டத்தில்) ஆட்ட உரிமை இழந்துவிட்டதாக எதிரியின் ஆளை ஆட்டத் தினின்று விலக்குதல் ; *v.* கொடுமைப்படுத்து, அடக்கியாளு ; சீறு, தாக்கு ; சினமுறச் செய் ; வெறுப்புறச் செய் ; கோபப் படு ; (சதுரங்க ஆட்டத்தில்) ஆட்ட உரிமை இழந்துவிட்ட தாக எதிரியின் ஆளை ஆட்டத்தினின்று விலக்கு.

**huff'ish, huff'y**, *a.* கோபிக்கிற, வெடுவெடுக்கிற, சீறுகிற ; சிடுசிடுப்பான ; எதையும் குற்றமாக எடுத்துக் கொள்கிற.

**hug**, *n.* அணைப்பு, இறுகத் தழுவுதல் ; மற்போரில் பிடிவகை ; *v.* அன்போடு இறுகத்தழுவு, ஆர்வத்தோடு அணை, கட்டித் தழுவு, கரடி வகையில் முன்னங்கால்களுக்கிடையே வைத்து அழுக்கு ; மனத்தில் பற்றிப் பிடித்துக்கொள் ; அன்பாதரவை வெளிக்காட்டு ; வாழ்த்துக்கூறு ; கரையோரமாயிரு ; (தொ.) hug oneself, தன்னைத்தானே மெச்சிக்கொள்.

**huge**, *a.* மிகப் பெரிய ; மாபேரளவான ; மிகச்சிறந்த.

**huge'ly**, *adv.* மிகப்பேரளவில்.

**hu'geous**, *a.* (பே-வ.) மிகப்பெரிய.

**hugg'er-mugg'er**, *n.* இரகசியம், மர்மம், ஒளிவு மறைவு, குழப்பம் ; *a.* இரகசியமான, ஒளிவு மறைவான ; குழப்ப மான ; *v.* மறை ; குழப்பு, வெளியாகாது அடக்கு, மறை வாகச் செய், அடக்கமாக முன்னேறு ; *adv.* குழப்பத்தில், இரகசியமாக, ஒளிவு மறைவாக.

**hugg'ery**, *n.* ஆதரவு நாடிய பசப்பு, வழக்குரைஞர் முதலி யோர் வகையில் தொழில் வாடிக்கை நாடிப் பசப்பி வசப் படுத்தும் முயற்சி.

**hug'-me-tight**, *n.* உடம்போடு ஒட்டிய கம்பளி ஆடைவகை.

**hug'uenot**, *n.* (வர.) கத்தோலிக்க மதத்திலிருந்து பிரிந்த முனைத்த சீர்திருத்தக் கிறித்தவமதக் கொள்கையுடைய பிரஞ் சுக்காரர்.

**hul'a**, *n.* ஹவாய் (Hawaii) நாட்டுப் பெண்ணின் நடனம்.

**hulk**, *n.* கரையோரச் சரக்குக் கிடங்காய்ப் பயன்படுத்தப்படும் உடைந்த கப்பலின் உடற்பகுதி ; எளிதில் கையாள முடியாத பளுவான கப்பல் ; மிகத் தடித்த மனிதர் ; பருமனான பொருள்.

**hul'king**, *a.* பருமனான ; அருவருப்பான.

**hulks**, *n. pl.* சிறைக்கூடமாகப் பயன்படும் உடைந்த கப்ப லின் உடற்பகுதி.

**hull** [1], *n.* உமி, தோடு, காய் கூல வகைகளின் மேல்தோல், மூடி, மேலுறை ; *v.* மேல் தோல் நீக்கு, உமி நீக்கு.

**hull** [2], *n.* கப்பலின் கட்டுமானம், கப்பல் உடற்பகுதி ; *v.* நீர்மூழ்கிக்குண்டு கொண்டு கப்பலின் உடற்பகுதியைத் தாக்கு.

**hullabaloo'**, *n.* குழப்பம், அமளி, ஆரவாரப் பேரொலி, கூச்சல்.

**hull'-down'**, *adv.* கப்பலின் உடற்பகுதி அடிவானத்திற்குக் கீழ்ப்புறமாகும்படி மிகத் தொலைவில் உள்ள நிலையில்.

**hullo', hull'oa**, *int.* வியப்பொலி, கவனத்தை ஈர்க்கும் குறிப்பொலி ; தொலைபேசியில் அழைப்பிற்குரிய பதிலொலி.

**hull'y**, *a.* உமி உடைய, மேற்றோலுடைய.

**hum** [1], *n.* முரல் ஒலி ; முனங்கொலி, மந்த ஓசை ; *v.* முரலு ; தாழ்ந்த குரலில் பாடு ; மந்த ஓசையில் வாய்திறவாது பாடு ; முனங்கு ; தயக்கத்தைக் காட்ட மெல்லிய குரலில் புரியாத படி கூறு ; (தொ.) hum and ha, hum and haw, இன்னது சொல்வது என்று அறியாத நிலையில் தயக்கத்தைக் காட்ட தெளிவற்ற ஒலி எழுப்பு ; make things hum, சுறுசுறுப்பாக இயங்க வை.

**hum** [2], *int.* தயக்கம் கருத்து வேறுபாடு இவற்றைக் காட்டும் ஒலிக்குறிப்பு.

**huma**, *n.* ஓய்வின்றித் திரிவதாகக் கதைகளில் கூறப்படும் பறவை.

**hum'an**, *a.* மனிதனுக்குரிய ; மனிதத் தன்மையுடைய ; மனி தப் பண்புகளைப் பெற்றிருக்கிற ; (தொ.) human nature, மனிதப் பண்பு, மனித இயல்பு.

**humane'**, *a.* இரக்கமுள்ள ; கொடைத்தன்மையுள்ள ; பண்பு நயமுடைய ; கலைத்துறை வகையில் பண்புநயம் பயிற்றுவிக் கிற ; (தொ.) humane killer, கால்நடைகளை நோவின்றிக் கொல்லும் கருவி ; humane society, நீரில் மூழ்கியவர்களைக் காப்பாற்றும் சங்கம்.

**hum'anism**, *n.* மனித இனநலக் கோட்பாடு ; மனித உலக வாழ்க்கை இயல் ; மனிதப் பொதுமைநல இயல் ; மனித இனப் பொதுச்சமய அமைதி ; மனித இன இயற் பண்பாய் வுத் துறை ; பண்டைக்கிரேக்க ரோமக்கலை இலக்கியப் பண்பு.

**hum'anist**, *n.* மனித இன இயற்பண்பாய்வாளர், மனிதப் பண்பாட்டியல் மாணவர் ; பண்டைக் கிரேக்க ரோமக் கலை இலக்கியப்பண்பாய்வாளர் ; கிரேக்க ரோமக்கலைப் பழங்கலை மாணவர் ; மனித இனநலக் கோட்பாட்டாதரவாளர்.

**humanitar'ian**, *n.* மனிதப் பண்புடையவர் ; மனித இன நலப் பற்றுடையவர் ; கனவியல் அறச்சிந்தனையாளர் ; அரு ளிரக்கப் பண்புடையவர் ; மனித இனப்பொதுச்சமய அமைதி யாளர் ; இயேசுநாதரை மனிதப் பண்புடையவராக மட்டுமே கொள்பவர் ; *a.* கனவியல் அறச்சிந்தனையுடைய, அருளிரக்கப் பண்புடைய ; மனிதஇனப் பொதுச்சமய அமைதியுடைய ; மனிதப் பண்புடைய ; மனித இனநலப் பற்றுடைய.

**human'ities**, *n. pl.* உயர்மனிதப் பண்புகள்; அருளிரக்கச் செயல்கள்; (தொ.) the humanities, பண்டைக்கிரேக்க ரோம இலக்கண இலக்கியக் கலைப்பயிற்சி; உயர்புலமை.

**human'ity**, *n.* மன்பதை, மனித இனம்; மனித இயல்பு, மனிதத்தன்மை; மனிதப் பண்பு; அருளிரக்கம், அன்பு; அற ஆர்வச் செய்கைகள்; (தொ.) Religion of Humanity, இயற்கை கடந்த பண்புகளை மறுத்த மனிதநல முன்னேற்றக் கோட்பாடு.

**hum'anize**, *v.* மனிதனுக்கு, மனிதப் பண்பூட்டு; மனிதத் தன்மையடையச் செய்; இரக்கமுடையவனுக்கு, அருளுடையவனுக்கு; மனிதனாகு, மனிதப் பண்புடையவராகு; பால் வகையில் தாய்ப்பாலின் பண்புடையதாக்கு; (தொ.) humanized milk, தாய்ப்பாலை ஒத்திருக்கும்படி செய்யப் பட்ட ஆவின்பால்.

**hum'ankind**, *n.* மனித இனம்.

**hum'anly**, *adv.* மனிதத்தன்மையோடு; மனித முயற்சியளவில்; மனித உணர்ச்சியுடன்; மனித நோக்குடன்.

**hum'ble**, *a.* பணிவான, தாழ்மையுள்ள; தாழ்நிலையிலுள்ள; தற்பெருமையற்ற; அடக்கமுள்ள; பகட்டற்ற; பொது நிலைப்பட்ட; *v.* தாழ்வுபடுத்து, செருக்குக் குலை, இழிவு படுத்து; (தொ.) eat humble pie, பணிந்து மன்னிப்புக் கோரு; அவமதிப்பை ஏற்றுக்கொள்; Humble Plant, 'தொட்டால் சிணுங்கி', தொட்டால் சுருங்கும் செடிவகை.

**hum'ble-bee**, *n.* கோத்தும்பி, பெரிய வண்டு வகை.

**hum'bug**, *n.* மோசடி; ஏய்ப்பு; கள்ளத்தனம்; பாசாங்குக் காரன்; ஏமாற்றுபவன், முறுகலான இனிப்புப்பண்ட வகை; *v.* ஏமாற்று; மோசடி செய்; பசப்பி ஏய்; போலியாக நடந்து கொள்; விட்டுவிட்டு விரை வேலைசெய்.

**hum'drum**, *n.* யாவரும் அறிந்த தன்மை; கவர்ச்சியற்ற நிலை, உவர்ப்பு நிலை; *a.* யாவரும் அறிந்த; சுவையற்ற; சலிப்பூட்டுகிற; மழுங்கலான; கூரறிவற்ற; *v.* கவர்ச்சியற்ற முறையில் செயலாற்று.

**hum'eral**, *n.* தலைவழிபாட்டின்போது குருமார் தோளைச் சுற்றிலும் அணிகிற நீள்வட்டமான பட்டுச்சவுக்கம்; *a.* தலைவழிபாட்டின்போது குருமார் அணிகிற; (தொ.) humeral veil, குருமார் தலைவழிபாட்டின்போது அணிகிற பட்டுச்சவுக்கம்.

**hum'erus**, *n.* மனித உடலில் கையின் மேற்புற எலும்பு; முதுகெலும்புடைய விலங்குகளின் முன்கால் மேற்புற எலும்பு.

**hum'id**, *a.* ஈரமான, ஈரக் கசிவான.

**humid'ify**, *v.* ஈர நயப்பூட்டு.

**humid'ity**, *n.* ஈரம், நீர்நயப்பு.

**humil'iate**, *v.* மதிப்பிழக்கும்படிச் செய், மானமிழக்கும்படிச் செய், செருக்குக்குலை; தாழ்வுபடுத்து, கீழ்ப்படுத்து; பிறர் தன்மதிப்புக்கு ஊறுபாடு செய்; துன்புறுத்து, அழுங்குவி.

**humil'ity**, *n.* பணிவு, தாழ்வுணர்ச்சி; அடக்கம், அமைவு, அமரிக்கை; தாழ்ந்தநிலை.

**humm'er**, *n.* வாய்திறவாது மென்மையாகப் பாடலை முனகுபவர்; முனகல் ஓசை எழுப்புபவர்; முரலும் வண்டு; மந்த ஓசையெழுப்பும் பறவை.

**humm'ing**, *a.* முரலுகிற; முனகுகிற; வாய்க்குள்ளாகப் பாடுகிற; (பே-வ.) ஊக்கமான, கிளர்ச்சிமிக்க; (தொ.) humming ale, புளித்துப் பொங்கி ஓசை எழுப்பும் காடியேறிய தேறல் வகை; humming knock on the head, தலையில் வலிமைவாய்ந்த குட்டு.

**humm'ing-bird**, *n.* சிறகடிப்பதன்முலம் பொம்மெனும் ஒலி எழுப்புகின்ற சிறு பறவை வகை.

**humm'ing-top**, *n.* சுழலும்போது பொம்மெனும் முரல் வோசை எழுப்பும் பம்பர வகை.

**humm'ock**, *n.* சிறு குன்று; மேடு; திடர்; தேரி; சதுப்பு நிலத்தில் உயர்ந்து செல்லும் நிலம்; பனிக்கட்டிப்பரப்பில் இடைகரை; பனிக்கட்டிக் குவியல்.

**hum'oral**, *a.* (மரு.) உடம்பின் தாதுக்களைச் சார்ந்த; (தொ.) humoral pathology, எல்லா நோயும் உடம்பிலுள்ள நீரியலான தாதுக்களின் நிலை சார்ந்ததெனக் கருதின முற்கால மருத்துவக் கோட்பாடு.

**hum'oralism**, *n.* உடலில் நீர்க்கசிவுப் பொருள்களுள்ள நிலை; உடலின் நீரியல் தாதுக்களின் நிலை சார்ந்தே நோய்கள் தோன்றுகின்றன என்னுங் கோட்பாடு.

**hu'moralist**, *n.* உடலின் நீரியல் தாதுப்பொருள்களின் நிலைகளினாலேயே நோய்கள் தோன்றுகின்றன என்னுங் கோட்பாட்டை ஆதரிப்பவர்.

**hum'orist**, *n.* நகைத்திறமுடையோன், நகைச்சுவையுணர்வுடையவர்; நகைத்திறப் பேச்சாளர்; நகைத்திற எழுத்தாளர்; நகைத்திற நடிகர்; நகைத்திறமூட்டும் பேச்சு நடையாளர்; தனித்திறப் போக்குடையவர்; மக்கள் போக்குகளில் ஈடுபட்டு ஆய்பவர்.

**hum'orous**, *a.* நகைத்திறத்தால் தூண்டப்பட்ட; நகையாடி மகிழ்வுறுவதற்குரிய; நகைத்திறம் நிரம்பிய; சிரிப்பூட்டுகின்ற, கேலிக்குரிய; தனிப்போக்கான; மனம்போன போக்கான; ஏறுமாறான.

**hum'our**, *n.* நகைச்சுவை; நகைச்சுவை காணும் திறன்; நகை ஏளனத்திறன்; ஈரம், நீர்க்கசிவு; நீர்ப்பொருள்; தாது, உயிரின உடற் கசிவுப்பொருள்; விருப்புவெறுப்புக் கூறு; வேடிக்கைக் கற்பனை; விளையாட்டான புனைவாற்றல்; குறும்பு; மனநிலை; மனப்போக்கு; மனவிருப்பம்; நாட்டம்; மனச் சாய்வு; *v.* இசையச் செய்; இணக்கமாக்கு; மனநிறைவு செய், உணர்ச்சியுடன் ஒத்திழைந்து மன நிறைவூட்டு; மகிழச் செய்; விட்டுக் கொடு, சலுகையளி; இடங் கொடு; (தொ.) aqueous humours, vitreous humours, ஒளியூடுருவும் திறமுள்ள நீரியலான கண்ணின் பகுதி; cardinal humours, உடல் அல்லது மன இயல்புகளைத் தீர்மானிப்பதாக முற்காலங்களில் கொள்ளப்பட்ட குருதி கோழை பித்தம் சோர்வு என்ற உடலின் நான்கு முக்கிய நீர்மப் பொருள்கள்; comedy of humours, தனிப்பட்ட குண இயல்புகளைப் பாத்திரங்களாகக் கொண்ட நாடகம்; good humour, மகிழ்வோடுள்ள மனநிலை; ill humour, மகிழ்வற்ற மனோநிலை; out of humour, மனநிலை மாறிய, சினமுள்ள, சினமூட்டப்பட்ட, வெறுப்போடு கூடிய.

**hum'oursome**, *a.* மனம்போன போக்கில் செல்கிற; உள்ளம் ஒரு நிலையற்ற; தனிப்போக்குடைய; சிடுசிடுப்பான.

**hump**, *n.* கூன், முதுகிலுள்ள இயற்கையான முனைப்பு; ஒட்டகத்தின் திமில்; நிலத்தின் குவி முனைப்பு; *v.* கூனல் வடிவாக்கு; தொந்தரவு செய், ஊக்கமழி, சோர்வூட்டு.

**hump'back**, *n.* கூனல் முதுகு; கூனுடையவர், கூனன், கூனி; *a.* கூனல் முதுகுடைய.

**hump'backed**, *a.* கூனிய, முதுகுகூனலுள்ள.

**humped**, *a.* கூனுடைய.

**humph**, *v.* ஐயம் தெரிவி, மனக்குறைபாட்டைத் தெரிவி; *int.* ஐய ஒலிச்சொல், வெறுப்பொலிச் சொல்.

**hump'ty-dump'ty**, *n.* விழுந்தால் எழுந்திருக்க முடியாதபடி தடித்துக் குறுகியவர்.

**hump'y** [1], *a.* முதுகுப் புடைப்புகள் நிறைந்துள்ள.

**hum'py** [2], *n.* ஆஸ்திரேலிய (Australian) நாட்டுக் குடிசை.

**hum'us**, *n.* இலை தழை மக்கிய சத்துள்ள தோட்டமண்.

**Hun**, *n.* ஊணர், 4-ஆம் 5-ஆம் நூற்றாண்டுகளில் ஐரோப்பாவைப் படையெடுத்துக் கொள்ளையடித்த ஆசிய நாடோடி இனம்; இழி வழக்காற்றில் செர்மானியர்.

**hunch**, *n.* முதுகுப்புடைப்பு, கூன்; தடித்த திரளை; *v.* புறங்கவிந்து வளை, கூனுண்டாகும்படி புறங்கவி.

**hunch'back**, *n.*=humpback.

**hunch'backed**, *a.*=humpbacked.

**hun'dred**, *n.* நூறு; பெருந்தொகை; நூறன் தொகுதி; கூற்றம், வட்டம், இங்கிலாந்து நாட்டின் சிறுதிற உட்பிரிவு; நூறு பொன்; நூறு வெள்ளி; *a.* நூறான, நூறு மடங்கான;

(பே-வ.) நூறுவதான; (தொ.) great hundred, long hundred, நூற்றி இருபது; Hundred Years' War, இங்கிலாந்திற்கும் பிரான்சுக்கும் இடையே (1337-1453) நடைபெற்ற நூற்றுண்டுப் போர்; not a hundred miles from, அருகாமையில்.

**hun'dredfold,** *a.* நூறுமடங்கான; நூறு உட்பிரிவுகள் கொண்ட; நூறு முறை மடிக்கப்பட்ட.

**hun'dred-per-cent',** *a.* முழு நிறைவான.

**hun'dred-per-cent'er,** *n.* விட்டுக்கொடுக்காத தேசபக்தர், தளர்வுறு நாட்டுப் பற்றுளர்.

**hun'dreds-and-thou'sands,** *n. pl.* அழகொப்பனையாகப் பயன்படுத்தப்படும் சிறு இனிப்புப்பண்டங்கள்.

**hun'dredth,** *n.* நூறு சமப்பகுதிகளில் ஒன்று; *a.* நூறுவதான, நூறில் கடைசியான; நூறு சமப்பகுதிகளில் ஒன்றுன.

**hun'dredweight,** *n.* நிறையளவுப் பேரெல்லைக் கூறு, பாரத்தில் இருபதில் ஒரு பகுதி, 112 கல் எடை.

**hung,** *v.* hang[1] என்பதன் இறந்தகால முற்றெச்ச வடிவம்.

**hung'-beef,** *n.* மாட்டிறைச்சியின் உப்புக்கண்டம்.

**hung'er,** *n.* பசி, பசியினுல் ஏற்படும் களைப்பு; பெருவேட்கை, வேணவா; அமைவின்மை, அவாத்துடிப்பு; *v.* பசிகொள், உணவார்வம் கொள்; ஆர்வத்துடன் நாடு, வேணவாக் கொள்; பட்டினிபோடு, உணவுமறு.

**hung'er-march,** *n.* பசி ஊர்வலம், வறுமைநிலையைத் தலைவர் கவனத்துக்குக் கொண்டு வருவதற்கான வேலையற்றோர் அணிவகுப்பு.

**hun'ger-strike,** *n.* சிறைப்பட்டவர்கள் தம் விடுதலைக்காக மேற்கொள்ளும் உண்ணுநோன்பு.

**hun'gry,** *a.* பசித்திருக்கின்ற; பசித் தோற்றமளிக்கின்ற; பசியை உண்டாக்குகிற; ஆர்வமிக்க, பேராசையுள்ள; வளமற்ற, வறண்ட, கட்டாந்தரையான; (தொ.) Hungry Forties, (வர.) இங்கிலாந்தின் 1840-49 ஆண்டு வற்கடம்.

**hunk,** *n.* தடி, வெட்டப்பட்ட பெருந்துண்டு; கோணல்மாணலான துண்டு; முதுகுப்புடைப்பு, கூன்.

**hunk'ers,** *n. pl.* பிட்டம்; (தொ.) on one's hunkers, குந்திக் கொண்டுள்ள நிலையில்.

**hunks,** *n.* கஞ்சன்.

**Hunn'ic, Hunn'ish,** *a.* ஐரோப்பிய நாடோடிக் கொள்ளையினத்தைச் சார்ந்த.

**hunt,** *n.* வேட்டை; வேட்டை நாய்களுடன்கூடிய வேட்டைக் குழு; வேட்டையாடுவதற்குரிய வட்டாரம்; பின்துரத்து முயற்சி; தேட்டம், தேடியலையும் முயற்சி; *v.* வேட்டையாடு; வேட்டைக்குச் செல்; வீர விளையாட்டுநாடி வேட்டம் பயில்; உணவுக்காக வேட்டை மேற்கொள்; இரைநாடி வேட்டைக் கெழு; துரத்திச் செல்; பின்தொடர்; துரத்தியடி; துருவித் தேடு; வேட்டைக் காட்டைத் துருவிக்கலை; வேட்டையில் குதிரைகளைப் பயன்படுத்து; வேட்டையில் நாய்களை ஈடுபடுத்து; (தொ.) hunt after, தேடு, அடைய முயற்சி செய்; hunt ball, வேட்டையில் ஈடுபட்டவர்களின் நடன நிகழ்ச்சி; hunt counter, வேட்டை மோப்பத்தைப் பின்னேக்கித் தொடர்ந்து செல்; hunt down, கடைசி வரை பின்தொடர்ந்து செல்; hunt in couples, சோடி நாய்களுடன் வேட்டையாடு; hunt out, தேடிப்பிடி; hunt the letter, செயற்கையாக மோனை அணிபயில்; hunt up, தேடிக் கண்டுபிடி.

**hun'ter,** *n.* வேடன், வேட்டையாடுபவன்; வேட்டையாடுவதற்குப் பயன்படும் குதிரை; கீலோடு கூடிய உலோக முகப்பு மேன்மூடியுள்ள கைக்கடிகாரம்; (தொ.) hunters' moon, அறுவடை நிலவிற்குப் பின்னைய நிறைமதியம்.

**hun'ting,** *n.* வேட்டையாடுதல்; வேட்டை; *a.* வேட்டையாடுகிற; வேட்டைக்குப் பயன்படுகிற; (தொ.) happy hunting grounds, அமெரிக்காவிலுள்ள 'சிவப்பு இந்தியர்களின்' துறக்க உலகம்; hunting mass, பொறுமையற்ற வேட்டையாளர்களுக்கான விரைவழிபாடு.

**hunt'ing-box,** *n.* வேட்டையாடுவதற்குரிய தற்காலிகமான இருப்பிடம்.

**hunt'ing-cog,** *n.* இணைந்து சுழலும் பற்சக்கரங்களிரண்டில் ஒன்றில் மட்டும் மிகுதிப்படியாகவுள்ள ஒருபல்.

**hunt'ing-crop,** *n.* வேட்டைக்களத்தில் பயன்படுத்தப்படும் கசை.

**hunt'ing-field,** *n.* வேட்டைக்களம்; நரிவேட்டைக்களம்; வேட்டையாளர்களின் கூட்டத் தொகுதி.

**hunt'ing-ground,** *n.* வேட்டைக்களம்

**hunt'ing-horn,** *n.* தாரை, வேட்டைக் கொம்பு; பக்கச் சேணத்தில் அண்மைப்பகுதியிலுள்ள இரண்டாவது புடைப்புக்குமிழ்.

**hunt'ing-song,** *n.* வேட்டைப் பாட்டு; வேட்டையைப் பற்றிய பாட்டு.

**hunt'ing-tide,** *n.* வேட்டைப் பருவம்.

**hun'tress,** *n.* வேட்டையாடும் பெண்.

**hunts'man,** *n.* வேட்டையாடுபவன்; வேட்டையாளன்; வேட்டையாடும்போது வேட்டை நாய்களைப் பேணிக் காக்கும் பணியாள்.

**hunts'manship,** *n.* வேட்டைத் திறலாண்மை.

**hunt-the-slipp'er,** *n.* மிதியடி வேட்டை, கைவிட்டுக் கைமாற்றி அனுப்பிக் கொண்டிருக்கும் செருப்பை வட்டத்திற் குள்ளிருப்பவர் பிடிக்கமுயலும் ஆட்டவகை.

**hur'dle,** *n.* இடையீட்டுத் தடைவேலி; பந்தயத்தில் தாண்டிச் செல்வதற்குரிய தடுப்புச் சட்டம்; துரோகிகளைத் தூக்கிலிட இழுத்துச் செல்லும் மரச்சட்டம்; *v.* மரச்சட்டங்களால் வேலியிடு; தடையிடர்களைச் சுற்றிலும் அமை; தடைச்சட்டத்தின் மீது தாவிக் குதி; இடையீட்டுத் தடைச்சட்ட ஓட்டப்பந்தயத்தில் கலந்தாடு.

**hurd'ler,** *n.* நீள்சதுர மரச்சட்டங்களைச் செய்பவன்; இடர் இடையீட்டு ஓட்டப் பந்தயங்களில் ஓடுபவன்.

**hur'dle-race,** *n.*, **hur'dles,** *n. pl.* தடைதாவல் ஓட்டப் பந்தயம், இடையீட்டுத் தடைச்சட்டங்களைத் தாண்டிச் செல்லும் ஓட்டப் பந்தயம்.

**hurd'y-gurdy,** *n.* கைப்பிடியைச் சுற்றி இயக்கும் இசைப் பெட்டி வகை; தெருவில் பாடுவதற்கான இசைப்பெட்டி வகை.

**hurl,** *n.* எறிவு, சுழல் வீச்சு; *v.* வீசி எறி, தூக்கி எறி, சுழற்றி வீசு.

**hurl'ey,** *n.* அயர்லாந்தின் வளைகோல் பந்தாட்ட வகை; பந்தாட்டத்துக்குரிய வளைகோல்.

**Hurl'ingham,** *n.* செண்டாட்டக் கழகத்தின் தலைமை அலுவலகம்.

**hurl'y-burl'y,** *n.* குழப்பம், கொந்தளிப்பு, சந்தடி, கலக்கம்.

**hurrah', hurray',** *n.* மிகு மகிழ்ச்சி; ஆதரவான மகிழ்ச்சியொலி; *v.* மகிழ்ச்சிக் குரல் எழுப்பு; *int.* மிகு மகிழ்ச்சிக் குறிப்பு, ஆதரவு விளிக் குறிப்பு.

**hu'rricane,** *n.* சூருவளி, புயற்காற்று; மேலை இந்தியத் தீவுகளுக்குரிய சுழல் காற்று; கொந்தளிப்பான செய்தி.

**hu'rricane-bird,** *n.* கப்பற் பறவை.

**hu'rricane-deck,** *n.* கப்பலின் சிறிய அரைத்தளமேடை.

**hu'rricane-lamp,** *n.* கூண்டு விளக்கு, வன்காற்றைத் தாங்க வல்ல விளக்குவகை.

**hu'rry,** *n.* மிகுவிரைவு, மிகுவிரைவில் முடிக்க வேண்டுமென்ற படபடப்பு; விரைவூக்கம்; பரபரப்பு; மிகையார்வம்; கலவரம்; கூட்ட நெருக்கடி; அவசரத்துக்குரிய தேவை; *v.* பரபரப்புக் கொள்; தேவையற்ற விரைவுகாட்டு; படபடப்புடன் செயலாற்று; விரைந்து இட்டுச்செல்; அதிரடி செய்து தூண்டு; விரைவுபடுத்து; (தொ.) hurry up, விரைவு செய்; in a hurry, மிகவிரைவில்; மிக எளிதாக, மனப்பூர விரும்பி.

**hu'rry-scu'rry,** *n.* குழப்ப அவசரம்; *v.* குழம்பி அவசரப்படு; *adv.* அவசரக்கோலமாய்.

**hurst**, *n.* குன்றுமேடு; ஆறு கடலிடையேயுள்ள மணல்திடல்; காடடர்ந்த மேடு; காடு.

**hurt**, *n.* ஊறு, காயம்; நோவு, தீங்கு, கேடு; *v.* ஊறுபாடு உண்டுபண்ணு; நோவூட்டு, கேடுசெய்; தீங்கிழை; துன்புறுத்து, வருத்தம் உண்டுபண்ணு; ஊறுசெய்.

**hurt'ful**, *a.* நோவு உண்டுபண்ணுகிற; ஊறுபாடு செய்கிற; கேடான, இழப்பு உண்டுபண்ணுகிற.

**hur'tle**, *n.* மோதொலி; சடசடவென்ற ஒலி; *v.* மோது; வீசி எறி; சடாரென்று தகர்வுறு; சடசடவென்ற ஒலியுடன் செல்.

**hurt'less**, *a.* ஊறு விளைவிக்காத; தீங்கிழைக்காத; தீங்கற்ற.

**hus'band**, *n.* கணவன், அகமுடையான்; செயலாட்சியாளர்; சிக்கன ஆட்சியாளர்; மேலாளர்; *v.* சிக்கனமாகக் கையாளு; மேலாட்சி செய்; கணவனைத் தேடிக்கொடு; கணவனுக இயங்கு; நிலத்தைப் பண்படுத்து.

**hus'bandman**, *n.* உழவர்.

**hus'bandry**, *n.* வேளாண்மை, உழவர் வேலை; நிலம் பண்படுத்தும் தொழில்; சிக்கன ஆட்சி; கவனிப்பு மிக்க மேலாட்சி.

**hush**, *n.* சந்தடியின்மை, ஓசை நீங்கிய அமைதி; நீர்ப் பாய்ச்சல்; நீர்ப்பாய்ச்சலின் இரைச்சல்; மேலரிப்பு; அடிநிலப் பாறை தெரியுமளவு மேற்பரப்பிலுள்ள மண்ணை நீர் அலசிவிடல்; *a.* சந்தடியற்ற, அமைதியான; *v.* சந்தடியடக்கு; அமைதிப்படுத்து; பேசாதிரு, ஓசையடங்கியிரு.

**hush'-money**, *n.* வாய்முட்டுக்காசு, மறைவுச் செய்தியைப் புறந்தெரியாதடக்கிவைப்பதற்காகக் கொடுக்கப்படும் பணம்.

**hush'-ship**, *n.* மறைகட்டுப் பெட்டிக் கப்பல், தொலைவாற்றல் மிக்க பீரங்கியுடன் மிகுவிரைவும் நீளமும் உடையதாகப் புறந்தெரியா மறைகட்டுமானமுடைய கப்பல்.

**husk**, *n.* உமி, வித்துக்களின் புறத்தோடு, புறத்தோல்; மீந்தோல்; உமிபோன்ற இயல்புடையது; சப்புச்சவறு; மோசமான பொருள்; பயனற்ற பொருள்; ஒட்டுணியால் கால்நடைகளுக்கு வரும் தொண்டை நோய் வகை; *v.* உமிபோக்கு; மேல்தோடு அப்புறப்படுத்து.

**hus'ky**[1], *n.* உடலுரமுடையவர், திடமமைந்த உடல்வாய்ந்தவர்; *a.* உமிசார்ந்த; உமியாலான; உமிநிரம்பிய; உமிபோன்ற; உலர்ந்த; கம்மிய, குரல்கட்டிய; ஒலியெழாத, கரகரப்பான; திடமான, உடலுரம் வாய்ந்த.

**hus'ky**[2], *n.* வடதுருவத்தை அடுத்த எஸ்கிமோ இனத்தவர் நாட்டு நாய்வகை.

**Hus'ky**[3], *n.* வடதுருவத்தை யடுத்த பகுதியில் வாழும் எஸ்கிமோ இனத்தவர் மொழி; எஸ்கிமோ இனத்தவர்.

**hussar'**, *n.* பளுவற்ற படைக்கலந் தாங்கிய குதிரைப்படை வீரர்.

**Huss'ite**, *n.* பொஹீமியா (Bohemia) நாட்டில் 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஜான் ஹஸ் (John Huss) என்ற முனைத்த சமய சீர்திருத்தத் தலைவரைப் பின்பற்றுபவர்.

**huss'y**, *n.* அடிச்சேரியாள்; துடுக்குக்காரி.

**hus'tings**, *n.* தேர்தல் நடவடிக்கைகள்; லண்டன் மாநகர வழக்கு மன்றம்; முற்காலத்தில் சட்ட மாமன்ற உறுப்பினர் அமர்வு அறிவிக்கப்பட்ட மேடை.

**hu'stle**, *n.* பரபரப்பு, நெருக்கடி ஆரவாரம்; *v.* நெருக்கு, உந்தித்தள்ளு; தள்ளு; விரைந்து திணி; குலுக்கு, ஆட்டி அலட்டு; வலிந்து வழி உண்டுபண்ணிச் செல்; விரை, அவசரப்படு; ஆரவாரஞ்செய்.

**hut**, *n.* சிறு குடில், புல் வீடு; தற்பொழுதைய தங்கிடம்; படை வீரர்களுக்கான தற்பொழுதைய பலகை வீடு; *v.* குடிசையில் தங்கு; படைவீரரைத் தங்கல் குடிசையில் அமர்வி.

**hutch**, *n.* குழிமுயல்களுக்கான பெட்டி; சிறிய அறை; சிறு வீடு, குடிசை; சுரங்கத்தில் பயன்படுத்தப்படும் கட்டை வண்டி.

**hut'-cir'cle**, *n.* தொல்பொருள் ஆராய்ச்சித் துறையில் வரலாற்றுக்கு முற்பட்டகாலக் குடிலின் சின்னமான வளைகற் கட்டுமானம்.

**hut'ment**, *n.* படைவீரர் குடிசைத் தொகுதி, படை வீடு.

**Huzoor'**, (அரா.) *n.* மரியாதை வழக்கு.

**huzza'**, *n.* மகிழ்வொலி, பாராட்டு அரவம்; *v.* பாராட்டி ஆரவாரம் செய்; *int.* மகிழ்ச்சியைக் காட்டும் வியப்பிடைச் சொல்.

**huzz'y**, *n.* = hussy.

**hy'acinth**, *n.* செந்நீலம் முதலிய நிறங்களையுடைய மணி வடிவ மலர்களையும் கிழங்கந்தண்டுகளையும் உடைய செடி வகை; செந்நீல நிறம்; ஒண்மணிக் கல்வகை.

**Hy'ades**, *n. pl.* விண்மீன் குழுக்களில் ஒன்று.

**hyaen'a**, *n.* கழுதைப்புலி.

**hy'aline**, *n.* படிகநிறப் பரப்பு; அமைதியான கடற்பரப்பு; நீல வான்பரப்பு; *a.* படிகவியலான, கண்ணாடிபோன்ற; தெளிவான; ஒளி ஊடுருவுகின்ற.

**hy'alite**, *n.* நிறமற்ற ஒண்மணிக்கல் வகை.

**hy'aloid**, *n.* கண்ணின் கண்ணாடித்தாள் போன்ற புறப்படலம்; *a.* கண்ணாடி போன்ற; (தொ.) hyaloid membrane, கண்ணின் மேற்படலம்.

**hyb'rid**, *n.* இனக்கலப்பின் வழித்தோன்றல்; இனங்கலந்து தோன்றிய செடி; இனங்கலந்து தோன்றிய உயிரினம்; *a.* இனக்கலப்புப் பிறவியான; இனத்தூய்மையற்ற; இனக் கலப்படமான; (தொ.) hybrid bill, தனிமுறை அலுவல் முறை ஆகிய இரு சார்புகளின் பண்புகளும் கலந்துள்ள சட்டப்பகர்ப்பு.

**hyb'ridism**, *n.* பிறிதினக்கலப்பு; இனக்கலப்பு நிலை; இனக் கலப்புப் பண்பு.

**hyb'ridize**, *v.* பிறிதினக்கலப்புக்கு உட்படுத்து; கலப்பினப் பிறவி உண்டுபண்ணு; இனத்துடன் இனம் கல.

**hyd'atid**, *n.* (மரு.) நோய் நீர் தேங்கியுள்ளமை; இழைக் கச்சைப் புழுவினுல் ஆகி அதனை உட்கொண்ட நோய்நீர்த் தேக்கப்பை.

**Hyde Park**, *n.* லண்டனில் உள்ள பெரும் பூங்கா; அரசியல் கிளர்ச்சிக் கூட்டங்களுக்கு நிலைக்களமான லண்டன் மாநகரத்து உயர்குடிச் சூழலார்ந்த பூங்காப்பகுதி.

**hyd'ra**, *n.* கிரேக்க புராணகதை மரபில் வெட்டவெட்ட வளர்ந்து வரும் பலதலைப்பாம்பு; ஒழித்தற்கரிய ஒன்று; தீராப் பெரும்பழி; நீர்ப்பாம்பு வகை; வெட்டிப் பகுப்பதால் பல்லுயிராகப் பெருகும் இயல்புடைய நன்னீர்வாழ் உயிர் வகை.

**hy'dra-head'ed**, *a.* ஒழிக்கப்படமுடியாதபடி அழிக்க அழிக்க விரைந்து வளரும் இயல்புடைய.

**hydran'gea**, *n.* வெள்ளைநீலக் கருஞ்சிவப்பு நிறங்களையுடைய உருள் பூங்கொத்துக்களைக்கொண்ட குறுஞ் செடிவகை.

**hyd'rant**, *n.* நெடுநீர்க்குழாய், நீள்குழாயை இணைத்து நீர் கொண்டு செல்லும்படி பெருங்குழாயுடன் பொருந்தும் இணைப்பு வாயினையுடைய நீர்க்குழாய்.

**hyd'rate**, *n.* தனிமத்துடன் அல்லது மற்றொரு சேர்மத்துடன் நீர் இணைந்த சேர்மப்பொருள்; *v.* தனிமம் அல்லது சேர்மம் வகையில் நீருடன் இணை.

**hydraul'ic**, *a.* குழாய் வழி செல்லும் நீர்சார்ந்த; கால்வாய் நீருக்குரிய; நீராற்றலால் இயக்கப்படுகிற; இயக்க ஆற்றலுக்குரிய நீர்பற்றிய ஆய்வுத்துறை சார்ந்த; (தொ.) hydraulic press, நீரமுக்கு இயந்திரம்; hydraulic ram, இயங்கு நீரின் தடையாற்றலால் அதன் பகுதியை உயர்த்தும் அமைவு.

**hydraul'ics**, *n. pl.* நீரியல் ஆய்வுத்துறை; குழாய்வழி இட்டுச்செல்லும் நீர்பற்றிய ஆய்வுத்துறை; இயக்க ஆற்றலுக்குரிய குழாய் நீர் பற்றிய ஆய்வுத்துறை.

**hyd'ric**, *a.* (வேதி.) நீரகத்துக்குரிய; நீரகமடங்கிய.

**hyd'ride**, *n.* தனிமத்துடன் நீரகம் இணைந்த சேர்மப்பொருள்.

**hyd'ro,** *n.* நீர்மருத்துவ மனை, நீர்மருத்துவ முறையினைப் பின்பற்றும் மருந்தகம்.

**hpdrocarb'on,** *n.* நீரகம் கரியகம் இணைந்த சேர்மப்பொருள்.

**hydrocephal'ic, hydroceph'alous,** *a.* மூளை நீர்க் கோவைக்கு உட்பட்ட.

**hydroceph'alus,** *n.* மூளைநீர்க்கோவை, தலையில் நீர் தங்கிய கோளாறு.

**hydrochlor'ic,** *a.* நீரகமும் பாசிகமும் உள்ளடங்கலான.

**hydrocyan'ic,** *a.* நீரகமும் கரிவெடியமும் உள்ளடங்கலான; (தொ.) hydrocyanic acid, நீரகக் கரிவெடியகக்காடி.

**hydrodynam'ic, hydrodynam'ical,** *a.* நீர் சார்ந்த இயக்க விசைபற்றிய, நீர்மத்தின் அல்லது நீர்மத்தின்மீது தாக்கும் ஆற்றல் பற்றிய.

**hydrodynam'ics,** *n. pl.* நீர்இயக்கவிசைசார்ந்த இயற்பியல் துறை.

**hydroelec'tric,** *a.* நீர்மின் ஆற்றல் சார்ந்த, நீராற்றலால் உண்டான மின் ஆற்றலுக்குரிய; நீர்மின் ஆற்றலால் இயக்கப்படுகிற.

**hyd'rogen,** *n.* நீரகம், எடைமானத்தில் மிகக்குறைந்த தனிமம், நீரில் மூன்றிலிரண்டு கூருயடங்கிய நீர்வளி; (தொ.) hydrogen bomb, நீர்வளிக் குண்டு, நீரகச்சேர்மம் செறியப் பெற்று உள்ளமைந்த அணுகுண்டினுல் நீரகம் கதிரகமாக மாற்றப்படுவதன்மூலம் பெரு விசையாற்றல் வெளிப்படுத்தும் குண்டுவகை.

**hydro'genate,** *v.* நீரகத்துடன் இணைவி; நீரகச்செறிவு ஊட்டு.

**hydrog'rapher,** *a.* நிலவுலக நீர்நிலைப் பரப்பாராய்ச்சித் துறை வல்லுநர்.

**hydrograph'ic, hydrograph'ical,** *a.* நிலவுலக நீர்நிலைப் பரப்பாராய்ச்சிக்குரிய.

**hydrog'raphy,** *n.* நிலவுலக நீர்நிலைப் பரப்பாராய்ச்சித் துறை.

**hy'droid,** *n.* வெட்டிப்பகுப்பதால் பல்லுயிராகப் பெருகும் இயல்புடைய உயிர்ப்பேரினம்; *a.* வெட்டிப்பகுப்பதால் பெருகும் இயல்புடைய நன்னீர்வாழ் உயிரினம் போன்ற; வெட்டிப்பகுப்பதால் பெருகும் உயிரினத்துடன் இனத் தொடர்புடைய.

**hydrokinet'ic,** *a.* நீர்ம இயக்கம் பற்றிய.

**hydrokinet'ics,** *n. pl.* நீர்ம இயக்கம் பற்றிய ஆய்வுத்துறை.

**hydrol'ogy,** *n.* நீரின் பண்பியல்பமைதிகள் பற்றிய ஆய்வு நூல்.

**hydrol'ysis,** *n.* நீரிடைச்சேர்மப் பிரிப்பு, நீர் இயல்பின் துணைகொண்டு நீர்கலந்த சேர்மத்தில் நீர்க்கூறு சேர்மக் கூறுகள் சிதைவுற்றுக் கூறுபடும் நிலை.

**hydroman'ia,** *n.* நீர்ப்பேரார்வம்.

**hydromechan'ics,** *n. pl.* நீரியக்க ஆய்வியல்.

**hyd'romel,** *n.* தேன் நீர்க்கலவை; (தொ.) vinous hydromel, புளிக்க வைக்கப்பட்ட தேன்நீர்க்கலவை.

**hydrom'eter,** *n.* நீர்ம எடைமானி, நீர்ம எடைமான ஒப்பீட் டளவு காட்டும் கருவி.

**hydromet'ric,** *a.* நீர்ம எடைமான அளவை சார்ந்த.

**hydrom'etry,** *n.* நீர்ம எடைமான ஒப்பீட்டறுதிப்பாடு.

**hydropath'ic,** *n.* நீர் மருத்துவமனை; நீர்மருத்துவ முறைக் குரிய தனி வாய்ப்புக்களையுடைய மருந்தகம்; *a.* நீர்மருத்துவ முறை சார்ந்த; நீர்மருத்துவத்துக்குரிய.

**hydrop'athist,** *n.* நீர்மருத்துவ முறை பயில்பவர்.

**hydrop'athy,** *n.* நீர்மருத்துவமுறை, அகப்புற நிலைகளில் நீரைப் பயன்படுத்தி நோய் குணப்படுத்தும் மருத்துவமுறை.

**hyd'rophane,** *n.* நீர்ப்படிகக்கல், நீருறிஞ்சும் ஆற்றலுடைய தாய் நீரில் அமிழ்ந்தபோது முற்றிலும் ஒளியூடுருவுவதாக மாறும் இயல்புடைய அரை ஒளியூடுருவும் மணிக்கல்வகை.

**hydrophob'ia,** *n.* நீர் வெறுப்பு; வெறிநாய்க்கடியின் சின்ன மாகத் தோற்றும் நீர் உவர்ப்பு; வெறிநாய்க்கடி; மனிதரின் வெறிநாய்க்கடிக் கோளாறு.

**hyd'rophone,** *n.* நீருள் ஒலியலைகளைக் கண்டுபிடிக்குங் கருவி.

**hyd'rophyte,** *n.* நீர்வாழ் செடிவகை.

**hydrop'ic,** *a.* நீர்க்கோவைநோய்க் கோளாறுடைய.

**hyd'roplane,** *n.* நீர்மூழ்கி எழவும் அமிழவும் உதவும் துடுப் புப்போன்ற உறுப்பமைவு; விசை வேகத்தில் நீரின் மேற்பரப் பின்மீது சறுக்கியோடும் இயல்புடன் தட்டையான அடி யுடைய விசைப்படகு; கடல்விமானம்.

**hydropneumat'ic,** *a.* காற்று நீர் ஆகிய இரண்டின் இயக்கத்தையும் உட்கொண்ட.

**hydropon'ics,** *n.* மண்ணிலி வேளாண்மை.

**hyd'ropsy,** *n.* மகோதரம்; நீர்க்கோவை நோய்.

**hydroquin'one,** *n.* நிழற்பட ஆக்கத்துக்கு உதவும் வேதி யியற் பொருட்கூறுகளில் ஒன்று.

**hyd'rospnere,** *n.* நீருலகு, நிலவுலக நீர்ப்பரப்பு; கடல் மாகடல்களின் மொத்தத்தொகுதி.

**hyd'rostat,** *n.* நீர்க்கூறு கண்டுணர உதவும் மின்னமைவு.

**hydrostat'ic,** *a.* நிலைநீர்மம் சார்ந்த, அமைந்தநிலையில் உள்ள நீர்மத்தின் அழுத்த ஆற்றலமைதிகளுக்குரிய; (தொ.) hydrostatic paradox, நீர்மப்பரப்பின் சிறுமை பெருமை எல்லை களின் அழுத்தச் சரிசம எதிர்நிலைப்பண்பு; hydrastatic press, நீராற்றல் அழுத்தப்பொறி.

**hydrostat'ics,** *n. pl.* நீர்மநிலையியல்.

**hydrotherapeut'ic,** *a.* நீர்மருத்துவ முறைசார்ந்த.

**hydrothe'rapy,** *n.* நீர்மருத்துவ முறை.

**hydrotherm'al,** *a.* வெப்பமூட்டப்பட்ட நிலஞ்சார்ந்த நீராற்ற லுக்குரிய; வெப்பமூட்டப்பட்ட நிலஞ்சார்ந்த நீராற்றலின் விளைவான.

**hydrothor'ax,** *n.* மார்பு நீர்க்கோவை நோய்.

**hydrot'ropism,** *n.* நீர்நோக்கிய அல்லது நீர்விட்டு விலகு கின்ற செடிகளின் இயற்பாங்கு.

**hyd'rous,** *a.* வேதியியல் களிப்பொருள்கள் வகையில் நீரடங்கி யுள்ள.

**hydrox'ide,** *n.* தனிமங்களுடன் நீரில்லாமலே நீரகமும் உயி ரகமும் கொண்ட சேர்மானப்பொருள்.

**Hydrozo'a,** *n. pl.* இழுதுமீன் போன்றவற்றை உள்ளடக்கிய வட்டுருச் சந்தமுடைய உயிர்ப்பேரினம்.

**hyen'a,** *n.* கழுதைப்புலி.

**hyetog'raphy,** *n.* மழைவீழ்ச்சி பற்றிய நிலப்பட அமைப்பு.

**hyetom'eter,** *n.* மழைமானி, மழைவீழ்ச்சியளக்கும் கருவி.

**Hygei'a,** *n.* உடல்நலத் தெய்வம்; உடல்நலம்பற்றிய உரு வகக் குறிப்பு, உடல்நலம்.

**hygei'an,** *a.* உடல்நலத் தெய்வத்துக்குரிய; உடல்நலம் பற்றிய.

**hy'giene,** *n.* உடல்நல இயல்; உடல்நலம் பேணும் கலை; உடல்நலம் பற்றிய தத்துவங்களின் தொகுதி.

**hygien'ics,** *n.* உடல்நலம் பற்றிய தத்துவங்களின் தொகுதி.

**hy'gienist,** *n.* உடல்நல இயல் வல்லுநர்.

**hyg'rodeik,** *n.* ஈரம் உலர்வு ஆகிய இருநிலைகளுக்குரிய இரு குமிழ்களைக் கொண்ட ஈரமானி வகை.

**hygrol'ogy,** *n.* வளிமண்டல ஈரநிலை பற்றிய ஆய்வு நூல்.

**hygrom'eter,** *n.* ஈரமானி, ஈரநிலை அளக்கும் கருவி.

**hygromet'ric,** *a.* ஈரநிலை அளவுக் கணிப்புச் சார்ந்த.

**hygrom'etry,** *n.* ஈரநிலை அளவைக்கணிப்பு.

**hyg'roscope,** *n.* ஈரங்காட்டி, வளிமண்டல ஈரநிலைகாண உதவுங் கருவி.

**hygroscop'ic,** *a.* வளிமண்டல ஈரநிலை சார்ந்த; ஈரம் உறிஞ்சும் பாங்குடைய.

Hyk'sos, *n. pl.* எகிப்தின் பண்டைக்கால (கி. மு. 2000-த்துக் குரிய) ஆயர்கோக்கள்.

hyl'ic, *a.* பருப்பொருளுக்குரிய; பருப்பொருளியல்புடைய, பிழம்பு நிலையான.

hylomorph'ism, *n.* இயன்மூலவாதம், பருப்பொருள் மூல நிலையே இயலுலகின் மூலமுதல் என்னும் கோட்பாடு.

hyl'otheism, *n.* இயலிறை ஒருமை வாதம், இயற்பொருளும் இறையும் வேறல்ல என்ற கோட்பாடு.

hyl'otheist, *n.* இயலிறை ஒருமை வாதி, இயற்பொருளும் இறையும் வேறல்ல என்ற கோட்பாடுடையவர்.

hylotheis'tic, *a.* இயலிறை ஒருமை வாதம் சார்ந்த, இயற் பொருளும் இறையும் வேறல்ல என்ற கோட்பாட்டுக்குரிய.

hylozo'ism, *n.* இயல் உயிர்வாதம், இயற்பொருளும் உயிரும் வேறல்ல என்ற கோட்பாடு.

hylozo'ist, *n.* இயல் உயிர்வாதி, இயற்பொருளும் உயிரும் வேறல்ல என்னும் கோட்பாடுடையவர்.

hylozois'tic, *a.* இயல் உயிர்வாதம் சார்ந்த, இயற்பொருளும் உயிரும் வேறல்ல என்னுங் கோட்பாடுடைய.

Hym'en[1], *n.* கிரேக்கபுராண மரபில் திருமணத் தெய்வம்.

hym'en[2], *n.* கன்னிமைத்திரைச்சவ்வு, முதிரா இளமைப் பருவத்தில் பெண் குறியின் புறவாயை மூடியிருக்கும் தாள் போன்ற சவ்வு.

hymene'al, *n.* திருமணப்பாட்டு; *a.* திருமணஞ் சார்ந்த.

Hymenop'tera, *n. pl.* ஒளியூடுருவும் மென்தாள்போன்ற நான்கு சிறகுகளையுடைய புழுபூச்சியினப் பிரிவு.

hymenop'teral, hymenop'terous, *a.* புழுபூச்சியினத்தில் நான்கு சவ்வுச் சிறகுகளை உடைய.

hymn, *n.* பாசுரம், இறைவன் புகழ்ப்பாடல்; தேவாரம்; *v.* பாசுரங்களால் இறைவன் புகழ்பாடு; பாடிப் பூசனை செய்; பாட்டால் புகழ்நிறுவு; பாட்டில் தெரிவி.

hym'nal, *n.* பாசுர ஏடு, இறைவன் புகழ்ப்பாடல் தொகுதி; *a.* பாசுரம் சார்ந்த; புகழ்ப்பாடலின் இயல்புடைய.

hym'nary, *n.* இறைவன் புகழ்ப்பாசுர ஏடு.

hym'nody, *n.* இறைவன் புகழ்ப்பாசுரத் தொகுதி; பாசுரம் பாடுதல்; பாசுரங்கள் இயற்றுதல்.

hymnog'rapher, *n.* பாசுரங்கள் இயற்றுபவர்.

hymnol'ogy, *n.* பாசுரங்கள் இயற்றுதல்; பாசுர ஆராய்ச்சி; பாசுரங்களின் தொகுதி.

hy'oid, *n.* வளைந்த நாவடி எலும்பு; *a.* எலும்பு வகையில் நாவடி சார்ந்த.

hy'oscine, *n.* நச்சுச்செடி வகையிலிருந்து எடுக்கப்பட்டு மருந் தாய் உதவும் காரப்பொருள்களில் ஒன்று.

hyoscy'amine, *n.* நச்சுச்செடி வகையிலிருந்து எடுக்கப்பட்டு மருந்தாகப் பயன்படும் காரப்பொருள்களில் ஒன்று.

hyp, *n.*=hypochondria.

hypaeth'ral, *a.* வானம் பார்த்த, கூரையற்ற; திறந்த வெளியான.

hypall'age, *n.* (இலக்.) வாக்கியத்தில் சொற்றொடர்புகள் தம்முள் நிலைமாறுகை.

hyperaesthes'ia, *n.* கூர்நரம்புணர்ச்சிக் கோளாறு; மட்டற்ற கூருணர்வுநிலை.

hyperaesthe'sic, hyperaesthet'ic, *a.* மட்டற்ற கூருணர்வுநிலையுடைய; மட்டற்ற கூரிய கலைச்சுவையுணர்வுடைய.

hyperb'aton, *n.* சொல் வரிசையில் தலைதடுமாற்றம்.

hyperb'ola, *n.* (வடி.) நிமிர்மாலை வட்டம், குவிபிறை, குவிகையுருவில் அடித்தள மீது சாய்பக்கங்களுக்குள்ள கோணத்திலும் பெருங்கோணம் படும்படி வெட்டிய குறுக்கு வெட்டு வாயின் வடிவம்.

hyperb'ole, *n.* உயர்வுநவிற்சி.

hyperbol'ic, hyperbol'ical, *a.* (வடி.) குவிபிறை சார்ந்த; உயர்வுநவிற்சியான.

hyperbor'ean, *n.* நிலவுலக வடகோடி வாழ்நர்; கிரேக்க புராண மரபின்படி வடகாற்றுக்கு அப்பால் கதிரொளி வளமிக்க பகுதியில் வாழும் மனித இனத்தவர்; *a.* நிலவுலகின் வடகோடியில் வாழ்கிற; கிரேக்கபுராண மரபின்படி வடகாற்றுக்கு அப்பால் கதிரொளி வளமிக்க பகுதியில் வாழும் இனம் சார்ந்த.

hypercatalec'tic, *a.* (இலக்.) யாப்பில் கடைசி இரண்டடிகளின் ஈற்றில் ஓர் அசை அல்லது அரையடி மிகுகிற.

hypercrit'ical, *a.* முனைவு ஆராய்ச்சியான, குற்றம் கண்டு பிடிக்கும் நிலையதான.

hypermet'ric, hypermet'rical, *a.* யாப்பில் மிகை அசையுடைய; அசை வகையில் யாப்பு மிகையான.

hypermetrop'ia, *n.* தொலைப்பார்வைக் கோளாறு.

hyperphys'ical, *a.* இயற்கை கடந்த, இயல் அமைதிகளுக்கு அப்பாற்பட்ட.

hyp'ersthene, *n.* பச்சைநிறக் கனிப்பொருள் வகை.

hyperten'sion, *n.* மட்டுமீறிய மிகஉயர்ந்த குருதி அழுத்தம்.

hypert'rophy, *n.* மிகை ஊட்டத்தால் ஏற்படும் உறுப்புப் பொருமல்.

hypeth'ral, *a.*=hypaethral.

hyph'en, *n.* சொல்லிடை இணைப்புக்குறி; ஒட்டுக்குறி; ஒலிப்பில் அசையிடையே நிகழும் இடைத் தயக்கநிலை; *v.* இணைப்புக் குறியிட்டு இணை.

hyph'enate, *v.* இணைப்புக்குறியிடு.

hypnogen'esis, *n.* துஞ்சுநிலை தூண்டிவிடல்.

hypnogenet'ic, *a.* அறிதுயில்நிலை தூண்டுகிற.

hypnol'ogy, *n.* மன ஆற்றலால் அறிதுயிலூட்டுதல் பற்றிய ஆய்வுநூல்.

hypnos'is, *n.* மன ஆற்றல் கொண்டு தூண்டப்படும் அறிதுயில்; அறிதுயில் நிலை.

hypnot'ic, *n.* துயிலூட்டுவது; மனஆற்றலால் தூண்டப்படும் அறிதுயில் நிலைக்கு ஆட்பட்டவர்; *a.* மனஆற்றலால் தூண்டப்படும் அறிதுயிலுக்குரிய; அறிதுயில்நிலையை உண்டுபண்ணுகிற.

hyp'notism, *n.* தரவுதுயில், சம்மோகனம், புறத்தூண்டுதலின்மீது மட்டுமே செயலாற்றும் இயல்புடைய செயற்கையான ஆழ்ந்த அறிதுயில்நிலை.

hyp'o, *n.* மாற்றுநிலை உவரகக் கந்தகி வகை, உவரகச் சேர்ம வகையில் உயிரக அணுக்களினிடமாகக் கந்தக அணுக்கள் இடம்பெற்ற உவரகக் கந்தகி.

hyp'oblast, *n.* உள்மடி உயிர்ம வரிசை, முதிராக் கருவின் உள்மடிப்புப் பருவத்தொடக்கத்தில் உருவாகும் உள்வரி முளையுயிர்ம வரிசை.

hypobran'chial, *a.* செவுளின் அடியில் அமைந்த.

hyp'ocaust, *n.* அடிநிலைவெப்பறை, உலை அல்லது வெப்பக் காற்று மூலம் சூடு சேகரித்து அளிக்கப் பண்டை ரோமாபுரியினர் பயன்படுத்திய நிலத்தளத்தின் அடியிலுள்ள பொள்ளலான இடம்.

hypochon'dria, *n.* தும்படைவுக் கோளாறு, மனவாட்ட நோய், மௌட்டிய நோய், கற்பனைப்பிணி.

hypochon'driac, *n.* மௌட்டிய நோயாளி, மனவாட்ட நோய்க்காளானவர்; *a.* மனவாட்டநோய் சார்ந்த; தும்படையூட்டும் நோய்க்கு ஆட்பட்ட.

hypochondri'asis, *n.*=hypochondria.

hypocris'tic, *a.* (இலக்.) செல்லப்பெயரின் இயல்புடைய.

hypoc'risy, *n.* பாசாங்கு, போலி நடிப்பு; படிற்றொழுக்கம்.

hyp'ocrite, *n.* வஞ்சனையாளர், கபட வேடதாரி.

hypocrit'ical, *a.* வஞ்சித்தொழுகுகிற, போலி நடிப்பினால் ஏய்க்கிற, பொய்யகமான.

**hypocyc'loid**, *n.* உள் உருள்வரை, வட்டத்தின் சுற்று வரையிலுள்ள புள்ளி மற்றொரு வட்டச் சுற்று வரையினுள்ளாக வட்டம் உருளும்போது இயக்கும் வளை வரைவடிவம்.

**hypoderm'ic**, *a.* அடித்தொலி சார்ந்த; (உள்.) மேல்தோலடியிலுள்ள; (மரு.) ஊசிபோடுதல் வகையில் தோலடியூடான; தோலடியூடான ஊசிபோடுதலுக்குரிய.

**hypoder'mis**, *n.* அடித்தொலி, செடி உயிரினங்களின் புறத்தோலடுத்துள்ள மென்தோல் பகுதி.

**hypogas'trium**, *n.* அடிவயிற்றின் அடியகட்டுப்பகுதி.

**hypoge'al, hypoge'an**, *a.* நிலத்தின் அடியிலுள்ள; விதைப்பகுதி நிலத்தினுள்ளிருக்கும்போது முளைவிடுகிற.

**hyp'ogene**, *a.* பாறை வகையில் நிலத்தினகமாக உருவான; நிலத்தினகம் உருவான பாறைகளுக்குரிய; நிலத்தினகத்தே பாறைகளையுருவாக்கும் இயலாற்றலுக்குரிய.

**hypoge'um**, *n.* நிலவறை; *pl.* hypoge'a.

**hypogloss'al**, *a.* நரம்பு வகையில் நாவடிக்குரிய.

**hypog'ynous**, *a.* (தாவ.) சூலகம் அல்லது கருவகத்துக்குக் கீழுள்ள.

**hyp'onasty**, *n.* (தாவ.) மேலே வளைவு தூண்டவல்ல கீழ்ப்புற மிகுவளர்ச்சிப்பாங்கு.

**hypophos'phite**, *n.* மாற்றுநிலை உவரகக் கந்தகத்துக் காடியின் உப்பு.

**hypos'tasis**, *n.* வண்டல், மண்டி; குருதி ஓட்டக் குறைவினால் உடலுறுப்புப் பகுதிகளில் ஏற்படும் செயலற்ற உறைவுக் கூறு; (மரு.) உறுப்பின் கழிமிகைக் குருதியுடைமை; (இறை.) அடிநிலைப் பொருண்மை, கிறித்தவ சமயக்கோட்பாட்டின்படி இறைமையின் முத்திறங்களின் உள்ளுறை மெய்ம்மை.

**hypostat'ical**, *a.* அடிநிலைப்பொருண்மைக் கூறான, மூல ஆக்கக்கூறான; இறைமையின் உள்ளார்ந்த தன்மைக்குரிய.

**hypos'tatize**, *v.* அடிநிலைப்பொருண்மைக் கூறாகக் கொள்ளு; மெய்யுருப்படுத்தி உருவகமாக்கு.

**hyp'ostyle**, *a.* தூண்கள் மீது ஆதாரமான கூரையையுடைய.

**hypoten'sion**, *n.* தாழ்ந்த குருதியழுத்தநிலை.

**hypot'enuse**, *n.* நெடுங்கை வரை, செங்கோண முக்கோணத்தில் செங்கோணத்துக்கு எதிர்முகமான உறுநீள்கோடு.

**hyp'othec**, *n.* (சட்.) கடனுளியின் உடைமைக்குரிய சட்டப் பாதுகாப்புரிமை.

**hypoth'ecary**, *a.* அடைமானம் சார்ந்த.

**hypoth'ecate**, *v.* அடகு வை; பொருளை ஒழுங்குமுறை ஏற்பாட்டின்கீழ்ப் பிணையமாக வை.

**hypotheca'tion**, *n.* அடைமானம்.

**hypoth'esis**, *n.* புனைவுகோள், வாத ஆதாரமாகத் தற்காலிகமாய்க் கொள்ளப்பட்ட கருத்து; மெய்ம்மைக்கோள், மேலாராய்வுக்கு அடிப்படையான தற்காலிகப் பொது விளக்கக் கோட்பாடு; *pl.* hypoth'eses.

**hypoth'esize**, *v.* புனைவுகோள் உருவாக்கு.

**hypothet'ic, hypothet'ical**, *a.* புனைவுகோளியலான, தெளிவின்றித் தற்காலிக முடிவாய் வாத ஆதாரமாக ஏற்கப்பட்ட; மெய்ம்மைக்கோளியலான, முடிந்த முடிபாகவன்றி மேலாராய்ச்சியின் அடிப்படையான பொதுவிளக்க மெய்ம்மையாய் ஏற்கப்பட்ட; புனைவுகோள் சார்பான, மெய்ம்மைக் கோளுக்குரிய; புனைவுகோளை மிகவும் பயன்படுத்தும் பழக்கமுடைய; ஒருதலையானதல்லாத, ஐயநிலையான, முடிந்த முடிபாயில்லாத.

**hypothet'ically**, *adv.* தற்பொழுதைக்குக் கொள்ளப்பட்ட நிலையில்.

**hypotrachel'ium**, *n.* தூண் தலைப்பின் அடிப்பகுதி.

**hypsog'raphy**, *n.* உயர்ச்சி பற்றி ஆயும் நில இயல்துறை.

**hypsom'eter**, *n.* இட உயரமானி, மேட்டுப்பகுதிகளின் உயரமளக்கும் கருவி.

**hypsomet'ric, hypsomet'rical**, *a.* மேட்டுநில உயர அளவை சார்ந்த.

**hypsom'etry**, *n.* மேட்டு உயர அளவைபற்றிய ஆய்வுத் துறை.

**Hyr'ax**, *n.* குழிமுயல் போன்ற சிறுவிலங்கினம்.

**hys'on**, *n.* சீனப் பச்சைத்தேயிலை வகை.

**hy'-spy** *n.* கண்பொத்தி விளையாடல்.

**hyss'op**, *n.* முற்காலங்களில் மருந்தாகப் பயன்படுத்தப்பட்ட மணமுள்ள புதர்ச்செடி வகை; யூதர் வினைமுறைகளில் பயன்படுத்திய சுள்ளி வகை; யூதர் துப்புரவுத் திருவினைகளில் பயன்படுத்திய சமித்துக்கட்டு.

**hysteres'is**, *n.* (இய.) காந்த ஆற்றலுக்குக் காந்தத்தின் தூண்டுதல் இயக்கம் பிற்படும்நிலை.

**hyster'ia**, *n.* இசிவுநோய், நரம்புக்கோளாறினால் பெண்டிர் உடல் உளப்பண்பையும் உரத்தையும் பாதிக்கும் இசிப்பு.

**hyste'ric, hyste'rical**, *a.* இசிப்புநோய்க் கோளாறுக்கு உள்ளான; பெண்டிர் இசிப்பு நோய்க்கோளாறு சார்ந்த; மிகையுணர்ச்சிக் கோளாறு வாய்ந்த.

**hyste'rics**, *n. pl.* பெண்டிர் இசிப்பு நோய்க்கோளாறில் உறுப்புக்களின் இழுப்புவலிப்புக்கள்; வலிப்புத்துடிப்புக்கள்.

**hysterogen'ic**, *a.* இசிப்பு நோய்க்கோளாறு உண்டுபண்ணுகிற.

**hysterog'eny**, *n.* இசிப்புநோய்க்கோளாறு உண்டுபண்ணுதல்.

**hysterol'ogy**, *n.* கருப்பை பற்றிய ஆய்வுநூல்.

***hys'teron prot'eron***, (ல.) *n.* (இலக்.) தலைதாள் தடுமாற்ற அணி.

**hysterot'omy**, *n.* கருவக அறுவை.

**I,** *n.* தான் என்ற உணர்ச்சி, தன்முனைப்பு ; *pron.* நான், யான், தன்மை ஒருமை மறுபெயர்; (தொ.) the I, தான் என்ற உணர்ச்சி, தன்முனைப்பு.

i'amb, *n.* = iambus.

iam'bic, *n.* (இலக்.) குறில் நெடிலான ஈரசைச் சீர்கொண்ட யாப்பு ; *a.* குறில் நெடிலான ஈரசைச் சீருக்குரிய ; குறில் நெடில் ஈரசைச்சீர்கொண்ட ; குறில் நெடில் ஈரசைச்சீரின் அடிப்படையில் அமைந்த.

iam'bics, *n. pl.* குறில் நெடிலான ஈரசைச் செய்யுள்; குறில் நெடில் ஈரசைச்செய்யுளாலான வசைப்பாட்டு.

iam'bist, iambog'rapher, *n.* ஈரசைச் சீர்ச் செய்யுள்களை எழுதுபவர், வசைப்பாட்டு வரைபவர்.

iam'bus, *n.* (இலக்.) குறில் நெடில் ஈரசைச்சீர் ; *pl.* iam'bi, iam'buses.

Iber'ian, *n.* ஸ்பெயின் போர்ச்சுகல் ஆகிய இருநாடுகளையும் உள்ளடக்கிய பண்டைய ஐபீரிய மாநிலவாணர் ; பண்டைய ஐபீரிய மொழி; *a.* பண்டைய ஐபீரிய மாநிலம் சார்ந்த.

ib'ex, *n.* உள்வாங்கிய பெரிய கொம்புகளையுடைய மலையாடு வகை ; *pl.* ib'exes, i'bices.

*ibid'em,* (ல.) *adv.* அதே சுவடியில், அதே பிரிவில், அதே நூற்பகுதியில்.

ib'is, *n.* நீரில் நடந்துசெல்லும் நாரையினப் பறவை; *pl.* ib'ises; (தொ.) Sacred Ibis, பண்டைய எகிப்தியர்கள் பூசித்து வழிபட்ட நாரையினப் பறவை.

ice, *n.* உறைநீர், பனிக்கட்டி ; அப்பம் முதலியவற்றின் மேலுள்ள சர்க்கரைப் பொருக்கு ; இனிப்பூட்டிய குளிர் பாலேடு ; இனிப்பூட்டிய குளிர்பழச்சாறு ; *a.* உறைநீர் அல்லது பனிக்கட்டி சார்ந்த; *v.* உறைவி; பனிக்கட்டியினுல் மூடு; இன்தேறல் முதலியவற்றைப் பனிக்கட்டியில் வைத்துக் குளிர்ச்சி உண்டுபண்ணு ; அப்பம் முதலியவற்றைச் சர்க்கரைக் கட்டியினுல் மூடு ; (தொ.) break the ice, தொடக்கம் செய் ; முதற்கண் நேரிடும் இடர்ப்பாடுகளைக் கடந்துசெல் ; நாணம் கூச்சம் தயக்கம் முதலியவற்றை முதற்கண் விடப் பழகிக்கொள் ; cut no ice, காரியமாக எதுவும் செய்யாதிரு; செயலில் எதுவும் வெற்றிகாணுதிரு ; day ice, உறைந்த கெட்டியான கரிய ஈருயிரகை.

ice'-action, *n.* நிலவுலகப்பரப்பில் நிலப் பனிக்கட்டியால் ஏற்படும் அரைப்பு.

ice'-age, *n.* மண்ணியல் பனியூழி.

ice'-anchor, *n.* மிதக்கும் பனிப்பாளத்துடன் படகு முதலியவற்றை இறுக்க உதவும் ஓரலகுடைய நங்கூரம்.

ice'-a'pron, *n.* மிதந்துவரும் பனிக்கட்டியை உடைத்து விலக்குகிற பால அமைவு.

ice'-axe, *n.* மலையேறுபவர்கள் பனிக்கட்டியில் படிகளை வெட்டுவதற்குப் பயன்படுத்தும் கோடரி வகை.

ice'berg, *n.* பனிப்பாறை, மிதக்கும் பனிப்பரப்புத்துண்டு ; உணர்ச்சியற்றவர்.

ice'-bird, *n.* சிறு கடற்புரு.

ice'blink, *n.* தொலைவிலுள்ள பெரும்பனிப்பரப்பின் ஒளிக்கதிர் எதிர்த்து மீள்வதால் வானவிளிம்பில் ஏற்படும் பளபளப்பு.

ice'-boat, *n.* பனிக்கட்டியினூடாகச் செல்வதற்குரிய சக்கர அமைவுடைய படகுவகை.

ice'-bound, *a.* பனிக்கட்டியால் சூழப்பட்ட ; பனிக்கட்டியிடையே மாட்டிக்கொண்ட ; பனிக்கட்டியில் சிக்கிய.

ice'-box, *n.* குளிர்பதனப்பேழை.

ice'-breaker, *n.* பனிக்கட்டியை உடைத்து ஊடே வழியுண்டாக்குவதற்கான கப்பல் ; பனிக்கட்டியை உடைப்பதற்கான துணைக்கருவி.

ice'-cap, *n.* பனிக்கவிகை, பனிமூடியபகுதி.

ice'-cold, *a.* பனிக்கட்டியைப்போல் குளிர்ந்த.

ice'-cream', *n.* இனிப்பு அல்லது நறுமணம் ஊட்டிய குளிர் பாலேடு ; (தொ.) ice-cream soda, குளிர்பாலேடு சேர்த்த காரநீர்.

iced, *a.* பனிக்கட்டியினுல் மூடப்பட்ட; பனிக்கட்டியினுல் குளிர வைக்கப்பட்ட ; சர்க்கரை மேற்பூச்சமைந்த.

ice'-fall, *n.* பனிக்கட்டி வீழ்ச்சி ; உறைநிலை நீர்வீழ்ச்சி போன்று தோன்றும் பனிக்கட்டியின் செங்குத்தான பகுதி.

ice'-fern, *n.* பலகணி மீது படியும் சூரல் போன்ற உறை பனிப்படுகை.

ice'-field, *n.* பனிப்பரப்பு, பனிக்கட்டிப் பாள மூடிய பெரும் பரப்பு.

ice'-floe, *n.* மிதக்கும் பெரிய பனிக்கட்டிப் பாளம்.

ice'-foot, *n.* நிலவுலகின் வடமுனை சார்ந்த கடற்கரையோரமுள்ள பனிக்கட்டிமூடிய பகுதி.

ice'-free, *a.* பனிக்கட்டியற்ற; என்றுமே உறைந்து போகாத.

ice'-front, *n.* சறுக்குப் பனிக்கட்டியின் முகப்புப்பக்கம்.

ice'-hill, *n.* சறுக்குவண்டி மீதேறிச் செல்வதற்கான பனிக் கட்டிச் சரிவு.

ice'-hock'ey, *n.* பனிக்கட்டிமீது சறுக்குக்கட்டையணிந்து ஆடப்படும் வளைகோற்பந்தாட்ட வகை.

ice'-house, *n.* நிலத்துக்கடியில் பனிக்கட்டி வைத்திருப்பதற்கான கட்டிடம்.

Ice'land, *n.* நார்வேக்கும் கிரீன்லாந்துக்கும் இடையிலுள்ள பெரிய தீவு ; *a.* ஐஸ்லாந்துக்குரிய ; ஐஸ்லாந்தில் தோன்றிய.

Ice'lander, *n.* ஐஸ்லாந்து நாட்டினர் ; ஐஸ்லாந்து நாட்டுக் குடிமகன் ; ஐஸ்லாந்து நாட்டு வேட்டைப்பருந்து வகை.

Icelan'dic, *n.* ஐஸ்லாந்து நாட்டு மொழி ; *a.* ஐஸ்லாந்து சார்ந்த.

Ice'land-li'chen, Ice'land-moss', *n.* மருந்தாகவும் உணவாகவும் பயன்படும் காளான்வகைப் பூண்டு.

ice'land-spar', *n.* சுண்ணகப் பளிங்கு வகை.

ice'-ledge, *n.* = ice-foot.

ice'man, *n.* பனிக்கட்டியின்மீது செல்வதில் வல்லவர் ; பனிக்கட்டிமீது சறுக்கி விளையாடுபவர்களுடனிருந்து ஊழியம் செய்பவர் ; பனிக்கட்டி விற்பவர்.

ice'pack, *n.* நெருக்கமாக மிதந்துசெல்லும் பனிக்குன்றுகள் ; மிதவைப் பனிப்பாளங்கள் நிறைந்த கடற்பரப்பு ; பனிக் கட்டியைக் கொண்டு செய்யப்பட்ட பொதி.

ice'-pan, *n.* மிதக்கும் பனிக்கட்டிப் பாளம்.

ice'-pick, *n.* பனிக்கட்டியைத் துண்டுகளாக உடைப்பதற்கான கூர்ங்கருவி வகை.

ice'-plant, *n.* வெயிலில் பனிக்கட்டிபோல் பளபளக்கும் இலைகளையுடைய செடிவகை.

ice'-pu'dding, *n.* உறையச்செய்யப்பட்ட இனிப்புத் தின்பண்ட வகை.

i'cer, *n.* அப்பம் முதலியவைகளைச் சர்க்கரைத் தோட்டில் பொதிபவர்.

ice'-rink, *n.* வழுக்கியோடுவதற்கான உறைபனிப்படலம்.

ice'-run, *n.* சறுக்குவண்டி செல்வதற்கான செயற்கைப் பனிக் கட்டிப்பாதை.

ice'-sheet, *n.* நிலப்பகுதி முழுவதையும் மூடியுள்ள பனிக் கட்டிப்படலம்.

ice'-spar, *n.* கண்ணுடிபோன்ற தெளிவான களிமக்கல் வகை.

ice'-stone, *n.* தொழில் வகைகளுக்குப் பெரிதும் பயன்படும் ஒளிரும் கனிப்பொருள் வகை.

ice'-water, *n.* பனி நீர்; பனிக்கட்டி உருகியநீர் ; பனிக்கட்டியிட்டுக் குளிர்ச்சியாகிய நீர்.

ice'-wool, *n.* பின்னல் வேலை முதலியவற்றில் பயன்படுத்தப்படும் பளபளப்பான கம்பளி நூல் வகை.

**ice'-worm**, *n.* பனிக்கட்டியாறுகளில் இருப்பதாகச் சொல்லப்படும் நாங்கூழ் இனப் புழுவகை.

**ice'-yacht**, *n.* பாய்மரங்களுடன் பனிக்கட்டியின்மீது செல்லும் சறுக்குக் கப்பல் வகை.

**ich'abod**, *n.* புகழ் மறைந்ததே என்ற ஏங்குகுரல், வருத்தக் குரல்.

**ichneum'on**, *n.* முதலைகளின் முட்டைகளை அழிக்கும் சிறிய தவிட்டு நிறமான கீரியின நாற்கால் விலங்கு வகை; மற்றொரு பூச்சியின் முட்டைப் புழுக்களில் தான் முட்டையிடும் பளிங்கனைய நான்கு சிறகுகளையுடைய சிறிய ஒட்டுண்ணிப் பூச்சிவகை.

**ichneu'mon-fly**, *n.* மற்றொரு பூச்சியின் முட்டைப்புழுக்களில் தான் முட்டையிடும் பளிங்கனைய நான்கு சிறகுகளை உடைய சிறிய ஒட்டுண்ணிப் பூச்சிவகை.

**ich'nite**, *n.*=ichnolite.

**ichnog'raphy**, *n.* நிலப்படம்; நிலப்படங்கள் வரையும் கலை.

**ichno'lite**, *n.* புதைபடிவ அடிச்சுவடு.

**ichnol'ogy**, *n.* புதைபடிவ அடிச்சுவடுகள் பற்றிய ஆய்வு நூல்.

**ich'or**, *n.* கிரேக்கபுராணக் கதை வகையில் கடவுளர்களின் நாளங்களில் குருதியைப்போல் வடியும் நீர்; (மரு.) புண்ணீர்; ஆண்யானையின் கன்ன மதநீர்.

**ichthyocoll'a**, *n.* மீன் பிசின்.

**ichthyog'rapher**, *n.* மீன்வகைகளைப் பற்றிய ஆய்வுரை எழுதுபவர்.

**ichthyog'raphy**, *n.* மீன்கள் பற்றிய ஆய்வுரை.

**ich'thyoid**, *n.* மீன் வகையைச்சேர்ந்த முதுகெலும்புள்ள உயிரினம்; *a.* மீன்போன்ற.

**ich'thyoidal**, *a.* மீன் போன்ற.

**ichthyol'atry**, *n.* மீன் வழிபாடு.

**ich'thyolite**, *n.* புதைபடிவ மீன்.

**ichthyol'ogy**, *n.* மீனியல் நூல்.

**ichthyoph'agist**, *n.* மீனுணி.

**ichthyoph'agy**, *n.* மீன் தின்னும் வழக்கம்.

**ichthyor'nis**, *n.* முன்னூழிப் பறவை வகை, மரபற்றுப் போன பல்லுடைய பறவைகளின் பேரினம்.

**Ichthyosaur'us**, *n.* முன்னூழி அரக்கப்பல்லி வகை, மிகப் பெரிய தலையையும் கூம்பிய உடலையும் நான்கு துடுப்புகளையும் நீண்ட வாலையும் உடைய மரபற்றுப்போன கடல்வாழ் உயிரினம்.

**ichthyos'is**, *n.* மேல்தோல் கெட்டியாகிச் சுரசுரப்பாகிவிடும் நோய்வகை.

**i'cicle**, *n.* உறைநீர்மணி, விழுநீர்த்துளி உறைந்து மின்னும் பனித்துகள், விழ்துளி வடிவப் பனிக்கட்டி.

**i'cing**, *n.* உறைதல்; குளிரவைத்தல்; பண்ணியம் முதலியவற்றின் சர்க்கரை மேற்பொதி; விமானத்தின்மீது பனிப்படிவு.

**ic'kle**, *a.* குழந்தை உலக வழக்கில் சின்னஞ்சிறிய.

**ic'on**, *n.* உருவம், உருவச்சிலை; புனிதமாகக் கருதப்படும் தெய்வ வடிவம்; புனிதச் செதுக்குவண்ண ஓவியம்.

**icon'ic**, *a.* உருவம் அல்லது உருவப்படம் பற்றிய; உருவம் அல்லது உருவப்படத்தின் தன்மைவாய்ந்த; மரபு வழக்கமான பாணியையொட்டிய.

**icon'oclasm**, *n.* உருவத்தகர்ப்பு; உருவவழிபாட்டு எதிர்ப்பு; ஆர்வப் பழமரபு அழிப்பு.

**icon'oclast**, *n.* உருவங்களை உடைப்பவர்; கீழ்த்திருச்சபையின் உருவ வழிபாட்டினை எதிர்த்து கி. பி. 8-ஆம் 9-ஆம் நூற்றாண்டுகளில் நடத்தப்பட்ட இயக்கத்தில் பங்கு பற்றியவர்; ஆர்வக்கொள்கைகளையும் நம்பிக்கைகளையும் தாக்குபவர்.

**iconog'raphy**, *n.* உருவங்களினால் அல்லது வரிவடிவங்களினால் பொருளை விளக்குதல்; படங்களே முதன்மையாயிருக்கும் சுவடி; படங்கள் அல்லது சிற்பம் பற்றிய கட்டுரை.

**iconol'ater**, *n.* உருவ வழிபாடு செய்பவர்.

**iconol'atry**, *n.* உருவ வழிபாடு.

**iconol'ogy**, *n.* உருவங்கள்-சிலைகள் பற்றிய ஆய்வு; குறிப்பு அடையாள முறைமை.

**iconom'achy**, *n.* உருவ வழிபாட்டுக்கு எதிரான இயக்கம்.

**iconom'eter**, *n.* (நி-ப.) நேர்முகப்பார்வைப் புல அறுதிக் கருவி; தொலைப்பொருளின் அளவையோ தொலைவையோ அறுதி செய்வதற்குரிய கருவி.

**iconos'tasis**, *n.* கீழைத்திருக்கோயில்களில் கருவறையை உருவங்கள் வைக்கப்பெறும் பகுதிகளிலிருந்து மறைப்பதற்கான திரைத்தட்டி.

**ic'osahed'ron**, *n.* (வடி.) இருபது பட்டைமுகப்புடைய பிழம்புருவம்; *pl.* icosahe'dra.

**ic'tus**, *n.* (யாப்.) சந்த அழுத்தம்; நாடித்துடிப்பு; *pl.* ic'tuses.

**i'cy**, *a.* பனிக்கட்டியாலான; பனிக்கட்டிகள் நிறைந்த; பனிக்கட்டி போன்ற; குளிர்ச்சியான; உறைபனி மூடிய; நடுக்குக் குளிரூட்டுகிற; அன்பார்வமற்ற.

**id**[1], *n.* (உயி.) கரு உயிர்ம இனக்கீற்றில் மரபியல் சிறப்பியல்புகளையெல்லாம் கொண்டுள்ளதாகக் கருதப்படும் மூலப்பொருள்; (உள.) தனிப்பட்ட ஒருவரின் உணர்வுந்துதல்.

**id**[2], =ide.

**ide**, *n.* கெண்டை இன மீன்வகை.

**ide'a**, *n.* கருத்து, எண்ணம்; கருத்துருவம், நினைவுப்படிவம்; நினைவுத்தோற்றம்; பாவனை உரு; உள்நோக்கம்; உட்கருத்து; உட்கோள், கருத்துப்போக்கு; புதுக் கருத்து; யோசனை; திடீர் எண்ணம்; ஆலோசனை; எண்ணச்சாயல்; தெளிவற்ற கொள்கை; உருவாகாத் திட்டம், திட்டவட்டமாகாக் கருத்து; மூலக்குறிப்பு; மூலமாதிரி; பிளேட்டோ என்ற பண்டைக் கிரேக்க அறிஞர் கருத்துப்படி குறைவுடைய நிலையற்ற உலகப் பொருள்வகைகளுக்குரிய குறைவற்ற நிலையான மூல முதற்படிவம்; (தொ.) man of ideas, சூழ்திறம் மிக்கவர்.

**ide'a'd, ide'aed**, *a.* கருத்துடைய, எண்ணவளம் வாய்ந்த.

**ide'al**, *n.* இலக்கியல் நிறைவு, பின்பற்றத்தக்க குறிக்கோள் நிலை; சீர்மை, குறைவிலா நிறைசெப்பம், முழுநிறைநலம்; *a.* இலக்கியலான, குறிக்கோள் நிலையான; கருத்தியலான, குறிக்கோள் வடிவான; கனவியலான, செயல்துறை சாராத; புனைவியலான, கற்பனைச் சார்பான; பண்டைக் கிரேக்க அறிஞர் பிளேட்டோ கருத்துக்களடங்கிய; பொருள்களின் நிலையான மூல நிறை படிவங்களுக்குரிய.

**ide'aless**, *a.* எண்ணங்கள் அற்ற.

**ide'alism**, *n.* கருத்தியற் கோட்பாடு, புலன்வழி அறியப்பட்ட புற அறிவுலகு முழுவதும் கருத்தியல் தோற்றமே எனும் கொள்கை; புற உலகவாய்மை அக அறிவின் வேறுனதென்ற கோட்பாடு; கற்பனைக்குறிப்பீடு; கருத்தியற் பாங்கு; கனவியற்போக்கு; செயல்துறை சாராதநிலை.

**ide'alist**, *n.* புற உலகில் தோன்றுவதெல்லாம் கருத்தளவே ஆகுமென்னும் கொள்கையுடையவர்; இலக்கியலாளர், குறிக்கோள் நிலையை எய்த முயல்பவர்; செயல்முறைக்கு ஒவ்வாதனவற்றை மேற்கொள்பவர்.

**idealist'ic**, *a.* புறஉலகில் தோன்றுவதெல்லாம் கருத்தளவேயாகுமென்னும் கொள்கை சார்ந்த; இலக்கியலாளர்களைச் சார்ந்த; குறிக்கோள் நிலையை எய்த விரும்புகிற; கனவியற்போக்குடைய.

**ideal'ity**, *n.* உச்ச உயர்நலநிலை, முழுநிறைவாயுள்ள கற்பனை நலம்; எட்டாக் கற்பனை நலம்; குறிக்கோள்நிலை; முழுநிறை அழகு நலக் கூறுகளைக் கற்பனை செய்து காணுந்திறம்.

**ide'alize**, *v.* இலக்கியலாகக் குறி; இலக்கியலாகக் கருது; மீ உயர்வாக மதி; மீ உயர்வுபடுத்து; மீ உயர்வுபடுத்திக்கூறு; கற்பனை உயர்நிலை ஆக்கு; செயல்துறைத் தொடர்பற்றதாக்கு; கனவியற்படுத்து.

**ide'alless**, *a.* குறியிலக்கற்ற, குறிக்கோள் இல்லாத.

ide'ate, *v.* கற்பனைசெய் ; எண்ணப்படிவங்களை உருவாக்கு; எண்ணு, கருது.

idee fixe, (பிர.) *n.* மனத்தை ஆட்கொண்டுள்ள கருத்து, ஒற்றைக்கருமத்தில் பித்தேறிய நிலை.

id'em, (ல.) *n.* அதுவே ; அதே நூலாசிரியர் ; அதே நூல் ; அதே சொல் ; *adv.* அதே நூலில் ; (தொ.) idem quod, (ல.) அதைப்போலவே.

iden'tic, *a.* ஒரேபடித்தான ; (தொ.) identic note, நாடுகளிடைப்பட்ட அரசியல் இடைபாடுகளில் ஒரேசமயத்தில் ஒரே சீராகப் பலதிறத்தார் தம்மிடையே பரிமாறிக்கொள்ளும் கருத்துக்குறிப்பு.

iden'tical, *a.* அதுவேயான, வேறு அல்லாத ; முழுதொத்த, எல்லாக் கூறுகளிலும் ஒப்பான ; இரட்டைக் குழவிகள் வகையில் சினைப்பட்ட ஒரே கருமுளையிலிருந்து வளர்ச்சி அடைந்த ; (அள.) வேறன்மைசுட்டுகிற ; (கண.) முழுது மொத்த நிலையைக் காட்டுகிற.

iden'tify, *v.* இனம் அறி, அடையாளம் கண்டுணர் ; ஒன்றே எனக் கருது ; அதுவேயெனச் சான்றுகூறு, வேறன்றென உறுதி கூறு ; அடையாளங்கண்டு இனவுறுதிப்படுத்து ; பொருண்மையில் ஒன்றேயெனக்குறி ; இனமாக வகுத்தமை ; ஒன்றுபடுத்து ; ஒன்றில் இழைவி, இணைபிரிக்க முடியாதபடி முழுதும் தோய்ந்து ஈடுபடுவி.

iden'tity, *n.* அதுவேயாந்தன்மை; வேறன்மை; தனித்துவம்; (கண.) முற்றொருமை; (அள.) முற்றொருமை காட்டும் சமன்பாடு ; (தொ.) identity disk, போர்ப்பணியிலீடுபட்டுள்ள வீரர் அணிவதற்கென அவர் பெயர் முதலியவை பொறிக்கப் பெற்றுள்ள வில்லை.

id'eogram, id'eograph, *n.* ஒலிகுறித்துக் காட்டாத சொல்லின் கருத்துக்குறியீடு, பண்டைச் சீன வரிவடிவம் போன்ற சொற்சுட்டுக்குறிப்பு.

ideol'ogist, id'eologue, *n.* கருத்தியல் கொள்கையாளர் ; கற்பனைக்கொள்கையாளர் ; பண்பியலான கோட்பாடுகளில் ஈடுபட்டவர் ; கனவியலாளர் ; செயல்முறைக்கு ஒவ்வாதனவற்றை மேற்கொள்பவர்.

ideol'ogy, *n.* கருத்தாய்வுநூல், கருத்துருவான பண்பாய்வு நூல்; பொருளுலகத்தொடர்பற்ற கட்டற்ற கருத்தியல் கட்டுமானம் ; கனவியல் கோட்பாட்டமைவு ; கருத்துத் தொகுதி; கருத்துப்பாங்கு ; இனத்தவர்-தனிமனிதர்-அரசியல் அல்லது பொருளியல் கோட்பாட்டுக்குழுவினர் முதலியோருக்குரிய பொது அடிப்படையான தனிக் கருத்துப்போக்கு.

ides, *n. pl.* பண்டைய ரோமரின் காலக்கணிப்பில் மார்ச்சு-மே-சூலை-அக்டோபர் மாதங்களின் 15-ஆம் நாளுக்கும் மற்ற மாதங்களின் 13-ஆம் நாளுக்கும் உரிய சுட்டுக்குறிப்பு.

id est, (ல.) (தொ.) அதாவது.

id'iocy, *n.* பேதைமை, மூளைத்திறமற்ற முழுநிறைமடமை.

id'iom, *n.* தனிமரபு, மரபுக்கூறு; மொழிமரபுத்திறம்; நாட்டு மரபுத்திறம்; மக்கள் மரபுமொழி; நாட்டுமரபுமொழி; மொழியின் வகை திரிபு ; பேச்சு வகைமரபு ; மரபுத்தொடர் ; மரபு வழக்கு.

idiomat'ic, *a.* மொழியின் தனிச் சிறப்பியல்பான ; மொழி மரபுக்குரிய ; மொழிவழக்குக்கு ஒத்த.

idiop'athy, *n.* தனிமனிதரின் தனிச்சிறப்புக்குரிய அனுபவம்; (மரு.) வேறொரு நோயின் வழிநிலையாய் அமையாமல் முதல் நிலையாகத் தோன்றும் நோய்.

id'ioplasm, *n.* (உயி.) மரபுவழிச் சிறப்பியல்பினை அறுதியிடும் ஊன்மக்கூறு.

idiosync'rasy, *n.* தனிமனப்போக்கு ; தனிச்சிறப்புக்குரிய பண்பு; தனி நூலாசிரியருக்குச் சிறப்பியல்பான மொழிநடை; தனிமுரண்பாடு ; பொதுமீறிய தனியியல்பு ; (மரு.) தனி மனிதருக்குச் சிறப்பியல்பான உடலமைப்பு.

id'iot, *n.* மட்டி, முழு மூடன் ; ஒன்றுக்கும் உதவாதவன், முழுமகன், பேதை.

idiot'ic, *a.* மட்டிக்குரிய ; மடமைவாய்ந்த.

id'iot-stitch, *n.* தையலிழைத் துன்னல்வகை.

i'dle, *a.* சோம்பலான, மடிமைவாய்ந்த ; சோம்பியிருக்கிற, முயற்சியற்ற ; செயல்விருப்பமற்ற ; வேலையில்லாத ; விளைவற்ற, பயனற்ற, வீணான ; செயல்வகையில் விளையாட்டுப் போக்கான ; எண்ணங்கள் வகையில் அறிவற்ற ; சொல் வகையில் உறுதிப்பாடற்ற ; செய்தி வகையில் ஆதாரமற்ற ; *v.* சோம்பியிரு ; வீண்காலங்கழி, பயனற்றவகையில் பொழுதைப்போக்கு; இயந்திர வகையில் உரிய செயலாற்றுமல் இயங்கு ; உந்துவண்டி விமான முதலியனவற்றின் வகையில் நீராவிப்புழையின் வாயடைக்கப்பெற்று மெல்ல இயங்கு ; (தொ.) idle wheel, காப்பாழி, இயந்திரம் கெட்டுப்போய் நின்றுபோகும்போது செயற்படும் காப்புச் சக்கரம் ; இயக்க இடையாழி, திசையை மாற்றுமலே ஒரு சக்கரத்திலிருந்து மற்றொன்றிற்கு விசையைச் செலுத்துவதற்காக அவைகளுக்கிடையில் பொருத்தப்படும் மூன்ருவது சக்கரம்.

i'dleness, id'lesse, *n.* சோம்பல்.

id'ler, *n.* சோம்பன், சோம்பேறி ; காப்பு ஆழி, இயந்திரம் கெட்டுப்போய் நின்றுபோகும்போது செயற்படும் காப்புச் சக்கரம் ; இயக்க இடையாழி, திசையை மாற்றுமலேயே ஒரு சக்கரத்திலிருந்து மற்றொன்றிற்கு விசையைச் செலுத்துவதற்காக அவைகளுக்கிடையில் பொருத்தப்படும் மூன்ருவது சக்கரம்.

Id'o, *n.* செயற்கை உலகப்பொதுமொழி வகை.

id'ol, *n.* வழிபாட்டுக்குரிய தெய்வ உருவம் ; பொய்த்தெய்வம், போலித்தெய்வம் ; பேரன்புக்குப் பாத்திரமானவர் ; பெரும்போற்றுதலுக்குப் பாத்திரமான பொருள் ; மாய நம்பிக்கை ; போலிக்கற்பனை ; (அள.) போலிமருட்சி, தப்பெண்ணம் ; பொருள்களைத் தவருகக் காணும் அல்லது கருதும் மனப்பாங்கு ; ஆங்கில அறிஞர் பிரான்சிஸ் பேக்கன் (Francis Bacon) வகுத்துக்காட்டிய நால்வகைப் பிழைபடுவாத அடிப்படைகளில் ஒன்று ; (தொ.) idols of the cave, idols of the den, தனி மனிதர் தனிக்குறைபாடுகளால் ஏற்படும் பிழைபாட்டு மருட்சிகள் ; idols of the forum, idols of the market, சொற்கள் சொற்றொடர்களில் கரந்துள்ள குறைபாடுகளால் ஏற்படும் பிழைபாட்டு மருட்சிகள் ; idols of the theatre, அறிவேடுகளின் அரைகுறை அறிவால் ஏற்படும் பிழைபாட்டு மருட்சிகள் ; idols of the tribe, மனிதர் இனப் பொது அறிவு நிலைக் குறைபாடுகளால் ஏற்படும் பிழைபாட்டு மருட்சிகள்.

idol'ater, *n.* உருவ வழிபாட்டினர் ; ஒருவரை அன்பார்வத்துடன் போற்றுபவர் ; ஒன்றினைப் பூசித்துப் பேணுபவர்.

idol'atry, *n.* உருவ வழிபாடு ; மீதூரும் அன்பு ; ஆர்வப் போற்றரவு ; (தொ.) honour one on this side of idolatry, வழிபடாக்குறையாக மதித்துப் போற்று.

id'olize, *v.* மீதூரும் அன்புக்குப் பாத்திரமாக்கு, வழிபாட்டுப் பொருளாக்கு; மட்டுமீறிய அன்புசெலுத்து; பெரிதும்போற்றி வழிபடு ; உருவவழிபாட்டினை மேற்கொள்.

idol'um, *n.* அகத்தில் தோன்றும் தோற்றம், எண்ணவடிவம்; (அள.) பிழைபடுவாத வகை, வாதக்கோளாறு ; *pl.* ido'la.

id'yl, id'yll, *n.* முல்லைப்பாட்டு, ஆயர்வாழ்வுபற்றிய சிறு காப்பியம் ; எளிய நாட்டுப்புற வாழ்க்கைக்கதை ; எளிய நாட்டுப்புற வாழ்க்கை நிகழ்ச்சி ; வனப்புமிக்க சொல்லோவியம் ; எளிய வாழ்க்கைச் சித்திரம்.

if, *n.* மயக்கதயக்கநிலை ; ஒருவேளை சிலவேளை என்ற குறிப்பு; கற்பனைப்பாவனை நிலை ; *conj.* ஆமாயின், என்ற நிலையில், என ஆனால், என நிகழ்ந்தால், என்று வைத்துக்கொண்டால்; (தொ.) as if, இருந்தாற் போன்று, இருந்தால் எப்படியோ அப்படியே, என்ற கற்பனையான நிலையில்.

ig'loo, *n.* எஸ்கிமோக்களின் (Eskimos) கும்மட்ட வடிவான குடிசை.

ig'neous, *a.* தீச்சார்ந்த, நெருப்புள்ள, நெருப்பொத்த; எரிமலை செயற்படுவதனால் உண்டான.

ig'nis fat'uus, (ல.) *n.* சதுப்புநில ஒளி, கொள்ளிவாய்ப் பேய் ; நம்பிக்கைதந்து நழுவிக்கொண்டே போகும் செய்தி, ஆதாய ஆசைகாட்டி ஏய்த்துக்கொண்டே செல்லும் நிகழ்வு.

**ignite'**, *v.* கொளுத்து, தீப்பிடிக்கவை; தீப்பற்று; மிகுதியும் சூடாக்கு; தீயெழச் சூடாக்கு, வேதியியல் மாறுதலடையும் அளவுக்கு வெப்பூட்டு.

**igni'tion**, *n.* தீப்பற்றவைப்பு; தீப்பற்றுகை; தீப்பிடித்துள்ள நிலை; அழல்மூட்டும் வகைமுறை; உள்வெப்பாலையில் தீக்கொளுவும் ஏற்பாடு.

**igno'ble**, *a.* இழிபிறவியான; தாழ்நிலையிலுள்ள; கீழான, இழிந்த; ஈனப்பேர் படைத்த; பழிப்புக்கிடமான; *v.* தாழ்த்து, இழிவுபடுத்து.

**ig'nominy**, *n.* இழிவு, பேரிகழ்; அவமதிப்பு; அவமானப் படத்தக்க நடத்தை; ஒழுக்கக்கேடு.

**ignoram'us**, *n.* அறிவிலி; *pl.* ignoram'uses.

**ig'norance**, *n.* அறியாமை; மடமை; தெரியாமை; அறியா நிலை; அறியாப்பிழை; அறியாப்பிழையால் நேர்ந்த செயல்; அறியாமைப்பருவம்; முகமது நபிநாயகத்துக்கு முற்பட்ட காலம்.

**ig'norant**, *n.* அறிவற்றவர்; *a.* அறியாத; தெரியாத; தகவல் பெறாத நிலையிலுள்ள; அறிவில்லாத; படிப்பில்லாத; எழுத்தறிவற்ற; அறியாமைக்குரிய; அறியாமையால் நிகழ்கிற; அறியாநிலை காட்டுகிற.

***ignora'tio elen'chi***, (ல.) *n.* (அள.) வாதம் மறுப்பதுபோற் காட்டித் தொடர்பற்ற பிற பொருளை மறுக்கும் போலி வாதம்.

**ignore'**, *v.* பொருட்படுத்தாமல் விடு, புறக்கணி; சிறைக்கணி, கண்டும் காணாததுபோல் இருந்துவிடு; பொதுச்சான்றாளர் வகையில் ஆதாரமில்லையெனத் தள்ளிவிடு.

***ignot'um per ignot'ius***, (ல.) *n.* விளக்கக் கருதும் பொருளைக்காட்டிலும் விளங்காத விளக்கம்.

**igua'na**, *n.* உடும்பு.

**Iguan'odon**, *n.* புதைபடிவமாகக் காணப்படும் மிகப்பெரிய தழையுண்ணியினப் பல்லி வகை.

**IHS**, *n.* கிரேக்க மொழியில் 'இயேசு' என்பதன் சுருக்கத்தைக் குறிக்கும் சின்னம்.

**ilei'tis**, *n.* சிறுகுடற் பின்பகுதியின் அழற்சி.

**ile'um**, *n.* சிறுகுடற் பின்பகுதி.

**il'ex[1]**, *n.* இலையுதிராச் 'சீமை ஆல்' வகை; *pl.* i'lices, il'exes.

**Il'ex[2]**, *n.* (தாவ.) முள்ளிலைகளும் பசிய சிறுமலர்களும் சிவப்புப் பழங்களுங்கொண்ட இலையுதிராப் புதர்ச்செடி உள்ளிட்ட பேரினம்.

**il'iac**, *a.* (உள்.) இடுப்புச்சார்ந்த; இடுப்பெலும்புக்குரிய; (தொ.) iliac artery, இடுப்புக் குருதிநாளம்; iliac passion, அடிக்குடரில் அடைப்பு ஏற்படுவதனால் உண்டாகும் நோக்காடு.

**Il'iad**, *n.* திராய் (Troy) முற்றுகையைப் பொருளாகக்கொண்டு ஹோமர் எழுதியதாகச் சொல்லப்படும் பண்டைக் கிரேக்க கவிதைக் காப்பியம்; தொடர் நெடுங்கதை; (தொ.) Iliad of woes, தொடர்ச்சியாக வருந்துன்பங்களின் தொகுதி.

***il'ium***, (ல.) *n.* (உள்.) இடுப்பெலும்பு; *pl.* il'ia.

**ilk**, *a.* அதே; (தொ.) of that ilk, அதே குடிப்பெயருடைய; அதே வகைப்பட்ட.

**ill**, *n.* தீமை, கேடு; தீங்கு, பொல்லாங்கு; கெடுதி, கேடான செய்தி; *a.* கெட்ட, தீய; தீங்கிழைக்கிற; கேடுசூழ்கிற; ஒழுக்கக்கேடான; அவல நிலையிலுள்ள; பொல்லாங்கான, பாதகநிலையிலுள்ள; துயர் தருகிற; இடர்ப்பாடான, கடுமைவாய்ந்த; கண்டிக்கத்தக்க; நோயுற்ற; தவறான; *adv.* மோசமாக, கேடாக; மாறாக, பாதகமாக; அரை குறையாக, குறைபாடுகளுடன், போதாநிலையில்; தவறாக; திருந்தா நிலையில்; குறி தவறி; வாய்ப்புக்கேடாக; இடர்ப்பட்டு; தொல்லை தொந்தரைகளுடன்; மனக்குறையுடன்; (தொ.) do an ill turn, கேடுசெய்; நலங்கெடு; go ill with, நலத்துக்கு எதிராகு, பாதகமாகு; ill at ease, இருப்புக்கொள்ளா நிலையுடைய, மன உலைவுடைய; ill blood, பகைமை உணர்ச்சி; ill fame, இகழ்ச்சி, பழி, வசை; ill off, மிக மோசமான நிலையில், வறுமைப்பட்டு; ill provided with, துணைச்சாதனங்கள் சரியாகப் பெறாமல், போதா வாய்ப்பு வளங்களுடன்; ill success, அரைகுறையான வெற்றி; ill to please, எளிதில் மகிழ்வுபடுத்த முடியாத; ill will, பகைமை எண்ணம்; it ill becomes one, தகுதிக்கு உகவாது, தகாது; take it ill, சினங்கொள்.

**ill'-advised'**, *a.* மதியற்ற; ஆய்ந்தமைந்த உணர்வில்லாத; தவறாக முடிவு செய்யப்பட்ட.

**ill'-affect'ed**, *a.* பரிவுகாட்டாத, ஆதரவு காட்டாத.

**illa'tion**, *n.* உய்த்துணர்வு; ஊக முடிவு; அனுமானித்தறியப்பட்ட செய்தி.

**illat'ive**, *a.* சொற்கள் வகையில் அனுமானம் குறித்த; ஊக வாசகத்துக்கு வாயில் செய்கிற.

**ill'-bred'**, *a.* சீர்கேடாகப் பயிற்றுவித்து வளர்க்கப்பட்ட; பண்பற்ற; முரட்டுத்தனமாக நடக்கிற.

**ill'-breed'ing**, *n.* பண்புக் கேடான வளர்ப்பு.

**ill'-condit'ioned**, *a.* வெடுவெடுப்பான; சீர்கெட்ட நிலையிலுள்ள.

**ill'-disposed'**, *a.* தீங்கிழைக்கும் பாங்குள்ள; பழியார்வமுள்ள; சுமுகமாயிராத.

**illeg'al**, *a.* சட்டப்படியிராத, சட்டத்துக்குமாறான, முறைகேடான.

**ille'gible**, *a.* விளங்காத, தெளிவாயிராத, படிக்கமுடியாத.

**illegit'imate**, *n.* முறைகேடாகப் பிறந்தவர்; திருமண மூலமாகவன்றிப் பிற முறையில் பிறந்தவர்; *a.* சட்ட இசைவு பெற்றிராத; தக்கதாயிராத; திருமணமூலமாகவன்றிப் பிற முறையில் பிறந்த, முறைகேடாகப் பிறந்த; தவறாக உய்த்துணரப்பட்ட; இயல்முரணிய; *v.* சட்டத்துக்கு மாறானதாக்கு; முறைகேடனென்று அறிவி.

**ill'-fat'ed**, *a.* அழிவுநோக்கிய, கேட்டுக்கு இட்டுச்செல்கிற; கெடுகேடான.

**ill'-fa'voured**, *a.* அழகற்ற; வெறுப்புத்தருகிற; விரும்பத்தகாத, விலக்கத்தக்க.

**ill'-gott'en**, *a.* தீய வழியில் ஈட்டப்பட்ட.

**ill'-hu'moured**, *a.* கடுகடுப்பான.

**illib'eral**, *a.* குறுகிய நோக்குடைய; கையிறுக்கமான, கஞ்சத்தனமான; நாகரிகமில்லாத, இழிந்த, மோசமான; மேம்பட்ட பண்பாடு அமையப்பெறாத; உரிமைபெற்ற மனிதருக்குத் தக்கதாயிராத.

**illi'cit**, *a.* சட்டத்தால் விலக்கப்பட்ட; கள்ளத்தனமான; மறைமுகமான; உரிமைச்சீட்டுப் பெறாத; கள்ளவாணிகத்துக்குரிய; மறையொழுக்கம் சார்ந்த; விதிமுறைக்கு மாறான, தவறான.

**illim'itable**, *a.* எல்லையற்ற, வரம்பின்றிப் பரந்தகன்ற.

**illit'erate**, *n.* தற்குறி, எழுதப்படிக்கத்தெரியாதவர்; *a.* எழுத்து வாசிப்பற்ற, எழுதப்படிக்கத்தெரியாத, கல்லாத.

**ill'-judged'**, *a.* மடமையான; ஆய்ந்தோய்ந்து பாராத, ஆய்வமைவற்ற.

**ill'-mann'ered**, *a.* நடைகேடான, முரட்டுத்தனமாக நடக்கிற.

**ill'-na'tured**, *a.* வெடுவெடுப்பான, சிறிவிழுகிற.

**ill'ness**, *n.* உடல்நலக்கேடு, பிணி, நோய்.

**illog'ical**, *a.* முன்பின் முரணான, பொருத்தக்கேடான; அளவைமுறைக் கொவ்வாத, தருக்கமுரணான.

**ill'-o'mened**, *a.* தீக்குறியான; அவப்பேறு சுட்டிய.

**ills**, *n. pl.* இடையூறுகள், காலக்கேட்டால் வரும் இடர்கள்.

**ill'-starred'**, *a.* தீக்கோளில் பிறந்த; அவப்பேறான.

**ill'-tem'pered**, *a.* கடுகடுப்பான.

**ill'-timed'**, *a.* பொருத்தமற்ற நேரத்தில் சொல்லப்பட்ட, வேளைக்கேடான.

**ill-treat'**, *v.* சீர்கேடாக நடத்து, கொடுமைப்படுத்து.

**illume'**, *v.* (செய்.) விளக்கேற்று; ஒளிகொடு, ஒளிரச்செய்.

**illum'inate**, *v.* விளக்கேற்று; வெளிச்சம் காட்டு; ஒளி விளக்கம் செய்; மூளை தெளிவி; மயக்கநீக்கு; விளக்கம் அளி, பொருளை விளக்கு; ஒளிரச்செய்; விழாக்கோல ஒளிவிளக்க ஒப்பனை செய்; கையெழுத்துச் சுவடியின் முதலெழுத்து முதலியவை வகையில் பொன் வெள்ளி மெருகிடு; வண்ண மெருகூட்டு.

**illuminati'**, *n. pl.* அறிவொளி பெற்றோர், புத்தெழுச்சி பெற்ற பல 18-ஆம் நூற்றாண்டுக் கழக உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்ட பெயர்.

**illum'ine**, *v.* ஒளி விளக்கம் அளி; ஆன்மிக அறிவொளி யூட்டு; ஒளிர்வி.

**ill-use'**, *v.* சீர்கேடாக நடத்து, கொடுமைப்படுத்து.

**illu'sion**, *n.* மயக்கம், மருட்சி; பொய்த்தோற்றம்; மாயத் தோற்றம்; போலி எண்ணம், போலிக்கருத்து; போலி நம்பிக்கை; விழிமாருட்டத் தோற்றம்; ஏமாற்றம்; மிக நுட்பமான மெல்லிய பளிங்கனைய பட்டுநூல் வலைத்துணி.

**illu'sionist**, *n.* மாயாவாதி, புறவுலகு வெறும் பொய் என்னுங் கோட்பாட்டாளர்; பொய்த்தோற்றங்கள் உண்டாக்குபவர்; மாயவித்தைக்காரர்.

**illus'ive**, *a.* ஏமாறச் செய்கிற; போலித் தோற்றமான; மாயமான; மருட்சி தருகிற.

**illus'ory**, *a.* பொய்த்தோற்றங்களால் ஏமாற்றுகிற, மருட்சி தருகிற.

**ill'ustrate**, *v.* தெளிவாக்கு, விளக்கு; எடுத்துக்காட்டு வாயிலாக விளக்கமளி; ஒப்புமைகாட்டித் தெளிவாக்கு; படங்கள்மூலம் விளக்கு; படங்களெழுதி அழகுபடுத்து; உருவரைகளால் அழகொப்பனை செய்.

**illustra'tion**, *n.* தெளிவாக்குதல்; எடுத்துக்காட்டு; விளக்கப் படம்.

**illus'trative**, *a.* விளக்குகிற; எடுத்துக்காட்டாகப் பயன்படுகிற.

**illus'trious**, *a.* புகழ்பெற்ற; முதன்மையான; சிறப்புவாய்ந்த; மேதக்க; தேசுடைய.

**im'age**, *n.* உருவம், படிவம்; உருவச்சிலை; படிமம்; புனிதர் திருவுருவச்சிலை; ஒத்த வடிவம்; உருவச்சாயல்; உருமாதிரி; எதிர் உரு, எதிர் படிவம்; பளிங்கில் தெரியும் நிழலுரு; உவம உருவக அணி; கருத்துரு, கருத்துப்படிவம்; மனச்சாட்சித் தோற்றம்; *v.* உருவங்கொடு; படந்தீட்டு; மனத்தில் உருவங் கற்பித்துக்காண்; நிழலுருப்படுத்திக்காட்டு; உருமாதிரியாய் அமை; மாதிரி எடுத்துக் காட்டாகப் பயன்படு; விளங்க விரித்துரை.

**im'agery**, *n.* உருவங்களின் தொகுதி, உருவங்கள்; உவம உருவக அணி வகை; இலக்கிய அணி; நினைவுக்காட்சி, மனத்தகத் தோற்றம்; புனைவாற்றல், கற்பனை.

**im'age-wor'ship**, *n.* உருவ வழிபாடு.

**ima'ginable**, *a.* கற்பனை செய்யப்படத்தக்க, மனத்தினுல் பாவிக்கப்படத்தக்க, நினைத்துப்பார்க்கக்கூடிய.

**ima'ginal**, *a.* (பூச்.) நிறை வளர்ச்சியடைந்த.

**ima'ginary**, *a.* கற்பனையான; உளதாயிராத; புறமெய்ம்மையற்ற; (கண.) கற்பிக்கப்பட்ட, கணிப்பளவில் உளதாயிருப்பதாகக் கொள்ளப்படுகிற; (தொ.) imaginary line, (கண.) கற்பனைக்கோடு; imaginary point, (கண.) கற்பனைப்புள்ளி; imaginary quantities, (கண.) கற்பனைக் கணிப்பளவைகள்.

**imagina'tion**, *n.* கற்பனை செய்தல்; புனைவாற்றல், கற்பனைத் திறம்; கலைப்புனைவுத்திறம்; பாவனை, போலி எண்ணம்; கட்டற்ற புனைவு, மாயத்தோற்றம்; வீண் எண்ணம்; போலிப்புனைவு; மனத்தின் படைப்புத்திறன்.

**ima'ginative**, *a.* சற்பனைத்திறத்துக்குரிய; கற்பனைத்திறத்தினைப் பயன்படுத்தும் பாங்குள்ள; மிகுகற்பனைத்திறம் வாய்ந்த.

**ima'gine**, *v.* கற்பனை செய், கற்பனையாற்றலைப் பயன்படுத்து; கருத்துருவாக்கிக்கொள்; வீண் எண்ணங்கொள், செருக்கிக்கொள்; எண்ணிப்பார்; ஊகி, உய்த்தறி; பாவித்துக்கொள், எண்ணிக்கொள்; உள்ளூரக்கருது; ஐயுறு; எண்ணு; கருத்தினை உட்கொள், எண்ணம் மேற்கொள்.

**im'agist**, *n.* கவிதைப்புனைவியல் திட்பக்குழுவினர், உணர்ச்சி வசப்படாமல் சரியான சொற்களை ஆண்டு மிகத் தெளிவாகவும் செறிவாகவும் பாடல்களியற்ற வேண்டுமென்பதை நோக்கமாகக்கொண்ட 20-ஆம் நூற்றாண்டுத் தொடக்ககாலக் கவிஞர்குழுவினர்.

**imag'o**, *n.* முற்றுரு, பூச்சி வாழ்க்கையில் எல்லா மாறுதல்களையும் அடைந்தபிறகு இறுதியாக ஏற்படும் முழு நிறைவான நிலை; *pl.* imag'ines, imag'os.

**imam'**, **imaum'**, *n.* பள்ளிவாசலுக்குரிய இஸ்லாமிய சமய குரு; பள்ளிவாசல் வழிபாட்டு முதல்வர்; இஸ்லாமியத் தலைவர்களின் பட்டப்பெயர்.

**im'becile**, *n.* பிறப்பிலேயே மூளைச்சோர்வுடையவர், ஏலா அறிவிலி; தன்னிலையற்றவர்; *a.* இயல்பான அறிவுமுடமுடைய, ஏலா மூளைத்தளர்ச்சியுடைய; தன்னிலையற்ற.

**imbibe'**, *v.* உள்ளீர்த்துக்கொள், ஈரம் உறிஞ்சு; காற்று உள்வாங்கு, மூச்சு உள்வாங்கு; உட்கொண்டு செரிக்கவை, நீர் பருகு, குடி; மனத்தில் வாங்கிக்கொள், கருத்துக்களை ஏற்றமை.

**im'bricate**, *v.* கவிந்து பாவு, மோட்டில் ஓடுகள் போன்று ஒன்றன்மேற் சென்று ஒன்று கவியும்படியாகப் பரப்பி அடுக்கு, இலைகள் மீன் செதிள்கள் போன்று பரவலாக அமைவி.

**imbro'glio**, *n.* குழப்பநிலை; அரசியல் சிக்கல்நிலை; நாடக நெருக்கடிக் கட்டநிலை; இசைத்துறையில் குழப்பநிலைபோலத் தோற்றமளிக்கும்படி வகுத்தமைக்கப்படும்நிலை.

**imbrue'**, *v.* குருதி முதலியவற்றின் கறைபடுவி; நீர்மத்தில் தோய்வி.

**imbrute'**, *v.* விலங்குபோல் ஆக்கு; விலங்குத்தன்மை யூட்டு.

**imbue'**, *v.* சாயம் தோய்வி; ஊறிச் செறியவை; ஊடுருவிப் பரவச்செய்; உள்நின்று இயக்குவி, ஊக்குவி.

**im'itable**, *a.* பார்த்துப் பின்பற்றத்தக்க, போன்று செய்யத் தக்க.

**im'itate**, *v.* பின்பற்று; பார்த்துப் பழகு; போலிசெய்; ஏறக்குறைய ஒப்புடையதாகச் செய்யமுயலு; போன்று நடி; போன்று நட, போலி ஒப்புமைகாட்டி நடி, நையாண்டி நடிப்புச்செய்.

**imita'tion**, *n.* பார்த்துப் பின்பற்றுதல்; போலிசெய்தல்; போலி காட்டி நடிக்கும் நடிப்பு, போலி, போலித்தோற்றம்; போலிப்பொருள்; இரண்டாந்தரச் செயற்கைப்பொருள்; ஏமாற்றுச் சரக்கு, புறத்தோற்ற மட்டுமே ஒத்த அகப்பண்பற்ற பொருள்; *a.* போலியான; புறப்பகட்டான; புறநடிப்பியல்புடைய; அகப்பண்பற்றுப் புறத்தோற்ற மட்டுமே ஒத்த; செயற்கையான; பார்த்துச் செய்யப்பட்ட; இரண்டாந் தரமான; பூவேலைத் துன்னல் வகையில் இயந்திரத்தால் செய்யப்பட்ட.

**im'itative**, *a.* பின்பற்றுகின்ற, பின்பற்றும் இயல்புடைய; போன்று செய்கின்ற; போலியாக நடிக்கின்ற; மாதிரியைப் பின்பற்றி அமைக்கப்பட்ட; போலியான; (தொ.) imitative arts, ஓவியமும் சிற்பமும் போன்ற இயற்கையைப் பின்பற்றும் கலைகள்; imitative word, இயற்கை ஒலியைக் குறித்து அவ்வொலியோடு கூடிய சொல்; பொருளின் தோற்றம் பண்பு முதலியவற்றை ஒலியால் குறிப்பிடுவதாகக் கருதப்படும் சொல்.

**immac'ulacy**, *n.* மாசிலா இயல்பு, கறையற்ற தன்மை, விழுமிய தூய்மைநிலை.

**immac'ulate**, *a.* மாசற்ற, கறையற்ற, களங்கமற்ற, விழுத் தூய்மைவாய்ந்த ; (தொ.) Immaculate Conception, தூய மரியன்னையின் (Blessed Virgin Mary) மனித இனத் தொடக்கப் பழியின் கறையற்ற சூலமைவு.

**imm'anence, imm'anency**, *n.* உள்ளுறைவியல்பு; பாலில் நெய்போல் இயல்பாக எங்கும் ஊடுருவிப் பரவியுள்ள இறைவனின் தன்மை.

**imm'anent**, *a.* உள்ளார்ந்த, இயல்பாயுள்ள, இயற்கையாய் அமைந்திருக்கிற, நிலைபேறான தன்மையில் படைப்பு முழுமையும் பரவி நிலவியுள்ள.

**imm'anentism**, *n.* எங்கும் நிலவியுள்ள கடவுள் பற்றிய நம்பிக்கை, இயல்பாக ஊடுருவிப் பரந்தியலும் இறைமை பற்றிய கோட்பாடு.

**Imman'uel**, *n.* இயேசுநாதரைக் குறித்த பெயர்.

**immater'ial**, *a.* பொருள் தன்மையில்லாத ; உடலற்ற ; உடல் சார்பில்லாத ; ஆவியியலான ; நுண்ணியலான ; கருத்தியலான ; புறக்கணிக்கத்தக்க, முக்கியமல்லாத.

**immater'ialism**, *n.* புலக்காட்சிப்பொருள்கள் தம்மியல்பாக உளதாம் தன்மை கொண்டனவல்ல என்னும் கோட்பாடு.

**immaterial'ity**, *n.* பொருள்தன்மையற்றநிலை, தூலப்பொருளற்ற தன்மை.

**immate'rialize**, *v.* தூலப்பொருளிலிருந்து பிரி.

**immature', immatured'**, *a.* முதிராத; முழுதும் விளையாத; பழுக்காத, பக்குவப்படாத; பருவமடையாத, நிறைவுறாத.

**immea'surable**, *a.* அளவிடற்கரிய, மிகப்பெரிய, வரம்பிட இயலாத.

**immed'iate**, *a.* அடுத்துள்ள ; இடையீடின்றி அருகிலுள்ள ; அடுத்த, மிக நெருங்கிய ; நேரடியான ; உடனடியான ; காரண வகையில் நேர் தொடர்புத் தூண்டுதலான, இடைக் காரண நிலைகளற்ற ; காலந்தாழ்த்தாத, சுணக்கமற்ற ; அடுத்துப் பின்வருகிற ; அடுத்துப்பின் நிகழ்வான ; (தொ.) immediate inference, (அள.) நேரடியான அனுமானம், உடனடியான முடிவு, இடையீடில்லாமல் ஊகித்துணர்தல்.

**imme'diatism**, *n.* உடனடியான தன்மை, உடனடியாகச் செயலாற்றும் கொள்கை.

**immemor'ial**, *a.* மிகப்பழமையான, தொல்பழமையான, நினைவுக்கு எட்டாத பழங்காலத்தைச் சேர்ந்த.

**immense'**, *a.* மிகப்பெரிய, அளக்க முடியாத, மிகப்பரந்த.

**immense'ly**, *adv.* மிகப்பெரிய அளவில் ; மிகுதியாக.

**immens'ity**, *n.* அளக்க இயலாப் பெரும்பரப்பு, எல்லையற்ற பேரளவு ; பெருஞ்சிறப்பு.

**immerse'**, *v.* மூழ்குவி, நீர்மத்தில் உள் அமிழ்த்து ; உள் அமிழ்த்திவை, தோய்வி ; மூழ்கடி, உள் அமிழச்செய் ; தீக்கை முறையாகத் தலையை நீரினுள் அமிழ்த்து ; ஆழ ஈடுபடுத்து, கவனமுற்றிலும் தோய்வி.

**immersed'**, *a.* மூழ்கடிக்கப்பட்ட; தோய்ந்த; (தாவ.) இழைமங்களுடன் தோய்ந்து சிக்கிய.

**immer'sion**, *n.* மூழ்குவிப்பு; மூழ்குநிலை; அமிழ்வு, தோய்வு; தீக்கைத் திருமுழுக்கு; வானகோளத்தின் நிழல் மறைவு, மற்றொரு கோளத்தின் நிழலில் மறைதல்; தோய் வாழ்வு, ஆழ்ந்த ஈடுபாடு; (தொ.) immersion heater, நீர்மத்தில் உள் தோய்ந்து நின்று வெப்பூட்டும் மின்கருவி.

**imm'ersionist**, *n.* முழுதும் நீரில் மூழ்கும் தீக்கை முறையை ஆதரிப்பவர் அல்லது கடைப்பிடிப்பவர்.

**imm'igrant**, *n.* குடிபுகுபவர், வந்தேறி.

**imm'igrate**, *v.* பிறநாட்டிலிருந்து வந்து குடியேறு, குடிநுழை, குடிபுகு ; குடியேறுபவர்களாகக் கொண்டுவா.

**immigra'tion**, *n.* குடியேறுதல்.

**imm'inence**, *n.* அண்மையில் நிகழப்போகிற நிலை, உடனடியாக நேரவிருக்கும் இடர்.

**imm'inent**, *a.* நெருங்கி வர இருக்கிற, அண்மையில் நிகழப்போகிற, உடனடியாக நிகழக்கூடிய, வருவதாக அச்சுறுத்துகிற.

**immis'cible**, *a.* கலக்க முடியாத, கலப்பதற்கு இடந்தராத.

**immit'igable**, *a.* தணிக்க முடியாத, அமைக்க இயலாத, மட்டுப்படுத்த இயலாத.

**immix'ture**, *n.* கூட்டுக்கலப்பு, சிக்குறவு.

**immob'ile**, *a.* இயங்காத ; அசைவற்ற ; நகர்த்த முடியாத.

**immob'ilize**, *v.* அசைக்கமுடியாதபடி பொருத்து; படைகள் ஊர்திகள் வகையில் வேறொரு இடத்திற்கு இடம் பெயர்க்க முடியாதபடி செய் ; செலாவணியிலிருந்து நாணயத்தைத் தடுத்துத் திரும்பப் பெற்றுக்கொள்.

**immod'erate**, *a.* முனைப்பான, நடுநிலை இகந்த; மட்டுமீறிய, எல்லை கடந்த, கட்டுக்கடங்காத; அளவுமீறிச் செலவுசெய்கிற, ஊதாரித்தனமான.

**immodera'tion**, *n.* அளவுமீறிய தன்மை ; மட்டுமிஞ்சிய நிலை ; கழிமிகை, மிகைபாடு, மிகுதி.

**immod'est**, *a.* அடக்கமற்ற ; நடைநயமற்ற ; துடுக்கான ; நடைமுனைப்பான ; வெட்கமில்லாத ; வரம்புமீறிய, மதிப்புக்கேடான.

**imm'olate**, *v.* பலியாக்கு, பலியாக ஒப்படை ; பலியாகக் கொல்லு; மற்றொருவருக்காக நலங்களைத் துற, தியாகம் செய்.

**immo'ral**, *a.* ஒழுக்கமற்ற, நெறியற்ற; நன்னெறிக்குப் புறம்பான, ஒழுக்கக்கேடான; கொடிய; நெறிகெட்ட, தீயொழுக்கமுள்ள.

**immort'al**, *n.* இறவாதவர்; தேவர்; இறவாப்புகழுடையவர்; புகழ் நிலைபெற்ற இலக்கிய எழுத்தாளர் ; பிரஞ்சுக்கலை இலக்கியக்கழக உறுப்பினர்; *a.* இறப்பற்ற, இறவாமையுற்ற; தெய்விகமான ; அழியாத ; என்றும் புகழ் பெற்றுள்ள, நிலைபேறான.

**immort'alize**, *v.* இறவாநிலை வழங்கு ; அழியாப்புகழை அளி ; நிலைபேறான வாழ்வளி ; நீடித்து நிலைத்திருக்கச்செய்.

**immort'ally**, *adv.* நிலையாக, என்றுமுள்ளதாக, நீடித்ததாக.

**immort'als**, *n. pl.* பண்டைக்கிரேக்கரின் தேவர்கள்; தெய்வங்கள் ; பண்டைக்காலப் பாரசீக அரசரின் மெய்காப்பாளர் குழு.

**immortelle'**, *n.* உலர்ந்தபின்பும் நிலையான வண்ணமுடன் கல்லறைகளை அழகுபடுத்தும் தாள் போன்ற மலர்க்கொத்து வகை.

**immo'vable**, *a.* இயங்காத; இயக்கமற்ற; வளைந்துகொடுக்காத ; மாறுதலுக்கு இடங்கொடாத ; அசைக்கமுடியாத, உறுதியான ; உணர்ச்சியற்ற.

**immo'vables**, *n. pl.* நிலை உடைமைகள், புடைபெயர்க்க முடியாத செல்வக்கூறுகள், தாவர சொத்துக்கள்.

**immune'**, *n.* பிணிகளினின்று முழுநிறை தடைகாப்புப் பெற்றவர் ; *a.* நஞ்சு தொற்றுநோய் முதலியவற்றினின்றும் விடுபாடு உடைய, தடைகாப்புறுதி பெற்ற.

**immun'ity**, *n.* (சட்.) காப்புரிமை ; (சட்.) விடுபாட்டுரிமை; (மரு.) தடைகாப்புநிலை.

**imm'unize**, *v.* தொற்றுநோய்களினின்று தடைகாப்பு அளி.

**immure'**, *v.* சிறைப்படுத்து ; அடைத்துவை.

**immut'able**, *a.* மாற்றமுடியாத, மாறாத, நிலையான, மாறும் இயல்பற்ற.

**imp** [1], *n.* பேய்க்குட்டி ; கூளி, குறளி ; குறும்புத்தனமுள்ள குழந்தை ; குழந்தை.

**imp** [2], *v.* வேட்டைப்பருந்தின் சிறகுகளில் ஒட்டுச்சேர்; ஒட்டுச் சேர்த்து வலுப்படுத்து.

**im'pact** [1], *n.* மோதுதல், தாக்குதல், அடியின்வேகம் ; தாக்குதல் விளைவு ; விசைப்பயன் ; விசைவலு ; பயன் ; செயல் விளைவு.

**impact'** [2], *v.* அழுத்தமாகப் பதியவை, வலிவாக ஊன்றவை, நெருக்கு, இறுக்கிப்பிணை.

impair', v. அழி, பதங்கெடு; சேதப்படுத்து, ஊறுபடுத்து, பழுதாக்கு; ஆற்றல் குறை.

impale', v. கழுவேற்று; கூரிய முளையை உடலில் குத்தி ஊடுருவச் செய்; செருகிவை; குத்திவை; கழிகளால் வேலியமை; வரம்புகட்டு; அடைத்துவை; (கட்.) பிரிக்கப்பட்ட இரு குலமரபுச்சின்னங்களைச் செங்குத்தான நடுக்கோடிட்டு அருகருகாக வைத்து இணை.

impal'pable, a. தொட்டு உணரமுடியாத; மிகமெல்லிய; நுண்ணியலான; மனத்தாற் பற்ற முடியாத; உணரமுடியாத; புதிரான.

impal'udism, n. சதுப்புநில வாழ்நரிடையே காணப்பெறும் இடையிடையிட்ட மண்ணீரல் அழற்சியும் காய்ச்சலும் வாய்ந்த பிணிவகை.

impan'ate, a. இயேசுநாதரின் திருவுடல் வகையில் திருநேர்வு பெற்ற திருவுணு அப்பத்திலடங்கிய.

impana'tion, n. திருநேர்வு பெற்ற திருவுணு அப்ப வகையில் இயேசுநாதரின் திருமேனி உளப்பாட்டடக்கம்.

impan'el, v.=empanel.

impa'radise, v. பொன்னுலகாக்கு, பொன்னுலக மயமாக்கு; பேரின்ப நிலைக்குக்கொணர்; பேரின்பமளி; களிமகிழ்வூட்டு.

imparisyllab'ic, n. பண்டைக்கிரேக்க லத்தீன் மொழி இலக்கணங்களில் ஆறும் வேற்றுமையில் எழுவாய் வேற்றுமையை விட மிகுதியான அசைகளைக் கொண்ட பெயர்ச்சொல்; a. பண்டைக் கிரேக்க லத்தீன் மொழி இலக்கணங்களில் பெயர்ச்சொல் வகையில் ஆறும் வேற்றுமையில் எழுவாய் வேற்றுமையைவிட மிகுதியான அசைகளைக்கொண்ட.

impark', v. விலங்குகளைத் தோட்டத்தில் அடை; பூங்காவிற்காக நிலத்தைச் சுற்றி வேலியடை.

impart', v. பங்களி; செய்திகூறு; தெரிவி.

impar'tial, a. நடுநிலை தவறாத, ஒருதலை சாயாத; தப்பெண்ணமற்ற; நடுநேர்மை வாய்ந்த.

impart'ible, a. பிரிக்கமுடியாத; பங்கிடத்தகாத.

impass'able, a. கடந்துசெல்ல முடியாத.

impasse', n. முட்டுச்சந்து; தப்பிக்க முடியாதநிலை.

impass'ible, a. உணர்ச்சித்திறமற்ற; உணரும் திறமில்லாத, துன்ப உணர்வற்ற; துன்பத்துக்கு ஆட்படாத; வருத்த முணரும் இயல்பற்ற.

impa'ssion, v. உணர்ச்சியூட்டு, உணர்ச்சி கிளர்ந்தெழச் செய், முனைப்பான தூண்டுதலளி.

impass'ive, a. உணர்ச்சித்திறக் குறைவான; கிளர்ச்சியற்ற; துன்பமுணராத; ஆரமைதியுடைய, அசைக்க முடியாத வீறமைதி வாய்ந்த.

impaste', v. பசைப்பொருளில் பொதி; பசைபோன்ற பொருளில் பதித்துவை; பசைக் களிம்பாக்கு; வண்ணச்சாயங்களை அப்பிச் சாயம் தீட்டு.

impas'to, n. திண்சாயப்பூச்சு, கெட்டியாக வண்ணச்சாயம் அப்பிய நிலை.

impa'tience, n. பொறுமையின்மை, பொறுமையற்ற விரைவு; அமைவின்மை, படபடப்பு; சகிப்பின்மை.

impa'tient, a. பொறுமையற்ற; பதற்றமான, மன அமைதியற்ற; சகிப்புத்தன்மையற்ற; ஆத்திரமான, அமைதியற்ற தன்மையில் ஆர்வமுற்ற.

impawn', v. அடகுவை; ஈடாகவை, உறுதிக்காப்பாக அளி.

*impayable*, (பிர.) a. விலைமதிப்பற்ற.

impeach', v. உச்சஉயர் பேரவை மன்றத்தில் நிறுத்தி அரசுப் பகைமைக் குற்றஞ்சாட்டு; பேரவைப் பொதுமன்றத்தின் சார்பாக உயர்மன்றத்தில் அரசியல் உயர்பணியாளர்மீது குற்றஞ்சாட்டு; மன்றச்சான்ருகி உடன்குற்றவாளிமீது குற்றம் தாக்கு; குறைகாண், இழித்துரை, மதிப்புக்குறைப்படுத்து.

impeach'able, a. குற்றத்துக்கிடமான, குறைகாணத்தக்க.

impeach'ment, n. மன்பகைக் குற்றச்சாட்டு; அரசியல் குற்றச்சாட்டு, பழிப்பெதிர்ப்பு, குற்றத்தாக்குதல்.

impecc'able, a. பழிக்கிடந்தராத, மாசற்ற, குற்றமில்லாத; குறையற்ற.

impecun'ious, a. கையில் பணமில்லாத, பணமுடைப்பட்ட.

imped'ance, n. (மின்.) மாற்று மின்னோட்டத்துக்கு ஏற்படும் புறத்தோற்றத்தடை.

impede', v. தடைசெய்; முட்டுக்கட்டையிடு, தாமதப்படுத்து.

imped'iment, n. தடை, இடர்ப்பாடு, குறை; (தொ.) impediment in one's speech, திக்கிப்பேசுதல், தெற்றுவாய்.

impel', v. உந்துவி, முன்னேறச்செய், தூண்டு; இயக்கு, செலுத்து, ஓட்டு; கட்டாயப்படுத்திச் செய்வி.

impend', v. தொங்கு, ஊசலாடு; அச்சுறுத்தும் நிலையில் இரு; எக்கணமும் நிகழஇரு; வரஇரு, நடைபெற இரு.

impen'etrable, a. ஊடுருவிச்செல்ல இடந்தராத, துளைக்க முடியாத; அறிய முடியாத, ஆழங்காண முடியாத, கருத்தேற்கும் இயல்பற்ற, முட்டாளான; (மெய்.) இட இயல்பு வகையில் ஒருங்கு இருபொருள் புகுந்திடப்பெறமுடியாத.

impen'etrate, v. ஆழ்ந்து ஊடுருவு, நுழை; உற்றறி.

impen'itent, a. பிழைக்கிரங்காத, கழிவிரக்கமற்ற; தீமையில் தோய்ந்து கல்மனப்பட்ட.

impe'rative, n. (இலக்.) வினையின் ஏவல்வடிவம்; a. கட்டளையிடுகிற, அதிகாரமான; அவசரமான; தவிர்க்க முடியாத; (இலக்.) ஏவலைக் குறிக்கிற.

*imperat'or*, (ல.) n. (வர.) பண்டை ரோமாபுரியில் தளபதி, வெற்றியுடன் திரும்பும் படைத்தலைவர்; சக்ரவர்த்தி, பேரரசர்.

impercep'tible, n. புலப்படா நுண்பொருள்; a. புலனால் அறியப்படமுடியாத; உணரமுடியாத; காணப்பட முடியாத, புலப்படாத; சிறு அளவான, மிகநுட்பமான; நுண்ணியலான.

impercip'ient, a. புலனறிவிற் குறைபாடுடைய.

im'perence, n. கல்லா ஆணவம், மடமைத் துணிவு.

imperf'ect, n. (இலக்.) முடிவுறுநிலை குறித்த வினைச்சொல்லின் காலப்படிவம்; வினையின் முடிவுறா இறந்தகாலம்; a. குறைபாடான, நிறைவுறாத; குற்றமுள்ள; (இலக்.) வினைச்சொற் காலப்படிவ வகையில் முடிவுறுநிலை குறித்த; (தொ.) imperfect tenses, (இலக்.) முடிவுறா நிலைகுறித்த வினைச்சொற் காலங்கள்.

imperfec'tion, n. குறைபாடு; குற்றம், தவறு; கறை, மாசு, நிறைவுறுநிலை.

imperf'orate, a. துளையற்ற, துளையிடப்படாத; அஞ்சல் தலை வகையில் துளைவரியற்ற; அஞ்சல்தலை வரித்தாள் வகையில் துளைவரியிடப்படாத; (உள்.) இயல்பான புழைகள் இல்லாத.

imper'ial, n. கீழுதட்டின் அடிப்புறத் தாடிப்பகுதி; மோட்டிலிடத்தக்க மூடைப்பெட்டி; ருசிய தங்க நாணயம்; a. பேரரசுக்குரிய; பிரிட்டனின் மைய அரசைச் சார்ந்த; பேரரசைச் சார்ந்த; ஏகாதிபத்தியஞ்சார்ந்த; உச்சஉயர் அதிகாரமுடைய, தனிமுதல் உரிமையுடைய; மாட்சிமை மிக்க, மேன்மை தங்கிய; பகட்டழகுடைய; சிறந்த; பிரிட்டனில் வாணிக அளவைகளின் வகையில் மைய ஆட்சியின் சட்டவரம்புக் கட்டளைப் பட்ட பகுஅளவையுடைய; தாள் வகையில் 22 × 32 அங்குல அளவுடைய; (தொ.) imperial federation, பேரரசு கூட்டுக்குழு; Imperial Institute, பிரிட்டனின் பேரரசு நாடுகளிடையே வாணிகத்தொடர்புகளுக்குரிய இலண்டனிலுள்ள கட்டிடம்; imperial preference, பேரரசு நாடுகளுக்குரிய சலுகை, பிரிட்டனின் பேரரசுக் கூட்டிணைவு நாடுகளிடைப்பட்ட சரக்குகளுக்குக் குறைந்த வரி விதிக்கும் முறை.

imper'ialism, n. சக்ரவர்த்தியின் ஆட்சி; பேரரசு ஆட்சி முறை; பேரரசுத் தன்மை, பேரரசுக் கோட்பாடு; பிரித்தானியப் பேரரசின் பல்வேறு பகுதிகளின் போர்ப்பாதுகாப்பு உள்நாட்டு வணிகம் முதலியவற்றிற்கான கூட்டிணைப்பு; குடியேற்ற நாடுகளால் வரும் வளம் பற்றிய நம்பிக்கை.

**imper'ialist**, *n.* பேரரசின் ஆதரவாளர்; பேரரசுக் கோட்பாட்டு ஆதரவாளர்; (வர.) செர்மன் பேரரசரின் ஆட்சியை ஆதரிப்பவர்; பிரித்தானிய ஏகாதிபத்தியவாதி, ஏகாதிபத்திய ஆதரவாளர்.

**impe'ril**, *v.* இடுக்கணுக்கு உள்ளாக்கு, இடர்ப்பாட்டுக்கு உட்படுத்து.

**imper'ious**, *a.* அதிகாரமனப்பான்மையுள்ள; மேலாதிக்க மிக்க தொனியையுடைய; வீறுப்பான, இறுமாப்புவாய்ந்த; கட்டளையிடுகிற; தவிர்க்கமுடியாத; அதிரடியான, இமைக்கப் பொறுத அவசரமுடைய.

**impe'rishable**, *a.* அழியாத, அழிவில்லாத.

***impe'rium***, (ல.) *n.* கட்டற்ற வல்லாட்சி; மேனிலைப் படைத்துறை ஆட்சி; பேரரசு; (தொ.) *imperium in imperio*, (ல.) வல்லாட்சிக்குள் ஒரு வல்லாட்சி.

**imperm'anent**, *a.* நிலையற்ற, நிலைத்திராத, நிலையாமையுடைய.

**imperm'eable**, *a.* ஊடுருவ இடந்தராத, துருவிச்செல்ல முடியாத; (இய.) நீரியற்பொருள்கள் கடந்து செல்லவிடாத.

**impermiss'ible**, *a.* இசைவளிக்கத்தகாத, ஒப்புதலளிக்க இயலாத.

**imperscrip'tible**, *a.* எழுத்து மூலமான ஆணைபெறுத.

**impers'onal**, *a.* ஆளைக்குறிக்காத, பண்புகுறித்த; (இலக்.) ஆட்சார்பற்ற; தனி மனிதரைச் சுட்டாத; பொதுமுறையான; (இலக்.) வினை வகையில் வினைமுதல் சுட்டாத, பொதுச்சுட்டான.

**impers'onate**, *v.* உருவகப்படுத்திக்காட்டு; உருமேற்கொண்டு செயலாற்று; நடித்துக்காட்டு; பாகம் நடி; ஆள்மாருட்டஞ் செய்.

**impersona'tion**, *n.* ஆள்மாருட்டம்.

**imperson'ify**, *v.* பண்புருவகப்படுத்து, பண்பைப் பண்பியாக உருவகஞ் செய்; உருவகஞ் செய், மனித இயல்பு ஏற்றி உரை.

**impert'inence**, *n.* மதிப்பின்மை.

**impert'inent**, *a.* தகாத, முறைகெட்ட, திமிரான; துடுக்குத்தனமிக்க; மட்டுமதிப்பற்ற, வரம்புகடந்த; தகாத்தலையீடான; பொருத்தக்கேடான; முட்டாள்தனமான.

**imperturb'able**, *a.* எளிதில் அமைதி குலையாத, அசையா அமைவுறுதி வாய்ந்த.

**imperv'ious**, *a.* புகவழியளிக்காத, துளைக்கமுடியாத; செவிவழி நுழைய இடங்கொடாத; மூளையில் ஏற்றுக்கொள்ளாத.

**impetig'o**, *n.* கொப்புளத் தொற்றுநோய் வகை.

**im'petrate**, *v.* (இறை.) வேண்டிப்பெறு.

**impet'uous**, *a.* விசைவேகமான, வீசியடிக்கிற; கட்டுக்கடங்காத, வெறித்த, மூர்க்கமான; சிந்திக்காமல் செயலாற்றுகிற.

**im'petus**, *n.* தூண்டுவிசை; செயல்தூண்டுதல், தூண்டுதிறம்.

**im'peyan phea'sant**, *n.* தலைச்சூட்டும் வண்ண அழகுமிக்க இறக்கையும் கொண்ட வான்கோழிவகை.

**im'pi**, *n.* தென் ஆப்பிரிக்க இனத்தவரின் படைவீரர் தொகுதி.

**impi'ety**, *n.* இறைப்பற்றுர்வமின்மை, தெய்வபக்தியற்ற நிலை; சமயத்துறை அவமதிப்பு; மதிப்பார்வக்கேடு; பணிவடக்கமின்மை.

**impinge'**, *v.* மேல்வந்தழுத்து, மோது; தாக்கு, அடி; மோதுவி; மேற்சென்று பாதித்தல்செய்.

**im'pious**, *a.* கடவுட் பற்றில்லாத; சமயத்தை இகழ்கிற, கொடிய, பழிசார்ந்த.

**im'pish**, *a.* குறளி சார்ந்த; குறளி போன்ற; கூளியின் இயல்புடைய; குறும்புமிக்க; குறும்புசெய்து தொல்லை உண்டுபண்ணுகிற.

**impit'eous**, *a.* (செய்.) இரக்கமற்ற.

**implac'able**, *a.* எளிதில் மசியச்செய்ய முடியாத, இணக்குவிக்க இயலாத; தளர்த்தப் பெறமுடியாத; மாருத, கனியாத; விட்டுக்கொடுக்காத, தணியாத.

**implacen'tal**, *a.* நஞ்சுக்கொடியற்ற, தொப்புட்கொடியில்லாத.

**implant'**, *v.* நடு, நட்டுவை; செருகிவை; முளைத்து வளரச்செய்; பயிரிடு; நிலைநாட்டு; புகுத்து; பதியவை; ஆழ்ந்து செறியும்படி செய்.

**implaus'ible**, *a.* பொருத்தமாகத் தோற்றுத.

**impledge'**, *v.* அடகுவை, அடைமானம் வை.

**im'plement**, *n.* கருவி, துணைச்சாதனம், தட்டுமுட்டுப் பொருள்; *v.* ஒப்பந்தத்தை நிறைவேற்று; செயல்முற்றுவி, செயல்துறை நிறைவுசெய்.

**im'plements**, *n. pl.* துணைக்கருவிகளின் தொகுதி, கருவி கலக் கோப்பு.

**imple'tion**, *n.* நிறைத்தல், நிரப்புதல்; நிறைவு, முழுமை.

**im'plicate**, *n.* குறிப்பாகச் சுட்டப்பட்ட பொருள்; *v.* சிக்கவை, பின்னிக்கொள்ளச்செய்; பாதிக்கச்செய்; சிக்கலாக்கு; குறிப்பாகச்சுட்டு; உய்த்துணரும்படி சொல்.

**impli'cit**, *a.* பொருள் தொக்கி நிற்கிற; உள்ளடக்கமான; (தொ.) implicit faith, மட்டுமாற்றங்களற்ற முழுநிறை நம்பிக்கை, ஐயுருப் பற்றுறுதிப்பாடு; திருச்சபை ஏற்பிலே அடங்கியுள்ள நம்பிக்கை, ஏற்ற திருச்சபை மூலமாகவன்றித் தனி மனிதன் தானே நாடி அனுபவத்தால் பெறுத நம்பிக்கை.

**implore'**, *v.* கெஞ்சிக்கேள், மன்றுடு, இரந்து வேண்டு.

**implor'ingly**, *adv.* வற்புறுத்திக் கெஞ்சி, மன்றுடி.

***impluv'ium***, (ல.) *n.* அங்கணம், பண்டை ரோமரின் கட்டட நடுமுற்றத்தில் மோட்டு நீரைச் சேரவாங்கும் தொட்டிக்கட்டு.

**imply'**, *v.* குறிப்பாகச் சுட்டு, பொருள்தொக்கியிருக்கச் செய்; மறைமுகமாகக் குறிப்பிடு; சூழ்ச்சித்திறம்படக் கூறு.

**impold'er**, *v.* கடலிலிருந்து நிலம் மீட்டுப்பெறு.

**impol'icy**, *n.* மோசமான செயற்கோட்பாடு, கால இடச் சூழலுக் கொவ்வாநிலை.

**impolite'**, *a.* நடைநயமற்ற, வணக்க இணக்கமற்ற, மரியாதையில்லாத.

**impol'itic**, *a.* செயல்துறை அறிவு நயமற்ற, ஏற்பறிவற்ற; செயல் நயமறியாத; கால இடச்சூழலுக்கு ஒவ்வா நிலையுடைய.

***imponderabil'ia***, (ல.) *n. pl.*=imponderables.

**impon'derable**, *n.* கணிக்க முடியாதது, கணக்குக் கடந்தது, சில்லறையானது; *a.* (இய.) பளுவற்ற, இலேசான, கனமில்லாத; அளவிடமுடியாத.

**impon'derables**, *n. pl.* கணிக்கமுடியாதவை, கணக்குக் கடந்தவை; கணிக்க முடியாக் கூறுகள், தெரியவராக் காரண நிலைக் கூறுகள்; சிறு சில்லறைச் செய்திகள்.

**impon'ent**, *n.* கடமை முதலியவற்றைச் சுமத்துபவர்; *a.* கடமை முதலியவற்றை விதிக்கின்ற, கடமை சுமத்துகிற.

**im'port**[1], *n.* உட்பொருள், தொக்கு நிற்கும் கருத்து; உட்கருத்து, சுட்டுப்பொருள்; முக்கியத்துவம், சிறப்புக்கூறு; இறக்குமதி.

**import'**[2], *v.* இறக்குமதி செய்; பொருள்சுட்டு, பொருள் குறிப்பிடு, பொருள்கொள்; தெரிவி, தெரியப்படுத்து; நலங்களைப் பாதித்தல் செய்; முக்கியத்துவமுடையதாக இரு.

**import'ance**, *n.* முக்கியத்துவம்; பெருமை, சிறப்பு; தனி மனிதனின் மதிப்பு; பெருமைத்தனம், பகட்டாரவாரம்.

**import'ant**, *a.* முக்கியமான, முக்கியத்துவம் வாய்ந்த; பெரும்பயன் விளைவிக்கிற; பகட்டாரவாரமுள்ள, பகட்டான, பெருமையான.

**imports'**, *n. pl.* இறக்குமதிச் சரக்குகள்.

**import'unate**, *a.* விடாக்கண்டனுன, ஓயாது வற்புறுத்தலாகக் கெஞ்சிக் கேட்கிற; விடாப்பிடியான; மீண்டும் மீண்டும் நெருக்கித் தொந்தரவு செய்கிற; அவசரப்படுத்தி நெருக்குகிற.

**importune'**, *v.* இடைவிடாமல் இரந்துகேள், வற்புறுத்திக் கெஞ்சிக் கேள், தொடர்ந்து மன்றுடு.

importun'ity, *n.* விடாத்தொந்தரவு.

impose', *v.* சட்டக்கோப்புச்செய், அச்சுக் கோக்கப்பட்ட உருக்களை இருப்புச்சட்டத்தில் வைத்துப் பொருத்தி அமை; வரி சுமத்து; வலிந்து கடமை ஏற்கச்செய்; பணிகளைச் செய்யும்படி ஏற்பி; பொறுப்புக்களை ஒப்படை; போலிச்சரக்குகளைக் கொடுத்து ஏய்; ஏமாற்று; தோற்றத்தால் கவர்ச்சிக்கு உட்படுத்து; பண்புத் திறங்களால் ஆட்கொள்ளு.

imposi'tion, *n.* சுமத்தீடு; விதிப்பு; வரி; தீர்வை; சுமை; ஏமாற்றுச் செயல்; பள்ளிக்கூடத்தில் தண்டனையாக விதிக்கப்பட்ட கடமை வேலை; திருச்சபைப் பணி அமர்த்து வினையில் கையமர்த்துதல்.

imposs'ible, *a.* செயல்கூடாத; இயலாத, நடக்கமுடியாத; உண்மையாக நடந்திருக்க முடியாத; முற்றிலும் பொருத்தமற்ற; எவ்வகையிலும் ஒத்துவராத, இணங்கி நடத்த முடியாத; எளிதாக இல்லாத, வசதியில்லாத; ஒத்துக்கொள்ள முடியாத, மிகு மோசமான.

im'post[1], *n.* (வர.) வரி; கடமை; திறை, கப்பம்.

im'post[2], *n.* (க-க.) மேல்வளைவைத் தாங்கும் தூணின் மேற்பகுதி.

impos'thume, *n.* = impostume.

impos'tor, *n.* ஏமாற்றுகிறவர், வஞ்சகர், மோசக்காரர்.

impos'tume, *n.* சீக்கட்டியபரு; கேடுவிளைவிக்கும் பகுதி.

impos'ture, *n.* ஏமாற்று, மோசடி, வஞ்சகம்.

im'potent, *a.* செயலற்ற, வலுவற்ற; ஆற்றலற்ற; செயல் வகையற்ற; முதுமையுற்ற, தளர்ந்த; ஆண் தன்மையற்ற.

impound', *v.* கால்நடைகளைப் பட்டியில் அடை; முடிவை; சிறைப்படுத்திவை; சட்டப்படி உரிமையைத் தன்வயப்படுத்திக்கொள், சட்டப்படி உடைமைப் பொருளாகக் கொள்; பறிமுதல் செய்.

impov'erish, *v.* வறுமையாக்கு, ஏழ்மையாக்கு; வலுக்குறையச்செய்; வளங்குறை.

imprac'ticable, *a.* செயல்முறைக்கொவ்வாத; செயற்படுத்த இயலாத; வைத்துநடத்த இயலாத; சமாளிக்கமுடியாத; செய்ய முடியாத; பயனற்ற; பாதைகள் வகையில் செல்வதற்கரிதான.

im'precate, *v.* சாபமிடு, பழித்துரை, கண்டி.

impreca'tion, *n.* சாபம்.

impreg'nable, *a.* கோட்டை வகையில் கைப்பற்றமுடியாத வலிமையுள்ள; தாக்குதலுக்கு அசையாத.

impreg'nate, *a.* சினைப்படுத்தப்பட்ட, கருவுறச்செய்யப்பட்ட; செறிவுற்று வளப்படுத்தப்பட்ட; *v.* சினைப்படுத்து, கருவுறச்செய்; செறிவி, திண்ணிறை வாக்கு, ஏற்கக்கூடிய அளவுகல; (உயி.) கருப்பொலிவுறுத்து; பண்புதோய்வித்து வளப்படுத்து.

impresar'io, *n.* பொதுக்கேளிக்கை விழாக்கள் ஏற்பாடு செய்பவர்; இசைநாடக மேலாள்; இசையரங்குச் செயலாளர்.

imprescrip'tible, *a.* வரையறைகட்கு உட்படாத, சட்டப்படி அகற்ற முடியாத.

im'press[1], *n.* பொறிப்பு, முத்திரை; பொறிப்புச் சின்னம்; தனிச் சிறப்பான அடையாளம்.

impress'[2], *v.* அழுத்து, பதியச் செய், குறியிடு, அடையாளம் செய்; முத்திரையிடு; அச்சில் பதி; திறம்படக் கவர்ச்சி செய்; ஆழ்ந்து பண்புருவாக்கு; மனத்திற் பதியவை.

impress'[3], *v.* நிலப்படை கடற்படைத்துறைகளில் சேவை செய்யும்படி வற்புறுத்து; பொதுச்சேவைக்காகக் கைப்பற்று; விவாதத்தில் இணைத்துப் பயன்படுத்திக்கொள்.

impre'ssion, *n.* பொறித்தல், பொறிப்பு; பொறித்த அடையாளம்; முத்திரை; அச்சுப்பதிவு; படச்செதுக்குப்பாளப் பதிவு; பதிப்பு, ஒருதடவை பதிக்கப்பட்ட ஏடுகளின் தொகுதி; மறுபதிப்பு, பதிப்பின் மாற்றம்படாத மறு அச்சுப் பதிவு; கருத்துப்பதிவு, கருத்துத்தடம், கருத்துவிளைவு; உணர்ச்சி விளைவு; எண்ணப்பதிவு, மனத்தில் ஏற்பட்ட கருத்து; தெளிவற்ற நம்பிக்கை, உறுதியற்ற கோட்பாடு.

impre'ssionable, *a.* எளிதில் உள்ளத்தில் எதுவும் பதிகிற; எளிதாகப் பிறர் கருத்தேற்றுத் தன்னை மாற்றிக்கொள்ளும் தன்மையுடைய; ஏற்கும் இயல்புடைய.

impre'ssionism, *n.* பாவியல் கலைத்திறம், விரிநுணுக்கக் கூறுகளில்லாமலே பொதுமைப்பாவமும் தொனியும் உண்டு பண்ணும் ஓவிய இலக்கியக் கலைகளின் பண்பு.

impress'ive, *a.* ஆழ்ந்த உணர்ச்சியைத் தூண்டத்தக்க, மனக்கிளர்ச்சி உண்டாக்குகிற, கவர்ச்சியூட்டி ஆட்கொள்ளத்தக்க, மனத்தில் ஆழ்ந்து பதியத்தக்க.

im'prest, *n.* அக்கறைத்தொகை, அரசாங்க வேலைக்காக முன்பணமாகக் கொடுக்கப்பட்ட தொகை, அச்சாரம்.

*imprimat'ur*, (ல.) *n.* அச்சிடுவதற்குரிய அரசியல் இசைவுரிமை; இசைவாணை, செயலுரிமை இணக்கம்.

*imprim'is*, (ல.) *adv.* முதலாவதாக, முதலிடத்தில்.

im'print[1], *n.* பெயர்விவரப் பொறிப்பு, அடையாள முத்திரை.

imprint'[2], *v.* முத்திரையிடு, மனத்தில் ஆழ்ந்து படியச்செய், கருத்தில் பதியச்செய்.

impris'on, *v.* சிறைப்படுத்து, காவலில் அடை; கட்டுப்படுத்து, எல்லைக்குட்படுத்து, அடைத்துவை, மூடி வை.

improb'able, *a.* இயல்பாக நிகழக்கூடாத, நடைபெற்ற உண்மையாயிருக்க முடியாத, பொருத்தமற்ற, நம்புதற்கரிய.

improb'ity, *n.* நாணயமற்ற தன்மை, நேர்மையின்மை; வஞ்சகம், மோசம்.

impromp'tu, *n.* முன்னேற்பாடின்றி ஆற்றப்படுகிற பேச்சு; உடனடி நகைச்சுவைத்துணுக்கு; முன்முயற்சியின்றி உருவாக்கப்படும் கட்டுரை; உடனடி நடிப்புப்பகுதி; திட்டமற்றதுபோல் அமைக்கப்படும் இசை அமைப்பு; *a.* முன்னேற்பாடின்றி ஆற்றப்படுகிற; உடனடிச் செயலான; முன்முயற்சியற்ற; *adv.* முன்னேற்பாடின்றி, உடனடிச் செயலாக, முன்முயற்சியில்லாமல், தற்கணமாக.

improp'er, *a.* நேரல்லாத, தகுதியற்ற, தவறான, ஒழுங்கில்லாத; (தொ.) improper fraction, தகாப்பின்னம், முழுமை கனிந்த மேனிலைக் கீழ்வாய் எண்.

improp'riate, *v.* திருச்சபை மானியத்தைக் கூட்டவைக்கு அல்லது தனிப்பட்டவருக்குரிய சொத்துடன் இணைத்துக்கொள்; திருச்சபை வருவாய் உடைமைகளைச் சமயத்துறை சாராப் பொதுத் துறையினர் கையில் ஒப்படை.

improp'riator, *n.* திருச்சபை மானியம் அல்லது மகன்மை ஒப்படைக்கப் பெற்றவர்.

impropri'ety, *n.* தவறான நடைமுறை; தகுதியின்மை; ஒழுங்கின்மை.

improv'able, *a.* திருத்தத்தக்க, செம்மைப்படத்தக்க; மேம்பாடடையத்தக்க; வேளாண்மைக்குகந்த நிலையிலுள்ள.

improve', *v.* திருத்து; செம்மைப்படுத்து; மேம்பாடடையச்செய்; முன்னேற்று; திருத்தங்கள் செய்; நிலத்தைச் சீர்திருத்து; நிலம் பண்படுத்தி மதிப்புயர்த்து; கட்டிடத்தை மேலும் கட்டி மேம்படுத்து; விலை உயர்த்து; திருந்து; மேம்படு; முன்னேறு; மேலும் சிறந்து வளர்; தாண்டி மேம்பாடு காண்; நன்கு பயன்படுத்திக்கொள்; (தொ.) improve away, திருத்தியமைப்பதன்மூலம் நீக்கிவிடு; improve the occasion, improve the opportunity, தறுவாயை நன்கு பயன்படுத்திக்கொள்; improve upon, மேலும் சிறப்பாகச் செய், சிறப்பைத் தாண்டிப் பெருஞ்சிறப்புக் காண்.

improve'ment, *n.* திருத்துதல்; திருத்தம், மேம்பாடு, முன்னேற்றம்; மேம்பாடு தரும் மாறுபாடு; திருத்தம்பெற்ற செய்தி; திருந்திய பொருள்; திருத்தத்துக்கு உதவுகிற கூறு; மேம்பட்ட புதிய மாற்றுப்பொருள், மேம்பட்ட பகரப் பொருள்; மதிப்புயர்த்தும் மாறுபாடு; விரிவுபடுத்தும் புதுக் கூறு.

improv'er, *n.* திருந்துபவர்; திருத்துபவர்; மேம்பாடடைபவர்; தேர்ச்சி நாடியவர், தன் திறமைப்பயிற்சி நாடிக் குறை ஊதியத்துடனோ ஊதியமில்லாமலோ உழைப்பவர்.

in'fantile, *a.* குழந்தைகளைப்போன்ற ; குழந்தைகளுக்குரிய ; தொடக்க நிலையிலிருக்கிற ; குழந்தைப்பருவத்துக்குரிய ; (தொ.) infantile paralysis, இளம்பிள்ளைவாதம்.

infan'tilism, *n.* (மரு.) அறிவோ உடம்போ வளர்ச்சியடையாத நிலை, உடலுள வளர்ச்சியற்ற நிலை.

in'fantry, *n.* காலாட்படை, இளவணி.

in'fantryman, *n.* காலாட்படை வகுப்பைச் சேர்ந்த வீரன்.

infat'uate, *v.* மருட்சியூட்டி அறிவிழக்கச் செய் ; முட்டாளாக்கு ; மயக்கு ; மோகவலையுட்படுத்து.

infatua'tion, *n.* மையல், மோகம், கைம்மயக்கம்.

infect', *v.* நோய் நுண்மங்கள் பரப்பி நச்சுப்படுத்து ; நோய் பற்றுவி; காற்றில் நிரப்புவி ; பழுதாக்கு, கெடு ; கறைப்படுத்து ; உள்ளத்தில் தீயபண்பு பற்றுவி ; கருத்து மேற்கொள்ளச் செய்.

infec'tion, *n.* தொற்று ; காற்று நீர் மூலமான நோய்த்தொற்று ; தொற்றுநோய் ; ஒட்டிப்பரவும் பொருள்; படர்ந்து கறைப்படுத்தும் பொருள் ; பற்றிப்பரவும் பண்பு, பரவும் திறம்.

infec'tious, *a.* தொற்றுகிற ; நோய்பரப்புகிற ; கொள்ளை நோய்த் தன்மைவாய்ந்த ; நோய்வகையில் நீர் அல்லது காற்று மூலமாகப் பரவக்கூடிய ; உணர்ச்சி முதலியவற்றின் வகையில் பரவும் பாங்குடைய, தொற்றிக்கொள்ளுகிற.

infec'tive, *a.* தொற்றவைக்கும் இயல்புடைய ; பழுதாக்குகிற ; பரவக்கூடிய.

infelicif'ic, *a.* மகிழ்ச்சிக்கேடு விளைவிக்கிற.

infeli'citous, *a.* மகிழ்ச்சிக்கேடான ; மங்கலக்கேடான, நற்பொருத்தமற்ற.

infeli'city, *n.* மகிழ்ச்சிக்கேடு ; அவப்பேறு, அமங்கலம் ; சொல் முதலியவற்றில் நற்பொருத்தமின்மை.

infer', *v.* உய்த்துணர், அனுமானி, ஊகி, வருவி, முடிவு செய் ; உய்த்துணரவை.

in'ferable, *a.* அனுமானிக்கத்தக்க, ஊகத்தால் பெறக்கூடிய.

in'ference, *n.* ஊகம், ஊகித்தல்; அனுமானம், கருத்தளவை, தேற்றப்பாடு, முடிவு, முடிவாகப்பெற்ற பொருள், கோள்.

infer'ior, *n.* கீழோர், தரத்தில் அல்லது நிலையில் மற்றவரைவிடத் தாழ்ந்தவர்; *a.* கீழ் உள்ள, தரம்-நிலை முதலியவற்றில் தாழ்ந்த ; மட்ட வகையான ; கோள்கள் வகையில் நிலவுலகின் பாதைக்கு உள்ளடங்கிய பாதையுடைய ; அச்சு வகையில் பொது எழுத்துவரி மட்டத்துக்குக்கீழே இடப்படுகிற ; (தாவ.) புல்லிவட்டம் வகையில் கருவகத்துக்குக் கீழுள்ள ; கருவகம் வகையில் புல்லிவட்டத்துக்குக் கீழுள்ள.

inferio'rity, *n.* இழிவு, இளப்பம் ; தாழ்வு ; (தொ.) inferiority complex, தாழ்வு மனப்பான்மை.

infern'al, *a.* அளறு சார்ந்த; நரகத்தின் இயல்புடைய, கீழுலகுக்குரிய, பேயுலகுக்குரிய ; மோசமான ; வெறுக்கத்தக்க ; கொடுமை வாய்ந்த ; (தொ.) infernal machine, தோற்றத்தால் மயக்கி எதிர்பாராப் பேரிடர் விளைக்கவல்ல வெடிமருந்து திணிக்கப்பெற்றுள்ள பொறியமைவு.

infern'o, *n.* அளறு, நரகம் ; பயங்கரக்காட்சிக்களம் ; *pl.* infern'os.

infer'rable, *a.*=inferable.

infert'ile, *a.* வறண்ட, செழிப்பற்ற.

infest', *v.* சூழ்ந்து தாக்கு; மொய்த்தலைக்கழி; நோய் நுண்ம வகையில் பரவி ஊடாடு ; நோய்வகையில் சுற்றி நிலவு.

infesta'tion, *n.* மொய்ப்பு, ஊடாட்டம் ; சுற்றி வளைப்பு ; திரண்டதாக்குதல் ; தாக்குதலுக்கு ஆட்பட்டநிலை.

infeuda'tion, *n.* மானிய அளிப்பு, நிலத்தை மானியமாக விடல்; (தொ.) infeudation of tithes, சமயஞ்சாரா மேலாளருக்கு மகன்மைவரி அளித்தல்.

infibula'tion, *n.* விழைச்சுக்கட்டு, புணர்ச்சி செய்வதைத் தடுக்கும்பொருட்டுப் பாலுறுப்புக்களைக் கொக்கியினால் கட்டிவிடும் முறை.

in'fidel, *n.* சமய நம்பிக்கையற்றவர் ; (வர.) கிறித்துவ சமயத்துக்கு மாறுபட்ட சமயநெறியைக் கடைப்பிடிப்பவர் ; யூதர் அல்லது முகமதியர் நோக்கில் உண்மைச் சமயத்தில் நம்பிக்கையற்றவர் ; பொதுப்படையான நோக்கில் புறச்சமயி ; நாத்திகர் ; *a.* சமய நம்பிக்கையற்ற ; புறச்சமயிகள் சார்ந்த.

infidel'ity, *n.* கிறித்தவ சமயத்தில் நம்பிக்கையின்மை ; பற்றுறுதியின்மை, கணவன் மனைவியரிடையே உண்மையாக நடந்துகொள்ளாமை, வஞ்ச ஒழுக்கம்.

in'field, *n.* மனையணை நிலம், குடும்ப மனையகத்தைச் சுற்றி அல்லது அதற்கு அண்மையிலுள்ள பண்ணை நிலம் ; உழத்தகுந்த நிலம் : ஒழுங்காக எருவிட்டுப் பயிரிடப்படும் நிலம் ; மரப்பந்தாட்ட வகையில் பந்திலக்குக் கட்டைக்கு அண்மையிலுள்ள ஆட்டக்களப்பகுதி.

in'fight'ing, *n.* கைநீளத்துக்கும் குறைவாக நெருங்கி நடத்தப்படும் குத்துச்சண்டை.

infil'trate, *v.* இறு, வடித்தெடு ; கசிந்து வடியப்பண்ணு ; கசிந்து பரவச்செய் ; கசிந்துவடி ; ஊடுருவிப்பரவு ; படிப்படியாகச் சென்று பரவு.

infiltra'tion, *n.* இறுத்தல், வடித்தல்; இறுப்புமுறை, வடிப்பு முறை ; ஊடுபரவல், படிப்படியாக உள்சென்று தோய்ந்து பரவுதல்; இறுத்தமண்டி, வடிநீர்ப்படிவம் ; இறுத்தலுக்குரிய பொருள்; படை மக்கள் தொகை வகையில் புதுவரவின் படிப்படியான ஊடுபரவல்.

in'finite, *n.* எல்லையற்ற பரம்பொருள், கடவுள் ; வரம்பிலி, முடிவுறுதி கருதமுடியாத பொருள் ; எல்லையற்ற பெரும் பரப்பு; *a.* முடிவில்லாத, எல்லையற்ற; கருத்து வரம்பு கடந்த, வரம்பிலியான ; வரம்பின்மையளாவிய ; மாபெரிய ; மிகப் பலவான ; அள்ள அள்ளக் குறையாத ; (கண.) கணிப்பு வரம்புகடந்த; (வடி.) வட்டை வகையில் மறி அளவையாக்கி வரம்பிலியாக்கப்பட்ட; (இலக்.) முற்று வினையல்லாத, வினை வகையில் எண் இடப் பால் கட்டுப்பாடற்ற வடிவமுடைய ; (தொ.) the Infinite, கடவுள் ; the infinite, அகண்ட பெருவெளி.

infinites'imal, *n.* உறுநுண் அளவு, மிகச் சிறிய அளவை ; *a.* மிக நுண்ணிய, உறு நுணுக்கமான; (தொ.) infinitesimal calculus, (கண.) முழுநிலைக் கணிப்பு மிச்சநிலைக் கணிப்பு ஆகிய இரண்டும் இணைந்த கணிப்புமுறை.

infin'itive, *n.* (இலக்.) வினைப்பொது நிலை, வினைக்கருத்தினை எழுவாய்க்குப் பயனிலையாக்காமல் காட்டும் வினைவடிவம் ; செயவெனுமெச்ச வடிவம் ; எண்ணிடம் எஞ்சு வினைவடிவச் சொல் ; *a.* (இலக்.) வினைக் கருத்தினை எழுவாய்க்குப் பயனிலையாக்காமல் காட்டுகிற; செயவெனும் எச்ச வடிவான.

infin'itude, *n.* எல்லையற்ற தன்மை ; முடிவற்ற எண் ; முடிவிலாப் பரப்பு.

infin'ity, *n.* (கண.) முடிவற்றது, முடிவிலி.

infirm', *a.* வயது முதிர்ச்சி காரணமாக உடல் வலிமையற்ற ; மூப்பால் தளர்ந்த ; மெலிந்த ; ஏலாத ; மனவுறுதி அற்ற.

infirm'ary, *n.* மருத்துவமனை; பள்ளிக்கூடம்-தொழிற்கூடம் முதலியவைகளில் நோயாளிகள் தங்குமிடம்.

infirm'ity, *n.* பலக்குறைவு.

in'fix[1], *n.* (இலக்.) இடைவைப்பு, வேர்ச்சொல்லில் மாறுதல் விளைவிப்பதற்காகப் புகுத்தப்படும் கூறு.

infix'[2], *v.* ஊன்றி நாட்டு, நிலைநிறுத்து; அறைந்து பொருந்தவை ; உட்செலுத்தி இறுக்கு ; மனத்திற் பதியவை ; (இலக்.) இடைக்கூறு புகுத்து.

*in flagran'te delic'to*, (ல.) *adv.* குற்றஞ்செய்து கொண்டிருக்கும் நிலையில், குற்றத்தின் செயல் நிலையிலேயே.

inflame', *v.* கொழுந்து விட்டெரியச் செய் ; தீக்கொளுத்து, எரியெழுப்பு, நெருப்பேற்று; எரிவு உண்டாகச் செய்; குருதி கொதிக்கச் செய் ; உடல் வெப்பூட்டு ; கிளர்ச்சி ஊட்டு ; அழற்சி உண்டுபண்ணு ; தீப்பற்று ; கிளர்ச்சிகொள் ; அழற்சியுறு.

**inflamm'able**, *n.* எளிதில் தீப்பற்றிக்கொள்ளும் பொருள்; *a.* எளிதில் தீப்பற்றிக்கொள்ளக் கூடிய; எளிதில் அல்லது விரைவில் சினங்கொள்ளுகிற.

**inflamma'tion**, *n.* அழன்றெழல், கொழுந்து விட்டெரிதல்; எரிவு; கொதிப்பு, கிளர் எழுச்சி; வீக்கம், அழற்சி.

**inflamm'atory**, *a.* உணர்ச்சியைக் கிளறிவிடக்கூடிய; அழற்சி சார்ந்த, வீக்கம் உண்டுபண்ணுகிற.

**inflate'**, *v.* ஊதிப் பெருக்கச் செய், உப்பச்செய், தற்பெருமை கொள்ளச் செய்; பணவீக்கங் கொள்ளச் செய்; செயற்கையாக விலையேறச் செய்.

**inflat'ed**, *a.* வீங்கிய, பூரிக்கச் செய்யப்பட்ட; பேச்சுவகையில் தற்பெருமையான, வீறாப்பான; மொழி நடை வகையில் செயற்கைப் பகட்டான.

**infla'tion**, *n.* ஊதல், உப்பல்; தற்பெருமைப் பூரிப்பு; வீங்கிய நிலை; மொழி நடை வகையில் செயற்கைப் பகட்டாரவாரம்; பணவீக்கம்.

**inflat'or**, *n.* வீங்கச் செய்பவர்; காற்றடைக்கும் கருவி.

**inflect'**, *v.* உள்வாங்கு, உட்பக்கமாகத் திருப்பு, வளை; (இலக்.) இலக்கணத் தொடர்பைக் காட்டுவதற்காகச் சொல்லிறுதியில் மாறுதல் செய்; விகுதி சேர்த்து உருமாற்று; (இசை.) இசைவிகற்பம் செய்.

**inflec'tion**, *n.* = inflexion.

**inflec'tive**, *a.* (இலக்.) விகற்பம் உண்டுபண்ணுகிற; விகற்பத்துக்குரிய; விகற்பத்துக்குட்பட்ட; சொல் சிதைவுக்குரிய.

**inflex'ible**, *a.* வளைக்க முடியாத; வளையாத; வணங்காத, விறைப்பான.

**infle'xion**, *n.* உள் வளைவு; நெறிவிலகல்; தொனித்திரிபு; (இலக்.) சொல் உரு மாறுபாடு; விகுதி; (வடி.) வளைவு மாற்றம், உள் குழிவு வளைவைப் புறக் குவிவு வளைவாக்கும் மாறுபாடு.

**inflict'**, *v.* சுமத்து, கட்டாயமாக ஏற்று, பெறுவி, அனுபவிக்கச் செய்; தண்டனை வகையில் ஏற்கும்படி செய்து ஒறு.

**inflic'tion**, *n.* சுமத்துதல்; கட்டாயப்படுத்தி அனுபவிக்கச் செய்தல்; அல்லற்படுத்தும் செயல்; தண்டனை; தண்டனை விதிப்பு.

**inflores'cence**, *n.* (தாவ.) பூங்கொத்தொழுங்கு; இணர், பூங்கொத்து; மலர்ச்சி.

**in'flow**, *n.* உட்பாய்வு; உள் ஒழுக்கு; உள்பாயும் பொருள்.

**in'fluence**, *n.* இயக்க விளைவு, செயல் விளைவு; விளைபயன், பலன்; புடை விளைவு; கோள்களின் தாக்கு விளைவு; செல்வாக்கு, தனி மனிதனின் சூழ்வலி; ஆற்றல் கூறு, மாறுதல் உண்டுபண்ணும் கூறு; ஆக்கத் திரிபுகள் உண்டுபண்ணும் செய்தி; செல்வாக்குக்குரியவர்; விளைபயனுக்குரிய பொருள்; சக்தி, ஆக்கத்திரிபு உண்டுபண்ணும் ஆற்றல்; உள்ளாற்றல், மறை ஆற்றல், பின்னணி ஆற்றல்; மின் வகையில் அணுக்க ஆக்க விளைவுத்திறம்; *v.* விளைவாட்சிக்கு உட்படுத்து; விளைவு உண்டுபண்ணு; நிலைமாற்றம் காண், மாறுதல் உண்டுபண்ணு; இயக்கு, ஆக்கத் திரிபு உண்டுபண்ணு.

**in'fluent**, *n.* வந்துபாயும் கிளை ஆறு, துணையாறு; *a.* உள்ளே பாய்கிற.

**influen'tial**, *a.* செல்வாக்குமிக்க, செல்லுஞ் சொல்லுடைய, செல்லும் அதிகாரமுடைய, வல்லமையுடைய.

**influen'za**, *n.* சளிக்காய்ச்சல், கடு நீர்க்கோப்புடன் கூடிய காய்ச்சல்; influenza cold, கடுமையான நீர்க்கோப்பு.

**in'flux**, *n.* உட்பாய்வு, உள்நோக்கிய ஒழுக்கு; உள்வரவு, புகுதரவு; தேக்கம், வந்து மண்டுதல்.

**inform'**, *v.* அறிவி, தெரிவி; தகவல் கூறு; கற்பி, போதி; குறைபுறம் தெரிவி, குற்றம் வெளியிட்டுக் கூறு; உருக்கொடு; உயிர்ப்பூட்டு; பண்பூட்டு; மனத்திற் பதியவை; பண்பு தோய்வி.

**inform'al**, *a.* முறைப்படி அமையாத, ஒழுங்குமுறை சாராத, தனிமுறையான, இயல்பான.

**inform'ant**, *n.* அறிவிப்பவர், தகவல் கொடுப்பவர்; குற்றவாளிபற்றி அறிவிப்பவர்.

***in form'a paup'eris***, (ல.) *adv.* நீதிமன்றச் செலவுத் தொகைகளைக் கொடுக்க இயலா ஏழ்மையான நிலையில்.

**informa'tion**, *n.* தெரிவிப்பு, தகவலறிவிப்பு; தகவல், செய்தி; (சட்.) நீதிமன்றத்தில் கூறப்பட்ட குற்றச்சாட்டு.

**inform'ative**, *a.* செய்தி தெரிவிக்கிற, தகவல் அறிவிக்கிற, விளக்கமான; அறிவுறுத்துகிற, கற்பிக்கிற.

**inform'atory**, *a.* அறிவுறுத்துகிற, கற்பிக்கிற; விளக்குகிற; தகவல் தெரிவிக்கிற.

**informed'**, *a.* அறிவூட்டப்பட்ட; கற்பிக்கப்பட்ட; கற்றுணர்ந்த; கேட்டுணர்ந்த; தகவல் தெரிந்த.

**inform'er**, *n.* குற்றஞ் சாட்டுபவர்; குறை கூறுபவர்; காட்டிக் கொடுப்பவர்; குற்றங் கண்டுரைக்கும் பணி மேற்கொண்டவர்.

***in'fra***, (ல.) *adv.* கீழே, தாழ; பின்னர்.

**infrac'tion**, *n.* மீறுகை; சட்டவரம்பு கடப்பு.

***in'fra dig***, (ல.) *a.* ஒருவருடைய தன்மதிப்புக்குக் கீழான, மதிப்புக்கு ஒவ்வாத.

**in'fralapsar'ian**, *n.* வீழ்ச்சி மீட்சிப் புகழ் வீற்றுக் கோட்பாட்டாளர், இறைவன் தன் புகழ் வீறுதோன்றப் பலரை வீழ்ச்சிக்கும் சிலரை மீட்சிக்கும் தேர்வு செய்கின்றனென்ற கிறித்தவ சமயக் கிளைகளின் கோட்பாட்டைப் பின்பற்றுபவர்; *a.* வீழ்ச்சி மீட்சிப் புகழ்க்கோட்பாட்டினைச் சார்ந்த.

***infra-red'***, *a.* அப்பாற் சிவப்பு நிறத்துக்குரிய, நிறப்பட்டையில் சிவப்பு நிறத்துக்கு அப்பாற்பட்ட கட்புலப்படா நிறத்துக்குரிய.

***infra ren'al***, (ல.) *a.* சிறுநீர் பிரிக்கும் கழலைகட்குக் கீழே உள்ள.

***infra scap'ular***, (ல.) *a.* தோட்பட்டை எலும்புக்கு அடியில் உள்ள.

***infra stern'al***, (ல.) *a.* மார்பு எலும்புக்குக் கீழேயுள்ள.

**infra-structure**, *n.* உள்ளமைப்பு; படைத்துறை நடைமுறைகளுக்குப் பின்னணித் துணையான ஊழியத்துறைகள் செய்தி இணைப்புக்கள் ஆகியவற்றின் இணைப்பமைவு; முழு ஐரோப்பிய பாதுகாப்பமைப்பு; ஐரோப்பாக் கண்டப் பொதுப்பாதுகாப்புக்குரிய விமான நிலையங்கள் - தொலை செய்தித் தொடர்புகள் - பொது ஊழிய நிறுவனங்கள் ஆகியவற்றின் மொத்தத் தொகுதி.

**infreq'uent**, *a.* அடிக்கடி நிகழாத, அரு நிகழ்வான.

**infringe'**, *v.* மீறு, கீழ்ப்படிய மறு; வரம்பு கட; சட்டம் ஒப்பந்தம் வாக்கு ஆகியவற்றுக்கு மாறாக நட.

**infruc'tuous**, *a.* பயனற்ற, பலனளிக்காத; வீணான, ஊதியமற்ற.

**infundib'ular**, *a.* பெய்குழல் வடிவான, ஊற்றுங்குழல் போன்ற.

**infur'iate**, *v.* சினமூட்டு, சீற்றமுண்டாக்கு; வெறியூட்டு, பித்துவெறி உண்டுபண்ணு.

**infuse'**, *v.* உட்சொரி, உட்செலுத்து, பாய்ச்சு; புகவிடு; உணர்ச்சி புகுந்து பரவவிடு; பண்பு கலக்கவிடு; புகட்டு, தோய்வி, ஊறவை; ஊறிக்கல, தோய்ந்து ஒன்றுபடு.

**infus'ible**, *a.* உருக்க முடியாத; உருக்கி ஒன்றாகச் சேர்க்க முடியாத.

**infu'sion**, *n.* ஊற்றல்; புகுந்து பரவவிடல்; அறிவு புகட்டல்; ஊறிக் கலத்தல்; அகத்தூண்டுதல்; உள்ளுயிர்ப் பண்பு; ஊறல் சாறெடுக்க நீர் ஊற்றல்; சேர்க்கப்பட்ட கலவைக்கூறு; கரைசல்; உயிர்ச்சாறு, வடிசாறு; வடிசாற்றுத்தேறல்; சாற்றுக்கூறு.

**infusor'ia**, *n. pl.* அழுகிய விலங்கு தாவரப் பொருள்களின் வடிநீரில் காணப்படும் மூல முதல் உயிரி வகை.

in'gathering, *n.* திரட்டிச் சேர்த்தல்; அறுவடை, வினை பொருட்களைச் சேகரித்தல்.

ingem'inate, *v.* இரட்டுறச் செய்; செயலிரட்டு; கூறியது கூறு.

ingen'ious, *a.* கூர்மதியுடைய, யூகமுடைய, சூழ்திறமிக்க, புனைதிறம்வல்ல; புனைதிறம் வாய்ந்த.

*in genue*, (பிர.) *n.* கள்ளங்கபடமற்ற சிறுமி; நாடகத்தில் தோன்றும் சூதுவாதற்ற பெண்மை நடிப்புறுப்பினர்.

ingenu'ity, *n.* புதுப்புனைவுத் திறன்; சூழ்ச்சித்திறம், கூர்மதி.

ingen'uous, *a.* கள்ளங்கபடற்ற, சூதுவாதற்ற, ஒளிவு மறைவற்ற; வெள்ளை உள்ளம் படைத்த; குற்றமற்ற.

ingest', *v.* உணவை வயிற்றுக்குள் கொண்டுசெல்.

ing'le, *n.* அடுப்பில் எரியும் நெருப்பு.

ing'le-nook, *n.* புகைப்போக்கி மூலை.

inglor'ious, *a.* இழிவுக்குரிய, அவமதிப்புள்ள; புகழ் அற்ற; ஊர்பேர் தெரியாத.

in'going, *n.* புகுதரவு, தமக்கு வேண்டிய சீர்திருத்தங்களுக்காகத் தொழில்துறை வாடகைக்காரர் செலுத்தும் தொகை.

ing'ot, *n.* உலோக வார்ப்புக்கட்டி, தங்கம் வெள்ளி எஃகு முதலியவற்றுக்குரிய வார்ப்புப் பாளம்.

ingraft', *v.* பதி, ஒட்டு, பொருந்தவை.

in'grain, ingrain', *a.* உள்தோய்வாகச் சாயமிடப்பட்ட; உள்ளார்ந்த, உள்ளியல்பாக அமைந்துள்ள; வேரோடி உறைத்த.

in'grained, *a.* நன்கு வேர்பாய்ந்துள்ள; நீண்ட நாள் நிலவி உறைத்த; ஆழமாகப் பதிந்துள்ள.

ingrate', *n.* (செய்.) நன்றி கெட்டவர்; *a.* நன்றி மறந்த.

ingra'tiate, *v.* உகந்தவராகச் செய்.

ingrat'itude, *n.* செய்ந்நன்றி மறத்தல், நன்றிக்கேடு.

ingraves'cent, *a.* (மரு.) நோய்நிலை வகையில் மேலும் சீர்கேடடைகிற.

ingred'ient, *n.* கலவையின் கூறு, ஆக்கக்கூறு.

in'gress, *n.* உள்நுழைவு; நுழைவுரிமை.

in'growing, *a.* உள்நோக்கி வளருகிற, நகத்தின் வகையில் சதைக்குள் வளருகிற.

ing'uinal, *a.* அரையைச் சார்ந்த, தொடை அடிவயிறு இணைப்புக்குரிய.

ingur'gitate, *v.* பேராவலுடன் விழுங்கு; வளைத்து உட்கொள்.

inhab'it, *v.* உறைவுகொள், குடியிருப்பிடமாகக் கொள், இடமாகக்கொண்டு தங்கிவாழ்.

inhab'itancy, *n.* குடியுரிமைக்கு இன்றியமையாத கால வரைக் குடியிருப்பு.

inhab'itant, *n.* நாடிடங்கொண்டு வாழ்பவர், நீடுதங்கி வாழும் குடியிருப்பாளர்.

inhale, *v.* உள்வாங்கு, வளி மணம் முதலியவற்றை மூச்சோடு உள் இழு; புகைகுடிப்பு வகையில் புகை நுரையீரல்களுக்குள் பரவுமாறு உட்கொள்.

inharmon'ic, *a.* முரணிசையான, இசைந்து ஒலிக்காத.

inharmon'ious, *a.* பொருத்தமற்ற, இசைந்து ஒலிக்காத, முரணிசையான.

inhere', *v.* நிலையாகத் தங்கியிரு, நிலைகொண்டிரு, பற்றியிரு; பண்பு வகையில் இயற்கூறுயமைந்திரு; உரிமைவகையில் உரியவரை இயல்பாகச் சார்ந்திரு.

inher'ence, inher'ency, *n.* பற்றியிருக்கை, உள்ளார்ந்திருக்கை, நிலையாக உள்ளிருக்கை.

inher'ent, *a.* பற்றியிருக்கிற; இரண்டற நீங்காது உள்ளியல்பாயிருக்கிற; உள்ளார்ந்த; இயல்பான.

inhe'rit, *v.* மரபுரிமையாகப் பெறு, பின்னுரிமையாளராக அடை.

inhe'ritable, *a.* மரபுரிமையாகப் பெறத்தக்க.

inhe'ritance, *n.* மரபுரிமையாக அடைதல்; பரம்பரை உடைமை, வழிவழிச் சொத்து.

inhe'ritor, *n.* வாரிசு, மரபு வழியுரிமையாளர், பரம்பரை வழியாகச் சொத்துக்கு உரியவர்; *fem.* inhe'ritress, inhe'ritrix.

inhe'sion, *n.* = inherence.

inhib'it, *v.* தடைக்கட்டுச் செய், திருச்சபைச் சமயப்படி குறிப்பிட்ட ஆளைக் குறிப்பிட்ட செயல் செய்யக்கூடாதென்று தடைசெய்; தடுப்பாணையிடு, திருச்சபைப் பணியாளர் பணிக் கடமைகளைச் செயற்படுத்தக் கூடாதென்று கட்டளையிடு; தடுத்து நிறுத்து; விலக்கி வை.

inhibi'tion, *n.* தடைக்கட்டுச் செய்தல்; தடைக்கட்டு; தடுப்பாணை; விலக்கி வைப்பு; (உள.) பயிர்ப்புத் தடை, நீடித்த பழக்கம் அல்லது பயிற்சி காரணமான செயலவாக்களின் உள்ளார்ந்த தடையுணர்ச்சி.

inhos'pitable, *a.* விருந்தோம்பாத, அன்பு வரவேற்பற்ற; அன்பில்லாத; கவர்ச்சியற்ற, இட வகையில் நிழலாதரவு தராத, வள ஆதரவற்ற; நில வகையில் தரிசான.

inhospital'ity, *n.* விருந்தோம்பாமை, அன்பு வரவேற்பின்மை; நில வகையில் வளக்கேடு.

inhum'an, *a.* மனிதத் தன்மையற்ற; பழிகேடான, கொடிய; காட்டுமிராண்டித்தனமான; மனித இனப் பொதுவுக்குப் புறம்பான.

inhuma'tion, *n.* மண்ணிலிடல், புதைத்தல்.

inhume', *v.* புதை.

inim'ical, *n.* பகையான, நட்பில்லாத; தீங்கு விளைவிக்கிற.

inim'itable, *a.* பார்த்துப் பின்பற்ற முடியாத; பார்த்தமைக்க இயலாத; ஈடற்ற, ஒப்புக்காட்ட இயலாத.

iniq'uity, *n.* நேர்மையற்ற தன்மை, அநீதி, கொடுமை.

ini'tial, *n.* சொல்லின் முதலெழுத்து; பெயர் முதலெழுத்து; *a.* தொடக்கத்திலுள்ள, முதலிலுள்ள; தொடங்குகிற; *v.* பெயரின் முதலெழுத்துக்களை மட்டும் குறி; முதலெழுத்து மட்டும் குறித்துக் கையொப்பமிடு.

initials, *n. pl.* தலைப்பு எழுத்துக்கள்.

ini'tiate[1], *n.* தீக்கை பெற்றவர்; சமயக்கூட்டில் சேர்க்கப்பட்டவர்; *a.* தீக்கை செய்யப்பட்ட.

ini'tiate[2], *v.* தொடக்கம் செய்; துவக்கிவை; தோற்றுவி; புதிய அறிவுத்துறை வகையில் புகுமுகம் செய்துவை; சமய வகையில் தீக்கை வழங்கு, புகுமுக வினைகளாற்றிச் சேர்த்துக் கொள்.

ini'tiative, *n.* முயற்சி தொடங்குநிலை; முதற்படி; நற்றொடக்கம், அடியெடுப்பு; தொடங்கும் உரிமை; தொடங்கும் வாய்ப்பு வள ஆற்றல்; சுவிட்சர்லாந்து முதலிய நாடுகளில் சட்டமன்றம் வழியாக அல்லாது மக்கள் நேரடிச் சட்டம் ஆக்கும் உரிமை; *a.* தொடக்கம் செய்ய உதவுகிற; புகுமுகமான; (தொ.) have the initiative, செயல் தொடங்குவதன் மூலம் எதிரி முயற்சியைத் தூண்டி இயக்கும் வாய்ப்பு வளம் பெறு; சட்டமன்றத்துக்கு வெளியே பொதுமக்கள் வகையில் சட்ட ஆக்க உரிமைபெறு; take the initiative, முயற்சியில் முந்திக்கொள், துணிந்து முயற்சி தொடங்கு.

ini'tio, (ல.) *adv.* புத்தக முதலியவற்றின் வகையில் தொடக்கத்தில்.

inject', *v.* உட்செலுத்து; மருந்து ஊசிபோடு; உட்புகுத்திப் பள்ளம் நிரப்பு.

injec'tion, *n.* மருந்து ஊசி போடுதல்; ஊசியிட்டுச் செலுத்தும் மருந்து நீர்மம்.

injudi'cious, *a.* ஆராயாது துணியப்பட்ட, அறிவுத் தகுதியற்ற.

injunc'tion, *n.* உரிமைக் கட்டளை; தடை அதிகார ஆணை; செயல் தடைப்படுத்தவும் வலியுறுத்தவும் பெறப்படும் நீதிமன்றக் கட்டாயமுறை உத்தரவு.

**in'jure**, *v.* தீங்கு செய்; ஊறுபடுத்து, காயப்படுத்து; பழுதுபடுத்து, இழப்பு உண்டுபண்ணு; நலங்கெடு.

**in'jured**, *a.* புண்பட்ட; தீங்கிழைக்கப்பட்ட, தீங்குக்கு ஆளானதாகக் குறைப்படுகிற; துயர்ப்படுகிற.

**injur'ious**, *a.* புண்படுத்துகிற; தீங்கு நிறைந்த, தீங்கான, கெடுதலான; தீமை உண்டுபண்ணத்தக்க; மதிப்புக் கேடான, அவதூறான.

**in'jury**, *n.* தீங்கு; தீங்கிழைக்கும் செயல்; தீமை உண்டு பண்ணும் நடத்தை; இழப்பு, சேதம்; ஊறு, காயம்; அழிபாடு.

**injus'tice**, *n.* நேர்மைக் கேடு, அநீதி; முறையற்ற செயல்; உரிமைப் பறிப்பு; தீங்கிழைப்பு.

**ink**, *n.* மை; எழுதும் மை; கருநிறக் குழம்பு; அச்சடிப்பதற்குப் பயன்படும் வண்ணப் பசை; கடல்மீன் வகையிலிருந்து வெளிப்படும் கருநிற நீர்மம்; *v.* அச்சுருக்கள்மீது மை பூசு; மையினுல் எழுது; கரிய வண்ணம்பூசு.

**ink'-bag**, *n.* கடல்மீன்வகை எதிரிகளிடமிருந்து தப்புவதற்காகத் தன் உடலினின்று வெளிப்படுத்தும் கருநீர்மம்.

**ink'-bottle**, *n.* மைக்கூடு.

**ink'er**, *n.* தந்திச் செய்திகளை மையினுல் பதிவு செய்யும் கருவி; அச்சிடும் இயந்திரத்தில் மை தடவும் உருளை.

**ink'-horn**, *n.* முற்காலங்களில் எழுதும் மை வைப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட சிறு கொம்புக்கலம், மைக்குப்பி.

**ink'ling**, *n.* அறிகுறி; முன்குறிப்பு; தெளிவற்ற குறிப்பு; சூசகம், ஊக ஐயப்பாடு.

**ink'-pad**, *n.* மையட்டை, முத்திரையச்சில் மைபூசும் அட்டை.

**ink'-pot**, *n.*=ink-bottle.

**ink'stand**, *n.* மைக்கூடு தாங்கி, மைக்கூடுகள் வைப்பதற்கான அமைப்புடைய சட்டம்.

**ink'-well**, *n.* எழுதும் மேசைக்குழியில் பொருத்தப்பட்ட மைக்கூடு.

**in'land**, *n.* உள்நாடு, நில உட்பகுதி; *a.* உள்நாட்டிலுள்ள; கடலினின்று ஒதுங்கி உட்புறத்தேயுள்ள; உள்நாட்டுத் தொடர்புள்ள; உள்பகுதிக்குள் கட்டுப்பட்டுள்ள; *adv.* உள்நாடு நோக்கி, உள்நாட்டில்; (தொ.) inland duty, உள்நாட்டு வாணிக வரி; inland revenue, உள்நாட்டு வரி வருமானம்; inland trade, உள்நாட்டு வாணிகம்.

**in'lay**[1], *n.* கல் முதலியன பதித்துச் செய்த வேலை.

**inlay'**[2], *v.* உள் அழுந்தலாகப் பதித்து வை; உட்பதித்து ஒப்பனை செய்; அச்சுப்பாளம் பக்கம் ஆகியவற்றை உள்வெட்டுப் புழையில் பொருத்தி இணை.

**in'let**, *n.* கடற்கூம்பு, கடற்கழி, நீர்குடா; வாயில்; நுழைவிடம்; நுழைத்த பகுதி.

**in'lier**, *n.* (மண்.) தொல்படிகத்திட்டு, பின்னுலுண்டான படிவினுல் முற்றிலும் சுற்றிச் சூழப்பட்ட முன்படிவிடம்.

*in lo'co pare'ntis*, (ல.) *adv.* தாய் தந்தையரின் இடத்தில், பெற்றோருக்குப் பதிலாக.

**in'ly**, *a.* உள்ளார்ந்த, மறைவடக்கமான; *adv.* (செய்.) உள்ளே; உள்ளார்ந்து, அந்தரங்கமாய்; மிக நெருங்கிப்பழகிய தன்மையில்.

**in'lying**, *a.* உள்ளே இருக்கிற.

**in'mate**, *n.* அகத்தார், தங்கியிருப்பவர்களுள் ஒருவர்; உட்குடியிருப்பாளர்; உடனுறைபவர்.

*in med'ias res*, (ல.) *adv.* பொருட்களின் இடையே உள்ளார்ந்த நடுவிடத்தில்.

*in memor'iam*, (ல.) *adv.* நினைவாக; நினைவு பேணுவதற்காக.

**in'most**, *a.* உள்ளார்ந்த; மிகவும் அந்தரங்கமான; மிகவும் உட்புறமாக இருக்கிற; மிக உட்புறமாக அமைந்துள்ள.

**inn**, *n.* பிரயாணிகள் விடுதி, வழிப்போக்கர் தங்கல்மனை; (தொ.) inns of chancery, லண்டனில் சட்ட மாணவர்கள் விடுதியாகப் பண்டு பயன்பட்ட கட்டிடங்கள்; சட்ட மாணவர் விடுதியை இடமாகக்கொண்ட சங்கங்களின் தொகுதி; Inns of Court, இங்கிலாந்தில் வழக்குரைஞர் நுழைவு இசைவு தரத் தனியுரிமையுடைய நாற் பெருஞ் சங்கங்களுக்குரிய கட்டிடம்.

**innate'**, *a.* உள்ளார்ந்த, உள்ளியல்பான, இயல்பார்ந்த.

**innav'igable**, *a.* கப்பற் போக்குவரவுக்குப் பயன்படாத.

**inn'er**, *n.* துப்பாக்கி சுடும் இலக்கின் மையத்திற்கு அடுத்த வெளிச்சுற்றிலுள்ள பகுதி; இலக்கு மையத்தின் வெளிச்சுற்றுப் பகுதியில் நாக்கிய குண்டு; *a.* உட்புறமான; உட்பகுதி சார்ந்த; அகச்சார்பான; (தொ.) inner tube, சக்கரத்தின் சுழல்வட்டைச் சார்ந்த புறத்தோட்டினுள் பொதிந்த காற்றூட்டப்பட்ட தொய்வகக்குழாய்; the inner man, உள்ளாவி, உள்மனம்.

**inn'ermost**, *a.* உள்ளார்ந்த; உள்தொலைவான, புறத்திருந்து நெடுந்தொலை உள்ளார்ந்த.

**innerv'ate**, *v.* நரம்பு வலுவூட்டு; உறுப்பு வகையில் நரம் பூட்டு; செயலூக்கமளி, தூண்டி ஊக்கு.

**inn'ings**, *n. pl.* மரப்பந்தாட்டத்தில் பந்தடிப்பதற்கு ஒரு பக்கத்தவருக்குரிய முழு ஆட்டமுறை; ஆட்டக்காரர் ஒரு முறையில் ஆடிய ஆட்டம்; பதவிக்காலம், அரசியல் கட்சியின் ஆட்சிக்காலம்; கடலிலிருந்து உருவாக்கிப் பெறப்பட்ட நிலம்.

**inn'keeper**, *n.* விடுதிக்காரர், சத்திரம் வைத்து நடத்துபவர்.

**inn'ocence**, *n.* சட்டக் குற்றச் சார்பின்மை; குற்றமின்மை; மாசின்மை; கேடின்மை; சூழ்ச்சியற்ற இயல்பு; கரவின்மை; எளிவந்த தன்மை; ஏலாநிலை.

**inn'ocency**, *n.* குற்றமிலாநிலை, மாசறுநிலை.

**inn'ocent**, *n.* குற்றமற்றவர், மாசற்றவர்; குழந்தை; அறிவிலி, பேதை; *a.* குற்றமற்ற, பாவம் செய்யாத, பழிபாவமற்ற; சூழ்ச்சியற்ற; தீங்கற்ற; எளிய.

**innoc'uous**, *a.* தீங்கு விளைவியாத, கேடற்ற.

**innom'inate**, *a.* பெயரிடப்படாத, பெயரற்ற; (தொ.) innominate bone, வயது வந்தவரிடையே மூன்று எலும்புகளின் இணைவாக உருவான இடுப்பு எலும்பு.

**inn'ovate**, *v.* புதிது புனை; புதுவழியமை; புதுமுறைகாண்; புது மாறுதல்கள் உண்டுபண்ணு.

**inno'xious**, *a.* தீங்கற்ற, கேடுவிளைவிக்காத.

*in nub'ibus*, (ல.) *adv.* மேகங்களிடையே; கற்பனையில்; திட்பமில்லாமல்; புனைவு நிலையில்; தெளிவற்ற தன்மையில்.

**innuen'do**, *n.* மறைமுகக் குறிப்பு; குத்தல் பேச்சு; *v.* சாடைகாட்டிப் பேசு; மறைமுகமாகக் குறிப்பிடு.

**innum'erable**, *a.* எண்ணிக்கையற்ற, மிகப் பலவான.

**innutri'tion**, *n.* உணவூட்டக் குறை.

**innutri'tious**, *a.* ஊட்டமளிக்காத, சத்துக் குறைந்த.

**inobserv'ance**, *n.* கருத்தின்மை, கவனமின்மை; சட்ட வகையில் இணங்கி நடவாமை; செயலில் நடைமுறைப்படுத்தாமை.

**inoccupa'tion**, *n.* இட ஆட்சியின்மை; செயலீடுபாடின்மை; கவனமின்மை; தொழிலின்மை.

**inoc'ulate**, *v.* நோய்த்தடுப்பு ஊசி போடு; தொற்று நோய்களைத் தடுக்க அந்நோயணுக்கள்கொண்ட மருந்தினை ஊசி மூலம் உடலிற் செலுத்து; செடியில் தளிரினை அல்லது மொட்டினைச் செருகி ஒட்டு உண்டுபண்ணு.

**inod'orous**, *a.* மணமற்ற.

**inoffen'sive**, *a.* புண்படுத்தாத; தீமை இழைக்காத; வெறுக்கத்தகாத.

**inoffi'cious**, *a.* பணிக்கடனற்ற; செயற் பொறுப்பற்ற; (சட்.) அறமுறைக் கடமை சாராத.

inop'erable, *a.* கட்டி முதலியவற்றின் வகையில் அறுவை மருத்துவம் செய்ய முடியாத.

inop'erative, *a.* செயலற்ற; செயல் விளைவற்ற, பயனற்ற.

inopp'ortune, *a.* வேளைக்கொவ்வாத, வேளைக்கேடான, சமயத்துக்குப் பொருந்தாத.

inord'inate, *a.* அளவு மிஞ்சிய, மட்டுமீறிய; மிகு அளவான; அடக்க முடியாத; ஒழுங்கற்ற, கட்டுப்பாடற்ற.

inorgan'ic, *a.* உயிரியல் உறுப்பமைதியற்ற; உயிர்ப்பொருள் சார்பில்லாத; ஒழுங்கமைவில்லாத; இயல்பான அகவளர்ச்சி யற்ற; புறவளர்ச்சியான; தற்செயல் வளர்ச்சியான; உயிர் வளர்ச்சியற்ற; (வேதி.) கரியமற்ற; கனிப்பொருள் தோற்ற முடைய; (தொ.) inorganic chemistry, கரியமில்லா பொருட்களைப் பற்றிய வேதியியல்.

inorganiza'tion, *n.* அமைப்பு முறையின்மை, வகைதொகை கேடு.

inornate', *a.* முயன்று அழகுபடுத்தப்படாத, பகட்டணியற்ற, எளிய.

inos'culate, *v.* குருதிக் குழாய்கள்வகையில் இணைத்துப் பொருத்து; முளையுடன் முளை இணைந்து பொருந்து; புரி இழைகள் வகையில் பின்னி இணைவி; பின்னி இணைந்துகொள்.

*in part'ibus, infidel'ium,* (ல.) *adv.* முரண் சமயக்கோட் பாடு நிலவும் நாட்டில்.

in'patient, in'-patient, *n.* மருத்துவ மனையிலேயே தங்கிப் பண்டுவம் பெறுபவர், அகநிலைச் சிகிச்சையாளர்.

*in poss'e,* (ல.) *adv.* உள்ளார்ந்த மேல்வள ஆதாரம் உடைய தாக.

in'pouring, *n.* உட்பொழிவு; *a.* உள்ளே பொழிகிற.

*in prop'ria person'a,* (ல.) *adv.* தானாக நேரடியாக.

*in pur'is natural'ibus,* (ல.) *adv.* முழுதும் ஆடையற்று, முழு நிர்வாணமாக.

inq'uest, *n.* சட்டத் தேர்வாராய்ச்சி; உண்மையறிவதற்கான முறைமன்றத் தேர்வாய்வு; பிண ஆராய்ச்சிக்குரிய தீர்ப்புச் சான்றுரைஞர் குழு; (தொ.) grand inquest, தலைமைத் தீர்ப்புச் சான்றுரைஞர் குழு; grand inquest of the nation, மாமன்றப் பொதுப்பேரவை; great inquest, last inquest, கடைநாள் தீர்ப்பு.

inqui'etude, *n.* மன அமைதியின்மை, மன உலைவு; உடல் உலைவு.

inquire', *v.* விவரம் ஆராய்; உசாவு, செய்தி கோரு; நலம் உசாவு; தேவை குறித்துக் கடையில் விவரம் கேள்; பெயர் முதலிய விவரம் கோரு.

inquir'y, *n.* உசாவல்; விசாரணை; கேள்வி; ஆய்வாராய்வு; (தொ.) court of inquiry, படைத்துறை முறைமன்றம், படைத்துறைப் பணியாளர் வீரர் குற்றங்களை விசாரிக்கும் நீதிமன்றம்; make inquiries, தகவல் கேள், விவரம் கோரு.

inquisi'tion, *n.* உசாவல், கேள்விமுறைத் தேர்வாய்வு; பணித் துறை ஆய்வுமுறை; முறைமன்றத் தேர்வு விசாரணை; (தொ.) the Inquisition, முரண் சமயக்கோட்பாடுகளை ஒடுக்குவதற்கான சமயத்துறை சார்ந்த தண்ட உயர்முறை மன்றம்.

inquis'itive, *a.* உசாவுகிற; அறியும் அவாமிக்க; துடியார்வ மிக்க; பிறர் செய்திகளில் தலையிடுகிற.

inquis'itor, *n.* கேள்வி முறையாளர், வழக்காராய்ச்சியாளர்; சமயத்துறை சார்ந்த தண்ட உயர்மன்றத்தின் பணியாளர்; பணித்துறைத் தேர்வாய்வாளர்; (தொ.) Grand Inquisitor, சில நாடுகளில் உயர்படி நீதிமன்ற உசாக்குழுவின் இயக்குநர்; Inquisitor General, ஸ்பெயின் நாட்டில் உயர் நீதிமன்ற உசாக் குழுத் தலைவர்.

inquisitor'ial, *a.* நியாய விசாரணையாளரைச் சார்ந்த; கடுங்கேள்விமுறை வாய்ந்த; எரிச்சலூட்டும்படி பிறர் விஷயங்களில் தலையிடுகிற.

in'road, *n.* மீச்செலவு, பகைப்புலமீது படையெடுப்பு; ஆக்கிர மிப்பு, எல்லை கடந்த உள்நுழைவு; எல்லைகடந்த கொள்ளை யடிப்பு; வல்லந்தமான எல்லைமீறல்.

in'rush, *n.* உட்பாய்வு, விரைந்த உள்நுழைவு.

ins, *n. pl.* ஆட்சியிலுள்ள அரசியல் கட்சி.

insal'ivate, *v.* உமிழ்நீரில் உணவைக் கல.

insalub'rious, *a.* உடல் நலத்திற்கொவ்வாத; நல உகப்பற்ற.

insane', *a.* மூளைதிறம்பிய; பித்துப்பிடித்த; வெறியார்ந்த; அறிவு திறம்பிய; தன்னிலை மறந்த; (தொ.) insane asylum, பைத்தியக்காரர் காப்பு விடுதி.

insan'itary, *a.* உடல் நலத்திற்கு ஒவ்வாத; துப்புரவற்ற, தூய்மையற்ற.

insa'tiable, *a.* மனநிறைவு உண்டாக்கமுடியாத, மனநிறை வடையாத; தணியாத, ஆற்றமுடியாத; பேராசையுடைய.

insa'tiate, *a.* என்றும் மனநிறைவடையாத; எளிதில் திருப்தி உறாத.

inscribe', *v.* எழுதிப் பதிவுசெய், பொறித்துவை; பட்டியலில் பெயரைப் பதிவுசெய்; தாள்-தகடு முதலியவற்றில் குறியீடு களால் அடையாளமிடு; பதிவாளர்களுக்குப் பங்கு வடிவத்தில் கடன் அளி; (வடி.) உள்வரை, சில குறிப்பிட்ட புள்ளிகள் பிறிதொன்றன் வரம்பிற்குள் வரும்படி வரைப்படம் அமை.

inscrip'tion, *n.* பொறித்து வைத்தல்; எழுத்துப்பொறிப்பு; பொறித்து வைக்கப்பட்ட எழுத்துமூலம்; நாணய உட் பொறிப்பு; கல்வெட்டுப் பொறிப்பு; செதுக்குப் பொறிப்பு.

inscrip'tive, *a.* கடன்வகையில் பங்கு வடிவில் வெளியிடப் பட்ட; பொறிப்புமூலம் சார்ந்த.

inscrut'able, *a.* ஆராய்ந்தறியக்கூடாத, புரியாத, தெளி வற்ற, அறிய முடியாத; முழுதும் மர்மமான.

in'sect, *n.* புழுப்பூச்சியினம்; சிற்றுயிர்; அற்பர்; பொருட் படுத்தத் தகாதவர்.

insectar'ium, *n.* புழுப்பூச்சிமனை, புழுப்பூச்சியின உயிர்கள் வைக்கப்பட்டுள்ள இடம்.

insec'ticide, *n.* புழுப்பூச்சி கொல்லி, புழுப்பூச்சிகளை அழிப் பதற்குரிய மருந்து.

Insectiv'ora, *n. pl.* புழுப்பூச்சியுண்ணும் சிறிய பாலுணி யின உயிரினப்பிரிவு.

insect'ivore, *n.* புழுப்பூச்சியுண்ணும் சிறு பாலுணியின உயிர் களில் ஒன்று.

insectiv'orous, *a.* புழுப்பூச்சிகளைத் தின்று வாழ்கிற.

insectol'ogy, *n.* புழுப்பூச்சிகளைப்பற்றிய ஆராய்ச்சி நூல்; பூச்சியியல் நூல், புழுப்பூச்சியினங்களால் ஏற்படும் பொருளி யல் கூறுகளை ஆராயும் இயல்துறை.

in'sect-powder, *n.* பூச்சிகொல்லி, பூச்சி புழு வண்டு முதலிய வற்றை விரட்டவோ கொல்லவோ பயன்படும் மருத்துத் தூள்.

insecure', *a.* பாதுகாப்பற்ற; காவலற்ற; நிலையற்ற; விழுந்துவிடக்கூடிய; இடிந்து விழக்கூடிய; நம்பமுடியா நிலையுடைய.

insem'inate, *v.* விதையூன்று, வித்திடு; வித்திட்டுப் பயிர் வளர்; பண்பு செறிவி, திறம்தோய்வி; புகுத்து; செயற்கை யாகப் பண்பூட்டு.

insen'sate, *a.* புலனுணர்வற்ற; ஊறுணர்வில்லாத, சொரணை யற்ற; உணர்ச்சியற்ற; நல்லுணர்வற்ற; மடத்தனமான.

insensibil'ity, *n.* அக உணர்ச்சியின்மை, கனிவின்மை; அசட்டை மனப்பான்மை; தன்வயமின்மை, உணர்விழப்பு.

insen'sible, *a.* புலப்படாத; மிகநுட்பமான; உணரமுடியாத படி நுண்படிகளாக இயங்குகிற; அற்பமான, மதித்துணரத் தகாத; நினைவிழந்த, உணர்விழந்த நிலையுடைய; கவனியாத, தெரியாத; அக உணர்ச்சியற்ற, காழ்த்துப்போன; கிளர்ச்சி யற்ற, சோர்வற்ற.

insen'sitive, *a.* கூர் உணர்வற்ற, நுண்ணுணர்வுத் திற மில்லாத; சொரணையில்லாத.

insen'tient, *a.* உணருந் திறமற்ற; உயிரற்ற.

insep'arable, *a.* பிரிக்கமுடியாத; (தொ.) inseparable prefix, தனிச்சொல்லாகப் பயன்படுத்தமுடியாத முன்னிணைப்புக் கூறு.

insep'arables, *n. pl.* இணைபிரியா நண்பர்கள்; இணைபிரியாப் பொருள்கள்.

insert', *v.* செருகு; இடையில் சேர்; நுழைத்துவை; இடைக் குறிப்பாகப் புகுத்து.

inser'tion, *n.* செருகுதல்; இடையிற் சேர்த்தல்; நுழைத்தல், புகுத்தல்; செருகிய பொருள்; இடையிற் சேர்த்த பகுதி; அழகொப்பனை நூற்பின்னல்; (உள்.) தசை உறுப்பு முதலியவை இணைந்திருக்கும் முறை.

in'set[1], *n.* இடைச்செருகப்பட்ட அதிகப்படியான பக்கங்களின் தொகுதி; சிறிய உள்வைப்புப் படம், வரைப்படத்துள் வரைப் படம்; ஆடையில் செருகப்பட்ட அழகொப்பனையான துணித் துண்டு; அரைச்சட்டை ஓரத்தில் அணியப்பட்ட இரண்டு வெண்மையான துண்டுத் துணிகளில் ஒன்று.

inset'[2], *v.* உள் வை; உள்ளீடு செய்; உள்வரை; உட்படமாகச் சேர்.

inset'[3], inset'ted, *v.* inset[2] என்பதன் இறந்தகால முடிவெச்சம்.

in'shore', *a.* கரைக்கருகிலுள்ள; *adv.* கரைக்கு அருகில்; (தொ.) inshore of, கரைக்கு மேலும் அணிமையில் உள்ள.

in'side'[1], *n.* உள்ளிடம்; உட்பக்கம்; உட்பரப்பு; பாதையில் சுவருக்கு அருகான பக்கம்; பொதுப்பாட்டையிலிருந்து விலகிய பாதைப்பக்கம்; உட்பகுதி; நடுக்கூறு; குடல்; அடிவயிற்றின் உட்புறம்; வண்டியில் உள்ளிருக்கையில் பயணம் செய்பவர்; (தொ.) the inside of a week, வாரத்தின் நடுப்பகுதி; turned inside out, உட்புறம் வெளிப்புறமாக அமைக்கப்பட்ட.

in'side[2], *a.* உள்ளாக இருக்கிற; உட்பக்கமாக அமைந்த; உள்ளிடத்திலிருந்து வருகிற; (தொ.) inside information, இரகசியச் செய்தி, புறத்தார்க்கு எட்டமுடியாத செய்தி.

inside'[3], *adv.* உட்புறமாக, உட்பக்கத்தில்; உள்ளாக; *prep.* உள்ளே, உட்புறத்தில், உட்பக்கமாக.

insid'er, *n.* அகத்தார், அக உறுப்பினர், சங்கம் அமைப்பு முதலியவற்றில் உள்ளிருப்பவர்; இரகசியத்தை உணர்ந்தவர்.

insid'ious, *a.* உட்கவடான, நயவஞ்சகமான; ஆழ்ந்த திட்டமிட்டுச் சதிசெய்கிற, மறைந்து பழி சூழ்கிற; தீயநோக்குடன் மெல்ல முன்னேறுகிற; பழியுட்கரந்து மெல்லப் படிப்படியாக வளர்கிற; பழிசூழ்ச்சி வாய்ந்த, நம்பவைத்து ஏய்க்கிற.

in'sight, *n.* உள்நோக்கு, நுழைபுலம், நுண்ணறிவுத் திறம்.

insig'nia, *n. pl.* விருதுச்சின்னங்கள்; சிறப்புரிமைச் சின்னங்கள்; அறிகுறி அடையாளம்.

insignif'icant, *a.* குறிப்பிடத்தக்கதல்லாத, சிறப்பில்லாத, மிகச் சிறுதிறமான, அற்பமான.

insincere', *a.* வாய்மையற்ற, உள்ளொன்று புறமொன்றுன; கபடமான, வஞ்சமான.

insin'uate, *v.* சாட்டிக்கூறு, மறைமுகமாகக் குறிப்பிடு; சுட்டிக் குறைகூறு; மெல்ல நயம்படப் புகுத்து; தயவுக்குப் பாத்திரமாக்கு; மெல்லநுழை; பசப்பி ஆதரவுபெறு.

insip'id, *a.* சுவையற்ற; கிளர்ச்சியற்ற; மந்தமான; கவர்ச்சியற்ற.

insist', *v.* ஊன்றி அழுத்தமாகக்கூறு; வற்புறுத்து; விடாப்பிடியாக வேண்டு; தனிமுக்கியத்துவம் கொடு.

*in sit'u*, (ல.) *adv.* முன்னிருந்த அதே இடத்தில்.

insobri'ety, *n.* மதிமயக்கம்; குடி மயக்கம்.

insola'tion, *n.* சூரியபுடம், வெயிலிற்படும்படி வைத்தல், வெயிலில் வைத்து வண்ணம்போக்குதல்; வெயில் மருத்துவச் சிகிச்சை; நோய் தரும் வெயில் காய்வுநிலை.

in'solent, *a.* மதியாமல் பேசுகிற; திக்காரமான, திமிரான; துடுக்குத்தனமிக்க.

insol'uble, *a.* கரைக்கமுடியாத; விடை கண்டறியமுடியாத.

insol'vency, *n.* வகையற்ற நிலை, நொடிப்பு.

insol'vent, *n.* பட்ட கடனைத் தீர்க்க ஆற்றலற்றவர், நொடித்தவர்; *a.* கடன் தீர்க்க முடியாத, வகையற்ற; நொடித்தவர்க்குரிய.

insom'nia, *n.* துயிலொழிவு, உறக்கமின்மை நோய்.

insomuch', *adv.* என்ற அளவிற்கு, என்ற அளவில்.

*insouciant*, (பிர.) *a.* புறக்கணிப்பான, அக்கறையற்ற; கவலையற்ற, கவனமற்ற.

inspan', *v.* வண்டியின் நுகத்தடியில் எருதுகளைப் பூட்டு; வண்டியைப் பயணத்துக்குச் சித்தமாக்கு.

inspect', *v.* மேற்பார்வை செய்; பணி முறையில் கண்காணி; கூர்ந்து தேர்ந்தாராய்.

inspec'tor, *v.* மேற்பார்வையாளர்; காவல்துறை மேலர்.

inspec'torate, *n.* காவல்துறை மேலர் பதவி; மேற்பார்வையாளர்களின் தொகுதி; மேலர் ஆட்சி வரம்புக்குட்பட்ட வட்டகை.

inspira'tion, *n.* உள்ளுயிர்ப்பு, மூச்சு உள் வாங்குதல்; உள் உயிர்ப்பூட்டுதல்; அகத்தூண்டுதல்; துணையூக்கம்; தெய்விக அகத்தூண்டுதல்; அருட்கிளர்ச்சி; திடீர் உள்தூண்டுதல்; திடீர்க்கிளர்ச்சி எண்ணம்; அகத்தூண்டுதலால் ஏற்படும் செய்தி; அகத்தூண்டுதலுக்குரிய செய்தி; அகத்தூண்டுதலுக்குரிய மூலம்; கிளர்ச்சியூட்டும் உள்ளார்வக் கொள்கை; (தொ.) moral inspiration, தெய்விக அறத்துறை அகத்தூண்டுதல், சமய ஒழுக்கத்துறைக் கருத்துக்கள் தெய்விகத் தூண்டுதலால் அமையும்நிலை; plenary inspiration, தெய்விக நிறைபொருண்மைத் தூண்டுதல், திருமறைப் பகுதிகளில் எல்லாப் பொருள்களுமே தெய்விகத் தூண்டுதலால் அமையும் நிலை; verbal inspiration, தெய்விக நிறைசொல் தூண்டுதல், திருமறைவாசக முழுவதுமே தெய்விகத் தூண்டுதலால் அமையும் நிலை.

in'spirator, *n.* வளிவாங்கி, காற்று அல்லது நீராவியை உள்வாங்கும் கருவி; காற்றூட்டு கருவி.

inspire', *v.* மூச்சு உள் இழு, மூச்சு உள்வாங்கு; உயிர்ப்பூட்டு; அகத் தூண்டுதலளி; தெய்விக ஊக்கமளி; உணர்ச்சியூட்டு, எழுச்சியூட்டு, உணர்ச்சி புகட்டு; உணர்ச்சியைத் தோற்றுவி.

inspired', *a.* தெய்விக உள்ளூக்கம் பெற்ற; அகத்தூண்டுதலளிக்கப்பட்ட; உயிர் உணர்ச்சிகளால் தூண்டப்பட்ட; மேல்நிலை மறை தூண்டுதலுக்குரிய; மேலிடத் தூண்டுதலுக்குரிய; (தொ.) an inspired article, செல்வாக்குள்ளவரால் இரகசியமாகத் தூண்டப்பட்ட கட்டுரை.

inspi'rit, *v.* உயிர்ப்பி; உணர்ச்சியூட்டு; எழுச்சியூட்டு, ஊக்கு.

inspiss'ate, *v.* கெட்டியாக்கு, தடிப்பாக்கு; உருச்சுருக்கு.

instabil'ity, *n.* நிலையில்லாமை; உறுதியின்மை; மன உலைவு; அடிக்கடி மாறும் இயல்பு.

instal', install', *v.* பதவியில் அமர்த்து, வினைமுறைகளுடன் பணியில் ஏற்றிவை; நிலைநாட்டு, நிறுவு; கருவியை அமைவில் பொருத்திச் சித்தஞ்செய்.

installa'tion, *n.* அமர்த்தல், வினைமுறைகளுடன் அமர்த்து வினை நிறைவேற்றம்; பயனுறுநிலை இணைப்பு; முழுநிறை கருவிகல அமைவு.

instal'ment, *n.* தவணை; தவணைப்பணம்; தொடர்கதை வெளியீடு முதலியவற்றின் வகையில் தொகுதி; வெளியீட்டுக் கூறு.

in'stance, *n.* எடுத்துக்காட்டு; சான்றுநிகழ்ச்சி; குறிப்பீடு; தூண்டுரை; (சட்.) வழக்கின்படிமுறை; *v.* சான்றாக எடுத்துக் காட்டு, சான்றுதரும் செய்தியாக எடுத்துக்கூறு; குறிப்பிடு; (தொ.) at the instance of, வேண்டுகோளின்படி, ஆலோசனையின்படி; court of first instance, முதல்நிலை அதிகார வரம்புள்ள நீதிமன்றம்; in the first instance, முதலில், தொடக்கத்தில், முதற்படியில், முதற்பகுதியில்; சட்ட நடவடிக்கைகளின் முதற்படி முறையில்.

**in'stancy,** *n.* அவசரம், படுவிரைவு.

**in'stant,** *n.* நொடி, காலநுட்பம், உடனடிவேளை, மிகக் குறுகிய நேரநிலை ; சரிநுட்பநேரம் ; *a.* உடனடியான ; மிக அவசரமான ; நடைமுறை மாதத்தைச்சார்ந்த.

*instantane,* (பிர.) *n.* கணநேரக் காட்சி நிழற்படம் ; சில வரிகளில் எழுதப்படும் சுருக்கக் கட்டுரை.

**instantan'eous,** *a.* உடனடியான ; கணத்தில் நிகழ்கிற ; உடனடியாகச் செயற்படுகிற.

**instan'ter,** *adv.* உடனே, உடனடியாக.

**in'stantly,** *adv.* உடனே, அக்கணத்திலேயே.

*in stat'u pupillar'i,* (ல.) *adv.* பாதுகாப்பாளர் பொறுப்பின் கீழ்.

*in stat'u quo,* **adv.** நிலைமாறுமல், இருக்கும் நிலையிலேயே, முன்போன்ற நிலையில்.

**instaura'tion,** *n.* மீட்டமைவு, முன்னிலை மீட்டமைத்தல் ; புதுமீட்பமைவு, புதுப்பித்தாக்கப்படும் நிலை.

**instead',** *adv.* பகரமாக, பதிலாக, ஈடாக; ஒன்றன் இடமாக, பிரதியாக.

**in'step,** *n.* புறவடி, பாதத்தின் மேற்பகுதி ; புதைமிதியின் புறவடிப்பகுதி ; புறவடி வடிவுடைய பொருள்.

**in'stigate,** *v.* பின்னின்று தூண்டிவிடு; தீமை ஏவு; கிளர்ச்சிக்குத் தூண்டு ; கொலை முதலிய செயல்களுக்கு மறை தூண்டுதலளி.

**instil', instill',** *v.* துளித்துளியாக விடு ; சிறிது சிறிதாகப் புகட்டு; படிப்படியாக அறிவுறுத்து; சிறிதுசிறிதாகப் பண்பு தோய்வி.

**instilla'tion,** *n.* சிறிதுசிறிதாக வடித்தல்; அறிவு புகட்டுதல்; உள்ளத்தில் பண்பு பரவவிடுதல் ; புகட்டப்பட்ட பண்பு.

**in'stinct**[1], *n.* இயல்புணர்ச்சி; இயற்கை அறிவு இயலெழுச்சி; உள்ளார்ந்த உந்துணர்வு; இயற்றூண்டுதல்; இன உணர்வு, அறிவுநிலையுடையன போலக் காணப்படும் திட்ட அறிவற்ற விலங்கினங்களின் இயல்பான செயற்பண்பு ; இயலறிவுத் திறம் ; உணர்வற்றநிலைச் செயல்தூண்டுதலுக்கும் முழு அறிவுணர்வுத் தூண்டுதலுக்கும் இடைப்பட்ட நிலையுடைய இயல்பான அகத்தூண்டுதல்.

**instinct'**[2], *a.* உள்ளூறித்தோய்ந்த, நிரம்பி உட்பொதிந்துள்ள, பொதுளித் ததும்பிய.

**in'stitute,** *n.* நிறுவனம்; கழக முறை அமைப்பு; குறிப்பிட்ட நோக்கத்துக்குரிய நிலையான வளர்ச்சித்திட்ட ஏற்பாடு; இலக்கிய மெய்விளக்கத்துறை அமைப்பு ; கல்வி கலை ஆய்வு புத்தாய்வுகளுக்குரிய நிலையம் ; நிலையக் கட்டிடம் ; *v.* ஏற்படுத்து, நிறுவு; தொடங்கிவை; ஏற்பாடு செய்; அமர்த்து.

**in'stitutes,** *n. pl.* சட்டமூலத் தொகுப்பு.

**institu'tion,** *n.* ஏற்படுத்துதல்; நிறுவுதல்; நிலையம், பொது நோக்கத்துக்கான அமைப்பு ; நிலையக்கட்டிடம் ; நிலையான ஏற்பாடு ; நிலையான ஒழுங்கமைப்பு முறை ; நிலவர நிதி அமைப்பு; அறிவு கற்பிக்கும் ஏற்பாடு; பின் மரபினர் அமர்த்தீடு ; சட்ட அமைப்பு; பழக்க வழக்க மரபு ; விதிகளின் தொகுப்பு ; சமய முதல்வரால் குருமாரிடம் ஒப்படைக்கப்படும் ஆன்மநலப் பணிப் பொறுப்பு; (பே-வ.) நன்கு தெரியப்பட்டவர் ; நாடறிந்த செய்தி.

**institu'tional,** *a.* அமைப்பாக வகுக்கப்பட்ட, நிறுவனமாகச் செயலாற்றுகிற; அமைப்பு மூலமான, அமைப்பு வழியாகச் செயலாற்றுகிற.

**institu'tionalize,** *v.* அமைப்புமுறைக்குட்படுத்து; அமைப்பு முறை ஆக்கு, நிலையமாகச் செயற்படுவி.

**instruct',** *v.* அறிவுறுத்து; அறிவூட்டு, கற்பி, கற்றுக்கொடு; தெரிவி ; உணர்த்து, நடத்து ; ஏவு ; கட்டளையிடு.

**instruc'tion,** *n.* கற்பித்தல், அறிவுறுத்துதல், அறிவூட்டல் ; போதனை.

**instruc'tions,** *n. pl.* செயல்துறைக் கட்டளை ; மேலாளர் செயல்முறைப் போதனை ; நெறிமுறைக் கட்டளைத்தொகுதி ; வழக்கறிஞரிடம் தரப்படும் விவரக் கட்டளை.

**instruc'tive,** *a.* அறிவுரை வழங்குகிற, அறிவுறுத்துகிற ; நல்லறிவு கொளுத்துகிற ; அறிவூட்டத்தக்க ; படிப்பினை அளிக்கிற.

**in'strument,** *n.* செயற்கருவி, துணைக்கலம்; துணைப்பொருள், கருவியாக உதவும் சாதனம் ; கருவியாகப் பயன்படுபவர், கையாள் ; இசைக்கருவி, இசையொலி எழுப்பும் சாதனம் ; ஒப்பந்தப்பத்திரம்; பதிவேடு, பத்திரம்; *v.* இசைக்கருவிக்குரிய பாடற்பகுதி அமை; (தொ.) stringed instruments, நரப்பிசைக் கருவிகள் ; wind instruments, காற்றிசைக் கருவிகள், துளைக்கருவிகள்.

**instrumen'tal,** *a.* கருவியாகப் பயன்படுகிற; துணைச்சாதனமான ; கருவிசார்ந்த ; கருவியிலிருந்து எழுகிற; ஏதுவான, காரணமான; இசைக்கருவிகளால் எழுப்பப்படுகிற; (தொ.) instrumental case, மூன்றும் வேற்றுமை, கருவிப்பொருள் வேற்றுமை.

**instrumental'ity,** *n.* துணைமை, துணைப்பொருள், இடைச் சாதனம் ; நிமித்தகாரணம்.

**instrumenta'tion,** *n.* இசைக்கருவிகளுக்கான இசையமைப்பு; இசைக்கருவிகளின் இயல்பு ஆற்றல் அழுத்தம் ஆகியவை பற்றிய ஆய்வு ; கருவிகள்கொண்டு அறுவை மருத்துவம் செய்தல்; கருவிகள் கொண்டு செயலாற்றல் ; துணைமை, துணைப்பொருள்.

**insubord'inate,** *a.* கீழ்ப்படியாத, அடங்காத ; கிளர்ச்சி செய்கிற, கலகம் செய்கிற.

**insubstan'tial,** *a.* உண்மையற்ற ; திடத்தன்மையற்ற.

**insuff'erable,** *a.* பொறுக்கமுடியாத, தாங்குதற்கரிய.

**insuffi'ciency,** *n.* போதாமை.

**insuffi'cient,** *a.* பற்றாத, போதாத, தேவைக்குக் குறைந்த.

**in'sufflate,** *v.* காற்று-ஆவி முதலியவற்றைப் பரப்பிடையே செலுத்து ; மூக்கினுள் காற்றுப்பட ஊது.

**insuffla'tion,** *n.* மேல் ஊதுதல் ; உள் ஊதுதல் ; பேயை ஓட்டுதற்கான சடங்கில் பேய்பிடித்தவர்மீது ஊதுதல்.

**in'sufflator,** *n.* காற்றை மேற்செலுத்துதல் ; புலனுகாக் கை விரல் தடங்களைத் தெளிவாகக் காணும்படி மேலே தூளைப் பரப்பிச்செலுத்தும் கருவி.

**in'sular,** *a.* தீவின் இயல்புடைய; நீரால் சூழப்பட்ட; தீவைப் பற்றிய ; தீவில் உறைபவர்களைப்பற்றிய ; தனிநிலையான, தனி ஒதுக்கமான ; குறுகிய மனப்பான்மையுள்ள ; லத்தீன் மொழிக் கையெழுத்து வடிவத்தின் வகையில் முற்பட்ட ; இடைநிலைக்காலத்தில் பிரிட்டனில் வழங்கிய.

**insula'rity,** *n.* தீவின் இயல்பு ; தனிநிலை, தனி ஒதுக்கம் ; குறுகிய மனப்பான்மை.

**in'sulate,** *v.* தீவாக்கு ; சுற்றுச் சார்பினின்று பிரித்து வை ; தனிப்படுத்து, துண்டுபடுத்து ; வெப்பத்தொடர்பறுத்துப் பாதுகாப்புச் செய் ; மின்பாயாமல் காப்பிடு.

**in'sulin,** *n.* கணையச் சுரப்புநீர், விலங்குகளின் கணையச் சுரப்பியிலிருந்து எடுக்கப்பட்டு நீரிழிவுநோய் தடுக்கப் பயன்படுத்தப்படும் மருந்து வகை.

**in'sult**[1], *n.* அவமதிப்பு, மரியாதையற்ற நடத்தை ; வசை மொழி, பழிதூற்றரவு, நிந்தை.

**insult'**[2], *v.* வசை கூறு, இகழ், அவமதி ; பலர்முன் பழித்துரை, மானபங்கஞ்செய்.

**insup'erable,** *a.* கடக்கமுடியாத ; வென்று சமாளிக்க முடியாத.

**insupport'able,** *a.* பொறுக்கமுடியாத ; தாங்கமுடியாத ; மேற்கொள்ள இயலாத.

**insur'ance,** *n.* காப்புறுதி, காப்பீடுசெய்தல் ; காப்பீட்டுத் தவணைப் பணம், காப்புறுதிக் கட்டணம்.

**insur'ant,** *n.* காப்புறுதிப் பத்திரம் அளிக்கப்பெற்றவர்.

**insure'**, *v.* உறுதிப்படுத்து, உறுதிசெய் ; காப்புறுதி செய் ; காப்பீடுமூலம் உறுதிசெய்.

**insur'er**, *n.* ஈடுசெய்ய உத்தரவாதம் அளிப்பவர்; காப்புறுதி செய்துகொள்பவர்.

**insur'gence, insur'gency**, *n.* கிளர்ச்சி, எதிரெழுச்சி, ஆட்சியை எதிர்த்துக் கிளர்ந்தெழுதல்.

**insur'gent**, *n.* கிளர்ச்சிக்காரர், ஆட்சி எதிர்ப்பாளர் ; *a.* கிளர்ச்சி செய்கிற; கடல் வகையில் கிளர்ந்தெழுந்து பாய்கிற.

**insurmoun'table**, *a.* ஏறிக்கடக்கமுடியாத ; கடந்து மேற்செல்ல இயலாத, வென்று சமாளித்தற்கரிய.

**insurrec'tion**, *n.* ஆட்சி எதிர்ப்பு; கிளர்ச்சிக்கான தொடக்கநிலை எழுச்சி, புரட்சி.

**insuscep'tible**, *a.* மசியாத, இளகாத ; தடம்பதிய இடந்தராத ; ஏற்காத ; இயலாத.

**intact'**, *a.* முழுமைகெடாத, குறைபடாத, பழுதுபடாத; தொடப்படாமலுள்ள.

**inta'gliated**, *a.* மேற்பரப்பில் செதுக்கப்பட்ட.

**inta'glio**, *n.* செதுக்கு வேலைப்பாடு ; கடினமான பொருளினமீது செய்யப்பட்ட செதுக்கு வேலை ; செதுக்கு வேலைப்பாடுள்ள மணிக்கல் ; *v.* கடினமான பொருள்களின் மீது செதுக்குவேலைப்பாடு செய்.

**in'take**, *n.* உள்வாய், ஆற்றிலிருந்து குழாய்க்கோ கால்வாய்க்கோ நீர் எடுத்துச் செல்லும் இடம் ; சுரங்கத்தில் காற்றுப் புழைவாய் ; குழாயின் அல்லது குறுங்காலுறையின் ஒடுங்கிய பகுதி; தையலிணைப்புக் குறுக்கம்; கொள்பொருள்; கொள்ளப்பட்டவர் ; சதுப்பு நிலத்திலிருந்து சீர்ப்படுத்திப் பயன்படுத்தப்பட்ட நிலம்.

**intan'gible**, *a.* தொட்டறிய முடியாத ; உணர முடியாத; புரியமுடியாத, புதிரான ; மனத்தால் பற்றமுடியாத.

**in'teger**, *n.* முழு எண் ; முழுமையாயுள்ள எண் ; முழுமைப் பொருள் ; பகுபடா அளவு.

**in'tegral**, *n.* முழுமை அளவை ; அடக்கக்கூறுகளின் முழு மொத்தம் ; முழுமைத் தொகையீடு ; *a.* முழுமையான ; முழுமைவாய்ந்த ; முழு எண்ணான ; முழு எண்ணுக்குரிய ; (தொ.) integral calculus, முழுமைக் கணிப்பெண்.

**in'tegrant**, *a.* ஆக்கப் பகுதியாயுள்ள, முழுமையின் நேர் உறுப்பாயுள்ள, முழுமையாக்கத்துக்கு இன்றியமையாக் கூறான.

**in'tegrate**, *a.* பகுதிகளாலான ; முழுமையான, முழுநிறைவான ; *v.* முழுமையாக்கு, குறைப்பகுதி சேர்த்து முழுமையாக்கு ; பகுதிகளை இணைத்து நிறைவாக்கு ; மொத்தத் தொகை குறிப்பிடு ; முழுச்சராசரி கூறு.

**integra'tion**, *n.* முழுமையாக்கம் ; ஒருமைப்பாடு, வெள்ளையரும் பிறவண்ண மக்களும் அடங்கிய பல்வேறுபட்ட சமுதாயத்தை ஒரே முழு அமைப்பாக வகுத்தமைக்கும் செயல்.

**integ'rity**, *n.* முழுமை, கூறுபடாநிலை ; நேர்மை, வாய்மை, நாணயம், ஒழுங்கு.

**integ'ument**, *n.* புறப்போர்வை, தோல், மேந்தோல்.

**in'tellect**, *n.* மனத்தின் அறிவுத்திறம், அறிவாற்றல் ; மூளைத்திறம் ; ஆய்வுணர்வுத்திறம் ; அறிவுடையவர் ; அறிவுடையோர் தொகுதி.

**intellec'tion**, *n.* ஆய்ந்தறிதல், பகுத்தறியும்முறை.

**intellec'tual**, *n.* அறிவுத்திறனுடையவர், ஆய்வறிவாளர், அறிஞர் ; *a.* அறிவுத்திறம்வாய்ந்த, அறிவாற்றலுள்ள ; அறிவாற்றல் சார்ந்த, ஆய்வுணர்வுக்குரிய ; அறிவுக்குகந்த ; அறிவுத்திறநோக்கிய.

**intellec'tualism**, *n.* ஆய்வறிவுக்கோட்பாடு, எல்லா அறிவும் ஆய்திறத்தின் விளைவே எனுங் கொள்கை.

**intell'igence**, *n.* அறிவுத்திறம், கூர்மதி, விவேகம் ; ஆறறிவுயிர், அறிவுரு ; தகவல், செய்தி ; வேவுத்தகவல் ; (தொ.) Intelligence Department, படைத்துறை வேவுச்செய்தி அரங்கம்; intelligence quotient, அறிவுத்திற அளவெண், அறிவுக் குறி எண்.

**intell'igencer**, *n.* தகவல் கொடுப்பவர் ; ஒற்றர், மறைமுகத் தகவலாளர்.

**intell'igent**, *a.* அறிவுத்திறம்வாய்ந்த ; அறிவுள்ள, விவேகமுள்ள, கூர்மதியுடைய.

**intelligent'sia, intelligent'zia**, *n.* தற்சிந்தனையாற்றலுடையவர் தொகுதி, கற்றறிந்தோர் வகுப்பு.

**intell'igible**, *a.* புரியக்கூடிய, விளக்கமான, தெளிவான ; அறிவுக்குப் புலனாகின்ற, புலப்படக்கூடிய ; (மெய்.) புலன்களால் அறியப்படாது அறிவால் மட்டுமே அறியக்கூடிய.

**intem'perance**, *n.* தன்னடக்கமின்மை; வரம்புமீறிய செயல்; மட்டுமீறிய குடிப்பழக்கம்.

**intem'perate**, *a.* வரம்புகடந்த நுகர்வீடுபாடுடைய ; மட்டுமிஞ்சிய குடிப்பழக்கமுடைய ; மட்டுமீறிய ; அளவுகடந்த.

**intend'**, *v.* எண்ணு, உளங்கொள்; முன்னரே கருது ; செயல் குறி, திட்டமிடு ; மனமாரச் செயலில் முனை.

**inten'dant**, *n.* மேலாள், கண்காணி.

**inten'ded**, *n.* (பே-வ.) மணஞ்செய்துகொள்ள உறுதி செய்யப்பட்டவர்.

**intend'ment**, *n.* சட்டத்தினால் நிலைநிறுத்தப்பட்ட மெய்யான பொருள் விளக்கம்.

**intense'**, *a.* மும்முரமான, முனைப்பான ; கடுமையான, தீவிரமான ; உச்ச அளவான ; உச்ச வேகமான ; ஆர்வமிக்க ; உணர்ச்சிமிக்க.

**inten'sion**, *n.* செறிவுநிலை, நெருக்கம் ; மனத்தின் தீவிர முயற்சி ; தன்முனைப்பாற்றல் ; தீவிர விருப்பாற்றல்.

**inten'sive**, *a.* முனைப்பியலான ; தீவிரமான ; ஆழ்ந்த ; செறிவு உண்டுபண்ணுகிற ; விளைவுவீதம்பெருக்குகிற ; பயன் நிறைவு ஊக்குகிற ; (மரு.) படிப்படியாக அளவேற்றுகிற ; (இலக்.) அழுத்தம் குறிக்கிற ; பொருளை வலியுறுத்திக் காட்டுகிற ; (தொ.) intensive inoculation, (மரு.) படிப்படியாகச் செறிவை மிகுதிப்படுத்தி மருந்தூசி போடல்.

**intent'** [1], *n.* உள்நோக்கம், எண்ணம் ; செயல்நோக்கம் ; மறைநோக்கம் ; *a.* கருத்தூன்றிய, விடாமுயற்சியுடன் கைக்கொண்ட, ஊக்கத்துடன் ஈடுபட்ட ; மனமார்ந்த அக்கறையுள்ள ; ஆவல்விருப்பங் கொண்ட ; (தொ.) to all intents and purposes, பெரிதும், செயல்முறையில், அனுபவத்தில்.

**inten'tion**, *n.* உட்கருத்து, உட்கோள், உள் எண்ணம் ; உள்ளக்குறிப்பு, குறிக்கொண்ட செயல்முடிவு ; மனத்துட்கொண்ட செயல் திட்டம் ; கருதப்பட்ட செய்தி ; (அள.) புலனுணர்வு தொகுத்த பொதுக் கருத்துப்படிவம் ; (மரு.) பண்டுவத் திட்டம் ; (இறை.) வழிபாட்டு நேர்வுக் குறிக்கோள் ; (தொ.) first intention, காயங்களில் பிரிந்த பகுதிகள் வளர்ந்து கூடி ஆறும் இயல்பு ; particular intention, special intention, (இறை.) திருக்கோயிலில் வழிபாட்டுக்குரிய தனி நேர்வு நோக்கம் ; second intention, காயங்களில் பொடிப்பிட்டு புடைத்தாறும் இயல்பு.

**inten'tional**, *a.* வேண்டுமென்றே செய்யப்பட்ட, மனமாரத் திட்டமிட்டு இழைக்கப்பட்ட ; உள்நோக்கமுடைய.

**inten'tionally**, *adv.* வேண்டுமென்றே, மனமாரத்திட்டமிட்டு.

**inten'tions**, *n. pl.* (பே-வ.) திருமண ஏற்பாட்டைக் குறித்த உள்ளார்ந்த நோக்கங்கள்; (தொ.) first intentions, (அள.) முற்கோள் கருத்துப்படிவங்கள் ; பொருள்களைப் பற்றிய முன்னீடான மூலக் கருத்துக்கள் ; second intentions, (அள.) பொருள்களைப் பற்றிய வகை வேறுபாடு உடன்பாடு இனம் முதலியவற்றைக் குறித்த பின்னீடாகத் தோன்றும் கருத்துக்கள்.

**inter'** [1], *v.* புதை ; கல்லறையில் அடக்கஞ்செய் ; நிலத்தினுள் இட்டு மூடு.

***in'ter*** [2], (ல.) *prep.* இடையே, நடுவே.

**in'teract** [1], *n.* இரண்டு அங்கங்களுக்கிடையேயுள்ள நாடக இடை ஓய்வு வேளை ; இடைக்காட்சி.

**interact'**[2], *v.* ஒன்றின்மீதொன்று செயலாற்று, எதிரெதிர் செயல் விளைவு உண்டுபண்ணு.

**interac'tion**, *n.* செயலெதிர்ச்செயல், பின்னிய செயல் விளைவு.

**in'ter al'ia**, (ல.) *adv.* மற்றவற்றிற்கிடையில்.

**interartic'ular**, *a.* ஒரு முட்டின் அடுத்தடுத்திருக்கும் மேற்பரப்புக்களுக்கிடையேயுள்ள.

**interbed'**, *v.* மற்றவற்றிடையே வை, இடையே கிடத்து.

**interblend'**, *v.* ஒன்றேடொன்று கல; மாறிமாறிக் கல.

**interbreed'**, *v.* இனக்கலப்புச்செய், இனங்களைக் கலந்து உருவாக்கு; இனங்களை மாறிமாறிக்கல.

**interc'alary**, *a.* காலப்பட்டியில் ஞாயிற்றுக் கணிப்பாண்டுடன் ஒத்திசைவுக்காக மிகை நாளாக அல்லது மிகை மாதமாக இடைச் செருகப்பட்ட; ஆண்டு வகையில் இடைச்சேர்வு மிகையுடைய; இடையிணைக்கப்பட்ட; இடைப்பட்ட.

**interc'alate**, *v.* ஆண்டுப்பட்டியில் இடையிற்கல; இடைச்செருகு.

**intercede'**, *v.* இடையிட்டுப் பரிந்து பேசு; பரிந்தாதரித்து வேண்டு.

**intercen'sal**, *a.* மக்கட்கணிப்புப் பருவங்கட்கிடைப்பட்ட, இரு குடிமதிப்புகளுக்கிடையேயுள்ள.

**intercept'**, *v.* இடைமறி, தலையிட்டுத்தடு, குறுக்கிடு; இடையீடாகு; இடையறுத்தகற்று; தடைசெய், நிறுத்து; (கண.) இரு புள்ளிகளுக்கிடைப்பகுதியைத் தனிப்படுத்திக் குறிப்பிடு.

**intercep'tor**, *n.* பின்பற்றித் துரத்துவதற்குகந்த பளுவற்ற விரைவிமானம்.

**interce'ssion**, *n.* பரிந்துரைப்பு; பரிந்தாதரவு வேண்டுதல்; இறைவனிடம் பரிந்து அருள்வேண்டுகை.

**in'terchange**[1], *n.* இடைப்பரிமாற்றம்; பண்டமாற்று; கொடுக்கல்வாங்கல்; ஒற்றை மாற்றுமுறை, ஒன்றுவிட்டொன்ருன முறை.

**interchange'**[2], *v.* பரிமாற்றஞ் செய், பண்ட மாற்றுச்செய், கொடுத்துவாங்கு; ஒன்றிற்கு ஒன்ருக இடமாற்று; ஒன்றுவிட்டு ஒன்ருக மாற்று.

**intercolle'giate**, *a.* கல்லூரிகளுக்கிடையே நிகழ்கிற, கல்லூரிகளுக்கிடைப்பட்ட.

**intercolon'ial**, *a.* குடியேற்ற நாடுகளுக்கிடைப்பட்ட, குடியேற்ற நாடுகளிடையே நடத்தப்படுகிற.

**intercolum'nar**, *a.* இரு தூண்களுக்கிடையான.

**intercolumnia'tion**, *n.* ஒழுங்காக இடைவெளியிட்ட தூணமைப்பு; தூணிடைவெளி.

**in'tercom**, *n.* இடைச்செய்தித்தொடர்பு; வானூர்திகளின் இடைச்செய்தித்தொடர்பு.

**intercommun'icate**, *v.* இடைச்செய்தித்தொடர்பு கொள்; தாராளமாகப் போக்குவரவுத் தொடர்புகொள்.

**intercommun'ion**, *n.* நெருங்கிய உறவு, தோழமை ஈடுபாடு; செயல் பரிமாற்றம், உறவு பரிமாற்றம்.

**intercommun'ity**, *n.* பல்குழுப் பொதுமை; பொதுவிலுடைமை.

**interconnect'**, *v.* ஒன்றேடொன்று பின்னி இணை, இருபுறத்தொடர்புகளாலும் உறவுபடுத்து.

**interconvert'ible**, *a.* இடைமாற்றக்கூடிய.

**intercos'tal**, *a.* உடலின் விலா எலும்புகளுக்கிடையேயுள்ள; கப்பலின் பக்கக் கட்டைகளுக்கிடையேயுள்ள.

**intercos'tals**, *n. pl.* உடலின் விலா எலும்புகளுக்கு இடையே உள்ள பகுதிகள்; கப்பலின் பக்கக் கட்டைகளுக்கு இடையே உள்ள பகுதிகள்; இடைப்பகுதிகள்.

**in'tercourse**, *n.* இடைக்கூட்டுறவு; செயலிணைவுறவு; சமூகக் கூட்டுறவு; தோழமைத்தொடர்பு; கடவுள் மனித இடைத்தொடர்பு; வாணிகப்போக்குவரவுத் தொடர்பு; பாலுறவு, கலவி, புணர்ச்சி.

**intercross'**, *v.* குறுக்குமறுக்காக வை; சிலுவை போன்று கிட; பின்னி இனம் பெருக்கு.

**intercu'rrent**, *a.* செய்திவகையில் இடைநிகழ்வான; கால வகையில் இடைப்பட்ட; நோய்வகையில் உடனிகழ்வான; விட்டுவிட்டு நேர்கிற.

**interdenomina'tional**, *a.* பல்சமயக்குழுக்களுக்கிடைப்பட்ட; சமயக் குழுக்களுக்குப் பொதுவான; தனிக் குழுச் சார்பற்ற.

**interdepend'**, *v.* ஒன்றையொன்று சார்ந்திரு, பின்னிச் சார்ந்திரு.

**interdepen'dence, interdepen'dency**, *n.* கூட்டுச்சார்பு; கூறுகளிடையே பின்னிச் சார்பு.

**interdepen'dent**, *a.* ஒன்றையொன்று பின்னிச் சார்ந்த.

**in'terdict**[1], *n.* விலக்காணை, தடைக்கட்டளை; தடைக்கட்டாணை, சமயத் தொடர்புகளிலிருந்து ஆளையோ இடப்பகுதியையோ பிரித்து விலக்கிவைக்கும் போப்பாண்டவரின் தடை ஆணை.

**interdict'**[2], *v.* செயல் விலக்காணையிடு; பயனீட்டுத் தடைவிதி; செயலிலிருந்து தடுத்துவை; ஆள் வகையில் பொருள் மறு; சமயத் தொடர்பிலிருந்து விலக்கிவை.

**interdic'tory**, *a.* தடையுத்தரவடங்கிய; விலக்காணை செய்கிற.

**interdi'gital**, *a.* கைகால் விரல்களுக்கிடையே உள்ள.

**interdi'gitate**, *v.* கைகோப்பது போன்று பின்னிப்பிணை.

**in'terest**, *n.* வட்டி; உறுமிகை, மிகைவீதம்; கவர்ச்சி; அக்கறை; செல்வாக்கு; உன்னிப்பு, கவனம்; நலன்; தனிநலம்; தன்னலம்; ஆதாயம்; பற்று; பற்றுத்தொடர்பு; தனிப்பற்று; கருத்து; பொறுப்புரிமைப்பங்கு; சட்டப்படி உரிமை; சார்வுநிலை, சாதக நிலைமை; *v.* பற்றுத் தூண்டு, அக்கறை உண்டாகச்செய்; கவர்ச்சியூட்டு; கவனந்தூண்டு; கருத்துக்கொள்ளச் செய்; குறிப்பிட்ட திசையில் கருத்துத் தூண்டு; தெரியவேண்டுமென்ற ஆர்வம் உண்டுபண்ணு; (தொ.) compound interest, கூட்டு வட்டி, வட்டிக்கு மேல் வட்டி; make interest, தன்னலத்தைத் தூண்டிப் பயன்படுத்து; simple interest, நேர்வட்டி; vested interests, குழுநலங்கள், இயல்பாக மாருச் சார்புடைய நலங்கள்.

**interfa'cial**, *a.* இருதள முகப்புக்களுக்கிடையேயுள்ள; இடைமுகப்புத் தளத்துக்குரிய.

**interfere'**, *v.* தலையிடு; குறுக்கிடு; இடையேபுகு; இடையீடாகு; இடையிட்டுத்தடு, குந்தகம்செய்; குதிரைவகையில் காலுடன் கால் முட்டிக்கொள்; இடைக்குறுக்கிட்டு மோது; ஒளிக்கதிர் வகையில் குறுக்கிட்டு உறழ்வுறு.

**interfer'ence**, *n.* தலையிடுதல்; குறுக்கீடு.

**interferom'eter**, *n.* ஒளியலை அளவுமானி, இடையீட்டுத் தடுப்புமூலம் ஒளியலைகளின் நீளத்தை அளக்கும் கருவி.

**in'terflow**[1], *n.* ஒருங்குட்பாய்வு, பின்னிப்பாய்வு; கூடிக் கலப்பு.

**interflow'**[2], *v.* ஒருங்கு ஒழுகிப்பாய்; கூடிக்கல, பின்னிப் பிணைவுறு.

**interf'luent**, *a.* பின்னிக் கலந்தொழுகுகின்ற.

**interfuse'**, *v.* பின்னி இணைவுறுத்து; கூடிக்கலப்புறு; இணைந்தொன்றுபடு; இரண்டறப் பரவி இணைவுறு.

**intergla'cial**, *a.* இரு பனியூழிக்காலங்களுக்கு இடையே உள்ள.

**intergrada'tion**, *n.* படிப்படியாக மாறி ஒன்றுபடுதல்.

**intergrade'**, *n.* நுண்ணிய இடைப்படி, படிப்படியான நிலையில் மாறி வேற்றுரு ஒப்பாகும் மாறுபாட்டில் இடைப்பட்ட படிநிலை; *v.* படிப்படியான நிலைகளால் வேற்றுரு ஒப்பு அடை.

**intergrowth'**, *n.* பின்னுவளர்ச்சி, ஒன்றிற்குள் ஒன்று பின்னலாகச் சிக்கி வளர்தல்.

**in'terim,** *n.* இடைக்காலம், இடைப்பட்ட நேரம்; *a.* இடைப்பட்ட காலச்சார்பான, இடைப்படுகாலத்துக்குரிய; தற்போதைக்கான; (தொ.) interim dividend, இடைப்பட்ட காலப் பங்கு வீதம்.

**inter'ior,** *n.* உட்பகுதி, உட்புறம், உள்நாட்டுப்பகுதி; கட்டடத்தின் உட்புறம்; அறையின் உட்புறம்; ஓவியத்தில் உட்புறக் காட்சி; உள்ளார்ந்த இயல்பு; ஆன்மா; உள்நாட்டுத் துறை; *a.* உட்புறத்ததான; உட்புறமமைந்த; உள்நாட்டைச் சேர்ந்த; கடற்கரையிலிருந்து நெடுந்தொலைவிலுள்ள; எல்லைப்புறத்துக்கு நெடுந்தொலைவிலுள்ள; உள்ளார்ந்த; உள்ளான; மனத்தகத்தான; ஆன்மிகமான, உள்நோக்கிய.

**interja'cent,** *a.* இடையில் அமைந்துள்ள, இடைப்பட்ட, இடைநிலையான.

**interjac'ulatory,** *a.* தனிநிலையில் கழறப்பெற்ற, திடுமென இடையிட்டுரைக்கின்ற.

**interject',** *v.* இடையீடாகப்பேசு, குறுக்கிட்டுரை; திடுமென இடைமறித்துரை, தனிநிலையாகக் கழறு.

**interjec'tion,** *n.* திடீர் உரை; வியப்புரை; வியப்பிடைச் சொல்.

**interknit',** *v.* இணைத்துப்பின்னு.

**interlace',** *v.* இடையிடையே கோத்துப்பின்னு, இணைத்துப் பின்னு; ஒன்றோடொன்று கல; ஒன்றோடொன்று மாறி மாறிப் பின்னிச்செல்.

**interlap',** *v.* ஒன்றையொன்று மேற்கவிந்திரு.

**interlard',** *v.* இடையிடையே கல, அயல்மொழிச் சொற்களை இடைச்செருகிக் கலந்து வழங்கு.

**in'terleaf,** *n.* நூலின் இடையிடையே சேர்த்த வெறுந்தாள்; *pl.* in'terleaves.

**interleave',** *v.* வெற்றுத்தாள்களை நூலின் இடையிடையே இணை.

**interline',** *v.* வரியிடையே சொற்களைச்சேர், இடைவரி சேர்.

**interlin'ear,** *a.* வரிகளுக்கிடையே எழுதப்பட்ட; இடைவரியாக அச்சடிக்கப்பட்ட.

**interlin'gua,** *n.* ஐரோப்பிய மொழிகளில் உள்ள லத்தீன அடிப்படையாக அமைக்கப்பட்ட அனைத்துலக மொழி.

**interlink',** *v.* கொளுவி இணை, இடையிணைப்புச்செய்.

**interlob'ular,** *a.* இரு பிரிவுகளுக்கிடையேயுள்ள.

**interlock',** *v.* ஒன்றை ஒன்றுடன் பிணைத்திறுக்கு; பொருந்த இணைவுறு; பிணைப்புறு; இருப்பூர்தி நெம்புகோல்களை ஒருங்கியங்கும்படி சேர்த்திணைவி.

**interlocu'tion,** *n.* உரையாடல், வாதம்.

**interloc'utor,** *n.* உரையாடலிற் பங்குகொண்டு பேசுபவர்; நீகிரோ இசைக்குழுவின் மேலாளர்; (சட்.) தற்காலிக முன்னுத் தரவு.

**interloc'utory,** *a.* நீதிமன்ற வழக்கு விசாரணையின் இடையிற் கூறப்பட்ட.

**in'terloper,** *n.* தலையிடுபவர், தன் ஆதாயம் கருதிப் பிறர் காரியங்களில் தலையிட்டுத் தொல்லை கொடுப்பவர்; (வர.) உரிமையற்ற வணிகர்.

**in'terlude,** *n.* இடைக்காட்சி, முற்காலத் தொடர்நாடகங்களின் இடைப்பட்ட சிறு நாடகக்காட்சி; முற்பட்டகால நாடக வகை; நாடகக் காட்சிகளிடையேயுள்ள இடைவேளை; இடைவேளை நிகழ்ச்சி; இடைமாற்று நிகழ்ச்சி; இடைக் காட்சி இசை; (இசை.) பாட்டிடைக் கருவி இசைப்பு.

**interma'rriage,** *n.* மண இணைப்புறவு, குடும்பம்-குலம்-சாதி-உறவுக்குழு ஆகியவற்றிடையே நிகழும் கலப்புமணம்.

**interma'rry,** *v.* மண இணைப்புறவுகொள், குடும்பம்-குலம்-நாடு முதலிய குழுக்களின் வகையிற் பிற குழுவிலிருந்து கலப்புமண உறவுகொள்.

**intermed'dle,** *v.* தகாநிலைத் தலையீடுகொள், வேண்டாத வற்றில் தலையிடு.

**intermed'iary,** *n.* இடையீட்டாளர், நடுவர், சந்து செய்விப்பவர்; *a.* இடையீட்டாளராய்ச் செயலாற்றுகிற; சந்து செய்விக்கிற; இடைநிலையான.

**intermed'iate,** *n.* இடைவருபொருள்; இடைப்பட்டபொருள்; நடுத்தரமான பொருள்; *a.* இடைவந்த; இடைப்பட்ட; நடுத்தரமான; இடையீடான; இடையிலுள்ள; *v.* இடைநின்று செயலாற்று; சந்து செய்வி.

**intermed'ium,** *n.* இடைப்பட்டபொருள், இடைநிலைப் பொருள்; ஊடுபொருள், விண்புறவெளியில் ஆற்றல் கடக்க விடும் ஊடுபொருள்.

**interm'ent,** *n.* புதைத்தல், புதைவினை.

**interme'zzo,** *n.* நாடகத்தின் இடையே வரும் சிறுதிற இடைக்காட்சி, பெரிய இசை நிகழ்ச்சித்தொகுப்பை இணைக்கிற சிறு மெல்லிசை நிகழ்ச்சி.

**intermigra'tion,** *n.* குடிப்பெயர்ச்சிப் பரிமாற்றம், குடிபெயர்வு மாற்றிக்கொள்ளுதல்.

**interm'inable,** *a.* முடிவுறுத; சலிப்பூட்டுகிற; களைப்பூட்டுகிற அளவுக்கு நீண்ட.

**interming'le,** *v.* ஒன்றுடன் ஒன்று சேர்; இருபொருள்களைச் சேர்த்துக் கல; இணைந்து கல.

**intermi'ssion,** *n.* ஓய்வு, இடை நிறுத்தம்; நாடக இடைவேளை; நாடக இடைவேளைக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாடற் பகுதிகள்.

**intermit',** *v.* நிறுத்திவை; இடைநிறுத்து; தொடர்பறு; காய்ச்சல்-நோவு-நாடி ஓட்டம் ஆகியவற்றின் வகையில் சிறிது இடையே ஓய்வுறு.

**intermix',** *v.* ஒன்றுகக் கலப்புறு; ஒன்றோடொன்று கல; இணைந்து கல.

**in'tern[1],** *n.* கல்விநிலைய இல்லத்தின் உள்ளுறைவாளர்; மருத்துவமனை உள்ளுறை மருத்துவர்; முதிர்மாணவ மருத்துவர், மாணவத் தேர்ச்சி முதிர்ந்து அல்லது பட்டம் பெற்று மருத்துவ மனையில் தங்கித் துணைமருத்துவராகச் செயலாற்றுபவர்.

**intern'[2],** *v.* நாட்டுக்குள் கட்டுப்படுத்து; எல்லைக்குள் நடமாட்டம் கட்டுப்பாடுசெய்; நாட்டின் உட்பகுதிக்குள் அனுப்பிவை; பாதுகாப்புக் காவலில் வை.

**intern'al,** *a.* உள்ளான, உட்புறமான, உட்புறமுள்ள; உள்ளுறுப்பான; உள்நாட்டுக்குரிய; உள்நாட்டுச் செய்திகள் சார்ந்த; உள்ளத்துக்குரிய; ஆன்மிகமான; அகவியலான, அகப்பண்பு சார்ந்த; (தொ.) internal-combustion engine, உள்வெப்பாலை, எரிபொருள் உருளைக்குள் வெடிக்கும் ஆற்றலால் இயங்கும் பொறி; internal evidence, அகச்சான்று.

**Interna'tional[1],** *n.* உலகத்தொழிலாளர் கூட்டமைப்பு; (தொ.) first International, மார்க்ஸிய (Marxist) அடிப்படையான 1862-1873 வரை நிலவிய முதல் உலகத்தொழிலாளர் கூட்டமைப்பு; second International, *1889*-இல் கூட்டப்பட்ட சமதர்ம அடிப்படையான உலகத் தொழிலாளர் கூட்டமைப்பு; third International, *1919-1943* வரை நிலவிய ருசியப் பொதுவுடைமைச் சார்பான உலகத்தொழிலாளர் கூட்டமைப்பு.

**interna'tional[2],** *n.* அனைத்து நாட்டுப் போட்டிப் பந்தயங்களில் ஈடுபடுபவர்; அனைத்து நாட்டுப் போட்டி; அனைத்து நாட்டுப் பொதுவுடைமைப் புரட்சிச் சங்க உறுப்பினர்; *a.* வெவ்வேறு நாடுகளிடையேயுள்ள; அனைத்துநாட்டுத் தொடர்புடைய; உலகநாடுகள் சார்ந்த; பன்னுடு சார்ந்த; எல்லா நாட்டுக்குமுரிய; அனைத்துநாட்டுத் தொழிலாளர் சங்கத்தைச் சார்ந்த; (தொ.) international standard atmosphere, பல நாட்டு விமானத்துறை வெற்றிகளை ஒப்பிட்டு நோக்குவதற்காக மேற்கொள்ளப்படும் பொதுவளி மண்டலநிலை.

***internationale,*** (பிர.) *n.* அனைத்துநாட்டுப் புரட்சிப்பாடல்.

**interna'tionalist,** *n.* அனைத்துநாட்டுத் தொடர்புக்கொள்கையாளர், அனைத்துநாட்டுப் பொதுவுடைமைப் புரட்சிச் சங்க ஆதரவாளர்.

**interna'tionalize,** *v.* அனைத்துநாட்டுரிமையாக்கு, வெவ்வேறு நாடுகளின் இணைந்த பாதுகாப்பின்கீழ்க் கொண்டு வா.

**interne'cine,** *a.* ஒருவரை ஒருவர் அழிக்கிற ; ஒன்றையொன்று கெடுக்கிற ; உட்பகை சார்ந்த.

**intern'ment,** *n.* பாதுகாப்புக் கட்டுப்பாடு ; (தொ.) internment camp, போரில் கைதிகள் அயல்நாட்டினர் காவல் கட்டுப்பாட்டுப் பாசறை.

**in'ternode,** *n.* கணுவிடைப்பகுதி, இருகணுக்களுக்கு இடைப்பட்ட தண்டுப்பகுதி.

***in'ter nos,*** (ல.) *adv.* நமக்குள், நமக்கிடையே.

**internun'cial,** *a.* நரம்புகள் வகையில் உடலின் வேறு வேறு அமைப்புக்களை இணைத்துத் தொடர்புபடுத்துகிற.

**internun'cio,** *n.* போப்பாண்டவரின் தனிமுறைத்தூதர், தூதர் அமர்த்தப்படாத காலத்தில் அல்லது இடத்தில் பணியாற்றும் இடைத்தூதர் ; (வர.) துருக்கி அரசவையிலுள்ள ஆஸ்திரிய அரசியல் தூதர்.

**interocean'ic,** *a.* இருபெருங்கடல்களுக்கிடைப்பட்ட, மாகடல்களை இணைக்கிற.

**interos'culate,** *v.* ஒருவரோடு ஒருவர் கூடியிணை ; ஒன்றோடொன்று கல ; இடையிணைப்பாயமை.

**inteross'eous,** *a.* எலும்புகளுக்கிடையே உள்ள.

**interpage',** *v.* இடைப்பக்கங்களில் அச்சிடு; பக்கங்களிடையே செருகு.

**interpari'etal,** *a.* மண்டையோட்டின் பக்க எலும்புகளுக்கிடையே உள்ள.

**interp'ellate,** *v.* இடைவினா எழுப்பு ; நடைமுறை நிகழ்ச்சிகளை இடைமறித்து அமைச்சரை விளக்கம் கேள்.

**interpen'etrate,** *v.* முழுநிறைவாக ஊடுருவிச்செல்; முழுமையாக ஊடுருவிப் பரவு; மாறிமாறி ஒன்றையொன்று ஊடுருவு.

**interplait',** *v.* சேர்த்துமுடை, இணைத்துப்பின்னு.

**interplan'etary,** *a.* கோள்களுக்கிடைப்பட்ட.

**in'terplay,** *n.* இடைவிளைவு, கலப்பின் இருதிசைப் பயன் விளைவுகளின் தொகுதி.

**interplead',** *v.* மூன்றாவதாளான ஒருவரின் செய்திபற்றி முடிவு செய்ய ஒருவருக்கொருவர் வாதாடு.

**In'terpol,** *n.* குற்ற ஒழிப்பில் உலக ஒத்துழைப்பு ஊக்குவதற்காக அமைக்கப்பட்டுள்ள அனைத்து நாட்டுக் காவல்துறைக் குழு.

**interp'olate,** *v.* இடைச்செருகு, புத்தகத்தின் இடையில் இடைச்செருகு; சொற்களை இடைச்செருகு; (கண.) தொடர்பு வரிசைகளில் இடை உருச்சேர்.

**interpose',** *v.* இடைச்செருகு ; இடையிட்டுப்புகுத்து ; குறுக்கிடுசெய் ; குறுக்கிடு ; இடையிற் பேசு ; இடைப்படு.

**interposi'tion,** *n.* குறுக்கிடுதல் ; குறுக்கீடு ; தலையீடு, இடையீடு ; குறுக்கிட்டுப் பேசுதல் ; குறுக்கிடுகிற பொருள்.

**interp'ret,** *v.* உட்பொருளை வெளிப்படுத்து ; கலை நயப்படுத்திக்காட்டு ; செயலுருப்படுத்திக்காட்டு ; பொருள்படுத்து; சுட்டிக் குறிப்பிடு ; சுட்டியுணர்; எளிய மொழியில் விளக்கு; மொழிபெயர்த்துரை.

**interp'retable,** *a.* விளக்கப்படத்தக்க.

**interpreta'tion,** *n.* பொருள்விளக்கம் ; தரப்பட்ட பொருள் விளக்கம் ; கருத்து விளக்கக்காட்சி ; கருத்துவகை.

**interp'retative,** *a.* விளக்கம் அடங்கிய; விளக்க விளைவான.

**interp'reter,** *n.* மொழிபெயர்ப்பாளர் ; மொழிபெயர்த்துக் கூறுபவர் ; பொருள் விளக்குபவர்.

**interp'retress,** *n.* மொழிபெயர்ப்பவள் ; பொருள் விளக்கும் பெண்.

**interprovin'cial,** *a.* இருமாநிலங்களுக்கிடைப்பட்ட ; இரு மாகாணங்களுக்கிடையே அமைந்துள்ள.

**interpunc'tion,** *n.* நிறுத்தக்குறி அமைதி.

**interpunc'tuate,** *v.* நிறுத்தக்குறியிடு.

**interra'cial,** *a.* வெவ்வேறு இனங்களுக்கிடையேயுள்ள.

**interreg'num,** *n.* ஒழுங்கான அரசனில்லாக் காலம், இடையாட்சிக்காலம் ; ஓராட்சி முடிவுக்கும் அடுத்தஆட்சித் தொடக்கத்துக்கும் இடைப்பட்ட காலம் ; இடை ஓய்வு, இடைக்காலம் ; *pl.* interreg'na, interreg'nums.

**interrela'tion,** *n.* இடையுறவு.

**interrela'tionship,** *n.* இடை உறவுத்தன்மை.

**inte'rrogate,** *v.* கேள்விகேள், வினவு ; வழக்கில் குறுக்குக் கேள்வி கேள், உசாவு, விசாரணை செய்.

**interroga'tion,** *n.* கேள்விகேட்டல், வினா, உசாவல்.

**interrog'ative,** *n.* வினாச்சுட்டு, வினாப்பெயர் ; *a.* வினவுகிற, கேள்வி வடிவான, கேள்வி கேட்கிற, கேள்விகுறித்த.

**interrog'atory,** *n.* கேள்வி ; கேள்வித்தொகுதி ; குற்றஞ்சாட்டப்பட்டவரிடம் கேட்கப்படும் குறுக்குக் கேள்வித் தொகுதி ; *a.* வினவுகிற, வினாவுடன் கூடிய, விசாரணை செய்கிற, வினாமுறையான.

***in terror'em,*** (ல.) *adv.* எச்சரிப்பாக.

**interrupt',** *v.* குறுக்கிட்டுத்தடு; திடீரெனக் குறுக்கிடு; திடுமெனத் தொடர்பறு ; தடுத்துமறி; இடைத்தடுத்துப்பிரி ; காட்சியை மறை ; குறுக்கீடுசெய்.

***in'ter se,*** (ல.) *adv.* அவர்களுக்கிடையே; அவற்றிடையே.

**intersect',** *v.* ஊடறு ; வெட்டித் துண்டாக்கு ; (வடி.) கோட்டிணைக் குறுக்கிட்டுப்பிரி.

**intersec'tion,** *n.* ஊடறுத்தல் ; ஊடறுப்பு ; குறுக்கீடு ; (வடி.) குறுக்கீட்டுச் சந்திப்பு ; குறுக்கீட்டுச் சந்திப்புப் புள்ளி.

**intershoot',** *v.* இடைநேரம் விட்டுவிட்டு எறி ; விட்டுவிட்டுக் கண்வீச்சு எறி ; மாறு மாறான பல்வண்ணப்படுத்து.

**in'terspace,** *n.* இடைவெளி ; இடைநேரம்.

**intersperse',** *v.* இடையிடையே தூவு, சிதறிப்பரப்பு ; பல்வேறு இயற்படுத்து.

**interspin'al,** *a.* முதுகந்தண்டின் இணைப்பு எலும்புகளுக்கிடையே உள்ள.

**interspin'ous,** *a.* முதுகந்தண்டின் எலும்புகளின் முளைகளுக்கிடையே உள்ள.

**in'terstate,** *a.* அரசுகளுக்கிடையே நிகழ்கிற ; அரசுகட்கிடைப்பட்ட.

**interstell'ar,** *a.* விண்மீன்களுக்கிடையேயுள்ள ; கதிரவன் அண்டத்துக்கு அப்பாற்பட்ட.

**inters'tice,** *n.* சிறு இடைவெளி ; சந்து, வெடிப்பு, ஒடுங்கிய பிளவு.

**intersti'tial,** *a.* சிற்றிடைவெளி சார்ந்த, சிறு பிளவுருவான; சந்துகளில் உள்ள.

**interstratifica'tion,** *n.* படுகை இடைப்பாடு ; படுகைகளிடையே மாறிமாறிக் கிடத்தல்.

**intertan'gle,** *v.* ஒன்றோடொன்று சிக்கலாக்கு.

**intertan'glement,** *n.* கூட்டுச்சிக்கல், ஒன்றோடொன்று பின்னிச்சிக்கிக்கொள்ளுதல்.

**intertex'ture,** *n.* பின்னல் நெசவு.

**intertrib'al,** *a.* குடிமரபுகளுக்கிடைப்பட்ட, குலங்களிடைப்பட்ட.

**intertwine',** *v.* ஒன்றுடனொன்றாகப் பின்னி முறுக்கு ; பின்னுறு.

**intertwist',** *v.* ஒன்றுடனொன்றாக முறுக்கு, பின்னி முறுக்கிக்கொள்.

**in'terval,** *n.* இடைவெளி ; இடைநேரம் ; இடை ஓய்வு ; இடைப்பிளவு ; இடைநிறுத்தம் ; (இசை.) இரு ஒலிகளுக்கிடையே உள்ள குரலெடுப்பு வேற்றுமை ; பண்பு வகையில் இருவருக்கிடையே அல்லது இருபொருள்களுக்கிடையே உள்ள வேற்றுமை ; (தொ.) at intervals, இங்கும் அங்கும் ; அடுத்தடுத்து ; இடைநேரம் விட்டுவிட்டு.

intervall'ic, *a.* கோட்டை மதில்களுக்கு இடையேயுள்ள வெளி சார்ந்த.

intervein', *v.* நரம்புகள் போல குறுக்குமறுக்காகச் செல்லுவி.

intervene', *v.* குறுக்கிடு; இடையில் நிகழ்; இடையே நேர்; சீர்ப்படுத்துவதற்காகத் தலையிடு; தலையிட்டுத்தடு; (சட்.) வழக்கில் முதலில் தொடர்புகொள்ளாமல் பின்னர்க் குறுக்கிடு.

interven'tion, *n.* இடையீடு; தலையீடு; இடையிட்ட தடை; இடையீட்டு இணக்குவிப்பு.

in'terview, *n.* காண்பு, நேரிடைக்காட்சி; *v.* நேருக்குநேர் சந்தி, பேட்டிகாண், சந்தித்துப் பேசு.

*in'ter viv'os*, (ல.) *adv.* உயிர் வாழ்பவரிடையே, உயிர் வாழ்வனவற்றிடையே; நல்லெண்ணக் கொடையாக, மரபுரிமையாகவன்றி நன்கொடையாக.

intervolve', *v.* ஒன்றிற்குள் ஒன்றுகச் சுருட்டிவை.

interweave', *v.* இணைத்துப்பின்னு; இசைத்து நெசவு செய்.

interwind', *v.* இணைத்துச் சுருட்டு, சேர்த்து முறுக்கு.

interwork', *v.* இசைத்துப்பின்னு, ஒன்றன்மீதொன்றுகச் செயலாற்று.

interwreathe', *v.* ஒன்றையொன்று சேர்த்து மாலையாகச் சுற்று, ஒன்றினுள் ஒன்றுகப் பின்னு.

inter-zon'al, *a.* இரண்டாம் உலகப்போர் (1939-1945) முடிவில் நேச வல்லரசுகளிடையே பரப்பீடு செய்யப்பட்ட அரங்கங்களுக்கிடைப்பட்ட; பகுப்பீட்டரங்கங்களுக்குரிய.

intes'tate, *n.* விருப்ப ஆவணம் எழுதாமல் இறந்துவிடுபவர்; *a.* இறுதிப்பத்திரம் எழுதாமல் இறக்கிற.

intes'tine, *a.* உள்ளியலான; சச்சரவு வகையில் குடும்பத்துக்கு உள்ளான; போர் வகையில் நாட்டெல்லைக்குட்பட்ட, நாட்டகமான; உயிரின வகையில் உடலுக்குட்பட்ட; (தொ.) intestine motion, முற்றிலும் உடலுக்குள்ளேயே இயங்குகிற.

intes'tines, *n. pl.* குடல்; உணவுக்குழாயின் கீழ்ப்பகுதி; (தொ.) large intestine, பெருங்குடல்; small intestine, சிறுகுடல்.

in'timacy, *n.* நெருங்கிய உறவுடைய நிலை; உள்ளார்ந்த பழக்கம்; கள்ளப்புணர்ச்சி.

in'timate, *n.* மிக நெருங்கிய நண்பர்; உற்றார், உற்ற நேயர்; *a.* மிக நெருங்கிய; மிக நெருங்கிய பழக்கமுடைய; நெருங்கிய உறவுடைய; உள்ளார்ந்த; உற்ற, உயிர்த் தொடர்புடைய; நாட்குறிப்பு முதலியவற்றின் வகையில் உள்ளுணர்ச்சிகளையெல்லாம் தெரிவிக்கின்ற; *v.* தெரியப்படுத்து, தெரிவி; குறிப்பாலறிவி, சுட்டு; குறிப்புக்காட்டு; (தொ.) intimate knowledge, நெருங்கிய பழக்கத்தால் ஏற்பட்ட அனுபவ அறிவு.

intim'idate, *v.* அச்சுறுத்து, மிரட்டு, மிரட்டி அடக்கு; அச்சுறுத்தித் தன் விருப்பப்படி நடக்கச்செய்.

intim'ity, *n.* தனிமை உள்ளார்ந்த தன்மை; தனிமறைவு; நெருங்கிய பழக்கம்.

intinc'tion, *n.* திருக்கோயில் அருளுணா வினையில் பழத்தேறலில் அப்பத்தின் தோய்வு.

intit'ule, *v.* பாராளுமன்றச் சட்ட உரிமையளி.

in'to, *prep.* உள், உள்ளே, உள்ளாக.

in'-toed, *a.* கால்விரல்கள் உள்நோக்கித் திருப்பப்பட்டுள்ள.

intol'erable, *a.* பொறுக்க இயலாத, தாங்குதற்கரிய.

intol'erant, *a.* பொறுதியற்ற, சகிப்புத்தன்மையற்ற, மாறுபாடு பொருத.

in'tonate, *v.* இசையோடு ஓது; இனிய அதிர்விசையலை எழுப்பு; தனிக்குரலிசையுடன் கூறு.

intona'tion, *n.* இசையோடு ஓதுதல்; இசையலை அதிர்வு, ஒலியலை எழுச்சிதாழ்வு; குரல் உயர்வு தாழ்வு; இசையமுத்தம்; எளிய இசைப்பாடலின் தொடக்க வாசக எடுப்பு.

intone', *v.* இசையோடு ஓது; தனி இசைக்குரலுடன் ஓது.

*in tot'o*, (ல.) *adv.* முழுதும், முற்றும்.

intox'icant, *n.* வெறியூட்டும் குடிவகை; மதி மயக்கும் பொருள்; *a.* வெறியூட்டுகிற, மதி மயக்குகிற.

intox'icate, *v.* வெறியூட்டு; தன்னடக்கம் மீறிய அளவில் கிளர்ச்சியூட்டு, எழுச்சியூட்டு; தூண்டு.

intoxica'tion, *n.* வெறி; குடிமயக்க வெறி; மட்டுமீறிய கிளர்ச்சி; நஞ்சூட்டல்.

intracran'ial, *a.* மண்டையோட்டுக்குள்ளான, மண்டையோட்டின் உட்புறஞ் சார்ந்த.

intrac'table, *a.* வசப்படுத்த முடியாத, அடங்காத; எளிதில் கையாள முடியாத, படிமானமாகாத.

intrad'os, *n.* (க-க.) வளைமுகட்டின் உட்புற வளைவு, வளைமுகட்டின் கீழ்வளைவு.

intramur'al, *a.* மதிலகமான, கட்டிடத்தினுள்ளே நடைபெறுகிற.

intrana'tional, *a.* நாட்டெல்லைக்குட்பட்ட, நாட்டெல்லை கடவாத.

intran'sigence, intran'sigency, *n.* இணங்காமை, விட்டுக்கொடாப்பண்பு.

intran'sigent, *n.* அரசியலில் வளைந்து கொடாதவர், கொள்கை விட்டுக்கொடுக்காதவர்; *a.* இணங்கிப்போகாத, ஒத்துவராத, விட்டுக்கொடுக்காத.

intran'sitive, *n.* செயப்படுபொருள் குன்றியவினை; *a.* செயப்படுபொருள் குன்றிய.

in'trant, *n.* கல்லூரிப் புது நுழைவாளர்; சங்கத்தில் சேருபவர்.

intraven'ous, *a.* நரம்பின் அகத்துள்ள; நரம்பூடாகச் செலுத்தப்படுகிற.

intrep'id, *a.* அஞ்சாத, துணிச்சல்மிக்க.

in'tricacy, *n.* கடுஞ்சிக்கல், விளங்காப்புதிர்.

in'tricate, *a.* திருக்குமறுக்கான; கடுஞ்சிக்கலான; மறைபுதிரான, தெளிவற்ற.

in'trigant, in'triguant, *n.* உட்சூழ்ச்சிகளில் ஈடுபடுபவர்.

intrigue', *n.* உட்கிளர்ச்சி, மறை சூழ்ச்சி, கபடச்செயல்; மறை காதல், கள்ளத்தொடர்பு; *v.* உட்சூழ்ச்சி செய், மறை சதிகளில் ஈடுபடு; மறை செல்வாக்கைப் பயன்படுத்து; மறைவான காதல் கொள்; ஆவலைக்கிளறு, அவாத்தூண்டு.

intrin'sic, *a.* உள்ளார்ந்த; உள்ளியல்பான; உயிர்க்கூறான.

introduce', *v.* புகுத்து; உள் இடு, செருகு; பழக்கத்திற்குக் கொணர்; புதிதாகத் தொடங்கி வை, புதுவது புகுத்து; உள்ளே இட்டுச் செல்; அறிமுகப்படுத்து; சமூகத்திற்கு இளம் பெண்ணை அறிமுகப்படுத்து; கவனத்துக்குரியதாக்கு; பாராளுமன்றத்தில் சட்ட முதலியவற்றைக் கொண்டுவந்து முன்னிலைப்படுத்து.

introduc'tion, *n.* அறிமுகப்படுத்துதல்; அறிமுகம்; முன்னுரை; முகவுரை; தொடக்கநிலையான பகுதி, தொடக்கக் கூறு; (தொ.) letter of introduction, அறிமுகக்கடிதம்.

introfle'xion, *n.* உள்நோக்கி வளைதல், உண்முக வளைவு.

introgre'ssion, *n.* உட்போக்குவரவு.

intro'it, *n.* அருளுணா வழிபாட்டின்போது திருமுன்னிலையை அணுகும் சமயகுரு பாடும் திருமறைப்பாடல்.

introjec'tion, *n.* உயிரில்லாதனவற்றுக்கு உயிர்ப்பண்பேற்றுதல்; தாதான்மிய உணர்வு, புற உலகப்பொருள்களுடனும் உயிர்களுடனும் ஒன்றுபட்டு அவற்றின் நிலைகளையும் முடிவுகளையும் தமதாக உணரும் உணர்வு.

intromi'ssion, *n.* உட்புக விடுதல்; செருகல்; பிறர் உடைமைக் கையாளும் உரிமையை மேற்கொள்ளுதல்.

intromit', *v.* இடைச்செருகு, செருகு; புகவிடு, நுழையவிடு.

intromitt'ent, *a.* புகவிடுகிற; செருகுகிற; உட்செருகுவதற்கிசைவாக அமைக்கப்பட்ட, புகுத்தற்கிசைவான.

introspect', *v.* உண்முகமாகத் தன்னுளாராய், தன்னைத்தானே உள்ளாய்வு செய், உண்முகச் சிந்தனை செய்.

**introspec'tion,** *n.* உட்புறக்காட்சி; தற்காட்சி, தன் உள்ளத்தைத் தானே நுணுக்கிக்காணும் செயல், உண்முக நோக்கு.

**introsuscep'tion,** *n.* = intussusception.

**introver'sion,** *n.* அகமுகக் கோட்டம்; அகம்புறமாகத் திருப்புகை, உண்முகச் சிந்தனை; தன்முக அவாச்சார்பு; தற்சுட்டு நலம்; அகச்சிந்தனை நாட்டம்; இறைமை அகமுகக்காட்சி.

**in'trovert** [1], *n.* அகமுக நோக்காளர், தற்சோதனை செய்பவர்; சிந்தனையை உட்புறமாகத் திருப்பும் இயல்புடையவர்.

**introvert'** [2], *v.* அகமுகச் சிந்தனை செய், எண்ணங்களை உள் நோக்கித் திருப்பு; உள்வாங்கிக்கொள்; (வில.) உறுப்பை உறுப்பினுள்ளிடமாக இழுத்துக்கொள்.

**intrude',** *v.* உரிமையில்லாமல் தலையிடு; இடையில் புகு; அழையாது நுழை; வல்லந்தமாகப் புகுத்து; தனிமையுள்ள எல்லைமீறிப் புகு.

**intrud'er,** *n.* அழையாது நுழைபவர்; தாக்கும் விமானம்.

**intru'sion,** *n.* தலையீடு; இடையீடு; அழையா நுழைவு; வலிந்த புகுத்தீடு; (மண்.) படுகையிடையே கலவைப்பாறையின் உட் சறுக்கீடு.

**in'tubate,** *v.* (மரு.) குரல்வளை திறந்திருக்கும்படி அதனுள் குழாயைச் செருகு.

**in'tuit,** *v.* உள்ளுணர், இயற்கை உணர், நேரடி உணர்வு பெறு.

**intui'tion,** *n.* உள்ளுணர்வு; ஆய்வாராய்வு இல்லாமலே ஏற்படும் நேரடி உணர்வு; நேரடிப்பொறி உணர்வு; திடீர் உணர்வுத்திறம், அகத்திற உணர்வு.

**intui'tionalism,** *n.* மெய்ம்மை உள்ளுணர்வின் பயனே என்னும் கோட்பாடு.

**intui'tionism,** *n.* உள்ளத்தின் இடையீடின்றிப் பொறிகள் புறப்பொருள்களை நேரடியாகவே அறிகின்றன என்னும் கோட்பாடு.

**intu'itive,** *a.* உள்ளுணர்வாலறியப்பட்ட; ஆராயாது உணரப்பட்ட; உள்ளுணர்வால் இயக்கப்படுகிற, இயலறிவால் இயங்குகிற; உள்ளுணர்வு சார்ந்த; இயலறிவார்ந்த.

**intu'itivism,** *n.* நன்னெறிக் கூறுகள் உள்ளுணர்வைச் சார்ந்து எழுபவை என்னும் கோட்பாடு.

**intumes'cence,** *n.* பரு, வீக்கம், புடைப்பு.

**intumes'cent,** *a.* உப்புகிற, பருக்கிற.

**intussuscep'tion,** *n.* (உட.) தன்னியலாக்க ஆற்றல், உயிரினங்கள் அயற்பொருள்களைத் தன்மயமாக்கித் தன்னுடலுடன் உடலாக இணைவித்துக்கொள்ளும் திறம்; கருத்துக்கள் வகையில் தன்மயப்படுத்திக்கொள்ளும் திறன்; குடல் வகையில் ஒரு பகுதிக்குள் மற்றொரு பகுதியை இழுத்துக்கொள்ளும் செயல்.

**inunc'tion,** *n.* நெய்யாட்டு, எண்ணெய் தடவுதல்.

**in'undate,** *v.* வெள்ளப்பெருக்குக்கு உள்ளாக்கு, வெள்ளம் அலைபாய்ந்தோட வை; வழிந்தோடுவி, சூழ்ந்து மூழ்கடி.

**inurbane',** *a.* பண்பமைதியில்லாத, இணக்க வணக்கமற்ற, நாகரிகப் பண்பாடற்ற.

**inure',** *v.* பயிற்றுவித்துப் பழக்கு, பழக்கப்படுத்து; வலுவூட்டு, பழக்கத்தால் காய்த்துப் போகச்செய்; (சட்.) நடைமுறைப்படு, செயல்வலிவுறு.

**inure'ment,** *n.* பழக்கப்படுத்துதல்; பயிற்சிப்பழக்கம்; பயின்று பழகிய நிலை.

**inurn',** *v.* உடலெரித்த சாம்பலைத் தாழியில் இடு.

**inut'ile,** *a.* பயனற்ற.

**inutil'ity,** *n.* பயனின்மை; பயனற்ற நிலை; ஆதாயமின்மை; பயனற்ற பொருள்.

**invade',** *v.* படையெடுத்துத்தாக்கு, பகைநாட்டின்மேல் தண்டெழுந்து செல்; எல்லைமீறி நுழை; தாக்கு; உரிமையுள் தலையிடு; தொல்லைகொடு.

**inva'ginate,** *v.* உறையிலிடு; உறையினுள்ளாகப் புகுத்து; குழாய்போன்ற உறையை அகம்புறமாகத் திருப்பு.

**in'valid** [1], *n.* நோயாளி, பிணியாளர், இயலாதவர்; *a.* நோயாளிக்குரிய, இயலாத, ஏலமாட்டாத.

**inval'id** [2], *a.* சட்டப்படி செல்லாத, ஆற்றலற்ற, கட்டுப்படுத்தாத, பயனற்ற.

**invalid'** [3], *v.* நோயாளியாகப் படுக்கவை, இயலாதவராக்கு; நோயாளி போன்று நடத்து; படைப்பணியிலிருந்து அகற்று; நோய்காரணமாக வீட்டுக்கு அனுப்பு; நோயாளியாகு, நோயாளிப் பட்டியலில் இடம்பெறு.

**inval'idate,** *v.* சட்டப்படி செல்லாததாக்கு பயனற்றதாக்கு, வெறுமையாக்கு.

**invalid'ity,** *n.* சட்டப்படி செல்லாத தன்மை; பயனற்ற தன்மை; நோயுற்றநிலை, உடல் உரங்குன்றியநிலை.

**inval'uable,** *a.* விலைமதிக்க முடியாத, விலைமதிப்பற்ற, அரு மதிப்புள்ள.

**in'var,** *n.* இயல்நூற் கருவி மணிப்பொறி முதலியன செய்வதற்கேற்றபடி மிகக்குறைவான விரிவகற்சி அலகெண்ணுடைய செர்மன் வெள்ளி எஃகுக்கலவை.

**invar'iable,** *a.* மாறுத, ஒரே படிமையுடைய; (கண.) நிலையெண்ணுன, மாதிரியான.

**inva'sion,** *n.* படையெடுப்பு, தண்டெழுச்சி; தாக்குதல்; வரம்பு மீறுகை, எல்லை கடப்பு; பிறர் உரிமை கைப்பற்றுதல்; வல்லந்த நுழைவு.

**invec'tive,** *n.* திட்டு, வசைமாரி; வசைத்தாக்குதலான சொற்பொழிவு; வன்சொல், சுடுசொல்.

**inveigh',** *v.* தாக்கிப்பேசு, இரைந்து பழிதூற்று, அறைந்து வசைபாடு.

**invei'gle,** *v.* பசப்பித்தூண்டு, நயமாக ஏய்த்துச் செயலாற்றுவி.

*invener'unt,* (ல.) *v.* பலர் வரைந்த கலைப்படங்களில் இயற்றினோர் பெயர்களுடன் 'இயற்றினர்' என்ற குறிப்பு.

*inven'it,* (ல.) *v.* கலைப்படங்களில் இயற்றினோர் பெயருடன் 'இயற்றினர்' என்னும் குறிப்பு.

**invent',** *v.* புத்தாக்கம் புனை, புத்தமைவுகாண்; புதிதாகப் புனைந்துருவாக்கு, முதன் முதலாகக் கண்டுபிடி; கற்பனையாக உருவாக்கு; பொய்யாகக் கற்பனை செய்; இட்டுக்கட்டு.

**inven'tion,** *n.* புதிதுபுனைதல்; புத்தாக்கப் புனைவு; கற்பனைத்திறம்; போலிப்புனைவு; இட்டுக்கட்டான செய்தி; (சட்.) பாதுகாப்பு உரிமைச்சீட்டு பெற்ற புதிய கண்டுபிடிப்பு.

**in'ventory,** *n.* விளக்க விவரப்பட்டி; பட்டியலிலுள்ள சரக்குகளின் தொகுதி; அணு இயக்கச்சுழலில் உள்ள மொத்தப் பொருண்மைக்கூறு; *v.* பட்டியலில் சரக்குகளைப் பதிவு செய், பட்டியலாக்கு.

**invera'city,** *n.* பொய்.

**Inverness',** *n.* ஸ்காத்லாந்து நாட்டிலுள்ள ஒரு நகரம், ஆடவரின் கையற்ற மேலங்கி; (தொ.) Inverness cloak, Inverness coat, கையற்ற மேலங்கி.

**inverse',** *n.* தலைகீழ்நிலை; நேர் எதிர்மாருக உள்ள பொருள்; *a.* நிலை ஒழுங்கு உறவு முதலியவற்றில் தலைகீழாகவுள்ள, தலைகீழ் எதிர்மாருன; (தொ.) inverse proportion, தலைகீழ்த்தகவுப் பொருத்தம்; inverse ratio, நேர்மாறு விகிதம், தலைகீழ்த் தகவு.

**inver'sion,** *n.* தலைகீழ்த்திருப்புதல், எதிர்மாருக்குதல்; நிலை ஒழுங்கு உறவு முதலியவற்றினை எதிர்மாருகப் புரட்டுதல்; (இலக்.) சொற்களின் அமைப்பைத் தலைகீழ்ப்புரட்டுதல்; தலைகீழ்த்தகவு, மாற்று வீதம்; (இசை.) தலைகீழாகத் திருப்பும் முறை, எதிர்மாற்றத்தின் விளைவு.

**in'vert** [1], *n.* தலைகீழ் வளைவுக் கட்டுமானம்; (உள.) பால் உணர்ச்சிகள் தலைமாற்றமாயுள்ளவர்; (தொ.) invert sugar, வலம்புரிப் பழவெல்லம் இடம்புரிப் பழவெல்லம் ஆகியவற்றின் கலவை.

**invert'**[2], *v.* தலைகீழாகப் புரட்டு, தலைகீழாகக் கவிழச்செய், நிலை உறவு வரிசை ஒழுங்கு முதலியவற்றைத் தலைகீழாகத் திருப்பு.

**invert'ebrate,** *n.* முதுகெலும்பில்லா விலங்கு; துணிவற்றவர்; *a.* முதுகெலும்பற்ற; உறுதியற்ற, வலுவற்ற.

**invest',** *v.* ஆடை அணிவி, போர்த்து; அணிவி; இணைவி; பதவியிலமர்த்து; முற்றுகையிடு, ஆதாயத்தை நாடி முதலிடு.

**inves'tigate,** *v.* அலசியாராய், சோதனைசெய், விசாரணை செய், உசாவு; துருவித்தேடு.

**inves'titure,** *n.* சடங்கோடு பதவியில் அமர்த்தல்; பணி அமர்த்தீடு; பண்புகளிணைவித்தல்.

**invest'ment,** *n.* முதலீடு செய்தல்; முதலீடு; பணம் முதலீடு செய்யப்பட்ட சொத்து; பணியமர்த்திடு, பதவியேற்றல்; ஆடை அணிவித்தல்; முற்றுகை இடுதல், முற்றுகை.

**invet'erate,** *a.* நீடித்துப் பயின்று உறுதியாகிவிட்ட, வேரூன்றிய, நாட்பட்ட, மாறாத, அசைக்கமுடியாத.

**invid'ïous,** *a.* மனக்கசப்பு உண்டுபண்ணக்கூடிய, நச்சுத்தன்மையுடைய; பகைமை பாகுபாடு உண்டுபண்ணும் தன்மையுடைய; போட்டி பொறாமைகள் தூண்டக்கூடிய.

**invi'gilate,** *v.* தேர்வின்போது மாணவர்களைக் கண்காணி, விழிப்புடன் மேற்பார்வையிடு.

**invig'orate,** *v.* எழுச்சியூட்டு, ஊக்கமூட்டு, உயிர்ப்பளி.

**invin'cible,** *a.* வெல்லமுடியாத; வென்று கொள்ள முடியாத.

**invi'olable,** *a.* மீறத்தகாத, அவமதிக்க ஒண்ணாத, கேடணுகத் தகாத, முழுநிறை காப்புடைய.

**invi'olate,** *a.* சேதத்துக்காளாகாத, கேடுறாத, சிதையாத; மீறப்படாத, தூய்மை கெடாத.

**invis'ible,** *a.* கட்புலனாகாத; மறைந்துள்ள; காணமுடியாதபடி மிகச் சிறிதான; (தொ.) invisible exports, ஏற்றுமதியைவிட இறக்குமதி அதிகமாக இருப்பதற்குக் காரணமான கப்பல் போக்குவரத்து அயல்நாட்டு முதலீடு முதலிய செய்திகள்; invisible ink, எழுதிய பின்னர்ச் சூடேற்றப் படுதல்மூலமே எழுத்துக்களைக் கண்ணுக்குப் புலப்படச் செய்கின்ற மை; the invisible, காணா உலகு, கடவுள்.

**invita'tion,** *n.* விரும்பி அழைத்தல்; வேண்டுதல்; அழைப்பிதழ், அழைப்புத்தாள்; கவர்ச்சி.

**invite',** *n.* (பே-வ.) அழைப்பு; *v.* அழை; வரவழை; வணக்க இணக்கமாக அழைப்பு அனுப்பு; வருமாறு வேண்டு; செய்யும்படி தூண்டு; வரவேற்கும் விருப்பம் தெரிவி; ஏற்கும் மனப்பாங்கு காட்டு; கவனம் கவர், கவர்ச்சியுடையதாயிரு; தூண்டுதலளி; செயற்காரணமாயியலு.

*in vit'ro,* (ல.) *adv.* வேதித்துறை ஆய்வுக் கூடத்தில் சோதனைக் கண்ணாடிக் குழாயில்.

**invoca'tion,** *n.* வேண்டுதல், நேர்வுவழிபாடு; வேண்டுதல் வழிபாட்டுத் தொடக்க வாசகம்; திருக்கோயில் வழிபாட்டில் வேண்டுதல் வாசகம்; வேண்டுதலுக்குரிய இறைவிளி வாசகம்; வேண்டப்படுபவருக்குரிய விளி அடைமொழி; வரம்வேண்டுதல்; தெய்வ ஆவி அழைப்பு, ஆவாகனம்.

**in'voice,** *n.* விலைப்பட்டி, விலை விவரங்களுடன்கூடிய சரக்குப் பட்டியல்; *v.* விலைப்பட்டி வரை, சரக்குகளின் விலை விவரங்களைக் குறி.

**invoke',** *v.* தொழுதுவேண்டு, வழிபட்டு வரவழை; வணங்கி வேண்டிக்கொள்; ஊக்கி உதவவேண்டு.

**in'volucre,** *n.* (உள்.) மேலுறை; (தாவ.) பூவடிச்சிதல் தொகுதி.

**invol'untary,** *a.* விருப்பாற்றலுக்குட்படாத, எண்ணாமல் நிகழ்கிற, தானாக இயல்கிற.

**in'volute,** *n.* உட்சுருள்; (வடி.) கூம்பி, வட்டமையத்தை அடுத்த உள்வட்டத்தின்மீது உள்வளைகோட்டமுறும் வட்டவளைவு; *a.* சிக்கலான; உட்சுருளான; அடர்ந்து சுருண்ட; உள்முகமாகத் திரும்பிய; (தாவ.) ஓரத்தில் உள்முகமாகச் சுருண்ட.

**involu'tion,** *n.* சிக்கவைத்தல்; சுற்றி வளைத்தல், சிக்கல்; உட்புறமாக வளைதல், உட்சுருள்வு; உட்சுருள்வுப்பகுதி; சிக்கல் வாய்ந்த இலக்கணக் கட்டமைவு; (கண.) விசை அமுக்கம்.

**involve',** *v.* ஒன்றுக்குள் ஒன்று வைத்துச் சுருட்டு; பொதி; திருகு சுருளாகச் சுற்று; சிக்கவை; சிக்கலாக்கு; சூழ்ந்துகொள்; உள்ளடக்கு; உட்கொண்டிரு; சேர்த்திணைத்திழு; தொக்க பொருளாகக்கொள்; தொடர்புடையதாயிரு; சேர்த்திணைத்துக்கொண்டிரு; (கண.) விசையேற்று; புரியாதபடி செய், நினைவிலும் வடிவத்திலும் புரியாதபடி செய்.

**involve'ment,** *n.* சிக்கலாக்குதல்; சேர்த்திணைத்தல்; பொருளியல் சிக்கல்நிலை; சிக்கலான செய்தி.

**invul'nerable,** *a.* ஊறு செய்ய முடியாத, காயப்படுத்த இயலாத.

**in'ward,** *a.* உட்புறமாக அமைந்துள்ள, மனத்துள்ள, ஆன்மிகமான; உள் நோக்கிய; *adv.* மனத்தினுள்; ஆன்மதளத்தில்; உட்புறநோக்கி; உட்புறத்தில்.

**in'wardly,** *adv.* உட்புறத்தில், உட்புறமாய், உள்ளுக்குள்ளாக, மனத்துள்; தனக்குள்ளாக, உரத்துப் புறம்வெளிப்படாமல்.

**in'wardness,** *n.* உள்ளியல்பு; உள்நோக்கிய பண்பு; ஆன்மிக நிலை.

**in'wards**[1], *n. pl.* குடல், உள்ளுறுப்புகள்.

**in'wards**[2], *adv.* உட்புறநோக்கி; உட்புறத்தில்; மனத்தினுள்; ஆன்ம தளத்தில்.

**inweave',** *v.* கலந்துபின்னு, கலந்து நெய்து இணை; பின்னிச் சிக்கலாக்கு.

**inwrought',** *a.* துணி வகையில் சித்திரம் அல்லது கோலங்களால் அணி செய்யப்பட்ட; துணிமேல் வரையப்பட்டுள்ள; சித்திர வேலைப்பாடு பொருந்திய, நெருக்கமாக உள்ளாரப் பின்னிக் கலந்துள்ள.

**inya'la,** *n.* தென் ஆப்பிரிக்க மான் வகை.

**i'odide,** *n.* கறையகை, பிறிதொரு தனிமத்தோடு கறையம் சேர்ந்த கூட்டுக்கலவை.

**i'odine,** *n.* கறையம், கரியப்பொருளைக் கருந்தவிட்டு நிறமாகக் கறைப்படுத்தும் இயல்புடைய தனிமம்.

**io'doform,** *n.* கறைய நச்சுத்தடை மருந்து, நச்சுத்தடைக் காப்பாகப் பயன்படுத்தப்படும் கறையச் சேர்மம்.

**i'olite,** *n.* அலுமினியக் கன்மம் இரும்பு வெள்ளிமம் ஆகியவை இணைந்த நீல அல்லது ஊதாநிறச் சேர்மவகை.

**i'on,** *n.* இயனி, மின்மயத்துகள், நீர்க்கரைசலிலும் சேண் வெளியிலும் அணு அமைதிக்குலைவால் ஏற்படும் மின் செறிவூட்டப்பட்ட துகள்.

**Ion'ian,** *n.* அட்டிகா (Attica) மேற்கு ஆசியா மைனர் (Western Asia Minor) முதலிய நிலப்பரப்புக்களில் பண்டு பரவிய கிரேக்க இனப் பிரிவின் உறுப்பினர்; *a.* அயோனியாவைச் சார்ந்த; பண்டைக்கால கிரேக்க இசைமுறையைச் சார்ந்த; (தொ.) Ionian mode, பண்டைக்கால கிரேக்க இசைமுறை.

**Ion'ic,** *a.* அயோனியாவைச் சார்ந்த, கிரேக்க இனத்துக்குரிய அயோனியப் பிரிவு சார்ந்த; (தொ.) ionic a majore, இரு நெடில் இருகுறில் இணைந்த நாலசைச்சீர்; ionic a minore இரு குறில் இரு நெடில் இணைந்த நாலசைச்சீர்; ionic dialect, கிரேக்கமொழியின் ஆதென்ஸ் பகுதித்திசைமொழியாகிய 'அட்டிக்' என்பதன் மூல இன மொழிப்பிரிவு; ionic order, (க-க.) பண்டைக்கால கிரேக்க கட்டிடக் கலையில் தூண் தலைப்பின் இருபுறச்சுருள் அணி அமைப்பு.

**ion'ium,** *n.* சேண்மம், விண்மத்திலிருந்து கிடைக்கும் அணுச் சிதைவார்ந்த நுண்ணதிர்வுடைய தனிப்பொருள் வகை.

**ion'osphere,** *n.* மீவளிமண்டலம், வளிமண்டலத்தின் மேல் தளப்பகுதி.

**iot'a,** *n.* கிரேக்க நெடுங்கணக்கில் ஓர் எழுத்து; இம்மி, மிகச் சிறிய அளவு, சிறு துகள்.

**iot'acism**, *n.* கிரேக்க மொழியில் 'இ' என்னும் உயிரெழுத்தை மிகுதியாகப் பயன்படுத்துதல்; பிற உயிர்களிலும் இகர ஒலி ஏற்றல்.

**IOU'**, *n.* வெண்ணிலைக்கடன் உறுதிச்சீட்டு, வெண்ணிலைக் கடன் சீட்டு, தொகை குறிப்பிடப்பட்ட கடன் உறுதிக்குறிப்பு.

**ipecacuan'ha**, *n.* வாந்தியும் வயிற்றுப்போக்கும் உண்டாக்கும் தென் அமெரிக்க மூலிகை வேர்.

***ip'se dix'it***, (ல.) *n.* வாதமுறை சாரா ஆணைக்கூற்று.

***ipsiss'ima verb'a***, (ல.) *n. pl.* வழுவற்ற சரியான சொற்கள்.

***ip'so fac'to***, (ல.) *adv.* அவ்வுண்மை காரணமாகவே, அது காரணமாகவே.

**ira'de**, *n.* துருக்கி சுல்தானின் எழுத்துமூலக் கட்டளை.

**Irak', 'Iraq'**, *n.* மெசபொடேமியா உள்ளிட்ட அராபிய அரசு.

**Iran'ian**, *n.* பாரசீக இனத்தவர்; *a.* பாரசீக நாட்டைச் சார்ந்த; பாரசீக மொழியினஞ் சார்ந்த.

**iras'cible**, *a.* எளிதில் கோபிக்கிற, முன்கோபியான.

**irate'**, *a.* கோபமுள்ள, சினமுடைய.

**ire**, *n.* கோபம், வெகுளி, சினம்.

**iren'ic, iren'ical**, *a.* அமைதி குறிக்கொண்ட, சமாதானத்தை நோக்கமாகவுடைய.

**iren'icon**, *n.*=eirenicon.

**irida'ceous**, *a.* பகட்டான மலர்களையும் கத்திபோன்ற இலைகளையும் வேர்க்கிழங்குகளையுமுடைய அல்லியினச் செடியினத்தைச் சார்ந்த.

**irides'cent** *a.* வானவில் வண்ணங்காட்டுகிற; இடத்திற்குத் தக்கபடி பன்னிறம் பகட்டிக்காட்டுகிற.

**irid'ium**, *n.* உறுதியம், அணு எண் 77 கொண்ட உறுகடுமை மிக்க உலோகத் தனிமம்.

**iridos'mine**, *n.* தங்கப்பேனா முனைகளுக்குப் பயன்படுத்தப்படும் உறுதியம் என்மியம் இணைந்த உலோகக் கலவை.

**Ir'is [1]**, *n.* கிரேக்க வானவில் தெய்வ அணங்கு, வானவர் தூதணங்கு.

**ir'is [2]**, *n.* விழித்திரைப் படலம்; நடுவே விழிமணிக்குரிய துளையுடைய கருவிழிச்சவ்வு; பகட்டான மலர்களையும் கத்தி வடிவ இலைகளையும் வேர்க்கிழங்குகளையுமுடைய செடிஇனம்; வானவில்லின் நிறங்களை நிழலிட்டுக் காட்டுகிற பாறைப் படிகக்கல் வகை; கண்ணாடி வில்லைகளுக்கு ஒளிப்புழை விரித்துச் சுருக்கி வகுக்கும் மறைப்பு; (தொ.) iris diaphragm, ஒளி வகுப்பு மறைப்பு, கண்ணாடி வில்லைகளுக்கு ஒளியை ஒழுங்குபடுத்தி அனுப்பும் சுருங்கி விரியக்கூடிய மறைப்பு.

**Ir'ish**, *n.* ஐரிஷ் மொழி; அயர்லாந்து மக்களால் பேசப்படும் மொழி; *a.* அயர்லாந்தைச் சார்ந்த; (தொ.) Irish bridge, சாலைக்குக் குறுக்கே செல்லும் கல்லாலான திறந்த வடிகால்; Irish bull, முரணுரை அல்லது இசைவற்றதாகத் தோற்றும் வாசகம்; Irish Free State, 1922-ஆம் ஆண்டு பிரிட்டனுக்குரிய அரசியலிலிருந்து பிரிந்து தன்னாட்சியுரிமைபெற்ற அயர்லாந்து நாட்டின் பகுதி; the Irish, அயர்லாந்தின் குடிமக்கள்.

**Ir'ishman**, *n.* அயர்லாந்து நாட்டான்.

**Ir'ishwoman**, *n.* அயர்லாந்து நாட்டினள்.

**irit'is**, *n.* கருவிழிச்சவ்வு வீக்கம்.

**irk**, *v.* தொந்தரையூட்டு, சோர்வூட்டு; வெறுப்பளி.

**irk'some**, *a.* தொந்தரையூட்டுகிற, சோர்வூட்டுகிற, வெறுப்புத்தருகிற.

**i'ron**, *n.* இரும்பு; இரும்புக்கருவி; படைக்கலம்; இரும்புத் தட்டுமுட்டு; இருப்புத்தலைப்புடைய குழிப்பந்தாட்ட மட்டை; வலிமை; வலிமைதரும் இரும்புச்சத்துள்ள மருந்து; சூட்டுக்கோல், சூடு போடும் கருவி; சலவைப்பெட்டி; *a.* இரும்பாலான, இரும்பினாலியன்ற; வலிமையுள்ள, உரமான, உறுதியான, வளையாத; மிகுகண்டிப்பான; இரக்கமற்ற; *v.* இரும்பிணை; இரும்புத்தகட்டால் பொதி; விலங்குமாட்டு; சலவைப்பெட்டியிடு, சலவைப் பெட்டியினால் தேய்த்துச் சமன்படுத்து; சமன்படுத்து; (தொ.) have many irons in the fire, have too many irons in the fire, பல முயற்சிகளில் ஈடுபடு, பல வகைத் துறைகளை மேற்கொள், பல சூழ்திறன்களைக் கையாளு; in irons, கைகளில் விலங்கு மாட்டப்பட்ட, கைவிலங்கு போடப்பட்ட; iron age, கொடுங்கோலாட்சிக்காலம்; இருப்புக் கருவிகள் பயன்படுத்தும் காலம்; Iron Cross, பிரசிய–ஆஸ்திரிய (Prussian-Austrian) வீரப் போர்ப்பதக்கம்; Iron Duke, (வர.) முன்னாள் ஆங்கிலப் படைத்தளபதியான வெலிங்டன் பெருமகனார்; iron horse, நீராவி இயந்திரவண்டி; இருசக்கர மிதிவண்டி; மூவுருளை மிதிவண்டி; iron lung, இயந்திரக் குழாய்கள்மூலம் செயற்கை முறையில் உயிர்ப்பு உண்டாக்குவதற்குப் பொருத்தப்படும் இரும்புப் பெட்டி; iron rations, திடீர்த்தேவைகளின்போது மட்டும் பயன்படுத்துவதற்காக வைக்கப்பட்ட சிறு அளவான போர்வீரரின் உணவு; strike while the iron is hot, காற்றுள்ளபோதே தூற்றிக்கொள், நல்வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக்கொள்.

**i'ron-bark**, *n.* கெட்டியான அல்லது உறுதியான மேற்பட்டையுடைய நீலகிரித்தைலம் வடிக்கும் மரவகை.

**i'ron-bound**, *a.* இரும்பினால் கட்டப்பட்ட; கடற்கரையோரம் வகையில் பாறையினால் சூழப்பட்ட; மட்டுமீறிய கண்டிப்புடைய, கட்டுப்பாட்டிலிருந்து சிறிதும் வழுவாத, சிறிதும் வளைந்து கொடுக்காத.

**i'ronclad**, *n.* இரும்புத்தகடுகள் வேயப்பட்ட கப்பல்; *a.* இரும்புத் தகடுகள் வேய்ந்துள்ள, இரும்பினால் பாதுகாக்கப்பட்ட.

**i'ron-curtain**, *n.* இரும்புத்திரை, உள்விவகாரங்களையும் இரகசியங்களையும் கண்டுபிடிக்கமுடியாத தடுப்புநிலை; சோவியத் ஒன்றியத்தின் (U. S. S. R.) மேல் எல்லையூடாகச் செய்தி பரவாமல் தடுக்கும் அமைப்புமுறை.

**i'ron-grey**, *n.* சாம்பல் நிறம்; *a.* சாம்பல் நிறமுடைய, புதிதாக உடைக்கப்பட்ட இரும்பு நிறமுடைய.

**iron'ic, iron'ical**, *a.* வஞ்சப் புகழ்ச்சிசார்ந்த, வஞ்சப்புகழ்ச்சியைப் பயன்படுத்துகிற, வஞ்சப் புகழ்ச்சியாகக் கூறுகிற; வஞ்சப் புகழ்ச்சிப் பழக்கமுடைய.

**ir'onist**, *n.* வஞ்சப்புகழ்ச்சியாளர்.

**i'ronmaster**, *n.* இரும்பு உற்பத்தியாளர்.

**i'ronmonger**, *n.* இரும்புச்சரக்கு வணிகர்.

**i'ron-mould**, *n.* இரும்புக்கறை, இரும்புத்துருவின் கறை; எழுதும் மைக்கறை; *v.* இரும்பு கறைப்படுத்து; எழுதும் மையினால் கறையாக்கு.

**i'rons**, *n. pl.* விலங்கு; குதிரையேறும் படித்தட்டு, அங்கவடி; கோணலான உருவமைப்பு; திருத்துவதற்குப் பயன்படுத்தப்படும் இருப்புக்கால் இணைப்பு.

**I'ronsides**, *n.* மாவீரர், பெரு வீரர்; (வர.) கிராம்வெல் என்ற பிரிட்டனின் ஆட்சித்தலைவனுடைய புரவிப்படை வீரர்கள்.

**i'ron-stone**, *n.* கடினமான இரும்புக்கனி உலோகக்கலவை வகை.

**i'ronwork**, *n.* இரும்புவேலை; இரும்பினால் செய்யப்பட்ட பொருள்களின் தொகுதி.

**i'ronworks**, *n.* இரும்பு உற்பத்திச்சாலை; இரும்பு வார்த்து உருக்கும் இடம்; இரும்புப்பொருட்கள் உற்பத்தி செய்யும் சாலை.

**ir'ony [1]**, *n.* முரண்நகைச்சுவை; வஞ்சப்புகழ்ச்சி; எதிர்ப் பொருள் கொள்ள வேண்டிய சொற்றொடர்; கேலியாக மற்றொருவருடைய கருத்தை ஏற்றுக்கொள்ளும் பாவனை; கேலி விளையாட்டுப்பண்பு, முரண்நகைத்திறம்; (தொ.) Socratic irony, எதிரி தவறென்று எண்பிப்பதற்காக அறியாதவர்போல் பாசாங்கு செய்தல்.

**iron'y [2]**, *a.* இரும்புசார்ந்த; இரும்புபோன்ற; இரும்பாலான.

**irrad'iant**, *a.* ஒளிவீசுகிற.

**irrad'iate**, *v.* ஒளிவீசு, ஒளியால் நிரப்பு; ஒளிவிளக்கஞ் செய், பொருள் விளங்கும்படி செய்; விளக்கு, தெளிவு படுத்து; முகத்தை மகிழ்ச்சியால் ஒளிபெறச்செய்; கதிரவன் ஒளிக்கு உட்படுத்து; கதிரவன் ஒளியின் ஊதா கடந்த நிறத்தின் செயலுக்கு உட்படுத்து.

**irradia'tion**, *n.* பிரகாசித்தல்; ஒளிப்பிறக்கம்; இருண்ட பின்னணியில் ஒளியார்ந்த பொருளின் விளிம்பு பெரிதாகத் தெரியும் நிலை, அவிரொளிக்காட்சி.

**irra'tional**, *n.* கூறுபடா எண், தீரா அளவை; *a.* பகுத்தறிவுக்கு மாறுன, அறிவுக்குப் பொருந்தாத, முரண்பாடான, குளறுபடியான; (கண.) கூறுபடா எண்ணைச் சேர்ந்த, தீரா அளவை சார்ந்த.

**irreclaim'able**, *a.* சீர்ப்படுத்த முடியாத, சீர்திருத்த இயலாத, மேன்மையாக்க முடியாத.

**irrec'ognizable**, *a.* அடையாளம் கண்டுபிடிக்க இயலாத, புரிந்துகொள்ள முடியாத.

**irrec'oncilable**, *n.* ஒத்திணங்து வராதவர்; சட்ட முதலியவற்றுக்கு எவ்வகையிலும் ஒத்துவராதவர்; விட்டுக்கொடுக்காத எதிரி; *a.* தன்மையில் கட்சி சட்டம் முதலியவற்றை எதிர்க்கிற, அமைதிப்படுத்த முடியாத.

**irreco'verable**, *a.* மீட்க முடியாத, திரும்பப் பெற இயலாத.

**irrecus'able**, *a.* ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய, மறுக்க முடியாத.

**irredeem'able**, *a.* மீட்கமுடியாத, திரும்பப்பெற முடியாத; சீர்திருத்த முடியாத, உருப்படாத.

**irreden'tist**, *n.* இத்தாலி முதலிய கீழ் ஐரோப்பிய நாடுகளில் அவ்வந்நாட்டு மொழி பேசும் மாவட்டங்கள் அவ்வந் நாட்டைச் சேர வேண்டும் என்ற கோட்பாட்டாளர்.

**irredu'cible**, *a.* குறுக்க முடியாத; விரும்பிய நிலைக்குக் கொண்டுவர முடியாத; (தொ.) irreducible minimum, மேலும் குறைக்க முடியாத சிறுக்கம்.

**irref'ragable**, *a.* (அறிக்கை வாதம் ஆள் முதலியன பற்றிய) செய்திவகையில் மறுக்க முடியாத; வாத வகையில் எதிர்வாதிட முடியாத; ஆள்வகையில் எதிர்த்துப் பேச முடியாத.

**irrefran'gible**, *a.* மீறமுடியாத; ஒளிக்கதிர் வகையில் கோட்டுறுத்த முடியாத; கோட்ட நீர்மையற்ற.

**irref'utable**, *a.* பொய்யென எண்பித்துக் காட்ட முடியாத; மறுக்கமுடியாத; எதிர்த்து வாதாட முடியாத.

**irreg'ular**, *a.* ஒழுங்கற்ற; சட்டத்திற்கு எதிரான, விதிக்குப் புறம்பான; இயற்கைக்கு மாறுன, இயல்பு கடந்த; செவ்வொழுங்கற்ற; சமமல்லாத, கரடுமுரடான மேற்பரப்புடைய; சமதளமற்ற; ஒழுங்குமுறையில்லாத; கால ஒழுங்குபடாத; (இல.) முறைப்படி மாறுபடாத; படைத்துறை ஒழுங்குமுறை சாராத, நிலையாகப் படைத்துறையிலீடுபடாத.

**irreg'ulars**, *n. pl.* ஒழுங்காகப் பணித்துறையிலில்லாத படைவீரர் தொகுதி.

**irrel'ative**, *a.* தொடர்பில்லாத, உறவற்ற; உறவினரற்ற; தனித் தன்னிலையான.

**irrel'evant**, *a.* தொடர்பற்ற; செய்திக்கு ஒவ்வாத, தலைப்புக்குப் பொருத்தமற்ற.

**irreli'gion**, *n.* சமயப்பற்றின்மை, சமய மறுப்பு; சமய வெறுப்பு, சமயப்புறக்கணிப்பு.

**irremed'iable**, *a.* சீர்ப்படுத்தவியலாத, சரிப்படுத்த முடியாத, குணப்படுத்த முடியாத.

**irremiss'ible**, *a.* மன்னிக்க முடியாத; மாற்ற முடியாதபடி கண்டிப்பாகக் கட்டுப்படுத்துகிற.

**irremo'vable**, *a.* விலக்க முடியாத; பணியிலிருந்து அகற்ற முடியாத.

**irrep'arable**, *a.* காலவகையில் சரிசெய்ய இயலாத, சேத வகையில் சீர்ப்படுத்த முடியாத.

**irreplace'able**, *a.* ஈடு செய்யமுடியாத, இழப்பு வகையில் இட்டு நிரப்ப முடியாத.

**irrepress'ible**, *a.* அடக்கிவைக்க முடியாத; கட்டுப்படுத்த முடியாத.

**irreproach'able**, *a.* குறை காணமுடியாத, குற்றமற்ற, நேர்மையான.

**irresis'tible**, *a.* தடுக்கமுடியாத; எதிர்த்து வெல்ல முடியாத, பெருவலி வாய்ந்த; கவர்ச்சி வகையில் தடுக்க முடியாத வலிமையுடன் ஈர்க்கிற.

**irres'olute**, *a.* ஒரு முடிவுக்கு வராத, தயக்கம் வாய்ந்த; மன உறுதியற்ற; திடசித்தமில்லாத.

**irresol'vable**, *a.* கூறுகளாகப் பிரிக்க முடியாத; விடுவிக்க முடியாத, விடைகாண முடியாத; சிக்கலகற்ற இயலாத.

**irrespec'tive**, *a.* கணக்கில் சேர்க்காமலேயுள்ள, நீக்கிக் கணிக்கிற; பொருட்படுத்தாத.

**irrespon'sible**, *a.* பொறுப்பற்ற; பொறுப்பற்ற தன்மையுடன் நடக்கிற; பொறுப்புணர்ச்சியில்லாத, கவலையற்ற, மனம்போல நடக்கிற.

**irrespon'sive**, *a.* ஏனென்று கேளாத, எதிர் வினைவற்ற.

**irreten'tion**, *n.* அடக்கி வைக்க முடியாமை; சிறுநீர் அடக்க முடியாநிலை.

**irreten'tive**, *a.* மறதியுடைய, மனத்தில் நிறுத்தி வைக்க முடியாத.

**irretriev'able**, *a.* சீர்ப்படுத்த முடியாத, ஈடு செய்ய முடியாத, மீட்க முடியாத.

**irrev'erent**, *a.* மட்டு மதிப்பற்ற, பணிவிணக்கமற்ற.

**irrevers'ible**, *a.* மாற்ற முடியாத; திருப்பி மறிக்க முடியாத.

**irrev'ocable**, *a.* மாற்றமுடியாத, கை கடந்து போன, மீட்டுப் பெறமுடியாத.

**i'rrigate**, *v.* நீர்ப்பாசன வசதி செய்; கால்வாய்கள்மூலம் நீர் பாய்ச்சு; ஈரப்பதம் செய்து வளப்பமூட்டு; (மரு.) காயத்துக்குத் தாரையூற்றிக் குளிர் நிலைப்படுத்து.

**irriga'tion**, *n.* நீர்ப்பாசனம்.

**i'rritable**, *a.* எளிதிற்சினங்கொள்கிற, முன்கோபியான, வெடுவெடுப்பான; உறுப்பு முதலியவற்றின் வகையில் கூருணர்ச்சியுள்ள, தொட்டால் கூச்சமுள்ள; தசைகள் நரம்புகள் வகையில் புறத்தூண்டுதலினுல் உயிர்ப்பியக்கம் எழுப்பப் பெறத்தக்க.

**i'rritancy** [1], *n.* சினம்; எரிவந்தம், அழற்சி; தொல்லை, இடைஞ்சல்.

**i'rritancy** [2], *n.* (சட்.) செல்லுபடியாகாததாகச் செய்தல், செல்லுபடியாகாதிருத்தல்.

**i'rritant**, *n.* உறுத்தி, எரிவந்தம் கொடுக்கும் பொருள்; *a.* சினமூட்டுகிற, அழற்றுகிற, எரிவந்தம் தருகிற.

**i'rritate** [1], *v.* சினமூட்டு, எரிச்சற்படுத்து, துயரளி; உறுப்பு முதலியவற்றில் உறுத்தல் உண்டாக்கு; உறுப்பினை உயிர்ப் பியக்கம் கொள்ளும்படி தூண்டு.

**i'rritate** [2], *v.* (சட்.) செல்லாததாக்கு, முற்றும் தவறென்று தள்ளு.

**irrita'tion**, *n.* சினமூட்டல், அழற்சி, உறுத்தல், தினவு, நமை, நமைச்சல்.

**irrup'tion**, *n.* படையெடுப்பு; வல்லந்தமான நுழைவு.

**Irv'ingite**, *n.* திருமாணவர் திருச்சபை (Catholic Apostolic Church) என்ற பெயருடைய கத்தோலிக்க் கழகத்தைச் சேர்ந்தவர்.

**is**, *v.* be என்னும் வினைச்சொல்லின் படர்க்கை ஒருமை நிகழ் கால வடிவம்.

**Is'abel, Isabell'a**, *n.* தவிட்டு மஞ்சள் நிறம்; *a.* தவிட்டு மஞ்சள் நிறமுள்ள.

**isago'gic**, *a.* தோற்றுவாயான, அறிமுகப்படுத்துகிற.

**isagog'ics**, *n. pl.* விவிலிய (Bible) நூல் பற்றிய இலக்கிய வரலாற்றுய்வுத்துறை.

**is'atin**, *n.* (வேதி.) அவுரி நீலத்தை உயிரகமூட்டுவதனுல் கிடைக்கும் செந்நிற மணி உருப்பொருள்.

**ischiad'ic, ischiat'ic**, *a.* இடுப்பிணைச் சார்ந்த.

**Ish'mael**, *n.* விவிலிய நூல்கூறும் இஷ்மாயில் போன்றவர், சமூகத்திலிருந்து தள்ளப்பட்டவர்; சமூகத்தோடு மாறுபட்டவர்.

**Ish'maelite**, *n.* இஷ்மாயிலின் மரபினர்; பெடாவி அராபிய இனம் (Bedavi Arab) சார்ந்தவர்; சமூகத்திலிருந்து ஒதுக்கப்பட்டவர்.

**is'inglass**, *n.* மீன் பசைக்கூழ்.

**Is'lam**, *n.* முகம்மதிய சமயம்; முகம்மதிய உலகம்.

**isl'and**, *n.* தீவு, நீர்சூழ்நிலம், திட்டு; தனி ஒதுக்கிடம்; தனி மைய இடம்; தெருக்கடப்பு நெறியில் இடைகாப்பான மேட்டிடம்; கப்பலின் மேற்கட்டுமானம்; கப்பற் பாலம்; (உட.) தனி இழைமத்தொகுதி; தனி உயிர்மத்தொகுதி; *v.* நீர்சூழ்ந்த நிலமாக்கு; தனிப்படுத்தி வை; தீவுகளைப்போல் திட்டுகள் இணை.

**isle**, *n.* தீவு.

**isl'et**, *n.* சிறுதீவு; தனித்து வேருயுள்ள பகுதி அல்லது இடம்.

**ism**, *n.* தனிக்கொள்கை, கோட்பாடு; தனிப்பழக்க மரபு.

**is'obar**, *n.* (வானிலை.) சமஅழுத்தக்கோடு, திணைப்படத்தில் ஒரே வளிமண்டல அழுத்தம் உள்ள இடங்களை இணைத்துக் காட்டும் கோடு.

**isoba'ric**, *a.* (வானிலை.) சமஅழுத்த இட எல்லைகுறிக்கிற.

**is'ocheim**, *n.* குளிர்காலச் சராசரி வெப்ப நிலைக்கோடு, திணைப்படத்தில் சராசரி ஒருசீரான குளிர்கால வெப்பநிலை இடங்களை இணைத்துக்காட்டும் கோடு.

**isocheim'al, isochim'enal**, *n.* குளிர்காலச் சராசரி வெப்ப நிலைக்கோடு; *a.* திணைப்படத்தில் ஒருசீரான குளிர்காலச் சராசரி வெப்பநிலை உடைய இடங்களை இணைத்துக்காட்டுகிற.

**isochromat'ic**, *a.* ஒளிநூல் துறையில் சரிசம நிறமுள்ள; நிழற்படத்துறையில் இயல்நிறமுடைய.

**isoch'ronous**, *a.* சரிசமகாலம் கொள்கிற; ஊசலி வகையில் ஒரேசீராக இயங்குகிற.

**isoclin'al, isoclin'ic**, *a.* சமமான காந்தமுள் சாய்வினைக் காட்டுகிற; (தொ.) isoclinic lines, திணைப்படத்திலே ஒரு சீரான காந்தச் சரிவுடைய இடங்களை இணைக்கும் கோடுகள்.

**isoc'racy**, *n.* எல்லாருக்கும் சமஅரசியல் அதிகாரமிருக்கிற ஆட்சிமுறை.

**isocrat'ic**, *a.* ஆட்சிமுறை வகையில் எல்லாருக்கும் சம அரசியல் அதிகாரமிருக்கிற.

**isodynam'ic**, *a.* சரிசமமான காந்தவிசை காட்டுகிற.

**isoge'otherm**, *n.* (மண்.) சமவெப்பதளக் கோடு, நிலவுலகின் அகட்டில் ஒரே சீரான வெப்பநிலையுடைய இடங்களை இணைக்கும் கோடு.

**isogon'ic**, *a.* சரிசமக் காந்த மாறுதல் கோணங்களைக் காட்டுகிற.

**is'olate**, *v.* தனிப்படுத்து; தனிமை செய்; தீவுபோன்ருக்கு; வேருகப்பிரித்து வை; தொத்துநோய் வகையில் நோயாளியைப் புறத்தொடர்பில்லாதபடி ஒதுக்கிவை; (வேதி.) கூட்டுப்பொருள்களிலிருந்து தனிப்பட விடுவி.

**isola'tion**, *n.* தனிமை; ஒதுக்கநிலை; தொடர்பின்மை; (தொ.) isolation hospital, தொத்து நோயாளர்களுக்காகத் தனிப்படுத்தப்பட்ட மருத்துவசாலை; isolation ward, தொத்துநோயாளர்களுக்காகத் தனிப்படுத்தப்பட்ட மருத்துவ மனைப் பிரிவு.

**isola'tionism**, *n.* தலையிடாக்கொள்கை, பிற நாடுகளின் விவகாரங்களில் தொடர்பு கொள்ளக் கூடாதென்ற கோட்பாடு.

**isola'tionist**, *n.* பிறநாடுகளின் விவகாரங்களில் தலையிடக் கூடாதென்பவர்.

**isome'ric**, *a.* (வேதி.) கூட்டுச்சமநிலையுடைய, ஒரே எடையுடன் ஒரேவகைத் தனிமங்களை ஒரேசீரான வீதங்களில் ஆனுல் வெவ்வேறு தொகுப்புகளாகக் கொண்டுள்ள.

**isomet'ric, isomet'rical**, *a.* சமமட்டுடைய, ஒரேசீரான அளவுள்ள.

**isomorph'ism**, *n.* இசை மணியுருப்பான்மை, ஒரேவகையான அல்லது நெருங்கிய தொடர்புடைய வடிவியல் உருவங்களாக மணிவுருக்கொள்ளும் இயல்பு.

**isomorph'ous**, *a.* இசைமணியுருப்பான்மையுடைய, ஒரே வகையான அல்லது நெருங்கிய தொடர்புடைய வடிவியல் உருவங்களாக மணிவுருக்கொள்ளுகிற.

**isoni'azid, isoni'azide**, *n.* எலும்புருக்கி நோயிற் பயன் படுத்தப்படும் மருந்துச் சரக்குவகை.

**ison'omy**, *n.* சரிசம அரசியல் உரிமை நிலை.

**isoperimet'rical**, *a.* (வடி.) சரிசமச் சுற்றளவுள்ள.

**is'opod**, *n.* (வில.) உடலின் இடைக்கண்டத்தில் ஏழு சரிசமமான இணைக்கால்களையுடைய மேலோட்டுயிர் வகை.

**isos'celes**, *a.* (வடி.) முக்கோண வகையில் இருசமபக்கங் களையுடைய.

**isoseis'mal**, *a.* நிலநடுக்க வகையில் ஒரேசீரான செறிவுள்ள அதிர்ச்சி இடங்களை இணைக்கிற.

**isoth'eral**, *n.* சரிசமக் கோடை வெப்பநிலைக்கோடு, ஒரே சீரான சராசரிக் கோடைகால வெப்பநிலையுடைய இடங்களை இணைக்கும் கோடு; *a.* ஒரேசீரான சராசரி கோடைகால வெப்பநிலையுடைய இடங்களை இணைக்கிற.

**is'otherm**, *n.* சமவெப்பநிலைக் கோடு, ஒரேசீரான சராசரி ஆண்டு வெப்பநிலையுடைய இடங்களை இணைக்கும் கோடு.

**isotherm'al**, *n.* சமவெப்பநிலைக்கோடு; *a.* ஒரேசீரான சராசரி ஆண்டு வெப்பநிலையுடைய இடங்களை இணைக்கிற.

**i'sotone**, *n.* கருவுட்பகுதியில் நொதுமங்களை ஒரே எண்ணுக உடைய அணு.

**is'otope**, *n.* (வேதி., இய.) ஓரகத்தனிமம், ஒரேபொருண்மையுடன் எடைமட்டும் வேறுபாடுடைய தனிமவகை; (தொ.) stable isotope, கதிரியக்கமற்ற ஓரகத்தனிமம்.

**isotop'ic number**, *n.* அணுவின் கருவுளில் நேர்மங்களைவிட நொதுமங்களின் மிகைபாட்டெண்.

**i'sotron**, *n.* மின் கோட்டத்தால் ஓரகத்தனிமங்களை வேறு வேறு பிரிக்கும்முறை.

**i'sotype**, *n.* புள்ளி விவரப்பட விளக்கம்.

**Is'rael**, *n.* இஸ்ரேல் நாடு; 1948 மேத்திங்களில் பாலஸ்தீனத்தில் (Palestine) நிறுவப்பட்ட யூதர்நாடு; யூத இனம்; கடவுளுக்கு விருப்பமான மக்கட்பிரிவு; *a.* இஸ்ரேல் நாட்டுக்குரிய.

**Israel'i**, *n.* இஸ்ரேல் நாட்டினர்; *a.* இஸ்ரேல் நாடு சார்ந்த.

**Is'raelite**, *n.* யாக்கோபின் வழிவந்தவர்; யூதர்; தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் ஒருவர்; யூதர் சட்டத்தைக் கடைப்பிடிக்கும் கிறித்தவ சமயப்பிரிவினர்.

**iss'ue**, *n.* வெளிப்போக்கு; புறங்கசிவு; குருதிக்கசிவு; குருதிக் கசிவுக்கான துளையீடு; போக்கிடம், செல்வழி; பத்திரிகை-புத்தகம்-அஞ்சல்தலை-பொருளக முறி முதலியவற்றின் வெளியீடு; பதிப்பு, ஒரு வெளியீட்டுத் தொகுதி; வழங்கீடு, பரப்பீடு; ஆணை முதலியவற்றின் பிறப்பிப்பு; பலன்; செயல் முடிவு; விளைபயன்; சந்தானம், கான்முளை, வழித்தோன்றல்; இடைபாடு, வழக்காடும் இருதிறத்தார்க்கும் இடைப்பட்ட பொருள்; வாதச்செய்தி; வாத அடிப்படை, ஆய்வு அடிப்படை; வாத முடிவு; ஆய்வு விளைவு; நடைமுறை, செயல் முறை; செயற்கையாக எழுப்பப்படும் பொக்குளம்; *v.* வெளியிடு; பரப்பு; அனுப்பு; ஆணை முதலியவற்றைப் பிறப்பி; புறஞ்செல்; கசிவுறு; விளைவுறு; உண்டாகு; எழு; வெளிப்படு; வெளியிடப்பெறு; பரவு, பரவுதலுறு; முடிவுறு;

(சட்.) முக்கிய செய்தியை அனுகிச்செல்; படைத்துறையில் படைக்கலங்கள் வழங்கு; (தொ.) at issue, ஆட்கள் வகையில் மாறுபட்ட; பொருள்கள் வகையில் விவாதத்துக்குட்பட்ட; in the issue, நிகழ்ச்சிப் போக்கில்; issue of fact, (சட்.) மெய்ந்நிகழ்வு பற்றிய வாதம்; issue of law, (சட்.) சட்டம் பற்றிய வாதம்; join issue, பொது அடிப்படைமீது சேர்ந்து வாதி; (சட்.) பொதுத் தீர்ப்புக்காகக் கூட்டாக வாதவிவரம் அனுப்பு; மறுதிற வாதப்பொருளை ஏற்றுக்கொள்.

**iss'ueless,** *a.* மகப்பேறற்ற, குழந்தைகள் இல்லாத.

**isth'mus,** *n.* பூசந்தி, இருபெரும் நிலக்கூறுகளை இணைக்கும் நில இடுக்கு; இருபெருங்கடலைப் பிரிக்கும் இடைகரை; (உள்., தாவ.) இரு பெரும்பகுதிகளை இணைக்கும் ஒடுக்கமான உறுப்பு; *pl.* isth'muses.

**is'tle,** *n.* கற்றாழை நார்வகை.

**it,** *pron.* அது; அதனை.

**it'acism,** *n.* கிரேக்கமொழி ஏகாரத்தை ஆங்கிலத்தில் ஈகாரம் போல ஒலித்தல்; கிரேக்கக் கையெழுத்துச்சுவடிகளில் மற்ற உயிரெழுத்துக்களுக்குப் பதிலாக கிரேக்க இகர எழுத்தை அமைத்துக்கொள்ளுதல்.

**Ital'ian,** *n.* இத்தாலிய மொழி; இத்தாலிய நாட்டினர்; *a.* இத்தாலி நாடு சார்ந்த; (தொ.) Italian cloth, சட்டைகளுக்கு உள்ளே வைத்துத் தைப்பதற்கான மென்பட்டு வகை; Italian handwriting, பிரிட்டன்-இத்தாலி-பிரான்ஸ் முதலிய நாடுகளில் இப்போது வழக்காற்றிலுள்ள கையெழுத்து வகை; Italian iron, இழைகளைச் சுருள வைப்பதற்குரிய உருண்ட முகப்புடைய நீளுருளை வடிவான இருப்புப் பாளக் கருவி வகை; Italian warehouseman, ஆலிவ் எண்ணெய் பழவகைகள் முதலிய இத்தாலியப் பல சரக்குகளில் வாணிகம் செய்பவர்.

**Ital'ic[1],** *a.* பண்டைய இத்தாலி நாடுசார்ந்த; ரோம் நகருக்குப் புறம்பான பண்டைய இத்தாலி மாநிலம் சார்ந்த.

**ital'ic[2],** *a.* இத்தாலிய அச்சுப்பணியாளர் ஒருவரால் 1501-இல் வழக்காற்றுக்குக் கொண்டுவரப்பட்ட; வலப்பக்கம் சாய்ந்த அச்சுருப்படிவ வகை சார்ந்த; (தொ.) italic type, வலப் பக்கம் சாய்ந்த அச்சுருப்படிவ வகை.

**ital'icize,** *v.* பொருளை அழுத்தமுறக் காட்டுவதற்காகவோ வேறு பிரித்துக் காட்டுவதற்காகவோ வலப்பக்கம் சாய்ந்த அச்சுருப்படிவங்களைக்கொண்டு அச்சிடு.

**ital'ics,** *n. pl.* வற்புறுத்துவதற்காக அல்லது வேறு பிரித்துக் காட்டுவதற்காகக் கையாளப்படும் வலப்பக்கம் சாய்ந்த எழுத்துக்கள்.

**Ital'iot, Ital'iote,** *n.* பண்டைய இத்தாலியிலுள்ள கிரேக்கக் குடியேற்றப்பகுதியாளர்; *a.* தென் இத்தாலியிலிருந்த பண்டைய கிரேக்கக் குடியேற்ற நாடுகள் சார்ந்த.

**itch,** *n.* சிரங்கு; தோலில் அரிப்புக்காணும் தொற்றுநோய் வகை; நமைச்சல்; அமைதியற்ற பேரவா, ஒன்றைச் செய்ய வேண்டும் அல்லது அடையவேண்டுமென்னும் துடிதுடிப்பு; *v.* தோலில் அரிப்புணர்ச்சி கொள்; ஒன்றைச் செய்யவேண்டும் அல்லது ஒன்றை அடையவேண்டுமென அமைதியற்ற ஆர்வங்கொள்; (தொ.) itching palm, ஆதாயம் பெற வேண்டுமென்னும் அவா.

**itch'-mite,** *n.* தோலைத் துளைத்துச் சிரங்குக்குக் காரணமாயிருக்கும் சிறு பூச்சி வகை.

**it'em,** *n.* உருப்படி, இனம், வகை, எண்ணிக்கைக்குரிய ஒன்று; எண்ணிக்கைப் பதிவு, குறிப்பெண்; பத்திரிகைச் செய்திக் குறிப்பு விவரம்; *adv.* இதுபோலவே, இன்னும், மேலும், கூட.

**it'emize,** *v.* வகைவகையாகச் சொல்லு.

**it'erate,** *v.* கூறியது கூறு; மீண்டும் மீண்டும் செய்.

**itera'tion,** *n.* இரட்டுறுத்தல், கூறியது கூறல்; செய்தது செய்தல்.

**Ithur'iel's spear,** *n.* மெய்த்தூய்மைக்கான உரையாணி.

**ithyphall'ic,** *n.* கிரேக்க மதுத்தெய்வப் பாடல்; ஒழுக்க வரம்பு மீறிய பாட்டு; *a.* மதுத்தெய்வ விழா ஊர்வலத்துக்குரிய இலிங்க உருச்சார்ந்த; மதுத்தெய்வப் பாடலுக்குரிய யாப்புமுறை சார்ந்த.

**itin'erant,** *a.* அலைந்து திரிகிற, சுற்றுடி வருகிற, நடுவர் வகையில் இடத்துக்கு இடம் செல்கிற; மெதடிஸ்ட் (Methodist) என்ற கிறித்தவத் திருச்சபைக் குருமார் வகையில் வட்டாரஞ் சுற்றி வருகிற.

**itin'erary,** *n.* வழி, பயணஞ்செல் நெறி; பயண விரிவுரை ஏடு; பயண வழிகாட்டு விவர ஏடு; வழிகாட்டு நூல்; *a.* பயணஞ் செய்வது சார்ந்த, பயண நெறி பற்றிய.

**itin'erate,** *v.* ஊரூராய்ப் பயணஞ் செல்; மெதடிஸ்ட் என்ற கிறித்தவ திருச்சபைக் குருமார் வகையில் வட்டாரத்திலிருந்து வட்டாரமாகச் செல்.

**its,** *a.* it என்பதன் உடைமைப் பொருள் வேற்றுமை வடிவம்; it என்பதன் உடைமைப்பொருட்பெயர் வடிவம்; அதன், அதனுடைய; இதன், இதனுடைய.

**itself',** *pron.* அதுவே; தானே; அதனையே; (தொ.) by itself, புறத்தூண்டுதல் இல்லாமலேயே, தானாகவே; தன்னாலேயே; in itself, தன்னிலையிலேயே, தனிநிலையில்.

**iv'ories,** *n. pl.* தந்தப் பொருள்கள்.

**iv'ory,** *n.* தந்தம், யானை-நீர்யானை-கம்பிளியானை-திமிங்கிலம் முதலிய விலங்கு வகைகளின் மருப்பு; தந்தத்தின் நிறம்; *a.* தந்தத்தினாலான; தந்தம் போன்ற; (தொ.) ivory black, எரிக்கப்பட்ட தந்தத்திலிருந்து கிடைக்கும் கறுப்புப்பொடி; ivory tower, மனித வாழ்க்கையின் கடுமைகளிலிருந்து தொலைவாய் ஒதுங்கிய இடம்.

**i'vory-nut,** *n.* தென்னமெரிக்க பனைவகையின் கொட்டையின் பருப்பு.

**i'vory-tree,** *n.* வெட்பாலை மரம்.

**iv'y,** *n.* பளபளப்பான திண் பச்சை உதிரா இலைகளையுடைய படர்கொடி வகை; (தொ.) ivy geranium, பெருவாரியாகப் பயிரிடப்படும் பளபளப்பான திண்பச்சை இலைகளையுடைய தென்னுப்பிரிக்க படர்செடி வகை.

**ix'ia,** *n.* பெரிய பகட்டு வண்ண மலர்களையும் வாள்போன்ற இலைகளையுமுடைய தென் ஆப்பிரிக்க செடிவகை.

**Ixi'on's wheel,** *n.* கிரேக்க புராணக் கதைப்படி நரகத்தில் இக்ஸியன் என்பவனின் தண்டனைக்குரியதான முடிவில் காலச் சுழற்சிச் சக்கரம்.

**iz'ard,** *n.* பைரென்னீஸ் (Pyrenees) மலைத்தொடரில் வாழும் ஆட்டின விலங்கு வகை.

**izz'at,** (அரா.) *n.* மானம்; புகழ்; ஆண்டகைமை; தன்மதிப்பு; தற்பெருமை.

**J**, *n*. 'J' என்ற எழுத்துமுத்திரை இடப்பட்ட அகல முனைப் பேனா.

**ja'al-goat**, *n*. எகிப்து மேல்நிலத்தைச் சேர்ந்த சைனியை (Sinai) மலைப்பகுதியிலுள்ள காட்டு ஆட்டு வகை.

**jab**, *n*. கத்திக்குத்து; முட்டிக்குத்து; துப்பாக்கிமுனைக் குத்து; *v*. முரட்டுத்தனமாகக் குத்து; கத்தியால் குத்து; செருகு.

**jabb'er**, *n*. பிதற்றல், உளறல்; *v*. பிதற்று, உளறு; எடுப்புக் குரலிற்பேசு; பொருள் தெளிவின்றிச் சொற்களை உச்சரி; குரங்குபோலப் பற்களை நெறநெறவெனக் கடி.

**jab'iru**, *n*. அமெரிக்க வெப்பமண்டல நாரையினப் பறவை வகை.

**jaboran'di**, *n*. சிறுநீர் வியர்வை பெருக்கும் இயல்புடைய பிரேசில் நாட்டு மூலிகைச்செடியின் உலர்ந்த சிற்றிலைகள்.

**jabot'**, *n*. மகளிர் உட்சட்டை ஓரக்குஞ்சம்; (வர.) ஆடவர் உட்சட்டை முகப்புக்குஞ்சம்.

**jac'ana**, *n*. மிதக்கும் இலைகளின்மீது நடப்பதற்கேதுவான நீண்ட நகங்களையுடைய சிறிய வெப்பமண்டலப் பறவை வகை.

**ja'cinth**, *n*. செவ்வந்திக்கல் வகை.

**jack[1]**, *n*. பொதுநிலை ஆடவர் பெயர்க்குறிப்பு; ஆள்; சிறு பணியாள்; பொதுநிலைக் கப்பலோடி; சீட்டு வகையில் ஒன்று; அகப்பைக்கோல் திருகுபொறி; பாரந்தூக்கிப் பொறி; வண்டி தூக்கிப்பொறி; புதைமிதியகற்றி; இயந்திரப்பகுதி; மீன் வகையின் குஞ்சு; ஆட்டக்காரர் குறியாக வைக்கும் பந்து; *v*. பளுத்தாங்கும் கருவிப் பொறியால் உயர்த்து, பாரந்தூக்கியால் மேலே ஏற்று; (தொ.) before you could say Jack Robinson, மிகு விரைவாக, உடனடியாக, திடீரென்று, எதிர்பாராமல்; everyman jack, ஒவ்வொருவரும், ஒவ்வொரு தனியாளும்; Jack Frost, உருவக வழக்கில் உறைபனி; Jack in office, வீண் ஆரவாரப் பணி முதல்வர்; Jack Ketch, கொலைப் பணியாள், தூக்கிலிடுபவன்; Jack of all trades, எதையுஞ் செய்யக்கூடியவன்; jack pudding, கோமாளி, விகடன்; jack tar, கப்பலோட்டி; jack up, முயற்சி முதலியவற்றைக் கைவிடு, விட்டுவிடு.

**jack[2]**, *n*. கப்பலின் கொடி; கப்பலுக்குரிய தாயக நாட்டைக் காட்டும் கொடி; மாலுமிக்குச் சைகைச் செய்தியாகப் பாய்மரத்தில் பறக்கவிடப்படும் ஒற்றைக்கொடி; (தொ.) Union Jack, ஆங்கில ஐக்கிய அரசுகளின் மூவிணைக் கொடி.

**jack[3]**, *n*. காலாட்படைவீரரின் கைப்பகுதியற்ற உள்ளாடை; இடைநிலைக்காலப் படைவீரனின் தோல் உட்காப்புச்சட்டை; (தொ.) black jack, கீல்தோய்த்த மெழுகுத் தோலாலான இன்தேறற் சாடிவகை.

**jack[4]**, (ம.) *n*. பலாமரம்; (தொ.) jack fruit, பலாப்பழம்.

**jack'-a-dan'dy**, *n*. பகட்டன், வீண் ஆடம்பரக்காரன்.

**jack'al**, *n*. நரி; முன்னணியான உழைப்புவேலை செய்பவர்.

**jack'anapes**, *n*. குரங்கு; குறும்பன்; துடுக்கானவன்; தற்பெருமையுடையவன்; துடுக்கான குழந்தை.

**jack'ass**, *n*. ஆண் கழுதை; பேதை; (தொ.) laughing jackass, பெரிய ஆஸ்திரேலிய மாநில மீன்கொத்திப் பறவை வகை.

**jack'boot**, *n*. முழங்காலுக்குமேல் வரும் புதைமிதியடி.

**jack'daw**, *n*. திருக்கோயில் தூபிகளைச்சுற்றி வாழும் சிறு திருட்டுக் காக்கை வகை.

**jack'et**, *n*. கைப்பகுதியுள்ள புறச்சட்டை, சிறுசட்டை; கச்சு; வெப்பாலையின் உள்வெப்பக்காப்பு மேலுறை; புத்தகத்தின் வண்ண அட்டைப் பொதியுறை; விலங்கின் மேல்தோல்; உருளைக்கிழங்கு மேல்தோல்; *v*. அட்டைப் பொதியுறையால் மூடு; (தொ.) dust one's jacket, அடி, மொத்து.

**jack'-in-the-box'**, *n*. பெட்டியைத் திறந்தவுடன் குதித்தெழும் பொம்மை; வாணவேடிக்கை வகை.

**Jack'-in-the-green'**, *n*. மே மாத விளையாட்டுக்களில் இலைகளாலான சட்டத்தில் உள்ளடக்கப்பட்ட மனிதன் அல்லது பையன்.

**jack'-knife**, *n*. பையில் வைக்கக்கூடிய பெரிய கைப்பிடிக் கத்தி.

**jack'-o'-lantern**, *n*. கொள்ளிவாய்ப் பேய்; சதுப்புநில ஒளி.

**jack'-plane**, *n*. கட்டை விமானம், கரடுமுரடான வேலைக்குப் பயன்படும் வானூர்தி.

**jack'pot**, *n*. சீட்டாட்ட வகையில் இரண்டு அல்லது மேற்பட்ட சிறப்புச் சீட்டு உடையவர்கள்மட்டும் எடுத்துக் கொள்ளக்கூடிய பொதுச் சேமிப்புத்தொகுதி.

**Jack'-pudd'ing**, *n*. விதூடகர், வேழம்பர்.

**jack'-raft'er**, *n*. (க-க.) கூரை உச்சியிலுள்ள குறுகிய உத்திரம்.

**jack'-snipe**, *n*. நீண்ட அலகுள்ள சதுப்புநிலப் பறவை வகையின் சிற்றினம்.

**jack'-staff**, *n*. பாய்மரத்தின்மேற் பறக்கவிடும் கொடியைச் சாய்த்துக் கட்டுவதற்கான மரக்கழி.

**jack'-tow'el**, *n*. உருளையிலிருந்து தொங்கும் துணி.

**Jac'ob**, *n*. ஏணி போன்ற நீலநிற அல்லது வெள்ளைநிற மலர்க் கொத்துக்களையுடைய செடிவகை; (கப்.) மரப்படியுள்ள கயிற்றேணி; (தொ.) Jacob's staff, அளவையரின் இருப்புப் பூணிட்ட கோல்; தூரத்தையும் உயரத்தையும் அளக்கும் அளவையரின் கருவி.

**Jacobe'an**, *a*. முதலாவது ஜேம்ஸ் அரசரின் ஆட்சி சார்ந்த; விவிலிய ஏட்டின் தூயதிரு. இளந்திற ஜேம்ஸ் (St. James the Less) என்பாரைச் சார்ந்த; கருநிறச் சீமை ஆலின் சாயலுடைய.

**Jac'obin[1]**, *n*. தூயதிரு. டாமினிக் (St. Dominic) துறவு மடத்துக் குழுவைச் சேர்ந்தவர்; 1789-ஆம் ஆண்டில் பாரிஸ் நகரத்தில் பழைய 'ஜாகோபின்' (Jacobin) துறவிமடத்தில் நிறுவப்பட்ட தீவிர குடியாட்சிச் சங்கத்தின் உறுப்பினர்; தீவிர குடியாட்சிச் சங்கத்தின் கொள்கைகளை ஆதரிப்பவர்; அடிப்படையையே மாற்றியமைக்க விரும்பும் தீவிரக் கோட்பாட்டாளர்.

**jac'obin[2]**, *n*. கழுத்தின் பகுதியில் மேல்நோக்கித் திரும்பியமைந்த இறகுகள்கொண்ட மாடப்புறு வகை.

**Jac'obite**, *n*. பிரிட்டனில் இரண்டாம் ஜேம்ஸ் முடி துறந்த பின்னும் அவரை அல்லது அவருடைய பின்மரபினரை ஆதரித்தவர்.

**jacob'us**, *n*. முதலாம் ஜேம்ஸ் காலத்திற் பொறிக்கப்பட்ட பொன் நாணயம்; *pl*. jacob'uses.

**jac'onet**, (இ.) *n*. மட்டான திட்பமுள்ள பருத்தித்துணி, வீக்கத்திற்கு மாவைத்துக் கட்டப் பயன்படும் நீர்புகாச் சாயக் காப்பிடப்பட்ட பருத்தித்துணி வகை.

**Jacq'uard loom**, *n*. சித்திரப் பூவேலைக்குரிய இசைவுவாய்ப்பு அளிக்கும் அமைவுடன் இணைக்கப்பட்ட தறிவகை.

***jacquerie***, (பிர.) *n*. உழவரின் புரட்சி, பிரான்சில் 1357-8 இல் நடைபெற்ற வேளாண்கிளர்ச்சி.

**jactıta'tion**, *n*. (மரு.) படுக்கைப் புரளல், சதைத்துடிப்பு; (தொ.) jactitation of marriage, ஒருவருடைய கணவன் அல்லது மனைவியெனப் பொய்யாக உரிமை கொண்டாடுங் குற்றம்.

**jacula'tion**, *n*. எறிதல்.

**jade[1]**, *n*. தரங்குறைந்த குதிரை; உழைத்திளைத்த குதிரை; விளையாட்டுத்தனமுள்ள பெண்; *v*. கடினமான வேலையினுல் இளைக்கச் செய், சோர்வுறச் செய்.

**jade[2]**, *n*. பச்சை மணிக்கல் வகை; நீலம் பச்சை வெள்ளை நிறங்களையுடைய சுண்ண வெளிமக் கன்மகி.

***jadoube***, (பிர.) சதுரங்க ஆட்டக்காயை நகர்த்தும் கருத்தில்லை என்று ஆட்டக்காரர் தெரிவிக்கும் சொல்.

**Jaeg'er**, (பெர்.) *n*. கம்பளித்துணி வகை.

**Jaff'a**, *n*. உணவின்பின் உட்கொள்ளத்தக்க கிச்சிலிப்பழ வகை.

**jag**, *n.* கூர்மையான குவடு; குன்றின் குவட்டுமுனை; *v.* ஒழுங்கில்லாமல் ஓரம் வெட்டு, தாறுமாறாகக் கிழி; பற்களைப்போல் வெட்டு அமை.

*jag'er*, (செர்.) *n.* குறிப்பிட்ட செர்மன் படைத்துறைக் குழுவின் உறுப்பினர், துப்பாக்கிப் படைவீரர்.

**jagg'ery**, *n.* வெல்லம்; பனைவெல்லம், கருப்புக்கட்டி.

**jaghir', jaghire'**, (இ.) *n.* ஊழிய மானியம்.

**jaghir'dar**, (இ.) *n.* ஊழிய மானிய உரிமையாளர்.

**jag'uar**, *n.* அமெரிக்க காடுகள் சிலவற்றிலுள்ள பூனையினத்தைச் சேர்ந்த பெரிய ஊனுண்ணி விலங்கு வகை.

**Jah**, *n.* எகோவா (Jehovah), விவிலியப் பழைய ஏற்பாட்டில் யூதர்களின் கடவுட்பெயர்.

**jail**, *n.* சிறைக்கூடம், காவற்கூடம்.

**Jain**, *n.* சமணர், சமண சமயத்தினர்; *a.* சமண சமயத்தைச் சார்ந்த.

**jal'ap**, *n.* மெக்சிகோ நிலப் படர்கொடிக் கிழங்கினின்று எடுக்கப்படும் பேதிமருந்து.

**jal'ousie**, *n.* அடைப்புச் சட்டம்.

**jam**[1], *n.* நெருக்கடி; மிகு நெருக்கத்தால் செயலற்ற நிலை; நெருக்கத் தொகுதி; *v.* நெருக்கு; திணி; இடையிட்டு அழுத்து; அடர்த்தியாக நெருக்கப்பெறு; ஆப்புப்போல் திணிக்கப்பட்டு இறுகு; வானொலி அல்லது தந்தியில்லாக் கம்பி வகையில் வேறு இடத்திற் செயலாற்றுவதன்மூலம் செய்திகளைத் தெளிவற்றதாக்கு.

**jam**[2], *n.* பழப்பாகு, பழச்சத்து, சர்க்கரைப்பாகில் பதம் செய்யப்பட்ட பழ ஊறல்.

**Jamaic'a, Jamaic'a rum**, *n.* வெல்லச் சாராயவகை.

**jamb**, *n.* வாயிலின் புடைநிலை; பலகணியின் பக்கநிலை.

**jamboree'**, *n.* கொண்டாட்டம்; மகிழ்கூட்டு; சாரணச் சிறுவர்களின் பேரணித்திரட்டு.

**jambs**, *n. pl.* கணப்படுப்பின் வாயருகிலுள்ள பக்கக்கற்கள்.

**Jane'ite, Jan'ite**, *n.* ஜேன் ஆஸ்டின் (Jane Austen) என்பவரின் புனை கதையேடுகளின் ஆர்வலர்.

**jang'le**, *n.* கடுங்கூவிளி; சச்சரவு; *v.* கடுங்கூக்குரல் எழுப்பு; இரைந்து பேசு; சச்சரவிடு.

**jan'issary, jan'izary**, *n.* (வர.) துருக்கி சுல்தானின் மெய்க்காப்புக் குழுவில் ஒருவர்; துருக்கிநாட்டுப் போர்வீரர்; கொடுங்கோலாட்சியின் கருவியான மனிதர்.

**jan'itor**, *n.* வாயிற் காவலர்.

**jann'ock**, *a.* நேர்மையான.

**Jan'senist**, *n.* ஜென்சன் (Jansen, 1585-1638) என்பவரின் கொள்கையுடைய ரோமன் கத்தோலிக்கர் திருக்கோயில் கட்சியின் உறுப்பினர், இயற்கையான மனித சக்தி நன்மைக்குப் புறம்பாக இயங்கும் இயல்புடையதென்ற கோட்பாட்டுக் குழுவினர்.

**Jan'uary**, *n.* ஆங்கில ஆண்டின் முதல் மாதம்.

**Jan'us**, *n.* முன்பின் இருமுகமுடைய பண்டை இத்தாலிய தெய்வம்; வாயில்காப்புத் தெய்வம்.

**Jap**, *n.* (பே-வ.) ஜப்பானிய நாட்டினர்; *a.* ஜப்பானிய நாட்டைச் சேர்ந்த.

**Japan'**[1], *n.* ஜப்பான் நாடு.

**japan'**[2], *n.* திண்ணிய சாய எண்ணெய்; ஜப்பானிய பாணியில் செய்யப்படும் வேலைப்பாடு; ஜப்பான்நாட்டுச் சரக்கு; *v.* கெட்டியான மெருகெண்ணெயால் மேற்பூச்சுப்பூசு; கறுப்பாகவும் பளபளப்பாகவும் பூச்சுப்பூசு.

**Japanese'**, *n.* ஜப்பானியர்; ஜப்பான் நாட்டவர்; ஜப்பான் நாட்டுக் குடியுரிமையாளர்; ஜப்பானிய மொழி; *a.* ஜப்பான் நாட்டுக்குரிய; ஜப்பானியருக்குரிய; ஜப்பானியமொழி சார்ந்த.

**Japanesque'**, *n.* ஜப்பானிய பாணியிலுள்ள ஒப்பனைப் படிவம்; *a.* ஜப்பானியப் பாணியின் சாயலுடைய.

**jape**, *n.* (செய்.) கேலி; *v.* கேலிசெய்.

**Japhet'ic**, *a.* 'பழைய ஏற்பாட்டி'லுள்ள நோவாவினுடைய மகனாகிய ஜாபெட் (Japheth) மரபில் வந்த; இந்தோ-ஐரோப்பிய வழிமுறையான.

**japon'ic**, *a.* ஜப்பான்நாட்டைச் சார்ந்த, ஜப்பானியரைச் சார்ந்த.

**japon'ica**, *n.* ஜப்பானிய நாட்டுச் செடிவகை, அழகொப்பனைக்காக வளர்க்கப்படும் செடிவகை.

**jar**[1], *n.* சாடி, குடுவை; கைப்பிடியுள்ள கண்ணாடிக்குவளை; கைப்பிடியற்ற கண்ணாடிக்குவளை; சாடியளவு; *v.* சாடியிலடை; (தொ.) Leyden jar, 1745-இல் புனைந்துருவாக்கப்பட்ட மின்வடிகலம்.

**jar**[2], *n.* கரகரப்பான ஒலி; செவிக்கின்னாத ஒலி அதிர்வு, நரம்பு நடுக்கம், நரம்பதிர்ச்சி; உணர்ச்சி உறுத்தல்; அதிர்ச்சி; முரண்பாடு; இசைவிணக்கமின்மை; சச்சரவு, மாறுபாடு; *v.* கரகரப்பான ஒலியெழுப்பு; வெறுப்புண்டாக்கும்படி ஓசைபடு; முரணோசையுடன் இயங்கு; அபசுரமாகு; இசைமுறிவான ஒலியுண்டாக்கு; நரம்புகளில் முரணிசைவான அதிர்ச்சி உண்டுபண்ணு; முரண்பாடு உண்டுபண்ணு; உணர்ச்சி முரண்படுத்து; உணர்ச்சி முரண்படு; கருத்து மாறுபடு; சச்சரவிடு; அதிர்ச்சி உண்டாக்கு.

**jar**[3], *n.* (பே-வ.) திருப்புநிலை; (தொ.) on the jar, on a jar, on jar, சிறிது திறந்தநிலையில்.

*jardiniere*, (பிர.) *n.* அழகுப்பூங்குடுவை மலர்த்தொட்டி.

**jarg'on**[1], *n.* பிதற்றொலி, சலசலப்பு; விளங்கா ஒலி; விளங்கா மொழி; காட்டுமிராண்டிப் பேச்சு; விளங்காத தொடர்கள் நிரம்பிய மொழிநடை.

**jarg'on**[2], **jargoon'**, *n.* இலங்கையில் காணப்படும் நிறமற்ற அல்லது புகை நிறமார்ந்த மணிக்கல் வகை.

**jargonelle'**, *n.* காலத்திற்கு முன்பாகவே கனிகின்ற பேரியினப் பழ வகை.

**jarl**, *n.* (வர.) பண்டை நார்வே அல்லது டென்மார்க் நாட்டின் குழுத்தலைவன்.

**ja'rrah**, *n.* உயர்தர வெட்டுமரமாகப் பயன்படும் பிசினுடைய மேலை ஆஸ்திரேலிய செம்மர வகை.

**jarv'ey**, *n.* வாடகைக் குதிரைவண்டி ஓட்டுபவர்; மோட்டார் ஓட்டுபவர்.

**jas'min, jas'mine**, *n.* மல்லிகை, முல்லையின மலர்ச்செடி வகை; (தொ.) common jasmin, white jasmin, மல்லிகைக் கொடி வகை.

**jas'per**, *n.* சிவப்பு மஞ்சள் அல்லது பழுப்புநிறமுடைய மணிக்கல் வகை.

**Jat**, *n.* வடமேற்கு இந்தியாவிலுள்ள மக்கட் குழுவினருள் ஒருவர்.

**jaun'dice**, *n.* மஞ்சட் காமாலைநோய்; பார்வைக்கோளாறு; *v.* மஞ்சட் காமாலைநோயால் தாக்கு; பொறுமைக்கு ஆளாக்கு; தீர்ப்பு வகையில் பொறுமையூட்டி மாறுபடுத்து.

**jaunt**, *n.* இன்பப் பயணம்; *v.* இன்பப் பயணஞ் செய்.

**jaunt'ing-car**, *n.* அயர்லாந்தில் பெருவழக்கான இன்பப் பயண இருசக்கர ஊர்தி.

**jaun'ty**, *n.* கப்பல் காவல்துறையினரின் தலைவர்; *a.* கவலையற்ற இன்ப எழுச்சி கொள்கிற; இன்ப எழுச்சிப்பகட்டு உடைய; இறுமாந்த தற்பெருமைப் பகட்டுடைய.

**Ja'van**, *n.* ஜாவா நாட்டுக்குரிய மனிதர்; *a.* ஜாவா நாட்டுக்குரிய.

**Javanese'**, *n.* ஜாவா நாட்டினர்; மத்திய ஜாவா நாட்டின் மொழி; *a.* ஜாவா நாட்டுக்குரிய.

**jav'elin**, *n.* எறிவதற்குரிய பளுக்குறைந்த ஈட்டி, எறிவேல்.

**jaw**, *n.* தாடை; தாடை எலும்பு; (பே-வ.) வம்பளப்பு; சொல்மாரி; *v.* சோர்வுறும்படி நீளப்பேசு; கண்டித்துப் பேசு; (தொ.) hold your jaw, பேசாமலிரு, வம்பளப்பை நிறுத்து.

jaw'-bone, *n.* பாலுணிகளின் கீழ்த்தாடை எலும்புகளில் ஒன்று; கீழ் இன விலங்குகளில் கீழ்த்தாடை இணையெலும்பு.

jaw'-break'er, *n.* ஒலிப்பதற்குக் கடுமைவாய்ந்த சொல், பல்லுடைக்குஞ் சொல்.

jaws, *n. pl.* பற்கள் உள்ளிட்ட வாயின் எலும்புகள்; பள்ளத்தாக்கு-கால்வாய் முதலியவற்றின் குறுகிய வாயில்; இயந்திரத்தின் குறடுபோல் பற்றிக்கொள்ளும் அலகுகள்.

jay, *n.* வண்ண இறகுடைய சலசலக்கும் ஐரோப்பியப் பறவை வகை; பிதற்றுபவர், ஓயாது சலசலத்துத் தொல்லை தருபவர்.

jay'-walker, *n.* போக்குவரத்து விதிகளைக் கவனிக்காமல் சாலையில் குறுக்குமறுக்காகச் செல்லுபவர்.

jazz, *n.* அமெரிக்க நீகிரோவரின் ஆரவார இசைக்கூத்து; பேரிரைச்சலுள்ள நிகழ்ச்சி; *a.* முரணிசைவான; பகட்டு வண்ணமிக்க; முரட்டுத்தனமான; கேலிக்கூத்தான; *v.* பேராரவார நிகழ்ச்சியிற் கலந்து செயலாற்று; கேலிக்கூத்து நிகழ்த்து; (தொ.) jazz band, பேரொலி இசைமேளக்குழு.

jea'lous, *a.* பொருமையுடைய, பிறர்நலங் காணப்பொருத; காப்பு விழிப்புடைய; அருங்காவலுடைய, இழப்பஞ்சிக் காக்கிற; சிறுதவறுகளைப் பொருத; காதலர் வகையில் ஓயா ஐயுறவுடைய.

jea'lousy, *n.* பொருமை; ஓயா ஐயுறவு; இடைவிடா இழப்பச்சம்; அருங்காவற் பண்பு, காப்பு விழிப்புடைமை.

jean, *n.* சாய்வரி நெசவுடைய பருத்தித்துணி.

jeans, *n. pl.* சாய்வரிப் பருத்தித்துணியாலான உடுப்புக்கள்.

jeep, *n.* பயன்பாட்டுப் பொறிவண்டி.

jeer[1], *n.* (கப்.) பாய்மர அடிச்சட்டங்களை ஏற்றியிறக்குவதற்குரிய அமைவு.

jeer[2], *n.* இகழ்ச்சி, ஏளனம், வசைமொழி, திட்டுதல்; *v.* இகழ்ச்சியாகச் சிரித்து அவமதி; ஏளனம் செய்.

jehad', *n.* முஸ்லீம் வழக்கில் புனித சமயப்போர்; அறப்போர்; கொள்கைக்கான வீரப்போராட்டம்.

Jehov'ah, *n.* எகோவா, விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் யூதர்களின் கடவுட்பெயர்.

Jehov'ist, *n.* விவிலிய நூலில் கடவுளை 'எகோவா' என்று குறிப்பிடும் முதல் ஆறு பாகங்களின் ஆசிரியர்களில் ஒருவர்.

Je'hu, *n.* மூர்க்கமான வண்டியோட்டி, கடும்வலவன்.

jejune', *a.* அருகிய, மிகக்குறைவான; நிலவகையில் வளமற்ற; பயனற்ற, மலடான; மனத்திற்கு நிறைவளிக்காத; கவர்ச்சியற்ற, ஊக்கமற்ற.

Jek'yll and Hyde, *n.* இரட்டை மனிதன்; இருதலை மணியம், இருவேருட்களாக மாறிமாறி நடக்கும் ஒருவர்.

jell'y, *n.* பாகு, இழுது; பாகுக் கறியுணவு, எலும்புதோல்களைக் கொதிக்கவைத்தாற்றிய கொழுங்குழம்பு; வடிசாறு, பழச்சாற்றின் வடிகுழம்பு; *v.* வடிசாற்றுக் குழம்பு செய்; பாகாய் வடித்து இறுக வை.

jell'y-bag, *n.* பாகு வடிகட்டும் பை.

jell'y-fish, *n.* இழுதுமீன்.

jell'ygraph, *n.* பாகுபாவிய தட்ட மூலம் பகர்ப்பெடுக்குங் கருவி.

jem'adar (பெர்.) *n.* இந்தியப்படையில் தாழ்படிப்பணித் தலைவர்; இந்தியக் காவல்துறைப் பணியாளர்; பணியாள் தலைவர்; (பே-வ.) தளம் பெருக்குபவர்.

jemim'as, *n. pl.* நீண்டு சுருங்கும் பக்கங்களுள்ள புதைமிதியடி வகை; புதைமிதியடி மேலுறை.

jemm'y, *n.* கன்னக்கோல்; ஆட்டுத்தலை இறைச்சிக்கறி.

*je ne sais quoi*, (பிர.) *n.* தெரியாததொன்று, விளக்கிக் கூற முடியாத செய்தி.

jenn'et, *n.* ஸ்பெயின் நாட்டுச் சிறு குதிரை.

jenn'eting, *n.* பருவ காலத்துக்குமுந்திப் பழுக்கும் ஆப்பிள் பழவகை.

jenn'y, *n.* புடைபெயர்வுடைய பாரந்தூக்கி; நூற்புக்கதிர்ப் பொறி; மேடைக்கோற் பந்தாட்டத்தில் பந்தடி; சிறுக்கி; பட்டிக்காட்டுப்பெண்; ஆந்தைப்பெடை; குருவிவகைப் பெடை; பெட்டைக்கழுதை; (தொ.) jenny wren, பாடும் பறவைவகை; spinning jenny, நூற்புக்கதிர்ப் பொறி.

jeo'pardize, *v.* இடருள்ளாக்கு, இடருக்கு உட்படுத்து.

jeo'pardy, *n.* இடர், இடுக்கண், இடையூறு.

jequi'rity, *n.* குன்றிமணி போன்ற இருநிற விதைகளையுடைய படர் புதர்வகை.

jerbo'a, *n.* நெடுந்தொலை தாவுமியல்புள்ள ஆப்பிரிக்க பாலைவனக் கொறிவிலங்கு வகை.

*jereed'*, *jerid'*, (அரா.) *n.* கீழ்த்திசைக் குதிரைவீரரின் வேல்; வேலாட்டம், வேல் விளையாட்டுவகை.

jeremi'ad, *n.* ஒப்பாரி; துயரக் கதை; புலம்பற் காவியம்.

Jeremi'ah, *n.* காலநிலை பழிப்பவர்; புலம்பறிவர், அழுதரற்றும் மெய்ஞ்ஞானி.

Je'richo, *n.* பாலஸ்தீன நகரம்; (தொ.) go to Jericho, போய்த்தொலை, நாசமாய்ப் போ; நரகத்துக்கே போய்ச்சேர்.

jerk[1], *n.* வெட்டியிழுப்பு, வெட்டுத்திருப்பு; சுரிப்பிழுப்பு, தசைநாரின் திடீர்ச் சுருக்கதிர்ச்சி, திடீர் இழுப்பு வலி; உடற்பயிற்சியில் திடீர் வெட்டியக்கம்; பறவைகளின் திடீர்ப் பாட்டெழுச்சி; *v.* சட்டென இழு; சட்டெனத்தள்ளு; சட்டென முறுக்கு; வெட்டி வீசியெறி; ஆற்றலுடன் தூக்கியெறி; வெட்டிவெட்டிச் செல், ஆட்டத்துடன் செல்.

jerk[2], *v.* மாட்டிறைச்சி முதலியவற்றை அரிகண்டமிட்டு வெயிலில் உலர்த்திப் பதஞ்செய்.

jerk'in, *n.* (வர.) ஆடவரின் இறுக்கமான சிறுசட்டை; குறுந் தோற்சட்டை.

jerks, *n. pl.* அங்கத்துடிப்பு; தசைத்துடிப்பதிர்ச்சி; சமய வெறித் துடிப்பாட்டம்.

Jerobo'am, *n.* இன்தேறல் மிடாக்குப்பி, எட்டுமுதல் பன்னிரண்டு குப்பி வரை பிடிக்கும் தேறல் பெருங்குப்பி.

Je'rry[1], *n.* செர்மன் படைவீரர்; செர்மானியர்.

je'rry[2], je'rry-builder, *n.* மோசமான பொருள்களால் உறுதியற்ற தன்மையில் போலியான கட்டிடம் கட்டுபவர்.

je'rry-building, *n.* மோசமான பொருள்களால் உறுதியற்ற கட்டிடம் கட்டுதல்; மோசமான சரக்குகளால் உறுதியற்றதாகக் கட்டப்பட்ட கட்டிடம்.

je'rry-built, *a.* மோசமான பொருள்களால் உறுதியற்ற தன்மையில் கட்டப்பட்ட.

jerryman'der, *n.*, *v.*=gerrymander.

je'rry-shop, *n.* கீழ்த்தரச் சாராயக்கடை.

Jers'ey[1], *n.* ஆங்கிலக் கடற்கால்வாயிலுள்ள தீவின் பெயர்; (தொ.) Jersey cow, பயிற்சியினப் பசுவகை.

jers'ey[2], *n.* ஆட்டக்காரர் அணியும் நெருக்கமான கம்பளிப் பின்னல் சட்டை; கம்பளிப் பின்னல் உள்சட்டை; பெண்கள் அணியும் இறுக்கமான சிறுசட்டை; ஆட்டுக் கம்பளியின் நேர்த்தியான பகுதி; நன்கு கோதப்பட்ட கம்பளி; பயிற்சியினப் பசுவகை; *pl.* jers'eys.

Jerus'alem, *n.* பாலஸ்தீன நாட்டில் உள்ள நகரம்; (தொ.) Jerusalem artichoke, தின்னக்கூடிய கிழங்கினை உடைய தூரியகாந்தியினச் செடிவகை; Jerusalem pony, கழுதை.

jess, *n.* வேட்டைப் பருந்தின் கால்கட்டுக்குரிய தோல்வார்; பருந்தின் கால்கட்டுப் பட்டிழை; *v.* வேட்டைப் பருந்துக்குக் கால்கட்டிடு.

jess'amin, jess'amine, *n.*=jasmin.

Jess'e, *n.* விவிலிய வரலாற்றின்படி தாவீது (David) என்பவர் தந்தை; ஜெஸ்ஸியினிடமிருந்து வந்த இயேசுநாதரின் வழிமரபுக் கொடி; திருக்கோயிலின் பெரிய சரவிளக்கு.

Jess'e window, *n.* ஜெஸ்ஸி முதற்கொண்ட இயேசுநாதரின் மரபுவரிசைக் கொடிவழி சித்திரிக்கப்பட்ட பலகணி,

jest, *n.* கேலி; வேடிக்கைப்பேச்சு; விளையாட்டுரை; ஏளனத்துக்குரியது, நகையாடத்தக்கது; நையாண்டி வசை மொழி; ஏளன இகழ்ச்சிக்குறிப்பு; பரிகாசத்துக்கு ஆளானவர்; *v.* கேலி செய்; வேடிக்கையாகப் பேசு; விளையாட்டுத்தனமாக நட; ஏளனமாக நையாண்டி செய்; (தொ.) in jest, விளையாட்டாக, கேலியாக.

jest'-book, *n.* நகைத் துணுக்குகள் கொண்ட புத்தகம்; விகடத்துணுக்கு நூல்.

jes'ter, *n.* கேலி செய்பவர்; விகடன், கோமாளி.

Jes'uit, *n.* இக்னேஷியஸ் லாயோலா (Ignatius Loyola) என்பவரால் 1533-ல் நிறுவப்பட்ட இயேசுநாதர் சங்கம் (Society of Jesus) என்ற ரோமன் கத்தோலிக்கக் குழுவின் உறுப்பினர்; சூழ்ச்சியாளர்; பாசாங்குக்காரர்; பசப்பி ஏய்ப்பவர்; (தொ.) Jesuits' bark, சிங்கோனு மரப்பட்டை.

jet[1], *n.* கருநிமிளைக்கல்; ஆழ்ந்த பளபளப்பான கருநிறம்; *a.* கருநிமிளை சார்ந்த; பளபளப்பான கருநிறம் உடைய.

jet[2], *n.* நீர்த்தாரை; பீற்று நீராவி, பீற்று வளி; பீற்றுக் குழாய் நுனி; *v.* பீற்று, தாரையாக ஊற்று; பீற்றுநீராவி வெளியிடு; விசையுடன் பீற்றுவளி வெளியேற்று.

jet'-black, *a.* பளபளப்பான மைக் கருநிறமுடைய.

jet'-engine, *n.* பீற்றுவிசை இயந்திரம்.

jet'-plane, *n.* பீற்றுவளி விசையால் இயங்கும் விமானம்.

jet'-propelled, *a.* பீற்று நிலக்கரி வளியின் விசையால் இயங்குகிற.

jet'sam, *n.* எறிபளு, பளுக்குறைக்க எறியப்படும் சரக்கு; கரைமீது ஒதுக்கப்பட்ட எறிபளு.

jett'ison, *n.* பளு எறிவு, கப்பலின் பளுவகற்றி இடர்காக்கும் படி வெளியே எறிதல்; *v.* பளு எறி, கப்பலின் பளு அகற்றி இடர்காக்க வெளியே எறி.

jett'on, *n.* காசுவட்டு, சீட்டாட்டம்-கணிப்புமுறைகளிற் பயன்படுத்தப்படும் வட்டு.

jett'y[1], *n.* துறைமுக அணைகரை; இறங்குதுறை, கடவு.

jett'y[2], *a.* மைக் கருமையான.

*jeu*, (பிர.) *n.* மகிழ்ச்சி; விளையாட்டு.

*jeu de mots*, (பிர.) *n.* சிலேடை, இருபொருள் ஒருசொல் துணுக்கு.

*jeu d'esprit*, (பிர.) *n.* நகைச்சுவைத் துணுக்கு.

*jeune premier*, (பிர.) *n.* நாடகத்தில் சிறுவர் முகப்பு நிகழ்ச்சி.

*jeunesse doree*, (பிர.) *n.* ஒய்யார இளைஞர், பகட்டு நடையுடை வாலிபர் தொகுதி.

Jew, *n.* யூதர், எபிரேய இனத்தைச் சேர்ந்தவர்; கடுவட்டிக்குக் கடன் கொடுப்பவர்; கடுங்கண்டிப்பாளர்; ஈவிரக்கமின்றிப் பேரம் செய்பவர்; எவரையும் எளிதில் நம்பாதவர்; *v.* (பே-வ.) ஏய்; மட்டிலாச் சூழ்ச்சி செய்து ஏமாற்று; (தொ.) tell that to the Jews, நீ கூறுவது நம்பமுடியாத செய்தி; unbelieving Jew, நம்பிக்கையற்றவர், கடு ஐயுறவானவர்; Wandering Jew, இயேசுநாதரைப் பழித்ததற்காகக் கடைத்தீர்ப்பு நாள்வரை அலைந்து திரிவதாகக் கருதப்படும் பழங்கதை உறுப்பினர்; wandering Jew, படர்கொடி வகை.

Jew'-bait'ing, *n.* யூதர்களை அடக்கி ஒடுக்கும் வன்முறை நடவடிக்கை, யூதர்களின்மேலான அரசியற்குற்றச்சாட்டு.

jew'el, *n.* அணிமணிப்பூண், மணிக்கற்கள் பதித்த அணிகலன்; விலையுயர்ந்த மணிக்கல்; உயர்வாக மதிக்கப்படுபவர்; உயர்மதிப்புப் பொருள்; *v.* மணி பதிப்பி; அணிமணி இணை; பூண் அணி; அணிமணி ஒப்பனைசெய்; கடிகாரத்தின் சுழலச்சுத் துளைகளில் மணிக்கற்களைப் பொருத்து.

jew'el-case, *n.* அணிமணிப் பேழை.

jewel'-house, *n.* லண்டன் மணிக்கூண்டில் (Tower of London) அரச அணிமணிகள் வைக்கப்பட்டிருக்கும் அறை.

jew'eller, *n.* அணிமணி செய்பவர்; பொற்கொல்லர், அணிமணி வாணிகம் செய்பவர்.

jew'ellery, jew'elry, *n.* அணிமணித் தொகுதி; அணிமணிச் சரக்கு.

jew'ing, *n.* வீட்டுப் புறுவின் அலகடித் தசைப்பொருக்கு.

Jewr'y, *n.* யூதர் இனம்; (வர.) யூதர் குடியிருப்பிடம்; யூதர் சேரி, நகரம் முதலியவற்றில் யூதர் குடியிருப்பு.

Jew's'-ear, *n.* உண்ணத்தக்க கிண்ண வடிவமான காளான் வகை.

Jew's'-harp', *n.* மோர்சிங், இசைக்குரிய வாய்க்கருவி வகை.

jezail', *n.* ஆப்கானியரின் (Afghan) பளுமிக்க நீண்ட துப்பாக்கி வகை.

Jez'ebel, *n.* நாணமற்ற ஆணவம் மிகுந்த பெண்; ஒழுக்கந் தவறிய பெண்; மேனுமினுக்கி.

jib[1], *n.* கப்பலின் பாய் முகட்டிலுள்ள நிலவரமான முக்கோணப்பாய்; *v.* (கப்.) பாய்மரத்தை ஒருபுறத்திலிருந்து மறுபுறம் இழு; பாய்மர வகையில் சுற்றிச் சுழலு; (தொ.) cut of his jib, அவனுடைய தனிமுறைத் தோற்றம்.

jib[2], *v.* குதிரை வகையில் இடக்குப்பண்ணு, முன்னே செல்ல மறு, பின்னேக்கியிழு, நின்று அடம்பண்ணு, பக்கங்களில் இழு; செயலில் முனையமறு; (தொ.) jib at, செயலில் மிகு வெறுப்புக்காட்டு; ஆளிடம் பகைமை காட்டு.

jibb'a, jibbah', (அரா.) *n.* ஜிப்பா, முகம்மதியர் துணி மேலங்கி.

jib'-boom, *n.* கப்பலின் முன் கோடியில் நீண்டுள்ள மரச்சட்டம்; பாரந்தூக்கியின் கைபோன்ற கருவி.

jib'door, *n.* சுவர்த்தளக் கதவு, சுவருடன் சுவராகத் தெரியும்படி ஒரே வண்ணமும் அமைப்பும்பட அமைக்கப்பட்ட கதவு.

jibe, *n.*, *v.*=gibe.

jiff, jiff'y, *n.* (பே-வ.) கணம், மிகக் குறுகிய நேரம்.

jig, *n.* துடிப்பான ஆடல்வகை; எழுச்சியுள்ள நடன இசை; கருவிப்பிடி நிலை, கைக்கருவிகளைக் கொண்டு உருவாக்கும் பொருளை நிறுத்திப் பிடிப்பதற்குப் பயன்படும் துணைச் சாதனம்; *v.* துடிப்பான நடனத்திலீடுபடு; திட்ப நுட்பத் தரம் பிரி, கனிப்பொருள்களை அடியிற் சல்லடையிட்ட பெட்டியில் இட்டு நீரடியில் அலைப்பதன்மூலம் கனிப்பொருள்களின் திட்ப மென்மைப் பொருள்களைப் பிரி.

jigg'er[1], *n.* (கப்.) ஓர் இரட்டைக்கப்பியும் ஒற்றைக்கப்பியும் கயிறும் கூடிய ஏற்று கருவியமைவு; சிறு பாய்மரம்; சிறு பாய் உடைய சிறிய கப்பல் வகை; குழிப்பந்தாட்டத்தில் ஒடுங்கிய முகப்புடைய இரும்புத்தடி; கனிப்பொருள்களைச் சல்லடையிட்டு வகை பிரிப்பவர்.

jigg'er[2], *n.*=chigoe.

jigg'er[3], *v.* பழிக்காளாக்கு.

jigg'ery-pok'ery, *n.* (பே-வ.) திருட்டுத்தனமான சூழ்ச்சி, ஏமாற்று, மோசடி.

jig'gle, *v.* மெல்ல ஊசலாட்டு; வளைந்து நெளிந்து ஆடுவி; துடிதுடிப்புடன் ஆடு, சாய்ந்தாடு, நெளிந்தாடு; குலுக்கியாடு.

jig'saw, *n.* திருகுவாள், எவ்வடிவும் அறுக்கத்தக்க ஒடுங்கிய இருபுறக் கூர்வாள் பொறி; திருகுவெட்டுப்புதிர்; (தொ.) jigsaw puzzle, திருகுவெட்டுப்புதிர், அட்டையில் ஒட்டப்பட்டுக் கோணல் மாணலாக வெட்டப்பட்ட படத் துண்டுகளை இணைக்கும் விளையாட்டு; திகைக்க வைக்கும் புதிர்.

jihad', *n.*=jehad.

Jill, *n.*=Gill[4].

jilt, *n.* காதலில் ஆசைகாட்டி மோசம் செய்யும் பெண்; *v.* காதலில் ஆசைகாட்டி மோசம் செய்; நம்பவைத்து ஏய்.

Jim Crow, *n.* நீகிரோவர்; நிமிர்த்தல் திருகு, இருப்புச் சட்டங்களை நேராக நிமிர்த்திவிடப் பயன்படும் கருவி; Jim Crow car, புகைவண்டிகளில் நீகிரோவர்களுக்கென ஒதுக்கப்பட்ட பெட்டிகள்.

**jing'le**, *n.* பன்மணிக் கலகலப்பொலி; சங்கிலிச் சலசலப்பொலி; அடுக்கொலி, ஒலி இயைபு, எதுகை மோனை இணைவு; இருசக்கர மோட்டார் வண்டி; *v.* மணி ஒலி செய்; சாவிகள் வகையில் கணகணவென ஒலிக்கும்படி குலுக்கு; எதுகை மோனை நிரப்பி எழுது.

**jing'o**, *n.* ஆரவார நாட்டுப்பற்றுளர்; கிளர்ச்சித் தேசியவாதி; (வர.) 1878-இல் பீக்கன்ஸ்பீல்டுப் பெருமகனுர் (Lord Beaconsfield) கொள்கை ஆதரவாளர்; *a.* அசட்டுத் துணிவான; கீழ்த்தரமாக மக்களைத் தூண்டிவிடுகிற; குறுகிய பகட்டார வாரத் தேசீயஞ் சார்ந்த; *pl.* jing'oes; (தொ.) by jingo, மக்களைக் கிளறிவிடும் பாடல்களால்; by jingo, by the living jingo, மட்டான எழுச்சியுடைய சூளுரைக்குறிப்பு.

**Jing'oism**, *n.* குறுகிய பகட்டாரவாரத் தேசியக் கொள்கை; விருப்பு; குறுகிய போலிப்பற்று.

**jink**, *n.* பிடிகொடாது நழுவித்தப்புதல், தட்டிக்கழித்துச் செல்லுதல்; *v.* பிடிகொடாது நழுவித்தப்பிச் செல், தட்டிக் கழித்துத் தப்பு; (தொ.) high jinks, ஆரவார விளையாட்டு, கேளிக்கைக் கும்மாளம்.

**jinnee'**, *n.* இஸ்லாமிய வழக்கில் சிறு தெய்வ உரு, கூளி; *pl.* jinn.

**jinrick'sha, jinrik'isha**, *n.* ரிக்ஷா, இழுப்புவண்டி.

**jirg'a**, *n.* ஆப்கானிய குடிமக்கள் தலைவர் பேரவை.

**jit'ney**, *n.* தாழ்ந்த கட்டணப் பேருந்துகலம்; சிறுவிலைப் பொருள்; *a.* சிறுவிலையுடைய; அற்பமான.

**jitt'er**, *v.* நரப்பு நடுக்கமுறு, கூச்சமுற்று நடுங்கு.

**jitt'erbug**, *n.* உணர்ச்சியூட்டும் நடனத்துக்கு ஆட்பட்டவர்; அவைக்கூச்ச நடுக்கமுடையவர்.

**jitt'ers**, *n. pl.* நடுங்காட்டம், கூச்சத்தால் வரும் கோழைத்தனம், அவைக்கூச்சம்; (தொ.) have the jitters, நடுங்காட்டங்கொள், செயற்கூச்சங்கொள்.

**jiu-jitsu'**, *n.*=ju-jutsu.

**Job**[1], *n.* விவிலிய நூல் பழைய ஏற்பாட்டிலுள்ள 'ஜாப் ஏட்டின்' (Book of Job in O. T.) கதைத் தலைவர்; பொறுமை மிக்கவர், பொறுமையுடன் கடுஞ்சோதனைகளைத் தாங்குபவர்; (தொ.) Job's tears, வழிபாட்டு உருட்டுமணியாகப் பயன்படுத்தப்படும் புல்வகை விதைகள்; would try the patience of Job, மிகத் தொல்லை தரத்தக்கதாயுள்ளது.

**job**[2], *n.* வேலை, பணி, தொழில்; பதவி; அலுவல்; கடமை; பணி ஈடுபாடு; கூலிவேலை; சில்லறை வேலை; மறை சூழ்ச்சிச் செயல்; குற்றத்துறை ஈடுபாடு; வாடகைக் குதிரை; வாடகை வண்டி; வாணிகக் கொடுக்கல் வாங்கலுக்குரிய அற்பப் பொருள் தொகுதி; *v.* சிறுபணி செய்; வண்டி-குதிரை முதலியவற்றை வாடகைக்கு விடு; தரகுவேலை செய்; தரகுக்குக் கொடுக்கல் வாங்கல் செய்; பங்கு வாணிகத்தில் ஈடுபடு; பொறுப்பான பதவியைத் தன்னல ஆதாயத்துக்குப் பயன்படுத்து; லஞ்ச ஊழல்களுக்குப் பயன்படுத்து; (தொ.) bad job, தண்ட உழைப்பு; அவக்கேடு; தோல்விக்குரியது; do person's job, ஆளைக்கெடுத்துப் பாழாக்கு; good job, வெற்றிகரமான வேலை; ஆதாயம் தருஞ் செய்தி; நல்ல செய்தி; நற்பேறு; job lot, ஆதாய நோக்குடன் குத்துமதிப்பாக வாங்கப்பட்ட மொத்தப் பேரமான சிறுபொருள் தொகுதி.

**job**[3], *n.* தாற்றுக்குத்து, கூர்நுனியால் குத்தி ஊக்குதல்; வெட்டியிழுப்பு; குடைவு, இடிப்பு, சிற்றுதைவு; *v.* கடிவாளத்தை வெட்டியிழு; சிறிது புண்படுத்து; தாற்றினால் குத்து, இடி; தூண்டு.

**joba'tion**, *n.* (பே-வ.) நீண்ட கண்டிப்பு.

**jobb'ernowl**, *n.* (பே-வ.) வெற்றுமண்டை, அறிவிலி, மூடன், மட்டி.

**jobb'ery**, *n.* மோசடி வகை.

**job'master**, *n.* வாடகைக்காக வண்டியும் குதிரையும் கொடுப்பவர்.

**job'-work**, *n.* சில்லறை வேலை; கூலி வேலை; இடையிடை நேரும் கூலிப்பணி.

**jock'ey**, *n.* குதிரைப் பந்தயங்களில் குதிரையேறிச் செல்லும் பணியாள்; குதிரை வணிகர்; தொழில்துறையில் மட்டுமீறித் தன்னல ஆதாயந் தேடுபவர்; *v.* நெருக்கித்தள்ளி முன்னேறு; மறைசூழ்ச்சி முறைகளால் வெற்றிபெறு; தந்திரத்தால் வெல்லு; ஏமாற்று; (தொ.) Jockey Club, பந்தயக் குதிரைக்காரர்களின் கழகம், இங்கிலாந்திலுள்ள நியூமார்க்கெட் (Newmarket) என்னும் இடத்தில் நிறுவப்பட்ட பந்தயக் குதிரைக்காரர்களின் சங்கம்.

**jock'o**, *n.* சிம்பான்சி (chimpanzee) குரங்கு, வாலில்லாக் குரங்கு வகை; *pl.* jock'os.

**jocose'**, *a.* விளையாட்டான, வேடிக்கையில் விருப்பமுள்ள.

**joc'ular**, *a.* வேடிக்கையான, விளையாட்டான; களிப்புள்ள, மகிழ்வுறுத்தக்க, நகைச்சுவையுள்ள.

**joc'und**, *a.* இன்மகிழ்ச்சியான, களி கிளர்ச்சியுடைய, மகிழ்ச்சி விளைவிக்கிற; எழுச்சியுடைய.

**Jodhpurs'**, *n. pl.* முழங்காலிலிருந்து கணுக்கால்வரை நெருக்கமாகவுள்ள குதிரையேற்றம் முதலியவற்றிற்குரிய நீண்ட காற்சட்டை.

**Joe Mill'er**, *n.* நாட்பட்ட கேலித்துணுக்குப் பேச்சு.

**jo'ey**, *n.* பைம்மாவின் கன்று, ஆஸ்திரேலிய நாட்டுக் கங்காரு என்னும் விலங்கின் குட்டி, குருளை, விலங்கின் குட்டி; *pl.* jo'eys.

**jog**, *n.* உந்தித்தள்ளல், இடித்துத் தள்ளுதல்; குடைவு, கவனத்தைத் தூண்டுவதற்கான கிள்ளல்; துள்ளல் மென்னடை; *v.* திடுமெனத் தள்ளு; பிடித்துக்குலுக்கு; கவனத்தைக் கவர்வதற்காகக் கிள்ளு, குடை; நினைவைத் தூண்டு; மேலுங் கீழுமாக எழுந்தெழுந்தாடு; பெரு முயற்சியுடன் ஆடியசைந்து நட; நடந்து கழி, எழுச்சியின்றி நட; கடுகிச்செல்.

**jog'gle**[1], *n.* ஆட்ட அசைவு; *v.* ஆட்ட அசைவுடன் செல்.

**jog'gle**[2], *n.* அண்டைப்பொருத்து, இரு கற்கள் அல்லது கட்டைகள் விழாமல் ஒன்றுமேலொன்றாக முட்டவைக்கும் பொருத்து; முட்டுப் பொருத்துக்கான ஒருபக்கப் பள்ளக் குடைவு; சார்பொருத்துக்கான ஒருபுற முனைப்பு; இணைப் பொருத்துக்கான இடைத்துணுக்கு; *v.* முட்டுப் பொருத்திட்டு இணை.

**jog'trot**, *n.* தளர்ந்த விரைநடை, குறைந்த வேகமுடைய ஒரே சீரான நடை; சலிப்பைத் தரும்படியான முன்னேற்றம், எழுச்சியற்ற வேகம்.

**Johann'isberger**, *n.* நேர்த்தியான வெள்ளை இன்தேறல் வகை.

**John**, *n.* பொதுநிலை ஆண்பால் இயற்பெயர்; (தொ.) John Barleycorn, உருவக வழக்கில் மாவூறல்சாராயம்; John Bull, உருவக வழக்கில் உருமாதிரியாகக் குறிக்கப்படும் ஆங்கிலேயர்; ஆங்கில நாட்டினம்; John Chinaman, உருவக வழக்கில் உருமாதிரியாகக் குறிக்கப்படுஞ் சீன நாட்டினத்தவர்; John Company, கிழக்கிந்திய வணிகக்கூட்டத்தார்; John Doe, சட்டத்தில் பேசப்படும் கற்பனை உருவகமாகக் குறிக்கப்படும் வாதி; John Dory, உணவாகக் கொள்ளப்படும் கடல்மீன் வகை.

**John'ian**, *n.* கேம்பிரிட்ஜிலுள்ள செயிண்ட் ஜான் கல்லூரி (St. John's College, Cambridge) சார்ந்தவர்; *a.* கேம்பிரிட்ஜிலுள்ள செயிண்ட் ஜான் கல்லூரி சார்ந்த.

**johnn'y**, *n.* ஆள்; ஓயிலாகக் காலந்தள்ளுபவர், நாகரிகப் பாங்கான சோம்பேறி; (தொ.) Johnny Raw, கற்றுக்குட்டி, அனுபவமில்லாப் புதுப்பணியாள்.

**johnn'y-cake**, *n.* கோதுமைமாவுப் பண்ணியம்; மக்காச் சோள மாவுப் பண்டம்.

**John-o'-Groat's, John-o'-Groat's-House**, *n.* வடக்கு ஸ்காத்லாந்து; (தொ.) from John-'o-Groat's to Land's End, கிரேட் பிரிட்டன் (Great Britain) முழுமையும்.

**Johnsonese'**, *n.* சாமுவேல் ஜான்சனது (Samuel Johnson) எழுத்துநடைமொழி மரபு; ஜான்சனது போன்ற எழுத்து நடைமொழி மரபு.

**Johnson'ian**, *a.* டாக்டர் சாமுவேல் ஜான்சன் (Dr. Samuel Johnson 1709-84) என்பாரின் பண்பு சார்ந்த; ஜான்சன் போன்ற; லத்தீனிலிருந்து பிறந்த மிக நீண்ட சொற்களை வழங்கும் எழுத்துநடை சார்ந்த.

***joie de vivre***, (பிர.) *n.* வாழ்வின் கிளர்ச்சி, வாழ்க்கை இன்ப நுகர்வுணர்ச்சி.

**join**, *n.* கூடல் மையம், கோடுகள்கூடும் புள்ளி; கூடல்வரை, தளங்கள் கூடும் கோடு; *v.* ஒன்றுசேர்த்து வை; இணை; சேர்த்துக் கட்டு; கட்டி இறுக்கு; சேர்த்து வை; இரண்டு புள்ளிகளை நேர்வரையினால் இணை; மண உறவால் பிணைவி; நட்பில் இணைவி; மணத்தொடர்பால் ஒருங்கிணை; நட்பில் ஒன்றுசேர்; செயலில் உடன் பங்குகொள்; சந்தி; சென்று கூடு; கழகம் முதலியவற்றில் சேர், உறுப்பினராகு; படை-கப்பல் முதலியவற்றில் பதவி ஏற்றுக்கொள்; படை-கப்பல் முதலியவற்றில் மீண்டும் போய்ச்சேர்; ஆறு முதலியவற்றின் வகையில் சென்றுகல; (தொ.) join battle, போரிடத் தொடங்கு; join hands, கைகளைக் கட்டிக்கொள்; ஒருவரோடொருவர் கை பிணைத்துக்கொள்; செயலில் இணை, முயற்சியில் ஒருங்கிணை; join issue, வாதிக்கத் தொடங்கு; (சட்.) வாதப்பொருளைக் கூட்டாகத் தீர்ப்புக்கு அனுப்பு; மற்றவர் கூறும் வாதப்பொருளை ஏற்றுக்கொள்; join up, படையில் சேர்.

**join'der**, *n.* இணைப்பு; (சட்.) வாதிகளாக அல்லது எதிர் வாதிகளாக ஒருங்கிணையும் கூட்டிணைவு; (சட்.) வாதக் கூற்றின் ஏற்பிசைவு.

**join'er**, *n.* சேர்த்து வைப்பவர், இணைப்பவர்; சிறு தச்சு வேலை செய்பவர்.

**join'ery**, *n.* சிறு தச்சுவேலை, வீட்டு தட்டுமுட்டுச் செப்பம் செய்யும் சிறுதிறத் தச்சுத்தொழில்.

**joint**, *n.* பொருத்து, இரண்டு பொருள்கள் இணைக்கப்படுமிடம்; கீல், மூட்டு; எலும்புப் பிணைப்பு; கணு, இலை அல்லது கிளை வளரும் தண்டின் பகுதி; மூட்டிணைப்பு, இரு கூறுகளின் செயற்கையான உறுதி இணைப்பு; இயக்கச் சந்து, வேண்டிய வழியில் மட்டும் இயங்கும்படியாக மூட்டப்பட்ட இணைப்பு; (மண்.) பெரும்பாறையில் பிளவு, வெடிப்பு; பொருளின் ஆக்கக்கூறு; தசைக் கண்டம், இறைச்சித் துண்டம்; *a.* கூட்டான; இணைந்த; ஒருங்கிணைவான; கூட்டுடைமையான; கூட்டுடைமையாளரான; ஈரிணைவான; பொதுவான, உடன்பங்காளியான; உடன்பங்கான, பொதுக் கூட்டான; *v.* பொருத்துக்களால் இணை; இடையே சாந்திட்டுப் பூசி இணை; இடம் நிரப்பி இணை; பலகைகளை இழைத்து ஒருசீராக்கிச் சேர்; கணுக்கணுவாகப் பிரி; கூறு கூறாகப் பிரி; (தொ.) during their joint lives, யாவரும் உயிரோடு இருக்கையில்; joint stock, பொதுமுதல், கூட்டுப் பங்கு, பங்குகளாகப் பிரிக்கப்பட்ட முதல்; out of joint, எலும்பு வகையில் மூட்டு நழுவிய; சீர்குலைந்த; put one's nose out of joint, காதல் இடம் கவர்ந்து கொண்டுவிடு; நட்பிடம் கவர்ந்து கொண்டுவிடு; மனங் குலைவுறச் செய்; தோல்வியுறச் செய்.

**join'ter**, *n.* பொருத்துபவர், இணைப்பவர்; இழைப்புளி; கொல்லறு, சந்து பிசைவதற்கான கொத்தன் கருவி; மின் கம்பிகளை இணைக்கும் வேலையில் அமர்த்தப்பட்டுள்ள ஆள்.

**join'tress**, *n.* கைம்மை காப்பீட்டுப் பொருள் உடைய கைம் பெண்.

**joint'-stock company**, *n.* கூட்டுப் பங்குக் கழகம்.

**joint'-stool**, *n.* தச்சரால் பொருத்தப்பட்ட பாகங்களாலான மணை.

**join'ture**, *n.* கைம்பெண் நிலையடைந்தால் காப்பதற்கென மணவிக்கு விடப்பட்டுள்ள சொத்து; *v.* மணவி கைம்மை காப்புப் பொருள் அடையுமாறு ஏற்பாடுசெய்.

**joist**, *n.* திராவி, துலாக்கட்டை, மரவாரை, சுவருக்குச்சுவராக இடும் தளக் குறுக்குக்கட்டை.

**joke**, *n.* கேலி, விகடம்; வேடிக்கைப் பேச்சு; விளையாட்டுத் தனமான செய்தி; ஏளனத்துக்குரிய நிலை; *v.* பகடிபண்ணு, கேலி செய்; ஏளனஞ் செய்; (தொ.) it is no joke, முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டிய செய்தி; practical joke, ஒருவரைக் கேலிக்கு உட்படுத்தும் குறும்புச்செயல்.

**jok'er**, *n.* கேலிசெய்பவர், பகடி பண்ணுகிறவர்; வேழம்பர்; சீட்டாட்ட வகையில் மிகவுயர்ந்த துருப்பாகக் கருதப்படும் ஒற்றை வெற்றுச்சீட்டு.

**jo'kul**, ***jo'kull***, *n.* ஐஸ்லாந்திலுள்ள பனிமலை.

**joll'ify**, *v.* மகிழ்ச்சியோடிரு, உல்லாசமாயிரு; அடிக்கடி மதுபானஞ் செய்; குடியருந்துவி; மகிழ்வோடிருக்கச் செய்.

**joll'ity**, *n.* விளையாட்டயர்வு, மகிழ்ச்சிக் கொண்டாட்டம்.

**joll'y**, *n.* கப்பலிலுள்ள சிறு படகுவகை; கடற்படை வீரன்; கழிமகிழ்வாட்டம்; *a.* கழிமகிழ்வான; மிக்க மகிழ்ச்சி தருகிற; சிறிது குடிபோதையிலிருக்கிற; கொண்டாட்டமான; (பே-வ.) மிக இன்பமான, களி கிளர்ச்சியான; *v.* (பே-வ.) புகழ்ந்து பசப்பு, கெஞ்சு; கேலிபண்ணு, ஏளனம் செய்; *adv.* (பே-வ.) மிக; (தொ.) the jolly god, கிரேக்க மதுக்கடவுள்.

**joll'y-boat**, *n.* கப்பலில் உள்ள சிறு படகு வகை.

**jolt**, *n.* தூக்கியெறிவு; இருப்பூர்தியின் குலுக்காட்டம்; *v.* குலுக்கு, திடீர் விசையுடன் தூக்கியெறி; வண்டி வகையில் கடக்குக் கடக்கென்று ஆட்டங்கொண்டு செல்.

**jol'terhead**, *n.* பெரிய அருவருப்பான மண்டை; அறிவற்றவன்.

**Jon'ah**, *n.* அவக்கேடு கொண்டுவருபவர்; கேட்டைக் கொண்டுவந்து விடுவாரே என்பதற்காகப் பலியிடப்பெறுபவர்.

**Jon'athan**, *n.* அமெரிக்க குடிமக்களின் உருமாதிரி, அமெரிக்க மக்களினம்; உணவின்பின் அருந்துவதற்குரிய ஆப்பிள் பழவகை; (தொ.) Brother Jonathan, அமெரிக்க மக்களின் உருமாதிரி, அமெரிக்க மக்கள் வகுப்பு.

***jongleur***, (பிர.) *n.* (வர.) பாணன், இடத்துக்கிடம் திரிந்து செல்லும் பாடகன், நாடோடிப் பாடகன்.

**jonq'uil**, *n.* நாணல் போன்ற இலைகளையுடைய தாழைவகை; தாழை வகையின் நிறம்; இளமஞ்சள் வண்ணம்.

**jord'an**, *n.* சிறுநீர்க்கலம்.

**Jord'an alm'ond**, *n.* தெற்கு ஸ்பெயினிலுள்ள மலாகா (Malaga) என்னும் துறைமுகப்பட்டினத்திலிருந்து கிடைக்கும் நேர்த்தியான வாதுமை வகை.

**jor'um**, *n.* பெரிய குடிகலம்; பெரிய குடிகலத்திலுள்ள பான வகை.

**Jos'eph**[1], *n.* தூய மனிதன்.

**jos'eph**[2], *n.* 18-ஆம் நூற்றாண்டில் பெண்கள் அணிந்துவந்த நீண்ட குதிரையேற்ற அங்கி.

**joss**, *n.* சீன வழிபாட்டுச் சிலை உரு.

**joss'-house**, *n.* சீனக்கோயில்.

**joss'-stick**, *n.* சமித்துப் பிசின்கட்டை, சீனர் தங்கள் கடவுளர்களுக்குத் தூபமிடுவதற்காக எரிக்கும் பிசின்தடவிய குச்சி வகை.

**jo'stle**, *n.* நெருக்கடிப்பு; நேரடிமோதல்; *v.* நெருக்கித் தள்ளு, முட்டி மோது; பிடித்துப்பறிக்கப் பூசலிடு; நெருக்கு, முழங்கையினால் இடித்துத்தள்ளு.

**jot**, *n.* புள்ளியளவு, அணு; சிறிது, அற்பம்; *v.* அவசரமாக எழுதிக்கொள், சுருக்கக் குறிப்பெடு.

**joule**, *n.* (மின்.) வேலை ஊக்க ஆற்றலின் அலகு.

**jounce**, *v.* மேல்விழுந்து மோது, துள்ளிக்குதி.

**journ'al**[1], *n.* நாட்குறிப்புச் சுவடி; அன்றாட நடப்புக் குறிப்பு; தொழிற்கணக்கு முறையில் நாளேடு; செய்தித்தாள், பத்திரிகை; (கப்.) குறிப்புப் புத்தகம்; (தொ.) the Journals, பாராளுமன்ற அன்றாட நடவடிக்கைக் குறிப்புக்கள்.

**journ'al**[2], *n.* இருசுக்கடை, தேய்வுருளைகளுடன் இணையும் ஊடச்சின் பகுதி.

**journalese'**, *n.* பத்திரிகைகளுக்குரிய எழுத்துநடை; கீழ்த் தரப் பத்திரிகைகளின் நடை; ஆய்வமைவற்ற அவசரப் பத்திரிகை நடை.

**journ'alist**, *n.* இதழாசிரியர்; பத்திரிகை எழுத்தாளர்.

**journ'alize**, *v.* நாளேட்டிற் பதிவுசெய்; நாட்குறிப்பேடு பேணு; நாட்குறிப்பேட்டிற் பதிவுசெய்.

**journ'ey**, *n.* சிறுதொலைப் பயணம், பயண அளவு; பயணம்; சுற்றுப்பயணம்; தரைச்செலவு; *pl.* jour'neys; *v.* பயணஞ் செய்.

**journ'eyman**, *n.* மற்றொருவருக்காக வேலை செய்யுங் கலைத் தொழிலாளர்; மற்றொருவருக்காக வேலைசெய்யும் பொறித் தொழிலாளர்; நாள் வேலையாள்; கூலியாள்; கூலிக்கு உழைப்பவர்; பயிற்சிப்பருவ முடித்துவிட்ட தொழிலாளி; மின்னியக்கத் தொடர்புடைய கடிகார முகப்பு; வானாராய்ச்சி நிலையத்தில் துணைமணிப்பொறி.

**journ'eyman clock**, *n.* வானாராய்ச்சி நிலையத்தில் துணை மணிப்பொறி.

**journ'ey-work**, *n.* கூலியாள் வேலை.

**joust**, *n.* திருத்தகை வீரர் குதிரைமீதிவர்ந்து செய்யும் ஈட்டிப் போர்; *v.* குதிரைமீதேறி ஈட்டிப் போர்செய்.

**Jove**, *n.* ஜூபிட்டர் என்ற பண்டை ரோமாபுரிப் பெருந் தெய்வம்; (தொ.) by Jove! கடவுள் ஆணையாக!

**jov'ial**, *a.* களிப்பான, மகிழ்ச்சி விளைவிக்கிற; விருந்துக் கொண்டாட்டத்துக்குரிய.

**jovial'ity**, *n.* மகிழ்ச்சி.

**Jov'ian**, *a.* ரோமானியப் பெருந்தெய்வம் சார்ந்த; அத் தெய்வம் போன்ற; கோள்வகையில் வியாழன் சார்ந்த.

**jowl**, *n.* தாடை எலும்பு, தாடை; கன்னம்; முனைப்பு வெளிக்கழுத்து, முனைப்பான தொண்டை; கால்நடைகளின் அலைதாடி; பறவைகளின் முதல் இரைப்பை; மீன் வகைகளின் தலையும் அதையடுத்துள்ள பாகங்களும்; (தொ.) cheek by jowl, நெருக்கமாக, ஒன்றாக இணைந்து.

**joy**, *n.* மகிழ்ச்சி, களிப்பு; உவகையளிக்கும் செய்தி; *v.* (செய்.) மகிழ், களி; மகிழ்வூட்டு.

**joy'-bells**, *n.* கொண்டாட்டக் காலங்களில் அடிக்கப்படும் மணி.

**joy'-ride**, *n.* பொறிவண்டி இன்பச் சுற்றுலா; திருட்டுத்தனமாகக் கிட்டிய பொறிவண்டியில் இன்பப் பயணஞ் செய்தல்; *v.* இன்பப் பொறிவண்டியில் பயணஞ் செய், மற்றொருவர் வண்டியில் இன்பச் சுற்றுப் பயணம் நடத்து.

**jub'ilance**, *n.* பெருமகிழ்ச்சி; கிளர்ச்சியாரவாரம்.

**jub'ilant**, *a.* மகிழ்ச்சிகொண்டு ஆரவாரிக்கிற, நாவலிட்டார்ப்பரிக்கிற, விழாக்கொண்டாடுகிற.

***Jubilat'e***[1], (ல.) *n.* ஆங்கிலத்தோத்திரச் சுவடியில் நூறாவது பாசுரம்; நாவல் நாளோதை, வெற்றியார்ப்பரிப்பு.

**jub'ilate**[2], *v.* பெருமகிழ்ச்சி கொள், களிப்பாரவாரஞ் செய்.

**jub'ilee**, *n.* யூதர்களிடையே 50 ஆண்டுகட்கொருமுறை கொண்டாடப்பட்ட விடுதலை மீட்சி விழா; ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையின் பாவமன்னிப்புக்குரிய ஆண்டின் விழா; ஐம்பதாம் ஆண்டு நிறைவுவிழா; விழாக்காலம்; பெருமகிழ்ச்சிப் பருவம்; மீதூரும் மகிழ்ச்சி; (தொ.) diamond jubilee, அறுபதாவது ஆண்டு நிறைவுவிழா; Diamond Jubilee, பிரிட்டனை ஆண்ட விக்டோரியா அரசி ஆட்சியின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழா; silver jubilee, இருபத்தைந்தாம் ஆண்டு நிறைவு விழா.

**Juda'ic**, *a.* யூதர்களுக்குரிய.

**Jud'aism**, *n.* யூதர் வினைமுறைக் கோட்பாடுகளின் தொகுதி; யூதர் வினைமுறைகளைப் பின்பற்றுதல்.

**Jud'aize**, *v.* யூதர் பழக்கவழக்கச் சடங்குகளைக் கடைப்பிடி; யூதர் ஆக்கு.

**Jud'as**[1], *n.* இயேசுநாதரைக் காட்டிக்கொடுத்த சீடர்; காட்டிக் கொடுப்பவர், கருங்காலி.

**jud'as**[2], *n.* கதவினூடே மறைந்திருந்து பார்ப்பதற்கான சந்து.

**Jud'as-colour**, *n.* சிவப்பு நிறம்.

**Jud'as-coloured**, *a.* சிவப்பான.

**Jud'as-kiss**, *n.* அன்பு செய்வதுபோல் காட்டிக்கொடுக்கும் நயவஞ்சகச் செயல், நச்சுப்பாசப் பசப்பு.

**Jud'as-tree**, *n.* இலைகளுக்கு முன்பே தோன்றும் ஊதா மலர்களையுடைய மரவகை.

**judd'er**, *n.* பாடுபவர் குரல் எழுச்சி தாழ்ச்சியால் ஏற்படும் அதிர்வு மாருட்டம்; வானூர்தியில் ஏற்படும் அதிர்வலை.

***Jud'enhetze***, (செர்.) *n.* திட்டமிட்டு யூதர்களைத் தொல்லைக்கு உள்ளாக்குதல்.

**judge**, *n.* முறை முதல்வர், நீதிபதி; மீமிசை நடுவர்; கடவுள்; தீர்ப்பளிப்பவர்; நடுவர், நடுநிலைத் தீர்ப்பாளர்; நடுவணர், போட்டிகளில் தீர்ப்புச் செய்பவர்; சான்றாளர், போட்டிப் பரிசளிப்பவர்; மதிவலர், நலஞ்சீர்தூக்கி மதிப்பவர்; துறை வல்லுநர், தேர்வுணர்வாளர்; சான்றோர்; (வர.) யூதரிடையே படைத்துறை ஆட்சித்துறை அதிகாரங்களையுடைய மீநடுவர்; (வர.) யூதரிடையே ஜோஷுவா (Joshua) காலத்துக்கும் மன்னர்கள் காலத்துக்கும் இடைப்பட்ட ஊழியில் தலைமைப் பணி முதல்வர்; *v.* நீதிபதியாகப் பணிசெய்; கேள்வி முறை செய்; வழக்காராய், விசாரணை நடத்து; தீர்ப்பளி; தீர்ப்பாணை வழங்கு, தண்டனை விதி; வாத முடிவுசெய்; மதித்துணர், மதிப்பிடு; செய்திகளை ஒப்பிட்டு மதித்துரை; குணங்குறை தேர்ந்துரை; தேர்ந்து முடிவுபடுத்தும் அதிகாரம் மேற்கொள்; திறனாய்ந்துரை; குற்றங்காண்; கண்டித்துரை; கருது; முடிவான கருத்துக் கொள்; கருத்து முடிவுரை; நேர்மையான முடிபு கூறு; சட்டமுடிபு தெரிவி; நலந்தேர்ந்துரை; (தொ.) Judge Advocate General, படைத்துறை மன்றங்களின் மேலாண்மை வகிக்கும் உள்துறை அலுவலர்.

**judge'-made**, *a.* நடுவர்களால் இயற்றப்பட்ட, நீதிமன்றத் தீர்ப்பினால் தோற்றுவிக்கப்பட்ட; (தொ.) judge-made law, நடுவர்களின் தீர்ப்புக்களை அடிப்படையாகக்கொண்ட தத்துவம்.

**judgemat'ic, judgemat'ical**, *a.* (பே-வ.) ஆய்வறிவுடைய, பகுத்துணர்வுள்ள.

**judge'ment**, *n.* முறைமன்றத் தீர்ப்பு, விதிக்கப்பட்ட தண்டனை; கடவுள் சீற்றத்தின் அடையாளமெனக் கருதப்படும் பொல்லாங்கு; திறனாய்வு முடிவு; மதிப்பீடு; கருத்து; கண்டனம்; திறனாய்வுப் பண்பு; நுண்ணறிவாற்றல், பகுத்துணர்வு; (தொ.) judgement creditor, எதிர்த்தீர்ப்புப் பெற்ற கடன் கொடையாளர்; judgement debt, கொடுக்க வேண்டுமென்று தீர்ப்பான கடன்; judgement debtor, எதிர்த் தீர்ப்புப்பெற்ற கடனாளி; judgement summons, கொடுக்க வேண்டுமென்று தீர்ப்பான கடனைச் செலுத்தத் தவறியதன் பயனான அழைப்பாணை; the last judgement, கடைநாள் தீர்ப்பு.

**judge'ment-day**, *n.* ஊழிக்கடைத் தீர்ப்பு நாள், கடவுளின் இறுதித் தீர்ப்புநாள்.

**judge'ment-seat**, *n.* நீதிபதி இருக்கை; முறைமன்றத் தலைமை.

**Judg'es**, *n. pl.* (விவி.) பழைய ஏற்பாட்டின் ஏழாவது சுவடி.

**judg'ment**, *n.* = judgement.

**jud'icature**, *n.* நீதித்துறையாட்சி; நீதித்துறை; முறை நடுவர் பணி; நடுவர் பதவிக்காலம்; மொத்த நீதிபதிகளின் தொகுதி; முறைமன்றம்.

**judi'cial**, *a.* முறைமன்றம் சார்ந்த; நீதிமன்றத்தினால் செய்யப்பட்ட; நீதிமன்றத்துக்குகந்த; நிலவரச்சட்ட அமைப்புக்குரிய; சட்டத்தினால் நிலைபேறுக்கப்பட்ட; நீதிபதி சார்ந்த; நீதிபதிக்குகந்த; தீர்ப்புக்குரிய; தீர்ப்பினைத் தெரிவிக்கிற; தீர்ப்பாய்வுக் கடமையுடைய; நுண்ணாய்வுடைய; காய்தல் உவத்தலகற்றிய, நடுநிலையான, நடுநிலையுணர்வுடன் கூடிய; இறைவன் தீர்ப்புக்குரிய.

**judi'ciary**, *n.* நீதிநிலையத் துறை; நீதிமன்ற அமைப்பு; நாட்டின் நீதிபதிகள் அனைவரின் மொத்தத் தொகுதி; *a.* நீதிபதி சார்ந்த; நீதிமன்றத்துக்குரிய; தீர்ப்புக்குரிய.

**judi'cious**, *a.* நல்லறிவுடைய, முன்கவனமான, கூர்த்த மதியுடைய.

**ju'do**, *n.* ஜப்பானிய மற்போர் முறை.

**jug**[1], *n.* கூசா, கைப்பிடியும் மூக்கும் உடைய நீர்க்கலம்; *v.* சாடியிலிட்டுப் புழுக்கு, முயல் முதலியவற்றைக் கூசாவினுள்ளிட்டு வேகவை.

**jug**[2], *n.* பறவை வகைகள் எழுப்பும் ஒலி; *v.* பறவை வகைகளின் அகவொலியெழுப்பு.

**jug'ate**, *a.* (தாவ.) சிற்றிலையுறுப்புக்களை இரட்டைகளாகவுடைய.

**Jugg'ernaut**, (ச.) *n.* பூரிசகநாதம் என்னும் இடத்தில் கண்ணன் திருவுரு ஊர்வலமாக எடுத்துச்செல்லப்படுவதற்குரிய பெரிய தேர்; மூடபக்திக்கிரையாகி மக்கள் தம்மைப் பலிகொடுத்தழியும் இடம்; மக்கட்பலி ஏற்கும் பண்பு; மக்கட் பலிகொள்ளும் அமைப்பு; (தொ.) Juggernaut car, பூரிசகநாதத் தேர்; மக்கள் குருட்டுப்பக்தி காரணமாகத் தாமே வந்து பலியாவதற்குரிய அமைப்பு.

**jug'gle**, *n.* எத்துமானம், ஏமாற்று; *v.* பொறித்தட்டு வித்தைகள் செய்; வஞ்சி, ஏமாற்று; மோசஞ் செய்; செய்திகளைத் திரித்துக்கூறு; ஏமாற்று வித்தையினால் தட்டிப்பறி; பொறித்தட்டு வித்தையினால் மாருட்டஞ் செய்; சூழ்ச்சி முறையால் தட்டிச்செல்.

**jugg'ler**, *n.* செப்படி வித்தைக்காரர்; பொறித்தட்டாளர்; ஏமாற்றுக்காரர், எத்தர்; ஆள்மாருட்டஞ் செய்பவர்.

**jugg'lery**, *n.* செப்படி வித்தை; ஏமாற்று, புரட்டு, மோசடி.

**jug'-jug'**, *n.* பாடும் பறவை எழுப்பும் மெல்லிய அகவொலி.

**Jug'oslav**, *n.*=Yugoslav.

**jug'ular**, *n.* கழுத்துப் பெருநரம்பு; *a.* கழுத்து அல்லது தொண்டை சார்ந்த; மீன் வகையில் நெஞ்சுத் துடுப்புக்களுக்கு முன்னால் வயிற்றுத் துடுப்புக்களையுடைய.

**jug'ulate**, *v.* கொல்; கழுத்தை நெரித்துக் கொலைசெய்; ஆற்றல் மிக்க மருந்தால் நோய்க் காலத்தைக் கட்டுப்படுத்து.

**juice**, *n.* சாறு; சத்து; உயிர்க்கூறு; விலங்குடம்பின் நீர்க்கூறு; (தொ.) the juices, உடம்பின் நீர்க்கூறுகள், தாதுக்கள்.

**jui'cy**, *a.* நிரம்பச் சாறுள்ள, கனிந்த; வானிலை வகையில் ஈரமான, மழையான; (பே-வ.) அறிவுவளமுடைய; சுவையான; கவர்ச்சியாற்றலுள்ள.

***ju-ju***, (பிர.) *n.* மேற்கு ஆப்பிரிக்காவின் போலிவணக்கப் பொருள், தாயத்து; தாயத்தினால் விளைக்கப்படும் தடை.

**ju'jube**, *n.* இலந்தை மரவகை; இலந்தைவகைப்பழம்; சர்க்கரையும் ஊன்பசையும் கலந்து இலந்தைப்பழ உருவில் செய்யப்படும் மருந்துவில்லை.

**ju-jutsu'**, *n.* ஜப்பானிய மற்போர் முறை.

**juke'-box**, *n.* தானியல் இசைப்பெட்டி, நாணய வில்லை செருகப்பட்டால் குறிப்பிட்ட இசைத்தட்டுக்களைத் தானே இயக்கிப் பாடவைக்கும் இயந்திரம்.

**jul'ep**, *n.* இனிப்புப்பானம்; மருந்துக்குச் சுவையூட்டும் இன்குடிநீர்; குடிநீர் ஊக்குமருந்து; பனிக்கட்டி அல்லது மணப்பொருள் ஊட்டப்பட்ட நீர்ச்சாராயக் கலவை.

**Jul'ian**, *a.* ஜூலியஸ் சீசர் (Julius Caesar கி. மு. 100-44) என்ற ரோமாபுரிப் பேரரசுத் தலைவருக்குரிய; (தொ.) Julian calendar, ஜூலியஸ் சீசரால் நடைமுறைக்குக் கொணரப்பட்ட ஆண்டுப்பட்டி.

***julienne***, (பிர.) *n.* இறைச்சிச் சாறுடன் வேகவைக்கப்பட்ட காய்கறிக் குழம்பு.

**July'**, *n.* ஆங்கில ஆண்டின் ஏழாவது மாதம்.

**jum'bal, jum'ble**[1], *n.* மெல்லிய பொருபொருப்பான இனிப்புப் பண்ணிய வகைகள்.

**jum'ble**[2], *n.* பல்பொருள் கூட்டுக்குவியல், கும்பல் கூளம்; குழப்பநிலை, தாறுமாறான நிலை, அலங்கோலம்; குலுக்கீடு, கலைப்பு; *v.* கும்பல் கூளமாகத்திரட்டு; தாறுமாறாக்கல, அலங்கோலமாக்கு; ஒருங்குகூட்டிக் கலை, செப்பம் குலைவி; குழப்பு, கலைவுறு, கலந்துபோ.

**jum'ble-sale**, *n.* மலிவான பல்கூட்டுச் சரக்கு விற்பனை.

**jum'ble-shop**, *n.* பல்கூட்டுச் சரக்கு விற்பனைக்கடை.

**jum'bo**[1], *n.* பருத்த அருவருப்பான ஆள்; பருத்த அருவருப்பான விலங்கு; பருத்த அருவருப்பான பொருள்; குறிப்பிடத்தக்க அளவு பெருவெற்றி காண்பவர்; *pl.* jum'bos.

**Jum'bo**[2], *n.* லண்டன் நகர விலங்குக் காட்சிச்சாலையிலுள்ள பெயர்பெற்ற யானை.

**jump**, *n.* குதிப்பு; துள்ளல், எழும்புதல்; தாவல், தாண்டுதல்; குலுக்கம், திடீர் அசைவு; அதிர்ச்சி; கிளர்ச்சிக் குதியாட்டம்; திடீர் ஏற்றம், பெரும்படி உயர்வு; திடீர் மாறுபாடு; இடையறவு, தொடர்பறவு, இடைப்பிளவு; *v.* துள்ளிக்குதி; திடீரென எழும்பு; குலுங்கு, திடீர் அசைவுறு; அதிர்ச்சியினால் திடீரெனத் துள்ளு, கிளர்ச்சியினால் குலுக்குறு; விலை வகையில் திடுமென உயர்வுறு; தாவிக்குதி; தாவிமேற்குதி; தாண்டு, தாவிக்கடந்து செல்; படியாமலே விட்டு மேற்கடந்து செல்; மேற்போக்காகத் தொட்டுத் தடவிச்செல்; மற்றவர் அறியாமலே அவரை விஞ்சி மேற்செல்; இருப்பூர்தி வகையில் பாதையை விட்டு விலகிச்செல்; குழந்தையைக் குதிக்கவை; துள்ளவை; திடுக்கிடவை, திகைக்கச் செய்; திடீரெனப் பாய்ந்து பிடி; ஆவலுடன் கைப்பற்று; விட்டுச்சென்றதைத் தனதாக்கிக்கொள்; கைவிட்டதைத் திடுமெனக் கைக்கொள்; இடைவிட்டு விட்டுச்செல்; அவசர முடிவுக்கு வா; திடீரெனத்தாக்கு; திடீரென ஏற்றுக்கொள்; முற்றிலும் இசைவுறு; சரியொத்து உடம்படு; உருளைக்கிழங்கு முதலியவற்றை வாணலியிலிட்டுக் கிளறி வறு; நெட்டுளியால் பாறையைத் துளைசெய்; (தொ.) high jump, பயிற்சி விளையாட்டுப் போட்டி வகையில் உயர் குதிப்போட்டி; jump at, ஆவலுடன் ஒப்புக்கொள், விரைந்து ஏற்றுக்கொள்; jump down one's throat, கடுமையாகத் திட்டி விடையளி; கடுமையான வசையுடன் இடையீடு செய்; jump for joy, பெருமகிழ்ச்சியினால் துள்ளு, அடங்கா மகிழ்ச்சிகொள்; jump in, வண்டி முதலியவற்றில் விரைவாக ஏறு; jump on, jump upon, குற்றவாளி முதலியவர்களைச் சொல்லாலோ செயலாலோ பணியும்படி தாக்கு; jump out of one's skin, வியப்பினால் துள்ளு, திடீர் வியப்புறு; jump over the broomstick, கட்டுப்பாடின்றித் திருமணம் செய்துகொள்; jump the gun, பந்தயச் சமிக்கை வேட்டு வகையில் சரியான காலத்துக்குமுன்பே வெடி; உரிய பருவம் வருமுன் செயலாற்று; நேர்மையற்ற நலம்பெறு; jump the queue, உரிமையின்றி வரிசையில் இடம்பெறு; வரிசையில் முறைகடந்து முந்து; long jump, உடற்பயிற்சித்துறையில் நீளத்தாவும் போட்டி; the jumps, (பே-வ.) மயக்கவெறித் துடிப்பு.

**jum'per**[1], *n.* பாய்பவர், குதிப்பவர்; குதிப்பது; வேல்ஸ் நாட்டு மெதடிஸ்ட் (Welsh Methodist) திருச்சபையைச் சேர்ந்தவர்; தத்துப் பூச்சி வகை; பாய்மரக் குறுக்குச் சட்டங்களை இறுக்கிப்பிடிக்குங் கயிறு; பாறை துளைபோடுவதற்குப் பயன்படும் நெட்டுளி.

**jum'per**[2], *n.* கப்பலோட்டிகளின் தளர்த்தியான கித்தான் மேற்சட்டை; இடுப்பு வரையில் தொங்கும்படி மகளிர் அணியும் தளர்த்தியான மேற்சட்டை.

**jum'ping**, *a.* குதிக்கிற, தத்துகிற; (தொ.) jumping cat, பொதுமக்கள் கருத்து உருவாகிற வரையில் வாளா இருக்கிற அரசியல்வாதி.

**jump'ing-bean**, *n.* உள்ளிருக்கும் முட்டைப்புழுவின் செயலால் அசைகிற மெக்சிகோ நாட்டுச் செடி வகையின் விதை.

**jump'ing-deer**, *n.* கறுப்பு வாலுள்ள வட அமெரிக்க மான் வகை.

**junc'tion**, *n.* இணைப்பு; இணைப்பிடம்; இரு கிளையாறுகளின் கூடல்; இரு பாதைகள் சேருமிடம்; புகைவண்டிப் பாதைகளின் சந்திப்பு.

**junc'ture**, *n.* இணைவு; இணைபகுதி; கூடுமிடம்; வேளை, நிகழ்ச்சிகள் வந்துகூடும் நேரம்; தறுவாய், ஏல்வை, திருப்புக் கட்ட வேளை.

**June**, *n.* ஆங்கில ஆண்டின் ஆறுவது மாதம்.

**jun'gle**, (இ.) *n.* தூறு, புதர்க்காடு, குறுங்காடு; இறும்பு, அடர்ந்த வெப்பமண்டலக்காடு; (தொ.) jungle fever, கடுமையான மலைக்காய்ச்சல் வகை.

**jun'ior**, *n.* இளையோர்; இளமுறையோர்; இளம்படியினர்; பிந்தியவர்; பிற்பட்டவர்; பின்னால் வந்தவர்; சிறியவர்; *a.* இளைய; சின்ன; பிந்திய; குறைந்த நீடிப்புள்ள; தாழ்ந்த படியுடைய, கீழ்நிலையிலிருக்கிற.

**jun'iorate**, *n.* இயேசு சங்கத்தாரிடையே இளம்படியினர் சமயகுரு பதவியை ஏற்குமுன் மேற்கொள்ள வேண்டிய இரண்டாண்டுப் பயிற்சி.

**jun'iper**, *n.* உதிரா ஊசியிலைகளையுடைய புதர்ச்செடி வகை; (தொ.) common juniper, முள்ளிலைகளையும் கறுப்புப் பழங்களையுமுடைய புதர்ச்செடி வகை; oil of juniper, புதர்ச் செடி வகையின் பழங்களிலிருந்து செய்யப்பட்டு மருந்திலும் குடிவகையிலும் பயன்படும் எண்ணெய்.

**junk**[1], *n.* பழங்கயிற்றுத் துண்டுகள்; கழிக்கப்பட்ட பொருள், குப்பை கூளம்; மொத்தை, கட்டி, பருந்துண்டு; (கப்.) உப்புக்கண்டம்; கொழுப்புத்தரும் திமிங்கில வகையின் தலையில் மொத்தையாகக் காணப்படும் இழைமம்; *v.* துண்டுக் கயிறுகளாக வெட்டு.

**junk**[2], *n.* சீனக்கடல்களிற் செல்லுந் தட்டையான அடிப்பாக முடைய மரக்கல வகை.

**junk'er**, (செர்.) *n.* செர்மன் நாட்டு இளங்கோமகன்; பிரஷ்யாவில் (Prussia) தனி உரிமையுடைய உயர்குடியாட்சிக் கட்சியைச் சேர்ந்தவர்.

**junk'et**, *n.* மேலே பாலேடு கவித்த இனிப்பூட்டிய தயிர்ப் பண்ணியம்; விருந்து; *v.* விருந்தயர், மகிழ்வுலா விருந்து நுகர்.

**junk'eting**, *n.* மகிழ்வுலா விருந்து, நிலா விருந்து.

**junk'-shop**, *n.* கப்பற் பழங்கலப்பொருள்களின் பண்டகசாலை.

**Jun'o**, *n.* ஜூபிட்டர் என்னும் ரோமப் பெருந்தெய்வத்தின் மனைவி; வீறுர்ந்த அழகு வாய்ந்த பெண்; (வான்.) செவ்வாய்-வியாழன் ஆகிய கோள்களின் பாதைகளுக்கிடையே ஞாயிற்றினைச் சுற்றிச் சுழலும் சிறு கோள்களில் மூன்றுவதான கோள்; *pl.* Jun'os.

**jun'ta**, *n.* ஸ்பானிய அல்லது இத்தாலிய நாடுகளில் செயலாட்சிக்குழு அல்லது ஆய்வுக்குழு.

**jun'to**, *n.* உட்கட்சிக்குழு, குறுங்குழு; தன்னலக்கும்பல்; அரசியல் அல்லது வேறு நோக்கங்களுக்கான மறை சூழ்ச்சிக் கூட்டம்; *pl.* jun'tos.

***jupe***, (பிர.) *n.* மகளிர் பாவாடை.

**Ju'piter**, *n.* ரோமானியப் பெருந்தெய்வம்; வியாழக்கோள்; (தொ.) Jupiter Pluvius, ரோமர் மழைக்கடவுள்.

**jur'al**, *a.* சட்டம் பற்றிய, ஒழுக்கநல உரிமைகள் கடமைகள் சார்ந்த.

**Jurass'ic**, *a.* (மண்.) பிரஞ்சு நாட்டுக்கும் சுவிட்சர்லாந்துக்கும் இடையிலுள்ள ஜூரா (Jura) மலைகள் சார்ந்த; மணிச் சுண்ணக்கல் அடுக்குச் சார்ந்த.

**jur'at**, *n.* நகரத் தந்தையாரையொத்த நகராட்சி அலுவலர்; ஆங்கிலக் கடற்கால் தீவுகளில் (Channel Islands) உள்ள வாழ்நாள் குற்றநடுவர்.

**jurid'ical**, *a.* முறைமன்ற நடவடிக்கைகள் சார்ந்த; சட்டம் பற்றிய.

**jur'isconsult'**, *n.* சட்டம் படித்தவர், சட்ட அறிஞர், சட்ட வல்லுநர்.

**jurisdic'tion**, *n.* சட்ட ஆட்சி, சட்ட அதிகாரம், நீதியின் செயலாட்சி; சட்ட மேலுரிமை; சட்ட ஆட்சி எல்லை; சட்ட ஆட்சிப் பரப்பு; அதிகார எல்லை; விசாரணை அதிகாரம்.

**jurisprud'ence**, *n.* சட்ட இயல், மனித சமுதாயச் சட்டம் பற்றிய நூல்; சட்டத்துறை மெய்விளக்க இயல்; சட்டத் துறைக் கோட்பாடு; சட்டத்துறைத் திறமை.

**jurisprud'ent**, *n.* சட்ட வல்லுநர்; *a.* சட்ட அறிவார்ந்த.

**jurispruden'tial**, *a.* சட்ட இயல் சார்ந்த.

**jur'ist**, *n.* சட்ட வல்லுநர், சட்ட அறிஞர்; சட்டங்கள் பற்றி எழுதுபவர்; சட்ட மாணவர்; சட்டத்துறைப் பட்டதாரி.

**jur'or**, *n.* முறைகாண் ஆயத்தின் உறுப்பினர், அறங்கூறுநர்; சூளுறவு செய்பவர்.

**jur'y**, *n.* முறைகாண் ஆயம், அறங்கூறாயம், முறைமன்றத்தில் தங்களுக்கு முன் கூறப்பட்ட வழக்கில் முடிவு தெரிவிப்பதாக ஆணையிட்டமர்ந்திருப்பவர்கள்; பரிசாயம், போட்டிகளில் பரிசுகள் வழங்குவதற்குத் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள்; (தொ.) common jury, petty jury, trial jury, உரிமை அல்லது குற்றம் பற்றிய வழக்குகளில் நிகழ்வுபற்றிய முடிவான விவாதத்தை ஆய்ந்து ஒருமனதாகத் தீர்ப்புக்கூறும் 12 பேர் கொண்ட ஆயம்; coroner's jury, கொலைகளிலும் ஊறுடை இடர்களிலும் பிண ஆய்வு அதிகாரிக்குத் துணைபுரியும் முறைகாண் ஆயம்; grand jury, குற்றச்சாட்டுக்கள் முடிவான முறைகாண் ஆயத்துக்கு அனுப்பப்படுவதற்கு முன் அவற்றைப்பற்றி ஆய்வதற்கு அமர்விக்கப்படும் 12 பேர் முதல் 23 பேர் வரையில் கொண்ட குழு; jury of matrons, (சட்.) ஒருத்தி கருவுற்றிருப்பதைக்குறித்து முடிவுகூற முன்னாட்களில் அமர்த்தப்பட்ட பெண்கள் கொண்ட முறைகாண் ஆயம்; special jury, சமுதாயத்தில் குறிப்பிட்ட நிலை எய்தியுள்ளவர்கள் கொண்ட முறைகாண் ஆயம்.

**jur'y-box**, *n.* நீதிமன்றத்தில் முறைகாண் ஆயத்தினர் அமரும் தனியிடம்.

**jur'yman**, *n.* முறைகாண் ஆயத்தின் உறுப்பினரான ஆடவர்.

**jur'y-mast**, *n.* ஒடிந்துபோன அல்லது கெட்டுப்போன பாய் மரத்துக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் தற்காலிகப் பாய்மரம்.

**jur'ywoman**, *n.* முறைகாண் ஆயத்தின் உறுப்பினரான மாது.

**juss'ive**, *a.* (இலக்.) வியங்கோளான, கட்டளை காட்டுகிற.

**just**[1], *n., v.* = joust.

**just**[2], *a.* நடத்தை வகையில் நேர்மையான, முறைதவறாத; கொடை-தீர்ப்பு முதலியவற்றின் வகையில் நடுநிலை கோடாத; உரிமை வகையில் நியாயமான, நேரிய; அளவு வகையில் சரியான; பரிசு வகையில் பெறுந்தகுதியுடைய; கருத்து வகையில் நல்ல ஆதாரமுடைய; உணர்ச்சி வகையில் ஒப்புரவார்ந்த; *adv.* சரியாக, துளிகூடப் பிசகாமல்; அப்படியே; கணக்காக, கணக்கான நேரத்தில்; இப்போதுதான்; போதும் போதாததாக, சற்றுக்குறைந்த நிலையிலேயே; (பே-வ.) உறுதியாக, முற்றிலும்; (தொ.) just now, இப்போதுதான், இந்தக்கணத்தில்; சற்றுமுன்.

**jus'tice**, *n.* நேர்மை, முறைமை, நீதி; முறைதவறா நடத்தை; நடுநிலை, ஒருசார்பின்மை; ஒப்புரவு; நேரிய செயலாட்சி, உரிமை காப்பதில் அதிகாரம் செலுத்தல்; நீதிமன்ற நடவடிக்கைத்துறை; உயர்நீதிமன்ற நீதிபதி; குற்றநடுவர்; (தொ.) do justice to, நேர்மை காட்டு; தக்கவாறு பாராட்டு; do oneself justice, திறமைக்குத் தக்கவாறு செயலாற்று; Justice of the Peace, அமைதிகாவல் நடுவர், நாட்டின் அமைதி காப்பதற்கென நியமிக்கப்படும் பொதுநிலைக் குற்றநடுவர்; poetic justice, கவிதை நேர்மை, இலட்சிய நியாயம்.

**justi'ciable**, *n.* மற்றொருவருடைய விசாரணை அதிகாரத்துக்கு உட்பட்டவர்; *a.* நீதிமன்ற விசாரணைக்குட்பட்ட.

justi'ciar, *n.* (வர.) பிரிட்டனில் நார்மன் அரசர்கள் காலத்திலும் அவர்களுக்குப் பின்னர் 13-ஆம் நூற்றுண்டுவரை ஆண்ட அரசர்கள் காலத்திலும் இருந்த முதன்மையான அரசியல்-நீதித்தலைமை அலுவலர்.

justi'ciary, *n.* நீதித்துறையாட்சி செலுத்துபவர் ; *a.* நீதித்துறை ஆட்சிமுறைபற்றிய.

jus'tifiable, *a.* நேர்மையென எண்பிக்கப்படத்தக்க, சரியென ஆதரிக்கப்படத்தக்க.

justifica'tion, *n.* எண்பிப்பு ; சரியென நிறுவுகை ; உரிமை மெய்ப்பிப்பு ; நேர்மை எனக் காட்டுதற்குரிய அடிப்படை நியாயம்; பாவமன்னிப்பு; உரிமைக்காப்பு விளக்கம், போதிய காரணமிருக்கிறதென்னும் வாதம்.

jus'tify, *v.* எண்பி, நிறுவு ; நேர்மையென விளக்கு, சரியெனக் காட்டு ; உரிமை மெய்ப்பி, உரிமைக்கு ஆதரவளி ; நிகழ்ச்சிகள் வகையில் சரியானவையெனச் சொல்லத்தக்கவையாயிரு ; நடத்தை-உரிமை முதலியவற்றின் வகையில் போதிய காரணங்கள் காட்டு ; சமய சித்தாந்தத்துறையில் குற்றம் அல்லது பழியை மன்னித்து விடு ; இறையருளின் பாற்படுத்துக் கழுவாய் செய்துவிடு ; அச்சுத்துறையில் வரியைச் சரிக்கட்டு ; (தொ.) justify bail, (சட்.) போதிய உடைமையிருக்கிறதென ஆணையிட்டுக்கூறிப் பிணையமாகத் தகுதி பெற்றவரெனக் காட்டு.

jut, *n.* புடைப்பு, முனைப்பு, உந்தல், பிதுக்கம், பிதுங்குமுனை ; பீற்றியக்கம் ; *v.* உந்து, முனைப்பாக இரு, புறந்துருத்து.

Jute[1], *n.* ஐந்தாம் ஆறும் நூற்றுண்டுகளில் இங்கிலாந்துமீது படையெடுத்த செர்மன் இனத்தவரில் ஒருவர் ; செர்மன் தாழ்நிலை (Low German) மக்கள் குழுவினம்.

jute[2], *n.* சணற்பயிர் ; சணல்நார் ; சணல்.

juvenes'cence, *n.* இளமைவாயிற் பருவம், பிள்ளைமையிலிருந்து இளமைக்கு மாறும் இடைவளர்ச்சிப் பருவம்.

juvenes'cent, *a.* இளமையணித்தான, மிக்கிளம் பருவத்திய.

juv'enile, *n.* இளைஞர், இளமைப்பருவத்தினர் ; *a.* இளமையான ; இளமைப் பருவஞ் சார்ந்த ; இளைஞருக்குரிய ; இளமைப் பருவத்துக்குச் சிறப்பியல்பான ; (தொ.) juvenile court, (சட்.) இளங்குற்றவாளிகள் பற்றிய வழக்குகளை ஆய்வதற்கென்றே அமைக்கப்பட்ட முறைமன்றம் ; juvenile offender, இளங்குற்றவாளி.

juv'eniles, *n. pl.* (பே-வ.) இளைஞர்க்குரிய ஏடுகள்.

juvenil'ia, *n. pl.* ஆசிரியரது இளமைப்பருவத்து நூல்கள்.

juxtapose', *v.* பொருள்கள் வகையில் அடுத்தடுத்து வை.

juxtaposi'tion, *n.* அடுத்தடுத்து வைத்தல் ; அடுத்தடுத்து வைக்கப்பெறுதல் ; பக்க அணிமைநிலை.

**Kaa'ma**, *n.* தென் ஆப்பிரிக்க மான்வகை.

**kabb'alah**, *n.*=cabbala.

**kabuki'**, *n.* பண்டைய ஜப்பானிய வரலாற்று இசை நாடக வடிவம்.

**Kabyle'**, *n.* பெர்பெரி (Berbery) பழங்காலக் குடிகள் உட்படத் தொடர்பான மொழிகள் பேசும் வட ஆப்பிரிக்க இனத்து உறுப்பினர்; பெர்பெரி மொழி.

***kadd'ish***, *n.* யூதரின் துயர்க்கொண்டாட்ட வழிபாடு; யூதத் திருக்கோயில் வழிபாட்டுரைக்கீதம்.

**kad'i**, *n.*=*cadi*.

**Kaff'ir, Kaf'ir**, *n.* தென் ஆப்பிரிக்க பண்டு (Bantu) இனம் சேர்ந்தவர்; ஆசியாவிலுள்ள காப்பிரிஸ்தான் (Kafiristan) சார்ந்தவர்.

**Kaff'irs**, *n. pl.* தென் ஆப்பிரிக்க சுரங்கங்களின் பங்குகள்.

***ka'go***, (ஜப்.) *n.* ஜப்பானிய பல்லக்கு வகை.

**kail**, *n.*=kale.

**kail'yard**, *n.*=kaleyard.

**kain'it, kain'ite**, *n.* செயற்கை உரமாகப் பயன்படும் வேதிப் பொருள் கலவைவகை.

**kai'ser**, *n.* (வர.) பேரரசர்; செர்மன் நாட்டுப் பேரரசர்; ஆஸ்திரியநாட்டுப் பேரரசர்; புனித ரோமப் பேரரசுத் தலைவர்.

***kaja'wah***, (பெர்.) *n.* மகளிர்க்குரிய ஒட்டக அம்பாரி.

**ka'ka**, *n.* நியூசிலாந்து நாட்டுக் கிளிவகை.

**ka'kapo**, *n.* நியூசிலாந்து நாட்டில் ஆந்தைபோல் இரவில் இயங்கும் கிளிவகை.

**kakemon'o**, *n.* ஜப்பானிய சுவர்ப்படம்.

**kala-azar'**, *n.* கீழ்த்திசை வெப்பமண்டலக் கடுங்கொள்ளை நோய்வகை.

**kale**, *n.* சுருண்ட இலைகளுடைய கோசுக்கீரை வகை; (தொ.) Scotch kale, ஊதாநிற இலைகளையுடைய கோசுக்கீரை வகை; ஊதாநிறக் கோசுக்கீரை அல்லது காய்கறியால் செய்யப்படும் குழம்பு வகை.

**kaleid'oscope**, *n.* பல்வண்ணக்காட்சிக் கருவி; அடிக்கடி மாறுபடும் படிவத்தொகுதி.

**kaleidoscop'ic, kaleidoscop'ical**, *a.* பல்வண்ணக் காட்சிக்கருவி சார்ந்த; பல்வண்ணக்காட்சிக் கருவிபோன்ற; பல்வண்ணமுடைய, அடிக்கடி வண்ண வடிவ மாறுதலுடைய.

**kal'ends**, *n. pl.*=calends.

**kale'yard**, *n.* காய்கறித் தோட்டம், அடுக்களை அடுத்த தோட்டம்; (தொ.) kaleyard school, கதைகளில் ஸ்காத்லாந்து பொதுமக்கள் வாழ்க்கை வருணனையையும் பேச்சுமொழியையும் தாராளமாகப் பயன்படுத்தும் எழுத்தாளர் குழு.

**kal'i**[1], *n.* தாழை, முன்பு சாம்பல்மூலம் காரவகைகள் செய்வதற்குப் பயன்பட்ட சதுப்புநிலச் செடிவகை.

**Ka'li**[2], (த.) *n.* காளி, கொற்றவை, துர்க்கை.

***kalian'***, (பெர்.) *n.* தனிவடிவமைப்புடைய பாரசீக நாட்டுப் புகைக்குழாய்வகை.

**Kalin'ga prize**, *n.* ஐக்கியநாடுகள் கல்வி விஞ்ஞானப் பண்பாட்டுக்கழகத்தில் பாட்னேயிக் (B. Patnaik) என்பவரால் 1951-இல் நிறுவப்பட்ட விஞ்ஞானத்துறை மக்கள் இலக்கியப் பரிசு.

***kalioun'***, (பெர்.) *n.*=*kalian*.

**Kal'muck, Kal'myk**, *n.* காஸ்பியன் (Caspian) பகுதிகளில் வாழும் மங்கோலிய இனத்தினர்; மங்கோலிய இனத்தினரின் மொழிவகை; *a.* மங்கோலிய இனத்தினரின் மொழிவகை சார்ந்த.

**ka'long**, (மலாய்) *n.* மலேயாநாட்டுப் பழந்தின்னி வௌவால் வகை.

***kal'pa***, (ச.) *n.* கற்பம், நான்முகன் நாள் (432 கோடி ஆண்டுகள்).

***kamerad'***, (செர்.) *v.* சரணடை; *int.* சரண்புகவரும் செர்மானிய இராணுவ வீரர் கூறுஞ் சொற்றொடர்.

***ka'mi***, (ஜப்.) *n.* ஜப்பானிய மாகாணத்தலைவரின் விருதுப் பெயர்; ஜப்பானிய தெய்வம்.

**kamika'ze**, *n. pl.* தற்கொலைப்பாங்கான தாக்குதலில் ஈடுபடும் ஜப்பானிய விமானிகள்; தற்கொலைப்பாங்கான போர்முறை.

**kamptul'icon**, *n.* தரைவிரிப்புத் துணிவகை, ரப்பர் ஒருவகைப்பிசின் தக்கை நெட்டி இவற்றின் கலவை மேல்பூசப்பட்ட இரட்டுத்துணி வகை; தொய்வகம் பிசின் கட்டை நெட்டி ஆகியவற்றாலான தள விரிப்பு இரட்டு.

**kan'aka**, *n.* தென்கடல்தீவு வாணர், ஆஸ்திரேலிய மாநிலத்தில் முன்பு குவின்ஸ்லாந்து (Queensland) வட்டாரத்தில் கரும்புத்தோட்டத் தொழிலாளியாகச் சேவைசெய்து வந்துள்ள தென்கடல்தீவு வாசி.

**Kanarese'**, *n.* கன்னட நாட்டவர்; கன்னட மொழி.

**kangaroo'**, *n.* பைம்மா, கங்காரு, ஆஸ்திரேலியா மாநிலத்தில் குட்டியினை வைத்துக்கொள்ளக்கூடிய வயிற்றுப் பையையுடைய விலங்குவகை; (தொ.) kangaroo bicycle, சரிந்த பின்பகுதி கொண்ட பாதுகாப்பான மிதிவண்டி; kangaroo closure, மன்றக் கூட்டங்களில் அவைத்தலைவர் சில திருத்தங்களை விவாதத்திற்கு எடுத்துக்கொண்டு பிறவற்றைத் தள்ளிவிடும் முறை.

***kanoon'***, (பெர்.) *n.* ஐம்பது முதல் அறுபது நரம்புகளைக் கொண்ட யாழ்வகை.

**Kan'tian**, *a.* காண்ட் (Immanuel Kant) என்ற செர்மானிய நாட்டுத் தத்துவ அறிஞருக்குரிய.

**ka'olin**, *n.* பீங்கான் செய்யும் மென்மையான வெண்ணிறக் களிமண்வகை.

***kapell'meister***, (செர்.) *n.* இசைக்குழு இசைநாடகம் பாடகர் தொகுதி முதலியவற்றை இயக்குபவர்; (தொ.) *kapellmeister music*, எழுச்சியற்ற பொதுநிலைப்பாணி இசை.

**ka'pok**, (மலாய்.) *n.* இலவம்பஞ்சு, மிகச்சிறந்த மென்மையான பஞ்சுவகை.

**kapp'a**, *n.* K என்னும் கிரேக்க எழுத்து.

**Ka'raite**, *n.* திருநூல்களின் சொற்களுக்கு நேரிடையான பொருள் கொள்ளும் கிரிமியா (Crimea) என்ற ருசிய நாட்டுப் பகுதியிலுள்ள யூதமரபுக் கிளையினர்.

**karm'a**, (ச.) *n.* கர்மம், முன்வினைப் பயன்.

**karoo', karroo'**, *n.* தென் ஆப்பிரிக்காவிலுள்ள உயர்ந்த களிமண் மேட்டு நிலம்.

**kaross'**, *n.* தென் ஆப்பிரிக்க தொல்பழங்குடியினர் வழங்கும் மயிர் நீக்கப்படா விலங்குத்தோல் ஆடை.

**kart'el**, *n.* தென் ஆப்பிரிக்க எருதுவண்டிகளிலுள்ள மரப் படுக்கை.

**kartell'**, *n.*=cartel.

**katabat'ic**, *a.* (வான்.) கீழ்நோக்கிப் பாயும் கால்வளியால் இயக்கப்படுகிற.

**katab'olism**, *n.* (உயி.) ஊன்மச் சிதைவு, உயிர்ச்சத்தின் கட்டழிவு.

**katathermom'eter**, *n.* காற்றின் குளிர்ச்சியுறும் ஆற்றலை அளப்பதற்குரிய வெறியச் சத்தடங்கிய வெப்பமானி.

**kath'ode**, *n.*=cathode.

**kat'ydid**, *n.* பெரிய பச்சைநிற அமெரிக்க வண்டினம்.

**kaur'i**, *n.* நியூசிலாந்திலுள்ள நறுமணப் பிசின் தரும் ஊசியிலை மரவகை.

**ka'va**, *n.* சிறுநீர்ப்போக்கினைத் தூண்டும் மருந்தாகப் பயன்படும் வேரையுடைய புதர்ச்செடி வகை; சிறுநீர்ப்போக்கு மிகுவிக்கும் மருந்துவேர்.

**kavass'**, (துரு.) *n.* துருக்கியில் போர்க்கருவிகள் தாங்கிய காவலர் ; பணியாள் ; விரைதூதர்.

**kay'ak**, *n.* பனிக்கடற் படகு, வட துருவ எஸ்கிமோக்கள் பயன்படுத்தும் பளுவற்ற கடல்நாய்த் தோலினால் மூடப்பட்ட படகு.

**ke'a**, *n.* ஆடுகொல்லி கிளி, ஆடுகளைக்கொன்று பிட்டக் கொழுப்புண்ணும் நியூசிலாந்திலுள்ள கொடிய பச்சைக்கிளி வகை.

**keck**, *v.* குமட்டொலி எழுப்பு ; (தொ.) keck at, கண்டதும் குமட்டலுணர்ச்சி எய்தப்பெறு.

**kedge**[1], *n.* கப்பலை நிலைபெயரச் செய்வதற்கான சிறு நங்கூரம்; *v.* நங்கூரக் கயிற்றினால் கப்பலினை நிலைபெயரச் செய் அல்லது கப்பலை அசைந்து நகரச்செய்.

**kedg'eree**, (இ.) *n.* கிச்சடி, சோறு வெங்காயம் பருப்பு முட்டை முதலியவை சேர்ந்த இந்திய உணவுவகை; மீன் சோறு முட்டை கலந்த ஐரோப்பிய உணவு வகை.

**keel**[1], *n.* கப்பலின் அடிக்கட்டை; இரும்பு அடிக்கட்டைப் பாளம்; (செய்.) கப்பல் ; *v.* கப்பலின் அடிப்புறம் மேலாகும்படி தலைகீழாக்கு, கப்பலைக் கவிழ் ; (தொ.) false keel, கப்பலின் அடிக்கட்டையினைப் பாதுகாப்பதற்காக மேலிணைக்கப்பட்ட கட்டை.

**keel**[2], *n.* அடித்தட்டைக்கலம், அடிப்புறம் தட்டையாயுள்ள நிலக்கரிக்கப்பல்; அடித்தட்டைக்கலம் எடுத்துச்செல்லும் நிலக்கரி அளவு.

**keel'-blocks**, *n.* கட்டுமானத் தளத்தில் அடிக்கட்டையின் அண்டைக்கட்டு.

**keel'-haul**, *v.* ஆள்வகையில் தண்டனையாகக் கப்பலடிக் கட்டையடியினூடாகக் கட்டியிழு; மிகக் கடுமையாக நடத்து.

**keel'son**, *n.* = kelson.

**keen**[1], *n.* அழுகையுடன்கூடிய அயர்லாந்து நாட்டு இழவுப் பாடல் ; *v.* அழுதரற்றிக்கொண்டே இழவுப்பாடல் பாடு, ஒப்பாரி வை.

**keen**[2], *a.* கூரிய ; ஆர்வமிக்க ; கருவிவகையில் கூர்முனையுள்ள ; ஒளிவகையில் ஊடுருவுகிற ; ஒலி வகையில் காதைத் துளைக்கிற ; உரத்த ; குளிர்வகையில் உறைப்பான ; நோவு வகையில் கடுமையான ; கூருணர்ச்சியுடைய ; நுண்ணுணர்வுடைய ; முனைத்த சுவையுடைய ; கூரறிவுடைய.

**keen'-set**, *a.* பசியார்ந்த ; விருப்பார்வமுள்ள.

**keep**, *n.* காவற்கூண்டு, கோட்டைக்கோபுரம் ; கோட்டை, அரண்காப்புடைய இடம் ; பாதுகாப்பு ; பராமரிப்புக்குரிய உணவு ; *v.* வை, வைத்திரு ; மறைத்து வை, அடக்கி வை ; தனக்கென வைத்துக்கொள் ; பேணி வை, பேணிக் காத்துக்கொள் ; உடைமையாக வைத்துக்கொள் ; இழவாது வைத்திரு; பிற்றைநாளைக்கென்று சேமித்து வை ; ஒழுங்கு பேணு ; பொறுப்பு மேற்கொண்டு நடத்து ; நிர்வகி, வைத்து நடத்து; கணக்குப்பதிவு செய்து ஒழுங்காகப்பேணு ; கணக்குவைத்துப் பேணு ; வைத்தாதரி; வைப்பாகக் கொண்டு பேணு ; விடாது தொடர்வி ; மாறுது நீடித்துத் தொடர்வி ; தொடர்ந்திரு ; விடாது தொடர் ; பின்பற்று ; தொடர்ந்து பின்பற்றிச் செல் ; தங்கியிரு ; எதிர்ப்பிடையே உறுதியாயிரு ; பிடிவிடாதிரு ; விட்டுவிடாதிரு ; அகலாதிரு ; அசையாதிரு ; மாறுதிரு ; வெளியே செல்லாதிரு ; பதனழியாது வை ; கெடாதிரு ; நீடித்துழை ; நலமாறுதிரு ; அடக்கிக்கொள் ; விலகியிரு ; செயல்தவிர் ; தடு. தடுத்துநிறுத்திவை ; காவலில் வை; கட்டுப்படுத்தி வை; மதிப்புக்கொடு; மீறுது பின்பற்று; நிறைவேற்று ; கொண்டாடு ; (தொ.) keep at, விடாமல் வேலைசெய், தொடர்ச்சியாக வேலைநடத்துவி ; keep away, வருகை தவிர், விலகியிரு, வருவதை விலக்கு, வருவதைத் தடு; keep back, கொடாதிரு; முன்னேற்றத்தைத் தாமதப்படுத்து; ஒளி, மறை, அடக்கு; keep body and soul together, உயிருடனிரு ; keep down, அடக்கிவை, கீழ்ப்படுத்தி வை, தொகையில் குறைவாக்கு ; சிறுபோரில் படுத்துப் பதுங்கிச் சண்டைசெய் ; keen from, தவிர், விலக்கு ; விலகு; keep in, அடைத்து வை ; அடக்கிவை ; தடு ; பள்ளிக்கூடம் விட்ட பின்பும் வீட்டிற்கனுப்பாமல் மாணவனை நிறுத்தி வை ; தீ எரிந்து கொண்டிருக்கும்படி செய் ; வீட்டிற்குள்ளிரு ; நல்லுறவோடிரு ; keep in repair, நல்நிலையில் வைத்திரு, சீர்கேடடையாமற் பேணு ; keep off, நீக்கு, விலக்கு ; விலகியிரு ; அணுகவிடாது தடு ; தூரத்திலிரு ; keep on, தொடர்ந்து செயலாற்று, தொடர்ந்து மேற்கொண்டிரு ; keep oneself to oneself, தனித்திரு, மக்கள் சமூகத்தைவிட்டு விலகியிரு ; keep one's powder dry, முன்னேற்பாடுகள் செய்து தயாராகவிரு ; keep out, நுழையாமல் தடு ; உட்புகாமலிரு ; keep to, எல்லை கடந்து போகாதிரு, ஒட்டிக்கொண்டிரு; keep together, சேர்த்துவை; இணைந்திரு, சேர்ந்திரு ; keep to oneself, பிறரோடு பகிர்ந்துகொள்ள மறு ; keep under, அடக்கி வை ; அடிமைப்படுத்தி வை : கீழ்ப்படுத்து ; keep up, கிளர்ச்சி குன்றுதிருக்கச் செய் ; விலைவாசி தளராது இருக்கச் செய் ; குறையாமல் நிலைபெறச்செய் ; keep up with the Joneses, அண்டை அயலாருடன் சமுதாய முறையில் சரிசமமாகப் பழகு ; keep wicket, மரப்பந்தாட்டத்தில் இலக்குக் காப்போராகச் செயலாற்று.

**keep'er**, *n.* வைத்திருப்பவர் ; பேணுபவர் ; காப்பவர்; காவலர் ; நிறுவனங்களின் உடைமைக் காப்பாளர் ; விலங்குக் காவலர் ; வேட்டைக்காடு காவலர் ; அரச முத்திரை மேற்காப்புப் பெருமகனுர் ; ஆட்ட இலக்குக் காப்பாளர் ; ஆட்ட எல்லை காப்பாளர் ; பூட்டின் திறவுவாய் ; திறவுக்காப்பு ; காந்தமுனைத் தேனிரும்பு.

**keep'ing**, *n.* காவல், பராமரிப்பு ; இணக்கம் ; ஒப்புமை ; (தொ.) in keeping with, ஒத்து, இசைந்து ; in one's keeping, ஒருவருடைய ஆதரவில், பராமரிப்பில் ; in safe keeping, பொறுப்பில், பாதுகாவலில் ; out of keeping with, இசையாது, முரணுக.

**keep'ing-room**, *n.* வீட்டின் வரவேற்பு அறை.

**keep'sake**, *n.* நினைவூட்டு சின்னம், கொடுத்தவர் நினைவாக வைக்கப்பட்ட பொருள் ; உணர்ச்சிப் பசப்புடையது.

**keep'sakes**, *n. pl.* உணர்ச்சிப் பசப்புடைய எழுத்து உருப்படிகள்.

**kees'hond**, (டச்.) *n.* ஆலந்து நாட்டு நாய் வகை.

***kef, keif, kief***, (அரா.) *n.* கஞ்சாச் செடி ; கஞ்சா மயக்கம் ; சோம்பல் நிலை இன்பம்.

***keffi'yeh***, (அரா.) *n.* அராபியர் தலையணியாக அணியும் கைக்குட்டை.

***kef'ir***, (காக்கஸ்.) *n.* நோயாளிகளுக்குக் கொடுக்கப்படும் நுரைத்துப் பொங்கும் குடிவகை.

**keg**, *n.* சிறு மிடா.

**kelp**, *n.* பெரிய கடற்பூண்டு வகை.

**kel'pie, kel'py**, *n.* ஆட்களை மூழ்கடிக்கும் விருப்புடையதாகக் கூறப்படும் குதிரை வடிவ நீர்த் தெய்வம்.

**kel'son**, *n.* கப்பல் அடிக்கட்டையுடன் அடித்தளக்கட்டைகளை இணைக்கும் கட்டை வரிசைகள்.

**Kelt**[1], *n.* = Celt.

**kelt**[2], *n.* முட்டையிட்ட குளமீன் சால்மன் முதலிய மீன்வகைகளில் ஒன்று.

**kemp**, *n.* முரட்டுக் கம்பளி மயிர்.

**ken**, *n.* கண்ணோக்கு, காட்சி எல்லை; அறிவெல்லை; *v.* பார்த்தவுடன் புரிந்துகொள் ; அறி, அடையாளம் கண்டுகொள்.

**kenn'el**[1], *n.* நாய்ப்பட்டி ; வேட்டைநாய்த் தொட்டிக்கட்டு ; இழிந்த குடியிருப்பிடம் ; *v.* பட்டியில் அடை ; பட்டியில் வாழ் ; இழிந்த இடத்தில் உறை.

**kenn'el**[2], *n.* சாக்கடை, கழிநீர் ஓடை.

**kenos'is**, *n.* (இறை.) இயேசுநாதர் மனித உருவேற்பின்போது முழுமையாகவோ பகுதியாகவோ தெய்வத்தன்மையைக் கைதுறத்தல்.

**Ken'tish,** *a.* பிரிட்டனின் கெண்ட் (Kent) மாவட்டத்தைச் சேர்ந்த; (தொ.) Kentish fire, வெறுப்புக் கைதட்டல்; Kentish man, கெண்ட் மாவட்டத்தில் மெட்வே (Medway) ஆற்றின் மேற்குப் பகுதிக்குரியவர்; Kentish rag, கெண்ட் என்னுமிடத்திற் காணப்படும் கடினமான சுண்ணக் கற்கள்.

**kent'ledge,** *n.* (கப்.) கப்பலின் நிலவர அடி எடைப்பாரமாகப் பயன்படுத்தப்படும் வார்ப்பு இரும்புப்பாளம்.

**kep'i,** *n.* தளமட்டப் போக்கான முகட்டையுடைய பிரஞ்சுப் படைவீரர் குல்லாய்.

**kept,** *v.* keep என்பதன் இறந்தகால முடிவெச்சம்.

**ke'ratin,** *n.* கொம்பு நகம் முதலியவை உருவாவதற்கு அடிப் படைப் பொருளாக நிற்கும் வெடியகப்பொருள்.

**ke'ratose,** *n.* கடற்பஞ்சு வகைகளின் காழ்ப்பகுதிப் பொருள்; *a.* கொம்புபோன்ற காழ்ப்பொருளாலான.

**kerb,** *n.* நடைப்பாதை அல்லது தளத்தின் ஓரத்தில் பதிக்கப் பட்ட கல்வரிசை; (தொ.) kerb market, பங்குமாற்று நிலை யத்தில் விற்கப்படாத பிணையத்தொகைப் பங்குகளை நிலைய அலுவல் நேரத்திற்குப் பிறகு விற்கும் இடம்.

**kerb'-stone,** *n.* நடைப்பாதை அல்லது தளத்தில் பதிக்கப் பட்ட கல்; (தொ.) kerb-stone broker, பங்கு மாற்று நிலைய உறுப்பினரல்லாத தரகர்.

**kerch'ief,** *n.* தலைக்குட்டை; (செய்.) கைக்குட்டை.

**kerf,** *n.* இரம்ப அறுப்பினால் ஏற்படும் பிளவு; மரத்தின் வெட்டப்பட்ட பகுதி.

**kerm'es,** *n.* செங்கொட்டையென முன்பு கருதப்பட்ட கருத் தரித்த பெண் பூச்சியினம்; பெண்பூச்சியினத்தின் உலர்ந்த உடலிலிருந்து எடுக்கப்படும் செஞ்சாயப்பொருள்; (தொ.) kermes oak, பசுமைமாறுச் சீமை ஆல்மர வகை.

***kerm'is,*** (டச்.) *n.* ஆலந்து நாட்டின் ஆரவாரமிக்க பருவச் சந்தை.

**kern, kerne,** *n.* (வர.) பளுவற்ற படைக்கலம் தாங்கிய அயர்லாந்து நாட்டுக் காலாட்படைவீரன்; உழவன், பட்டிக் காட்டான்.

**kern'el,** *n.* கொட்டைக்குள்ளிருக்கும் பருப்பு; கூலத்தினுள் இருக்கும் அரிசி; கருமூலப் பகுதி, உருவாக்க மையம்.

**ke'rosene,** *n.* மண்ணெண்ணெய்.

**Kerram'ograph,** *n.* தொலைமின் புயல்களைப் பதிவு செய் வதற்குரிய கருவி.

**Ke'rry, Kerry blue,** *n.* வேட்டைநாய் வகை.

**kers'ey,** *n.* நீண்ட கம்பளி உரோமத்தினின்று நெய்யப்படும் குறுகலான முரட்டுக்கம்பளி ஆடை வகை.

**kers'eymere,** *n.* சாய்வரி அமைவாக நெய்யப்பட்ட நேர்த்தி யான கம்பளி ஆடைவகை.

**kers'eymeres,** *n. pl.* நேர்த்தியான சாய்வரிக் கம்பளித்துணி யால் செய்யப்பட்ட காற்சட்டை.

**kes'trel,** *n.* குறும்பருந்து வகை.

**ketch,** *n.* இருபாய்கள் கொண்ட சிறிய கரையோர மரக்கலம்.

**ketch'up,** *n.* காளான்-தக்காளி ஆணம்.

**ket'one,** *n.* கரிமச்சேர்ம வகைகளில் ஒன்று.

**ket'tle,** *n.* கொதி கெண்டி, கைப்பிடி வைத்த வெந்நீர்க் கொதி கலம்; (தொ.) a pretty kettle of fish, பெருஞ் சிக்கல், குழப்பம்.

**ket'tle-drum**[1], *n.* படகம், குடமுழாவகை, குறிப்பிட்ட பண் திறத்துக்கேற்ப வரிந்துகட்டப்படுகிற பித்தளையாலான அரை யுருளை வடிவத் தோற்கருவி வகை.

**ket'tle-drum**[2], *n.* பெரும்படியான பிற்பகல் தேநீர் விருந்து.

**ket'tle-drummer,** *n.* குடமுழவு வகை முழக்குபவர்.

**ket'tle-holder,** *n.* வெந்நீர்க் கெண்டியின் கைப்பிடித் துணி.

**kev'el,** *n.* (கப்.) முறுக்கும் கயிறுகளைப் பிணிப்பதற்குரிய முளையாப்பு.

**Kew Gard'ens,** *n. pl.* லண்டன் பயிர் ஆராய்ச்சித்துறைத் தோட்டம்.

**key**[1], *n.* திறவுகோல்; மறைதிறவு; வாயில் துணை, புகுமுக வழித் துணை; வழிகாட்டுங் குறிப்பு; விடைக்குறிப்பு; புதிர் விளக்கக் குறிப்பு; விளக்க வரைப்படம்; மொழி பெயர்ப்புத் துணைக்குறிப்பு; விடைக்குறிப்பேடு; தளமையம், உயிர்மைய இடம்; வாயில் தளம், இடைமுகத்தளம்; தலைக்கல், கட்டிட வளைவு முகட்டுக்கல்; ஆப்பு; இருசாணி; கருவிகளின் விசைக் கட்டை; தட்டச்சுப் பொறியின் விரற்கட்டை; மணிப்பொறி யின் முறுக்குக் கட்டை; கயிற்றுப்புரி முறுக்குக் கட்டை; மின் ஒட்டத் திருப்பாணி; அல்லிக்கொத்துவிதை வகை; பூவேலைப் படிவம்; சுவர் வகையில் முதல் மேற்பூச்சு; இசையில் கிளைச்சுரத் தொகுதி; கருத்துத் தொனி; போக்கின் முனிமுகம்; அடிப்படையான உயிர்க்கருத்து; வெற்றியின் உயிர்நிலை; ஆட்சிநிலையின் உயிர்நாடி; இயக்கும் உயிர் மூலம்; *v.* திறவுகோலாற் பூட்டு; திருகுக் கட்டையால் திருக்கி இறுக்கு; இசைக்கருவியை முடுக்கு; விடை விளக்கம் அளி; முறுக்கிவிடு, தூண்டு, எழுச்சியூட்டு; விளம்பரத்தில் தனி அடையாளக்கூறு இணை; (தொ.) get the key of the street, have key of the street, இரவில் தங்க இடமின்றி வீதி யிலிரு; golden key, silver key, இலஞ்சமாக அளிக்கப்படும் பொன் வெள்ளி நாணயம், கைக்கூலி; key industry, மூலத் தொழில், இன்றியமையாத் தொழில்; key map, எல்லைக் கோடுகள் மட்டும் கொண்ட சிற்றளவான நிலப்படம்; key move, சதுரங்க ஆட்டத்தில் வெற்றிக் கட்டத்தின் முதல் கட்டை இயக்கம்; key up, வேண்டிய நிலைக்கு முறுக்கிவிடு; தொனி உயர்த்து; தூண்டு; கிளர்ச்சியூட்டு; மதிப்பு உயர்த்து.

**key**[2], *n.* தாழ்ந்த தீவு, கடற்பாறை வரிசை.

**key'board,** *n.* இசைக்கருவிகளில் ஆணிப்பட்டடை.

**key'-cold,** *a.* உயிரற்ற.

**key'hole,** *n.* பூட்டுத் திறவுகோல் துளை.

**keynes'ian,** *a.* ஜான் மெய்னாடு கெயின்ஸ் (John Maynard Keynes-1883-1946) என்பாரின் முதலாளித்துவ மட்டியல் கட்டுப்பாட்டுவாதம் சார்ந்த.

**key'-note,** *n.* உயிர்ப் பண்திறம்.

**key'-ring,** *n.* திறவுகோல் வளையம்.

**keys,** *n. pl.* போப்பாண்டவரின் சமயத்துறை அதிகாரம்; போப்பாண்டவரின் அதிகார ஆற்றல்; மான் தீவிலுள்ள கீழவை; (தொ.) cross keys, St. Peter's keys, போப்பாண்ட வருக்கு அளிக்கப்பட்ட மேலாண்மை உரிமை; House of Keys, இங்கிலாந்தின் தென்பகுதியிலுள்ள அயில் ஆப் மேன் (Isle of man) என்ற தீவினுடைய சட்டசபையின் தேர்ந் தெடுக்கப்பட்ட பகுதி.

**key'stone,** *n.* மையக்கல், வளைவு முகட்டுக்கல்; மூலாதாரக் கூறு, உயிர்க்கூறு; உயிர்நிலை, உயிர்நாடி.

**Kgot'la,** *n.* தென் ஆப்பிரிக்க பெசுவானலந்து (Bechuanaland in South Africa) நாட்டில் பழங்குடி மக்களின் மூத்தோர் பேரவை.

**khadd'ar,** (இ.) *n.* கதர்த்துணி.

***khakan,*** (துரு.) *n.*=*khan*[1].

**kha'ki,** (இ.) *n.* காக்கிதுணி, பிரிட்டனின் படைத்துறையினர் அணியும் மங்கற் பழுப்புநிறத் துணி; *a.* பழுப்பு நிறமான.

**khal'ifa,** *n.*=caliph.

**khal'ifat,** (அரா.) *n.*=caliphate.

**kham'sin,** (அரா.) *n.* எகிப்து நாட்டில் மார்ச்சு ஏப்ரல் மே மாதங்களில் வீசும் தெற்கு அல்லது தென்கிழக்கு வெப்பக் காற்று.

**khan**[1], (துரு.) *n.* நடு ஆசியா ஆப்கானிஸ்தான் முதலிய நாடு களில் அரசர்களுக்கும் அதிகாரிகளுக்கும் வழங்கும் விருதுப் பெயர்; (வர.) இடைக்காலத்தில் துருக்கிய தார்த்தாரிய மங் கோலிய இனங்களின் பெருந்தலைவர்களின் பட்டம்; சீனப் பேரரசருக்குரிய பட்டப் பெயர்.

**khan**[2], (அரா.) *n.* வழிப்போக்கர் விடுதி.

**khe'da, kedd'ah**, (இ.) *n.* யானைகளைப் பிடிப்பதற்கான அடைப்புப் பொறி.

**Khedive'**, (துரு.) *n.* எகிப்தில் (1867 முதல் 1914 வரை இருந்த) துருக்கிநாட்டு அரசப் பிரதிநிதி.

*khid'mutgar*, (இ.) *n.* பணியாள், உணவு மேசையருகே நின்று பணிசெய்யும் வேலையாள்.

**khil'afat**, *n.* நபிநாயகம் பேரால் இஸ்லாமிய உலகை ஆள் பவர், துருக்கிப் பேரரசர்; (தொ.) khilafat agitation, முதல் உலகப்போர் (1914-1918) முடிவடைந்தபின் இஸ்லாமியப் பேரரசான துருக்கியின் வீழ்ச்சிக்கெதிராக இந்தியாவில் முஸ் லீம்கள் நடத்திய இயக்கம்.

**kib'ble**[1], *n.* சுரங்கங்களில் இரும்பை மேலே ஏற்றப் பயன் படுத்தப்படும் வாளி.

**kib'ble**[2], *v.* கரடுமுரடான பொடியாக அரை.

**kibbutz'**, *n.* இஸ்ரேல் (Israel) நாட்டில் யூத சமுதாய நல வேளாண்மைக் குடியமைப்பு.

**kibe**, *n.* குளிரால் கைகால்களில் ஏற்படும் கொப்புளப்புண்; (தொ.) tread on one's kibes, ஒருவர் உணர்ச்சிகளைப் புண் படுத்து.

*kibit'ka*, (ருசிய.) *n.* கம்பளத்தால் மூடப்பட்ட தார்தார் (Tartar) களின் கூடாரம்; தார்தார்களின் குடும்பம்; பனிக்கட்டிமேல் செல்லும் மேல்மூடியிடப்பட்ட குடும்பச் சறுக்குவண்டி.

**kib'itzer**, *n.* (பே-வ.) வேண்டாத் தலையீட்டாளர்; வேண்டா அறிவுரை தருபவர்; சீட்டாட்டத்தில் ஆட்டக்காரரின் பின் னிருந்து வேடிக்கை பார்ப்பவர்.

*kib'lah*, (அரா.) *n.* தொழுகையின்போது முகமதியர்கள் நோக்கும் மெக்கா (Mecca) நகரக் கோயிலிருக்குந் திசை.

**kib'osh**, *n.* முட்டாள்தனம்; போலி எத்துமானம்; (தொ.) put the kibosh on, தலையிலடி, அடித்தொழி.

**kick**, *n.* உதை, எட்டி மிதித்தல்; உதைபந்தடி; பின்னு தைப்பு, துப்பாக்கியின் எதிர் எறிவு; உதைவிசை, உதைக்கும் ஆற்றல்; எதிர்த்தாக்காற்றல்; தாக்குதல்; வெட்டி வெட்டிச் செல்லும் இயக்கம்; (பே-வ.) தாங்கும் ஆற்றல், எதிர்ப் பாற்றல்; (பே-வ.) ஊக்காற்றல்; இன்னதிர்ச்சி; *v.* உதை, எட்டிமிதி; காலால் எற்று; எட்டி எறி; உதைத்தோட்டு; உதைபந்தடி; அவமதித்து வெளியேற்று; வெறுப்புக்காட்டு, மனக்கசப்புத் தெரிவி; (தொ.) bad kick, உதைபந்தாட்டத் தில் மோசமான ஆட்டக்காரர்; good kick, உதைபந்தாட் டத்தில் நல்ல ஆட்டக்காரர்; kick against, kick at, வெறுப் பைக்காட்டு, விருப்பமின்மையைத் தெரிவி; kick against the pricks, தன் எதிர்ப்பால் தனக்கே துன்பம் பெருக்கிக்கொள்; kick off, உதைபந்தாட்டத்தில் பந்தினை முதலில் உதை; kick one upstairs, பெயரளவான நன்மையாகப் பெருமகனுர் பட்டம்முதலியன அளித்து ஒதுக்கிவிடு; kick the bucket, இறந்துபோ, மாள்வுறு; kick up, kick up a dust, kick up a row, உதைத்துப் புழுதி கிளப்பு; தேவையற்ற பெருஞ் சந்தடி செய்; kick up heels, விளையாட்டாகப் பின்னங்கால் எறி

**kick**[2], *n.* கண்ணடிக் குப்பியில் கீழுள்ள குழிவு.

**kick'er**, *n.* உதைக்குங் குதிரை.

**kick'ing-strap**, *n.* பின்காலுதைப்பைத் தடுக்கும் குதிரைத் தோல்வார்ப் பட்டை.

**kick'shaw**, *n.* பெருஞ்சுவை உணவுவகை; விளையாட்டுப் பொருள், சிறுதிற அணிமணி.

**kick'-start'er**, *n.* உந்து மிதிவண்டியை மிதித்துச் செலுத்தும் விசைப்படியின் நெம்புகோல்.

**kid**[1], *n.* வெள்ளாட்டுக்குட்டி; வெள்ளாட்டுக்குட்டித் தோல்; பதனிடப்பட்ட வெள்ளாட்டுக்குட்டித் தோல்; *v.* ஆடு வகை யில் ஈனு; குட்டி ஈனு; (தொ.) the Kid, the Kids, தேராளன் விண்மீன் குழுவிலுள்ள மூன்று சிறிய நட்சத்திரங்கள்.

**kid**[2], *n.* சிறு மரத்தொட்டி.

**Kidd'erminster carpet**, *n.* இரண்டு வேறுபட்ட வண்ணங் கள்கொண்ட துணிகளை இடையிணைத்த சமுக்காள வகை.

**kid'dle**, *n.* ஆற்றணை வலை; கடற்கரைக் கழியடைப்பு வலை.

**kid'-glove'**, *a.* மெல்லியல் வாய்ந்த; அன்றாட வேலையைத் தவிர்க்கிற.

**kid'nap**, *v.* குழந்தைகளைத் திருடு; சட்டத்திற்குப் புறம்பாக ஆட்களைக் கடத்து, வல்லந்தமாகக் கடத்திச் செல்.

**kid'ney**, *n.* குண்டிக்காய், இரத்தத்திலிருந்து கழிவுப் பொருளைப் பிரித்துச் சிறுநீராக்கி வெளியேற்றும் உறுப்பு; உணவாகப் பயன்படும் ஆடு மாடு பன்றி முதலிய விலங்கு களின் குண்டிக்காய்; இயல்பு, குணம்; (தொ.) kidney bean, குட்டையான பிரஞ்சு மொச்சை வகை; kidney potato, நீண்ட உருளைக்கிழங்குவகை.

*kief*, (அரா.) *n.*=*kef*.

**kie'-kie**, *n.* கூடையாகச் செய்யக்கூடிய இலைகளுடைய நியூ சிலாந்து நிலத் தொற்றுச்செடிவகை.

**kier**, *n.* வண்ணான் சால், ஆடைகளை வெள்ளாவியில் வைப்ப தற்கான பெருமிடா.

**kie'selguhr**, *n.* பளபளப்பூட்டுவதற்கும் வெடிமருந்து தயா ரிப்பதற்கும் பயன்படும் மண்வகை.

**Kikuyu'**, *n.* ஆங்கிலத் திருச்சபையில் பிற திருச்சபை உறுப் பினர்களும் தூய நற்கருணையில் பங்கு கொள்ளுதல் பற்றிய விவாதம்.

**kil'derkin**, *n.* அளவு தேறல்மிடா; தேறல்மிடா அளவு (16 அல்லது 18 காலன்கள்).

**kill**, *n.* கொல்லுஞ் செயல்; கொலை; வேட்டையிற் கொல்லப் பட்ட உயிரினம்; கொல்லப்பட்ட இரை; புல்வெளிப்பந்தாட் டத்தில் மீட்டு வாராத பந்தடி; *v.* கொல்லு; நோய் வகையில் உயிர்போக்கு; கொலைசெய்; தூக்கிலிடு; செடிகொடி உரங் குன்றச் செய், வலுவழி; உணர்ச்சி இல்லாதாக்கு; எதிர் மாற்று வண்ணத்தால் முனைப்பழி; நேரத்தை வீணாக்கழி; மட்டுமீறிப் போற்றுதலுக்கு ஆளாக்கு; மட்டுமீறிக் களிப்பூட்டு; மட்டுமிஞ்சிக் கவர்ச்சி செய்; சட்டப் பகர்ப்பை முற்றிலும் தோல்வியுறச் செய்; உதை பந்தாட் டத்தில் பந்தை அசைவின்றி நிறுத்து; புல்வெளிப் பந்தாட் டத்தில் பந்து மீண்டுவாராதபடி அடி; மறுத்தொதுக்கு, தள்ளு, களை; கரைசல நீராளமாக்கு, செறிவு கெடு; உண வுக்குரிய உயிரின வகையில் கொன்றபின் கொழுவிய இறைச்சி தருவதாயிரு; புனைகதையில் பாத்திரஞ் சாவ தாகத் தீட்டு; (தொ.) got up to kill, கவர்ச்சிக்குள் வீழ்த் தத்தக்க ஆடையணி ஒப்பனையுடைய; kill off, ஆட்களைக் கொன்றொழி; kill two birds with one stone, ஒரே செயலில் இரு நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்; ஒரு கல்லில் இரு மாங்காய்களை வீழ்த்து; kill with kindness, தவறான அன் பினால் அழிவுண்டாக்கு.

**kill'adar**, *n.* கோட்டைப் படைத்தலைவன்.

**kill'-devil**, *n.* நீரில் சுழலும்படி செய்யப்பட்ட செயற்கைத் தூண்டில் இரை.

**kill'er**, *n.* கொல்லுபவர்; கொல்லுவது; கொலைஞர்; வழக்க மாகக் கொலையிலீடுபடும் கொலைகாரர்; இறைச்சிக் கடைக் காரர், விலங்குகளை இறைச்சிக்காக வெட்டுபவர்; கொல்லும் கருவி; விலங்குகளை வெட்டும் பொறிக்கருவி; மாற்றுப் பொருட்கூறு; திமிங்கிலகிலம், மூர்க்கமான திமிங்கில வகை; (தொ.) humane killer, வேதனையில்லாமலே விலங்குகளை வெட்டிவீழ்த்தும் பொறி; killer whale, திமிங்கிலம், மூர்க்க மான பெருந்தீனி உண்கிற திமிங்கில இனம்.

**kill'ick**, *n.* சிறு படகுகள் நங்கூரமாகப் பயன்படுத்தும் பளு வான கல்; சிறு நங்கூரம்.

**kill'ing**, *n.* கொல்லுதல்; கொலை; கொடுங்கோலாட்சி; இரக்க மின்றிக் கடுமையாக நடத்தல்; *a.* கொல்லுகிற; உயிர் போக்கு கிற; அழிக்கிற; தடுத்தமைக்க முடியாத; உறு கவர்ச்சி யுடைய; அடக்கமுடியா நகைத்திறமூட்டுகிற.

**kill'joy**, *n.* மற்றவர் மகிழ்ச்சியைக் கெடுப்பவர்.

**kill'-time**, *n.* பொழுதுபோக்கு வேலை, காலங்கடத்துவதற்காகச் செய்யப்படும் வேலை; *a.* பொழுதுபோக்குதற்கான, காலத்தை வீணாக்குகிற, காலத்தை வீணாக்கும் நோக்கமுடைய.

**kiln**, *n.* சுண்ணாம்புக் காளவாய்; செங்கற் சூளை; சூட்டடுப்பு; கொல்லன் உலை; *v.* காளவாயிற் காயவை; சூளையில் சுடு; சூட்டடுப்பிற் காயும்படி செய்.

**kiln'-dry**, *a.* சூட்டடுப்பிலிட்டுக் காய்ந்த.

**kil'o** [1], *n.*=kilogram.

**kil'o** [2], **kil'ocuric**, *n.* கதிரியக்கப் பேரலகு, 1000 கதிரியக்கச் சிற்றலகு.

**kil'ocycle**, *n.* வானொலியில் நொடி ஒன்றுக்கு ஆயிர விசை விரையதிர்வலகு.

**kil'ogram, kil'ogramme**, *n.* ஆயிரச்சிரெடை, பதின்மான எடையளவைப் பேரலகு.

**kilogramme'ter, kilogramme'tre**, *n.* ஆயிரச்சிரெடையை ஒரு சிர்க்கோல் உயர்த்தவல்ல ஆற்றல்.

**kil'oliter, kil'olitre**, *n.* ஆயிரம் சிர்ப்படி (liter), 35. 31 கன அடி கொண்ட முகத்தலளவுப் பேரலகு.

**kil'ometer, kil'ometre**, *n.* ஆயிரச்சிர்க்கோல், 3280. 89 அடிநீளமுடைய பதின்மானப் பேரலகு.

**kil'owatt**, *n.* ஆயிர மின்பேரலகு, மின்னலகுத்தொகுதி.

**kilt**, *n.* ஸ்காத்லாந்து மேட்டு நிலவாணர் (Scottish Highlanders) அணியும் முட்டளவேயான குறும்பாவாடை; *v.* பாவாடையை மேலிழுத்துச் செருகு; ஆடைக்கொசுவம் சுருக்கு.

**kil'ter**, *n.* நல்லுழைப்பு நிலை, பணிச்செப்பநிலை.

**kil'tie**, *n.* சிறு காற்சட்டையணிந்த ஸ்காத்லாந்து மேட்டுநிலவாணர்.

**kin**, *n.* இனமரபுக் குழு; இனஉறவு; இன உறவினர் குழாம்; குடும்பக்குழு; ஒரே குடும்பத்தினர்; *a.* இனஉறவுடைய, ஒரே குடும்பம் சார்ந்த உறவினரான; (தொ.) kith and kin, அறிமுகமான நண்பரும் உறவினரும்; near of kin, நெருங்கிய உறவுள்ள; next of kin, மிக நெருங்கிய உறவினர்; விருப்ப ஆவணம் இன்றி இறந்தபோதும் இயல்பாகத் தனியுடைமையிற் பங்குகொள்வதற்கு உரிமையுடையவர்; of kin, ஒரே இனத்தைச் சேர்ந்த, உறவுள்ள, குருதிக் கலப்புள்ள; ஒரே இயல்புடைய.

**kin'chin**, *n.* திருடர் குழூஉக்குறி வழக்கில் குழந்தை; (தொ.) kinchin lay, குழந்தைகளிடமிருந்து பணம் களவாடுதல்.

**kin'cob**, *n.* பொன் அல்லது வெள்ளிச் சரிகையினால் ஒப்பனை செய்யப்பட்ட விலையுயர்ந்த இந்திய பட்டுத்துணி வகை.

**kind**, *n.* இனம், மரபின உறவுக்குழு; வகை; செடி உயிர் வகைகளில் இனப்பிரிவு; தனிக்குழு; தனிப்பிரிவு; வகை வேறுபாடு; வகைமாதிரி; மாதிரி, போன்ற வகை; இயற்கை; தன்மை, இயல்பு; பண்பு; சரக்கு, பொருளினம்; திருக்கோயில் இறுதி உணா வழிபாட்டின் அப்பத்தேறல்களில் அப்பம் அல்லது தேறல்; *a.* இரக்கமான, தயவார்ந்த; பாசமிக்க; நட்பிணக்கமான; அன்பான; (தொ.) in a kind, ஒருவாறாக, ஒரு வகையாக; in kind, சரக்காக, பண்டமாக, பணமாக அன்றி வினைபொருளாக; kind of, (பே-வ.) ஒருவகையாக, ஓரளவுக்கு; repay his insolence in kind, அவமதிப்பை அதேவகைச் செயலால் மீட்டளி.

**kin'dergarten**, *n.* சிறுவர்களுக்குரிய விளையாட்டுமுறைக் கல்விப்பள்ளி.

**kind'-heart'ed**, *a.* இரக்க மனமுடைய, ஈரநெஞ்சம் வாய்ந்த.

**kin'dle**, *v.* ஏற்று, பொருத்து, நெருப்புப் பற்றவை; தழலெழுப்பு; ஒளிரச்செய்; ஒளிர்; தீப்பற்றிக்கொள்; நெருப்புப் பிடி; அழன்றெழு; தூண்டு; சினமூட்டு; அவா எழுப்பு; உணர்ச்சி கிளறு; ஊக்கு; உள்ளார்வம் எழுப்பு.

**kin'dling**, *n.* எரியச்செய்தல்; தீ மூட்டுதற்கான சிறுகட்டை.

**kind'lings**, *n. pl.* தீ மூட்டுதற்கான சிறு சுள்ளிகள்.

**kind'ly**, *a.* இரக்கமுள்ள; (வானிலை.) உகந்த, நல்ல, துணை நலமான; *adv.* அன்புகூர்ந்து.

**kind'ness**, *n.* இரக்கம், அருட்குணம்; அன்புச்செயல்.

**kin'dred**, *n.* குருதி உறவு; உறவினர் தொகுதி; பண்பொருமைப்பாடு; *a.* குருதி உறவுள்ள; நேசமுடைய; ஒப்புமையுடைய, ஒரேமாதிரியான.

**kine**, *n. pl.* பசுக்கள்.

**kinem'a**, *n.*=cinema.

**kinemat'ic**, *a.* தனிநிலை இயக்கஞ்சார்ந்த, ஆற்றல்தொடர்பு கருதாத இயக்கநிலை சார்ந்த.

**kinemat'ics**, *n. pl.* (இய.) இயக்கவியல், ஆற்றல் தொடர்பில்லாத இயக்கம்பற்றிய ஆய்வியல்.

**kinemat'ograph**, *n.*=cinematograph.

**kinematograph'ic**, *a.*=cinematographic.

**kinematog'raphy**, *n.*=cinematography.

**kinet'ic**, *a.* (இய.) இயக்கஞ் சார்ந்த, இயக்கத்தின் விளைவான; (தொ.) kinetic energy, இயங்காற்றல்; kinetic theory of gases, நுண்துகள்களின் இயக்கத்தினாலேயே வளிநிலை தோன்றுகிறதென்னும் கோட்பாடு; kinetic theory of heat, நுண்துகள்களின் இயக்கத்தினாலேயே வெப்பம் தோன்றுகிறதென்னும் கோட்பாடு.

**kinet'ics**, *n. pl.* (இய.) இயக்கத்தாக்கியல், பொருள்களின் இயக்கங்களுக்கும் அவற்றின்மீது செயற்படுகிற ஆற்றல் தாக்குகளுக்குமுள்ள தொடர்புகளைப் பற்றிய ஆய்வியல்.

**king**, *n.* அரசன், தனிநிலை அரசின் மரபுரிமை ஆட்சியாளன்; மன்னன், நாட்டாட்சியாளன்; வணிக வேந்தர்; சதுரங்க ஆட்டத்தில் அரசுரிமைக்காய்; கட்ட ஆட்ட வகையில் ஆட்டப் பலகையைக் கடந்து எதிரியின் தொடக்கக் கோட்டினை அடைந்ததும் முடிசூடப் பெறுகிற காய்; சீட்டாட்ட வகையில் அரசன் உருவம் பொறிக்கப்பெற்றுள்ள சீட்டு; பழங்கள்-செடிகள் முதலியவற்றின் மிகச்சிறந்த வகை; *v.* அரசனாகச் செயலாற்று; ஆட்சி செய்; அரசனாக்கு; (தொ.) King Baby, குடும்பத்தின் தனிப்பெரும் போற்றுதலுக்குரிய குழந்தை; King Charles's spaniel, கரும்பழுப்பு நிறமுள்ள சிறு வேட்டைநாய் வகை; King Emperor, (வர.) அரசச் சக்கரவர்த்தி, இங்கிலாந்து அரசராகவும் இந்தியாவின் சக்கரவர்த்தியாகவும் இருந்தவர்; King Log, ஒன்றுஞ் செய்யாத பொம்மை அரசன்; King of Arms, படைக்கல உரிமைக் குழாத்தின் தலைமைக்கட்டியர் ஐவருள் ஒருவர்; king of beasts, சிங்கம்; king of birds, கழுகு; King of kings, கடவுள்; கிழக்கு நாடுகளில் மன்னர்மன்னன், மாபெரு வேந்தன்; king of metals, தங்கம்; King of Terrors, கூற்றம், சாவுத்தெய்வம்; சாவு; King of the Castle, குழந்தை விளையாட்டு வகை; king of the forest, சீமை ஆல்; king of the herrings, துடுப்பு மீன்; King's Bench, உயர்நீதிமன்றப்பிரிவு; (வர.) அரசர் அமர்ந்த நீதிமன்றம்; king's bishop, சதுரங்கப் பலகையில் ஆட்டத்தொடக்கத்தில் 'அரசு'க்காய்ப் பக்கமாக வைக்கப்படும் ஒட்டகம் போன்ற காய்வகை; King's Bounty, ஒருங்கே மூன்று குழந்தைகளைப் பெற்ற தாய்க்கு வழங்கப்படும் கொடைப்பொருள்; King's colour, படைப்பகுதியினரால் எடுத்துச் செல்லப்படும் இரட்டைப் பட்டுக்கொடிகள்; King's Counsel, அரசாங்கத் தரப்பு வழக்கறிஞர்; King's English, திருத்தமான ஆங்கிலமொழி நடை; king's evil, கண்டமாலை; king's knight, சதுரங்கப் பலகையில் ஆட்டத்தொடக்கத்தில் 'அரசு'க்காய்ப் பக்கமாக வைக்கப்படும் குதிரைத்தலைக் காய்வகை; king's peg, சாராய வகையும் உயர்ந்த குடித்தேறல் வகையும் கலந்த பானவகை; King's pipe, லண்டன் துறைமுகத்தில் கள்ளப்புகையிலையைக் கொளுத்துவதற்காக முன்பு பயன்படுத்தப்பட்ட உலைக்கூடம்; King's Roll, போர்ப்பணி செய்தவர்களை ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் குறையாமல் வேலையிலமர்த்திக்கொள்ளப் பிணைப்பட்டுள்ள பணிமுதல்வர்களின் பட்டியல்; king's rook, சதுரங்க ஆட்டத்தொடக்கத்தில் 'அரசு'க்காய்ப் பக்கமாக வைக்கப்படும் கோட்டைமதில்

போன்ற காய்வகை ; King Stork, கொடுங்கோல் மன்னன் ; King's weather, சிறப்புக்கொண்டாட்டக் காலங்களில் வாய்த்துவிடுகிற நேர்த்தியான வானிலை ; take King's shilling, படையில் சேர் ; the king's highway, பொது நெடுவழி; turn king's evidence, (சட்.) மற்ற குற்றவாளி களுக்கெதிராகச் சான்றுகொடு.

**king'bird**, *n.* துறக்கப்பறவை, நியூகினி (New Guinea) என்ற தீவைச் சார்ந்த அழகிய இறகுத் தொகுதிவாய்ந்த பறவை வகை ; அமெரிக்க பறவைவகை.

**king'bolt**, *n.* முதன்மையான பெரிய முளை.

**king'-co'bra**, *n.* கருவழலை, இராசமாநாகம்.

**king'-crab**, *n.* இலாடவடிவத் தோடுடைய நண்டு ; இலாட வடிவத் தோடுடைய நத்தைபோன்ற கடல்வாழ் உயிர்வகை.

**king'craft**, *n.* ஆட்சித்திறம், திறம்பட அரசோச்சுங் கலை.

**king'-crow**, *n.* கிகிணி, வலியன்.

**king'cup**, *n.* கிண்ணவடிவான பொன்னிறப் பூக்களைக் கொண்ட செடிவகை.

**king'dom**, *n.* முடியரசு நாடு ; மன்னரின் ஆட்சிக்குட்பட்ட பரப்பு ; அரசு, இராச்சியம்; ஆட்சிப்பகுதி, நிலப்பகுதி ; இயற்கைப்பொருள்களின் இனப்பிரிவு, இனப்பரப்பு ; பெரு வகுப்பு ; அருளாட்சி ; அருளாட்சி எல்லை ; (தொ.) animal kingdom, விலங்கினப்பரப்பு ; விலங்கினப் பெரும்பிரிவு ; mineral kingdom, கனிப்பொருட் பிரிவு ; United Kingdom, இங்கிலாந்து-ஸ்காத்லாந்து-வடக்கு அயர்லாந்து ஆகிய வற்றை உட்கொண்ட தொகுதி ; vegetable kingdom, பயி ரினப்பரப்பு, தாவரப் பெரும்பிரிவு.

**king'fisher**, *n.* மீன்கொத்திப் பறவை.

**king'let**, *n.* குட்டி அரசர் ; பொன்னிறச்சூட்டுடைய பறவை வகை.

**king'maker**, *n.* மன்னர்களைப்படைக்கும் ஆற்றலுடையவர்; (வர.) ஆறுவது ஹென்றி ஆட்சிக்காலத்திலிருந்த வார்விக்கு கோமகன் (Earl of Warwick.)

**king'pin**, *n.*=kingbolt.

**king'post**, *n.* நடுமரம், கூரைச்சட்டத்தில் கைம்மரங்களின் கீழ் முனைகளை இணைக்கும் கட்டையின் மையத்திலிருந்து செங்குத்தாக உச்சி வரையில் மேலெழும்பும் கம்பம்.

**king'ship**, *n.* அரசு ; அரசபதவி ; அரசநிலை ; அரசருக்குரிய மதிப்பு.

**kink**, *n.* குணக்கல், கோட்டம், கம்பி-சங்கிலி அல்லது கயிற் றில் விழும் இடைமுறுக்கு ; மனக்கோட்டம், மனக்கவிவு ; கொக்கி, கொளுவி ; *v.* முறுக்குவிழு, குணக்கலுறு, முறுக் கிக்கொள் ; கயிற்றில் முறுக்கு விழச்செய்.

**kink'ajou**, *n.* இரவுநடமாட்டமுடைய ஊனுண்ணும் மரம் வாழ் அமெரிக்க விலங்குவகை.

**kinn'ikinic'**, *n.* அமெரிக்க இந்தியர்கள் புகையிலைக்குப் பதிலாகப் பயன்படுத்தும் கலவைப்பொருள் வகை ; புகைக் கும் கலவைப் பொருள்வகை தருஞ் செடி.

**ki'no**, *n.* மருந்துவகைகளிலும் தோல் பதனிடுவதிலும் துவர்ப் புப் பொருளாகப் பயன்படுத்தப்படும் வேங்கை மரவகையின் பிசின்.

**kins'folk**, *n. pl.* குருதித் தொடர்புடைய உறவினர்.

**kin'ship**, *n.* குருதித் தொடர்புடைய உறவு ; பண்பொற் றுமை ; பண்புத் தொடர்பு.

**kin'tal**, *n.*=quintal.

**kiosk'**, *n.* எளிய கட்டமைப்புடைய திறந்த கூடாரம் ; செய் தித்தாள் முதலியவை விற்பதற்கான எளிய கட்டமைப்பு வாய்ந்த வெளிப்புறக்கடை ; பொதுத்தொலைபேசிக்கான வெளிப்புறக் கட்டமைப்பு, பொதுத் தொலைபேசி அமைவு; (தொ.) Yildiz Kiosk, துருக்கி சுல்தான் அரண்மனை.

**kip**, *n.* பதனிட்டுப் பயன்படுத்தப்படும் இளவிலங்கின் தோல்.

**kipp'er**, *n.* முட்டையிடும் பருவத்தில் மீன்வகையில் ஆண் இனம் ; மீன் உணங்கல், உப்பிட்டு உலர்த்தப்பட்ட மீன் வகை ; *v.* மீன் வகைகளை உப்பிட்டு உணக்கு.

**Kirghiz'**, *n.* காஸ்பியன் கடற் (Caspian Sea) கரையில் வாழும் மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர் ; காஸ்பியன் கடற்கரையில் வாழும் மங்கோலிய இனத்தவர் மொழி ; *a.* காஸ்பியன் கடற்கரையில் வாழும் மங்கோலிய இனத்தவரைச் சார்ந்த.

**kirk**, *n.* வடஇங்கிலாந்து ஸ்காத்லாந்து வழக்கில் திருக் கோயில் ; (தொ.) Kirk of Scotland, ஸ்காத்லாந்து நாட்டுத் திருச்சபை ; kirk session, ஸ்காத்லாந்து நாட்டுத் திருச்சபை யின் முதற்கீழ்ப்படி முறைமன்றம்.

**kirk'-man**, *n.* ஸ்காத்லாந்து நாட்டுத் திருச்சபை உறுப் பினர்.

**kirsch'**, **kirsch'wasser**, *n.* காட்டுப் பழவகைகளின் புளிப் பேறிய தேறலிலிருந்து வடித்து இறக்கப்படுஞ் சாராய வகை.

**kir'tle**, *n.* மேலங்கி, உள்ளுடை வகை.

**kis'met**, (துரு.) *n.* ஊழ், விதி.

**kiss**, *n.* முத்தம் ; மேசைக் கோற்பந்தாட்டத்தில் பந்துகளுக் கிடையே நேரும் மோதல் ; இனிப்புத் தின்பண்ட வகை ; *v.* முத்தங்கொடு, முத்தமிடு ; மேசைக்கோற் பந்தாட்டவகை யில் பந்துடன் பந்து மோதச் செய் ; (தொ.) kiss away, முத்தங்கொடுத்துக் கண்ணீர் துடை ; kiss hands, kiss the hand, பதவியேற்கும்போது அல்லது முறைமையான வணக் கம் செலுத்தும்போது மன்னரின் கைகளை முத்தமிடு ; kiss one's hand to, முத்தங்கொடுக்க விரும்புவதைத் தெரிவிப் பதற்காகத் தன் கையையே முத்தமிட்டுக் காட்டு ; kiss the book, சூளுறவு செய்யும் வகையில் விவிலிய நூலுக்கு முத்தங் கொடு ; kiss the dust, அடிபணிந்துபோ, சரணுகதியடை ; கொல்லப்பெறு ; வீழ்ந்து மாள்வுறு ; kiss the ground, நெடுஞ்சாண்கிடையாகக் கீழே விழுந்து வணங்கு; தாழ்வுறப் பெறு ; kiss the rod, தண்டனையைப் பணிந்து ஏற்றுக் கொள்.

**kiss'ing**, *n.* முத்தமிடல் ; *a.* முத்தங்கொடுக்கிற ; (தொ.) kissing kind, ஒருவர்க்கொருவர் அன்புற்றிருக்கிற நிலை.

**kiss'ing-crust**, *n.* ரொட்டி சுடுகையில் ஒன்று மற்றொன் ரோடு ஒட்டியுள்ள பகுதியிலிருக்கும் மென்தோடு.

**kiss'ing-gate**, *n.* ஒரு தடவை ஒருவரை மட்டுமே செல்ல விடும் பிளவுவடிவ அடைப்புக் கதவு.

**kiss'-in-the-ring'**, *n.* இளைஞர்களிடையே ஒருவர் வேறு பாலரா யுள்ள மற்றொருவரைத் துரத்திக்கொண்டுபோய் முத்த மிடும் விளையாட்டுவகை.

**kiss'-me-quick**, *n.* செடிவகை; மகளிர் தலையில் பின்புறமாக மிகச் சாய்வாக வைத்துக்கொள்ளும் சிறுதொப்பி வகை ; குட்டையான முன் மயிர்ச்சுருள்.

**kit[1]**, *n.* மரத்தொட்டி; படைவீரர் மூட்டைமுடிச்சுத் தொகுதி; மூட்டைமுடிச்சுப் பை ; பயண ஆயத்த அணி ; தொழிலாளி யின் கருவிகலத்தொகுதி ; *v.* ஏற்படுத்திக்கொடு, ஆயத்தஞ் செய் ; சித்தஞ் செய்யப்பெறு.

**kit[2]**, *n.*=kitten.

**kit'-bag**, *n.* நீட்டுப்பை, படைவீரரின் அல்லது பயணக் காரரின் ஆடை அணிமணிப் பை.

**kit'-cat**, *n.* (வர.) ஆங்கில நாட்டில் 'விக்கு' (Whig) கட்சி அரசியல்வாதிகள் கொண்ட கழகத்தின் உறுப்பினர்; (தொ.) Kit-cat Club, இரண்டாவது ஜேம்சு (James II) மன்னரை ஏற்ற 'விக்கு' கட்சியினரால் நிறுவப்பட்ட கழகம் ; kit-cat portrait, 38 அங்குல நீளமும் 28 அங்குல அகலமும் உள்ள நிழற்படம்.

**kitch'en**, *n.* அடுக்களை, சமையலறை, மடைப்பள்ளி ; (தொ.) kitchen garden, காய்கறித் தோட்டம்; kitchen midden, (தொல்.) பெரும்பாலும் தோடுகளும் எலும்புகளும் கொண்ட வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட குப்பைகூளக்குவியல் ; kitchen physic, மிகுதியான நல்ல உணவு.

**kitch'ener**, *n.* சமையலறை வேலையாள்; சமையலறை மேலாள்; சமையற் சூட்டடுப்பு.

**kitchenette'**, *n.* சிறு சமையலறை; சமையலறையும் பொருட் கிடங்கும் ஒருங்கமைந்த சிறுகூடம்.

**kite**, *n.* பருந்து, கருடன்; கொடுங் கொள்ளையிடும் ஆர்வ முள்ளவன்; எத்தன்; பட்டம், காற்றுடி; பிரிட்டனின் சரக்குத் தர நிறுவனக் கட்டுப்பாட்டுக்கிணக்கமான தர உறுதிக்குரிய பருந்துக்குறி; *v.* காற்றுடியைப்போல் விண்ணிற் பறந்து உலவு; காற்றுடியைப்போல் விண்ணில் தாவிப் பறக்கச்செய்; (தொ.) fly a kite, பட்டம் பறக்கவிடு; பொதுமக்கள் கருத்தைத் தெரிந்துகொள்வதற்காக நோட்டம் விட்டுப்பார்; கடன் பத்திரம்மூலம் பணந்திரட்டு.

**kite'-balloon'**, *n.* படைத்துறை வேவுக் கூண்டு.

**kites**, *n. pl.* இளங்காற்றில் மட்டும் விரிக்கப்படும் மிகவுயர்ந்த கப்பற்பாய்கள்.

**kith**, *n.* அறிமுகப்பழக்கம்; (தொ.) kith and kin, உற்றார் உறவினர்.

**kitool'**, *n.*=kittul.

**kitt'en**, *n.* பூனைக்குட்டி; கூச்சமுள்ள சிறுமி; *v.* ஈனு, பூனை வகையில் குட்டிபோடு.

**kittereen'**, *n.* மேற்கிந்திய ஒற்றைக் குதிரை வண்டி.

**kitt'iwake**, *n.* கடற்பறவை வகை.

**kit'tle**, *a.* கூச்சமுள்ள, எளிதில் கையாளமுடியாத; (தொ.) kittle cattle, கூச்சமுள்ள கால்நடைகள்; எளிதில் பழகாதவர்.

**kittul'**, *n.* பனையினமரம்; பனையினமரத்தின் கருநிறமுடைய உறுதியான நார்ப்பொருள் வகை.

**kitt'y [1]**, *n.* செல்லப்பெயர் வழக்கில் பூனைக்குட்டி.

**kitt'y [2]**, *n.* சீட்டாட்ட வகைகளில் பந்தயத் தொகைகளின் கூட்டு; பொது நிதி; முடப் பந்தாட்டத்தில் இலக்காகவுள்ள சிறு வெள்ளைப்பந்து.

**ki'wi [1]**, *n.* (பே-வ.) நியூசிலந்து நாட்டவர்.

**ki'wi [2]**, *n.* நியூசிலந்தில் காணப்படும் வாலற்ற பறக்காத பறவை வகை.

**klax'on**, *n.* உந்துவண்டியின் மின்விசை ஊதுகுழல்.

**klepht**, *n.* (வர.) துருக்கிய வெற்றியின்பின் (15-ஆம் நூற்றுண்டில்) கிரேக்க அல்லது அல்பேனிய நாட்டிலுள்ள மலைப் பகுதிக் கொள்ளைப் படைவீரர்.

**kleptoman'ia**, *n.* திருட்டுச்செயலில் ஆர்வம், திருட்டார்வக் கோளாறு.

***klip'springer***, *n.* தென் ஆப்பிரிக்க சிறு மான்வகை.

**kloof**, *n.* தென் ஆப்பிரிக்காவில் குறுகிய மலையிடுக்கு, மலை விடர், பள்ளத்தாக்கு.

**knack**, *n.* தனிப்பயிற்சித்திறம், தனிநய நுட்ப ஆற்றல்; பயில்திறப்பண்பு, தனிச் செயற்பண்பு, தனிப்பேச்சுநடைப் பழக்கம்; நுண்விசைப்பொறி, விளையாட்டுப்பொறி; நுட்பச் சூழ்ச்சித்திறம்.

**knack'er**, *n.* அடிவிலங்காளர், பயனற்ற குதிரைகளை வாங்கிக் கொல்லும் தொழிலுடையவர்; கழிபொருள் வணிகர், மூலப் பொருள்களுக்காகப் பழையவீடுகள்-கப்பல்கள் முதலியவற்றை வாங்குபவர்.

**knag**, *n.* மரக்கணு, கிளையின் அடித்தூறு.

**knap [1]**, *n.* சிமையம், குன்றின் குடுமி; மேட்டுச்சரிவான நிலம்.

**knap [2]**, *v.* பாட்டைச்சரளைக்காகக் கல்லுடை, சம்மட்டியால் தகர்.

**knap'sack**, *n.* சடங்கம், அசம்பை, இரட்டு அல்லது தோலாலான படைவீரர் அல்லது பயணக்காரர் தோள்பை.

**knap'weed**, *n.* உறுதியான காம்பும் ஊதாமலர்களுமுடைய சாதாரண களைப்பூண்டு வகை.

**knar**, *n.* மரக்கணு, கரணை, அடிமரத்திலோ வேரிலோ பட்டையால் மூடப்பட்ட கரடு.

**knave**, *n.* வீணன், குறும்பன், போக்கிரி; படைவீரன் அல்லது பணியாள் உருவம் தாங்கியுள்ள ஆட்டச்சீட்டு.

**knav'ery**, *n.* நாணயக்கேடு, நேர்மையின்மை, கயமை.

**knav'ish**, *a.* போக்கிரித்தனமான; மோசடியான; கயமைத் தனமான.

**knead**, *v.* பிசை; மாப்பிசைந்து ரொட்டி சுடு; களிமண் பிசைந்து மட்பாண்டஞ் செய்; கல, ஒன்றுபடுத்து; பற்றவை; உடம்பைப் பிடித்துவிடு.

**knead'ing**, *n.* பிசைதல்; (தொ.) kneading trough, மாவு பிசைவதற்குரிய மரத்தொட்டி.

**knee**, *n.* முழங்கால் முட்டு; முழங்காலை மூடும் ஆடைப்பகுதி; வடிவத்தில் அல்லது நிலையில் முழங்கால் போன்றபொருள்; முடக்கு வளைவுள்ள இரும்பு அல்லது மரத்துண்டு; *v.* முழங் காலினால் தொடு; பணிச்சட்டம் முதலியவற்றினை முடக்கு வளைவான இரும்பு அல்லது மரத்துண்டினால் இறுக்கு; (பே-வ.) காற்சட்டையை முழங்காலண்டை புடைத்திருக்கச் செய்; (தொ.) bring one to his knees, ஒருவரை வணங்க வை; give a knee to, குத்துச்சண்டை வீரரை இடைவேளையில் முழங்கால்மேல் தாங்கு; குத்துச்சண்டை வீரரின் உடன் துணைவராயிரு; is on the knees of the gods, முடிவு இன்னும் உறுதிப்படாதிருக்கிறது; on one's knees, வழிபடுகையில் முழந்தாள் படியிட்டு, வணங்கி, வணக்கமாக.

**knee'-breech'es**, *n. pl.* முழங்கால் வரையிலோ அல்லது அதற்குச்சற்று கீழாகவோ உள்ள காற்சட்டை.

**knee'-cap**, *n.* முழங்கால் சில்லு; குதிரைகளின் முழங்கால் களுக்குரிய காப்பு மூடி.

**knee'-deep**, *n.* முட்டளவு ஆழமுள்ள.

**knee'-hole**, *n.* மேசையின் இழுப்பறை அடித்தளங்களுக் கிடையே முழங்கால் விட்டுக்கொள்வதற்கான வெற்றிடம்.

**knee'-hole table**, *n.* இழுப்பறை அடித்தளங்களுக்கிடையே முழங்கால் விட்டுக்கொள்வதற்கான வெற்றிடம் அமைந்துள்ள மேசை.

**knee'-joint**, *n.* முழங்கால் மூட்டு; மூட்டிணைப்பு, கீலினால் பொருத்தப்பெற்ற இருபகுதிகள் கூடுமிடம்.

**kneel**, *v.* மண்டியிடு, முட்டுன்றிநில்; முழந்தாள்படியிட்டு வணங்கு; பணிவுகாட்டு.

**knee'-pan**, *n.*=knee-cap.

**knee'-swell**, *n.* (இசை.) இசைப்பெட்டிகளில் முழங்காலினால் இயக்கப்படும் நெம்புகோல்.

**knell**, *n.* சாவுமணியோசை; தீக்குறி, தீமைக்கறிகுறி; *v.* சாவு மணியடி; இரங்கொலி எழுப்பு; தீமைக்கறிகுறியாக மணியடி; சாவுமணிபோன்று தீக்குறி காட்டு.

**knelt**, *v.* kneel என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**Kness'et**, *n.* ஒரே அவையையுடைய இஸ்ரேல் நாட்டு மாமன்றம்.

**knew**, *v.* know என்பதன் இறந்தகாலம்.

**Knick'erbocker**, *n.* நியூயார்க் வாசி.

**knick'erbockers**, *n. pl.* முழங்காலில் திரட்டி மடிக்கப்பட்ட தளர்த்தியான காற்சட்டை.

**knick'ers**, *n. pl.* (பே-வ.) முழங்காலில் திரட்டப்பட்ட தளர்த்தியான காற்சட்டை; முழங்காலில் திரட்டி மடிக்கப் பட்ட தளர்த்தியான மகளிரின் குறுங்காற்சட்டை.

**knick'-knack**, *n.* பொட்டுப்பொடி, சிற்றழகுப் பொருள், சிற்றணிமணித் துணுக்கு; சிங்காரத் தட்டுமுட்டுப்பொருள், பொட்டுப் பொடிச் சரக்கு; சிறுவிளையாட்டுக்கருவி.

**knife**, *n.* கத்தி, பேனுக்கத்தி; குத்துவெட்டுக்குரிய பெருங் கத்தி; இயந்திரத்தின் பாகமாகவுள்ள அலகு; *pl.* knives; *v.* கத்தியினால் வெட்டு; கத்திகொண்டு குத்து; (தொ.) before you can say knife, மிகவிரைவாக, திடீரென்று; have one's knife in, விடாப்பிடியாக ஒருவரிடம் பகைமை கொண்டிரு; ஒருவரைப் பழிவாங்கக் காத்திரு; play a good knife and fork, வயிரரச்சாப்பிடு; the knife, (மரு.) அறுவைச்செயல்கள்; war to the knife, ஈவிரக்கமற்ற போர்.

**knife'-board,** *n.* கத்தித் துப்புரவுப் பலகை; பழைய வகைப் பேருந்து வண்டியின் முகட்டின்மேல் நீளவட்டமாக அமைக்கப் பட்டுள்ள இணையிருக்கை.

**knife'-boy,** *n.* மேசைக்கத்திகளைத் துப்புரவுசெய்யும் பையன்.

**knife'-edge,** *n.* கத்தியின் கூர்விளிம்பு; (இயந்.) ஊசலி அசைவதற்கேதுவாயிருக்கிற எஃகு அச்சு.

**knife'-grinder,** *n.* சாணை பிடிப்பவர், கத்தி கூராக்குபவர்.

**knife'-machine',** *n.* கத்தித் துப்புரவு இயந்திரம்.

**knife'-rest,** *n.* கத்தித் தாங்கி, உணவுமேசையில் கத்தி கவர் முள் ஆகியவற்றை வைப்பதற்கான உலோகம் அல்லது கண்ணாடியாலான கட்டை.

**knight,** *n.* வீரத் திருத்தகை, ஆண்டகை; கருணைமறவன், மாதர்களுக்கும் நலிவுற்றோர்களுக்கும் நல்லாதரவு நல்கிக் காக்கும் வீரன்; வீரார்ந்த பெருந்தகை, நற்பணிக்காக மன்னரால் மதிப்புக்குரிய படைத்துறை நிலைக்கு உயர்த்தப்பட்ட உயர்குடிப்பிறப்பினர்; பண்பார்பெருந்தகை; படைத்துறை நிலைக்கு உயர்த்தப்பட்டவர்; வீரப்பெருந்தகைப் பட்டம் வழங்கப்பெற்ற உயர்குடிப்பிறப்பாளர்; (வர.) மாமன்ற வட்டப்பேராள், கோட்டம் அல்லது வட்டத்துக்கு மாமன்றத்தில் பிரதிநிதியாயிருப்பவர்; பண்டைய ரோம் நாட்டில் குதிரைப் படையைச் சேர்ந்த ஒருவர்; பண்டைய கிரேக்க நாட்டில் ஆதென்ஸ் (Athens) நகரில் இரண்டாம் படிநிலைக்கு உயர்த்தப்பட்ட குடிமகன்; சதுரங்க ஆட்டத்தில் குதிரைத்தலையுடைய காய்; *v.* ஒருவருக்கு வீரத்திருத்தகைப் பட்டம் வழங்கு; (தொ.) knight bachelor, தனிப்பட்ட எந்தப் படிநிலையையும் சாராத பொதுநிலைப்பட்டம் பெற்ற வீரத்திருத்தகை; knight commander, வீரத்திருத்தகைப் படி நிலை வகைகளில் மேல்தரத்தைச் சேர்ந்தவர்; knight companion, வீரத்திருத்தகைப் படிநிலையில் தாழ்ந்த தரத்தைச் சேர்ந்தவர்; knight errant, உலாவியல் பெருந்தகைவீரர், அருளாண்மைச் செயல்களைத் தேடித்திரிந்த இடைநிலைக்கால ஆண்டகை; கோமாளி வீரன்; knight of the post, பொய்க் கரியுரைத்தே வாழ்க்கை நடத்துகிறவர்; Knights Hospitallers, படைத்துறைத் துறவிகள்கொண்டதாக 1048-ல் நிறுவப்பட்ட அமைப்பு; Knights Templars, பாலஸ்தீன (Palestine) நாட்டுக்குத் திருத்தல யாத்திரை செல்பவர்களுக்குப் பாதுகாப்பளிப்பதற்கான சமயச்சார்பான படைத்துறை அமைப்பு.

**knight'age,** *n.* வீரத்திருத்தகையினர் தொகுதி; வீரத்திருத் தகைகளின் வரலாறடங்கிய பட்டியல்.

**knight'hood,** *n.* வீரத்திருத்தகைப் பட்டம்; வீரத்திருத்தகை நிலை; வீரத்திருத்தகையோரின் படித்தரம்; வீரத்திருத்தகை அமைப்பு.

**knight'ly,** *a.* வீரத்திருத்தகைக்குரிய; வீரத்திருத்தகைக் குகந்த; வீரத்திருத்தகை போன்ற.

**knight'-mar'shall,** *n.* அரசன் அரண்மனைக்குப் பன்னிரண்டு கல் தொலைவுக்குட்பட்ட எல்லையில் நடைபெறும் குற்றங்கள் நடவாமற் காத்த முற்காலப் பணியாளர்.

**knight'-service,** *n.* (வர.) படைத்துறைப் பணிக்கான மானியமுறை.

**knit,** *v.* துன்னு; பின்னியிழை; வலையாகப் பின்னு; துன்னலுறு, பின்னி இணைவுறு; துன்னி உருவாக்கு, பின்னல்வேலை செய்து உண்டுபண்ணு; சுரி, நெரி, சுருக்கமுறுவி; நெரிப்புறு, சுருக்கமுறு; நெருங்கியிணை; ஒன்றுபடுத்து; கூட்டி ஒன்றுக்கு; செறிவுறுத்து; (தொ.) knit up, பின்னலிழை போட்டுச் செப்பனிடு; வாத முதலியவற்றுக்கு நிறைவளி; நன்கு முடி.

**knitt'ing,** *n.* துன்னுதல்; பின்னல்வேலை; ஒன்றுபடுத்தல்.

**knitt'ing-needle,** *n.* துன்னூசி, துன்னுகோல், பின்னலிழைக் கோல்.

**knit'tle,** *n.* (கப்.) புரியிழையினாலான சிறிய நூற்கயிறு.

**knob,** *n.* குமிழ், முளையுருளை; உருள்புடைப்பு; கொம்மை; குமிழ்வடிவக் கைப்பிடி; சர்க்கரை-நிலக்கரி முதலியவற்றின் சிறு கட்டி; *v.* குமிழ் இணைவி; புடை, வீங்கு, உப்பு.

**knobbed,** *a.* குமிழ் இணைவுற்ற; குமிழினையுடைய; குமிழ் நிரம்பிய, சிறு புடைப்புக்களையுடைய.

**knob'ble,** *n.* சிறு புடைப்பு, கணு.

**knobb'y,** *a.* புடைப்புக்கள் நிறைந்த, கணுக்கள் உள்ள.

**knob'kerrie,** *n.* தென்னாப்பிரிக்கர் ஆயுதமாக வழங்கும் குமிழ்ப்பிடியுள்ள குறுந்தடி.

**knob'stick,** *n.* படைக்கலம் என்னும் வகையில் குமிழ்த் தலைப் புடைய தடி; வேலைநிறுத்தக் காலத்தில் வேலைக்குச் செல்பவர்.

**knock,** *n.* திடீர் அடி, தட்டுதல், தாக்குதல், இடிப்பு, குத்து, கொட்டு; இயந்திரத்தினுள் கோளாறு காரணமாக எழும் உள்வெடிப்பொலி; *v.* வலங்கொண்டடி, மொத்து; இடி, குத்து; கொட்டு; மோது; மோதப்பெறு; அறைந்து உட்செலுத்து; அடித்து வெளியேற்று; கதவைத்தட்டு, தடதடவென்றடித்துக்கொள்; தடதட ஓசை உண்டுபண்ணு; இயந்திர வகையில் தடதடவென்றோசை உண்டாகப்பெறு; அடித்துத்தாக்கு; அடிகள் மூலம் வழங்கு; அடிகள் மூலம் செய்துமுடி; அடித்து வீழ்த்து; ஏலத்தில் சுத்தியடித்துப் பொருளை வழங்கு; (தொ.) knock about, அடிமேல் அடி கொடு; முரட்டுத்தனமாக நடத்து; அலைந்து திரி; ஒழுங்கற்ற வாழ்வு நடத்து; knock against, சென்று மோதிக்கொள்; தற்செயலாகச் சந்தி; knock down, அடித்து வீழ்த்து; தோல்வியுறுவி; ஏல விற்பனையில் சம்மட்டியாலடித்து ஏலங் கேட்டவருக்குப் பொருளை விற்றுவிடு; (பே-வ.) குறிப்பிட்டு அழை; (பே-வ.) விலைகளைக் குறை அல்லது தணி; எளிதாக எடுத்துச் செல்லும்படி இயந்திரம் முதலியவற்றைக் கூறுகளாகப் பிரித்துவிடு; knock head, நெற்றி நிலத்தில் படிய விழுந்து வணங்கு; தன்னை இழிவுபடுத்திக்கொள், தாழ்த்திக்கொள்; knock into a cocked hat, செம்மையாக அடி; knock off, அடித்து ஒடித்து வேருக்கு; வேலையை விட்டொழி; விட்டொழி; (பே-வ.) விரைந்து காரியஞ் செய்; பாடல்கள் முதலியவற்றை விரைவாக இயற்றித்தள்ளு; விலைப்பட்டியலில் கழிவுதள்ளு; விலையிலிருந்து கழிவு தள்ளிவிடு; knock one into the middle of next week, அடித்து ஓட்டு; knock one's head against, முரணான சூழ்நிலைகளோடு மோதிக்கொண்டு இடர்ப்படு; knock one's head off, ஒருவரை எளிதில் விஞ்சு; knock on the head, தலையிலடித்து உணர்விழக்கச் செய், தலையிலறைந்து கொல்லு; திட்டம் முதலியவைகளுக்கு முடிவு கட்டு; knock out, புகைபிடிக்குங் குழலைக் கவிழ்த்துக்கொட்டு; குத்துச்சண்டையில் குறிப்பிட்ட நேரத்தில் எதிரி மீண்டும் எழாதவாறு மடங்கச்செய், படுகுலையடிகொடு, தோல்வியுறுவி; (பே-வ.) அவசரமாகத் திட்டமிடு; knock the bottom out of, வாதம் முதலியவற்றைச் செல்லாததாக்கு; knock together, அவசரமாக ஒன்றுசேர்; knock under, பணி; கீழ்ப்படி; knock up, அடித்து மேல் நோக்கிச் செலுத்து; அவசரமாகச் செய், விரைந்து ஏற்பாடு பண்ணு; மரப்பந்தாட்டத்தில் ஓட்டங்கள் எடு; கதவைத்தட்டி ஆளை எழுப்பு; களைப்புறுவி; களைப்புறு.

**knock'about,** *n.* பகட்டாரவாரமும் இரைச்சலுமுடைய இசையரங்கு; அலைந்து திரிதல்; *a.* பகட்டாரவாரமுள்ள, இரைச்சலான; துணிவகையில் முரட்டு உபயோகத்துக்குப் பயன்படுத்தத்தக்க.

**knock'-down,** *n.* தெருச்சண்டை, அருகில் உள்ளவரும் கலந்துகொள்ளும் கைகலப்பு; *a.* அடிவகையில் வீழ்த்துகிற, விஞ்சி மேற்செல்கிற, அடக்குகிற; ஏல விற்பனையில் கேட்கப்படும் விலை வகையில் மிகக்குறைந்த, கொள்முதல் வைப்பான.

**knock'er,** *n.* மோதுபவர், தட்டுபவர்; கதவுதட்டும் கைப்பிடி; சுரங்கங்களில் வாழ்ந்துகொண்டு உலோகக் கனிப்பொருள் இருக்குமிடம் தட்டிக் காட்டுவதாகக் கருதப்படும் கூளித்தெய்வம்.

**knock'-kneed,** *a.* தெற்றுக்காலுடைய.

**knock'-knees,** *n. pl.* தெற்றுக்கால், நடக்கும்போது ஒன்றோடொன்று மோதும் முட்டிக்கால்கள்.

**knock'-out',** *n.* படுகுலையடி, மீண்டெழாதபடி குத்துச் சண்டைக்காரனை அடிக்கும் அடி; ஏலவிற்பனையில் குறை விலையில் வாங்கிவிட உடந்தையாயிருப்பவர்; *a.* குத்துச்சண்டை குத்து வகையில் எதிரியை எழாதவாறு வீழ்த்துகிற.

**knoll**[1], *n.* சிறுகுன்று, மேடு.

**knoll**[2], *v.* மணி அடி; மணி அடித்து நேரங்காட்டு; மணி அடித்தழை.

**knot**[1], *n.* முடிச்சு; சிக்கல், நெருடு; இடர், புதிர்; பிரச்சினை; உடுப்பின் ஒப்பனை இழைக்கச்சை; (கப்.) வேகமளக்குங் கருவியல் முடிச்சுக்களால் குறிப்பிடப்படும் பிரிவு; 6080 அடி கொண்ட கடல்துறை நீட்டலளவை அலகு; பிரச்சினை-கதை நிகழ்ச்சி முதலியவைகளின் மையம்; விலங்கினது உடம்பிலுள்ள கெட்டியான மொத்தைக்கட்டி; செடியின் காம்பு-கிளை அல்லது வேரில் காணப்படும் புடைப்பு; அடிமரத்தில் கிளை தோன்றுமிடத்தில் உண்டாகுங் கெட்டியான திரட்சி; அறுக்கப்பட்ட பலகையில் இத் திரட்சியினுல் ஏற்படும் எதிரிழைப்பகுதி; செடிக்காம்பின் கணு; தொகுதி, கூட்டம், கணம்; குலே; கொத்து; சுமைகளைத் தூக்கிச் செல்வதற்கான இரட்டைத்தோள் சும்மாடு; *v.* கயிறு முடிச்சிடு; முடிச்சாகக் கட்டு; ஆடை ஓர முடிச்சுக்களிடு; முடிச்சுக்களிட்டு ஆடைக் கரைகளுண்டாக்கு; புருவம் நெரி; நெருக்கமாக ஒன்றுபடுத்து; சிக்கவை, சிக்குப்படுத்து; (தொ.) cut the Gordian knot, வன்செயலினுற் கட்டுப்பாடுகளகற்றிச் சிக்கலேத்தீர்; Gordian knot, சிக்கலான முடிச்சு, இடரான பிரச்சினை அல்லது வேலே; porter's knot, சுமைகளை எடுத்துச் செல்வதற்கான இரட்டைத் தோள் சும்மாடு; weaver's knot, வெவ்வேறு அளவுள்ள கயிறுகளை இணைப்பதற்கான முடிச்சு வகை.

**knot**[2], *n.* ஈரமுள்ள மணற்பாங்கான இடங்களில் நீரில் நடந்து செல்லுஞ் சிறு பறவை வகை.

**knot'-grass**, *n.* சிக்கிக்கொண்டு படருந் தண்டுகளையும் இளஞ்சிவப்பு மலர்களையுமுடைய களைப்பூண்டு வகை.

**knott'y**, *a.* முடிச்சுக்கள் வாய்ந்த; கணுக்கள் நிரம்பிய; புதிரான, விளக்கமுடியாத.

**knot'work**, *n.* பின்னப்பட்டுள்ள கயிறுகள் கொண்ட ஒப்பனை வேலைப்பாடு; சித்திர வேலைப்பாடமைந்த தையல் வேலை வகை.

**knout**, *n.* அடியால் உயிர்போக்கவல்ல ருசிய நாட்டு முற்காலச் சவுக்கு; *v.* ருசியச் சவுக்கினுல் அடி.

**know**, *n.* தெரிநிலை, போதிய தகவல் பெற்றுள்ள நிலை, அறிய வேண்டுவனவற்றை அறிந்துள்ள நிலை; *v.* அறி, தெரிந்திரு; தகவல் உடையவராயிரு; ஐயமற உணர்ந்துகொண்டிரு; அடையாளமறி; இனங் கண்டுகொள்; பெயர் விவரந் தெரிந்திரு; திரித்தறி, வேறு பிரித்துணரும் ஆற்றலுடையவராயிரு; அனுபவத்தாலறி, உணர்; நன்கு தெரிந்திரு; பழகியறிந்திரு; பாலினத்தொடர்பு கொண்டிரு; தேர்ச்சி பெற்றவராயிரு; புலமையுடையவராயிரு; (தொ.) don't know him from Adam, பார்வையில் அடையாளந் தெரியாதிரு; in the know, விவரம் முழுதுந் தெரிந்திருக்கிற; தெரியாதநிலையில் இல்லாத; know a hawk from a handsaw, தெளிந்த பொது நிலை அறிவுள்ளவராயிரு; know better, know better than that, கூறியதை நம்பிவிடா அளவுக்குச் செய்திகளை நன்கு தெரிந்திரு; know by name, பெயரைப்பற்றிக் கேள்விப் பட்டிரு; பெயரைக் கூறக்கூடியவராயிரு; know how, வழியறி; know of, உணர், அறி; know one's own mind, ஊசலாட்டமற்றுணர்; know the ropes, செயல் துறையின் நிலையையும் விவரங்களையும் நுணுக்கங்களையும் தெரிந்து கொள்; know what is what, உலக அனுபவமும் அறிவும் உடையவராயிரு; not that I know of, எனக்குத் தெரிந்த வரையில் இல்லை.

**know'-all**, *n.* எல்லாந் தெரிந்தவர்; எல்லாந் தெரிந்ததாகச் சொல்லிக்கொள்பவர்.

**know'-how**, *n.* வழிவகையறிவு; செய்விக்கேற்ற சரியான வகைமுறை நுண்ணறிவாற்றல்.

**know'ing**, *a.* அறிவுள்ள, விரகுடைய; சூழ்ச்சித்திறமுள்ள; முழு விழிப்புடனிருக்கிற; (பே-வ.) புதுப்பாணியிலுள்ள, நாகரிகப் பாங்கான.

**know'ingly**, *adv.* முழு விழிப்புடனிருக்கிற நிலையில், வேண்டுமென்றே, நெஞ்சறிந்து, மனப்பூர்வமாக.

**knowl'edge**, *n.* அறிவு; அறிந்த செய்தி; தகவல்; புற அறிவுத்தொகுதி; அறிவுப்பரப்பு; அறிவுப் பரப்பெல்லை; தெரிந்துள்ள செய்தியின் அளவு; நெருங்கிய பழக்கம்; அனுபவப் பழக்க அறிவு; (தொ.) come to one's knowledge, தெரியவரலாகு.

**knowl'edgeable**, *a.* (பே-வ.) செய்திகளை நன்கு தெரிந்துள்ள, விவரமறிந்த, அறிவமைதியுடைய.

**know'-nothing**, *n.* அறிவிலி; ஐயுறவுக் கோட்பாடுடையவர்.

**knuc'kle**, *n.* கைமுட்டி; விரலடி இணை எலும்பு; நாற்கால் விலங்கு வகையில் கணைக்கால்; குதிரைமுட்டு; கன்றுக் குட்டி அல்லது பன்றியின் இறைச்சியுடன் கூடிய முழங்கால் முட்டுப் பகுதி; *v.* கைமுட்டியால் அடி; கைமுட்டியால் தேய்; விரல்மடக்கிக் குத்து; முட்டியால் அழுத்து; முட்டி கொண்டு துடை; கோலியாடுகையில் விரற் கணுக்களை நிலத்தின்மீது வை; (தொ.) a rap on the knuckles, சிறுவர்களின் விரற் கணுவின் மேலடித்துத் தண்டிக்கும் வகை; கண்டித்தல்; knuckle down, kunckle under, விட்டுக்கொடு, கீழ்ப்படி, அடங்கிப்போ; near the knuckle, (பே-வ.) இழிந்த பாங்குடையதென்று சொல்லும் நிலைக்கு மிக அணித்தான, கிட்டத்தட்ட இழிபாங்கான.

**knuck'le-bone**, *n.* கைமுட்டி எலும்பு; ஆடு முதலிய நாற்கால் விலங்குகளின் கால்முட்டி எலும்பு; குதிரையின் முட்டெலும்பு.

**knuck'le-bones**, *n. pl.* ஆடு முதலியவைகளின் முழங்கால் முட்டி எலும்புகளைக் கொண்டு ஆடப்படும் விளையாட்டு வகை.

**knuck'le-duster**, *n.* முட்டிக்காப்பு, கைமுட்டியால் அடிக்கும் போது ஊறு நேராதபடிக் காப்பதற்கான உலோக உறை.

**knur, knurr**, *n.* அடிமரக் கணு, முண்டு; காழ்ச்செறிவு; இங்கிலாந்தின் வடபகுதியில் ஆடப்படும் ஆட்டத்திலுள்ள மரப்பந்து.

**knurl**, *n.* முடிச்சு, கணு; தட்டெழுத்துப் பொறியில் அச்சமுத்துத் தாள் தகட்டைத் திருப்புங் குமிழ்; உலோக வேலையில் விளிம்பு அமைவு.

**knut**, *n.* பகட்டான இளைஞன்.

**ko'a**, *n.* 'சான்டுவிச்' (Sandwich) தீவுகளிற் காணப்படும் வேல மரவகை.

**koa'la, koo'lah**, *n.* ஆஸ்திரேலியாவிலுள்ள மரம் வாழ் பாலுணி விலங்குவகை.

**kob'old**, *n.* செர்மானியரின் பழங்கதை மரபில் நற்கூளி; சுரங்கங்களில் வாழும் அடிநிலக் கூளி.

**kod'ak**, *n.* தொடர்படமெடுக்குந் தகட்டுச்சுருளையுடைய நிழற்படக் கருவி; *v.* தொடர்சுருளைக் கருவிகொண்டு நிழற்படம் பிடி; காட்சியை மிகு விரைவாக நிழற்படம் பிடி; தோற்றத்தை விவரித்துக் கூறு.

**ko'el**, *n.* குயில் வகை.

**koh'-i-noor**, *n.* புகழ்பெற்ற தென் இந்திய வைரம்; இனத்திற் சிறந்தது; மிகச் சிறந்த பொருள்.

**kohira'bi**, *n.* இங்கிலாந்திற் கால்நடைகளுக்குத் தீவனமாகப் பயன்படுங் கோசுக்கீரை வகை.

**kohl**, *n.* மைக்கற்பொடி; அஞ்சனம், கண்ணுக்குத் தீட்டும் மை.

**koin'e**, *n.* கிரேக்க இலக்கிய காலத்துக்கும் கீழை ரோமப் பேரரசுக் காலத்துக்கும் இடைப்பட்ட ஊழியின் பொதுநிலைக் கிரேக்க இலக்கிய வழக்குமொழி.

**kol'a**, *n.*=cola.

**Kolar'ian**, *n.* கோலர், வங்காள மலைகாடுகளிலுள்ள ஆரியர்களல்லாத தொல்பழங்குடியினர்; *a.* கோலர் இனத்தைச் சேர்ந்த.

**kolin'sky**, *n.* சைபீரியா (Siberia) விலுள்ள நில-நீர்வாழ் விலங்கு வகையின் மென்மயிர்த்தோல்.

**komitadj'i, komitaj'i**, *n.*=comitadji.

**kom'somol**, *n*. ருசியாவின் பொதுவுடைமை இளைஞரமைப்பு.

**koo'doo**, *n*. தென் ஆப்பிரிக்காவிலுள்ள சுருள் கொம்பும் வெண்ணிறக் கோடுமுடைய பெரிய மான் வகை.

**koo'lah**, *n*.=koala.

**koorb'ash**, (அரா.) *n*.=kourbash.

**kop'ec, kop'eck, kop'eek, kop'ek**, *n*.=copeck.

**kopp'ie, kop'je**, *n*. தென் ஆப்பிரிக்காவில் சிறு குன்று.

**Kor'an**, (அரா.) *n*. இஸ்லாமியர் திருமறை.

**korf'ball**, *n*. ஆலந்துநாட்டுக் கூடைப்பந்தாட்ட வகை.

**kosh'er**, *n*. யூதர்களின் மரபுச்சட்டத்தின்படி செய்து விற்கப் படும் உணவு அல்லது உணவுக்கடை; *a*. யூதர் மரபுணவுக் குரிய; யூதர் மரபுணவு மனைக்குரிய.

**kotow'**, *n*. கீழ்ப்படிதலின் அறிகுறியாக நெற்றி நிலத்தில் படும்படி வணங்குஞ் சீனர் வணக்கமுறை; *v*. சீன மரபுப்படி நெற்றி நிலத்திற்பட வணக்கஞ் செய்.

**kot'wal**, (இ.) *n*. இந்தியத் தலைமை ஊர்க்காவலர்; குற்ற நடுவர், தண்டலாளர்.

**koum'iss**, *n*. குதிரைப்பாலிலிருந்து தயாரிக்கப்படும் புளிப் பான குடிவகை.

**kourb'ash**, (அரா.) *n*. துருக்கி எகிப்து நாடுகளில் தண்டனைக்குரிய சாட்டைவார்.

**kraal**, *n*. சுற்றிலும் வேலியாற் சூழப்பட்ட தென் ஆப்பிரிக்க கிராமம்; ஆடுமாடு அடைக்குந் தொட்டி, வேலியிடப்பட்ட பட்டி.

**krait**, (இ.) *n*. வங்காளத்திற் காணப்படும் கடு நச்சுப்பாம்பு வகை.

**kra'ken**, *n*. நார்வே நாட்டுக் கடலோரப்பகுதிகளிற் காணப் படுவதாகக் கருதப்படும் பழங்கதை மரபுக்குரிய கடல் வேதாளம்.

**krans**, *n*. தென் ஆப்பிரிக்காவிற் சுவர்போல் மேற்கவிந்து நிற்கும் பாறைகள்.

**krem'lin**, *n*. ருசியாவில் மாஸ்கோ நகரிலுள்ள அரசியல் கட்டிடமாகிய உட்கோட்டை மாளிகை; (தொ.) the Kremlin, ருசிய அரசாங்கம்.

**kreu'tzer**, *n*. செர்மனி ஆஸ்திரியா நாடுகளில் முன்பு வழங் கிய வெள்ளி செம்பாலான சிறு நாணயம்.

***krieg'spiel***, (செர்.) *n*. போர் மாதிரி விளையாட்டு, வரை படங்களின்மேல் மரக்கட்டைகளைப் போர்வீரர்களாகக் கொண்டு நகர்த்திச் செல்லும் ஆட்ட வகை.

**kril'ium**, *n*. நில அரிப்பைத்தடுக்கும் தூள் வகையின் வாணிகப்பெயர்.

**kris**, *n*.=creese.

**Krish'naism**, *n*. கண்ணன் வழிபாடு.

**kromes'ky**, *n*. கொத்திய கோழிக்குஞ்சின் இறைச்சி உட் பொதிந்த பன்றி இறைச்சிப் பொரியலுணவு வகை.

**kron'e**, *n*. டென்மார்க்-நார்வே-ஸ்வீடன் முதலிய நாடுகளிற் பழக்கத்திலிருக்கும் வெள்ளி நாணயம்; முற்கால ஆஸ்திரியா நாட்டின் வெள்ளி நாணயம்; முற்கால செர்மனி நாட்டுத் தங்க நாணயம்.

**Kroo, Krou, Kru**, *n*. மேலை ஆப்பிரிக்காவில் லைபீரியா நிலத்தின் கரையோரப் பகுதிகளில் உள்ள திறமைவாய்ந்த கடலோடிகளான நீக்ரோ இனத்தவர்; *a*. லைபீரியா நிலத்து நீகிரோ இனத்தைச் சார்ந்த.

**kryp'ton**, *n*. (வேதி.) மறையம், ராம்சே (Ramsay) என்பவ ரால் 1898-ஆம் ஆண்டிற் கண்டுபிடிக்கப்பட்ட அரிய இயை பியக்கமற்ற ஆவித்தனிமம்.

**ksha'triya**, (ச.) *n*. க்ஷத்திரியர், வீர வகுப்பினர்.

**kud'os**, *n*. பெருமை, கீர்த்தி, புகழ்.

**Kuf'ic**, *n*.=cufic.

**Ku'-Klux, Ku'-Klux-Klan'**, *n*. (வர.) அமெரிக்க தென் ஐக்கிய அரசுகளில் மறைநிலை நீகிரோ எதிர்ப்புச்சங்கம்; முதல் உலகப் போர்க்கால அமெரிக்க மறைநிலை அயலார் தடைக்காப்புச் சங்கம்.

***kuk'ri***, (இ.) *n*. இருமுனைகளிலும் அகன்று வளைந்த கூர்க்க வீரரின் கொடுவாள்.

**kul'ak**, *n*. செல்வ வளநிலையுடைய ருசிய நாட்டுக் குடியான வர்; *pl*. kul'aki.

***kultur'***, (செர்.) *n*. பண்பாடு; நாகரிகம்; நாகரிகப்படிவம்.

***kultur'kampf***, (செர்.) *n*. (வர.) பள்ளி-கோயில்கள் நிர்வாகம் பற்றி முற்காலச் செர்மன் பேரரசாட்சியாளர்க்கும் போப் ஆண்டவருக்கும் இடையேயுள்ள பூசல்.

**kumm'el**, (செர்.) *n*. சோம்பு மணமூட்டப்பட்ட இன்தேறல் வகை.

**Kurd**, *n*. கூர்டிஸ்தான் (Kurdistan) குடிமகன்.

**Kuomintang'**, *n*. சீனாவில் (1912-இல்) நிறுவப்பட்ட தேசியப் புரட்சிக் கட்சி.

***kur'saal***, (செர்.) *n*. செர்மானிய உடல்நலத் தலங்களிற் பார்வையாளர்களுக்கென ஒதுக்கப்பட்ட கட்டிடம்.

**kvass**, *n*. கம்பு போன்ற ஒருவகைத் தானியத்தினின்று இறக்கப்படும் ருசியநாட்டுக் குடிவகை.

**kwashior'kor**, *n*. வெப்ப நாடுகளிற் புரதச்சத்துப் போதாமை யால் வரும் நோய் வகை.

**kwe'la**, *n*. தென் ஆப்பிரிக்க சூலூ (Zulu) மக்கள் பாடல் வகை.

**ky'anize**, *v*. மரங்கள் உளுத்து அல்லது மக்கிப்போகாமல் தடுக்கும் 'வீரம்' கலந்த கரைசலைப் பூசு.

**kyat**, *n*. பொதுச் செலாவணியிலுள்ள பர்மிய நாணயம்.

**kyl'in**, *n*. சீன ஜப்பானிய பீங்கான் கலங்களின் மேல் வரையப்படும் பழங்கதை மரபுக்குரிய வியத்தகு வடிவுடைய விலங்கு உருவங்கள்.

**kyl'oe**, *n*. ஸ்காத்லாந்து நாட்டில் வளர்க்கப்படும் நீண்ட கொம்புடைய குட்டையான மாடு வகை.

**kym'ograph**, *n*. ஒலி அலைகளின் அழுத்த வேறுபாடுகளைப் பதிவு செய்யுங் கருவி.

***Kyr'ie ele'ison***, (கிரே.) *n*. கிரேக்க ரோம திருக்கோயில்களில் வழிபாட்டின்போது கூறப்படும் வழிபாட்டுச் சொற்றொடர்; வழிபாட்டுச் சொற்றொடர் சார்ந்த பின்னணி இசையமைப்பு; ஆங்கிலத் திருக்கோயில்களில் 'நற்கருணை' வழிபாட்டின் போது சமயகுருவின் கட்டளைகளுக்கு அளிக்கப்படும் மறு மொழி.

La, *n.* (இசை.) மேற்பாலேயில் ஆறுவது இசைமானம் அல்லது பண்.

laag'er, *n.* படைவீடு; வண்டிகளை வட்டமாக நிறுத்தி வைத்து அமைத்த கூடாரம்; படைத்துறைக்கவச ஊர்திகளின் தங்கலிடம்; *v.* வண்டிகளை வட்டமாக நிறுத்தி வைத்துக் கூடாரம் அமை; வண்டி வட்டக்கூடாரங்களில் ஆட்களைத் தங்கவை.

lab, *n.* (பே-வ.)=laboratory.

lab'arum, *n.* ரோமரின் படைத்துறைக் குறிகளுடன் கிறித்தவச் சின்னங்களையும் இணைத்த கான்ஸ்டண்டின் (Constantine) என்ற முதல் கிறித்தவ ரோமப் பேரரசர் கொடி.

lab'dacism, *n.*=lambdacism.

labefac'tion, *n.* நடுக்கம்; தளர்ச்சி, வலுக்குறைவு; வீழ்ச்சி.

lab'el, *n.* தாள் நறுக்கு; முகப்புவரிச்சீட்டு, பொருட்பெயர்-பண்பு-வகை-உடையவர் பெயர்-செல்லுமிடம் முதலிய இன்றியமையா விவரங்களைத் தாங்கிய அடையாளத் துண்டுக் குறிப்பு; வகை விவரத் துணுக்கு, வகை தொகைப்படுத்தப் பட்ட தொடர்பு விவரக்குறிப்பு; தற்குறிப்பு அடைமொழிப் பெயர்; ஒட்டுப்பொறிப்புத் தலை, தலைச்சின்னம்; *v.* பொருட்களின்மேல் பெயர் விவரச்சீட்டை இணை; தலைச்சின்னத்தை ஒட்டு; இனவாரியாகப் பிரித்து ஒதுக்கிக் குறிப்பிடு.

*lab'ia*, (ல.) *n. pl.* (உள்.) இதழ்கள் போன்ற பெண்குறியின் பகுதிகள்.

lab'ial, *n.* இதழ் ஒலி; உதடுகளின் துணையால் ஒலிக்கப்படும் எழுத்து; *a.* இதழ்பற்றிய; இதழ்போன்ற; உதடுகள் போன்று செயலாற்றுகிற; உதடுகளால் ஒலிக்கப்பெறுகிற; (தொ.) labial pipe, (இசை.) உதடுபோன்ற உறுப்புடைய இசைக்கருவி.

lab'iate, *n.* (தாவ.) உதடனைய இதழ்களுடைய மலர்வகை; உதடு போன்று இருபிரிவாகப் பிரிந்த புற இதழ்வட்ட முடைய செடிவகை; *a.* உதடனைய இதழ்களுடைய; உதடு போன்ற புல்லிவட்டங் கொண்ட; இதழ்கள் போன்ற.

lab'ile, *a.* (இயற்., வேதி.) நிலையற்ற, நிலைமாற்றமடையக் கூடிய; பொருள்மாற்றம் பெறக்கூடிய.

lab'io-dental, *a.* உதடும் பல்லும் பொருந்தி உண்டாகிற.

*lab'ium*, (ல.) *n.* தோடுடைய சிற்றுயிரினங்களின் வாய் அடிப்புறம்; ஒற்றைத் தோட்டுயிரின் உதடுபோன்ற உட்பகுதி; உதடுபோன்று இருகூறுகப் பிரிந்த மலரின் கீழ்ப் பகுதி.

lab'oratory, *n.* ஆய்வுக்கூடம், ஆராய்ச்சி செய்முறைச் சாலை.

labor'ious, *a.* விடாதுழைக்கிற, கடினமான வேலைசெய்கிற; உழைப்பாளியான, முனைத்த உழைப்பீடுபாடுடைய; மட்டு மீறிய கடுமையுடைய, வருந்தி உழைக்கத்தக்க, எளிதாகச் செய்ய முடியாத; நீடித்த உழைப்பு தேவைப்படுகிற.

lab'our [1], *n.* உழைப்பு; கடுமுயற்சி; சமுதாயத் தேவை நிறைவேற்றும் உடலீடுபாட்டு வேலை; முயற்சியாற்றல்; உழைப்பாற்றல்; தொழிலாளர் தொகுதி, தொழில்வகுப்பு; தொழிலாளர் இன ஆற்றல்; ஆற்றல் சான்ற முயற்சி; மூளைவேலை; பிள்ளைப் பேற்றுவலி; கப்பலின் புயற்காலப் பெரும் பிறழ்வுப்போக்கு; *v.* உழை; கடுமுயற்சி செய்; கடு உழைப்பில் ஈடுபடு; முனைந்து முயல்; கடுந்துயருறு; துன்பம் அனுபவி; பிள்ளைப்பேற்று நோவுறு; கப்பல் வகையில் உழல், இடரெதிர்த்துப் போராடு; நுணுகி விரிவுபட எடுத்துரை; கடும் உழைப்புக்காட்டு; பேருழைப்பாற் செயற்கைவினைவு உண்டுபண்ணு; இடர்ப்பட்டு மெல்லமெல்ல இயங்கு; (செய்.) நெற்றி வியர்வை நிலத்தில் விழப்பாடுபடு; (தொ.) labour of Hercules, மிகுவலிமை தேவைப்படுஞ் செயல்; labour of love, ஊதியமின்றி ஏற்றுச் செய்யப்படும் பணி; lost labour, பயனற்ற ஊதியமில்லா உழைப்பு, தண்டவேலை.

Lab'our [2], *n.* அரசியல் முறையின் தொழிலாளர் தொகுதி; (தொ.) Labour Exchange, உழைப்புத் தேவைப்படும் இடங்களுக்குத் தொழிலாளர்களை அனுப்பும் உள்நாட்டுத் தொழில் அமைப்பு அலுவலகம்; Labour leader, தொழிலாளர் தலைவர்; தொழிற்சங்கத் தலைவர்; Labour Party, தொழிற்கட்சி; தொழிலாளர் நலனுக்காக நிற்கும் பாராளுமன்ற உறுப்பினர் தொகுதி.

lab'ourer, *n.* உழைப்பவர்; தொழிலாளி, பாட்டாளி.

lab'ourite, *n.* தொழிற்கட்சி உறுப்பினர்; தொழிற்கட்சிச் சார்பாளர்.

lab'our-market, *n.* தேவைக்கேற்பத் தொழிலாளர் கிடைக்கத் தகுஞ் சமுதாய நிலைக்களம்.

Lab'rador dog, Lab'rador retriever, *n.* காயம்பட்ட அல்லது இறந்த வேட்டை உயிரினங்களின் உடலை மீட்டுத் தருவிக்கப் பழக்கப்படுத்தப்பட்ட நாய்வகை.

lab'ret, *n.* அழகுக்காக உதட்டில் செருகிக் கொள்ளப்படுஞ் சிறு கிளிஞ்சல் அல்லது எலும்பு.

laburn'um, *n.* ஒளிமிக்க மஞ்சள்நிற மலர்க்கொத்துக்களைக் கொண்ட சிறு மரவகை.

lab'yrinth, *n.* அரும்புதிர் நெறி, மீட்டுவரமுடியாதபடி திருக்குமறுக்காக அமைக்கப்பட்ட வழி; புதிர்நெறிக்கூடம், அரும்புதிர் நெறிகள் அமைந்த கட்டிடம்; திகைப்பூட்டுந் திருக்குமறுக்குப் புதிர்; கடுஞ் சிக்கலமைவு; உட்காதின் திருக்குமறுக்கான துளை; திகைப்பூட்டுஞ் சிக்கல் நிலை.

labyrin'thodon, labyrin'thodont, *n.* திருக்குமறுக்காக வளைந்து வளைந்துள்ள பல்லமைப்புடைய நில நீர்வாழ் பேருருவப் புதையுயிர்ப் படிவ விலங்குவகை.

lac [1], *n.* அரக்கு, சில பூச்சிகளால் தற்காப்புக்காகச் சுரப்பிக்கப்படும் பிசின்போன்ற பொருள்.

lac [2], (இ.) *n.* நூறுயிரம், இலட்சம்.

lace, *n.* வார் இழை, புதைமிதி அரணம் போன்றவற்றிற் புழை வழிகோத்து இறுக்குவதற்குரிய இழைக்கச்சை; இழைவார்; ஆடவர் மேலங்கியை அழகுபடுத்துவதற்குரியதாகக் கண்ணி சுருளை முடிச்சுப் பின்னல்களால் அழகுபடுத்தப்பட்ட புரி இழை; பூத்தையல் இழை; சரிகை; பல்வண்ணப் பின்னல் முறுக்கு நூற்கயிறு; *v.* வாரிழைகோத்திறுக்கு, இழைக் கச்சைகொண்டு புதைமிதியரணத்தை இறுக்கு; இழைப் பட்டிகையினுல் இடுப்பைச் சுற்றி இறுக்கிக்கட்டு; இடுப்பை வரிந்திறுக்கு; சரிகையால் பின்னு; சரிகை ஒப்பனைசெய்; இழைக்கச்சையால் பின்னு; பூத்தையல் வேலையில் பல் வண்ணக்கோடுகள் வரும்படி பின்னு; பின்னிமுறுக்கு; பல்சுவை கல; சாராயஞ் சேர்த்துப் பால் முதலியவற்றிற்குச் சுவையூட்டு; கெடாமல் வை; கசைவாரினுல் அடி.

lace'-glass, *n.* சரிகை அல்லது பின்னல் வேலைபோன்ற சித்திரங்கள் கொண்ட வண்ணக்கண்ணுடி.

lace'-pillow, *n.* சரிகை வேலைசெய்யும் பெண்ணின் மடிமீது வைக்கப்படும் அடித்திண்டு.

la'cerate, *v.* கிழி, கீறு, கிழித்துப் புண்படுத்து; சிராய்த்துக் காயப்படுத்து; உள்ளத்தைப் புண்படுத்து, மனவருத்தம் உண்டுபண்ணு.

lacert'ian, lacert'ine, *a.* பல்லிகளைச் சார்ந்த; பல்லி போன்ற.

Lacet', *n.* சரிகை இழைகளிட்டு நாடா அல்லது வாரிழைகளாற் செய்யப்படுஞ் சித்திரவேலை.

lach'es, *n.* (சட்.) மன்னிக்கத் தகாத கவனக்கேடு; மடிமைக் குற்றம்; சட்டஞ் சார்ந்த கடமையை நிறைவேற்றுவதில் புறக்கணிப்பு; உரிமை வலியுறுத்திப் பெறுவதில் சுணக்கம்; உரிமை நிறைவேற்றத்தில் தயக்கம்.

lach'ryma Chris'ti, *n.* தென் இத்தாலியிற் செய்யப்படும் ஆற்றல்மிக்க இனிய செந்தேறல் வகை.

lach'rymal, *n.* கண்ணீர்க்கலம்; *a.* கண்ணீர் சார்ந்த; கண்ணீரலான; கண்ணீருக்கான; (தொ.) lachrymal canal, கண்ணீர்க்கால்; lachrymal duct, கண்ணின் உள்

மூலையிலிருந்து கண்ணீரை மூக்கடிக்குக் கொணரும் நரப்புக் குழாய்; lachrymal gland, கண்கடையிலுள்ள கண்ணீர்ச் சுரப்பி; lachrymal sac, கண்ணீர்ப் பை; lachrymal vase, கண்ணீர்க்கலம்.

**lach'rymals**, *n.* கண்ணீர்த்தொடர்புடைய உறுப்புக்கள்; கண்ணீர்ச்சுரப்பி-கண்ணீர்க்கால் முதலியவற்றின் தொகுதி.

**lachryma'tion**, *n.* கண்ணீர் ஒழுக்கு.

**lach'rymatory**, *n.* பண்டைய ரோம தூபிகளிலுங் கோபுரங்களிலுங் காணப்படும் கண்ணீர்க்கலமாகக் கருதப்பட்ட சிறு குப்பி; *a.* கண்ணீர் சார்ந்த; கண்ணீர் வருவிக்கிற; (தொ.) lachrymatory bomb, கண்ணீர்ப் புகைக்குண்டு.

**lach'rymose**, *a.* கண்ணீர் நிறைந்த; கண்ணீர் வடிக்கிற; அழுகிற இயல்புடைய.

**lacin'iate**, **lacin'iated**, *a.* (தாவ., வில.) தாறுமாறுக உள்ளாழ்ந்து வெட்டிச் சிதைக்கப்பட்ட; ஓரத்தில் ஒடுங்கிய அலகுக்காக அமைந்த; கீற்றுகீற்றுன.

**lack**, *n.* குறைபாடு, பற்றுக்குறை; *v.* இன்றியமையாது தேவைப்படு; இல்லாது குறைபடு; இலம்பாடுறு, இல்லாம லிரு; பெருமலிரு; (தொ.) for lack, தேவை காரணமாக, இல்லாததால்; no lack, நிறைவான, குறைவற்ற; ஏராள மான.

**lackadais'ical**, *a.* சோர்வுற்ற; வருந்துந் தோற்றமுள்ள; மென்னயத் தளர்ச்சிப் பகட்டுடைய; ஒயிலான உணர்ச்சிப் பகட்டுடைய.

**lack'er**, *n.*=lacquer.

**lack'ey**, *n.* குற்றேவலன், பணியாள்; பணித்துறைப்பட்டி அணிந்த வேலையாள்; கெஞ்சிப் பசப்புபவன்; பிறரை ஒட்டி வாழ்பவர்; ஒட்டுயிர் போன்று விடாது பற்றிநிற்பவர்; *v.* குற்றேவலனுயிரு, பணியாளாயிரு, கீழ்த்தரமான அடிமைக் குணத்தோடு நடந்துகொள்.

**lack'land**, *n.* நிலமில்லாதவர், நிலமற்றவர்.

**lack'lustre**, *a.* கண் வகையில் ஒளிமங்கிய, மங்கலான.

**lacon'ic**, *a.* மணிச்சுருக்கமான, பொழிப்பான, பொருட்செறி வார்ந்த, சூத்திரம்போல் திட்பநுட்பம் உடைய; மணிச்சுருக்க மாகப் பேசுகிற; விரைசுருக்கக் குறிப்புவாய்ந்த நடை யுடைய.

**lac'onism**, *n.* சுருங்கச்சொல்லும் பண்பு; மணிச்செறிவான நடைத்திறம்; பொருட்செறிவுள்ள முதுமொழி.

**lacq'uer**, *n.* பித்தளைமெருகு, பித்தளைமேல் பூசப்படுவதற் கான பொன்வண்ண மெருகெண்ணெய்; அரக்குச்சாயம், மரத்தின்மீது பூசப்படும் மெருகெண்ணெய்; மெருகெண் ணெய் பூசப்பட்ட மரச்சரக்கு; *v.* பொன்வண்ண மெருகெண் ணெய் பூசு; (தொ.) japanese lacquer, மரம் முதலியவற்றிற் குப் பூசப்படுங் கெட்டியான மெருகெண்ணெய்வகை; மெரு கெண்ணெய்ப்பூச்சுப் பூசப்பட்ட பொருள்கள்.

**lacq'uey**, *n.*=lackey.

**lacrosse'**, *n.* வட அமெரிக்க வளைகோற்பந்தாட்ட வகை.

**lacta'tion**, *n.* பால்கொடுத்தல்; பால்சுரப்பு.

**lac'teal**, *a.* பால்சார்ந்த, குடல்நீர்மங்களால் உண்டாக்கப் படும் பால்போன்ற கணையம் பித்தம் ஆகிய நீர்மத்தைக் கொண்டு செல்கின்ற.

**lac'teals**, *n. pl.* குடற் பாற்குழாய்கள், குடலில் அமைந் துள்ள நுட்பமான பாற்குழாய்கள்.

**lactes'cence**, *n.* பால்போன்ற தோற்றம்; பால்போன்ற சாறு சுரப்பித்தல்.

**lactes'cent**, *a.* பால்போன்ற தோற்றமுடைய, பால்போன்ற சாறு சுரப்பிக்கிற.

**lac'tic**, *a.* (வேதி.) பால்சார்ந்த, பால்பற்றிய, பாலுக்குரிய; (தொ.) lactic acid, புளித்த பாலில் உண்டாகுங் காடிப் பொருள்.

**lactif'erous**, *a.* பால் சுரப்பிக்கிற, பால்போன்ற நீர்மத்தை உண்டாக்குகிற.

**lac'tometer**, *n.* பால்மானி.

**lac'to-prot'ein**, *n.* பாலில் அமைந்துள்ள வெண் கருப் பொருள்.

**lac'to-scope**, *n.* பாலின் ஏட்டுமானி.

**lactose'**, *n.* பால்வெல்லம், பாலில் உள்ள சர்க்கரை.

**lacun'a**, *n.* இடைவெளி; இடையீடு; இடைத்தயக்க நேரம்; விடுபட்ட பகுதி; எலும்பு-தசை முதலியவற்றிலுள்ள இடைக் குழிவான பகுதி.

**lacus'trine**, *a.* ஏரிகளைச்சார்ந்த; ஏரிகளில் வாழ்கின்ற; ஏரிகளில் வளர்கிற; (தொ.) lacustrine age, மக்கள் ஏரி உறைவிடங்களில் வாழ்ந்த ஊழி.

**la'cy**, *a.* பூப்பின்னல் போன்ற, சரிகை போன்ற.

**lad**, *n.* சிறுவன், இளைஞன்; தோழன்.

**ladd'er**, *n.* ஏணி, படிமரம்; தவருன தையலாற் காலுறையில் ஏற்படுஞ் செங்குத்தான நூற்பிரிவுகள்; படிமுறை, உலகில் முன்னேறுவதற்கான வழி, படிநிலைத்தொகுதி, குறிக்கோளை அடைவதற்கான படிகளின் மொத்தம்; (தொ.) kick down ladder, முன்னேற உதவியாயிருந்த நண்பர்களையோ தொழிலையோ உதறித்தள்ளு.

**ladd'er-dredge**, *n.* ஏணித்தொடர் ஏற்றம், ஏணிபோன்ற சங்கிலித் தொடரில் தூக்கிச்செல்லப்படும் வாளிகளின் தொகுதியடங்கிய ஏற்ற அமைவு.

**ladd'er-stitch**, *n.* பூப்பின்னல் வேலையில் குறுக்குத்தையல்.

**lade**, *v.* கப்பலிற் சரக்குகளை வை, கப்பலுக்குப் பாரமேற்று; சரக்குகளாகக் கப்பலில் ஏற்று.

**lad'ed**, *v.* lade என்பதன் இறந்தகாலம்; lade என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**lad'en** [1], *a.* சரக்கேற்றப்பட்ட; சுமையேற்றப்பட்ட; பளு வேற்றப்பட்ட; துயர்-பழி முதலியவற்றின் பாரம் உடைய.

**lad'en** [2], *v.* lade என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**la-di-da'**, *n.* வீம்படிப்பவன்; வீரப்பாளன்; தற்பெருமை மிக்க பேச்சு நடை உடை உச்சரிப்புக்களையுடையவன்; பகடி; *a.* போலியான வீம்புநடையும் வீரப்புப் பேச்சுமுடைய.

**lad'ies** [1], *n.* பெண்களுக்கான கைகால் கழுவும் இடம்.

**lad'ify**, *v.*=ladyfy.

**lad'ing**, *n.* சாமான் ஏற்றுதல்; கப்பற் சரக்கு.

**la'dle**, *n.* அகப்பை, சட்டுவம்; *v.* அகப்பையால் எடுத்து ஊற்று.

**lad'y**, *n.* சீமாட்டி, பெருமாட்டி; பெருங்குடிப்பெண்டு; இல்லத்தலைவி; மனைவி; காதலி; தலைமகள், தலைவி; மரியாதை வழக்கிற் பண்புடைமாது; பெண்பாலார்; விலங்கு புள்ளினங்களிற் பெண்பால்; *pl.* ladi'es; (தொ.) ladies' chain, நான்கு இணை துணைவர்கள் ஐம்புள்ளி வடிவில் நின் றுடும் ஆடல் வகை; ladies' gallery, மாமன்றத்திற் பெண் களுக்கென ஒதுக்கி வைக்கப்பட்ட மேடையிருக்கை வரிசை; ladies' man, lady's man, பெண்கள் கூட்டத்திலேயே வட்ட மிடுபவன்; Lady Bountiful, அருளாண்மையுடன் யாவர்க்கும் அன்பாதரவு காட்டும் மாது; Lady Day, கன்னித்தாய் விழா (மார்ச் 25), தேவதூதனுல் இயேசுநாதர் திருப்பிறப்பு உணர்த் தப்பட்ட நாளின் ஆண்டுவிழா; காலாண்டுத் தவணைநாள்; lady help, இல்லப் பணித்துணைவி, மதிப்புடன் நடத்தப்படும் பணிப்பெண்; lady of bed chamber, அரண்மனை உவளகப் பாங்கி; Lady Mayoress, நகரத்தலைவர் மனையாள்; lady of easy virtue, ஒழுக்கங் கெட்டவள்; Lady's bed, ஒருவகைப் புல்; lady's companion, கைப்பை; Lady's cushion, கொத் தான இலைகளையும் வெண்மை-மஞ்சள் அல்லது செந்நிற மலர் களையுங் கொண்ட பாறைச்செடிவகை; Lady's finger, வெண் டைக்காய்; Lady's laces, ஈர்க்குப்போன்ற புல்வகை; Lady's mantle, ரோசா இனக்குடும்பச் செடிவகை; Lady's slipper, பெண்கள் புதைமிதியடியைப்போன்ற வடிவுடைய மஞ்சள் நிற மலருள்ள செடிவகை; Lady's tresses, மலர்ச்செடிவகை; Our Lady, தூய கன்னி மேரி; painted lady, வண்ணத்துப் பூச்சிவகை.

**Lad'y-altar**, *n.* திருக்கோயிலிற் தூய மரியன்னையின் பலிபீடம்.

**lad'ybird**, *n.* கரும்புள்ளிகள் கொண்ட செந்நிற வட்டச் சிறு வண்டுவகை.

**lad'y-chair**, *n.* காயமுற்றவர்களைத் தூக்கிச் செல்வதற்கான இருவர் கைகோப்பமைப்பு.

**Lad'y-chapel**, *n.* பெரிய திருக்கோயில்களிற் பலிபீடத்திற்குக் கிழக்காக அமைக்கப்பட்ட தூய கன்னிமரியாளின் திருவிடம்.

**lad'y-fern**, *n.* உயர்ந்த மென்மையான சூரல்வகை.

**lad'yfy**, *v.* சீமாட்டியாக்கு; சீமாட்டியென அழை; பெருங்குடி மங்கைபோன்று நடிப்பூட்டு.

**lad'y-in-waiting**, *n.* அரண்மனை உவளகப் பாங்கி.

**lad'y-killer**, *n.* பெண்களை மயக்கி வெற்றிகொள்ள விழைபவன்.

**lad'ylike**, *a.* சீமாட்டியின் குணவியல்புகளுடைய; சீமாட்டிக்குத் தகுதியான; ஆண்மையில்லாது பெண் தன்மையுள்ள; ஆண்மையற்ற.

**lad'y-love**, *n.* உளமார் காதலி.

**lad'yship**, *n.* பெருமாட்டிநிலை; சீமாட்டித்தன்மை; பெருமாட்டி பட்டம்.

**lady's-maid**, *n.* பாங்கி, சீமாட்டியின் பணிப்பெண்.

**Lad'y-smock, lady's-smock**, *n.* புல்தரைச் செடிவகை.

**laevo-com'pound**, *n.* (வேதி.) ஒளிக்கதிர்களின் சாய்தளப் பாட்டை இடம்புரியாக இயக்குந் திறமுள்ள சேர்மம்.

**laevogyr'ous, laevorot'atory**, *a.* (வேதி.) ஒளிக்கதிர்களின் சாய்தளப்பாட்டை இடம்புரி இயக்கமாக்குகிற.

**laev'ulose**, *n.* (வேதி.) இடம்புரி வெல்லம், ஒளிக்கதிர்களின் சாய்தளப்பாட்டை இடம்புரி இயக்கப்படுத்துந் திறமுடைய பூத்தேனின் அல்லது பழத்தின் சத்தான சர்க்கரை.

**lag**[1], *n.* இயக்கப்பின்னடைவு; ஒழுக்கின் பின்தங்கல்; தடங்கல் நிலை; சுணக்கம், தாமதம்; ஒன்றனுக்கு மற்றொன்று பின் தங்கிய அளவு; பின்கோடி, கடைக்கோடி; பின்தங்கியவர்; பின் தங்கியது; *a.* பின்தங்கிய, பின்னடைந்த; கடைக்கோடியான; தாமதமான, சுணங்கிய; *v.* பின்னடை, பிந்து; பின்தங்கு.

**lag**[2], *n.* குற்றவாளி, கைதி; கடுங்காவல் தண்டனைப்பருவம்; நாடு கடத்துந் தண்டனைத்தவணை; *v.* கடுங்காவல் தண்டனை அளி; நாடுகடத்தத் தண்டனையளி; காவலிற் பற்று.

**lag**[3], *n.* கொதிகலத்தின் மின்கடத்தாத மூடியின் ஒருபகுதி; மின் கடத்தாத மூடி; மர உள்வரிச்சட்டம்; மரப்பட்டிகை; வரிச்சல்; குத்துக்கட்டை; *v.* மின் கடத்தாத பகுதியுள்ள மூடியினுற் கொதிகலத்தை மூடு.

**lag'an**, *n.* (சட்.) கடலடியில் கிடக்குங் கப்பல் உடைவுப் பொருள்கள்.

**la'ger, la'gerbeer**, *n.* செர்மன் நாட்டுச் சிறுதிற இன்தேறல் வகை.

**lagg'er**, *n.* பின்தங்குவோர்.

**lagoon', lagune'**, *n.* காயல், கடற்கழி, கடலினின்று மணல் திட்டுக்களால் பிரிக்கப்பட்ட ஏரிபோன்ற உப்புநீர்த் தேக்கம்; மணித்தீவின் மையவட்டக் காயல்.

**la'ic**, *n.* சமயத்துறை சாராதவர்; பொது நிலையானவர்; திருச்சபைச் சார்பற்றவர்; *a.* சமயத்துறை சாராத, பொதுநிலையான.

**la'icize**, *v.* சமயச்சார்பற்றதாக்கு; சமயச்சார்பற்றவர்களிடம் பள்ளிக்கூடம் முதலியவற்றை ஒப்படை; சமயச்சார்பற்றவர்களுக்குப் பதவி வாய்ப்பு முதலியன அளி.

**laid**[1], *v.* lay என்பதன் இறந்தகால முற்றெச்சம்.

**laid**[2], *a.* வைக்கப்பெற்ற; பதிக்கப்பெற்ற; (தொ.) laid paper, கம்பிகளைப் பயன்படுத்திச் செய்யப்பட்டதால் வரிவரியான முகடுகளுள்ள காகிதம்.

**lain**, *v.* lie[2] என்பதன் முற்றெச்சம்.

**lair**, *n.* குகை; வளை, பொந்து; அளை, காட்டு விலங்குகள் தங்குமிடம்; கால்நடை வழித்தங்கற் பட்டி; *v.* குகையில் தங்கு; வழித்தங்கற் பட்டியில் அடை.

**laird**, *n.* (செய்.) ஸ்காத்லாந்தில் நிலக்கிழார், பெருமகன்.

**La'is**, *n.* கலைத்திறம் நிறைந்த அழகுமிக்க ஆடலணங்கு.

***laissez-aller***, (பிர.) *n.* முழுக்கட்டுப்பாடற்ற தன்மை, தாராளமான சுதந்திரநிலை.

**laiss'ez-faire**, *n.* அரசியற் கட்டுப்பாடற்ற வாணிகக் கோட்பாடு, தன்னிச்சை வாணிகக் கொள்கை.

**la'ity**, *n.* சமயச்சார்பற்ற பொதுநிலைமக்கள்; பணித்துறை சாராத பொதுநிலையினர்; தனித்துறை சாராத பொதுத் திறத்தினர்; தனித்துறை சாராப் பொதுமைநிலை.

**lake**[1], *n.* ஏரி; கண்மாய், வானமாரிக்குளம்; (தொ.) lake country, the Lakes, இங்கிலாந்தின் ஏரி மாவட்டங்கள்; lake dwelling, ஏரிப்படுகை மனை, வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் ஏரிப்படுகையில் முளைகளின்மீது கட்டப்பட்ட வீடு; lake poets, கோல்ரிட்ஜ் (Coleridge) சதே (Southey) ஒர்ட்ஸ் ஒர்த் (Wordsworth) போன்று ஏரி மாவட்டங்களில் வாழ்ந்த ஆங்கிலப் பெருங்கவிஞர்கள்; the Great Lake, அட்லாண்டிக் மாகடல் (Atlantic Ocean); the Great Lakes, அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் கனடாவுக்கும் எல்லையாக அமைந்துள்ள பெரிய ஏரிகள்.

**lake**[2], *n.* அரக்கினுல் முன்பு செய்யப்பட்டுவந்த வண்ணப் பொருள்; சாயப்பொருளாலான வண்ணப்பொருள்.

**lake'-dweller**, *n.* ஏரிப்படுகைமனை வாணர், வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் ஏரிப்படுகை வீடுகளில் வாழ்ந்தவர்.

**lake'-land**, *n.* இங்கிலாந்தின் ஏரிமாவட்டங்கள்.

**lakh**, *n.*=lac.

**lalla'tion**, *n.* ரகர லகரப்போலி; ரகரத்தை லகரமாக ஒலித்தல்; குழந்தைத் தன்மைவாய்ந்த பேச்சு.

**lam**, *n.* அடி, மொத்து, பிரம்பால் வன்மையாக அடி.

**la'ma**[1], *n.* திபேத் (Tibet) மங்கோலியா (Mongolia) மாநிலங்களின் புத்தமத குரு; (தொ.) Grand Lama, திபேத் நாட்டின் புத்தசமயத் தலைமை ஆட்சிக்குரு.

**lama**[2], *n.*=llama.

**Lamarck'ian**, *n.* லமார்க் (lamarck) என்ற பிரஞ்சு உயிர் நூலறிஞரின் கொள்கையைப் பின்பற்றுபவர்; *a.* லமார்க் என்ற பிரஞ்சு உயிர் நூலறிஞரின் கொள்கையைச் சார்ந்த.

**lama'sery**, *n.* திபேத்திய மங்கோலிய புத்தசமயத் துறவிகளின் மடம்.

**lamb**, *n.* இளமறி, செம்மறியாட்டுக் குட்டி; செம்மறியாட்டுக் குட்டி இறைச்சி; திருக்கோயிற் குழுவினரில் இளையர்; சூதுவாதற்றவர்; வலுவற்றவர்; அன்புக்குரியவர்; *v.* செம்மறியாட்டுக் குட்டிகளை ஈனு; பெறு, குட்டிபோடு; குட்டிபோடும் பெண் ஆடுகளைப் பேணு; (தொ.) as well be hanged for a sheep as for a lamb, துணிவுடன் தீவினை செய்; fox in lamb's skin, wolf in lamb's skin, புலித்தோற் பெற்றம்; நயவஞ்சக வேடதாரி; the Lamb, the Lamb of God, இயேசுநாதர்.

**lambaste'**, *v.* நையப்புடை, அடித்துத்தண்டனை செய், அடி.

**lamb'da**, *n.* கிரேக்க நெடுங்கணக்கில் 'எல்' என்ற எழுத்து; (தொ.) lambda moth, கிரேக்க 'எல்' எழுத்தின் வடிவக் கோடுகளை இறகில் கொண்ட அந்துப்பூச்சிவகை.

**lamb'dacism**, *n.* ரகரத்தை லகரம்போல ஒலித்தல்; லகரத்தைத் தவருக ஒலித்தல்; லகர ஒலியுடைய சொற்களைக் கழிமிகையாகப் பயன்படுத்துதல்.

**lamb'doid, lambdoid'al**, *a.* கிரேக்க 'எல்' எழுத்தின் வடிவுடைய; (தொ.) lambdoid suture, மண்டையின் இருபக்க எலும்புகளையும் பிடரி எலும்பையும் இணைக்கிற மண்டை எலும்புப் பொருத்துவாய்.

**lam'bent**, *a.* எரிதழல் வகையில் தடவிச்சென்றெரிகின்ற; ஒளிவகையில் தழலாடுகின்ற; சுடரிடுகின்ற; மெல்லொளி வீசுகின்ற; பேச்சு வகையில் நகையொளி வீசுகின்ற; நகைச்சுவை வகையில் கலகலப்பான.

**Lam'beth**, *n.* ஆங்கிலத் திருச்சபைத் தலைமைக்குருவின் மாளிகை; திருச்சபை மண்டலத் தலைமைக்குரு; (தொ.) Lambeth degree, காண்டர்பெரி (Canterbury) மண்டல முதல்வர் அளிக்கும் பட்டம்.

**lamb'like**, *a.* ஆட்டுக்குட்டி போன்ற; அமைந்த மெல்லியல் புடைய.

**lam'brequin**, *n.* கதவின் அல்லது பலகணியின் முகட்டுத் திரை.

**lamb's-fry**, *n.* விதையடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியின் விதைப்பகுதி இறைச்சி.

**lamb'-skin**, *n.* கம்பளியோடுகூடிய ஆட்டுக்குட்டித்தோல்; பதனிடப்பட்ட ஆட்டுக்குட்டித் தோல்.

**lamb's-tails**, *n.* பழுப்பு நீலநிறமுள்ள மெல்லிறகு போன்ற மலர்த்தொகுதியினையுடைய செடிவகை.

**lamb's-wool**, *n.* காலுறை செய்தற்குப் பயன்படும் ஆட்டுக் குட்டியின் கம்பளி.

**lame**, (பிர.) *n.* பொன் அல்லது வெள்ளி இழைகளாற் பின்னப் பட்ட துணி; *a.* பொன் அல்லது வெள்ளி இழைகளாற் பின்னப்பட்ட.

**lame**, *a.* நொண்டியான; நொண்டுகிற; காலொடிந்த; காலற்ற; முடமான; கதை முதலியவற்றின் வகையில் குறைபாடுடைய; வாத வகையில் குற்றமுள்ள; காரண விளக்க வகையில் மனநிறைவளிக்காத; சாக்குபோக்கு வகை யில் ஒப்புக்கொள்ளத்தகாத; சீர் வகையில் அசைக்குறை வான, தட்டித்தடங்குகிற; *v.* நொண்டியாக்கு, முடமாக்கு; குறைப்படுத்து, ஏலாதாக்கு.

**lamell'a**, *n.* தாள்படலம், செதிளடுக்கு; தசைச்சவ்வு; எலும்புத் தகடு; *pl.* lamell'ae.

**lament'**, *n.* புலம்பல், ஒப்பாரி; இரங்கற்பா, கையறுநிலைப் பாடல்; *v.* புலம்பு, அழு, நொந்து அரற்று; கழிந்ததற் கிரங்கு; வருந்து; இறந்தவருக்காகத் துயர்கொண்டாடு.

**lam'entable**, *a.* வருந்தத்தக்க; துயருக்குரிய; துக்கங் கொண்டாடுதற்குரிய.

**lamenta'tion**, *n.* புலம்புதல், ஒப்பாரி வைத்தல், கதறுதல், ஓல மிடுதல்; (தொ.) Lamentations, Lamentations of Jeremiah, அழுதரற்றல், விவிலிய நூலில் 'பழைய ஏற்பாட்டில்' உள்ள ஜெரிமையா (Jeremiah) என்னும் ஞானியின் புலம்பல்.

**lam'ia**, *n.* குழந்தைகளையும் மனிதர்களையுங் கொன்று தின் னும் பெண்பேய் உரு.

**lam'ina**, *n.* மென்தகடு, சவ்வு; தாள்படலம்; *pl.* lam'inae.

**lam'inar**, *a.* தகட்டுக்குரிய; (தொ.) laminar flow, தடை படாத் துகளணுக்களின் இயக்கம்.

**lam'inate**, *a.* மென்தகட்டு வடிவான; மென்தகடுகளா லான; *v.* உலோகத்தை மெல்லிய தகடாகும்படி அடி அல்லது சுருட்டு; அடுக்கு அல்லது தகடுகளாகும்படி பிள; உலோகத் தகடுகளால் மேலே பரப்பு; அடுக்கடுக்காக வைத்து உற்பத்தி செய்.

**Lamm'as'** *n.* ஆகஸ்ட் மாதத்தின் முதல் நாள்; அறுவடைத் திருநாள்; (தொ.) latter Lammas, இல்லாத தேதி, வாரா நாள்.

**lamm'ergeyer**, *n.* தாடியுள்ள பெருங்கழுகு வகை.

**lamp**, *n.* விளக்கு, தீபம்; வளிவிளக்கு; கூண்டுவிளக்கு; மூடொளியலங்கம்; கைப்பந்தம்; வாணொளிக்கோளம்; கதிரவன்; திங்கள்; விண்மீன்; அறிவொளி விளக்கம்; ஆன்மிக ஒளி; நம்பிக்கை ஒளி; *v.* ஒளிவீசு; விளக்கேற்று; விளக்குகள் பொருத்து; ஒளிவிளக்குஞ் செய்; (தொ.) hand on the lamp, pass on the lamp, அறிவு வளர்ச்சியின் முன் னேற்றத்தில் பங்குக்கடமையைச் செய்; குறிக்கோள் முன் னேற்றத்திற்காகக் கடமையிற் பங்குகொள்.

**lam'pas** [1], *n.* குதிரைவாயின் மேலண்ணத்தில் வீக்கம் உண்டு பண்ணும் நோய் வகை.

**lam'pas** [2], *n.* முன்பு சீனாவிலிருந்து வந்த பூப்போட்ட பட்டுத் துணி வகை.

**lamp'black**, *n.* புகைக்கரியிலிருந்து செய்யப்படுங் கரு வண்ணப்பொருள்.

**lamp'-chimney**, *n.* கூண்டு விளக்கின் புகைபோக்கி.

**lam'pion**, *n.* வண்ண ஒளியலங்கம், எண்ணெயும் திரியுங் கொண்ட விளக்கு வைக்கப்படும் வண்ணக் கண்ணாடிக்கலம்.

**lamp'light**, *n.* விளக்கொளி.

**lamp'lighter**, *n.* தெருவிளக்கு ஏற்றுபவர்; (தொ.) like a lamp lighter, விரைவாக, வேகத்துடன்.

**lampoon'**, *n.* கீழ்த்தர வசைப்பாடல், தாக்கு வசைப்பாட்டு, பொறுப்புடன்கூடிய நேரடி வசையுரை; *v.* தாக்கு வசைப் பாட்டியற்று; தாக்கி எழுது.

**lamp'post**, *n.* தெருவிளக்குத் தூண், விளக்குக்கம்பம்.

**lam'prey**, *n.* விலாங்கு மீன் போன்ற மீன்வகை.

**Lancas'trian**, *n.* லங்காஷயர் அல்லது லங்காஸ்டர் என்னும் பகுதியின் குடிமகன்; (வர.) ரோசாமலர்ப் போர்களில் லங்காஸ்டர் கோமகன் மரபினரைத் தலைவராகக் கொண்ட சிவப்பு ரோசாக் கட்சியினர்; *a.* லங்காஷயர் அல்லது லங்காஸ்டரைச் சார்ந்த; (வர.) பண்டைய ரோசா மலர்ப் போரில் செவ்வண்ண ரோசாமலர்க் கட்சியைச் சார்ந்த.

**lance**, *n.* ஈட்டி; மீனெறிவேல்; திமிங்கில வேட்டைக்குரிய வேல்; *v.* ஈட்டியினாற் குத்து; (செய்.) எறி, தூக்கி வீசு; தூக்கி எறி, கடலில் வீசு; (மரு.) அறுவைச் சிறுகத்தியினால் குத்து; அறுத்துத் திற; ஈட்டியை ஊடுருவிச் செலுத்து.

**lance'-corporal**, *n.* படைத்துறைப் பணியாளர்களில் ஒரு படியினர், துணையாணை முகவர்.

**lance'-fish**, *n.* ஈட்டி போன்ற மீன்வகை.

**lance'let**, *n.* முதுகெலும்புடைய உயிரினத்தின் மிக்க கீழ்ப் படி உயிரினமான மீன்வகை.

**lan'ceolate**, *a.* ஈட்டித்தலை போன்ற வடிவுடைய, அடி யகன்று இருபுறமும் முனைநோக்கிக் குவிகின்ற.

**la'ncer**, *n.* குதிரைப் படைவீரன்; முன்பு ஈட்டி தாங்கியிருந்த குதிரைப் படைவீரன்.

**la'ncers**, *n. pl.* நான்கு அல்லது நான்குக்கு மேற்பட்ட இணைத் துணைவர் ஆடும் நடனவகை; நான்கு அல்லது நான்கிற்கு மேற்பட்ட இணைத்துணைவர் ஆடும் நடனவகைக்கான இசை மெட்டு.

**lance'-sergeant**, *n.* படைத்துறையில் ஆணை முதல்வராகப் பணியாற்றும் ஆணைமுகவர்.

**lance'-snake**, *n.* அமெரிக்க நச்சுப்பாம்பு வகை.

**la'ncet**, *n.* தூரி, அறுவை மருத்துவக் கூர்ங்கத்தி; கூர்முகட்டு வளைவு; கூர்முகட்டுப் பலகணி.

**Lance'let**, *n.* மீன்வகை, உண்மையான முதுகெலும்புள்ள கீழுயிர் வகை.

**lance'wood**, *n.* வண்டி அடிக்கட்டை-தூண்டிற்கோல் முதலிய வற்றிற்குப் பயன்படுத்தப்படுங் கெட்டியான உழைப்பாற்றல் மிக்க மேலை இந்திய மரவகை.

**la'ncinating**, *a.* நோவு வகையிற் கூர்மையான, குத்தலான, முனைப்பான.

**land**, *n.* நிலம்; நிலப்பரப்பு; நிலவுலகின் கூறு; கரை, தரை; உலகு, தேசம்; நாடு; அரசுப்பகுதி; மாவட்டம்; வட்டாரப்பகுதி; நில உடைமை; விளைநிலம்; வயல் வரப்புக் களாற் பிரிக்கப்பட்ட விளைநிலக்கூறு; பீரங்கியில் குழாய் வரைகளினிடைப்பட்ட பகுதி; *v.* கப்பலிலிருந்து கரையில் இறக்கு; ஊர்தியிலிருந்து இறக்கு; மீனைக் கரைக்குக் கொண்டு சேர்; இறக்குமதி செய்; கீழே இறக்கு; தரைமீது வை; கப்பலிலிருந்து இறங்கு; விமான வகையில் நிலத்தில் இறங்கு; குதித்து இறங்கு; விமான வகையில் கடற்பரப்பில் இறங்கு; சரக்கு வகையில் இறக்கப்பெறு; கீழிடு; நிலத்தில் ஊன்று;

நிலைநாட்டு; கொண்டுசேர்; கைப்பற்று, கைக்கொள்; தன் னலத்துக்குப் பயன்படுத்திக்கொள்; சென்றுசேர், வந்திறங்கு; நிலக்கு ஆளாகு; அடிகொடு, தாக்கு; பரிசு வகையில் வென்றுபெறு; பந்தயக்குதிரையை முதல்நிலைக்குக் கொணர்; பந்தயக்குதிரை வகையில் முதல்நிலையடை; மண்ணை வெட்டிக் கிளறு; தோண்டியெடு; மண்கொண்டு அடை; முடிவாகப் பெறு; (தொ.) how the land lies, நேர நிலவரம்; தறுவாய்க் குரிய நிலைமை; Land League, குத்தகைதாரக் குடியானவர் களுக்கு நில உரிமையும் குத்தகைக்குறைப்பும் வேண்டு மென்று 1879-81-ஆம் ஆண்டுகளிற் கிளர்ச்சி செய்த ஐரிஷ் சங்கம்; land of promise, கனுன் (Canaan) என்ற செழிப் பான நாடு; land of the leal, வானுலகம், சொர்க்கம், விண்ணுலகம், பொன்னுலகு; land of the living, நடைமுறை உலக வாழ்க்கைத்துறை.

land'-agency, *n.* பண்ணைநில மேற்பார்வைப்பணி; நில உடைமை மாற்று வணிக நிலையம்.

land'-agent, *n.* பண்ணைநில மேற்பார்வையர்; நில உடைமை மாற்று வணிகர்.

lan'dau, *n.* மடிப்பு முகட்டுவண்டி, முகட்டை முன்புறமோ பின் புறமோ மூடித்திறக்கவல்ல நான்கு சக்கரவண்டி.

landaulet', landaulette', *n.* மடிப்புமுகட்டுப் பெட்டிவண்டி, முகட்டை முன்புறமோ பின்புறமோ திறக்கவல்ல நான்கிருக்கை மூடுவண்டி.

land'bank, *n.* நில அடமானப் பொருளகம்.

land'-breeze, *n.* கரைக்காற்று, கரையிலிருந்து கடல்நோக்கி வீசுங் காற்று.

land'-carriage, *n.* நிலவழிச் சரக்குப் புடைபெயர்ப்பு, கரை வழிப்பெயர்ச்சி.

land'-crab, *n.* கடலில் இனம்பெருக்கி நிலத்தில் வாழும் நண்டுவகை.

*land'drost*, (டச்.) *n.* (வர.) தென்னாப்பிரிக்காவில் குற்ற நடுவர்.

lan'ded, *a.* நிலச்சொத்துடைய; நில உடைமையான; நிலத் தைக் கொண்டுள்ள; நில வருவாயினை உடைய; (தொ.) the landed interest, நிலக்கிழார்களின் தொகுதி நலம்; நில உரிமை.

land'fall, *n.* (கப்.) நில அணிமைப்பேறு, நிலம்நோக்கி அணுகுதல்; நீண்ட கடற்பயணத்தில் முதற்கரை அணு குதல்; (தொ.) bad landfall, (கப்.) திட்டத்திற்கு மாறுன நில அமைவு; good landfall, (கப்.) எதிர்பார்த்த நில அடைவு, திட்டப்படியான நில அணுக்கம்.

land'-force, land'-forces, *n. pl.* நிலத்துறைப்படை; கரைப்படைவீரர் தொகுதி.

land'girl, *n.* பண்ணைவேலைப் பெண்; போர்க்காலத்திற் பண்ணைவேலை செய்யும் பெண்.

land'grabber, *n.* அயர்லாந்தில் குடியானவர்களை விரட்டி விட்டு நிலத்தைக் கைப்பற்றிக்கொள்பவர்; கடுமுறையால் நிலம் கைப்பற்றுபவர்; குடியானவர் வெளியேற்றப்பட்ட நிலத்தைக் கைக்கொள்பவர்.

land'grave, *n.* செர்மனியில் ஆட்சியுரிமைப் பெருமக்கள் பட்டம்.

land'holder, *n.* நிலக்கிழார், நில உரிமையாளர்; குடியானவர்.

land'-hunger, *n.* நிலம் கைப்பற்றும் பேரவா.

land'-hungry, *a.* நிலத்தைக்கைப்பற்ற வேண்டுமென்ற பேராவலுள்ள.

lan'ding, *n.* நிலத்தில் இறங்குதல்; கரையேறுதல்; சரக்கு இறக்குதல்; ஊர்தியிலிருந்து இறங்குதல்; கீழேவைத்தல்; அடித்தல்; இறங்குமிடம்; இரண்டு படிக்கட்டு வரிசைகளின் இடையிலுள்ள மேடை.

land'ing-beam, *n.* தாழ்நில வழிகாட்டி அலைக்கரம், விமானம் நிலத்திலிறங்க வழிகாட்டும் வானொலி அலைக்கதிர்க்கற்றை.

land'ing-craft, *n.* கரையிற் படையிறக்க உதவும் தாழ்ந்த தட்டையான திறந்த தளமுடைய கப்பல்; கரை இறக்கக் கப்பல் தொகுதி.

land'ing-field, *n.* விமானம் ஏற இறங்க உதவுந் தளம்.

land'ing-gear, *n.* விமானம் ஏற இறங்க உதவுஞ் சக்கரம் முதலிய அமைவுகளின் தொகுதி.

land'ing-ground, *n.* விமானம் இறங்குவதற்காக முன்னரே ஏற்பாடு செய்யப்பட்ட இடம்.

lan'ding-net, *n.* தூண்டிலிற் பிடிக்கப்பட்ட பெருமீனை இறக்கி வைப்பதற்குரிய வலை.

lan'ding-place, *n.* இறங்குமிடம்; இறக்குமிடம்.

land'ing-ship, *n.* ஊர்திகளை இறக்குவதற்கேற்ப முகப்பைச் சாய்த்திறக்கும் வாய்ப்புடைய கப்பல்வகை.

land'ing-speed, *n.* விமான இறக்கத்துக்குரிய குறைந்த அளவுவேகம்.

lan'ding-stage, *n.* பிரயாணிகள் இறங்கவும் சரக்குகளை இறக்கவும் பயன்படும் மிதவை மேடை.

land'ing-strip, *n.* கப்பல் விமானம் இறங்கத்தக்க கரடுமுர டான நீண்ட இடுக்கான இடம்.

land'-jobber, *n.* நிலத்தை வாங்கி விற்று ஆதாயம் பெறு வதில் துணிகரச் சூதாட்ட வேட்டையாடுபவர்.

land'lady, *n.* வழித் தங்கல்மனைத்தலைவி; வாடகைக் குடி யிருப்பு விடுதித்தலைவி.

land'-laws, *n. pl.* நிலச்சட்டம், நிலச்சொத்துரிமைச் சட்டம்.

land'less, *a.* நிலமற்ற.

land'-locked, *a.* நிலஞ்சூழ்ந்த; நில அடைப்புற்ற; கிட்டத் தட்ட நிலத்தால் நாலாபக்கமுஞ் சூழப்பட்ட.

land'lord, *n.* நிலக்கிழார், நிலவுரிமை மேலாளர்; உணவக மேலாளர்; விடுதிக்காரர், தங்கல்மனைத் தலைவர்; வழிமனைத் தலைவர்.

land'lordism, *n.* பண்ணை மேலாட்சிமுறை; பண்ணை மேலாட்சிமுறை ஆதரவுக் கோட்பாடு.

land'lubber, *n.* (கப்.) கடலறியாதவர்; கப்பல் பற்றி எதுவும் அறியாதவர்.

land'mark, *n.* நில எல்லைக்குறி; மாவட்டம் முதலியவற்றுள் குறிப்பிடத்தக்க பொருள்; முனைப்பாகத் தோன்றும் பொருள்; முக்கியமான நிகழ்ச்சி; குறிப்பிடத்தக்க கட்டம்; வரலாற்றில் திருப்புமுனை, திரும்புகட்டம்.

land'mine, *n.* கரைக்கண்ணி, நிலச்சுரங்கவெடி; விமானத்தி லிருந்து வான்குடையிலிறக்கிவிடப்படும் வெடிகுண்டுப் பொறி.

landoc'racy, *n.* (பே-வ.) நிலக்கிழார் வகுப்பு.

land'owner, *n.* நிலக்கிழார், நிலத்தின் உரிமையாளர்.

land'rail, *n.* வயலில் ஊடாடும் பறவை வகை.

land'scape, *n.* இயற்கை நிலக்காட்சி; இயற்கைக்காட்சி வனப்புடைய சூழ்நிலம்; இயற்கைக்காட்சி ஓவியம்.

land'scape-gardener, *n.* இயற்கைக்காட்சிப் படத்தின் வனப்பமையத் தோட்டத்தை அமைக்குந் தோட்டக்காரர்.

land'scape-gardening, *n.* இயற்கைக்காட்சிப் படத்தின் வனப்புடைய தோட்ட அமைப்பு.

land'scape-marble, *n.* மரம் போன்ற குறிகளுள்ள சலவைக் கல் வகை.

land'scape-painter, *n.* இயற்கைக்காட்சிப் பட ஓவியர்.

Land's-End, *n.* கார்ன்வாலின் (Cornwall) மேற்குக்கோடி முனை.

land'-service, *n.* படைத்துறைப் பணி.

land'-shark, *n.* கரையிலுள்ள கப்பலோட்டிகளைச் சுரண்டி வாழ்பவன்.

land'-sick, *a.* கப்பல்வகையில் நிலம் மிக அருகிலிருப்பதால் இயங்குவதில் தடைப்படுகிற.

land'slide, *n.* நிலச்சரிவு; எதிர்பாராப் பெருவெற்றி, தேர்தலில் மிக்க பெரும்பான்மையான வாக்குகள் ஒரு கட்சிக்கே கிடைத்த நிலை.

land'slip, *n.* நிலச்சரிவு, மலையின்மீதிருந்து நிலத்தொகுதி அல்லது மண்-கல்-முதலியன சரிந்து கீழே சறுக்குதல்.

land'man, *n.* கப்பலோட்டியல்லாதவர்.

*land'sturm,* (செர்.) *n.* (வர.) தங்குதடையற்ற அவசரகாலப் போர்ப்படை ஆட்சேர்ப்பு.

land'-swell, *n.* கரைகடந்த கடலலைப்பாய்ச்சல், கரைமீது தாவும் அலையெழுச்சி.

*land'tag,* (செர்.) *n.* செர்மன் நாட்டுச் சட்டமன்றம்.

land'-tax, *n.* நிலவரி.

land'-tie, *n.* சுவர்தாங்கிக் கட்டுமானம்; சுவர்தாங்கி உத்தரம்; உதைகல்; உதைகால்.

land'ward, *adv.* உள்நாட்டில்.

*Land'wehr,* (செர்.) *n.* செர்மனி முதலிய நாடுகளிற் போர்க்கால மக்கட் படை, போர்க்கால நாட்டுப்படைத்திரட்டு.

land'-wind, *n.*=land-breeze.

lane, *n.* சந்து, முடுக்கு; இடைவழி; இடுங்கல் வழி, முள் வேலிகளுக்கிடையிலுள்ள வழி; ஒடுக்கமான தெரு; இரு வரிசைகளாக நிற்கும் மக்களிடையே உள்ள ஊடுவழி; பாதை நெறிச்சந்து, பாதைகளில் ஒருதிறப்போக்குக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் வழி; பெருங்கடலிற் செல்லும் நீராவிக்கப்பல்களுக்காக வரையறை செய்யப்பட்ட கடற்பாதை; (தொ.) it is a long lane that has no turning, மாறுதல் இல்லாமல் போகாது; red lane, குரல்வளை; the Lane, Drury Lane, லண்டனிலுள்ள நாடக அரங்கு.

lang'rage, lang'ridge, *n.* கப்பலின் பாய்கயிறுகளைச் சேதப்படுத்துவதற்கு முன்பு பயன்படுத்தப்பட்ட இரும்புத் துண்டுத் துணுக்குக்களடைத்த துப்பாக்கிக்குண்டு.

lang syne, *n.* பழங்காலம்; *adv.* பழங்காலங்களில்.

lang'uage, *n.* மொழி; பேச்சு; பேச்சுமுறை; சொல்தொகுதி; மொழிநடை; இலக்கியநடை; மொழிநடைப்பாணி; கருத்து வெளியிடும் முறை; பேச்சாற்றல்; சொல்லமைதி; சொல் தேர்வுத்திறம்; சொல்வழக்காறு; சொல்வளம்; தனித்துறைச் சொல் தொகுதி; கருத்துத் தெரிவிக்கும் குறியீட்டுத்தொகுதி; bad language, vulgar language, கீழ்த்தரப் பேச்சு; finger language, விரற் சைகைகளாலான குழுமரபுக் குறியீட்டுத் தொகுதி வழக்கு; language of flowers, மலர்வகைகள் சார்ந்த குழூஉக்குறியீட்டுத் தொகுதி; speak the same language, உணருமாற்றல் வகையில் ஒரே தரத்தினராயிரு; ஒரே பழக்கவழக்கப் பண்புடையவராயிரு; ஒரே விருப்புவெறுப்புச் சுவைக்கூறுகளுடையவராயிரு; strong language, உணர்ச்சியுள்ள முனைத்த பேச்சு; வன்சொல்.

*langue d'oc,* (பிர.) *n.* லாயிர் (Loire) ஆற்றிற்குத் தெற்கே முற்காலங்களிற் பேசப்பட்ட பிரஞ்சுமொழி வகை.

*langue d'oil,* (பிர.) *n.* லாயிர் (Loire) ஆற்றிற்கு வடக்கே பேசப்பட்ட தற்காலப் பிரஞ்சுமொழிக்கு மூல அடிப்படையான முற்கால மொழிவகை.

lang'uid, *a.* தளர்ச்சிவாய்ந்த, ஊக்கமிழந்த; களைப்புற்ற; எழுச்சி குன்றிய, கிளர்ச்சியற்ற; தளர்வான, சோர்வான; ஓய்வுகொள்ளும் நிலையிலுள்ள, தளரவிட்ட; மெலிந்த, நலிவுற்ற; மடிவார்ந்த; பெருந்தயக்க நிலையுடைய.

lang'uish, *v.* சோர்வடை; ஊக்கங்குறை; வலுக்குறைவாகு; குறைபடு; தளர்வுறு, நலிவுறு, மெலிவுறு; சோர்வூட்டும் சூழ்நிலையின்கீழ் வாழ்; சோர்வுற்ற தோற்றத்தை மேற்கொள்; மேலீடான மெல்லுணர்ச்சி உடையதாகப் பாவனைசெய்.

lang'uor, *n.* சோர்வு; மெலிவு; தளர்ச்சி; கவனக்குறைவு; கிளர்ச்சியின்மை; மென்கனிவு; மடிமை; அரைத்துயில்; வாட்டநிலை, உணர்வற்ற கனவுபோன்ற நிலை.

langur', *n.* நீண்ட வாலுடைய குரங்கு வகை.

lan'iary, *n.* கோரைப்பல், கடித்துக்கிழிக்கும் நாய்ப்பல்; *a.* கடித்துக் கிழிப்பதற்குப் பயன்படுத்தப்படுகிற.

lanif'erous, lani'gerous, *a.* கம்பளி மயிருள்ள.

lank, *a.* மெலிந்த; வதங்கிய, ஒட்டி ஒடுங்கிய; சுரித்த; சோர்வான; தொங்கலான; படிந்துகிடக்கிற, தொய்வான; கம்பிபோன்ற, நெளிவு வளைவற்ற; நெட்டிய.

lank'y, *a.* அருவருப்பாக மெலிந்து நீண்ட, கோரமான முறையில் நெட்டையான.

lann'er, *n.* வேட்டைப்பருந்தில் பெண் வகை.

lann'eret, *n.* வேட்டைப்பருந்தில் ஆண் வகை.

lan'olin, *n.* தைல வகை மூலப்பொருளான ஆட்டுக்கம்பளச் சத்து.

lans'quenet, *n.* செர்மனியில் பிறப்புற்ற சீட்டாட்ட வகை.

lan'tern, *n.* ஒளிக்கூண்டு, விளாந்தர், கண்ணாடிக்கூட்டு விளக்கு; கலங்கரைவிளக்க ஒளிமாடம்; மோட்டு ஒளிப்புழை மாடம்; மின்மினிப்பூச்சியின் ஒளியிழைக் கை; (தொ.) bull's-eye lantern, அரையுருளை வடிவான முகப்புக் கண்ணாடியுடைய ஒளிக்கூண்டு; chinese lantern, ஒளிவிளக்கக் காட்சிகளில் பயன்படுத்தப்படுந் தாள்பொதி ஒளிக்கூண்டு; lantern jaws, முகத்திற்கு உட்குழிவான தோற்றத்தைக் கொடுக்கும் நீண்ட மெல்லிய தாடைகள்; magic lantern, ஒளிப்பட விளக்கம்; படங்களை உருப்பெருக்கிக் காட்டும் ஒளிநிழல் திரை; parish lantern, சந்திரன், நிலா.

lan'thanum, *n.* (வேதி.) 1839-41 ஆம் ஆண்டுக்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட அலுமினிய உலோகக் குழுவினம் சார்ந்த அரிய தனிமப்பொருள்.

lan'thorn, *n.* ஒளிக்கூண்டு, விளக்கு.

lan'yard, *n.* (கப்.) பற்றுவடம், கட்டுவதற்கு அல்லது கைப்பிடியாகப் பயன்படுவதற்கான சிறு கயிறு அல்லது கம்பி.

Laodice'an, *n.* சமயம் அல்லது அரசியலில் அரைகுறை ஆர்வமுடையவர்; *a.* சமயம் அல்லது அரசியலில் அரைகுறை ஆர்வமுடைய.

lap[1], *n.* தொங்கல், சட்டை அல்லது சேணம் முதலியவற்றின் மடிவுப்பகுதி; காதின்மடல்; மடிப்பு; முன்தானை; பாவாடையின் முன்பகுதி; மடி, முன்துடை; மேற்பகுதி; பள்ளத்தாக்கு; மலைகளின் நடுவே உள்ள உட்குழிவு; *v.* மடியில் வை, துடைமீது வைத்துக்கொள்.

lap[2], *n.* மேற்கவிதலின் அளவு; மேற்கவிவான பகுதி; இழைக்கூண்டின் வரிந்து கட்டிய பாளம்; வட்டுருளையில் ஒரு முழுச்சுற்று; பந்தய ஓட்டத்தில் ஒரு சுற்றுவட்டம்; நீராவி இயந்திரத்தில் நீராவியை முற்றும் ஒழிப்பதற்குத் திறப்பிதழ் மையம் விரிய வேண்டிய அளவு; பொறிச் சீட்டாட்டத்தில் மறு ஆட்டத்துக்குக் கொண்டுசெல்லும் மிச்சம்; *v.* சுருள்வுறு, மடிப்புறு, சுற்றி மேவுறு; உறை முதலியவற்றால் மூடு, வரிந்து போர்த்து; வரிந்து கட்டு; சுருள்வி, மடிவி, மேவுவி; சூழ், சுற்றிவளை; வளைத்தணை, மேற்சென்று கவி; மேற்கவிதலுடன் இயலு; கடந்து இயலு; ஓட்டப்பந்தயத்தில் முதற்சுற்றில் அல்லது மேற்பட்ட சுற்றில் போட்டி எதிர்ப்பாளரைத் தாண்டிச்செல்.

lap[3], *n.* கற்கள் மெருகிடப் பயன்படும் சுழல்வட்டத் தகடு; *v.* சுழல்வட்டத் தகட்டால் மெருகிட்டுப் பளபளப்பாக்கு.

lap[4], *n.* நாயின் நீராளக்குடிமம்; நீராளக் குடிதேறல்; ஒருமுறை நாத்துழாவிக் குடிப்பு; ஒருமுறை நாத்துழாவிக் குடிக்கும் அளவு; நாத்துழாவொலி; சிற்றலை வீச்சு; சிற்றலை மோதொலி; *v.* நக்கிக்குடி, நாவால் துழாவிக்குடி; பேராவலுடன் பருகு; பரபரப்புடன் மாந்து; சிற்றலை மோது; சிற்றலை மோதொலியுடன் இயங்கு.

laparec'tomy, *n.* குடற் பகுதி அறுவை.

lap'arocele, *n.* இடுப்பிலுள்ள குருதிக்குழாய் முறிவினால் ஏற்படுங் குடல் சரிவு.

laparot'omy, *n.* அடிவயிற்றின் புறத்தோட்டின் அறுவை.

lap'-dog, *n.* வளர்ப்புச் சிறு நாய்.

lapel', *n.* மேற் சட்டையின் மார்புப்புற பின்மடிப்புப் பகுதி.

lap'icide, *n.* கல்வெட்டுபவர்; கல்வெட்டுப் பொறிப்பாளர்.

**lap'idary**, *n.* மணிக்கல் வெட்டுபவர்; மணி செதுக்குபவர்; மணிக்கல் மெருகு கொடுப்பவர்; *a.* கல் சார்ந்த; கல்லின் மீது செதுக்கப்பட்ட; எழுத்துக்களைப் பொறிப்பதற்குரிய; கல்வெட்டுக்குரிய.

**lap'idate**, *v.* கல்லாலடி, கல்லாலடித்துக் கொல்.

**lapid'ify**, *v.* கல்லாகும்படி செய், கல்லாக்கு.

**lap'is laz'uli**, *n.* மணிக்கல் வகை, கந்தகக் கன்மகி; கந்தகக் கன்மகியிலிருந்து கிடைக்கும் ஒளிர்வுமிக்க நீலவண்ணப் பொருள்; கந்தகக் கன்மகியின் நீலவண்ணம்.

**lap'-joint**, *n.* தண்டவாளம்-கம்பம் முதலியவற்றின் வகையில் இரு விளிம்புகளையும் பருமனில் பாதியாக்கி இணைத்துப் பொருத்தும் முறை.

**Lap'land**, *n.* ஸ்காண்டினேவியா (Scandinavia) வின் வட கோடிப்பகுதி.

**Lapp**, *n.* வடக்கு ஸ்காண்டினேவியா மாநிலத்தின் வடகோடியிலுள்ள குள்ளமான மனித இனத்தைச் சேர்ந்தவர்; லாப்லந்தி லுள்ள மொழி; *a.* லாப்லந்து சார்ந்த; லாப்லந்து மொழியினைச் சார்ந்த.

**lapp'et**, *n.* தொங்கல்; மடி; காதின் மடல்; தசைமடிப்பு; மற்றொன்றின்மீது படிந்திருக்கும் பகுதி; மேற்சட்டையின் மார்புப்புறப் பின்மடிப்பு; பெண்டிர் தலையணி ஆடையோடு இணைந்த நீண்ட கொடிபோன்ற தொங்கல் துணி.

**Lappon'ian**, *n., a.*=Lapp.

**lapse**, *n.* வீழ்வு; பிறழ்வு; சோர்வு, குறைபாடு, தவறு; ஓரா வழு, சிறு விடுபாடு; செய்யாப்பிழை, தவறவிட்டநிலை; வழங்காக்கேடு; நாச்சோர்வு, சொல்லிழுக்கு; எழுத்தாண்மைப் பிழைபாடு; ஒழுங்குத்தவறு, கவனக்கேட்டால் வரும் சிறு நெறிபிறழ்வு; நினைவிழப்பு, உணர்வுக்கேடு, இடைமறதி; படிவீழ்வு, படியிறக்கம்; முன்னிலையடைவு, முன்னிலைவிழ்வு; நீர்மத்தின் மெல்லிய புடைபெயர்ச்சிப் போக்கு; காலக்கழிவு, காலக்கடப்பு; கால இடையீடு; தவணைக்கடப்பு; தவணைக் கடப்பால் வரும் உரிமைக்கேடு; சமயப்பிறழ்வு; புறச்சமயச் சார்வு; உயர்விட வெப்பநிலைத்தாழ்ச்சி; *v.* வீழ்வுறு; சோர்வுபடு; பிறழ்வுறு; மெல்ல ஒழுகிச்செல்; கழிவுறு; தணிவுறு; கடந்துசெல்; மறைவுறு; தவணைகடந்துபடு; தவணைகடந்து செல்லுபடியற்றதாகு; முன்னிலைக்குப் பின்னடைவுறு; உடைமை வகையில் முன்னுரிமையாளருக்கே மீட்டுச் சென்றுவிடு; ஏலாமையால் விழும்படி விடு; முயற்சி பற்றுமையாற் சோரவிடு; காக்கத்தவறு, பேணுதிழுக்குறு; தவறவிடு.

**lap'stone**, *n.* சக்கிலியின் தோல் வேலை அடிக்கல்.

**lap'-streak**, *n.* பலகைப்பாளம் மேலது கீழதின்மேல் கவியும் படி இணைத்த படகு.

*lap'sus*, (ல.) *n.* தவறு.

*lap'sus cal'ami*, (ல.) *n.* பேனாவின் தவறு, எழுத்துத்தவறு.

*lap'sus ling'uae*, (ல.) *n.* நாத்தவறு.

**Laput'an**, *n.* ஜோனதன் ஸ்விப்ட் (Jonathan Swift) என்ற ஆங்கில இலக்கிய ஆசிரியரின் கற்பனைக்குரிய பறக்கும் தீவின் குடிவாணர்; *a.* கற்பனைக்குரிய பறக்கும் தீவுசார்ந்த; வியப்புக் கற்பனையான; கனவுத்தோற்றமான; பொருத்த மற்ற.

**lap'wing**, *n.* கூட்டத்தொகுதியாக வாழ்கிற நீண்ட காலுடைய நீர்ப்பறவை வகை.

**lar** [1], *n.* பண்டை ரோமரின் வீட்டுத்தெய்வம்; *pl.* lar'es.

**lar** [2], *n.* வெள்ளைக் கையுடைய பர்மிய வாலில்லாக் குரங்கு வகை.

**larb'oard**, *n.* (கப்.) இடது கைப்புறம்; *a.* (கப்.) இடது புறமான.

**lar'ceny**, *n.* (சட்.) திருட்டு, களவிற் பிறர் பொருள் கைப்பற்றுதல்; (தொ.) petty larceny, சிறுதிறத் திருட்டு.

**larch**, *n.* கற்பூரத்தைலம் தரும் ஊசியிலைக் கூட்டுமான மர வகை.

**lard**, *n.* உணவு-மருந்து வகைகளில் பயன்படும் பன்றி அகட்டுக் கொழுப்பு; *v.* பன்றிக்கொழுப்பைப் பூசு; கொழுக்கவை; இறைச்சியிடையே சமைப்பதற்குமுன் பன்றிக் கொழுந் தசைத் துண்டுகளை இடையிடையே புகுத்து; இடையிடைச் செருகு; இடையிடைக் கல; பேச்சிலும் எழுத்திலும் இடையிடையே செருகி அணிசெய்.

**larda'ceous**, *a.* (மரு.) பன்றிக்கொழுப்புப் போன்ற; தசையிழைமம் சீர்கெடப்பெற்றுக் கொழுப்புப்போலான; தசையிழைமச் சீர்கேட்டுக் கோளாறினால் நோயுற்று வருந்துகின்ற.

**lard'er**, *n.* உணவரங்கு, இறைச்சி முதலியவை வைக்கும் சேம அறை.

**lard'on, lardoon'**, *n.* இறைச்சியில் பூசுவதற்கு அல்லது இடையிடையே செருகுவதற்குப் பயன்படும் பன்றிக்கொழுந் தசைக்கீற்று.

**large**, *n.* தடையற்ற நிலை, சுதந்திர நிலை; அகல்விரிவு, முழு நிறை நுணுக்கவிவர விளக்க இயல்பு; பரவல்நிலை, தனிக் குறிப்பீடற்ற பொதுநிலை; குறிப்பிட்ட தனி அலுவலற்ற பொதுத்தன்மை; பேரளவு; (இசை.) முற்கால இரு நெடிலளவொத்த இசைமானம்; *a.* பெரிதான, பரந்தகன்ற; அகல்விரிவான; ஏராளமான, வளமான; பலவற்றை உட்கொள்ளவல்ல; எல்லாம் தழுவுகிற; தாராளமான; ஈகைக் குணமுடைய; அன்பாதரவுமிக்க; பரந்தநோக்க முடைய, குறுகிய நோக்கமற்ற; ஒருசார்பற்ற; தப்பெண்ணங்களுக்கிடங்கொடாத; பெரும்போக்கான; பெருமிதமான; பெருமதிப்புடைய; பெருமை சான்ற; முக்கியத்துவம் வாய்ந்த; தற்பெருமையுடன் நடக்கிற; தங்குதடையற்ற; கட்டற்ற, கட்டற்ற இயல் எளிமை வாய்ந்த; *adv.* பகட்டாக; (கப்.) காற்றின் திசையில் முனைப்பாக; (தொ.) at large, சுதந்தரமாக, கட்டுப்பாடின்றி; முழு விவரங்களோடு; தொகுதியாக, முழு அளவில்; பொதுவாக, தனிப்படுத்திக் கூறுமல், குறித்த எவ்வகை நோக்கமுமில்லாமல்; by and large, பொதுவாகக் கூறுமிடத்து, மொத்தத்தில்; எல்லாவற்றையும் சேர்த்துக் கவனித்துப் பார்த்தால்; gentleman at large, தனிப்பட்ட கடமைகளில்லாமல் அரசு மன்றத்தில் இணைப்புக்கொண்டுள்ள உயர் குடிப்பெருமகன்; வேலையில்லாதவர், தொழிலில்லாதவர்.

**large'-heart'ed**, *a.* வண்மையுளம் உடைய; இரங்குகிற.

**large'ly**, *adv.* பெரிதும்; பெரும்பாலும்; மொத்தத்தில்.

**lar'gess, lar'gesse**, *n.* தாராளமான மகிழ்ச்சி; நன்கொடை, வள்ளன்மை மிக்க ஈகை.

**larg'o**, *n.* (இசை.) பரந்தாழ்ந்த மெல்லியக்க இசை; *adv.* பரந்தாழ்ந்த மெல்லியக்கத்துடன்.

**la'riat**, *n.* குதிரை முதலியவற்றை முளையில் கட்டிப் பிணைக்கும் கயிறு; கட்டற்ற விலங்கு கால்நடைகளைப் பற்றிப் பிடிக்கும் சுருக்குவார்க் கண்ணி.

**lark** [1], *n.* வானம்பாடியினப் பறவை; (தொ.) rise with the lark, வைகறைத் துயிலெழு.

**lark** [2], *n.* விளையாட்டு, வேடிக்கை, களியாட்டு; வேடிக்கையான நிகழ்ச்சி; *v.* கேளிக்கையில் ஈடுபடு, துள்ளி விளையாடு, குறும்பு செய்; (தொ.) what a lark! எவ்வளவு வேடிக்கை! எவ்வளவு மகிழ்ச்சியான செய்தி!

**lark'-heel**, *n.* உணவுக்குரிய காரமான இலைகளுள்ள செடி வகை.

**lark'spur**, *n.* குதிமுள் போன்ற புல்லிவட்டமுள்ள செடிவகை.

**la'rrikin**, *n.* போக்கிரி இளைஞன், தெருச்சுற்றி வீணன்.

**la'rrup**, *v.* (பே-வ.) நையப்புடை, தண்டனைகொடு.

**la'rum**, *n.*=alarum.

**larv'a**, *n.* முட்டைப்புழு, முட்டையினின்று வெளிவந்த புழு, கம்பளிப்புழு; அரைகுறை உருமாற்றமடையும் மற்ற விலங்குகளின் முதிராத வடிவம்; *pl.* larv'ae.

**laryngit'is**, *n.* குரல்வளை அழற்சி.

**laryng'oscope**, *n.* குரல்வளையைக் கூர்ந்து நோக்குவதற்குப் பயன்படும் துணைக்கருவித்தொகுதி.

**laryngot'omy**, *n.* வெளியிலிருந்தே குரல்வளையின் உட்பகுதியில் வெட்டும் அறுவை முறை.

**la'rynx**, *n.* குரல்வளை.

**Las'car**, (இ.) *n.* கப்பலோட்டி; கூடார உயைழர்.

**lasciv'ious**, *a.* சிற்றின்பச் சார்பு மிகுதியுடைய, காமமிக்க; சிற்றின்பந் தூண்டுகின்ற.

**lash**, *n.* கசையடி; தோல்வார்ச் சுடக்கு; சாட்டைபோன்ற தொய்வான பொருளாலடிக்கும் அடி; சுளீர் வீச்சு, சுளீர்ச் சுடக்கீடு; கசையின் வார்; கசைமுனை; சாட்டை; கசையடித் தண்டனை; வசையடி, வசைத்தாக்குதல்; *v.* கசையாலடி; வாரால் அடி; வாலால் அடி; சடாரென்றடி; பாய்ந்தூற்று, விசையுடன் கொட்டு; தாக்குவிசையுடன் அடி; அடி; எற்று, உதை; மோது; கண்டி, திட்டு, வசைமொழியால் தாக்கு; வன்சொல் வீசு; சாட்டையாலடித்துத் தூண்டு; அடித்துத் தூண்டுதலளி; (தொ.) lash onself into a fury, கடுஞ்சீற்றம் வருவித்துக்கொள்; the lash, கசையடித் தண்டனை.

**lash'er**, *n.* கசையாலடிப்பவர்; மோதுவது; அணை; அணையின்மீது ஓடும் நீர்; அணையின்கீழுள்ள சிறு குட்டை.

**lash'kar**, *n.* போர்க்கருவிகள் தாங்கிய குடிமரபுக் குழுவினர்.

**las'pring**, *n.* மீன்வகையின் முதிரா வடிவம்.

**lasque**, *n.* வடிவமைதியற்ற நரப்பிழைப் பட்ட வைரக்கல்.

**lass**, *n.* சிறுமி, சிறுக்கி, பெதும்பை; காதலி.

**lass'itude**, *n.* களைப்பு, சோர்வு; தளர்மடிமை, முயற்சி செய்வதற்கு மனமில்லாமை, அக்கறையின்மை.

**lass'o**, *n.* கால்நடைகள் முதலியவற்றைப் பிடிக்கப் பயன்படும் தோல்வார்ச் சுருக்குக்கண்ணி; *pl.* lass'os; *v.* தோல்வார்ச் சுருக்குக் கண்ணியிட்டுப் பிடி.

**last[1]**, *n.* கடைசி ஆள், இறுதியில் குறிப்பிடப்பட்டவர்; கடைசிப் பொருள், இறுதியில் குறிப்பிடப்பட்டது; இறுதி நாள்; இறுதி நேரம்; கடைசி, இறுதி; சாவு, இறப்பு; இறுதியான ஒன்று; கடைசிச் செயல்; *a.* கடைசியான; முடிவான; எல்லாவற்றிற்கும் பின்னுள்ள; இறுதியாக வருகிற; வாழ்க்கையின் முடிவான; உலகத்தின் முடிவான; அடுத்து முந்திய; மிக அணிமைக் காலத்திய; மிகவுங்கீழான; மிகத் தாழ்ந்துள்ள; மிகக்குறைவான பதவியிலுள்ள; மிகக் குறைந்த மதிப்புள்ள; இறுதியாக எஞ்சியுள்ள; முடிவான, தீர்மானமான; புறக்கோடியான, முனைக்கோடியான; *adv.* கடைசியாக; எல்லாவற்றிற்கும் பிந்தி; மிக அணிமையாகக் கடைசியில்; முடிவாக; அறுதியாக; (தொ.) at long last, முடிவில், இறுதியில்; பெருங் காலதாமதத்திற்குப் பிறகு; last but not least, வரிசைப்படி கடைசியிலாயினும் சிறப்புப்படியில் வேறாக, கடைசியாகக் குறிப்பிடினும் முக்கியத்துவங் குறையாத; last day, இறுதித்தீர்ப்பு நாள்; the four last things, சாவு-தீர்ப்பு-சொர்க்கம்-நரகம் ஆகிய நான்கு முடிவான பொருள்கள்; till the last, to the last, முடிவு வரையில்; கடைசிவரை; இறக்கும் வரையில்.

**last[2]**, *n.* வீரியம், நீடுழைப்பாற்றல்; கெடாது நீடித்துப் பயன்படும் பண்பு; *v.* நீடித்துழைப்பதாயிரு, கெடாதிரு; அழியாதிரு, செலவாகாதிரு; உயிருடனிரு; போதியதாயிரு; தேவைக்குச் சரியாயிரு; (தொ.) last out, நீடித்து நிலைத்திரு; பதங்கெடாதிரு.

**last[3]**, *n.* புதைமிதியடி செய்வதற்குரிய படியுருவக்கட்டை; (தொ.) stick to one's last, புரியாச் செய்திகளில் தலையிடாதிரு.

**last[4]**, *n.* வாணிக எடையளவு; வாணிகக் கன அளவை; இடத்துக்கும் சரக்குக்கும் ஏற்ப மாறுபடும் வாணிகப் பரும அளவை; (தொ.) last of malt, மாவூறல் இரண்டரை அந்தர்; last of wool, பன்னிரண்டு சாக்குக் கம்பளி.

**last'ing**, *n.* நெட்டுழைப்புத் துணிவகை; *a.* நீடித்திருக்கிற; நிலைத்த; நீலைபேறுள்ள, நீடித்து உழைக்கக்கூடிய.

**lat**, *n.* பத்து ஆங்கில பென்னி மதிப்புடைய லாட்வியா (Latvia) நாட்டின் பொன் நாணய மூல அளவு.

**Lataki'a**, *n.* கலவைப் பொருள்களில் பயன்படுத்தப்படும் துருக்கிப் புகையிலை வகை.

**latch**, *n.* புறவிசைக் கொண்டி; பொறித்தாழ்ப்பாள்; புறவிசைப்பூட்டு; கதவின் விசையடைப்பு; *v.* பொறித்தாழ்ப்பாளிடு, விசைத் தாழ்ப்பாளிட்டுப் பூட்டு; (தொ.) on the latch, தாழ்ப்பாளால் மட்டும் பூட்டும்படியான, விசைத்தாழிட்ட.

**latch'et**, *n.* புதைமிதியடியின் தோல்வார் இழை.

**latch'key**, *n.* விசைத்தாழ்த் திறவுகோல்; (தொ.) latchkey vote, விசைத்தாழ்த் திறவுகோலைக் குடியிருப்பின் குறியடையாளமாகக் கொண்ட குடியிருப்பாளர் வாக்களிப்புரிமை.

**late**, *n.* அணிமைக்காலம்; *a.* தாமதமான, பிந்திய; சுணங்கிய, உரியகாலங் கடந்த; காலங் கடந்து நிகழ்கிற; எதிர்பார்த்த காலத்துக்குப் பிற்பட இயலுகிற; முடிவுநோக்கி நெடுந்தொலை சென்ற; இறுதிக்கு அணித்தான; நெடுநாட்கடந்த; நடுப்பருவங்கடந்த; வேளைகடந்த; காலந்தாழ்த்தற்குரிய; பொழுதுசென்ற; பொழுதேறிய; வழக்கமான நேரங்கடந்த; பின்னடைந்த; பிற்பட்ட; பிற்காலத்திய; காலஞ்சென்ற, அணிமையில் மறைவுற்ற; முன்னுளைய; பணி ஓய்வுற்ற; அணிமையில் நிகழ்வுற்ற; கழிந்த; *adv.* காலந்தாழ்த்து, சுணங்கி, தாமதமாக; உரியகாலத்துக்குப் பின்; பிந்தி, மிகவும் பிற்பட்டு; காலங்கடந்து; பொழுதேற, வேளைகடந்து நெடுநேரமாக; அணிமையில்; முன்பெல்லாம், அணிமைக் காலங்களில்; காலஞ்சென்று, பிற்பட்டு; பருவங்கடந்து; பிற்பட்டபடியில்; நம் காலத்தை எட்டிய நிலையில்; (தொ.) late fee, தாமதக் கட்டணம்; late hours, இயல்பான வேளை கடந்த நேரம்; late in the day, காலமல்லாத காலத்தில்; of late years, சென்ற சில ஆண்டுகளில்; soon or late, முன்பின்னாக, எப்போதாவது ஒரு சமயத்தில்.

**lateen'**, *a.* (கப்.) பாய்மரத்திலிருந்து 45 பாகைக் கோண அளவுடைய முக்கோண அமைப்புள்ள; 45 பாகைக் கோண அளவான முக்கோண அமைப்புடைய பாய்மரம் கட்டப்பட்டுள்ள.

**late'ly**, *adv.* சிறிது காலத்திற்குமுன், அணிமையில், அணிமைக் காலங்களில்.

**lat'en**, *v.* பிற்படு, சுணங்கு.

**lat'ent**, *a.* மறைந்திருக்கிற; வெளிப்படாத; உள்ளார்ந்த; உட்செறிவான; வெளியிற் காணப்படாத; முதிர்வுறாத; இயக்கமில்லாத; புதைவியல்புடைய, மறை தன்மையுடைய; (தொ.) latent heat, உட்செறி வெப்பம், புதைசூடு.

**lat'eral**, *n.* பக்கக் கிளை; பக்கக் கிளையுறுப்பு; புடைப்பொருள்; *a.* பக்கத்திலுள்ள; புடைநிலையான; பக்கத்திலிருந்து இயங்குகிற; பக்கம்நோக்கிச் செல்கிற; (தொ.) lateral branch, நேர்மரபின் கிளைவழிக் குடும்பம், நேர்மரபினரின் உடன்பிறந்தார் வழிக்குடும்பம்.

**Lat'eran, The Lateran, St. John Lateran**, *n.* ரோமாபுரியிலுள்ள தூய யோவானின் கிறித்தவ தலைக்கோயில்; (தொ.) Lateran Council, மேற்கு மண்டலத் திருச்சபையின் ஐந்து பொதுக்குழுக்களில் ஒன்று.

**lat'erite**, *n.* வெப்பமண்டலச் சாலையமைப்பிற் பயன்படுத்தப்படும் செவ்வண்ண இரும்பகக் களிமண்.

**lat'ex**, *n.* (தாவ.) இரப்பர் மரப்பால்.

**lath**, *n.* மென்மரப் பட்டிகை, வரிச்சல்; *v.* சுவர்-தளம்-மச்சுக்களுக்கு மென்பட்டிகைப் பாவு; (தொ.) as thin as a lath, ஆள்வகையில் ஒட்டி மெலிந்த; lath and plaster, சுவரின் உட்புறம் முகப்புக்கூரையின் உட்புறம் பிரிவினைத்தட்டி முதலியவற்றிற்குப் பயன்படுத்தப்படும் காரை-மெல்லிய பலகைக் கீற்று முதலிய பொருள்கள்.

**lathe[1]**, *n.* கெண்ட் (Kent) கோட்டத்தின் ஆட்சித்துறை வட்டங்களில் ஒன்று.

**lathe[2]**, *n.* கடைசல் இயந்திரம்; சட்டி பானைகள் செய்வதற்குப் பயன்படும் சுழல் வட்டம்.

**lathe'-bearer**, *n.* கடைசல் பிடிக்கும் பொறியின் மையங்கள் அல்லது கொளுவிகளுக்குரிய நிலைச்சட்டம்.

**lathe'-bed**, *n.* கடைசல் பிடிக்கும் பொறியின் ஏற்பமைவு வாய்ப்புடைய அடிப் பணிச்சட்டம்.

**lathe'-carrier, lathe'-dog**, *n.*=lathe-bearer.

**lath'er**, *n.* நுரை, சவுக்கார நுரை; குதிரையின் வியர்வை நுரை; *v.* நுரைபடு, நுரையாகு; நுரையால் மூடப்பெறு; மழிப்பதற்காகச் சவுக்கார நுரைதடவு; அடி, நையப்புடை.

**lath'i**, (இ.) *n.* குறுந்தடி, குண்டாந்தடி.

**latifun'dia**, *n. pl.* பெரும்பண்ணை, நிலங்களின் தொகுதி; பெரும்பண்ணையாட்சி நிலை.

**Lat'in**, *n.* லத்தீன் மொழி; லேஷியம் (Latium) என்ற பண்டை இத்தாலி நாட்டு மாகாணத்தின் குடியுரிமையாளர்; சிறப்புக் குடியுரிமையுடைய இத்தாலி நாட்டவர்; பண்டை லத்தீன் மரபில் வந்த மொழியினைப் பேசுபவர்; ரோமன் கத்தோலிக்கர்; *a.* பண்டை ரோமாபுரியினரைச் சார்ந்த; லேஷியம் என்ற பண்டை இத்தாலிய மாகாணத்துக்குரிய; லத்தீன் மொழிக்குரிய; லத்தீன் மொழியிலுள்ள; லத்தீன் மொழிபோன்ற; ரோமன் கத்தோலிக்க திருச்சபை சார்ந்த; பண்டை ரோமரின் பழக்கவழக்கங்களை மரபுவழிப் பின்பற்றுகிற; பண்டை ரோமரின் பழக்கவழக்க மரபுகளைப் பின்பற்றும் மக்களைச்சார்ந்த; லத்தீன் மரபுவழி மொழிகளைப் பேசுகிற; பிரான்ஸ்-ஸ்பெயின்-போர்ச்சுகல்-இத்தாலி ஆகிய மாநிலங்களுக்குரிய; (தொ.) classical Latin, கி. மு. 75 முதல் கி. பி. 175 வரையுள்ள லத்தீன் இலக்கியமொழி; late Latin, கி. பி. 175 முதல் கி. பி. 600 வரை வழங்கிய லத்தீன் மொழி; low Latin, பிற்பட்ட பண்டைக்கால முற்பட்ட இடைநிலைக்கால லத்தீன்மொழி; இடைநிலைக்காலத்திய லத்தீன்மொழி; medieval Latin, கி. பி. 600 முதல் கி. பி. 1500 வரை வழங்கிய லத்தீன்மொழி; modern Latin, கி. பி. 1500-க்குப் பிற்பட வழங்கும் தற்காலத்துக்குரிய லத்தீன் மொழி; old Latin, ஏறத்தாழ கி. மு. 75-க்கு முற்பட்ட லத்தீன்மொழி; இலக்கிய காலத்துக்கு முற்பட்ட லத்தீன் மொழி; the Latin peoples, பிரான்சு-ஸ்பெயின்-போர்ச்சுகல் இத்தாலி முதலிய நாட்டுமக்கள்; thieves' Latin, திருடர்களின் மறைமொழி.

***Latin'e***, (ல.) *adv.* லத்தீன் மொழியில்.

**Latin'ity**, *n.* லத்தீன் எழுதுபவரின் மொழிநடை; லத்தீன் மொழிநடைப் பாணி.

**lat'inize**, *v.* சொல்லுக்கு லத்தீன் வடிவங் கொடு; லத்தீன் மொழிப்படுத்து; பண்டை ரோமரின் பழக்கவழக்க மரபுகளுடன் இசைவுபடுத்து; லத்தீன் மரபுத் தொடர்களை வழங்கு.

**lat'itude**, *n.* விரிவகலம்; வீச்செல்லை; ஆற்றலெல்லை; வாய்ப்பகலம்; வாய்ப்பெல்லை; இடவாய்ப்புரிமை, வாய்ப்பெல்லையுரிமை; தாராள மனப்பான்மை; கட்டுப்பாடின்மை; நெகிழ்வு; தளர்வு; தளர்வுரிமை; பொருள்கோள் விரிவெல்லையுரிமை; (நில.) குறுக்கையளவு, நடுவரைகடந்துள்ள கோணஅளவு; (வான்.) கதிர் வீதியிலிருந்துள்ள கோண அளவு.

**lat'itudes**, *n. pl.* பரப்பெல்லைகள்; (தொ.) high latitudes, நிலநடுக் கோட்டுக்கு வடதொலைவு அல்லது தென் தொலைவுப் பகுதி மண்டலங்கள்; low latitudes, நிலநடுக் கோட்டுக்கு அருகிலுள்ள மண்டலப்பகுதிகள்.

**latrine'**, *n.* மலசலம் கழிப்பிடம், கால் கழுவிடம்.

**latt'en**, *n.* பித்தளை போன்ற மஞ்சள் உலோகக் கலவை; *a.* பித்தளை போன்ற உலோகக் கலவையாலான.

**latt'er**, *a.* பிந்திய, பின்கூறப்பட்ட; இரண்டில் பின்குறிப்பிடப்பட்ட; பிற்பட்ட; பிற்பகுதியான; பின்வருகிற, பிந்தி நிகழ்கிற; பிந்திய நிலையுடைய; தற்காலத்தோடொட்டிய; அணிமைக்காலத்திய; முடிவணித்தான; (தொ.) in these latter days, உலக வரலாற்றில் மிகப்பிற்பட்ட அணிமைக் காலத்தில்; latter end, சாவு, இறப்பு.

**latt'er-day**, *a.* அணிமைக் காலத்துக்குரிய; (தொ.) latter-day saints, நியூயார்க்கில் 1830.ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட மார்மன்ஸ் (Mormons) என்ற சமயக்குழுவைச் சார்ந்த பலதார உறுப்பினர்.

**latt'erly**, *adv.* வாழ்க்கையின் இறுதித் தறுவாயில்; காலப் பகுதியின் முடிவான தறுவாயில்; அணிமைக்காலத்தில், சிறிது காலமாக.

**latt'ice**, *n.* பின்னல் தட்டி, வரிச்சல் அல்லது கம்பிகளின் பின்னலால் அமைந்த மறைப்பு; பின்னல் வேலைப்பாடமைந்த பொருள்; பின்னலமைப்புடைய பிழம்புரு; குறுக்குப்பின்னல் கம்பி வலையிட்ட பலகணி; *v.* வலைப்பின்னலுருவாக்கு; பின்னல் தட்டியமைத்துப் பொருத்து; (தொ.) lattice bridge, குறுக்குச் சட்டப் பாலம்; lattice frame, lattice girder, இரும்பாலான பின்னற்சட்ட அமைப்போடு இணைக்கப்பட்ட பெரிய உத்தரம்; lattice window, பின்னல் வலைப் பலகணி, பின்னல் வலைச்சட்டப் பலகணி.

**latt'ice-work**, *n.* பின்னல்வலை வேலைப்பாடு; பின்னல் வேலைப்பாட்டமைப்பு.

**Lat'vian**, *n.* பால்டிக் (Baltic) கடலடுத்துள்ள லாட்வியா குடியரசின் குடிமகன்; *a.* லாட்வியா நாட்டைச் சேர்ந்த.

**laud**, *n.* புகழ்ச்சி; புகழ்ச்சிப் பாசுரம்; *v.* புகழ்ந்து பேசு, புகழ்ச்சி செய், கொண்டாடு.

**laud'able**, *a.* புகழத்தக்க, பாராட்டத்தக்க, புகழ்ச்சிக்கு உரித்தான; (மரு.) உடலியல் சுரப்புநீர் வகையில் உடலுக்கு நல மார்ந்த.

**laud'anum**, *n.* சாராய அபினிக் கரைசல்.

**lauda'tion**, *n.* புகழ்ச்சி, ஏத்துதல்; மதித்தல், போற்றுதல்.

***laudat'or tem'poris de'ti***, (ல.) *n.* முற்காலமே பொற்காலமென்று விரும்பிப் போற்றுபவர்.

**laud'atory**, *n.* புகழுரை; *a.* புகழடங்கிய; புகழ்ச்சியுடைய, புகழ்கிற.

**lauds**, *n. pl.* திருக்கோயில் முதற்பகல் வழிபாட்டு வேளை; புகழ்க்கீதம்.

**laugh**, *n.* நகை; நகைப்பொலி; ஏளனச்சிரிப்பு; சிரிக்கும் பாணி, நகைக்கும் வகைமுறை; *v.* சிரி; நகைப்பொலி செய்; நகைமுகங் காட்டு; ஏளன நகைப்பு நகை; வெறுப்புடன் சிரி; அகமகிழ், களிப்புறு; சிரித்துரையாடு; (தொ.) have the laugh of, get the laugh of, have the laugh on one's side, தாக்குபவரைத் திரும்பத் தாக்கு; he laughs best who laughs last, முடிவிற் சிரிப்பவனே உண்மையாகச் சிரிப்பவன், முற்றிலும் முடியுமுன் அகமகிழ்வுறுவது தவறு; join in the laugh, தன்னை ஏளனஞ்செய்து சிரிப்பவரோடுகூடச் சேர்ந்து சிரி, கேலிக்காரரோடுகூடச் சேர்ந்து சிரி; laugh at, கேலி பண்ணு; ஏளனஞ்செய், இகழ்; புன்னகை புரி, மகிழ்ச்சி குன்றுதிரு, மகிழ்வுடனிரு; ஏளனம் செய்வதன் மூலம் பழக்கவழக்கம் நம்பிக்கை முதலியவற்றின் பிடியகற்று; laugh away, சிரித்து ஒதுக்கித்தள்ளு; கேலி கிண்டலில் காலத்தைப் போக்கு; laugh down, சிரித்து வாயடக்கு; laugh in one's sleeve, மறைமுகமாகச் சிரி, ஒளிவுமறைவாக நகை; laugh off, சிரித்துக்கழி; சிரித்துத் தொல்லைகளிலிருந்து தன்னைத் தப்புவித்துக்கொள்; laugh on wrong side of mouth, மகிழ்ச்சியாரவார வீறுப்பையடுத்துத் துயரம் அல்லது எரிச்சலுக்கு ஆளாக நேரு; laugh out of court, மறுவிளக்கங்களுக்கு இடமில்லாதபடி ஏளனஞ்செய்து அகற்றிவிடு; laugh over, சிரித்துப்பேசித் தள்ளிவிடு.

**laugh'able**, *a.* சிரிக்கத்தகுந்த, நகைப்புக்கிடமான; நகைப்பைத் தோற்றுவிக்கிற; வேடிக்கையால் மகிழ்ச்சியளிக்கிற.

**laugh'ing**, *n.* சிரித்தல், நகைத்தல்; (தொ.) no laughing matter, கேலிக்கிடமான செய்தியன்று; விளையாட்டுச்செய்தி அன்று; புறக்கணிக்கத்தகாத செய்தி.

**laugh'ing-gas**, *n.* வெடியத்து உயிரகை, வலிநீக்கும் மயக்க மருந்தாக மூக்கில் உட்கொண்டு பயன்படுத்தப்படும் வெறியூக்கும் வளி.

**laugh'ing-stock**, *n.* பழிப்புப்பொருள்.

**laugh'ter**, *n.* உரத்த சிரிப்பு; நகைப்பொலி; (தொ.) Homeric laughter, உரத்த பொதுச்சிரிப்பு.

**launce**, *n.* வேலையிறக்கத்தின்போது மணலில் புதைந்து கொள்ளும் இயல்புடைய விலாங்குபோன்ற மீன்வகை.

launch[1], *n.* கல இறக்கம், கப்பல்-படகு வகைகளில் நீரில் இறக்கும் செயல்; கலப்புறப்பாடு, கப்பல்-படகு வகைகளில் துறைபெயர்ந்து செல்லுதல்; *v.* தூக்கியெறி, வீசியெறி; கடலில் தள்ளு; மிதக்கவிடு; தொலைக்கனுப்பு; புதிய துறை தொடங்கு, புது முயற்சியில் இறங்கு; முயற்சியை மேற்கொண்டு புறஞ்செல்.

launch[2], *n.* போர்க்கப்பலின் மிகப்பெரிய படகு; தட்டையான அடிப்புறமுள்ள பெரிய படகு; நீராவி கல்லெண்ணெய் முதலியவற்றால் இயங்கும் பெரும் பயணப்படகு; இன்ப உலாப்படகு.

laun'der, *v.* சலவை செய், ஆடைகளை வெளு; ஆடை வகையில் சலவைக்குரிய தாயிரு, வெளுப்புக்கு ஈடுசெய்வதாய் இரு.

laun'dress, *n.* வண்ணகப் பெண், ஆடை வெளுப்பவள்; இங்கிலாந்தில் முறைவர் உரிமை மன்றங்களின் மேற்பார்வையாளர்.

laun'dry, *n.* அலக்ககம், சலவை மனை, ஆடைவெளுப்புச் சாலை; சலவைக்குரிய துணிகளின் தொகுதி.

laur'eate, *n.* அரசவைக் கவிஞர், ஊதியம்பெற்றுப் பாடும் அரசியற் கவிஞர்; பேச்சு முதலிய போட்டிகளில் வெற்றி வாகை சூட்டப்பெற்றவர்; *a.* வெற்றிமாலை சூட்டப்பெற்ற, வாகை சூடிய, வாகைகொண்ட; வெற்றி வாகைக்குரிய, வெற்றி வாகை சூட்டப்பெறத்தக்க.

lau'rel, *n.* புன்னைவகை; பாடற் போட்டியில் வெற்றிச் சின்னமான தழை; வெற்றிச்சின்னம்; வெற்றித் தனித்துறை ஏற்றம்; (தொ.) look to one's laurels, பெற்ற புகழ்ப் பெருமையை இழந்துவிடாமல் காப்பாற்றுவதில் விழிப்பாக இரு; rest on one's laurels, பெற்ற புகழைக்கொண்டு திருப்தி அடை, மேலும் புகழ்வேண்டுமென்ற முயற்சியில் ஈடுபடாதிரு.

lau'rel-bottle, *n.* பூச்சிகளைக் கொல்வதற்காகப் புன்னை வகையின் இலைகளால் நிரப்பப்பட்ட குப்பி.

laurestin'us, laurustin'us, *n.* எப்போதும் பசுமை நிறமுள்ள மலருடைய புதர்ச்செடி வகை.

la'va, *n.* எரிமலைக் குழம்பு, உருகிய பாறைக் குழம்பு.

lavab'o, *n.* ஏசுநாதரின் இறுதியுணவு விழாவின் தற்காலிக சமயகுரு கைகளைக் கழுவும் சடங்கு; கைகழுவும் வினைமுறைக்காகப் பயன்படுத்தப்படும் கைத்துண்டு; கை கழுவு தட்டம்; துறவிமடத்தின் தண்ணீர்த்தொட்டி, கழுவு கலம்.

lavab'os, *n. pl.* கைகால் கழுவும் அறை; கழுவு நீர்க்கலம்.

lava'tion, *n.* கழுவுதல், அலம்புதல்.

lav'atory, *n.* கழுவு நீர்க்கலம், துணி துவைப்பதற்குப் பயன்படும் கலம்; கைகால் கழுவும் அறை; சிறுநீர் கழிப்பிடம்.

lave, *v.* (செய்.) கழுவு, குளி; அலம்பு; அலைமோது; ஒழுகு, நீரோட்டமாகச் செல்.

lave'ment, *n.* (மரு.) ஊசிபோடுதல்; குடல் கழுவுதல், மூலம் வழி நீர் முதலியன செலுத்தி மலக்குடலைத் தூய்மை செய்தல்.

lav'ender, *n.* நறுமணச் செடிவகை, ஆடைகளை மணமூட்ட வைக்கப்படும் நறுமணச் செடிவகையின் மலர்க்காம்புகள்; செஞ்சாயலுடைய மென்னீல நிறம்; *v.* துணி முதலியவற்றில் நறுமணச் செடியின் மலர்ப்பூக்காம்புகளை வை; (தொ.) lay up in lavender, பின்னால் பயன்படுத்துவதற்காகச் சேர்த்து ஒதுக்கிவை.

lav'ender-water, *n.* நறுமணப்புதர்ச் செடிவகையின் மலர் காம்பு முதலியவை ஊட்டப்பட்ட நீர்மம்.

lav'er[1], *n.* கடற்பாசி வகை; உண்ணத்தக்க கடற்பாசி இனம்.

lav'er[2], *n.* (விவி.) யூதமத குருக்கள் கழுவுவதற்கான பெரிய பித்தளைக்கலம்; அலம்புவதற்கான தட்டம்; ஊற்றுத் தேங்குகலம்; கிறித்தவர் கோயிலில் திருநீர்வட்டில்.

lav'erock, *n.* = lark[1].

lav'ish, *n.* நிறைவு; *a.* வரையாது கொடுக்கிற; மட்டுமிஞ்சிச் செலவிடுகிற; ஏராளமான விளைவைத் தருகிற; தாராளமான; ஊதாரித்தனமான, அளவு மீறிச் செலவிடுகிற; *v.* தாராளமாகக் கொடு; மட்டுமீறிச் செலவிடு.

law[1], *n.* சட்டம்; சட்டத்தொகுதி; அரசியற் சமுதாயத்தின் கட்டமைதி; சட்ட ஆட்சி, அரசியல் ஒழுங்குமுறை; சட்டக் கட்டுப்பாடு; சட்டமுறைமை; சட்டத்துறை; தனித்துறைக் குரிய சட்டம்; சட்டக்கல்வி; சட்டப்புலமை; சட்டத்தொழில்; சட்டவாசகம், சட்டக்கூறு; சட்டத்துக்குகந்தது; சட்ட ஆட்சிமுறை; சட்ட நடைமுறை; வழக்குமுறை; வழக்கு நிலை; பொதுநீதி; நடைமுறை ஒழுங்கு, செயல் ஒழுங்கு; மரபொழுங்கு; வழக்கமுறைமை, விவகார முறை; கட்டளை; மேற்கோள் விதி; கட்டளை விதிமுறை; விதிமுறை வாசகம்; இயலமைதி; இயற்கை ஒழுங்கமைதி; மெய்யொழுங்கமைதி; தத்துவம்; மெய்ம்மை வாய்பாடு, சூத்திரம்; வேட்டை விளையாட்டுப்போட்டிப் பந்தயங்களில் முன்னுரிமைச்சலுகை; நேர்மைச்சலுகை; சலுகை நேரம்; ஓய்வு; *v.* சட்டநாடி வழக்குக்குச்செல்; விரைவுபடுத்து; (தொ.) be a law unto oneself, மனம்போன போக்கில் நட, மரபொழுங்கைப் புறக்கணி; give the law to, தன் ஆணை சுமத்து; Gresham's law, கெட்ட நாணயம் நல்ல நாணயத்தைப் புழக்கத்திலிருந்து விரட்டிவிடுகிறது என்ற சட்டம்; Grimm's law, இந்தோ செர்மானியக்குழு மொழிகளில் மெய்யெழுத்துக்களின் மாறுதல்களைப்பற்றிய கிரிம் (Jacob Grimm 1785-1863) என்பாரின் மெய்விளக்க விதி; international law, law of nations அனைத்து நாட்டுச்சட்டம், உலக நாடுகளிடையேயுள்ள தொடர்புகளை ஒழுங்குபடுத்தும் சட்டம்; Kepler's laws, ஜோஹான் கெப்லர் (Johann Keplar 1571-1630) கண்டு நிறுவிய கோள இயக்கங்களைப் பற்றிய மூன்று மெய்விளக்க விதிகள்; law calf, சட்ட புத்தகங்களின் கட்டிடத்துக்காகப் பயன்படுத்தப்படும் கறைப்படுத்தப்படாத மாட்டுக்கன்றின் தோல்; law French, சட்டத்திலும் சட்டப் புத்தகங்களிலும் பயன்படுத்தப்படும் பழைய பிரஞ்சுமொழிச் சொற்கள்; law Latin, ஆங்கிலச் சட்டங்களில் பயன்படுத்தப்பட்ட முற்காலக் கலப்பட லத்தீன் மொழி; law merchant, வணிகத் துறை ஒழுங்குமுறைச் சட்டம்; laws of motion, நியூடன் (Newton) என்பவரால் முறைப்படுத்திக் கூறப்பட்ட பொருள்களின் இயக்கம் பற்றிய மூன்று மெய்விளக்க விதிகள்; lay down the law, அதிகாரத் தோரணையுடன் பேசு, வீம்பு பேசு, அச்சுறுத்தி அடக்கியாளு; martial law, படைத்துறை ஆட்சிநிலை; take the law into one's own hands, தனக் கிழைக்கப்பட்ட தீங்குக்கு வன்முறையால் தானே எதிர்பழி செய்ய முற்படு; the law of the Medes and Persians, மாற்றவே முடியாத சட்டம்; Verner's law, இந்தோ செர்மானியக் குழு மொழிகளில் அழுத்தமாற்றத்தால், மெய்யெழுத்து ஒலிகளில் ஏற்படும் மாறுதல்கள் பற்றிய வெர்னர் (Karl Verner) என்பாரின் மெய்விளக்க விதி.

law[2], *int.* (பே-வ.) வியப்புணர்த்துஞ் சொல், வியப்பிடைச் சொல்.

law'-abiding, *a.* சட்டத்திற்குக் கீழ்ப்படிகின்ற.

law'-agent, *n.* வழக்கு விவரம் திரட்டும் முறைமன்ற அலுவலர்; கீழ்மன்ற வழக்குரைஞர்; வழக்காடும் உரிமை பெற்றவர்.

law'ful, *a.* சட்ட உரிமை வாய்ந்த; சட்டத்தின்படி அமைந்த; சட்டத்துக்கு மாறல்லாத; சட்ட ஒப்புதல் பெற்ற; சட்டத்திற்கு இயைய நிறுவப்பட்ட; முறைப்படி பிறந்த.

law'giver, *n.* சட்ட முதல்வர், சட்டம் செய்பவர்; சட்டத் தொகுதியை உருவாக்கியவர்.

law'-hand, *n.* சட்டப்பத்திரங்களில் பயன்படுத்தப்படும் கை எழுத்து.

lawk, lawks, *int.* (பே-வ.) வியப்பிடைச் சொல்; (தொ.) lawk-a-mussy, (பே-வ.) கடவுள் மன்னிப்பாராக, கடவுள் இரக்கம் காட்டுவாராக.

law'less, *a.* சட்ட ஆட்சியற்ற; சட்டச் செயலாட்சியில்லாத; அமைதியற்ற, குழப்பமிக்க; சட்டமீறிய; சட்டத்துக்குக் கீழ்ப்படியாத; சட்டத்துக்குக் கட்டுப்படாத; கட்டுப்பாடில்லாத, ஒழுங்கு மதியாத; ஒழுக்கவரம்பற்ற; வரம்புமீறிய நடையுடைய, மனம்போனபடி நடக்கிற.

law'-lord, *n.* பிரிட்டிஷ் மாமன்ற மேலவையில் (House of Lords) சட்டத்துறை உதவிக்குத் தகுதிவாய்ந்த உறுப்பினர்.

law'maker, *n.* சட்டமியற்றுநர்.

lawn[1], *n.* புல்வெளி, புல்நிலப் பரப்பு; ஒட்ட வெட்டப்பட்ட புல்கரண் பரப்பு; பூம்பொழில், இன்பப் புல்வெளித் தோட்டம்; (தொ.) lawn tennis, புல்வெளி வரிப்பந்தாட்டம்.

lawn[2], *n.* நேர்த்தியான நாரால் செய்யப்பட்ட துணி வகை, சமய வட்டத்தலைவர் உடையின் கைப்பகுதி தைப்பதற்குப் பயன்படும் மெல்லிய நார்த்துணி; (தொ.) lawn sieve, நார்த்துணி அல்லது பட்டாலான மென்மையான சல்லடை.

lawn'-mower, *n.* புல் அறுக்கும் பொறி.

lawn'-sprink'ler, *n.* பூவாளிப் பொறி, புல் தோட்டத்தில் நீர்தெளிக்கும் சுழற் குழாய்ப்பொறி.

law'-officer, *n.* சட்ட அதிகாரி; வழக்குரைஞர் அரங்க முதல்வர்.

laws, *int.*=law[2].

law'-stationer, *n.* வழக்குரைஞர்களுக்குத் தேவையான தாள் முதலியவற்றை விற்பவர், பெரிய எழுத்தில் எழுத வேண்டிய வழக்குப்பத்திரங்களை மேற்கொள்பவர்.

law'suit, *n.* உரிமைக்கோரிக்கை வழக்கு.

law'-term, *n.* சட்டத்துறைச் சொல்; முறைமன்ற இருக்கைக் கால எல்லை.

law'-writer, *n.* சட்ட எழுத்தாளர், சட்ட நூலாசிரியர்; சட்டப்பத்திரங்களை முறைப்பட எழுதுபவர், சட்ட எழுத்தர்.

law'yer, *n.* வழக்குரைஞர், வழக்கறிஞர், சட்ட அறிஞர், மன்றுடி, வழக்கு நடத்தும் ஆட்போர், சட்டப் பயிற்சியுள்ளவர்; (தொ.) Penang lawyer, பினுங்கு நாட்டுப் பனைக்குச்சியால் செய்யப்பட்ட நடையுலாக் கோல்.

lax[1], *n.* ஸ்விடன் அல்லது நார்வே நாட்டுக்குரிய பெரிய வெண்செதிள்களுடைய இளஞ்சிவப்பு உணவுமீன் வகை.

lax[2], *a.* தளர்வு வாய்ந்த, சோரவிட்ட; செறிவற்ற, அடர்த்தியில்லாத; உள்துளைகளையுடைய; நுண்துளை நிரம்பிய; கவனியாதிருக்கிற; கடமையில் தவறுகிற; கண்டிப்பில்லாத; தெளிவற்ற, உறுதியற்ற.

lax'ative, *n.* குடலிளக்க மருந்து, இளம் பேதிமருந்து; *a.* குடலை இளக்குகிற.

lay[1], *n.* நாட்டுப்பாடல்; சிறுகதைப் பாட்டு; உணர்ச்சிப் பாடல்; பறவைகளின் பாட்டு.

lay[2], *n.* கிடப்பு; நிலக்கிடக்கை, இட அமைவு; வழிநிலை; திசையமைவு; நிலை; அடுக்கின் பாங்கு; அடுக்குத்தளம்; கயிற்றுப்புரி முறுக்கின் பாங்கு; *v.* கிடத்து; படுக்கவை; நிலத்தில் படியவை; விழ்த்து; கிழிடு; இடு; போடு; வை; அடித்து அமர்த்து; அமிழ்த்து; தணிவி; அமைவி; மேவுவி; பொருத்தி வை; படியவிடு; வைத்திரு; படிந்த நிலையில் வை; காற்று வகையில் பயிர்களைச் சாய்த்துக்கிடத்து; காற்று கடல் தூசி முதலியவற்றைத் தணியச் செய்; பேய் வகையில் எழுச்சி அடக்கு; தப்பெண்ணங்களை அமர்த்து; பந்தயம் வை; பந்தயம் வைக்க முன்வா; படுவி; நிலைப்படுத்து; ஆட்படுத்து; முன் வை; முன் கொணர்; கொணர்ந்து வை; முன்னிடு; காரணமாகக் கற்பி; சுட்டிக்காட்டு; சாட்டு; சுமத்து; இட்டுக்காட்டு; அடி; விக்கு; ஒழுங்காக வை; வகுத்தமை; கட்டமை; செய்தொழிலுக்கேற்ற முன்னெருக்கஞ் செய்துவை; உருவாக்கு; தீட்டு; தீற்று; மேலே பூசு; பரப்பு; பொதி; வரையறுத்தமை; (தொ.) cannot lay my hands upon it, வரையறுத்துக் குறித்துக்காட்ட இயலவில்லை; lay aboard, கப்பலில் ஏறும் நோக்குடன் அதன் ஓரமாக விரைந்தோடு; எதிரி கப்பலைத் தாக்கும்படி அதன் ஓரமாகக் கப்பலைச் செலவிடு; lay about one, சுற்றியடி, எல்லாப் பக்கங்களிலும் அடி; lay an information, சட்டமுறைப்படி குற்றச்சாட்டைக் கொண்டுவா; lay aside, lay by, ஒதுக்கி வை; எதிர்கால நோக்கிச் சேமித்துவை; தள்ளி வை; பயன் படுத்தாமலிரு; கைவிடு, துற; lay bare, திறந்து காண்பி, முடாக்ககற்று, வெளிக்காட்டு; நிர்வாணமாக்கு; வெட்ட வெளியாக்கு, இரகசியம் வெளிப்படுத்து; lay breakfast, lay cloth, lay table, உணவுக்காக மேசையை முன்னேற்பாடு செய்; lay by the heels, lay fast, சிறைப்படுத்து, சிறையிலடை; கட்டிப்போடு; lay down, கிழிடு, தரையில்வை; lay down one's arms, சரணடை, படைக்கலந் துற, எதிர்ப்பைக் கைவிடு; lay emphasis, lay stress, lay weight, வற்புறுத்து, அழுத்தமாகக்கூறு, முக்கியமெனக்கருது; lay great store upon, உயர்வாக மதி, உயர்வாகக் கருது; lay hands on, பிடி, கைப்பற்று, தன்னதாக உரிமைப்படுத்திக் கொள்; வன்முறையாக நடத்து; lay hands on oneself, தற்கொலை செய்துகொள்; lay heads together, கூடிப்பேசு, கலந்தாராய்; lay hold of, lay hold on, பிடி, பற்று; கைப்பற்று, வல்லந்தமாகக் கைக்கொள், எதிரியின் குறைபாடு அல்லது வலுக்கேட்டைப் பயன்படுத்து; lay in, கையிருப்புச் சரக்காக வைத்துக்கொள்; அடிமாரி பொழி, அடித்து நொறுக்கு; lay it on thick, lay with a trowel, வெளிப்படையாக முகப்புகழ்ச்சி செய்; lay low, தாழ்த்து கீழ்ப்படுத்து, செருக்கைக்குலை, பணியும்படி செய்; lay on, வரி முதலியன சுமத்து; அடிவழங்கு, அடிகொடு, அடிமேல் அடியடி; சாட்டையால் வீக்கு; பூசு; lay one's bones, குறிப்பிட்ட இடத்தில் புதைக்கப்பெறு; lay one under, கட்டாயநிலை உண்டுபண்ணு; lay open, தோலைப் பிளந்து காட்டு; வெளிப்படுத்து; தெளிவுபடுத்து; விளக்கிக்காட்டு; lay out, விரித்திடு; பரவச்செய்; சிதறச்செய்; திறந்து காட்டு; காணும்படி வை; பிணத்தைப் புதைவினைக்குச் சித்தம் செய்; பணத்தைச் செலவில் ஈடுபடுத்து; திட்டப்படி ஒழுங்கு செய்; செயலுக்கு ஒருக்கமாக்கு; (பே-வ.) தற்பொழுதைக்கு ஆட்டத்திலிருந்து அப்புறப்படுத்து; lay shaft, மின்பாய்ச்சுப் பொறியின் புறநிலை அடிக்கட்டு; lay siege to, முற்றுகையிடு; வற்புறுத்திக் கெஞ்சிக்கேள்; lay the fire, நெருப்பு வைப்பதற்குத் தக்கவாறு எரிபொருளை வகுத்து வை; lay to rest, lay to sleep, படுக்கவை; அமைதியாயிருக்கும்படி செய்; இறுதி ஒய்வு அளி; புதை, அடக்கஞ் செய்; lay up, சேமித்துவை; ஒதுக்கி வை; சிறுகச்சிறுகப் பணம் திரட்டிக் குவி; பிள்ளைப்பேற்றுக்கு ஒருக்குவி; கப்பலைப் பணிப்புறமாக்கு; lay wait, lay wait for, தாக்கும்படி பதுங்கியிரு; lay waste, பாழாக்கு.

lay[3], *a.* சமயச்சார்பற்ற; தீக்கைபெறுத, துறவுக்குழுவில் சாராத; பொதுநிலை மக்களைச்சார்ந்த; பொதுநிலை மக்களால் செய்யப்பட்ட; வல்லுநர் குழுவுக்குப் புறம்பான; (தொ.) lay brother, சமயத்துறைப் பணி ஏற்றும் பிறவேலையிடு பாட்டுரிமை பெறும் ஆடவர்; lay clerk, தலைக்கோயில் பாடகர்; திருக்கோயில் வட்டார எழுத்தர்; lay communion, பிற வேலையிடுபாட்டுரிமை பெற்ற சமயத்துறை வழிபாட்டுப் பணி, பொதுமக்களுக்கான இறுதி உணு வழிபாடு; lay deacon, உலகியல் சார்ந்த பணியில் இருந்துகொண்டே சமயப்பணி செய்யும் முன்றும்படிச் சமயகுரு; lay lord, பிரிட்டிஷ் மாமன்ற மேலவையில் சட்ட அலுவல் பாராத பொதுநிலை உறுப்பினர்; lay reader, சமய வழிபாட்டுச் சடங்குகளை நடத்துவதற்கு உரிமையளிக்கப்பட்ட பொதுநிலை மக்களில் ஒருவர்; lay sister, சமயத்துறைப் பணி ஏற்றும் பிறவேலையிடுபாட்டுரிமை பெறும் பெண்டிர்.

lay[4], *v.* lie என்பதன் இறந்தகாலம்.

lay'er[1], *n.* வைப்பவர்; கிடத்துபவர், இடுபவர்; முட்டை முதலியன இடுவது; (தொ.) bad layer, நன்கு முட்டை இடாத பெட்டைக்கோழி; good layer, நன்கு முட்டையிடும் பெட்டைக்கோழி.

lay'er[2], *n.* அடுக்கு, பாளம், அடை; படுகை; மண்படுகை; தாய்ச்செடியோடு தொடர்புள்ளபோதே வேரூன்றுவதற்காக நிலத்தில் இறுக்கி இணைக்கப்பட்ட பதிய மூளை; சிப்பிப் படுகை; கிளிஞ்சிற் படுகை; *v.* தாய்ச்செடியோடு தொடர்புள்ளபோதே வேரூன்றுவதற்காக நாற்றுமுளையை நிலத்தில் இணைத்து நட்டுவளர்; வளர்ச்சிக் குறைவினுல் கதிர்மணிப் பயிர் நிலத்தில் படிந்துகிடக்கும்படி செய்; (தொ.) layers and backers, தனிப்பட்ட குதிரை முதலியவற்றிற்கு எதிரிடையாக அல்லது சார்பாகப் பந்தயப்பணம் கட்டுபவர்கள்.

lay'ers, *n. pl.* வயலில் சிதறலாக வளர்ச்சிக் குறைவினுல் படிந்துகிடக்கும் பயிர்ப்பகுதிகள்.

lay'er-stool, *n.* நாற்றுமுளைகள் தோற்றுவிக்கப்படும் வேர்.

layette', *n.* புனிற்றுத் துணைப்பொருள்கள், புதிதாகப் பிறந்த குழவிக்குத் தேவையான உடைகள்-படுக்கை முதலிய துணைப் பொருள்களின் தொகுதி.

lay fig'ure, *n.* ஆடையணிகளையிட்டுப் பகட்டாகக் காட்டுவதற்குப் பயன்படும் மரத்தாலிணைக்கப்பட்ட மனித உருவம்; சிறப்பற்ற மனிதன், மதிப்பு ஏதும் இல்லாதவன்; புனைகதையில் மெய்த்திறமற்ற பண்போவியம்.

lay'lock, *n.* (பே-வ.)=lilac.

lay'man, *n.* தீக்கை பெருதவன், பொதுநிலை மக்களில் ஒருவன்; தொழில்-கலை-விஞ்ஞானம்-மருத்துவம் முதலியவற்றில் பயிற்சி பெருதவர்; சாதாரண மனிதர்; தனித்துறை சாராதவர்; வல்லுநர் குழுவுக்குப் புறம்பானவர்.

lay'-off, *n.* தொழிலாளியைத் தற்காலிகமாக வேலையினின்று விலக்கி வைத்திருக்கும் காலம்; தொழில்துறையில் தளர்ச்சிப் பருவம்.

lay-out', *n.* திட்டம்; திட்ட ஏற்பாடு, அமைப்புத்திட்டம்; நிலத்திட்ட விடுப்பு; மனைத்திட்ட அமைப்பு.

lay'stall, *n.* குப்பைமேடு, குப்பை கூளக் குவியல்.

laz'ar, *n.* நோயுற்று நலிந்த ஏழை; தொழுநோயர்.

lazaret', lazarett'o, *n.* ஏழை நோயாளிகள் மருத்துவமனை; குட்டநோய் மருத்துவமனை; தொற்றுநோய்க்கு மனை; தொற்றுநோய்க்கப் கப்பல்; கப்பலின் பின்புறமுள்ள சரக்குச்சேமப் பகுதி.

Laz'arus, *n.* இரவலர்; பஞ்சை, ஏழை; (தொ.) Lazarus and Dives, பஞ்சை ஏழையும் பணம்பெருத்த செல்வரும்.

laze, *n.* (பே-வ.) சோம்பற் காலம்; *v.* சோம்பலாயிரு; சோம்பிக் காலத்தைக்கழி, வீண்பொழுது போக்கு.

laz'iness, *n.* சோம்பல்.

laz'uli, *n.*=lapis lazuli.

laz'y, *a.* சோம்பலான, மந்தமான, மடிமை வாய்ந்த; வேலை செய்ய மனமில்லாத, சோம்பலுக்கேற்ற; சோம்பலைத் தூண்டுகின்ற; *v.* சோம்பலாயிரு; (தொ.) lazy pinion, சக்கரங்களிடையே இயக்கும் ஆற்றலைவாங்கி அனுப்பும் சிறு சக்கரம்.

laz'y-bed, *n.* ஆறடி அகலமும் இருபுறங்களிலும் நீண்ட பள்ளமுமுள்ள உருளைக்கிழங்குப் பயிர்ப்படுகை.

laz'y-bones, *n.* சோம்பேறி, மந்தமானவர்.

laz'y-tongs, *n.* தூரத்திலுள்ள பொருட்களைப் பற்றியெடுப்பதற்குரிய பல்திசை வளைவுகளையுடைய செம்புகோல் அமைவு.

*lazzaron'e*, (இத்.) *n.* நேபில்ஸ் (Naples) நகரத்தில் பலதிறச் சிறு தொழிலும் செய்து பிழைக்கும் தெருச்சுற்றி; *pl.* *lazzaro'ni*.

lea[1], *n.* (செய்.) பசும்புல் தரை; திறந்தவெளி நிலம்.

lea[2], *n.* இடத்துக்கு இடம் மாறுபட்டு வழங்கும் நூலின் நீட்டலளவை வகை.

leach, *v.* நீர்மம் கசியவிடு; மரம்-பட்டை-களிமண் ஆகிய வற்றைக் கசிவூறலுக்கு உட்படுத்து; கசிவூறல்மூலம் உள் மாசு வெளியேற்று.

lead[1], *n.* ஈயம், வங்கம்; நீராழம் பார்ப்பதற்கான ஈய நூல் குண்டு; அச்சுவேலை வகையில் இடைவரிக் கட்டை, வரிகளின் இடைவெளியை அகலமாக்குவதற்கான உலோகத் தகடுப் பாளம்; *v.* ஈயம் பூசு; ஈயம் பொதி; ஈயத்தைக் கொண்டு பளுவேற்று; கண்ணடித் தகடுகளுக்கு ஈயச் சட்டமிடு; அச்சுவேலையில் வரித் தகடுகளிட்டு வரிகளைப் பிள; துப்பாக்கிக் குழல் வகையில் ஈயப்பூச்சினுல் கறைப்படு; (தொ.) arm the lead, அடித்தள இயல்புணர்வதற்காக ஈய நூல்குண்டிலுள்ள குழிவில் கொழுப்புவைத்து நிரப்பு; black lead, கருவங்கம், எழுது கரிக்கோலின் உட் கரிக்கீற்றுப் பொருள்; lead comb, மயிரைக் கறுப்பாக்குவதற்காகப் பயன்படுத்தப்படும் ஈயச் சீப்பு; lead pencil, கரிமுனை எழுதுகோல்; lead wool, நீர்க் குழாய்களை இணைப்பதற்குப் பயன்படுத்தப்படும் நூலிழை போன்ற ஈயம்; red lead, ஈயச் செந்தூரம்; white lead, ஈய வெள்ளை, வண்ண மைப்பொருளாகப் பயன்படுத்தப்படும் ஈயக் கரியகியுடன் நீரியல் ஈய உயிரகி இணைந்த சேர்ம வகை.

lead[2], *n.* வழித்துணை முதன்மை; வழிகாட்டு முதன்மை; முந்துநிலை; முனைப்பு; முதன்மை; தலைமை; முந்துநிலை அளவு; முன்னீடு, முன்னோடி, மாதிரி; முன்மாதிரி; முன் மாதிரிப் பண்பு; ஊக்காதரவு; ஊக்கு முனைவு; முதன்மை, தலைமை, முனைப்பு; முதலிடம்; தலைமைப்பண்பு; செயற்கை நீர்க்கால்; ஆலை நீர்க்கால்; தலைமை மின்னிணைப்புக் கம்பி; மின்திற இணைப்புக்கால்; வான் அலைவாங்கி இணைப்புக்கம்பி; பணிப்பாள நீர்க்கால்வாய்; கைவார், நாய் முதலியவற்றைக் கட்டி இழுத்துச்செல்லுதற்குரிய கயிறு; கயிற்றின் போக்கு; முன் ஆட்டவுரிமை; முன்னுரிமை ஆட்டம்; நாடக முதன்மை நடிப்புப்பகுதி; *v.* வழிகாட்டு; முன்செல்; கைப்பிடித்து இட்டுச்செல்; கால்நடை விலங்குகளைக் கயிறிட்டு இழுத்துச் செல்; வலுக்கட்டாயமாக அழைத்துச் செல்; துணை செல்; பாதை வகையில் இட்டுக்கொண்டு செல்; இட்டுக்கொண்டு செல்லும் வழியாய் அமை; செலுத்து; பாயச்செய்; நெறிப் படுத்தி ஒழுகச்செய்; நாடிச்செல்; ஊடாகக் கடக்கவிடு; முந்திச்செல்; முந்திக்கொள், முந்து; விஞ்சிநில்; மேம்படு; முதன்மையாயிரு; தலைமை வகித்து நடத்து; நாடகத்தில் முதன்மைப் பகுதியாக நடி; விளையாட்டில் முதலாட்டமாடு, முன் ஆட்ட உரிமை மேற்கொள்; புதுமை புகுத்து; தூண்டு, ஏவு; தூண்டுதலாயிரு; முடிவுகொள்ளச் செய்; விளைவுடைய தாக்கு; ஏதுவாகு; வழிவகு; வழியாயிரு; சார்பு உண்டு பண்ணு; நோக்கிச் சாய்வுறு; வாழ்க்கை வகையில் மேற் கொண்டியலு; நடத்து, வாழ்; அனுபவி; மேற்கொள்ளுவி; அனுபவிக்கச் செய்; பயிர்விளைச்சலைக் களஞ்சியத்துக்குக் கொண்டுசெல்; (தொ.) lead astray, தவறான வழிகாட்டு, பாவம் செய்யத் தூண்டு; தீநெறிப்படுத்து; lead away, எண்ணுமல் பின்பற்றத் தூண்டு; lead by the nose, விரும்பு வதையெல்லாம் உணர்வின்றியே செய்யும்படி தூண்டு; lead off, தொடங்கு, துவக்கமுறு; துவக்கு; lead on, பசப்பி மயக்கிக் கருதிய அளவு கடந்து செல்லும்படி தூண்டு; lead one a dance, நோக்கம் நிறைவேறப் பெறுவதற்காகப் பெருந் தொல்லைகொடு; lead one a life, அவனுக்கு அடுத்தடுத் துத் தொல்லைகொடு; lead one to suppose, ஏமாற்றிக் கருத் தேற்கத் தூண்டுதல் செய்; lead the way, முன்செல், முதன்மைதாங்கி நடத்து; lead up to, படிப்படியாக உண் டாகும்படி செய், படிப்படியாக ஒன்றினுக்கு ஏற்பாடு செய்; பேச்சினை ஒரு பொருளுக்குத் திருப்பு; சீட்டாட்ட வகையில் குறிப்பிட்ட சீட்டினை வெளிக்கொணரும் வகையில் சீட்டினை இறக்கு; lead woman to altar, பெண்ணைத் திருமணம் செய்துகொள்; return lead, கூட்டாளி இறக்கின சீட்டி னத்தில் முதலில் ஆடப்படும் ஆட்டம்.

lea'den, *a.* ஈயம் சார்ந்த; ஈயத்தினுல் செய்த, ஈயத்தினுல் செய்ததைப்போன்ற; கனத்த; மழுங்கச் செய்கிற; மந்தமான, அசைவற்ற; சுமையுள்ள; ஈயத்தின் நிறம் வாய்ந்த; (தொ.) leaden sword, பயனற்ற வாள்; sleep's leaden sceptre, உணர்வு மழுக்கும் ஆற்றல்.

Lead'enhall', *n.* லண்டனில் உள்ள இறைச்சி-கோழி முதலிய பறவைகள் விற்கப்படும் அங்காடி.

lead'er, *n.* தலைவர்; முதல்வர்; வழிகாட்டிக்கொண்டு முன் ஞல் செல்பவர், நடத்திச்செல்பவர்; வழக்கில் முதன்மையான வழக்கறிஞர்; மந்தையில் முதன்மையான குதிரை; மரத்தில் மேல்நோக்கி வளரும் முதன்மையான கவை; சதைப்பற்றை இயக்கும் தசைநார்; செய்தித்தாளின் தலையங்கம்; (அச்சு.) விழிக்கு வழிகாட்டும் புள்ளிகளால் அல்லது கோடுகளால் ஆன வரை; (தொ.) follow my leader, ஆட்டக்காரர் ஒவ் வொருவரும் தலைவர் செய்கிறபடி செய்யக் கடமைப்பட்டுள்ள ஆட்டவகை; leader of House of Commons, இங்கிலாந்து நாட்டு மாமன்றப் பொதுமக்கள் அவையில் அரசியல் அலு

வலை முன்னின்று தொடங்கும் அதிகாரமுள்ள ஆளுங்கட்சி உறுப்பினர்.

leaderette', *n.* செய்தித்தாளில் சிறு தலையங்கம், துணைத் தலையங்கம்.

lead'ership, *n.* தலைமை, முதன்மை; தலைமைப்பதவி; தலைமையேற்று நடத்தும் ஆற்றல்.

lead'-in, *n.* வானொலிப் பெட்டியையும் வெளிப்புறத்து அலை வாங்கியையும் இணைக்கும் கடத்துகம்பி.

lead'ing, *n.* வழிகாட்டுதல்; வழிகாட்டும் பண்பு; தலைமை; ஆன்மிகத் துணை; பயிர் விளைவைக் களஞ்சியஞ்கொண்டு சேர்ப்பு; *a.* தலைவராகச் செயலாற்றுகிற; செயலாட்சி செய்கிற, கட்டுப்படுத்தியாள்கிற; முனைப்பான; முதன்மையான; முந்திச் செல்கிற, முனைந்த; முன்னேற்றம் வாய்ந்த; (தொ.) leading article, செய்தித்தாளின் தலையங்கம்; வாணிகத் துறையில் தூண்டு சரக்கு, மற்றப் பண்டங்கள் வாங்கப் படும்படி செய்வதற்காகக் குறைந்த விலைக்கு விற்கப்படும் பண்டம்; leading case, (சட்.) மாதிரி வழக்கு, மற்ற வழக்குகளைத் தீர்ப்பதற்கு முன்மாதிரியாகப் பயன்படுகிற வழக்கு; leading edge, விமானச்சிறகின் முன்விளிம்பு; leading lady, நாடகத்தில் முதன்மையான பாகமேற்கும் நடிகை; leading light, செல்வாக்கும் புகழும் மிக்கவர்; leading man, நாடகத்தில் முதன்மையான பாகமேற்கும் நடிகர்; leading motive, (இசை.) கதைக் கருப்பொருள்; பாடல்முழுவதும் உறுப்பினர் நிகழ்ச்சி உணர்ச்சிகளுடன் விரவி நிரவிவரும் கருத்து; leading note, பின்வரவிணைக்கும் ஏழாம் இசைத்திறம்; leading question, வேண்டிய மறுமொழியை வருவிக்கும் கேள்வி; men of light and leading, பெருஞ் செல்வாக்குடையவர்கள்.

lead'ing-business, *n.* முதன்மையான நடிகர் ஏற்றுநடிக்கும் பாகங்களின் தொகுதி.

lead'ing-rein, *n.* குதிரையை இட்டுச் செல்வதற்கான கடிவாள வார்.

lead'ing-staff, *n.* எருதின் மூக்கு வளையத்துடன் இணைக்கப் படுந் தடி.

lead'ing-strings, *n.* குழந்தைகளுக்கு நடை பயிலக் கற்பிப்பதற்காக முன்பு பயன்படுத்தப்பட்ட கயிறுகள்; (தொ.) in leading-strings, பயிற்சிப்பருவ நிலையில், துணைமை நிலையில்.

lead'-off, *n.* தொடக்கம்.

lead'-poi'soning, *n.* ஈய நச்சூட்டு, வங்க தோசம்.

leads, *n. pl.* கூரை வேய்வதற்கான ஈயத் தகடுகள்; ஈயத் தகடுகள் வேய்ந்த கூரைப்பகுதி; சாளரத்தின் கண்ணாடியைத் தாங்கும் ஈயச் சட்டங்கள்.

leads'man, *n.* நீராழம் பார்ப்பதற்கான ஈய நூற்குண்டினை இயக்குகிற கப்பலோட்டி.

lead'-work, *n.* ஈயத்தினால் செய்யப்பட்ட பொருள்; ஈய வேலைப்பாடு.

lead'-works, *n.* ஈயச்சுரங்க உலோகக்கலவை உருக்கப்படும் இடம்.

leaf, *n.* இலை; இலைத்தொகுதி; பூவிதழ்; தழை; புகையிலை; தேயிலை; சுவடித்தாள்; தாளின் இரண்டு பக்கங்கள்; பொன்-வெள்ளி ஆகியவற்றின் மிக மெல்லிய உலோகத் தகடு; சீவினகொம்பு-சலவைக்கல்-அபிரகம் முதலியவற்றின் மிக மெல்லிய தகடு; மடிப்புக் கதவுகளின் தனி மடிப்புக் கூறு; நெட்டிழுப்பு மேசையின் இழுப்புப் பகுதி; இழுப்புப் பாலத்தின் மடிப்பலகு; கதவின் சீப்புச் சட்டத்தின் ஒரு பட்டிகை; பற் சக்கரத்தின் பல்; *pl.* leaves; *v.* தளிர், இலைவிடு, தழை; (தொ.) fall of the leaf, இலையுதிர்காலம்; in leaf, தழைத்திருக்கிற நிலையில்; leaf brass, மெல்லிய பித்தளைத் தகடு; leaf insect, செடியின் இலைபோன்ற சிறகுகளையுடைய பூச்சி வகை; take a leaf out of one's book, ஒருவரைப் பார்த்துப் பின்பற்று; turn over new leaf, திருந்திப் புதுவாழ்வு தொடங்கு, திருந்தி நல்லொழுக்கம் மேற்கொள்.

leaf'-lard, *n.* பன்றியின் குண்டிக்காய்களைச் சுற்றியுள்ள கொழுப்புப் படலங்களிலிருந்து செய்யப்படும் இடைக் கூட்டுக் கறியுணவு.

leaf'let, *n.* (தாவ.) இலையின் பகுதியான சிற்றிலை; குருத்திலை; துண்டுப் பத்திரிகை.

leaf'-mould, *n.* அழுகும் இலைகளையே பெரும்பாலும் கொண்டுள்ள மண், தழைமக்கிய மண்.

leaf'y, *a.* இலைமயமான, இலைகள் நிறைந்த, தழைவான; இலைபோன்ற.

league [1], *n.* ஏறத்தாழ மூன்று மைல் தொலைவு.

league [2], *n.* கூட்டிணைவு; இணைகுழு; ஒப்பந்தக் குழு; காப்பிணைவுக் கூட்டுறவு; நாட்டுக் கூட்டிணைவு; கூட்டிணைவு நாடுகளின் குழுமம்; கூட்டுக் காப்புக் கழகம்; சங்கம்; கூட்டிணைவுக் கழகம்; விளையாட்டுக் குழுக்களின் கூட்டிணைப்புச் சங்கம்; *v.* கூடிச்சேர்; கூட்டிணைவில் சேர்; உடன்படிக்கை செய்து கொண்டு ஒப்பந்தத்தில் இணை; கூட்டிணைவாக இணைவுறு, கூட்டிணைவாக்கு; (தொ.) in league with, சார்ந்து நேசங்கொண்டுள்ள நிலையில்; தம்முள் ஒருங்கிணைந்து; League football, கூட்டாகச் சேர்ந்துள்ள கழகங்கள் விரத் தலைமைத் தேர்வுக்காக ஒன்றோடொன்று ஆட்டமாடும் அமைப்பு; League of Nations, சர்வதேச சங்கம், போர்த் தடுப்பு முயற்சி மேற்கொள்வதற்காக 1919-ஆம் ஆண்டின் சமாதான உடன்படிக்கையினால் நிறுவப்பட்ட சங்கம்; Primrose League, ஆங்கில அரசியலில் 1883-இல் காணப்பட்ட பழமை தழுவுவோர் (Conservatives) கழகம்; Solemn League and Covenant, (வர.) நெறி ஒப்பந்தக் கூட்டுக் கழகம், இங்கிலாந்திலும் ஸ்காத்லாந்திலும் கிறித்தவ சமயப் பிரிவாகிய மூத்தோர் ஆட்சிக் கொள்கையை (Presbyterianism) நிறுவுவதற்காக 1643-இல் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கை.

leag'uer [1], *n.* முற்றுகையிடும் சேனையின் பாசறை; முற்றுகை; அமைச்சு நிலை அயல்நாட்டுத் தூதர்; வண்டிகள் சூழ நிறுத்தப்பட்ட காப்பு அரண் பாசறை; கவச விசைக்கலங்களுக்கான நிறுவுதுறை; *v.* முற்றுகையிடு; வண்டிகளைக் காப்பரண் பாசறையாக நிறுத்து; வண்டிக் காப்பரண் கூடாரத்தில் தங்க வை; கூடாரமிடு.

leag'uer [2], *n.* கூட்டிணைவுக் குழுவின் உறுப்பினர்.

leak, *n.* ஒழுக்கு, கசிவு; இல்லி, பொத்தல், கலத்தில் உள்ளிருந்து வெளியிலோ வெளியிலிருந்து உள்ளாகவோ நீர்மம் ஊறுவதற்குரிய சிறு பிளவு அல்லது துளை; தகா நுழைவழி; தகாச் செல்வழி; மின்மிகை அடர்ப்பிடம்; *v.* கல வகையில் புறத்தே ஒழுகவிடு; உள்ளே கசியவிடு; ஒழுகச்செய்; நீர்ம வகையில் புறத்தே ஒழுகு; உட்கசி; மறைசெய்தி வகையில் வெளிவரப் பெறு, மெல்லப் புறஞ்சென்றுவிடு, வெளிப்பட்டுப் பரவு; (தொ.) spring a leak, சந்துவிடு; துளைபட்டுக் கசியவிடு, உள்ளே நீர் வரவிடு.

leak'age, *n.* ஒழுகல்; ஒழுகும் பொருள்; சில்லிமூலமாக உள்ளே ஏறும் பொருள்; ஒழுகலுக்கு மாற்றீடு; மறைவெளிப்படுதல், முறையிலா இரகசியங்கள் வெளியீடு; அறியவராச் செலவு, விளக்கமுடியாப் பண மறைவு.

leak'y, *a.* இல்லியுடைய, ஓட்டையுடைய; சில்லிகள் உள்ள; சிறுநீர் அடக்கமுடியாத; இரகசியங்களை வெளியிடும் பாங்குள்ள.

lean [1], *n.* கொழுப்பில்லாத இறைச்சி, இளந்தசை; *a.* மெலிந்த, மெல்லிய, கொழுத்திராத; குறைந்த, வளமற்ற; மட்டத்தரமான; ஊட்டச்சத்தில்லாத; ஆதாயமற்ற; இறைச்சி வகையில் பெரும்பாலும் தசைநார்களே கொண்ட, கொழுப்புச் சேர்ந்திராத; (தொ.) lean years, பஞ்சம் நேர்ந்துள்ள ஆண்டுகள்.

lean [2], *n.* சாய்திறம், சாய்வு, சரிவு; *v.* சாய்ந்திரு; சாய்த்துக் கொள்; சாய்த்து வை; சார்த்தி வை; சாய்; சார்; ஆதாரமாகக்கொள்; நம்பியிரு; கோணலாக நில்; கருணை முதலியன கொள்ளும் பாங்குடையவராயிரு; சார்பாக மனக்கோட்டமுள்ளவராயிரு; (தொ.) lean over backwards, மறுகோடிக்குச் செல், அவாவுடன் ஒப்புக்கொள்ளும் அளவுக்குப் போ.

**lean'ing**, *n.* சார்பு, சாய்வு, சரிவு; சாய் செயல்; சாய்நிலை; சார்பு நாட்டம், சார்பு மனப்பாங்கு; மனக்கோட்டம்; *a.* சாய்ந்துள்ள; இயல் விருப்பமுடைய, ஒருசார் விருப்பமுள்ள.

**leap**, *n.* குதிப்பு; பாய்ச்சல்; துள்ளுதல்; தாண்டுதல்; தாண்டிய தொலை; பாய்ந்து குதித்தற்குரிய இடம்; தாண்டுதற்குரிய பொருள்; திடீர் இடைமாற்றம்; அகல் இடையீடு; நீண்ட இடைநேரம்; அகல் இடைவெளி; *v.* குதி; துள்ளு; துள்ளிச் செல்; பாய்; தாண்டு; மீதாகத் தாவு; வேகமாகச் செல்; திடுமெனச் செல்; சட்டென நெடுந்தொலை கட; தெறி; வேகமாகக் கட; குதிக்கச் செய்; ஆண் விலங்குகள் வகையில் புணர்ச்சியில் முனைவுறு; (தொ.) by leaps and bounds, தாவிக் குதித்து; மிகுந்த பெரிய அளவாக; வியத்தக்க முறையில் விரைவான முன்னேற்றத்துடன்; leap in the dark, விளைவு தெரியாமல் மேற்கொள்ளப்படும் துணிகர முயற்சி; look before you leap, எண்ணித் துணிக கருமம்; பதறிச் செய்கிற காரியத்தைத் தவிர்.

**leap'-day**, *n.* பிப்ரவரி மாதத்தின் 29-ஆம் நாள்.

**leap'-frog**, *n.* பச்சைக்குதிரை, தவளைப்பாய்ச்சல் விளையாட்டு; *v.* தவளைப்பாய்ச்சல் ஆட்டம் ஆடு, மேலாகத் தாவிக்குதி.

**leap'-year**, *n.* மிகுநாள் ஆண்டு, நானூறு ஆண்டுகளில் ஒரு முறையும் நூறில் குறைந்த நான்காண்டுகட்கு ஒருமுறையும் பிப்ரவரியில் ஒரு நாள் மிகையாக 366 நாட்கள் கொண்ட ஆண்டு; (தொ.) leap-year proposal, மிகுநாள் ஆண்டில் மட்டுமே உரித்தான பெண்ணின் திருமணக் கோரிக்கைக் கேள்வி.

**learn**, *v.* புதிதாகக் கற்றுக்கொள்; கற்றுணர், படித்தறி; போதனை பெறு; மனத்திற் பதிய வைத்துக்கொள்; உருப் போட்டுக் கைவரப்பெறு; பயின்று திறம் கைவரப்பெறு; அனுபவத்தால் அறி; கேள்விப்படு, கேள்வியால் தெரிய வரப்பெறு; கற்றுக்கொடு; (தொ.) I am yet to learn, I have yet to learn, 'நீ தான் கூறுகிறாய், நான் நம்பவில்லை' என்ற குறிப்புரை.

**learn'ed**[1], *v.* learn என்பதன் இறந்தகால வடிவங்களில் ஒன்று; learn என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**learn'ed**[2], *a.* கற்றறிந்த, படித்துத் தேர்ந்த, நன்குணர்ந்த, துறைபோன, அறிவுவளம் நிரம்பிய; நீதிமன்றங்களில் வழக்கறிஞரைக் குறிப்பிடும் மரியாதை வழக்குவகையில் சட்டத்தில் கற்றுத் துறைபோய; மொழி-தொழில் முதலியவை வகையில் கற்றறிந்தவர்களால் பயிலப்பட்ட; கற்றவர்களால் மேற்கொள்ளப்பட்ட; மொழியிலுள்ள சொற்கள் வகையில் கற்றவர்களால் அயல்மொழிகளிலிருந்து புகுத்தப்பட்ட.

**learn'ing**, *n.* கற்றல்; கல்வி; கற்கப்படுவது; அறிவு, புலமை; (தொ.) the new learning, பதினாறும் நூற்றாண்டில் இங்கிலாந்தில் புகுத்தப்பட்ட கிரேக்கமொழி ஆய்வறிவு, மறுமலர்ச்சி.

**learnt**, *v.* learn என்பதன் இறந்தகால வடிவங்களுள் ஒன்று; learn என்பதன் முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**lease**[1], *n.* கட்டுக் குத்தகை, குறிப்பிட்ட காலத்துக்கு அனுபவ உரிமையளிக்கும் ஒப்பந்தக் கட்டுப்பாட்டு முறை; நிலக் குத்தகை, பாட்டம்; மண்ணகக்குத்தகை; கட்டுக் குத்தகை உரிமை; கட்டுக் குத்தகை முறை; கட்டுக் குத்தகைக் கால எல்லை; அனுபவக் காப்புரிமை எல்லை; உரிமைக்காப்புக் கால நீடிப்பு; *v.* கட்டுக் குத்தகை உரிமை வழங்கு; நிலம் அல்லது மனையைக் கட்டுக் குத்தகைக்கு விடு; நிலம் அல்லது மனையைக் கட்டுக் குத்தகையில் எடு; (தொ.) a new lease of life, நோய்-கவலை முதலிய தடைகளின் நீக்கத்தால் ஏற்படும் புது வாழ்வுக்கான வாய்ப்பு.

**lease**[2], *n.* தறியிலே பாவு நூலிழைகளை முனைகளில் பிரித்து விடல்; பாவு நூலிழை முனை பிரித்துவிடும் முறை; பாவு நூலிழை முனை பிரித்துவிடும் இடம்.

**lease'hold**, *n.* கட்டுக் குத்தகை உரிமை; கட்டுக் குத்தகை நிலம்; கட்டுக்குத்தகை மனை.

**lease'holder**, *n.* கட்டுக் குத்தகையாளர், நிலத்தை அல்லது மனையைக் கட்டுக்குத்தகை எடுப்பவர்.

**Lease'-Lend'**, *n.*, *a.*, *v.* = Lend-Lease.

**leash**, *n.* நாய்வார்; மூன்று வேட்டை நாய்கள்-முயல்கள் முதலியவைகொண்ட கணம்; நெசவு வகையில் பாவுநூலை ஏற்றுக்கொள்வதற்கான சிறு துளையுடன்கூடிய கயிறு; *v.* தோல்வாரினாற் கட்டிப்பிடி; தோல்வாரினாற் கட்டி இணை; (தொ.) hold in leash, அடக்கியாள்.

**least**, *n.* அறச்சிறிது; *v.* அறச்சிறிய; மிகமிகக் கொஞ்சமான; மிகமிக அற்பமான; *adv.* மிகமிகக் குறைவாக, மிகமிகக் கொஞ்சமாக; (தொ.) at least, குறைந்தபடியில், குறைந்த அளவில், சிறிதளவாவது, எப்படியாவது; at the least, மிகமிகக் குறைந்த அளவில்; in the least, the least, குறைந்த அளவில், சிறிதேனும், குறைந்த அளவிலேனும்; least common multiple, (கண.) மீச்சிறு பொது மடங்கை; least said soonest mended, விவாதிப்பது சீர்கேடாகமுடியும்-விவாதியாமல் இருப்பதே நல்லது; line of least resistance, மிகு உழைப்பற்ற எளிய வழி; to say the least of it, நிதானமாகக் கூறினுங்கூட.

**least'ways, least'wise**, *adv.* (பே-வ.) குறைந்தபடியாகக் கொண்டாலும்.

**leat**, *n.* ஆலை முதலியவைகளுக்கு நீர்கொண்டு செல்லும் திறந்த நீர்க்கால்.

**lea'ther**, *n.* பதனிட்ட தோல்; தோற் சரக்கு; தோலினால் செய்யப்பட்ட பகுதி; மெருகிடுவதற்கான தோல் துண்டு; தோல்வார்; *v.* தோலினால் மூடு; தோல் கவசக் காப்புச் செய்துகொள்; தோல்வாரினால் அடி; (தொ.) American leather, மெழுகுத்துணி வகை; leather and prunella, உடுப்பில் மட்டுமுள்ள வேற்றுமை; nothing like leather, தம் பொருளே தமக்குப் பெரிதும் பயன்படும் என்பது.

**lea'ther-back**, *n.* கடலாமை வகை.

**leatherette'**, *n.* தோல்போலச் செய்யப்பட்ட தாள்வகை; தோல்போலச் செய்யப்பட்ட துணிவகை.

**lea'ther-head**, *n.* அறிவிலி, முடன்.

**lea'ther-jacket**, *n.* மீன் வகைகளில் ஒன்று; ஈ வகையின் முட்டைப்புழு.

**lea'thern**, *a.* தோலினால் ஆன; தோல் சார்ந்த; தோல் போன்ற.

**lea'ther-neck**, *n.* கப்பலோட்டிகள் வழக்கில் படைவீரன்; கடற்படைவீரன்.

**lea'theroid**, *n.* செயற்கைத்தாள் தோல், வேதிமுறையில் பாடம் செய்யப்பட்டுப் பச்சைத்தோல்போலிருக்கும் பருத்தித் தாள்.

**lea'ther-wood**, *n.* உறுதியான பட்டையுடைய மரவகைகள்.

**lea'thery**, *a.* தோல்போன்ற; இறைச்சி வகையில் நெற்றான.

**leave**[1], *n.* இசைவு, இணக்கம்; இசைவாணை; செல்விடை, போவதற்கான இசைவளிப்பு; பள்ளி-பணிமனைகளில் விடுப்பு, செலவிசைவாணை, விடுப்பிணக்கம்; விடுப்புக்காலம், செலவிசைவுக்காலம்; (தொ.) take French leave, செல்விடை பெறுமல் போ; இசைவுபெறுமல் வெளியே செல்; take leave of one's senses, பைத்தியம் கொள், வெறிபிடி; ticket of leave, தண்டனைக்காலம் முடிவடைவதற்கு முன்பே சிறைக்கு வெளியிலிருப்பதற்கான உரிமை.

**leave**[2], *n.* மேசைக் கோற்பந்தாட்டக்காரர் இடையே ஆட்டம் விட்டுச் செல்லும்போது உள்ள ஆட்டப்பந்து நிலை; *v.* விட்டுச்செல்; கிடக்கவிடு, இருக்கவிடு; பின்தங்கவிடு; வைத்துவிட்டுப்போ; பகரமாக விட்டுப்போ; செய்யவிடு; இடு; கீழே போடு; கீழே இட்டுச்செல்; ஒப்புவிக்கும்படிவிடு; மீதமாக விடு; எஞ்சவிடு; உடைமையாக விட்டுப்போ; விருப்ப ஆவணத்தில் வழங்கு; விட்டுநீங்கு; இடம் விட்டகலு; புறப்படு; பணிவிட்டகலு; தொடர்பறுத்து விடு; கைவிடு; துற; பிரிந்துசெல்; விட்டுப்பிரி; கடந்து செல்; நிறுத்து; நிறுத்திவிடு; வேலைசெய்யாமல் நின்று போ; தவிர்; (தொ.) leave alone, குறுக்கிடாதிரு, அப்படியே விட்டுவிடு, தலையிடாதுசெல்; leave behind, கொண்டுபோகாது விட்டுச்செல்; பின்தங்கவிட்டுச் செல்;

வினைவாக விட்டுப்போ ; சுவடுவிட்டுச் செல் ; கடந்து மேற் செல் ; leave hold of, பிடியை விடு ; leave it at that, அதனை அதனோடு விடு, மேலும் விளக்கிக்கொண்டு தொல்லை விளைவியாதிரு; leave me cold, கிளர்ச்சி ஊட்டாதிரு; leave no stone unturned, நோக்கம் எய்தப்பெற எதையும் விடாது செய்; leave off, விட்டொழி ; விலகு ; தவிர் ; நிறுத்திக் கொள் ; முடிவுகாண் ; leave one to oneself, அடக்கிக் கட்டுப்படுத்தாது விட்டுவிடு ; leave out, தவிர், உட்படுத் தாது விடு, விலக்கிவிடு, நீக்கிவிடு ; leave over, தற்போ தைக்கு விலக்கிவை, ஒதுக்கி வைத்துவிடு; leaves much to be desired, போதியதாக இல்லை.

leave'-breaker, *n.* விடுப்புக் காலத்துக்கு அப்பாலும் வேலைக்கு வராமல் நிற்பவர்.

lea'ven, *n.* புரையூட்டுப்பொருள், மாவு புளிப்பாக்கும் பொருள்; ஊடுபரவி உள்ளிருந்து மாற்றுதற்குரிய திறம் ; உள்ளார்ந்த நுண்திறக்கூறு ; *v.* புளிப்புப்பொருள் சேர்த்து மாவைப் புளிக்கவை ; ஊடுருவிப் பரவிமாற்று ; பக்குவப்படுத்தும் பொருள் சேர்த்து மாற்றியமை ; (தொ.) the old leaven, திருத்தமுறு நிலையின் சுவடுகள்.

leav'ings, *n. pl.* எச்சம், மிச்சம், சிந்தல் சிதறல்கள் ; நினை வூட்டுஞ் சின்னங்கள் ; கழிவுப்பொருள்கள்.

leb'ensraum, (செர்.) *n.* நாட்டின் வாழ்நிலத் தேவை, தன் இயல்பான வளர்ச்சிக்குத் தேவைப்படுகிறதென ஒரு நாடு கருதும் நிலப்பரப்பு.

lech'er, *n.* ஒழுக்கக்கேடன், காமுகன், தூர்த்தன்.

lech'erous, *a.* ஒழுக்கக்கேடான, சிற்றின்பத்தில் தோய்வுற்ற; ஒழுக்கங்கெடுக்கிற.

lech'ery, *n.* சிற்றின்ப நடத்தை, ஒழுக்கங்கெட்டதன்மை.

lec'tern, *n.* திருக்கோயில் மேடையின் சாய்மேசை.

lec'tion, *n.* பாடம் ; பாடபேதம்.

lec'tionary, *n.* கிறித்தவ திருக்கோயில் வழிபாட்டில் படிக்கப்படும் மறைநூற் பகுதித்திரட்டு; மறைவாசகப் பகுதிப் பட்டியல்.

lec'ture, *n.* சொற்பொழிவு, விரிவுரை, பேச்சு ; போதனை, அறிவுரை; கண்டனவுரை; *v.* சொற்பொழிவாற்று; கல்லூரி அல்லது பல்கலைக்கழக வகுப்பில் பெருஞ்சொல்லாற்று; சொற் பொழிவாற்றிப் பாடங்கற்பி ; அறிவுரை பகர்; கண்டி ; (தொ.) read one a lecture, கடிந்துரை.

lec'turer, *n.* சொற்பொழிவாளர்; விரிவுரையாளர்; அறப் போதகர், இங்கிலாந்து மாநிலத் திருச்சபைச் சார்பில் பொது நிதித் திரட்டுதவி மூலம் ஆதரித்து நடத்தப்பட்ட போதகர் குழுவினர்.

lec'tureship, *n.* கல்லூரியில் அல்லது பல்கலைக்கழகத்தில் ஆசிரியர் பதவி.

led[1], *a.* நடத்திச் செல்லப்படுகிற, தன்செயலற்ற ; (தொ.) led captain, சார்ந்திருப்பவர், பிறரையொட்டி வாழ்பவர் ; அண்டிப்பிழைப்பவர் ; led horse, வேலைக்காரனால் நடத்தி வரப்படும் மிகுதிப்படியான விடுதிக்குதிரை.

led[2], *v.* lead[2] என்பதன் இறந்தகால-முடிவெச்சம்.

ledge, *n.* சுவர்ப்பக்க வரை விளிம்பு, சுவரின் பக்கத்தை ஒட்டிய ஒடுங்கிய நீள்விளிம்பு ; பாறைப்பக்கப் படிவிளிம்பு ; அடிநீர் முரம்பு, நீர்க்கீழ் பாறைமுகடு ; சுரங்க வகையில் உலோகக் கலப்புள்ள பாறைப் படலம்.

ledg'er, *n.* கணக்குப்பதிவுத் துறையில் பேரேடு ; நிலைப்பதி வேடு ; பதிவேடு; சாரப்படிமரம், சாரங்கட்டுவதில் கட்டிடத் துடனிணைவாக உள்ள மரக்கட்டை; தட்டையான கல்லறைக் கற்பாளம் ; நிலையாகப் பொருத்தி வைக்கப்பட்ட தூண்டில் இரை ; நிலவரத் தூதர் ; *a.* நிலவரமாயிருக்கிற ; (தொ.) ledger line, (இசை.) அயல் சுரக்குறிக்கு மேலே அல்லது கீழே சேர்க்கப்படும் சிறுகோடு.

ledg'er-bait, *n.* நிலையாகப் பொருத்தப்பட்ட தூண்டிலிரை.

ledg'er blade, *n.* துணி கத்தரிக்கும் இயந்திரத்திலுள்ள நிலைக்கத்தி.

ledg'er-line, *n.* நிலையாகப் பொருத்தி வைக்கப்பட்ட தூண்டிற்கயிறு.

lee, *n.* அணவுக்காப்பு, அணிமைச்சார்பினால் ஏற்படும் பாது காப்பு ; காப்பணவுடைய பக்கம், காற்றுப்படாத பக்கம் ; காற்றுச் செல்திசை ; (தொ.) shore, கப்பலின் காற்றொ துக்குப்பக்கம் நோக்கிய கரை.

lee'-board, *n.* மிதவைத் தடைப்பலகைச் சட்டம், மரக்கலம் காற்றோட்டத்தில் இழுத்துச் செல்லப்படுவதைக் குறைக்கும் பொருட்டு அதன் காற்றொதுக்குப் பக்கத்தில் இறக்கப்படும் பலகைச் சட்டம்.

leech[1], *n.* அட்டை, குருதி உறிஞ்சும் உயிரினம் ; ஒட்டுணி, பிறரை ஒட்டிக்கொண்டு சுரண்டிப் பிழைப்பவர் ; (தொ.) stick like a leech, ஒருவரிடம் விடாமல் ஒட்டிக்கொண்டிரு.

leech[2], *n.* கப்பற்பாயின் நிமிர்ந்த பக்கப்பகுதி; கப்பற்பாயின் சாய்ந்த பக்கப்பகுதி.

leech[3], *n.* (செய்.) மருத்துவர்.

leek, *n.* வேல்ஸ் நாட்டின் தேசியச் சின்னமான வெங்காய இனச் சமையற் பூண்டுவகை; (தொ.) eat the leek, அவ மதிப்பை மடியில் வாரிக்கட்டிக்கொள்.

lee'most, *a.* கொஞ்சமுங் காற்றுப்படாத பக்கத்திலிருக்கிற.

leer[1], *n.* இளித்த பார்வை, ஒருக்கணித்த காமநோக்கு ; நய வஞ்சகத் திருக்குநோக்கு ; *v.* கெட்ட எண்ணத்துடன் ஓரப் பார்வை பார், சிற்றின்ப அவாவுடன் ஒருக்கணித்துப்பார்.

leer[2], *n.* கண்ணாடியை நெகிழக்காய்ச்சி ஆறவைப்பதற்கான உலை.

lees, *n. pl.* இன்தேறல் முதலியவற்றின் வண்டல் அல்லது மண்டி ; மிக இழிந்த பகுதி ; கழிசடை, கழிவுப்பொருள்.

leet, *n.* (வர.) பண்ணைப்பருவ நீதிமன்றம், பண்ணை ஆட்சி முறையில் பெருமகன் ஆண்டுக்கொருமுறை அல்லது அரை யாண்டுக்கொருமுறை நடத்தக்கூடிய பதிவு நீதிமன்றம் ; பண்ணைப்பருவ நீதிமன்றத்தின் அதிகார வரம்பு ; பண்ணைப் பருவ நீதிமன்றத்தின் ஆட்சியெல்லை ; (தொ.) court leet, ஆண்டு அல்லது அரையாண்டுப் பருவந்தோறும் நடைபெறும் பண்ணைப்பருவ நீதிமன்றம்.

lee'ward, *n.* காற்றுபடாத திசை; *a.* காற்றுக்கு ஒதுக்குப் புறமான பக்கத்திலு[ள்ள]; *adv.* காற்றுக்கு ஒதுக்கமான பக்கத்தின் திசையில்.

lee'wardly, *a.* (கப்.) காற்றுக்கு ஒதுக்கமான பக்கம் சாயும் பாங்குடைய.

lee'way, *n.* (கப்.) காற்றுவாட்டம், காற்றுவீசும் பக்கமாக விலகிச் செல்லும் போக்கு; (தொ.) make up leeway, இட ரான நிலையினின்றும் போராடி மீள் ; இழந்த தொலையைச் சரிசெய் ; இழந்த நேரத்துக்கு ஈடுசெய்.

Left, *n.* அரசியல் மாமன்றத்தில் புரட்சிமுனைப்புமிக்க கட்சி, மாமன்றத்தலைவர் இடப்புறம் அமரும் வழக்கமுடைய முனைத்த சீர்திருத்தக் கட்சி.

left[1], *n.* இடதுபக்கம்; இடப்பக்கப் பகுதி ; படையின் இடச் சிறையணி; இடது கை; இடங்கை அடி; இடப்புறக் குண்டடி; இடப்புறக் குண்டடியால் வீழ்த்தப்பட்ட பறவை ; இடது கையுறை ; இடதுகாற் புதைமிதி ; முற்போக்கில் முனைத்த கட்சி; கட்சியின் முற்போக்குப் பகுதி; புரட்சிகரமான மாற்றம் விரும்பும் சமயக்குழு ; மெய்விளக்கத் துறையில் அடிப்படைப் புதுமாற்றம் கோரும் கோட்பாட்டுக் குழு; *a.* இடப்பக்கமான; இடது பக்கத்துக்குரிய; இடப்பக்கத்திலுள்ள; இடதுபக்கத் துக்கான ; பார்ப்பவர் வகையில் இடது பக்கத்திலுள்ள ; பேச்சுமேடையில் பேசுபவருக்கு இடதுபுறஞ் சார்ந்த ; எதிரி படையின்வகையில் படையின் இடது சிறையணிக்கு நேர் எதிராயுள்ள ; நாடக அரங்கில் நடிப்பவருக்கு இடப்புறமான; ஆற்றில் நீரோட்டத் திசை நோக்கி நீரில் இறங்கி நிற்பவ ருக்கு இடப்புறமான ; குடியாட்சிப்பண்பு நோக்கிய; முற் போக்கு நோக்கிய, முற்போக்கான; *adv.* இடது பக்கத்தில்; இடதுபுறமாக ; இடப்பக்கம் நோக்கி; (தொ.) left hand, இடது கை; இடதுகைப் பக்கம்; இடது கைக்கு அருகிலுள்ள

நிலப்பரப்பு; left turn, இடப்பக்கமாகத் திரும்பிய திருப்பம்; marry with the left hand, அனுலோமவகைத் திருமணம் செய்துகொள், பெண் படிநிலைமாறுமலும் பெண்ணின் பிள்ளைகளுக்குத் தந்தை சொத்தில் உரிமையில்லாமலும் செய்யும் உயர்படி ஆண் தாழ்படிப் பெண் திருமண முறையை மேற்கொள்.

**left²**, *n.* leave என்பதன் இறந்தகால-முடிவெச்சம்.

**left'-hand'**, *a.* இடப்பக்கத்திலுள்ள; வலது கையைவிட இடது கைக்கு அருகிலுள்ள; இடக்கையில் அதிக வலிமை பெற்றிருக்கிற; (தொ.) left-hand blow, இடக்கையினுல் கொடுக்கப்பட்ட அடி; left-hand man, ஒருவரையடுத்து இடப்பக்கம் நிற்பவர்; left-hand rope, இடஞ்சுழியாக முறுக்கப்பட்ட கயிறு.

**left'-hand'ed**, *a.* இடதுகைப் பழக்கமுள்ள; அருவருப்பான தோற்றமுள்ள, அழகற்ற நடையுடைய; இருபொருள்படுகிற, ஐயுறவுக்கு இடமான; ஈரடியான; இருதிசையில் செயலாற்றுகிற; இருமனப்பட்ட, மனமார்ந்ததல்லாத; செல்லுபடியாகாத; திருமணவகையில் அனுலோமவகை சார்ந்த; திருமண வகையில் போலித்தனமான; இடக்கைப் பழக்கத்துக்கென அமைக்கப்பட்ட; குத்து அல்லது அடி வகையில் இடக்கையினுல் கொடுக்கப்பட்ட.

**left'-hand'er**, *n.* இடதுகைப் பழக்கமுள்ளவர்; இடக்கையினுல் விடப்பட்ட குத்து.

**left'ism**, *n.* (பே-வ.) அரசியல் இடது சாரியினரின் கோட்பாடுகள் அல்லது கொள்கை முறை.

**left'ist**, *n.* (பே-வ.) அரசியல் இடதுசாரி உறுப்பினர்; *a.* அரசியல் இடதுசாரி சார்ந்த.

**leg**, *n.* கால்; விலங்கின் கால்; விலங்கின் கால் இறைச்சி; கால் எலும்பு; மரம்-நெட்டி ஆகியவற்ருலான செயற்கைக் கால்; மேசை-நாற்காலி-இயந்திரங்கள் ஆகியவற்றின் கால், ஆதார உறுப்பு, ஆதாரப் பகுதி; உடையின் கால் பகுதி; கவர்க்கோலின் பக்கக் கால்; முக்கோணத்தில் அடிவரையல்லாத பக்கம்; பாய்க்கட்டுமாறுமல் மரக்கலம் செல்லுந் தொலை; பறக்குந் தொலைவின் கட்டம்; பயணத் தொலைக் கட்டம்; ஒரு காலைப் பின்னுக்கு இழுத்துக்கொண்டு செய்யப்படும் வணக்கமுறை; ஏமாற்றுக்காரன்; விளையாட்டில் தொடர் நிகழ்ச்சிகளில் ஒரு பகுதி அல்லது நிகழ்ச்சிக் கெலிப்பு; மரப்பந்தாட்டத்தில் மட்டை ஆட்டக்காரருக்குப் பின்னுல் வலப்பக்கத்திலுள்ள ஆட்டக்களப் பகுதி; *v.* நட, முடுகி நடைகட்டு; காலைப் பக்கம் அல்லது மேற்சுவரில் உதைத்துச் சுருங்கைக் கால்வாயிற் படகைச் செலுத்து; (தொ.) boot is on other leg, உண்மை அல்லது பொறுப்பு எதிர்ப்பக்கத்தில்தான் இருக்கிறது; fall on one's legs, இடர்ப்பாடு முற்றும் நீங்கப்பெறு; feel one's legs, find one's legs, நிற்க அல்லது நடக்க ஆற்றல் பெறு; give one a leg up, ஏறுவதற்கு அல்லது தடையைக் கடப்பதற்கு உதவிசெய்; has not a leg to stand on, செய்திகளைக்கொண்டோ நல்ல ஆதாரங்களைக்கொண்டோ கட்டுரையை எண்பிக்க முடியாது; have the legs of, விஞ்சிமேம்பட்ட வேகத்துடன் செல்லும் ஆற்றல் பெற்றிரு; keep one's legs, விழாதிரு; leg before wicket, மரப்பந்தாட்டத்தில் மட்டை பிடித்திருப்பவர் பந்தினைக் காலினுல் நிறுத்தும் முறைகேடு; leg it, ஊக்கமாக நட அல்லது ஓடு; leg stump, மரப்பந்தாட்ட வகையில் நிலையிலுள்ள மட்டைக்காரருக்குப் பின்னுல் வலப்பக்கத்தில் இருக்கிற ஆட்டக்களப் பகுதிக்கு மிக அண்மையிலுள்ள முளை; leg theory, மரப்பந்தாட்ட வகையில் நிலையிலுள்ள மட்டைக்காரருக்குப் பின்னுல் வலப்புறத்தில் பந்து எறிபவர்கள் திரண்டிருக்க அப்பகுதிக்குப் பந்தினை வீசுதல்; on one's last legs, சாகுந்தறுவாயில், முடிவு நெருங்கியுள்ள நிலையில்; on one's legs, சொற்பொழிவு ஆற்றுதற்காக எழுந்து நிற்றல்; நடமாடக்கூடிய அளவுக்கு நலம் பெற்றிருத்தல்; வளமான அல்லது ஊன்றிய நிலையிலிருத்தல்; pull one's leg, (பே-வ.) ஏமாற்று; put best leg foremost, முழுவேகத்துடன் நட; set one on his legs, வாழ்க்கையில் நிலைகொள்ளச் செய்; shake a leg, நடனமாடு; show a leg, படுக்கையினின்று எழுந்திரு; stand on one's own legs, தற்சார்புள்ளவராயிரு; stretch one's legs, உடற்பயிற்சியின் பொருட்டு நட; take to one's legs, ஓடிப்போ, ஓடிவிடு; walk one off his legs, நடக்கவைத்துச் சோர்வடையும்படி செய்.

**leg'acy**, *n.* விருப்புரிமைக்கொடை, விருப்ப ஆவணமூலமாகக் கொடுக்கப்படும் பணம் அல்லது பொருள்; மரபுரிமைச் செல்வம்; மரபுரிமைப் பண்பு, முன்னேர் வழிவந்த பண்பு.

**leg'acy-hunt'er**, *n.* விருப்ப ஆவணத்தில் விட்டுச்செல்லவிருக்கும் பொருளை நாடி அதற்குரியவரைச் சுற்றி வளைய வளைய வந்துகொண்டிருப்பவர்.

**leg'al**, *a.* சட்டஞ் சார்ந்த, சட்டத்தை அடிப்படையாகக் கொண்ட, சட்ட வரம்புக்கு உட்பட்ட; சட்டத்தைத் தொழிலாகக் கொண்ட; சட்டப்படி உரியதான; சட்டத்தினுல் நியமிக்கப்பட்ட; சட்டக் கட்டுப்பாட்டுக்குரிய; நேர்மைப் பொருத்தமின்றிச் சட்டப் பொருத்தத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்ட; சட்டத்திற்கு உடன்பாடான; நம்பிக்கையினுலன்றி யூதர் பழைய சமயசித்தாந்தப்படி தொண்டுசெய்வதுமூலமே உய்திபெறுதற்குரிய; (தொ.) legal tender, மறுக்கவொண்ணுச் செலாவணிப் பணம்.

**leg'alism**, *n.* சமயசித்தாந்த வகையில் சமயநூல்களைவிடச் சட்டத்தைச் சிறப்பாகக்கொள்ளுதல்; வினைமுறைகளைக் கடைப்பிடிப்பதனுல் பாவம் மன்னிக்கப்படுமென்னும் கோட்பாடு; கண்டிப்பான சட்டக் கடைப்பிடித் தன்மை, சிவப்பு நாடாப் பண்பு.

**legal'ity**, *n.* முறைமை உடைமை; சட்டத்துக்கு உடன்பாடாந் தன்மை; சமயச் சட்டத்தின் வாசகத்தையே பின்பற்றும் பண்பு.

**le'galize**, *v.* முறைமை உடையதாக்கு, சட்டத்துக்கு ஒத்திருக்கும்படி செய்.

**leg'ate¹**, *n.* போப்பாண்டவருக்குப் பிரதிநிதியாக அனுப்பப்படும் சமயகுரு; (தொ.) *legate a latere*, முழு அதிகாரங்களையுடைய போப்பாண்டவரின் உயர்நிலைத் தூதர்.

**legate'²**, *v.* விருப்ப ஆவண வழி உடைமை வழங்கு; (தொ.) give and legate, விருப்ப ஆவண வழி உடைமை வழங்கு.

**legatee'**, *n.* விருப்ப ஆவண வழி உடைமை பெறுபவர்.

**lega'tion**, *n.* தூதுப் பேராட்களை அனுப்புதல்; நிலைத்தூதுக் குழு, தூதுவப் பேராளர் குழு; வெளிநாட்டமைச்சுப் பரிவாரக் குழு; வெளிநாட்டமைச்சர் உரிமைப் பணிமனையிடம்; தூதுவப் பேராளர் பதவி.

*lega'to*, (இத்.) *adv.* இசைக்குழு இயக்குரை வழக்கில் ஒரே கதியில், மெத்தென, இடையீடின்றி.

**leg'-bail**, *n.* ஓடித் தப்பித்துக் கொள்ளுதல்; (தொ.) give leg-bail, தப்பியோடு.

**leg'-bye**, *n.* மரப்பந்தாட்ட வகையில் மட்டைக்காரரின் உடம்பில் கை தவிர வேறு எந்தப் பாகத்தையேனும் பந்து தொடும்போது அதுகாரணமாகக் கணக்கிடப்படும் கெலிப்பெண்.

**le'gend**, *n.* புராணக் கதை, மக்களால் ஆர்வமாக நம்பப்படும் மரபுவழிக் கதை; கட்டுக் கதை; புராணக் கதை இலக்கியம்; பழங்கதை மரபு; நாணயங்களின் எழுத்துப் பொறிப்பு; முத்திரை பதக்கங்களின் குறிக்கோள் வாசகப் பொறிப்பு.

**leg'endary**, *n.* பழங்கதைப் புத்தகம்; பழங்கதைகள் எழுதுபவர்; *a.* பழங்கதை சார்ந்த; கட்டுக் கதை அடங்கிய; புராணக் கட்டுக்கதையின் தன்மைவாய்ந்த; புனைவான; வியப்பார்வமளிக்கிற, புதுமை உணர்வூட்டுகிற.

**leg'endry**, *n.* கட்டுக்கதைத் தொகுதி, கட்டுக்கதைத் துறை; கட்டுக்கதைகள்.

**le'ger**, *a.*=ledger.

**le'gerdemain'**, *n.* செப்பிடு வித்தை; மாயமந்திரம்; ஏமாற்று முறை; பசப்பேய்ப்பு; சொற்புரட்டு.

**legg'er**, *n.* சுருங்கைக் கால்வாய்ச் சுவர்களை உதைத்துப் படகைச் செலுத்துபவர்; காலுறை மேற்பகுதி செய்பவர்; காலுறை மேற்பகுதி செய்யும் பொறிக் கருவி.

**legg'ings,** *n. pl.* முழங்கால் வரையில் காப்பாக அணியும் தோலாலான புறக் குப்பாயம்.

**leg'-guard,** *n.* மரப்பந்தாட்டக்காரரின் கால் முழந்தாள் களுக்குக் காப்பளிக்கும் மெத்தை.

**legg'y,** *a.* சிறுவன்-குதிரைக்குட்டி-நாய்க்குட்டி ஆகியவற்றின் வகையில் கம்பி போன்று நீண்டு ஒடுங்கிய கால்களையுடைய.

**leghorn',** *n.* தொப்பி முதலியவைகளில் வைக்கோலால் ஆன வரிப்பின்னல் வேலைப்பாடு; வீட்டுக்கோழி வகை.

**le'gible,** *a.* எழுத்து வகையில் தெளிவான, எளிதில் படிக்கக் கூடிய.

**le'gion,** *n.* படையணிப் பிரிவு; பண்டைய ரோமர் படையில் 3000 முதல் 6000 வீரர் வரைக் கொண்ட பிரிவு; பேரெண் ணிக்கை; பெருந்திரள், பெருங்கூட்டம்; (தொ.) Legion of Honour, பிரெஞ்சு நாட்டுச் சிறப்புப் படித்தரம்; their name is Legion, அவர்கள் எண்ணற்றவர்கள்.

**le'gionary,** *n.* படையணிப் பிரிவினைச் சேர்ந்தவர், படை வீரர்; *a.* படையணிப் பிரிவு சார்ந்த; படையணிப் பிரிவு களுக்குரிய; படையணிப் பிரிவுகளை உட்கொண்ட; பெருந் திரளான, பேரெண்ணிக்கை உடைய.

**le'gioned,** *a.* (செய்.) படையணிப் பிரிவுகளாயுள்ள.

**leg'islate,** *v.* சட்டமியற்று.

**legisla'tion,** *n.* சட்டமியற்றுதல்; சட்டமியற்றுந் துறை; சட்டங்கள்.

**le'gislative,** *n.* சட்டமியற்றும் உரிமை ஆற்றல்; சட்டம் இயற்றுங் குழுமம்; *a.* சட்டமியற்றுகிற; சட்டங்களியற்றும் உரிமை ஆற்றலுடைய; சட்டங்களியற்றுதல் சார்ந்த.

**le'gislator,** *n.* சட்டம் இயற்றுபவர்; சட்டமன்ற உறுப்பினர்.

**le'gislature,** *n.* சட்டமன்றம், நாட்டின் சட்டமியற்றும் உரி மையுடைய குழுமம்.

**le'gist,** *n.* சட்ட வல்லுநர்.

**legit'imacy,** *n.* முறைமை நிலை; சட்டப்படியான நிலை.

**legit'imate,** *a.* சட்டப்படியான திருமண மூலமாகப் பிறந்த; முறைமை வாய்ந்த; நேரிய, சரியான, ஒழுங்கான, நேர் மாதிரியை ஒத்திருக்கிற; அரசுரிமை வகையில் மரபுரிமை வழாத; அளவை முறைமையில் ஏற்புடைய, *v.* ஆணை மூலம் முறைமை உடையதாக்கு; சட்டமியற்றி நேர்மை வாய்ந்த தாக்கு; சான்று காட்டி ஏற்புடையதாக்கு; சரி என்று மெய்ப்பி; முறைமையானதென்று காட்டுவதற்கு உதவு; (தொ.) the legitimate drama, ஏற்புடைய பண்புகள் அமை யப்பெற்ற நாடகம், நேரிது என்று ஏற்றுக்கொள்ளத் தக்க நாடகம்.

**legit'imatize,** *v.* முறைமை உடையதாக்கு; சட்டத்துக்கு உடன்பாடானதாகச் செய்.

**legit'imism,** *n.* (வர.) ஸ்பெயின் பிரான்சு நாடுகளில் மன்னர்குடியின் நேர்முக மரபுவழியை அடிப்படையாகக் கொண்ட உரிமைவாய்ந்தவர் மாட்டுப் பற்றுறுதியுடையவ ராக இருத்தல்.

**legit'imize,** *v.*=legitimatize.

**leg'-of-mut'ton,** *a.* பொதுவாக ஆட்டிறைச்சிக் கால் வடிவம் உடைய; (தொ.) leg-of-mutton sail, முக்கோண வடிவம் உள்ள பாய்மர வகை; leg-of-mutton sleeve, மணிக்கட்டில் இறுக்கமாகவும் மேலே முழு நிறைவாகவும் உள்ள சட்டைக் கைப்பகுதி.

**leg'-pull,** *n.* (பே-வ.) ஒருவரை ஏமாற்றுவதற்காகச் செய்யப் படும் முயற்சி.

**leg'-rest,** *n.* கால்தாங்கி, அமர்ந்திருக்கும் நோயாளியின் கால் களை வைத்துக்கொள்வதற்கான அமைவு.

**leg'-show,** *n.* கால் காட்டி ஆடும் பெண்டிர் நடனவகை.

**leg'ume, legum'en,** *n.* பயற்றின நெற்று; பயற்றங்காய்; உணவாகப் பயன்படும் பயற்றினச் செடியின் பகுதி.

**legum'inous,** *a.* பயற்றினஞ் சார்ந்த; பயற்றினம் போன்ற; பயற்றினத் தாவரக் குடும்பத்துக்குரிய.

**leis'ter,** *n.* கவைமுனையுடைய மீனெறி வேல்; *v.* மீன் வேட்டையில் கவைமுள் வேலால் எறி.

**leisu're,** *n.* ஓய்வு நேரம்; ஒழிவு வேளை, அலுவலீடுபாடற்ற நேரம்; செயலுக்கான வேளைவாய்ப்பு; தக்கசெவ்வி, ஏற்ற தறுவாய்; (தொ.) at leisure, மெல்லோய்வாக, சாவ தானமாக; at one's leisure, ஓய்வு உள்ளபோது, வாய்ப்பு நோக்கி; wait one's leisure, ஓய்வு வேளை கிடைக்கும் வரை காத்திரு, செவ்வி எதிர்நோக்கி இரு.

**lei'surely,** *a.* மெல்லோய்வான, தக்க ஓய்வமைவுடைய, நிதானமான, சாவதானமான; *adv.* ஓய்வமைவாக, நிதான மாக.

***leit-motif, leit-motiv,*** (செர்.) (இசை.) தொடர்குறிக் கோப்பு, தனிப்பட்ட ஆள் கட்டம் அல்லது உணர்ச்சியுடன் தொடக்க முதல் கடைசிவரை தொடர்புகொண்ட செய்தி.

**lem'an,** *n.* காதலர்.

**lemm'a,** *n.* முற்கோள், பூர்வாங்க வாசகம்; வைப்புக்கோள், தற்பொழுதைக்கு வாதத்தை முன்னிட்டு மெய்யாகக் கொள் ளப்பட்ட வாசகம்; எண்கோள், முன்னரே எண்பிக்கப்பட்டு வாத ஆதாரமாக மேற்கொள்ளப்படும் செய்தி; தலைவரி, தலைப்பு வாசகம்; கோள்வரி, மேற்கோள் வாசகம்; சுட்டுவரி, படங்களின்கீழ்த் தரப்படும் மேற்கோளுரை; ஊடிழைவரி, கட்டுரை விரிவுரை பொருளுரை முதலியவற்றில் சுருக்கத் தலைப்புக் குறிப்பாகத் தரப்படும் மேல்வரிப் பகுதி; *pl.* lemm'as, lemm'ata.

**lemm'ing,** *n.* வயல் எலியொத்த வடதுருவப் பகுதிக்குரிய சிறு கொறிவிலங்கு வகை.

**lem'on,** *n.* எலுமிச்சையினப் பழம்; எலுமிச்சையின மரம்; எலு மிச்சை நிறம், செம்மஞ்சள் நிறம்; (தொ.) lem'on kali, எலுமிச்சம் பழச்சாறு கலந்த பொங்குபானம்; lemon pudding, எலுமிச்சை மணமும் சுவையுமூட்டப்பட்ட மாப் பிட்டுவகை; lemon squash, எலுமிச்சை வகைப் பழச்சாற்றுப் பானம்; salt of lemon, எழுது மையின் கறையினைப் போக்கு வதற்கான வெல்லச்சத்து வகை.

**lem'on²,** *n.* ஐரோப்பாவில் உள்ள தட்டையான உணவு மீன் வகை.

**lem'onade,** *n.* எலுமிச்சம்பழச் சாற்றுப் பானம்.

**lem'on-drop,** *n.* எலுமிச்சம் பழமிட்டாய், எலுமிச்சம் பழ மணமும் சுவையும் கலந்த தித்திப்புப் பண்டம்.

**lem'on-plant,** *n.* எலுமிச்சை மணமுள்ள செடிவகை.

**lemon'squeezer,** *n.* எலுமிச்சம் பழத்தின் சாறு பிழியும் கருவி.

**lem'ur,** *n.* மடகாஸ்கர் தீவுப்பகுதிக்குரிய நீண்ட முஞ்சியை உடைய குரங்கினஞ் சார்ந்த இரவில் நடமாடும் பாலுண்ணி விலங்குவகை.

**lend,** *v.* கடன்கொடு; வட்டிக்குப் பணங் கொடு; கடனாகக் கொடு; பற்றுக்கணக்கில் கொடு; பொருளை இரவல் கொடு; கூலிக்கு அல்லது வாடகைக்கு வழங்கு; தற்காலப் பயன் கருதிக் கொடுத்துதவு; lend a hand, lend a helping hand, உதவி செய், செயல் துணையாய் உதவு; lend ear, lend an ear, lend one's ear, செவிசாய், செவிசாய்த்துக் கேள், கவனி.

**Lend'-Lease',** *n.* ஈட்டுக் கடன்முறை, கூட்டுக் குத்தகைக் கடன் முறை, இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் 1941-லிருந்து பிரிட்டன் முதலிய நாடுகளுக்கு முக்கிய தளங்களின் தவணைக் குத்தகைக்கீடாகப் போருதவி முதலியன வழங்கும் வகையில் அமெரிக்க ஐக்கிய நாடுகள் மேற்கொண்ட முறை; *a.* ஈட்டுக் கடன்முறை சார்ந்த; *v.* ஈட்டுக் கடன் முறையில் உதவிசெய்.

**length,** *n.* நீளம், பிழம்புருவின் மூவளவையில் கழிமிகையான அளவைக்கூறு; நீட்சி, நீளமாயிருக்கும் தன்மை; கோடியி லிருந்து எதிர்க்கோடிக்கு உள்ள தொலை; உச்ச நீள எல்லை; அளவு; தொலைவு; படி; கால நீட்சி, கால அளவு; குறிப் பிட்ட நீள அளவு; துணிக்கச்சை அளவு; உயிர்மாத்திரை நீட்சி; மாத்திரை அளவு; மரப்பந்தாட்டத்தில் முளைக் குறி யிலிருந்து பந்தின் தெறிதொலை; (தொ.) at arm's length,

கை எட்டுந் தொலைவில்; at full length, கால்நீட்டிப் படுத்த நிலையில்; நெடுஞ்சாண்கிடையாக; at length, at full length, at great length, at some length, விரிவாக, குறைக்காமல்; கடைசியில்; நெடுங்காலமான பின்பு; keep one at arm's length, நெருங்கிப் பழகாதிரு, சிறிது தொலைவில் வைத்து அளவோடு பழகு.

leng'then, *v.* நீளமாக்கு; நீட்டு; நீளமாகு; (யாப்.) உயிரெழுத்தை நெடிலாக்கு.

length'wise, *adv.* நீளப் போக்கில்.

leng'thy, *a.* மிகநீண்ட, வரம்புகடந்து நீளமான, சோர்வூட்டும் அளவு நீண்ட, மிகைபடக் கூறப்பட்டுள்ள.

len'ience, len'iency, *n.* இளக்கரம், மெல்லிணக்க நயம்.

len'ient, *a.* கண்டிப்புக் குறைவான; இளக்காரமான, மிகுதி சலுகை காட்டுகிற; விதி-கட்டுப்பாடுகள் வகையில் தளர்த்தி விடப்பட்ட; மெல்லிணக்க நயமான; கனிவு நலமிக்க; பொறுத்துப் போகும் இனிய பாங்குடைய; தண்டனை வகையில் கடுமையற்ற; மருந்து வகையில் நோவு ஆற்றுகிற.

Len'inism, *n.* 1917-ஆம் ஆண்டு நிகழ்ந்த ருசியப் புரட்சித் தலைவர் லெனின் கொண்ட பொருளாதாரக் கோட்பாடு.

len'itive, *n.* நோவு ஆற்றும் மருந்து, பிணி தணிக்கும் மருந்து; *a.* நோவு தணிக்கிற, இதமாக்குகிற.

len'ity, *n.* இரக்கம், கருணை; சலுகை, தயவார்ந்த செயல்.

len'o, *n.* முகத்திரை-தொப்பி முதலியன செய்வதற்கான மெல்லிய பருத்தி வலைத் துணிவகை.

lens, *n.* கண்ணாடி வில்லை; வளைமுகப் பளிக்குவில்லை; இரு புற வளைமுகக் கண்ணாடி வில்லை; கண்ணின் படிக நீர்மம் பளிக்கு நீர்மங்களுக்கிடையேயுள்ள கதிர் சிதறுவிக்கும் அமைவு; நிழற்படக் கருவியின் வில்லைத்தொகுதி; *pl.* lenses.

Lent[1], *n.* கிறித்தவ மதத்தினர் அனுசரிக்கும் நாற்பது நாள் நோன்பு, இயேசுபெருமான் பாலையிற் கழித்த நாட்களைக் கொண்டாடும் விழா; (தொ.) Lent face, ஒளியற்ற முகம், மகிழ்வற்ற முகம், Lent fare, நோன்புக்கு ஏற்ற இறைச்சி சாரா உணவு; Lent lily, மஞ்சள் நிற மலர்வகை; Lent term, கிறித்தவ நோன்பு நாட்கள் நிகழும் பல்கலைக் கழகப்பருவம்.

lent[2], *v.* lend என்பதன் இறந்தகால முடிவெச்சம்.

Len'ten, *a.* கிறித்தவ சமயத்தாரின் நாற்பது நாள் நோன்புக் குரிய; நோன்புக்கு ஏற்ற; (தொ.) Lenten face, சோர்வுற்ற முகம்; Lenten fare, இறைச்சியற்ற உணவு.

lentic'ular, *a.* அவரையின விதை வடிவுடைய; வில்லை வடிவான; இரு குவிவுடைய; கண்ணின் விழிவில்லைக்குரிய.

len'til, *n.* அவரையினச் செடி; அவரையின விதை.

len'tisk, *n.* குங்கிலிய வகை மரம்.

len'titude, *n.* மந்தகுணம்.

*len'to*, (இத்.) *a.* இசை இயக்க ஏவற்குறிப்பில் மெதுவான; *adv.* மெதுவாக.

len'toid, *a.* கண்ணாடி வில்லை போன்ற வடிவுடைய.

Lents, *n. pl.* கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் நாற்பது நாள் நோன்பு நிகழும் பருவத்தில் நடைபெறும் படகுப் பந்தயம்.

Le'o, *n.* சிம்மராசி, ஐந்தாவது வான்மனை.

Le'onid, *n.* சிம்மராசியினின்று வருவதாகத் தோற்றமளிக்கும் வால்மீன்.

le'onine[1], *a.* அரிமா போன்ற; சிங்கத்துக்குரிய; சிங்கங்கள் சார்ந்த.

Le'onine[2], *n.* அடியிடை இயைபெதுகையுடைய இடைக்கால லத்தீன் அறுசீரடிப் பாவகை; *a.* 'லியோ' என்ற பெயருடைய போப்பாண்டவர்க்குரிய; 'லியோ' என்பவரால் புனைந்துருவாக்கப்பட்ட; Leonine city, நான்காம் லியோ (Leo IV) என்ற போப்பாண்டவரால் அரண் செய்யப்பட்ட ரோம் நகரப் பகுதி; Leonine verse, அடியிடை இயைபெதுகையினையுடைய இடைக்கால லத்தீன் அறுசீரடிப் பாவகை.

leo'pard, *n.* சிறுத்தைப்புலி, (கட்.) இங்கிலாந்தின் விருதுக் கேடயத்தில் பாதுகாப்புச் சின்னமாகப் பொறிக்கப்பட்ட அரிமா உரு; (தொ.) can the leopard change his spots?, மரபுக் குணம் மாறுமா? snow leopard, சிறுவேங்கை வகை.

Lep'cha, *n.* திபேத் நாட்டின் பகுதிகளிலும் சிக்கிம் (sikkim) நாட்டிலும் வாழும் மக்கள் இனத்தவர்.

lep'er, *n.* தொழுநோயர், குட்டநோயாளி.

lepidop'terous, *a.* வண்ணத்துப்பூச்சி உள்ளிட்ட செதிள் மூடிய நான்கு இறகுகளுள்ள பூச்சியினஞ் சார்ந்த.

lep'orine, *a.* முயல் இனத்தைச் சார்ந்த.

leprechaun', *n.* அயர்லாந்து வழக்கில் பேய்.

lep'rosy, *n.* தொழுநோய், குட்டம்; ஒழுக்கக்கேடு; நடத்தைக்கேடு பரப்பும் பண்பு.

lep'rous, *a.* தொழுநோய் பற்றிய, குட்டம் பிடித்த.

leptocephal'ic, *a.* குறுகிய மண்டையோட்டை உடைய.

leptdoac'tyl, *n.* நீண்ட மெல்லிய கால்விரல்களையுடைய பறவை; *a.* நீண்ட மெல்லிய கால்விரல்களையுடைய.

lep'ton, *n.* மின்மத்துக்கு ஒப்பான அல்லது மின்மத்தினும் நுண்ணிய துகள்.

Les'bian, *n.* ஒருபாற் புணர்ச்சியிலீடுபட்ட பெண்; *a.* லெஸ்பாஸ் (Lesbos) என்ற பண்டைக் கிரேக்க நாட்டுப் பகுதி சார்ந்த; Lesbian vice, பெண்களிடைப்பட்ட செயற்கை முயக்கம்.

*lese-majeste*, (பிர.) *n.* அரசுப்பகைமைக் குற்றம்; தாழ்ந்த பணியிலுள்ளவர்களின் வரம்பு மீறிய நடத்தை.

lese-maj'esty, *n.* (சட்.) அரசுப்பகைமைக் குற்றம், இராஜத் துரோகம்.

le'sion, *n.* நைவுப்புண்; (மரு.) உறுப்புக்கள் சிதைவு; உறுப்புக்கோளாறு.

less[1], *n.* மேலுங் குறைந்த அளவு; மேலுங் குறைந்த எண்ணிக்கை; மேலுங் குறைவான பகுதி; பிறிதினுங் குறைந்த மதிப்புடையது; *a.* முன்னிலுங் குறைந்த; மேலுங் குறை அளவான; மேலுங் குறைந்த எண்ணிக்கையுடைய; மேலுங் கொஞ்சமான; மேலுஞ் சிறிதான; விஞ்சிக் குறைந்த மதிப்புடைய; மேலுந் தாழ்ந்த; பிறிதினுந் தரத்தில் குறைந்த; மேலும் வயது குறைந்த; *adv.* மேலுங் குறைவாக, முன்னிலுங் குறைந்த அளவில், மேலுஞ் சிறுக; *prep.* குறைவாக.

less[2], *a. adv.* little ஒன்பதன் உறழ்படி.

lessee', *n.* குத்தகைக்கு எடுத்தவர்; மனை-வீடு-கட்டிடம் நாடகக் கொட்டகை ஆகியவற்றின் குத்தகை ஏற்றவர்; மொத்த வாடகைக்கு எடுத்திருப்பவர்.

less'en, *v.* குறைத்துக்கொள்; சுருக்கு; அடக்கு, ஒடுக்கு; தாழ்த்து.

less'en[1], *a.* பண்பிற் குறைந்த; சிற்றளவான.

less'er[2], *a.* little என்பதன் உறழ்படிவங்களில் ஒன்று.

less'on, *n.* பாடம்; நாட்பாடம், பள்ளியில் குறிப்பிட்ட நாட்களில் முடிப்பதற்காக வகுக்கப்பட்ட படிப்புப் பகுதி; பாடத்துக்குரிய காலம்; விவிலிய ஏட்டிலிருந்து எடுக்கப்பட்ட காலைமாலை வழிபாட்டுப் பகுதி; படிப்புக்குரிய வாசகப்பகுதி; படிப்புக்குரிய தலைப்பு; பயிற்சிப்பகுதி; மேல்வரிச் சட்டம்; மேற்கோள்; முன்மாதிரி; படிப்பினை; படிப்பினைதருஞ் செய்தி; இடித்துரை, கண்டனம்; தண்டனை; *v.* அறிவுறுத்து; அறிவுரை கூறு; எச்சரிக்கை செய்; தண்டி, கண்டி; பயிற்சியளி, ஒழுங்குபடுத்து.

less'or, *n.* குத்தகைக்கு விடுபவர், வாடகைக்கு விடுபவர்.

lest, *conj.* நிகழாதிருக்கும்படி, என்பது ஆகாதபடி, கூடாதென்னும் எண்ணத்தை முன்னதாகக்கொண்டு.

let[1], *n.* தடை, இடையூறு; பந்தாட்டத்தில் பந்திற்கும் ஆட்டக்காரருக்கும் இடையே ஏற்படும் தடங்கல்.

let[2], *v.* விடு, இசைவளி; போகவிடு; வாடகைக்கு விடு; (தொ.) let alone, செயலில் தலையிடாதிரு, தடையிடாது செய்யவிடு, let be, வாளா விட்டுவிடு, கவனியாதே, குறுக்கிடாதே; let down, தக்க சமயத்தில் உதவாமற் கைவிடு; உற்றுழிக் கைநெகிழ விடு; அவனுடன் எதிர்பார்த்தபடி நடவாமல் ஏமாற்றமடையச் செய்; let fall, நழுவ விடு; கீழே விழச்செய்; let go, பிடிதளர்த்தி விடு; போகவிடு; கைவிடு; விடுவி; நினைவினின்றும் அகற்று; தடைநீக்கு; let in, புகவிடு, உள்ளே வரவிடு, வருவதற்குக் கதவைத் திற; let into, சேர்த்துக்கொள், புகுத்து; இரகசியம் முதலியவை தெரியும் உரிமையளி; let loose, விடுதலை செய், தளை நீக்கு, தடைவிலக்கிப் பரப்பு; let off, தண்டிக்காமல் விடு; வேட்டுவிடு; தப்பவிடு; வெளிவிடு; வெளியேற விடு; let one alone to do, நம்பி ஒப்படை; let one down gently, அவமதிப்பு திடீரென ஏற்படாமல் மெல்ல விலக்கு; let oneself in, சமாளித்து நுழைவுபெறு; தானாக நுழைவுபெறு; துன்பத்தில் சிக்கிக்கொள்; let out, கதவைத் திறந்துவிடு; வெளிச்செல்ல விடு; தளரவிட்டுத் தை; வாடகைக்கு விடு; மறைவெளியிடு; வெளியே தெரிவி; முட்டியால் குத்து; காலால் உதை; கடுஞ்சொற்களால் தாக்கு; let up, (பேவ.) கடுமை தணி; let well alone, வேண்டாதவிடத்துத் தலையிடாதிரு; to let, வாடகைக்கு விடப்பட்ட, குடிக்கூலிக்கு விடப்பட்ட.

leth'al, *a.* கொல்லுகிற, சாகடிக்கிற; உயிர்போகக்கடிக்கத் தக்க; கொல்லுந் திட்டம் உடைய, கொல்லுதற்குரிய; (தொ.) lethal chamber, விலங்குகளை நோவின்றிக் கொல்லும் அறை.

lethar'gic, lethar'gical, *a.* மசணத்தனமான, செயலற்ற, அசட்டை மனப்பான்மையுடைய.

leth'argy, *n.* தூம்படைவுக் கோளாறு; இயல்பு மீறிய நீள் துயில்நிலை; மடிமை, செயலின்மை, மந்தம்; மயக்கம்; ஊக்கமின்மை, கிளர்ச்சியின்மை; அக்கறையின்மை, அசட்டை மனப்பான்மை.

Leth'e, *n.* கிரேக்க புராண மரபில் கடந்த காலத்தைப் பற்றிய நினைவை முழுதும் மறக்கடிக்கும் ஆற்றல் உடையதாகக் கருதப்பட்ட கீழுலக ஆறு; முழு மறதிநிலை.

let'-off, *n.* மரப்பந்தாட்டத்தில் பிடிப்பதற்கான வாய்ப்பிருந்தும் கைவிடப்பட்ட பந்து; பெற்ற தறுவாய் இழப்பு; விடுவழி; விழா நிகழ்ச்சி.

lett, *n.* பால்டிக் (Baltic) பகுதிகளில் வாழும் மக்களினத்தவரில் ஒருவர்.

lett'er, *n.* எழுத்து, வரிவடிவ ஒலிக்குறி; வரிவடிவின் ஒலிக்குறி; வரிவடிவின் ஒலிக்குறிப்பு; அச்சுத்துறையில் எழுத்துரு; முடங்கல், கடிதம்; பத்திரம், எழுத்துமூலம்; சொற்சுட்டுப் பொருள்; நேர் சொற்பொருள் நுணுக்கம்; நேர் சொற்பொருண்மை; *v.* எழுத்துப் பொறிப்பிடு; எழுத்துக்களால் குறிப்படையாளமிடு; (தொ.) letter of advice, சரக்கு விலைப்பட்டி முதலியவை அனுப்பியது பற்றிய தகவலறிவிப்பு முடங்கல்; letter of attorney, பகரச் செயலாண்மை உரிமைப்பத்திரம்; in letter, சொல்லின் நேரான புறப்பொருளின்படி; to the letter, சொல்லுக்குச்சொல் வழுவாதபடி, நேர் சொற்பொருளின்படி நுண்குறிப்பு விவரங்களையும் சேர்த்து.

lett'er-balance, *n.* அஞ்சல் கடித எடைபார்க்கும் நிறைகோல்.

lett'er-book, *n.* போக்குவரத்து கடிதப்படிகள் வைக்கப்பட்ட ஏடு.

lett'er-bound, *a.* நேர் சொற்பொருள் வரையறைக்கு உட்பட்ட, ஒவ்வொரு எழுத்தையும் பின்பற்றி நடக்கிற.

lett'er-box, *n.* அஞ்சல் பெட்டி.

lett'er-card, *n.* அஞ்சல் அட்டை, கடிதம் எழுதுவதற்கான மடித்த பசையொட்டிய அட்டை.

lett'er-case, *n.* கடிதங்களை வைத்துக்கொள்வதற்கான சிறு கையேடு.

lett'er-lock, *n.* எழுத்துப்பூட்டு, குறிப்பிட்ட தனி மறை எழுத்து வரிசை மூலம் பூட்டித் திறக்கும் பூட்டுவகை.

lett'er-paper, *n.* கடிதம் எழுதுவதற்கான நான்மடி உருவத் தாள்.

lett'er-perfect, *a.* தன் நடிப்புப் பாகத்தை நன்கு மனப்பாடமாக அறிந்துள்ள.

lett'erpress, *n.* விளக்கப்படப் புத்தகத்திலுள்ள அச்செழுத்துப்பகுதி; விளக்கப்படத்தின் தொடர்பான எழுத்துப்பகுதி.

lett'ers, *n. pl.* சட்டச் சார்பான கடிதங்கள்; தொழிற்சார்பான எழுத்துமூலங்கள்; இலக்கியம், இலக்கியப்புலமை; கலை இலக்கியத்துறை; (தொ.) commonwealth or republic of letters, ஆசிரியர் உலகு, ஆசிரியர் குழு; letters of administration, விருப்பாவண உரிமையற்ற நில ஆட்சி உரிமைப் பட்டயம்; letters of business, மண்டலக் குருமார் பேரவை செய்தியை ஆய்வுக் கொடுத்துதவுதற்குரிய அரச உரிமை ஆணை; letters patent, அரசுப்பட்டயத் தனியுரிமை; man of letters, எழுத்தாசிரியர், எழுத்தாளர்; புலவர், அறிஞர்; the profession of letters, எழுத்தாசிரியர் உலகு.

lett'er-weight, *n.* அஞ்சல் முடங்கல்களை நிறுக்கும் துலைக்கோல்; தாள் பளு எடை, தாள் பறக்காமல் இருப்பதற்கு மேல்வைக்கும் எடை.

lett'er-worship, *n.* குருட்டுத்தனமான சொற்பற்றுண்மை, உட்கருத்தை விட்டுச் சொல்லின் புறப்பொருளில் மட்டற்ற பற்றுக் காட்டுதல்.

lett'er-writer, *n.* கடிதம் எழுதுபவர்; கடிதம் எழுதும் முறை பற்றிய ஏடு.

Lett'ic, *n.* லாட்வியா (Latvia) நாட்டுக்குரிய மொழி, பால்டிக் (Baltic) குழுவினைச் சார்ந்த இனத்தின் மொழி; பால்டிக் இனமொழிக் குழு; *a.* லாட்வியா நாட்டுப் பால்டிக் இனஞ் சார்ந்த குழுவினுக்குரிய; பால்டிக் இனமொழிக் குழுவுக்குரிய.

Lett'ish, *n.* லாட்வியா (Latvia) நாட்டுக்குரிய மொழி; *a.* லாட்வியா நாட்டுக்குரிய மொழி சார்ந்த.

lett'uce, *n.* கீரை வகை, பச்சடிக்கீரை.

let-up, *n.* நிறுத்துதல்; குறைதல்; நோய் தணிவு.

leuc'o cyte, *n.* குருதியின் நிறமற்ற நுண்மம், ஊனீர் நுண்மம்.

leucop'athy, *n.* பாண்டுநோய்க்காளான தன்மை, நிற நுண்மமற்ற தன்மை.

leucorrhoe'a, *n.* பெண்டிர் வெண்கசிவுக் கோளாறு.

leuc'otome, *n.* (மரு.) மூளை முன் அலகுக்குரிய அறுவை ஊசி.

leucot'omy, *n.* (மரு.) மூளை முன் அலகின் ஊசி அளவை.

leukaem'ia, *n.* (மரு.) குருதி வெள்ளை நுண்மப் பெருக்கக் கோளாறு.

lev, *n.* பல்கேரிய நாட்டு நாணய வகை; *pl.* leva.

Levant'[1], *n.* நடுநிலக்கடலின் கிழக்குக் கரைப்பகுதி.

levant'[2], *v.* சூதாட்டத்தில் பணயப் பணமும் இழந்த பணமும் கொடாமல் தலைமறைவாக ஓடிவிடு.

Levan'ter[1], *n.* நடுநிலக் கடலின் கிழக்குக் கரைப்பகுதியில் வாழ்பவர்; நடுநிலக்கடலின் வலமிக்க கீழ்க்காற்று.

levan'ter[2], *n.* சூதாட்டத்தில் பந்தயப் பணம் கொடாது ஓடிவிடுபவர்.

Levan'tine, *a.* நடுநிலக்கடலின் கிழக்குக்கரை நாடுகளைச் சார்ந்த; நடுநிலக்கடலின் கிழக்குக்கரை நாடுகளில் வாழ்கிற; நடுநிலக் கடலின் கிழக்குக்கரை நாடுகளுடன் வாணிகஞ் செய்கிற.

levat'or, levat'or-muscle, *n.* உறுப்பினை உயர்த்தும் தசை, தூக்குவிசைத் தசை.

lev'ee[1], *n.* நாளோலக்கம், காலைக் கூட்டணி வரவேற்பு; திருவோலக்கம், அரசுரிமைக் கூட்டணிக் காட்சி; ஆடவர் பேட்டி குழு.

lev'ee, levee'[2], *n.* ஆற்றின் வெள்ளக் காப்புக்குரிய அணை கரை.

lev'el, *n.* சரிமட்டம், சமதளம்; தளமட்டம், மட்டம் பார்க்கும் கருவி; தன்மட்டம், சமதளநிலை; படித்தளம், உயர்வுப்படி நிலை; சமுதாயப் படிநிலை; ஒழுக்கப் படிநிலை; அறிவுப்படி நிலை; சமதளப் பரப்பு; சமதளப் பரப்பான நாட்டுப்பகுதி; *a.* நிரப்பான, கிடைமட்டமான, நிலம்படிந்த, நூல்குண்டுக் குச் செவ்வான, ஒத்த உயரமுடைய, ஒப்பான; ஒருநிலைப் பட்ட; சமநிலையான; சரிசமமான; உயர்வுதாழ்வற்ற; ஒரேதரமான; ஒரே பாணியிலமைந்த; ஒத்த தருணமுடைய; *v.* சமதளப் படுத்து; ஒருநிலைப் படுத்து; ஒரேமட்டமாக்கு; உயர்வுதாழ்வகற்று; நிலமட்டமாக்கு; தாக்கிவீழ்த்து; இலக்குக் குறிவை; நோக்கி நீட்டு; குறியாகக் கொண்டு வசையால் தாக்கு; (தொ.) do one's level best, இயன்ற அளவும் முயலு; find one's level, பிறருடன் ஒப்பிட்டுத் தன் மெய்ந்நிலையை உணர்; on a level with, ஒரே கிடை வரைத் தளத்தில்; on the level, (பே-வ.) உண்மையாக, நேர்மையாக.

level-headed, *a.* உணர்ச்சி வயப்படாத, உலகியல் அறி வமைதி வாய்ந்த.

lev'eller, *n.* சமப்படுத்துபவர்; சமப்படுத்துவது; சமுதாய வேறுபாடுகளை ஒழிக்க விரும்புபவர்; சமத்துவ வாதி.

lev'elling-screw, *n.* சரிமட்டத் திருகாணி, இயந்திரத்தின் பகுதிகளை மயிரிழைகூடப் பிசகாது தளமட்டத்திற்கு ஒழுங்கு படுத்தும் மரையாணி.

lev'er, *n.* நெம்புகோல், துப்பாக்கிக் குழலைத்திறக்கும் விசைக் கோல்; *v.* நெம்புகோலினுல் உயர்த்து; நெம்புகோலைப் பயன் படுத்து, நெம்புகோலை இயக்குவி; (தொ.) lever of the first order, எடை தாங்குதளம் விசை ஆகிய மூன்றில் தாங்குதளத்தை மையமாகக் கொண்ட நெம்புகோல்; lever of the second order, எடை தாங்குதளம் விசை ஆகிய மூன் றில் எடையை மையமாகக் கொண்ட நெம்புகோல்; lever of the third order, எடை தாங்குதளம் விசை ஆகிய மூன்றில் விசையை மையமாகக்கொண்ட நெம்புகோல்; lever watch, நெம்புகோற் கருவியால் இயக்கப்படும் கைக்கடிகாரம்.

lev'erage, *n.* நெம்புகோலியக்கம்; நெம்புகோலின் கையாட்சி; நெம்புகோல் அமைப்பு; நெம்புகோல் தொகுதி; நெம்புகோலைப் பயன்படுத்துவதனுல் கிடைக்கும் ஆற்றலாதாயம், நிறை வேற்றும் சாதனம்; கருவியாற்றல்; ஆற்றல்; செல்வாக்கு; துணைவலு.

lev'eret, *n.* முயற்குட்டி.

levi'athan, *n.* பெருங்கடல் விலங்கு; அருவருப்பான பேருரு; இனத்தின் மிகப் பேருரு; மாபெருங் கப்பல்; பேராற்றல் சான்றவர்; மாபெருஞ் செல்வர்.

lev'igate, *v.* மென்தூளாக்கு, மைப்பொடியாக்கு; மென்குழம் பாக்கு.

lev'in, *n.* (செய்.) மின்னல், மின்வெட்டொளி.

lev'irate, *n.* யூதர் முதலியோரிடையே வழங்கியபடி மாண்ட வன் மனைவியை அவன் உடன்பிறந்தான் அலலது அணுக்க உறவுடையோன் மணந்துகொள்ளும் வழக்காற்று முறை.

lev'itate, *v.* யோக ஆற்றல் மூலம் காற்றில் அந்தரமாக எழச் செய்; வாயுத்தம்பனம் செய்து உயர்ந்தெழு.

Lev'ite, *n.* திருக்கோயிற் குருமார் துணைவராகச் செயலாற்றிய யூத இன வகுப்பினர், யூத இனக் கிளைமரபு வகையினர்.

Levit'ical, *a.* யூத இனக் கிளைமரபு வகை சார்ந்த; திருக் கோயிற் குருமார் துணையான கிளைமரபுக்குழுச் சார்ந்த; யூத இனக் கிளைமரபினர் வினைமுறைக்குரிய; விவிலிய ஏட்டின் முதல் ஐம்பிரிவுகளுள் மூன்றும் பிரிவுக்குரிய.

Levit'icus, *n.* விவிலிய ஏட்டின் பழைய ஏற்பாட்டில் முதல் ஐந்து பிரிவுகளில் மூன்றும் பிரிவேடு.

lev'ity, *n.* பளுவின்மை; கருத்தின்மை, கவலையின்மை; கட்டற்ற வாழ்வு; ஒழுக்கத்தளர்வு; பொறுப்பற்ற போக்கு; தீயொழுக்கம்; புல்லறிவு, விளையாட்டுத்தனம்.

levo-com'pound, *n.* = laevo-compound.

levogyr'ous, levorot'atory, *a.* = laevogyrous.

lev'ulose, *n.* = laevulose.

lev'y, *n.* வரிவிதிப்பு; வரிப்பிரிப்பு; வரித்திரட்டு; படைத் திரட்டு, படைக்கு ஆள் திரட்டு; பிரித்த வரித்தொகை; திரட்டிய படை வீரர் தொகுதி; *v.* வரிவிதி; சுங்கம் விதி; வரி திரட்டு; பணம் தண்டு; சட்ட நடைமுறை நிறைவேற்ற மூலம்சரக்கு மீது பணம் பிரி; கொள்ளைவரி கைப்பற்று; அச்சுறுத்திப் பணம் பறி; படைக்கு ஆள்சேர்; படைக்கு ஆள் திரட்டு; பொருக்கான படைதிரட்டு; போர்ச்சாதனங் கள் திரட்டு; போர்க்கெழு; capital levy, பேரிறைப் பிரிப்பு, நாட்டின் மொத்தச் செல்வத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியை அரசாங்கம் உடைமையாக்கிக் கொள்ளுதல்; levy in mass, பொதுப் படைத்திரட்டு, உடல்வலிமைவாய்ந்த எல்லா மனிதர் களையும் போர் முதலியவற்றிற்காகச் சேர்த்துக்கொள்ளுதல்.

lewd, *a.* காமவெறிபிடித்த, ஒழுக்கங்கெட்ட; இழிந்த, கீழ்த் தரமான; கவையற்ற; தூய்மையற்ற; மரியாதையற்ற.

lew'is, *n.* கனமான கற்களைப் பற்றித்தூக்குவதற்கான இரும்புப் பொறியமைப்பு; நற்கொத்தர் சங்க உறுப்பினரின் புதல்வர்.

Lew'is gun, *n.* பளுக்குறைந்த இயந்திரத் துப்பாக்கி வகை.

lew'isite, *n.* கொப்புள வளி, இராசயனப் போர்முறையில் பயன்படுத்தப்படும் கொப்புளம் உண்டாக்கும் நச்சு வளி.

lex'ical, *a.* மொழியின் சொற்கள் பற்றிய; சொற்களஞ்சியம் சார்ந்த, அகரவரிசை ஏடு குறித்த.

lexicog'rapher, *n.* சொற்களஞ்சிய ஆசிரியர், நிகண்டு ஆசிரியர்.

lexicog'raphy, *n.* சொற்களஞ்சியக்கலை.

lex'icon, *n.* சொற்களஞ்சியம், அகராதி.

lexig'raphy, *n.* சொற்குறியீட்டெழுத்து முறை, ஒவ்வொரு வரிவடிவக் குறியீடும் ஒருசொல்லைக் குறிப்பிடுமாறு எழுதும் முறை.

*lex talion'is*, (ல.) *n.* பழிக்கெதிர்ப்பழிச் சட்டமுறை.

ley, *n.* பருவப் புல்நிலம், சிறிதுகாலம் புல்விளையும் நிலம்.

Ley'den battery, *n.* மின்கல அடுக்கு.

Ley'den jar, *n.* மின்கல வகை.

li, *n.* சீனத் தொலைவலகு, ஏறத்தாழ 633 கெசத் தொலைவு; ஏறத்தாழ 3/5 குன்றிமணியுள்ள சீன எடை வகை.

liabil'ities, *n. pl.* கடன் பொறுப்புக்கள், செலுத்த வேண்டிய கடன்தொகைகள்.

liabil'ity, *n.* சட்டக் கடப்பாடு, பிணைப்பாடு; பொறுப் புடைமை, உத்தரவாதம்; கடன்பாடு, கடன் கொடுக்க வேண்டிய பொறுப்பு; கடப்பாட்டுக்குரிய செய்தி; கடன்; (தொ.) limited liability, வரைநிலைப் பொறுப்பு, வணிகக் கூட்டின் பங்குக்காரர்கள் வகையில் சட்டப்படி வரையறுக்கப் பட்ட பொறுப்புடைமை.

li'able, *a.* சட்டக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட; உத்தரவாத முடைய; சட்டப் பிணைப்புக்குரிய; வரி-தண்டனை முதலிய வற்றின் விதிப்புக்குக் கடமைப்பட்ட; ஆட்படத்தக்க நிலையில் உள்ள, வருநிலையில் உள்ள, நிகழ் நிலையில் உள்ள.

liaise', *v.* தொடர்புகொள், உறவு கொண்டிரு.

liais'on, *n.* பிணைப்பு; ஆணுக்கும் பெண்ணுக்கும் இடைப் பட்ட கரவொழுக்கம், கள்ளப்புணர்ச்சி; பிரஞ்சு மொழியில் நிலைமொழி ஈற்று மெய்யின்மீது வருமொழி முதலில் வரும் உயிர் ஏறி ஒலித்தல்; (படை.) தொடர்பு, ஊடாட்டம்; (தொ.) liaison officer, இணைப்பு அலுவலர்.

lia'na, liane', *n.* முறுக்கித் தீவழ்ந்து படரும் வெப்ப மண்டலக் காட்டுக் கொடிவகை.

li'ar, *n.* பொய்யர், வழக்கமாகப் பொய் பேசுகிறவர்.

li'as, *n.* நீலச் சுண்ணும்புக்கல் பாறை வகை.

liba'tion, *n.* தெய்வத்துக்குப் படைக்கப்படும் பானம்

lib'el, *n.* எழுத்துமூலமான குற்றத்தாக்கு; (சட்.) அவமதிப்பறிவிப்பு, நற்பெயருக்குக் கேடுண்டாகும்படி வெளியிடப்பட்ட அறிவிப்பு; நற்பெயர் கெடுக்கத்தக்க செய்தி வெளியீடு; (பே-வ.) அவதூறு, புரளி, பொய்யான இகழுரை; மதிப்புக்கேடு, மதிப்புக் கெடுப்பதற்குக் காரணமாயிருக்கும் வழு; *v.* தாக்கறிவிப்பினுல் புகழ்கெடு; அவதூறு செய்; பொய்யான வசைத்தாக்குதல் செய்; பொய்யாகக் குற்றஞ்சாட்டு; (சட்.) அவமதிப்பான அறிவிப்பு வெளியிடு; (சட்.) எழுத்துமூலம் அறிவிப்புச்செய்து எதிர் நடவடிக்கை எடு.

lib'eller, lib'ellist, *n.* அவதூருக எழுதுபவர்.

lib'ellous, *a.* எழுத்துமூலந் தாக்குகிற, அவதூருன.

Lib'eral[1], *n.* முற்போக்குக் கட்சி உறுப்பினர்; பிரிட்டிஷ் முற்போக்குக் கட்சியினர்.

lib'eral[2], *n.* முற்போக்காளர்; *a.* பெருந்தகைக்குரிய; பெருந்தன்மை வாய்ந்த; பெரும்போக்கான; தாராள மனப்பான்மை உடைய, குறுகிய நோக்கமற்ற; பரந்த கொள்கையுடைய; வைதிகக் கட்டுப்பாடற்ற; முற்போக்கெண்ணங்கொண்ட; குடியாட்சிச் சார்வான; மக்களுரிமை நோக்கிய; மிகுதியான, ஏராளமான; வளமான; வரையாது கொடுக்கிற, வண்மையுடைய; கஞ்சத்தனமற்ற; கண்டிப்பற்ற; கலைப் பண்புத்திறமான; தொழில்நுட்பத்திறஞ் சாராத; பொதுப் பாங்கான, தனித்துறை சாராத; கட்டற்ற; திறந்த மனப்பான்மையுடைய; (தொ.) Liberal Conservative, பழமை தழுவு கட்சி உறுப்பினராயிருந்தும் சீர்திருத்தங்களை வெறுக்காதவர்; liberal education, தொழில் அல்லது தொழில் நுட்பக் கல்வியாயிராமல் மனத்தைப் பொதுவாக விரிவு படுத்துவதை நோக்கமாகக்கொண்ட கல்வி.

liberal'ity, *n.* வள்ளன்மை; விரிந்த மனப்பான்மை, பெருந்தகைமை; பெரும்போக்கு.

lib'erate, *v.* விடுவி; தளை நீக்கு; விடுதலை செய்; (வேதி.) கலவையிலிருந்து பிரித்து வெளியேற்று.

libera'tion, *n.* விடுதலை; விடுவிப்பு; தளைநீக்கம்; (தொ.) Liberation Society, அரசியலிலிருந்து திருச்சபைத் தொடர்பு நீங்க வேண்டுமென்று கூறும் அமைப்பு.

liberta'rian, *n.* ஊழ்க்கோட்பாட்டை எதிர்ப்பவர்; தன் விருப்பார்ந்த வினையாட்சிக் கோட்பாட்டாளர்; விடுதலை ஆதரவுக் கோட்பாட்டாளர்; *a.* தன் விருப்பார்ந்த வினையாட்சிக் கோட்பாடுடைய.

libert'icide, *n.* விடுதலை உரிமை அழிப்பவர்; *a.* விடுதலை உரிமையை அழிக்கிற.

lib'erties, *n. pl.* நீண்டகால மரபுரிமைகள், மரபாட்சி உரிமைத்திறங்கள், வழிவழி அனுபவச் சலுகைகள், பட்டய உரிமைகள், உரிமைப் பேறுகள்.

lib'ertine, *n.* மெய்த்துறையில் கட்டற்ற சிந்தனை உரிமையாளர்; மனம்போன போக்காளர்; காமுகன்; *a.* கட்டற்ற, ஒழுக்கவரம்பற்ற; (தொ.) chartererd libertine, கட்டில்லா மனம்போன போக்காளர்.

lib'erty, *n.* விடுதலை; விடுதலையுரிமை; தன்னுட்சியுரிமை; ஆட்சித் தனியுரிமை; கொடுங்கோன்மையின் தாக்கற்ற உரிமை; கொடுங்கோன்மையிலிருந்து பெற்ற அரும்பெறல் உரிமை; உரிமைத்திறம்; தங்குதடையற்ற தன்னுரிமை; அடிமைத்தளை நீக்கம்; தனியுரிமை; தன்செயலுரிமை; தன் விருப்பாற்றலுரிமை; (மெய்.) ஊழின் தளையற்ற தன் வினையாற்றல்; விதிகளின் கட்டுப்பாடற்ற தன்னுரிமையாற்றல்; சிறப்புரிமை; தடையற்றநிலை; உரிமையாற்றல் எல்லை; விருப்புரிமைஎல்லை; தன்னுரிமைக்கான இசைவு: இசைவுரிமை; சலுகை, விலக்குரிமை; உரிமைச் சலுகை; விதி மீறுகை; தகா உரிமை; ஈடுபாடின்மை; வாய்ப்போய்வு; (தொ.) at liberty, கட்டுப்பாடில்லாமல் ஒன்றினைச் செய்யும் உரிமையுடன்; விடுதலைபெற்று; cap of liberty, குடியரசுச் சின்னமாயுள்ள கூம்புவடிவத் தொப்பி; civil liberty, சமுதாயச் சட்டத்துக்குட்பட்ட தன்னுரிமை; Liberty Hall, தத்தம் விருப்பம்போல் நடக்கக்கூடிய இடம்; liberty man, கரைக்குச்செல்லும் இசைவு பெற்றுள்ள கப்பலோட்டி; liberty of conscience, சமயவகைத் தன்னுரிமை; liberty of the press, கருத்துக்களை முன்னிசைவின்றித் தன் பொறுப்பில் அச்சிட்டு வெளியிடுவதற்கான உரிமை; liberty ship, பகுதி பகுதியாகப் பொருத்தத்தக்கபடி முன்னரே திட்டமிட்டுப் பெரிய அளவில் இரண்டாம் போர்க் காலத்தில் செய்யப்பட்ட அமெரிக்க சரக்குக்கப்பல் வகை; natural liberty, சட்டங்களே இல்லா இயற்கைநிலை; set at liberty, விடுதலை செய், விடுவி; take liberties, மட்டுமீறி நெருங்கிப்பழகு; விதிகளை அல்லது செய்திகளை மட்டுமீறிக் கையாளு; take the liberty to do, செய்யத்துணி, செய்யக் கருது.

libid'inous, *a.* சிற்றின்ப உணர்ச்சிகொண்ட.

libid'o, *n.* (உள.) உணர்ச்சியின் உந்துதல், பாலுணர்ச்சியின் உந்துதல்.

Libra[1], *n.* (வான்.) துலா ராசி.

*lib'ra*[2], (ல.) *n.* கல் எடை; ஆங்கிலப் பொன் நாணயம்; *pl.* *lib'rae.*

librar'ian, *n.* நூலகர், ஏடகக்காப்பாளர், புத்தகசாலையின் பொறுப்பு வாய்ந்த அலுவலர்.

lib'rary, *n.* நூல் நிலையம், ஏடகம், பொதுமக்கள் பயன்படுத்துவதற்குரிய புத்தகசாலை; வீட்டிற் படிக்க எழுதப் பயன்படுத்தப்படும் அறை; பொதுமக்களுக்கான புத்தகத் தொகுதி; தனித் துறையினருக்கான நூலகம்; உறுப்பினர்களுக்கான புத்தகக்கூடம்; தனி மனிதர் ஏட்டுத்தொகுதி; வெளியீட்டாளர் ஒரே கோப்பாக வெளியிடுந் தொகுதி; ஏட்டாசிரியர் பயன்படுத்தும் ஏட்டுத்தொகுதி; வெளியீட்டாளர் ஒரே கோப்பாக வெளியிடுந் தொகுதி; ஏட்டாசிரியர் பயன்படுத்தும் ஏட்டுத்தொகுதி; ஏட்டாசிரியருக்குப் பழக்கமான புத்தகத்தொகுதி; (தொ.) circulating library, சுற்றியல் நூல் நிலையம்; free library, இலவச ஏடகம்; lending library, இரவல் தரும் நூல் நிலையம்; library edition, ஏடகப் பதிப்பு; reference library, இருப்பு நூலகம், புரட்டும் நூலகம்; walking library, பெரும்புலமையர், கல்வியிற் பெரியவர்.

librate', *v.* ஊசலாடு, அலையாடு; சமநிலைகொள், சமப்படுத்தப் பெறு; நடுங்கு, துடி.

libra'tion, *n.* அலையாடுதல்; (தொ.) libration of moon, திங்களில் வட்ட விளிம்புக்கு அருகிலுள்ள பாகங்கள் மறைந்து தோன்றுவதுபோன்ற அலையாடு தோற்றம்.

librett'o, *n.* இசை நாடகச் சுவடி, இசை நாடக முதலியவற்றிற்குரிய வாசகங்கள்; *pl.* librett'i.

Lib'yan, *n.* ஆப்பிரிக்கா கண்டத்திலுள்ள பண்டைய லிபியா பகுதியினர்; (செய்.) ஆப்பிரிக்கர்; ஆப்பிரிக்காவின் பெர்பெர் (Berber) மொழி; *a.* பண்டைய லிபியாவினைச் சார்ந்த; (செய்.) ஆப்பிரிக்காவைச் சார்ந்த; பெர்பெர் மொழியைச் சார்ந்த.

li'cence[1], *n.* விடை, இசைவு, இணக்கம்; திருமண இசைவாணை; மேடைப் பேச்சு இசைவுக் கட்டளை; அச்சடித்தல் இணக்க முறி; வெளிப்பொருள் வாணிக இணக்க ஆணை; பல்கலைக்கழகம் வழங்கும் கலைத்துறைத் தகுதிச் சான்றிதழ்; தன்னிச்சை, விருப்பாண்மை; தவருன உரிமை வழங்கீடு; சட்ட ஒதுக்கீடு; ஒழுங்குப் புறக்கணிப்பு; எழுத்தாளர் இலக்கண ஒழுங்குப் புறக்கணிப்பு; கவிஞர் சந்த உரிமைச் சலுகை.

li'cence[2], li'cense, *v.* இசைவளி; முழு உரிமை கொடு; வழங்கும் உரிமை கொடு; பயன்படுத்தும் உரிமை வழங்கு; குறிப்பிட்ட காரியத்துக்காக மனையிடத்தைப் பயன்படுத்திக் கொள்ள அதிகாரமளி; வெளியிட இணக்கமளி; நாடகம் நடத்த அனுமதி கொடு.

li'censed, *a.* உரிமைபெற்றுள்ள; முழு உரிமை அளிக்கப் பெற்றுள்ள; (தொ.) licensed victualler, சாராயம் முதலியவை விற்பதற்கு இசைவாணை பெற்றுள்ள பொதுவிடுதியாளர்.

licensee', *n.* உரிமை வழங்கப் பெற்றவர்.

li'censer, *n.* தனியுரிமை வழங்குபவர், இசைவிணக்கம் கொடுப்பவர்; இணக்க ஆணை வழங்க அதிகாரம் பெற்றவர்.

**licen'tiate**, *n.* பல்கலைக்கழகத்தின் தகுதிச் சான்றிதழ் பெற்றிருப்பவர்; கல்லூரி அல்லது தேர்வுத் தலைவர் சான்றிதழ் பெற்றவர்; திருச்சபை வகையில் சமயச் சொற்பொழிவாற்ற இசைவுரிமை பெற்றிருப்பவர்.

**licen'tious**, *a.* கட்டுப்பாடுகளுக்கு உட்படாத; இலக்கண விதிகளை மீறிய; மிகு சிற்றின்பப் பற்றுள்ள; இழிவான.

**lice'ntiousness**, *n.* இழிகாமம், தூர்த்தத்தன்மை.

**li'chen**, *n.* மரப்பாசி, கற்பாசி; சிவப்புப் பருக்களுடன் கூடிய தோல் நோய் வகை.

**lich'-gate**, *n.* பிணப்பெட்டியை வைத்திருப்பதற்கான திருக்கோயில் முற்றத்தின் வாயிற்படிநிலை.

**lich'-house**, *n.* பிணமனை, சாவுக்கிடங்கு.

**lich'-owl**, *n.* சாக்குறியெனக் கருதப்படும் கிறீச்சொலியுடைய ஆந்தை வகை.

**lich'-stone**, *n.* திருக்கோயில் வாயிற்படியில் பிணப்பெட்டியை வைப்பதற்கான கற்பீடம்.

**li'cit**, *a.* கள்ளத்தனமானதாயிராத, முறையான.

**lick**, *n.* நக்குதல், நாவினால் துழாவுதல்; விலங்குகள் உப்பினை நக்குமிடம்; சுரீரென்ற அடி; நாக்கு உறிஞ்சிய அளவு; மேலீடான பூச்சு; *v.* நக்கு; சுவைக்காக நாவினைத் துழாவு; நக்கி ஈரமாக்கு; நக்கித் துப்புரவு செய்; நக்கிக்குடி, உறிஞ்சு; துடை; அலைகள்-தீநா முதலியவை வகையில் மேலே லேசாகத் தொட்டுக்கொண்டு செல்; தீநா வகையில் ஊர்ந்துசென்று விழுங்கிவிடு; சண்டையில் அல்லது போட்டியில் தோல்வி உறச் செய், விஞ்சு; (தொ.) lick into shape, உருவாக்கு; நல்ல தோற்றமுடையதாக்கு; பயனுடையதாகச் செய்; lick one's chops, lick one's lips, உணவினை எதிர்நோக்கி நாவினைத் துழாவு; lick one's shoes, அடிமைத்தனமாக நட; licks creation, எல்லாவற்றையும் விஞ்சியிருக்கிறது; lick the dust, வீழ்ச்சியடை, தோல்வியுறு.

**lick'erish**, *a.* நற்சுவைப்பொருள் நாடுகிற, சுவையான உணவில் விருப்பமுள்ள; பேராசையுள்ள, அங்கலாய்ப்பான; கயமைத்தனமுள்ள.

**lick'spittle**, *n.* அண்டிப் பிழைப்பவர், இச்சகம்பேசி வாழ்பவர்.

**lic'orice**, *n.*=liquorice.

**lic'tor**, *n.* பண்டைய ரோமன் குற்ற நடுவருடன் சென்று பணிசெய்த நடவடிக்கை அலுவலர்.

**lid**, *n.* கலம்-ஏனம் முதலியவற்றின் மூடி; அடைக்கும் பகுதி; கண்மடல்; சங்கின் நுழைவாயிலை மூடும் கதவுபோன்ற அமைவு; (தாவ.) தடுக்கிதழ், மூடிபோன்ற அமைவு; (தொ.) with the lid off, பார்வைக்குத் தெரிகிற நிலையில்; உள்ளிருக்கும் முழுப் பயங்கரமும் தெரியும் நிலையில்.

**lid'o**, *n.* பொதுவான திறந்தவெளி நீச்சல் குளம்.

**lie**[1], *n.* பொய்; நெஞ்சறிந்த மறைப்புரை; வஞ்சனை, கரவடம்; போலி நம்பிக்கை, குருட்டு மரபு; *v.* திரித்துக்கூறு, பொய் பேசு; நற்பெயரைக் கெடு; பொய்பேசி அகப்பட்டுக்கொள்; பொய்பேசி மீள்; பொய்பேசி மீட்டு; பொருள்கள் வகையில் ஏமாறச்செய்; ஏய்த்துவிடு; (தொ.) act a lie, பொய் பேசாமலேயே ஏமாற்று; give one the lie, பொய்யரென்று குற்றஞ் சாட்டு; give the lie to, பொய்ம்மையைக் காட்டப் பயன்படு, பொய்யாக்கிவிடு; lie detector, தானியங்கித் தசைகளின் மிகையூக்கால் பொய்பேசுவதைக் கண்டுபிடிக்கும் ஆற்றலுடையதெனக் கருதப்படும் பொறிக் கருவி; white lie, முற்றிலும் மெய்யல்லாத வழக்காற்றுப் புரை; நன்னோக்கமுடைய பொய்யுரை; புரைதீர்ந்த பொய்.

**lie**[2], *n.* கிடை, கிடப்பு; கிடக்கும் திசை; கிடக்கும்நிலை; இட அமைவு; விலங்கின் முழை; பறவைகளின் தங்கிடம்; மீன்களின் ஒதுங்கிடம்; *v.* படு; விலங்குகள் வகையில் கிட, கிடக்கை கொள்; படுக்கை நிலைகொள்; இருக்கைகொள்; கிடப்புறு; அமைந்திரு; பரந்து காணப்பெறு; நங்கூரமிட்டுத் தங்கியிரு; அமைவுறு; கலவியிலிணை; படைவீடமைத்துத்தங்கு; அசையாதிரு. (சட்.) ஏற்புடையதாயிரு; கல்லறையில் கிடக்கைகொள்; பள்ளிகொள்; (தொ.) as far as in me lies, என்னால் கூடியவரையில்; find out how the land lies, நிலைமைகள் எவ்வாறிருக்கின்றனவென்பதைக் கண்டறி; let sleeping dogs lie, விவாதத்துக்கிடமான வற்றைக் கிளறிவிட்டுக் கொள்ளவேண்டா; lie by, வழங்கப்பெறாதிரு; சும்மா இரு; ஓய்வெடுத்துக்கொண்டு விலகியிரு; lie close, ஒளிந்திரு; lie down, தன்மதிப்பின்றி நடந்துகொள்; எதிரியை நோக்கி நிமிர்ந்து நிற்காதிரு; lie heavy, அழுத்து; சுமையாயிரு; வயிற்றில் பாரமாயிரு; மனச்சான்றுக்கு அழுத்தலாயிரு; lie in, மகப்பேறுக்காகப் படுக்கையில் கிடப்புறு; lie in a nutshell, மிகச்சுருங்கிய வடிவில் அடங்கியிரு; lie in ruins, வீழ்ச்சியுற்றுக் கிட; lie in state, இறந்தவர் வகையில் பொதுவிடத்தில் எல்லாரும் பார்க்கும்படி கிடத்தப்பெறு; lie in the dust, வீழ்ச்சியுறு, வீழ்ந்துபடு; lie in wait, பகைவரைத் தாக்குவதற்காகப் பதுங்கியிரு; lie low, பதுங்கு, நெடுஞ்சாண்கிடையாயிரு; இறந்துகிட, இழிவுபட்டுக்கிட; ஒன்றும் பேசாதிரு; காலங் கருதியிரு; lie off, (கப்.) கரையிலிருந்து அல்லது வேறு கப்பலினின்று சற்றுத் தொலைவில் இரு; lie of the land, செய்திகளின் நிலைமை, பொதுநிலைப் போக்கு; lie on the bed one has made, தன்செயலின் பயன்களைத் தானே நுகர்; lie out of one's money, பண வகையில் கொடுக்கப்பெறாதிரு; lie over, தள்ளிவைக்கப் பெறு, ஒத்திப்போடப் பெறு; lie perdu, (படை.) மறைந்திரு; lies with you to do, உனது வேலை அல்லது உரிமை; lie to, (கப்.) பாய் சுருக்குவதன்மூலம் முன்புறம் காற்றடிக்கும் திசையிலிருக்கும்படி அசையாமல் இரு; lie up, பணியிலிருந்து விலகி ஓய்வெடுத்துக்கொள்; படுத்துக்கொள்; அறையில் இரு; கப்பல் வகையில் துறையில் நிறுத்தப்பெறு; பணிக்கு அமர்த்திக்கொள்ளப் படாமல் இரு; it lying down, புல்லார்வுறு, பணித்து ஏற்றமைவுறு.

**lie'-abed**, *n.* நேரங்கழித்து எழுந்திருப்பவர்.

**Lie'big**, *n.* வெண்சத்தோ கொழுப்போ பசையோ இல்லாதபடி பிரித்தெடுக்கப்பட்ட மாட்டிறைச்சிச் சாறு.

**lied**, (செர்.) *n.* செர்மன் நாட்டுப்பாடல், நாட்டுப்பாடல் வகையைச் சேர்ந்த செர்மன் கவிதை; *pl. lieder*.

**lief**, *adv.* விருப்பமுடன், மகிழ்ச்சியாக.

**liege**, *n.* பண்ணையுரிமை மேலாள்; தலைவர்; வாரக்குடியாள்; *a.* நிலமானியப் பணிபெற உரிமையுள்ள; நிலமானியப் பணி செய்யக் கடமைப்பட்டுள்ள; (தொ.) liege lord, நிலமானியக் கிழார்; பண்ணை மேலாள், பண்ணைத் தலைவர்.

**liege'man**, *n.* கொத்தடிமை, பற்றுறுதியுள்ள ஏவலாள்.

**li'en**, *n.* கடன் கொடுத்தவர் பற்றூன்றுரிமை, உடைமையின் மேலுள்ள கடன் தீர்க்கப்படுகிற வரையில் அதை வைத்திருப்பதற்கான உரிமை; பணித்துறை மீள்வுரிமை.

**lierne'**, *n.* (க-க.) வில்வளைவுக் கூரையிலுள்ள குறுக்குக் கிளைச்சட்டம்.

**lieu**, *n.* மாற்று; பதிலிடம்; (தொ.) in lieu of, மாற்றாக, பகரமாக.

**lieuten'ant**, *n.* அணுக்க முதன்மையர்; ஆட்பேர்.

**lieuten'ant-governor**, *n.* துணைநிலை ஆளுநர்.

**lieuten'ant-governorship**, *n.* துணைநிலை ஆளுநர் பதவி.

**life**, *n.* உயிர்; உயிருடனிருத்தல்; உயிர்நீட்டிப்பு; பிழைப்பு, பிழைத்திருத்தல்; உயிர்ப்பொருள், உயிரி; சிற்றுயிர்த்தொகுதி; வாழ்நாள்; வாழ்க்கை; வாழ்க்கை வரலாறு; வாழ்வு; உயிர்ப்பு; உயிரியக்கம்; உயிர்த்துடிப்பு; உயிராற்றல், ஊக்கம்; எழுச்சி, உள்ளக்கிளர்ச்சி; புதுத்தூண்டுதல்; உயிர்க்களை; உயிர்த்தோற்றம்; உயிர்த்தடம்; உயிர்த்திறம், உயிர் மெய்ம்மை, மெய்த்திறம்; எழுச்சியூட்டுஞ் செய்தி; அரும்பொருள், அரும்பேறு; வாழ்க்கை வாய்ப்பு; உயிர் நீட்டிப்பு; புது வாழ்வு, புது வாழ்வு வாய்ப்பு; மறுவாழ்வு; இன்பம், நிலையான இன்பம்; மேல்நிலை வாழ்வு; வாழ்க்கைமுறை; உணர்ச்சிச்செறிவு; செயல்செறிவு; ஈடுபாடு; ஈடுபாட்டுச் செறிவு; வாழ்க்கையில் செயல்மிக்க பகுதி; செயல் வாழ்வு; வாழ்க்கையனுபவம்; வாழ்வின் இன்ப துன்பத் தொகுதி; (தொ.) *pl.* lives;

வாழ்க்கை அனுபவம் ; வாழ்வின் இன்ப துன்பத் தொகுதி ; (தொ.) a matter of life and death, ஒருவர் இருப்பதையோ இறப்பதையோ அறுதியிடும் ஒன்று; batsman was given a life, ஒரு வாய்ப்புக் கொடுத்து ஆட்டத்தை இழந்த பின்னும் மட்டைக்காரர் ஆட்டத்திலிருந்து நீக்கப்படவில்லை; bring to life, மயக்கத்தினின்றும் தெளிவி; cannot for the life of me, என் உயிர் போவதாயிருந்தாலும் முடியாது; cat has nine lives, பூனையைக் கொல்வது கடினம்; come to life, மயக்கத்தினின்றும் தெளிவுபெறு; expectation of life, வருங்கால வாழ்நாள் வாய்ப்பு வளநிலை; for dear life, for one's life, சாகாமல் தப்பித்துக்கொள்ளும் பொருட்டு; here he is as large as life, வேடிக்கையாகக் கூறுமிடத்து அவர் இங்கு நேரில் வந்திருக்கிறார் ; lease for three lives, பெயர் குறிப்பிடப்பட்ட மூவருள் எஞ்சி உயிரோடிருப்பவர் இறந்து போனதும் முடிவு பெறும் குத்தகை; life annuity, ஒருவர் உயிரோடிருக்கும் வரையில் அவருக்கு ஆண்டுதோறும் கொடுக்கப்படும் பணம், வாழ்க்கைப் பணம் ; life assurance, உயிர்காப்புறுதி ; life estate, ஒருவர் தமது வாழ்நாள்காறும் வைத்திருக்கக்கூடிய உடைமை ; Life Guards, பிரிட்டிஷ் படையிலுள்ள இரண்டு குதிரைப்படைப் பகுதிகள் ; life interest, ஒருவர் தம் வாழ்நாள்காறும் வைத்திருக்கக்கூடிய உடைமையில் அவருக்குள்ள வருவாய் உரிமை; life sentence, ஆயுள்தண்டனை low life, கீழ் வகுப்பினரது சமுதாயப் பழக்கங்கள் ; my life, அருமைப்பாட்டைக் குறிக்கும் விளி ; new lease of life, நோய் தீர்ந்து குணமடைந்ததனுல் அல்லதுகவலை நீங்கியதனுல் இனியும் வாழக்கூடிய புது வாய்ப்பு ; portray to the life, மூலத்தினின்றும் வழுவாமல் உருவப்படம் எழுது; உயிர்த்திறம்பட வருணி ; sell one's life dear, sell one's life dearly, கொல்லப்படுவதற்கு முன் தாக்குபவர்களைக் கொல்லு அல்லது காயப்படுத்து; staff of life, உயிர்வாழ்க்கைக்கு ஆதாரப்பொருள்; this life, இம்மை, நிலவுலக வாழ்க்கை.

life'belt, *n.* மிதவைக் கச்சை, இடர்க்காலத்தில் கடலில் நீந்தி மிதக்க உதவும் மிதவைப்பொருளாலான அரைக்கச்சை.

life'-blood, *n.* உயிர்க்குருதி, உயிர் வாழ்வதற்கு வேண்டிய இரத்தம்; வலிவு அல்லது உயிர்ப்புத் தரும் பொருள்; உதடு அல்லது கண்மடல் தானுகவே துடித்தல்.

life'boat, *n.* உயிர்க்காப்புப்படகு, இடரில் உதவும் படகு.

life'-breath, *n.* ஊக்கமூட்டுங் கூறு, வலிமையளிக்குங் கோட்பாடு.

life'buoy, *n.* மிதப்புக் காப்பமைவு, காப்பாற்றப்படுகிறவரை ஆளை நீரில் மிதக்க வைக்கும் அமைவு.

life'-giving, *a.* உயிர்ப்பூட்டுகிற, ஊக்கந்தருகிற.

life'-guard, *n.* மெய்க்காப்பாளர்.

Life'-Guards'man, *n.* பிரிட்டிஷ் படையிலுள்ள இரண்டு குதிரைப்படைப் பகுதிகளைச் சேர்ந்த வீரர்.

life'-jack'et, *n.* நீரில் ஆழாமல் மிதக்க வைக்கும் சட்டை அமைவு.

life'less, *a.* உயிரற்ற ; செத்த ; உணர்ச்சியற்ற ; மரத்துப் போன ; ஊக்கமிழந்த ; கவர்ச்சியற்ற ; சப்பையான.

life'like, *a.* உயிரோட்டமுடைய ; உயிர்க்களையுள்ள ; மூலத்தையொத்த ; மூலத்தின் உயிர்ப்பண்பை அப்படியே எடுத்துக்காட்டுகிற.

life'line, *n.* உயிர்ப்பாதை, உயிர்போன்ற முக்கியத்துவம் உடைய போக்குவரவு நெறி ; உயிர்காப்பதற்காகவென்று மிதவைப் பொருளுடன் கட்டப்பட்டுள்ள கயிறு ; நீர்மூழ்கிசைகை காட்டுவதற்குப் பயன்படுத்தும் கயிறு ; கைவரை நூல் வகையில் ஆயுள்வரை.

life'long, *a.* வாழ்நாள் முழுதும் நீடித்திருக்கிற, நீடித்த காலப் பழக்கமுடைய.

life'-office, *n.* உயிர்க்காப்பீட்டு அலுவலகம்.

life'-preserv'er, *n.* நீரில் மூழ்காமல் காக்கும் அமைவு ; முனையில் பெருஞ்சுமை பொருத்தப்பட்டுள்ள குறுந்தடி.

life'-size, *n.* இயற்கை வடிவளவு; *a.* இயற்கை வடிவளவினதான.

life'-sized, *a.* இயற்கை வடிவளவினதான.

life'-spring, *n.* உயிரூற்று.

life'-strings, *n.* உயிர்நாடி, உயிரோடிருப்பதற்கு இன்றியமையாததெனக் கருதப்படும் நரம்பு ; உயிர் வாழ்வதற்கு மூலாதாரம் ; (தொ.) life-strings are broken, life-strings are cut, ஆள் இறந்துவிட்டார்.

life'-table, *n.* வாழ்க்கை வாய்ப்புவள அட்டவணை, மனிதர்கள் வாழக்கூடிய சராசரி வயதுகள் பற்றிய புள்ளிவிவரங்களைக் காட்டும் அட்டவணை.

life'time, *n.* ஆயுட்காலம், வாழ்நாள் ; உயிரோடிருக்கும் காலம், வாழுங்காலம்.

life'-work, *n.* வாழ்நாட் பணி, வாழ்நாளில் செய்ய ஒருவர் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளும் பணி.

lift, *n.* தூக்குதல் ; மேல் நோக்கி உயர்த்துதல் ; மேலே எழுப்புதல் ; தூக்காற்றல் ; தூக்கும் செவ்வுயரம் ; தூக்கும் கருவி ; பாரந்தூக்கி ; இயங்கேணி, தளங்களிடையே ஏற்ற இறக்கங்களுக்குரிய கருவி ; இயங்கேணிக்குரிய புழைக்கூடு; விமானக் காற்றழுத்தத்தின் செந்தூக்கான ஆற்றல்கூறு ; உயர்வு ; பதவிமேம்பாட்டுப் படி, மேலாக்கப்படி ; உயர்வுதவி, மேம்பாட்டாதரவு ; உந்துகலத்தில் சிறிது தொலைவு ஏற்றிச் செல்லும் உதவி ; *v.* தூக்கு; உயர்த்து; தாங்கியெடு; மேல் தளத்துக்குக் கொண்டுசெல் ; எடுத்துக் கொண்டுசெல் ; திருடி எடுத்துச்செல் ; ஆனிரை கவர் ; தூக்கி நிமிர்த்து, எடுத்து நிற்கவை ; உயர்வுடையதாகக் கொள் ; உயர்த்தப் பெறு ; வீங்கு, புடை ; எழு ; அலையில் மிதந்தெழு ; மகிழ்வூட்டு; அகற்று; அகல், விலகு ; பந்தினை மேல்நோக்கி எறி; உருளைக்கிழங்கினைத் தோண்டி எடு ; (தொ.) dead lift, அசைக்கமுடியாதவாறு மிக்கசுமையுள்ள பொருள் ; give one a lift, ஒருவரைச் சிறுதொலைவு வண்டியில் ஏற்றிக்கொண்டு செல் ; ஒருவருக்குக் கைகொடுத்துதவு ; lift a hand, சிறு முயற்சியேனும் எடுத்துக்கொள் ; lift one's voice, உரத்துக் குரலெழுப்பு ; lift up one's head, நலிவுகடந்து மீள ஊக்கங்கொள் ; lift up one's heel, உதை, உதைகொடு ; lift up one's horn, பேராசைகொள், செருக்குடையவராயிரு ; never lifted a hand against one, அடிக்கக் கையெடுத்ததில்லை.

lig'ament, *n.* (உள்.) விசி, எலும்புகளைப் பிணைக்கும் தசைநார் ; உறுப்புக்களைப் பற்றிப்பிடிக்கும் நரம்பு.

ligate', *v.* (மரு.) அறுவையில் குருதி வடியாமல் குருதி நாளத்தைக் கட்டி இறுக்கு.

lig'ature, *n.* கட்டுமானம், பிணைப்பு ; குருதி வடிவதைத் தடுப்பதற்கோ வீக்கம் தணிப்பதற்கோ உரிய கட்டு ; தளை, கட்டுவதற்குரிய பொருள் ; அறுவையில் குருதிநாளக் கட்டு, முடிச்சு ; அச்சில் எழுத்துக்களின் இணைப்புரு ; (இசை.) சுர விசை இணைப்பு ; *v.* கட்டிழையால் தளை, கட்டி முடிச்சிடு.

lig'er, *n.* 'அரிப்புலி', ஆண்சிங்கத்துடன் பெண்புலி இணைந்த இணைவின் மரபு.

light[1], *n.* ஒளி, வெளிச்சம் ; படரொளி; ஒளிபரப்பு, திறந்த அகல்வெளி ; விளக்கு; விளக்கொளி ; அழல்நா ; விளக்கொளிப்பிழம்பு ; ஒளிதரும் பொருள் ; நெருப்புப்பற்றவைக்க உதவும் பொருள் ; வாணுெளிக்கோளம் ; ஒளிபட்டு மின்னும் பொருள் ; மினுக்கம், மின்னொளி ; பகலொளி, பகல் ; ஒளித்தோற்றம் ; பார்வை, நோக்கு ; கண்பார்வையாற்றல் ; தெளிவு, விளக்கம் ; களை, பொலிவு ; ஒளிக்கூறு ; ஒளிவரும் புழைவழி; பலகணியின் செங்குத்தான கூறு; (சட்.) பலகணி ஒளி வீழ்வு உரிமை ; கலங்கரை விளக்கம் ; கலங்கரை விளக்கத்துக்கான கப்பலின் ஒளிவரி ; ஓவியத்தின் ஒளி வண்ணம் ; படத்தின் பொலிவுக்கூறு ; அறிவொளி ; அறிவு விளக்கம்; ஆய்வுநோக்கு; ஆய்வுநோக்குக் கோணம்; ஆராய்ச்சி ; மெய்யறிவு ; மனத்தெளிவு ; அறிவுவிளக்கத் துணை; அறிவுவிளக்க வழிகாட்டி ; அறிவுவிளக்கப் பண்பு ; வழிகாட்டும் பண்பு ; அருளொளி ; அருளொளி விளக்கம் ; மெய்ஞ்ஞானம் ; தூண்டுரை, தூண்டுகுறிப்பு ; புதிர்விளக்கக் குறிப்பு ; *a.* விளக்கு வசதி செய்யப்பட்ட ; வெளிச்ச மிக்க ; ஒளிச்சாயலான ; வெண்மைகலந்த ; இருண்டிராத ;

வெளிறிய; இளஞ்சாயலான; *v.* ஒளிபொருத்து, ஒளியூட்டு; விளக்குப்பொருத்து; விறகு பற்றவை; தெருவிளக்குகள் ஏற்று; தீப்பற்று; விளக்குப்பற்றிக்கொள்; எரி; ஒளி கொடு; ஒளிவிளக்கஞ் செய்; விளக்கு; முனைப்பாகக் காட்டு; தெளிவுபடக் காட்டு; வழிகாட்டு; களையூட்டு, பொலிவூட்டு; (தொ.) Ancient Lights, சாளரத்தின் வழியாக வரும் ஒளியைப் பக்கத்து வீட்டுக்காரர் கட்டிடமெழுப்பித் தடுக்கக் கூடாதெனத் தெரிவிக்கும் எழுத்தறிவிப்பு; bring to light, கண்டுவெளிப்படுத்து, விளக்கமாக்கு; by the light of nature, சொல்லிக்கொடுக்கப் பெருமலேயே, உள்ளுணர்வினுல்; come to light, வெளிப்படு; வெளிப்படுத்தப்பெறு; in a good light, சாதக நிலையில், நலம் பெருக்கமாகக் காணப்படும்படி; in the light of these facts, இச்செய்திகளின் துணைகொண்டு பார்க்கையில்; light due, light duty, கலங்கரை விளக்கங்களை வைத்துப் பேணுவதற்காகக் கப்பல்கள்மீது விதிக்கப்படும் ஆயம்; light of one's countenance, ஆதரவுத்தோற்றம், ஆதரவான ஒப்புதல்; light of one's eyes, கண்ணில் மணியர்னவர், அருமையானவர்; light up, விளக்கேற்று, வெளிச்சத்தினுல் விளக்கமுறச்செய்; சுருட்டு முதலியவற்றைப் பற்றவை; men of light and leading, தகுதியும் செல்வாக்குமுடையவர்கள்; northern lights, வடமுனை வளரொளி; place thing in a good light, அதை நல்லமுறையாகத் தெரியக்காட்டு; see the light, பிற, தோன்று; shed light upon, விளக்குதற்கு உதவிசெய்; stand in one's light, மறை, நிழலடி; உரிய வாய்ப்புக்களைக்கெடு; strike a light, நெருப்புப் பற்றவை; the light blues, விளையாட்டுப் போட்டிகளில் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகப் பிரதிநிதிகள், கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகப் பிரதிநிதிகள் சார்பினர்; throw light upon, விளக்குதற்கு உதவிசெய்; zodiacal light, ஞாயிறு தோற்றத்துக்கு முன் கிழக்கிலும் ஞாயிறு மறைவுக்குப்பின் மேற்கிலும் சில சமயங்களில் காணப்படும் நெடிய முக்கோணம் போன்ற வான ஒளிப்பரப்பு.

**light[2]**, *a.* மெல்லிய, இலேசான; நயநுட்பம்வாய்ந்த, மெல் இயக்கம் வாய்ந்த; மென்மையான; எடைகுறைவான; பாரமற்ற; அடர்த்தி எண் குறைவாகக்கொண்ட; பளுக்குறைவாகக் கட்டப்பட்ட; சிறிது பளுவுக்காகவே இயன்ற; விரைந்து செல்வதற்காகக் கட்டப்பெற்ற; விரைவியக்கமுடைய; எளிதில் இயங்குகிற; எளிய, எளிதில் செய்யக்கூடிய; எளிதாகத் தாங்கக்கூடிய; எளிமை நலம்வாய்ந்த, நயநேர்த்தியான; அடர்த்தியற்ற, திட்பமற்ற; வலிமையற்ற, உறுதியில்லாத; இன்தேறல் வகையில் செறிவற்ற; துயில் வகையில் நொய்ம்மையுடைய, எளிதில் கலையத்தக்க; கவலையற்ற; மகிழ்ச்சியுடைய, கிளர்வூக்கமுடைய; கிளர்ச்சி தருகிற; முக்கியத்துவமற்ற, சிறுதிறமான, அற்பமான; ஆழ்ந்து கவனிக்கவேண்டியிராத; ஆழ்ந்து கவனியாத; யோசனையற்ற; விளையாட்டுத்தனமிக்க; கேலித்தனம் வாய்ந்த; கேலிக்கு இலக்கான; வேடிக்கையே நோக்கமாகக் கொண்ட; ஒழுக்கம் புறக்கணிக்கிற; கற்புறுதியில்லாத; அடிக்கடி மாறும் இயல்புடைய; *adv.* மெள்ள; எளிதாக; (தொ.) light come light go, எளிதில் வந்தது எளிதில் போய்விடும், தேடாச் செல்வம் பாடாய் முடியும்; light engine, இருப்பூர்தித் தொடர்வண்டி இணைக்கப்பெருத இழுபொறி; light fingers, கைதேர்ந்த திறம்; light hand, நுண்திறச் செயலாண்மை; light heavyweight, 161 கல்லெடைக்குக் குறையாத அல்லது 175 கல்லெடைக்கு மேற்படாத எடையுள்ள குத்துச்சண்டை வீரர்; light marching order, (படை.) விரைவாகக் கொண்டுபோகப்படும் தளவாளங்களுடன் செல்கை; light railway, எளிதான கட்டமைப்பு வாய்ந்த இருப்பூர்திப் பாதை; light ship, சரக்கு இறக்கப்பட்ட கப்பல்; light waterline, சரக்கு இறக்கப்பட்ட கப்பலின் நீர்வரை; make light of, இளப்பமாகக் கருது, ஒரு பொருட்டாக மதியாதிரு; with a light heart, கிளர்ச்சியுடன், கவலையில்லாமல், மனவருத்தமின்றி.

**light[3]**, *v.* (கப்.) கயிறு முதலியவற்றை நெடுகத்தூக்கு, கயிறு முதலியவற்றை இழுப்பதிற் கைகொடு; நேர், தற்செயலாக நிகழ்; கீழே இறங்கு.

**light'-armed**, *a.* பளுக்குறைவான படைக்கலங்களும் தளவாடங்களும் தாங்கிய.

**light'-bob**, *n.* எளிதான அமைப்புடைய காலாட்படையைச் சேர்ந்த வீரர்.

**light'en[1]**, *v.* பளுக் குறை; கப்பலின் பாரத்தைக் குறை; கப்பல் வகையில் பாரம் குறைவாக்கப்பெறு; உள்ளத்தின் கவலை தவிர்; கிளர்ச்சியூட்டு; உளத்தின் வகையில் கவலை தீரப்பெறு, கிளர்ச்சிகொள்; தணியச்செய்; தணிவுறு.

**light'en[2]**, *v.* ஒளிகாலு; ஒளிர்வி; ஒளிர்; பொலிவுறு; சுடர் வீசு; மின்னு, மின்னலிடு.

**light'ening**, *n.* ஒளிகாலுதல்; ஒளிரப்பண்ணுதல்; மலர்தல்; மின்னுதல்.

**light'er[1]**, *n.* விளக்கேற்றுபவர்; தீக்கொளுவும் பொருள், பூஞ்சுருட்டு முதலியவற்றைப் பற்றவைப்பதற்கான தன்னியக்கமுடைய அமைவு.

**light'er[2]**, *n.* வள்ளம், சலங்கு, நாவாய்க்குறடுக்கு வராத கப்பல்களிலிருந்து சரக்கிறக்கவும் அவைகளில் சரக்கேற்றவும் துறைமுகத்தில் சரக்குகளை அங்குமிங்கும் கொண்டுபோகவும் பயன்படுத்தப்படும் தட்டை அடிப்பாகமுடைய படகு; *v.* சரக்குகளை வள்ளத்திலேற்றிக் கொண்டுபோ.

**light'er[3]**, *a.* light[2] என்பதன் உறழ்படி.

**light'-fing'ered**, *a.* கள்ளத்தனமான.

**light'foot**, *a.* விரைந்துசெல்லும் இயல்புடைய, விரைவெளிமையுடைய.

**light'-head'ed**, *a.* தலைசுற்றுகிற, தலைக்கறக்கமுடைய.

**light'-heart'ed**, *a.* மனச்சுமையற்ற; களிப்பான; கவலையில்லாத; ஆழ்ந்த சிந்தனையற்ற; ஆய்ந்த...மவில்லாத.

**light'house**, *n.* கலங்கரை விளக்கம்.

**light'ish[1]**, *a.* சற்றே வெளிச்சமுள்ள.

**light'ish[2]**, *a.* சற்றே இலேசான.

**light'-minded**, *a.* நெஞ்சுரம் இல்லாத.

**light'ness**, *n.* நொய்ம்மை, கனமின்மை; கவலையின்மை; அகமகிழ்வு; ஒழுக்கக்கட்டின்மை.

**light'ning**, *n.* மின்னல்; (தொ.) chain lightning, chained lightning, forked lightning, வளைந்து வளைந்து கவர்விட்டுச் செல்லும் மின்னல்; heat lightning, summer lightning, எங்கேயோ மழை பெய்வதன் விளைவாக இடியோசையின்றிப் பரவலாக ஒளிவீசும் மின்வெட்டு; lightning strike, மின்வெட்டு வேலைநிறுத்தம், குறுகியகால அறிவிப்புடன் திடீரெனத் தொழிலாளர் செய்யும் வேலைநிறுத்தம்; sheet lightning, பரவலாக ஒளிவீசும் மின்வெட்டு.

**light'ning-conduc'tor, light'ning-rod**, *n.* துலிகை, இடிதாங்கி.

**light'-o'-love**, *n.* வம்பப் பெண்டிர், பொதுமகள்.

**lights[1]**, *n. pl.* விளக்கக் கூறுகள்; கண்டுபிடிப்புகள்; அறிவுத்திறங்கள்.

**lights[2]**, *n. pl.* பூனைகளுக்கும் நாய்களுக்கும் உணவாகப் பயன்படுத்தப்படும் ஆடு-எருது-பன்றி முதலியவற்றின் நுரையீரல்கள்.

**light'ship**, *n.* விளக்குக்கப்பல், அவிரொளிகள் தாங்கிக் கலங்கரை விளக்கமாகப் பயன்படும் கப்பல்.

**light'-skirts**, *n.* ஒழுக்கங்கெட்ட பெண்.

**light'some**, *a.* மலர்ந்த தோற்றமுடைய, கவலையற்ற, களிப்பான; விரைவியக்கமுடைய.

**light'weight**, *n.* சராசரி எடைக்குக் குறைவான எடையுள்ள மனிதர் அல்லது விலங்கு; குத்துச்சண்டைத் துறையில் 126 கல்லெடைக்கும் 135 கல்லெடைக்கும் இடைப்பட்ட கனமுடையவர்; *a.* சராசரி எடைக்குக் குறைந்த எடையுள்ள.

**light'wood**, *n.* ஒளிர்கொழுந்து விட்டெரியும் இலேசான கட்டையுடைய மரவகை.

**lign-al'oes,** *n.* கரியபோளம், கற்றுழை வகையிலிருந்து பெறப் படும் மருத்துச் சரக்கு; மெக்சிகோ (Mexico) நாட்டுக் கற்றுழை வகையின் நறுமணக் கட்டை.

**lig'neous,** *a.* அகக்காழான், செடியினத்தின் வகையில் உட் கட்டைப் பகுதியினையுடைய.

**lignif'erous,** *a.* மரவகையில் உட்கட்டைப்பகுதி விளை விக்கிற.

**lig'niform,** *a.* மரத்தின் உட்கட்டை வடிவான.

**lig'nify,** *v.* மரத்தில் உட்கட்டையாக்கு.

**lig'nite,** *n.* பழுப்பு நிலக்கரி, மர உட்கட்டை அமைப்பினை உடைய பழுப்பு நிறமான நிலக்கரி வகை.

**lig'num vit'ae,** *n.* மேற்கிந்தியத் தீவுகளின் புதர்ச்செடி வகைகளின் கட்டை.

**lig'ulate,** *a.* (தாவ.) நாக்கு வடிவமான; இழைக்கச்சையுரு வான; சிலிர்களையுடைய.

**like[1],** *n.* சரிநேர்ப்பொருள்; சரிநேர் ஆள்; குழிப்பந்தாட்ட வகையில் ஒவ்வொரு கட்சியினரும் ஆடிய வீச்சுக்களின் எண்ணிக்கையைச் சமப்படுத்தும் வீச்சு; ஒத்த வகைப் பொருள்; ஒத்தவகைப் பொருள்கள்; *a.* ஒத்தமாதிரியான; போலிருக்கிற; ஒத்த இயல்புடைய; மூலத்தையொத்த; ஒன்றையொன்று ஒத்திருக்கிற; (கண.) ஒத்த ஓரினமான; ஒரே வகையைச் சேர்ந்த; தனிச்சிறப்பியல்புக்கொத்த; தனிப் பண்பாயிருக்கிற; நம்பிக்கையூட்டும் நிலையிலிருக்கிற; வாய்ப் பான நிலையிலுள்ள; *prep.* அந்தவிதமாக; அதே அளவுக்கு; (தொ.) and the like, முதலியவை; like a shot, மறுப்பின்றி, விருப்பமுடன், விளைவைக்கருதாமல்; like blazes, மும்முர மாகப் பாய்ந்து; like fun, விரைவாக; ஊக்கத்துடன்; மிகுதியாய்; like mad, மூர்க்கமாக, வல்லந்தமாக; like master like man, முதல்வர் எப்படியோ அப்படியே பணி யாளும்; look like, போன்ற தோற்றமுடையதாயிரு.

**like[2],** *v.* விரும்பு, உகந்ததாகக் கருது, நாட்டங்கொள், ஈடு பட்டு மகிழ்.

**like'lihood,** *n.* நிகழ்வியல்வு, ஒன்று நிகழ்வதற்கான சாத் தியக்கூறு, நிகழத்தக்கநிலை.

**like'ly,** *a.* பெரும்பாலும் நேரக்கூடிய, நிகழும் சாத்தியக் கூறுடைய; உண்மையாயிருக்கக்கூடிய; ஆயிருக்கக்கூடிய; எதிர்பார்க்கப்படுகிற; பொருத்தமானதுபோல் தோன்றுகிற; செய்யத்தக்கவர்போல் தோன்றுகிற; *adv.* பெரும்பாலும், நிகழும் சாத்தியக்கூறுடையதாக, நம்பக்கூடியதாக.

**like'-mind'ed,** *a.* ஒத்தநோக்கம் உடைய; ஒத்த சுவை யுணர்ச்சி உடைய.

**lik'en,** *v.* ஒப்பிடு; ஒப்பிட்டுக்கூறு; ஒப்புடையதாகக் காட்டு.

**like'ness,** *n.* போன்றிருக்கும் தன்மை, ஒத்த தன்மை, ஒப்பு; ஒப்புமை; ஒத்தபடிவம்; ஒப்புரு; ஒத்த தோற்றம், சாயல்; உருவொத்தபடம்; ஓவியப்படம்; (தொ.) take one's likeness, உருவப்படமெழுது.

**likes[1],** *n. pl.* சரிநேர்ப் பொருள்கள் அல்லது ஆட்கள், ஒத்த பொருள்கள் அல்லது ஆட்கள்.

**likes[2],** *n. pl.* பிடித்தமானவைகள், விருப்பமானவைகள், முன் சார்பு நிலைகள்; (தொ.) likes and dislikes, விருப்புவெறுப் புக்கள், வேண்டியவை வேண்டாதவை.

**like'wise,** *adv.* இதுபோலவே; மேலும், இன்னும்; *conj.* இதுபோலவே.

**li'kin',** (சீனம்.) *n.* சீனுவில் மாவட்ட இடப்பெயர்வு வரி.

**lik'ing,** *n.* விருப்பம், தனிப்பற்று, பற்றவா, நாட்டம்; மகிழ்வு ஈடுபாடு, சுவைத்திறப் பற்று.

**lil'ac,** *n.* நறுமண மலர்ப்புதர்ச் செடிவகை; இளஞ்சிவப்பு நிறம்; *a.* இளஞ்சிவப்பான.

**lilia'ceous,** *a.* அல்லிமலர்ச் செடியினஞ் சார்ந்த.

**Lillipu'tian,** *n.* லிலிபுட் என்ற கற்பனை நாடு சார்ந்தவர்; குள்ளர்; *a.* லிலிபுட் என்ற கற்பனை நாடு சார்ந்த; மிகு குள்ள மான, மிகச் சிற்றுருவுடைய.

**lilt,** *n.* சந்தப்பாடல், இசைப்பாடல்; *v.* இசைத்துப் பாடு, சந்தமுடன் பாடு.

**lil'y,** *n.* அல்லிமலர்; தூவெண் மேனியர்; தூவெண்ணிற முடையது; தூய்மையுடையவர்; தூய்மையுடையது; வெண்ணிற மரபுரிமை மலர்ச்சின்னம்; மென்மையான வெள்ளை நிறம்; (தொ.) lilies and roses, தூவெண் மேனி நிறம்; lily of the valley, மணிவடிவ வெண்மலர்க்கொத்தும் இருபேரிலைகளையும் உடைய இளவேனில் மலர்ச்செடி வகை; the lilies, பழைய பிரஞ்சு அரசின் மரபுரிமைச் சின்னம்; பிரஞ்சு நாட்டுப் பூர்பன் (Bourbon) மரபுவழி.

**lil'y-iron,** *n.* கழற்றக்கூடிய முகப்புடைய மீனெறி வேல், சுழலும் எறி ஈட்டி வகை.

**lily'-liv'ered,** *a.* கோழைத்தனமான.

**lil'y-white,** *a.* அல்லிமலர் போன்ற தூய வெண்ணிற முடைய.

**limb[1],** *n.* சினை, பக்க உறுப்பு; கைகால் அல்லது சிறகு; கொப்பு, பெருங்கிளை; சிலுவைக் கை; வாசகக் கூறு; மலை யின் பக்கக்கிளை; *v.* உறுப்பு அகற்று; உடல் முண்ட மாக்கு; முடமாக்கு; செயலற்றவராக்கு; (தொ.) escape with life and limb, ஊறுபாடு மிகுதியில்லாமல் தப்பித்துக் கொள்; limb of the devil, limb of satan, குறும்புக் குழந்தை; limb of the law, வழக்குரைஞர்; ஊர்க்காவலர்; out on a limb, உறுப்பு வகையில் பேரிடர் நிலைப்படு.

**limb[2],** *n.* மேற்பரப்பின் விளிம்பு; கோணமானி முதலிய வற்றின் அளவு குறிக்கப்பட்ட ஓரம்; வெங்கதிர் தண்கதிர் மண்டிலங்களின் ஓரம்; அல்லிவட்டம் புல்லிவட்டம் இலை ஆகியவற்றின் இதழ்ப்பகுதி.

**lim'bate,** *a.* (உயி., தாவ.) தெளிவாக வேறுபடுத்தப்பட்ட ஓர எல்லைகளையுடைய; வண்ண வேறுபாடுடைய விளிம் பெண்களையுடைய.

**lim'bec,** *n.* = alembic.

**lim'ber[1],** *n.* பீரங்கி வண்டியின் கழற்றக்கூடிய முன்பகுதி; *v.* பீரங்கி வண்டியின் முன்பகுதியைப் பீரங்கியோடு சேர், பீரங்கி வண்டியின் இரு பகுதிகளையும் இணைத்துப் பூட்டு.

**lim'ber[2],** *n.* (கப்.) இறைப்புக்குழாய்க் கிடங்குக்குக் கழிவு நீர் செல்வதற்காக தளக்கட்டைப் பலகையில் வெட்டப்பட்ட துளைகளுள் ஒன்று.

**lim'ber[3],** *a.* எளிதில் வளையக்கூடிய, துவளத்தக்க; *v.* வளையும்படி செய், துவளச்செய்; இளக்கமாகும்படி செய்.

**lim'bo,** *n.* புறநரகு, இயேசுநாதர் பிறப்புக்கு முன் வாழ்ந்த நல்லோரும் ஞானஸ்நானம் பெறாத குழந்தைகளும் செல்லுவ தாகக் கூறப்படும் நரகச் சுற்றுப்புறப்பகுதி; சிறைச்சாலை; சிறைக்காவல்; புறக்கணிக்கப்பட்ட நிலை; மறக்கப்பட்ட நிலை; முழுமறதி; *pl.* lim'bos.

**lime[1],** *n.* சுண்ணாம்பு; சுண்ணநீறு; சுண்ணக உயிரகை; பறவைகளைப் பிடிப்பவர் பயன்படுத்தும் பட்டைப்பசை; *v.* தோலைச் சுண்ணநீரில் இட்டு ஊறுபதஞ் செய்; கிளைகளில் பட்டைப் பசைவைத்துப் பறவைகளைப் பிடி; பட்டைப்பசை தேய்; (தொ.) slaked lime, சுண்ணநீர்க் கலவை.

**lime[2],** *n.* எலுமிச்சம் பழம்; எலுமிச்சை.

**lime[3],** *n.* அழகொப்பனைக்குரிய இருதய வடிவ இலைகளும் சிறு நறுமண இளமஞ்சள் வண்ண மலர்களுமுள்ள மரவகை.

**lime'-burner,** *n.* சுண்ணம் செய்பவர், சுண்ணாம்புக்கல்லை எரித்துச் சுண்ணம் உண்டாக்குபவர்.

**lime'-cast,** *n.* கட்டிடத்தின் சுண்ண மேற்பூச்சுப் பாளம்.

**lime'-juice,** *n.* எலுமிச்சம்பழப் பிழிவு; எலுமிச்சைச் சாற்றுக் குடிமம்; சொறி-கரப்பான் மருந்தாகப் பயன்படும் எலுமிச்சம் பழச்சாறு.

**lime'kiln,** *n.* சுண்ணாம்புக் காளவாய், சுண்ணாம்புச் சூளை.

**lime'light,** *n.* வெள்ளொளி, தீயகமும் நீரகமும் கலந்துருவான சுடரொளி; (தொ.) the limelight, முழு ஒளிவிளக்கப் பலரறி நிலை, பட்டாங்க நிலை.

lim'en, *n.* (உள.) தூண்டுதலுணர்ச்சி புலப்படாக் கீழ் எல்லை; உணர்ச்சியைத் தோற்றுவிப்பதற்குத் தேவையான நரம்புக்கிளர்ச்சியின் மிகக்குறைந்த அளவு.

lime'-pit, *n.* மயிரை நீக்குவதற்காக விலங்கின் தோல்களை ஊறவைக்கும் குழி.

lim'erick, *n.* வெற்று வேடிக்கைப்பாட்டு.

lime'-stone, *n.* சுண்ணும்புக் கற்பாறை வகை; சுண்ணும்புக்கல்; உரமாகப் பயன்படும் சுண்ணக் கரியகை.

lime'-tree, *n.*=lime[3].

lime'-twig, *n.* பறவைப்பிடிப்புப் பசை பூசப்பட்ட கிளை.

lime'-wort, *n.* மூலிகைச் செடிவகை.

lim'it, *n.* வரம்பு, எல்லைக்கோடு; எல்லைக்கோடிமுனை; கடத்தலாகாத எல்லை, கடக்கக்கூடாத வரம்பு; *v.* வரம்புக் குட்படுத்து, வரையறு; கட்டுப்படுத்து; எல்லை ஏற்படுத்து; மட்டுப்படுத்து; (தொ.) inferior limit, கீழ் எல்லை, அணிமை வரம்பு, சிற்றெல்லை; limited company, வரைநிலைக் கழகம்; limited monarchy, அரசியலமைப்புக்குக் கட்டுப்பட்ட முடியரசு; limit man, ஓட்டப்பந்தயத்தில் மிகமிக நீண்ட தொடக்கச் சலுகை பெற்ற மனிதன்; superior limit, பேரெல்லை, உச்சவரம்பு; without limit, எல்லையற்ற; அளவற்ற, வரையறையில்லாத.

limitar'ian, *n.* மனித இனத்தில் வரையறை செய்யப்பட்ட ஒருபகுதி மட்டும் மீட்புப்பெறும் என்னும் கோட்பாட்டாளர்.

lim'itary, *a.* கட்டுப்பாட்டுக்குட்படுத்தப்பட்ட; எல்லை சார்ந்த, எல்லைக்குட்பட்டுள்ள; எல்லைகளாகச் செயற்படுகிற; வரம்பாகப் பயன்படுகிற.

limita'tion, *n.* கட்டுப்படுத்தல்; கட்டுப்பாடு; கட்டுப்பாட்டு விதி; குறைபாடு; எல்லை வரையறை; சூழல் கட்டுப்பாடு; சட்டக்கால எல்லை; உரிமைத்தவணை எல்லை; (தொ.) statute of limitations, செயலாட்சியைக் கால வரையறைப் படுத்தும் சட்டம்.

lim'itrophe, *a.* எல்லையை அடுத்துள்ள.

limn, *v.* வண்ணப்படம் எழுது; தீட்டு, வரை.

limnol'ogy, *n.* ஏரிகளின் புறநிலை இயல்பாராய்ச்சி; குளவாழ்வு உயிரினங்கள் பற்றிய ஆய்வு.

lim'ousine, *n.* மூடிய பொறிவண்டி.

limp[1], *n.* நொண்டுநடை; *v.* நொண்டி நட; சேதமடைந்த ஊர்தி வகையில் தட்டுத்தடங்கலுடன் செல்; செய்யுள் வகையில் முட்டுப்பட்டுச்செல்.

limp[2], *a.* மடிவான; வளைகின்ற; கெட்டியில்லாத, உறுதியற்ற; எளிதில் வளையக்கூடிய; புத்தக அட்டை வகையில் விறைப்பாக நிற்காத; சோர்வுவாய்ந்த, ஊக்கமில்லாத, தன் வலுவற்ற.

lim'pet, *n.* பாறையில் ஒட்டிவாழும் ஒட்டுச்சிப்பி; நத்தையின வகை; (தொ.) limpet mine, கப்பலின் அடிப்புறத்தில் பொருத்தப்பட்ட கடற்கண்ணி.

lim'pid, *a.* தெளிவான, துலக்கமான; ஒளிசெல்லவிடுகின்ற; தூய, கலங்கலில்லாத.

limp'kin, *n.* நாரை இனப் பறவை வகை.

limp'-wort, *n.*=lime-wort.

lin'age, *n.* வரிமானம், அச்சிடப்பட்ட வரி எண்ணிக்கை; வரிமானக் கூலிக்கட்டணம்.

linch'pin, *n.* கடையாணி, சக்கரக் காப்பாணி.

Lin'coln green, *n.* பச்சைவண்ணத் துணிவகை.

lin'den, *n.* எலுமிச்சையின மரம், அழகொப்பனைக்குரிய இருதய வடிவ இலைகளும் சிறு நறுமண இளமஞ்சள் வண்ண மலர்களுமுள்ள மரவகை.

line[1], *n.* வரை, கோடு; வரம்பு, எல்லைக்கோடு; வரிசை; படை அணிநிரை; அகழி; மடிப்புவரை; அடையாளக் கோடு; திரைப்பு, சுரிப்பு வரி; முகத்தோற்றம்; ஒளிக் கீற்று; கீற்று வரி; ஏட்டின் வரி; பாவின் அடி; செய்யுள்; சுருக்கக்குறிப்பு; சிறுசடிதம்; வாணிகக்கட்டளை; கட்டளைச் சரக்கு; நூல், இழை, கயிறு; கயிற்றுத் துண்டு; ஆழம் பார்க்கும் குண்டுநூல்; அளவு இழைக்கச்சை; தூண்டில்; துணி தொங்கவிடும் கொடிக்கயிறு; வழிகாட்டும் கயிறு; வழியறிவிப்புக் கோடு; கம்பி; தந்திக்கம்பி; கம்பிவடம்; தந்திப்பாதை; வழி; போக்கு; திசை; நடைமுறை; நெறி; ஒழுங்கு; ஒழுங்குமுறை; விதி; படித்தரம்; தொகுப்பு, கோப்புத் தொகுதி, கோவை; தொடர்; குடும்பக் கால்வழி; மரபு; வழிமரபு; மரபுவரிசை; துறை; கூறு; தொழில் முறை; வாணிகத்துறைச் சரக்கு; வாழ்க்கைத் துறை; விருப்பத் துறை; ஆற்றல் பாங்கு; கைவரை; அங்குலத்தில் பன்னிரண்டில் ஒரு பங்கான நுண்ணளவை, நுண்கூறலகு; தொலைக்காட்சியில் பக்கவாட்டில் கீற்று கீற்முக எடுக்கும் நிழற்காட்சிக் கூறுகளில் ஒன்று; *v.* கோடிடு; வரிவரியாயிரு, வரியிட்டு நிரப்பு; வரியிட்டுக் குறி; கோடிட்டு அடி; வரிசைப்படுத்து; வரிசைப்படு; வரிசையாக உருவாக்கு; வரியாக உருவாகு; படைக்காவல் வை; காவல்நிலைகளில் நிறுத்து; வரிசையில் நில்; சம எடையில் நில்; ஒழுங்கு முறையில் அமைந்திரு; பாடலை அடியடியாகப் பாடும்படி வழங்கு; (தொ.) all along the line, இடந்தவருமல், எங்கணும்; தொடர்ந்து, ஓயாது, இடைவிடாது; bring into line, ஒத்துக்கொள்ளும்படி செய்வி; இணக்குவி; இசைவி; by rule and line, துல்லியமாக, மயிரிழைகூடப் பிசகாமல்; come into line, ஒப்புக்கொள்; உடன் ஒத்துழை; இணங்கு, இசை; down line, இருப்புப்பாதையின் தலைமை இடத்திலிருந்து; give one line enough, விட்டுப்பிடி, போகிறவழி செல்லவிட்டுப் பின்னுல் ஒருவரைக் கையுங்களவுமாகப்பிடி; hard lines, அவப்பேறு, அதிட்டக்கேடு; கொடுமை; line abreast, அருகருகாக; (கப்.) பக்கத்துக்குப் பக்கமாக நேர்வரிசையில்; line ahead, (கப்.) நூலிழைபோல முன்செல்லும் வரிசை; line of beauty, எதிரெதிராக வளையும் கோடு, அழகுப்பாம்பு வளைவு; line of fortune, உள்ளங்கை செல்வக் குறியீட்டுவரை; line of life, அகங்கை ஆயுள் வரை; line through, கோடிட்டு அழி; one's line of country, தனிப்பட்ட விருப்பாராய்வுக்குரிய துறை; on the line, இரண்டின் இடைப்பட்ட எல்லைக்கோட்டில்; picture hung on the line, பார்வையாளரின் கண்ணளவில் மையத்தைக் கொண்டுள்ள காட்சிப்படம்; read between the lines, எழுத்தின் புறம்பாக ஊகித்துக்கொள், மறைந்துகிடக்கும் பொருளை அறி; the Line, நில நடுக்கோடு; the line, (படை.) நிலையான எண்ணிக்கையிடப்பட்ட படைப்பகுதிகள்; toe the line, கட்சித் திட்டத்தை ஏற்றுக்கொள்; up line, தலைமையிடம் நோக்கி.

line[2], *n.* சணல் கூளத்திலிருந்து பிரிக்கப்பட்ட மெல்லிய நீண்ட சணல் நூல்.

line[3], *v.* பை வகையில் உட்புற உறையணி; பெட்டி முதலியவற்றின் உட்புறம் பொதி; ஆடைக்கு உள்வரி இணை; பை, வயிறு முதலியவற்றின் வகையில் உட்புறம் நிரப்பு; உள்வரியாயமைலு.

line[4], *v.* நாய் முதலியவற்றின் வகையில் பெடையுடன் பிணைவுறு.

lin'eage, *n.* வழிமரபு, மரபுவழி; கால்வழி.

lin'eal, *a.* நேர் மரபுவழி சார்ந்த; நேர்கோட்டுக்குரிய; நேர் வரைகளாலான; கோட்டின் திசையான.

lin'eaments, *n. pl.* தனிச் சிறப்புக்கூறுகள்; தோற்ற அமைதி.

lin'ear, *a.* வரிபற்றிய; கோடுகள் அடங்கிய; நேரான; நீளமான; (கண., இய.) நீட்டலளவை சார்ந்த; ஒரே அளவாக ஒடுங்கி நீண்ட; (தொ.) linear A, கிரீட் (Crete) தீவில் அகழ்ந்தாய்வில் கண்டெடுக்கப்பட்ட புலன் விளக்கம் பெருத தொல்பழங்கால வரிவடிவ வகை; linear B, மிகத் தொல்பழங்காலக் கிரேக்க மொழி சார்ந்த வரிவடிவாகக் கருதப்படும் மினோவ (Minoan) நாகரிக வரிவடிவ வகை; linear equation, (கண.) ஒருபடிச் சமன்பாடு.

linea'tion, *n.* கோடுகள் வரைதல்; கோடுகளால் குறியிடுதல்; கோடுகளாலான அமைப்பு.

line'-drawing, *n.* மைக்கோல் அல்லது கரிக்கோல் கொண்டு வரையும் வரைபடம்.

line'-engraving, *n.* வரி உருப்படம், கூரிய வரிக்கோடுகளால் ஆன படம்.

line'-filling, *n.* கையெழுத்துப்படியில் வெறுமையான இடத்தில் அழகொப்பனையான கீற்று.

line'-firing, *n.* அணிவரிசையில் நிற்பவர் ஒருமுக வேட்டு.

line'man, *n.* வரிசைக் காவலர், கம்பி முதலியவற்றைப் பழுது பார்த்துப் பேண வேண்டிய பொறுப்புடையவர்.

lin'en, *n.* நாரால் செய்யப்பட்ட துணி; நார்மடி, சில்லறைத் துணிமணி; (தொ.) wash one's dirty linen at home, வீட்டு அழுக்குமூட்டைகளை வெளிக்குக் கொண்டுவராதிரு; wash one's dirty linen in public, வீட்டுக் குப்பைகளை வெளியே கொண்டுவந்து கிளறு.

lin'en-draper, *n.* நார்மடி முதலியவற்றில் வாணிகஞ் செய்பவர்.

lin'en-fold, *n.* நார்மடிச் சுருள் போன்று செதுக்கப்பட்ட அணிகலன்.

lin'er[1], *n.* பீரங்கி-இயந்திரம் ஆகியவற்றில் சுழற்றக்கூடிய உள்வரி உலோகக் காப்புறை.

lin'er[2], *n.* பயண நீராவிக்கப்பல்; பயண வானூர்தி.

liner[3], *n.* புருவ மை எழுதுவதற்கான வண்ணப்பொருள்.

lines, *n. pl.* பாடல்; நடிப்புப் பகுதி; ஊழ்வாய்ப்புக் கூறு, ஊழ்வகுப்பு; உருவரைக் கோடு; குடிசை வரிசை; அரண் வரிசை; திருமணச் சான்றிதழ்; கப்பல் முதலியவற்றின் வகையில் கட்டுமான அமைப்புத்திட்டம்.

lines'man, *n.* நிலைப்படைப் பிரிவின் வீரன்; பந்தாட்ட நடுவரின் துணைச்சான்றாளர்.

line'-work, *n.* மைக்கோல் தீட்டுமானம்; கரிக்கோல்தீட்டுமானம்; மைக்கோல் படம்; கரிக்கோல் படம்.

ling[1], *n.* பதன உணவாகப் பயன்படுத்தப்படும் நீண்ட மெல்லிய வடஐரோப்பியக் கடல்மீன் வகை.

ling[2], *n.* புதர்ச்செடி வகை.

ling'a, ling'am, *n.* (ச.) இலிங்கம்.

ling'er, *v.* தயங்கி நில், சுணங்கு, சுற்றி வட்டமிட்டுத் தயங்கு; நேரந்தாழ்த்திக்கொண்டிரு; புறப்படாமல் காலங் கடத்து; நோய்வகையில் போகாது நீடித்திரு; சாவாது நீடி; அரை உயிராய்க் காலங்கழி.

*lingerie*, (பிர.) *n.* நார்மடித்துணிமணி; நார்மடித்துணிமணிச் சேமத்தொகுதி; பெண்களின் உள்ளுடைத் தொகுதி.

ling'o, *n.* புரியா அயல்மொழி, குழு வழக்குமொழி, தனி வழக்குமொழி; குழூஉக்குறி வழக்கு.

ling'ua franc'a, *n.* கீழை நடுநிலக்கடற் பகுதியில் வழங்கும் கலப்பு மொழி; இடையீட்டுப் பொதுமொழி; இடையீட்டுப் பொதுக்கருத்துப் பண்பு.

ling'ual, *n.* ட, ண போன்று நாவிடைப் பிறக்கும் ஒலி; *a.* (உள்.) நாவினைச் சார்ந்த; ஒலிமுறை நூல் வகையில் நாவினால் உருவாகின்ற; பேச்சுக்குரிய; மொழி சார்ந்த.

ling'uiform, *a.* (தாவ., உள்., வில.) நா வடிவுடைய.

ling'uist, *n.* அயல்மொழி வல்லார்; பன்மொழியறிஞர்.

linguis'tic, *a.* மொழி நூலாராய்ச்சி சார்ந்த; மொழி சார்ந்த.

linguis'tics, *n. pl.* மொழியியல்.

ling'ulate, *a.* நா வடிவுள்ள.

ling'uoden'tal, *a.* நாப்பல் ஒலிப்புடைய.

lin'hay, *n.* பண்ணையின் திறந்த முகப்புக் கொட்டகை.

lin'iment, *n.* தேய்ப்புத்தைலம் முதலிய கில்வாத நோய்க்குரிய பூச்சுத் தைல மருந்து.

lin'ing, *n.* உள்வரிப் பூச்சு; உள்வரித் துணி, அணைசீலை; அக உறை.

link[1], *n.* கண்ணி, சங்கிலியின் தனி வளையம்; கண்ணியிழை, துன்னலிழையின் தனிப்பின்னல் இணைப்பு; தொடர் கோவையின் தனி உறுப்பு; கொக்கி, கொளுவி, இடையிணைப்புக் கருவி; இடையிணைப்புப் பொருள்; இடை இணைப்பாளர்; இடைநிரப்பீடு; நில அளவையில் ஏறத்தாழ 8 அங்குலமுள்ள நீட்டலளவைக் கூறு; *v.* கொக்கியால் பொருத்து, இடையில் சேர்த்திணை; ஒன்று சேர், ஒட்ட வை; கைகளைக் கோத்துக் கொள்; பற்றிப்பிடி; பிணை.

link[2], *n.* பழங்காலத் தீவட்டி, கிலும் சணற் கூளமும் சேர்த்து செய்யப்பட்ட தீப்பந்தம்.

link'boy, *n.* தீப்பந்தந் தூக்குஞ் சிறுவன்.

linked, *a.* இணைக்கப்பட்ட; (தொ.) linked battalions, தாயகத்தில் ஒன்றும் அயலகத்தில் ஒன்றுமாக இணைக்கப்பட்ட படைப்பிரிவுகள்.

links, *n. pl.* கடலோரக் கரையிலுள்ள மணற்பாங்கான புற்றரை; குழிப்பந்தாட்டக் களம்.

linn, *n.* நீர்விழ்ச்சி; அருவிப்பள்ளம்; கொடும்பாறை.

Linnae'an, Linne'an, *n.* லின்னேயஸ் (Linnaeus) என்னும் உயிரியல் அறிஞரைப் பின்பற்றுபவர்; லின்னேயஸ் வகுத்த பாகுபாட்டு அமைப்பைப் பின்பற்றுபவர்; *a.* லின்னேயஸின் அமைப்பு முறையைப் பின்பற்றுகிற.

linn'et, *n.* பழுப்புநிற இசைப்பறவை வகை.

linn'ey, linn'y, *n.*=linhay.

lin'ocut, *n.* மெழுகுத்துணி போர்த்த பலகையில் பொறிக்கப்படும் புடைப்பகழ்வுச் சித்திரம்; மெழுகுத்துணிக் கட்டைப் புடைப்பகழ்வு அச்சு.

linol'eum, *n.* மெருகிட்ட மெழுகுத்துணி வகை.

lin'otype, *n.* வரி உருக்கச்சுப் பொறி, அச்சுருக் கோப்பு இல்லாமலே எழுத்துருக்களை வரிப்பாளங்களாக உருக்கிவார்த்து அடிக்கும் அச்சுப்பொறி.

lin'sang, *n.* கிழக்கிந்திய தீவுகளிலுள்ள புனுகுப்பூனை வகை.

lin'seed, *n.* ஆளிவிதை; (தொ.) linseed cake, ஆளிவிதைப் பிண்ணாக்கு; linseed meal, ஆளிவிதை மாவு; linseed oil, ஆளிவிதை எண்ணெய்; linseed poultice, வீக்கத்திற்குப் பயன்படுத்தும் ஆளிவிதை மாவுத்துணிக் கட்டுமானம்.

lin'sey-wool'sey, *n.* கம்பளியும் நூலும் சேர்ந்து நெய்த பருக்கன் ஆடைத்துணி வகை.

lin'stock, *n.* (வர.) பழைய பீரங்கிகளுக்கு நெருப்புவைக்கும் எரிகொள்ளி இணைத்த நீண்ட கோல்.

lint, *n.* காயங்களுக்கும் புண்களுக்கும் கட்டும் பஞ்சுத்துணி வகை, கட்டுத்துணி.

lin'tel, *n.* வாயில்-பலகணி ஆகியவற்றின் மேற்கட்டை.

lin'y, *a.* கோடுகளால் ஆன; வரிவரியான, சுரிப்புள்ள, மடிப்புள்ள.

Li'on[1], *n.* சிங்கராசி.

li'on[2], *n.* சிங்கம்; ஆண்மையுள்ளவர், வீரர், நெஞ்சுரமுடையவர்; கூட்டங்களில் சிறப்பாக அறிமுகம் செய்துவைக்கப்படும் புகழ்பெற்ற கல்வியறிவுடையோர்; பிரிட்டன் நாட்டுச்சின்னம்; (தொ.) lion in the way, கற்பனை இடையூறு, கருத்துருவான தடை; lion's mouth, இடரார்ந்த நிலை; lion's share, மிகப்பெரிய பகுதி; சிறந்த பகுதி; தலையான பங்கு; lion's skin, போலிவீரம்; வீரப்புனைவுரு ஏற்பு; see the lions, நகரத்தில் காணவேண்டிய முக்கியமான பகுதிகளைக் காண்; show the lions, நகரத்திற் காணவேண்டிய பகுதிகளைக் காட்டு.

li'on-heart, *n.* மன வலியன்.

li'onize, *v.* அருங்காட்சி காண்; சுற்றிப்பார்; அருங்காட்சி காட்டு; அருங்காட்சியாகக் காட்டு; புகழ்வீரராக நடத்து; புகழ்வீரராக்கு.

li'ons, *n. pl.* அருங்காட்சிகள், நகரத்திற் காணவேண்டிய பகுதிகள், காட்சிச் சிறப்புடைய பகுதிகள்.

**lip**, *n.* உதடு, இதழ்; உதடுபோன்ற உறுப்பு, இதழ்போன்ற பகுதி; கிண்ணத்தின் வளைவிளிம்பு; துளையின் பக்க விளிம்பு; புண்ணின் வாயலகு; மலரின் இதழலகு; துடுக்கான பேச்சு; துடுக்குத்தனம்; *v.* உதட்டால் தொடு, இதழ் பொருத்து; அலை வகையில் மேவி மீள்; தொட்டு விலகு; உதட்டுக்குள்ளாக முனகு; குழிப்பந்தாட்டப் பந்து வகையில் குழிவிளிம்பினை மேவி விழாதிரு; குழிப்பந்தாட்ட வகையில் பந்தினைக் குழிவிளிம்பு மேவும்படி செய்; (தொ.) bite one's lip, ஏமாற்றத்தால் உதட்டைக் கடித்துக்கொள்; சிரிப்பையும் கோபத்தையும் அடக்குவதற்காக உதட்டைக் கடித்துக் கொள்; curl one's lip, வெறுப்பைக் காட்டுவதற்காக உதட்டைச் சுழி, இகழ்ச்சியைக் காட்டுவதற்காக உதட்டை மடக்கு; escape one's lips, முன் எண்ணமின்றித் தானாக வெளியிடப்படு; from the lips only, வெறும் உதட்டு அளவில், மனமார்ந்த நிலையிலில்லாமல்; hang one's lip, அவமானத்தினால் உதட்டைத் தொங்கப்போடு; hang on one's lips, சொல்லும் சொற்களையெல்லாம் பயபக்தியோடு உன்னிப்பாகக் கேள்; lick one's lips, smack one's lips, சுவையான உணவை எதிர்நோக்கி உதட்டை நாவால் துழாவிக்கொள்; stiff upper lip, மன உரம்; விடாப்பிடி.

**lip'-deep**, *a.* உதட்டளவான, மனமேவாத, உள்ளார்ந்த வாய்மையற்ற.

**lip'-language**, *n.* இதழியக்கப் பேச்சுமுறை, உதட்டசைவினைப் பயன்படுத்திச் செவிடர்களுக்கும் ஊமைகளுக்கும் கற்பிக்கும் முறை.

**lipog'raphy**, *n.*=haplography.

**lipp'er**, *n.* (கப்.) அலையதிர்வியக்கம், கடற்பரப்பின் திரைப்பு.

**lip'-reading**, *n.* உதட்டசைவால் செவிடர்களும் ஊமையும் பேச்சுப் பொருளறியும் முறை.

**lip'salve**, *n.* உதட்டுப் புண் களிம்பு; முகப்புகழ்ச்சி, போலிப் புகழ்ச்சி.

**lip'-service**, *n.* போலி வழிபாடு, பாவிப்பு.

**lip'-speaking**, *n.* செவிடர்களும் ஊமைகளும் உணரும்படி உதட்டசைவால் பேச்சுப் பொருளறிவிக்கும் முறை.

**lip'stick**, *n.* உதட்டுப்பூச்சு வண்ணக்கோல்.

**liquate'**, *v.* உருக்கி உலோகங்களைப் பிரி; உருக்கி உலோகங்களைத் துப்புரவு செய்.

**liq'uefy**, *v.* கெட்டிப்பொருள் அல்லது வளிப்பொருளை நீர்மமாக்கு; திண்மம் அல்லது வளிமம் வகையில் திரவமாகு.

**liques'cent**, *a.* நீர்மமாகிற; திரவமாகக்கூடிய; நீர்மமாகும் தன்மையுடைய.

**liqueur'**, *n.* மணமும் இன்சுவையும் ஊட்டப்பட்ட கடுந்தேறல் வகை; சர்க்கரையும் சாராயம் அல்லது முந்திரித் தேறலும் கலந்து மணமூட்டப்பட்ட கலவைத்தேறல் வகை; *v.* தேறலுக்கு மணமுஞ் சுவையும் ஊட்டு; சர்க்கரை முதலியவற்றை உடன்கல; (தொ.) liqueur brandy, சுவைத்தேறல் கலந்த பழத்தேறல் குடிவகை.

**liqueur'-frame, liqueur'-stand**, *n.* குப்பித்தட்டு, கடுந்தேறல் புட்டிகள் வைக்கும் சட்டம்.

**liqueur'-glass**, *n.* கடுந்தேறல் குடிக்கப் பயன்படும் மிகச் சிறு குவளை.

**liq'uid**, *n.* நீர்மம், திரவவடிவுடைய பொருள்; ஒழுகியல் ஒலி; *a.* நீரியலான; நீர்ப்பொருளின் தன்மையுடைய; நீர்போன்ற; ஒழுகியலான; பளிங்கியலான, எளிதில் ஒளி ஊடுருவும் தன்மைவாய்ந்த; நிலையற்ற, அடிக்கடி மாறும் இயல்புடைய; சொத்துக்கள் வகையில் எளிதில் பணமாக மாற்றக்கூடிய; ஒழுகிசையான, முரணோசையற்ற; (ஒலி.) மிடற்றொலி வல்லாத, உயிரொலி போன்ற; (தொ.) liquid air, கடுங் குளிர்ச்சியினால் நீராக மாற்றப்பட்ட காற்று; liquid fire, அழலெறி கருவி உமிழும் தீக்கொழுந்து.

**liq'uidate**, *v.* கடனைத்தீர், செலுத்தித் தீர்த்துவிடு; தீர்த்துக் கட்டு, ஒழித்துவிடு, அடக்கி ஒடுக்கிவிடு; மூடிவிடு; கூட்டு வணிக வகையில் கொடுக்கல் வாங்கல் கணக்கெடுத்து மூடு.

**liquida'tion**, *n.* தீர்த்துக்கட்டுதல், கொடுக்கல் வாங்கல் கணக்கெடுத்து மூடுதல்; கலைப்பு, தீர்வாட்சி; ஒழுங்குநிலை; (தொ.) go into liquidation, ஒழுங்குநிலையடை, தீர்த்துக் கட்டு, நொடித்துப்போ.

**liq'uor**, *n.* குடிதேறல்; வடிநீர்மம், சாராயம் வடிப்பதில் பயன்படும் நீர்; கழிவுநீர்; கழுவுநீர்; கசிவூறல்; செய்நீர்; கஞ்சி, வடிநீர், உணவு வேகவைத்த நீர்; *v.* தோலைக் கொழுப்பால் அல்லது நெய்மத்தால் பதப்படுத்து; மாவை நீரில் ஊறவைத்துப் புளிக்க வை; (தொ.) malt liquor, மாத்தேறல், புளித்த மாவின் வடிப்புத்தேறல்; spirituous liquor, சாராயக் குடிவகை.

**liq'uorice**, *n.* அதிமதுர வேரிலிருந்து எடுக்கப்பட்டு மருந்தாகவும் தின்பண்டமாகவும் பயன்படும் கருநிறப் பொருள், அதிமதுரம்; அதிமதுர வேரையுடைய செடிவகை.

**liq'uorish**, *a.* சாராய விருப்பமுள்ள, குடிவிருப்பைத் தெரிவிக்கிற.

**lir'a**, *n.* இத்தாலி நாட்டு நாணய வகை; *pl.* li're.

**lisle thread**, *n.* நுண்முறுக்கிழை.

**lisp**, *n.* மழலைச்சொல், தெளிவற்ற ஒலிப்புடைய குழந்தைப் பேச்சு; சகரதகரப்போலி ஒலிப்பு; நீரின் ஒழுகிசை; இலைகளின் மென்சலசலப்பொலி; *v.* மழலைச் சொல்லாடு; தெளிவற்ற ஒலிப்புடன் பேசு; குறைபட உச்சரி; சகரத்தினிடமாகத் தகரப்போலி ஒலிப்புடன் பேசு; (தொ.) lisp out, மழலையில் பேசு; அரைகுறை ஒலிப்புடன் கூறு.

**liss'om, liss'ome**, *a.* தொய்வான, ஒசிவான, துவள்வுடைய; இழைவான.

**list**[1], *n.* பட்டியல்; பெயர்ப்பட்டி; இனக்குறிப்புப் பட்டி; நிகழ்ச்சிக் குறிப்புப்பட்டி; விலைப்பட்டி; துணி ஓரம், கரை, வகைமாறிய துணியாலான ஓரக்கரை; கரை கிழிந்த கச்சை; *v.* படைவீரனாகச் செல்; பட்டியலில் பதிவு செய்; கிழித்த ஆடை ஓரத்தை வைத்துக் கதவை இறுக்கிப் பொருத்து; (தொ.) active list, போருக்கு அழைக்கப்படும் பொறுப்பும் தகுதியுமுள்ள கடற்படை-நிலப்படை-விமானப்படை பணியாளர் பட்டி; free list, நாடக அரங்கு முதலியவற்றிற்குள் இலவச நுழைவிசைவு பெற்றோரின் பெயர்ப்பட்டியல்; வரி விலக்குடைய பொருட்களின் பட்டியல்; line edges of door with list, குளிர்காற்றைத் தடுப்பதற்காகக் கிழித்த ஆடை ஓரங்களை வைத்துக் கதவுகளை இறுக்கமாகப் பொருத்து.

**list**[2], *n.* கப்பல் அல்லது கட்டிடம் முதலியவற்றின் ஒருபக்கமான சாய்வு; *v.* ஒருபக்கமாகச் சாய்.

**list**[3], *v.* விரும்பு, மனங்கொள்; விரும்பித் தேர்ந்துகொள்; பிடித்தமாயிரு.

**list**[4], *v.* உற்றுக்கேள்.

**li'sten**, *v.* உற்றுக்கேள், கவனி; விண்ணப்பத்திற்குச் செவிகொடு; அவாவிற்கு இணங்கு; மருட்சிக்கு உள்ளாகு; வேண்டுகோளுக்கு இணங்கு; (தொ.) listen in, தொலைபேசிச் செய்தியை இரகசியமாக ஒற்றுக்கேள்; கம்பியில்லாச் செய்திவாங்கும் கருவியைப் பயன்படுத்து.

**li'stener**, *n.* உற்றுக்கேட்பவர்; ஒற்றுக்கேட்பவர்; (தொ.) good listner, பிறர்கூறுவதைக் கூர்ந்து கேட்கும் பழக்கம் உடையவர்.

**li'stening-post**, *n.* எதிரி நடவடிக்கைகளையும் இயக்கங்களையும் அறிந்துகொள்ளும்படி பாசறைக்கருகில் உள்ள இடம்.

**lis'terine**, *n.* நச்சுத்தடை மருத்துக் கரைசல்.

**lis'terize**, *v.* நச்சுத்தடை முறைகளைப் பின்பற்றிக் காயம் ஆற்று.

**list'less**, *a.* கவனமில்லாத, அக்கறையற்ற; மந்தமான, எழுச்சியற்ற; கருத்தில்லாத, கவையற்ற; முயற்சி செய்ய விருப்பமில்லாத.

**lists**, *n. pl.* குதிரைவீரர் ஈட்டிப்போர்க் களரியைச் சுற்றியுள்ள கழிக்கோல் வேலி; பந்தயப் போட்டிக்களம்; போர்க்களம்; வாதிடும் களம்; (தொ.) enter the lists against, வாத எதிர்வாதத்திற்கு அறைகூவி அழை, வாத எதிர்வாத அறைகூவலை ஏற்றுக்கொள்.

lit, *v.* light என்பதன் இறந்தகால வடிவங்களில் ஒன்று ; light என்பதன் முடிவெச்சவடிவங்களில் ஒன்று.

lit'any, *n.* இறைமுறையீட்டுப் பாசுரத்தொகுதி, வழிபாட்டிலும் சமய ஊர்வலங்களிலும் குருமாரும் மக்களுமாக மாறி மாறிப் பாட்டினைப் பல்லவியாகப் பாடுவதற்கமைந்த வேண்டுகோள் பாசுரத்தொகுதி ; the litany, பொது இறைமுறையீட்டு ஏட்டில் உள்ள வழிபாட்டுப் பாசுரம்.

lit'any-desk, lit'any-stool, *n.* வழிபாட்டுமேடை முழங்காற்படி.

litchi', *n.* சீனப் பழமர வகை ; சீனப் பழவகை.

lit'eracy, *n.* எழுத்தறிவு, படிப்பு வாசனை.

*lit'erae humanior'es*, (ல.) *n.* பண்பாட்டிலக்கியம் ; ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தின் கிரேக்க லத்தீன இலக்கியப் பயிற்சிப் பள்ளி ; ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகக் கலை இளவல் தேர்வின் கிரேக்க லத்தீன பிரிவு.

lit'eral, *n.* அச்சு அல்லது தட்டச்சில் எழுத்துப் பிழை ; *a.* எழுத்துச் சார்ந்த; எழுத்தியல்பான ; எழுத்தைப் பின்பற்றிய; சொல்லுக்குச்சொல் சரியான ; சொல்லின் நேர்ப்பொருள் சார்ந்த ; சொல்லின் மூலமுதற் பொருள் சார்ந்த ; உவம உருவகச் சார்பற்ற ; வெளிப்படைப்பொருள் சார்ந்த ; உயர்வு நவிற்சியற்ற ; நேருண்மையான.

lit'eralize, *v.* உருவக முதலிய அணிவழக்குகளைச் சொல்லின் நேர்ப்பொருளிலேயே கொள் ; நேர்ச்சொற்பொருட்படுத்து.

*literar'um doc'tor*, (ல.) *n.* இலக்கியத்தில் 'டாக்டர்' என்னும் பல்கலைக்கழகச் சிறப்புப் பட்டம்.

lit'erary, *a.* இலக்கியஞ் சார்ந்த ; இலக்கியப் பண்புடைய ; மொழி வகையில் நடைநயம் வாய்ந்த ; இலக்கிய வடிவமைதி வாய்ந்த; இலக்கியப் புலமை வாய்ந்த; இலக்கிய ஈடுபாடுள்ள; இலக்கியத் தொடர்பான ; இலக்கிய ஏடுகள் சார்ந்த ; இலக்கிய வழக்கான ; எழுத்து வழக்கான ; எழுத்தாளர் கையாட்சிக்குரிய ; இலக்கியம் படைக்கிற ; எழுத்தாண்மை சார்பான; பேச்சுவழக்கிற் படாத; எழுத்துநடை சார்ந்த; (தொ.) literary history of a thing, இலக்கிய ஆட்சி வரலாறு ; literary man, இலக்கிய வாணர், செந்நாப்புலவர், இலக்கியப் புலமையுடையவர் ; literary property, புத்தகங்கள் முதலியவற்றின் வெளியீட்டுரிமை ; தனிவெளியீட்டு உரிமைக்கு உட்பட்ட நூல்.

lit'erate, *n.* எழுத்தறிவுடையவர் ; இலக்கியத் தொடர்புடையவர் ; பல்கலைக்கழகப் பட்டமில்லாமலே ஆங்கில சமயக் குழுவுக்குள் (Anglican orders) சேர்த்துக் கொள்ளப்பட்டவர் ; *a.* எழுதப்படிக்கத் தெரிந்த, கல்வியறிவுள்ள.

*literat'i*, (ல.) *n. pl.* கல்வியறிவாளர், புலமையுடையவர், கற்றவகுப்பினர்.

*literat'im*, (ல.) *adv.* சொல்லுக்குச் சொல்லாக, ஏட்டில் உள்ளவாறே.

lit'erator, *n.* இலக்கிய வாணர் ; கல்வியறிவுடையவர், இலக்கிய வழக்கில் ஊடாடுபவர்.

lit'erature, *n.* இலக்கியம், கலைப்பண்பார்ந்த ஏட்டுச் சேமவளம் ; நாட்டிலக்கியம் ; மொழியிலக்கியம் ; காலக்கூற்றினுக்குரிய இலக்கியப் பகுதி; கலையியல்வாய்ந்த எழுத்தாண்மை; எழுத்தாண்மைத் துறை; எழுத்தாண்மைத் தொழில்; இலக்கியப் படைப்பு ; எழுத்தாண்மைத்தொகுதி ; இலக்கிய உலகம், இலக்கியப்படைப்பாளர் வகுப்பு ; ஏட்டுத்தொகுதி ; தனித்துறை ஏட்டுப்பரப்பு ; (பே-வ.) அச்சுருவ ஏட்டுத்தொகுதி, அச்சடித்த ஏடு.

lith'arge, *n.* உயிரக ஒரணுவுடனிணைந்த ஈயம்.

lithe, *a.* நொசிவான, தொய்வுடன் வளையக்கூடிய.

lith'ia, *n.* கல்லிய உயிரகை.

lith'ia-water, *n.* வாத நோய்களுக்குப் பயன்படும் கல்லிய உயிரகைக் கலப்பு நீர்மம்.

lith'ic [1], *a.* கல்சார்ந்த அல்லது குண்டிக்காயில் கல்லுடைய.

lith'ic [2], *a.* (வேதி.) கல்லியம் சார்ந்த.

lith'ium, *n.* கல்லியம், உலோகத் தனிம வகை.

lith'ograph, *n.* கற்பாள அச்சு ; *v.* கற்பாள அச்சுமுறையில் அச்சடி ; கல்லின்மேல் எழுது ; கல்வறைச் செதுக்கீடு செய்.

lithog'raphy, *n.* கல்லச்சுக் கலை.

litho'logy, *n.* பாறை ஆய்வுநூல் ; (மரு.) கற்கோளாறு ஆய்வுநூல்.

lithontrip'tic, *n.* (மரு.) குண்டிக்காயில் உள்ள கற்களை உடைக்கும் மருந்து.

lith'ophyte, *n.* (வில.) சுண்ணகக் கலப்புடைய பவழக்குழிசில் ; (தாவ.) கற்களின்மேல் வளரும் செடிவகை.

lithot'omy, *n.* குண்டிக்காயிலுள்ள கற்களை நீக்கும் அறுவை முறை.

lithot'rity, *n.* இயல்பாக வெளிவருமளவில் குண்டிக்காய்க் கற்களைப் பொடியாக்கும் மருத்துச் செய்முறை.

Lithuani'an, *n.* லிதுவேனிய (Lithuania) நாட்டினர் ; லிதுவேனிய நாட்டு மொழி ; *a.* லிதுவேனிய மொழிசார்ந்த.

lit'igate, *v.* வழக்காடு, வழக்கில் ஒருசார்பாக இரு ; சட்ட உரிமைபற்றி எதிர்த்துப் போராடு.

liti'gious, *a.* வழக்காடுகிற ; வழக்காடுவதில் விருப்பமுள்ள ; வழக்கில் வாதத்திற்கிடமான ; வழக்காடத்தக்க செய்தியுள்ள ; வழக்குச் சார்ந்த.

lit'mus, *n.* கற்பாசி வகையிலிருந்து கிடைக்கும் வேதியியல நிறமாற்ற இயல்புடைய வண்ணப்பொருள்.

lit'mus-paper, *n.* வேதியியல் நிறமாற்ற வண்ணப்பொருள் தோய்ந்த நீலத்தாள்.

lit'otes, *n.* குறைவு நவிற்சி.

lit're, *n.* பதின்மான முகத்தலளவை அலகு, 'லிட்டர்', பத்து செண்டிமீட்டர் பக்கமுள்ள கன சதுரத்தின் பரிமாணம்.

litt'er, *n.* சிவிகை ; நோயாளிகளுக்கான தூக்கு கட்டில் ; சேக்கை, சிறு விலங்குகளின் வைக்கோற் படுக்கை ; ஒரீற்றுக் குட்டிகளின் தொகுதி ; சருகு சாணக்கூளம் ; குப்பை கூளம் ; தாள் செத்தை சவறு ; துண்டுதூசுக் குவை ; துப்புரவற்ற நிலை ; *v.* வைக்கோல் சேக்கையிடு, வைக்கோல் கூளம் தூவிப் பரப்பு ; இடத்தை ஒழுங்கின்றி வைத்திரு ; பொருளைத் தாறுமாறாகப் போட்டுவைத்திரு ; தாறுமாறான தோற்றமளி ; பரவலாகச் சிதறியிடு ; குட்டிகளை ஈனு.

*litterateur*, (பிர.) *n.* இலக்கியவாணர்.

lit'tle, *n.* சிறிது ; சிறிதளவு ; சிறிதளவானது ; சிறிது தொலை ; சிறிதுநேரம் ; அற்பம், சிறுதிறமானது ; *a.* சிறிய ; பெரிதல்லாத ; சிற்றளவான ; மிகுதியல்லாத ; சிற்றுருவுடைய ; இளைய ; குழந்தையாயிருக்கிற ; குழந்தைபோன்ற மென்னயம் வாய்ந்த ; குழந்தைபோன்று மென்னய உணர்ச்சி தூண்டுகிற ; குழந்தைபோன்று மெல்லாதரவுக்குரிய ; குழந்தைபோன்று அருமையான, அரிய விருப்பத்துக்குரிய ; குற்றுருவுடைய ; இழிந்த, கீழ்த்தரமான ; சிறப்பற்ற, முக்கியத்துவமற்ற ; அவலமான, சிறுதிறமான ; புறக்கணிக்கத்தக்க, அற்பமான ; *adv.* மிகச்சிறிய அளவில் மட்டுமே ; ஒரு சிறிதே ; அரிதே, கிட்டத்தட்ட இல்லை என்று சொல்லும் அளவில் ; (தொ.) a little, ஒரு சிறிது, கொஞ்சம், சிறிதளவானது ; in little, சிறுபடி அளவில், சிறிய அளவு வீதத்தில் ; little go, (பே-வ.) கேம்பிரிட்ஜ் (Cambridge) பல்கலைக் கழகத்தில் இளங்கலைப் பட்டத்திற்கான முதல் தேர்வு அல்லது சோதனை ; little Mary, (பே-வ.) வயிறு ; Little Masters, பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த டியூரர் (Durer) என்ற செர்மானிய செதுக்கு வேலைக்காரருடைய பாணியைப் பின்பற்றிய சிறு அச்சுச் செதுக்கு வேலைக்காரர்கள் குழு ; little or nothing, சிறிதளவுகூட இல்லை ; the little, ஆற்றல் இல்லாதவர், சிறப்பற்றவர்.

lit'tle-case, *n.* (வர.) சிறைக்கூட முடக்க அறை.

lit'tle-Englander, *n.* பிரிட்டன் தன் குடியேற்ற நாட்டுப் பொறுப்புக்களையும் கடமைகளையும் குறைத்துக்கொள்ள வேண்டுமென்னும் கோட்பாட்டாளர்.

**lit'tle-Englandism**, *n.* பிரிட்டன் தன் குடியேற்ற நாட்டுப் பொறுப்புக்களையும் கடமைகளையும் குறைத்துக்கொள்ள வேண்டுமென்னும் கோட்பாடு.

**litt'oral**, *n.* கடலோரப் பகுதி ; *a.* கடலோரத்திலுள்ள.

**lit'urgy**, *n.* கிழக்கிந்திய திருக்கோயில்களின் நற்கருணை அலுவலகம் ; பொதுவழிபாட்டுமுறை வாசகச்சுவடி ; பொது அருள்முறையீட்டுத் தொகுதி ; பண்டைக் கிரேக்க நாட்டில் நகரச் செல்வர்கள் காசின்றிச் செய்யும் பொதுத்தொண்டு.

**liv'able**, *a.* வீட்டு அறை வகையில் குடியிருக்கத்தக்க ; இடச் சூழல் வகையில் தங்கிவாழ்வதற்கிசைவான ; தட்பவெப்பநிலை வகையில் மனித வாழ்வுக்குகந்த; வாழ்வுவகையில் வாழத்தக்க; ஆள்வகையில் உடன்வாழ்வதற்கியைந்த, தோழமைக்குகந்த.

**live [1]**, *a.* உயிருள்ள, உயிரோடிருக்கிற; வாழ்நிலையிலிருக்கிற; மெய்யாகவுள்ள, கற்பனையல்லாத ; ஓவிய உருவாயில்லாத ; நடைமுறை வினைக்குரிய ; விளையாட்டுப் பொருளாயில்லாத, வேடிக்கைப் பொருளாயிராத ; நடிகர் நடிப்பு வகையில் திரை வழியன்றி நேரே மேடையில் நடிக்கிற ; வானொலி தொலைக் காட்சி வகையில் ஒலிப்பதிவு மூலமாகவன்றி நேரே பேச்சினை ஒலிபரப்புகிற ; உயிர்த்திறம் கெடாத ; ஆற்றல் கெடாதிருக்கிற; கங்குவகையில் தணல் கெடாத; தோட்டா-மின்கல வகைகளில் விசைதீர்ந்துவிடாத ; தவணை கடந்துவிடாத ; இன்னும் செல்லுபடியாகவுள்ள ; பாறை வகையில் உள்நிலப் பாறைச் சட்டத்துடன் தொடர்புடைய, தனித்தனித் துண்டாயிராத ; இயந்திரச் சக்கர வகையில் விசையியக்கம் தூண்டுகிற; வாணிகத்துறை மீன் வகையில் மிகப் புதிதான; (தொ.) live load, பாரங்களின் குறுக்கசைவியக்கத்தால் ஏற்படும் பார அழுத்தம் ; live wire, வரம்புகடந்த விசைத்துடிப்புடைய ஆள்.

**live [2]**, *v.* உயிருடனிரு, வாழ்ந்திரு ; பிழைத்திரு, சார்ந்து பிழை ; சார்ந்து வாழ்வுபெறு ; வாழ், வாழ்க்கையில் நடந்து கொள் ; வாழ்க்கை நடத்து ; வாழ்க்கைமுறை மேற்கொள் ; வாழ்நாள் கழி ; குறிக்கோள்வழி நில் ; வாழ்க்கை நடந்து காட்டு ; வாழ்வுமூலங் காட்டு ; வாழ்வாகக்கொள் ; வாழ்க்கை நுகர், வாழ்க்கையை முழுதும் அனுபவி ; நீடித்து வாழ் ; நீடித்திரு ; அழிவு கடந்து நிலவு ; தங்கிவாழ் ; தங்கியிரு ; இருப்பிடமாகக்கொள் ; (தொ.) live a double life, வேறுபட்ட இருவாழ்க்கை வாழ், இரண்டகவாழ்வு வாழ் ; live and learn, புதிய உண்மையை வரவேற்கும் முறையில் வாழ்ந்து தெரிந்துகொள்; live and let live, பிறர் மாசு கண்டும் காணாததுபோல் வாளா இரு ; வாழ்ந்து பிறரை வாழவிடு ; live close, கஞ்சத்தனமாக இரு, கருமித்தனமாக வாழ் ; live fast, தீய நடத்தையால் உடல்நலம் முதலியன கெடுமாறு வாழ், சிறிது காலத்திற்குள்ளே பெரிய அளவு ஆற்றலைப் போக்கடித்துக்கொள் ; live in a small way, மட்டான செலவில் அமைதியோடு வாழ், சிக்கனமாகவும் அமைதியாகவும் காலங்கழி ; live in clover, கவலையற்ற இன்பவாழ்க்கையிற் புரளு ; live on air, எதுவும் உண்பதாகக் காணப்படாதிரு, காற்றை உண்டு வாழ்வதுபோல் தோற்றமளி ; live out the night, இரவு முழுதும் இறவாது பிழைத்திரு; live to oneself, தனித்துவாழ், பிறரோடு ஒட்டாது ஒதுங்கிவாழ் ; live up to one's principles, live up to one's faith, நடைமுறை வாழ்க்கையில் கொள்கையைக் கடைப்பிடி ; live well, சுவை செறிந்த அருஞ்சிறப்புடைய உணவுகளை உண்டுவாழ்.

**live'-bait**, *n.* தூண்டிலில் இரையாக வைக்கப்பட்ட உயிருள்ள மீன் அல்லது புழு.

**live'lihood**, *n.* வாழ்க்கைத்தொழில், பிழைப்பு.

**live'long**, *a.* நெடு நீளமான, நெடு நீளமாக நீடித்த, விடாது நீண்ட.

**live'ly**, *a.* உயிர்த்தன்மையுள்ள; உயிராற்றலுடைய; உயிர்த் துடிப்புடைய ; உயிர்த்தோற்றமுடைய ; மெய்ப்பாடுடைய ; முனைப்பான விளக்கம் வாய்ந்த ; சுறுசுறுப்பான ; கிளர்ச்சி வாய்ந்த; எழுச்சிதருகிற; உவகையூட்டுகிற; சுவையார்ந்த; நிறவகையில் பளபளப்பான ; படகு வகையில் அலைமீது எழுந்தெழுந்து செல்கிற ; துள்ளிசையான ; இக்கட்டார்ந்த ; நெருக்கடியான.

**liv'en**, *v.* ஒளிர்வூட்டு, கிளர்ச்சியூட்டு.

**live'-oak**, *n.* அமெரிக்க நாட்டுப் பசுமை மாறாச் சீமை ஆல் மரவகை.

**liv'er [1]**, *n.* ஈரற்குலை ; உணவாகப் பயன்படும் விலங்குகளின் ஈரல் தசை ; (தொ.) hot liver, மன எழுச்சி மிகுந்த இயல்பு; காதல் உணர்ச்சியுடைய தன்மை ; liver wing, சமைத்துப் பக்குவம் செய்யப்பட்ட கோழியில் ஈரற்குலையுள்ள வலப்புறம்; வலப்புறம் ; white liver, lily liver, கோழைத்தனம்.

**liv'er [2]** *n.* வாழ்பவர் ; (தொ.) good liver, நன்னடக்கையாளர், ஒழுக்கசீலர், தூய்மையர்.

**liv'er-colour**, *n.* ஈரல் நிறம், கருஞ்சிவப்பும் பழுப்பும் கலந்த நிறம்.

**liv'er-complaint**, *n.* ஈரல் நோய்.

**liv'eried**, *a.* தொழிலுடையணிந்த, பணிச்சின்னந் தாங்கிய.

**liv'er-line**, *n.* கைவரை நூலில் குறிப்பிடத்தக்க உள்ளங்கைக் கோடுகளில் ஒன்று.

**Liverpud'lian**, *n.* லிவர்பூல் (Liverpool) என்னும் நகரத்தில் வசிப்பவர் ; *a.* லிவர்பூல் நகரில் வசிக்கிற.

**liv'er wort**, *n.* ஈரல்நோய்க்குப் பயன்படுத்தப்பட்டு வந்த மூலிகைச் செடி வகை.

**liv'ery [1]**, *n.* பணியாடை ; பணிச்சின்னம் ; நகரத்தொழிற் குழுவுறுப்பினர் அடையாள ஆடை ; தனியாடை ; தனித் தோற்றம் ; நகரத்தொழிற்குழுவின் உறுப்பாண்மை ; பணியாளர் உணவு உடை உதவிப்படி ; குதிரை தீவனப்படி ; (சட்.) உடைமை உரிமை ஒப்புவிப்பு; (தொ.) at livery, தீர்மானிக்கப்பட்ட கட்டணத்திற்காகக் குதிரையைப் பேணித் தீவனமளித்து வைத்திருக்கும் முறையில் ; in livery, பணியாளர் உடை அணிந்து, வேலையாளாக ; livery company, தனியாடை அணிந்திருந்த முற்கால நகரத் தொழிற்குழு நிறுவனம் ; livery fine, முற்கால நகரத் தொழிற்குழு நிறுவனத்தில் உறுப்பினராவதற்குரிய கட்டணம் ; out of livery, பொதுமுறை உடையில், பணிச்சின்ன ஆடை அணியாது ; sue one's livery, மரபுரிமையாளர் என்ற முறையில் சொத்துரிமை ஒப்புவிக்கப் பெறுவதற்கான வழக்கினைத் தொடர் ; take up one's livery, ஏவற்பணி மேற்கொள்; நகரத்தொழிற் குழு உறுப்பினராகு.

**liv'ery [2]**, *a.* ஈரல் போன்ற திட்பமுள்ள ; ஈரல் போன்ற நிறமுடைய; ஈரற்கோளாறுடைய ; மண்வகையில் உறுதியான; உடலமைதியற்ற ; சிடுசிடுத்த நிலையிலுள்ள.

**liv'eryman**, *n.* பணிச்சின்னமணிந்த ஊழியர் ; நகரத் தொழிற்குழு உறுப்பினர் ; படிபெற்றுக் குதிரைக்குத் தீவனமிட்டுப் பேணும் பொறுப்புடையவர்.

**liv'ery servant**, *n.* கஞ்சுகன்.

**liv'ery stable**, *n.* குறிப்பிட்ட கட்டணம்பெற்றுத் தீவனமளித்துப் பேணி வளர்ப்பதற்கும் வாடகைக்கு விடுதற்கும் உரிய குதிரை இலாயம்.

**live'-stock**, *n.* வீட்டு விலங்குகள்.

**liv'id**, *a.* வெளிறிய நீல நிறமான ; கன்றிப்போன; (பே-வ.) கடுஞ்சீற்றமுடைய.

**liv'ing**, *n.* பிழைப்பு, வாழ்க்கைத் தொழில் ; வாழ்க்கைத் தேவை ; வாழ்க்கைமுறை ; திருக்கோயில் மானியம் ; *a.* வாழ்கிற ; உடனிணை வாழ்வுடைய; இப்பொழுதுள்ள, ஒத்த கால வாழ்வுடைய ; முழுதொத்த, சரியொத்த ; வழக்காற்றிலுள்ள; (தொ.) good living, இன்சுவை நல்லுணவு வாய்ப்புடைய இன்ப வாழ்வு; living coal, கங்கு, எரிந்துகொண்டிருக்கிற நிலக்கரி, அணையாமல் கனிந்துகொண்டிருக்கிற கரி; living death, நடைப்பிண வாழ்க்கை, நம்பிக்கைக்கு இடமற்ற இடரார்ந்த துன்பநிலை ; living language, பேச்சுவழக்கு மொழி ; living rock, தனித்துத் துண்டுபடாமல் நிலவுலகத் தோட்டின் நேர்பகுதியாக அமைந்துள்ள பாறை; living wage, வாழ்க்கை நடத்தப்போதிய குறைந்த ஊதியம்; within living memory, உயிரோடு இருப்பவர்களின் நினைவெல்லைக்குட்பட்ட,

liv'ing-room, *n.* பகல் நேர அறை.

*livre*, (பிர.) *n.* பழைய பிரஞ்சு நாணயம்.

lixiv'iate, *v.* கரையும் பொருளையும் கரையாப் பொருளையும் வடித்திறுத்துப் பிரித்தெடு.

liz'ard, *n.* பல்லி; பாடும் அழகிய பறவை வகை.

lla'ma, *n.* தென் அமெரிக்காவில் கம்பளி போன்ற மயிரடர்ந்த குட்டையான திமிலற்ற பொதிசுமக்கும் ஒட்டக இன விலங்கு வகை; ஒட்டக இன விலங்கின் கம்பளி மயிர்.

llaner'o, *n.* மரங்களற்ற தென் அமெரிக்க சமவெளியில் வாழ்பவர்.

lla'no, *n.* மரங்களற்ற தென் அமெரிக்க சமவெளி.

Lloyd's, *n.* கப்பற்பிணைக் காப்பீடேற்பவர்களின் சங்கம்; (தொ.) Lloyd's list, கப்பல்துறைச் செய்தியிதழ்; Lloyd's register, கப்பல்துறை ஆண்டுமுறை வகுப்பீட்டுப் பட்டியல்.

lo, *int.* அதோ காண்; அந்தோ; ஐயோ.

loach, *n.* உணவாகப் பயன்படும் நன்னீர்வாழ் சிறு மீன் வகை.

load, *n.* சுமை, பளு, தூக்கிச் செல்லும் பொருள்; கண்டி, பார அளவை; எடையாகப் பயன்படும் பொருள்; (மின்.) மின்விசை ஆக்கப்பொறியால் குறித்தகாலத்தில் வெளியேற்றப்படும் மின்னோட்ட அளவு; மனச்சுமை; கவலை, பொறுப்பு, அக்கறை; *v.* சுமை ஏற்று; பாரமேற்று; கப்பலில் சரக்கேற்று; மேலும் பளுவேற்று; பளுவாயிரு; பளுவால் அழுத்து; ஈயம் வைத்துப் பளுவாக்கு; கப்பல் வகையில் எடையேற்றுக்கொள், பளுத்தாங்கு; எடைப்பெருக்கத்துக்காகக் கலப்படஞ் செய்; இன்தேறலுக்கு வலுவூட்ட மட்டப் பொருளைக் கல; தேவைக்குமேல் மட்டுமீறிக் கொடு; துப்பாக்கி முதலியவற்றிற்கு மருந்து திணி; பங்குகளைப் பெரிய அளவில் வாங்கு; வாழ்க்கைக் காப்பீட்டுத் தவணைகளுக்கு மிகை படக் கட்டணம் விதி; (தொ.) loaded dice, எடைமாருட்டம் செய்யப்பட்ட கவறு; take a load off one's mind, மனச் சுமையை அகற்று.

load'-displacement, load'-draught, *n.* எடைமான மூழ்கு வரை, ஏற்றிய எடையால் கப்பல் அமிழும் வரைமட்டம்.

load'ed, *a.* வாதீட்டில் ஒருதிசைச் சார்புமிக்க; வாத வகையில் போராட்டச் செய்திகளை உட்கொண்ட.

load'er, *n.* வேட்டையாட்களின் துப்பாக்கிகளுக்கு மருந்து திணிக்கும் பணியாள்; பளுவேற்றும் பொறி; (தொ.) breech loader, muzzle loader, single loader, மருந்து திணிக்கப்படும் துப்பாக்கி வகைகள்.

load'-line, *n.* பாரவரை, அளவுசுமை ஏற்றப்பட்டதைக் காட்டுங் கோடு.

loads, *n. pl.* (பே-வ.) ஏராளம், பெரிய அளவு, கழிமிகை.

load'stone, *n.* காந்தக்கல், காந்தம்.

load'-waterline, *n.*=load-line.

loaf [1], *n.* ரொட்டித்துண்டு, ஊதப்ப அளவுக்கூறு, பொங்கப்ப அளவுக்கூறு; கூம்பு வெல்லக்கட்டி; அச்சுவெல்லத் துண்டு; கோசுக்கீரை வகைகளின் உருள் தலைப்பகுதி; *pl.* loaves; (தொ.) brown loaf, சலிக்காத மாவினால் செய்யப்பட்ட பழுப்புநிற ரொட்டி; cottage loaf, household loaf, tinned loaf, ரொட்டி அளவுப் பாள வகைகள்; loaf sugar, கூருருளை வடிவுள்ள சர்க்கரைக்கட்டி; அச்சுவெல்லத்துண்டு; loaves and fishes, சிறு வாழ்க்கை நலங்கள்.

loaf [2], *n.* சோம்பித்திரிதல்; *v.* சோம்பித்திரி, காலத்தை வீணில் கழி; உலாவு, மெல்ல நட.

loaf'ing, *n.* சோம்பித்திரிதல், காலத்தை வீணிற் கழித்தல்.

loam, *n.* களிச்சேற்று வண்டல்; செங்கல் செய்வதற்கான களிமணல் செத்தைக் கலவை; மக்கிய பொருள் கலந்த வளமிக்க வண்டல் உரம்.

loan, *n.* கொடுக்கும் கடன்தொகை, கடனுதவித் தொகை; இரவல்; கடன்கொடுப்பு; பொதுக் கடனளிப்பு கடனளிப்புத் தொகை; அரசியல் ஒப்பந்த உரிமைமுன்பணப் பேறு; மேற்கொண்ட அயல்வரவுக் கூறு; அயல்மொழி வரவுச் சொல்; அயல் இனப்பண்பு; *v.* கடன்கொடு; கொடுத்து உதவு.

loan'holder, *n.* கடனீட்டுப் பத்திரங்களைக் கைவசமாகக் கொண்டிருப்பவர்; பொருளை அடைமானம் பெற்றவர்.

loan'office, *n.* கடனுதவிப் பணிமனை; அரசாங்கத்துக்குரிய தவணை வரிகளைப் பெறும் நிலையம்.

loan'society, *n.* கடனுதவிச் சங்கம், தவணைப் பங்குவரி செலுத்தும் உறுப்பினர்களுக்கு வரி நிதியிலிருந்து கடன் கொடுத்துதவும் சங்கம்.

loath, *a.* விருப்பமில்லாத; (தொ.) nothing loath, ஒரு சிறிதும் விருப்பக்குறைவில்லாத, முழு விருப்புடனிருக்கிற.

loathe, *v.* வெறு, அருவருப்புடன் பார், வெறுப்புக்கொள்.

loath'ly, *a.* (செய்.) வெறுக்கத்தக்க, அருவருப்பான.

loath'some, *a.* அருவருப்பூட்டுகிற, வெறுக்கத்தக்க; குமட்டலுண்டாக்குகிற.

loath'-to-depart, *n.* பிரிவுவாழ்த்துப் பாடலிசை.

lob, *n.* மரப்பந்தாட்டத்தில் கீழ்க்கைப் பந்துவீச்சு; புல்வெளி வரிப்பந்தாட்டத்தில் உச்சாணிப் பந்துவீச்சு; *v.* உருண்டு புரண்டோடு; ஏடாகோடமாக நட; தட்டுத்தடங்கலுடன் இயங்கு; பந்தைச்சுழற்றி உயர எறி; பந்தைச் சுற்றுவிசையுடன் மெல்ல எறி.

lob'ate, *a.* (தாவ.) தொங்கு சதைகளுள்ள; காது வகையில் மடல்களுள்ள; நண்டுவகையில் கொடுக்குகளுள்ள.

lobb'y, *n.* தலைவாயில்; முகப்பு அறை; முகப்புக்கூடம்; இடைகழி; தங்கறை; புகுமுகக்கூடம், பல அறைகளுக்கு வழிமுகமான பொதுக்கூடம்; சட்டமன்றப் புறக்கூடம், பொதுமக்கள் உறுப்பினரைக் கண்டு பேசுவதற்குரிய புறவாரம்; வாக்குப்பதிவு முன்னிட்டுச் சட்டமன்ற உறுப்பினர் கடந்து செல்லும் ஊடுவழிகள் இரண்டில் ஒன்று; *v.* சட்டமன்ற உறுப்பினர் ஆதரவு தேடு, உறுப்பினர் ஆதரவு திரட்டிச் சட்டப் பகர்ப்பை நிறைவேற்று; உறுப்பினரிடம் மன்றாடி வாக்குச் சேர்; புறவாரங்களில் ஊடாடித் திரி.

lobe, *n.* மடல், தொங்குசதை; இதழ், தட்டை வட்டாகத் தொங்கும் பகுதி; அலகு, ஓரப்பிளவுக்கூறு; (தொ.) lobe of ear, புறக்காதுமடல்.

lobel'ia, *n.* நீலம் சிவப்பு ஊதாநிறப் பிளவிதழ் மலர்களையுடைய மூலிகை வகைச்செடி.

loblolly boy, loblolly man, *n.* (கப்.) அறுவை மருத்துவரின் கைத்துணைவர்.

lobot'omy, *n.*=leucotomy.

lob'scouse, *n.* (கப்.) காய்கறி சேர்த்து வதக்கப்பட்ட இறைச்சி உணவுவகை.

lob'ster, *n.* பெருங்கடல் நண்டுவகை; கடல்நண்டிறைச்சி; (தொ.) lobster joint, குழலில் வேண்டிய ஒத்திசைவமைவு உள்ள பொருத்துக்கூறு.

lob'ster-eyed, *a.* முண்டக்கண்ணுடைய, முன்புறமாகப் பிதுங்கிய கண்ணுள்ள.

lob'ster-pot, *n.* அலவன் குடுவை, நண்டுகளைப் பிடிக்கப் பயன்படும் கூடை.

lob'ule, *n.* காதின் சிறுமடல்; சிறு இதழ்.

lob'worm, *n.* மீன்தூண்டிலிற் பயன்படுத்தப்படும் மண்புழு.

local' [1], *n.* நிகழ்ச்சி நடந்த இடம்.

loc'al [2], *n.* நிலக்குடிவாணர்; உள்ளூர்த் தொழில்வாணர்; உள்ளூர் மேடைப் பேச்சாளர்; பத்திரிகை உள்ளூர்ச் செய்தி; திணை அகவட்ட அஞ்சல்தலை; திணைவட்டத் தொடர்வண்டி; (பே-வ.) உள்ளூர்ப் பொது அருந்தகம்; *a.* இடஞ் சார்ந்த; உள்ளூருக்குரிய; நில வட்டாரத்துக்குரிய; குறிப்பிட்ட இடத்திலுள்ள; திணைச் சிறப்புரிமை வாய்ந்த; திணைத் தனிப்பண்புகொண்ட; திணை வட்டார எல்லைக்குட்பட்ட, எங்கும் பொதுப்பரவலாக இல்லாத; (மரு.) நோய் வகையில் உறுப்பெல்லைக்குட்பட்ட, உடல் முழுதும் பரவாத; (கண.) புள்ளி-கோடு முதலியவற்றின் திரிவட்டணை சார்ந்த; அஞ்சல் மேல்வரிக் குறிப்பு வகையில் உள்ளூர் வட்டத்துக்குரிய; (தொ.) local colour, உள்ளூர்

வண்ணம் ; திணைமுறைப் பின்னணிப் பண்பு ; ஓவியவகையில் தனிமுறைச் சிறப்புவண்ணக் கூறு ; local government, வட்டார ஆட்சி; தலத்தாபன ஆட்சி; local time, வட்டாரப் பொழுதுக் கணிப்புப்படி அமைந்த நேரம்.

**locale'**, *n.*=local[1].

**loc'alism**, *n.* தனியிடப்பற்று; திணைவட்டாரப்பற்று; திணைநிலைக் கருத்துக்குறுக்கம் ; திணை வட்டாரச் சார்பு ; வட்டார மரபு, வட்டார வழக்கு.

**local'ity**, *n.* திணையிடம், வட்டாரம் ; நிகழ்விடம் ; இடச் சூழல் ; சூழமைவிடம், அமைப்பிடம் ; இடக்குறிப்பு; வட்டார அறிவு.

**loc'alize**, *v.* இட எல்லைக்குட்படுத்து ; இட எல்லையுள் வகுத்தமை ; வட்டார எல்லையுட்படுத்து ; வட்டாரப் பண்பூட்டு ; நடுவாட்சி வலுத்தளர்த்து, கிளையாட்சி வலுப்படுத்து ; தனிப்படுத்திக் கவனி, கவனத்தை ஒருமுகப்படுத்திக் காண்.

**loc'als**, *n. pl.* வட்டாரமுறைத் தேர்வுகள், வட்டாரந்தோறும் நடத்தப்படும் பல்கலைக்கழகத் தேர்வுகள்.

**locate'**, *v.* இடங்குறிப்பிட்டுக் காண் ; நுணுகி இடங்குறி ; சூழிடங்காண் ; எல்லைகுறி ; இடத்தில் அமைவி, இடநிறுவு ; சூழலில் அமைவி.

**loca'tion**, *n.* இட அமைவு ; இடச்சூழல் ; சரியான இடம் ; திரைப்படப்பிடிப்பு வகையில் படத்தின் பகுதி எடுக்கப்படும் வெளியிடம்.

**loc'ative**, *n.* (இலக்.) இடவேற்றுமை, ஏழாம் வேற்றுமை ; *a.* (இலக்.) இடவேற்றுமைக்குரிய, ஏழாம் வேற்றுமைக்கு உரிய.

**loch**, *n.* ஸ்காத்லாந்து நாட்டில் ஏரி ; கடற்கழி, காயல்.

**lock**[1], *n.* மயிர்க்கற்றை ; குடுமி ; கம்பளிக்கொத்து ; பஞ்சுத் திரள்.

**lock**[2], *n.* பூட்டு ; பூட்டு விசைத்தாழ் ; விசைத்தடுக்கு, சக்கரம் சுழலாமல் அல்லது விசை திறம்பாமல் அல்லது நெறி பிறழாமல் தடுக்கும் அமைவு; வெடிவிசைக்குமிழ்; கால்வாயின் தளமாற்ற அடைப்பமைப்பு; பொறித்தொழிலிற்குரிய செறி காற்றறையை அடுத்துள்ள இடைச்செறிவுக் காற்றறை ; போக்குவரவு நெரிசல் நெருக்கடி ; சக்கரச் சாய்வு வரம்பு, பின்சக்கரத் தளத்திலிருந்து முன்சக்கரம் சாயத்தக்க சாய்வின் உச்ச எல்லை ; *v.* பூட்டு ; தாழிடு ; கதவு பெட்டி முதலிய வற்றை இறுக்கி மூடிப் பூட்டு ; வீடு முதலியவற்றின் கதவை மூடிப் பூட்டிடு ; இசைவாகப் பூட்டப்பெறு ; பூட்டையுடைய தாயிரு ; ஆள் அல்லது பொருளைப் பூட்டி அடைத்து வை ; சுற்றி வளைத்துக்கொள் ; சேமித்து வை ; தொலைவில் ஒதுக்கமாக்கி அமைக்கப்பட்டிரு ; சிறை செய், காவலில் அடை ; அடங்கி ஒடுங்கும்படி செய் ; வெளியே நிறுத்திப் பூட்டிவிடு ; பின்னி இணைத்துக்கொள் ; பின்னிக் கொளுவி இயங்க முடியாமற் செய் ; பின்னிக்கொண்டு இயங்கமுடியாமலிரு ; அணைத்துக்கொள் ; மற்போரில் கட்டிப்பிடித்துக் கொள் ; நடக்கும்போது முன்வரிசை பின்வரிசை கால்கள் பின்னும்படி நெருங்கி அணிவகுத்து நடத்து ; முன்சக்கரச் சாய்வாற்றலுடன் இயங்கு ; கால்வாய்க்குத் தளமாற்ற அடைப்பமைப்பு ஏற்படுத்து; படகைத் தளமாற்ற அடைப்புக் களினூடாக ஏற்றி இறக்கிச் செலுத்து; தளமாற்ற அடைப்பு வழிச்செல்லு ; (தொ.) Lock Hospital, மேகநோய் மருத்துவ நிலையம் ; lock, stock, and barrel, எல்லாமாக, முழுநிறைவாக ; under lock and key, பூட்டப்பட்டு ; பத்திரமாக.

**lock'age**, *n.* கால்வாய்த் தளமாற்ற அடைப்புக்களினால் நிகழும் எழுச்சி வீழ்ச்சி அளவு ; கால்வாய்த் தளமாற்ற அடைப்புப் பயனீடு ; தளமாற்ற அடைப்பின் எண்ணிக்கை ; கால்வாய் அணையடைப்பைப் பயன்படுத்துவதற்குரிய ஆய வரி.

**lock'chain**, *n.* வண்டியின் சக்கரங்களின் சங்கிலிப்பூட்டு.

**lock'er**, *n.* பூட்டுபவர் ; பூட்டுவது ; நிலைப்பெட்டி, சிறிய அடுக்குப்பெட்டி ; பொதுக் கூடங்களில் தனிப்பூட்டு வாய்ப்புடைய நிலையடுக்கு ; (கப்.) துணிமணிப்பேழை ; ஆடையணிமணி அறை ; பலநிலைப் பெட்டிகளில் ஒன்று ; (தொ.) not a shot in the locker, பையில் பணமில்லை.

**lock'et**, *n.* பதக்கம் ; வாளுறை மீதுள்ள பட்டைத்தகடு ; பொன் வெள்ளியாலான சிறு பேழை.

**lock'fast**, *a.* பூட்டிப் பாதுகாப்பான.

**Lock'ian**, *a.* ஜான் லாக் (John Locke) என்ற மெய்விளக்க அறிஞரைப் பின்பற்றுகிற; லாக்கின் கோட்பாட்டைச் சார்ந்த.

**lock'jaw, locked'-jaw**, *n.* வாய்ப்பூட்டு நோய்.

**lock'-keeper**, *n.* கால்வாயின் தளமாற்ற அடைப்புக் காவலர்.

**lock'man**, *n.* 'மான்' (Isle of Man) தீவில் பிண ஆய்வாளரின் துணைவர்.

**lock'nut**, *n.* மரையாணி கழலாமலிருப்பதற்கான பூட்டமைவு.

**lock'out**, *n.* கதவடைப்பு, தொழிலாளரின் வெளியடைப்பு.

**locks**, *n. pl.* தலைமுடி, தலைமயிர்.

**locks'man**, *n.*=lock-keeper.

**lock'smith**, *n.* கொல்லன் ; பூட்டுச் செய்பவன் ; பூட்டுகளைப் பழுது பார்ப்பவன்.

**lock'spring**, *n.* கடிகார மேல்மூடியை மூடவைக்கும் சுருள் வில்.

**lock'-stitch**, *n.* இழைப்பூட்டுத் தையல் ; ஈரிழைகள் உறுதியாகச் சேரும்படி தையல் இயந்திரத்தில் பின்னப்பட்ட பூட்டுத்தையல்.

**lock'up**, *n.* பள்ளி அடைப்பு ; கடையடைப்பு ; அடைப்பு நேரம் ; மூலதனக் கட்டுப்பாடு ; கட்டுப்பட்ட மூலதனம் ; சிறைக்கூட மனை, கைதிகள் தற்காலத் தங்கலாகப் பயன்படும் மனை ; சிறைக்கட்டறை.

**loc'o**[1], *n.* புகைவண்டி இயக்குபொறி.

**loc'o**[2], *n.* கால்நடைகளுக்கு மூளைக்கோளாறை உண்டு பண்ணும் அவரைக் குடும்பத்தைச் சார்ந்த அமெரிக்க நச்சுச் செடிவகை.

***loc'o citat'o***, (ல.) *adv.* ஏற்கனவே மேற்கோளாகக் காட்டப் பட்ட பகுதியில்.

**loc'o-disease**, *n.* அமெரிக்க அவரைக்குடும்ப நச்சுச் செடி வகையைத் தின்பதனால் கால்நடைகளுக்கு ஏற்படும் மூளை நோய்.

**loc'omote**, *v.* (உயி.) புடைபெயர், இடம்விட்டு இடம் பெயர்.

**locomo'tion**, *n.* புடைபெயர்வு; இடம்விட்டு இடம்பெயர்வு; இடம் பெயரும் ஆற்றல் ; பயணம், செயற்கை இடமாற்ற முறை.

**loc'omotive**, *n.* தொடர்வண்டி இயக்கு பொறி ; தன் ஆற்றலாலேயே இடம் பெயர்ந்தியங்கும் பொறி ; இடம் பெயர்ந்து செல்ல உதவும் விலங்கு ; *a.* புடைபெயர்ச்சிக்குரிய ; இடம் பெயரும் ஆற்றலுடைய, ஓரிடத்தில் நிலைத்திராத, தானே தன் ஆற்றலால் புடைபெயர்ந்தியங்குகிற ; இடத்துக்கிடம் கொண்டு செல்கிற ; (பே-வ.) பயணத்துக்குரிய ; (தொ.) locomotive engine, தன்னுற்றலால் இடம்விட்டு இடம் பெயர்ந்து செல்லும் இயந்திரம், தொடர்வண்டியின் இயக்கு பொறி.

**loc'omotor**, *n.* புடைபெயர் வண்டி, புடைபெயர்பவர் ; *a.* இடம்விட்டு இடம்பெயரும் ஆற்றலுள்ள ; ஓரிடத்தில் நிலைத்திராத.

**loc'omotory**, *a.* இயங்குகிற, ஓரிடத்தில் நிலைத்திராத, இடப் பெயர்வுடைய.

**loc'ulus**, *n.* (வில., தாவ., உள்.) பள்ளக்குழிகளுள் ஒன்று ; *pl.* loc'uli.

**loc'um ten'ens**, *n.* பகர ஆள்.

**loc'us**, *n.* இடம், குறிப்பிடம், நிலையிடம் ; (கண.) புள்ளி வரைதளம் ஆகியவற்றின் திரிபடிவம்; (தொ.) locus classicus, நன்கு தெரிந்த பகுதி ; நன்கு சால்புறுத்தப்பட்ட கூறு ; locus in quo, நிகழ்ச்சியிடம் ; locus poenitentiae, பின்வாங்கு வாய்ப்பு, தீர்மானமான நடவடிக்கை எடுக்கும் வரையில் பின்வாங்குவதற்குத் தரப்பட்டுள்ள தறுவாய் ; locus standi, இசைவேற்புடைய நிலை; தலையீட்டுரிமை, இடையீட்டுரிமை ; முறைமன்ற வருகை உரிமை.

**loc'ust**, *n.* வெட்டுக்கிளி; அழிகேடன்; சால் விழுங்கி; நடு நிலக் கடலக மரவகையின் கனி; இலவங்க வகை மரக் கொட்டை; இலவங்க மரவகை நெற்று.

**loc'ust-bird, loc'ust-eater**, *n.* வெட்டுக்கிளியை உண்ணும் பறவை வகை.

**loc'ust-tree**, *n.* கொம்புபோன்ற காயுடைய நடுநிலக் கடலக மரவகை.

**locu'tion**, *n.* பேச்சு; பேசும்பாணி; சொல்நடை; சொற்றொடர்ப்பாங்கு; நடைமரபுப் பாங்கு.

**loc'utory**, *n.* துறவி மடங்களில் உரையாடல் அறை; வரவேற்புக்கூடம்; துறவிமட வாசிகளுக்கும் வெளியார்களுக்கும் இடையே பேட்டிக்கான கம்பியழி.

**lode**, *n.* நீர்செல்லும் வழி, வாய்க்கால்; நீர்வழி; சதுப்புநிலக் கழிநீர்க் கால்வாய்; சதுப்பு நிலங்களிலுள்ள உலோகத் தாதுக் கொடிக்கால்.

**lode'star**, *n.* வடமீன், வடதிசை காட்டும் துருவ நட்சத்திரம்; வழிகாட்டி; வழிகாட்டுங் கொள்கை; குறிக்கோள்; இலக்கு.

**lodge**, *n.* புறமனை, தோட்டவீடு; வேட்டைக் களமனை; முகப்புக் குச்சில்; கல்லூரி வாயிற்குடில்; தொழிற்சாலைப் புகுமுகச் சாவடி; சட்டமன்ற முகப்புக்கொட்டில்; தொடர்மனை முனங்கறை; வாயிலோன் இருக்கை; நற்கொத்தர் கிளைச் சங்கக் கூடம்; கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகக் கல்லூரித் தலைவரின் உறைவிடம்; நீர்நாயின் குடைவுத் தூறு; வட அமெரிக்க இந்தியரின் கூடாரம்; *v.* தங்கிடம் அளி; தங்கல் விருந்தினராக ஏற்று இடவசதி வழங்கு; துயிலிடமளி; தங்கிடமாயமை; உள்ளடக்கு, உட்கொண்டிரு; தங்குவி; தங்கவிடு; பதியவை; பதியவிடு; பாதுகாப்பாக வை; அடைக்கலமாக ஒப்புவி; கொடு, ஒப்படை; தங்கு; தங்கலாளராக இரு; வாடகை தந்து குடியிரு; (பே-வ.) முறையீட்டைப் பதிவுசெய்; (தொ.) grand lodge, நற்கொத்தர் சங்க ஆட்சிக்குழு.

**lodge'ment**, *n.*=lodgment.

**lodg'er**, *n.* தங்குபவர்; வாடகைக் குடியிருப்பாளர்; (தொ.) lodger franchise, பிரிட்டனின் மாமன்றத்துக்கு 1918 நிறையுரிமைக்கு முற்பட்ட வாடகைக் குடியிருப்போருடைய வாக்குரிமை.

**lodg'ing**, *n.* வாடகை அறை; வாடகை விடுதி; தங்குமிடம்; குடியிருப்பிடம்; (தொ.) lodging turn, இருப்பூர்தி நிலையத்தில் வாய்ப்பிடங் கொள்ளவேண்டிய தவணைமுறை.

**lodg'ing-house**, *n.* வாடகை விடுதிமனை; (தொ.) common lodging-house, இரவில் படுப்பதற்கான பொது அறை வாய்ப்புக்கொண்ட வாடகை விடுதி.

**lodg'ings**, *n. pl.* விடுதிக்குப் புறம்பாக வேறிடத்தில் வசிப்பதற்கான வாடகை அறைகள்.

**lodg'ment**, *n.* பற்றரண், படைத்துறையில் எதிரிகளிடமிருந்து கைப்பற்றிய இடத்தில் அமைக்கப்படும் தற்காலிகக் காப்பரண்; கால் வைப்பிடம்; புது நிலைகாப்பிடம்; புது வெற்றியிடம்; வீழ்ச்சி இடைக்கழிவுத் திரளை; இடைத்தங்கு வண்டற் கூளம்; (சட்.) பண ஒப்படைப்பு; ஒப்படைப்புப்பணம்.

**lo'ess**, *n.* ஆற்றுப் பள்ளத்தாக்குகளில் படியும் களிமண் கலந்த சாம்பல் மஞ்சள் நிறமான வண்டல் படிவு.

**loft**, *n.* பரண்; மேல்தளத்திலுள்ள சிறு அறை, மாடியிலுள்ள குறுகிய அறை; குதிரை இலாயத்தின் மேலுள்ள அறை; புருக்கூடு; புருக்களின் தொகுதி; திருக்கோயிலின் அடுக்குமேடையிருக்கை; மன்றத்தின் சூழ் அடுக்குமேடை; குழிப்பந்தாட்டப் பந்தடி மட்டையின் பின்புறச்சாய்வு; *v.* குழிப்பந்தாட்ட வகையில் பந்தை உயர அடி; பந்தை உயர அடித்து இடர் நீங்கிச்செல்லுவி; புருக்களைக் கூட்டில் அடை.

**lof'ter**, *n.* பந்தைத உயரத்தில் அடிப்பதற்கான குழிப் பந்தாட்ட மட்டை.

**lof'ty**, *a.* ஓங்கிய, மிக உயரமான; வீறுர்ந்த, கம்பீரமான; இறுமாப்புள்ள; உயர்ந்த, மேன்மையான, விழுமிய; உயரப் பறக்கின்ற; பெருமிதமான, பெரும்போக்கான, ஆரவாரமான.

**log**[1], *n.* மரக்கட்டை; வெட்டப்பட்ட மரத்துண்டு; வீழ்த்தப்பட்ட மரப்பகுதி; கப்பலின் வேகத்தை அளக்குங் கருவி; தற்காலக் கூலித் தையற்காரனின் வேலைநேர அட்டவணை; *v.* துண்டுகளாக வெட்டு; கப்பல் சென்ற தூரத்தைக் குறிப்புப் புத்தகத்தில் பதிவுசெய்; கப்பல் வகையில் வேகமாக இடம் பெயர்ந்து செல்; (கப்.) நாள் விவரக் குறிப்பேட்டில் கப்பலோட்டியின் பெயரையும் செய்த குற்றவிவரத்தையும் பதிவு செய்; குற்றவாளிக்குத் தண்டப்பணம் விதி; (தொ.) float like a log, lie like a log, fall like a log, உதவியற்ற நிலையில் இயங்கு; have the log, throw the log, கப்பலின் வேகத்தை அளப்பதற்கான மிதவையைக் கையாளு; in the log, வெட்டப்படாத, முழு மரமாக உள்ள; King Log, பொம்மை அரசன், ஆடுதன் இராஜா; log cabin, மரக்கட்டைகளாலான குடிசை; roll my log and I'll roll yours, ஒருவருக்கொருவர் துணையுதவி செய்துகொள்ளு; sail by the log, கப்பலின் அமைவு நிலையை வேகமானியினுல் கணக்கிடு.

**log**[2], *n.*=logarithm.

**log'an**, *n.*=logan-stone.

**log'anberry**, *n.* ஒட்டுக் கனிவகை.

**log'an-stone**, *n.* தொட்டால் ஆடும் சமநிலையில் நிறுத்தப்பட்ட பளுவான கல்.

**logaoed'ic**, *n.* கிரேக்க மொழியில் முதலசை நீண்ட மூவசை ஈரசை விரவிய யாப்பு வகை; *a.* முதலசை நீண்ட மூவசை ஈரசை விரவும் யாப்புமுறை சார்ந்த.

**log'arithm**, *n.* (கண.) மடக்கை, எண்ணுக்கு நிகரான மதிப்புடைய கட்டளை விசை எண்ணின் மடங்கெண்; (தொ.) common logarithm, பத்தினைக் கட்டளை மூல எண்ணாகக் கொண்ட மடக்கை.

**log'-board**, *n.* நாள்விவரக் குறிப்புப் பலகை, கப்பல் வேகம் முதலியவற்றை நாள்விவரக் குறிப்பேட்டில் எழுதுவதற்கு முன் குறித்துக்கொள்வதற்குப் பயன்படும் மடக்கேடு.

**log'-book**, *n.* (கப்.) நாள்விவரக் குறிப்பேடு; பயண விவரக் குறிப்பேடு.

**log'-cabin**, *n.* கட்டைகளால் இயன்ற குடில்.

*loge*, (பிர.) *n.* நாடகக் கொட்டகை மூடிருக்கை.

**logg'erhead**, *n.* மரமண்டை, மூடன்; வெப்பூட்டத்தக்க இருபுற உருளைகளையுடைய நிலக்கில் உருக்குகருவி; படகில் கயிறுகளின் திசைத்திருப்பத்துக்குரிய நிலைக் கம்பம்; பெருந்தலைக் கடலாமை வகை; பெருந்தலைப் பறவை வகை; (தொ.) at loggerheads, at loggerheads with, ஒவ்வாதிருக்கும் நிலையில், சச்சரவிடும் நிலையில்.

**logg'ia**, *n.* திறந்த பக்கங்களுள்ள படிமேடை இருக்கை; மேல்வளைவோடு கூடிய சாலைப்பாதை; *pl.* logg'ias, logg'ie.

**lo'gic**, *n.* ஏரணம், அளவை நூல்; தருக்கமுறை; தருக்க முறை ஏடு; வாதமுறை; வாதப்போக்கு; தருக்கத்திறமை; தருக்கம், வாதம்; முறைமையாற்றல்; மாறா நியதி, விலக்க முடியா நிலை; (தொ.) is not governed by logic, குயுக்தியானது, தருக்க நூலுக்குப் புறம்பானது.

**lo'gical**, *a.* நேர்மையான; வாதப் பொருத்தமுடைய; காரண காரியத் தொடர்புடைய; நேர்மைப்பொருத்தமுடைய பொருத்தமாக வாதிக்கப்பட்ட; வருமுறையான, உய்த்துணரும் இயல்புடைய; தருக்கமுறைப்படக்கூடிய; எளிதில் நிலைநாட்டக்கூடிய; எதிர்வாதத்துக்கு நிற்கக்கூடிய; நம்பத்தக்க; சரியான வாதத்திற்கு இடந்தருகிற; பகுத்தறிவுக்குப் பொருத்தமான; (தொ.) logical designer, கணிப்பியந்திரங்களை அமைக்கும் திட்டங்களில் ஈடுபட்டுள்ளவர்.

**logi'cian**, *n.* அளவை நூல் வல்லான், தார்க்கிகன்.

**lo'gie**, *n.* நாடக மேடைகளில் பயன்படுத்தப்படும் துத்தநாகப் போலி அணிமணி.

**log'ion**, *n.* புறப்பதிவுப் பொன்மொழி, விவிலிய நற்செய்தி வரலாறுகள் நான்கினுக்கும் புறம்பாகப் பதிவு செய்யப்பட்டு நமக்குக் கிடைத்துள்ள இயேசுநாதரின் வாயுரைப் பொன்மொழி; *pl.* log'ia.

**logis'tic**, *a.* கணிப்பியல் திட்டம் சார்ந்த; தகவுப்பொருத்த மான, சரி அளவுப்பொருத்தமுடைய.

**logis'tical**, *a.*=logistic.

**logis'tics**, *n. pl.* போர்வீரர்களை அணிவகுத்து நடத்துங் கலை; கடற்படைக்குத் தேவையானவற்றை அளித்துக் காப் பாற்றுங் கலை.

**log'line**, *n.* மிதவை பொருத்தப்பட்ட கம்பிக்கயிற்றினை யுடைய கப்பலின் வேகமானி.

**log'ogram**, *n.* சுருக்கெழுத்திற் சொல்லெழுத்து.

**log'ograph**, *n.* அச்சிடுவதற்குப் பயன்படும் வகையில் ஒரே பகுதியாக வார்க்கப்பட்ட சொல்.

**logog'rapher**, *n.* ஹெரோடாடஸ் (Herodotus) என்பவ ருக்கு முன்னிருந்த கிரேக்க உரைநடை வரலாற்று ஆசிரியர் களுள் ஒருவர்; மேடைப்பேச்சு எழுத்தாளர்.

**logog'raphy**, *n.* சொல்லச்சு முறை.

**log'ogriph**, *n.* மாற்றெழுத்துப் புதிர்.

**logom'achy**, *n.* சொற்போர்.

**log'os**, *n.* 'சொல்'; வாக்கீசன்.

**log'otype**, *n.* அச்சுமுறையில் இணையெழுத்து வார்ப்பு; சொற் பாள வார்ப்பு.

**log'wood**, *n.* அமெரிக்க சாய மரவகை

**loin'-cloth**, *n.* அரைத்துணி.

**loins**, *n. pl.* அரை, இடுப்பு, போலி விலா எலும்புகளுக்கும் இடுப்பு எலும்புகளுக்கும் இடைப்பட்ட பகுதி; தண்டெ லும்பின் இடுப்புப்பகுதியை உட்படுத்திய இடுப்பிறைச்சி; (தொ.) fruit of one's loins, child sprung from one's loins, ஈன்றெடுத்த மகவு; gird up one's loins, பயணம் முதலிய வற்றிற்கு வரிந்துகட்டு, முயற்சிக்கு முன்னெருக்கமாய் அமை.

**loir**, *n.* சுண்டெலிக்கும் அணிலுக்கும் இடைப்பட்ட வளை தோண்டி வாழும் கொழுத்த கொறிவிலங்கு வகை.

**loit'er**, *v.* சோம்பித்திரி; வறிதே காலந்தாழ்த்து; இடை யிடையே தங்கித் திரி; அலைந்து திரிந்து பொழுது போக்கு; சுற்றித்திரி; பின் தங்கு.

**loll**, *v.* நா வகையில் வெளியே நீட்டித் தொங்கவிடு; சோம்ப லாக நில்; கிடந்துருள்; சாய்ந்திரு; செயலற்ற முறையில் மேலே சாய்ந்துகிட.

**Loll'ard**, *n.* பதினான்காம் நூற்றாண்டில் வைகிளிப் (Wyclif) என்பவரைப் பின்பற்றிய சமய எதிர்ப்பாளருள் ஒருவர்.

**loll'ipops**, *n. pl.* இனிப்புத் தின்பண்டம், சர்க்கரையில் பொதிந்த பழப்பண்டம்.

**loll'op**, *v.* (பே-வ.) தள்ளாடு, தடுமாறி விழு; தயங்கி நட, சோம்பலோடு அருவருப்பாக நடந்துசெல்.

**Lom'bard**, *n.* இத்தாலி நாட்டை ஆறும் நூற்றாண்டில் கைப்பற்றியவர்களுள் ஒருவர்; லம்பார்டியில் வாழ்பவர்; *a.* இத்தாலி நாட்டை ஆறும் நூற்றாண்டில் கைப்பற்றிய செர்மானியர்களைச் சார்ந்த; லம்பார்டி பகுதிக்குரிய; (தொ.) Lombard street, வட்டித் தொழிலாளர் வாழ்ந்துவந்த பொரு ளகங்கள் நிரம்பிய லண்டன்மாநகர்த் தெரு.

**Lombard'ic**, *a.* லம்பார்டியைச் சார்ந்த; லம்பார்டி பகுதி மக்களுக்குரிய; 7-13-ஆம் நூற்றாண்டுகளுக்கிடைப்பட்ட சிற்பப் பாணிக்கு உரிய; 15-16-ஆம் நூற்றாண்டுகளுக்குரிய ஓவியக்கலைப் பாணிக்கு உரிய.

**lom'ent**, *n.* முதிர்வுற்றபோது ஒவ்வொரு விதைக்கணுவாக வெடிக்கும் காய் நெற்றுவகை.

**Lo'ndon clay**, *n.* (மண்.) தென்கிழக்கு இங்கிலாந்தின் மூன்றும் பிரிவு மண்ணியற் படிவு.

**Lo'ndon ivy**, *n.* லண்டன் மாநகர மூடுபனி.

**Lo'ndon particular**, *n.* (பே-வ.) லண்டன் நகரத்திற்கே தனிச் சிறப்பாயமைந்த மூடுபனி வகை.

**Lo'ndon pride**, *n.* மஞ்சள் வெண்மை சிவப்பு முதலிய கலப்பு மஞ்சரிப் பூக்களையும் கொத்தான இலைத்தொகுதியையும் கொண்ட மலர்ச்செடிவகை.

**Lo'ndon smoke**, *n.* மங்கிய சாம்பல் நிறம்; வெளிறிய ஈய நிறம்.

**lone**, *a.* தனிமையான, துணையற்ற, தோழமையற்ற; அரு நிகழ்வான; பலகாற்போகாத; குடியற்ற, குடியில்லாத, தனித்த; தனிமையை உணர்கிற; தனிமையை எண்ணச் செய்கிற; (தொ.) in lone hand, விளையாட்டில் மற்றெல் லோரையும் தனித்தெதிர்க்கும் நிலையில்.

**lone'liness**, *n.* தனிமை.

**lone'ly**, *a.* தனித்த, துணையற்ற; ஒதுக்கமான; ஆளரவ மற்ற; நடமாட்டமில்லாத.

**long**[1], *n.* நெடுங்காலம்; நீளிடை, நீண்ட கால இடைவெளி; விரிவிளக்கம்; நீளசை; நெடில் ஒலி; (க-க.) நீள்பாளம்; (பே-வ.) நெடு விடுமுறை; (இசை.) ஈரிடைச்சுரம்; *a.* நீள மான; நெடிய, நெட்டையான; நீள்கால அளவுடைய, நீடு நிகழ்கிற; நெடுந்தொலைவான; நெடுந்தொலைவு எட்டுகிற; நெடுந்தொலைவாற்றலுடைய; தலைவகையில் உயரமிக்க; முக வகையில் ஒடுங்கிய; சோர்ந்த தோற்றமுடைய; கால நீடித்த; நீடுவழக்கான; நீடித்த பழமையுடைய, நெடுங் காலத்திய; முன்னோக்குடைய; தொலைநோக்குடைய; தொலை விளைவுடைய; தொலைவிலிருந்து செயலாற்றத்தக்க; கண் பார்வைவகையில் தொலைவுத்திறக் கோளாறுடைய; நீட்டான; நீட்டளவுடைய; காலநீடிப்புடைய; நெடிது தொடர்ந்த; நீளமிக்க; நீண்டுசெல்கிற; அளவில் விஞ்சிய; பெரிய; நெடுநீளமான; வரம்பு கடந்த நீட்சியுடைய; சோர் வூட்டுகிற; ஒலி-அசை வகையில் கால அளவு நீட்டிப்புடைய; *adv.* நீண்டகாலமாக; நெடுநேரமாக; காலநீடித்து; கால முழுவதும்; நீண்டகால அளவில்; (தொ.) as long as, so long as, என்றநிலை இருக்குமட்டும்; என்றநிலைமட்டும் இருக்கு குமானல், என்றநிலையில்; be long doing, be long in doing, செயலில் மிகக் காலந்தாழ்த்து; மிக மெல்லச் செயலாற்று; has a long arm, நெடுந்தொலைவிற்குத் தன் ஆற்றலை உணர்த் தக்கூடியவர்; in the long run, முடிவில், பல சூழ்நிலை மாற் றங்களுக்குப் பிறகு, வேறுபடு நிலைகளுக்குப் பிறகு; long after, நெடுநாளைக்குப்பிறகு; நெடுங்காலத்துக்குப் பின்; long ago, நெடுங்காலத்துக்கு முன்; long before, நெடிது முன்னாக; விரைவில், சீக்கிரத்தில்; long bowls, நெடுந் தொலைவிலிருந்து போடுதல்; long butt, மேசைக்கோற் பந்தாட்டத்தின் நீண்ட கோல்; long clay, திருக்கோயிற் பாதுகாவலரின் புகைக்குழாய்; long cloth, நீண்டதாக நெய்யப்பட்ட துணிவகை; long date, பட்டய நிறைவு நாள் வகையில் நெடிது நாள் இடைவிட்ட காலம்; long drink, உயரமான கண்ணாடிக் கோப்பைகளில் கொடுக்கப்படும் இன் தேறல் வகை; long ears, கழுதை இயல்பு, மடமை; long face, ஒளியற்ற முகம், துயரார்ந்த முகம்; சோர்ந்த முகத்தோற்றம்; long field, மட்டைப்பந்தாட்டத்தில் பந்து வீசுபவருக்குப் பின்னுள்ள விளையாட்டுக் களப்பகுதி; long figure, long price, மிகுவிலை, பெருவிலை, தாங்கற்கரிய விலை; long head, இயல்பாகவுள்ள நீளத்தைவிட மிகுதி யாக நீண்ட தலை; அறிவுக்கூர்மை, மதிநுட்பம், முன்னறிவு; long hop, மட்டைப்பந்தாட்டத்தில் குறுகிய தொலைவில் படுமாறு வீசப்படும் பந்து; long jump, நெடுந்தாண்டல்; long measure, நீட்டலளவை; long metre, அடிக்கு எட்டு அசை கள் கொண்ட நாலடிப் பாசுர யாப்பு; long odds, சூதாட்டத் தில் சிறிதும் சமமற்ற தன்மையில் பணயம் வைத்தாடுதல்; long off, long on, மட்டைப் பந்தாட்டத்தில் பந்து வீசு பவரின் இடப்புறம் வலப்புறம் அல்லது பின்புறத்தில் இருக்கும் ஆட்டக்காரர்; Long Parliament, (வர.) 1640-ஆம் ஆண்டில் தேர்ந்தெடுக்கப்பட்டு 1660-ஆம் ஆண்டில் கலைக்கப் பட்ட பிரிட்டனின் மாமன்றம்; long pig, மனிதத் தசை, மனித ஊனுண்ணிகள் மனித ஊனுக்கு வழங்கும் பெயர்; long pull, சில இன்தேறல் விடுதிகளில் வாடிக்கைக்காரர் களைக் கவருவதற்காகக் கொடுக்கப்படும் மிகுதிப்படி அள வான இன்தேறல்; long robe, வழக்குரைஞர் உடை;

long service, நீண்டகாலப் படைத்துறைப் பணி, பன்னீராண்டு படைப் பணி முறை; long sight, தொலைப் பார்வைக் கோளாறு; தொலை நோக்கு; நுண்காட்சித் திறம்; long suit, சீட்டாட்ட வகையில் ஒரே இனத்திற் பல சீட்டுக்கள் கொண்ட கை; Long Tom, நெடு நீளமான அல்லது நெடுந்தொலை விற்குச் சுடக்கூடிய துப்பாக்கி வகை; long tongue, வம்பளப்பு; long vacation, பெரிய விடுமுறை; long waist, ஆடையில் மிகவும் கீழாகவுள்ள இடுப்புப்பகுதி; long wave, வான்தந்தி வகையில் எண்ணூறு கோல் அல்லது அதற்கு மேற்பட்ட நீளமுடைய அதிர்வுகள் கொண்ட வானலை; long wind, இடை ஓய்வின்றி நெடுந்தொலை ஓடும் ஆற்றல்; சோர்வூட்டுமளவில் நீடித்துப் பேசும் அல்லது எழுதும் ஆற்றல்; make a long arm, மேசையில் இருப்பதை எட்டியெடுப்பதற்குக் கையை நீட்டு; make a long nose, விரல்களை மூக்கிற்கெதிராக வெட்டி இகழ்ச்சிக் குறிப்புக்காட்டு; take long views, பின்விளைவுகளை ஆராய், வருங்கால விளைவுகளைச் சிந்தி; the long and the short of it, அதைப்பற்றிச் சொல்லக்கூடியவை சொல்லவேண்டியவை எல்லாம்.

long[2], *v.* விரும்பு, அவாவுறு, வேணவாக்கொள்.

long'ago, *n.* தொல்பழங்காலம்; *a.* தொல்பழங்காலத்திய.

long'-bill, *n.* நீண்ட அலகுள்ள சதுப்புநிலப் பறவை வகை.

long'boat, *n.* பயணக்கப்பலின் மிகப் பெரிய படகு.

long'-bow, *n.* கையால் வளைத்து இறகிணைப்புடைய நீண்ட அம்பு கொண்டு எய்யும் வில்; (தொ.) draw the long-bow, உயர்வுநவிற்சியும் பொய்ப்புனைவுஞ் சேர்த்து நெடுநீளச் சரடுவிடு.

long'-clothes, *n.* கைக்குழந்தையின் ஆடைகள்.

long'distance, *a.* காலநிலை முன்னறிவிப்பு வகையில் நெடுநாள் முன்னதாக அறிவிக்கப்பட்ட.

long'-drawn, long'-drawnout, *a.* வரையறையின்றி நீட்டிக்கப்பட்ட, வரம்புமீறி நாட்கடத்தப்பட்ட.

lon'gerons, *n. pl.* வானூர்தியின் நீட்டுவாட்டமான உடற்பகுதி அல்லது இயந்திரத்தின் மேலுறை உறுப்பு.

longev'al, longaev'al, *a.* நீண்டநாள் உயிரோடிருக்கிற, நீடு வாழ்கிற.

longev'ity, *n.* பன்னாள் வாழ்வு, நீள்வாணாள்.

long'-hand, *n.* சாதாரண எழுத்துமுறை.

longicaud'ate, *a.* நீண்ட வாலுடைய.

lon'gicorn, *n.* இழைபோன்ற நீண்ட உணர்கொம்புடைய வண்டு வகை.

lon'gitude, *n.* நிரைகோடு, தீர்க்காம்ச ரேகை; நீளப்பாங்கு.

longitud'inal, *a.* நீளப்பாங்கான நீட்டுப்போக்கான; நிரைகோடு சார்ந்த.

long'-liver, *n.* நீடுவாழ்பவர்.

Long'obard, *n.* இத்தாலி நாட்டில் கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் படையெடுத்த செர்மானிய இனத்தவருள் ஒருவர்; இத்தாலியில் லம்பார்டி பகுதிக்கு உரியவர்.

long'-playing, *a.* ஒலிப்பதிவுத் தட்டுவகையில் உள்வரிகளின் மிகு நுட்பங் காரணமாக மிக நீடித்த பாடல்கள் அடங்கிய.

longs and shorts, *n.* லத்தீன் பாவகை; (க-க.) நீளமும் குட்டையுமான பாளங்கள் மாறிமாறி வைக்கப்பட்டுள்ள நிலை.

long'shanks, *n.* நீண்ட காலுடைய பறவை, ஆள்காட்டுங்குருவி, பவழக்காலி.

long'-shore, *a.* கடற்கரையருகில் உள்ள; கடற்கரையருகில் ஊடாடுகிற; கடற்கரையோரமாக வேலைசெய்கிற.

long'-shore-man, *n.* கரையோரப் பகுதியில் கப்பலிற் சரக்கேற்றுபவர்; கடற்கரையோரமாக மீன்பிடிப்பவர்.

long'-spun, *a.* சலிப்பூட்டுகிற.

long'-stand'ing, *a.* நெடுங்காலமாகவுள்ள, நீடித்துநிலவுகிற.

long'stop, *n.* மட்டைப்பந்தாட்டத்தில் இலக்குக் காவலருக்குப் பின்னின்று அவரால் விடப்பட்ட பந்துகளைத் தடுப்பவர்; *v.* இலக்குக் காவலருக்குப் பின்னின்று அவரால் பிடிக்காமல் விடப்பட்ட பந்துகளைத் தடு.

long'-suff'ering, *n.* சகிப்புத்தன்மை, நெடுங்காலம் தீங்குகளைப் பொறுமையோடு தாங்கியிருத்தல்; *a.* தீங்குகளை நெடுங்காலம் பொறுத்துக்கொண்டுள்ள.

long'-term, *a.* நெடுங்கால எல்லையுடைய; திட்டவகையில் தொலைநாட்குறிக்கொண்ட, நீண்டகாலத்ததான, குறுகிய காலத்ததல்லாத.

long'-tongued, *a.* வாய்நீண்ட, வாயாடியான; பிதற்றுகிற.

*longue haleine*, (பிர.) *n.* நீடரும்பணி, நீடித்த விடாமுயற்சியும் உழைப்பும் தேவைப்படும் வேலை; புத்தகப்படைப்புத் தொழில்.

*longueurs*, (பிர.) *n. pl.* புத்தகம் படம் நாடகம் முதலிய வற்றிற் சோர்வூட்டும் பகுதி.

loo, *n.* வட்டமேசையில் ஆடப்படும் சீட்டாட்ட வகை; சீட்டாட்டத்தில் தண்டத்தொகையைப் பொதுநிதிக்குச் செலுத்தும் நிலை; *v.* ஆட்டத்தவறுகளுக்காகத் தண்டத்தொகைக்கு உட்படுத்து; (தொ.) unlimited loo, பொதுநிதியில் முன்னமேயுள்ள தொகைக்குச் சமமாகத் தண்டத் தொகை விதிக்கப்படும் சீட்டாட்ட வகை.

loob'y, *n.* முட்டாள், அறிவிலி.

loof'ah, *n.* உடல்தேய்ப்புக்குரிய சுரை வகையின் நெற்று.

look, *n.* நோக்கு, பார்வை; நோட்டம்; நோக்குந் திசை; தோற்றம்; சாயல்; *v.* நோக்கு, காண்; நோட்டமிடு; உற்றுப்பார்; நாடு, கவனி; கவனம் செலுத்து; திரும்பிப் பார்; பக்கமாகத்திரும்பு; கண்ணுறு, எதிர்முகமாகு, தோற்று, தோற்றமளி, போலத்தோன்று; திசையில் சாய்வுறு, திசைநாடிச் செல்வதுபோன்றிரு; எதிர்நோக்கு; நோக்கால் உணர்த்து; நோக்கால் தெரிவி; தேர்ந்துகாண், தேர்ந்தாராய்; கண்டறுதிசெய், கண்டுறுதி செய்; திசைநோக்கி அமைவுறு; (தொ.) look about, விழிப்புடனிரு, சுற்றி நோக்கு; look about one, சூழ்நிலை ஆய்ந்துகாண்; திட்டமிடுமுன் சூழ்ந்து ஆய்வுசெய்; look after, பார்வையினூற் பின் தொடர்; நாடு, தேடு; கவனித்துப் பார்த்துக்கொள்; பேணு; look ahead, திரும்பிநோக்கிச் செல்லுமிடமறிந்துசெல்; look alive, விரைவுபடுத்து; look as if, என்ற நிலையே போன்ற தோற்றமளி; look back, முயற்சியில் தயக்கங்கொள்; பின்னேக்கு; சென்றது கருதிப்பார்; look before you leap, பதற்றமான செயலை நீக்கு, எண்ணித் துணி; look black, வெகுளி அல்லது வெறுப்பினைக்காட்டு; புருவங்களை நெரி; look blue, அச்சங்கொள், பயந்து தோன்று; கிளர்ச்சியின்றிச் சோர்வாகத் தோற்றமளி; look down one's nose at, (பே-வ.) உள்ளார்ந்த ஏளன வெறுப்புடன் நோக்கு; look down upon, தருக்குடன் நோக்கு; look for, எதிர்பார்; எதிர்நோக்கி விழிப்பாயிரு; அவாவுடன் நாடு; நாடு, தேடு; look forward to, அவாவுடன் எதிர்நோக்கு; look in, தற்செயலாகச் சென்று காண், வழக்கமுறையில் சென்றுகாண்; look into, ஆராய்; ஆழ்ந்து நுணுகிக் காண்; நுணுகிக் கற்றுராய்; look like, தோன்று; போன்றிரு, வரும் என்ற நிலையைக் குறிப்பாய்த் தோற்றுவி; முன்கூட்டித் தீங்கு குறி; முன்கூட்டி நலங்குறி; look on, காட்சியாகக் கண்டிரு, வாளா பார்த்துக்கொண்டிரு; கருது, பாவித்துநடத்து; look one in the face, துணிவாக நேருக்குநேர் நோக்கு, அஞ்சாது நோக்கு, தளராது நோக்கு; look oneself again, உடல்நலம் திரும்பிய தோற்றமளி; look over, தேர்ந்தாராய்; சட்டைசெய்யாது விட்டுவிடு; look round, வருநிலைகள் ஆய்ந்து மதி; look sharp, காலங்கடத்தாது சுறுசுறுப்பாயிரு; looks his age, வயதிற்கேற்ற தோற்றமுடையவராயிருக்கிறார்; look small, அற்பத்தனமாகத் தோற்று; look through, துருவிக்காண், ஊடுருவிப்பார், மீட்டும் மீட்டும் நன்காராய்; வழுவின்றி ஆராய்; ஊடாக நன்கு வெளிப்படத்தோன்று; look to, நன்காராய், ஆராய்ந்துபார், கவனமாகப் பார்த்துக்கொள், கவனமாக இரு.

**look'ing-glass,** *n.* முகக்கண்ணுடி, நிலக்கண்ணுடி.

**look'-out',** *n.* விழிப்பு ; காவல் ; காவல்தளம் ; காவலாள் ; காவற்குழு ; காவற்படகு ; சூழ்நிலக்காட்சி ; வருவாய்ப்பு வளநிலை ; தனிப்பொறுப்பு.

**loom¹,** *n.* நெசவுத்தறி ; துடுப்பின் கைப்பிடி.

**loom²,** *n.* கடலோடிகளின் தெளிவற்ற முதல் நிலத்தோற்றம்; *v.* தெளிவின்றித் தோன்று ; அச்சுறுத்தும் உருவில் பருத்து விரிந்து தெளிவின்றித் தோன்று.

**loom³,** *n.* கடற் பறவை வகை.

**loon,** *n.* நீர்வாழ் பறவை வகை.

**loon'y,** *n.* பைத்தியக்காரன், கிறுக்கன் ; *a.* பைத்தியமான, கிறுக்குப் பிடித்த.

**loop,** *n.* கண்ணி, கயிற்று மடிப்பு வளையம் ; கொளுவி, உலோகக் கம்பிகளின் கொக்கி வளையம் ; அணியிழைச் சடைமடி ; இருப்புப்பாதையின் மடிகிளை, பிரிந்துசேருங் கிளை ; மையவிசை இருப்புப்பாதையின் சுழல்மடி வளைவு ; விமானியின் கரண வளைவு ; மிதி வண்டியின் கரண வளைவு ; பனிச் சறுக்காட்டத்தில் ஒருதிசைச் சறுக்கு வளையம் ; *v.* இழை-கயிறு முதலியவற்றால் கண்ணியிடு ; மடிப்பு வளையமிடு ; கொக்கிபோல் வளையச்செய் ; கொக்கிபோல் வளை ; கொளுவு; வளைந்துமடி ; சடை மடி புனைவி ; சூழ், சூழ்ந்துபற்று ; வளையங்களால் இணை ; கொளுவியால் பொருத்து ; (தொ.) looping the loop, கரண வித்தை.

**loop'er,** *n.* கம்பளிப்புழு, உடலை வில்போல் வளைத்துச் சுருக்குவதன்மூலம் நகர்ந்து செல்லும் புழுவகை ; கொக்கி அல்லது கண்ணி போடுவதற்கான தையற்பொறி அமைவு.

**loop'-hole,** *n.* சுடு மதிற்புழை; காலதர்; புழைவாய்; காண்பதற்குரிய துளை இடைவழி; தப்பித்துக்கொள்ளும் வழி; சட்டமீறி நடப்பதற்குரிய வகைதுறை; *v.* சுவரில் புழைவாய் அமை.

**loop'-line,** *n.* பிரிந்துசென்று மீண்டும் இணையுங் கிளை இருப்புப்பாதை.

**loose,** *n.* விடுபாடு ; தடைநீக்கம் ; கட்டுத்தளர்வு ; தளர்ச்சிநிலை ; தடையற்ற செயலுரிமை ; செல்வழி ; போக்கிடம் ; செல்வழி வகைதுறை ; செல்திற உரிமை ; *a.* தளர்ந்த ; கட்டிறுக்கமற்ற ; உறுதியற்ற ; விறைப்பற்ற ; இழுத்துக் கட்டப்படாத ; அடர்த்தியற்ற ; சுருக்கச்செறிவற்ற ; கட்டற்றுப் பெருகிய; கட்டமைவற்ற; கட்டுப்பாடற்ற; தளர்ச்சியான; உதிரியான ; விடுபட்ட ; எளிதில் பிரிக்கக்கூடிய ; (வேதி.) இணைந்திராத, தனிநிலைப்பட்ட ; தனித்துத் தொங்குகிற, உறுதியாக இணைக்கப்படாத ; பொருத்தப்படாத ; வரையறையற்ற; திட்டவட்டமாயில்லாத; தெளிவற்ற; பொருத்தமற்ற ; சரியாயில்லாத ; திருத்தமாயில்லாத ; மேலாள் வகையில் கண்டிப்பற்ற ; சரியாகச் செயலாற்ருத ; விதிமுறைக் கட்டுப்பாடற்ற ; இலக்கணமுறையிலமையாத ; ஒழுக்கக் கேடான ; நெறிதவருன ; பேச்சழுத்தமில்லாத ; நடைக் கோட்டமுடைய ; செயல்திட்பமற்ற ; மொழிபெயர்ப்பு வகையில் சொல்லுக்குச்சொல் நேரடியாயிராத; *v.* விடுவி; தளர்த்து; படகு வகையில் கட்டவிழ் ; முடிச்சுக் கழற்று ; நங்கூரம் பற்று நெகிழ்வி ; முடி கலை ; அம்பு செல்லவிடு ; விட்டெறி, எய் ; தடையகற்று ; (தொ.) at a loose end, உறுதியான அலுவலற்ற, திட்டமான தொழிலற்ற ; loose bowels, தடையற்ற வயிற்றுப்போக்கு ; loose bowling, மரப்பந்தாட்டத்தில் குறி சரியாகவைத்துப் பந்து எறியப்படாத ஆட்டம் ; loose box, இலாயம்-புகைவண்டித்தொடர் ஆகியவற்றில் குதிரையை அடைத்து வைப்பதற்கான பெட்டிபோன்ற அமைப்பு; loose build, loose make, அழகற்ற உருவம், அந்தமில்லாத் தோற்றம் ; loose fielding, தவருன கவனமற்ற பந்துவீச்சு ; loose fish, ஒழுக்கங்கெட்டவர் ; loose game, loose play, காற்பந்தாட்டத்தில் ஆட்டக்காரர்களின் கட்டிணைவற்ற ஆட்டம்; loose handwriting, ஒழுங்கற்ற தாறுமாருன கையெழுத்து ; loose order, பரந்த இடைவெளிகளுடைய அணியமைவு ; loose tongue, வம்பளப்பு ; on the loose, மகிழ்ச்சிப்பெருக்குடன், கேலி விளையாட்டுக்களுடன் ; with a loose rein, கடிவாளத்தைத் தளர்த்திவிட்டு ; தற்கட்டுப்பாடில்லாமல், இன்ப நுகர்வுக்கு மிகவும் சலுகைகாட்டி.

**loose'-leaf,** *a.* கணக்கேடு முதலியவற்றில் தாள்கள் தனித்தனியாகப் பிரித்தெடுக்கக்கூடிய.

**loos'en,** *v.* தளர்த்து, நெகிழ்த்து ; நாத்தடையை நீக்கு ; இறுக்கந் தளர்வுறு ; செறிவு குன்று ; உறுதி குறைபடு ; குடலை இளக்கு ; வறட்சியினுல் இருமு ; ஒழுக்கக் கட்டுப்பாட்டைத் தளர்த்து.

**loose'strife,** *n.* மலர்ச்செடி வகை.

**loot,** *n.* (இ.) கொள்ளை, சூறை, பறிக்கப்பட்ட பொருள் ; இலஞ்சம், நேர்மையற்ற கைக்கூலி இறுப்பு ; *v.* கொள்ளையடி ; சூறையாடிக் கொண்டுசெல்.

**lop¹,** *n.* சிறு மரக்கிளை, மரக்கொம்பு, கவடு ; *v.* கிளைகளை வெட்டு, கொம்புகளைத் தறி, கிளைகளையும் கவடுகளையும் கழி ; (தொ.) lop and top, lop and crop, செடிகள் அல்லது மரங்களைக் கழித்து அழகுசெய் ; சீவி ஒழுங்குசெய்.

**lop²,** *n.* தொங்கு காதுகளுள்ள முயல் ; *v.* வளைந்து உறுதியற்றுத் தொங்கு ; காதுகளைத் தொங்கவிடு ; தலைதொங்கவிடு, சாய்.

**lop³,** *n.* சிற்றலையசைவு ; *v.* சிற்றலைசிதறு, சிற்றலைகளாகத் துடிப்புறு.

**lope,** *n.* நீண்ட துள்ளலுடைய ஓட்டம் ; *v.* நீண்ட பாய்ச்சலுடன் ஓடு.

**lop'-ear,** *n.* தொங்கு காதுடைய முயல்வகை.

**lop'-ears,** *n. pl.* தொங்குங் காதுகள்.

**lophobran'chiate,** *n.* கொத்துக்களாக அமைந்த செவுள்களையுடைய மீன் ; *a.* மீன் வகையில் கொத்துக்களாக அமைந்த செவுள்களையுடைய.

**loph'odont,** *n.* கடைவாய்ப்பல் முகட்டில் குறுக்குப் பள்ளங்களையுடைய விலங்கு ; *a.* விலங்கு வகையில் கடைவாய்ப்பல் முகட்டில் குறுக்குப் பள்ளங்களையுடைய.

**lopp'ings,** *n. pl.* உறுப்புக்குறைப்பு; வெட்டிக்கழிப்பு; வெட்டி வீழ்த்திய பகுதிகள்.

**lop-sid'ed,** *a.* பக்கங்கள் ஏற்றத்தாழ்வாய் அமைந்த, பக்கங்கள் பெரிது சிறிதாய் அமைந்த; சரிசமநிலையற்ற; ஏறுமாருன.

**loqua'cious,** *a.* வீண்பேச்சுப் பேசுகிற, வம்பளக்கிற, வாயாடித்தனமான ; பறவைகள் வகையில் கலகலக்கிற ; நீரோட்டவகையில் சலசலக்கிற.

**loq'uat,** *n.* சீன-ஜப்பானிய நாட்டுப் பழமர வகை.

***loq'uitur,*** (ல.) *v.* பேசுகிருர்.

**lor'al,** *a.* (உயி.) முகட்டலகு சார்ந்த, பறவைகளின் கண்களுக்கும் அலகின் மேற்பகுதிக்கும் இடைப்பட்ட கூறு சார்ந்த ; பாம்புகளின் கண்களுக்கும் மூக்குக்கும் இடைப்பட்ட கூறுசார்ந்த.

**lor'cha,** *n.* சீன மேற்கட்டமைப்பும் ஐரோப்பிய அடிக்கட்டும் உடைய கப்பல் வகை.

**lord,** *n.* ஆண்டை, தலைவர், அண்ணல், கோமான் ; முதல்வர் ; (செய்.) நிலக்கிழார் ; தொழில் முதல்வர் ; பண்ணையாட்சிமுறை மேலாளர் ; கணவர், கொழுநர் ; (வான்.) ஆட்சிக்கோள், சிறப்பு விண்மீன்குழு ; இறைவன், கடவுள் ; கிறிஸ்து பெருமான், இயேசுநாதர் ; செல்வர், சீமான் ; பெருமகன் ; பெருமகன் மதிப்படைமொழிக் குறிப்பு ; உயர் நடுவர் மதிப்புக்குறிப்பு ; மதிப்புவிளிமரபுக் குறிப்பு ; *v.* மேலாண்மை செய்; மேலாட்சி நடத்து; ஆணவம் செலுத்து; தலைமை உரிமை கொள் ; மேன்மக்களாக்கு ; பெருமகன் பட்டம் அளி; (தொ.) Civil Lord, கடற்படைத்துறைக் குழுவின் போர்த்துறை சாராத பொதுமுறை உறுப்பினர் ; First Lord, அரசாங்க உயர்பணிக் குழுவின் முதல்வர் ; House of Lords, பிரிட்டிஷ் மாமன்றத்தின் மேன்மக்கள் சபை, மாமன்ற மேலவை; இறுதியான மேல்வழக்கு மன்றமாக அமைக்கப்பட்ட மேலவைக் குழு ; Lords Commissioners, ஆட்சி உயர் பணிக்குழுவின் உறுப்பினர்கள் ; Lord in waiting, அரசியின் ஏவற்பணிச் சிறப்புப் பெருமகனுர்; Lord of the Bedchamber, அரசரின் ஏவற்பணிச் சிறப்புப் பதவியிலிருக்கும் பெருமகனுர் ; Lord Mayor, மாநகராண்மை முதல்வர் ;

Lord Rector, ஸ்காத்லாந்து பல்கலைக்கழக ஆட்சிக் குழுவின் நன்மதிப்புத் தலைவர்; lords & ladies, ஒற்றைவிதைப் பருப் புள்ள காட்டுச்செடி வகை; Lord's day, ஞாயிற்றுக்கிழமை; lords of creation, மன்னினம், மக்கள்தொகுதி; Lords of Session, ஸ்காத்லாந்து நீதிமன்றக் கூட்டமர்வின் நடுவர்கள்; Lord's supper, 'தேவநற்கருணை'; the Lord, our Lord, கிறிஸ்துபெருமான், இயேசுநாதர்.

lord'ly, *a.* வீறுப்பான, செருக்குடைய, இறுமாப்பான; ஆதிக்க மனப்பான்மையுள்ள; வீறுர்ந்த; விழுமிய, பெருமகனுக்குரிய.

lordos'is, *n.* (மரு.) தண்டெலும்பின் முன் நோக்கிய வளைவு.

Lord's, *n.* லண்டன் நகரத்திலுள்ள மரப்பந்தாட்ட வெளி; மரப்பந்தாட்டக்குழுவின் தலைமை அலுவலகம்.

lord'ship, *n.* பெருமகன் பட்டம், பெருமகன் ஆட்சி; பெரு மகன் ஆட்சிப் பகுதி; பெருமகன் ஆட்சியுரிமை; மேலாண்மை ஆட்சி.

lore[1], *n.* புலமை, கல்விச் செல்வம், கலையறிவுத் தொகுதி; தனி ஆய்வுத்துறை மரபுச்செய்தித் தொகுதி; கோட்பாட்டுத் தொகுதி.

lore[2], *n.* (வில.) அலகுமுகடு, பறவைகளின் அலகின் மேற் பகுதிக்கும் கண்ணிற்கும் இடைப்பட்ட இழைப்பட்டை போன்ற பரப்பு; பாம்புகளின் கண்ணிற்கும் மூக்குப்பகுதிக் கும் இடைப்பட்ட தோல்பட்டை போன்ற ஒடுக்கமான பரப்பு.

Loretton'ian, *n.* ஸ்காத்லாந்தில் லோரெட்டோ பள்ளியின் உறுப்பினர்; *a.* லோரெட்டோ பள்ளியினைச் சார்ந்த.

*lorgnette*, (பிர.) *n.* இசைநாடக தொலைநோக்குக் கண்ணாடி.

lo'ricate, *a.* (வில.) எலும்பு செதிள் தோடு முதலியவற்றா லான உடற்காப்புக் கவசத்தினையுடைய.

lo'rikeet, *n.* ஒளிமிக்க வண்ணங்கள்கொண்ட சிறு கிளி வகை.

lo'riner, *n.* (வர.) கடிவாளம் குதிமுள் செய்பவர்.

lor'is, *n.* இரவு நேரங்களில் நடமாடுகிற வாலற்ற மெலிந்த உருவுடைய பாலுணி விலங்குவகை.

lorn, *a.* (செய்.) கைவிடப்பட்ட, தனிமையான, மனித நடமாட்டமற்ற.

lo'rry, *n.* பார உந்து, பார மோட்டார் வண்டி; இருப்புப் பாதைக் கட்டைவண்டி.

lor'y, *n.* பளபளப்பான வண்ணச்சிறகுகள் கொண்ட கிளி போன்ற பறவை வகை.

lose, *v.* இழ; இழக்கப்பெறு; தொலைத்துவிடு, கெடப்பெறு; கைதவறவிடு, கைநெகிழவிடு; மாள்வு மூலம் பிரிவுறப்பெறு, மாளப்பெறு, இழந்து கையறவுறு; உறவு அகலப்பெறு, தொடர்பு நீங்கப்பெறு; உடைமை நீங்கப்பெறு; பறிமுதல் செய்யப்பெறு; பந்தய முதலியன கையிழக்கப்பெறு; இழப்பு உண்டாகப்பெறு; பொருட்சேதமடை; குறைபாடு அடை; நலம்பாதிக்கப் பெறு; ஆற்றலிழ, சோர்வுறு; செயல் பிழை; வழி தவறு; காணமல் திகைப்புறு; வீணாக்கு; பயனின்றிக்கழி; பயனிழ; பயனில்லாமல் போ; வாய்ப்பிழ; வண்டி முதலியவற்றிற்கான நேரம் தவறு; தோற்றிழ; தோல்வியுறு; கெலிப்பிழ; தோல்வியுறச்செய்; தோல்விக் காரணமாயமை; நிறைவேறுமற்போ; தன்வயமழியச்செய்; முனைப்பழியச்செய்; மறைப்புச்செய்; தோல்வி அணுகுநிலை பெறு; (தொ.) be lost upon, கவனங் கவரத்தவறு, தாக்கு விளைவு எதுவும் இல்லாமற்போ; does not lose in the telling, சொல்வதிற் சுவை குறையவில்லை; lose ground, நிலையிழ, வலுவிழ; பின்வாங்கு; பதவியைக் காப்பாற்றுவதில் தவறு; lose interest, அக்கறை கைவிடு, சுவையிழ, கவர்ச்சி குறையப்பெறு; lose one's temper, lose patience, பொறுமை யிழ, பதற்றமடை, சினங்கொள்.

los'er, *n.* இழப்புக்கு ஆளாகுபவர், தோல்வி ஏற்பவர்; ஆட் டத்தில் தோல்விபெறுபவர்; பந்தயம் இழப்பவர்; பந்தயத் தில் வெற்றிபெருக் குதிரை; (தொ.) be a loser by, இழப்புறு, இழப்புக்கு ஆளாகு, நலங்கள் பாதிக்கப்பெறு; good loser, தோல்வியில் துவளாதவர்; இழப்பிலும் கிளர்ச்சி குன்றாதவர்.

los'ing, *a.* வெற்றி நம்பிக்கையற்ற, வெற்றிவாய்ப்பற்ற, தோல்விக்கே வழிவகுக்கத்தக்க; (தொ.) cannot play a losing game, ஆட்டத்தில் நம்பிக்கையற்று ஊக்கமிழந்து விடுவார்; losing game, தோல்வி தவிர்க்க முடியாதென்ற நிலையிலுள்ள ஆட்டம்.

loss, *n.* இழப்பு, நட்டம்; இழக்கப்பெற்ற ஆள்; இழந்த பொருள்; இழப்புத்தொகை; இழப்பிடர்; இழப்புக் குறை பாடு; (தொ.) at a loss, தடுமாற்ற நிலையில், திகைப்பு நிலை யில்; தவறான நிலையில்; குறைபாடான நிலையில்.

loss'-leader, *n.* வாடிக்கை கவர்ந்தீர்க்கும்படி நட்ட விலைக்கு விற்கப்படும் பொருள்.

lost[1], *a.* இழந்த; கைதுறந்த; துறக்கப்பட்ட; விட்டுப் போன; நம்பிக்கைக்கிடமற்ற; கதிகெட்ட, நற்கதிக்கு வகை கெட்டுப்போன; (தொ.) lost soul, மீட்பற்ற ஆன்மா, நரகத் துக்குரிய உயிர்.

lost[2], *v.* lose என்பதன் இறந்தகால முற்றெச்ச வடிவம்.

lot, *n.* தொகுதி; ஓரினக்கூட்டு; ஓரினக்கூட்டாளிகளின் தொகுதி; யோக விற்பனைக்கான சரக்குத்தொகுதி; சீட்டுக் குலுக்குத்தேர்வு; குலுக்குத்தேர்வுமுறை; குலுக்குத்தேர்வு முடிவு; ஊழ்வகுப்பமைவு; ஊழ்க்கூறு; யோகம், ஊழ் வாய்ப்புநிலை; பாக்கியம், செல்வவாய்ப்பு; பங்கு; தனிப் பொறுப்பு; கடமை; வரி; பங்கீட்டுக்கூறு; நிலப் பங்கீட்டுக்கூறு; நிலக்கூறு, நிலப்பகுதி; (பே-வ.) பெரிய அளவு, ஏராளம்; *v.* நிலம் பங்கிட்டுக் கொடு; சரக்குக் கூறிடு; பொருள் பாத்தீடு செய்; (தொ.) bad lot, இகழ்ச்சிக் குரியவர், நேர்மைக்கேடானவர்; cast in one's lot with, throw in one's lot with, நிலையில் பங்குகொள், நலந் தீங்கு களில் ஒத்துணர்ந்து பங்குகொள்.

loth, *a.*=loath.

Lothar'io, *n.* கயவர், தீ நெறியாளர்; *pl.* Lothar'ios.

lo'tion, *n.* (மரு.) கழுவுநீர்மம்.

lott'ery, *n.* குருட்டுவாய்ப்புமுறை; திருவுளச்சீட்டுத்தேர்வு முறை; குலுக்குச்சீட்டுப் பரிசுமுறை; விற்பனைக்குலுக்குச் சீட்டு; பொறுக்குச்சீட்டுமுறை; சூதாட்டமுறை.

lott'ery-wheel, *n.* திருவுளச்சீட்டைக் கலக்கப் பயன்படும் பெட்டியுடன் கூடிய சக்கரம்.

lott'o, *n.* குலுக்குச்சீட்டு போன்ற சூதாட்ட விளையாட்டு.

lot'us, *n.* தாமரை; அல்லியின வகை; சோம்பல் வாழ்வில் ஈடுபாடு உண்டாக்குவதாகக் கருதப்பட்ட கிரேக்க பழங் கதை மரபுச் செடிவகை.

lot'us-eat'er, *n.* சோம்பேறி, செயலின்றிச் செம்மாந்திருப் பவர்; கிரேக்க பழங்கதைமரபில் காய்வகை அருந்திச் செம் மாந்திருந்த மக்கள் தொகுதி.

lot'us-eat'ing, *n.* சோம்பல் வாழ்வில் செம்மாந்திருத்தல்.

loud, *a.* உரத்த, உரத்து ஒலிக்கிற, வல்லொலியான; முழக்க மான; கூச்சலான, கூச்சலிடுகிற; பகட்டான, முனைப்பான; தெளிவாகத் தெரிகிற, பார்வையைக் கவர்கின்ற, வெளிப் பகட்டு மிகுந்த; *adv.* உரக்க, வல்லொலியாக; (தொ.) loud speaker, ஒலிபெருக்கி.

lough, *n.* ஏரி; கடற்கழி.

lou'is, louis-d'or', *n.* ஏறத்தாழ 20 பிராங்கு மதிப்புள்ள முற்காலப் பிரஞ்சுப் பொன் நாணயம்.

Louis Quatorze, *a.* சிற்ப ஓவிய ஒப்பனைக் கலைத்துறை களில் பிரஞ்சு நாட்டரசன் பதினான்காம் லூயி (Louis XIV 1643-1715) காலத்துக்குரிய பாணியிலமைந்த.

Louis Quinze, *a.* சிற்ப ஓவிய ஒப்பனைக் கலைத்துறைகளில் பிரஞ்சு நாட்டரசன் பதினைந்தாம் லூயி (Louis XV 1715-1774) காலத்துக்குரிய பாணியிலமைந்த.

Louis Seize, *a.* சிற்ப ஓவிய ஒப்பனைக் கலைத்துறைகளில் பிரஞ்சு நாட்டரசன் பதினாறும் லூயி (Louis XVI 1774-1792 காலத்துக்குரிய பாணியிலமைந்த.

Louis Treize, *a.* சிற்ப ஓவிய ஒப்பனைக் கலைத்துறைகளில் பிரஞ்சு நாட்டரசன் பதின்மூன்றாம் லூயி (Louis XIII 1610-1643) காலத்துக்குரிய பாணியிலமைந்த.

lounge, *n.* ஓய்வுகொள்ளல்; ஓய்யார நடமாட்டம்; மெல்லுலா விடம்; முன்கூடம், முன்கட்டு; சாய்ப்பு, உட்கார்ந்திருப்பதற்குரிய அறை; ஓய்வுச் சாய்விருக்கை, தாழ்ந்த சாய்வுக் கிடக்கை; *v.* உலாவித் திரி; ஓய்வாகக் கிட; சாய்ந்திரு; செயலின்றிப் பொழுதுகழி, சோம்பியிரு; (தொ.) lounge suit, பகலுடை, பின்தொங்கலற்ற சட்டை.

lour, *n.* முகச்சுளிப்பு, புருவநெரிப்பு, சிடுசிடுப்பு, சிடுசிடுத்த தோற்றம்; வானம் முகில் முதலியவற்றின் கறுத்திருண்ட தோற்றம்; *v.* முகத்தைச்சுளி, புருவத்தை நெரி, சிடுசிடுப்புக்கொள்.

louse, *n.* பேன்; ஒட்டுயிர்ப்பூச்சி; ஒட்டுயிர் வகை; *pl.* lice.

lout[1], *n.* மட்டி, முட்டாள்; காட்டாள், அருவருப்பான தோற்றமுடையவர்.

lout[2], *v.* தலைகுனிந்து வணங்கு, கும்பிடு.

louv'er, *n.* இடைநிலைக்கால முன்கூடப் புகைக்கூம்பு; காற்று புக விடுவதற்கான பலகை அல்லது கண்ணாடிப்பாளங்களின் மோட்டுக் கவிகையடுக்கு.

louv'er-boards, *n. pl.* காற்று புகவிடுவதற்கான பலகை அல்லது கண்ணாடிப்பாளங்களின் மோட்டுக் கவிகையடுக்கு.

louv're[1], *n.*=louver.

Louvre[2], *n.* பாரிஸ் நகரின் முன்னாள் அரண்மனை; பாரிஸ் நகரிலுள்ள தற்போதைய கலைத்திறக் காட்சிமனை.

louv're-boards, *n. pl.*=louver-boards.

lo'vable, *a.* விரும்பத்தக்க, அன்புக்குரிய; நல்லிணக்கமான, நட்புக்குரிய; காதலிக்கத் தகுதியான.

lo'vage, *n.* மூலிகை வகை.

love, *n.* அன்பு, பற்று; பற்றார்வம், பாசம்; நேசம், நட்பு; காதல்; காதலணங்கு, காதலி; அன்புச்செய்தி; காதல் நினைவூட்டு; காதல் தொடர்பு, காதலாட்டம்; அன்பு விளிக் குறிப்பு; காதல் தெய்வம், மதவேள்; கெலிப்பு எண்மானம் இல்லா ஆட்டம்; கெலிப்பெண் பெறு நிலை; *v.* அன்புகொள்; பாசங்கொள்; நேயமுறு; காதல்கொள், காதலி; விரும்பு; அன்புடன் பேணு, பாசத்துடன் போற்று; பெற்றுமகிழ்; நுகர்ந்துமகிழ்; ஈடுபாடுகொள்; விரும்பிப்பயில், வழக்கமாக ஈடுபடு; நாட்டங்கொள், சார்புகொள்; (தொ.) fall in love, காதல்கொள், காதலி; for love or money, எப்படியாவது, எத்தகைய வகைதுறை மேற்கொண்டாயினும்; for the love of, பொருட்டு, பெயரால்; give love to, அன்புச் செய்தியை அறிவி; in love, காதலில் ஆழ்ந்த நிலையில், காதல்கொண்ட நிலையில்; in love with, காதலீடுபாடு கொண்டு; கவர்ச்சி கொண்டு; labour of love, அன்புப்பணி, இனிய கடமை; love all, விளையாட்டு வகையில் இருசார்பினரும் ஆட்டத் திறக்கூறெண் பெறுநிலை; love game, விளையாட்டு வகையில் தோல்வியுற்றவர் ஆட்டத்திறக்கூறெண் ஒன்றும் பெறு நிலை; love in a cottage, போதிய பணமில்லாமலே செய்யும் திருமணம்; make love to, காதல்புரியத்தொடங்கு, காதலாட முற்படு; play for love, பணயத்திற்கல்லாமல் வெறு மகிழ்ச்சிநோக்கி விளையாடு; there is no love lost between them, ஒருவரையொருவர் வெறுக்கிறார்கள்.

love'-affair', *n.* காதல் நிகழ்ச்சி, காதல் நடவடிக்கை.

love'-apple, *n.* சீமைத் தக்காளி.

love'-begotten, *a.* முறைப்படிப் பிறக்காத, மணமுறைக்குப் புறம்பான.

love'-bird, *n.* கிளியினச் சிறு பறவை, அன்றில் வகை.

love'-child, *n.* மணமுறைப்படி பிறக்காத குழந்தை.

love'-drug, *n.* மயக்க வெறிதரும் புகைக் குடிப்புக்குரிய ஆப்பிரிக்க செடிவகை; கஞ்சா செடிவகை.

love'-feast, *n.* தொடக்கக்காலக் கிறித்தவரிடையே நிகழ்ந்த ஆன்மநேய ஒருமைப்பாட்டு விருந்து, மெதடிஸ்டு (Methodist) உட்சமய வகுப்பினர் அன்பு வழிபாடு.

love'-in-a-mist', *n.* உணவுக்குழம்பு வகைக்குப் பயன்படும் மஞ்சள் வண்ண மலர் வகை.

love'-in-i'dleness, *n.* பல்வண்ண மலர்ச்செடிவகை.

love'-knot, *n.* சிக்கல் முடிச்சு.

Love'lace, *n.* கைதேர்ந்த பெண் வேட்டையாளர், சமூகக் கட்டுப்பாடுகளுக்கு உட்படாதவர்.

love'less, *a.* அன்பற்ற, அன்பு காட்டாத; அன்புக்குரியராகாத; காதலிக்காத; காதலிக்கப்படாத.

love'-letter, *n.* காதற்கடிதம்.

love'-lies-bleed'ing, *n.* குருதிச் சிவப்பான தொங்கல் மலர்களையுடைய தோட்டச் செடிவகை.

love'lock, *n.* பின்னற் சுருணை.

love'-lorn, *a.* காதலுக்கு ஏங்குகிற, காதலரால் கைதுறக்கப்பட்ட.

love'ly, *a.* அழகான, வனப்புள்ள; கவர்ச்சிவாய்ந்த; (பே-வ.) மகிழச்செய்கின்ற.

love'-match, *n.* காதல் மணம்.

love'-philtre, *n.* வசிய மருந்து, காதலைத்தூண்டும் மருந்து.

lo'ver, *n.* காதலர்; கள்ளக்காதலர்; காதலூடாடி; போற்றுபவர், ஆர்வலர்; பொருள் பண்பு செயல்களிற் பற்றார்வமுடையவர்.

love'-shaft, *n.* மாரன் கணை.

love'sick, *a.* காதலால் ஏக்கமுற்ற, காதலுக்கு அலந்த, காதலால் நலிவுற்ற.

love'-song, *n.* காதற்பாடல்.

love'-story, *n.* காதல் நிகழ்ச்சி, காதற்கதை.

love'-token, *n.* காதற்சின்னம், காதல் நினைவுக்குறி.

lo'ving, *a.* காதலிக்கின்ற; நேசபாசம் வாய்ந்த; அன்பு கொள்கின்ற, பற்றுமிக்க, அன்பார்ந்த.

lov'ing-cup, *n.* விருந்து மேடையிற் சுற்றி அனுப்பப்படும் பெரிய இன்தேறல் கலம்.

lov'ing-kind'ness, *n.* அன்புக்கனிவு.

low[1], *n.* தாழ்வானது; தாழ்மட்டம்; குறைந்தது; காற்றழுத்தம் குறைந்த பகுதி; குறைந்த எண்; *a.* தாழ்ந்த; பள்ளமான, மேடல்லாத; தாழ்நிலத்துக்குரிய; உயரங் குறைந்த; குட்டையான, நெட்டையல்லாத; கீழேயுள்ள; சட்டை வகையில் கழுத்துக் கீழாக வெட்டப்பட்டுள்ள; ஆழ்ந்த; புடை செதுக்கு வகையில் திட்பங் குறைந்த; எண் வகையில் குறைந்த; அளவை வகையில் குறைந்த எண்ணிக்கையுடைய; அளவு குறைந்த; நிறைவற்ற, தொகை குறைந்த; வெப்பநிலை குறைந்த; அழுத்தநிலை குறைந்த; விரைவற்ற, மந்தமான; விலை மலிவான; இழிந்த; கீழ்த்தரமான; மட்டமான; உயர்ஒழுங்கமைவற்ற; அற்பத்தனமான; கஞ்சத்தனமான; மதிப்பற்ற, சிறப்பற்ற; தன்மதிப்பில்லாத; உயர்வற்ற, பொதுநிலையான; தாழ்நிலையிலுள்ள; பதவியில் குறைந்த; படியில் இழிந்த; தாழ்வு சுட்டிய; குறைந்த பந்தய எல்லையுடைய; மொழிநடை வகையில் கொச்சையான; இழிவழக்கான; தாழ்குரலுடைய; மெல்ல ஒலிக்கிற; அழுத்த வகையில் கனத்தொனி வாய்ந்த; ஒலிவகையில் நாவின் தாழ் நிலையில் எழுகிற; முனைப்புக்குறைந்த; நாகரிகமற்ற; பண்பாட்டிற் குறைந்த; எளிய; சமுதாயப்படியில் தாழ்ந்த; வளர்ச்சி குன்றிய; வளங்குன்றிய; உரங்குன்றிய, முன்னேறாத; கிளர்ச்சியற்ற; ஊக்கமற்ற; சோர்வார்ந்த; வலுக்குறைந்த; போதாத; அருந்தலான; ஊக்காற்றல் குறைந்த; உள்ளூட்டங் குன்றிய; நிகழ் காலத்துடன் அணிமைமிக்க; நிலவுலக நேர்க்கோடு வகையில் நடுவரைக்கு அணித்தான; திருச்சபைத் துறையில் சமய வினைமுறை மிகுதி வேண்டாத; *adv.* தாழ்நிலையில்; கீழான நிலைக்கு; இழிநிலையில்; இழிநிலைக்கு; பணிவாக; எளியநிலையில்; ஊட்டக்குறைவாக; குறைந்த பந்தய எல்லையுடன்; மெல்ல; மெள்ள, தளர் ஒலியுடன்; நிகழ்காலத்துக்கு அணிமையாக; நடுவரைக்கு அணிமையாக; தாழ்வாக;

நிலத்தளத்துக்கு அணிமையாக; (தொ.) at lowest, குறைந்த அளவில்; குறைந்த தொகையில்; குறைந்த எல்லையில்; bring low, உடல்நலம்-செல்வம்-பதவி முதலிய வகையில் தாழ்த்து; collar low, காற்பந்தாட்ட வகையில் இடுப்பை அல்லது இடுப்பின் கீழ்ப்பகுதியைப் பிடி; high and low, எல்லோரும், ஒவ்வொருவரும்; lay low, வீழ்த்து; தோற்கடி; lie low, பதுங்கு; மறைந்திரு; வாளா கிட; செயலொடுங்கியிரு; நோக்கம் மறைத்து ஒழுகு; அவமதிக்கப்பெறு, தாழ்த்தப்படு; விழுந்துகிட; இறந்துபடு; live low, ஊட்டமற்ற உணவுண்டு வாழ்; low celebration, தேவநற்கருணைச் சடங்கில் திருக்கோயில் பாடகர் கூட்டமும் உதவிப் புரோகிதர்களும் இல்லாமல் நடைபெறும் வழிபாட்டு விழா; Low Church, சமய குரு சமய வினைமுறைகட்கு முதன்மையளிக்கவிரும்பாத திருச்சபைக் கோட்பாடு; low comedian, அவல நாடகத்திற் கோமாளி நடிகர்; low comedy, அவலநாடகம்; Low Countries, கடல்மட்டத்திலும் தாழ்ந்த நிலமுடைய நெதர்லாந்து (Netherlands) நாடு; Low Dutch, Low German, செர்மானிய மொழிக்குழுவில் ஆங்கில மொழி-டச்சு மொழி உட்பட மேற்கு வடக்கு செர்மன் மொழி வழக்குத் தொகுதி; low latitudes, நில நடுக்கோட்டுக்கு அருகிலுள்ள பகுதிகள்; low life, கீழ்த்தர வாழ்க்கை, கீழ்த்தரமக்களின் வாழ்க்கை; low moon, வானவிளிம்பிற்கு அருகிலுள்ள நிலா; low pitch, இசையில் தாழ் இசைப்பு; தாழ்நிலைச் சாய்வு; low relief, முனைப்புக்குன்றிய புடைப்புநிலை ஓவியம்; Low Sunday, இயேசுநாதர் உயிர்த்தெழுந்த நாள் விழாவுக்கு அடுத்த ஞாயிற்றுக்கிழமை; low tide, low water, வேலை இறக்கம்; Low Week, இயேசுநாதர் உயிர்த்தெழுந்த நாள் விழாவிற்குப் பின்னுள்ள வாரம்; play low, குறைந்த பணயம் வைத்து விளையாடு; talk low, தாழ்குரலிற் பேசு, மெல்லொலியிற் பேசு.

low[2], *n.* பசுவின் கனைப்பொலி; *v.* பசுவகையில் கனைப்பொலி செய்; பசுப்போற் கதறு; பசு இரைவது போன்ற குரலுடன் பேசு.

low'-born, *a.* தாழ்குடிப் பிறந்த; இழிந்த, தாழ்ந்த.

low'-bred, *a.* நாகரிகமில்லாத, பண்பற்ற; இழிநடத்தையுள்ள.

low'brow, *a.* (பே-வ.) தனியறிவுச்சிறப்பற்ற, பண்பாட்டு உயர்வற்ற.

low'browed, *a.* தாழ்ந்த, மேன்மையற்ற, உயர்பண்பற்ற; பாறை வகையில் புறங்கவிந்துள்ள; கட்டிடம் முதலியவற்றின் வகையில் தாழ்ந்த வாயிலுள்ள; இருளார்ந்த.

low'-down, *a.* இழிந்த, தாழ்வான; அற்பத்தனமான; அடிமைத்தன்மை மிக்க; அவமதிப்பான, இகழ்ச்சிக்குரிய.

low'er[1], *a.* low என்பதன் உறழ்படி.

low'er[2], *a.* இருபொருள்களிடையே கீழான; தாழ்ந்த; தாழ்படியிலுள்ள; (தொ.) lower boy, கீழ்வகுப்புப் பையன்; lower case, அச்சுத்துறையில் நெடுங்கணக்கின் சிற்றெழுத்து வடிவம்; lower critic, சொற்களை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு திறந் தேர்பவர்; lower deck, கப்பலின் கீழ்த்தளம்; lower Empire, பிற்கால ரோமப் பேரரசு, கீழைரோமப் பேரரசு; lower House, lower chamber, கிழ்ச்சபை; lower school, ஐந்தாம் வகுப்பு வரையுள்ள பள்ளி; ஐந்துக்குக் கீழ்ப்பட்ட வகுப்புக்களின் தொகுதி; lower world, நிலவுலகம்; நரகம்; the lower deck, சிறுபணியாளர் தொகுதி.

low'er[3], *v.* இறக்கு; தாழ்த்து; குறையாக்கு; குறைபடு; (கப்.) படகைக் கீழே விடு; பாய்மரத்தைக் கீழே இழு; உயரத்தின் அளவைக்குறை; அமிழ்த்து; படிப்படியாகக் கீழே செல், அமிழ்; கிழ்நோக்கிச் சாய்; விலை இறக்கு; விலை குறைவுறு; முனைப்புக்குறை; குரல் தணிவுறு; நிலையிறக்கு, இழிவுசெய்.

lower[4], *n., v.* = lour.

low'er-brack'et, *a.* பட்டியலின் அடியிற் சேர்க்கப்பட்ட.

low'est, *a.* low என்பதன் ஏற்றுயர்படி.

Low'land, *a.* ஸ்காத்லாந்தின் தென்கிழக்குப் பகுதிசார்ந்த அல்லது தென்கிழக்குப் பகுதியிலுள்ள.

Low'lander, *n.* தென் ஸ்காத்லாந்து வாணர்.

Low'lands[1], *n.* ஸ்காத்லாந்தின் தென்கிழக்குப் பகுதி.

low'lands[2], *n. pl.* பள்ளப்பகுதி நிலம்.

low'liness, *n.* பணிவு, பணிவமைதி.

low'ly, *a.* அடக்கவொடுக்கமான, பணிவுள்ள; தாழ்நிலையிலுள்ள, ஏழ்மைவாய்ந்த; எளிமையான; பகட்டில்லாத; *adv.* அடக்கமாக, பணிவாக; தாழ்மையாக, எளிமையாக.

low'-wa'ter mark, *n.* நீர்மட்ட இழிவரை; வேலை இறக்க எல்லைவரை; கீழ் எல்லை, அகட்டுநிலை.

lox, *n.* = loxygen.

loxodrom'ic, *n.* எல்லா நிரைகோடுகளையும் சம அளவில் ஊடுருவிச் செல்லுஞ் சாய்வரை; *a.* சாய்வான தன்மையில் கப்பலிற் பயணஞ் செய்கிற; சாய்வாக மிதந்துசெல்கிற; எல்லா நிரைகோடுகள் வகையிலும் ஒரே சாய்வளவில் ஊடுசெல்கிற.

loxodrom'ics, *n.* எல்லா நிரைகோடுகளையும் சம அளவில் ஊடுருவிச்செல்லும் கப்பற் பயணமுறை.

lox'ygen, *n.* ஆகாய விமானத்தில் பயன்படுத்தப்படும் நீரியல் உயிரகம்.

loy'al, *n.* மாறா உளத்தர்; கிளர்ச்சிப்பொழுதிலும் பற்று மாறாதவர்; *a.* திடப்பற்றுடைய; பற்றுறுதிகாட்டுகிற; ஆர்வப் பற்றுடைய; நம்பிக்கைக்குரிய; கடமை தவறாத; காதல் உறுதியுடைய; பொறுப்பு மீறாத.

loy'alty, *n.* இராஜபக்தி, அரசப்பற்று; நிறைமை, பற்றுறுதி, வாய்மை தவறாமை; பற்றுறுதிக் கோட்பாடு.

loz'enge, *n.* சாய்சதுர உரு; வைரவடிவம்; எதிர்ச்சம கோணத் தீர்க்க சதுரம்; மரபுரிமைச்சின்னத்தில் முதுகன்னி அல்லது கைம்பெண் நிலைக்குரிய சாய்சதுரவடிவக் கேடயம்; சர்க்கரை கலந்த எளிதில் கரையுமியல்புடைய மருந்து, நலமார்ந்த இன்பண்ட வகை; பலகணிச்சட்டத்தில் சாய்சதுரக் கண்ணுடித்தகடு.

loz'enged, *a.* மாறுபட்ட வண்ண அடுக்குடைய சாய்சதுரப் பலகணிச் சட்டம் பொருந்திய; பலகணிவகையில் சாய்சதுரக் கண்ணுடிச் சட்டங்களையுடைய.

£.s.d., *n.* பவுன்-ஷில்லிங்-பென்னி, ஆங்கில நாணயப் படிவரிசை; பணம்; செல்வம்.

lubb'er, *n.* மொண்ணைத்தடியன், அருவருப்புப் பேருருமடையன்; நாகரிகம் தெரியாதவன், நாட்டுப்புறத்தான், காட்டான்; செயல்நுட்பம் தெரியாத மாலுமி; (தொ.) lubber's hole, கப்பலின் மேல்தளத்திலுள்ள பெரிய வட்டத்துளை; lubber's line, திசைகாட்டும் பொறியில் கப்பல் முகப்புத் திசைகுறித்த வரை.

lub'ricant, *n.* மசகுப்பொருள், உராய்வுகாப்புப் பொருள்; *a.* மசகியலான, உராய்வுதடுக்கிற.

lub'ricate, *v.* மசகிடு, உயவிடு; இயந்திரங்களில் எண்ணெய் பூசி உராய்வைக் குறைவாக்கு.

lubrica'tion, *n.* மசகிடல், உராய்வுத்தடை.

lu'bricative, *a.* உயவுப்பண்புடைய, உராய்வுதடுக்கிற.

lub'ricator, *n.* மசகுப்பொருள்.

lubri'city, *n.* சறுக்கல், வழுக்கல், வழவழப்பு, எண்ணெய்ப் பிசுக்கான தன்மை; ஒழுக்கக்கேடு, காமவெறி.

Luc'an, *a.* தூயதிரு லூக் (St. Luke) சார்ந்த.

Lucc'a, Lucc'a oil, *n.* உயர்தர ஒலிவ எண்ணெய்.

luce, *n.* மீன்வகை; மீன்வகையின் முழு வளர்ச்சியடைந்த படிவம்.

lu'cent, *a.* பளபளப்பான; ஒளிவீசுகின்ற; மின்னுகின்ற; அரைகுறையாக ஒளி ஊடுருவிச் செல்லுகிற.

lucern', lucerne', *n.* கால்நடைகளுக்குத் தீவனமாகப் பயன்படுகிற மணப்புல் சார்ந்த செடிவகை.

Lucian'ic, *a.* லூசியன் (Lucian) என்னும் கிரேக்க எழுத்தாளர் பாணியைச் சார்ந்த; ஏளனம் கலந்த நகைத்திறமுடைய.

**lu'cid,** *a.* துலக்கமுள்ள ; தெளிவான; நன்கு விளங்குகிற ; (பூச்., தாவ.) வழவழப்பும் பளபளப்புமான மேற்பரப்புடைய; (தொ.) lucid interval, பைத்தியம் பிடித்தவர்களின் நல்லறிவுள்ள இடைவேளை ; குழப்பங்களின் இடையில் அமைதியான நிலைமை.

**Lu'cifer,** *n.* விடிவெள்ளி ; நரகிறைவன், சைத்தான் ; நச்சுத் தீக்குச்சி; (தொ. lucifer match, உராய்வதால் தீப்பற்றும் தீக்குச்சி.

**lucif'ugous,** *a.* (உயி.) பகல் ஒளியை வெறுத்து ஒதுக்குகிற.

**luck,** *n.* ஆகூழ்; ஊழ்க்கூறு; தற்செயலான குருட்டுவாய்ப்பு, குருட்டடி ; குருட்டுவாய்ப்பான நிகழ்ச்சி ; குருட்டுயோகம், அதிர்ஷ்டம் ; நற்பேறு, நல்வாய்ப்பு ; திருத்தாயம், யோக உயிர்நிலையாகக் கருதப்படும் பொருள்; (தொ.) as luck would have it, ஆகூழாக, தற்செயல் வாய்ப்பாக ; down on one's luck, அவப்பேற்றினுல் ஊக்கங்கெட்டு; தற்காலிகமாக அவப்பேறுற்று ; for luck, நற்பேறு வருவிப்பதற்காக ; try one's luck, வெற்றி அவாவித் துணிந்தாடு, நற்பேற்றை எதிர்பார்த்து முயற்சிசெய்.

**luck'ily,** *adv.* நற்பேருக, அதிர்ஷ்ட வசமாக.

**luck'-money, luck'-penny,** *n.* யோகப்பணம் ; கால்நடைகளின் விற்பனையில் விற்பவர் வாங்குபவருக்கு நற்பேறவாவின் சின்னமாகத் திருப்பிக்கொடுக்கும் பணம் ; வாய்ப்பு வளப் பணம், நற்பேற்றுச்சின்னமாகச் செலவழியாது வைத்திருக்கும் பணம்.

**luck'y,** *a.* ஆகூழுடைய, ஊழ்த்தகுதிபெற்ற; குருட்டு வாய்ப்பான ; நற்பேறு தருகிற ; நற்பேறு குறித்த ; வாய்ப்பு வகைக் கவர்ச்சியுடைய; வாய்ப்பான சமயத்தில் வந்த, கால வாய்ப்புடைய; இடவாய்ப்புடைய, இயல் வாய்ப்பு வளமுடைய, நற்பேறுடைய, அதிர்ஷ்டமுள்ள.

**luck'y-bag, luck'y-tub,** *n.* யோகப்பொருளெடுப்புப் பை, சிறுதொகைக்குக் கையிட்டு எதனையும் எடுக்கும் வாய்ப்பு அளிக்கும் பை.

**luc'rative,** *a.* ஆதாயம் அளிக்கின்ற, மிகுவருவாய் உடைய, ஊதிய மிகுதியுள்ள.

**uc're,** *n.* கீழ்த்தர ஆதாயம், தகாவழி வருவாய், ஆதாய நோக்கப்பணம்.

**Lucret'ia,** *n.* கற்புக்கரசி, உயிரினும் கற்பு மேம்பட்டதாகக் கொண்டொழுகுபவள்.

**luc'ubrate,** *v.* ஆழ்ந்த சிந்தனைகளை எழுத்துமூலம் தெரிவி, சிந்தனை அலைகளைப் பதிவுசெய் ; ஆழ்ந்தகன்ற ஆராய்ச்சி ஏடு எழுது.

**lucubra'tion,** *n.* இராக்கால ஆய்வு ; சிந்தனை ; சிந்தனைத் தொகுதி ; ஆழ்ந்தகன்ற ஆராய்ச்சி ஏடு.

**luc'ulent,** *a.* தெளிவிளக்கமான, மெய்ம்மை எண்பித்துக் காட்டுகின்ற.

***luc'us a non lucen'do,*** (ல.) *n.* பொருந்தா விளக்கம், முரணுரை விளக்கம்.

**Ludd'ite,** *n.* இயந்திர ஊழித்தொடக்கத்தில் *(1811-1816)* இயந்திர அழிப்புக் கிளர்ச்சியிலீடுபட்ட குழுவினர் ; *a.* இயந்திர அழிப்புக் கிளர்ச்சிக் குழுவினைச் சார்ந்த.

**lud'icrous,** *a.* நகைப்புக்கிடமான, கேலியான, முட்டாள்தனமான, பொருந்தாத.

**lud'o,** *n.* எளிதான பகடையாட்ட வகை.

***lu'es,*** (ல.) *n.* கொள்ளைநோய் ; ஒட்டுநோய் ; ஒட்டியல் பண்பு ; (தொ.) *lues Boswelliana*, தன் நூல்முதல்வரை மிகைப்படுத்திக்காட்டும் வாழ்க்கை வரலாற்று நூலாசிரியரின் இயல்பான போக்கு ; வாழ்க்கை வரலாற்ருசிரியர் தனது நூலுடைத்தலைவரை மிகைப்படுத்திக்காட்டும் இயற்சார்புப் போக்கு; *lu'es vener'ea*, மேகநோய், காமவிளைவு நோய்.

**luff,** *n.* (கப்.) பாய்மரத்திற்கு அடுத்துள்ள பாய்ப்பகுதி; அகல மிக்க கப்பல் முன்புறப்பகுதி ; *v.* கப்பல் தலைப்பை அல்லது முகப்பைக் காற்றுத் திசைக்கு அருகில் திருப்பு; கப்பல் முகப்பு காற்றுத்திசைக்கு அருகாகும்படி பயின்கட்டையைத் திருப்பு; படகுபந்தயத்தில் படகை எதிரியது படகின் காற்றுப்புறமாகச் செலுத்து.

**luf'fing-match,** *n.* படகுபந்தயத்தில் ஒருவர் மற்றவர் காற்றுப்புறப் பக்கமடைவதற்குரிய கடும்போட்டி.

***Luft'waffe,*** (செர்.) *n.* செர்மானிய விமானப்படை.

**lug** [1], *n.* தூண்டில் இரையாகப் பயன்படுத்தப்படும் பெரிய கடற்புழு.

**lug** [2], *n.* (கப்.) நான்கு மூலையுள்ள சாய்மடிப் பாய்.

**lug** [3], *n.* வலித்திழுப்பு, முரட்டிழுப்பு ; *v.* வலித்திழு ; முரட்டுத்தனமாகப் பற்றியிழு ; வலிந்து கடுமுயற்சி செய் ; பொருத்தமின்றி வலிந்துபுகுத்து ; வல்லந்தமாக இழுத்துக்கொண்டு செல்.

**lug** [4], *n.* இயந்திர வார்ப்புப் பகுதியின் பொருத்துமுளை ; பிடிப்புக்குமிழ், பிடிவளை ; காதுபோன்ற பகுதி.

***luge,*** (சுவிஸ்.) *n.* சுவிட்சர்லாந்தில் வழங்கும் பனிக்கட்டிச் சறுக்கு வண்டிவகை; *v.* பனிக்கட்டிமீது சறுக்கு வண்டியிற் செல்.

**lugg'age,** *n.* பயணமூட்டை, மூட்டைமுடிச்சு, பயணக் கட்டு.

**lugg'er,** *n.* நாலுமூலைப் பாய்களுள்ள சிறு கப்பல்.

**lug'sail,** *n.*=lug [2].

**lugub'rious,** *a.* சோர்ந்த தோற்றமுள்ள, துயரார்ந்த.

**luke'warm,** *n.* அரைகுறை ஆர்வமுடையவர்; *a.* இளவெப்பமுடைய ; அரைகுறை ஆர்வமுடைய, மிகுதி ஆழ் கருத்தில்லாத, அக்கறையில்லாத.

**lull,** *n.* புயலிடை அமைதி ; இடை ஓய்வமைதி; அமைதிப்படுத்தும் பண்பு ; *v.* அமைதிப்படுத்து ; புயல் அடங்கச் செய் ; அரவம் அடங்கச்செய் ; தூங்கச்செய், தாலாட்டி உறங்க வை ; உளக்கொந்தளிப்புத் தணி ; ஐயமகலச் செய் ; சூழ்ச்சியால் அவநம்பிக்கை அகற்று.

**lull'aby,** *n.* தாலாட்டுப் பாட்டு ; *v.* தாலாட்டு, தூங்கவைப்பதற்காகப் பாட்டுப் பாடு.

**lumbag'o,** *n.* இடுப்புவாதநோய், கீல்வாதநோய் ; *pl.* lumbag'os.

**lum'bar,** *n.* இடுப்பு நரம்பு ; இடுப்புப்பகுதித் தண்டெலும்பு; *a.* இடுப்பைச் சார்ந்த, இடுப்பிலுள்ள.

**lum'ber** [1], *n.* கழிகடை, ஒட்டை உடைசல் குவை, பயனற்ற துண்டுத்துணுக்குத் தொகுதி ; சேமிக்கப்பட்ட துண்டுத் துணுக்குக்களின் தொகுதி; இடமடைக்கும் பொருட்குவியல்; தேவையற்ற மிகுகொழுப்பு ; அரைகுறை வேலைப்பாடுடைய வெட்டுமரம்; *v.* இடமடை, இடஞ் செலுத்தி நிரப்பு; கொட்டிக் குவி; கூளமாக்கு; முரட்டுக் கட்டைகளாக வெட்டு; வெட்டி உருவாக்கு.

**lum'ber** [2], *v.* அருவருப்பான தோற்றத்துடன் இயங்கு, பெரும் பளுவுடன் தட்டுத்தடுமாறிச்செல், பேரிரைச்சலுடன் இயங்கு.

**lum'ber-carrier,** *n.* வெட்டுமர வணிகப்படகு.

**lum'berer,** *n.* காட்டுமரங்களை வெட்டி வகைப்படுத்துபவர்.

**lum'ber-jacket,** *n.* கழுத்தளவும் இறுகத்தக்க ஆடவர் திண்ணிய முழுச்சட்டை ; மாதர் முழுச்சட்டை.

**lum'berman,** *n.* மரக்கட்டைகளை வெட்டுபவர் ; மரம் அறுத்து ஒழுங்குபடுத்துபவர் ; வெட்டுமரக் கட்டைகளைத் தூக்கிச் செல்பவர்.

**lum'ber-mill,** *n.* மரக்கட்டைகளை இரம்பத்தினுல் அறுக்கும் தொழிற்சாலை.

**lum'ber-room,** *n.* கழிவுக்கிடங்கு, பயனற்ற சாமான்கள் வைத்திருக்கும் அறை.

**lum'ber-scaler,** *n.* மரக்கட்டைகளை அளப்பவர்.

**lum'bo-abdom'inal,** *a.* இடுப்பையும் அடிவயிற்றையும் சார்ந்த.

**lum'brical,** *n.* கைகால் விரல் வளைப்பதற்கான தசைகளில் ஒன்று ; *a.* கைவிரல்களை அல்லது கால்விரல்களை வளைக்கிற.

**Lum'iere**, *a.* வண்ண நிழற்பட முறை சார்ந்த; (தொ.) Lumiere process, வண்ண நிழற்பட முறை.

**lum'inary**, *n.* ஒளிப்பிழம்பு, ஒளிபரப்பும் பொருள்; ஒளிக் கோணம்; புகழ்சான்றவர்; ஆன்றோர்; அறிவு மேதை; ஆன்மிக வழிகாட்டி; தலைமைப் பெருந்தகை.

**luminif'erous**, *a.* ஒளிவழங்குகின்ற, ஒளிக்கதிர் பரப்புகின்ற.

**lum'inous**, *a.* ஒளிபிறங்குகின்ற, ஒளிதிகழ்கின்ற, சுடர்ஒளி வீசுகின்ற; இருளில் ஒளி வீசுகின்ற, மின்னிடுகிற; மின்னொளிர்வுடைய; பளபளப்பான, மினுமினுப்புள்ள; எழுத்தாளர் வகையில் நல்விளக்கம் அளிக்கிற, எழுத்தாண்மை வகையில் விளங்க வைக்கிற; (தொ.) luminous paint, இருளில் ஒளி விடுகிற வண்ணப்பூச்சு.

**lump**[1], *n.* கட்டி, மொத்தை; பெரிய அளவு, மிகுதியான அளவு; கும்பு, குவியல்; உருவாக்கத் தகுதியான களிமண் பாளம்; ரொட்டி சுடுவதற்குத் தகுதியான பிசைந்த மாவு உருண்டை; தசைமுண்டு, இயற்கைக்கு மாறான தசைவளர்ச்சி; புடைப்பு, வீக்கம், கன்றிய காயமுனைப்பு; மந்தமதி, பேதை; *v.* மொத்தையாகத் திரட்டு; கூளமாகக் குவி; வகைதிரி பின்றிப் பலதிறங்களையும் ஒருநிலைப்படக் குவி; பந்தய முதலியவற்றில் முழுப்பணத்தையும் பணயமாக வை; கட்டியாக எழு; கட்டியாகப் புடைத்து உருவாகு; பளுவுடன் இயங்கு; பளுப்பட அமர்; (தொ.) in the lump, மொத்தத்தில், ஒரே மொத்தமாக; எல்லாவற்றையும் ஒன்றாகக் கொண்டால்; is a lump of selfishness, முற்றமுழுக்கத் தன்னலமே கொண்டவர்; lump in throat, உணர்ச்சியால் உண்டாகும் தொண்டை அழுத்தம்; lump sugar, வில்லைச்சர்க்கரை; lump sum, முழு மொத்தத் தொகை.

**lump**[2], *n.* வயிற்றிலுள்ள உறிஞ்சும் வட்டத்தகட்டினால் பொருள்களின்மீது கெட்டியாக ஒட்டிக்கொள்ளும் நீல வண்ண மீன்வகை.

**lump**[3], *v.* வேண்டாவிருப்புடன் ஏற்றுக்கொள்.

**lum'per**, *n.* கப்பல் சரக்கேற்றி இறக்குபவர்; வேலைக் குத்தகைக்காரர்; திட்பநுட்பமற்ற வகைமுறை அமைப்பாளர்.

**lum'ping**, *a.* (பே-வ.) பெரிய; ஏராளமான; (தொ.) lumping weight, நல்ல பளு.

**lum'pish**, *a.* மிகுபளுவுடன் இடக்குமடக்கான, மொட்டை மொழுக்கையான; மட்டித்தனமான, மரமண்டையான.

**lum'py**, *a.* கட்டிகளால் நிறைந்த; கட்டிகளால் மூடப்பட்ட; காற்றினால் நீர் சிறுசிறு அலைகளாகத் துண்டாடப்பட்ட.

**lun'acy**, *n.* கோட்டி, கிறுக்கு, பைத்தியம்; (சட்.) குடியுரிமைக் கையாட்சிக்குக் குந்தகமான அறிவுக்கோளாறு; படுமுட்டாள்தனம்; (தொ.) Commissioner in lunacy, பித்தர் காப்புமனையைப் பார்வையிடுவதற்கு அமைக்கப்பட்ட பதின்மர் குழுவில் ஒருவர்; Commission of lunacy, குறிப்பிட்ட ஆளின் அறிவொழுங்குநிலை ஆய்வு செய்வதற்குரிய அதிகாரம்; Master in lunacy, பைத்தியக்காரர் என்று குறிக்கப்படுபவரின் செயல்தேர்ந்தாயும் பொறுப்புடைய அலுவலர்.

**lun'ar**, *n.* மதிநிலை, கதிரவன் அல்லது கோள் அல்லது வான் மீனிலிருந்து சந்திரனுக்குரிய கோணத்தொலைவுநிலை; பிறைவடிவான மணிக்கட்டெலும்பு; *a.* நிலாக்கோளத்துக்குரிய; சந்திரனைப்போன்ற; திங்களால் தோற்றுவிக்கப்பட்ட; வெளிறிய, மங்கலான, வெளுத்த; மந்தமான; மெல்லிய; பிறைவடிவான; வெள்ளி சார்ந்த; வெள்ளி கொண்டுள்ள; (தொ.) lunar bone, பிறைவடிவான மணிக்கட்டெலும்பு; lunar caustic, உருகி இணைவுற்ற வெள்ளிவெடியகி; lunar cycle, மாநிலா வட்டம், 19 ஆண்டுக்காலம்; lunar month, இரண்டு மறையுலா மதிகளுக்கு இடைப்பட்ட காலம், 29½ நாட்கள், ஏறத்தாழ நான்குவாரக் காலம்; lunar nodes, சந்திரன் அயனவரையைக் கடக்குமிடம்; lunar observation, நிரைகோட்டுநிலைக் கணிப்புக்குப் பயன்படும் மதிநிலைத் தொலைவுக்காட்சி; lunar politics, செயல் வகைக்கு ஒவ்வாத அரசியல்; செயல்வகைக்குப் புறம்பான சிக்கல்கள்; பயனற்ற சிறு செய்திகள்.

**lunar'ian**, *n.* நிலாவாணர், திங்களில் குடியிருப்பவர்; சந்திர மண்டலத்தைப்பற்றிச் சிறப்பறிவுள்ள வான நூலறிஞர்; திங்கட்கோளச் சிறப்பறிவுடைய கப்பலோட்டி.

**lun'ate**, *a.* (வில., தாவ.) பிறைவடிவுடைய.

**lun'atic**, *n.* பித்தர், கிறுக்கர்; வெறியர்; பைத்தியம் பிடித்தவர்; பித்துக்கொள்ளி; விசித்திரமானவர், விந்தையான நடத்தையுடையவர்; இயற்கைக்கு மாறுபட்ட போக்கினர்; அறிவற்றவர், மட்டி; *a.* கிறுக்கான, பித்துப்பிடித்த; வெறிகொண்ட; முட்டாள்தனமான; விசித்திரப் போக்குள்ள; விந்தை நடத்தையுடைய; இயற்கைக்கு மாறுபட்ட போக்குடைய; அறிவற்ற; (தொ.) lunatic asylum, பைத்தியக்காரர் பாதுகாப்பு விடுதி; lunatic fringe, இயக்கங்களில் வரம்பெல்லையிலுள்ள முனைப்பு வெறியார்வப் பற்றாளர் தொகுதி.

**luna'tion**, *n.* இரண்டு மறையுலா மதிகளுக்கு இடையிலுள்ள காலம்.

**lunch**, *n.* நண்பகலுணவு; சிற்றுண்டி; *v.* நண்பகலுணவு உண்; நண்பகலுணவு அளி, சிற்றுண்டி அருந்து; சிற்றுண்டி அளி.

**lun'cheon**, *n.*=lunch.

**lune**, *n.* பிறைவடிவம்; (வடி.) இணைவிற் கட்டம், சமதளத்தில் அல்லது உருளைப்பரப்பில் இரண்டு வில்வளைவுகளுக்கிடைப்பட்ட வடிவம்.

**lunette'**, *n.* வில்வடிவ முகட்டொளிப் புழைவாய், வளைமாட முகட்டில் பிறைவடிவான வண்ண ஓவியப்பகுதி; அரண் வகையில் முனைப்பான இரண்டு முகப்புக்களையும் இரண்டு இணைச் சிறைகளையும் கொண்ட கட்டுமானம்; தட்டை வடிவான கடிகாரக் கண்ணாடிவில்லை; (வர.) தலைவாங்கிப் பொறியில் கழுத்தை விடுவதற்கான துளை.

**lung**, *n.* நுரையீரல்; செயற்கை மூச்சு ஊட்டுவதற்காக நோயாளியின் உடம்பின்மேல் பொருத்தப்படும் இருப்புக்கூடு; (தொ.) good lungs, உறுதியான குரல்; lungs of London, பெரிய பட்டணத்தில் அல்லது அதற்கருகில் உள்ள திறந்த வெளியிடங்கள்; lungs of oak, நுரையீரல் நோய்க்கு நல்லதெனக் கருதப்படும் காளான்வகைப் பூண்டு.

**lunge**[1], *n.* வட்டோட்ட வீதி, வட்டமான குதிரை வையாளி வீதி; வட்டணைக்கயிறு, குதிரைகளை வட்டாகாரமாக ஓடவிடும்போது பிடிக்கும் கயிறு; *v.* குதிரையை வட்டோட்ட வீதியில் பழக்கு; வட்டணைக் கயிற்றுதவியால் குதிரையை ஓடவிட்டுப் பயிற்றுவி.

**lunge**[2], *n.* வாட்போரில் திடீரென்ற வாட்குத்து; திடீரென்ற முன்னோக்கிய பாய்வு, பாய்ச்சல்; *v.* வாளினால் குத்து, குத்துச்சண்டையில் தோள்வாங்கிக் குத்து; குதிரைவகையில் எற்று, உதை; படைக்கலங்கொண்டு ஓங்கிக்குத்து; குத்திச் செலுத்து; திடீரென்று பாய்ந்து செல்; திடீரெனப் பாய்ந்து புறப்பட்டுச்செல்.

**lung'-fish**, *n.* நுரையீரலுடன் செவுள்களும் உடைய மீன்வகை.

**lung'-pow'er**, *n.* குரல் ஆற்றல்.

**lung'wort**, *n.* நுரையீரல் நோய்க்கு நல்லதெனக் கருதப்படும் காளான்வகைப் பூண்டு.

**lunisol'ar**, *a.* திங்களுக்கும் ஞாயிறுக்கும் ஒருங்கே தொடர்பான; (தொ.) lunisolar period, ஞாயிறு வட்டமும் திங்கள் வட்டமும் ஒன்றுபட்டுப்போகும் நிகழ்ச்சிகளுக்கிடையிலுள்ள 532 ஆண்டுகள் கொண்ட கால அளவு; lunisolar year, ஞாயிறு திங்களின் வட்ட மாறுதல்களினால் முறைப்படுத்தப்படுங் கூறுகளையுடைய ஆண்டு.

**lunk'ah**, (இ.) *n.* காரச் சுருட்டு வகை.

**lup'in, lup'ine**[1], *n.* கால்நடைத் தீனியாக உதவுந் தோட்டச் செடிவகை.

**lup'ine**[2], *a.* ஓநாய்க்குரிய; ஓநாய் இனஞ் சார்ந்த; ஓநாய் போன்ற.

**lup'ines**, *n. pl.* கால்நடைத் தீனியாக உதவுந் தோட்டச்செடி வகைகளின் விதை.

**lup'us**, *n.* தோல் படைநோய் வகை.

**lurch**[1], *n.* கடுந்தோல்வி நிலை, எட்டாநிலை ; (தொ.) leave in the lurch, நண்பனை-கூட்டாளியை இடர்ப்பாடான நிலையில் கைவிட்டுவிடு.

**lurch**[2] *n.* திடீர்ச்சாய்வு, தடுமாற்றம்; *v.* திடீரென ஒருபக்கஞ் சாய், தடுமாறு.

**lurch'er**, *n.* சிறு திருட்டுச் செய்பவர், மோசடிக்காரர் ; ஒற்றர் ; கள்ளவேட்டைக்காரர் பயன்படுத்தும் கலப்பின நாய் வகை.

**lure**, *n.* வேட்டைப்பருந்தைத் திருப்பி வருவிப்பதற்குரிய கவர்ச்சிச்சின்னம்; வஞ்சக்கவர்ச்சிப் பொருள்; வஞ்சக்கவர்ச்சி இரை; வேட்டைக்கவர்ச்சி; மாயக்கவர்ச்சித் திறம்; *v.* கவர்ச்சிச் சின்னத்தால் வேட்டைப் பருந்தை மீட்டழை ; மருட்டு, கவர்ச்சிக்குட்படுத்து, வசப்படுத்து ; ஏய் ; ஆசைகாட்டி இழு ; தூண்டிச் செயலாற்றுவி.

**lur'id**, *a.* கோர உருவான, பேய்போன்ற; வெளிறியதோற்ற முடைய; பயங்கரமான; அச்சக்கூறுகள் வாய்ந்த; இயல்பு முரணிய ; கொந்தளிக்கிற ; (தாவ.) மங்கலான மஞ்சள் பழுப்பு நிறமுடைய; (தொ.) cast a lurid light on character or facts, நடத்தை அல்லது செய்திகளை அவலமாக அல்லது பயங்கரமாகக் காட்டு.

**lurk**, *n.* மறைவு ; *v.* பதுங்கியிரு, ஒளிந்திரு ; காத்திரு, உள்ளுறைவாயிரு ; கவனிக்கப்படாமல் இரு, வெளிப்படாதிரு, உள்ளுறையாயிரு; (தொ.) on the lurk, மறைவில் ஒற்றுடிக் கொண்டு, வேவுபார்த்துக்கொண்டு.

**lurk'ing-place**, *n.* மறைவிடம், ஒளிந்திருக்குமிடம்.

**lu'scious**, *a.* மிகுமதுரமான, நறுஞ்சுவையுள்ள ; தெவிட்டும் அளவுக்கு இனிப்பாயிருக்கிற ; அளவுமீறிய கவர்ச்சியுடைய; மொழிநடை வகையில் புலனின்பக் கவர்ச்சிமிக்க; சிற்றின்பச் சுவைகனிந்த.

**lush**, *a.* புல் தழை வகையில் வளமை ததும்பிய.

**lust**, *n.* இச்சை, கழிகாமம் ; அடங்காச் சிற்றின்ப அவா, தகாச் சிற்றின்பவேட்கை ; மட்டில் புலனுகர்வீடுபாடு ; *v.* மிகுவிருப்பங்கொள், இச்சைகொள், காமவிகாரமுறு.

**lus'tral**, *a.* தூய்மைச் சடங்கு சார்ந்த, வினைமுறையாகத் துப்புரவு செய்வது பற்றிய, துப்புரவுச் சடங்கில் பயன் படுத்தப்படுகிற.

**lus'trate**, *v.* கழுவாய்ப்பலி கொடுத்துத் துப்புரவாக்கு, வினைமுறைச் சடங்குகள் செய்து தூய்மைப்படுத்து, திருமுழுக் காட்டித் தூய்மைசெய்.

**lus'tre**[1], *n.* பளபளப்பு, ஒளிர்வு ; பிறங்கொளி ; காந்தி ; புறப்பொலிவு; கதிரொளி; அழகொளி, மிகுவனப்பு; பகட்டு; மிகுபுகழ் ; மேன்மை, தனிச்சிறப்பு ; சரவிளக்கு ; சரவிளக்கின் தொங்கல் கண்ணடிப்பட்டை ; மெல்லிய பளபளப்பான உடுப்புத் துணிவகை; ஒளிரும் மேற்புறமுடைய கம்பளி வகை; *v.* துணி மெருகிடு ; மட்பாண்டம் பளபளப்பாக்கு.

**lus'tre**[2], *n.*=lustrum.

**lus'trine**, *n.* பளபளக்கும் பட்டுத் துணிவகை.

**lus'trum**, *n.* ஐந்தாண்டுக்காலம் ; *pl.* lus'tra, lus'trums.

**lus'ty**, *a.* உடல்நலமும் வலிமையும் வாய்ந்த ; ஊக்கமுடைய, எழுச்சியுடைய, சுறுசுறுப்புள்ள.

***lu'sus natur'ae***, (ல.) *n.* இயல்பிழுக்கம், பெரிதும் இயல் முரணிய இயற்கைப் படைப்பு, இயல்திரி விலங்குரு ; இயல் திரி செடிவடிவம் ; இயற்கையின் திருவிளையாடல்.

**lu'tanist**, *n.* யாழ்ப்பாணர், யாழ்வகை வாசிப்பவர்.

**lute**[1], *n.* 14-17-ஆம் நூற்றுண்டுகளில் கையாளப்பட்ட யாழ் போன்ற இசைக்கருவி வகை ; (தொ.) little rift within the lute, யாழ் உட்கீறல்; மூளைக்கோளாறின் தொடக்கம் ; கலகத்தின் தொடக்கக் குறி.

**lute**[2], *n.* சீலைமண், மண்பூச்சடைப்பு ; காற்றுப்புகா மண்ணடைப் பூச்சு ; கலமட்பூச்சு ; ஒட்டுச்செடிப்பூச்சுக்காப்பு ; *v.* சீலைமண்பூசு, மண்பூசியடை, மட்காப்பிடு.

**lu'teoful'vous**, *a.* பழுப்பு கலந்த சிவந்த மஞ்சள் நிறமான.

**lu'teous**, *a.* (தாவ.) திண்ணிய செம்மஞ்சள் நிறமான.

**lute'string**, *n.* பளபளப்பான பட்டுத்துணி.

**Lute'tian**, *a.* பாரிஸ் நகர வாணர் சார்ந்த.

**Lu'theran**, *n.* மார்டின் லூதர் (Martin Luther 1483-1546) என்னும் செர்மன் சமய சீர்திருத்தக்காரரைப் பின்பற்றுபவர்; ஆக்ஸ்பர்கில் (Augsburg) அறிவிக்கப்பட்ட சமயக்கோட்பாடுகளை ஒப்புக்கொள்ளும் திருச்சபையைச் சேர்ந்தவர் ; *a.* மார்டின் லூதர் சார்ந்த ; ஆக்ஸ்பர்கில் அறிவிக்கப்பட்ட சமயக் கோட்பாடுகளை ஒப்புக்கொள்ளுந் திருச்சபைசார்ந்த.

**lux'ate**, *v.* மூட்டு விலகச்செய் ; இடம்பெயர்.

**luxa'tion**, *n.* இடப்பெயர்வு.

***luxe***, (பிர.) *n.* மிகுநிறைவு; (தொ.) *De luxe*, நிறைந்த வசதியுடைய.

**luxur'iant**, *a.* இனப்பெருக்க வளமுள்ள ; தாராளமாக வளர்கிற ; அளவுமீறிய செழிப்புவாய்ந்த; இலக்கியநடை-கலைப் பாணி வகையில் அணி வளம் நிரம்பிய, அழகுச்சொற் பெருக்கம் உடைய.

**luxur'iate**, *v.* களியாட்டயர், இன்பத்தில் மூழ்கிக்களி ; கவலையற்று வாழ், நீடின்பம் நுகர்.

**luxur'ious**, *a.* உயர் இன்பவாழ்வுடைய ; இன்பவாழ்வுக் குகந்த ; ஒய்யாரமான ; செழிப்பான ; கட்டற்ற புலனுகர் வின்பஞ் சார்ந்த.

**lux'ury**, *n.* உயர்இன்பவாழ்க்கை; இன்பவாழ்க்கைப் பொருள்; அரும்பெறல் இன்பப்பொருள் ; உயர்விலைப்பொருள் ; கவலையற்ற இன்பப்பெருவாழ்வு ; இன்றியமையக்கூடிய ஆனால் விரும்பத்தக்க பொருள்.

**lycan'thropy**, *n.* சூனியக்காரியின் ஓநாய் உருவேற்பு; தாம் விலங்காய்விட்டதாகக் கொண்ட மருட்சியால் நோயாளி விலங்கின் குரல்-உணவுப்பண்புகளை மேற்கொள்ளல்.

***lycee***, (பிர.) *n.* பிரஞ்சு நாட்டில் அரசினர் நடத்தும் இடைநிலைப்பள்ளி.

**Lyce'um**, *n.* அரிஸ்டாட்டில் தம் மாணவர்க்கு மெய்விளக்கியல் கொள்கைகளைக் கற்பித்த ஆதென்ஸ் நகரத்திலுள்ள தோட்டம் : இலக்கியக் கழகம் ; சொற்பொழிவுக் கூடம் ; கற்பிக்குமிடம்.

**Lych'nis**, *n.* இளஞ்சிவப்பு மலர்களையுடைய செடி இனம்.

**lyc'opod**, *n.* (தாவ.) நிமிர்ந்த சிதல் உறைகளையுடைய பாசி வகை.

**lycopod'ium**, *n.* (தாவ.) நிமிர்ந்த சிதல் உறைகளையுடைய பாசிவகை ; பாசிவகையிலிருந்து எடுக்கப்பட்டு அறுவை மருத்துவத்தில் உறிஞ்சு பொருளாகவும் நடிப்பரங்க மின்செய் ஒளியாகவும் பயன்படும் நுண்பொடிவகை.

**lydd'ite**, *n.* ஆற்றல்மிக்க வெடிமருந்து வகை.

**Lyd'ian**, *n.* மேலை ஆசியாவின் பண்டை நாடாகிய லிடியாவில் வழங்கிய மொழி ; லிடியாவில் வாழ்ந்தவர் ; *a.* லிடியா நாட்டைச் சார்ந்த ; (தொ.) Lydian mode, (இசை.) பண்டைய கிரேக்க சுரவரிசை வகை.

**lye**, *n.* கடுங்கார நீர், ஆற்றல் வாய்ந்த கழுவுநீர்ம வகை ; மாசு போக்கி.

**ly'ing**[1], *n.* படுத்திருத்தல் ; படுக்குமிடம் ; *a.* படுத்திருக்கிற; (தொ.) lying in, மகப்பேறுற்ற நிலையில்.

**ly'ing**[2], *n.* பொய் பேசுதல் ; *a.* பொய் பேசுகிற, ஏமாற்றுகிற, பொய்யான.

**ly'ing-in'**, *n.* மகப்பேறுற்ற நிலை ; (தொ.) lying-in hospital, மகப்பேற்று மருத்துவமனை.

**lyke'-wake**, *n.* இறந்தோர் உடலுக்கு இராக்காவல் விழிப்பு.

**lyme'-grass**, *n.* மணலின் புடைபெயர்ச்சியைத் தடுப்பதற்கும் பயிரிடும் புல்வகை.

**lymph**, *n.* (செய்.) தூயநீர் ; (உட.) நிணநீர் ; புண் முதலியவற்றிலிருந்து கசியும் ஊனீர் ; ஆவின அம்மைக் கொப்புளங்களிலிருந்து எடுக்கப்படும் சீநீர் ; காப்புச் சீநீர் வகை ; (தொ.) vaccine lymph, ஆவின அம்மைக் கொப்புளங்களிலிருந்து எடுக்கப்படும் சீநீர்.

**lymphat'ic**, *n.* ஊனீர் நாளம் ; *a.* நிணநீர் சார்ந்த ; சீநீர் சுரப்பிக்கிற; ஊனீர் கொண்டு செல்கிற; ஊளைச்சதையுள்ள; வெளிறிய தோலுடைய ; மந்தமான ; சோம்பலான ; lymphatic gland, நிணநீர்ச் சுரப்பி; lymphatic vessel, ஊன்நீர் நாளம்.

**lynce'an**, *a.* காட்டுப்பூனையின் கண் பார்வையுடைய; கூரிய பார்வையுள்ள.

**lynch**, *n.* சட்டமுறைப்படா வழக்குமன்ற நடவடிக்கை ; *v.* சட்ட முறையின்றித் தான்தோன்றித்தனமான தீர்ப்பளி; தான்தோன்றித்தனமாகக் கொலைத்தண்டனை விதி ; (தொ.) Judge Lynch, சட்டவிரோதமான நீதிமன்றக் கற்பனை உருவகம் ; lynch law, Lynch law, சட்டவிரோதமான நீதிமன்ற விதிமுறை.

**lynx**, *n.* சிவிங்கி, குறுவாலுடைய பூனையின விலங்குவகை.

**lynx'-eyed**, *a.* கூரிய பார்வையுள்ள.

**Ly'on, Lyon King of Arms**, *n.* ஸ்காத்லாந்தின் முதன்மையான படைக்கல அதிகாரி.

**Lyr'a**, *n.* வடக்கு விண்மண்டல மீன்குழு.

**Lyr'aid**, *n.* (வான்.) வடக்கு விண்மீன்குழுவினின்றும் ஏப்ரல் 20 வாக்கில் பரவும் ஒளி.

**lyr'ate**, *a.* (வில., தாவ.) யாழ் வடிவமுள்ள.

**lyre**, *n.* வழக்கற்றுப்போன யாழ்போன்ற நரப்பிசைக்கருவி வகை.

**lyre'-bird**, *n.* யாழ்வடிவிலமைந்த தோகையினையுடைய ஆஸ்திரேலியப் பறவை வகை.

**ly'ric**, *n.* சிறிய அளவினதான உணர்ச்சிப்பாடல்; தன்னுணர்ச்சிப்பாட்டு ; *a.* யாழ்சார்ந்த ; யாழுக்குரிய, பாடுதற்கேற்ற ; இசைப்பாட்டாகப் பாடத்தக்க ; பாடலுருவான ; பாடலினது இயல்புள்ள ; பாடலினால் தெரிவிக்கப்பட்ட ; பாட்டில் வெளியிடத்தக்க ; கவிஞரின் தற்கருத்துணர்ச்சிகளைத் தெரிவிக்கிற ; கவிஞர் வகையில் உணர்ச்சி நிரம்பிய சிறு பாடல்கள் எழுதுகிற ; (தொ.) lyric drama, the lyric stage, உணர்ச்சிப்பாடல் நாடகம்.

**ly'rical**, *a.* உணர்ச்சிப்பாடல் உருவான ; உணர்ச்சிப் பாடலுக்குரிய மொழிநடையில் அமைந்திருக்கிற; உணர்ச்சிப் பாடலுக்குகந்த மொழிநடையுடைய.

**ly'ricism**, *n.* உணர்ச்சிப்பாடலாயமைந்த; உணர்ச்சிப்பாடற் பண்பு ; உயர்தர உணர்ச்சிப்பாங்கு.

**ly'rics**, *n. pl.* உணர்ச்சிப் பாடல்கள்.

**Lyr'id**, *n.*=**Lyraid.**

**lyr'ist**, *n.* யாழ்ப்பாணர் ; உணர்ச்சிப் பாடற்கவிஞர்.

**lys'ol**, *n.* நோய்தொத்தல் தடுப்புநெய் ; நச்சுத்தடை மருந்தாகப் பயன்படுத்தப்படும் நீரில் கரையத்தக்க சவர்க்கார நெய்க்கலவை வகை.

**Ma**, *n.* = mamma.
**ma'am**, *n.* = madam.
**mac**, *n.* (பே-வ.) = macintosh.
**maca'bre**, *a.* கொடூரமான, கோரமான ; (தொ.) Danse macabre, கொடுகொட்டியாடல்.
**macac'o**[1], *n.* அமெரிக்க குரங்கு வகை.
**macaco**[2], *n.* மனிதக்குரங்கு வகைகள்.
**macad'am**, *n.* பாட்டைச்சரளை, பாட்டை போடுவதற்குரிய ஒரே சீராக உடைக்கப்பட்ட கல்துணுக்குத் தொகுதி ; *a.* ஜான் மக்காடம் (John Macadam 1756-1836) கண்டமுறையிற் போடப்பட்ட ; சரளையிடப்பட்ட.
**macad'amize**, *v.* பாட்டைக்குச் சரளைபோடு.
**macaron'i**, *n.* கோதுமைமாக் குழல்பண்ணியம்; பல்கூட்டு; வண்ணப் புனைபொருள் ; பறவை வகை ; (வர.) பதினெட்டாம் நூற்றாண்டு வழக்கில் ஒய்யாரன், பிலுக்கன் ; (தொ.) macaroni cheese, பாலாடைக்கட்டியுடன் வேகவைக்கப்பட்ட கோதுமை மாப்பசைச் சுருள் பண்ணியம்.
**macaron'ic**, *a.* பாடல்கள் வகையில் நையாண்டி வடிவத்திலுள்ள ; மணிப்பிரவாளமான, லத்தீன் ஆங்கிலச் சொற்கதம்பமான, குழப்பமான.
**macaron'ics**, *n. pl.* கேலிப்பாடல்கள் ; லத்தீன் ஆங்கில மொழிச்சொல் வழக்குகளின் கதம்பம், குழப்பம்.
**macaroon'**, *n.* முட்டை வெண்கரு வாதுமை சர்க்கரை முதலியன சேர்த்துச் செய்யப்படும் அப்பவகை.
**macart'ney**, *n.* வான்கோழியினப் பறவை.
**macass'ar, macass'ar oil**, *n.* கூந்தல் தைல வகை.
**macaw'**[1], *n.* கிளி வகை.
**macaw'**[2], *n.* பனை வகை.
**macc'abaw**, *n.* = maccaboy.
**Maccabe'an**, *a.* கி. பி. 166-இல் சிரியாமன்னரின் கொடுங்கோன்மையிலிருந்து யூதேயாவை விடுவித்த யூத இளங்கோக்கள் சார்ந்த.
**macc'aboy**, *n.* நறுமண மூக்குத்தூள்.
**mace**[1], *n.* (வர.) செண்டு, தண்டாயுதம் ; பணித்துறை முத்திரைக்கோல் ; மேசைப்பந்தாட்டக் கோல்.
**mace**[2], *n.* சாதிபத்திரி, சாதிக்காயின் மேல்தோடு.
**mace'-bearer**, *n.* பணித்துறை முத்திரைக்கோல் ஏந்திச் செல்லும் அலுவலர்.
**ma'cedoine**, *n.* காய்கறிக்குழம்பு; சமையலுக்குரிய குழம்புச் சாறு.
**ma'cerate**, *v.* ஊறவைத்து மென்பதமாக்கு ; பட்டினியால் மெலிவி ; மெலிந்து நலிவுறு.
**machan**[ʳ], (இ.) *n.* பரண்.
**machet'e**, *n.* = matchet.
**Machiavell'i**, *n.* அரசியலில் இரண்டகஞ் செய்பவன், சாணக்கியன், பழிக்கஞ்சாச் சூழ்ச்சிக்காரன்.
**Machiavell'ism**, *n.* சூழ்ச்சிக்குத் தயங்காத அரசியல்முறை, சாணக்கியம்.
**machic'olate**, *v.* (க-க.) தாக்குபவர்கள்மேல் கற்கள் முதலியவற்றை எறிவதற்காக மதிற்சுவர்களில் தண்டயங்களுக்கிடையில் இடைவெளிகள் ஏற்படுத்து.
**machicoul'is**, *n.* (க-க.) துப்பாக்கி வைத்துச் சுடுவதற்காக மதிற்சுவர்த் தண்டயங்களுக்கிடையிலுள்ள வெளியிடம்.
**mach'inate**, *v.* சூழ்ச்சிசெய், சதிவேலைகள் புரி.
**machina'tion**, *n.* சூழ்ச்சி, சதி.
**mach'inator**, *n.* சூழ்ச்சியாளர்.
**machine'**, *n.* இயந்திரம், விசைப்பொறி, இயற்பியல் விசையைச் செலுத்துவதற்கான அமைவு; விசையைக் கொண்டு செலுத்தும்கருவி; விசையைப்பயன்படுத்தும் கருவி; இருசக்கர மிதிவண்டி, முச்சக்கர மிதிவண்டி ; இயந்திரம்போல வேலை செய்பவர்; அறிவைச் செலுத்தாமல் செயலாற்றுபவர் ; சற்றும் பிசகாமல் ஒழுங்காகச் செயலாற்றுபவர் ; மேலாண்மை இயக்கும் அரசியல் அமைப்பு ; *v.* இயந்திரத்தினால் செய், இயந்திரத்தின் உதவியால் வினையாற்று ; இயந்திரத்தைப் பயன்படுத்து ; (தொ.) machine tool, இயந்திரத்தினால் இயக்கப்படுங் கருவி ; simple machine, கிளையுறுப்புக்கள் இல்லாத தனிநிலை இயந்திரம்.
**machine'-gun**, *n.* இயந்திர பீரங்கி, சக்கரங்களின்மேல் ஏற்றப்பட்டுத் தானே விரைவில் சுடும் பீரங்கி ; *v.* இயந்திர பீரங்கியால் சுடு.
**machine'-made**, *a.* இயந்திரத்தினாற் செய்யப்பட்ட.
**machi'nery**, *n.* இயந்திரத்தொகுதி ; இயந்திரக் கருவிகலத் தொகுதி, இயந்திரப்பணி ; இயந்திர விசை ; இயந்திர அமைப்பு ; இலக்கியத்துறையில் இயற்கை கடந்த ஆள் நிகழ்ச்சித் துணை அமைப்பு.
**machi'nist**, *n.* இயந்திரங்கள் செய்பவர் ; இயந்திரங்களை நெறிப்படுத்துபவர்; இயந்திரங்களை இயக்குபவர்; இயந்திர இயக்கவல்லுநர் ; தையல் இயந்திரத்தில் வேலைசெய்பவர்.
**machom'eter**, *n.* விமானக்காற்று ஒப்புவிசைமானி, திணை நிலக்காற்று வேகத்தின் கூறளவாக விமான வேகத்தை கணித்தளவிடும் கருவி.
**mac'intosh**, *n.* மழைச்சட்டை, மழை மேலங்கி.
**mack**, *n.* (பே-வ.) = macintosh.
**mack'erel**, *n.* கானாங்கெளுத்தி, உணவாகப் பயன்படும் கடல் மீன்வகை; (தொ.) mackerel breeze, mackerel gale, கடலின் மேற்புறத்தைச் சலசலக்க வைத்துக் கானாங்கெளுத்தி மீன் பிடிப்பதற்குதவும் வன்காற்று ; mackerel sky, நீண்ட மெல்லிய ஒருபோகான பஞ்சுத்திரள்கள் போன்ற மேகங்களுடன் கூடிய வானம்.
**mack'intosh**, *n.* = macintosh.
**ma'cle**, *n.* இரட்டைப்பளிங்கு ; கனிப்பொருளில் உள்ள கறுப்புப்புள்ளி.
*Macon*, (பிர.) *n.* பிரஞ்சு நாட்டிலுள்ள இன்தேறல் வகை.
**macon'ochie**, *n.* படைவீரர்களுக்குக் கொடுக்கப்படும் பேழை உணவுவகை.
**macra'me**, *n.* இழைமுடிச்சுக்களின் விளிம்பு, கயிற்று முடிச்சின் விளிம்பு.
**macrocephal'ic**, *a.* நீண்ட அல்லது பெரிய தலையுடைய.
**mac'rocosm**, *n.* அண்டம், அகிலம், பேரளவினதாகிய முழுமை.
**macrom'eter**, *n.* தொலைவிலுள்ள பொருள்களை அளப்பதற்கான கருவி.
**mac'ron**, *n.* நெடிற்குறி.
**macroscop'ic**, *a.* வெற்றுக் கண்களுக்கே புலனாகிற.
**mac'ula**, *n.* பரிதி வட்டத்திலுள்ள கரும்புள்ளி ; கனிப்பொருளில் உள்ள களங்கம்; தோலில் நிலையாக உள்ள மறு; *pl.* mac'ulae.
**mad**, *a.* பித்துப்பிடித்த, மூளைக்கோளாறுடைய, தன்னிலை மறந்த, மதிகேடான, அறிவுகெட்ட ; மனவெழுச்சிகொண்ட, மதிமயக்கமுற்ற ; (பே-வ.) மன எரிச்சலுற்ற ; விலங்குகள் வகையில் வெறிபிடித்த; மகிழ்ச்சி மீதூர்ந்த, உவகை வெறிபிடித்த; *v.* பித்துக்கொள்ளச் செய்; பைத்தியமாயிரு, வெறிச் செயல்கள் புரி ; (தொ.) like mad, மூர்க்கமாக, வல்லந்தமாக ; mad as a hatter, முழுப்பைத்தியம் பிடித்த.
**mad'am**, *n.* பெருமாட்டி, மாதரைக்குறிக்கும் நன்மதிப்பு விளி.
*madame*, (பிர.) *n.* திருவாட்டி, மாதர் குறித்த நன்மதிப்படை மொழி ; பெருமாட்டி, மாதர் குறிந்த நன்மதிப்பு விளி ; *pl.* *mesdames*, (தொ.) Madame Tussaud's, லண்டன் மெழுகுச் சிலைக் காட்சிச்சாலை.
**madapoll'am**, *n.* முன்பு தமிழகத்தில் நெய்யப்பட்ட பருத்தித் துணி வகை.

mad'cap, *n.* எளிதில் உணர்ச்சி வசப்படுபவர், பித்துக் கொள்ளி.

madd'en, *v.* பித்துக்கொள்ளச்செய், பைத்தியமாக்கு; சின மூட்டு, எரிச்சலுண்டாக்கு; வெறிகொள்.

madd'er, *n.* மஞ்சிட்டி, மஞ்சள் மலர்களையுடைய பூண்டு வகைக்கொடி; மஞ்சிட்டிச்சாயம்.

mad'-doc'tor, *n.* பைத்தியம் பிடித்தவர்களுக்குப் பண்டுவம் செய்யும் மருத்துவர்.

made[1], *a.* ஆக்கப்பட்ட; இயற்றப்பட்ட; செய்துமுடிக்கப் பட்ட; செயற்கையான; வலிந்து உண்டுபண்ணப்பட்ட; கூட்டிணைவான; (தொ.) a made man, வாழ்கையில் உறுதி யாக வெற்றிபெறக்கூடியவர்; made dish, பல பொருள்கள் கலந்து சமைக்கப்பட்ட துணையுணவு; made gravy, செயற் கையாய்க் கலவை செய்யப்பட்ட இறைச்சிக்குழம்பு.

made[2], *v.* make என்பதன் இறந்தகாலம், முடிவெச்சம்.

Madeir'a, *n.* மடிராத் தீவில் செய்யப்படும் வெள்ளை இன் தேறல் வகை; (தொ.) Madeira cake, மென்பதமான அப்ப வகை

*mademoiselle*, (பிர.) *n.* பிரஞ்சுமொழி வழக்கில் மணமாகாத பெண்; பிரஞ்சு வீட்டாசிரியை; *pl. mesdemoiselles.*

mad'-house, *n.* பித்தர் மருத்துவ மனை.

mad'ia, *n.* சூரியகாந்தியினச் செடி வகை; (தொ.) madia oil, சூரிய காந்தியினச் செடியிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்.

mad'man, *n.* பிச்சன், கோட்டிக்காரன்.

madonn'a, *n.* கன்னிமேரி; கன்னிமேரியின் படம்; கன்னி மேரியின் சிலை; (தொ.) madonna lily, வெள்ளாம்பல் வகை.

*madras'ah*, (அரா.) *n.* இஸ்லாமியக் கல்லூரி.

mad'repore, *n.* நுண்துளைகள் கொண்ட பவளப் பேரினம்; நுண்துளைகள் கொண்ட பவள வகையை உண்டாக்கும் உயிரினம்.

mad'rigal, *n.* சாவளி, காதல் சார்ந்த சிறு பாடல் வகை.

*madur'o*, (ஸ்பா.) *a.* சுருட்டுகள் வகையில் நிறைமணம் ஊட்டப்பெற்றுள்ள.

mad'woman, *n.* பிச்சி, பித்துடையவள்.

Maecen'as, *n.* கலைவள்ளல், கலை-இலக்கியம் ஆகியவற்றின் புரவலர்.

mael'strom, *n.* நார்வே மேற்குக் கரையில் தோன்றும் நீர்ச் சுழி; பெரிய கடல் நீர்ச் சுழல்.

maen'ad, *n.* கிரேக்க மதுத் தெய்வத்தின் பூசாரிப்பெண்.

*maestos'o*, (இத்.) *adv.* (இசை.) வீறுர்ந்து.

*maes'tro*, (இத்.) *n.* புகழ்வாய்ந்த இசைப்பாடல் இயற்றுபவர்; இசை கற்பிப்பவர்; இசைநிகழ்ச்சி நடத்துபவர்.

maff'ick, *v.* ஆரவார வெறியாட்டயர்.

mafi'a, *n.* சிசிலி (Sicily) என்னும் தீவுப்பகுதியின் மக்க ளிடையே சட்டத்தின்மீதும் அமைச்சர்கள்மீதும் உள்ள பகைமை; சட்ட எதிர்ப்புக் குற்றச்செயல்கள்; சட்டத்தின் மீது பகைமை கொண்டு குற்றமிழைப்பவர்கள்.

mag, *n.*=magneto.

magazine', *n.* படைக்கலக் கொட்டில், போர்க்காலத்தில் படைக்கலங்களையும் போர்த்தளவாடங்களையும் சேர்த்து வைக்குமிடம், துப்பாக்கிமருந்து முதலிய வெடிமருந்து களைச் சேர்த்து வைக்குமிடம்; பருவ இதழ்ச்சுவடி, பல எழுத்தாளர்களின் கட்டுரைகளடங்கிய பருவ வெளியீடு; (தொ.) magazine gun, அவ்வப்போது மருந்து நிரப்பா மலேயே அடுத்தடுத்துச் சுடவல்ல துப்பாக்கி.

Mag'dalen, Mag'dalene, *n.* திருந்திய விலைமகள்.

Magdalen'ian, *a.* (தொல்.) பிரஞ்சு நாட்டில் உள்ள 'லா மாடிலீன்' (La Madeleine) என்னுமிடத்திற் காணப்படும் படிவங்கள் காட்டுங் கற்காலஞ் சார்ந்த.

mage, *n.* மாயாவி; அறிவர், புலவர், மேதை.

magen'ta, *n.* ஒண் சிவப்புச்சாயம்; *a.* ஒண் சிவப்புச்சாயந் தீட்டப்பட்ட; ஒண் சிவப்புச்சாயம் போன்ற.

magg'ot, *n.* சில பூச்சிகளின் முட்டைப்புழு; நிலையற்ற வேடிக்கைக் கற்பனை; (தொ.) red maggot, கோதுமைப் பூச்சியின் முட்டைப்புழு.

Ma'gi, *n. pl.* பண்டைப் பாரசிகப் புரோகித வகுப்பினர்; சூனியக்காரர், மாயாவி; அறிவர்; (தொ.) the Magi, the three Magi, குழந்தை இயேசுநாதருக்குக் கீழ்த்திசையிலிருந்து காணிக்கைகள் கொண்டு வந்த 'அறிஞர்கள்'.

Ma'gian, *n.* பண்டைய பெர்சிய குருமார்களில் ஒருவர்; மந் திரக்காரர்; *a.* பண்டைப் பெர்சிய குருமார் சார்ந்த.

ma'gic, *n.* மாயவித்தை; மந்திரம்; வியத்தகு விளைவுகளைத் தோற்றுவிக்கும் ஆற்றல்; *a.* மாயவித்தைசார்ந்த; மந்திரம் போன்ற; வியத்தக்க; விளக்கமுடியாத; புதிர்விளைவுகளை உடைய; (தொ.) black magic, பில்லி, சூனியம்; magic lantern, படவிளக்குக் கருவி, ஒளி விளக்கப்படம், படங்களைத் திரையில் ஒளியுருப் பெருக்கிக்காட்டுதற்கான அமைவு; magic mirror, மாயக்கண்ணுடி, எதிர்காலக் காட்சிகளை அல்லது தொலைவுக் காட்சிகளைக் காட்டுங் கண்ணுடி; magic square, மாயச்சதுரம், நேர் குறுக்குச் சாய்வாக எவ் வழிக் கூட்டினுலும் ஒரே தொகை வரும்படி அமைக்கப்பட் டுள்ள சதுரம்; natural magic, தெய்விக ஆற்றலற்ற மாயம், செப்பிடுவித்தை; white magic, நல்தெய்வங்களின் துணை யுடன் செய்யப்படும் மாயம்.

magi'cian, *n.* மாயக்காரன், மந்திரவாதி.

magilp', *n.*=megilp.

Maginot line, *n.* செர்மனி எல்லையிலுள்ள பிரஞ்சு அரண் வரிசை.

magister'ial, *a.* குற்றவியல் நடுவர் சார்ந்த; குற்ற வழக்கு நடுவரால் நடத்தப்பட்ட; குற்றவியல் நீதிபற்றிய; தண்ட நடுவர் அதிகாரம் உடைய; மேலாண்மைத்தனமான; கருத் துக்கள் வகையில் அதிகாரம் அமைந்த.

magis'tral, *a.* பள்ளி ஆசிரியர்களைச் சார்ந்த; தலைவர்களைச் சார்ந்த; நோய் தீர்வுமுறை வகையில் மருந்து நூலிற் காணப்பெருமல் குறிப்பிட்ட நோய்க்கு மருத்துவரால் வகுக்கப் பட்ட.

ma'gistrate, *n.* குற்றவியல் நடுவர்; அமைதி காப்பு நடுவர்; தண்டலாளர்.

Maglemos'ian, *a.* டென்மார்க்கில் காணப்படும் தடங்களுக் குரிய தொடக்கக்கால ஐரோப்பிய நாகரிகஞ் சார்ந்த.

mag'ma, *n.* (மண்.) கற்குழம்பு.

Mag'na Cart'a, Mag'na Chart'a, *n.* (வர.) பேருரிமைப் பத்திரம், பிரிட்டனில் ஜான் (John) என்ற மன்னரிடமிருந்து 1215-இல் மக்கள் சார்பில் பெறப்பட்ட அரசியல் உரிமைப் பத்திரம்.

magnal'ium, *n.* அலுமினியமும் வெளிமமும் (magnesium) கொண்ட இலேசான வன்கலவை.

magnanim'ity, *n.* பெருந்தகைமை, பெருந்தன்மை, பெருமித மனப்பாங்கு.

magnan'imous, *a.* பெருங்குணமுள்ள, குறுகிய சிற் றுணர்ச்சிகளைக் கடந்த.

mag'nate, *n.* பெரிய மனிதர், மேம்பாடுடையவர்; சிறப்புடை யவர்; பெருஞ் செல்வர்.

magne'sia, *n.* வெளிம உயிரகை; (பே-வ.) வயிற்றுப் புளிப் பகற்றும் மருந்தாகப் பயன்படுத்தப்படும் வெண்பொடி, நீரூட்டப்பட்ட வெளிமக்கரியகி.

magnes'ium, *n.* வெளிமம், உலோகத்தனிம வகை; (தொ.) magnesium light, கண் கூசவைக்கும் பேரொளி.

mag'net, *n.* காந்தம், அயம்பற்றி; காந்தக்கல்; கவர்ச்சிக் குரிய பொருள்; கண்ணையும் கருத்தையும் ஈர்க்கும் பொருள்; (தொ.) horse-shoe magnet, வளைவிற் காந்தம்.

**magnet'ic,** *a.* காந்தத்தின் இயல்புடைய ; காந்த ஆற்றல் உண்டாக்குகிற ; காந்த ஆற்றலால் உண்டாக்கப்படுகிற ; காந்த ஆற்றலால் செயற்படுகிற ; காந்தக்கல்லின் இயல்புகளை ஏற்கத்தக்க ; காந்தக்கல்லினால் ஈர்க்கப்படத்தக்க ; மிக்க கவர்ச்சி வாய்ந்த ; மயக்குகிற, வசியம் பண்ணுகிற ; (தொ.) magnetic equator, காந்த ஊசி சாய்விலாதிருக்கிற நடுநிலை வரை ; magnetic mine, காந்தக் கடற்கண்ணி, கடலுக்கடியில் அமிழ்த்தப்பட்டுக் கப்பல் நெருங்கும்போது வெடிக்கும்படி அமைக்கப்பட்டுள்ள கண்ணி ; magnetic needle, வடக்கு நோக்கி கருவியில் எப்போதும் வடக்கையே காட்டுங் காந்த ஊசி ; magnetic north, காந்த ஊசிமுனை காட்டும் வடதிசைப்பகுதி.

**magnet'ics,** *n. pl.* அயப்பற்று ஆய்வுத்துறை.

**mag'netism,** *n.* காந்தவிசை; அயப்பற்று; கவர்ச்சி; அழகுக் கவர்ச்சி; (தொ.) animal magnetism, வசியவித்தை, மனித வசியம் ; terrestrial magnetism, நிலவுலகக் கோளக் காந்த விசை.

**mag'netite,** *n.* அயக்காந்தம், காந்த விசைப்பட்ட இருப்பு உயிரகை.

**mag'netize,** *v.* காந்த விசையூட்டு; காந்தத்தின் இயல்புகளை ஏற்று ; கவர்ச்சிசெய், ஈர்த்துக்கொள் ; வசியம்பண்ணு.

**magnet'o,** *n.* தனிக் காந்த மின்னாக்கி, உள்வெப்பாலைப்பொறி முதலியவற்றில் தீக்கொளுவுதற்காகப் பயன்படுத்தப்படும் தனிநிலைக்காந்த மின்னாக்கிப்பொறி ; *pl.* magnet'os.

**magne'to-elec'tric,** *a.* காந்த இயக்க மின்வலி சார்ந்த.

**magne'to-electric'ity,** *n.* காந்த இயக்க மின்வலி.

**magne'to-graph,** *n.* காந்த வரைவி, காந்தத் தாக்குதல்களின் மாறுதல்களைப் பதிவு செய்வதற்கான கருவி.

**mag'netron,** *n.* (இய.) உயர்தர அதிர்வூசல் உண்டுபண்ணுவதற்கான வெவ்வயனி வேகக்குழாய்.

**magnif'icat,** *n.* விவிலியத்தின் 'லூக்' (Luke) பகுதியில் கன்னிமேரி பற்றிய புகழ்ப்பாடல்.

**mag'nific'ation,** *n.* பெரிதாக்குதல்.

**magnif'icent,** *a.* வீறுார்ந்த ; உயர்வான ; சிறப்புவாய்ந்த ; முழுநிறைவுடன் கட்டப்பட்ட அல்லது ஒப்பனைசெய்யப்பட்ட; வளமையான, தாராளமான; (பே-வ.) நேர்த்தியான, சிறந்த.

**magnif'ico,** *n.* வெனிஸ் நகரத்துப் பெரிய மனிதர் ; பெருந்தகை ; *pl.* magnif'icoes.

**mag'nify,** *v.* பெரிதாக்கு ; உருப்பெருக்கு ; பெரிதாகச்செய் ; பெரிதாக்கிக்காட்டு ; மிகைப்படுத்து ; (தொ.) magnifying glass, உருப்பெருக்காடி.

**magnil'oquent,** *a.* பெருமையொடு பேசுகிற ; உயர்சொல் வகையான ; தற்புகழ்ச்சியான.

**mag'nitude,** *n.* பருமன் ; பரும அளவு ; பரிமாணம் ; பெருமை ; முதன்மை, முக்கியத்துவம் ; விண்மீன்கள் வகையில் ஒளிப்பிறக்கம் ; ஒளிப்பிறக்க நிலை ; (தொ.) of the first magnitude, முதன்மைநிலை வாய்ந்த ; முதன்மை ஒளிப்பிறக்கம் உடைய.

**magnol'ia,** *n.* தழை-மலர் வனப்புக்காகப் பயிற்றி வளர்க்கப்படும் தாவர இனம்.

**mag'num,** *n.* அரை 'காலன்' (gallon) அளவு ; அரைக்காலனளவுப் புட்டி ; அரைகாலன் அளவு குடிதேறல் ; முகத்தலளவுக்கூறு.

**mag'num bon'um,** *n.* சமைத்தற்குரிய பெரிய மஞ்சள்நிறப் பழவகை ; உருளைக் கிழங்கு வகை.

***mag'num op'us,*** (ல.) *n.* இலக்கியப் பெரும்படைப்பு ; கலைப் பெரும்பணி ; எழுத்தாளரது முக்கிய படைப்பு.

**mag'pie,** *n.* கறுப்பு வெள்ளை இறகுகளையும் நீண்டொடுங்கிய வாலையுமுடைய ஐரோப்பியப் பறவை வகை ; புறு வகை ; சலசலப்பாளர் ; வம்பளப்பவர் ; இலக்குவட்டத்தின் புறக்கோடியடுத்த வளையம்; இலக்குவட்டப் புறக்கோடி அடுத்துப் படும் வேட்டு.

**Mag'yar,** *n.* ஹங்கேரியில் வாழும் மங்கோலிய இனத்தவர் ; ஹங்கேரியில் வாழும் மங்கோலிய இனத்தவரின் மொழி ; *a.* ஹங்கேரியில் வாழும் மங்கோலிய இனஞ் சார்ந்த.

**mag'yar, magyar blouse,** *n.* ஒரு துணியிலேயே கைகளும் வெட்டப்பட்டுள்ள மார்புச்சட்டை.

**Maharaj'a, Maharaj'ah,** (ச.) *n.* பேரரசர்.

**Maharan'ee,** (ச.) *n.* பேரரசி, பேரரசன் மனைவி.

**Mahat'ma,** (ச.) *n.* அருட் பெரியார், அருளாளர்.

**Mahd'i,** (அரா.) *n.* இஸ்லாமியப் பெருந்தலைவர், இஸ்லாமியர் எதிர்பார்க்கும் வருங்காலத்துக்குரிய இஸ்லாமிய உலகத் தலைவர்.

**mah-jong', mah-jongg',** *n.* 144 காய்களை வைத்து நால்வர் ஆடுஞ் சீன விளையாட்டு வகை.

**mahl'stick,** *n.* = maulstick.

**mahog'any,** *n.* சீமை நூக்கு, நல்ல மெருகேற்கும் கட்டுமான மரவகை ; உணவு மேசை ; சீமை நூக்கின் நிறம், செந்தவிட்டு நிறம் ; (தொ.) have one's knees under one's mahogany, உடனிருந்துண்.

**Mahom'etan,** *n.* இஸ்லாமியர் ; *a.* இஸ்லாமிய.

**mahout',** *n.* யானைப்பாகன்.

**Mahratt'a,** *n.* மராட்டியர்.

**mah'seer,** *n.* வேட்டையாடப்படும் நன்னீர் மீன் வகை.

**maid,** *n.* சிறுமி ; முதுகன்னி ; பணிப்பெண் ; (தொ.) maid of honour, அரசியின் அல்லது இளவரசியின் மணமாகாத சேடி ; பாலேடு அப்பவகை ; old maid, குமரிமூத்தவள் ; சீட்டாட்ட வகை.

***maidan',*** (பேர்.) *n.* திடல், திறந்த வெளியிடம் ; படை அணி வகுப்பிடம்.

**maid'en,** *n.* பெண், சிறுமி, மங்கை ; கன்னிப்பெண் ; மணமாகாத பெண் ; மணமாகாத முதிய மாது ; (வர.) ஸ்காத்லாந்தில் பயன்படுத்தப்பட்ட தலைவாங்கிப்பொறி வகை ; *a.* மணமாகாத ; பெண்விலங்கு வகையில் பாலினச் சேர்க்கைபெறாத ; குதிரை வகையில் பந்தயப் பரிசுபெறாத ; குதிரைப்பந்தய ஓட்ட வகையில் பரிசுபெறாக் குதிரைகளுக்குமட்டும் இடமளிக்கப்பட்ட ; செடிவகையில் வித்திலிருந்து விளைந்த ; போர்வீரன் வகையில் போரனுபவமற்ற; வாள் வகையில் கையாளப்பட்டிராத, பயன்படுத்தப்படாத ; (தொ.) maiden name, கன்னிப் பருவப் பெயர், மணமாவதற்குமுன் வழங்கிய பெயர் ; maiden over, மரப்பந்தாட்டத்தில் ஓட்டம் எடுக்காத ஆட்டப்பகுதி ; maiden speech, முதற்பேச்சு, கன்னிப்பேச்சு.

**maid'enhair,** *n.* மயிரிழை போன்ற காம்புகளும் நுண்ணிலைகளும் கொண்ட சூரல் வகை.

**maid'enhead,** *n.* கன்னிமை, கன்னித்தன்மை; முதல் நுகர்வு; முதல் அனுபவம் ; முதல் முயற்சி.

**maid'enhood,** *n.* கன்னிமை ; கன்னிப்பருவம் ; கன்னிமை நிலை ; முதல் முயற்சி ; முதல் நுகர்வு, முதல் அனுபவம்.

**maid'servant,** *n.* பணிப்பெண்.

**maieut'ic,** *a.* சாக்ரட்டீஸ் என்ற கிரேக்க பேரறிஞரின் ஆய்வுமுறை வகையில் உள்ளக் கருத்துக்களை வெளிப்படுத்தி விளக்கத் தூண்டுகிற.

**mail**[1], *n.* கவசம், போர்ப்பாதுகாப்பான இருப்புச்சட்டை; *v.* கவசம் பூட்டு, காப்பிட்டுப்பொதி ; (தொ.) the mailed fist, வன்செயல்.

**mail**[2], *n.* அஞ்சல் கட்டு ; அஞ்சல்முறை ; வெளிநாட்டு அஞ்சல் ; நாளஞ்சல் தொகுதி ; *v.* அஞ்சல்மூலம் அனுப்பு; அஞ்சலிற் சேர் ; (தொ.) mail order, அஞ்சல் அனுப்பாணை.

**mail'cart, mail'coach,** *n.* முற்கால அஞ்சல் வண்டி.

**maim,** *v.* குறைப்படுத்து, ஊனமாக்கு; முடமாக்கு, நொண்டியாக்கு ; பழுதாக்கு, ஊறுபடுத்து.

**main**[1], *n.* பகடை ஆட்டக்கேள்வி எண் ; சேவற் போட்டிப் பந்தயம்.

**main**², *n.* வலு, வலிமை; உடற்பெரும்பகுதி; தலைநிலம், நிலப்பெரும்பகுதி; கடல், கடலின் அகல் பெரும் பரப்பு, ஆழ் கடல்; தலைமை வாய்க்கால்; சாக்கடைப் பெருங்கால்; தலைப் பெருங்குழாய்; முதன்மை நிலை; *a.* தலைமையான; சிறப்பான; அளவில் முதன்மையான; பரப்பில் தலைநிலைவாய்ந்த; பெரும்பகுதி உட்கொண்ட; முழு ஆற்றலும் பயன்படுத்தப் பட்ட; (தொ.) have an eye to the main chance, காரியத்தில் கண்ணுயிரு; தன்னலத்தில் கருத்தாயிரு; in the main, பெரும்பாலும்; main line, மூலபாட்டை, முக்கியபாதை; Main Street, முக்கிய தெரு; splice the main brace, தனி மிகையான வெல்லச்சாராயப் பங்கீட்டளவை வழங்கு; the main point, வாதத்தின் முனைத்த கருத்து; with might and main, முழு வலிமையோடு கூட, முழுமுச்சுடன்.

**main'land**, *n.* தீவு முதலிய புறப்பகுதிகள் நீங்கலான தலை நிலப் பரப்பு.

**main'mast**, *n.* முக்கிய பாய்மரம்.

**main'sail**, *n.* கப்பலின் முக்கிய பாய்.

**main'spring**, *n.* கடிகாரத்தின் முக்கிய சுருள்வில்; மூலவிசை, உயிர்ப்பொறி.

**main'stay**, *n.* கப்பலின் முன்புறப் பாய்மரத்தில் மேலிருந்து கீழ்வரையுள்ள கயிறு; மூலக்கையிருப்பு; முக்கியமான ஆதாரம்; முக்கிய ஆதாரப்பொருள்; தலைமையான ஆதர வாளர்.

**maintain'**, *v.* தொடர்ந்து செயலாற்று; விடாமல் நடத்து; அழியாமற் காத்துவா; செப்பனிட்டு வைத்துப்பேணு; ஆதரவளித்துக் காப்பாற்று; உணவுடையுதவி ஆதரி; ஆதரி; உண்மையென வற்புறுத்து, மெய்ப்பித்து நிலைநிறுத்து.

**main'tenance**, *n.* பேணுகை; பராமரிப்பு; தொடர்ச்சிகாப்பு, காப்பாட்சி; வாழ்க்கைப்பிழைப்பு; வாழ்க்கைப்படியுதவி; பிழைப்பூதியம்; (சட்.) சட்டமுறையான காரணமில்லாமல் வழக்காடுபவருக்கு உதவிசெய்யுங் குற்றம்.

**main'top**, *n.* முக்கியமான பாய்மரத்தின் கீழ்ப்பகுதித் தலைப் பின்மீதுள்ள மேடை.

**maiol'ica**, *n.*=majolica.

**maisonette'**, **maisonnette'**, *n.* சிறு வீடு; தனியாக வாடகைக்கு விடப்பட்ட வீட்டின் பகுதி.

*maitre d'hotel*, (பிர.) *n.* மாளிகைவீட்டுப் பொறுப்பாட்சி யாளர்; அருந்தக மேலாட்சியாளர்.

**maize**, *n.* சோளம், மக்காச்சோளம்; சோளக் கதிர்மணி.

**maizen'a**, *n.* உணவாகப் பயன்படும் சோளமாக் கூழ்.

**majes'tic**, *a.* கம்பீரமான, பெருமிதத்தோற்றம் வாய்ந்த; மாண்பமைதிமிக்க, வீறு நலமார்ந்த, தனிப்பெருஞ் சிறப்புடைய; அமைவாரவார மிக்க.

**maj'esty**, *n.* வீறு, தோற்ற உயர்வு; நடைப்பெருமிதம்; பேச்சு விழுப்பம்; புகழ்வீறு; ஆற்றல் நிறைவு; மாண்பமைதி, தன்னிறைவமைதி; புகழ் ஒளி, சூழொளி வட்டம்; இறைவன் திருவீற்றிருக்கை; இயேசுநாதரின் திருவெழுந்தருளிப்புக்கோலம்; பாடைமேற்கட்டி; மன்னர் புகழ்ப்பட்டக் குறிப்பு; (தொ.) Her Majesty, அரசி படர்க்கைச்சுட்டுக் குறிப்பு; His Majesty, அரசர் படர்க்கைச்சுட்டுக் குறிப்பு; Their Majesties, அரச குடியினர் படர்க்கைச்சுட்டுக் குறிப்பு; Your Majesties, அரசர் குடும்ப முன்னிலைச்சுட்டு விளிக் குறிப்பு; Your Majesty, மன்னர் முன்னிலைச்சுட்டு விளிக் குறிப்பு.

**Majlis'**, *n.* பாரசீக நாட்டுச் சட்டமாமன்றம்.

**majol'ica**, *n.* பளபளப்பான அழகிய இத்தாலிய மட்கல வகை; இத்தாலிய மட்கல வகைப்போலி.

**maj'or**¹, *n.* படைத்துறைப் பணித்தலைவர்; (தொ.) bugle major, drum major, pipe major, trumpet major, படைப்பிரிவின் தனித்துறைப் பணித்தலைவர்.

**maj'or**², *n.* இரண்டில் பெரியது; வயதுவந்தவர்; வீட்டுப் பணி மேற்பார்வையாளர்; (அள.) பெரும்பதம், இனச்சுட்டு; மாணவர் சிறப்புநிலைப்பாடம்; *a.* இரண்டில் பெரிதான; பெரும்படியான; முக்கியத்துவமிக்க; மூப்பான, விஞ்சிய வயதுடைய; வயதுவந்த; (தொ.) major axis, நெட்டச்சு; major epilepsy, வலிப்புநோய்; major part, முக்கியமான பகுதி; பெரும்பகுதி; major premiss, (அள.) வாத மூலப் பெரும்பொருள் வாசகம்; major suit, சீட்டாட்டத்தில் உயர் தரச்சீட்டு; major term, (அள.) பெரும்பதம், இனச்சுட்டு.

**maj'or-general**, *n.* படைத்துறைப் பணித்தலைவர்.

**majo'rity**, *n.* பெரும்பான்மை; பெரும்பான்மையர்; மிகுதியான எண்ணிக்கையுடையவை; நிறை வயது, உரிய வயது; படைத்தளபதிப் பதவி; (தொ.) absolute majority, தனி நிலைப் பெரும்பான்மை, சரிபாதிக்கு மேலான பெரும்பான்மை; join the majority, இறந்துபோ, மாள்வுறு; the majority, இறந்தோர், சாவுற்றோர்.

**majus'cule**, *n.* தொன்மைக்கால எழுத்துமுறை வகையில் பெரிய எழுத்து; *a.* தொன்மைக்கால எழுத்துமுறை வகையில் பெரிய எழுத்தைச் சார்ந்த.

**make**, *n.* செயலாக்கம்; ஆக்கச்செய்பொருள்; செயல்விளைவு; ஆளின் செயலாக்க விளைவு; நாட்டின் செய்தொழிலாக்கப் பொருள்; ஆக்கப்பாணி; கட்டுமானப்பண்பு; வினைமைப் பாங்கு; ஆக்க ஒழுங்கு; ஒழுங்கமைதி; அமைப்பு; வடிவம்; மாதிரி, வகை அமைதி; ஆக்க அளவு; சீட்டாட்டத்தில் துருப்புக்கேள்வி; மின் தொடர்பாக்கம், மின்வட்டகை முற்றுவிப்பு; *v.* ஆகும்படி செய்; ஆக்கு; படை; உருப்படுத்து; உண்டுபண்ணு; நூல் இயற்று; சேர்த்துருவாக்கு; கலந்து ஆக்கு; பொருத்தி அமைவி; ஒழுங்குசெய், சரிசெய்; செய்; செய்தமை; செய்வி, செயல்தூண்டு; நிகழ்வி; தோற்றுவி; செயல் எழச்செய்; வற்புறுத்து, வலிந்து செயலாற்றுவி; ஆகும் தகுதிபெற்றிரு; காரணமாக அமைவுறு; மாற்றியமை; ஆக்கத்தகுதி பெற்றிரு; ஆக்கப்பயன்படு; பயனுடையதாயிரு; மூலப்பொருளாயமைவுறு; ஆக்கக் கூறுயமை; இணைந்தாகு; கூடியமைவுறு; தொகைபடு, தொகையாகு; கணிப்புறு; சீட்டாட்டத்தில் சீட்டுக் கலை; அமர்வி; விளைவி; விளைவாக அளி; விளைவாகு; நிறுவு; நிலைநாட்டு; விதிசெய்; சட்டமாக அமைவி; முன்செல்; ஏற்படுத்து; ஆயத்தப்படுத்து; ஆதாயமாகப்பெறு; பெறு; சீட்டாட்டத்தில் பிடியில் வெற்றிபெறு; ஈட்டு; வழிசெய்; கெலிப்பெண் பெறு; கண்டுணர்; முடிவுபடுத்து; உணர்; புரிந்து கொள்; எண்ணங்கொள்; ஐயுறு; தயக்கங்கொள்; காட்சிக்குத் தென்படு; செய்துமுடி; சென்றெட்டு; சென்றெய்து; வெற்றியுடன் எய்து; முயற்சிசெய்; தொடங்கு; புறப்படு; வழங்கு; நடந்துகொள்; ஒழுகு; நயவஞ்சகமாக நடந்துகொள்; துணைக்கருவியாய் உதவு; நாடிச்செல்; சாய்வுறு; சார்பு அளாவி நில்; (தொ.) make a bag, வேட்டையில் விலங்கு-பறவை பல எய்தப்பெறு; make a book, குறிப்பிட்ட நிகழ்ச்சியின்மீது தொடர்ச்சியாகப் பந்தயங் கட்டு; make after, பின்தொடர், பின்தொடர்ந்துசெல்; make against, எதிர்ப்பாயிரு, பாதகமாயிரு; make a hash of it, பயன்படமுடியாமற் கெடு, காரியங் கெடு; make and mend, (கப்.) ஓய்வு நேரம், பணியாளர்களுக்குக் குறிப்பிட்ட கடமைகளில்லாத வேளை; make as if one had, பாசாங்கு செய்; make away, விரைவாகச்செல், விரை; make away with, கைதுறந்துவிடு; கொல்; வீண்செலவு செய்; பாழாக்கு; make believe, பாசாங்கு செய், நடி; make bold, செய்யத்துணி; துணிந்து முன் வா; make do, வைத்துச் சமாளித்துக்கொள், வைத்து ஒப்பேற்றிக்கொள்; make face, அழகுகாட்டு, முகம் வலித்துக் காட்டிக் கேலிசெய்; make for, உகந்ததாயிரு; உறுதி செய்வதாயிரு; நோக்கிச்செல், குறிக்கொண்டு முன்னேறு; எதிர் தாக்குதல் செய்; make free with, தாராளமாகப் பழகு; உரிமைச் சலுகைகள் கொள்; make fun of, make game of, ஏளனஞ் செய், கேலி செய்; make good, உறுதி நிறைவேற்று; செய்து முடி; எதிர்பாரா வெற்றியுறு; இழப்பீடு செய்; தவறு சரி செய்; நேர்மையுடையதாக்கு; make hay, வைக்கோல் உலர்த்து; தறுவாயை விடாது கைக்கொள்; make hay of, கூளமாக்கு, குழப்பு; make head, முனைந்து முன்னேறு; make head or tail of, இனம் புரிந்துகொள்ளு; make it, கடப்பதில் வெற்றியடை; வெற்றி நிறைவுற்றிரு;

make it up, வேற்றுமையைப் போக்கிக்கொள்; சரிப்படுத்திக் கொள், சமரசமாகு; make light of, புல்லாகக்கருது, அசட்டை செய்துவிடு; make little of, புறக்கணி, குறைவுபடுத்து; make love, அணுகிக்காதலி; நட்பாடு, அன்பாடிப் பழகு; make much of, பொருட்படுத்து, மிகைப்படுத்து, மிகுதியான முக்கியத்துவம் அளி; make no bones about, make no bones of, தயக்க நீக்கு; ஐயமின்றித்துணி; make of, மதித்துணர், இன்னதெனப் புரிந்துகொள்; make off, ஓடிவிடு, திருட்டுத்தனமாகக் கொண்டோடு, எடுத்துக்கொண்டு ஓடிவிடு; make oneself scarce, (பே-வ.) ஒதுங்கியிரு, மறைந்திரு, அப்பாற் சென்று மறை, காட்சிக்கு அரிதாகிவிடு; make or mar, ஆக்கு அல்லது அழி; ஆக்கலழித்தல் செய்; make out, வரை; எழுதி உருவாக்கு; விளக்கக் குறிப்பெழுது; அருமுயற்சியுடன் திரட்டு; எண்பித்துக்காட்டு; கண்டறி, கண்டுணர், தெளிவாக அறி; காணப்பெறு; make over, உரிமை மாற்று; உடைமை மாற்றிக்கொடு; make peace, உடன்படிக்கை செய்; make place, make room, make way, வழிவிடு, இடமளி; நகர்ந்து கொடு; make sail, கடலிற் செல்; பாய் விரி; make sure, make sure of, உறுதி செய், ஐயத்துக்கு இடமில்லாமற் செய், மெய்ம்மை கண்டுகொள்; make the best of, முழுதும் பயன்படுத்திக்கொள்; கிடைத்ததை மேலாகக்கொண்டு பயன்படுத்து; make up, நிறைவு செய்; பற்றுக்குறை நிரப்பு, இழப்பு ஈடுசெய், சரிசெய்; திரட்டி ஒன்றுசேர், இணைத்து உருவாக்கு; பூசல் தீர்த்துவிடு; மணம் ஏற்பாடு செய்; ஒப்பனை செய்து தக்க தோற்றம் கொடு; make up one's mind to, முடிவு செய், ஒரு வழி உறுதிப்படு; make up to, அன்புகாட்டு, காதலாடு; வசப்படுத்த முயலு; make water, சிறுநீர் கழி; make way, முன்னேறு.

make'-believe, *n.* பாசாங்கு, போலி நடிப்பு; *v.* பாசாங்கு செய், நடி; நம்பும்படி நடி.

make'peace, *n.* அமைதி உண்டுபண்ணுபவர், சமாதானம் செய்பவர்.

Mak'er[1], *n.* படைப்பு முதல்வர், கடவுள்.

mak'er[2], *n.* செய்தவர்; படைத்தவர், உருவாக்கியவர், இயற்றியவர்.

make'shift, *n.* தற்காலிகச் சரக்கு; சமாளிப்புச் செயல், தற்காலிகச் சூழ்ச்சி; அகடவிகடத் திறம்.

make'-up, *n.* நடிகரின் வேடம்; நடிப்பு வேடத்திற்கான சிங்காரிப்புப் பொருள்; மாதர் முக ஒப்பனை; மாதர் ஒப்பனைப் பொருள் தொகுதி; அச்சு ஒழுங்கமைப்பு; ஒழுங்கமைந்த அச்சுப்பகுதி.

make'weight, *n.* பார நிறைக்கும் எடை, எடையை நிறைவு செய்வதற்கான சிறு பளு; வழக்கு வலிமையுள்ளதாகக் காண்பிப்பதற்குச்சேர்க்கப்படும் முக்கியமல்லாத சிறு செய்தி.

mak'ing, *n.* செய்தல், உருவாக்குதல், தொழிற்படுத்தல்; (தொ.) be the making of, வெற்றியை உறுதியாக்கு; சாதகமான வளர்ச்சிக்கு வழிகோலு; ஆதரவான முதிர்ச்சிக்கு வழிவகு.

mak'ings, *n. pl.* ஆதாயம்; ஈட்டுபொருள்; ஆக்கப்பண்புக் கூறுகள், வருங்கால மேன்மைக்குரிய விதைக்கூறுகள்.

mal'achite, *n.* நீரியல் தாமிரக் கரியகி, உயர் மெருகு ஏற்கும் பச்சைநிறக் கனிப்பொருள் வகை.

mal'acoderm, *n.* மென்தோல் உயிரினப்பிரிவு.

malacol'ogist, *n.* நத்தையின ஆய்வுநூல் வல்லுநர்; நத்தையின ஆய்வுநூல் மாணவர்.

malacol'ogy, *n.* நத்தையின ஆய்வுநூல்.

mal'acoptery'gian, *n.* மென்துடுப்பு மீன் இனம்; *a.* மென்துடுப்புள்ள, மென்துடுப்பு மீன்வகை சார்ந்த.

malacos'tracan, *n.* நத்தையினஞ்சார்ந்த உயிரினம்.

maladjust'ment, *n.* பொருத்தக்கேடு, உறுப்பமைதிக்கேடு.

maladministra'tion, *n.* பழுதுடைய ஆட்சி, முறைகெட்ட செயலாட்சி.

mal'adroit, *a.* தவறான; செப்பமற்ற; குளறுபடியான, தாறுமாறான.

mal'ady, *n.* பிணி, நோக்காடு; நலிவு, கோளாறு.

*mal'a fid'e*, (ல.) *a.* நல்லெண்ணமற்ற, இரண்டகமான, சூதான; வஞ்சகத்துடன் செய்யப்பட்ட; *adv.* தீய எண்ணத்துடன், வஞ்சகக் கருத்தோடு.

Mal'aga, *n.* ஸ்பெயின் நாட்டின் தென்பகுதியிலுள்ள வெண்ணிற இன்தேறல் வகை.

Malagas'y, *n.* மடகாஸ்கர் (Madagascar) தீவிற் பேசப்படும் மொழி; மடகாஸ்கர் தீவின் குடிவாணர்; *a.* மடகாஸ்கர் தீவுக்குரிய மொழி சார்ந்த; மடகாஸ்கர் குடியிருப்பாளருக்கு உரிய.

mal'aise, *n.* உடல்நலக் குறைபாடு, எப்பிணியும் இல்லாமலே உடல்நலங் குன்றியநிலை.

mal'amute, *n.* எஸ்கிமோ இனத்தவரின் நாய்.

mal'anders, *n.* குதிரை முழங்காலின் பின்புறச் சொறிக் கட்டி.

mal'aprop, mal'apropism, *n.* ஒலிக்குழப்பச் சொற்குளறுபடி, ஒரு சொல்லுக்கு மாறாக அதைப்போல் ஒலிக்கும் வேறு சொல்லைத் தவறாகப் பயன்படுத்துதல்.

malapropos', *n.* சமயப் பொருத்தமற்ற பேச்சு; இசைவுக்கேடான நிகழ்ச்சி; *a.* சமயப் பொருத்தமற்ற; *adv.* சமயப் பொருத்தமற்றதாக.

mal'ar, *n.* கன்ன எலும்பு; *a.* கன்னத்துக்குரிய.

malar'ia, *n.* முறைக்காய்ச்சல், மலைக் குளிர்காய்ச்சல்; உடல் நலத்துக்குக் கேடான சதுப்புநில நச்சுக்காற்று.

Malay', *n.* மலாய்மொழி; மலாய் இனத்தவர், மலேயாவிலும் கிழக்கு தீவுக்குழுவிலும் தலைமையாயுள்ள இனத்தின் உறுப்பினர்; (தொ.) Malay fowl, பெரிய வீட்டுக்கோழி வகை.

Malaya'lam, *n.* மலையாள மொழி.

mal'content, *n.* மனக்குறையுடையவர்; கிளர்ச்சி ஆதரவாளர்; *a.* மனக்குறை உடைய; கிளர்ச்சி செய்கிற.

*mal de mer*, (பிர.) *n.* கடற்பயணிகளுக்கு ஏற்படும் குமட்டல் கோளாறு.

male, *n.* ஆண்; ஆண்பாலர்; *a.* ஆண்பாலுக்குரிய.

maledic'tion, *n.* பழிப்புரை, தெறுமொழி, சாபம்.

malefac'tion, *n.* தீங்கிழைப்பு, பொல்லாங்கு; குற்றம்.

mal'efactor, *n.* கேடு விளைவிப்பவர், தீங்கிழைப்பவர், குற்றவாளி.

malef'ic, *a.* கேடு சூழ்கிற, மந்திர-சூனிய வகைகளில் தீங்கு விளைவிக்கிற, தீக்குறியான.

malef'icent, *a.* புண்படுத்துகிற; பழி சூழ்கிற; குற்றவாளியான; குற்றத்துறை சார்ந்த.

mal'emute, *n.*=malamute.

malev'olent, *a.* தீங்கு விளைவிப்பதில் விருப்பமுடைய, பழியார்வமுள்ள.

malfeas'ance, *n.* (சட்.) பொல்லாங்கு, பணியாளர் நெறி தவறிய நடத்தை.

malforma'tion, *n.* பொருத்தமில்லாத உருவ அமைப்பு, செப்பக்கேடு.

mal'ic, *a.* (வேதி.) பழ வகைகள் சார்ந்த; (தொ.) malic acid, பழக்காடி.

mal'ice, *n.* வன்மம், மனக்காழ்ப்பு; பகைமை எண்ணம்; பழிசூழ் நோக்கு; தொல்லைதரும் விருப்பம்; (சட்.) தீய நோக்கம், கொலைக் குற்றத்தை மிகுதியாக்கும் மனமார்ந்த வன்ம எண்ணம்; (தொ.) bear malice, பழிவாங்கும் உணர்ச்சியை வளர், பொல்லாப்புப்பேணு.

mali'cious, *a.* கெடு நோக்கான.

malign', *a.* தீங்கு விளைவிக்கின்ற; நோய்கள் வகையில் துன்பம் விளைவிக்கிற; *v.* அவதூறு சொல்; புறங்கூறு; பழிகூறு, இழித்துச் சொல்.

**malig'nancy**, *n.* உக்கிர வேகம்; கடு வெறுப்புணர்ச்சி, கடும்பகைமை.

**malig'nant**, *n.* (வர.) பிரிட்டனின் உள்நாட்டுப்போரில் (1640-1644) மன்னராதரவாளர்; *a.* நோய் வகையில் உக்கிரமான, வேகமாகத் தொற்றிப் பரவுகிற; கேடு விளைவிக்கின்ற; கொடிய; கடு வெறுப்புணர்ச்சியுள்ள.

**malig'nity**, *n.* ஆழ்ந்த வெறுப்பு; நோய்வகையில் உக்கிரத் தன்மை.

**maling'er**, *v.* கடமை விலக்குவதற்காக நோயுற்றதாகப் பாசாங்கு செய்; நோயாளியாக நடித்துத் தட்டிக்கழி; நோய் நிலை நீடிப்பதாக நடித்துக் கடமையை ஒத்திப்போடு.

**mal'ism**, *n.* உலகம் கேடு நிறைந்தது என்ற கோட்பாடு.

**mal'ison**, *n.* சாபம், தெறுமொழி.

**mall**, *n.* சாலை வழி, மோடிடப்பட்ட நடைவழி; (வர.) ஆட்ட வகை; ஆட்ட வகைக்குரிய மூடுபாதை; ஆட்ட வகைக்குரிய கொட்டாப்புளி.

**mall'ard**, *n.* காட்டு வாத்து; காட்டு வாத்தின் இறைச்சி.

**mall'eable**, *a.* உலோகங்களின் வகையில் தகடாக்கக்கூடிய, அடித்து நீட்டக்கூடிய, வளைந்து கொடுக்கிற; சூழ்நிலைக் கேற்ப மாற்றியமைக்கத்தக்க; நெகிழ்விணக்கமுடைய; பணியத்தக்க; காலநிலைமைக்கு ஏற்பச் சரிப்படுத்திக் கொள்கிற.

**mall'emuck**, *n.* தோலடிப்பர்தம் நீண்ட வெண்மை கருமை நிற இறக்கையுமுடைய கடற்பறவை வகை.

**mall'enders**, *n.*=malanders.

**mall'et**, *n.* கொட்டாப்புளி, மரச்சுத்தி, மரச்சம்மட்டி; பந்தாட்ட வகையில் பந்தடிகட்டை.

***mall'eus***, (ல.) *n.* காதின் சுத்தி எலும்பு, காதுச்சவ்வின் அதிர்ச்சியை உட்காதுக்குள் ஊடுபரவவிடும் எலும்புப் பகுதி.

**mall'ow**, *n.* மெல்லிழை இலைத் தண்டுகளும் ஊதா மலர்களும் உடைய செடிவகை.

**malm**, *n.* மென்மையான சுண்ணப்பாறை; சுண்ணக் களி நிலம்; சுண்ணக் களிமண்; நேர்த்தியான சுண்ணக்களிச் செங்கல்வகை.

**malmais'on**, *n.* செவ்வண்ண மலர்ச்செடி வகை.

**malm'sey**, *n.* கிரீஸ்-ஸ்பெயின் நாடுகளிலிருந்து கிடைக்கும் இனிப்பான கடுந்தேறல் வகை.

**malnutri'tion**, *n.* சத்துக் குறை உணவு, போதா ஊட்டம்.

**malod'orous**, *a.* கெட்ட வாடையுள்ள.

**malprac'tice**, *n.* கெடுசெயல்; (சட்.) ஒழுங்கற்ற மருத்துவம்; (சட்.) பொறுப்புக்கேடான பதவிச் சுரண்டல்.

**malt**, *n.* வடிப்பதற்கான மாவூறல்; *v.* மாவூறலாக்கு; மாவூறவை; வித்து வகையில் வெப்பால் கெடு; மாவூறலாகு; (தொ.) extract of malt, நோயாளிகளுக்கு உணவான மாவூறல் நீர்; malt liquor, மாத்தேறல்.

**Mal'ta**, *n.* மால்ட்டா, நடுநிலக்கடல் தீவு; (தொ.) Malta fever, மால்ட்டா தீவில் நிலவுங் கடுங்காய்ச்சல்.

**Maltese'**, *n.* மால்ட்டா தீவின் மொழி; மால்ட்டாவின் குடிவாணர்; *pl.* Maltese'; *a.* மால்ட்டாவைச் சார்ந்த; மால்ட்டாவின் மொழி சார்ந்த.

**mal'tha**, *n.* கீலும் மெழுகுஞ் சேர்ந்த காரைவகை.

**malt'-house**, *n.* வடிதேறலுக்கான மாவூறற் கிடங்கு.

**Malthus'ian**, *n.* மால்தஸ் (Malthus) என்பாரைப் பின்பற்றுபவர்; மக்கட் பெருக்கத்தைத் தடுப்பதற்கு ஒழுக்கஞ் சார்ந்த கட்டுப்பாடு வேண்டுமென்ற கோட்பாடுடையவர்; *a.* மால்தஸின் கோட்பாடு உடைய; மக்கட் பெருக்கத்தைத் தடுக்க ஒழுக்கக் கட்டுப்பாடு வேண்டுமென்ற கொள்கை சார்ந்த.

**mal'ting**, *n.* வாற்கோதுமையை மாவூறலாக்குதல்; வடிதேறலுக்கான மாவூறற்கிடங்கு.

**mal'tose**, *n.* (வேதி.) மா வெல்லம், மாவூறலிலிருந்து எடுக்குஞ் சர்க்கரை.

**maltreat'**, *v.* தவறாக நடத்து; கொடுமைப்படுத்து, துன்புறுத்து.

**malt'ster**, *n.* மாவூறல் ஆக்குபவர்.

**malt'-worm**, *n.* மட்டுமீறிச் சாராயங் குடிப்பவர்.

**malva'ceous**, *a.* மெல்லிழை இலை தண்டுடைய வண்ண மலர்ச் செடியினஞ் சார்ந்த.

**malversa'tion**, *n.* கெடுநடத்தை; பணித்துறைப் பொறுப்புக்கேடான நடைமுறை; செயலாட்சிக்கேடு; நிதியாட்சிக் கேடு, நிதி மோசடி; இலஞ்சப் பழக்கம்; சட்டமீறிய பணப் பறிப்பு.

**mama'**, *n.*=mamma.

**mam'ba**, *n.* ஆப்பிரிக்க மர நச்சுப்பாம்பு வகை.

**mam'elon**, *n.* குவடு, வட்ட முகடு.

**Mam'eluke**, *n.* அடிமை; (வர.) எகிப்திய அரசுரிமையைக் கி. பி. 1254-இல் கைப்பற்றிய படைவீரர் குழுவில் ஒருவர்.

**mamill'a**, *n.* முலைக்காம்பு; முலைக்காம்பு வடிவ உறுப்பு.

**mamma'**[1], *n.* அம்மா, தாய்.

**mamm'a**[2], *n.* பாலுணிகளின் பால்மடி; ஆண்களின் உடலமைப்பில் பால்மடிக்கு இணையான உறுப்பு; *pl.* mamm'ae.

**mamm'al**, *n.* பாலூட்டி, கருப்பை உயிர்.

***mammal'ia***, *n. pl.* பாலூட்டும் உயிரினத் தொகுதி.

**mammalif'erous**, *a.* (மண்.) பாலூட்டும் உயிரினங்களின் பழங்காலப் புதை தடங்கள் கொண்டுள்ள.

**mammee'**, *n.* பெரிய மஞ்சள்நிறப் பழமுடைய அமெரிக்க வெப்பமண்டல மரவகை.

**mamm'on**, *n.* காசுத்தெய்வம், தெய்வம்போலப் பூசித்துப் பேணப்படுஞ் செல்வம்; பண்பற்ற செல்வர்குழு; (தொ.) the mammon of unrighteousness, தீவழிச் செல்வம், கெட்ட வழியில் ஈட்டிய செல்வம்; கெட்ட வழியில் செலவாகுஞ் செல்வம்.

**mamm'oth**, *n.* கம்பளி யானை, மரபற்றுப்போன பாரிய யானையினப் புதைபடிவ விலங்கு; *a.* மிகப்பெரிய.

**mamm'y**, *n.* குழந்தை வழக்கில் அம்மா, தாய்; செவிலி.

**man**, *n.* மனிதன்; ஆடவன்; ஆள்; மனித இனம்; மனித உடல், மனித இன உடற்கூறு; வயது வந்தவர்; முழு வளர்ச்சியடைந்த மனிதர்; தனி மனிதர்; ஒருவர்; கணவர்; துணைவர்; (வர.) பண்ணையாள்; அடிமை; ஏவலாள்; தொழிலாளர்; படைவீரர்; சதுரங்க ஆட்டக்காய்கள் வகை; *v.* கோட்டைப் பாதுகாப்புக்கு வேண்டிய ஆட்களைத் திட்டப் படுத்தி அமர்த்து; கப்பலின் முக்கிய பகுதிகளில் ஆள் அமர்த்து; பணித்துறைகளில் ஆட்களை நிரப்பு; உள்ளத்துக்கு உரமூட்டு; ஊக்கம் வலுப்படுத்து; (தொ.) all to a man, to a man, ஒருவர்விடாது எல்லாரும், ஒருவர்கூட விலக்கின்றி அனைவரும்; as a man, தனிப்பட்ட குணப்பண்புகளைக் கருதுமிடத்து; be a man, play the man, ஆண்மை ஆற்றலுடன் இயங்கு; be one's own man, சுதந்திரமாகச் செயலாற்று, புலன்கள் முதலிய ஆற்றல்களைத் தன்வசமாகக் கொண்டிரு; inner man, ஆன்மா; உள் மனிதத்தன்மை; man and wife, கணவனும் மனைவியும்; man Friday, அடிமைக்குணமுள்ள பணியாள்; பலதிற வேலையாள்; man in the moon, கற்பனை மனிதன்; man of Kent, மெட்வே (Medway) என்னும் இடத்திற்குக் கிழக்கில் பிறந்தவர்; man of letters, இலக்கிய எழுத்தாளர்; புலவர், இலக்கிய அறிஞர்; man of straw, வைக்கோலடைத்துருவாக்கிய கொல்லைப்பொம்மை; கற்பனை மனிதர்; கற்பனை எதிரி; சரக்கற்றவர்; வக்கற்றவர், வசதியற்றவர்; outer man, மனித உடல், உடல் சார்ந்த புறவாழ்வு; the man in the street, the man on the street, பொதுநிலை மனிதர்; பொதுமக்களில் ஒருவர்.

**man'acle**, *v.* விலங்கிடு.

man'acles, *n. pl.* தளைகள், கை விலங்குகள்.

man'age, *n.* குதிரைப்பயிற்சி; குதிரையின் பயிற்சிமுறை இயக்கம்; குதிரையின் குறும் பாய்ச்சல்; குதிரையேற்றப் பயிற்சிக்கூடம்; *v.* கையாளு, கருவிகலங்களைக் கையாளு; நடத்து, செயற்படுத்து; அடக்கியாளு, மேலாட்சிசெய்; பொறுப்பு ஏற்றுக்கொள்; கட்டுப்படுத்து; பசப்பிக் காரிய மாற்று, வசப்படுத்திச் செயல்செய்; கொண்ட நோக்கம் ஒருவாறாக நிறைவேறப்பெறு; ஒப்பேற்று; எதிர்த்துநின்று சமாளி; சூழ்ச்சிமூலம் செயல் வெற்றிகரமாக்கு; தக்கவாறு பயன்படுத்து.

man'agement, *n.* செயலாட்சி; மேலாண்மை; தந்திரம், சூழ்ச்சிப்பொறி, சூழ்ச்சிப்பொறி அமைப்பு, சூழ்ச்சி நுட்பமுடைய இயந்திரம்; (தொ.) the management, செயலாட்சிக் குழு, இயக்குநர் குழு.

man'ager, *n.* மேலாளர், செயலாட்சியாளர்; வணிகக்குழு இயக்குநர்; நிறுவனச் செயலாட்சியர்; பார்வையாளர், சட்டமாமன்றத்தின் இரு அவைகளின் கடமைகளைக் கவனிக்க நியமிக்கப்பட்ட மாமன்றக் குழுவின் உறுப்பினர்; (சட்.) கடன் கண்காணிப்பாளர், கடன் கொடுத்தவர்களின் நலத்துக்காக வணிகநிலையத்தை மேற்பார்வை செய்வதற்கு நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்டவர்.

man'akin, *n.* அமெரிக்க வெப்பமண்டலங்களில் வாழும் ஒள்ளிய நிறமுடைய சிறுபறவை வகை.

man'-at-arms', *n.* படைவீரன்; பளுவான போர்த்தளவாடங்கள் தாங்கிய குதிரைப்படை வீரன்.

manatee', *n.* கடற்பசு.

Man'chester goods, *n.* பருத்தித் துணிமணி.

Man'chester School, *n.* காப்புவரியில்லாத வாணிகமுறைக் கோட்பாட்டாளர் குழு.

man'-child, *n.* ஆண் குழந்தை.

manchineel', *n.* மேலை இந்தியத்தீவின் நச்சுப் பால்மர வகை.

man'ciple, *n.* பள்ளி-கல்லூரி நிறுவனங்களில் உணவுப் பொருள்கள் வாங்கும் பொறுப்புடைய பணியாளர்.

Mancun'ian, *n.* மாஞ்செஸ்டர் குடிமகன்; மாஞ்செஸ்டர் இலக்கணப் பள்ளி மாணவர்; *a.* மாஞ்செஸ்டரைச் சார்ந்த; மாஞ்செஸ்டர் இலக்கணப் பள்ளிக்குரிய.

Mandae'an, *n.* தெய்வ ஐயுறவுக் கோட்பாட்டாளர்களான பண்டைக் கிறித்தவப் புறச்சமயிகளின் மரபில் மெசபொட்டேமியா (Mesopotamia) வில் மீந்துள்ள இக்குழுவைச் சேர்ந்தவர்; மெசபொட்டேமிய இனக்குழு மரபின் மொழி; *a.* ஐயுறவுக் கோட்பாட்டு மரபில் வந்த மெசபொட்டேமிய இனக் குழுவினுக்குரிய.

mandam'us, *n.* மேல்மன்ற ஆணை, கீழ்மன்றத்திற்கு உயர் நீதிமன்றம் விடுக்கும் ஆணை.

man'darin[1], *n.* சீன ஆட்சி வகுப்பினர், சீன உயர்தரப் பணித்தரங்கள் ஒன்பதினுள் இடம் பெற்றவர்; உயர்தரச் சீன வகுப்பினரின் மொழி; சீன உயர்தரப் பேச்சுக் கட்டளை மொழி; காலப் பிற்போக்குடைய தலைவர்; சீனத் தலையாட்டிப் பொம்மை உரு; (தொ.) mandarin duck, வண்ணச் சிறகுகளுள்ள சீனத் தாரா வகை.

man'darin[2], man'darine, *n.* ஆழ்ந்த செம்மஞ்சள் நிறமான கிச்சிலிப்பழ வகை; நிலக் கீலிலிருந்து எடுக்கப்படும் செம்மஞ்சள் வண்ணப்பொருள்; கடுந்தேறல் வகை.

man'datary, *n.* (சட்.) கட்டளையுரிமை அளிக்கப்பட்டவர்.

man'date[1], *n.* சட்ட உரிமைக்கட்டளை; நீதிமன்றக் கட்டளை உரிமை; பிற்பட்ட நாட்டுப் பகுதியின் வகையில் அனைத்து நாட்டுக் கழகத்தின் ஆட்சிக் கட்டளையுரிமை; ஆணை, மேலிடக்கட்டளை; கருத்துரைக் கோரிக்கைமீது போப்பாண்டவரின் மறுமொழித் திருக்குறிப்புச்சீட்டு; உரிமைக் கட்டளை ஏற்பாளர் வகையில் இலவசமான ஒப்பந்தக் கடமை ஏற்பு; பேராண்மை உரிமை, வாக்களிப்புமூலம் மக்கள் அளித்த உரிமை ஆற்றல்.

mandate'[2], *v.* உரிமைக் கட்டளை முறைக்குக் கட்டுப்படுத்து.

man'datory[1], *n.* = mandatary.

man'datory[2], *a.* உரிமைக்கட்டளை சார்ந்த, உரிமைக்கட்டளை தெரிவிக்கின்ற.

man'dible, *n.* தாடை; பாலூட்டி உயிரினங்களின் கீழ்த் தாடை; பறவைகளின் அலகு; பூச்சியினங்களின் மேல் தாடையின் இரு பாதிகளில் ஒன்று.

mandol'a, *n.* தந்தி இசைக்கருவி வகை.

man'dolin, man'doline, *n.* தந்தம்-இறகு ஆகியவற்றாலான வில் மாட்டி வாசிக்கப்படும் இணைத் தந்திகளையுடைய யாழ்வகை.

mandor'a, *n.* = mandola.

mandrag'ora, *n.* மயக்க மருந்துச் செடிவகை.

man'drake, *n.* வாந்தி மயக்கத் திறங்களையுடைய நச்சுச் செடிவகை.

man'drel, man'dril, *n.* கடைசல் பிடிக்கும் பொறியின் நடு வச்சு; குழல் வடிவம் உருவாக்கப் பயன்படும் நீள் உருளைக் கோல்; சுரங்கத் தொழிலாளரின் கடப்பாரை.

man'drill, *n.* மூர்க்கத்தனமுள்ள பெரிய ஆப்பிரிக்க மனிதக் குரங்கு வகை.

man'ducate, *v.* மெல்லு, பற்களால் அரை, உண், தின்.

mane, *n.* பிடரி மயிர்; நீண்டமயிர்.

man'-eater, *n.* மந்தின்னி, மனிதரைத் தின்னும் மனிதன்; கடிக்கும் குதிரை; மனிதரைத் தின்னும் புலி; மனிதரைத் தின்னும் சுறுமீன்.

manege', *n.* குதிரையேற்றப் பயிற்சிக்கூடம்; குதிரையின் பயிற்சிமுறை இயக்கங்கள்; குதிரையேற்றத் திறன்.

man'es, *n. pl.* தென்புலத்தார்; வழிபடுதற்குரிய மூதாதையரின் ஆவிகள்.

man'ful, *a.* வீரமிக்க; துணிவுள்ள; மனவுரம் வாய்ந்த; உறுதியுடைய; ஆண்மையுடைய; பெருமிதமான.

man'fully, *adv.* ஆண்மையுடன், வீரத்தோடு.

man'gabey, *n.* வெண்ணிறக் கண்ணிமையுடைய மேலை ஆப்பிரிக்க குரங்கினம்.

mang'anese, *n.* மங்கனம், கண்ணாடி செய்வதில் பயன்படும் கருநிறக் கனிப்பொருள் தனிமம்.

mange, *n.* மயிரடர்ந்த விலங்குகளின் தோல் நோய்; தோல் மாசு.

mang'el, mang'el-wurz'el, *n.* கால்நடைத் தீவனமாகப் பயன்படும் பெரிய சர்க்கரைக் கிழங்கு வகை.

man'ger, *n.* குதிரை இலாயத் தொட்டி; மாட்டுக் கொட்டில் தொட்டி; (தொ.) dog in the manger, தானும் வாழாது பிறரையும் வாழவிடாதவர்.

mang'le[1], *n.* சலவை மடிப்புப்பொறி; *v.* சலவைப் பொறியிலிட்டு அழுத்தி மடி.

mang'le[2], *v.* நை, அடித்துச் சிதை; கொத்து, உருக்கெட வெட்டு; சின்னபின்னப்படுத்து; மூலத்தைத் தப்புத்தவறாக்கி உருத்தெரியாது பண்ணு; சொற்களைத் தவறாக ஒலித்து இனம் தெரியாததாக்கு.

mang'o, *n.* மாங்காய், மாங்கனி.

mang'o-fish, *n.* பொன்வண்ண மீன்வகை.

mang'old, mang'old-wurz'el, *n.* = mangel.

mang'onel, *n.* (வர.) படைத்துறைக் கவண்பொறி, கல்லுமிழ் பொறி.

mang'osteen, (மலாய்.) *n.* மங்குஸ்தான் பழம்; மங்குஸ்தான் மரம்.

mang'rove, *n.* மருந்துக்கும் தோல் பதனிடுவதற்கும் பயன்படும் பட்டையினையுடைய வெப்பமண்டலச் சதுப்புநிலப் படர் தாவர வகை.

man'gy, *a.* மயிரடர்ந்து வங்கு பற்றிய; அழுக்கடைந்த; இழிதோற்றமான.

**man'handle**, *v.* மனித ஆற்றலால் மட்டுமே இயக்கு; முரட்டுத் தனமாகப் பிடித்து இழு.

**manhatt'an**, *n.* இன்தேறல் கலவைக் குடிவகை.

**man'hole**, *n.* புதைசாக்கடை வாயிற்புழை, புதைசாக்கடைக் குத் தெருவின்மீது அமைக்கப்பட்டிருக்கும் திறப்பு.

**man'hood**, *n.* மனிதத்தன்மை ; ஆண்மை, வீரம், துணிவு, உரம் ; முழு வளர்ச்சிப்பருவம் ; நாட்டின் ஆடவர் தொகுதி; (தொ.) manhood suffrage, வயதுவந்த ஆண்களின் வாக் குரிமை.

**man'-hour**, *n.* மன்மணி அலகு, ஒரு மனிதன் ஒரு மணி நேரம் செய்யும் வேலையளவு.

**man'ia**, *n.* வெறி, கோட்டி; மூளைக்கோளாறு; மனமாருட்டக் கோளாறு ; பேரார்வம், மட்டுமீறிய ஆவல், உணர்ச்சியார்வ மிகை.

**man'iac**, *n.* வெறியர், கோட்டிக்காரர், பித்தேறியவர், அறி விழந்தவர், பித்தர் ; *a.* பைத்தியம் பிடித்த, வெறியான, அறிவிழந்த.

**mani'acal**, *a.* பைத்தியம் பிடித்த; பைத்தியம் பிடித்தவர் போன்ற.

**man'ic**, *a.* பித்து வெறி சார்ந்த; பித்து வெறிக்கு ஆட்பட்ட.

**man'ic-depressive psychosis**, *n.* இடையிடையே நன்னிலை யுடன் மாறிமாறிக் களிப்பு சோர்வு வெறிகளுண்டுபண்ணும் பித்தக்கோளாறு.

**Manichee'**, *n.* இறைவனும் நரகிறையும் நிலைபேறுடைய சரி ஆற்றலுடையவர் என்ற கோட்பாடுடைய முற்காலச் சமயக்கிளையினர்.

**man'icure**, *n.* கைவிரல் நக ஒப்பனைக்கலை ; கைவிரல் நக ஒப்பனைக் கலைஞர் ; *v.* கை விரல் நகங்களை ஒப்பனைசெய்.

**man'ifest**, *n.* தீர்வைத் துறையினர்க்குக் காட்டுவதற்குரிய சரக்குப்பட்டியல் ; *a.* வெளிப்படையான, தெளிவான ; *v.* தெளிவாகக்காட்டு ; மெய்ம்மை காட்டு ; பண்பு முதலிய வற்றைப் புறந்தெரியச் சுட்டிக்காட்டு ; வெளிப்படுத்து, வெளிப்படுத்திக்காட்டு ; பண்பு உருப்படுத்திக்காட்டு ; உரு வெளிப்படுத்திக்காட்டு ; கருத்து எடுத்துக்காட்டு ; சரக்குப் பட்டியலில் பதிவுசெய் ; கருத்தை வெளிப்படையாகத் தெரி விப்பதற்குரிய நடவடிக்கை எடு.

**manifes'to**, *n.* கொள்கை விளக்க அறிவிப்பு ; அரசியலார் பொது அறிக்கை விளம்பரம் ; கட்சித் திட்ட அறிவிப்பு ; தனியார் கருத்தறிவிப்பு.

**man'ifold**, *n.* பல்புழைவாய் இயந்திர அறை ; பல்வாயிற் குழாய் ; மைத்தாள் படிவுப்படி ; (கண.) முழு மொத்தம் ; அசைபோடும் விலங்குகளின் மூன்றுவது இரைப்பை ; *a.* பன்மடியான ; பல்லுருவான ; பல்வேறுன ; பல்வேறு ப்ப னுடைய; பல்தொழில் ஒருங்கு செய்கிற; பல்வகைப் பெருக்க முடைய ; *v.* பல்படி ஒருங்கெடு ; படி பெருக்கு ; (தொ.) manifold writer, படிபெருக்கி, மைத்தாள் படியெடுக்கும் கருவி.

**man'ikin**, *n.* சிறு மனிதன் ; குள்ளன் ; மூட்டுத்தெரியும் ஒட்டுவடிவப் பொம்மை ; உடலமைப்பின் மாதிரி ; அமெரிக்க வெப்ப மண்டலச் சிறு பறவை.

**manill'a**[1], *n.* ஆப்பிரிக்க பழங்குடிகள் நாணயமாக வழங் கும் உலோக வளையல்கள்.

**Manill'a**[2], *n.* பிலிப்பைன் தீவுகளின் தலைநகரம் ; கயிறு-பாய் செய்வதற்கு உதவும் சணல் நார் வகை ; மணிலாவில் செய்யப்படும் சுருட்டு வகை ; (தொ.) Manilla hemp, கயிறு-பாய் செய்வதற்குதவும் சணல் நார்வகை ; Manilla paper, சிப்பம் கட்டுதற்குரிய சணல்தாள்.

**manille'**, *n.* நால்வர் ஆடும் முற்காலச் சீட்டாட்ட வகைகளில் இரண்டாவது சிறந்த மதிப்புடைய சீட்டு.

**man'ioc**, *n.* மேற்கிந்திய தீவுகளின் கிழங்குடைய செடி வகை ; கிழங்கு வகையின் மாவு.

**man'iple**, *n.* ரோமாபுரியில் 60 முதல் 120 வரை படைவீரர் கொண்ட படைப்பகுதி உட்பிரிவு ; தேவநற்கருணைச் சடங்கில் குருமார் உடை; குருமார் உடையில் இடது கையி னின்று தொங்கும் மூன்றடி நீளமுள்ள துண்டு.

**manip'ulate**, *v.* கையாளு, கைவினையாற்று; சூழ்ச்சித்திறத் துடன் கையாளு; திறமையாக நடத்து ; பெருமுயற்சியுடன் காரியமாற்று, செல்வாக்கைப் பயன்படுத்திக் காரியம் சாதித் துக்கொள்.

**man'itou**, *n.* பற்றுவி, அமெரிக்க இந்தியர் வழக்கில் தனி மனிதனுக்கு நலமோ தீங்கோ செய்யும் ஆவி வடிவம் ; தெய் வதம், இயற்கை கடந்த ஆற்றலுடைய பொருள்.

**mankind'**, *n.* மனித இனம், மன்பதை ; ஆண்பாலார்.

**man'like**, *a.* மனித குணங்களையுடைய ; ஆண்மையுடைய ; மனிதனின் கெட்ட குணங்களையுடைய ; பெண்வகையில் ஆண்போன்ற.

**man'ly**, *a.* ஆடவரின் நற்குணங்களுள்ள ; வீறுமிக்க ; கவ டில்லாத; பெண்வகையில் ஆணின் குணமுள்ள; மனிதனுக்குத் தகுதியான, மனிதத் தகுதி வாய்ந்த.

**mann'a**, *n.* தாவர வகைகளின் இன்னமுதக் கசிவூறல் ; குட லிளக்க ஆற்றலுடைய செடிவகைகளின் இனிய வடிசாறு ; இன்னமுது, இன்னுணவு ; மனத்துக்கினிய அறிவூட்டம் ; இயேசுநாதரின் இறுதி விருந்து விழாவின் திருவுணவமுது ; (வர.) பண்டை இஸ்ரேல் மக்களுக்குப் பாலைவனத்தில் இறை யருளால் வழங்கப்பட்ட உணவு; (தொ.) manna in sorts, குடலிளக்க இன்சாற்றின் கீழ்த்தர வகை ; manna in tears, குடலிளக்க இன்சாற்றின் உயர் வகை.

**mann'a-ash**, *n.* இன்னுணவூறல் தரும் மரவகை.

**mann'a-croup**, *n.* சொரசொரப்பான சிறுமணிக் கோதுமை மாவுணவு.

**mann'equin**, *n.* ஆடையணிக் காட்சிக்காகப் பயன்படுத்தப் படும் பெண் ; ஆடையணிக் காட்சிக்காகப் பயன்படுத்தப் படுபவர்.

**mann'er**, *n.* பாங்கு, பாணி, முறை; செயல்வகை; வழிவகை; நடைப்பாங்கு; எழுத்து நடைப்பாணி; கலைப்பாணி; எண்ணப் படிவம் ; வழக்கமரபு ; வகை, மாதிரி ; (தொ.) adverb of manner, (இலக்.) முறை விளக்க வினையடை ; in a manner, ஒருவாறு, ஓரளவில்; in a manner of speaking, பேசுமிடத்து, ஒருவகையில் கூறுவதானால்; the grand manner, பழங் காலப் பெருமித முறைமை ; to the manner born, பிறவிக் குணமாக அமைந்த, இயல்பாகப் பொருந்திய.

**mann'ered**, *a.* நடத்தைவாய்ந்த ; நல்லொழுக்கங்கொண்ட ; பாணி-ஓவியர்-எழுத்தாளர் வகையில் செயற்கைப் பாணி வாய்ந்த.

**mann'erism**, *n.* செயற்கை மரபு, போலிநடை ; கலை இலக் கியத்துறையில் செயற்கைத் தனிப்பாங்கு ; மட்டுமீறிய ஒரு திறச் சார்பு; எழுத்தாண்மை-பேச்சு வகையில் போலி மரபுத் துணுக்கு நடை, செயற்கைநடை.

**mann'erly**, *a.* நன்னடத்தையுள்ள, வணக்க இணக்கமான.

**mann'ers**, *n. pl.* பழக்கவழக்க நடைமுறைகள் ; நடத்தை முறைகள் ; புற ஒழுகலாறுகள்; சமுதாய ஒழுக்கமுறைகள்; நன்னடக்கை, வணக்க இணக்க நடைமுறை.

**mann'ish**, *a.* பெண் வகையில் ஆண்மாரியான, ஆணியல்பு காட்டுகிற.

**mann'ite, mann'ite-sugar**, *n.* குடலிளக்க இன்சாற்றுப் பொருள், இன்னுணவுப் பொருள்.

**manoeu'vre**, *n.* படைகள் அல்லது போர்க்கப்பல்களின் திட்டமிட்ட நடைமுறை இயக்கம் ; படைத்துறை நட வடிக்கை ; கண்மாருட்ட நடவடிக்கை, ஏய்ப்பு நடவடிக்கை; திறமைவாய்ந்த திட்டம் ; *v.* சூழ்ச்சிமுறைத் திட்டத்துடன் படைகளை அல்லது போர்க்கப்பல்களை நடத்து ; சூழ்ச்சித் திட்டமுறைகளைக் கையாள் ; ஆள் அல்லது பொருளை சூழ்ச் சித்திறமூலம் செயலாற்றுவி, தூண்டி இயக்கு ; முனைந்து திட்டமிட்டு வேலைசெய், மறைதிட்ட மூலம் ஏற்பாடு செய்.

man'-of-war', *n.* போர்க்கப்பல், நாட்டின் கடற்படையைச் சேர்ந்த போர்த்தளவாடக் கப்பல்.

manom'eter, *n.* ஆவி வளி அழுத்தமானி.

*ma non tropp'o*, (இத்.) *adv.* (இசை.) கட்டளைக்குறிப்பின் பின்னடைமொழி வழக்கில் மட்டாகவே, மட்டுமீறாமல்.

man'or, *n.* இங்கிலாந்து நாட்டு நில உடைமைப்பிரிவு; முற்காலப் பண்ணைத் தனியுரிமை நிலம்; பண்ணைமுறையாட்சி உரிமை வட்டாரம்; அமெரிக்காவில் குடிவாரத்துக்குரிய நிலப்பகுதி; (தொ.) lord of the manor, பண்ணை நில உரிமையாளர்.

man'power, *n.* ஆள்வலம், பணித்துறைக்குத் தேவைப்படும் ஆள் எண்ணிக்கை அளவு.

*manque*, (பிர.) *a.* இருந்திருக்கக்கூடிய ஆனால் இல்லாமற் போன.

man'sard, man'sard roof, *n.* மேற்பாதிச் சாய்வைவிடக் கீழ்ப்பாதிச்சாய்வு செங்குத்தாயுள்ள இருசரிவு மோடு.

manse, *n.* சமயத்துறையினர் உறைவிடம், ஸ்காத்லாந்து நாட்டுத் திருக்கோயில் குருவின் வீடு.

man'servant, *n.* வேலைக்காரன், ஆண்பாற் பணியாள்.

man'sion, *n.* மாளிகை, பெரிய வீடு; (தொ.) the Mansion house, லண்டன் மாநகர் முதல்வரின் மாளிகை.

man'sion-house, *n.* பண்ணைமனை, பண்ணை நில உரிமையாளரின் இல்லம், நிலக்கிழாரின் வீடு; பணிமுதல்வர் மனை.

man'sions, *n. pl.* குடும்பங்கள் தனித்தனியாகத் தங்குதற் கேற்பப் பிரிக்கப்பட்ட பெரிய கட்டிடம்.

man'slaughter, *n.* மனிதக்கொலை செய்தல்; (சட்.) பகைமை வன்ம எண்ணமற்ற ஆட்கொலை.

man'suetude, *n.* மெல்லிணக்கப் பண்பு, பணிவுடைமை.

man'tel, man'telpiece, *n.* அடுப்பங்கரைத் தண்டயப் பலகை.

man'tel-board, *n.* அடுப்பங்கரை நிலையடுக்கு.

mante'let, *n.* குறுங்கைச் சட்டை; பீரங்கிச் சுடுபவரின் கவசம்.

man'telshelf, *n.* அடுப்பங்கரைச் சுவர் நிலையடுக்கு.

man'tel-tree, *n.* அடுப்பங்கரை விட்டம்.

man'tic, *a.* உய்த்துணர்தல் சார்ந்த, வருவதுணர்த்துகிற.

mantill'a, *n.* பெண்களின் தலை-தோள் மறைக்கும் மெல்லிய ஆடை, சிறுதொப்பி.

man'tis, *n.* பூச்சிகளைத் தின்னும் பெரும் பூச்சி வகை; (தொ.) praying mantis, கும்பிடுவதுபோல் முன்கால்களை விரித்துயர்த்தி நிற்கும் பூச்சிவகை.

mantiss'a, *n.* மடக்கையின் பதின்மானக்கூறு.

man'tle, *n.* பெண்களின் தளர்த்தியான கையற்ற மேலாடை; மூடாக்கு, போர்வை; மெல் ஒளித்திரைவலை; நத்தைகளின் மெல்லிய புறத்தோல் மடிப்பு; *v.* மெல்வலைபோல் போர்த்து; தளர்த்தியான கையற்ற மேலாடை அணிவி; மூடு, மறை; நீர்ம வகையில் அழுக்கு அல்லது நுரையால் மேற்படியப் பெறு, மூடப்பெறு; இரத்தம் ஏறி கன்னங்கள் சிவப்பாக்கு.

mant'let, *n.*=mantelet.

man'trap, *n.* மனிதரை வீழ்த்து பொறி, உரிமையின்றி நுழைபவர்களைப் பிடிக்கும் விசைப்பொறி.

man'tua, *n.* 17-18-ஆம் நூற்றாண்டுகளில் வழங்கிய பெண்களின் தளர்த்தியான மேலங்கி.

man'tua-maker, *n.* மேலாடை ஆக்குபவர்.

man'ual, *n.* கையேடு, சிறு குறிப்பு ஏடு; கைகளால் வாசிக்கப்படும் இசைக்கருவியின் இசைப் பட்டடை; (வர.) சமயவினைச் சடங்கில் திருக்கோயில் குருவால் பயன்படுத்தப்படும் சமயவிதி ஏடு; *a.* கைகள் சார்ந்த; கைகளால் செய்யப் பட்ட; (தொ.) manual exercise, (படை.) துப்பாக்கியைக் கையாளும் பயிற்சி.

manufac'tory, *n.* தொழிற்சாலை, பட்டறை, பணிக்களரி.

manufac'ture, *n.* ஆக்கத்தொழில்; செய்தொழிலாக்கம்; செய்தொழில் துறை; ஆக்கிக்குவிப்பு; *v.* ஆக்கு; பயனுக்கி மிகுதியாகப் படை; விளைவி; உழைத்துருவாக்கு; கற்பனை இலக்கிய வகையில் இணைந்துருவாக்கு, செயற்கையாகப் படை.

manumit', *v.* (வர.) அடிமைகளை விடுதலை செய்.

manure', *n.* எரு, நில உரம், மக்கிப்போன எரு, நிலவளச் சத்து; *v.* எருவிடு, உரமிட்டுச் செழிப்பாக்கு.

man'uscript, *n.* கையெழுத்துப்படி, கையால் எழுதிய பிரதி, அச்சடிப்பதற்குக் கொடுக்கப்படும் மூல வரைப்படி.

man'ward, *a.* மனிதர்பக்கம் நோக்கிய, மன்னினம் நாடிய.

Manx [1], *n.* மேன் (Isle of Man) தீவினைச் சார்ந்தவர்; மேன் தீவு மொழி; வாலில்லாப் பூனைவகை; *a.* மேன் தீவினைச் சார்ந்த.

Manx [2], *n. pl.* மேன் தீவு மக்கள்.

Manx'man, *n.* மேன் தீவில் வாழ்பவர்.

ma'ny, *n.* பலர்; பல; *a.* பல; (தொ.) a good many, a great many, மிகப்பலர்; பெருந்திரள்; மிகப்பல; one too many, தேவைப்படாதவர்; தேவைப்படாதது; மிஞ்சியவர், திணறடித்தவர், திகைக்கச் செய்பவர்; the many, கும்பல், பெருந்திரள், கூட்டம்.

man'yplies, *n.* (பே-வ.) அசைபோடும் விலங்குகளின் மூன்றாவது இரைப்பை.

ma'ny-sided, *a.* பல பக்கங்களுள்ள; பல தோற்றக்கூறுகள் உடைய; பல்வகையான ஆற்றல்கள் அமைந்த; பல பண்புத் திறங்கள் கொண்ட.

ma'ny-sidedness, *n.* பலவகை ஆற்றல்கள் கொண்ட தன்மை, பல்திறப் பண்புகள் நிறைந்த நிலை.

Maor'i, *n.* நியூசிலாந்தில் வாழும் பழுப்பு நிற இனத்தவர்; நியூசிலாந்தின் பழுப்பு நிற இனத்தவர் மொழி.

map, *n.* நாட்டுப்படம், நிலப்படம்; உலகப்படம்; *v.* நிலப் படம் வரை; உலகப்படம் வகு; தாளில் நாட்டுப்படம் எழுது; திட்டமிடு.

ma'ple, *n.* சர்க்கரை தரும் அழகுடைய நிழல் தரு மரவகை; அழகுடைய நிழல் தரு மரவகையின் கட்டை.

Maquis', *n.* பிரஞ்சு நாட்டில் 1939-45ஆம் ஆண்டுப் போரில் ஈடுபட்ட நாட்டுப் பற்றாளர் படை.

mar, *v.* கெடு, அழி, முழுதும் பாழ்படுத்து; பதங்கெடு, அழிவுவேலை செய்.

ma'rabou, *n.* மேற்கு ஆப்பிரிக்க பெரு நாரை வகை; தொப்பிகளில் அழகுக்காகச் செருகப்படும் கொக்கு இறகின் கொத்து.

ma'rabout, *n.* வட ஆப்பிரிக்க வழக்கில் முஸ்லீம் துறவி; முஸ்லீம் துறவியின் கல்லறைமாடம்.

maraschi'no, *n.* சிறு கறுப்புப் பழவகையிலிருந்து எடுக்கப்படும் தேறல் வகை; *pl.* maraschi'nos.

maras'mus, *n.* உடல் கரைவு.

Ma'rathon, *n.* நெடுநீள ஓட்டப்போட்டி; எல்லைமீறிய பொறுமை தேவைப்படும் முயற்சி.

maraud', *v.* கொள்ளையடி; சூறையாடு; திருடு; திருடித் திரி.

maraud'er, *n.* கொள்ளைக்காரன்.

marave'di, *n.* (வர.) ஸ்பானிய நாட்டு நாணயம்.

mar'ble, *n.* சலவைக்கல், பளிங்குக்கல், மாக்கல்; *v.* பல் வண்ணச் சலவைக்கல் தோற்றம் அளி.

mar'bles, *n. pl.* கழங்கு, கோலிக்காய்.

marc, *n.* பழச்சக்கை, அழுத்திச் சாறு பிழியப்பட்ட பழங்களின் கோது.

Marc'an, *a.* தூயதிரு மார்க் (St. Mark) சார்ந்த.

mar'casite, *n.* கந்தகக்கல்; வெள்ளை இருப்புக்கந்தகக்கல்.

**marcel'**, *n.* தலைமயிரில் செயற்கையாக ஒப்பனை செய்யப்பட்ட அலைபோன்ற தோற்றம்; *v.* தலைமயிருக்கு அலை போன்ற செயற்கைத் தோற்றமளி; (தொ.) marcel wave, மயிரின் செயற்கை அலை ஒப்பனை.

**marces'cent**, *a.* செடி உறுப்பு வகையில் விழாது உலர்ந்து தொங்குகிற.

**March[1]**, *n.* ஆங்கில ஆண்டின் மூன்றும் மாதம்; (தொ.) March brown, தூண்டிலுக்கு இரையாகப் பயன்படும் ஈ வகை; March hare, வெறிபிடித்தாடும் முயல்.

**march[2]**, *n.* (வர.) எல்லை, எல்லைப்புறம், இருநாடுகளுக்கு இடைப்பட்ட நிலப்பகுதி; *v.* பொது எல்லைப்புறம் கொண்டிரு.

**march[3]**, *n.* அணிவகுப்பியக்கம், அணிவகுப்பு முன்னேற்றம்; அணிகடப்பு; அணி கடந்த தொலை; அணி இயக்க இசை; ஒழுங்குமுறைப்பட்ட நடை; நெடுந்தொலைக் கடுநடை; போக்கு, கடப்பு, செலவு; *v.* அணிவகுத்துச் செல், அணி வரிசையிற் செல்; ஒழுங்குபட்ட நடையுடன் செல்; கடந்து செல்; முன்னேறு; தளராது மேற்செல்; கடந்து செல்ல விடு; போக்கு, வெளியேற்று; (தொ.) marching orders, போருக்குப் புறப்படுவதற்கான கட்டளை; march past, வணக்கம் செலுத்திக்கொண்டே படைகள் அணியாகக் கடந்து செல்லுதல்; படை அணிவகுத்துச் செல்லும்போது இசைக்கப்படும் இசைவகை.

**march'es**, *n. pl.* இங்கிலாந்திற்கும் ஸ்காத்லாந்திற்கும் இடைப்பட்ட எல்லைப்புறப் பகுதி; இங்கிலாந்திற்கும் வேல்ஸுக்கும் (Wales) இடைப்பட்ட பகுதி.

**mar'chioness**, *n.* கோமகள், தன்னுரிமைக் கோமகவுரிமை உடையவள்; கோமாட்டி, கோமான் மனைவி; கோமான் உரிமைக் கைம்பெண்.

**march'pane**, *n.* வாதுமைப் பண்ணியம், வாதுமைக் கொட்டையும் வெல்லமும் அரைத்து ஆக்கிய பண்டம்; வாதுமைக் கொட்டை வெல்லமிட்டமைத்த மாவு.

**marcon'i, marcon'igram**, *n.* சேணொலிச் செய்தி, கம்பியில்லாத் தந்திமூலம் அனுப்பப்படும் செய்தி.

**Mard'i gras**, *n.* நீற்றுப் புதன்கிழமைக்கு முந்திய செவ்வாய்க் கிழமை; நோன்பு விழாவின் கடைசி நாள்.

**mare[1]**, *n.* பெண் குதிரை, குதிரையின விலங்கின் பெண்.

***mare[2], mar'e claus'um***, (ல.) *n.* நாட்டின் ஆட்சி வரம்பிற்கு உட்பட்ட கடற்பகுதி.

**Marechal Niel**, *n.* ரோசா இனத் தழுவு கொடிவகை.

***mar'e lib'erum***, (ல.) *n.* பொதுக் கடற்பகுதி, அனைத்து நாடுகளுக்கும் பொதுவுரிமைப்பட்ட கடற் பெரும்பகுதி.

**maremm'a**, *n.* உடல்நலத்துக்கொவ்வாத கடலடுத்த சதுப்பு நிலப்பகுதி.

**mare's'-nest**, *n.* குதிரைக்கூடு, முயற்கொம்பு வேட்டை, பயனில் மாயக் கண்டுபிடிப்பு.

**mare's'-tail**, *n.* நீர்வாழ் செடிவகை.

**marg'arine**, *n.* செயற்கை வெண்ணெய்.

**marg'ay**, *n.* புலிபோன்ற தென் அமெரிக்க காட்டுப்பூனை வகை.

**marge**, *n.* (செய்.) = margin.

**mar'gin**, *n.* எல்லைக்கோடியடுத்த பகுதி; அச்சுத்துறையில் அடிக்காது விடுபடும் பக்க ஓர இடம்; ஒதுக்கி விடப்பட்ட ஓரப்பகுதி; விடுமிகை, ஈடு செய்வதற்காக முன்னரே சேர்க்கப்பட்ட மிகைபகுதி; சலுகை மிகை, காலம்-பொருள் முதலியவற்றின் தேவைக்கு மேற்பட்ட அளவு; வாணிகம் வகையில் தற்செயல் இழப்பீடு சரிசெய்வதற்காகப் பங்குத் தரகரிடம் சேமிப்பாக ஒப்படைக்கப்படும் பணம்; *v.* ஓர இடம்விடு; ஓர இடத்தில் குறிப்பு எழுது; பங்குத் தரகரிடம் கணக்கு மாற்றங்களில் ஏற்படும் இழப்பீட்டிற்காகப் பணம் ஒப்படை.

**mar'ginal**, *a.* ஓரத்துக்குரிய, ஓர இடஞ்சார்ந்த; ஓர இடத்திலுள்ள; ஓர இடத்தில் வரையப்பட்ட; ஓரக்குறிப்புக்களையுடைய; எல்லைக்கோடியடுத்த, விளிம்படுத்த; நில வகையில் பயன்படுத்துதற்கரிதான.

**marginal'ia**, *n. pl.* ஓரக்குறிப்புகள்.

**margo'sa**, *n.* வேப்பமரம்.

**marg'rave**, *n.* (வர.) புனித ரோமப் பேரரசின் இளவரசர்களுக்கு அளிக்கப்பட்ட செர்மானிய பட்டப்பெயர்; எல்லைப்புற மாகாணத் தலைவர்.

**marg'ravine**, *n.* புனித ரோமப் பேரரசின் செர்மானிய விருதுப்பெயர் கொண்ட சில இளவரசர் மனைவியர்க்குரிய பட்டப்பெயர்; எல்லைப்புற மாகாணத் தலைவரின் மனைவி.

**marg'uerite**, *n.* பெரிய மலர்களையுடைய சிறு தோட்ட மலர்ச்செடி வகை.

***mariage de convenance***, (பிர.) *n.* ஆதாயத் திருமணம், தன்னல ஆதாய நோக்குடன் செய்யப்படும் திருமணம்.

**Mar'ian**, *n.* (வர.) ஸ்காத்லாந்து அரசி மேரியின் ஆதரவாளர்; *a.* தூய கன்னி மரியாளை வழிபடுகிற; (வர.) இங்கிலாந்தில் ஸ்காத்லாந்து அரசி மேரிக்கு ஆதரவான.

***ma'rid***, (அரா.) *n.* ஆற்றல்மிக்க ஆவி, பேய்.

**ma'rigold**, *n.* பொன்வண்ண மலர்களுள்ள செடிவகை.

**marihua'na, marijua'na**, *n.* புகை குடிப்பதற்குரிய கஞ்சாச்சருகுப் பூஞ்சுருட்டு.

**marim'ba**, *n.* முற்பட்ட நாகரிகநிலையில் உள்ள ஆப்பிரிக்கர்கள் வழங்கிய மரக்கட்டைகளால் ஆன இசைக்கருவி வகை; தற்கால பல்லியக் கருவிவகை.

**marinade'**, *n.* மணத்தேறலுப்பீடு, ஊறுகாய், தேறலும்-காடியும்-மணப்பொருளும் கலந்த கலவையில் ஊறிய பொருள்; மீனுப்பீடு; இறைச்சி உப்பீடு, உப்புக்கண்டம்; *v.* தேறல்-காடி-மணப்பொருட் கலவையில் ஊறச்செய்.

**marine'**, *n.* கடற்படை; வாணிகக் கப்பற்படை; கடற்படை வீரன்; நீர்-நில நடவடிக்கைக் குழாத்தின் படைத்துறை வல்லுநர்; *a.* கடல் சார்ந்த; கடலில் விளைகிற; கடல்துறை பற்றிய; கப்பல் பற்றிய; கடற்படைச் சார்பான; கடலில் பயன்படுகிற; வீரர்கள் வகையில் கடற்படையில் வேலையாயிருக்கிற; (தொ.) marine stores, விற்பனைக்கான பழைய கப்பலுக்குரிய சிறுபொருள்கள்.

**ma'riner**, *n.* கடலோடி; கப்பலோட்டி; (தொ.) master mariner, மீகாமன், தலைமைக் கப்பலோட்டி.

**Marin'ism**, *n.* இத்தாலியப் புலவர் மாரினி (Marini) யின் போலி நடை; செய்யுளின் செயற்கைப்பாணி.

**Mariol'atry**, *n.* தூய கன்னி மரியாளின் வழிபாடு.

**marionette'**, *n.* சூத்திரப்பாவை.

**ma'rish**, *n.* சதுப்புநிலம்; *a.* சதுப்பு நிலஞ்சார்ந்த.

**Mar'ist**, *n.* ரோமன் கத்தோலிக்கரிடையே கன்னிமரியாள் சங்கம் சார்ந்தவர்.

**ma'rital**, *a.* கணவனுக்குரிய; திருமணஞ்சார்ந்த, திருமணம் பற்றிய.

**ma'ritime**, *a.* கடலருகில் வாழ்கிற; கடற்கரையோரம் காணப்படுகிற; கடலோடு இணைந்த, கடல் சார்ந்த.

**marj'oram**, *n.* சமையலில் பயன்படுத்தப்படும் மணப்பூண்டுச் செடிவகை.

**mark**, *n.* குறி; சின்னம்; இலக்கு; தடம்; கறை; தழும்பு; அடையாளம்; அடையாளக் குறி; உடற்பயிற்சிப் போட்டிகளில் புறப்படும் எல்லைவரை; தர அடையாளக் குறியீடு, தரம்; பண்புக் குறியீடு; முத்திரை; கைநாட்டுக் குறி; நடத்தைச் சான்றுக்குறி; இடக்குறிப்படையாளம்; மதிப்பெண்; தனிச் சிறப்பு; விருப்ப எல்லை; விரும்பிய பொருள்; செர்மன் ஊர்ப்பொதுநிலத் தொகுதி; குத்துச்சண்டை வகையில் வயிற்றுத் தொப்பூழ்ப் பகுதி; உதைபந்தாட்டத்தில் சிறப்பாட்டக்காரன் நிலத்திலிடும் குதிக்காற் குறி; *v.* குறியிடு; முத்திரையிடு; எழுத்திற்குறி; வடுவிடு; அடையாளமிடு; தடம் பொறி; இயற்குறியாயமைவி; விலைகுறி; எல்லை குறி; திட்டவரையிடு; முன்குறித்து வை, ஒதுக்கி வை; குறித்துக்காட்டு; சுட்டியுணர்த்து; பதிவு செய்; தெரியக்காட்டு; சின்னமாகக் காட்டு; தனிப்படுத்திக் காட்டு;

பண்பாயுடனிலவு; பண்பாயமை; தாளமிடு; நினைவிற் குறித்துக்கொள்; கூர்ந்துகாண்; உதைபந்தாட்டத்தில் உன்னிப்போடு உடன்செல்; (தொ.) a marked man, ஐயத் தோடும் பகைமையோடும் கவனிக்கப்படும் ஒருவர்; beside the mark, wide of the mark, குறி விலகி; நேரடித் தொடர்பு இல்லாமல்; easy mark, எளிதில் ஏமாறுபவர்; get off the mark, ஆட்டப்பந்தய வகையில் புறப்படு, ஓடத் தொடங்கு; make one's mark, தனிச்சிறப்புப் பெறு; mark down, கவனித்துக்கொள்; குறித்துக்கொள்; விலையைக் குறைத்துக் குறி; mark off, எல்லை வரையறுத்துப் பிரி; திரித்து அறி; திரித்துணருவி; mark out, நிலத்திற்கு எல்லை ஏற்படுத்து; வழி அமை, திட்டம் தீர்மானி, விதி, நியமி; mark time, கால்களை இயக்கு, முன்னேறுவதாகப் பாவித்து நேரங்கடத்திக்கொண்டிரு; mark up, விலையை ஏற்றிக் குறி; of mark, கவனிக்கத்தக்க, குறிப்பிடத்தக்க; Plimsoll's mark, சரக்கேற்றியபின் கப்பல் எவ்வளவு தூரம் நீருள் அமிழலாம் என்பதைக் குறிக்குங் கோடு; the mark, படித்தரம்; பொது அளவு.

mark², *n.* வெள்ளி-தங்கத்திற்கான எடை; செர்மனி நாட்டு நாணய வகை; (வர.) 13 பென்னி 4 துட்டுக்குச் சமமான ஆங்கிலநாட்டுக் கணிப்புப் பணம்.

mark'er, *n.* குறியிடுபவர்; குறியிடு கருவி; வருகையாள் பதிவு செய்பவர்; சட்டாம்பிள்ளை; வேட்டை விலங்குகளைக் காட்டுபவர்; ஆட்டங்களில் கெலிப்புத் தோற்பு எண்களைக் கணிப்பவர்; கெலிப்பு எண் கணிப்புப் பொறி; குறிவிளக்க ஒளிக்கூம்பு, குண்டு வீச்சாளர்க்குதவியாகக் குறியிலக்குகள் மீது ஒளிவீசிக் காட்டும் ஒளிக்கூம்பு.

mark'et, *n.* அங்காடி, சந்தை; சந்தைக்கூட்டம்; சந்தைக் களம்; சந்தை கூடும் பருவம்; கால்நடைத்தாமணி; தாமணிக்களம்; வாணிகக்களம்; கொடுக்கல் வாங்கல்; கொடுக்கல் வாங்கல் வாய்ப்பு; தேவைப்பாடு; தேவைப்பாடுள்ள இடம்; விற்பனை; பேரம்; விலைப்படு நிலை, விற்குநிலை; விலை வீதம்; விலைமதிப்பு; *v.* விற்பனைக் களப்படுத்து; விலைப்படுத்து; சந்தைக்கனுப்பு; சந்தையில் கொடுக்கல் வாங்கல் செய்; (தொ.) black market, கள்ளச்சந்தை; bring one's eggs to a bad market, bring one's hogs to a bad market, திட்டங்களில் தோல்வியுறு; come into the market, விற்பனைக்கு வந்துசேர்; make a market of, பண்டமாற்றுக்கு; market garden, விற்பனைக்காகக் கறிகாய்கள் வளர்க்கப்படும் தோட்டம்; market value, நிலவர விலை; money market, பங்கு வாணிகச் செயற்களம்; put on the market, விற்பனைக்குக் கொடு, விலை கூறு; the corn market, கூலவாணிகத் துறை.

mar'ket-day, *n.* சந்தை நாள்.

mar'ket-place, *n.* சந்தைக் கூடம்.

mar'ket-price, *n.* நிலவர விலை.

mar'ket-town, *n.* சந்தை கூடும் நகரம்.

mar'khor, *n.* முறுக்கிய பெரிய கொம்புகளுள்ள காட்டு ஆட்டு வகை.

mark'ing, *n.* குறியிடல்; இலக்குவைப்பு; தோல் வண்ணம்; சிறகு வண்ணம்.

mark'ing-ink, *n.* துணிக்குறியிடும் மை.

marks'man, *n.* குறி வல்லவன்; *pl.* marks'men.

Mark Tap'ley, *n.* என்றும் மகிழ்ச்சியோடும் உள்ளக் கிளர்ச்சியோடும் இருப்பவர்.

mark'-up, *n.* வாணிகத்துறையில் செலவாதாயங்களுக்கு ஈடு செய்ய அடக்க விலைக்குமேல் குறித்த விலையில் சேர்க்கப்படும் மிகைவிலை.

marl, *n.* களிமண்ணும் சுண்ணக் கரிகையும் கலந்த மண்வள உரச்சத்து; *v.* நிலத்திற்குக் களிமண்ணும் சுண்ணக் கரிகையும் கலந்த உரமிடு.

Marlbur'ian, *n.* மார்ல்பரோ கல்லூரி (Marlborough College) உறுப்பினர்; *a.* மார்ல்பரோ கல்லூரியைச் சார்ந்த.

marl'ine, *n.* (கப்.) இரு புரிகள் கொண்ட மெல்லிய கயிறு.

marl'ine-spike, mar'linspike, *n.* கயிறு பிரித்தணைக்கப் பயன்படும் கூரிய காழ்மரக்கோல்; புரி இழைக்கும் இருப்புக் கோல்.

marl'ite, *n.* காற்றின் செயற்பாடு தடுக்கும் ஆற்றலுடைய சுண்ணக்கரிகை கலந்த களிமண் வகை.

marm'alade, *n.* பழப்பாகு.

marm'ite, *n.* தேறல் காடிச் சத்து.

marm'olite, *n.* அடுக்கியல் பச்சை வண்ணப் பாறைவகை.

marmor'eal, *a.* (செய்.) பளிங்குக் கல்லாலான; சலவைக் கல் போன்ற.

marm'oset, *n.* அமெரிக்க வெப்ப மண்டலத்துக்குரிய மயிர டர்ந்த வாலுடைய சிறு குரங்குவகை.

marm'ot, *n.* அணில் இனத்தைச் சார்ந்த சிறு விலங்கு வகை; குளிக்கும்போது அணியும் தொப்பிவகை.

ma'rocain, *n.* பட்டுத்துகில் வகை.

Ma'ronite, *n.* லெபனன் (Lebanon) பகுதியில் வாழும் சிரியக் (Syrian) கிறித்தவக்கிளை சார்ந்தவர்.

maroon'¹, *n.* பலத்த ஓசையுடன் வெடிக்கும் வாண வெடி வகை; பழுப்புச் சிவப்புநிறம்; *a.* பழுப்புச்சிவப்பு நிறமான.

maroon'², *n.* மேற்கிந்திய தீவுகளைச் சார்ந்த நீகிரோ வகுப்பினர்; தனித்துக் கைவிடப்பட்டவர்; *v.* தண்டனையாகக் குற்றவாளியைத் தனியான தீவில் விட்டுவிடு; பொழுதுபோக்கு; சோம்பித்திரி, சுணங்கு.

marque, *n.* (வர.) எதிரிகளின் வாணிகக்கப்பலைக் கைப்பற்றுவதற்கான தனிக் கப்பலாளர் சிறப்புரிமை; எதிரி வாணிகக் கப்பலைக் கைப்பற்றும் உரிமைச்சீட்டு பெற்ற கப்பல்.

marquee', *n.* பெரிய கூடாரம்.

marq'ueterie, marq'uetry, *n.* உள் இழைப்பு வேலை.

marq'uis, marq'uess, *n.* கோமான்.

marquise', *n.* கோமான் மனைவி; கோமாட்டி; கூர் முட்டை வடிவ மணிக்கொத்துப்பதித்த கணையாழி.

marq'uois, marquois scale, *n.* சமதூர ஒருபோகு கோடுகள் வரைவதற்கான கருவிச்சட்டம்.

ma'rram, *n.* கடற்கரையில் மணலைப்பற்றி உறுதியாக்கும் புல்வகை.

ma'rriage, *n.* திருமணம்; திருமணத்தொடர்பு; மணவினை; திருமணமுறை; திருமண நிகழ்ச்சி; மிக நெருங்கிய இணைவு; சீட்டாட்ட வகையில் ஓரின அரசன் அரசிச் சீட்டுக்களின் இணைவு; (தொ.) civil marriage, சடங்குகள் இன்றிச் சமுதாய அதிகாரிகளால் நடத்தப்பெறும் திருமணம்; communal marriage, சமுதாயக்குழுவில் எல்லாப் பெண்களையும் எல்லா ஆண்களும் திருமணம் செய்துகொள்ளும் முறை; companionate marriage, இருவரும் விரும்பினுல் மணவிலக்கு செய்துகொள்ளவும் சட்டப்படி கருத்தடை செய்துகொள்ளவும் உரிமையளிக்கும் திருமணம்; marriage articles, திருமணத்துக்குமுன் சொத்துக்கள் மரபுரிமை முதலிய உரிமைகள் பற்றிய ஒப்பந்தம்; marriage licence, திருமணம் செய்துகொள்வதற்கான அரசியலார் ஒப்புதல்; marriage lines, திருமணச் சான்றேடு.

ma'rriageable, *a.* திருமணத்திற்கான வயதுள்ள, திருமணஞ் செய்துகொள்ளத்தக்க.

ma'rriage-bed, *n.* மணவறைப்படுக்கை; உரிமைப்புணர்ச்சி.

ma'rried, *a.* திருமணத்தால் இணைந்த; திருமண உறவுடைய.

*marron glacé*, (பிர.) *n.* வாதுமை வகையோடு பனிக்கட்டியும் சர்க்கரையும் கலந்த இனிப்புத் திண்பண்ட வகை.

ma'rrow¹, *n.* எலும்பு மச்சை, நல்லி, எலும்பிற்குள்ளிருக்கும் மெல்லிய கொழுப்புப் பொருள்; முக்கிய பகுதி; (தொ.) chilled to the marrow, முற்றிலும் குளிர் தாக்குற்று; spinal marrow, முதுகந்தண்டின் உள்ளீடு; vegetable marrow, சுரையினச் செடிவகை.

ma'rrow², *n.* (பே-வ.) துணைவர், தோழர்; இணைதுணை; முற்றிலும் ஒத்த படிவம்.

ma'rrowbone, *n.* மச்சை எலும்பு.

ma'rrow-spoon, *n.* எலும்புகளிலுள்ள மச்சையை எடுப்பதற்கான கரண்டி.

ma'rry, *v.* மணவினையில் இணைத்து வை; மணஞ் செய்து கொடு; மணங்கொள்; மணத்திற்கொள்; மணஞ்செய்; பொருந்த இணை; திட்பமிகாதபடி கயிறுகளின் புரி முறுக்கி இணை.

Mars, *n.* ரோமர்களின் போர்த்தெய்வம்; அங்காரகன், செவ்வாய்; போர், போர்த்தொழில்.

Marsa'la, *n.* வெண்ணிற முந்திரித்தேறல் வகை.

Marseillaise', *n.* பிரஞ்சு நாட்டுப்பாடல்; பிரஞ்சுப் புரட்சிக்காரர் பாடல்.

Marseilles', *n.* அழுத்தமான பருத்தித் துணிவகை.

marsh, *n.* சதுப்புத் தாழ்நிலம்; (தொ.) marsh gas, ஒளி உமிழும் சதுப்புநில வளி, கரியகச் செறிவுடைய நீரக வளி; marsh mallow, சதுப்பு உவர்நிலப் புதர்ச்செடி வகை; சதுப்பு உவர்நிலச் செடிவகையின் வேரிலிருந்து செய்யப்படும் இன்பண்ட வகை; marsh marigold, பொன்வண்ணப் பூக்களுள்ள செடிவகை.

marsh'al, *n.* படைத்துறை மீயுயர் அலுவலர், சுற்றுலா நடுவருடன் செல்லும் செயலாண்மைப் பணித்துணைவர்; விழா ஒழுங்கு முறைப் பணியாளர்; வீரப்போட்டி ஒழுங்கு முறைப் பணியாளர்; சிறைக்கூட முகவர்; அரண்மனைத் தலையாரி; *v.* ஒழுங்காக வரிசைப்படுத்தி வை; (கட்.) குடும்ப மரபுச் சின்னங்களை ஒன்று சேர்; சடங்குகளோடு அழைத்துச்செல்; ஒழுங்குபட இணைவுறு; (தொ.) judge's marshal, சுற்றுலா நடுவருடன் செல்லுஞ் செயலாண்மைப் பணித்துணைவர்; knight marshal, (வர.) நீதிமன்றக் கடமைகளுள்ள அரண்மனைத் தலையாரி; marshalling yard, இணை கூட்டுக்களம், சரக்கு வண்டிகள் ஒருங்குகொண்டு நிறுத்தப்படும் இருப்புப்பாதைக் களம்.

marsh'alsea, *n.* (வர.) அரண்மனை அலுவலர் நடத்தும் நீதி மன்றம்; அரண்மனை அதிகாரியின் கட்டுப்பாட்டிலுள்ள சிறைச்சாலை.

marsup'ial, *n.* பைம்மாவினம், வயிற்றில் பையுடைய பாலூட்டி உயிரினம்; *a.* பைபோன்ற; பைம்மாவினஞ் சார்ந்த.

mart, *n.* (செய்.) அங்காடி, கடைத்தெரு; ஏல அறை; சந்தை, வாணிக மைய இடம்.

martell'o, *n.* பகைவர் வந்திறங்குவதைத் தடுப்பதற்காகக் கடற்கரையில் கட்டப்பட்டுள்ள சிறு வட்டவடிவக் கோட்டை; *pl.* martell'os.

mart'en, *n.* மதிப்புயர்ந்த மென்மயிருடைய கீரியின விலங்கு வகை.

mar'tial¹, *a.* போருக்குரிய; போருக்குத் தகுதிவாய்ந்த; போருக்குகந்த; வீரமிக்க; போர் விருப்பமுள்ள; (தொ.) martial law, போர்க்காலச் சட்டம், பொதுநிலைச்சட்டம் நிறுத்திவைக்கப்படும் படைத்துறை ஆட்சிமுறை.

Mar'tial², *a.* செவ்வாய்க்கோள் சார்ந்த.

Mar'tian, *n.* செவ்வாய்க்கோளில் வசிப்பவர்.

mart'in, *n.* வீட்டுச்சுவர் முதலியவற்றில் மண்கூடு கட்டுங் குருவி வகை.

martinet', *n.* கண்டிப்பாளர்; கண்டிப்புமிக்க படைத்துறைவர்.

mart'ingale, *n.* குதிரை எறியாமலிருக்கும்படி கட்டும் தலைவார்; (கப்.) பாரந்தூக்கியின் நீள் கையைக் கட்டிவைப்பதற்கான கயிறு; சூதாட்ட வகையில் இறுதி வெற்றி எதிர்நோக்கிப் பணயத்தை இரட்டிப்பாக்கும் முறை.

marti'ni¹, *n.* சாராயம்-வெள்ளை இன்தேறல் முதலியவற்றைக் கொண்டு செய்யப்படும் தேறல் கலவை வகை.

marti'ni², Marti'ni-Hen'ry rifle, *n.* சுழல் துப்பாக்கி வகை.

Mar'tinmas, *n.* தூய திரு. மார்ட்டின் (St. Martin) திருநாளாகிய நவம்பர் 11.

mart'let, *n.* குருவி வகை; (கட்.) காலற்ற பறவை.

mart'yr, *n.* புனிதத்தியாகி, மதத்துக்காக உயிர் துறந்தவர்; வீரத் தியாகி, கொள்கைத்தியாகி, கொள்கைக்காக உயிர் விட்டவர்; *v.* உயிர்த்தியாகியாக்கிவிடு, கொள்கைக்காகக் கொன்றுவிடு; வதைசெய்; (தொ.) make a martyr of oneself, புகழ் கருதித் தனி விருப்பங்களை விட்டுவிடு; புகழுக்காகத் தனி விருப்பங்களைத் துறப்பதாக நடி; martyr to gout, முடக்குவாதம் முதலியவற்றால் எந்நேரமும் துன்பப்படுபவர்.

mart'yrdom, *n.* புனித உயிர்த்துறவு; கொள்கைக்கான உயிர்த்தியாகம், பலிச்சாவு; தியாகத்துயரங்களின் தொகுதி; சித்திரவதை ஏற்பு.

mart'yrize, *v.* உயர்ந்த குறிக்கோளுக்காக உயிர்த்தியாகம் செய்வி; கொண்ட கொள்கைக்காகத் துன்பம் மேற்கொள்ளுவி.

martyrol'atry, *n.* புனிதத்தியாகிகளின் வழிபாடு.

martyrol'ogy, *n.* புனிதத்தியாகிகளின் பட்டியல்; புனிதத்தியாகிகளின் வரலாறு.

mart'yry, *n.* வீரத்தியாகியின் நினைவாக எழுப்பப்பட்ட கோயில்.

marv'el, *n.* வியத்தக்கபொருள்; வியத்தகு நிகழ்ச்சி, அற்புதம்; பண்பின் வியத்தக்க எடுத்துக்காட்டு, வியத்தகு பண்புடைய பொருள்; வியப்பு; *v.* வியப்புறு, மலைப்படை.

marv'ellous, *a.* அற்புதமான; திகைக்கச் செய்கிற; நம்ப முடியாத.

Marx'ian, *n.* செர்மன் சமவுடைமைவாதியான காரல் மார்க்ஸின் (Karl Marx 1818-1883) கொள்கைகளைக் கடைப்பிடிப்பவர்; *a.* காரல் மார்க்ஸ் கொள்கைகள் சார்ந்த.

marz'ipan, *n.*=marchpane.

mascar'a, *n.* கண்ணிமை மயிர்களுக்குச் சாயம் ஊட்டுவதற்கான கலவை மருந்து.

mas'cot, *n.* தாயத்து, அதிர்ஷ்டம் உண்டுபண்ணும் பொருள்; நற்பேறு கொணர்விப்பதாகக் கருதப்படும் ஆள்.

ma'sculine, *n.* ஆண்பால்; ஆண்பாற்சொல்; *a.* ஆண்பாலுக்குரிய; (இலக்.) ஆண்களின் பெயர்களுக்குரிய பால் சார்ந்த; வீறுமிக்க; ஆண்மைவாய்ந்த; ஊக்கமுடைய; பெண் வகையில் ஆணியல்புகள் வாய்ந்த, ஆண்மாரியான; (தொ.) masculine ending, அழுத்தம்பெற்ற அசையுடன் அடிமுடிதல்; masculine rhyme, பிரஞ்சு மொழிப் பா வகையில் அழுத்தம்பெற்ற அசைகளில் முடிகிற சொற்களுக்கிடையேயுள்ள அடியீற்றெதுகை.

mash, *n.* கூழாகும்பொருட்டு வெந்நீருடன் கலக்கப்பட்ட அரைத்த மாவு; குதிரைகள் முதலியவற்றிற்குச் சூடாகக் கொடுக்கப்படும் வெந்த கூலம் தவிடு முதலியவற்றின் கலவை; மசியல்; குழப்பமான கதம்பம்; *v.* அரைத்தமாவை வெந்நீரில் கல; மசியலாக்கு; உருளைக்கிழங்கு முதலியவற்றைப் பிசைந்து மொத்தையாக்கு.

mash'er, *n.* சிறு பேதைப் பெண்களின் கருத்தைக் கவர்வதாக எண்ணிப் பகட்டான உடை உடுத்தும் பிலுக்கன்.

mash'ie, *n.* குழிப்பந்தாட்ட வகையில் பந்தினை மிக உயர அல்லது இடைப்பட்ட தொலைவுகளுக்குத் தூக்கியடிப்பதற்கான இருப்புக்கோல்.

mash'-tub, *n.* அரைத்தமா கூழாக்கப்படும் தொட்டி.

mash'y, *n.*=mashie.

ma'sjid, (அரபு.) *n.* பள்ளிவாசல்.

mask, *n.* முகமூடி; முகத்திரை; முகக்காப்பு வலை; பண்டைய கிரேக்க-ரோம நடிகர்களால் அணியப்பட்ட மனிதத் தலை பொம்மை; பொய்முகம், முகத்தைப்போல் செய்யப்பட்ட

களிமண் அல்லது மெழுகுருவம்; மாறுவேடம்; உருமாற்றம்; முகமூடியணிந்தவர்; நரிமுகம், நரித்தலை; *v.* முகமூடி கவி; முகமூடியினால் உருமாற்று; பகைவர் பார்க்காமல் மறைத்து வை; பகைவர் படைகள் செயற்படாமல் தடுத்து நிறுத்திவை; நேசப்படையின் பீரங்கி வேட்டு வரிசையில் நின்றுகொண்டு அது செயற்படாமல் தடு; உருமாற்று, உணர்ச்சி முதலியவற்றை மறைத்துக்கொள்; (தொ.) masked ball, முகமூடிகள் அணிந்துகொண்டு ஆடப்படும் குழு நடனவகை.

**ma'sker**, *n.* முகமூடி அணிந்திருப்பவர்; முகமூடி நடனக் குழுவினர்.

**maskinon'ge**, *n.* வட அமெரிக்க பெரிய ஏரிகளிற் காணப்படும் பெருமீன் வகை.

**mas'ochism**, *n.* அடக்கிக் கொடுமைசெய்வதை ஏற்றின்பமடையும் முரணியல் சிற்றின்பநிலை; அஞரின்பம்.

**mas'on**, *n.* கொற்றன், கொல்லத்துக்காரன், கல்தச்சன், சிற்பி; நற்கொற்றர், உடன்பிறப்புணர்ச்சியுடன் ஒருவர்க்கொருவர் உதவிசெய்துகொள்ளும் கேண்மைக்கழக உறுப்பினர்; *v.* கட்டுமான வேலை செய், கொல்லத்து வேலை செய்; கல்தச்சு வேலைப்பாட்டினால் வலுப்படுத்து.

**mason'ic**, *a.* நற்கொற்றர் கேண்மைக்கழக முறை சார்ந்த.

**mas'onry**, *n.* கட்டுமான வேலை, கொல்லத்துவேலை, கல்தச்சு வேலைப்பாடு.

**Masor'a, Masor'ah**, *n.* விவிலிய நூல் மூலபாடம் பற்றி யூதரிடையே மரபாக வந்த செய்திகளின் தொகுப்பு.

**Mas'orete, Mas'orite**, *n.* விவிலிய நூல் மூலபாடம்பற்றி யூதரிடையே மரபாக வந்த செய்திகளைத் தொகுக்கும் யூதப்புலவர்.

**masque**, *n.* கலைபயில்வோரின் இசைநாடகக் கூத்து வகை; இசைநாடகக் கூத்துக்காக எழுதப்பட்ட நாடகம்.

**ma'squer**, *n.*=masker.

**masquerade'**, *n.* அயிற்பெண்டு, முகமூடி நடனம்; பொய்த்தோற்றம், பகட்டு; *v.* அயிற்பெண்டாடு, முகமூடி நடனத்தில் கலந்துகொள்; மாறுவேடத்தில் தோன்று; உருமாறிச் செல், பொய்த்தோற்றம் கொள்.

**mass¹**, *n.* ரோமன் கத்தோலிக்கக் கோயில்களில் இயேசுநாதரின் இறுதி உணவுவிழா; இறுதி உணவு விழாவில் பயன்படுத்தப்படும் வழிபாட்டுச்சுவடி; இறுதி உணவு விழாப்பாடல்களின் இசைமெட்டமைப்பு; (தொ.) high mass, குரு-உதவிக் குருவின் துணைகொண்டு தூபம்-இசைப்பாடல் ஆகியவற்றுடன் நடத்தப்படும் இறுதி உணவுவிழா வழிபாடு; low mass, இசைப்பாடலின்றி மிகச்சுருங்கிய வினைமுறைகளோடு நடத்தப்படும் இறுதி உணவுவிழா வழிபாடு.

**mass²**, *n.* பிண்டம், கட்டி; பலவற்றின் திரள், செறிதொகுதி; பெரிய எண்ணிக்கை; நிறைபிழம்பு; பெரும்பரப்பு; மொத்தம்; (இய.) பொருண்மை, அடங்கியுள்ள பொருளின் அளவு; *v.* பிண்டமாகத்திரட்டு, மொத்தையாகச் சேர்; ஓரிடத்தில் கொண்டுவந்து குவி; (தொ.) in the mass, மொத்தத்தில்; mass energy, பொருண்மை ஆற்றல், பொருண்மை காரணமாகப் பிண்டத்துக்குரிய ஆற்றல்; mass meeting, மாபெரும் பொதுக்கூட்டம்; mass observation, பொதுமக்கள்பற்றிய கூராய்வு; mass of manoeuvre, படையணிவகுப்புத்தேவைகளுக்கென எதிலும் ஈடுபடுத்தாமல் ஆயத்தமாக வைத்திருக்கப்படும் தானைப்பகுதி; mass production, திட்டமிடப்பட்டபெரிய அளவான பொருட்படைப்பு; the mass, the great mass, பெரும்பகுதி; the masses, பெரும்பான்மைப் பொதுமக்கள், அடிநிலை வகுப்புமக்கள்.

**mass'acre**, *n.* நூழிலாட்டு, படுகொலைக்களரி, கொன்று குவிப்பு; *v.* கொன்று குவி, படுகொலை செய்.

**massage'**, *n.* உருவுதல், வருடுதல், தசைகளும் மூட்டுக்களும் செயலாற்றத் தூண்டுவதற்காக அவற்றைத் தேய்த்துப் பிசைந்து விடுதல்; *v.* உருவு, வருடு, தேய்த்துப் பிசைந்துவிடு.

**masse**, (பிர.) *n.* மேசைக்கோற்பந்தாட்டக் கோலினைச் செங்குத்தாகப் பிடித்துக்கொண்டு கொடுக்கப்படும் அடி.

**masseur'**, *n.* உடம்பைத்தேய்த்துப் பிசைந்துவிடுதலைத் தொழிலாகக் கொண்டவன்; *fem.* masseuse'.

**mass'if**, *n.* மலைமுகட்டுத் திரள்.

**mass'ive**, *a.* பெருத்த; கனமான; கெட்டியான; திண்மையான; பெரும்படியான; கனிசமான; உறுப்புக்கள் வகையில் பெரிதாக உருவாகியுள்ள; மலைக்கவைக்கிற; உள்ளத்தில் பதியும் ஆற்றல்வாய்ந்த; பரும அளவு மிக்குடைய.

**Massor'a, Massor'ah**, *n.*=Masora.

**Mass'orete, Mass'orite**, *n.*=Masorete.

**mass'-spec'trograph**, *n.* திரிபடிவ வகைபிரி கருவி, மின்காந்தக்களங்களூடாக அணுவிசை இயக்குவதன்மூலம் தனிமமறுபடிவங்களைப் பிரிப்பதற்குரிய கருவியமைவு.

**mass'y**, *a.* திண்மையான, பளுவான.

**mast¹**, *n.* மரக்கலக்கூம்பு, கப்பற் பாய்மரம்; வானொலியமைப்பின் வான் கம்பிக் கம்பம்; பறவைக்கப்பலைக் கட்டி நிறுத்துவதற்குரிய உறுதியான எஃகுக்கோபுரம்; (தொ.) before the mast, பொதுநிலைக் கப்பலோட்டியின் நிலையில்.

**mast²**, *n.* பன்றிகளுக்கு உணவாகப் பயன்படும் காட்டு மரங்களின் கனிகள்.

**mas'taba**, *n.* (தொல்.) சரிவான பக்கங்களும் தட்டையான மேற்பகுதியுமுடைய பண்டைய எகிப்தியக் கல்லறை.

**ma'ster**, *n.* தலைவன்; ஆண்டை, எசமான்; மேலாளர்; ஆயன், மேலாட்சியாளர்; நிலைய மேலாண்மையர்; கல்லூரித் தலைவர்; கப்பல் முதல்வர்; பணி முதல்வர், பணிமனை மேலுரிமையாளர்; உடையவர், மேலுரிமையர்; காப்பாளர்; ஆசிரியர்; ஆசான், குரு; மெய்விளக்கத்துறை ஆசிரியர்; வல்லார்; திறலாளர்; தேர்ச்சியாளர்; கைதேர்ந்தவர்; துறைபோனவர்; ஆட்சித்திறமையாளர்; நம்பி; இளஞ்சேய்; இளநிலை ஆண்டை; *a.* தனி முதன்மையான; தலைமை நிலைக்குரிய; தனிச்சிறப்பு வாய்ந்த; அடக்கியாளும் திறமுடைய; வென்று மேம்படும் திறலுடைய; ஆட்சியாற்றல் வாய்ந்த; *v.* கீழடக்கு; அடக்கியாளு; போராடி வெல்லு; நிறை ஆட்சிக்குட்படுத்து; முற்றிலும் தன்வயப்படுத்து; முழுத் தேர்ச்சியடை; துறைபோகக் கைவரப்பெறு; தலைமை வகித்தாட்சி செய்; (தொ.) be master of, ஆதிக்கத்தில் வைத்துக்கொள், மேலாட்சி கைவரப்பெறு; be one's own master, விரும்பியவாறு செய்யும் உரிமைபெறு; make oneself master of, கற்றுத்தீர், துறைபோ; கையாளுவதில் முழுத்திறமை பெறு; master mason, மூன்றும் படித்தரத்தை எய்தியுள்ள நற்கொற்றர் கழக உறுப்பினர்; Master of Arts பல்கலைக்கழகக் கலைமுதல்வர் பட்டம் பெற்றவர்; கலைமுதல்வர்; Master of foxhounds, வேட்டைநாய்களைத் தம் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவர்; Master of Misrule, (வர.) கிறிஸ்துமஸ் களியாட்டங்களில் தலைமை வகிப்பவர்; Master of the Ceremonies, வினைமுறை முதல்வர், சடங்குகளின் தன்மையையும் வரிசை முறையையும் வகுக்கிற அதிகாரி; Master of the Horse, அரச குடும்பத்தின் குதிரை அரங்க முதல்வர்; Master of the revels, அரசு சார்ந்த விழா வினைமுறைகளைக் கண்காணிப்பவர்; Master of the Rolls, ஆவணங்களைத் தம் பொறுப்பில் வைத்திருக்கும் மேல்முறை மன்ற நடுவர்; old masters, மறுமலர்ச்சிக்கால இத்தாலியக் கலை மன்னர்; The Master, இயேசுநாதர்.

**ma'ster-at-arms'**, *n.* போர்க்கப்பலின் காவற்பணியாளர்.

**ma'sterful**, *a.* அடம்பிடித்த, பிடிமுரண்டான; ஆதிக்க மனப்பான்மையுள்ள, வீறுப்புடைய.

**ma'ster-key**, *n.* ஆணித்திறவு, பல பூட்டுகளைத் திறக்கவல்ல திறவுகோல்.

**ma'sterly**, *a.* தேர்ச்சி வாய்ந்த, வல்லாண் திறமமைந்த.

**ma'sterpiece**, *n.* சிறந்த வேலைப்பாடுடைய பொருள்; தலைசிறந்த படைப்பு.

**ma'stership**, *n.* நாயகத்துவம், ஆதிக்கம், ஆட்சி; பள்ளி ஆசிரியர் பதவி; பள்ளி ஆசிரியர் அலுவல்.

**ma'ster-stroke**, *n.* தேர்ச்சித்திறமிக்க செயல், வன்றிறச் செய்கை.

**ma'stery**, *n.* ஆட்சி, ஆதிக்கம்; முதன்மை, தலைமை; தேர்ச்சித்திறம்; வல்லமை; மேம்பாட்டுநிலை; தேர்ச்சி நய எளிமை.

moth'-eaten, *a.* அந்துப்பூச்சிகளால் அரிக்கப்பட்ட, காலங் கடந்த, பழமைப்பட்டுப்போன.

mo'ther [1], *n.* தாய், அன்னை; தோற்றமூலம், தோற்றுவாய்; கன்னிமாடத் தலைவி; தாழ்வகுப்பினரிடையே முதிய மாதின் விளிக்குறிப்பு; கோழிக்குஞ்சுகளை வளர்ப்பதற்கான கருவி அமைவு; *v.* பெறு, பிறப்பி, தோற்றுவி; தாயைப்போல் பேணி வளர்; பிள்ளையென உரிமையாய் ஏற்றுக்கொள்; பிள்ளையென வெளிப்படக்கூறு; பிள்ளையாக நடத்து; தாய்மைப் பொறுப்பேற்று; ஆசிரியப் பொறுப்புக்குரியவ ராக்கு; தாய் தேடியளி; (தொ.) Mother Church, தாயின் நிலையுடைய திருச்சபை, மூலத்திருக்கோயில்; mother country, தாய்நாடு, குடியேற்ற நாடுகளின் தாய்நாடு; mother earth, தாய் நிலம்; பூவுலக அன்னை; Mother Hubbard, மேல் அங்கி, முழு மேலங்கி; mother lodge, நற்கொத்தர் தீக்கைபெற்ற சங்கம்; mother of millions, mother of thousands, செம் புள்ளி மலர்களையுடைய பசுமை மாறாச் செடிவகை; mother of pearl, கிளிஞ்சல்களின் உட்புறத்திலுள்ள பளபளப்பான பொருள்; mother ship, நீர்மூழ்கிக் குண்டுப் படகுகள் நீர் மூழ்கிக் கப்பல்கள் முதலியவற்றின் பொறுப்புடைய கப்பல்; mother's son, மனிதன்; mother tongue, தாய்மொழி, பிற மொழிகளின் மூலமொழி; mother wit, இயல்பான அறிவு, பொது அறிவு, சொந்த அறிவு.

mo'ther [2], mother of vinegar, *n.* புளிக்காடியில் உண் டாகும் பிசின்போன்ற பொருள்.

Mo'ther-Church, *n.* கிளைச்சபைகள் தோற்றுவித்த தாய்த் திருச்சபை.

mo'ther-craft, *n.* தாய்மைத்திறன், குழந்தை வளர்ப்புத் திறன்.

mo'ther-in-law, *n.* மாமியார், கணவனின் தாய்; மனைவி யின் தாய்.

mo'therland, *n.* தாயகம், தாய்நாடு.

mo'therly, *a.* தாய்மைக் குணமுடைய; தாயின் நற்பண்பு கள் வாய்ந்த; தாயின் நற்குணங்களைக் காட்டுகின்ற.

motif', *n.* கலைப்பண்புக்கூறு; கலைத்துறையில் முனைத்த கருத்து; தனியே தைத்திணைக்கப்படும் பூவணி வேலை.

mot'ile, *a.* (உயி., தாவ.) இயங்கியலான, அசையும் தன்மை யுடைய.

mo'tion, *n.* அசைவு; இயக்கம்; இயங்குமுறை; இயங்கு நிலை; இடமாற்றம்; நுண்பெயர்ச்சி; நிலைமாற்றம்; சாடை, சைகை; இயங்குபாணி; இயக்க ஆற்றல், இயக்கும் ஆற்றல்; இயங்கும் ஆற்றல்; இயலுணர்ச்சித் தூண்டுதல்; மனவெழுச்சி; உணர்ச்சி; திடீர்விசை; தூண்டுதல் விசை; இயந்திரப்பகுதி; வயிற்றுப்போக்கு; மன்றத் தீர்மானக் கோரிக்கைமுறை; முறைமன்றக் கட்டளைக் கோரிக்கை; *v.* சாடைகாட்டித் தெரிவி; சைகைமூலஞ் செயல் தூண்டு; சாடைமூலம் ஏவு; தீர்மானக் கட்டளைமுறை கொணர்; ஆலோசனை கூறு; (தொ.) in motion, இயங்குநிலையில், நிலையின்றி; motion picture, இயங்கு படக்காட்சி, பேசாத் திரைப்படம்; put in motion, இயங்கச்செய், செயற் படுத்துவி.

mot'ivate, *v.* செயல் நோக்கமளி; செயல்நோக்கங் கற்பி; செயல் நோக்கமாயிரு; சிறப்புக் கூறுயமை.

mot'ive [1], *n.* செயல் நோக்கம்; செயல் தூண்டுதலுணர்ச்சி; உட்கோள்; உட்கருத்து, உள்ளெண்ணம்; சிறப்புக்கூறு, உட்கூறு; *a.* இயக்கத்தைத் தோற்றுவிக்கும் இயல்புடைய; இயக்கஞ் சார்ந்த; *v.*=motivate; (தொ.) motive power, இயந்திர விசை, இயக்குந் திறமுடைய ஆற்றல்.

*mot juste*, (ல.) *n.* திட்பநுட்பவுரை, பொருள் நயத்தை முழு நுட்பமானத் தன்மையில் துல்லியமாகத் தெரிவிக்கும் சொல்.

mot'ley, *n.* கதம்பத்திரள், பொருத்தமற்ற கலவைக்கூளம்; (வர.) கோமாளியின் பல்வண்ண உடை; *a.* பல்வண்ண முடைய, பல்வகை நிறமுடைய; பலதிறப்பட்ட, பல்வேறு பட்ட; (தொ.) wear motley, கோமாளியாக நடி.

mot'or, *n.* விசைப்பொறி, இயந்திரத்துக்கு இயக்க ஆற்ற லளிக்கும் பகுதி; (உள்.) இயக்குதசை; கட்டளை நரம்பு, தசை இயக்கத்தைத் தூண்டுவதற்கான நரம்பமைவு; *v.* உந்து வண்டியிற் செல்; விசை வண்டியிற் கொண்டுசெல்; (தொ.) motor bandit, உந்துகலமுடைய கொள்ளைக்காரன்; motor cycle, விசைமிதி, விசைப்பொறி வாய்ந்த மிதி வண்டி.

mot'or-car, *n.* மோட்டார், உலா விசை உந்துவண்டி.

mot'orize, *v.* விசை உந்து வாய்ப்புக்களை உடனிணைத்தமை.

mot'tle, *n.* பல்வண்ணப் புள்ளியமைவு; அடைதிரள்வண் ணம்; சுட்டி, வண்ணப்பட்டை; பல்வண்ணக் கம்பளி இழை; *v.* பல்வண்ணப் புள்ளிகளிடு.

mott'led, *a.* பல்வண்ணப்புள்ளிகள் வாய்ந்த; அடைதிரள் வண்ணம் உடைய.

mott'o, *n.* மேற்கோள் உரை; கடைப்பிடிக்கும் பொன்மொழி; முகப்பு மேற்கோள் வாசகம்; இசைப்பல்லவி; வாணவெடி மூலம் காட்டப்படும் விளம்பர வாசகம்.

moue, *n.* உதட்டுப் பிதுக்கம்.

mouff'lon, *n.* தென் ஐரோப்பிய மலையாடு வகை.

mou'jik, *n.* ருசிய நாட்டுக் குடியானவர்; பெண்டிரின் தளர்த்தி யான கம்பளிக் குல்லாய்.

mould [1], *n.* மாதிரி அச்சு, கட்டளைச்சட்டம், வார்ப்படம், கட்டிடம்-மரவேலை முதலியவற்றில் உருக்கொடுக்க உதவும் துணைக்கருவி; உருக்குக் குகை; பிட்டுக் குழல், அப்பம் உரு வாக்கும் உரு அச்சு; குழல்பிட்டு, உரு அப்பம்; *v.* மாதிரி அச்சில் வார்; கட்டளைச் சட்டத்தில் உருவாக்கு; அச்சிலிட்டு அப்பம் உருவாக்கு; உருக்குக் குகையில் உருக்கி வார்; (தொ.) cast in heroic mould, வீரூர்ந்த இயல்பு வாய்க்கப்பெற்ற; mould candle, வார்ப்பட மெழுகுத்திரி.

mould [2], *n.* புழுதி மண்; பசளை மண், உழுத நிலத்தின் உதிர் மண்பரப்பு; (தொ.) man of mould, எடுப்பார் கைப் பிள்ளை.

mould [3], *n.* பூஞ்சக்காளான்.

mould'-board, *n.* உழுசாலில் மண்ணைப் பெயர்த்துத் தள்ளும் முனைப்பலகை.

moul'der [1], *n.* வார்ப்படஞ் செய்பவர்; உரு அச்சில் வார்ப்பவர்.

moul'der [2], *v.* பொடியாகு; மண்ணாகு, உளுத்துப்போ; இற்றுவிடு.

moul'diness, *n.* உளுத்தநிலை, பூஞ்சைப்பிடிப்பு.

moul'ding, *n.* வார்ப்படஞ் செய்தல்; வார்ப்படம்; வார்ப்பட உருவம்; கட்டிடம்-மரவேலை முதலியவற்றில் சித்திரவேலைப் பாடு.

moul'ding-board, *n.* அப்பமாவு பிசையும் பலகை.

mould'-loft, *n.* கப்பலின் முழுஅளவு மாதிரிப்படம் வரையப் பட்ட தளமுள்ள அறை.

moult, *n.* இறகுதிர்ப்பு; இறகுதிர்செயல்; இறகுதிர்ப்பு முறை; இறகுதிர்ப்புப் பருவம்; *v.* சிறகுதிர்; சிறகினை உதிர்; சிறகுதிர்க்கப்பெறு; சிறகுவகையில் உதிர்க்கப் பெறு.

moul'vi, *n.*=moolvi.

mound [1], *n.* மணிமுடி முகட்டுக்கோளம், நிலவுலகத்தைக் குறிக்கும் மணிமுடிப்பொற்பந்து.

mound [2], *n.* திடல், மேடு; மண்மேடு; பிணக்குழிமேடு; பொற்றை, சிறுகுன்று, *v.* மண்மேடுகளால் சூழவை; மண் மேடுகளாகக் குவி.

mound'-builder, *n.* மண் மேடெழுப்பும் வரலாற்றுக்கு முற் பட்ட வட அமெரிக்க இந்திய இனத்தவர்; வட அமெரிக்க இந்திய இனத்தில் ஒருவர்; முட்டைகளைக் குவியலாக அடுக் கும் பறவை வகை.

**mount**, *n.* மலைக்குவடு, சிமையம்; குன்று; மேடு; செய்குன்று; ஏற்றம், மேல்நோக்கிய சரிவு; ஏறுகை; ஏறுமுறை; ஏற்றப்படி; ஏற்றச்சைகை; ஊர்திவிலங்கு; ஏறிச்செல்வதற்கான ஊர்தி, மிதிவண்டி; படச்சட்டம்; மணி ஒப்பனை ஏற்றச்சட்டம்; படப்பின்னணி அட்டை; நிலைச்சட்டம்; நுண்ணோக்காடியில் பொருள் வைப்பதற்கான சூழமைவு; கைவரை நூல் முறையில் உள்ளங்கை விரலடி மேடு; *v.* ஏறு; மலை ஏறிச்செல்; ஊர் விலங்கேறியிவர்; ஊர்தி ஏறியமர்; ஏறியமர்ந்து செல்; ஏற்று; மீதமர்ந்து செல்லுவி; ஊர்தி அமைத்துக்கொடு; எழு; மட்டத்தில் உயர்; அளவில் மிகு; தொகை ஏறு; விசை மேம்படு; ஆற்றல் உயர்வுறு; குருதி வகையில் கன்னத்தில் முனைத்தெழுந்து கன்றித்தோன்று; மேலே செல்; உயர்ந்து செல்; மேல்நோக்கிப் பரவு; பதவி உயர்வுறு; பதவியேற்று; பின்னோக்கி இறந்தகாலம் சென்றளாவு; விலங்கு வகையில் இணைவிழைச்சுக்கொள்ளுவி; சட்டத்தில் ஏற்று; ஒப்பனைச்சட்டத்தில் பொருத்து; சட்டம் இணை; சூழமைவில் பொருத்திவை; தறி இணை; கருவிகலங்களை இணைத்து ஒருங்குவி; காட்சியரங்கேற்று; நாடக அரங்கேற்றஞ் செய்; பீரங்கியை நிலைமேடையிலேற்று; (தொ.) mount an offensive, (படை.) முன்னேறித் தாக்கு, தாக்கத் திட்டமிடு; mount guard, காவற்பணி செய்; காவலமர்த்து; mount up, தொகையில் உயர், அளவில் மேலெழு.

**moun'tain**, *n.* மலை; பெருங்குவியல்; (தொ.) mountain ash, செந்நிறக் கொட்டைகளையுடைய மரவகை; mountain chain, மலைத்தொடர், சங்கிலித் தொடர்மலை; mountain dew, (பே-வ.) ஸ்காத்லாந்திய இன்தேறல் வகை, mountain sickness, மலைநோய்; the Mountain, (வர.) முதல் பிரஞ்சுபுரட்சிக் காலச் சட்டமன்றத்தில் மிகப் பெரும்பான்மை கொண்டிருந்த தீவிரக்கட்சி.

**mountaineer'**, *n.* மலைவாணர்; மலையேறி, மலையேறுவதில் வல்லுநர்.

**moun'tainous**, *a.* மலைகள் நிறைந்த; மலைப்பாங்கான; மிகப்பெரிய.

**moun'tebank**, *n.* நாடோடிப் போலி மருத்துவர், போலி அறிஞர், அறிவுப்பகட்டாளர்.

**mourn**, *v.* மாள்வுக்காக வருந்து; துயரங்கொண்டாடு; துயரச் சின்னம் மேற்கொள்; இழப்புக்காக வருத்தமடை; துன்பத்துக்கு ஆற்றுது அரற்று.

**mourn'er**, *n.* இழவு கொண்டாடி, கூலித்துயர்க் கொண்டாட்டக்காரர்.

**mourn'ful**, *a.* துயர்தருகிற, இரங்கத்தக்க; வருத்தம் நிறைந்த, துன்பம் மிக்க.

**mourn'ing**, *n.* துயருறுதல்; இழவுக்கொண்டாட்டம்; துயர்ச்சின்ன மேற்கொள்கை; (தொ.) complimentary mourning, ஒத்துணர்வுமுறையான துயர்க்கொண்டாட்டம், உறவினரல்லாத இறந்தோருக்கு நன்மதிப்பு அறிகுறியான கருநிற உடையணிவு; in mourning, துயர்ச்சின்னக் கருநிற உடையில்; கண் வகையில் கரும் புண்ணுற்ற நிலையில்; விரல் நகம் வகையில் மாசூர்ந்த நிலையில்.

**mourn'ing-coach**, *n.* சாவண்டி.

**mourn'ing-paper**, *n.* கரிவிளிம்புத் தாள்.

**mourn'ing-ring**, *n.* நீத்தார் நினைவுக்கணையாழி.

**mouse**, *n.* சுண்டெலி; எளிதில் அச்சங்கொள்பவர்; நாணிக்கோணுபவர்; ஒதுங்குகிறவர்; பதுங்குகிறவர்; உருளை முதலியவற்றின் மீதுள்ள சுற்றுக் கயிறும் பளுவும்; *pl.* mice; *v.* சுண்டெலி வேட்டையாடு, சுண்டெலி பிடி; சுறுசுறுப்பாகத்தேடு, தேடித்திரி, நாடித்திரி; (கப்.) பின்னற் கயிற்றினால் வரிந்து சுற்று.

**mouse'-colour**, *n.* சுண்டெலி வண்ணம், சாம்பல் நிறத்தில் கருமையும் மஞ்சளுங் கலந்த நிறம்.

**mouse'-ear**, *n.* செடி வகை.

**mouse'trap**, *n.* எலிப்பொறி.

**mousse**, *n.* சுவையூட்டப்பட்ட பாலேட்டு உறைவு உணவுப் பொருள்வகை.

**mousseline'**, *n.* மெல்லிய பிரஞ்சுத் துகில் வகை.

**mousseline'-de-laine**, *n.* பருத்தி கம்பிளிக் கலவை ஆடை வகை.

**mousseline'-de-soie**, *n.* நெசவுத்திறன் வாய்ந்த மென் பட்டுத் துகில் வகை.

**moustache'**, *n.* மீசை, விலங்கின் மீசை.

**moustache'-cup**, *n.* மீசைக் குவளை, பருகும்போது மீசையைப் பாதுகாக்கும் அமைவுள்ள கிண்ணம்.

**Mouster'ian**, *a.* (தொல்.) பிரான்சு நாட்டின் பழங்கற்காலத்தைச் சார்ந்த.

**mouth**[1], *n.* வாய்; குகையின் நுழைவாயில்; ஆற்றுமுகம்; அடுப்பின் முகவாய்; பையின் திறந்த பகுதி; புட்டியின் புழைமுகம்; உண்ணுபவர்; உண்ணுவது; பேச்சாளர்; குரல் கொடுப்பது; வாய்மொழியாளர்; கருத்துப் பேராள்; குரல்; பேச்சு; முகக்கோட்டம்; *v.* வீண்பெருமை பேசு, மேட்டிமையாகப் பேசு; மிகத்தெளிவாகப் பேசு, உட்கொள், உண்; வாயால் தொடு; குதிரையின் வாயிற் கடிவாளமிட்டுப் பழக்கு; முகத்தைச் சுளி, உதட்டைக்கோட்டு; (தொ.) down in the mouth, வாட்டமுள்ள, சோர்ந்த, கிளர்ச்சியற்ற; give mouth, நாய் வகையில் குரை; laugh on wrong side of one's mouth, புலம்பு, அழு; make a wry mouth, ஒத்துக்கொள்ள மறுக்கும் அறிகுறியாக வாயைக்கோட்டு; mouth waters at, சுவைஎதிர்பார்த்து வாய்நீர் ஊறுகிறது; put speech into person's mouth, சொன்னதாகக் கற்பித்துக் கூறு; put words into his mouth, சொல்லவேண்டியதைச் சொல்லிக்கொடு; take the words out of person's mouth, மற்றவர் கூறப்போவதை முன்னமேயே கூறிவிடு; useless mouth, வேலைசெய்யாமல் உண்பவர்.

**mouth'-filling**, *a.* சொற்பகட்டான, ஆரவார ஓசையுடைய, கடின நடையுடைய.

**mouth'ful**, *n.* கவளம்.

**mouth'-organ**, *n.* வாயிசைக்கருவி.

**mouth'-piece**, *n.* வாயில் பொருந்தும் இசைக்கருவிப் பகுதி; புகை பிடிக்கும் குழாயின் வாய்ப்பகுதி; முகமூடியின் வாய்த்தட்டு; புகைப்பூஞ்சுருள் குழாய்; முகவர், பிறருக்காகப் பரிந்து பேசுபவர்.

**mouth'y**, *a.* இகழ்ந்து பேசுகிற, திட்டுகிற; ஆரவாரமாகப் பேசுகிற, உரத்த குரலில் முழங்குகிற.

**mo'vable**, *n.* பெயர்ப்பியல் உடைமை, இயங்குடைமை; *a.* அசையக்கூடிய; இயங்கக்கூடிய; (தொ.) movable feast, தேதி மாறிக்கொண்டு செல்லும் விருந்து.

**mo'vables**, *n. pl.* தனிப்பட்ட உடைமைகள்.

**move**, *n.* புடைபெயர்ச்சி; இடப்பெயர்ப்பு; முயற்சி; இயக்கத் தொடக்கம்; நடவடிக்கைப்படி; செயற்கூறு; ஆட்டக்காய் பெயர்ப்பு; காய் நகர்த்தீட்டுமுறை; காய் பெயர்ப்பு முயற்சி; செயல்முறை; செயல்திட்டம்; நடவடிக்கை; இடமாற்றம்; தொழிலகமனைப்பகுதி; *v.* அசை, நிலைபெயர், நிலைமாறு; அசைவி, நிலைபெயர்வி, நிலைமாற்று; ஆட்டு; குலுக்கு; கலக்கு; இடம்பெயர்; புடைபெயர்த்து, நகர்த்து; கவருட்டக் காய் இடம்பெயர்த்து; இடத்துக்கிடஞ் செல்; முன்னேறு; தங்கிடமாற்று; இயங்கு; இயங்குவி; செயல்தொடங்கு; செயலாற்று; பரபரப்புடன் ஓடித்திரி; தொழில் வகையில் நடமாடு; உயிர்த்துடிப்புடன் இயலு; செயற்படத் தூண்டு, கிளறிவிடு; செயற்படு; நடவடிக்கை எடு; குடல் இளக்கு; குடல் வகையில் இளக்கம் கொள்; உணர்ச்சியூட்டு; கனிவி; பேரவையில் முன்மொழி; சட்டமன்றத்தின் நடவடிக்கை கொணர்; நீதிமன்றத்தில் விண்ணப்பம் செய்; கோரு, மன்றுடு; (தொ.) make a move, பேர், செல், உணவு மேசை முதலியவற்றிலிருந்து எழுந்து செல்; move about, அடிக்கடி இடம் மாறிச்செல், அடிக்கடி இருப்பிடத்தை மாற்று; திரி, நடமாடு; move heaven and earth, முழு ஆற்றலுடன் முயற்சி செய்; move in, புதிய வீட்டில் குடியேறு, புதுமனை

புகு; move on, போய்க்கொண்டிரு; போய்க்கொண்டிருக்கத் தூண்டு; moving staircase, இயங்கு படிக்கட்டு; on the move, இயங்கிக்கொண்டிருத்தல்.

**move'ment**, *n.* அசைவு; இயக்கம்; படைப் புடைபெயர்ச்சி; இயந்திர இயங்குபகுதி; இயந்திர இயங்கு பகுதிகளின் தொகுதி; மன எழுச்சி, உள்ளத்தூண்டுதல்; இலக்கியப் பகுதியின் கதை நடை, கவிதைநடை, கருத்துநடை; இசை இலக்கியத்தின் தனி அமைப்புக் கூறு; பொதுக்கிளர்ச்சி, பொதுஇயக்கம்; வாணிகக்களப் போக்கு.

**mo'ver**, *n.* முன்மொழிபவர், தீர்மானத்தைக் கொண்டு வருபவர்; (தொ.) prime mover, ஆற்றலின் மூலசக்தி, இயக்க மூலக்கூறு; பயனிறை கருத்துப் படைப்பாளர்.

**mo'vies**, *n. pl.* இயங்கு திரைப்படம்.

**mow**[1], *n.* முகக்கோட்டம்; *v.* முகக்கோட்டம் செய்துகாட்டு.

**mow**[2], *n.* உலர்புல் போர், கூலவகைக் குவியல்; களஞ்சியத்தில் உலர்புல் போர் கூட்டுவிக்கும் இடம்; *v.* போர் குவி; குவியலாகக் குவி.

**mow**[3], *v.* உலர்புல் அறுவடை செய்; வயல் அறு; வெட்டித் தள்ளு, பேரழிவு செய்.

**mow'burnt**, *a.* கூலக்குவியலின் புழுக்கத்தினால் சேதமடைந்த.

**mox'a**, *n.* கீல்வாத அக எரிவுக்கு மாற்றான புற எரிவாகப் பயன்படுத்தப்படும் மூலிகைத்துய்.

**moy'a**, *n.* எரிமலைச்சேறு.

**Moza'rab**, *n.* (வர.) இஸ்லாமிய அரசரின் மேலுரிமையேற்ற கிறித்தவ சமயத்தவர்.

***Mpret***, *n.* (வர.) முற்கால அல்பேனிய நாட்டு ஆட்சியாளர்.

**much**, *n.* மிகுதியான அளவு; முக்கியத்துவமுடையது, மதிப்புடையது; *a.* மிகுதியான, பெரிய அளவான; *adv.* மிகுதியாக, நிரம்ப, மிக்க அளவில்; (தொ.) make much of, மிகுதியாகப் பாராட்டு; மிகு முக்கியத்துவம் கொடு; பயன்படுத்தி மிகு, ஆதாயம் பெறு; much of a size, கிட்டத்தட்ட அதே அளவில்; much the most likely, பெரும்பான்மை மெய்யாய் இருக்கக்கூடிய, மிகுதியும் நம்பத் தக்க; think much of, உயர்வாகக் கருது.

**much'ness**, *n.* பெரிய அளவு, மிகு அளவு; (தொ.) much of a muchness, ஏறத்தாழ ஒரே மாதிரியான, கிட்டத்தட்ட அதே போன்ற.

**mu'cilage**, *n.* தாவரப்பசைப்பொருள், பிசின், கோந்து; சளி.

**muck**, *n.* பண்ணை உரம்; அழுக்கு; வெறுப்புத்தருவது; (பே-வ.) ஒழுங்கற்ற நிலை, தாறுமாறான நிலை; துப்புரவுக்கேடு; *v.* அழுக்காக்கு, அசுத்தப்படுத்து.

**muc'kle**, *n.*, *a.* = mick'le.

**muck'-rake**, *n.* குப்பைவாரி, சீப்புபோன்ற அமைப்புடைய குப்பை கூட்டுங் கருவி.

**muck'worm**, *n.* வண்டல் புழு, எரு-சாணம் முதலியவற்றில் வாழும் பூச்சி; உலோபி, ஈயாத்திரட்டாளர்; தெருச்சுற்றிச் சிறுவன்.

**muc'ous**, *a.* சளியுடைய; சளியால் மூடப்பட்ட; (தொ.) mucous membrane, சளிச்சவ்வு.

**muc'ro**, *n.* (தாவ., வில.) கூரிய பகுதி; கூரிய முனையுடைய உறுப்பு.

**muc'us**, *n.* சளி; கோந்து, பிசின்; மீன் முதலிய சில விலங்குகளின் உடல்களிலிருந்து வெளிப்படும் குழம்புநீர்ப் பொருள்.

**mud**, *n.* சேறு, சகதி; ஈரக்குழைவான மண்; பயனற்றது; தூய்மை கெடுப்பது; பழிப்பானது; (தொ.) fling mud, throw mud, வசவுக்கு ஆளாக்கு; பழிசுமத்து; mud pie, குழந்தை விளையாட்டு மண் பண்ணியம்; mud volcano, சேற்றை வெளியே கக்கும் எரிமலை; stick in the mud, சேற்றில் அழுத்து; பிற்போக்குடையவராயிரு.

**mudar'**, *n.* எருக்கு.

**mud'-bath**, *n.* மருத்து மண்ணீர்க்குளி, வாதம்-கீல்வாதம் போன்ற நோய்களுக்குத் தாதுப்பொருளடங்கிய மண்ணிலே குளித்தல்.

**mud'guard**, *n.* சக்கர மட்பட்டை.

**mud'dle**, *n.* குழப்பம்; குளறுபடி; மடமை; *v.* குழப்பு; குடிபோதையில் தாறுமாறாக்கு; தவறுதலாகக் கலந்து குழப்பு; தவறுதல் செய்; குழப்பமும் பயனுமற்ற வேலையிலீடுபடு; (தொ.) muddle on, ஒழுங்கின்றித் தாறுமாறாக முன்னேறு; muddle through, திறமையினாலன்றி விடாமுயற்சியினால் செயல் வெற்றி அடை.

**mudd'y**, *a.* சேறுபோன்ற; சேறு நிறைந்த, சேற்றினால் மூடப்பட்ட; ஒளி வகையில் மங்கலான; குரல் வகையில் தடித்த, மென்மையாயிராத; குழம்பிய அறிவுடைய; தெளிவற்ற; புரியாத; *v.* சேறாக்கு; குழப்பு; கலக்கு; மந்தமாக்கு.

**Mud'ies**, *n.* லண்டன் வணிக நிறுவனத்தின் சுற்று ஏடகம்.

**mudir'**, *n.* துருக்கிய சிற்றூர் முதல்வர்; எகிப்திய மாகாண ஆளுநர்.

**mud'lark**, *n.* சகதிவாழ்நர்; சேற்றிடை வேலை செய்பவர்; சேறளைந்தாடி; சேறளை தெருச்சுற்றிச் சிறுவன்.

**muezz'in**, *n.* இஸ்லாமியத் தொழுகை அழைப்புக் குரலாளர்.

**muff**[1], *n.* கம்பளியாலான மகளிர் கையுறை, மகளிர் கை பொதிக் கம்பளிச்சட்டை.

**muff**[2], *n.* அறிவிலி, மட்டி, பேதை; செயல்திறமற்றவர்; வகைதெரியாதவர், செயல்முறையறியாதவர்; வேலைக்குளறுபடியாளர்; ஏறுமாறாகக் காரியமாற்றுபவர்; பணிச் செப்பமற்றவர்; சப்பர், பயனற்றவர்; விளையாட்டில் திறமையற்றவர்; ஆட்டச் செப்பமற்றவர்; பந்தினைக் காக்கத் தெரியாதவர்; *v.* குளறுபடி செய்; செயல் தவறு; பந்தினைத் தவறவிடு.

**muffetee'**, *n.* மணிக்கட்டில் அணியப்படும் கம்பளிப் பின்னற் கட்டு.

**muff'in**, *n.* வட்டமான முறுகு நெய் அப்பம்.

**muffineer'**, *n.* முறுகு நெய்யப்பத்துக்கு உப்போ சர்க்கரையோ கொட்டிக்கொள்வதற்குரிய நுண்புழைச்சிமிழ்.

**muf'fle**, *n.* முகறைக்கட்டை, அசைபோடும் விலங்குகள்-கொறி விலங்குகள் ஆகியவற்றின் மூக்கு மேலுதடு ஆகியவற்றின் தடித்த பகுதி; *v.* கழுத்தினையும் மிடற்றினையும் குளிர் காப்புக்காகப் பொதிகுட்டைகொண்டு மூடு; பேச்சுத் தடுக்க முகமூடித் திரையிடு; முரசு-மணி முதலியவற்றில் ஓசை அடக்கப் பொதி திரையிடு; ஒலி தடுப்புக்காகத் துடுப்பு-குதிரைக் குளம்பு முதலியவற்றிற்குப் பொதியுறையிடு; குரலடக்கு, உள்ளடக்கி வெளியிடு.

**muff'ler**, *n.* கம்பளிக் கழுத்துக்குட்டை; குத்துச் சண்டைக்காரர் கையுறை; திண் கையுறை; ஓசையடக்கத் திண்டு.

**muf'ti**, *n.* துருக்கிய சமயத்துறை அலுவல் முதல்வர்; முஸ்லீம் சட்ட அறிஞர்; அலுவலரின் அலுவல் சாராப் பொது நிலை உடை.

**mug**[1], *n.* குடுவை, நீர்குடிக்கும் நீளுருளை வடிவுள்ள குவளை; குடுவை நீர்மம்; குளிர்பானம்.

**mug**[2], *n.* அறிவிலி, பேதை, மூடன்; ஏமாளி.

**mug**[3], *n.* தேர்வு; முயன்று வருந்திக்கற்பவன்; *v.* உருப்போடு, முயன்று படி, வருந்திப் படி.

**mugge'r**, *n.* பரந்தகன்ற மூக்குடைய முதலை வகை.

**mugg'ins**, *n.* அறிவிலி, பேதை; குழந்தைகள் சீட்டாட்ட வகை; வட்டாட்ட வகை.

**muggleton'ian**, *n.* பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய புதிய சமயக்கிளை வகையினர்; *a.* 17-ஆம் நூற்றாண்டுச் சமயக்கிளை வகையைச் சார்ந்த.

**mugg'y**, *a.* நாள் நிலை வகையில் ஈரமும் வெப்பமுமுள்ள; வானிலை வகையில் புழுக்கமான, இறுக்கமான; மூச்சுத்திணற வைக்கிற.

**mug'wump**, *n.* பெரிய மனிதர், அரசியல் கட்சிகளிலிருந்து விலகி நிற்பவர், சுயேச்சையாளர்; பணித்தலைவர், மேலாளர், அரசியல் நடுநிலையாளர்.

**mulatt'o**, *n.* நீகிரோவுக்கும் வெள்ளையருக்கும் பிறந்தவர்; *a.* பழுப்புநிறமான.

**Mul'berry**[1], *n.* (வர.) இரண்டாம் உலகப் போரில் நேசநாட்டினர் ஐரோப்பாப் படையெடுப்புக்காக முன்கூட்டித் திட்டமிடப்பட்டுக் குறிக்கப்பட்ட துறைமுகம்.

**mul'berry**[2], *n.* பட்டுப்புழுக்கள் உண்ணும் இலைகளையுடைய முசுக்கட்டை மரம்; அதன் கனி; (தொ.) mulberry bush, குழந்தைகளின் விளையாட்டு வகை.

**mulch**, *n.* இளநடவுமர வேர் காப்புக்கான ஈர வைக்கோல் தழைக்கூளம்; *v.* இளநடவுமர வேர்காப்புக்கான ஈர வைக்கோல் தழைக்கூளம் பரப்பு.

**mulct**, *n.* குற்றத்திற்கான தண்டத்தொகை; *v.* தண்டம்விதி.

**mule**[1], *n.* கோவேறு கழுதை, கழுதை ஆண் குதிரைப் பெட்டைக் கலப்பினம்; (பே-வ.) குதிரை ஆண் கழுதை பெட்டைக் கலப்பினம்; அறிவிலி; பிடிவாதக்காரன்; கலப்பினச் செடி; கலப்பின விலங்கு; நூல் நூற்கும் இயந்திரம்.

**mule**[2], *n.* தனிப்பகுதியற்ற குதிகால் மிதியடி.

**mule**[3], *v.*=mewl.

**muleteer'**, *n.* கோவேறு கழுதை ஓட்டி.

**mulieb'rity**, *n.* பெண்மை, பெண் தன்மை; மென்மை; ஆண்மையற்றதன்மை.

**mull**[1], (இ.) *n.* மென்துகில் வகை.

**mull**[2], *n.* குழப்பம், தவறு; *v.* தவறு செய்; குழப்பு, தாறுமாருக்கு.

**mull**[3], *v.* மதுவினை முட்டைக்கரு-சர்க்கரை-மணப்பொருள்கள் இட்டுச் சூடான பானமாக்கு.

**mull'ah**, *n.* முஸ்லிம் அறிஞர், இஸ்லாமிய சட்ட அறிஞர்.

**mull'ein**, *n.* சுணையுடைய இலைகளும் மஞ்சள் மலர்களும் உடைய மூலிகை வகை.

**mull'er**, *n.* அம்மிக் குழவி.

**mull'et**, *n.* உணவாகப் பயன்படும் நீளுருளை வடிவுள்ள கடல் மீன் வகை.

**mulligatawn'y**, (த.) *n.* மிளகுதண்ணீர், மிளகுசாறு; (தொ.) mulligatawny paste, மிளகு நீர் வைக்கப் பயன்படும் கறிக்கூட்டு; mulligatawny soup, மிளகு நீர்.

**mull'igrubs**, *n. pl.* கிளர்ச்சியற்ற நிலை; வயிற்று நோவு.

**mull'ion**, *n.* மேல்கீழான பலகணி இடைக்கம்பி.

**mull'ock**, *n.* ஆஸ்திரேலியாவில் தங்கம் விளையாத பாறை வகை; தங்கம் எடுக்கப்பட்ட சுரங்கக் கழிவுப்பொருள்; (பே-வ.) குப்பை, கூளம்.

**multang'ular**, *a.* பல கோணங்களுடைய.

**multe'ity**, *n.* பல்வகைத்தன்மை.

**mul'ticoloured**, *a.* பலவகை வண்ணங்களாலான.

**multifar'ious**, *a.* வெவ்வேறு வகைப்பட்ட; பல்வேறு வகைகள் கொண்ட.

**mul'tifid**, *a.* (உயி.) பல பகுதிகளாகப் பிளவுபடுத்தப்பட்ட.

**multiflor'ous**, *a.* அடிக்காம்பு வகையில் மூன்று மலர்களுக்கு மேற்கொண்ட.

**mul'tifoil**, *a.* (க-க.) தூணிடை வளைவுகள் ஐந்துக்கு மேல் உடைய.

**mul'tiform**, *a.* பல வடிவுகள் உடைய, பல உருக்கள் கொண்ட.

**multilat'eral**, *a.* பல பக்கங்கள் கொண்ட; ஒப்பந்த வகையில் பல கட்சிகளை உட்கொண்ட.

**multi-ling'ual**, *a.* பல மொழிகளுக்குரிய.

**multimillionaire'**, *n.* பல்கோடிப் பெருஞ்செல்வர், கோடீஸ்வரர்.

**multinom'ial**, *a.* குறிக்கணக்கியலில் இரு உருக்களுக்கு மேல் உடைய.

**multip'arous**, *a.* ஒன்றுக்கு மேற்பட்ட குட்டிகளை அல்லது குஞ்சுகளை ஈனுகிற; ஓரீற்றுப் பல்குட்டிகளையுடைய; பெண்டிர் வகையில் ஒன்றுக்கு மேற்பட்ட குழந்தைகளை ஈன்றெடுத்த.

**multiparti'te**, *a.* பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்ட.

**mul'tiple**, *n.* எண்ணின் மடங்கு, மீதமின்றி எண்ணால் வகுக்கப்படத்தக்க தொகை; *a.* பன்மடங்கான; பல்கூறடங்கிய; பல்கூறுகளாலான; பல் உறுப்புக்களாலான; பல்கூட்டான; பன்முகமான; வாணிகநிலைய வகையில் பல்கிளைகளையுடைய, பல்வேறுவகைப்பட்ட; (தொ.) multiple shop, பல்கிளைக் கடை.

**mul'tiplex**, *a.* பல்வகைத் தன்மையுள்ள, பல் அமைப்புக்கள் ஒன்ருய் இணைந்துள்ள.

**mul'tiplicable**, *a.* பெருக்கக்கூடிய, பலமடங்காக்கக்கூடிய.

**multiplicand'**, *n.* பெருக்கப்படும் எண்.

**multiplica'tion**, *n.* பெருக்கல்; ஓர் எண்ணை மற்ருேர் எண்ணால் பெருக்கும் கணக்கியல்முறை; (தொ.) multiplication table, பெருக்கல் வாய்பாடு.

**multipli'city**, *n.* பலவான தன்மை, பல்வகைப்பாடு.

**mul'tiplier**, *n.* பெருக்கும் எண்; வருமான மிகைவீதம், சேமிப்பு வளர்ச்சியைவிட வருமான வளர்ச்சி விஞ்சும் வீத அலகு; விசைப் பெருக்கி, ஆற்றலளவைப் பன்மடியாக்கி எளிதில் புலப்படுத்தும் பொறி.

**mul'tiply**, *v.* (கண.) பெருக்கு; பெருகு; மிகுதிப்படுத்து; இனம்பெருக்கு; இனப்பெருக்கமுறு; வளர்த்துப் பெருக்கு; பன்மடங்காக்கு.

**mul'titude**, *n.* எண்ணிறந்தநிலை; பேரெண்ணிக்கை; மக்கள் திரள், கூட்டம்; (தொ.) the multitude, பொதுநிலை மக்கள்.

**multitud'inism**, *n.* பொதுநிலைமக்கள் நலக்கோட்பாடு, தனிப்பட்டவரின் நலத்தினைவிடப் பெருவாரியான மக்களின் நலத்தையே மிகுதியாக விரும்பும் கொள்கை.

**mul'tivalve**, *n.* பன்மடித்தோடுகள் கொண்ட உயிரினம்; *a.* பன்மடித் தோடுகள் கொண்ட.

**multiv'ocal**, *n.* பலபொருள்கொள்ளத்தக்க சொல்; *a.* பல பொருள் கொள்ளத்தக்க.

**multoc'ular**, *a.* பல கண்களையுடைய.

***mul'tum in parv'o***, (ல.) *n.* சிற்றடக்கப் பெரும் பொருள்.

**multung'ulate**, *n.* இரண்டுக்கு மேற்பட்ட செயற்படும் குளம்புகளையுடைய விலங்கு; *a.* செயற்படும் இரண்டுக்கு மேற்பட்ட குளம்புகளையுடைய.

**mul'ture**, *n.* மா அரைகாரருக்கு அளிக்கப்படும் கூலம் அல்லது மாவு வடிவான மகன்மை.

**mum**[1], *n.* வாயாடாமை, ஓசையின்மை; *a.* வாய் பேசாத; *v.* வாய் பேசாது சைகை காட்டு, சைகையால் கருத்துத் தெரிவி; *int.* வாயாடாதே, பேசாதே.

**mum**[2], *n.* (வர.) சாராய வகை.

**mum**[3], *n.* குழந்தை வழக்கில் அம்மா.

**mum'ble**, *n.* முணுமுணுப்பு, புரியாப்பேச்சு; புரியா ஒலிப்பு; *v.* தெளிவின்றி முணுமுணு; உச்சரி; வெறும்வாயை மெல்லு, பொக்கை வாயசைத்தியக்கு.

**Mum'bo Jum'bo**, *n.* பழங்குடி வகையினர் வணங்கியதாகக் கூறப்படும் ஆபாசச் சிலையுரு; மூடமதிப்பிற்குரிய பொருள்.

**mum'chance**, *a.* நாவடக்கிய, பேசாத.

**mumm'er**, *n.* (வர.) ஊமைக்காட்சி நடிகர்; நாடகமாடி.

**mumm'ery**, *n.* ஊமைக்காட்சி; கேலிக்கூத்து, பொருளற்ற வினைமுறை.

**mumm'ify**, *v.* சடலப் பதனீடுசெய், இறந்த உடலைத் தைல மிட்டுணக்கிப் பதனப்படுத்தி வை; சுருக்கு, வாட்டமடையச் செய்; காயச்செய்; வற்றச்செய்.

mumm'y [1], *n.* பதனம் செய்யப்பட்ட உயிரற்ற உடல்; உணக்கல் உடல்; மசியற்பிழம்பு, களிபோன்ற பொருள்; செறி பழுப்பு வண்ணப்பொருள்.

mumm'y [2], *n.* குழந்தை வழக்கில் அம்மா.

mump [1], *v.* சோர்ந்து செயலற்றிரு, முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டிரு; முகத்தைச் சுளித்துக்கொண்டிரு.

mump [2], *v.* இர, இரந்து திரி, பிச்சையெடுத்து அலை.

mum'pish, *a.* புட்டாளம்மைக்கு ஆட்பட்ட; சுடுமூஞ்சித் தனமான.

mumps, *n. pl.* புட்டாளம்மை; சுடுமூஞ்சித்தனம்.

munch, *v.* அரைத்துத்தின்னு, அசைபோடுவது போன்று ஒலியெழுமாறு உணவை மெல்லு.

Munchaus'en, *n.* நம்பமுடியா அருஞ்செயல் கதைத்தலைவன்; மட்டுமீறிய கட்டுக்கதை.

mun'dane, *a.* இவ்வுலக வாழ்க்கைக்குரிய, இம்மைக்குரிய, மண்ணுலகு சார்ந்த.

mundung'us, *n.* முடைநாற்றப் புகையிலை வகை.

mung'o, *n.* கீழ்த்தர முரட்டுக்கம்பளி நூல்.

mung'oose, *n.*=mongoose.

Mun'ich, *n.* எதிரிக்குச் சலுகை விட்டுக்கொடுத்துச் சமாளிக்குஞ் செயல்.

muni'cipal, *a.* நகரவைக்குரிய; நகராட்சியின் கீழுள்ள; நகராண்மைக் கழகத்தாலான; (தொ.) municipal law, தனி மாநிலத்திற்குரிய சட்டம்.

municipal'ity, *n.* தனியாட்சியுரிமை நகராண்மைக்கழகம்; நகர், திணைத்தனியாண்மையுடைய நகரம்.

munif'icent, *a.* வரையா வள்ளன்மையுடைய, வாரி வழங்குகிற.

mun'iments, *n. pl.* உரிமைச்சான்றுவணம், தனிச்சலுகைச் சான்றுப் பத்திரங்கள்.

muni'tion, *n.* படைக்கலங்கள், போர்க் கருவிகள் மருந்து குண்டு முதலிய கருவிகலத் தொகுதிகள்; *v.* போர்த்தளவாடங்கள் தருவித்து அளி, வெடிமருந்து தொகுத்து வழங்கு.

muni'tions, *n. pl.* போர்ப்படைக்கலங்கள்; வெடிமருந்து சேமவைப்புக்கள்; போர்த்தளவாடங்கள்.

munn'ion, *n.*=mullion.

munt'jak, *n.* சிறிய ஆசிய மான்வகை.

Muntz, Muntz metal, *n.* கப்பற் கவசத்தகட்டுக்கான உலோகக் கலவை, துத்தநாகம் 40 சதவீதம் கலந்த செம்புக் கலவை.

mur'age, *n.* (வர.) நகரமதில் வரி, சுற்றுச்சுவர் கட்டவோ சீர்செய்யவோ போடப்படும் வரி.

mur'al, *n.* சுவர்ச்சித்திர ஒப்பனை; *a.* சுவருக்குரிய; சுவர் போன்ற; சுவர்மீதான; (தொ.) mural crown, காஞ்சி மாலை, முற்றுகை இடப்பட்ட நகரின் அரண் சுவரின்மேல் முதலில் ஏறும் வீரருக்கு அணிவிக்கப்படும் மாலை; mural paintings, சுவரோவியங்கள்.

Murator'ian, *a.* முரடோரி (Muratori) என்ற 18-ஆம் நூற்றுண்டைய இத்தாலியப் புலவருக்குரிய.

murd'er, *n.* திட்டமிட்ட கொடுங்கொலை, மனமார்ந்த ஆட்கொலை; கொலைக்குற்றச்செயல்; *v.* மனிதத்தன்மையற்றுக் கொடுங்கொலை செய்; வன்மத்தோடு ஆட்கொலை செய்; தவருக ஒலித்துப் பாழ்படுத்து, தவருன வழக்கால் சொற்கொலை செய்; (தொ.) cry blue murder, அளவுமீறிக் கூக்குரலிடு; the murder is out, மறைசெய்தி வெளியாகிவிட்டது.

murd'erer, *n.* கொலைகாரன், கொல்வோன்.

murd'erous, *a.* மனமார்ந்த கொலை செய்யத்தக்க; கொடுங்கொலைக்குரிய; கருவி வகையில் கொடுங்கொலை செய்வதற்குரிய; கொலை செய்யும் விடா உறுதி கொண்டுள்ள.

mure, *v.* சிறையிலடை; அடைத்து வை.

mur'ex, *n.* ஊதா நிறச் சாயம் தரும் கிளிஞ்சில் அல்லது சிப்பி வகை; *pl.* mur'ices, mur'exes.

mur'iate, *n.* பாசிகை.

muriat'ic, *a.* நீரகப்பாசிகை சார்ந்த; (தொ.) muriatic acid, நீரகப்பாசிகைக் காடி.

murk, *a.* (செய்.) இருளார்ந்த; மூடுபனியார்ந்த; புகையார்ந்த.

murk'y, *a.* கருமைதோய்ந்த, இருளார்ந்த; அடர்ந்த.

murm'ur, *n.* முணுமுணுப்பு; முறுமுறுப்பு, குறையீடு; அடங்கிய குரல்; குரலடங்கிய பேச்சு; *v.* தொடர்ச்சியாக மெல்லொலி செய்; முணுமுணு; முறுமுறு, குறைப்பட்டுக்கொள்; அடங்கிய குரலில் சொற்களை ஒலி.

mu'rrain, *n.* கன்று காலிகளுக்கு வரும் தொற்றுநோய் வகை.

mu'rrey, *n.* முசுக்கட்டைப்பழ நிறம், கருஞ்சிவப்பு; *a.* கருஞ்சிவப்பு நிறமுடைய.

mu'rrhine glass, *n.* அரிய நுண்மணிக் கற்கூறுகளுருவான நயமிக்க கண்ணுடிக் கலங்கள்.

muscadel', *n.*=muscat.

mus'cadine, *n.* கத்தூரி நறுமணமுடைய கொடிமுந்திரிப் பழவகை.

mus'cardine, *n.* தாவர ஒட்டுயிரிகளால் பட்டுப்புழுக்களுக்கு ஏற்படும் நோய்வகை.

mus'cat, muscatel', *n.* கத்தூரி நறுமணமுடைய கொடி முந்திரிப் பழவகை; கத்தூரி மணமுள்ள கொடிமுந்திரிப் பழங்களிலிருந்து வடிக்கப்படும் இன்தேறல் வகை; கத்தூரி மணமுடைய கொடிமுந்திரி உலர்பழம்.

mu'scle, *n.* தசைநார், சதைப்பற்று; விலங்கின் உடலில் தசை நிறைந்த பகுதி; தசையின் முக்கிய கூறு; *v.* வன்முறை செய்து தலையிடு; (தொ.) muscle in, வல்லந்தமான வழிகளைக் கையாண்டு இடைபுகு.

mu'scle-bound, *a.* அளவுமீறிய பயிற்சியால் உறுதியாக விறைத்த தசைகளையுடைய.

muscol'ogy, *n.* பாசி ஆய்வுநூல்.

muscova'do, *n.* பழுப்புச்சர்க்கரை, கருப்பஞ்சாற்றிலிருந்து எடுக்கப்பட்ட தூய்மைப்படுத்தப்படாத வெல்லம்.

mus'covite [1], *n.* காக்காய்ப்பொன்.

Mus'covite [2], *n.* ருசிய நாட்டார்; மாஸ்கோ நகர்க் குடிமகன்.

Mus'covy, *n.* ருசிய நாடு; (தொ.) Muscovy duck, கத்தூரி மணமுள்ள அமெரிக்க வாத்து வகை.

mus'cular, *a.* தசைநார் பற்றிய; தசைப்பற்றுக்களாலான, தசைப் பற்றுக்களைப் பாதிக்கிற; தசைமுறுக்குடைய, திண்ணிய தசைப்பற்றுவாய்ந்த; (தொ.) muscular Christianity, உடல் உள உறுதிப்பாடு குறித்த கிங்ஸ்லி (C. Kingsley) என்பவர் நூல்களில் தீட்டிக்காட்டிய உயர் குறிக்கோளியல் சமயப்பண்பு.

mus'culature, *n.* உடலின் தசைமண்டலம்; உறுப்பின் தசைக்கூறமைவு.

Muse [1], *n.* கிரேக்க புராணமரபில் கலைத்தேவதைகள் ஒன்பதின் மருள் ஒருவர்; (தொ.) the Muses, காவியக்கலைத் தெய்வம் (Calliope), வரலாற்றுக்கலைத் தெய்வம் (Clio), உணர்ச்சிக் கவிதைத்தெய்வம் (Erato), இசைக்கலைத் தெய்வம் (Euterpe), வீறுநாடகத் தெய்வம் (Melpomene), தெய்வப்பாடல் தெய்வம் (Polyhymnia), நடனத் தெய்வம் (Terpsichore), களிநாடகத் தெய்வம் (Thalia), வானூல் தெய்வம் (Urania) ஆகிய கிரேக்க புராண மரபுக்குரிய கலையணங்குகள் ஒன்பதின்மர்.

muse [2], *n.* கவிதை; கவிதைக்கலை; கலை; கவிஞர்; கவிதைக்கான அகத்தூண்டுதல்; கவிதைக்கலை அருந்திறம்; (தொ.) the muse, கவிஞர்களுக்கு ஊக்கமளிக்குந் தெய்வம்; கவிஞரின் ஆற்றல், பெரும் புலமை.

muse [3], *v.* சிந்தனையில் ஆழ்ந்திரு; தன்னை மறந்து எண்ணமிட்டிரு; ஆழ்நினைவுடன் உற்றுநோக்கியிரு; ஆழ்ந்து ஆராய்; ஆய்ந்துநோக்கு.

**musette'**, *n.* துருத்திபோன்ற இசைக்கருவி வகை; பையூத்திசை போன்ற முல்லைநிலப் பண்ணிசை; பையூத்திசை போன்ற முல்லைநிலப் பண்ணிசைக்குரிய நடனம்; இசைப் பெட்டியின் இசைக்கட்டைத் தடை.

**muse'um**, *n.* பொருட்காட்சிச்சாலை, அரும்பொருட் காட்சி மனை; (தொ.) museum piece, காட்சிச்சாலையில் வைக்கத் தகுந்த கலைநயம் வாய்ந்த அரும்பொருள்; பழம்பாணியானவர்; பழங்காலப்பொறி.

**mush**, *n.* மென்களி, மென்கூழ்; கஞ்சி, தெளு.

**mush'room**, *n.* நாய்க்குடை, காளான், உணவுக்குரிய மழைக் குடைத்தாவரம்; குடைவடிவப் பூஞ்சையின வளர்ச்சி; திடீர் வளர்ச்சிப் பொருள்; புதுச் செல்வர்; புத்துயர்வுற்றவர்; கீழ்நோக்கி வளைந்த அருகுடைய மகளிர் வைக்கோல் தொப்பி வகை; *v.* உணவுக்கான காளான்களைத் திரட்டு; துப்பாக்கித் தோட்டா வகையில் விரிவுற்றுத் தட்டையாக்கு; (தொ.) mushroom growth, திடீர் வளர்ச்சி.

**mus'ic**, *n.* இசை; இசைக்கலை; இன்னிசை, பண்ணுடன் கூடிய பாடல்; எழுதப்பட்ட இசைக்குறிப்பு; அச்சடிக்கப் பட்ட இசைக்குறிப்பு; இன்குரல்; இன்னோசை; இன்னொலி; (தொ.) face the music, குறைகூறுபவர்களை எதிர்த்து நில்; music box, இசைப்பெட்டி, சீப்புப்போன்ற தகட்டின்மீது பற்கள் வாய்ந்த உருளை சுழல்வதால் இசையெழுப்பும் இசைக் கருவி வகை; rough music, கூக்குரல், சந்தடி, குழப்பம்; set to music, பாடலுக்கு இசை அமை.

**mus'ical**, *a.* இசை சார்ந்த; இனிமையான; இசைவிணக்க முடைய; இசைக்கலைத் திறமைவாய்ந்த; இசை நயப்புடைய; இசையமைக்கப்பட்ட, இசையோடு சேர்ந்து இசைக்கப்பட்ட; (தொ.) musical box, இசைப்பெட்டி, சீப்புப்போன்ற தகட் டின்மீது பற்கள் வாய்ந்த உருளை சுழல்வதால் இசை யெழுப்பும் இசைக்கருவி வகை; musical chairs, இசைவட்டக் கேளிக்கை, ஆட்டச்சுற்றுத்தோறும் ஓர் அமர்விருக்கை குறைத்து இசை நின்றவுடன் இருக்கை இழந்தவர் விலக்கப் படும் ஆட்டவகை; musical comedy, ஆடல்பாடல் உரை நிரம்பிய பொழுதுபோக்குக் களி நாடகம்; musical film, இசையைச் சிறப்பாகக் கொண்ட திரைப்படம்; musical glasses, நீர்க்கல இசைக்கருவி, சலதரங்கம்; musical ride, இசையோடு கூடிய படைத்திறப் பயிற்சிமுறை.

**musicale'**, *n.* இசைவிருந்துக் குழாம்.

**mus'ic-hall**, *n.* இசைக்கூடம், ஆடல்பாடல் நாடகங்களுக் கான மண்டபம்.

**musi'cian**, *n.* இசைக்கலை அறிஞர், இசைப்பாடகர்.

**musicol'ogy**, *n.* இசைத்துறை ஆர்வப் பயிற்சிமுறை.

**mus'ic-stool**, *n.* உயரம் சரிசெய்யும் வாய்ப்புடைய இசை மேளக் கோக்காலி.

**musk**, *n.* கத்தூரி; கத்தூரி மணமுள்ள செடிவகை; (தொ.) musk melon, முலாம்பழ வகை.

**musk'-deer**, *n.* கத்தூரி மான்.

**musk'-duck**, *n.* கத்தூரி மணமுள்ள அமெரிக்க வாத்து வகை.

**mus'ket**, *n.* காலாட்படைவீரனின் துப்பாக்கி; பருந்துவகைச் சேவல்.

**musketeer'**, *n.* துப்பாக்கி வீரர்.

**mus'ketry**, *n.* துப்பாக்கித் தொகுதி; துப்பாக்கிப் பயிற்சித் துறை; துப்பாக்கிப் பழக்கம்; துப்பாக்கிப் பயிற்சிப் போதனை; துப்பாக்கிப் படை.

**mus'ket-shot**, *n.* கைத்துப்பாக்கிக் குண்டு; குண்டுத் தொலைவு, துப்பாக்கிக் குண்டு பாயுந் தொலைவு.

**musk'-ox**, *n.* அமெரிக்க துருவப்பகுதியிலுள்ள முனைத்த கத்தூரி மணமுடைய எருது போன்ற விலங்கு வகை.

**musk'-rat**, *n.* வட அமெரிக்க நீர்வாழ் கொறிவிலங்கு வகை; நீர்வாழ் கொறிவிலங்கின் மென்மயிர்த்தோல்.

**musk'-rose**, *n.* மணமுள்ள பெரிய வெண்மலரையுடைய செடி வகை.

**musk'-tree, musk'-wood**, *n.* கத்தூரி மண மரவகை.

**musk'y**, *a.* கத்தூரி மணமுள்ள.

**Mus'lim**, *n.*, *a.*=Moslem.

**mus'lin**, *n.* மென்துகில் வகை; பெண்டிர் உடைகட்டும் திரை கட்டும் உதவும் நுண்ணயமுடைய பருத்தியாலான மென் துகில்; (தொ.) bit of muslin, (பே-வ.) பெண்.

**muslinet'**, *n.* திண்ணிய மென்துகில் வகை.

**mus'mon**, *n.*=moufflon.

**mus'quash**, *n.* வட அமெரிக்க நீர்வாழ் கொறிவிலங்கின் மென்மயிர்த் தோல்.

**muss**, *n.* (பே-வ.) குழப்பநிலை, தூய்மையற்ற நிலை, தாறு மாறான தன்மை; *v.* ஒழுங்கு குலை, சீர்குலை, தாறுமாறாக்கு.

*mussal'*, (அரா.) *n.* தீவட்டி, தீப்பந்தம்; தீவட்டி பிடிப்பவர்.

*mussal'chee*, (அரா.) *n.* தீவட்டி பிடிப்பவர்.

**muss'el**, *n.* சிப்பி வகை; (தொ.) mussel plum, கருஞ் சிவப்புநிறப் பழவகை.

**muss'uck**, (இ.) *n.* தோலாலான நீர்ப்பை.

**Muss'ulman**, *n.* இஸ்லாமிய சமயத்தவர்.

**must**[1], *n.* புதிய சாராயம்; முழுப்புளிப்பாகு முன்னுள்ள கொடிமுந்திரிப் பழச்சாறு.

**must**[2], *n.* பூஞ்சைக்காளான்பிடித்தநிலை; பழமைப்பட்ட தன்மை.

**must**[3], *n.* மதவெறி; *a.* ஆண்யானைகள்-ஒட்டகங்கள் வகை யில் வெறிகொண்ட நிலையிலுள்ள.

**must**[4], *n.* செய்து தீரவேண்டியநிலை; *v.* வேண்டும்.

**mustache'**, *n.*=moustache.

**musta'chio**, *n.*=moustache.

**mus'tang**, *n.* மெக்சிகோ (Mexico) கலிபோர்னியா (California) பகுதிகளிலுள்ள காட்டுக்குதிரை; (தொ.) mustang grape, செந்நிறமான சிறு கொடிமுந்திரிப் பழவகை.

**mus'tard**, *n.* கடுகு; சுவைமிக்க பொருள்; ஆர்வ ஊக்க முள்ளவர்; (தொ.) French mustard, புளிக்காடியோடு கலக்கப்பட்ட கடுகு; grain of mustard seed, மிகப்பெரிய வளர்ச்சிக்குரிய சிறுபொருள்; mustard and cress, கடுகு முளைக்கீரை; mustard gas, நச்சாவி நீர்ம வகை.

**mus'tard-pot**, *n.* மேசைக் கடுகுக்கலம்.

**mus'ter**, *n.* திரளணி, மேற்பார்வை இடுவதை எதிர்நோக்கிக் கூடும் பேரணி; எண்ணிக்கைத் தணிக்கைக்கான கூட்டணி; மொய்திரள்; பேரவை; தொகுதி; *v.* திரளணி கூட்டு; திரளணிகூடு; ஒருங்கு திரட்டு; குழுமு; மனவுரம் வகையில் வரவழை; உடல்வலிமை ஒருங்குதிரட்டு; (தொ.) pass muster, போதுமானதென்று ஏற்றுக்கொள்ளப்பெறு.

**mus'ter-book**, *n.* படைத்துறைப் பதிவேடு.

**mus'ter-roll**, *n.* அணியேடு, படைவீரர் பெயர்க் குறிப் பீட்டுப்பட்டியல்.

**mus'ty**, *a.* பூஞ்சைக்காளான் பிடித்த; ஊசிப்போன; ஊசல் வாடையுடைய; ஊசிச் சுவைகேடான; நாட்பட்ட, பழமைப் பட்ட, காலங்கடந்த.

**mutabil'ity**, *n.* நிலையாமை.

**mut'able**, *a.* மாறக்கூடிய; மாறும் இயல்புள்ள.

**muta'tion**, *n.* மாற்றம், மாறுபாடு; (உயி.) வகைமாற்றம், மாறுதலடைந்து புது உயிரினந் தோன்றுதல்; (தொ.) mutation stop, (இசை.) தொனிமாற்றக்கட்டை.

*mutat'is mutan'dis*, (ல.) *adv.* வேண்டிய மாறுதல்களுடன்.

**mute**[1], *n.* ஊமை, ஊமர்; ஊமைக்கூத்து நடிகர்; வாய்திறவா திருப்பவர்; ஊமைப்பணியாள்; கூலித் துயர்கொண்டாடி; இசைநரம்படக்கும் திண்டு; இசைக்கருவி அதிர்வடக்கிப் பொறி; இசைக்குழல் மந்தப்பட்டை; (சட்.) வழக்காடா திருப்பவர்; (ஒலி.) தடைமெய்யொலி; தடை ஒலி மெய் எழுத்து; ஊமை எழுத்து, ஒலிப்பற்ற எழுத்து; *a.* ஊமை யான; பேசாத; ஓசையற்ற, வேட்டைநாய் வகையில் குரைக் காத; பேச்சில் தெரிவிக்காத; சைகையால் தெரிவிக்கிற;

ஒலி வகையில் உறுப்புத்தடையுடைய; தடை ஒலியான; எழுத்து வகையில் ஒலிக்கப்படாத; *v.* ஒலி அடக்கு; ஒலித் தடங்கல் செய்; இசைக்கருவியின் ஒலியை மந்தமாக்கு; (தொ.) stand mute of malice, (சட்.) வழக்குரைப்பதற்கு வேண்டுமென்றே மறு.

**mute**[2], *v.* பறவைகள் வகையில் மலத்தை வெளியேற்று; எச்சமிடு.

**mut'ilate**, *v.* உறுப்புக் குறை; முடமாக்கு; உருக்கெடு, உருச் சிதை; வெட்டிக் குறை; உறுப்பைப் பயனற்றதாக்கு; நூற் பகுதிகளை நீக்கி குறைப்பட்டதாக்கு.

**mutineer'**, *n.* அரசியற் புரளியாளர், ஆட்சி எதிர்ப்புக் கிளர்ச்சியாளர்; கிளர்ச்சிப் படைவீரர்; மேலாட்சிமீறி எழுபவர்.

**mut'inous**, *a.* புரளி செய்கிற, எதிர்ப்புக்கிளர்ச்சி செய்கிற, மீறி எழுகிற, அடங்காதெதிர்க்கிற; கிளர்ச்சி செய்கிற, கலகம் செய்கிற, கலவரம் செய்கிற.

**mut'iny**, *n.* அரசியற்புரளி, ஆட்சி எதிர்ப்புக்கிளர்ச்சி; படைவீரர் கலகம்; கலகம், கிளர்ச்சி, கலவரம்; சட்டப்படியான அதிகாரத்தை வெளிப்படையாகப் புறக்கணிக்குங் கலகம்; படைத்தலைவர்களுக்கு எதிரிடையாகப் படைவீரர்கள் செய்யுங் கலகம்.

**mut'ism**, *n.* பேசாநிலை, மௌனம்; ஊமைத்தன்மை.

**mut'ograph**, *n.* இயங்குபொருளைத் தொடர்பட வரிசைப் படுத்தும் கருவி அமைவு; *v.* இயங்குபொருளைத் தொடர்பட வரிசைப்படுத்திக் காட்டு.

**mut'oscope**, *n.* இயங்கு பொருளின் தொடர்வரிசைப்படத்தைக் காட்சி காட்டுங் கருவி அமைவு.

**mutt'er**, *n.* முணுமுணுப்பு; முணுமுணுப்புச் சொற்கள்; *v.* தாழ்ந்த குரலிற் பேசு, முணுமுணு; தெளிவில்லாமற் பேசு, குறைசொல்.

**mutt'on**, *n.* ஆட்டிறைச்சி; (பே-வ.) ஆடு; (தொ.) dead as mutton, முற்றிலும் இறந்த; முழுதும் உயிரற்ற; eat one's mutton, ஆட்டிறைச்சியோடு உணவு உண்; mutton chop, ஆட்டிறைச்சித் துண்டு, ஆட்டின் விலா எலும்பிறைச்சி; ஆட்டெலும்பு போன்ற வடிவுடைய மீசை; mutton dressed like lamb, (பே-வ.) இளம் பெண்ணைப்போல உருவொப்பனை செய்துகொள்ளும் வயதானவள்; to our muttons, நமக்குரிய செய்திக்கே.

**mutt'on-head**, *n.* (பே-வ.) மந்த மதியாளர், முட்டாள்.

**mut'ual**, *a.* பரஸ்பரமான, ஒருவருக்கொருவர் பரிமாற்றமான; ஒன்றுக்கொன்று பரிமாற்றமான; (தொ.) mutual admiration society, புகழெதிர்ப் புகழ்க்கூட்டுறவு; ஒருவர்க்கொருவர் தமக்குள் மெச்சிக்கொள்ளுங் குழு; mutual insurance company, காப்பீடு செய்பவர் பிணைப்புறுதிக் கழகம், ஆதாய முழுதும் காப்பீடு செய்பவர்களுக்கே வரும் காப்புறுதிக் கழகம்; mutual terms, பணக்கட்டத்தினிடமாகச் சேவைகளை மாற்றிக்கொள்ளும் ஒப்பந்தமுறை.

**mut'ualism**, *n.* நலவாழ்வுக்குக் கூட்டுறவுச் சார்புத்தொடர் தேவை என்னுங் கோட்பாடு.

**mut'ule**, *n.* (க-க.) டோரிக் (Doric) என்னும் கிரேக்க கலைப் பாணியின்படி தூணின் மேல்வரம்பிலுள்ள பிதுக்கற் கவரணை.

**mu'zhik**, *n.*=moujik.

**muz'zle**, *n.* மூஞ்சி, விலங்கின் மூக்கும் வாயுமுள்ள முற்பகுதி; துப்பாக்கி வாய்முகப்பு; விலங்கின் வாரினாலான முகவாய்க் கட்டு; கம்பியாலான விலங்கின் வாய்மூடி; *v.* வாய்மூடியிடு; பேசாதிருக்கும்படி செய்; பாய்மரத்தை உள்வாங்கு.

**muz'zle-loader**, *n.* வாய்ப்பக்கமாக மருந்தடைப்பதற்குரிய பீரங்கி.

**muzz'y**, *a.* மந்தமான, எழுச்சியற்ற; குடிமயக்கத்தால் அறிவு மந்தமான.

**my**, *pron.* என்னுடைய.

**myal'gia**, *n.* (மரு.) தசைக்குரிய கீல்வாத நோய்.

**my'alism**, *n.* மேற்கிந்திய தீவுகளில் கையாளப்படும் சூனிய வகை.

**my'all**, *n.* புகையிலைக் குழாய் செய்யும் நறுமணக்கட்டையுடைய ஆஸ்திரேலிய வேல மரவகை.

**mycel'ium**, *n.* (தாவ.) பூசணவலை, பூஞ்சைக்காளானின் வெண்மையான நாரியற் பொருள்.

**Mycenae'an**, *a.* (தொல்.) கிரேக்க நாட்டில் கிரேக்க நாகரிகத்துக்கு முற்பட்டு (கி. மு. 1400-கி. மு. 1100 வரை) நிலவிய நாகரிகஞ் சார்ந்த.

**mycetom'a**, *n.* காலில் அல்லது கையில் கடற்பஞ்சு போன்று தோன்றும் நோய்வகை.

**mycol'ogy**, *n.* காளானூல், பூஞ்சைக்காளானைப் பற்றிய ஆய்வுநூல்.

**mycos'is**, *n.* ஒட்டுயிர்க்காளானுள்ள நிலை; ஒட்டுயிர்க் காளானால் தோன்றும் நோய்.

**myelit'is**, *n.* முதுகந்தண்டு நாள வீக்கம்.

**myl'odon**, *n.* மரபற்றழிந்துபோன மாபெருங் கரடியின உயிர்.

**myna**, *n.*=mina[3].

**mynheer'**, *n.* ஆலந்து நாட்டவர்.

**myocardit'is**, *n.* நெஞ்சுப்பைத் தசை வீக்கம்.

**myocard'ium**, *n.* நெஞ்சுப்பையின் தசைப்பகுதி.

**myol'ogy**, *n.* தசைப்பற்றாய்வு நூல்.

**my'ope**, *n.* அணிமைப்பார்வை நோயாளர்.

**myos'is**, *n.* கண்பாவை இடுக்கம்.

**my'osote**, *n.* "தொட்டாற் சிணுங்கி" செடிவகை.

**Myosot'is**, *n.* "தொட்டாற் சிணுங்கி" செடியினம்.

**my'riad**, *n.* (செய்.) பத்தாயிரம்; மிகப்பல; *a.* பத்தாயிரக் கணக்கான; எண்ணற்ற.

**my'riapod**, *n.* அட்டை பூரான் இன உயிர்.

**myriora'ma**, *n.* பல்காட்சிப்பட வேடிக்கை.

**Myrm'idon**[1], *n.* அக்கிலஸ் (Achilles) என்ற கிரேக்க மாவீரனைப் பின்பற்றிய தெஸ்ஸேலியா (Thessalia) நாட்டு வீர இனத்தவர்.

**myrm'idon**[2], *n.* குண்டன், முரட்டுக் கூலிவேலையாள்; அடியாள், கூலிக்கு வேலைசெய்யும் போக்கிரி; கொத்தடிமை, அடிமைத்தனமான பணியாள்; (தொ.) myrmidon of the law, ஊர்க்காவலர், தலையாரி.

**myrob'alan**, *n.* நெல்லிக்காய், தோல்பதனிடல்-சாயம் ஆகிய வகைகளில் பயன்படும் காரத்துவர்ப்பான கனிவகை.

**myrrh**[1], *n.* வெள்ளைப்போளம், நறுமணப்பொருள் செய்யப் பயன்படும் பிசின் வகை.

**myrrh**[2], *n.* நறுமணச் செடிவகை.

**myr'tle**, *n.* பசுமை மாறா நறுமண மலர்ச் செடிவகை.

**myself'**, *pron.* நானே, என்னையே.

**mys'tagogue**, *n.* மறைஞான குரு; பண்டைக் கிரேக்கரிடையே உயர் மெய்ஞ்ஞான ஆசிரியர்.

**mys'teries**, *n. pl.* இயேசுநாதரின் இறுதி உணவு விழா; பண்டைக்கிரேக்கர்-ரோமர் ஆகியோரின் மறைவினை முறைகள்.

**myster'ious**, *a.* மறைவடக்கமான; புதைவான; விளங்காத, விளக்கமற்ற; புதையார்வமுடைய, மறைத்து வைப்பதில் மகிழ்வுடைய.

**mys'tery**, *n.* புதைமறைவான செய்தி; விளங்காச் செய்தி, விளங்கா மெய்ம்மை; புதிர்நிலை, தெளிவின்மை; ஒளிவு மறைவுப் பழக்கம்; மறைபொருள்; மறைமெய்ம்மை, அறிவு கடந்த சமய உண்மை; உயர் தெய்விக உணர்வு; இயேசுநாதரின் வாழ்க்கை நாடகம்; (தொ.) make a mystery of, மறை பொருளாகப் பாவி.

**mys'tery-ship**, *n.* இரகசியப் போர்க்கப்பல், முதல் உலகப் போரில் பொதுநிலைக் கலம்போலத் தோற்றமளிக்கும்படி அமைந்த நேசநாட்டுப் போர்க்கப்பல்.

**mys'tic**, *n.* அறிவர், மறைஞானி; அறிவு கடந்த மெய்யுணர்வாளர்; இறை உணர்வாளர்; தனிநிலையிழந்தவர்; இறைநிலை கலந்தவர்; *a.* அகநிலை உணர்வுபெற்ற; மறைமெய்ம்மை சார்ந்த; அறிவுநிலை கடந்த; ஆழ்ந்த உட்பொருளுடைய; ஆன்மிகச் சார்பான; மறை ஆற்றலுடைய, தெய்வத் திறனுடைய.

**mys'ticism**, *n.* இறைநிலை இணைவுப் பான்மை, இறைமை இணைவுப் பண்பு.

**mys'tify**, *v.* நம்பவைத்து ஏய்; கோமாளியாக்கு; மருட்சிக்கு ஆளாக்கு; திகைக்க வை; புதிரிடு; புதைமறைவு செய்; புரியாததாக்கு.

**mystique'**, *n.* தெய்விக மறை அச்சமதிப்புச் சூழமைவு; மறை அச்சமதிப்புச் சூழமைவு முறை.

**myth**, *n.* புராணக்கதை, மக்கள் பழங்கதை; இட்டுக்கட்டு; வெற்றுப்புனைந்துரை; கற்பனையாகப் படைக்கப்பட்ட பேர்வழி; இல்பொருட் கற்பனை.

**myth'ic, myth'ical**, *a.* புராணச் சார்பான, பழங்கதை மரபுச்சார்பான; இட்டுக்கட்டான, கற்பனையான; பொய்யான; ஆதாரமற்ற.

**myth'icize**, *v.* புராணப் பொருளாக்கு, பழமரபுக் கதையாக்கு; புராணக் கதையாகக்கொள்; புராணக்கதைபோலப் பொருள் படுத்து; புராணக்கதை என்று விளக்கங் கூறு.

**mythog'rapher**, *n.* புராண ஆசிரியர், பழங்கதை எழுதுபவர்.

**mythog'raphy**, *n.* குழைமக் கலையில் புராணக் கருத்துக்களைத் தீட்டுங் கலை.

**mythol'ogy**, *n.* புராண இலக்கியம்; புராணத்துறை; புராணக்கதைத் தொகுதி; கற்பனைப் பழங்கதைக்கோவை, மரபுரைக் கோவை; தனி ஆள்-இடம்-பொருள் பற்றிய புராண மரபுத்தொகுதி; புராண ஆய்வுத்துறை நூல்.

**mythopo'eic, mythopoet'ic**, *a.* புராணக்கதைகளைப் புனைகின்ற; புராணக் கதைகளைப் படைக்கிற.

**mythopo'et**, *n.* புராணப் படைப்புக் கவிஞர்.

**mythopo'etry**, *n.* புராண இலக்கியப்படைப்பு.

**myth'us**, *n.* = myth.

**myxoedem'a**, *n.* மந்திப்புக் கோளாறு, கேடயச்சுரப்பிக் குலைவு காரணமாக உடலுறுப்புக்களின் அடிச்சவ்வுகள் தடித்து உடலுள ஊக்க அழிவு உண்டுபண்ணும் நோய்.

**myxom'a**, *n.* ஊனீர்ப்புற்று.

Nab, *v.* பற்று, பிடி.

nab'ob, (இ.) *n.* மொகலாயப் பேரரசின் மாகாணத் தலைவர், மண்டலிகர்; (வர.) இந்தியாவிலிருந்து பெருஞ்செல்வத்துடன் தாயகம் மீண்ட ஆங்கிலேயர்; இன்பவாழ்க்கைப் பெருஞ் செல்வர்.

Nab'oth's vine'yard, *n.* காமுறப்படும் பொருள்.

nac'arat, *n.* கிச்சிலிப்பழ சிவப்புநிறம்.

nacelle', *n.* விமான இயந்திர வேயுறை; வான்கலத்தின் சகடப் பகுதி.

na'cre, *n.* இறகு வடிவான கடலுயிர் வகை; இப்பி, சோழி முத்துச்சிப்பிகளின் தோட்டின் உட்புறம்; சிப்பிமீன்.

nad'ir, *n.* (வான்.) உச்சிக்கு நேரெதிர்; தாழ்விற்கு எல்லை.

nag[1], *n.* ஏறிச் செல்வதற்குரிய மட்டக்குதிரை; (பே-வ.) குதிரை.

nag[2], *v.* குறை கண்டுபிடி; ஓயாது நச்சுப்படுத்து, தொல்லைப் படுத்து.

naga'na, *n.* தென் ஆப்பிரிக்காவின் கொடிய நச்சு ஈ வகையால் வரும் காய்ச்சல்.

nag'or, *n.* மேலை ஆப்பிரிக்க கலைமான் வகை.

nai'ad, *n.* நீரரமகள்; *pl.* nai'ades, nai'ads.

nail, *n.* நகம், கால்நகம்; உகிர், விலங்கு-புட்களின் கொடு நகம்; மெல்லலகுடைய பறவைகள் வகையின் மேலலகு மீதுள்ள காழ்ப்புடைப்பு; ஆணி; காய்ப்புப் புற்று, உடலின் கடுங் காழ்ப்புடைப்பு; முற்கால நீட்டல் அளவைச் சிற்றலகு, இரண்டேகால் அங்குலம்; *v.* ஆணி அடி; வரிசையாக ஆணி அடித்திறுக்கு; ஊசியால் பிணை; உறுதியாகப் பற்று; வலிந்து பிடி, பற்றி நிறுத்து; கவனத்தை அசையாது நிறுத்து; (தொ.) drive nail in one's coffin, ஓயா நச்சரிப்பால் விரைவில் சாகடி; மட்டுமீறிய குடியினுல் விரைந்து உயிர்க்கு ஊறு தேடு; hard as nails, நன்கு பயிற்சி செய்யப்பட்ட, செப்பமுறப் பயிற்றுவிக்கப்பட்ட; hit the nail on the head, hit the right nail on the head, குறி தவருது செயல் வெற்றிகொள்; சரியான செயல்செய்; சரியான செய்தியில் கருத்துச் செலுத்து; சரியான விளக்கம் அளி; nail a lie to the counter, nail to barndoor, nail to counter, போலித் தன்மையை யாவரும் அறியச் செய்; nail up, ஆணிகளிட்டு இணை; ஆணியில் உயரத் தொங்கவிடு; on the nail, தாமதத்துக்கு இடமில்லாமல், பணம் கொடுப்பதில் தவணைக்கு வழிவைக்காமல்; right as nails, நிரம்பச் சரியான, குறைவற்ற; tooth and nail, முழுநிறை முயற்சியுடன்.

nail'-brush, *n.* நகந்துடைக்கும் தூரிகை.

nailed'-up, *a.* நன்கு கட்டமைக்கப்படாத; (தொ.) nailed-up drama, உறுப்புக்கள் நன்கு இணைக்கப்படாத செப்பமற்ற நாடகம்.

nail'er, *n.* ஆணி செய்பவர்.

nail'ery, *n.* ஆணி செய்யுமிடம்.

nail'-head, *n.* ஆணித்தலைப்பு, தரை; ஆணித்தலைப்புப் போன்ற சிற்ப ஒப்பனைக்கூறு.

nail'ing, *n.* ஆணி அடித்தல்; ஆணி செய்தல்; பற்றியிறுக்கல்; பற்றிப் பிடிப்பு.

nail'-scissors, *n.* நகம் வெட்டி.

nain'sook, (இ.) *n.* மிக நேர்த்தியான பருத்தியாடை வகை.

naive', *a.* சூதறியாத, பயிலா நடையுடைய, இன்னியல்பான, எளிமை நலமுடைய, பகட்டறியாத; நடிப்பறியாத, சூதுவாதற்ற.

naiv'ete, naiv'ety, *n.* இயலெளிமை; பயிலா நடை; சூதறியாப் பேச்சு; கரவின்மை.

nak'ed, *a.* உடுப்பற்ற, மேற்போர்வையற்ற; பாதுகாப்பற்ற; உறையற்ற; மேல் வளர்ச்சியற்ற, மரஞ்செடி கொடியற்ற, புல் புதரற்ற; மழுங்கலான; வெறுமையான; புறத்திரையற்ற; அகநிலைப் பாறை வகையில் புறந்தோன்றுகிற; புனைவற்ற, ஒப்பனையற்ற; உருமாருத; இயல் எளிமை வாய்ந்த; மறைவற்ற, ஒளிவற்ற; அறை-கட்டிட வகையில் தட்டுமுட்டற்ற; மரஞ்செடி வகையில் இலைதழையற்ற; துணையாதரவற்ற; துணை இணைவுகளற்ற; கருவித்துணை இல்லாத; வெறுமையான; வெட்டவெளியான; (தொ.) Naked Boys, Naked Lady, அல்லியினச் செடிவகை.

nak'er, *n.* முழா, போர்ப்பறை.

nam'able, *a.* பெயர் கூறத்தக்க; பெயர் குறிப்பிடப்படும் தகுதியுடைய.

nam'by-pam'by, *n.* பிதற்றுரை, சுவையற்ற பேதைமையுரை; *a.* சுவையற்ற, சுவையற்ற, போலிப் பசப்பான.

name, *n.* பெயர்; அடைமொழி, பண்பு சுட்டியழைக்கும் சொல்; பட்டப்பெயர், மதிப்பார்ந்த பெயர் வழக்கு; புகழ், மதிப்பு, சால்பு; குடிப்பெயர்; குடும்பம், இனக்குழு; பெயர் மட்டிலுமான நிலை, பொருண்மையற்ற நிலை; சிறப்பின்மை; போலித்தன்மை; மேற்கோள்; முறைமை; வேறு ஆட் பெயர்ப்புனைவு; *v.* பெயரிடு; பெயரிட்டழை; பெயர் கூறு; குறி; தனிப்படக் குறிப்பிடு; அமர்வி, பதவிக்கு அமர்த்து; பணிக்கெனச் சுட்டிக் குறிப்பிடு; சட்டமன்ற அவையில் முறைகேடான நடத்தை குறித்துப் பெயர் குறிப்பிடு; சான்ருக எடுத்துரை; குறித்து முடிவுறுதி கூறு; (தொ.) in name, பெயரால் மட்டும், போலியாக, பொருண்மையின்றி வெறும் பெயராக; in name of, in one's name, in the name of, பெயரால்; சார்பாக; அதிகாரத்தின்மீது; சான்ருக; ஆதரவை முன்வைத்து; நலத்தை முன்னிட்டு; மனத்திற்கொண்டு; name after a person, ஒருவர் பெயரை மதித்துப் பாராட்டி அதே பெயரை மற்றொருவருக்கு இடு; name the day, நாளை அறுதிசெய்து கூறு; திருமணநாளைக் குறிப்பிட்டுரை; மணமாகாப் பெண் வகையில் திருமணநாளைக் குறித்து விருப்பம் தெரிவி; name your price, விலைகுறி; not to be named in same day with, not to be named on same day with, எத்தனையோ மடங்கு தாழ்ந்த, மிகத் தாழ்ந்தபடியான.

name'-child, *n.* பெயராளன், தன் பெயரிட்ட குழந்தை.

named, *a.* பெயரிடப்பட்ட; பெயரையுடைய; என்ற பெயருடைய.

name'-day, *n.* தன் பெயருக்குரிய திருத்தகைப் புனிதர் திருநாள்.

name'less, *a.* பெயரற்ற; பெயரறியப்படாத; பெயர் குறிப்பிடப்படாத; பெயர்குறிக்க வேண்டாத; பெயர் குறிக்குந் தகுதியில்லாத, முக்கியத்துவமற்ற; மிகப் பொதுப்படையான, அற்பமான; புகழற்ற; வரையறுத்துரைக்க முடியாத; வருணிக்க முடியாத; சொற்கடந்த; மிக மோசமான; வெறுக்கத்தக்க; அருவருப்பான.

name'ly, *adv.* அதாவது.

name'-part, *n.* நாடகத்துக்குரிய பெயர்க் காரணமான பகுதி; பெயர்க்கூறு.

name'-sake, *n.* தம் பெயரை உடைய மற்றொருவர்; தன் பெயரைக் கொண்ட மற்றொரு பொருள்.

nan'cy, *n.* செயற்கைப் புணர்ச்சியாளர், தன்னொத்த பால் அவாவுடையவர்; *a.* தன்னொத்த பால் அவாவுடைய.

nankeen', *n.* மஞ்சள் பருத்தியால் செய்யப்பட்ட நூல் துணி வகை; மஞ்சள் அல்லது வெளிறிய மஞ்சள் நிறம்.

nan'ny, *n.* வெள்ளாட்டின் பெட்டை; செவிலித்தாய்.

Nantz, *n.* பழச்சாராயம்.

nap[1], *n.* சிறு துயில்; அரைத்தூக்கம்; பகலுறக்கம்; *v.* சிறுதுயில் கொள், சற்றே தூங்கிவிழு.

nap[2], *n.* மென்துய்ப்பரப்பு, ஆடையில் மேன்முனைப்பான வெட்டுத் துய்ப்பரப்பு; மெத்தென்ற மென்பரப்பு; *v.* ஆடையில் மேல் முனைப்பான வெட்டுத்துய்ப்பரப்பு அமை, தேங்காய்ப்பூப் பின்னல் அமை.

nap[3], *n.* தனித்தனிக் கட்சியான ஐவராடும் சீட்டாட்ட வகை; ஐவர் சீட்டாட்ட வகையில் ஐங்குறி மதிப்புக் கோரிக்கை; ஐவர் சீட்டாட்ட வகையில் ஐம்பொறிக் கெலிப்பு; வெற்றியுறுதி தரும் குதிரைப் போட்டிப் பந்தயக்குறிப்பு; வெற்றி

யுறுதியுடைய துணிந்த தேர்வு ; உடைமை முழுமையும் ஈடு படுத்திய துணிவுச் சூதாட்டச் செயல்; *v*. வெற்றியுறுதி யுடைய குதிரைப்பெயர் குறிப்பிடு; (தொ.) go nap, துணிந்த தேர்வுகள் ஐந்தும் கெலிக்கும் பொறுப்பேற்றுக்கொள் ; முழுதும் இழக்கத் துணிந்திறங்கு.

**nape**, *n*. கழுத்தின் பின்புறம், பிடரி, பின் கழுத்து.

**nap'ery**, *n*. மேசைத்துணி; குடும்பப் பயனீட்டுக்குரிய துணி.

**nap'-hand**, *n*. வெற்றியுறுதிக்கான நம்பிக்கைதரும் துணிந்த தேர்வுக்குரிய நிலை.

**naph'tha**, *n*. இரசகற்பூரத் தைலம்.

**naph'thalene, naph'thaline**, *n*. இரசகற்பூரம்.

**naph'thalize**, *v*. இரசகற்பூரத் தைலமூட்டு, இரசகற்பூரத் தைலங்கலந்து பதனூட்டு.

**nap'kin**, *n*. குறுந்துணி, துடைப்புக்குட்டை ; குழந்தையின் அணையாடை ; (தொ.) lay up in a napkin, பயன்படுத்தா மலே வைத்திரு.

**nap'kin-ring**, *n*. துடைப்புக்குட்டை வளையம்.

**napol'eon**, *n*. (வர.) இருபது பிரஞ்சு வெள்ளி கொண்ட முதல் நெப்போலியன் காலத்திய பிரஞ்சு தங்க நாணயம்; உயரக் கால் புதையரணம்; தனித்தனி ஆட்டமாக ஐவராடும் பிரஞ்சு சீட்டாட்ட வகை ; பனிக்கட்டியூட்டப்பட்ட உயர்தர அப்ப வகை; (தொ.) double napoleon, நெப்போலியன் காலத்திய 40 பிரஞ்சு வெள்ளிகொண்ட தங்க நாணயம்.

**Napoleon'ic**, *a*. (வர.) பிரஞ்சு பேரரசன் முதலாம் நெப் போலியனுக்கு உரிய ; முதலாம் நெப்போலியனைப்போன்ற ; மூன்றாவது நெப்போலியனுக்கு உரிய.

**napp'y**, *a*. சாராய வகையில் நுரைக்கிற, கடுமுனைப்பான.

**na'pu**, *n*. தென்கிழக்காசிய பகுதியிலுள்ள கத்தூரிமான் வகை.

**nar'ceine**, *n*. அபினியிலிருந்து எடுக்கப்படும் காரம், அபினி யைப்போல் பயன்படுத்தப்படும் அபினிக்காரம்.

**narciss'ism**, *n*. தற்பூசனை, தற்காதல்; தற்காதற் கோளாறு.

**Narciss'us**, *n*. முனைத்த மணமுடைய வெண்மலரும் அடித் தண்டுங்கொண்ட செடிவகை ; *pl*. Narciss'i, Narciss'uses.

**narc'olepsy**, *n*. துயில் மயக்கநோய், திடீர்த்தூக்கக் கோளாறு வகை.

**narcos'is**, *n*. மரமரப்பு மருந்தூட்டிய நிலை ; மரமரப்பு மருந் தூட்டல் ; நோவுணர்ச்சியற்ற நிலை.

**narcot'ic**, *n*. மரமரப்பூட்டும் மருந்து; நோவுணர்ச்சி அகற்றும் பொருள் ; மயக்கமருந்து ; துயிலூட்டும் பொருள் ; *a*. மரமரப்பூட்டுகிற, ஊறுணர்ச்சியகற்றுகிற ; மயக்கமூட்டு கிற ; துயிலூட்டுகிற ; நோவுணர்ச்சியற்ற நிலைசார்ந்த.

**narc'otism**, *n*. மயக்க மருந்தின் செயலாற்றற் பண்பு.

**narc'otize**, *v*. மயக்கமூட்டும் மருந்தின் செயலுக்கு உட் படுத்து.

**narg'hile**, *n*. நீரோடி குடிப்புக்குழல், நீருடாகப் புகை வரும்படி அமைக்கப்பட்ட புகைபிடிக்குங் குழாய்.

**narrate'**, *v*. எடுத்துரை, கதையாகக் கூறு ; கதையாக எழுது.

**narra'tion**, *n*. எடுத்துரைத்தல், தொடர்பாகச் சொல்லுதல் ; கதைப்படுத்துதல்.

**na'rrative**, *n*. கதை ; கதைக்கூற்று ; கூற்று ; தொடர் உரை ; கதைப்பகுதி ; நிகழ்ச்சி விரிவுரை ; *a*. கதை இயல் பான ; கதை வடிவான ; கதைக் கூற்றுக்குரிய ; தொடர் உரை சார்ந்த, வரிசைப்பட எடுத்துரைக்கிற.

**narra'tor**, *n*. கதை கூறுபவர்.

**na'rrow**, *a*. ஒடுக்கமான, அகலக்கட்டையான; நெருக்கமான, இடையகலங் குறைந்த ; கூம்பிய, குறுகிய ; விரிவகற்சிக் கிடமில்லாத, இடவளமற்ற ; முட்டுப்பாடான ; சுருங்கிய, குடுவை போன்ற ; எல்லைக்குறுக்கமான, அளவு வரையறைப் பட்ட ; குறுகிய அளவான ; சிறிதே விலகிய ; குறுகிய நோக்கமுடைய ; குறுகிய தன்னலமுடைய ; தாராள மனப் பான்மையற்ற ; குறுகிய வெறிபிடித்த ; கஞ்சத்தனமான ; கையிறுக்கமான ; கடுஞ்சிக்கனமான ; செல்வவளமற்ற ; குருட்டுத் தப்பெண்ணமுடைய; மிகு கண்டிப்பான; நுணுகிக் காண்கிற ; (ஒலி.) செறிவான ; *v*. ஒடுக்கு ; சுருக்கு ; குறுக்கு ; குறைபடு ; கட்டுப்படுத்து ; அடைத்திரு; ஒடுங்கு; சுருங்கு ; துன்னலில் தைப்புக்களின் எண்ணிக்கையினைக் குறைவாக்கு ; (தொ.) narrow bed, narrow cell, narrow house, கல்லறை ; narrow circumstances, வறுமைச்சூழல் கள், வறுமை; narrow cloth, 52 அங்குலத்துக்குக் குறைவான துணிவகை; narrow escape, மயிரிழை தப்பிய நிலை; narrow examination, அஃகிய தேர்வாய்வு; narrow gauge, இருப்புப் பாதையில் 4 அடி 8½ அங்குல அகலத்திற்குக் குறைந்த தண்ட வாள அமைவு ; narrow goods, இழைக்கச்சை-சடை முதலிய வாணிகப் பொருள்கள் ; narrow majority, சிறிதே மிகுந்த மேம்பாடுடைய பெரும்பான்மை ; narrow seas, பிரிட்டானிய தீவுகளைச் சூழ்ந்த சிறுகடல்கள்.

**na'rrow-mind'ed**, *a*. குறுகிய நோக்கம் வாய்ந்த ; தாராள மனப்பான்மையற்ற ; பழைய குருட்டுத் தப்பெண்ணங்களை உடைய.

**na'rrows**, *n. pl*. இடுக்கு வழி ; ஒடுங்கிய கால்வாய் ; ஆற்றிடுக்கு ; கடலிடுக்கின் மிக ஒடுங்கிய பகுதி ; தெருவின் ஒடுங்கிய இடம்.

**nar'thex**, *n*. பெண்டிர்-நோன்பிகள்-சமயப் புத்தேற்பாளர்கள் வருவதற்குரிய மூற்காலத் திருக்கோயிலின் அழியிடப்பட்ட மேற்கு முகப்புவாயில்.

**nar'whal**, *n*. கொம்பன் திமிங்கிலம், ஒற்றை அல்லது இரட் டைத் தந்தங்களையுடைய திமிங்கில வகை.

**nas'al**, *n*. மூக்கொலி ; மூக்கொலியெழுத்து ; மூக்கிடைத் தட்டு இணை எலும்பு ; கவசத்தில் மூக்குறுப்பு ; *a*. மூக்குக் குரிய ; மூக்கு வழியாய் ஒலிக்கிற ; மூக்கொலி சார்ந்த.

**nasal'ity**, *n*. மூக்கொலிப்பு.

**nasaliza'tion**, *n*. மூக்கொலிப்படுத்துதல்.

**nas'alize**, *v*. மூக்கொலிப்படுத்து.

**nas'cency**, *n*. தோற்றம் எடுக்கும் நிலை, முதிரா நிலை.

**nas'cent**, *a*. பிறக்கும் நிலையிலுள்ள, முழு வளர்ச்சி எய்தாத.

**nase'berry**, *n*. சடாமாஞ்சிப்பழம் ; சடாமாஞ்சி மரம்.

**nas'o-fron'tal**, *a*. மூக்கையும் நெற்றியையுஞ் சார்ந்த.

**nastur'tium**, *n*. உணவாகப் பயன்படும் நீர்வாழ் செடிவகை; செம்பொன் நிற மலர்களையுடைய தூங்கு கொடிவகை.

**nas'ty**, *a*. அருவருக்கத்தக்க அளவு அழுக்கடைந்த, ஆபாச மான ; ஊசிய, சுவைமணங் கெட்ட ; ஓயாத் தொந்தரவான; தூறலும் சேறும் நிறைந்த, காற்றும் மழையும் மிக்க ; இடர் வாய்ந்த, கேடார்ந்த ; விடாச்சனியான ; தீயொழுக்கத்தில் கிடந்துழல்கிற ; நடைநலமற்ற ; கோணல் நடை வாய்ந்த ; விரும்பத்தகாத ; தகாத்தனமான ; சிடுசிடுப்பான ; குணங் கெட்ட, கெடுமதியுடைய, பகைக்குங் குணமுடைய.

**nat'al**, *a*. பிறப்புச் சார்ந்த ; பிறப்பு முதல் தொடர்கிற.

**natal'ity**, *n*. பிறப்பு வீதம் ; பிறப்பு.

**nata'tion**, *n*. நீந்துதல்.

**natator'ial, nat'atory**, *a*. நீந்துகிற ; நீந்துதல் சார்ந்த.

**nat'es**, *n. pl*. (உள்.) பிட்டம் ; பார்வை சார்ந்த மூளையின் முன்புற அலகுகள்.

**na'tion**, *n*. இனம், தேசிய இனம் ; நாட்டினம் ; (தொ.) law of nations, நாடுகளிடையே ஒழுங்கு நிறுவும் சட்டக் கட்டுப்பாடு, League of Nations, சர்வதேச சங்கம், போரைத் தடுத்து நிறுத்தும் நோக்குடன் 1919-இல் முதல் உலகப்போர் முடிவில் உடன்படிக்கையாலமைந்த பன்னாட்டு அமைப்பு ; most favoured nation, குறைந்த அளவான காப்புவரிச் சலுகை பெறும் நாடு ; United Nations, ஐக்கிய நாடுகள் அமைப்பு, முதலில் 1942-இல் அச்சு வல்லரசுகளுக்கெதிரான நேசதேச அமைப்பாகத் தொடங்கி 1945-இல் இரண்டாம் உலகப் போரின்பின் அமைதி விரும்பும் உலகநாடுகளின் கூட்டாகச் சீரமைக்கப்பட்ட அமைப்பு.

**na'tional**, *a.* நாட்டினத்துக்குரிய ; நாட்டுப் பொதுத்தளத் துக்குரிய, தேசம் முழுமைக்கும் உரிய ; தேசிய, நாட்டுக்குச் சிறப்புரிமையான ; நாட்டினத்தின் தனிப்பண்புக்குரிய ; தேசிய இனங்களுக்குரிய, நாட்டினங்களுக்குரிய, நாடுகளுக் குரிய ; (தொ.) Grand National, Grand National Steeple-chase, ஆண்டுதோறும் மார்ச்சு மாதத்தில் நடைபெறும் நீளிடை வழித்தடங்கல் குதிரைப் போட்டிப் பந்தயம் ; national air, national anthem, நாட்டுரிமைப்பண், தேசிய கீதம் ; national church, நாட்டு அரசியல் ஏற்புரிமை பெற்ற முறையார்ந்த திருச்சபை நிறுவனம் ; National Convention, பிரான்சில் பிரஞ்சுப் புரட்சிக் காலங்களில் 1792 முதல் 1795 வரை நடைமுறையிலிருந்த நிறை உரிமைப் பேரவை ; national debt, தேசியக் கடன், நாட்டின் பெயரால் அரசிய லாரால் வாங்கப்பெற்றுத் திருப்பியளிக்கப் பெருதிருக்கும் தொகை ; National Guard, 1789-இல் முதலில் அமைக்கப் பட்ட பிரஞ்சுப் புரட்சிப் படை ; national school, இங்கிலாந் தில் 1811-ல் தொடக்கக்கல்வி பரப்புதற்காக அமைக்கப்பட்ட தேசியக்கழகத் தொடர்புகொண்ட பள்ளி ; National Socialist Party, செர்மனியில் ஹிட்லரால் அமைக்கப்பட்ட நாஜிக் கட்சி.

**na'tionalism**, *n.* நாட்டுப்பற்று ; தேசியக் கோட்பாடு ; தேசிய நடைமுறை ; தேசியத் தன்னுட்சிக்கொள்கை, நாட்டு விடுதலையுரிமைக் கோட்பாடு ; தொழில் துறையைத் தேசிய மாக்குங் கொள்கை.

**na'tionalist**, *n.* தேசியவாதி, நாட்டு ஒருமைப்பாட்டுக் கொள்கையுடையவர் ; நாட்டுத் தனியாட்சியுரிமைக் கோட் பாட்டாளர் ; தேசிய நலங்களின் பற்றுர்வலர் ; நாட்டின் பேரரசாட்சியாற்றலில் அக்கறை கொண்டவர் ; நாட்டு நலங் கட்காக உழைப்பவர்.

**nationalist'ic**, *a.* தேசியஞ்சார்ந்த.

**national'ity**, *n.* நாட்டுரிமைப்பண்பு ; தேசியத்தன்மை ; நாட்டினச் சார்பு, தேசிய இன உறுப்பாண்மை சார்ந்த நாட்டினம் ; நாட்டின வாழ்வு ; தேசியப் பண்புடைய மக்கள் தொகுதி ; தேசிய இனம், அரசியல் நாட்டுப் பிரிவு ஒன்றன் கூறுக உள்ள இனம் ; இனத்தேசியக் கூறு, நாட்டுப் பிரிவு கள் பலவற்றின் கூறுகப் பரவியுள்ள இனக்கூறு.

**nationaliza'tion**, *n.* தேசிய மயமாக்குதல் ; நாட்டின் உரிமையாக்கம், நாட்டுடைமையாக்கம், நாட்டியலாக்கம்.

**na'tionalize**, *v.* தேசிய மயமாக்கு; நாட்டின் உரிமையாக்கு; அயல் நாட்டவர் வகையில் தேசியப் பண்பூட்டு ; தேசிய உடைமையாக்கு ; தேசியப் பொது ஆட்சிக்கு உட்படுத்து.

**na'tionals**, *n.* நாடொத்தவர் ; இனமொத்தவர்.

**nat'ive**, *n.* திணைப் பிறப்புரிமையாளர் ; பிறப்புரிமை ஆய்வு நிலையில் இருக்கப் பெற்றவர் ; ஆஸ்திரேலியாவிற் பிறந்த வெள்ளையர்; ஐரோப்பியரல்லாதவர் ; மேலை நாகரிகத்துக்குப் புறம்பான இனத்தவர் ; வெள்ளையருக்கு அயலான நிறத்தை யுடையவர் ; வெள்ளையருக்கு அயலான நிறத்தவர் தொகுதி; திணையுரிமைச் செடிகொடி ; திணைக்குரிய உயிரி ; பிரிட்டன் நீர் எல்லையில் வளர்ந்த கிளிஞ்சில் வகை ; பிரிட்டன் நீர் எல்லையில் செயற்கைத் தொட்டியில் வளர்க்கப்பட்ட கிளிஞ் சில் வகை ; *a.* இயல்பான உரிமையுடைய ; இயற்கையான ; உள்ளார்ந்த ; பிறப்புரிமையான ; அடிப்படைக்கூறுன ; இயற்கை நிலையினையுடைய ; செயற்கை ஒப்பனையற்ற ; செயற்கை மாறுதலற்ற ; எளிய ; இயல்பான இடத்திற் காணப்படுகிற, தன்னிடத்திலேயே உள்ள ; கனிப்பொருள் வகையில் இயலுருவான ; கனிப்பொருள் வகையில் இயற்கை யிலேயே நேரடியாகப் பெற்ற ; பிறப்புரிமையான, பிறப்பிலே உரிமைப்பட்ட ; பிறப்பிலிருந்தே உரிமைப்பட்ட; திணைப் பிறந்த ; திணையிலிருந்து தோன்றிய ; திணையிலிருந்து உருவான ; அயல் வரவல்லாத ; இனமக்களுக்குரிய ; இன மக்களிடையே அயல்வரவின் முன்னரே காணப்பட்ட ; பிறப்புடன் இணைந்த ; ஆஸ்திரேலிய செடி கொடி உயிர் வகைகளில் ஆஸ்திரேலிய முன்மரபு மாதிரி சார்ந்த; கிளிஞ்சில் வகையில் பிரிட்டனில் செயற்கைத் தொட்டிகளில் பயிற்றி வளர்க்கப்பட்ட ; (தொ.) go native, திணைநிலைக் குடிமக்க ளுடன் பழகி அவர்கள் நடையுடைபாணி மேற்கொள்ளு ; native rock, தன்னியல்பான இடத்திலேயே இருக்கும் பாறை; சுரங்கமிடப்படாத பாறை ; native princes, திணைக்குடி மன்னர்.

**nat'ivism**, *n.* அகநிலைக் கருத்துக்கோட்பாடு ; திணைக்குடி யாதரவுக் கோட்பாடு.

**nativ'ity**, *n.* பிறப்பு ; பிறப்புநிலை ; பிறப்பிடம் ; பிறந்த நேரம் ; பிறக்கும் முறை ; பிறப்புப்பற்றிய விவரம், ஜாதகம், பிறப்புப்பட்டி ; பிறப்புக்குரிய சார்பு நாட்டினம்; திணைநிலைப் பிறப்பு ; திணைநிலைப் பிறப்புரிமை ; இயேசுநாதர் பிறப்பு; இயேசுநாதர் பிறப்புப்படம்; இயேசுநாதர் பிறப்புநாள் விழா, கிறிஸ்துமஸ் பண்டிகை ; கன்னிமரி பிறப்பு, செப்டம்பர் 8; தூய திரு. ஜான் பிறப்பு, ஜூன் 24.

**nat'ron**, *n.* ஏரிக்கரைகளில் கிடைக்கும் நீருட்ட வெடியக்கரியகி.

**natt'er**, *v.* (பே-வ.) சோம்பேறித்தனமாக வெற்றுரையாடு; முணுமுணு ; கடுகடுப்பாகப் பேசு.

**natt'erjack**, *n.* முதுகில் மஞ்சள் வரைகளையுடைய பிரிட்டா னிய தேரைவகை.

**natt'ier blue**, *n.* நீலத்தின் மென்சாயல் வண்ணம்.

**natt'y**, *a.* ஒழுங்குபட்ட, நேர்த்தியான, நுட்பநய நேர்த்தி வாய்ந்த ; கைத்திறமிக்க ; கைத்திறங் காட்டுகிற.

**na'tural**, *n.* பிறவி மந்தன் ; இசைத்துறையில் பொதுநிலைத் தொனி, முன்னதைப் பொதுநிலை ஆக்குந் தொனி; சீட்டாட்ட வகையில் முதலில் 21 குறி எண் கெலிப்பவர் ; *a.* இயற்கை சார்ந்த; இயல்பாக உண்டான; இயற்கையைப் பின்பற்றிய; இயற்கையால் வழங்கப்பட்ட ; ஆண்டு முதலியவற்றின் வகையில் இயற்கையை அடிப்படையாகக் கொண்ட ; இயல் பான ; தெய்விக அருநிகழ்வல்லாத ; இறையருள் வெளிப் பாடு சாராத; ஆன்மிகச் சார்பற்ற; புனையப்படாத; அறிவு நிலைக் கட்டமைப்புச் சாராத ; இயற்கைநிலை மாருத; மனிதத் தலையீட்டால் மாற்றப்படாத ; சாவு வகையில் இயற்கார ணங்களாலான, கொலை இடையூறுகளுக்கு உள்ளாகாத ; உள்ளார்ந்த, இயலுணர்ச்சி சார்ந்த ; இயலற உணர்வு சார்ந்த ; இயற்கைத் தூண்டுதலுக்குரிய நல்லுணர்ச்சிகளின் பாற்பட்ட ; அன்புப் பாசமுடைய ; பொதுநிலையான ; தானுகச் செயலாற்றுகிற ; இயல் நிகழ்வான ; வழக்கமான, பொது நடைமுறையிலுள்ள ; வியப்புக்கு இடனற்ற ; எதிர் பார்க்கத்தக்க ; உயிர்ப்பண்புடைய ; நடை எளிமையுடைய, பகட்டற்ற ; இயல் எளிமையுடைய, செயற்கை நடிப்பற்ற ; எளிவரலுடைய; இயற்கை மரபான; வலிந்து செய்யப்படாத; வலிந்துபெறப்படாத, பிறப்பினுல் தொடர்புடைய, தத்தெடுக் கப்படாத ; முறைகேடான ; திணைநிலைப் பிறப்புடைய; திணை நிலைப் பிறப்புரிமையுடைய ; இயல்நிலையிலுள்ள, திருந்தா நிலையுடைய; இசைத்துறையில் தொனி வகையில் பொதுநிலை யுடைய ; இயல்துறை சார்ந்த ; (தொ.) natural gas, நிலத்தி லிருந்து வெளிப்படும் வளி; natural history, நிலவுலகத்தையும் அதன் விளைவு வளங்களையும் ஆயும் பொது ஆய்வுத்துறை, தாவர இயல்-விலங்கு நூல்-கருப்பொருள் நூல் ஆகியவற்றின் தொகுதி ; களத்துறைக் கருப்பொருள்நூல் ; natural law, இயலமைதி, இயற்கையின் ஒழுங்கு ; சமயமும் சட்டமும் சாராத மனச்சான்றடிப்படையான நன்மை தீமையறிவமைதி; natural magic, இயலாற்றலின் சிறப்பறிவுத் துணையால் இயக்கப்படும் அருஞ்செயல் நிகழ்வு ; செப்படிவித்தை, கைத் திற வித்தை ; கலைத்துறைக் கற்பனையின் மாயக் கவர்ச்சி யாற்றல் ; natural numbers, முழு எண்கள் ; natural order, தாவரக் குடும்பம் ; natural orders, இயல்நூற் பெரும்பிரிவு கள் ; natural philosophy, இயற்பியலாய்வு ; பௌதிக ஆராய்ச்சி; natural science, உளநூல்-அறநூல்-கணக்கியல் அல்லாத புறநிலை இயற்கை ஆராய்ச்சித்துறை ; natural religion, பகுத்தறிவார்ந்த சமயம் ; natural selection, இயல் தேர்வு விளைவு ; மரபுப்பண்புகளும் போட்டியின் விளைவான தகுதி நேர்வுப்பண்புகளும் சேர்ந்த இயற்கை இயல் வளர்ச்சி யின் தேர்வு ; natural son, சட்டப்படிச் செல்லாத மகன் ; natural system, இயல்மரபு வழாத வகைதொகைப் பாகுபாடு; natural theology, பகுத்தறிவார்ந்த இறைமை நூல்.

na'tural-born, *a.* திணைப்பிறப்புடைய.

na'turalism, *n.* இயற்கைப் பண்பாடு, இயற்கை வாய்மை நிலையினை அணுக்கமாகப் பின்பற்றும் முறை; வாய்மைப் பண்பு, கலை இலக்கியத் துறைகளில் வாய்மை வழுவாமையே குறிக்கோள் எனக் கருதும் பண்பாடு; நேர் வாய்மையியல்; மரபுப் பண்புகளை விலக்கி இயல்பு நிலையே பின்பற்றும் முறை; இயற்சமயக் கோட்பாடு, இயற்கை கடவாத சமய நம்பிக்கை; இயற்கை ஆத்திகம், இறையருள் வெளிப்பாடு இடம் பெறாத இறை நம்பிக்கை; இயற்கை அடிப்படையான சமய அறநெறி முறைமை; இயலுணர்ச்சிகளின் அடிப்படையான செயல்நெறி முறை; (மெய்.) இயற் கோட்பாடு, இயற்கை கடந்த பண்புகளை விலக்கிய உலகியல் கொள்கை.

na'turalist, *n.* இயற்கைப் பண்பாடு பின்பற்றுபவர்; கலை-இலக்கியத் துறையில் வாய்மைப் பண்பாளர்; நேர் வாய்மையியல் பின்பற்றுபவர்; இயற்சமயக் கோட்பாட்டாளர்; இயற் கோட்பாட்டாளர்; செடிகொடி உயிரின ஆராய்ச்சியாளர்; நாய்களையும் கூண்டில் வளர்க்கப்படும் உயிரினங்களையும் வைத்து வாணிகஞ் செய்பவர்; பஞ்சு முதலியன உள் திணித்து மாண்ட உயிரின உடல் பதனஞ் செய்து வாணிகஞ் செய்பவர்; *a.* இயற்கைப் பண்பாடு சார்ந்த; வாய்மைப் பண்புடைய; இயற்கோட்பாடு சார்ந்த; இயற்பண்புக் குகந்த; இயற்கோட்பாட்டுக்கியைந்த; இயல் நூல்துறை சார்ந்த.

naturalis'tic, *a.*=naturalist.

na'turalize, *v.* அயல் நாட்டவருக்குக் குடியுரிமை வழங்கு; அயலினச் சொற்களையோ பழக்க வழக்கங்களையோ மேற் கொண்டு வழங்கு; செடி கொடி உயிரினங்களைப் புதுநிலத்தில் பயிற்றிப் புகுத்து; இயற்பண்பூட்டு; மரபு முறைகளைத் தவிர்க்கச் செய்; அருநிகழ்வுப் பண்புகளைத் தவிர்த்து விடு, இயல் அடிப்படையுடையதாக்கு; குடியுரிமையுடையவராகு; திணை இயைவு பெறு; இயற்பியல் ஆய்வு பயில்.

na'turally, *adv.* இயல்பாக; இயற்கை மரபு வழியாக; இயல்பான முறையில்; இயற்கையைப் பின்பற்றி; தன் இயல்புக்கிசைவாக; உயிரின் இயல்புப்படி; வழக்கப்படி, பொது வழக்காற்றினையொட்டி; எதிர்பார்க்கப்பட்டபடியே.

Na'ture[1], *n.* இயற்கை ஆற்றல், இயற்சத்தி.

na'ture[2], *n.* இயற்கை; இயலுலகு; இயற்கைநிலை; இயற்கை மரபு; இயல் நடைமுறை; இயலாற்றல்; இயலாட்சி; இயல் வளர்ச்சித்திறம்; இயல்நிலை ஒழுங்கு; இயல் வாய்மை; இயல்பு; இயல்பான தன்மை; உள்ளார்ந்த பண்பு; உள்ளுரம்; மனப்பண்பு; இயலுணர்ச்சிப் பண்பு; குணம்; இயல்புடையவர்; குணமுடையவர்; வகை, மாதிரி; தன்மை; தரம், தர அளவு, வகைத்திறம்; உள்ளாற்றல்; உயிராற்றல்; உயிரியக்கம்; கலைத் துறையில் இயற்கை வாய்மை; மூல இயற்கைநிலை, சமுதாய வளர்ச்சிக்கு முற்பட்டகால மனித வாழ்க்கைநிலை; செடி கொடி விலங்குகள் வகையில் பயிற்று வித்துப் பழக்கப்படாத நிலை; ஆடையற்ற நிலை; மர உணவுச் சாறு, பாலரக்குச் சாறு; (தொ.) debt of nature, சாவு, மாள்வு; ease nature, relieve nature, குடல் இளக்கி மலம் வெளியேற்று; nature study, பொதுநிலைச் செடிகொடி உயிர் பற்றிய ஆய்வறிவுத்துறை; state of nature, இறையருளால் மீட்கப்படாத இயற்கை மனநிலை; touch of nature, இயற் பண்புக்கூறு; (பே-வ.) பிறர் ஒத்துணர்வை இயக்கவல்ல உணர்ச்சிக்கூறு.

na'ture-cure, *n.* இயற்கை மருத்துவமுறை, இயற்கையின் போக்கிலேயே குணங்காண விடும்படி நடத்தப்படும் மருத்துவ முறை.

na'ture-print'ing, *n.* இயலழுத்த அச்சு, இயற்கைப் பொருள்கள் அழுத்தி எடுக்கப்பட்ட பாளங்களினுல் எடுக்கப் படும் அச்சுமுறை.

naught, *n.* ஒன்றுமின்மை, இன்மை; (கண.) இன்மைக்குறி, சுழி; *a.* தகுதியற்ற, பயனற்ற; (தொ.) come to naught, ஒரு பயனுமில்லாமற் போ, முழுத் தோல்வியடை; set at naught, பொருட்படுத்தாதிரு, அலட்சியப்படுத்து.

naught'y, *a.* குறும்புத்தனமான, கீழ்ப்படிதலற்ற, நன்னடக்கையற்ற; கெட்ட, குறைகூறத்தக்க, கயமைத்தனமான.

naus'ea, *n.* நோய்மையுணர்ச்சி; கப்பற் பயணத்தில் குமட்டல் உணர்ச்சி; அருவருப்பு.

naus'eate, *v.* உணவு வெறுப்பூட்டு; அருவருப்பூட்டு; கடற் பயணக் குமட்டற் கோளாறு அடைவி; குமட்டலுணர்ச்சி கொள்; உணவு வெறு; அருவருப்புக் கொள், வெறுப்பு அடை.

naus'eous, *a.* குமட்டுகிற; அருவருப்பான மணஞ்சுவையுடைய, வெறுக்கத்தக்க.

nautch, (இ.) *n.* நாட்டியத் தொழிலர் காட்சி.

naut'ical, *a.* கப்பல்துறை சார்ந்த; கப்பலோட்டிகள் பற்றிய; கடலோடிகளுக்குரிய; கடற்படை-வணிகக்கப்பல் ஆகியவை பற்றிய; (தொ.) nautical almanac, கடல் நிலைப்பட்டி, வானிலை-கடலெழுச்சி-வேலை ஏற்ற இறக்கம் ஆகியவைபற்றிய செய்திகள் கொண்ட கடலோடிகளின் ஆண்டுக் குறிப்புநூல்.

naut'ilus, *n.* நத்தை வகை.

nav'al, *a.* கடற்படைக்குரிய; கடற்படையிலுள்ள; கடற் படைக்கான; கப்பலுக்கான; கப்பலுக்குரிய; கப்பற் படையினுல் வெல்லப்பட்ட; கப்பற் படையினுல் ஆற்றப்பட்ட; போர்க் கப்பலைத் தளமாகக் கொண்ட; போர்க்கப்பல்கள் அடங்கிய; (தொ.) Naval Aviation, கடற்படையின் விமானக் கிளைத்துறை; naval officer, கடற்படைத்துறை அதிகாரி; naval stores, கடற்படைக்கான பொருட்கிடங்கு.

nave[1], *n.* சக்கரத்தின் குடம், சக்கரத்தில் அச்சைப் பொருத்துமிடம்.

nave[2], *n.* கிறித்தவத் திருக்கோயிலின் நடுக்கூடம்.

nav'el, *n.* கொப்பூழ், உந்தி; மையப்புள்ளி; (தொ.) navel orange, கொப்பூழ் போன்ற உச்சி அமைவுடைய கிச்சிலிப் பழ வகை.

nav'el-string, *n.* கொப்பூழ்க்கொடி.

nav'el-wort, *n.* செடிவகை.

nav'icert, *n.* கப்பலின் போர்க்காலச் சரக்குச் சான்றிதழ்; சரக்கு வகைக்குக் கடப்புரிமைச்சீட்டு.

navic'ular, *n.* கை-கால்களிலுள்ள படகுவடிவ எலும்பு; குதிரையின் படகு வடிவ எலும்பில் வரும் நோய் வகை; *a.* படகு வடிவுடைய, தோணி போன்ற; (தொ.) navicular bone, கை-காலிலுள்ள தோணி போன்ற எலும்பு.

nav'igable, *a.* நீர்வழிப் போக்குவரவுக்குரிய; கப்பல் செலத்தக்க; கடல் திறமுடைய, கப்பல் வகையில் கடற் பயணத்துக்கேற்ற நன்னிலையில் உள்ள; பறவைக் கப்பல் வகையில் விரும்பிய வழிச் செலுத்தத்தக்க.

nav'igate, *v.* கடலிற் செலுத்து; கடற்பயணஞ் செய்; நீர் வழிச் செலுத்து; நீர்வழிப் போக்குவரவு செய்; விமானத்தை உகைத்துச் செல்; கப்பலைக் குறித்த திசையிற் செலுத்து; விமானத்தை விரும்பிய திசையில் இயக்கு.

naviga'tion, *n.* கடற் பயணம்; நீர்வழிச் செலவு; விமான வகையில் அகல்வெளிச் செலவு; கப்பல் வழிநிலை தெரிமுறை; வானூர்தி நெறிநிலை தெரிமுறை; நீர்வழிச் செலவுத் திறம்; (தொ.) aeriel navigation, வான்வழிச் செலவு; inland navigation, உள்நாட்டு நீர்வழிச் செலவு, ஆறு-கால்வாய்-ஏரிகள் வழிப் போக்குவரவு.

naviga'tion-coal, *n.* நீராவிக் கொதிகலங்களுக்குப் பயன் படுத்தப் பெறும் நிலக்கரி வகை.

nav'igator, *n.* கடல்வழி வல்லுநர், திறமை வாய்ந்த கப்பலோட்டி; கடல்சூழ் வரவாளர், கடற் பயணப் பொறுப்பு ஏற்பவர்; புதுக் கடல்வழி காண்பவர், புதுக் கடலிடம் புகுபவர்.

navv'y, *n.* கால்வாய்-இருப்புப்பாதை-சாலை முதலிய துறைகளில் அகழ்வுத் துறைப் பணியாள்.

nav'y, *n.* கப்பற்படை; கப்பற் கூட்டம், கப்பல் தொகுதி; நாட்டுக் கடற்படைத்துறை, கடற்படைக் கப்பல்களும் கப்பற் பணியாளர்களும் சேர்ந்த தொகுதி; (தொ.) navy bill,

கடற்படைத் தலைமை நிலையம் அளிக்கும் காசோலை; navy blue, கடற்படைத் துறையினர் அணியும் ஆழ்ந்த நீலநிற ஆடை; navy cut, மெல்லிதாக நறுக்கப்பட்ட புகையிலைச் சுருளை; navy league, கடற்படையில் நாட்டு மக்களின் ஆர்வத்தைத் தூண்ட அமைக்கப்பட்ட குழு; navy list, படைத் துறைப் பெயர்கள்-செய்திகள் கொண்ட கடற்படைப் பணி நிலைய ஏடு.

nawab', *n.* மாகாண ஆட்சியாளர்; பெருமகன், செல்வச் சீமான்.

nay, *n.* அன்றெனும் சொல்; மறுப்பு; எதிர்ப்புரை; *adv.* அப்படியன்று; இன்னும் சொல்லப்போனால்; உண்மையில், மெய்யாக.

Nazarene', *n.* நாசரேத் நகரத்தவர்; கிறித்தவர்; பழங்கால யூத கிறித்தவக் கிளைமரபினர்; *a.* நாசரேத் நகரைச் சார்ந்த; கிறித்தவரான; யூத கிறித்தவர்களைச் சார்ந்த.

Naz'arite[1], *n.* நாசரேத் நகரத்தவர்.

Naz'arite[2], *n.* யூத நோன்பி.

naze, *n.* நிலக்கூம்பு முனை, கடலுள் உந்தி நிற்கும் நிலக் கோடு.

Na'zi, *n.* செர்மானிய தேசிய சமநெறிக் கட்சியின் உறுப்பினர்.

Naz'irite, *n.*=Nazarite[2].

neap, *n.* வியன்கால் வேலை ஏற்ற இறக்கம், மதி வட்டத்தின் முதற்காலிலும் மூன்றும் காலிலும் நிகழும் மட்ட வேலை ஏற்ற இறக்கம்; *v.* அலை வகையில் மட்ட வேலை ஏற்ற இறக்கமடை; கப்பல் வகையில் மட்ட வேலை ஏற்ற இறக்கத்தால் பின் தங்கலுறு.

Neapol'itan, *n.* இத்தாலிநாட்டு நேப்பிள்ஸ் (Naples) நகரத்தவர்; *a.* நேப்பிள்ஸ் நகரம் சார்ந்த; (தொ.) Neapolitan ice, பல நறுஞ்சுவை வண்ண அடுக்குடைய உறைபாலேடு; Neapolitan violet, இருவகை நறுமணங் கொண்ட தனிமலர் வகை.

neap'-tide', *n.*=neap.

near, *a.* அணுக்கமான, நெருங்கிய உறவுடைய; நெருக்கமான, நெருங்கிய பழக்கமுடைய; இப்பாலான, நெருங்கிய தொலைவிலுள்ள; அருகிலுள்ள; கால அணிமையுடைய; குறுகிய தொலைவுடைய, நேர் குறுக்கான; இடது பக்கமான; நெருங்கிய ஒப்புமையுடைய; அணுக்க ஏற்றத் தாழ்வான; நுணுகி நோக்க வேண்டிய, நுட்பமான; இடுங்கிய; மயிரிழை தப்பிய; *adv.* அருகில்; கால அணிமையில்; ஏறத்தாழ; கிட்டத்தட்ட; நெருக்கமாக, அணித்தாக; கஞ்சத்தனமாக; கிட்டத்தட்ட முனைந்தொருங்கி; *prep.* அருகே; நெருங்கி; தொலை குறைவாக; அடுத்து, பக்கத்தில்; நுணுக்கமாக; கால அணித்தாக; *v.* அணுகு, நெருங்கு; (தொ.) far and near, எங்கும், எல்லா இடத்திலும்; near at hand, கைக்கெட்டிய தொலைவில்; மிக அண்மைக் காலத்தில்; near by, சிறிது தொலைவில்; near miss, மயிரிழை தப்பிய நிலை; near upon, விரைவில், மிக அணித்தான காலத்தில், நெருங்கி; near work, அருகில் வைத்து நுணுகிப் பார்த்துச் செய்யவேண்டிய வேலை; the near distance, முகப்புக்கும் பின்னணிக்கும் இடைப்படு தொலைவுத் தோற்றம்.

Nearc'tic, *a.* (வில.) வட அமெரிக்காவின் குளிர் மட்டு வெப்ப மண்டலங்களைச் சார்ந்த.

near'ly, *adv.* கிட்டத்தட்ட; ஏறத்தாழ, நுணுகி; மிக அணுக்கமாக, நெருக்கமாக.

near'-sighted, *a.* அணிமைப் பார்வையுள்ள, குறுக்கப் பார்வையுள்ள; வருவது உணராத.

neat'[1], *n.* எருது, மாட்டின விலங்கு, கால்நடைகள்.

neat[2], *a.* நேர்த்தியான, செப்பமிக்க தோற்றமுடைய; செம்மையான, ஒழுங்கமைப்புடைய; நேரிய; அமைப் பெளிமை வாய்ந்த; மொழிநடை-சொற்கள் வகையில் திட்பம் வாய்ந்த, திட்ப நுட்பம் இயைந்த; செயல் திறமிக்க; எளிமை வண்ணஞ் சான்ற; முறைமை வாய்ந்த; துப்புரவான, அப்பழுக்கற்ற; மது வகையில் நீர் கலவாத.

neath, *prep.* (செய்.) கிழே, அடியில்.

neat'-handed, *a.* கைத்திறம் வாய்ந்த.

neat'-herd, *n.* ஆயர், ஆனிரை மேய்ப்பவர், இடையர்.

neat'-house, *n.* மாட்டுத்தொழுவம், கால்நடைப்பட்டி.

neat'ly, *adv.* துப்புரவாக; ஒழுங்கெளிமையுடன்; கைத்திற எளிமையுடன்.

neat'ness, *n.* துப்புரவு; ஒழுங்கெளிமை; எளிமைத்திறம்.

neat's'-foot, *n.* மாட்டுக் காலடி இறைச்சிக்கறி.

neat's'-leather, *n.* மாட்டுத்தோல்.

neat's'-tongue, *n.* மாட்டுநா இறைச்சிக்கறி.

neb, *n.* அலகு; மூக்கு; மூஞ்சி; முகறை நுனி; மூக்குப் போன்ற கூம்பு முனை; நுனி.

neb'ula, *n.* விழி வெண்கோளத்திற் படர்ந்து பார்வைக் கோளாறு உண்டாக்கும் மேகம் போன்ற மறு அல்லது புள்ளி; (வான்.) ஒண்முகிற் படலம்; ஒண்மீன் படலம், ஒளி ஆவி போலத் தோன்றும் நீணெடுந் தொலை விண்மீன் குழாம்; *pl.* neb'ulae.

neb'ular, *a.* ஒண்மீன் படலஞ் சார்ந்த; (தொ.) nebular hypothesis, nebular theory, ஞாயிற்று மண்டலமும் பிற விண்மீன் மண்டலங்களும் ஒண்மீன் படத்திலிருந்தே தோன்றின என்னும் கொள்கைவாதம்.

nebul'ium, *n.* வண்ணப்பட்டையின் பச்சைநிறப் பகுதியில் உள்ள ஒளிமிக்க வரிகளின் காரணமாக முன்னால் கருதப்பட்ட வளி மூலப் பொருள்.

neb'ulous, *a.* (வான்.) ஒண்மீன் படலத்துக்குரிய; ஒண்மீன் படலம் போன்ற; முகில் போன்ற; மஞ்சு படர்ந்தாற் போன்ற; மங்கலான, தெளிவற்ற, தெளிவான உருவற்ற; கலங்கலான, குழம்பிய; (தொ.) nebulous star, தெளிவற்ற உடுக்களின் சிறு திரள்; ஒண் படலத்தினுட்பட்ட விண்மீன்.

necessar'ian, *n.*=necessitarian.

necessar'ianism, *n.* மன்னியல் வாதம், விருப்பாற்றல் புற ஆற்றல்களால் இயக்கப்படுவதேயன்றித் தன்னியலாற்றலாலன்று என்று கொள்ளும் கோட்பாடு.

ne'cessaries, *n. pl.* இன்றியமையாத் தேவைப்பொருள்கள், உயிர்நிலைத் தேவைகள்.

ne'cessarily, *adv.* தவிர்க்க முடியாதபடி, கட்டாயமாக, இன்றியமையா நிலையில்.

ne'cessary, *n.* கட்டாயத்தேவை; ஒதுக்கிடம்; (பே-வ.) பணம்; *a.* இன்றியமையாத, அவசியமான; கட்டாயத் தேவையான; தீராது வேண்டப்படுகிற; நடந்துதீர வேண்டிய; ஆகவேண்டிய; தவிர்க்க முடியாத, விலக்க முடியாத; விருப்புரிமைக்கு இடமற்ற, கட்டாயமாகச் சுமத்தப்பட்ட.

necessitar'ian, *n.* மன்னியல்வாதி, புறநிலைக் காரணங்களன்றிச் செயற்காரணங்களாகத் தன்னியலான விருப்பாற்றல் எதுவும் கிடையாதென்ற கோட்பாட்டினை உடையவர்; *a.* மன்னியல் வாதமான.

necessitar'ianism, *n.*=necessarianism.

necess'itate, *v.* இன்றியமையாததாக்கு, தவிர்க்க முடியாதபடி செய், அவசியமாக்கு, கட்டாயப்படுத்து.

necess'ities, *n. pl.* வறுமை, நல்குரவு; கடுந்துயர், துன்பம்; நெருக்கடித் தேவைநிலை.

necess'itous, *a.* வறுமையான, நல்கூர்ந்த.

necess'ity, *n.* இன்றியமையாமை, தவிர்க்கமுடியாமை; கட்டாய நிலை; சூழ்நிலைக் கட்டுப்பாடு; விலக்க முடியா நிகழ்வு, கட்டாய விளைவு; தவிர்க்க முடியாத செய்தி; (தொ.) logical necessity, மறுக்க முடியாத இயல் முடிவு; வாத முறை நேர்முடிவு; make a virtue of necessity, செய்து தீர வேண்டியதை மனமாரச் செய்து தீர்; விலக்க முடியாததை ஏற்றமைதிகொள், தவிர்க்க முடியாததை நற்பண்புடன் ஏற்றமை; of necessity, தவிர்க்க முடியாத நிலையில்.

neck[1], *n.* கழுத்து; விலங்கின் கழுத்திறைச்சி; குப்பியின் குறுகிய கூறு; வழி-வாய்க்கால் முதலியவற்றின் ஒடுங்கிய பகுதி; நில இடுக்கு, நில இணைப்பு; கணவாய்; இடை

இணைப்புப் பகுதி; (க-க.) தூணின் தலைப்படுத்த கீழ்ப்பகுதி; *v.* கட்டித் தழுவு, கழுத்தைக்கட்டு; (தொ.) break neck of task, வேலையிலுள்ள மிகக் கடினமான பகுதியைக் கட; neck and crop, தலைகீழாக; முழுதும்; முன்பின் பாராமல் எல்லாவற்றையும்; neck and neck, ஒட்டப்பந்தயத்தில் நெருக்கமாக ஓடுகிற; neck or nothing, வெற்றிக்காக எதற்கும் துணிந்து அனைத்தையும் பணயம் வைத்தல்; save one's neck, தூக்கிலிடப்படாமல் தப்பித்துக்கொள், தன்னைக் காத்துக்கொள்.

neck[2], *n.* கடைசி அறுவடைக் கூலக்கதிர்க் கட்டு.

neck'band, *n.* கழுத்துப்பட்டி.

neck'cloth, *n.* கழுத்துக்குட்டை, ஆடவர் கழுத்தைச்சுற்றி அணியும் துகிற்பட்டி.

neck'erchief, *n.* கழுத்தைச்சுற்றி அணியுங் குட்டை.

neck'ing, *n.* (க-க.) எருத்தம், தூணின் தலைப்பகுதிக்கும் நடுத்தண்டிற்கும் இடையிலுள்ள பகுதி.

neck'lace, *n.* ஆரம், கழுத்து மாலை, பதக்கம், கண்டசரம்.

neck'let, *n.* கழுத்து அணி; கம்பளிப் பட்டிகை.

neck'tie, *n.* கழுத்துக்கச்சு, கழுத்துப்பட்டையைச் சுற்றி அணியப்படும் சுருக்கு.

neck'-verse, *n.* தலை காக்கும் பாடல், திருச்சபைக் காப்புரிமையுடையவர் கொலைத் தண்டனையிலிருந்து தவிர்ப்புப் பெற வாசிக்கப்படும் விவிலியப் பாடல் வாசகம்.

neck'wear, *n.* கழுத்தணி.

necrobios'is, *n.* உடலின் தசை அழுகல்.

necrogen'ic, *a.* இறந்த உடலினின்று தோன்றிய.

necrol'atry, *n.* இறந்தவர் வழிபாடு; இறந்தவர் பற்றிய மதிப்பு; பிண வழிபாடு; பிணத்துக்குக் காட்டப்படும் மதிப்பு.

nec'rology, *n.* இறந்தவர் பெயர்ப்பட்டி.

nec'romancer, *n.* ஆவியுலகப் பேச்சாளர்; மாய வித்தையாளர்.

nec'romancy, *n.* ஆவிகள் தொடர்பால் வருவதுரைத்தல்; மாயவித்தை, மாந்திரிகம்.

nec'rophagous, *a.* பிணந் தின்னுகிற.

nec'rophore, *n.* இறந்தவற்றைப் புதைத்து மூடிவைக்கும் வண்டுவகை.

nec'ropolis, *n.* இடுகாடு.

nec'ropsy, nec'roscopy, *n.* பிணத்தேர்வாய்வு, இறந்த பிறகு செய்யும் உடல் ஆய்வு.

necros'is, *n.* உடற்பகுதி இழைம அழுகல், எலும்புடன் உடற்பகுதி இழைமம் அழுகல்.

nec'tar, *n.* அமிழ்தம், சாவா மருந்து; இன்சுவைப்பானம்; தேன்; வளியூட்டப்பட்ட பான வகை.

nec'tarine, *n.* கண்ணிறுக்கமான சதைப் பற்றுடைய பேரியினக் கனிவகை.

nec'tary, *n.* மலரின் தேன்தடம்.

Nedd'y, *n.* கழுதை.

need, *n.* தேவை; தேவைக்கூறு; தேவைப்படுநிலை; வேண்டிய பொருள்; துணையற்ற நிலை; இடர்நிலை, நெருக்கடி நிலை; இல்லாக்குறை; இலம்பாடு, வறுமை; *v.* தேவையுறு, வேண்டிநாடு; தேவைப்படு; தேவையுணர்; குறைபாடுறு; குறைபாடு உணர்; கடப்பாடு கொண்டிரு; இன்றியமையா நிலையுறு; வேண்டியதாகு; (தொ.) have need, தேவையுடையவராயிரு; have need of, வேண்டுதலுறு, தேவை உணர்; if need be, தேவைநிலை ஏற்பட்டால், தேவைப் பட்டால்.

need'fire, *n.* உராய் நெருப்பு, உலர்ந்த கட்டை உராய்தலினுல் ஏற்படுந் தீ.

need'ful, *a.* தேவைப்படுகிற, இன்றியமையாத, அவசியமான.

nee'dle, *n.* ஊசி; ஊசி வடிவ மணியுருப் படிவம்; குளிர் மண்டல மர வகைகளின் ஊசி வடிவ இலை; கூர் முட்கருவி; காந்த முள், காந்த ஊசி; பொன் உரையாணி; கூரறுவைக் கருவி; கூரலகுடைய செதுக்கு கத்தி; தோலடிப் பீற்றுக்குரிய குத்து மருந்தூசி; இசைத்தட்டு முள்; துப்பாக்கி-பீரங்கிகளின் குண்டுறை வெடிக்க வைக்கும் வெடியூசி; தூபி, கோரி, ஊசிக்கோபுரம்; கூர்முனைக் கொடும்பாறை; நீள் கொடுமுடி, கூர்ஞ்சிமையம்; (க-க.) தற்கால உதைகால்; குத்தல் உணர்ச்சி; தொல்லை; *v.* ஊசியால் தை; குத்து; துளை; ஊடுருவு; ஊடுருவிச் செல்; ஊடாகப் புகுந்துசெல்; புகுந்து வழிசெய்; உத்தர உதைகால் கொடு; ஊசியுரு மணிப்படிவமாகு; ஊசிப்படிவமாயமை; குத்திக்கிளறு; எரிச்சலூட்டு; தொல்லைகொடு; அலைக்கழி; செயலுக்குத் தூண்டு; (தொ.) needle game, needle match, பகைமை உணர்ச்சியைத் தூண்டும் முனைப்பான போட்டி விளையாட்டு.

nee'dle-bath, *n.* ஊசித்தாரைக் குளிப்பறை.

nee'dle-book, *n.* புத்தக வடிவ ஊசிப்பெட்டி.

nee'dle-fish, *n.* மூரல் மீன், ஊசி போன்ற வடிவுடைய மீன்.

nee'dleful, *n.* ஊசியில் ஒரு தடவையில் கோக்கக்கூடிய நூலின் அளவு, ஊசிக் கோப்பளவு நூல்.

nee'dle-gun, *n.* ஊசியின் தாக்குதலால் தோட்டா வெடிக்கும் துப்பாக்கி வகை.

nee'dle-lace, *n.* ஊசிப் பின்னல்வேலை.

nee'dle-point, *n* கூர்முனை; ஊசிப் பின்னல் வேலை.

need'less, *a.* தேவையற்ற, வேண்டாத.

nee'dlewoman, *n.* தையல் மாது, தையல் பயிற்சித் திறமுடைய பெண்.

nee'dlework, *n.* தையல் வேலை.

need'ments, *n. pl.* தேவைப்பொருள்கள்; பயணத் துணைப் பொருள்கள்.

needs[1], *n. pl.* இயற்கைத் தேவைகள்; இயற்கை வாய்ப் புதவிகள்.

needs[2], *adv.* இன்றியமையாத நிலையில், கட்டாயமாக.

ne'er, *adv.* (செய்.)=never.

ne'er'-do-well, ne'er'-do-well, *n.* உதவாக்கரை, ஒன்றுக்கும் பயனற்ற ஆள்.

nefar'ious, *a.* கொடிய, இழிந்த, பழியார்ந்த, வெறுக்கத் தக்க.

negate', *v.* மறு, இல்லையென்று கூறு, இல்லாததாக்கு.

nega'tion, *n.* மறுத்தல்; மறுப்பு; மறுப்புரை; மறுப்புச் செய்தி; மறுப்புக் கோட்பாடு; எதிர்மறை; அன்மை; இன்மை; இல்பொருள்; மறுதலை மெய்ம்மை; மெய்யல்லாதது.

nega'tionist, *n.* அழிவுவாதி; வெற்று மறுப்புவாதி, தனக்கென ஆக்கக் கருத்தாக எதுவுமின்றி ஒப்புக் கொள்ளப்பட்ட எல்லாப் பொதுக் கருத்துக்களையும் முற்றிலும் மறுப்பவர்.

neg'ative, *n.* எதிர்மறை; எதிர்மறைப் பண்பு; அன்மை; இன்மைக்கூறு; மறுப்புரை; எதிர்மறை வாசகம்; மறுப்பெதிர் மொழி; மறிநிலை எண், எதிர்மறையான அளவை; நிழற்படத்தில் மறிநிலைத் தகடு; மின்கலத்தில் எதிர்மின் தகடு; *a.* எதிர்மறையான; மறுப்பான; மறுமொழி வகையில் மறுப்புத் தெரிவிக்கிற; தடையான, தடையறிவிக்கிற; வாக்குச் சீட்டு வகையில் எதிரான; அல்லாத; எதிர்பண்பு வாய்ந்த; எதிர் இயல்புடைய; இன்மைக்கூறு தெரிவிக்கிற; எதிர்மறைக் கூறுன; எதிர்மறைச் சார்பான; எதிர்மறையை அடிப்படையாகக் கொண்ட; நிழற்படத்துறையில் மறிநிலைப் படிவமான; எதிர்மின் சார்ந்த; ஆற்றல் வகையில் எதிர் விசையார்ந்த; (அள.) மாறுபாடு வலியுறுத்துகிற; மெய் விலக்குகிற; (கண.) மறுதலையான; சுழித்துக் காண வேண்டிய; இழப்புக் குறித்த; *v.* மறுத்துரை; மறு; தவறென்று எண்பி; இசைவு மறு; எதிர்த்தழி, செல்லாதாக்கு; பயனற்றதாக்கு.

neg'ativism, *n.* வெற்று மறுப்புவாதம், அழிவுவாதம்.

neglect', *n.* புறக்கணிப்பு ; புறக்கணிக்கப்பட்ட நிலை ; புறக் கணிப்பு மனப்பான்மை ; புறக்கணிப்புக்கு ஆளாகும் நிலை ; கருத்தின்மை ; உன்னிப்பின்மை, கவனக்குறைவு ; *v.* புறக் கணி ; கவனியாதிரு ; விழிப்புத் தளரவிடு ; கவனிக்காது விடு ; முடிக்காமல் வழுவு ; செய்யத்தவறு.

neg'lige, *n.* எளிமை உடை ; எளிமைத் தோற்றம் மேற் கொண்ட உடை.

neg'ligeable, *a.*=negligible.

neg'ligence, *n.* கருத்தின்மை, கவனக்குறைவு ; கவனிப்புக் குறைபாடு, பேணிப்பாராக் குறை ; புறக்கணிப்பு ; கட்டுப் பாட்டுத் தளர்வு, கலைத்துறையில் செயற்கைப்பண்புக்கு ஆட் படாத இயலெளிமைப்பண்பு.

neg'ligent, *a.* புறக்கணிக்கிற ; கவனக்குறைவான ; கருத் தூன்றிச் செய்யப்படாத; பேணிப்பாராத; கட்டுப்பாட்டைப் புறக்கணிக்கிற ; எண்ணிப்பாராத.

neg'ligible, *a.* புறக்கணிக்கத்தக்க, தள்ளிவிடக்கூடிய, சிறப் பில்லாத.

neg'otiable, *a.* பணமாக மாற்றத்தக்க; (தொ.) negotiable instrument, செலாவணி முறி.

nego'tiate, *v.* கூடிக்கலந்து பேசு, ஒப்பந்த நோக்குடன் கலந் துரையாடு; இசைவிணக்க முறையிற் கலந்து ஏற்பாடு செய்; கலந்துபேசி முடிவுசெய் ; கைப்பொருள் பெற்றுப் பண முறியை மாற்றிக்கொடு ; காசாக மாற்று, கொடுத்து நாணய விலைமதிப்புப் பெறு ; பெற்று நாணய விலைமதிப்புக்கொடு ; வேலி தாண்டிச் செல் ; இடர் கடந்து செல்; இக்கட்டு வகை யில் ஒரு தீர்வு காண் ; இடர்நீக்கு.

negotia'tion, *n.* ஒப்பந்தம் பேசுதல் ; பேரப்பேச்சு.

Neg'ress, *n.* நீகிரோ இனப்பெண்.

negrill'o, *n.* நடு ஆப்பிரிக்காவிலும் தென் ஆப்பிரிக்காவிலும் உள்ள குள்ள நீகிரோ இனத்தவர்; *pl.* negrill'os.

negri'to, *n.* மலேயோ-பாலினீசிய (Malayo-Polynesian) நிலப் பகுதியிலுள்ள குற்றுருவ நீகிரோ இனத்தவர்.

Neg'ro, *n.* நீகிரோவர், நீகிரோ இன ஆண் ; *a.* நீகிரோ இனத்தைச் சார்ந்த, நீகிரோக்களால் உறைவிடமாக்கப்பட்ட; நீகிரோக்களோடு தொடர்புகொண்ட; கருநிறமுடைய, கருமை யான ; இருண்ட ; *pl.* Neg'roes ; (தொ.) negro ant, கட் டெறும்பு ; negro minstrels, நீகிரோ இனப் பாடல்களையும் நடனங்களையும் பாடியாடிக் காட்டும் நாடோடி நடனக்குழு.

neg'ro-head, *n.* காரமான கரும்புகையிலை; கீழ்த்தர ரப்பர்வகை.

Neg'roland, *n.* நீகிரோவர் நிலம் ; ஆப்பிரிக்காவில் நீகிரோ வர்கள் குடியிருக்கும் நிலப்பகுதி.

Neg'us[1], *n.* அபிசீனியாவின் அரசர்.

neg'us[2], *n.* இன்தேறலும் நீரும் கலந்த வெப்பான இனிப்புப் பானம்.

neigh, *n.* கனைப்பு ; *v.* குதிரைபோலக் கனை.

neighb'our, *n.* அயலவர், அருகிலுள்ளவர், அக்கம் பக்கத்திலுள்ளவர் ; அண்டைவீட்டார் ; அடுத்திருப்பவர் ; அடுத்த தெருவினர் ; பக்க ஊரினர் ; அண்டை நாட்டினர் ; அருகிலுள்ளது ; அணிமையிலுள்ள பொருள் ; நட்புணர்ச்சி யுடையவர்; பாசமுடையவர்; பாசத்துக்குரியவர் ; *v.* அடுத் திரு ; எல்லையடுத்திரு ; ஒரே எல்லைகொண்டிரு ; அணித் தாயிரு, கிட்டத்தட்ட சென்றெட்டியதாயிரு.

neighb'oured, *a.* அண்டையயலாராகக் கொண்ட ; அரு காகக் கொண்ட ; சுற்றுச் சூழ்நிலையாகக் கொண்ட.

neighb'ourhood, *n.* அருகிடம், சுற்றுப்புறம்; சூழ்வட்டாரம்; அணிமை; அருகிலுள்ள தன்மை; அணுக்க அளவு; அணிமை ஒப்புமை ; அணிமை இணக்க உணர்ச்சி, அணிமைப்பாகம்.

neith'er, *pron.* இரண்டும் அற்றது, இதுவும் அதுவும் அல் லாதது, குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள பொருள்களில் எதுவு மல்லாதது ; *a.* இரண்டுமற்ற, இதுவும் அதுவும் அல்லாத, குறிப்பிட்டுள்ள எண்ணிக்கையுள்ள பொருள்களில் எதுவுமல் லாத; *adv.* இரண்டும் இல்லாததாக, ஒன்றிலும் சாராததாக; *conj.* அல்லது இதுவோவெனில் அதுதானும் இல்லை.

nek, *n.* தென் ஆப்பிரிக்க மலைத்தொடரில் இடைப்பள்ளம்.

nek'ton, *n.* (உயி.) பெருங்கடலிலும் ஏரியிலும் நீந்தி வாழும் உயிரினத்தொகுதி.

nell'y, *n.* வெண்மையும் கருமையுமான நீண்ட இறகுத் தொகுதியுடைய மிகப்பெரிய கடற்பறவை வகை.

nem'atocyst, *n.* இழுதுமீன் முதலியவற்றில் கொடுக்காக இயக்கத்தக்க சுருள் இழை அடங்கிய நுண்மக்கூறு.

nem'atode, nem'atoid, *n.* நீண்டுருண்ட வடிவுடைய புழு வகை ; *a.* நீளுருள் வடிவுடைய.

Nem'esis, *n.* பழித்தெய்வம் ; சூழ்வினை ஆற்றல் ; கலை இலக்கியத்துறையில் இயல்பான அறமுறைப் பழிவிளைவு.

*nem'ine contradicen'te*, (ல.) (சு-வ. *nem. con.*) *adv.* யார் மறுப்புமின்றி, எதிர்வாக்கில்லாமல், ஒருமுகமாக.

nen'uphar, *n.* அல்லி மலர்வகை.

ne'o-Cam'brian, *a.* (மண்.) தண்டிலா உயிரூழியின் முதற் பகுதியின் பிற்கூறு சார்ந்த.

ne'odoxy, *n.* புதிய கோட்பாடு ; புதிய கொள்கை.

ne'o-Hell'enism, *n.* கிரேக்க கொள்கை குறிக்கோள்களின் மறுமலர்ச்சிப் பண்பு.

neolith'ic, *a.* புதிய கற்காலத்தைச் சார்ந்த, பண்பட்ட கருவி கள் பயன்படுத்தப்பெற்ற கற்காலப் பிற்பகுதி சார்ந்த.

neolo'gian, *n.* சமய சித்தாந்தத் துறையிற் புதுச்சொற் பொறிப்பாளர் ; இறைமையாய்வு நூல் துறையிற் புதுச் சொல் வழங்குபவர்; *a.* இறைமையாய்வு நூல் துறையிற் புதுச்சொல் வழங்குகிற ; இறைமையாய்வு நூல் துறையிற் பகுத்தறிவுச் சார்புடைய.

neol'ogism, neol'ogy, *n.* புதுச் சொற்படைப்பு ; புதுப் படைப்புச்சொல் ; சமய சித்தாந்தத்துறையில் புதுமைக் கருத் துச்சார்பு ; சமய சித்தாந்தத்துறையில் புதுப்பகுத்தறிவுக் கோட்பாட்டுச் சார்பு ; இறைமையாய்வு நூலில் புதுக்கருத் தேற்பாளர் ; இறைமையாய்வு நூலில் பகுத்தறிவுச் சார்பு ஏற்பவர்.

ne'o-Malthu'sianism, *n.* கருத்தடை முறை வழக்காறு.

ne'on, *n.* செவ்வொளி விளக்குக்களில் பயன்படுத்தப்படும் செய லற்ற தனிமவளி; (தொ.) neon light, செவ்வொளி விளக்கு.

neontol'ogy, *n.* வாழ் மரபாய்வுநூல், நின்று நிலவும் மர புடைய விலங்குகள் பற்றிய ஆய்வுநூல்.

ne'ophron, *n.* எகிப்திய வெண்கழுகு வகை.

ne'ophyte, *n.* சமயப்புதுவர், புதிதாகச் சமயம் மாறியவர் ; முற்காலக் கிறித்தவ சமயப் புத்தேற்பாளர்; ரோமன் கத்தோ லிக்க சமயப் புத்தேற்பாளர் ; புத்தமர்வுற்ற சமயகுரு ; துறவுச்சங்கப் புதுவரவாளர் ; புதுப்பயிற்சியாளர் ; புது மாணவர் ; அனுபவமற்றவர்.

ne'o-Plat'onism, *n.* பிளேட்டோ (Plato) கருத்துக்களும் கீழ்த்திசைக்குரிய மறைமெய்ம்மைக் கொள்கைகளும் சேர்ந்த மூன்றாம் நூற்றாண்டுக் கலவைக் கோட்பாடு.

neote'ric, *a.* புதுமையான, புத்தம்புதிய ; அண்மைக்காலத் திய ; புது வழக்காறான, புதுவரவான, புதிதுபுகுந்த; புத்தம் புதுப்பாணியான ; தற்காலத்துக்குரிய.

neotrop'ical, *a.* அமெரிக்க வெப்பமண்டலப் பகுதிக்குரிய ; அமெரிக்க வெப்பமண்டலப் பகுதியில் காணப்படுகிற.

neozo'ic, *a.* (மண்.) தொல்லுயிரூழிக்குப் பிற்பட்ட ஊழி களுக்குரிய, இடையுயிரூழி புத்துயிரூழிகட்குரிய.

nepen'the, *n.* துயர் மறக்கவைக்கும் மருந்து.

nepen'thes, *n.* சாடி வடிவ இலைகளுள்ள செடியினம்.

ne'phew, *n.* உடன்பிறந்தார் மகன், அண்ணன் மகன்; தம்பி மகன் ; அக்காள் மகன் ; தங்கை மகன்.

nephol'ogy, *n.* முகிலாய்வு நூல், மேகம்பற்றிய ஆராய்ச்சித் துறை.

nephrec'tomy, *n.* குண்டிக்காயறுவை.

nephrit'ic, *a.* குண்டிக்காய் சார்ந்த, குண்டிக்காயிலுள்ள.

nephrit'is, *n.* குண்டிக்காய் வீக்கம்.

*ne plus ul'tra,* (ல.) *n.* மேற்செலவுத் தடுப்பாணை; கடக்க முடியாத்தடை; செல்லத்தக்க உச்சநிலை; உச்ச எல்லை; மீமுகடு; நிறைவுநிலை.

nep'otism, *n.* குருதிச்சலுகை, உயர்பணியர் உறவினர்க்குக் காட்டும் தனி ஆதரவு.

Nep'tune, *n.* கிரேக்கபுராண மரபில் கடல் தெய்வம்; சேண்மம், கதிரவனைச் சுற்றி ஓடும் எட்டாவதுகோள்; (தொ.) Neptune's cup, பவளவகை.

Neptun'ian, *n.* பாறைகள் சிலவற்றின் நீர்வழித் தோற்றக் கோட்பாடுடையவர்; *a.* (மண்.) நீரின் செயலால் தோன்றுகிற.

neptun'ium, *n.* சேணியம், விண்ணிய அணுக்கள் நொதுமங்களை ஏற்றுச் சேணுயம் ஆகும்போது ஏற்படும் நிலையற்ற இடைமாற்ற நிலைத்தனிமம்.

ner'eid, *n.* கடலணங்கு; (வில.) நீண்ட கடற்புழு, கடற்பூரான்.

*ner'o anti'co,* (இத்.) *n.* பண்டை ரோமப் பேரரசின் பாழடைந்த கட்டிடங்களில் காணப்படும் கருஞ் சலவைக்கல்.

ner'oli, *n.* நறுமணப் பொருள்களுக்காகப் பயன்படுத்தப்படும் செம்மஞ்சள் மலர்த் தைலம்.

Neron'ian, *a.* ரோமப் பேரரசன் நீரோவைச் சார்ந்த; பேரரசன் நீரோ காலத்துக்குரிய; கொடுங்கோன்மை வாய்ந்த; கொடிய, இரக்கமற்ற; ஆணவமான, மனம்போன போக்குடைய; வரம்பு கடந்த.

nerv'ate, *a.* (தாவ.) இலை வகையில் நரம்புகளுள்ள.

nerva'tion, nerv'ature, *n.* இலைநரம்பு அமைதி.

nerve, *n.* நரம்பு; தளை, தசைக்கட்டு; (உள்.) உணர்ச்சி நாளம், மூளையிலிருந்து உடலுறுப்புப் பகுதிகளுக்குத் தூண்டுதல் அலையதிர்வுகளைக் கொண்டுசெல்லும் தசைநாண்; வில்நாண்; நரம்பின் நாரியல் இழைமம்; (தாவ.) இலை நரம்பு, நடுநரம்பு; முறுக்கேறிய நிலை; ஊக்கம்; ஆற்றல்; மனவுறுதி; இடரிடை உலையா மன அமைதி; மனத்திட்பம்; துணிவு; தளராத்தன்னம்பிக்கை; (பே-வ.) துணிச்சல், திண்ணக்கம், துடுக்குத்தனம்; *v.* வலிவூட்டு, ஊக்கமளி, உரமூட்டு; இடர் எதிரே முழுவலிமையும் திரட்டி ஒருங்குவி; (தொ.) strain every nerve, முழு முயற்சிசெய்.

nerve'-cen'tre, *n.* நரம்பு மையம்.

nerve'-knot, *n.* நரம்புத்திரள்.

nerve'less, *a.* வலிமையற்ற, உரமற்ற; கிளர்ச்சியற்ற; செயலற்ற; நரம்பில்லாத.

nerves, *n. pl.* நரம்புணர்வுநிலை; அளவுமீறிய கூருணர்ச்சி நிலை; நரம்புக் கோளாறுநிலை, எளிதில் கிளர்ச்சியூட்டப்படும் நிலை; உணர்ச்சித் துடிப்பு; (தொ.) a fit of nerves, நடுக்க நிலை; get on one's nerves, தொந்தரவு கொடுப்பதாயிரு, பொறுமையைச் சோதிப்பதாயிரு; lose one's nerves, மனவுறுதி இழ; war of nerves, வேதனைப்போர், மனவுரங் கெடுக்கும் போர் முயற்சி.

nerv'ine, *n.* (மரு.) நரம்பூக்க மருந்து, நரம்புக்கோளாறு தணிவிக்கும் மருந்துப்பொருள்; *a.* நரம்புத்தளர்ச்சியைத் தணிவிக்கிற, நரம்புக்கோளாறுகளைப் போக்குகிற.

nerv'ous, *a.* தசைப்பற்றுள்ள, தசைக்கட்டு நிரம்பிய; வலிமை பொருந்திய; இலக்கியநடை வகையில் உரமிக்க, பொருட்செறிவான, சொற் சுருக்கமிக்க; நரம்பு சார்ந்த; நரம்புகள் நிறைந்த; நரம்புணர்வைப் பாதிக்கிற; மென்மையான நரம்புகளையுடைய, நுட்பக்கூருணர்வுடைய; தொட்டால் சிணுங்குகிற; நரம்புக்கோளாறுடைய; எளிதில் சினங்கொள்கிற; எளிதில் மனக்கிளர்ச்சிகொள்கிற; எளிதில் அமைதியிழக்கிற; அஞ்சி நடுங்குகிற; கோழைத்தனமுடைய; துணிவில்லாத; மனவுரமற்ற; கூச்சப்படுகிற; (தொ.) nervous system, நரம்புமண்டலம்; நரம்புமண்டல அமைப்பு.

nerv'ure, *n.* பூச்சி சிறகின் நரம்புச்சட்டம்; இலைநரம்பு; இலையின் தலைநரம்பு.

nerv'y, *a.* (செய்.) வலிமையுடைய, தசைப்பிடிப்புடைய.

nesc'ience, *n.* அறிவின்மை.

nesc'ient, *n.* அறிவின்மைக் கோட்பாட்டாளர், கடவுளையோ இயற்கை கடந்த எவ்வாற்றலையோ அறிய இயலாதென்னும் கோட்பாடு உடையவர்; *a.* அறியாமையுள்ள, கடவுள்பற்றிய கருத்தற்ற, ஐயுறவுக்கோட்பாடுடைய.

ness, *n.* நிலக்கோடு, நிலமுனை, நிலக்கூம்பு.

nest, *n.* கூடு, பறவை தங்கி வாழுமிடம்; புழுப்பூச்சிக்கூடு; விலங்கின் உறைவிடம்; உறையுள்; வீடு; ஒதுக்கிடம்; தனிவாழ்விடம்; தனிக்காப்பிடம்; இன்ப வாய்ப்பிடம்; இனப் பெருக்கிடம்; பேணிடம்; திருடர் சேம இடம்; தீமை தழைப்பிடம்; மொய்திரள், இனக்குழு; தொகுதி; திரட்டு; இழுப்பறைத் தொகுதி; *v.* கூடுகட்டி வாழ்; கூடுகட்டு; கூடமைப்பில் ஈடுபடு; கூட்டைப்பறித்தெடு; கூட்டில் அமைத்துவை, செறித்துவை; ஒன்றுக்குள் ஒன்றாகப் புகுத்தி வை.

nest'-egg, *n.* தூண்டு முட்டை, பெட்டைக்கோழி முட்டையிடும்படி தூண்டுவதற்காக வைத்த முட்டை அல்லது முட்டைப்போலி; சேம ஒதுக்கீட்டுத்தொகை; சேமிப்புத் தொகைக் கருமூலம்.

ne'stle, *v.* மிடைந்திரு; மொய்த்திரு; ஒட்டி அணைந்திரு, தழுவியிரு; வாய்ப்பாக அமர்ந்துகொள், பாதி உடல் புதைவாகக் குழைத்தமர்ந்துகொள்; பேணி அணை; அணைவாக நெருக்கு; அமர்விடம் அளி.

ne'stling, *n.* புனிற்றிளங்குஞ்சு, கூட்டைவிட்டு நீங்க இயலாத இளங்குஞ்சு.

Nes'tor, *n.* அறிவுமிக்க முதியவர்; குழுவில் மூத்தவர்.

Nestor'ian, *n.* இயேசுநாதர் தெய்விகத் தன்மையும் மனிதத் தன்மையும் வெவ்வேறாகக் கொண்டிருந்தவர் என்ற முற்காலக் கான்ஸ்டாண்டிநேப்பிள் சமய முதல்வர் நெஸ்டாரியஸ் (கி. பி. 428) என்பாரின் கோட்பாட்டாளர்; *a.* நெஸ்டாரியஸ் என்பாருக்குரிய; நெஸ்டாரியஸ் என்பாரின் கொள்கை சார்ந்த; இயேசுநாதர் தெய்விகத் தன்மையும் மனிதத்தன்மையும் உடைய இருவேறு இயல்புடையவர் என்ற கோட்பாட்டைச் சார்ந்த.

net [1], *n.* வலை; மீன்வலை; பழமுதலியன வைக்கும் வலைப்பை; பந்தாட்ட வலை; சூழ்ச்சி; சிலந்திக்கூடு; வலைபோன்ற அமைப்பு; வலைப்பின்னல் வேலை; *v.* வலையால் மூடு; வலையிட்டுப்பிடி; வலையிலடை; மீன்பிடி; ஆற்றில் வலை வீசு; வலைப்பின்னல் வேலை செய்; பை-படுக்கை முதலியவற்றை வலைப்பின்னலாக முடை; வலைப்படிவத்தில் அமை, வலைப்படிவப்பாணியில் அமை; வலையாரப்பின்னு; வலைபோல பின்னு.

net [2], *a.* கழிவு நீங்கிய, கழிவுபோக எஞ்சியுள்ள, நிகர, தேவையான குறைப்புக்கள் போக மிகுதியாக நிற்கின்ற; *v.* நிகர ஆதாயமாகப்பெறு; நிகர வருவாயாகப் பயனளி; (தொ.) net price, நிகரவிலை, கழிவுதள்ள முடியாத திட்டவட்ட விலை; net profit, நிகர ஆதாயம், செலவுகழித்த மெய்ந்நிலை ஆதாயம்.

net'ball, *n.* வலைக்கூட்டுப் பந்தாட்டம், மேல்கட்டிய வலைத் தொங்கலுடைய வளையத்தினூடாகப் பந்துவிழும்படி ஆடும் பெண்டிர் பந்தாட்ட வகை.

*ne tem'ere,* (ல.) *n.* புறச்சமயத் திருமணத்தடைக் கட்டளை, தனி இசைவாலன்றிப் பிறசமயத்தாருடன் ரோமன் கத்தோலிக்கர் செய்யும் திருமணம் செல்லாதென்ற போப்பாண்டவரின் 1907-ஆம் ஆண்டு ஆணை.

neth'er, *a.* கீழே உள்ள; அடியிலுள்ள, உள்ளான; நிலவுலகுக்குக் கீழே உள்ள; (தொ.) nether garments, காற்சட்டை; nether man, nether person, கீழுறுப்புத்தொகுதி, கால்கள்; nether millstone, கல்நெஞ்சம்; nether regions, nether world, கீழுலகம், நரகு.

Neth'erlander, *n.* நெதர்லாந்து நாட்டவர்.

Neth'erlandish, *a.* நெதர்லாந்து நாட்டைச் சார்ந்த.

net'suke, *n.* குமிழணி, ஜப்பானியர் அணியும் மெருகிடப்பட்ட குமிழ்மாட்டி போன்ற அணிகலன்.

**nett'ing**, *n.* வலையிடல்; வலை; வலைக்குரிய இழை; வலைப் பின்னலுக்கான கச்சை; வலையழிக்கான கம்பி; கம்பியாலான வலை; கம்பி வலைப்பகுதி.

**net'tle**, *n.* பூனைக்காஞ்சொறிச் செடி வகை; *v.* முட்செடிகளால் அடி; காஞ்சொறிமுத்துப்போலக் குத்து; எரிச்சலுண்டாக்கு; சினமூட்டு; தொந்தரவுசெய்.

**net'tle-rash**, *n.* காஞ்சொறிமுத்துக்களால் ஏற்படும் தடிப்புச் சொறி வேதனை.

**net'work**, *n.* பின்னல் வேலை; பின்னல், வலையமைவு, குறுக்கு மறுக்குக்கட்ட அமைவு; ஆறு-இருப்புப்பாதை-கால்வாய் முதலியவற்றின் வலைபோன்ற கிளைப்பின்னலமைப்பு; இணைதிட்ட ஒலிபரப்பு நிலையக்கோவை.

**neum, neume**, *n.* (இசை.) அசை ஒலிப்பு இசைப்புக்குறி; இடைநிலைக்கால இசைமானத்தில் சுரத்தொனி ஏற்ற இறக்கக் குறி.

**neur'al**, *a.* நரம்புகள் சார்ந்த; நரம்புமைய அமைப்பைச் சார்ந்த.

**neural'gia**, *n.* நரம்பு வலி; தலைவலி, விட்டுவிட்டு வரும் கடுமையான முகக்கடுப்பு.

**neural'gic**, *a.* தலைவலி சார்ந்த.

**neurasthen'ia**, *n.* நரம்புத்தளர்ச்சி.

**neurasthen'ic**, *a.* நரம்புத்தளர்ச்சி சார்ந்த.

**neura'tion**, *n.* பூச்சி சிறகின் நரப்புச்சட்டப் பரப்பு; இலை நரப்புச் சட்டப்பரப்பு.

**neurec'tomy**, *n.* நரம்பறுவை, நரம்புத்துணிப்பு.

**neur'ine**, *n.* நரம்பிழைமம்.

**neurol'ogy**, *n.* நரம்பாய்வு நூல்.

**neurom'a**, *n.* நரம்புக்கட்டி; *pl.* neurom'ata.

**neuro-mus'cular**, *a.* நரம்புத்தசை சார்ந்த.

**neur'opath**, *n.* இயற்கை கடந்த உணர்ச்சியறிவுள்ளவர்; இயல்மீறிய நரம்புணர்ச்சிக் கோளாறுடையவர்.

**neurop'athist**, *n.* நரம்புநோய் மருத்துவ வல்லுநர்.

**neurop'athy**, *n.* இயற்கைமீறிய நரம்புக்கோளாறு.

**neuro-physiol'ogy**, *n.* நரம்புமண்டல அமைப்பாய்வுநூல், நரம்புமண்டலம் பற்றிய உடலமைப்புநூல்.

**neuro-psych'ic**, *a.* நரம்பியல்-உளவியல் ஆகிய இருசார்புப் பண்புகளுஞ் சார்ந்த.

**neurop'terous**, *a.* பளிங்குவலை போன்ற நாலு சிறகமைப்புடைய பூச்சியினம் சார்ந்த.

**neuros'is**, *n.* நரம்புச்சிக்கலால் ஏற்படும் உடல்நிலைக் கோளாறு; மூளை நுண்ம அமைதிக்கோளாறு; *pl.* neuros'es.

**neurot'ic**, *n.* நரம்புமண்டலத்தைப் பாதிக்கும் மருந்துச்சரக்கு; நரம்புக்கோளாறுடையவர்; இயற்கை மீறிய உணர்ச்சியுடையவர்; *a.* நரம்புமண்டலத்தைப் பாதிக்கிற; நரம்புக்கோளாறுக்கு ஆட்பட்ட; இயற்கை மீறிய உணர்ச்சியுடைய.

**neurot'omy**, *n.* ஒருசிறை உணர்விழப்புக்கான நரம்பறுவை.

**neurypnol'ogy**, *n.* செயற்கைத் துயிலூட்டுக்கலை, வசியம்.

**neut'er**, *n.* (இலக்.) ஆண்பெண்பால் வேறுபாடு காட்டாப் பெயர்ச்சொல்; பால்வேறுபாடு காட்டாப் பெயரடை; தன்வினை, செய்வினை செயப்பாட்டுவினை வேறுபாடற்ற வினைச் சொல்; நொதுமலர், போரில் இருசார்புமற்ற பொது நிலையாளர்; வாதத்தில் சார்புகொள்ளா நடுநிலையாளர்; கருத்து வேறுபாட்டில் சார்பற்றவர்; பூச்சியினப்பெண்பாலில் பாலின முதிர்வற்றவை; செடியினத்தில் பாலின உறுப்பற்றவை; விதையகற்றப்பட்ட பூனை; *a.* இரண்டுங்கெட்ட; பொது நிலையான; சார்பற்ற; ஆண்பெண் பான்மை குறிக்காத; செய்வினை செயப்பாட்டுவினை வேறுபாடு குறிக்காத; தாவரங்களில் பாலின உறுப்புக்களற்ற; பூச்சியினத்தில் பாலின முதிர்ச்சியற்ற பெண்பாலான, மலடான; போரில் சார்பற்ற; வாதத்தில் நடுநிலையான; கருத்து வகையில் தனிச்சார்பு கொள்ளாத.

**neut'ral**, *n.* நடுநிலை அரசு; போரில் நடுநிலை வகிக்கும் நாடு; நடுநிலையாளர், நடுநிலை வகிப்பவர்; நடுநிலை நாட்டுக் குடிமகன்; நடுநிலை நாட்டுக் கப்பல்; விசையூக்க இயந்திரத்தில் இயக்கம் ஊட்டாது இயங்கும் பகுதியின் நிலை; *a.* போரில் ஈடுபடாத, நடுநிலையான, விலகிநிற்கிற; விலகி நிற்கும் உரிமை அளிக்கப்பட்ட; வாதத்தில் சார்பற்ற; கருத்து வேறுபாடுகளில் கலக்காத, தனிநிலையான; சார்புறுதியற்ற; தெளிவான, நிலையற்ற; திட்டவட்டமான பண்பற்ற; வகைப்படுத்த முடியாத; தனிமுனைப்புப்பண்பில்லாத; முடிபுறுதியற்ற; சுவைமுனைப்பற்ற; வண்ண உறுதியற்ற; பூச்சியினத்தில் பெண்பாலில் பாலின வளர்ச்சியற்ற, பெண்மலடான; தாவரத்தில் பாலுறுப்புக்களற்ற; மின்னூற்றலில் நொதுமின்னுன; வேதியியலில் காடி-காரச் செயல்கள் இரண்டுமற்ற; (தொ.) neutral tint, சாம்பல் நிறம், கற்பலகை வண்ணம்; stand neutral, நடுநிலையிலிரு; போரில் ஈடுபடாதிரு; போரில் நடு நிலையாயிருப்பதாக அறிவி.

**neut'ralize**, *v.* மட்டுப்படுத்து, முனைப்பழி; மாறுன விளைவால் பயனற்றதாக்கு; ஈடுகட்டு, சரிக்கட்டு; இட வகையில் போர் எல்லையிலிருந்து விலக்கிவை.

**neut'ron**, *n.* நொதுமம், மின் இயக்கமில்லாத சிற்றணுத்துகள்.

**neve**, *n.* குழை பனிப்பரப்பு; பனியோடையின் தலைப்பில் பனிக்கட்டியாகச் செறிவுறுத தளர் பனித்திரள் பரப்பு.

**nev'er**, *adv.* ஒருபோதுமில்லா நிலையில், என்றுமில்லா நிலையில்; (தொ.) it is never too late to mend, சீர்திருந்துவதற்கு எப்போதும் இடமுண்டு; never a one, யாருமில்லை, ஒருவருமில்லை; Never Never, Never Never Land, வட குயின்ஸ்லாந்து (Queensland) நாடு; never so, அளவு கடந்த தன்மையில்.

**nev'ermore'**, *adv.* இனி எக்காலத்தும் இல்லா நிலையில்.

**nevertheless'**, *adv.* எனினும், அப்படியிருந்தாலும், இருந்தபோதிலும்.

**new**, *a.* புதிய; முன்னில்லாத; முதன்முதலாகத் தெரிவிக்கப்படுகிற; முன் உணரப்படாத; தெரியவராத; முன்கேட்டறியாத; முன்கண்டறியாத; அண்மையில் தோன்றிய; புதிதாக ஆக்கப்பட்ட; அணிமையில் செய்துமுடிந்த; புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட; புதிதான, பழக்கத்திலில்லாத; மாறிய; மாறுபாடான; புது மாறுதலுடைய; புதுப்பிக்கப்பட்ட; புதிதாகச் சேர்க்கப்பட்ட; கெடாத; புதுநிலையிலுள்ள; பழமைப்பட்டுவிடாத; தேய்வுறுத; தளராத; பளபளப்புக் குறையாத; புத்தாக்கம்பெற்ற; புத்துயர்வுபெற்ற; புது வகையான; புதுப்பயனுடைய; வேறு வகையான; அனுபவமற்ற; புதுமுறையான; *adv.* புதிதாக; அண்மையில்; (தொ.) new chum, தாய்நாட்டிலிருந்து ஆஸ்திரேலியாவுக்குப் புதிதாக வந்துள்ள; new comer, காலந்தாழ்ந்து வந்துசேர்ந்தவர்; New Deal, அமெரிக்க ஐக்கியநாட்டுத் தலைவர் ரூஸ்வெல்ட் (Roosevelt) ஆட்சியில் (1932-இல்) திட்டமிடப்பட்ட சமூக பொருளாதாரச் சீரமைப்புத்திட்டம்; New Englander, புதிய இங்கிலாந்து குடியேற்றவாசி, ஐக்கிய அமெரிக்காவிலுள்ள ஆறு பிற்பட்ட ஆங்கிலக் குடியேற்ற அரசுகள் ஒன்றில் குடியாகவுள்ளவர்; new look, தற்கால உடைப்பாணி, புத்தம்புதிய தோற்றம்; new man, கிறித்தவ மதத்தில் புதிதாகச் சேர்ந்த புறச்சமயி, கிறித்தவ மதத்திற்கு மாறியவர்; new moon, முதற் பிறைநிலா; new year, வரும் ஆண்டு; தொடங்கிவிட்ட ஆண்டு; புத்தாண்டு, put on the new man, கொள்கை-மத மாற்றங்களை வெளிப்படையாகக் காட்டு; the New Comedy, பிற்காலக் கிரேக்க இன்பியல் சமுதாய நாடகம்; the New Learning, பதினாரும் நூற்றாண்டில் இங்கிலாந்தில் புகுத்தப்பட்ட கிரேக்க கல்விமுறை; the new model, (வர.) 1644-5-ஆம் ஆண்டில் பாராளுமன்றப் படையைத் திருத்தி அமைப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட திட்டம்; the new woman, புதுமைப்பெண், ஆடவருடன் சரிசம உரிமை விரும்புபவள், பழம்போக்கை உதறித்தள்ளி விடுதலை வேண்டும் பெண்; the New World, அமெரிக்கா; turn over a new leaf, திருந்து, திருந்திப் புதுவழி தொடங்கு.

**new'-blown**, *a.* புதுமலர்ச்சியுடைய, அப்பொழுதுதான் மலர்ந்த.

new'-born, *a.* புதிதாகப் பிறந்த.

new'-built, *a.* புதுப்பித்துக் கட்டப்பட்ட, திரும்பக் கட்டப்பட்ட.

new'-coined, *a.* சொற்கள் வகையில் புதிதாகப் படைத்துருவாக்கப்பட்ட.

new'-come, *a.* காலந்தாழ்த்து வந்துசேர்ந்த.

new'el, *n.* சுழற்படிக்கட்டின் நடுத்தூண் ; படிக்கட்டுக் கைப்பிடி வரிசையின் அடிக்கம்பம் ; படிக்கட்டுக் கைப்பிடி வரிசையின் உச்சிக்கம்பம் ; (தொ.) hollow newel, open newel, சுழற் படிக்கட்டின் மைய இடைவெளி.

new-fang'led, *a.* புதுமை விரும்பியான ; புதுவரவுப் பாணியான ; புதுமைப் போக்கான.

Newfound'land, Newfound'land dog, Newfound'lander, *n.* நீந்தும் ஆற்றல்மிக்க பெரிய வேட்டைநாய் வகை.

new'-front, *v.* புதிய முகப்பு அமை.

new'-furnish, new'-model, *v.* சீர்திருத்தி அமை.

Newg'ate, *n.* லண்டன் நகரச் சிறைச்சாலை ; (தொ.) Newgate frill, Newgate fringe, முகம் மழிக்கப்பட்டு மோவாயின் கீழ் வளர்க்கப்படுந் தாடி ; Newgate knocker, கூவிவிற்பவர்கள் மேற்கொள்ளும் தலைமயிர்ச்சுருள்.

new'ly, *adv.* புதிய முறையில் ; புதிதாக ; அண்மையில் ; சிறிது காலத்துக்குமுன் ; சிறிது காலமாக.

Newm'arket, *n.* குதிரைப்பந்தயங்களுக்குப் பெயர்போன நகரம் ; இறுக்கமான மேற்சட்டை ; சீட்டாட்ட வகை ; (தொ.) Newmarket coat, இறுக்கமான மேற்சட்டை.

news, *n. pl.* செய்தி ; புதுத்தகவல், புதிய நிகழ்ச்சிகளின் விவரம்; (தொ.) that is no news, அது முன்னரே தெரிந்தது தான்.

news'-agent, *n.* செய்தித்தாள் விற்பவர்.

news'-boy, *n.* செய்தித்தாள் கூவி விற்கும் பையன்.

news'-letter, *n.* செய்திமடல், நாட்டுப்புற ஊர்களுக்குச் செய்திகளுடன் அனுப்பப்படும் கடிதம்.

news'-man, *n.* செய்தித்தாள் விற்பவர்.

news'monger, *n.* வம்பளப்பவர், ஊர்ச்செய்தி பேசுபவர்.

news'paper, *n.* செய்தித்தாள், பத்திரிகை.

news'print, *n.* செய்தித்தாள் அச்சிடுதற்கான தாள்.

news'-reel, *n.* செய்திச்சுருள், நாட்செய்திகளைத் தெரிவிக்கும் திரைப்படம்.

news'-room, *n.* செய்தித்தாள் படிப்பதற்கான அறை.

news'-sheet, *n.* எளிய வடிவச் செய்தித்தாள்.

news'-stand, *n.* செய்தித்தாள் விற்பனைச் சாவடி.

news'-vendor, *n.* செய்தித்தாள் விற்பவர்.

newt, *n.* பல்லியின உயிர்வகை.

Newton'ian, *n.* நியூட்டன் (Sir Isaac Newton 1642-1727) என்ற விஞ்ஞான அறிஞரைப் பின்பற்றுபவர்; தொலைநோக்கி வகை ; *a.* நியூட்டனுக்குரிய ; இயலுலகு பற்றிய நியூட்டனின் கொள்கை சார்ந்த; நியூட்டனுல் திட்டம் செய்யப்பட்ட.

new-year's day, *n.* புத்தாண்டுநாள், ஜனவரி முதல் நாள்.

new-year's eve, *n.* புத்தாண்டுக்கு முந்திய நாள், டிசம்பர் முப்பத்தோராம் தேதி.

next, *n.* அடுத்தவர் ; அடுத்தது ; மிக அணிமை உறவுடையவர் ; மிக அணிமை உறவுடையது ; *a.* அடுத்த ; ஒட்டி அருகிலுள்ள; உடனடியாகப் பின்தொடர்கிற; மிக அணிமையுடைய ; மிக அணிமை ஒப்புடைய ; அடுத்துவருகிற ; அடுத்தபடியான; மிக அணிமை உறவுடைய; *adv.* அடுத்து; மிக அணிமையில் ; அடுத்தபடியாக ; அடுத்தாற்போல ; இனி ; அடுத்த தடவை ; *prep.* அடுத்துப்பக்கத்தில் ; மிக அணிமையில் ; மிக ஒப்பாக ; (தொ.) next of kin, மிக அணிமையான உறவினர் ; next to nothing, கிட்டத்தட்ட ஒன்றுமில்லை என்று சொல்லும்படி.

next'-best, *a.* இரண்டாவதாகச் சிறந்ததாயுள்ள.

next'-door [1], *a.* அடுத்த வீட்டில் இருக்கிற; பக்கத்தில் கடைவைத்திருக்கிற ; அண்டையிலுள்ள ; (தொ.) next-door to felony, கொடுங்குற்றமென்றே சொல்லத்தக்க.

next-door' [2], *adv.* அடுத்த வீட்டில் ; பக்கத்தில்.

nex'us, *n.* இணைவு, தொடர்பு, பற்று, உறவு ; (தொ.) the cash nexus, பணத்தொடர்பு.

Niag'ara, *n.* நீர்வீழ்ச்சி, அருவி, மலைவீழாறு; பேரொலி, கம்பலை; (தொ.) shoot Niagara, பயங்கர இடரில் துணிந்து குதி.

nib, *n.* இறகு மைக்கோலின் கூர்முனை; பேனு அலகு; கருவி முதலியவற்றின் கூர்முனை; *v.* பேனு அலகு செய்; பேனு அலகினைச் சரிப்படுத்து ; அலகினைப் பேனுக் கட்டையிற் செருகு.

nib'ble, *n.* கொறித்தல், கொந்துதல் ; அரித்தல், சிறுகடி ; கொறிப்பதற்குப் போதிய புல்லளவு ; *v.* சிறுகச் சிறுகக் கடித்துத்தின், கொந்து ; விளையாட்டாகக் கறித்துக்கொண்டிரு ; கொறி ; மெல்லப் பற்களால் பிருண்டு; அரி; கடிந்துகொள், சிறு குற்றங்குறை கூறி நச்சரிப்புச் செய்.

nib'lick, *n.* பெரிய உருண்டையான தலைப்பகுதியுடைய குழிப்பந்தாட்ட மட்டை.

nibs, *n. pl.* கொக்கோ விதைகளின் நொறுங்கல் துணுக்குக்கள்.

nice, *a.* நுட்பமான ; நயமான; நுண்ணயமான; மென்னயமிக்க ; இன்னயம் வாய்ந்த ; கூருணர்வு நயமுடைய, சிறு நுட்பமும் உணர்கிற ; நுண்ணயத்திரிபுணர்வு வேண்டப்படுகிற ; நுட்பத்திறமை வாய்ந்த ; நுண்ணயத்திறமிக்க ; சிறுநுட்பம் காட்டுகிற ; பூத்தானமான, மட்டின்றி நுட்ப நுணுக்கம் பார்க்கிற ; எளிதில் நிறைவமைதி பெருத, திருப்திப்படுத்துதற்கரிய ; இசைவிணக்கமுடைய ; நட்புப் பாசமுடைய; இனிய; இனிய தோற்றம்வாய்ந்த, நல்வனப்பார்ந்த; கண்ணோட்டமுடைய, பரிவிணக்கமார்ந்த ; பாராட்டத்தக்க; திருப்தியான ; *adv.* திருப்தியாக.

nice'-looking, *a.* இனிய காட்சியளிக்கிற, அன்பாதரவான தோற்றமுடைய.

Nicene', *a.* நைசீயா (Nicaea) நகரத்திய; நைசீயா நகரத்தில் கி. பி. 325, 787-ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற அனைத்துக் கிறித்தவத் திருச்சபைக்குரிய ; (தொ.) Nicene Creed, நைசீயா நகரத்தில் நடைபெற்ற முதல் கிறித்தவ திருச்சபையில் ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்துக்களை அடிப்படையாகக்கொண்டு வகுக்கப்பட்ட சமயக்கோட்பாடு.

ni'ceties, *n. pl.* நுட்பநுணுக்க விவரங்கள், சில்லறை நுட்ப வேறுபாடுகள்.

ni'cety, *n.* நுண்ணய ஒழுகலாறு; சரிநுட்பம், நுட்பதிட்பம்; அருநயப் பண்பு, நயநுணுக்கம்; நுட்பவேறுபாடு; வேண்டா நயநுணுக்க விவரம் ; (தொ.) to a nicety, சரிநுட்பமாக.

niche, *n.* மாடக்குழி ; சிலையுருக்கள் வைப்பதற்குரிய சுவர் மாடம்; தனியிடம், ஒருவர்க்குரிய தனி ஒதுக்கிடம்; *v.* சுவர் மாடத்தில் வை ; உள்ளிழைந்து அமர்ந்துகொள், பதுங்கி ஒட்டிக்கொள்.

nick, *n.* வடு, கணிப்புக்குறி; குறியாட்டத்தில் முதலடிக் கெலிப்பெறி ; தேறல் அளவு கலத்தில் கள்ள அடித்தட்டு ; குறிக்கொண்ட புள்ளி; குறித்த கணம், சரியான தறுவாய்; காலங்கடந்துவிடுவதற்கு முற்பட்ட கடைசிக்கணம் ; *v.* வடுப்படுத்து ; வடுக்குறியிடு ; குதிரை வாலை உயர்த்தி வைத்துக்கொள்ளும்படி வாலடியில் வடுவிடு ; குறியாட்டத்தில் கெலிப்பெண் அடை ; வேட்டையில் குறுக்குவெட்டிச்செல் ; பந்தயத்தில் மூலை வெட்டிச்செல் ; சரியாக ஊகித்துவிடு; வண்டி தவறுமுன் எட்டிப்பிடித்துவிடு; காலங் கடந்துவிடுமுன் கைப்பற்று ; (தொ.) in the nick, in the nick of time, சரியான தறுவாயில்.

nick'el, *n.* நிக்கல், கலவைகளில் பெரிதும் பயன்படுத்தப்படும் கெட்டியான ஒளிரும் வெள்ளை உலோகம் ; அமெரிக்க சிறு நாணயம் ; ஐரோப்பிய சிறு நாணய வகை ; *v.* நிக்கல் மூலாம்பூசு; (தொ.) nickel silver, செர்மன் வெள்ளி போன்ற கலவை உலோகம்; nickel steel, இரும்பும் நிக்கலுங் கலந்த கலவை உலோகம்.

**nick'-nack**, *n.* சிறுதிறப் பொருள்கள், பளுவற்ற சிறுதிறக் கருவிகலங்கள்; சிறுதிறத் துணிமணித் துணுக்குக்கள்.

**nick'name**, *n.* விளையாட்டுப்பெயர், செல்லப்பெயர்; *v.* செல்லப் பெயரிட்டழை; விளையாட்டுப்பெயர் கொடு.

**nico'tian**, *n.* சுருட்டு முதலியவை பிடிப்பவர்; *a.* புகையிலை சார்ந்த.

**nic'otine**, *n.* புகையிலை நஞ்சு, புகையிலையிலிருந்து வடித்திறக்கப்படும் எண்ணெய் வடிவ நச்சுச்சத்து.

**nic'tate, nic'titate**, *v.* கண்கொட்டு, இமை; உள்ளிமைப் படலம் திறந்து மூடியாடப்பெறு; (தொ.) nictating mambrane, nictitating membrane, பல உயிர்கள் வகையில் மூன்றுவது உள்ளிமைப்படலம்.

**ni'cy**, *n.* குழந்தை வழக்கில் இனிப்புத் தின்பண்டம்.

**nidamen'tal**, *a.* (வில.) நத்தை வகைகளின் முட்டைத் திரளை வைப்பதற்குப் பயன்படுகிற.

**nidd'ering, nid'ering**, *n.* இழிமகன், கோழை; *a.* இழிவான, கோழையான.

**nid'dle-nod'dle**, *a.* தலையாடுகிற, நடுங்குகிற, ஆட்டங்கொடுக்கிற; *v.* தலையாடிக்கொண்டிரு; தடுமாறு, தள்ளாடு; ஊசலாடு.

**nide**, *n.* ஓரீடு, வான்கோழி வகையின் ஓரீற்றுக்குஞ்சுகள்.

**nid'ificate, nid'ify**, *v.* கூடு கட்டு.

**nid'-nod**, *v.* தலையசைத்துக்கொண்டேயிரு.

**nid'us**, *n.* பூச்சியினம் முட்டையிடுமிடம்; சிதல்கள் அல்லது விதைகள் வளர்ச்சியடையுமிடம்; நோய் விளையும் இடம்; கோட்பாடு தழைப்புறும் இடம்; இயற்கைக்கொள்கலம்; முட்டைத்திரள்; பருத்திரள்; *pl.* nid'i, nid'uses.

**niece**, *n.* உடன்பிறந்தாரின் மகள்; தமையன்-தம்பி-தமக்கை-தங்கை மகள்.

**niell'o**, *n.* வெள்ளிச் செதுக்குருவின் வரைகளை நிரப்புவதற்கான கருப்புக் கலவைப்பொருள்; வெள்ளிச் செதுக்கிற் கரும் வண்ணம் நிரப்பிய ஒப்பனை வேலைப்பாடு; வெள்ளிச் செதுக்கிற் கரும்வண்ணம் நிரப்பும் வேலைப்பாட்டுப்பாணி; *pl.* niell'i, niell'os.

**Nier'steiner**, *n.* வெள்ளைத்தேறல் வகை.

**Nietzsch'ean**, *n.* நீட்ஷி (F. Nietzsche, இறப்பு 1900) என்னும் செர்மன் மெய்விளக்கியலாரைப் பின்பற்றுபவர்; நீட்ஷியின் கோட்பாடுகளை ஆதரிப்பவர்; *a.* நீட்ஷி என்னும் செர்மன் மெய்விளக்கியலாருக்குரிய; நீட்ஷியின் கொள்கைகள் சார்ந்த.

**nigg'ard**, *n.* கருமி, பிசினுறி, கஞ்சன்; *a.* உலோபியான, கைக்கடிப்புடைய.

**nigg'ardly**, *a.* பிசினுறியான, கஞ்சத்தனமான; வழங்க மனமில்லாத; கைக்கடிப்புடன் கொடுக்கிற; குறைத்துக்கொடுக்கிற; சிறுகச்சிறுகத் தருகிற; அற்பமான; சிறிதும் போதாத; *adv.* பிசினுறியாக, கருமித்தனமாக, போதும் போதா நிலையில்.

**nigg'er**, *n.* (இழி.) நீகிரோவர்; கருநிற மனித இனத்தவர்; கரு மனிதர்; கிழங்கு அரிக்கும் கருங் கம்பளிப் பூச்சி வகை; (தொ.) nigger melody, nigger song, அமெரிக்க நீகிரோவர் இசை; அமெரிக்க நீகிரோவர் பாடல்.

**nigg'er-brown**, *a.* தவிட்டுநிறத்தில் கருஞ்சாயலான.

**nigg'erhead**, *n.*=negro-head.

**nig'gle**, *v.* சில்லறை விவரங்களில் காலத்தை வீணுக்கு; சில்லறை நுணுக்கங்களை அளவுக்குமீறி விரிவுபடுத்து.

**nigg'ling**, *a.* மிகச் சிறுதிறமான, சில்லறையான, அற்பமான; பரந்த தன்மையற்ற; பெருந்தன்மையற்ற; கையெழுத்து வகையில் புரியாத.

**nigh**, *a.* அருகிலுள்ள; *adv.* அருகே; *prep.* அருகில்.

**night**, *n.* இரவு; இராக்காலம்; இராப்போது; இருள், இருட்டு; மருட்சி; அறியாமை; துயர்; தீமை; இராக்காலச் சிறப்பு நிகழ்ச்சி; இராக்கால நிலை; இராக்காலத் தனி அனுபவங்கள்; (தொ.) a dirty night, புயலான இரவு, மழைமிகுந்த இரவு; all night, all night long, முழு இரவும், இரவு முழுவதும்; at night, இரவில்; by night, இரவில்; இருளில், மறைவில்; make a night of it, மகிழ்ச்சியாக இரவைக் கழி; night and day, அல்லும் பகலும்; எப்போதும்; இடைவிடாமல்; night art, மகிழ்ச்சியான இரவு; பணியாளுக்குரிய இராப்பணி ஓய்வு.

**night'-bird**, *n.* ஆந்தை; இராக்குயில்; ஒழுக்கக்கேடன், இராச்சுற்றி.

**night'-blindness**, *n.* இராக்குருடு; மாலைக்கண், மட்டொளியில் கண்தெரியாக் கோளாறு.

**night'-boat**, *n.* இரவுப் பயணப்படகு.

**night'cap**, *n.* இரவுக்குல்லாய்; உறக்கத்திற்குமுன் பருகும் வெறித்தேறல்.

**night'-cellar**, *n.* அடிநிலத்தமைந்த கீழ்த்தரச் சாராயக்கடை.

**night'-chair**, *n.*=night-stool.

**night'-clothes**, *n.* இராக்கால உடை, படுக்கை உடுப்பு.

**night'-club**, *n.* இரவுவிடுதி, உறுப்பினர்க்கு மட்டும் இரவுணவு-படுக்கை-ஆடல் முதலியவற்றின் உரிமை அளிக்கும் நிலையம், இரவுக்கேளிக்கை விடுதி.

**night'-dress, night'-gown**, *n.* பெண்டிர் இரவு உடை; குழந்தையின் இராக்கால உடுப்பு.

**night'fall**, *n.* கதிரவனடைவு, மாலை, இரவின் தொடக்கம்.

**night'-flower**, *n.* அல்லியின மலர், இரவில் மலர்ந்து பகலில் சுருங்கும் மலர்.

**night'-glass**, *n.* கடலின்கண் இரவிற் பயன்படுத்தும் குறுகிய தொலைநோக்கி.

**night'-hag**, *n.* சூனியக்காரி, இரவில் ஆகாயத்திற் பறந்து செல்லும் பெண் பிசாசு.

**night'-hawk**, *n.* இராக் கள்ளன், இராச்சுற்றி.

**night'ingale**, *n.* அல்லிசைப் புள், புலம் பெயர்வுறும் இன்னிசைப் பறவை வகை.

**night'-jar**, *n.* விரைவிற் பறந்துசெல்லும் இரவுப் பறவை வகை.

**night'-light**, *n.* மங்கலான இரவு விளக்கு.

**night'-line**, *n.* இரவில் மீன் பிடிப்பதற்காக இரையோடு வைத்துவிட்டுச் செல்லப்படும் தூண்டில்.

**night'-long**, *a.* இரவுநேர முழுதும் நீடிக்கிற.

**night'ly**, *a.* இரவில் நிகழ்கிற; இரவுதோறும் நிகழ்கிற; இரவில் செய்யப்பட்ட; இரவில் உள்ள, இரவில் இருக்கிற; (செய்.) இரவு சார்ந்த, இரவோடு பொருந்திய; *adv.* ஒவ்வொரு இரவிலும், இரவுதோறும்.

**night'man**, *n.* கழிமலமகற்றும் வேலையாள்.

**night'mare**, *n.* தூங்குபவர்மீது உட்கார்ந்து திக்குமுக்காடச் செய்து மூச்சுத் திணறவைப்பதாகக் கருதப்படும் பேயுரு; பெருங்கவலை; கொடுங்கனவு; கோரக்கனுக் காட்சி; மனக்கிலி; ஓயாது வந்துவந்து வருத்தும் பெருந்தொல்லை.

**night'-piece**, *n.* இரவுக்காட்சி ஓவியம், இராக்கால இயற்கைக் காட்சிப்படம்.

**night'-school**, *n.* தொழிலாளர்களுக்கான இராப்பள்ளிக் கூடம்.

**night'-season**, *n.* (செய்.) இராக்காலம்.

**night'shade**, *n.* இரவில் மலருஞ் செடியினம்.

**night'-shirt**, *n.* நீண்ட துயிற்சட்டை.

**night'-soil**, *n.* மலம்; கழிநீர்க்கூளம்.

**night'-stool**, *n.* மலக்கழிப்பு முக்காலி.

**night'-suit**, *n.* படுக்கை ஆடைத் தொகுதி.

**night'-time**, *n.* இராக்காலம்; இராக்கால நிலை; இராக்கால வாய்ப்புநிலை.

**night'-watch**, *n.* இரவுக்காவல்; இராக்காவல் குழு; யாமம், பண்டை எபிரேயர்-ரோமரிடையே இராக்காவற் காலக்கூறு.

night'-work, *n.* இராக்கால வேலை, இரவிற் செய்யவேண்டிய தொழில்; இரவிற் செய்த வேலை.

night'y, *n.*=night-dress.

nigres'cence, *n.* கருஞ்சாயல், கருவண்ணம்.

nigres'cent, *a.* கருஞ்சாயலான.

nig'ritude, *n.* கருமை; இருள்.

*ni'hil ad rem*, (ல.) *a.* தொடர்பற்ற, தலைப்புக்குப் பொருத்தமில்லாத.

ni'hilism, *n.* எதிர்மறுப்புவாதம், சமய ஒழுக்கத்துறைகளில் நடைமுறை நம்பிக்கைக் கோட்பாடுகள் யாவற்றையும் மறுக்குங் கொள்கை; ருசியாவில் 19-ஆம் நூற்றாண்டில் முளைத்த மறுப்பியல் கட்சிவாதம்; (மெய்.) சூனியவாதம், இயலுலகு உளதாந் தன்மையை மறுக்குங் கோட்பாடு.

nihil'ity, *n.* சூனியம், ஒன்றுமில்லாமை; சிறுதிறம்.

nil, *n.* இல்லை; சுன்னம்.

*nil admirar'i*, (ல.) *n.* எதைக்கண்டும் வியப்புறு மனப்பான்மை; கவலையில்லா அசட்டைநிலை.

nil'gai, *n.* சிறு கொம்புடைய மான்வகை.

Nilom'eter, *n.* நைல் ஆற்றின் நீர்மட்ட உயர்வினைக் காட்டும் அளவு குறிக்கப்பட்ட தூண்.

Nilot'ic, *a.* நைல் ஆற்றைச் சார்ந்த; நைல் நிலப்பகுதி சார்ந்த; நைல் நிலப்பகுதிக்குரிய குடிமக்களைச் சார்ந்த.

nim, *v.* திருடு.

nim'ble *a.* விரைவான; விரைவியக்கமுடைய; விரை பயில்வுடைய; விரை திறம் வாய்ந்த; உள வகையில் பல்திறப் பயிற்சியுள்ள; விரைவில் புரிந்துகொள்கிற; சுறுசுறுப்பான.

nim'bus, *n.* பரிவேடம்; தெய்விகவடிவங்களைச் சுற்றியுள்ள சூழ் ஒளிவட்டம், தெய்விக வடிவங்களின் ஓவியங்களில் காட்டப்படும் ஒளிவட்டவரை; (வான்.) மழை முகில்; *pl.* nim'bi, nim'buses.

nimi'ety, *n.* கழிமிகை.

nim'iny-pim'iny, *a.* செயற்கையான, பகட்டுமினுக்கான.

Nim'rod, *n.* வேட்டை வல்லான்; பயிற்சி விளையாட்டு வல்லுநர்.

ninc'ompoop, *n.* அப்பாவி; பேதை; அறிவற்றவன்; உரமிலி.

nine, *n.* ஒன்பது; ஒன்பது குறிகள் ஆட்டச்சீட்டு; (தொ.) dressed up to the nines, ஆடம்பரமாக உடையணிவிக்கப்பட்டு; nine days' wonder, நிலையற்ற சிலநாள் ஆரவாரம்; nine-o' clock wind, துப்பாக்கி வீரரின் இடதுகைப் புறத்திலிருந்து அடிக்குங் காற்று; nine times out of ten, மிக்க பெரும்பான்மையாக; the Nine, கிரேக்க புராணத்திலுள்ள ஒன்பது பெண் தெய்வங்கள்; to the nines, முழுநிறைவை நோக்கி.

nine'fold, *a.* ஒன்பது மடங்கான.

nine'pins, *n.* எறிகட்டை ஆட்டம், பந்தினால் அடித்துவிழச் செய்யும் ஒன்பது கட்டைகள்கொண்ட ஆட்டவகை.

nine'teen, *n.* பத்தொன்பது; *a.* பத்தொன்பது ஆன.

nine'teenth, *n.* பத்தொன்பதாமவர்; பத்தொன்பதாவது; பத்தொன்பதில் ஒரு கூறு; *a.* பத்தொன்பதாவதான; பத்தொன்பதில் ஒரு கூறான; (தொ.) nineteenth hole, குழிப்பந்தாட்டச் சங்கத்தின் இன்தேறல் விடுதி.

nine'tieth, *n.* தொண்ணூறுமவர்; தொண்ணூறுமது; தொண்ணூறில் ஒரு கூறு; *a.* தொண்ணூறுவது ஆள்; தொண்ணூறில் ஒரு கூறு ஆன.

nine'ty, *n.* தொண்ணூறு; *a.* தொண்ணூறான; (தொ.) the nineties, 90 எண் கொண்ட பாகை அளவுகள்; நூற்றாண்டில் 90 முதல் 99 வரையுள்ள ஆண்டுகள்; 90 முதல் 99 வரையுள்ள வயதளவு.

Nin'evite, *n.* நினீவே (Nineveh) என்ற பண்டைக்கால நகர வாழ்நர்.

ninn'y, *n.* முட்டாள், பேதை; மனவுரம் அற்றவர்.

*ninon*, (பிர.) *n.* இலேசான பட்டுத்துணி வகை.

ninth, *n.* ஒன்பதாமவர்; ஒன்பதாவது; ஒன்பதில் ஒரு கூறு; *a.* ஒன்பதாவதான; ஒன்பதில் ஒரு கூறான; (தொ.) ninth part of a man, தையற்காரன்.

ninth'ly, *adv.* ஒன்பதாவதாக.

Ni'obe, *n.* கையாறுற்று ஆறுத்துயரிலாழ்ந்த அணங்கு; குழந்தைகளுக்காக அழுதுகொண்டேயிருந்தபோது கல்லாகும்படி செய்யப்பட்ட பெண்.

niob'ium, *n.* (வேதி.) அருந்தலான உலோகத்தனிமம்.

nip[1], *n.* கிள்ளல்; நெருடல்; கடிப்பு; கொய்வு; ஊறுபாடு; கடுநோவு; ஊறுபடுத்துந் தன்மை; குளிரின் கடுப்பு; வசையின் உறுத்தல்; கண்டனத்தின் உறைப்பு; கடித்தெடுத்த அல்லது கொய்த துணுக்கு; சுரங்கப்பாளத்தின் அரிப்பு, தேய்வு; (கப்.) வடக்கயிற்று நெரிவு; *v.* கிள்ளு; நெருடு; நெருக்கி நசுக்கு; கடி; கொய்; வளர்ச்சியைத் தடைப்படுத்து; நலத்துக்கு ஊறுசெய்; ஊறுபடுத்து, கடுப்பூட்டு; காரமாகக் கடிந்துரை; (தொ.) nip in the bud, முளையிலேயே கிள்ளியெறி.

nip[2], *n.* ஊக்கமூட்டுவதற்கான சிறிதளவு இன்தேறல்; *v.* ஊக்கமூட்டுஞ் சிறிதளவு இன்தேறலை அருந்து.

ni'pa, *n.* கிழக்கிந்திய பனையின மரவகை.

nipp'er, *n.* கிள்ளுபவர்; கிள்ளுவது; கடுப்பூட்டுபவர்; கடுப்பூட்டுவது; நலங்கெடுப்பவர்; நலங்கெடுப்பது; மீன்வகை; சிறுவன், பழ விற்பனையாளரின் உதவியாள்; தெருச் சுற்றிச் சிறுவன்; வீடில்லாக் குழந்தை.

nipp'ers, *n. pl.* இடுக்கி, பற்றுக்குறடு, சாமணம்; வில் அமைப்புடைய மூக்குக்கண்ணாடி; குதிரையின் முன்வாய்ப்பல்; நண்டு இனத்தைச் சேர்ந்த உயிரினத்தின் கொடுக்கு.

nip'ple, *n.* முலைக்காம்பு; முலைக்காம்பு பாதுகாப்புக் கவிகை; குழந்தைப் பால்புட்டிக் காம்பு; தோல்-கண்ணாடி-உலோகம் முதலியவற்றின்மீதுள்ள குமிழ் முளை; மலைமீதுள்ள சிறு முகடு; துப்பாக்கி விசைமீது மூடிப் பொருத்தப்படும் துளையிட்ட முனைப்பு.

nip'plewort, *n.* மஞ்சள்நிற மலருடைய களைச்செடி வகை.

Nipp'on, *n.* ஜப்பான்.

nirva'na, (ச.) *n.* வீடுபேற்றுநிலை.

*nis'i*, (ல.) *conj.* (சட்.) இல்லாவிடில், ஒழிய; (தொ.) decree nisi, order nisi, rule nisi, வேறு எதிர் நடவடிக்கைகளால் ஒதுக்கி வைக்கப்பட்டாலன்றிக் குறிப்பிட்ட காலம் முழுநிறை உரிமைபெற்ற கட்டளை.

*nis'i pri'us*, (ல.) *n.* பொதுத்துறை வழக்குகளைப் பருவகால நீதிமன்றங்களில் நடுவர்கள் விசாரணை செய்தல்; நடுவர்கள் பருவகால நீதிமன்ற விசாரணை நடவடிக்கை.

Niss'en hut, *n.* வளையிருப்புக் குடில், திண்காரை நிலத்தளமும் சுரங்கம் போன்ற அமைப்பும் உடையதாய் வளைவு நெளிவான இரும்புத் தகட்டாலான குடிசை.

nit, *n.* ஈர் ஒட்டுயிரின வகைகளின் முட்டை, பேன்முட்டை.

nit'on, *n.* கதிரியச் சிதைவினின்று கிட்டும் கதிரியக்கம் வாய்ந்த தனிம வளிப்பொருள்.

nit'rate[1], *n.* வெடியகி, வெடியக்காடியுடன் மூல அடிப் பொருளோ வெறியமோ சேர்வதால் உண்டாகும் உப்பியற் பொருள்.

nitrate'[2], *v.* வெடியக்காடியுடன் கல; வெடியக்காடியூட்டு; வெடியக்காடி கலந்து செயற்படுத்து.

ni'tre, *n.* வெடியுப்பு, சாம்பர வெடியகி; (தொ.) cubic nitre, உவர வெடியகி.

nit'ric, *a.* வெடியம் சார்ந்த; வெடியம் உட்கொண்ட; (தொ.) nitric acid, வெடியக் காடி.

nit'rify, *v.* வெடியத்தால் வளமாக்கு; வெடியக் காடியாக மாற்று.

nit'rite, *n.* வெடியகக் காடியின் உப்புச் சத்து.

**nitro-a'cid**, *n.* உயிர்ப்பொருட் காடியுடன் கலந்த வெடியக் காடிக் கலவை.

**nitro-com'pound**, *n.* வெடியக் காடியின் செயலால் ஆக்கப் பட்ட கலவை.

**nitro-explos'ive**, *n.* வெடியக் காடியைக் கொண்டு செய்யப் பட்ட வெடிமருந்து.

**nit'rogen**, *n.* வெடியம், வளிமண்டலத்தில் ஐந்தில் நான்கு கூறான வளித்தனிமம்.

**nitro-gly'cerin, nitro-gly'cerine**, *n.* வெடிப்பாற்றல் மிக்க மஞ்சட்கலவை நீர்மம்.

**nitro-powd'er**, *n.* வெடியக்காடி சேர்த்துச் செய்யப்பட்ட வெடிமருந்து.

**nitro-sulphur'ic**, *a.* வெடியக் கந்தகக்காடிக் கலப்பினுல் ஏற்பட்ட.

**nit'rous**, *a.* வெடியகம் சார்ந்த; வெடியகம் போன்ற; வெடியக முட்டப்பட்ட; (தொ.) nitrous acid, வெடியகக் காடி; nitrous oxide, வெடியக உயிரகை, மயக்க மருந்தாகப் பயன் படும் வளி.

**nitrox'yl**, *n.* வெடியமும் உயிரகமும் உட்கொண்ட வேதிப் பொருட் குழுமம்.

**nit'wit**, *n.* அறிவிலி, பேதை.

**nix**, *n.* நீரர மைந்தர், நீர்வாழ் சிறு தெய்வம்; *fem.* nix'ie.

**Nizam'**, *n.* ஐதராபாத்தின் இடைக்கால அரசர்; துருக்கி நாட்டுப் படைவீரர்.

**no**, *n.* இல்லையென்ற சொல்; மறுப்புரை; மறுப்பு; ஒன்று மில்லாதது; *a.* எத்தகையதும் அல்லாத; எதுவும் இல்லாத; எவரும் இல்லாத; ஒன்றும் இல்லாத; அல்லாத; மாருன; என்றுகூற முடியாத; உளதாகாத; கருத இடமிராத; வேண்டாத; சரியல்லாத, நேரல்லாத, தவருன; மதிப்பற்ற; முக்கியத்துவமற்ற; *adv.* அப்படி அல்லாது; என்று கூற முடியாமல்; அல்லாது; (தொ.) no less, no less than, அள விற் குறையாது, என்ற அளவுக்கு ஒப்பாக; no man's land, புறம்போக்கு, பொதுநிலம்; no more, இனியில்லா நிலையில்; இதற்கு மேலில்லா நிலையில்; முடிந்துவிட்ட நிலையில்; இறந்து விட்ட நிலையில்; no side, காற்பந்தாட்டத்தில் ஆட்டமுடி வினைப் பற்றிய நடுவரின் அறிவிப்பு; no thoroughfare, பொது வழியன்று என்னும் அறிவிப்பு, மறுபக்கம் அடைத் திருக்கிறது என்பதற்கான அறிவிப்பு; no trump, no trumps, சீட்டாட்டத்தில் துருப்பு வகை குறிக்காமல் ஆட்டமாடும் அறிவிப்பு; no whit, இல்லவேயில்லை, முழுதும் இல்லை.

**Noach'ian, Noach'ic**, *a.* விவிலியக்கதை மரபின்படி வெள்ள ஊழிகடந்து வாழ்ந்த மனிதவின முன்னோனை நோவா (Noah) என்பவனைச் சார்ந்த; நோவா காலத்துக்குரிய.

**Noah's ark**, *n.* விவிலியக்கதை மரபுப்படி ஊழிவெள்ளத்தின் போது இறைவன் தன் அருட்சலுகையால் அதனின்று தப்ப நோவா பயன்படுத்திய தோணி; நோவா மேகமண்டலம்.

**Noah's nightcap**, *n.* மஞ்சள்வண்ண மலர்ச்செடி வகை.

**nob**, *n.* தலை; இருவர் சீட்டாட்டவகையில் இனமொத்த 'அடியாள்' சீட்டுக்காட்டல்; இனமொத்த 'அடியாள்' சீட்டுக் காட்டலால் வரும் கெலிப்புக்குறி; *v.* குத்துச்சண்டையில் தலையில் அடி.

**nob'ble**, *v.* முறைகேடான மறைவழிகளில் சலுகைபெறு; ஒழுங்குகேடான தன்மையில் பணம் கைப்பற்று; குற்ற வாளியைப் பிடி.

**no'-being**, *n.* இல்பொருள்; உளராகாதவர், இலா உருத் தோற்றம்.

**nobil'iary**, *a.* உயர்குடிச் சார்ந்த; பெருமக்கள் குழுவினுக் குரிய; உயர் குடியாளர் தொகுதியைச் சார்ந்த; பெருமக்கள் குடிப்பட்டத்துக்கு உரிய; (தொ.) nobiliary particle, பிரஞ்சு செர்மன் மொழிகளில் உயர்குடிச் சுட்டான முன்னிடைச் சொல்.

**nobil'ity**, *n.* உயர்குடிப்பிறப்பு; உயர்குடிப்பதவி; உயர் குடி மக்களின் தொகுதி; பெருந்தன்மை; உயர்பண்பு; மேதகைமை.

**no'ble**, *n.* உயர்குடிமகன், பெருமகன்; முற்கால நாணய வகை; *a.* உயர்குடியைச் சேர்ந்த; உயர் புகழ் பெற்றுள்ள; சிறப்பு வாய்ந்த; உயர் குணமுடைய; உயர்நோக்கமுள்ள; மேதக்க, பெருந்தன்மையுடைய; வண்ணப்பகட்டான; வீறுர்ந்த தோற்றமுள்ள; மிகச்சிறந்த; மெச்சத்தகுந்த; உலோகப் பொருள்களின் காடிபற்றுத, களிம்பேறுத, துருப் படாத, வேதியியல் மாறுபாட்டில் கேடுறுத; கறைபடாத.

*noblesse*, (பிர.) *n.* பெருங்குடிமக்களின் தொகுதி; (தொ.) *noblesse oblige*, சிறப்புரிமைக்கேற்ற பொறுப்புணர்வு.

**no'body**, *n.* ஒருவரும் இலார்; பொருளல்லர்.

**no'cent**, *a.* தீமை செய்கிற; குற்றமுள்ள.

**nock** [1], *n.* குதை, வில்லின் நாண் பள்ளம்; நாண் பற்றுவதற் கான அம்பின் காம்படி; *v.* அம்பை நாணில் தொடு.

**nock** [2], *n.* பாய்மர வகையின் முற்புற மேல் மூலை.

**noctam'bulant**, *a.* இரவில் உறக்கத்தில் நடந்து செல்கிற.

**noctiflor'ous**, *a.* இரவில் மலர்கிற.

**noctiluc'a**, *n.* இருளில் ஒளிவிடுகிற சிற்றுயிர்.

**noctiv'agant, noctiv'agous**, *a.* இரவில் சுற்றித்திரிகிற.

**noc'tule**, *n.* பிரிட்டனிலுள்ள மிகப்பெரிய வௌவால் வகை.

**nocturn'al**, *a.* இரவுக்குரிய; இரவிலுள்ள; இரவிற் செய்யப் பட்ட; இரவில் நடமாடுகிற.

**noc'turne**, *n.* கனவு போன்ற தூங்கிசைத் துணுக்கு; இரவுக் காட்சி ஓவியம்.

**noc'uous**, *a.* தீதுடைய.

**nod**, *n.* தலையாட்டம்; அதிகாரத்தின் அடையாளமான தலை யசைப்பு; *v.* தலையசை, தலையாட்டு; தலையாட்டி ஒப்புதல் அளி; தலையசைத்துக் கட்டளை தெரிவி; அரைகுறை உறக்க நிலையில் தலையை முன்னே சாயவிடு; அரைகுறை உறக்கம் கொள்; தள்ளாடு, சாய்; தன்னறியாமல் தவறு செய்; (தொ.) Homer sometimes nods, யானைக்கும் அடி சறுக்கும்; land of nod, தூக்கம்; nodding acquaintance, மேற்போக் கான நட்பு, சிறிதளவே பழக்கமான நட்பு.

**nod'al**, *a.* கணுச்சார்ந்த; கரணைக்குரிய.

**nod'dle**, *n.* (பே-வ.) தலை; மூளை; *v.* தலையசை, தலையாட்டு.

**nodd'y**, *n.* முட்டாள், பேதை; வெப்பமண்டலக் கடற்பறவை வகை.

**node**, *n.* முடிச்சு; குமிழ்; புடைப்பு; கரணை, வேர் தடி கிளை களிலுள்ள திரளை; இலைக்கணு; இலைகள் கிளைக்கும் இடம்; கட்டி; கீல்வாதக் கழலை; கோளின் சுழற்சி வட்டம் மற்றொரு கோளின் சுழற்சி வட்டத்தோடு சந்திக்கும் இடம்; அதிர் வுடைய பொருளின் அதிர்வு மையப்புள்ளி; மையமுனை; கண்ணிக்கணு, வளைவுக்கோடு தன்னையே சந்திக்கும் இடம்.

**nodose'**, *a.* முடிச்சுள்ள; கணுவுள்ள; சிக்கலுள்ள; குமிழ் களுள்ள, புடைப்புள்ள.

**nodos'ity**, *n.* முடிச்சுகளுள்ள தன்மை; முடிச்சு, கணு; புடைப்பு, முனைப்பு.

**nod'ule**, *n.* திரளை, சிறு உருண்டை; செடியில் சிறு கணு; நரப்புக் கரணை, நரப்புக்கணு.

**nod'us**, *n.* கடா, சிக்கலான செய்தி; இக்கட்டு, கதை முதலிய வற்றின் சிக்கலான கட்டம்; *pl.* nod'i.

**Noel'**, *n.* நாவலோ! கிறிஸ்துமஸ் பாடல்களில் மகிழ்ச்சி குறிக்கும் இடைச்சொல்.

**noes**, *n. pl.* எதிர்மறுப்பு வாக்குக்கள்; எதிர்மறுப்பு வாக்கா ளர்கள்.

**noet'ic**, *n.* அறிவுத்திற ஆய்வியல்; *a.* அறிவுத்திறம் சார்ந்த; கருத்தியலான, புலன்களுக்கு அப்பாற்பட்ட; கோட்பாட் டாராய்ச்சியில் ஈடுபட்டுள்ள.

**nog** [1], *n.* குற்றி, மரமுளை; ஆப்பு; சிறு மரக்கட்டை; மொட்டை மரக்கிளை; கிளைமுறிந்த அடித்தூறு; மரத்தின் பயனற்ற அடிக்கட்டை; *v.* ஆப்படித்திறுக்கு, மரமுளை அடித்துச் செப்பம் செய்; மரச்சட்டத்தில் செங்கல் வேலைப்பாடமைத்துக் கட்டு.

**nog**[2], *n.* இங்கிலாந்தின் கிழக்கு ஆங்கிளியாப் பகுதியில் வடிக்கப்பட்ட காரச் சாராய வகை.

**nogg'in**, *n.* சிறு குடுவை; கடுந்தேறல் வகையில் சிறுமுகத்தல் அளவு, கால் 'பைண்ட்'.

**no'how**, *adv.* வழியில்லாமல், ஒருவழியாலும் முடியாததாக, எவ்விதத்திலுமில்லாது.

**noil**, *n.* குறுகிய கம்பளிச் சீவல் அல்லது சீவல்கள்.

**noise**, *n.* கூச்சல், இரைச்சல்; வெறுப்பான ஒலி; கடுமையான ஒலி; *v.* பேரொலி செய்; பரவலாகத் தெரிவி; (தொ.) big noise, (பே-வ.) முக்கியத்துவம் வாய்ந்தவர்; make a noise, மிகுதியாகப் பேசு; அதிகமாகக் குற்றங்கூறு; நாடறிந்தவராயிரு; இகழார்ந்தவராயிரு, கெட்டபெயர் உடையவராயிரு.

**noisette'**[1], *n.* கலப்பின ரோசா மலர்வகை.

***noisette***[2], (பிர.) *n.* கொத்திய இறைச்சி உண்டி வகை.

**nois'ome**, *a.* கேடுதருகிற; வெறுப்பூட்டுகிற; கெட்டவாடையுள்ள.

**nois'y**, *a.* கூச்சலிடுகிற; இரைச்சல் மிக்க; கொந்தளிப்பான; உரத்த; மொழிநடைவகையில் ஆரவாரமான; பகட்டான; முனைப்பான.

***nol'ens vol'ens***, (ல.) *adv.* விரும்பினும் விரும்பாவிடினும்; கட்டாயப்படுத்தி; எப்படியாவது.

***nol'i me tan'gere***, (ல.) *n.* தோற்சிலந்திப்புண்; முகப்பரு; தொடா எச்சரிப்பு, அணுகாத்தடை, தலையீடு தடுப்பு; தொட்டால் வெடித்து விதை சிதறவிடுஞ் செடி; மகதலேன் மரியாள் மாதினுக்கு இயேசுநாதர் காட்சியளித்தது பற்றிய படம்.

**noll**, *n.* (பே-வ.) தலை, மண்டை, தலையுச்சி.

***noll'e pros'equi***, (ல.) *n.* (சட்.) வாதிபக்க வழக்குத்துறப்பு; அரசியல் வழக்குரைஞர் வழக்குப்பின்னிடைவு; குற்றச்சாட்டுக் கைதுறப்பு; நடவடிக்கை நிறுத்தம்; வழக்குத்துறப்புப் பதிவு.

***nol'o episcopar'i***, (ல.) *n.* பொறுப்புவாய்ந்த பதவித் தவிர்ப்பு; பொறுப்புத்தவிர்ப்பு மரபுவாசகம்.

**nom'ad**, *n.* நாடோடிமரபினர், மேய்ச்சல்நாடி இடத்துக்கு இடம் அலைந்து திரியும் வாழ்க்கைமரபுடைய இனத்தவர்; நிலையான வாழ்வற்றவர்; ஊர்சுற்றி; *a.* நாடோடியான, அலைந்து திரிகிற, ஊர்சுற்றுகிற.

**nomad'ic**, *a.* குடிநிலவரமற்ற, நாடோடியான.

***nom de guerre***, (பிர.) *n.* புனைபெயர், மாற்றுப்பெயர், பாவனையாக மேற்கொள்ளப்பட்ட பெயர்.

***nom de plume***, (பிர.) *n.* எழுத்தாளரின் புனைபெயர், புனை குறிப்பு.

**nom'enclator**, *n.* பெயரிடுபவர்; தாவரவியலில் பெயர் வகுத்துரைப்பாளர்; விருந்தில் உரிய இடத்துக்கு இட்டுச் செல்லும் அரங்கத் துணைவர்; பண்டை ரோமரிடையே ஆளறிமுகப் பணியர்; தேர்தல் காலத்தில் பெயர்கூறி ஆள் அறிமுகம் செய்யும் கடமையுடைய அடிமை.

**nom'enclature**, *n.* இடுபெயர்த் தொகுதி; துறைப்பெயர்த் தொகுதி; துறை வழக்காறு, துறைச்சொல் வழக்கு; முறைப் படுத்தப்பட்ட துறை வழக்குச்சொல்.

**nom'inal**, *a.* பெயர் சார்ந்த; பெயர்ச்சொல் போன்ற; பெயர்ச்சொல் இயல்புடைய; பெயர்களைத் தருகின்ற; பெயர் களடங்கிய; பெயரளவேயான, பெயர் மட்டிலான, உண்மையல்லாத, பெயருக்குரிய மெய்ப் பண்பற்ற; (தொ.) nominal definition, பெயர்ப்பண்பு விவர விளக்கம்; nominal sum, பெயரடையாளத் தொகை.

**nom'inalism**, *n.* (மெய்.) பெயர்ப் போலிமைக்கோட்பாடு, பொதுப்பெயர் பண்புப் பெயர்கள் பொருள்குறியாப் பெயர்க் குறிப்புக்கள் மட்டுமே என்னுங் கருத்து.

**nom'inate**, *v.* பெயர்குறிப்பிடு; பெயரால் கூப்பிடு; தேர்தலுக்குநிறுத்து; வேட்பாளராகக் குறிப்பிடு; பதவிக்குஅமர்த்து; தேர்தலுக்காக முன்மொழி; அமர்வி, நியமனஞ் செய்.

**nomina'tion**, *n.* பெயர்க்குறிப்பீடு; தேர்தல் முன்மொழிவு; பதவி அமர்த்தீடு; பணி அமர்விப்பு; நியமனம், பதவி அமர்த்தும் உரிமை.

**nom'inative**, *n.* (இலக்.) எழுவாய் வேற்றுமை; *a.* எழுவாய் வேற்றுமை சார்ந்த; அமர்த்தீடு சார்ந்த, நியமன உரிமையால் அமர்த்தப்படத்தக்க.

**nominee'**, *n.* நியமிக்கப்பட்டவர்; பெயர் குறிப்பிடப்பட்டவர், முன்மொழியப்பட்டவர்.

***non***, (ல.) *adv.* இல்லாததாக.

**non-abstain'er**, *n.* குடிவிலக்காதவர்; விலக்காதவர், விலகியிராதவர்.

**non-ac'cess**, *n.* (சட்.) வழக்கில் தந்தைமை சாலாது என்ற வாதம்.

**non'age**, *n.* (சட்.) இருபத்தொரு வயதுக்கு உட்பட்ட பருவம்; வயதுவரா நிலை; பருவமடையா நிலை; தொடக்கப்பருவம்.

**nonagenar'ian**, *n.* 89-100 ஆண்டுகட்கு இடைப்பட்ட வயதுடையவர்; *a.* 89-100 ஆண்டுகட்கு இடைப்பட்ட வயதுடைய.

**non-appear'ance**, *n.* தோன்றாமை, நீதிமன்றத்தில் கட்சிக்காரர் அல்லது சான்றுரைஞர் வராதிருத்தல்.

**non'ary**, *n.* (கண.) ஒன்பதின் தொகுதி; *a.* ஒன்பது எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்ட.

***non assump'sit***, (ல.) *n.* (சட்.) எதிர்வாதி வாக்குறுதி அளிக்கவில்லை என்ற வாதம்.

**non-belli'gerant**, *n.* போரில் ஈடுபடா நாடு; *a.* போரில் ஈடுபடாத.

**nonce**, *n.* தற்போதைய நிலை, தற்சமயம்.

**nonce'-word**, *n.* அப்போதைக்கு உருவாக்கப்பட்ட சொல், ஒரு தறுவாய்க்காகப் புதிதாக உண்டுபண்ணப்பட்ட சொல்.

**non'chalant**, *a.* உணர்ச்சியற்ற; அக்கறையற்ற, அசட்டையான.

**non'-claim**, *n.* சட்டப்படி தகுந்த காலத்தில் எழுப்பத்தவறிய உரிமை வாதம்.

**non-colle'giate**, *a.* மாணவர் வகையில் கல்லூரி சாராத; பல்கலைக்கழக வகையில் கல்லூரிகளில்லாத.

**non-com'batant**, *n.* போரிடாத துறையைச் சார்ந்தவர், படைத்துறை சாராப் பொதுமகன்.

**non-commi'ssioned**, *a.* படைத்துறைப்பதவி வகிக்காத.

**non-committ'al**, *n.* பொறுப்பேலாச் சமநிலை, ஒருபாலும் சாராமல் விலகிநிற்குந் தன்மை; *a.* பொறுப்பேலாத, கட்டுப் படுத்திக் கொள்ளாத.

**non-commun'icant**, *n.* நற்கருணை வழிபாட்டுக்குச் செல்லாதவர்.

***non com'pos, non com'pos men'tis***, (ல.) *a.* (சட்.) கிறுக்கான, மனக்கோளாறுள்ள.

**non-conduc'ting**, *a.* மின்வலி ஊடுசெல்லாத; இகைப்புத் திறனற்ற, வெப்பத்தையோ மின்வலியையோ கொண்டு செல்லாத.

**nonconform'ist**, *n.* ஆங்கிலேய திருச்சபைக் கொள்கையை ஒப்புக்கொள்ளாதவர்; (தொ.) the nonconformist conscience, ஆங்கிலேய திருச்சபைக் கொள்கையை ஒப்புக்கொள்ளாதவர்களின் மனச்சான்றுக்குரிய கருத்துக்கள்; ஆங்கில திருச்சபை ஏலாதவர் மனச்சான்றுக்குரிய அரசியல் கருத்துப்பகுதி.

**nonconform'ity**, *n.* பொருந்தாமை, ஒத்துவராமை; இசைவின்மை; ஆங்கிலேய திருச்சபைக் கொள்கையை ஒப்புக் கொள்ளாதவர்களின் கொள்கைகள்-பழக்கங்கள் ஆகியவற்றின் இயல்பு.

**non'-content**, *n.* பிரிட்டிஷ் மாமன்ற மேலவையில் தீர்மானத்துக்கு எதிரிடையாக வாக்களிப்பவர்.

**non-co-opera'tion**, *n.* ஒத்துழையாமை; பிரிட்டிஷ் ஆட்சிக் கால இந்தியாவில் ஒத்துழையாமை இயக்கம்.

**non'descript**, *n.* எளிதில் வகைப்படுத்தப்பட இயலாதவர்; வகைப்படுத்தப்பட முடியாதது; இரண்டுங்கெட்டது, இதுவும் அதுவுமல்லாத பொருள்; கலப்பினத்தவர்; கலப்புப்பொருள்; *a.* வகைப்படுத்தப்பட இயலாத; விளக்கிக்கூற முடியாத; கலப்பினமான.

**none**, *pron.* யாருமிலார்; *a.* ஒன்றுமில்லாத; *adv.* ஒருசிறிது கூட இல்லாததாக.

**non-effec'tive**, *a.* படைவீரர்-மாலுமிகள் வகையில் படைத் துறைப்பணிக்குத் தகுதியற்ற.

**non-eg'o**, *n.* நானல்லாதது, புறப்பொருள், தான் அறியாது அறியப்படும் பொருள்.

**nonen'tity**, *n.* இல்பொருள்; பொருளன்மை; கட்டுக்கதை, கற்பனை; மதிப்பு ஏதுமற்றவர்; மதிப்பில்லாத பொருள்; இன்மையெண் குறி.

**nones**, *n. pl.* பண்டை ரோமர் வழக்கில் மார்ச்சு முதல் ஒன்று விட்ட மாதங்களில் 7-ம் மற்ற மாதங்களில் 5-ம் ஆகிய விழா நாள்; பிற்பகல் மூன்று மணிக்குரிய திருக்கோயில் வழிபாடு.

*non ess'e*, (ல.) *n.* இல்லாதது, இல்லாமை, இல்லாநிலை.

*non est*, (ல.) *n.*=*non inventus*.

*non est inven'tus*, (ல.) *n.* எதிர்வாதியைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்ற தலையாரியின் அறிவிப்பு.

**none'such**, *n.*=nonsuch.

**nonet'**, *n.* (இசை.) ஒன்பது இசைக்கருவிகளுக்கான பாட்டு வகை; ஒன்பது குரல்களுக்கான பாட்டு வகை.

**non-Euclide'an**, *a.* வடிவியலில் பண்டைய் கிரேக்க அறிஞரான யூக்ளிட் (கி. மு. 300) மேற்கொண்ட அடிப்படைக் கோட்பாடுகளுக்குப் புறம்பான.

**non-feas'ance**, *n.* (சட்.) செய்தக்க செய்யாப் பிழைபாடு.

**non-flamm'able**, *a.* எளிதில் தீப்பற்றாத.

**non-hum'an**, *a.* மனித இனத்தைச் சேராத.

**nonill'ion**, *n.* ஓரிலக்கம், கோடிகோடி கோடி கோடி கோடி கோடி கோடி, ஒன்று தொடர்ந்த 54 சுன்னங்களையுடைய பேரெண்.

**non-interven'tion, non-interfer'ence**, *n.* தலையிடாக் கொள்கை; பிறநாட்டுச் சச்சரவுகளில் தலையிடாமை.

**non-intru'sion**, *n.* ஸ்காத்லாந்தின் திருக்கோயில் வகையில் பொது அவை விரும்பாத சமயகுருவைப் புரவலர் அவர்கள் மீது சுமத்தக் கூடாதென்னுங் கொள்கை.

*non inven'tus*, (ல.) *n.* (சட்.) எதிர்வாதி தன் வட்டாரத்தினுள் காணப்படவில்லை என்ற தலையாரியின் அறிவிப்பு; ஆள் எல்லையுளின்மை அறிவிப்பு.

**non'ius**, *n.* நுண்கணிப்பு மானிகளில் அளவு கூறுபடுத்தும் வகைமுறை.

**non-join'der**, *n.* (சட்.) வழக்கில் பங்காளர் அனைவரையும் சேர்க்காமை.

**Nonjur'or**, *n.* பிரிட்டிஷ் அரசர் வில்லியம்-அரசி மேரி ஆகியோருக்கு அடக்க உறுதிமொழிச் சூளுரை கூறமறுத்த சமய குரு.

**non-jur'y**, *a.* முறைகாண் ஆயத்தினர் உதவியற்ற வழக்கு விசாரணை சார்ந்த.

*non liq'uet*, (ல.) *n.* (சட்.) விளக்கமில்லை என்ற அறிவிப்பு, முடிவு தெளிவற்ற வழக்கில் முறைகாண் ஆயத்தினர் ஒத்திவைப்பு முடிபு.

**non-lo'gical**, *a.* அளவைமுறையின்றிப் பெறப்பட்ட, அளவைசாரா முறையான.

**non-mem'ber**, *n.* உறுப்பினரல்லாதவர்.

**non-met'al**, *n.* (வேதி.) உலோகமல்லாத தனிமம்.

**non-mo'ral**, *a.* ஒழுக்கமுறை சாராத, ஒழுக்கநெறித் தொடர்பில்லாத.

**non-na'tural**, *a.* இயல்நெறி திறம்பிய.

*non nob'is*, (ல.) *n.* "வெற்றி தோல்விகள் கடவுளாலன்றி நம்மால் அல்ல" என்று தொடங்கும் லத்தீன் பாடல்; ஆட்டப்படுதல் உணர்வு.

**nonpareil'**, *n.* தனி ஒருவர், ஈடிணையற்றவர்; தனிநிலைப் பொருள், ஈடெடுப்பற்றது; (அச்சு.) அச்செழுத்து அளவு வகை; இனிப்புத் தின்பண்ட வகை; சீமை இலந்தைப்பழ வகை; பறவை வகை; கோதுமை வகை; அந்துப்பூச்சி வகை.

**non-part'y**, *a.* கட்சிச் சார்பற்ற, அரசியல் கட்சிப்பற்று நீக்கிக் கவனிக்க வேண்டிய.

*non pla'cet*, (ல.) *n.* தீர்மானத்திற்கு எதிரிடையாகத் திருக்கோயில் அல்லது பல்கலைக்கழகப் பெருங்குழுக்களில் கூறும் எதிர்ப்பு வாக்கு; *v.* தீர்மானத்தைத் தோற்கடி.

**nonplus'**, *n.* திகைப்புநிலை, தடுமாற்றம்; தத்தளிப்பு; குழப்ப நிலை, செயலற்றநிலை; *v.* திகைக்க வை, தடுமாற்றமூட்டு.

*non plus ul'tra*, (ல.) *n.* "மேற்செல்லற்க" என்ற தடையாணை; மேற்செல்ல முடியா எல்லைக்கோடி; உச்சநிலை; முழுநிறை முகடு.

*non poss'umus*, (ல.) *n.* நம்மால் முடியாது என்ற கூற்று, இயலாமை அறிவிப்பு; மறுப்பு.

**non-provid'ed**, *a.* தொடக்கப்பள்ளி வகையில் திணைநில அரசியல் ஆதரவுபெறாத.

**non-res'ident**, *n.* புறக்குடியிருப்பாளர், உடனுறைவற்ற சமயகுரு; உடனுறைவற்ற சமய அலுவலர்; வேறிட வாழ்வுடையவர்; தற்காலிகக் குடியிருப்பாளர்; *a.* சமய குருமார் வகையில் உடன் குடியிருப்பற்ற; உடனுறைவற்ற; வேறிட வாழ்வுடைய; நீடித்துக் குடியிராத.

**non-resis'tance**, *n.* (வர.) ஆட்சி நேர்மையற்றதாயினும் எதிர்க்கக்கூடாதென்ற 17-ஆம் நூற்றாண்டுக் கொள்கை.

**non'sense**, *n.* முட்டாள்தனம்; பொருத்தமற்றது; ஒப்புக்கொள்ளத் தகாதது; *int.* என்ன முட்டாள்தனம்! சீ! பொருத்தக்கேடானது! (தொ.) nonsense verses, பொருளற்ற பாட்டுகள், வீண்வேடிக்கைப் பாட்டுகள்.

**non'sense-book**, *n.* அறியாப்பருவ ஏடு, கருத்தற்ற வெறும் நகைத்துணுக்கேடு.

*non seq'uitur*, (ல.) *n.* தொடர்பாய் வருவதல்ல என்ற நிலை, பொருத்தமற்ற வாத முடிபு.

**non-skid'**, *a.* வழவழப்பான தரையில் வழுக்காமலிருக்கின்ற.

**non-soci'ety**, *a.* தொழிற்சங்கத்தைச் சாராத.

**non'-stop'**, *n.* இடைநில்லா ஓட்டம்; இடைநில்லா வண்டி; இடைநில்லா உந்து; *a.* இடைநிலைகளில் நிற்காத; இடையில் தங்காத, இடை நிறுத்தலற்ற; *adv.* இடையில் நிற்காமல்.

**non'such**, *n.* ஒப்புமையற்றவர்; ஈடிணையிலார்; நறுமணப் புல் வகை.

**non'suit**, *n.* சான்றுமெய்ப்பிப்பு அற்ற நிலையில் வழக்கு நிறுத்தம்; *v.* வாதியின் வழக்கை நிறுத்திவிடு.

**non-un'ion, non-un'ionist**, *a.*=non-society.

**non'us**, *n.* ஒன்பதாமவர்; ஒரே பெயருடையவருள் ஒன்பதாவதாக எண்ணிட்டுக் கூறப்படுபவர்.

**non-us'er**, *n.* (சட்.) வழங்காத்தவறு, கையாளாமையால் செல்லுபடிநிலையிழப்பு.

**noo'dle** [1], *n.* முட்டாள்.

**noo'dle** [2], *n.* மாவீடு, வடிசாற்றிலிடப்படும் மாவு-முட்டைக் கலவையின் வற்றல் துணுக்கு.

**nook**, *n.* மூலை; பின்னிடம்; ஒதுக்கிடம்; தனியிடம்.

**noon**, *n.* நண்பகல், உச்சிவேளை, பகல் பன்னிரண்டுமணி.

**noon'day, noon'tide**, *n.*=noon.

**noose**, *n.* சுருக்குக்கயிறு, கண்ணி, சுருக்குப்பொறி, சுருக்குக் கண்ணி; தூக்குக்கயிறு; திருமணத்தளை; தளை, வலை; *v.* சுருக்கில் பிடி; வலையில் சிக்கவை; கயிற்றில் சுருக்கிடு; கழுத்தில் சுருக்கிடு.

**nop'al**, *n.* அமெரிக்க சப்பாத்தி முட்செடிவகை,

**nor** [1], *adv.* அல்லதூஉம், இல்லாததாக; *conj.* அல்லதூஉம், இன்றி.

**nor'** [2]-, *n.*=north.

**Nord'enfelt**, *n*. இயந்திரத் துப்பாக்கி வகை.

**Nord'ic**, *a*. வடமேற்கு ஐரோப்பாவில் ஸ்காண்டினேவியாப் பகுதி சார்ந்து பரவியுள்ள நெட்டையான நெடிய மண்டையோட்டினையுடைய வெள்ளை நிறத்தவர் இனத்தைச் சார்ந்த.

**Norf'olk**, *n*. இங்கிலாந்திலுள்ள ஒரு மாவட்டம் அல்லது கோட்டத்தின் பெயர்; (தொ.) Norfolk capon, செவ்வண்ணக் கடல்மீன் வகை; Norfolk dumpling, Norfolk turkey, நார்ஃபக் மாவட்டத்தில் குடியிருப்பவர்; Norfolk jacket, தளர்த்தியான இடைக்கச்சுள்ள ஆடவர் சிறுசட்டை; Norfolk plover, தடித்த முழங்காலுடைய நீர்ப்பறவை வகை; நீர்ப்பறவை வகையின் தடித்த முழங்கால்.

**norl'and**, *n*. வடபுலம்.

**norm**, *n*. உருமாதிரி, படிவம்; மேல்வரி எடுத்துக்காட்டு; கட்டளைச்சட்டம்.

**norm'al**, *n*. இயல்பான நிலை; பொதுமாதிரி; பொதுநிலை அளவு; இயல்பான தளமட்டம்; பொதுத்தட்பவெப்பநிலை; உடலின் இயல்பான வெப்பநிலை; சராசரி, பொது நிகர நிலை; (வடி.) செங்குத்துக்கோடு; *a*. இயல்பான, பொது முறையான, வழக்கமான; கட்டளைப்படியான, உருமாதிரிக்கியைந்த; வடிவியலான; அமைவியலான; (வடி.) செங்குத்தான; (தொ.) normal school, ஆசிரியப் பயிற்சிப்பள்ளி, கல்விமுறைப்பள்ளி.

**norm'alcy, normal'ity**, *n*. இயல்நிலை.

**Norm'an**, *n*. நார்மனியர், பிரான்சில் நார்மண்டி (Normandy) மாவட்டத்தினர்; நார்மண்டி நாட்டு மக்களின் மரபு வழியினர்; *a*. நார்மண்டி நாட்டுமக்கள் இனமரபைச் சார்ந்த; (தொ.) Norman French, நார்மனியர் பேசும் பிரஞ்சு மொழி; முற்கால ஆங்கில சட்டமன்றங்களில் வழங்கப்பட்ட பிரஞ்சு மொழி; Norman style, கட்டிடக் கலையில் நார்மன் பாணி.

**Norn**, *n*. ஸ்காண்டிநேவியா நாட்டுப் பழம்புராணப் பெண் தெய்வங்களுள் ஒன்று.

**No'rroy**, *n*. இங்கிலாந்தில் டிரெண்ட் (Trent) ஆற்றுக்கு வடக்கில் ஆட்சி எல்லைகொண்ட கட்டியப் பெருந்தகை.

**Norse**, *n*. நார்வே நாட்டுமொழி; *a*. நார்வே நாட்டுமொழியைச் சார்ந்த; நார்வே நாட்டைச் சார்ந்த; (தொ.) Old Norse, நார்வே நாட்டிலும் நார்வே நாட்டுக்குடியேற்ற நாடுகளிலும் 14-ஆம் நூற்றுண்டு வரையில் வழங்கிய நார்வே நாட்டுமொழி.

**Norsk**, *n.,a.*=Norse.

**north**, *n*. வடக்கு, வடதிசை; வடபுலம்; வடபகுதி; இந்தியாவின் வடபகுதி; பிரிட்டனின் வடபகுதி; வட ஐரோப்பா; வட இங்கிலாந்து; வட ஸ்காத்லாந்து; வட அயர்லாந்து; அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அடிமைமுறை வழக்கிலில்லாத வடபால் அரசுகளின் தொகுதி; வாடை, வடகாற்று; காந்த ஊசியின் வடமுனை; *a*. வடபாலுள்ள; வடதிசைச் சார்ந்த; வடபகுதிக்குரிய; காந்த ஊசியின் வடமுனைப் பக்கமான; வடதிசைப் பக்கமுள்ள; வடபகுதியான; காற்று வகையில் வடக்கிருந்து வீசுகிற; காந்த ஊசி வகையில் வடக்கு நோக்கிய; *adv*. வடக்கே, வடபால், வடக்குத் திசையாக, வடக்கு நோக்கி, காந்த ஊசியின் வடமுனைத்திசையில்; (தொ.) magnetic north, காந்த ஊசியின் வடமுனை காட்டும் வடதிசைப் பகுதி; North Country, இங்கிலாந்தின் வடக்குப் பகுதி; north light, வடமுனை வளரொளி; North Sea, வடகடல், ஸ்காண்டிநேவியாவுக்கும் பிரிட்டனுக்கும் இடையே உள்ள கடல்; North star, வடமீன், துருவ நட்சத்திரம்.

**North-coun'try**, *a*. இங்கிலாந்தின் வடபகுதிசார்ந்த, இங்கிலாந்தின் வடபகுதிக்குரிய; தனிப்பட்ட இயல்புகளையுடைய.

**North-coun'tryman**, *n*. வட இங்கிலாந்தின் குடிவாழ்பவர்.

**north-east'er**, *n*. வடகிழக்குக் காற்று.

**north'er**, *n*. இலையுதிர்காலத்திலும் குளிர்காலத்திலும் நடு அமெரிக்காவின் கிழக்குக் கரைமீது வீசும் கடுங்குளிர் காற்று.

**north'erly**, *a*. வடக்கு நோக்கிய; காற்று வகையில் வடக்குப் பக்கமிருந்து அடிக்கின்ற; *adv*. வடக்குநோக்கி, காற்று வகையில் வடக்குப்பக்கமிருந்து.

**north'ern**, *n*. வடபுலத்தவர்; வடகாற்று; *a*. வடக்கிலுள்ள; வடக்கே வாழ்கிற; வடக்கிலிருந்து வருகிற; வடக்கின் தனிச்சிறப்பியல்புள்ள; (தொ.) northern lights, வடமுனை வளரொளி.

**north'erner**, *n*. வடபகுதியர்.

**north'ing**, *n*. வடக்கு நோக்கிய முன்னேற்றம்; பயணவகையில் வடதிசை நோக்கிய பிறழ்வு.

**North'land**, *n*. (செய்.) வடமாநிலம்; நாட்டின் வடபகுதி.

**North'man**, *n*. நார்வே நாட்டுக் குடிமகன்; ஸ்காண்டினேவிய மாநிலக் குடிமகன்.

**Northum'brian**, *n*. பிரிட்டனின் வடபாலுள்ள பண்டை நார்த்தம்பிரியாப் (Northumbria) பகுதி சார்ந்தவர்; பண்டை நார்த்தம்பிரிய மொழிவழக்கு; நார்த்தம்பர்லாந்து (Northumberland) மாவட்டத்தின் குடிமகன்; நார்த்தம்பர்லாந்து மாவட்டத் திசைமொழி; *a*. நார்த்தம்பர்லாந்தைச் சார்ந்த; பண்டை நார்த்தம்பிரியாவுக்குரிய.

**north'ward**, *n*. வடமுகப்பக்கம்; *a*. வடக்கு நோக்கிய; *adv*. வடக்கு நோக்கி.

**north'wardly**, *a*. வடதிசை சார்ந்த, வடதிசை நோக்கிய; *adv*. வடதிசையாக.

**north'wards**, *n*. வடமுகப்பக்கம்; *adv*. வடக்கு நோக்கி

**north-west'er**, *n*. வடமேற்குக் காற்று.

**nor'ward**, *n., a., adv.*=northward.

**nor'wards**, *n., adv.*=northwards.

**Norwe'gian**, *n*. நார்வே நாட்டுக் குடிமகன்; நார்வே நாட்டு மொழி; *a*. நார்வே நாட்டைச் சார்ந்த.

**nor'-west'er**, *n*. வடமேற்குக் காற்று; கடுந்தேறல்; கண்ணுடிக்கலம்; எண்ணெய்த்தோல் குல்லாய்.

**nose**, *n*. மூக்கு; அலகு, அலகுப்பகுதி; நீள் கூம்பு; துருத்துமுனை; குழாய்-துருத்தி-வாலை முதலியவற்றின் திறந்த முன்புறக் கூம்புப்பகுதி; கப்பல் முகப்பு; கூர்ங்குவடு; படி முதலியவற்றின் கொடுமுனை; (க-க.) சுவரின் புடை கூம்பணி; முகர்வுணர்வு; வைக்கோல்-தேயிலை முதலியவற்றின் மணம்; மோப்பம், முகர்வாற்றல்; புலங்கண்டுபிடிக்கும் தனி இயல்திறம்; *v*. முகர்; முகர்ந்தறி; மணத்தால் கண்டுணர்; மோப்பம்பிடி; கூர்ந்து கண்டறி; புலங்காண், ஒற்றுடு; துழாவித்தேடு; மூக்கால் துடை, மூக்குகொண்டு தேய்; மூக்கை நுழை; தலையிடு; புறந் துருத்து; உள்ளே துளைத்துச்செல்; கப்பல்வகையில் நெருக்கி வழி உண்டு பண்ணிக் கொண்டு முன்னேறு; (தொ.) bite one's nose off, snap one's nose off, வெடுவெடுப்பாக மறுமொழி கூறு, கடுமையாக விடையிறு; count noses, tell noses, ஆதரவாளர்களை எண்ணு; வெறும் எண்ணிக்கையினுல் கேள்வி களைத் தீர்மானி; cut off one's nose to spite one's face, பொருமையினுல் தன்னைத்தானே துன்புறுத்திக்கொள்ளு; follow one 's nose, நேரே செல்; இயல்புணர்ச்சி பின்பற்றி நட; keep nose to grindstone, இடைவிடாது வேலைவாங்கு; lead by the nose, விரும்பும்படியெல்லாம் நடக்கும்படி தூண்டு; தன்வயப்படுத்தி ஆட்டு; make long nose, வெறுப்பைக்காட்டு; nose of wax, எளிதாக வயப்படுத்தக்கூடிய பொருள்; எளிதில் திருப்பக்கூடியவர்; parson's nose, பக்குவம் செய்த கோழியின் பிட்டி; pay through the nose, மிகைக் கட்டணஞ் செலுத்து; அளவுமீறிய விலைகொடுக்க நேரு; poke one's nose, thrust one's nose, தொடர்பற்ற செய்தியில் தலையிடு; put one's nose out of joint, விலக்கி இடங்கவர்; ஏமாற்றமூட்டு; திண்டாட வை; speak through one's nose, மூக்கியல் தொனியுடன் பேசு; under one's nose, முன்னிலையிலேயே, எதிரிலேயே.

**nose'-ape**, *n*. நீண்ட மூக்குள்ள குரங்கு வகை.

**nose'bag**, *n*. குதிரையின் தலையில் மாட்டப்படும் தீவனப் பை.

**nose'band**, *n*. குதிரையின் கன்னப்பகுதி வார்களோடு இணைக்கப்படும் கடிவாளப்பட்டை.

**nose'dive**, *n*. வானூர்தியின் கீழ்நோக்கிய பாய்வு; *v*. வானூர்தி வகையில் கீழ்நோக்கிப் பாய்.

**nose'-flute**, *n.* சயாம் (Siam) நாட்டினராலும் பீஜி (Fiji) மக்களாலும் மூக்கால் ஊதப்படும் இசைக்குழல் வகை.

**nose'gay**, *n.* பூச்செண்டு.

**nose'-monkey**, *n.*=nose-ape.

**nose'-piece**, *n.* உருப்பெருக்கி கண்ணுடியில் நடுச்சில் பொருத்தப்பட்ட பகுதி.

**nos'er**, *n.* கடுமையான எதிர்க்காற்று.

**nose'ring**, *n.* எருதின் மூக்குவளையம்; மூக்குத்தி, மூக்கில் அணியும் அணிவகை.

**Nosey Parker**, *n.* பிறர் காரியங்களில் தலையிடுபவர்.

**nos'ing**, *n.* படிவரிசை; படிவரிசை விளிம்பின் உலோக முகப்பு.

**nosog'raphy**, *n.* நோய்களின் முறைப்படியான விளக்க வருணனை.

**nosol'ogy**, *n.* நோய் வகுப்பாய்வுநூல்.

**nostal'gia**, *n.* தாயகநாட்டம், வீட்டுநினைவுத் துயரம்; பழங்கால நாட்டம்.

**nos'toc**, *n.* பசுநீல வண்ணப் பசைப்பண்புடைய பாசிவகை.

**Nostradam'us**, *n.* குறிகூற்றூர்வலர்; வருங்குறி கூறுவதே தொழிலாகக் கொண்டவர்.

**nos'tril**, *n.* மூக்குத்துளை.

**nos'trum**, *n.* கைம்மருந்து; போலி மருத்துவர் மருந்து; அரசியல் தனியுரிமை பெற்ற மருந்துச்சரக்கு; உதிரித்திட்டம், வல்லுநர் துணைபெருத தனி மனிதரின் அரசியல்-சமுதாயச் சீர்திருத்தத் திட்டம்; தனிமுறைவகை.

**nos'y**, *n.* பெருமூக்கு; *a.* பெருமூக்குடைய; நெடியுடைய; தேயிலை வகையில் நறுமணமுடைய; வாடைவகை திரிபுணர்வுடைய.

**not**, *adv.* இன்றி, இல்லாது, அல்லாது; (தொ.) not once or twice, பல தடவை, பன்முறை; not reluctant, உவப்புடனேயே; not too well, பெரிதும் மோசமாகவே.

***not'a ben'e***, (N.B.) (ல.) *v.* கீழ்வருவதைக் கவனி, பின்வருவதைக் காண்.

**notabil'ity** *n.* குறிப்பிடத்தக்க தன்மை; குறிப்பிடத்தக்கவர், சிறப்புடையவர், புகழ் மிக்கவர்.

**not'able**, *n.* சிறப்புடையவர், புகழ்மிக்கவர், பெரியவர்; *a.* குறிப்பிடத்தக்க; சிறப்புடைய; முனைப்பாகத் தெரியக்கூடிய; மகளிர் வகையில் வீட்டுவேலைகளில் திறமையுடைய; (வேதி.) தெளிவாகத் தெரியக்கூடிய; (தொ.) Assembly of Notables, சிறப்பு மன்றம், நெருக்கடிக் காலங்களில் தேவையான பொழுது கூடித் தற்காலிகப் பாராளுமன்றமாகப் பணிபுரியும் மன்றம்.

**not'ary**, *n.* ஆயத்துறை எழுத்துப்பதிவாளர், ஆவணங்கள் எழுதவும் பதியவும் அமர்த்தப்படும் பணியாளர்; (தொ.) notary public, சான்று அலுவலர்.

**nota'tion**, *n.* குறிமான முறை; கணக்கியலில் இலக்கம், எண்மானம்; உருக்கணக்கியலில் உருமானம்; இசைத்துறையில் இசைக் குறிமானம்; குறிப்பு, குறிப்புரை.

**not'-being**, *n.* உள்பொருள் இன்மை, இல்பொருள்நிலை.

**notch**, *n.* வடு; வெட்டுத்தடம்; வெட்டுக்குறி; இடுக்கமான விடர்ப்பாதை; மரப்பந்தாட்டத்தில் கெலிப்புக்குறி; *v.* வடு உண்டுபண்ணு; வெட்டுக்குறியிடு; வாள் வகையில் விளிம்பில் பற்குறி நிரப்பு; கணிப்புக் குறியிடு; மரப்பந்தாட்டத்தில் ஓட்ட எண்கள் எடு; படிக்கட்டு வரிசையில் படிகளைப் புகுத்து.

**notched**, *a.* வடுவுடைய; வெட்டுத்தடங் கொண்ட.

**notch'-wing**, *n.* அந்துப்பூச்சி வகை.

**note**, *n.* தனிக்குரலிசை; இசைக் குறியீடு; சுரம்; பறவைகளின் குரலிசைப்பு; தொனி; தனிப்பண்பு; உயிர்க்கூறு; அடையாளக் குரல்; அடையாளக் குரலிசைப்பு; கவனக் குறிப்பு; விவரம், நினைவுக்குறிப்பு; சுருக்கக் குறிப்பு; குறியீடு; குறிப்பீடு; குறிப்புரை; உரை விளக்கம்; குறிப்புச் சீட்டு; கடிதக் குறிப்பு; அரசியலறிவிப்பு; பத்திரம், கைச்சீட்டு, உறுதி முறி; காசு முறி; சிறப்பு, பெருஞ்சுட்டு; *v.* உன்னிப்பாக நோக்கு; கூர்ந்துபார்; குறி, கவனி; மனத்திற் பதியவைத்துக்கொள்; குறிப்பிடு; குறித்துக்கொள்; குறிப்புரை எழுது; (தொ.) note of hand, உறுதிக் கைம்முறி, குறிப்பிட்ட காலத்தில் பணத்தைத் திருப்பித் தருவதாக எழுதப்பட்ட வாக்குறுதிச் சீட்டு; of note, பெருஞ்சுட்டுடைய, பெயர்பெற்ற; take note of, கவனி, குறித்துக் கொள்; உற்றுப்பார்; worthy of note, குறிப்பிடத்தக்க சிறப்புடைய; கவனிக்கத்தக்க.

**note'book**, *n.* குறிப்பேடு.

**note'case**, *n.* பையுறை, சட்டைப் பையிலிட்டுக் கொண்டு செல்லத்தகும் சிறு பை.

**not'ed**, *a.* பெருஞ்சுட்டு வாய்ந்த; பெயர்பெற்ற.

**note'-paper**, *n.* கடிதம் எழுதுவதற்கான தாள் வகைகள்.

**note'worthy**, *a.* குறிப்பிடத்தக்க; கவனிக்கத்தக்க.

**no'thing**, *n.* ஒன்றுமின்மை, எதுவுமின்மை; இல்பொருள்; வெறுமை, சூனியம்; சிறுதிறம்; அற்பமானது; (கண.) இன்மை, சுன்னம்; இல்லாதது; சமய நம்பிக்கை வகையில் எந்த மதப்பிரிவினையுஞ் சாராதவர்; கடவுட் பற்றிய கருத்தற்றவர்; *adv.* ஒரு சிறிதுமின்றி; ஒரு வகையிலுமின்றி, எதுவுமின்றி; (தொ.) can make nothing of, அறிந்துகொள்ள முடியாது; தீர்வுகாண முடியாது; எவ்வகையிலும் பயன்படுத்த முடியாது, எதற்கும் கையாள முடியாது; எவ்வகையிலும் உருவாக்க இயலாது; come to nothing, பயனற்றதாகி விடு; தோல்வியடை; பாழ்படு, ஒன்றுமில்லாததாகு; dance on nothing, தூக்கிலிடப்படு; fade away to nothing, தேய்ந்திறு, படிப்படியாக மறைந்துபோ; for nothing, காசின்றி, கைம்மாறின்றி; has nothing in him, மிகப் பொதுநிலைப்பட்டவர்; குறிப்பிடத்தக்க சிறப்பற்றவர், தனித் தன்மையற்றவர்; have nothing to do with, எத்தகைய தொடர்பும் அற்றிரு; தொடர்பு கைதுறந்திரு; செயல் தொடர்பு விலக்கியிரு; make nothing of, சிறுதிறமாகக் கருது, அற்பமாக நடத்து; make nothing of doing, தயக்கமின்றிச் செயலாற்று, பொதுமுறைச் செயலாகக் கருதிச் செயல்செய்; neck or nothing, வெற்றிக்காக அனைத்தையும் பணயம் வைத்து; no nothing, (பே-வ.) இல்லையென்ற பட்டியலின் முடிவு; nothing but, nothing else but, nothing else than, ஒன்று தவிர மற்றெதுவுமின்றி, மற்றெதுவும் தவிர்த்து ஒன்றுமட்டிலுமாக; nothing like leather, தமக்கே உரிய பொருள்கள்தான் எல்லாக் காரியங்களுக்கும் பயன்படுபவை; there is nothing for it but to, வேறு வழியில்லா நிலையிற் கட்டாயமாக, புகலின்றித் தீர்வாக.

**no'thingness**, *n.* இல்பொருள் நிலை; ஒன்றுமில்லா நிலை; இல்லாப்பொருள்; பயனற்ற தன்மை; சிறுதிறத் தன்மை; சிறப்பற்றது.

**no'things**, *n. pl.* அற்பமானவை.

**not'ice**, *n.* அறிவிப்பு; செய்தி; தகவல் தெரிவிப்பு; சட்டச் சார்பான முன்னறிவிப்பு; எச்சரிக்கை; முறைப்படியான தகவலறிவிப்பு; விளம்பரம்; அறிவிப்புப்பலகை; விளம்பரப் பட்டி; துண்டறிக்கை; குறிப்பீடு; சுருக்கக் கருத்துரை; பத்திரிகை அறிவிப்புப்பத்தி; பத்திரிகை மதிப்புரை; கவனம்; கவனிப்பு; தெரிநிலை, அறிவு, தகவல் உணர்ந்த நிலை; *v.* கவனி; கவனம் செலுத்திப்பார்; உற்றுநோக்கு; கவனத்தில் எடுத்துக்கொள்; கருத்துச்செலுத்து; அக்கறை காட்டு; உணர்ந்ததாகக் காட்டிக்கொள்; கண்ணேட்டஞ் செய்; அருளாதரவு காட்டி நய இணக்கத்துடன் நடத்து; குறிப்பிடு; குறித்துச்சொல்; கருத்துரை வழங்கு; சட்டப்படியான முன்னறிவிப்பு வழங்கு; முறைப்படி அறிவிப்பு செய்; (தொ.) baby takes notice, அறிவுத் திறத்திற்கான அறிகுறிகளைக் குழந்தை காட்டுகிறது; come into notice, கவனத்தைக் கவர்; give notice, முன்னறிவிப்புச் செய்; take no notice of, கவனிக்காதிரு; கவனித்து எந்த முயற்சியும் செய்யாதிரு.

no'tice-board, *n.* பொது அறிவிப்புப் பலகை, விளம்பரப் பலகை.
not'ifiable, *a.* தெரிவிக்கப்பட வேண்டிய.
notifica'tion, *n.* விளம்பர அறிவிப்பு, விளம்பரம்.
not'ify, *v.* தெரியப்படுத்து; அறிவி; அறிவிப்புச்செய்; எச்சரிக்கை அறிவிப்புக்கொடு.
no'tion, *n.* கருத்து, எண்ணம், உட்கோள்; கருத்துப்பாங்கு; தனிக்கோட்பாடு; எண்ணப்போக்கு; தனிப்பட்ட கொள்கை; கோட்பாட்டு விளக்கம்; கருத்துச்சாயல்; எண்ணச்சார்பு; மலிவான கலைநுட்பம் வாய்ந்த சிற்றணிமணிப்பொருள்; (மெய்.) பொருளுலகு பற்றிய பரவலான பொதுக் கருத்துப் படிவம்.
no'tional, *a.* கருத்தியலான; வெறுங்கோட்பாடு சார்ந்த; செயல் தேர்வாராய்ச்சிமூலம் நிறுவப்படாத; நினைவியலான, மெய்யல்லாத; புனைவியலான, கற்பிதமான.
no'tions, *n. pl.* விஞ்செஸ்டர் கல்லூரி (Winchester College) யின் தனிமரபுச் சிறப்புடைய சொற்றொகுதி.
notobranch'iate, *a.* முதுகுப்புறமான செவுள்களையுடைய.
not'ochord, *n.* முதுகெலும்புக்கு மூல அடிப்படையாக அமையும் குருத்தெலும்புத் தண்டு.
Notogae'a, *n.* விலங்குநூலில் ஆஸ்திரேலியா-நியூசிலாந்து புதிய வெப்பமண்டலப் பகுதிகள் ஆகியவற்றை உள்ளடக்கிய பரப்பு.
notonec'ta, *n.* படகுத்தும்பி, முதுகுப்புறமாக நீந்தும் நீர் வண்டு வகை.
notor'ious, *a.* வசைப்பெயர் எடுத்த; தகாவழிப் பேர்போன; இகழார்ந்த, அறிபழியான.
Notre-Dame', *n.* பாரிஸ் நகரத்து மாதாகோயில்.
no-trump'er, *n.* துருப்பு ஏதுமில்லாமல் ஆட்டமாடுபவர்.
notwithstand'ing, *adv.* இந்நிலையில்கூட; *prep.* முற்றிலும் மாறான தன்மையில்; *conj.* எப்படியிருந்தாலும்.
no'ugat, *n.* கொட்டைப்பருப்பு-சர்க்கரை கலந்த இனிப்புத் தின்பண்டம்.
nought, *n.* ஒன்றுமில்லை, ஏதுமின்மை; இன்மை, வெறுமை; (கண.) சுன்னம்; (தொ.) bring to nought, அழித்தொழி; திகைப்பூட்டு; தோல்வியடையச் செய்; come to nought, அழிக்கப்படு; தோல்வியடை; திகைப்புறு; noughts and crosses, குறுக்குவெட்டுக் கட்ட ஆட்டம், குழந்தை விளையாட்டு வகை; set at nought, ஏளனஞ் செய், புறக்கணி.
noum'enon, *n.* உணர்வுரு, புலன்சாராத் தூய அகநிலை அறிவுணர்வால் உணரப்படும் கருத்துப் படிவம்; *pl.* noum'ena.
noun, *n.* (இலக்.) பெயர்ச்சொல்.
nou'rish, *v.* ஊட்டிவளர்; ஊட்டமளி; பேணு; ஆதரவு காட்டி ஊக்கப்படுத்து; வைத்துப்பேணு; பேணிக்கா.
nou'rishment, *n.* உணவு; ஊட்டம்; உணவூட்டம்; உணவு அளிப்பு.
nous, *n.* கிரேக்க மெய்விளக்கியலில் மனம், உள்ளம், அறிவு; (பே-வ.) பொது அறிவு வளம், உலகியலறிவுத் திறம், வன்மை வாய்ப்பு வளம்.
*nouv'eau riche'*, (ஆங்கிலோ-பிரஞ்சு) *n.* புதுப்பணக்காரர்; புதுப் பதவியாளர்.
nov'el, *n.* அகலப் புனைகதை; இத்தாலிய கலைஞர் பொக்காச்சியோ (Boccaccio) இயற்றிய டெக்காமெரான் (Decameron) என்ற கதைத் தொடரில் ஒரு கதை; (வர.) பண்டை ரோமர் சட்டத் திரட்டில் இணைக்கப்பட்ட புதுக்கட்டளை; *a.* புதிய; புதுமை வாய்ந்த; புதுவகையான; வியப்பளிக்கிற; முன்னம் அறிந்திராத.
novelette', *n.* குறு நாவல், குறும் புனைகதை.
nov'elist, *n.* அகலப் புனைகதையாளர்.
nov'elize, *v.* அகலப் புனைகதையாக்கு, நாடகம்-உண்மை நிகழ்ச்சிகள் ஆகியவற்றை அகலப் புனைகதையாக மாற்று.
nov'elty, *n.* புதுமை; புதுத்திறம்; புதிய கூறு; புதுமையான பொருள்.
Novem'ber, *n.* ஆங்கில ஆண்டின் பதினோராவது மாதம்.
noven'a, *n.* ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையில் 9 நாள் தொடர்ந்த தொழுகை நோன்பு.
noverc'al, *a.* மாற்றாந் தாயின் தன்மையுடைய; மாற்றாந் தாய்க்குரிய.
nov'ice, *n.* புத்தாள், புதிதாகச் சமயமாற்றம் பெற்றவர்; புதுவர், சமய நிறுவனத்தில் உறுதி ஏற்காமலே தற்காலிகமாக ஏற்கப்பட்டிருப்பவர்; அனுபவமற்றவர்; திறமையற்றவர்; தொடக்க நிலையாளர், புதுப்பயிற்சியாளர், கற்றுக்குட்டி.
novi'ciate, novi'tiate, *n.* புதுவர்நிலை, நிலைபேறுறுத் தேர்வுப் பருவநிலை; தேர்வுப் பருவக்காலம்; புதுப்பயிற்சியாளர்; புதுவரவாளர் தங்கிடம்.
nov'ocaine, *n.* தேவையான பகுதியை உணர்ச்சியற்று மரத்துப்போகச் செய்யும் மருந்து.
now, *n.* இந்தச்சமயம்; நிகழ்காலம்; *adv.* இப்போது; இந்நேரத்தில்; இக்காலத்தில்; இந்த சூழ்நிலையில்; *conj.* இப்பொழுது; (தொ.) now and again, now and then, விட்டுவிட்டு, அடிக்கடி, இடையிடையே; now or never, இது தான் தக்க வேளை, இவ்வேளையைக் கைவிட்டால் பிறகு கிட்டாது.
now'aday, *a.* இக்காலத்திய, இக்காலம் பற்றிய.
now'adays, *n.* தற்காலம், நிகழ்காலம், இக்காலம்; முன்னேற்றமுற்ற இக்காலம்; புதுமைப் போக்குடைய இக்காலம்; *adv.* தற்காலத்தில்.
no'way, no'ways, no'wise, *adv.* எந்த வழியிலுமில்லாமல், எவ்வாற்றானும் முடியாததாக, இல்லவே இல்லாததாக.
Nowel', *int.* நாவலோ! கிறித்துமஸ் பண்டிகை மகிழ்ச்சி ஆரவாரக் கூக்குரல்.
no'whence, no'whither, *adv.* எந்த இடத்திலும் இல்லாமல்; எந்த இடத்திற்கும் இல்லாமல்.
no'where, *adv.* எவ்விடத்திலுமின்றி, எங்குமின்றி, ஓரிடத்துமின்றி; (தொ.) be nowhere, come in nowhere, போட்டி விளையாட்டுக்களிலும்-ஓட்டப் பந்தயங்களிலும் முதல் மூன்றிடங்களைப் பெறுதிரு; nowhere near, கிட்ட இல்லாத.
no'xious, *a.* தீமையான, கெடுதி விளைவிக்கிற; நச்சுத்தன்மை வாய்ந்த.
*noyade*, (பிர.) *n.* நீரில் மூழ்கவைத்துக் கொலை செய்தல்; (வர.) 1794-இல் நடைபெற்ற மூழ்கடிப்புப் படுகொலைத் தொகுதி.
noyau', *n.* கொட்டைப்பருப்புக்களிட்டு நறுமணமும் தீஞ்சுவையுமூட்டப்பட்ட தேறல்வகை.
noz'zle, *n.* குழாய் முனை, தூம்புவாய்; நீள்குழாய்க் கூம்பலகு.
nu'ance, *n.* நுட்ப வேறுபாடு; வண்ணச்சாயல் வகையில் நுண்ணயத்திரிபு; கருத்துவகையில் நயநுட்ப வேற்றுமை; சொற்பொருள் வகையில் நுழைநய வேறுபாடு; உணர்ச்சி வகையில் நுணுக்கத் திரிபுநயம்.
nub, nub'ble, *n.* நிலக்கரிக்கட்டி; சுருக்கம், கருப்பொருட் குறிப்பு.
nub'ile, *a.* மகளிர் வகையில் மணமாகத்தக்க பருவமடைந்த.
nu'chal, *a.* பிடர்பற்றிய, கழுத்தின் பின்புறத்துக்குரிய.
nucif'erous, *a.* கொட்டை பயக்கிற.
nuciv'orous, *a.* கொட்டை அருந்துகிற.
nuc'leal, nuc'lear, nuc'leary, *a.* கருவுக்குரிய; கருமுளை சார்ந்த; கரு மைய இயல்புடைய; (தொ.) nuclear fission, பரு அணுப்பிளப்பு; nuclear fuel, அணு ஆற்றல் மூல ஆதாரம்; nuclear reactor, அணு ஆற்றல் சார்ந்த ஆய்வுக் கால அமைவு.
nuc'leole, *n.* (உயி.) கருவிற்குள் கரு, உள்ளணுவுள்ளிருக்கும் உள்ளணு.
nuc'leus, *n.* மையக்கரு, வளர்பிழம்பின் கருமூலம்; கொட்டை; மையக் கொளு, தீக்கல்லின் உடையா மையச் செறிகணு; (வான்.) வால் வெள்ளியின் தலைப்பிலுள்ள செறிவொளிப் பிழம்பு; (உயி.) ஊன்மத்தின் நள்ளுயிர்மம்; (வேதி.)

சேர்மத் தொடர் உருவாகும்படி பிற அணுக்களுடன் இணைய வல்ல நிலவர நள்ளணுத்திரள்; (இய.) கருவுள், சுழலும் மின்மங்களுக்கு ஈடான நேர்மின் செறிவுடைய கரு மையம்.

**nude**, *n.* ஆடையற்ற உருவச்சிலை, வெறுமேனி உருவ ஓவியம்; *a.* அம்மணமான, ஆடையற்ற, துணியால் மூடப்பெறாத; (தொ.) the nude, ஆடையற்ற உருவம்; ஆடையற்ற நிலை.

**nudge**, *n.* முழங்கை இடிப்பு, தட்டு, தள்ளு; *v.* முழங்கையால் இடி; இடித்துக் கவனத்தைத் திருப்பு.

**nud'ism**, *n.* முண்டு கட்டாக் கோட்பாடு.

**nu'dist**, *n.* அற்றம் மறைக்க வேண்டாதவர்.

***nu'gae***, (ல.) *n. pl.* அற்பமானவை, பயனற்ற புலமை நுணுக்கங்கள்; ஆதாயமற்ற சிறுதிறச் செய்திகள்.

**nug'atory**, *a.* அற்பமான; பயனற்ற, ஆதாயமற்ற; சட்டப்படி செல்லாத; நடைமுறையிலில்லாத; இயங்காத.

**nugg'ar**, *n.* நைல் (Nile) ஆற்றுப் பாங்கரில் வழங்கும் வாயகன்ற படகு வகை.

**nugg'et**, *n.* சீர் செய்யப்படாத தங்கக்கட்டி.

**nuis'ance**, *n.* தொல்லை, தொந்தரவு; நச்சரிப்பாளர், தொல்லை தருபவர்; சள்ளை, தொந்தரவூட்டுவது; தொந்தரவு தரும் செயல்; வேண்டா வெறுப்புக்குரிய செய்தி; (சட்.) மன்பதைத் தொல்லை, சமுதாயத்துக்குக் கேடான செயல்; (சட்.) பிறருக்குக் கேடுபயப்பது.

**null**, *n.* குழூஉக்குறி உட்கொண்ட பயனில் எழுத்து; *a.* செல்லுபடியாகாத, மதிப்பில்லாத; கட்டுப்படுத்தாத; பொருளற்ற; வேறு நிலையான; இல்லா நிலைப்பட்ட; (தொ.) null and void, சட்டப்படி முற்றும் செல்லாதது.

***null'a bon'a***, (ல.) *n.* கடனுக்கு ஈடாகக் கடனாளியிடம் சொத்து எதுவுமில்லையென மாநகர் மணியக்காரர் கொடுக்கும் அறிக்கை.

**null'ah**, (இ.) *n.* கால்வாய், நீரோடை, ஆழ்பள்ள நீரோடை.

**null'ify**, *v.* பயனற்றுப் போகச்செய்; செல்லுபடியற்றதாக்கு; தள்ளுபடி செய்; முனைப்பழி, ஆற்றல்கெடு.

**null'ipore**, *n.* கடல்வாழ் தாவரவகை.

**null'ity**, *n.* செல்லுபடியாகாத நிலை; பயனற்ற தன்மை; வெறுமையான தன்மை; செல்லுபடியாகாத சட்டம்; செல்லா ஆவணம்; இல்லாத ஒன்று; மிகச் சிறுதிறம்.

**numb**, *a.* உணர்ச்சியற்ற; மரமரத்த; இயக்க ஆற்றலற்ற; *v.* உணர்ச்சி அறச்செய், மரத்துப்போகச் செய்; உணர்வு மழுங்கச்செய்.

**num'ber**, *n.* எண்; எண்ணிக்கை; தொகை; இலக்கம், எண்குறி, எண்ணின் வரிவடிவு; தொகுதி, குழு; எண்ணுதிறம், கணிப்பு; கணக்குத்திறம்; எண்வரிசை; வரிசை எண் குறித்த பொருள்; எண்குறிப்பு நறுக்கு; உருப்படி; இசைநாடகக் கூறு; கட்டுரைப்பகுதி; நாளேட்டின் தனி இதழ்; பலர்; பல; (இலக்.) பெயரின் எண், சொல்லின் எண் சுட்டு திறம்; *v.* எண்ணு, எண்ணிக்கையிடு; இலக்கமிடு, இலக்கமிட்டுச்சுட்டு; இலக்கங்குறி; தொகைப்படுத்து; வகைப்படுத்து; தொகைப்படு; எண்படு; அகவையுறு, வயதுடையவராயிரு; மொத்தமாகு; உள்ளடக்கமாக மதி; கூறுக மதி; வரையறு, குறிப்பிட்ட எண்ணிக்கைக்குட்படு; (தொ.) back number, முன்னிதழ், காலங்கடந்துவிட்ட இதழ்; காலத்துக்கு ஒவ்வாதவர்; கவனிக்கப்படாதவர்; காலத்துக்கொவ்வாதது, கழிந்தது; in number, எண்ணிக்கையில்; without number, கணக்கற்ற, எண்ணிலடங்காத.

**num'berless**, *a.* எண்ணிக்கையற்ற, கணக்கிலடங்காத.

**num'bers**, *n. pl.* சீர்த்தொகுதி செய்யுள்நடை; சுரத்தொகுதி இசைநடை; பெருந்தொகை; எண்ணிக்கை வலிமை.

**numb'-fish**, *n.* மின்னேற்றுமீன், இரையைத் தன்பாலுள்ள மின்னாற்றலினால் மரத்துப்போகச் செய்து கொன்றுதின்னும் மீன்வகை.

**num'bles**, *n. pl.* மானின் குடற்கொடி.

**num'erable**, *a.* எண்ணத்தக்க.

**num'eral**, *n.* எண்குறி, இலக்கம்; எண்ணுப்பெயர்; எண் குறித்த இலக்கத் தொகுதி; எண்குறித்த தொடர்; எண் குறித்த சொல்; *a.* எண்ணைக் குறிக்கிற, எண் சார்ந்த.

**nu'merate**, *v.* எண்ணு; எண்களைப் படி.

**numera'tion**, *n.* எண்ணுகை; எண்ணுமுறை; கணிப்பு; கணிப்பு முறை; எண் வரிசைப்படி கூறல்; எண் அறுதியீடு; (கண.) எழுத்துமானம், இலக்கத்தை எழுத்தாக எழுதுதல்; (தொ.) numeration table, இலக்கத்தான மதிப்பட்டவணை, இடத்திற்கேற்ப எண்களின் மதிப்பினைக் காட்டும் அட்டவணை.

**num'erator**, *n.* கீழ்வாய் இலக்கத்தில் பகுதி, பின்னத்தின் மேல் இலக்கக்கூறு; எண்ணுபவர், கணக்கிடுபவர்.

**nume'ric**, *n.* முழு எண்; தகுபின்னம்; தகாப்பின்னம்; பொதுக் கூறற்ற விகிதம்.

**nume'rical**, *a.* எண்ணைக் குறிக்கிற; எண் சார்ந்த; எண்ணியலான.

**num'erous**, *a.* பல அடங்கிய; பலரை உட்கொண்ட; பெரிய அளவான; பலரைச் சார்ந்த, பலருக்குரிய; மக்கள் நெருக்கம் உடைய; மிகப்பல; மொழிநடை வகையில் சந்த அமைவுடைய, இன்னியைவுடைய.

**num'inous**, *n.* பத்திமையுணர்வு; *a.* தெய்வத்தன்மை சார்ந்த; தெய்வமிக்க.

**numismat'ic**, *a.* நாணயங்களைப் பற்றிய; நாணயமுறை சார்ந்த.

**numismat'ics**, *n. pl.* காசியல், நாணயம்-பதக்கம் முதலியவற்றின் ஆராய்ச்சித்துறை.

**numm'ary**, *a.* நாணயம் பற்றிய; காசு-பண உருவான.

**numm'et**, *n.* (பே-வ.) நண்பகல் சிற்றுண்டி.

**numm'ulite**, *n.* (மண்.) மூன்றாவது நில அடுக்கில் வட்டத் தகடு அல்லது சில்லு போன்ற புதைபடிவத் தோடு.

**num'nah**, *n.* சேணத்துணி, சேணத்திற்கடியிலுள்ள திண்டு.

**num'skull**, *n.* மடையன், முட்டாள், மட்டிமண்டை.

**nun**, *n.* மாடக் கன்னி; கிறித்தவப் பெண் துறவி; பறவை வகை; அந்துப்பூச்சி வகை.

**nun'atak**, *n.* கிரீன்லாந்தில் பனிச் சமவெளியிடைத் தனி நெடும்பாறை.

**nun'-buoy**, *n.* நடுவில் உருண்டையாகவும் இருபுறமும் கூர்ங்குவிவாகவும் உள்ள மிதவை.

***nunc dimitt'is***, (ல.) *n.* ரோமன் கத்தோலிக்க வழிபாடுகளிற் பாடப்படும் சிறு தோத்திரப்பாடல்; சேட்புல யாத்திரைப் பாடல்.

**nun'ciature**, *n.* திருத்தூதர் பணி; போப்பாண்டவரின் வெளிநாட்டுத் தூதர் பதவிக்காலம்.

**nun'cio**, *n.* வெளிநாட்டு அவைகளிலுள்ள போப்பாண்டவரின் பேராண்மைத் தூதர்; *pl.* nun'cios.

**nunc'upate**, *v.* விருப்ப ஆவணத்தை வாய்மொழியாகக் கூறு.

**nunna'tion**, *n.* (இலக்.) வேற்றுமையில் பெயர்ச் சொல்லிறுதியில் நகர ஒலி இணைவு.

**nun's cloth**, *n.* மெல்லிய கம்பளித்துணி வகை.

**nun's thread**, *n.* நேர்த்தியுடைய வெண்மையான தையல் நூல்.

**nun's veiling**, *n.* மெல்லிய துகில் வகை.

**nuph'ar**, *n.* மஞ்சள்நிற நீராம்பல் வகை மலர்.

**nup'tial**, *a.* திருமணஞ் சார்ந்த; திருமணம் பற்றிய.

**nup'tials**, *n. pl.* திருமணம், திருமண உறவு.

**nurse**[1], *n.* தாதி, வளர்ப்புத்தாய்; ஊட்டுதாய்; குழந்தைகளைப் பேணி வளர்ப்பவள்; நோயாளிகளைப் பேணிக் காப்பவர்; பாலூட்டி வளர்ப்பு; பேணிக் காப்பு; இனத்தாய்ச்சி, தேனீ-எறும்பு முதலிய உயிரிகள் வகையில் மரபு பேணிக்

காக்கும் அலியினம்; கன்னித்தாய்ச்சி, இனப்பெருக்க வகை மாறுபாடுடைய உயிரிகளிடையே பால் சார்பற்ற இனப் பெருக்கப் படிநிலை; காட்டு வளர்ப்புத் துறையில் பிற இன மரங்களுக்கு நிழல் தருவதற்காக வளர்க்கப்படும் மரம்; பண்பின் வளர்ப்பு நிலம்; *v.* ஊட்டுதாயாய் உதவு; பாலூட்டி வளர்; பேணி வளர்; தாதியாகச் செயலாற்று; நோயாளிகளைக் கவனித்துப் பேணு; நோய்நொடி கவனித்துக் குணப்படும்படி பணிவிடை செய்; செடிகொடி பயிர்களைப் பேணு; தோட்டம் பாதுகாத்து வளர்; கலை முதலிய வற்றைப் பேணி ஆதரி; பகைமை-கவலை முதலியவற்றை மனத்தில் வைத்துப் பேணி வளரச்செய்; தளராமல் பாதுகா; பரிவோடு கவனி; கவலை கேடு வராமல் பேணு; குழந்தையை அன்புடன் எடுத்தணைத்து ஆதரவு காட்டு; தழுவிக்கொஞ்சி விளையாடு; முழந்தாளைக் கட்டி அணைத்துக் கொண்டிரு; காலைத் தடவிப்பிடி; உறுப்பினை மிகு ஆதரவுகாட்டிப் போற்றிப்பேணு; கணப்பருகில் அணைவாக அமர்; வாக்கா ளர்களுடன் அடிக்கடி தொடர்பு கொண்டு தேர்தல் தொகுதி யில் நல்லெண்ணம் பேணு; மேசைக் கோற்பந்தாட்டத்தில் எளிதாகத் தொடர்ந்தடிக்கும் நிலையில் பந்துகளை அருகரு காகப் பார்த்துவை; முன் உந்துகலத்தின் தொழில் வாய்ப்பில் பங்குபற்றும் நோக்குடன் அண்டி அணைத்து நிறுத்து; பந்தயக் குதிரை வகையில் தொல்லைதருவதற்காக உடனெ ருங்கிச் செல்; (தொ.) nurse ship, நீர்மூழ்கிக் கப்பல்களையும் நீர்மூழ்கிக் குண்டுப் படகுகளையும் கொண்டு நடத்தும் பெரிய கப்பல்.

**nurse**[2], *n.* சுறுமீன் வகை.

**nurse'-child**, *n.* வளர்ப்புப் பிள்ளை.

**nurse'-frog**, *n.* குஞ்சு பொரிக்கும் வரையில் முட்டைகளைத் தந்தையே சுமந்து திரியும் மரபுடைய தவளை வகை.

**nurse'ling, nurs'ling**, *n.* குழந்தை, செவிலியால் பேணி வளர்க்கப்படும் குழவி; வளர்க்கப்பட்டவர்; பேணி உருவாக் கப்பட்டவர்; வளர்க்கப்பட்டது; பேணி உருவாக்கப்பட்டது.

**nurse'-maid**, *n.* தாதி.

**nurs'ery**, *n.* குழந்தை வளர்ப்பரங்கம்; குழந்தையர் காப் பறை; நாற்றுப்பண்ணை, நாற்றங்கால்; பண்பின் வளர்ப் பிடம்; பண்புடையர் தாயகம்.

**nurs'ing**, *n.* வளர்ப்பு; சீராட்டு; பேணுகை; *a.* வளர்க்கிற; பேணிக் காக்கிற; வளர்ப்புக்குரிய; (தொ.) nursing father, வளர்ப்புத் தந்தை; nursing governess, குழந்தைகளைப் பேணிவளர்க்கவும் கல்வி புகட்டவும் அமர்த்தப்படுஞ் செவிலி; nursing home, தனியார் மருத்துவ மனை; nursing mother, வளர்ப்புத்தாய்.

**nur'ture**, *n.* பேணி வளர்ப்பு; பயிற்றுவிப்பு; கவனிப்பு, அன்புக் கண்காணிப்பு; ஊட்டம்; ஊட்டி வளர்ப்பு; *v.* பேணி வளர்; ஊட்டி வளர்; பேணிப் பயிற்றுவி.

**nut**, *n.* கொட்டை; கொட்டைவகை; உட்பருப்புடைய ஒற்றை விதை; தலை; கடுமிண்டன்; கடுநிரடு; இளமை முறுக் குடையவன்; நூற்புக்கதிரின் பல்வட்டு; திருகு மரை, சுரை யாணி இறுக்கும் புரி வட்டு; இசைக்கருவியின் மீட்டுவில் நாணிறுக்கி; பிரடை, வில்யாழின் திவவுக்கட்டை; நிலக்கரிக் கட்டி; சிறு மாச்சில்லு; சிறு மாப்பண்ணியம்; சிரட்டைக் குடி கலம்; *v.* கொட்டைகளைச் சேகரி, கொட்டைகளைத் தேடிப் பொறுக்கு; (தொ.) hard nut to crack, எளிதில் விடுவிக்க முடியாத புதிர், கடுங்கடா; off one's nut, மூளை திறம்பிய, கிறுக்கான.

**nut'ate**, *v.* (தாவ.) தலையாடு, தொங்கவிடு.

**nuta'tion**, *n.* தலையாட்டம்; (தாவ.) வளர் நுனித்தண்டின் வளைவு; (வான்.) நிலவுலக ஊடச்சின் சிற்றுசலாட்டம்.

**nut'-brown**, *a.* செந்தவிட்டு நிறமான.

**nut'-butter**, *n.* கொட்டைகளிலிருந்து எடுக்கப்படும் வெண் ணெய் போன்ற உணவு வகை.

**nut'cracker**, *n.* பறவை வகை; குறட்டு முகவாய்க்கட்டை; (தொ.) nutcracker face, குறடுபோன்ற முகவாய்க் கட்டை யுடைய முகம்.

**nut'crackers**, *n. pl.* கொட்டை வெட்டி; குறட்டு முகவாய்க் கட்டை.

**nut'-gall**, *n.* சாயப் பொருளாகப் பயன்படும் சீமை ஆல் வகையின் கரணை.

**nut'hatch**, *n.* கொட்டைகளை உண்டு வாழும் பறவை வகை.

**nut'meg**, *n.* சாதிக்காய்.

**nut'meg-apple**, *n.* சாதிக்காய்க் கொட்டை.

**nut'meg-liver**, *n.* ஈரலின் நோயுற்ற நிலை.

**nut'-oil**, *n.* கொட்டை வகையினின்று எடுக்கப்படும் மெழு கெண்ணெய் வகை.

**nut'-palm**, *n.* கொட்டைகளையுடைய ஆஸ்திரேலிய பனையின மரம்.

**nut'ria**, *n.* தென் அமெரிக்க நீர்வாழ் கொறிவிலங்கு வகையின் மென்மயிர்த் தோல்; நீர்வாழ் கொறிவிலங்கு வகையின் மென் மயிர்.

**nut'rient**, *a.* ஊட்டச் சத்தாகப் பயன்படுகிற; ஊட்டம் அளிக்கிற.

**nut'riment**, *n.* ஊட்ட உணவு, சத்துணவு.

**nutri'tion**, *n.* உணவூட்டம், ஊட்ட வளம், சத்துள்ள உணவு.

**nutri'tional**, *a.* உணவு ஊட்டத்துக்குரிய.

**nutri'tious**, *a.* ஊட்டம் தரத்தக்க; ஊட்டமிக்க.

**nut'ritive**, *n.* உணவு வகை; ஊட்டந்தரும் உணவு; *a.* உணவாகப் பயன்படுகிற, ஊட்டச் சத்துடைய.

**nuts**, *n. pl.* நிலக்கரிக் கட்டிகள், நிலக்கரித் துண்டுகள்.

**nut'shell**, *n.* கொட்டை ஓடு; சிறு கொள்கலம், சிறுகுடில்; மணிச்சுருக்கம், செறி சுருக்கம்.

**nut'-tree**, *n.* கொட்டைகள் ஈனும் மரவகை.

**nutt'y**, *a.* கொட்டைகள் நிறைந்த; கொட்டைப்பருப்புப் போன்ற சுவையுடைய.

**nut'-wee'vil**, *n.* பச்சைக் கொட்டைவகைமீது முட்டையிடும் வண்டுவகை.

**nux vom'ica**, *n.* எட்டிக்காய்.

**nuz'zle**, *v.* மூக்கினை அழுத்து; மூக்கால் அழுத்து; மூக்கால் இடி; மூக்கால் தேய்; மூக்கால் கிளறு; மோப்பம் பிடி; ஒன்றி அணைத்துக்கிட; நெருக்கிக்கிட; வாய்ப்பாக அமர்ந்துகொள்.

**nyctalop'ia**, *n.* இரவுக் குருடு, மாலைக்கண், இருட்டில் மட்டும் தெளிவாகப் பார்வையுடைமை.

**nyctitrop'ic**, *a.* (தாவ.) இரவில் ஒருதிசையில் திரும்புகிற.

**nyl'ghau**, *n.* குறுங்கொம்புடைய இந்திய மான்வகை.

**nyl'on**, *n.* தொய்வும் திண்மையும் மிக்க கண்ணாடிபோன்ற செயற்கைத் துகில் வகை.

**nyl'ons**, *n. pl.* மகளிர் காலுறை; மகளிர் ஆடைகள்.

**nymph**, *n.* கொல்லிப்பாவை; அரமகள், நீரங்கை, வன தெய்வம்; எழில் மடமாது; முட்டைப்புழுவின் கூடு.

**nym'pholepsy**, *n.* கிட்டாதவற்றின்மேற் கொள்ளும் ஆசை யால் ஏற்படும் வெறித்துடிப்பு.

**nym'pholept**, *n.* கொள்கை வெறியர்.

**nymphoman'ia**, *n.* (மரு.) மகளிர் கழிகாமம்.

**nystag'mus**, *n.* கண்விழிகள் ஓயாமல் ஊசலாடும் நிலையி லுள்ள கண்ணோய், சுரங்கத் தொழிலாளர் கண்ணோய்.

 oh, *int.* ஓ! ஆ! விளிக்குறிப்பு.

oaf, *n.* பேய்ப்பிள்ளை, மாருட்டக்குழந்தை; மட்டிப்பிள்ளை; கோணற்சிசு; *pl.* oafs, oaves.

oak, *n.* சீமை ஆல்வகை, கருவாலி வகை; சிந்தூர மரம்; (செய்.) மரக்கலங்கள்; பல்கலைக்கழகங்கள் வகையில் ஒரு தொகுதியான அறைகளின் வெளிக்கதவு; கருவாலி மர இலைகள்; கருவாலி மரக்கன்றின் இலைநிறம்; *a.* கருவாலி மரத்திலுற் செய்யப்பட்ட; கருவாலி மரஞ் சார்ந்த; (தொ.) Dwarf oak, செடிவகை; Ground oak, செடிவகை; heart of oak, துணிவுடையவர்; sport one's oak, பல்கலைக்கழகங்கள் வகையில் வெளியார் வாராமல் வெளிக்கதவை மூடிவிடு; the Oaks, மூன்றுவயது பெண் குதிரைக்குட்டிகளுக்காக எப்சம் (Epsom) என்னுமிடத்தில் நடக்கும் பந்தயம்.

oak'-apple, *n.* கருவாலிமர இலையின்மீது ஒருவகைப் பூச்சியினுல் தோன்றும் புடைவளர்ச்சி; (தொ.) Oak-apple Day, (வர.) இரண்டாம் சார்லஸ் மீண்டும் 1660-ஆம் ஆண்டில் அரசுரிமைபெற்ற நாள், மே 29 விழா.

oak'-beauty, oak'-egg'er, *n.* அந்துப்பூச்சி வகை.

oak'en, *a.* கருவாலி மரத்திலுற் செய்யப்பட்ட; கருவாலி மரஞ் சார்ந்த.

oak'-fern, *n.* ஈரப்பாறைகள்-சுவர்கள் முதலியவற்றில் வளரும் மழமழப்பான முக்கிளைப்புடைய சூரல்வகை.

oak'-fig, oak'-gall, *n.* கருவாலி மரத்தில் பூச்சி வகை காரணமாகத் தோன்றும் புடைவளர்ச்சி.

oak'-hook-tip, oak'-moth, *n.* அந்துப்பூச்சி வகை.

oak'-plum, oak'-potato, oak'-spangle, *n.* கருவாலி மரங்களில் பூச்சி வகைகளினுல் தோன்றும் புடைவளர்ச்சி.

oak'um, *n.* கலப்பற்ருகப் பயன்படுத்தப்படும் பழங்கயிற்றுச் சிதைவு; (தொ.) pick oakum, பழங்கயிற்றைப் பிய்த்துச் சிலும்பலாகச்செய்.

oak'-wart, *n.* கருவாலி மரங்களில் பூச்சி வகைகளினுல் தோன்றும் புடைப்பு.

oak'-wood, *n.* கருவாலி மரக்காடு; கருவாலி மரக்கட்டை.

oar, *n.* படகுகைக்கும் தண்டு, துடுப்பு, நீந்துவதற்குப் பயன்படும் உறுப்பு; நீர்ப்பறவையின் இறக்கை; நீந்துபவரின் கை; தண்டுகைப்பவர்; *v.* தண்டு உகை, துடுப்பு வலி; (தொ.) chained to the oar, நெடுநேரம் கடுஉழைப்புச்செய்யும்படி கட்டாயப்படுத்தப்பட்ட; have an oar in every man's boat, பிறர் காரியங்களில் தலையிடுபவராயிரு; oar one's arms or hands, நீந்துவதுபோலக் கைகளை இயக்கு; pull a good oar, திறமைவாய்ந்த படகு உகைப்பவராயிரு; put in one's oar, தலையிடு; rest on one's oars, இளைப்பாறு.

oa'sis, *n.* பாலைப் பசுந்திடல்; *pl.* oa'ses.

oast, *n.* புளிப்பு மாவூறற் சூளை.

oast'-house, *n.* மாவூறலை உலர்த்துவதற்கான சூளை உள்ள கட்டிடம்.

oat'cake, *n.* புல்லரிசி அப்பம்.

oath, *n.* சூளுறவு, ஆணை, சபதம், வஞ்சினம்; தெய்வப் பழிமொழி; தெறுமொழி.

oat'meal, *n.* புல்லரிசிக்கூழ்.

oats, *n. pl.* மனிதர்களுக்கும் குதிரைகளுக்கும் உணவாகப் பயன்படும் புல்லரிசிப் பயிர்வகை; புல்லரிசிக் கூலவகை; புல்லரிசித் தாளினின்றும் செய்யப்படும் இசைக்குழல்; (தொ.) sow one's wild oats, இளமைப் பருவத்துக்குரிய இன்பக் களியாட்டங்களில் மூழ்கு; Wild Oat, நீண்ட காட்டுப் புல்லரிசிப் பயிர்வகை.

*obbliga'to*, (இத்.) *n.* (இசை.) இணைபிரிந்தியலாத் துணைக்கூறு, நேரிணை உறுப்பு; *pl. obbliga'tos*; *a.* துணை இசைப்பு வகையில் இன்றியமையாத, பிரிக்கமுடியாத.

ob'duracy, *n.* விடாக்கடுமை, பிடிமுரண்டுத்தன்மை; நெகிழா நெஞ்சழுத்தம்.

ob'durate, *a.* நெஞ்சழுத்தமிக்க, தளராக் கடுமையுடைய, மூர்க்கமான; தவறுக்கு வருந்தாத; விடாப்பிடியுடைய, பிடிமுரண்டான, காழ்ப்பேறிய, கன்னெஞ்சுள்ள.

ob'eah, *n.* நீகிரோவரிடம் வழக்காற்றிலுள்ள சூனிய வகை.

obed'ience, *n.* வணக்கம், கீழ்ப்படிவு; அடக்க ஒடுக்கம்; ஆணைக்கடங்கி நடத்தல்; சட்டத்துக்கு இணங்கி நடத்தல்; ரோமன் கத்தோலிக்கத் திருச்சபை வழக்காற்றில் வணங்கப் பெறும்நிலை; மேலாட்சி; கீழ்ப்படிவுக்குரிய குழு; மேலாண்மை எல்லை; (தொ.) in obedience to, ஆணைக்கிணங்க, கட்டளைப்படி; கீழ்ப்படிந்து; பின்பற்றி; passive obedience, விருப்பு வெறுப்பற்ற கீழ்ப்படிவு, அடிமைநிலைக் கீழ்ப்படிவு.

obed'ient, *a.* கீழ்ப்படிதலுள்ள, பணிவான, இணங்கி நடக்கிற.

obedien'tiary, *n.* துறவிமடத் தலைவருக்குக்கீழ் பதவிவகிப்பவர்.

obeis'ance, *n.* தலைவணங்குதல், வணக்கமுறை; உடல் வளைத்து வணக்கந் தெரிவித்தல்; வணக்கமுறை தெரிவிப்பு, பணிவறிவிப்பு; மதிப்பிணக்கங்காட்டல்; பணிவிசைவு, இணக்கஇசைவு, ஏற்பிசைவு.

ob'elisk, *n.* சதுரத்தூபி, நான்முகக் கூர்நுனிக்கம்பம்; நாற்கட்டக் கம்பவடிவான மலை; நான்முகக் கூர்நுனிக் கம்ப வடிவமைந்த மரம்; சொல் அல்லது வாசகம் போலி என்பதைக் காட்டுவதற்காகப் பண்டைச் சுவடிகளில் கையாளப்பட்ட அடையாளம் (—, ÷); (அச்சு.) அடிக்குறிப்புகளில் அல்லது ஓரங்களில் கையாளப்படும் உடைவாள் குறி (†); (தொ.) double obelisk, (அச்சு.) இரட்டை உடைவாள் குறி (‡).

ob'elize, *v.* சொல் அல்லது தொடர் போலி என்பதற்கான அடையாளங் குறி; போலியானதென்று — ÷ என்னும் அடையாளங்களால் குறியிடு.

ob'elus, *n.* சொல் அல்லது வாசகம் போலி என்பதைக் காட்டுவதற்காகப் பண்டைச் சுவடிகளில் கையாளப்பட்ட அடையாளம் (—, ÷); (அச்சு.) அடிக்குறிப்புகளில் அல்லது ஓரங்களில் கையாளப்படும் உடைவாள் குறி (†); *pl.* ob'eli; (தொ.) double obelus, (அச்சு.) இரட்டை உடைவாள்குறி (‡).

obese', *a.* கொழுத்த, தடித்த.

obes'ity, *n.* கொழுப்பு, மட்டுமீறிய தூலிப்பு.

obey', *v.* கீழ்ப்படி, பணிந்திணங்கு; சொற்படி நட, பின்பற்றி ஒழுகு; கட்டளை நிறைவேற்று; உணர்ச்சியினுல் தூண்டப்பட்டு இயங்கு; ஆற்றலினுல் இயக்கப்பட்டு இயங்கு.

ob'fuscate, *v.* இருளாக்கு, மறை; உணர்வு மழுங்கச்செய், குழப்பமடையச்செய்.

ob'i[1], *n.*=obeah.

ob'i[2], *n.* ஜப்பானிய பெண்களும் குழந்தைகளும் அணியும் அகலமான ஒண்ணிற அரைக்கச்சை.

*ob'iit*, (ல.) *v.* இறந்துபோனர்.

ob'it, *n.* நினைவு வழிபாடு; வள்ளல் நினைவு வழிபாடு; நிறுவன முதல்வர் நினைவு வழிபாடு.

*ob'iter*, (ல.) *adv.* இடையிலே, போகிற போக்கில், இதற்கிடையில்.

*ob'iter dic'tum*, (ல.) *n.* இடைக்கூற்று; நடுவர் தீர்ப்பினிடைத் தெரிவிக்கும் சட்டமுறை மதிப்பில்லாத கருத்து; *pl. ob'iter dic'ta.*

obit'uary, *n.* பத்திரிகைத்துறை சாவு அறிவிப்பு; இறப்புச் செய்திகள் பற்றிய செய்தித்தாள் அறிக்கை; இறந்துபோனவர் பற்றிய சுருக்க வரலாறு; *a.* இறப்பினைப் பதிவுசெய்கிற; இறந்தவர்பற்றிய.

ob'ject[1], *n.* பொருள்; பருப்பொருள்; காட்சிப்பொருள்; ஒளிக் கருவியால் பார்க்கப்படும் பொருள்; புறப்பொருள்; புலனுல் அறியப்படும்பொருள்; நானெனும் தன்மைக்குப்

புறம்பானது; கருத்துநோக்கம்; செயல் இலக்கு; குறிக்கோள்; நாடும்பொருள்; இலக்கானவர்; உரியவர், ஆட்பட்டவர், உட்பட்டவர்; இலக்கானது, உரியது, உட்பட்டது; (இலக்.) செயப்படுபொருள், வினைப்படு பெயர், முன்வைப்புச் சார்பெயர்; (தொ.) direct object, செயப்படுபொருள்; indirect object, வினைப்படுபெயர், வினைச்சொற்கள் சிலவற்றுடன் ஒருசார் செயப்படுபொருள் போல வரும் பெயர்; no object, விளம்பர வழக்காற்றில் ஒரு பொருட்டன்று.

**object'**[2], *v.* தடைசொல், மறுப்புக்கூறு; ஒவ்வாதென உணர்; பொருந்தாமை தெரிவி; வேண்டாமென்று சொல்; வெறுப்புக்கொள்.

**ob'ject-ball**, *n.* குறிப்பந்து, மேசைக் கோற்பந்தாட்டத்தில் ஆட்டக்காரர் தமது பந்தைத் தாக்கும் பந்து.

**ob'ject-finder**, *n.* ஒருபொருள் இருக்குமிடத்தைக் கண்டறிய உருப்பெருக்காடிகளில் உள்ள அமைவு.

**ob'ject-glass**, *n.* பொருள்வில்லை, ஒளியியற் கருவியின் முனையில் ஆய்வுப் பொருளுக்கு அடுத்துள்ள கண்ணடி வில்லை.

**objec'tify**, *v.* பொறிகளுக்குப் புலனுகும் பொருளாகக் காட்டு; புறப்பொருளாக்கு, மனத்துக்குப் புறம்பானதாகச் செய்; உருப்படியான வடிவம் வழங்கு; உருவங்கொடு.

**objec'tion**, *n.* மறுப்பு, எதிரீடு, எதிருரை; தடங்கலுரை; தடைக்கூறு; மறுத்துரைத்தல்; எதிரான காரணம்; எதிரீடான அறிக்கை; பொருந்தாமை உணர்வு; பொருந்தாமை தெரிவிப்பு; வெறுப்புணர்ச்சி; வெறுப்பறிவிப்பு.

**objec'tionable**, *a.* மறுப்புக்கிடமான, ஆட்சேபத்துக்குரிய; கண்டிக்கத்தக்க; வெறுக்கத்தக்க; அருவருப்பான; ஒப்புக்கொள்ளப்பெருத.

**objec'tive**, *n.* பொருள்வில்லை, காட்சிக்கருவியில் ஆய்பொருளை அடுத்துள்ள முனைப்பகுதி; படைத்துறைக் குறியிலக்கு, கொள்குறி; (இலக்.) இரண்டாம் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமைப் பெயர்ச்சொல்; *a.* (மெய்.) புற உலகுக்குரிய; புறப்பொருளுக்குரிய; மனத்துக்குப் புறம்பான; புலனுல் அறியக்கூடிய; தன்னின் வேருன; மெய்யான; (மரு.) நோயாளி உணர்ச்சிசாராமல் பிறரால் காணப்படுகிற; உணர்வுக்குப் புறம்பாக நிகழ்கிற; (இலக்.) இரண்டாம் வேற்றுமை சார்ந்த; செயப்படுபொருளுக்குரிய; (தொ.) objective case, இரண்டாம் வேற்றுமை; objective point, குறியிலக்கு, படைகள் செயற்படுவதற்காகச் செலுத்தப்படும் குறியிடம்.

**objec'tivism**, *n.* புறநோக்கு, புறப்பொருள் மெய்ம்மையையே வற்புறுத்தும் கருத்துப்பாங்கு; அகம்பற்றிய அறிவைவிட புறம்பற்றிய அறிவே முற்பட்டதும் முதன்மையானதுமென்று எண்ணுங் கோட்பாடு.

**ob'ject-lens**, *n.* = object-glass.

**ob'jectless**, *a.* நோக்கமில்லாத, கருத்தற்ற.

**ob'ject-less'on**, *n.* பொருட்பாடம், ஆய்வுக்குரிய பொருளை வகுப்பில் வைத்துக்கொண்டே நடத்தப்படும் பாடம்; எச்சரிக்கை செய்யும் நிகழ்ச்சி, நல்லறிவு புகட்டும் அனுபவம்; கண்கூடான படிப்பினை.

**objec'tor**, *n.* தடைசொல்பவர், எதிர்ப்பவர், மறுப்புரையாளர்; (தொ.) conscientious objector, உளச்சான்று காரணமாக எதிர்ப்பவர், மனதார விரும்பவில்லையென்னுங் காரணத்திஞல் கட்டாயப்பணி-அம்மை குத்துதல் முதலியவற்றினின்றும் விலக்களிக்கப்பெற்றவர்.

**ob'ject-plate**, *n.* உருப்பெருக்காடியில் ஆய்வுக்குரிய பொருள் வைக்கப்படும் வில்லை.

**ob'ject-staff**, *n.* மட்ட நிலைச்சட்டம், நில அளவைக்காரர் மட்டம் பார்க்க வழங்கும் நிலைச்சட்டம்.

**ob'jurgate**, *v.* கண்டித்துரை, கடிந்துசொல்.

**ob'late**[1], *n.* நேர்ச்சியாளர், துறவி மடத்தில் சமய வாழ்க்கைப் பணிக்கெனத் தம்மை ஒப்புவித்துக்கொண்டவர்.

**oblate'**[2], *a.* (வடி.) கோளவுரு வகையில் இருமுனைகளும் தட்டையான; சிற்றச்சுள்ள.

**obla'tion**, *n.* பலியுணவு, திருப்படையல், நைவேத்தியம்; நேர்ச்சிப்பொருள்; துறவிமடத்து நற்பணிகளை முன்னிட்ட திருக்கொடை; பலிப்பொருள்; பலியாள், பலியிடப்படுபவர்.

**ob'ligate**, *v.* சட்டப்படி கட்டுப்படுத்து, பிணைப்படுத்து.

**obliga'tion**, *n.* கடப்பாடு, கடமையுணர்ச்சி; கடமைப் பொறுப்பு; நன்றிக்கடன்; கடப்பாட்டுக்குரிய செய்தி; உதவி, கடமையுணர்ச்சியுடன் செய்யப்படும் செயல்; சட்டப் பிணைப்பு, சட்டப்பிணைப்பாற்றல்.

**oblig'atory**, *a.* கடப்பாடாகவுள்ள; நெறிமுறையாகக் கட்டுப்படுத்துகிற; செய்துதீரவேண்டிய; சட்டப்படி பிணைக்கிற.

**oblige'**, *v.* கடமைப்படுத்து; கடப்படுவி, நன்றிக்கடனுக்கு உரியவராக்கு; செய்துதீரவேண்டியதாக்கு; உதவியருள், கடமையுணர்ச்சியின்பாற்பட்ட செயல் செய்; கட்டுப்படுத்து; சட்டப்பிணைப்படுத்து; (பே-வ.) மகிழ்வூட்டு, ஆடல்பாடல் முதலிய பொழுதுபோக்குகளின்மூலம் இன்பத்துணை நல்கு.

**obligee'**, *n.* (சட்.) ஒப்பந்தத்திஞல் கட்டுப்படுத்துபவர்; (சட்.) ஒப்பந்தப் பத்திரம் பெறுபவர்; உதவிக்கு நன்றிக்கடம் பூண்டவர்.

**obli'ging**, *a.* உதவும் மனப்பாங்குடைய; அன்புதவி அளிக்கும் பான்மையுடைய; அருளிரக்கம் உடைய; இசைவிணக்கமுடைய.

**ob'ligor**, *n.* (சட்.) தம்மை ஒருவருக்குப் பிணைப்படுத்திக் கொள்பவர்; பிணைப்பத்திரம் எழுதிக்கொடுப்பவர்.

**oblique'**, *a.* சாய்ந்த, நிமிர்வரையிலிருந்து கோடிய; சாய்வான, படுவரையிலிருந்து கோடிய; கோடு வகையில் இணைவு செவ்வல்லாத, ஒருபோகாகவோ செங்குத்தாகவோ அமையாத; (வடி.) வரை-தளவடிவம்-பரப்பு-கோணம் ஆகியவற்றின் வகையில் செங்கோணத்தினின்றும் பிறழ்ந்த, கூர்ங்கோணமான, விரிகோணமான; கூம்பு-நீள் உருளை முதலியவற்றின் வகையில் அடித்தளத்துக்குச் செங்குத்தாயிராத அச்சுடைய; (உள்.) உடம்பின் அல்லது உறுப்பின் நீள் அச்சுக்கு ஒருபோகாகவோ செங்குத்தாகவோ அமையாத; (தாவ.) இலை வகையில் சமமற்ற பக்கங்களையுடைய; நேராகச் செய்திக்கு வராத, பேச்சு வகையில் நேர் அல்லாத, சுற்றி வளைக்கிற; படர் வழியான; (இல.) வேற்றுமை வகையில் எழுவாய் விளி நீங்கலான பிற சார்ந்த; (இலக்.) கேட்டுரைத்தலில் நேர்முறையல்லாத, படர்க்கைப்பாடான; *v.* (படை.) சாய்வாக முன்னேறு.

**obliq'uity**, *n.* சரிவு, சாய்வு; ஓராயம், கோட்டம், நேர்வு பிறழ்வு; செவ்விணைவின்மை, ஒருபோகாகவோ செங்குத்தாகவோ அமையா நிலை; பிழை, ஏறுமாருன நிலை, ஒழுங்குத் தவறு.

**oblit'erate**, *v.* துடைத்தழி, தடம் இல்லாமற் செய், தெளிவாகத் தெரியாமல் செய்; புழைவகையில் வழியடை.

**oblitera'tion**, *n.* துடைத்தழித்தல், புதைத்தல்.

**obliv'ion**, *n.* மறதி; புறக்கணிப்பு, கவனிக்கப்படாத நிலை; (தொ.) Act of Oblivion, Bill of Oblivion, அரசியற்குற்ற முழு மன்னிப்பு; fall into oblivion, மறந்தொழியப்பெறு; வழக்கொழிந்துபோ.

**ob'long**, *n.* நீள்சதுரம்; நீள்வட்டம்; நீள்சதுர உருவம்; நீள்சதுர உருவுடைய பொருள்; நீள் வட்டவடிவம்; நீள்வட்ட வடிவுடைய பொருள்; *a.* நீள்சதுரமான, நீள்வட்டமான; உருண்டை வகையில் நீளச்சுள்ள; தாள்-ஏடு-அஞ்சல்தலை முதலியவற்றின் வகையில் உயரத்தைவிடக் குறுக்ககலம் மிகுதியாகவுடைய.

**ob'loquy**, *n.* இகழ்ச்சி; அவதூறு.

**obmutes'cence**, *n.* வாய்மூடித்தனம்.

**obno'xious**, *a.* தீமை விளைக்கத்தக்க; அருவருப்பான, விரும்பத்தகாத, வெறுக்கப்படுகிற.

**ob'oe**, *n.* மரத்தாலான துளையிசைக்கருவி வகை; துளையிசைக் கருவி இசை எழுப்பும் இசைமேளக் கட்டை.

**ob'ol**, *n.* ஏறத்தாழ $1\frac{1}{2}$ பென்ஸ் மதிப்புள்ள பண்டைய கிரேக்க வெள்ளி நாணய வகை.

**obscene′**, *a.* நாறுகிற ; குப்பையான ; வெறுப்பூட்டுகிற.

**obscen′ity**, *n.* நாற்றம் ; கீழ்மை ; நயமின்மை.

**obscur′ant**, *n.* ஆராய்ச்சி வெறுப்பவர்; அறிவொளி பகைப்பவர் ; சீர்திருத்த எதிர்ப்பாளர்.

**obscure′**, *n.* இருள்நிலை ; விளக்கமின்மை ; ஒதுக்கிடம்; *a.* இருளார்ந்த; ஒளியற்ற; புகையார்ந்த; நிற வகையில் மங்கலான ; கண்ணுக்குத் தெரியாத ; தெளிவாகப் புலப்படாத ; தெளிவற்ற ; தெளிவாகச் சொல்லப்படாத ; எளிதிற் புரியாத ; விளக்கமற்ற; ஐயப்பாடான; புதிரான; புதைவான; காட்சிக்குத் தொலைவான ; ஒதுக்கிடமான ; கவனிக்கப்படாத; அறியப்படாத; புகழ்நிலை எய்தாத; தாழ்நிலையான; *v.* மங்கலாக்கு ; தெளிவற்றதாக்கு ; இருட்டடிப்புச்செய் ; புரியாததாக்கு ; பார்வையிலிருந்து மறை ; மங்கவை ; விஞ்சி ஒளிவிடு; புகழ்மறைப்புச் செய்; (தொ.) obscure rays, ஒளி வண்ணப்பட்டையில் கட்புலனுகா வெப்பக்கதிர்கள்.

**obscur′ity**, *n.* தெளிவற்ற நிலை ; இருண்மை ; மறைவு.

***obscur′um per obscur′ius***, (ல.) *n.* விளங்காத ஒன்றை இன்னுங் கடினமானதொன்றால் விளக்குதல்.

**obsecra′tion**, *n.* குறையிரத்தல், வேண்டுகோள்; வழிபாட்டு விண்ணப்பப் பாசுரம்.

**ob′sequies**, *n. pl.* ஈமக்கடன்.

**obseq′uious**, *a.* கழி எளிமைய, கெஞ்சும் பான்மைய ; தன்மதிப்பற்ற, அடிமைப்பணிவுடைய.

**observ′ance**, *n.* கைக்கொள்ளுதல்; மேற்கொள்ளுதல்; பின்பற்றுதல்; சடங்கு முதலியவற்றின் வகையில் கடைப்பிடித்தல்; நிறைவேற்றுதல்; சமய வினைமுறை; பழக்க வழக்கமுறை; அமைப்பு விதி; வினைமுறைக்குழு; விதிமுறைகளைப் பின்பற்றும் நிறுவனம்.

**observ′ant[1]**, *n.* பழக்கவழக்கங்களைக் கண்டிப்பாகக் கடைப்பிடிப்பவர் ; *a.* கூர்ந்து கவனிக்கிற ; கவனித்துச் செயற்படுகிற; விழிப்புணர்ச்சியோடிருக்கிற, எச்சரிக்கையுள்ள; நுண்ணறிவைச் செலுத்துகிற, நுண்காட்சித்திறமுடைய.

**Observ′ant[2]**, *n.* கண்டிப்பான விதிமுறைகளைப் பின்பற்றுகிற துறவிமட நிறுவன உறுப்பினர்.

**observa′tion**, *n.* நுண்காட்சி ; நுண்காட்சித்திறம் ; கூர்நோக்கு ; நுட்ப விரிவான காட்சிப்பழக்கம் ; காட்சியறிவு ; இயற்கைக் காட்சியுணர்வு ; நுண்காட்சிப்பதிவு; வானிலைக் காட்சிப் பதிவு ; புலக்காட்சி; புலக்காட்சியாற்றல்; நுட்பக் கவனம் ; கூர்ந்து கவனித்தல்; கூர்ந்த கவனிப்புக்கு உட்படுதல் ; குறித்துரை ; கருத்தறிவிப்பு ; காட்சிப் பதிவீடு ; கருத்துப்பதிவீடு ; குற்றங் குறை கூறல் ; படைத்துறை வகையில் புலங்காண்டல் ; கோட்டை வேவுபார்ப்பு ; (தொ.) observation car, சுற்றுக்காட்சிக்கு வாய்ப்பான அமைப்புடைய பயணவண்டி; observation post, ஞாயில் காவல்.

**observ′atory**, *n.* வானிலை ஆய்வுக்கூடம்.

**observe′**, *v.* உற்றுநோக்கு, நுணுகிக்காண்; உற்றறி, கவனி; உற்றுநோக்கிக் குறித்துக்கொள் ; பின்பற்று ; முறைப்படி செய்; மேற்கொள், கொண்டாடு; நிறைவேற்று; கண்டுரை; குறிப்பிடு ; கருத்தறிவி ; கருத்துரையாகக் கூறு ; கண்டு பதிவுசெய்.

**observ′er**, *n.* நுணுகிக்காண்பவர்; உற்றுநோக்குபவர்; நுண்காட்சியாளர்; பின்பற்றுபவர்; கருத்தறிவிப்பவர்; அளவைக் கருவிகண்டு குறிப்பவர் ; கண்டு பதிவுசெய்யும் பணியாளர் ; கூட்டக் காண்பாளர் ; வானூர்திவலவன் காட்சித்துணைவர்; படைத்தலைவர் காட்சித்துணைவர் ; கடற்படைத் தலைவர் காட்சித்துணைவர் ; அக்கறை உடையவர்.

**obsess′**, *v.* அலைக்கழிப்பூட்டு, ஆட்டிப்படை, பேயாட்டமாட்டுவி ; சள்ளைப்படுத்து ; உளவகையில் வேறிடமின்றி அடர்த்தாட்சி செய், முழுதும் இடம் பிடித்தாட்டு ; முழுக் கவனத்தையும் கவர்ந்து தனதாக்கு.

**obse′ssion**, *n.* ஆட்டிப்படைப்பு ; ஆட்டிப்படைக்கும் புற ஆற்றல்; ஊன்றிய கருத்துவெறி; ஊன்றிய வெறிக்கருத்து.

**obsid′ian**, *n.* எரிமலைக் கரும்பளிங்குப் பாறை.

**obsoles′cent**, *a.* வழக்கற்றுப் போய்க்கொண்டிருக்கிற ; மறைந்துகொண்டு வருகிற ; வழக்கற்றுவரும் பாங்குடைய ; (உயி.) உறுப்பு வகையில் ஒரு காலத்தில் முழுவளர்ச்சியடைந்திருந்து படிப்படியாக அருகிக்கொண்டு வருகிற.

**ob′solete**, *n.* பழமைப்பட்டுப்போனவர், புறக்கணிக்கப்பட்டவர் ; வழக்கற்றுப்போன பொருள் ; *a.* வழக்கற்றுப்போன, வழக்காற்றிலிருந்து விலக்கப்பட்ட ; பழமைப்பட்டுப்போன ; அருவழக்குடைய ; (உயி.) உறுப்பு வகையில் முன்னிலும் வளர்ச்சி மட்டுப்பட்ட ; உறுப்பு வகையில் துணையினங்களை விடப் பிற்பட்ட வளர்ச்சியுடைய; கருநிலையிலுள்ள; முதிர்ச்சியுருத, வளர்ச்சி தடைப்பட்ட.

**ob′stacle**, *n.* தடங்கல், தடை ; இடைஞ்சல், இடையூறு ; (தொ.) obstacle race, தடங்கல் தாண்டு பந்தயம்.

**obstet′ric, obstet′rical**, *a.* (மரு.) தாய்மை மருத்துவஞ் சார்ந்த, மகப்பேறு மருத்துவத்துக்குரிய.

**obstetri′cian**, *n.* தாய்மை மருத்துவ வல்லுநர், தாய்மை மருத்துவர்.

**obstet′rics**, *n.* தாய்மை மருத்துவம்.

**ob′stinacy**, *n.* அடம், பிடிவாதம் ; மூர்க்கத்தனம் ; தன் முரண்டு ; எளிதிலடங்காமை ; எளிதில் சீர்ப்படாமை.

**ob′stinate**, *a.* பிடிவாதமுடைய, அடம் பிடிக்கிற ; வளைந்து கொடுக்காத, தன்முனைப்புமிக்க ; மூர்க்கத்தனமிக்க.

**obstrep′erous**, *a.* இரைச்சலான, ஆரவாரமுள்ள, கூச்சலிடுகிற; கொந்தளிப்பான, கட்டுப்பாட்டுக்கடங்காத; கூச்சலிட்டெதிர்க்கிற.

**obstruct′**, *v.* தடு, மறி; தடுத்து நிறுத்து, தடைசெய்; இடையூறுண்டுபண்ணு, இடைஞ்சல் விளை ; வழியடை ; முன்னேறவொட்டாமற் செய்; மாமன்ற நடவடிக்கைகள் வகையில் முட்டுக்கட்டைபோடு.

**obstruc′tion**, *n.* தடை, தடங்கல் ; இடையூறு, இடைஞ்சல்; வழியடைப்பு ; வழியடைக்கப்பெறல்; மட்டுமீறிப்பேசுவதன் மூலம் மாமன்ற வேலைகளுக்கு முட்டுக்கட்டையிடல்.

**obstruc′tion-guard**, *n.* தடைவாங்கி, தண்டவாளங்களிலிருந்து தடைகளை அகற்றுவதற்காக நீராவி இயங்கு பொறிக்குமுன் பொருத்தப்படும் நீள் சட்டம்.

**obstruc′tionist**, *n.* மாமன்ற வேலைகளுக்கு முட்டுக்கட்டையிடும் அரசியல்வாதி ; *a.* மாமன்ற வேலைகளுக்கு முட்டுக்கட்டையிடும் அரசியல் வாதிகளுக்குரிய.

**obstruc′tive**, *n.* தடங்கல் ; முன்னேற்றத்தைத் தடுப்பவர் ; *a.* இடையூறு செய்கிற ; தடங்கலுண்டுபண்ணும் நோக்கங் கொண்ட.

**obtain′**, *v.* அடை, பெறு; ஈட்டு; வழங்கு, நடைமுறையிலிரு, வழக்காற்றிலிரு.

**obtec′ted**, *a.* (பூச்.) பூச்சிக் கூட்டுப்புழுக்கள் வகையில் வெளித்தோட்டுக் கூட்டினுல் மூடப்பெற்றுள்ள.

**obtest′**, *v.* வேண்டு, குறையிர ; சான்றுகூறக் கோரு ; கண்டனந் தெரிவி.

**obtrude′**, *v.* வேண்டாது புகு ; அழைக்கப்படாது நுழை.

**obtrud′er**, *n.* வலிய நுழைபவர்.

**obtrunc′ate**, *v.* தலையை வெட்டு, உச்சியை வெட்டு.

**obtund′**, *v.* (மரு.) உணர்வு மழுங்கச்செய் ; ஆற்றல் அழி.

**ob′turate**, *v.* நிறுத்திவிடு; புழையடைத்துவிடு, மூடி முத்திரை இட்டுவிடு.

**obtuse′**, *a.* முனை மழுங்கலான, கூர்விளிம்பற்ற ; (வடி.) கோணங்கள் வகையில் விரிந்த, இருசெங்கோணத்திற் குறைந்து ஒரு செங்கோணத்திற் பெரிதான ; நோவு வகையில் மந்தமான, கொடியதாயிராத ; முட்டாளான, அறிவு மந்தமாயுடைய ; புலனறிவு வகையில் மழுங்கலான.

**ob′verse**, *n.* நாணயம்-பதக்கம் ஆகியவற்றின் வகையில் முகப்புப்பக்கம்; பொருளின் முகப்பு; முன்புறம்; மறுவடிவம், எதிர்க்கூறு ; *a.* (தாவ.) உச்சியைவிடக் குறுகலான அடிப்பாகமுடைய ; வேறொன்றுக்கு நிகரான; மறு கூறுகவுள்ள.

**obver'sion**, *n.* ஒன்றை நோக்கி மற்றொன்றைத் திருப்புதல்; (அள.) உய்ப்பெதிர் மறை, நிகரான மறுகூறு வருவிக்கும் உடனடியான அனுமான முறை.

**obvert'**, *v.* ஒன்று இருக்கும் திசைநோக்கித் திருப்பு; ஒன்றினை நோக்கியிரு; (அள.) ஒன்றுக்கு நிகரான மறுகூறுன எதிர்மறையை உய்த்துவருவி.

**ob'viate**, *v.* அகற்று, அப்புறப்படுத்து, ஒழித்துக்கட்டு; முன்னறிந்து நீக்கு; சூழ்ச்சியினுல் வெல்; வழிக்குக் கொண்டுவா; கடுமை கெடு.

**ob'vious**, *a.* வெளிப்படையான, தெளிவான, ஐயத்துக்கிடந்தராத.

**ocari'na**, *n.* பீங்கான் அல்லது உலோகத்தாலான சிறு முட்டை வடிவத் துளையிசைக்கருவி வகை.

**occa'sion**, *n.* தறுவாய்; வாய்ப்பு; வேளை, நிகழ்ச்சிக்குரிய நேரம்; ஏற்றகாலம்; தூண்டுதல் காரணம்; சிறப்புப்பருவம்; சாக்குப்போக்கு; தேவை; நேரடியான காரணம், உடனடிக் காரணம்; சிறப்பு நிகழ்ச்சி; *v.* விளைவி; நடப்பி, வருவி.

**occa'sional**, *a.* வேளைக்குரிய; தறுவாய்க்கான; சிறப்பு நிகழ்ச்சியை முன்னிட்ட; தனி நிகழ்ச்சிக்கிசைவாக அமைந்த; தனி நேரங்களிற் செயற்படுகிற; இடையிடை நிகழ்வான, அவ்வப்போது நிகழ்கிற; துணைமையான; உடனடித் தூண்டுதலான; (தொ.) occasional cause, துணைக்காரணம், சிறப்பற்ற காரணம்; occasional licence, குறிப்பிட்ட இடத்திலும் காலத்திலும் மட்டும் இன்தேறல் விற்பதற்கான தனி விலக்கு உரிமை.

**occa'sionalism**, *n.* இறை தலையீட்டியைபுக் கோட்பாடு, மனத்துடன் புற உலகின் இயைபுத்தோற்றம் இரு திசையிலும் நேரடி இறைத்தலையீட்டினுலேயே நேர்வது என்ற ரீன் டேகாரிட்டே (Rene Descartes 1586-1650) என்னும் மெய்விளக்கியலார் கோட்பாடு.

**occa'sions**, *n. pl.* தொழில், தொழில் நடவடிக்கைகள்.

**Oc'cident**, *n.* மேல்திசை; மேலை உலகம்; ஐரோப்பா; மேலை ஐரோப்பா; ஐரோப்பா-அமெரிக்கா ஆகியவற்றின் தொகுதி; அமெரிக்கா; ஐரோப்பிய நாகரிகம்.

**occiden'tal**, *n.* மேலையுலகினர், மேலை நாட்டினர்; எட்கார் டி வால் (Edgar de Wahl) 1922-இல் புதிதுபுனைந்த மொழிப் பெயர்; *a.* மேல்திசைக்குரிய; மேலையுலகுக்குத் தனிச்சிறப்பான; ஐரோப்பாவுக்குரிய; அமெரிக்காவுக்குரிய; அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேல் பகுதிக்குரிய; மணி வகையில் மலிவான இரண்டாந்தரத்துக்குரிய.

**occiden'talism**, *n.* மேலை நாகரிகம்; மேலை நாட்டினர் பழக்கவழக்கப் போக்குகள்.

**occiden'talist**, *n.* மேலை உலக மொழி ஆய்வுத்துறை மாணவர்; மேலையுலகக் கருத்துக்களையும் பழக்கவழக்கங்களையும் ஆதரிக்கும் கீழை நாட்டவர்.

**occiden'talize**, *v.* மேலையுலகக் கருத்துக்களுக்கு இணங்க மாற்று; மேலைப்பழக்கவழக்கங்களுடன் இசைவி.

**occip'ital**, *n.* தலையோட்டின் பின் எலும்பு; *a.* தலைப் பின்புறம் சார்ந்த.

**oc'ciput**, *n.* தலையின் பின்பகுதி, மண்டையின் பிற்பகுதி.

**occlude'**, *v.* உள்துளை நிரப்பு; புழை அடைப்புச் செய்; தடைசெய்; (வேதி.) வளிகளை உறிஞ்சு, உறிஞ்சி அடக்கிக் கொள்.

**occult'**, *a.* மறைவாக வைக்கப்பட்ட; மறைவியலான; மறை பொருளான, சிலருக்கு மட்டுங் கற்றுக்கொடுக்கப்படும் தன்மையுள்ள; புரியாத; பொது ஆய்வுக்கு அப்பாற்பட்ட; தெய்விகமான; இயற்கைமீறிய நிகழ்ச்சிகளைக் கொண்ட; மாய மந்திரஞ் சார்ந்த; *v.* மறைத்து வை; தற்காலிகமாகப் பார்வைக்கு மறை; (வான்.) முன் குறுக்கிட்டுக் காட்சியை மறை.

**occult'ing**, *a.* இடைமறித்து மறைக்கிற; (தொ.) occulting light, இடையிடையே ஒளி மறைக்கப்படுகிற கலங்கரை விளக்கம்; விட்டு விட்டு ஒளி வீசும் கலங்கரை விளக்கம்.

**occ'upancy**, *n.* உடைமையாட்சி; உடைமையாட்சிக்காலம்; தங்கும் உரிமை பெற்றிருத்தல்; உடைமை கைக்கொள்ளுகை; குடியிருக்கை; குடிபுகுதரவு.

**occ'upant**, *n.* நில முதலியவற்றை உடைமையாட்சியாகக் கொண்டுள்ளவர்; குடியிருப்பவர்; தங்கி வாழ்பவர்; தங்குபவர்; உடைமைப் படாததன் உரிமை நிறுவி உடைமை கைப்பற்றுபவர்.

**occupa'tion**, *n.* குடியிருக்கை; குடியிருப்பாட்சி; குடியிருப்புக்கு ஆட்படுநிலை; படைப்பற்றுட்சி; குடியிருப்பாட்சிக் காலம்; குடியிருப்பாட்சி உரிமை முறை; வாழ்க்கைத்தொழில்; பொழுதுபோக்குப் பணி; பணிமுறை, தொழில்முறை; (தொ.) army of occupation, பற்றுட்சிக்காலப்படை, தோற்கடிக்கப்பட்ட பகுதியில் நிலையான ஆட்சி ஏற்படும் வரையில் ஆட்சிப்பொறுப்புடைய படை; occupation bridge, நிலத்தில் வாழ்பவர்கள் மட்டும் பயன்படுத்திக்கொள்ளக்கூடிய தனிப் பட்டவர்க்குரிய பாலம்; occupation franchise, குடியிருப்பவர்க்குரிய வாக்குரிமை; occupation road, நிலத்தில் வாழ்பவர்கள் மட்டும் பயன்படுத்திக்கொள்ளக்கூடிய தனிப்பட்டவர்க்குரிய பாட்டை.

**occupa'tional**, *a.* வாழ்க்கைத் தொழில் சார்ந்த; தொழில் துறையால் நிகழ்கிற.

**occ'upier**, *n.* அனுபவிப்பவர், நிலத்தை அல்லது வீட்டைத் தன் அனுபவத்தில் வைத்துக்கொண்டிருப்பவர்.

**occ'upy**, *v.* அமர்வுகொள்; இடங்கொள்; இடம் பெற்றிரு; உடைமை கைக்கொள்; உடைமையாட்சி கொள்; குடியிரு; பதவியை வகி; குடியிருப்பாட்சி கொள்; பற்றுட்சி கைக்கொள்; உடைமை கைப்பற்று; ஓய்வுநேரம் நிரப்பு; காலம் தேவைப்படு.

**occur'**, *v.* நிகழ்; நடைபெறு; நேரிடு; காணப்படு; இருப்பதாக அறியப்படு; மனத்தில் தோன்று.

**occu'rrence**, *n.* நிகழ்ச்சி, சம்பவம்.

**o'cean**, *n.* பெருங்கடல், சமுத்திரம்; நிலவுலகு புடைசூழ்ந்த நெடுநீர்ப்பரப்பு; ஆழி, நிலவுலகம் சூழ்ந்த நெடுநீர்ப்பரப்பின் பெருங்கூறு; பெரிய அளவுடையது; பெரும் பரப்புடையது, (தொ.) ocean greyhound, விரைவாகச் செல்லக்கூடிய பயணக்கப்பல்; ocean lane, நீராவிக் கப்பல்களுக்குக் குறிக்கப்பட்ட கடற்பாதை; ocean tramp, தனிவாணிகப் பொருள்கள் மட்டுமன்றிப் பொதுவாகச் சரக்குகள் ஏற்றிச்செல்லும் வாணிக நீராவிக்கப்பல்.

**Ocean'ia**, *n.* பசிபிக் பெருங்கடலிலும் அதற்கு அண்மையிலும் உள்ள தீவுத் தொகுதி.

**Ocean'ian**, *n.* பசிபிக் பெருங்கடலிலும் அதற்கு அருகிலுமுள்ள தீவுகளில் குடியிருப்பவர்; *a.* பசிபிக் பெருங்கடலிலும் அதனைச் சார்ந்த தீவுகளிலும் வாழ்கிற.

**ocean'ic[1]**, *a.* பெருங்கடல் சார்ந்த; பெருங்கடல் போன்ற.

**Ocean'ic[2]**, *a.* பசிபிக் பெருங்கடலிலும் அதனைச்சார்ந்த தீவுகளிலுமுள்ள.

**Oce'anid**, *n.* பெண் தெய்வம், கிரேக்கபுராண மரபில் கடலணங்கு; *pl.* Oce'anids, Oce'anides.

**o'cellate, o'cellated**, *a.* வண்ண வளையத்துடன் கண் போன்றமைந்த; கண்போன்ற பொட்டினையுடைய.

***ocell'us***, (ல.) *n.* பூச்சிவகைகளில் கூட்டிணைவல்லாத கண்; கூட்டிணைவான கண்ணின் தனிக்கூறு; பிறவண்ண வளையஞ் சூழ்ந்த வண்ணப்பொட்டு; *pl. ocell'i.*

**o'celot**, *n.* பூனை இன அமெரிக்க காட்டு விலங்குவகை.

**ochloc'racy**, *n.* கும்பலாட்சி.

**ochlocrat'ic**, *a.* கும்பலாட்சி சார்ந்த.

**och're**, *n.* மஞ்சட்காவி மண்; வெளிறிய பழுப்பு மஞ்சள் நிறம்; காவி, சுவர் தீற்றுவதற்குரிய மஞ்சட்பழுப்பு வண்ணச்சாயம்; உலோகத் துருவகை.

**o'clock**, *n.* கடிகாரப்படி மணி.

**oc'tachord**, *n.* எட்டு நரம்புகள் கொண்ட இசைக்கருவி; எண் பாலை, கேள்வித் தொடர்; எட்டுச்சுரங்கள் கொண்ட தொடர்.

**oc'tad**, *n.* எட்டு அடங்கிய தொகுதி, எட்டன் தொகுதி.

**oc'tagon**, *n.* எண்கோணம், எட்டுப் பக்கங்கள் கொண்ட வள உரு; எண்கோணப் பகுதியுடைய கட்டிடம்.

**octag'onal**, *a.* எண்கோணமான, எட்டுப்பக்கங்களையுடைய.

**octahed'ron**, *n.* எண்முகப்பிழம்புரு.

**oc'tane**, *n.* நீர்க்கரிமத் தொடர்மங்களில் ஒன்று.

**oc'tant**, *n.* அரைக்கால் வில்வரை, வட்டச் சுற்றுவரையின் எட்டிலொரு கூறுன வில்வரை; அரைக்கால் வட்டக்கூறு, இரண்டு ஆரங்களுக்கிடைப்பட்ட வட்டப்பரப்பின் எட்டிலொரு கூறு; அரைக்கால் வளாகம், முத்தசை செங்குறுக் கீட்டால் ஏற்படும் இடவெளியின் எண்கூறுகளில் ஒன்று; வானியலிலும் கடற்செலவிலும் பயன்படுத்தப்படும் எண்ம வட்ட மானி; (வான்.) கோள் நெறி வட்டத்தின் 45 பாகைக் கூறு; (வான்.) மதி நெறிவட்டத்தில் கதிரிணைவு அல்லது கதிரெதிர்விலிருந்து 45 பாகைக் கோணத்திலுள்ள குறியிடம்.

**oc'tarchy**, *n.* எட்டரசுத் தொகுதி.

**octaroon'**, *n.*=octoroon.

**oc'tastyle**, *n.* எண்தூண் மாடம்; எண்தூண் முகப்பு; *a.* முகப்பில் எட்டுத்தூண்களையுடைய; முனைக்கோடியில் எட்டுத் தூண்களையுடைய.

**oc'tateuch**, *n.* விவிலிய ஏட்டின் பழைய ஏற்பாட்டுக்குரிய முதல் எண்சுவடித் தொகுதி.

**oc'tave**, *n.* விழாநாளுக்கு எட்டாம் நாள்; விழாநாள் முதல் எட்டு நாள் தொகுதி; எட்டன் தொகுதி; எட்டடிச்செய்யுள்; பதினான்கடிச் செய்யுளின் முதல் எட்டடி; (இசை.) சுரத்தின் மேற்பாலை; சுரத்தின் கீழ்ப்பாலை; பன்னிரண்டு அசைசுரத் தொகுதி; மேற்பாலைக் கேள்விக்கட்டை; வாட்போரில் ஒரு நிலை; 13½ காலன் அளவு கொண்ட இன்தேறல் மிடா.

**oc'tave-coupler**, *n.* இசைக்கருவியில் எட்டுச் சுரங்களை இணைக்குங் கருவி.

**oc'tave-flute**, *n.* புல்லாங்குழல் மேற்பாலைக்கட்டை.

**octav'o**, *n.* எட்டாக மடித்த தாள் அளவு; எண்மடிப் புத்தக அளவு.

**octav'us**, *n.* பள்ளி வழக்கில் ஒரே பெயருடையவரில் எட்டாமவர்.

**octenn'ial**, *a.* எட்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நிகழ்கிற; எட்டாண்டு நீடித்திருக்கிற.

**octet', octette'**, *n.* எட்டுப் பாடகர்கள் தொகுதி; எட்டு நடிகர்கள் தொகுதி; எண்மர் பாடுவதற்கான பாடல்; எட்டு நடிகருக்கான நடிப்புப்பகுதி; எட்டடிப் பாடல்; பதினான்கடிப் பாடலில் முதல் எட்டடி.

**octill'ion**, *n.* பத்து லட்சம் கோடி கோடி கோடி கோடி கோடி கோடி, ஒன்றுடன் 48 சுன்னங்களைச் சேர்த்தால் ஆகும் தொகை.

**octingenten'ary**, *n.* எண்ணூறுவது ஆண்டு விழா.

**Octob'er**, *n.* ஆங்கில ஆண்டின் பத்தாவது மாதம்.

**Octob'rist**, *n.* (வர.) ருசிய சட்டசபையில் மிதவாதக் கட்சியின் உறுப்பினர்; *a.* ருசிய நாட்டு மிதவாதக் கட்சியைச் சார்ந்த.

**octocenten'ary, octocentenn'ial**, *n.*=octingentenary.

**octode'cimo**, *n.* பதினெண்மடித்தாள் அளவு; பதினெண் மடிப் புத்தக அளவு.

**octogenar'ian**, *n.* எண்பது வயதுடையவர்; *a.* எண்பது வயதுடைய; எண்பது வயதுடையவரைச் சார்ந்த.

**oc'tonal**, *a.* எட்டன்மானம் சார்ந்த; எட்டடுக்கிய, எண்மடியான; நாணயவகையில் எண்மடிப் பகுப்புடைய.

**octonar'ian**, *n.* எண் சீரடி; *a.* யாப்பு வகையில் எண் சீருடைய.

**oc'tonary**, *n.* எட்டின் தொகுதி; எட்டடிப்பா; *a.* எட்டன்மானம் சார்ந்த, எட்டடுக்கிய, எண்மடியான; நாணயவகையில் எண்மடிப் பகுப்புடைய.

**oc'topus**, *n.* எண்காலி, வாய்முகப்பைச் சுற்றிலும் எட்டுக் கிளையுறுப்புக்களையுடைய அச்சந்தரத்தக்க கடல் விலங்கினம்; பேரிடர் தருவது, தீங்கான ஆற்றல்.

**octoroon'**, *n.* வெள்ளையருக்கும் நீகிரோவருக்கும் பிறந்த கலப்பினத்தவர்.

**octosyllab'ic**, *n.* எட்டு அசைகளையுடைய செய்யுள்; *a.* எட்டு அசைகளைக் கொண்ட.

**octosyll'able**, *n.* எட்டு அசைகளைக்கொண்ட சொல்; *a.* எட்டு அசைகளைக் கொண்ட.

**oc'troi**, *n.* ஐரோப்பிய நாடுகளில் நகர்ச் சுங்கவரி; நகர்ச் சுங்கச் சாவடி; நகர்ச் சுங்கப் பணியாளர்.

**oc'tuple**, *n.* எண் மடங்கு; *a.* எண்மடங்கான; *v.* எட்டால் பெருக்கு.

**oc'ular**, *n.* கருவியில் சேர்க்கப்படும் விழிக் கண்ணாடிச் சில்லு; *a.* கண்ணுக்குரிய, பார்வைக்குரிய; கண்கூடான; (தொ.) ocular demonstration, கண்கூடான செய்ம்முறை விளக்கம்.

**oc'ularist**, *n.* செயற்கை விழிகள் ஆக்கிப்படைப்பவர்.

**oc'ulate, oc'ulated**, *a.*=ocellate.

**oc'ulist**, *n.* கண் மருத்துவர், கண் மருத்துவ வல்லுநர்.

**oc'ulonas'al**, *a.* கண் மூக்குச் சார்ந்த.

**od**, *n.* காந்த-படிக-வேதி-வசிய ஆற்றல்களுக்கு ஆதாரமாக இயற்கை முழுதும் பரந்து நிற்பதாகக் கருதப்படும் ஆற்றல்.

**od'alisque**, *n.* துருக்கிய அரசர்களின் பெண் அடிமை; துருக்கிய அரசர்களின் காமக்கிழத்தி.

**odd**, *n.* குழிப்பந்தாட்டத்தில் எதிர்த்தரப்பைவிட மிகையாகப் பெற்ற பந்தடி; ஏற்றத்தாழ்வு சரிப்படுத்தும் சலுகைப் பந்தடி; சீட்டுப்பொறி ஆட்டத்தில் ஆறன் தொகுதி கடந்த பொறித் தட்டு; *a.* ஒற்றையான, இரட்டையல்லாத; எண்வகையில் வியனுன, இரண்டால் வகுக்கப்பெறுத; ஒற்றைப்படை எண்ணுக்குரிய; சோடியுடன் இணையாத; இரட்டைப்படையில் மிச்சமான; வட்டத்தொகைபோக மீந்துள்ள; தொகுதியுட் சேராத; உதிரியான; சில்லறையான; பாதிக்கு ஒன்று மிகையான; குறிப்பிட்ட தொகைக்குச் சற்று மிகைப்பட்ட; சில்லறையுடன் கூடிய, சொச்சமான; கணக்கில் சேராத; தனிமிகையான; விட்டுப்போன; தொடர்புபடாத; ஈடுபடுத்தப்படாத; தொலை ஒதுக்கமான; எதிர்பார்க்கப்படாத; வழக்கமல்லாத; புதுமையான; பொதுநிலை திரிந்த; புதிரீடான; அரிய இயல்புடைய; விசித்திரமான; நகைப்புக்கிடமான; ஒத்துவராத; கோமாளித்தனமான; குழு வாக்கெடுப்பில் சரிசம வாக்குகளுக்கு மேம்பட்டுத் தனி மதிப்புப் பெறுகிற; சீட்டுப்பொறியாட்டத்தில் இருதரப்பும் ஆறன் தொகுதி தீர்ந்தபின் முதலாவதாக முனையப்பெறுகிற; (தொ.) forty odd, நாற்பதுக்கும் ஐம்பதுக்கும் இடையில்; odd and even, சூதாட்டம்; odd man out, நாணயத்தை எறிந்து பார்த்து மூவரில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் முறைப்படி; odd numbers, odd volumes, முழுநிறைவாகாத வரிசைகளைச் சேர்ந்த பருவ இதழ்கள்; sixty odd thousand, அறுபது ஆயிரத்துக்கும் எழுபது ஆயிரத்துக்கும் இடையில்; sixty thousand odd, அறுபது ஆயிரமும் சில நூறும் சில்லறையும்; the odd man, இரட்டைப்படை வரிசையில் அடங்காத தனி மனிதன்; the odd trick, சீட்டாட்டவகையில் இருதரப்பினருக்கும் ஆறுஆறு பிடித்தபிறகும் எஞ்சியுள்ள பதின்மூன்றுவது பிடி; twelve pounds odd, பன்னிரண்டு பவுன்களும் சில்லறையும்.

**odd'-come-short**, *n.* எஞ்சியது, மிச்சம்.

**odd-come-short'ly**, *n.* அண்மையில் ஒரு நாள்.

**odd'fellow**, *n.* நற்கொத்தர் சங்கத்தைப் போன்ற சடங்குகளையுடைய நட்புறவுக் குழுவின் உறுப்பினர்.

**odd'ity**, *n.* புதுமை, விசித்திரம்; தனிப்பட்ட போக்கு; விசித்திரமானவர்; விந்தைப்பொருள்; வியப்பான நிகழ்ச்சி.

odd'ments, *n. pl.* எச்சமிச்சங்கள், எஞ்சியவைகள்.

odds, *n. pl.* துண்டுத்துணுக்குகள் ; உயர்வுதாழ்வு ; வேற்றுமை ; மனவேறுபாடு, சச்சரவு ; சாதகநிலை ; போட்டியில் பிற்பட்டவர்க்குரிய சலுகை; விட்டுக்கொடுக்கும் வீதாச்சாரச் சலுகை ; நகைக்கூறு ; வருநிலை வாய்ப்பு, நிகழ இருப்பது ; (தொ.) odds and ends, எச்சமிச்சங்கள்.

ode, *n.* பண்டைய கிரேக்க துள்ளற் கலிப்பாடல் வகை ; 50 முதல் 200 அடி வரையுள்ள நீடுயர் எழுச்சிப்பாடல் வகை ; (தொ.) choral ode, கிரேக்க நாடக இசைக்குழுப் பாடல்.

ode'um, *n.* பண்டைக் கிரேக்க ரோமர்களிடையே இசை நிகழ்ச்சிகளுக்கான கட்டிடம்.

od'ic, *a.* காந்தக் கவர்ச்சி-படிகஆக்கம்-வேதிமாற்றம்-வசிய வித்தை ஆகியவைகள் நிகழ்வதற்குக் காரணமாக இயற்கை முழுதும் பரந்து பரவி நிற்பதாகக் கருதப்படும் ஆற்றல் சார்ந்த.

od'ious, *a.* வெறுக்கத்தக்க, அருவருப்பான.

od'ium, *n.* பரந்துபட்ட வெறுப்பு, பழி, இகழ்ச்சி.

*odium theolo'gicum*, (ல.) *n.* சமய தத்துவ அறிஞரிடையே யுள்ள வழக்கமான போட்டிப் பகைமையுணர்ச்சி, ஒரு தொழிலர் வெறுப்புணர்ச்சி.

odontal'gy, *n.* பல் வலி.

Odontogloss'um, *n.* பெரிய அழகிய பூக்களையுடைய வண்ணமலர்ச் செடிவகை.

odontol'ogy, *n.* பல் ஆய்வுநூல்.

odontorhync'ous, *a.* அலகில் பற்கள் போன்ற அமைப்புடைய.

odorif'erous, *a.* நறுமணம் பரப்புகிற.

od'orous, *a.* (செய்.) = odoriferous.

od'our, *n.* நறுமணம் ; நாற்றம் ; வாடை; அறிகுறி, சாயல், தடம் ; (தொ.) bad odour, ill odour, அவப்பெயர், இழுக்கு ; good odour, நற்பெயர், நன்மதிப்பு.

od'ours, *n. pl.* நறுமணப் பொருள்கள்.

od'yl, *n.* = od.

Od'yssey, *n.* கிரேக்க பெருங் காவியங்களிரண்டில் ஒன்று, ஒடிசஸ் (Odysseus) என்ற பெருவீரனின் சுற்றுலாப் பயண வரலாறடங்கிய வீரப்பெருங்காவியம் ; சுற்றுலாத் தொகுதி ; துணிகர நிகழ்ச்சிகள் நிறைந்த நீள் பயணம்.

oe'cist, *n.* குடியேற்ற முதல்வர்; பண்டைய கிரேக்கரிடையே குடியேற்ற நாடு தோற்றுவித்தவர்.

oecol'ogy, *n.* = ecology.

oecumen'ical, *a.* கிறித்தவ உலகப் பரப்பு முழுதுஞ் சார்ந்த; முழு மொத்தமான, எல்லாவற்றையும் உட்கொண்ட ; உலகப் பொது திருச்சபையைச் சார்ந்த ; உலகளாவிய.

oedem'a, *n.* இழைம அழற்சி ; இழைமங்களில் நீர்க்கோவை.

Oed'ipus, *n.* புதிர்களை விடுவிப்பவர், சிக்கல்களை அவிழ்ப்பவர்; (தொ.) Oedipus complex, உளஆய்வியலின்படி எதிர் பாலராகிய பெற்றோர் வகையில் பிள்ளைகளுக்கு உட்செறிவாக இருப்பதாகக் கருதப்படும் அடங்கிய உள்ளுணர்ச்சிக்கூறு.

o'er, *adv.*, *prep.* (செய்.) = over.

oesoph'agus, *n.* உணவுக்குழாய், தொண்டை கடந்து இரைப்பைக்குச் செல்லுங் குழாய்.

oes'trum, oes'trus, *n.* மாட்டு உண்ணி ; தூண்டுதல் ; திடீர்உணர்ச்சி ; உணர்ச்சிப்பொறி, வெறியார்வம்.

of, *prep.* உடைய, ஆறும் வேற்றுமை உடைமைப் பொருள் உருபு ; உரியதாக ; உள்ள, கொண்ட ; இருந்து ; கொண்டு ஆக்கப்பட்ட ; பற்றி, குறித்து ; இடையே ; சார்ந்து ; காரணமாக ; கால்வழிமரபில் ; போது ; வகையில்.

off, *n.* மரப்பந்தாட்டத்தில் எதிர்ப்புறம் ; *a.* அப்பாலுள்ள; தொலைவிலுள்ள ; வண்டி-குதிரை வகையில் வலப்பக்கத்திலுள்ள; *v.* (பே-வ.) கைவிடுவதாகத் தெரிவி; நீக்கிவிடுவதாக அறிவி ; ஒப்பந்தத்திலிருந்து விலகு ; சமரசப்பேச்சிலிருந்து பின்வாங்கு ; *adv.* தொலைவில், அப்பால்; *prep.* விலகி, ஒதுங்கி, தள்ளி; விட்டு, இருந்து ; (தொ.) be off, விரைந்து போ, புறப்படு, போ ; come off, திரும்பிவா, வந்துவிடு ; தப்பிவிடு ; fall off, go off, சீர்குலை, நிலைமை மோசமாகு ; fall off, கப்பல் வகையில் காற்றின் ஒண்மை நெருக்கம் குறைவுபடு ; ill off, வறிய நிலையில், நல்கூர்ந்த தன்மையில்; make off, விரை; புறப்படு ; off and on, விட்டுவிட்டு, இடையிட்டு, அவ்வப்பொழுது ; நிச்சயமின்றி ; off colour, நன்னிலையிலில்லாமல், நோயுற்று ; off one's feed, பசியின்றி, பசியார்வமின்றி ; உணவு செல்லாமல் ; off one's hands, கைப்பொறுப்பின்றி ; off one's head, கிறுக்குப்பிடித்த, பைத்தியங் கொண்ட ; off shore, கடற்கரையிலிருந்து சிறு தொலைவில் ; off side, காற்பந்தாட்ட வகையில் எதிரிகளின் இலக்கிற்கும் பந்திற்கும் இடைப்பட்ட பக்கம் ; off the point, தொடர்பின்றி, தலைப்புக்குப் பொருந்தாமல், வழிவிலகி ; show off, பகட்டாகக் காட்டு, புறப்பகட்டாகத் தோற்றுவி ; take off, நீக்கு, அகற்று ; விழுங்கு ; போல நடி ; தரையைவிட்டு மேலெழு ; well off, நன்னிலையில், பொருள் வளத்தோடு.

off'al, *n.* கழிவுப்பொருள் ; குப்பைகூளம் ; துண்டுதுணுக்கு; இறைச்சிக்குதவாத விலங்குடல் கழிவு ; ஊழ்த்த இறைச்சி ; மட்ட வகை மீன், விலைகுறைவான மீன்; உமி, தவிடு; சக்கை, வண்டல், மண்டி ; (தொ.) offal milk, கீழ்த்தரமான பால்.

off'-drive[1], *n.* மரப்பந்தாட்டத்தில் மறுபுறஞ் செல்லும் பந்தடி.

off-drive'[2], *v.* மரப்பந்தாட்டத்தில் மறுபுறம் செல்லும்படி பந்தினை அடி.

offence', *n.* உணர்ச்சி புண்படுத்தல்; புண்படுநிலை, உணர்ச்சி ஊறுபாடு ; மீச்செலவு, வலிந்துதாக்குதல் ; குற்றம், குற்றச் செயல் ; பொல்லாங்கு ; சட்ட வகையில் மீறுகை.

offend', *v.* உணர்ச்சி புண்படுத்து, வருத்தமுண்டாக்கு ; சினமூட்டு ; வெறுப்பூட்டு ; தீங்குசெய் ; அவமதி ; ஒழுங்கு மீறு, வரம்பு கட ; சட்டம் மீறு ; தவருக நட.

offense', *n.* = offence.

offen'sive, *n.* மீச்செலவு, வலிய முதலிற் சென்று தாக்குதல் ; வலிந்து கைப்பற்றுஞ் செயல், ஆக்கிரமிப்பு ; *a.* வலிந்து மேற்சென்று தாக்குகிற ; போருக்கு வலிந்து எழுகின்ற, தாக்குதலிற் பயன்படுத்துகிற ; தாக்குதலிற் பயன்படுத்துதற்கான ; துன்பம் அல்லது வருத்தம் தருவதற்கான ; அவமதிப்பான, புறக்கணிப்பான ; வெறுப்பூட்டுகின்ற ; தீநாற்றமுடைய, அருவருப்பான, குமட்டுகிற ; எதிரிடையான.

off'er, *n.* கொடைமுனைவு, மனமாரக் கொடுக்க முன்வருகை ; வரம், தன் விருப்பக்கொடை, உரிமைக்கொடை ; தருமொழி, கொடுக்க ஒருங்கியுள்ளமை தெரிவிப்பு ; உரிமை வழங்கீடு, சலுகை அளிப்பு ; உரிமைச்சலுகை ; உதவ முன்வருகை, உதவுகுறிப்பறிவிப்பு ; செயல் ஏற்பறிவிப்பு, செயல் ஏற்க முன்வரல், இசைவுக்குறிப்பு, விருப்பறிவிப்பு; விலைக்குறிப்பீடு; விலை இசைவுக்குறிப்பு ; ஏலக் கோரிக்கை ; மணத்தில் கொடுக்க முன்வருகை ; *v.* படையல் செய், பலியாக அளி ; மதிப்புடன் வழங்கு; கொடுக்க முன் வா; வழங்கும் குறிப்புத் தெரிவி ; கொடுக்கும் குறிப்பில் கை நீட்டு ; மணக்கோரிக்கை செய் ; திருமணத்தில் கொடுக்க இசைவு தெரிவி ; செயல் ஒழுக்கக் குறிப்புத் தெரிவி ; விற்பனைக்கு வை ; ஏலத்தில் விலை கூறு ; விலை குறிப்பிடு ; விருப்பக்குறிப்பறிவி ; உதவ முன் வா ; செயலேற்று முன் வா ; போர் தொடுத்தெதிர்க்க முனை ; முன் வை; பொது வாய்ப்பளி.

off'ering, *n.* காணிக்கை, படையல் ; நேர்த்திக்கடன்.

off'ertory, *n.* படையல் வழிபாடு, படையல் வழங்கப்படும் வழிபாட்டுக்கூறு ; படையற் பொருள் ; காணிக்கை ; வழிபாட்டு நேரக் காணிக்கைப் பணத்திரட்டு.

off'hand[1], *a.* முயற்சி முனைப்பற்ற ; முன்னேற்பாடின்றிச் செய்யப்படுகிற ; முன்கருதலுடன் முனைந்து செய்யாத ; இயலெளிமைவாய்ந்த ; கோடு வகையில் வாரொழுங்கான ; கற்றுருவாக்கப்படாத ; உடனெழுச்சியான ; பண்பு நய அமைதியற்ற, வெடுக்கென்ற ; சடங்காசாரமற்ற, வரிசை வக்கணையின்றிச் சுருக்கான.

offhand'[2], *adv.* உடனடியாக ; தயக்கமின்றி; முன் முயற்சியின்றி ; கற்றுருவாக்காமல்.

off'ice[1], *n.* பணி; அலுவல்; பணித்துறை; தொழில்துறை; வேலை ; கடமை ; கடமைத்துறை ; பொதுப்பணிமுறை ; ஆட்சிப் பொறுப்பு; அமைச்சரவைப் பொறுப்பு; வினைமுறை; கடன்முறை; செயல்முறை, இணைசெயல்; வழிபாட்டு முறை, வழிபாட்டு வினைமுறை; இறுதி வினைமுறை ; பணிமனை, அலுவலகம் ; தொழில்மனை ; பணித்துறைப்பிரிவு ; கடமை ஈடுபாடு.

Off'ice[2], *n.* அலுவலகம், ஆட்சிப்பொறுப்பிடம் ; ஆட்சிப் பொறுப்புக்குழு, ஆட்சிக்குழுமம் ; (தொ.) Foreign Office, வெளிநாட்டமைச்சர் அலுவலகம்; Holy Office, இடைக்காலக் கிறித்தவ சமயத்துறை உயர்தண்ட நீதிமன்றம் ; Post Office, அஞ்சலகம் ; அஞ்சல் ஊழியத்துறை ; War Office, போர் முறைச் செயலகம்.

off'icer, *n.* அலுவலர், பணியாளர், பணித்துறைவர் ; உயர் பணியாளர்; பொதுப்பணியாளர்; படைத்துறை ஆணையர்; கடற்படைத்துறை ஆணையாளர் ; விமானப்படைத்துறை ஆணையர் ; பணித்துறைக் குழுவின் ஆணையர்; திட்டக்குழு ஆணையாளர்; சங்க ஆட்சிக்குழுவினர்; காவல்துறையினர்; மேலாளர், பணித்துறைப் பொறுப்பாளர் ; பணித்துறை நான்காம் தள நன்மதிப்புப்படி; *v.* பணியாளர்களை அமைத்துக்கொடு ; பணியாளர்கள்மீது மேலாட்சி நடத்து, மேலாளராகச் செயலாற்று.

off'ices, *n. pl.* மனை வினையிடங்கள்.

offi'cial, *n.* பணிமுதல்வர்; பணித்துறைவர்; பொதுப்பணித் துணைவர், துணைமைப் பொதுப்பணியாளர் ; சமயத்துறை முறை மன்றங்களில் துறைமுதல்வரின் பேராளர் ; *a.* பணிமனை சார்ந்த ; பணித்துறைக்குரிய ; பணித்துறைக் கடமைகள் சார்ந்த ; பொதுப்பணியமர்வுபெற்ற ; பொதுப்பணி ஈடுபாடுடைய ; பணித்துறை ஏற்புடைய ; பணித்துறை இசைவுபெற்ற ; முறைமை ஏற்புடைய ; முறைமைப்பட்ட ; முறையார்ந்த ; மருத்துவப் பட்டியலேட்டின்படியான.

offi'cialdom, *n.* பணித்துறைவர் குழு, பணியாளர் தொகுதி; பணித்துறை உலகு ; பணித்துறைநிலை; மட்டுமீறிய பணித்துறைச் சார்பு ; பணித்துறைப்பான்மை, பணிமனை மனப்பான்மை.

officialese', *n.* பணித்துறைக் குழுவழக்குமொழி.

offi'cialism, *n.* பணித்துறைநிலை ; பணித்துறைப்பான்மை; பணித்துறைக்கண்டிப்பு; மட்டிலா அலுவலகப்பற்று; பணித்துறைத் தற்செருக்கு.

offi'ciant, *n.* வழிபாட்டு வினைமுறையாளர்.

offi'ciate, *v.* வினையாற்று, சமய வினைமுறைக்கடனாற்று ; வழிபாட்டு முறையாற்று ; பணித்துறைக் கடனாற்று ; பொதுக்கடமையாற்று, கடன்முறைசெய்.

offi'cinal, *a.* மருத்துவத் துறைக்குரிய ; மருத்துவர் வழக்காற்றின்பாற்பட்ட ; மருத்துவப் பட்டியற்படியான.

offi'cious, *a.* முந்து உபசாரமுடைய, வலிந்து தலையிடுகிற ; தேவைக்கு மேற்பட்ட ; கடமையின் பொதுவரம்பு மீறிய ; முறைமை வரம்புக்குப் புறமான, முறைப்படாத ; பணித்துறைக் கட்டுப்பாடற்ற.

off'ing, *n.* கரையினின்று சிறிது தொலைவான இடம்; சிறிதே தொலைவான தூரம் ; (தொ.) in the offiing, கண்ணுக்குத் தோன்றும் நிலையில் ; அருகில்.

off'ish, *a.* (பே-வ.) நெருங்கிப்பழக விரும்பாத, தனித்து ஒதுங்கி நடக்கிற.

off'-licence, *n.* வீடுகளிலிருந்து வெகு தொலைவில் பயன்படுத்துவதற்குச் சாராயம் விற்பதற்கான உரிமை.

off'load, *v.* பளு அகற்று; சரக்கினை இறக்கு.

off'-print, *n.* கட்டுரைத் துணுக்குப் படி.

off'-saddle, *v.* சேணங் கழற்று.

off'scourings, *n. pl.* கழிவுப்பொருள்கள்; அழுக்கு அடைவுகள்.

off'set, *n.* செடியினத்தின் அடிக்கன்று, முளைபாற்றலுடைய அடிக்கிளை ; வேரடி ; கிளைக்குருத்து ; உயிர் மரபுக் கொழுந்து ; பக்கக்கிளை ; பக்கச்சிறுமலை ; கிளைக் குன்று ; குறை நிரப்பீடு; எதிரீடு, ஒப்புறழ்வால் பண்பெடுத்துக்காட்டும் நிலை ; குழாயின் திடீர்த்திருப்பம் ; (க-க.) திண்ணக்குறைவு ; (க-க.) சுவரில் திட்பக்குறைவு உண்டுபண்ணும் பக்க உட்சாய்வு; அச்சுத்துறையில் எதிர்ப் பக்கக் கறைப்படிவு ; அழுத்தப்பட்ட தொய்வக உருளைமீது மை தடவி எதிர்ப் படிவாக எடுக்கப்படும் கல்லச்சுமுறை ; நில ஆய்வளவையில் ஊடு நேர்வரைக்குச் செவ்வான நேர் குறுக்குத்தொலைவு ; *v.* சரியீடுசெய், குறைநிரப்பு ; (தொ.) offset printing, offset process, அழுத்தப்பட்ட தொய்வக உருளைமீது மை தடவி எதிர்ப்படியாக எடுக்கப்படும் கல்லச்சு முறை.

off'shoot, *n.* பக்கக்கிளை, பக்கக்கன்று; கிளைவிளைவு, துணை விளைவு.

off'shore[1], *a.* கரையிலிருந்து சற்று விலகிய, கரையிலிருந்து செல்கிற ; (தொ.) offshore wind, கடல் நோக்கி வீசுங் காற்று.

offshore'[2], *adv.* கரையிலிருந்து விலகி ; கரையிலிருந்து.

off'spring, *n.* கால்வழி, வழிமரபு ; மரபெச்சம், மரபுக் கொழுந்து ; விளைபயன், விளைவு.

Of'lag, (செர்.) *n.* அலுவலர்க்கான செர்மன் சிறைக்கூடாரம்.

oft, *adv.* (செய்.) =often.

o'ften, *adv.* அடிக்கடி, பலதடவை, அடுத்தடுத்து, மீண்டும் மீண்டும்.

o'ftentimes, *adv.* அடிக்கடி.

og'am, *n.*=ogham.

og'doad, *n.* எட்டன் தொகுதி; எட்டெனும் எண்.

ogee', *n.* (க-க.) கீழிருந்து குழிவு குவிவான இரட்டைவளைவுப் பக்க ஒப்பனைப்பகுதி ; காணிவடிவ வரை, பாம்பு வடிவ இரட்டை வளைவு ; *a.* கீழிருந்து குழிவு குவிவாகச் செல்கிற ; பாம்புவடிவ இரட்டை வளைவான.

ogee'd', *a.* குழிவு குவிவான இரட்டை வளைவமைந்த.

ogh'am, *n.* பண்டைப் பிரிட்டனிலும் அயர்லாந்திலும் வழங்கிய இருபது உருக்கள் கொண்ட எழுத்துமுறை ; பண்டைப் பிரிட்டன்-அயர்லாந்து வழக்கிலுள்ள எழுத்துரு.

og'ive, ogive', *n.* (க-க.) வளைவுக்கூடத்தின் சாய்குறுக்குக் கை ; காதிக் (Gothic) மரபுக்குரிய கூர்முனை வளைவு.

o'gle, *n.* ஒசிந்த நோக்கு, சிறக்கணிப்புப் பார்வை ; காதற் பார்வை ; *v.* சிறக்கணி ; ஒசிந்து பார்.

Og'pu, *n.* சோவியத் ருசியாவில் புரட்சி எதிர்ப்பியக்கங்களைத் தடுத்தாள்வதற்குரிய முற்கால அமைப்பு.

o'gre, *n.* மனிதனைத் தின்னும் அரக்கன், மன்னுணி.

og'ress, *n.* மனிதனைத் தின்னும் அரக்கி.

Ogy'gian, *a.* வரலாற்றுக்கு முற்பட்ட.

oh, *int.* விளிக்குறிப்பு; வியப்புக்குறிப்பு; உணர்ச்சிக்குறிப்பு.

ohm, *n.* மின்தடை அலகு.

oho', *int.* வியப்புக்குறிப்பு ; உவகைக்குறிப்பு.

oil, *n.* நெய்ப்புப்பொருள் ; எண்ணெய், எண்ணெய்ச்சாயம் ; *v.* எண்ணெய்பூசு ; மசகிடு ; எண்ணெயிட்டு இளக்கு ; இயைபெளிமையுடன் இயங்குவி ; எண்ணெய்போலாக்கு ; எண்ணெய் போலாகு ; எண்ணெயூட்டு ; எண்ணெய் உள்ளூறித் தோயச்செய் ; (தொ.) burn the midnight oil, இரவில் நெடுநேரம் விழித்திருந்து படி; இரவில் நெடுநேரம் விழித்திருந்து வேலை செய் ; oil and vinegar, ஒருங்கிணையா முரண்பாடுடைய பொருள்கள் ; oil one, oil one's hand, கைக்கூலி கொடு, கைக்கூலி கொடுத்து இணக்குவி ; oil one's tongue, முகப்புகழ்ச்சி செய், புகழ்ந்து பசப்பு, நயவுரையாற்று ; oil the wheels, சக்கரங்களுக்கு மசகிடு, மசகிட்டு மென்னயத்துடன் இயங்கச்செய் ; இயைபெளிமையுடன் இயங்குவி; நயமாகச் செயலாற்றுவி; பசப்பிக் காரிய

மாற்று ; கைக்கூலிகொடுத்து எளிதாகக் காரியம் நடக்கும் படி செய் ; pour oil on the flame, உணர்ச்சிகளைக் கிளறி எழுப்பு ; pour oil on the waters, இசைவூட்டி அமைதிப் படுத்து ; smell of oil, நெடிதிருந்து படித்த அடையாளம்; கடும் உழைப்புக்குறி ; strike oil, அடிநிலத்தில் எண்ணெய் ஊற்றுக் கிடைக்கப்பெறு ; வெற்றி எய்து.

oil'-bird, *n.* எண்ணெய் எடுப்பதற்குப் பயன்படும் பறவை வகை.

oil'-bush, *n.* நெய்ம உலோக உள்ளீடு.

oil'-cake, *n.* பிண்ணாக்கு.

oil'-can, *n.* எண்ணெய்க்கலம்.

oil'-cloth, *n.* மெழுகுத்துணி.

oil'-coat, *n.* மெழுகுத்துணிச் சட்டை.

oil'-colours, *n. pl.* வண்ண மை, வண்ணப்பொருள் கலந்த எண்ணெய்.

oil'-engine, *n.* எண்ணெயால் இயங்கும் பொறி.

oil'er, *n.* எண்ணெய் பூசுபவர், எண்ணெய் பூசுவது ; மச கிடுபவர் ; மசகிடுவது ; எண்ணெய் ஊற்றும் கிண்ணி.

oil'-field, *n.* எண்ணெய்படும் இடம்.

oil'-gauge, *n.* எண்ணெய் அளவுமானி.

oil'-gilding, *n.* மஞ்சள் வண்ணங் கலந்த ஆளி எண்ணெய் மீது பூசப்பெறும் மெல்லிய பொன் தகட்டுத்தாள்.

oil'-gland, *n.* நெய்மப்பொருள் சுரப்பிக்கும் கழலை.

oil'-gold, *n.*=oil-gilding.

oil'-hole, *n.* மசகெண்ணெய் ஊற்றுவதற்குரிய இயந்திரத் துளை.

oil'man, *n.* எண்ணெய் வகைகள் செய்பவர் ; எண்ணெய் வகைகள் விற்பவர்.

oil'-meal, *n.* ஆளிவிதைப் பிண்ணாக்கு.

oil'-painting, *n.* எண்ணெய்ச்சாய ஓவியக்கலை ; எண் ணெய்ச்சாயப்படம்.

oil'-palm, *n.* எண்ணெய்தரும் விதைகளையுடைய பனையின மரம்.

oil'paper, *n.* எண்ணெய்த்தாள், எண்ணெயிட்டுக் கண்ணாடி போல் ஒளியூடுருவும்படி செய்யப்பட்ட தாள்.

oil'-plant, *n.* எண்ணெய்ச் செடி.

oil'-press, *n.* செக்கு, செக்காலை.

oils, *n. pl.* மெழுகுத்துணி ; எண்ணெய் வகைகள் ; (தொ.) drying oils, உறைவண்ணச் சாயங்கள்; essential oils, volatile oils, ஆவிவடிப்புக்கும் மணத்துக்கும் உரிய நெய்மப் பொருள்கள் ; fatty oils, fixed oils, வண்ணச்சாயமாகவும் மசகாகவும் பயன்படுத்தப்படும் ஆவிவடிப்பேற்காத நெய்மப் பொருள்கள் ; mineral oils, மசகாகவும் ஒளிதரும் எரிபொரு ளாகவும் பயன்படும் நெய்மங்கள் ; non-drying oils, மசகாக வும் ஒளிதரும் எரிபொருளாகவும் பயன்படும் உறையா நெய்மப் பொருள்கள்.

oil'-seed, *n.* எண்ணெய்விதை.

oil'skin, *n.* நீர்த்தடைக்காப்புச் செய்யப்பட்ட மெழுகுத்துணி; மெழுகுத்துணி ஆடை.

oil'skins, *n. pl.* எண்ணெய்த் துணியாலான முழு உடைத் தொகுதி.

oil'-spring, *n.* எண்ணெய் ஊற்று.

oil'-stone, *n.* எண்ணெய் ஊட்டப்பட்ட தீட்டுக்கல், சாணைக் கல்.

oil'-tanker, *n.* எண்ணெய்க்கப்பல்.

oil'y, *a.* எண்ணெய் சார்ந்த; எண்ணெய் போன்ற; புகழ்ந்து பசப்புகிற; குழைந்து நடிக்கிற; நயமாக இணைத்துக்கொள்கிற.

oint'ment, *n.* மருந்துநெய்.

Oir'eachtas, *n.* அயர்லாந்து சட்ட மாமன்றம், இரு அயர் லாந்து பேரவைகளுடன் தலைவரும் கூடிய தொகுதி.

oka'pi, *n.* ஒட்டைச்சிவிங்கி போன்ற வண்ண அமைப்புக்களை யுடைய நடுஆப்பிரிக்க மாட்டினவிலங்குவகை, வரிமான் வகை.

ok'ra, *n.* வெண்டை வகை.

old, *a.* பழைய; பழங்காலத்திய; பழமைப்பட்டுவிட்ட; பழம் பாணியான ; பழமைப்பட்ட; காலங்கடந்துவிட்ட; வழக் காறற்றுப்போன ; வழங்கிக்கழித்த ; பழகிய ; பழகிப்போன ; நீடித்த ; நீடித்து வழங்கிய ; முற்பட்ட ; முந்திய; முன் னோர்களுக்குரிய ; அனுபவமிக்க ; தேர்ச்சிமிக்க ; முதிய ; வயதுசென்ற ; வயதுடைய ; மூப்பால் தளர்வுற்ற ; கிழடு தட்டிய; அறிவு முதிர்ச்சியுடைய; (தொ.) old age, முதுமை; old bachelor, மணங்கொள்ளா வாழ்க்கையில் உறுதிபெற்ற வர் ; old bird, ஏமாற்றங்களில் சிக்காது கடுவிழிப்பாயிருப் பவர் ; old boy, வயதுசென்றவர் ; வயதுசென்ற தோற்ற முடையவர்; இளந்தோற்றமுடைய முதியவர்; பேச்சு வழக்கில் தந்தை; கணவன் ; பழைய மாணவர் ; old gentleman, Old Harry, Old Nick, Old Scratch, நரகத் தலைவன், பேயரசு ; Old Glory, உடுக்களும் கம்பிகளும் கலந்த அடையாள முடைய அமெரிக்க கொடி ; old gold, மங்கிய பொன்னிறம் ; old hand, தேர்ச்சிபெற்ற வேலையாள் ; கைதேர்ந்தவர், பழகித் தேர்ச்சிபெற்றவர்; old man, திருந்தா மனித இயல்பு; குரங்கு வகை ஆண் ; வாணிகக் கப்பல் மீகான் ; மணமுள்ள செடி வகை ; அன்பு விளிக்குறிப்பு ; ஊக்கு விளிக்குறிப்பு ; பேச்சு வழக்கில் தந்தை; கணவன் ; பணிமுதல்வன் ; Old Stager, அனுபவமிக்கவர் ; Old Tom, old wine, மதுவகை ; முதிர் சுவைத்தேறல் ; Old World, நில உலகக்கோளத்தின் கீழ்ப் பாதி.

ol'den, *a.* (செய்.) முற்காலத்திய, பழங்காலத்திய, பண்டை நாளைய; *v.* மூப்பால் தளர்வுறு; முதுமையால் தளர்வுறுத்து.

old'ster, *n.* இளமைநிலை கடந்தவர்.

olea'ginous, *a.* எண்ணெய் உண்டுபண்ணுகிற; எண்ணெய் சார்ந்த; நெய்மப்பசையுடைய; கொழுப்பார்ந்த; கொழுப்புப் பண்புடைய ; எண்ணெயின் இயல்புடைய.

olean'der, *n.* அலரி.

oleas'ter, *n.* காட்டு நெய்ம மரவகை.

ol'eograph, *n.* எண்ணெய் வண்ண அச்சுப்படம்.

ol'eography, *n.* எண்ணெய் வண்ணப்பட அச்சுமுறை.

oleo-marg'arine, *n.* செயற்கை வெண்ணெயின் கூறுயுதவும் மாட்டிறைச்சியின் கொழுப்புச்சத்து.

oleom'eter, *n.* எண்ணெய்மானி.

oleo-res'in, *n.* பிசினரக்கு நெய்மப்பொருள் கலவை.

olfac'tion, *n.* முகர்வுணர்வு, மோப்பம்.

olfac'tories, *n. pl.* முகர்வுணர்வுக்குரிய உறுப்புக்கூறுகள்.

olfac'tory, *a.* மோப்பம் பற்றிய.

olib'anum, *n.* நறுமணப் புகைதரும் பிசின் வகை.

ol'id, *a.* கெடுநாற்றமுள்ள, கடுவாடையுடைய.

ol'igarch, *n.* சிலவராட்சி உறுப்பினர்.

oligarch'ic, oligarch'ical, *a.* சிலவராட்சிக்குரிய.

ol'igarchy, *n.* சிலவராட்சி ; சிலவராட்சியர்.

oligocarp'ous, *a.* சில்கனியுடைய.

ol'igocene, *a.* (மண்.) புத்துயிர்ப் பேரூழியின் முதல் இடைப் பருவங்களுக்கு நடுவான இடைப்பருவ ஊழிக்குரிய.

ol'io, *n.* கதம்பக்கூட்டுணவு, கூட்டுச்சோறு ; *pl.* ol'ios.

oliva'ceous, *a.* 'ஆலிவ்' மரக்காயின் நிறமுடைய, புகை யார்ந்த பசு மஞ்சள் வண்ணமான.

ol'ive, *n.* ஆலிவ் மரம், தேவதாரு வகை எண்ணெய்தரும் கொட்டையுடைய பசுந்தழை மரவகை; ஆலிவ் மரக்கிளை; ஆலிவ் தழைக்கொத்து ; அமைதிச் சின்னம் ; சமாதானச் சின்னம் ; கிளிஞ்சில் வகை ; குமிழ் வடிவச் சட்டைமாட்டி ; புகையார்ந்த பசுமஞ்சள் நிறம் ; *a.* புகையார்ந்த பசுமஞ்சள் நிறமுடைய ; மேனி வகையில் பொன் பழுப்பு நிறமுடைய ; (தொ.) olive crown, வெற்றிச்சின்னமான தழைச்சூட்டு ; olive oil, ஆலிவ் எண்ணெய், தேவதாரு வகை எண்ணெய்,

**ol'ive-branch**, *n.* சமாதானச் சின்னம்; குழந்தை; (தொ.) hold out the olive branch, அமைதி நாடு.

**ol'iver[1]**, *n.* ஆணி வடிப்பதற்குரிய மிதி சம்மட்டி வகை.

**Ol'iver[2]**, *n.* பிரஞ்சுப் பழங்கதையில் வீரன் ரோலந்தின் (Roland) இணையொத்த தோழன்; வீரத்துணைவன்; (தொ.) a Roland for an Oliver, சரிக்குச்சரி.

**ol'ives**, *n. pl.* காய்கறிகளுடன் கலந்தவித்த மாட்டிறைச்சி அல்லது கன்றிறைச்சிக் கண்டங்கள்.

**ol'ivin, ol'ivine**, *n.* பசுமஞ்சள் வண்ணமான மணிக்கல்.

**oll'a podri'da**, *n.* கதம்பக் கூட்டுணவு.

**olym'piad**, *n.* பண்டைக் கிரேக்க உலகின் கூட்டாட்டப் பந்தய விழாக்களுக்கிடைப்பட்ட நான்காண்டுக்காலம்; முதற் கூட்டாட்டப் போட்டி (கி. மு. 776) தொடங்கிக் கிரேக்கர் மேற்கொண்ட ஆண்டுக்கணிப்பு ஊழி.

**Olym'pian**, *n.* ஒலிம்பஸ் (Olympus) மலைமீது வாழ்வதாகக் கொள்ளப்பட்ட கிரேக்க பெருங் கடவுளரில் ஒருவர்; பெருந் தேவன், தேவர்; வீறுர்ந்தவர்; அருள்நலங் கொண்ட மேதகை; *a.* ஒலிம்பஸ் மலைக்குரிய; ஒலிம்பஸ் மலையில் வாழ்கிற; தெய்விகத்தன்மை வாய்ந்த; வீறுர்ந்த; மேதக்க; அருள் நலமார்ந்த.

**Olym'pic**, *a.* பண்டைக் கிரேக்க உலகில் ஒலிம்பியா (Olympia) என்னும் பகுதியில் நடைபெற்ற; அனைத்து நாடுகளின் போட்டிக்குரிய; (தொ.) Olympic games, பண்டைக் கிரேக்க உலகில் கி. மு. 776 முதல் நான்காண்டுக்கொருமுறை நடைபெற்ற விளையாட்டு-இசை-இலக்கியப் போட்டி நிகழ்ச்சி; தற்கால உலகில் 1896 முதல் நான்காண்டுக்கொருமுறை நடைபெற்றுவரும் உலகப் போட்டி நிகழ்ச்சி.

**Olym'pics**, *n. pl.* கி. மு. 776 முதல் நான்காண்டுக்கொரு முறை நடைபெற்ற பண்டைக் கிரேக்க உலகப்போட்டி; 1896 முதல் நான்காண்டுக்கொருமுறை நிகழும் தற்கால உலகப்போட்டி நிகழ்ச்சி.

**Olym'pus**, *n.* கிரேக்க பெருந்தெய்வங்கள் வாழ்வதாகக் கருதப்பட்ட மலை.

**om'bre**, *n.* பதினேழு-பதினெட்டாம் நூற்றாண்டுகளில் பெரு வழக்காயிருந்த சீட்டாட்ட வகை.

**om'ega**, *n.* கிரேக்க நெடுங்கணக்கின் கடைசி எழுத்து; தொடரின் முடிவு; வளர்ச்சி முடிவு; முன்னேற்ற முகடு.

**om'elet, om'elette**, *n.* முட்டை ஊற்றப்பம்; கொத்திய இறைச்சி-பாலேடு-பழப்பாகு-மணப்பூண்டு முதலியவற்றின் சுவை யூட்டப்பெற்ற முட்டைப் பொரியல் மடிப்புப் பண்ணிய வகை; (தொ.) cannot make an omelet without breaking eggs, உழைப்புக் கடுமையின்றிப் பலனுகர முடியாது.

**om'en**, *n.* முன்னம், நிமித்தம்; *v.* வருவதுரை, முன்னறிகுறி காட்டு.

**omen'tum**, *n.* குடல் போன்ற பிற வயிற்று உறுப்புக்களோடு இரைப்பையை இணைக்கும் வபை மடிப்பு.

**om'inous**, *a.* முன்னறிகுறியான; தீக்குறியான; வரும் பேரிடரை முன் காட்டுகிற; அச்சுறுத்துகிற.

**omi'ssion**, *n.* விடுபாடு, விட்டு விடுகை; விடுபடல்; சேர்க்காது விடுதல்; செயற்சோர்வு, செய்தக்க செய்யாமை; செய்யப்படாதது; கடமைப் புறக்கணிப்பு, கடமைச் சோர்வு.

**omit'**, *v.* விடு, விடுபடச்செய்; செய்யத்தவறு; கடமை புறக்கணி.

**om'nibus**, *n.* பேருந்துகலம், பெரிய பொறியூர்தி; *a.* ஒரே சமயத்தில் பல செயல்கள் செய்கிற; பல வழிகளிற் பயன்படுகிற; பல உருப்படிகள் கொண்ட; பல இனங்கள் அடங்கிய; *pl.* om'nibuses; (தொ.) family omnibus, private omnibus, புகைவண்டி நிலையத்திற்கோ புகைவண்டி நிலையத்திலிருந்தோ பிரயாணிகளையும் சரக்குகளையும் கொண்டு செல்லும் பேருந்துகலம்; omnibus bar, omnibus wire, முழு மின் அலையும் ஊடுசெல்லுங் கம்பி; omnibus book, பெரும்பாலும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்ட பல கதைகள்-நாடகங்கள் உட்கொண்டு அனைவரும் வாங்கக்கூடிய குறைந்த விலைக்குக் கிடைக்கும் ஏடு; omnibus box, நாடக அரங்கில் பங்குவரியாளர்களுக்கான முன் வரிசை இருக்கை; omnibus train, எல்லா நிலையங்களிலும் நின்று செல்லும் புகைவண்டி.

**omnicom'petent**, *a.* எல்லா வழக்குகளுக்கும் பொருந்திய சட்ட வரம்பாட்சியுடைய.

**omnifar'ious**, *a.* பல்வகையான, நாலா வகைப்பட்ட.

**omnif'ic**, *a.* எல்லாவற்றையும் படைக்கிற, அனைத்தையும் உண்டாக்குகிற.

**omni'genous**, *a.* எல்லா வகைகளும் சார்ந்த.

**omnip'otence**, *n.* எல்லாம் வல்ல தன்மை, வரம்பில் ஆற்றல்; கடவுள்; மிகப்பெருஞ் செல்வாக்கு, பேராற்றல்.

**Omnip'otent[1]**, *n.* கடவுள், இறைவன்.

**omnip'otent[2]**, *a.* எல்லாம் வல்ல.

**omnipres'ence**, *n.* எங்கும் இருக்கும் தன்மை; எங்கும் நிறைந்த தன்மை.

**omni'science**, *n.* நிறைபேரறிவு, எல்லாம் அறியும் பேரறிவு; கடவுள்.

**Omni'scient[1]**, *n.* கடவுள், இறைவன்.

**omni'scient[2]**, *a.* எல்லாம் அறிகிற.

**om'nium gath'erum**, *n.* பல்பொருட் கதம்பம்; பல்வகை மக்கள் கும்பல்; எல்லாருக்கும் அழைப்பு விடுக்கப்பட்ட விருந்து.

**omniv'orous**, *a.* கண்டதைப் புசிக்கிற.

**om'oplate**, *n.* தோட்பட்டை எலும்பு.

**om'phalos**, *n.* கேடயத்தின் மேலுள்ள குமிழ்; பூமியின் மையமாகக் கருதப்பட்ட டெல்பி (Delphi) என்னுமிடத்திலுள்ள கூருருவாக்கல்; மையம், நடு; சக்கரத்தின் குடம்.

**om'phalotomy**, *n.* கொப்பூழ்க் கொடியைப் பிரித்தல்.

**on**, *n.* மரப்பந்தாட்டத்தில் முதலில் ஆடுங் கட்சி; *a.* மரப்பந்தாட்டத்தில் பந்து அடிக்கும் ஆட்டக்காரரின் இலக்கிற்கு இடப்பக்கத்திலுள்ள முன்பகுதி நோக்கிய; முன்பகுதி சார்ந்த; *adv.* மேலே; முன்னோக்கி; உயர, தூர; அப்புறம், பிறகு; *prep.* மேல், மீது, மிசை; இல்; அருகில்; நோக்கி; (தொ.) be on, சார்வாயிருக்கிற; கட்சியாளராக இருக்க விரும்புகிற; be on to, கருத்துக்களையும் எண்ணங்களையும் அறிந்து விழிப்பாயிரு; on and off, அங்குமிங்கும், இடையிடையே; on licence, கட்டிடங்களிலேயே குடிவகைகள் குடிக்கும்படி விற்பதற்கான இசைவுரிமை; on to, மேனிலைநோக்கி.

**on'ager**, *n.* காட்டுக்கழுதை வகை; *pl.* on'agers, on'agri.

**on'anism**, *n.* நிறைவுரு இணைவிழைச்சு; தன்கைத்தீமை.

**once**, *n.* ஒருமுறை; ஒரேவேளை; உடனடி வேளை; *adv.* ஒரு காலத்தில்; முன் ஒரு காலத்தில்; ஒருதடவை; ஒரு படி; (தொ.) at once, உடனடியாக, தயக்கமின்றி; ஒருங்கே, ஒரே நேரத்தில்; once and again, பன்முறை, பல தடவை; once for all, முடிவாக, உறுதியாக; once in a way, once in a while, எப்பொழுதாவது ஒருதடவை, அருமையாக; once more, மறுபடியும், இன்னொரு தடவை.

**once-o'ver**, *n.* (பே-வ.) மீடிகையான நிறை ஆய்வு.

**on'cer**, *n.* (பே-வ.) வாரத்தில் ஞாயிற்றுக்கிழமை ஒருநாள் மட்டுந் திருக்கோயிலுக்குச் செல்பவர்.

**on'-coming**, *n.* அணுகுதல்; *a.* முன்னேறுகிற, நெருங்குகிற, அணுகுகிற.

*on dit*, (பிர.) *n.* கேள்வித்துணுக்கு; அவதூறான சொல்.

**one**, *n.* ஒன்று; ஒருவன்; ஒருத்தி; *pron.* ஏதோ ஒருவர்; ஏதோ ஒரு பொருள்; *a.* ஒன்றான; இணைந்த; பிறரல்லாத; ஒற்றையான; (தொ.) all in one, எல்லாம் இணைந்து; at one, ஒத்து உடன்பட்ட, ஒரு மனப்பட்ட; in the year one, வெகுகாலத்திற்குமுன்; it is all one to me, எனக்கு எல்லாம் ஒன்றுதான்; எதுபற்றியும் கவலையில்லை; எதுவும் பயனில்லை; never a one, ஒருவருமில்லை; எவருமில்லை; number one, தான்,

தற்பற்றுக்குரிய இலக்கு ; one and all, எல்லாம் சேர்ந்து ; one by one, one after another, ஒவ்வொன்ருக; ஒவ்வொரு வராக: one with another, சராசரியாக; ten to one, பெரிதும் உறுதியாக ; the all and the one, முழு ஒருமை, கூட்டு மொத்த நிலையுடன் கூடிய முழுமைநிலை ; the Evil One, சைத்தான், நரகத்தலைவன்; the Holy One, One above, இறைவன்.

one'-eyed, *a.* ஒற்றைக்கண்ணுள்ள, ஒரு கண் குருடான.

one'-hand'ed, *a.* ஒரே கையுடைய ; ஒரே கையால் செய்யப் பட்ட.

one'-horse, *a.* ஒற்றைக்குதிரையால் இழுக்கப்படுகிற; ஒரே குதிரைகொண்டு வேலை செய்யப்பட்ட ; மிகச் சிறுதிறமான ; வாய்ப்பு வளம் மிகக் குறைந்த.

one'-ide'a'd, one'-ide'aed, *a.* ஒரே கருத்துள்ள; குறுகிய நோக்கங்கொண்ட.

oneirocrit'ic, *n.* அளவுக்குறி கூறுபவர்.

oneir'omancy, *n.* அளவுக்குறி கூறுங்கலை

one'-legged, *a.* ஒற்றைக்காலுள்ள ; சரிசம நிலையற்ற.

one'-man, *a.* ஒருவர் தேவைப்படுகிற; ஒருவர் கொண்ட ; ஒருவரால் நடத்தப்படுகிற, ஒருவரால் கண்காணிக்கப்படுகிற.

one'ness, *n.* ஒருமை; தனிமை; தனித்தன்மை; அருந்திறம்; முழு ஒருமை ; ஒற்றுமை ; உடன்பாடு ; இணக்கம் ; ஒத்த தன்மை ; வேறுபடா நிலை, மாருநிலை, ஒன்ருந்தன்மை, வேறற்ற தன்மை.

one'-pair, *n.* முதல் தளத்திலுள்ள அறை; இரண்டு முதல்தள அறைத்தொகுதி.

on'er, *n.* புகழ்பெற்றவர், குறிப்பிடத்தக்க சிறப்புடையவர் ; குறிப்பிடத்தக்க பொருள்; (பே-வ.) பந்து அடித்தல் முதலிய வற்றில் ஒன்று என்னும் எண்ணிக்கை.

on'erous, *a.* பளுவேறிய, கனமிக்க; மிகுபொறுப்பான; மிகு கவலை தருகிற.

oneself', *refl. pron.* ஒருவரே; ஒருவர் தாம்; ஒருவர் தம்மையே.

one'-sid'ed, *a.* ஒருசார்பான ; ஒருசாய்வான ; ஒருபுறத்தில் மட்டும் உள்ள ; ஒருபுறமட்டுமேயுடைய ; (தொ.) one-sided plant, தண்டின் ஒருபக்கம் மட்டும் இலைகளையுடைய ; one-sided street, ஒருபக்கத்தில் மட்டும் வீடுகளுள்ள தெரு.

one'step, *n.* அமெரிக்க துரிதநடன வகை.

one'-way, *a.* ஒருதிசைப்போக்கு மட்டுமேயுடைய; ஒருதிசைச் செலவுக்கு மட்டும் இசைவுடைய ; ஒருதிசைப்போக்குக்கு மட் டும் ஒதுக்கப்பட்ட; (தொ.) one-way street, ஒரு வழித் தெரு.

on'fall, *n.* தாக்குதல்.

on'flow, *n.* முன்னேக்கிய பாய்ச்சல், விரைவொழுக்கு.

on'goings, *n.* முறைதவறிய நடவடிக்கைகள்; விந்தையான செய்திகள்.

on'hanger, *n.* சார்பாளர், பின்பற்றுபவர்.

on'ion, *n.* வெங்காயம், உள்ளிப்பூண்டு; *v.* வெங்காயத்தைக் கண்ணில் தேய்த்து நீர் வரச்செய்; (தொ.) flaming onions, நெருப்புக்கோளத் தொடரைப் போன்ற வானூர்தி எதிர்ப்புக் குரிய எறிகுண்டு.

oni'on-couch, oni'on-grass, *n.* காட்டுக் கூலவகை.

oni'on-shell, *n.* நத்தை வகை.

on'looker, *n.* பார்வையாளர்.

on'ly, *a.* ஒரே ; ஒன்றுமட்டுமான, ஒரே ஒரு, ஒரே ஒன்ருன ; தனிமையான ; *adv.* மட்டும்; தான்; ஒரு வழியாக; *conj.* எனினும், ஆயினும் ; விதிவிலக்காக.

onomatopoe'ia, *n.* சொற்பொருள் இசைவணி; ஒலி அனு கரணம்.

on'rush, *n.* முன்னேக்கிய பாய்ச்சல்.

on'set, *n.* கடுமையான தாக்குதல்; வலுத்தாக்குதல்; தொடக்கம்.

on'slaught, *n.* கடுந்தாக்குதல், எதிர்ப்பு, மோதல்.

ontogen'esis, *n.* தனி உயிரின் தோற்றவளர்ச்சிகளின் வரலாறு.

ontol'ogy, *n.* மெய்ப்பொருள் மூல ஆராய்ச்சி.

on'us, *n.* சுமை; பொறுப்பு; கடமை.

on'ward, *a.* முன்னேக்கிய ; முன்னேக்கிச் செலுத்தப்பட்ட ; *adv.* முன்னேக்கி ; மேன்மேலும் ; முன்னேற்ற விரைவுடன்.

on'wards, *adv.* முன்னேக்கி, மேன்மேலும்; முன்னேற்ற விரைவுடன்.

on'ymous, *a.* பெயர் அறியப்படுகிற, அநாமதேயமல்லாத.

on'yx, *n.* பல்வகை நிற அடுக்குகள் கொண்ட மணிவகை ; (மரு.) பொருள் புலப்படா நிலையில் விழி முன்தோலின் கீழ்ப்பகுதியின் ஒளி ஊடுருவவிடாத் தன்மை; (தொ.) onyx marble, பற்பல வண்ண அடுக்குகள் கொண்ட மணிக் கல் போன்ற சலவைக்கல் அமைப்பு.

oo'dles, *n. pl.* (பே-வ.) பெருந்திரள், தேவைக்கு மேற்பட்ட கழிமிகை.

ooe'cium, *n.* பொலிமுகை, முதுகெலும்பற்ற விலங்குகளில் கருவை உள்வாங்கிப் பொலிவிக்கும் மொட்டுப் போன்ற பை.

oog'amous, *a.* ஆண் பெண் கரு உயிர்மச் சேர்க்கையால் இனப்பெருக்கம் உண்டுபண்ணுகிற.

oogen'esis, *n.* கரு அணுவின் தோற்ற வளர்ச்சி வரலாறு.

o'olite, *n.* சுண்ணமணிக்கல், பரற்செறிவுடைய சுண்ணக்கல்; (மண்.) சுண்ணக்கல் கொண்ட நிலப்படிவ அடுக்கு.

ool'ogy, *n.* பறவை முட்டைச் சேகரம்; பறவை முட்டை ஆய்வுநூல்.

ool'ong, *n.* பதப்படுத்தப்பட்ட கருநிறச் சீனத் தேயிலை வகை.

oom, *n.* தென் ஆப்பிரிக்க வழக்கில் மாமன்.

oont, (இ.) *n.* ஒட்டகம்.

ooze, *n.* ஆற்று வண்டல் ; நீராளமான அடிச்சேறு ; கசிவு ; மென்கசிவொழுக்கு ; பட்டை நீர், தோல் பதனிடப் பயன் படும் சீமை ஆல் மரப்பட்டை ஊறல் நீர் ; *v.* துளைகள் வழியாக ஈரங் கசிவுறு, கசிந்து வெளிப்படு ; ஈரக்கசிவை வெளிவிடு, புறங்கசி ; கசிந்து ஒழுகு ; வெளிப்படு ; வெளி விடு ; கசியவிடு ; செய்தி புறம்போகவிடு ; ஊக்கம் கரைய விடு.

ooze'-calf, *n.* சாயம் தோய்ந்து ஊறிய கன்றின் தோல்.

opa'city, *n.* ஒளியை ஊடுருவிச் செல்லவிடாத தன்மை ; ஒளியை எதிரிட்டுக் காட்டாத இயல்பு ; மழுங்கல்தளம், பொருள்புரியா நிலை ; மழுப்பம்.

op'ah, *n.* இறைமீன், நிலாமீன், வட அட்லாண்டிக் கடலில் வாழும் அருமதிப்புடைய ஒளிவண்ண மீன்வகை.

op'al, *n.* பலநிறம் நிழலாடும் மணிக்கல் வகை, நிறம் மாறும் மணிவகை.

opales'cence, *n.* வானவில் வண்ண மாறுபாட்டுடன் கூடிய பால் நுரை நிறம்.

op'aline, *n.* அரைகுறையாகத் தெளிவில்லாமல் ஒளிக்கதிர் கள் ஊடுருவிச் செல்லும் வெண்ணிறக் கண்ணுடி ; *a.* பல நிறம் நிழலாடும் மணி வகைபோன்ற ; மாறிக்கொண்டிருக் கும் நிறங்களைக் காட்டுகிற ; வானவில்போல் பல நிறங் களுடன் விளங்குகிற.

opaque', *a.* ஒளியை ஊடுருவிச் செல்லவிடாத ; ஒளியை எதிரிட்டுக் காட்டாத ; ஒளிவிடாத ; கண்ணுக்குப் புலப் படாத ; தெளிவற்ற ; மழுங்கலான, அறிவுக்கூர்மையற்ற ; (தொ.) the opaque, இருட்டு.

ope, *v.* (செய்.) =open.

op'en, *n.* திறந்த வெளியிடம்; தங்குதடையற்ற வான்வெளி; பொதுவிடம், பொதுமக்கள் பார்வைக்குரிய இடம் ; *a.* திறந்த, வாயில் மூடப்பெருத, மூடி பொருத்தப்படாத; புழை அடைக்கப்படாத ; பூவகையில் மலர்ந்த ; மடிப்பவிழ்ந்த ; இடைவெளியுடைய; துளைகளையுடைய; போக்குவழி உடைய;

வழிமறிக்கப்படாத; நுழைவு தடுக்கப்படாத; செல்ல வழி விடுகிற; வளைக்கப் பெறாத; அடைப்பற்ற; வேலியிட்டுத் தடுக்கப்படாத; தடையற்ற; பொதியப்பெறாத; மேலீடற்ற; மூடாக்கற்ற; மேற்கவிவற்ற; மறைப்பற்ற; திரை நீக்கப்பட்ட; வெளிப்படையான; கள்ளங்கபடமற்ற; மூடிமறைக்காத; தப்பெண்ணமற்ற; முன்முடிபு அற்ற; ஒரு சாய்வு அற்ற; எதையும் எளிதில் ஏற்கும் பண்புடைய; வேற்றுமைகளை வர வேற்கிற; பொதுக்காட்சிக்குரிய; எல்லாரும் அணுகத்தக்க; எல்லாருக்கும் உரிய; தாராள வாய்ப்பளிக்கிற; இடமளிக்கிற; முழு வாய்ப்பின்மீது அமைந்த; பொதுமக்கட்குரிய; பொது உரிமையான; பொது விளம்பரமான; தடைபடாக் காட்சி யுடைய; பரந்த, அகன்ற; அகல்விரிவான; இடுக்கமற்ற; குடல் வகையில் மலச்சிக்கலற்ற; தாராளமாகக் கொடுக்கிற; வரையறையற்ற; தனிக்கட்டுப்பாடற்ற; முடிவுகட்டாத; முடிவுறாத; (இசை.) சுரவகையில் தடைபடாக் குழலிசைப்புச் சார்ந்த; சுரவகையில் நரப்பிசைப்புச் சார்ந்த; இடைநிறுத்த மற்ற; தொடர்பான இசைப்புடைய; (இலக்.) அசைவகை யில் உயிரெழுத்துடன் முடிகிற; (ஒலி.) உயிர் ஒலிவகையில் அங்காந்தொலிக்கிற; *v.* திற; திறந்துகொள்; திறந்து விடு; திறந்திரு; வாயில் உடையதாயிரு; திசைநோக்கி யமை; பூவகையில் மலர்வுறு; வாயில் உண்டுபண்ணு; துளை உண்டுபண்ணு; வழிசெய்; போக்குவழியுடையதா யமை; துளையுடையதாய் அமை; செல்வழியாயுதவு; தடை நீக்கு; தடை விலகப்பெறு; தொடங்கு; அலுவல் தொடங்கு; திறந்துவை; தொடங்கிவை, வழக்கில் தொடக்க நடவடிக்கை எடு; நடவடிக்கை மேற்கொள்; இயக்கிவை; நிறுவு; பேசத்தொடங்கு; வேட்டைநாய் வகையில் குரைக் கத்தொடங்கு; தோன்று; தோற்றத்தொடங்கு; புதுத் திருப்பக்காட்சிபெறு; முழுக்காட்சிகாண்; காட்சிக்குப் புலப் படுத்து; காட்சிக்குப் புலப்படு; வெளிப்படுத்து; வெளியிடு; அறியும்படி விளக்கு; (தொ.) force an open door, கரப்பி லாரிடங் கேள்; keep open doors, keep open house, வருபவர் களை எல்லாம் ஏற்று விருந்தளி; lay open, திறந்து வெளிக் காட்டு; தோல் உரித்துக் காட்டு, பிளந்துகாட்டு; open boat, தளமற்ற படகு; open bowels, குடல் இளக்குவி; open champion, கட்டுப்பாடற்ற போட்டிகளுக்குப் பிறகு வாகை சூடியவர்; open country, பரந்த காட்சியுடைய நிலப்பரப்பு; open face, கபடற்ற தோற்றம்; open fire, குண்டு வீசத் தொடங்கு; open ground, ஏர்கொண்டு நிலத்தை உழு; open harmony, நீள இடைவெளிகள் கொண்ட சுரத்தொகுதி ஒத்திசைவு; open hearth process, ஆழமற்ற மூட்டு அனல் உலையில் எஃகு செய்யும்முறை; open ice, கப்பல் போக்கு வரத்துக்கு இடமளிக்கக்கூடிய பனிப்பரப்பு; open letter, திறந்த முடங்கல், வெளிப்படைக் கடிதம்; open one's designs, திட்டங்களை வெளியிட்டுத் தெரிவி; open one's eyes, வியப்புக் காட்டு; நல்லறிவுபுகட்டு; open order, (படை., கப்.) அகன்ற இடைவெளிகள் கொண்ட அணி; open out, பிரி; திற; விரிவடை; வளர்ச்சியடை; விரைவுபடுத்து; பேச்சில் விருப்பங் கொள்; open question, கருத்து வேற்றுமைகள் கொண்ட செய்தி; open scholarship, போட்டியடிப்படையில் அளிக் கப்பட்ட கல்வியுதவித்தொகை; open the case, வழக்கைப் பற்றிய தொடக்க அறிக்கை படி; open time, விலங்கு-மீன் வகையில் வேட்டையாடக்கூடிய காலம்; இனம் பெருக்கும் பருவங்கடந்த காலம்; open up, எளிதில் காணத்தக்க வாய்ப்பளி; கவனத்திற்குக் கொண்டுவா; வெளிப்படுத்து; open weather, open winter, மூடுபனியற்ற பருவம்; open work, உலோகவேலையில் அல்லது கசவு வேலையில் இடை வெளிகள் கொண்ட வேலைப்பாடு; receive with open arms, மனமார வரவேற்புக் கொடு, நிறைந்த உள்ளத்தோடு எதிரழை; the open door, அயல்நாடுகள் வந்து வாணிகம் செய்வதற்காக ஒரு நாடு அளிக்குங் காசில்லா நுழைவுச் சலுகை; with open eyes, மனமாரத் தெரிந்து; நல்ல நினை வுடனேயே; விருப்புடனே.

**op'en-cast**, *n.* முகட்டுத் திறப்புடைய சுரங்க அகழ்வுப் பகுதி.

**op'en-hearted**, *a.* கபடற்ற.

**op'ening**, *n.* பிளவு; இடைமுறிவு; இடையீடு; புழை; வாயில்; செல்வழி; இடைவெளி; தொடக்கம்; தொடக்கப் பகுதி; வழக்கில் தொடக்க அறிக்கை; சதுரங்க ஆட்ட வகையில் தொடங்குவதற்கான ஆட்டம்; நல்வாய்ப்பு, ஏற்ற சூழ்நிலை, தக்க தறுவாய்; *a.* முதலாவதான; தொடக்கத்தி லுள்ள.

**op'enly**, *adv.* ஒளிவுமறைவின்றி; எல்லோருக்கும் தெரியும் படியாக, பொதுவாக, வெளிப்படையாக.

**op'era**, *n.* இசைநாடகம், இசையைச் சிறப்புக்கூறாகக் கொண்ட நாடகம்; இசைநாடகக்கலை; (தொ.) comic opera, உரையாடல் உள்ளிட்ட இசைநாடகம்; grand opera, உரையாடலில்லா இசைநாடகம்.

**op'era-cloak**, *n.* மாலை விருந்துகளுக்கோ இசைநாடகங் களுக்கோ செல்லும் மகளிர் அணியும் மேலாடை.

**op'era-glass, op'era-glasses**, *n.* இசைநாடகங்களில் அல்லது நாடகக்கொட்டகைகளில் பயன்படுத்துவதற்கான சிறு தொலைக்காட்சிக் கண்ணாடி.

**op'era-hat**, *n.* ஆடவரது நீண்ட மடக்குத் தொப்பிவகை.

**op'era-hood**, *n.* மாலை விருந்துகளுக்கோ இசை நாடகங் களுக்கோ செல்லும் மகளிர் அணியும் முகத்திரை.

**op'era-house**, *n.* இசைநாடகக் கொட்டகை.

**op'erate**, *v.* இயங்கு, நடைபெறு; செயற்படு; பணியாற்று; கையாளு; இயக்கு, நடைமுறைப்படுத்து; செய்துமுடி, நிறைவேற்று; செயல் விளைவு உண்டுபண்ணு; நடத்து, மேலாட்சி செய்; பயன் அளி; உணர்ச்சிகளைப் பாதி; (படை.) போர்த்துறை நடவடிக்கைகளெடு; வாங்குதல் விற்றல்வழி பங்கு விலைமதிப்பில் உயர்வுதாழ்வு உண்டு பண்ணு; (மரு.) அறுவை செய்.

**operat'ic**, *a.* இசைநாடகம் போன்ற; இசைநாடகத்துக்குரிய.

**op'erating-room**, *n.* அறுவை மருத்துவ அறை.

**op'erating-table**, *n.* அறுவை மருத்துவ மேசை.

**op'erating-theatre**, *n.* மருத்துவ மாணவர்கள் முன்னிலை யில் அறுவை மருத்துவம் செய்துகாட்டுதற்கான இடம்.

**opera'tion**, *v.* நடவடிக்கை, செயற்பாடு; செயல்முறை; வேலைநடைமுறை, வேலைப்பாடு; செயல்வகை; இயக்கம்; இயங்குமுறை; சட்டச் செயலாட்சி; சட்டச் செயலாட்சி எல்லை; நடப்புநிலை, செல்லுபடியாயிருக்கும் தன்மை; படைகள்-கப்பற் படைகள் வகையில் போர்த்திற நடவடிக்கை; அறுவை மருத் துவ நிகழ்ச்சி; (கண.) எண்களின் செய்மானம்.

**op'erative**, *n.* கலைத்தொழிலாளர்; பொறி வேலையர்; பணி யாள்; வேலையாள்; ஆலைத்தொழிலாளி; *a.* செயல்முறை சார்ந்த; செயல்விளைவுள்ள; நிறைவியலுடைய, விரும்பிய பயனை அளிக்கிற; கருத்துமுறையுடனமையாத, செயற்படு கிற; நடைமுறையான, நடப்பிலுள்ள; (மரு.) அறுவைசார்ந்த.

**op'eratize**, *v.* இசைநாடகமாக்கு, இசைநாடகவடிவங் கொடுத் தமை.

**operc'ulum**, *n.* மீன்களின் செவுள் உறை அல்லது மூடி; கிளிஞ்சில் துளை மூடி; தாவரங்களிலுள்ள துளை மூடி.

**operett'a**, *n.* ஓரங்க இசைநாடகம், சிற்றியல் இசைக்கூத்து.

**op'erose**, *a.* பெரும் உழைப்புத் தேவைப்படுகிற, கடினமாக உழைக்கிற.

**oph'icleide**, *n.* திருகாணிகளையுடைய பித்தளை இசைக்குழல் வகை.

**ophid'ian**, *n.* (வில.) பாம்பினஞ் சார்ந்த உயிர்; *a.* பாம் பினஞ் சார்ந்த.

**ophiol'ater**, *n.* பாம்பு வழிபாட்டினர்.

**ophiol'atry**, *n.* பாம்பு வழிபாடு.

**oph'ite**, *n.* பச்சைக்கல் வகை, பாம்புநிறச் சலவைக்கல்.

**ophthal'mia**, *n.* கண்ணழற்சி.

**ophthal'mic**, *n.* கண்ணோய் மருந்து; *a.* கண் சார்ந்த; கண்ணழற்சி கண்டுள்ள; கண்வகையில் வீக்கங்கண்டுள்ள; கண்ணோய் போக்கவல்ல.

**ophthalmit'is**, *n.* (மரு.) கண்ணழற்சி.

**ophthalmol'ogist**, *n.* (மரு.) கண் மருத்துவர்; கண்ண மைப்பு ஆய்வாளர்.

**ophthalmol'ogy**, *n.* கண் மருத்துவம்; கண்ணுய்வு நூல்; கண்ணமைப்பாய்வுநூல்.

**op'iate**, *n.* அபின் கலந்த தூக்கமருந்து; அபின் கலந்த நோவாற்று மருந்து; *a.* அபின் கலந்த; தூங்க வைக்கிற; மயக்கமூட்டுகிற; *v.* அபினுடன் கல.

**opine'**, *v.* கருது, எண்ணங்கொள்; கருத்துத்தெரிவி.

**opin'ion**, *n.* கருத்துரை; எண்ணம்; மதிப்பீடு; நம்பிக்கை; நடைமுறைக் கொள்கை; கருத்து வேறுபாடு; பொதுக் கருத்து; தற்காலிகத் துணிவு; தனிப்பட்ட கருத்து; கொள்கை; கோட்பாடு; நிபுணரின் கருத்து அறிவிப்பு; தொழில்முறை ஆலோசனை; நன்மதிப்பு; (தொ.) a matter of opinion, வாதத்திற்குரிய செய்தி; public opinion, பொதுமக்கள் கருத்து; the courage of one's opinions, எண்ணங்களுக்கேற்பச் செயலாற்றுந் துணிவு.

**opin'ionated, opin'ionative**, *a.* கொள்கைப் பிடிவாத முடைய; முரட்டுப்பிடியான, தன்முனைப்புள்ள, ஆணவமிக்க.

**opisom'eter**, *n.* வணர்கோல், வளைகோடுகளை அளக்குங் கருவி.

**opis'thograph**, *n.* இருபுறமும் எழுதப்பெற்றுள்ள திண்ணிய தாள்; இருபக்கங்களிலும் எழுத்துச் செதுக்கப்பெற்றுள்ள கற்பாளம்.

**op'ium**, *n.* அபினி, கம்புகம்; *v.* அபினி மருந்திடு, அபினூட்டிப் பண்டுவஞ்செய்; (தொ.) opium den, அபினி குடிப்பவர்கள் பயிலுமிடம்.

**opodel'doc**, *n.* சவர்க்காரப் பூச்சுத் தைல வகை.

**opop'anax**, *n.* முற்கால மருத்துப் பிசின்வகை; நறுமணப் பிசின்வகை.

**oposs'um**, *n.* பைக்கீரி, மரம் அல்லது நீரில் வாழ்ந்து இரவில் நடமாடும் மதலைப்பையுடைய அமெரிக்க அல்லது ஆஸ்திரேலிய சிறு விலங்கு வகை.

**opp'idan**, *n.* நகரத்தினர், ஈட்டன் (Eton) கல்லூரி இல்லத்தில் தங்காது நகர உணவுவிடுதியில் தங்கிப் பயிலும் மாணவர்; *a.* நகரஞ் சார்ந்த.

**opp'ilate**, *v.* (மரு.) வழியடை, துளை தூர்த்துவிடு.

**oppon'ent**, *n.* எதிரி, பகை; *a.* எதிர்க்கிற, மாறுன, முரண்பட்ட, பகையான.

**opp'ortune**, *a.* தறுவாய்க்கு ஏற்ற; வேளை வாய்ப்பான, தக்கவேளையில் வந்தமைந்த; பொருத்தமாக வந்துசேர்ந்த; ஆங்காலமான; காலத்தினுற் செய்த; செவ்வி வாய்த்த.

**opportun'ism**, *n.* வேளை வாய்ப்பு வாதம், காலத்துக்கேற்ற நடைமுறைக்கொள்கை; வாய்ப்பு வேட்டை, சந்தர்ப்பவாதம்; கொள்கைப்பேரம்; சமயசஞ்சீவித்தன்மை, வேளைக்கு ஒத்த ஒழுகலாறு.

**opportun'ist**, *n.* வாய்ப்பு வேட்டையாளர், சந்தர்ப்பவாதி; வேளைக்கூத்தர், சமயசஞ்சீவி; அரசியல் பச்சோந்தி; வேளைக்குத் தக்கவாறு கொள்கைகளை மாற்றிக்கொள்பவர்; நிலையான கொள்கையற்றவர்.

**opportun'ity**, *n.* செவ்வி, தறுவாய், தக்க சமயம்; வேளை வாய்ப்பு; வாய்ப்பு வேளை; நல்வாய்ப்பு, வாய்ப்பு வழி, வழி திறப்பு.

**oppose'**, *v.* எதிர், எதிர்த்து நில்; மாறுயிரு; எதிரீடாக்கு, எதிராக வை; எதிர்த்துரை; தடு; தடை செய்; தடங்கல் கூறு; தடுத்துரை.

**opposed'**, *a.* எதிரான, மாறுன, முரண்பட்ட, பகையான.

**oppose'less**, *a.* (செய்.) தடுக்கமுடியாத; எதிர்த்து வெல்ல முடியாத.

**opp'osite**, *n.* மறுதலை, எதிர்மாறுன பொருள்; முரண், எதிர்ப்பண்பு; எதிர்ச்சொல்; எதிரி; *a.* எதிரான, மறுதலைப் பண்பு வாய்ந்த; எதிர்மாறுன; முற்றிலும் வேறுபட்ட; நேர் எதிரான; எதிரிணையான; நேருக்கு நேரான, எதிர் முகமான; எதிர்ப்பக்கத்திலுள்ள; எதிர்நிலையான; முற்றும் மாறுன; *adv.* எதிரே, எதிர்ப்பக்கத்தில், எதிர்த்திசையில்; எதிரிணையாக; *prep.* எதிரில், எதிர்ப்பக்கத்தில்; (தொ.) opposite number, சரி இணை அலுவலர்; ஒன்றுக்குச் சரி நிகராக மற்றொரு தொகுதியிலுள்ள பொருள்; opposite prompter, நாடக மேடையில் நடிகருக்கு வலப்பக்கத்திலிருந்து நினைவுறுத்துபவர்; play opposite, நாடகம்-திரைப்படம் ஆகியவற்றில் முதன்மையான நடிகருடன் சோடியாக நடி; சோடியுடன் இணைவாக நடி.

**oppositifol'ious**, *a.* (தாவ.) இலைகளைத் தண்டின் எதிர்ப் புறங்களில் இரண்டிரண்டாக உடைய.

**opposi'tion**, *n.* எதிரீடு; முற்றும் எதிரான நிலை; வேறுபாடு; முரண், எதிர்முரண்; பகைமை, எதிர்ப்பு, பகைநிலை; எதிர்க்கட்சி; (அள.) மறிநிலைத் தொடர்பு; ஒரே எழுவாயும் பயனிலையும் உடைய இரண்டு கூற்றுகளிடையே அளவிலோ இயல்பிலோ இரண்டிலுமோ உள்ள வேறுபாடு; (தொ.) His Majesty's Opposition, the Opposition, மாமன்றத்தில் ஆளுங்கட்சிக்கு எதிரான முக்கிய கட்சி.

**opposi'tionist**, *n.* எதிர்க்கட்சி உறுப்பினர்; *a.* எதிர்ப்பாக வுள்ள.

**oppositisep'alous**, *a.* (தாவ.) புல்லிக்கு நேரெதிராக மலரிழையுடைய.

**oppress'**, *v.* அழுத்து; அமுக்கு; நெருக்கு; ஒடுக்கு; அடர்; கொடுங்கோலாட்சி புரி, வலுக்கட்டாயமாக அடக்கிவை; கொடுமைப்படுத்து.

**oppre'ssion**, *n.* அநீதி, அட்டூழியம், கொடுமை; அடக்கு முறை; கொடுங்கோன்மை; பெருந்துயர உணர்ச்சி; தாங்கொணுத் துன்பநிலை; ஊக்க இழப்பு.

**oppress'ive**, *a.* கொடிய; பீடையான, ஒறுக்கும் பாங்குடைய; பெருஞ்சுமையாயுள்ள; கொடுங்கோன்மையான; அடக்கியாள்கிற.

**oppress'or**, *n.* கொடியோன்; கொடுங்கோலன்; பாதகன், கண்டகன்.

**opprob'rious**, *a.* இகழ்ச்சியான, வைதுரைக்கிற, அவதூறுன; பண்பிழந்த.

**opprob'rium**, *n.* கெட்டபெயர்; வசை; பழி; இகழுரை, இழிவு.

**oppugn'**, *v.* மறுத்துரை, எதிர்த்துக்கூறு; தடங்கல் உரை.

**oppug'nant**, *n.* எதிரி, மாற்றுன்; *a.* எதிர்க்கிற, பகையான.

**op'simath**, *n.* முதுமையிற் கற்றுக்கொள்பவர்.

**opsim'athy**, *n.* முதுமையிற் கற்ற கல்வி.

**opson'ic**, *a.* நோய் நுண்மங்களை நிணநீரணுக்கள் எளிதில் உறிஞ்சிக்கொள்ளச்செய்யும் விளைவினை உண்டுபண்ணுகிற.

**op'sonin**, *n.* நோயாளி உடலில் அழிந்த நோய் நுண்மங்களைச் செலுத்துவதால் விளைவிக்கப்படும் பொருள்.

**opt**, *v.* விருப்பத்தைத் தெரிவி; தெரிந்தெடுத்துக்கொள்.

**op'tative**, *n.* (இலக்.) வியங்கோள்; *a.* விருப்பத்தை உணர்த்துகிற; (இலக்.) வியங்கோளான; (தொ.) optative mood, (இலக்.) வியங்கோள் வினைப்பாங்கு.

**op'tic**, *a.* (உள்.) கண் சார்ந்த, கட்புலனுக்குரிய; (தொ.) optic angle, காட்சி வரைக்கோணம், பொருளின் இருகோடிகளிலிருந்து புறப்பட்டுக் கண்ணின் மையத்தில்சேரும் வரைகளுக்கிடையிலுள்ள கோணம்; விழியிடைக்கோணம், இரண்டு கண்களிலிருந்து புறப்பட்டு ஒரு புள்ளியில் வந்து சேரும் வரைகளுக்கிடையிலுள்ள கோணம்.

**op'tical**, *a.* கண்ணுக்குரிய; பார்வைக்குரிய; கண்பார்வைக்கும் ஒளிக்கும் உரிய இடைத்தொடர்பு சார்ந்த; ஒளியியல் சார்ந்த; பார்வைக்குத் துணைசெய்யும் வகையில் அமைக்கப்பட்ட; ஒளிநூல் கோட்பாடுகளின்படி அமைக்கப்பட்ட; (தொ.) optical illusion, விழிக்காட்சி மயக்கம், பொய்த் தோற்றம்.

opti'cian, *n.* மூக்குக்கண்ணாடி செய்பவர்; மூக்குக்கண்ணாடி விற்பவர்.

op'tics, *n. pl.* கண்ணொளியியல், காட்சியொளிசார்ந்த ஆய்வு நூல்.

op'time, *n.* கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக மரபில் கணக்கியலில் சிறப்புப் பட்டம் பெற்றவர்களுள் இரண்டாவது அல்லது மூன்றாவது வகுப்பில் தேர்ச்சிபெற்ற ஒருவர்.

op'timism, *n.* இனிமை நம்பிக்கை; இன்மகிழ் நலம், இன்பமே எதிலும் எதிர்பார்க்கும் மனநலன், நல்லார்வ நலம், எதிலும் நற்கூறே காணும் இனிய மனவளம்; இந்நில வுலகமே வாழ்வதற்கு மிகச் சிறந்ததென்ற லேப்னிட்ஸ் (Leibnitz) என்ற மெய்விளக்க அறிவரின் கொள்கை; படைப்பு முழுமையிலும் முடிவாக நன்மையே வெல்லும் என்னுங் கருத்து.

op'timist, *n.* இன்முகச்செவ்வியர், அனைத்திலும் நன்மையே காண்பவர்.

optimis'tic, *a.* இன்மகிழ் நலமார்ந்த, எதிலும் நலமே காண்கிற, தளரா நம்பிக்கையார்வம் கொண்டுள்ள.

op'timum, *n.* உயிர்வாழ்வு வளத்துக்குப் பெரிதும் உகந்த சூழ்நிலை; *a.* பெரிதும் உகந்த; மிகவும் விரும்பத்தக்க; வளர்ச்சி வளங்களுக்குப் பெரிதும் துணைநலமான.

op'tion, *n.* விருப்பம்; விருப்பத்தேர்வு; தெரிந்தெடுப்புரிமை; தெரிந்தெடுக்கப்பட்டது; தெரிந்தெடுக்கப் படக்கூடியது; விருப்பம் தெரிவிக்கும் உரிமை; பங்குமாற்று முதலியவற்றின் வகையில் வரையறுத்த காலத்துக்குள் விருப்பம்போல் குறிப்பிட்ட விலைக்கு வாங்குவதற்கான உரிமை; (தொ.) local option, ஒரு மாவட்டத்தில் சாராயம் விற்கப்படுவதை அங்குள்ளவர்கள் தடுத்துவிடக்கூடிய ஏற்பாடு.

op'tional, *a.* விருப்பப்படியான, கட்டாயமற்ற.

optom'eter, *n.* விழிக் காட்சியாற்றல் எல்லைத்தேர்வாய்வுக் கருவி.

optom'etrist, *n.* விழிப்பார்வைத் தேர்வாய்வாளர்.

op'tophone, *n.* குருடர்கள் எழுத்தினை வாசிக்கச்செய்யும் வகையில் ஒளியை ஒலியாக மாற்றுங் கருவி.

op'ulence, *n.* பொருள்வளம், செல்வநிறைவு; வளமை, செழுமை.

op'ulent, *a.* செல்வமிக்க, பொருள்வளமுடைய; செழுமையான, தாராளமான, சேமவளமுடைய.

*op'us,* (ல.) *n.* இசை-இலக்கிய எழுத்தாண்மைத் துறைகளில் கலை ஆக்கப்படைப்பு; (தொ.) *magnum opus, opus magnum,* தனிப்பெரு நூல்.

opus'cule, *opus'culum,* (ல.) *n.* சிற்றிலக்கியப் படைப்பு; சில்லறை இசைப்பாடல்; *pl.* opus'cula.

or[1], *n.* (கட்.) மரபுவழிச் சின்னங்களிற் செதுக்கிய புள்ளிகளால் காட்டப்பெறும் மங்கலான பொன் அல்லது மஞ்சள் நிறம்.

or[2], *conj.* அல்லது, இரண்டில் ஏதோ ஒன்றாக, என்பவற்றுள் ஏதோ ஒன்றாக; அதாவது; அல்லாவிட்டால்.

o'rach, *n.* தோட்டக் காய்கறிச் செடிவகை.

o'racle, *n.* தெய்வ வாய்மொழித்தலம்; யூதர்கோயில் கருவறை; தெய்வ வாய்மொழியாளர்; வருங்குறியுரைப்போர்; முன்னறிவுடையோர், அறிவர்; உறுதுணையாளர், சான்றோர்; விரிச்சி, முன்னறிவுரை, இருபொருளுரை; தெய்வமொழி; இறைவாக்கு; பொய்யாமொழி; தோலா நல்லுரை; பொன்றுத் துணை; தெய்விக வழிகாட்டுச்சின்னம்; தவருக்குறி; *v.* வாய்மொழித் தெய்வமாகக் கூறு, விரிச்சியுரை; (தொ.) work the oracle, கணியனைக் கையிற் போட்டுக்கொண்டு விரும்பிய பதிலைப் பெறு; சூழ்ச்சிசெய்து விரும்பிய விளைவைப் பெறு.

orac'ular, *a.* தெய்வமொழி சார்ந்த; விரிச்சியின் இயல்பு வாய்ந்த; குறி சொல்வது போன்ற; வருங்குறி சொல்லுகிற; தவரு வாய்மையுடைய; தெய்வத்தன்மை வாய்ந்த; இருபொருளுடைய, ஐயப்பாடான, புரியாத.

or'al, *n.* (பே-வ.) வாய்மொழித்தேர்வு; *a.* பேசப்படுகிற, வாய்மொழியான; (உள்.) வாய்சார்ந்த.

o'rally, *adv.* வாய்மொழியாக.

O'range[1], *n.* ரோன் (Rhone) ஆற்றின் கரையிலுள்ள நகரம்; *a.* "ஆரஞ்சு இளவரசர்கள்" குடும்பம் சார்ந்த; ஆலந்திலும் பிரிட்டனிலும் அயர்லாந்திலும் "ஆரஞ்சு இளவரசர்" கட்சியை ஆதரிக்கிற; ஆரஞ்சுக் கழகஞ் சார்ந்த; ஆரஞ்சுக் கழகத்தை ஆதரிக்கிற; அயர்லாந்தில் முனைத்த புரோடஸ்டண்டு ஆதிக்கக் கொள்கையுடைய.

o'range[2], *n.* கிச்சிலிப்பழம்; கிச்சிலிமரம்; செம்மஞ்சள் நிறம்; *a.* செம்மஞ்சள் நிறமான; (தொ.) mock orange, நெடிவீசும் வெண்மலர்க் கொத்துக்களையுடைய புதர்ச்செடிவகை; oranges and lemons, குழந்தைகள் விளையாட்டு வகை; 'ஆரஞ்சு' நிறப் புள்ளிகளுள்ள மஞ்சள் மலர்களையுடைய இலை யுதிராச் செடிவகை: squeezed orange, இனிப் பயன்படாப் பொருள்; squeeze the orange, நற்கூறுகளையெல்லாம் எடுத்துவிடு.

orangeade', *n.* கிச்சிலிப்பழச் சாற்றுப் பான வகை.

or'ange-blossom, *n.* மணமகள் அணிந்துகொள்ளும் கிச்சிலி மரத்தின் வெண்மலர்கள்.

or'ange-colour, *n.* செம்மஞ்சள் நிறம்.

or'ange-fin, *n.* வரால் மீன்வகை.

Or'angeman, *n.* முனைத்த புரோட்டஸ்டண்டு ஆதிக்கம் நிலை நாட்டுதற்காக 1795-இல் அயர்லாந்தில் அமைக்கப்பட்ட கழகத்தின் உறுப்பினர்.

o'range-tip, *n.* முன்சிறகின் முனையில் 'ஆரஞ்சு' நிறத் திட்டுடைய வண்ணத்துப்பூச்சி வகை.

orang'-outang', or'ang-ut'an, *n.* மனிதக் குரங்கு, வாலில்லாக் குரங்குவகை.

orate', *v.* சொற்பொழிவுசெய்; உரத்துப்பேசு.

ora'tion, *n.* சொற்பொழிவு, பேருரை, மேடைப்பேச்சு; (இலக்.) மொழி; பேசும்முறை; (தொ.) direct oration, தன்மைப்பேச்சு ஒப்பிப்பு; நேர்முகப்பேச்சு ஒப்பிப்பு; indirect oration, oblique oration, படர்க்கைப்பேச்சு ஒப்பிப்பு.

o'rator, *n.* நாவலர், மேடைப்பேச்சுத் திறமையுடையவர்; சொல்வன்மை வாய்ந்த பொதுப்பேச்சாளர், சொற்பொழிவாளர்; *fem.* o'ratress, o'ratrix; (தொ.) Public Orator, விழாக்களில் பல்கலைக்கழகத்தின் சார்பாகப் பேசும் ஆக்ஸ்போர்டு-கேம்பிரிட்ஜு அலுவலர்.

orato'rical, *a.* நாவன்மை வாய்ந்த; செயற்கை அணி நயத்துடன் பேசுகிற; சொற்றிறம் வாய்ந்த; சொற்பொழிவு சார்ந்த, சொற்கோப்புக்கலை சார்ந்த.

orator'io, *n.* நாடக இசைப்பண்புடன் கலந்த சமயச்சார்பான புண்ணியக் கதைக்கச்சேரி; *pl.* orator'ios.

o'ratorize, *v.*=orate.

O'ratory[1], *n.* 1564-இல் ரோமாபுரியில் நிறுவப்பட்ட நோன்புகள் மேற்கொள்ளாத எளிய ரோமன் கத்தோலிக்க குருமார்கள் கழகம்; ரோமாபுரியில் நிறுவப்பட்ட நோன்புகள் மேற்கொள்ளாத எளிய ரோமன் கத்தோலிக்க குருமார்கள் கழகத்தின் பிறநாட்டுக் கிளை.

o'ratory[2], *n.* தனிப்பட்டவர் தொழுகையிடம், சிறு வழிபாட்டிடம், மனையகக் கோயில்.

o'ratory[3], *n.* பேச்சுத்திறன், சொற்கோப்புக்கலை; சொற்பொழிவு; அலங்காரப்பேச்சு; பகட்டாரவாரப்பேச்சு, பெரும் பேச்சு.

orb, *n.* வட்டம்; வட்டு, வட்டத்தட்டு, வட்டத்தகடு; வளையம்; உருண்டை, கோளம்; வான் ஒளிக்கோளம்; விண்மண்டலம்; விழிக்கோளம்; (செய்.) கண்; சிலுவை ஏந்திய கோளச் சின்னம்; முழுமொத்தம், திரளுரு; *v.* சூழ்; கோளமாகத் திரட்டு; கோளமாகத் திரள்.

orbic'ular, *a.* வட்டமான; வட்டத்தகட்டு வடிவான; மோதிர வடிவுடைய; கோளவடிவுள்ள, உருண்டையான; திரண்டுருண்ட; ஒரே முழுமொத்தமான; ஒழுங்குபட்ட முழுமையினையுடைய; (தொ.) orbicular muscle, துளை சுருக்குந் தசை.

**orb'it**, *n.* கட்குழி; பறவையின் கண்சூழ் வரை; பூச்சியின் கண் சூழ்ந்த வளையம்; கோள்வீதி; கோளப்பாதை; வால் வெள்ளியின் நெறி; வரம்பு; செயல் எல்லை.

**orc, orc'a**, *n.* திமிங்கில வகை; கடல்வாழ் பெருவிலங்கு.

**Orcad'ian**, *n.* ஆர்க்னி (Orkney) தீவுகளில் வாழ்பவர்; ஆர்க்னி தீவுகளைச் சேர்ந்தவர்; *a.* ஆர்க்னி தீவுகள் சார்ந்த.

**orch'ard**, *n.* பழத்தோட்டம்.

**orch'ardist, orch'ardman**, *n.* பழத் தோட்டக்காரர்.

**orches'tic**, *a.* ஆடல் சார்ந்த.

**orches'tics**, *n.* ஆடற் கலை.

**or'chestra**, *n.* பண்டைய கிரேக்க நாடக அரங்கின் முகப்பில் இசைக் கருவியாளர் இருந்து வாசிப்பதற்குரிய அரைவட்டப் பகுதி; நாடக-நடன அரங்குகளில் இசைக்கருவி இயக்குநர் மேடை; இசைக்கருவியாளர்கள் குழு; கூடுகொள் இன்னியம், பல்லியம்.

**orches'tral**, *a.* கூடுகொள் இன்னியஞ் சார்ந்த, பல்லியத்துக் குரிய.

**or'chestrate**, *v.* கூடுகொள் இன்னிய வாசிப்பிற்காகப் பாடல் இயற்று; கூடுகொள் இன்னிய வாசிப்பிற்காக ஏற் பாடுசெய்.

**orchestri'na, orches'trion**, *n.* பல்லியம் போன்ற இசை யொலி எழுப்புதற்கென வகுக்கப்பட்ட பெருங்குழல் இசைக் கருவி.

**or'chid**, *n.* (தாவ.) பகட்டு வண்ணமலர்ச் செடிவகை, ஓக்கிட்டு.

**or'chidist**, *n.* பகட்டு வண்ண மலர்செடி ஆர்வலர்.

**or'chidology**, *n.* பகட்டுவண்ண மலர்ச்செடி ஆய்வுநூல்.

**orchidoman'ia**, *n.* பகட்டு மலர்ச்செடிப் பித்து.

**or'chil**, *n.* பாசி வகையிலிருந்து கிடைக்குஞ் சிவப்பு அல்லது ஊதா நிறச் சாயப்பொருள்.

**or'chis**, *n.* இங்கிலாந்து நாட்டில் பகட்டான பல்வண்ண மலர்களையும் மெல்லிய நிமிர்ந்த தண்டுகளையுமுடைய ஒற்றை விதைச் செடியினக் குழுவின் வகை.

**orchit'is**, *n.* அண்டவாதம், விரைவீக்கம்.

**or'cin**, *n.* (வேதி.) பாசி வகையிலிருந்து எடுக்கப்பட்டுப் பல் வேறு சாயங்களைத் தரும் நிறமற்ற பளிங்கனைய பொருள்.

**ordain'**, *v.* விதித்தமை; ஊழமைவாக்கு; ஆணையிட்டமர்த்து; சமயப்பணியில் அமர்த்து; அமர்வு வினையாற்று; புனிதப் பதவிப்படி சார்த்தியருள்; பணியுரிமையளி; வகுத்தொழுங்கு படுத்து; ஒதுக்கிவை; நிறுவு; நிலைப்படுத்து.

**ordain'ment**, *n.* விதித்தல்; கட்டளை.

**ordeal', ord'eal**, *n.* சோதனைமுறை, எண்ணெய்க் கொப் பரை முதலிய கடுந்தேர்வு.

**ord'er**, *n.* உத்தரவு; விதிமுறை; கட்டளைமுறை; பணித் துறைச் செயற்கட்டளை; பண வகையில் அளிப்பாணை; சரக்கு வகையில் அனுப்பாணை; உத்தரவுச் சீட்டு; ஒழுங்கு; வரிசைமுறை; படையணி; அமைதி; நேர்மை; தகவு; செப்பம், துப்புரவு; மரபொழுங்கு; முறைமை, வகைமுறை; வகை, மாதிரி; படி; தரம்; படிநிலை வகுப்பு; அமைப்பு, நிறுவனம்; அமைப்புக்குழு; நன்மதிப்புக்குழு; வீரத்திருத் தகைத் தொகுதி; அமைப்புச் சின்னம்; நன்மதிப்புச் சின்னம்; வீரத் திருத்தகைத் தொகுதிச் சின்னம்; சமயப் பணித் துறை அமைப்பு; பூர்வாங்கச் செயல்முறை; துப்பாக்கியின் மொட்டைப்பக்கம் நிலத்தூன்றி நிமிர்ந்து நிற்கும்நிலை; (தாவ.) இனக்குழுமம்; (கண.) அடுக்குத் தொடரின் படி முறை; எண்ணின் மதிப்பளவு; சேர்மங்களின் இணைவுப்படி; *v.* ஒழுங்குபடுத்து; முறைப்படுத்து; அமைவி; ஊழ்வகையில் வகுத்தமை; உத்தரவிடு; வகுத்தளி; போகும்படி கட்டளைப் படுத்து; கொண்டு வரும்படி ஏவு; வரவழை; துப்பாக்கி யின் அடிப்புறம் நிலத்தூன்றி நிமிர்ந்து நிற்கும்படி ஏவு; ஏவி நடத்து; செயலாணை செய்; (தொ.) by order, உரிய உத்தரவு பெற்று; முறைப்படி; close order, படைத்துறை யில் செறிவான அணி; in order, in good order, ஒழுங்குடன், நன்னிலையில்; பயன்படுத்தத்தக்க நிலையில்; in order, வரிசைப்படி; in order that, என்ற நோக்கத்துடன்; in order to, ஆக, வேண்டி, என்பதற்காக; keep order, ஒழுங்கு பேணு, அமைதி குலையாமல் காத்தமை; law and order, சட்ட ஒழுங்கமைதி; money order, அஞ்சல் பண விடை; new order, புது மரபு, புது நடைமுறை; old order, பழைய பாணி, பழைய மரபு; on order, உத்தரவிடப்பட்ட நிலையில்; கோரப்பட்டுள்ள நிலையில்; open order, படைத் துறையில் தளர் வரிசை அணி; கப்பற்படை அகல் அணி வரிசை; order arms, துப்பாக்கி அடியை நிலத்தில் வலப்புறம் ஊன்றி நிமிர்ந்துநில்; order of the day, நாள் நிகழ்ச்சி நிரல், நாண்முறை ஆணைத் திட்டம்; அதிகாரி பிரகடனம்; out of order, in bad order, ஒழுங்கின்றி; சீர்குலைவாக; முறையற்ற தாய்; point of order, விதிமுறைக்கடா; rise to order, rise to a point of order, வாதத்தில் தலையிட்டு ஒழுங்குமுறை வினா எழுப்பு; to order, கட்டளையின்படி; வேண்டுதற் கோரிக்கையின்படி.

**ord'erly**, *n.* பணிமுறைத் துணைவர்; படைத்துறை மருந்தகத் துணை ஏவலர்; *a.* ஒழுங்கு முறைப்பட்ட, கட்டுப்பாடுகளை மதித்து நடக்கிற, ஒழுங்கமைதியுடைய, நடையமைதி வாய்ந்த; படைத்துறையில் ஆணை நிறைவேற்றும் பொறுப் புடைய; (தொ.) orderly bin, தெருக்குப்பை ஒதுக்கல் தொட்டி; orderly officer, நாள்முறை ஆணைப் பணியாளர்.

**ord'erly-room**, *n.* படைவீட்டில் படைப்பிரிவின் அலுவலக அறை.

**ord'ers**, *n. pl.* சமயப்பணித் தரங்கள், துறவுப் பணிநிலைகள்; மேலிட உத்தரவுகள்; (தொ.) holy orders, சமயத்துறவுப் பணித்துறை; in orders, சமயப் பணித்துறையிலீடுபட்டு; சமயப் பணித்துறையில் அமர்வு பெற்று; take orders, சமயப் பணித்துறை அமர்வு பெறு, சமயப்பணி ஏற்றமை.

**ord'inal**, *n.* எண் வரிசைமுறைப் பெயர்; சமயத்துறைப் பணியேடு; சமயப்பணி நேர்வமர்வுப் பதிவேடு; *a.* எண் வகையில் வரிசைமுறை சுட்டுகிற; படிமுறை குறித்த.

**ord'inance**, *n.* உரிமைக்கட்டளை, மேலாணை; சமயவினை.

**ord'inand**, *n.* திருநேர்வாளர், சமயப்பணியமர்விற்கு உரி யவர்.

**ord'inary**, *n.* சமயத்துறை இயலுரிமை வழக்கு நடுவர், பொதுமுறை நீதிபதி; *a.* பொதுமுறையான, சாதாரண மான; வழக்கமான, வாடிக்கையான; சிறப்பற்ற, பொது நிலையான; பணிச் சார்புக்குரிய, பொதுமுறை உரிமை வாய்ந்த, ஆணைச்சார்பற்ற; அழகு முனைப்பற்ற; நடுத்தர மான; (தொ.) in ordinary, மருத்துவர் வகையில் நிலையான, வாடிக்கையாகப் பார்க்கிற; கப்பல் வகையில் ஆணைபெறாத; Lord Ordinary, அமர்நீதி மன்றத்தின் புறவிருக்கை சார்ந்த பொதுமுறை நீதிபதி.

**ord'inate**, *n.* (வடி.) குவிகை நடுவிட்டத்துக்கு இணையான நாண்வரை; (கண.) வரைவிளக்கப் படத்தில் நடுச்சுட்டு வரையிலிருந்து மற்ற நடுச்சுட்டுக்கு இணையான வரை.

**ordina'tion**, *n.* பதவியளிப்பு, ஆச்சாரிய அபிடேகம்; வகைப் படுத்துதல்; வரிசைப்படுத்துதல்; ஆணையிடல்.

**ordinee'**, *n.* புதிதாக நியமிக்கப்பட்ட சமயவட்டத் துணைவர்.

**ord'nance**, *n.* பீரங்கி, சகடத்தின்மேல் ஏற்றப்படும் பெரிய இயந்திரத் துப்பாக்கி; படைக்கலச் சாலையரங்கம்; (தொ.) Ordnance datum, நிகரக் கடற்பரப்பு மட்ட அளவு; Ordnance survey, பிரிட்டன்-வட அயர்லாந்துப் பரப்புக் களின் நில ஆய்வளவை.

**ord'ure**, *n.* பிழுக்கை, எச்சம்; கொச்சைப் பேச்சு.

**ore**, *n.* உலோகக்கரு, கனியிலிருந்து எடுக்கப்படும் இயற்கை உலோகக் கலவை; (செய்.) உலோகம்; தங்கம்.

**or'ead**, *n.* மலையணங்கு.

**orec'tic**, *a.* (மரு., மெய்.) வேட்கைக்குரிய, அவாவுணர்வுக் குரிய; பசியுணர்வு தூண்டுகிற.

**or'eide**, *n.* போலித்தங்கம்.

**orfe**, *n.* பொன்னிற மீன்வகை.

**org'an**, *n.* உறுப்பு, அங்கம்; உள்ளுறுப்பு, கருவி, சாதனம்; கருத்துப்பரப்பும் வாயில், கொள்கை பரப்புக்கருவி; குரலமைவு, சாரீரம்; இசைக்கருவி; இசைப்பேழை, சுரமண்டலம்; இசைப்பேழையுறுப்பு; இசைப்பெட்டி; (தொ.) mouth organ, விளையாட்டு ஊதுகருவி.

**org'an-blower**, *n.* ஒத்தூதுபவர்; இசைத்துருத்தி இயக்குங் கருவி.

**org'an-builder**, *n.* இசைப்பேழை யாத்தமைப்பவர்.

**org'andie**, *n.* பாலாவித் துணி, மென்றுணி வகை.

**org'an-grinder**, *n.* கையால் சிறிய இசைப்பேழை இயக்குபவர்.

**organ'ic**, *a.* உறுப்புக்குரிய; உறுப்புப் போன்ற; உறுப்பு விளைவான; உறுப்புக்களாலமைந்த, உறுப்பாக்கமுடைய, உறுப்பமைதி வாய்ந்த; உடலமைப்புக்குரிய; உடற் கூற்றியலான; உடலுக்கு இயல்பான; அடிப்படையான, உள்ளார்ந்த; அமைப்பியல் சார்ந்த; கூட்டிணைப்பியல் சார்ந்த; உயிரியக்கவியலான; உயிர்ப்பொருட் கூருன; (மரு.) உறுப்பாக்கம் குலைக்கிற; (வேதி.) உயிர்ப்பொருட் கூருன; உயிராக்க விளைவான; கரியச் சேர்க்கைப் பொருள்களாலான, கரியச் சேர்மானமுடைய.

**org'anism**, *n.* உறுப்பாண்மை, உறுப்பமைதி; உறுப்பமைதியுடைய உயிர், விலங்கு-தாவர இன உயிர்களில் ஒன்று; உயிர்ப்பொருள்; கூட்டிணைவமைப்பு, முழுமொத்த உரு, ஒருயிர்போல் இயங்கும் அமைப்பு.

**org'anist**, *n.* இசைப்பேழை இயக்குநர்.

**organiza'tion**, *n.* அமைப்பாண்மை; இணைப்பாட்சி; அமைப்புமுறை; அமைப்பு; சங்கம், நிறுவனம்.

**org'anize**, *v.* உறுப்பிணை; உறுப்பமைதி உண்டுபண்ணு; உயிர்ப்பூட்டு; உயிர்ப்பொருளாக்கு; உயிர்ப் பொருளாகு; சேர்த்து ஒன்றுபடுத்து; இணைத்துருவாக்கு; ஒழுங்கமை; செயல் திறமூட்டு; திட்ட ஆக்கஞ் செய்; ஏற்பாடு செய்.

**org'anized**, *a.* உறுப்புக்களின் கூட்டு ஒத்துழைப்பினையுடைய, கூட்டிணைவான; ஒருமுகப்படுத்தப்பெற்ற; ஒழுங்கமைதியுடைய.

**org'anizer**, *n.* அமைப்பாளர்; கூட்டிணைப்பவர்; கருமுளையில் பிற பகுதிகளின் வளர்ச்சியைத் தூண்டியியக்கும் கருவுயிர்க்கூறு.

**org'an-loft**, *n.* திருக்கோயிலில் இசைப்பேழை வைத்திருக்கும் மேடை.

**org'anon**, *n.* சிந்தனைமுறைத் தத்துவ ஆய்வேடு; ஆராய்ச்சி முறைத் தத்துவம்; ஆராய்ச்சிக்குரிய கருவிமுறை.

**org'an-screen**, *n.* இசைப்பேழை மேடைக்கும் பாடற்குழுவிற்கும் இடையில் அமைந்துள்ள வண்ண ஓவியத்தட்டி.

**org'an-stop**, *n.* இசைப்பேழையில் இசைக்குழாய்த் தொகுதி; இசைக்குழாய்த் தொகுதியை இயக்கும் குமிழ்ப்பிடி.

**org'anum**, *n.* = organon.

**org'anzine**, *n.* நடு இழை மற்ற இழைகளுக்கு எதிராகத் திரிக்கப்பட்ட பட்டுமுறுக்கிழைக் கயிறு.

**org'asm**, *n.* உணர்ச்சித் துடிதுடிப்பு; புணர்ச்சியிடைத் துடிப்பு, புணர்ச்சிப் பரவசநிலை.

**or'geat**, *n.* தீஞ்சாறு வகை.

**orgias'tic**, *a.* தெய்விகக் களியாட்ட விழாவின் மறைவினைக்கு உரிய; சிற்றின்ப ஆடல் பாடற் களியாட்டஞ் சார்ந்த.

**or'gies**, *n. pl.* காமன் பண்டிகை போன்ற பண்டைக் கிரேக்க ரோமர் ஆடல் பாடல் களியாட்டவிழாவின் மறைவினைமுறைகள்; ஆடல் பாடல் கூத்துக் களியாட்டம்; சிற்றின்பக் கேளிக்கைக் கூத்தாட்டம்.

**or'gy**, *n.* orgies என்பதன் ஒருமை.

**or'iel**, *n.* மாடிக் கிளிக்கூண்டுப் பலகணி, சுவராதாரத் தண்டயக் கைகள் மீதமைந்த பல்கோணத் தொங்கற் பலகணி.

**Or'ient**[1], *n.* கீழ்த்திசை; கீழ்த்திசையுலகு; கீழை நாடுகள்.

**or'ient**[2], *n.* (செய்.) எழுஞாயிற்றுத் திசை; குண திசை வான்; கீழையுலகின் முத்து; தூய ஒளி வண்ணம்; முத்தின் தூய ஒளிவண்ணக்கூறு; *a.* (செய்.) கீழ்த் திசைக்குரிய; கதிரவன் வகையில் எழுகின்ற நிலையிலுள்ள; ஒளி வகையில் இளநலம் திகழ்கிற; சுடரிடுகின்ற, முத்து முதலிய அரும்பொருள் வகையில் ஒளி பிறங்குகின்ற, தூய ஒளி வண்ணக்கூறு வாய்ந்த; விலை மதித்தற்கரிய.

**orient'**[3], *v.* = orientate.

**Orien'tal, orien'tal**, *n.* கீழ்த்திசைவாணர், கீழை நாடுகளுக்குரியவர்; ஆசியாக் கண்டத்தவர்; *a.* கீழ்த்திசைக்குரிய; கிழக்கிலிருந்து வருகிற; கீழ்நாடுகளுக்குரிய; கீழையுலகில் காணப்படுகிற; குணதிசை நாகரிகஞ் சார்ந்த; கீழை நாகரிகத் தொடர்புடைய.

**Orien'talism**, *n.* கீழையுலக மரபு; கீழையுலக மரபுத் தொடர், கீழையுலக வழக்காறு; கீழ்த்திசை மொழிப்புலமை.

**Orien'talist**, *n.* கீழ்த்திசை மொழிப்புலமையாளர்; கீழ்த் திசைவாணர்.

**o'rientate**, *v.* கிழக்குமுகமாக அமைவி; திருக்கோயில் பாடகர் குழுவிடம் கீழ்த்திசையாக அமையும்படி செய்; காலடி கிழக்கு நோக்கியிருக்கும்படி புதைவடக்கஞ் செய்; திசைமுகப்படுத்து; சரியான திசைத் தொடர்பமைவி; சரியாக இணைத்துத் தொடர்புபடுத்து; சரியான தொடர்பு கொள்ளுவி; கிழக்குமுகமாகத் திரும்பு; குறிப்பிட்ட திசை முகமாகு.

**orienta'tion**, *n.* கிழக்கு நோக்கிய அமைப்பு; திசையமைவு; திசையமைப்பு; திசைமுகப்புநிலை; திசைத் தொடர்புணர்வு; திசைத் தொடர்பமைவு; தொடர்பிணைவு; ஊறுணர்வின் இட இயல்பு அறியுந் திறம்; ஆற்றுப்படுத்தும் பயிற்சி.

**o'rifice**, *n.* துளை, துவாரம்; புழைவாய்.

**o'riflamme**, *n.* முற்கால பிரான்சில் ஈட்டியில் இணைக்கப்பட்ட பன்முனைச் செம்பட்டுக்கொடி; போர் எழுச்சிக்கொடி; போராட்ட எழுச்சித் தூண்டுதல்; எழுச்சி தூண்டும் குறிக்கோள்; வண்ணப் பகட்டு; பகட்டு வண்ணப்பொருள்.

**o'rigan, orig'anum**, *n.* மருவகம், சமையலுக்குதவும் மணப்பூண்டு வகை.

**o'rigin**, *n.* முதல்நிலை, தோற்றம், பிறப்பு; தோற்றுவாய், தொடக்கம்; மரபுமூலம், மூலமுதல்; மூல முதலிடம், பிறப்பிடம்; ஆற்றின் தலைமுதல்; சொல்மூலம்; (கண.) அளவின் தொடக்க முதல்.

**ori'ginal**, *n.* மூலப்படிவம், பார்த்துப் படியெடுக்க உதவிய மூலம்; மெய்ம் மூல ஓவிய மாதிரி; முதனூல்; மூலநூல், மொழி பெயர்ப்பின் மூலம்; தனிமாதிரிப் பேர்வழி, தனிச் சிறப்புப் பண்புடையவர்; *a.* தொடக்க முதலேயுள்ள; தொடக்க நிலைப்பட்ட; முதலாவதான; மூல முதலான; படி மூலமான; மெய்ம் மூலமான; தனி முதலான, பிறிதொன்றை மூலமாகக் கொள்ளாத; தன்முதலான, பிறிதொன்றைப் பார்த்துப் பின்பற்றாத; தற்பண்பு வாய்ந்த; தனிப்புதுமையுடைய; தற்சார்புடைய; தற்சிந்தனை வாய்ந்த; தற்படைப்பான.

**original'ity**, *n.* தன்முதன்மை; தற்பண்பு; தற்படைப்புத் திறம்; தற்கற்பனை ஆற்றல்; தற்படைப்பாற்றல்.

**ori'ginate**, *v.* பிறப்பி, தொடங்கிவை; படைத்துருவாக்கு, உண்டுபண்ணு; முதன்முதலாகச் செய், முதன்முதலாக நடைமுறைக்குக் கொண்டுவா; மூலமாகக் கொள்; மூலமரபாகக் கொள்; பிறப்புறு, எழு, தோன்று; தொடங்கு.

**ori'ginative**, *a.* உண்டுபண்ணும் ஆற்றலுடைய, படைக்குந் திறம் வாய்ந்த

**orinas'al**, *n.* வாய் மூக்கு ஒலி; *a.* வாய் மூக்கொலி சார்ந்த.

**or'iole**, *n.* காஞ்சனப்புள், கருமை பொன்மைநிற இறக்கைகளையுடைய மண்டலப்பறவை வகை.

**Ori'on**, *n.* மான்தலை விண்மீன்குழு, மிருகசீரிடம்; (தொ.) Orion's belt, மான்தலை விண்மீன் குழுவின் நடு மூன்று உடுக்கள்; Orion's hound, அழல்மீன், அக்கினி நட்சத்திரம்.

o'risons, *n. pl.* வழிபாட்டுரை.

Orl'eans, *n.* பழவகை; பருத்தி கம்பளி கலந்து நெய்த ஆடைவகை.

orl'op, *n.* கப்பல் அடி அகட்டுத்தளம்.

orm'er, *n.* உணவுக்குரிய ஒற்றைத் தடுக்கிதழ் அமைப்புடைய நத்தை இனம்.

orm'olu, *n.* தட்டுமுட்டுச்சாமான்களை அணி செய்யப் பயன்படும் பளபளப்பான வெண்கலம்; செம்பும் துத்தநாகமும் வெள்ளியமும் கலந்த பொன்வண்ண உலோகக்கலவை; பொன்வண்ண உலோகக் கலவையால் செய்யப்பட்ட அல்லது அணிசெய்யப்பட்ட பொருள்கள்.

orn'ament, *n.* அணிமணி, பூண், நகை; அழகுப்பொருள், அணிசெய்யப் பயன்படுவது, அழகினைத் தருவது; அணி வேலைப்பாடு; சிறப்பு அளிப்பவர்; அணிசெய்யப்பட்டநிலை; அணிஒப்பனைக் கூறுகள்; *v.* ஒப்பனை செய், அணிசெய்; சிறப்பி; அழகுபடுத்து.

orn'aments, *n. pl.* வழிபாட்டிற்குத் தேவையான பொருள்கள், பலிமேடை-திருக்கலங்கள்-தேறல்புட்டி-வழிபாட்டு ஏடு முதலியவற்றின் தொகுதி; (இசை.) அழகிசைப்பண்கள்.

ornate', *a.* அணிநலம் வாய்ந்த.

ornithol'ogy, *n.* பறவையியல் நூல்.

ornith'omancy, *n.* பறவைக் குறி முறை.

ornithorhync'us, *n.* முட்டையிட்டுப் பால்கொடுக்கும் வாத்தின நீர்வாழ் பறவை வகை.

ornithos'copy, *n.* புள்நிமித்தம்.

orog'raphy, *n.* மலையமைப்புச்சார்ந்த நிலவியல், மலைகளைப் பற்றி ஆயும் நிலவியற் பிரிவு.

orohipp'us, *n.* குதிரையின் முன்மரபெனக் கருதப்படும் மரபற்றுப்போன புதைபடிவ நாற்கால் விலங்குவகை.

or'oide, *n.* செம்பும் துத்தநாகமும் கலந்த பொன்வண்ண உலோகக்கலவை.

or'otund, *a.* உச்சரிப்பு வகையில் வாய்நிறைந்துள்ள; சொற்றொடர் வகையில் வாய்நிறைவான; நிறை ஆரவாரமான; பகட்டாரவாரமான, போலி ஆடம்பரமான.

orph'an, *n.* ஏதுமிலி, அனாதை; *v.* பெற்றோரிழ.

orph'anage, *n.* பெற்றோரற்ற பிள்ளைநிலை, தந்தை தாயின்மை; துணையிலாக் குழந்தைகள் நிலையம்; பெற்றோரற்ற பிள்ளைகளின் வளர்ப்பு நிறுவனம்.

Orphe'an, *a.* கிரேக்கரிடையே டயோனிசஸ் என்ற தெய்வத்தின் வழிபாட்டினிடையே ஆர்பியஸ் (Orpheus) என்பாரின் மறைக்கோட்பாட்டுக்குரிய; மறைபுதைவான, தெய்வத் தன்மையுடைய.

Orph'ic, *a.* கிரேக்கரிடையே டயோனிசஸ் என்ற தெய்வத்தின் வழிபாட்டினிடையே ஆர்பியஸ் என்பவரின் மறைக் கோட்பாட்டுக்குரிய; மறைபுதைவான; தெய்வத் தன்மையுடைய; ஆர்பியஸ் என்ற தெய்விக ஆற்றலுடைய இசைக் கவிஞனுக்குரிய; தெய்விக இசையாற்றலுடைய.

orph'rey, *n.* சமயச்சடங்கு ஆடைகளின் சரிகைச் சித்திர வேலைப்பாடுடைய ஓரப்பகுதி.

orp'iment, *n.* மஞ்சள்வண்ணப் பொருளாகப் பயன்படும் கனிப்பொருள், உள்ளிய முக்கந்தகை, அரிதாரம், தாளகம்.

orp'in, orp'ine, *n.* ஊதா நிறமலர்களையுடைய சதைப்பற்றுள்ள மூலிகை வகை.

Orp'ington, *n.* பண்ணைப் பறவை இனம்.

o'rrery, *n.* மணிப்பொறி போன்றியங்கும் கோள்மண்டல அமைப்புக் கருவி.

o'rris[1], *n.* பகட்டான மலர்களையும் கத்தி போன்ற இலைகளையுமுடைய தண்டங்கிழங்குச் செடிவகை.

o'rris[2], *n.* பொன் வெள்ளிச் சரிகை வேலை.

o'rris-powder, *n.* நறுமணப் பொருளாகவும் மருந்தாகவும் பயன்படும் பொடி.

o'rris-root, *n.* மணமூட்டும் பொருளாகவும் மருந்தாகவும் பயன்படும் வேர் வகை.

Ors'on, *n.* அஞ்சாத முரடன்.

orthocephal'ic, *a.* நீளத்தில் முக்காலுக்கும் ஐந்தில் நாலுக்கும் இடைப்பட்ட அகலமுடைய மண்டையோடு வாய்ந்த.

orthochromat'ic, *a.* நிழற்படத்தில் வண்ணங்களுக்கு சரியான செறிவுகொடுக்கிற.

orth'oclase, *n.* படிகங்களில் செங்கோணங்களில் இரட்டைப் பிளவுகளுடைய களிக்கற் கூறு.

orth'odox, *a.* ஏற்புடைச்சமயம் சார்ந்த, சமயமாறுபாடற்ற; சமயத் தனிநிலையுற்ற, புறச்சமயம் சாராத; ஏற்றுக்கொள்ளப்பட்ட; மரபு வழாத; நடப்பாட்சிக் கோட்பாட்டில் உறுதியான.

orth'odoxy, *n.* ஏற்புடைச் சமய உறுதி; மரபுக்கோட்பாடு; நடப்பாட்சி மரபு.

ortho'epy, *n.* சரியான உச்சரிப்பு இயல்.

orthogen'esis, *n.* வேறுபாடுகள் பெரிதும் திட்ட ஒழுங்கமைப்புடையவை என்று கருதும் படிவமுறை வளர்ச்சி வாதம்.

orthog'nathous, *a.* செங்குத்தான தாடைகளையுடைய.

orthog'onal, *a.* செங்கோணங்களாலான, செங்கோணங்கள் கொண்ட.

orthograph'ic, orthograph'ical, *a.* எழுத்துக்கூட்டு முறைசார்ந்த.

orthog'raphy, *n.* எழுத்திலக்கணம்; எழுத்துக்கூட்டுமுறை; நிலப்படங்களில் உயர்ச்சியூட்டும் தொலைத்தோற்ற முறை.

orth'opaedy, *n.* அங்கக்கோணல் சார்ந்த அறுவை மருத்துவம்.

orthop'terous, *a.* நேரான குறுகிய முன் சிறகுகள் கொண்ட வண்டுவகை சார்ந்த.

orthop'tic, *n.* சரியாக இலக்குநோக்க உதவும் ஒளியூடுருவாத துளையிட்ட மூக்குக்கண்ணாடி; *a.* துப்பாக்கி சுடுவதில் நேரான நோக்குடைய, சரியான பார்வை சார்ந்த.

orth'otone, *a.* சொல் வகையில் தனக்கெனத் தனிப்பட்ட ஒலி அழுத்தமுடைய.

ort'olan, *n.* நறுஞ்சுவை உணவுக்குரிய தோட்டப்பறவை வகை.

orts, *n. pl.* (பே-வ.) மிச்சில், உண்ட எச்சமிச்சங்கள்.

o'ryx, *n.* பெரிய நேரான கொம்புகளுடைய ஆப்பிரிக்க மான் வகை.

os'can, *n.* தென் இத்தாலியிலுள்ள பண்டைய இத்தாலியப் பழங்குடி மக்களுள் ஒருவர்; தென் இத்தாலியிலுள்ள பண்டைப் பழங்குடியினத்தவருக்குரிய இலத்தீன் மொழியின் வகையைச் சார்ந்த மொழி; *a.* தென் இத்தாலியிலுள்ள பண்டைய இத்தாலியப் பழங்குடி மக்களின் இலத்தீன் மொழி வகையைச் சார்ந்த.

os'cillate, *v.* ஊசலாடு; இருமுனைகளுக்கிடையே இங்குமங்கும் அசைவுறு; முன்னும் பின்னுமாக ஆடு; கருத்து செயல்நிலை முதலியவற்றுள் இருதிறக் கோடிகளுக்கிடையே தயங்கி ஊசலாடு; (மின்.) மின் அலைகள் வகையில் மாறி மாறிப் பாய்; கம்பியில்லாத் தந்தியின் அலைவாங்கி வகையில் தவறான கையாளுதலினால் மின்காந்த அலைகளை வெளிவிடு.

oscita'tion, *n.* கொட்டாவி விடுதல்; கவனமின்மை; புறக்கணிப்பு.

os'cular, *a.* வாய்க்குரிய; முத்தத்துக்குரிய; (கண.) பரப்பு அல்லது வளைவு வகையில் மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட புள்ளிகளில் பொருந்துகிற.

os'culate, *v.* முத்தமிடு; (தாவ., வில.) இடைப்பட்ட இனங்களின் வழியால் தொடர்புகொள்; மற்றவற்றோடு அல்லது மற்றொன்றோடு பொதுப் பண்புகள் அல்லது தன்மைகள் கொண்டிரு; (கண.) வளைவு அல்லது பரப்பு வகையில் மூன்று அல்லது மூன்றுக்கு மேற்பட்ட நிலைகளிற் பொருந்து.

o'sier, *n.* முடைவதற்குரிய வரிச்சல் முளே, கூடை முடையப் பயன்படும் பிரம்பு வகை.

Osman'li, *n.*, *a.*=Ottoman [1].

os'mium, *n.* வெண்மக் குழுவினைச் சார்ந்த எடையில் எல்லாப் பொருள்களையும் விஞ்சிய உலோகவகை.

os'mose, osmos'is, *n.* (இய.) ஊடுகலப்பு, துளைகள் உள்ள இடைத்தடுப்புக்கள் வழியாகத் திரவங்கள் பரவித் தம்முட் கலக்குந் தன்மை.

os'mund, *n.* பூக்குஞ் சூரல் வகை.

os'prey, *n.* மீன் கொத்தித்தின்னுங் கழுகு போன்ற பெரிய கடற்பறவை வகை; தொப்பிமேல் பஞ்சு போன்ற மெல்லிறகு.

oss'eous, *a.* எலும்பாலான; எலும்பு உட்கொண்ட; எலும்புக் கூடுடைய; எலும்பாகிவிட்ட; புதைபடிவ எலும்புகள் நிறைந்த.

oss'icle, *n.* (உள்.) சிறு எலும்பு, விலங்கு உடலமைப்பில் எலும்பு போன்ற சிறுபகுதி.

oss'ifrage, *n.*=osprey.

oss'ify, *v.* எலும்பாக மாறு; எலும்பாக மாற்று; கடினமாகு; கடினமாக்கு; கெட்டிப்படு; வாட்டு; வளர்ச்சியறச் செய்.

oss'uary, *n.* என்புக்கலம், இறந்தவர்களின் எலும்புகள் வைக்கும் கலம்; பழைய எலும்புகள் காணப்படும் குகை; எலும்புகள் அடுக்கி வைக்கப்படும் வீடு அல்லது நிலவறை.

osteit'is, *n.* எலும்பழற்சி.

osten'sible, *a.* பகட்டுவெளிப்படையான, வெளிவேடமான, உண்மையை மறைத்துக்காட்டுவதற்கான, காட்சிக்குரிய.

osten'sory, *n.* திருமேனிக்கலம், நற்கருணை வினையால் தெய்வத்துக்கு நேர்ந்துவிட்ட அப்பத்தைப் பொதுமக்களுக்குக் காட்டுவதற்கான பொன் அல்லது வெள்ளியாலான திறந்த கொள்கலம்.

ostenta'tion, *n.* பகட்டாரவாரக்காட்சி; ஆரவாரப்பகட்டு; பணப்பகட்டு; இன்பப்பொருட்பகட்டு; பிறரின் கவனத்தைக் கவருவதற்கான முயற்சி.

osteogen'esis, *n.* எலும்பு உருவாதல்.

osteog'raphy, *n.* எலும்புகளைப் பற்றிய நூல்மரபு விளக்கம்.

osteol'ogy, *n.* எலும்புகளைப் பற்றி ஆயும் உள்ளுறுப்பியல்; விலங்கின் எலும்புக்கட்டுமான அமைப்பு.

osteomala'cia, *n.* என்புமென்பாடு, மண்ணியல் உப்பு நீக்கத்தினுல் எலும்பு மென்மையாகுதல்.

osteomyelit'is, *n.* நிணவெலும்பு வீக்கம்.

os'teopath, *n.* வன்மப்பிடி மருத்துவர், தசையைப்பிடித்து விடுதலால் நோய் நீக்கும் மருத்துவர்.

osteop'athy, *n.* வன்மப்பிடிமுறை, தசைபிடித்து விடுவதால் குணப்படுத்தும் மருத்துவ முறை.

os'tiary, *n.* மாதா கோயில் வாயிலோன்.

os'tler, *n.* தங்குமனைகளிலுள்ள குதிரைக்காரன், குதிரை இலாயத்தான்.

os'tracism, *n.* நாடுகடத்தல்; தள்ளிவைப்பு; சமுதாயத்திலிருந்து ஒதுக்கி வைத்தல்.

os'tracize, *v.* நாடுகடத்து; விலக்கிவை; சமுதாயத்திலிருந்து ஒதுக்கிவை.

os'trich, *n.* தீக்கோழி; (தொ.) ostrich belief, ostrich policy, தன் கண்ணைமூடினுல் உலகம் இருண்டுவிட்டதென்று கருதும் மயக்கம்.

os'trich-farm, *n.* அழகிய இறகுகளுக்காகத் தீக்கோழி வளர்க்கும் பண்ணை.

os'trich-plume, *n.* தீக்கோழி இறகு.

os'trich-tip, *n.* தீக்கோழி இறகுமுனை.

o'ther, *n.*, *pron.* மற்றது; ஏனையது; மற்றவர்; *a.* ஒன்றுவிட்டொன்ருன; இரண்டாவதான; இரண்டில் ஒன்ருன; மற்ற, ஏனைய; இன்னும் உள்ள; வேருன; எஞ்சிய; *adv.* வேறு வகையாக; (தொ.) happens every other day, ஒன்றுவிட்டொன்ருன நாள்களில் நிகழ்கிறது; எப்போதோ சில சமயங்களில்; in other words, அதாவது; none other than, தவிர வேறு யாருமில்லை; on the other hand, நேர் மாருக, அவ்வாறின்றி; other things being equal, நிலைமைகள் மற்றெல்லா வகையிலும் மாருமலிருந்தால்; someone or other, எவரோ ஒருவர்; some time or other, ஏதோ ஒரு சமயத்தில்; the other day, முன்ஞெருநாள், அன்ஞெருநாள்; the other world, வருங்கால வாழ்வு; மேலுலகம்.

o'thergates, *adv.* வேறு வகையில்.

o'therguess, *a.* முற்றிலும் வேறு வகையான.

o'therwhence, *adv.* வேறு எங்கிருந்தேனும்.

o'therwhere, oth'erwheres, *adv.* (செய்.) மற்ருேரிடத்தில்.

o'therwhile, o'therwhiles, *adv.* மற்ற சமயங்களில், சில சமயங்களில்.

o'therwise, *adv.* வேறு வகையாக, இன்ஞெரு வழியில்; இல்லையெனின்; மற்றப்படி; நிலைமைகள் வேருனவையாயிருந்தால்; அல்லது; வேறு கூறுகளில்; வேறு நிலையில்; (தொ.) merits or otherwise, நற்கூறுகளோ குறைபாடுகளோ.

o'therwise-minded, *a.* உலகத்தார் உண்டென்பது இல்லையென்கிற, நடப்பிலுள்ள கருத்துக்களுக்கு மாறுபாடாயுள்ள.

o'ther-worldly, *a.* மறு உலகை நினைத்துக்கொண்டிருக்கிற, மறு உலக மனப்பான்மையுடைய.

ot'ic, *a.* செவிக்குரிய, காது சார்ந்த.

o'tiose, otiose', *a.* ஓய்வான; வேலையற்ற, சோம்பலான; வீணுன, பயனற்ற; மிகையான.

*o'tium cum dignitat'e*, (ல.) *n.* வீறமைதி வாய்ந்த இன்ப வாழ்வுநிலை.

otol'ogy, *n.* செவியமைப்பு நூல்; செவிநோய் நூல்.

ot'oscope, *n.* உட்செவி ஆய்வுக்கருவி; செவிப்புல வழியான உடலாய்வுக்கருவி, நாடியறி கருவி.

*otta'va ri'ma*, (இத்.) *n.* எட்டு வரிகள்கொண்ட செய்யுள் வகை.

ott'er, *n.* நீர்நாய்; நீர்நாயின் மென்மயிர்; மீன் பிடிப்பதற்கான கருவி கலங்கள்; சுரங்க வெடிகளை அகற்றுவதற்கான நீர்மூழ்கிக்கப்பல் வடிவமைந்த அமைவு.

ott'er-dog, ott'er-hound, *n.* நீர்நாய் வேட்டைக்குப் பயன்படும் நாய்வகை.

ott'er-spear, *n.* நீர்நாய் வேட்டையில் பயன்படுத்தப்படும் ஈட்டி வகை.

ott'o, otto of roses, *n.* அத்தர், ரோசா இதழ்களிலிருந்து பெறப்படும் ஆவியாய்ப் போகும் நறுமணத் தைலம்.

Ott'oman [1], *n.* துருக்கியர்; *a.* துருக்கியில் முதலாவது ஆத்மன் (Othman I) அரச மரபு சார்ந்த; துருக்கியர்களில் முதலாவது ஆத்மன் கிளைவழி சார்ந்த; முதலாவது ஆத்மன் வழி வந்தவர்களால் ஆளப்பட்ட பேரரசு சார்ந்த; துருக்கிப் பேரரசுத் தொடர்பான; துருக்கிய.

ott'oman [2], *n.* சாய்மானம் அல்லது கைகள் இல்லாத மெத்தையிட்டுத் தைத்த இருக்கை; மெத்தையிட்டுத் தைத்த மேற்பாகமுடைய பெட்டி.

ou'bit, *n.* மயிரடர்ந்த கம்பளிப்புழு வகை.

oubliette', *n.* பொறிவாயில் வழியாகமட்டும் உட்புகவல்ல மறைவான நிலவறைச்சிறை.

ouch, *n.* மணி பதித்த ஆடையூக்கு.

ought [1], *v.* வேண்டும், கட்டாயமாக வேண்டியதாகும்.

ought [2], *n.*=aught.

oui'ja, oui'ja-board, *n.* அட்சரப்பலகை, குறி சொல்லும் எழுத்துப் பலகை.

ounce [1], *n.* (சு-வ. oz.) வீசம் கல்லெடை; மிகச்சிறிய அளவு.

**ounce**[3], *n.* காட்டுப்பூனை வகை; மலைச்சிறுத்தை; நடு ஆசியாவில் காணப்படும் புலிவகை.

**our,** *a.* எங்களுடைய; நம்முடைய; நமக்குரிய; எங்களுக்குரிய.

**ours,** *pron.* நம்முடையது; எங்களுடையது; நம்முடையவை; எம்முடையவை.

**ourself',** *pron. sing.* ஒருவர் வகையில் நாமே; நம்மையே.

**ourselves',** *pron. pl.* நாமே; நாங்களே; நம்மையே; எங்களையே.

**ou'sel,** *n.*=ouzel.

**oust,** *v.* நீக்கு, வெளியேற்று, தள்ளு, அகற்று; துரத்து; வெளியேற்றி இடத்தைக் கைப்பற்றிக்கொள்.

**ous'ter,** *n.* (சட்.) வெளியேற்றம்; உடைமை கைப்பற்றல், பறித்தல்.

**out,** *n.* வெளியேயிருப்பவர்; வெளியேயிருப்பது; புற நீட்டம், புறத்தே நீட்டிக்கொண்டிருப்பது; புற வளைவு; அச்சுக்கோப்பதில் விடுபட்டுப்போனது; பொழுதுபோக்குப் பயணம்; வெளியே போகும் வழி; *a.* புறம்பான, புற எல்லையடுத்துள்ள, தொலைவிலிருக்கிற; ஆட்ட வகையில் வீட்டுக்கு வெளியே ஆடப்படுகிற; அயல் நாடுகளில் ஆடப்படுகிற; வெளி நோக்கிய; மரப்பந்தாட்டக்காரர் வகையில் பந்தடிக்காத; வழக்கமானதைவிடப் பெரிதான; *v.* (பே-வ.) வலுக்கட்டாயமாக வெளியேற்று; குத்துச்சண்டை வகையில் தோல்வியுறச் செய்; வெளியேகு; வெளியே வா; கழலு; வெளிக்கொணர்; பேசு; *adv.* புறத்தே, வெளியே, உள்ளேயிராமல், வெளிப்புறமாக, பிறநாடுகளில்; புற நோக்கி; உலக நடையினின்றும் விலகி; மற்றவர்களிடமிருந்து அப்பாலாக; மொத்தத்திலிருந்து பிரிந்து; எல்லைகளுக்கப்பால், வழக்கமான இடம்விட்டு; முதல் நிலையிலிருந்து விலகி; தொலைவிடத்தே, தொலைவிடம் நோக்கி; கடல் நோக்கி; தாயகத்தை விட்டு நீங்கி, கட்டிடத்தைவிட்டு விலகி; திறந்த வெளியில், திறந்த வெளிக்குள்; ஒதுங்கிய அல்லது ஒதுக்கப்பட்ட நிலையில்; பதவியிலிராமல்; வழக்காற்றிலிராமல்; ஆட்டத்திலிராமல், பந்தடிப்பவராயிராமல், விலக்கப்பட்டு; போட்டியினின்றும் சில காலம் விலகி; வெற்றியடைந்த நிலையில்; குறியைவிட்டு விலகி; பிழைபட்டு; சரியான வடிவத்திலிராமல்; நல்ல நிலைமையிலிராமல்; மலைப்புற்று; ஒத்துப்போகாமல்; பங்கிடப்பட்டு; மற்றவர்கள் வசத்தில், பொதுமக்கள் வசத்தில்; கடனாக; முடிவு நோக்கி, முடிவில்; களைப்புற்ற நிலையில்; அவிந்துபோன நிலையில்; முழுவதும், தீர; இழப்புக்குட்பட்டு; களத்தில்; ஒன்றைத் தேடிக்கொண்டு, வெளிப்படையாக ஒன்றைக் குறிக்கோளாகக் கொண்டு; கலகம் விளைத்து, வேலை நிறுத்தத்திலீடுபட்டு; பாதுகாப்பற்ற நிலையில்; மறைந்திராமல், இருட்டடிப்புக்குட்படாமல்; பொது மக்களுக்குமுன்; வீட்டுப்பணியில்; விரிந்து; மலர்ச்சியுற்று; உரக்க; வலுக்கட்டாயமாக; ஒளிவு மறைவின்றி; *prep.* விட்டுவிலகி, இருந்து; வெளிப்புறநோக்கி, திறந்தவெளி நெடுகலாக; *int.* அந்தோ! போ! ஒழிந்து போ! ஆட்டமிழந்தாய்! ஆட்டமிழந்தார்! வெட்கம்! (தொ.) all out, மரப்பந்தாட்ட வகையில் குழு முழுவதன் ஆட்ட வட்டம் முடிந்துவிட்டது; எல்லா முயற்சியும் செய்து பார்த்தாகிவிட்டது; call out, அறைகூவிச் சண்டைக்கு அழை; வேலைக்குக் கூப்பிடு; வெளிக்கொணர்; செயல் முறைக்குக் கொண்டுவா; catch out, மரப்பந்தாட்டத்தில் அடிக்கப்பட்ட பந்தைக் கீழேவிழுமுன் பிடித்து அதை அடித்தவரை ஆட்டமிழக்கச் செய்; தவறு செய்யப்படுகையில் கண்டுபிடி; knock out, அடித்துத்தள்ளு; குத்துச்சண்டையில் குறிப்பிட்ட காலத்துக்குள் மீண்டும் எழாதபடி குத்திவீழ்த்து; வெல்; மோப்பம் தொடர்பற்றுப்போ; miners are out, சுரங்கத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்; murder will out, கொலையை மூடி மறைத்துவைக்க முடியாது; உண்மை வெளியாகியே தீரும்; not out, மரப்பந்தாட்டத்தில் எதிர்க்கட்சியினரின் கேள்விக்கு ஆட்ட நடுவர் தீர்ப்புக்கூறும் வகையில் பந்தடிப்பவர் ஆட்டமிழக்கவில்லை; out and about, நோய் நலிவுற்றவர் வகையில் வெளியே செல்லக்கூடிய நிலையிலுள்ள; out and away, மேம்பட்ட நிலையில், போட்டியைக் கடந்தநிலையில்; out and out, முழுக்க முழுக்க, முற்றிலும்; out at elbows, மேற்சட்டை வகையில் நைந்துபோன; ஆள் வகையில் ஏழ்மையான; out for, தேடிப் புறப்பட்ட நிலையில், குறிக்கொண்டு; மரப்பந்தாட்டத்தில் பந்தடிப்பவர் வகையில் ஓட்ட எண்ணிக்கை பெற்று ஆட்டமிழந்து; out of character, தகாத, ஒழுக்க வரம்பற்ற; out of course, நெறிவிலகி, ஒழுங்குமீறி, முறை தவறி; out of date, வழக்காற்ற, பழமைப்பட்ட; out of doors, திறந்தவெளியில், திறந்த வெளிக்குள்; out of drawing, பிழையாக வரையப்பட்டு; out of fashion, நடப்பு நயத்துக்கு மாறான; out of favour, வெறுக்கப்பட்டு; out of hand, அக்கணமே; கட்டுக்கடங்காமல்; out of it, பங்கு கொள்வதனின்றும் நீக்கப்பட்டு, வாய்ப்பின்றி; புகலற்று; தடுமாறி, பிழைபட்டு; தவறான செய்தி தெரிவிக்கப்பட்டு; வழுவான; out of joint, சரியாகப் பொருத்தப்பட்டிராமல், இசைவு கெட்டு, கழன்று; out of keeping, ஒத்திசைவாயிராமல்; out of one's mind, பைத்தியம் பிடித்து; out of one's own head, தன் கருத்தாகவே, புதுப்புனைவாக; out of place, உரிய இடத்திலிராத, பொருத்தமற்ற; பருவத்திற்கு ஏலாத; out of pocket, பணமில்லாமல், வரவைக் காட்டிலும் அதிகமாகச் செலவிட்டு; out of print, பதிப்புப்படிகள் இல்லை; out of question, ஐயத்துக்கிடமின்றி; out of sight, பார்க்க முடியாத நிலையில், மறைந்து; (பே-வ.) ஒப்பிட்டுப்பார்க்க முடியாது; out of sorts, உடல்நலமின்றி, மன எழுச்சியற்று, சிடுசிடுப்பாக; (அச்சு.) ஓரின அச்சுருப்படிவங்கள் போதாத நிலையில்; out of temper, சிடுசிடுப்பாக, எரிச்சலூட்டப் பெற்று; out of the common, இயல்முரணிய நிலையில், வழக்கத்திற்கு மாறாக; out of the way, தடையேயிராமல்; ஒதுக்கமாக; out of time, உரிய காலத்திற்கு முந்தி; காலங் கடந்து; இசைவகையில் தாளந் தப்பி; out of tune, இசை வகையில் குரல் எடுப்பு சரிவர அமையாமல்; out of use, நெடுநாள் பயன்படுத்தப்படாத; out of wedlock, திருமண மூலமாகவல்லாமல்; out size, இயல்பாயுள்ளதற்கு மேற்பட்ட அளவு; out to do, ஒன்றைச் செய்யும் முனைப்புடன்; out to out, வெளிப்புறமாக அளவெடுக்கும் வகையில் ஒரு கோடியிலிருந்து மறு கோடிவரையில்; மொத்தத்தில்; out upon, ஒழிக! வெட்கம், வெட்கம்! out with, அவரோடு நட்புறவாக இல்லை; மறை செய்தியை வெளியிட்டுரை; out with him, அவரை வெளியேற்று; put oneself out of the way, உதவி செய்வதற்காகத் தன்னைத் தொந்தரவுக்குள்ளாக்கிக்கொள்; put out of sight, பார்வையிலிருந்து அகற்று; times out of number, எண்ணற்ற தடவை; work out, கணக்கிடு; முயன்று செய்துமுடி; தீர்வுகாண், முடிவுறு.

**out-act',** *v.* செயலில் மேம்படு.

**out-and-out'er,** *n.* மட்டுமீறியவர்; மட்டுமீறிய வகையைச் சேர்ந்த பொருள்; முற்றார்வமுடைய கட்சிக்காரர்; பெரும் புளுகு.

**out'back,** *n.* ஆஸ்திரேலிய வழக்கில் மிகு தொலைவிலுள்ள குடியேற்ற நாடுகள்; *a.* மிகு தொலைவிலுள்ள குடியேற்ற நாடுகள் சார்ந்த.

**outbal'ance,** *v.* சோர்வுறச் செய், விஞ்சு, மேம்படு; கனத்திறல் அழுத்து.

**outbid',** *v.* ஏலத்தில் கூறிய விலைக்குமேல் விலைவைத்துக் கேள்; இன்னும் மிகுதி செய்வதாகச் சொல்; தாண்டிச் செயலாற்றிவிடு.

**out'board,** *a.* கப்பலுக்கு அல்லது படகுக்கு வெளிப்புறத்திலுள்ள; படகின் புறத்தே பொறிகள் அமைக்கப் பெற்றுள்ள; *adv.* கப்பலுக்கு வெளியே; வெளிப்புற நோக்கி.

**out-brag',** *v.* தற்புகழ்ச்சி செய்வதில் விஞ்சு, வீம்பில் மேம்படு.

**outbrave',** *v.* எதிர்த்து நில்.

**out'break**[1], *n.* திடீர் வெடிப்பு; எதிர்பாராக் கிளர்ச்சி; திடீர் எழுச்சி; உணர்ச்சிகளின் வெறி எழுச்சி; போரின் திடீர்த் தொடக்கம்; நோயின் திடீர் வெறியாட்டம்.

**outbreak'** [2], *v.* வெடித்து வெளிப்படு ; திடீரெனத் தோன்று; எதிர்பாராது எழுச்சிகொள்.

**out'building**, *n.* புற வீடு, புறக்கட்டுச் சிற்றில்.

**out'burst** [1], *n.* திடீர் வெளிப்பாடு ; திடீர் வெடிப்பு ; திடீர் எழுச்சி ; எரிமலை வெடிப்பு ; தெரிபாறை.

**outburst'** [2], *v.* வெடித்து வெளிப்படு.

**out'cast**, *n.* நாடு கடத்தப்பட்டவர்; குடியொதுக்கப்பட்டவர்; தள்ளி வைக்கப்பட்டவர்; போக்கிரி; இழிசினர் ; *a.* துரத்தப் பட்ட, தள்ளுண்ட; வீடற்ற; நாதியற்ற.

**out'caste** [1], *n.* சாதி நீக்கம் செய்யப்பட்டவர், இழிசினர், கீழோர் ; *a.* சாதி நீக்கம் செய்யப்பட்ட.

**outcaste'** [2], *v.* சாதி நீக்கம்செய்.

**outclass'**, *v.* மற்றவரைவிட மேல்வகுப்புக்குரியவராயிரு.

**out'-clearing**, *n.* தீர்வாக்கம், பணக்கட்டளைத்தாள்களை யும் பண முறிகளையும் கணக்குத் தீர்விடத்துக்கு அனுப்புதல்.

**out'college**, *a.* கல்லூரியில் தங்கியிராத ; கல்லூரியைச் சேர்ந்திராத.

**out'come**, *n.* விளைவு, பலன்.

**out'crop** [1], *n.* பாறை வெளித்தோன்றுதல், தெரிபாறை ; கிளர்ச்சி, எதிர்ப்பு.

**outcrop'** [2], *v.* வெளித்தோன்று.

**out'cry** [1], *n.* கூக்குரல், கூப்பாடு ; துயர்க்குரல் ; கண்டனக் குரல்; குழம்பிய ஒலி ; பொதுமுறை ஏலம்.

**outcry'** [2], *v.* விஞ்சிக் குரலெழுப்பு, மேம்பட்டுக் கூக்குரலிடு.

**outdance'**, *v.* நடனமாடுவதில் விஞ்சு.

**outdare'**, *v.* துணிவில் விஞ்சு, எதிர்த்து நில்.

**outdis'tance**, *v.* மிக முந்திச்செல் ; மிகப் பின்னால் தங்கி விடச்செய்.

**outdo'**, *v.* மேம்படு, விஞ்சு, வெல்.

**out'door**, *a.* திறந்தவெளியிற் செய்யப்படுகிற ; மனைப் புறத்தே இருக்கிற ; வெளியிடத்திற் பயன்படுத்துகிற ; (தொ.) outdoor agitation, சட்டமன்றத்திற்கு வெளியே செய்யப்படுங் கிளர்ச்சி; outdoor relief, மனைப்புற உதவி, வேலை விடுதியில் தங்கியிராதவருக்குச் செய்யப்படும் உதவி.

**outdoors'**, *adv.* திறந்த வெளியில்.

**out'er**, *n.* துப்பாக்கி இலக்கினைச்சுற்றி மிகத் தொலைவி லுள்ள வட்டம் ; இவ்வட்டத்தைத் தாக்கும் வேட்டு எறி ; *a.* மையத்திலிருந்து விலகியுள்ள ; வெளிப்புறத்ததான ; புறம்பான ; வெளிப்புறத்துக்குரிய ; புறநிலையான, புறப் பொருண்மை சார்ந்த, அகவியலல்லாத ; (தொ.) the outer man, ஒருவரது புறத்தோற்றம்; உடைத்தோற்றம்; the outer world, பழகும் சூழல் வட்டாரத்துக்குப் புறம்பானவர்கள்.

**out'ermost**, *a.* மிகத் தொலைவிலுள்ள, கடைப்புற எல்லை யான.

**outface'**, *v.* துணிவுடன் எதிர்த்துநில் ; முகத்திலடி ; கடு முகங் காட்டு.

**out'fall**, *n.* ஆறு முதலியவற்றின் வடிகால்.

**out'field**, *n.* பண்ணைக்குப் புறம்பாகவுள்ள நிலம்; எண்ணம் முதலியவற்றிற்கு அப்பாற்பட்ட துறை ; மரப்பந்தாட்ட வகையில் இலக்குக் கட்டைகளுக்குத் தொலைவிலுள்ள பகுதி.

**outfight'**, *v.* போரிட்டு வெல், போரில் மேம்படு.

**out'fighting**, *n.* கைகளத்துக்கு அப்பால் விலகி இடும் குத்துச்சண்டை.

**out'fit**, *n.* கருவிகலத் தொகுதி ; குறிப்பிட்ட நோக்கத்துக் கான துணைக்கலக்கோப்பு ; (பே-வ.) ஒன்றுபட்ட குழு, செயற்கணம் ; *v.* கருவிகலக் கோப்பூட்டு, துணைக்கலத் தொகுதி இணைத்தொருங்குவி.

**out'fitter**, *v.* கருவிகலத் தொகுதி முன்னேற்பாட்டாளர், உடை அணிமணிக்கோப்புப் படைப்பாளர்.

**outflank'**, *v.* (படை.) பக்கத்தில் தாண்டிச்செல் ; பக்கவாட் டில் தாக்கு ; ஏமாற்றிச் சிக்கவை.

**out'flow** [1], *n.* வழிந்தோடுதல் ; நீர்-காற்று-மின் வகையில் வெளிநோக்கிய ஓட்டம் ; வடிகால் ; வழிந்தோடும் அளவு.

**outflow'** [2], *v.* வழிந்தோடு.

**outfly'**, *v.* தாண்டி வேகமாகப் பற, வேகமாகப் பறந்து தப்பித்துக்கொள்.

**outgen'eral**, *v.* விஞ்சிய போர்முறைத் தலைமைத்திறத்தினால் வெல்.

**out'go** [1], *n.* வெளிச் செல்வது ; செலவு.

**outgo'** [2], *v.* தாண்டிச்செல் ; விஞ்சு ; மேம்படு ; கடந்து வாழ்ந்திரு ; ஊடு சென்று எஞ்சியிரு ; வெளிச்செல் ; முடி வுக்கு வா.

**out'going**, *n.* வெளியே போகுஞ் செயல் ; வெளிச்செல்லும் நிலை ; மிகக் கடைசியான எல்லை ; செலவு ; *a.* புறப்பட்டுச் செல்கிற.

**out'goings**, *n.* செலவு, முதலீடு.

**outgone'**, *v.* outgo [2] என்பதன் முடிவெச்சம்.

**outgrow'**, *v.* தாண்டி வேகமாக வளர் ; விஞ்சி உயரமாகு ; ஆடைகளின் அளவெல்லைமீறி வளர்ந்துவிடு ; வளர்ச்சியால் பண்புகளைக் கடந்துசெல் ; இளமைப் பழக்கங்களை நாளடை வில் விட்டொழி.

**out'growth**, *n.* கிளைப்பு ; புற வளர்ச்சி ; இயல்பான விளைவு.

**out-hec'tor**, *a.* எதிர்த்து மடக்குகிற ; *v.* மடக்கு, எதிர்த்து அடக்கு.

**out-he'rod**, *v.* வன்செயலில் விஞ்சு ; (தொ.) out-herod Herod, வன்செயலில் அதற்குப் பேர்போன ஹிராட் என்ற கொடியவனையும் விஞ்சிவிடு.

**out'house**, *n.* புறவீடு, புறக்கட்டுச் சிற்றில்.

**out'ing**, *n.* இன்பப் பயணம், வீட்டைவிட்டு வெளிச்சென்று கழிக்கப்படும் விடுமுறைப் பருவம்.

**out-jock'ey**, *v.* வளைத்து எட்டிப்பிடி; ஏய்த்துக் காரியமாற்றி விடு, ஏமாற்றி வெற்றிகாண் ; மட்டுமீறிச் செயலாற்றித் தோல்வியுறச்செய்.

**outland'ish**, *a.* அயல்நாட்டுத் தோற்றமுடைய ; வெளி நாட்டு உச்சரிப்புள்ள ; புதுமை வாய்ந்த, இயல்முரணிய ; அருவருப்பான, வடிவமைதியற்ற.

**outlast'**, *v.* குறிப்பிட்ட கால எல்லைக்கப்பாலும் நீடித்திரு ; தாண்டி நெடுங்காலம் நீடித்திரு.

**out'law**, *n.* சட்டத்தின் காப்பிழந்தவர் ; நாடு கடத்தப்பட்ட வர் ; *v.* தடைசெய், விலக்காணையிடு ; சட்டக்காப்பின்மை அறிவி.

**out'lawry**, *n.* சட்டக்காப்பின்மைக்கு ஆளாக்குதல்; சட்டச் காப்பிழந்தவர் நிலை.

**out'lay** [1], *n.* செலவிட்டதொகை ; செலவுகள் ; முதலீடு.

**outlay'** [2], *v.* பார்க்கும்படி காட்டிவை ; செலவிடு ; முட்டை யிடுவதில் மேம்படு.

**out'let**, *n.* வெளிச்செல்லும் வழி ; வழிந்தோடும் வழி, வடி கால் ; புறமதகு.

**out'lier**, *n.* திறந்தவெளியில் படுத்திருப்பவர் ; விலகித் தனி யாகத் தங்கியிருப்பவர் ; வெளியார் ; பிரிந்து புறத்தே கிடக்கும் பொருள் ; (மண்.) பழைய பாறைகளால் சூழப் பட்ட தனியான பாறைத்துணுக்கு.

**out'line**, *n.* உருவரை, எல்லைக்கோடு ; திட்டவரை ; குத்தா யக் குறிப்பு; உருவரைக் குறிப்பு ; மட்டநிலைக்கோடு ; உரு மாதிரி ; திருந்தா உரு ; சுருக்க வாய்மொழி விவரம் ; சுருக் கம் ; *v.* அச்சுக்கட்டு ; எல்லைக்கோடு வரை ; உருவரையிடு ; முக்கியக் கோடுகளைமட்டும் காட்டி உருவெழுது ; திட்டக் குறிப்பிடு, முக்கியக்கூறுகளை மட்டும் விவரித்துக்கூறு ; ஒப்பனை முதலிய செய்கையில் எல்லைகுறி; (தொ.) in outline, பட வகையில் முக்கிய கோடுகளைக்கொண்டு மட்டும் வரையப் பட்ட ; சுருக்கமான ; பொதுவான.

**out'lines**, *n. pl.* முக்கியகூறுகள், பொதுக்கோட்பாடுகள்.

**outlive'**, *v.* கடந்து வாழ்ந்திரு ; எஞ்சியிரு ; குறிப்பிட்ட காலப்பகுதி முடிய வாழ்ந்திரு ; தன் எல்லைதாண்டி வாழ்ந்திரு ; மறந்துவிடப்படும் அளவுக்கு வாழ்ந்திரு.

**out'look**, *n.* விழிப்புடைய காவல் ; இருந்து காவல்புரிவதற்கான இடம் ; பரந்த காட்சி ; எதிர்கால வாய்ப்பு வளம் ; உளங்கொள் பாங்கு, மனநிலைச் சார்பு.

**out'lying**, *a.* மைய இடத்திலிருந்து மிகுதொலை விலகியிருக்கிற, தொலை ஓதுக்கமான.

**outmanoeu'vre**, *v.* சூழ்ச்சித்திற மேம்பாட்டால் வெல்; திட்ட மேம்பாட்டினால் தோல்வியுறுவி.

**outmarch'**, *v.* விஞ்சி முன்னேறு ; முன்னேறுவதனால் பின் தங்கச் செய்.

**outmatch'**, *v.* மேம்படு, போட்டியில் விஞ்சு.

**outmea'sure**, *v.* அளவுமிக்கதாயிரு, அளவில் விஞ்சியிரு.

**outmod'ed**, *a.* நாண்மரபுக்கு மாறான, பழமைப்பட்ட.

**out'most**, *a.*=outermost.

**out'ness**, *n.* புறநிலை, பொருண்மை, பருப்பொருளியல்.

**outnum'ber**, *v.* எண்ணிக்கையில் விஞ்சிவிடு.

**out-of-door'**, *a.* திறந்தவெளியிலுள்ள, திறந்தவெளிக்கான ; மாமன்றத்துக்கு வெளியேயுள்ள.

**out of doors**, *adv.* மாமன்றத்துக்கு வெளியே ; திறந்த வெளியில்.

**outpace'**, *v.* விஞ்சி வேகமாகச் செல்.

**out'-patient**, *n.* மருத்துவமனைப் புற நோயாளி.

**out'-pensioner**, *n.* அறநிலையத்தில் தங்கவேண்டியிராத ஓய்வுச் சம்பளக்காரர்.

**out'post**, *n.* புறக்காவற்படையிருக்கை ; புறக்காவல் அரண் ; காவற்படை ; தொலைவுக் குடியிருப்பு.

**out'pour** [1], *n.* கொட்டுகை, பொழிவு ; உணர்ச்சி வேகமிக்க பேச்சு ; சொரிவு, பொழிவு ; இலக்கிய வடிவான உணர்ச்சி வெளிப்பாடு.

**outpour'** [2], *v.* ஊற்று, கொட்டு, பொழி ; நீர்க்காலாக வழிந்தோடு.

**out'put**, *n.* செய்பொருள் ஆக்க அளவு; விளைவளவு, வேலையளவு.

**out'rage**, *n.* அட்டூழியம், அழிசெயல், மானக்கொலை, அவமதிக்கும் பழிச்செயல் ; கற்பழிப்பு ; *v.* மானம்பறி, கொடும்பழி ஆற்று ; கொடுஞ் செயலுக்குட்படுத்து; தீங்குசெய் ; அவமதி; கற்பழி ; பட்டாங்கமாகச் சட்டம்-ஒழுக்கம் முதலியன மீறு ; வேண்டுமென்றே மனம் புண்படுத்து ; திடுக்கிடச் செய்.

**outra'geous**, *a.* மட்டுமீறிய, வழக்கமீறிய ; வன்செயலான, மூர்க்கமான, கொடுமையான ; ஒழுக்கக்கேடான ; அருவருப்பான.

**outrange'**, *v.* துப்பாக்கி முதலியன வகையில் மிகு தொலைவுக்குக் குண்டு பாய்ச்சும் ஆற்றல் பெற்றிரு.

**outre**, (பிர.) *a.* வழக்கமீறிய; தகாத; கோமாளித்தனமான; பண்புமீறிய.

**out-reach'**, *v.* நீட்டு ; எட்டிப்பிடி ; எல்லைகடந்து நீண்டுகிட ; எல்லைகடந்து செல் ; ஏய்.

**out'-relief**, *n.* புறமனைத் துணையுதவி.

**outride'**, *v.* முந்தி ஏறிச்செல், அப்பாலும் இவர்ந்து செல் ; கப்பல் வகையில் புயலினூடே இடரின்றிச் செல்.

**out'rider**, *n.* வண்டிக்கு முன்னே பின்னே உடனே குதிரையேறிச் செல்லும் பணியாள் ; வாணிகத்தின்பொருட்டு வெளிநாடுகளிற் பயணம் செய்பவர்.

**out'rigged**, *a.* படகு முதலியன வகையில் பாய்கள் விரிப்பதற்குரிய முனைப்பான தூலங்களையுடைய.

**out'rigger**, *n.* தூம்புகட்டை, பாய்களை விரிப்பதற்குரிய முனைப்பான தூலம்; விலாவரிக்கட்டை, வள்ளம் கவிழாதபடி அதன் பக்கவாட்டில் பொருத்தப்பட்டுள்ள முனைப்பான அமைவு; உகைப்பு விசைக்கட்டை, படகின் உகைப்பாற்றலைப் பெருக்கும்பொருட்டு அதன் பக்கவாட்டில் கிடையாகப் பொருத்தப்பட்டுள்ள இரும்புமிண்டு ; விசைப்படகு, துடுப்பியக்குவதற்குரிய முனைப்பான மிண்டுகள் கொண்ட எளிய பந்தயப்படகு ; சாரத்தூலம் ; தள நீட்டச்சட்டம், விமானத் தளங்களைத் தாங்குவதற்கான முனைப்பான சட்டம் ; சேமக் குதிரைப்பூட்டு, சேமத் தனி மிகையான குதிரையைப் பூட்டுவதற்கான வண்டியின் குறுக்குச் சட்டத்தின் நீட்டம்; சேமப் பூட்டுக் குதிரை, வண்டியின் குறுக்குச் சட்ட நீட்டத்தில் பூட்டப்படும் குதிரை.

**outright'**, *a.* நேரடியான, உடனடியான ; தீர்க்கமான, தீர்மானமான ; முழு நிறைவான ; *adv.* அடியோடு, மொத்தமாக ; ஒரேயடியாக ; முற்றும், முழுவதும்.

**outriv'al**, *v.* போட்டியில் விஞ்சு, மேம்படு, வெல்லு.

**outrun'**, *v.* வெளியே ஓடு, கடந்துபோ, கழிவாகு ; மிகுதியாகு; ஓடித் தப்பித்துக்கொள்; எல்லைகடந்து செல்; (தொ.) outrun the constable, கடன்படு, வருவாய்க்கு மேல் செலவு செய்.

**out'runner**, *n.* உடன் துணையாள், வண்டியுடன் ஓடிவரும் பணியாள் ; சேமக்குதிரை, வண்டியின் ஏர்க்கால்களுக்குப் புறம்பாகப் பூட்டப்படுங் குதிரை; பனிக்கட்டிமீது வண்டியில் சறுக்கிச் செல்பவர்களுக்கு வழிகாட்டும் நாய்.

**out'rush** [1], *n.*. திடீர்ப் பாய்ச்சல், வேகமான வெளிப்பாய்வு.

**outrush'** [2], *v.* வேகமாகப் பாய்ந்து செல், விரைந்து வெளிப்பாய்.

**outs**, *n. pl.* ஆட்சிக்கு வெளியேயிருக்கும் கட்சியாளர் ; வரிவகைச் செலவினங்கள்; (தொ.) the ins and outs, இப்படியும் அப்படியுமான திருப்பங்கள், மூலைமுடுக்குகள்; ஒன்றன் நடைமுறை பற்றிய முழு விவரங்கள்; அலுவல் மனையில் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருப்பவர்கள்; the outs, பதவியிலிராத அரசியல் கட்சி.

**outsail'**, *v.* கடலில் முந்திச்செல் ; கப்பலில் தொலைவிடப் பயணம்செய்.

**out'sentry**, *n.* படையிருக்கையின் புறக்காவலாள்.

**out'set**, *n.* தொடக்கம், எடுத்த எடுப்பு.

**outshine'**, *v.* விஞ்சி ஒளிர் ; மேம்படு.

**outshoot'**, *v.* எய்வதில் விஞ்சு ; வேட்டுக்குறி வைப்பதில் மேம்படு ; குறியிலக்குக்கு அப்பால் வேட்டுச்செலுத்து ; துருத்திக் கொண்டிரு.

**outside'**, *n.* வெளிப்புறம் ; மேற்பக்கம் ; புறத்தோற்றம் ; புறநிலை ; புற உலகு ; பெரும்பகுதி ; புறத்தேயிருந்து பயணஞ் செய்பவர் ; *a.* புறஞ் சார்ந்த ; வெளிப் பக்கத்திலுள்ள ; வெளிப்புறத்துக்கு அருகிலுள்ள ; நிறுவனத்தைச் சேர்ந்தவராயிராத ; சூழலுக்குப் புறம்பான ; மிகைபடியான; *adv.* வெளிப்புறத்தில் ; வெளிப்புறம் நோக்கி ; உள்ளேயிராமல் ; அடைக்கப்பட்டிராமல் ; சேர்க்கப்பட்டிராமல் ; *prep.* புறம்பாக, சேர்க்கப்பட்டிராமல், எல்லைகளுக்கப்பால், உள்ளேயிராமல், வெளிப்புறத்தில், வெளிப்புற நோக்கி ; (தொ.) outside broker, பங்குமாற்றுக் களரியின் உறுப்பினரல்லாத தரகர் ; outside in, உட்புறம் வெளிப்புறமாகும்படி.

**outsid'er**, *n.* புறம்பானவர், புறத்தார் ; தொடர்பற்றவர், அயலார் ; கட்சி சேர்ந்தவராயிராதவர் ; தொழில்துறை சார்ந்தவரல்லாதவர் ; தீக்கை பெறாதவர் ; பொதுநிலையாளர் ; குழாத்தில் கலந்துறவாடத் தகுதியற்றவர் ; போட்டியில் சேர்க்கப்பட வாய்ப்பில்லாத ஆள்; போட்டியில் சேர்க்கப்பட வாய்ப்பில்லாத விலங்கு.

**outsides'**, *n. pl.* கட்டிலே மேற்புறமிருக்கும் தாள்கள்.

**out'sight**, *n.* புறநோக்கு.

**outsit'**, *v.* உரிய காலத்துக்கு அப்பாலும் அமர்ந்திரு ; மற்ற விருந்தாளிகளைவிட மிகுதிநேரம் தங்கியிரு.

**out'size**, *n.* ஆடை முதலியன வகையில் தேவைக்கு மேற்பட்ட அளவு ; *a.* தேவைக்கு மேற்பட்ட அளவினதான.

**out'skirts**, *n. pl.* புறஞ்சேரி, நகர்ப்புற எல்லை ; செய்தியின் புற எல்லை.

**out'span**, *n.* கட்டவிழ்ப்பிடம் ; கட்டவிழ்ப்பு ; கட்டவிழ்த்து இளைப்பாற விடுங்காலம் ; *v.* நுகத்தினின்றும் கட்டவிழ்.

**outspeak'**, *v.* உரக்கச் சொல்; எல்லைகடந்து பேசு; எல்லாரும் கேட்குமாறு பேசு ; துணிவாகப் பேசு ; நிமிர்ந்து பேசு.

**out-spend'**, *v.* வரம்புமீறிச் செலவு செய்.

**out'spok'en**, *a.* மனந்திறந்து பேசுகிற ; கள்ளங்கபடற்ற ; துணிவுடன் சொல்லப்பட்ட ; பேச்சில் துணிச்சலுள்ள.

**out'spread** [1], *n.* விரிவு, பரப்பு ; *a.* பரவிய.

**outspread'** [2], *v.* பரவு ; பரப்பு.

**out'standing**, *a.* முனைப்பான, முதன்மையான ; தீர்வு காணப்பெறாத ; செலுத்தப்படாத ; இன்னும் மீந்துள்ள ; கவனிக்க வேண்டிய, செய்ய வேண்டியிருக்கிற.

**out-stare'**, *v.* கூசாது எதிர்த்து முறைத்துப்பார், நாணமற்றவர்களின் உறுத்த நோக்கினை எதிர்த்து நோக்கு, கண்கூசப் பெறுமல் விழித்து நோக்கு.

**out'station**, *n.* தொலைவிட நிலையம், தலைமையிடத்தினின்றும் விலகியுள்ள இடம்.

**outstay'**, *v.* உரிய காலத்துக்கு அப்பாலும் தங்கியிரு ; நெடுநேரம் தங்கியிரு ; விஞ்சி நீடித்திரு.

**outstep'**, *v.* எல்லை கட, வரம்பு மீறு.

**outstretch'**, *v.* விரித்து நீட்டு, தாவிப்பிடிக்க எட்டு ; முழு நீளமும் பரப்பு.

**outstrip'**, *v.* கடந்து செல், முந்திக்கொள், மேம்பட்டிரு.

**out-talk'**, *v.* வாதத்தில் வெல், அடித்துப் பேசு ; தூக்கி எறிந்து பேசு.

**out-think'**, *v.* எண்ணத்தில் மேம்படு ; அறிவால் வெல்.

**out'-throw** [1], *n.* எறியப்பட்டதன் அளவு.

**out-throw'** [2], *v.* வெளியே எறி, அப்பால் வீசு.

**out'-thrust** [1], *n.* சிற்பத்தின் ஏதேனும் ஒருபாகத்தின் வெளிப்புற அமுக்கம்.

**out-thrust'** [2], *v.* வெளிநோக்கி அமுக்கு.

**out-trav'el**, *v.* விஞ்சி வேகமாகச் செல் ; கடந்து அப்பால் செல் ; எல்லைகடந்து போ.

**out'-turn**, *n.* செயலாக்கம் பெற்ற பண்டத்தொகுதி ; செய்பொருள் விளைவு.

**outval'ue**, *v.* மதிப்பில் விஞ்சு.

**outvie'**, *v.* போட்டியில் விஞ்சு.

**outvoice'**, *v.* மேம்பட்டு உரக்கப்பேசு ; கடந்து திறம்பட வுரை, கவர்ச்சியாக விஞ்சிப்பேசு.

**outvote'**, *v.* மேம்படு வாக்குகள் பெற்றுத் தோல்வியுறச் செய்.

**out'voter**, *n.* தேர்வுத் தொகுதியில் தங்கியிராத வாக்காளர்.

**out-walk'**, *v.* மற்றவரைவிட மிகுதொலை நட; மற்றதைவிட மிகுதியான நேரம் நடந்துசெல்; மற்றவரைவிட வேகமாக நட; எல்லைகடந்து நட.

**out'wall**, *n.* புறச்சுவர்.

**out'ward**, *n.* புறத் தோற்றம், வெளிப்புறம் ; *a.* வெளி நோக்கிய ; உடம்பு சார்ந்த, புறம்பான, பருப்பொருளான, கண்ணுக்குப் புலனுகிற, தோற்றமட்டிலுமான, மேலெழுந்த போக்கான ; *adv.* வெளிநோக்கிய திசையில், புறத்திலுள்ளதை நோக்கி ; (தொ.) outward form, புறத்தோற்றம் ; outward man, சமயத்துறை வழக்கில் உடம்பு ; நகைச்சுவை வழக்கில் ஆடை அணிகலன்கள் ; outward things, நம்மைச் சுற்றிலுமுள்ள உலகம் ; to outward seeming, வெளித்தோற்றத்தில், புறத்தோற்றத்தைமட்டிலுங் கருதினுல்.

**out'ward-bound**, *a.* கப்பல் பயணக்காரர் வகையில் அல்லது பயண வகையில் தாயகத்தை விட்டுப் புறப்பட்டுச் செல்கிற, வெளிநாடு செல்கிற.

**out'wardness**, *n.* புற வாழ்க்கை, புறவுலகம், பொருண்மை; வெளிப் பொருள்களிற் பற்று அல்லது நம்பிக்கை, உலோகாயதம்.

**out'wards** [1], *n. pl.* புறப்பொருள்கள், வெளிப்பகுதிகள் ; புற வினைமுறைகள், அவசியமற்ற சடங்குகள்.

**out'wards** [2], *adv.* வெளிநோக்கிய திசையில், புற நோக்கி.

**outwatch'**, *v.* விஞ்சி மிகுநேரம் விழித்துக்கொண்டிரு; இரவு கடந்தும் விழித்திரு.

**outwear'**, *v.* நேரத்தைப் போக்கிக் கழித்துவிடு, வாழ்ந்து கழித்துவிடு.

**outweed'**, *v.* வேரோடு பிடுங்கு.

**outweep'**, *v.* மிகுதியாக அழு; மட்டுமீறிக் கண்ணீர்விட்டழு.

**outweigh'**, *v.* நிறைகூடு, எடையில் மிகுதியாயிரு; மதிப்பில் உயர் ; முக்கியத்துவத்தில் மேம்படு ; செல்வாக்கில் விஞ்சு.

**outwent'**, *v.* outgo [2] என்பதன் இறந்தகாலம்.

**outwit'**, *v.* சூழ்ச்சியினுல் வெல் ; திறமையால் வெற்றியடை; பொறியில் வீழ்த்து, ஏமாற்று.

**out'work** [1], *n.* புற அரண், வீட்டுக்குப் புறம்பான வேலை ; தொழிற்கூடத்துக்குப் புறம்பான பணி.

**outwork'** [2], *v.* முடிவு செய், முடிவுக்குக் கொண்டுவா.

**out'worker**, *n.* மனைப்புறத்தே வேலை செய்பவர் ; வேலையை வீட்டிற் செய்வதற்குக் கட்டுகள் கொண்டு செல்பவர்.

**out'worn'**, *a.* (செய்.) நைந்துபோன ; பழமைப்பட்ட, வழக்காறற்ற ; தீர்ந்து போன.

**out-zol'a**, *v.* உண்மையை எடுத்து விளம்புவதில் அதன் முதல்வனையும் விஞ்சு ; (தொ.) out.zola Zola, உண்மை எடுத்துரைக்குங் கடைப்பிடியில் முதல்வனுன பிரஞ்சு எழுத்தாளர் ஸோலாவையும் விஞ்சிவிடு.

**ou'zel**, *n.* சிறு பறவை வகை.

**ov'a**, *n. pl.* புது உயிராக உருவாகும் பெண்கரு உயிரணுக்கள்.

**ov'al**, *n.* முட்டை வடிவம், நீள் உருண்டை ; நீள் உருளைவடிவுடைய பொருள் ; *a.* முட்டை வடிவான, நீளுருண்டை வடிவுடைய ; முட்டைபோன்ற வெளிவரையுடைய.

**ovariot'omy**, *n.* கருவக அறுவை.

**ova'rious**, *a.* முட்டையுள்ள.

**ovarit'is**, *n.* அண்டகோச அழற்சி.

**ov'ary**, *n.* பெண் கருப்பை ; கருவகம், முட்டைப்பை; மலரின் சூலக அடிப்பகுதிக் கூறு ; கருமுளை.

**ov'ate**, *a.* (தாவ.) முட்டை வடிவான.

**ova'tion**, *n.* மகிழ்ச்சிதரும் சிறு வெற்றி; ஆரவார வரவேற்பு; விடாத கைத்தட்டு.

**o'ven**, *n.* சூட்டடுப்பு, செங்கல் கல் அல்லது இரும்பாலான மூடு வெப்ப உலையடுப்பு ; (வேதி.) மூடுலையடுப்பு ; (தொ.) Dutch oven, திறந்த பக்கம் திரும்பியுள்ள உலோக உலைப் பெட்டி.

**o'ven-bird**, *n.* அடுப்பு வடிவக் கூடுகள் பின்னும் பறவை வகை.

**ov'er**, *n.* மரப்பந்தாட்டத்தில் இடைத்தவணை ஆட்டம் ; மரப்பந்தாட்டத்தில் இடைத்தவணைப் பந்தெறிவு ; முடிந்த செய்தி ; முடிந்தது ; மிகைப்படியானது ; *a.* மேலுள்ள ; வெளிப்புறமான ; மிகுதியான ; *adv.* சாய்ந்து ; கவிழ்ந்து, தலைகுப்புற ; தலைகீழாக, மறித்து ; பரப்பு முழுவதிலும் ; மேலாக, மீதாக, மேற்கவிந்து ; முழுக்காரணமாக, குடைமறித்து ; திரும்பத்திரும்ப, முழுச்சுற்றுக ; தொடக்கத்திலிருந்து மீண்டும் புதிதாக; குறுக்காக; பக்கம் மாறி; கட்சி மாறி, கொள்கை மாறி ; மட்டின்றி, வரம்பின்றி ; முடிந்த நிலையில், அமைந்த நிலையில் ; இறுதி ஓய்வுற்று ; *prep.* மேலாக ; மீதாக ; மேற்கவிந்து ; மேலே ; மேற்புறத்தில்

பல இடங்களில்; தொடக்க முதல் கடைசிவரை; அங்குமிங்கும்; சுற்றிச்சுற்றி; பற்றி, குறித்து; மேலே தொங்கவிட்டுக்கொண்டு; மேற்பட, அப்பாற்பட்டு; தொடர்பில்லாமல்; எங்கும், முற்றிலும், சுற்றிலும்; மலிந்து; தாவி; கடந்து மறுபக்கத்தில்; மறுகரையில்; எதிர்ப்புறத்தில்; ஊடாக; (தொ.) over again, புதிதாக; over against, எதிராக; over and above, கூடுதலாக; over head and ears, முழுதும் அமிழ்ந்து.

overact', *v.* மிகைப்படுத்தி நடி; மிகைப்படுத்திக் காட்டு; செயல்வரம்பு கட.

ov'erall[1], *n.* வேலை செய்யும்பொழுது மகளிர் அணியும் தளர்த்தியான மேலாடை.

o'verall[2], *a.* எல்லாவற்றையும் உள்ளிட்ட.

ov'eralls, *n. pl.* அழுக்கு வேலை செய்யும்பொழுது தொழிலாளர் அணிந்துகொள்ளும் மேல் காற்சட்டை; (படை.) அதிகாரிகளின் முழு உடை.

ov'erbalance[1], *n.* அளவு மிகை, எடை மிகை.

overbal'ance[2], *v.* சமநிலை இழந்து கீழேவிழு; நடுநிலையிழந்து விழச்செய்.

overbal'ance[3], *v.* மதிப்பில் மிகைப்படு, கனத்தால் அழுத்து.

overbear', *v.* பளுவால் அழுத்து; ஆற்றலால் நிலைகுலையச் செய்; மேலாண்மையால் கீழ்ப்படுத்து; செல்வாக்கில் மிகைப்படு.

overbear'ing, *a.* வீறுப்பான, அடக்கியார்ப்பரிக்கிற.

overbid', *n.* மேற்கேட்பு, விஞ்சிய கேள்வி; *v.* மேற்கேள்வி கேள்.

overblow', *v.* (இசை.) அடிப்படைப் பண் எழுப்புவதற்குப் பதிலாக இசைவிணக்கமுடைய இசையுண்டாகும்படி மிகுந்த ஆற்றலோடு குழலூது.

overblown', *a.* புயல் முதலியன வகையில் வீசி ஓய்ந்துவிட்ட; மலர்கள் வகையில் முழுதும் மலர்ந்த, மலர்ச்சிப் பருவம் கடந்துவிட்ட.

ov'erboard, *adv.* கப்பலிலிருந்து வெளியே; (தொ.) throw overboard, கழித்துத் தள்ளு, எறிந்துவிடு; துறந்துவிடு.

overbrim', *v.* விளிம்புவரை பொங்கித் ததும்பு.

overbuild', *v.* கட்டிடங்களால் நிரப்பு; மிகநெருக்கமாகக் கட்டு; மேற்கட்டுமானம் அமை; மட்டுமீறி மேலே கட்டி எழுப்பு; மட்டுமீறி நம்பிக்கை வை.

overbuilt,' *a.* மிக அதிகமான கட்டிடங்களையுடைய.

overburd'en, *v.* நிறையச் சுமத்து.

overbus'y, *a.* மட்டுமீறி ஈடுபட்ட, மிகுதியாக வேலையுள்ள, வேலையில் மிக்க கவனம் செலுத்தியுள்ள.

overbuy', *v.* தேவைக்குமேல் மிகுதியாக வாங்கு.

overcall', *v.* சீட்டாட்ட வகையில் மேற்கேள்வி கேள்; மிகு கேள்வி கேள்.

overcan'opy, *v.* மேற்கட்டிபோல் மூடு, விதானம்போல் மேல் மறை.

over-cap'italize, *v.* மிகு முதலீட்டு அளவு உறுதிசெய்.

ov'ercare, *n.* அளவுமீறிய முன்னெச்சரிக்கை, மிகு விழிப்புடைமை.

overcast', *n.* மூடாக்கு; *a.* மூடாக்கிட்ட, மப்பு மந்தாரமான; இருள் பரந்த; துயர்பரவிய; *v.* மூடாக்கிடு, மப்புப்போடு; இருள் பரப்பு; துயர்நிழல் பரப்பு.

ov'ercharge[1], *n.* மின்மிகைச்செறிவு; வெடிமருந்து மிகுசெறிவு; மிகுவிலை; மிகைக்கட்டணம்; மிகுசுமை.

overcharge'[2], *v.* மட்டுமீறி வெடிமருந்து செறிவி; வரம்பு கடந்து மின்செறிவூட்டு; நுணுக்க விவர முதலியவற்றை மட்டின்றி மிகுதியாகச் செறிவுறுத்து; மிகுசுமை ஏற்று; மிகைப்படுத்து; விலையேற்றிக் கூறு; மிகுவிலைகோரு; மிகு கட்டணம் விதி.

overcloy', *v.* தெவிட்டு.

ov'ercoat, *n.* மேலங்கி.

over-col'our, *v.* நுணுக்க விளக்கங்களையும் வருணனைகளையும் மிகைப்படுத்து.

ov'ercome[1], *a.* களைப்பு முதலியவற்றால் ஆட்கொள்ளப்பட்ட; உணர்ச்சி முதலியவற்றிற்கு முற்றிலும் ஆட்பட்ட; உதவியற்றுப்போன, செயலற்றுப்போன; தன்னுற்றலிழந்த; (தொ.) overcome with liquor, குடிபோதையில் மூழ்கிய.

overcome'[2], *v.* விஞ்சி மேம்படு; மேற்கவிவுறு; வெற்றிகொள்; கீழடக்கி வெல்லு; வென்று ஆட்சிசெய்.

over-con'fidence, *n.* மட்டுமீறிய தன்னம்பிக்கை.

over-con'fident, *a.* மட்டுமீறிய தன்னம்பிக்கை கொண்ட.

over-credu'lity, *n.* எளிதில் எதையும் நம்புந்தன்மை, மட்டுமீறிய நம்பிக்கை கொள்ளுதல்.

overcrop', *v.* விடாது தொடர்ந்து பயிரிடுவதனால் நிலத்தை வறிதாக்கு.

overcrow', *v.* வெற்றிவீறுப்புப் பேசு, வெற்றி இறுமாப்புடன் நட.

overcrust', *v.* திண்ணிய புற ஏட்டினால் மூடு; கடுமையான மேலுறையிற் பொதி; ஏடுமேற் படிந்திரு.

over-cunn'ing, *n.* அளவுமீறிய சூழ்ச்சித்திறம், தன் நோக்கத்தையே கெடுத்துவிடும் வரம்புகடந்த வஞ்சகம்.

over-cur'ious, *a.* பிறர் செய்திகளில் மட்டின்றித் தலையிட விரும்புகிற; மிகவும் எச்சரிக்கையுள்ள; எளிதில் மனநிறைவு அடையாத.

overdo', *v.* அளவுமீறிச் செய்; வரம்புமீறிச் செல்; ஆற்றல் எல்லைமீறி உழைக்கச்செய்; அளவுமீறிப் பக்குவங்கெடச் செய்.

ov'erdoor, *n.* கதவுமேல் ஒப்பனை.

ov'erdraft, *n.* பொருளகத்தில் இருப்புக்குமேல் பணம் எடுப்பு; பொருளகக் கணக்குவகையில் இருப்புக்குமேல் பற்று.

overdraw', *v.* பொருளகத்தில் இருப்புக்கு மேற்பட்டுப் பணம் எடு; வருணனையில் மிகைப்படுத்திக் கூறு.

ov'erdress[1], *n.* மேலுடை, இரண்டுடை நிறம் உடைய அங்கியின் புறப்பகுதி.

overdress'[2], *v.* வரம்புமீறிப் பகட்டாக உடையணி.

overdrive', *v.* களைப்படையும்படி குதிரையை ஓட்டு; களைப்புறும்படி ஆளை வேலைவாங்கு.

over-es'timate[1], *n.* மிகை மதிப்பீடு; *v.* தகுதிக்கு மேற்பட்டு மதிப்பிடு.

ov'er-excit'ed, *a.* மிகு உணர்ச்சி வசப்பட்ட; மிகு உள்ளதிர்வுடைய.

ov'erfall, *n.* நீரோட்டச் சந்திப்புக்களால் ஏற்படும் கொந்தளிப்பான கடற்பரப்பு; நீரடிப் பாறையருகே நீரோட்டத்தினால் ஏற்படும் கொந்தளிப்பான நீர்பரப்புப் பகுதி; கொந்தளிப்பான நீர்ப்பரப்புப் பகுதி; கொந்தளிப்பான நீர்ப்பரப்பு; திடீர்ச் சூழ்நிலை; மிகைநீர்வடி அமைவு; நீர்ப்பூட்டுத் தளநிலை காக்கும் மதகு.

ov'erfault, *n.* (மண்.) எறிதிசை வழிச்சாய்வுடைய எதிர்நிலை மடக்கு.

overfish', *v.* நீர்நிலையில் வரம்பின்றி மீன்பிடித்து வறிதாக்கு.

ov'erflow[1], *n.* பொங்குவளம், பொங்கி வழிந்தோடுவது; தேவைக்கு மேற்பட்டது; (தொ.) overflow meeting, நடைபெறும் இடம் கொள்ளாததால் வேறு இடங்களில் சென்று கூடுபவர்கள் கூட்டம்.

overflow'[2], *v.* பொங்கி வழி; நிலமீது வெள்ளமாகப் பெருகு; மக்கள் கூட்டம் வகையில் அறைகள் முதலிய இடயெல்லைகளைக் கடந்து பரவு; கொள்கலம்-கிண்ணம் முதலியவை வகையில் நிறைந்து வழி; உணர்ச்சி ததும்பி வழிந்தோடு; செல்வம் கொழி.

ov'erfold[1], *n.* (மண்.) நடுப்பகுதி தலைகீழாக மாறிய பாறைப்படுகை மடிப்பு.

overfold'[2], *v.* (மண்.) உண்மடி, பாறை மடிப்பினுள் மடிப் பாக மடிப்புறு.

ov'erfront, *n.* மேலங்கியில் இணைக்கப்பட்ட கைப்பகுதியின் தொங்கல் மடி.

overgo'vern, *v.* தேவையில்லாத கட்டுத்திட்டங்களுக்கு உட்படுத்து.

ov'erground, *a.* நிலத்திற்குமேல் எழுப்பப்பட்ட.

ov'ergrow', *v.* மேற்கவிந்து படர்; தொற்றிப்படர்; மட்டு மீறி வளர்ச்சியுறுவி; பண்புநிலை தாண்டி வளர்ந்துவிடு.

ov'ergrowth[1], *n.* மேற்கவிந்த வளர்ச்சி; புறத்திரட்சி வளர்ச்சி; மிகு வளர்ச்சி.

overgrowth'[2], *n.* உடல் நலத்திற்குக் கேடான பெருவளர்ச்சி.

ov'erhand, *a.* தோளுக்குமேல் கைகளை உயர்த்திய; பற்ற வேண்டும் பொருளுக்கு மேற்சென்ற கையையுடைய; மேல் கையுடைய; *adv.* தோளுக்கு மேலுயர்ந்த கைகளுடன்.

ov'erhang[1], *n.* தொங்கற்பகுதி, புறந்துருத்திக்கொண்டிருக் கும் பகுதி; புறந்துருத்தியுள்ள அளவு; முனைப்பாக நீட்டிக் கொண்டிருக்கும் நிலை.

overhang'[2], *v.* கவிந்திரு, தொங்கலாயிரு, புறந்துருத்திக் கொண்டிரு; மேலே நீட்டிக்கொண்டிரு; அண்மையில் நிகழவிரு.

ov'erhaul[1], *n.* முழுத் தேர்வாய்வு, செப்பனிடுவதற்காகச் செய்யப்படும் ஆய்வு.

overhaul'[2], *v.* பகுதிபகுதியாகப் பிரித்தாராய்; கப்பல் வகையில் நிலைமையை முழுதும் ஆய்; எட்டிப்பிடி, விரைந்து சென்றெட்டு.

ov'erhead[1], *a.* தலைக்குமேல் உள்ள; தலைக்குமேலே வைக்கப் பட்ட; (தொ.) overhead charges, அலுவலகச் செலவுகள், வட்டி-செயலாட்சிப் பொறுப்பு முதலியவற்றிற்கான செல வினங்களின் தொகை.

overhead'[2], *adv.* வானத்தில்; உயரமாக; மேலுள்ள மாடியில்.

overhear', *v.* ஒட்டுக்கேள், ஒளிந்து நின்றுகேள், தற்செய லாகக் கேள்.

ov'erhouse, *a.* மின்கம்பிகள் வகையில் கம்பங்களுக்குப் பதி லாக வீட்டு உச்சிகளில் தாங்கப்படுகிற அல்லது கட்டப்பட் டுள்ள.

overhoused', *a.* மிகப்பெரிய வீட்டில் வசிக்கிற.

over-iss'ue, *n.* இசைவளிக்கப்பட்ட அளவிற்குமேல் அல்லது திருப்பித்தரும் அளவிற்குமேல் பொருளகத்தினால் வெளியிடப் பட்ட பங்கு; *v.* இசைவளிக்கப்பட்ட அளவிற்குமேல் அல் லது திருப்பிக் கொடுக்கும் ஆற்றலுக்குமேல் அளி.

overjoyed', *a.* மிக்க மகிழ்ச்சிகொண்ட.

overjump', *v.* குதித்துச் சுளுக்கு வருவித்துக் கொள்வி; (தொ.) overjump oneself, சுளுக்கேற்படும் வகையில் தாண்டு.

ov'erknee, *a.* முழங்காலுக்குமேல் செல்லுகிற.

over-lab'our, *v.* மட்டுமீறி நுணுக்க விரிவுபடுத்து.

ov'erland[1], *a.* நிலங்கடந்து செல்கிற, நிலவழியான.

overland'[2], *adv.* நிலவழியாக.

ov'erlap[1], *n.* மேற்சென்று கவிந்திருக்கை; மேற்சென்று கவிந்திருக்கும் பகுதி.

overlap'[2], *v.* பாதி மேற்சென்று கவிந்திரு; பகுதியொத்திரு.

ov'erlay[1], *n.* மேல்விரிப்பு, மேலுறை; மூடி, போர்வை, சிறு மேசைவிரிப்பு.

overlay'[2], *v.* மேல்விரி; மேலே பூசு; மேலே கவி.

overleaf', *adv.* ஏட்டில் தாளின் மறுபக்கத்தில்.

overleap', *v.* தாவு, தாண்டிக் குதி; ஏறிக் கடந்துசெல்; விட்டுவிடு; புறக்கணி.

overlie', *v.* மீதுகிட; குழந்தை வகையில் மேற்கிடந்து அமுக்கு.

overlive', *v.* வயதுவகையில் கடந்து வாழ்; மற்றொருவர் வகையில் வாழ்வெல்லைகடந்து உயிரோடிரு.

overlook', *v.* மேலிருந்து நோக்கு; உயர்ந்திரு; கவனிக்கத் தவறு, காணத்தவறு; புறக்கணி; மேற்பார்வை செய், கண்காணி.

ov'erlord, *n.* குடிவார முதல்வர்; பண்ணை முதல்வர்; மேலாண்மையர்; மேல்நிலக்கிழார்; மேலுரிமையரசு; ஒரு நாட்டை ஆளும் பிற நாடு, நாடாளும் அயல் நாட்டரசர்.

ov'erman, *n.* மீமனிதர், சீவன்முத்தர், இருவினை கடந்தவர்; நீட்ஸ் (Nietzche) என்பாரின் கோட்பாட்டின்படி நன்மை தீமைக் கட்டுப்பாடு கடந்த உயர்குறிக்கோள் மனிதர்.

ov'ermantel, *n.* அடுக்களைத் தண்டயக்கட்டுமீதுள்ள ஒப்ப னைத் தட்டு.

overmast'ed, *a.* மிக உயரமான பாய்மரங்களையுடைய; மிகப் பளுவான பாய் மரங்களுள்ள.

ov'ermatch[1], *n.* விஞ்சிய வலிமையுடையவர்.

overmatch'[2], *v.* மிகுந்த வலிமையோடிரு; வெல்லு, தோற்கடி.

over'-mea'sure, *n.* தேவைக்கு அதிகமான அளவு; மிகை யளவு.

over-nice', *a.* நயத்திரிபு நுணுக்கங் காண்கிற; எளிதில் மனநிறைவுபடுத்த இயலாத.

ov'ernight[1], *a.* ஓரிரவிற் செய்து முடித்த, முந்திய நாளிர வில் முடித்துவிட்ட.

overnight'[2], *adv.* முன்னிரவில், முந்தியநாள் மாலையில், ஓரிரவுக்குள்ளாக.

overpass', *v.* கடந்துசெல், குறுக்கே செல், தாண்டு; அடுத்த முனையை அடை; கட.

overpassed', overpast', *a.* கடந்த, சென்ற, கழிந்த.

overpay', *v.* மிகையாக ஊதியங் கொடு, மிகுதியாகக் கட்டு.

over-peo'pled, *a.* மட்டுமிஞ்சிய மக்கள் நெருக்கம் உடைய.

overpersuade', *v.* விருப்பமில்லா நிலையிலும் மட்டுமீறி வலி யுறுத்தி இணங்கச்செய்.

overpitch', *v.* மரப்பந்தாட்டத்தில் இலக்குக் கட்டைகளுக்கு மிக அண்மையில் விழும்படி பந்துவீசு.

ov'erplus, *n.* கழிமிகை.

overpoise', *v.* நிறையில் விஞ்சு; மதிப்பில் விஞ்சு.

over-pop'ulated, *a.* மட்டுமீறி மக்கள் நெருக்கமுடைய; அளவுமீறிய நெருக்கமுடைய.

over-popula'tion, *n.* மக்கள் தொகைப்பெருக்கம்; மக்கள் தொகை மிகுந்துள்ள நிலை.

overpot', *v.* மிகப்பெரிய தொட்டியில் செடி நடு.

overpow'er, *v.* கீழடக்கு, அடக்கி ஆட்கொள்ளு; மிகை ஆற்றலால் பயனற்றதாக்கு; விஞ்சிய ஆற்றலுடையதாயிரு; தடுக்கமுடியாததாக்கு.

over-pow'ering, *a.* தடுக்கவியலாத ஆற்றலுடைய; அடக்க முடியாத.

overpraise', *n.* மிகு புகழ்ச்சி; *v.* மிகுதியாகப் புகழ், வரம்பு கடந்து புகழ்ச்சிசெய்.

overpre'ssure, *n.* மிகை அழுத்தம்; மிகுவேலை நெருக்கடி; மிகைநெருக்கடி.

overprint', *v.* அச்சடித்த பக்கத்தில் மேலும் அச்சடி.

over-produce', *v.* மிகுதியாக உற்பத்தி செய், தேவைக்கு மேற்பட விளைவி.

over-produc'tion, *n.* மட்டுமீறிய விளைவு; தேவைக்குமேல் உற்பத்தி.

ov'erproof, *a.* வடித்த சாராய வகைகளில் உள்ளதைவிட அதிக அளவான வெறியச் சத்துடைய.

overrate', *v.* மட்டுமீறி உயர்வான மதிப்புக்கொள்; அளவு மீறி மதிப்பிடு, உயர்விலை மதிப்பிடு.

ov'erreach[1], *n.* அளவிறந்து ஊக்குதல்; அளவுமீறிய முயற்சியால் ஏற்படும் தோல்வி.

**overreach'**[2], *v.* குதிரை வகையில் பின்காற்குளம்பு பட்டு முன்கால் காயமுறச்செய்; எட்டிப்பிடித்து மேற்செல்; மிகு திறமையால் காரியம் கெடச்செய்; மிகு சூழ்ச்சியால் தோல்வியுறுவி; வலிந்து எட்டிப்பிடிக்க முயன்று தோல்வியுறுவி; (தொ.) overreach oneself, மட்டுமீறிய முயற்சியால் வெற்றியடையுமுன் சோர்வுறு.

**over-read'**, *v.* மட்டுமீறி வாசி, வரம்புமீறிப் படி; திரும்பிப் பார்த்துப் படி.

**over-refine'**, *v.* கூர்நுண் வேறுபாடுகள் காண்; கழிநுண் வேறுபாடுகள் கற்பி.

**over-rent'**, *v.* அதிக வாடகை வாங்கு; உழுவோர் முதலியோரிடம் அதிக வரி வாங்கு.

**override'**, *v.* குதிரைவகையில் ஏறி ஊர்ந்து சோர்வுறச்செய்; குதிரைப் படையின் காலடிக்கீழ் அழியவிடு; மிதித்துச்செல்; புறக்கணி; ஒதுக்கித் தள்ளு; இணங்கமறு; மேலுரிமைப் பாட்டில் பணிய மறு; அறுவை மருத்துவத்தில் எலும்பு வகையில் ஒன்றன்மீது ஒன்ருகக் கிட.

**overripe'**, *a.* அளவுமீறிக் கனிந்த; கனிந்தளிந்த.

**overrule'**, *v.* ஒதுக்கித் தள்ளு, உதறித்தள்ளு.

**overrun'**, *v.* விஞ்சி ஓடு; பரந்து ஒழுகு; ஓடித் தப்பு; எல்லை கட, வரம்புமீறு; மலிந்துவடி, பொங்கிவழி; ஓடிக் களைப்புறு; ஓடித் தீங்கிற்கு ஆளாகு; எல்லைகடந்து வளர்; எங்கும் பரவி நிரப்பு; கடந்து பரப்பு; படர்ந்து பரவு, படர்ந்து கவிந்து நிலைகொள்; கொள்ளைப்பூச்சி பொட்டுக்கள் வகையில் நெருங்கி மிடைவுறு; படைபரப்பு, படைகளைப் பரவலாகத் திரிய விடு; பரந்தழிவு செய்; படையெடுத்துப் பாழ்படுத்து.

**oversail'ing**, *a.* கற்கட்டிட அமைப்பு வகையில் கீழ் இருப்பதைவிட மேற்பகுதி முனைப்பாக நீண்டிருக்கிற.

**ov'ersea**[1], *a.* கடல் கடந்த.

**oversea'**[2], *adv.* கடல் கடந்து, கடலுக்கு அப்பால்.

**overseas'**[1], *a.*=oversea[1].

**overseas'**[2], *adv.*=oversea[2].

**oversee'**, *v.* மேலிருந்து கீழ்நோக்கு; வேலையாள்களையும் வேலையையும் மேற்பார்வை செய், கண்காணி.

**ov'erseer**, *n.* கண்காணி, மேற்பார்வையாளர்; (தொ.) overseer of the poor, ஏழைகளைப் பேணுவதுபோன்ற பணிப்பொறுப்புக்களையுடைய கிறித்தவ திருக்கோயிலைச் சார்ந்த சிறு வட்டார அதிகாரி.

**oversell'**, *v.* வழங்கக்கூடிய அளவிற்குமேல் விற்பனை செய்; மிக உயர் விலைக்கு விற்பனைசெய்.

**ov'ersew**, *v.* சாய்வரித் தையல் இடு, இரு முனைகளையும் அல்லது ஓரங்களையும் ஒரே தையல் ஒரே திசையில் ஊடுருவி மறு திசையில் திரும்பும்படி தை.

**overshad'ow**, *v.* வெயில்படாது காப்பளி; நிழலடிப்புச் செய்; ஒளிமறைப்புச் செய், விஞ்சிய ஒளியால் மறை.

**ov'ershoe**, *n.* புறக்காப்புப் புதைமிதியடி, புதைமிதி பொதிவுறை.

**overshoot'**, *v.* குறிகடந்து எய்; இலக்குக்கடந்து வேட்டுச் செலுதது; இலக்குக்கடந்து செல்; குறிகடந்து ஆற்றல் செலுத்து; (தொ.) overshoot the mark, overshoot oneself, உயர்வு நவிற்சியாகக் குறி; மிகைப்படுத்து; வரம்புமீறிச் செயலாற்றிக் காரியங் கெடு.

**ov'ershot**[1], *a.* மேலுதடு வகையில் கீழுதடு தாண்டி நீண்டிருக்கிற; மேலிருந்து நீராற்றல் பெறுகிற; (தொ.) overshot wheel, மேலிருந்து விழும் நீரால் இயக்கப்படும் விசைச் சக்கரம்.

**overshot'**[2], *a.* மேலாக எய்யப்பட்ட; மேலாக ஏவி எறியப்பட்ட; இலக்குக் கடந்து எறியப்பட்ட; குறிகடந்து தவறிய; வேட்டுகளுக்கு மிகுதியும் உட்பட்ட; வரம்பு கடந்த; விஞ்சப்பெற்ற.

**ov'erside**[1], *a.* கப்பலின் பக்கவாட்டிற் சரக்குகளை ஏற்றி இறக்குகிற.

**overside'**[2], *adv.* படகில் ஏற்றி இறக்குஞ் சரக்குகள் வகையில் கப்பலின் பக்கவாட்டில்.

**ov'ersight**, *n.* புறக்கணிப்பு; கவனக்குறைவு; கருதாப்பிழை; தன்மறதி; காட்சிப்பிழை, காணத்தவறுகை.

**ov'erslaugh**, *n.* (படை.) பணிமுறை விலக்கு.

**oversleep'**, *v.* காலங் கடந்து தூங்கு.

**ov'ersleeve**, *n.* உடுப்பின் கைத்தொங்கல் உறைகாப்பு.

**ov'ersoul**, *n.* இயவுள், வான்பேருயிர், உயிர்களை உள்ளடக்கி உலகனைத்தும் இயங்குவிக்கும் இறைநிலை.

**overspend'**, *v.* கையிருப்புக்குமேற் செலவுசெய், தகுதிக்கு மேற் செலவழி.

**overspent'**, *a.* மிகவும் களைத்துள்ள.

**ov'erspill**, *n.* வடிந்து சிந்தியது; புலம்பெயர் மக்கள் தொகை மிகுதி.

**overspread'**, *v.* எங்கும் கலந்து பரவு; பரப்பில் கவிந்து பரவு, கவிந்து மறை; கவிந்து மூடு; மூடி மறை.

**overstate'**, *v.* மிகைப்படக் கூறு.

**overstate'ment**, *n.* உயர்வு நவிற்சி, மிகையுரை.

**overstay'**, *v.* வரவேற்பாளர் விருப்ப அளவிற்குமேல் தங்கு; வரம்புகடந்து தங்கியிரு.

**overstep'**, *v.* எல்லைகட, வரம்புமீறு.

**ov'erstrain**[1], *n.* மிகு கடுமை, கடுஞ்சோர்வு.

**overstrain'**[2], *v.* மிகு களைப்பூட்டும் அளவில் கடும் உழைப்பு ஏற்றுக்கொள்; கடுமுயற்சி மேற்கொள்.

**overstrung'**[1], *a.* மிகைபட முறுக்கேறிய; அதிர்ச்சிக்கு உட்பட்ட.

**ov'erstrung**[2], *a.* இசைக்கருவி வகையில் கம்பிகளின் தொகுதிகள் சாய்வாக ஒன்றையொன்று கடக்கிற.

**oversubscribe'**, *v.* கடன் முதலியன வகையில் விரும்பப்பட்ட தொகைக்குமேல் கட்டு, கூடுதலாகச் செலுத்து.

**ov'ert**, *a.* வெளிப்படையாகச் செய்யப்பட்ட; மறைவில்லாத; எல்லாருக்கும் தெரியத்தக்க; (தொ.) market overt, வருபவர்கள் எல்லோருக்கும் விற்பனைக்கான பொருள்களை வெளிப்படையாகக் காட்டும் விலைக்களம்; overt act, எண்ணம் நிறைவேற்றுஞ் செயல்.

**overtake'**, *v.* மேற்சென்று எட்டு, தொடர்ந்துசென்று பிடி; புயல்-இடர்-துன்பம் வகையில் எதிர்பாராது திடீரென வா.

**overtask'**, *v.* மிகுந்த வேலைகொடு, கடும்வேலை வாங்கு.

**overtax'**, *v.* மிகுவரி சுமத்து; மிகை வரியால் அழுத்து; மட்டுமீறிய அளவு பயன்கோரிப் பெறு.

**ov'erthrow**[1], *n.* தோல்வி; தலைகீழ் எறிவு; நிலைகுலைவு; மரப்பந்தாட்டத்தில் மேலுங் கெலிப்புத்தரும் வாய்ப்புடைய தடைப்பட்ட மீட்டெறி.

**overthrow'**[2], *v.* தலைகீழாக்கு, மறித்துவிடு, கவிழ்த்துவிடு; வீழ்த்து; நிலைகுலைவி; வென்று வீழ்த்து, தோற்கடி.

**ov'erthrust**, *n.* நில மடக்கில் மற்ற அடுக்குகளின் மீதான மேலெறிவு.

**ov'ertime**[1], *n.* மிகைநேரம்.

**overtime'**[2], *adv.* மிகைநேரமாக, குறித்த வேலைநேரத்துக்குப் புறமாக.

**ov'ertone**[1], *n.* (இசை.) நிலைச்சுரத்தோடு கம்மிய தொனியுடன் கேட்கப்பெறும் மேற்சுரம்.

**overtone'**[2], *n.* மேற்பூச்சின் எதிர்நிழல் வண்ணம்.

**overtop'**, *v.* உயரிடம் பெறு, தர உயர்வுடையதாயிரு.

**overtrain'**, *v.* கேடு உண்டாகுமளவில் மட்டுமீறிப் பயிற்சியளி, மட்டுமீறிய பயிற்சியால் கெடு.

**overtrump'**, *v.* விஞ்சிய உயர்துருப்புச் சீட்டால் ஆடு.

**ov'erture**, *n.* உடன்படிக்கைப் பேச்சுத் தொடக்கம்; நேசத் தொடர்பு முயற்சி; தனிமுறைக் கோரிக்கை; முறைநிலை வேண்டுகோள்; காதற்கோரிக்கை, மணவுறவுக் கோரிக்கை; (இசை.) அரங்குத் தொடக்க நிகழ்ச்சி.

**ov'erturn**[1], *n.* கரணம், தலைமறிவு; நிலைகுலைவு, முறை கவிழ்வு.

**overturn'**[2], *v.* கவிழ்; மறியவை, கவிழ்த்து; தலைகீழாய்ப் புரட்டு; விழு; வீழ்த்து; சீர்கெடச்செய்; அழி, பாழாக்கு.

**overwatched'**, *a.* மிகவும் விழித்திருந்ததால் அயர்வுகொண்ட.

**overween'ing**, *a.* தருக்கான, தற்பெருமைமிக்க; மட்டு மீறிய தன்னம்பிக்கை வாய்ந்த.

**ov'erweight**[1], *n.* மிகை எடை; அளவுகடந்த பாரம்.

**overweight'**[2], *a.* தேவைக்கு மேற்பட்ட எடையுள்ள; *v.* மிகு சுமையேற்று.

**overweight'ed**, *a.* வரம்புமீறிச் சுமையேற்றப்பட்ட; எடை மீறிய.

**overwhelm'**, *v.* மூழ்கடித்துவிடு; மேலழுத்தி அமுக்கு; அடியிற் புதைந்து விடும்படிச்செய்; திடீரென அமுக்கி அழி; உணர்ச்சியில் ஆழ்த்து; கேள்விமாரியால் திணறச்செய்.

**overwhel'ming**, *a.* திணற அடிக்கிற; சமாளிக்க முடியா அளவு பெரிய.

**overwind'**, *v.* கடிகாரம் முதலிய வகையில் எல்லைக்குமேல் சுற்று.

**ov'erwork**[1], *n.* அதிக வேலை, வரம்புகடந்த உழைப்பு.

**overwork'**[2], *v.* கடுமையாக வேலைசெய்யத் தூண்டு; கடுமையாக வேலை செய்; வேலையால் களைத்துப்போகச் செய்; மிகு வேலையால் சோர்வுறுத்து.

**overwrite'**, *v.* மிகையாக எழுதிப் பெயர்கெடுத்துக்கொள்.

**ovibov'ine**, *n.* செம்மறியாட்டிற்கும் எருதுக்கும் இடைப்பட்ட தன்மைகள் கொண்ட விலங்கு; *a.* செம்மறியாட்டிற்கும் எருதிற்கும் இடைப்பட்ட தன்மைகள் கொண்ட.

**ov'icide**, *n.* செம்மறியாட்டுக் கொலை.

**Ovid'ian**, *a.* ஓவிட் (Ovid) என்ற லத்தீன் கவிஞரைச் சார்ந்த; ஓவிட் என்ற லத்தீன் கவிஞரின் காவியத்திற்குரிய.

**ov'iduct**, *n.* முட்டைத் தூம்பு.

**ov'iform**, *a.* முட்டை வடிவான.

**ov'ine**, *a.* செம்மறியாடுபோன்ற; ஆடுகளுக்குரிய.

**ovip'arous**, *a.* முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கிற; முட்டையிற் பிறக்கிற.

**ovipos'it**, *v.* முட்டையிடு.

**ovipos'itor**, *n.* முட்டையிடும் உறுப்பு.

**O'vis**, *n.* செம்மறியாடு.

**ov'oid**, *n.* முட்டைவடிவப் பொருள்; நீள்வட்டம்; *a.* கெட்டியான நீளுருளை வடிவுடைய; முட்டை வடிவமான.

**ov'olo**, *n.* (க-க.) கால்வட்ட வளை பகுதியுடைய சித்திர வேலைப்பாடு.

**ovorhomboid'al**, *a.* சாய்சதுரத்திற்கும் நீளுருளை வடிவிற்கும் இடைப்பட்ட.

**ovovivip'arous**, *a.* உடலுக்குள்ளேயே முட்டை பொரித்துக் குஞ்சுகள் உண்டாக்குகிற.

**ov'ule**, *n.* (தாவ.) பெண்பாலின் பொலிவுருக் கருவணு; கருநிலை விதை, கருவுரு முட்டை.

**ov'um**, *n.* விலங்குகளின் பெண் கருவகத்திலுண்டாகுஞ் சினை; பாலுண்ணி-மீன்-பூச்சியினங்களின் முட்டை.

**owe**, *v.* கடன்பட்டிரு; கடமையுணர்வு கொண்டிரு; வழங்கும் கடப்பாடு கொள்; உரிய மூலமுதலாகக் கொள்; மறவாது உளத்தில் வைத்துப் பேணு; (தொ.) owe one a grudge, மனக்காழ்ப்பை விடாமற் பேணு, கறுவு கொள்.

**Ow'enism**, *n.* ராபர்ட் ஓவென் (Robert Owen 1771-1858) என்பாரின் பொதுவுடைமைக் கூட்டுறவுக் கோட்பாடு.

**ow'ing**, *a.* கடனாகக் கொடுக்க வேண்டிய; விளைவான, பயனான, காரணமான; (தொ.) owing to, விளைவாக, காரணமாக, பயனாக.

**owl**, *n.* ஆந்தை; கங்குலார்; பார்வை மட்டானவர்; ஒளிக்கு ஒதுங்கிச் செல்பவர்; வீறுர்ந்தவர், செம்மாந்தவர்; அறிவாளியின் தோற்றமுடைய அறிவிலி; (தொ.) fly with the owl, இரவுப் பழக்கங்கள் கொள்; owls to Athens, கொல்லர் தெருவில் ஊசி.

**owl'ery**, *n.* ஆந்தைப் பொந்து.

**owl'et**, *n.* ஆந்தைக் குஞ்சு.

**owl'ish**, *a.* ஆந்தைபோல விழிக்கிற; மந்தமான.

**own**, *a.* தனக்கே உரிய, சொந்தமான, தனிப்பட்ட உரிமையான; தனக்கெனத் தகுதி வாய்ந்த, பிறர்க்குரியதல்லாத; தன் தனிச்சார்பான; இரவல் பெறாத; முழு நேருரிமை வாய்ந்த; *v.* தனதெனப் பெற்றிரு; உடைமையாகக் கொண்டிரு; தனதென ஒத்துக்கொள்; ஏடு வகையில் ஆக்கியோனென உரிமை பாராட்டு; பிள்ளை வகையில் உரிமையாக ஏற்றுக்கொள்; மெய்யென ஒப்புக்கொள்; சரியென இசைவு தெரிவி; தானே ஏற்றுக்கொள்; மறுப்புச் செய்யாதிரு; (தொ.) on one's own, சொந்தச் செலவில்; சொந்த முயற்சியில்; own brother, own sister, இருசார்புப் பெற்றோரும் பொதுவான உடன்பிறப்பாளர்.

**ow'ner**, *n.* உடையவர், உடைமையுரிமையாளர், சொந்தக்காரர்.

**ow'nerless**, *a.* உடையவரற்ற, உரியவரற்ற.

**ow'nership**, *n.* உடைமை, உடைமையுரிமை, சொந்தம்.

**ox**, *n.* எருது; விதையடித்த காளை; *pl.* ox'en; (தொ.) have the black ox tread on one's foot, இடுக்கணுக்கு ஆளாகு; முதுமைக்கு ஆட்படு.

**ox'alate**, *n.* வெல்லகை.

**oxal'ic**, *a.* வெல்லகை சார்ந்த; (தொ.) oxalic acid, நச்சுத் தன்மை வாய்ந்த புளிங்காடி வகை, வெல்லகக்காடி.

**ox'-bird**, *n.* சிறு பறவை வகை.

**ox'er**, *n.*=ox-fence.

**ox'-eye**, *n.* பெருங்கண், அகல்விழி; பறவை வகை; செடி வகை; மோட்டுச்சாளரம்.

**ox'-eyed**, *a.* அகல்விழியார்ந்த.

**ox'-fence**, *n.* மாட்டுத்தொழுவத்து வேலி.

**Ox'ford**, *n.* இங்கிலாந்து நாட்டில் ஒரு மாவட்டம்; இங்கிலாந்து நாட்டில் ஒரு நகரம்; இங்கிலாந்து நாட்டில் ஒரு பல்கலைக் கழகம்; *a.* ஆக்ஸ்போர்டு நகரத்திற்குரிய; ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திற்குரிய; (தொ.) Oxford bags, அகலக் காற்சட்டை; Oxford blue, திண்ணிய நீலம்; Oxford clay, நீலக் கடுங்களிப் பாறைவகை; Oxford frame, இரு பக்கங்களும் அடியில் குறுக்கிட்டு நீடிக்கும் பாணியிலுள்ள படச்சட்டம்; Oxford Group, Oxford Group Movement, டாக்டர் பிராங்க் புக்மன் (Dr. Frank Buchman) என்பாரைப் பின்பற்றுஞ் சமயக் கோட்பாட்டுக் குழு; Oxford mixture, திண் சாம்பர்நிற ஆடை; Oxford movement, ஆங்கிலத் திருச்சபையில் கத்தோலிக்க நடைமுறைகளைப் புதுப்பிக்கும் நோக்குடன் 1833-இல் தொடங்கப்பட்ட சமயத் துறை இயக்கம்.

**ox'-gall**, *n.* துப்புரவு செய்யவும் சாயமிடவும் மருந்து செய்யவும் பயன்படும் பிசின் வகை.

**ox'head**, *n.* மாட்டுத்தலை; மட்டி, அறிவிலி.

**ox'herd**, *n.* மாட்டிடையன்.

**ox'hide**, *n.* மாட்டுத்தோல்.

**ox'idate**, *v.* உயிரகத்துடன் இணைவுறுவி; உயிரகத்துடன் இணைவுறு.

**oxida'tion**, *n.* உயிரகத்தோடிணைப்பு; உயிரகத்தோடிணைவு; உயிரக இணைவு.

**ox'ide**, *n.* உயிரகை, தனிமம் அல்லது உயிர்ம அடிச்சேர்மத் துடன் உயிரகம் இணைந்த வேதிப்பொருள்.

**ox'idize**, *v.* உயிரகத்துடன் இணைவுறுவி; உயிரகத்துடன் இணைவுறு; உயிரகமேற்று மாறுதலுறு; துருப் பற்றவை, துருப் படர்வி; துருப் பிடி.

**ox'idizer**, *n.* உயிரகத்துடன் இணைவிக்கும் கருவிப்பொருள்.

**ox'lip**, *n.* மலர்ப்பூண்டு வகை.

**Oxon'ian**, *n.* ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகப் பட்டதாரி; ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக உறுப்பினர்; ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக முன்னுள் உறுப்பினர்; *a.* ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகஞ் சார்ந்த.

**ox'tail**, *n.* உணவுச் சாற்றுக்குப் பயன்படுத்தப்பெறும் மாட்டுவால் இறைச்சி.

**oxy-acet'ylene**, *a.* உயிரகக் கைவளிக் கலவையடங்கிய; உயிரகக் கைவளிக் கலவையின் பயனீட்டுக்குரிய; (தொ.) oxy-acetylene blowpipe, வெவ்வூதுலைக் குருகு.

**oxya'cid**, *n.* உயிரகமடங்கியுள்ள காடி.

**oxycarp'ous**, *a.* கூர்முனைக் கனியுடைய.

**ox'ygen**, *n.* உயிரகம், உயிர்களுக்கு இன்றியமையா உள் ளுயிர்ப்புக் கூறுக இயலும் வளி.

**ox'ygenate, ox'ygenize**, *v.* உயிரகமூட்டு; உயிரகத் துடன் கல; உயிரகத்துடன் இணைவுறுவி; உயிர்ப்புமூலம் குருதி முதலியவற்றிற்கு உயிரகச்செறிவூட்டு.

**ox'ymel**, *n.* தேம்புளிக்காடி, புளிக்காடியுடன் தேன்கலந்த பானம்.

**oxymor'on**, *n.* சொல் முரணணி, முரணுவபோன்ற சொற் களின் இணையடுக்கு.

**oxyop'ia**, *n.* கூர்விழிப் பார்வைக் கோளாறு.

**ox'ysalt**, *n.* உயரகமடங்கிய உப்புவகை.

**ox'ytone**, *n.* கிரேக்க மொழியில் கடையசையில் விசையழுத் தங் கொண்ட சொல்; *a.* கிரேக்க மொழியில் கடையசையில் விசையழுத்தங் கொண்ட.

**oy'er**, *n.* உலா முறைமன்றத் தண்டவழக்குக் கேள்விமுறை; (தொ.) oyer and terminer, உலா முறைமன்றக் கேள்வி முறை ஆணை.

**oyes', oyez'**, *int.* அமைதியாணைக் குறிப்பு.

**oys'ter**, *n.* ஈரிதழ்ச்சிப்பி.

**oys'ter-bank**, *n.* சிப்பி மலிந்து பெருகுங் கடலடிப்பகுதி; சிப்பி பேணி வளர்க்கப்படும் இடம்.

**oys'ter-bar**, *n.* அருந்தகத்தில் சிப்பிச் சிற்றுணு வழங்கப் படும் இடம்.

**oys'ter-bed**, *n.*=oyster-bank.

**oys'ter-catcher**, *n.* ஆழமற்ற கடல் நீரினுள் நடக்கவல்ல பறவை வகை.

**oys'ter-farm**, *n.* சிப்பிப் பண்ணையாகப் பேணப்படும் கடலடிப் பகுதி.

**oys'ter-knife**, *n.* சிப்பிச் சூரிகத்தி.

**oys'ter-patty**, *n.* சிப்பிப் பண்ணியம்.

**ozo'cerite, ozok'erit**, *n.* மெழுகுத்திரி-மின்காப்பு ஆகிய வகைகளிற் பயன்படும் புதைபடிவ அரக்குப்பொருள்.

**oz'one**, *n.* கமழி, செறி உயிரக ஓதை; மகிழ்வூக்குந் திறன்.

**ozonif'erous**, *a.* செறி உயிரகங் கொண்ட; கமழி ஆக்குகிற.

**oz'onize**, *v.* கமழியாக மாற்று; செறி உயிரகமூட்டு; செறி உயிரகம் வழங்கு.

**ozoniz'er**, *n.* உயிரகத்தைக் கமழியாக்கும் அமைவு.

**Pa**, *n.* (பே-வ.)=papa.

**pab'ulum**, *n.* உணவு.

**pace**[1], *n.* ஒரு காலடி; காலடித்தொலைவு; ஏறத்தாழ முப்பது அங்குலத்தொலைவு; பண்டை ரோமர் வழக்கில் ஒரே காலின் இரு தடங்களுக்கிடைப்பட்ட தொலைவு, ஏறத்தாழ அறுபது அங்குலத்தொலைவு; செல்லும் வேக அளவு, நடைவேகம்; ஓட்டவேகம்; முன்னேற்ற வேகம்; *v.* மென்னடையிடு; ஒழுங்குநடையிடு; ஒழுங்குநடை நடந்து கட; காலடியால் அள; குதிரை வகையில் ஒருபக்கத்து இருகால்களையும் ஒருங்கெடுத்துவைத்து நட; வேக அறுதியிட்டமை; (தொ.) go the pace, மிகு விரைவாகச் செல்; சிறிது காலத்திற்குள்ளே பெரிய அளவு ஆற்றலைப் போக்கடித்துக்கொள்; hold pace with, keep pace with, தொடர்ந்து உடன்செல்; make the pace, set the pace, பிறர் பின்பற்றுவதற்காக வேகத்தை முறைப்படுத்து; put one through one's paces, ஒருவர் திறமறிய ஏற்பாடுசெய்.

*pa'ce*[2], (ல.) *prep.* இசைவிணக்கம்பெற்று, கருத்துக்குப் போதிய மதிப்புப்பெற்று.

**pa'cer**, *n.* மென்னடையிடுபவர், ஒழுங்குநடையிடுபவர்; ஒரு பக்க இருகால் ஒருங்குநடைபோடுங் குதிரை.

*pa'ce tu'a*, (ல.) *adv.* தம் இசைவிணக்கத்துடன், தம் கருத்துக்குரிய மதிப்புடன்.

**pa'cha**, *n.*=pasha.

**pachi'si**, (இ.) *n.* நால்வர் ஆடும் தாய ஆட்டம்.

**pach'yderm**, *n.* திண்தோல் விலங்கு; திண்தோலர், சொரணை கெட்டவர்.

**pachyderm'atous**, *a.* திண்தோல் விலங்கினஞ் சார்ந்த; திண் தோலுடைய; ஊறுணர்ச்சியற்ற.

**Pacif'ic**[1], *n.* ஆசிய-அமெரிக்க மாநிலங்களுக்கு இடையிலுள்ள மாகடல், பசிபிக் மாகடல்; *a.* பசிபிக் மாகடலுக்குரிய.

**pacif'ic**[2], *a.* அமைதிவாய்ந்த; சமாதானம் நாடுகிற; அமைந்த பண்புநலமுடைய.

**pacifica'tion**, *n.* அமைதிப்படுத்துதல்; அமைதி உடம்பாடு.

**pacif'icism, pa'cifism**, *n.* போரொழிப்புக் கோட்பாடு, போரொழிப்பு விரும்பத்தக்கதன்றியும் நடைமுறைப்படுத்தத் தக்கதென்னுங் கோட்பாடு.

**pacif'icist, pa'cifist**, *n.* போரொழிப்புக் கோட்பாட்டாளர்.

**pa'cify**, *v.* அமைதிப்படுத்து, கோபந் தணிவி, கொந்தளிப்பை அடக்கு; அமைதியூட்டு; அமைதி நிலவச்செய்.

**pack**, *n.* கட்டு; சிப்பம்; மூட்டைமுடிச்சு; தொகுதி; கும்பு, குழு; வேட்டைநாய்த் தொகுதி; விலங்குத்திரள்; பறவைத் தொகுதி; நீர்மூழ்கு படை நிரை; சீட்டுக்கட்டுத் தொகுதி; ஓட்டுத்தாள் முதலியவற்றின் மூட்டிணை அடுக்கு; மீன்-கனி வகை முதலியவற்றின் பருவ விளைவுத்தொகுதி; நில முனைக் கோடிக் கடல்களின் மிதவைப் பனிக்கட்டிப்பாளத் தொகுதி; காற்பந்தாட்ட வகையில் முன்வரி ஆட்டக்காரர் தொகுதி; *v.* திணித்துவை; நெருக்கிவை; திரட்டிக்குவி; கட்டிடு; பொதி; வரிந்துகட்டு; இறுக்கிக்கட்டு; கட்டில் இணை; மூட்டையில் வைத்துக்கட்டு; மூட்டையாகக் கட்டு; பெட்டியில் இட்டுநிரப்பு; பேழையிலிட்டுப் பதனஞ்செய்; வேட்டை நாய்களைத் தொகுதிகளாக வகுத்தமை; சீட்டுக்களைக் கட்டில் வை; (மரு.) ஈரத் துணியால் சுற்றி வரிந்து போர்த்து; நிறைய சுமை ஏற்று; மூட்டை கட்டிக்கொண்டு புறப்படு; ஒருங்குதிரள்; தொகுதிகளாக இணை; எளிதாகக் கட்டில் அமை; அடுக்க எளிதாயமைந்திரு; முறைகாண் ஆயத்தினர் முதலியோரை ஒருசார்புபடத் தேர்ந்தெடு; (தொ.) pack of fools, மூடர் தொகுதி; pack of lies, பொய்மூட்டை, புளுகு மூட்டை; pack of nonsense, பொருந்தாப் புளுகுமூட்டை; send one packing, மூட்டை முடிச்சோடு அனுப்பு.

**pack'age**, *n.* கட்டு; சிப்பம்; துணிமணி செறித்து வைக்கப் பட்ட பெட்டி.

**pack'-drill**, *n.* தண்டமுறைப் படையணி நடை.

**pack'er**, *n.* வரிந்துகட்டுபவர்; வாணிக மூட்டை கட்டி; சிப்பங்கட்டி; மூட்டை கட்டுவதற்கான பொறி.

**pack'et**, *n.* சிறு சிப்பம்.

**pack'-horse**, *n.* பொதிக்குதிரை.

**pack'ing**, *n.* வரிந்துகட்டல்; மூட்டைகட்டல்; பொதிவு; கட்டுமானம்; கட்டுமானப்பொருள்; கட்டுமான இடநிரப்புப் பொருள்; பொறியின் சுழல்பகுதி அடைப்பு நிரப்புப்பொருள்; மசகடைப்பு.

**pack'ing-box**, *n.* துணிமணி நிரப்புப்பெட்டி.

**pack'ing-needle**, *n.* கட்டுமானத் தையல் ஊசி.

**pack'ing-sheet**, *n.* பொதியுறை, கட்டுமானப்பொதியிரட்டு; (மரு.) நீர்மருத்துவத்துறை ஈரக்கம்பளம்.

**pack'-saddle**, *n.* பொதிக்குதிரைச் சேணம்.

**pack'thread**, *n.* கட்டிழை; கட்டுமானத் தைப்பு நூல்.

**pact**, *n.* உடன்படிக்கை.

**pad**[1], *n.* சேணப் பையுறை; இரட்டைச்சேணத்தின் உடல் வார் மாட்டி; திண்டு, மெத்தை; பையுறை, பஞ்சுத் திணியுறை; இடநிரப்புக் காப்பு; நைவுகாப்பு; ஆட்டக்காரர் முழந்தாள் காப்புறை; குண்டூசி உறைகாப்பு; ஒட்டுத்தாள் இணைபொதி; விலங்கு அடிகாப்புத் தசைத் திண்டு; நரி-முயல் ஆகியவற்றின் உள்ளங்கால்; காலடித்தடம்; கொளுவியின் தாயமாட்டி; கைப்பிடிநிலைமாட்டி; *v.* திண்டு அமை; மென் பஞ்சுறை பொருத்து; இணைபொதி ஆக்கு; பஞ்சு உள்வைத்துத் திணி; உப்ப வை, பெரிதாக்கு; ஊறித் தோய்வி; வண்ணப் பற்றுசு செறிவி; காலடி மூலம் தடங் காண்; பயனில் சொற்கொண்டு நிரப்பு.

**pad**[2], *n.* பழம் முதலியவற்றின் ஒரு கூடை அளவு.

**pad**[3], *v.* கால்நடையாகச் செல்; கால்நடையாகப் பயணஞ் செய்.

**pad'dle**[1], *n.* நீள்தண்டு; படகின் அகல் துடுப்பு; வண்டிச் சக்கரத்தின் சுற்றுவரைச் சட்டப்பகுதி; மீனின் துடுப்பு; துடுப்பியக்கம்; துடுப்பியக்கத் தவணை; *v.* துடுப்பை இயக்கு; படகினைத் தண்டுகைத்துச் செலுத்து; நீரில் தவழ்ந்துசெல்; மெல்லச் செல்; (தொ.) paddle one's own canoe, தன்னையே சார்ந்திரு.

**pad'dle**[2], *v.* ஆழமற்ற நீரில் காலாலளை, அளைந்து விளையாடு; கையால் தடவியூடாடு; குழந்தை வகையில் தள்ளாடி நடமாடு.

**padd'ock**[1], *n.* சிறு புல்வெளி; பொலிவிடைப்பண்ணைப் பகுதியான புல்வெளி முற்றம்; குதிரையோட்டப் பந்தய வெளியருகில் பந்தயத்துக்கு முன்பு குதிரைகளைக் கட்டிவைப்பதற்கான புற்கரணடைப்பு; வயல், நிலக்கூறு.

**padd'ock**[2], *n.* (பே-வ.) தவளை, தேரை.

**Padd'y**[1], *n.* அயர்லாந்து நாட்டவர்.

**padd'y**[2], *n.* நெல்; நெற்பயிர்த்தாள்; நெற்பயிர்.

**padd'y**[3], **padd'ywhack**, *n.* (பே-வ.) கோப எழுச்சிவீச்சு, சீற்றம்.

**Pa'dishah**, (பெர்.) *n.* பாரசிக அரசர்; துருக்கி மன்னர்.

**pad'lock**, *n.* கொண்டிப்பூட்டு; *v.* கொண்டிப்பூட்டிட்டுப் பூட்டு; (தொ.) padlock law, மணக்கட்டு எல்லையைப் பூட்டிக்கொள்வதற்குரிய உரிமைச் சட்டம்.

**padouk'**, *n.* பர்மா நாட்டு வெட்டுமரவகை; வெட்டு மரவகையின் கட்டை.

**pad're**, *n.* பாதிரி, தனிமுறைக் குரு.

*padron'e*, (இத்.) *n.* நடுநிலக்கடல் வாணிகக்கப்பல் தலைவன்; இத்தாலி நாட்டில் தெருப்பாடகர் தலைவன்; குழந்தைப் பிச்சைக்காரர் தலைவன்; இத்தாலிய வழிமனையுரிமையாளன்.

**Pa'dshah**, (பெர்.) *n.*=Padishah.

**pad'uasoy**, *n.* முற்கால ஒப்பனைப் பட்டிழைப்புரி.

**pae'an**, *n.* நன்றிப்பாடல்; வாகைப்பாடல்.

**paed'erast**, *n.* பையன் வேட்கையர்.

**paed'erasty**, *n.* பையன்பால் வேட்கை.

**paediat'ric**, *a.* குழந்தை மருத்துவஞ் சார்ந்த.

**paediatri'cian**, *n.* குழந்தை மருத்துவர்.

**paediat'rics**, *n. pl.* (மரு.) குழந்தை வைத்தியம்.

**paediat'rist**, *n.*=paediatrician.

**paedobap'tism**, *n.* குழந்தைத் தீக்கைமுறை.

**paedobap'tist**, *n.* குழந்தைத் தீக்கைமுறை ஆதரவாளர்.

**pae'on**, *n.* ஓரசை நீண்ட நாலசைச்சீர்.

**pag'an**, *n.* புறச்சமயி; *a.* புறச்சமயியான.

**pag'anish**, *a.* புறச்சமயச் சார்புடைய.

**pag'anism**, *n.* புறச்சமயச்சார்பு; புறச்சமயம்; புறச்சமய நம்பிக்கைகள் பழக்கவழக்கங்கள் தொகுதி.

**pag'anize**, *v.* புறச்சமயச்சார்பாக்கு; புறச்சமயத்துக்கு மாற்று.

**page** [1], *n.* பக்கம், ஏட்டிதழின் ஒருபுறம்; வரலாற்றில் ஒரு பக்கம் நிறைக்கத்தக்க பகுதி; *v.* பக்கவரிசை எண்குறி, பக்க எண்குறி.

**page** [2], *n.* பணியாள், குற்றேவற் சிறுவன், துணைச்சிற்றாள்; துணையுழையர், உயர்தரப் பணிமுதல்வர் துணையாள்; பயிற்சி நிலையிலுள்ள வீரப்பெருந்தகையின் இளந்துணைவர்; இளந்தகை, இளவீரப்பெருந்தகை; *v.* துணையுழையர் மூலம் கூவியழை.

**pa'geant**, *n.* ஆரவாரக் கண்காட்சி; பேரணிக்காட்சி; அருவண்ணக்காட்சி; நாடகக் கண்காட்சி; வரலாற்றுக்காட்சியணி; ஓவியப் பல்வண்ணக்காட்சி; அணிவரிசைக்காட்சி; வெற்றாரவாரம், புறவண்ணத்தோற்றம்.

**pa'geantry**, *n.* பகட்டாரவாரக் காட்சி; வெற்றாரவாரத் தோற்றம்.

**Pa'gett, M.P.**, *n.* சென்றிருக்கும் நாட்டைப்பற்றி அறிய வேண்டுவன யாவும் சில மாதங்களுக்குள் அறிந்துவிடுவதை எதிர்பார்க்கும் பிரயாணி.

**pa'ginal**, *a.* பக்கங்கள் சார்ந்த; பக்கவரிசையான; பக்கங்கள் அடங்கிய; பக்கத்துக்குப் பக்கம் இணைவான.

**pa'ginate**, *v.* பக்கவரிசைப்படுத்து, பக்கவரிசை எண்குறி.

**pagina'tion**, *n.* பக்க வரிசைப்பாடு, பக்க வகுப்பு; பக்க எண்குறியீட்டு முறை.

**pa'ging**, *n.* பக்க எண்குறிப்பீடு; பக்கக் குறியீட்டுமுறை.

**pagod'a**, *n.* கோபுரம்; கோயில்; தூபி; கோட்டம், புத்த விகாரம்; தூபிப்பாணியில் அமைந்த கட்டிடம்; வராகன், தென்னிந்திய பழம்பொன் நாணயம்.

**pagod'a-tree**, *n.* வராகன்கள் காய்ப்பதாகக் கற்பனை செய்யப் பட்ட மரம்.

**pagur'ian**, *n.* யோகி நண்டு, யோகிபோன்ற தோற்றம் காட்டும் நண்டு வகை; *a.* யோகி நண்டுக்குரிய.

**pah**, *int.* வெறுப்புக்குறிப்பு.

**paid**, *v.* pay என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**pail**, *n.* வாளி, மரத் தூக்குதொட்டி; வாளி அளவு.

**paillasse'**, *n.* வைக்கோல் பையுறை, வைக்கோல் மெத்தை.

**paillette'**, *n.* மினுக்கத் துணுக்கு, மெருகுச் சாயத்தில் பயன்படும் பளபளப்பான உலோகத் துகள்.

**pain**, *n.* நோவு, வேதனை; மனத்துன்பம், மனத்துயர்; *v.* நோவு உண்டுபண்ணு; துன்புறுத்து; நோவுகொள், துன்புறு.

**pained**, *a.* துன்புற்ற; துயரார்ந்த; நோவுறுகிற; வருத்தங் கொள்கிற; கவலையார்ந்த.

**pain'ful**, *a.* நோவுதருகிற; துன்பந்தருகிற; துன்பம் நிறைந்த, வருந்தி உழைக்கவேண்டிய; கவலை எடுத்துக் கொள்ளவேண்டிய.

**pain'less**, *a.* நோவற்ற; நோவுதராத; வருத்தந் தேவையற்ற.

**pains**, *n. pl.* பிள்ளைப்பேற்று வேதனை; கடுமுயற்சி, மெய் வருத்தம்.

**paint**, *n.* சாயம்; முகப்பூச்சு வண்ணப்பொருள்; *v.* வண்ணந் தீட்டு; ஓவியந் தீட்டு; அணிசெய், ஒப்பனை செய்; உருவகப் படுத்திக் காட்டு, சொல்லோவியந் தீட்டு; சாயம்பூசு; வண்ணந் தோய்வி; முகத்துக்குச் சாயமிடு; (தொ.) paint out, சாயம் மேலிட்டு உருத்தெரியாமல் அழி; paint the lily, அழகினை அழகு செய்; paint the town red, கலவரமாக எழு.

**paint'ed**, *a.* சாயம்பூசிய; அணி செய்த; (தொ.) Painted Lady, வண்ணத்துப்பூச்சி வகை.

**paint'er** [1], *n.* ஓவியர்; சாயமிடுபவர்; (தொ.) painter's colic, ஈயச்சாயமிடுபவர்களுக்கு அடிக்கடி வரும் வயிற்றுவலி.

**paint'er** [2], *n.* படகைக் கப்பலுடன் பிணைக்குங் கயிறு; (தொ.) cut the painter, குடியேற்ற நாட்டு வகையில் பிரிவு ஏற்படுத்து.

**paint'ing**, *n.* ஓவியம்; ஓவியக்கலை.

**paint'y**, *a.* சாயஞ் சார்ந்த; வண்ணமிகையுடைய.

**pair**, *n.* இணை, இரண்டன்தொகுதி; சோடி, இணையாக வழங்கும் பொருள்களின் ஒரு தொகுதி; கத்தரி-குறடு-காற்சட்டை முதலியன போன்று இருபகுதிகள் இணைந்தே வழங்கும் இரு கவர்ப்பொருள்; மணத்துணைவர்; கணவன் மனைவியர்; மணமாகிய காதல்துணைவர்; இணைகாதலர்; ஒரு நுகத்துக் குதிரை இணை; சட்டமாமன்றத்தில் ஒருங்கு இசைவுடன் வராதிருக்கும் இணைதுணைவோர்; இணைதுணைவராகத்தக்க எதிரிணை துணைவோர்; இணைதுணைவோருள் ஒருவர்; எதிரிணை; விலங்கிணை; ஒத்த இணை; ஈடுசோடு, ஒப்புடைய எதிரிணை; படிக்கட்டு இரட்டை; *v.* இணைவுறு; காதலில் இணை; திருமணத்தில் இணை; இணைவிழைச்சில் ஈடுபடு; எதிர்பாலாருடன் கூடி இணை; எதிர்பாலுடன் இணை; சோடியாக்கு; இணையிணையாக வகுத்தமை; சோடியாகு; இணையிணையாக அமை; எதிரிணையாயிரு; இணைகூடு, ஒருங்கிணை; சட்டமாமன்றத்தின் எதிர் உறுப்பினர் இருவர் வகையில் ஒத்து முடிவுசெய்து வராமலிரு; (தொ.) pair off, இரண்டிரண்டாக வை, இரட்டையாக அடுக்கு; pair royal, ஒரே இனப்பிரிவு சார்ந்த மூன்று சீட்டுக்களின் தொகுதி; ஒத்த எண்ணைக் கொண்ட மூன்று கவற்றுக்காய்கள்.

**pair'-horse**, *a.* இரட்டைக் குதிரைகளுக்குரிய.

**pair'-oar**, *n.* இரட்டைத் துடுப்புப் படகு.

**paja'mas**, *n. pl.*=pyjamas.

**pal**, *n.* தோழர், நண்பர், துணைவர்; *v.* இணைந்திரு; தொடர்புகொள், கூட்டாளியாயிரு.

**pal'ace**, *n.* அரண்மனை, அரசமாளிகை; கிறித்தவசமயத் தலைவர் இருப்பிடம்; அகல்மாட மாளிகை; இன்பமாளிகை, கேளிக்கை விருந்தாட்டு மனை; (தொ.) palace car, இன்ப வாய்ப்புக்கள் அமைந்த புகைவண்டிப் பெட்டி.

**pal'adin**, *n.* பழங்கால பிரஞ்சு நாட்டு மன்னன் சார்லிமேன் (Charlemagne) அரசவைப் பெருமக்கள் பன்னிருவருள் ஒருவர்; அருஞ்செயல்வீரன், வீரத்திருவாளன்.

**palaeoarc'tic**, *a.* பழைய உலகின் வடபகுதி சார்ந்த, வட ஆசிய ஐரோப்பிய பரப்புக்குரிய.

**palaeocrys'tic**, *a.* தொல்பழங்காலத்திலிருந்தே உறைந்த பனிக்கட்டி சார்ந்த.

**palaeog'raphy**, *n.* தொல்லெழுத்துக் கலை.

**palaeolith'ic**, *a.* பழைய கற்கருவிகளாற் குறிக்கப்பட்ட; பழங்கற்காலஞ் சார்ந்த.

**palaeontol'ogy**, *n.* புதைபடிவ ஆய்வு நூல்.

**pal'aeothere**, *n.* சிறு தும்பிக்கைபோன்ற உறுப்பும் குளம்புகளும் கொண்ட பன்றியொத்த வழக்காறற்றுப்போன பால்குடி விலங்குவகை.

**palaeozo'ic**, *a.* (மண்.) தொல்லுயிரூழி சார்ந்த.

**palaes'tra**, *n.* களரி, மற்போர்ப் பயிற்சி நிறுவனம்.

**pal'afitte**, *n.* சுவிட்சர்லாந்திலும் வட இத்தாலியிலும் கம்பங்கள் மீதமைந்த வரலாற்றிற்கு முற்பட்டகால ஏரிக்குடிசைகள்.

**palankeen', palanquin'**, *n.* பல்லக்கு, சிவிகை; மூடு வண்டி.

**pal'atable**, *a.* நாவுக்கினிய; சுவையார்ந்த; மனத்திற்குப் பிடித்தமான.

**pal'atal**, *n.* அண்ண ஒலி; இடைநா இடையண்ண ஒலி; *a.* அண்ணத்திற்குரிய; இடைநா இடையண்ணத்திற் பிறக்கிற.

**pal'ate**, *a.* அண்ணம்; முதுகெலும்புடையவற்றின் மேல்வாய்; சுவையுணர்வு, சுவைப்புலன்; மனச்சுவை, மனவிருப்பம்.

**pala'tial**, *a.* மாளிகை போன்ற; பீடுறு தோற்றமுடைய.

**palat'inate**, *n.* ஆட்சியுரிமை உடைய பெருமகனின் கீழுள்ள நிலப்பகுதி; டர்ஹாம் (Durham) பல்கலைக்கழகத்தில் போட்டி விளையாட்டுக்களில் அணியப்படும் இள ஊதா நிறம்; (தொ.) the Palatinate, the Rhine Palatinate, அரசருக்கான உரிமைகளும் மதிப்புமுடைய பெருமகனின் ஆட்சிக் கீழிருந்த பழைய செர்மானிய பேரரசு.

**pal'atine** [1], *n.* மகளிரின் கம்பளித் தோள்குட்டை.

**Pal'atine** [2], *a.* கோமகன் வகையில் மன்னருக்குமட்டுமே உரிய ஆட்சியுரிமைகளையுடைய.

**pal'atine** [3], *a.* அண்ணத்துக்குரிய, அண்ணஞ் சார்ந்த; (தொ.) palatine bones, பல்லண்ணத்தை உருவாக்கும் இரண்டு எலும்புகள்.

**pal'atogram**, *n.* அண்ண ஒலிப்பிறப்பு விளக்கப்படம், ஒலிகளின் பிறப்பில் அண்ணத்துக்குரிய பங்கினை விளக்குதற்குரிய உருவப்படம்.

**pala'ver**, *n.* கலந்து பேசுங்கூட்டம்; ஆப்பிரிக்க பழங்குடியினருடன் கூடிப்பேசுங்கூட்டம்; ஆரவாரப்பேச்சு; வாத ஆரவாரம்; வீண்வாதம்; ஏமாற்றுப்பேச்சு; *v.* மட்டுமீறிப் பேசு; வீண்பேச்சுப் பேசு; முகப்புகழ்ச்சி செய்; கெஞ்சிக் காரியமாற்று.

**palay'**, (த.) *n.* பாலைமரம்.

**pale** [1], *n.* வேலிக்கான கூர்முனையுடைய மரத்துண்டு; மரமுளை, கிராதிக்கம்பு; வேலி; எல்லை; (கட்.) கேடயத்தின் மையத்திலுள்ள செங்குத்தான கோடு; (தொ.) the English Pale, ஆங்கிலேயர்கள் ஆட்சியிலிருந்த அயர்லாந்து நாட்டுப் பகுதி.

**pale** [2], *a.* வெளிறிய, வெளுத்த; மங்கலான, மங்கல் நிறமுடைய; ஒளிமழுங்கலான; *v.* வெளிறிப் போ; வெளிறச் செய்.

**paled**, *a.* வேலியிடப்பட்ட, முளைகளால் வேலி சூழப்பட்ட.

**pales'tra**, *n.* = palaestra.

**pal'etot**, *n.* தளர்ச்சியான மேலங்கி.

**pal'ette**, *n.* ஓவியர் வண்ணத்தட்டு; ஓவியர் பயன்படுத்தும் வண்ணம்; ஓவியர்வண்ண வகை; ஓவியர் வண்ணக்கலப்பு.

**pal'ette-knife**, *n.* வண்ண அலகுக்கத்தி, வண்ணங்கள் கலக்கப் பயன்படும் மெல்லிய எஃகு அலகுடைய கத்தி.

**pal'frey**, *n.* மகளிர் ஏறிச்செல்லும் மட்டக்குதிரை.

**Pa'li**, *n.* புத்தசமயத்தவரது புனிதமொழி, பாளி.

**pal'ikar**, (கிரே.) *n.* கிரேக்க அல்லது அல்பேனிய படைத் தளபதியின் விடுதலைப் போராட்டகாலக் குழுவின் உறுப்பினர்.

**pal'impsest**, *n.* அழித்தெழுதத் தக்க வரைவு மூலப்பொருள்; *a.* முதற்படியை அழித்து அதன்மேல் இரண்டாம் முறை எழுதப்பட்ட.

**pal'indrome**, *n.* இருவழி ஒக்குஞ்சொல்; (எ-டு. மோரு தருமோ) முன்பின் இருவழியும் ஒத்த எழுத்துக்கோப்புடைய செய்யுள், மாலைமாற்று; *a.* இருவழியும் ஒக்குஞ் சொல்லுடைய, மாலைமாற்றான.

**pal'ing**, *n.* இடுமுள் வேலி.

**palingen'esis**, *n.* புத்துயிர்ப்பு, புத்துயிரளிப்பு; புதுமலர்ச்சியூட்டல்; (உயி.) முன்னோர் பண்புகள் உள்ளவாறே மாறுது உருவாதல்.

**pal'inode**, *n.* மாறுபடக் கூறுங் கவிதை; கொள்கை கைதுறப்பு.

**palisade'**, *n.* கம்பிவேலி; குச்சிவேலி, கூரிய முளைகளால் ஆன அடைப்பு; (படை.) திண்ணிய கழியரண்; *v.* வேலியிட்டு அடை, வேலி சூழ், வேலியிடு.

**pal'ish**, *a.* சற்றே வெளுத்துப்போன, வெளிறிய.

**pall** [1], *n.* பிணச்சீலை, பிணப்பேழை அல்லது கல்லறைமேல் விரிக்கப்படுங் கருமை அல்லது ஊதா அல்லது வெள்ளை மென்பட்டினுலான துணி; போப்பாண்டவர் அல்லது மாவட்டக் கிறித்தவ சமயத்தலைவர் அணியுங் கம்பளியுடை; மேலங்கி, மேலாடை.

**pall** [2], *v.* சுவையற்றுப் போ; ஊக்கங்குன்றச்செய்; வெறுப்பூட்டு, சலிப்பூட்டு.

**Pallad'ian**, *a.* (க-க.) பதினாறும் நூற்றாண்டின் இத்தாலிய பாணிசார்ந்த.

**pallad'ium** [1], *n.* பாலாஸ் (Pallas) என்ற பெண் தெய்வத்திற்குரிய டிராய் (Troy) நகர்ப் பாதுகாப்புச் சிலை; பாதுகாப்பு; *pl.* pallad'ia.

**pallad'ium**, [2], *n.* விழுப்பொன் வகைத் தனிமம், பிளாட்டின (platinum) உலோகக் குழுவைச் சார்ந்த வெண்ணிற உலோகத் தனிமம்.

**pall'bearer**, *n.* பிணப்பேழை தூக்குபவர்.

**pall'et**, *n.* வேட்கோவர் மரத்துடுப்பு; ஓவியரின் வண்ணத் தட்டு; சக்கர இயக்கத்தை மாற்றப் பயன்படும் பொறியின் கைப்பிடி; இசைக்கருவியின் காற்றுப் பெட்டியில் ஒவ்வொரு குழலுக்கும் அடியிலுள்ள தடுக்கிதழ்.

**pall'iasse**, *n.* = paillasse.

**pall'iate**, *v.* மட்டுப்படுத்து; தளர்த்து; நோயைத் தணிவி; குறை பொருட்படுத்தாதிரு.

**pallia'tion**, *n.* கடுமைத்தணிவு.

**pall'iative**, *a.* அப்பொழுதைக்குக் குறைக்கிற, தணிக்கிற, ஆற்றுகிற, தளர்த்துகிற.

**pall'id**, *a.* வெளுத்த, வெளிறிய.

**pall'ium**, *n.* கிரேக்கரிடையே ஆண்பாலார் அணியும் நீள் சதுர அங்கி; மாவட்டக் கிறித்தவ சமயத்தலைவரின் கம்பளி உடுப்பு; நத்தையின் புறமடிப்புக்கள்.

**pall'-mall'**, *n.* வளையப்பந்தாட்டம், நீண்டொடுங்கிய வழியில் தொங்கவிடப்பட்ட இரும்பு வளையங்களின் ஊடாகப் பந்து செலுத்தப்படும் பந்தாட்ட வகை; வளையப்பந்தாட்டத் திற்குரிய நீண்டொடுங்கிய சந்துவழி.

**pall'or**, *n.* வெளிறிய நிறம்; வெளிறிய தோற்றம்.

**pall'y**, *a.* (பே-வ.) இணக்கமான, நட்பான.

**palm** [1], *n.* புல்லின மரம், தென்னை-பனை போன்ற ஒற்றைத் தடி மரவகை; வெற்றிக்கு அடையாளமான பனைவகைக் குருத்து; நய நேர்த்தி; பரிசு, வெற்றியில் கிடைத்த பொருள்; கிறித்தவர்களுக்குச் சிறப்பான விழாக்களிற் பயன்படுத்தப்படும் குருத்தோலை; (தொ.) Palm Sunday, இயேசுநாதர் மீட்டுயிர்த்தெழுந்ததன் நினைவான குருத்தோலை விழாநாள்.

**palm** [2], *n.* உள்ளங்கை; அங்கைவரை மூடுங் கையுறை; அங்கை அகலம், ஏறத்தாழ நாலு அங்குலம்; உள்ளங்கை நீளம், ஏறத்தாழ எட்டு அங்குலம்; *v.* சூழ்ச்சியால் ஏய்த்துச் செயலாற்று; திறமையால் வெற்றியுறு; உள்ளங்கையால் சீட்டு-கவறு முதலியவற்றை மறை; உள்ளங்கையால் தடவு; கைக்கூலி கொடு, கையுறை அளி; (தொ.) grease person's palm, கைக்கூலி கொடுத்து வசப்படுத்து; sailmaker's palm, விரற்காப்பு ஈயக்குமிழ்களுடன் இணைக்கப்பட்ட உள்ளங்கைத் தோல்வார் உறைகாப்பு.

**Pal'ma Chris'ti**, *n.* ஆமணக்கு வகை சார்ந்த செடியினம்.

**pal'mar**, *a.* உள்ளங்கை சார்ந்த; உள்ளங்கையிலுள்ள.

**pal'mary**, *a.* வாகையேந்திய ; புகழ்பெற்ற, சிறப்புவாய்ந்த.

**pal'mate, pal'mated**, *a.* உள்ளங்கை வடிவான.

**pal'mer**, *n.* புண்ணிய யாத்திரையிலிருந்து குருத்தோலேயோடு திரும்பும் கிறித்தவர் ; எருசலேம் சென்றுவந்தவர் ; வறுமை வாழ்வை நோன்பாக மேற்கொண்ட நாடுசுற்றுந் துறவி ; கேடு விளைவிக்கும் மயிரடர்ந்த கம்பளிப் புழு வகை; மயிரார்ந்த செயற்கை ஈ.

**pal'mer-worm**, *n.* கேடு விளைவிக்கும் மயிரடர்ந்த கம்பளிப் புழு வகை.

**palmett'o**, *n.* குட்டையாயுள்ள விசிறிப்பனை ; கூழைப்பனை யினங்களின் வகை.

**pal'miped, pal'mipede**, *n.* தோலடியுள்ள பறவை ; *a.* தோலடியுள்ள.

**pa'lmistry**, *n.* கைவரைநூல், இரேகை சாத்திரம்.

**palm'-oil**, *n.* புல்லின மர எண்ணெய்.

**pa'lmy**, *a.* புல்லின மரவகை சார்ந்த; பனையின மரங்கள் நிரம்பிய; வெற்றிவிழாக் கொண்டாடுகிற; வளமிக்க, சிறப்பு மிக்க.

**palmyr'a**, *n.* பனைமரம்.

**palp**, *n.* பூச்சிகளின் உணர்கொம்பு.

**pal'pable**, *a.* தொடக்கூடிய ; உணரக்கூடிய ; புலன்களால் எளிதில் அறியக்கூடிய, மனத்தால் அறியக்கூடிய.

**pal'pate**, *v.* தொட்டுக் கையாளு ; மருத்துவ ஆய்வில் தொட்டுச் சோதனைசெய்.

**pal'pebral**, *a.* கண்ணிமை சார்ந்த; கண்ணிமைகளுக்குரிய.

**pal'pitate**, *v.* துடி ; நடுங்கிடு.

**palpita'tion**, *n.* துடிப்பு ; கடும் உழைப்பு-நோய்-கவலே ஆகியவற்றால் ஏற்படும் மிகுதியான நெஞ்சுத்துடிப்பு.

**pal'pus**, *n.*=palp.

**pa'lsgrave**, *n.* அரசருக்கு மட்டுமேயுள்ள ஆட்சியுரிமைகளைத் தன் ஆட்சிவரம்பிற்குள் கொண்ட கோப்பெருமகன்.

**pa'lstave**, *n.* வெண்கல ஊழிக் கோடரி.

**pal'sy**, *n.* முடக்குவாதம் ; முழுதும் உதவியற்றநிலே; முழுதும் உதவியற்றதாக்கும் பண்பு ; *v.* முடக்குவாதப்படுத்து ; மரத்துப் போகச் செய் ; உணர்வுகெடு.

**pa'lter**, *v.* இரண்டுபொருள்படப் பேசு; இரண்டகமாக நட, மாருட்டஞ் செய் ; போக்குக்காட்டி ஏய் ; சிறு செய்திக்குச் சச்சரவு செய், அற்பத்திற்கு மல்லாடு; முக்கியத்துவம் கவனியாமல் விளையாட்டுத்தனமாக நடந்துகொள்.

**pa'ltry**, *a.* அற்பமான, சிறுதிறமான ; வெறுக்கத்தக்க ; பயனற்ற.

**palud'al**, *a.* சதுப்புநிலஞ்சார்ந்த ; சதுப்பு நிலத்திற்குரிய ; முறைக் காய்ச்சலுக்குரிய.

**pal'y**, *a.* (செய்.) சற்றே வெளுத்த.

**pam**, *n.* சீட்டாட்ட வகையில் உச்சமதிப்புடைய காலாட் சீட்டு.

**pam'pas**, *n. pl.* தென் அமெரிக்காவில் அமேசான் ஆற்றின் தென் பகுதியிலுள்ள மரங்களற்ற பரந்த சமவெளிப்பகுதி.

**pam'pas-grass**, *n.* தென் அமெரிக்காவினின்று ஐரோப்பாவிற்குக் கொண்டுவரப்பட்ட வெண்பட்டுப்போன்ற நீள் சூட்டுப் பெரும் புல்வகை.

**pam'per**, *v.* அதிக சலுகை காட்டு ; இனிய உண்டி ஊட்டு ; முழுதுந் திருப்தி செய் ; (தொ.) pampered menial, கெஞ்சிப் பிழைப்பவன்.

**pamper'o**, (ஸ்பா.) *n.* தென் அமெரிக்காவில் மேற்புறக்கடல் நோக்கி வீசும் கடுங்குளிர்காற்று ; *pl.* pamper'os.

**pamph'let**, *n.* துண்டு வெளியீடு ; விளம்பரச் சிற்றேடு.

**pamphleteer'**, *n.* துண்டு வெளியீட்டு எழுத்தாளர் ; சிறு விளம்பர ஏட்டு ஆசிரியர் ; *v.* துண்டு வெளியீடுகள் உருவாக்கு.

**Pan[1]**, *n.* பண்டைக் கிரேக்கரின் நாட்டுப்புறத் தேவதை ; இயற்கைத் தெய்வம்; புறச்சமயப் பரப்பு; புறச்சமயப் பண்பு, பொய்த் தெய்வ வழிபாடு ; இயேசுநாதர் காலத்துக்கு முன் இருந்த உலகம் ; ஒழுக்கத்துக்குப் புறம்பான உலகம்.

**pan[2]**, *n.* உலோகத்தட்டு ; மட்கலத்தாலம் ; கொதிகலத் தட்டம்; தட்டுப்போன்ற கொதிகலம்; துப்பாக்கியின் பற்றுவாய்; நிலப்பள்ளம்; மண்ணின் கீழாயுள்ள கெட்டியான படுகை ; *v.* தாலத்திலிட்டுப் பொற்சன்னங்களைக் கழுவு ; தங்கம் தோன்றப்பெறு ; வெற்றியடை ; நன்ருக நடைபெறு, நல்லபடி இயங்கு.

**pan[3]**, (இ.) *n.* வெற்றிலே.

**panace'a**, *n.* அனைத்துநோய் மருந்து, சஞ்சீவி.

**panache'**, *n.* சிகையணி இறகு, தலேச்சூட்டு; பகட்டு; வீம்பு நடை, வீருப்புப் பேச்சு.

**pana'da**, *n.* கூழாக வேகவைத்து நறுமணம் ஊட்டப்பட்ட அப்பம்.

**pan-Af'rican**, *a.* ஆப்பிரிக்கர்கள் அனைவரையுஞ் சார்ந்த ; ஆப்பிரிக்கர்கள் முழுமைக்குமான.

**Panama', Panama hat**, *n.* வைக்கோல் போன்ற பொருளாற் செய்யப்படும் நேர்த்தியான நெகிழ்வுடைய தொப்பி வகை.

**pan-Ang'lican**, *a.* இங்கிலாந்தின் திருச்சபையோடு அதன் கிளைகளையும் உள்ளடக்கிய.

**pan'atrope**, *n.* ஒலிபெருக்கிமூலம் இசைத்தட்டுக்களின் படியெடுக்கும் மின் அமைவு.

**pan'cake**, *n.* பணியார வகை, தோசை, முட்டை-மாவு-சர்க்கரை-பால் முதலியன கலந்து தட்டில் வார்த்தெடுக்கப்படும் மெல்லிய அடைவகை; விமானம் தட்டைச் சிறகுகளோடு கீழிறங்குதல்; (தொ.) flat as a pancake, முழுதும் தட்டையான.

**pancha'yat**, (ச., த.) *n.* பஞ்சாயத்து, ஐம்பெருங்குழு.

**panchromat'ic**, *a.* (நி-ப.) எல்லா நிறங்களையும் ஒருபடித்தாகக் கூருணர்கிற.

**pan-cos'mism**, *n.* பருப்பொருள் சார்ந்த இயலுலகு மட்டுமே மெய்யானதென்னுங் கோட்பாடு.

**pancrat'ic**, *a.* மல்லர் குத்துச்சண்டை சார்ந்த ; மூக்குக் கண்ணுடிவில்லே வகையில் பல பாகைகளிற் பருமைப்படுத்தத் தக்க.

**pancra'tium**, *n.* மல்லர் குத்துச்சண்டை.

**panc'reas**, *n.* கணையம், செரிமானத்துக்கேற்ற நீர்சுரக்கும் இரைப்பைக்கு அருகிலுள்ள சுரப்பி.

**pancreat'ic**, *a.* கணையஞ் சார்ந்த; (தொ.) pancreatic juice, கணைய நீர்.

**pan'creatin**, *n.* கணைய நீரின் செயற்படு கூறுகளில் ஒன்று; விலங்குகளின் கணையங்களிலிருந்து வடித்திறக்கப்படுஞ் செரிமான நீர்மம்.

**pan'da**, *n.* செங்கரடிப் பூனை, இமயமலேப் பகுதிசார்ந்த கரடியின விலங்கு வகை.

**Pandae'an, Pande'an**, *a.* கிரேக்க நாட்டுப்புறத் தெய்வத்தினைச் சார்ந்த ; (தொ.) Pandean pipe, வரிசையான குழல்களையுடைய இசைக்கருவி வகை.

**pan'dects**, *n. pl.* பண்டை ரோமப் பேரரசர் ஜஸ்டினியன் (Justinian) கட்டளைப்படி தொகுக்கப்பட்ட 50 சுவடிகளில் அடங்கிய ரோமப் பொதுநிலேச்சட்டம்; சட்டங்களின் முழுத் தொகுதி.

**pandem'ian**, *a.* இழிதகைமையான, உடலின்பஞ் சார்ந்த ; (தொ.) pandemian venus, பாலுணர்ச்சி சார்ந்த உடலின்பக் காமம்.

**pandem'ic**, *n.* பெரும்பரப்புத் தொத்துநோய் ; *a.* பெரும் பரவலான.

**pandemon'ium**, *n.* பேய்க்கூடம்; ஒழுங்கற்ற வன்செயலும் பேய்க்கூச்சலும் நிகழுமிடம் ; பெருங்குழப்பம்.

**pan'der**, *n.* பரத்தமைத் தரகர்; தீய சூழ்ச்சிகளுக்குத் துணை செய்பவர்; *v.* இழிந்த உணர்ச்சிகளுக்கு இடந்தேடிக்கொடு; தீய சூழ்ச்சிகளுக்குத் துணைசெய்.

**pandicula'tion**, *n.* காலை நீட்டிக்கொண்டு கொட்டாவி விடுதல்.

**pan'dit**, (ச.) *n.* அறிஞர், மொழிப்புலவர்; இந்துசமய சாத்திர வல்லுநர்; இந்திய சட்ட நிபுணர்; விஞ்ஞானப் புலவர்.

**pan'door**, *n.*=pandour.

**pandor'a**, *n.* நரப்பிசைக்கருவி வகை.

**Pandor'a's box**, *n.* நல்வாழ்வு சாபப்பெட்டி, கிரேக்கப் பழங் கதை மரபில் மனித இனத்தின் துன்பங்களையும் துயரங்களை யும் உள்ளடக்கித் திறந்தபோது சிதறவிட்டதாகக் கருதப் படும் பெட்டி.

**pandore'**, *n.*=pandora.

**pan'dour**, *n.* முற்கால ஆஸ்திரிய (Austrian) படைத்துறைப் பணியிலிருந்த காலாட்படையினன்; கொள்ளைக்காரன்.

**pane**, *n.* பலகணிக் கண்ணாடிச்சில்லு; பலகணிச் சட்டத்தின் நாற்கட்டமான கண்ணாடிப்பாளம்; *v.* பலநிறப் பட்டைத் துண்டுகளை இணைத்து உடுப்பு முதலியன ஆக்கு.

**panegy'ric**, *n.* புகழுரை; *a.* புகழ்சாற்றுகிற, புகழ்பாடுகிற, போற்றுதல் மயமான.

**panegy'rist**, *n.* புகழ்பாடுபவர், வைதாளிகர், மங்கலம் பாடுவோர்.

**pan'egyrize**, *v.* புகழ்ந்து பேசு; பாராட்டியெழுது.

**pan'el**, *n.* சேணத்தின் உள்ளிட்டு நிரப்பிய அணைதுணி; சேணவகை; தாள் நறுக்கு; முறைகாண் ஆயத்தினர் பெயர்ப் பட்டியல்; முறைகாண் ஆயம்; சிறு பெயர்ப்பட்டியல்; வழக்கு விசாரணைக்குட்பட்டவர்களின் தொகுதி; குற்றஞ் சாட்டப்பட்டவர்களின் தொகுதி; காப்பீட்டு மனுவாளர் களுக்குப் பணி செய்ய ஒத்துக்கொள்ளும் மாவட்ட மருத்து வர்களின் பட்டியல்; பொட்டிப்பு, கதவு-சுவர்க்காப்பீடு ஆகியவற்றின் பரப்பில் தனி முகப்புக்கூறு; நீள்சதுரத் துண்டு, மகளிர் உடுப்பில் வைத்துத் தைக்கப்படும் வேறு வகை அல்லது நிறமுள்ள துணித்துண்டு; வேலிப்பிரிவு; அகலத்தைவிட நீளம் மிக அதிகமாகவுள்ள பெரிய அளவு நிழற்படம்; அரங்கம், பிரிவு; கூறு; *v.* விலங்குக்குச் சேணம் பூட்டு; சுவர்-கதவு முதலியவற்றில் பொட்டிப்புகள் அமை; வேறுவகை அல்லது வேறுநிறத் துண்டுகளைக் கொண்டு உடுப்பு முதலியவற்றை ஒப்பனைசெய்.

**pang**, *n.* கடும்வேதனை, இணைவு; சுரீரென்ற நோவு.

**pan'gamy**, *n.* திடீர்ப்புணர்ச்சி, திடீர்த் திருமணம்.

**pan-gen'esis**, *n.* உறுப்புமரபுக் கோட்பாடு, உயிர்ப்பொரு ளின் ஒவ்வொரு கூறும் தன்னினம் பெருக்கிக்கொள்கிறதென் னுங் கொள்கை.

**pan-Germ'an**, *a.* அரசியல் கூட்டமைப்பிலுள்ள செர்மானி யர் அணைவரையுஞ் சார்ந்த, செர்மானியர் அணைவரையுஞ் சார்ந்த.

**pangol'in**, *n.* எறும்புண்ணும் விலங்குவகை.

**pan-Hell'enism**, *n.* கிரேக்கர்கள் அணைவருடைய அரசியற் கூட்டமைப்பு.

**pan'ic** [1], *n.* இத்தாலிய தினைவகையின உள்ளிட்ட புல்வகை களின் பேரினம்.

**pan'ic** [2], *n.* கிலி, திகில், பீதி, கூட்டத்திற் பரவி ஆட் கொள்ளும் கலவர உணர்ச்சி; அவசரச் செயல்களைத் தூண்டும் திடீர் அச்சம்; அச்சத்தால் ஏற்படும் தன்வயமற்ற மருட்சிநிலை; *a.* அச்ச வகையில் ஆதாரமற்ற, மட்டுக்கு மிஞ்சிய; *v.* திகிலூட்டு, திகிலடை.

**pan'icky**, *a.* திகில் விளைக்கிற, கிலிகொண்ட.

**pan'icle**, *n.* (தாவ.) பல்கவர் மலர்க்கொத்து, கலப்பு மஞ்சரி.

**pan'ic-mong'er**, *n.* திகில் பரப்புபவர், பீதியுண்டாக்குபவர்.

**panifica'tion**, *n.* பொங்கப்பம் செய்தல், ரொட்டிப் புனைவு.

**pan-Is'lam**, *n.* இஸ்லாமிய உலகத்தின் கூட்டு; இஸ்லாமிய உலகின் கூட்டமைவுக்கள இயக்கம்; இஸ்லாமிய உலகின் கூட்டிணைவார்வம்.

**panjan'drum**, *n.* கற்பனை வீரத்திருமகன்.

**pan'logism**, *n.* இயலுலகு மூலதத்துவத்தின் வெளிப்பாடே என்ற கோட்பாடு.

**panlogis'tic**, *a.* ஹெகல் (Hegel) என்னும் செர்மன் அறிஞர் கோட்பாட்டின்படி பகுத்தறிவுக்கொத்தது மட்டுமே உண்மை யானதெனக் கருதுகிற.

**pann'age**, *n.* பன்றி பொறுக்கலுண்டி; காடுகளிற் பன்றி மேய்ப்புரிமை.

**panne**, *n.* உடுப்புக்குப் பயன்படுத்தப்படும் நீண்ட துய்களை யுடைய மென்துணி வகை.

**pann'ier** [1], *n.* பொதிவிலங்கின் சுமைகூடை இரட்டைகளில் ஒன்று; தூக்கு கூடை; அறுவை முதலுதவிக் கருவிகளுக் கான மூடிய கூடை; மகளிர் உடையை இடுப்பண்டை ஏந்தலாகக் காட்டுதற்கான புடைப்பமைவு.

**pann'ier** [2], *n.* (பே-வ.) சட்ட மாணவர் கழகத்தில் மேசை ஏவலாள்.

**pann'ikin**, *n.* சிறு உலோகக் குடிகலம்; குடிகலத்திலுள்ள பானம்.

**pan'oplied**, *a.* முழுப் படைக்கவசம் அணிந்துள்ள.

**pan'oply**, *n.* முழுப் படைக்கவசம்; பகட்டு அங்கி.

**panop'ticon**, *n.* வட்டக் கண்காணிப்புச்சிறை, காவலர் மைய மான ஓரிடத்திலிருந்துகொண்டு எல்லாக் கைதி அறை களையும் பார்க்கக்கூடிய வட்ட அமைப்புடைய சிறைச்சாலை; பொருட்காட்சி அறை.

**panora'ma**, *n.* அகல்பரப்புக்காட்சி; உட்சுவர்ச்சுற்று வண்ண ஓவியக் காட்சி; அவிழ்த்து உருளவிட்ட படம்.

**panoram'ic**, *a.* பரந்த காட்சியுடைய, சுற்றுவண்ணக்காட்சி வாய்ந்த.

**pan'-pipe, pan'-pipes**, *n.* குழல்வரி இசைக்கருவி, வரிசை யான குழல்களைக்கொண்டு இயன்ற இசைக்கருவி வகை.

**pan-Sla'vism**, *n.* ஸ்லாவிய இனத்தவர் அணைவரின் அரசியல் ஒற்றுமையியக்கம்.

**pansperm'atism, pansperm'y**, *n.* இசைவான சூழ்நிலை யில் பெருக்கம் அடையத்தக்க எண்ணற்ற நுண்மங்கள் வளி மண்டலத்தில் நிறைந்துள்ளன என்னுங் கோட்பாடு.

**pan'sy**, *n.* பல்வண்ண மலர்கள் காடாக வளரும் தோட்டச் செடிவகை; பெண்ணியல்புள்ள இளைஞன்; தன்னொத்த பாலி னருடன் கூடுபவன்.

**pant**, *n.* மூச்சுத்திணறல், குறுமூச்சு, துடிப்பு; *v.* மூச்சுத் திணறு; மிகவிரும்பு, வேணவாக்கொள்; தவி, பதை, துடி; திணறிக்கொண்டே பேசு.

**pantag'amy**, *n.* அனைத்துலக பிரமசரியம்.

**pantagru'elism**, *n.* அகடவிகடம்.

**pantalets', pantalettes'**, *n. pl.* மகளிர் குறுங்காற்சட்டை; மிதிவண்டிக் காற்சட்டை.

**Pantaloon'** [1], *n.* இத்தாலிய இன்பியல் நாடகத்தில் இறுக்கமான காற்சட்டையணிந்துவரும் நாடகவுறுப்பினர்; கோணங்கி; புல்தடுக்கி.

**pantaloon'** [2], *n.* (வர.) இறுக்கமான காற்சட்டை, ஒருங் கிணைந்த காற்சட்டையும் காலுறையும்.

**pantaloons'**, *n. pl.* இறுக்கமான காற்சட்டை.

**pantech'nicon**, *n.* தட்டுமுட்டுப் பொருள்களின் கிடங்கு; (தொ.) pantechnicon van, தட்டுமுட்டுப் பொருள்களை எடுத்துச் செல்லும் மூடுவண்டி.

**pan'theism**, *n.* அனைத்திறைக்கொள்கை, இயல்வன யாவும் இறையுருவே என்னுங் கோட்பாடு; பலதெய்வ வழிபாடு.

**pan'theon,** *n.* பல தெய்வக் கோயில்; ஓரின மக்களின் தெய்வங்கள்; புகழடைந்து இறந்தவர்கள் புதைக்கப்பட்டுள்ள கட்டிடம்; புகழடைந்து இறந்தவர்களுக்கு நினைவுச் சின்னங்களுள்ள கட்டிடம்; பொதுமக்களது பொழுதுபோக்கிற்காக 1772-இல் லண்டனில் திறக்கப்பட்ட கட்டிடம்.

**pan'ther,** *n.* பெருஞ்சிவிங்கி, சிறுத்தை; *fem.* pan'theress; (தொ.) American panther, புள்ளிப்புலி.

**pan'ties,** *n. pl.* (பே-வ.) சிறுவர்கள் அணியுங் காற்சட்டை; மகளிர் அணியும் இறுக்கமான குறுங்காற்சட்டை.

**pan'tile,** *n.* எழுதக வளைவான குறுக்குவெட்டுடன் கூடிய கூரை ஓடு; குழிவான அல்லது குவிவான குறுக்கு வெட்டுள்ள ஓடு.

**pantisoc'racy,** *n.* எல்லாருக்கும் சரிசம ஆற்றலும் சம நேராட்சி உரிமையும் உடைய சமுதாயம்.

**pan'tograph,** *n.* தரைப்படம் முதலியவற்றை எந்த அளவிலும் படிசெய்வதற்கான கம்பிச் சட்டம்.

**pantolo'gic,** *a.* முழுநிறை அறிவுத்தொகுதி சார்ந்த.

**pantol'ogy,** *n.* முழுநிறை அறிவுத்தொகுதி.

**pan'tomime,** *n.* (வர.) ரோமன் ஊமைக்கூத்து நடிகர்; போலி மாருட்ட நடிகர்; கோமாளிகளின் கூத்து-நடனம்-பாடல்கள் இவற்றுடன் முடியும் ஆங்கில நாடகக்காட்சி; ஊமைக்கூத்து, அவிநயக்கூத்து; *v.* ஊமைக்கூத்துமூலம் புலப்படுத்து; சைகைமூலந் தெரியப்படுத்து.

**pantomorph'ic,** *a.* எல்லா வடிவங்களையும் எடுக்கிற.

**pantopragmat'ic,** *n.* எல்லாவற்றிலும் தலையிடுபவர்; *a.* ஒவ்வொன்றிலும் தலையிடுகிற.

**pantoscop'ic,** *a.* நெடுந்தூரத்துக்கு எட்டும் பார்வையுடைய.

**pan'try,** *n.* சரக்கறை, உக்கிராணம்.

**pan'tryman,** *n.* வீட்டு வேலையாள்.

**pants,** *n. pl.* (பே-வ.) காற்சட்டை; கடை வழக்கில் நீண்ட இறுக்கமான குறுங்காற்சட்டை.

**pan'zer,** *n.* போர்க்கவசம்; *a.* போர்க்கவசம் பூண்ட.

**pan'zers,** *n. pl.* (பே-வ.) கவசம் பூண்ட படைகள்.

**pap**[1], *n.* குழந்தையுணவு, மெல்லுணவு.

**pap**[2], *n.* பெண்டிர் மார்புக்காம்பு; ஆடவர் மார்பு மையம்.

**papa',** *n.* குழந்தை வழக்கில் அப்பா, தந்தை.

**pap'acy,** *n.* போப்பாண்டவர் பதவி; போப்பாண்டவர் பதவிக்காலம்; போப்பாதிக்கம், போப்பாண்டவர் ஆட்சிமுறை.

**pap'al,** *a.* போப்பாண்டவரைச் சார்ந்த; போப்பாண்டவர் பதவிக்குரிய.

**pap'alism,** *n.* போப்பாண்டவர் ஆட்சிமுறை.

**pap'alist,** *n.* போப்பாண்டவரின் ஆதரவாளர்; போப்பாதிக்கத்தை ஆதரிப்பவர்.

**pap'alize,** *v.* போப்பாண்டவர் ஆட்சிமுறையாக்கு; போப்பாண்டவர் சார்புடையதாக்கு; போப்பாண்டவரின் ஆதரவாளர் ஆக்கு; போப்பாண்டவரின் ஆதரவாளர் ஆகு.

**papav'erous,** *a.* கசகசாச் செடிபோன்ற; கசகசாச் செடிக்கு இனமான.

**papaw',** *n.* பப்பாளிமரம்; பப்பாளிக்காய்.

**pap'er,** *n.* தாள்; தாள்துண்டு; கழகத்தில் வாசிப்பதற்கான கட்டுரை; பத்திரம்; முறி; செய்தியிதழ், பத்திரிகை; தேர்வு வினுத்தாள்; நுழைவுரிமைச் சலுகையாளர்; தாள் பணம், காசுமுறி; சுவர் பொதிதாள்; பொதிதாள்; தாள் பொதி அளவு; தாள் சார்ந்தது; *a.* தாளடங்கிய; தாளாலான; தாள்போன்ற; தாள்மீது எழுதப்பட்ட; *v.* தாளில் பொதி; தாளால் மூடு; தாளில் மடித்து வை; தாள்விளிம்பு ஒட்டு; தாள் கந்தல் ஒட்டு; தேய்ப்புத்தாளிடு; தாள் பயன்படுத்திச்செய்; (தொ.) commit to paper, எழுதிவை; எழுத்துருவில் பதித்துவை; on paper, எழுத்துருமட்டிலுமான; கொள்கையளவில் திட்டமிடப்பட்ட, செயல்முறைக்கு வராத; தற்காலிகக் கோட்பாடாக ஏற்பட்டிருக்கிற; paper-bag cookery, வெண்ணெய்க் காகிதப்பையில் பல்வகை உணவுப் பொருள்களை வைத்து இளஞ்சூடான அடுப்பின்மேல் ஏற்றிச் சமைக்கும் முறை; paper currency, தாள்நாணயம்; paper money, செலாவணி நாணயமாகப் பயன்படுத்தப்படும் பொருளகமுறி; தாள்பணம்; paper profits, உத்தேச இலாபம்; paper war, paper warfare, தாள்போர், துண்டு விளம்பரங்கள் செய்தித்தாள்கள் மூலமாக நடத்தப்படும் வாக்குவாதம்; put pen to paper, எழுதத்தொடங்கு.

**pa'per-back,** *n.* தாள் அட்டையிட்ட நூல்.

**pap'er-chase,** *n.* தாள்துண்டு ஓட்டப்போட்டி ஆட்டம், தாள்துண்டுகளைக் கிழித்துப் போட்டுக்கொண்டே ஓடுபவரைப் பின்பற்றி அத்துண்டுகளைக் கைக்கொண்டு அவரைப் பின்தொடர்ந்து பிடிக்கும் நாட்டுப்புற விளையாட்டு.

**pap'er-hanger,** *n.* சுவர்களிற் சித்திரப் பூவேலைத்தாள்களை ஒட்டுபவர்.

**pap'er-hangings,** *n. pl.* சுவர்களில் ஒட்டுதற்கான சித்திரப் பூவேலைத்தாள்.

**pap'er-mill,** *n.* தாள் ஆலை, தாள் செய்யப்படுந் தொழிற்சாலை.

**pap'ers,** *n. pl.* ஆளின் அல்லது கப்பலின் அடையாளம் அல்லது மதிப்பு நிலையை எண்பிப்பதற்கான ஆவணங்கள்; (தொ.) send in one's papers, பணி துற.

**pap'er-stain'er,** *n.* சுவரில் ஒட்டப்படும் ஒப்பனைத்தாள்கள் செய்பவர்.

**pap'er-weight,** *n.* தாட்கட்டை, தாள் பறக்காமல் மேல் வைக்கப்படும் பளுவுடைய பொருள்.

**pap'ery,** *a.* தாள்போன்ற.

**pap'ier mach'e,** *n.* பெட்டி-தட்டு முதலியன செய்வதற்கான தாள் ஊறல் கூழ்மொத்தை.

**papiliona'ceous,** *a.* (தாவ.) வண்ணத்துப் பூச்சியுருவுடைய.

**papill'a,** *n.* காம்புபோன்ற உறுப்புப்பகுதி; (தாவ.) சதைப் பற்றுள்ள சிறு முகிழ்; *pl.* papill'ae.

**pap'illary,** *a.* சதைக்காம்பு போன்ற, சினப்புச்செறிந்த.

**pap'illate,** *a.* சதைக் காம்புகளையுடைய.

**pap'illose,** *a.* சதைக்காம்புகளையுடைய, சினப்புச்செறிந்த, கரணைகள் நிறைந்த.

**pap'ist,** *n.* போப்பாண்டவர் ஆதிக்கத்தை ஆதரிப்பவர்; ரோமன் கத்தோலிக்க கிறித்தவர்.

**papoosh', papouche',** *n.* செருப்பு வகை.

**papp'us,** *n.* (தாவ.) துய்ச்சிறை.

**pap'rika,** *n.* அங்கேரிய (Hungarian) நாட்டிலுள்ள சிவப்பு மிளகு வகை.

**paps,** *n. pl.* மலைக் குவடுகள்.

**pap'ula, pap'ule,** *n.* பரு, கொப்புளம்; செடிகளிற் காணப்படும் சதைப்பற்றுள்ள சிறுமுகிழ்; *pl.* pap'ulae, pap'ules.

**papyra'ceous,** *a.* தாளின் இயல்புவாய்ந்த; தாளைப்போல் மெல்லிய.

**papy'rograph,** *n.* பொறித்தகட்டுப் படியெடுப்புக்கருவி, செதுக்குத்தாள் தகட்டினைக்கொண்டு ஆவணங்களுக்குப் படியெடுப்பதற்கான அமைவு.

**papyrog'raphy,** *n.* பொறித்தகட்டுப் படியெடுப்பு முறை, படம் முதலியன தாளிலிருந்து துத்தநாகத்தகடு முதலியவற்றிற்கு மாற்றப்படுகிற படியெடுக்கும் முறைகள்.

**papyrol'ogist,** *n.* பண்டைய புல்தாள் வரைவு ஆய்வாளர்.

**papyrol'ogy,** *n.* பண்டைய புல்தாள் வரைவு ஆய்வுத்துறை.

**papy'rotype,** *n.* = papyrography.

**papyr'us,** *n.* கோரையின நாணற்புல் வகை, ஓலைநாணல்; கோரையின நீர்ப்பூண்டிலிருந்து எகிப்தியர் முதலியோர் செய்த வரைதாள்; நாணற்புல் தாளில் எழுதப்பட்ட கையெழுத்துப்படி; *pl.* papy'ri.

**par**[1], *n.* சமநிலை; படியளவை; சராசரி; பங்கு-பங்குமுதல் ஆகியவற்றின் முகப்புவிலை; குழிப்பந்தாட்ட வகையில் முழு ஆட்டத்தில் ஒரு குழிக்கு எடுக்க வேண்டிய வீச்சு அளவு; ஆட்டத்தில் ஒரு தடவைக்கு எடுக்க வேண்டிய அடிகளின் அளவு; (தொ.) above par, முகப்பு விலைக்கு மேற்பட; ஆதாயத்துடன்; சார்வு நலத்தோடு; at par, முகப்பு மதிப் பின்படி; below par, முகப்பு விலைக்குக் குறைவாக, தள்ளு படி செய்து கொடுத்து; on a par with, சரிசம நிலையில், சம மாக, ஒத்த நிலையில், ஒத்த படித்தரத்தில்; par of exchange, நாட்டின் நாணய மதிப்புக்கு மற்றொரு நாட்டின் நாணய மதிப்பில் ஏற்றுக்கொள்ளப்பட்ட மாற்றுவீதம்.

**par**[2], *n.* (பே-வ.) பத்தி, பிரிவு.

**par**[3], *n.* = parr.

**parab'asis**, *n.* கிரேக்க இன்பியல் நாடகங்களில் அவை யோரை முன்னிலைப் படுத்திக் கவிஞன் பெயரால் பின்னணி இசைக்குழுவினர் பாடும் பாடல்.

**pa'rable**, *n.* நீதிக்கதை; உருவகக் கதை; பழமொழி.

**parab'ola**, *n.* சாய்மாலை வட்டம், குவிகை வடிவின் சாய் பக்கங்கள் ஒன்றற்கிணைவான குறுக்குவெட்டிற்படும் நீள் வட்ட வடிவம்.

**parabol'ic, parabol'ical**, *a.* உருவகமாயமைந்த; நீதிக் கதை போன்ற; நீதிக்கதைக்குரிய; சாய்மாலை வட்டம் போன்ற; சாய்மாலை வட்டத்துக்குரிய; சாய்மாலை வட்ட வடிவான.

**parab'oloid**, *n.* சாய்மாலை வட்டத் திண்மம், ஒருதிசைக் குறுக்குவெட்டுத் தளங்கள் சாய்மாலை வட்டமாயிருக்கும் பிழம்புரு, சாய்மாலை வட்டச் சுழற்சியால் ஏற்படும் பிழம்பு வடிவம்.

**parach'ronism**, *n.* காலக்கணிப்பு வழு, கால ஆராய்ச்சித் தவறு.

**pa'rachute**, *n.* வான்குடை மிதவை, வானூர்தியிலிருந்து பத்திரமாகக் கீழே இறங்கவுதவுங் குடைபோன்ற கருவி; *v.* வான்குடை மிதவை உதவிகொண்டு வானூர்தியிலிருந்து கீழே குதித்து இறங்கு; வான்குடை மிதவைமூலமாக நிலத் தில் இறக்கு; (தொ.) parachute flare, இலக்குப் பரப்பினை ஒளி விளக்கப்படுத்துவதற்காக வான்குடை மிதவைமூலம் கீழே எறியப்படும் பந்தம்; parachute mine, வானூர்தியி லிருந்து வான்குடை மிதவைமூலம் கீழே வீசப்பட்ட வெடி மருந்துகள் கொண்ட பொதியுறை: parachute troops, வான் குடைப் படை, வான்குடை மிதவைமூலம் இறக்கப்படும் படைவீரர் தொகுதி.

**pa'raclete**, *n.* வழக்குப் பரிந்துரையாளர்; தூய ஆவிக்குரிய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

**parade'**, *n.* படையணித் திரட்டு; நாள்முறை அணிவகுப்பு; அணிவகுப்புக் காட்சி; அணிவகுப்புக்களம், படையணிச் சதுக்கம்; பொதுவெளி அரங்கம்; *v.* படையணி திரட்டு; காட்சிக்காக அணிவகுப்பு நடத்து; படையணியாக ஊர் வலஞ் செல்; பகட்டாரவாரமாகச் செல்; பகட்டாரவாரஞ் செய்; பகட்டாக விளம்பரப்படுத்து.

**pa'radigm**, *n.* இலக்கணத்தில் மேற்கோள் வாய்பாடு, கட்டளைப்படிவ வாய்பாடு.

**pa'radise**, *n.* விண்ணுலகு, சுவர்க்கம், துறக்கம், ஏதேன் தோட்டம்; பேரின்ப இடம்; பெருமகிழ்வுநிலை; (தொ.) bird of paradise, நியூகினியிலுள்ள காக இனஞ்சார்ந்த அழகு வண்ணச் சிறகுகளையுடைய பறவை வகை; earthly paradise, வையகத் துறக்கம், ஏதேன் தோட்டம்; fool's paradise, மெய்யல் உலகு, போலி இன்பநிலை.

**pa'rados**, *n.* மதகரண் அடைகரை.

**pa'radox**, *n.* முரணுரை, பொருந்தாவுரை; புதிர், முரண்படு செய்தி; புதிரீடு, முரண்படு மெய்ம்மை, முரணுரைபோலத் தோன்றும் மெய்யுரை; புரியாப் புதிர், ஏற்றுக்கொள்ளப் பட்ட இயல்புக்கு மாறான செய்தி; புதிரீட்டாளர், நம்ப முடியாதவர், புரிய முடியாதவர்.

**paradox'ure**, *n.* புனுகுப்பூனை வகை.

**pa'raffin**, *n.* கன்மெழுகு, களிமண்ணுடன் கல்லெண்ணெ யைக் கலந்து காய்ச்சும்போது கிடைக்கும் மெழுகுவகை; *v.* கன்மெழுகு பூசு; கன்மெழுகு கலந்து செயலாற்றுவி; (தொ.) liquid paraffin, மணஞ்சுவைகளற்ற மலமிளக்க மருந்து வகை; paraffin oil, விளக்கு எரிக்கவும் மசகுப்பொருளாக வும் பயன்படும் எண்ணெய்வகை; paraffin wax, திண்ணிய கன்மெழுகு, கெட்டியான மெழுகுப்பொருள் வகை.

**parago'ge**, *n.* (இலக்.) பகுதிப்பொருள் விகுதி.

**pa'ragon**, *n.* ஏண்; இணை முழு நிறை வைரமணி; *v.* ஒப்பிடு, இணை.

**pa'ragraph**, *n.* ஏட்டின் ஒருபத்தி, விடு கூறு, பிரிவு; புதிய பத்தி அடையாளக் குறியீடு, புதுக்கருத்துத் தொடக்கக் குறியீடு (¶); பத்திரிகையில் தலையங்கமற்ற தனியான பகுதி; *v.* பத்தி எழுது, ஆள் அல்லது பொருளைப்பற்றிப் பத்தி எழுது; பத்தி வரிசையாகப் பிரி.

**paraheliotrop'ic**, *a.* செடிகளில் ஒளிக்கதிர்களுக்கு இலை களின் விளிம்புகாட்டிச் சாய்கிற.

**paraheliot'ropism**, *n.* ஒளிக்கதிர்களுக்கு இணைவாக இலை களைத் திருப்பும் செடிகளின் இயல்பு.

**pa'rakeet**, *n.* நீண்ட வாலுடைச் சிறு கிளிவகை.

**pa'rakite**, *n.* வான்குடை போன்று செயற்படும் காற்றாடி வகை; விஞ்ஞான ஆய்வு கருதிப் பறக்க விடப்படும் வாலில் லாக் காற்றாடி.

**paraleip'sis, paralip'sis**, *n.* கூறுது கூறலணி.

**parallac'tic**, *a.* விழிக்கோட்ட வழுச்சார்ந்த.

**pa'rallax**, *n.* விழிக்கோட்ட வழு; விழிக்கோட்டக் கோணளவு.

**pa'rallel**, *n.* இணைதொலைவுக் கோடு, ஒருபோகு; *a.* கோடு முதலியன வகையில் இணைவான, ஒருபோகுடைய; இணை தொலைவான; இணையொத்த, இசைவுப் பொருத்தமான; (தொ.) parallel bars, இணைவு கம்புகள், இணைக்கம்பி உடற் பயிற்சிக்கருவி; parallel ruler, ஒருபோகுக் கோடுகள் வரை வதற்குரிய சுழலச்சால் இணைக்கப்பட்ட இரட்டை வரை கோல்.

**parallelep'iped**, *n.* இணைவகத் திண்மம், இணைவகங்களைப் பக்கங்களாகவுடைய பிழம்புரு.

**pa'rallelism**, *n.* ஒருபோகு நிலை, ஒருவழி இணைவுநிலை; நுட்ப உள்ளுறுப்பொப்புமை; இருசொல் இயைபணி; தொடர் உவமை; இணைவளர்ச்சிப் போக்கு; உடலும் உள மும் தொடர்பின்றியே இணைவாக இயங்குகின்றன என்னுங் கோட்பாடு.

**parallel'ogram**, *n.* ஒருபோகு நாற்சிறையி, இணைவகம், எதிர்ப் பக்கங்கள் சமமாகவும் இணைவாகவுமுள்ள வரை உருவம்; (தொ.) parallelogram of forces, இணைவிசை இணைவகப்போக்கு, இரண்டு விசைகள் இணைந்து ஒரே விசையாகச் செயலாற்றும்போது திசையிலும் அளவிலும் மூல விசைகள் இரண்டும் ஓரிணைவகத்தின் இருபுடைப் பக்கங்களுக் கும் இணைவிசை அவற்றிடைப்பட்ட மூலைவிட்டத்துக்கும் சமமாயிருக்கும் நிலை.

**paral'ogism**, *n.* தவறான வாதம், பொருந்தா வாதம்.

**paral'ogy**, *n.* போலி நியாயம்.

**pa'ralyse**, *v.* பக்கவாதத்தால் தாக்கு, முடக்குவாதத்துட் படுத்து; ஆற்றலறச் செய், செயலறச் செய், முடமாக்கு.

**paral'ysis**, *n.* முடக்குவாதம், பக்கவாதம்; ஆற்றலிழந்த நிலைமை.

**paralyt'ic**, *n.* முடக்குவாதம் உடையவர்; இயக்க ஆற்றற் கூறிழந்தவர்; *a.* பக்கவாதப் பிணியால் வருந்துகிற; இயக்க ஆற்றலிழந்த.

**paramagnet'ic**, *a.* காந்த முனைகளால் இழுக்கப்படத்தக்க.

**paramatt'a**, *n.* பட்டு அல்லது பருத்தி இணைத்த நய நேரியல் கம்பளித்துணி வகை.

param'eter, *n.* (கண.) திணையியல் நிலையளவுரு, பொதுவாக மாறுபட்டுக் குறிப்பிட்ட தறுவாயில் மட்டும் நிலையான மதிப்புடைய அளபுரு.

paramil'itary, *a.* துணைப்படைத் திறமான, படைத்துறை போன்ற அமைப்புடன் நிலையான படைத்துறையை வலிமைப் படுத்துவதற்காக வகுக்கப்பட்ட.

paramne'sia, *n.* பொய்ந்நினைவு.

pa'ramo, *n.* தென் அமெரிக்க வெப்பமண்டலப் பகுதிகளில் உள்ள மரங்களற்ற உயர்ந்த பீடபூமி; *pl.* pa'ramos.

pa'ramount, *n.* உயர் தலைவர்; மேதகவாளர்; *a.* தலைமை சான்ற; மேதகவான.

pa'ramour, *n.* கள்ளக்காதலர்.

par'ang, *n.* மலாய்நாட்டு உறைவாள்.

paranoe'a, paranoi'a, *n.* அறிவுப் பிறழ்ச்சி; தருக்கியல் சித்தப்பிரமை.

par'anymph, *n.* மாப்பிள்ளைத் தோழன்; மணமகள் தோழி.

pa'rapet, *n.* கைப்பிடிச்சுவர்; (படை.) மறைகுழிகளுக்கு மறைப்பாக எதிரில் எழுப்பப்படும் மணல் மேடு, படைகளை மறைக்கவும் பாதுகாக்கவும் பதுங்கு குழிகளின்முன் கட்டப்படும் சிறு மதிலரண்.

pa'raph, *n.* பிறர் போலியாக இடாமல் தடை செய்வதற்கான கை ஒப்பத்தின் வீச்சு எறிவுக்கோடு.

paraphernal'ia, *n. pl.* எடுபிடி கொடி; மூட்டை முடிச்சு; உரிமை மகளிர்; பரிவாரம்; இயந்திரத்தின் துணைக்கலத் தொகுதி; இணை துணுக்குகள்.

pa'raphrase, *n.* பொழிப்புரை; ஸ்காத்லாந்து நாட்டுத் திருக்கோயில்களில் வழங்கப்படும் விவிலிய நூல் பொழிப்புரைகள் கொண்ட திரட்டு; *v.* பொழிப்புரை செய்.

paraple'gia, *n.* உடம்பின் கீழ்ப்பகுதிப் பக்கவாதம்.

pa'rasang, *n.* மூன்றேகால் மைல்கள் நீளமுடைய பண்டைப் பாரசீகத் தொலைவு அளவு.

paraselen'e, *n.* நிலா மண்டல ஒளிவட்டத்தில் ஒளிமிக்க இடம், போலிமதி.

pa'rasite, *n.* சுரண்டி வாழ்பவர், அண்டி வாழ்பவர்; அட்டை, புல்லுருவி; ஒட்டுயிர்; செடி அல்லது சுவரின்மேல் பற்றி வளருங் கொடி வகை.

parasit'icide, *n.* ஒட்டுயிர்க்கொல்லி.

pa'rasitize, *v.* ஒட்டுண்ணி போன்று பற்றிப்படர்; ஒட்டுயிர் போலச் சுரண்டி வாழ்.

parasol', *n.* கைக்குடை; (தொ.) parasol monoplane, விமானத்துள் விமானம்.

parasyn'thesis, *n.* (மொழி.) தொகைச்சொல் வழிச்சொற் பிறப்பு.

paratax'is, *n.* (இலக்.) இணைப்புச் சொற்கள் அல்லது துணைச் சொற்களின்றித் துணையுறுப்பு வாசகங்களை அடுக்குதல்.

pa'ratroops, *n. pl.* வான்குடை மிதவையில் ஏற்றிச்செல்லப் படும் படைவீரர்கள்.

paratyph'oid, *n.* குடற்காய்ச்சற் போன்ற காய்ச்சல் நோய்.

pa'ravane, *n.* ஆழ்தடக் கடற்கண்ணி வாரி, கடலடிக் கண்ணிகளின் தளையறுப்பதற்குரிய நீர்மூழ்கிபோன்ற ஆழ்தட இழுவைக்கருவி.

parb'oil, *v.* அரைகுறையாகக் கொதிக்க வை.

parb'uckle, *n.* பார ஏற்றக்கயிறு, மிடா முதலிய உருளை வடிவப் பொருள்களை ஏற்றி இறக்கப் பயன்படுங் கயிறு; *v.* பார ஏற்றக் கயிற்றினால் ஏற்ற இறக்கஞ் செய்.

par'cel, *n.* சிறு கூறு, பகுதி; சிப்பம், பொட்டலம், உருப்படிக் கட்டு; உருப்படி; வாணிகத்துறையில் ஒரு நடவடிக்கையில் கையாளப்படும் அளவு; *v.* பகுதிகளாகப் பிரி; (கப்.) கப்பல் விளிம்படைப்புக்கள்மீது நிலக்கீலும் இரட்டுத் துண்டும் பொதி; இரட்டுத்துண்டுகளால் கயிறு பொதி; (தொ.) parcel post, சிப்ப அஞ்சல்; சிப்பங்கள் பற்றிய அஞ்சற் பிரிவு.

par'celling, *n.* உருண்டைக் கயிறுகள்மேல் சுற்றப் பயன்படும் நிலக்கீல் பூசப்பட்ட இரட்டுத் துண்டுகள்.

par'cenary, *n.* இணைமரபுரிமை.

par'cener, *n.* இணைமரபினர், பங்காளி.

parch, *v.* இலேசாக வறு; வாட்டு, உலர்த்து; வரட்சியூட்டு; வாடி உலர்.

parch'ment, *n.* வரைதோல், எழுதுவதற்காகப் பாடம் செய்யப்பட்ட ஆட்டுத்தோல்; படம் எழுதுவதற்குரிய தோல்; தோலில் எழுதப்பட்ட கையெழுத்தேடு; வரைதோல் போன்ற தொலி, உமி.

pard, *n.* சிறுத்தைப் புலி.

pard'on, *n.* மன்னிப்பு; மன்னிப்பு வழங்கும் பண்டிகை; (சட்.) தண்டனை குறைப்பு, பொறுத்தருள் பண்பு; *v.* மன்னித்துவிடு; குற்றத்தைப் பொருட்படுத்தாது விடு; தண்டிக்காது விட்டுவிடு.

pard'oner, *n.* (வர.) திருக்கோயில் பாவமன்னிப்புச் சீட்டு விற்பனை உரிமையாளர்.

pare, *v.* சீவிச்செப்பனிடு, தறித்து ஒழுங்குபடுத்து; பழம் முதலியவற்றின் தோலைச் சீவு; தோடு நீக்கு; நகம் வெட்டு; கொஞ்சங் கொஞ்சமாகக் குறை; ஓரம் நறுக்கு, விளிம்பு வெட்டி எறி.

parego'ric, *n.* சூட அபினித்தைலம், சூடன்-சோம்பு-சாம்பிராணி மணங்களூட்டப்பட்டு அபினி கரைந்த சாராயத்தாலான நோவாற்று மருந்து; *a.* நோவாற்றுகிற, வேதனை தணிக்கிற; (தொ.) paregoric elixir, சூட அபினித்தைலம்.

pareir'a, *n.* சிறுநீர்க் கோளாறுகளுக்குப் பயன்படுத்தப்படும் பிரேசில் நாட்டு வேர்ச்சரக்கு மருந்து வகை.

paren'chyma, *n.* (உள்.) சுரப்பிக்கருப்பொருள், உறுப்புக் கருப்பொருள்; (தாவ.) இலை-பருப்பு-பழச்சதை போன்ற மென்பகுதிகளின் உயிர்மங்களில் அருகருகாகக் காணப்படும் சமசதுர மென்பதக் கூறு.

paren'chymal, parenchym'atous, *a.* மென்பதக் கூறான.

par'ent, *n.* பெற்றோர்; தந்தை அல்லது தாய்; முன்னோர்; விலங்கு தாவரங்களின் மூல முன்னினம்; மூலம், தோற்றுவாய்; (தொ.) our first parents, ஆதாம் ஏவாள்.

par'entage, *n.* பெற்றோர் விவரம்; ஊங்கணோர் மரபு, தாய் தந்தையர் வழியான அல்லது முன்னோர் வழியான மரபு; பெற்றோர் மரபுப்பண்பு; முன்னோர் மரபுப்பண்பு; கால்வழி, பரம்பரை; மரபின் மதிப்பு; பெற்றோர்நிலை; பெற்றோராதல்; பெற்றோர் பிள்ளை தொடர்பு.

paren'theses, *n. pl.* தனிநிலை மொழிக்குரிய அடைப்புக் குறிகள்.

paren'thesis, *n.* தனிநிலை மொழி; இடைப்பிறிது வருவது, தொடர்பிலிக்குறி, வளை அடைப்புக்குறி; இடைமுறிப்புக் காட்சி; இடைவேளை.

paren'thesize, *v.* இடைமுறிப்பாக நுழை; தனிநிலை மொழியாகப் புகுத்து; பிறைவடிவ அடைப்புக் குறிகளுக்கிடை அமை.

parenthet'ic, *a.* தனிநிலைமொழியான; இடைமுறிப்புறுப்பான, இடைப்பிறவரலுக்குரிய; இடையில் வைப்பதற்குரிய.

parerg'on, *n.* துணைப்பணி; *pl.* parer'ga.

pa'resis, *n.* (மரு.) அரைகுறை முடக்குவாதம்; தசை இயக்கத்தை மட்டுந் தடைப்படுத்தி உணர்ச்சியைத் தடைப்படுத்தாத பக்கவாதம்.

*par excellence*, (பிர.) *adv.* தனிச்சிறப்புக் காரணமாக; எல்லாவற்றிற்கும் மேம்பட்டு.

par'get, *n.* காரை, சாந்து, சுண்ணச்சாந்து; *v.* காரை பூசு, சுண்ணச்சாந்து பூசு.

parhel'ion, *n.* கதிரவனைச் சுற்றியுள்ள ஒளிவட்டத்திற் பேரொளியுள்ள இடம், போலிக்கதிரவன்.

par'iah, (த.) *n.* பறையர்.

**Par'ian**, *n.* மிக நேர்த்தியான வெண்ணிற மங்குப்பாண்டம்; உயர்ந்த வெள்ளைக்களிமண்; *a.* வெண்ணிறப் பளிங்குக் கல்லுக்குப் பேர்போன பரோஸ் (Paros) தீவைச் சார்ந்த.

**pari'etal**, *n.* மண்டையோட்டின் உச்சிப் பக்கங்களுக்குரிய எலும்பிணைகளுள் ஒன்று; *a.* புறத்தோடு சார்ந்த; புறத் தோடுகளுக்குரிய; புறத்தோட்டின் உட்பக்கஞ் சார்ந்த; (தாவ.) செடியின் கருவகப்புறத்தோட்டின் உட்பக்கத்துக் குரிய; மண்டையோட்டின் உச்சிப் பக்கங்களுக்குரிய எலும் பிணையில் ஒன்றுசார்ந்த; (தொ.) parietal bones, மண்டை யோட்டின் உச்சிக்கும் பக்கங்களுக்கும் உரிய எலும்பிணைகள்.

*pari mutuel*, (பிர.) *n.* இழந்தவர்களின் பணயப்பொருளை வென்றவர்கள் தங்களுக்குள் பிரித்துக்கொள்ளும் பந்தய வகை.

*par'i pass'u*, (ல.) *adv.* இணையாக, சோடியாக; ஒரே சம யத்தில், சமமாக.

**Pa'ris**, *n.* பிரஞ்சு நாட்டுத் தலைநகர்; (தொ.) Paris blue, வண்ண வகை; Paris doll, உடுப்பு அளவிற்காகத் தையற் காரன் வைத்திருக்கும் பொம்மை; Paris green, பூச்சிக் கொல்லியாகவும் வண்ணப்பொருளாகவும் பயன்படும் நச்சு வேதிப்பொருள்; Paris white, மெருகிடப் பயன்படும் மிக நேர்த்தியான சுண்ணப்பொருள்.

**pa'rish**, *n.* வட்டாரம்; சமயகுருவினுடைய மாவட்டக் கிளைப் பிரிவு; வட்டாரத்தில் வசிப்பவர்கள்; (தொ.) civil parish, வறியோர் பாதுகாப்புச் சட்டம் ஆட்சிப்படுவதற்காக அமைக் கப்பட்ட மாவட்டம்; go on the parish, வட்டார வறியோர் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் உதவிபெறு; parish clerk, திருக்கோயிற் பொது அலுவலர்; parish council, வட்டார ஆட்சிக்குழு; parish lantern, நிலா; parish register, பிறப்பு-இறப்பு ஏடு.

**parish'ioner**, *n.* திருச்சபை வட்டாரக் குடிவாணர்.

**Pari'sian**, *n.* பாரிஸ் நகரத்தவர்; *a.* பாரிஸ் சார்ந்த.

**parisyllab'ic**, *a.* (இலக்.) கிரேக்க லத்தீன மொழிகளில் பெயர்ச் சொற்களில் எழுவாயும் பிற ஒருமை வேற்றுமை வடி வங்களும் ஒருங்கே ஒரே எண்ணிக்கை அளவான அசைகளைக் கொண்ட.

**pa'rity**, *n.* ஒப்புமை, சரிசமநிலை; திருக்கோயில் உறுப்பினர் கள் அல்லது குருமார்களிடையே சரிசமத்துவம்; இணை, சமம், ஒப்பு; வேற்று நாணயத்தில் சரிசம மதிப்பு.

**park**, *n.* பூங்கா, திறந்தவெளித்தோட்ட வளாகம்; பூங்கா மனை, வேலிசூழ்ந்த நாட்டுப்புறத் தோட்டமனை; உந்து வண்டிகள் தங்கிநிற்குமிடம்; பாசறையில் பீரங்கி அமைப் பிடம்; பாசறைப் படைக்கல வைப்பிடம்; பீரங்கித்தொகுப்பு; படைக்கலத்தொகுதி; சேமக்காப்பான தனிச் சோலை வளம்; கிளிஞ்சில் வளர்ப்புப்பண்ணை; *v.* பூங்காவாக அடைப்புச் செய்; பூங்காவாக்கு; பீரங்கிகளைத் தொகுப்பாக்கி வை; உந்து வண்டியைத் தங்கல் இடத்திற்கொண்டு நிறுத்து; (தொ.) oyster park, கிளிஞ்சிற்பண்ணை; the Park, லண்ட னிலுள்ள நாகரிகம் மிக்க பொழுதுபோக்கிடமாகிய ஹைடு பார்க் (Hyde Park).

**park'a**, *n.* எஸ்கிமோக்கள் அணியுந் தலைக்கவிகையோடு கூடிய தோல் மேலாடை.

**park'in**, *n.* (பே-வ.) வெல்லப்பாகும் கூலவகை மாவும் சேர்த்துச் செய்த அப்பவகை.

**parl'ance**, *n.* பேச்சுப்பாங்கு, பரிபாஷை.

*parlement*, (பிர.) *n* (வர.) 1792 வரை இருந்த பழைய பிரஞ்சு நீதிமன்றம்.

*parlementaire*, (பிர.) *n.* இடைப் போர்நிறுத்தக் கொடி தாங்குபவர்.

**parl'ey**, *n.* சிக்கல் தீர்வுப்பேச்சு; *v.* எதிரியுடன் கலந்துபேசு, போரிடையே ஒப்பந்தம் பற்றிக் கலந்துரையாடு; பிறிதொரு மொழி பேசு.

**parleyvoo'**, *n.* பிரஞ்சு மொழி; பிரஞ்சு நாட்டினன்; *v.* பிரஞ்சு மொழி பேசு.

**parl'iament**, *n.* பிரிட்டனின் சட்டமாமன்றம்; இந்திய சட்ட மாமன்றம்; சட்டமன்றம்; பிரஞ்சு நீதிமன்றம்; இஞ்சி ரொட்டித்துண்டு.

**parliamentar'ian**, *n.* சட்டமன்ற இயலறிஞர்; பதினேழாம் நூற்றாண்டு உள்நாட்டுப் போரில் பிரிட்டனின் சட்ட மாமன்றச் சார்பாளர்; *a.* சட்ட மாமன்றச் சார்பான; சட்ட மாமன்ற ஆதரவாளரான.

**parliamen'tary**, *a.* சட்ட மாமன்றஞ் சார்ந்த; சட்ட மாமன் றத்தின் சட்டத்துக்கு உட்பட்ட; சட்ட மாமன்றத்தால் மர பாக நிலைநாட்டப்பட்ட; மொழிகள் வகையில் சட்டமாமன் றத்திற் கூறப்படும் தகுதியுடைய; அவைக்குப் பொருந்திய; நாகரிகமான; சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட; சட்டமன்ற விதி மரபுகளுக்குக் கட்டுப்பட்ட; சட்ட மாமன்ற ஆதரவான; (தொ.) parliamentary agent, தனிப்படக் கொண்டுவரப் படும் சட்டப்பகர்ப்புக்களை உருவாக்குவதற்காக அமர்த்தப் பட்ட ஆள்; parliamentary train, 1844 மாமன்றச் சட்டத் தின்படி ஒரு கல் தொலைவுக்கு ஒரு துட்டுக்கு மேற்படாத கட்டணம்பெற்று ஓடிய புகைவண்டி.

**parl'iament-cake**, *n.* ரொட்டியப்பம்.

**parl'our**, *n.* முகப்பறை, வீட்டின் வரவேற்பறை; மறைபேச் சறை; துறவிமடங்களில் உரையாடலுக்கு ஒதுக்கப்பட்ட பகுதி; பொதுப்பணிமனைகளில் உரையாடலுக்கு வாய்ப் புள்ள அறை; வழிமனையின் தனிநிலை உரையாடல் அறை; (தொ.) parlour boarder, முதல்வரின் வீட்டில் தங்கும் பள்ளிவிடுதி மாணவர்; parlour car, பெருவசதிப் புகை வண்டிப்பெட்டி; parlour maid, மேசைப் பணிப்பெண்.

**parl'ous**, *a.* இடுக்கண் நிறைந்த; *adv.* மிகு முனைப்பாக; மட்டுமீறிய அளவில்.

**Parmesan', Parmesan cheese**, *n.* பார்மா (Parma) என்னுமிடத்திற் செய்யப்படும் பாலடைக்கட்டி வகை.

**Parnass'ian**, *n.* பிரான்சு நாட்டில் 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கலை கலைக்காகவே என்ற கோட்பாட்டைக் கொண்ட குழுவினைச் சார்ந்த கவிஞர்; கவிஞர்; *a.* பண்டைக் கிரேக்கரின் கலைத்தெய்வங்கட்குப் புனிதமான பர்னசஸ் (Parnassus) மலையைச் சார்ந்த; கலைத் தெய்வங்கட் குரிய; கலை கலைக்காகவே என்ற கொள்கையை மேற்கொண்ட கவிஞர் குழுவினைச் சார்ந்த.

**Parnass'us**, *n.* பண்டைக் கிரேக்க நாட்டில் கலைத்தெய்வங் களுக்குரிய புனித இடமாகக் கருதப்பட்ட மலை; கவிதை களின் தொகுதி.

**Parn'ellism**, *n.* பார்னல் (C. S. Parnell) என்பவரால் 19-ஆம் நூற்றாண்டின் கடைப்பகுதியில் நடத்தப்பட்ட அயர் லாந்து நாட்டுத் தன்னாட்சிக் கோட்பாடு.

**Parn'ellite**, *n.* பார்னல் என்பவரின் அயர்லாந்து நாட்டுத் தன்னாட்சிக் கொள்கையினைப் பின்பற்றுபவர்.

**paroch'ial**, *a.* திருச்சபை ஆட்சி வட்டாரஞ் சார்ந்த; குறுகிய பகுதி சார்ந்த; குறுகிய நோக்கங்கொண்ட; குறுகிய விருப்பு வெறுப்புக்களையுடைய; குறுகிய சுவை உணர்ச்சிப் பாங்கு களையுடைய.

**paroch'ialism**, *n.* திருச்சபை வட்டார அடிப்படையான திணையாட்சிமுறை; குறுகிய நோக்கம், குறுகிய கோட்பாடு.

**paroch'ialize**, *v.* குறுகிய நோக்கமுடையதாக்கு; வட்டா ரங்களாக வகுத்தமை; திருச்சபை வட்டாரப் பணிசெய்.

**pa'rody**, *n.* நையாண்டிப் போலி, எழுத்தாண்மை-நடிப்பு முதலியவற்றில் குறைபெருக்கிக் காட்டிக் கேலிக்கு ஆளாக்கு வது; வலுவில் போலி, பின்பற்றிச் செய்யப்பட்ட மூலத்தின் உயிர்ப்பண்பற்ற போலி; *v.* நையாண்டிப் போலி செய்து காட்டு, நகைப்புக்கிடமாகும்படி குறைகளைப் பெருக்கிக் காட்டு, கேலிக்குரியதாக்கிக் காட்டு.

**par'ol**, *a.* வாய்ச்சொல்லான, ஏடலலாத.

**parole'**, *n.* நன்னம்பிக்கை உறுதிமொழி; (படை.) வாய் மொழி உறுதி, போர்க்கைதிகளை விடுவிக்கும்போது தப்பித்து ஓடவில்லையென்றோ விடுவிக்கப்பட்டால் திரும்பவும் சிறைக் குத் திரும்புவதாகவோ அல்லது குறிப்பிட்ட காலம் வரை

சிறையிட்டவர்களுக்கு எதிராக எவ்வகை ஆயுதமும் ஏந்துவதில்லையென்றோ அளிக்கும் வாக்குறுதி; (படை.) காவல் அதிகாரிகள் அல்லது சோதனை அலுவலாளர்கள் பயன்படுத்தும் நாள்முறை அடையாளச் சொல்; *v.* நாணய வாக்குறுதியின்மீது கைதியை விடுவி; (தொ.) on parole, கைதியின் நாணய வாக்குறுதியின்பேரில் விடுதலைபெற்று.

**paronomas'ia**, *n.* செம்மொழிச் சிலேடை.

**paronych'ia**, *n.* விரற்சுற்றி.

**pa'roquet**, *n.*=parakeet.

**parot'id**, *n.* காதின் முன்புறத்திலுள்ள சுரப்பி; *a.* காதருகில் அமைக்கப்பட்ட; (தொ.) parotid duct, காதின் முன்புறச் சுரப்பியையும் வாய் உட்புறத்தையும் இணைக்கும் சுரப்பி நாளம்.

**parotit'is**, *n.* பொன்னுக்கு வீங்கி, புட்டாளம்மை.

**pa'roxysm**, *n.* இசிப்பு, வலிப்பு.

**parox'ytone**, *n.* (இலக்.) கிரேக்க மொழியில் ஈற்றயல் அசை கூர் ஒலியழுத்தங்கொண்ட சொல்; *a.* (இலக்.) கிரேக்க மொழியின் சொல்வகையில் ஈற்றயல் அசை கூர் ஒலியழுத்தங்கொண்ட.

**parp'en**, *n.* சுவரில் இருதலை நெடுங்கல்.

**parq'uet**, *n.* மரக்கட்டை எழில்விரிப்பு; *v.* மரக்கட்டை எழிற்பரப்பு அமை.

**parr**, *n.* சிறு சால்மன் மீன், சால்மன் மீன் குஞ்சு.

**parricid'al**, *a.* தந்தைக்கொலை சார்ந்த; தந்தைக்கொலை போன்ற; உறவுக்கொலைக்குரிய; நாட்டுப் பகைமைப்பழி சார்ந்த.

**pa'rricide**, *n.* தந்தையைக் கொன்றவர்; நெருங்கிய உறவினரைக் கொன்றவர்; மதிப்பிற்குரியவரைக் கொன்றவர்; நாட்டுப் பகைஞர்; தந்தைக்கொலை; உறவுக்கொலை; சான்றோர்க் கொலை; நாட்டுப் பகையாண்மை.

**pa'rrot**, *n.* கிளி; *v.* கிளிபோல் சொன்னதைச்சொல்; கிளிபோல் சொன்னதைச் சொல்ல ஆளைப்பழக்கு; கிளிபோலப் பேசு.

**pa'rrot-fish**, *n.* கிளியினது போன்ற அலகும் பளபளப்பான வண்ணமுமுடைய மீன்வகை.

**pa'rry**, *n.* தவிர்த்தல், தடுத்தகற்றுதல்; *v.* தவிர், தடுத்தகற்று.

**parse**, *v.* சொல்லிலக்கணங் கூறு; வாக்கியத்தைக் கூறுகளாகப் பாகுபடுத்தி அவற்றிற்கு விவரங்கூறு.

**pars'ec**, *n.* வான் விகலை அலகு, நிலவுலகின் நிகர ஆரத்தொலைவின் காட்சியிட மாற்றத்தால் ஏற்படும் ஒரு விகலை நோக்குக் கோண வேறுபாட்டுக்குரிய விண்மீன்களின் தொலைவு.

**Parsee'**, *n.* பார்சி, பாரசீகரின் பழைய சமய நெறிப்பட்டவர்; முற்காலப் பாரசீக மொழி, பாரசீக நாட்டில் சஸ்ஸானிய மரபினர் (Sassanians) காலத்து மொழி.

**Par'seeism**, *n.* இந்தியா வந்துசேர்ந்த பாரசீகர்களின் சமயம்.

**parsimon'ious**, *a.* மட்டுமீறிச் சிக்கனமான; உலோப குணமுள்ள, ஈயாத.

**pars'imony**, *n.* செட்டு, சிக்கனம்; உலோபம்; (தொ.) law of parsimony, மெய்ம்மைகளுக்கு ஏது கூறும் வகையில் அவசியமானவைகட்கு மேற்பட்ட காரணங்களைக் கொள்ளுதலாகாதென்னும் விதி.

**pars'ley**, *n.* சமையலில் நறுமணத்திற்காகச் சேர்க்கப்படும் இலைகளையும் வெள்ளை மலர்களையுமுடைய செடிவகை.

**pars'nip**, *n.* சமையலுக்குப் பயன்படுத்தப்படும் இள மஞ்சள் நிறக் கிழங்கு; சமையலுக்குரிய இளமஞ்சட் கிழங்கினையும் மஞ்சள்நிற மலர்களையுமுடைய செடிவகை; (தொ.) fine words butter no parsnips, வெறும் வாய்ச்சொற்கள் பயனற்றவை.

**pars'on**, *n.* ஊர்ச் சமயகுரு; திருச்சபைப் பணியாளர்; (தொ.) parson's nose, கோழி முதலியவற்றின் எச்சம் அல்லது வால் பகுதி.

**pars'onage**, *n.* சமயகுரு இல்லம்.

**par'son-bird**, *n.* கருஞ்சிறகும் வெள்ளைக் கழுத்துமுடைய நியூசிலந்து பறவை.

**part**, *n.* கூறு, பகுதி; புத்தகப் பிரிவு, காண்டம், பாகம்; சம்புடம்; முழுமையின் சமக்கூறுகள் பலவற்றில் ஒன்று; ஒதுக்கப்பட்ட பாகம், பங்கீடு; செயலில் ஒருவரது பங்கு; கடமை; அரங்கில் நடிகருக்குக் கொடுக்கப்பட்ட நடிப்புப் பகுதி; அரங்கில் நடிகர் பேசுஞ் சொற்கள்; அரங்கில் நடிகர் பேசவேண்டியவற்றின் படி; வாதத்தில் கட்சி; வழக்கில் பக்கம்; (இசை.) குறிப்பிட்ட குரல் அல்லது கருவிக்கென ஒதுக்கீடு செய்யப்பட்ட பண்; *v.* கூறுகளாகப் பிரி; தொடர்பறு; நட்பு வேறுபடு; விட்டுச்செல்; வேறிடஞ் செல்; கிளைகளாகப் பிரி; வகிரெடு; சண்டை செய்பவர்களை விலக்கிவை; நண்பர்களைப் பிரித்து வை; வேறுபடுத்து; கூட்டுறவை விட்டொழி; (பே-வ.) பணங்கொடு; *adv.* பகுதியாக, சிறிதுமட்டில், பாகத்தைப் பற்றிய மட்டில்; (தொ.) art and part, எண்ணமுஞ் செயலும்; for my part, என்னைப் பற்றிய வரையில்; for the most part, பெரும்பாலும், அநேகமாக; in bad part, in ill part, எதிரீடாக, பிரதிகூலமாக; in good part, சாதகமாக; in great part, பெரிதும், பெரிய அளவில்; in part, சிறிதளவாக, குறையளவில்; on the part of, சார்பாக, சார்பில்; part and parcel, இன்றியமையாக் கூறு; part company with, விட்டுப்பிரி; part from, part with, விட்டுப்பிரி, விடைபெற்றுக்கொள்; part of speech, (இலக்.) சொல்லின் வகை; play a part, ஏமாற்று; take in good part, நல்லபடியாகக் கொள்; take part in, உதவிசெய்; பங்குகொள்; take part with, ஒரு கட்சியை ஆதரி; take the part of, ஆதரி, தாங்கு.

**partake'**, *v.* பங்குகொள்; கூட்டிலிணைந்து பங்கெடுத்துக் கொள்; சிறிது அருந்து; இயல்பு முதலியவற்றிற் பங்கு கொள்.

**parterre'**, *n.* பூம்படுக்கை, தோட்டத்திற் பூம்பாத்திகள் அமைந்த சமதளப்பகுதி; இசையரங்கு மண்டபத்திற் கூடு கொள் இன்னியத்துக்குப் பின்னுள்ள பாகம்.

**parthenogen'esis**, *n.* (உயி.) பாலினக் கூட்டற்ற இனப் பெருக்கம்.

**Parth'ian**, *a.* பண்டைய மேற்கு ஆசிய அரசாகிய பார்த்தியா சார்ந்த; (தொ.) a Parthian shot, பிரிவுநேரக் கடைசிக் கணை வீச்சு; Parthian glance, பிரிவுநேரக் கடைசி நோக்கு; Parthian shaft, பிரிவுநேரக் கடைசி வசைச்சொல்.

*parti*, (பிர.) *n.* திருமணத்துக்குத் தகுந்தவரெனக் கருதப்படுபவர்.

**par'tial**, *n.* (இசை.) முழுமையாக ஒலிக்காத கிளைச்சுரம்; *a.* ஒருசார்புடைய, மனக்கோட்டமுடைய; நேர்மையற்ற; அரைகுறையான, நிறைவற்ற; முழுமையாயிராத; பகுதியளவான; (தொ.) partial eclipse, ஒருசிறைக் கோள் மறைப்பு; upper partials, (இசை.) முழுமையாக ஒலிக்காத கிளை உயர் சுரம்.

**partial'ity**, *n.* மனக்கோட்டம், ஒருபுடைச் சார்பு, தனிப்பற்று, ஓரவஞ்சனை.

**part'ible**, *a.* பிரிக்கத்தக்க; பங்கிட்டுத் தீரவேண்டிய.

**partic'ipant**, *n.* பங்குகொள்பவர்; *a.* பங்குகொள்ளுகிற; கலந்துகொள்ளுகிற.

**parti'cipate**, *v.* பங்குபெறு; தொடர்புகொள்; கலந்துகொள்; பண்பினைச் சிறிது பெற்றிரு.

**participa'tion**, *n.* பங்கேற்றல், கலந்துகொள்ளுதல், பங்குபற்றுதல்.

**part'iciple**, *n.* பெயரடை வினைச்சொற்களுக்கு ஒத்த சொல்; (தொ.) past participle, perfect participle, முடிவெச்சம்; relative participle, பெயரெச்சம்; verbal participle, வினையெச்சம்.

**part'icle**, *n.* துகள், பொடி; சிறு துண்டு, துணுக்கு; அணுக்கூறு; இடைச்சொல்; முன்னிணைவு; பின்னிணைவு.

**part'icoloured**, *a.* இருநிற இடைக்கலப்புடைய, சிறிது ஒருநிறமும் எஞ்சியது வேறுநிறமுமாகவுள்ள, பலவகைப் பட்ட.

**partic'ular**, *n.* நுணுக்க விவரம்; தனியுரு, தனியொருமை உறுப்பு; சிறப்பு; *a.* குறிப்பிட்ட, தனிப்பட்ட, சிறப்பான பிறவற்றை விடுத்து ஒன்றினுக்கு மட்டும் உரிய; (அள.) இனத்தில் முழுமையையும்பற்றிக் குறியாமல் சிலவற்றைப் பற்றி மட்டுங் குறிக்கிற; மற்றவைகளினின்றும் வேறு பிரித்துக் கருதப்படுகிற, தனியான; கவனத்துக்குரிய; நுணுக்கமான; சரிநுட்பமான; மிகு கண்டிப்பான; தனிப்படு சுவைத்திறமுடைய; தனிப்படு சுவை உணர்வுக் கண்டிப் புடைய; (தொ.) in particular, தனிப்பட, சிறப்பாத, முக்கியமாக; விவரமாக; Particular Baptists, மனித இனத் தில் தேர்ந்தெடுத்த சிலருக்கு மட்டுமே மீட்பும் நற்கதியும் கிடைக்குமென்னுங் கோட்பாடுடைய விவிலியக் கிளைக் குழுவினர்.

**partic'ularism**, *n.* மனித இனத்தில் தேர்ந்தெடுத்த சில ருக்கு மட்டுமே மீட்பும் நற்கதியுங் கிடைக்குமென்னுங் கோட்பாடு; கட்சி-பிரிவு முதலியவற்றினிடம் தனிப்பட்ட ஈடுபாடு; பேரரசில் உள்ள ஒவ்வொரு நாட்டுக்கும் அரசியல் உரிமை வழங்குவதென்னுங் கோட்பாடு.

**partic'ularity**, *n.* தனிப்பட்டதாயிருக்குந் தன்மை, சிறப் பியல்பு; நுணுக்கவிவரம்; குறிப்பிட்ட செய்தி.

**partic'ularize**, *v.* தனிப்படக் குறிப்பிட்டுக் கூறு, தனியாகக் குறிப்பிடு; ஒவ்வொன்றாக எடுத்துச்சொல்; விவரங்களைக் குறிப்பிடு.

**partic'ularly**, *adv.* தனிமுறையில், தனிப்பட; வகைவகை யாக, விவரமாக; பகுதி வாசக முறையில்; குறிப்பிடத்தக்க முறையில், முனைப்பாக, குறிப்பாக.

**partic'ulars**, *n. pl.* நுணுக்க விவரங்கள், விவர வர லாறு; விவரக்கணக்கு.

**part'ing**, *n.* பிரித்தல்; பிரிதல்; பிரியுமிடம்; வகுக்கப்படு மிடம், வகுப்பு, வகிடு; பிரிக்குங் கோடு; விடைபெற்றுப் போதல்; *a.* பிரிக்கிற, வகுக்கிற; புறப்பட்டுச்செல்கிற; விடைபெற்றுப்போகிற; விடைபெறுதற்குரிய; விடைபெறும் நேரத்திலான; (தொ.) parting of the ways, வழி இரண் டாகவோ பலவாகவோ பிரிந்துசெல்லும் இடம்; முக்கியமான முடிவெடுக்கவேண்டிய தறுவாய்.

*parti pris*, (பிர.) *n.* மனக்கோட்டம், முன்னரே கொண்ட கருத்து.

**partisan'**[1], *n.* கட்சிக்காரர், கட்சி-கொள்கை முதலியவை மாட்டுக் குருட்டுத்தனமான ஈடுபாடுடையவர்; (படை.) தனிப் படையெழுச்சிகளின்போது அமர்த்திக்கொள்ளப்படும் ஒழுங்கற்ற சிறிய படைப்பிரிவுகளைச் சேர்ந்த வீரர்; இரண் டாவது உலகப்போரில் பகைவர் ஆட்சிக்குட்பட்ட பகுதியில் அடங்காமல் எதிர்த்தவர்; *a.* கட்சிப்பற்றுடைய; பட்சபாத மான, கோட்டமுள்ள.

**part'isan**[2], *n.* (வர.) குத்துவாள் போன்ற நீண்ட கைப்பிடி யுடைய ஈட்டிவகை.

**part'ite**, *a.* (தாவ., பூச்.) கிட்டத்தட்ட அடிவரையில் பிளவு பட்ட.

**parti'tion**, *n.* பிரிவினை, கூறுகளாகப் பிரித்தல்; பிரிக்கப் பட்ட கூறு; இடைத்தட்டி, இடைத்தடுக்கு, பிரிக்குங் கட்டமைப்பு, தடுப்புச்சுவர்; எல்லைச்சுவர்; (சட்.) பிரிவிடு, நிலவுடைமையைக் கூட்டுக் குத்தகைக்காரர்களுக்கிடையே பிரித்துக்கொடுத்தல்; *v.* கூறுகளாகப் பிரி, பாகங்களாக வகு, பங்கிடு; (தொ.) partition deed, பாகப் பத்திரம்; partition off, அறை முதலியவற்றைத் தடுப்புச் சுவரினுற் பிரி.

**part'itive**, *n.* திரண்ட மொத்தத்தின் பாகத்தைக் குறிப்பிடு கிற சொல்; *a.* திரண்ட மொத்தத்தின் பாகத்தைக் குறிப்பிடு கிற; (தொ.) partitive genitive, கூறுகளாகப் பிரிக்கப் பட்ட மொத்தத்தைக் காட்டுவதற்காகப் பயன்படுத்தப்படும் உருபு.

**partizan'**[1], *n., a.* = partisan[1].

**part'izan**[2], *n.* = partisan[2].

**part'ly**, *adv.* ஒரு பகுதியைக் குறித்தமட்டில்; அரைகுறை யாக, பகுதியளவாக; ஓரளவாக, சிறிதளவாக.

**part'ner**, *n.* கூட்டாளி, பங்காளி; துணைவர்; மனைவி; கண வன்; ஆடற்கூட்டாளி; வரிப்பந்தாட்டம் முதலியவற்றில் ஆட்டக்கூட்டாளி; கூட்டுவாழ்வினையுயிர்களுள் ஒன்று; *v.* இணை, கூட்டு; கூட்டாளியாயிரு; (தொ.) predominant partner, முதன்மைப் பங்காளி; ஐக்கிய அரசின் (United Kingdom) முதன்மைப் பங்காளியான இங்கிலாந்து; sleeping partner, வாணிகத்தில் முதல்மட்டும் இட்டு உட னிருந்து செயலாட்சி செய்யாத பங்காளி.

**part'ners**, *n. pl.* (கப்.) கப்பல் மேல்தளத்தில் பாய்மரம்-குழாய் முதலியன செல்லுந் துளையைச் சுற்றியுள்ள வெட்டு மரச் சட்டவேலைப்பாடு.

**part'nership**, *n.* கூட்டுப்பங்காண்மை, கூட்டில் பங்காளியா யிருக்கிற நிலை; பங்காண்மைக் கூட்டுவாணிகம்; ஒரு தொழி லில் ஈடுபட்டிருப்பவர்களுக்கிடைப்பட்ட ஒப்பந்தம்.

**part'-own'er**, *n.* கூட்டுச் சொந்தக்காரர்.

**part'ridge**, *n.* கௌதாரி.

**part'ridge-wood**, *n.* தச்சுத் தொழிலுக்குப் பயன்படுத்தப் படும் கடினமான சிவப்புக்கட்டை வகை; சில காளான் வகைகளால் சட்டைகளின்மேல் தோன்றும் புள்ளிகள்.

**parts**, *n. pl.* இடங்கள், நிலப்பகுதிகள்; திறமை, அறிவுத் திறம்; விலங்குடம்பின் பகுதிகள்; (தொ.) the privy parts, மறை உறுப்புக்கள்.

**part'-song**, *n.* ஒத்திசைப்பாட்டு.

**part'-time**, *a.* குறை நேரத்துக்குரிய, முழுநேரமல்லாத.

**part'-tim'er**, *n.* பகுதிநேரப் பணியாள்.

**partur'ient**, *a.* ஈனுகிற, ஈனுந்தறுவாயிலுள்ள; கருவுயிர்ப் புச் சார்ந்த; கருத்துப் படைப்புச்சார்ந்த, புத்துருவாக்கும் நிலையிலுள்ள.

**parturi'tion**, *n.* பிள்ளைப்பேறு; பிறப்பு, புதுத்தோற்றம்.

*partur'iunt mon'tes, nascet'ur ridic'ulus mus*, (ல.) மலைகள் கருவுயிர்த்து எலியைப் பெற்றன, மிகப் பெரு முயற்சி அற்பப் பயன்.

**part'y**, *n.* கட்சி; கூட்டத்தார்; சேகரத்தார்; நோக்கம்-கொள்கை முதலியவற்றில் ஒன்றுபட்ட குழுவினர்; பயணக் குழு; ஒரு தொழிலர் குழு; விருந்தினர் கூட்டம்; வழக்கில் ஒருதிறத்தவர்; ஒப்பந்தஞ் செய்துகொள்பவர்களில் ஒரு சார்பினர்; மணவினையில் ஒருதரப்பினர், மணமகன்; மண மகள்; உடந்தையாளர், ஒத்து உதவுபவர்; ஆள்; *a.* (கட்.) வெவ்வேறு சாயல் வண்ணங்கள்கொண்ட பாகங்க ளாகப் பிரிக்கப்பட்ட; சுவர் வகையில் இரு கட்டிடங்களுக் குப் பொதுவாகப் பயன்படுகிற; (தொ.) party spirit, கட்சி மனப்பான்மை; party wall, கட்டிடங்களுக்குப் பொது வுரிமையாக வழங்கப்படும் இடைச்சுவர்.

**part'y-coloured**, *a.* = particoloured.

**parv'enu**, *n.* பெருவாழ்வு அற்பர்; யாணரார்.

**parv'is**, *n.* வளைமுற்றம், திருக்கோயில் முதலியவற்றின் எதிரி லுள்ள அடைப்பிட்ட நிலப்பரப்பு.

*pas*, (பிர.) *n.* முந்துரிமை, முந்துநிலை; ஆடல் அடிபெயர்ப்பு முறை; (தொ.) have the pas of one, முந்திக்கொள்.

**pasch'al**, *a.* இயேசுநாதர் உயிர்த்தெழுந்த திருநாள் பற்றிய; யூதர்களின் விடுதலைத் திருவிழா சார்ந்த.

*pas de deux*, (பிர.) *n.* ஒருவர் அல்லது இருவர்க்கான நடன வகை.

**pa'sha, pasha'**, *n.* பாஷா, உயர்தரத் துருக்கிய அதிகாரி; துருக்கிய படைத்தலைவர்; துருக்கி மாகாண ஆளுநர்; (தொ.) pasha of one tail, மூன்றாந்தரத் துருக்கிய அதிகாரி; pasha of three tails, முதல்தரத் துருக்கிய அதிகாரி; pasha of two tails, இரண்டாந்தரத் துருக்கிய அதிகாரி.

**pa'shalic**, *n.* பாஷாவின் ஆட்சி வரம்பு.

**pa'shm**, *n.* காசுமீரச் சால்வைகள் செய்வதற்குப் பயன்படும் திபேத்திய வெள்ளாடுகளின் அடிமென்மயிர்.

**pasque'-flower**, *n.* மணிவடிவ ஊதா மலர்ச் செடிவகை.

**pasquinade'**, *n.* வசைப்பாட்டு, பழிப்புரை, அங்கதம்.

**pass**, *n.* தேர்ச்சி, தேறுதல்; பொதுநிலைத் தேர்வு வெற்றி; நெருக்கடி நிலை; நுழைவு இசைவுச் சீட்டு; வெளியேறுவதற்கான இசைவுச்சீட்டு; விடுதியில் தங்காதிருப்பதற்கான இசைவுச்சீட்டு; வாட்போரில் குத்துதல்; கண்கட்டு மாயம், கை மாயம்; கை தடவுஞ் சமிக்கை; பந்து கைமாற்றம், பந்தாட்ட வகையில் தன்பக்க ஆட்டக்காரருக்குப் பந்தினைச் செலுத்துதல்; கணவாய், மலைகளினூடு செல்லும் இடுங்கிய பாதை; (படை.) ஒரு நாட்டுக்குள் செல்லும் வழியாக அமைந்துள்ள கணவாய்; ஆற்றுவாயிடை மரக்கலம் செல்லத்தக்க வாய்க்கால்; மீன் அணையைத் தாண்டித் துள்ளிவரும் வழி; *v.* முந்து, மேலே செல், முன்னேறு; புழங்கு, வழக்காற்றிலிரு; இடம்விட்டு இடம் மாற்றப்பெறு; மாறுதலுறு; சா, இற; கடந்து செல்; கழிவுறு; முடிவுறு; சேரிடத்துக்குக் கொண்டுபோ, கொண்டு வர வேண்டிய இடத்துக்கு வந்துசேர்; வழிவகுத்துக்கொண்டு செல்; கண்டிக்கப்படாமல் தப்பித்துக்கொள்; போதுமானதென்று ஏற்றுக்கொள்ளப்பெறு; மன்றச் சட்டப்பகர்ப்பு முதலியவற்றின் வகையில் நிறைவேற்றப்பெறு; வேட்பாளர் வகையில் தேறு, தேர்ச்சியடை; தேர்வாளருக்கு மனநிறைவளி; நிகழ், நேரிடு; செய்யப்பெறு, சொல்லப்பெறு; நடுத்தீர்ப்புக்கூறு; தீர்ப்புவகையில் வழங்கப்பெறு; சீட்டாட்டங்கள் வகையில் வாய்ப்பினை இழந்துவிடு, ஆட்டத்திலிருந்து விலகிக்கொள்; பின்தங்கும்படி விட்டுச்செல்; தாண்டிச்செல்; சட்டப்பகர்ப்பு வகையில் சட்ட மன்றத்தால் ஆய்ந்து ஏற்றுக்கொள்ளப்பெறு; தேர்வுக்கு வேண்டிய தரம் எய்து; விஞ்சு; மேம்படு; அறிவாற்றல்களைக் கடந்ததாயிரு; அனுப்பு; இயக்கு, நகர்த்து, செலுத்து; காற்பந்தாட்டம் முதலியவை வகையில் தன்பக்க ஆட்டக்காரருக்குப் பந்தினைச் செலுத்து; கடந்துபோகச் செய்; தேர்வில் மாணவனைத் தேர்ச்சிபெறச் செய்; சட்ட மன்றத்தில் சட்டம் முதலியவற்றை ஆய்ந்து நிறைவேற்று; காலவகையில் கழி; கொடுத்துவிடு; வழங்கு, செலாவணியிலிருக்கச் செய்; தீர்ப்பு உரை; கண்டித்துப்பேசு; (தொ.) bring to pass, செய்துமுடி, நிறைவேற்று, நிகழ்வி; come to pass, நிகழ், நேரிடு; free pass, நுழைவிணக்கச் சீட்டு; பயண இணக்கச்சீட்டு; has passed the chair, தலைவராக அல்லது மாநகர் முதல்வராக ஆனுர்; pass a dividend, பங்குவிதம் அறிவிப்புத் தவிர்; pass away, இறந்துபடு; pass by, தவிர், புறக்கணி, தாண்டி நடந்து செல்; pass by the name of, என வழங்கப்பெறு; passed pawn, சதுரங்க வகையில் அடுத்தாற்போல் எதிர்ப்பில்லாத காய்; pass for, என ஏற்கப்பெறு; எனத் தவருக வழங்கப்பெறு; pass in one's checks, இறந்துபடு; pass muster, அம்பலமேறு; போதுமானதென்று ஏற்றுக்கொள்ளப் பெறு; pass off, உணர்ச்சி முதலியவை வகையில் மங்கிப் போ; நடவடிக்கைகள் வகையில் முற்றும் நிறைவேற்றப்பெறு; ஒன்றை ஒன்றெனச் சொல்லி ஏமாற்றிக் கொடுத்துவிடு; ஒன்றிலிருந்து கவனத்தைத் திருப்பு; pass on, முன்செல், முன்னேறு; இறந்துபடு; அனுப்பு; கைக்குக் கை மாற்றியனுப்பு; தீர்ப்புக்கூறு, தண்டனை விதி; மோசஞ் செய்; pass out, (பே-வ.) இறந்துபடு; மதுக்குடியினுல் நினைவிழ; pass over, தவிர், விட்டுவிடு; pass the time of day, (பே-வ.) முகமனுரைகள் பரிமாறிக்கொள்; pass through, நுகர், பட்டுணர், அனுபவி; pass upon, தீர்ப்புக்கூறு, தண்டனைவிதி; கைமாயஞ் செய், ஒன்றை ஒன்றெனச் சொல்லி ஏமாற்றிக் கொடுத்துவிடு; pass water, சிறுநீர் கழி; sell the pass, கொள்கைக்குத் தவறிழை.

**pa'ssable**, *a.* கடந்து செல்லக்கூடிய; பயணஞ் செய்யத்தக்க; நீர்வழிவகையில் படகு முதலியன செல்லத்தக்க; ஒப்புக்கொள்ளக்கூடிய, மட்டாக நல்லதான; பொறுத்துக் கொள்ளக்கூடிய, புறக்கணித்துவிடத் தக்க.

**pass'age[1]**, *n.* சேறல், செலவு, பெயர்ச்சி; நிலைமாற்றம், ஒரு நிலையிலிருந்து மற்றொன்றுக்கு மாறுதல்; ஊடே செல்வதற்கான உரிமை; கப்பற்பயணம்; பிரயாணியைக் கடல்வழி கொண்டு செல்வதற்கான உரிமை; சட்டமாக நிறைவேற்றுதல்; செல்லும் வழி; நடை, இடைகழி; ஏட்டுரைப்பகுதி; (தொ.) bird of passage, நாடோடிப்பறவை; நாடோடி, ஓரிடத்தில் நிலையாய்த் தங்காதவர்; passage at arms, passage of arms, சண்டை, வாய்ச்சண்டை; passage beds, (மண்.) பொழுதைய அடுக்குகள்.

**pass'age[2]**, *v.* குதிரையைப் பக்கவாட்டாகச் செலுத்து; பக்கவாட்டமாகச் செல்.

**pass'ages**, *n. pl.* இருவர்க்கிடையே நடக்கும் விவகாரங்கள்; ஒருவர்க்கொருவர் மனம்விட்டுப் பேசிக்கொள்ளுதல்.

**pass'ant**, *a.* (கட்.)மரபுச்சின்னத்திற் காணப்படும் விலங்கு வகையில் வலப்பக்க முன்னங்கால் தூக்கிய நிலையில் வலப்பக்கம் நோக்கி நடக்கிற.

**pass'book**, *n.* பற்றுவரவு ஏடு, வைப்பீட்டாளர் பணம் போடுவதையும் எடுப்பதையுங்காட்டும் பொருளகக் கணக்கேடு.

*passe*, (பிர.) *a.* இளமை கடந்துவிட்ட; காலநிலை கடந்துவிட்ட.

*passee*, (பிர.) *a.* பெண்வகையில் எழிற் பருவம் கடந்துவிட்ட.

*passe menterie*, (பிர.) *n.* பொன்-வெள்ளிச் சரிகை மணிகள் வாரிழை முதலியவற்றைக் கொண்டு செய்த ஒப்பனை.

**pass'enger**, *n.* பயணர்; (பே-வ.) செயல்துறை உழைப்பில் ஈடுபடாக் குழுவினர்.

**pass'enger-pig'eon**, *n.* நெடுந்தொலைவு பறந்து செல்லக்கூடிய வட அமெரிக்க காட்டுப்புரு வகை.

*passe-partout*, (பிர.) *n.* பொதுச்சாவி, பல பூட்டொரு கோல்; நிழற்படச் சட்டம்; விளிம்புகளில் ஒட்டுநாடாவைக் கொண்டு இணைக்கப்படும் இரண்டு கண்ணுடிப் பாளங்களைக் கொண்ட படச்சட்டம்.

**pa'sser**, *n.* கடந்து செல்பவர்; தேர்வில் தேறுபவர்; கடந்து செல்விப்பவர்; தேறுவிப்பவர்; பொருள்களை வேறு வேலையாள் கைக்கு மாற்றுபவர்.

**pass'er-by**, *n.* வழிச்செல்வோர்.

**pass'erine**, *n.* கிளையினைப் பற்றிக்கொண்டு குந்துதற்கேற்ற கால்களையுடைய பறவையினத்தின் வகை; *a.* கிளை அல்லது கொம்பினைப் பற்றிக்கொண்டு அமர்வதற்கேற்ற கால்களையுடைய பறவையினஞ் சார்ந்த; சிட்டுக்குருவியின் அளவுள்ள.

**pass'ible**, *a.* (இறை.) உணர்ச்சியுடைய; துன்பமுணரக்கூடிய.

*pass'im*, (ல.) *adv.* ஏட்டுரை மேற்கோள் சுட்டுவகையில் எல்லா இடங்களிலும், முழுவதிலும், பரவலாக.

**passim'eter**, *n.* பயணச்சீட்டுத் தானியங்கி.

**pa'ssing**, *n.* கடந்துசெல்லுதல்; தேர்வில் தேறுதல்; கடந்து செல்வித்தல்; தேறுவித்தல்; கடந்துசெல்லுமிடம்; முடிவுறுதல்; இறப்பு; பட்டுநூல் உள்ளீடாகவுள்ள பொன் அல்லது வெள்ளி இழை; *a.* அருகே செல்கிற; ஊடே செல்கிற; விட்டுச்செல்கிற; நிலையற்ற, விரைந்தோடுகிற; நன்கு ஆராயாத; தற்செயலான; *adv.* கடந்துசென்றுகொண்டு; நிலையற்று; விரைந்தோடி; நன்கு ஆராயாமல்; தற்செயலாக.

**pass'ing-bell**, *n.* சாவுமணி.

**pass'ing-note**, *n.* (இசை.) பண்ணமைதிக்கு இன்றியமையாததாய் இராது தடங்கலற்ற சுரபேதத்திற்குத் துணை செய்யும் இசைக்கூறு.

**pa'ssion**, *n.* உணர்ச்சி; அடங்காக் கோபம்; அடங்காப் பாலிணை விழைவு, மிகு காமம்; வெறி உணர்ச்சி; பேரார்வம்; *v.* (செய்.) உணர்ச்சி கொள்; பேரார்வங்காட்டு; (தொ.) Passion Sunday, கிறித்தவரின் நாற்பது நாள் உண்ணு நோன்புக்காலத்தின் ஐந்தாவது ஞாயிற்றுக்கிழமை; Passion Week, இயேசுநாதர் உயிர்த்தெழுந்த நாள் விழாவில் வரும் ஞாயிற்றுக்கிழமைக்கு முந்திய வாரம்; மீட்டுயிர்ப்பு

விழா ஞாயிற்றுக்கிழமைக்கு முந்திய வாரத்துக்கு முந்திய வாரம்; the Passion, இயேசுநாதர் சிலுவையிற்பட்ட துன்பங்கள்; இயேசுநாதர் வாழ்க்கை வரலாற்றில் அவர் சிலுவையிற்பட்ட வேதனைகள் குறித்துவரும் நிகழ்ச்சி; இயேசுநாதர் வாழ்க்கை வரலாற்றில் அவர் சிலுவையிற்பட்ட வேதனைகள் குறித்துவரும் கதையின் இசையமைப்பு.

**pa'ssional**[1], *n.* திருத்தொண்டர்கள் தியாகிகள் இவர்களுடைய துன்பங்களைக் கூறுஞ் சுவடி.

**pa'ssional**[2], *a.* உணர்ச்சி சார்ந்த; பேரார்வங் காட்டுகிற.

**pa'ssionate,** *a.* எளிதிற் சினங்கொள்ளத்தக்க; உணர்ச்சிக்கு ஆட்பட்ட; எளிதில் உணர்ச்சிகொள்ளுகிற; முற்றார்வத்தின் விளைவான; மொழி-சொல் முதலியவை வகையில் பேருணர்ச்சி காட்டுகிற.

**pass'ion-flower,** *n.* இயேசுநாதர் சிலுவையிற்பட்ட வேதனைகளுக்குக் காரணமாயிருந்த ஆணி-முள் முதலியவைபோன்ற தோற்றமுடைய மலர்க்கொடி வகை.

**pa'ssionist,** *n.* இயேசுநாதர் சிலுவையிற்பட்ட வேதனைகளின் நினைவை நிலைநிறுத்துவதற்குத் தங்களாலானதையெல்லாம் செய்யப் பிணைபட்டுள்ள குழுவினருள் ஒருவர்.

**pass'ionless,** *a.* சமநிலையான; எளிதிற் சினமூட்டப்பெறாத; காமம் நீத்த.

**pass'ion-play,** *n.* இயேசுநாதரது துன்பங்களையும் இறப்பினையுங் காட்டும் சமயநாடகம்.

**pass'ive,** *n.* (இலக்.) வினையின் செயப்பாட்டு வடிவம்; செயப்பாட்டு வினை; சாத்துவிக குணத்தினர்; *a.* துன்பமேற்கிற; தன் செயலின்றிப் பிறர் செயலுக்காட்பட்ட; (இலக்.) செயப்பாட்டுவினை சார்ந்த; எதிர்க்காத, அடங்கிப்போகிற; சுறுசுறுப்பில்லாத, மந்தமான, உயிர்ப்பற்ற; (தொ.) passive debt, வட்டி செலுத்தப்பெறாத கடன்; passive resistance, அறப்போர், சாத்துவிக எதிர்ப்பு; passive voice, (இலக்.) செயப்பாட்டு வினை.

**pass'key,** *n.* வாயிற்கதவு முதலியவைகளுக்கான தனிமுறைத் திறவுகோல்; பல பூட்டுச் சாவி.

**pass'man,** *n.* பல்கலைக்கழகத் தேர்வில் சிறப்புநிலைப் பட்டம் பெறாமல் பொதுநிலைப்பட்டம் பெற்றவர்.

**pa'ssover,** *n.* இஸ்ரவேலர்கள் எகிப்தியரிடமிருந்து பெற்ற விடுதலையைக் கொண்டாடும் யூதர் திருவிழா; யூதர் திருவிழாவின்போது கொன்று தின்னப்படும் ஆட்டுக்குட்டி; இயேசுநாதர்.

**pa'ssport,** *n.* கடவுச்சீட்டு, பயண இசைவுச்சீட்டு, நுழைவுரிமை தருஞ் செய்தி.

**pass'word,** *n.* அடையாளச்சொல், பகைவனினின்றும் நண்பனைப் பிரித்துக் காட்டுவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சொல் அல்லது சொற்றொடர்.

**past,** *n.* இறந்த காலம்; சென்ற காலத்தில் நேர்ந்த நிகழ்ச்சி; ஒருவரது கடந்தகால வாழ்க்கை; *a.* கழிந்த காலத்தைச் சேர்ந்த; நடந்துபோன, கடந்துபோன; இப்போதுதான் கழிவாகிவிட்ட; முடிவுற்ற; (இலக்.) கால வகையில் சென்றுவிட்ட; *adv.* அருகாகக்கடந்து; *prep.* குறித்த காலவகையில் கடந்து; குறித்த இடவகையில் அப்பால்; எல்லை வகையில் அப்பால்; (தொ.) past master, வாணிகக்குழு-நற்கொத்தர் கழகம் முதலியவற்றில் தலைவராய் இருந்தவர்; துறை போகியவர்; past participle, (இலக்.) முடிவெச்சம்; past tense, (இலக்.) இறந்த காலம்; the past, கடந்த காலம்.

**paste,** *n.* பிசைந்த ஈர மாவு, கூழ், களி, பசைக்குழம்பு, இனிப்புத் தின்பண்ட வகை; மீன் பிட்டு; பற்று, மாப்பசை, பிசின்; இளக்கமான மென்கலவை வகை; போலி மணிக்கல் செய்வதற்கான நேர்த்தியான கண்ணாடி வகை; *v.* பசையினால் ஒட்டு; நாடக முதலியவற்றின் விளம்பரத்தைப் பசை தடவிச் சுவரில் ஒட்டு; தாள் முதலியவை ஒட்டி மூடு.

**paste'board,** *n.* தாள் அட்டை; *a.* தாள் அட்டையாலான; நொய்தான; போலியான; சிறப்பற்ற.

**pas'tel,** *n.* நீலச்சாயம் தருஞ் செடிவகை; செடிவகையிலிருந்து கிடைக்கும் நீலச்சாயம்; வண்ணக்கோல்கள் செய்வதற்காகப் பசைநீரில் நிறமிகளைக் கலந்து உண்டாக்கப்படும் உலர்பசை; வண்ணக்கோலினால் தீட்டப்பட்ட படம்.

**pas'tern,** *n.* குதிரையின் காற்குழைச்சு.

**pas'teurism,** *n.* அடுத்தடுத்து ஊசிகுத்தி மருந்தேற்றுவதன் மூலம் நீர்வெறுப்புநோய் போன்றவை வராமல் தடுக்கும் அல்லது குணப்படுத்தும் முறை.

**pas'teurize,** *v.* பிரஞ்சு விஞ்ஞானியான லூயி பாஸ்டர் (Louis Pasteur 1822-95) முறைப்படி பாலைச் சூடாக்கித் துப்புரவு செய்; ஊசிகுத்தி மருந்தேற்றி நோய்க்கு மருத்துவஞ் செய்.

**pasti'ccio,** *n.* கதம்பம், கூட்டுக்கலவை; இசைக்கலம்பகம், வெவ்வேறு மூலங்களிலிருந்து எடுத்து ஆக்கப்பட்ட இசைப்பாடல்; பல்வேறு படங்களைப் பார்த்து எழுதப்பட்ட படம்.

**pastiche',** *n.* கதம்பம்; வெவ்வேறு மூலங்களிலிருந்து எடுத்து ஆக்கப்பட்ட இசைப்பாடல்; வேறு பல படங்களைப் பார்த்து எழுதப்பட்ட படம்; தெரிந்த ஒரு நூலாசிரியரின் நடையில் அமைந்துள்ள இலக்கிய நூற்கோப்பு; தெரிந்த ஒரு கலைஞரின் பாணியிலமைந்துள்ள கலைவேலைப்பாடு.

**pas'til, pastille',** *n.* நறுமணத் தூபச் சுருள்; சிறு நறுமணத் தின்பண்டம்; இனிப்புக்கலந்த மருந்து வில்லை.

**pa'stime,** *n.* பொழுதுபோக்கு, விளையாட்டு, களியாட்டம்; நேரப்போக்குமுறை.

**pa'stor,** *n.* நல்லாயர், மேய்ப்பர், குரு, போதகர், திருக்கோயிலின் அல்லது திருச்சபையின் பொறுப்புடைய சமயகுரு; ஆன்மிக வழிகாட்டி; கருந்தவிட்டு நிறச் சிறகுகளையுடைய பறவை வகை.

**pa'storal,** *n.* நாட்டுப்புற வாழ்க்கை குறிக்கும் நாடகம்; முல்லைத்திணைப் பாட்டு; முல்லைநிலவாழ்க்கைக் காட்சிப்படம்; சமயகுரு மக்களுக்கு எழுதிவிடுக்கும் கடிதம்; *a.* ஆயர்களைச் சார்ந்த; நிலவகையில் மேய்ச்சலுக்குப் பயன்படுகிற; பாடல்கள் முதலியவை வகையில் நாட்டுப்புற வாழ்க்கையை விரிக்கிற; சமயகுரு சார்ந்த; (தொ.) pastoral epistles, புதிய ஏற்பாட்டில் டிமோத்தி-டைட்டஸ் (Timothy and Titus) என்பவர்களுக்குப் பால் (Paul) என்பவர் எழுதிய திருமுகங்கள்.

**pastora'le,** *n.* நாட்டுப்புற வாழ்க்கை பற்றிய இசைப்பாடல்; முல்லைத்திணை சார்ந்த எளிய இசைநாடகம்.

**pa'storalism,** *n.* முல்லைத்திணைப் பண்பு; நாட்டுப்புற வாழ்க்கையை விரித்து எழுதும் பாணி.

**pa'storate,** *n.* சமயகுருவின் பதவி; சமயகுருவின் பதவிக் காலம்; சமய குருமார் குழு.

**pas'try,** *n.* பிசைந்து வேகவைத்த மாவு; அடை, அப்பவகை, மாப்பண்டப் பண்ணியம்.

**pas'try-cook,** *n.* மாப்பண்டஞ் செய்பவர்.

**pa'sturable,** *a.* மேய்ச்சலுக்கு உகந்த.

**pa'sturage,** *n.* மேய்ப்பு, ஆநிரை மேய்த்தல்; மேய்ச்சல் நிலம்.

**pa'sture,** *n.* கால்நடைத் தீவனம்; மேய்ச்சல் பசும்புல் தரை; பசும்புல் நிலம்; *v.* கால்நடைகளை மேய்ச்சலுக்குக் கொண்டு போ; கால்நடைகளை மேயவிடு; ஆடுகள் முதலியவை வகையில் புல்மேய்; ஆள்வகையில் ஆடுகள் முதலியவற்றைப் புல் தரையில் மேயவிடு.

**pa'sty**[1], *n.* இறைச்சி-பழம் முதலியன உள்ளீடாகவுள்ள மாப்பண்ட வேவல்.

**pas'ty**[2], *a.* பசைக்குரிய; பசைபோன்ற; வெளிறிய நிறம் அல்லது தோற்றமுடைய.

**pas'ty-faced',** *a.* வெளிறிய நிறம் அல்லது தோற்றமுடைய.

**pat**[1], *n.* தட்டிக் கொடுத்தல்; சொட்டு; ஆதரவுக்குறிப்பு, மெச்சுதற் குறிப்பு; திரளை, வெண்ணெய் முதலியவற்றின் வகையில் மெல்லத்தட்டி உருவாக்கிய உருளை; *v.* தட்டு,

கொட்டு; தட்டித் தட்டையாக்கு; தட்டிக்கொடு; விரலால் தட்டி ஒத்துணர்வுகாட்டு, முதுகில் தட்டித்தடவி ஆதரவு தெரிவி; ஆதரவு காட்டு; மெச்சு; ஊக்குதல் தெரிவி; (தொ.) pat on the back, ஆர்வ ஆதரவு தெரிவி, ஆதரவு தெரிவித்து ஊக்கு.

pat[2], *a.* வாய்ப்பான, வாக்கான; தறுவாய்க்கு ஏற்ற, காலத்துக்குப் பொருத்தமான; நோக்கத்துக்கு இசைவான; எண்ணத்துக்குப் பொருத்தமாக அமைந்த; *adv.* வாய்ப்பாக, வாக்காக; தறுவாய்க்கு ஏற்றதாக, காலத்துக்கு இசைவாக; சரியாக, நுட்பமாக, நுட்பந் தவறாமல்; நோக்கத்துக்கு முற்றிலும் பொருத்தமாக; எந்த நேரத்திலும் பயன்படுத்திக் கொள்ளும் ஆயத்தநிலையில்; (தொ.) stand pat, சீட்டாட்ட வகையில் வெளிச்சீட்டெடுக்க நாடாமல் தன் கைச்சீட்டைக் கொண்டே ஆடு; மாறுதல் ஏற்க மறு; தன் துணிவே மேற்கொள்.

pat[3], *n.* அயர்லாந்து நாட்டானைப் பற்றிய வேடிக்கைப் பெயர்.

pat'-a-cake, *n.* குழந்தைப்பாடல் தொடக்க வாசகம்; குழந்தை விளையாட்டு வகை.

*patagi'um*, (இத்.) *n.* வௌவாலினத்தின் இறக்கைச் சவ்வு.

patavin'ity, *n.* லத்தீன் மொழியில் காணப்படும் பாடுவா (Padua) வட்டாரத் திசைமொழிப் பண்பு.

pat'-ball, *n.* புல்வெளிப் பந்தாட்ட வகை.

patch, *n.* ஒட்டு; வட்டப்பட்டை, அகலப்பொட்டு; ஒட்டுத் தையல் துண்டு; காயத்தின்மீதுள்ள மாவடைக்கட்டு; கண் தடைக்கட்டு; சுட்டி, பரப்பின்மீதுள்ள இடை வேறுபாட்டுப் பட்டை; பாத்தி, நிலத்துண்டம்; பத்தை, துண்டு நிலத்தின் இலை தழை மர வளர்ச்சித் தொகுதி; எச்சமிச்சம்; இடையிடைப்பகுதி, இடைவெட்டு; 17, 18-ஆம் நூற்றாண்டுகளில் மேனி வண்ணமெடுத்துக்காட்ட அணியப்பட்ட கரும் பட்டுத் துண்டு அல்லது மாவடைப்பொட்டு; *v.* ஒட்டுத் தையலிடு; ஒட்டுப்போடு; ஒட்டுத்துண்டால் சரிசெய்; ஒட்டுத்துண்டு வகையில் ஒட்டுப்போட உதவு; ஒட்டிட்டுச் சரிசெய், துண்டுத் துணுக்குகள் கொண்டு ஒப்பேற்று; சந்து செய், அமைத் திணக்குவி, சீர்செய்; அவசர அவசரமாக ஒட்டிட்டுச் சரிசெய்; ஒட்டுக்களிணைத்து உருவாக்கு; துண்டுகளை ஒட்டி இணை; பொட்டுப்பொட்டாகத் தோற்று, பட்டைபட்டையாகத் தென்படு; (தொ.) not a patch on, சிறிதும் ஒப்பிடத் தக்கதன்று, ஒப்பிட ஏதும் இல்லை; மலை மடுவாக வேறுபட்டது; patch up, ஒட்டிட்டுச் சீராக்கு, அரைகுறையாகப் பழுது பார்; பூசல் இணக்குவி; strike a bad patch, கேடான பருவம் வரப்பெறு.

patch'ouli, patch'ouly, (த.) *n.* பச்சிலை, மணப்பொருள் தருஞ் செடிவகை; மணப்பொருள் வகை.

patch'-pocket, *n.* சட்டைவெட்டுப் பை, துண்டொட்டுப் பை.

patch'-work, *n.* ஒட்டுவேலை; பன்னிற ஒட்டிணைவு; பல்வகை ஒட்டிணைவு.

pate[1], *n.* (பே-வ.) தலை; மூளை.

*pate*[2], (பிர.) *n.* உணவுக்களி வகை ; (தொ.) *pate de foie gras*, கொழுவிய வாத்தீரற் களி.

*patell'a*, (ல.) *n.* முழந்தாள் முட்டுச்சில்லு, கால்முட்டெலும்பு; சிறு தட்டம்; *pl. patell'ae.*

patell'ar, *a.* கால்முட்டுச் சில்லுக்குரிய.

patell'ate, *a.* குவிதட்டம் போன்ற; சிப்பியுருவான.

pat'ent, *n.* காப்புரிமைப் பட்டயம்; புதுமுறை ஆக்க விற்பனைகளுக்குரிய தனிக்காப்புரிமை; தனிச்சிறப்புரிமை; தனியுரிமைச் சான்றிதழ்; உரிமைக் காப்புடைய புத்தாய்வு முறை; தனிக் காப்புரிமை வாய்ந்த புதுச் செய்முறை; சிறப்புச் சின்னம், பண்புச் சின்னம்; *a.* தனிக்காப்புரிமையுடைய; உரிமைக் காப்புடைய; தனியுரிமைச் சான்றுடைய; தனி உரிமைத் தொடர்பிணையுடைய; (பே-வ.) தனிக்காப்புரிமைத் தகுதி வாய்ந்த, காப்புரிமை பெறத்தக்க; திறந்த; வெளிப்படையான; தெளிவான, மேலீடாகவே தெரிகிற; *v.* தனிக் காப்புரிமை பெறு, அரசியற் பட்டய உரிமை பெறு; (தொ.) letters patent, காப்புரிமைப் பட்டயம்; patent leather, மெருகிட்ட கருவண்ண மேற்பரப்புடைய தோல்; patent log, கப்பல் வேக அளவைக் காட்டும் வட்டில்; patent office, காப்புரிமைச் சீட்டு வழங்கும் பணிமனை; patent of gentility, தவறா உயர்குடிச் சின்னம்.

patentee', *n.* காப்புரிமைச்சீட்டு எடுப்பவர்; தனியுரிமைப் பட்டயம் பெற்றிருப்பவர்; பட்டய உரிமைப் பயன்பெறுபவர்.

pat'ent-roll, *n.* பட்டய உரிமை பெற்றோர் பெயர்த்தொகுதிப் பட்டியல்.

paterfamil'ias, *n.* குடும்பத் தலைவர்; தந்தை.

patern'al, *a.* தந்தையினுடைய; தந்தைக்குரிய; தந்தை வழியான; தந்தைவழி உறவுடைய; தந்தை போன்ற; தந்தையின் அன்புடைய; (தொ.) paternal government, நல்லெண்ணத்துடன் குடிகளின் உரிமைகள்மீது தேவையற்ற கட்டுப்பாடுகளைச் சுமத்தும் அரசியல்; paternal grandmother, தந்தையின் தாய்; paternal legislation, நல்லெண்ணத்துடன் குடிகளின் உரிமைகள்மீது தேவையற்ற கட்டுப்பாடுகளைச் சுமத்துஞ் சட்டங்கள்.

patern'ity, *n.* தந்தைமை, தந்தையாயிருக்குந் தன்மை; தந்தைத் தொடர்பு; தந்தை வழியில் பிறப்புமூலம்; ஆக்கியோன் நிலை, ஆசிரிய உரிமை; ஆக்கமூலம், தோற்றமூலம்.

pat'ernos'ter, *n.* இறைவழிபாட்டு வாசகம்; இறைவழிபாடு; சமய மேடையுரை; அக்கமணிமாலையில் இறைவழிபாட்டு நினைவூட்டும்' பெரிய மணியுரு; செபமாலை; அக்கமாலை போன்ற பொருள்; இடையிடையே கொக்கியுடைய தூண்டில்; (க-க.) அக்கமாலை போன்ற அணி ஒப்பனை; (தொ.) black paternoster, white paternoster, மந்திரிப்பு வாசகமாகப் பயன்படுத்தும் வழிபாட்டு வாசகம்; devil's paternoster, முணுமுணுப்பு; paternoster line, இடையிடையே கொக்கியுடைய தூண்டில்.

path, *n.* வழி; காலடிப்பாதை; நடைப்பாதை; பந்தய ஓட்ட மிதிவண்டிகளுக்கு வழிகாட்டும் நெறிவரை; செல்நெறி; செயல் நெறிமுறை; வழிவகை, நெறிமுறை.

Pathan', *n.* பட்டாணியர், ஆப்கன் நாட்டவர், ஆப்கன் நாட்டினத்தவர்.

pathet'ic, *a.* இரக்கந்தூண்டுகிற; இரங்குகிற, இரக்கமான; துயரார்ந்த, சோகமான; (தொ.) pathetic fallacy, தற்குறிப்பேற்றம்.

pathet'ics. *n. pl.* சோக உணர்ச்சி தூண்டுதல்; கழிபேர் அவலம்.

path'finder, *n.* புதுநிலங் காண்பவர்; புதுவழி நாடுபவர்; குண்டு விமானத்துக்குமுன் சென்று இலக்கு விளக்கங் காணும் வழிகாட்டி விமானம்.

path'ic, *n.* இயல்பல் புணர்ச்சிச் சிறுக்கன்; *a.* செயலுக்கு ஆட்படுகிற, தன்செயலற்றுச் செயல் ஏற்கிற.

path'less, *a.* வழியற்ற; முன்சுவடற்ற.

pathogen'esis, *n.* நோய்த்தோற்ற வகை.

pathogenet'ic, pathogen'ic, pathog'enous, *a.* நோய் உண்டுபண்ணுகிற, பிணி தோற்றுவிக்கிற.

pathog'eny, *n.*=pathogenesis.

pathognomon'ic, *a.* நோய் இன்னதென்று குறிப்பிட்டுக் காட்டுகிற.

pathog'nomy, *n.* உணர்ச்சி ஆய்வியல்.

pathol'ogist, *n.* நோய்க்குறியாய்வு வல்லுநர்; நோய்க்குண நூல் வல்லுநர்.

pathol'ogy, *n.* நோய்க்குண நூல், நோய்க்குறி நூல்; உணர்ச்சியாய்வு நூல்.

pathopho'bia, *n.* நோயச்சம்.

path'os, *n.* அவலச்சுவை; உணர்ச்சிக்கனிவு; இரக்கப் பண்பு.

path'way, *n.* வழிநடைப்பாதை.

**pa'tience,** *n.* பொறுமை ; இடையரு ஊக்கம் ; நோய் நோன்றல்; பொறுக்கும் எல்லை; ஒருவரே ஆடுஞ் சீட்டாட்ட வகை ; (தொ.) would try the patience of Job, எவர் பொறுமை எல்லையையுங் கடந்தது.

**pa'tience-dock,** *n.* செடிவகை.

**pa'tient,** *n.* நோயர், நோய்நோற்பவர் ; மருத்துவரின் வாடிக்கையர் ; *a.* பொறுமையுள்ள; பொறுத்துக்கொள்கிற; நீடித்துத் தாங்கும் ஆற்றலுடைய ; விடா ஊக்கமுடைய ; ஏற்கிற, பொருள்கோளுக்கு இடந்தருகிற.

**pat'ina,** *n.* பழைய வெண்கலப் பொருள்களுக்குரிய அழகுப் பசுங்களிம்பேற்றம், பசுங்களிம்பு ; உலோகக் களிம்பின் மென்படலம் ; பண்டை ரோமாபுரிப் பாணியில் பரந்தகன்ற தட்டம் ; திருவுணு வழிபாட்டுத் தட்டம்.

***pa'tio,*** (ஸ்பா.) *n.* உள்முற்றம்; *pl. pa'tios.*

**pat'ois,** *n.* சேரிமொழி ; திசைமொழி.

**pat'riarch,** *n.* குடி முதல்வன் ; குடும்பத்தலைவர், குடும்ப ஆட்சி முதல்வர் ; குலபதி, குல ஆட்சி முதல்வர் ; இன ஆட்சி முதல்வர் ; யூதரின் சிறப்புக்குரிய மூதாதையருள் ஒருவர் ; முதுவர், முற்காலக் கீழைத் திருச்சபைகளில் வட்டார முதல்வர் ; ரோமன் கத்தோலிக்க உயர்படி முதல்வர் ; மூதாளர் ; இனத்தில் வாழும் மூப்பு மிக்கவர் ; இனத்தின் சிறப்புப் பொருள்.

**patriarch'al,** *a.* குடும்ப ஆட்சித் தலைவருக்குரிய ; இன ஆட்சித் தலைவருக்குட்பட்ட ; குடும்ப ஆட்சி முதல்வர் போன்ற ; இன ஆட்சி முதல்வரியல்புடைய.

**pat'riarchate,** *n.* திருச்சபை முதுவர் பணிநிலை; திருச்சபை முதுவர் ஆட்சி வட்டாரம் ; திருச்சபை முதுவர் பணிமனை ; திருச்சபை முதுவர் உறைவிடம் ; குடும்ப ஆட்சி முதல்வர் படிநிலை.

**pat'riarchy,** *n.* குடி முதல்வராட்சி ; குடிமுதல்வராட்சி முறைச் சமுதாயம் ; குடிமுதல்வர் ஆட்சிம்முறை அரசு.

**patri'cian,** *n.* பண்டை ரோமாபுரி உயர்குடியுரிமையாளர் ; ரோமாபுரிப் பேரரசின் உயர் உரிமைக் குடியாளர் ; ரோமாபுரிப் பேரரசின் தொலை மாகாணங்களில் பேரரசர் பேராளர் ; இத்தாலியக் குடியரசுகளில் உயர்குடித் தலைவர் ; உயர் குடியாளர் ; ஆட்சிக்குடி உரிமையாளர் ; *a.* பண்டை ரோமாபுரியில் உயர் ஆட்சி வகுப்புக்குரிய ; உயர்குடிப் பிறந்த ; உயர்குடி சார்ந்த.

**patri'ciate,** *n.* உயர்குடி வகுப்பு; உயர்குடி மக்கள் தொகுதி; உயர்குடியாட்சி ; உயர்குடிப் படிநிலை.

**patricid'al,** *a.* தந்தைக்கொலை சார்ந்த; தந்தையைக் கொலை செய்கிற.

**pat'ricide,** *n.* தந்தைக்கொலை ; தந்தையைக் கொன்றவர்.

**patrimon'ial,** *a.* தந்தைவழிச் சொத்துச் சார்ந்த ; தந்தை வழி வந்த.

**pat'rimony,** *n.* தந்தைவழிச் சொத்து ; மூதாதையர் வழி மரபுச் செல்வம் ; திருக்கோயிலுக்கு விடப்பட்ட நிவந்தம்.

**pat'riot,** *n.* பிறந்தநாட்டார்வலர்.

**patriot'ic,** *a.* பிறந்தநாட்டுப் பற்றூர்ந்த.

**pat'riotism,** *n.* நாட்டுப்பற்று, தேசாபிமானம்.

**patris'tic,** *a.* தொடக்க காலக் கிறித்தவ திருச்சபை முதுவர் ஏடுகள் சார்ந்த.

**patrol',** *n.* படைத்துறைச் சுற்றுக்காவல் உலா; ஊர்க்காவலர் சுற்றுக்காவல், ரோந்து ; காவல்தண்டு, சுற்றுக்காவற் குழு ; தண்டுகாவலர் ; நாள்முறை விமானச் சுற்றுலா ; வேவுக்குழு, புலங்காண் குழு ; *v.* சுற்றுக்காவல் புரி ; தண்டு காவலராகச் செயலாற்று.

**pat'ron,** *n.* புரவலர் ; காப்பாளர் ; சிறப்பு வாடிக்கையாளர் ; காப்புத் திருத்தகை, மரபாதரவுப் புனிதர் ; பண்டை ரோமா புரியில் விடுவிக்கப்பட்ட அடிமையின் முன்னாள் தலைவர் ; பண்டை ரோமாபுரியில் பொதுக் குடியினர் துணையாதரவாளர் ; மானியம் வழங்கும் உரிமையுடையவர்.

**pat'ronage,** *n.* புரவு, ஆதரவு ; மானியம் வழங்கும் உரிமை; வாடிக்கையாதரவு

**pat'ronal,** *a.* காப்புத் திருத்தகை சார்ந்த, மரபாதரவுப் புனிதர் பெயராலான.

**pat'roness,** *n.* பெண் புரவலர்.

**pat'ronize,** *v.* புரந்தருள், துணையாதரவு செய், ஊக்குதவி செய் ; வள்ளலாக நடி, ஆதரவுப் பாவனை காட்டு, பெருமித ஆதரவுப்பாங்குடன் நட.

**pat'ronizing,** *a.* ஆதரவுப் பசப்புக் காட்டுகிற, ஆதரவு பாலிக்கிற.

**pat'ronizingly,** *adv.* ஆதரவுப் பசப்புடன், ஆதரவுப்பாவனைப் பாங்கில்.

**patronym'ic,** *n.* தந்தைவழிப் பெயர்; மூதாதைவழிப் பெயர்; *a.* தந்தை வழியான ; மூதாதை வழிப்பட்ட.

**patroon',** *n.* (வர.) சிறப்புரிமை நிலக்கிழார், நியூயார்க்கு-நியூ ஜெர்ஸி ஆகிய அமெரிக்க பகுதிகளில் 1850-க்கு முன்னிருந்த டச்சு அரசியலின் பட்டய உரிமைபெற்றுச் சிறப்புரிமை பெற்றிருந்த நிலக்கிழார் ; கப்பல் மீகான் ; படகு வலவர்.

**patt'en,** *n.* மேல் சோடு, சேற்றுக்காப்பு மீபுதையரணம், புதையரணம் சேற்றில் அமிழாதபடி இருப்பு வளையங்கள்மீது மரத்தாலான அடிக்கட்டையுடைய காப்புக்கவிகைப் புதையடி.

**patt'er[1],** *n.* குழுஉமொழி ; தொழிற்குழுவின் தனிக்குறிமொழி ; ஆரவாரப் பேருரை; பாடலிடை விரை உரையாடல்; பாடல்வாசகம் ; களிநாடக வாசகம் ; *v.* கடகடவென ஒப்பி; மளமளவென்று பேசு ; உளமேவாமல் பேசு.

**patt'er[2],** *n.* தடதடவொலி, அடுக்கடுக்காகத் தட்டும் ஒலி ; *v.* சடசடவென்றொலி எழுப்பு ; மோட்டில் மழைத்துளிகள் விழும் ஒலி எழுப்பு ; குற்றடியிட்டு விரைந்தோடு, குடுகுடுவென்றோடு ; சடசடவொலி எழும்படி நீர்கொட்டு.

**patt'ern,** *n.* பாங்கம், எடுத்துக்காட்டமைப்பு ; தோரணி ; எடுத்துவரிச் சட்டம்; எடுத்துக்கோள் வார்ப்பு; முன்வரைவு; *v.* முன்மாதிரியாகக் கொண்டு செய், படிவம் பின்பற்றிச் செய் ; மேல்வரிச்சட்டமாகப் பின்பற்று ; மாதிரிச்சட்டங் கொண்டு ஒப்பணைசெய் ; பாங்காக்கு.

**patt'ern-room,** *n.* ஆடை-கம்பளம்-சுவர்த்தாள்களின் ஒப்பனை மாதிரிச் சட்டம் உருவாக்குந் தொழிற்சாலைப் பகுதி.

**patt'ern-shop,** *n.* ஆடை கம்பளம்-சுவர்த்தாள்களுக்கான ஒப்பனை மாதிரிப் படிவங்களின் சட்டங்களை உருவாக்குந் தொழிலகம்.

**patt'y,** *n.* மாப்பண்டம், பிட்டு.

**patt'ypan,** *n.* மாப்பண்டம் சுடுவதற்கான சில்லுத்தட்டு.

**pat'ulous,** *a.* திறந்த, விரிந்த; கிளைகள் வகையில் பரந்தகன்ற.

**pau'city,** *n.* சின்மை.

**Paul'ine,** *n.* லண்டன் மாநகர் தூய திரு. பால் கல்வி நிலைய உறுப்பினர் ; *a.* தூய திரு. பாலுக்குரிய.

**paulo-post-fu'ture,** *n.* கிரேக்க மொழியில் வினைச்சொல் எதிர்நிகழ்வின் விளைவு குறிக்குங் காலம், முடிவுநிலை எதிர் காலம்.

**Paul Pry,** *n.* "முந்திரிக்கொட்டை".

**paunch,** *n.* தொப்பை, வயிறு; விலங்கின் முதல் இரைப்பை; திண்ணிய பாய்விரிப்பு; *v.* குடலெடு, குடலை வெளிப்படுத்து.

**paup'er,** *n.* ஏழையர், நொடித்தவர் ; இரவலர், இரப்பாளி ; ஏழையர் விடுதியின் உதவி பெறுபவர் ; இயலா நிலை மனுச் செய்பவர்.

**pau'perdom,** *n.* = pauperism.

**pau'peress,** *n.* இயலா எளிமையுடைய பெண்; ஏழை விடுதி உதவி பெறும் பெண் ; இரந்துண்பவள்.

**pau'perism,** *n.* இயலாநிலை, நொடிப்பு நிலை.

**pau'perize,** *v.* இயலாநிலைப்படுத்து ; புற உதவி நாடும் பழக்கத்துக்கு ஆளாக்கு.

**pause**, *n.* இடை ஓய்வு; இடைத் தயக்கம்; இடை நிறுத்தம்; பேச்சிடை ஓய்வு; படிப்பிடைத் தயக்கம்; (இசை.) சுரம் அல்லது நிறுத்தக்குறியின்கீழ் இடும் நீட்டிப்புக் குறி; *v.* இடைத்தயங்கு; இடையே சிறிது நிறுத்து; காத்திரு; மெல்ல நிறுத்திச் செல், நின்று தயங்கி மேற்செல்.

**pav'age**, *n.* தளவரிசைக்கூலி; தளவரிசை வரியுரிமை.

*pav'an*, (ஸ்பா.) *n.* விநோதக் கூத்துவகை.

**pave**[1], *v.* தளவரிசையமை; மீதாகப் பரப்பு; முன்னேற்பாடு செய்.

*pavé*[2], (பிர.) *n.* தளம்; மணிக்கற் பதிப்பு.

**pave'ment**, *n.* தளவரிசையிட்ட பகுதி; நடைபாதைத் தளம்; (வில.) பாவுதளம் போன்ற பல்லமைவு; (தொ.) crazy pavement, பல வடிவக் கற்கள் கொண்டு அமைத்த தோட்டப் பாதை; on the pavement, குடியிருக்க இடமில்லாமல்.

**pave'ment-artist**, *n.* நடைபாதை ஓவியக்கலைஞர், வழி செல்பவரிடமிருந்து பணம்பெறுவதற்காக நடைபாதையில் வண்ண ஓவியம் தீட்டுங் கலைஞர்.

**pavil'ion**, *n.* கூடார மண்டபம்; விதான மண்டபம்; காட்சி மாடம்; கட்டிடத்தின் ஒப்பனைப் புறத் தாழ்வாரம்; பட்டையிட்ட மணிக்கல்லின் அடிப்பகுதி; மருத்துவக்கூடத் தனிப் பகுதி; கொம்பில் கட்டிய மணி; புறச்செவி; *v.* அணிமாடங்களுடன் அமை; வண்ணப் பந்தரிட்டுக் கவி; இட்டுப் பொதி.

*pavona'zzo*, (இத்.) *n.* மயில்வண்ணக் குறியுடைய சலவைக் கல்; *a.* சலவைக்கல் வகையில் மயில்வண்ணக் குறியுடைய.

**pav'onine**, *a.* மயிலுக்குரிய; மயில் போன்ற.

**paw**, *n.* கூருகிர்க்காலடி; (பே-வ.) உள்ளங்கை, கை; கையெழுத்து; *v.* தாளால் அறை; குதிரை வகையில் நிலத்தி லுதை; காலால் நிலத்தில் எற்று; (பே-வ.) திருந்தா நிலையிற் கையாளு; மோசமாகக் கையாடு.

**pawl**, *n.* இயந்திரப் பற்களைத் தடுக்கும் அடைதாழ்; நங்கூரந் தூக்கியைச் சறுக்காமல் தடுக்கும் அடைகோல்; *v.* நங்கூரந் தூக்கியைச் சறுக்காமல் அடைகோலிட்டுத் தடு.

**pawn**[1], *n.* சதுரங்க ஆட்டத்திற் காலாட் காய்.

**pawn**[2], *n.* ஈடு, பிணையம், கொதுவை; அடகு, அடைமானம்; *v.* பிணையாக அளி; ஈடு வை, அடகு வை; உயிர்-உறுதிச் சொல்-மானம் ஆகியவற்றைப் பிணையமாக வைத்துச் செயலாற்று; இழக்க முனை.

**pawn'broker**, *n.* அடைமான வட்டிக்கடைக்காரர்.

**pawn'broking**, *n.* அடைமான வட்டித்தொழில்.

**pawnee'**, *n.* அடைமானமாகப் பொருள் வைக்கப் பெற்றவர், பிணையம் ஏற்பவர்.

**pawn'shop**, *n.* அடைமானக் கடை.

**pax**, (ல.) *n.* குருமாரும் வழிபாட்டாளரும் வழிபாட்டின்போது திருமுத்தமிடும் சிலுவைக் குறியிட்ட கற்பாளம்; *int.* போர் நிறுத்தம்! நட்பமைதி! (தொ.) pax Britannica, பிரிட்டன் பேரரசாட்சிக்குட்பட்ட நாடுகளில் நிலைநிறுத்தப்படும் அமைதி; pax Romana, பண்டை ரோமாபுரிப் பேரரசாட்சிக்குட்பட்ட நாடுகளில் நிலைநிறுத்தப்பட்ட அமைதி; pax vobiscum, உங்களிடையே அமைதி நிறைவதாக.

**pay**[1], *n.* உழைப்பூதியம், கூலி; சம்பளம், ஊதியம்; *v.* கொடுக்கவேண்டிய பணத்தைக் கொடு; வரிப்பணம் கொடு; பணத்தை ஒப்படை; உழைப்புக்கு ஊதியம் அளி; உழைப்புக்கீடாக வழங்கு; பரிசு வழங்கு; கொடு, வழங்கு, அளி; விளைவித்துக் கொடு, விளைவி; ஆதாயம் அளி; ஏற்ற பலன் அளி; (தொ.) pay back, கடனைத் திருப்பிக்கொடு; செய்வதற்குப் பதில் செய்; pay court to, காதலனாக ஊடாடு; பாராட்டுரை; மதிப்புக்காட்டு; தன் காரியத்தை முன்னிட்டுப் பின்சென்று நயந்து நட; pay down, காசாக உடனடிப்பணம் கொடு; pay for, விலைகொடு; ஏற்ற தண்டனைபெறு; உரிய துன்பத்தை ஏற்றுக்கொள்; சரியீடு செய்; செலவை ஏற்றுக்கொள்; pay for one's whistle, கொண்ட சிறிதளவு இன்பத்துக்குப் பேரளவான விலைகொடு; pay in, கணக்கில் வரவினமாக்கு; நிதிக்குப் பங்குவரி அளி; pay its way, கடனில்லாமல் செலவுக்குப் போதியதாகு; pay load, விமானப் பாரத்தில் வருவாய்தரும் பகுதி; pay off, முழுதும் கொடுத்துத்தீர்; சரியான ஊதியமளி; பழிக்குப்பழி வாங்கு; (கப்.) காற்றெதிர்ப் பக்கமாக ஒதுங்கு; pay one's way, செலவுக்குப் பணமுடையராயிரு; pay out, பணத்தைச் செலவுவகையில் வழங்கு; தக்க தண்டனை கொடு; (கப்.) கயிறு முதலியவற்றைத் தளர்த்தி நீட்டி விட்டுக்கொடு; pay round, (கப்.) முகப்புத் திருப்பு; pay the piper, செலவுப் பொறுப்பேற்றுக்கொள்; பெருஞ்செலவுக்கு ஆட்படு; pay the piper and call the tune, செலவுப் பொறுப்பை ஏற்றுச் செயலாட்சி மேற்கொள்; pay through the nose, கஷ்டப் பட்டுக்கொடு; pay up, முழுதுங்கொடு, கொடுத்துத்தீர்.

**pay**[2], *v.* தார் பூசு; ஈரத்தடைக் காப்பாகக் கீலடி.

**pay'able**, *a.* கொடுக்க வேண்டிய; கொடுக்கத்தக்க; சுரங்க வகையில் ஆதாயந் தரத்தக்க.

**pay'-as-you-earn**, *a.* வருமானவரித் துறையில் வருவாய் இடத்திலேயே பிடித்துக் கொள்ளப்படுகிற.

**pay'-bill**, *n.* சம்பளப் பட்டியல்.

**pay'-day**, *n.* சம்பள நாள்; பங்குக்களச் செலாவணி நிலையத்திற் பங்கு முதல் மாற்றுக்குப் பணங் கொடுக்கப்படும் நாள்.

**payee'**, *n.* பணம் பெறுவோர்.

**pay'er**, *n.* பணந் தருபவர்.

**pay'ing**, *a.* வருவாய் அளிக்கிற, ஆதாயந் தருகிற; செலவுக்குப் பணங் கொடுக்கிற; கட்டணம் அளிக்கிற, வாடகை தருகிற; (தொ.) paying guest, ஒரு குடும்பத்தில் பணங் கொடுத்து உணவு வசதிமட்டும் பெறுபவர்.

**pay'-list**, *n.* சம்பளம் பெறுபவர் பட்டியல்.

**pay'master**, *n.* படைவீரர்க்குச் சம்பளம் வழங்குபவர்; தொழிலாளர்க்குச் சம்பளப்பணம் வழங்குபவர்; (தொ.) paymaster general, கருவூலத் துறையரங்கத் தலைவர்.

**pay'ment**, *n.* பண வழங்கீடு, பணங்கொடுப்பு; கொடுக்கப் படும் பணம்; ஊதியம்.

**payn'ize**, *v.* மர வகையில் பதனக் காப்பூட்டும் பொருள் தோய்வி.

**pay'-roll**, *n.* = pay-list.

*paysage*, (பிர.) *n.* நாட்டுப்புறக் காட்சி; துண்டு நிலக்காட்சி; துண்டுநிலக் காட்சிப்படம்.

**pay'-sheet**, *n.* = pay-bill.

**pea**, *n.* பயறு; பட்டாணி; பயற்றினம்; பயற்றுச்செடி; பயற்றினச்செடி; (தொ.) green peas, உணவுக்குரிய இளம் பயறு; pea soup, பயற்று வடிசாறு; sweet pea, தோட்டப் பகட்டு மலர்ச்செடி வகை.

**peace**, *n.* அமைதி, போரற்ற நிலை, சமாதான நிலை; உள்நாட்டமைதி, குழப்பமற்ற நிலை; சட்ட ஒழுங்கமைதி; மன அமைதி, உலைவிலா நிலை, கலக்கமின்மை; நட்பமைதி; மோனம், சந்தடியின்மை; (தொ.) at peace, அமைந்து, நட்பமைதியுடன், கலவரமின்றி, சண்டையில்லாமல்; be sworn of the peace, தண்டலாளராக அமர்வுபெறு; commission of the peace, justice of the peace, அமைதி காவலர், சுற்றுலா நடுவர்; hold one's peace, வாளா இரு, அரவமற்றிரு; keep the peace, அமைதிபெறு, சச்சரவற்றிரு, பூசல் தடுத்தாள்; king's peace, நாட்டுச்சட்ட ஒழுங்காட்சியமைதி; make one's peace with, மீண்டும் நண்பராக்கிக்கொள்.

**peace'able**, *a.* அமைதி நாடுகிற; அமைதியுடனிருக்கிற; கலவரமற்ற; சச்சரவு நாடாத.

**peace'ful**, *a.* அமைதி வாய்ந்த; அமைதிநிலைக்குரிய.

**peace'maker**, *n.* சந்து செய்விப்பேர்ர்.

**peach**[1], *n.* பழவகை; கனிமரவகை.

**peach**[2], *v.* உடன்கூட்டாளியைக் காட்டிக்கொடு, கூட்டாளிக்கெதிராகச் சான்றுபகர்.

**peach'-blow**, *n.* மென்னீலச் செந்நிறம்; நீலச்செந்நிற மெருகு வண்ணம்.

**peach'-coloured**, *a.* வெளிறிய சிவப்புநிறமுடைய.

**pea'-chick**, *n.* மயிற்பிள்ளை, இள மயில்.

**pea'cock**, *n.* மயில்; மயிற் சேவல்; *v.* தன்னழகு பகட்டிக் காட்டு; பகட்டு வீறுப்புடன் நடைபழகித் திரி; வீறுப்புக் காட்டு.

**pea'cock-blue**, *n.* மயில்நீலம், மயிற்கழுத்துப் போன்ற திண்ணீலம்.

**pea'cock-butt'erfly**, *n.* வண்ணத்துப்பூச்சி வகை.

**pea'cock-fish**, *n.* பச்சை-நீலம்-சிவப்பு-வெண்மை நிறங்களைக் கொண்ட மீன் வகை.

**pea'hen**, *n.* பெடை மயில்.

**pea'-jack'et**, *n.* கப்பலோட்டியின் குறுமேற்சட்டை.

**peak**[1], *n.* முகடு, சிமையம்; மலைமுகடு, கொடுமுடி; தாடி முனை; தொப்பி முனை; கப்பலின் ஒடுங்கிய முனைக்கோடி; பாய் உச்சி விளிம்பு; *a.* உச்சநிலையான, உச்ச அளவான; *v.* (கப்.) பாய்க்கட்டைகளை நிமிர்த்துயர்த்து; துடுப்பினை உயர்த்திப்பிடி; திமிங்கில வகையில் மூழ்கும் வேளையில் வாலைச்செங்குத்தாகத் தூக்கு; குத்துமுனைத் தோற்றம் அளி; குத்து முகடாக எழு.

**peak**[2], *v.* நலிந்து மெலிவுறு.

**peak'y**[1], *a.* முகடு போன்ற; முகடுள்ள; முகடு முகடான.

**peak'y**[2], *a.* ஒட்டி மெலிந்த.

**peal**, *n.* முழக்கம்; கிளர் ஒலியலை; பன்மணி ஒலி; கணகண ஒலி; *v.* முழங்கு; கணகணவென்றொலி; கிளர் ஒலியெழுப்பு.

**pea'nut**, *n.* நிலக்கடலைச் செடிவகை; நிலக்கடலைவகை.

**pear**, *n.* பேரியினக்காய் வகை.

**pearl**[1], *n.* முத்து; அரும்பொருள்; இனத்தின் சிறந்த எடுத்துக்காட்டு; முத்துப்போன்ற பொருள்; பனித்துளி; கண்ணீர்த்துளி; பல்; அச்சுருப்படிவ வகை, படிகவகைப் பொருள்களின் சிறு துணுக்கு; *v.* முத்துப்போன்ற துளிகள் சிதறவிடு; முத்துத் துளிகளாகச் சிதறு; முத்து வெண்மையாக்கு; கூலவகைகளைச் சிறு துணுக்குகளாக்கு; முத்துத் துளிகளாக உருவாக்கு; முத்துப்போன்ற துளிகளாகு; முத்துக்குளி.

**pearl**[2], *n.* பூவேலைத் தலையணை ஓரத்தின் ஒப்பனை இழை முடி, இழைமுடிக்கண்ணி; *v.* இழைமுடிக் கண்ணியிட்டுப் பூவேலை செய்.

**pearl'-ash**, *n.* சாம்பர நீறு.

**pearl'-bar'ley**, *n.* வாற்கோதுமைக் குறுநொய்.

**pearl'-div'er**, *n.* முத்துக்குளிப்பவர்.

**pearl'-fisher**, *n.* முத்துச் சிப்பிகளை எடுப்பவர்.

**pearl'-fishery**, *n.* முத்துச்சலாபம், முத்தெடுக்குந் தொழில்; முத்துக்குளிக்குமிடம்.

**pear'lies**, *n. pl.* சட்டையின் முத்துக்குமிழ்மாட்டிகள்; பழம்-மீன் ஆகியவற்றின் தெரு விற்பனையாளர் அணியும் முத்துக் குமிழ்மாட்டி நிரம்பிய ஆடை.

**pearl'-pow'der**, *n.* வெண்ணிற ஒப்பனை முகத்தூள்.

**pearl'-sa'go**, *n.*=**pearl-barley.**

**pearl'-shell**, *n.* முத்துச்சிப்பி.

**pearl'-white**, *n.* வெண்ணிற ஒப்பனை முகத்தூள்; செயற்கை முத்துச் செய்யப் பயன்படும் சிப்பித்தூள் சரக்கு.

**pearl'y**, *a.* முத்துப்போன்ற; முத்துச்சிப்பிக்கு உரிய; முத்து நிரம்பிய; முத்து வளமிக்க.

**pear'main**, *n.* இன்கனி வகை.

**pear'-shaped**, *a.* பம்பர வடிவுடைய, அடி குறுகி மேல் திரண்ட உருவுடைய.

**pear'-tree**, *n.* பேரியினக் கனிமரம்.

**pea'sant**, *n.* உழவர்; நாட்டுப்புறத்தார்.

**pea'santry**, *n.* உழுகுலம்.

**pease'-cod**, *n.* பயற்று நெற்று.

**pease'-pudding**, *n.* பயற்று மாப்பண்ணிய வகை.

**pea'-shooter**, *n.* பயறுகளை வைத்து ஊதி எறியவல்ல குழல்.

**pea-soup'er**, *n.* திண்ணிய மஞ்சள்நிற மூடுபனி.

**pea-soup'y**, *a.* மூடுபனி வகையில் திண்ணிய மஞ்சள்நிறம் வாய்ந்த.

**peat**[1], *n.* புல்கரி, தூள் நிலக்கரி.

**peat**[2], *n.* தருக்குச் சிறுமி.

**peb'ble**, *n.* கூழாங்கல்; மூக்குக் கண்ணாடிச் சில்லுகளுக்குப் பயன்படும் படிகப் பாறைப்பாளம்; மூக்குக்கண்ணாடிச் சில்லு; மணிக்கல் வகை.

**pebb'ly**, *a.* கூழாங்கல் நிறைந்த.

*pebrine*, (பிர.) *n.* கரும்பொட்டு, பட்டுப்புழுக்களுக்கு வரும் கொள்ளைநோய் வகை.

**pecan'**, *n.* திண்கட்டையுடைய அமெரிக்க வாதுமையின மரம்.

**pecc'able**, *a.* பாவஞ் செய்யக்கூடிய; பிழை செய்யும் இயல்புடைய.

**peccadill'o**, *n.* சிறு மாசு.

**pecc'ant**, *a.* பாவஞ் செய்கிற; (மரு.) கோளாறுடைய; நோய் தூண்டுகிற.

**pecc'ary**, *n.* பன்றியின அமெரிக்க விலங்கு.

*peccav'i*, (ல.) *n.* பழியேற்றிரங்கல்; (தொ.) *cry peccavi*, பாவஞ் செய்தேன் எனக்கூறு.

**peche Mel'ba**, *n.* பழவகை உறைபாலடைக் கலவை.

**peck**[1], *n.* முகத்தலளவைக் கூறு, 2 காலன்; 2 காலன் அளவுள்ள கொள்கலம்; பேரளவு.

**peck**[2], *n.* கொட்டு, அலகின் குத்து; கொத்து வடு; அவசர முத்தம்; *v.* அலகினுற் கொத்து; கொத்தியெடு; கொத்தித் துளையிடு.

**peck'er**, *n.* கொத்துபவர்; கொத்துவது; கொத்தும் பறவை, மரங்கொத்தி, மண்கொத்தி.

**peck'ish**, *a.* பசிமிக்க.

**peck'sniff**, *n.* போலி அருளாளர்.

**pec'ten**, *n.* (வில.) சீப்புப்போன்ற அமைப்புடைய உறுப்பு; *pl.* pec'tines.

**pec'tin**, *n.* பழப்பசைச் சத்து.

**pec'toral**, *n.* மார்பணிக் கவசம்; யூத உயர்குருவின் மார்பணிப் பட்டிகை; *a.* நெஞ்சுக்குரிய, மார்பு சார்ந்த; மார்பு நோய்க்குக் குணம் அளிக்கிற; மார்பில் அணியப்படுகிற; (தொ.) pectoral cross, மேற்றிராணியர் மார்பணிச் சிலுவை.

**pec'tose**, *n.* காய்ச்சத்து.

**pec'ulate**, *v.* பணங் கையாடு, கையாடல் செய்.

**pecul'iar**, *n.* தனியியல்புக்கூறு, சிறப்பியல்பு; சிறப்புத் தனியுரிமை; வட்டார மேலாட்சியிலிருந்து விலக்குரிமை பெற்ற திருச்சபை; தனிச்சிறப்புரிமையுடைய திருக்கோயில்; *a.* சிறப்புரிமையான; தனியியல்பான; தனிப்பட்ட தன்மையுடைய; பொது நீங்கிய, தனி ஒருவர்க்கு மட்டுமேயுரிய; தனி ஒன்றனுக்கேயுரிய; தனிப்படக் குறிப்பிடத்தக்க, தனித்தன்மைப்பட்ட; வழக்கமற்ற, கண்டு கேட்டறியாத, புதிர் வாய்ந்த; (தொ.) peculiar people, யூதர்; தம்பிரான் தோழர்கள்; Peculiar People, நோய் குணமடைவதற்குத் திருவருள் துணையையே எதிர்நோக்கும் கோட்பாட்டுடன் 1838-இல் நிறுவப்பட்ட கிறித்தவ கிளைச்சமய வகையினர்.

**peculia'rity**, *n.* தனித்தன்மை; சிறப்பியல்பு; தனிப்பட்ட பண்புக்கூறு; சிறப்புப்பண்புக்கூறு; வழக்கம் மீறிய பண்பு.

**pecul'iarly**, *adv.* தனி நிலையில், தனி முறையில்; எதிர்பாரா வகையில், வழக்கம் மீறிய நிலையில்; தனிப்பட்ட தன்மையில்.

**pecun'iary**, *a.* பண வகையான, பொருள் வகை சார்ந்த; அபராதத் தண்டனையான.

**pedagog'ics,** *n.* ஆசிரியரியல்.

**ped'agogism,** *n.* = pedagoguism.

**ped'agogue,** *n.* பள்ளியாசிரியர் ; ஆசிரியர் ; கண்டிப்புக் கணக்காயர்.

**ped'agoguism,** *n.* போதனைமுறை ; போதனை ; கற்பிக்கும் பாங்கு.

**ped'agogy,** *n.* ஆசிரியரியல், போதனைமுறை.

**ped'al,** *n.* மெம்படி; இயந்திர மிதிகட்டை; இசைக்கருவியின் மிதிபலகை ; (இசை.) நீள் கவிவிசைப்பு ; வைக்கோலின் திண்ணிய அடித்தாள் ; வைக்கோல் புரி ; *a.* காலடிக்குரிய ; சிப்பியினத்தின் காலடி உறுப்புச் சார்ந்த ; *v.* மெம்படியை மிதித்தோட்டு ; இயந்திரத்தை மிதித்தியக்கு ; இசைக்கருவி மிதிகட்டையை மிதித்தியக்கு ; இசைக்கருவி இயக்கு.

**ped'ant,** *n.* கல்விச் செருக்குடையவர் ; புத்தகப் படிப்பாளர்; கோட்பாட்டு வெறியர் ; நூல் விதிமுறை வெறியர்.

**pedan'tic,** *a.* கல்விச் செருக்குடைய ; விதிகண்டிப்பான ; எங்கும் பள்ளியாசிரியராகவே நடந்து கொள்கிற ; புலமைப் பாணி விடாத.

**ped'antize,** *v.* கல்விச்செருக்குடன் நட ; புலமைப்பாணியிற் செயலாற்று ; புலமைப் பகட்டாளராக்கு.

**pedantoc'racy,** *n.* ஆசிரியராட்சி.

**ped'antry,** *n.* பகட்டு நூலறிவு ; புலமைக்கண்டிப்பு ; பகட்டாரவாரச் சொற்றொடர் ; குருட்டுக் கோட்பாட்டு வெறி.

**ped'ate,** *a.* (வில.) காலடி உடைய; பாதம் போன்ற; (தாவ.) இலை வகையில் கால்விரல் அல்லது பறவை உகிர் போன்ற கூறுடைய.

**ped'dle,** *v.* சுற்றித் திரிந்து விற்பனை செய் ; சுற்றித்திரி ; அற்ப காரியங்களில் முனைந்திடுபடு ; சில்லறையாகக் கொடு ; சிறிது சிறிதாகக் கொடு.

**ped'erasty,** *n.* = paederasty.

**ped'estal,** *n.* நிலைமேடை; சிலை அடிப்பீடம் ; தூண் அடிக் கட்டை ; கால்புழை மேசையின் ஆதாரக்கால்; இயந்திர உருளையின் பக்கப் பிடிப்பாதாரம் ; இயங்கியல் நிலையடுக்கு; அடிப்படை, ஆதாரம் ; *v.* பீடத்தின்மீதமை, பீடத்தின்மீது ஆதாரமாக்கு.

**pedes'trian,** *n.* கால்நடையர், நடப்பவர் ; நடைப்பயிற்சியாளர் ; *a.* கால்நடையாகச் செல்கிற, நடந்து செல்கிற ; நடத்தலுக்குரிய ; மந்தமான ; உயிரூக்கமற்ற.

**pedes'trianism,** *n.* நடைப்பயிற்சி, நடந்து செல்லும் பழக்கம்.

**pedes'trianize,** *v.* நட, கால்நடை பயில்.

**ped'icel,** *n.* (தாவ., வில.) காம்பு போன்ற சிற்றமைவு, காம்புச் சிறு கிளை.

**ped'icellate,** *a.* காம்புச் சிற்றமைவுடைய.

**ped'icle,** *n.* சிறுகாம்பு.

**pedic'ular,** *a.* பேன் போன்ற; பேன் சார்ந்த.

**pedic'ulate,** *a.* காம்புடைய; துடுப்பு வகையில் மணிக்கட்டுப் போன்ற திருப்பும் அமைவுடைய மீன்வகை சார்ந்த.

**pedic'ulous,** *a.* = pedicular.

**ped'icure,** *n.* கால்விரல் உகிர்க்காழ்ப்பு மருத்துவம் ; கால்விரல் உகிர்க் காழ்ப்பு மருத்துவர் ; *v.* காழ்ப்பகற்றிக் கால்விரல் உகிர் மருத்துவஞ் செய்.

**ped'igree,** *n.* குடிவழி, மரபுக் கால்வழி அட்டவணை, வம்சாவளி; விலங்கின் மரபுக் கால்வழி; மரபுக் கால்வழியுடையது.

**ped'igreed,** *a.* குடிவழியுடைய.

**ped'iment,** *n.* (க-க.) பண்டைக் கிரேக்க கட்டிடக்கலைப் பாணியில் வரி முக்கோண முகப்பு முகடு ; வில்முகப்பு முகடு.

**pedimen'tal,** *a.* வரி முக்கோண முகப்பு முகட்டையுடைய ; வரி முக்கோண முகட்டு முகப்பைப் போன்ற.

**ped'imented,** *a.* வரி முக்கோண முகப்பு முகட்டினையுடைய.

**ped'lar,** *n.* அம்பணர், தலைச்சுமை அங்காடியர்; வம்பு உய்க்குநர் ; (தொ.) pedlar's French, திருடர் குழூஉக்குறி.

**ped'lary,** *n.* சுமந்து விற்பவர் தொழில் ; அம்பணர் சரக்கு.

**pedo-bap'tism,** *n.* = paedo-baptism.

**pedo-bap'tist,** *n.* = paedo-baptist.

**pedol'ogy,** *n.* மண்வகை ஆய்வுநூல்.

**pedom'eter,** *n.* அடியீடுமானி, காலடி எண்ணிக்கையால் தொலைவைக் கணித்துக் காட்டுங் கருவி.

**ped'oscope,** *n.* கால் புதையரண இசைவை நுண் கதிரொளியால் தேர்ந்தாயுங் கருவி.

**ped'rail,** *n.* பளுவான வண்டிகள் கரடுமுரடான பாதையில் எளிதாகச் செல்லும்படி காலடிகள் போன்ற சுற்றுறுப்புக்களுடன் கூடிய சக்கர அமைவு; சக்கரக் காலடியுறுப்பமைவு; காலடி உறுப்பமைவுச் சக்கரமுடைய வண்டி.

**pedunc'le,** *n.* (தாவ.) பூங்கொத்தில் தலைப் பூக்காம்பு; தனி நுனிப் பூக்காம்பு ; (வில.) காம்பு போன்ற உடற் பகுதி அமைவு.

**pedunc'ular, pedunc'ulate, pedunc'ulated,** *a.* தனிக் காம்பு சார்ந்த ; தலைக்காம்புக்குரிய.

**peek,** *v.* கூர்ந்து நோக்கு.

**peel** [1], *n.* (வர.) இங்கிலாந்து ஸ்காத்லாந்து எல்லைப்புறங்களில் முற்காலச் சிறு சதுரக் கோபுரம்.

**peel** [2], *n.* அடுப்பில் சூட்டப்பத்தைப் புரட்டிப் போடுவதற்குரிய சட்டுவக் கோல்.

**peel** [3], *n.* பழத்தோல்; *v.* பழத்தில் தோலுரி; உருளைக்கிழங்கு முதலியவற்றின் தோலை அகற்று ; மரத்தின் பட்டையுரி ; தோலை உரித்தெடு ; தோல் உரிக்கப் பெறு ; பட்டை உரியப் பெறு ; (தொ.) pack and peel, ஏதாவது தொடர்புகொள்.

**peeled,** *a.* சூறையிடப்பட்ட ; தோலுரிக்கப்பட்ட ; மழுக்கையான.

**peel'er** [1], *n.* உரிப்பவர்; கொள்ளையடிப்பவர்; நிலவளங் கெடுக்குந்தாவரம்; தோலுரிக்குங்கருவி, புறத்தோடகற்றும் அமைவு.

**peel'er** [2], *n.* (வர.) முற்கால அயர்லாந்து காவல் துறையினர்.

**peel'ing,** *n.* உரித்தல்; உரிதோல்; உரியல்.

**Peel'ite,** *n.* (வர.) கூலக் கட்டுப்பாட்டுச் சட்டங்களை அகற்றியபோது பிரிட்டனின் அமைச்சரான பீல் (Sir R. Peel) என்பாருக்கு ஆதரவளித்த கான்சர்வேட்டிவ் (Conservative) கட்சியுறுப்பினர்.

**peen,** *n.* சுத்தியல் தலைப்பின் மென்னுனி.

**peep** [1], *n.* ஊடுநோக்கு, துளைவழிப் பார்வை ; ஒளிவுக்காட்சி, மறை நோட்டம் ; முதல் தோற்றம் ; *v.* ஊடாக நோக்கு, துளைவழிகாண் ; உற்றுக்காண் ; மறைவாக நோட்டமிடு, மெல்லவந்து தோற்றமளி ; அரைகுறையாக வெளிப்படு ; பண்புகள் வகையில் இயல்பாக வெளிப்படு ; (தொ.) peep of dawn, peep of day, காலை முதற் கதிரொளி, புலரி ; peep show, பூதக்கண்ணாடிவழிக் காட்சி ; peep sight, சுழல் துப்பாக்கியில் புழைவழிக் காணுந் தோற்றம்.

**peep** [2], *n.* மெல்லிய கீச்சொலி; பறவை ஒலி; எலியின் அரவம் ; *v.* கீச்சொலிசெய்.

**peep'er,** *n.* மறைந்து பார்ப்பவர்; உற்று நோக்குபவர்.

**peep'-hole,** *n.* பார்க்குந் துளை; ஒளி ஊடு செல்லவிடும் சிற்றிடைவெளி.

**peep'ing,** *a.* துளை வழி உற்று நோக்குகிற, மறைந்து காண்கிற; (தொ.) peeping Tom, சன்னல் வழிப் பார்வையர்.

**peep'show,** *n.* சிறு புழைவழிக் கண்காட்சி அமைவு.

**peep'-through,** *a.* ஊடாகக் காணும் வாய்ப்பு அளிக்கிற.

**peep'-toe,** *n.* கால்விரல் காட்டும்படி நுனி வெட்டப்பட்ட புதைமிதி.

**peep'ul,** (இ.) *n.* அரசமரம்.

**peer** [1], *n.* படி ஒப்பானவர்; சரியிணை, சரி ஒப்பானது; பிரிட்டனின் உயர்படிப் பெருமகனுர், கோமக்கள் படியினர்; மேன்மக்கள் அவை உறுப்பினர் ; உயர் பெருங்குடி மகன் ; *v.* ஒப்பாயிரு, சரியிணையாயிரு ; உயர்படிப் பெருமகனுராக்கு.

**peer** ², *v.* கூர்ந்து நோக்கு, உற்று நோக்கு ; வெளிப்படத் தோன்று ; காட்சிக்கு உரியதாகு.

**peer'age**, *n.* பிரிட்டன் உயர்படிப் பெருமகனர் நிலை.

**peer'less**, *a.* இணையற்ற.

**peev'ish**, *a.* வெடுவெடுப்பான, சிறி விழுகிற, சிடுசிடுப்பு மிக்க.

**pee'wit**, *n.* கூட்டமாக வாழும் நீள்காலுடை நீர்ப்பறவை வகை.

**peg**, *n.* முளை, மாட்டற் கொம்பு; பற்றிறுக்கி, ஆப்புக்கட்டை; இணைகுழைச்சு ; மாடகம், யாழ் முதலிய கருவித் தந்திகளை வரிந்திறுக்கும் முறுக்காணி ; தடைக்கட்டை ; கட்டுத்தறி ; எல்லைக்குற்றி ; குறிச்சந்து, ஆட்ட வகையில் அளவை குறிக்கும் ஆப்புமுளை ; சாக்குப்போக்குக் கருவி ; குடிவகை ; *v.* முளையறைந்து இறுக்கு ; ஆப்பு அறை ; ஆணியிறுக்கு ; விதிமுறைகளுக்குள் கட்டுப்படுத்து; பங்குமாற்றுக் களத்தில் பங்குமதிப்பு விலை திடீர் ஏற்ற இறக்கம் அடையாமல் அறுதி விலையால் தடுத்து நிறுத்து ; குறிமீது முளை இலக்குவை ; முளைகொண்டு தாக்கு; முளையறை; ஆட்டவகையில் அளவைக் குறித்து ஆப்புமுளை செருகு; சுரங்க உரிமை எல்லையை முளை யால் குறி ; ஆட்ட வகையில் ஆட்ட இறுதி குறிக்கும் முறை யில் முளைமீது பந்தடித்து விழ்த்து ; விடாமுயற்சியுடன் உழை ; (தொ.) a peg to hang on, வேறொன்றினை இணைப் பதற்கான கருவி; வெறுஞ் சாக்குப்போக்கு; வேறொரு செய லுக்கு ஏற்பமைவான தறுவாய் ; off the peg, செயலுக்கு உரிய நிலையில் ; round peg in a square hole, square peg in a round hole, இடத்துக்கு ஒவ்வாத ஆள் ; take down a peg or two, படியிறக்கு, மதிப்பிற் சில படிகள் தாழ்த்திவிடு.

**peg'amoid**, *n.* வண்டிக் கட்டுமானத்திற் பயன்படும் செயற் கைத் தோல்.

**peg'asus**, *n.* கிரேக்க பழங்கதை மரபில் பறக்கும் திப்பிய குதிரை ; கவிதையாற்றல்.

**peg'orative**, *n.* இழிவுபடுத்துஞ் சொல்; *a.* இழிவுபடுத்துகிற.

**peg'-top**, *n.* உலோக முனையுடைய பம்பரம்; (தொ.) peg-top trousers, இடுப்பகன்று கணுக்கால் சுருங்கிய காற்சட்டை வகை.

*peignoir*, (பிர.) *n.* மாதர் அணியுந் தளர்த்தி அங்கி.

*peine forte et dure*, (பிர.) *n.* கடும்வதைத் தண்டனை, கேள் விக்கு விடையளிக்க மறுக்கும் கொடுங்குற்றவாளி வகையில் அழுத்திக் கொல்லுந் தண்டம்.

**pek'an**, *n.* வட அமெரிக்க கீரியின ஊனுணி விலங்குவகை.

**peke**, *n.* சீனக் குள்ளநாய் வகை.

**pek'in**, *n.* பட்டுத்துணி வகை.

**Pekinese'**, *n.* சீன தேசத்தில் பீகிங்கு நகரவாணர்; குறுநாய் வகை ; *a.* சீன தேசத்துப் பீகிங்கு நகரத்துக்குரிய.

**Pekingese'**, *n.*=Pekinese.

**Pek'ing man**, *n.* பீகிங்கு அருகே 1929-இல் கண்டெடுக்கப் பட்ட முன்னூழிக்காலப் புதைபடிவ மனித இனம்.

**pek'oe**, *n.* கருநிற நறுமணத் தேயிலை வகை.

**pel'age**, *n.* விலங்கின் கம்பளிமயிர் ; குறுமென் மயிர்.

**Pela'gian** ¹, *n.* தொல்லைத் தீவினை இல்லை என்னும் பிலாஜி யஸ் (Pelagius) என்ற கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த துறவியின் கோட்பாட்டைப் பின்பற்றுபவர் ; *a.* பிலாஜிய ஸைச் சார்ந்த ; பிலாஜியஸ் கோட்பாட்டைச் சார்ந்த

**pela'gian** ², *n.* கடல் வாழ்வன ; *a.* கடல்வாழ் உயிரினம் பற்றிய.

**pela'gic**, *a.* மாகடலுக்குரிய ; கடற்பரப்பிற்குரிய ; கடற் பரப்பில் வாழ்கிற ; கடற்பரப்பில் நிகழுகிற ; கடலின் நடு ஆழத்துக்குரிய ; கடல் நடு ஆழத்தில் வாழ்கிற ; கடலின் ஆழத்தில் நிகழ்கிற ; ஆழ்கடல் சூழலிற் படியவிடப்பட்ட.

**pelargon'ium**, *n.* பகட்டு மலர்களையும் நறுமண இலை களையுமுடைய செடியினம்.

**Pelas'gic**, *a.* கிரீஸ் நாட்டில் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த பண்டைய மக்களினஞ் சார்ந்த; (தொ.) Pelasgic architecture, கிரீஸ் நாட்டுப் பழங்காலக் கட்டிடக் கலை.

**pel'erine**, *n.* மகளிரின் தோள் தொங்கலுடுப்பு.

**pelf**, *n.* கொண்டி.

**pel'ican**, *n.* குஞ்சுகளுக்குத் தன் குருதியையே ஊட்டி வளர்ப் பதாக முற்காலங்களில் கருதப்பட்ட உணவுச் சேமிப்புப் பையுடைய நீர்க்கோழி வகை.

**pelisse'**, *n.* கணுக்கால்வரை நீண்டு தொங்கும் மகளிர் மேலங்கி ; குதிரை வீரரின் குறுமென்மயிர்ச் சட்டை ; குழவி மனைப்புறச் சட்டை.

**pellag'ra**, *n.* ஊட்டக் குறைவால் ஏற்பட்டு முடிவில் மூளைக் கோளாறில் கொண்டுவிடும் தோல்வெடிப்புடைய நோய்வகை.

**pell'et**, *n.* குறும் பந்து ; குளிகை ; இரவைக்குண்டு ; நாண யங்கள் முதலியவற்றின் மீதுள்ள சிறு குமிழ் வடிவம் ; *v.* தாள் உருண்டையால் அடி, தாள் சுருட்டி எறி.

**pell'icle**, *n.* தோல் ; சவ்வு ; மென்படலம்.

**pell'itory**, *n.* தொட்ட இடத்தில் எரிச்சலூட்டுங் காரச்சுவை கொண்ட வேர்ச் செடிவகை ; சிறிதே பச்சையான மலருடைப் புதர்ச்செடிவகை.

**pell'-mell'**, *n.* குழப்பம்; கதம்பம்; கைச்சண்டை; *a.* தாறு மாறான, குழப்பமான; *adv.* குழப்பமாக, ஒழுங்கின்றி, தாறு மாறாக ; தலைகுப்புற.

**pellu'cid**, *a.* தெள்ளத் தெளிந்த ; ஒளி எளிதில் ஊடுருவிச் செல்கிற; மாசுமறுவற்ற; உச்சரிப்பில் தெளிவான; அறிவுத் தெளிவுடைய, மனக்கோட்டம் அற்ற.

**Pel'manism**, *n.* இருபதாம் நூற்றாண்டின் நினைவுப் பயிற்சி முறை.

**pel'met**, *n.* திரைச்சீலைக் கழிகளை மறைப்பதற்காகக் கதவுகள் அல்லது பலகணிகள்மேல் விடப்படுங் குறுகிய கரைத் தொங்கல்.

**pelot'a**, *n.* பந்தும் மட்டையுங் கொண்டு விளையாடப்படும் பாஸ்க் (Basque) இனத்தவர் ஆட்டவகை.

**pelt** ¹, *n.* செம்மறியாட்டின் அல்லது வெள்ளாட்டின் குட்டைக் கம்பளி மயிர் கொண்ட தோல்; பதப்படுத்தப்படாத கம்பளித் தோல் ; செம்மறியாட்டின் பதப்படுத்தாத பச்சைத்தோல்.

**pelt** ², *n.* எறிபடைத் தாக்கு ; எறிபடைத்தாக்கு விசை ; *v.* எறிபடைகளைக் கொண்டு தாக்கு ; மழை முதலியவற்றின் வகையில் கடுமையாகப் பெய் ; விடாது எறிபடைகளைத் தொடர்ந்து வீசு ; விடாது வேட்டுவிட்டுக் கொண்டிரு.

**pel'ta**, *n.* பண்டையக் கிரேக்கர்கள்-ரோமர்கள் ஆகியோரின் பளுவற்ற சிறு கேடயம் ; (தாவ.) கேடயம் போன்ற அமைப்பு.

**pel'vis**, *n.* இடுப்பெலும்பு, இடுப்புக்கூடு, இடுப்புவளையம் ; குண்டிக்காயின் உட்குழிவு.

**Pem'broke, Pem'broke table**, *n.* சிறு மடக்கு மேசை.

**pemm'ican**, *n.* கொழுச்செறிவப்பம், இளகிய கொழுப்புடன் உலர் இறைச்சித்தூள் சேர்த்த அப்பம் ; மாட்டுக்கறிக் கொழுச்செறிவப்பம் ; இலக்கியச்செறிவு.

**pem'phigus**, *n.* (மரு.) நீர்க்கொப்புளத் தோல்நோய்வகை.

**pen** ¹, *n.* தொழுவம், பட்டி, வேலியடைப்பு, சூழ்பட்டி ; *v.* பட்டியில் அடை, தொழுவத்திற் கட்டு, கிடை மறி.

**pen** ², *n.* இறகுப்பேனா; எஃகு அல்லது தங்கத்தாலான எழுது கோல் ; எழுதுதல் ; எழுதும் பாணி ; *v.* எழுது ; வரை ; இயற்று.

**pen** ³, *n.* அன்னப்பெடை.

**pen'al**, *a.* தண்டனை பற்றிய ; தண்டனைக்குரிய ; சட்டப்படி தண்டிக்கக்கூடிய ; தண்டனையாக விதிக்கப்பட்ட ; தண்ட னைக்குரிய இடமான ; (தொ.) penal colony, குற்றவாளி களை ஒதுக்கி வைத்திருக்கும் இடம்; penal servitude, கடுமை யான உழைப்புடன் கூடிய சிறைக்காவல் ; கடுங்காவல் தண்டனை.

**pena'lize**, *v.* தண்டி; தண்டனைக்குரியதாக்கு ; தண்டனைக் குரியதென்று அறிவி ; ஆட்டக்காரரைத் தண்ட வரிக்குள் ளாக்கு, தண்டம் அடையச்செய்.

pen'alty, *n.* தண்டனை; தண்டத்தொகை; சீட்டாட்ட வகையில் ஆட்ட விதிப்படி விளையாடுபவரின் கெலிப்பு எண்ணோடு சேர்க்கப்படும் எண்ணிக்கைகள்; (தொ.) penalty kick, காற்பந்தாட்டத்தில் இலக்கிற்கு முன்னுள்ள நிலப்பகுதியில் பந்தினைத் தடுக்கும் எதிர் ஆட்டக்காரர்கள் ஆட்ட விதிகளை மீறியதன் விளைவாக மறுபுறத்தார் பெறும் பந்தடி முறை உரிமை.

pen'ance, *n.* நோன்பு, தவம்; கழுவாய்; கழுவாய்க்காகத் தன்னை ஒறுத்தல்; *v.* கழுவாய் விதி, பிராயச்சித்தங் கூறு; (தொ.) do penance, கழுவாய் தேடு, பிராயச்சித்தஞ் செய், நோன்பிரு.

pen'-and-ink', *n.* எழுது பொருள்கள்; பேனாப்படம்; *a.* மையும் பேனாவுங்கொண்டு எழுதப்பட்ட.

Penat'es, *n. pl.* ரோமர் குலதெய்வங்கள்.

pence, *n. pl.* ஆங்கிலநாட்டுச் செப்புக்காசுகள்.

*penchant*, (பிர.) *n.* விருப்பம், மனச்சார்பு.

pen'cil, *n.* வரைகோல், கரிக்கோல்; வண்ண ஓவியத்தூரிகை; தீட்டுபாணி, வண்ண ஓவியப்பாணி; (இய.) குவிகதிர்க் கூம்பு; (வடி.) வரைக்கூம்பு, ஒருமுனையில் கூடும் பல நேர்க் கோடுகள்; *v.* வரைகோலாற் குறி; கரிக்கோலால் தீட்டு; பந்தயப் புத்தகத்தில் குதிரையின் பெயரைப் பதிவுசெய்; வண்ணத்தைக்கொண்டு ஒரே மையமுள்ள மெல்லிய பல கோடுகள் வரை.

pen'cil-case, *n.* வரைகோல் உறை.

pen'dant, pen'dent, *n.* பதக்கம், கழுத்தணியிற் கோக்கப் பட்டுள்ள தொங்கணி; (கப்.) பாய்மரத்தின் உச்சியில் தொங்கும் சிறு கயிறு, கீழ்ப்புறத்தில் பாய்மரக் கருவிகளின் கொக்கிகளை இணைப்பதற்குதவும் கண்ணியுடன் கூடிய சிறு கயிறு; கைக்கடிகார வளையம்; இணைதுணை, சோடி, எதிரிணை; *a.* தொங்குகிற, மேற்கவிந்து தொங்குகிற; உறுதியற்ற; முடிவுபெறாத; நிறைவேறாத, முடிவுக்காகக் காத்திருக்கிற.

*penden'te lit'e*, (ல.) *adv.* வழக்கு முடிவதற்கிடையே.

penden'tive, *n.* (க-க.) கவிகை மாடத்தின் சதுரவளைவு தாங்கி அடித்தளத்துக்குரிய உருளை முக்கோண வடிவுடைய குவிகால்.

pend'ing, *a.* முடிவு செய்யப்படாத; முடிவிற்காகக் காத்துள்ள; விரைவில் முடிவுசெய்யப்பட இருக்கிற; *prep.* முடிவு செய்யப்படும் வரையில்; முடிவு செய்யப்படுவதற்கிடையில், முடிவு செய்யப்படும் வகையில்.

pendrag'on, *n.* பண்டைய பிரிட்டிஷ் குறுநில மன்னர்.

pen'dulate, *v.* ஊசலாடு; ஊசற்குண்டு போலாடு; தீர்வு பெறாதிரு, முடிவுறாதிரு.

pen'duline, *a.* கூண்டு வகையில் தொங்குகிற, ஆடிக்கொண்டிருக்கிற; பறவை வகையில் தொங்குகூண்டு கட்டுகிற.

pend'ulous, *a.* தொங்கலான; பறவைக்கூண்டு-மலர் முதலியவற்றின் வகையில் ஊசலாடுகிற.

pen'dulum, *n.* ஊசற் குண்டு; மணிப்பொறியின் ஊசலி; ஊசலாடும் ஆள்; ஊசலாடும் பொருள்; (தொ.) compensation pendulum, சரியீட்டு ஊசலி; swing of the pendulum, ஊசற் குண்டின் ஊசலாட்டம்; கட்சிகளுக்கிடையேயுள்ள அதிகார ஊசலாட்டம், ஆட்சிநிலை மாறிமாறி வரும் நிலை.

Penel'ope, *n.* பத்தினி; யூலிசிஸ் (Ulysses) மனைவி.

penel'opise, *v.* செய்ததை அழித்துச் செய்.

pen'eplain, *n.* (மண்.) குறிஞ்சி மருதத்திரிபு.

penetral'ia, *n. pl.* கட்டிட உள்ளகங்கள்; கோயிற் கருவறைகள்; உள்ளிட இரகசியங்கள்.

pen'etrate, *v.* ஊடுருவு, உட்புகு; ஊடுபரவு; துருவி நோக்கு; துருவிக் கண்டுணர்; பண்புதோய்வி; மனம்-பொருள்-திட்டம்-உண்மை முதலியவற்றின் வகையில் நுணுகி உள்நோக்கு, நுட்பமாக ஆராய்; வழி செய்து கொண்டு போ; நுழை.

pen'etrating, *a.* நுழைநோக்குடைய; துளைத்துச் செல்கிற; உண்ணோக்குடைய; மற்ற ஓசைகளையும் விஞ்சி எளிதாகக் கேட்கிற.

penetra'tion, *n.* உட்புகுவு, ஊடுறுவல்

pen'-feather, *n.* இறகு, எழுதுகோலாக முன்பு பயன்படுத்தப் பட்ட குருத்து இறகு.

peng'uin, *n.* துடுப்பு போன்ற சிறகுகளால் நீரடியில் நீந்த வல்ல தென்பகுதிக் கடற்கோழி வகை; பறவா விமானம்.

pen'ial, *a.* ஆண்குறி சார்ந்த.

pen'icillate, *a.* (இய., தாவ.) சிறு கொத்துக்களையுடைய; சிறு திரள்களை உருவாக்குகிற; தூரிகையாற் சிறு கீறுகள் இடப்பட்ட.

penicill'in, *n.* பெனிசிலின், பூஞ்சக்காளானில் முதலிற் கண்டு பிடிக்கப்பட்டுச் சில நோய்நுண்மங்களின் வளர்ச்சியைத் தடைசெய்யப் பயன்படும் மருந்து.

penin'sula, *n.* தீவக்குறை, தீவகற்பம், ஒட்டரங்கம்; (தொ.) the Peninsula, ஸ்பெயினும் போர்ச்சுகலும் சேர்ந்த தீவக் குறை மாநிலம்.

penin'sular [1], *n.* தீவக்குறைவாணர்; *a.* தீவக்குறை உருவான; ஒட்டரங்கஞ் சார்ந்த; பிரஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் (1808 முதல் 1814 வரை) நடந்த போர்குறித்த.

Penin'sular [2], *n.* (1808 முதல் 1814 வரை) ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் இடையே நிகழ்ந்த போரின் படைவீரர்.

penin'sulate, *v.* நிலத்தைத் தீவக்குறை ஆக்கு.

pen'is, *n.* ஆண்குறி.

pen'itent, *n.* செய்ததற்கு இரங்குபவர்; கழுவாய் மேற்கொள்ளுபவர்; *a.* தவறுக்காக வருந்துகிற; உய்தி தேடுகிற, கழுவாய் வேண்டுகிற; நோன்பாற்றுகிற.

peniten'tial, *a.* கழுவாய் சார்ந்த; நோன்பு முறைக்குரிய.

peniten'tiary, *n.* திருத்தியல் சிறை; கழுவாய்-தண்டனைத் தளர்த்தீடு ஆகியவற்றின் மேலாட்சிக்குரிய போப்பாண்டவரின் நீதிமன்றப் பணிமனை; சீர்திருத்தமுறும் மாதர் புகன் மனை; *a.* கழுவாய் சார்ந்த; சீர்திருத்தப் பணிசார்ந்த.

pen'itents, *n. pl.* கூட்டு உட்கட்டுப்பாட்டுக்காக இணையும் ரோமன் கத்தோலிக்க துறவுமடக் குழுவினர் தொகுதி.

pen'knife, *n.* சிறு கத்தி, பேனாக்கத்தி.

pen'man, *n.* நன்றாக எழுதுபவர், நல்ல கையெழுத்தாளர்; எழுத்தாளர், ஆசிரியர்.

pen'manship, *n.* எழுதுந் திறமை, கையெழுத்துப்பாணி; இலக்கியக் கட்டுரை அல்லது செய்யுளின் பாணி.

pen'-name, *n.* எழுத்தாளரின் புனைபெயர்.

penn'ant, *n.* (கப்.) பாய்மரத்தின் உச்சியில் தொங்கும் சிறு கயிறு, கீழ்ப்புறத்தில் பாய்மரக் கருவிகளின் கொக்கிகளை இணைப்பதற்குதவும் கண்ணியுடன்கூடிய சிறு கயிறு; நீண்டு குறுகிய முக்கோண வடிவுடைய படைத்துறையின் அடையாளக் கொடி, ஈட்டியையுடைய குதிரைப்படையின் கொடி; கப்பலின் நீண்டு குறுகிய புகைப்போக்கி; கொடி.

penn'ies, *n. pl.* ஆங்கிலநாட்டுச் செப்புக்காசின் தனி நாணயங்கள்.

penni'form, *a.* (வில., தாவ.) இறகுபோன்ற வடிவமுடைய; தூவியின் தோற்றமுடைய.

penn'iless, *a.* காசில்லாத, கைப்பொருளற்ற; ஏழ்மையான; துணையற்ற.

penn'ill, *n.* யாழ்போன்ற இசைக்கருவியோடு பாடுவதற்காகச் சமயத்திற்கேற்றபடி அமைக்கப்பட்ட பாட்டு; பண்டை வேல்ஸ் மக்களின் கவியரங்கத்திற் பாடப்படும் ஆசுகவி; *pl.* pennill'ion.

penn'on, *n.* நீண்டு குறுகிய முக்கோண வடிவுடைய படைத் துறைப் பிரிவின் அடையாளக் கொடி, ஈட்டியையுடைய குதிரைப்படையின் கொடி; கப்பலின் நீண்டு குறுகிய புகைப் போக்கி; கொடி.

penn'orth, *n.* = pennyworth.

**penn'y**, *n.* ஆங்கில நாட்டுச் செப்புக்காசு; (பே-வ.) சிறு நாணயம், சிறுகாசு; (தொ.) a pretty penny, பெருந் தொகை; in for a penny, in for a pound, தொடங்கிய செயலை எப்படியாயினும் எல்லாவற்றுனும் முடித்துவிட வேண்டும்; penny farthing, (பே-வ.) பழைய பாணியான உயர மிதிவண்டி; penny post, முற்காலப் பொதுநிலை அஞ்சற் கட்டணமுறை; penny wise, சிறு செலவினங்களி லும் மட்டுமீறிக் கையிறுக்கமாயிருக்கிற; penny wise and pound foolish, உலக்கை போவதை விட்டு விட்டு ஊசி போவதைக் கணக்குப் பார்க்கிற; Peter's penny, Peter's pence, (வர.) போப்பாண்டவரின் கருவூலத்திற்கு 1860 முதல் விருப்பாணைப்படி அளிக்கப்படும் ஆண்டு வரி; take care of the pence, சிறுதொகையினுஞ் சிக்கனமாக இரு; turn an honest penny, நல்ல வழியிற் சிறிது பணம் ஈட்டு.

**penn'y-a-line**, *a.* எழுத்து வகையில் மேற்போக்கான, மலிந்த தரமான.

**penn'y-a-liner**, *n.* குறைந்த கூலிக்கு அளவுமீறி உழைத்து எழுதுபவர்.

**pennyroya'l**, *n.* மூலிகையாகப் பயன்படும் புதினு இனச் செடிவகை.

**penn'y-wedding**, *n.* மணமக்களை மணப்படுத்த விருந்ினர் காசுதரும் திருமணவினை.

**penn'y-weight**, *n.* இருபத்துநான்கு குன்றிமணி எடையளவு.

**penn'ywort, wall pennywort**, *n.* சதுப்புநிலங்களில் வளரும் வட்ட இலைச் செடிவகை.

**penn'yworth**, *n.* ஒரு செப்பு நாணயத்தில் வாங்கக்கூடியது, ஒரு செப்புக்காசு மதிப்புள்ளது.

**penol'ogy**, *n.* தண்டனை ஆய்வுநூல், சிறைநிர்வாகம்.

**pen'sile**, *a.* தொங்கிக்கொண்டிருக்கிற; பறவைகள் வகையில் தொங்குகூண்டு கட்டுகிற.

**pen'sion**, *n.* ஓய்வுகால ஊதியம், உரிமை துறப்புக்கீடான உதவிச் சம்பளம்; பரிவூதியம்; துணைமை ஊதியம்; அன்புதவி; 'கிரே விடுதி' (Gray's Inn) என்ற சட்ட மாணவர் இல்ல ஆய்வுப்பேரவை; ஐரோப்பாவில் உணவு விடுதி; *v.* ஓய்வுச் சம்பளம் கொடு; உதவிச்சம்பளம் கொடுத்து வசமாக்கிக் கொள்; உதவிச்சம்பளம் கொடுத்து விலக்கு; (தொ.) Ministry of Pensions, 1914-18-ஆம் ஆண்டுப்போரில் நிறுவப்பட்ட ஓய்வுச்சம்பளத் துறை; old-age pension, குறிப்பிட்ட வயதிற்கு மேற்பட்ட தொழிலாளர்களுக்கோ ஏழைகளுக்கோ அனைவருக்குமோ அரசாங்கம் அளிக்கும் வார அல்லது மாத ஓய்வுச்சம்பளம்; pension off, ஓய்வுச்சம்பளம் கொடுத்து விலக்கீடு செய்.

**pen'sionable**, *a.* பணி முதலியவற்றில் ஓய்வுச்சம்பள உரிமையுடன் கூடிய; ஆட்கள் வகையில் உதவிச் சம்பளம் பெறத் தக்க உரிமையுடைய; பரிவூதியம் பெறும் உரிமையளிக்கிற.

**pen'sionary**, *n.* ஓய்வூதியம் பெறுபவர்; உடைமையுரிமை ஓய்வூதியத்தால் இழந்தவர்; *a.* ஓய்வுச் சம்பள இயல்புடைய.

**pen'sioner**, *n.* ஓய்வுச்சம்பளம் வாங்குபவர்; உதவிச்சம்பளம் பெறுபவர்; ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் உணவுக்கும் விடுதிக்கும் உதவிச்சம்பளம் பெறுமல் சொந்தப் பணத்திலிருந்தே செலுத்தும் மாணவர்.

**pen'sive**, *a.* எண்ணத்தில் ஆழ்ந்துள்ள, சிந்தனையில் மூழ்கிய; வருத்தந் தோய்ந்த, வாடிய தோற்றமுடைய.

**pen'stock**, *n.* மதகு, மடை.

**pent**, *a.* அடைத்து வைக்கப்பட்ட; அடக்கி வைக்கப்பட்ட.

**pen'tachord**, *n.* முல்லையாழ், ஐந்து நரம்புகளுள்ள இசைக் கருவி; முல்லைப்பண், ஐந்து சுரங்கள் கொண்ட இசைத்தொடர்.

**pen'tacle**, *n.* செப்படி வித்தையில் அடையாளக் குறியாகப் பயன்படுத்தப்படும் உருவம்.

**pen'tad**, *n.* ஐந்து, ஐந்தன் இலக்கம்; ஐந்தன் தொகுதி; ஐந்து நாட்கள் கொண்ட காலப்பகுதி; (வேதி.) ஐயிணைதிறத் தனிமம், ஐந்து நீரக அணுக்களுடன் இணையும் ஆற்றல் கொண்ட தனிமம்.

**pentadac'tyl**, *n.* கைகால்கள் ஒவ்வொன்றிலும் ஐந்து விரல்களுள்ளவர்; கால் ஒவ்வொன்றிலும் ஐந்து விரல்களுள்ள விலங்கு; *a.* ஒவ்வொரு காலில் அல்லது கையில் ஐந்து விரல்கள் கொண்ட; கால் ஒவ்வொன்றிலும் ஐந்து விரல்களை யுடைய விலங்குகளைப்பற்றிய.

**pen'tagon**, *n.* ஐங்கோணம், ஐந்து பக்கங்களுள்ள உருவம்.

**pen'tagram**, *n.* ஐந்து முனைகளுள்ள விண்மீன் வடிவம்; ஐந்து மூலைகள் கொண்ட விண்மீன் வடிவில் அமைந்த மறை வியல் உரு.

**penta'gynous**, *a.* மலர்வகையில் ஐந்து சூலகங்கள் கொண்ட.

**pentahed'ron**, *n.* ஐந்து முகப்புக்கள் கொண்ட பிழம்புரு.

**pentam'erous**, *a.* (தாவ.) இதழ் வட்டகைகளை ஐந்தாக உடைய; (வில.) ஐந்து இணைப்புகள் கொண்ட.

**pentam'eter**, *n.* (யாப்.) ஐஞ்சீரடி.

**pentan'drous**, *a.* ஐந்து தனிப்பூவிழைகள் கொண்ட.

**pen'tane**, *n.* நில எண்ணெயிலிருந்து எடுக்கப்படும் நீரமக் கரியவகை.

**pentapet'alous**, *a.* ஐந்து இதழ்களையுடைய.

**pentap'ody**, *n.* ஐந்து சீர்கள் கொண்ட செய்யுள் அடி; ஐஞ்சீரடிச் செய்யுள்.

**pen'tastich**, *n.* செய்யுளின் ஐந்தடித்தொகுதி.

**Pen'tateuch**, *n.* விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் மோசே (Moses) என்பாருக்கு உரியதாகக் கருதப்பட்ட முதல் ஐந்து ஏடுகள்.

**pentath'lon**, *n.* பண்டைக் கிரேக்கர் பயிற்சி விளையாட்டுப் போட்டியில் பங்கெடுத்துக்கொள்ளும் அனைவரது ஐந்து நிகழ்ச்சித் தொகுதி; தற்கால ஒலிம்பிக் பந்தயங்களில் (Olympic races) ஐந்து ஆட்டத்தொகுதி.

**pentatom'ic**, *a.* (வேதி.) அணுத்துகளில் ஐந்து அணுக்கள் கொண்ட.

**pentaton'ic**, *a.* ஐந்து இசைக்குரல்கள் கொண்ட.

**pentav'alent**, *a.* ஐந்திற இணைவாற்றலுடைய, தனிமங்களில் ஐந்து அணுக்கள் நீரகத்தோடு இணையும் ஆற்றலுடைய.

**Pen'tecost**, *n.* யூதர்களின் அறுவடை விழா; யூத திருக்கோயிலின் திருக்கட்டளை நாள் விழா; ஈஸ்டர் விழா நாளுக்குப்பின் அடுத்த ஏழாவது ஞாயிற்றுக்கிழமை.

**pent'house, pen'tice**, *n.* சாய்விறக்கி மோடு, முக்கியமான கட்டிடச் சுவரோடு இணைந்துள்ள சரிவுக்கூரை; மேற்கட்டி, அணியொப்பனைப் பந்தல்.

**pe'ntode**, *a.* கம்பியில்லாத் தந்தி தடுக்கிதழ்கள் வகையில் ஐந்து மின்வாய்கள் கொண்ட.

**Pen'tonville**, *n.* தனித்தனி அறைகளில் கைதிகளை அடைப்பதற்கேற்ப அமைக்கப்பட்ட லண்டன் நகரச் சிறை.

**pentstem'on**, *n.* பகட்டு வண்ணமலர்களுடைய தோட்டச் செடிவகை.

**penult', penul'timate**, *n.* ஈற்றயல் அசை; ஈற்றயல்; *a.* கடைசிக்கு முந்திய, ஈற்றயலான.

**penum'bra**, *n.* அரைநிழற் கூறு; நிலவுலகு திங்கள் இணை நிழலான திண்ணிழற்பகுதி சூழ்ந்த அரைநிழல் வட்டம்; கதிரவன் கறைப் பொட்டுச் சூழ்ந்த இளங்கரும் பகுதி.

**penur'ious**, *a.* கடுமிடிமையான; பற்றுக்குறையான; கஞ்சத்தனமான.

**pen'ury**, *n.* இலம்பாடு, ஏழ்மைநிலை, நல்குரவு.

**pen'wiper**, *n.* பேனு துடைக்குஞ் சிறுதுண்டு.

**pe'on**, *n.* பணியாள், ஏவலாள், பணிமனை குற்றேவலன்; ஸ்பானிய அமெரிக்க வழக்கில் நாட்கூலியாள்; மெக்ஸிகோவில் அடிமையாய்விட்ட கடனாளி.

**pe'onage**, *n.* குற்றேவலர் பணி; பணியாட்களை வேலைக்கு அமர்த்துதல்.

**pe'ony**, *n.* வெண்சிவப்பு மலர்ச்செடி வகை.

**pe'ople**, *n.* மக்கள்; சமுதாயம்; இனம்-நாட்டு மக்கள்; வாழ்குழு; மக்கள் வகுப்பு; மக்கள் குழாம்; குடிமக்கள்; மாவட்டக் கிறித்தவ குருமார் கூட்டம்; *v.* குடியமர்வு செய்; குடிமக்களாக்கு; வாழ்குடிகளாக்கு; தங்கிவாழச் செய்; விலங்கினங்கள் வாழச்செய்; தங்கிவாழ்; குடியமர்; (தொ.) People's Palace, லண்டனில் ஏடகம்-கல்விப் பயிற்சி வகுப்புக்கள்-பொழுதுபோக்குக் கேளிக்கைகள் ஆகியவற்றினையுடைய தொழிலாளர் நிறுவனம்.

**pe'oples**, *n. pl.* உறவினர்; படைதாங்கிய உழைப்பவர் குழு; புடையர் குழு, பரிவாரம்; தொழிலாளர் குழு; பொதுமக்கள்; குடியுரிமையாளர்.

**pep**, *n.* (பே-வ.) ஊக்கம், தெம்பு, கிளர்ச்சி.

**peperi'no**, *n.* கரிமணற்கல், மணலும் கரித்தூளுங் கலந்து உருவான துகள்களுள்ள பளுவற்ற எரிமலைப் பாறைவகை.

**pepp'er**, *n.* மிளகு; *v.* மிளகுப்பொடி தூவு; மிளகுகலந்து செய்; எறிபடைகளால் தாக்கு; கடுமையாகத் தண்டி; (தொ.) Black Pepper, மிளகுக்கொடி; cayenne pepper, மிளகாய்; காரமுடையது; white pepper, வெள்ளை மிளகு, தோல் நீக்கப்பெற்ற கருமிளகு.

**pepper-and-salt'**, *n.* கருமையும் மங்கல் வெண்ணிறமும் உள்ள இருவகைக் கம்பளி நூலால் நெய்யப்பட்ட துணி; சிறு கரும்புள்ளியும் மங்கல் நிறப்புள்ளியும் இடைவிரவிய துணி.

**pepp'erbox, pepp'er-caster, pepp'er-castor**, *n.* மிளகுப்பொடி தூவுதற்கேற்ற மூடி அமைப்புடன் கூடிய சிறு வட்டப்பெட்டி.

**pepp'er-corn**, *n.* காய்ந்த மிளகு; பெருமதிப்பில்லாப் பொருள்.

**pepp'erer**, *n.*=pepperbox.

**pepp'ermint**, *n.* வாசனைத் தைலம் தருஞ் செடிவகை; வில்லை, சிறந்த தைல மணமூட்டப்பட்ட இனிப்புத் தின்பண்டம்.

**pepp'er-pot**, *n.* மிளகுப்பொடி தூவுகலம்; இறைச்சி-காய்கறி-உலர்த்திய மீன் ஆகியவற்றோடு மிளகாய் கலந்து செய்யப்படும் மேலை இந்தியக் கார உணவுவகை; ஜமெய்க்கா (Jamaica) தீவில் வாழ்பவர்.

**pepp'ery**, *a.* மிளகாலான, மிளகுபோன்ற; மிளகு நிறைந்த; காரமான; எரிப்பான; கடுகடுப்பான, சிடுசிடுப்பான.

**pep'sin**, *n.* இரைப்பையில் ஊறுஞ் சாற்றிற் கலந்துள்ள ஊன் கரைக்கும் ஆற்றலுடைய காடிச்சத்து.

**pep'tic**, *a.* செமிக்கச் செய்கிற; செமிப்பதற்கு உதவியான; (தொ.) peptic gland, இரைப்பை நீர்ச்சுரப்பி.

**pep'tone**, *n.* கரிநீரகைகளின் புத்துருவாகச் செரிமான நீரிலுள்ள எளிதிற் கரையும் உறையாப்பொருள்.

**per**, *prep.* வழியாக, மூலமாக; ஒவ்வொன்றிற்கும், ஒவ்வொருவருக்கும்; அளவுக்கு; (தொ.) per cent, நூற்றுக்கு; per man, தலைக்கு; per post, அஞ்சல்வழி; per rail, இருப்புப்பாதை வழியாக; per steamer, நீராவிக்கப்பல் வழி.

**peradven'ture**, *n.* உறுதியின்மை; ஐயகநிலை; தற்செயல் நிகழ்வு; *adv.* தற்செயலாக; ஒருவேளை.

**perai'**, *n.* பெருந்தீனி உண்கிற அமெரிக்க நாட்டு நன்னீர் மீன்வகை.

**peram'bulate**, *v.* நடந்து திரி, சுற்றித்திரி, அலைந்து திரி; நாடுகளிற் சுற்றித்திரிந்து தணிக்கை செய்; கிறித்தவ திருச்சபை வட்டாரங்களைச் சூழநடந்து அவற்றின் எல்லையை வரையறு.

**peram'bulator**, *n.* தள்ளுவண்டி, குழந்தைத் தொட்டில் வண்டி; தொலைவுமானி சக்கரம்; திரிபவர்.

*per ann'um*, (ல.) *adv.* ஆண்டுதோறும், ஆண்டிற்கு.

**percale'**, *n.* நெருக்கமாக நெய்யப்பட்ட பருத்தித்துகில் வகை.

*per cap'ut, per cap'ita*, (ல.) *adv.* தலைக்கு, ஒவ்வொருவருக்கு.

**perceive'**, *v.* மனத்தால் உணர்; கூர்ந்து கவனி; உணர்; புலனுல் உணர்; காண்.

**percen'tage**, *n.* நூற்று விழுக்காடு, சதவீதம்.

**per'cept**, *n.* புலனுணர்வுப் பொருள்; புலனியல்காட்சி, உளவியல் காட்சி, செயல்துறை அல்லாத அனுபவம்.

**percep'tible**, *a.* புலன்களால் உணரத்தக்க; அறியக்கூடிய; காணத்தக்க.

**percep'tion**, *n.* புலனுணர்வு; பொறிக்காட்சி; உணர்வுக் காட்சி; கலையுணர்வுக்கூறு; புலனுணர்வுமூலம் ஏற்படும் உள்ளத்தின் புறக்காட்சி; வரிமுதலியவற்றின் பிரிவு.

**perch**[1], *n.* துடுப்புக்கொண்ட ஐரோப்பிய நன்னீர் உணவு மீன்வகை.

**perch**[2], *n.* பறவை தங்குவதற்கான குறுக்குக்கம்பி; பறவை குந்துவதற்கான இடம்; உயர்காப்பிடம்; பாதுகாப்பிடம்; நாலு சக்கரவண்டியின் இருசு; நில அளவுகோல், 11 முழ நீள அளவு; *v.* பறவை வகையில் குந்து; தங்கு, ஓய்வு கொள்; ஆள் வகையில் அமர், தங்கியிரு; (தொ.) hop the perch, இற, மாள்வுறு; knock off one's perch, முறியடி, அழி; square perch, 121 சதுர முழ அளவு.

**perchance'**, *adv.* தற்செயலாய், ஒருவேளை.

**perch'er**, *n.* குந்துவதற்கேற்ற கால்களோடு கூடிய பறவை.

*percheron*, *n.* (பிர.) வலிவும் விரைவும் மிக்க பிரஞ்சுநாட்டு வளர்ப்பினக் குதிரைவகை

**percip'ient**, *n.* நுண்காட்சியாளர்; தொலைவிலுணர்தல் மூலம் புலன்கடந்த காட்சிகளைக் காண்பவர்; *a.* உணர்கிற; அறிகிற; காண்கிற.

**perc'olate**, *v.* நீர்ம வகையில் வடிக்கட்டுக்கடந்து ஊறிச் செல், கடந்து ஊடுபரவு; கசிந்து அப்பாற்செல்; கசியவை; வடிகட்டு; தூளைத் துளைவழி தேய்த்து வடிகட்டு.

*per con'tra*, (ல.) *n.* கணக்கேட்டில் எதிர்ப்புறம்; *adv.* கணக்கேட்டில் எதிர்ப்புறத்தில், மறுபக்கமாக.

**percuss'**, *v.* (மரு.) நோயின் தன்மையை நுணுகி ஆராய்வதற்காக விரலால் அல்லது கருவியால் மெள்ளத்தட்டு.

**percu'ssion**, *n.* மோதுதல், மோதல் அதிர்ச்சி; தண்ணுமை; (மரு.) நோய்த்தன்மை ஆராய்வதற்காக விரல் அல்லது கருவியின் மூலந் தட்டுதல்; (இசை.) இசைக்கருவி வகையில் தட்டுதலால் இசை எழுப்புதல்; (தொ.) percusson cap, வெடிபொருள்கள் திணிக்கப்பெற்றுச் சுத்தியலால் தாக்கும்பொழுது வெடித்துச் சிதறும் வெடிகருவிகளின் செம்பாலான மூடி.

**percutan'eous**, *a.* தோலினூடே நிகழ்கிற, தோல் வாயிலாகச் செயலாற்றப்படுகிற.

*per di'em*, (ல.) *adv.* நாள் ஒன்றிற்கு.

**perditi'on**, *n.* அழிவு; நரகம்.

**perdu'**, *a.* (படை.) மறைந்துகொள்ளுதற்குரிய புறக்காவலரணுன.

**perdue'**, *a.* மறைவான; (தொ.) lie perdue, மறைந்திரு.

**perdur'able**, *a.* நிலையான; அழியாத, என்றுமுள்ள; நீடித்து உழைக்கக்கூடிய.

*pere*, (பிர.) *n.* தந்தை; தந்தை-மகன் பொதுப்பெயரில் தந்தை சுட்டுவதற்குரிய பின்னடைக் குறிப்பு.

**pe'regrin**, *n.*, *a.*=peregrine.

**pe'regrinate**, *v.* பயணஞ் செய், சுற்றியலை.

**peregrina'tion**, *n.* சுற்றலைவு; நாடுசூழ் வருகை; முழுநிறைவான பயணச்சுற்றுலா; வெளிநாட்டுத் தங்கற் பயணம்.

**pe'regrinator**, *n.* சுற்றி அலைபவர், நாடுசூழ் வரவாளர்.

**pe'regrine**, *n.* வேட்டைப் பருந்து; *a.* வெளிநாட்டுக்குரிய, வெளிநாட்டுத் தோற்றமுடைய.

**pe'remptory**, *a.* முடிவான, மீறமுடியாத; முழுதும் நிலைநாட்டப்பட்ட; மிக இன்றியமையாத; ஆள் வகையில் பிடிவாதமான; தனித்தன்னுட்சியாளரான, வல்லாட்சியாளரான; (சட்.) கட்டளை வகையில் தீர்மானமான; கட்டளைப்பத்திர வகையில் மறுப்புக்கு இடங்கொடாத; (தொ.) peremptory mandamus, மறுத்தற்கிடமில்லாக் கட்டளை; peremptory writ, எதிர்வாதி வழக்குமன்றத்திற்குக் கட்டாயம் வர வேண்டுமென்னும் அழைப்புக் கட்டளை.

**perenn'ial**, *n.* பல்லாண்டு மரவடை, ஆண்டுக்கணக்கில் வாழவல்ல தாவரம்; *a.* என்றுமுள்ள, எப்பொழுதும் இருக்கிற; நிலைத்திருக்கிற; நெடுநாளிருக்கிற; நீர்வழி வகையில் ஆண்டின் எல்லாப் பருவங்களிலும் ஓடிக்கொண் டிருக்கிற; தாவர வகையில் பல்லாண்டு உயிர்வாழ்கிற.

**perf'ect**[1], *n.* செயல்முடிவு தெரிவிக்கும் வினைவடிவம்; *a.* முழுநிறைவான; குறைபாடற்ற; வடுவற்ற; குற்றமற்ற; பயிற்சி முதலியவற்றின் வகையில் முற்றுவிக்கப்பட்ட, முழு நிறைவாக்கப்பட்ட; சரிநிறைவான, பிசகாத; சரிநுட்பமான, துல்லியமான; கலப்பற்ற; முழுநிலையான; பண்பு முனைப் பான; (தாவ.) பூவின் நாள் இதழ்ச் சுருள்வு முழுதும் உடைய; (இசை.) தூங்கலோசை இசைவான; (இலக்.) வினைவடிவ வகையில் செயல்முடிவு குறிக்கிற.

**perfect'**[2], *v.* நிறைவுபடுத்து; முற்றுவி, முடி; முழுநிறை வாக்கு; முன்னேற்றுவி.

**perfec'tion**, *n.* முழுநிறைவு; முழுநிறைவாக்கல்; முழு வளர்ச்சி; தவறற்ற நிலை; படிநிலையில் மிகுசிறப்பு; முழு நிறைவுடைய பொருள்; முழுநிறைவுடைய ஆள்; உச்சக் குரல்; மிகச்சிறந்த பண்பு.

**perfec'tionist**, *n.* சமயத்திலும் ஒழுக்கத்திலும் நிறைவடைய முடியும் என்ற கொள்கையுடையவர்.

**perfec'tions**, *n. pl.* தேர்ச்சிக் கூறுகள், தனிச்சிறப்புக் கூறு கள், தகுதிக் கூறுகள்.

**perferv'id**, *a.* ஆர்வமுள்ள; வெப்பமான.

**perfid'ious**, *a.* நம்பிக்கைத் துரோகமான; மெய்ம்மை காட் டாத.

**perf'idy**, *n.* துரோகம், நயவஞ்சகம், நம்பிக்கை மோசம்.

**perfol'iate**, *a.* (தாவ.) காம்பு இலையினூடே செல்வது போன்ற தோற்றமுடைய.

**perf'orate**, *v.* துளைத்துச்செல்; துளை; தாளில் முத்திரை களுக்கான சூழ்வரிசைத் துளைகளிடு; பொத்தல் இடு; வெட்டி வழிசெய்; ஊடுசெல்.

**perfora'tion**, *n.* துளையிடுதல்; துளை ஆக்கம்; புடை விடுதல்; துளைகளிட்ட நிலை; ஊடுபுழை; கிழிப்பதற்கு வாய்ப்பான துளைவரிசை.

**perf'orator**, *n.* துளைப்பவர்; துளைப்புக்கருவி; துளைப் புறுப்பு.

**perforce'**, *n.* இன்றியமையாச் சிறப்பு; *adv.* இன்றியமை யாமையை முன்னிட்டு; கட்டாயத்தால்.

**perform'**, *v.* இயற்று; செயற்படுத்து, செய்துமுடி; வினை யாற்று; ஆற்று, புரி, நடத்து; கையாளு; பொதுநிகழ்ச்சி விளையாட்டு ஆகியவற்றை நடத்து; கட்டளை-சூளுரை-செயல் முதலியவற்றை நிறைவேற்று; நாடகம் நடி; பாடல் பாடு; சூழ்ச்சி இழை; செயற்பொறிகள் காட்டு; பயிற்று விக்கப்பட்ட விலங்குகள் வகையில் செய்துகாட்டு.

**perform'able**, *a.* செய்யப்படத்தக்க; நடைமுறையில் கூடிய தான, சாத்தியமான.

**perform'ance**, *n.* செயல் நிறைவேற்றம்; செயல்காட்சி; செய்தல், செய்துமுடித்தல்; செயற்கரிய செயல்; நாடகம் அல்லது பொதுக்காட்சி நிகழ்ச்சி.

**perform'er**, *n.* செய்பவர், வினையாற்றுபவர்; செயல்நிறை வேற்றுபவர்; கடமை நிறைவேற்றுபவர்; சட்ட நடவடிக்கை நிறைவேற்றுபவர்; வினைமுறையில் பங்கெடுப்பவர்; விழா முறையில் பங்கெடுப்பவர்; வித்தைக்காரர்; செயற் காட்சி யாளர்.

**perf'ume**[1], *n.* நறுமணம், எரியும் பொருளினின்று எழும் நன்மணம்; இன்மணம்; மணம்; நறுமணத்தைலம்.

**perfume'**[2], *v.* நறுமணமூட்டு; நறுமணம் தோய்வி; நன் மணம் நிரப்பு; இன்மணங் கல.

**perfum'er**, *n.* நறுமணப்பொருள்கள் செய்பவர்; நறுமணப் பொருள் வணிகர்.

**perf'umery**, *n.* விரை; விரைபொருட்கலை.

**perfunc'tory**, *a.* கடமைக்காகச் செய்யப்படுகிற, மேலோட்ட மான அக்கறைமட்டுமேயுடைய; ஆழ்கவனமற்ற; மனந் தோயாத; மெய்ப்புக்கான.

**perfuse'**, *v.* நீர்முதலியன தெளி, தூவு; ஒளி முதலியவற்றின் வகையில் மூடு, நன்கு பரவு; சூழ்ந்துபரவு, கவி; உட்கவி வுற்றுப் பரவு; நீரை உள்ததும்பவிடு, நீர்மேலீடாக அலம்ப விடு.

**pergamen'eous**, *a.* பண்படுத்தப்பட்ட வரையுந்தோலாலான; எழுதுதற்காகப் பதப்படுத்தப்பட்ட ஆட்டுத்தோல் போன்ற.

**perga'na**, (பெர்.) *n.* = pergunnah.

**perg'ola**, *n.* கொடிவீடு, தோட்டப் பூம்பந்தர்; செடிகொடி கள் கவிந்துள்ள நடைபாதை, கொடிகள் படரவிட்ட கழித் தட்டிகளால் வளைக்கப்பட்ட இடைவழி.

**pergunn'ah**, (பெர்.) *n.* ஊர்களை உள்ளடக்கிய ஊர் வட்டகை, பிடாகை.

**perhaps'**, *adv.* ஒருவேளை.

**per'i**, *n.* பாரசீகப் பழங்கதை மரபில் தேவதை, அணங்கு; அழகி.

**peria'gua**, *n.* = piragua.

**pe'rianth**, *n.* பூவின் புறவட்டம், அல்லிவட்டமும் புல்லிவட்ட மும் வேறு பிரிக்கப்பட முடியாத நிலையிலுள்ள முழுவட்டம்.

**pe'riapt**, *n.* தாயத்து, மந்திரக்கவசம்.

**pericardit'is**, *n.* குலையுறை அழற்சி, நெஞ்சுப்பையை மூடிக் கொண்டிருக்கும் சவ்வின் வீக்கம்.

**pericard'ium**, *n.* குலையுறை, நெஞ்சுப்பையை மூடிக்கொண் டிருக்கும் சவ்வு.

**pe'ricarp**, *n.* விதையுறை, நெற்று.

**perichon'drium**, *n.* கணுநீங்கலாகக் குருத்தெலும்பு முழு வதும் மூடியிருக்கும் சவ்வு.

**pe'riclase**, *n.* வெசுவியஸ் (Vesuvius) எரிமலையிற் காணப் படும் வெள்ளிமமும் இரும்புத்துருவுங் கலந்த கனிப்பொருள் வகை.

**periclin'al**, *a.* (மண்.) மையத்திலிருந்து எல்லாத் திசை களிலும் சரிந்திருக்கிற.

**peric'ope**, *n.* சிறுபகுதி; பத்தி; பொதுவழிபாடுகளில் படிக் கப்படும் விவிலிய ஏட்டுச் சிறுபகுதி.

**pericran'ium**, *n.* மண்டையோட்டை மூடிக்கொண்டுள்ள சவ்வு; (பே-வ.) மண்டையோடு; மூளை; அறிவாற்றல்.

**pe'ridot**, *n.* பச்சை மணிக்கல் வகை.

**pe'rigee**, *n.* நிலவுலகத்துக்கு மிக அடுத்த கோளின் இடம்; நில உலகத்துக்கு மிக அணித்தான திங்களுலகின் இடம்.

**pe'rigynous**, *a.* கருவகம் அல்லது சூலகம் சுற்றிலும் பூவிழை களையுடைய.

**perihel'ion**, *n.* ஞாயிற்றணிமை நிலை, கோள் சுற்றிவரும் பாதையில் கதிரவனுக்கு அண்மையிலுள்ள இடம், கோள் நெறியில் கதிரவனை அணுகுமிடம்.

**pe'ril**, *n.* இடர், துன்பநெருக்கடி; *v.* இடருக்குள்ளாக்கு, இன்னலுக்குட்படுத்து; (தொ.) in peril of one's life, உயிரை இழக்கும் இடர்நிலையில்; you do it at your peril, உன் பொறுப்பிற் செய்.

**perim'eter**, *n.* சுற்றுவட்ட அளவு; புற எல்லை; வட்ட மான உருவின் சுற்றுவரை; வட்டச்சுற்றுவரை நீளம்; சுற்றுக்கட்ட நீளம்; காட்சிப்பரப்பை அளப்பதற்கான கருவி.

**perine'um**, *n.* (உள்.) உடலில் விதைப்பைக்கும் எருவாய்க் கும் இடைப்பட்ட பகுதி; எருவாய்க்கும் பெண் உறுப்புக் கும் இடைப்பட்ட உடற்பகுதி.

**per'iod**, *n.* ஊழி, வானியற்பொருத்தங்கள் திரும்பத்திரும்ப நிகழ்வதால் குறிக்கப்படும் காலக்கூறு; கோள்வட்டம், வானக்கோள் சுழற்சியின் காலம்; பருவம், நோய் நீட்டிக்குங் காலம்; காலவட்டம், வரலாறு-வாழ்க்கை முதலியவற்றின்

பகுதி; காலக்கூறு, காலப்பகுதி; முழு வாக்கியம்; வாக்கியத்தின் கடைசியிலுள்ள நிறுத்தம், வாசக முழு நிறுத்தம்; (கண.) முற்றுப்புள்ளிக்குறி; பதின்பகுப்புத் தனிக்குறிப்புப் பகுதி; குறிப்பிட்ட காலப்பகுதி; *a.* குறிப்பிட்ட காலப்பகுதி சார்ந்த; இறந்தகாலத்திற்குரிய பண்புடைய; (தொ.) put a period to, முடி, முடிவிற்குக் கொண்டுவா.

**period'ic,** *a.* வான்கோள்களின் சுழற்சியோட்டஞ் சார்ந்த; குறிப்பிட்ட இடைவெளிகளுடன் திரும்பத்திரும்ப நிகழ்கிற; இடையிடை நிகழ்கிற; ஒழுங்கான; கணிப்பு ஒழுங்குவகைகளாகச் செயற்படுகிற; ஒழுங்காய் எழுந்தெழுந்தமிழ்கிற; (தொ.) periodic table, ஒத்த வேதிப்பண்புகள் ஒரே ஒழுங்காகத் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்ட தொகுதிகளிற் சேருகின்ற தனிமங்களின் அணு எண்படியான பட்டியல்.

**period'ical,** *n.* பத்திரிகை, பருவ இதழ்; *a.* வான்கோள்களின் சுழற்சி வட்டஞ் சார்ந்த; குறிப்பிட்ட இடைவெளிகளுடன் திரும்பத் திரும்ப நிகழ்கிற; ஒழுங்கான, கணிப்பு-ஒழுங்குவகைகளிற் செயற்படுகிற.

**periodi'city,** *n.* பருவ நிகழ்வு; இடையீட்டொழுங்கு; விரைவதிர்வு.

**per'iods,** *n. pl.* மாதவிடாய்.

**perios'teum,** *n.* எலும்புகளை மூடியுள்ள சவ்வு.

**peripatet'ic**[1], *n.* (பே-வ.) சாத்து வணிகர்; *a.* செயற் காரணமாக அல்லது தொழிற் காரணமாக இங்குமங்கும் அலைந்து திரிகிற; அலைந்துதிரிகிற; திரிந்து வாணிகஞ் செய்கிற.

**Peripatet'ic**[2], *n.* பண்டைக்கிரேக்க அறிஞர் அரிஸ்டாட்டிலைப் பின்பற்றுபவர்; *a.* அரிஸ்டாட்டிலைச் சார்ந்த; அரிஸ்டாட்டிலைப் பின்பற்றுகிற.

**peripetei'a, peripeti'a,** *n.* வாழ்க்கையில் திடீர்ச்செல்வநிலை மாறுதல்; நாடகத்தில் திடீர் செல்வநிலை மாற்றம்.

**periph'ery,** *n.* வட்டப்பரப்பின் சுற்றுக்கோடு; புற எல்லை; புறப்பரப்பு.

**periph'rasis,** *n.* சுற்றிவளைத்துப் பேசுதல், மிகைபடக் கூறல்; சுற்றி வளைத்த சொற்றொடர்.

**perip'teral,** *a.* கோயில் வகையில் ஒற்றை வரிசைத் தூண்களாற் சூழப்பட்ட.

**perique',** *n.* மிகச்சிறந்த கருநிறப் புகையிலை வகை.

**pe'riscope,** *n.* நீர்மூழ்கிக் கப்பலின் முகட்டுமேற்பரப்புக் காட்சிக்கருவி; பாதுகாப்புக் குழியின் புறக்காட்சிக் கருவி; நிழற்படக் கருவியின் மையச்சில்லு.

**periscop'ic,** *a.* காட்சிநேர்வரை திறம்பியைக் காண உதவுகிற.

**pe'rish,** *v.* அழி; இறந்துபோ; மறைவுறு; உயிரிழ; மாள்வுறு; அழிவுக்கு ஆளாகு; வீழ்ச்சியுறு; ஆற்றலிழக்கச் செய்.

**pe'rishable,** *a.* அழிந்துபோகிற; விரைவில் அழுகிக் கெட்டு விடுகிற.

**pe'rishables,** *n. pl.* அழிபொருள்கள், காய்கறி-பழங்கள் போன்று விரைந்தழியக்கூடியவை.

**pe'risperm,** *n.* விதைகள் சிலவற்றில் முளைப்பையின் புறத்தேயுள்ள வெண் கருத்திரள்.

**pe'rispome, perispom'enon,** *n.* (இலக்.) கிரேக்க மொழியில் கடைசி அசையில் ஏற்ற இறக்க அழுத்தங்கொண்ட சொல்; *pl.* pe'rispomena.

**perissodac'tylate,** *a.* (வில.) ஒவ்வொரு காலிலும் ஒற்றைப் படை எண்ணுடைய விரல்கள் கொண்ட.

**peris'talith,** *n.* (தொல்.) புதைமேட்டைச் சுற்றிச் செங்குத்தாக நிற்கும் குத்துக்கல் வட்டம்.

**peristal'sis,** *n.* (உட.) உணவுசாரம் எளிதிற் செல்லுவதற்கிசைவான உணர்வற்ற வட்டாகாரமான தன்னியக்கத் தசைச்சுருக்க அலைகள்.

**peristeron'ic,** *a.* மாடப்புறுக்களுக்கு உரிய.

**pe'ristome,** *n.* (தாவ.) பாசிகளில் விதையுறைகளின் வாயிலுள்ள பல்லமைவு; (வில.) முதுகெலும்பு விலங்குகளின் வாயைச் சுற்றியுள்ள பகுதி.

**pe'ristyle,** *n.* சுற்றுத்தூண் வரிசை, கோயில்-மடம்-மண்டபம் முதலியவற்றைச் சுற்றிலும் உள்ள தூண் வரிசை; சுற்றுமண்டபம், கோவில்-மடம்-மண்டபம் முதலியவற்றைச் சுற்றிலுமுள்ள தூண்வரிசை நிறைந்த இடம்.

**peritone'um, peritonae'um,** *n.* (உள்.) வபை, அடிவயிற்று உட்பகுதியைச் சூழ்ந்துள்ள நீரடங்கிய இரட்டைச் சவ்வுப் பை.

**perityphli'tis,** *n.* குடல்வால் அழற்சி.

**pe'riwig,** *n.* பொய்மயிர்க் குல்லாய்.

**pe'riwinkle**[1], *n.* நீலமலர்ப் பசுங்கொடி வகை.

**pe'riwinkle**[2], *n.* உணவுக்குப் பெரிதும் பயன்படும் நத்தை வகை.

**perj'ure,** *v.* பொய்யாகச் சத்தியஞ் செய்.

**per'jured,** *a.* பொய்ச்சத்தியஞ் செய்கிற.

**perjur'ious,** *a.* வாயல் வாய்மைபற்றிய; பொய்க்கரிக் குற்றம் உள்ளிட்ட.

**perj'ury,** *n.* பொய்ச்சத்தியம்; பொய்க்கரி கூறுதல்; சூளுரை மீறுதல்.

**perk,** *a.* துடுக்கான, தன்முனைப்பான; செம்மாப்புடைய; *v.* சட்டென்று தலைநிமிர்; திடுமென நீட்டு; ஆணவமாக முந்திமேற்செல்; விறைப்புடன் நடந்துகொள், இழந்த ஊக்கம் பெறு, ஊக்கத்துடன் எழு.

**perk'y,** *a.* துடுக்கான, தன்முனைப்பான.

**perl'ite,** *n.* மெருகேறிய உருள்மணிகள் வடிவிலுள்ள பளிங்குப் பாறைவகை.

**perm,** *n.* (பே-வ.) தலைமயிரில் உண்டாக்கப்படும் செயற்கை அலை நெளிவு.

**perm'alloy,** *n.* நிக்கலும் இரும்புஞ் சேர்ந்த காந்தக் கூருணர்வுடைய கலவை.

**perm'anence,** *n.* மன்னுகை, நிலைத்த தன்மை, நிலைபேறு; நீடித்திருக்கும் நிலை.

**perm'anency,** *n.* நிலைபேறு; பொன்றுப் பொருள்.

**perm'anent,** *a.* நிலையான, நிலைபேறுன, மன்னிய; (தொ.) permanent magnet, நிலைக்காந்தம்; permanent set, பயன்படுத்தப்படுவதனால் உண்டாகுஞ் சேதத்துக்கு உட்பட்ட பிறகு உலோகம் அடையும்நிலை.

**permang'anate,** *n.* (வேதி.) பரமங்கனிக்காடியின் (permanganic acid) உப்பு; (தொ.) permanganate of potash, potassium permanganate, கரைசலில் தொற்று நீக்கியாகப் பயன்படுத்தப்படும் பரமங்கனிகக் காடியின் சாம்பர உப்பு.

**permanga'nic acid,** *n.* (வேதி.) பரமங்கனிகக் காடி.

**permeabil'ity,** *n.* ஊடுருவ இடந்தரும் இயல்பு; ஊறி உட்புக இடந்தரும் நிலை; (தொ.) magnetic permeability, காந்தத்தாக்குக்கும் இளக்கி அடர்த்திக்கும் உள்ள தகவு.

**per'meate,** *v.* உட்புகு, ஊடுருவு; ஊடுருவிப்படர்; புகுந்து பரவு; தெவிட்டுநிலை எய்தும்வரையிற் கரைவுறு; எங்கும் பரவிக் கலப்புறு.

***per men'sem,*** (ல.) *adv.* திங்களொன்றிற்கு, மாதத்திற்கு.

**Perm'ian,** *a.* (மண்.) தொல்லுயிர் ஊழியின் கடைசி மேலடுக்குப் பிரிவு சார்ந்த.

***per mill'e,*** (ல.) *adv.* ஆயிரத்திற்கு, ஒவ்வோர் ஆயிரத்திற்கும்.

**permiss'ible,** *a.* ஏற்கத்தக்க, இசைவு வழங்கத்தக்க, அனுமதிக்கக்கூடிய.

**permi'ssion,** *n.* இசைவு, அனுமதி.

**permiss'ive,** *a.* இசைவு தருகிற; கட்டாய வற்புறுத்தலின்றி உரிமை வழங்கப்படுகிற, தடையில்லாத; (தொ.) permissive legislation, கட்டாய வற்புறுத்தலில்லாமலேயே அதிகாரங்களை வழங்குஞ் சட்டம்.

**perm'it**[1], *n.* இசைவாணைச்சீட்டு, சுங்கம் விதிக்கத்தக்க சரக்குகள் முதலியவற்றை இறக்கவோ எடுத்துச்செல்லவோ இசைவளிக்கும் எழுத்தாணை, அனுமதிச்சீட்டு; இசைவு, அனுமதி.

**permit'**[2], *v.* அனுமதி கொடு, இசைவளி; ஏற்றுக்கொள்; இடங்கொடு.

**permuta'tion**, *n.* (கண.) தொகுதியின் உறுப்பு வரிசை மாற்றம்; வரிசை மாற்ற ஒழுங்கமைவு, வரிசைமாற்ற வகைகளில் ஒன்று.

**permute'**, *v.* முறைமாற்று, வரிசைமாற்று.

**pern**, *n.* தேனீக்கள்-குளவிகள் ஆகியவற்றின் முட்டைப்புழுக்களைத் தின்னும் பறவை வகை.

**perni'cious**, *a.* பொல்லாத, பெருங்கேடு பயக்கவல்ல, அழிவுண்டாக்கக்கூடிய, சாவுக்கேதுவான; (தொ.) pernicious anaemia, சாவினை விளைக்குங் குருதிச் சோகை வகை.

**pernick'ety**, *a.* (பே-வ.) சிறுகுற்றமும் பொறாத; இடர்ப்பாடான; விழிப்பாகக் கையாளவேண்டியிருக்கிற, நுட்பக்கவனந் தேவைப்படுகிற.

**pernocta'tion**, *n.* இரவினைக் கழித்தல்; சமயத்துறையில் இரவு முழுதுங் கண்விழித்தல்.

**pe'rorate**, *v.* சொற்பொழிவில் தொகுத்து முடிவுரை கூறு; விரிவாகப் பேசு.

**perora'tion**, *n.* சொற்பொழிவின் முடிவுரைப்பகுதி; நாத்திறம் படைத்த சொற்பொழிவு.

**perox'ide**, *n.* (வேதி.) பர உயிரகை; (பே-வ.) நீரகப் பர உயிரகை, நச்சரியாகவும் மயிரை வெளுப்பதற்கும் பயன்படுத்தப்படும் பிசுபிசுப்பான நிறமற்ற நீர்மம்; *v.* நீரகப் பர உயிரகையைக்கொண்டு மயிரை வெளுப்பாக்கு; (தொ.) peroxide of hydrogen, நீரகப் பர உயிரகை.

**perp'end**[1], *n.* சுவரின் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்கு அதனூடே செல்லுங் கல்.

**perpend'**[2], *v.* ஆழ்ந்தாராய்.

**perpendic'ular**, *n.* குத்துக்கோட்டினை அறுதி செய்வதற்கான கருவி; செங்குத்துக்கோடு; *a.* தொடுவானத் தளத்திற்குச் செங்கோணத்திலுள்ள; செங்குத்தான; நிலைக்குத்தான, சாய்வற்ற; நிற்கிற நிலையிலுள்ள; (வடி.) குறிப்பிட்ட கோடு-தளம்-அல்லது பரப்பிற்குச் செங்கோணத்திலுள்ள; (தொ.) perpendicular style, இங்கிலாந்தில் 1350 முதல் 1600 வரை வழங்கிவந்த திருக்கோயில் கட்டிடக் கலைப்பாணி.

**perpendic'ularity**, *n.* செங்குத்து நிலை.

**perpendic'ulars**, *n. pl.* கப்பல் நீளத்தை அறுதிசெய்வதற்குதவும் வகையில் அதன் நீர்க்கோட்டின் இருமுனைகளிலிருந்தும் மேல்நோக்கி எழும் செங்குத்துக்கோடுகள்.

**perp'etrate**, *v.* குற்றஞ் செய்; செய்யுள் வகையில் இயற்று; சிலேடை வகையில் அமை.

**perpet'ual**, *a.* நிலையான, என்றுமுள்ள; மன்னும் நிலையதான, தொடர்ச்சியான; (பே-வ.) அடிக்கடி நிகழ்வதான; (தொ.) perpetual motion, புறத்திலிருந்து நிறுத்தும் ஆற்றல் பெறுவிடில் முடிவில்லாமற் செயற்படத்தக்க இயக்கம்.

**perpet'uance**, *n.* = perpetuation.

**perpet'uate**, *v.* நிலைபேறுடையதாக்கு; என்றும் இயங்கச் செய்; நீடித்திருக்கச்செய்; மறக்கப்படாமற் பேணு.

**perpetua'tion**, *n.* நிலைபேறுக்கம்; முடிவில் தொடர்ச்சி; என்றென்றும் காத்துப்பேணுகை; நெடுநீள்தொடர்ச்சி; நெடுநீள் காலம் பேணுகை.

**perpetu'ity**, *n.* நிலைப்பாடு, நிலைபேறு, நிலைத்திருக்குந் தன்மை; எல்லையில் காலம்; வரையறுக்கப்படாக் கால எல்லை; என்றுமுள்ளது; நிலையான உடைமை; நிலையான பதவி; நிலையான ஆண்டுப்படி; நிலையான ஆண்டுப்படிக்குரிய முலதனத் தொகை; (தொ.) for perpetuity, in perpetuity, to perpetuity, என்றென்றைக்கும்.

**perplex'**, *v.* குழப்பமடைவி, திகைப்பூட்டு; சிக்கலாக்கு; சிக்கவை, பின்னிக்கொள்.

**perplex'ity**, *n.* தடுமாற்றம், மனக்குழப்பம்; இரண்டக நிலை, தடுமாற்றம் உண்டுபண்ணுவது; சிக்கலான நிலை.

***per procuration'em***, (ல.) *adv.* பகரநிலையாக; கையொப்பமிடுபவர் செயல்வினைவாக.

**perq'uisite**, *n.* இடை ஆதாயம், தற்செயலாகக் கிடைத்த மிகைப்பேறு; சுதந்திரம்; பணியாளர் சேதாரப்பொருளுரிமை; வாடிக்கைக் கையுறை; (சட்.) முறையான வருமானத்துக்கு மேற்பட வரும் பண்ணை முதல்வர் ஆதாயம்.

**pe'rron**, *n.* வாயிற்படி மேடை.

**pe'rry**, *n.* பேரிப்பழத் தேறல் வகை.

***per sal'tum***, (ல.) *adv.* இடையீடின்றி நேரடியாக, உடனடியாக.

**pers'ecute**, *v.* வாட்டு, கொள்கைவேறுபாடு காரணமாகத் துன்புறுத்து; அடக்குமுறை அட்டூழியங்களுக்கு ஆளாக்கு, இடர்ப்படுத்து, முறைகடந்து வருத்து; தொந்தரவு கொடு.

**persecu'tion**, *n.* அடக்குமுறை அட்டூழியம், விடாத்துயரளிப்பு; (தொ.) persecution mania, அடக்குமுறைப் பித்தம்; தாம் இடைவிடாது துன்புறுத்தப்படுவதாக வெறிமயக்குறுதல்.

**pers'ecutor**, *n.* வருத்துவோர், ஆரஞர் தருவோர்.

**persever'ance**, *n.* விடாமுயற்சி, ஆள்வினையுடைமை; சமயத்துறையில் திருவருளுக்கு ஆட்பட்ட நிலையில் இருந்துவருதல்.

**persevere'**, *v.* விடாமுயற்சியுடன் செயலாற்று, உருற்று.

**Per'sian**, *n.* பெர்சிய நாட்டவர்; பெர்சியமொழி; *a.* பெர்சிய நாடு சார்ந்த; (தொ.) Persian carpet, மென்மையான சமுக்காள வகை; Persian cat, பட்டுப்போன்ற நீண்ட மயிரும் குச்சுவாலும் உடைய பூனைவகை; Persian powder, பூச்சிகளைக் கொல்லுந் தூள் வகை; Persian wheel, கீழேசெல்லும் நீரினால் இயக்கப்படும் தண்ணீர் இறைப்பதற்கான பெரிய சக்கரம்.

**persiennes'**, *n. pl.* எளிய கிடைச்சட்டங்களுடன் கூடிய வெளிப்புறப் பலகணித் திரைகள்.

**pers'iflage**, *n.* ஏளனப்பேச்சு, இலேசான வசவு.

**persimm'on**, *n.* அமெரிக்க வகை ஈச்சம்பழம்.

**persist'**, *v.* விடாது வற்புறுத்து, விடாப்பிடியாயிரு; விடாது தொடர், தொடர்ந்து வாழ்ந்திரு, கடந்துவாழ், எஞ்சியிரு.

**persis'tence, persis'tency**, *n.* விடாப்பிடியாக இருக்கும் இயல்பு; தொடர்ந்து நீடிப்பு; பிடிவாதம்.

**persis'tent**, *a.* உறுதியாக நிற்கிற, பிடிவாதமான, விடாப்பிடியான; எதிர்ப்பைக் கடந்து முன்னேறுகிற; (வில., தாவ.) கொம்புகள்-மயிர்-இலைகள் முதலியவற்றின் வகையில் நிலையான.

**pers'on**, *n.* தனியொரு மனிதர், ஆள்; உயிருள்ள மனித உடம்பு; (சட்.) ஒப்புக்கொள்ளப்பட்ட மனித உரிமைகளும் கடமைகளும் உடையவர்; ஒப்புக்கொள்ளப்பட்ட உரிமைகளும் கடமைகளும் உடைய கூட்டவை; நாடகம் அல்லது கதையில் வரும் உறுப்பு; (இலக்.) தன்மை-முன்னிலை-படர்க்கை என்ற மூவிடங்களில் ஒன்று; (வில.) கூட்டிணை உயிர்களில் ஒன்று; (தொ.) in person, நேரில், தாமே; the three persons of the Godhead, திருத்தந்தை-திருச்சேய்-தூய ஆவி என்ற இறைமையின் மூன்று மூர்த்தங்கள்.

***person'a***, (ல.) *n.* ஆள், தனியொரு மனிதர்; (தொ.) *in prop'ria person'a*, நேரில், தாமே; *person'a grat'a*, வேண்டியவர், பிடித்தமானவர்; *person'a non grat'a*, வேண்டாதவர், விரும்பப்படாதவர்.

**pers'onable**, *a.* நல்தோற்றமுடைய, வனப்புவாய்ந்த, அழகுவாய்ந்த.

**pers'onage**, *n.* பொருளவர், உயர்நிலையினர்; நாடக உறுப்பினர்; கதை உறுப்பினர்.

pers'onal, *a.* தனிப்பட்ட, தனி மனிதருக்குரிய, பொதுவல்லாத; ஒருவர் தாமே செய்த, ஒருவர் நேரில் ஆற்றிய; தனியொருவரை நோக்கிய, தனியொருவரைக் குறித்த; சொந்தக் கருத்துக்களைத் தெரிவிக்கிற, சொந்தக் கருத்துக்களைத் தெரிவிக்கும் பாங்குள்ள; (இலக்.) தன்மை-முன்னிலை-படர்க்கை என்ற மூவிடங்களில் ஒன்றிற்குரிய; மூவிடங்களில் ஒன்றினைக் குறிப்பிடுகிற; (தொ.) personal column, செய்தித்தாளில் தனியொருவர்க்குரிய சிறு விளம்பர ஒதுக்கீட்டுப் பத்தி; personal equation, கருவிகாட்டும் கணக்கெடுப்பவர் அக்கணக்கினைச் சரியாக எடுக்கும் பாங்கற்றவராயிருப்பது காரணமாக அக்கணக்கில் செய்யவேண்டியுள்ள திருத்தம்; personal estate, personal property, (சட்.) தட்டுமுட்டுப்பொருள்கள், இயங்குடைமை; ஒருவரது கால்வழியினரை அடையும் நிலமல்லாத மற்றெல்லா உடைமைகளும் நிலத்திலுள்ள உரிமைகளும்; personal identity, நிலை மாறாத் தனிமையுணர்ச்சி; personal rights, வாழுயிர் உரிமைகள்; personal security, சொந்தப் பிணையம்; personal service, முகவரியர் கையிலேயே சேர்ப்பிப்பது; personal transaction, சொந்தக்கணக்கு; சொந்த முயற்சிச் செயல்.

personal'ities, *n. pl.* குறிப்பிட்ட ஒருவரைப்பற்றிய கருத்துரைகள்.

personal'ity, *n.* தனிமனிதர் நிலை; தனியாள்; தனியாள் மெய்ம்மைநிலை; தனிமனித வாழ்வு; தனித்தன்மை; தனி மனிதர் சிறப்பியல்பு; ஆள்; முக்கியமான ஆள்; தனி மனிதர் செய்திச்சுட்டு; தனிமனிதப் பண்பியல்புகளின் மொத்தத்தொகுதி; தனி மனிதரிடம் உள்ள வேறுபட்ட செயற்பண்பு நிலைகளில் ஒன்று; (தொ) multiple personality, (உள.) ஒரே மனிதரிடம் இரண்டு அல்லது பல வெவ்வேறான முரண்பட்ட இயல்புகள் இருப்பதாகத் தோன்றும் நிலை.

pers'onalize, *v.* = personify.

pers'onally, *adv.* நேராக; தாமே; தம்மைப்பற்றியவரை.

pers'onalty, *n.* (சட்.) செயற்பொறுப்பினரைச் சாரும் சொத்துக்கள்.

pers'onate[1], *a.* (தாவ.) இதழுடைய அல்லி வட்டம் வகையில் கீழிதழ் மேல்நோக்கிப் பருத்திருப்பதனால் மூடப்பட்ட.

pers'onate[2], *v.* நாடக உறுப்பின் பாகமேற்று நடி; போலச் செய்; ஆள்மாறாட்டஞ் செய்.

personifica'tion, *n.* தற்குறிப்பேற்றம், ஆளுருவாக்குதல், பண்பைப் பண்பியாக உருவகஞ் செய்தல்; கருத்தளவான ஒன்றன் எடுத்துக்காட்டாகக் கருதப்படுபவர்; ஓர் இயல்பின் உருவகம் எனக் கருதப்படும் பொருள்.

person'ify, *v.* ஆளுருவாக்கு; பண்பைப் பண்பியாக உருவகஞ்செய்; எடுத்துக்காட்டாயிரு; இயல்பினைக்கொண்டிரு.

personnel', *n.* அலுவலகப் பணியாளர், ஊழிய ஆளினர்.

perspec'tive, *n.* வரைபடத்தில் தொலையணிமைக் காட்சி அமைவு; தொலையணிமைக் காட்சிப்படம்; பொருள்களுக்கிடையே படத்திற் காணப்படுந் தொலைவுத்தோற்றம்; உள்ளத்தில் வாதப்பொருளில் முதல்-சினைபற்றிய தகவு நோக்கு; தொலைக்காட்சி; பரப்புத்தோற்றம்; முழு உளக் காட்சி; பரப்பு மனக்காட்சி; *a.* இயலுருத்தோற்றம் பற்றிய; தொலை அணிமைத் தோற்றத்துக்கிணங்கிய; (தொ.) in perspective, இயலுருத்தோற்றக் காட்சிப்படம் வரையும் விதிகளுக்கிணங்கச் சரியான தொலை அணிமைத் தகவுப்படி வரையப்பட்ட; linear perspective, பொருள்களின் உருவம்-அளவு-நிலை ஆகியவை சார்ந்த படத்தின் புற இயலுருத் தோற்ற அமைவு; perspective plane, இயலுருத்தோற்றத் தளம், இயலுருத்தோற்றமாகக் காட்டவேண்டிய பொருள்களின் படம் வரைதற்குரிய பரப்பு.

pers'pex, *n.* விமானப் பலகணித் திரைக்குப் பயன்படுத்தப்படும் கண்ணாடியினும் மிக இலேசான விறைப்பான ஒளி ஊடுருவும் உடையாத குழைமப்பொருள்.

perspica'cious, *a.* கூர்த்த மதியுள்ள, நுண்ணறிவுடைய.

perspica'city, *n.* கூர்த்தமதி, நுண்ணறிவு.

perspicu'ity, *n.* தெளிவு.

perspic'uous, *a.* எளிதில் விளங்குகிற, தெளிவாகச் சொல்லப்பட்ட; ஆள்வகையில் தெளிவாக எடுத்துரைக்கிற.

perspir'able, *a.* வியர்வை ஊடுசெல்ல விடுகிற; வியர்வையுடன் வெளியேற்றப்படக்கூடிய.

perspira'tion, *n.* வியர்த்தல்; வியர்வை.

perspire', *v.* வியர்த்தலுறு, வியர்வையரும்பு.

persuade', *v.* அறிவுறுத்தி இணங்க வை; மெய்யெனக்காட்டி நம்பவை, மெய்ப்பித்துக்காட்டு.

persuad'er, *n.* கருத்தை ஒப்புக்கொள்ளச் செய்பவர்; இணங்க வைப்பது.

persuas'ible, *a.* நயந்து சொல்லி நம்பவைக்கத் தக்க, இணங்குவிக்கத் தக்க, சொல்லித் திருத்தக்கூடிய.

persua'sion, *n.* இணங்குவித்தல்; மெய்யெனக்காட்டி நம்பவைத்தல்; உறுதியான கொள்கைப் பற்றூர்ந்த நம்பிக்கை; சமயக்கோட்பாடு; சமயக்கோட்பாட்டுப் பிரிவினர்; இனம், வகை, வகுப்பு.

persuas'ive, *n.* தூண்டுதல்; செயல்நோக்கம்; *a.* மெய்ப்பிக்கவல்ல; தூண்டி இயக்கக்கூடிய; கவர்ச்சியுடைய.

pert, *a.* அடக்கமற்ற, துடுக்கான.

pertain', *v.* உரியதாயிரு; சார்ந்ததாயிரு; பொருத்தமாயிரு; தொடர்புடையதாயிரு, சார்புபெற்றிரு.

pertina'cious, *a.* பிடிவாதமான, விடாப்பிடியுடைய, இணங்காத.

pertina'city, *n.* இணங்காமை, பிடிவாதம், முரட்டுத்தனம், விடாப்பற்று.

per'tinence, per'tinency, *n.* பொருத்தம், தொடர்புள்ளதாயிருக்கும் நிலை.

pert'inent, *a.* சார்புடைய, ஏற்புடைய, தகுந்த, பொருத்தமான.

pert'inents, *n. pl.* சார்ந்தவை, சார்புரிமைகள், உடைமைப் பொருள்கள்.

perturb', *v.* கலக்கு, மனத்தைக் குழப்பு.

perturba'tion, *n.* கலக்குதல்; கலங்கிய நிலை; மனக்கலக்கம்; ஒழுங்கின்மை; கலக்குவது; (வான்.) வானக்கோளின் முறையான இயக்கத்தில் மூன்றுவது பொருளாற்றலால் உண்டாகும் சிறு தடுமாற்றம்; வானக்கோளின் சுற்றியக்கத்தில் மையக்கோளத்தின் கோளம் மீறிய உருவமைதியினுல் ஏற்படுஞ் சிறிய உலைவு.

peruke', *n.* பொய்ம்மயிர்த் தொப்பி.

peru'sal, *n.* தேர்ந்தாய்வு, நுண்ணாய்வு; படித்தல், பார்வையிடல்.

peruse', *v.* கவனமாகப் படி, நுண்ணாய்வுசெய்.

Peru'vian, *n.* தென் அமெரிக்காவிலுள்ள பெரு (Peru) நாட்டினர்; *a.* பெரு நாடு சார்ந்த; (தொ.) Peruvian bark, கொய்னா மருந்துதரும் சிங்கோனா மரப்பட்டை.

pervade', *v.* ஊடுருவிப்பரவு, பரந்து தோய்வுறு; ஊடுருவி நிரப்பு; கரைந்து தெவிட்டுநிலை எய்துவி.

pervas'ive, *a.* படர்ந்து பரவுகிற, ஊடுபரவும் பாங்குள்ள, ஊடுருவி நிரம்பும் ஆற்றலுடைய.

perverse', *a.* விடாது பிழைசெய்கிற; வேண்டுமென்றே தவறுசெய்கிற, விபரீதமான; தேவைக்கு முரணான; கட்டுமீறிய; முறைதிறம்பிய; சொற்கேளாத; சிடுசிடுப்பான; குணக்கேடுடைய; நெறிகோணிய, தவறான போக்குடைய; கொடிய; ஏறுமாறான; தீர்ப்பு வகையில் சான்றுகளுக்கு முரண்பட்ட, நடுவர் காட்டிய நெறிக்கு மாறான.

perver'sion, *n.* நெறிபிறழ்வு; பிறழ்வுநிலை; நடைமுரண்பாட்டு விளைவு; உருத்திரிபு; ஏறுமாறான போக்கு; இயல் முரணிய பாலுணர்ச்சி; (கண.) கண்ணாடியில் நிழற்படிவம் உண்டாதல்; கண்ணாடி நிழற்படிவம்.

pervers'ity, *n.* முறைகேடு; முரணியல், வக்கரிப்பு, விபரீதப் பண்பு.

pervers'ive, *a.* தகாவழிச் செல்கிற; முரண்பாடான; தலை கீழாய்ப் புரட்டுகிற.

perv'ert[1], *n.* இயல்முரணிய பாலுணர்ச்சியுள்ளவர்; கோணல் போக்குடையவர்; கொள்கை மாருட்டக்காரர்; அறிவைத் தவருகப் பயன்படுத்துபவர்.

pervert'[2], *v.* தகாவழிப் பயன்படுத்து; இயல்மீறிய பொருள் கொள்; சொற்களைத் தவருக வழங்கு; சமயக்கோட்பாட்டு வகையில் உண்மை நெறியினின்றும் விலக்கி அழைத்துச் செல்.

perv'ious, *a.* ஊடுருவிப்பரவுதற்கு இடங்கொடுக்கிற; வழி விடுகிற; இணங்குகிற, ஒத்துப்போகிற.

Peshi'to, Peshi'tta, *n.* மேலை அரமிய மொழியில் விவிலிய நூலின் பெயர்ப்பு.

pesh'wa, *n.* (வர.) முற்கால மராட்டிய அரசின் முதலமைச்சர்; மராட்டிய பரம்பரைக் குறுமன்னர்.

pe'so, *n.* தென் அமெரிக்க குடியரசு நாடுகளில் வழங்கும் நான்கு ஷில்லிங்கு குத்தாய மதிப்புள்ள வெள்ளி நாணயம்.

pess'ary, *n.* (மரு.) கருப்பையினை நிலைபிறழாமல் தாங்குதற் காக அல்குல் வாயிலிற் பெண்கள் பொருத்திக்கொள்ளும் கருவி; கருநிலைப்படுத்தும் குறிவாயுட் கரையும் மருந்து.

pess'imism, *n.* சோர்வுவாதம், உலகில் எதுவுமே கெட்டது என்று கொள்ளும் கோட்பாடு; சிணுங்கு மனப்பான்மை, எதிலுமே தீயசார்பு காணும் பாங்கு; தோல்வி மனப் பான்மை; கிளர்ச்சியின்மை, சோர்வு: அவா முறிவு.

pess'imist, *n.* நம்பிக்கையற்றவர், தோல்வி மனப்பான் மையர், எதிலுந் தீயதையே காண்பவர்; துன்ப இயற்கைக் கோட்பாட்டாளர்.

pest, *n.* தொல்லை கொடுப்பவர்; அழிவுவேலை செய்பவர்; அழிவுசெய்யும் உயிரினம்; பீடை, தொற்றுநோய்.

pes'ter, *v.* தொந்தரவு செய், ஓயாது தொல்லை கொடு.

pest'-house, *n.* தொற்றுநோய் மருத்துவமனை.

pestif'erous, *a.* கேடுதருகிற, அழிவுசெய்கிற; அருவருப் பான; கொள்ளைநோய் விளைக்கிற.

pes'tilence, *n.* சாவு விளைக்கிற கொள்ளைநோய்; மாமாரி, ஈதி.

pes'tilent, *a.* உயிருக்கு அழிவு செய்கிற, சாவு விளைவிக்கிற; ஒழுக்கக்கேடான; (பே-வ.) தொந்தரை செய்கிற.

pestilen'tial, *a.* பெருவாரி நோயியல்பு வாய்ந்த; கொள்ளைநோய் விளைக்கிற; கொள்ளைநோயினுற் பீடிக்கப் பட்ட; பேரழிவு செய்கிற, பெருவாரியாகத் தீங்கிழைக்கிற; வெறுப்பூட்டுகிற; தொந்தரை செய்கிற.

pe'stle, *n.* கலுவக் குழவி; உலக்கை; *v.* கலுவத்தில் அரை.

pestol'ogy, *n.* பூச்சித்தொல்லை ஆய்வுநூல்.

pet[1], *n.* ஆசை விலங்கு; ஆசைப்புள்; அன்பு மகவு; தனிப் பற்றிற்குரியது, செல்லமாக வளர்க்கப்படுவது; *v.* செல்ல மாக நடத்து, கொஞ்சிச் சீராட்டு; (தொ.) pet aversion, மிகுவெறுப்புப் பொருள்; pet name, செல்லப்பெயர்.

pet[2], *n.* கடுஞ்சினம், கடுகடுப்பு.

pet'al, *n.* பூவிதழ், அல்லி, மடல், தளம்.

pet'aline, *a.* பூவிதழுக்குரிய; பூவிதழ்போன்ற.

pet'alled, *a.* பூவிதழ்களையுடைய.

pet'aloid, *a.* பூவிதழின் தோற்றமுடைய.

pet'alon, *n.* யூதர் தலைமைக்குருவின் தலைப்பாகையிலுள்ள பொன்மடல்.

petard', *n.* கதவுகள் முதலியவற்றைத் தகர்க்கப் பயன்பட்ட சிறு போர்ப் பொறிவகை; சிறு வெடிகுண்டு; வானவெடி, அதிர்வேட்டு.

pet'asus, *n.* பண்டைக் கிரேக்கர் தொப்பிவகை.

petaur'ist, *n.* பறப்பதுபோன்ற பாய்ச்சலுக்குதவும் சிறகுத் தோலுடைய பைம்மா வகை.

pet'-cock, *n.* நீராவி முதலியவற்றை வெளிவிடுவதற்கான சிறு அடைப்புக் குமிழ்.

Pet'er[1], *n.* கிறித்தவ ஆண்பாற் பெயர்; இயேசுநாதரின் திரு மாணவருள் ஒருவர்; (தொ.) blue Peter, கப்பல் புறப்படு முன் பறக்கவிடப்படும் வெண்சதுரம் தாங்கிய நீலக்கொடி; Peter's fish, முதுகில் இருவிரல் அடையாளங்கள் போன்ற கோடுகளையுடைய மீன்வகை; rob Peter to pay Paul, கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடை; Saint Peter, St. Peter, இயேசுநாதர் திருமாணவருள் ஒருவர்.

pet'er[2], *v.* தேய்ந்திறு, படிப்படியாக அழிந்து ஒன்றுமில்லாது போ.

Pet'er-penny, Pet'er's-penny, Pet'er's-pence, *n.* (வர.) போப்பாண்டவருக்கு விரும்பித் தரப்படும் பென்னி அளவு ஆண்டு வரித்தொகை.

pet'ersham, *n.* முறுக்குப்பட்டு, நாடா; முற்காலத்தில் அணி யப்பட்ட கனமான மேலங்கி அல்லது காற்சட்டை; கனத்த மேலங்கி அல்லது காற்சட்டை தைப்பதற்கான துணி.

pet'iolar, *a.* இலைக்காம்பு சார்ந்த; இலைக்காம்பின் இயல் புடைய.

pet'iolate, pet'iolated, *a.* இலைக்காம்புடைய.

pet'iole, *n.* (தாவ.) இலைக்காம்பு.

peti'tion, *n.* வேண்டுகோள், மனு, விண்ணப்பம்; குறை யிரப்பு; முறைமன்றத்திடம் எழுத்து மூலமான மன்ருட்டு; *v.* வேண்டுகோள் விடு, விண்ணப்பஞ் செய்துகொள்; மனுச் செய்.

peti'tioner, *n.* மனுச்செய்பவர்; திருமண விடுதலை கோரும் வழக்குகளில் வாதி; (வர.) பிரிட்டனின் அரசர் இரண்டாம் சார்லஸ்ஸிடம் 1680-ஆம் ஆண்டில் பாராளுமன்றம் கூட்ட வேண்டுமென்று மனுச்செய்துகொண்ட கட்சிகளில் குறிப் பிட்ட ஒன்றினைச் சார்ந்தவர்.

*peti'tio princip'ii,* (ல.) *n.* நச்சுச்சுழல்வாதம், வாதக் குழப்பம், மெய்ப்பிக்க வேண்டியதையே ஆதாரமாகக் கொண்டுவிடுதல்.

*petit-maitre* (பிர.) *n.* பகட்டன், பிலுக்கன், தற்பெருமைக் காரன்.

*petit mal,* (பிர.) *n.* கடுமையற்ற காக்காய்வலிப்பு நோய் வகை.

*petits-chevaux,* (பிர.) *n.* சூதாட்ட விளையாட்டு வகை.

*petit souper,* (பிர.) *n.* நெருங்கிய நண்பர் சிலருக்கு அளிக்கும் இரவு விருந்து.

*petits soins,* (பிர.) *n. pl.* சின்னஞ்சிறு துணையூழியங்கள்.

*petit verre,* (பிர.) *n.* குவளைநிறை மது.

pet'rel, *n.* கருமை வெண்மை நிறங்களும் நீண்ட இறகுகளும் உடைய சிறு கடற்பறவை வகை.

petrifac'tion, *n.* கல்லாகுதல்; கல்லாக மாறிய பொருள்; கல்லாக மாறிய பொருளின் திரள்; கல்வடிவாகக் கிடைத்த புதைபடிவம்.

pet'rify, *v.* கல்லாக்கு; உணர்ச்சியறச்செய்; வியப் பால் செயலறச்செய்; அச்சத்தால் உணர்விழக்கச்செய்; விறைத்துப்போகச் செய்; கடினமாக்கு; மனம்-கொள்கை வகையில் உயிர்ப்பு ஆற்றல் இழக்கச்செய்.

pet'roglyph, *n.* கற்பாறைச் செதுக்குவேலை.

pet'rograph, *n.* கற்பாறைச் செதுக்கெழுத்து, கல்வெட்டு.

petrog'raphy, *n.* கற்பாறைகளின் அமைப்பு-உருவாக்கம் முதலியவற்றைப்பற்றிய இயலாய்வு விளக்கம்.

pet'rol, *n.* கல்லெண்ணெய், பொறிவண்டிகளுக்கும்-விமானம் முதலியவற்றிற்கும் பயன்படும் தூய்மையாக்கப்பட்ட நில எண்ணெய்; தூய்மைப்படுத்திய பெட்ரோலியம்.

petrol'eum, *n.* பாறை எண்ணெய், உள்வெப்பாலையிலும் பிற பொறிகளிலும் எரிபொருளாகப் பயன்படும் நிலமேற் படுகைக்குரிய தாது எண்ணெய்.

*petroleur*, (பிர.) *n.* பாறை எண்ணெயைப் பயன்படுத்தி எரித்தழிப்பவன்.

*petroleuse*, (பிர.) *n.* பாறை எண்ணெயைப் பயன்படுத்தி எரித்தழிப்பவள்.

petrol'ic, *a.* கல்லெண்ணெய் சார்ந்த; பாறை எண்ணெய்க்கு உரிய.

petrol'ogy, *n.* கல்லாய்வு நூல், கற்பாறைகளின் தோற்றம்-அமைப்பு முதலியவை பற்றிய நூல்.

pet'ronel, *n.* (வர.) பதினாறு-பதினேழாம் நூற்றாண்டுகளின் குதிரைவீரர்கள் பயன்படுத்திய பெரிய கைத்துப்பாக்கி வகை.

pet'rous, *a.* பாறையாலான; பாறை சார்ந்த; பாறைபோன்ற; (உள்.) பொட்டெலும்பில் மிகவுங் கடினமான பகுதி சார்ந்த.

pett'icoat, *n.* மகளிர் உட்பாவாடை, உள்ளங்கி; பெண்; மங்கை; (தொ.) petticoat government, பெண் ஆளுமை.

pett'icoats, *n. pl.* மகளிர் இல்லாண்மை; மகளிர்.

pett'ifog, *v.* சட்டத்துக்குட்பட்ட உருட்டுப்புரட்டுக்களைக் கையாளு; சட்ட நுணுக்கம் பார்த்துச் சொற்புரட்டுச் செய்; சிறு சொல் நுட்பங்களுக்காகச் சச்சரவிடு.

pett'ifogger, *n.* கீழ்த்தரமான வழக்குரைஞர்; கீழ்த்தர வழிகளைக் கையாளும் வழக்குரைஞர்; எந்தத் துறையிலும் மிகச் சிறுசெய்திகளுக்கும் கீழ்த்தரமான முறைகளைக் கையாளுபவர்.

pett'ish, *a.* சிடுசிடுப்பான, வெடுவெடுப்பான; எளிதிற் சினங் கொள்ளுகிற.

pett'itoes, *n. pl.* உணவுக்குப் பயன்படும் பன்றியின் கால்கள்.

pett'o, (இத்.) *n.* மறைவடக்கம், தனி இரகசியம்; (தொ.) *in petto*, தன் மனத்துக்குள், இரகசியமாக, பிறருக்குத் தெரியாமல்.

pett'y, *a.* மிகச்சிறிய; முக்கியமல்லாத; குறுகிய மனப் பான்மையுடைய; கீழ்த்தரமான; (தொ.) petty cash, சில்லறை வரவு செலவு இனம்; petty jury, சிறு திருட்டு முதலியவற்றின் முறைகாண் ஆயத்தினர்.

pet'ulant, *a.* எரிச்சல்கொள்ளுகிற, வெடுவெடுப்பான.

petun'ia, *n.* பெய்குழல் வடிவான ஊதா அல்லது வெண்ணிற மலர்களையுடைய செடிவகை; ஆழ்ந்த ஊதா நிறம்.

petun'tse, *n.* மங்குப்பாண்டங்கள் செய்யச் சீனுவிற் பயன் படுத்தப்படும் வெண்ணிற மண் வகை.

pew, *n.* கோயில் திண்ணை; திருக்கோயிலிற் குடும்பத்தினருக்கான சூழிருக்கை; திருக்கோயில் சூழிருக்கைத்தொகுதி; திருக்கோயிலிற் சாய்மானமுடைய நிலையான இருக்கை; (பே-வ.) இருக்கை; *v.* திருக்கோயிலிற் சூழிருக்கைகள் அமை; சூழிருக்கையாய் அடைப்பிடு.

pe'wit, *n.*=peewit.

pew'-rent *n.* திருக்கோயிற் சூழிருக்கை வாடகை.

pewt'er, *n.* வெள்ளீயமும் காரீயமுங் கலந்த சாம்பல்நிற உலோகக் கலவை; வெள்ளீயக் காரீயக் கலவைக் கலத் தொகுதி.

pfenn'ig, pfenn'ing, *n.* சிறு செர்மானிய செப்பு நாணயம், செர்மானிய வெள்ளி நாணயத்தில் நூறில் ஒரு பங்கு மதிப்புடைய காசு.

pha'eton, *n.* இரட்டைக் குதிரைத் திறப்பு வண்டி.

phagedaen'a, phageden'a, *n.* பரவும் குருதிக்கட்டிப் புண்.

phag'ocyte, *n.* நோயணுக்களை ஈர்த்துக்கொண்டு உடலை நோய்களினின்றுந் தடுக்கும் ஆற்றலுள்ள நிணநீரணு.

phal'ange, *n.*=phal'anx.

phalan'geal, *a.* (உள்.) கைவிரல்களின் அல்லது கால்விரல்களின் தனித்தனி எலும்பு சார்ந்த.

phalan'ger, *n.* பறக்கும் அணில் போன்ற மரங்களில் வாழும் ஆஸ்திரேலிய பைம்மா இனக் குடும்பம்.

phal'anstery, *n.* பூரியர் (Fourier) என்பவரால் நிறுவப்பட்ட 1800 பேர்களடங்கிய சமுதாயப் பொதுவாழ்வு முறைக்குழு; சமுதாயப் பொதுவாழ்வுமுறைக் குழுவிற்குரிய கட்டிடம்.

phal'anx, *n.* (வர.) கிரேக்கரிடையே மாசிடோனியரின் செறிவுமிக்க காலாட்படையணி; பொதுவாழ்வு முறைக்குழு; பூரியர் (Fourier) என்பவரால் நிறுவப்பட்ட 1800 பேரடங்கிய பொதுவாழ்வு முறைக் குழாம்; (உள்.) கைகால் விரல்களின் தனி எலும்பு; பூவிழைக்கொத்து; *pl.* phal'anges, phal'anxes.

phal'arope, *n.* நீரினுள் நடக்கவும் நீந்தவும் வல்ல சிறு பறவை வகை.

phall'us, *n.* இலிங்கவுரு, படைப்பாற்றல் சின்னமாக வழி படப்படும் குறிவடிவம்.

phana'riot, *n.* கான்ஸ்டாண்டிநோபிள் நகரில் பனர் (Phanar) பகுதியில் வாழ்ந்த கிரேக்கருள் ஒருவர்; துருக்கியரின் கீழ்ப் பணிபுரிந்த கிரேக்க பணியாளர் வகுப்பினரில் ஒருவர்.

phan'erogam, *n.* (தாவ.) ஆண்பெண் கூறுகளையுடைய மலர்ச்செடிவகை.

phan'sigar, (இ.) *n.* கொள்ளைக் கூட்டத்தினர்.

phan'tasm, *n.* கற்பனைக்காட்சி, உருவெளித்தோற்றம்; (உள.) புனைவுருத்தோற்றம்; ஆவியுருக்காட்சி.

phantasmagor'ia, *n.* லண்டனில் 1802-ஆம் ஆண்டில் காட்டப்பட்ட மாயத்தோற்றங்களின் பொருட்காட்சி; பல்வண்ணப் புனைவுருக்காட்சி; பல்வண்ண மெய்ந்நிலைச் சூழற் காட்சி.

phan'tasy, *n.* கற்பனையுருவினைப் படைக்கும் ஆற்றல்; மனக் கண் தோற்றம்.

phan'tom, *n.* மாயம், பொய்த்தோற்றம்; ஆவியுரு, பேயுருத் தோற்றம்; புனைவுருத்தோற்றம்; உள்ளீடற்ற உருத் தோற்றம்; இல்பொருள் தோற்றம், பொருண்மையற்ற போலியுரு; போலித்தோற்றம்.

Phar'aoh, *n.* பண்டைய எகிப்திய அரசர்களின் பொதுப் பட்டப்பெயர்; (தொ.) Pharaoh's serpent, உருகுநிலையில் பாம்பு வடிவில் வளைந்துவளைந்து செல்லும் விளையாட்டு வேதிப்பொருள்.

Pha'risee, *n.* கடுமையான ஆசாரங்களையும் மரபுச்சடங்குகளையும் எழுத்தியலான சட்டங்களையும் கடைப்பிடிக்கும் யூத வகுப்பினர்; ஆசாரக்கள்ளர், போலிப் புற ஆசாரக்காரர்; மரபொழுங்கு சார்ந்த ஆசாரக்கண்டிப்பாளர், போலிப் பகட்டர், பாசாங்குக்காரர்.

pharmaceut'ical, *a.* மருந்து ஆக்கத்தொழிலுக்குரிய; மருந்து வழங்கீடு விற்பனை சார்ந்த.

pharmaceu'tics, *n.* மருந்தாக்க இயல்.

pharm'acist, *n.* மருந்துக்கடைக்காரர்; மருந்தாக்கக் கலைஞர்.

pharmacol'ogy, *n.* மருத்துப் பொருளியல்.

pharmacopoe'ia, *n.* வாகட நூல், மருத்துப்பொருள் தொகுதி.

pharm'acy, *n.* மருந்தகம்; மருந்துக்கடை; மருந்தாக்கக்கலை.

phar'os, *n.* கலங்கரை விளக்கம்; கரைவிளக்கப் பந்தம்.

pharyng'ocele, *n.* அடித்தொண்டை அழற்சி, முன் தொண்டை அடிப்புற அழற்சி.

pharyng'otomy, *n.* தொண்டையழற்சி அறுவை.

phase, *n.* திங்களின் கலை, மதிவட்டத்தின் ஒளிவிளக்கக்கூறு; கோள் ஒளிக்கலை; மாறுபாட்டுப் படி; வளர்ச்சிப் படி; (இய.) மாறுபாட்டலை இயக்கத்தின் அலையிடைப் படி; (இய.) மாற்று மின்னோட்ட இயக்கப் படிநிலை; பொருளின் நிலை மாறுதல்; இடைப் படி; தோற்ற வேறுபாடு; பண்பு வேறுபாடு.

phea'sant, *n.* நெடுவால் பகட்டு வண்ணக் கோழிவகை.

phena'cetin, *n.* காய்ச்சல் தடுக்கும் மருந்து.

phen'ix, *n.* இறந்தெழும் பறவை; பெறலரும் பொருள்.

phen'ol, *n.* கரியகக் காடி.

phenol'ogy, *n.* உயிரிகள் ஆய்வியல்.

phenom'enal, *a.* குறிப்பிடத்தக்க; வியப்புக்குரிய; தனிச் சிறப்புக்குரிய; புலன்களால் உணரத்தக்க; தெரிந்துகொள்ளக் கூடிய.

**phenom'enalism, phenom'enism,** *n.* அறிவின் அடிப் படை நிகழ்ச்சியுணர்வுகள் மட்டுமே என்ற கோட்பாடு.

**phenom'enon,** *n.* இயற்காட்சி, இயல்நிகழ்ச்சி, காரண காரியத்தொடர்பு ஆய்ந்து காணப்படாச் செய்தி; புலன் குறித்த செய்தி; மனங் குறித்துக் கண்ட செய்தி; ஆராய்ச்சிக் குரிய செய்தி; குறிப்பிடத்தக்க ஒன்று; குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி; குறிப்பிடத்தக்க ஆள்; *pl.* phenom'ena.

**phen'yl,** *n.* கரியகக்காடியிலுள்ள அடிக்கூற்றுக் கரியக நெய்மம்.

**phew,** *int.* வியப்புக்குறி; வெறுப்புக்குறி; பொறுதியின்மைக் குறிப்பொலி.

**phial,** *n.* சிறுபுட்டி, சிறு கண்ணுடிக்குப்பி.

**philan'der,** *n.* காதலன்; பெண்பித்தன்; காதற்பரத்தன்; *v.* காதல்கொண்டு திரி; மகளிர் பின்னர் அலை.

**phil'anthrope,** *n.* = philanthropist.

**philanthrop'ic,** *a.* மனிதவினத்தை நேசிக்கும் பண்புள்ள; இரக்கமுள்ள; கொடைக்குணமுள்ள.

**philan'thropist,** *n.* மனிதவினப் பற்றுளர்; பிறர் நலனுக்கு உழைப்பவர்; கொடையாளி, இரக்கமுள்ள நன்கொடை யாளர்.

**philan'thropize,** *v.* இரக்கங் காட்டு; கொடையாளியாயிரு, பிறருக்கு உதவி செய்.

**philan'thropy,** *n.* மனிதவின நேயம்; அருட்பண்பு; கொடையாண்மை; சமுதாயத்தொண்டு.

**philat'elist,** *n.* அஞ்சல்தலைச் சேர்ப்பர்.

**philat'ely,** *n.* அஞ்சல் தலைத் திரட்டு; அஞ்சல் தலை ஆய்வு.

**philharmon'ic,** *n.* இசையார்வமிக்கவர்; *a.* இசைவிருப்பு மிக்க.

**phil'hellene,** *n.* கிரேக்கர்களிடம் நட்போடும் அன்போடும் பழகுபவர்; கிரேக்க நாட்டு விடுதலை ஆதரவாளர்; *a.* கிரேக்க ரிடம் நட்பார்வம் மிக்க; கிரேக்க நாட்டு விடுதலைக்கு ஆதர வான.

**Philipp'i,** *n.* கி. மு. 43-இல் நடைபெற்ற பெரும்போர்; (தொ.) thou shall see me at Philippi, meet at Philippi, பழிவாங்கு வதாக அச்சுறுத்தும் சொற்றொடர்கள்.

**philipp'ics,** *n. pl.* மாசிடோனைச் (Macedon) சேர்ந்த பிலிப் பிற்கு (Philip) எதிராக டெமாஸ்தனிஸ் (Demosthenes) என்ற பண்டைக் கிரேக்க சொற்பொழிவாளர் செய்த சொற் பொழிவுகள்; அந்தோணிக்கு மாறாகச் சிசரோ செய்த ஆவேசச் சொற்பொழிவுகள்; கடுமையான வசைமாரி, திட்டு.

**philippi'na, philippine,** *n.* ஒருவகைத் தின்றிகொட்டை; கொட்டைப்பருப்பு பகிர்ந்தூண் விளையாட்டுமரபு.

**Phil'istine,** *n.* பிலிஸ்தியர்கள், இஸ்ரவேலர்களைத் துன் புறுத்திய போர் விருப்பமுள்ள மக்களினம்; கைப்பற்றித் துன்புறுத்தும் எதிரி; அமீனு; இலக்கியக் கருத்துரையாளர்; வெளியார், செர்மானிய பல்கலைக்கழக வழக்கில் மாணவரல் லாதவர்; பண்பற்றவர்; உயர்நாட்டமற்றவர்; உலகியல் நாட்டமுடையவர்; *a.* பண்பற்ற, நாகரிகமற்ற; உயர்நாட்ட மற்ற, உலகியற் பற்றுடைய.

**philobib'lic,** *a.* புத்தக விருப்புடைய, நூலார்வமுடைய.

**philogy'nist,** *n.* பெண் விருப்பர்.

**philol'oger,** *n.* = philologist.

**philolo'gian,** *n.* = philologist.

**philolo'gical,** *a.* மொழிநூல் சார்ந்த; கலையிலக்கிய ஆர்வஞ் சார்ந்த.

**philol'ogist,** *n.* மொழிநூல் வல்லார்; கலையிலக்கிய ஆர் வலர்.

**philol'ogy,** *n.* மொழிநூல்; கலை இலக்கியப் பற்றார்வம்.

**phil'omath,** *n.* கல்வியார்வலர்.

**Phil'omel, Philomel'a,** *n.* (செய்.) இராக்குயில், இரவிற் பாடும் பறவை வகை.

**Philopen'a, philopoen'a,** *n.* = philippina.

**philoprogen'itive,** *a.* பிள்ளைக்கனி ஆர்வமுடைய.

**philos'opher,** *n.* மெய்ந்நூல் அறிஞர், தத்துவஞானி; மெய் யுணர்வுப் பற்றார்வலர்; மெய்விளக்க இயல் ஆய்வாளர்; அறிவாராய்ச்சிச் சிந்தனையாளர்; மெய்யுணர்வுக் கோட் பாட்டுக்கேற்ப வாழ்க்கை நடத்துபவர்; உள்ள நடுநிலை யாளர், எவ்வகை இடர்களிலும் சிக்கல்களிலும் உலைவிலா அமைதியுடையவர்; (தொ.) moral philosopher, ஒழுக்கச் சிந்தனையாளர்; natural philosopher, இயற்கைத் தத்துவ அறிஞர்; philosopher's stone, சித்துமணிக்கல், பிற உலோ கங்களைப் பொன்னாகவோ வெள்ளியாகவோ மாற்றும் இயல் புடையதாகக் கருதப்படும் மணி.

**philosoph'ic, philosoph'ical,** *a.* மெய்யுணர்வு இயல் சார்ந்த, தத்துவ ஞானத்துக்குரிய, மெய்யுணர்வியலிற் பற் றுடைய; தத்துவ அறிவுத்திறம் சான்ற; மெய்யுணர்வார்ந்த; இடரிடை உலையா அறிவமைதியுடைய; தன்னடக்க அமைதி வாய்ந்த.

**philos'ophism,** *n.* மெய்யுணர்வுப் பாவனை; மெய்யுணர்வு வித்து; பிரஞ்சு அறிவுக்களஞ்சியத்தார் மெய்விளக்கமுறை.

**philos'ophize,** *v.* மெய்யுணர்வு இயலாளராகச் செயலாற்று; தத்துவ ஆராய்ச்சி செய், கொள்கை ஆய்வு செய்; தத்துவம் பேசு; கொள்கை ஆய்விலாழ்ந்துவிடு, நன்மைதீமை ஆழ்ந் தாராய்; தத்துவப் போக்காக்கு, மெய்யுணர்வு இயலாள ராக்கு; சமநிலைப்படுத்து, அறிவமைதிப்பண்யூட்டு.

**philos'ophy,** *n.* அறிவார்வம்; மூல முதற்காரணம் பற்றிய சிந்தனை; பொருள்களின் பொதுமூலக் கோட்பாட்டாராய்வு; தத்துவம்; தனித்துறை அடிப்படைக் கோட்பாட்டாராய்ச்சி; மனவமைதி; பகுத்தறிவுச்சிந்தனை; வாழ்க்கைக்கோட்பாடு; வாழ்க்கை நடைமுறைத்திட்டம்; மெய்விளக்கியல்; மெய் யுணர்வுக் கோட்பாட்டுத்துறை; மெய்யுணர்வுநூல்; ஆழ்ந்த அறிவமைதி, நடுநிலையமைதி; (தொ.) moral philosophy, ஒழுக்கச்சிந்தனை; ஒழுக்கக் கோட்பாடு பற்றிய ஆராய்ச்சி; ஒழுக்க ஆய்வியல்துறை; natural philosophy, இயற்கைப் பொருளாராய்ச்சி.

**philotech'nic,** *a.* தொழிற்கலையார்வமுடைய, கலைநுணுக்க ஆர்வஞ் சார்ந்த.

**phil'ter, phil'tre,** *n.* வசியமருந்து, காதலைத் தூண்டும் மருந்து.

**phiz,** *n.* (பே-வ.) முகம்; முகத்தோற்றம்.

**phlebit'is,** *n.* குருதி நாளத்தின் புறத்தோல் வீக்கம்.

**phleb'olite, phleb'olith,** *n.* குருதிநாளங்களில் ஏற்படும் சுண்ணப்படிவுக் கோளாறு.

**phlebot'omize,** *v.* குருதிவடிக்கும் மருத்துவமுறையைக் கையாளு; குருதி வடிப்புச்செய்.

**phlebot'omy,** *n.* முற்காலக் குருதிவடிப்பு மருத்துவமுறை, மருத்துவமுறைக் குருதிவடிப்பு.

**phlegm,** *n.* சளி, கோழை, கபம்; குளிர்ச்சி, சோம்பேறித் தனம்; உணர்ச்சியற்ற தன்மை.

**phleg'magogue,** *n.* கபம் வெளிப்படுத்தும் மருந்து.

**phlegmat'ic,** *a.* கபம் உண்டுபண்ணுகிற; கோழை நிரம்பிய; தணுப்பு மிக்க; மடிமையார்ந்த; எளிதிற் செயற்படாத.

**phleg'mon,** *n.* அழற்சிக் கட்டி, பரு.

**phlo'em,** *n.* (தாவ.) மென்மரம் சூழ்பகுதி, வளரும் மரப்பகுதி யும் அதனுடன் இணைந்த இழைமங்களும் சேர்ந்த தொகுதி.

**phlogis'tic,** *a.* தனிமமாக முன்பு கருதப்பட்ட எரிபொருட் களின் எரிப்பாற்றல் சார்ந்த; (மரு.) அழற்சியுடைய.

**phlogis'ton,** *n.* தனிமமாக முன் கருதப்பட்ட எரிபொருள் களின் எரிப்பாற்றல்.

**phloriz'in,** *n.* மரவகைகளின் கசப்பு வேர்ப்பட்டை; மர வேர்ப்பட்டைகளிலிருந்து எடுக்கப்படுங் கசப்புச்சத்து.

**phlox,** *n.* தென் அமெரிக்க மலர்க்கொத்துச் செடியினம்.

**phob'ia,** *n.* அச்சக்கோளாறு; வெறுப்புக்கோளாறு.

Phoeb'e, *n.* திங்களங்கடவுள்.

Phoeb'us, *n.* கிரேக்க புராண மரபில் செங்கதிர்க்கடவுள்; அப்பலோ (Apollo); (செய்.) கதிரவன்.

Phoenici'an, *n.* பினீசியாவில் வாழ்பவர்; பினீசியாவின் மொழி; *a.* பினீசியாவைச் சார்ந்த; பினீசியரின் மொழி சார்ந்த.

phoen'ix, *n.* இறந்தெழும் பறவை, கிரேக்க புராணமரபுப்படி பல நூற்றாண்டுகள் வாழ்ந்து தன்னை எரித்த சாம்பரிலிருந்து மீண்டும் புத்துயிர் பெறுவதாகக் கருதப்பட்ட பாலைவனப் பறவை வகை; பெறலரும் பொருள்.

phon, *n.* (இய.) ஒலியுர அளவை.

phon'ate, *v.* மிடற்றொலி செய், குரலொலி எழுப்பு.

phonaut'ograph, *n.* ஒலியலைப்பதிவுக் கருவி.

phone[1], *n.* (பே-வ.) தொலைபேசி; *v.* தொலைபேசி மூலம் பேசு.

phone[2], *n.* அடிப்படைப் பேச்சொலி.

phon'eme, *n.* ஒலியம்.

phonem'ics, *n.* ஒலியவியல்.

phonen'doscope, *n.* உள்ளொலி பெருக்கி, மனித உடலிலுள்ள சிறு ஒலிகளையும் தெளிவாகக் கேட்பதற்கு வகை செய்யுங் கருவி.

phonet'ic, *a.* குரலொலிக்குரிய; குரலொலிபற்றிய; ஒலிப்பு முறை சார்ந்த; நிலையான மதிப்புடைய குரலொலிச் சின்னமான.

phonetici'an, *n.* ஒலியியல் வல்லுநர்.

phonet'icist, *n.* ஒலிமுறை எழுத்தார்வலர்.

phonet'ics, *n. pl.* ஒலியியல்.

phon'etist, *n.* ஒலியியல் வல்லுநர்; ஒலிமுறை எழுத்து வடிவ ஆதரவாளர்; ஒலிமுறை எழுத்துருவைப் பயன்படுத்துபவர்.

phon'ogram, *n.* ஒலியமை வடிவம்; ஒலிக்கருவியிற் செய்யப்பட்ட பதிவு.

phon'ograph, *n.* ஒலிகொள்வடிவம், நீளுருளைகளைப் பயன்படுத்திச் செய்யப்பட்ட பழைய ஒலிப்பதிவுமுறை இசைப்பெட்டி; இசைப்பெட்டி; *v.* ஒலிப்பதிவுசெய்; பதிவுசெய்ததைத் திரும்ப ஒலிக்கச்செய்.

phonog'raphy, *n.* பிட்மன் (Pitman) என்பாரின் ஒலிமுறைச் சுருக்கெழுத்து; ஒலிகளைப் பதிவுசெய்யும் கருவி கொண்டு தானே ஒலிப்பதிவு செய்யுங்கருவி; இசைப்பதிவுப் பெட்டியைப் பயன்படுத்தி ஒலிப்பதிவுசெய்யுங் கருவி.

phon'olite, *n.* தட்டினால் ஒலிசெய்யும் எரிமலைப் பாறை வகை.

phonol'ogy, *n.* ஒலியியல்; ஒலிவரலாற்று ஆய்வு.

phonom'eter, *n.* ஒலியலைமானி.

phon'ophore, phon'opore, *n.* தொலைபேசிச் செய்திகளை தந்திச்செய்திகளுக்குக் குந்தகமில்லாமலே தந்திக்கம்பிவழிச் செலுத்துங் கருவி.

phon'oscope, *n.* இசை நரம்புகளைத் தேர்ந்தாய்வு செய்வதற்கான கருவி; ஒலியதிர்வு காட்டி, ஒலியலைகளைக் கண்ணுக்குப் புலப்படும் வடிவிற் காட்டுங் கருவி.

phon'otype, *n.* ஒலிமுறை அச்செழுத்து.

phorm'ium, *n.* நார்ப்பொருளாகப் பயன்படும் வெங்காயக் குடும்பச் செடியினம்; நியூசிலாந்து நாட்டுச் சணற் செடி வகை.

phos'gene, *n.* 1914-18 போரில் ப்யனபடுத்தப்பட்ட நச்சு வளி வகை.

phos'phate, *n.* எரியகி, எரியகிக்காடியின் உப்புகளில் ஒன்று; சுண்ண எரியகி-இரும்பு எரியகி-அலுமினிய எரியகி ஆகியவற்றுள் ஒன்று.

phos'phates, *n. pl.* எரியகிக்காடியின் மூன்று உப்புக்களில் ஒன்று.

phosphat'ic, *a.* எரியகியின் இயல்பு வாய்ந்த; எரியகி அடங்கியுள்ள.

phos'phene, *n.* (உட.) விழித்திரையில் எரிச்சல் உண்டாகிக் கண்விழி அழுத்தப்படுவது காரணமாகத் தோன்றும் ஒளி வளையங்கள்.

phos'phide, *n.* (வேதி.) எரியகை, எரியமும் வேறு தனிமமுஞ் சேர்ந்த கூட்டு.

phos'phite, *n.* (வேதி.) எரியகி, எரியகக்காடியின் உப்பு.

phos'phorate, *v.* எரியத்தோடு சேர்; எரியஞ் செறிவி.

phos'phor-bronze, *n.* தேயாப் பரல்மணி, சிறிது எரியங் கலந்து உறுதியாக்கப்பட்ட வெண்கலக் கலவை.

phosphoresce', *v.* எரிவழிவில்லாமலேயே சுடர்விடு; எரியத்தைப்போல் மிகு குறை எரிவழிவுடன் இருளில் ஒளிவீசு.

phosphores'cence, *n.* இருளில் ஒளி, ஒளி மினுக்கம்.

phosphores'cent, *a.* சுடர்விடுகிற, ஒளிமினுங்குகிற.

phospho'ric, *a.* எரியஞ் சார்ந்த; எரியம் போன்ற; சுடர்விடுகிற; (வேதி.) எரியம் உயரிணைதிறனாக அடங்கியுள்ள; (தொ.) phosphoric acid, எரியக்காடி; phosphoric anhydride, எரிய இன்னீரகை.

phos'phorism, *n.* (மரு.) எரிய நச்சூட்டு.

phos'phorite, *n.* மணியுரு அல்லாத சுண்ண எரியகியின் வகை.

phosphorogen'ic, *a.* (இய.) இருளில் ஒளிவீசச் செய்கிற.

phos'phorograph, *n.* (இய.) சுடர்பரப்பின்மேல் தோன்றும் நிலையற்ற உருவம்.

phosphorog'raphy, *n.* சுடர்பரப்பின்மேல் நிலையற்ற உருவங்கள் தோன்றச் செய்யுங் கலை.

phos'phoroscope, *n.* இருளில் ஒளி நீடித்திருப்பதை அளப்பதற்கான அமைவு; பன்னிற ஒளிகளுடன் ஒளிரும் வெவ்வேறு சுடர்ப்பொருள்களைக் கொண்ட விளையாட்டுப் பொம்மை.

phos'phorous, *a.* சுடர்விடுகிற; (வேதி.) எரியம் சிறுதிறனாக அடங்கியுள்ள; (தொ.) phosphorous acid, எரியகக்காடி; phosphorous anhydride, எரியக இன்னீரகை.

phos'phorus, *n.* எரியம்; (தொ.) phosphorus necrosis, தீக்குச்சி செய்யும் தொழிலில் எரிய ஆவி வெளிப்படுவதனால் தொழிலாளர்களின் தாடையெலும்பின் சீரழிவுக்கோளாறு.

phos'phureted, phos'phuretted, *a.* வேதியியல் முறையில் எரியத்தோடு சேர்க்கப்பட்ட.

phoss'y-jaw, *n.* தீக்குச்சித் தொழிலாளர்களிடையே எரிய ஆவி காரணமான தாடையெலும்பின் சீரழிவுக்கோளாறு.

phot'ism, *n.* உணர்ச்சி காரணமான ஒலித்தோற்றம்.

phot'o, *n.*, *v.* = photograph.

phot'ochromy, *n.* வண்ண நிழற்படக் கலை.

photo-fin'ish, *n.* பந்தயத்தில் இன்ன குதிரை வெற்றியடைந்ததென்பதை நடுவர் தீர்மானிக்கும் பொருட்டுப் பந்தயத்தின் கடைசித் தசையில் மிகநெருக்கமாக எடுக்கப்பட்ட நிழற்படம்; பந்தயத்தின் இறுதிக்கட்ட நெருக்கடி.

pho'togen, *n.* மெழுகெண்ணெய் வகை; ஒளியுற்பத்தி உறுப்பு.

photogen'ic, *a.* ஒளியுண்டாக்குகிற; சுடர்விடுகிற; நிழற்படம் எடுக்கத்தக்க.

phot'oglyph, phot'oglyphy, *n.* நிழற்படச் செதுக்குக் கலை.

phot'ograph, *n.* நிழற்படம்; *v.* நிழற்படம் எடு; நிழற்பட உருவொப்புமை எடு; நிழற்படவெடுப்பிற் செயற்படு.

photog'rapher, photog'raphist, *n.* நிழற்படக்கலைஞர்; நிழற்படத்தொழிலர்; நிழற்பட வல்லுநர்.

photog'raphy, *n.* நிழற்படக் கலை.

photogravure', *n.* நிழற்பட மறிபடிவத் தகட்டுச்செதுக்குரு; *v.* நிழற்பட மறிபடிவத்தை உலோகத்தகட்டில் பதியவைத்துச் செதுக்குவது மூலமாக ஒப்புருவம் எடு.

photom'eter, *n.* ஒளிச்செறிவு மானி.
photom'etry, *n.* ஒளிச்செறிவளவை.
photomic'rograph, *n.* உருப்பெருக்காடியினுல் விரிவாக்கப் பட்ட பொருளின் நிழற்படம்.
photophob'ia, *n.* ஒளிவெறுப்பு, கண்கூச்சம்.
phot'ophone, *n.* ஒலிகளை ஒளிமூலமாகக் கடத்தும் அமைவு.
phot'osphere, *n.* ஞாயிறு-விண்மீன் முதலிய வான்கோளங் களைச் சூழ்ந்துள்ள ஒளிக்கோசம்.
Phot'ostat, *n.* படவுருப் படிவமைவு, ஆவணங்கள்-வரிவடி வங்கள் முதலியவற்றின் படியுருவங்களை எடுப்பதற்கான நிழற்பட அமைவு ; படவுருப்படிவம், நிழற்பட அமைவினுல் எடுக்கப்பட்ட ஆவணங்கள் முதலியவற்றின் நேர்படியுருவம்.
photosyn'thesis, *n.* (தாவ.) ஒளி இயைபாக்கம்.
phototeleg'raphy, *n.* தந்திப்பட அனுப்பீட்டமைவு.
pho'totype, *n.* ஒளிப்படத் தகட்டச்சு; நிழற்படத் தகட்டச்சு முறைப்படம்.
photozincog'raphy, *n.* நிழற்பட முறையில் துத்தநாகத் தகட்டில் உருச் செதுக்குங் கலை.
phrase, *n.* சொற்றொடர், தொடர் மொழி ; சொல் தொடுப்பு ; மரபுவழிச் சொற்றொடர் ; ஒருசொல் நீர்மைத்தொடர் ; திட்ப நுட்பமான சிறு தொடர் ; (இசை.) பெரிய பாடலின் கூறுகிய சிறு துணுக்கு ; *v.* சொற்கள் வாயிலாக வெளிப் படுத்து.
phrase'-monger, *n.* இன்சொற்றொடர் ஆர்வலர்.
phras'eogram, *n.* சுருக்கெழுத்தில் சொற்றொடரைக் குறிக் குங் குறியீடு.
phras'eograph, *n.* சுருக்கெழுத்தில் தனிக்குறியீடுடைய சொற்றொடர்.
phraseol'ogy, *n.* சொல்நடை.
phra'ses, *n. pl.* உள்ளீடில்லாத வெறுஞ்சொற்றொடர்கள்.
phrat'ry, *n.* (வர.) கிரேக்கரிடையே குலத்தின் கிளையான குருதியினப் பிரிவு ; பண்டைய இனங்களின் குலமுறைப் பிரிவு.
phrenet'ic, *a.* வெறிபிடித்த, மூர்க்கமான; விடாப்பிடி வெறி கொண்ட.
phren'ic, *a.* (உள்.) உந்து தசையினுடைய ; வயிற்று விதானஞ் சார்ந்த.
phrenol'ogy, *n.* மண்டையோட்டு அமைப்பு ஆய்வியல், பல்வேறு உளத்திறங்களுக்குரிய உறுப்புக்களின் வளர்ச்சி யையும் நிலையையும் மண்டையோட்டின் வெளியமைப்பு மூலமே துணிய முயலும் ஆய்வுத்துறை நூல்.
phren'sy, *n.* ஞானவெறி, தெய்வமேறிய ஆவேசம், திப்பியம்; பேய்கொண்ட நிலை.
phron'tistery, *n.* எண்ணிப் பார்ப்பதற்கான இடம்.
Phry'gian, *a.* பண்டைய சிறிய ஆசியாவில் (Asia Minor) உள்ள பிரிஜியா சார்ந்த ; (தொ.) Phrygian cap, உச்சிப் பகுதி முன்னுல் வளைந்துள்ள கூம்புவடிவக் குல்லாய் ; Phrygian mode, (இசை.) போர்த்திறத்திலமைந்த பண்டைய கிரேக்க இசைப்பாணி.
phthis'ical, *a.* ஈளை சார்ந்த ; காச நோயுடைய.
phthis'is, *n.* ஈளை, காச நோய்.
phut, *n.* கொப்புளம் அல்லது மெல்லிய தோற்பையின் வெடிப்பொலி; துப்பாக்கிக்குண்டு பாயும் ஒலி; *adv.* 'பட்' டென்று ; (தொ.) go phut, தகர், இடிந்து விழு ; திட்டம் முதலியவற்றின் வகையிற் பாழ்படு.
phylac'tery, *n.* யூதர்கள் அணியும் மறைவாசகங்கள் அடங் கிய சிறு தோற்பேழை ; பகட்டாரவாரச் சமய வினைமுறை ; தாயத்து; (தொ.) make broad one's phylacteries, நேர்மை கடைப்பிடிப்பதாகப் பகட்டிக்கொள்.
phylet'ic, *a.* (உயி.) இனக்குழு சார்ந்த.

phylloph'agan, *n.* தழையுண்ணி, இலைகளைத் தின்றுவாழும் விலங்கு.
phylloph'agous, *a.* தழையுண்ணியான, இலைகளைத் தின்று வாழ்கிற.
phyll'opod, *n.* தழைக்காலி, இலைபோன்ற கால்களையுடைய நத்தையின உயிர் ; *a.* இலைபோன்ற கால்களையுடைய.
phyll'ostome, *n.* தழைமூஞ்சி வாவல், இலைபோன்ற மூக்கினை யுடைய வெளவால்.
phyllotax'is, *n.* இலையடுக்கு முறை.
phylloxer'a, *n.* செடிப்பேன் இனம், கொடிமுந்திரிச்செடியை அழிக்கும் பூச்சிவகை.
phylogen'esis, phylog'eny, *n.* விலங்கு அல்லது செடி வகையின் இனவளர்ச்சி ; விலங்கு அல்லது செடிவகையின் இனவரலாறு.
phyl'um, *n.* (உயி.) விலங்கு அல்லது செடிவகையின் இனப் பெரும்பிரிவு ; *pl.* phyl'a.
phys'ic, *n.* நோய்தீர்க்குங் கலை, பண்டுவம் ; மருத்துவத் தொழில் ; (பே-வ.) மருந்து ; *v.* மருந்துகொடு ; (தொ.) physic garden, நூலுக்கு விளக்கந்தரும் வகையில் வைத்துப் பேணப்படும் தோட்டம்.
phys'ical, *a.* இயற்பொருள் சார்ந்த, சடப்பொருள் தொடர் பான ; இயற்பியல் சார்ந்த, இயற்பியல் விதிகளுக்கிணங் கிய ; உடல் சார்ந்த ; (தொ.) physical astronomy, வான் கோளங்களின் இயற்பியல் நிலையையும் வேதியியல் நிலையையும் பற்றிய ஆய்வுநூல் ; physical chemistry, இயற்பியல் வேதிநூல், வேதியியல் பண்புசார்ந்த இயற்பியல் கூறுகளையும் வேதியியல் இயைபுகளோடு உடனுக ஏற்படும் இயற்பியல் மாற்றங்களையும் ஆயும் நூல்துறை ; physical force, உடம்பின்மீதான வலுவந்தத் தாக்கு ; physical geography, இயற்கையமைப்புக்களைப்பற்றிக் கூறும் நில வியல்.
physi'cian, *n.* மருத்துவர்; மருத்துவத்திலும் அறுவையிலும் சட்டப்படித் தகுதி பெற்றவர் ; நோய்தீர்ப்பவர் ; கோளாறு அகற்றுபவர், தீங்கு நீக்குபவர்.
phys'icism, *n.* இயற்பொருட் கோட்பாடு, வெறும் இயற் பொருள்களே அல்லது சடப்பொருள்களே உண்மையானவை என்னுங் கோட்பாடு.
phys'icist, *n.* இயற்பியல் ஆய்வுத்துறை மாணவர் ; இயல் நூல் மாணவர் ; உயிரின் இயற்பொருள் தோற்றக் கோட் பாட்டாளர்.
phys'icky, *a.* மருந்துபோன்ற ; மருந்தினை நினைவூட்டுகிற.
phys'ics, *n. pl.* இயற்பியல், இயற்பொருள் ஆற்றல் ஆகிய வற்றின் இயல்புகளைப்பற்றி ஆயும் நூல்துறை.
physioc'racy, *n.* இயலாட்சி, இயற்கை முறைக்கு ஒத்த அரசு.
phys'iocrat, *n.* இயலாட்சி ஆதரவாளர், இயற்கை முறைக்கு ஏற்றதான அரசாட்சி வேண்டுமென்பவர்.
physio'geny, *n.* உயிரியக்கச் செயற்பாடுகளின் தோற்ற வளர்ச்சி வரலாறு.
physiogn'omy, *n.* உறுப்பமைதி இயல், சாமுத்திரிகம், முகத்தோற்றங்களிலிருந்து அல்லது உடலமைப்பிலிருந்து ஒருவர் குணத்தையறியுங் கலை ; உறுப்புக்களின் அமைதி ; முக அமைப்பு ; (பே-வ.) முகம் ; நாடு முதலியவற்றின் புறவியல்புகள் ; சிறப்புக் கூறு ; முனைந்த சிறப்புப்பண்பு.
physiog'raphy, *n.* இயற்கையமைப்பின் விளக்கம் ; இயற் கைத் தோற்றங்களின் வருணனை ; பொருட்தொகுதிகளின் விவரக் குறிப்பு ; இயற்கையமைப்புக்களைப்பற்றிக் கூறும் நிலவியல்.
physiol'atry, *n.* இயற்கை வழிபாடு.
physiol'ogy, *n.* உடல்நூல், விலங்குகளும் தாவரங்களும் உள்ளிட்ட உயிரினங்களின் இயற்கைச் செயற்பாடுகளையும் தோற்றங்களையும்பற்றிக் கூறும் நூல்.

**physiothe'rapist**, *n.* இயன் மருத்துவர் ; மின் மருத்துவர் ; பிடித்துவிடுதல் முதலிய இயற்கைமுறைகளால் நோய் தீர்க்கும் மருத்துவர்.

**physiothe'rapy**, *n.* இயன் மருத்துவம், உடம்பு பிடித்து விடுதல்-தூயகாற்று-மின்சாரம் போன்ற இயற்கை முறைகளால் பண்டுவம் செய்யும் முறை.

**physique'**, *n.* உடலமைப்பு, உடம்பின் கட்டுக்கோப்பு வளம்.

**phytogen'esis, phyto'geny**, *n.* செடிகளின் தோற்ற வளர்ச்சி முறை.

**phytog'raphy**, *n.* விவரணத் தாவர நூல்.

**phytol'ogy**, *n.* தாவரவியல்.

**phyt'omer**, *n.* தாவர அடியுறுப்புக்கூறு ; தாவர உயிர்க்கூறு ; தாவர உயிர்க்கொழுந்து, தனிச்செடியாக வளரும் திறமுடைய முளை.

**phytoph'agous**, *a.* செடிகளைத் தின்று வாழ்கிற.

**phytot'omy**, *n.* தாவரக்கூறுய்வு, செடிகளை வெட்டிக் கூறிட்டு ஆய்வு செய்தல்.

**phytozo'on**, *n.* கடற்பஞ்சினம், செடிபோன்ற தோற்றமுள்ள விலங்கு ; *pl.* phytozo'a.

**pi**, *n.* 'பை' என்ற ஒலிப்புடைய கிரேக்க எழுத்து ; (கண.) வட்டலகு, வட்டத்தின் விட்டத்துக்கும் சுற்றுவரைக்கும் உள்ள தகவினைக் குறிக்கும் அடையாளமான 'பை' என்ற கிரேக்க எழுத்து.

**piac'ular**, *a.* கழுவாய் இயல்புடைய, பரிகாரமான.

**piaffe'**, *v.* குதிரைவகையில் பெருநடையிட்டுச் செல்.

**piaff'er**, *n.* குதிரை வகையில் பெருநடைச் செலவு.

**pi'a mat'er**, *n.* (உள்.) மூளையைச் சூழ்ந்துள்ள மூன்று சவ்வுப் படலங்களில் கடைசி அடிச்சவ்வுப் படலம்.

**pianette'**, *n.* நிமிர்ந்த அமைப்புடைய தாழ்வான சிறு இசைப் பெட்டி வகை.

**piani'no**, *n.* நிமிர்ந்த அமைப்புடைய இசைப்பெட்டி வகை.

***pianissi'mo***, (இத்.) *n.* (இசை.) மிக மென்மையாக வாசிக்கப் படவேண்டிய பாடற்பகுதி ; *adv.* மிக மென்மையாக.

**pi'anist**, *n.* இசைப்பெட்டிவகை வாசிப்பவர்.

***pia'no***[1], (இத்.) *n.* (இசை.) மென்மையாக வாசிக்கப்பட வேண்டிய பாடற் பகுதி ; *adv.* மென்மையாக.

**pian'o**[2], *n.* இசைப்பெட்டி வகை, கின்னரப்பெட்டி ; *pl.* pian'os ; (தொ.) cottage piano, நிமிர்ந்த அமைப்புடைய சிறு இசைப்பெட்டிவகை; grand piano, நிறைவொலியுடைய பெரிய கிடை இசைப்பெட்டிவகை ; piano organ, இயந்திர இயக்கத்தினுல் வாசிக்கப்படும் குழல்கள் அமைந்துள்ள இசைப்பெட்டி வகை.

**pianofort'e**, *n.* = piano[2].

**pianol'a**, *n.* இயந்திர இயக்கத்திஞல் இசைப்பெட்டி வாசிப்பதற்கான அமைவு வகை.

**pian'o-play'er**, *n.* இசைப்பெட்டிவகை வாசிப்பதற்கான இயந்திர அமைவு ; இசைப்பெட்டிவகை வாசிப்பவர்.

**pias'ter, pias'tre**, *n.* ஸ்பானிய வெள்ளி நாணய வகை ; சிறு துருககிய-எகிப்திய நாணய வகை.

**piazz'a**, *n.* இத்தாலிய நகரத்தின் பொதுச்சதுக்கம் அல்லது அங்காடியிடம்.

**pib'roch**, *n.* ஒத்துவாத்தியத் திரிபுவகை.

**pic'a**, *n.* ஓர் அங்குலத்தில் ஆறு வரிகள் அடுக்கக்கூடிய அளவுள்ள அச்சுருப்படிவ வகை.

**pic'ador**, *n.* ஏறெதிரே ஈட்டியேந்திய இவுளி வீரன்.

**pic'amar**, *n.* மரக்கீலிலிருந்து எடுக்கப்படும் கசப்பு எண்ணெய் வகை

**picaresque'**, *a.* புனைகதை வகையில் துணிகரப் போக்கிரிகளின் செயல்களைப் பற்றிக் கூறுகிற.

**picaroon'**, *n.* போக்கிரி ; திருடன் ; கடற்கொள்ளையாள் ; கொள்ளைக்கப்பல் ; *v.* கொள்ளையாளாகச் செயலாற்று.

**picc'alilli**, *n.* காய்கறி ஊறுகாய்.

**picc'aninny**, *n.* சிறுகுழந்தை ; நீகிரோவர் குழந்தை ; *a.* சின்னஞ்சிறிய, குழந்தை இயலுடைய.

**picc'olo**, *n.* சிறு புல்லாங்குழல் வகை ; *pl.* picc'olos.

**pice**, (இ) *n.* பைசா, செப்புக்காசு.

**pichiciag'o**, *n.* தென் அமெரிக்காவில் சிலி (Chili) நாட்டைச் சேர்ந்த வளைதோண்டும் இயல்புடைய சிறுவிலங்கு வகை.

**pick**, *n.* குந்தாலி, குத்துகோடரி ; பற்குச்சி ; கூர்நுனிக் கருவி ; பொறுக்குதல், தெரிந்தெடுத்தல், தெரிவு, ஆய்வு ; ஒன்றன் மிகச்சிறந்த கூறு ; *v.* குந்தாலியாற் கொத்து, கல்லு ; குந்தாலியால் வெட்டித் துளைசெய் ; பல்குத்து ; எலும்பு முதலியவற்றில் ஒட்டிக்கொண்டிருக்கும் தசையை அகற்று ; பழம்பறி ; மலர்கொய் ; பறவைகள் வகையில் கூலம் முதலியவற்றை அலகினுல் கொத்தியெடு ; மனிதர்கள் வகையில் சிறிது சிறிதாகத் தின் ; (பே.வ.) சாப்பிடு ; பொறுக்கு, தேர்ந்தெடு, ஆய்ந்தெடு; பிய்த்தெறி, பிரித்தெடு; (தொ.) pick a lock, திருடும் நோக்கத்துடன் கூர்ங்கம்பியினுல் பூட்டைத் திற ; pick and choose, முயன்று தேர்ந்தெடு ; pick and steal, சிறு களவு செய் ; pick a quarrel with, வலிந்து சண்டைக்குப் போ, சண்டையிடுவதற்கு வாய்ப்பு ஏற்படுத்திக்கொள் ; pick at, குற்றங்காண் ; pick holes in, குற்றந் தேடிக்காண் ; pick oakum, பழங்கயிறுகளைப் பிரித்து நார் எடு ; pick off, பிடுங்கியகற்று ; ஆட்கள் முதலியவர்களை ஒவ்வொருவராக வேண்டுமென்றே சுடு ; pick one's pocket, சட்டைப் பையிலுள்ளவற்றைத் திருடு, மடிதடவு ; pick one's way, உன்னிப்பாகக் கால் பார்த்து வைத்து நடந்துசெல் ; pick out, பிரித்துணர் ; வண்ணப் புள்ளிகளிட்டுப் பிரித்துக்காட்டு ; பொருள் தெரிந்துகொள் ; கேள்வி மூலமாகமட்டும் அறிந்திருக்கிற இசைப்பண்ணினை இசைப்பெட்டி முதலியவற்றில் வாசி ; pick over, ஆய்ந்து தேர்ந்தெடு ; pick to pieces, பிய்த்தெறி ; குற்றங்களை ஒவ்வொன்ருக எடுத்துக்காட்டிக் கண்டி ; pick up, நிலம் முதலியவற்றைக் குந்தாலியால் கொத்து ; கைப்பற்றி எடுத்துக்கொள் ; விழுந்தபின் முயன்றெழுவி ; பிழைப்புக் குரியதை ஈட்டிக்கொள் ; ஊதியம் அடை ; செய்தி தெரிந்து கொள் ; நீடொளி விளக்கைக்கொண்டு தேடிக்காண் ; வானொலியில் விரும்பியதைக் கேட்பதில் வெற்றிபெறு ; வழியில் ஏற்றி இட்டுச்செல் ; கண்டு அறிமுகப்படுத்திக்கொள் ; தவறிய வழியை மீண்டும் கண்டுபிடி ; சதைப்பற்றுக்கொள்; புத்துணர்ச்சிபெறு ; இழந்த உடல்நலம் எய்தப்பெறு ; விளையாட்டுகள் வகையில் கட்சி ஆட்டக்காரர்களை மாறி மாறித் தேர்ந்தெடு ; the pick of the bunch, கிடைப்பவற்றுள் மிகச் சிறந்தது.

**pick'-a-back**, *adv.* சுமைபோலத் தோளிலும் முதுகிலும் ஏற்றிக்கொண்டு.

**pick'aninny**, *n.*, *a.* = piccaninny.

**pick'ax, pick'axe**, *n.* குந்தாலி ; *v.* குந்தாலியால் நிலம் முதலியவற்றைக் கொத்து ; குந்தாலியைக்கொண்டு வேலை செய்.

***pick'elhaube***, (செர்.) *n.* கூர்முனையுடைய தலைக்கவசம்.

**pick'er**, *n.* குந்தாலியால் நிலங்கொத்துபவர்; பழம் பறிப்பவர்; மலர் கொய்பவர் ; நிலங் கொத்துவதற்கான அல்லது கல்லுவதற்கான கருவி வகைகள்.

**pick'erel**, *n.* மீன் வகையின் குஞ்சு.

**pick'et**, *n.* குற்றி ; கட்டுத்தறி ; வேலிகளுக்கான முளை ; (படை) கழுமரம், தண்டனைக்குரியவர் நிறுத்தி வைக்கப் படுவதற்குரிய கூர்ங்கழி ; கழுமர ஏறத்தண்டனை ; (படை.) பகைப்புலக் காவற்படை ; எல்லைக்காவற் பிரிவு ; பாசறைக்காவற் பிரிவு; நகர்க்காவல் பாசறைப்பிரிவு; *v.* கூர் முளையடித்துக் காப்பமை ; குதிரை முதலியவற்றை முளையடித்துக் கட்டிவை ; காவற்பணியில் வீரர்களை நிறுத்து ; மறியல் செய்பவர்களைக் கொண்டு தொழிலாளர்களைச் சூழ்ந்து

நெருக்கு; மறியல் செய்; (தொ.) inlying picket, தங்கு யிடத்தில் முன்னேற்பாடாக வைத்திருக்கப்படும் காவற் படைப்பிரிவு; outlying picket, பகைவர்களைக் கவனிப்பதற் காகப் புறத்தே அனுப்பப்படும் காவற்படைப் பிரிவு.

**pick'ets**, *n. pl.* வேலைநிறுத்தம் முதலியவற்றின்போது தனி யாகவோ கூட்டாகவோ மறியல்செய்பவர்கள்.

**pick'ing**, *n.* கொத்துதல்; கல்லுதல்; கொய்தல்; பறித்தல்; தெரிந்தெடுத்தல்; கள்ளத்தனமாகப் பூட்டைத் திறத்தல்.

**pick'ings**, *n. pl.* மேல்வரும்படிகள், பிசிர்வருமானங்கள்.

**pic'kle**, *n.* ஊறவைப்பதற்குரிய நீர்மம், ஊறல் உப்புநீர்; ஊறற் புளிங்காடி; ஊறற் சிறுதேறல்; துப்புரவாக்குவதற் கான காடிக் கரைசல்; குறும்புக்குழந்தை; *v.* உவர்நீர் முதலி யவற்றில் ஊறவைத்துப் பதனமிடு, புளிக்காடியில் ஊறுகாய் போடு; உப்புநீர் முதலியவை ஊட்டிப் பக்குவஞ் செய்; (கப்.) ஆளைக் கசையாலடித்த பிறகு அவன் முதுகில் உப்பு அல்லது புளிக்காடி தடவித் தேய்; (தொ.) have a rod in pickle for, தண்டனை கொடுக்க ஒருங்கியிரு.

**pic'kles**, *n. pl.* ஊறுகாய், உப்பு முதலியவற்றில் ஊறின காய்; வெங்காய ஊறல்; வெள்ளரிக்காய் ஊறல்.

**pick'lock**, *n.* பூட்டுக்களைக் கள்ளத்தனமாகத் திறப்பவர்; பூட்டுக்களைக் கள்ளத்தனமாகத் திறப்பதற்கான கருவி.

**pick'-me-up**, *n.* கிளர்ச்சி பான வகை.

**pick'pocket**, *n.* முடிச்சுமாறி, கத்திரிக்கள்ளன்.

**pick'some**, *a.* மிகுகண்டிப்பான சுவைத்திறமுடைய.

**pick'-up**, *n.* தற்செயலாக அறிமுகமானவர்; எதிரெதிர்க்கட்சி ஆட்டத்தலைவர்கள் தங்கள் கட்சி ஆட்டக்காரர்களை மாறி மாறித் தேர்ந்தெடுத்து ஆடும் விளையாட்டு; மரப்பந்தாட்ட வகையில் பந்தினைக் கையாற் பற்றியெடுத்தல்; பதிவிசைப் பெட்டியின் இசைத்தட்டுப் பாடல்களை மின் ஆற்றலால் வானொலி ஒலிபெருக்கியின்மூலங் கேட்கும்படி செய்வதற்கான அமைவு.

**pick'wick**, *n.* விலைமலிவான சுருட்டுவகை.

**Pickwick'ian**, *a.* சொற்கள் வகையில் தனிப்பொருளில் வழங்குகிற; மறைபொருளில் வழங்கப்பெறுகிற; தனித் துறை ஊக முறையில் வழங்கப்படுகிற.

**pic'nic**, *n.* கூட்டாஞ்சோறு; மனைப்புற விருந்துக்குழு; (பேவ.) இனிய ஏற்பாடு; எளிய செய்தி; *v.* மனைப்புற விருந்திற் கலந்துகொள்; (தொ.) no picnic, எளிதல்லாத செயல்.

**picot'**, *n.* ஆடையின் ஒப்பனைக்கரை முதலியவற்றிலுள்ள முறுக்கிய நூலிழைக்கண்ணி.

**picotee'**, *n.* பூப்பயிர்ப்பாளர்கள் வளர்க்கும் இரட்டடுக்கு இதழ் மலர்ச்செடிவகை.

**picq'uet**, *n.* காவற்படை, சேணைக்காவல்.

**pic'ric acid**, *n.* (வேதி.) சாயம் போடுவதிலும் அறுவை மருத்துவத்திலும் வெடிமருந்துகளிலும் பயன்படுத்தப்படும் மிகுகசப்பு மஞ்சள்நிறப் பொருள்.

**Pict**, *n.* வடக்குப் பிரிட்டனிலிருந்த தொல்குடி மக்களினத் தவர்.

**pic'tograph**, *n.* ஓவிய எழுத்து; சித்திரக் குறுக்கெழுத்து.

**pictog'raphy**, *n.* ஓவியவெழுத்துக் கலை.

**pictor'ial**, *n.* படமிகு பத்திரிகை; *a.* படங்கள் சார்ந்த; படங்கள் வாயிலாகத் தெரிவிக்கப்படுகிற; பட விளக்கங்கள் கொண்ட; படமாக அமையத் தகுந்த.

**pic'ture**, *n.* படம்; ஓவியம்; கலைப்படம்; உருவப்படம்; அழகுப்பொருள்; காட்சி; மொத்தக்காட்சித்தொகுதி; செய் திக்கோவை, பொருள் தொகுதி, விவகாரம்; உருமாதிரி, ஒப்புமை, மாதிரி; *v.* படங்கள் வாயிலாகத் தெரிவி; விளக்க மாக வருணித்துக்கூறு; கற்பனை செய்துபார்; (தொ.) come into the picture, கவனத்துக்குரியதாகு; in the picture, சிறிது கவனத்தைப் பெற்றிருக்கிற; போதிய அளவு ஆதரித்துப் பேசப்பெற்றிருக்கிற; moving pictures, the pictures, திரைப்படக்காட்சி; out of the picture, தொடர் பற்றது; picture hat, வெள்ளை விளிம்புடைய மகளிர் தொப்பிவகை; picture postcard, படமுடை அஞ்சலட்டை.

**pic'ture-card**, *n.* அரசன்-அரசி-ஏவலன் படந் தாங்கிய ஆட்டச்சீட்டுவகை.

**pic'ture-drome, pic'ture-palace, pic'ture-theatre**, *n.* திரைப்பட அரங்கு.

**pic'ture-gallery**, *n.* ஓவியக் காட்சிச்சாலை; ஓவியக் காட்சித் தொகுப்பு.

**picturesque'**, *a.* படம் போன்ற; படமாக எழுதத்தக்க; விளக்கமான; மொழி முதலியவற்றின் வகையில் கண்ணைக் கவருகிற; கவரும்படி வருணிக்கிற.

**pic'ture-writ'ing**, *n.* கருத்தோவிய முறை.

**pic'ul**, *n.* சீன எடுத்தலளவை (133-1/3 பவுண்டு).

**pic'ul-stick**, *n.* தோளில் மாட்டிச் சுமைகளைத் தூக்கிச் செல் வதறகான கோல்.

**pid'dle**, *v.* சிறுபிள்ளைத்தனமாக நட; சுவைக்காது உண்; (பேவ.) சிறுநீர் கழி.

**pidd'ock**, *n.* தூண்டிலிரையாகப் பயன்படுத்தப்படும் இரட் டைத் தடுக்கிதழ் நத்தை வகை.

**pidg'in**, *n.* (பேவ.) ஒருவரது வேலை, விவகாரம்; (தொ.) pidgin English, சீனரது சிதைவுற்ற ஆங்கில மொழிவழக்கு.

**pie**[1], *n.* பறவை வகை; வீண்வம்பு பேசுபவர்.

**pie**[2], *n.* மோதகவகை, சினையப்பம்; காய்கறி-இறைச்சி முதலி யவற்றைக் கரைத்த மாவினுள் வைத்து வேகவைத்துச் செய்யப்படும் பண்ணிய வகை; (தொ.) bran pie, யோக விழாத்தொட்டி, கிறிஸ்துமஸ் திருவிழாவின்போது கைக்கு வந்ததை எடுக்கும்படி பொம்மைகளைத் தவிட்டில் மறைத்து வைத்துள்ள தொட்டி; have a finger in the pie, உரிமை யின்றித் தலையிடுபவராயிரு; mud pie, குழந்தைகளின் விளை யாட்டுப் பண்ணியம்.

**pie**[3], *n.* (அச்சு.) அச்சுருப்படிவங்களின் குழப்பமான குவியல்; குழப்பம்; *v.* அச்சுருப்படிவங்களைக் கலந்துவிடு; (தொ.) printers' pie, அச்சுருப்படிவங்களின் குழப்பமான குவியல்.

**pie**[4], (இ.) *n.* பைசா, செப்புக்காசு.

**pieb'ald**, *a.* குதிரை முதலியவற்றின் வகையில் முறையின்றி வெண்மை கருமை நிறங்களையுடைய; பலவகையான, கதம்ப மான; கலப்பினமான.

**piece**, *n.* துண்டு; கூறு, பகுதி; துண்டு நிலம், அடைப் பிட்ட நிலப்பகுதி; பிரிவுற்ற பகுதி; கண்டம், தனிக்கூறு; முனைமுகம்; மாதிரிப்பகுதி; பாளம், ஒன்றுபட்ட கூறு, சினைப்பகுதி; அளவுப்பகுதி; அளவு மிடா; மாதிரி, எடுத்துக் காட்டு; சுடுபடைக்கலம், பீரங்கி; பீரங்கிக்குழல்; சது ரங்கம் முதலிய ஆட்டங்களில் ஆட்டக்காய்; நாணயம்; படம்; இலக்கியப்படைப்பு; இசைப்பாடல்; நாடகம்; *v.* இணைத்திடு; ஒட்டுப்போடு; முழுமையாக்கு; இழைகளைப் பொருத்து; இணைத்துப் பொருத்தவை; சேர்த்து உருவாக்கு, கூட்டி உருப்படுத்து; சிறுகச்சிறுக ஈட்டு; கதை முதலிய வற்றின் வகையில் பகுதிகளைச் சேர்த்து உருவாக்கு; ஒருங் கிணை; (தொ) all to pieces, துண்டுதுண்டாக, சிதறுண்ட நிலையில்; a piece of one's mind, வெளிப்படை வசவு; break to piece, துண்டுகளாக உடை; தகர்வுறு; சிதறு; in pieces, உடைந்துபோன நிலையில்; of a piece, ஒத்திருக் கிற, முரண்பாடற்ற; piece out, ஈட்டு; piece together, துண்டுதுண்டாகச் சேர்த்து ஒன்றாக்கு; piece up, ஒட்டுப் போடு; அண்டை கோடு; piece work, துண்டுவேலை, நேரக் கணக்கில் அல்லாமல் அளவுக்கேற்பக் கூலி பெறும் வேலை; to pieces, சிதைந்த நிலையில்.

*piece de resistance*, (பிர.) *n.* சாப்பாட்டில் வலுப்பண்டம்.

**piece'-goods**, *n. pl.* திட்டமான நீளத்துடன் செய்யப்படுந் துணி, ஜவுளி.

piece'meal, *n.* சின்னஞ் சிறுதுண்டு; கொஞ்சங்கொஞ்சமான அளவு; *a.* சிறிது சிறிதாகச் செய்யப்படுகிற; துண்டுதுண்டான; *adv.* துண்டு துண்டாக, சிறிது சிறிதாக; (தொ.) by piecemeal, கொஞ்சங் கொஞ்சமாக.

piec'er, *n.* இழைநெருடி, நூற்புத் தொழிற்சாலையில் அறுந்துபோன இழைகளைப் பொருத்துவதற்காக அமர்த்தப்பட்டுள்ள சிறுவன் அல்லது சிறுமி.

pie'crust, *n.* சிணையப்பத் தோடு, மோதக வகையின் வெந்த மாத்தோடு.

pied, *a.* பல வண்ணங்களாலான.

*pied a terre*, (பிர.) *n.* உள்ளங்கால் வைப்பிடம்; தற்காலிகத் தங்கலிடம்.

pier, *n.* அலைதாங்கி, இரேவு, அலை இடைகரை, அலைவாய்க் குறடு; பாலந்தாங்கி; தூண்; பலகணிகளுக்கு இடையிலுள்ள திண்கட்டு வேலை.

pier'age, *n.* அலைமேடையைப் பயன்படுத்துவதற்கான கட்டணம்.

pierce, *v.* குத்தி ஊடுருவு; துளைத்து உட்செல்; குளிர்-நோவு-துன்பம் வகையில் உட்புகுந்து வருத்து; கூர்ந்துருவ நோக்கு; ஊசி முதலியவற்றினுற் குத்து; மிடா முதலியவற்றில் துளை உண்டுபண்ணு; வல்லந்தமாக நுழை.

pier'-glass, *n.* முற்காலக் கட்டுமானங்களிற் பலகணிகளுக்கிடையில் அமைக்கப்பட்ட நிலைக்கண்ணுடி; நீண்டுயர்ந்த பெரிய நிலைக்கண்ணுடி.

Pier'ian, *a.* வடக்கு தெசலி (N. Thessaly) நாட்டிலுள்ள கலைத் தெய்வங்களின் இருப்பிடமெனப் புகழ்பெற்ற பியரியா (Pieria) என்னுமிடஞ் சார்ந்த.

pi'errot, *n.* பிரஞ்சுநாட்டு விகடன்; *fem.* pierrette'.

*piet'a*, (இத்.) *n.* இயேசுநாதரின் உயிரற்ற உடலத்தைக் கன்னிமரியாள் தாங்கிக்கொண்டிருப்பதாகக் காட்டும் படம் அல்லது சிற்பம்.

pi'etism, *n.* பதினேழாம் நூற்றுண்டில் லூதரன் திருச்சபையில் (Lutheran Church) கடவுட்பற்றுர்வம் புதுப்பிப்பதற்காக ஸ்பீனர் (Spener) என்பவர் தொடங்கிய இயக்கம்; கடவுட்பற்றுணர்ச்சி; கடவுட்பற்றுள்ளவராகப் பகட்டிக் கொள்ளுதல்.

pi'etist, *n.* கடவுட்பற்றுணர்ச்சியுள்ளவர், பக்தர்; கடவுட்பற்றுர்வம் புதுப்பிக்க முயன்ற பதினேழாம் நூற்றுண்டுக்குரிய செர்மன் சமயச் சீர்திருத்த இயக்கத்தவர்.

pi'ety, *n.* கடவுட்பற்று; கடமையுணர்ச்சி.

piezom'eter, *n.* அமுக்கமானி.

pig, *n.* பன்றி; பன்றியிறைச்சி; இளம் பன்றி; இளம் பன்றியிறைச்சி; (பே-வ.) பேராசையர்; அழுக்குப்பிடித்தவர்; குதிர்வயிறர்; ஏறுமாறுனவர்; நச்சரிப்பவர்; உலையிலிருந்து எடுக்கப்பட்ட நீள் இரும்புப்பாளம்; கிச்சிலிப் பழச்சுளை; *v.* பன்றிக்குட்டிகளை ஈனு; பன்றிகளைப்போல் மந்தையாகத் திரள்; (தொ.) bring one's pigs to a fine market, bring one's pigs to a pretty market, bring one's pigs to the wrong market, நலமல்லா வாணிகஞ் செய்; buy a pig in a poke, கண்மூடித்தனமாக வாங்கு; pig it, பன்றிகளைப்போல் ஒருங்குதிரள்; pig's wash, பன்றித்தொட்டி நீர்; when pigs fly, என்றுமில்லாமல்.

pi'geon[1], *n.* புரு, மாடப்புரு; முட்டாள், பேதை, அப்பாவி, ஏமாளி; *v.* ஏமாற்று; (தொ.) clay pigeon, புரு வடிவுடைய களிமண் எய்குறி; homing pigeon, தூது கொண்டுசெல்லப் பயிற்சியளிக்கப்பெற்ற புரு; pigeon pair, ஆணும் பெண்ணுமான இரட்டைக் குழந்தைகள்; குடிக்கு ஒரே ஆணும் பெண்ணுமாகப் பிறந்த குழந்தைகள்; pigeon's milk, புருக்கள் குஞ்சுகளுக்கு ஊட்டும் அரைச்செரிமான உணவு; பிள்ளைகளை எடுத்துவரும்படி கூறி ஏமாற்று விளையாட்டாகக் கூறும் இல்பொருள் குறிப்பு.

pi'geon[2], *n.* (பே-வ.) விவகாரம்; (தொ.) pigeon English, சீனர்களும் ஐரோப்பியர்களும் பரிமாறிக்கொள்ளும் ஆங்கிலச் சொற்கள் பெரும்பாலுங்கொண்ட மொழிவழக்கு.

pig'eon-breast, *n.* உருவக்கேடாகக் குறுகலாய் அமைந்த மார்பு.

pig'eon-breast'ed, *a.* உருவக்கேடாகக் குறுகலாய் அமைந்த மார்புடைய.

pi'geongram, *n.* புரு உய்க்குஞ் செய்தி.

pig'eon-hearted, *a.* அஞ்சிச் சாகிற.

pig'eon-hole, *n.* புருமாடம், புருக் கூட்டறை; *v.* புருக் கூட்டறையிற் பிரித்தடுக்கு; பின்னுய்வுகருதிச் செய்தியை ஒதுக்கிவை; செய்தியைத் திட்டமாக நினைவில் வை.

pig'eonry, *n.* புருமாடம், புருக்கூடு.

pig'eon-toed, *a.* உள்வாங்கி வளைந்திருக்கும் கால் விரல்களையுடைய.

pigg'ery, *n.* பன்றித்தொழுவம்.

pigg'ish, *a.* பன்றிபோன்ற; பேராசை கொண்ட; அழுக்குப் பிடித்த; ஏறுமாறுன போக்குடைய.

pigg'y, *n.* பன்றிக்குட்டி.

pig'gy-wiggy, *n.* குழந்தை வழக்கில் பன்றிக்குட்டி; அழுக்குப் பிடித்த குழந்தை; கிட்டிப்புள் விளையாட்டு.

pig'headed, *a.* பிடிவாதமான, அறிவற்ற.

pig'-iron, *n.* தேனிரும்பு.

pig'-jump, *v.* குதிரை வகையில் கால்களை இணைக்காமல் நான்கு கால்களாலுங் குதி.

pig'let, pig'ling, *n.* பன்றிக்குட்டி.

pig'ment, *n.* வண்ணப்பொருள், சாயப்பொருள்; நிறமி, இயற்கை நிறப்பொருட்கூறு.

pig'my, *n.*, *a.*=pygmy.

pig'nut, *n.* நிலக்கடலை வகை.

pig'skin, *n.* பன்றித்தோல்; பதனிட்ட பன்றித்தோல்.

pig'sticker, *n.* ஈட்டிகளைக்கொண்டு பன்றி வேட்டையாடுபவர்; பன்றி வேட்டைக்காகப் பயிற்சியளிக்கப்பட்ட குதிரை; இறைச்சிக்காகப் பன்றி வெட்டுபவர்; நீண்ட அலகுடைய சட்டைப்பைக் கத்தி.

pig'sticking, *n.* ஈட்டிகள் கொண்டு காட்டுப்பன்றி வேட்டையாடல்; இறைச்சிக்காகப் பன்றியைக் கொல்லுதல்.

pig'sty, *n.* பன்றிப்பட்டி; அழுக்கடைந்த குடிசை.

pig'tail, *n.* மெல்லிய புகையிலைச்சுருள்; தொங்குமயிர்ப் பின்னல், சடைப்பின்னல், பனிச்சை.

pig'wash, *n.* பன்றித்தொட்டி நீர்.

pig'weed, *n.* பன்றிகள் தின்னும் பூண்டுவகைகள்.

pike[1], *n.* வேல்கம்பு, ஈட்டி, கூர்முனைக் கழி, கூர்ங்கோல்; குன்றின் கொடுமுடி; நன்னீர்ப் பெருந்தீனி மீன்வகை; நன்னீர் மீன்வகையின் குட்டி; (பே-வ.) மீன்கொத்துங் கருவி; *v.* ஈட்டியினுற் குத்தித் துளை, வேல்கம்பால் குத்திக் கொல்லு.

pike[2], *n.* சுங்கச்சாவடி, சுங்கம், ஆயம்; சுங்கச்சாவடி அமைந்துள்ள பெரும்பாதை.

pike'let, *n.* மாலைச்சிற்றுண்டி அப்பவகை.

pike'man[1], *n.* ஈட்டிவீரன்.

pike'man[2], *n.* சுங்கச்சாவடிக் காவலர்.

pik'er, *n.* (பே-வ.) சூதாட்டத்தில் ஆர்வமற்ற ஆட்டக்காரர்; வீர விளையாட்டு மனப்பான்மையற்றவர்.

pike'staff, *n.* சுளிக்கு, ஈட்டியின் மரக் கைப்பிடி; (தொ.) plain as a pikestaff, மிகத்தெளிவான.

pilas'ter, *n.* சதுரத் தூண்.

pilau', pilaw', (பெர்.) *n.* புலவு, ஊனேடு கலந்து நறுமணப் பொருள்களிட்டுப் பக்குவப்படுத்திய உணவு.

pilch, *n.* மென்கம்பளத் துணி.

pil'chard, *n.* சிறு கடல்மீன் வகை.

pil'corn, *n.* உமி தானியமணியோடு ஒட்டிக்கொண்டிராத கூலவகை.

pile[1], *n.* முளை, கூர்ங்கழி; குத்துக்கழி; ஆற்றின் சேற்று நிலத்தில் செங்குத்தாக நிறுத்திவைக்கப்படும் பாலக்கால்; கட்டிட அடிப்படைதாங்கும் பதிகால்; பண்டை ரோமரின் வேல்; அம்பு முளை; (கட்.) தலைகீழ்க்கூம்பு; *v.* கூர்முளைகளை அமைத்துக்கொடு; முளையிறக்கு; கட்டிட அடிப்படை தாங்கும் நீண்ட பதிகால் தறிகளை அடித்திறக்கு.

pile[2], *n.* குவியல், ஒழுங்கான அடுக்கு; ஈமவிறகு அடுக்கு; படியடுக்கு; படைக்கல அடுக்கு; குண்டுக்குவியல்; நாணய அடுக்கு; (பே-வ.) பணக்குவியல், செல்வம்; உயர்ந்த பெருந்திரளான கட்டிடங்கள், நீள்நெடுமாடம்; மின்நிரை, மின்னோட்டம் விளைவிப்பதற்கான வகைமாறி அடுக்கி வைக்கப்படும் வேறுவேறு உலோகங்களாலான தகடுகளின் நிரை; அணு ஆற்றலைக் கட்டுப்படுத்தி இயக்கும் அமைவு; *v.* குவி, ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கு; சுமையேற்று; (தொ.) atomic pile, அணு ஆற்றலைக் கட்டுப்படுத்தி இயக்கும் அமைவு; funeral pile, ஈமவிறகு அடுக்கு; make a pile, make one's pile, வேண்டிய அளவு பணங் குவி; pile arms, சுழல் துப்பாக்கிகள் வகையில் தடித்த முனைகள் கீழே இருக்க வாய்ப்புறம் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருக்கும்படி அமைத்து வை; pile it, மிகைபடக்கூறு; pile up, கப்பலைப் பாறைகளின்மேல் மோதுவி; கப்பல் கரைதட்டச் செய்; pile on the agony, pile up the agony, (பே-வ.) துன்பச் செய்திகளை மேன்மேல் அடுக்கிக்கொண்டுபோ.

pile[3], *n.* மென்மயிர், துய், தூவி, மெல்லிறகு, ஒற்றை முடி மயிர்; மெய்ம்மயிர்; ஆட்டு மயிர்; துணிச்சடை.

pile[4], *n.* நோய்வகையில் மூலமுளை, மூலக்கட்டி.

pile[5], *n.* நாணயப் பின்புறம்.

pile'-driver, *n.* கட்டிட அடிப்படை தாங்கும் நீண்ட பதிகால் தறிகளை அடித்திறக்குவதற்கான இயந்திரம்.

piles, *n. pl.* மூலநோய்.

pile'wort, *n.* மஞ்சள்நிற மலர்ச்செடி வகை.

pil'fer, *v.* சிறு களவு செய், அற்பப்பொருள்களைத் திருடு.

pil'ferage, *n.* சிறு திருட்டு.

pil'ferer, *n.* திருடன்.

pilgarl'ic, *n.* வழுக்கைத்தலை; வழுக்கைத்தலையர்; பேதை.

pil'grim, *n.* தலந் திரிதருபவர், யாத்திரிகர்; வாழ்க்கைப் பயணஞ் செய்பவர்; *v.* யாத்திரிகர்போல் அலை; (தொ.) Pilgrim Fathers, வெளியேறிய மூத்தோர், 1620-இல் அமெரிக்காவுக்கு வெளியேறிச்சென்று குடியேறிய ஆங்கிலக் கடுந் தூய்மைச் சமயத்தார் (English Puritans); The Pilgrims of Great Britain, The Pilgrims of the United States, ஆங்கில-அமெரிக்க நட்புறவை வளர்க்குங் கழகங்கள்.

pil'grimage, *n.* யாத்திரை; வாழ்க்கைப்பயணம்; *v.* யாத்திரை செல்.

pil'grimize, *v.* யாத்திரை செய்; தல யாத்திரிகராகச் செயலாற்று.

pilif'erous, *a.* (தாவ.) மென்மயிருள்ள, துய்யுடைய.

pil'iform, *a.* மயிர்போன்ற.

pill, *n.* மாத்திரை, குளிகை; ஒப்புக்கொள்ள வேண்டிய தொன்று; மென்று விழுங்கவேண்டிய செய்தி; தொல்லைப் படுத்தும் ஆள்; பந்து; வரிப்பந்தாட்டப் பந்து; பீரங்கிக் குண்டு; *v.* மாத்திரைகளை மிகுதியாக உட்கொள்ளச்செய்; (தொ.) a pill to cure an earthquake, அரைகுறைச் செயல்; gild the pill, கடுவிற்குக் கட்டிபூசு, கசப்புச்செய்தியை மழுப்பு.

pill'age, *n.* கொள்ளை, போர்க்காலத்திற் கொள்ளையிடல், சூறை; *v.* பாழாக்கு, தாக்கிக் கொள்ளையடி.

pill'ar, *n.* தூண்; அழகுத்தம்பம், தூபி; ஆதாரக்கால்; திருநிலைக்கால்; வணங்கப்படுஞ் சிலைக்கம்பம்; நெடும்பாறை; சுரங்கத்தின்மேல் தன் ஆதாரமாக அகழாது விடப்பட்ட ஒடுங்கிய பாறை அல்லது நிலக்கரிப்பகுதி; மிதிவண்டி இருக்கையின் ஆதாரம்; கைக்கடிகாரத்தை அல்லது கடிகார முகப்பை நிலைநிறுத்தும் ஆதாரமுனை; காற்று-நீர் முதலியவற்றின் நீள் செங்குத்துப்பிழம்பு; முக்கிய ஆதரவாளர்; *v.* தூண்களைக்கொண்டு தாங்கச்செய்; தூணைப்போல் தாங்கு; (தொ.) from pillar to post, இங்குமங்கும், ஓர் இடர்ப்பாட்டினின்றும் விடுபட்டு மற்றொன்றில் மோதுண்டு; தலைவலி போய்த் திருவலி.

pill'ar-box, *n.* அஞ்சல் தூண்.

pil'laret, *n.* சிறு தூண்.

pill'arist, *n.* கந்து முனிவர்.

pill'box, *n.* மாத்திரைப்பேழை; ஒற்றைக்குதிரை வண்டி; (படை.) சிறு தற்காலிக நிலவறை அரண்.

pill'ion, *n.* (வர.) பிற்கலணை, குதிரைமீது இரண்டாவது சேணம்; பின்னிருக்கை, மிதிப்பொறிவண்டியில் ஊர்பவருக்குப்பின் மற்றொருவருக்கான துணையிருக்கை.

pill'iwinks, *n.* (வர.) விரல்நெருக்கி, விரல்களை நசுக்கிச் சித்திரவதை செய்வதற்கான கருவி.

pill'ory, *n.* தண்டனைக்கட்டை, குற்றவாளியை ஒறுப்பதற்கான அரிகண்டம் போன்ற மரப்பணிச்சட்டம்; *v.* ஒறுப்பதற்கான மரப்பணிச்சட்டத்தில் மாட்டு; பழிப்புக்கு ஆளாக்கு.

pill'ow, *n.* தலையணை; தலையணைக்கட்டை; துன்னல் திண்டு; முட்டுக்கொடுப்பதற்கான திண்டுக்கட்டை; *v.* தலையணைமேற் சாய்ந்துகொள்; தலைசாய்த்து இளைப்பாறு; (தொ.) take counsel of one's pillow, ஓர் இரவு முழுதும் சிந்தித்துப்பார்.

pill'ow-case, *n.* தலையணை உறை.

pill'ow-fight, *n.* திண்டெறி விளையாட்டு, ஒருவர்மீதொருவர் தலையணைகளை வீசியடித்துக்கொள்ளும் விளையாட்டு.

pill'ow-slip, *n.* தலையணை உறை.

pill'owy, *a.* தலையணைபோன்ற; உருண்டு பெருத்த; மெதுவான.

pills, *n.* மேடைக் கோற்பந்தாட்டம்.

pil'lule, *n.* மாத்திரை, சிறு குளிகை.

pil'ose, *a.* மயிர் அடர்ந்த, மயிர்போர்த்த.

pil'ot, *n.* வலவர், இயக்குவோர்; கப்பல் வலவர், துறைமுகக் கப்பற் பொறுப்பாளர்; விமானம் இயக்குபவர்; வானூர்திச் செலவைக் கட்டுப்படுத்தும் பகுதிகளை இயக்குபவர்; வழிகாட்டி; வேட்டைக்களத்தில் நெறிகாட்டி; *v.* வழிகாட்டி இட்டுச்செல், ஆற்றுப்படுத்து; நெறிகாட்டியாகச் செயலாற்று; விமான வலவனாகச் செயலாற்று; (தொ.) drop the pilot, நம்பகமாக அறிவுரை கூறுபவரைக் கைவிடு; pilot balloon, காற்றுவீசும் திசையைக் கண்டறிவதற்காக மேலே பறக்கவிடப்படும் சிறு புகைக்கூண்டு; Pilot Officer, இரண்டாவது படைத்துணைத் தலைவருக்கு நிகரான விமானப் படை அதிகாரி; pilot plant, முன்மாதிரி இயந்திரம்; pilot scheme, முன்னோடிதிட்டம், சோதனைத்திட்டம்.

pi'lotage, *n.* முற்செலுத்துதல்; வழிகாட்டுதல்; நெறிகாட்டியின் கூலி.

pi'lot-cloth, *n.* மேலங்கிகளுக்கான கனத்த முரட்டுத்துணி வகை.

pi'lot-engine, *n.* முன்செல்லும் பொறியம்.

pi'lot-fish, *n.* சுறுவுக்கு வழிகாட்டுவதாகச் சொல்லப்படும் சிறுமீன் வகை.

pi'lot-flag, *n.* மாலுமி வேண்டுமென்னும் அறிகுறிக்கொடி.

pi'lot-jacket, *n.* முரட்டுக் கம்பளித்துணியினாலான மாலுமியின் குறுகிய மேற்சட்டை.

pi'lotless, *a.* செலுத்துபவர் இல்லாத; விமானவகையில் வலவன் ஏவாத.

pil'ous, *a.* மயிரடர்ந்த.

pil'ule, *n.* சிறு குளிகை.

pim'elode, *n.* பூனைபோன்ற அமைப்புடைய மீன்வகை.

pimen'to, *n.* மிளகு; நறுமணக்கொட்டை வகை; நறுமணக் கொட்டை தரும் மரவகை.

**pimp**, *n.* காமத் தரகர்.

**pim'pernel**, *n.* வண்ணமலர்க் களைச்செடி வகை.

**pim'ping**, *a.* சிறிய, அற்ப, இழிந்த; நோய்வாய்ப்பட்ட, உடல்நலங் குன்றிய; மேலீடான உணர்ச்சிவசப்பட்ட.

**pim'ple**, *n.* குரு, முகப்பரு.

**pim'pled, pim'ply**, *a.* பருக்களையுடைய.

**pin**, *n.* குண்டூசி; பிணைப்பூசி; மரம் அல்லது உலோகத்தினாலான முளை; பிரடை, நரப்பிசைக் கருவிகளின் முறுக்காணி; 4½ காலன் (gallon) அளவுள்ள சிறு மிடா; *v.* குண்டூசியைக்கொண்டு பொருள்களை ஒன்றோடொன்று இணை; முளை-ஈட்டி முதலியவற்றைக்கொண்டு குத்தி அசையாமல் நிறுத்து; சுவர் முதலியவற்றின்மேல் வைத்து அழுத்திப்பற்றி அசையாமற் பிடித்திரு; வாக்குறுதியில் பிணி; ஏற்பாடுகளிற் பிணை; கம்பி முதலியவற்றால் வேலியிடு; (தொ.) don't care a pin, அறவே கவலைப்படவில்லை; pin one's faith on, முழு நம்பிக்கை வைத்திரு; pins and needles, திமிர்விட்டு வரும்போது உறுப்புக்களில் ஏற்படும் சிலிர்ப்புணர்ச்சி; pin up, சுவர்-கரை முதலியவற்றிறகுக் கற்கட்டிடத்தினால் முட்டுக்கொடு; split pin, இயந்திரப் பகுதிகளின் துளைகளிற் செலுத்தி இறுக்குவதற்கான முனைபிளந்த உலோகமுளை.

**pin'afore**, *n.* குழந்தை வேறுடுப்பு.

**pinas'ter**, *n.* தேவதாரு இன மரவகை.

*pince-nez*, (பிர.) *n.* வில்பிடிப்பு மூக்குக்கண்ணாடி.

**pincers**, *n. pl.* குறடு, இடுக்கிப்பொறி; (படை.) இருகவர்ப் படை நடவடிக்கை; (தொ.) pincers movement, (படை.) இடுக்கிப்பொறி நடவடிக்கை.

*pincette*, (பிர.) *n.* சிறுகுறடு, சாமணம்.

**pinch**, *n.* கிள்ளுதல், நெருடுதல், நுள்ளல்; கடிப்பு, நெரிப்பு; வேதனை; சிட்டிகையளவு; நெருக்கடி வேளை, அவசர நொடிக்கட்டம்; *v.* கிள்ளு, நுள்ளு, நெருடு; நசுக்கு, வருத்து, கடிப்புறுத்து, நோவுறுத்து; நோவால் நெளியப்பண்ணு; கொல்; மூனைமுறி; தொல்லையளி; பணம் பிடுங்கு, சுரண்டு; கைக்கடிப்பாயிரு, பிசுணித்தனஞ் செய்; கருமித்தனம் பண்ணு, கஞ்சத்தனங் காட்டு; தாறறுக்கோலால் ஊக்கு; காறறோட்டத்துக்கு மிக அணிமையாகக் கலத்தை இயக்கு; (தொ.) a pinch of, ஒரு சிட்டிகையளவு; at a pinch, நெருக்கடிக்கட்டத்தில்; where the shoe pinches, நேரனுபவத்தில் இக்கட்டு உள்ள இடம்.

**pinch'beck**, *n.* போலித்தங்கம், செம்பு-துத்தநாகக் கலவை வகை; *a.* போலியான.

**pin'cushion**, *n.* குண்டூசிச் செருகணை.

**Pinda'ri**, (இ.) *n.* கொள்ளைக்கூட்டத்தினர்.

**Pinda'ric**, *a.* பிண்டார் (Pindar) என்ற பண்டைக் கிரேக்க கவிஞனுக்குரிய.

**Pinda'rics**, *n. pl.* பிண்டார் என்ற கிரேக்க கவிஞன் வழங்கிய பாவகை; பிண்டார் பண்பைப் பின்பற்றுவதாகக் கருதப்பட்ட 17-ஆம் நூற்றாண்டு யாப்புவகை.

**pine**[1], *n.* தேவதாரு, பசுமைமாறு ஊசியிலை மரவகை; (தொ.) pine carpet, முட்டைப்புழுப் பருவத்தில் தேவதாரு மரம் தின்று வாழும் அந்துப்பூச்சிவகை; pine marten, கருந்தவிட்டுநிறக் கீரியினச் சிறுவிலங்கு வகை.

**pine**[2], *v.* மெலிவுறு, நலிவுறு; வாட்டமுறு, வதங்கு; ஏங்கு, வேணவாக்கொள்ளு; இனைவுறு, நினைந்து நினைந்து இரங்கு.

**pin'eal**, *a.* (உள்.) தேவதாருவின் காயுருவுடைய; (தொ.) pineal gland, மூளையில் மூன்றாவது குழியின் பின்னுள்ள செயல் விளக்கம் உணரப்படாத சுரப்பி.

**pine'apple**, *n.* அன்னாசிப்பழம்.

**pine'-beauty**, *n.* முட்டைப்புழுப் பருவத்தில் தேவதாரு மரத்தைத தின்றுவாழும் அந்துப்பூச்சிவகை.

**pine'-cone**, *n.* தேவதாருவின் திரளை.

**pin'ery**, *n.* அன்னாசிப்பழத் தோட்டம்: தேவதாரு மரச்சோலை.

**pin'-feather**, *n.* வளராத இறகு.

**pin'-fire**, *a.* துப்பாக்கி வகையில் முளை செருகுவதன்மூலம் வெடிதீர்க்கும்படி செய்யப்படுகிற; (தொ.) pin-fire cartridge, முளை செருகி வெடிக்கப்படும் வெடிக்கலம்.

**pin'fold**, *n.* அடைகொட்டில்; *v.* பட்டியில் அடை.

**ping**, *n.* விண்ணென்ற ஒலி, துப்பாக்கிக்குண்டு பாயும் ஓசை; *v.* விண்ணென்ற ஓசையுடன் பாய்; விண்ணென்ற ஓசையுடன் செல்லுவி.

**ping'-pong'**, *n.* மேசை வரிப் பந்தாட்டம்.

**ping'uid**, *a.* எண்ணெய்ப்பசையுடைய, வழவழப்பான.

**ping'uin**, *n.* மேலை இந்திய தீவுகளிலுள்ள அன்னாசிபோன்ற பழவகை.

**pin'-head**, *n.* குண்டூசித்தலை; மிகச்சிறிய பொருள்.

**pin'-hole**, *n.* குண்டூசித்துளை; முளை பொருந்துகிற துளை.

**pin'ion**, *n.* சிறகு நுனி; (செய்.) சிறகு; பறக்கும் ஆற்றல் உள்ள சிறகின் பகுதி; விசைகொள் இறகு; செதுக்கு வேலையில் முன் கையுறுப்பொத்த இறக்கைபகுதி; *v.* சிறகொடி, பறவையின் இறக்கையை வெட்டிப் பறக்கமுடியாமற் செய்; இயங்க முடியாமற் கட்டு; கைகளைக்கட்டு; அசையாமல் இறுகப் பிணைத்துக்கட்டு.

**pink**[1], *n.* பல நிறவகைகளையுடைய மலர்ச்செடிவகை; இளஞ்சிவப்பு நிறம்; உச்ச உயர் நிறைவு; உச்சநிறை நலம்; நரி வேட்டையாளர் அணியும் செஞ்சட்டை; நரிவேட்டையாளர்; நரிவேட்டையாளரின் செஞ்சட்டைக்குரிய துகில்; *a.* இளஞ்சிவப்பான; அரசியல் துறையில் சிவபபுப் பக்கச்சாய்வான.

**pink**[2], *n.* மஞ்சள் சாயப்பொருள்.

**pink**[3], *n.* சிறுமீன் வகை.

**pink**[4], *n.* (வர.) ஒடுங்கிய பின்பகுதியை உடைய பாய்க்கப்பல வகை.

**pink**[5], *v.* வாளால் ஊடுருவு; தோலில் துளைவரிசையிட்டொப்பனை செய்; அணிசெய், அழகுபடுத்து.

**pink**[6], *v.* குமுறல் வெடியோசை செய், கலவையின் அரைகுறை எரிவியக்கத்தால் பலபட இரைந்தெழும் வெடிமுழக்கஞ் செய்.

**pink'-eye**, *n.* குதிரைகளுக்கு வரும் ஒட்டுவாரொட்டிக் காய்ச்சல்; ஒட்டுவாரொட்டியான கண்நோய் வகை; கடல்மீன்களின் செந்நிறக் கோளாறு.

**pink'-eyed**, *a.* இளஞ்சிவப்புநிறக் கண்களையுடைய.

**pink'ish**, *a.* சிறிதே இளஞ்சிவப்பான.

**Pink'ster**, *n.* இயேசுநாதரின் மீட்டெழுச்சி விழாக்கழிந்த ஏழாம் ஞாயிற்றுக்கிழமை; (தொ.) pinkster flower, இளஞ்சிவப்பு மலர்சசெடிவகை.

**pink'y**, *a.* இளஞ்சிவப்பவாவிய, இளஞ்சிவப்புச் சாய்வான.

**pin'-money**, *n.* கையடைப்பணம், உடுப்புச்செலவு முதலியவற்றிற்காகப் பெண்ணுக்குக் கொடுக்கப்படும் ஆண்டுப் படிப்பணம்; மனைவியின் சொந்தச் செலவுக்கென்று ஒதுக்கப்பட்ட படிப்பணம்.

*pinn'a*, (ல.) *n.* புறச்செவியின் அகல் மேற்புறம்; இறகு வடிவ இலையின் உள்ளுறுப்புக் கிளையிலை; துடுப்பு; துடுப்பமைவு.

**pinn'ace**, *n.* வள்ளம்.

**pinn'acle**, *n.* கோபுரமுகடு; மோட்டு முகடு; இயற்கைக் குவடு; உச்சநிலை, முழுநிறைநிலை; *v.* முகடாய் அமை; முகட்டில் வை; முகட்டுடன் அமை.

**pinn'ate, pinn'ated**, *a.* (தாவ.) இலைகள் வகையில் இறகு வடிவான; (வில.) இறகுபோன்ற வடிவமைதியுடைய.

**pinn'er**, *n.* குத்திவைத்துப் பிணைப்பவர்; குத்திவைத்துப் பிணைப்பது; குண்டூசி செய்பவர்.

**pinn'i-grade, pinn'i-ped**, *n.* துடுப்புவடிவக் கால்களையுடைய விலங்கு; *a.* துடுபபுவடிவக் கால்களையுடைய.

**pinn'othere, pinn'otere**, *n.* சிப்பி கிளிஞ்சில் வகையின் தோட்டிலமர்ந்து அதன் உணவையே பகிர்ந்துண்ணும் சிறு நண்டினம்

**pinn'ule**, *n.* (தாவ) இறகுவடிவ இலையின் கிளையிலையின் கிளையிலை; (வில.) சிறிய இறகு அல்லது துடுப்புப் போன்ற உறுப்பு; விண்மீன்வடிவ உயிரினத்தின் கிளைக் கையுறுப்பு; உயர்வுமானியின் பார்வை உறுப்பு.

**pinn'y**, *n.*=pinafore.

**pin'ochle, pin'ocle**, *n.* கீழ்ச்சீட்டுக்கள் கழிக்கப்பட்ட நான்குகட்டுச் சீட்டுகளுடன் விளையாடப்படும் சீட்டாட்ட வகை; சில தனித் துருப்புச் சீட்டுவகைகளின் அறிவிப்பு.

**pinol'e**, *n.* சோளமாக் கலவை; சோளமாத் தின்பண்ட வகை.

**pin'-point**, *n.* ஊசிமுனை; மிகச்சிறு பொருள்; *a.* இலக்கு வகையில் மிக நுட்பமாகக் குறிபார்க்கவேண்டிய; *v.* மிக நுட்பமாகக் குறிபார்த்து எறி; மிகநுட்பமாகக் குறிப்பிடு.

**pin'prick**, *n.* நச்சரிப்பு; சிறுதொல்லை.

**pins**, *n. pl.* (பே-வ.) கால்கள்.

**pint**, *n.* நீர் முகத்தலளவைச் சிற்றலகு, அரைக்கால் காலன்; (மரு.) 20 நீர்ம அவுன்சு.

**pin'-table**, *n.* இயந்திரச் சூதாட்ட அமைவு.

**pinta'do, pinta'do bird, pinta'do petrel**, *n.* கடற் பறவை வகை; கினிக்கோழி.

**pin'tail**, *n.* கூர்முனை வாலுடைய வாத்துவகை; கூர்முனை வாலுடைய காட்டுக்கோழிவகை.

**pin'tle**, *n.* சுழலுறுப்புக்கு ஊடச்சாய் உதவுந் தாழ்க்கட்டை.

**pin'-tuck**, *n.* ஊசிக்கொசுவம், உடையில் மிகக்குறுகிய ஒப்பனை மடிப்பு.

**pin'-up**, *n.* பற்றுர்வப்படம், சுவரில் மாட்டி அழகுபார்க்கப் படும் பற்றுர்வதுக்குரியவரின் படம்; *a.* சுவரிற் படமாக மாட்டி அழகுபாக்கப் படுவதற்குரிய; (தொ.) pin-up girl, ஓவத்தன்ன நங்கை.

**pin'-wheel**, *n.* கடிகாரமணியடிக்கும் செம்புகோலை உயர்த்தும் பறகளை விளிம்பிற் கொண்ட சிறுசக்கரம்; தாள் காற்றுடி; சுழலும் சக்கரவாணம்.

***pinxer'unt***, (ல) *v.* ஓவியக்குறிப்புவகையில் 'இது தீட்டினர்' என்னுங் குறிப்பு.

***pinx'it***, (ல.) *v.* ஓவியக்குறிப்புவகையில் 'இது தீட்டினர்'.

**pin'y**, *a.* தேவதாரு மரத்தினுடைய; தேவதாரு மரம்போன்ற; தேவதாரு மர இயல்புடைய; தேவதாரு மரங்கள் நிறைந்த.

***piolet***, (பிர.) *n.* பனிபிளக்குங் கோடரி.

**pioneer'**, *n.* வழிகாண்மார்; படைத்துறையில் படைகட்கு முன்சென்று வழி செப்பனிடுபவர்; வழிமுனைவர்; முன்னோடி, முதன் முயற்சியாளர்; புதுவழிகாண்போர், புதுப்புலங் காண்போர்; *v.* முன்னோடியாயமை; முன்சென்று பாதை செப்பனிடு; முனமுயற்சிசெய்; புதுவழி கண்டுதவு; புதுவழி திறப்பதில் ஈடுபடு, புதுப் புலங்காண்பதில் முனை.

***piou-piou***, (பிர.) *n.* மெய்ம்மாதிரியான பிரஞ்சுக் காலாட் படைவீரர்.

**pi'ous**, *a.* கடமை பேணுகிற; சமயப்பணியார்வமுடைய; (தொ.) pious fraud, நன்னோக்க ஏமாற்று; கேடற்ற இரண்டகம்; pious opinion, வற்புறுத்தப்படாத கருத்து.

**pip**[1], *n.* தொண்டைகட்டி நாவில் வெண்மைபடரும் இயல் புள்ள கோழி-பருந்துகளின நோய்வகை.

**pip**[2], *n.* சீட்டுப்புள்ளிகுறி; பகடைக்குறிப்புள்ளி; தாயக் கட்டைப் புள்ளி; படைப்பணியாளர் தோட்சின்ன விண்மீன் குறிப்புள்ளி; கொத்துப்பூவின் சிறு தனிப்பூ; அன்னுசிப் பழத்தின் மீதுள்ள சுளைத்தடம்.

**pip**[3], *n.* பல்விதைக்கனியின் தனிச் சிறு விதை.

**pip**[4], *n.* அடையாளக்குறியீட்டு ஒலியில் பி (P) என்ற எழுத்துக் குறிப்பு.

**pip**[5], *n.* ஊதல் சமிக்கையில் ஒற்றை உயர்விசை ஒலி.

**pi'pal**, *n.* அரசமரம்.

**pipe**, *n.* குழாய், குழல், வேய்ங்குழல்; இசை மேளத்தின் தனிக்குழல்; மிடற்றிசைக்குரல்; புள் இசைப்பொலி; பறவைப் பாட்டு; படகோட்டியின் சீழ்க்கை: சீழ்க்கையடிப்பு; உடலில் குழல் வடிவ உறுப்பு; புகைபிடிக்குங் குழாய்; சுரங்கக் கனிவள வேர்; காட்டுக்கோழியைப் பொறியில் பிடிப்பதற்கான வாய்வழி; *v.* குழலூது; வேய்ங்குழல் வாசி; குழலிற் பாடு; குழலிசைத்து வருவி; சீழ்க்கையடித்துக் கப்பலோட்டிகளை உணவுக்கு வரவழை; சீழ்க்கையடி; கீச்சுக் குரலிடு; குழாய்கள் இணைத்தமை; ஆடை கத்தரித்துத் திருத்தி ஒப்பனைசெய்; அப்பங்களை அழகுபடுத்தி ஒப்பனை செய்; மலர்ச்செடிவகைக் கணு வெட்டி வைத்துப் பயிர் பெருக்கு; (தொ.) King's pipe, Queen's pipe, கள்ள வாணிகப் புகையிலையை எரிக்கப் பயன்படுத்தப்பட்ட லண்டன் நகர்த் துறைமுக உலைக்களம்; pipe away, படகு புறப்பட அடையாளக் குறிப்பு ஓசைசெய்; pipe down, (கப்.) வேலையிலிருந்து நீக்கு; pipe dream, பயனில கற்பனை, மயக்கவெறி மருந்துண்டவரின் கனவுபோன்ற காட்சி; pipe major, படைத்துறை இசைக்கருவியாளர் தலைவர்; pipe of peace, அமைதி ஒப்பந்தக்குறியாக அமெரிக்க செவ்விந்தியர் புகைக்கும் புகைக்குழாய்; pipe one's eyes, அழு, கண்ணீர் விடு; pipe up, பாடத்தொடங்கு; இசைக்கருவி வாசிக்கத்தொடங்கு; put that in your pipe and smoke, முடியுமானுல் செய்தியை மனத்தில் வாங்கிச் செரிக்க வைத்துக்கொள்.

**pipe'-clay**, *n.* புகைகுடிகுழாய் செய்யப் பயன்படும் வெண் களிமண்; ஆடைநேர்த்தியில் மிகுகவனம்.

**pipe'-fish**, *n.* முகம்நீண்ட நீளுருவ மீன்வகை.

**pipe'-line**, *n.* குழாய் இணைப்பு வரிசை; எண்ணெய்க்குழாய் வழி; உறபத்தியாளரிடமிருந்து சிறு வாணிகர்க்கு அல்லது வாங்குவோர்க்குப் பொருள் இடையீடின்றிச் செல்லுதல்.

**pip'er**, *n.* குழலூதுபவர்; நாடோடிப்பாடகர்; மீன்வகை; வலுவிழந்த ஏலாக்குதிரை; பறவைக்குஞ்சு; மாடப்புறுக் குஞ்சு; ஈ வகையின் முட்டைப்புழு; பிற விலங்குகளைப் பொறியுட்படுத்த பயிற்றுவிக்கப்பட்ட நாய்; (தொ.) pay the piper, செலவை ஏற்றுக்கொள்; pay the piper and call the tune, செலவை ஏற்றுக்கொள்வதால் கட்டுப்படுத்தி நடத்த முற்படு.

**pipe'-rolls**, *n. pl.* பழைய நாட்டுக் கருவூலமன்றப் பதிவேட்டுச் சுருள்கள்.

**pipe'-stone**, *n.* அமெரிக்க செவ்விந்தியர் புகைகுடிகுழாய் செய்ய வழங்கிய திண்ணிய செங்களிக்கல்.

**pipette'**, *n.* வடிகுழல், சிறு அளவான நீர்மங்களை அளவாக ஊறறப பயன்படும் ஆய்க்களக் கூர்முகக் குழாய்க்கலம்.

**pip'ing**, *n.* குழல் வாசிப்பு; வேய்ங்குழல் ஊதல்; குழல் போன்ற ஒலியீடு; குழல்வரிசை; குழல்வரிசையமைவு; குழாய் அமைப்புக்குரிய துண்டக்கூறு; ஆடையிழைகளுக்குக் குழாய் போன்ற நுனி ஒப்பனை; அப்பங்கள்மீது சர்க்கரையாலான கயிறுபோன்ற வரி ஒப்பனை; தண்டுமுளையின் வெட்டுத் துண்டு; துப்புரவு அகழ்வுகளுக்கான சுரங்கக்குழாய் நீர்ப் பீற்று; *a.* குழல் வாசிக்கிற; வேய்ங்குழல் ஊதுகிற; குழல் ஊதலபோன்று ஒலிக்கிற; சீழ்க்கையடிக்கிற; கீச்சிட்ட; மெல் உயர்விசைக்குரலுடைய; குழலிசையுடன்கூடிய; வெப்ப விசையுடன் சுரீரென்று பீற்றுகிற, வெப்புமிகக; (தொ.) piping times of peace, வேய்ங்குழலிசைக்கும் இன்னமைதி நாட்கள்.

**pipistrel', pipistrelle'**, *n.* வௌவால் வகை.

**pip'it**, *n.* வானம்பாடியினப் புள்வகை.

**pip'kin**, *n.* மண்கலத் தட்டு, மட்பாண்டம்.

**pipp'in**, *n.* ஆப்பிள் பழவகை.

**piq'uancy**, *n.* ஊக்கார்வம்.

**piq'uant**, *a.* காரசாரமான; கூர்ஞ்சுவை தூண்டுகிற; சுவை யாாவம கிளறிவிடுகிற.

**pique**[1], *n.* வன்மம், அகக்காழ்ப்பு; வெம்பகை, கடுஞ்சீற்றம்; *v.* உள்ளரிப்பூட்டு, நெஞ்சராவு; தற்பெருமைக்கு ஊறுசெய்; தற்பெருமைகொள்ளுவி; விருப்பு மேற்கொள்ளுவி; (தொ.) in a fit of pique, வன்ம வேகத்தில்; take a pique against, எதிராகப் பகைமைக் காழ்ப்புக்கொள்.

**pique²**, *n.* இருவர் சீட்டாட்ட வகையில் எதிரி ஆடத் தொடங்குமுன் 30 கெலிப்புப்புள்ளி எடுத்தல்; *v.* எதிரி ஆடத் தொடங்குமுன் 30 கெலிப்புப்புள்ளி எடு.

**piq'ue³**, *n.* விறைப்பான ஊடுநூலுடைய பருத்தித்துகில்.

**piquet'¹**, *n.* 32 சீட்டுடன் இருவராடும் சீட்டாட்ட வகை.

**piq'uet²**, *n.* (படை.) காவற் படைப்பிரிவு.

**pir'acy**, *n.* கடற்கொள்ளை; கொள்ளைக்குற்றம்; உரிமை மீறிய வெளியீட்டுச் செயல்.

**pira'gua**, *n.* கட்டுமர வகை, ஒரே கட்டையில் செய்யப்பட்ட ஒடுங்கிய நீள்படகு; இருபாய்மரமுடைய தோணி.

**pir'ate**, *n.* கடற்கொள்ளைக்காரர்; கொள்ளைக்கப்பல், கடற் கொள்ளைக்காரர் கப்பல்; ஆசிரியர் ஏட்டுரிமை கவர்பவர்; பிற உரிமை நெறிகளில் செல்லும் உந்தூர்தி; மட்டுமீறிக் கட்டணம் பெறும் உந்தூர்தி; பயணிகளைச் சுரண்டும் உந் தூர்தி; *v.* சூறையாடு; இசைவுரிமையின்றி ஏட்டினைப் பதிப்பித்து நேர்மையற்ற ஆதாயமடை; கடற்கொள்ளைக்கார ராகச் செயலாற்று.

**pirat'ic, pirat'ical**, *a.* கடற் கொள்ளைக்காரருக்குரிய; கடற் கொள்ளை சார்ந்த; கொள்ளையடிக்குந் தன்மையான; உரிமைப்பறிப்புச் சார்ந்த.

**pirouette'**, *n.* குழு நடனத்திடையே காற்பெருவிரலூன்றிய சுற்றோட்டம்; *v.* நடனத்திடையே காற்பெருவிரலூன்றிச் சுற்றோட்டமாடு.

***pis aller***, (பிர.) *n.* சிறந்த வழி வேறு இல்லையென்று மேற் கொள்ளப்பட்ட நெறி.

**pis'cary**, *n.* மீன்பிடிக்கும் உரிமை; அயலார் நீர்ப்பரப்பில் உடையவருடனுகப் பிறருடனே சென்று மீன்பிடிக்கும் உரிமை.

**piscator'ial**, *a.* மீன்பிடித்தலில் தோய்ந்து பழகிய.

**pis'catory**, *a.* மீனவரைச் சார்ந்த; மீன்பிடிப்பிற்கு உரிய.

**Pis'ces**, *n. pl.* மீன்கள்; மீனராசி; மீன வான்மீன் வட்டக் குழு.

**pis'ciculture**, *n.* செயற்கை மீன்வளர்ப்பு.

**piscifau'na**, *n.* மீன் தொகுப்பு.

**pisci'na**, *n.* மீன்தொட்டி; பண்டை ரோமாபுரியினரின் குளிப் புத்தொட்டி; திருக்கோயிலில் நீர் வெளியேற்றத்தக்க துளை யமைந்த திருக்கலங் கழுவுதொட்டி.

**pis'cine¹**, *n.* நீராடுதற்குரிய குளம்.

**pis'cine²**, *a.* மீனிற்குரிய.

**pisciv'orous**, *a.* மீன் தின்னுகிற

***pise***, (பிர.) *n.* கட்டிடங் கட்டுவதற்குரிய பொருளாகப் பயன் படுத்தப்படும் இறுகிய மண்களிச் சரளைப்பாளம்.

**pish**, *int.* இழிவுக்குறிப்பு; வெறுப்புக்குறிப்பு; பொறுமை யின்மைக் குறிப்பு.

**pishogue'**, *n.* சூனியம்; வசியம்.

**pis'iform**, *a.* பயறுவடிவமான; (தொ.) pisiform bone, மணிக்கட்டு மேல்வரிசைச் சிற்றெலும்புகளுள் ஒன்று.

**pis'mire**, *n.* எறும்பு.

**piss**, *n.* சிறுநீர்; *v.* சிறுநீர் கழி.

**pista'chio**, *n.* இன்பசுங் கொட்டை; இன்பசுங் கொட்டை மரம், பசுங்கொட்டை நிறம்.

**pis'til**, *n.* மலர்ச்சூலகம், மலரின் பெண்மை உறுப்பு.

**pis'tol**, *n.* கைத்துப்பாக்கி; *v.* கைத்துப்பாக்கியாற் சுடு.

**pistole'**, *n.* ஐரோப்பிய தங்க நாணயம்; 18 ஆங்கில வெள்ளி மதிப்புடைய ஸ்பானிய தங்க நாணயம்.

**pis'tolgraph**, *n.* உடனடி நிழற்படமெடுப்புக்கான முற்காலக் கருவியமைவு.

**pis'tol-grip**, *n.* கைத்துப்பாக்கிப்பிடி.

**pis'tol-shot**, *n.* கைத்துப்பாக்கி வேட்டு; கைத்துப்பாக்கி சுடும் தொலைவெல்லை.

**pis'ton**, *n.* உந்துதண்டு, குழலச்சுத் தண்டு.

**pit**, *n.* குழி; குண்டு, தோண்டிய பள்ளம்; சுரங்கக்குழி; பொறிக்குழி, விலங்குகளைப் பிடிப்பதற்கான கிடங்கு; படு குழி, ஆளை வீழ்த்துவதற்கான பள்ளம்; சேவற் சண்டை அரங்கம்; நரகக்குழி; உடல் குழிவு; உடலின் உட்பொள்ளல்; தழும்புக்குழி; அம்மைத் தழும்பு; காட்சிக்கொட்டகையின் நிலத்தளம்; காட்சிக்கொட்டகையில் நிலத்தளக் குழு; உந்து வண்டிப் பந்தயத்தின் தளவாட உதவிக் கொட்டில்; விமானி இருப்பிடம்; செலாவணிக் களத்தில் தனிப்பொருள் வாணிகக் கிடங்கு; *v.* குழிவு உண்டுபண்ணு; பதனஞ் செய்யக் கிடங்கில் இடு; சேவல் முதலியவற்றைச் சண்டை அரங்கத் தில் விடு; காட்சியரங்கத்தில் விடு; எதிராக நிறுத்திப் போராட விடு; (மரு.) தொட்ட இடங் குழிவுறு; (தொ.) dig a pit for, குழியில் வீழ்த்தச் சதிசெய், அழிவுக்கு வழி வகுத்தமை; pit pony, அடிநிலத்தில் வைக்கப்பட்டுள்ள சுரங்கக் குதிரை; the pit, the pit of hell, நரகக்குழி.

**pit'-a-pat**, *n.* தட்டுத்தடவெனும் ஒலி, தடதடவெனும் ஓசை; *adv.* தட்டுத்தடவெனும் ஒலியுடன், தடதடவென.

**pitch¹**, *n.* நிலக்கீல், சூட்டில் களியாயிளகும் கரும்பசைக் கட்டிப்பொருள்; *v.* நிலக்கீல்கொண்டு பொதி, நிலக்கீல் பூச் சிடு, நிலக்கீல் தடவு; (தொ.) pitch black, pitch darkness, கருமிருட்டு, கும்மிருட்டு.

**pitch²**, *n.* தூக்கி எறிவு, கப்பல் முதலியவற்றின் உந்தல்; மரப்பந்தின் முதல் வீசெறி; சேணெறிவு, குழிப்பந்தாட்டத் தில் இலக்கிறகு மிக அருகே விழுமாறு பந்து எறியும் உச்ச வீச்சு; சந்தையின் சரக்குச்செறிவு; நிலையாய்க் காத்திருக்கு மிடம்; வேட்டைப்பருந்து இரைமீது பாயுமுன் பறக்கும் உயரம்; பருந்தின் வீழ்வு; உயரம்; விசை; படிநிலை; செறிவு; சாய்வளவு; மோட்டுச் சாய்வின் செவ்வுநிலையளவு; (இயற்.) தொடர் வரிகளின் இடைவெளியளவு; தொடர்நிலைப்புள்ளி களின் இடைநிலையளவு; சக்கரப் பற்களின் இடைத்தொலை யளவு; (இசை.) தொனியளவின் செறிவு உயர்வளவு; *v.* எறி; குறிநோக்கி வீசு; சுண்டி எழுப்பு; குழிப்பந்தாட்டத்தில் பந்தை இலக்கருகில் விழுமாறு ஓங்கி எறி; குத்தி வை; நடு; உறுதி யாக நிறுவு; நிலைப்படுத்து; கூடார முதலியவற்றை நிறுவு; சந்தையில் சரக்குகளைக் கடைவிரித்து வை; பாதைகளிற் கற்பாவு; முகப்பிற் பதித்து வை; மேற்பொதிந்து வை; கல் அடிவாரமிடு; (இசை.) குறிப்பிட்ட தொனி அளவில் அமை; குறித்தபாணியில் உருவாக்கு; தொனிச்செறிவெல்லையளி; உயர்வெல்லையளி; தலை குப்புற வீழ்த்து; முன்புறமாகக் கவிழ்த்துவிடு; எதிர்த்து நிற்கவை; குழிப்பந்தாட்டத்தில் பந்தை இலக்கருகே வந்துவிழும்படி ஓங்கி உயரத்தில் எறி; கட்டப்பந்தாட்டத்தில் பந்தை இன்னொருவரெடுக்கும்படி மற்றவர்க்கு எட்டாது மேலாகவோ கீழாகவோ எறிந்து கொடு; தேர்வு முடிவுசெய்; உறுதிசெய்; கூடாரமிட்டுத் தங்கு; முன்னேக்கிப் பாய்; கிடைநிலையில் ஒரு குறுக்கச்சின் எல்லைக்குள்ளாக ஊசலாடு; சாய்; செங்குத்தாகச் சரி; பிணைப்புறு, கையொடு கை கலப்புறு; (தொ.) pitch into, விசையுடன் சென்று விழு, பளுவுடன் விழு; pitch on, விசை யுடன் விழு; pitch shot, குழிப்பந்தாட்டத்தில இலக்கருகில் விழும்படியான ஓங்கிய பந்துவீச்சு; pitch upon, தற்செய லாகத் தேர்ந்தெடு.

**pitch'-and-toss**, *n.* நற்பேறு எறிகணைவீச்சு.

**pitch'blende**, *n.* கதிர்மத்துக்குரிய முக்கியக் கனிப்பொருள் வகை.

**pitch'-cap**, *n.* தண்டனைக் கருவியாகப் பயன்படுத்தப்பட்ட நிலக்கீல் உள்வரிபிட்ட தொப்பி.

**pitched**, *a.* நெருங்கிக்கலந்த; அடர்ந்து கைகலப்புற்ற; (தொ.) pitched battle, இருதரப்பும் நெருங்கி மோதிக் கை கலப்புற்ற சண்டை.

**pitch'er¹**, *n.* பரணி, பெரிய சாடி; (தாவ.) சாடிவடிவான இலைதிரியுறுப்பு.

**pitch'er²**, *n.* எறிபவர்; பந்தாட்டவகைகளில் முதற்பந்தெறி யாளர்; நிலையான இடத்தில் கடையமைக்கும் தெருவணிகர்; தெருப்பாவுகல்; நடுவதற்கான சிறுகிளை.

pitch'-far'thing, *n.* நற்பேறுநாணய எறியாட்டம்.
pitch'fork, *n.* கவர்க்கோல், வைக்கோல்வாரி; (இசை.) கவர்முள் இசைக்கருவி; *v.* கவர்க்கோலால் எடுத்துத்தள்ளு, கவர்க்கோலால் எடுத்தெறி; பணி-பதவி முதலியவற்றில் தள்ளித்திணி.
pitch'-pine, *n.* அரக்குப்போன்ற பிசின்தரும் தேவதாரு வகை.
pitch'-pipe, *n.* ஒத்தூது குழல், சுருதிக்குழல்.
pitch'stone, *n.* நிலக்கீல்போலத் தோற்றமளிக்கும் எரிமலைப் பாறை
pitch'-wheel, *n.* மற்றொரு சக்கரமியக்கும் பற்சக்கரம்.
pitch'y, *a.* நிலக்கீலால் ஆகிய; நிலக்கீலுக்கு உரிய; நிலக்கீலின் தன்மையுடைய; நிலக்கீல்போன்ற; நிலக்கீல்போன்ற கருமை நிறமுடைய.
pit'eous, *a.* இரக்கமுண்டுபண்ணுகிற; இரங்கத்தக்க; வருந்தத்தக்க.
pit'fall, *n.* இடறுகுழி, விலங்குகளைப் பொறியாக வீழ்த்துவதற்கு அகழப்பட்ட குழி; சதிப்பொறி, வீழ்த்துபொறி.
pith, *n.* தாவரங்களின் உள்ளீடான மென்சோறு; பழவகைகளின் தோட்டு உள்வரி மாப்பொருள்; மைய இழைமம்; நடுநாடி; நடுத்தண்டின் மச்சை; உட்கரு, உள்ளீட்டுப்பகுதி; உயிர்க்கூறு, கருச்சத்து; ஆற்றல், வல்லமை; தனிச்சிறப்பு; சுருக்கம், சாரம்; கருப்பொருள், உயிர்க்கூறான பொருள்; நெட்டி; *v.* தண்டெலும்பகற்றி விலங்கினைக் கொல்.
pithecan'thrope, *n.* குரங்குமனிதன், மனித இனத்துக்கும் குரங்கினத்துக்கும் இடையே உயிரின வளர்ச்சி இணைப்பாயிருந்ததாகக் கருதப்படும் உயிரினம்.
pithec'oid, *a.* வாலில்லாக் குரங்குபோன்ற; குரங்கியல்பு வாய்ந்த.
pith'y, *a.* மெல்லிய உள்ளீடுடைய; மெல்லிய உள்ளீட்டிற்குரிய; மெல்லிய உள்ளீடுபோன்ற; மெல்லிய உள்ளீடு நிரம்பிய; மணிச்சுருக்கமான; சுருக்கமும் ஆற்றலும் மிக்க; பொருட் செறிவுள்ள.
pit'iable, *a.* இரங்கத்தக்க; வருந்தத்தக்க; ஏளனத்துக்குரிய.
pit'iful, *a.* இரக்கமுடைய; ஏளனத்துக்குரிய.
piti'less, *a.* இரக்கங்காட்டாத, இரக்கமற்ற.
pit'man, *n.* சுரங்கத்தில் இயந்திரப்பகுதிகளை இணைக்கும் வேலையாள்.
pit'pan, *n.* நடு அமெரிக்க உட்குடைவுப் படகு.
pit'-pat, *n.*, *adv.*=pit-a-pat.
pitt'ance, *n.* சிறுகட்டளை; இரக்கப்படி; சிறு தொகை, சிறிய அளவு.
pitt'ite, *n.* கொட்டகை நிலத்தளத்தில் அமர்ந்திருப்பவர்.
pitu'itary, *a.* சிழுக்குரிய; சீழ் சுரக்கிற; கபத்துக்குரிய; பசை நீர் கசியவிடுகிற; (தொ.) pituitary body, pituitary gland, கபச்சுரப்பி, குருக்கழலை, உடல்வளர்ச்சிக்கு முக்கியமாக உதவுவதாகக் கருதப்படும் தூம்பற்ற மூளையடிச் சுரப்பி.
pitu'itrin, *n.* குருக்கழலை நீர்; மூளையடிச் சுரப்பியினின்று சுரக்கும் இயக்குநீர்.
pit'y, *n.* இரக்கம்; இரக்கத்துக்கு ஏதுவான செய்தி; வாய்ப்புக்கேடான செய்தி; கழிவிரக்கத்துக்குரிய செய்தி; வருந்தத்தக்க செய்தி; வருந்தத்தக்கநிலை; *v.* இரங்கு, கண்டிரக்கப்படு, நினைந்து வருத்தமுறு.
pityri'asis, *n.* (மரு.) சிதல்சிதலாயுரியும் தோல்நோய்.
piv'ot, *n.* சுழல்முளைப்பகுதி, திருகு குடுமி; இயக்க மையம்; படை அணித்துறையில் சுழலியக்க மையமாக நிற்பவர்; *v.* சுழல்முளைமூலம் இணை; திருகு குடுமி இணைப்பளி; சுழல் முளைமீது திருகி இயங்கு.
piv'otal, *a.* திருகு முளையியல்புடைய.
pix'ie, *n.* கூளி, நற்குறளி.

pix'ilated, *n.* (பே-வ.) சிறிது அறிவுதிறம்பிய.
pix'y, *n.*=pixie.
*pizzica'to* (இத்.) *n.* (இசை.) கைவிரலால் நரம்புளர்ந்து பாடப்படும் பண்; *a.* கைவிரலால் நரம்புளரப்படுகிற; *adv.* கைவிரலால் நரம்புளர்ந்து.
plac'able, *a.* தணிக்கக்கூடிய; தணிந்த; பொறுக்கும் பண்புடைய.
plac'ard [1], *n.* சுவரொட்டி; விளம்பர அட்டை.
placard' [2], *v.* சுவர்மீது விளம்பரம் ஒட்டு; சுவரொட்டி மூலம் விளம்பரஞ் செய்.
placate', *v.* இணக்குவி; சாந்தப்படுத்து.
place, *n.* இடம்; வெளியிடம், முற்றம்; நிலம்; நிலப்பகுதி; நகர்; ஊர்; கிராமம்; மனை; கட்டிடம்; தங்கிடம்; உறையுள்; இருக்கை; பரப்புக்கூறு; பிழம்புக்கூறு; உடலின் பகுதி; ஏட்டின்கூறு; பணியிடம்; பதவி; சமுதாயப்படி; படிமுறை, தரம்; உரிமையிடம்; உரியபடி; தகவிடம்; கடமை; உரிய நிலை; நேர்நிலை; தகுதிப் படிவரிசை; வாதப் படிவரிசை; (கண.) எண் தானம், பதின்முறைப்படித்தானம்; *v.* வை; இடத்தில் அமர்வி; ஒழுங்குபடுத்திவை; சரியான இடத்தில் வை; குணங்குறை மேவுவி; பணியில் அமர்த்து; பணி அமர்த்திக்கொடு; பணத்தை முதலீடுசெய்; சரக்குகளை வாடிக்கைக்காரர்களிடம் ஒப்படை; சரக்குகளின் அனுப்பாணை சேர்ப்பித்துவிடு; நம்பிக்கை வை; இடம் குறித்தமை; வரிசையிடம் வகுத்தமை; இடம்குறித்துணர்; நினைவில் குறித்துணர்; இனம் கண்டறி; பந்தயத்தில் முதல் மூன்றினுள் ஒன்றாகக் குறி; இலக்குநோக்கி வைப்புப்பந்தினை அடி; (தொ.) give place to, இடம் விட்டுக்கொடு; பின்னுரிமையாளராகப்பெறு; in place, ஒழுங்காக, பொருத்தமாக; தகுதியுடையதாக; in place of, பகரமாக, பதிலாக; out of place, பொருத்தமின்றி; முரண்பாடாக; தகுதியற்றதாக; take place, நடைபெறு; முந்திடங்கொள்.
placeb'o, *n.* மாண்டவர்மீதான வழிபாட்டுப்பாடலின் முதல் எதிரிசைப்பு; அந்திக்கால மருந்து; *pl.* placeb'oes, placeb'os.
place'-brick, *n.* காய்ச்செங்கல், சூளையில் காற்றுப்பக்கமாய் இருந்ததனால் அரைகுறை வேக்காடுடைய செங்கல்.
place'-kick, *n.* வைப்புப்பந்தடி.
place'man, *n.* காதன்மை அலுவலர், மேலவர் தன்னல ஆதாயங்கருதி அமர்த்திய பணித்துறைவர்.
placen'ta, *n.* நச்சுக்கொடி; (தாவ.) சூலகத்தின் கருவக ஒட்டுப்பகுதி.
placen'tal, *a.* நச்சுக்கொடி சார்ந்த.
pla'cer, *n.* கனிவளங் காணத்தக்க ஆற்றின் வண்டற்படிவு.
*pla'cet*, (ல.) *n.* பிடித்தம், விருப்பம்; *v.* எனக்குப் பிடித்தமாயிருக்கிறது; (தொ.) *non placet*, பிடித்தமின்மை; எனக்குப் பிடித்தமில்லை.
pla'cid, *a.* அமைந்த; மெல்லமைதிவாய்ந்த; விழுமிய வீறமைதிமிக்க.
placid'ity, *n.* மெல்லமைதி, ஆர்ந்தமைந்த தன்மை.
plack'et, *n.* பெண்டிர் பாவாடை உட்பை.
plack'et-hole, *n.* பெண்டிர் பாவாடையின் உட்பைவாய்.
plac'oid, *a.* செதிள் வகையில் தகடுபோன்ற; மீன்வகையில் தகடுபோன்ற செதிள்களையுடைய.
*plafond*, (பிர.) *n.* மச்சடி; சித்திரம் வரைந்த அறைமுகடு; அறைமுகட்டோவியம்.
plag'al, *a.* (இசை.) ஐந்தாம் நரம்புக்கும் அதன்மேற்கேள்விக்கும் இடைப்பட்ட குரல்களையுடைய; (தொ.) plagal cadence, (இசை.) நாலாம் நரம்பிணைவு உயிர்நரம்படுத்து முன்வரும் இழைவுநிலை.
plage, *n.* நடப்புநயக் கடற்கரை.
pla'giarism, *n.* எழுத்துத்திருட்டு; கருத்துத்திருட்டு.
pla'giarist, *n.* எழுத்தினைக் களவாடுபவர்; கருத்தினைக் களவு செய்பவர்.

**pla'giarize**, *v.* எழுத்துத்திருட்டுச் செய்; கருத்தினைத் திருடு.

**pla'giary**, *n.* எழுத்துத்திருட்டு; கருத்துத்திருட்டு; எழுத்தினைக் களவாடுபவர்; கருத்தினைத் திருடுபவர்.

**plagiocephal'ic**, *a.* மூளையின் முன்னும்பின்னும் வேறு வேறு பக்கமான பாதிகளில் வளர்ச்சியடைந்துள்ள.

**plagioclas'tic**, *a.* கனிப்பொருளில் சாய்வெட்டு வரையுடைய.

**pla'giostome**, *n.* சாய்வரை வாயுடைய மீன்வகை.

**plague**, *n.* கொள்ளைநோய்; ஒழுக்கமுறை அழிகேட்டுக்குரிய செய்தி; தொல்லை, தொந்தரவு; *v.* கொள்ளை நோய்க்கு ஆட்படுத்து; தொல்லையூட்டு, தொந்தரவு கொடு.

**plague'some**, *a.* தொந்தரவு தருகிற; தொல்லையளிக்கிற.

**plague'-spot**, *n.* கொள்ளைநோயின் வீக்கங்காணுமிடம்; ஒழுக்க அழிகேட்டிற்கு மூலகாரணம்; பழிகேட்டிற்குத் தொடக்கமான பகுதி.

**plag'uy**, *a.* (பே-வ.) தொல்லையூட்டுகிற; பெரிய அளவினதான; *adv.* (பே-வ.) தொல்லையூட்டும் முறையில்; பெரிய அளவில்.

**plaice**, *n.* தட்டை உணவுமீன் வகை.

**plaid**, *n.* கம்பளச் சால்வை வகை; வண்ணப்பட்டையிட்ட கம்பளித் துணிவகை; புறஆடை; வட ஸ்காத்லாந்து நாட்டுப்புற ஆடைக்குரிய துணி.

**plaid'ed**, *a.* கம்பளித்துணி வகையாலான; கம்பளச் சால்வையணிந்த; வட ஸ்காத்லாந்து நாட்டுப்புற ஆடையணிந்த.

**plain**[1], *n.* சமநிலம்; சமவெளி; புறவெளி, திறந்த இடம்; தாழ் நிலம்; ஆற்றுப்படுகை; *a.* தெளிவான; எளிய, எளிதில் உணரக்கூடிய; சிக்கலற்ற; வண்ணந்தோய்விக்கப்பெறாத; எளிமை வாய்ந்த; பகட்டற்ற; உயரின்ப வாய்ப்பு வளங்களற்ற; கரவடமற்ற; ஒளிவுமறைவற்ற; நேரடியாகப் பேசுகிற; நாட்டுப்புற நடையுடை தோற்றமுடைய; அழகற்ற, கவர்ச்சியற்ற, மிகப்பொதுப்படையான தோற்றம் வாய்ந்த; *adv.* தெளிவாக; (தொ.) be plain with, மறையாது பேசு; plain cards, படமில்லாச் சீட்டுக்கள்; plain clothes, பணிமுறைச் சார்பற்ற ஆடை; plain dealing, நடைநேர்மை, கரவின்மை; plain living, எளிய வாழ்க்கை; plain sailing, இடர்ப்பாடற்ற கடற்பயணம்; இடர்ப்பாடில்லாத எளிய முயற்சி; plain suit, துருப்பல்லாச் சீட்டுத் தொகுதி; plain tile, தட்டையோடு.

**plain**[2], *v.* (செய்.) புலம்பு; முறையீடுசெய்; கரைந்தழு.

**plain'-chant**, *n.* மாறுபாடில்லா ஒற்றைப்பண்ணிசைப்பு.

**plain'-song**, *n.* இடைக்காலத் திருக்கோயிலில் தனிக்குரல் நேர் பண்ணிசைப்பு; பலர் இணைந்து பாடுதற்குரிய இசை.

**plain'-spoken**, *a.* மறையாது பேசுகிற; வெளிப்படையாகக் கூறப்பட்ட.

**plaint**, *n.* (சட்.) குற்றச்சாட்டு; முறையீடு; (செய்.) குறையீடு; புலம்பல்.

**plain'tiff**, *n.* முறையீட்டாளர், வாதி, வழக்காடி.

**plain'tive**, *a.* துயரார்ந்த, அவலமிக்க, சோகமான.

**plait**, *n.* பின்னல் மயிர்க்கற்றை; இரண்டுக்கு மேற்பட்ட வைக்கோற் புரிமுறுக்கு; இழைக்கச்சைப் பின்னல்; துணிமடிப்புவரை; *v.* சடைபின்னு; புரிமுறுக்கு; இழைதிருகி இணை.

**plan**, *n.* திட்டம்; வரைவு; ஒழுங்கமைப்பு; கால-இட அட்டவணை; நகரம்-நகரப்பகுதி-நிலம் முதலியவற்றின் நிலவரைப் படிவம்; கட்டிட உருவரைப்படிவம்; *v.* திட்டமிட்டு உருவாக்கு; திட்டமிடு; முன்னேற்பாடுசெய்; கருத்துரு அமை; உருவரைப்படிவம் வரை; நிலவரைப்படிவம் உருவாக்கு.

**planch**, *n.* சில்லு; குறுங்கல்.

**plan'chet**, *n.* உருப்பெறு நாணயத் தட்டம்.

**planchette'**, *n.* எழுத்தியக்கப் பலகை; ஆவியுலகத் தொடர்புப் பலகை.

**plane**[1], *n.* தளம், சரிமட்டமான பரப்பு; சமதளப்பரப்பு; சமதளப்பரப்புநிலை; விமானம், வானவூர்தி; வானவூர்திப்பகுதிக்கு ஆதாரமான மென்தளப்பலகை; மணிக்கல்லின் பட்டைமுகம்; *a.* சமதளமான, சரிமட்டமான; சரிசமதளத்தில் கிடக்கிற, தளமட்டமான; *v.* வானூர்தியில் இயங்கு; வானூர்திப்பயணஞ் செய்; தளமட்டக்கருவியால் நிலப் பரப்பாராய்; (தொ.) inclined plane, சாரம், சாய்தள ஏற்ற இறக்கத் துணைக்கருவி; plane chart, நிலவுலக நேர்வரை நிரைவரைகள் சமதூர வரைகளாகக் காட்டப்படும் வரைப்படிவுப்படம்; plane sailing, கப்பலின் சமதள இயைபுப் போக்கு; இடக்கற்ற இழைவுநெறி.

**plane**[2], *n.* இழைப்புளி; உலோக இழைப்புக்கருவி; *v.* இழைத்து வழவழப்பாக்கு; உலோகத்தை இழைத்துத் தளமட்டப்படுத்து; மேடுபள்ளம் அகற்றி மட்டத்தளப் படுத்து.

**plane**[3], *n.* கைவடிவ அகல் இலைகளையுடைய மரவகை.

**plan'et**[1], *n.* (வான்.) கோள்; (சோதி.) கிரகம்; (தொ.) major planets, புதன்-சுக்கிரன்-பூமி-செவ்வாய்-வியாழன்-சனி-விண்மம்-சேண்மம்-சேணுகம் ஆகிய ஒன்பது பெருங் கோள்கள்; minor planets, செவ்வாய் வியாழனுக்கு இடையேயுள்ள குறுங்கோள்கள்; primary planets, கதிரவனை நேரே சுற்றிச்செல்லும் பெருங்கோள்-குறுங்கோள்கள்; secondary planets, கதிரவனை நேரடியாகச் சுற்றாது கோள்களில் ஒன்றைச் சுற்றும் துணைக்கோள்கள்.

**plan'et**[2], *n.* நாள்விருந்திற்கேற்ப நிறம் மாறும் திருவுணவழிபாட்டுக் குருமார் கையுறுப்பற்ற உடை.

**plane'-table**, *n.* மட்டப் பலகை மேசை.

**planetar'ium**, *n.* கோள் நிலை இயக்கங்களைக் காட்டும் பொறி.

**plan'etary**, *a.* வான்கோள்களுக்குரிய; நிலவுலகுக்குரிய; இம்மைக்குரிய, இவ்வுலக வாழ்வுசார்ந்த; உலகியலான; நிலை திரிகிற; நிலை திரும்புகிற; (தொ.) planetary hour, இயற்பகலின் அல்லது இயலிரவின் பன்னிரண்டில் ஒருகூறு வேளை; planetary influence, கோள்விளைவு, கிரக பலன்; planetary system, கதிரவன் மண்டலம்.

**planetes'imal**, *n.* கோளணு, குளிர்நிலையில் கோள்கள் திரண்டுருவாவதற்குக் காரணமாயிருந்ததாகக் கருதப்படும் கோள்நிலை அணுத்துகள்.

**plan'etoid**, *n.* குறுங்கோள், செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடையே கதிரவனைச் சுற்றிவரும் ஆயிரக்கணக்கான சிறு கோளங்களில் ஒன்று.

**plan'et-stricken, plan'et-struck**, *a.* குழப்பமுற்ற, திகைப்புண்ட.

**plan'gency**, *n.* முழக்கம், சிலிர்ப்பூட்டும் ஓசை.

**plan'gent**, *a.* இரட்டும் ஓசையுடைய; விதிர்விதிர்க்கிற.

**planim'eter**, *n.* தளமட்டமானி.

**planimet'ric, planimet'rical**, *a.* தளப்பரப்பளவை சார்ந்த.

**planim'etry**, *n.* தளப்பரப்பு அளவை.

**planipet'alous**, *a.* மலர்கள்வகையில் தட்டையிதழ்களுடைய.

**plan'ish**, *v.* மெருகூட்டு; தடிப்புடையதாக்கு.

**plan'isher**, *n.* தட்டையாக்குங் கருவி.

**plan'isphere**, *n.* கோளத்தட்டமைவு, கோளப்பகுதியைத் தட்டையான தளத்தில் படிவித்துக்காட்டும் அமைவு; (தொ.) revolving planisphere, இடவேளை வான்காட்டி, குறித்த இடவேளையிற் கட்புலனாகும் வான்கோளப்பகுதி காட்டும் அமைவு.

**plank**, *n.* பலகை; அரசியல் கோட்பாட்டுத்திட்டம்; கொள்கைத்திட்டம்; *v.* பலகைகொண்டு தளம் பாவு; பலகையால் மூடு; பலகை இணைத்தமை; (தொ.) plank bed, கடுங்காவல் கைதிகளுக்குரிய மெத்தையற்ற படுக்கை; walk the plank, கண்மூடிச்சென்று கடலில் விழு.

**plank'ing**, *n.* பலகைபாவுதல்; பலகையிணைப்பு; பலகை பொதிவு; பலகைத்தொகுதி; பலகைகளாலான வேலைப் பாடு.

**plank'ton**, *n.* (உயி.) மிதவியம், கடல் முதலிய நீர்ப்பரப்பின் மேல்-அடித்தள ஆழங்களில் உள்ள மிதவை நுண்ம உயிரினத் தொகுதி.

**planoconc'ave**, *a.* கண்ணுடிவில்லைகள் வகையில் ஒருபுறம் தட்டையும் ஒருபுறம் உட்குழிவும் ஆன.

**planocon'vex**, *a.* கண்ணுடிவில்லை வகையில் ஒருபுறம் தட்டையும் ஒருபுறம் மேற்குவிவும் ஆன.

**planom'eter**, *n.* தளப்பரப்பு அளக்கப் பயன்படும் வார்ப் பிரும்புத் தகடு.

**plant**, *n.* மரவினம், தாவரம்; செடி; கன்று; முளை, கிளைக் கன்று; பயிர்; வளர்ச்சி; முளைப்பு; உயிர்த்திறம்; உயிர்ப்பு; நிற்கும் நிலை, நிலையமைதி; முன்னேற்பாடான ஒப்படைப்புப் பொருள்; துணைக்கருவித்தொகுதி; இயந்திர சாதனம்; தொழிற்சாலை; அறிவுத்துணையமைவு; கலைத்துணையமைவு; *v.* நடு; பயிரிடு; நாற்றுக நடவுசெய்; நத்தை-மீன் முதலியன வளர்வதற்காக நீர்நிலையில் இடு; மரம்வளர்; பயிரேற்று; குடியிருப்பமை; படியவை; ஊன்று; மனத்தில் ஊன்றுவி; குறிவைத்துக் குத்து, எற்று; வித்திடு; நிலத்தில் ஊன்று; புதைத்துவை; போலி வளங்காட்டச் சுரங்கத்தேட்ட இடத்தில் மண்ணில் பொன்பொடி கலந்துவை; ஓச்சு, குத்துவிடு, அடிகொடு; இடத்தில் ஒற்றுடவிடு.

**Planta'genet**, *n.* (வர.) இரண்டாம் ஹென்றி முதல் மூன்ரும் ரிச்சர்டு வரையுள்ள பிரிட்டிஷ் மன்னர் குடிமரபு.

**plan'tain**[1], *n.* பறவைத்தீனியாகப் பயன்படும் விதைகளை யுடைய பேரிலைக் குறுஞ்செடிவகை.

**plan'tain**[2], *n.* வாழை; வாழையின மரவகை; வாழைப்பழம்; வாழைக்காய்.

**plan'tar**, *a.* (உள்.) உள்ளங்காலிற்குரிய.

**planta'tion**, *n.* தோப்பு; பண்ணை; பருத்திவிளை; புகையிலைத் தோட்டப்பண்ணை; (வர.) குடியேற்றம்; குடியேறுகை; (தொ.) plantation song, (வர.) உழவுப் பாட்டு.

**pla'nter**, *n.* பண்ணையாள்; பண்ணையார்; (வர.) அயர் லாந்தில் ஆங்கிலக் குடியேற்றத்தார், குடியகற்றப்பட்டவர் நிலத்தில் குடியிருப்புப்பெற்றவர்; நடவு இயந்திரம்.

**plant'igrade**, *n.* உள்ளங்கால் பதித்துநடக்கும் விலங்கினம்; உள்ளங்கால் பரப்பு முழுவதும் நிலத்தில் ஒருங்கே படிய வைத்து நடக்கும் மனிதர்; *a.* உள்ளங்கால் பதித்துநடக்கிற; உள்ளங்கால் பரப்பு முழுதும் பதித்து நடக்கிற.

**plant'-louse**, *n.* செடிப்பேன்.

**plantoc'racy**, *n.* பண்ணையார் ஆட்சி.

**planx'ty**, *n.* மூவகைச் சந்தப்போக்குடைய அயர்லாந்து இசைப்பாங்கு.

**plaque**, *n.* அணிகிளர் பலகை; பெயர்ப்பொறி கல்; பதக்க வில்லை; (மரு.) வீக்கத்தழும்பு.

**plash**[1], *n.* சதுப்புநிலக் குளம், குட்டை.

**plash**[2], *n.* முக்குளிப்பு, தடாற்குதிப்பு; *v.* நீரில் துடுமெனப் பாய்.

**plash**[3], *v.* வேலியாகத் தழைகிளைகளை வளைத்து வரிந்து கட்டு; தழைகிளை வரிந்து வேலி அமை; தழைகிளை வரிந்து வேலி செப்பஞ்செய்.

**plash'y**, *a.* நீர்நிலை சார்ந்த, சதுப்பு நிறைந்த.

**plasm**, *n.* உயிர்மத்தின் ஊன்மம், உயிரியற்பொருள்.

**plas'ma**, *n.* பசும்படிக்கக் கல் வகை; நிணநீர், குருதியில் நுண்ணிழைமங்கள் மிதப்பதற்குரிய அடிப்படை ஊனீர்க் கூறு; உயிர்மத்தின் ஊன்மக்கூறு.

**plasmat'ic, plas'mic**, *a.* ஊனீர் சார்ந்த; ஊன்மஞ் சார்ந்த.

**plasmod'ium**, *n.* கருவுள் இணையாத அணு உயிர்களின் திரள்பிழம்பு; முறைக்காய்ச்சலுக்குக் காரணமான ஒட்டுயிர் நுண்மம்; *pl.* plasmod'ia.

**plas'molyse**, *v.* ஊன்ம உலர்வுக்கு ஆட்படுத்து; தாவர உயிர்மச்சுரிப்பு ஊட்டு.

**plasmol'ysis**, *n.* ஊன்ம உலர்வு, நீரிழப்பால் ஏற்படும் ஊன்மச்சுருக்கம்; தாவர உயிர்மச்சுரிப்பு, விஞ்சிய செறி வார்ந்த நீர்மத்தோய்வு காரணமான தாவர உயிர்மச் சுருக்கம்.

**pla'ster**, *n.* கட்டு; அரைசாந்து, சுவர் மச்சடிகளின் பரப்பிற் பூசப்படும் மணல்-மயிர் கலந்தமென்சாந்துக்கலவை; சுண்ணக் கந்தகி; *a.* அரைசாந்தாலான; *v.* மருத்துவக்கட்டிடு; கட்டிட்டு மருத்துவஞ் செய்; பிசைந்து பூசு; அப்பு, பூசு; கொட்டிப் பரப்பு, வாரி அப்பு, மட்டின்றிப்பூசு; மேல் ஒட்டு; அரை, பொடியாக்கு; வேட்டுக்களால் தகர்; மென்பரப்பாக்கு; மெழுகிப்பசப்பு; களிக்கல் பொடியூட்டு; நீறுகொண்டு ஒட்டி யிணை; (தொ.) court plaster, வெட்டுக்காயங்களுக்கான ஒட்டுப்பசைத்துணி; mustard plaster, காரசாரமான செய்தி; காரசாரமான ஆள்; plaster of Paris, வார்ப்புக்குடுவையாக வும் காரை மண்ணுகவும் பயன்படும் களிக்கல் தூள்.

**plas'tic**, *n.* குழைம ஒட்டுறுப்பறுவை; வார்ப்புப்பொருள்; *a.* குழைத்து உருவாக்கத்தக்க; குழைத்துருவாக்கப்பட்ட; குழைமக்கலை சார்ந்த; குழைவான, எளிதில் உருவேற்கிற; எளிதில் மாறுகிற, நிலையுருவற்ற; உருமாற்றத்தக்க, உருத் திரிபூட்டத்தக்க; இருது தளர்ந்து வளைகிற; இயல்வளர்ச்சி யூட்டுகிற; உயிரியல் இழைமமாக்கத்தக்க; பருப்பொருள் கடந்த நுண்ணியல் திறம் ஆக்கத்தக்க; உயிரியல் இழைம ஆக்கத்துடன் கூடிய; (தொ.) plastic arts, குழைமக்கலைகள், உருவாக்கஞ் சார்ந்த சிற்பம்-மட்பாண்டத்தொழில் முதலிய கலைகள்; plastic clay, (மண்.) புத்துயிரூழியின் தொடக்க நடுவூழிப்படுகை; plastic surgery, ஒட்டுறுப்பு அறுவை.

**plas'ticine**, *n.* செயற்கைக் களிமண், குழைவுருவாக்கத்துக் குரிய களிமண்ணினிடமாகப் பள்ளிகளில் பயன்படுத்தப் படும் செயற்கைக் குழைமப்பொருள்.

**plasti'city**, *n.* குழைவியல்பு; எளிதில் உருமாறுந் தன்மை.

**plas'ticizer**, *n.* குழைபொருட் குழுமத்தை உருவாக்கும் அல்லது வளமாக்கும் பொருள்.

**plas'tics**, *n. pl.* குழைபொருட் குழுமம்; குழைவுப்பொருள் தொகுதி; வார்ப்படப் பொருள்கள்.

**plas'tron**, *n.* வாட்போர் வீரனின் தோல்பொதிந்த மார்புக் கவசம்; குதிரைவீரரின் கழுத்தணிகாப்பு மார்புக்கவசம்; பெண்டிர் மார்புக்கச்சின் அணிமுகப்பு; ஆடவர் திண்மெரு கிட்ட உட்சட்டை முகப்பு; ஆமையோட்டின் வயிற்றுப்பகுதி; விலங்குகளின் வயிற்றுப்பகுதித் தோடு.

**plat**[1], *n.* திடல், நிலப்பகுதி.

**plat**[2], *n.* பின்னல், சடை, புரிமுறுக்கு; *v.* பின்னிவிடு, முறுக்கி இணை.

**plat**[3], (பிர.) *n.* உணவுத்தட்டம்.

**plat'an**, *n.* கைவடிவ அகல் இலைகளையுடைய மரவகை.

**plate**, *n.* உணவுத்தட்டம்; தட்ட உணவுத்தொகுதி; தாம் பாளம்; திருக்கோயில் காணிக்கைத்தட்டம்; தட்டு; திண்ணிய தகடு; தகட்டுப்பாளம்; கவசத்தகடு; இயந்திரத்தின் தட்டு றுப்பு; செதுக்குத்தகடு, செதுக்குதற்குரிய மென்பரப்புத் தட்டு; செதுக்குத்தகட்டுப் படிவுரு; ஏட்டில் படம் உடைய தனிச்செருகிதழ்; முற்காலத்தகட்டுத் தண்டவாளம்; ஆசிரியர் பெயர்-சின்னம் முதலியன பொறித்த ஏட்டுப் பெயர் முத்திரைத்தகடு; பெயர்ப்பொறிப்புத் தகடு; வாயில் முகப்புத் தகடு; புதைபேழை முகப்புத்தகடு; ஒளிப்பதிவுக்கான நிழற் படத்தகடு; நிலையச்சுப் பதிவுத் தகடு; நிலையச்சு மின்பதி தகடு; சுவர்முகட்டு உத்திரம், கதவு பலகணிகளின் உருச் சட்டக் கையிணைப்பான விட்டம்; உலோகக் கலங்களின் தொகுதி; பந்தயப் பரிசுக்கலம்; திருக்கோயில் காணிக்கைத் தட்டம்; தட்டக் காணிக்கை; பொய்ப்பல் இணைப்பு அடித் தகடு; பந்தாட்டத்தில் பந்தடிகாரர் நிலையிடம்; *v.* தகடுபொதி; கப்பல் வகையில் தகட்டுக்காப்பிடு; பூணணி வகையில் தகட்டுப்பொதிவு செய்; உலோகமீது வெள்ளி பொன் மென்றகடு பொதி; அச்சுநிலைப்படிவத் தகடெடு;

(தொ.) half plate, நிழற்படத் துறையில் $4\frac{3}{4}'' \times 6\frac{1}{2}''$ அளவு; home plate, கட்டப்பந்தாட்டத்தில் பந்தடிக்காரர் இட எல்லை; pitcher's plate, கட்டப்பந்தாட்டத்தில் பந்தெறிகாரர் இடம்; plate glass, முகக்கண்ணாடிக்கான வார்ப்புப்பளிங்குத் தகடு; கடைப்பலகணிக் கண்ணாடித்தகடு.

plateau', n. மேட்டுநிலம், நிலமேடு; பூவேலைப்பாடுடைய தட்டம்; அணியொப்பனைப் பட்டயச் சின்னம்; தட்டை முகட்டினையுடைய பெண்டிர் தொப்பி; pl. plateaus', plateaux'.

plate'-basket, n. கரண்டி முதலியன வைக்குங் கூடை.

plate'ful, n. தட்ட அளவு.

plate'layer, n. தண்டவாளம் பழுதுபார்க்குநர்.

plate'-mark, n. முத்திரை.

plat'en, n. அச்சகத்தில் அச்சுத்தாள் அழுத்துந் தகட்டுப் பாளம்; தட்டச்சில் தாள் அழுத்துந் தகடு.

plat'er, n. ஈயம் பூசுபவர்; வெள்ளித்தகடு பொதிபவர்; கப்பல் கட்டும் தொழிலில் மேல் தகட்டுப்பாளம் பொருத்து பவர்; பட்டிப்புரவி, பட்டயச்சின்னங்களையே முன்னிட்டுப் பந்தயத்தில் கலந்துகொள்ளும் கீழ்த்தரப் பந்தயக்குதிரை.

plate'-rack, n. தண்டயப்பலகை, உலோகக்கலன் ஏந்து சட்டம்.

plat'form, n. பேச்சுமேடை; தளமேடை; கலையரங்க மேடை; தனித்துறை மேடையரங்கம்; மேடையில் அமர்ந்திருப்பவர்; மேடைத்தளம்; மேட்டுநிலம்; தொடர்வண்டி நிலையத்தின் பரப்புமேடை; பீரங்கிமேடு; பாதையோர நடைமேடை; மேடைப்பேச்சுத்துறை; கட்சிக்கோட்பாட்டடிப்படை; கட்சித் தேர்தலறிவிப்பு; விவாத அடிப்படை; v. மேடைமீது வை; மேடைமீது தோன்று; மேடைமீது பேசு; மேடையமைத்துக் கொடு; திட்டமமை.

plat'ing, n. முலாம்பூசுதல்; தங்கப்பூச்சு; வெள்ளிப்பூச்சு; தகடுட்டுதல்; பரிசிற்கலன் பந்தயம்.

platin'ic, a. நாலிணைதிற விழுப்பொன் சார்ந்த.

platinif'erous, a. விழுப்பொன்னடங்கிய.

plat'inize, v. விழுப்பொன் பூச்சிடு.

plat'inoid, n. செம்பு-துத்தம் முதலிய உலோகங்கள் அடங்கிய கலவை; விழுப்பொன்னுடன் இணைந்து கிடைக்கும் உலோகம்.

plat'inotype, n. விழுப்பொன் மைத்தூளினுற் செய்யப்படும் நிழற்பட அச்சுமுறை.

plat'inous, a. ஈரிணைதிற விழுப்பொன் சார்ந்த.

plat'inum, n. விழுப்பொன், அணு எடை 78 கொண்ட விலை மிக்க ஒண் சாம்பர்நிற உலோகத்தனிமம்; a. விழுப்பொன்னு லான; விழுப்பொன்னுக்குரிய; (தொ.) platinum black, கரித்தூள் வடிவான விழுப்பொன்; platinum blonde, பொன் சாம்பர்நிற மயிருடைய பெண்; platinum metals, விழுப் பொன்னுடன் இணைந்து கிடைக்கும் உலோகங்கள்.

plat'itude, n. பயனில் பெருங்கூற்று; வெற்றுரை.

platitudinar'ian, n. வறுமொழியாளர்; a. வெற்றுரை யுடைய.

platitud'inize, v. வெற்றுரைவாரவுரை கூறு; மேலீடான பொதுநிலை மெய்ம்மைகளையே கூறு.

Platon'ic, a. பிளேட்டோ (கி. மு. 427-347) என்ற பண்டைக் கிரேக்க அறிவருக்குரிய; பிளேட்டோவின் கோட்பாடு சார்ந்த; கருத்தியலான; கோட்பாட்டு நிலைப்பட்ட; ஆன்ம ஈர்ப்புடைய; சொல்லளவான, செயல்சாராத; (தொ.) Platonic love, பொறியுணர்ச்சியில்லாக் காதல், ஆன்ம நேயம்; Platonic year, வான்கோளங்கள் வேறு வேறு தனி நிலைப்போக்கு முற்றித்தொடக்க நிலையடைவதற்குப் பிடிக்கும் பேரூழிவட்டம்.

Platon'icism, n. மெய்யுறு புணர்ச்சியில்லாக் காதல்.

Platon'ics, n. pl. பொறியுணர்ச்சியில்லாக் காதல்; ஆன்ம நேயக் காதலர் பேச்சு; ஆன்மநேயக் காதலர் தொடர்பு.

Plat'onism, n. பிளேட்டோ என்ற பண்டைக்கிரேக்க அறி வரின் கோட்பாடு; ஆன்ம நேயம்.

Plat'onist, n. பிளேட்டோ என்ற பண்டைக் கிரேக்க அறி வரைப் பின்பற்றுபவர்.

platoon', n. படைப்பிரிவு; காலாட்படைப் பிரிவின் குண்டு வீச்சு; குண்டுவீச்சு நடத்துவதற்கான சிறு காலாட் படைப்பிரிவு.

platt'en, n. = platen.

platt'er, n. மரவை; தாம்பாளம், தட்டு.

plat'ypus, n. வாத்தலகுடைய ஆஸ்திரேலிய நீர்வாழ் விலங்கு.

plat'yrhine, plat'yrrhine, n. தென் அமெரிக்க குரங்கு வகை; a. அகன்ற மூக்குடைய.

plaud'its, n. pl. கைகொட்டாரவாரம், கைதட்டு முழக்கம்; முனைப்பார்வப் பாராட்டு.

plaus'ible, a. சரியாகத் தோற்றமளிக்கிற, எளிதில் நம்பத் தக்க; வாத வகையில் நேர்மையாகத் தோன்றுகிற; ஆள் வகையில் புறத்தோற்றத்தில் நேர்மையானவராகத் தெரிகிற.

play, n. விளையாட்டு; களரியாட்டம்; பயிற்சி விளையாட்டு; மனைப்புற ஆட்டம்; குழந்தைகளின் கட்டற்ற செயல், ஆட்ட பாட்டம்; துள்ளல், குதியாட்டம்; ஓட்டசாட்டம்; கேளிக்கை; பொழுதுபோக்கு விளையாட்டு; பொழுது போக்கு; பொழுதுபோக்குக் காட்சி; நாடகக்காட்சி; நாடகம்; வேடிக்கை; கேலி, களியாட்டம்; விளையாட்டுப்பாங்கு; விளையாட்டுப் பாங்கான செயல்; நகையாட்டம்; கட்டற்ற போக்கு; எளிய செயல்; ஆர்வச்செயல், மகிழ்ச்சிக்குரிய செயல்; மகிழ்வூட்டுஞ் செயல்; விரைவியக்கம்; மெல்லி யக்கம்; கட்டற்ற இயக்கம்; ஓய்வின்பம்; வேலை ஓய்வு; வேலை நிறுத்தம்; சூதாட்டம்; பந்தய ஆட்டம்; சொல்திரி பாட்சி; சிலேடையாட்சி, இரட்டுற மொழிதல்; v. விளை யாடு; கேளிக்கை வகையிற் பங்குகொள்; ஆட்டத்திற் கலந்துகொள்; ஆட்டத்திற் பங்கு கொள்ளுவி; பந்தடி; எதிர்த்து ஆட்டம் ஆடு; சூதாடு; சூதாட்டத்தில் காய் நகர்த்தி வை; பந்தய ஆட்டமாடு; சீட்டிறக்கு; நாடகத்தில் நடி; நாடகத்திற் பங்குகொள்; நடி, பாவி; வாழ்க்கைத் துறையிற் பங்குகொண்டு செயலாற்று; இசைக்கருவி இயக்கு; துள்ளிக்குதி, குதியாட்டமிடு; குழந்தை வகையில் கைகால் அசைத்தாட்டு; இங்குமங்கும் ஓடியாடு; உலவு; மெல்ல இயங்கு; தொட்டுச்செல்; ஊடாடு; மகிழ்ந்து செயல் செய்; களிப்பூட்டிச்செயலாற்று; கட்டுப்பாடின்றி இயங்கு; தட்டுத் தடங்கலின்றி இயக்கு; கேலி செய்; சூழ்ச்சிப் பொறியிற் சிக்கவைத்து நையாண்டிபண்ணு; மெல்ல ஏமாற்று; தூண்டிச் செயலாற்றுவி; துப்பாக்கிக்குண்டு பாயவிடு; துப்பாக்கி வகையில் குண்டு பாயப்பெறு; தொழிலாளர் வகையில் வேலையிலிருந்து விலகியிரு; தூண் டிலை இழுத்து இழுத்துக் களைப்படையும் வரை மீனை வாளா விட்டுவைத்திரு; (தொ.) child's play, சிறுபிள்ளை விளை யாட்டு, மிக எளிய செயல்; fair play, நேர்மை தவறா விளை யாட்டு; எல்லோருக்கும் சமநிலை வாய்ப்பளிப்பு; foul play, மோசடி விளையாட்டு; நேர்மைக் கேடு; வஞ்சகச் செயல்; make play, ஓட்டப் பந்தயங்களிலும் வேட்டை ஆட்டத் திலும் நிறைபயனுடன் செயலாற்று, பின்தொடர்ந்து வரு பவர்களுக்கு நல்ல பயிற்சியளி; சோர்வுறச் செய். play a good knife and fork, வயிறு நிரம்ப உண்ணு; play a good stick, நன்றுகச் சிலம்பமாடு; நன்றுக வாட்போர் செய்; play at, அரை மனத்துடன் விளையாட்டில் ஈடுபட்டிரு; குறை மனதோடு செயலில் ஈடுபட்டிரு; play booty, உளவாயிருந்து காட்டிக்கொடு; play by ear, முறையான இசைப்பயிற்சி யின்றிக் கேள்வியறிவுமூலமே இசைக்கருவியை வாசி; play ducks and drakes, நீரிற் கற்களை எறிந்து விளையாடு; கவலை யின்றிப் பணத்தைச் செலவழி, வீண்செலவு செய்; played out, ஆற்றல் இழந்து, சோர்வுற்று, பயனற்ற நிலையடைந்து; play fair, ஆட்டத்தில் எதிரிக்கும் சம வாய்ப்புக் கொடு; ஆட்ட விதிகளை மனத்திற்கொண்டு நேர்மையாக ஆடு; நியாயமாக நடந்துகொள்; play fast and loose, கடமைகளைப் புறக்கணி; நம்பிக்கைமோசஞ் செய், நம்பிக்கை வைக்கத்

தகுதியற்றிரு; play first fiddle, முக்கிய பதவியிலிரு, தலைமைப் பதவியை மேற்கொள்; play foul, கள்ள ஆட்டம் ஆடு; ஆட்டத்தில் எதிரிக்கு ஒத்த வாய்ப்புக் கொடுக்காமல் ஆடு; ஆட்ட விதிகளைப் புறக்கணித்து ஆடு; நேர்மைக் கேடாக நட; play in, திருக்கோயில் வழிபாட்டாளர் குழு உள்வருஞ் சமயம் இசைக்கருவியில் வாசி; play into the hands of, நோக்கங்களுக்குச் சார்பாகச் செயலாற்றி அவற்றில் தானே சென்று சிக்கு; play off, பிரித்துவைத்து நலமடை; கேடு பயக்கும் வகையில் தூண்டிச் செயலாற்றுவி; பொருளை இன்னொன்றாகக் காட்டி வெற்றிபெறு; play of words, சொல்லணி; play on, மரப்பந்தாட்ட வகையில் தன்னுடைய இலக்குக் கட்டைகள் நோக்கிப் பந்தினை அடித்து ஆட்டமிழ; play on, play upon, ஒருவரின் அச்சம்-கவலை முதலியவற்றைப் பயன்படுத்திக்கொள்; play one's cards well, வாய்ப்புக்களை நன்கு பயன்படுத்திக்கொள்; play on words, play upon words, சொற்சிலேடை; play out, திருக்கோயில் வழிபாடு முடிந்தவுடன் வழிபாட்டாளர் வெளியே போகும்போது இசைக்கருவியில் வாசி; play second fiddle, இரண்டாந்தரப் பணியை மேற்கொள்; பெரியவரைப் பணிந்து செயலாற்று; play Shylock, இரக்கமற்ற தன்னலத்தனாகச் செயலாற்று; play up, விளையாட்டில் முழு ஆற்றலையும் ஈடுபடுத்து; play upon the square, நியாயமாக நடந்துகொள், நேர்மையோடு செயலாற்று; play upto, துணையாதரவாக நாடகத்தில் நடி; முகப்புகழ்ச்சி செய்; play well, மரப்பந்தாட்டத்தில் ஆட்டக்கள வகையில் விளையாடுவதற்கேற்ற நன்னிலையுடையதாயிரு; play with, எடுத்து விளையாடி மகிழ்; விளையாட்டுக் காட்டு; விளையாட்டாகக் கருதிச் செயலாற்று, எளிதாகக் கருதி நட.

**play'-actor**, *n.* நடிப்புப் பேர்வழி.

**play'bill**, *n.* நாடக விளம்பரம், நாடக அறிவிப்புச் சுவரொட்டி.

**play'-day**, *n.* விடுமுறை நாள்.

**play'-debt**, *n.* சூதாட்டத்தில் ஏற்பட்ட கடன்.

**play'er**, *n.* ஆட்டத்தவர்; விளையாட்டில் தேர்ந்தவர்; மரப்பந்தாட்டத்தில் தொழில்முறை ஆட்டத்தவர்; இசைக்கருவி மிழற்றுநர்; இசைக்கருவி தானாக இயங்குவதற்குரிய கருவியமைவு; அரைகுறை மனத்துடன் செயலாற்றுபவர்; ஆட்ட வகைகளில் ஆட்டமுறையாளர்; (தொ.) professional player, மரப்பந்தாட்டம் முதலியவற்றில் தொழில்முறை ஆட்டக்காரர்; நடிப்பை வாழ்க்கைத் தொழிலாக மேற்கொண்ட நடிகர்.

**play'er-piano**, *n.* தானாக வாசிக்கும்படி துணைக்கருவிகளோடு பொருத்தப்பட்ட இசைக்கருவி வகை.

**play'fellow**, *n.* விளையாட்டுத் தோழர்.

**play'ful**, *a.* விளையாட்டுத்தனமான; கருத்தற்ற; விளையாட்டு விருப்புடைய; நகைச்சுவையுடைய; கேலியான.

**play'game**, *n.* விளையாட்டுச் செய்தி, நடைமுறைப் பண்பு குன்றிய செயல்.

**play'goer**, *n.* நாடகக் கொட்டகைகளுக்கு அடிக்கடி செல்பவர்.

**play'ground**, *n.* ஆட்டக்களம்; பள்ளிக்கூட விளையாட்டு வெளி; (தொ.) the playground of Europe, சுவிட்சர்லாந்து.

**play'house**, *n.* நாடகசாலை, நாடகக் கொட்டகை.

**play'ing**, *n.* விளையாடுதல்; இசைக்கருவி வாசித்தல்; கேலி செய்தல்.

**play'ing-cards**, *n. pl.* சீட்டுக்கட்டு.

**play'let**, *n.* சிறு நாடகம்.

**play'mate**, *n.* விளையாட்டுத் தோழர்.

**play'-off**, *n.* வெற்றி தோல்வியின்றி நேர்ந்த சமநிலைப் போட்டியில் முடிவு துணிவதற்கான மிகையாட்டம்.

**play'some**, *a.* விளையாட்டுத்தனமான.

**play'thing**, *n.* விளையாட்டுப்பொருள்; கைப்பாவை, பிறர் விளையாட்டுப்பொருள், பிறரால் எளிதிற் பயன்படுத்தப் படுபவர்.

**play'time**, *n.* விளையாட்டு நேரம்.

**play'-way**, *n.* கல்வி வகையில் விளையாட்டு முறை.

**play'wright**, *n.* நாடக ஆசிரியர்.

**pla'za**, *n.* அங்காடி, சந்தை கூடுமிடம்; ஸ்பானிய நகரங்களில் திறந்த வெளியிடம்.

**plea**, *n.* முறையீடு, வேண்டுதல், பரிந்து பேசுதல்; வாதம்; வழக்கு; (சட்.) வாதி-எதிர்வாதி சார்பான வாத அறிவிப்பு; வழக்குத் தொடுப்பு; (தொ.) Court of Common Pleas, 1875-இல் அகற்றப்பட்டுவிட்ட பழைய முறைமீட்டு மன்றம்; special plea, புதிய செய்திகளின் அடிப்படையிற் செய்யப்படும் தனிவழக்கு வாத அறிவிப்பு.

**pleach**, *v.* சுற்றிப்பிணை; இசைத்துப் பின்னு.

**plead**, *v.* வழக்காடு, வழக்காளிகள் சார்பில் முறைமன்றத்தில் வாதாடு; கொள்கைகள்-நலங்கள்-பண்புகள் ஆகியவற்றின் சார்பில் நின்று வாதாடு; ஆதரித்துப் பேசு; மன்றாடு, எடுத்துக்கூறி முறையிடு; சாக்குப்போக்காக விளக்கங் கூறு; வாதாடி வேண்டு; (தொ.) plead guilty, குற்றவாளியென்று ஒப்புக்கொள்; plead not guilty, குற்றஞ் செய்யவில்லை யென்று மறு; plead with, ஆதரவுகோரி வற்புறுத்திவேண்டு.

**plead'er**, *n.* வழக்குரைஞர்; வாதாடுபவர்.

**plead'ing**, *n.* வாதாடுதல்; வாதாடி வேண்டுதல்; வாதி-எதிர்வாதிகளின் வழக்குவாத அறிவிப்பு.

**plea'sance**, *n.* (செய்.) இன்பம்; இன்ப நுகர்வு; மகிழ்வு; மகிழ்வளிப்பது; மாளிகையோடு இணைந்துள்ள இன்பக்களம்.

**plea'sant**, *a.* மகிழ்வளிக்கிற, மனத்திற்கு உகந்த; உணர்ச்சிகளுக்கு இயைந்த; புலன்களுக்கு இணக்கமான, பூரிக்கிற.

**pleas'antness**, *n.* இனிமை, திருப்தி.

**plea'santry**, *n.* கேலிப்பேச்சு; விளையாட்டுப் பேச்சு; நகைச்சுவை நையாண்டி.

**please**, *v.* மகிழ்வி; மனத்திற்கு உகந்ததாயிரு; விரும்பு, ஏற்றதாகக் கருது; திருவுளங் கொள்ளுவி; திருவுளங் கொள்ளு; (தொ.) if you please, தம் இசைவின் பேரில்; please yourself, உன் விருப்பம்போற் செய்.

**pleas'ing**, *a.* மகிழ்வூட்டுகிற, திருப்தியளிக்கிற.

**plea'surable**, *a.* இன்பந் தருகிற, மகிழ்ச்சியளிக்கிற.

**pleasu're**, *n.* இன்பம்; இன்ப நுகர்வு; மனமகிழ்ச்சி; புலனுகர்வு சார்ந்த மகிழ்ச்சி, விருப்பம்; *v.* இன்பமளி; மனமகிழ்வுகொள்; (தொ.) man of pleasure, நடைக்கேடன், ஒழுக்கங் கெட்டவன்.

**pleasu're-boat**, *n.* இன்பப் படகு.

**pleasu're-ground**, *n.* களியாட்டக் களம்.

**pleat**, *n.* மடிப்புவரை; *v.* மடிப்பு உண்டாக்கு.

**plebe**, *n.* (பே-வ.) அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கடற்படையில் அல்லது படைத்துறைக் கல்லூரியில் கீழ்க்கோடிப் படிநிலை உறுப்பினர்.

**plebei'an**, *n.* பண்டைய ரோமாபுரியில் பொதுமக்களில் ஒருவர்; *a.* இழி பிறப்புடைய; பொதுமக்களைச் சார்ந்த; இழிந்த, நயநாகரிகமற்ற, தாழ்ந்த தரமான.

**pleb'iscite**, *n.* (வர.) ரோமப் பொதுமக்கள் தனிமன்றத்தில் நிறைவேற்றிய சட்டம்; நெருக்கடிக் கட்டங்களில் வாதத்துக்குரிய செய்திமீது குடிமக்கள் அனைவரின் நேர்முக வாக்கு; சமுதாயச் செய்திகளிற் பொதுக்கருத்து அறிவிப்பு.

**plec'trum**, *n.* நரப்பிசைக்கருவி வகையில் பயன்படுத்தப் பெறும் இறகடிக்கோல்.

**pledge**, *n.* பிணையம்; பிணையப்பொருள்; பிணையாயிருக்கும் நிலை; ஈடு; அடகுப்பொருள்; மரபுச்சின்னம்; குழந்தை; அன்பின் அறிகுறி, ஆதரவின் சின்னம்; வருங்குறிச் சின்னம்; நலம் விழைவிசைவு, பிறர்நலங் கருதிக் குடிநீர் வகை அருந்துதல்; உறுதிச்சொல், வாக்குறுதி; மது நிறுத்த ஒப்பந்த உறுதி; அரசியல் தலைவரின் செயலுறுதிச் சூளுரை; *v.* பிணையமாக வை, அடகு வை; நாணயத்தை முன்வைத்து உறுதியளி; நலம் விழைவறிகுறியாக அருந்து.

**pledgee'**, *n.* அடகு வாங்குகிறவர்; அடைமானப் பொருள்களை அல்லது பிணையப் பொருள்களை வைத்திருப்பவர்.

**pledg'et**, *n.* மருத்துப் பட்டைத்துணி.

**Plei'ad**, *n.* அறிஞர் எழுவர் குழு.

**Plei'ads, Plei'ades**, *n. pl.* ஏழு விண்மீன்கள் அடங்கிய கார்த்திகை விண்மீன் குழு; ஏழு விண்மீன்கள் குழு.

**pleis'tocene**, *n.* (மண்.) நாலூழியின் முன்னூழி, உலகூழிகளில் கடையூழிக்குரிய ஈற்றயல் அடுக்கு; *a.* (மண்.) புத்துயிரூழியின் ஈற்றயற்பகுதி சார்ந்த.

**plen'ary**, *a.* முழு நிறைவான; முழு முடிவான; மட்டுமடங்கற்ற.

**plenipoten'tiary**, *n.* முழு அதிகாரம் பெற்ற தூதர்; முழு அதிகாரம் பெற்றவர்; *a.* முழு நிறை அதிகாரம் வாய்ந்த.

**plen'itude**, *n.* முழுமை, நிறைவு; முழுநிறைவளம்.

**plen'teous**, *a.* (செய்.) மிகுதியான, ஏராளமான.

**plen'tiful**, *a.* மிகுதியான, நிறைந்த; திரளான.

**plen'ty**, *n.* நிறைவு; (தொ.) horn of plenty, பொங்குமா வளம், வளமார் கொம்புச்சின்னம்.

**plen'um**, *n.* பொருள் நிறை இடைவெளி; நிறை பேரவை; (தொ.) plenum system, காற்றை உள்ளே வல்லந்தமாக அனுப்புங் காற்றூட்டமைவு.

**ple'onasm**, *n.* (இலக்.) மிகைப்பாட்டு மொழி; கூறியது கூறல்.

**plesiosaur'us**, *n.* மரபற்றுப்போன கடல்வாழுங் குறுவால் நீள்கழுத்துடைய ஊரும் விலங்குவகை; *pl.* plesiosar'i, plesiosar'uses.

**pleth'ora**, *n.* குருதிமிகை; மிகுநிறைவு.

**pleur'a**, *n.* மார்புவரி, உள்ளுறுப்புக்களைக் கவிந்து போர்த்த பால்குடி உயிரின் மார்பு உள்வரிச் சவ்வுகள் இரண்டில் ஒன்று; தண்டெலும்பிலா விலங்குகளின் உடற்புறத் தோற் பகுதி.

**pleur'isy**, *n.* நுரையீரற் சவ்வின் அழற்சி.

**pleurodyn'ia**, *n.* மார்புத்தசை வாதத்தால் ஏற்படும் விலாவலி நோய்.

**pleuropneumon'ia**, *n.* மார்பு உள்வரிச் சவ்வழற்சியுடன் கூடிய குலைக்காய்ச்சல்; கொம்புடைய கால்நடைகளிடையே பரவுந் தொற்று நோய்வகை.

**plexim'eter**, *n.* தட்டுக்கொட்டுமானி.

**plex'or**, *n.* (மரு.) வர்மத்தட்டுச் சிகிச்சை முறையிற் பயன்படுத்தப்படுஞ் சிறு சுத்தி.

**plex'ure**, *n.* குறுக்குநெசவு.

**plex'us**, *n.* பின்னல்வேலை; பின்னலமைவு; சிக்கல், குழப்பம்.

**pli'able**, *a.* நெகிழ்வுடைய, ஒசிவுடைய; எளிதில் வளையத்தக்க; எளிதில் மடக்கத்தக்க; எளிதில் வசப்படுத்தத்தக்க; செல்வாக்கிற்கு இசையத்தக்க; எதற்கும் ஒத்திசைவான.

**pli'ant**, *a.* தொய்வான, எளிதில் வளைகிற; ஒசிவான; செல்வாக்கிற்கு எளிதில் விட்டுக்கொடுக்கிற; எளிதாக வசப்படுகிற; ஒத்திசைந்து போகிற.

*plic'a*, (ல.) *n.* தோல் மடிப்பு; சவ்வின் மடிவு; நோய் காரணமான தலைமயிரின் சடைப்பிடிப்பு; (தொ.) *plica polonica*, தலைமயிரின் சடைப்பிடிப்பு.

**plic'ate**, *a.* (தாவ., வில., மண்.) மடிப்புடைய; விசிறிபோல மடிந்துள்ள.

**plica'tion**, *n.* மடிப்பு; மடித்தல்; மடிவு, மடிந்துள்ள நிலை.

**pli'ers**, *n. pl.* இடுக்கு குறடு, இடுக்கி, சாமணம்.

**plight[1]**, *n.* வாக்குறுதி; மன உறுதிப்பாடு; *v.* வாக்குக் கொடு, உறுதியளி, சூளெடுத்துக்கொள்; பிணை நில்; மண உறுதிப்பாடு செய்.

**plight[2]**, *n.* நிலைமை, நெருக்கடிநிலை.

**plim**, *v.* (பே-வ.) வீங்கு, புடைப்புறு.

**Plim'soll line, Plim'soll's mark**, *n.* கப்பற் சரக்குப் பளுவளவுக் கோடு.

**plim'solls**, *n. pl.* மலிவான ரப்பர் அடித்தோலுடைய புதைமிதியடி வகை.

**plinth**, *n.* தூணின் பீட அடி; மர அடிக்கட்டை; நிலத்தையடுத்து உந்தி நிற்கும் சுவர்ப் பகுதி.

**plin'thite**, *n.* சிவப்புநிறக் களிமண் வகை.

**Pli'ocene**, *n.* (மண்.) நில அடுக்கின் மூன்றுவது பிரிவின் புத்தம்புதிய பிரிவு; *a.* (மண்.) நில அடுக்கின் மூன்றுவது படிவின் புத்தம்புதிய பிரிவு சார்ந்த.

**plod**, *n.* கடும் உழைப்பு; கடு நடை; *v.* கடு முயற்சியுடன் உழை; அடிமையாக உழை; இடைவிடாது நட.

*plombe*, (பிர.) *a.* அலுவலக முத்திரையிடப்பட்ட.

**plop**, *n.* தொப்பென்ற ஒலி; தொப்பென்ற ஒலியோடு நீரில் விழுதல்; *v.* தொப்பென்ற ஒலியோடு விழச்செய்; தொப்பென்று விழு; *adv.* தொப்பென்ற ஒலியோடு.

**plot**, *n.* மனையிடம், நிலக்கூறு; கதையமைப்பு; கதையின் நிகழ்ச்சிக்கூறு; சூழ்ச்சி, மறை சதி, மறைபொறித் திட்டம்; *v.* மனைப்படம் எழுது; சதித்திட்டமிடு, மறை சூழ்ச்சி செய்.

**plough**, *n.* ஏர், கலப்பை; உழுத நிலம்; கலப்பை போன்றுள்ள கருவி வகைகளில் ஒன்று; தேர்வில் மாணவனைத் தள்ளிவிடுதல்; *v.* உழு; சாலிடு; புரட்டு; நிலம்பறி, கிளறு, கலப்பையைக் கொண்டு மேற்புறத்தைக் கீறு; கல்லியெறி; சால்வரியிடு; நெற்றியில் திரைவிழச் செய்; மிகு உழைப்போடு முன்னேறிச்செல்; கப்பல் வகையில் தண்ணீரைக் கிழித்துக்கொண்டு செல், வழி உண்டுபண்ணிக் கொண்டு செல்; தேர்வில் மாணவனைத் தோல்வியுறச் செய்; (தொ.) plough a lonely furrow, முன்னூளைய கூட்டாளிகளிடமிருந்து பிரிந்து தனிவழியே செல்; plough back, நிலத்தை வளப்படுத்துவதற்காகப் புல் முதலியவற்றை நிலத்தில் மடக்கி உழு; வாணிகத்தில் இலாபத்தை மீண்டும் முதலீடு செய்; plough in, உழுது மண்ணுல் நிரப்பு; Plough Monday, இயேசுநாதரின் தெய்விகத் தோற்ற விழாவினை அடுத்துவரும் திங்கட்கிழமை; plough the sand, plough the sands, வீணுக்கு உழை, வீண்பாடு படு; put one's hand to the plough, காரியம் செய்யத் தொடங்கு, வேலையை மேற்கொள்; the Plough, கலப்பை விண்மீன் குழு, சப்தரிஷி மண்டலம்.

**plough'-beam**, *n.* ஏர்க்கால்.

**plough'-boy**, *n.* உழவுக் கால்நடைகளை ஓட்டுபவன், உழவுக் கால்நடைகளை நடத்துபவன்.

**plough'-land**, *n.* உழுது பண்படுத்துதற்குரிய நிலம்; (வர.) நிலப்பரப்பளவு அலகு, ஓர் ஆண்டு காலத்தில் எட்டு எருதுகளைக் கொண்டு உழக்கூடிய பரப்புள்ள நிலம்; இங்கிலாந்தின் வடக்கு-கிழக்குப் பகுதிகளில் வரிவிதிப்பு நில அளவின் அலகு.

**plough'man**, *n.* உழவன்.

**plough'share**, *n.* உழுமுனை, கொழு.

**plough'-shoe**, *n.* உழுமுனையின் உறை, கொழுவினைத் தாங்கிப் பிடிக்கும் அமைவு.

**plough'-staff**, *n.* கலப்பையிலிருந்து மண் முதலியவற்றை அகற்றுவதற்கான கருவி.

**plough'-tail**, *n.* கைப்பிடியுடைய கலப்பைமுனை, மேழிப்பிடி; பண்ணை வேலை.

**plo'ver**, *n.* ஆட்காட்டி குருவியினத்தைச் சேர்ந்த பறவை வகை.

**ploy**, *n.* வேலை, அலுவல், தொழில்முறை ஏற்பாடு, தொழில் முறைப் பயணம்.

**pluck**, *n.* பறித்தல், சட்டென்று இழுத்தல், இசிப்பு; தேர்வில் தோல்வி; உணவு வகையில் ஆட்டின் குலை, விலங்கின் நெஞ்சுப்பை-நுரையீரல்-கல்லீரல்-உயிர்ப்புக்குழல் கொண்ட ஊன்தொகுதி; துணிவு, உரம், ஊக்கம்; *v.* பறி, பிடுங்கு, இழு, இழுத்துச்செல், தென்னியிழு, வெட்டியிழு; பறவையின்

இறகுகளை அகற்று ; கொள்ளையிடு, மோசடி செய் ; மாண வரைத் தேர்வில் தோல்வியுறச்செய் ; (தொ.) have a crow to pluck with, குற்றங்காண் ; pluck up, ஊக்கங்கொள், துணிவு மேற்கொள், ஆற்றல் பெறு.

plucked, *a.* பறிக்கப்பட்ட ; தேர்வில் தள்ளிவிடப்பட்ட.

pluck'y, *a.* துணிவூக்கமுள்ள, விடாமுயற்சியுடைய.

plug, *n.* அடைப்புக்கட்டை, ஆப்பு, தக்கை, அடைப்பாகப் பயன்படும் இயற்கைக்கரணை ; அடைப்பு ; கழிப்பிடத் தொட்டி நீரைத் திறந்துவிடும் பொறி ; அழுத்தப்பட்ட புகையிலைக் கட்டை ; வெட்டப்பட்ட புகையிலைக்கட்டைத் துண்டு ; தீயணைப்புக்குழாயின் வாயடைப்புக் குமிழ் ; *v.* அடைப்பான் கொண்டு துளை அடை ; சுடு ; முட்டியினுற் குத்து ; (பே-வ.) வலிந்து செவியுட்புகுத்தி விளம்பரஞ்செய்.

plum, *n.* இனிய சதைப்பற்றுள்ள பழவகை ; பழமர வகை ; உலர்ந்த கொடிமுந்திரிப்பழம் ; நல்ல பொருள், தொகுதியில் மிகச் சிறந்த ஒன்று ; வாழ்க்கையில் நற்பேறு ; (தொ.) French plum, உயர்வகைப் பழ வற்றல் ; plum cake, கொட்டையில்லா உலர்ந்த கொடிமுந்திரிப்பழம் முதலியன சேர்த்துச் செய்யப்பட்ட பண்ணிய வகை ; plum duff, கொட்டையில்லாக் கொடிமுந்திரிப்பழ வற்றல் சேர்த்துச் செய்யப்படும் மாவுக்களி ; plum pudding, உலர் பழஞ் சேர்ந்த மாவுக்களி.

plu'mage, *n.* பறவையிறகுகளின் தொகுதி.

plumassier', *n.* ஒப்பனை இறகுகள் செய்பவர் ; ஒப்பனை இறகு களில் வாணிகஞ் செய்பவர்.

plumb, *n.* ஈயக்குண்டு ; தூக்குநூற் குண்டு ; ஆழம்பார்க்கும் நூற்குண்டு ; *a.* செங்குத்தான ; முழுநிலையான ; மரப்பந் தாட்டத்தின் பந்திலக்குக் கட்டை வகையில் நேர் மட்டமான, சரி நேரான ; *v.* தூக்குநூற்குண்டு கொண்டு ஆழம்பார் ; செங்குத்தாக்கு ; காரீயக் கம்மியராகப் பணிபுரி ; *adv.* செங்குத்தாக ; சரி நுட்பமாக, துல்லியமாக ; (தொ.) out of plumb, செங்குத்தாயிராத.

plumbag'o, *n.* காரீயம், வரையி, எழுதுகோலுக்காகப் பயன் படுத்தப்படும் ஈயத்தைப் போன்ற கரிவகை ; நடுநிலக்கடல் சார்ந்த ஒப்பனைச்செடி வகை.

plum'beous, *a.* ஈயஞ் சார்ந்த ; ஈயம் போன்ற ; ஈயம் பூசிப் பளபளப்பாக்கப்பட்ட.

plumb'er, *n.* ஈயக்கம்மியர், ஈயம்-துத்தநாகம்-வெள்ளீயம் முதலியன கொண்டு குழாய்-தொட்டி முதலியவற்றைப் பொருத்திச் செப்பனிடுபவர்.

plumb'ery, *n.* ஈயக்கம்மிய வேலை ; ஈயக்கம்மியர் தொழிற் சாலை.

plum'bic, *a.* (வேதி.) ஈயங்கலந்த ; நோய்க்குண ஆய்வு வகையில் ஈயம் இருப்பது காரணமான.

plumbif'erous, *a.* ஈயங் கிடைக்கிற ; ஈயங் கொண்டுள்ள.

plumb'ing, *n.* செங்குத்தாக்குதல் ; ஈயத்தொழில் ; ஈயக் குழாய் முதலியன பழுது பார்ப்பவர் வேலை.

plum'bism, *n.* ஈய நச்சூட்டு.

plumb'less, *a.* ஆழம் பார்க்க முடியாத.

plumb'-line, *n.* விடுது ; தூக்குநூல், சுவரின் ஒழுங்கறி கருவியின் நூற்கயிறு.

plumb'-rule, *n.* கொத்தனது தூக்குநூல்.

plume, *n.* இறகு, ஒப்பனை இறகுச்சூட்டு ; தலைக்கவசம்-தொப்பி ஆகியவற்றின் இறகுக்குஞ்சம் ; குதிரைமயிர்ச் சூட்டு ; இறகு போன்ற உறுப்பு ; இறகு போன்ற உறுப்பு வளர்ச்சி ; *v.* இறகுகளைக் கோதிவிட்டுக் கொள் ; இறகு செருகு ; இரவல் இறகுகளைக்கொண்டு ஒப்பனை செய்துகொள் ; அற்பச் செய்தி பற்றிப் பெருமைப்பட்டுக்கொள் ; போலிப் பண்பு வகையில் பெருமைகொள்.

plume'let, *n.* முளைக்குருத்து ; சிறுகொண்டை, சிகை முடி.

plumm'er-block, *n.* (இய.) சுழலும் நடு அச்சினைத் தாங்குதற்கான உறையுடன் கூடிய உலோகச் சட்டம்.

plumm'et, *n.* தூக்குநூல் ; தூக்குநூற் குண்டு ; ஆழம் பார்ப்பதற்கான கருவியின் ஈயக்குண்டு ; அழுத்துசுமை ; தடங்கலாயிருக்கும் பாரம் ; தக்கையை நேர்நிறுத்தும் பொருட்டுத் தூண்டிற் கயிறுடன் இணைக்கப்படும் பளு.

plumm'y, *a.* உலர்ந்த கொடிமுந்திரிப் பழங்கள் சார்ந்த ; கொடிமுந்திரிப் பழங்கள் மலிந்த ; வளமான ; நல்ல ; உகந்த.

plumose', *a.* இறகு போன்ற ; இறகுகளையுடைய.

plump[1], *a.* கொழு கொழுத்த ; சதைப்பற்றுள்ள ; உருண்டு திரண்ட ; முழு நிறைவான ; *v.* கொழுக்கப்பண்ணு ; கொழுப் பேறு ; உருட்சி திரட்சியுறு ; புடைத்து வீங்கு, பருமனுகு.

plump[2], *n.* திடீரென மூழ்குதல் ; பளுமிக்கதன் வீழ்ச்சி ; *a.* நேர்முகமான ; மட்டுவரைப்படாத ; மொட்டையான ; *v.* திடீ ரென மூழ்கு ; செங்குத்தாக விழு ; வாக்குகளைப் பலருக்குப் பங்கிடாமல் ஒருவருக்கே அளி ; *adv.* தடாலென, சடுதியில், செங்குத்தாக ; ஒளிவு மறைவின்றி.

plum'per[1], *n.* வாய்த்திரள் தக்கை, குழிவிழுந்த கன்னங்களை உருட்சியாக்கும் பொருட்டு வாயில் அடைத்து வைத்துக் கொள்ளப்படும் பந்து அல்லது வட்டுப் போன்ற தக்கைப் பொருள்.

plum'per[2], *n.* தடாலென்ற வீழ்ச்சி, செங்குத்தான முக் குளிப்பு ; தடாலென்ற அடி ; வாக்குகளைப் பலருக்குப் பகிர்ந் தளிக்காமல் ஒருவருக்கே அளிப்பவர் ; ஒருவருக்கே அளிக்கும் வாக்கு ; புளுகு, பச்சைப்பொய்.

plump'ness, *n.* மொழுமொழுத்த தன்மை, உருண்டு திரண் டிருக்கை.

plum'-pudd'ing dog, *n.* வண்டியுடன் ஓடுவதற்காக வைத் திருக்கும் புள்ளி நாய் வகை.

plum'-pudd'ing stone, *n.* (மண்.) தீக்கல் போன்ற கூழாங் கற்கள் கொண்ட கூட்டுப்பாறை.

plu'mule, *n.* முளைக்குருத்து ; பறவைகளின் சிறு மென் தூவி.

plu'my, *a.* இறகு போன்ற ; இறகு மூடிய ; மென்தூவிகள் போர்த்த ; பெரிய இறகுகளால் ஒப்பனை செய்யப்பட்ட.

plun'der, *n.* கொள்ளை, சூறை ; சூறைப்பொருள் ; கொள்ளை ஆதாயம் ; *v.* கொள்ளையிடு ; சூறையாடு ; போரில் பறி ; திட்டமிட்டுப் பறி ; பிறர் பொருளைக் கையாடு.

plun'derage, *n.* கொண்டி, கொள்ளையடித்தல் ; கப்பலில் சரக்குகளைத் திருடுதல் ; கையாடிய பொருள், கொள்ளை யடித்த பொருள்.

plun'derer, *n.* கொள்ளைக்காரன்.

plunge, *n.* மூழ்குதல், முழுக்கு ; திடீர்த் தோய்வு ; துணிகர முனைப்பு ; இடர் நுழைவு ; *v.* தடாலென்று நீரில் பிடித்துத் தள்ளு ; நெருக்கடிக்குள் வீழ்த்து ; செடித் தொட்டியை நிலத்தில் ஆழப் பதியவை ; மூழ்கு ; துணிந்திறங்கு ; அறை யில் அவசரமாக நுழை ; படிக்கட்டில் வேகமாக இறங்கு ; படிக்கட்டில் வேகமாக ஏறிச்செல் ; குதிரைவகையில் முன்னுல் வேகமாகப் பாய் ; கப்பல் வகையில் நீளவாட்டாகச் சாய்ந்து மூழ்கு ; வரம்பின்றிச் சூதாடு ; கடனுளியாகு ; (தொ.) take the plunge, திட்டமிட்ட செயலைத் துணிந்து மேற்கொள்.

plunge'-bath, *n.* முழ்கு நீர்த் தொட்டி.

plun'ger, *n.* மூழ்கடிப்பவர் ; மூழ்குபவர் ; மூழ்குவது போன்ற இயக்கத்துடன் செயற்படும் இயந்திர உறுப்புக்கள்.

plung'ing, *n.* முக்குளிப்பு ; முழுக்குதல் ; மூழ்குதல் ; *a.* முக்குளிக்கிற ; பாய்கிற ; (தொ.) plunging fire, உயர இருக்கிற பீரங்கிகளிலிருந்து தீர்க்கப்படுகிற வெடிகள்.

plunk, *n.* இசைக்கருவியின் தந்திகளைத் தெறித்தலால் எழும் ஒலி ; (பே-வ.) பலத்த அடி ; (பே-வ.) அமெரிக்க வெள்ளி நாணயம் ; *v.* இசைக்கருவித் தந்தி வகையில் மீட்டொலி செய் ; திடீரெனத் தள்ளு, தொப்பென விழு ; எதிர்பாரா வகையில் தாக்கு.

plu'perf'ect, *n.* (இலக்.) முடிவு சுட்டிய சென்றகாலம், இறந்த காலத்துக்கு இறந்த காலம், குறிப்பிட்ட இறந்த காலத்துக்கு முன்பே முடிந்துவிட்ட செயலைத் தெரிவிக்கிற காலம்; *a.* இறந்த காலத்துக்கு இறந்த காலமான.

plur'al, *n.* (இலக்.) பன்மை; பன்மையெண்; பன்மைப் பெயர் வடிவம்; பன்மை வினைவடிவம்; *a.* பன்மைகுறித்த, ஒன்றுக்கு மேற்பட்டதைக் குறிப்பிடுகிற; இருமை எண் முறை உள்ள மொழிகளில் இரண்டுக்கு மேற்பட்டதைக் குறிப்பிடுகிற; எண்ணிக்கையில் ஒன்றிற்கு மேற்பட்ட; (தொ.) plural vote, பல்தொகுதி வாக்கு, ஒன்றிற்கு மேற்பட்ட தொகுதிகளில் வாக்களிப்பதற்கான அதிகாரம்; பன்மை வாக்கு, ஒரே தொகுதியில் ஒரு முறைக்கு மேல் வாக்களிப்பதற்கான அதிகாரம்.

plur'alism, *n.* பல்பதவியாண்மை, ஒரேவேளையில் பல பதவிகளை வகித்தல்; (மெய்.) பன்மை வாதம், மூலப்பொருள்கள் ஒன்றிற்கு மேற்பட்டவை என்று கொள்ளும் அனேகான்ம வாதம்.

plur'alist, *n.* பல்பதவியாளர், ஒரேசமயத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட நிலைகளைத் தாங்குபவர்; (மெய்.) பன்மைவாதி, அனேகான்ம வாதி.

plural'ity, *n.* பன்மை, பலவாயிருக்கும் நிலை; பேரெண்ணிக்கை, கூட்டம், திரள்; ஒன்றிற்கு மேற்பட்ட பதவிகளை வகித்தல்; ஒன்றிற்கு மேற்பட்ட மானியங்களைக் கைக்கொண்டிருத்தல்; மற்றொன்றனோடு சேர்த்து வகிக்கப்படும் பதவி; வாக்குகள் முதலியவற்றின் வகையில் பெரும்பான்மை.

plur'alize, *v.* பன்மையாக்கு; பன்மை வடிவத்திற் கூறு; ஒன்றிற்கு மேற்பட்ட திருக்கோயில் மானியங்களை வைத்துக் கொண்டிரு.

plurilit'eral, *a.* (இலக்.) மூன்றிற்கு மேற்பட்ட எழுத்துக்களையுடைய.

pluripres'ence, *n.* எங்கெங்கும் இருத்தல்.

pluriser'ial, pluriser'iate, *a.* பல வரிசைகள் கொண்ட.

plus, *n.* கூட்டல் குறி; கூடுதலான அளவு; நேர் அளவு, எதிர்மறையல்லாத அளவை; *a.* கூடுதலான, மிகையான, மிகுதிப்படியான; (கண.) நேரான, எதிர்மறையல்லாத, கூட்டப்பட்ட; (இய.) மின்னாற்றல் வகையில் நேராற்றலுடைய, நேர்மின் ஆற்றல் செலுத்தப்பட்ட; குழிப்பந்தாட்ட வகையில் மிகுதிப்படியான முட்டுக்கட்டையுடைய; *prep.* உடன் சேர்க்கப்பட்டு.

plus'-fours', *n. pl.* நீண்டகன்ற காற்சட்டை.

plush, *n.* மெத்தென்ற பூம்பட்டுவகை.

plush'es, *n. pl.* பணியாள் காற்சட்டை வகை.

plu'tarchy, *n.* செல்வராட்சி.

Plu'to, *n.* கிரேக்க புராணமரபில் செல்வத்துக்குரிய கீழுலகத் தெய்வம்; சேணகம், நெப்டியூனை (Neptune) விடத் தொலைவிலுள்ள (1930-இல் கண்டுபிடிக்கப்பட்ட) கோளினம்.

plutoc'racy, *n.* செல்வராட்சி.

plu'tocrat, *n.* பொருட்செல்வ வலிவர்.

plutol'atry, *n.* செல்வப்பூசனை, பண வழிபாடு.

Pluton'ian, *a.* கிரேக்க புராண மரபில் செல்வத்துக்குரிய கீழுலகத் தெய்வஞ் சார்ந்த; கீழுலகுக்குரிய; மிகுதொலைக் கோளான சேணகஞ் சார்ந்த.

Pluton'ic, *n.* அழற்பாறை, அடிநில வெப்பழலால் உண்டான பாறை; *a.* தொலைக்கோளான சேணகம் சார்ந்த; கிரேக்க புராண மரபில் செல்வத்துக்குரிய கீழுலகத்தெய்வஞ் சார்ந்த; கீழுலகுக்குரிய; (மண்.) தீ சார்ந்த, அடிநில வெப்பால் உருவான, எரிமலையால் ஆக்கப்பட்ட; (தொ.) Plutonic rocks, அழற்பாறைகள், அடிநில வெப்பால் உருகி உறைந்த பாறைகள்; Plutonic theory, உள்வெப்பம் செயற்படுவதனாலேயே பெரும்பாலான மண்ணியல் இயக்கங்கள் உண்டாகின்றன என்னுங் கோட்பாடு.

Plu'tonist, *n.* மண்ணியல் துறையில் அடிநில வெப்பத்தின் சிறப்பை வலியுறுத்திய ஜேம்ஸ் ஹட்டன் (James Hutton 1726-97) என்பவரைப் பின்பற்றுபவர்.

pluton'ium, *n.* பொன்னாகம், அணு எண் 94 கொண்ட தனிமம்.

pluton'omy, *n.* பொருளியல்.

plu'vial, *n.* மழையங்கி; *a.* மழை சார்ந்த; மழையுள்ள; (மண்.) மழையினால் ஆக்கப்படுகிற.

pluviom'eter, *n.* மழைமானி.

plu'vious, *a.* மழையுள்ள.

ply[1], *n.* துணி முதலியவற்றின் வகையில் மடிப்பு; திண்மை, கனம்; அடுக்கின் ஓர் அடை, பாளம், படலம்; கயிறு முதலியவைகளின் இழை அல்லது புரி; போக்கு, பாங்கு.

ply[2], *v.* ஊக்கத்துடன் பயன்படுத்து, கையாளு; மும்முரமாக ஈடுபடு; வினாக்களை அடுக்கு; வாதங்களினால் விரைந்து தாக்கு; உணவு முதலியவற்றை இடைவிடாமல் தருவித்துக் கொடு; (கப்.) காற்றுவருந்திசை நோக்கிச் செலுத்து; போய் வந்து கொண்டிரு; வாடகைக்காக விடு.

Plym'outh, *n.* இங்கிலாந்தில் தென்மேற்கிலுள்ள துறைமுகம்; அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மசாச்சுஸெட்ஸ் (Massachusetts) அரசிலுள்ள துறைமுக நகரம்; (தொ.) Plymouth Rock, பெரிதான அமெரிக்க வளர்ப்பின வீட்டுக் கோழி வகை.

ply'wood, *n.* ஒட்டுப்பலகை, படலங்களின் இழைவரை ஒன்றற்கொன்று குறுக்காக வைத்து ஒட்டிச் செய்யப்படும் மெல்லிய வன் பலகை.

pneumat'ic, *n.* காற்றுப்பட்டை, காற்றடைத்த குழாய்ப் பட்டை: காற்றடைத்த குழாய்ப்பட்டை வாய்ந்த மிதிவண்டி; *a.* வளி சார்ந்த; காற்றுக்குரிய; வளி இயக்கத்தால் செயற்படுகிற; பறவைகளின் எலும்புகள் வகையில் காற்றுக் குழிவுகள் கொண்ட; காற்றுக் குழிவுகள் சார்ந்த; ஆன்மிக, உயிர் நலஞ் சார்ந்த; (தொ.) pneumatic dispatch, காற்றழுத்தத்தினால் அல்லது காற்று வெளியேற்றத்தினால் இயக்கப்பட்டுக் குழாய்கள் வழியாகச் சிப்பங்கள் முதலியவற்றை இடம் பெயர்த்துக்கொண்டு செல்லும்முறை; pneumatic trough, வளிக்கொள்கலம், நீர் அல்லது பாதரசப் பரப்பின்மேல் சாடிகளில் வளிதிரட்டுவதற்கான கலம்; pneumatic tyre, காற்றடைத்த குழாய்ப்பட்டை.

pneumati'city, *n.* வளிகொள் இடங்கள் வாய்க்கப்பெற்றுள்ள நிலை.

pneumat'ics, *n.* வளி ஆய்வியல்.

pneum'atocyst, *n.* பறவை முதலியவற்றின் உடம்பிலுள்ள காற்றுப்பை.

pneumatol'ogy, *n.* ஆவிகளைப் பற்றிய கோட்பாடு; தூய ஆவிபற்றிய கோட்பாடு; உளநூல்.

pneumatom'eter, *n.* மூச்சுமானி.

pneu'matophore, *n.* (தாவ.) மூச்சு வேர், சதுப்புநிலச் செடிகளில் காற்று உறிஞ்சுவதற்காக மேல்நோக்கி வளரும் வேர்.

pneumogas'tric, *a.* நுரையீரல்களையும் இரைப்பையையுஞ் சார்ந்த; (தொ.) pneumogastric nerves, மூளை நரம்புகளின் பத்தாவது இணை.

pneumon'ia, *n.* சளிக்காய்ச்சல், சீதசன்னி, நுரையீரல் இழைமங்கள் ஒரு பகுதியோ முழுதுமோ வீங்கிய நிலை; (தொ.) double pneumonia, இரட்டை நுரையீரற் காய்ச்சல்; single pneumonia, ஒற்றை நுரையீரற் காய்ச்சல்.

pneumon'ic, *n.* நுரையீரல் நோய்களுக்கான மருந்து; *a.* நுரையீரல்கள் சார்ந்த.

pneumonit'is, *n.* சளிக்காய்ச்சல், சீதசன்னி.

po, *n.* குழந்தை வழக்கில் சிறுநீர் கழிக்குங் கலம்.

poach[1], *v.* முட்டை அவி, முட்டையை ஓடு நீக்கிக் கொதிக்கும் நீரிற் போட்டு வேகவை.

**poach²**, *v.* விரல்-கழி முதலியவற்றை ஒன்றனுள் நுழைவி, உட்பாய்ச்சு; நிலம் வகையில் மிதித்துச் சேருக்கப் பெறு; வரம்பு கடந்து பிறர் தனியுரிமையில் தலையிடு; பிறர் நிலத்தில் நுழை; பிறர் உரிமையைத் தவருகக் கையாளு; மீறிப் பிறர் உடைமையில் தலையிடு; முறைகடந்து மீன்பிடி; விலங்குகளை ஒழுங்கின்றி வேட்டையாடிப் பிடி; பந்தயத்தில் தகாவழியில் நல்வாய்ப்புப் பெறு; வரிப்பந்தாட்ட வகையில் கூட்டாளியின் களத்திற்குரிய பந்தினை அடி.

**poch'ard**, *n.* ஆண் வாத்து வகை.

**poach'er**, *n.* முட்டை வேகவைப்பவர்; முட்டை வேக வைப்பதற்குரிய குழிவுக்கலம்; பிறர் நிலத்தில் நுழைபவர்; பிறர் உரிமையில் தலையிடுபவர்.

**pock**, *n.* பெரியம்மைக் கொப்புளம், வைசூரி முத்து.

**pock'et**, *n.* சட்டைப் பை; கம்பளி-முசுக்கட்டையினக் காய் வகை முதலியவற்றை அளப்பதற்கான பை; ஆடைப் பை; பண வருவாய்வள ஆதாரங்கள்; மேடைக் கோற்பந்தாட்ட வகையில் பந்துகளை அடித்து வீழ்த்துவதற்கான மேசை யோர மூலைப் பைகளுள் ஒன்று; (மண்.) பாறையின் அயற் பொருள் செறிந்த இடைப்பள்ளம்; பாறையில் பொன் முதலியவற்றின் கனியம் நிரம்பிய இடைக்குழிவு; (படை.) பகைவர் ஆட்சிக்குட்பட்ட தனியிடம்; பகைவர் ஆட்சிக்குட்பட்ட தனிபிடத்திலுள்ள படைகள்; வான் இடையிறக்க மண்டலம், காற்றழுத்தக் குறைவினுலோ காற்றின் கீழோட்டத்தினுலோ விமானங்கள் கீழிறங்க நேருவதற்குக் காரணமான காற்று இடைவெளி; *a.* சட்டைப்பைக்குரிய; சிறு அளவினதான, சட்டைப் பையில் கொண்டுசெல்லத்தக்க அளவு அல்லது வடிவுடைய; *v.* சட்டைப்பையில் வைத்துக்கொள்; சட்டைப் பையில் வைத்து மறைத்துக்கொள்; பந்தயத்தில் போட்டியிடுபவரைச் சுற்றி வளைத்துக்கொள்; கைப்பற்றிக் கொள், பறித்தெடுத்துக்கொள்; அவமதிப்பைத் தலைக்குனிவுடன் ஏற்றுக்கொள்; உணர்ச்சிகளை மறைத்துக்கொள்; உணர்ச்சிகளை அடக்கிக்கொள்; மேடைக் கோற்பந்தாட்ட வகையில் பந்தினை அடித்துப் பைக்குள் வீழ்த்து; (தொ.) be prepared to put your hand in your pocket, கொஞ்சம் பணம் செலவழிக்க ஒருங்கியிரு; empty pocket, பணமில்லாதவர்; have one in pocket, முழு ஆதிக்கத்தின்கீழ் அடக்கி வைத்துக்கொண்டிரு; in pocket, பண நிலையில், பணமுள்ள நிலையில்; out of pocket, பணமில்லாத நிலையில், பணம் போகு நெறியில்; pick a person's pocket, ஒருவர் சட்டைப் பையிலுள்ளதைத் திருடு; pocket an insult, அவமானத்தை ஏற்றிரு; pocket battleship, செறிவடக்கமான சிறு போர்க் கப்பல்; pocket borough, தேர்தலுக்குரிய கைவசத்தொகுதி, சிறு தொகுதி; pocket expenses, சில்லறைச் செலவுகள்.

**pock'et-book**, *n.* குறிப்பேடு, குறிப்புப் புத்தகம்.

**pock'etful**, *n.* சட்டைப்பை கொள்ளுமளவு.

**pock'et-money**, *n.* கைப்பணம், சில்லறைச் செலவுக்கான பணம்.

**pock'et-piece**, *n.* பைத்தாயத்து, நற்பேறு உண்டு பண்ணுதற்காகச் சட்டைப்பையில் கொண்டுசெல்லும் நாணயம்.

**pock'et-pis'tol**, *n.* பைத்துப்பாக்கி, சட்டைப்பையிற் கொண்டுசெல்லும் கைத்துப்பாக்கி; பைத் தேறற் புட்டி, சட்டைப்பையிற் கொண்டுசெல்லும் சாராயப் புட்டி.

**pock'mark**, *n.* அம்மைத்தழும்பு.

**pock'marked**, *a.* அம்மைத்தழும்புள்ள, வைசூரித்தழும்பு நிறைந்த

**pock'-pudd'ing**, *n.* கொழுத்தவர்; பெருந்தீனியர்; ஆங்கிலேயருக்குரிய ஸ்காத்லாந்தரது சாட்டுப்பெயர்.

**pococuran'te**, *n.* கருத்தில்லாதவர்; *a.* கருத்தில்லாத.

**pod¹**, *n.* துளையிடுஞ் சுழல்கருவிக்கான குழிப்பொருத்து.

**pod²**, *n.* நெற்று, அவரை முதலிய செடிவகைகளின் விதைகளடங்கிய தோடு; வெடிக்கும் விதைப்பை; பட்டுப்புழுக் கூடு; வெட்டுக்கிளி முட்டைகளின் உறை; விலாங்குமீன் பிடிப்பதற்கான குறுங் கழுத்து வலை; *v.* செடிவகையில் நெற்றுவிடு; நெற்றின் தோடு நீக்கு.

**pod³**, *n.* கடற் சிங்கங்களின் கூட்டம்; திமிங்கிலங்களின் சிறு குழாம்; *v.* கூட்டமாகத் திரளும்படி கடற்சிங்கங்களைத் துரத்து.

**pod'agra**, *n.* (மரு.) சூலை, சந்துவாதம்; கால் சந்துவாதம்.

**pod'agral, podag'ric, pod'agrous**, *a.* சந்துவாதஞ் சார்ந்த; கால் சந்துவாதம் பீடித்துள்ள.

**podd'ed**, *a.* நெற்றுடைய; நெற்றுகக் காய்க்கிற, நெற்றுவிடுகிற; நெற்றுக வளர்கிற; செல்வ நிலையில் உள்ள; இன்ப வாய்ப்பு நலமார்ந்த.

***podesta'***, (இத்.) *n.* இத்தாலிய நகராட்சிகளில் உள்ள குற்றவியல் நடுவர்; (வர.) இடைநிலைக்கால இத்தாலிய நகரங்களின் முதன்மையான குற்றவியல் நடுவர்.

**podge**, *n.* (பே-வ.) கொழுத்துக் குறுகிய ஆள்.

**pod'ium**, *n.* நெடுமேடைப்பீடம்; அரங்கைச் சுற்றியுள்ள உயர்மேடை; அறையைச் சுற்றியுள்ள தொடர் விசிப்பலகை; *pl.* pod'ia.

**podophyll'in**, *n.* (வேதி.) குடலிளக்கும் இயல்புள்ள கசப்பான மஞ்சள் குங்கிலிய வகை.

**po'e-bird**, *n.* கருஞ்சிறகும் வெள்ளைக் கழுத்தும் உடைய நியூசிலாந்து பறவை வகை.

**po'em**, *n.* செய்யுள், பா; இன்னறுஞ் செய்யுள்வகை; இயைபமைதிச் செய்யுள்.

**po'esy**, *n.* கவிதை.

**po'et**, *n.* கவிஞர், பாவலர், செய்யுள் யாப்பவர்; *fem.* po'etess; (தொ.) Poets' Corner, வெஸ்ட்மினிஸ்டர் திருமனை (Westminster Abbey) யில் பல கவிஞர்களின் கல்லறைகளும் நினைவுச்சின்னங்களுங் கொண்ட பகுதி; கவிதைகள் வெளியிடப்படும் செய்தித்தாள் பகுதி.

**poetas'ter**, *n.* புன்கவிஞர், இழிபொருட் பாவலர்.

**poet'ic**, *a.* கவிதை சார்ந்த; பாட்டிற்குரிய; பாட்டின் நல்லியல்புகள் வாய்ந்த; (தொ.) poetic justice, கவிதை நீதி; poetic license, கவிஞர் சிறப்புரிமை; கவிதைச் சிறப்பு வழக்கு; poetic works, தனிக் கவிஞரின் கவிதைத்தொகுதி, பாடல் ஏடுகள்.

**poet'ical**, *a.* கவிதை சார்ந்த; பாட்டிற்குரிய; செய்யுள் வடிவில் எழுதப்பட்ட; (தொ.) poetical works, அடங்கல் முறை, கவிதைத் தொகுதி.

**poet'icize**, *v.* கவிதைக்குரியதாக்கு; பாடல் வடிவினதாக்கு.

**poet'icule**, *n.* புன்கவிஞர்.

**po'etize**, *v.* கவிஞராக எழுது, பாவலன்போலப் பாடு; கவிதையாக்கு; பாடல்வழியாகப் புகழ் நிறுவு.

**po'etry**, *n.* கவிதை, செய்யுட்கலை; உயர்கருத்தின் உயர் சொற் சந்த யாப்பு; உயர்நிலை உணர்ச்சியின் வீறார்ந்த சொற்கோப்பு; கவிதைத்தொகுதி; ஆழ்ந்த உணர்ச்சி; பாடலுக்குரிய தகுதியமைந்த கருத்து; ஆழ்கருத்து; (தொ.) prose poetry, உரைக்கவிதை, யாப்பமைதி ஒன்றினைத்தவிர மற்ற செய்யுள் இயல்புகளெல்லாமுடைய உரைநடை.

**pog'o**, *n.* போகல் விசைக்கட்டை, வில்லமைவுடன் கூடிய குதித்தல் விளையாட்டுக் கருவி வகை; *pl.* pog'os.

***pogrom'***, (ருசிய.) *n.* (வர.) நூழிலாட்டு, திட்டமிட்ட ருசிய நாட்டு யூதர் படுகொலை.

**poign'ancy**, *n.* காரம், கடுப்பு.

**poign'ant**, *a.* கடுப்பான; உறைப்பான; எரிச்சலூட்டுகிற; நெடியுடைய; துன்பந்தருகிற; காரசாரமான; கிளர்ச்சி தூண்டுகிற.

**poinsett'ia**, *n.* பெரிய செந்நிற இலைகளையுடைய மஞ்சள் நிறப் பூச்செடி வகை.

**point**, *n.* முனை; கருவியின் கூர்நுதி; விளிம்பு; துளைக் கருவி; செதுக்கூசி; மான் கொம்பின் முனைக்கவர்; தார் முள்; மின்தாங்கி முனை; குத்துச்சண்டையில் முகவாய்க்

கட்டை; தண்டவாள இணைப்பின் புடைசாய்வுடைய முனைப்புப்பகுதி; முனைக்கோடி; முடிவு; நிலமுனை; நிலக் கூம்பு; புள்ளி; (வடி.) நீள அகல அமைவற்ற இடக்குறிப்பு; நிறுத்தப்புள்ளி; செமித்திய வரிவடிவின் ஒலி வேறுபாட்டுக் குறி; குறியிட்ட இடம்; துல்லிய இடம்; சரிநுட்ப நிலை; பதின் மானப் புள்ளி; பதின்மானக் கூறு; அச்செழுத்துரு அலகு (·0138 அங்குலம்); அளவைக் கூறு; அளவைப் படிநிலை; பங்கீட்டுமுறை அலகு; பங்குகளின் விலைமதிப்பளவு; தர மதிப்பளவை; முன்னேற்றத் தரம்; தட்பவெப்ப நிலை அள வுக்கூறு; மிகுதிப்பாட்டின் கூறு; துன்னூசிப் பின்னல்; மகளிர் உட்கச்சு-உள்ளாடைக்குரிய உலோகக் கலப்புடைய பூவேலைப் பின்னல் நாடா; ஆட்ட மிகைக் கெலிப்பெண்; கட்ட ஆட்டக் குறுங்கட்டம்; சீட்டாட்ட வகையில் உச்சக் கேள்வி; உச்சக்கேள்விக்குரிய சீட்டுத்தொகுதி; உச்சக் கேள்விக்குரிய கெலிப்பெண்; கள ஆட்டக்காரர், மரப் பந்தாட்ட வகையில் ஆட்டக்காரர்களின் வலப்பக்கத்தில் நிறுத்தப்படுபவர்; கள ஆட்டக்காரர்நிலை; வாட்போர்; வேட்டை வகையில் நேர்குறி இலக்கு; நேர்குறி இலக்குப் போக்கு; வேட்டைநாய் வகையில் குறிவிலங்குச் சுட்டுதல்; (கட்.) கேடயத்தில் இட அறுதிக்குரிய ஒன்பது குறியிடங் களில் ஒன்று; (படை.) படைத்துறை இசையில் கடையான ஒலி; (படை.) முன்னணிக்காவற் குழு; (கப்.) கப்பற்பாயின் கீழ் விளிம்புத் தும்புக்கயிறு; திசைக்கூறு, திசைகாட்டு கருவியின் முப்பத்திரண்டு திசைச் சாய்வுக் கூறுகளில் ஒன்று; பகுதி; நுணுக்கம்; நுட்பம்; தகுதி; பொருத்தம்; விறுவிறுப்பு; பயன் செறிவு; தனிப் பண்புத்திறம்; சிறப் புக்கூறு; தனி அடையாளக்கூறு; தனியன், தனியுரு, சிறப்பியல்பு; கதையின் முக்கியகூறு; கட்டம்; தறுவாய்; கணநேரம்; குறித்த கணம்; நடப்புச்செய்தி; வாத மையக் கூறு; விவரக்கூறு; செய்திக்கூறு; வாதச் செய்திக்கூறு; பொருத்தமான கூறு; சரியான செய்தி; உட்கோள்; உறுதிப்பாடு; *v.* சுட்டிக்காட்டு; குறித்துக்காட்டு; பார்வை செலுத்து; கவனிப்புக்கு உரியதாகக் குறி; திசைமுகமாக்கு, முகப்பைத் திசைநோக்கித் திருப்பி நீட்டு; விரலாற் காட்டு; எடுத்துக்காட்டு; வேட்டைநாய் வகையில் குறிவிலங்கின் திசைநோக்கிக் காட்டு; இலக்குக் குறிக்கொள்; திசை நோக்கிச் சாய்வுறு; எழுதுகோல் முதலியவற்றின் முனை தீட்டு; கூர்மையாக்கு; வழிபாட்டுப் பாடல்களுக்கு இசைக் குறிமானம் இடு; பாடலுக்கேற்ப அசை வகுத்து எழுது; சொற்களுக்கு அழுத்த முனைப்புக் கொடு; படமூலம் குறித்துக்காட்டு; பண்பு முனைப்புக் கொடு; புள்ளிகளிடு; புள்ளி அடையாளமிடு; மண் கொத்தியால் கொத்து; கொத்தி மண் புரட்டு; மென்மயிர்த் தோலில் இடையே வெண்மயிர் குத்தி வை; சந்துபூசு, கட்டுமானத்தில் பழைய இணைப்புக் காரை அகற்றிப் புதுக்காரை இடை திணித்துப் பூசு; பாத்தீட்டலகுப்படி பங்கீடு செய்; நோக்கித் திருப்பியிரு; நோக்கித் திரும்பிய நிலைகொள்; (தொ.) at all points, எல்லாப் பகுதியிலும்: at the point of, தறுவாயில்; விளிம் பில், ஓரத்தில்; carry one's point, வாதாடுவதை நிறுவிப் பெறு; full point. நிறுத்தக்குறி, முற்றுப்புள்ளி; give points to, எதிரிக்கு ஆட வாய்ப்புக்கொடு; எதிரியைவிட மேம்பட்டிரு; in point, பொருத்தமாக, தகுதியாக; make a point, யோசனை கூறு, திட்டம் வரை; கூற்றை மெய்ப்பி, வாதத்தை நிலைநிறுத்து; on the point of, upon the point of, செயலாற்றுந் தறுவாயில்; point lace, முழுதும் ஊசியா லேயே செய்யப்பட்ட இழைப்பின்னல் வேலை; point of honour, மானத்தைப் பாதிக்கும் செய்தி; point of order, ஒழுங்குச் சிக்கல்; point of view, நோக்குநிலை, நோக்குகோணம்; to the point, செய்திக்குத் தேவையானது மட்டும், பொருளுக் குப் பொருத்தமானது மட்டிலும்.

**point'-blank'**, *a.* குண்டு வகையில் படுக்கை மட்டமாகக் குறிவைக்கப்பட்ட; *adv.* நேர் இலக்காக, படுக்கை மட்ட மான நேர்கோட்டில்; நேராக, ஒளிவு மறைவின்றி, வெளிப் படையாக; முன்னேற்பாடின்றி, முன்கருத்தின்றி; (தொ.) point-blank distance, தளமட்டமாகக் குண்டு சுடப்படக் கூடிய எல்லை.

***point d'appui***, (பிர.) *n.* (படை.) தாங்கு இடமையம்; ஆதாரத் தளம்; புதிய தாக்குதல் தொடங்குதற்குரிய இடம்.

**point'-device**, *a.* முற்றிலுஞ் சரியான; திட்டவட்டமான; *adv.* முற்றிலும் சரியான முறையில், சிறிதுந் தவறாது, துல்லியமாக.

**point'-duty**, *n.* போக்குவரவு வழிக் கண்காணிப்பாளர் வேலை.

**point'ed**, *a.* முனையுடைய; கூர்மையான; கருத்துரை வகை யில் முனைப்புடைய; உள்ளத்தை வடுப்படுத்துகிற; வற் புறுத்துகிற; தெளிவாகச் சுட்டிக்காட்டப்பட்ட.

**point'er**, *n.* சுட்டிக்காட்டுபவர்; சுட்டிக்காட்டுவது; மணிப் பொறி-துலாக்கோல் முதலியவற்றில் சுட்டுமுள்; சுட்டிக் காட்டப் பயன்படும் நீண்ட கோல்; மோப்பமுற்ற நிலையில் விறைப்பாக நின்று ஒரு காலைத் தூக்கிக்கொள்ளும் நாய், வேட்டை நாய்; (பே-வ.) சைகை, குறிப்பு.

**point'ers**, *n. pl.* சப்தரிஷி மண்டலத்திலுள்ள முதல் இரண்டு விண்மீன்கள்.

**point'ing**, *n.* சுட்டிக்காட்டுதல்; நிறுத்தக் குறியிடல்; கட்டுமான இணைப்புக் காரைப் பூச்சு; ஆங்கிலத் திருச்சபை யில் வழிபாட்டுப் பாடல்களுக்கான இசைமான அமைப்பு.

**point'less**, *a.* குறிப்பில்லாத; முனையற்ற, மழுங்கலான; பொருளற்ற; பொருத்தமற்ற; கெலிப்பெண்கள் பெறாத.

**points**, *n. pl.* குதிரையின் இருபுறக் கோடிமுனைப் பகுதிகள்.

**points'man**, *n.* இருப்புப்பாதை பிரியுமிடத்தில் இணைப்பு வேலை செய்பவர்; போக்குவரவினைக் கண்காணித்து ஒழுங்கு படுத்தும் காவலர்.

**point'-to-point' race**, *n.* குறியிட்ட சிற்சில இடங்களின் வழியே ஓடும் குதிரைப் பந்தயம்.

**poise**, *n.* சமநிலை; மனத்தயக்க நிலை; கோட்ட அமைதி, தலை முதலிய உறுப்புக்களை வைத்துக்கொண்டிருக்கும் தனி முறை நிலையமைதி; *v.* சமநிலையில் நிறுத்து; தொங்கவிடு; தாங்கவிடு; தலை முதலிய உறுப்புக்கள் வகையில் தனிக் கோட்ட அமைதியுடையராயிரு; சமநிலையில் வைக்கப்பெறு; காற்றுவெளியில் அந்தரத்தில் மிதந்துநில்.

**pois'on**, *n.* நஞ்சு, உயிர் போக்கும் பொருள்; உயிரைக் கொல்வது; உடல்நலத்திற்கு ஊறுவிளைக்கும் பொருள்; (பே-வ.) சிறு அளவில் உட்கொண்டவுடன் விரைந்து கொல் லும் பொருள்; *v.* நஞ்சூட்டு; நஞ்சூட்டிக் கொல்; குருதி யில் நச்சுத்தன்மையை உண்டாக்கு; காற்று-நீர் முதலிய வற்றை நச்சுப்படுத்து; படைக்கருவிமேல் நஞ்சு பூசு; மனத் தைக் கலை, மனத்தைத் தவறான வழியிற் செலுத்து; மகிழ்ச்சி கெடு, இன்பத்தை அழி; பயனறக் கெடு, நிலம்-உலை முதலிய வற்றைக் கெடுத்துப் பயனறச் செய்; (தொ.) poison pen, பொல்லாங்கு மொட்டைக் கடிதம் எழுதுபவர்.

**pois'onous**, *a.* நச்சுத்தன்மையான.

**pois'on-tree, pois'on-wood**, *n.* நச்சுத்தன்மையுடைய மரம்.

***poissarde***, (பிர.) *n.* சந்தைக் கலகக்காரி; பரதவமகள்.

**poke**[1], *n.* கோணிப்பை, பை, சாக்குப்பை.

**poke**[2], *n.* நுழைப்பு, திணிப்பு, இடிப்பு; வேலிக்குள் நுழை யாதபடி கால்நடைகளுக்கிடப்படும் தடைப்பூட்டு; மகளிர் தொப்பியின் உந்தல் விளிமபு; *v.* நுழையவிடு, திணி; குத்தித் தள்ளு, இடித்துத் தள்ளு; அகப்பைக்கோல் கொண்டு நெருப்பைக் கிளறு; குத்தித் துளையுண்டாக்கு; கழிகொண்டு குத்து; வல்லந்தமாக உரிமையின்றி இடித்துக் கொண்டு நுழை, வலுக்கட்டாயமாகத் தலையிடு; (பே-வ.) சிறிய நெருக்கமான இடத்திலிரு; (தொ.) poke about, poke and pry, பிறர் செய்திகளில் ஆர்வங்காட்டு; poke fun at, கேலி செய், ஏளனம் பண்ணு; poke one's head, தலையை முன்கவித்துச் செல், தலைகவிழ்த்துக் குனி; poke one's nose, தொடர்பில்லாததில் தலையிடு.

**poke'-bonnet**, *n.* அருள்மீட்புப்படை மகளிர் தொப்பி போன்ற அமைப்புள்ள தொப்பி; உந்து விளிம்புள்ள மகளிர் தொப்பி; திருவருட்படை என்னும் கிறித்தவ சமயக்குழுவின் மாதர் அணியும் தொப்பி.

**pok'er[1]**, *n.* தீக்கோல், நெருப்பைக் கிளறி விடுதற்கான கம்பி; ஆக்ஸ்போர்டு-கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகங்களில் துணைவேந்தரின் முன்செல்லுங் கட்டியர்; வெண்ணிற மரத்திற் சூடிட்டுச் சித்திரப் பூவேலைகள் செய்தற்கான கருவி; *v.* வெண்ணிற மரத்திற் சூடிடுகருவிகொண்டு சித்திரப் பூவேலை செய்; வெண்மரத்தில் கருவியாற் சூடிடுவதன் மூலம் அணிசெய்.

**pok'er[2]**, *n.* பந்தயச் சீட்டாட்ட வகை.

**pok'er-face**, *n.* சீட்டாட்டக்காரரது குறிப்பறியமாட்டாத முகம்.

**pok'er-work**, *n.* வெண்ணிற மரத்திற் சூடுபடுத்தப்பட்ட கருவிகளாற் செய்யப்படுஞ் சித்திரப் பூவேலை.

**pok'y**, *a.* அறை வகையில் இறுக்க இடுக்கமான, மிக நெருக்கமான; கீழ்த்தரமான; தொழில் வகையில் சிறுதிற, தாழ்ந்த.

**polacc'a, pola'cre**, *n.* மூன்று பாய்களுள்ள நடுநிலக்கடல் வாணிகக்கப்பல்.

**pol'ar**, *a.* நிலமுனைக்கோடிக்குரிய, துருவஞ் சார்ந்த; நிலவுலக முனைக்கோடிக்கருகேயுள்ள; காந்தமுனைக் கோடிகளுள்ள; காந்தமுனைப்புள்ள, காந்தத்தன்மையுள்ள; நேர் எதிர்மின் ஆற்றல்களையுடைய; அணுத்திரள் வகையில் குறிப்பிட்ட திசையில் செவ்வொழுங்காக அமைவுற்ற; (வடி.) தளமூலப் புள்ளி சார்ந்த; நிலமுனைக்கோடிகளைப்போன்ற இயல்புடைய; நேர் எதிரெதிர் பண்புகளையுடைய; (தொ.) polar bear, துருவப் பகுதிக்குரிய மிகப்பெரிய வெண்ணிறக் கரடி; polar circles, நிலமுனைக்கோடி வட்டம், துருவச் சக்கரம்; polar distance, அண்மையிலுள்ள நிலமுனைக்கோடியிலிருந்து கோளப் புள்ளிக்குள்ள கோணத்தொலைவு.

**polarim'eter**, *n.* வக்கரிப்புமானி, ஒளிக்கதிர் வக்கரிப்புக் கோட்டமானி.

**pola'riscope**, *n.* வக்கரிப்புக்காட்டி, ஒளிக்கதிர் வக்கரிப்பியல்பு காட்டுங் கருவி.

**pola'rity**, *n.* துருவமுனைப்பு, இருகோடிகளும் நிலவுலக முனைக்கோடிகளை நோக்கி முனைத்து நிற்கும் காந்தக்கல்-காந்த ஊசி முதலியவற்றின் இயல்பு; மின்னூட்டு முனைக்கோடி இயல்பு; இருகோடி எதிரெதிர் நிலை; காந்த ஈர்ப்பு.

**pol'arize**, *v.* ஒளிக்கதிர் வக்கரிக்கச்செய், ஒளிக்கதிர் அலைகள் எதிர் பக்கங்களில் ஒத்தும் செங்கோணவாட்டில் வேறுபட்டும் திரியும்படி செய்; காந்த முனைவாக்கமூட்டு; மின் முனைப்பாக்கமூட்டு; போக்கின் திசை ஒருமுகப்படுத்து; சொல் முதலியவற்றின் வகையில் தன்முனைப்புடன் வழங்கு; சிறப்புப் பொருள்பட வழங்கு.

**polatouche'**, *n.* பறக்கும் அணில்வகை.

**pol'der**, *n.* நெதர்லாந்தில் கடலிலிருந்தோ ஆற்றிலிருந்தோ மீட்கப்பட்ட தாழ்நிலப்பகுதி.

**pole[1]**, *n.* கழி, கம்பு; உலோகக்கம்பி; கூடாரக்கால்; நிலைக் கம்பம்; தந்தி முதலியவற்றிற்கான கம்பம்; நுகத்தடி; கோல், 11 முழ நீள அளவு; *v.* கழிகள் இடு; கம்புகள் பொருத்து; கழிகொண்டு செயலாற்று; கழியால் தள்ளு; (தொ.) under bare poles, (கப்.) பாய்களின்றி.

**pole[2]**, *n.* நிலவுலக முனைக்கோடி, துருவம்; காந்தமுனைப்புக் கோடி; மின் முனைப்புக்கோடி; உறுப்பின் உருட்சி முனைப்பு; நேர் எதிரெதிரான பண்பிணைகளில் ஒன்று; (தொ.) magnetic pole, காந்தவிசைத் துருவம், காந்த ஊசியின் முனை செங்குத்தாக நிற்கும் நிலவுலகின் வடக்குத் தெற்கு முனைக்கோடியடுத்த பகுதிகள்; north pole, நிலவுலக வட முனைக்கோடி, வட துருவம்; south pole, நிலவுலக தென் முனைக்கோடி, தென் துருவம்.

**Pole[3]**, *n.* போலந்து நாட்டினன்.

**pole'-ax, pole'-axe**, *n.* கண்டகோடரி, மழுப்படை; முற்காலப் படைக்கப்பற் கோடரி; சூர்க்கோடரி, ஈட்டியும் கோடரியும் இணைந்த படைக்கலம்; இறைச்சிக்கடைக்காரனின் வெட்டுக்கத்தி.

**pole'cat**, *n.* மரநாய், கீரியினத்தைச் சேர்ந்த விலங்குவகை.

**pole'-jumping**, *n.* கழிதாண்டல், நீண்ட கழியைப் பிடித்துக் கொண்டு உயரமாகத் தாண்டுதல்.

**pol'emarch**, *n.* (வர.) பண்டைக் கிரேக்கரிடையே பொதுப் பணிகளையும் ஏற்றுநடத்திய படைத்துறைத் தலைவர்; ஆதென்ஸ் (Athens) என்ற கிரேக்க நகரில் படைத்துறைப் பணிகள் பூண்ட ஒன்பது குற்றத்தண்டனை நடுவர்களுள் ஒருவர்.

**polem'ic**, *n.* வாதம்; வாத உரைஞர்; வாதத்திற்குரிய நூல்; *a.* வாதத்திற்குரிய.

**polem'ics**, *n. pl.* விவாதக்கலை; விவாதப்பயிற்சி; சமய வாதத்துறை.

***polen'ta***, (இத்.) *n.* மாக்கலவைக் கஞ்சி, சவ்வரிசிமாவும் வாதுமை போன்ற கொட்டை மாவும் கலந்து காய்ச்சப்பெற்ற இத்தாலிய நாட்டுக் கஞ்சி வகை.

**pole'-star**, *n.* வடமீன், துருவ நட்சத்திரம்; வழிகாட்டியாக விளங்குவது; கவர்ச்சி மையம்.

**police'**, *n.* காவல்துறை; நகர அமைதிகாக்கும் முறை; பொது அமைதிகாப்புத் துறை; காவல்துறைப் படை; காவல்துறையினர் தொகுதி; *v.* காவல்துறையினர் வழி ஒழுங்கமைதி காப்புச் செய்; ஒழுங்கமைவாட்சி நடத்து; ஒழுங்குநிலை நாட்டு; (தொ.) police State, சர்வாதிகார ஆட்சி, காவல் துறையினரால் நடத்தப்படும் ஒருமுக அரசியல் ஆதிக்க ஆட்சி.

**police'-court**, *n.* காவல்துறை நீதிமன்றம்.

**police'-magistrate**, *n.* காவல்துறை நீதிமன்றக் குற்றவியல் நடுவர்.

**police'man**, *n.* காவல்துறையாள்.

**police'-office**, *n.* காவல்துறை அலுவலகம்.

**police'-officer**, *n.* காவல்துறை அதிகாரி.

**police'-station**, *n.* காவல் நிலையம்.

**police'-trap**, *n.* காவல்துறைஞர் வலை; தானியங்கு வாகன வேக மறைவுமானி.

**policlin'ic**, *n.* தனிநிலை மருத்துவப் பயிற்சிமனை, மருத்துவ மனையிலன்றித் தனிமனையிலுள்ள மருத்துப் பயிற்சிக்கூடம்; மருந்தக வெளியாள் பண்டுவப் பகுதி.

**pol'icy[1]**, *n.* அரசாட்சிக்கலை; அரசியல்திறம்; நடத்தைப் போக்கு; செயல்திற நுட்பம்; மதிநுட்பம்; தந்திரம்.

**pol'icy[2]**, *n.* காப்பீட்டுத்துறையில் காப்புறுதிப் பத்திரம், காப்பீட்டு ஒப்பந்த இதழ்.

***pol'igur***, (த.) *n.* பாளையக்காரர்.

**pol'iomyelit'is**, *n.* (மரு.) முதுகுத்தண்டின் சாம்பல்நிற உட்பகுதி அழற்சி, இளம்பிள்ளை வாதம்.

**pol'ish[1]**, *n.* மெருகு, மினுமினுப்பு, தேய்ப்பினுல் ஏற்படும் பளபளப்பு; தேய்ப்பு; தேய்ப்புப்பொருள்; பண்பட்ட தன்மை; *v.* தேய்த்துப் பளபளப்பாக்கு, மெருகேற்று; வழவழப்பாக்கு, துலக்கு, மினுக்கு; நேர்த்தியாக்கு; பண்பாடுடையதாக்கு; (தொ.) polish off, விரைவிற் செய்துதீர்.

**Pol'ish[2]**, *n.* போலந்துநாட்டு மொழி; போலந்து நாட்டினர்; *a.* போலந்து நாட்டிற்குரிய; போலந்து நாட்டைச் சார்ந்த.

**pol'itarch**, *n.* (வர.) பண்டை ரோமரிடையே கீழ்த்திசை நகர ஆளுநர்.

**polite'**, *a.* பண்பட்ட.

**pol'itic**, *n.* அறிவுக் கூர்மையுள்ளவர், நுட்ப மதியினர்; ஊகி; சூழ்ச்சித்திறமுடையவர்; *a.* அறிவுக்கூர்மையுடைய; நுட்ப மதியுடைய; ஊகமுள்ள, முன்மதி வாய்ந்த; சூழ்ச்சித் திறமுடைய; செயல்வகைத் திறமுடைய; செயல் நயமுடைய; சூழலுக்கு இயைந்த செயல்திறம் வாய்ந்த; (தொ.) body politic, அரசுக்குரிய மக்கள் தொகுதி, ஆட்சி மக்கள் தொகுதி.

**polit'ical,** *n.* அரசியல் மேலாண்மைப் பேராள்; *a.* அரசுக்குரிய, நாட்டாட்சிக்குரிய; பொது ஆட்சித்துறைக்குரிய; அரசியல் சார்ந்த; அமைபொழுங்குடைய அரசியல் நெறிமுறை சார்பான; ஆட்சிமுறையில் ஈடுபட்ட; அரசியல்கட்சி சார்ந்த; அரசியல் கட்சியில் ஈடுபட்ட; (தொ.) political agent, political resident, (வர.) சார்பாட்சி அரசுகளின் அரசர்களுக்கு ஆலோசனை கூறும் மேலரசின் அதிகாரி; political economy, பொருளியல் நூல்; political geography, அரசியல் பிரிவடிப்படையான நிலநூல்; political science, ஆட்சியியல்; political verse, அளவாலன்றி ஈற்றயலசைச் சார்பான ஒலியழுத்தத்தால் இயக்கப்படும் தற்கால கிரேக்க கவிதை.

**politi'cian,** *n.* அரசியல் வாதி; அரசியல் அறிஞர், அரசியல் வல்லுநர்; அரசியலைத் தொழிலாகக் கொண்டவர்; அரசியல் கட்சியிலீடுபட்டவர்; அரசியலைப் பொழுதுபோக்காகக் கொண்டவர்; அரசியல் சூழ்ச்சிமுறை தெரிந்தவர்; சூழ்ச்சிக்காரர்.

**polit'icize,** *v.* அரசியல்வாதியாக நடி; அரசியலில் ஈடுபடு; அரசியலைப் பற்றிப் பேசு; அரசியற் பண்பேற்று, அரசியல் சார்ந்ததாக்கு.

**polit'ico-religious,** *a.* சமயச் சார்புடைய அரசியல் சார்ந்த.

**pol'itics,** *n. pl.* ஆட்சியியல்; அரசியல்துறை ஆய்வியல், அரசியற்கலை; ஆட்சிமுறை; அரசியற் கோட்பாடுகள்.

**pol'ity,** *n.* ஆட்சி அமைதிநிலை; ஆட்சி அமைப்பொழுங்கு; ஆட்சி அமைப்புமுறை; அமைப்பொழுங்குடைய அரசியற் சமுதாயம்; அரசு, ஆட்சிக்குரிய இனக்குழு.

**polk,** *n.* பொகீமியா (Bohemia) நாட்டின் கிளர்ச்சிமிக்க நடன வகை.

**poll[1],** *n.* தலை; மனிததலை; முடிவளரும் தலைப்பகுதி; மீன் வகையின் தலை-தோள் பகுதி; சுத்தியல்தலைப்பின் பருத்த பகுதி; ஆள், தனியாள்; தேர்தல் வாக்காளர் பட்டியல்; தேர்தல் வாக்களிப்பு; தேர்தல் வாக்கெண்ணிக்கை; *v.* முடி கத்தரி; திரள் வளர்ச்சிக்காகத் தாவரங்களின் உச்சிப் பகுதியை வெட்டு; கால்நடைகளின் கொம்புகளை அகற்று; வாக்கெடுப்பு நடத்து; வாக்கெடுப்புப் பெறு; வேட்பாளர் வகையில் வாக்குக்களைப்பெறு; வாக்குச்சீட்டை இடு; வாக்கினைக் கொடு.

**poll[2],** *n.* மோழை எருது; கொம்பற்ற எருது வகை; *a.* சரி சமமாக வெட்டப்பட்ட, உச்சி தறிக்கப்பட்ட; கொம்பு தறிக்கப்பட்ட; கொம்பற்ற.

**Poll[3],** *n.* தத்தை, கிளியின் மரபு வழக்குப்பெயர்; (தொ.) poll parrot, கிளி; மரபு வழக்கான சொற்றொடர்களையும் வாதங்களையும் பயன்படுத்துபவர்.

**poll[4],** *n.* கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக வழக்கில் பொதுவகைத் தேர்வு; (தொ.) go out in the Poll, வெறுந் தேர்வுப் பட்டம் பெறு; the Poll, பொதுத் தேர்வுப்பட்டம் பெறுபவர்.

**poll'am,** (த.) *n.* பாளையம், பாளையக்காரரின் பண்ணை.

**poll'an,** *n.* அயர்லாந்து நாட்டு நன்னீர் மீன்வகை.

**poll'ard,** *n.* மோழை விலங்கு; கொம்பிழந்த விலங்கு; கொம்பற்ற ஆடுமாடு வகை; நுனி தறித்துத் திரள் தலையுடையதாக ஆக்கப்பட்ட தாவரம்; தவிடு; குறுநொய்த் தவிடு, மாவடங்கிய குறுந்தவிடு; *v.* மரவகையில் இளங்கிளைகள் நெருக்கமாகவும் வட்டமாகவும் கிளைப்பதற்காக உச்சியைத் தறி.

**poll'en,** *n.* பூந்தாது, மகரந்தம்; கருவுயிர்க்கச் செய்யும் தாவர ஆண்பாற்கூறு; *v.* பூந்தாது இட்டுச்செல்; பூந்தாதிறுற் கவியவை.

**pollicita'tion,** *n.* (சட்.) முறைப்படி ஏற்றுக்கொள்ளப்படாத வாக்குறுதி, ஒதுக்கிவிடத்தக்க வாக்குறுதி.

**poll'inate,** *v.* பூந்தாது தூவு, பூந்துகள் மேலிடு.

**poll'oi,** (கிரே.) *n. pl.* பலர், பெரும்பாலோர்.

**poll'-tax,** *n.* தலைவரி, ஆள்வரி.

**pollute',** *v.* மாசுபடுத்து, அழுக்காக்கு.

**pollu'tion,** *n.* தீட்டு; தூய்மைக் கேடு, விழுப்பு.

**pol'o,** *n.* செண்டாட்டம், குதிரைமீதிவர்ந்து செண்டுகொண்டு ஆடும் பந்தாட்டம்.

**polonaise',** *n.* திறந்த மேற்பாவாடையுடன் கூடிய மகளிர் கச்சு; ஸ்காத்லாந்தில் முன்பு வழங்கப்பட்ட திறந்த பாவாடையுடன் கூடிய குழந்தைச்சட்டை வகை; போலந்துநாட்டு மென்னய ஊர்வல நடன வகை.

**poloni'um,** *n.* கதிரியக்க விளைவுள்ள அணு எண் 84 கொண்ட உலோகத் தனிம வகை.

**polon'y, Polon'y sausage,** *n.* அரை வேக்காடான பன்றியிறைச்சி கலந்த காரப் பண்ணிய வகை.

**pol'o-stick,** *n.* செண்டு, செண்டாட்டத்திற் பயன்படுத்தப்படும் நீண்ட கைப்பிடியுள்ள தண்டு.

**pol'tergeist,** *n.* ஏவல், ஆர்ப்பரி தேவதை.

**polt'-foot,** *n.* முட்டிக்காலர்; முட்டிக்கால்; *a.* முட்டிக்காலினையுடைய.

**poltroon',** *n.* மானவுணர்ச்சியற்ற கோழை.

**poltroon'ery,** *n.* கிளர்ச்சியின்மை.

**polyadel'phous,** *a.* கொத்தாய் இணைந்த.

**polyan'drist,** *n.* பல்கணவர் பெண்.

**polyan'drous,** *a.* பல கணவர்களுடன் வாழ்க்கை நடத்துகிற; (தாவ.) பல மலர்த்துய்களையுடைய.

**pol'yandry,** *n.* பல கணவருடைமை.

**polyan'thus,** *n.* பலநிற மலர்களையுடைய பசுமைமாறு வளர்ப்பினச் செடி வகை.

**pol'yarchy,** *n.* பலராட்சி.

**polyatom'ic,** *a.* பிற அணுக்களுடன் எளிதில் இடமாறவல்ல பல நீரக அணுக்களைக்கொண்ட.

**polyautog'raphy,** *n.* கல்லச்சுமுறை.

**polybas'ic,** *a.* (வேதி.) இரண்டுக்கு மேற்பட்ட அடிமங்களை அல்லது ஓர் அடிமத்தில் இரண்டிற்கு மேற்பட்ட அணுக்களைக் கொண்ட.

**polycarp'ellary, polycarp'ous,** *a.* பல கருவக உயிர்மங்களைக்கொண்ட.

**polychaet'an, polychaet'ous,** *a.* பூச்சி வகையில் காற்குறடுகளில் மிகப்பல முட்கூறுகளைக்கொண்ட.

**poly-chro'ite,** *n.* மஞ்சள்நிறமி, பல்வேறு ஆய்வுப்பொருள்களோடு பல்வேறு வண்ணங்கள் காட்டும் மஞ்சளிலுள்ள வண்ணப் பொருள்.

**polychromat'ic,** *a.* பல்வண்ணமுடைய.

**pol'ychrome,** *n.* பல்வண்ணக் கலைவேலை, பன்னிற உருவச்சிலை வேலைப்பாடு; பல்வகை வண்ணம் பூசுதல்; *a.* பல்வண்ணங்களைக்கொண்டு பூச்சுவேலை செய்யப்பட்ட; பல்வண்ண ஒப்பனை செய்யப்பட்ட; பல்வண்ணங்களில் அச்சடிக்கப்பட்ட.

**pol'ychromy,** *n.* பன்னிறப்பூச்சுக்கலை; பன்னிறச் செதுக்குக்கலை.

**polyclin'ic,** *n.* தனியார் பலவகை மருத்துவ மனை; பலவகைப் பயிற்சி மருத்துவமனை.

**polydac'tyl,** *n.* மிகைவிரல் உயிர், கால்-கைகளில் இயல்பான எண்ணிக்கைக்கு மேற்பட்ட விரல்களைக்கொண்ட விலங்கு; *a.* இயல்பான எண்ணிக்கைக்கு மேற்பட்ட கால்-கை விரல்களையுடைய.

**polydaem'onism,** *n.* இயற்கைக்கு மேற்பட்ட பல ஆற்றல்களில் நம்பிக்கை.

**polygam'ic,** *a.* பன்மனைவிகளையுடைய.

**polygam'ist,** *n.* பன்மனைவியருடையவர், பன்மனைவியரை மணக்கும் பழக்கம் உடையவர்.

**polyg'amous,** *a.* பன்மனைவியரையுடைய, ஒரே சமயத்தில் பல மனைவியரைக் கொள்ளும் பழக்கமுடைய; பல கணவர்களையுடைய; (வில.) ஒரு பருவத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட

இணைவுத் தோழமையுடைய ; (தாவ.) சில மலர்களில் ஆண் உறுப்புக்களும் சிலவற்றில் பெண் உறுப்புக்களும் சிலவற்றில் இருபால் உறுப்புக்களும் கொண்ட.

polygam'y, *n.* பன்மனைமணம் ; பன்மனை மணமுறை.

polygas'tric, *a.* பல இரைப்பைகள் கொண்ட.

polygenes'ic, *a.*=polygenetic.

polygen'esis, *n.* பல்வேறு மூலவினத் தோற்றம் ; பல்வேறு கருமூலையிலிருந்து உண்டான உயிர்த் தோற்றம்.

polygenet'ic, polygen'ic, *a.* நீரகம் முதலியவற்றோடு இணைந்து ஒன்றிற்கு மேற்பட்ட சேர்மங்கள் ஆக்கவல்ல.

poly'genism, *n.* பன்மூல மன்மரபியல் கோட்பாடு, பல தனிவேறு இணை துணைகளான மூதாதையரிடமிருந்தே மனித வினம் தோன்றிற்று என்னுங் கொள்கை.

poly'genist, *n.* பன்மூல மன்மரபியல் கோட்பாட்டாளர்.

poly'geny, *n.* பன்மூல மன்மரபு, மனிதவின வகையில் பல தனிவேறான இணை துணையான மூதாதையர்களிடமிருந்து தோன்றுதல்.

pol'yglot, *n.* பன்மொழிகளில் எழுதப்பட்ட நூல்; பன்மொழியாளர் ; *a.* பன்மொழிகளாலான.

pol'ygon, *n.* பல்கோணக்கட்டம், நான்கிற்கு மேற்பட்ட பல பக்கங்களையுடைய வரைப்படிவம்.

polyg'onal, *a.* பல்கோணக்கட்ட வடிவான ; பல்கோணக் கட்டஞ் சார்ந்த ; பல பக்கங்களையுடைய.

polyg'onum, *n.* பல்வகைக் களைகளையும் புற்களையும் உள்ளடக்கிய தாவர இனப்பிரிவு.

pol'ygram, *n.* பல கோட்டு வடிவம்.

pol'ygraph, *n.* பலபடியமைவு ; பன்னூலாசிரியர்.

polyg'ynous, *a.* பன்மனைவியர் மணமுறை சார்ந்த ; பன் மனைவியருடன் வாழ்க்கை நடத்துகிற ; (தாவ.) மலர்கள் வகையில் பல சூலகங்கள் உடைய, பல சூலகத் தலைகள் கொண்ட.

polyg'yny, *n.* பன்மனை மணமுறை.

polyhed'ron, *n.* பல்தளப் பிழம்புரு, ஆறுக்கு மேற்பட்ட பல பக்கங்களுடைய கன வடிவம்.

polyhis'tor, *n.* பல்கலை வல்லுநர், பலதிறப் புலவர்.

pol'ymath, *n.*=polyhistor.

polym'athy, *n.* பல்துறை அறிவு.

pol'ymer, *n.* (வேதி.) மீச்சேர்மம், ஒரே வகைப்பட்ட சேர்மங்களின் அணுத்திரள்கள் இணைந்து வேதியியல் முறையில் மாறுமலே அணுத்திரள் எடை மானமும் இயற்பியல் பண்பும் மட்டும் மாறுபட்ட பிறிதுருச் சேர்மம்.

polyme'ric, *a.* (வேதி.) மீச்சேர்ம இயலுடைய, சேர்மங்கள் வகையில் வேதியியல் இணைவுவீதத்தில் மாறுபாடில்லாமலே அணுத்திரள் எடைமானத்தில் மட்டும் வேறுபாடுடைய.

polym'erism, *n.* (வேதி.) மீச்சேர்மத்திறம், சேர்மங்கள் வேதியியல் இணைவுக் கூறுகளின் வீதத்தில் மாறுபாடின்றி அணுத்திரள் எடைமானத்தில் மட்டும் மாறுபட்டிருக்கும் தன்மை ; (தாவ.) பல பகுதிகளையுடையதாயிருத்தல்.

polymeriza'tion, *n.* (வேதி.) மீச்சேர்ம இணைவு.

pol'ymerize, *v.* (வேதி.) மீச்சேர்மமாக இணை ; (தாவ.) பல பகுதிகளுடையதாக்கு.

polym'erous, *a.* (தாவ.) பல பகுதிகளாலான.

polymorph'ic, polymorph'ous, *a.* (தாவ.) தனி உருக்களதோறும் மாறுபடுகிற ; தொடர்ந்து பல மாற்றங்களை அடைகிற.

Polyne'sia, *n.* ஆஸ்திரேலியாவுக்குக் கிழக்கில் பசிபிக் மாகடலிலுள்ள சிறு தீவுக்குழுமம்.

polyn'ia, *n.* பனிக்கேணி, பனிக்கட்டிப் பரப்பிலுள்ள இடைநீர்ப்பரப்பு.

polynom'ial, *a.* பெயர்வகையில் பல சொற்களுடைய ; (கண.) தொடர் வகையில் பல உருக்களைக் கொண்ட.

polyon'ymous, *a.* பல் பெயருடைய.

polyon'ymy, *n.* ஒரு பொருட் பல்பெயர்.

polyop'ia, *n.* பல்வடிவக் காட்சிக் கண் கோளாறு.

pol'yp, pol'ype, *n.* பல கால் உயிரினம்.

pol'ypary, *n.* பல கால் உயிரிகளைத் தாங்கும் பொதுத் தண்டு.

polypet'alous, *a.* தனித்தனிப் பூவிதழ்களைக் கொண்ட.

polyph'agous, *a.* பெருந்தீனி தின்கிற ; (வில.) பல்வகை உணவுகளைத் தின்கிற.

pol'yphone, *n.* பலவொலி ஒரு குறி.

polyphon'ic, polyph'onous, *a.* பல குரல்களுள்ள ; (மொழி.) பல்வகை ஒலிகளைக் குறிக்கிற ; (இசை.) கொடுக்கப்பட்ட மெல்லிசைப் பாடலுக்குத் துணையாகச் சேர்க்கப்பட்ட.

polyph'ony, *n.* பல குரல்களுள்ள தன்மை ; பல ஒலி ஒரு குறி ; (இசை.) கொடுக்கப்பட்ட மெல்லிசைப் பாடலுக்குத் துணையாகச் சேர்க்கப்பட்ட இன்னிசை.

polyphylet'ic, *a.*= polygenetic.

polyphyll'ous, *a.* தனிப் பூவுறையுடைய, தனிப் புல்லிதழ் உடைய.

pol'ypite, *n.* கூட்டு வாழ்வுயிரினத்தில் தனி உயிரி.

pol'ypod, *n.* பல கால் விலங்கு; *a.* பல கால்களையுடைய.

pol'ypody, *n.* சூரல் வகை, பெரணியினப் பிரிவு.

pol'ypoid, *a.* பல கால் விலங்கு சார்ந்த ; பல கால் விலங்கினைப் போன்ற.

pol'ypus, *n.* கீழ் உயிரினங்களின் உணர்ச்சிக் கொடுக்கினைப் போன்ற கிளையுறுப்புக்கள் கொண்ட சழலைக் கட்டி.

polysep'alous, *a.* தனித்தனிப் புல்லிதழ்கள் வாய்ந்த ; தனித் தனிப் பூவுறைகள் வாய்ந்த.

pol'ystome, *n.* பல வாய்களையும் உறிஞ்சு புழைக்கைகளையும் உடைய விலங்கு ; *a.* பல வாய்களையும் உறிஞ்சு புழைக்கைகளையுங் கொண்ட.

polysyllab'ic, *a.* பல அசையுடைய.

polysyll'able, *n.* பல அசை ஒருசொல்.

polysynthet'ic, *a.* பலகூட்டிணைவான; மொழிகள் வகையில் ஒரு வாக்கியத்திலுள்ள பல சொற்களையும் ஒன்றாக இணக்கிற.

polytech'nic, *a.* பலதொழில் நுணுக்கப் பயிற்சி சார்ந்த, பலதுறைப் பயிற்சியிலீடுபட்ட, பலதுறைப்பட்ட, பலதுறைகளையும் வளர்த்தற்குரிய ; (தொ.) Polytechnic Institution, பலதொழில் நுணுக்கப் பயிற்சி நிறுவனம், லண்டனில் 1838-இல் நிறுவப்பட்ட பல்துறைக்கூடம் ; polytechnic school, பலதொழில் நுணுக்கப் பள்ளி.

polythal'amous, *a.* (உயி., தாவ.) பல கண்ணறைகளுள்ள, பல அறைகளையுடைய.

pol'ytheism, *n.* பல தெய்வ வழிபாடு ; பல தெய்வ நம்பிக்கை ; பல தெய்வ வணக்கமுறை.

pol'ytype, *n.* அச்சுப் பதிவுத்தகடு வகை ; செதுக்கு வேலையிலிருந்து எடுக்கப்பட்ட அச்சுத்தகட்டுப் பதிவுப்படி.

polyzo'a, *n.* முதுகெலும்பற்ற தட்டுயிரி இனப்பிரிவு.

polyzon'al, *a.* கலங்கரைவிளக்கக் கண்ணாடி வகையில் பல வில்லை வளையங்களால் ஆக்கப்பட்ட.

pom, *n.* சடைக் குச்சுநாய் வகை.

pom'ace, *n.* பழப்பிழிவெச்சம், பிழிவுச்சக்கை.

pomade', *n.* காசறை, நறுமண மயிர்ச்சாந்து ; *v.* மயிர்ச்சாந்து தடவு.

pom'ander, *n.* மணப்பொருட் சம்புடம்.

Pomard', *n.* சிவப்புநிற இன்தேறல்வகை.

**poma'to**, *n.* உருளைத் தக்காளி.

**pomat'um**, *n.*, *v.*=pomade.

***pom'be***, *n.* ஆப்பிரிக்காவில் கூலவகைகளிலிருந்தும் பழத்திலிருந்தும் செய்யப்படும் மதுபான வகை.

**pome**, *n.* (தாவ.) ஆப்பிள் போலி; (செய்.) ஆப்பிள்; உலோகக்குண்டு.

**pome'granate**, *n.* மாதுளம்பழம்; மாதுளை மரம்.

**pom'elo**, *n.* சிறு கிச்சிலிப்பழவகை; கொடிமுந்திரிப்பழம்.

**Pomeran'ian**, *n.* குச்சுச் சடைநாய்வகை, பட்டுப்போன்ற நீண்ட மயிரும் கூம்பிய முகமும் நிமிர்ந்த கூரிய காதுகளும் உடைய சிறுநாய் வகை; *a.* பால்டிக் கடலின் தென்கரையில் உள்ள பொமிரேனியா (Pomerania) மாகாணஞ் சார்ந்த.

**pom'fret**, *n.* உணவு மீன்வகை; இனிய அப்ப வகை.

**pom'iculture**, *n.* பழவளர்ப்புத்துறை, பழப்பண்ணைத் தொழில்.

**pomif'erous**, *a.* கனி தருகிற.

**Pommard'**, *n.*=Pomard.

**pomm'el**, *n.* கலணைக்கரடு, சேணத்தின் மேல்நோக்கிய முனைப்பான முன்பக்கம்; கத்தியின் கைப்பிடிக் குமிழ்; *v.* மொத்து, குமிழ்ப்புறத்தால் அடி; முட்டிகளால் குத்து.

**pomol'ogy**, *n.* பழவளர்ப்பு நூல்.

**Pomon'a**, *n.* பண்டை ரோமரின் பழங்கதை மரபில் பழங்களின் தேவதை; (தொ.) Pomona green, மஞ்சள் முனைப்பாகவுள்ள பச்சை நிறம்.

**pomp**, *n.* பகட்டாரவாரம், ஆடம்பரம், ஆகுலம்.

**Pom'padour**, *n.* பதினைந்தாவது லூயி (Louis XV) மன்னரின் அரசி; *a.* கூந்தல் ஒப்பனைப்பாணி வகையில் பாம்படோர் அரசிக்குரிய; கச்சு வெட்டுப்பாணியில் பாம்படோர் அரசிக்குரிய.

**pom'pano**, *n.* வட அமெரிக்க மேற்கிந்திய தீவுகள் சார்ந்த உணவு மீன்வகை; *pl.* pom'panos.

**pom'pier, pom'pier ladd'er**, *n.* தீயணைப்போர் ஏணி.

**pom'-pom**, *n.* (பே-வ.) இயந்திரப் பீரங்கி.

**pom'pon**, *n.* கூந்தல் திருகணி; பெண்கள்-சிறுவர்கள் ஆகியோரின் தொப்பிகளிலும் மிதியடிகளிலும் உள்ள இழைப் பட்டை-மலர்கள் முதலியன கொண்ட ஒப்பணைக்குஞ்சம்; போர்வீரர் தொப்பியின் முன்பக்கத்திலுள்ள உருளைக்குஞ்சம்.

**pompos'ity**, *n.* பகட்டிறுமாப்பு, செயற்கைப் பகட்டாரவாரம்; ஆரவாரச் செயல்; ஆகுல நீர்மை.

**pom'pous**, *a.* பகட்டாரவாரமான; பகட்டழகுடைய; தோற்றச் சிறப்பு வாய்ந்த; தற்பெருமையுள்ள; மொழிவகையில் சொற்பகட்டான, ஆரவார ஒலியுடைய, வெற்றுரையான.

**pon'ceau**, *n.* ஒளிர் சிவப்பு நிறம்.

**pon'cho**, *n.* தென் அமெரிக்க மேலாடை, தலைநுழைவதற்கான நடுவிடம் விட்ட நீண்ட ஆடைச்சதுக்கம்; தலைநுழைவிடம் விட்ட மிதிவண்டிக்காரரின் நீர் ஊறாத நீண்ட மேலாடைச்சதுக்கம்.

**pond**, *n.* குட்டை, குளம்; சிறு செய்குளம்; *v.* அணைகட்டி நீரோட்டத்தைத் தடுத்து நிறுத்து; நீரோட்டத்திற்கு அணை போடு; நீர்நிலை வகையில் குளமாக அமைவுறு, குட்டையாகத் தேங்கு.

**pon'dage**, *n.* குளத்து நீரின் கொள்ளளவு; நீர்த்தேக்கம்.

**pon'der**, *v.* நினைநினை; தீர எண்ணிப்பார்.

**pon'derable**, *a.* கணிசமான எடையுடைய.

**pondera'tion**, *n.* எடையிடு, நிறுத்துப்பார்த்தல், சமநிலைப்படுதல்.

**pon'derous**, *a.* பளுவான; எளிதிற் கையாளமுடியாத; மிகுதியான உழைப்பு வேண்டியிருக்கிற; நடைவகையில் எழுச்சியற்ற, கவர்ச்சியற்ற; மிகுசோர்வு விளைவிக்கிற.

**pond'-life**, *n.* குட்டை வாழுயிரி, குளங்குட்டைகளில் வாழும் தண்டிலி உயிரினத் தொகுதி.

**pond'weed**, *n.* நிலைநீர்ப் பூண்டு.

**pon'e**[1], *n.* சீட்டாட்ட வகைகளில் முதல் ஆட்டக்காரர்; சீட்டாட்ட வகைகளில் முதல் ஆட்டக்காரரின் கூட்டாளி.

**pone**[2], *n.* மக்காச்சோள அப்பம்; அமெரிக்க இந்தியர்கள் செய்யுஞ் சோள அப்பம்; பால்-முட்டை முதலியன சேர்த்துச் செய்யப்படும் நேர்த்தியான அப்ப வகை; நேர்த்தியான அப்பவகையின் முழுப்பாளம்; நேர்த்தியான அப்பவகையின் அரைப்பாளம்.

**pongee'**, *n.* மென்பட்டு; நேரியற் பருத்தி.

**pon'go**, *n.* மனிதக்குரங்கு வகை; வாலில்லாக் குரங்கு.

**pon'iard**, *n.* குத்துவாள், உடைவாள்; *v.* உடைவாளினாற் குத்து.

***pons***, (ல.) *n.* (உள்.) பாலம், மூளையின் இருபாதிகளையும் இணைக்கும் நரம்பிழைப்பட்டை; (தொ.) *pons asinorum*, கழுதைப்பாலம், தொடக்கப் பயிற்சியாளர்களுக்கு இடர்ப்பாடானதாகக் கருதப்படும் பண்டைக் கிரேக்க அறிஞர் யூக்ளிட் (Euclid) என்பாரின் வடிவியல் ஏட்டின் முதற்சுவடியின் ஐந்தாவது தெரிவு; *pons Varolii*, மூளையின் இருபாதிகளையும் இணைக்கும் நரம்பிழைப்பட்டை.

**pon'tifex**, *n.* பண்டைய ரோம் நகரில் சமய குருமார்களின் முதன்மைக் குழுவின் உறுப்பினர்; போப்பாண்டவர்; *pl.* pontif'ices; (தொ.) Pontifex maximus, பழைய ரோம் நகரில் சமயகுருமார்களின் முதன்மைக்குழுத் தலைவர்.

**pon'tiff**, *n.* மேற்றிராணியார், மாவட்டச்சமய முதல்வர்; முதன்மைப் புரோகிதர்; தலைமைக்குரு, தேசிகர்; (தொ.) sovereign pontiff, போப்பாண்டவர்.

**pontif'ical**, *n.* மாவட்டச் சமய முதல்வர்களுக்கான வினைமுறைச்சுவடி; *a.* மாவட்டச் சமய முதல்வரைச்சார்ந்த; தவறிழைக்காதவரென்று சொல்லிக்கொள்கிற ஆரவார மதக் கொள்கைப் பற்றூர்ந்த.

***pontifical'ia***, (ல.) *n. pl.*=pontificals.

**pontif'icals**, *n. pl.* விருதணி, மாவட்டச் சமய முதல்வரின் உடுப்புக்கள்-விருதுகள்-சின்னங்கள் ஆகியவை.

**pontif'icate**[1], *n.* சமயகுருமார்களின் முதன்மைக்குழுவின் உறுப்பினருடைய பதவி; மாவட்டச் சமய முதல்வருடைய பதவி; போப்பாண்டவருடைய பதவி; போப்பாண்டவர் பதவிக்காலம்.

**pontif'icate**[2], *v.*=pontify.

**pon'tify**, *v.* தலைமைக்குருமார் குழு உறுப்பினராகச் செயலாற்று; மாவட்டச் சமயத் தலைவராகச் செயலாற்று; போப்பாண்டவராகச் செயலாற்று; தவறிழைக்காதவரெனக் கூறிக்கொள்.

***pont-levis***, (பிர.) *n.* தூக்குப்பாலம், கோட்டையின் உள்ளே இழுத்துக்கொள்ளத்தக்க பாலம்.

**pontoneer', pontonier'**, *n.* தட்டைப் படகுப் பொறுப்பாளர்; படகுப்பாலங் கட்டுபவர்.

**pontoon'**[1], *n.* சலங்கு, தட்டைப்படகு; தோணிப்பாலம்; நீரின்கீழ் அடித்தளம் அமைக்க உதவும் நீரேறுப் பெரும் பேழை; படகுருவான துறைமுகவாயிற் கதவம்; விமானத் தெப்பம்; தெப்பம்; *v.* மிதவைப்படகுகளில் ஆற்றைக் கடந்துசெல்.

**pontoon'**[2], *n.* யோகச் சீட்டாட்ட வகை.

**pon'y**, *n.* மட்டக்குதிரை.

**pood**, *n.* 36 பவுண்டுள்ள ருசிய எடையளவு.

**poo'dle**, *n.* சடைநாய், பலவகையில் வேடிக்கையாகக் கத்தரிக்கப்பட்டு ஆர்வத்துடன் வளர்க்கப்படும் நீண்ட சுருள் மயிரினை உடைய சடைநாய் வகை; *v.* சடைநாயின் மயிரை அழகுக்காகக் கத்தரித்து ஒழுங்குபடுத்து.

**pooh**, *int.* சீ! பொறுமையின்மைக் குறிப்பு; வெறுப்பொலிக் குறிப்பு.

**Pooh-Bah'**, *n.* பல பதவியாளர்.

**pooh-pooh'**, *v.* ஏளனஞ் செய்.

**poo'ja**, (த.) *n.* பூசை.

**poo'ka**, *n.* கூளி, சிறுதெய்வம்.

**poo'koo**, *n.* தென் ஆப்பிரிக்காவைச் சார்ந்த சிவப்பு மான் வகை.

**pool**[1], *n.* இயற்கையாயமைந்த சிறுகுளம்; அமைந்த நீர்நிலை; கட்டி நிற்கும் நீர்மத்தேக்கம்; மடு, ஆற்றின் அமைந்த நீர்ப் பகுதி; *v.* கல்வெட்டியெடுக்கையில் ஆப்புச்செருகுவதற்காகத் துளைசெய்; நிலக்கரி வகையில் கீழறு, சுரங்கமறு.

**pool**[2], *n.* பொதுநிதி; பொதுச்சேர்மம்; பொது மேசைப் பணம், சீட்டாட்ட வகையில் பந்தயப் பணம்-தண்டப்பணம் ஆகியவற்றின் மொத்தம்; பொது மேசைப்பணச் சேமக்கலம்; மேடைக் கோற்பந்தாட்டவகை; கூட்டுச் சூதாட்ட முயற்சி; கூட்டுச்சூதாட்டப் பந்தயங்களின் மொத்தம்; வாணிகக் கூட்டிணைப்பு, போட்டியிடுபவர்கள் போட்டியைத் தவிர்ப்பதற்காக விலைகளை நிச்சயித்துத் தொழிலைப் பங்குபோட்டுக் கொள்ளத் தங்களுக்குட் செய்துகொள்ளும் ஏற்பாடு; *v.* பொதுநிதியிற் போடு; பொதுவாகக்கொள்; போக்குவரத்து நிறுவனங்கள் முதலியவை வகையில் பொதுக்கூட்டாக்கி ஆதாயப் பங்குகொள்.

**poon**, (த.) *n.* புன்னைமரம்.

**poon'ah brush**, *n.* பூனா ஓவியத்தூரிகை, கீழ்த்திசை வேலைப் பாட்டிணையொப்ப மெல்லிய தாளில் வண்ண ஓவியம் வரைவதற்குப் பயன்படும் தூரிகை.

**poon'ah paint'ing**, *n.* பூனா ஓவியப்பாணி.

**poon'ah paper**, *n.* பூனா ஓவியத்தாள், கீழ்த்திசை வேலைப் பாட்டிணையொப்ப வண்ண ஓவியம் வரைவதற்குப் பயன்படும் மெல்லிய தாள்.

**poon'-oil**, *n.* புன்னை எண்ணெய்.

**poop**[1], *n.* கப்பலின் பிற்பகுதி; கப்பலின் பின்கோடி மேடைத் தளம்; *v.* அலை வகையில் கப்பலின் பின்பகுதியின்மேல் மோது; கப்பல் வகையில் பிற்பகுதியின்மேல் அலைமோதப் பெறு.

**poop**[2], *n.*, *v.* = pope[3].

**pooped**, *a.* கப்பல் வகையில் பின்கோடி மேடைத்தளமுடைய.

**poor**, *a.* வறிய, ஏழ்மையான; வளமற்ற, குறைபாடுடைய; மண் வகையில் விளையாத; குறைவாயுள்ள, போதாத, எதிர் பார்த்ததைவிடக் குறைவாயிருக்கிற; இழிவான, அற்பமான; எழுச்சியற்ற, ஊக்கங்குறைந்த; வெறுக்கத்தக்க; தாழ்மையுள்ள; பொருட்படுத்த வேண்டியிராத; இரங்கத்தக்க; நற்பேறற்ற; நலக்கேடான; (தொ.) poor man's weather glass, மழைக்காலத்தில் அல்லது மப்புமந்தார நேரத்தில் மூடிக் கொள்ளும் ஒளிர்சிவப்பு மலர்ச் செடிவகை.

**poor'-box**, *n.* தரும உண்டி, ஏழையர் உதவிநிதிப்பெட்டி.

**poor'-house**, *n.* ஆதுலர் சாலை, ஏழையர் விடுதி.

**poor'-law**, *n.* ஏழையர் உதவிமுறைச்சட்டம், இரவலர் சட்டம்.

**poor'ly**, *a.* உடல்நலமற்ற, நலக்கேடான; *adv.* பற்றுக் குறையாக, போதாமல், குறைபாட்டுடன்; முழுவெற்றியின்றி; இழிவாக, வெறுக்கத்தக்க வகையில்.

**poor'ness**, *n.* குறையுடைமை, குறைபாடு.

**poor'-rate**, *n.* அற வரி, ஏழைகளின் உதவிக்காக விதிக்கப் படும் வரி.

**poor'-spir'ited**, *a.* ஊக்கமற்ற; கோழையான, உரமற்ற; எதற்கும் அஞ்சுகிற.

**poort**, (டச்சு.) *n.* குறுகிய கணவாய்.

**pop**[1], *n.* திடீரென்று வெடிப்பொலி; ஆடுகள் முதலியவற்றிற்கு அடையாளமிடுகையில் வைக்கப்படும் புள்ளி அல்லது பொட்டு; (பே-வ.) நுரைத்துப் பொங்குகிற பான வகை; *v.* விரைந்த சிறு வெடிப்பொலி எழுப்பு, புட்டியிலிருந்து அடைப்புத் தக்கையை இழுக்கும்போது உண்டாவதைப்போன்ற ஒலிசெய்; வெடிதீர்; பறவை முதலியவற்றைத் துப்பாக்கியால் சுடு; திடுமென வை; திடுதிப்பெனப்போடு; விரைவாக இயங்கு அல்லது செல்; திடீரெனக் கேள்வி கேள்; *adv.* விரைந்த வெடிப்பொலியுடன், திடீரென; *int.* 'டப்' போன்ற ஒலிக்குறிப்புச்சொல்; (தொ.) pop the question, (பே-வ.) திருமண விருப்பம் பற்றி வினவு.

**pop**[2], *n.* (பே-வ.) பொதுவிருப்பமான இசையரங்கு.

**pop**[3], *n.* ஈட்டன் (Eton) கல்விநிலையத்தில் உள்ள பொழுது போக்கு-சொற்போர்க் கழகம்.

**pop**[4], *n.* = papa.

**pop'corn**, *n.* மக்காச்சோளப் பொரி; மக்காச்சோள வகை.

**pope**[1], *n.* போப்பாண்டவர், ரோமன் கத்தோலிக்க திருச் சபையின் தலைவர்; குறைவற்ற முழுநிறைவானவராகக் கூறிக் கொள்பவர்; முழுநிறைவானவரெனக் கருதப்பெறுபவர்; (தொ.) Pope Joan, கற்பனையான பெண் போப்பாண்டவர்; சீட்டாட்ட வகை; pope's eye, எருது அல்லது ஆட்டின் துடையிலுள்ள கொழுப்பு சூழ்ந்த நிணநீர்ச்சுரப்பி; pope's head, நீண்ட கைப்பிடியுடைய உருள் துடைப்பம்; pope's nose, கோழி முதலியவற்றின் வால்நுனி இறைச்சிக் கறி.

**pope**[2], *n.* ருசியா முதலிய நாடுகளின் கிரேக்கர் திருச்சபையின் வட்டகைக் கோயிற்குரு.

**pope**[3], *n.* துடையின் பொறித்தடம், அடித்தால் பொறுக்க முடியாத நோவு அல்லது மயக்கந்தரும் துடைப்பகுதி; *v.* துடையின் பொறித்தடத்தில் அடி; (தொ.) take one's pope, துடையின் பொறித்தடத்தில் அடி.

**pope'dom**, *n.* போப்பாண்டவர் பதவி; போப்பாண்டவர் பணிமதிப்பு; போப்பாண்டவர் ஆட்சியெல்லை; போப்பாண்டவர் பதவிக்காலம்.

**pop'ery**, *n.* ரோமன் கத்தோலிக்க சமயம், ரோமன் கத்தோலிக்க கூறுகள் அமைந்த சமயமுறை.

**pop'gun**, *n.* பொம்மைத் துப்பாக்கி; பயனற்ற சுடுபடைக் கலம்.

**pop'ish**, *a.* போப்பாண்டவர் சமயமுறைமை சார்ந்த; போப்பாண்டவருக்குரிய.

**pop'lar**, *n.* நெட்டிலிங்க மரவகை.

**Pop'larism**, *n.* இரவலர் இல்லங்களில் தங்கியிராது உதவி கோருபவர்களுக்குத் தாராளமாக உதவி வழங்குங் கொள்கை; வரிவீதங்களை உயர்த்துவதற்கேதுவாயுள்ள உதவிமுறைக் கொள்கை.

**pop'lin**, *n.* பட்டியல் பருத்தித்துணி வகை.

**poplit'eal**, *a.* துடையின் பிற்பகுதிசார்ந்த; முழங்காலின் பின்னுள்ள குழிவுக்குரிய.

**popp'a**, *n.* = papa.

**popp'et**, *n.* குஞ்சு-குழந்தைபற்றிய ஆர்வச்சொல்; கடைசற் பொறியின் தலைப்பாகம்; கப்பலைப் புறப்படுத்தப் பயன்படும் சிறுமரத் துண்டு; உயரத்தூக்குவதில் பயன்படும் கயிற்றுக் கப்பிகளைத் தாங்குஞ் சட்டம்.

**popp'et-head**, *n.* கடைசற் பொறியின் தலைப்பகுதி.

**popp'ing**, *n.* வெடிப்பொலி எழுப்புதல்; துப்பாக்கி வெடி தீர்த்தல்; பொருளைத் திடுமென வைத்தல்; விரைந்தியங்குதல்.

**popp'ing-crease**, *n.* மரப்பந்தாட்ட வகையில் மட்டைக் காரர் நிற்கவேண்டிய எல்லைக்கோடு.

**pop'ple**, *n.* நீர் அலை திரைவு, நீரலை உருட்சி, மெல்லிய நீர்த் திரை; *v.* அலைவகையில் உருண்டோடு, முன்னும்பின்னும் அலைபாய்.

**popp'y**, *n.* கசகசாச்செடி, மயக்கமூட்டும் பாற்சாற்றினையுடைய செடிவகை; (தொ.) Flanders poppy, முதலாவது உலகப் பெரும்போரில் (1914-18) இறந்துபட்ட பிரிட்டிஷ் வீரர்களின் நினைவுச்சின்னம்; முதல் உலகப்போரில் மாண்ட வீரர் நினைவுநாளில் விற்கப்படும் செயற்கை வண்ணப்பூ; opium poppy, அபின் தரும் கசகசாச் செடிவகை; Poppy

Day, முதலுலகப்போரில் மாண்ட வீரர் நினைவாகச் செயற்கை வண்ணமலர்கள் செய்து விற்கப்படும் நாள்.

**popp'y-head,** *n.* கசகசாச் செடியின் விதையுறை; திருக் கோயில் இருக்கை முனையின் ஒப்பனை முகடு.

**pop'shop,** *n.* அடைமான வட்டிக்கடை.

**pop'sy, pop'sy-wop'sy,** *n.* 'கிளி' போன்ற ஆர்வமொழி; சிறுபெண்.

**pop'ulace,** *n.* பஞ்சுநிலம், பொதுமக்கள் திரள்.

**pop'ular,** *a.* மக்கள் பாராட்டிற்குரிய; பொதுமக்கள் சார்ந்த; பொதுமக்களால் நடத்தப்படுகிற; பொதுமக்களும் அறிந்து கொள்ளுமாறு ஆக்கப்பட்ட; மக்கள் சுவைக்கேற்பச் செய்யப் பட்ட; மக்கள் பொருள் நிலைக்கு ஏற்றவாறு அமைக்கப் பட்ட; பொதுமக்களிடையே வழங்குகிற; (தொ.) at popular prices, குறைந்த விலைகளில்; popular front, அரசியலில் முன்னேற்றக் கருததுள்ளவர் கட்சி.

**popula'rity,** *n.* பொதுமக்களிடை மதிப்பு; பொதுமக்கள் விரும்பும் நிலை.

**pop'ularize,** *v.* பாமரர்க்குரியதாக்கு; மக்கள் விரும்பும்படி செய்; வாக்குரிமை முதலியவற்றைப் பொதுமக்களிடையே வழங்கு; தொழில்நுணுக்கப் பொருள் முதலியவற்றை எல் லாரும் விரும்பும் வடிவத்தில் எடுத்துச்சொல்; யாவரும் விரும்பும் முறையில் எழுது.

**pop'ulate,** *v.* குடியேற்று.

**popula'tion,** *n.* மக்கட்டொகை; குடியேற்றச் செயல்.

**pop'ulist,** *n.* குடிப்பொதுமைக் கட்சியினர், இருப்பூர்திகள்-படித்தர வருமான வரி முதலியவற்றை அரசினர் கட்டுப் பாட்டின்கீழ் வைத்திருக்க வேண்டுமென்பதை நோக்கமாகக் கொண்ட அமெரிக்க அரசியல்கட்சி உறுப்பினர்; கூட்டாண் மையை ஆதரிக்கும் ருசிய அரசியல்கட்சி உறுப்பினர்.

**pop'ulous,** *a.* குடிநெருக்கான, மக்கள் நிறைந்த.

**porb'eagle,** *n.* சுறாமீன் வகை.

**porce'lain,** *n.* மங்கு, பீங்கான்; பீங்கான் கலம்; *a.* மங்கினுல் செய்யப்பட்ட; மென்மையான, நொய்ம்மையான; (தொ.) porcelain clay, வெண்களிமண்.

**porce'lainize,** *v.* பீங்கானுகச் சுடு.

**porc'elainous, porcella'neous,** *a.* பீங்கான் போன்ற.

**porce'lain-shell,** *n.* சோழி.

**porcel'lanous,** *a.*=porcelainous.

**porch,** *n.* புகுமுக மண்டபம்; முடு முன்றில்; (தொ.) the Porch, ஆதென்சில் (Athens) ஸீனோ (Zeno) வும் அவர் மாணவர்களும் தங்கியிருந்த மண்டபம்; மெய்விளக்கியலில் இன்பதுன்ப நடுநிலைக்கோட்பாடு.

**por'cine,** *a.* பன்றிக்குரிய, பன்றிபோன்ற.

**porc'upine,** *n.* எய்ப்பன்றி, முள்ளம்பன்றி; சிக்குவாரி, சணல் கோதுங் கருவி; *a.* முள்ளம்பன்றி போன்ற.

**pore[1],** *n.* நுண்துளை; மயிர்க்கண்.

**pore[2],** *v.* கருத்தூன்றிப்பார், படிப்பதில் ஆழ்ந்திரு; நீளநினை, ஒன்றியிருந்து நினை; (தொ.) pore one's eyes out, சுவடியை நெருக்கமாக வைத்து ஊன்றிப்படிப்பதனுல் கண்கள் சோர் வடையச் செய்; pore over, கருத்தூன்றிப் படி.

**porge,** *v.* யூதர் சமயவினைமுறை வகையில் கொல்லப்பட்ட விலங்கின் தசைநார் முதலியவற்றை அகற்றித் தூய்மை யுடையதாக்கு.

**por'ism,** *n.* (கண.) கிளைத்தேற்றம்; (அள.) பன்முகப் பல கோள், விடை தீர்வுகளுக்கு வழிவகுக்கக்கூடிய நிலைதரும் முற்கோள்.

**pork,** *n.* பன்றியிறைச்சி.

**pork'-butch'er,** *n.* விலைப்பொருட்டுப் பன்றி கொல்வார்.

**pork'er,** *n.* இறைச்சிப் பன்றி; கொழுத்த ஆண்பன்றிக்குட்டி.

**pork'ling,** *n.* சிறுபன்றி; பன்றிக்குட்டி.

**pork'-pie,** *n.* கொத்திய பன்றியிறைச்சி வேவல்.

**pork'y,** *a.* பன்றியிறைச்சி சார்ந்த; பன்றியிறைச்சி போன்ற; (பே-வ.) சதைப்பற்றுள்ள, கொழுத்த.

**pornoc'racy,** *n.* விலைமகளிர் செல்வாக்காட்சி.

**pornog'raphy,** *n.* பரத்தையர் வருணனை; இழிபொருள் ஓவியம்; இழிபொருள் இலக்கியம்.

**poroplas'tic,** *a.* அறுவை மருத்துவ வகையில் செறி கம்பளம் போன்ற நுண்துளைகளும் குழைவுங்கொண்ட.

**por'ous,** *a.* நுண்துளைகளையுடைய.

**porph'yry,** *n.* வெண்ணிலைப் பாறைவகை

**porp'oise,** *n.* கடற்பன்றி வகை.

**porra'ceous,** *a.* வெங்காயப் பச்சையான.

**porrect',** *v.* (வில.) உறுப்பை முன்னுற நீட்டு; திருச்சபைச் சட்டத்துறையில் ஆவணத்தைத் திருமுன்னிலையில் வழங்கு.

**po'rridge,** *n.* கூழ், துழவை; (தொ.) keep your breath to cool your porridge, உன் புத்திமதியை நீயே வைத்துக் கொள்.

**porrig'o,** *n.* (மரு.) தலைப்பொடுகு.

**po'rringer,** *n.* வட்டில், குழந்தைகளின் சிறு உணவுத்தட்டு.

**port[1],** *n.* துறைமுகம்; துறைமுகப்பட்டினம்; துறைமுக முள்ள இடம்; சுங்க அதிகாரிகளிருக்கும் துறைமுகப் பட்டினம்; (தொ.) Cinque Ports, (வர.) இங்கிலாந்தின் தென்கிழக்குக் கரையிலுள்ள ஐந்து துறைமுகங்கள் (Sandwich, Dover, Hythe, Romney, and Hastings); close port, ஆற்றின் மேடான பகுதியிலுள்ள துறைமுகம்; free port, தீர்வையில்லாத் துறைமுகம், அனைத்துநாட்டு வணிகர் களும் சரக்குகளைத் தடையின்றி ஏற்றவும் இறக்கவும் உரிமை யுடைய துறைமுகம்; இறக்குமதிகளுக்கான அல்லது ஏற்று மதிகளுக்கான விலக்குரிமை; port admiral, கடற்படைத் துறைமுக மேலாண்மைப் பொறுப்புடைய கடற்படைத் தலைவர்: port of call, தேவைப்பொருள்களுக்காக அல்லது செப்பனிடுவதற்காகக் கப்பல்கள் செல்லக்கூடிய துறைமுகம்; port of entry, வாணிகச் சரக்குகள் சட்டப்படி வரக்கூடிய துறைமுகம்.

**port[2],** *n.* நகரக் கோட்டைவாயில்; (கப்.) கப்பல் பக்கப்புழை வாய்; துப்பாக்கிவாய் வழிப்புழை; காலதர், காற்றுப் புழை; (இயந்.) ஆவி-நீர் முதலியன செல்வதற்கான துளைவாய்; கடிவாள இரும்பிலே குதிரையின் நாக்கிற்காக வளைத்த பகுதி.

**port[3],** *n.* நடைத்திறன், நடைப்பாங்கு; (படை.) படைக் கலம் சாய்த்தேந்தித் தாங்கிச் செல்லும் நிலை; *v.* துப்பாக்கி முதலிய படைக்கலங்களைக் குழல் மேலிருக்கும்படியாக இடது தோளிற் சாய்த்து ஏந்து.

**port[4],** *n.* (கப்.) கப்பலின் இடதுபக்கம்; *a.* இடதுபக்கமான; *v.* கப்பலை இடதுபக்கமாகத் திருப்பு; கப்பல் வகையில் இடது பக்கமாகத் திரும்பு.

**port[5],** *n.* போர்ச்சுகல் திராட்சைத்தேறல்.

**por'ta,** *n.* (வில.) வாயில் போன்ற பகுதி; (வில.) கல்லீர லின் குறுக்காகவுள்ள பிளவு.

**port'able,** *n.* எடுத்துச்செல்லத்தக்க பொருள்; *a.* எடுத்துச் செலலத்தக்க, கையேந்தலான, கையடக்கமான.

**port'age,** *n.* எடுத்துச்செல்லுதல்; கொண்டுபோவதற்குப் பிடிக்குஞ் செலவு; நீர்வழிகளிடையே படகின் சரக்குக் கொண்டு ஏக வேண்டியுள்ள நிலவழி; *v.* இரண்டு நீர்நிலை களுக்கு இடையே படகின் சரக்குக்களை நிலத்தின் மேற் கொண்டுசெல்; (தொ.) mariner's portage, மாலுமியின் சொந்தத் தொழிலுக்கென விடப்படும் இடப்பரப்பு.

**port'al[1],** *n.* நுழைவாயில்; அணிவாயிற் கதவம்; அணி கெழுவாயில்.

**port'al[2],** *a.* (உள்.) கல்லீரலின் குறுக்குப்பிளவு சார்ந்த; (தொ.) portal system, கிளை நாளங்களுடன்கூடிய வடிபாய் குழல்; portal vein, வடிபாய்குழல், கல்லீரலுக்குக் குருதி கொண்டு செலுத்துங் குருதிநாளம்.

*portamen'to*, (இத்.) *n.* (இசை.) ஒரு சுருதியிலிருந்து மற்றொன்றிற்கு நழுவிக்கொண்டே செல்லுகை.

**port'ative**, *a.* எடுத்துச்செல்லுதற்குரிய, தூக்கெளிய.

*port-crayon*, (பிர.) *n.*=*porte-crayon*.

**portcull'is**, *n.* கோட்டைவாயிலடைக்கும் சருகுபொறிச் சட்டம்.

**Porte**, *n.* (வர.) துருக்கிப்பேரரசு ; (தொ.) the Ottaman Porte, the Porte, the Sublime Porte, (வர.) கான்ஸ்டாண்டி நோபிளில் உள்ள ஆட்டோமன் அரசிருக்கை ; 1923 வரையி லிருந்த துருக்கிய அரசு.

*porte-cochere*, (பிர.) *n.* ஊடகவாயில், வண்டி கடந்து செல்வதற்குரிய வீட்டினூடான வாயில்.

*porte-crayon*, (பிர.) *n.* வண்ணக்கோல் கைப்பிடி.

*portefeuille*, (பிர.) *n.*=portfolio.

*porte-monnaie*, (பிர.) *n.* பணப்பை ; குட்டையேடு.

**portend'**, *v.* முன்குறிகாட்டு.

**port'ent**, *n.* முற்குறி; உற்பாதம், கெடுகுறி; அருந்திறலாளர்; வியத்தகு நிகழ்ச்சி.

**porten'tous**, *a.* தீக்குறியான ; வியப்பிற்குரிய ; பொதுநிலை கடந்த ; உள்ளத்திற் பதியும் ஆற்றல்வாய்ந்த.

**port'er**[1], *n.* வாயிலோன் ; *fem.* port'ress.

**port'er**[2], *n.* சுமைகாரன் ; முட்டாள் ; கசப்புச் சாராயவகை; (தொ.) porter's knot, சும்மாடு அட்டை.

**port'erage**, *n.* கொண்டுசெல்லுதல் ; எடுகூலி, சுமைகூலி.

**port'fire**, *n.* வெடிகுண்டுகளைப் பற்றவைப்பதற்கான பொறி யமைவு ; சுரங்கமறுக்கையில் வெடிமருந்துகளுக்குத் தீக் கொளுவுவதற்கான பொறியமைவு.

**portfol'io**, *n.* கைப்பை, உதிரித்தாள்கள் படங்கள் வைப்ப தற்குரிய கெட்டித்தாள் பையுறை ; அமைச்சர் பதவி; வணிக இணைப்புக்கழக முதலீடுகளின் பட்டியல் ; *pl.* portfol'ios.

**port'hole**, *n.* கப்பற் சாளரம்.

**port'ico**, *n.* மூடு முன்றில், புகுமுக மண்டபம் ; *pl.* port'icos.

*portiere*, (பிர.) *n.* கதவத் திரை.

**por'tion**, *n.* பங்கு, பாகம், கூறு ; உண்டிச்சாலைகளின் வாடிக்கைக்காரர்களுக்குப் படைக்கப்படும் உணவின் அளவு ; பெண் வழிச்சீர், சீதனம் ; விதி, ஊழ் ; *v.* பங்குகளாகப் பிரி, பங்கிட்டுக்கொடு, பங்கு ஒப்படை ; பெண்ணுக்குச் சீர் வரிசைசெய், சீதனங்கொடு.

**por'tionless**, *a.* உடைமையற்ற ; சீதனம் இல்லாத.

**Port'land**, *n.* போர்ட்லாந்து தீவிலுள்ள சிறை ; *a.* போர்ட் லாந்து தீவுடன் தொடர்புடைய ; (தொ.) Portland cement, சீமைக்காரை, சீமைச் சுண்ணும்பு-களிமண் ஆகியவற்றுற் செய்யப்படும் செயற்கைப் பசைமண்.

**port'ly**, *a.* பருத்த, கொழுத்த ; வீறுர்ந்த தோற்றமுடைய.

**portman'teau**, *n.* பயணத் தோற்பெட்டி, நடுவிலிருந்து தட்டையாக மடிக்கவல்ல பெருந்தோற்பெட்டி ; இருபாதி ஒட்டுச்சொல், இரண்டு சொற்களின் ஒலிகளும் பொருள்களும் கலந்துருவான கற்பனைச்சொல் ; *pl.* portman'teaus, portman'teaux.

*portola'no*, (இத்.) *n.* (வர.) துறைமுகத் திசைகாட்டிச் சுவடி.

**port'rait**, *n.* உருவப்படம் ; சொல்லோவியம், விளக்க வருணனை.

**port'raitist**, *n.* உருவப்படம் வரைபவர்.

**port'raiture**, *n.* உருவப்பட வரைவு ; உருவப்படம் ; உருவப் படக்கலை ; உருவப்படத் தொகுதி ; விளக்க வருணனை.

**portray'**, *v.* உருவப்படமெழுது ; விளக்கமாக வருணி.

**portray'al**, *n.* உருவப்படமெழுதுதல் ; விளக்கமாக வருணித்தல் ; ஒப்புருவம்.

**Port'reeve**, *n.* (வர.) நகரத்தின் முதன்மையான அலுவலர் ; நகர முதல்வருக்கு ஒரு படி கீழான அலுவலர்.

**Portuguese'**, *n.* போர்ச்சுகல் நாட்டுக்குடிமகன்; போர்ச்சுகல் நாட்டு மொழி ; *a.* போர்ச்சுகல் நாட்டைச் சார்ந்த ; போர்ச்சுகல் நாட்டுமொழியைச் சார்ந்த.

**port'-wine'**, *n.* போர்ச்சுகல் மதுவகை.

**pose**[1], *n.* நிற்கும் விதம், நிலை ; மனப்பாங்கு, மனநிலை ; பாவிப்பு, மேற்கொள்ளும் நிலை; தாய விளையாட்டு வகையில் முதலாட்ட உரிமை ; *v.* ஓவியரின் மாதிரி வகையில் குறிப் பிட்ட தோற்றநிலையில் அமைவி ; குறிப்பிட்ட தோற்ற நிலையை மேற்கொள்; கலைநோக்குடன் தனிப்பட்ட தோற்றச் சாய்வை மேற்கொள் ; தனித்திறம் பாவி, தனித்திறனுடை யவர் போலப் பாவனை மேற்கொள்ளு ; வலியுறுத்து, வலி யுறுத்திக்கொடு ; கடாவிடு ; தாய ஆட்டவகையில் முதற் காயைக் களத்தில் வை.

**pose**[2], *v.* கேள்விகளால் அல்லது புதிர்களால் திணற அடி.

**pos'er**, *n.* திணறவைக்கும் கேள்வி, திகைப்பூட்டும் புதிர் ; தடுமாறச் செய்பவர்.

*poseur*, (பிர.) *n.* வேடதாரி.

**posit**, *v.* உண்மையென ஏற்றுக்கொள் ; மெய்யாகக்கொள் ; உள்ளதென வாதத்துக்காக வைத்துக்கொள்; நிலையில் அமை ; ஒழுங்குபடுத்திவை.

**posi'tion**, *n.* நிலை ; இருப்பு, இருக்கை ; உடல் அமர்வுநிலை; மனநிலை, மனப்பாங்கு ; இருப்பிடம், கிடப்பு ; நிலைமை ; சூழ்நிலை ; நற்சூழல்நிலை; நல்வாய்ப்புநிலை; படிநிலை, பதவி; பணி நிலை ; (படை.) உரிய வாய்ப்பிடம்; (இலக்.) கிரேக்க-லத்தீன் யாப்பில் அசையுயிரின் பின்தொடர்பு நிலை ; (அள.) மெய்யுரை வாசகம் அறுதியிடல் ; மெய்யுரைவாசக அறுதி ; *v.* நிலையில் வை ; நிலையினை உறுதிசெய்; படைகளைப் போர் நடவடிக்கைகளுக்காக உரிய இடத்தில் அமர்த்து ; (தொ.) in position, சரியான இடத்தில், தக்க இடத்தில் ; out of position, பொருந்தாத இடத்தில், சரியான இடத்திலில்லா மல்; people of position, மேனிலையிலுள்ளோர்.

**pos'itive**, *n.* நேர் எண், நேர் அளவை; நிழற்பட நேர்படிவம்; நிழற்பட நேர்படிவத்தை ஒத்த உருப்படிவம் ; நேர்மின் ஆற்றல் ; மின் பிரிகல நேர்த்தகடு ; இசைக்கருவி வகையான துணைமேளம் ; (அள.) உறுமெய்ம்மை, உறுதிசெய்வதற் குரிய செய்தி ; (இலக்.) பெயரடை வினையடைகளின் ஒப் பீட்டுப் படிகளில் இயற்படி ; (இலக்.) இயற்படியான பெய ரடை ; இயற்படியான வினையடை ; *a.* (சட்.) ஆக்கமுறை யான ; இயல்பாயமைந்ததல்லாத ; குறிப்பிட்டு உறுதி செய்யப்பட்ட ; தனிப்பட வரையறுக்கப்பட்ட ; ஐயத்துக் கிடமற்ற ; கட்டாயமான ; தன்னுறுதியுடைய ; மட்டற்ற தன்னம்பிக்கையுடைய ; மாறாத ; நெகிழ்வு விரிவற்ற; தனி நிலையான, தொடர்பியல்புச் சார்பற்ற ; (பே-வ.) தீர்ந்த, முற்றியலான ; புறமெய்ம்மை சார்ந்த, புறநிகழ்வுச்செய்தி சார்ந்த ; உளதாம்தன்மை குறித்த, இன்மைமறுத்த, எதிர் மறையல்லாத ; காந்தத்தில் வடகோடி காட்டுகிற ; சுழற்சி வகையில் வலஞ்சுழித்த ; (இலக்.) பெயரடை வினையடை ஒப்பீட்டுப்படிகளில் இயற்படியான ; (நி. ப.) நேர்படியான, இயல்பான ஒளி நிழல்வண்ணம் காட்டுகிற ; நில உலகக் கோள் வகையில் தென்கோடி சார்ந்த ; (மின்.) நேர்நிலைப் பட்ட, மின்னணு மிகையால் தோற்றுகிற ; (தொ.) positive electricity, நேர்மின் ஆற்றல், கண்ணுடியைப் பட்டுத்துணியில் தேய்ப்பதனுல் ஏற்படும் மின் ஆற்றல் ; positive organ, திருக்கோயில்களில் பெரிய இசைக்கருவிப் பெட்டிக்குத் துணையாக அமைந்துள்ள தூக்கிச்செல்லக்கூடிய சிறு இசைப்பெட்டி வகை ; positive pole, காந்த வகையில் வடக்கு நோக்கிய முனை ; நில உலகக்கோள வகையில் தென் முனைக்கோடி, தென்துருவம்.

**pos'itivism**, *n.* நேர்க்காட்சி வாதம், 'அகஸ்ட் காம்டே' (Auguste Comte) என்பவரின் மெய்விளக்கக் கோட்பாடு ; நேர்க்காட்சி வாதத்தை அடிப்படையாகக் கொண்ட சமய முறை.

**pos'itron**, *n.* நேர் ஆக்கமின்மம், மின்மங்களுக்கு ஆற்றலில் இணையாகத் தற்காலிகமாகக் கருவுளில் உருவாகும் நேர்மின் திரள்.

**posol'ogy**, *n.* மருந்து அளவியல்.

**poss'e**, *n.* குழுமம்; ஊர்க் காவலர் தொகுதி; வலிமை வாய்ந்த படைவீரர்தொகுதி ; அதிகாரம்.

***poss'e comita'tus***, (ல.) *n.* கலகம் முதலியவற்றை அடக்க மாநகரத் தலைவரால் அழைக்கப்படும் உள்ளூர்ப்படை.

**possess'**, *v.* உடையராயிரு ; உடையதாயிரு; உடைமையாகப் பெற்றிரு ; உடைமையாகக் கைக்கொள் ; திறமை தகுதி முதலியவற்றைப் பெற்றிரு ; உள அமைதி ஆன்மிக அமைதியைக் கைக்கொண்டிரு ; பேய் பிசாசு வகையில் ஒருவரைப் பிடித்தாட்டு ; (தொ.) be possessed of, உடையராயிரு, உடைமையாகக்கொள் ; like all possessed, பேராற்றலோடும் உணர்ச்சியோடும், ஆவேசத்தோடும் ; possess oneself of, உடைமையாகக் கைக்கொள், உடைமையாகப் பெற்றிரு.

**posse'ssion**, *n.* உடைமையாகப் பெற்றிருத்தல்; உடைமை; உடைமைப்பொருள், கையாட்சி ; (சட்.) அனுபவஉரிமை, சட்டப்படியான உரிமையாளருக்குள்ளதைப் போன்ற உரிமை ; (தொ.) in possession, பொருள் வகையில் உடைமையாகக் கைக்கொள்ளப்பட்ட ; ஆள்வகையில் உடைமையாகக் கைக்கொண்டுள்ள.

**posse'ssions**, *n. pl.* சொத்து, உடைமை; வென்றாளும் ஆட்சி நிலப்பரப்பு, ஆட்சியின்கீழ் வந்துள்ள அயல்நிலப் பரப்பு.

**possess'ive**, *n.* உடைமைவேற்றுமை, ஆறும் வேற்றுமை ; உடைமை வேற்றுமைச்சொல்; *a.* உடைய, உடைமைக்குரிய; உரிய, சொந்தமான ; (இலக்.) உடைமையைக் குறிக்கிற, ஆறும்வேற்றுமை சார்ந்த ; (தொ.) possessive case, ஆறும் வேற்றுமை ; possessive pronoun, கிழமை மறுபெயர் ; உடைய பொருளைச் சுட்டும் மறுபெயர்.

**poss'et**, *n.* பத்தியக் குடிவகை.

**possib'ilist**, *n.* உடனடியாகச் செயல்முறைப்படுத்தக்கூடிய சீர்திருத்தங்களையே குறியாகக் கொண்டு செயலாற்றிய ஸ்பானிய குடியரசுக் கட்சியினர் அல்லது பிரஞ்சு சமவுடைமைவாதி.

**possibil'ity**, *n.* ஒல்லுவது, முடியக்கூடிய செயல்; செயல் கூடுநிலை, சாத்தியம்.

**poss'ible**, *n.* துப்பாக்கிசுடும் பயிற்சியில் எடுக்கக்கூடிய உயர்தரக் கெலிப்பெண் ; வேட்பாளர் தகுதியுடையவர் ; ஆட்டக்குழுவிற் சேரும் தகுதியுடையவர் ; செய்யக்கூடிய முழு அளவு ; *a.* இருக்கக்கூடிய ; நிகழக்கூடிய ; செய்யக்கூடிய ; மட்டளவாகச் செய்யக்கூடிய ; நேர்மையான, அறிவுக்குப் பொருத்தமான ; புரியக்கூடிய, விளங்கக்கூடிய ; (தொ.) do one's possible, ஒருவர் செய்யக்கூடிய அனைத்துஞ் செய்.

**poss'ibly**, *adv.* ஒருவேளை, கூடுமாயின், இயலுமாயின் ; இயலுமளவில், கூடியவரையில்.

**poss'um**, *n.* செத்ததுபோலப் பாவித்து எதிரிகளிடமிருந்து தப்பும் பழக்கமுடைய பைம்மாவின அமெரிக்க விலங்கு வகை ; (தொ.) play possum, நோயுற்றிருப்பதாக நடி, நோயாளியாகப் பாசாங்குசெய்.

**post[1]**, *n.* கம்பம்; மரக்கம்பம்; மரமுளை; குற்றி; கட்டுத்தறி; நிலைக்கால் ; ஆதாரக்கால்; உதைகால்; கழுமரம்; இலக்குக் குறிக்கம்பம் ; அடர்த்தியும் நெருக்கமுமான சுண்ணக்கல் படுகை; சுரங்கங்களில் ஆதாரமாக விடப்பட்ட நிலக்கரித் திரள் ; *v.* விளம்பரத்தாளை ஒட்டு ; சுவரொட்டிகளை ஒட்டு; சுவரொட்டியால் விளம்பரப்படுத்து ; கல்லூரியில் தேர்வு பெறாத மாணவர்களின் பெயர்ப்பட்டியல் ஒட்டு ; தவணை கடந்த அல்லது காணாமற்போன கப்பலின் பெயரை விளம்பரப்படுத்து.

**post[2]**, *n.* அஞ்சல் ; பழங்கால அஞ்சல்வழி இடைமாற்றுக் குதிரைகளுடன் கூடிய ஆள்; பழங்கால விரைதூதர்; அஞ்சல் வண்டி ; அஞ்சல் ஆள், அஞ்சற்கடிதம் கொண்டுசெல்பவர், ஒருதடவைவரும் அஞ்சற்கடிதத்தொகுதி; ஒருவேளை அஞ்சல் தொகுதி; ஒருவேளை அஞ்சற்பெட்டியிலிருந்து எடுக்கும் கடித முதலியவற்றின் தொகுதி; ஒருவீட்டில் ஒருதடவை கொடுக்கப்படும் அஞ்சல் உருப்படிகளின் தொகுதி ; அஞ்சல்மனை ; அஞ்சல்பெட்டி ; அஞ்சலுக்கான கடிதத்தொகுதி ; அஞ்சலுக்குக் கொண்டுசெல்லப்படும் பணிமனைக் கடிதத்தொகுதி; எழுதுதாள் அளவு (20" × 16") ; எழுதுதாள் வகை ; *v.* குதிரை இடைமாற்று ஏற்பாட்டுடன் பயணஞ் செய் ; விரைந்து பயணஞ் செய்; விரைவுகொள்; கடிதத்தை அஞ்சற் பெட்டியில் இடு; அஞ்சல் மனையில் கொண்டுசேர்; அஞ்சலில் ஒப்படை; கடைக்கணக்குத் துறையில் பேரேட்டில் கொண்டு பதிவுசெய், பேரேட்டில் குறி; பேரேட்டுக் கணக்கை நிறைவு செய் ; முழுத்தகவலும் தெரிவி ; *adv.* மிகு விரைவாக ; அஞ்சல்முறையில், வழி இடைமாற்றுக் குதிரைகளின் ஏற்பாட்டுமூலமாக ; (தொ.) by return of post, அடுத்த மறு அஞ்சலில், கடிதம் கொண்டுவந்த அதே அஞ்சல் தூதன் வழியாகவே ; general post, காலையில் முதலில் வருங் கடிதங்கள்; வீட்டிற்குள் ஆடும் விளையாட்டுவகை ; parcel post, சிப்ப அஞ்சல் துறை ; penny post, ஒருபென்னிகட்டணத்தில் சென்ற தொடக்கக்கால அஞ்சல்முறை.

**post[3]**, *n.* படைத்துறைக் களம், படைவீரர் நிறுத்தப்பட்டுள்ள இடம் ; பாளையம், வென்ற நாட்டில் படைப்பிரிவு தங்க வைக்கப்பட்டுள்ள இடம் ; படைவீரர் காவலிடம், பணித் துறைக் கடமைக்குரிய இடம்; அரண்காப்பிடம், கோட்டைத் துறை; ஒதுக்குப்புறமான நாட்டின் வாணிகத்துறைக் களம் ; பணியிடம், பணிநிலை ; இருபதுக்கு மேற்பட்ட துப்பாக்கிகளையுடைய படைக்கப்பல் முதல்வர் ஆணைப்பணி; (படை.) வேளை எக்காளமுழக்கம் ; *v.* படைவீரரைக் காவலாக நிறுத்து ; படைப்பிரிவினை நிறுவு ; படைக்கப்பல் முதல்வராக அமர்த்து ; பணியில் அமர்வுசெய் ; (தொ.) first post, (படை.) இரவிற் படுக்கைக்குச் செல்லும் நேரத்தை அறிவிக்கும் முதல் எக்காள ஒலி ; last post, படைத்துறை இழவு வினைகளில் ஊதப்படும் இறுதி எக்காள ஒலி ; post captain, இருபது அல்லது அதற்கு மேற்பட்ட துப்பாக்கிகள் கொண்ட கப்பலுக்குத் தளபதியாகச் செயலுரிமை அளிக்கப்பட்டவர் ; post up, முழுச்செய்திகளையுங் கூறு, முழு விவரங்களையும் அளி.

**pos'tage**, *n.* அஞ்சற் கட்டணம் ; (தொ.) postage stamp, அஞ்சல் தலை.

**pos'tal**, *a.* அஞ்சல் பற்றிய, அஞ்சல் சார்ந்த ; (தொ.) postal order, அஞ்சல் பண ஆணைத்தாள் ; postal union, பல நாட்டு அஞ்சற்கட்டண ஒழுங்குமுறை ஏற்பாட்டிற்கான பல்வேறு நாடுகளின் அரசாங்கக் கூட்டுறவுக் குழு.

**post'-bag**, *n.* அஞ்சற் பை.

**post'-boat**, *n.* அஞ்சற்படகு ; குறிப்பிட்ட இடங்களுக்கான தனிப்பயணப் படகு.

**post'-boy**, *n.* கடிதங்கொண்டுசெல்பவன் ; முற்காலத்தில் அஞ்சற்குதிரைமீது செல்பவன் ; முற்காலத்தில் குதிரைமீது அமர்ந்து வண்டி ஓட்டுபவன்.

**post'card**, *n.* அஞ்சல் அட்டை.

**post'-chaise**, *n.* (வர.) முற்கால வழி இடைமாற்று ஏற்பாடுடைய அஞ்சல் வண்டி.

**post-class'ical**, *a.* கிரேக்க-ரோமமொழிகளின் இலக்கிய காலத்திற்குப் பிற்பட்ட.

**post-commun'ion**, *n.* திருக்கோயிலில் தூய நற்கருணை தொடர்ந்து நடைபெறும் இயேசுநாதரின் திருவிருந்து நிகழ்ச்சிப்பகுதி.

**post-cos'tal**, *a.* விலா எலும்பிற்குப் பின்னுள்ள.

**post'-date[1]**, *n.* பின்தள்ளிக் குறித்த நாள்.

**post-date'[2]**, *v.* உண்மை நாளைக் குறிக்காது பின்தள்ளிக் குறி.

**post-diluv'ian**, *n.* விவிலிய ஏட்டின் உலக வரலாற்று மரபுக்குரிய பேரூழி வெள்ளத்துக்குப்பின் வாழ்ந்தவர் ; *a.* பிரளயத்திற்குப்பின் வாழ்ந்த ; பேரூழி வெள்ளத்துக்குப்பின் நிகழ்ந்த.

**posteen'**, *n.* செம்மறியாட்டின் கம்பளி நீக்கப்பெறாத ஆப்கானிஸ்தான் நாட்டிற்குரிய பெரிய முழு மேலங்கி.

**post-en'try**, *n.* குதிரைப்பந்தயத்திற் பிற்சேர்வு ; கடைக் கணக்குத் துறையிற் பிற்சேர்ப்பு ; பிந்துகுறிப்பு.

**pos'ter**, *n.* விளம்பரத்தட்டி ; விளம்பரங்களை ஒட்டுபவர் ; காற்பந்தாட்ட வகையில் இலக்குக்கம்பத்துக்கு மேலே சென்று இலக்கினை எய்தும்படியான பந்துதைப்பு.

***poste restante***, (பிர.) *n.* அஞ்சற் காப்பகம், கேட்கும் வரையில் கடிதங்களை வைத்திருக்கும் அஞ்சல் நிலைய அரங்கம்.

**poster'ior**, *n.* உடலின் பிற்பகுதி, பிட்டங்கள்; *a.* பின்னுள ; தொடர்ச்சியில் பின்வருகிற ; பின்பக்கத்திய.

**poste'rity**, *n.* கால்வழி, சந்ததி ; பின்னோர், வழித்தோன்றல்கள் ; வருமரபு, பின்வருந் தலைமுறைகள்.

**pos'tern**, *n.* பின்புறக் கதவு ; புறக்கடை, பக்கக்கதவு, பக்க வாயில்.

**post-exil'ian, post-exil'ic**, *a.* யூதரின் பாபிலோனிய சிறைவாழ்வுக்குப் பிற்பட்ட.

**post'-fix** [1], *n.* பின்வைப்பு, விகுதி, சொல்லின் பின்னொட்டுக் கூறு.

**post-fix'** [2], *v.* கடைப்பகுதியிற் சேர்.

**post'-free**, *a.* அஞ்சற் கட்டணமின்றிக் கொண்டு செல்லப்பட்ட ; அஞ்சற் கட்டணம் முன்னரே கட்டப்பட்ட.

**post-gla'cial**, *a.* (மண்.) பனிப்பேரூழிக்குப் பிற்பட்ட.

**post-grad'uate**, *n.* பட்டப் பின்பயிற்சி, பட்டம் பெற்றபின் படிப்பு ; *a.* பட்டம் பெற்ற பின்னுள, பட்டத்திற்குப்பின்.

**post-haste'**, *adv.* மிகு விரைவுடன்.

***post hoc erg'o prop'ter hoc***, (ல.) *n.* பிந்திவந்தது எனவே பின்விளைவாகத்தக்கது என்ற வாதம் ; காலவரிசையைக் காரண காரியமாகத் தொடர்புபடுத்தும் போக்கைக் கண்டிக்கும் ஏளனக்குறிப்பு.

**post'-horse**, *n.* முற்கால அஞ்சல்முறையில் வழியிடை மாற்றுக்குதிரை.

**post'humous**, *a.* இறந்த பின்னுள ; தந்தை இறந்தபின் பிறந்த ; இயற்றியவர் மறைவுக்குப்பின் அச்சிடப்பட்ட.

**postiche'**, *n.* வேலைப்பாடு முற்றுப்பெற்றபின் சேர்க்கப்படுவது ; சிற்ப வேலையில் பின்னுற் சேர்க்கப்படும் பொருத்தமற்ற வேலை, தேவைக்கு அதிகமான பின்னிணைப்பு வேலை ; கடைச்சரக்கு வகையில் பொய்ம்மயிர், கள்ளமுடி ; போலி முகப்பு; *a.* போலியான; செயற்கையான, இயற்கையல்லாத.

**postic'ous**, *a.* (தாவ.) பின்பகுதியிலுள்ள ; பின்னுள ; பின்பக்கத்திய.

**pos'til**, *n.* (வர.) ஓரக்குறிப்பு, விவிலிய நூலில் ஓரத்தில் எழுதப்படும் விளக்கக்குறிப்பு ; விளக்கவுரை, விரிவுரை.

**postil'ion, postill'ion**, *n.* மாவூர் வலவன், இரட்டைக் குதிரைகள் பூட்டிய வண்டியில் அண்மையிலுள்ள குதிரை மீதிவர்ந்து ஓட்டுபவன்.

**post-impre'ssionism**, *n.* அகவாய்மைப் பண்போவிய முறை, பிரான்சில் 19-ஆம் நூற்றுண்டில் தோன்றிய புறவாய்மைப் பண்போவிய இயக்கத்திற்குப் பின் அதன் எதிரியக்கமாகத் தோன்றிய ஓவிய இயக்கம்.

**postlim'iny**, *n.* (ரோம. சட்.) மறுசீர்ப்பெறலுரிமை, நாடு கடத்தப்பட்டவர் அல்லது சிறைப்பிடிக்கப்பட்டவர் திரும்பிய பின் நாட்டின் குடியுரிமைகளைத் திரும்பப்பெறும் நிலை ; மறுசீரமைப்புப் பேறு ; அணைத்து நாட்டுச் சட்ட வகையில் போருக்குப்பின் ஒருவருடைய நாடு மீண்டும் அந்நாட்டார் ஆட்சிக்கு வந்தால் போர்க்கைதிகள்-கைப்பற்றப்பட்ட பொருள்கள்-பெற்றுப் பழையநிலைக்கு மீளுந் தன்மை.

**post'lude**, *n.* இசை முடிப்பியக்கம் ; இசைத்துறையில் இறுதித் தற்புனைவியக்கம்.

**post'man**, *n.* அஞ்சலாள்.

**post'mark**, *n.* அஞ்சல் முத்திரை ; *v.* அஞ்சல் முத்திரையிடு.

**post'master** [1], *n.* அஞ்சல்நிலையத் தலைவர் ; (தொ.) Postmaster General, அஞ்சல்துறைத் தலைவர்.

**post'master** [2], *n.* ஆக்ஸ்போர்டு சார்ந்த மெர்டன் (Merton) கல்லூரியின் உதவிச்சம்பள மாணவர்.

**post'mastership**, *n.* அஞ்சல்நிலையத் தலைவர் நிலை ; அஞ்சல் நிலையத் தலைவர் பதவி.

***post merid'iem***, (ல) *adv.* நடுப்பகலுக்குப்பின்னுல், பிற்பகலில்.

**post-millenn'ial**, *a.* இயேசுநாதரின் மறுவருகை திருவாயிரம் கடந்து நிகழும் என்ற கோட்பாட்டுக்குரிய.

**post-millenn'ialism**, *n.* இயேசுநாதரின் மறுவருகை திருவாயிரத்துக்குப்பின் நிகழும் என்ற கோட்பாடு.

**post'mistress**, *n.* அஞ்சல்நிலையத் தலைவி.

**post-mort'em** [1], *n.* சாவிற்குப் பின்னுய்வு ; (பே-வ.) சீட்டாட்ட வகையில் ஆட்டம்பற்றிய பின்பேச்சு ; *a.* சாக்காட்டின் பின் செய்யப்படுவதான.

***Post-mort'em*** [2], (ல.) *adv.* சாக்காட்டிற்குப் பின்.

**post-nat'al**, *a.* பிறப்பிற்குப்பின் நிகழ்கிற.

**post-nup'tial**, *a.* திருமணத்திற்குப் பிற்பட்ட.

**post-ob'it**, *n.* மரபுச்சொத்துக்குரிய முன்னவர் இறந்ததும் கொடுத்த வாக்குத்தொகை உரிமை தருகிற கடன் பத்திரம் ; *a.* இறந்த பிறகு நடப்புக்கு வருகிற.

**post'-office**, *n.* அஞ்சல்நிலையம்.

**post'-office order**, *n.* பணஞ் செலுத்துதற்கான அஞ்சல் நிலையக் காசோலை.

**post-or'al**, *a.* வாய்க்குப்பின் அமைந்துள்ள.

**post'-paid**, *a.* அஞ்சல்தொகை செலுத்தப்பட்ட.

**post-pli'ocene**, *a.* மண்ணியல் கடையூழியாகிய புத்துயிரூழியில் மூன்றுந்தரக் கிளை ஊழிகளும் நான்காந்தரப் பனி ஊழிப்பருவங்களும் கடந்த காலத்திற்குரிய.

**postpone'**, *v.* காலங்கடத்து, தள்ளிவை ; காலந்தாழ்த்து ; முக்கியத்துவங் குறைத்து மதி.

**postpone'ment**, *n.* காலங்கடத்துதல் ; தள்ளிவைக்குஞ் செயல்.

**postposi'tion**, *n.* பின்வைப்பு, விகுதி.

**postpran'dial**, *n.* உணவிற்குப் பிற்பட்ட.

**post'script**, *n.* (சு-வ. P.S., P.P.S.) பிற்சேர்க்கை ; கடிதத்தில் கையெழுத்திட்டபின் எழுதிச் சேர்க்கும் பத்தி; வானொலி பரப்புச் செய்தி அறிக்கையின் முடிவில் வரும் பேச்சு.

**post-ter'tiary**, *a.* மண்ணூல் புத்துயிரூழியின் முதல் மிகப் பெருங்கூறு கழிந்த.

**post'-town**, *n.* தனி அஞ்சல்நிலையமுடைய நகரம்.

**pos'tulant**, *n.* சமய அமைப்பிற் சேர்வதற்கான வேட்பாளர்.

**pos'tulate** [1], *n.* அடிக்கோள், ஆராய்ச்சியின் அடிப்படையாக ஏற்றமைவு கொள்ளப்பட்ட மெய்ம்மை ; அடிப்படைநிலை ; இன்றியமையா முதற்படு முதற்கூறு ; (வடி.) இயல்வுக் கோள், எளிய கையாட்சி இயலுவதாகக் கொண்டு மேற் செல்லும் முறை.

**pos'tulate** [2], *v.* ஏற்றமைவாகக் கொள் ; அடிப்படையாக வேண்டு ; மெய்யாக அப்பொழுதைக்கென ஏற்றுக்கொள் ; முற்படு, முதற்கூறுகக் கோரு ; இன்றியமையா முற்படு கூறுக வற்புறுத்திக் கூறு ; திருச்சபைச் சட்டத்துறையில் மேல் ஏற்பிசைவு எதிர்நோக்கித் தேர்வுசெய்.

**pos'ture**, *n.* நிலைகோடல் ; தோற்ற அமைவு, மனநிலை ; பாங்கு, நிலை, போக்கு ; *v.* நிலைகொள்ளு, தனி அமைவு நிலையில் நில், தனிப்படு தோற்றநிலைகொள் ; தனிநிலை உடலமைவுடன் இயலு.

**pos'ture-maker**, *n.* நிலைகொளையர்.

**pos'ture-master**, *n.* உடற்பயிற்சிக்கலை ஆசிரியர், கட்டழகுக்கலை ஆசிரியர்.

**pos'y** *n.* பொலஞ்சொல் ; பூங்கொத்து.

**pot**, *n.* பானை ; மட்கலம் ; கண்ணுடிக் கொள்கலம் ; நீர் மொள்ளும் கலம் ; உலோகக் குடிகலம் ; அடிசிற் கலம் ; மைகொள் புட்டில் ; பழச்சாற்றுப் புட்டில் ; கொள்கல

அளவு; தாள் அளவு (15½" × 12½"); பணத்தின் பெருந் தொகை; மேசைக் கோற்பந்தாட்டத்தில் பந்துவீழ்பை; பைவீழ் பந்தடி; மேசைக் கோற்பந்தாட்டத்தில் பையில்வீழ அடிக்கும் பந்தடி; வெள்ளியாலான பரிசுப் பூங்குவளை; பலர் பெருந்தொகைப் பந்தயம் வைத்த குதிரை; பலர் விருப்பத்துக்குரியது; தலைக்கவசம்; v. கலத்திலிடு; கலத்திலிட்டு வை; சாடியில் உப்பிடு வை; கலத்திலிட்டுச் சமை; தொட்டியில் நடு; மேசைக் கோற்பந்தாட்டத்தில் பையில் விழும்படி பந்தினை அடி; அணுக்கக் குறிவேட்டு எறி; வேட்டையில் கொன்ற சிறு விலங்கினைப் பையிலிடு; கைக்கொள், பெறு; சுருக்கிக் கூறி நையாண்டிசெய்; (தொ.) big pot, பொருளர்; come and take pot luck with us, எங்களோடு வந்து எங்களுக்குக் கிடைப்பதை நுகர்; go to pot, அழிந்துபோ, ஒழிந்துபோ; keep the pot boiling, வாழ்க்கைத் தொழிலை ஒழுங்காகச் செயற்படச் செய்; make the pot boil, வாழ்க்கைத்தொழில் செய், சீவனம் பண்ணு; pot hat, வட்டமான உச்சியுடைய அழுத்தமான கம்பளித் தொப்பி; pot lead, பந்தயப் படகுகளின் உடற் பகுதி வகையில் பயன்படும் ஈயம்; the pot calls the kettle black, தன்குற்றங்காணாது பிறர்குற்றங் காண்பவர்; watched pot never boils, கவலைப்பட்ட பொருள் கைகூடுவதில்லை.

**pot'able**, *a.* குடிக்கத்தக்க.

**pot'ables**, *n. pl.* பான வகைகள்.

**pot'-ale**, *n.* வடிகூடத்தின் கடைக்கழிவான மிகுபுளிப்பு மண்டி.

**potam'ic**, *a.* ஆற்றிற்குரிய.

**pot'ash, potass'**, *n.* மர உப்பு, சாம்பலுப்பு; (தொ.) caustic potash, சாம்பர நீரக உயிரகை.

**pot'ash-water**, *n.* வளி கலந்த பானவகை.

**potass'ium**, *n.* சாம்பரம், மென்மையான வெண்ணிற உலோகத்தனிமம்; கூட்டுப்பொருட்களில் பயன்படும் கார உலோகங்களில் ஒன்று; (தொ.) potassium cyanide, சாம்பரக் கரிநீரகை, மிகக்கொடிய நஞ்சுவகை.

**pota'tion**, *n.* குடித்தல்; குடிதேறல்.

**pota'tions**, *n. pl.* கடுங்குடி, வெறிமயக்கக் குடி.

**potat'o**, *n.* உருளைக்கிழங்குச் செடி; உருளைக்கிழங்கு; (தொ.) small potatoes, நிரம்பிய மதிப்பில்லாதது; the clean potato, the potato, சரியானது, தக்கது.

**potat'o-box**, *n.* வாய்.

**potat'o-ring**, *n.* கலந்தாங்கி, கலச்சும்மாடு.

**potat'o-trap**, *n.* வாய்.

**pot'-belly**, *n.* தொப்பை வயிறுடையவர், வயிறுதாரி.

**pot'-boiler**, *n.* வாழ்க்கைப் பிழைப்புக்காக மேற்கொள்ளப் பட்ட கலை-இலக்கிய வேலை; வாழ்க்கைப் பிழைப்பிற்காகக் கலை-இலக்கிய வேலைசெய்பவர்.

**pot'-bound**, *a.* தொட்டியின் அளவுகடந்து வளர்ந்துவிட்ட; வளர்ச்சிககு இடமற்ற.

**pot'-boy**, *n.* மதுக்கடைப் பையன்.

**pot'-companion**, *n.* கள்வகை நண்பர், மதுக் கூட்டாளி.

**poteen'**, *n.* அயர்லாந்துநாட்டு வழக்கில் கள்ள வடிப்புச் சாராயம்.

**po'tency**, *n.* ஆற்றல்; பயனுடைமை; செல்வாக்கு நிறைந்தவர்.

**pot'ent**, *a.* (செய்.) ஆற்றல்வாய்ந்த; மிகப்பெரிய; சிந்தனை வகையில் அறிவுக்குப் பொருத்தமான; கருத்துவகையில் மறுக்கமுடியாத; மருந்து முதலியன வகையில் ஆற்றல்மிக்க.

**pot'entate**, *n.* ஆளுநர், வல்லுநர்.

**poten'tial**, *n.* (மின்.) மின்னூட்ட அளவு; மின் அழுத்த அளவு; நிகழக்கூடியது; மூல வாய்ப்புவளம்; உள்ளார்ந்த ஆற்றல், வேண்டும்போது செயல்திறப்படுத்தப்பெறும் அடங்கிய ஆற்றல்வளம்; (இலக்.) ஆற்றல் உணர்த்தும் வினைச் சொல்; *a.* உள்ளார்ந்த ஆற்றல்வாய்ந்த, வேண்டும்போது செயல் திறப்படும் திறமுள்ள; பின்வள வாய்ப்புடைய, அகநிலைத் தகுதிவாய்ந்த; (இலக்.) இயலக்கூடும் செயல் உணர்த்துகிற; இருக்கத்தக்க; செயலுக்கு வரக்கூடிய; (தொ.) potential cautery, potential corrosive, (மரு.) வாட்டுஞ் செயல் விளைவினை உண்டுபண்ணும் பொருள்; (மரு.) அரிக்குஞ் செயல் விளைவினை உண்டுபண்ணும் பொருள்; potential difference, நிகழக்கூடும் மின்னோட்டத்தின் ஏற்றத் தாழ்வு உச்ச எல்லைகளின் வேறுபாடு; potential energy, உள்நிலை ஆற்றல்; potential mood, ஆற்றலுணர்த்தும் வினை வாய்பாடு.

**poten'tiality**, *n.* இயல்திறம்; உள்ளடங்கிய ஆற்றல்; செயற்படுந்திறம்; செயற்படத்தக்க மறை ஆற்றல்.

**poten'tially**, *adv.* இயல்திறமுறையில், கூடியதாக.

**poten'tialize**, *v.* இயல்திறமுடையதாக்கு; உள் ஆற்றலுடையதாக்கு; நிலைபேறுடையதாக்கு.

**poten'tiate**, *v.* ஆற்றலளி, சக்தியூட்டு; இயலச்செய்.

**potentiom'eter**, *n.* மின்னழுத்த ஆற்றல்மானி.

**pot'-hanger**, *n.* பானைக்கொக்கி.

**potheen'**, *n.* அயர்லாந்துநாட்டு வழக்கில் கள்ளவடிப்புச் சாராயம்.

**poth'er**, *n.* திணறல் தூசி; புகைப்படலம்; பேரிரைச்சல்; குழப்பம்; *v.* மனக்குழப்பம் அடை, அலைக்கழிக்கப்படு, தொந்தரைப்படுத்திக்கொள்.

**pot'-herb**, *n.* தோட்டக் காய்கறிவகை.

**pot'-hole**, *n.* (மண்.) பாறைகளில் இயல்பாக உண்டாகும் ஆழமான நீள்துளை; போக்குவரவுச் சாலைகளில் ஏற்படும் பள்ளம்.

**pot'-hook**, *n.* உறி, பானைக்கொக்கி.

**pot'-house**, *n.* மதுக்கடை.

**pot'-hunter**, *n.* தினல் வேட்டுவர்; பரிசில் வேட்டுவர்.

**potiche'**, *n.* மேசைப் பூச்சட்டி.

**potichoman'ia**, *n.* மேசைப் பூச்சட்டிச் சித்திரப்பித்து.

**po'tion**, *n.* ஒருவேளை மருந்துநீர்; ஒருவேளை நஞ்சு.

***pot'lach, pot'lache, pot'latch***, *n.* வட அமெரிக்க இந்தியரின் மரபுக்குழு விருந்து.

**pot'man**, *n.* மதுக்கடைப் பணியாள்.

**pot'-metal**, *n.* செம்பீயக்கலப்பு; இரும்பு உடைசல்கள்; உருகிய நிலையில் நிறங்கள் ஊட்டப்பெறும் வண்ணக் கண்ணாடிக்கலம்.

***pot-pourri***, (பிர.) *n.* உலர்மணக்குவைப் புட்டி, நறுமணத்திற்காகச் சாடிகளில் சேர்த்துவைக்கப்படும் உலர்ந்த மலரிதழ்களும் நறுமணப் பொருள்களும் அடங்கிய கலவை; இலக்கியக் கதம்பம்; கதம்ப இசை உருப்படி.

**pot-roast**, *n.* இறைச்சிப் புழுக்கல், *v.* புழுக்கு.

**pot'sherd**, *n.* மட்கல உடைசல்.

**pot'-shot**, *n.* எளிய இலக்குச் சூடு; திடீரெனச் சுடுதல்.

**pot'-still**, *n.* ஆவி வெப்பூட்டாது நேரே வெப்பூட்டிச் சாராயம் வடிக்கும் வாலை.

**pot'stone**, *n.* சிறுமணி உருவுடைய சவுக்காரம் போன்ற கல்.

**pott**, *n.* எழுதுதாள் அளவு (15½" × 12½").

**pot'tage**, *n.* ஆணம், சாறு; வயிறு கழுவுங்கஞ்சி; (தொ.) mess of pottage, விழுப்பொருளுக்குப் பதிலாகப் பெறுஞ் சிறுநன்மை.

**pott'er**[1], *n.* குயவர், வேட்கோவர்; (தொ.) potter's asthma, potter's bronchitis, மட்கலத் தொழிலர்க்குத் தூசியால் ஏற்படும் மார்ச்சளி நோய்; potter's lathe, கலம் வனையும் களிமண்ணுக்கு உருக்கொடுக்குங் கருவி; potter's wheel, வேட்கோத் திகிரி.

**pott'er**[2], *v.* வலுக்குறைவாக வினையாற்று, அறிவுச்சோர்வுடன் வேலை செய்; தொடர்பின்றி இடையிடைவிட்டு வேலை செய்; வீண்காலம் போக்கு, மெல்ல நகர்ந்து செல்; சுற்றித் திரி, அலை; சிறுபிள்ளைத்தனமாக நட.

**pott'ery**, *n.* மட்பாண்டத்தொழில்; வேட்கோவர் கலை; மட்பாண்டஞ் செய்யும் இடம்; சட்டிபானை, மட்கலத் தொகுதி.

**pot'tle**, *n.* அரைக்காலன் நீர்ம அளவை; அரைக்காலன் நீர்மங் கொள்ளும் கலம்; பழக்கூடை.

**pott'o**, *n.* மேற்கு ஆப்பிரிக்க மனிதக்குரங்கு.

**potty**, *a.* வெறிகொண்ட, பற்றுவெறியுடைய; சாதாரணமான; (தொ.) potty questions, எளிதில் விடையளிக்கவல்ல தேர்வு வினுக்கள்.

**pot'valiant**, *a.* குடியினுல் வீரவெறிகொண்ட.

**pot'waller**, *n.* தனிக்குடித்தன வாக்காளர்.

**pot'-walloper**, *n.* தனிக்குடித்தன வாக்காளர்; (கப்.) சமையல்வேலைத் துணைவன்.

**pouch**, *n.* சிறுபை; சட்டை வெளிப்பை; போர்வீரர் துப்பாக்கி மருந்துப்பை; கங்காரு போன்ற விலங்குகளின் மதலைப்பை; குரங்கின் கன்னப்பை; (தாவ.) பை போன்ற குழிவு; விரையுறை; *v.* பையிற் போடு; உடைமையாக்கிக் கொள்; திருட்டுத்தனமாக எடுத்துக்கொள்; உடையின் பாகத்தைப் பைபோலத் தொங்கவிடு; பைபோல் தொங்கு.

**pouched**, *a.* பையினையுடைய; பைபோன்ற உறுப்புடைய; (தொ.) pouched mouse, மதலைப்பையினையுடைய சிறு விலங்குவகை; வெளிப்புறமாகத் திறக்கும் கன்னப்பைகளையுடைய அமெரிக்க கொறிவிலங்குவகை; pouched rat, வெளிப்புறமாகத் திறக்கும் கன்னப்பைகளையுடைய வளைதோண்டும் அமெரிக்க கொறிவிலங்கு வகை.

**pouch'y**, *a.* உப்பிப் புடைத்துள்ள; தளர்ந்துத் தொங்குகிற.

**poudrette'**, *n.* மலக்கழிவு-கட்டைக்கரி முதலியவற்றுலான எருவகை.

***pouf, pouffe***, (பிர.) *n.* மகளிர் புடைப்புக் கூந்தல் ஒப்பனை வகை; தாழ்விருக்கைப் பெருந் திண்டு; மெத்தை.

**poulp, poulpe**, *n.* பற்றி உறிஞ்சும் எட்டுக் கைகளையுடைய கடல்வாழ் உயிரின வகை.

**poult**, *n.* வீட்டுக்கோழி-வான்கோழி முதலியவற்றின் குஞ்சு.

***poult-de-soie***, (பிர.) *n.* முறுக்கு வண்ணப்பட்டு வகை.

**poul'terer**, *n.* பறவை வாணிகர்.

**poul'tice**, *n.* பதவாடை, பற்று, கட்டி-புண் முதலியவற்றிற்கு மெல்லிய துணியின்மேல் வைத்துக்கட்டும் சூடான மாக்களி; *v.* கட்டி முதலியவைகளுக்குப் பதவாடை வைத்துக் கட்டு.

**poul'try**, *n.* வளர்ப்புப் பறவைகள்.

**pounce** [1], *n.* பறவை உள்நகம், உகிர்; இருஞ்சுதல், பறவையறைதல், திடுமெனப் பாய்ந்து இறங்குதல்; *v.* இருஞ்சு, திடுமெனப் பாய்ந்து பற்று; திடீரெனத்தாக்கு; ஆர்வத்துடன் கைப்பற்று.

**pounce** [2], *n.* மை உறிஞ்சுதூள்; புரைவழிச் சுண்ணம்; வண்ணப்பொடி; *v.* சுண்ணத்தால் செவ்விதாக்கு.

**pound** [1], *n.* வீசங்கல்லெடைகள் (ounce) பதினாறு கொண்ட நிறையளவு; இருபது ஷில்லிங்குகள் கொண்ட பிரிட்டிஷ் பணம்; இருபது ஷில்லிங்குகள் மதிப்புடைய தங்க நாணயம்; *v.* நாணயமடித்தல் வகையில் ஒரு பவுண்டு நிறை இருக்க வேண்டிய எண்ணிக்கையுள்ள நாணயங்களை எடைபோட்டு அவற்றின் நிறையைச் சரிபார்; (தொ.) penny wise and pound foolish, பூசணிக்காய் போவதறியாமல் கடுகு போவதற்குக் காதறுத்துக் கொள்ளுதல்; pound note, ஒரு பவுண்டு மதிப்புள்ள பொருளக நாணயத்தாள்; pound Scots, (வர.) 1 ஷில்லிங்கு 8 பென்ஸ்; pound sterling, இருபது ஷில்லிங்கு கொண்ட பணம்.

**pound** [2], *n.* பட்டி, ஆளற்ற கால்நடைகளையும் பொருள்களையும் மீட்கிறவரையில் அடைத்து வைப்பதற்கான இடம்; விலங்குகளுக்கான தொழுவம்; சிறை; வேட்டைவகையில் இடர்ப்பாடான நிலை; *v.* கால்நடை முதலியவற்றைப் பட்டியிலடை; (தொ.) pound the field, வேட்டையில் வேலி வகையில் கடக்கக்கூடாததாயிரு; குதிரைமீது செல்பவர் வகையில் பிறரால் தாண்டமுடியாத வேலியைத் தாண்டு.

**pound** [3], *v.* அரை, பொடியாக்கு, தூளாக்கு; இடி, துவை, குறு; மோது; தூள்தூளாக அடித்து நொறுக்கு; செம்மையாக அடி; துப்பாக்கி முதலியவற்றுல் பலமாகச் சுடு; நட; ஓடு; சவாரிசெய்; பளு உணர்ச்சியுடன் நடந்துசெல்.

**poun'dage**, *n.* ஒரு பவுன் பணத்துக்கு இவ்வளவென்னுந் தரகு அல்லது கட்டணம்; ஒரு தொழிலிலிருந்து கிடைக்கும் மொத்த வருமானத்தில் கூலியாகக் கொடுக்கப்படும் நூற்றுவிழுக்காடு, ஒரு பவுண்டு எடைக்கு இவ்வளவென்று செலுத்தப்படுந் தொகை; அஞ்சற்காசோலை முதலியவை மீதான கட்டணம்; தொகை; அஞ்சற்காசோலை முதலியவை மீதான கட்டணம்; (தொ.) tonnage and poundage, (வர.) இறக்குமதி அல்லது ஏற்றுமதி செய்யப்பட்ட மிடாத்தேறல்மீதும் பவுன் மதிப்புள்ள சரக்குமீதும் முதலாவது சார்லஸினுல் (Charles I) மாமன்றத்தின் உடன்பாடின்றி முறைமீறி விதிக்கப்பட்ட வரி.

**pound'-day**, *n.* வருபவர்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் ஒரு பவுன் நாணயம் அல்லது ஒரு பவுண்டு எடையுள்ள பண்டங்களை அறவுதவியாகக் கோரப்படும் நாள்.

**poun'der** [1], *n.* அரைத்துப் பொடியாக்குங் கருவி; உலக்கை, குழவி; உரல், அம்மி.

**poun'der** [2], *n.* பவுண்டு எடையுள்ள பொருள்; பவுண்டு எடைக் குண்டுகளையுடைய துப்பாக்கி; பவுன் பணம் மதிப்புள்ள பொருள்; பவுன் பணம் வைத்திருப்பவர்.

**pound'-lock**, *n.* இரண்டு கதவுகளுள்ள நீர்த்தேக்க அடைப்புப் பூட்டு.

**pour**, *n.* பெரும்பெயல், சோனைமாரி; வார்ப்படத் தொழில் வகையில் ஒருதடவை வார்க்கப்பட்ட உருக்கிய உலோகம் முதலியவற்றின் அளவு; *v.* ஊற்று, கொட்டு; பொழி, சொரி; சிந்து; ஏராளமாக வெளிப்படுத்து; அடுத்தடுத்து வெளிப்படுத்து; பாய், பெருகு; மழைவகையில் சோனுமாரியாகப் பெய்; ஏராளமாக வந்தடை; ஏராளமாக வெளியேறி வா; (தொ.) it never rains but it pours, கேடுகள் பலவாகவே வருகின்றன; pour cold water on, ஊக்கங்கெடு, ஆர்வத்துக்குத் தடை போடு; pour oil upon troubled waters, நயம்பட உரைத்துக் கலகந் தணிவி.

***pourboire***, (பிர.) *n.* காபிச்செலவு, அன்பளிப்பு.

***pourparlers***, (பிர.) *n. pl.* பேச்சு வார்த்தைக்கு முன்னீடான கலந்தாய்வு, பூர்வாங்கப் பேச்சுக்கள்.

**pour'point**, *n.* (வர.) அடுக்கு மெத்தை, சேர்க்கைப்பள்ளி.

**poussette'**, *n.* ஈரிருவர் கைகோத்தாடல்; *v.* இணையாகக் கைகோத்து ஆடு.

***pou sto***, (கிரே.) *n.* நிற்குமிடம், செயலின் அடிப்படை.

**pout** [1], *n.* மீன் வகை.

**pout** [2], *n.* உதட்டுப் பிதுக்கம்; *v.* உதடுகளைப் பிதுக்கு, உதடுகள் வகையில் வெறுப்புக்குறியாகப் பிதுக்கமுறு.

**pout'er**, *n.* வெறுப்பினுல் உதட்டைப் பிதுக்குபவர்; புடைத்த மார்புடைப் புறுவகை.

**pov'erty**, *n.* வறுமை, ஏழ்மை, நல்குரவு, இன்மை, பஞ்சம், பற்றுக்குறை, குறைபாடு; இனப்பொதுப்பண்பு குறைபாட்டுநிலை; இழிதகைமை, சிறுமை, அற்பத்தனம்.

**pov'erty-strick'en**, *a.* நிரப்பிடும்பையுடைய; மொழிவகையில் சொல்வளங் குறைந்த.

**powd'er**, *n.* பொடி, தூள்; மருந்துப்பொடி; சூரணம்; நீற்று மருந்து, பற்பம்; நறுமணச் சுண்ணம்; வெடிமருந்து; விளையாட்டுகள் வகையில் அடியின் வீச்சாற்றல்; *v.* பொடி தூவு, தூள் முதலியவற்றுற் போர்த்து; நறுமணச் சுண்ணந் தூவு; புள்ளிகளால் மேற்புறத்தை ஒப்பனைசெய்; பொடியாக்கு; (தொ.) food for powder, படைவீரர்கள்; not worth powder and shot, முயற்சிக்கு ஒவ்வாத, சிரமத்திற்கு ஏற்ற பயன்தராத; powder blue, சலவைத் தொழிலிற் பயன்படுத்தப்படும் நீலக் கண்ணுடித்தூள்; நீலக்கண்ணுடித் தூளின் அடர்நீலநிறம்; அடர்நீலநிறமான; smell of powder, போர் அனுபவம்.

**powd'er-down**, *n.* பறவையிறகின் தூவி.

**powd'er-flask, powd'er-horn**, *n.* வெடிமருந்துப் புட்டில்.

**powd'er-magazine**, *n.* வெடிமருந்துக் கிடங்கு.

**powd'er-mill**, *n.* வெடிமருந்தாலை,

**powd'er-monkey**, *n.* (வர.) போர்க்கப்பலில் பீரங்கிகளுக்கு வெடிமருந்து எடுத்துச் செல்லுஞ் சிறுவன்.

**powd'er-puff**, *n.* சுண்ணப் பூம்பந்து.

**powd'er-room**, *n.* வெடிமருந்துக்கிடங்கு ; மகளிர் ஒதுக்கிடம்.

**powd'ery**, *a.* சுண்ணஞ் சார்ந்த ; தூள் போன்ற, பொடி போர்த்த, தூசி படிந்த ; தூளாகிற.

**power**, *n.* ஆற்றல் ; விசையாற்றல் ; வேலைத்திறம் ; வேலைத்திற ஆற்றற்கூறு ; இயக்குந்திறம் ; இயக்குவிசை ; இயந்திர ஆற்றல் ; இயந்திர ஆற்றல் கருவி ; உருப்பெருக்காடி-தொலை நோக்காடி ஆகியவற்றின் இயலுருப்பெருக்க விசையளவு ; கண்ணுடிச்சில்லின் குவிமைய அமைவு ; ஆணையுரிமை ; மேலாண்மையுரிமை ; ஆட்சியுரிமை ; வலிமை, மிடல் ; ஆட்சித்திறல் ; ஆட்சி ; வல்லரசு ; அடக்குந்திறம் ; கட்டுப்படுத்தி ஆளுந்திறம் ; அதிகாரத் தலைமையிடம் ; ஊக்கம் ; உடல்வலிமை, சக்தி ; செய்திறம் ; செயலுரிமை ; செயலிசைவுரிமை ; இயல்திறம் ; இயல்திற எல்லை ; சட்டவுரிமை; உரிமைத் தகுதி; உரிமைத்தாள், உரிமைப்பத்திரம்; ஆன்மிக வலிமை; உளத்திறக்கூறு; ஆன்மிக ஆற்றற்கூறு; செல்வாக்கு ; பெருந்தொகை வலிமை ; பேரெண் வலிமை ; எழுத்தின் ஓசைத்திறம் ; பயன்விளைவுத்திறம் ; வலிமையாளர் ; இயக்குந்திறன் உடையவர் ; விவிலிய வழக்கில் அதிகாரத்துக்குட்பட்டதன் அடையாளம்; தேவ தூதர்களில் ஆளும் படித்தரத்துக்குரிய தெய்வதங்கள் ; (கண.) எண்ணின் விசைப்பெருக்கம்; (வடி.) மையவிசைமானம், இரு வட்டமைய இடைத்தொலைப் பெருக்கத்திற்கும் அவற்றின் ஆரப் பெருக்கங்களுக்கும் இடைப்பட்ட வேற்றுமை அளவு ; *a.* ஆற்றல் சார்ந்த ; இயந்திர ஆற்றலால் இயக்கப்படுகிற ; உடலாற்றலால் இயக்கப்படாத; *v.* இயந்திர ஆற்றலிணைவி; (தொ.) in one's power, ஒருவர் தயவில்; ஏலுமளவு; power of attorney, பகர ஆள் செயலுரிமைப் பத்திரம் ; power politics, தெம்பு அரசியல்; the mechanical powers, நெம்புகோல்-சக்கரம்-அச்சு-கப்பி-திருகு முதலிய கருவியாற்றல்கள் ; the powers that be, ஆட்சியிலிருப்போர்.

**pow'er-dive**, *n.* நேர்குத்துப் பாய்வு, விமான வகையில் இயந்திரங்களை நிறுத்தா நிலையிலேயே செங்குத்தாக இறங்குவது; *v.* நேர்குத்தாகப்பாய்; இயந்திரங்கள் அடக்கப்பெறுமலேயே செங்குத்தாக இறங்கு.

**pow'erful**, *a.* ஆற்றல்மிக்க ; பெருஞ் செல்வாக்குடைய ; திட்பம் வாய்ந்த, செறிவு மிக்க ; பயன் விளைவுத்திறம் மிக்க.

**pow'er-lathe**, *n.* இயந்திரக்கடைசலி.

**pow'erless**, *a.* வலுவற்ற ; ஆற்றுத, சிறிதும் உதவிசெய்ய முடியாத.

**pow'er-loom**, *n.* இயந்திரத் தறி.

**pow'er-mill**, *n.* இயந்திர ஆலை.

**pow'er-station**, *n.* மின் உற்பத்தி நிலையம்.

**pow'wow** [1], *n.* வட அமெரிக்க-இந்தியரிடையே மருத்துவர் ; செவ்விந்தியரிடையே சூனியக்காரர் ; செவ்விந்தியரின் மந்திர வினைமுறைக் குழு.

**powwow'** [2], *v.* மருத்துவத் தொழில்புரி ; மந்திரத் தொழில்புரி ; மந்திர வினைமுறைக்குழு நடத்து ; மந்திர வினைமுறைக் குழுவில் வாதிடு ; மருத்துவஞ் செய், மந்திரம் போட்டுக் குணப்படுத்து.

**pox** [1], *n.* அம்மை, பெரியம்மை; பயற்றம்மை; கோ வைசூரி; (பே-வ.) கிரந்தி நோய்.

**pox** [2], *n.* pock என்பதன் பன்மை.

***pozzola'na, pozzuola'na***, (இத்.) *n.* சீமைக்காரை வகையில் பெரிதும் பயன்படும் எரிமலைச் சாம்பல்.

***praam***, *n.* = *pram* [1]

**prac'ticable**, *a.* செயல்முறைக்குகந்த, செய்யக்கூடிய, செய்துமுடிக்கத்தக்க ; பாதை கடவு வகைகளில் பயன்படுத்தக்கூடிய, நடைமுறைப்படுத்தக்கூடிய ; நாடக அரங்கின் பலகணிகள் வகையில் மெய்யாகப் பயன்படுபவையான.

**prac'tical**, *a.* செயல்முறை சார்ந்த ; நடைமுறைக்குரிய ; அனுபவத்தில் தெரிகிற ; காரிய சாத்தியமான ; காரியத்துக்குப் பயன்படுகிற ; தொழிலில் ஈடுபட்டிருக்கிற, தொழில் புரிகிற ; மனக்கோட்டையான தன்மையின்றி செயலாற்றும் பாங்குள்ள ; செயல்துறையில் உண்மையான ; (தொ.) practical joke, செயற்குறும்பு, நையாண்டிக் குறும்பு ; practical politics, செயல்முறைக்கு ஒத்த திட்டங்கள்.

**prac'tically**, *adv.* நடைமுறையில் ; உண்மையாக ; கிட்டத்தட்ட ; பெரும்பாலும்.

**prac'tice**, *n.* பழக்கம், வழக்கமான செயல் ; சட்ட நடைமுறை ஒழுங்கு ; வாடிக்கை ; நீடித்த பயிற்சி ; பயிற்சித் தொடர்பு ; வழக்கறிஞர் மருத்துவர் ஆகியோரின் தொழில் முறைப்பணி; கடைக்கணக்குமுறை, விலை விகிதம் சரக்களவு ஆகியவற்றில் ஒன்றிலிருந்து ஒன்று வகை மாற்றிக் கண்டு பிடிக்கும் முறை; (தொ.) in practice, நடைமுறையிலிருக்கிற; out of practice, நடைமுறையிலிராத, பழக்கம் விட்டுப்போன; put in practice, put into practice, திட்டம்-ஏற்பாடு முதலியவற்றை நிறைவேற்று.

**practi'cian**, *n.* தொழில்நடத்துபவர் ; செயல்முறைக்கு ஒத்தவர்.

**prac'tise**, *v.* செயற்படுத்து; வழக்கமாகச் செய்துகொண்டிரு; தொழில் நடத்து, தொழில்புரி ; கலை-கருவி முதலியவற்றில் பயிற்சி மேற்கொள் ; பழக்கு ; பழகு ; (தொ.) practise on, practise upon, ஏமாற்று, ஒருவர் ஏமாளியாயிருப்பதைப் பயன்படுத்திக்கொள்.

**prac'tised**, *a.* பயிற்சி மூலமாகத் திறமைபெற்றுள்ள.

**practi'tioner**, *n.* வழக்குரைஞர் ; மருத்துவர் ; (தொ.) general practitioner, மருந்து அறுவை ஆகிய இரண்டு துறைகளிலும் தொழில் நடத்துபவர்.

**praeco'cial**, *a.* புனிற்றுூட்டமுடைய, பறவை வகையில் முட்டையிலிருந்து வெளிவந்ததும் இரைதேடிக் கொள்ளவல்ல குஞ்சுகளையுடைய.

**praemunir'e**, (ல.) *n.* (சட்.) கட்டளையழைப்பு, இங்கிலாந்தில் போப்பாண்டவரின் அதிகாரத்தை நிலைநிறுத்துவதாகக் குற்றம் சாட்டப்பட்டவரை அழைக்குமாறு மாவட்ட நீதிபதிக்கு இடப்படும் கட்டளை.

**praepos'tor**, *n.* மாணவர் தலைவர், சட்டாம்பிள்ளை.

**praet'or**, *n.* (வர.) தண்டலர், ரோமரிடையே ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சித்தலைமைப் பொறுப்பிற் பங்கு கொண்டிருந்த குற்றவியல் நடுவர்.

**praetor'ian**, *n.* ரோமர் குற்றவியல் நடுவர் ; படித்தரமுடையவர் ; ரோமப் பேரரசரின் மெய்க்காவல் படைவீரர் ; *a.* ரோமர் குற்றவியல் நடுவர் சார்ந்த ; ரோமப் பேரரசரின் மெய்க்காவற்படை சார்ந்த.

**pragmat'ic**, *a.* பிறர் செய்தியில் தலையிடுகிற; பிடிவாதமான, கொண்டதுவிடாத ; செயல்துறைப் பயன் நாட்டமுடைய ; வரலாற்று நிகழ்ச்சிகள் காட்டுந் தத்துவங்களையொட்டி வரலாற்றைக் கொண்டு செல்லுகிற ; நாட்டரசின் வினைகள் பற்றிய; (தொ.) pragmatic sanction, ஆணைச்சட்டம், அடிப்படைச் சட்டமாகப் பிறப்பிக்கப்படும் பேரரசர் தனிக் கட்டளை.

**pragmat'ical**, *a.* பிறர் செய்தியில் தலையிடுகிற ; பிடிவாதமான, கொண்டது விடாத ; செயல்துறைப் பயன்நாட்டமுடைய.

**prag'matism**, *n.* பிறர் செயலில் உரிமையின்றித் தலையிடுதல்; கல்விச் செருக்கு; செயல்துறைப் பயன்நாட்டமுடைமை; காரியவாதியாயிருக்குந்தன்மை ; (மெய்.) பயனீட்டுவாதம், மனித நலனுக்குப் பயன்படுகிற அளவிற்கு ஒன்றினை மதிப்பிட வேண்டுமென்னுங் கோட்பாடு.

**prag'matist**, *n.* பிறர் செயலில் தலையிடுபவர் ; கொண்டது விடாதவர் ; கல்விச் செருக்குடையவர் ; தன்முனைப்புள்ளவர்; பயனீட்டுக் கோட்பாட்டாளர், பயனீட்டுவாதத்தில் நம்பிக்கையுடையவர்.

**prag'matize**, *v.* மெய்யாகக் குறித்துக்காட்டு ; பகுத்தறிவுக்கு ஒத்ததாக்கு ; நேர்மைக்கிணங்க வை.

**prair'ie**, *n.* மரமற்ற பரந்த வெளி ; அலை போன்ற பரப்புடைய புல்வெளி ; (தொ.) prairie oyster, முழுமையாக விழுங்கப்படும் பச்சைமுட்டை.

**prai'rie-chick'en**, *n.* வட அமெரிக்க காட்டுக்கோழி வகை.

**prai'rie-dog**, *n.* நாய்போல் குரைக்கும் வட அமெரிக்க கொறி விலங்கு வகை.

**prai'rie-hen**, *n.*=prairie-chicken.

**praise**, *n.* புகழ்ச்சி ; பாராட்டு ; புகழ்தல் ; *v.* புகழ் ; மெச்சு, போற்று ; பராவு, துதி.

**praise'worthy**, *a.* புகழ்தற்குரிய, பாராட்டத்தக்க.

**Pra'krit**, (ச.) *n.* பிராகிருதம், பாகதம், சம்ஸ்கிருதத் திரிபாயுள்ள அல்லது தொடர்பாயுள்ள பேச்சுவழக்கு மொழிகளுள் ஒன்று.

**pra'line**, *n.* வாதுமை இனிப்புப்பிட்டு.

*pram*[1], (டச்.) *n.* சரக்கேற்றும் தட்டை அடிப்பாகமுடைய படகு வகை ; பீரங்கிகள் ஏற்றப்பட்ட தட்டைப்படகு வகை; ஸ்காண்டினேவிய (Scandinavian) கப்பலின் படகு.

**pram**[2], *n.* (பே-வ.) தள்ளுவண்டி, கைவண்டி.

**prance**, *n.* பின்கால்மீது துள்ளிக்குதிப்பு ; தாவு நடை, எழுச்சிமிக்க நடை; துள்ளலியக்கம்; *v.* குதிரையைப் பின்னங்கால்களை ஊன்றித் துள்ளச்செய்; துள்ளி நட ; துள்ளி நடக்குங் குதிரைமீதிவர்ந்து செல்; இறுமாப்பு நடைபோடு ; பகட்டுநடை நட ; வீறுப்புக்காட்டு.

**pran'dial**, *a.* சாப்பாட்டிற்குரிய.

**prank**[1], *n.* குறும்பு விளையாட்டு ; சிறு குறும்பு ; நையாண்டிக் குறும்பு ; இயந்திரங்கள் வகையில் ஒழுங்கற்ற இயக்கம்.

**prank**[2], *v.* ஒப்பனைசெய், அலங்கரித்துக்கொள் ; மலர்கள் முதலியவற்றால் அணிசெய்.

**prase**, *n.* பச்சைப் படிகக்கல் வகை.

**parte**, *n.* பிதற்றுரை, வீண்பேச்சு, பயனில்சொல்; *v.* பிதற்று; உளறு.

**prat'ie, prat'y**, *n.* ஆங்கிலோ-ஐரிஷ் வழக்கில் உருளைக் கிழங்கு.

**prat'incole**, *n.* தூக்கணங் குருவியின் தோற்றமும் பழக்க வழக்கங்களும் உடைய பறவை வகை.

*pratique*, (பிர.) *n.* தொற்று நீக்கச்சீட்டு, தொற்றுநோய் ஒதுக்கீட்டுக்குப்பின் கப்பலுக்கு வழங்கப்படும் துறைமுகத் தொடர்புரிமைச்சீட்டு.

**prat'tle**, *n.* குதலை ; *v.* குதலை பேசு.

**pratt'ler**, *n.* குதலைப்பேச்சினர் ; குழந்தை.

**prav'ity**, *n.* உணவுவகையில் கெட்டுப்போன நிலை ; கொடுமை.

**prawn**, *n.* இருல் மீன் ; *v.* இருல்மீன் பிடி.

**prax'is**, *n.* எடுத்துக்காட்டு ; வழக்கம் ; (இலக்.) பயிற்சிக்கான எடுத்துக்காட்டு வாய்பாடுகள்.

**pray**, *v.* வழிபடு; வேண்டுதல் செய்; விண்ணப்பித்துக்கொள்; வேண்டு ; இசைவு கோரு ; மன்றாடு ; குறையிர, கெஞ்சிக் கேள்.

**pray'er**[1], *n.* இறைவணக்கம் ; வழிபாட்டுமுறை ; இறையருள் வேண்டுதல் ; வழிபாட்டு வாசகம் ; இறைவணக்க வாய்ப்பாடு ; வேண்டுகோள் ; முறையீடு, விண்ணப்பம் ; வேண்டப்படும் பொருள் ; (தொ.) Lord's prayer, இயேசுநாதர் தமது சீடர்களுக்குக் கற்றுக்கொடுத்த வழிபாட்டு முறை.

**pray'er**[2], *n.* இறைவணக்கஞ் செய்பவர் ; வேண்டிக்கொள்பவர்.

**pray'er-book**, *n.* வழிபாட்டு ஏடு.

**prayer'ful**, *a.* இறைவணக்கஞ் செய்யும் பாங்குள்ள; கடவுள் வழிபாட்டொழுக்கமுடைய.

**prayer'-meet'ing**, *n.* தொழுகைக் கூட்டம்.

**prayer'-wheel**, *n.* தருமசக்கரம், திபேத்திய பௌத்தர் வழிபாட்டு வாசகம் பொறித்த சுழல்நீள் உருளை.

**preach**, *n.* அறவுரை, திருக்கோயில் மேடைப்பேச்சு; (பே-வ.) வலிந்த நீதிபோதனை ; *v.* சமயச் சொற்பொழிவாற்று ; அறவுரை கூறு ; வலியப் போய் நீதிபோதனை செய் ; சொற்பொழிவுகள் வாயிலாகச் சமய நூல்களைப் பலரறியக்கூறு ; சொற்பொழிவுகள் வாயிலாகக் கோட்பாடுகள் முதலியவற்றைக் கேட்போர் மனத்திற் பதியவை ; (தொ.) preach down, குறைவுபடுத்து ; preach up, பாராட்டிப் பேசு.

**preach'er**, *n.* சமய போதகர், சமயச் சொற்பொழிவாளர் ; சமய குரு ; ஆதரவாளர் ; மன்றாடி.

**preach'ify**, *v.* சலிக்கும்படி போதி.

**preach'ment**, *n.* வாய்வீச்சுச் சமயச் சொற்பொழிவு ; சலிப்புப்பேச்சு.

**preach'y**, *a.* (பே-வ.) சலிப்பு அறவுரையான.

**pre-acquaint'**, *v.* முன்னதாகத் தெரிவி.

**pre-adam'ic**, *a.* ஆதாம் காலத்திற்குமுன் இருந்ததாகக் கருதப்படுகிற.

**pre-ad'amite**, *n.* ஆதாம் காலத்திற்குமுன் இருந்ததாகக் கருதப்படும் இனத்தவர் ; ஆதாமுக்குமுன் இருந்ததாகக் கருதப்படும் இன மரபினர் ; ஆதாமுக்குமுன் மனித இனம் இருந்ததாக நம்புபவர் ; *a.* ஆதாம் காலத்திற்குமுன் இருந்ததாகக் கருதப்படுகிற.

**pre-admon'ish**, *v.* முன்னெச்சரிக்கை செய்.

**pre-admoni'tion**, *n.* முன்னெச்சரிக்கை செய்தல், முற்பட்ட எச்சரிக்கை.

**pream'ble**, *n.* முகப்புரை, பீடிகை ; முற்கூற்று, பூர்வாங்க வாசகம் ; தொடக்கப்பகுதி ; *v.* முகப்புரை அமை, தோற்றுவாய் செய்.

**pre-appoint'**, *v.* முன்னதாகத் திட்டப்படுத்து.

**pre-arrange'**, *v.* முன்னேற்பாடு செய், முன்னதாக ஒழுங்கமைவு செய்.

**pre-aud'ience**, *n.* முற்கூற்றுரிமை ; வழக்குரைஞர் தம்முள் முற்படப் பேசும் உரிமை.

**preb'end**, *n.* மானியப்படி, திருச்சபை உறுப்பினருக்கு உதவித்தொகையாக அளிக்கப்படும் மானிய வருவாய்ப்பகுதி; திருச்சபை உறுப்பினர் உதவித்தொகைக்கு மூலமுதலான மானியப்பகுதி ; திருச்சபை உறுப்பினர் உதவித்தொகைக்கு மூலமுதலான வரிப்பகுதி; மானிய வருவாய்ப் பகுதியிலிருந்து உதவித்தொகை பெறும் திருச்சபைக்குழு உறுப்பினர்.

**preb'endary**, *n.* மானிய வருவாய்ப் பகுதியிலிருந்து உதவித்தொகை பெறும் திருச்சபைக்குழு உறுப்பினர்.

**preb'endary-stall**, *n.* கிறித்தவ திருக்கோயில் வருவாயில் ஊழிய மானியம் பெறுங் குருவின் தங்கிடம்.

**precar'ious**, *a.* பிறர் சார்பொட்டிய ; நிலையுறுதியற்ற ; நிலையற்ற ; முடிவுக்குரியதையே ஆதார மெய்ம்மையாகக் கொள்கிற; தற்செயல் நிகழ்வான; ஐயத்துக்கிடமான; இடர் செறிந்த.

**prec'atory**, *a.* (இலக்.) வேண்டுகோட் பொருளுடைய ; (தொ.) precatory trust, கட்டுப்படுத்தும் இயல்புடையதாக மதிக்கப்படும் வேண்டுதல் வாசகங்கள் ; precatory words, விருப்ப ஆவண வகையில் செயல் நிறைவேற்றங் கோரி வேண்டிக்கொள்ளும் வாசகப்பகுதி.

**precau'tion**, *n.* முன்யோசனை, முன் எச்சரிக்கை நடவடிக்கை.

**precau'tionary**, *a.* முன்னெச்சரிக்கையான.

precede', *v.* முந்தியதாயிரு, முன்னிகழ்வுறு; முற்படு, முன் வரிசைப்படு; முக்கியத்துவத்தில் மேம்படு; தரத்தில் விஞ்சியதாயிரு; முற்படுவி, முன்நிகழ்வி.

pre'cedence, pre'cedency, *n.* முந்துநிலை, காலத்தால் முற்பட்ட தன்மை; வரிசையில் முன்னிடம்; மேம்பாடு; மேம்பட்ட இடம்; முற்படுதகுதி; முதன்மை; முந்துரிமை; முன்னிகழ்வு; முன்னுரிமை.

pre'cedent[1], *n.* முன்னோடி மாதிரி; முன்னோடி நிகழ்ச்சி; முன்நிகழ்வுச் சாக்குபோக்கு; (சட்.) முற்சான்று, முன்மாதிரிக் கட்டளை.

preced'ent[2], *a.* முற்போந்த முன்னிகழ்வான, முந்திய உயர்படியான.

pre'cedented, *a.* முன்னோடி நிகழ்வுடைய; முன்னிகழ்வாதார முடைய, முற்சான்றுடைய.

precent', *v.* இசைக்குழுத் தலைவனாகச் செயலாற்று.

precen'tor, *n.* இசைக்குழுத் தலைவன்; (வர.) திருச்சபைக் குழுவில் தன் கடமையைப் பகர ஆளுக்கு விட்டுச்செல்லும் உரிமை படைத்திருந்த முற்கால உறுப்பினர்.

pre'cept, *n.* கட்டளை, நீதி வாசகம்; முதுமொழி; நல்லொழுக்கப் போதனை; தெய்விக ஆணை; எழுத்துமூலமான உத்தரவு, பற்றாணை; தேர்தலுக்கு ஏற்பாடு செய்து நடத்துவதற்கான எழுத்துமூலக் கட்டளை; குறிப்பிட்ட தவணை வீதப்படி பணம் திரட்டுவதற்கு அல்லது செலுத்துவதற்குரிய ஆணைக்கோரிக்கை.

precep'tor, *n.* ஆசான், குரு.

precep'tory, *n.* (வர.) புனித யாத்திரைக் காவற்பணி மேற்கொண்ட சமயத் தொண்டர் படைக்குழுவின் துணை நிலைப் பிரிவினர்; சமயத் தொண்டர்படைத் துணை நிலைப் பிரிவினர்க்குரிய மனையிடம்; சமயத்தொண்டர் படைத் துணை நிலைப் பிரிவுநிலை.

prece'ssion, *n.* முந்துகை; (வான்.) பூர்வாயணம், புவி மையத்தில் வெங்கதிர் தண்கதிர் ஈர்ப்புக்களால் ஏற்படும் அயன மைய முந்துநிகழ்வு.

pre-Chris'tian, *a.* இயேசுநாதருக்கு முற்பட்ட; கிறித்தவ சமயம மேம்படுதற்கு முந்திய.

pre'cinct, *n.* எல்லைக்கோடு; எல்லை வரையறைப்பட்ட இடம்; மதிலக வட்டாரம்; தேர்வுத்தொகுதியெல்லை; வட்டம், மாவட்டப்பகுதி.

pre'cincts, *n. pl.* சூழிடங்கள், சுற்றுப்புற இடங்கள், கோட்டை எல்லை.

pre'cious, *a.* மதிப்புமிக்க; அருமந்த, மொழி-வேலைப்பாடு முதலியவற்றில் செயற்கைச் செப்பம் வாய்ந்த; (பே-வ.) மிகைப்பட்ட; *adv.* அரிதாக, வழக்கமீறி; (தொ.) precious metal, பொன்-வெள்ளி முதலிய விலையுயர் உலோகம்; precious stone, மணிக்கல்.

pre'cipice, *n.* கொடும் பாறை, செங்குத்துப் பாறை.

precip'itance, precip'itancy, *n.* குப்புற வீழ்வு; பதற்றப் பண்பு; முன்பின் ஆராயாமை; தேராச்செயல்.

precip'itant[1], *n.* கரைசலிற் படிகம் உண்டுபண்ணும் நீர்மம்.

precip'itant[2], *a.* தலைகீழாக விழுகிற; தொப்பென்று விழுகிற; கடுவேகமாகப் பாய்கிற; திடீர் வேகமான.

precip'itate, *n.* (வேதி.) கரைசலின் மண்டிப்படிவு; (இய.) மழையும் பனியும் போன்ற ஆவியின் குளிர் உறைவுப்படிவு; *a.* தலைகீழான; கடுவேகமாக விரைகிற; ஆள் வகையில் பதற்றமான; செயல்வகையில் முன்பின் ஆராயாத; மடத் துணிச்சலான; *v.* தலைகீழாக வீசு; கடு வேகமாக எறி; மிகு விரைவுபடுத்து, அவசரப்படுத்து; விரைவில் நிகழ்வி; (வேதி.) கரைசலில் கரையா வண்டலாகப் படியச்செய்; ஆவியைக் குளிரால் உறைவி.

precipita'tion, *n.* தலைகீழ் எறிவு; குப்புறு வீழ்ச்சி; தெறிப் பாயசல்; திடீர் உணர்ச்சிநிலை; திடீர் உணர்ச்சிச்செயல்; படு விரைவு; மட விரைவுத் துணிச்சல்; படி வண்டல்; வண்டற் படிவு; வண்டல் வடிப்பு; படிவாக்கம்; படிவுப் பொருள்; திடீர் உறைவு; மழை; கல்மழை; பனி வீழ்ச்சி; பனிப்பெயல்; மழைவீழ் அளவு.

precip'itous, *a.* செங்குத்தான; சாய்வற்ற, திடீர் வீழ்வான; திடீர் ஏற்றமான.

precis, (பிர.) *n.* சுருக்கம், பொழிப்பு, குறிப்புரை; *v.* சுருக்கு, பொழிப்பாக்கு.

precise', *a.* துல்லியமான; நன்கு வரையறுக்கப்பட்ட; சரி நுட்பம் வாய்ந்த; செவ்விய, இழையும் பிசகாத, விதிமுறை வழாத.

precise'ly, *adv.* சரி நுட்பமாக; இழையும் வழுவாமல்; முற்றிலும் அதே முறையிலேயே.

preci'sian, *n.* சமயத்துறையில் மயிரிழை வழுவாது வினை முறை கடைப்பிடிப்பவர்; விதிமுறை வழாதவர்; கண்டிப்பாளர்.

preci'sion, *n.* துல்லியம்.

preclude', *v.* விலக்கு, தள்ளு; தடைசெய்; நடைமுறைக்கு ஒவ்வாததாக்கு.

preclu'sion, *n.* தவிர்ப்பு, முன் தடுத்தல்.

preco'cious, *a.* பிஞ்சில் முதிர்ந்த; சிறுமுதுக்குறைவான; பருவத்திற்கு முன்பாகவே பூக்கிற; பருவம் வருமுன் காய்க்கிற; இலை தளிர்ப்பதற்கு முன்பே பூக்கிற; செயல்வகையில் வயதுக்கு மீறிய அறிவாற்றலைக் காட்டுகிற.

precoç'ity, *n.* பருவமுன் பழுத்தல்; பிஞ்சில் முதிர்வு.

precogni'tion, *n.* முன்னறிவு, முன்னுணர்வு.

pre-compose', *v.* முன்னதாக உருவாக்கு.

preconceive', *v.* முற்புனைவாகக் கொள்; அறியுமுன்னரே கருத்துக்கொள், முன்கூட்டியுணர்.

preconcep'tion, *n.* அறியுமுன் கருத்து, முன்னுறு தப்பெண்ணம்.

pre-con'cert[1], *n.* முன்னேற்பாடு.

pre-concert'[2], *v.* முன்னதாகவே வகுத்துத் திட்டமிடு.

pre-condemn', *v.* முன்னதாகக் கண்டி.

pre-condi'tion, *n.* முன்நிபந்தனை.

prec'onize, *v.* சாற்று, அம்பலப்படுத்து; பலரறியப் பாராட்டுரை, பெயர் கூவி அழை; நியமனத்தைப் பலரறிய ஏற்றிசைவளி.

pre-con'scious, *a.* உணர்வுநிலைக்கு முற்பட்ட, உணர்ச்சி விழிப்புநிலைக்கு முற்படுநிலை சார்ந்த.

pre-con'tract[1], *n.* முந்திய ஒப்பந்தம்; முந்திய மணவுறுதி.

pre-contract'[2], *v.* முன்னதாக ஒப்பந்தம் செய்துகொள்; முன்கூட்டி மணவுறுதி செய்துகொள்.

pre-cord'ial, *a.* (உள்.) நெஞ்சுப் பைக்கு முன்னுள்ள.

pre-cos'tal, *a.* (உள்.) விலாவெலும்புகளுக்கு முன்னுள்ள.

precurs'or, *n.* முன்னோடி, முன்வரு தூதன்; முன்னறிவிப்பாளர்; முற்போந்த அறிகுறி; முந்தையர், பணித்துறையில் ஒருவருக்கு முன்னிருந்தவர்; இயேசுநாதர்க்கு முன் வாழ்ந்து அவர் வருகைக்கு முன்னறிவிப்பாளராக அமைந்த தீக்கையாளர் யோவான் (John the Baptist).

precurs'ory, *a.* முன்குறிப்புரையான, பீடிகையான, வாயில் செய்கிற, புகுமுகமான; முன்னோடித் தூதனாக அமைந்த.

preda'cious, *a.* விலங்கு வகையில் பிற விலங்குகளை உண்ணுகிற; பிற விலங்குகளை உண்ணும் விலங்குகள் பற்றிய; சூறையாடுகிற, கொள்ளையடிக்கும் பழக்கமுடைய.

predate', *v.* முன் தேதியிடு, மெய்யான தேதிக்கு முன் தேதி குறி.

pred'atory, *a.* கொள்ளைசார்ந்த, கொள்ளையடிக்கிற, சூறையாடும் பழக்கமுள்ள; விலங்குவகையில் பிற விலங்குகளைக் கொன்றுதின்னுகிற.

predecease', *n.* முற்சாவு; *v.* முன்மாள்வுறு.

pred'ecessor, *n.* முற்பதவியாளர், பதவியில் முன்னிருந்தவர்; முந்தியது, முன்னது; முற்போந்த ஒன்று; முதாதை.

**predefine'**, *v.* முன்னதாகவே வரையறு ; முன்பே அறுதி செய் ; முந்திக் குறிப்பிடு.

**predell'a**, *n.* திருக்கோயில் வழிபாட்டு மேடையின் முகட்டுத் தளம் ; வழிபாட்டு மேடைப் பின்புற மாடக்குழி ; வழிபாட்டு மேடைப்படி முகப்போவியம் ; வழிபாட்டு மேடைப்படி முகப்புச் செதுக்குரு ; வழிபாட்டுமேடைப் பின்புற மாட ஓவியம் ; வழிபாட்டு மேடைப் பின்புற மாடச் செதுக்குரு ; வழிபாட்டுமேடை அடிப்புறத் தனிக்கட்ட ஓவியம்.

**predestinar'ian**, *n.* ஊழ் முன்னறுதிப்பாட்டில் நம்பிக்கையுடையவர் ; *a.* ஊழ் முன்னறுதிப்பாட்டுக் கோட்பாடு சார்ந்த ; விதியின் முன்னறுதிப்பாடு சார்ந்த.

**predes'tinate**, *v.* முன்வகுத்தமை, கடவுள்வகையில் தனி மனிதரின் வீடுபேறு உடைமை-அன்மை ஆகியவற்றையும் பிற செயல்களையும் முன்னரே முடிவாக அறுதியிட்டு வகுத்தமைத்துவிடு, முன்னறுதியூழால் தனிமனிதரை முற்றிலுங் கட்டுப்படுத்திவிடு.

**predestina'tion**, *n.* முன்வகுத்தமைவு, ஊழ், மாறா நியதி, வீடுபேற்றிற்கும் இறவா வாழ்விற்கும் எனக் கடவுளால் சிலர் முன்னறுதி செய்யப்பட்டுள்ளனர் என்ற கருத்து ; நடப்பது யாவுமே கடவுளால் முன்னறுதி செய்யப்பட்டவை என்ற கருத்து.

**predes'tine**, *v.* முன்முடிவு செய்துவை, முன்னரே அறுதி செய் ; ஊழ் வகையில் முன்கூட்டி வகுத்தமை ; கடவுள் வகையில் ஊழ் முன்னறுதிப்பாடு செய்தமை ; வீடுபேற்றிற்கு உரியராகச் சிலரை முன்னறுதி செய்துவிடு ; நடப்பு நிகழ்ச்சிகளையும் தனிமனிதர் செயல்களையும் முற்றிலும் முன்னரே வகுத்தமைத்துவிடு.

**predetermina'tion**, *n.* முன்முடிவு.

**predeterm'ine**, *v.* முன்னரே தீர்மானி ; முன்னறுதிசெய் ; முன்னரே தீர்ப்புமுடிவு செய்துவை; முன்னரே விதி, ஊழ்வலி போன்று நியமித்துவை.

**pred'ial**, *n.* நில அடிமையாள், நிலத்துடன் பிணைக்கப்பட்ட அடிமை ; *a.* நிலஞ் சார்ந்த ; பண்ணை சார்ந்த ; நாட்டுப்புற மான ; நாட்டுப்புறஞ் சார்ந்த ; வேளாண்மைக்குரிய ; அடிமைகள் வகையில் நிலத்தோடு இணைக்கப்பட்ட.

**pred'icable**, *n.* பயனிலைமானம், ஒன்றைக்குறித்துக் கூறப் படத்தக்கது ; *a.* பயனிலைமானமாக ஒன்றைப்பற்றிக் கூறத் தக்க.

**pred'icables**, *n. pl.* அரிஸ்டாட்டில் (Aristotle) என்ற பண்டைக் கிரேக்க அறிஞரால் எழுவாய்மானத்தோடு தொடர்பு நோக்கி வகுக்கப்பட்ட இனம்-வகை-வகைதிரிபு-இனப்பண்பு-தனிப்பண்பு ஆகிய ஐந்து பயனிலைமானப் பிரிவுகள்.

**predic'ament**, *n.* இக்கட்டுநிலை ; இடர்ப்பாட்டுநிலை ; இடுக்கட்பட்ட நிலைமை ; குறித்தேற்றிக் கூறக்கூடியது ; அரிஸ்டாட்டில் என்ற பண்டைக் கிரேக்க அறிஞர் வகுத்துரைத்த பொருள்-அளவை-பண்பு-தொடர்பு-இடம்-காலம்-கிடப்புநிலை-உடைமை-செயல்-செயலின்மை என்ற பத்துப் பயனிலை மானக் கூறுகளில் ஒன்று.

**pred'icant**, *n.* தென் ஆப்பிரிக்காவில் டச்சுப் புரோடஸ்டாண்டு திருக்கோயிலின் சமயகுரு ; *a.* சமயத்துறைக் குழுவினரிடையே சமயச் சொற்பொழிவாற்றுகின்ற.

**pred'icate[1]**, *n.* (அள.) பயனிலைமானம், வாசகத்தின் பயனிலைப்பகுதி ; குறித்து ஏற்றிக் கூறப்படுவது ; (இலக்.) பயனிலை, வாசகத்தின் பயனிலைக்கூறு ; குணம்.

**pred'icate[2]**, *v.* ஒன்றைப்பற்றி உள்ள செய்தியை உறுதிப்படுத்து ; பண்பேற்றிக் கூறு, வற்புறுத்திக்கூறு ; (அள.) பயனிலைமானப்படுத்து, எழுவாய்மானத்தைப்பற்றி ஒன்றினை வலியுறவாகக் கூறு.

**predic'ative**, *a.* உறுதிப்படுத்துகிற, குறித்து வற்புறுத்துகிற ; பயனிலைக் கூறான.

**pred'icatory**, *a.* சமய உரைக்குரிய ; சமய உரையாற் குறித்துக்காட்டப்பட்ட ; சமயச் சொற்பொழிவாற்றுகிற.

**predict'**, *v.* வருவதுரை, குறிகூறு ; முன்மதிப்பிட்டுரை.

**predi'ction**, *n.* வருவதுரைத்தல்.

**predic'tor**, *n.* வருவதுரைப்போர் ; முன்கூறுவோர் ; பகை வானூர்தி வரும் உயரம்-திசை-வேகம் முதலியவற்றைத் தீர்மானிக்குங் கருவி.

**pre-digest'**, *v.* முற் செரிமானமாக்கு, உணவை உண்பதற்கு முன் எளிதாகச் செரிமானமாகக் கூடியதாகச் செய்.

**pre-dige'stion**, *n.* முற்செரிமானம், உணவை உண்பதற்கு முன் செயற்கையாக எளிதாய்ச் செரிமானமாகக் கூடியதாகச் செய்தல்.

*predikant'*, (டச்.) *n.* தென் ஆப்பிரிக்காவிலுள்ள டச்சு புரோடஸ்டாண்டு திருக்கோயிலின் சமயகுரு.

**predilec'tion**, *n.* ஒருதலைச் சார்வு, மனச்சாய்வு ; மனக் கோட்டம் ; ஒருதலை விருப்பம் ; இயற்சார்பு.

**predispose'**, *v.* முற்சார்பூட்டு; கருத்துவகையில் முற்சாய்வுப் படுத்து ; நோய்வகையில் முன்பே எளிதில் ஆளாகுநிலை யூட்டு ; செயல் வகையில் முன்னமைவூட்டு.

**predisposi'tion**, *n.* முற்சார்பு ; முற்பரிவு ; இறையருள் வகையில் முற்செவ்வி ; நோய்வகையில் இயற்சார்வுநிலை.

**predom'inate**, *v.* விஞ்சி மேம்பட்டிரு ; பெருந்தொகையாயிரு ; வலிமிக்கிரு ; முக்கிய கூறாயிரு ; சிறப்புப் பெற்றிரு ; உயர்விடங்கொள்.

**predoom'**, *v.* முன்னதாகவே கெடுபேரிடு ; முன்தீர்ப்பளி.

**pre-elect'**, *v.* முன்னதாகத் தெரிவுசெய்.

**pre-elec'tion**, *n.* முன்தெரிவு, முன்னதாக எதிர்நோக்கித் தேர்ந்தெடுத்தல் ; *a.* தேர்தலுக்கு முந்திய, தேர்தலுக்கு முன் செய்யப்பட்ட, வாக்குறுதிகள் வகையில் தேர்தலுக்கு முன் அளிக்கப்பட்ட.

**pre-em'inence**, *n.* முந்து தலைமை, படினம்.

**pre-em'inent**, *a.* ஒப்புயர்வற்ற; தனி மேம்பாடுடைய, முந்து தலைமையுடைய.

**pre-empt'**, *v.* பிறருக்கு வாய்ப்பளிக்கும் முன்னரே விலைக்கு வாங்கு ; பிறருக்குமுன் விலைக்குவாங்கும் உரிமைபெறும்படி பொதுநிலத்தைக் கையாட்சிக்குக் கொண்டுவா; முன்னதாகக் கைப்பற்றித் தனதாக்கு ; சீட்டாட்டத்தில் மற்றவர்கள் கேட்க முடியாத அளவுக்குக் கேள்வி கேள்.

**pre-emp'tion**, *n.* முற்படு விலைக்கோட் பேறு, மற்றவர்கள் வாங்குவதற்கான வாய்ப்பளிக்கப்படுவதற்கு முன் விலைக்கு வாங்குதல் ; முற்படு விலைக்கோள் உரிமை, மற்றவர்கள் வாய்ப்பளிக்கப்படுவதன்முன் விலைக்கு வாங்குதற்கான உரிமை ; முற்பட விலையிற் கொள்ளப்பட்ட நிலம் ; சட்ட மீறிய நொதுமலர் சொத்தை நிலையாக வரையறுக்கப்பட்ட விலைக்குக் கைப்பற்றும் போர்த்திறத்தார் உரிமை.

**pre-emp'tive**, *a.* முற்படு விலைக்கோள் பெறுகிற ; சீட்டாட்டத்தில் பிறர் கேள்வி கேட்கமுடியாத அளவிற் கேட்கிற.

**preen**, *v.* இறகுகளை அலகாற் கோதி அழகுசெய் ; ஆள் வகையில் கோலஞ் செய், அழகுபடுத்து.

**pre-engage'**, *v.* முன்னதாக ஒப்பந்தஞ் செய்துகொள் ; முற்பட ஈடுபாடு கொள்வி.

**pre-estab'lish**, *v.* முன்னதாக நிறுவு, முற்பட நிலைப்படுத்து.

**pre-exil'ian, pre-exil'ic**, *a.* யூதர்கள் நாடு கடத்தக் கொண்டுசெல்லப்பட்டதற்கு (கி. மு. 586-538) முந்திய.

**pre-exist'**, *v.* முன்னொரு பிறவியில் உளதாயிரு ; ஒருவருக்கு முன்வாழ்ந்திரு.

**pre-exis'tence**, *n.* பிறப்பிற்கு முற்பட உளதாம்நிலை, உடலுருவாகுவதன் முற்பட்ட வாழ்வு.

**pref'ab**, *n.* (பே. வ.) முன்னிணைவு வீடு.

**prefab'ricate**, *v.* முன்னிணைத்து அமை, கட்டிடத்திற்கு வேண்டிய கூறுகளைத் தனித்தனியாய் உருவாக்கு ; (தொ.) prefabricated house, கட்டளை வீடு, முன்னிணைவு வீடு.

**pref'ace**, *n.* முன்னுரை, பாயிரம் ; பேச்சின் முற்கூறு ; திருவுணா வழிபாட்டு வினையின் முற்பகுதி ; *v.* முன்னுரையளி ; பீடிகையிடு ; செயலுக்கான முற்றகவுரை கூறு, செயலுக்கான முன்னீடு செய் ; வழிசெய், முன்னீடாய் அமை.

**prefator'ial**, *a.* பாயிரமாய் அமைந்த.

**pref'atory**, *a.* முன்னுரையான.

**pref'ect**, *n.* பண்டை ரோமாபுரி அதிகாரி; பண்டை ரோமாபுரிப் படையாட்சியாளர்; பிரான்சில் ஆட்சி அரங்கத்தலைவர்; சட்டாம்பிள்ளை; (தொ.) prefect of police, பாரிஸ் நகரக் காவல்துறை முதல்வர்.

**prefec'torial**, *a.* ஆட்சியரங்கத் தலைவருக்குரிய.

**prefec'tural**, *a.* ஆட்சியரங்கத் தலைமைசார்ந்த.

**pref'ecture**, *n.* ஆட்சியரங்கத் தலைமைப்பதவி; ஆட்சியரங்கத்தலைவர் பணிமனை; ஆட்சியரங்கத்தலைவர் ஆற்றல் எல்லை.

**prefer'**, *v.* முன்மதி; விரும்பித்தேர்; ஆக்கமளி, பணியில் மேம்படுத்து; முன்கொணர்; கொண்டுவந்து காட்டு.

**pref'erable**, *a.* முன்தேர்விற்கு உகந்த, முன்மதிப்புக்குரிய.

**pref'erably**, *adv.* முன்மதிப்பாக; பெரிதும் விரும்பத்தக்க நிலையில்.

**pref'erence**, *n.* முன்மதிப்பீடு; விருப்பத்தேர்வு; முன்னுரிமை; விருப்பச் சார்பு; இறக்குமதி வகையில் ஒரு நாட்டிற்குக் காட்டப்படுஞ் சார்தகவு நிலை; (தொ.) preference bond, முன்னுரிமைப்பத்திரம், கொடுக்கப்படுவதில் முன்மதிப்புப்பத்திரம்; preference share, preference stock, பங்கூதிய வகையில் முன்னுரிமையுடைய பங்கு.

**preferen'tial**, *a.* முன் மதிப்புவாய்ந்த; முன்னுரிமைக்குரிய; பங்கூதியப் பேறுவகையில் முந்துரிமையுடைய; சாதகமான, சலுகையாதரவுடைய; பிரிட்டனுக்கும் சார்புநிலை நாடுகளுக்குந் துணைநலமான.

**prefer'ment**, *n.* மேற்பதவி.

**preferred'**, *a.* முன்மதிக்கப்பட்ட.

**prefig'ure**, *v.* முன்கற்பனை செய்துகொள்; முற்பட உருப்படுத்திக்காட்டு; முன் குறித்துணர்.

**pref'ix**[1], *n.* முன்னிடு, முன்னிடைச்சொல்; முன்னடை, பெயருக்குமுன் இடப்படும் அடைமொழி.

**prefix'**[2], *v.* முன்னிடு, முன்னிணைப்பாக்கு; முன்னடையாகச் சேர்.

**preform'**, *v.* முன்னரே உருவாக்கு, முன்னரே தோற்றுவி; முன்னரே கருத்துருவாக்கு.

**preforma'tion**, *n.* முன்னுருவாக்கம்; (தொ.) theory of preformation, பின்வளர்வதன்றி உறுப்பமைதி முற்றிலுங் கருவிலேயே உருவாயிற்றென்னும் கோட்பாடு.

**preform'ative**, *n.* முன்னொட்டிடைச்சொல்; *a.* முன்னொட்டிடையான; முன்கூட்டி உருவாகிற.

**pre-fron'tal**, *a.* (உள்.) நெற்றி எலும்புக்கு முன்னுள்ள; மூளையின் முற்பிரிவுக்கு முற்பகுதியிலுள்ள.

**pregla'cial**, *a.* பனி ஊழிக்கு முந்திய.

**preg'nable**, *a.* அழிக்கக்கூடிய, வடுப்படக்கூடிய; அரண் வகையில் தாக்கிக் கைக்கொள்ளத்தக்க.

**preg'nancy**, *n.* சூல், கருப்பம்.

**preg'nant**, *a.* சூலுண்ட, கருவுற்ற; தாவரவகையில் பொலிவூட்டப்பெற்ற; கருநிலை வளங்கொண்ட; வருங்காலச் சிறப்பு வாய்ந்த; கருத்து வளமிக்க; கற்பனை வளமுடைய; புதுப் புனைவு வளம் நிரம்பிய; உட்பொருள் கனிவுள்ள; தொனிப் பொருட் செறிவுடைய; குறிப்புப் பொருளுடைய; குறிப்பிடத்தக்க சிறப்புவாய்ந்த.

**prehen'sile**, *a.* பற்றிப்பிடிக்கத்தக்க, பற்றிக்கொள்ளும் ஆற்றல்வாய்ந்த.

**prehen'sion**, *n.* பற்றுகை, பிடிப்பு; மனம்பற்றுகை; அறிதல், உணர்வு.

**prehisto'ric**, *a.* தொல் பழங்காலத்திய, வரலாற்றிற்கு முந்திய.

**prehis'tory**, *n.* வரலாற்றிற்கு முற்பட்ட காலம்; வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட செய்திகள்.

**pre-hum'an**, *a.* மனிதன் உண்டான காலத்திற்கு முற்பட்ட.

**pre-igni'tion**, *n.* முன்னிடுவெடிப்பு, உள்வெப்பாலை எரிபொருளின் உரிய நேரத்துக்கு முற்பட்ட வெடிப்பு.

**prejudge'**, *v.* முன்முடிவுசெய்; தேராது தீர்ப்புக்கூறு.

**prej'udice**, *n.* முற்சாய்வு; முற்கோள்; தப்பெண்ணம்; கேடு, தீங்கு, பொல்லாங்கு; ஊறு, இழப்பு; எதிர்ச்சார்பு; *v.* தப்பெண்ணம் உண்டுபண்ணு, முன்கூட்டி மனங்கெடு; கேடு உண்டுபண்ணு, தீங்கிழை, பொல்லாங்குப்படுத்து; எதிர்ச்சார்பாக்கு; (தொ.) to the prejudice of, எதிர்ச்சார்பாக, கேடுவிளைக்கும் முறையில்; without prejudice to, பாதிக்காமல், ஏற்கெனவே உள்ள உரிமை நிலைகளுக்கு எவ்வகைக் கேடும் இல்லாமல்.

**prejudi'cial**, *a.* எதிர்ச்சார்பான, கேடு உண்டுபண்ணத்தக்க; தப்பெண்ணம் ஊட்டுகிற, முற்சாய்வு உண்டுபண்ணுகிற.

**prel'acy**, *n.* உயர் திருச்சபைப் பதவி; உயர் திருச்சபைப் பதவியாளர் பணி; உயர் திருச்சபைப் பதவியாளர் ஆட்சி வட்டம்; திருச்சபைக் குருமார் ஆட்சிமுறை.

**prel'ate**, *n.* மேம்படு சமயகுரு, உயர் திருச்சபைப் பதவியாளர்; (வர.) திருமடத்தலைவர்.

**prel'atess**, *n.* திருமடத்தலைவி, திருமட முதல்வி.

**prelat'ic, prelat'ical**, *a.* மேம்படு சமயகுருவுக்கு உரிய; உயர் திருச்சபைப் பதவிக்குரிய.

**prel'atize**, *v.* திருச்சபையினைச் சமயகுருமார் ஆட்சிக்குட்படுத்து; மேம்படு சமயகுருவுக்குரியதாக்கு.

**prel'ature**, *n.* மேம்படு சமயகுருமார் பதவி; உயர்திருச்சபைப் பதவியாளர் தொகுதி.

**prelect'**, *v.* விரிவுரையாற்று; பல்கலைக்கழகத்திற் சொற்பொழிவுசெய்.

**prelec'tor**, *n.* மேடைப் பேருரையாளர்.

**preliba'tion**, *n.* முற்சுவை.

**prelim'**, *n.* (பே-வ.) புகுமுகத்தேர்வு.

**prelim'inaries**, *n. pl.* முன்னேற்பாடுகள், முன்னொழுங்குகள்.

**prelim'inary**, *n.* புகுமுகத் தேர்வு; *a.* முன்னணியான, பூர்வாங்கமான.

**prel'ude**[1], *n.* முற்செயல்; முன்விளைவு, பீடிகை; (இசை.) முன்தரவு.

**prel'ude, prelude'**[2], *v.* புகு முகப்படுத்து, வாயில் செய், முன்குறித்துக்காட்டு; பாயிரத்துடன் தொடங்கு; (இசை.) முன்தரவு இசைப்பி.

**prelus'ive**, *a.* முன்தரவான, பீடிகையான.

**premature', prem'ature**, *n.* முற்பட்டு வெடிமருந்து வெடித்தல்; *a.* முதிராத, பருவமுறாத; உரியகாலத்திற்கு முற்பட்ட, அவசரப்பட்ட.

**prematur'ity**, *n.* முதிரா நிலை.

**pre-maxill'ary**, *a.* (உள்.) மேல்தாடைக்கு முன்னுள்ள.

**premed'itate**, *v.* முன்பே ஆழ்ந்தாராய்; முன் எண்ணு.

**premed'itated**, *a.* முன்கருதலுடன் திட்டமிடப்பட்ட, திட்டமிட்டுச்செய்யப்பட்ட.

**premedita'tion**, *n.* முன்னாராய்ச்சி, முன்சிந்தனை.

**prem'ier**, *n.* முதலமைச்சர்; *a.* முதன்மையான.

*premiere*, (பிர.) *n.* நாடக முதலாட்டம்; திரைப்பட முதல் வெளியீடு; *v.* நாடக முதலாட்டங்காட்டு; திரைப்பட முதல் வெளியீடு செய்.

**pre-millenar'ian**, *n.* திருமுன்னுயிரத்தார், திருவாயிரத்திற்கு முன்னதாகவே இயேசுநாதரின் இரண்டாவது திருவருகை நேருமென்னும் நம்பிக்கையுள்ளவர்; *a.* திருவாயிரத்திற்கு முன்னதாகவே இயேசுநாதரின் இரண்டாவது திருவருகை நேருமென்னும் நம்பிக்கைக்குரிய.

**pre-millenn'ial**, *a.* திருவாயிரத்திற்கு முற்பட்ட.

**pre-millenn'ialism**, *n.* திருமுன்னுயிரக்கொள்கை, திருவாயிரத்திற்கு முன்னதாகவே இயேசுநாதரின் இரண்டாவது திருவருகை நேருமென்னும் நம்பிக்கை.

**prem'ise**[1], *n.* (அள.) தரவு வாசகம்; மெய்க்கோள், மெய்யாகக்கொள்ளப்பட்ட வாதமூலக் கூற்று; முகப்புரை, முற்கூற்று, பத்திரத்தின் முதனிலைவாசகம்.

**premise'**[2], *v.* முகப்புரையாக எழுது; முன்னுரையாகக் கூறு.

**prem'ises**, *n. pl.* (சட்.) முன்கூறப்பட்டவை; முன்கூறப்பட்ட நிலமனையிடங்கள்; (சட்.) வரைப்பிடம், சட்டச் செயற்பாட்டுக்கு உட்படும் இடப்பரப்பெல்லை; வளவு.

**prem'iss**, *n.*=premise[1].

**prem'ium**, *n.* பரிசில், ஊக்கப்பரிசு; காப்பீட்டுக் கட்டணம்; பரிதூதியம், நல்லெண்ண மிகை ஊதியம்; வட்டிமீது மிகைக் கட்டணம்; தொழிற்பயிற்சிக்கான மதிப்பளிப்பு; வாசி வட்டம், உயர் செலாவணியாக மாற்றுவதற்குரிய மிகை வட்டம்; மிகைமதிப்பு, உயர்மதிப்பு; (தொ.) at a premium, முகப்புவிலைக்கு மேலாக, மிகைமதிப்பாக; put a premium on, ஊக்கமளித்து வளரச்செய்.

**premol'ar**, *n.* முன் கடைவாய்ப்பல், கடைவாய்ப்பல்லுக்கு முன்னுள்ள பல்; மனிதர்வகையில் இருகதுப்புப்பல்.

**premon'ish**, *v.* முன்னெச்சரிக்கை செய்.

**premoni'tion**, *n.* முன்னுணர்வு, முன்னெச்சரிக்கை.

**premon'itor**, *n.* முன்னெச்சரிப்பவர்; முன்னெச்சரிப்பது; முன்னறிந்துரைப்பவர்; முன்னறிந்துணர்த்துவது.

**premon'itory**, *a.* முன்னெச்சரிக்கை தருகிற; முன்னறிவிக்குந் தன்மையுடைய.

**Premonstraten'sian**, *n.* பிரமாண்ட்ரே (Premontre) என்னுமிடத்தில் 1119-இல் நிறுவப்பட்ட திருநெறித்துறவுக் குழாத்தினைச் சார்ந்தவர்; திருநெறிக் குழுவமைப்பு வகையினைச்சார்ந்த பெண்துறவி; *a.* திருநெறித்துறவுக்குழு அமைப்புவகையினைச்சார்ந்த.

**premorse'**, *a.* (தாவ., பூச்.) கட்டைவெட்டித் தறித்தது போன்ற முனையுடைய.

**premo'tion**, *n.* இறைவயவிருப்பறுதி, படைக்கப்படும் உயிரின் மனச்சார்பினை முன்னதாக நிச்சயிக்கும் தெய்வச் செயல்.

**pre-nat'al**, *a.* பேறுகாலத்திற்கு முந்திய.

**pren'tice**, *n.* புதுப்பயிற்சியர்.

**preoccupa'tion**, *n.* பிறிதீடுபாடு; முன்னீடுபாடு, முன்பே வேறு வேலையில் ஈடுபட்டதனால் ஏற்படும் கைக்கட்டுநிலை; இடவகையில் முந்தமர்வு; முற்கோட்கருத்து, முற்சார்பு, முன்முடிபு.

**preocc'upied**, *a.* பிறிது கவனமான, ஆழ்நிலையில் தன்னை மறந்த.

**preocc'upy**, *v.* இடவகையில் முன் அமர்த்திக்கொள்; உளவகையில் முன் ஈடுபடுத்திக்கொள்; பிறவழிச்செல்ல இடமின்றி உளத்தை முழுதும் ஈடுபடுத்திக்கொள்; முன்பே தனதாக்கிக் கொள்.

**pre-oc'ular**, *a.* (உள்.) கண்ணிற்கு முன்னுள்ள.

**pre-o'ral**, *a.* வாய்முன்னுள்ள.

**pre-ordain'**, *v.* முன்னதாக வகுத்தமை; கடவுள்வகையில் ஊழ்வழி முன்னறுதிசெய்.

**preor'dinance**, *n.* முன்விதித்தமை, அன்றெழுதியது.

**prepara'tion**, *n.* முன்னேற்பாடு செய்தல்; முன்னெருக்கம்; பள்ளிப்பாட முன்பயிற்சி; மருத்துக்கலவை; மருத்துணவுத் திட்டம்; (இசை.) பின்வரு முரணிசைப்புக்கேற்ற முன் முரணதிர்வு.

**prepara'tions**, *n. pl.* முன்னேற்பாடுகள், முன்னெருக்கங்கள்.

**prepa'rative**, *n.* முன்னெருக்கச்செயல்; (படை., கப்.) முன்னேற்பாட்டுக் கட்டளை அடையாள அறிவிப்பு; முன்னெருக்க முரசறைவிப்பாணை; ஆயத்தநிலைக் குழலூதற் கட்டளை; *a.* முன்னெருக்கமான, முன்னேற்படான.

**prepa'ratory**, *n.* முன்னணிப்பள்ளி; *a.* முற்பயிற்சியளிக்கிற, முன்னீடான, பீடிகையான; முன்னெருக்கம் உண்டு பண்ணுகிற, ஆயத்தமாக்குகிற.

**prepare'**, *v.* முன்னேற்பாடுசெய்; ஆயத்தமாக்கு; தகுதியூட்டு; முன்னீடுசெய், முதனிலைத்தகுதி உண்டுபண்ணு; பேச்சு-எழுத்து முதலியவற்றை முன்முயன்று உருவாக்கு; பாடத்தை முற்பயிற்சியால் ஆயத்தஞ் செய்; முற்பயிற்சியளித்துத் தகுதி பெறுவி; முன்னெருக்கஞ் செய்; மருந்து முதலியன கலந்து உருவாக்கு; (இசை.) பின்வரு முரணிசைப்புக்கேற்ற முன்முரணதிர்வூட்டு.

**prepared'**, *a.* ஒருங்கிய, ஆயத்தமான; முன்முயற்சியால் தகுதியுற்ற; தகுதி நிலையிலுள்ள; கலந்துருவாக்கப்பட்ட; செயற்கையாக உருவான.

**prepar'edness**, *n.* தகுநிலை; (படை.) ஆயத்தநிலை, எக்கணமும் போருக்கெழ ஒருங்கியிருக்கும் நிலை.

**prepay'**, *v.* முன்பணஞ் செலுத்து; முன்பே செலவுகொடு.

**prepense'**, *a.* எண்ணித் திட்டமிடப்பட்ட, கருதிச்செய்யப்பட்ட, நோக்காகக் கொள்ளப்பட்ட.

**prepon'derance**, *n.* விஞ்சுநிலை; எடைமேம்பாடு; அளவேற்றம்; தொகையில் கழிமிகை, மிகுபெரும்பான்மை; சிறப்பு மேம்பாடு; விஞ்சிய செல்வாக்கு; ஆற்றல் மேம்பாடு.

**prepon'derant**, *a.* எடைவிஞ்சிய; தொகையில் மிஞ்சிய; கழிமிகையான, பெரும்பான்மையான; அளவேற்றமுடைய; சிறப்பு மேம்பட்ட; விஞ்சிய செல்வாக்குடைய; மேம்பட்ட ஆற்றலுடைய.

**prepon'derate**, *v.* மேம்படு, மேம்பட்டநிலை எய்தப்பெறு; விஞ்சு, விஞ்சியிரு; எடையில் மிகு; தொகையிற் பெரிதாயிரு; பெரும்பான்மையாகு; பெரிதளவாயிரு; முதன்மைநிலை பெறு; முதன்மைக் கூறாய் அமை; நிறைகோல் தட்டுவகையில் பளுவால் அமிழ்.

**preposi'tion**, *n.* (இலக்.) முன்வைப்பு, முன்னிடைச்சொல், முன்வரும் உருபு.

**preposi'tional**, (இலக்.) *a.* முன்வைப்பின் இயல்புடைய, முன்னிடைச்சொல் சார்ந்த.

**prepos'itive**, *a.* (இலக்.) சொல்-உருபு ஆகியவற்றின் வகையில் முன்வைப்பதற்குரிய.

**prepos'itor**, *n.* பள்ளிச் சட்டாம்பிள்ளை.

**prepossess'**, *v.* முன்கருத்துக்கொள்; சார்பு கருத்துக்கொள்.

**prepossessed'**, *a.* முற்சாய்வுடைய; ஒருசார்புடைய; சார்பாகச் சாய்ந்த.

**prepossess'ing**, *a.* கவர்ச்சியூட்டவல்ல; தன்சார்பில் சாய்வூட்டத்தக்க.

**preposse'ssion**, *n.* முன்சார்புடைமை.

**prepos'terous**, *a.* இயற்கைக்கு மாறான, பகுத்தறிவுக்கு ஒவ்வாத, நம்பமுடியாத; சிறிதும் பொருந்தாத, முற்றிலும் ஒவ்வாத.

**prepot'ence, prepot'ency**, *n.* ஆற்றல் மேம்பாடு; வீரிய மிகுதி.

**prepot'ent**, *a.* ஆற்றல்மிக்க; ஆற்றலில் விஞ்சிய; (உயி.) பொலிவூட்டுத் திறத்தில் மேம்பட்ட, மரபிற் பண்பூட்டும் திறத்தில் விஞ்சிய.

**pre-pran'dial**, *a.* உண்டிக்கு முந்திய.

**pre-pref'erence**, *n.* முந்து முற்சார்பு.

**prep'uce**, *n.* மாணிநுதி.

**Pre-Raph'aelism**, *n.* முற்படு கலையார்வக்கோட்பாடு, இத்தாலிய கலைஞர் ரபேல் (Raphael 1483-1520) காலத்திற்கு முற்பட்ட பழங்கலையார்வ ஈடுபாட்டுக் குழுவினரின் கலைக்கோட்பாடு.

**Pre-Raph'aelite**, *n.* பழங்கலையார்வக் கோட்பாட்டுக் குழுவினர், இத்தாலிய கலைஞர் ரபேல் காலத்திற்கு முற்பட்ட கலைப்பண்பைப் பின்பற்றிய 19-ஆம் நூற்றாண்டின் பழங்கலையார்வக் குழுவினர்.

Pre-Raph'aelitism, *n.*=Pre-Raphaelism.
prereq'uisite, *n.* முற்படு தேவை ; நிபந்தனை ; *a.* முன் நிபந்தனையான.
prerog'ative, *n.* மேதகவுரிமை, தனிச்சிறப்புரிமை ; முதற் பாக்கு ; முதல் வாக்குரிமை ; *a.* தனி முதலுரிமையுடைய ; (வர.) பண்டைய ரோமரிடையே முதல் வாக்குரிமையுடைய.
pres'age[1], *n.* தீ நிமித்தம் ; வருவதன் குறி.
presage'[2], *v.* முன்னறிவி ; முன்னறிந்துரை.
presbyop'ia, *n.* கிட்ட பார்வைக் குறைவு.
pres'byter, *n.* பொதுவாட்சிச் சமயக்கிளையின் திருச்சபை மூப்பர் ; குருமார் ஆட்சிச் சமயக்கிளையில் இரண்டாந்தரச் சமயகுரு; முற்காலத் திருச்சபைகளில் திருக்கோயில் அலுவலர்.
presbyt'eral, *a.* திருச்சபை மூப்பர் சார்ந்த.
presbyt'erate, *n.* சமயமூப்பர் பதவி; சமயமூப்பர் தொகுதி; மூப்பராட்சி முறை.
presbyter'ial, *a.* மூப்பர் ஆட்சிமுறை சார்ந்த ; மாவட்டச் சமயகுருமன்றஞ் சார்ந்த.
Presbyter'ian, *n.* பொது ஆட்சிமுறைத் திருச்சபையின் உறுப்பினர் ; சமயமூப்பர் ஆட்சிமுறை ஆதரவாளர் ; *a.* பொது ஆட்சிமுறைச் சமயக்கிளைசார்ந்த.
Presbyter'ianism, *n.* திருச்சபைப் பொது ஆட்சிமுறை.
Presbyter'ianize, *v.* மூப்பராட்சிமுறை ஆதரவாளராக்கு ; திருச்சபைப் பொது ஆட்சிமுறை ஆதரவாளராகு ; மூப்ப ராட்சிமுறை நோக்கிச் சாய்வுறு.
pres'bytery, *n.* கருமனை, திருக்கோயில் உள்மண்டபம் ; மாவட்டச் சமயகுரு மன்றம் ; சமயகுரு மன்றத்திற்குரிய மாவட்ட எல்லை ; மூப்பர் ஆட்சிமுறை.
pre'science, *n.* முன்னுணர்வு ; முன்னறிவு.
pre'scient, *a.* முன்னுணர்வுடைய, முன்னறி தன்மையுடைய.
pre-scientif'ic, *a.* இக்கால அறிவியல்முறை தோன்றுதற்கு முற்பட்ட.
prescind', *v.* துணித்தெறி ; பிரித்தெறி; கவனங்குறைத்துக் கொள்.
prescribe', *v.* அறுதியிடு ; விதிமுறைசெய் ; ஆணையாக இடு ; மருந்து முதலியன வகுத்துக்குறி ; குறித்துக்கொடு ; வகுத்துரை, வழிவகை கூறு ; எல்லை கட்டுறுத்து ; நடப் புரிமை வற்புறுத்து ; நீள் வழக்காற்றுரிமை கோரு ; தவணை கடந்து செல்லாததாகு.
pres'cript, *n.* விதி, கட்டளை, ஆணை.
prescrip'tion, *n.* விதியமைப்பு ; ஆணையிடுதல் ; மருந்து சீட்டு, மருந்துபட்டி ; நீள்வரன்முறை வழக்காறு ; நீள் வழக்காற்றுரிமை ; நீடுவழக்காற்றுரிமைக் கோரிக்கை ; கால எல்லைக் கட்டுப்பாடு ; உரிமைத்தவணை.
prescrip'tive, *a.* விதிமுறைக் கட்டுப்பாட்டிற்குரிய ; விதி முறையாற் கட்டுப்படுத்துகிற ; கட்டுறுத்துகிற ; நீள்வழக் காற்றிற்குரிய, வரன்முறைக் கட்டுச் சார்ந்த.
preselec'tive, *a.* உந்துவிசைச் சக்கரப் பற்கள் வகையில் முன்னரே தேர்ந்தெடுத்து அமைக்கத்தக்க.
pres'ence, *n.* உளதாந்தன்மை ; இருத்தல் ; அணுக்கம் ; முன்னிலை, திருமுன் ; தோற்ற அமைதி, நிலையமைதி ; தன்னிலையமைதி, உணர்வமைதி; செயல்திற அமைதி; (தொ.) in the presence of, முன்னிலையில் ; உடனுக ; presence of mind, மனஞ்சோராமை, இடுக்கணழியாமை ; real presence, ரோமன் கத்தோலிக்க கோட்பாட்டின்படி திருவுணா வழி பாட்டில் இயேசுநாதரின் குருதி-தசை வந்துடனிருக்கை.
pres'ence-chamber, *n.* ஓலக்கம்.
pres'ent[1], *n.* நிகழ் வேளை ; (இலக்.) நிகழ்காலம் ; *a.* நிகழ் காலத்திய; தற்போதைய; தற்போதுள்ள; இவ்விடத்துள்ள; இதை எழுதுகிற ; முன்னிலையிலுள்ள, இப்போது முன் இருக் கிற; இங்குக் குறிக்கப்படுகிற; தற்போது குறிப்பிடப் படுகிற ; உளதான ; உளரான ; உடனிலையான ; உடனிருக் கிற ; வாழ்பவரான ; தற்போதைய மதிப்பிற்குரிய ; (தொ.) at present, இப்பொழுது, நிகழ்வேளையில் ; for the present, தற்காலிகமாக, இக்கண அளவில்.
pres'ent[2], *n.* நன்கொடை.
present'[3], *n.* துப்பாக்கி வணக்கமுறை ; வணக்கமுறைத் துப்பாக்கிநிலை ; *v.* அறிமுகப்படுத்து ; முன்னிலையில் அறி முகஞ் செய்து வை ; முன்னிலைப்படுத்து; தேர்வுக்கு முனைவி; தோற்றுவி, காட்சியளி ; காட்டு ; உளத்தில் தோன்றுவி ; நன்னடையாகக்காட்டு ; வழங்கு, அளி ; கையில் ஒப்படை ; படைக்கலம் நீட்டிப் பிடி ; துப்பாக்கியை வணக்கமுறையில் ஏந்து ; (சட்.) முன் வை, கவனத்திற்குக் கொண்டுவா.
presen'table, *a.* அறிமுகப்படுத்தத்தக்க ; செப்பம்வாய்ந்த ; பரிசாகக் கொடுக்கத்தக்க.
presenta'tion, *n.* பரிசளிப்பு ; பொதுக்காட்சி ; நாடக மேடைக்காட்சி ; அறிமுகப்படுத்துகை ; முன்னிலைப்படுத் துகை ; திருமுன்னிலைப்படுத்துகை ; திருமுன்னிலைக் காட்சி ; புறத்தோற்றப்பாங்கு ; (மெய்.) கணநேர உணர்வு ஆற்றல் ; (தொ.) presentation copy, பரிசுப் படி.
presenta'tionism, *n.* புலனுணர்வே நேராக மனவுணர் வாகும் என்னுங் கோட்பாடு.
presen'tative, *a.* மானியமாக அளிக்கத்தக்க ; கருத்தை மனத்தில் நன்கு எடுத்துக்காட்டத்தக்க ; (மெய்.) கணநேர உணர்வுக்குகந்த; (மெய்.) புலனுணர்வு நேரே மனவுணர் வாகிறது என்னுங் கோட்பாடு சார்ந்த.
presentee', *n.* பரிசுபெறுபவர் ; மானியம் வழங்கப்பட்ட திருச்சபை அதிகாரி ; பதவிக்குப் பரிந்துரைக்கப்பட்டவர் ; நீதிமன்றத்தில் முன்னிலைப்படுத்தப்படுவர்.
presen'tient, *a.* பின்னிகழ்வுபற்றிய முன்னுணர்வுடைய.
presenti'ment, *n.* வருந்தீங்குணர்தல்.
presen'tive, *a.* சொல்வகையில் பொருளை நன்கு எடுத்துக் காட்டுகிற, கருத்தை நன்கு உளத்துக்குத் தெரிவிக்கிற.
pres'ently, *adv.* உடனே.
present'ment, *n.* நாடகக்காட்சித்தோற்றம் ; ஓவியத் தோற்றம் ; தோற்றக் கவர்ச்சி ; மனக்காட்சிப்பாங்கு ; உளத்துக்கு எடுத்துக்காட்டுஞ் செயல் ; திருச்சபை மேலதிகாரியிடம் ஊர்த் தலைமைக்குருவின் குற்றமுறையீடு ; (சட்.) முறைகாண் ஆயத்தினரின் சான்றறிவிப்பு.
pres'ents, *n. pl.* எழுத்துக்கள், வாசகங்கள் ; ஆவணம்.
preserva'tion, *n.* காப்பீடு ; பதனம், பேணுகை ; பதன நிலை.
preserv'ative, *n.* பதனச்சரக்கு ; காப்புமுறை, காப்பு நட வடிக்கை ; நோய்த்தடைக்காப்புமருந்து ; *a.* பதனஞ் செய்ய உதவுகிற ; சேமக்காப்புச் செய்கிற, அழியாது காக்கிற.
preserve', *n.* பதனப்பழச்சாறு, பழச்சத்து; தனிக்காடு, தனிக் காப்பு வேட்டைக்காடு ; தனி ஆட்சிவட்டம்; போட்டியற்ற தனி உரிமையெல்லை ; மீன்வளர்ப்பு நீர்நிலை ; *v.* வைத்துக் காப்பாற்று; கெடாது பேணு; அழியாது பாதுகாப்புச்செய்; உயிருடன் வைத்துப்பேணு ; தளராது நடைமுறைப்படுத்து ; தொடர்ந்து நடைபெறுவி ; பண்புகாத்துப் பேணு ; பதனஞ் செய் ; அழுகாமல் தடு ; புரையாமல் பார்த்துக்கொள் ; தனி உரிமைக்காக வைத்துக்காப்பாற்று ; உடல் தளர்ச்சியுறாமற் பேணு.
preside', *v.* தலைமைதாங்கு ; மேலாண்மை ஏற்று நடத்து ; அடக்கி ஆட்சிசெய் ; முதன்மைநிலைகொள் ; (தொ.) presiding officer, வாக்குச்சாவடி அதிகாரி.
pres'idency, *n.* தலைவர்பதவி ; தலைவர் பதவிக்காலம் ; தலைவர் ஆட்சி வட்டகை, மாகாணம்.
pres'ident, *n.* கூட்டத்தலைவர் ; மன்றத்தலைவர்; குடியரசுத் தலைவர் ; அவைத்தலைவர் ; கல்லூரி முதல்வர் ; பொருளக முதல்வர்.
pres'identess, *n.* பெண் தலைவர் ; தலைவர் மனைவி.
presiden'tial, *a.* தலைவர்க்குரிய.

**presid'iary**, *a.* காப்புப்படைசார்ந்த; காவற்படையாய் இயல்கிற; காவற்படையினையுடைய.

*presid'io*, (ஸ்பா.) *n.* கோட்டை; அரண்காப்புடைய நகரம்.

**presid'ium**, *n.* பொதுவுடைமை நிறுவனங்களில் நிலைவாரியம்.

**press**[1], *n.* அச்சகம்; அச்சியந்திரம்; அச்சுத்தொழில், அச்சுக்கலை; அச்சுத்துறை; பத்திரிகைத்துறை, பத்திரிகை உலகம்; அழுத்தப்பொறி; மட்ட அழுத்தப்பொறி; உரு அழுத்துப்பொறி; பிழிவுக்கருவி; அழுத்துகை; அழுத்தம்; நெருக்கம்; நெருக்கடி; வேலை நெருக்கடி; அவசர நெருக்கடி; திரள்; கூட்டம்; மாடநிலைப்பேழை; புத்தகநிலையடுக்கு; (கப்.) காற்றழுத்தந் தாங்கும் பாய் அளவெல்லை; *v.* நெருக்கு; அழுத்து; அமுக்கு; அழுத்தி இணை; அழுத்தி அமுக்கு; நெருக்கி அணை; பிழி; விசையுடன் உந்தித்தடு; அழுத்திச் சப்பையாக்கு; அழுத்தி மட்டமாக்கு; அழுத்தங்கொடுத்து வழவழப்பாக்கு; அமுக்கிச் செறியவை; அழுத்தி அடக்கமாக்கு; நெருக்கித்தாக்கு; பளுவேற்று; அமுங்கச்செய்; அழுந்தச்செய்; கிளர்ச்சியடக்கு; வருத்து; மனத்துயரூட்டு; துன்பத்துள் ஆழ்த்து; துயர்ப்படுத்து; மனத்தில் ஆழ்ந்து பதியவை; நெருக்கடிக்கு உள்ளாக்கு; தொல்லைப்படுத்து; அவசரப்படுத்து; மன்றாடிக் கேள்; விடாது வேண்டு; கருத்தினை ஏற்று; மேற்சுமத்து; வற்புறுத்து; வலிந்து ஏற்கும்படி நெருக்கு; நெருங்கு; திரள்; அணுகு; முனை, விரை; முன்னேறு; (தொ.) go to press, அச்சிற்கு எடுத்துக்கொள்; in the press, அச்சாகிக்கொண்டு; press campaign, press stunt, பத்திரிகை முழக்கம், பத்திரிகை விளம்பரம்; the press, அச்சுச் செய்தி, செய்தித்தாள்கள்.

**press**[2], *n.* படைத்துறைக் கட்டாய ஆட்சேர்ப்பு; கடற்படை வல்லந்த ஆட்சேர்ப்பு; *v.* படைத்துறையிற் சேரும்படி கட்டாயப்படுத்து; கடற்படையில் வற்புறுத்திச்சேர்; வல்லந்தப்படுத்து; வலிந்து பயன்படுத்து.

**press'-agent**, *n.* விளம்பரச் செயலர்.

**press'-box**, *n.* செய்தியாளர் தனியிருக்கை

**press-button war**, *n.* ஏவுகலப்போர்.

**press'-cutting**, *n.* பத்திரிகைத்துணுக்கு.

**press'-gall'ery**, *n.* செய்தியாளர் அமரிருக்கை.

**press'-gang**, *n.* படைச்சேர்ப்புக்குழு.

**press'ing**, *a.* அழுத்துகிற; தாக்குகிற; அவசரமான; நெருக்கடியான; வற்புறுத்தலான; கட்டாயமான; இன்றியமையாத; விடாப்பிடியான.

**press'man**, *n.* பத்திரிகையாளர்; அச்சக இயக்குநர்.

**press'mark**, *n.* ஏட்டின் ஏடக வகுப்புக் குறியீடு.

**press'-money**, *n.* முன்பணம், அச்சாரம்.

**pre'ssure**, *n.* அழுத்தம்; செறிவு; அமுக்கம்; அமுக்கவீதம்; அவசர நெருக்கடி; துன்பம்; தொல்லை; வற்புறுத்தல்; மிக்க செல்வாக்கின் வலிமை; தேவை நெருக்கடி; எதிர்ப்பழுத்தம்; எதிர்ப்பழுத்த வீதம்; மின்வலி இயலாற்றல் வேறுபாடு.

**pre'ssure-cooker**, *n.* உயர் அழுத்தச் சமையற்கருவி.

**pre'ssure-group**, *n.* ஆற்றல் உட்குழு, அரசியல்மீது ஆற்றல் செலுத்தும் தன்னலக்குழு.

**pre'ssurize**, *v.* அழுத்தக் கட்டுப்பாடுசெய், விமானவகையில் உயர் வளிமண்டல அழுத்தங்களுக்கேற்றவகையில் அழுத்த இசைவுத்திறமூட்டு.

**prestidigita'tion**, *n.* செப்பிடு வித்தை, மாயவித்தை.

**prestidi'gitator**, *n.* செப்பிடு வித்தைக்காரர், கழைக்கூத்தாடி, குறளி வித்தையாளர், மாயமந்திரக்காரர்.

**prestige'**, *n.* தன்மானம்; செல்வாக்கு; கீர்த்தி.

*prestiss'imo*, (இத்.) *n.* (இசை.) முடுகியல்பு, மிகுவிரைவியக்கம்; முடுகியற் பாட்டு; *a.* முடுகியலான; *adv.* மிகு விரைவாக.

*pres'to*, (இத்.) *n.* (இசை.) விரைவியக்கம்; விரைபாட்டு; *a.* விரைவான; *adv.* விரைவாக.

**presum'able**, *a.* மெய்யாகக் கருதத்தக்க, உண்மையெனக் கொள்ளத்தக்க.

**presume'**, *v.* ஊகி, மெய்யெனக் கொண்டு நிகழ்த்து, ஆராயாமலே ஏற்றுக்கொள்; மெய்யெனக்கொள்; துணிந்து எண்ணு; எண்ணும் உரிமை எடுத்துக்கொள்; தகவுகடந்து செல், உரிமை எல்லைதாண்டு; உரிமையின்றிச் செயலாற்று; தகாச் சலுகைகொள்.

**presum'ing**, *a.* தகாத்துணிவுடைய.

**presump'tion**, *n.* உத்தேசம், ஆராயா ஏற்பு; தற்கால ஏற்பு; ஆராயாது ஏற்றுக்கொள்ளப்பட்ட செய்தி; தகாச்சலுகை; தகாத்துணிபு; வரம்புமீறிய நடத்தை; (சட்.) இயல்புநிலை, உண்மையெனக் கொள்ளுதற்குரிய நிலை; இயல்பான முடிபு; மறுதலை எண்பிக்கப்படாத் துணிபு; பொதுத்துணிபு, தற்காலத் துணிபு.

**presump'tive**, *a.* உத்தேசமான, தற்கால ஏற்பிற்குரிய; (தொ.) heir presumptive, பிறவழி உரிமை இன்னும் ஏற்படாநிலை உரிமையாளர், இனி வேறு உரிமையாளர் பிறந்தாலன்றி இயல்பான உரிமையுடையவர்; presumptive evidence, மறுதலை எண்பிக்கப்படாத செய்தித்துணிபு.

**presump'tuous**, *a.* மிதப்புவாய்ந்த, தன்முப்புடைய; தகாத்துணிவு வாய்ந்த; உரிமை விஞ்சிய.

**presuppose'**, *v.* முன்னூகி, முன்னதாகக் கொள்.

**presupposi'tion**, *n.* முற்கோள்.

**pretence'**, *n.* பாவனை, பாசாங்கு; போலிநடிப்பு; போலித்தன்மை, மோசடி; போலிப்பகட்டு; போலி உரிமை; பாவிப்பு, நடிப்பாக மேற்கொண்ட நடையுடைதோற்றம்; நடிப்பு; உரிமைத்தடம், உரிமைக்கான சிறு சாக்குப்போக்கு; உரிமைக்கோரிக்கை.

**pretend'**, *v.* பாசாங்குசெய்; போலியாகச் செயலாற்று, போலி நடிப்புநடி; போலியாகப்பகட்டு, பொய்த்தோற்றம் அளி; போலி உரிமைகொள்; பகட்டால் நம்பவை; விளையாட்டாகப் பாவனைசெய்; மெய்போலக்கூறு; உரிமைகோரு; பெற நாட்டங்கொள்; பெறத்துணி; மண இணைவு அவாவுறு; பண்புவகையில் பெற்றிருப்பதாகப் பாவனைசெய்.

**preten'der**, *n.* பகடி, போலி உரிமையாளர்.

**preten'sion**, *n.* உரிமைத்தகுதி; கேட்புரிமை; போலிப் பகட்டு.

**preten'tious**, *a.* போலிப் பெருமைகொள்ளுகிற, பகட்டான, தான்தோன்றியான.

**pretercan'ine**, *a.* நாய் இயல்புகடந்த.

**preterhum'an**, *a.* மனித இயல்புகடந்த.

**pret'erite**, *n.* (இலக்.) இறந்தகாலம்; இறந்தகாலச்சொல்; *a.* இறந்தகாலங் குறித்த.

**pret'erite-pres'ent**, *n.* இறந்தகால வடிவ நிகழ்காலச் சொல்.

**preteri'tion**, *n.* குறிப்பிடாது மேற்செல்லல்; குறியாதொழிவு, விட்டுவிடல்.

**pretermi'ssion**, *n.* ஒழிவு, இடையறவு.

**pretermit'**, *v.* கடந்துசெல், கூறுது ஒழி; செய்யாது விடு; புறக்கணி; வழக்கு இடையொழியவிடு; தொடர்பு இடையறவிடு.

**preterna'tural**, *a.* இயற்கைநிலை கடந்த, இயல்புமீறிய.

**preterna'turalism**, *n.* இயற்கை கடந்தநிலை; இயல்புமீறிய முறைமை; இயற்கை நிலைகடந்த அமைப்பு; இயற்கைமீறிய வற்றினைப் பற்றிய கோட்பாடு, இயல்புகடந்தவை பற்றிய நம்பிக்கை.

**preterna'turally**, *adv.* இயற்கைகடந்த முறையில்.

**pretersen'sual**, *a.* புலனுட்சிக்குப்புறம்பான, ஐம்புல ஆற்றல் எல்லைக்கு அப்பாற்பட்ட.

**pret'ext**[1], *n.* சாக்குப்போக்கு, வியாஜம், தலைக்கீடு.

**pretext'**[2], *v.* சாக்குச்சொல்லு, தலைக்கீடு உரை.

**pret'one**, *n.* அழுத்த விசையுடைய அசைக்கு முன்னசை; அழுத்த விசையசைக்கு முன் உயிரொலி.

**preton'ic**, *a.* அழுத்தவிசைக்கு முன்னசை சார்ந்த.

**pre'tties**, *n. pl.* சித்திர அணிமணிகள்; சிறுதிறப் பகட்டணிகள்.

**pre'ttify**, *v.* மேனி மினுக்கு, பகட்டிக்கொள்.

**pre'ttily**, *adv.* கவர்ச்சிமிக்க முறையில், ஒயிலாக; குழந்தை வழக்கில் நன்கு, நற்பண்புடன்.

**pre'ttiness**, *n.* மேனிமினுக்கு; சிங்காரப்பொருள்; ஒய்யார அணிமணி; நவின்றோர்க்கினிமை.

**pre'tty**, *n.* ஒயில், சிங்காரப்பண்பு; தேறற் குவளையில் சித்திரச் செய்கை; (பே-வ.) குழிப்பந்தாட்டத்தில் நேரோட்டம்; *a.* ஒயிலான; சிங்காரமான; சித்திர அழகு வாய்ந்த; கவர்ச்சி வாய்ந்த; கண்ணுக்கினிய; செவிக்கின்பமான; நேர்த்திமிக்க; நுண்ணயம் வாய்ந்த; மிகநல்ல; பாராட்டத்தக்க; போற்றத் தக்க அளவான; மெச்சத்தக்க; *adv.* நன்முறையில்; போற்றத்தக்க அளவில்; மட்டான அளவில்; ஏறத்தாழ.

***pret'zel***, (செர்.) *n.* முடிச்சு வடிவ உப்புப் பிஸ்கட்டு.

**pre'-univers'ity course**, *n.* பல்கலைக்கழகப் புகுமுகத் திட்டம்.

***preux chevalier***, (பிர.) *n.* இன்பநடை வீரர்.

**prevail'**, *v.* மேலோங்கு, மேம்படு; வெல்; செல்வாக்குப் பெறு; வழக்கில் நீடித்திரு; நீங்காதிரு; நடப்பிலிரு; பெரு வழக்காயிரு; நன்கு உகந்ததாய் அமை.

**preval'ence**, *n.* பரவியுள்ளமை; மிகுசெல்வாக்குடைமை.

**preva'ricate**, *v.* மழுப்பிப் பேசு; தட்டிக்கழிக்கும் வகையில் நடி; சொற்புரட்டுச்செய்; தாக்காட்டு; இருபொருள்படப் பேசு; ஏய்த்துப் பசப்பு; (சட்.) எதிரியுடன் தொடர்பு கொண்டு தன்கட்சிக்காரரைக் காட்டிக்கொடு.

**preven'ient**, *a.* முந்திய; முன்னதாகத் தடுக்கிற; (தொ.) prevenient grace, (இறை.) செய்ததற்கிரங்குமுன் அவன் தாள் நினைப்பிக்கும் அருள்.

**prevent'**, *v.* தடைசெய்; இடையிட்டு நிறுத்து; முன்னறிந்து தடு; வராமல் தடு; தவிர்; விலக்கு; முன்னறி; முன்னறிந்து ஆவனசெய்; முன்னறிந்து அமைவி.

**preven'ter**, *n.* தடுப்பவர், தடைசெய்பவர்; இடையூறு விளைவிப்பவர்; (கப்.) பிற்சேர்ப்புக்கயிறு; மறு சங்கிலி; இணைப்புத் திருகு.

**preven'tive**, *n.* தடுப்புச்செயல்; தடுப்புமருந்து; *a.* தடுக்கக் கூடிய; (தொ.) preventive custody, தடுப்புக் காவல்.

**prev'iew**, *n.* வெள்ளோட்டம், முற்காட்சி; *v.* முற்காண்.

**prev'ious**, *a.* முந்திய; முன்நிகழ்ந்த; *adv.* முன்னாக, முற்பட; (தொ.) Previous Examination, பல்கலைக்கழகப் பட்டத்தேர்வு வகுப்பின் நுழைவுத்தேர்வு; previous question, வாதச்செய்தி பற்றி வாக்கெடுக்க வேண்டுமா என்னும் வினா.

**previse'**, *v.* முன்னறி, வருவதறி; வருவதுரை.

**previsi'on**, *n.* முன்னுணர்வு.

**pre-war'**, *a.* போருக்கு முந்திய; *adv.* போருக்கு முற்பட்ட காலத்தில்.

**prey**, *n.* கொண்டி; இரைவிலங்கு; இரை; பலி; (விவி.) போரில் தப்பி மீண்டது, தன்னுயிர்; *v.* இரை தேடு; இரையாகக்கொள்ளு; சூறையாடு; அரித்துத்தின்; உணர்ச்சி வகையில் உள்நின்று அரி; தீங்கிழை; (தொ.) beast of prey, பிற உயிரினங்களைக் கொன்று இரையாகக்கொள்ளும் விலங்கு; bird of prey, பிற உயிரினங்களைக் கொன்று தின்னும் பறவை.

**pri'apism**, *n.* கட்டின்மை, பரத்தமை; (மரு.) ஆண்குறி விறைப்பு.

**price**, *n.* விலை; மதிப்பளவு; பெறுவதற்காக இழக்கநேரும் பொருள்; பெறுவதில் அடையும் துன்ப அளவு; கைக்கூலியாய் வசப்படுத்தத்தக்க அளவு; கொலைவினைக்குத் தரும் கையுறை; ஆள் பற்றீட்டுக்கு அளிக்குங் கையுறை; குதிரைப் பந்தயத்தில் குதிரைமீதிடும் பணய மதிப்பு; *v.* விலைகுறி; விலையை வரையறு; விலை கேள்; விலை மதிப்பிடு; மதிப்பிடு; (தொ.) above price, beyond price, without price, விலை மதிக்கவொண்ணாத; at any price, என்ன விலை கொடுத்தேனும், எப்பாடு பட்டாவது; cost price, கொள்விலை; long price, கழிமிகுவிலை; price oneself out of the market, மீமிகு விலை கோரு; set price on person's head, பிடிப்பதற்காக அல்லது கொல்வதற்காகப் பரிசறிவி.

**priced**, *a.* விலைகுறித்துள்ள; விலைகூறப்பட்டுள்ள, விலை அறுதியிடப்பட்ட.

**price'less**, *a.* விலைமதிப்பற்ற, பெருமதிப்புடைய, மிகுவிலையுயர்ந்த.

**price'-list**, *n.* நடப்புவிலைப் பட்டியல்.

**prick'**, *n.* துளைக்கும் கூர்முனைப்பு; குத்து; குத்துதல்; முள்தைப்பு; ஊசித்தைப்பு; குத்தியதுளை; தையல்துளை; குத்துஞ்செயல்; குத்தப்படும் அனுபவம்; குத்தல் உணர்ச்சி; குத்தியகாயம்; புள்ளியிடம்; கணம்; கடிகார மணிக்குறி; அடையாளக்குறி; இயக்குங்குறி; முயல் அடித்தடம்; *v.* மெல்லக்குத்து; கூர்முனையால் குத்து; குத்திச் சிறுதுளைசெய்; குத்தி உள்நுழையச்செய்; குத்தி இணை; குத்தி எடு; துளையில் புகுத்து; கூர்நோவுண்டாக்கு; குத்தும் உணர்ச்சி உண்டாக்கு; துன்பம் விளைவி; குதிரையைக் குதிமுள்ளால் குத்தி விரைவாகச் செலுத்து; பட்டியலில் பெயரைப் புள்ளியிட்டுக்குறி; குதிரை மீதிவர்ந்துசெல்; மாவட்டமணியம் போன்றவர்களைப் பட்டியலில் பெயர்மீது புள்ளியிடுவதன் மூலம் தெரிந்தெடு; புள்ளிகளிட்டுப் பூவேலை மாதிரிப்படிவங் குறி; குத்திநடு; நாய்வகையில் காதை நிமிர்த்து, காதை நிமிர்த்திக் கூர்ந்து கவனி; திடுமென விழிப்புற்றுக் கவனி; நிமிர்ந்து முனைத்து நிற்கவை; விறைத்துநில்; தூண்டு; ஒட்டி ஒப்பனைசெய்; சூனியக்காரி என்று ஐயுறப்பட்டவள் உடலில் குத்தி உணர்ச்சியற்ற பகுதி தேடு; (தொ.) kick against the pricks, பயனற்ற தடுப்பு முயற்சிகளில் தன்னையே ஊறுபடுத்திக்கொள்; prick in, prick off, prick out, நிலத்தில் துளைகளிட்டுச் செடி நடு; prick the bladder, prick the bubble, குட்டை வெளிப்படுத்து; ஆளின் வெறுமையை அம்பலமாக்கு; நடிப்பை வெளிப்படுத்து; prick up one's ears, நாய்வகையில் காதுகளை விறைப்பாக்கி விழிப்பாய் இரு; ஆள்வகையில் கூர்ந்து கவனிக்கத் தொடங்கு.

**prick'-eared**, *a.* நாய்வகையில் நிமிர்விறைப்புக் காதுகளையுடைய; முனைத்த செவிகளையுடைய.

**prick'-ears**, *n.* நாயின் நிமிர்ந்த கூரான காதுகள்; மனிதரின் முனைப்பான செவிகள்.

**prick'er**, *n.* குத்துவது; குத்து கருவி; கூர்முள்; தோல் தைக்கும் ஊசி; சூனியக்காரியை ஆய்ந்து கண்டுபிடிப்பவர்; விரைகுதிரை ஊர்பவர்.

**prick'et**, *n.* ஈராட்டைக் கலைமான்; மெழுகுத்திரி செருகி வைக்குந் தண்டு; (தொ.) pricket's sister, பொன்தவிட்டு நிறமும் சிற்றுருவும் உடைய ஈராட்டைப் பெண்மான்.

**pric'kle**[1], *n.* துய்முள், பொடிமுள்கற்றை, செடிகளின் மேற்புறத்தில் தோன்றும் முள்போன்ற சுணை; சிறுமுள்; முள்ளெலியின் கடுங்கூர்மையுடைய முள்; *v.* முள்ளாற் குத்து; பொடிமுள்ளாற் குத்துவது போன்ற உணர்ச்சி உண்டாக்கு; முள்ளாற் குத்தப்படுவது போன்ற உணர்ச்சிபெறு.

**pric'kle**[2], *n.* பிரம்புக்கூடை; பிரம்புக்கூடை அளவை.

**prick'ly**, *a.* செடிகள்-விலங்குகள் வகையில் முட்கள் போர்த்த; முள் நிறைந்த, சுணையுள்ள; முள் குத்தும் உணர்ச்சியுடைய; (தொ.) prickly heat, வியர்க்குரு; prickly pear, சப்பாத்துக் கள்ளி, பாம்புக்கள்ளி.

**pride**, *n.* செருக்கு, இறுமாப்பு; தற்பெருமை; தன்முனைப்பு; அகம்பாவம்; பெருமை கொள்ளுவதற்குரியவர்; பெருமைக்குரியது; மயில் முதலியவற்றின் வகையில் பெருமிதத் தோற்றம், வீறமைதி; பெருமை உணர்ச்சி; கட்டழகு அமைவு; களிகிளர்ச்சி; (தொ.) false pride, மாணமானம்; pride of grease, வேட்டை விலங்கு வகையில் கொழுப்பார்ந்த நிலை; pride of place, உயர்பதவி; சிறப்பிடம்; இறுமாப்பு; pride of the morning, விடியல்நேர மூடுபனி அல்லது மழைத்தூறல்; pride oneself on, pride oneself upon, பெற்றிருப்பதில் பெருமைகொள்.

*prie-dieu*, *n*. (பிர.) வழிபாட்டில் முழங்காற் படியிடும் சாய்வு மேசை.

**priest**, *n*. பூசாரி, அர்ச்சகர்; திருச்சபைச் சமயகுரு, சடங்குகள் செய்யும் உரிமைபெற்ற மதகுரு; அயர்லாந்தில் மீனைக் கொல்லப் பயன்படுத்தப்படும் மரக்கொட்டாப்புளி; *v*. சமய குருவாக்கு; புரோகிதராக்கு; சமயச்சடங்குகள் ஆற்றும் பூசாரியாக அமர்த்து; (தொ.) high priest, யூதர்களின் தலைமைக்குரு; தலைமைப்புரோகிதர்.

**priest'craft**, *n*. குருமாரின் பேராசை; சமயகுருமாரின் உலகியற் பற்றுர்வப் பண்பு; புரோகிதச் சூழ்ச்சிமுறை.

**priest'hood**, *n*. சமயகுரு நிலை; புரோகிதப்பண்பு; சமய குருமார் அமைப்பு முறை.

**priest'ly**, *a*. சமயகுருவிற்குரிய; மதகுருவிற்கேற்ற; சமய குருவினைப் போன்ற; புரோகிதத் தன்மையுடைய; (தொ.) priestly code, விவிலிய நூலின் முற்பகுதியில் சமயகுருமாருக்கான ஒழுங்கியற் கூறு.

**priest'-ridden**, *a*. சமயகுரு ஆட்சிக்குக் கட்டுப்பட்ட, குருமாராற் கொடுமை செய்து அடக்கப்பட்ட.

**priest's hood, priest'-in-the-pulpit**, *n*. உயரமான வெண்ணிற மடல்களையுடைய ஒற்றைவிதைச் செடிவகை.

**prig**, *n*. நடையழுத்தக்காரர், மயிரிழைநுட்பம் பின்பற்றுபவர்; நீக்குப்போக்கறியாத் திருத்தமுறையினர்; மட்டுமீறிய பேச்சு நடைத்திருத்தம் பேணுபவர்; விடாப்பிடி ஒழுக்கக் கொள்கையர்; போலித் தற்பெருமையாளர்.

**prigg'ish**, *a*. மயிரிழைநுட்பம் பின்பற்றுகிற; போலித் தற்பெருமையுடைய.

**prim**, *a*. முறைபிசகாத; துல்லிய; செயற்கை ஆசாரமிக்க; பழகாது பின்னடைந்து நிற்கிற; *v*. செயற்கை ஆசாரம் மேற்கொள்; பழகவிரும்பாத முகத்தோற்றங்கொள்; இதழ்க் கோட்டம் மூலம் விருப்பின்மை தெரிவி.

*pri'ma*, (இத்.) *a*. முதன்மையான, முதலாவதான, தலைமையான.

*pri'ma buff'a*, (இத்.) *n*. நாடக அரங்கில் தலைமை நகைச்சுவைப் பாடகி; தலைமை நகைச்சுவை நடிகை.

**pirm'acy**, *n*. திருக்கோயில் தலைமைக்குருவின் அலுவலகம்; முதன்மை, தலைமைச்சிறப்பு.

*pri'ma donn'a*, (இத்.) *n*. இசைநாடகத்தில் தலைமைப்பாடகி; எளிதில் உணர்ச்சி கொள்பவர்; *pl*. pri'ma donn'as, prim'e donn'e.

**primaev'al**, *a*.=primeval.

*pri'ma fa'cie*, (ல.) *a*. முதற்காட்சியில் தோன்றுகிற; முதல் எண்ணத்தை அடிப்படையாகக்கொண்ட; *adv*. முதல் தோற்றத்திலேயே.

**prim'age**[1], *n*. கப்பற்சரக்குக் கூலிக்கு மேற்பட்ட நூற்றுமானத் தொகை.

**prim'age**[2], *n*. கொதிகலத்து நீராவியுடன் மேலே கொண்டு செல்லப்படும் நீரின் அளவு.

**prim'al**, *a*. முதல்நிலையான, முக்கியமான; மூலாதாரமான; முற்படு நிலையான, நாகரிகத் தொடக்ககால நிலையான.

**prim'ary**, *n*. மூலம், முதல்நிலை; மூலக்கூறு; நேர்கோள், நேரடியாகக் கதிரவனைச் சுற்றுங்கிரகம்; பூர்வாங்கத்தேர்தல் கூட்டம், தேர்தலுக்கான வேட்பாளர்களைத் தெரிவு செய்யுங் கூட்டம்; *a*. முதல்நிலையான; மூலமான; முதன் முதல் உருவான; தொடக்கத்திலிருந்தே உள்ள; அடிப்படையான; முதற்படியான; பலபடிக்கிளைகளில் முதற்படிக்கிளையான; தொடக்கநிலையான; இறகுகளில் மூலக் கையுறுப்புக்களிலிருந்து கிளைத்த; தொடக்கக் கல்விக்குரிய; தொடக்கநிலை வகுப்புக்குரிய; (தொ.) primary amputation, அழற்சி அல்லது வீக்கம் இடையூருக நிகழ்வதற்குமுன் செய்யப்படும் உறுப்புத் துண்டிப்பு; primary assembly, primary meeting, தேர்தலுக்கான வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்குங் கூட்டம்; primary battery, மின் ஆற்றல் உண்டாக்கும் மின்கல அடுக்கு; primary colour, கலவை மூலக்கூறாய் உதவும் சிவப்பு-பச்சை-ஊதா ஆகிய தலையாய வண்ணங்களில் ஒன்று; வண்ணம் பூசுபவர்கள் தேரும் சிவப்பு-நீலம்-மஞ்சள் ஆன மூல வண்ணங்களில் ஒன்று; primary education, தொடக்கக் கல்வி; primary planets, கதிரவனை மையமாகக் கொண்டு சுழலும் நேர் கோள்கள்; primary school, தொடக்க நிலைப் பள்ளி; primary tenses, (இலக்.) இறப்பு நிகழ்வெதிர்வுகளாகிய முக்கிய காலக்கூறுகள்.

**prim'ate**, *n*. கிறித்தவ தலைமைக்குரு, நாட்டுச்சமய முதல்வர்.

**primat'es**, *n*. *pl*. மனிதன்-குரங்கு உள்ளிட்ட உச்சவுயர்வுப் பால்குடி உயிரினத்தொகுதி.

**prime**[1], *n*. முழுநிறைவு நிலை; சிறந்த பகுதி; தொடக்கம்; முதற்படிநிலை; முதற்காலக் கூறு; கிறித்தவ வழிபாட்டின் நாள் தொடக்கவேளை; உதயவேளை, காலை ஆறுமணி; (கண.) பகா எண்; (வேதி.) இயைநிலையில் அலகான தனி அணு; வாட்போரில் எதிர்த்தாக்குநிலை; *a*. தலைமையான, முக்கியமான, இன்றியமையாததான; முதல் தரமான, மிகச் சிறந்த; மிகுநேர்த்தியான; முதலாவதான; அடிப்படையான; (கண.) முழுமையான எண் கூறற்ற, எண் வகையில் பகா நிலையான; (தொ.) prime cost, கொள்விலை; prime minister, முதலமைச்சர்; prime mover, முதன்மையான இயக்குங்கருவி, இயக்கமூல ஆற்றல்; பொறிகளை இயக்கும் ஆற்றல் மூலம்; ஆற்றலை இயக்காற்றலாக்கும் இயந்திரம்; பயன்மிக்க கருத்தின் கருத்தா; prime vertical, prime vertical circle, தொடுவானத்தின் கிழக்கு-மேற்கு மையங்களைக் கடந்து உச்சத்தில் நடுநிரல் வான்கோட்டினைச் செங்குத்தாக வெட்டிச்செல்லும் வான்வட்டம்.

**prime**[2], *v*. (வர.) துப்பாக்கியில் மருந்து திணி; குழாய் செயற்படுவதற்காக நீரூற்று; ஆள்வகையில் வேண்டிய தகவல்கள் அறிவித்துச் சித்தப்படுத்து; நிரம்பக் குடிக்கச் செய், உறிஞ்சு தடைப்படுத்துவதற்காக மரத்தின்மீது எண்ணெய் அல்லது வண்ணம்பூசு; கொதிகலத்தினுள் ஆவியோடு நீர்த்திவலை வடிவாகப் புகவிடு.

**prim'er**[1], *n*. தொடக்கப் பாடபுத்தகம், அரிச்சுவடி; தொடக்க அறிவேடு; (வர.) முற்கால வழிபாட்டு நூல்; (அச்.) அச்செழுத்து அளவு; (தொ.) great primer, long primer, அச்சுரு அளவு வகையிற் பெரிது.

**prim'er**[2], *n*. துப்பாக்கி மருந்திற்குத் தீவைக்குங் குழாயமைவு.

*primer'o*, (ஸ்பா.) *n*. (வர.) சீட்டாட்டத்தில் 16-ஆம் 17-ஆம் நூற்றுண்டுகளில் நாகரிக வழக்காயிருந்த சூதாட்ட வகை.

*primeur*, (பிர.) *n*. முதற்கனிகள்; பருவ முன்விளைவு; முன் வரு செய்தி.

**primev'al**, *a*. முதல் ஊழிசார்ந்த, தொடக்கக்காலத்திற்கு உரிய; பண்டைக்காலத்திய.

**prim'ing**[1], *n*. வெடிமருந்து திணிப்பு; துப்பாக்கி மருந்துக்குத் தீவைத்தல்; துப்பாக்கியில் உள்ள வெடிமருந்து; சுரங்க வெடிப்புக்கான மருந்துப்பொடி வரிசை; முற்சாயமாகச் சாயக்காரர் பயன்படுத்துங் கலவை; மாத்தேறலிற் சேர்ப்பதற்குரிய வெல்லச் சேர்வை; அவசரக்கல்வி, விரை அறிவு திணிப்பு; உருப்பாடமாக்குதல்.

**prim'ing**[2], *n*. வேலை நீர் ஏற்ற இறக்க மாறுவிசை, வியன்கால் வேலை ஏற்ற இறக்கத்திலிருந்து சமன்கால் வேலை ஏற்ற இறக்கத்துக்கு இடையே நிகழும் வேலை நீர் ஏற்ற இறக்கவிசை விரைவியக்கம்.

**primip'ara**, *n*. தலைச்சன் பிள்ளைத்தாய்ச்சி.

**primip'arous**, *a*. தலைச் சூலினளான.

**prim'itive**, *n*. மறுமலர்ச்சி ஊழிக்கு (15-ஆம் 16-ஆம் நூற்றுண்டுகளுக்கு) முற்பட்டகால வண்ண ஓவியர்; மறுமலர்ச்சி ஊழிக்கு முற்பட்டவர் வரைந்த வண்ண ஓவியம்; முதல்நிலை மெதடிஸ்டு (Methodist) இயக்கத்தவர்; மூலமுதல்; மூல வேர்ச்சொல்; *a*. மூல ஊழிக்குரிய; முற்பட்ட காலத்திய; நாகரிக முதிர்ச்சியற்ற; நாகரிக முதிர்ச்சியற்ற காலத்திற்குரிய; பழம்பாணியான; முதிராப் பண்புடைய; திருந்தாத; கரடுமுரடான; நிறங்கள் வகையில் இணைமூலமுதலான, கரு

மூல இயல்புடைய; மூலமுதலான; தன்மூலமான, கிளை வரவியல்பற்ற; (இலக்.) மூல வேர்ச்சொல்லியல்பான, பகுதியான; (கண.) வரையுரு வகையில் பிறவற்றிற்கு மூலமான; வரையுரு வகையில் துணைக்கட்டுமானங்கட்கு மூலமான; (மண்.) மிக முற்பட்ட ஊழியில் உருவான; (வில.) வளர்ச்சியின் மிக முற்பட்ட படிநிலையில் தோன்றுகிற; (தொ.) Primitive Church, பண்டைக்காலத்திய கிறித்தவ திருச்சபை.

*pri'mo*[1], (இத்.) *n.* (இசை.) இருவர் குரற்பாட்டில் முற்பகுதி.

*prim'o*[2], (ல.) *adv.* முதலாவதாக, முதலிடத்தில்.

**primogen'itor**, *n.* முதல் மூதாதை, முந்தைமூலவர்.

**primogen'iture**, *n.* முந்துபிறப்புநிலை; மயின்முறைக் குலத்துரிமை.

**primord'ial**, *a.* தொடக்கத்திலுள்ள; உலகின் தொடக்க நிலைக் காலத்திற்குரிய; ஆதியிலிருந்தே உள்ள; மூலமுதலான, அடிமூலமான.

**prim'rose**, *n.* இளவேனில் இளமஞ்சள் மலர்ச்செடிவகை; இளமஞ்சள்நிற மலர்வகை: வெளிறிய மஞ்சள் வண்ணம்; (தொ.) Primrose dame, Primrose knight, இங்கிலாந்தின் அரசியல்தலைவர் பீக்கன்ஸ்பீல்டு கோமான் பென்ஜமின் டிஸ்ரேலி (மறைவு 1881) நினைவுக்கழக உறுப்பினர்; Primrose Day, பென்ஜமின் டிஸ்ரேலி (Benjamin Disraeli) ஆண்டு நினைவுவிழாநாள் (ஏப்ரல் 19); Primrose habitation, பெஞ்சமின் டிஸ்ரேலி நினைவுக் கழகப்பணிமனைக் கட்டிடம்; Primrose League, பென்ஜமின் டிஸ்ரேலி நினைவுக்கழகம்; primrose peerless, இரட்டை மலர்களுள்ள நறுமணந்தருஞ் செடிவகை; the primrose path, இன்பவாழ்க்கை நாட்டம்.

**prim'ula**, *n.* பலவண்ண மலருடைய பசுமைமாறுச் செடிவகை.

*prim'um mob'ile*, (ல.) *n.* அண்டகோளகை, வான்கோளங்களை உடன்கொண்டு பூவுலகை நாள்தோறும் சுற்றுவதாக இடைநிலைக்காலங்களில் கருதப்பட்ட வானகோளம்; மூல இயக்க ஆற்றல்; செயல்மூல ஆற்றல்.

**prim'us**[1], *n.* ஸ்காத்லாந்து திருச்சபைத் தலைமைக்குரு; *a.* பள்ளியில் ஒரே பெயருள்ள ஆண்களில் மூத்தவனான; பள்ளியில் ஒரே பெயருள்ளவரில் முற்பட்டவரான.

**prim'us**[2], *n.* ஆவிச் சூட்டடுப்பு வகை.

*prim'us in'ter par'es*, (ல.) *n.* சமநிலைக்குழுவில் முதல்வர்; சமநிலைக் கூட்டுக்குழுமத்தின் பேராளர்.

**prince**, *n.* இளங்கோ, இளவரசன்; அரசகுடி இளவல்; பிரிட்டனில் மன்னன் மகன்; பேரரசன் மகன்; அரசி புதல்வன்; பேரரசி புதல்வன்; மன்னன் பெயரன்; சில நாடுகளில் சிற்றரசர்; உச்சவுயர் பட்டமுடையவர்; ஆட்சியாளர், தலைவர்; இளங்கோமகன்; கோமகன்; கோமான்; தலைசிறந்தவர்; ஒப்பற்றவர்; புகழ்சான்றவர்; (தொ.) Hamlet without the Prince of Denmark, உள்ளுறை உயிர்த்தன்மை நீங்கப்பெற்ற பொருள், மாப்பிள்ளையில்லாத் திருமணம்; Prince Albert, (பே-வ.) இரட்டை மார்புப்பகுதி கொண்ட ஆண்களின் மேலங்கிவகை; prince bishop, தம் ஆட்சிப் பகுதியில் முழு அதிகாரமுங் கொண்ட சமய வட்டத் தலைவர்; Prince Consort, ஆளும் அரசியின் கணவர்; prince of darkness, prince of the air, prince of the world, நரகிறைவன், சைத்தான், பேய்மகன்; Prince of Denmark, ஷேக்ஸ்பியர் நாடகக் கதைத் தலைவன் ஹாம்லட் (Hamlet); Prince of Peace, 'அமைதியின் அரசு', இயேசுநாதர்; prince of the blood, அரசகுடும்பத்தின் இளவல்; prince of the Church, prince of the Holy Roman Church, போப்பாண்டவரின் ஆலோசனைக்குழு உறுப்பினர்களுள் ஒருவர்; ரோம நகரத் தலைமைத் திருச்சபைகளுள் ஒன்றன் தலைமைக்குரு; எழுபது தலைமைக் குருமார்களுள் ஒருவர்; Prince of Wales, பிரிட்டனின் ஆட்சியுரிமை இளவரசர்; Prince of Wales's feathers, நெருப்புக்கோழியின் முக்கூட்டு இறகு; Prince Regent, இளவரசாட்பேர், ஆட்சியின் ஆட்பேராகச் செயலாற்றும் இளவரசர்; Prince Royal, ஆளும் அரசரின் தலைமகன், ஆட்சியுரிமையுடைய மூத்தமகன்; Prince Rupert's Drops, உடைந்தால் சிதறிவிடும் கண்ணாடிக்குமிழ் வகைகள்; prince's feather; செம்மலர்ச் சூட்டுடைய நீண்ட செடிவகை; prince's metal, செம்பும் துத்தநாகமும் கலந்த உலோகக்கலவை.

**prince'ly**, *a.* இளவரசுக்குரிய; இளவரசுப் படிநிலையுடைய; அரசுரிமைக்கேற்ற; இளவரசினை ஒத்த; இளவரசுக்குகந்த; உச்ச உயர்வுடைய; விழுமிய, மதிப்பார்ந்த.

**prin'cess**, *n.* இளவரசி; அரசனின் மனைவி; அரசனின் மகள்; அரசனின் பெயர்த்தி; (தொ.) princess dress, princess petticoat, கச்சு-பாவாடை நீள அளவுகள் ஒரே துண்டிலிருந்து வெட்டப்படும் மகளிரின் உள்ளாடைகள்; princess of the blood, அரசரின் மகள்; அரசரின் பெயர்த்தி; Princess Regent, ஆட்பேரிளவரசி, பகர ஆட்சியாளராகச் செயலாற்றும் இளவரசி; பகர ஆட்சியாளரான இளவரசரின் மனைவி; Princess Royal, அரசின் மூத்த மகள்.

**prin'cipal**, *n.* முதல்வர்; ஆளுநர், முதன்மையானவர்; கல்லூரித்தலைவர்; மேலாளர்; துணைவரின் மேலாட்சியாளர்; பொறுப்பு முதல்வர், நேரடிப் பொறுப்பர்; உடந்தையாளர், பிணைய உரிமையாளர்; மற்போரில் பொருநர்களில் ஒருவர்; விட்டங்களைத் தாங்கும் தாய்நிலை உத்தரம்; மூலதனம், விடுமுதல்; இசைக்கருவி மெட்டுவகை; *a.* முதன்மையான; முக்கியமான; தனிமையான; மூலதனம் பற்றிய; (இலக்.) துணை முதலான, வாசகங்களில் சார்பு வாசகங்களுக்கு மூலமான; (தொ.) lady principal, கல்லூரித் தலைவி; principal boy, principal girl, அவிநயக்கூத்தில் தலைமைப் பாத்திரம் தாங்கும் பையன் அல்லது பெண்; principal clause, சார்புறுப்பு வாசகங்களைக் கொண்ட தலைமைவாசகக் கூறு; principal in the first degree, நேரடியாகக் குற்றத்திற்குப் பொறுப்பாளி; principal in the second degree, குற்றத்திற்கு உடந்தையாக இருந்தவர்.

**principal'ities**, *n. pl.* தேவதூதர்களின் ஒன்பது படிநிலைகள்.

**principal'ity**, *n.* இளவரசரின் ஆட்சி; இளவரசரின் ஆட்சிக்குரிய பகுதி; இளவரசு பதவி; இளவரசுநிலை மதிப்பு; இளவரசின் ஆற்றல்; இளவரசுநிலை; இளவரசு பட்டத்துக்குரிய ஆட்சிப்பகுதி; வேள்புல அரசு.

**prin'cipally**, *adv.* முக்கியமாக, சிறப்பாக.

**prin'cipate**, *n.* (ரோம வர.) நீடித்து நிலவிய குடியரசு முறைகளை அழிக்காமலே முற்பட்ட பண்டைப் பேரரசர்கள் நடத்திய ஆட்சி; இளவரசன் ஆட்சி.

**prin'ciple**, *n.* தத்துவம்; அடிப்படை மெய்ம்மை; மூலக் கோட்பாடு; இயற்கை அமைதி; பொது அமைதி, விதி; ஒழுக்கமுறை விதி; செயல்முறைக்கொள்கை; தனி நடைமுறைக் கட்டுப்பாடு; இயந்திர ஆற்றல் நுணுக்கம்; உள்ளத்தின் ஆற்றல் கூறு; தனித்திறம்; பண்புக்கூறு, பண்புக்கு அடிப்படையான கூறு; பிறப்பு முதல், தோற்றுவாய்; (தொ.) on principle, வரையறுத்துக்கொண்ட ஒழுக்க நியதிகளின்படி; திட்டமிட்ட நேர்மையான எண்ணங்களின்படி.

**prink**, *v.* கட்டுச்செட்டாக நன்கு ஒப்பனை செய்துகொள்; மதிப்பாக உடுப்பணி; பறவைகள் வகையில் இறகுகளைக் கோதி அழகு செய்துகொள்.

**print**, *n.* அச்சு; முத்திரை பதித்த வெண்ணெய்க்கட்டி; அச்சடித்த பருத்தித்துணி; அச்சடித்த பகுதி; அச்செழுத்து; அச்சிட்டது; அச்சிட்ட வெளியீடு, செய்தித்தாள்; தகட்டச்சுப் பதிவு; தகட்டச்சுமாதிரி; பதித்த சுவடு; பொறிப்புத்தடம்; (நிழ.) நிழற்படத் தகட்டச்சுப்படம்; *v.* அச்சிடு; பதிப்பி; முத்திரை பொறிப்பிடு; கருத்து-காட்சி முதலியவற்றை மனத்திற் பதியவை; தாள்-தோல் முதலியவற்றின் மீது எழுத்துப் பொறிப்பி; படம் பதியவை; நிழற்படத் தகட்டச்சுப் பதிப்பிடு; ஆசிரியர் அல்லது பதிப்பாசிரியர் வகையில் புத்தகங்களை அச்சிடு; அச்சிட்டு வெளியிடு; அச்சிட்டுத்தெரிவி; அச்செழுத்துப்போன்று எழுது; ஒப்பனை செய்யும் வண்ண மாதிரிகள் கொண்டு துணிகளில் அச்சிடு; வண்ண மாதிரிகளை அல்லது சித்திரவேலைகளைத் தாள் முதலியவற்றினின்று மெருகிடப்படாத மட்கலங்கள்மேல் இடமாற்றுச்செய்; (தொ.) print hand, print letters, அச்செழுத்தைப்போன்ற கையெழுத்து; print off, print out, நிழற்படத்தைத் தகடாக

உருவாக்கு ; out of print, விற்பனையாகிவிட்ட, கைவசமில்லாத ; rush into print, புத்தக வகையில் அச்சிட்டு வெளியிடு; செய்திகளைத் தக்க சான்றுகளின்றிச் செய்தித்தாளுக்கு எழுது.

**prin'ter**, *n.* அச்சடிப்பவர்; அச்சுத்தொழில் முதல்வர்; அச்சக உரிமையாளர்; அச்சடிக்கும் இயந்திரம்; (தொ.) printer's devil, அச்சகச் சிற்ருள் ; printer's mark, அச்சக வாணிக அடையாளமுத்திரை; printer's pie, குழம்பிய நிலையில் விழுந்த அச்செழுத்துக்களின் தொகுதி.

**prin'ting**, *n.* அச்சு ; அச்சடிப்பு ; அச்சுக்கலை ; அச்சுத் தொழில்; பதிப்பு, ஒருங்கு அச்சிடப்பட்ட படிகளின் தொகுதி.

**prin'ting-ink**, *n.* அச்சக மை, அச்சு மை.

**prin'ting-press**, *n.* அச்சகம், அச்சிடுந் தொழிற்சாலை.

**print'-seller**, *n.* செதுக்குவேலைகள்-மாதிரிகள் முதலிய வற்றை விற்பவர்.

**print'-shop**, *n.* செதுக்குவேலைகள்-மாதிரிகள் முதலியவை விற்குங் கடை.

**print'-works**, *n.* அச்சடி துணியாலை, பருத்தித்துணிகளில் அச்சிடுந் தொழிற்சாலை.

**pri'or [1]**, *n.* திருமட முதல்வர், மடத்துத்தலைவருக்கு அடுத்த நிலையிலுள்ள திருமடத்துப் பணியாளர்; துறவியர் குழுத் தலைவர்; (வர.) சில இத்தாலிய குடியரசுகளில் தலைமைத் தண்டலாளர்.

**pri'or [2]**, *a.* முந்திய ; காலத்தால் முற்பட்ட ; முன்னதாக உள்ள; முந்திய முதன்மையுடைய; *adv.* முன்பாக, முன்னே.

**pri'oress**, *n.* திருமடத்து முதல்வி.

**prio'rity**, *n.* முந்துரிமை, முற்படும் உரிமை ; விஞ்சிய மேம்பாடு ; விஞ்சியதன்மை ; (தொ.) first priority, top priority, முதல் முந்துரிமை ; சிறப்பு முந்துரிமை.

**pri'ory**, *n.* துறவிமடம்; கன்னித்துறவியர் மடம்; (தொ.) alien priory, priory alien, அயல் நாட்டிலுள்ள மடத்தைச் சார்ந்துள்ள துறவிமடம்; அயல்நாட்டு மடத்தைச் சார்ந்துள்ள கன்னித்துறவியர் மடம்.

**prise**, *v.* நெம்பித்திற, மூடியைத் தென்னி எழுப்பு.

**pri'sm**, *n.* பட்டகை, மூன்று அல்லது மூன்றிற்கு மேற்பட்ட தட்டையான பக்கங்களையுடைய நீளுருளை உரு.

**prismat'ic**, *a.* பட்டகைபோன்ற; பட்டகை உருவான; ஒளிக் கதிர்களைப் பல்வண்ணங்களாகச் சிதற அடிக்கிற; நிறவகையில் பட்டகையால் பல்கூறுகச் சிதற அடிக்கப்பட்ட ; பல நிறம் கால் வீசுகிற, பல்வண்ணப்பகட்டான ; (தொ.) prismatic colours, வண்ணப்பட்டை நிறங்கள், கதிரவனொளியில் அடங்கியுள்ள சிகப்பு-ஆரஞ்சு-மஞ்சள்-நீலம்-பச்சை முதலிய நிறங்கள் ; prismatic compass, காட்சியின்போதே திசைக்குறிப்புத்தரும் நில அளவை; காட்சிக்கருவி; prismatic powder, கூழாங்கற் பொடி ; அறுகோணப் பிழம்புருவான வெடிமருந்துப் பொடி.

**pri'sm-binoculars, pri'sm-glasses**, *n.* முக்கோணப் பட்டைச்சில்லு வழங்கிக்குறுக்கலாக்கப்பட்ட பார்வைக்கருவி.

**pris'moid**, *n.* முரணிணைவகப் பக்கங்களையுடைய பட்டகை.

**pris'ms**, *n. pl.* வண்ணப்பட்டை நிறங்கள் பட்டகைமூலம் சிதறிக்காட்டப்படும் கதிரவனொளியிலடங்கிய சிகப்பு-ஆரஞ்சு-மஞ்சள்-நீலம்-பச்சை முதலிய நிறங்கள்.

**pris'on**, *n.* சிறை, காவற்கூடம் ; *v.* (செய்.) சிறையிலிடு ; (தொ.) prison editor, பத்திரிகைச்செய்திப் பொறுப்பேற்றுச் சிறைத்தண்டனை மேற்கொள்ளும் பதிப்பாசிரியர்.

**pris'on-bird**, *n.* சிறைக்கோட்டப் பெருச்சாளி.

**pris'on-breaker**, *n.* சிறைமீறியவர், சிறைதப்பியோடியவர்.

**pris'on-breaking**, *n.* சிறையிலிருந்து தப்பிச்செல்லுதல், சிறைதப்பியோடுதல், சிறைமீறுகை.

**pris'oner**, *n.* சிறைஞர்; போர்க்கைதி; புறஞ்செல்ல இயலாதிருப்பவர், கட்டுண்டிருப்பவர்; (தொ.) prisoner at the bar, குற்றவழக்கு விசாரணையின்போது காவலில் இருக்கும் காவற்கைதி ; prisoner of State, State prisoner, அரசியல் கைதி ; prisoner of war, போர்க்கைதி ; prisoner's bars, prisoner's base, சிறுவர் இருகட்சியாகப் பிரிந்து ஆடும் விளையாட்டு வகை ; take prisoner, சிறைப்படுத்து.

**pris'on-house**, *n.* (செய்.) சிறைச்சாலை.

**pris'tine**, *a.* தொன்னலம் வாய்ந்த, பழங்காலப் பண்பு கெடாத, பண்டைய.

**prith'ee**, *int.* அருள்கூர்க, தயவுசெய்க.

**priv'acy**, *n.* தனிமை; தனிமறைவு; மறைசெய்தி, இரகசியம்; அந்தரங்கத்தன்மை ; தனிமறைவிடம் ; ஒதுங்கிய தன்மை; தனி ஒதுக்கிடம் ; தொலை ஒதுக்கிடம் ; வாழ்க்கையிலிருந்து விலகிய நிலை ; பொதுவிளம்பரம் நாடாநிலை.

**privat'-docent', privat'-dozent'**, (செர்.) *n.* தனியார் ஆசிரியர்.

**priv'ate**, *n.* தனிமை ; தனிமுறைக்குழு ; தனிவாழ்வு ; *a.* தனிமுறையான, பணிமுறை சாராத ; பொதுமுறையில் வெளியிடப்படாத ; தனி உரிமைப்பட்ட, சொந்தமான ; தனிமுறைப்பட்ட, பொதுமக்களுக்குரியதாகாத ; திரைமறைவான, பொதுமக்கள் அறியாத ; தனிமறைவான, இரகசியமான ; தெரிவிக்காத, அந்தரங்கமான ; ஒதுக்குப்புறமான ; படைவீரர் வகையில் ஆணைபெரு அலுவலர்கீழ்ப் படைவீரராயிருக்கிற ; (தொ.) in private, தனி வாழ்க்கையில் ; தனி முறையில் ; தனிமையில் ; தனி ஒதுக்கமாக ; private act, தனிப்பட்டவரையோ ஒரு குழுவையோ பாதிக்குஞ் சட்டம் ; private bill, தனியாரைப் பாதிக்கும் மசோதா ; private house, தனிப்பட்டவர் வீடு ; private member, ஆட்சிப் பொறுப்பற்ற பொதுமக்கள் அவை உறுப்பினர் ; private parts, பால் உறுப்புக்கள் ; private school, தனியார் பள்ளி; private soldier, பதவியற்ற சாதாரணப் படைவீரர்; ஆணைபெரு அலுவலரின்கீழ்ப் பணிபுரியும் படைவீரர் ; this is for your private ear, மிக இரகசியமானது.

**privateer'**, *n.* எதிரிநாட்டுக் கப்பல்கள்மீது நடவடிக்கை எடுப்பதற்குரிய பற்றுணையுரிமைபெற்ற தனிப்பட்டவர்களின் போர்க்கப்பல்; *v.* பற்றுணையுரிமைபெற்ற தனிப்பட்டவர்களின் போர்க்கப்பலில் இடம்பெற்றுச் செல்.

**priva'tion**, *n.* தரமிழத்தல், தன்மை இழத்தல் ; நல அழிவு; நல்குரவு, வறுமை.

**priv'ative**, *a.* இன்மை சுட்டிய ; இழப்பு சுட்டிய ; இயல்பு நீங்கப்பெற்ற ; குண அழிவுக்குரிய; (இலக்.) இன்மை தெரிவிக்கிற, எதிர்மறைப்பண்பு சுட்டுகிற.

**priv'et**, *n.* வேலிப் புதர்ச்செடி வகை.

**priv'et-hawk**, *n.* வேலிப் புதர்ச்செடிகளில் முட்டையிடும் பெரிய விட்டில் பூச்சிவகை.

**priv'ilege**, *n.* சிறப்புரிமை; குழு உரிமைநலம்; சிறப்புரிமை நலம், தனிச்சலுகை ; உரிமைப்பேறு, உரிமைமேம்பாடு ; *v.* சிறப்புரிமையளி ; தனிச்சலுகைக்குரியவராக்கு ; பொறுப்புகளிலிருந்து தனி விலக்கு அளி ; (தொ.) bill of privilege, பெருமக்கள் குழுவால் விசாரிக்கப்பட வேண்டும் என்னும் பெருமகனின் மனு ; breach of privilege, சட்டமன்றச் சிறப்புரிமை மீறல் ; writ of privilege, உரிமை வழக்கு காரணமாகக் கைது செய்யப்பட்ட தனிச்சலுகையுடையவரைக் காவலினின்று விடுவிப்பதற்கான எழுத்துமூலக் கட்டளை.

**priv'ity**, *n.* (சட்.) தனிமறைவு காப்பமைதி, இரகசியம் உணர்ந்து அமைதல்; இருகட்சிகளுக்கிடையேயுள்ள சட்டத்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட உறவு.

**priv'y**, *n.* மலசலக் கழிப்பிடம் ; (சட்.) செயலில் உடனொத்தியலுபவர்; இரகசியத்தில் உடன்பங்கு கொண்டவர்; செய்தியில் உள்ளுடந்தையாயிருப்பவர்; *a.* பொருள் வகையில் மறைவான; இடவகையில் ஒதுக்கமான; இரகசிய வகையில் தெரிந்தடக்கமாயிருக்கிற ; (தொ.) Lord Privy Seal, முத்திரை நாயகம், பேராணை முத்திரை தேவைப்படாத ஆவணங்களுக்குரிய அரச முத்திரை வைத்திருப்பவர் ; Privy Council, அரசனின் தனிப்பட்ட ஆய்வுரையாளர்கள் குழு; பிரிட்டனில் அரசப் பேரவை ; privy parts, பால் உறுப்புக்கள் ; privy

purse, அரசரின் தனிப்பட்ட செலவிற்காகப் பொதுவரி வருமானத்திலிருந்து கொடுக்கப்படும் பணம்; அரசரின் தனிப்படியை வைத்திருப்பவர்; Privy seal, பொது ஆவணங்களில் இடப்படுவதற்குரிய அரசமுத்திரை; privy to, தெரிந்தநிலையிலுள்ள, இரகசியத்திற் பங்குகொண்டுள்ள.

**prize**[1], *n.* பரிசு; போட்டிகளில் வெற்றிச்சின்னம்; கலைப்பொருள்; மேம்பாடு கருதிக் கொடுக்கப்படும் சிறப்பு அடையாளப்பொருள்; அருமுயற்சியின் பயன், முயன்றுபெற்ற பொருள்; போட்டியிட்டுப் பெற்றபொருள்; அரும்பெறற் பேறு, முயன்றுபெறத் தக்கது; எதிர்பாராப்பேறு, யோகச் சீட்டுக்களிற் கிடைக்கும் பொருள்; *v.* உயர்வாக மதி, பாராட்டு; போற்று; மதித்துப்பேணு; (தொ.) prize fellowship, தேர்வுகளில் மேம்பட்டு நின்றதற்காக அளிக்கப்படும் பரிசு உதவிப் பணம்.

**prize**[2], *n.* கடற்போரில் வென்று கைப்பற்றப்பட்ட பொருள்; கைப்பற்றப்பட்ட கப்பல்; *v.* கடற்போரில் வென்று கைப்பற்று; (தொ.) become prize, கடற்போரில் வென்று கைப்பற்றப்படும் பொருளாகக் கொள்ளப்படு; make prize of, கடற்போரில் கைப்பற்று, கடற்போரில் கைப்பற்றப்படும் பொருளாகக்கொள்; prize fellow, பரிசுபெற்றவர்; உதவிப் பணம் வழங்கப்பட்டவர்.

**prize**[3], *v.* நெம்பித்திற, தென்னித்திறக்க முயற்சிசெய்.

**prize'-court**, *n.* கடற்போரில் கைப்பற்றிய பொருள்களைப் பற்றிய தீர்வுக்குரிய கடற்படைத் தலைமை நிலைய நீதிமன்றம்.

**prize'-fight**, *n.* பணத்திற்காகப் போடப்படும் குத்துச்சண்டை.

**prize'-fighter**, *n.* பணத்திற்காகக் குத்துச்சண்டை போடுபவர்.

**prize'man**, *n.* பரிசர்.

**prize'-money**, *n.* கடற்போரில் வென்று கைப்பற்றிய பொருள்களை விற்பதால் வரும் பணம்.

**prize'-ring**, *n.* பந்தயக் குத்துச்சண்டை வட்டரங்கு; பந்தயக் குத்துச்சண்டைப் பயிற்சிக்கான வட்டரங்கம்.

**pro**[1], *n.* (பே-வ.) உடற்பயிற்சி விளையாட்டையே வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர்; தொழிற்பயிற்சிச் செவிலியர்.

**pro**[2], *n.* ஆதரவாளர்; ஆதரவுப்பண்புக்கூறு; *adv.* ஆதரவாக; (தொ.) pro and con, ஆதரவாகவும் எதிராகவும்.

**pro'a**, *n.* மலேயாநாட்டுப் படகுவகை.

**probabil'iorism**, *n.* சான்றுதரவு மிகுதியுள்ள பக்கத்தையே பின்பற்ற வேண்டுமென்ற கோட்பாடு.

**prob'abilism**, *n.* மேற்கோளாட்சிகள் முரண்படுமிடங்களில் அறிஞர் ஒருவர் வழிநின்று எவரும் எவ்வழியும் மேற்கொள்ளலாம் என்ற கோட்பாடு; திட்டவட்டமான உறுதிப்பாடுடைய அறிவு எதுவும் கிடையாததால் நடைமுறை வாழ்க்கைக்குப் போதுமாயிருக்கிற நம்பிக்கைகளே பின்பற்றத்தக்கவை என்னுங் கொள்கை.

**probabil'ity**, *n.* நம்பக்கூடியதன்மை; மெய்ப்பிக்கக்கூடியது; நிகழக்கூடியது, நிகழக்கூடிய நிகழ்ச்சி; (கண.) நிகழ்ச்சித் தகவு.

**prob'able**, *n.* கெலிப்புவாய்ப்பு வேட்பாளர்; *a.* நிகழக்கூடிய; உண்மையாக இருக்கக்கூடிய.

**prob'ang**, *n.* தொண்டைச்சிக்கல் தீர்வு கருவி.

**prob'ate**, *n.* ஒப்பாட்சிக்குரியதாக நிறைவேற்ற உரிமையாளரிடம் ஒப்படைக்கப்பட்ட சான்றுறுதி வாய்ந்த விருப்பாவணம்; மெய்ப்பித்த விருப்பாவணப்படி; (தொ.) probate duty, விருப்பாவணம் எழுதி இறந்தவரின் தனி உடைமை மேல் போடப்படும் வரி.

**proba'tion**, *n.* தெரிந்தாயும்நிலை; முதனிலைத் தேர்வு, சமயம் புகுபவர்க்குரிய குறிப்பிட்ட கால அளவான புகுமுகத் தேர்வுநிலை; முதல்முறைக் குற்றவாளிகளுக்கு நன்னடத்தைச் சோதனைமுறையான விடுதலை; (தொ.) on probation, முதனிலைத் தேர்விற்கு உட்பட்டு; probation officer, முதற்குற்றவாளிகள்-இளங்குற்றவாளிகள் கண்காணிப்பாலோசனை அதிகாரி.

**proba'tional**, *a.* தகுதி ஆய்வுக்குட்பட்ட முதனிலைத்தேர்வின் தன்மையுடைய.

**proba'tionary**, *n.* தேர்ந்தாயும் நிலைக்கு உட்பட்டவர்; *a.* தகுதி ஆயவு சார்ந்த; முதனிலைத்தேர்வு முறையான; தேர்வு முறைக்கு உட்பட்ட.

**proba'tioner**, *n.* தேர்ந்தாய் நிலையினர்; நன்னடத்தைப் பிணையில் விடுவிக்கப்பட்டுள்ள முதற்குற்றவாளி அல்லது இளங்குற்றவாளி.

**prob'ative**, *a.* சான்றளிக்கிற, எண்பிக்கிற; சான்றுவடிவான.

**probe**, *n.* சலாகை; கிளறுதல்; சோதனைத்துளையீடு; *v.* சலாகை போடு; நுணுக்கமாக ஆய்வுசெய்; கூர்ந்து சோதித்துப்பார்; ஆழ்ந்து ஆய்வுசெய்.

**prob'ity**, *n.* நேர்மை, உண்மை, நாணயம்.

**prob'lem**, *n.* கடுவினா, ஐயப்பாட்டிற்குரிய செய்தி; புதிர், புரியாச் செய்தி; சிக்கல், மலைப்புத்தரும் செய்தி; கடா, விடுவிக்க வேண்டிய சிக்கலான செய்தி; தீர்வமைவு, சதுரங்கத்தில் தீர்வு அவாவிய காய் அமைவு; (வடி.) செய்மானத் தீர்வுக்குரிய மெய்ம்மை; (அள.) ஆய்வுக்கரு, முக்கூட்டு முடிவில் அடங்கியுள்ள விடுவிப்பிற்குரிய வினா; (கண., இயற்.) தீர்வாய்வு, தரவிலிருந்து முடிவுநோக்கிய வாதம்; (தொ.) problem child, சிக்கல் குணவியல்பு மகவு.

**problemat'ic, problemat'ical**, *a.* ஐயப்பாடான, முடிவுறுதியற்ற; சிக்கலான, கேள்விக்கு இடமளிக்கிற; (அள.) கூடு முடிவன்றிச் செயல் முடிவாயிராத.

**prob'lematist**, *n.* தீர்வு அமைவுகளை ஆக்கிப் படைப்பவர்; தீர்வு அமைவு ஆய்வாளர்.

**proboscid'ean, proboscid'ian**, *n.* தூம்புநுதி விலங்கினம்; *a.* தும்பிக்கை போன்ற; தும்பிக்கை சார்ந்த; தும்பிக்கைபோன்ற உறுப்பினையுடைய; தும்பிக்கைபோன்ற உறுப்பினையுடைய விலங்கினஞ் சார்ந்த.

**probos'cis**, *n.* தும்பிக்கை; பூச்சி வகைகளின் தூண்டிழை; புழு வகைகளின் உறிஞ்சுகுழல்; கேலி வழக்கில் நீண்ட மூக்கு; (தொ.) proboscis monkey, நெடுநீள் மூக்குடைய குரங்கு வகை.

**pro-cathed'ral**, *n.* சமயவட்டத் தலைமைத் திருக்கோயிலுக்குப் பதிலாக வழங்கும் திருக்கோயில்.

**proced'ural**, *a.* செயற்படுமுறை சார்ந்த; நடைமுறை சார்ந்த.

**proced'ure**, *n.* செயற்படு முறை; செல்லுமுறை, நடைமுறை; தொழில் நடவடிக்கை; சட்டமன்ற நிகழ்ச்சிமுறை.

**proceed'**, *v.* முன்செல்; நடத்திச்செல்; தொடர்ந்து செயற்படு; செயலாற்று; சட்ட நடவடிக்கை எடு; மேல்பட்டம் பெற முற்படு; நடைமுறையை மேற்கொள்; வெளி வா, வெளிப்படு, தோன்று.

**proceed'ing**, *n.* செயல்; முன்னேறுதல்; நடைபெறுதல்; நடவடிக்கை; தொடர்ந்து நடத்துகை; தொடர்ந்து செய்கை.

**proceed'ings**, *n. pl.* சங்க நடவடிக்கைக் குறிப்பேடு.

**pro'ceeds**, *n. pl.* விளைபயன், விளையுள்; வருமானம்.

**proceleusmat'ic**, *n.* நான்கு குற்றசைகள் கொண்ட சீர்; *a.* செய்யுட் சீர் வகையில் நான்கு குற்றசைகளையுடைய.

**procellar'ian**, *n.* அலைவாய்ப் புள்ளினம், தீவப் பறவையினம்; *a.* அலைவாய்ப் புள்ளினஞ் சார்ந்த.

**pro'cess**[1], *n.* நடைமுறை; செயற்பாங்கு; வழிமுறை; வழிவகை; படிமுறை; வழக்குமன்ற நடவடிக்கை; வழக்கு நடவடிக்கைத் தொடக்கம்; வழக்குமன்ற அழைப்புக்கட்டளை; இயல்வளர்ச்சி; உருவாக்கம்; அச்சுத்துறையில் தனிச் செய்முறை; (தாவ., வில., உள்.) புற வளர்ச்சி, முற்புடைப்பு; *v.* வழக்கு நடவடிக்கை எடு; செயல்முறைக்குள்ளாக்கு; உணவு வகையில் பதனஞ் செய்; படம் முதலியவற்றில் செய்முறையால் புத்துருவாக்கு.

**process'**[2], *v.* (பே-வ.) ஊர்வலஞ் செல்.

**proce'ssion,** *n.* ஊர்வலம், நகர்வலம், பவனி; ஊர்வலமாகச் செல்லும் மக்கள்; ஒழுங்கமைவற்ற ஓட்டப்பந்தயம்; தூய ஆவி வெளிப்பாடு; ஊர்வலவழிபாடு; *v.* ஊர்வலமாகச் செல்; வீதிகளின் வழியே பவனிசெல்.

**proce'ssional,** *n.* ஊர்வலப்பாடல்; ஊர்வலப்பாடல்தொகுதி; *a.* ஊர்வலஞ் சார்ந்த; ஊர்வலம் போன்ற; ஊர்வலமான; ஊர்வலங்களிற் கொண்டு செல்லப்படுகிற; ஊர்வலங்களிற் பயன்படுத்தப்படுகிற; ஊர்வலங்களிற் பாடப்படுகிற.

**proce'ssionist,** *n.* ஊர்வலத்திற் செல்பவர்.

**pro'cess-server,** *n.* வழக்குமன்ற ஆணை உய்ப்பவர்.

***proces-verbal,*** (பிர.) *n.* நிகழ்ச்சிக் குறிப்பு; செய்திப்பட்டி, பிரஞ்சு சட்ட வழக்கில் குற்றத்திற்கு ஆதரவான உண்மைகளின் எழுத்துமூல அறிக்கை.

**pro'chronism,** *n.* கால முற்குறிப்பீடு, நிகழ்ச்சி நிகழ்ந்த உண்மையான தேதிக்கு முன்னுன தேதியைக் குறிப்பிடுதல்.

**proclaim',** *v.* சாற்று; விளம்பரப்படுத்து; உரிமை கோரி வெளிப்படையாக அறிவி; முடிபு வலியுறுத்தி அறிவி; ஆட்சிப் பகுதியைக் கட்டுப்பாட்டு நிலைக்குரியதாக அதிகாரத்தோடு அறிவித்துவிடு; தடை-செய்தி முதலியவற்றை வலியுறுத்தி அறிவி.

**proclama'tion,** *n.* சாற்றுதல், பொது அறிவிப்பு; பொது அறிவிப்புச் செய்தி; அரச விளம்பரம்; நாடுகடத்தலறிவிப்பு; நாட்டுப் பகைப் பட்டியலிற் சேர்ப்பு.

**proclit'ic,** *a.* (இலக்.) கிரேக்க மொழியில் ஓரசைச் சொல் வகையில் தனக்கென அழுத்திசைப்பின்றி வருசொல்லுடன் இணைந்தொலிக்கிற.

**procliv'ity,** *n.* சார்பான நாட்டம், சார்பு நோக்கிய பற்று.

**procon'sul**[1], *n.* (வர.) பண்டை ரோம ஏகாதிபத்தியத்தில் புறமாகாணத் தலைவர்; பிற்கால ரோமப் பேரரசில் முன்னுள் புறமாகாண ஆளுநர்; புதிய குடியேற்ற நாட்டின் ஆளுநர்.

**pro'-consul**[2], *n.* மாகாணத் துணை முதல்வர், உதவி ஆளுநர்.

**procras'tinate,** *v.* காலந் தாழ்த்து; தயங்கு; தள்ளிவை.

**procrastina'tion,** *n.* நெடுநீர்மை.

**proc'reate,** *v.* கால்வழி உண்டுபண்ணு, மகவுபெறு; இனம் பெருக்கு.

**pro'creative,** *a.* பிறப்பிக்கிற.

**Procrus'tean,** *a.* வலிந்து மட்ட ஒருமை நிறுவுகிற, வன்முறையால் அளவிற்கு உட்படுத்துகிற.

**proc'tor,** *n.* பல்கலைக்கழக ஒழுங்குகாவலர்; மேலாளர்; (சட்.) சமயச்சார்புடைய வழக்குமன்றங்களின் வழக்குரைஞர்; (தொ.) King's Proctor, Queen's Proctor, இங்கிலாந்தில் மணமுறிவு வழக்குகளில் சூழ்ச்சியோ ஏமாற்றோ இருக்குமென ஐயப்படும் நிலையில் இடையிடும் உரிமையுடைய அதிகாரி.

**proctor'ial,** *a.* பல்கலைக்கழக ஒழுங்கு காவலருக்குரிய; ஒழுங்குகாவல் சார்ந்த; குற்றத் தண்டனைச் சார்பான.

**proc'torize,** *v.* பல்கலைக்கழக மாணவரிடையே ஒழுங்கு முறையை நிலைநாட்டு.

**procum'bent,** *a.* குப்புறப் படுத்துள்ள; நெடுஞ்சாண்கிடையான; (தாவ.) நிலத்தின்மேற் படிந்து வளர்கிற.

**procura'tion,** *n.* பிறர்வினை மேற்கோடல், நடைபெறுவித்தல், வழக்குரைஞரின் செயல்; வழக்குரைஞரின் உரிமைப் பகர நடவடிக்கை; மாவட்டச் சமயத் தலைவருக்கு அவரது வருகைக்காகப் பணிப் பொறுப்பாளர்கள் அளிக்கும் பணத் தொகை; கடன் பெறுவதற்கான பேரப்பரிவு முயற்சி; கடன் பேரப்பரிவு முயற்சிக்காகக் கொடுக்கப்படுந் தொகை; உடன்படுத்துந் தொழில்.

**proc'urator,** *n.* (வர.) ரோமர் பேரரசின் மாகாணக் கருவூல அதிகாரி; முகவர், பதிலாள்; பகரச் செயலுரிமையாளர்; இத்தாலிய நகரங்களின் குற்றநடுவர்; (தொ.) procurator fiscal, ஸ்காத்லாந்திலுள்ள அரசியற் சார்பான மாவட்ட வழக்கறிஞர்.

**proc'uratory,** *n.* பகரச் செயலுரிமை அதிகாரம்; சட்டப்படியான பகரச் செயலுரிமை.

**proc'uratrix,** *n.* கன்னிமாடப் புறச்செயல் தலைவி.

**procure',** *v.* பிறர்வினை மேற்கொள்; முயன்று பெறு; பெண் வகையில் கூட்டியிணைவி.

**procur'er,** *n.* பெண்தரகர்.

**prod,** *n.* குத்து, இடிப்பு; கையிடி; கம்புக்குத்து; தார்க்கோல் குத்து; கூர்ங்கருவி; தாற்றுக்கோல்; *v.* குத்து, இடி; தாற்றுக்கோலாற்குத்து; கழிமுனை கொண்டு இடி; குத்தித் தூண்டு; தொந்தரை செய்; எரிச்சலூட்டு; குத்துவது போலப் பாவித்துக்காட்டு.

**prodeli'sion,** *n.* யாப்பில் சொல்லின் முதலுயிர் கெடுதல்.

**prod'igal,** *n.* ஊதாரி; அளவுகடந்து செலவிடுபவர்; வீண் செலவு செய்பவர்; *a.* ஊதாரியான, அள்ளி இறைக்கிற; வீண்செலவழிக்கிற; (தொ.) prodigal son, கெட்டழிந்து மீண்ட புதல்வன்; வேடரிற் சிக்குண்டு திரும்பியவன்.

**prod'igalize,** *v.* ஊதாரித்தனமாகச் செலவிடு, அளவுகடந்து செலவிடு, வீண்செலவு செய்.

**prodi'gious,** *a.* வியப்புக்குரிய, அதிசயமான; மிகப்பெரிய; இயற்கை கடந்த.

**prod'igy,** *n.* வியத்தகுபொருள்; மாண்தகுநர், வியப்புவிளைப்போர்; அருந்திறலாளர்; சிறுமுதுக்குறைஞர்.

**prod'ition,** *n.* வஞ்சனை, துரோகம்.

**prod'itor,** *n.* துரோகி.

**prod'rome, prod'romus,** *n.* பூர்வாங்க ஏடு, பிறிதொரு நூலுக்கு முன்னுரையாகத் திகழும் நூல்; முகப்பீட்டுக் கட்டுரை, பிறிதொரு கட்டுரைக்குப் பூர்வாங்கமாயமையுங் கட்டுரை; (மரு.) நோய்க்குமுன் அடையாளம்; *pl.* prod'romi.

**prod'uce**[1], *n.* விளைவு; விளைச்சல், பயிர் விளைவு; தோட்ட விளைவு; விளைபொருள்; உழைப்பின் பயன்; கனிக்கலவையின் முடிவான விளைபயன்; மாற்றுத் தேர்வால் கிடைக்கும் உலோக விளைவு.

**produce'**[2], *v.* முன்னிலைப்படுத்து, பார்வைக்குக் கொண்டு வந்து வை; வரவிடு, முன்கொணர்ந்து ஒப்புவி; பயிர் விளைவி; விளை பொருள்களை ஆக்கிப் படை; செய்பொருள் ஆக்கு; உணர்ச்சிகளை உண்டுபண்ணு; உருவாக்கு; தோற்றுவி; ஈனு, பிறப்பி; நீட்டிக்கொண்டு செல், தொடர்வி; (வடி.) நீட்டு, தொடர்ந்து படர்வி.

**produ'cer,** *n.* உணவுப்பொருள் விளைவிப்பவர்; தேவைப் பொருள் உற்பத்தியாளர்; திரைப்படத் தயாரிப்பாளர், திரைப்பட முதலாளி; (தொ.) producer gas, சிவக்க வெப்பூட்டப்பட்ட கரியத்தின் ஊடாகக் காற்றைச் செலுத்தும் பொழுது உண்டாகும் வளி.

**prod'uct,** *n.* விளைபொருள்; விளைபயன்; விளைவு; (கண.) பெருக்கம், பெருக்கல் விளைவு; (வேதி.) பிரிவில் புதிதுண்டாகுஞ் சேர்மம்.

**produc'tion,** *n.* விளைவாக்கம், உற்பத்தி; படைத்தாக்கல்; கலைப் படைப்பு; இலக்கியப் படைப்பு; படைக்கப்பட்ட ஏடு; படைக்கப்பட்டது.

**produc'tive,** *a.* உண்டுபண்ணுகிற; ஆக்கவளமுடைய; விளைச்சல் வளமிக்க; செழிப்புடைய; ஆக்கிப்படைக்கும் ஆற்றல் வாய்ந்த; பிறப்பிக்குந் திறமுடைய; உழைப்பு வகையில் செயல் திறமிக்க; படைப்பு வாய்ப்புடைய; வாணிகத்துறையில் பண்டமாற்று வாய்ப்பு வளமுடைய.

**pro'em,** *n.* பாயிரம், முன்னுரை, முகவுரை.

**profane',** *a.* சமயச் சார்பற்ற; விவிலிய ஏடு சாராத; திருநிலைக்குப் புறமான; தீக்கையளிக்கப் பெருத; திருநிலை ஆணைக்கு மாருன; ஆசாரமற்ற; புனிதநிலை கெட்ட; தெய்வ நிந்தனையான; *v.* திருநிலை கெடு; புனிதநிலை அவமதி; ஆசார அழிமதி செய்; தீட்டாக்கு; தெய்வ நிந்தனைசெய்; தெய்விகத் தன்மையை ஏளனஞ் செய்.

**profan'ity**, *n.* துப்புரவுக்கேடு ; ஆசார அழிவு, அநுசிதம் ; தூய்மையற்ற பேச்சு.

**profess'**, *v.* உரிமை கொண்டாடு ; உறுதியாகக் கூறு ; உணர்ச்சி வகையில் வெளிப்படையாகப் புலப்படுத்து ; மேற்கொள்வதாகக் காட்டிக்கொள் ; வெளிப்படத் தெரிவி ; மனமார ஒத்துக்கொள்; சமயத்தில் பற்றுறுதிகொள்; பற்றுறுதியுடன் மேற்கொள் ; வாழ்க்கைத் தொழிலாகக் கொள் ; பேராசிரியராகப் போதனைசெய் ; பேராசிரியராகப் பணியாற்று.

**professed'**, *a.* தானே மனமார ஏற்றுக்கொண்ட ; சாற்றுநிலையான; வெளிப்படையாகப் புலப்படுத்தப்பட்ட, பலரறிய ஏற்றுக்கொண்ட ; புறப்பகட்டான ; வெளிப்படையான ; உரிமை பாராட்டிக்கொள்கிற.

**profess'edly**, *adv.* வெளிப்படையாய் ; சாற்றுநிலையில் ; ஏற்றுக்கொண்டபடி ; குறிப்பிட்டபடி.

**profe'ssion**, *n.* வெளிப்படை அறிவிப்பு ; சமய நம்பிக்கை ; பாவிப்பு ; வேடம் ; நிலையற்ற உறுதிமொழி ; வாழ்க்கைத் தொழில் ; வாழ்க்கைத்தொழிலாகக்கொண்ட பணித்துறை ; தொழிலர் தொகுதி.

**profe'ssional**, *n.* வாழ்க்கைத்தொழிலர் ; கலைத்தொழிலர் ; மரப்பந்தாட்டம்-குழிப்பந்தாட்டம் முதலியவற்றை ஊதியந் தரும் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர் ; *a.* வாழ்க்கைத் தொழிலுக்குரிய ; வாழ்க்கைத் தொழிலின் தொடர்புடைய ; வாழ்க்கைத்தொழிலாக மேற்கொண்ட ; (தொ.) professional politician, அரசியலைப் பிழைப்பாகக் கொண்டவர்.

**profe'ssionalism**, *n.* தொழிலர் தொகுதி மனப்பான்மை; வாழ்க்கைத் தொழிற் கூட்டணி மதிப்புநிலை ; வாழ்க்கைத் தொழில் சார்ந்த பண்புத்தொகுதி ; ஊழியப்பணியாளர்களை அமர்த்திக்கொள்ளும் முறை.

**profe'ssionalize**, *v.* வாழ்க்கைத்தொழிற் பண்பூட்டு ; தொழிலை ஊழியத்துறைப் பணியாளரிடம் ஒப்படை.

**profess'or**, *n.* பேராசிரியர் ; பல்கலைக்கழகப் பேராசிரியர் ; கல்லூரிப் பேராசிரியர்; மதக்கோட்பாட்டாளர்; வெளிப்படையாகக் கூறுபவர்.

**proff'er**, *n.* (செய்.) கொடுக்க முன்வருகை ; கொடுப்பிசைவு தெரிவிப்பு; வழங்கல் ஏற்புக் குத்தகை; வழங்குநலம்; உதவியின் தொடக்கப்படியான செயல் ; *v.* உதவ முன்வா ; நன்கொடை வழங்க முன்வா, தானாகப் பொறுப்பு ஏற்றுக்கொள்ள முன்வா.

**profi'ciency**, *n.* தேர்ச்சித் தோற்றம்; செயல்திறமை; வல்லுநர் பண்பு முன்னேற்றம்; முழுநிறைவு நோக்கிய திருத்தவளர்ச்சி.

**profi'cient**, *n.* வல்லுநர், திறலாளர், தேர்ந்தவர்; *a.* வல்லுநரான, கைதேர்ந்த.

**prof'ile**, *n.* பக்கத்தோற்ற வடிவம்; ஆளின் முகத்திற்குரிய பக்கவாட்டான உருவரைப்படிவம் ; ஒப்பீட்டளவுக்கோடு ; பக்கவாட்டான உருவவரைப் படிவப்படம், ஒருமுகத்தோற்ற வரைப்படம் ; கோட்டை-மண்மேட்டரண் ஆகியவற்றின் வகையில் குறுக்குவெட்டான செங்குத்துப் பகுதியின் வரைப்படம்; ஒருதள முகப்பான திரைக்காட்சி ஓவியம்; பத்திரிகைத் துறை வகையில் சிறு வாழ்க்கைக் குறிப்பு அல்லது பண்போவியக் குறிப்பு ; *v.* மனித முகத்தின் பக்க உருத்தோற்றப் படிவங்குறி ; தெளிவான முனைப்புடைய பக்கத்தோற்றங் கொடு.

**prof'it**, *n.* ஆதாயம், இலாபம் ; பய்ன், நன்மை ; பெறுதி, வருநலன் ; ஊதியம், நலமேம்பாடு ; *v.* பொருள்வகையில் ஆதாயமாயிரு ; பயன்படு, அனுகூலமாயிரு, நலந்தருவதாயிரு ; பயனடை ; நலம்பெறு.

**prof'itable**, *a.* ஆதாயமான ; இலாபம் விளைக்கிற ; பயன்படுகிற ; மிகு வருவாய் உடைய ; நலந்தருகிற, நலமேம்பாட்டு வாய்ப்பளிக்கிற.

**profiteer'**, *n.* நெருக்கடியைப் பயன்படுத்திக் கொள்ளை ஆதாயமடிப்பவர் ; *v.* நெருக்கடிநிலையைப் பயன்படுத்திக் கொள்ளை இலாபம் பெறு.

**prof'its**, *n. pl.* விடுமுதலுக்கு மேற்பட்ட வருமானமிகை.

**prof'it-sharing**, *n.* இலாபப்பங்கு ஒப்பந்தம்.

**prof'ligacy**, *n.* ஒழுக்கக்கேடு ; வரம்புமீறிய ஊதாரித்தன்மை.

**prof'ligate**, *n.* ஒழுக்கக்கேடர் ; ஊதாரி ; *a.* தீயொழுக்கமுடைய ; ஊதாரித்தனமான.

*pro form'a*, (ல.) *a.* வழக்க முறைமையை ஒட்டிச்செய்யப்படுகிற, ஆசாரஞ் சார்ந்த.

**profound'**, *n.* (செய்.) தடங்காணா ஆழம் ; கடலின் ஆழ்கசம் ; உள்ளத்தின் வகையில் ஆழ்தடம் ; காலவகையில் நீள்தொலைப்பகுதி ; வருங்கால வகையில் எட்டாத்தொலைப்பகுதி ; *a.* மிக ஆழ்ந்த, ஆழமிக்க ; தடங்காணாத ; நெடுந்தொலை உட்கடந்த ; உள்ளத்தின் வகையில் ஆழ்தடஞ்சார்ந்த ; உணர்ச்சி வகையில் அடித்தளத்திலிருந்து வருகிற ; முழு ஆற்றல்வாய்ந்த ; வீறுர்ந்த ; அறிவுவகையில் அளவிடற்கரிய ; புலமைவகையில் அறிவாழமிக்க ; எண்ணங்கள் வகையில் ஆழ்ந்த அறிவாராய்ச்சியுடைய; வணக்க வகையில் நெடும் பணிவார்ந்த ; உணர்ச்சிப்பதிவு வகையில் ஆழ்தடம் பதிந்த, அழியாத் தடம்பதித்த ; நெடுந்தொலை பரந்து செல்கிற.

**profund'ity**, *n.* ஆழமுடைமை.

**profuse'**, *a.* தாராளமான ; மட்டுமீறிய ; தேவைக்கு மேற்பட்ட ; தங்குதடையற்ற, அள்ளி வழங்குகிற.

**profuse'ly**, *adv.* அளவின்றி; தங்குதடையின்றி; ஏராளமாக.

**profu'sion**, *n.* தாராளம் ; ஊதாரித்தன்மை ; தங்குதடையற்ற வளம்.

**prog [1]**, *n.* கட்டுச்சோறு.

**prog [2]**, *n.* குத்துக்கோல்.

**prog [3]**, **progg'ins**, *n.* ஒழுங்குகாவலர், ஆக்ஸ்போர்டு அல்லது கேமபிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் ஒழுங்குமுறை நிலைநாட்டும் அதிகாரி ; *v.* பல்கலைக்கழக ஒழுங்கு காவலராகச் செயலாற்று.

**progen'itive**, *a.* கால்வழி பெருக்கத்தக்க, சந்ததி உண்டுபண்ணத்தக்க ; மரபுப்பெருக்கஞ் சார்ந்த.

**progen'itor**, *n.* மூதாதை, முன்னோர்; விலங்கு-தாவரங்களின் மரபுமூலமுதல்; தந்தை ; பண்புமரபில் முன்னோடி, முந்திய மூலமாதிரி.

**progen'iture**, *n.* கால்வழிப்பெருக்கம், சந்ததி ஆக்கம்; ஈனுதல் ; கால்வழி, சந்ததி.

**pro'geny**, *n.* கால்வழிமரபு, சந்ததி ; வழித்தோன்றியவை ; மக்கள் ; விலங்கு-தாவரம் முதலியவற்றின் மரபுத் தோன்றல்கள் ; பின்விளைவுத்தொகுதி, தொடர்விளைவான பயன்.

**proglott'is**, *n.* நாடாப்புழுவின் பாலுறுப்பு முதிர்ந்த பகுதி ; *pl.* proglott'ides.

**prog'nathous**, *a.* தாடை நீண்ட.

**prognos'is**, *n.* முன்கணிப்பு, வருவது முன்னறிவிப்பு; (மரு.) வருவதுரைத்தல் ; *pl.* prognos'es.

**prognos'tic**, *n.* வருங்குறி, வருவதுபற்றிய முன்குறிப்புரை ; உன்னம், நிமித்தம் ; முன்குறி, முன்னடையாளம் ; முன்னறிவுக்க உதவுங்கூறு ; *a.* முன்னறிகுறியான ; வருவது முன்கூறுகிற ; குறிகாட்டுகிற ; முன்னறிவிப்பின் இயல்புடைய

**prognos'ticate**, *v.* முன்னறிந்து கூறு, வருவதுரை ; முன்குறிகாட்டு, முன்னறிகுறியாய் அமை.

**prognostica'tion**, *n.* வருவதுரைத்தல், நிமித்தம்.

**prog'ram**, **prog'ramme**, *n.* நிகழ்ச்சிநிரல் ; செயல்முறை வகுப்பு ; அமைப்புத்திட்டம் ; *v.* நிரல்பட வகு ; செயல் திட்டம் வரை.

**prog'ress [1]**, *n.* முன்னேற்றம், முற்போக்கு வளர்ச்சி ; தொடர்ச்சி ; மேம்பாடு.

**progress' [2]**, *v.* முன்னேறு ; மேம்பாடு அடை ; வளர்ச்சியடை ; தொடர்ந்து நடைபெறு.

**progre'ssion,** *n.* முன்னேற்றம்; தொடர்முறை நிகழ்ச்சி; (கண.) படிமுறைவரிசை; (இசை.) சுரங்களின் இசைவுப்படி வரிசை; (தொ.) arithmetical progression, அளவு வளர்ச்சி; நிலையெண் கூடிக் குறைந்துவரும் படிமுறைப்பாங்கு; geometrical progression, பெருக்க ஏற்றவிறக்கத் தொடர்பு, நிலையெண்ணாற்பெருக்கி வகுத்துக்கொண்டு போகும் படிமுறைப்பாங்கு; harmonic progression, இசை இயைபுப் படிமுறை வரிசை, கீழ்வாய்ப் படிமுறைவரிசையின் கணக்கியல் மேல்வாய்மானப் பாங்கு.

**progre'ssionist, prog'ressist,** *n.* முன்னேற்றவாதி, அரசியல் சமுதாய முற்போக்குக் கொள்கைகளுக்கு ஆதரவு காட்டுபவர்; நாகரிக முற்போக்குக் கோட்பாட்டாளர், உலகவாழ்வு படிப்படியாக முன்னேறி வருகிறதென்னுங் கொள்கையுடையவர்.

**progress'ive,** *n.* முற்போக்காளர், அரசியல் சமுதாயத்துறைகளில் முன்னேற்ற ஆதரவாளர்; *a.* முன்னேறுகிற; படிப்படியாக முன்னோக்கிச் செல்கிற; படிப்படியான; சமுதாய நிலை-பண்பு-திறமை முதலியவற்றில் படிப்படியாக வளர்ந்து வருகிற; நோய்வகையில் முற்றிக்கொண்டே செல்கிற; சீர்திருத்தத்தை ஆதரிக்கிற; (தொ.) progressive whist, வெவ்வேறு மேசைகளில் ஆடும் பல ஆட்டக் குழுவினர்களுட் சிலர் ஒவ்வொரு ஆட்டமுடிவிலும் மற்றொரு மேசைக்குச் சென்று தொடர்ந்து ஆடும் சீட்டாட்டவகை.

**prohib'it,** *v.* தடைசெய், செயலைத்தடு; தடுத்தாணையிடு.

**prohibi'tion,** *n.* தடைசெய்தல்; செயலைத்தடுத்தல்; தடையுத்தரவு; மதுவிலக்கு; (சட்.) வழக்கு விசாரணைத் தடையுத்தரவு.

**prohib'itive,** *a.* தடுக்கிற, தடைசெய்கிற.

**prohib'itory,** *a.* விலக்குகிற, தடுக்கிற.

**proj'ect**[1], *n.* திட்டம், செயல்முறை ஏற்பாடு.

**project'**[2], *v.* துருத்திக்கொண்டிரு, முனைநீட்டிக்கொண்டிரு; எல்லைகடந்து உந்தியிரு; உந்துவி, நீட்டு; வெளிப்படவிடு, புறஞ்செலுத்து; பின்னணித்தளமீது உருவரை காணப்பெறு; பின்னணிக்கெதிராக உருவரை படியவை; எறிவுசெய், ஒளி நிழல் உருவரைகளை அகல்வெளியில் வீசு; மேற்படிவுசெய், ஒளி நிழல் வடிவங்களை எறிந்து மேற்படியவை; உருப்படியவை; புறநிலைப்படுத்து; புறவுருப்படுத்திக்காட்டு; மனத்தில் கருத்து உருவாக்கு; தொலைவிலிருந்து பிறர்முன் தன் ஆவியுருத்தோற்றுவி; தன் கருத்தாற்றலைப் புறஞ் செலுத்திப் பிறர் உள்ளக்கருத்தை உருவாக்கு; நிகழ்நிலை கடந்து வருங்காலத்தடத்தில் கருத்துப்படர்வி; வீசியெறி; அகல்வெளிநோக்கி ஏவு; ஏவி இயக்கு; நெறிமுறை வகுத்தமை; திட்டம் வகு; பண்டைப் பொன்மாற்றுச் சித்து வகையில் உருமாற்றுப்பொடியை மேலே தூவு; பொடி மேலே தூவி உருமாற்றுச்செய்; (வடி.) வரை உருவின் தொடர் சரியிணைவான உருவினைக் கட்டமைவி; புள்ளி கோடு வரையுரு வகைகளில் பிற தளமீது சரியிணைபடிவம் படிவி; நிலக்கோள வான்கோளங்களை மட்டத்தளத்தின்மீது சரிசமத் திசைமானப்படுத்திக்காட்டு; (தொ.) project oneself, மற்றொருவருடைய உணர்ச்சிகளிற் சென்று தங்கு; தொலைவிலுள்ளவரின் முன்சென்று ஆவித் தோற்றமாகத் தோன்று.

**projec'tile,** *n.* ஏவுகணை, உந்திவீசப்படும் எறிபடை; *a.* தூண்டுகிற, முன்னேறச்செய்கிற, உந்துகிற; உந்துவிசையினால் எறியப்படத்தக்க.

**projec'tion,** *n.* எறிவு, வீச்சு; உமிழ்வு, புறத்தெறிவு; உலோகமாற்றுச் சித்து; திட்ட ஏற்பாடு; பிதுக்கம், முந்துறுகை, நீட்டிக்கொண்டிருக்கை; (வடி.) தொடர் இணைவுரு, வரை உருவின் சரியிணை எறிவுப்படிவம்; (வடி.) பிறதள எறிவுரு, தளத்திலிருந்து தளமீது படிவிக்கப்படும் எறிவுப்படிவம்; உருவமைவு; கருத்துரு; திரைமீதுள்ள ஒளிநிழல் எறிவுரு; (தொ.) Mercator's projection, நிலக்கோளத்தின் மட்டதளச் சரிசமத்திசைமான எறிவுப் படம்; powder of projection, இரசவாதியின் பரிசனவேதித் தூள்; projection of a point, மூலவடிவத்திலுள்ள புள்ளிக்கு நிகராக மறுவடிவத்திலுள்ள புள்ளி.

**projec'tive,** *a.* கருத்துக்குப் புறவுருக்கொடுக்கிற; (வடி.) எறியப்பட்ட, எறிவுப்படிவ இயல்புடைய, எறிவினால் படிவிக்கப்பட்ட; எறிவினால் பண்புமாறாத; உந்துமுகப்புடைய; (தொ.) projective property of a figure, எறிவினால் மாறாத வடிவத்தின் இயல்பு.

**projec'tor,** *n.* திட்ட இயக்குநர்; ஆதாயவேட்டை நிறுவனங்களை அமைப்பவர்; ஒளி எறிவுக் கருவி அமைவு; திரைப்பட ஒளியுருப்படிவுக்கருவி; எறிவுப்படிவக்கோடு.

**prolapse',** *n.* (மரு.) கருப்பை நெகிழ்ச்சி; (மரு.) மலக்குடல் இடப்பெயர்வு; *v.* உடலுறுப்பு வகையில் இடப்பெயர்வுறு.

***prolap'sus,*** (ல.) *n.* (மரு.) உறுப்புப்பெயர்வு, கருப்பை அல்லது மலக்குடல் இடம்பெயர்வுறல்.

**prol'ate,** *a.* (வடி.) கோளவுரு வகையில் துருவ அச்சு நீட்டிப்பு உடைய, அகலத்தில் மிகை வளர்ச்சியுடைய; மிகு பரவலாயுள்ள; (இலக்.) பயனிலைப்பொருளை முடிப்பதற்குப் பயன்படுகிற, பயனிலைமானம் விரிக்கிற.

**prolat'ive,** *a.* (இலக்.) பயனிலைப்பொருளை முடிப்பதற்குப் பயன்படுகிற, பயனிலைமானம் விரிக்கிற.

**pro'-leg,** *n.* பூச்சிவகை முட்டைப்புழுவின் சதைப்பாங்குடைய அகட்டுக்கால்.

**prolegom'enon,** *n.* பாயிரம், பீடிகை; *pl.* prolegom'ena.

**prolep'sis,** *n.* வருவது முன்குறித்த நிலை; (இலக்.) வரும் பொருள் முன்குறித்த பெயரடை வழக்கு; *pl.* prolep'ses.

***proletaire,*** (பிர.) *n.* ஊழிய வகுப்பினர், சமுதாயத்தின் கடைவகுப்பு மக்களில் ஒருவர்.

**proletar'ian,** *n.* ஊழியவகுப்பினர், சமுதாயத்தின் கடைவகுப்பு மக்களில் ஒருவர்; *a.* சமுதாயத்தின் கடைவகுப்புச் சார்ந்த.

**proletar'ianism,** *n.* கடைவகுப்பு மக்கள் நிலை.

**proletar'iat, proletar'iate,** *n.* சமுதாயத்தின் கடைவகுப்பினர் குழு; பொருளாதார வகையில் தொழிலாளர் வகுப்பு, பாட்டாளி மக்கள் தொகுதி; (தொ.) dictatorship of the proletariat, பாட்டாளி மக்களின் சர்வாதிகார ஆட்சி.

**prol'etary,** *a.* சமுதாயத்தில் கடைவகுப்பு மக்கள் சார்ந்த.

**prol'icide,** *n.* பிள்ளைக்கொலை, சிசுக்கொலை.

**prolif'erate,** *v.* உயிர்மம் பெருக்கு; விரைந்து பெருக்கு.

**prolifera'tion,** *n.* உயிர்மப்பெருக்க வளர்ச்சி; இனப்பெருக்க அடியமைவிலிருந்து புதுக்குருத்துக்கள் உண்டாதல்; புதிய உறுப்புக்கள் அடுத்தடுத்து உண்டாதல்; குருத்துக்கள் புதிய செடிகளாக வளரும் வளர்ச்சி; பொதுநிலை இயல்பு மீறிய அல்லது பொதுநிலை எண்கடந்த உறுப்புக்கள் உண்டாதல்; பருவவளர்ச்சி மூலமாக உண்டாகும் புத்தமைப்பு.

**prolif'erous,** *a.* (தாவ.) இலையிலிருந்து இலைமொட்டு உண்டாக்குகிற; பூவிலிருந்து பூமொட்டு தோற்றுவிக்கிற; மொட்டுக்களிலிருந்து புதிய தலைமுறை உண்டுபண்ணுகிற; (வில.) தாய்விலங்கினின்றும் குமிழ்போன்ற உறுப்பு வளர்ச்சியிலிருந்து இனம் பெருக்குகின்ற; (மரு.) நோய்வகையில் உயிர்மப்பெருக்கத்தின் மூலமாகப் பரவுகிற.

**prolif'ic,** *a.* கால்வழிப் பெருக்கமுள்ள; இனப்பெருக்க வளமிக்க; ஏராளமான, விளைவு வளமிக்க.

**proli'gerous,** *a.* குழந்தைபெறுகிற, ஈனுகிற; பிறப்புச் சார்ந்த.

**prol'ix,** *a.* மிகுசொற்புணர்த்த, சலிப்பூட்டுகிற அளவுக்குச் சொற்பெருக்கமுள்ள; நெடுநீளமான.

**prolix'ity,** *n.* நீட்சி; சொல்மிகை.

**prol'ocutor,** *n.* இங்கிலாந்தின் மாகாணத் திருச்சபைக் குருமார் மன்றத்தின் கீழவைத் தலைவர்.

**prol'ogize,** *v.* பாயிரம் எழுது; முன்னுரையாகக் கூறு.

**prol'ogue,** *n.* முகப்புறுப்பு, பாயிரம், அறிமுகப்பகுதி; பீடிகை; அறிமுகம் செய்யப்பயன்படுகிற செயல், முன் குறிப்பு நிகழ்ச்சி; *v.* முகவுரை கூறி அறிமுகப்படுத்து; முகவுரை எழுதிச்சேர்.

**prol'oguize**, *v.*=prologize.

**prolong'**, *v.* நீட்டு; அளபெடுக்கச்செய், அசை ஒலிப்பினை நீடிக்கவை; காலங்கடத்து; நீடி; அளபெடு; கால நீட்டிப்புறு; தொடர்ந்து நீள்வுறு.

**prolonga'tion**, *n.* நீட்டம்; நீட்டிப்பு; தொடர்ச்சியாகச் சேர்க்கப்பட்ட ஒன்று, நீட்டிய பகுதி; தொடர்ச்சி.

**prolu'sion**, *n.* வெள்ளோட்டம்; முன் கட்டுரை.

**prom**, *n.* (பே-வ.) உலாவியல் இசைவிருந்துக்குழு, கேட்போர் அமர்ந்திராமல் உலவிக்கொண்டே கேட்கும் வாய்ப்புடைய இசைவிருந்தமைப்பு.

**promenade'**, *n.* உலா; உலாவுமேடை; பவனிவீதி; *v.* உலாவு; பவனி வா; (தொ.) promenade concert, அவையினர் திரிந்து கொண்டே கேட்கக்கூடிய இசையரங்கு; promenade deck, கப்பற் பிரயாணிகள் உலாவக்கூடிய கப்பல் மேல்தளம்.

**prom'erops**, *n.* தென்னுப்பிரிக்க பறவையினம்.

**Prometh'ean**, *n.* தீக்குச்சுக்குப் பதிலாக முன்பு வழங்கப்பட்ட கந்தகக்காடியும் எரியகக் கலவையும் அடங்கிய குழல் வகை; *a.* கிரேக்க புராணமரபில் தேவர் தலைவனை எதிர்த்து நின்று போராடி அருந்துயர்க்காளாகி மனித உலகுக்கு நெருப்பைக் கொணர்ந்ததாகக் கூறப்படும் தேவருக்கு முற்பட்ட அசுரவீரனுன புரோமித்தியஸ் போன்ற; புரோமித்தியஸ் என்ற வீரனுக்குரிய.

**prom'inence, prom'inency**, *n.* மேம்பாடு; மேற்புடைப்பு; உயர்ச்சி; மேடு, முகடு; முனைத்த முக்கியத்துவம்; முதன்மை நிலை, தலைமைநிலை; (தொ.) solar prominence, ஞாயிற்றினின்றும் வீசுகிற பெரிய வெண்சுடர்த் தீநா.

**prom'inent**, *a.* காண்புக்கடுத்த; மேற்புடைப்பான; எடுப்பான தோற்றமுடைய; விஞ்சிய, முனைத்த; மேடிட்ட, முகடான; முதன்மை வாய்ந்த, முக்கியத்துவம் வாய்ந்த; சிறப்புமிக்க.

**promiscu'ity**, *n.* கந்தறுகோலம், கண்டபடிக் கலப்பு.

**promis'cuous**, *a.* ஒழுங்கின்றிக் கலந்துள்ள, கந்தல் கூளக் கலவையான; தாறுமாறான; வரைமுறையற்ற, தராதரமற்ற; (பே-வ.) தற்செயல் நிகழ்வான; (தொ.) promiscuous hospitality, விதரணையில்லா விருந்து; promiscuous sexual relations, வரையறையற்ற ஆண்பெண் கூட்டுறவு.

**promis'cuous-like**, *adv.* தற்செயலாக, குறிப்பிட்ட தனிக் காரணம் எதுவுமின்றி.

**prom'ise**, *n.* உறுதிமொழி, வாக்குறுதி; வாக்களித்த செய்தி; வாக்களிக்கப்பட்ட பொருள்; நல்வாய்ப்புவளம், எதிர்காலத்துக்கான நம்பிக்கையூட்டும் செய்தி; *v.* உறுதி மொழிகூறு, வாக்களி, வாய்ப்புவள நம்பிக்கையூட்டு; எதிர்பார்க்கத்தக்கதாயிரு; (தொ.) breach of promise, வாக்குறுதி மீறல்; திருமண உறுதிமொழி மீறுகை; land of promise, promised land, வானுலகு, ஆபிரகாமுக்கும் அவருடைய கால்வழியினருக்கும் கடவுள் வாக்களித்த நிலம், பேரின்பம் தருவதென்று எதிர்பார்க்கப்படுமிடம்; the Promise, ஆபிரகாம் கால்வழியினருக்குக் கடவுள் அளித்த உறுதிமொழி.

**promisee'**, *n.* (சட்.) உறுதிமொழி கூறப்பெற்றவர், வாக்குக் கொடுக்கப் பெற்றவர்.

**prom'ising**, *a.* நல்ல எதிர்காலமுடைய; முன்னுக்கு வரக் கூடிய; பின்வரு வாய்ப்புவள நம்பிக்கையூட்டுகிற.

**prom'issory**, *a.* உறுதிமொழியடங்கிய; (தொ.) promissory note, உறுதிமொழிக் கடன்பத்திரம், கைக்கடன் சீட்டு.

**prom'ontory**, *n.* நிலக்கூம்பு, கடலிற் பாய்ந்துள்ள நில முனைக்கோடி; (உள்.) உந்துறுப்பு; உடலில் புறமுனைப்புடைய நீள் பகுதி.

**promote'**, *v.* உயர்த்து, மேம்படுத்து; முன்னேறுவி; வளர்ச்சி ஊக்கமளி; ஆதரித்து உயர்வுகொடு; மேல்தரப் படுத்து; மேல்வகுப்புக்கு உயர்த்து; சட்டம் முதலியவை வகையில் ஆதரவுதந்து நிறைவேற உதவு; சதுரங்கக்காய் வகையில் காலாட் காயை அரசிக் காயாக உயர்த்து.

**promot'er**, *n.* ஆதரவளிப்பவர், முன்னேறச்செய்பவர், உயர்வு ஊக்குபவர்; வணிகநிறுவனங்களின் அமைவுக்கான ஆக்க முயற்சிகள் செய்பவர்.

**promo'tion**, *n.* உயர்த்துதல்; முன்னேற்றல்; பதவி ஆதரித்தல்; முன்னேற்றம்; உயர்வு; பதவியுயர்வு; தேறுதல், மேல் வகுப்புக்குரிய உயர்வு; தொழில் முன்னேற்றத்துக்கான ஆக்கமுயற்சி.

**prompt**, *n.* பத்திரத்தவணை எல்லை; நினைப்பூட்டுதல்; தூண்டுதற் குறிப்பு, நினைவு தூண்டுஞ்சொல்; *a.* வரிந்தொருங்கிய, எப்போதும் செயலாயத்தமான; காலந்தவறுது சுறுசுறுப்புடன் செயலாற்றுகிற; விரைசுருக்காகச் செய்யப்பட்ட; உடனடியான; வாணிகப்பண்டங்கள் வகையில் உடனடியாகப் பணங்கொடுத்து எடுத்துப்போவதற்குரிய தான; *v.* தூண்டு, இயக்கு; நினைவுபடுத்து; நடிகர் முதலியவர்களுக்குத் தூண்டு குறிப்புதவு; எடுத்துக்கொடு; உணர்ச்சி-எண்ணம்-செயல் முதலியவற்றை எழச்செய்; *adv.* தாமதமின்றி, காலந்தாழ்த்தாமல், உடனுக்குடன்; (தொ.) for prompt cash, கைமேற் பணத்திற்குமட்டும்; prompt side, நினைப்பூட்டுபவர் இருக்கும் பக்கம்.

**prompt'-book**, *n.* அடியெடுத்துக்கொடுப்போர் கைப் புத்தகம்.

**prompt'-box**, *n.* நாடகமேடையில் நினைப்பூட்டுபவரின் அறை.

**promp'ter**, *n.* தூண்டுபவர்; நினைப்பூட்டுபவர், நடிகருக்கு அடியெடுத்துக் கொடுப்பவர்.

**promp'ting**, *n.* தூண்டுதல்; நினைப்பூட்டுதல்; ஊக்குதல்; (தொ.) the promptings of conscience, மனச்சான்றின் தூண்டுதல்.

**prompt'itude**, *n.* காலத்திற் கருத்துடைமை; செயல்விரைவு.

**prom'ulgate**, *v.* பலரறியச்செய், பிரகடனம் பண்ணு, கொள்கை முதலியவற்றைப் பரப்பு, தீர்ப்பு-செய்தி முதலியவற்றைப் பறைசாற்று.

**promulga'tion**, *n.* அறைபறை, பிரகடனம்.

**prona'os**, *n.* பண்டைய கிரேக்கர் கோயிலின் தலைவாயில் முன்கூடம்.

**pron'ate**, *v.* (உட.) கையைக் கவிழ்த்துவை.

**prona'tion**, *n.* (உட.) கையின் கவிழ்நிலை.

**pronat'or**, *n.* (உட.) கையைக் கவிழ்நிலையில் வைப்பதற்கு உதவுந் தசை.

**prone**, *a.* முன்கவிவான; முகங்கவிந்து படுத்திருக்கிற, நெடுஞ்சாண்கிடையாகப் படுத்திருக்கிற; நிலம் வகையில் கீழ்நோக்கிய தோற்றமுடைய, செங்குத்தான, தலைகீழான; சார்பு நிலையுடைய, சாதகமான மனச்சாய்வுடைய.

**proneur**, (பிர.) *n.* புகழ்ச்சியாளர், ஆர்வப்பாராட்டாளர்.

**prong**, *n.* கவர்முள்; இருகவர்க்கோல், கவர்முட்கருவி; *v.* கவர்க்கோலால் துளை; குத்து, இடி; கிளறு; மண்ணைக் கிளறிப் புரட்டு.

**prong'-buck, prong'-horn, prong'-horned antelope**, *n.* மான்போன்ற அசைபோடும் வட அமெரிக்க விலங்கு வகை.

**pronged**, *a.* கவர்முட்கள் உடைய.

**pronom'inal**, *a.* மறுபெயர் சார்ந்த; மறுபெயரின் இயல்புள்ள.

**pron'oun**, *n.* மறுபெயர், பெயர்ச்சொல்லினிடத்திற் பயன் படுத்தப்படுஞ் சொல்; (தொ.) demonstrative pronouns, சுட்டுப் பெயர்கள்; distributive pronouns, பகிர்வு மறுபெயர்கள்; indefinite pronouns, வரையறை செய்யா மறுபெயர்கள்; interrogative pronouns, வினா மறுபெயர்கள்; personal pronouns, மூவிடஞ்சார்ந்த மறுபெயர்கள்; possessive pronouns, கிழமைப்பொருள் சுட்டும் மறுபெயர்கள்; relative pronouns, மறுபெயர் ஒட்டுக்கள்.

**pronounce'**, *v.* சாற்று, முறைப்படி கூறு; கழறு, அழுத்தந் திருத்தமாக உரை; அறிவி; தெரிவி; தீர்ப்பு வழங்கு; ஒலிப்பு இயக்கிக்காட்டு; ஒலி, உச்சரி, நவிலு.

**pronounce'able**, *a.* ஒலிக்கத்தக்க, உச்சரிக்கக்கூடிய.

**pronounced'**, *a.* வன்திறமான, முனைப்புடைய; தனிப்பண் பினைக் காட்டுகிற, தீர்மானமான.

**pronounce'ment**, *n.* அதிகார அறிவிப்பு.

**pronoun'cing**, *n.* முறையாகக் கூறுதல்; கருத்து அறி வித்தல்; ஒலித்தல், உச்சரித்தல்; *a.* உச்சரிப்புக்கு உதவுகிற, ஒலிக்குறிப்பு இன்னதெனக் காட்டுகிற.

**pron'tosil**, *n.* கந்தகங் கலந்த மருந்துச்சரக்கு வகைகளில் ஒன்று.

**pronunciamen'to**, *n.* ஸ்பானியமொழி பேசும் நாடுகளில் கிளர்ச்சிக்காரர்கள் விடுக்கும் அறிவிப்பு; *pl.* pronuncia-men'tos.

**pronuncia'tion**, *n.* நவில்முறை, உச்சரிப்பு, ஒலிப்பு; சொற் களை உச்சரிக்கும் தனிப்பட்ட பாங்கு.

**proof**, *n.* கரி, மெய் அறுதிச்சான்று; விளக்கச்சான்று, தெளிவு, சான்று விளக்கம்; எண்பிப்பு; சான்றுப்பத்திரம், சான்றுச்சின்னம்; செயல் விளக்கம்; விளக்கச்செய்முறை; சோதிப்பு, கடுந்தேர்வு; தேர்வுமுறை: வெடிமருந்துகளைச் சோதிக்குமிடம்; வடிநீர்மங்களின் செறிமானத்தரம்; திருத்தத் துக்கான அச்சுப்படி, பார்வைப்படி; (நி-ப.) மூல எதிர்ப்படி யிலிருந்து எடுக்கப்படும் முதற் பதிவு; செதுக்குவேலையில் முதல் தேர்வுப்பதிவு; ஆய்குழல்; புத்தகம் வெட்டப்பட வில்லையென்பதைக் காட்டுவதற்கான அதன் சில தாள்களின் சரவை ஓரங்கள்; (கண.) முடிவுச் சோதனை; *a.* போர்க் கவசம் வகையில் சோதித்துப்பார்த்து வலிமையுடைய; ஊடுருவப்பட முடியாத, தாக்குதலால் கேடடையாத; தடை காப்பான; தூற்றுக்கு இடங்கொடாத; *v.* தடைகாப்புச் செய், ஊடுருவ முடியாததாக்கு; துணி முதலியவற்றை நீர் தோயாததாக்கு; (தொ.) armour of proof, சோதித்துப் பார்த்து உறுதியாக நம்பத்தக்க போர்க்கவசம்; தேர்ந்த காப்புறுதி; burden of proof, வாதத்தை மெய்ப்பிப்பதற் குரிய பொறுப்பு; proof before letters, தகட்டில் பெயர் செதுக்கப்படுவதற்குமுன் எடுக்கப்படும் பதிவு; signed proof, செதுக்கு வேலை வகையில் ஓவியர் கையெழுத்திட்டுத் தொடக் கத்தில் எடுத்த பதிவு.

**proof'less**, *a.* சான்று இல்லாத.

**proof'-plane**, *n.* காப்புறையிட்ட கைப்பிடியின்மேல் மின் கடத்தி பொருத்திப் பொருளின் மின் ஊட்டம் அளக்குங்கருவி.

**proof'-reader**, *n.* அச்சுப் பார்வைப்படி திருத்துபவர்.

**proof'-reading**, *n.* சரவையிடுதல், அச்சுப் பார்வைப்படி திருத்துதல்.

**proof'-sheet**, *n.* அச்சுப் பார்வைத்தாள்.

**prop'-jet engine**, *n.* நீர் அல்லது நீராவியால் சுழலும் பொறி உருளையுடைய விமான இயந்திரம்.

**prop[1]**, *n.* உதைகால், ஆதாரக்கம்பம்; ஆதாரம்; பற்றுக் கோடு; ஆதாரக்கம்பி; துணை இணைப்பு; பொறுப்பாளர், நடத்துபவர்; *v.* முட்டுக்கொடு, அணைப்புக்கொடு; ஏற்றுத் தாங்கு; குதிரைவகையில் முன்னங்கால்களை விறைப்பாக ஊன்றிக்கொண்டு திடீரென ஓடாது நின்றுவிடு.

**prop[2]**, *n.* (பே-வ., சு-வ.) விமானச் சுழல் விசிறி.

**prop[3]**, *n.* (சு-வ.) நாடக வழக்கில் மேடையுடைமை.

**propaedeut'ic**, *n.* கலைமுன் கலை, கலைமுன் அறிபொருள்.

**propaedeut'ics**, *n. pl.* முன்னணி அறிவு.

**propagan'da**, *n.* பரப்புரை; கருத்துப் பரப்பு, பிரசாரம்; பரப்பப்படுஞ் செய்தி; கோட்பாட்டுப் பரப்புதல் அமைப்பு; (தொ.) The Propaganda, அயல்நாட்டில் சமயப்பரப்புப் பொறுப்புடைய உயர்படிக் குருமார்கள் குழு.

**propagan'dist**, *n.* கொள்கைப் பரப்பீட்டாளர்; பரப்புக்குழு உறுப்பினர்; மதமாற்றத் தொண்டு ஊழியர்; ரோமன் கத்தோலிக்க உயர்படிப் பரப்பீட்டுக்குழு உறுப்பினர்; உயர் படிப் பரப்பீட்டுக்குழுவின் ஆட்சியிலுள்ள சமயப் பரப்பாளர்; பரப்பீட்டுக் குழுவாற் சமயம் மாற்றப்பட்டவர்.

**prop'agate**, *v.* இனம் பெருக்கு; இனப்பெருக்கமுறு; தன்னினந் தழைப்பி; மரபு தொடர்வி; பண்புமரபு தொடர்வி; பண்பு நீடித்துத் தழைக்கச்செய்; வெளிப்பரப்பு.

**propaga'tion**, *n.* பெருக்கம்; பரப்புகை.

**proparox'ytone**, *n.* ஈற்றயலுக்கு முந்திய அசையில் முனைப் பழுத்தமுடைய சொல்; *a.* சொல்வகையில் ஈற்றயலுக்கு முந்திய அசையில் முனைப்பழுத்தமுடைய.

**propel'**, *v.* முற்பட இயக்கு; முன்னேக்கிச் செலுத்து.

**propell'ant, propell'ent**, *n.* முற்செலுத்தம்; *a.* முன் னேக்கிச் செலுத்துகிற.

**propell'er**, *n.* கப்பலின் இயக்குறுப்பு; விமானச் சுழல்விசிறி; (தொ.) propeller turbine, நீர் அல்லது நீராவியால் சுழலும் பொறி உருளையுடைய விமான இயந்திரம்.

**propen'sity**, *n.* மனப்பாங்கு, போக்கு; செயற்சார்பு, நிலைச் சார்பு.

**prop'er**, *n.* வழிபாட்டு நாட்கட்டளைமுறை; நாள்முறைப் பாசுரம்; வேளைமுறை வழிபாடு; வேளைப்பாசுரம்; *a.* சரியான; பொருள் வகையில் சரிநேரான, பிழைபடாத; நேரான நேரிய; தன் பெயருக்கொத்த; இயல் எல்லை வரம்புட் பட்ட; தகுதியான, தற்பண்புக்குப் புறமல்லாத; தனக்கே யுரிய, தனிமுறையில் உரிய; பொருத்தமான; தக்க, உகந்த, இசைவான; தனிப்பொருத்தமான, அதற்குத் தகுந்த; தனிப்பட வகுக்கப்பட்ட; சமுதாயத்திற்கு ஒத்த; மதிப் பார்ந்த; நேர்மையான; மெய்யான; ஒத்துக்கொள்ளத் தக்க; இயல்நிலை சார்ந்த; நல்தோற்றம் வாய்ந்த; (பே-வ.) முழு நிறைவான; நிறவகையில் இயல்பாக இயற்கையில் உள்ளபடியேயுள்ள; (இலக்.) பெயர் வகையில் இடுகுறியான; (வான்.) வான்கோள இயக்கவகையில் தோற்றஞ் சாராத, இயல்பான புடைபெயர்ச்சி குறிக்கிற; (கண.) கீழ்வாய் எண் வகையில் தகுபின்னமான.

**properispom'enon**, *n.* (இலக்.) கிரேக்கமொழியில் ஈற்றய லசை வளைபழுத்தச் சொல்; *a.* (இலக்.) கிரேக்கமொழிச் சொல் வகையில் ஈற்றயலசையில் வளைபழுத்தங் கொண்ட.

**prop'erly**, *adv.* பொருத்தமாக, சரியாக, ஏற்றபடி; நேர்மை யாக; தக்கமுறையில், நல்லொழுக்கத்தோடு; (பே-வ.) முழு நிறைவாக; நெறிபிசகாத கட்டுப்பாட்டுடன்.

**prop'erty**, *n.* உடைமை, சொத்து; உரிமைப்பொருள்; நாடக அரங்கத்திற் பயன்படுத்தப்படும் துணைப்பொருள் தொகுதி; (அள.) இனப்பொதுப்பண்பு; (தொ.) personal property, மரபுவழிச் செல்லும் நிலமும் நிலஞ் சார்ந்தவையும் அல்லாத தனியுரிமைச் சொத்து; property qualification, சொத்துக்களின் அடிப்படையில் வருந் தகுதி; property tax, சொத்துவரி; real property, மரபுவழிச்செல்லும் நிலமும் நிலஞ் சார்ந்த உடைமைகளும் அடங்கிய தாவரச்சொத்து.

**prop'erty-man, prop'erty-master**, *n.* நாடக அரங்கத் திற் பயன்படுத்தப்படும் துணிமணி தட்டுமுட்டுப்பொருள் களின் பொறுப்பாளர்.

**proph'ecy**, *n.* வருவதுரைத்தல், முன்னறிவித்தல்; தொலை முன்னேக்கு; வருவது முன்னறிவிப்புரை.

**proph'esy**, *v.* வருவதுரை; தீர்க்கதரிசிபோலப் பேசு; வருங் கால நிகழ்ச்சிகளை முன்னறிவி.

**proph'et**, *n.* திருநாவுரையர்; வருவதுரைப்பவர்; தீர்க்க தரிசி; நபி; அருட்போதகர்; கொள்கை வாதாட்டாளர்; கோட்பாட்டுப் போராட்டவீரர்; சமயத்துறை சார்ந்த அருட் பணிப் பெருந்தகை; (தொ.) Saul among the prophets, எதிர்பாராத தனிப்பண்புத் திறங்களை உடையவர்; the Prophet, முகமதுநபிகள் நாயகம்; நியூயார்க்கில் 1830-ஆம் ஆண்டு நிறுவப்பட்ட மார்மன் (Mormon) சமயக் குழுவினைத் தோற்றுவித்த ஜோசப் சிமித் (Joseph Smith) என்பவர்; the prophets, விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டுத் தீர்க்க தரிசியர்.

**prophet'ic,** *a.* திருநாவுரையான, தீர்க்கதரிசிக்குரிய; முன்னுணர்ந்துரைக்கிற; வருவதுணர்த்துகிற; முன்னறிவிப்பு அடங்கிய.

**prophylac'tic,** *n.* நோய்தடுப்பு மருந்து; நோய்தடுப்பு முறை; *a.* நோய் தடுக்கிற.

**prophylax'is,** *n.* நோய்தடுப்புப் பண்டுவம்.

**propinq'uity,** *n.* அணிமை; உறவு; ஒப்புமை.

**propi'tiate,** *v.* சினந்தணிவி; மனக்குறையாற்று; அமைதிப்படுத்து; நல்லிணக்கமுண்டுபண்ணு; சூழல் இணக்குவி.

**propitia'tion,** *n.* இணக்குவிப்பு; ஈடு, கழுவாய்.

**propi'tiatory,** *n.* இரக்கத்தின் இருக்கை; யூதரிடையே இறை ஒப்பந்தக் கட்டளைகள் வைத்திருக்கும் பொன்னூர்ந்த முகடு; அருள் வள்ளல் இயேசுநாதர் பெட்டி; *a.* மனக்குறையாற்றுகிற; சினமாற்றுகிற; அமைதிப்படுத்துகிற; பழிமாற்றீடு செய்கிற.

**propi'tious,** *a.* செவ்வியார்ந்த; நல்லிணக்கம் வாய்ந்த; சார்பு நலமுடைய; நன்னிமித்தமான; நல்லிசைவான.

**prop'olis,** *n.* தேம்பிசின், புழைகளை அடைக்கத் தேனீக்கள் பயன்படுத்தும் தேன் பசைப்பொருள்.

**propone',** *v.* முன்தள்ளிவை; முன்மொழி.

**propon'ent,** *n.* சார்பாளர்; மன்ற நடவடிக்கைகளில் முன்மொழிபவர்; புதுக்கருத்துரைப்பவர்.

**propor'tion,** *n.* தகவுப்பொருத்தம்; இசைவுப் பொருத்தம்; பரிமாணம்; (கண.) தகவுப்பொருத்த அளவு; ஒருவீதம், மதிப்புக்களை ஒன்றன் கணிப்புமூலமாகக் காணும்முறை; *v.* வீதப்படி பிரி; பொருத்தமாக அமை; ஒன்றற்கொன்று பொருத்து.

**propor'tional,** *n.* தகவுப்பொருத்தத்தின் எண்கூறு; *a.* சரிசம விழுக்காடுடைய; சரிசமவீத அளவான; அளவொத்த; (தொ.) mean proportional, (கண.) ஒப்புவீத நடுநிலை எண்.

**propor'tionalist,** *n.* ஒப்பளவாளர், படிவீதத் திட்டம் அமைப்பவர்; சரி விழுக்காட்டுப் பேராண்மை ஆதரவாளர்.

**propor'tions,** *n. pl.* நீள-அகல-உயரங்கள்; அளவு, பருமன்.

**propos'al,** *n.* எடுத்துரை, முன்மொழிதல்; புதுக்கருத்துரைத்தல்; புதிது கொணர்தல்; தருமொழி; திருமணக் கோரிக்கை; புதுக்கருத்து; புத்தாய்வுத்திட்டம்; புதுச்செயல்முறை.

**propose',** *v.* எடுத்துமொழி; முன்மொழி; உளங்கொள்; குறிக்கொள்; திட்ட முன்கொணர்; வேட்பாளராகக் குறிப்பிடு; பெயர் குறிப்பிட்டு முன்மொழி; மணங்கோரு; புதிதாக எண்ணு; தகுதி நோக்கு; (தொ.) man proposes-God disposes, நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கிறது.

**proposi'tion,** *n.* ஆய்வுப்பொருள்; முன்மொழிவுரை; முன்மொழிவுச்செய்தி; அறுதியுரை; (அள.) கருத்துரை வாசகம்; (கண.) தெரிவு, வருமெய்ம்மை விளக்கம்.

**propound',** *v.* முன் எடுத்துரை, கலந்தாய்வுக்குக் கொணர்ந்து முன்வை; விருப்ப ஆவணத்தைச் சட்டப்படி நிலைநாட்டுவதற்காக அதிகாரிகள் முன்னிலைக்குக் கொண்டுவா.

**propraet'or,** *n.* (வர.) பண்டைய ரோமாபுரியில் படைத்துறையின் ஆணையின் கீழல்லாத துணை மாநில ஆளுநர்.

**propri'etary,** *n.* உடைமை உரிமையாண்மை, உரிமையாளர் நிலை; உரிமையாளர் குழு; *a.* உடைமை உரிமையுடைய; உடைமை உரிமை சார்ந்த; தனிப்பட்டவர் உரிமையுள் இருக்கிற; (தொ.) proprietary medicines, தனியுரிமை விற்பனைக் கட்டுப்பாட்டு மருந்துகள்.

**proprie'ties,** *n. pl.* ஒழுங்குமுறைகள், நன்னடத்தைப் பாங்குகள்; இலக்கிய நடைமுறை வரம்புகள்; இலக்கண விதிமுறை மரபுகள்.

**propri'etor,** *n.* உரிமையாளர்.

**propri'ety,** *n.* தகுதி; நேர்மை; ஒழுக்கமுடைமை; ஒழுங்குமுறைமை; தகவு, பொருத்தம்; நடைமுறை வரம்பு; மொழித்துறை; மரபுவழிப்பண்பு; சொல்வழக்காற்றில் நேர்வழக்காறு.

***prop'rio mot'u,*** (ல.) *n.* போப்பாண்டவரின் முறைமன்ற ஆட்சிக்குரிய முத்திரையற்ற போப்பாண்டவரின் திருக் கட்டளை.

**pro-proc'tor,** *n.* பல்கலைக்கழக உதவி ஒழுங்கு காவலர்.

**props,** *n. pl.* நாடகமேடைப் பொருள்கள், நாடக அரங்கத் துணிமணி தட்டுமுட்டுச்சொத்து உடைமைப் பொருள்கள்.

**proptos'is,** *n.* துருத்த நிலை; (மரு.) விழியின் முன்பிதுக்கம்.

**propul'sion,** *n.* உந்தெறிவு; முன்னேக்கித் தள்ளுதல்; தூண்டி இயக்குதல், முன்னேக்கி ஏவுதல்; உந்துவிசை, தூண்டும் ஆற்றல்.

**propylae'um,** *n.* கோயில் நுழைவாயில்; *pl.* propylae'a; (தொ.) the Propylaea, ஆதென்ஸ்நகர அகக்கோட்டை வாயில்.

**prop'ylite,** *n.* வெள்ளிச்சுரங்கப் பகுதிகளிற் காணப்படும் எரிமலைப்பாறை வகை.

**prop'ylon,** *n.* கோயில் நுழைவாயில்; *pl.* prop'ylons.

***pro rat'a,*** *a.* தகவுக்கேற்ற, சரிசம வீதப்படியான; *adv.* சரிசம விழுக்காட்டின்படி.

**pro-rec'tor,** *n.* பல்கலைக்கழகத் துணைமுதல்வர்; கல்லூரித் துணைமுதல்வர்; கல்விநிலையத் துணைத்தலைமையாசிரியர்; சமயவட்டத் துணைத்தலைவர்.

***pro renat'a,*** (ல.) *a.* அப்பொழுதைக்குப் பொருத்தமான; *adv.* ஏல்வைக்கு உகந்த வகையில்.

**proroga'tion,** *n.* சட்டமன்றத் தொடர்பறவு.

**prorogue',** *v.* கலைக்காது தள்ளிவை, சட்டமன்றத்தைக் கலைக்காமல் கூட்டத்தைத் தள்ளிவை.

**prosa'ic,** *a.* உரைநடைபோன்ற; புதுமை உணர்ச்சியற்ற; சாதாரணமான; கிளர்ச்சி தராத; எழுச்சியூட்டாத; கவிதை நயமற்ற; அணிநயம் இல்லாத; சாதாரணச் செய்தியியல்புடைய; கவர்ச்சியற்ற.

**pros'aist,** *n.* உரைநடையாளர்; கவர்ச்சியற்றவர்.

***pros and cons,*** (ல.) *n. pl.* சார்பெதிர்வுகள், ஆதரவாகவும் எதிராகவும் உள்ள பண்புக்கூறுகள்.

**proscen'ium,** *n.* நாடக அரங்கு முகப்பு.

**proscribe',** *v.* சட்டப் பாதுகாப்பினின்று அகற்று; நாடு கடத்து; துரத்து, வெளியேற்று; விலக்கிவை, கட்டுச்செய்; மறுத்துரை; தடைபோடு.

**proscrip'tion,** *n.* கொலைத்தீர்ப்பு; தடையிடல்.

**prose,** *n.* உரைநடை, வசனம்; திருச்சபை சார்ந்த இறைவாழ்த்தை அடுத்த துதியுரை; கவர்ச்சியற்ற மெய்ச்செய்தி; எழுச்சியற்ற பேச்சாளர்; கவர்ச்சியற்ற பண்புடையவர்; பொதுநிலைச் செய்தி; *v.* சலிப்புறப் பேசு; சலிப்புற எழுது; பாவினை உரைநடைப்படுத்து; (தொ.) prose poem, வசன கவிதை, கவிதைப் பாணியில் அமைந்த உரைநடை.

**prosec'tor,** *n.* உள்ளுறுப்பியலாய்வுப் பயிற்சிக்கான பிண அறுவையாளர்; மாவியற் பகுப்பாய்வாளர்.

**pros'ecute,** *v.* மேற்கொண்டு நடத்து; தொழில்வகையில் தொடர்ந்து மேற்கொள்ளு; கல்வி வகையில் மேற்கொண்டு பயில்; எதிர்வழக்குத் தொடர்; ஆள்வகையில் எதிராக வழக்குத்தொடு; வழக்கு விசாரணை வகையில் தொடர்ந்து நடைமுறைப்படுத்து.

**prosecu'tion,** *n.* (சட்.) குற்றவழக்குத் தொடர்வு; குற்றச்சாட்டு; வழக்குத் தொடருங் கட்சியினர்; தொழில்வகையில் மேற்கொண்டு தொடர்வு; கல்விவகையில் பயிற்சி நீடிப்பு.

**pros'ecutor,** *n.* குற்றச்சாட்டு வழக்குரைஞர்; வழக்குத் தொடுப்பவர்; தொடர்பவர்; *fem., pl.* prose'cutrices; *fem.* prosecut'rix; (தொ.) public prosecutor, குற்றவியல் அரசாங்க வழக்குரைஞர்.

**pros'elyte,** *n.* புதுவரவினர்; சமயம் மாறியவர்; கட்சி மாறியவர்; புதுக்கொள்கை ஏற்றவர்; யூதமதம் சார்ந்த பிற இனத்தவர்; *v.* மதமாற்றஞ் செய்.

**prosen'chyma,** *n.* (தாவ.) முனைகள் ஒன்றுள் ஒன்றுக இணைந்துள்ள நீள் உயிர்ம இழைமம்.

**pros'ify,** *v.* உரைநடைப்படுத்து.

*pros'it,* (ல.) *int.* பருகுநேர வாழ்த்துக்குறிப்பு, உனக்கு வெற்றி விளைக என்னுங் குறிப்பு.

**pros'odist,** *n.* யாப்பிலக்கண ஆசிரியர்; செய்யுளிலக்கண வல்லுநர்.

**pros'ody,** *n.* யாப்பிலக்கணம், செய்யுளமைப்பியல்.

**prosopopoe'ia,** *n.* ஆளுருப்படுத்தும் அணி; ஆளுருவாக்குதல்; பண்பைப் பண்பியாக உருவகித்தல்.

**pros'pect[1],** *n.* காட்சிப்பரப்பு; தொலைக்காட்சி; முகப்புத் தோற்றம்; முகப்புத்திசை; ஓவியக்காட்சி; மனக்காட்சி; எதிர்பார்த்தல்; எதிர்பார்க்குஞ் செய்தி; வருங்கால வாய்ப்பு, வாய்ப்பு வளம்; வெற்றி வாய்ப்புநிலை; வாடிக்கையாளராகத் தக்கவர்; வாடிக்கையாளராகக்கூடியவர்; சந்தாதாரராகத் தக்கவர்; கனிவள வாய்ப்புப் பகுதி; கனிவள மாதிரிப் பாளம்; கனிவள மதிப்புத்தேர்வு.

**prospect'[2],** *v.* இட வகையில் கனிவள வாய்ப்பு ஆய்வுசெய்; வாய்ப்பு வளந் தேடு; நிலவகையில் வளவாய்ப்பு நம்பிக்கையளி; கனிவள ஆய்வில்ஈடுபடு; சுரங்கத்தில் தேர்வுமுறையாக வேலை நடத்து; கனிவள வாய்ப்புறுதியளி.

**prospec'tive,** *a.* வருங்கால வாழ்விற்குரிய; எதிர்கால வாய்ப்புக்களை எதிர்நோக்கிய.

**prospec'tor,** *n.* கனிவளம் நாடுநர்.

**prospec'tus,** *n.* தகவல் தொகுப்பு அறிக்கை; அமைப்பு விளக்கக்குறிப்பு; திட்ட விளக்க அறிவிப்பு; *pl.* prospec'-tuses.

**pros'per,** *v.* வாழ்; வளமையுறு; முன்னேற்றமடை; வெற்றி பெறு; வெற்றிபெறச் செய்.

**prospe'rity,** *n.* வளமை; வாழ்வுவளம்; வெற்றிப்பொலிவு; நற்பேறு.

**pros'perous,** *a.* வளப்பமுள்ள, செல்வச் செழிப்பான; வாழ்வில் வெற்றி காண்கிற, மேன்மேலும் முன்னேற்றம் அடைகிற.

**pros'tate,** *n.* பால்குடி உயிர்களில் ஆண்பால் உறுப்புக்கு உடனிணைவான சுரப்பித் திரள்களாலான பெருஞ்சுரப்பி.

**pros'thesis,** *n.* (இலக்.) முற்சேர்ப்பசை; முற்சேர்ப்பெழுத்து; (அறுவை மரு.) உடம்பில் செயற்கையுறுப்புக்கள் இணைத்தல்.

**pros'titute,** *n.* விலைமகள், பரத்தை; *v.* பரத்தையாக்கு, இழிசெயலுக்கு உட்படுத்து; இழிசெயலுக்குப் பயன்படுத்து; உயர்பண்புகளை இழிபயனுக்கு விலைகூறு.

**prostitu'tion,** *n.* பரத்தைமை; இழிவுக்குள்ளாக்குதல்.

**pros'trate[1],** *a.* குப்புறப்படுத்த நிலையில் உள்ள, நெடுஞ்சாண்கிடையான; விழுந்து வணங்குகிற; சரணடைந்த, பணிந்த; முழுதும் தோல்வியுற்ற; வலுவிழந்த, முற்றிலுஞ் சோர்வுற்ற; (தாவ.) நிலம்படிந்து கிடக்கிற.

**prostrate'[2],** *v.* நெடுஞ்சாண் கிடையாகக் கிடத்து; வீழ்த்து, முறியடி; முழுதும் கீழடக்கு, பணியச்செய்; முற்றிலும் வலுவிழக்கச் செய்.

**pros'tyle,** *n.* நாற்றூண் முகப்பு மண்டபம், கிரேக்க திருக்கோயில்களிலுள்ள நான்கிற்கு மேற்படாத தூண்கள் கொண்ட நுழைமாடம்; *a.* நான்கிற்கு மேற்படாத தூண்கள் கொண்ட நுழைமாடமுடைய.

**pros'y,** *a.* சலிப்புத்தட்டுகிற; சிறப்பற்ற; எழுச்சியற்ற; சாரமற்ற.

**protag'onist,** *n.* முக்கிய நடிகர்; கதையின் முக்கிய உறுப்பினர்; வாகையர்; கோட்பாட்டுப் பரிவுரைஞர்.

*pro tan'to,* (ல.) *prep.* அதுவரையில், அந்த அளவுவரையிலும்.

**prot'asis,** *n.* பீடிகை வாசகம்; ஏலீற்று வாசகம்; *pl.* prot'ases.

**prot'ean,** *a.* அடிக்கடி மாறுகிற; பல வடிவம் ஏற்கிற; நிலையற்ற.

**protect',** *v.* காப்பாற்று; கெடாது தடு; இடரினின்று தடுத்தாளு; பாதுகாப்பு அளி; நாட்டுப் பொருளியல் துறையில் உள்நாட்டுத் தொழில்கட்குக் காப்புச்செய்; போட்டியிலிருந்து விலக்கிக் காப்பளி; தாள்முறி-காசுமுறிகளுக்குரிய நிதி ஏற்பாடுசெய்; இயந்திரங்களுக்குக் காப்புக் கவசமிடு.

**protec'tion,** *n.* பாதுகாப்பு; ஆதரவு; ஆதரவளிப்பது; ஆதரவாளர்; பொருள்கள் வகையில் வைத்தாதரிப்பு; காப்புறுதிச் சீட்டு; கப்பலோட்டிகளுக்கு அளிக்கப்படும் அமெரிக்க குடியுரிமைச் சான்றிதழ்; உள்நாட்டுத் தொழில் உற்பத்திக்குத் தரப்படுஞ் சலுகை.

**protec'tive,** *a.* பாதுகாக்கிற; பாதுகாப்பிற்கு உகந்த; பாதுகாப்பு நோக்கங்கொண்ட; உணவுவகையில் ஊட்டக்குறைபாட்டு நோய்களுக்கெதிராகப் பாதுகாக்கிற; (தொ.) protective coloration, உயிர்களுக்குத் தற்காப்புக்காக அமைந்துள்ள சூழ்வு-இட-நிற-வடிவத் தோற்றம்; protective custody, சேமக்காவல்.

**protec'tor,** *n.* காப்பாளர், ஆதரவாளர்; ஆட்சிக்காவலர்; ஆட்சிப்பேராளர்; காப்புக்கருவி, காப்புத் துணைப்பொருள்.

**protec'torate,** *n.* ஆட்சிக்காவலர் பணிநிலை; ஆட்சிக்காவற் காலம்; இங்கிலாந்தில் ஆலிவர் கிராம்வெல்-ரிச்சர்டு கிராம்வெல் (1653-1659) ஆகியோரின் ஆட்சிக்காலம்; காப்பாட்சி, பிற்பட்ட பகுதியின் பொறுப்பை ஏற்று முற்பட்ட அரசு நடத்தும் ஏவலாட்சிமுறை.

**protec'tory,** *n.* காப்பாண்மை நிலையம், துணையற்றவர்களுக்கும் பொல்லாத குழந்தைகளுக்கும் ஆதரவளிக்கும் ரோமன் கத்தோலிக்க நிறுவனம்.

**prot'ege,** *n.* காப்புட்படுநர், பிறர் பாதுகாவலில் வைக்கப்படுவோர்; இள மாணாக்கர்.

**prot'eid,** *n.* = protein.

**prot'eiform,** *a.* மிகவும் உருமாறத்தக்க.

**prot'ein,** *n.* (வேதி.) புரதப்பொருள், வெடியமும் பிற இன்றியமையா உயிர்ச்சத்துக்களும் உட்கொண்ட ஊட்டப் பொருள்.

*pro tem'pore,* (ல.) *prep.* தற்சமயத்திற்கு, குறிப்பிட்ட வேளைக்கு.

**proteran'drous,** *a.* (தாவ.) சூலகத்திற்கு முன்னரே பூந்துகள் முதிர்ச்சி எய்துகிற.

**protero'gynous,** *a.* (தாவ.) பூந்துகளுக்கு முன்பே சூலகம் முதிர்வுறுகிற.

**prot'est[1],** *n.* மறுப்புரை; கண்டனம்; கண்டன அறிவிப்பு; சிறுபான்மை எதிர்ப்பாளரின் கண்டனப்பதிவு; காசுமுறி முறைப்பட மறுக்கப்பட்டதென்ற பத்திரப் பதிவாளரின் எழுத்தறிவிப்பு; மனமார்ந்த உறுதி அறிவிப்பு.

**protest'[2],** *v.* முறைப்படி உறுதிப்படுத்திக்கூறு; கண்டனவுரை எழுது; எதிருரை தா; காசுமுறி மறுப்புப்பற்றிய பதிவுரை எழுது.

**prot'estant[1], Prot'estant[2],** *n.* கத்தோலிக்க திருச்சபையிலிருந்து பிரிந்து சென்றவர்; ஆணை எதிர்ப்பாளர், இடித்துரையாளர்; பதினாறும் நூற்றாண்டிலேற்பட்ட கிறித்தவ சீர்திருத்த இயக்கக் கொள்கையைப் பின்பற்றுபவர்.

**protes'tant[3],** *n.* மறுப்புரையாளர், கண்டன அறிவிப்பாளர்.

**Prot'estantism,** *n.* கிறித்தவ சமயத்தில் கத்தோலிக்க கொள்கையை மறுத்துப் பிரிந்துசென்று போப்பாண்டவரின் ஆட்சிக்கு எதிரான கொள்கையைப் பின்பற்றுகிற கிறித்தவ சமயம்.

**prot'estants[1], Prot'estants[2],** *n. pl.* (வர.) ஸ்பயர்ஸ் சங்க (Diet of Spires கி. பி. 1529) முடிவை எதிர்த்து விலகிச் செர்மனியில் கிறித்தவ சீர்திருத்தக் கோட்பாட்டை ஏற்றவர்கள்.

**protesta'tion,** *n.* முறைப்படி உறுதிப்படுத்தப்பட்ட கூற்று; முறைப்படி உறுதிப்படுத்திக் கூறுதல்; எதிர்ப்பு, மறுப்புரை, கண்டனம்.

**Prot'eus**, *n.* அடிக்கடி மாறுமியல்புள்ளவர்; அடிக்கடி மாறும் பொருள்; அணுவுடலி அல்லது ஒழுகுடலுடைய அணு உயிரினத்தின் பண்டைப்பெயர்; நுண்மவகை; விலங்குபோன்ற உடலும் நான்கு குட்டையான கால்களும் வாலுமுடைய நிலநீர் வாழும் உயிரினவகை; முற்பட்ட வழக்கில் வயிற்றுடலி.

**prothalam'ion, prothalam'ium**, *n.* ஸ்பென்சர் (Spenser) என்ற கவிஞரால் இயற்றப்பட்ட மணவிழாவிற்கு முற்பட்ட பாடல்.

**proth'esis**, *n.* திருவுணா வழிபாட்டுக்கலங்கள் வைக்கப்படும் மேசை; திருவுணாக்கலங்கள் வைக்கப்படும் திருக்கோயிற் பகுதி.

**prothon'otary**, *n.*=protonotary.

**protis'ta**, *n. pl.* விலங்கு தாவரப்பிரிவுகளில் ஒன்றில் மாத்திரம் படாத ஓரணு உயிர்ப்பிரிவு.

**proto-A'rabic**, *a.* அராபியர்களின் ஆதிமுன்னோர் சார்ந்த.

**proto-Cel'tic**, *a.* கெல்டிய இனத்தவரின் ஆதிமுன்னோரைச் சார்ந்த.

**protochlor'ide**, *n.* (வேதி.) பாசகம் குறைந்த அளவில் கலந்த சேர்மவகை.

**prot'ocol**, *n.* உடன்படிக்கை முதற்குறிப்பு; கூட்டு ஒப்பந்த மூலப்படி; முறையான ஒப்பந்தக்கூட்டு நடவடிக்கைக் குறிப்பு; பிரஞ்சு வெளிநாட்டு அரங்க ஒழுங்குமரபுப்பிரிவு; மரபு ஒழுங்குமுறை வக்கணைத்தொகுதி; பத்திர முதல் இறுதி வக்கணை; தூதரக வக்கணையாளர்; *v.* உடன்படிக்கை முதற்குறிப்பு எழுது; ஒப்பந்த மூலப்பத்திரமாக்கு; உடன்படிக்கை முதற்குறிப்பிற் பதிவுசெய்.

**protogenet'ic, protogen'ic**, *a.* வளர்ச்சிக்கால முதற்படியைச் சார்ந்த; முதற்பருவத்திற்குரிய.

**prot'ogine**, *n.* மிகப்பழைமையானது என்று கருதப்படும் ஆல்ப்ஸ் (Alps) மலைப் பாறைவகை.

**protohipp'us**, *n.* முற்பரிமா, மரபற்றுப்போன குதிரையின விலங்கு வகை.

**pro'tomartyr**, *n.* கிறித்தவசமயத்தின் முதல் உயிர்த்தியாகி, தூயதிரு ஸ்டீபன் (St. Stephen).

**prot'on**, *n.* அணுவின் கருவுளில் உள்ள நேர்மின்மம்.

**protonot'ary**, *n.* வழக்குமன்றங்களிலுள்ள தலைமை எழுத்தர்.

**prot'ophyte**, *n.* ஓரணுவுயிர்த்தாவரம்; *pl.* protoph'yta.

**prot'oplasm**, *n.* ஊன்மம், ஒளியூடுருவவல்ல அரை நீர்ம இயலான உயிரக கரிய நீரகங்களடங்கிய உயிர்ச்சத்துப் பொருள்.

**protoplas'mic**, *a.* ஊன்மஞ் சார்ந்த.

**prot'oplast**, *n.* முதன்முதலாகப் படைக்கப்பட்ட மனிதன்; மூலமுதல், மாதிரி, மூலப்பிரதி; ஊன்மக்கூறு; உயிர்மம்.

**protosulph'ide**, *n.* மிகக்குறைந்த அளவான கந்தகங்கலந்த சேர்மவகை.

**proto-ther'ia**, *n. pl.* பால்குடி இனத்தின் மிகத்தாழ்ந்த உட்பிரிவு சார்ந்த விலங்குகள், பால்குடி இனத்தின் முன்னோடியாகக் கருதப்படும் உயிரினம்.

**prot'otype**, *n.* மூலமுன்மாதிரி; முந்தை வடிவம்; முன்னோடி மாதிரி.

**prot'oxide**, *n.* மிகக் குறைந்த அளவான உயிரகங் கொண்ட சேர்மவகை.

**protozo'a**, *n. pl.* நுண்ணிய ஓரணுவுயிர்ப் பிரிவுசார்ந்த உயிர்கள்.

**protozo'al**, *a.* ஓரணு உயிர்சார்ந்த; நோய்வகையில் ஓரணு உயிர் நுண்மங்களால் ஏற்படுகிற.

**protozo'an**, *n.* நுண்ணிய ஓரணு உயிர்; *a.* நுண்ணிய ஓரணு உயிர்ப்பிரிவு சார்ந்த; நோய்வகையில் ஓரணு உயிர் நுண்மங்களால் ஏற்படுகிற.

**protozo'ic**, *a.* (மண்.) மண்ணியலூழிப் படுகை வகையில் மிக முற்பட்ட உயிர்வகைகளின் தடங்களையுடைய.

**protozool'ogy**, *n.* நுண்ணிய ஓரணு உயிராய்வுநூல்.

**protozo'on**, *n.* நுண்ணிய ஓரணு உயிர்.

**protract'**, *v.* நீட்டு, நீளமாக்கு; காலங்கடத்து; நிலத்தின் திட்டப்படத்தை வீதக்குறிப்பு அளவுப்படி வரை.

**protrac'tile**, *a.* (வில.) உறுப்பு முதலியவை வகையில் நீட்டக்கூடிய, விரிக்கக்கூடிய.

**protrac'tion**, *n.* காலநீட்டிப்பு; நீளச்செய்தல்; நீட்டுத் தசைச் செயல்; வீதக்குறிப்பு அளவுப்படி வரைதல்.

**protrac'tor**, *n.* கோணமானி; நீட்டுத்தசை, உறுப்புக்களை நீட்டுவதற்குரிய தசைநார்.

**protrude'**, *v.* முன்பிதுங்கியிரு, துருத்திக்கொண்டிரு; நீட்டு; உந்திநில்; உரிமையின்றித் தலையிடு.

**protru'sile**, *a.* கை-கால் முதலிய உறுப்புக்கள் வகையில் வெளியே நீட்டக்கூடிய.

**protru'sion**, *n.* துருத்திக்கொண்டிருக்கும் நிலை, முன்புறம் நீட்டியிருத்தல்.

**protub'erance**, *n.* புடைப்பு, கொம்மை, வீக்கம்.

**protub'erant**, *a.* புடைத்திருக்கிற, முனைப்பாகத் தெரிகிற.

**protu'berate**, *v.* புடைத்துக்கொண்டிரு, வீங்கு.

**prot'yle**, *n.* (வேதி.) தனிமங்களுக்கும் மூலமாகக் கருதப்படும் கற்பித முதற்பொருள்.

**proud**, *a.* செருக்கிய, இறுமாந்த; மட்டுமீறிய தன்மதிப்புடைய; தன்நிறைவுமிக்க; வீறுப்புமிக்க; மான உணர்ச்சியுடைய, தன்மதிப்புக்குன்றாத; விழுமிய தோற்றமுடைய; செயல் வகையில் பெருமைக்குரிய; பெருமைகொள்கிற, பெருமதிப்பிற்குரியதாகக் கொள்கிற; பெருமை அளிக்கிற; பெருமைக்குக் காரணமாகக் கூறப்படுகிற; துணிவான; எடுப்பான, துடிப்பான; புடைப்பான; வெள்ளத்தின் வகையில் பொங்கிவருகிற; விலங்கின் பெடை வகைகளில் இணைவவாமிக்க; (தொ.) do one proud, (பே-வ.) நிறை பெருமையுடன் நடத்து; proud flesh, ஆறிவரும் புண்ணைச் சுற்றிவளருஞ் சதை.

**proud'-heart'ed**, *a.* தருக்குணர்ச்சியுடைய.

**prov'able**, *a.* மெய்ப்பிக்கக் கூடிய.

**prove**, *v.* மெய்ப்பி, சான்றுறுதிசெய்; சரியென்று காட்டு; தேர்வுமூலம் உறுதிப்படுத்து; வாதமூலம் நிலைநாட்டு; செயல்மூலம் விளக்கு; விசாரணையால் தேர்ந்துகாண்; தெளிவுபடுத்து; சோதனை செய்துபார்; கணிப்பினை வேறு முறையால் சோதித்துச் சரிபார்; பண்பு தேர்; துப்பாக்கி வகையில் நோட்டம் பார்; தெளிவுபடு; பின்னால் விளக்க முறு நிலையடை; காணப்படு; என்று காணப்பெறு; வந்தமைவுறு; ஆகு; (தொ.) the exception proves the rule, விலக்குண்மையால் விதியுண்மை உறுதியாகிறது.

**proved'itor, provedore'**, *n.* (வர.) வெனிஸ் குடியரசின் உயர் அதிகாரி; உணவு ஏற்பாட்டாளர்.

**prov'enance**, *n.* தோற்றுவாய், பிறப்பிடம்.

**Provencal**, *n.* பிரஞ்சு நாட்டில் பிராவென்சு (Provence) மாவட்டத்தவர்; பிராவென்சு மாவட்ட மொழி; பிராவென்சு மாவட்ட மொழி பேசுபவர்; *a.* பிராவென்சு மாவட்டத்தைச் சார்ந்த.

**prov'ender**, *n.* தீவனம், கால்நடை உணவு; கேலிவழக்கில் மக்கள் உணவு.

**proven'ience**, *n.*=provenance.

**prov'erb**, *n.* பழமொழி; மேற்கோள் உரை; முதுரை; பொது நடைமுறை வழக்காறு; புதிர்உரை, விளக்கம் அவாவி நிற்கும் வாசகம்; பழமொழி பெயராகவும் கதை அடிப்படையாகவும் அமையும் பிரஞ்சு நாடகம்; (தொ.) Book of Proverbs, பழமொழிகள் கொண்ட விவிலிய ஏட்டின் பிரிவு.

**proverb'ial**, *a.* பழமொழிபோன்ற; முதுரையான; நாட றிந்த; கெட்டபெயர்பெற்ற.

**prov'erbs**, *n. pl.* வட்டமேசை விளையாட்டுவகை.

**prov'iant**, *n.* உணவுதருவிப்பு; படைத்துறை உணவு ஏற் பாடு.

**provide'**, *v.* தருவி, தருவித்து வழங்கு; ஏற்பாடு செய்து கொடு; தேவை சேகரித்துக்கொடு; வேண்டியன கொடுத்து உதவு; ஆள் வகையில் வேண்டிய துணைவாய்ப்பு வகைகள் இணைவி; படைவகையில் கருவிகலத் துணைவாய்ப்புக்கள் அளித்தமைவு செய்; உணவுப்பொருள் தேடித்தருவி; முன் னெருக்கங்கள் செய்; முன்கூட்டி எதிர்நடவடிக்கைகள் எடுத்து அமை; முன்னதாகச் சரியீடுசெய்து அமை; முன்ன தாகத் தடைகாப்புச்செய்துவிடு; (வர.) மானிய வகையில் ஆள் அமர்த்து; போப்பாண்டவர் வகையில் ஆள் இருக்கும் போதே அடுத்த உரிமையாளரை அமர்வு செய்துவிடு.

**provid'ed** [1], *a.* வசதிசெய்துகொடுக்கப்பட்ட; (தொ.) provided school, உள்ளூர் மேலாட்களால் உதவி அளித்து நடத்தப்படும் பொதுத் தொடக்கப்பள்ளி.

**prov'ided** [2], *conj.* இந்நிபந்தனைகட்கு உட்பட்டு.

**prov'idence** [1], *n.* முன்னுணர்வு, முன்கருதல்; சிக்கனத் திட்டம்; கடவுள் அருள், இயற்கையின் அருள்நலம்; (தொ.) special providence, தனி அருள்நிகழ்ச்சி, கடவுளின் அல்லது இயற்கையின் அருட்செயல் கைகூடிவரப்பெற்ற தனி நிகழ்ச்சி.

**Prov'idence** [2], *n.* கடவுள், ஆண்டவன்.

**prov'ident**, *a.* முன் அறிவுடைய, முன்யோசனை காட்டுகிற; சிக்கனமான.

**providen'tial**, *a.* தெய்வச்செயலான; தற்செயல் நல்வாய்ப் பான, நற்பேறுன.

**provid'er**, *n.* அளிப்பவர், கொடுப்பவர்; ஏற்பாடு செய்பவர்; (தொ.) lion's provider, நரி; universal provider, பல வகைச் சரக்குகளிலும் வாணிகம் செய்பவர்.

**prov'ince**, *n.* மாகாணம், நாட்டின் பெரும்பிரிவு; மாநிலச் சமய ஆட்சி முதல்வர் ஆட்சியெல்லை; கடமையெல்லை, செயல் துறை எல்லை; கலை-இலக்கியத்துறை எல்லை; (வர.) பண்டை ரோமப்பேரரசின் ஆட்சிப்பகுதி, வெளி மாகாணம்.

**provin'ces**, *n. pl.* தலைநகர் நீங்கிய மாகாணப் பகுதிகள்.

**provin'cial**, *n.* மாகாணவாசி; நாட்டுப்புறவாசி, சமய மாநில முதல்வர்; *a.* மாகாணத்திற்குரிய; மென்னயஞ் சாராத, குறுகலான.

**provin'cialism**, *n.* மாகாணப்பாங்கு; உள்ளூர்ப்பழக்கம்; மொழியின் மாகாண வழக்காறு; குறுகிய மாகாணப்பற்று.

**provin'cialist**, *n.* மாகாணவாசி.

**provi'sion**, *n.* முன்னேற்பாடு செய்தல்; முன்னேற்பாடு; முற்காப்பு; வழிவகை ஏற்பாடு; முன்னேற்பாடாக ஒதுக்கப் பட்ட தொகை; முற்சேகரப்பொருள்; முன்னேற்பாட்டு வாசகம்; கட்டுப்பாட்டு விதி; சட்டத்தில் நிபந்தனை வாசகம்; தனிச்சிறப்பான வழிவகை செய்யும் சட்டப்பிரிவு; உணவுப் பொருள்; (வர.) ஆள் இருக்கும் மானியத்துக்கான அடுத்த உரிமையாளர் அமர்த்தீடு; *v.* உணவுப்பொருள் சேகரி, உணவுப்பொருள் ஏற்பாடு செய்து அமை.

**provi'sional**, *a.* தற்பொழுதைக்கான.

**provis'ions**, *n. pl.* பலசரக்குக் கடை.

**provis'o**, *n.* காப்புவாசகம், சட்டத்தில் விலக்குக்கூறு, விருப் பாவணத்தில் கட்டுவரையறை; *pl.* provis'os.

**provis'or**, *n.* (வர.) பத்திரத்தின் தனி ஏற்பாட்டு வாசக உரிமையாளர்; போப்பாண்டவர் இளவரசு; சமய மனையின் உண்டிப்பொருள் முதல்வர்.

**provis'ory**, *a.* காப்பு வாசகம் அடங்கிய; நிபந்தனை மீதான, வருநிலை சார்ந்தே நிகழத்தக்க; தற்பொழுதைக்குரிய; தற் காலத்திய ஏற்பாடான.

**provoca'tion**, *n.* தூண்டுதல், சினமூட்டுஞ் செயல்; தீமை செய்வதற்கான தூண்டுதல்; எரிச்சலூட்டுதல்; தூண்டு காரணம்.

**provoc'ative**, *n.* தூண்டும் பொருள்; அறியும் ஆர்வம்; *a.* அறியும் ஆர்வத்தைத் தூண்டுகிற; வேண்டுமென்றே எரிச்ச லூட்டுகிற.

**provoke'**, *v.* சினமூட்டு, எரிச்சல் உண்டுபண்ணு; அவா எழுப்பு; கவர்ச்சியூட்டு; தூண்டு, கிளறு.

**prov'ost**, *n.* ஆக்ஸ்போர்டு-கேம்பிரிட்ஜ் கல்லூரிகள் சிலவற் றின் தலைவர்; (வர.) சமயத்துறைச் சங்கத்தலைவர்; ஸ்காத் லாந்து நகராண்மைக்கழகத் தலைவர்; செர்மனியில் நகரத் தலைமைத் திருக்கோயில் பொறுப்புள்ள சமயகுரு; (தொ) provost marshal, படைத்துறைக்காவலர் தலைவர்; படைத் துறை முறைமன்றம் நடக்கும் படைக்கப்பல் தலைவர்; குடியேற்ற நாடுகள் சிலவற்றில் தலைமைக் காவல் அதிகாரி; (வர.) பிரான்சில் படைத்துறைப் புறச்சார்பான பணியர்; provost sergeant, படைத்துறைக்காவலர் குழுத்தலைவர்.

**prow** [1], *n.* கப்பல் அல்லது படகின் முன்பகுதி; (வில.) உடலின் முன்முனைப்புப்பகுதி.

**prow** [2], *a.* தகுதிமிக்க; வீரப்பண்புநயமார்ந்த.

**prow'ess**, *n.* வீரம்; ஆண்மை; துணிவு; பண்பு நிறைவு.

**prowl**, *n.* கொள்ளைச்சுற்றுத் திரிவு; தெருச்சுற்றல், அலைவு, திரிவு; *v.* கொள்ளைப்பொருள் தேடித்திரி; இரைதேடி அலை; வீதிகளில் திருட்டுக்கருத்தோடு சுற்று.

**prox'imal**, *a.* (உள்.) உடலின் மையத்தை நோக்கி அமைந் துள்ள; இணைப்பு மையத்தை நோக்கி அமைந்துள்ள.

**prox'imate**, *a.* அண்மையான, அருகிலுள்ள; முந்திய அல்லது அடுத்த, உடனடியான; ஏறத்தாழ, கிட்டத்தட்ட.

*prox'ime accesser'unt, n. pl., prox'ime access'it, n. sing.* (ல.) பட்டியலில் பரிசு பெறுபவருக்கு அடுத்த நிலையில் வைக்கப்பட்டவர், பரிசு பெறுபவருக்கு அருகில் வந்தவர்.

**proxim'ity**, *n.* இடவகையில் அண்மை; காலவகையில் அணிமை; நெருங்கிய தன்மை, அடுத்துள்ள நிலை; (தொ.) proximity of blood, அடுத்த உறவு.

*prox'imo, adv.* அடுத்த மாதத்தில்.

**prox'y**, *n.* பதிலாள்; செயலுரிமைபெற்ற பதிலாள்; பதிலாள் வாக்குரிமை.

**prude**, *n.* நுணுக்கநாணி.

**pru'dence**, *n.* செயலறிவு; உலகியல்மதி; தன்னல நோக் குடைய அறிவு; முன்மதி.

**pru'dent**, *a.* செயலறிவுத்திறம்வாய்ந்த; செயல்நுட்பமறிந்த; வகைதிரிபுணர்வுடைய; யூகமுடைய; விவேகமுடைய, உலகியல் அறிவுவாய்ந்த, அறிவுநுட்பம் வாய்ந்த; அமைந் திருந்து செயல் செய்யக்கூடிய.

**pruden'tial**, *a.* தன்னல நோக்குச்சார்ந்த, காரிய அறிவு சார்ந்த, முன்மதிகாரணமான; நிர்வாகம் பற்றிய.

**pruden'tials**, *n. pl.* செயலறிவு முதுமொழி.

**pru'dery**, *n.* போலிநாணம், போலிப்பயிர்ப்பு.

*prud'homme*, (பிர.) *n.* தொழிலாளர் பிணக்குத் தீர்வு நடுவர்.

**pru'inose**, *a.* வெண்துகளால் மூடப்பெற்ற; பனிபோர்த்த.

**prune** [1], *n.* உலர் கொடிமுந்திரிப்பழம்; கொடிமுந்திரிப் பழச் சாற்றின் நிறம்; கருஞ் சிவப்பு ஊதாநிறம்; (தொ.) prunes and prism, நயநுணுக்கப் பசப்புப்பேச்சு.

**prune** [2], *v.* நறுக்கு; தறி, வெட்டு; தேவைக்கு மேற்பட்ட வற்றை அகற்று.

**prunell'a** [1], *n.* உறுதியான மென்பட்டு; முறுக்கிய கம்பளி நூல்.

**prunell'a** [2], *n.* தொண்டைக் கம்மல்; தொண்டையடைப்புக் காய்ச்சல்.

**prunell'o**, *n.* மிகச்சிறந்த உலர்முந்திரிப்பழ வகை; *pl.* prunell'os.

**pru'ning-hook**, *n.* மிகைக்கொம்புகளைக் கழிக்குங்கருவி.

**prunt,** *n.* கண்ணுடி வார்ப்பணி ; வார்ப்புக் கண்ணுடி ; கண்ணுடி வார்ப்புக் கருவி.

**prur'ience, prur'iency,** *n.* அரிப்பு, தினவு ; எண்ண இழிதகவு.

**prur'ient,** *a.* அரிப்புடைய ; காம எண்ண விருப்புடைய ; கெட்ட அவாவுடைய.

**pruri'ginous,** *a.* தோல் அரிப்புடைய.

**prurig'o, prurit'us,** *n.* அரிப்புக்கொப்புளம்.

**Pru'ssian,** *n.* பிரஷிய நாட்டினர், பிரஷிய குடியுரிமையாளர் ; *a.* பிரஷியாவிற் பிறந்த ; பிரஷியாவில் வாழ்கிற ; பிரஷிய நாட்டிற்குரிய ; (தொ.) Prussian blue, ஆழ்ந்த நீல வண்ணப்பொடி, அடர்த்தியான நீலவண்ணச் சரக்கு ; Prussian brown, Prussian green, ஆழ்ந்த நீலவண்ணச் சரக்கிலிருந்து எடுக்கப்படும் பழுப்பு வண்ணம் அல்லது பச்சை வண்ணம் ; Prussian carp, சிறு நன்னீர்மீன் வகை.

**Pru'ssianize,** *v.* தனியாளை நாட்டுநலத்திற்குப் பலியிடும் பிரஷிய முறையினைத் தழுவு.

**pruss'ic,** *a.* ஆழ்ந்த நீலவண்ணச் சரக்கு சார்ந்த ; அடர்ந்த நீலவண்ணத்திலிருந்து பெறப்பட்ட ; (தொ.) prussic acid, நீரசயனிகக் காடி.

**pry**[1], *v.* ஒற்றுப்பார், துருவி ஊடாக நோக்கு ; பிறர் மறையில் இடையிட்டுக் கருத்துச்செலுத்து ; தலையிட்டுத் தொல்லை கொடு ; பிறர் நடத்தைபற்றி உரிமையின்றி உசாவு ; நுழைந்து ஆராய் ; (தொ.) pry out, நுட்பமாக நோக்கி ஆய்வு செய்; வேண்டாத வகையில் தலையிட்டு ஆர்வத்துடன் கண்டுபிடி.

**pry**[2], *v.*=**prize**[3].

**prytane'um,** *n.* பண்டைய கிரேக்க நகரப் பொது வரவேற்பு மண்டபம்.

**psalm,** *n.* வழிபாட்டுப் பாடல், தோத்திரம், தெய்வகீதம் ; (தொ.) the Book of Psalms, the Psalms, பழைய ஏற்பாட்டிலுள்ள தோத்திரப்பாடல்கள்.

**psalm'-book,** *n.* பொதுவழிபாட்டுத் தோத்திரச்சுவடி.

**psalm'ist,** *n.* வந்தனைப்பாடல் இயற்றுபவர் ; the Psalmist, தோத்திரப்பாடல்களின் ஆசிரியர், தாவீது (David).

**psalmod'ic,** *a.* தோத்திரப்பாடல் இசைத்தலைச் சார்ந்த.

**psalmod'ist,** *n.* வந்தனைப்பாடல் பாடுபவர்.

**psalmod'ize,** *v.* தெய்வகீதம் பாடிப் பயிலு.

**psal'mody,** *n.* தோத்திரப்பாடல் இசைத்தல் ; தோத்திரப் பாடற்கலை ; தோத்திரப்பாடல்களின் தொகுதி ; ஞானப் பாடல்கள்.

**psal'ter,** *n.* தாவீதின் தோத்திரப்பாடல் திரட்டுச் சுவடி ; லத்தீன்-ஆங்கிலம் முதலிய மொழிகளில் தாவீதின் தோத்திரப் பாடல்களின் பதிப்பு ; வழிபாட்டுக்கான தாவீதின் தோத்திரப்பாடல் திரட்டின் படி.

**psal'tery,** *n.* பண்டைக்கால-இடைநிலைக்கால தெறி நரப் பிசைக் கருவிவகை.

**pseph'ism,** *n.* பண்டைய கிரீஸில் அத்தீனிய பொதுச்சபையினர் வாக்களிப்பின் மூலம் பிறப்பித்த கட்டளை.

**pseud'echis,** *n.* (வில.) நச்சுப்பாம்பினம்.

**pseudepig'rapha,** *n. pl.* பழைய ஏற்பாட்டாசிரியர்கள் எழுதியதாகக் கூறப்படும் சுவடிகள்.

**pseu'do,** *a.* பொய்யான, போலியான.

**pseudo-archa'ic,** *a.* நடை முதலியவற்றில் செயற்கைப் பழமைத்தோற்றங் கொண்ட.

**pseud'o-carp,** *n.* (தாவ.) போலிக்கனி, கருவகத்துக்குப் புறமான பகுதியிலிருந்து உருவாகும் கனியுரு.

**pseudo-class'ic,** *a.* பண்டைய கிரேக்க-ரோமக்கலைப்போலியான.

**pseudo-Goth'ic,** *a.* கூர்வளை சிற்பவகைப்போலி சார்ந்த.

**pseud'ograph,** *n.* உண்மை ஆசிரியரறியா இலக்கியம்.

**pseudol'oger,** *n.* கன்றிய பொய்யர்.

**pseudol'ogy,** *n.* பொய்ம்மைக்கலை.

**pseudo-mart'yr,** *n.* போலி உயிர்த்தியாகி.

**pseud'omorph,** *n.* பொய்த்தோற்றம் ; மாறுபடுமணியுரு, வேறொரு கனிப்பொருளுக்குரிய மணியுருத்தோற்றத்தைக் கொண்டுள்ள கனிப்பொருள் மணியுருவம்.

**pseud'onym,** *n.* புனைபெயர்.

**pseudon'ymous,** *a.* புனைபெயரில் எழுதப்பட்ட ; கற்பனைப் பெயரில் எழுதுகிற.

**pseud'oscope,** *n.* குவிவான பொருளைக் குழிவாகவும் குழிவான பொருளைக் குவிவாகவும் காட்டும் ஒளிக்கருவி வகை.

**pshaw,** *int.* சீ!-சீ!

**psilan'thropism,** *n.* இயேசுநாதர் மனிதரே என்னுங் கோட்பாடு.

**psilos'is,** *n.* மேற்பகுதி நீக்கி வெறுமையாக்கிக் காட்டும் நிலை ; மயிர்விழுந்துபோதல் ; வாய்-தொண்டை-செரிமானம் ஆகியவற்றைப் பீடிக்கும் வெப்பமண்டல நோய்வகை ; புறச்சதைக்கரைவு.

**psitt'acine,** *a.* கிளிகளுக்குரிய; கிளிபோன்ற.

**psittacos'is,** *n.* கிளிகளின் தொற்றுக் காய்ச்சல்.

**pso'as,** *n.* இடுப்புத்தசை.

**psor'a,** *n.* சிரங்கு.

**psori'asis,** *n.* யானைச்சொறி, நமட்டுச்சொறி.

**psyche,** *n.* உயிர், ஆன்மா ; உளம், மனம் ; வண்ணத்துப் பூச்சி வகை ; கிரேக்க பெண்தெய்வம்.

**psychi'atrist,** *n.* உளநோய் மருத்துவர்.

**psychi'atry,** *n.* மனநோய் மருத்துவம், உளமருத்துவம்.

**psych'ic,** *n.* ஆவி ஆற்றலுடன் தொடர்புகொள்ளக்கூடியவர், ஆவியூடாடி ; இயல் இயக்கமீறிய ஆற்றல் ; உடலியல்பு கடந்த செய்தி ; *a.* உளஞ் சார்ந்த ; ஆன்மிக ; உடலியல்பு கடந்த ; இயற்பியல் நியதிக்கு அப்பாற்பட்ட ; ஆவியுலகு சார்ந்த ; (தொ.) psychic force, ஆன்மிக ஆற்றல், இயலியக்கம் சாராதவற்றை விளக்குவதாகக் கொள்ளப்படும் இயற்பியல் கடந்த ஆற்றல்.

**psych'ical,** *a.* உளம் அல்லது உயிர் சார்ந்த ; மனிதனின் உயிர்நிலை வாழ்க்கைக்குரிய ; இயற்பியல் நியதிக்கு அப்பாற்பட்ட தோற்றங்கள் சார்ந்த ; இயற்கைக்கு அப்பாற்பட்ட நிலைகள் சார்ந்த ; (தொ.) psychical research, ஆவி உலகத் தொடர்பு பற்றிய ஆய்வு.

**psych'ics,** *n. pl.* உளநூல் ; ஆவிஉலகத் தொடர்புபற்றிய புத்தாய்வுத்துறை.

**psycho-an'alyse,** *v.* உளநிலைப்பகுப்பாய்வுசெய், உளநிலை உணர்வாய்வுமூலம் மருத்துவஞ்செய்.

**psycho-anal'ysis,** *n.* உளநிலைப்பகுப்பாய்வு, உணர்வுநிலை உணர்வுகடந்த நிலைகளின் தொடர்பு விளைவுகளை ஆயும் உள ஆய்வியல்துறை ; உளவியல் மருத்துவமுறை, உணர்வு கடந்தநிலை எண்ண உறைவுகளின் விளைவாய்ந்து நோய் தீர்க்கும் முறை.

**psycho-an'alyst,** *n.* உளநிலை ஆய்வுவல்லுநர், உளநிலை மருத்துவ ஆய்வாளர்.

**psycho-dynam'ic,** *a.* உள ஆற்றல் சார்ந்த.

**psycho-dynam'ics,** *n.* உள ஆற்றல் ஆய்வியல்துறை.

**psychogen'esis, psychog'ony,** *n.* மனத்தின் தோற்ற வளர்ச்சி, மனத்தில் கருத்து உருத்தோற்றம்.

**psycho'gram,** *n.* ஆவியினிடமிருந்து வருவதாகக் கருதப்படும் எழுத்துச்செய்தி.

**psycho'graph,** *n.* ஆவி எழுத்திற்குரிய கருவி.

**psychog'raphy,** *n.* விரிவியல் விளக்கமுறை உள ஆய்வுத்துறை ; ஆவி இயக்க வரிவடிவச் செய்திப்பேறு.

**psycholo'gical**, *a*. உளநூல் சார்ந்த; உள இயல்புத் தொடர்பான; மனத்தால் நேரடியாக உணரப்படுகிற; அக உணர்வுச் சார்பான; அகநிலை உணர்வுக்குரிய; (தொ.) psychological moment, உற்றவேளை, மனத்தைத் திறம்படக் கவர்ந்து ஆட்படுத்துவதற்குரிய சரிநுட்பமான காலக்கூறு.

**psychol'ogist**, *n*. உளநூல் வல்லுநர்; உளநூல் ஆய்வாளர்; உள உணர்வு செயற்பாடுகளை ஆய்பவர்; உள உணர்வு செயற்பாடுகளைப்பற்றிப் போதிப்பவர்.

**psychol'ogize**, *v*. உளநூல் ஆய்வில் ஈடுபடு; உள இயல்பிற்கேற்பப் பொருள் விளக்கு; மனிதவசிய முறையில் மயக்கி உறக்கமூட்டு.

**psychol'ogy**, *n*. உளநூல், உள இயல்பு நிலை இயக்கங்களையும் விளைவுகளையும் ஆயும் அறிவுத்துறை; உளநூல் பற்றிய ஆய்வேடு; உளநூல் நியதி; உள இயல்பு; உள உணர்வியக்கங்களின் தொகுதி; மனப்போக்கு, மனநிலை.

**psycho'mancy**, *n*. ஆவியுலகத்தொடர்பு.

**pyschomet'ric, psychomet'rical**, *a*. உற்றறி பண்பாற்றல் சார்ந்த.

**psychom'etry**, *n*. உற்றறி பண்பாற்றல், தொடுவதன் மூலமே பொருள்களின் அல்லது ஆள்களின் உள்ளியல்புகளை அறியும் மறையாற்றல்.

**psychomot'or**, *n*. உள ஆற்றற் செயற்பாடு, உள ஆற்றலால் தசைப்பகுதி இயங்குவித்தல்.

**psychoneuros'is**, *n*. சித்தப்பிரமைத் தொடக்கநிலை.

**psych'opath**, *n*. மனநிலை திரிந்தவர், உளநோயாளி.

**psychopath'ic**, *a*. உளநோய் சார்ந்த.

**psychop'athist**, *n*. உளநோய் மருத்துவர்.

**psychopathol'ogy, psychop'athy**, *n*. உளநோய் ஆய்வு நூல்.

**psychophys'ics**, *n*. உடலுளத்தொடர்பாய்வியல்.

**psychophysiol'ogy**, *n*. உளவியல் உடல்நூல்.

**psychos'is**, *n*. பைத்தியம், கோட்டி; *pl*. psychos'es.

**psychosomat'ic**, *a*. சிந்தையும் உடலுஞ் சார்ந்த; உடல் சார்ந்த நோய்வகையில் கவலைகளினால் உண்டான; கவலைகளினால் மேலும் மோசமாகிவிட்ட.

**psychotherapeut'ic**, *a*. வசியத்துயில் முதலிய வழிகளால் மனநோய்க்குப் பண்டுவஞ் செய்வது சார்ந்த.

**psychothe'rapy**, *n*. வசியத்துயில்முறை மருத்துவம், மயக்கி உறக்க மூட்டுவது மூலமாக நோய்க்குப் பண்டுவஞ் செய்தல்.

**psychrom'eter**, *n*. ஈர உணக்கவெப்பமானி, ஈரக்குமிழுடன் ஈரநீக்கிய குமிழும் உடைய வெப்பமானி வகை.

**ptarm'igan**, *n*. காட்டுக்கோழி வகை, கோடைக்காலத்தில் கறுப்புச் சிறகுகளையும் மழைக்காலத்தில் வெண் சிறகுகளையும் உடைய கோழியினப் பறவை வகை.

**pteridol'ogist**, *n*. சூரல் ஆய்வுத்துறை வல்லுநர்.

**pteridol'ogy**, *n*. சூரல் ஆய்வுநூல், பெரணி ஆராய்ச்சித் துறை.

**pterodac'tyl**, *n*. மரபற்றுப்போன சிறகுடைய ஊரும் உயிர் வகை.

**pterog'raphy**, *n*. சிறகுகள் பற்றிய விளக்கவுரை.

**pter'opod**, *n*. காலின் நடுப்பகுதி சிறகுபோல் விரிந்திருக்கும் நத்தையின உயிர்வகை.

**pte'ropus**, *n*. (வில.) நரிச்சல், பழந்தின்னும் வௌவால்; *pl*. pte'ropi.

**pter'osaur**, *n*. மரபற்றுப்போன பறக்கும் பல்லியின உயிர்.

**pteryg'ium**, *n*. (மரு.) சதைப்படர்த்தி, கண்ணோய் வகை.

**pte'rygoid**, *n*. தாடை முளை எலும்புகளுள் ஒன்று; *a*. சிறகு போன்ற; தண்டெலும்புடைய உயிரினங்களில் வல்லண்ண எலும்புகளுக்குப் பின்னால் மேல்தாடையிலுள்ள இரட்டையான முளையெலும்புகள் சார்ந்த; (தொ.) pterygoid process, தண்டெலும்புடைய உயிரினங்களில் வல்லண்ண எலும்புகளுக்குப் பின்னால் மேல்தாடையிலுள்ள இரட்டையான முளையெலும்புகளின் அமைவு.

**pti'san, ptisan'**, *n*. வாற்கோதுமைக் கஞ்சி.

**Ptolema'ic**, *a*. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவான நூலாராகிய தாலமி (Ptolemy) சார்ந்த; கி. மு. 323 முதல் கி. மு. 30 வரையில் எகிப்தை ஆண்ட தாலமி மரபு மன்னர்களைச் சார்ந்த; (தொ.) Ptolemaic system, வானநூல் வகையில் நிலவுலகை மையமாகக் கொண்டு ஞாயிறும் பிறகோள்களும் சுற்றி வருவதாகக் கொள்ளப்பட்ட கோட்பாடு.

**ptom'aine, ptomaine'**, *n*. அழிதசைநஞ்சு, அழுகும் பிணங்களிலும் காய்கறிகளிலும் உள்ள நச்சுப்பொருள் வகை.

**ptos'is**, *n*. இமைவாதம், தசையின் பக்கவாதத்தினால் கண்ணின் மேலிமை கீழ்நோக்கித் தொங்குதல்.

**pub**, *n*. (பே-வ.) பொது விடுதி.

**pub'erty**, *n*. பூப்புப்பருவம், பாலின முதிர்ச்சியின் தொடக்கக் காலம்.

**pubes'cence**, *n*. பூப்புப்பருவம் எய்துதல்; செடிகளின் இலைகளிலும் தண்டுகளிலும் காணப்படும் மென்மயிர்த்துய்; விலங்கு பூச்சிகளின் உடற்கூறுகளில் மென்மயிர்த்துய்; மென்மை, மொசுமொசுப்பு.

**pubes'cent**, *a*. மென்மயிருடைய; மென்மைவாய்ந்த.

**pub'lic**, *n*. பொதுமக்கள், சமுதாயமக்கள்; மனிதசமுதாயம்; மக்கள்; சமுதாயத்தில் ஒரு பிரிவினர்; பொதுமக்கள் கூடும் இடம்; பொதுமக்களைக் காணும் வெளியிடம்; (பே-வ.) பொது விடுதி; *a*. பொதுமக்களுக்குரிய; பொதுமக்கள் பற்றிய; பொதுமக்களின் சார்பான; பொதுமக்களுக்கான; பொதுமக்களுக்குப் பிரதிநிதியான; பொதுமக்களுக்குப் பயன்படத்தக்க; பொதுமக்கள் கலந்துகொள்கிற; பொதுவான, பொதுவில் ஏற்பட்டிருக்கிற; வெளிப்படையாகச் செய்யப்படுகிற; மக்கட்பணியில் ஈடுபட்டிருக்கிற; பொதுப் பணி சார்ந்த; பொதுமக்கள் கருத்து வழங்குதற்குரிய; பல்கலைக்கழக முழுமைக்குமுரிய; எல்லா நாடுகளுக்கும் பொதுவான, அனைத்து நாடுகளுக்கும் உரிய; (தொ.) in public, வெளிப்படையாக; பொதுமக்கள் அறியும்படி; notary public, சான்று அலுவலர்; public education, பள்ளிக்கல்வி, நாட்டுப் பொதுக்கல்வி; public funds, அரசினரால் எழுப்பப்பெற்றுள்ள நிலையான வட்டிக்கடன்; public holiday, பொது விடுமுறை நாள்; public house, பொதுவிடுதி; public lands, அரசினரின் உடைமையான பொது நிலங்கள்; public law, அனைத்து நாடுகள் சட்டம்; public orator, பொதுநிகழ்ச்சிகளிற் பல்கலைக்கழக ஆட்சிக்குழுவின் (Senate) சார்பில் உரையாற்றும் அலுவலர்; public prosecutor, அரசாங்கக் குற்ற விசாரணை வழக்கறிஞர்; public relations, பொதுமக்கள் தொடர்புப் பிரிவு; public relations officer, பொதுமக்கள் தொடர்புத்துறை முதல்வர்; public school, பெருமக்கள் பள்ளி; public spirit, நாட்டுப்பற்று; பொதுநல ஆர்வம்; public utility, பொதுநலத்துறை; public woman, விலைமகள்.

**pub'lican**, *n*. இறைதண்டுவோர்; சொண்டிகர், பெண்டிர் விடுதி நடத்துவோர்; ஆயக்காரர்.

**publica'tion**, *n*. வெளியிடுதல்; பொது அறிவிப்பு, விளம்பர அறிவிப்பு; வெளியீடு, வெளியிடப்பட்ட சுவடி; இசையிலக்கிய வெளியீடு; கலைவெளியீடு.

**pub'licist**, *n*. அனைத்து நாடுகள் சட்டம்பற்றி எழுதுபவர்; சர்வதேசச் சட்ட வல்லுநர்; நடப்புச்செய்திகளைப்பற்றி எழுதுபவர், பத்திரிகையாளர்.

**publi'city**, *n*. பலரறிநிலை, பிரசித்தி; ஆரவாரப்புகழ்; செய்திப்பரப்பு, பொது விளம்பரம்.

**pub'licize**, *v*. பரப்பிடு, சாற்று.

**pub'licly**, *adv*. வெளிப்படையாக.

**pub'lic-spir'ited**, *a*. ஒப்புரவுடைய, பொதுநல உணர்ச்சியுள்ள; பொதுநலத் தொடர்புடைய.

**pub'lish**, *v.* வெளியிடு, புத்தகம் விற்பனைக்கு உரியதாக்கு; இசைப்பகுதி-கலைப்பகுதி முதலியவற்றைப் பொதுமக்கள் அறியச்செய்; பலவிடங்களிலும் பரவச்செய்; அறிக்கை யிட்டுப் பரப்பு; முறைப்படி அறிவி; விளம்பரஞ்செய்; திருமண முன்னறிவிப்பாய் வினவு; திருமண முன்னறிவிப்பு அறிக்கை படி.

**pub'lisher**, *n.* வெளியீட்டாளர்; அறிவிப்பவர், தெரிவிப்பவர்.

**puccoon'**, *n.* வண்ண மையுடைச் செடிவகை.

**puce**, *a.* தெள்ளுப்பூச்சி நிறமான, செங்கல் மங்கலான.

**Puck**[1], *n.* ஷேக்ஸ்பியரின் 'நடுவேனிற்கனவு' நாடகத்தில் வரும் சிறப்புவாய்ந்த வனதெய்வம்.

**puck**[2], *n.* குறும்பு செய்யுங் குறளி; குழந்தை.

**puck**[3], *n.* வளைகோற் பனிச்சறுக்கற் பந்தாட்டத்திற்குரிய தொய்வக ஆட்டச்சில்லு.

**puck**[4], *n.* கால்நடை நோய்வகை.

**puck'a**, (இ.) *a.* முழுநிறைவான; முழுக்க முழுக்க நல்ல.

**puck'er**, *n.* மடிப்பு; திரைப்பு; குவிப்பு; வளைவு; கொய்சகம்; *v.* திரைகளாகச் சுருக்கு; மடிப்புக்களாகத் திரள்வி; சுரி, சுருங்கு, குவி; மடிப்புறு; குவிவுறு.

**puck'ery**, *a.* சுருங்கக்கூடிய, திரையும் பாங்குள்ள.

**pud**, *n.* (பே-வ.) குழந்தையின் கை; விலங்குகள் சிலவற்றின் முன்னங்கால்.

**pu'ddening**, *n.* (கப்.) உராய்வுத்தடைக் கயிற்றுமெத்தை.

**pu'dding**, *n.* களி, கூழ், புற்கை; கூலவகையின் மாவு-குருதி முதலியவை திணிக்கப்பட்ட பன்றி முதலியவற்றின் குடற்கறி; களிபோன்ற பொருள்; (கப்.) உராய்வுத்தடைக் கயிற்றுமெத்தை; (தொ.) black pudding, குருதிக்களி; more praise than pudding, சத்தில்லா வெறும் பாராட்டு; pudding pie, மாப்பணியார வகை; the proof of the pudding is in the eating, தின்பதால் தெரியும் பணியாரத் திறம்.

**pu'dding-cloth**, *n.* களி வேகவைக்குந் துணி.

**pu'dding-head**, *n.* மட்டி, மடையன்.

**pu'dding-heart**, *n.* கோழை.

**pu'dding-stone**, *n.* கூட்டுக்கலவைப்பாறை.

**pud'dle**, *n.* குட்டை, சேற்றுமடு; (பே-வ.) குழப்பம், தாறுமாறான நிலை; மண்ணடை, அணை-கரை முதலியவற்றில் நீர் புகாதவாறு பூசப்படும் மணல் கலந்த குழைசேறு; *v.* குட்டையில் அளை, சேற்றுமடுவில் புரள்; தூய்மையற்ற துறைகளில் ஈடுபடு; நீரைக் கலக்கிச் சேருக்கு; செய்தியைக் குழப்பு; களிமண்ணையும் மணலையுங் கலந்து பிசைந்து குழைசேருக்கு; கால்வாய் முதலியவற்றின் கரைகளுக்குக் குழைசேறு பூசு; தேனிரும்பாக்குதற்காக உருகிய இரும்பைக் கலக்கு.

**pudd'ly**, *a.* குட்டைகள் நிறைந்த.

**pud'ency**, *n.* அடக்கம், நாணம்.

**puden'dal**, *a.* மறையுறுப்புக்கள் சார்ந்த.

***puden'dum***, (ல.) *n.* மறை உறுப்பு, பாலினப் புற உறுப்பு; *pl. puden'da.*

**pudge**, *n.* (பே-வ.) கட்டை குட்டையானவர்; கொழுத்துக் குறுகிய விலங்கு.

**pudg'y**, *a.* கட்டை குட்டையான, கொழுத்துக் குறுகிய.

**pud'sy**, *a.* கொழுத்த, உருண்டு திரண்ட.

***pue'blo***, (ஸ்பா.) *n.* ஸ்பானிய அமெரிக்க பகுதிகளில் சிற்றூர்; ஸ்பானிய அமெரிக்க பகுதிச் செவ்விந்தியர்களின் குடியிருப்பு; *pl. pue'blos.*

**pu'erile**, *a.* சிறுபிள்ளைத்தனமான; விளையாட்டுப் புத்தியுள்ள; சிறுதிற, பயனற்ற; (தொ.) puerile breathing, முணுமுணு என்ற ஒலியுடன் குழந்தைபோல் மூச்சுவிடுங் கோளாறு.

**pueril'ity**, *n.* சிறுபிள்ளைத்தனம்; சிறுபிள்ளைத்தனம் வாய்ந்த செயல்; அற்பசெயல்; மதலைச்சொல்; அறிவற்ற சிறுதிறச்செயல், மடமை.

**puerp'eral**, *a.* பிள்ளைப்பேறு சார்ந்த, பிள்ளைப்பேற்றின் விளைவான; (தொ.) puerperal fever, பேறுகாலக் காய்ச்சல்; puerperal insanity, பிரசவப் பைத்தியம்.

**puff**, *n.* மோதுஞ் சிறு காற்றலை, திடீர்க்காற்று வீச்சு; குற்றுயிர்ப்பு வீச்சு; காற்றின் சிற்றலை வீச்சொலி; சிறு மூச்சொலி; வெளியேற்றப்படும் புகைக்கற்றை; ஆடை ஒப்பனை மடிப்பலை; மயிர் ஒப்பனை அலைச்சுருள்; ஒப்பனைத் துகள் ஒத்தும் இழைச்செண்டு; பொடிச்செண்டு; மாவினுற் செய்த பொங்கப்பம்; செய்தித்தாள்களில் நூலை மிகைபடப் புகழும் விமரிசனம்; செய்தித்தாள்களில் வாணிகப் பண்டங்களை மிகைபடப் புகழும் விளம்பரம், பக்கச்சொல், வீண் பாராட்டுரை; *v.* ஊது, மூச்சு அலை வெளிவிடு; காற்று வகையில் அலைவீசு; அசைப்பிடு, விட்டுவிட்டு எழு; முசுமுசுப்புக்கொள், இடர்ப்பட்டு மூச்சுவிடு; மூச்சுத் திணறவை; நீராவிப்பொறிவண்டி வகையில் 'குப்' 'குப்' என்று புகைவிடு; 'குப்' 'குப்' என்று புகைவிட்டுக்கொண்டே செல்; சுருட்டு முதலியவற்றின் வகையில் புகை ஊதித்தள்ளு; புடை, வீங்கு, வீக்கங்கொள்; தற்பெருமையால் பூரிப்புக் கொள்வி; மிகைபடப் பேசு; பொய்யாகப் புகழ்ந்து விளம்பரஞ் செய்; ஏலத்தில் விலை உயர்த்துவதற்காகக் கேள்வி கேள்; (தொ.) puff out, திக்கித் திணறிப்பேசு; puff paste, மெல்லடை மாக்களி; மெல்லடைப் பண்ணியம்; puff up, செருக்கடைவி.

**puff'-adder**, *n.* பெரிய ஆப்பிரிக்க நச்சுப்பாம்பு வகை.

**puff'-ball**, *n.* ஊதுகாளான், மணிவடிவச் சிதல் உறையுடைய காளான் வகை.

**puff'-box**, *n.* சுண்ணச் சம்புடம்.

**puff'er**, *n.* முசுமுசுப்பவர்; புகைவிடுபவர்; நீராவி இயந்திரம்; நீராவிப்படகு; ஏலத்தில் விலை ஏற்றிவிடுபவர்.

**puff'ery**, *n.* விளம்பரம், மிகைபடப்புகழ்தல்; சுண்ண வண்ணச் சிமிழ்கள்.

**puff'-puff**, *n.* மழலைப்பேச்சில் இரயில்.

**puff'y**, *a.* வன்காற்றாக வீசுகிற; குறுங்காற்று வீச்சான; புடைத்த, பாரித்த, வீங்கிய; அதைப்புக்கொண்ட, கொழுத்த.

**pug**[1], *n.* தடித்துக் குள்ளமான சப்பை முகமுடைய நாய் வகை; பெரிய நிறுவனத்தில் மேல்நிலையிலுள்ள வேலைக்காரர்; குள்ளநரி; திசைதிருப்புப் பொறிவண்டி.

**pug**[2], *n.* செங்கல் செய்வதற்கான கலவைக் களிமண், *v.* செங்கல் செய்வதற்காகக் களிமண்ணைக் கலந்து பக்குவப் படுத்து; தளமடித்துக் கெட்டியாக்கு; சந்தடித் தடை செய்வதற்காக நிலத்தள அடியில் களிமண்-வாள்தூள்-சாந்து முதலியவை இட்டு அழுத்து.

**pug**[3], *n.* விலங்கின் காலடிச்சுவடு; *v.* விலங்கினைத் தடங் கண்டு தொடர்.

**pug'-dog**, *n.* சப்பைமுகக் குள்ளநாய் வகை.

**pugg'aree**, (இ.) *n.* தலைப்பாகை; பின்தொங்கலுடன் தொப்பியைச் சுற்றி அணியப்படும் மென்துகில் குட்டை.

**pugg'ing**, *n.* அடித்தல், துவைத்தல்; செங்கல் செய்வதற்காகக் களிமண்ணை இயந்திரத்திலிட்டுக் கலந்து பக்குவப் படுத்துதல்; ஒலி ஊடுருவாதவாறு தரைத்தளங்களிடையே வைக்கப்படும் களிமண்-வாள்தூள்-சாந்து முதலியவற்றின் கலவை.

**pugg'ish**, *a.* குரங்கு போன்ற; சப்பை முகக் குட்டைநாய் வகை போன்ற; மேல்வளைந்த சப்பை மூக்குடைய.

**pugg'ree**, *n.*=puggaree.

**pugg'y**, *a.*=puggish.

**pu'gilism**, *n.* குத்துச்சண்டைக்கலை; குத்துச்சண்டையிடுதல்.

**pu'gilist**, *n.* குத்துச்சண்டையர்; சண்டையிடுபவர்; ஊக்கத்துடன் வாதிடுபவர்.

**pug'-mill**, *n.* செங்கல் செய்வதற்கான களிமண் கலவையைப் பக்குவப்படுத்தும் இயந்திரம்.

**pugna'cious**, *a.* சண்டையிடும் பாங்குள்ள, வம்பிற்கிழுக்கிற.

**pugna'city**, *n.* போர்த்தினவு.

**pug'-nose**, *n.* குறுஞ் சப்பைமூக்கு.

**puisn'e**, *n.* உயர்நீதிமன்றத் துணைநடுவர்; *a.* (சட்.) துணைமையான, பிற்பட்ட, பிந்திய, காலத்தாற் பின்னிட்ட; (தொ.) puisne judge, உயர்நீதிமன்றத் துணைநடுவர்; puisne mortgagee, பின்னிட்டுக் கொதுவை வைத்துக்கொண்டவர்.

**pu'issance**, *n.* பலம்.

**pu'issant**, *a.* சக்தி வாய்ந்த.

**pu'ja**, (த.) *n.* பூசை, வழிபாடு; திருவிழா.

**puke**, *n.* வாந்தி; *v.* வாந்தியெடு.

**pu'ker**, *n.* வாந்தி மருந்து.

**pukk'a**, **pukk'ah**, *a.*=pucka.

**pul'chritude**, *n.* அழகு, வனப்பு.

**pule**, *v.* கிறீச்சிட்டு அழு, இனை, சிணுங்கு.

**pull**, *n.* இழுப்பு, வலிப்பு; வெட்டியிழுப்பு; தென்னுகை; இசிப்பு; இழுப்புவிசை; ஈர்ப்பாற்றல்; செல்வாக்காற்றல்; மேலிட ஆதரவு வலிமை; கடிவாள இழுவை; பந்தயக்குதிரை வகையில் கடிவாளத் தடுப்பீர்ப்பு; வலிந்த படகுகைப்பு; மதுவகையில் நீள்குடியளவு; கேட்டதற்கு மேற்பட்ட தாராள மதுவழங்கீடு; பற்றுகைப்பிடி; அச்சுவகையில் சரவைப் பார்வைப்படி; பந்தாட்ட வகையில் பின்விசையடி; ஆக்க நலம், சாதகமான நலம்; *v.* இழு; பற்றி ஈர்; பிடுங்கு; கிள்ளியெடு; கவர்ந்து ஈர்; ஈர்த்துக்கொள்; முனைந்து உழல்; இழுத்துச்செல்; உறிஞ்சு; மொண்டுகொள்; சோர்த்து எடு; வார்த்துக்கொள்; பறித்தெடு; மணியை இழுத்தடி; படகு உகை; தண்டுவலி; வலிந்து துடுப்புத்தள்ளு; படகு வகையில் உகைக்கப்பெறு; பற்றிக்கிழி; உடல்நலங் கெடு; கோட்டு, முகம் வகையில் கோணலாக்கிக்கொள்; கைமுறை அச்சுப் பொறி இயக்கிப் படி எடு; திருத்தத்தகட்டின் அச்சுப்படி எடு; கைதுசெய்; சூதாட்ட மனைமீது தாக்குதல் நடத்து; குதிரை வகையில் கடிவாளம் பற்றி இழுத்து இடக்குப்பண்ணு; தன் பால் கவர்ந்தீர்த்துக்கொள்; முனைந்து முயன்று தன்பால் வரு வித்துக்கொள்; ஒருதிசைப்பட்ட சார்பூட்டு; ஆதரவை வலிந்து பெறு; செல்வாக்கைப்பயன்படுத்தி உதவு; வாரிவிடு; வீழ்த்து; அழி; குற்றங் காண், குறைப்படுத்து; பந்தயத்தில் தோற்க வைப்பதற்காகக் குதிரை வேகம் தடுத்துப்பிடி; குத்துச் சண்டையில் குத்து வலுக் குறை; செயல் வலுக் குறை; மரப் பந்தாட்டத்தில் பந்தை இடையிட்டு விலக்கு; (தொ.) pull about, இப்படியும் அப்படியுமாக இழு; pull a face, முகஞ் சுளி; pull apart, இழுத்துப் பிய்த்து வேறுவேறுக்கு; pull a sanctimonious face, மதிப்பான தோற்றம் மேற்கொள்; pull caps, pull wigs, சண்டைபோடு, பூசலிடு; pull devil, pull baker, தத்தம் வேலையை அவரவர் கவனிக்கட்டும்; pull down, இடித்துத்தள்ளு; தெம்பு குறைந்திரு; pull for, படகைத் திசையிற் செலுத்து; pull in, ஊர்தி வகையில் நிலை யத்துக்குள் நுழை; pull off, பரிசுபெறு; போட்டியில் வெற்றி யடை; pull off one's hat, தொப்பியைச் சிறிது எடுத்து வணக்கந் தெரிவி; pull one's ears, pull one by the ear, ஒறு, தண்டி; pull oneself together, புதிய ஊக்கம் பெறு; நலம் பெறு; pull one's leg, ஏமாற்று, முட்டாளாக்கு; pull one's nose, pull one by the nose, அவமானப்படுத்து; pull one's punches, குத்துச்சண்டையில் குத்தில் முழு ஆற்றல் ஈடுபடுத்தாதிரு; pull one's sleeve, pull one by the sleeve, கவனிக்கும்படி செய்; pull one's weight, படகு செலுத்து வதில் தன் முழுப்பளுவையும் ஈடுபடுத்து; வேலையில் தன் பங்கு முழுதுஞ் செய்; முழு மனத்துடன் ஒத்துழை; pull out, படகு வகையில் துடுப்புக்களினாற் செலுத்தப்பெறு; ஊர்தி வகையில் நிலையத்தைவிட்டு வெளியே செல்; pull out of the fire, ஆட்டம் இழந்துபோகுந் தறுவாயில் தடுத்து வெற்றி காப்பாற்று; pull round, உடல் நலம் பெறுவி; நன்னிலை எய்துவி; உணர்வுநிலை கொள்ளுவி; உடல்நலம் பெறு; நன்னிலை எய்து; உணர்வுநிலை கொள்; pull the bell, மணியை இழுத்தடி; pull the long-bow, மட்டுமிஞ்சிப் பொய் பேசு; தற்பெருமையடித்துக்கொள்; pull the strings, ஆட்டிப் படை, பின்னிருந்து இயக்கிவை; pull the wires, மறை செல்வாக்கினால் அரசியல் கட்சியையோ இயக்கத்தையோ நடத்து; pull through, இடர்-நோய் முதலியவற்றினின்றுந் தப்புவி; இடர்-நோய் முதலியவற்றினின்றுந் தேறு; pull together, ஒத்துழை; pull to pieces, பிய்த்துப் பிரித் தெறி; கண்ணறக்கண்டி; pull up, கடிவாளமிழுத்து நிறுத்து; கண்டி, குற்றங் கூறு, அதட்டு; தன்னையே அடக்கிக்கொள்; பந்தயம் முதலியவற்றில் தன் நிலையை முன்னேற்றிக்கொள்; pull up stakes, புறப்படச் சித்தமாயிரு.

**pull'-back**, *n.* தடங்கல், தடைப்படுத்துங் கூறு; தொங்கல் தாங்கி, மகளிர் ஆடைத்தொங்கலை எடுத்துச் செருகுவதற் கான அமைவு.

**pulled**, *a.* உடல்நலமிழந்த; ஊக்கங் குறைந்த; (தொ.) pulled bread, ரொட்டித்தூள் வறுவல்.

**pu'ller**, *n.* இழுப்பவர்; துடுப்பிழுத்துப் படகு செலுத்துபவர்; பந்தடிப்பவர்; இழுப்பது; இழுப்பதற்கான கருவி; இழுக்கும் இயந்திரம்; கடிவாளம் மீறி இடக்குச்செய்யுங் குதிரை.

**pu'llet**, *n.* இளம் பெட்டைக்கோழி.

**pu'lley**, *n.* உருளை, கப்பி, பாரஞ்சாம்பி; *pl.* pu'lleys; *v.* கப்பிமூலந் தூக்கு; கப்பி அமைத்து இணை; கப்பியால் வேலைசெய்.

**pull'icate**, (த.) *n.* வண்ணக் கைக்குட்டை; வண்ணக் கைக் குட்டை நெய்வதற்கான மூல இழைமப்பொருள்.

**Pu'llman**, **Pu'llman car**, *n.* இரயில் தனிவசதிப் பெட்டி.

**pull'-out**, *n.* விளிம்பொட்டு இதழ், ஒத்துப்பார்வையிடுவதை எளிதாக்கும் பொருட்டுச் சுவடித்தாள்களின் முகப்பு விளிம் பிலிருந்து விரியும் பக்கம்.

**pull'-over**, *n.* கம்பளிச்சட்டை; கம்பளித் தலைச்சீரா.

**pull'-through**, *n.* சுழல்துப்பாக்கிக்குழல் துப்புரவுத் தூரிகை.

**pull'ulate**, *v.* தண்டு வகையில் தளிர், அரும்புவகையில் முகிழ் வுறு, அரும்பிடு; விதை வகையில் முளை; கோட்பாடு வகை யில் தோன்று, தழைத்தோங்கு.

**pull'-up'**, *n.* பயணிகள் இடைத்தங்கல் மனை; திடீர் நிறுத்தம்; இழுத்து நிறுத்தல்.

**pu'lly-haul**, *v.* முழு வலிமையையும் ஈடுபடுத்தி இழு.

**pulmobranch'iate**, *a.* மூச்சுவிடுதற்கான திரிபமைப்புடைய செவுள்கள் வாய்ந்த.

**pulmom'eter**, *n.* நுரையீரல் ஆற்றல்மானி.

**pul'monary**, *a.* நுரையீரல் சார்ந்த; நுரையீரல்களிலுள்ள, நுரையீரல்களின் தொடர்பான; நுரையீரல்களையுடைய; நுரை யீரல் போன்ற உறுப்புக்களையுடைய; நுரையீரல் நோயினால் பீடிக்கப்பட்ட; நுரையீரல்களில் வலிமையிழந்த; (தொ.) pulmonary artery, நுரையீரற் பாய்குழல், நெஞ்சுப்பையி லிருந்து நுரையீரல்களுக்குக் குருதி கொண்டுசெல்லும் முதன் மைக் குருதிநாளம்.

**pul'monate**, *n.* நேரடியாக வளிமண்டலக் காற்றுயிர்க்குஞ் சிப்பி வகை; *a.* நுரையீரல்களை அல்லது நுரையீரல் போன்ற உறுப்புக்களையுடைய.

**pulmon'ic**, *n.* ஈளை மருந்து; *a.* நுரையீரல்களுக்குரிய.

**pulp**, *n.* விதைபருப்பு; பழச்சதை; களி, கூழ்; தாள்செய் வதற்குரிய கூழ்; நீரியலான தசைக்குழம்பு; பல்அடிக் கூழ்ப் பொருள்; தூளாக்கி நீருடன் கலக்கப்பட்ட கனி உலோகக் கலவை; *v.* களியாக்கு, கூழாகச்செய்; காப்பிக்கொட்டையி லிருந்து சோறு நீக்கு; களியாகு.

**pulp'er**, *n.* பொருள்களைக் களியாக்குவதற்கான இயந்திரம்.

**pu'lpit**, *n.* திருக்கோயிற் சமய உரைமேடை; சமயப்பிரசாரத் தொழில்; சமய உரையாற்றுங் குருமார்; ஏட்டுப்பெயர் வகையில் சமய உரைத்திரட்டு; *a.* சமய உரைமேடை சார்ந்த.

**pulpiteer'**, *n.* சமயப் பிரசாரகர்; *v.* சமய உரையாற்று.

**pulsate′**, *v.* துடி ; அடித்துக்கொள் ; தாளகதியில் விரிந்து சுருங்கு, அதிர்வுறு, அலைபாய் ; உயிர்ப்புறு; வைரக் கற்களிலிருந்து மண்ணைப் பிரிப்பதற்காக இயந்திரத்தின் மூலமாக அதிர்ச்சியூட்டு.

**pul′satile**, *a.* துடிப்புச் சார்ந்த ; நாடித்துடிப்பின் இயல்பு வாய்ந்த ; இசைக்கருவி வகையில் தட்டுவது மூலமாக வாசிக்கப்படுகிற.

**pulsatill′a**, *n.* செடிவகையின் ஊதாநிற மணிவடிவ மலர் ; மருந்தாகப் பயன்படும் ஊதாநிற மணிவடிவ மலரின் சாறு.

**pulsa′tion**, *n.* நாடித்துடிப்பு; உயிர்த்துடிப்பு; இதயத்துடிப்பு; அடிப்பு, துடிப்பு ; ஒழுங்காக இயங்கும் துடிப்பு ; அதிர்வு.

**pulsat′or**, *n.* குலுக்கியந்திரம், மண்ணிலிருந்து வைரத்தைப் பிரித்தெடுக்கக் குலுக்குகிற இயந்திரம்.

**pul′satory**, *a.* துடிக்கிற, அடித்துக்கொள்கிற, அதிர்கிற.

**pulse** [1], *n.* நாடி, நாடித்துடிப்பு ; குருதிக்குழாய் அதிர்வு ; இதயத்துடிப்பு; வாழ்க்கை விறுவிறுப்பு; உணர்ச்சியார்வம்; துடுப்பு முதலியவற்றின் சந்தமார்ந்த இயக்கம் ; (இசை.) தாளம்; ஒளியின் தனியலை; ஓசையின் தனி அலை; *v.* துடி, அடித்துக்கொள் ; அதிர், அலைபாய் ; தாளகதியில் விரிந்து சுருங்கு; தாள கதியில் இயக்குவி; (தொ.) feel one's pulse, நாடி பிடித்துப்பார், உள்ளக் கருத்தின் நோட்டம் பார்.

**pulse** [2], *n.* துவரையினம், பயற்றினம்.

**pul′ses**, *n. pl.* பயறு வகைகள்.

**pulsim′eter**, *n.* நாடிமானி, நாடி ஆற்றல் அல்லது துடிப்பு வீதம் அலகிட்டுக்காட்டுங் கருவி.

**pulsom′eter**, *n.* நீராவியைச் செறியவைப்பதற்கான வளிநீர் குழல்.

**pulta′ceous**, *a.* விக்கமருந்துக் களிபோன்ற, கூழான.

**pul′tan**, (இ.) *n.* காலாட்படை வகுப்பு.

**pul′verize**, *v.* தூளாக்கு, பொடியாக்கு; இடி, அரை; நீரைத் திவலைகளாகச் சிதறு ; இடித்து அழி, நொறுக்கு, தகர்வுறு, நொறுங்கு ; தூளாகு.

**pul′verizer**, *n.* தூளாக்குபவர் ; பொடிக்கும் இயந்திரம் ; சிதறு கருவி.

**pulve′rulent**, *a.* பொடியான, தூள் சார்ந்த; பொடிபோர்த்த; பாறை வகையில் நொறுங்கிவிடக்கூடிய, தன்னிணைவாற்றல் குன்றிய.

**pul′vil**, *n.* வாசனைத்தூள், பொடி.

**pul′vinate**, *a.* (தாவ., பூச்.) புடைப்பான, அதைப்புள்ள ; மேற்கவிவான ; திண்டுபோன்ற, திண்டுபோல் மெத்தென்ற.

**pul′vinated**, *a.* (க-க.) போதிகை வகையில் குவிமுகத்துடன் புடைத்திருக்கிற.

**pum′elo, pumm′elo**, *n.*=pomelo.

**pumi′ce**, *n.* மெருகு மாக்கல்வகை ; படிகக் கல், சிட்டக் கல் ; *v.* மாக்கல்கொண்டு தேய் ; சிட்டக்கல்லால் துப்புரவு செய் ; (தொ.) pumice hoof of horse, குதிரைக்குளம்பு கடற்பஞ்சு போலாகும் நோய்க்கோளாறு.

**pum′ice-stone**, *n.*=pumice.

**pumm′el**, *v.* குத்து, அடி.

**pump** [1], *n.* நீர்வாங்கு குழாய், காற்றழுத்த ஆற்றல்மூலம் நீரை மேலெழச் செய்யும் விசைக்குழாய் ; நீர்ம மட்டம் உயர்த்துவதற்கான விசைக்குழாய்ப் பொறி ; நீர்மம் இயக்குவதற்கான குழாய்ப்பொறி ; வளியழுத்தம் கூட்டவோ குறைக்கவோ பயன்படுத்தப்படும் குழாய்ப்பொறி ; இதயம், குருதி விசையியக்கக் கருவி ; பூச்சியினங்களிற் குருதியுறிஞ்சும் உறுப்பு ; பிறரிடமிருந்து தந்திரமாகச் செய்திகளைக் கவரும் முயற்சி ; பிறரிடமிருந்து திறமையாகச் செய்திகளைக் கவர்பவர் ; *v.* நீர்வாங்கு குழாயை இயக்கு ; நீர் முதலியவற்றை விசைக்குழாய்மூலம் அகற்று ; விசைக்குழாய்மூலம் நீர்மட்டம் உயர்த்து ; கப்பல்-கிணறு முதலியவற்றிலுள்ள நீரை விசைக்குழாய்மூலம் வற்றச்செய் ; வெளிப்படுத்து ; வெளிக்கொணர் ; செய்தியைத் தந்திரமாக வெளிப்படுத்து ; முழுதுங் களைப்படையச் செய் ; காற்று அழுத்தமானியில் உடனடியாகப் பாதரசத்தை ஏற்றியிறக்கு.

**pump** [2], *n.* குழாய்ச்செருப்பு, கட்டுப்போடாத புதைமிதி வகை.

**pu′mpernickel**, *n.* செர்மன்நாட்டுக் கூலவகை ரொட்டி.

**pump′kin**, *n.* பூசணிக்காய்.

**pump′-room**, *n.* கனிப்பொருள் நீரூற்றுக்களிலிருந்து மக்கள் குழாய்வழி நீரைக் குடிப்பதற்குரிய அறை.

**pun** [1], *n.* சிலேடை, சித்திரப்பேச்சு ; *v.* சிலேடையாகப் பேசு.

**pun** [2], *v.* அறை ; குத்தியிடித்து நிலத்தை உறுதிப்படுத்து ; திமிசுக்கட்டையால் இடி.

***pu′na***, (பெரு.) *n.* தென் அமெரிக்காவின் வட பகுதியிலுள்ள உயரமான பாழ்மேட்டுப்பகுதி ; காற்றழுத்தக் குறைவு காரணமாக ஏற்படும் கடுமூச்சுக் கோளாறு.

**punch** [1], *n.* தமருசி, தோல்-உலோகம்-தாள் முதலியவற்றில் துளையிடுங் கருவி ; தாழ்செறிபொறி, தாழ்ப்பாளைச் செறிப்பதற்கும் எடுத்தற்கும் பயன்படுங் கருவி ; செறிவழுத்தப் பொறி, ஆணியைப் பரப்பின்கீழ்ச் செலுத்தும் அமைவு ; வெட்டமுத்தப்பொறி ; பொறிப்பாணி, வார்ப்புருவத் தாய்ப் படிவம் அழுத்தும்பொறி ; முத்திரைப்பொறி; இலச்சினைப் பொறி ; *v.* தாள்-தோல்-உலோக முதலியவற்றில் தமருசியால் துளையிடு ; துளையிடு ; ஆணியை அடித்திறக்கு ; இருப்பூர்திச்சீட்டில் அடையாள நறுக்கிடு ; அழுத்துபொறி இயக்கிச் செறிவி ; அழுத்துபொறி இயக்கி நெகிழ்வி ; அழுத்துபொறி இயக்கி உருவாக்கு ; மரையழுத்து, குமிழ் அழுத்து ; பொறிப்பிடு ; அழுத்திப்பதிவு செய் ; (தொ.) bell punch, துளையிடலை மணியடித்துக்காட்டும் இருப்பூர்திச் சீட்டுத் துளைக்கருவி ; punch in, தமருசிகொண்டு ஆணியை உட்செலுத்து ; punch out, துறப்பணத்தைக்கொண்டு ஆணியைப்பிடுங்கு, வெளியேற்று.

**punch** [2], *n.* கைமுட்டிக் குத்து ; வன்திற இடி ; குத்தாற்றல்; விசையூக்கம் ; சுரங்க முகட்டின் ஆதார உதைகால் ; *v.* கைக்குத்துவிடு, முட்டியால் இடி; கோலாற் குத்து; தாற்றுக்கோலாற் குத்தி ஓட்டு ; (தொ.) pull one's punches, குத்துச்சண்டையில் முழு ஆற்றலையுஞ் செலுத்தத் தவறு.

**punch** [3], *n.* ஐங்கலவைப் பானகம், இன்தேறல்-சுடுநீர் அல்லது பால்-சர்க்கரை-எலுமிச்சைச்சாறு-நறுமணப் பொருட்கள் முதலியவை கலந்த சூடான பானம் ; ஐங்கலவைப் பானகக் குவளையளவு ; குவளைநிறை மது ; ஐங்கலவைப் பானக விருந்துக்குழு.

**punch** [4], *n.* குட்டைக்காற்குதிரை ; குறும் பரும் பொருள்.

**Punch** [5], *n.* பாவைக்கூத்தின் கோணங்கிக் குறளன்; லண்டன் நகர நகைச்சுவை வார இதழ் ; (தொ.) as pleased as Punch, மிகு மகிழ்ச்சி வாய்ந்த; as proud as Punch, மிக்க தற்பெருமையுடைய.

**punch′-ball**, *n.*=punch′ing-ball.

**punch′-bowl**, *n.* ஐங்கலவைப் பானகக் குவளை; குன்றுகளிற் காணப்படும் வட்ட வடிவ ஆழ்பள்ளம்.

**punch′-drunk**, *a.* கடுமையான அடியால் திகைப்படைந்த.

**pun′cheon** [1], *n.* துளைக்கருவி ; அண்டைகட்டுக்கம்பு.

**pun′cheon** [2], *n.* (வர.) பெரிய மிடா, 72 காலன் முதல் 120 காலன் வரை அளவுள்ள பறை.

**punch′er**, *n.* குத்துச்சண்டை செய்பவர், முட்டியால் தாக்குபவர் ; துளையிடு கருவி, தமருசி.

**Punchinell′o**, *n.* இத்தாலிய பொம்மலாட்டத் தலைமை நடிகர்; பொம்மலாட்டத் தலைமைப்பாத்திரம் ; குட்டையான பருத்த ஆள் ; *pl.* Punchinell′os.

**punch′ing-ball**, *n.* குத்துப்பயிற்சிப்பந்து, குத்துச்சண்டை பழகுவதற்காகத் தொய்வாற்றலுடைய தளையால் கட்டித் தொங்கவிடப்படும் காற்றடைத்த பந்து.

**punc′tate**, *a.* (தாவ., மரு.) புள்ளிகள் கொண்ட.

**punctil'io**, *n.* ஆசார நுணுக்கம், சடங்கு நுட்பம்; நுண்ணய வினைமுறைக்கூறு ; *pl.* punctil'ios.

**punctil'ious**, *a.* ஆசார நுணுக்கம் வாய்ந்த ; விடாப்பிடி நுட்ப ஒழுங்குமுறை வாய்ந்த ; ஆசார ஒழுங்குடைய ; வழுவற்ற, செம்மையான.

**punc'tual**, *a.* காலந்தவறுத ; காலங்கடவாத ; குறித்த காலத்திற்கு முந்திய ; (வடி.) புள்ளி அல்லது முனை சார்ந்த.

**punc'tuality**, *n.* காலந்தவறுமை, காலத்திட்பம்.

**punc'tuate**, *v.* புள்ளிகளிடு, நிறுத்தக்குறிகளிடு ; பேச்சிடையே கிளர்ந்துரைத்துத் தடு ; வற்புறுத்தல் கொடு.

**punctua'tion**, *n.* நிறுத்தக்குறியீடு ; நிறுத்தக் குறியிடுதல் ; எபிரேய முதலிய மொழிகளில் உயிர்க்குறி ஒலிக்குறிப் புள்ளிகளிடுதல்.

**punc'tum**, *n.* கறை, மேற்பரப்பின் மாசு ; வண்ணத்தடம் ; புள்ளி ; கரடு, மேடிட்ட தடம் ; தழும்பு, பள்ளமான புள்ளி ; *pl.* punc'tua.

**punc'ture**, *n.* கீறல் ; கிழிசல் ; துளை, ஓட்டை ; குத்து ; சக்கரப் புறவட்டில் ஏற்படும் பிளவு ; *v.* சக்கரப் புறவட்டில் துளை ஏற்படுத்து ; கிழிசல் உண்டாக்கு ; கீறுதலுறு.

**pun'dit**, *n.* = pandit.

**pun'gency**, *n.* உறைப்பு ; காரம் ; எரிச்சல், நெடி ; குத்தலான கேலி ; வன்சொல்.

**pun'gent**, *a.* காரமான ; உறைப்பான ; மணவகையில் மூக்கைத் துளைக்கிற ; கேலி வகையில் குத்தலான ; கண்டன வகையில் கடுமையான ; உணர்ச்சியைத் தூண்டுகிற; எரிச்சலூட்டுகிற ; (இய., தாவ.) கூரிய முனையுடைய.

**Pun'ic**, *n.* பண்டைய கார்த்தேஜ் (Carthage) மக்களின் செமித்திய இன மொழி ; *a.* கார்த்தேஜைச் சார்ந்த ; (தொ.) Punic faith, நம்பிக்கைக்கேடு, நம்பிக்கை மோசம்.

**pu'nice**, *n.* மூட்டைப்பூச்சி.

**pun'ish**, *v.* தண்டி ; தண்டனை அளி ; தண்டத்தொகை விதி ; அடி, ஒறு ; ஓட்டப்பந்தயத்தில் எதிர்ப்பக்கத்தாரைக் கடுஞ்சோதனைக்கு உள்ளாக்கு ; (பே-வ.) குத்துச்சண்டையில் எதிரிக்குக் கடுமையான அடிகொடு ; உணவுவகையில் பெரிய அளவு உட்கொண்டுவிடு ; பந்தாட்டத்தில் எதிர்ப்பக்கப் பந்தாட்ட வலுக்கேட்டை முழுதும் பயன்படுத்திக்கொள்.

**pun'ishment**, *n.* தண்டனை, ஒறுப்பு ; தண்டத்தொகை, தண்டவரி.

**puni'tion**, *n.* ஒறுப்பு

**pun'itive**, *a.* தண்டிக்கிற; தண்டனையாக விதிக்கப்படுகிற; தண்டனை இயல்புடைய ; (தொ.) punitive police, தண்டக் காவல்துறை, சட்டமீறிய பொதுநிலையுடைய மாவட்டத்தில் அம் மாவட்டச்செலவில் அமர்த்தப்படும் காவல்துறை அமைப்பு.

**punk**[1], *n.* விலைமகள், பரத்தை.

**punk**[2], *n.* மக்கிய மரம், மரக்கட்டைமீது வளருங் காளான் ; தீக்கொளுத்து குச்சி ; பயனற்ற பொருள் ; குப்பைகூளம் ; *a.* பயனற்ற ; அழுகிய.

**punk'a, punk'ah**, (இ.) *n.* விசிறி ; பங்கா, இழுப்புவிசிறி.

**punn'er**, *n.* அறைகருவி, கம்பத்தைச்சுற்றி மண்ணை இடித்து நிலத்தை உறுதியாக்கப் பயன்படுங் கருவி.

**punn'et**, *n.* குடுவை, பெட்டி, பழக்கூடை.

**pun'ster**, *n.* சிலேடையர்.

**punt**[1], *n.* பரிசல் ; *v.* பரிசல் தள்ளு ; பரிசல்வழி அனுப்பு.

**punt**[2], *n.* நிலம்பாவாப் பந்தடி, காற்பந்தாட்டப் பந்து கையிலிருந்து கீழே விழுந்து நிலத்தைத் தொடுமுன் காலால் உதைத்தல் ; *v.* நிலம்பாவாப் பந்தடி அடி.

**punt**[3], *n.* சீட்டாட்ட வகையில் பொருள் வைப்புக்கெதிராகப் பணயம் வைத்து ஆடுபவர் ; சீட்டாட்டவகைக் கெலிப்பெண் ; *v.* சீட்டாட்ட வகையில் பொருள்வைப்புக்கு எதிராகப் பணயம் வை ; (பே-வ.) குதிரைமீது பந்தயங் கட்டு.

**punt'-about**, *n.* பந்துதைப்பயிற்சி ; உதை பயிற்சிப் பந்து.

**pun'ter**, *n.* சூதாட்டக்காரர்.

**pun'ty**, *n.* ஊதுகம்பி, ஊதிக் கண்ணாடிப்பொருட்களை உருவாக்குவதிற் பயன்படுத்தப்படும் இரும்புக்கம்பி.

**pun'y**, *a.* குறிய, மிகச்சிறிய ; உருவில் குள்ளமான ; வலிமையற்ற; நுண்ணிய; நொய்ம்மையான; அற்பமான, சிறுதிற.

**pup**, *n.* நாய்க்குட்டி; *v.* ஈனு; குட்டிபோடு; (தொ.) in pup, கருக்கொண்டுள்ள, சூல் உற்ற; sell person a pup, ஏமாற்றுப் பேரஞ் செய்.

**pup'a**, *n.* முட்டைப்புழுக்கூடு, பூச்சியினத்தின் பருவச் செறிதுயிற்கூடு ; *pl.* pup'ae.

**pup'ate**, *v.* பூச்சியினப் பருவ வகையில் முட்டைப்புழுவாகு.

**pup'il**, *n.* பள்ளிமாணவர் ; பாடங்கற்பவர் ; கண்ணின்மணி, பாவை; (சட்.) இளங்கணாளர், பாதுகாப்பாளரின் பொறுப்பிலிருப்பவர், உரிய வயதை அடையாதவர்.

**pup'ilage**, *n.* உரிய வயது அடையாதிருக்கும் நிலை; பள்ளிச் சிறுவனுயிருக்கும் நிலை ; ஆதரவுநிலை, இளங்கண்மை ; மொழி-நாடு வகையில் சிறுபான்மை நிலை.

**pupi'lary**, *a.* கண்மணி சார்ந்த, கண்பார்வைக்குரிய; பள்ளிச் சிறுவருக்குரிய ; இளங்கணாளருக்குரிய ; பள்ளிக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட.

**pup'ilize**, *v.* மாணவர்களுக்குக் கற்பி, பாடம் பயிற்று.

**pup'illage**, *n.* = pupilage.

**pup'illary**, *a.* = pupilary.

**pup'illize**, *v.* = pupilize.

**pup'il-teacher**, *n.* சட்டாம்பிள்ளை ; மாணவ ஆசிரியர், தான் பயிற்சி பெற்றுக்கொண்டே பிற மாணவருக்குக் கற்பித்துப் பழகும் ஆசிரியர்.

**pupip'arous**, *a.* (பூச்.) கூட்டுப்புழு நிலையிலே கருவுயிரை ஈனுகிற.

**pupp'et**, *n.* கூத்தாட்டுப்பொம்மை ; பிறர் கைப்பாவை.

**pupp'et-clack**, *n.* = puppet-valve.

**pupp'et-play, pupp'et-show**, *n.* பொம்மலாட்டம், பாவைக்கூத்து.

**pupp'et-valve**, *n.* புடை இணைப்பில்லாத தூக்கு தடுக்கிதழ்.

**pupp'y, pupp'y-dog**, *n.* நாய்க்குட்டி; அறிவற்ற இளைஞன், தற்பெருமைக்காரன், பகட்டன், முட்டாள்.

**pur**, *v.* பூனைபோலக் கனை.

*pura'na*, (ச.) *n.* புராணம்.

**purb'eck**, *n.* கடினமான சுண்ணாம்புக்கல் வகை ; (தொ.) purbeck marble, உயர்நயம் வாய்ந்த சுண்ணாம்புக்கல் வகை.

**purb'lind**, *a.* அரைக்குருடான, கண் மங்கலான ; மழுங்கலான, அறிவுக் கூர்மையற்ற; ஆன்மிகத் தொலைநோக்கற்ற; *v.* அரைக் குருடாக்கு; மழுங்கலாக்கு, அறிவு மழுங்கச்செய்.

**purch'ase**, *n.* கொள்வினை, விலையிற் கொள்ளல் ; கொள்முதல் சரக்கு, விலைக்கு வாங்கிய பொருள்; பொறி ஆதாயம்; பொறி ஆதாயந் தருங்கருவி ; நிலத்திலிருந்து கிடைக்கும் ஆண்டு வருமானம் ; (வர.) படைத்துறையிற் பணம் கொடுத்து ஆணைப்பதவி பெறும் பழக்கம் ; (சட்.) நில ஈட்டுமானம், மரபுவழி பெறுமல் தன்முயற்சியாற் பெற்ற நில உடைமை ; *v.* வாங்கு, விலையிற்கொள் ; முயன்று பெறு ; (கப்.) கப்பி-நெம்பு முதலியவற்றின் உதவியால் நங்கூரம் எழுப்பு.

**purch'ase-money**, *n.* கொள்முதல் விலை ; பொருள்பெறக் கொடுக்கப்பட வேண்டும் விலை.

**purd'ah**, (பெர்.) *n.* திரை, படுதா.

**pure**, *a.* தூய, பரிசுத்தமான ; கலப்பற்ற ; நேர்வழிமரபான, கால்வழிக்கலப்பற்ற ; துறைதீர்ந்த, பிறிதொன்றன் தொடர்பற்ற ; கெடாத, வழுவாத ; தீமை கலவாத ; குற்றமற்ற, கறையற்ற ; களங்கமில்லாத, மாசுமறுவற்ற ; வாய்மை குன்றுத ; பெண்மைநலங் கெடாத ; ஒலிவகையில் முர

ணெலிக்கலப்பற்ற; இசைவகையில் முரணேசைக்கலப்பற்ற, சேரிசையான; உயிர்வகையில் மற்றேர் உயிரொலியினைத் தொடர்ந்த; சொல்லடி வகையில் உயிரீறன; மெய் ஒலி வகையில் மற்றெரு மெய்யொலியுடன் இணையாத; இயல் நூல் வகையில் பயன்முறைத்துறை சாராத; (தொ.) pure mathematics, தூய தனிநிலைக் கணக்கியல், பயன் முறைக் கணக்கியல் தொடர்பற்ற தனிக் கணக்கியல் துறை; pure science, செயன்முறை கருதா நுணங்கியல்.

**pure'-blood, pure'-blooded, pure'-bred,** *a.* இனக்கலப் பற்ற, தூய்மையான மரபுடைய.

***puree,*** (பிர.) *n.* காய்கறி வடிசாறு, இறைச்சிச்சூப்பி.

**pur'fle,** *n.* கரைக்கட்டு, ஆடைப்பூவேலை ஓரம்; *v.* பூவேலை ஓரத்தால் அழகுபடுத்து; கட்டிய விளிம்புகளைச் சுருண்ட மலர்கள் அல்லது இலைகள் போன்ற வேலைப்பாட்டால் ஒப்பனைசெய்.

**purf'ling,** *n.* வில்யாழ் வகையின் விளிம்புகளைச் சுற்றியுள்ள ஒப்பனை வேலைப்பாடு.

**purga'tion,** *n.* துப்புரவாக்கல்; மலக்கழிப்பு, குடல் தூய்மைப் பாடு; மலநீக்கம், ஆன்மாவின் வினையுலகத் தூய்மைப்பாடு; (வர.) கடுஞ்சோதனைகள் மூலமான குற்றச்சாட்டுத் தீர்வு; (வர.) சூளுறவு மூலமான குற்ற ஐயுறவுத்தீர்வு.

**purg'ative,** *n.* பேதிமருந்து; குடல் இளக்கமருந்து; *a.* குடல் இளக்குகிற; தூய்மைப்படுத்துகிற.

**purgato'rial, purgato'rian,** *a.* கழுவாய்நிலை சார்ந்த; ஆன்மா திருத்தமடையும் இடஞ் சார்ந்த.

**purg'atory,** *n.* கழுவாய்நிலை; வழுநீங்கிடம்; ஆன்மா திருத்த மடையும் இடம்; ரோமன் கத்தோலிக்க வழக்கில் மாள்வுக்குப் பின் திருவருட்பேற்றிற்குரியவர் பாவம் போக்கப்படும் இடம்; *a.* பாவங்களைப் போக்குகிற, தூய்மைப்படுத்துகிற.

**purge,** *n.* துப்புரவாக்கல்; மலக்கழிப்பு; கழிப்புக்குறைப்பு, படை கட்சி மன்றங்களில் வேண்டாதவரை நீக்கிக் கழித்தல்; *v.* பேதியாக்கு; குடலைச் சுத்தப்படுத்து; தூய்மைப்படுத்து; மாசகற்று, ஆன்மமலம் நீக்கு; உள்ளம் துப்புரவாக்கு; குற்றச்சாட்டிலிருந்து விடுதலை அளி; குற்றச்சாட்டுப் பற்றிய சந்தேகந் தெளிவி; குற்றமற்றவன் என்று எண்பி; (சட்.) பணிவேற்பினுலோ கழிவிரக்கத்தாலோ குற்றத்திலிருந்து கழு வாய் பெறு; அரசியல் கட்சியிலிருந்து விரும்பத்தகாதவரைக் கழித்தொதுக்கு; (தொ.) Pride's Purge, (வர.) பிரிட்டனில் நீடுமாமன்றத்தில் (1640-1660) பிரைட் என்பவரால் நடை முறைப்படுத்தப்பட்ட மன்னராதரவாளர்களின் நீக்கம்.

**purifica'tion,** *n.* தூய்மைப்பாடு; வாலாமை நீக்கம்; (தொ.) the Purification, the purification of the Virgin Mary, கன்னிமேரியின் குழந்தைப்பேற்றுத் தூய்மைச் சடங்கு, பிப்ரவரி 2-ஆம் நாள் விழா.

**pur'ificator,** *n.* திருவுணா வழிபாட்டுத் துப்புரவுத்துணி.

**pur'ify,** *v.* தூய்மையாக்கு, சுத்தஞ்செய்; சடங்கு முறைப் படி புனிதப்படுத்து; அயற்பொருள்களை அகற்றித் துப்புர வாக்கு; புடமிடு; அழுக்ககற்று; பாவம் நீக்கு.

**Pur'im,** *n.* ஹமானின் (Haman's) சூழ்ச்சி தோல்வி அடைந் ததைக் கொண்டாடும் யூதர்கள் திருவிழா.

**pur'ism,** *n.* தனித்தூய்மை.

**pur'ist,** *n.* தனித்தூய்மைக் கோட்பாட்டினர்.

**Pur'itan**[1], *n.* (வர.) கடுஞ்சீர்திருத்தச் சமயவாதி, பிரிட்டனில் எலிசபெத் அரசிகாலச் சீர்திருத்தம் அரைகுறையானது என்று கருதிய புரோட்டஸ்டாண்டு சமயத்தவர்.

**pur'itan**[2], *n.* கடுந்தூய்மைக் கட்சியினர்; சமயத்துறைக் கடுங்கண்டிப்பாளர்; ஒழுக்கத்துறைக் கடுங்கண்டிப்பாளர்; *a.* கடுஞ்சீர்திருத்தச் சமயவாதியைச் சார்ந்த; ஒழுக்கத்திலுஞ் சமயத்திலும் கடுங்கண்டிப்பான.

**pur'ity,** *n.* தூய்மை; உடல்துப்புரவு; ஒழுக்கத்தூய்மை.

**purl**[1], *n.* கோப்புத்தையல்; குஞ்சம்; ஒப்பனைப் பூவேலை அருகு; திருப்புத்தையல்; *v.* முறுக்கிழைச் சரிகைக்கரை பின்னு, குஞ்சம் வைத்துத் தை; திருப்புத்தையல் போடு.

**purl**[2], *n.* ஓடைவகையில் சலசலப்புடன் கூடிய சுழிப்போட்டம்; சிற்றலையாட்டம்; சிறுசுழிப்பு; *v.* சலசலப்புடன் சுழன்றேடு; சுழலு.

**purl**[3], *n.* (வர.) சூடாக்கி மணமூட்டப்பட்ட கடுந்தேறல் வகை.

**purl**[4], *n.* கரணம், தலைகீழ்வீழ்ச்சி; வீழ்ச்சி, தோல்வி; பேரிடி, பேரழிவு; *v.* கவிழ்; தலைகீழாக்கு; சுழற்று; தலைகுப்புற வீசி எறி; திட்டத்தைக் குலை.

**purl'er,** *n.* (பே-வ.) எறிவு; பேரடி, மிகுதுயர், தலைகுப்புற எறிவு.

**purl'ieu,** *n.* எல்லை, புறச்சிறை; காவற்காடு.

**purl'in,** *n.* உத்தர நெடுவிட்டம்.

**purl'ing,** *n.* நீர்ச்சலசலப்பு.

**purloin',** *v.* திருடிப்பெறு, சிறு அளவில் திருடு.

**purloin'er,** *n.* ஏய்த்துத் திருடுபவர், சிறு அளவில் திருடு பவர்.

**pur'ple,** *n.* கருஞ்சிவப்பு; ஊதா, ஊதா வண்ண உடை; பேரரசர்க்குரிய கருஞ்சிவப்புநிற உடை; கோதுமைப்பயிர் நோய் வகை; *v.* கருஞ்சிவப்புநிறமாக்கு; ஊதாநிறம் ஆகு; (தொ.) born in the purple, உயர்குடிப் பிறந்த; purple emperor, வண்ணத்துப் பூச்சிவகை; purple patch, சொல் லணிச் சித்திரம்.

**pur'ple-red,** *n.* ஊதாநிறச் சாயற் சிவப்பு.

**pur'ple-robe,** *n.* பேரரசர் அணியும் கருஞ்சிவப்பு ஆடை.

**pur'ples,** *n. pl.* பன்றிநோய் வகை.

**pur'point,** *n.* = pourpoint.

**purp'ort**[1], *n.* கருப்பொருள், மூலக்கருத்து, ஆவண மையக் கருத்து; சொற்பொழிவின் கருத்துரை; பொருள்சுருக்கக் குறிப்பு; செயல்நோக்கம், உட்கருத்து.

**purport'**[2], *v.* பொருள்படு; பொருள் இருப்பதாகத் தோன்று; செயல் எண்ணங்கொள்; கருத்துத்தெரிவி, வெளியிடு.

**purp'ose** *n.* செயல்நோக்கம், குறிக்கொண்ட கருத்து; *v.* எண்ணமிடு, கருத்துக்கொள், கருத்தில் குறிக்கொள்; (தொ.) of set purpose, முன்கருதலாக, வேண்டுமென்றே; on purpose, வேண்டுமென்றே; to little purpose, சிறிதளவு பயனுடன்; to some purpose, மிகச்சிறிதளவே பயனுடன்; to the purpose, பயன்படுமுறையில்; with no purpose, பயனின்றி.

**purp'osely,** *adv.* வேண்டுமென்றே, மனமார, முன்கருத லோடு.

**purp'osive,** *a.* நோக்கமுள்ள; நோக்கத்தோடு செய்யப்பட்ட; குறித்த நோக்கத்திற்குப் பயன்படுகிற; நோக்க உறுதி யுடைய, கருத்துத்திட்பமுடைய.

**Purp'ura**[1], *n.* ஊதாநிறச்சாயம் ஈனும் கடல்வாழ் நத்தை வகை.

**purp'ura**[2], *n.* தோலின்மேல் ஊதாநிறப் புள்ளிகள் காணப் படும் நோய்வகை.

**purpur'ic,** *a.* தோலின்மேற் காணப்படும் கருஞ்சிவப்புப் புள்ளிகள் கொண்ட நோய்சார்ந்த; (தொ.) purpuric acid, ஊதாநிற உப்புக்கள் கொண்ட காடிவகை.

**purp'urin,** *n.* எருக்குச்செடியிலிருந்து பண்டு எடுக்கப்பட்ட செஞ்சாயம்.

**purr,** *n.* பூனை முதலியவற்றின் உறுமலொலி; மகிழ்ச்சிக் குறிப்பு; மனநிறைவு காட்டும் அடங்கிய குரல்; *v.* உறுமு, மகிழ்ச்சிக் குறிப்புக்காட்டு.

**pu'rree,** (இ.) *n.* மஞ்சள்வண்ணச் சாயச்சரக்கு.

***pursang,*** (பிர.) *adv.* கலப்பின்றி, முழுக்கமுழுக்க.

**purse,** *n.* பணப்பை, பணம் வைப்பதற்கான தோற்பை; பணம்; நிதி; பைபோன்ற கொள்கலம், கூடு, பொறியுறை; *v.* உதடு-புருவம் முதலியவற்றைச் சுருக்கு; சுருக்கம் விழப் பெறு; பணப்பைக்குள் போடு; (தொ.) a common purse,

பொதுநிதி; heavy purse, long purse, செல்வ வளம்; light purse, நல்குரவு, வறுமை; privy purse, அரசருடைய சொந்த செலவுப்படி; the public purse, தேசப்பொதுப் பணம்.

**purse'-bearer**, *n.* பணப்பொறுப்பாளர்; பொதுநிதிப் பொறுப்பாளர்; முத்திரை நாயகத்தின் துணையாள்.

**purse'-net**, *n.* முயல்பிடிப்போரின் சுருக்கு வலைப்பை.

**purse'-proud**, *a.* பணச்செருக்குடைய.

**purs'er**, *n.* கப்பல் கணக்கர்; பிரயாணிக் கப்பலில் வரவு செலவுக் கணக்கு அதிகாரி.

**purse'-seine**, *n.* பைபோன்ற மீன்வலை.

**purse'-strings**, *n.* பணப்பையின் சுருக்குக்கயிறு; (தொ.) hold the purse-strings, பணச்செலவின் பொறுப்பு வகி; loosen the purse-strings, பணத்தைத் தாராளமாகச் செலவு செய்; tighten the purse-strings, பண வகையில் சிக்கனமாயிரு.

**purse'-tak'ing**, *n.* திருடுதல், கொள்ளையடித்தல்.

**purs'lane**, *n.* கோழிக்கீரை வகை.

**pursu'ance**, *n.* பின்பற்றுகை; தொடர்கை; செயற்படுத்துதல், நிறைவேற்றம்.

**pursu'ant**, *a.* பின்தொடர்கிற, பின்பற்றுகிற; செயற்படுத்துகிற; *adv.* இணங்க, அனுசரித்து.

**pursue'**, *v.* பின்தொடர்ந்து செல்; பின்தொடர்ந்து செய்; பின்பற்று; பின்சென்று வேட்டையாடு; ஓட்டிக்கொள்; தேடு, நாடு, நோக்கமாகக் கொள்; தேடிச்செல்; இணங்க நட, அனுசரித்துச்செல்; நெடுகச்செல்; மேற்கொண்டு நட.

**pursu'er**, *n.* பின்தொடர்பவர்; பின்றொடர்ந்து செய்பவர்; தேடிச் செல்பவர், இணங்கிநடப்பவர்; (சட்.) வாதி, வழக்காடி.

**pursuit'**, *n.* பின்தொடர்கை; நாட்டம், குறிக்கோள், முயற்சி; ஈடுபாடு; தொழில்; உத்தியோகம்; பொழுதுபோக்கு.

**purs'uivant**, *n.* துணைக்கட்டியர், கட்டிய உரிமைக்குழுவில் கட்டியருக்கு அடுத்த கீழ்ப்படியிலுள்ள அலுவலர்; (செய்.) பின்பற்றுபவர், ஊழியத்துணைவர்.

**purs'y**[1], *a.* புடைப்பான; கொழுத்த; குறுமூச்சு விடுகிற.

**purs'y**[2], *a.* சுரிப்புடைய, சுருக்கங்கள் கொண்டுள்ள.

**purt'enance**, *n.* விலங்குக் குடற்பகுதி.

**pur'ulence, pur'ulency**, *n.* சீழ்க்கொண்ட நிலை.

**pur'ulent**, *a.* சீழ்க்கொண்ட, சீழ்வடிகிற.

**purvey'**, *v.* ஏற்பாடு செய், அமைத்துக்கொடு; உணவுப் பொருள்கள் தருவித்துக் கொடுப்பதைத் தொழிலாகக்கொள்; படை முதலியவற்றிற்கு உணவுப்பொருள்கள் சேகரித்து வழங்குபவராகச் செயலாற்று.

**purvey'ance**, *n.* உக்கிராணத்தொழில், உணவுப்பொருள்கள் தருவித்துக் கொடுக்குந் தொழில்; குறிப்பிட்ட விலைக்கு உணவுப்பொருள் முதலியன பெறவும் குதிரை முதலிய வற்றைப் பயன்படுத்திக்கொள்ளவும் மன்னருக்குள்ள உரிமை.

**purvey'or**, *n.* உக்கிராணத்தார், விருந்து முதலியவற்றின் வகையில் உணவுப்பொருள்கள் தருவித்துக் கொடுப்பதைத் தொழிலாகக் கொண்டிருப்பவர்; (வர.) மன்னருக்கு உணவுப் பொருள்களுக்காக ஏற்பாடு செய்யும் அலுவலர்.

**purv'iew**, *n.* அகப்பாட்டெல்லை, உள்ளீட்டெல்லை; நோக்க எல்லை; கருத்தெல்லை; காட்சி வரம்பு.

**pus**, *n.* சீழ்.

**Pus'eyism**, *n.* டாக்டர் பூசி (Dr. E. B. Pusey 1800–82) முதலிய ஆக்ஸ்போர்டு சமய குருமார்களின் முற்காலக் கத்தோலிக்கசமயம் நோக்கிய மறுமலர்ச்சிக்கோட்பாடு.

**push**, *n.* தள்ளு; குத்து; இடி; கருவியால் நெக்குதல்; கொம்பினால் இடித்தல்; தள்ளுவிசை; அழுத்தவிசை; வில் வளைவின் உந்தாற்றல்; தாக்குதல்; படைத்தாக்காற்றல்; மேடைக்கோற் பந்தாட்டத்தில் பந்தினைத் தள்ளும் அடி; முயற்சி; முயற்சியூக்கம்; உந்தார்வம், தன்முனைப்பாற்றல்; செல்வாக்காற்றல்; துணையுதவி; பணி உயர்வுதவி; நெருக்கடி, இக்கட்டான நிலை; கும்பல்; வீணர்கும்பு; குற்றக் கைதிக்குழு; (பே-வ.) பணிவிலக்கீடு; *v.* தள்ளு, உந்து, நெருக்கு; மேடைக்கோற் பந்தாட்ட வகையில் பந்தினைத் தள்ளும் அடிகொடு; கொம்புகளினால் முட்டு; உந்திநில்; உந்திநிற்கச் செய்; தள்ளி முன்செல்; மேற்பட முயற்சிசெய்; வற்புறுத்து, தூண்டு, விரைவுபடுத்து; செல்வங்குவிப்பதில் ஊக்கமாக ஈடுபடு; உரிமைகொண்டாடு; பிடித்த நாடுகளை விரிவுபடுத்து; விளம்பரத்தினால் வலிந்து விற்பனை பெருக்கு; (தொ.) at a push, அவசரத்தேவையின்போது; get the push, வேலையிலிருந்து நீக்கப்பெறு; give the push, வேலையிலிருந்து நீக்கு; push off, படகு வகையில் துடுப்பைக் கரையில் உதைத்துத்தள்ளு; push out, துடுப்புவலித்து நீர்ப்பரப்பின் மீது செல்; படகு வகையில் துடுப்பு வலித்துச் செலுத்தப் பெறு; push the bottle, பருக எடுத்துக்கொண்டு மற்றவர்க்கு அனுப்பு; push through, முடிவுக்குக் கொண்டுவா.

**push'-ball**, *n.* தள்ளு பந்து.

**push'-bike**, *n.* (பே-வ.) மிதிவண்டி.

**push'-button**, *n.* மின்விசைக் குமிழ்; (தொ.) push-button war, ஏவுகலப்போர், குமிழமுத்தித் தொலைவிலிருந்தே இயக்கப்படும் ஏவுகலங்களால் நடத்தப்படும் போர்.

**push'er**, *n.* தள்ளுபவர், தூண்டுகிறவர்; தள்ளுவிசைப் பொறி; விமானத்தின் தள்ளுவிசைப்பகுதி; உந்துவிசை விமானம், பின்னிருந்து தள்ளு விசையினால் இயக்கப்படும் வானூர்தி; பின்னால் அமைக்கப்பட்டுள்ள உந்துவிசையினால் செலுத்தப்படும் விமானம்; அள்ளு கருவி; தன்முனைப்பாளர்; (தொ.) pusher aeroplane, உந்துவிசை விமானம்.

**push'ful**, *a.* முன்னேறும் ஊக்க ஆற்றலுடைய, ஊக்கத்துடன் முயற்சி செய்கிற.

**push'ing**, *a.* தொழிலில் முயன்று முன்னேறுகிற; ஊக்கமுடைய; முனைப்பாற்றல் வாய்ந்த, முனைந்து மேற்செல்கிற.

**push'over**, *n.* துலையல் எதிரி; ஏமாளி; எளிய பிரச்சினை.

**Push'too, Push'tu**, *n.* ஆப்கானிய மொழி.

**pusillanim'ity**, *n.* மனத்திடமின்மை.

**pusillan'imous**, *a.* மனவலிமையற்ற; அற்பத்தனமான; பயந்த.

**puss**, *n.* பூனை; முயல்; புலி; (பே-வ.) சிறுமி; பெரிய விட்டிற்பூச்சி வகை.

**pu'ssy**, *n.* குழந்தை வழக்கில் பூனை; மென்மயிர்ப்பொருள், மர வகையின் இறகுவிதைக்கொத்து.

**pu'ssy-cat**, *n.* குழந்தை வழக்கில் பூனை.

**pu'ssy-foot**[1], *n.* மதுவிலக்கு; *v.* மறைவாக நடமாடு, எச்சரிக்கையுடன் மெல்லச் செயலாற்று.

**Pu'ssyfoot**[2], *n.* மதுவிலக்கு ஆதரிப்பவர்.

**pus'tulate**, *v.* பருக்கொள், கொப்புளங்கொள்.

**pus'tule**, *n.* கொப்புளம், பரு; (தாவ., வில.) கரணை, திரளை; மறுப்போன்ற தசை வளர்ச்சிவகை.

**put**[1], *n.* வீச்செறிவு; பளுவு எறிவு, எடைக்கல்வீச்சு; வழங்கீட்டு விருப்புரிமை, பங்குக்களவாணிகத்துறையில் குறிப்பிட்ட பங்குச்சேமிப்புக்களைக் குறிப்பிட்ட விலைக்குக் குறிப்பிட்டகாலத்துக்குள்கொடுப்பதற்குரிய விருப்ப உரிமை; *v.* வை; போடு; இடு; இடத்தில் அமைவி; தொடர்புபடுத்து; இயைவி; எறி; பளுஎறி; இயக்கு, செலுத்து; தள்ளு; ஒதுக்கு; ஊற்று; உள்ளிடு; கொள்வி; புகுத்து; முன்வை; முன்னிலைப்படுத்து; கருத்துரைக்கும்படி கூறு; முன்கொணர்ந்து காட்டு; வழங்கு; பந்தயம் வை; பார்வைக்கு வை; முடிவுக்கு விட்டுவிடு; எடுத்துரை; ஒப்படை; குறி; இணை, பூட்டு; விலங்குகளைப் பிணைவி; பொலிவி; விலைகுறி; மதிப்பிடு; மொழிபெயர்ப்புச்செய்; வெளியிடு; குத்தாயமாகக்கொள்; புனைவாக வைத்துக்கொள்; ஈடுபடுத்து; சொல்லால் வகுத்துரை; பணிந்து தெரிவி;

வேண்டிக்கொள்; ஒப்புக்கொள்ளும்படி கேள்; ஆக்கு; செய்; வற்புறுத்து; தோன்றும்படி செய்; வரி வகையில் விதி, சுமத்து; கப்பல் வகையில் செல்லவிடு; கப்பலில் ஏறிச்செல்; (தொ.) put about, கப்பல் வகையில் செல் திசையை மாற்று; திசைதிருப்பு; குதிரையைத் திருப்பு, அணிதிருப்பு; வெளியிடு, பரவச்செய்; put a bullet through, துப்பாக்கிக்குண்டு ஊடுருவச்செய்; put across, வெற்றியாக நிறைவேற்று; நிலைநாட்டு; எய்தப்பெறு; பிறர் ஆதரவு பெறும் வகையிற் செயலாற்று; put a good face on it, நல்ல தோற்றம் அளி; சமாளிப்பதில் தைரியங்காட்டு; நன்றாகக் காட்டு; put a knife into, கத்தியால் குத்து; put and take, பம்பரச்சூதாட்ட வகை; put an end to it, put a period to it, put a stop to it, நிறுத்திவிடு, முடிவுக்குக் கொண்டுவா; put a spoke in one's wheel, பிறர் செயலிற் குறுக்கிட்டுக் கெடு; put away, நேர்ந்து ஒதுக்கிவை; மணத்தொடர் பறுத்து ஒதுக்கிவை; (பே-வ.) உணவுகொள், பானம் பருகு; (பே-வ.) சிறைப்படுத்து; (பே-வ.) அடைமானம் வை; put back, முன்னேற்றத்தைத் தடு, தடங்கல்செய்; கடிகாரத்தின் முள்களைப் பின்புறமாகத் தள்ளு; மீண்டும் முன் பதவிக்குக் கொண்டுவா; put bull to cow, put cow to bull, பொலிதலுக்காகப் பசுவையும் எருதையும் இணைத்துவை; put by, ஒதுக்கிவை, சேர்த்துவை; put down, அடக்கு; இறக்கு; எழுதிக்கொள்; வாயடைக்கச்செய்; செலவைத்தொடராது நிறுத்து; காரண விளக்கமாகக் கூறு, காரணமாக விளக்கு; கருது, மதிப்பிடு; put for, ஆதாயம் பெற முயற்சிசெய்; put forth, வலிமை-நாவன்மை-முயற்சி ஆகியவற்றைச் செயலில் ஈடுபடுத்து; எங்கும் பரவச்செய்; செடிவகையில் அரும்பு கொழுந்து முதலியன தளிர்ப்பி; நீட்டு, பரப்பு; பரப்பி வைத்துக் காட்டு; வெளியிடு; புதிதாகக் கொணர், புதிய கருத்தாகக் கூறு; விளைவி; மண வகையில் கமழ்வி; வட்டிக்குப் பணங்கொடு; கப்பல் வகையில் துறைமுகத்திலிருந்து புறப்படு; put forward, முனைப்பாக நீட்டு; முன் கொணர்; கோட்பாடு முதலியவற்றை எடுத்துரை; put hand to the plough, வேலையின் பொறுப்பு மேற்கொள்; put heads together, கலந்தாய்வு செய்; put in, பணியில் அமர்த்து; நீதிமன்றத்தில் நடவடிக்கைப் பதிவுசெய்; நீதிமன்றத்தில் முறைப்படி கொணர்ந்து முன்னிலைப்படுத்து; நுழை; புகுத்து; கொண்டுவந்து வழங்கு; உரிமைகோரு, குறையிரு, வேண்டிக்கொள்; குறுக்கிடு, இடையிட்டுரை; இட்டுநிரப்பு; அமர்த்து; நேரம் போக்குவி, நேரம் நிரப்பு; put in an appearance, தென்படு; நேரில் வந்து தோன்று; put in mind, நினைப்பூட்டு; put in one's oar, தலையிடு, இடையில் புகு; put it on, அதிக சுமை ஏற்று, மிகைப்படுத்திக் கூறு; put it past one, பொருத்தமற்றதென முடிவு செய்; put off, தள்ளிப்போடு; காலங்கடத்து; ஆடை வகையில் அகற்று; ஒதுக்கிவை, விலக்கிவை; பொறுப்புச்சுமத்து; வேறு வழியில் திருப்பிவிடு, கவனம் திருப்பிவிடு; மனங் குலைவி; படகு-படகுப்பிரயாணிகள் வகையில் கரையை விட்டுப் புறப்படு; put on, அணிந்துகொள்; அணிவி; புனை தோற்றம் மேற்கொள்; பொறிப்பி; தசைவளரப்பெறு, எடை பெருக்கமுறப் பெறு; விலை அதிகரிக்கச்செய்; மரப்பந்தாட்ட வகையில் ஓட்டங்களின் எண்ணிக்கையைப் பெருக்கு; பணயம் வை; கடிகார முள்களை முன்தள்ளி வை; செயற்படுத்து, ஆற்றல் ஈடுபடுத்து; தூண்டு; விளக்கு ஏற்று; மின் ஆற்றல் திறந்துவிடு; பந்தெறிவதற்கு ஆள் அமர்த்து; பந்தெறிவதற்கு ஏற்பாடுசெய்; இருப்பூர்தித் தொடர்வண்டி ஓடுவதற்கு ஏற்பாடுசெய்; put one's back up, சினமூட்டு; put one's foot down, உறுதியாக நிலைகொள்; put one's foot in it, பெருந்தவறு செய்; put one's hair up, சிறுமியின் தலைமுடியை வயது வந்த பெண்ணின் கூந்தலைப் போற் கோலஞ்செய்; put one's nose out of joint, மனங் குலையச்செய், மனமுறியச்செய், கருதிய காரியம் கெடு; put one's shoulder to the wheel, கடுமுயற்சிசெய்; put one up to, தூண்டு; செய்திகளை நன்கு அறிந்துகொள்ளச்செய், நன்கு அறிமுகப்படுத்து; put out, நிலைபெயரச்செய்; மூட்டு விலகச்செய்; மரப்பந்தாட்ட வகையில் பந்தடிப்பவரை ஆட்டம் இழக்கச்செய்; அவி, அணை; மனஉலைவுபடுத்து, குழப்பு; எரிச்சலூட்டு, தொந்தரவுசெய்; வசதிக் குறைவுக்காளாக்கு; வலிமை முதலியவற்றின் வகையில் செயலில் ஈடுபடுத்து; வட்டிக்குக் கடன்கொடு; முதலீடு செய்; தொழிலகத்துக்குப் புறத்தே செய்வதற்குரிய வேலைகொடு; put out of countenance, மனம் புண்படச்செய்; put over, நாடகம்-திரைப்படம் முதலியவற்றின் வகையில் பாராட்டப்பெறு; தனிச் சிறப்பினை உள்ளங்களில் பதியும்படிசெய்து வெற்றிபெறு; put the lid on, முத்தாய்ப்பாயிரு, எல்லாவற்றையும் விஞ்சியதாய் அமை; put the screw on, பலவந்தப்படுத்து; put the wind up one, (பே-வ.) அச்சுறுத்து; put the words in one's mouth, பிறர் என்ன சொல்லவேண்டுமென்பதை அவருக்குக் கூறு; put thing out of court, விவாதித்தற்குரியதல்லாததாக்கு; put thing out of one's head, மறந்துவிடு; மறக்கச்செய்; put through, வேலை நிறைவேற்று, தொலைபேசியில் ஒருவரை மற்றொருவருடன் பேசும்படி இணைப்பு வழங்கு; put to, பயன்படுத்து, சேர், இணை, சேணம்பூட்டு, முடிவிடு, ஏற்பாடு செய்; put to death, கொல்; கொல்லுவி; put together, பகுதிகளை ஒருங்கிணைத்து முழுமையாக்கு; ஆட்டவகையில் கெலிப்பெண்ணைக் குவித்துக் கொண்டுபோ; put to it, வற்புறுத்து, வல்லந்தப்படுத்து, வேறு வழியில்லாததாக்கு; put to rights, சரிசெய், ஒழுங்குபடுத்து; put to sea, கடற் பயணஞ் செய்யத் தொடங்கு; put to the blush, நாணுறுவி; தாழ்வுறச்செய்; சிறப்பில் மேம்படு; put two and two together, கிரமமான முடிவுசெய்; put up, குதிரை வல்லுநனைக அமர்த்து; நாடகத்தை அரங்கேற்று; வேட்டை விலங்கினை மறைவினின்று வெளியிலோட்டு; விலை ஏற்றுவி; பிரார்த்தனை வகையில் நேர்ந்துகொள்; வேண்டுகோள் வகையில் படையல்செய்; தேர்தல் வகையில் நிற்கவை; மண அறிக்கையை வெளியிடு; ஏலத்தில் விற்பனைக்கு வழங்கு; சிப்பமாகக் கட்டு, பாதுகாப்பாயிருக்கும்பொருட்டு ஏனத்தில் வை, வாளினை உறையிலிடு; தங்குமிடங் கொடுத்து ஆதரி; சத்திரம் முதலியவற்றில் இடமெடுத்துக்கொண்டு தங்கு; கட்டு, எழுப்பு, கட்டமை, இணைத்துருவாக்கு; put up a fight for, ஒன்றற்காகப் போராடு; put upon, முறையின்றிப் பயன்படுத்து, ஏமாளியாக்கு; put up with, பணிந்துபோ; பொறுத்துக்கொள்.

put², *n.* குழிப்பந்தாட்ட வகையில் பந்தடி; குழியில் விழும்படி மெல்ல அடிக்கப்படும் பந்தடி; *v.* குழிப்பந்தாட்ட வகையில் பந்தினை அடி, பந்து குழியில் விழும்படி மெல்ல அடி.

put'ative, *a.* உத்தேசமான; (தொ.) putative marriage, சட்டப்படி செல்லாதெனக் கருதப்படும் திருமணம்.

put'eal, *n.* தோவளம், கிணற்றின் குறுகிய சுற்றுச்சுவர்.

pu'tid, *a.* அழுகலான, கெடுநாற்றமுடைய.

put'lock, put'log, *n.* சாரக்கட்டை, சாரப்பலகைகளைத் தாங்குவதற்கான குறுகிய வெட்டுமரத்துண்டு.

put'-off, *n.* காலங்கடத்துதல்; தட்டிக்கழிப்பு.

putrefac'tion, *n.* அழுகல், பதனழிவு.

put'refy, *v.* அழுகிப்போ; பதனழிவுறு; கெட்டுப்போ; சீழ்பிடி, பழு; ஒழுக்கக்கேடுறு.

putres'cence, *n.* அழுகத்தொடங்கும் நிலை; பதனழிவுசார்ந்த நிலை.

putres'cent, *a.* அழுகும் போக்கிலுள்ள; அழுகும் போக்குச் சார்ந்த, அழுகும்போக்கின் விளைவான.

put'rid, *a.* பதனழிந்த, அழுகிய; வெறுப்பூட்டுகிற, கெடுதலான; தூய்மையற்ற, கைக்கூலி வாங்குகிற; மட்டரகமான, படுமோசமான; (தொ.) putrid fever, குடற்காய்ச்சல்; putrid sore throat, நச்சுத் தொண்டைக்கட்டுநோய்.

putrid'ity, *n.* அழுகல்.

*putsch,* (செர்.) *n.* திடீர்ப்புரட்சி.

putt, *n., v.*=put².

putt'ee, (இ.) *n.* காற்பட்டி.

put'ter¹, *n.* வைப்பவர், போடுபவர், இடுபவர்; நிலக்கரிச் சுரங்கத்தில் நாற்சக்கரத் தள்ளுவண்டியாளர்; நிலக்கரிச் சுரங்க இழுப்புவண்டியாளர்.

**putt'er** [2], *n.* குழியடி வலவர், குழிப்பந்தாட்ட வகையில் பந்தினை மெல்லத் தட்டிக் குழியில் வீழ்த்துபவர்; பந்தினை மெல்லத்தட்டிக் குழியில் வீழ்த்த வல்லவர்; குழிப்பந்தாட்ட மட்டை.

**putt'ing-green**, *n.* குழிப்பந்தாட்ட வரிப்புல்தளம்.

**putt'oo**, *n.* காஷ்மீர் ஆட்டுக்கம்பளத் துணி.

**putt'y**, *n.* மெருகுசுண்ணத்தூள், கண்ணாடியை அல்லது உலோகத்தை மெருகிடுவதற்கான சுண்ணத்தூள் வகை; அரைசாந்து, மணல் கலவாமல் நீரில் குழைத்த நேர்த்தியான சுண்ணச்சாந்து; இழைப்புநீறு, லப்பம், கண்ணாடிவில்லைகளைப் பதியவைப்பதிலும் அல்லது பலகை முதலியவற்றில் இடைவெளியின்றி நிரப்புவதிலும் பயன்படும் மக்கு; *v.* இழைப்பு வைத்துப் பொருத்து, லப்பம் இட்டு நிரப்பு; (தொ.) jewellers' putty, மெருகு சுண்ணத்தூள்; plasterers' putty, அரைசாந்து; putty medal, சிறுதிற ஊழியப் பரிசு.

**put-up'**, *a.* இட்டுக்கட்டான, மோசடியாகப் புனைந்தியற்றப் பட்ட.

*puy*, (பிர.) *n.* சிறிய எரிமலைக்கூம்பு; ஆவெர்ன் (Auvergne) என்னுமிடத்திலுள்ள எரிமலைக்குவடு.

**puz'zle**, *n.* புதிர்; தடுமாற்றம், குழப்பம்; திகைப்பு, மலைவு; சிக்கலான பிரச்சினை; திறமையை அல்லது பொறுமையைச் சோதிக்கும் பொம்மைப்பொறி; *v.* குழப்பு, புதிரிடு; மலைவுறுத்து; குழப்பமுறு.

**puzz'ledom**, *n.* தடுமாற்றம், குழப்பம்.

**puz'zle-head**, *n.* குழம்பிய எண்ணங்களையுடையவர்.

**puz'zle-head'ed**, *a.* குழப்பமான எண்ணங்களையுடைய, கருத்துக் குழம்பியுள்ள.

**puzz'lement**, *n.* மலைவுற்ற நிலை.

**puz'zle-pate**, *n.* குழம்பிய எண்ணங்களையுடையவர்.

**puz'zle-pat'ed**, *a.* குழப்பமான எண்ணங்களையுடைய, கருத்துக்குழம்பியுள்ள.

**puz'zle-peg**, *n.* மூக்குத்தடைக்கட்டை; நாய் தன் மூக்கினால் நிலத்தைத் தொடாதபடி கீழ்த்தாடையில் பொருத்தப்படும் மரத்துண்டு.

**puzzola'na**, *n.*=*pozzolana*.

**pyaem'ia**, *n.* சீழ்வகை நச்சுக்குருதி.

**pye'dog**, *n.* கேட்பாரற்ற நாய்.

**pyg'my**, *n.* குறளை, பழங்கதைமரபில் எத்தியோப்பியாவிலோ (Ethiopia) இந்தியாவிலோ இருந்ததாகக் கருதப் பட்ட குள்ள இனத்தவர்; குறுந்தெய்வதம், குறளி, கூளி; குள்ளர்; அறிவுக்கட்டையானவர், சிறுமைப்பட்டவர், அற்பர்; *a.* குள்ளமான, குள்ள இனத்தவரைச் சார்ந்த, வளர்ச்சி தடைப்பட்ட; குறுகிய தோற்றமுடைய; (தொ.) the Pygmies, ஆப்பிரிக்க நடுவரைப்பகுதிக் குட்டை மக்கள்.

**pyja'mas**, *n. pl.* தளர்த்திக் காற்சட்டை; இரவு உடுப்பு.

**pyl'on**, *n.* எல்லைக்கோபுரம்; கோபுர வாசல்.

**pylor'us**, *n.* (உள்.) இரைப்பை சிறுகுடல் முதற்கூற்று இடைவழிவாய்; சிறுகுடல் முதற்கூறடுத்த இரைப்பைப் பகுதி.

**pyogen'esis**, *n.* சீழ் உருவாதல்.

**pyorrhoe'a**, *n.* சீழ்ப்பல் நோய்.

**pyr'acanth**, *n.* வெண்ணிற மலர்களும் ஊதா நிறப் பழங்களும் கொண்ட பசுமைமாறு முட்செடிவகை.

**py'ramid**, *n.* எகிப்திய கூர்ங்கோபுரம்; பட்டைக்கூம்புரு; பட்டைக்கூம்புருவப்பிழம்பு; கூம்புவடிவப் பொருள்; கூம்பு வடிவக்குவியல்; கூம்புவடிவாகத் தறித்து விடப்பட்ட பழமரம்; ஏற்ற இறக்கமான அடிநீட்சியுடைய பாடல்.

**pyram'idal, pyramid'ic, pyramid'ical**, *a.* பட்டைக் கூம்பு வடிவுடைய.

**py'ramidist**, *n.* எகிப்திய கூர்ங்கோபுர ஆய்வாளர்.

**py'ramids**, *n. pl.* பதினைந்து வண்ணப் பந்துகளுடன் தெறிபந்து ஒன்றுகொண்டு ஆடப்படும் மேசைக்கோற் பந்தாட்ட வகை.

**pyre**, *n.* எரிபொருட்குவியல்; சிதை, ஈமத்தீ.

**pyreth'rum**, *n.* செவ்வந்தி வகைச் செடியினம்.

**pyret'ic**, *a.* காய்ச்சல் சார்ந்த; காய்ச்சல் தூண்டுகிற.

**pyrex'ia**, *n.* காய்ச்சல்.

**pyrheliom'eter**, *n.* கதிர் வெப்பமானி, கதிரவன் வெப்பத்தை அளக்குங் கருவி.

**pyr'idine**, *n.* (வேதி.) காசநோய் மருந்தாகப் பயன்படும் எலும்பு நெய் வடிம மூலப்பொருள்.

**pyrit'es**, *n.* நிமிளை, கந்தகக் கல்; (தொ.) iron pyrites, நிமிளை; copper pyrites, செம்பும் இரும்புஞ் சேர்ந்த இரு கந்தகை.

**pyro-elec'tric**, *a.* சூட்டினால் எதிரெதிர் முனைகள் நேர் மின்னாகவும் எதிர்மின்னாகவும் ஆகிற.

**pyro-electri'city**, *n.* வெப்ப மின்னாற்றல், சூட்டினால் எதிரெதிர் முனைகள் நேர்மின்னாகவும் எதிர்மின்னாகவும் ஆகுந் தன்மை.

**pyrogall'ic a'cid**, *n.* நிழற்படப் பதிவியல் முறையில் உயிரகம் குறைக்கப் பயன்படுங் காடி.

**pyrogenet'ic**, *a.* வெப்பம் உண்டுபண்ணுகிற; உடல்வெப்பு விளைவிக்கிற; காய்ச்சல் உண்டுபண்ணுகிற; காய்ச்சலுக் குரிய; காய்ச்சலால் உண்டாகிற.

**pyro'-gen'ic**, *a.* காய்ச்சல் பற்றிய.

**pyro'-genous**, *a.* பாறைவகையில் எரிமலையால் ஆக்கப்பட்ட; பொருள் வகையில் பிறிதொரு பொருள் எரிவினால் ஆக்கப் பட்ட.

**pyrog'raphy**, *n.* சூடாக்கப்பட்ட கருவியால் வெண்மரமீது தீட்டப்பட்ட செதுக்குவேலை.

**pyrogravure'**, *n.* சூடாக்கப்பட்ட இருப்புக்கருவியாற் செய்யப்படும் செதுக்கு வேலைப்பாடு.

**pyrol'atry**, *n.* அழல் வழிபாடு.

**pyrolig'neous**, *a.* மர எரிப்புச்சார்பான, மரப்பொருள் கொதிவடிப்பு மூலமான; (தொ.) pyroligneous acid, மரப் பொருள் வடிப்புக்காடி.

**pyroman'ia**, *n.* தீக்கொளுவு வெறி.

**pyroman'iac**, *n.* எரியூட்டுவெறியர்; *a.* தீக்கொளுவும் ஆர்வமுள்ள.

**pyrom'eter**, *n.* உயர்வெப்பமானி.

**pyromet'ric, pyromet'rical**, *a.* உயர்தள வெப்பமானி சார்ந்த.

**pyr'ope**, *n.* அழற்சிவப்பு நிறமுடைய மாணிக்கக் கல்வகை.

**pyropho'ric, pyroph'orous**, *a.* காற்றுப்பட்டால் தீப் பற்றிக்கொள்ளுகிற.

**pyroph'orus**, *n.* காற்றுப்பட்டால் தீப்பிடித்துக்கொள்ளும் பொருள்.

**pyrophot'ograph**, *n.* கண்ணாடிமீது காய்ச்சிப் பதிப்பிக்கப் பட்ட நிழற்படம்.

**pyrotech'nic**, *a.* வாண வேடிக்கை சார்ந்த; சொல் நய வகையில் அறிவுத்திறங் காட்டுகிற; உணர்ச்சிக் கொந்தளிப் புடைய; (தொ.) pyrotechinc display, வாணவேடிக்கை.

**pyrotech'nics**, *n. pl.* வாணவேடிக்கைக் கலை; சொல்திற நடவடிக்கை; உணர்ச்சிக்கொந்தளிப்புக் காட்சி.

**pyrotech'nist**, *n.* வாணவேடிக்கைப் பொருள்கள் செய்பவர்; வாணவேடிக்கை வல்லுநர்; பேச்சுத்திறங் காட்டுபவர்; இசைத்திறங் காட்டுபவர்.

**pyr'otechny**, *n.* வாணச்செய்முறை; வாணவேடிக்கைக் காட்சி; திறமை காட்டும் பேச்சு; திறமை காட்டும் இசை நிகழ்ச்சி.

**pyr'oxene**, *n.* அழற்பாறையிற் காணப்பெறும் படிக்ககி வகை; சுண்ணப் படிக்ககி, வெள்ளிமப் படிக்ககி, அழற் பாறைக் கனிம வகை.

**pyrox'ylin**, *n.* வண்ணநெய்-செயற்கைத்தோல் ஆகியவற் றிற்கு வெறியத்தில் தோய்த்துப் பயன்படுத்தப்படும் மரச் சத்து வெடியகிப் பொருள்வகை.

**Py'rrhic**[1], **py'rrhic**, *n.* பொருநர் ஆடல்; இரு குறில் அசைகள் கொண்ட செய்யுட்சீர்; *a.* இரு குறிலசைகள் கொண்ட; (தொ.) pyrrhic dance, பண்டைக் கிரேக்க நடன வகை.

**Py'rrhic**[2], *a.* பெருமுயற்சியால் அடையப்பட்ட; (தொ.) Pyrrhic victory, பெருமுயற்சிச் சிறுவெற்றி.

**Py'rrhonism**, *n.* அறிவின் உறுதிப்பாட்டை மறுத்த பண்டைக் கிரேக்க அறிவர் பிரோ (Pyrrho கி. மு. 320) என்பாரின் கோட்பாடு.

**Pyr'us**, *n.* பேரி மரவினம்.

**Pythagore'an**, *n.* பண்டைக் கிரேக்க அறிஞர் பைத்தகோரஸ் (Pythagoras) என்பாரின் ஆதரவாளர்; கூடு விட்டுக் கூடு பாய்வதில் நம்பிக்கைக் கொண்டனர்; *a.* பைத்தகோரஸ் என்பாரைப் பின்பற்றுகிற; பைத்தகோரஸ் கொள்கையை ஆதரிக்கிற; பைத்தகோரஸ் என்பாருக்குரிய.

**Pyth'ian**, *n.* பண்டைக் கிரேக்க நாட்டில் டெல்பி (Delphi) என்னுமிடத்திலுள்ள வருவதுரைக்குந் தெய்வம்; டெல்பியி லுள்ள அப்பொலோ (Apollo) என்ற தெய்வம்; டெல்பியில் வாழ்பவர்; *a.* டெல்பி சார்ந்த; அப்பொலோ சார்ந்த; தெய்வமொழிகூறும் டெல்பியின் கோயிலணங்கு சார்ந்த.

**pyth'on**[1], *n.* கிரேக்க புராண மரபில் அப்பொலோ என்ற தெய்வத்தாற் கொல்லப்பட்ட பெரும்பாம்பு; மலைப்பாம்பு; இரையை உடலால் வளைத்திறுக்கிக் கொல்லும் மாசுணம்.

**pyth'on**[2], *n.* வங்தேறும் பேய்வகை; பேய்கொள்ளப்பட்டவர்; பண்டைக் கிரேக்க நாட்டில் டெல்பியின் கோயிலணங்கு.

**pyth'oness**, *n.* டெல்பியிலுள்ள அப்பொலோ கோயில் அணங்கு.

**pyx**, *n.* பெட்டி; வழிபாட்டுத்திருவுணு அப்பம் வைக்கப்படுங் கலம்; கம்பட்ட சாலையில் கட்டளைப் பொன் வெள்ளி நாண யங்கள் வைக்கப்படும் பெட்டி; *v.* நாணயங்களைக் கட்டளைப் பெட்டியில் வை; மாற்றும் எடையும் பார்த்து நாணயங் களைச் சோதனைசெய்; (தொ.) trial of the pyx, பொற் கொல்லர் கழகத்தால் நடத்தப்படும் நாணயங்களின் ஆண்டுப் பரிசோதனை.

**pyxid'ium**, *n.* (தாவ.) பெட்டி மூடிபோல் மேற்பகுதி தனி யாக வெடிக்கும் விதையுறை; *pl.* pyxid'ia.

**pyx'is**, *n.* சம்புடம், பேழை.

Qua, *adv.* என்ற முறையில், என்பதாக.

quack[1], *n.* வாத்தின் கத்துதல் போன்ற ஒலி; *v.* வாத்துப் போலக் கடின ஒலி எழுப்பு; கத்து; பிதற்று.

quack[2], *n.* போலி மருத்துவர்; போலி அறுவையாளர்; அரைகுறை வைத்தியர்; மாய மருந்து விற்பவர்; மோசடி முறை கையாளுபவர்; *v.* போலி மருத்துவஞ் செய்; மாய மருந்து விற்பனை செய்; தற்புகழ்ச்சி விளம்பரஞ் செய்; வீம்பு பேசு.

quack'ery, *n.* போலி மருத்துவம், மோசடி மருந்து விற்பனை.

quack'salver, *n.* மருத்துவப் போலிநிபுணர்.

quad[1], *n.*=quadrangle.

quad[2], *n.*=quadrat.

quad[3], *n.*=quadruplet.

qua'drable, *a.* (கண.) பெருக்க எண்ணுக்குச் சரியீடாகக் குறிக்கத்தக்க; உரு எண்களின் வரை எண்ணளவு மடங்காகத் தெரிவிக்கத்தக்க.

quadragenar'ian, *n.* நாற்பது வயதுடையவர்; *a.* ஈரிருபது வயதுடைய.

Quadrages'ima, *n.* கிறித்தவ நோன்புவிழாப் பருவத்தின் முதல் ஞாயிற்றுக்கிழமை.

quadrages'imal, *a.* நாற்பது நாள் நீடிக்கிற; நாற்பதுநாள் கிறித்தவ நோன்புப் பருவஞ் சார்ந்த.

quad'rangle, *n.* நாற்கட்டம், நாற்கட்டு வரைவடிவம்; நாற்கட்டரங்கம், கட்டட நடுவிலுள்ள முற்றவெளி; சதுக்கம், கட்டடம் சூழ்ந்த நாற்கட்டு வெளி.

quadrang'ular, *a.* நாற்கட்டமான; நாற்கோணமான.

qua'drant, *n.* வட்டக்காற் சுற்றுவரை; கால்வட்டம், செங்கோண ஆரங்களுக்குட்பட்ட வட்டப்பகுதி; கோணமானி.

qua'drat, *n.* அச்சுத்துறையில் எழுத்துரு இட அடைப்புக் கட்டை.

qua'drate[1], *n.* (உள்.) நாற்கோண எலும்பு; நாற்கோணத் தசைநார்; *a.* (உள்.) நாற்கோணமான; சதுரமான.

quadrate'[2], *v.* சதுரமாக்கு; வட்ட முதலியவற்றின் சதுரச் சமன்பாடு காண்; இசைவாக்கு, பொருத்து; இசைவாகு, பொருந்து.

quadrat'ic, *n.* இருவிசைப்படிச் சமன்பாடு; *a.* (கண.) உருக்கணக்கியல் துறையில் இருவிசைப்படிமை சார்ந்த.

quadrat'ics, *n.* இருவிசைச் சமன்பாட்டுத்துறை உருக்கணக்கியல்.

qua'drature, *n.* (கண.) உருவின் சதுரச் சரியீட்டளவு; (வான்.) கதிரவனிடமிருந்து திங்கள் 90 பாகைத் தொலைவிலிருக்கும் இடகால நுட்பங்கள் இரண்டில் ஒன்று; கோளம் ஒன்றுக்கொன்று 90 பாகை தொலைவிலுள்ள நிலை.

quadrenn'ial, *a.* நான்கு ஆண்டுகட்கு ஒருமுறை நடைபெறுகிற; நான்காண்டுகள் நீடிக்கிற.

qua'dric, *n.* பிழம்புரு வடிவியலில் இரண்டாம் படிமையுடைய பரப்பு, நேர்கோட்டால் இருமுறை வெட்டப்படும் பரப்பு; *a.* பிழம்புரு வடிவியலில் பரப்புவகையில் இரண்டாம் படிமையுடைய.

qua'drifid, *a.* நான்கு பிரிவான, நான்கு கூறுகப் பிளவுற்ற.

quadrig'a, *n.* நான்கு குதிரைச் சாரட்டு.

quadrilat'eral, *n.* நாற்கட்டம், நாற்கோண வரைவடிவம்; நான்கெல்லைப் பரப்பு; *a.* நாற்கோணமான, நாலு பக்கங்களையுடைய; (தொ.) the Quadrilateral, வட இத்தாலியிலுள்ள நான்கரண்கள்.

quadriling'ual, *a.* நான்கு மொழிகளை வழங்குகிற; நான்கு மொழிகளிலுள்ள.

quadrille'[1], *n.* நான்கு இணைகள் ஆடும் நடனவகை; நான்கிணைகள் ஆடும் நடனவகை இசைப்பகுதி.

quadrille'[2], *n.* நால்வர் ஆடும் முற்காலச் சீட்டாட்டவகை.

quadrill'ion, *n.* ஆயிரங்கோடி கோடி கோடி; அமெரிக்க வழக்கில் பத்துக்கோடி கோடி.

quadrinom'ial, *a.* உருக்கணக்கியலில் நான்கு உருக்களை உடைய.

quadripart'ite, *a.* நான்கு பாகங்களைக்கொண்ட; நான்கு கட்சியினரையுடைய; நான்கு கட்சியினரின் தொடர்பு கொண்ட.

qua'drireme, *n.* நான்கு வரிசைத் தண்டுகளையுடைய பண்டைக்காலப் படகு.

quadrisyll'able, *n.* நாலசைச் சொல்.

quadriv'alent, *a.* (வேதி.) நாலிணை திறமுடைய, நாலு இணைத்திற அணுக்களுடன் இணையும் இயல்புகொண்ட.

quadriv'ium, *n.* (வர.) இடைநிலைக்காலப் பல்கலைக்கழகங்களில் கணக்கு-வடிவியல்-வானியல்-இசை ஆகிய நான்கு பாடக் கல்விப்பயிற்சித்திட்டம்.

quadroon', *n.* வெள்ளையருக்கும் அரைக்கரு நிறக்கலப்பினத்தவர்க்கும் பிறந்தவர்; காற்பங்கு நீகிரோக் குருதிக் கலப்பினத்தவர்; (வில., தாவ.) காற்பங்கு இனத் தூய்மையுடைய கலப்பினம்.

quadru'manous, *a.* நான்கு கைகளையுடைய; நிமிர் நிலை உயிரினங்களில் நாற்கை வாய்ந்த, நாலு கால்களிலும் விரல்கள் பெருவிரல்கள் எதிரெதிராகவுடைய.

qua'druped, *n.* நாற்கால் விலங்கு; *a.* நான்கு கால்களையுடைய.

qua'druple, *n.* நான்மடி எண், நான் மடங்கான எண்; *a.* நான்கு மடங்கான; நான்கு பகுதிகள் கொண்ட; நாலு தரப்பினருக்கிடைப்பிட்ட; நான் மடியளவான; நான் மடி எண்ணிக்கையுடைய, நான் மடி உயர்வுடைய; *v.* நான் மடங்காக்கு, நான்கினால் பெருக்கு.

qua'druplet, *n.* ஒரீற்று நான்கு குழவிகள்; ஒருங்கிணைந்து செயலாற்றும் நான்கன் தொகுதி; நால்வர்க்குரிய மிதி வண்டி.

quadru'plicate, *n.* நான் மடியான படிகளின் தொகுதி; *a.* நான்மடியான படிகளையுடைய; *v.* நான்கினால் பெருக்கு; வகைக்கு நாலு மாதிரிகள் ஆக்கு.

quadrupli'city, *n.* நான்மடித்தன்மை, நான் மடங்காயிருக்கும் இயல்பு.

quaer'e, *n.* வினா; *v.* வினவு.

quaes'tor, *n.* பண்டை ரோமாபுரிப் பண்டாரகர்; சம்பளம் வழங்குபவர்.

quaff, *v.* மாந்து, ஒரு வீச்சில் குடித்துவிடு, பெரு மடக்காகப் பருகு.

quag, *n.* ஆட்டங்கொடுக்கும் சதுப்பு நிலத்தடம்.

quagg'y, *a.* சதுப்பியல்பான, சேறுன; ஆற்றின் வகையில் சதுப்புநிலத்தின் வழிச்செல்கிற.

quag'mire, *n.* சதுப்புநிலம், படுசேறு; புதைகுழி.

quahaug', quahog', *n.* வட அமெரிக்க உருண்டைச் சிப்பி வகை.

Quai d'Orsay', *n.* பிரஞ்சு அயல்நாட்டு அலுவலகம்.

quail[1], *n.* கவுதாரியினப் புலம்பெயர் பறவை வகை.

quail[2], *v.* நடுக்கங்கொள்; தளர்வு காட்டு; அஞ்சிப் பின்வாங்கு; தணிந்து போ, பணிந்தடங்கு.

quail'-call, *n.* கவுதாரியினப் பறவைவகையை வீழ்த்துதற்குரிய சீழ்க்கை.

quail'ery, *n.* கவுதாரியினப் பறவை வளர்ப்புப்பண்ணை.

quail'-pipe, *n.* கவுதாரி புரை குழல்.

quaint, *a.* பழமை நலங்கனிந்த, விசித்திரக் கவர்ச்சியுடைய ஆர்வந்தூண்டும் இனிய முரண்பாடுடைய.

quake, *n.* அதிர்வு; (பே-வ.) நிலநடுக்கம்; *v.* அதிர், நில வகையில் நில நடுக்கத்தின்போது அதிர்வுறு; சதுப்புநில வகையில் ஆட்டங்கொடு; குளிரால் நடுங்கு.

**Quak'er**[1], *n.* ஜார்ஜ் பாக்ஸ் (George Fox) என்பவர் 1648-இல் நிறுவிய நண்பர் கழகத்தைச் சார்ந்தவர் ; *a.* நண்பர் கழகஞ் சார்ந்த.

**quak'er**[2], *n.* நடுங்குபவர் ; கப்பல் கோட்டை ஆகியவற்றி லுள்ள பொம்மைப் பீரங்கி.

**quak'er-bird**, *n.* கடற்பறவை வகை.

**Quak'erdom**, *n.* நண்பர் கழகச் சமய வாழ்க்கைமுறை ; நண்பர் கழகத்தார் தொகுதி ; நண்பர் கழகப் பரப்பு ; நண்பர் கழக ஆட்சி.

**Quak'eress**, *n.* நண்பர் கழகப் பெண் உறுப்பினர்.

**Quak'erism**, *n.* நண்பர்கழகச் சமய வாழ்க்கைமுறை; நண்பர் கழகக் கோட்பாடு.

**quak'er-moth**, *n.* மங்கல்நிற விட்டிற்பூச்சி.

**quak'ers'-meeting**, *n.* நண்பர் சமயக்கூட்டம் ; மோன அரங்கு.

**quak'ing-grass**, *n.* ஆடும் தலைப்பகுதியினையுடைய புல் வகை.

**quak'y**, *a.* ஆட்டங்கொடுக்கிற, நடுங்குகிற.

**qualifica'tion**, *n.* தகுதி ; சிறப்புப்பண்பு ; பதவிக்கு இன்றியமையாப் பண்புக்கூறு ; உரிமை பெறுவதற்கு முன்னீடான வரையறை ; தகுதிச்சான்று ; நிலைமாற்றம் ; வரையறை விலக்கு ; தகுதியளிப்பு ; தகுதிப்பேறு.

**qual'ificative**, *a.* பண்படையான, அடைமொழியாயியங்குகிற.

**qua'lificatory**, *a.* பண்படையான ; மட்டுப்படுத்துகிற ; பண்பேற்றுகிற ; தகுதிப்படுத்துகிற.

**qua'lified**, *a.* தகுதிபெற்ற ; தகுதிவாய்ந்த ; சிறப்புத்தகுதி யுடைய ; மட்டுப்படுத்தப்பட்ட, வரையறுக்கப்பட்ட.

**qua'lify**, *v.* பண்புபெறு; பண்படை கொடு; பண்படையாய் இயங்கு ; பண்பேற்றிக்கூறு ; வருணி, பண்பு விரித்துரை ; பண்புமாற்று ; சிறிதுமாற்றியமை ; வரையறையுடன் கூறு ; மட்டுப்படுத்து, முனைப்பழி ; மழுப்பியுரை ; தகுதிப்படுத்து ; சட்ட உரிமையுடையதாக்கு; தகுதி நிறைவுசெய், தகுதிபெறு.

**qua'litative**, *a.* பண்புசார்ந்த ; தனிக்கூறு சார்ந்த ; பண்பு வகை சார்ந்த ; பண்புப்படி சார்ந்த ; பண்படிப்படையான.

**qua'lity**, *n.* பண்பு ; குணம் ; தனியியல்பு ; தனித்திறம் ; தொனி ; நயம் ; உள்ளார்ந்த தனிக்கூறு ; நயநலக்கூறு ; பண்புநலம் ; பண்புக்கூறு ; பண்புத்தரம் ; பண்புவகை ; பண்புப்படி ; உடன்பாட்டு எதிர்மறை நிலைக்கூறு.

**qualm**, *n.* கணநேர இரக்கம் ; மனச்சான்றின் குத்தல் ; உள்ளார்ந்த ஐயப்பாடு ; உள்ளத்தளர்ச்சி ; உளச்சான்றின் ஊசலாட்டம் ; தன் நேர்மையில் ஐயம்.

**quandar'y**, *n.* குழப்பநிலை, இடர்ப்பாடு, ஊசலாட்டம்.

*quand meme*, (பிர.) *adv.* விளைவுகள் நோக்காமல்.

**quant**, *n.* சேற்று உகைதண்டு, சதுப்புநிலத்திற் படகு உகைப்ப தற்குரிய தடங்கல் வட்டுடன்கூடிய உந்துகோல் ; *v.* சேற்று உகைதண்டினுற் படகைச் செலுத்து.

**qua'ntic**, *n.* (கண.) உருக்கணக்கியலில் இரண்டு அல்லது மூன்று வரைவிலுருவுடைய முழுநிலைச் செவ்வியற்கோவை.

**qua'ntify**, *v.* அளவினை அறுதிசெய் ; அளவுமதிப்பு நிறுவு ; எடை மதிப்பிடு ; (அள.) அளவு வரையறை அடைமொழி இணை.

**qua'ntitative**, *a.* அளவுசார்ந்த ; அளவைக்குரிய ; அளவை யுடன் தொடர்புடைய ; அளந்து மதிப்பிடத்தக்க ; (இலக்.) யாப்பு அசை அழுத்தம் வகையில் அளவினை அடிப்படை யாகக்கொண்ட.

**qua'ntities**, *n. pl.* பெருந்திரள் ; பெருந்தொகை, ஏராளமான அளவு.

**qua'ntity**, *n.* அளவு ; அளக்கப்படும் பண்பு ; அளவுடைய பொருள் ; பரும அளவு ; எண் அளவு ; தொகை ; (இலக்.) உயிர் எழுத்துக்களின் குறில் நெடில் வேறுபாடு ; அசை அளவை ; (அள.) பதங்களின் சுட்டளவெல்லையறுதி ; (கண.) அளவுக் குறியீடு, அளவு மதிப்புரு.

**quantiv'alence**, *n.* (வேதி.) தனிம அணுவின் இணைதிற அளவு.

**qua'ntum**, *n.* தொகுதி, மொத்தம் ; கூறு, பங்கு, சக்திச் சொட்டு; (தொ.) quantum theory, (இய.) கதிரியக்கத்தில் ஆற்றல் அலைவீச்சுக்கோட்பாடு.

*qua'ntum lib'et, qua'ntum pla'cet*, (ல.) *n.* (மரு.) விரும்பும் அளவு.

*qua'ntnm suff'icit*, (ல.) *n.* (மரு.) போதிய அளவு.

**quaquavers'al**, *a.* (மண்.) எல்லாத் திசைகளையும் நோக்கிய.

**qua'rantine**, *n.* தடுப்புக்காப்பு, பயணிகள் கப்பல் நோயாளி கள் வகையில் தொற்றுத்தடைகாப்பு நாடித் தனிப்படுத்தி வைக்கும் கால எல்லை ; *v.* தொற்றுத்தடைகாப்பில் வை ; தொற்றுத்தடைகாப்புச்செய்.

*quar'e im'pedit*, (ல.) *n.* மானிய வழங்கீட்டில் தடை மனுவாளர்க்கு விடுக்கும் அறிவிப்பு முறி.

**qua'rrel**, *n.* சச்சரவு, சண்டை, பூசல் ; நட்பு முறிவு, மன வேறுபாடு ; குறையீடு, குறைப்பட்டுக்கொள்வதற்குரிய காரணம் ; *v.* சச்சரவிடு ; பூசலிடு ; சண்டையிடு ; நட்புறவு முறித்துக் கொள், மனவேறுபாடு கொள் ; முனைப்பாக மாறுபடு, கருத்து வேறுபாடுகொண்டு எதிர்த்துப் போராடு ; குறை காண், குற்றங்கூறு ; ஏற்றுக்கொள்ள மறு ; (தொ.) pick a quarrel, சண்டைக்குத் தொண்டுபிடி, வலிந்து சச்சர வுக்கு வழிதேடு ; quarrel with one's bread and butter, வாழ்க்கை வசதிக்கு மாறாய் நடந்துகொள்.

**quarr'elsome**, *a.* சண்டை பிடிக்கிற.

**qua'rry**[1], *n.* வேட்டைப்பொருள் ; பலி.

**qua'rry**[2], *n.* கற் சுரங்கம் ; கட்டிடக் கற்கள் எடுப்பதற்காகத் தோண்டிய தொடுகுழி ; தளம்பாவு கல் தொகுதி ; தளச் செங்கல் தொகுதி ; தகவல் களம் ; *v.* கட்டிடங்களுக்கான கல் தோண்டியெடு ; ஏடுகளில் முனைந்து தகவல்கள் தேடு ; பத்திரங்களைக் கிளறித் தேடுவதில் ஈடுபட்டுழை.

**qua'rry**[3], *n.* சன்னல் கண்ணடி ; சதுரக்கல்.

**quart**[1], *n.* முகத்தலளவைக்கூறு, கால் காலன் அல்லது இரண்டு பைண்டு அளவு ; கால் காலன் அளவுகலம், இரண்டு பைண்டு அளவு புட்டி ; கால் காலன் மாத்தேறல்.

**quart**[2], *n.* வாட்போரில் ஒருநிலை ; சீட்டாட்ட வகையில் நாலுசீட்டு வரிசைத்தொகுதி ; *v.* வாட்போரில் நிலைவகை மேற்கொள் ; வாட்போரில் நிலைவகையில் தலையைப் பின் வெட்டியிழு.

**quar'tan**, *n.* நான்காம் நாடோறும் விட்டுவிட்டு வரும் இசிவு ; காய்ச்சல் வகை.

**quarta'tion**, *n.* தங்கத் துப்புரவு வினைக்கு நான்கில் மூன்று பங்கில் வெள்ளிக் கலப்பீடு.

**quarte**, *n. v.* = quart[2].

**quar'ter**, *n.* கால் ; காற்பற்கு ; அமெரிக்க கால் வெள்ளி, 25 சதம் ; கால் கைகளில் ஒன்று உட்கொண்ட விலங்கின் உடல் இறைச்சியின் நான்கில் ஒரு கண்டம்; பறவையிறைச்சி யில் நான்கில் ஒரு கண்டம் ; (கப்.) மூலச் சங்கிலியில் பின்புறப் பகுதிகளில் ஒன்று ; எட்டு மரக்காலளவு, கால் அந்தர் ; காலாண்டு பருவம் ; காலாண்டு தவணைப்படி ; பள்ளியாண்டு பருவக்கூறு; திங்கள் பருவ வட்டத்தில் நாலில் ஒரு கூறு ; திங்களின் முதலிரண்டு அல்லது கடையிரண்டு கால் வட்டங்களுக்கிடைப்பட்ட நிலை; கால்மணி நேரம்; வரிக் கணிப்பீட்டில் 25 பொன் கொத்தளவு ; வரிக்கணிப்பில் 25 பொன் வருவாயளவு ; நாற்றிசைகளில் ஒன்று ; திசை ; திசை வட்டாரம் ; இடம் ; விட்டுக்கொடுப்பு, பணிபவருக்குத் தரப்படும் சலுகை ; கால் நாழிகைத் தொலைப் பந்தயம் ; நகரக்குடியிருப்பு வட்டாரம் ; *v.* நான்கு சரிபகுதிகளாக வெட்டு ; நான்கு கண்டங்களாகத் துண்டுபோடு ; நாட்டுப் பகைவனுடலை நான்கு கூறுகளாகத் துண்டுபடுத்து ; கேட யத்தை நான்கு கூறுபடுத்து; கேடயக் காற் கூற்றில் அமை; மரபுச் சின்னங்களுடன் பிற சின்னம் சேர் ; ஒன்றுவிட்டுக் கேடயக் காற்பகுதிகளில் அமைவி ; படைவீரர் முதலாயி

ஞேரைத் தங்கிடத்தில் அமர்த்து; வீரரைக் குறிப்பிட்ட இடத்தில் அமர்த்து; வீரருக்குத் தங்கல்மனையாக்கு; வேட்டைநாய்கள் வகையில் வேட்டைநிலத்தில் அங்குமிங்குந் திரி; (தொ.) from all quarters, எல்லாத் திசைகளிலுமிருந்து, நாலாபக்க இடங்களிலுமிருந்து; what quarter is the wind blowing in, காற்று எத்திசையில் அடிக்கிறது? செய்திகள் எப்படி நடக்கின்றன?

quar'terage, *n.* காலாண்டுவாரியாக ஊதியம் அளிக்கப்படல், காலாண்டு பருவ ஊதியமுறை; காலாண்டு ஊதியம்; காலாண்டு ஒய்வு உதவிச் சம்பளம்.

quar'ter-bell, *n.* கால்மணிநேரத்தில் அடிக்கும் மணி.

quar'ter-binding, *n.* முதுகுக்கு மட்டும் ஒடுங்கிய தோலிட்ட புத்தகக்கட்டிடமுறை.

quar'ter-bound, *a.* புத்தகக்கட்டிடவகையில் மூலைகளை விட்டு முதுகுக்குமட்டும் ஒடுங்கிய தோலிட்ட.

quar'ter-butt, *n.* மேடைக்கோற்பந்தாட்டத்தில் பந்தடியின் காற்கூற்று முட்டு.

quar'ter-deck, *n.* கப்பல்மேல்தளப் பின்பகுதி; கப்பற் பணியாளுநர் தொகுதி; கடற்படைப் பணியாளுநர் தொகுதி.

quar'ter-ill, *n.* பிட்டங்களிற் சதையழிவு ஏற்படும் கால் நடைநோய்.

quar'tering, *n.* நான்கு துண்டாக்குதல்; கேடயத்தை நான்கு கூறுக்குதல்; படைவீரர்களைத் தங்க வைத்தல்; கேடயக் கூறுகளில் அமைவித்தல்; புதுமரபுரிமையாளர் உறவு சுட்டிக் கேடய மரபுச் சின்னத்துடன் புதுச்சின்னம் இணைத்தல்.

quar'ter-left, *n.* (படை.) செங்கோணிற் கீாற்கூறு இடப் புறம்.

quar'ter-light, *n.* மூடு வண்டிப் பலகணி.

quar'ter-line, *n.* கப்பலுக்குப் பின் கப்பல் அமையும் நிலை.

quar'terly, *n.* காலாண்டு வெளியீடு; *a.* காலாண்டுதோறும் நடைபெறுகிற, ஆண்டில் நான்கு தடவை நிகழ்கிற; *adv.* காலாண்டுக்கு ஒரு முறையாக; கேடய நாற்கூறுகளிலும்; கேடய நாற்கூறுகளில் சாய்வெதிர் கூறுகளில்.

quar'terly-quar'tered, *a.* கேடயக் காற்கூறுகளுள் ஒன்றோ பலவோ நாற்கூறுகளாகப் பிரிக்கப்பட்ட.

quar'ter-master, *n.* கப்பற் சிறுதிறப் பணியாளர்; படைத் துறைத் துணிமணி தங்கல் மேற்பார்வைப் பணியாளர்.

quar'ter-master-general, *n.* (படை.) துணிமணி தங்கலரங்கத் தலைமைப்பணியாளர்.

quar'ter-miler, *n.* கால் நாழிகைத்தொலைப் பந்தய ஓட்டக்காரர்.

quar'tern, quar'tern-loaf, *n.* நாலு கல்லெடையுள்ள பொங்கப்பம்.

quar'ter-plate, *n.* $3\frac{1}{4}'' \times 4\frac{1}{4}''$ நிழற்படத்தகட்டளவு; $3\frac{1}{4}'' \times 4\frac{1}{4}''$ அளவு நிழற்படம்.

quar'ter-right, *n.* (படை.) செங்கோணிற் காற்கூறு வலப் புறம்.

quar'ters, *n. pl.* உறையுள்; படைத்தங்கல் இடம்.

quar'ter-sessions, *n.* காலாண்டுப் பருவ மேல்வழக்கு மன்றம்.

quar'ter-staff, *n.* உழவர் நெடுங்கோல்.

quar'ter-tone, *n.* (இசை.) சுரத்தின் காற்கூறு.

quar'ter-wind, *n.* கப்பற் பின்பகுதிமீது வீசுங்காற்று, பயணத்துக்குகந்த காற்று.

quartet', quartette', *n.* (இசை.) நாற்குரல் பாட்டு; நாற் கருவிப்பாடல்; நாற்குரல் எழுப்புவோர்; நாற்கருவி இசைப் போர்; நால்வர் தொகுதி; நான்கன் தொகுதி.

quar'tile, *n.* வானகோளங்களின் 90 பாகை இடைத் தொடர்பு; *a.* வானகோளங்களில் 90 பாகை இடைத்தொடர் புடைய.

quar'to, *n.* நான்மடித் தாளளவு, இரு தடவை மடித்த தாளின் அளவு; நான்மடித் தாளளவு ஏடு; (தொ.) quarto paper, நான்மடியாக மடித்த தாள்.

quar'tus, *n.* பள்ளிகளில் ஒரே பெயருள்ளவர்களில் வழங்கப் படும் வரிசை முறையில் நாலாமவன்.

quartz, *n,* படிகக்கல், கன்ம ஈருயிரகையுடன் சில சமயம் பொன்னும் கலந்த கனிமப்பொருள்.

quash, *v.* ஒழி, அகற்று; செல்லுபடியன்றென விலக்கு; இல்லாததாக்கு.

Qua'shee, *n.* நீகிரோவரைக் குறித்த தேசியச் சுட்டுப்பெயர்.

quas'i, *a.* உண்மையல்லாத; அரையளவான; போன்ற; *adv.* தோற்றத்தில் மட்டும்; *conj.* அதாவது.

quas'i-histo'rical, *a.* அரைகுறை வரலாற்றுத் தொடர் புடைய.

quassi'a, *n.* கசப்பான மருந்துநீர்வகை; கசப்பான மருந்து நீருக்குப் பயன்படும் கட்டை வேர் பட்டை முதலியவற்றினை யுடைய தென் அமெரிக்க மரவகை.

quat, *n.* பரு, கொப்புளம்.

quat'er-centen'ary, *n.* நானூற்று ஆண்டுவிழா.

quatern'ary, *n.* நான்கு என்ற எண்; நாற்பொருள்களின் தொகுதி; பிதகோரஸ் (Pythogaras) என்ற பண்டைக்கிரேக்க அறிஞரின்படி மறை மெய்ம்மையை உள்ளீடாகக்கொண்டு பத்தைக் கூட்டுத்தொகையாக உடைய முதல் நான்கு இலக்கங்களின் தொகுதி; *a.* நான்கு என்னும் எண்சார்ந்த; நாலு பகுதிகள்கொண்ட; (வேதி.) நான்கு தனிமங்கள் சேர்ந்த; நான்கு அடிப்பொருள்கள் சேர்ந்த.

quatern'ion, *n.* நான்கன் தொகுதி; ஒருதடவை இரண்டாக மடித்த நான்கு தாள்களின் தொகுதி; பிதகோரஸ் என்ற பண்டைக் கிரேக்க அறிஞரின்படி மறை மெய்ம்மை உள்ளீடாகக் கொண்டு பத்தைக் கூட்டுத்தொகையாகவுடைய முதல் நான்கு இலக்கங்களின் தொகுதி; (கண.) ஏவளவை களின் இடையீவு.

quatern'ions, *n. pl.* (கண.) ஏவளவை ஈவுக் கணிதிறம்.

quatern'ity, *n.* நான்மை, நான்காம் தன்மை; நால்வர் தொகுதி; இறைமையின் நான்மூர்த்தங்களின் தொகுதி.

quat'orzain, *n.* அளவு ஒவ்வாத பதினுன்கடிப் பாவகை.

quat'rain, *n.* நாலடிப்பாடல்; இடையிட்டியைபுப் பாடல்.

quat'refoil, *n.* நாலிதழ் மலர்; நான்கிலைத் துணர்; (கட்.) நாற்கதுப்பணி.

quattrocen'to, *n.* இத்தாலிய கலையுலகின் 15-ஆம் நூற்றுண்டு ஊழி.

quav'er, *n.* அதிர்வு, நடுக்கம்; பாட்டில் குரல்நாள அதிர்வு; பேச்சில் குரல் நடுக்கம்; *v.* அதிர்வுறு, நடுங்கு; பாடுதலில் அதிர்விசை பயன்படுத்து; அதிர்விசையுடன் பாடு; நடுங்கிசைச் சுரங்களுடன் பாடு.

quay, *n.* ஒடத்துறை; கப்பல்துறை.

quean, *n.* (செய்.) சிறுக்கி, பட்டி.

queas'y, *a.* உணவு வகையில் குமட்டுகிற; வயிற்று வகையில் குமட்டல் வாய்ந்த; ஆள்வகையில் எளிதில் குமட்டலுக்கு உட்படுகிற; செரிமானக் கோளாறுடைய; செரிமான மந்தம் வாய்ந்த; தொட்டால் துடிக்கிற, கழி பெரும் நுண்மையான.

quebra'cho, *n.* திண்ணிய கட்டையையும் மருந்துப்பட்டையையும் தரும் அமெரிக்க மரவகை; மருந்துப்பட்டை வகை.

queen, *n.* அரசி, ஆட்சியுரிமையுடைய அணங்கு; அரசன் மனைவி; பெண்ணரசி; காதலி; மனைவி; வீறமைதிமிக்க மாதரசி; அழகி; விழாவரசி; விளையாட்டரசி; தேவி, பெண் தெய்வம்; இனத்திற்சிறந்த அழகுப்பொருள்; மேம்பட்ட சிறப்பு வாய்ந்த பெண்; சதுரங்கத்தின் காயரசி; சீட்டாட்டத்தில் சீட்டரசி; பெண் தேனீ; பெண் குளவி; பெண் எறும்பு; அன்பாட்சிக்குரியவர்; அன்பாட்சிக்குரிய நாடு; அன்பாட்சிக்குரியது; அழகாட்சிக்குரியது; சிறப்புக்

குரியது; மேம்பட்டது; *v.* அரசியாக்கு; அரசியாக இயங்கு; மேலாட்சி செய்; சதுரங்கத்தில் காலாட்காயினைப் பலகை யோரங் கொண்டுசென்று அரசி முதலிய உயர்காய்களில் ஒன்றுக மாற்று; சதுரங்கக் காலாட்காய் வகையில் அரசி முதலிய உயர்காய்களில் ஒன்றுக மாற்றப்பெறு; (தொ.) queen consort, ஆளும் அரசர் மனைவி; queen dowager, ஆண்ட அரசர் விட்டுச்சென்ற கைம்பெண் மனைவி; queen mother, ஆளும் அரசரின் தாயார்; queen of hearts, அழகரசி; queen of the Adriatic, வெனிஸ் நகரம்; queen of the meadows, மலர் வகை; queen of the seas, பிரிட்டன்.

**queen'-cake**, *n.* பழங்கள் உள்ளிட்ட இதயவடிவான அப்பம்.

**queen'ing**, *n.* ஆப்பிள் வகை.

**queen'-like**, *a.* அரசிபோன்ற; பெருமித அழகு வாய்ந்த.

**queen'ly**, *a.* அரசிக்குரிய; அரசிக்கேற்ற; அரசிபோன்ற; வீறுர்ந்த.

**queen'-posts**, *n. pl.* மோட்டுவிட்டக் கூம்பின் இருநிமிர் கால்கள்.

**Queens'berry Rules**, *n. pl.* குவீன்ஸ்பரி கோமான் 1867-இல் வகுத்தமைத்த குத்துச்சண்டை விதிமுறைகள்.

**queen'-stitch**, *n.* பூ வேலையில் அழகுத் தையல்வகை.

**queen's'-ware**, *n.* பால்வண்ண மட்பாண்டவகை.

**queen's weather**, *n.* செங்கதிரொளி.

**queer**, *a.* தனி மாதிரியான; விந்தையான; தனிப்போக்குள்ள; ஐயுறத்தக்க; தலைசுற்றுகிற.

**quell**, *v.* (செய்.) அடக்கு; கீழ்ப்படுத்து, வலுக்கட்டாய மாகப் பணியச்செய்; வென்றடக்கு; அமுக்கி ஒழித்துக்கட்டு.

**quench**, *v.* தணி; குளிர்வி; விடாயினைத் தீர்; அவாவை நிறைவேற்று; அவாவை அடக்கு, வேகத்தைத் தடுத்து நிறுத்து; இயக்கம் தடைசெய்.

**quenelle'**, *n.* சுவையூட்டப்பட்ட மீன் அல்லது இறைச்சியா லான மாவுருண்டை.

**quer'imony**, *n.* குறைகூறல்.

**quer'ist**, *n.* வினவுவோர்.

**quern**, *n.* திரிகை, ஏந்திரம்; மிளகரைக்குங் கருவி.

**quern'-stone**, *n.* ஏந்திரக்கல்.

**que'rulous**, *a.* குறைபட்டுக்கொள்கிற, சிடுசிடுப்பு வாய்ந்த.

**quer'y**, *n.* வினு; தடை; *v.* வினவு; தடையெழுப்பு; விசாரி.

**quest**, *n.* வேட்பு; தேடும் பொருள்; விசாரணை; *v.* வேட்டை நாய்கள் வகையில் வேட்டை இலக்குத் தேடியலை; நாடிச் செல்; தேடித்திரி; (செய்.) தேடு, தேடிக் காண்.

**ques'tion**, *n.* வினு; வினுவாசகம்; ஐயப்பாடு; கருத்து வேறுபாடு; தடங்கலுரை, தடுப்புரை; விடுவித்துக்காண வேண்டிய கடுஞ்சிக்கல்; ஆய்வுக்குரிய பொருள்; வினுக் குறிப்பு, வினுக்குறி; கடுந்தேர்வு, குற்றத்தை ஒத்துக்கொள்ள வைப்பதற்கான வதை; *v.* வினவு; உசாவு; ஆராய்ச்சி மூலம் தகவல் கோரு; ஐயப்பாடு எழுப்பு; ஐயுறு; தடை யுரை எழுப்பு; எதிர்ப்பு உண்டுபண்ணு.

**ques'tionable**, *a.* கேள்வி எழுப்பத்தக்க; ஐயத்துக்குரிய; உறுதியற்ற; முற்றிலும் நேர்மை வாய்ந்ததாயிராத; குறை கூறத்தக்க; வாதத்துக்குரிய.

**questionnaire'**, *n.* வினுப்பட்டி, வினுவரிசை.

**quet'zal**, *n.* நீள் தோகையுடைய அழகிய பசும்பொன்னிறம் வாய்ந்த நடு அமெரிக்க பறவை வகை.

**queue**, *n.* புரிகுழற்பின்னல், பின்னற்சடை; சடைவரிசை, ஒழுகு வரிசை, முறை வரிசை; *v.* புரிகுழல் பின்னு, சடை பின்னு; சடை வரிசையில் நில்; ஒழுகு வரிசையுடன் சேர்ந்து நில்.

**quib'ble**, *n.* வெறுஞ்சொல் வாதம், சொல் விளையாட்டு; இரட்டுற மொழிதல்; *v.* இரட்டுற மொழி; வெறுஞ் சொல் பற்றி வாதிடு.

**quibb'ler**, *n.* இரட்டுற மொழிவோர்.

**quibbling**, *n.* இரட்டுற மொழிதல்.

**quick**, *n.* உயிர்த்தசை; தோலடி மென்மைத்தசை; நகத்தடி மென்மைத்தசை; புண்ணுறியவிடத்தின் இளந்தசைப்பகுதி; உணர்ச்சி மையம், நுண்ணுணர்ச்சியிடம்; மென்னய உணர்ச்சி நுட்பம்; உயிர்; உயிராற்றல்; உயிருடையது; உயிருடையவர்; உயிர்த்தாவரம்; வேலிப்பயிர் வகை; *a.* விரைந்த; வேகமான; மின்பாய்ச்சலான, கணநேரத்தில் நிகழ்கிற; குறைந்த அளவு நேரத்தில் முடிக்கப்படுகிற; குறைந்த இடையீட்டுடன் நடைபெறுகிற; ஊக்கமிக்க; சுறுசுறுப்பான; ஆயத்த நிலையுடைய; உடனடி செயல் திறம் வாய்ந்த; நுண்ணுணர்ச்சித் திறம் வாய்ந்த; கண நேரத்தில் உணருந் தன்மையுடைய; அறிவுவகையில் விரை திறம் உடைய; உயிர்த்துடிப்புள்ள; உயிர்ப்புடைய, உயிருடைய; வாழ்நிலையிலுள்ள; *adv.* விரைந்து; வேக மாக; குறைந்த நேரத்தில்; (தொ.) be quick, விரைவுபடு, விரை; quick step, (படை.) கணத்தில் காலடிக்கு 33 அங்குலமாக 128 காலடியுடன் அதாவது மணிக்கு 4 கல்லாக நடக்கும் விரைபடையணி நடை; quick time, காலடிக்கு 33 அங்குலமாக கணத்துக்கு 128 காலடி நடைவேக அளவு; quick with child, கரு உயிர்ப்புடன் துடிக்கும் பருவத்தில், ஏறிய சூல்நிலையில்; the quick, வாழ்பவர்; வாழ்வன; to the quick, உள்ளார; முற்றிலும்; முழுக்க முழுக்க.

**quick'en**, *v.* உயிர்ப்பி, உயிர்ப்பூட்டு; உயிர்ப்புறு, உயிர் பெற்றெழு; ஆன்மிக எழுச்சியூட்டு, விழிப்பூட்டு; எழுச்சி பெறு; ஊக்கமூட்டு, உயிர்த்தூண்டுதலளி, கொளுத்து; சூலுயிர்ப்புநிலையடை; விரைவுபடுத்து, விசையூட்டு, வேகம் பெருக்கு.

**quick'lime**, *n.* சுண்ணும்புக்கிளிஞ்சல்.

**quick'ness**, *n.* விரைவு, வேகம்; கணநிகழ்வுநிலை, மின்னிடு நிலை; விரை உணர்வு நுட்பம்; விரைதிறம்; ஆயத்தநிலை; கூருணர்ச்சித்திறம்.

**quick'sand**, *n.* உதிர்மணல்.

**quick'silver**, *n.* பாதரசம்.

**quid**, *n.* வாய்ப்புகையிலைக் கத்தை.

**quidd'ity**, *n.* சத்து, பொருண்மை; சொல்விளையாட்டு; போலி நுண்மை.

**quidd'ler**, *n.* நுணுக்கநய வீணர்.

**quid'nunc**, *n.* ஊர்வம்பாடி, வதந்தியாளர்.

**quid pro quo**, *n.* இழப்பீடு, சரியீடு; ஒன்றுக்கு ஒன்றை மாற்றுங் குற்றம்.

**quies'cence, quies'cency**, *n.* இயங்காமை; மோனம்; துயில்.

**quies'cent**, *a.* அசையாத, இயங்காத; மௌனமான; அடங் கிக் கிடக்கிற.

**qui'et**, *n.* அமைதி; மோனம்; உலைவின்மை; ஓய்வு, விரைவார வார மின்மை; கிளர்ச்சி பூசல்கள் அற்ற நிலை, குழப்பநிலை யின்மை; அமைந்த நடை; அமைந்த நிலை; *a.* சந்தடியற்ற, அரவமற்ற; மெல்லமைவான இயக்கமுடைய; அமைதியான; அமைவடக்க நடையுடைய; ஒதுங்கிய நடையுடைய; வெளிப்படையல்லாத; அடங்கிய; தனி ஒதுக்கமான; உரு மறைவான; உலைவற்ற; தலையீடற்ற, இடையீடற்ற; சச்சரவற்ற; பூசலற்ற, பணிமுறை சாராத; தனிமுறையான; தனி ஒதுக்கமான இடத்தில் நுகரப்படுகிற; கவலையற்று நுகரப்படுகிற; மனச்சான்றுறுத்தலற்ற, கழிவிரக்கமற்ற; *v.* அமைதிப்படுத்து; அமைவி; ஆற்று, தணி.

**qui'eten**, *v.* அமைதிப்படுத்து.

**qui'etism**, *n.* உள்ளதன்கண் அமைதி; வெறுப்பின்மைக் கோட்பாடு.

**qui'etude**, *n.* நிறையமைதி, சாந்தம்.

**quiet'us**, *n.* விடுதலை; விடுதலைச்சீட்டு; பற்றுச்சீட்டு; பிறவித்தளை நீக்கம்.

**quiff**, *n.* முற்கால ஒப்பனை நெற்றி மயிர்ச்சுருள்.

quill, *n.* இறகு, தூவல்; இறகு மைக்கோல், தூவற்பேனு; யாழ்வில்; தூண்டிற்கட்டை; பற்குச்சி; பன்றிமுள்; நூல் வட்டு; நாணலால் ஆன இசைக்குழல்; கருவாப்பட்டைச் சுருள்; சிங்கோனு மரப்பட்டைச்சுருள்; *v.* இறகுபோன்ற மடிப்புக்களுடையதாக்கு; அலைத்தடம் உண்டுபண்ணு; நூலை வட்டிலாகச் சுற்று.

quill'-covert, *n.* அடிமெல்லிறகுகளைக் கவிந்துள்ள இறகு.

quill'-driver, *n.* எழுத்தர்; எழுத்தாளர்.

quill'et, *n.* வாத நுண்ணயத்திறம், நுண்ணயச் சொல் வேறுபாடு.

quill'-feather, *n.* நீண்ட வால் இறகு.

quill'-pen, *n.* இறகுப் பேனு.

quilt, *n.* இணைப்பு மெத்தை; இணைப்புப் பஞ்சுறை; *v.* பஞ்சுறை பொதி, பொதி மெத்தையிடு; மெத்தைபோல் தைத்து இணை; நாணயம் கடிதம் முதலியவற்றைத் துகில்மடியில் உள்வைத்துப் பொதிந்து மறைத்துத் தை; இரவல் சொற்கருத்துக்களை இணைத்து ஏடு உருவாக்கு.

quin'ary, *a.* ஐந்து சார்ந்த; ஐந்து பொருள்கள் அடங்கிய.

quin'ate, *a.* (தாவ.) இலைவகையில் ஐந்து கிளையிலைகளையுடைய.

quince, *n.* பதனப்படுத்தி உணவாகவும் சுவையூட்டு பொருளாகவும் பயன்படுத்தப்படும் புளிப்பான திண்ணிய கனி வகை; திண்கனிதரும் மரவகை.

quincenten'ary, *n.*, *a.*=quingentenary.

quincun'cial, *a.* நாற்கட்ட ஐந்தன் தொகுதிநிலைசார்ந்த; நாற்கட்ட ஐந்தன் தொகுதியிலுள்ள; (தாவ.) இலைவகையில் மேல்புற இரண்டோரங்களிலும் கீழ்ப்புற இரண்டோரங்களிலும் இரண்டிரண்டிலை கவிவாகவும் மேல்கீழ் ஒன்று கவிவாகவும் உள்ள.

quinc'unx, *n.* நாற்கட்டம் அல்லது சதுரத்தில் நான்கு மூலைகளில் நான்காகவும் மையத்தில் ஒன்ருகவும் உள்ள ஐந்தன் தொகுதி; நாற்கட்டத்தில் அல்லது சதுரத்தில் ஐந்தன் தொகுதிநிலை.

quingenten'ary, *n.* ஐந்நூருவது ஆண்டு நிறைவுவிழா; *a.* ஐந்நூருவது ஆண்டுக்குரிய; ஐந்நூருவது ஆண்டிலுள்ள.

quin'ia, *n.* கொயினு, மருந்துப்பட்டைத்தூள் வகை.

quinine', *n.* கொயினு, சிங்கோனுபட்டையிலுள்ள காரகப் பொருள்; சிங்கோனுபட்டைக் காரகமடங்கிய மருந்துவகை.

quinquagenar'ian, *a.* ஐம்பது வயதானவர்; *a.* ஐம்பது வயதான.

quinquagen'ary, *n.* ஐம்பதாண்டு நிறைவுவிழா; ஐம்பது வயதானவர்; *a.* ஐம்பது வயதான.

Quinquages'ima, Quinquages'ima Sunday, *n.* கிறித்தவ நோன்பு விழாவுக்கு முந்திய ஞாயிற்றுக்கிழமை.

quinquang'ular, *a.* ஐங்கோணமான.

quinquecos'tate, *a.* ஐந்து விலா எலும்புகளையுடைய.

quinquelat'eral, *n.* ஐந்து பக்க உருவம்; ஐந்து பக்க உருவமுடைய பொருள்; *a.* ஐந்து பக்கமுள்ள.

quinquenn'ia, *n.* quinquennium என்பதன் பன்மை.

quinquenn'iad, *n.* ஐந்தாண்டு தொகுதி.

quinquenn'ial, *a.* ஐந்தாண்டிற்கு ஒரு முறையான; ஐந்தாண்டுகாலம் நடைபெறுகிற.

quinquenn'ium, *n.* ஐந்தாண்டுகாலம், ஐந்தாண்டு தொகுதி.

quinquepart'ite, *a.* ஐந்தாகப் பகுக்கப்பட்ட, ஐந்து கூறுகளையுடைய.

quinq'uereme, *n.* ஐந்து வரிசைத் தண்டுகளையுடைய பண்டைத் தோணி.

quinqueval'vular, *a.* ஐந்திதழ் அடைப்புக்களையுடைய

quinq'uifid, *a.* ஐந்து பிளவுகளையுடைய, ஐந்தாகப் பிளவுபட்ட.

quinqui'na, *n.* சிங்கோனு மரவகை.

quinquiv'alent, *a.* (வேதி.) ஐயிணை திறமுடைய.

quins, *n. pl.* (பே-வ.) ஓரீற்று ஐங்குழவிகள்.

quin'sy, *n.* தொண்டைவீக்கம்; உள்நாக்குப் பழுப்பு.

quint [1], *n.* ஐந்தில் ஒன்று, ஐந்தில் ஒரு கூருன இடை நிறுத்தம், இசைமேள அளவு குரலுக்குமேல் ஐந்தில் ஒரு கூருன தொனி மேற்பட்ட தட்டைக்கட்டை; யாழ்வகையின் ஒரு நரம்பு.

quint [2], *n.* சீட்டாட்ட வகையில் வரிசைமுறையான ஐந்து சீட்டின் தொகுதி; (தொ.) quint major, ஏரானிலிருந்து பத்து வரையுள்ள ஐஞ்சீட்டுத்தொகுதி; quint minor, ஆட்படத்திலிருந்து ஏழுவரையுள்ள ஐஞ்சீட்டுத்தொகுதி.

quin'tain, *n.* பண்டைக் குதிரைவீரர் ஈட்டி இலக்கெறி பயிற்சிப்போட்டி; திறமையற்ற குதிரைவீரர்மீது மொத்தும்படி சுழலும் மணற் பைகளையுடைய ஈட்டி இலக்கெறி போட்டிக் கம்பம்.

quin'tal, *n.* 100 கைலோ கிராம் எடை; 112 கல் எடை அல்லது அந்தர்; 100 கல் எடை.

quin'tan, *n.* நான்கு நாள் விட்டுவிட்டு வரும் இசிவுக் காய்ச்சல்வகை; *a.* நான்கு நாள் இடையிட்டு வரும் சன்னிக் காய்ச்சலுக்குரிய.

quinte, *n.* வாட்போரில் ஐந்தாவதுவகைத் தாக்கு அல்லது காப்புமுறை.

quintess'ence, *n.* சத்துச்சாறு; பண்டைக்கிரேக்க அறிஞர் கோட்பாட்டின்படி நாற்பூதங்களும் கடந்த ஐந்தாவதான அடிப்படை நுண் பொருட்கூறு.

quintet', quintette', *n.* ஐந்தன்தொகுதி; ஐந்து குரல்களுக்கான பாடல்; ஐந்து இசைக் கருவிகளுக்கான பாடல்; ஐங்குரற் பாடகர்; ஐங்கருவிப் பாடகர்; (தொ.) clarinet quintet, ஊதிசைக்குழல்வகையுட்பட்ட ஐயிசைக்கருவி; piano quintet, இசைமேளமுட்பட்ட ஐயிசைக்கருவி.

quintill'ion, *n.* நூறு கோடி கோடி கோடி கோடி; அமெரிக்க பிரஞ்சு வழக்குகளில் பதினுயிரங் கோடி கோடி.

quin'tuple, *n.* ஐம்மடி, ஐம்மடங்கான அளவு; *a.* ஐம்மடங்கான; ஐந்து பகுதிகளையுடைய; ஐந்து பகுதிகள் கொண்டுள்ள; *v.* ஐந்தால் பெருக்கு.

quin'tuplet, *n.* ஐவருக்கான மிதிவண்டி.

quin'tuplets, *n.* ஓரீற்று ஐந்து குழவிகள்; ஒருங்கு இயங்கும் ஐந்து பொருள்களின் தொகுதி.

quintup'licate, *n.* ஒத்திசைவான ஐந்து படிகளின் தொகுதி; ஒத்திசைவான ஐந்து மாதிரிகளின் தொகுதி; *a.* ஐம்மடங்கான; ஐம்படியான, மூலப்படியுடன் நான்கு புறப்படிகள் சேர்ந்த; *v.* ஐந்தால் பெருக்கு; ஐந்து மாதிரி எடு, ஐந்து படி எடு.

quin'tus, *n.* பள்ளியில் ஒரே பெயருடைய ஆண்களில் ஐந்தாமவர்.

quip, *n.* வசைத்துணுக்கு; நகைத்திற வாசகம்; சொற்பொருள் நயம்; செயற்கைச் சொல்திறம்; சொற்புரட்டு; பசப்புரை; *v.* சொற் புதிராடு.

*qui'pu*, (பெரு.) *n.* பன்னிற முடிச்சுக்களால் கருத்துக்களைப் பதிவு செய்யும் பண்டைப் பெருவிய எழுத்து முறையமைவு.

quire [1], *n.* இருபத்துநாலு கொண்ட எழுதுதாள் மடி; ஒன்றனுள் ஒன்ருக மடித்த தாள்கட்டு; ஒரு தடவை மடித்து 8 ஆக்கப்பட்ட நான்கு தாள் தொகுதி.

quire [2], *n.*, *v.*=choir.

Qui'rinal, *n.* இத்தாலிய அரசாங்கம்; இத்தாலிய அரசவை.

quirk, *n.* சொற்புரட்டு; ஏய்ப்பு நடவடிக்கை; எழுத்து அணிவளைவுக்கால்; படங்களில் செயற்கை அணிவளைவுக் கோடு; (க-க.) புறவளைவுகளுக்கு இடைப்பட்ட கூரகக் குடைவு.

quirt, *n.* சாட்டை வகை; *v.* கைச்சாட்டையால் அடி.

quis'ling, *n.* பழுதெண்ணும் உழையோர், ஐந்தாம் படைஞன்.

**quit**, *n.* உரிமைத் துறப்பு; *a.* விடுபட்ட; பொறுப்புத் தீர்வுற்ற; கடப்பாடு தவிர்ந்த; கடன் தீர்ந்த; தொடர்பு நீங்கிய; *v.* உரிமை துற; விட்டுக்கொடுத்துவிடு; கைவிடு; விட்டுச் செல்; புறப்பட்டு அப்பாற் போ; கடப்பாட்டிலிருந்து விடுவி; பொறுப்பிலிருந்து விடுவி; குற்றப் பொறுப்பில்லை என்று தெரிவி; விடுவி; கொடுத்துத்தீர்; திருப்பிக்கொடு; கொடு; நடந்துகொள்.

*qui tam*, (ல.) *n.* குற்றத் தகவலாளர்; குற்றத் தகவலாளர் வழக்கு.

**quitch, quitch'-grass**, *n.* படர்நீள் வேருடைய புல்வகை.

**quite**, *adv.* முற்றிலும், முழுவதும்; தீர, குறைவற; உச்ச அளவில்; முழு நிறைவாக, அதுவேயாக, வேறென்றிற்கும் இடமின்றி, நேரடியாக, அப்பழுக்கின்றி; சற்று மிகையான அளவில்.

**quits**, *a.* ஒப்புநிலையான.

**quitt'ance**, *n.* விடுவிப்பு, தீர்வு; பற்றுச்சீட்டு.

**quiv'er** [1], *n.* அம்பறாத்தூணி, அம்புக்கூடு; கைத்துணை வளம், கையிருப்பாதாரம்; சேமத்துணைவளம்; (தொ.) have an arrow or shaft left in one's quiver; முற்றிலும் வகையற்றுப் போகாதிரு; quiver full of children, பெருங் குடும்பம்.

**quiv'er** [2], *n.* துடிப்பு, அலையதிர்வு; *v.* துடி, அதிர்வுறு, படபட என்றடித்துக்கொள்.

*qui vive*, (பிர.) *n.* விழிப்புடைமை; விழித்துக் காவல் காத்திருக்கை; (தொ.) on the *qui vive*, விழிப்புடன், உன்னிப்பாகப் பார்த்துக்கொண்டிருக்கும் நிலையில்.

**Quix'ote**, *n.* நடைமுறைக்கு ஒவ்வாத மான ஆர்வலர்.

**quixot'ic**, *a.* கற்பனையுலகியல் வாய்ந்த.

**quixot'ics**, *n. pl.* ஆர்வ உணர்ச்சிநெகிழ்வுகள்.

**quiz**, *n.* கோமாளித்தனமான தோற்றமுடையவர், தனிப்போக்குடையவர்; நையாண்டி செய்யும் பழக்கமுடையவர்; விளையாட்டு வினாவிடை; நேர்முகத் தேர்வு; குமைத்தல், நையாண்டி செய்தல்; *v.* குமை, நையாண்டி செய்; ஏளனமாக மதி; புதுமையாகப் பார், வேடிக்கை காண்; விளக்கக் கண்ணுடிமூலம் பார்.

*quo'ad*, (ல.) *prep.* பற்றி, குறித்து.

*quo'ad hoc*, (ல.) *adv.* இவ்வகையில், இது சார்ந்த மட்டில்.

**quod**, *n.* சிறை; *v.* சிறைப்படுத்து.

*quod e'rat demonstran'dum*, (ல.) (தொ.) எண்பிக்கப்பட வேண்டியது இது.

*quod e'rat facien'dum*, (ல.) (தொ.) செய்யப்படவேண்டியது இது.

*quod e'rat invenien'dum*, (ல.) (தொ.) காணப்பெற வேண்டியது இது.

*quod vid'e*, (ல.) (தொ.) இதனைப் பிறிதோரிடத்திற் காண்க.

**quoin**, *n.* கட்டிடப்புற மூலைக்கோணம்; மூலைக்கல்; அறை உள்மூலை; அச்சுருப்பற்றுப்பு; துப்பாக்கி மட்ட அடைகட்டை; மிடா உருளாமல் தடுக்கும் உதைகட்டை; *v.* ஆப்பிட்டு இறுக்கு; அடைகொடுத்து உயர்த்து.

**quoit**, *n.* எறிவட்டு; *v.* வட்டு எறி; எறி வட்டாட்டமாடு.

**quoits**, *n. pl.* எறிவட்டாட்டம்.

**quon'dam**, *a.* முன்னொரு காலத்திய, முன்னுளைய.

**quor'um**, *n.* குறை நிறைவெண்.

**quot'a**, *n.* பொறுப்புப் பங்கு; கிடைப்புப் பங்கு.

**quot'able**, *a.* எளிதாக மேற்கோள் காட்டத்தக்க.

**quota'tion**, *n.* கூற்று எடுத்தாளுதல், ஏட்டுப்பகுதி எடுத்தாட்சி; எடுத்தாண்ட பகுதி, மேற்கோள்; விலைப்புள்ளி; பங்கு மதிப்புக் குறிப்பீடு; அச்சக இட அடைப்புக்கட்டை.

**quota'tion-marks**, *n. pl.* மேற்கோள் குறிகள்; (தொ.) double quotation-marks, இரட்டை மேற்கோள் குறிகள்.

**quot'ative**, *a.* எடுத்தாட்சி சார்ந்த; எடுத்தாளும் பழக்கமுடைய.

**quote**, *n.* (பே-வ.) மேலாட்சிப்பகுதி; *v.* எடுத்தாள்; மேற்கோள் காட்டு; மேற்கோள் வாசகம் எடுத்தாள்; மேற்கோள் எடுத்து முன்னிலைப்படுத்து; விலைப்புள்ளி கொடு.

**quoth**, *v.* சொன்னார், சொன்னான், சொன்னாள்; சொன்னேன்.

**quotid'ian** *n.* நாள்முறைச் சன்னி, நாள்தோறும் விடாது வரும் காய்ச்சல்; *a.* நாள்தோறும் நிகழ்கிற; நாள் முறையான; மிகப் பொதுப்படையான, சிறுதிறமான.

**quo'tient**, *n.* ஈவு, வகுத்து வந்த எண்.

*quo warran'to*, (ல.) *n.* உரிமையேது வினா, மன்னுரிமை முறைமன்றத்தார் உடைமை பதவி முதலியவற்றின் உரிமையாளரிடம் உரிமை ஆதாரம்பற்றி உசாவுதற்குரிய வினா ஆணைப்பத்திரம்.

**Quran'**, *n.* இஸ்லாமியர் திருமறை.

**Rabb'et**, *n.* மூலைப்பொருத்துவாய்; *v.* இசைப்புவாய்மூலம் இணை; விளிம்பில் இசைப்புவாய் வெட்டு.

**rabb'i**, *n.* யூதசட்ட வித்தகர்; யூதகுரு; (தொ.) Chief Rabbi, பிரிட்டனிலுள்ள யூத சமூகத்தவர்களின் சமயத்தலைவர்.

**rabb'in**, *n.* யூதகுரு, யூதசட்ட வித்தகர்; (தொ.) the rabbins, சட்டம்-கோட்பாடுபற்றிய மேலாண்மையுரிமையாளர்.

**rabb'inate**, *n.* யூத மதகுரு பதவி; யூத மதகுரு பதவிக்காலம்; யூத மதகுருமார்கள் குழு.

**rabbin'ical**, *a.* யூத குருமார்களுக்குரிய; யூதகுருமார்கள் கருத்துக்கள் சார்ந்த; யூதசட்ட வித்தகர் கல்விக்குரிய; யூத சட்டவித்தகர் மொழிநடைத் தொடர்பான.

**rabb'inism**, *n.* யூதமத குருமார்களின் கோட்பாடு; யூத சட்ட மேலாண்மையர் போதனை; யூத குருமார்களின் தனிப்பட்ட ஒலிப்புமுறை; எழுத்துருவச் சட்டத்தை ஒப்ப வாய்மொழிச் சட்டத்திற்கும் பிறகால யூதர் அளித்த ஒத்த மதிப்பு.

**rabb'inist**, *n.* யூத குருமார்களின் மரபுகளைக் கடைப்பிடிப்பவர்.

**rabb'it [1]**, *n.* குழிமுயல்; (பே-வ.) திறமையற்ற ஆட்டக்காரர்; *v.* குழிமுயல் வேட்டையாடு; (தொ.) Welsh rabbit, உருக்கிய பாலடைக்கட்டி உணவுவகை.

**rabb'it [2]**, *v.* கெடுவாய்.

**rabb'it-hutch**, *n.* குழிமுயல்பட்டி.

**rab'ble [1]**, *n.* கும்பல்; கீழ்மக்கள்; மந்தை.

**rab'ble [2]**, *n.* உலைத்துடுப்பு.

**Rabelaes'ian, Rabelais'ian**, *n.* ராபிலே (Rabelais-இறப்பு 1553) என்னும் பிரஞ்சு நகைச்சுவை எழுத்தாளரைப் பாராட்டுபவர்; ராபிலே என்பாரின் நூல்களில் ஈடுபாடுடையவர்; *a.* ராபிலே என்பாருக்குரிய; ராபிலே என்பாரைப் போன்ற; ராபிலே நூல்கள் சார்ந்த; ராபிலேயின் எழுத்துநடை போன்ற; மட்டுமீறிய நகைச்சுவையான; மிகு கற்பனை வாய்ந்த.

**rab'id**, *a.* சீறுகிற; முரட்டுத்தனமாகச் செயலாற்றுகிற; முரட்டுப்பிடிவாதமுள்ள; நாய்வகையில் வெறிபிடித்த; நாய் வெறிநோய் சார்ந்த.

**rab'ies**, *n.* நாய்வெறிநோய், நீர்வெறுப்பு நோய்.

**raccoon'**, *n.*=racoon.

**race [1]**, *n.* ஓட்டப் பந்தயம்; குதிரைப்பந்தயம்; படகோட்டப் போட்டி; பந்தயவேகம்; முந்துவேகம்; ஓட்டம், விரைவேகப் போக்கு; விசை ஒழுக்கு; கடல்நீரோட்டம்; ஆற்று நீரொழுக்கு; ஆலை நீரொழுக்கு; ஓட்டப்பாட்டை; இயங்குநெறி; நிலைத்த போக்கு; வானகோளங்களின் போக்கு; வாழ்க்கைப் பாதை; கைத்தறியின் ஓடம் இயங்கும் நீள் பள்ளம்; *v.* ஓட்டப்பந்தயப் போட்டியிடு; குதிரைப் பந்தயத்தில் ஈடுபட்டுப் பங்குகொள்; முழு வேகத்திற்செல்; கருவிகள் வகையில் தடைவிசை நீங்கி முழுவிரை வேகத்தில் இயங்கு; போட்டியில் விஞ்சு; முந்தி முன்செல்; போட்டியிடுவி; முழு நிறை வேகத்தில் இயங்குவி; குதிரைப்பந்தயத்தில் பணத்தை வாரி இறை; (தொ.) race ball, குதிரைப்பந்தயங்கள் தொடர்பாக நடைபெறும் ஆடல்வகை; the racing world, குதிரைப்பந்தய வெளி.

**race [2]**, *n.* இனம், பொதுமரபில் இணைந்த குழு; மூலக் குடிமரபுகுழு; கால்வழிக்குழு, வழிமரபு; தனிவேறான மரபினக் குழு; பொதுமரபுக்குடி; பொதுமரபுடைய குலத்தொகுதி; பொது இனமரபுடைய நாடு; பயிறசி மரபினம்; மனித இனம்; உயிரினம; விலங்கு தாவரங்களின வகைகள் யாவுமடங்கிய உயிர்ப்பேரினம்; வாழும் உயிர்களின் பெரும்பிரிவு; மரபு, உறவு; குலம், வகுப்பினம், பொதுவான சிறப்புக்கூறுகளையுடையவர்களின் தொகுதி.

**race [3]**, *n.* இஞ்சி வேர்.

**race'-card**, *n.* குதிரைப்பந்தய நிகழ்ச்சிமுறைப் பட்டியல்.

**race'course**, *n.* வையாளிவீதி, குதிரைப்பந்தய வெளி.

**race'horse**, *n.* வாலாதி, பந்தயக்குதிரை.

**raceme'**, *n.* (தாவ.) துணர், சரிசமச் சிறுகாம்புகளால் தலைக் காம்புடன் இணைக்கப்பட்ட கொத்து மலர்.

**race'-meet'ing**, *n.* பந்தயநாள்; பந்தயநேரம்.

**ra'cemose**, *a.* (தாவ.) துணர்போன்ற, தலைக்காம்பின்மீது சரிசம சிறுகாம்புடைய கொத்துமலர் வடிவான; துணர் சார்ந்த; துணர்களையுடைய; கொடிமுந்திரிப்பழக்குலை போன்ற.

**ra'cer**, *n.* பந்தயம் ஓடுபவர்; பந்தயம் ஓடுவது; பந்தயக் குதிரை; பந்தயப்படகு; பந்தய ஓட்ட மிதிவண்டி; பளுவான பீரங்கி மேடை சுழலும் வட்டத் தண்டவாளம்.

**ra'ces**, *n. pl.* திட்டமுறைக் குதிரைப் பந்தயங்கள்.

**ra'chis, rha'chis**, *n.* முதுகுத்தண்டு; துணர் நடுக்காம்பு; இறகு நடுநரம்பு, முருந்து; *pl.* ra'chides.

**rachit'is**, *n.*=rickets.

**ra'cial**, *a.* இனஞ்சார்ந்த, குலமரபுக்குரிய, குடிமரபின் விளைவான; இனங்காரணமான; இனம்பற்றிய; இனத்தொடர்பான.

**ra'cialism**, *n.* இனவுணர்ச்சி மனப்பான்மை; இன வேறுபாட்டுணர்ச்சி.

**rack [1]**, *n.* வேகமாகச் செல்லும் மேகங்கள்; *v.* மேகங்கள் வகையில் காற்றிலடித்துச் செல்லப்பெறு.

**rack [2]**, *n.* அழிவு, பாழாதல்; (தொ.) rack and ruin, கவனிப்பார் அற்றுப் பாழாகும் நிலை.

**rack' [3]**, *n.* கடவஞ்சி, அழிச்சட்டம்; செருகு சட்டம், கொள்கலச்சட்டம்; பற்கள் பொளிந்த கப்பி அல்லது சட்டம்; *v.* வைக்கோல் தொட்டியில் இரவுத்தீனி நிரப்பு; குதிரையைத் தீனித்தொட்டியோடு கட்டிப்போடு; கடவஞ்சியில் வை; (தொ.) at rack and manger, பொங்குவளமாக; வீண்செலவு அழிவு முறையில்; rack and pinion, பற்கள் பொளிந்துள்ள சட்ட மூலம் சுழலியக்க நேர் இயக்க மாறுபாடு செய்யும் அமைவு; rack up horse, இரவில் குதிரைக்காகத் தொட்டியில் தீனி நிரப்பு.

**rack [4]**, *n.* சித்திரவதைக்கருவி, ஒறுக்கப்படுபவரைப் படுக்கவைத்து அவர் மூட்டுகள் கழலும்படி இயக்கப்படுஞ் சட்டம்; *v.* சித்திரவதைக் கருவிகொண்டு மூட்டுகள் கழற்று; நோய்-மனவேதனை வகையில் சித்திரவதை செய்வி; பெருந்துன்பத்துக்காளாக்கு; முரட்டுத்தனமாகப் பிடித்தாட்டு; மட்டுமீறிய சுமையினால் தீங்குசெய்; கொடுமையாகத் துன்புறுத்தி வேலை வாங்கு; நிலவாரம் வலிந்து வாங்கு, கடுநிலவாரம் கேட்டுக் குடிவாரத்தாரைத் துன்புறுத்து; மட்டுமீறிப் பயன்படுத்தி நிலத்தை வறிதாக்கு; (தொ.) on the rack, சித்திரவதைக் கருவியில் வைத்து ஒறுக்கப்படும் நிலையில்; பெருந்துன்பத்துக்கு அல்லது சோர்வுக்கு உட்பட்ட நிலையில்; rack one's brains, மூளைக்கு அதிக உழைப்புக்கொடு.

**rack [5]**, *n.* பட்டைச்சாராயம்.

**rack [6]**, *n.* படுமென்னடை, குதிரையின் மென்னடைக்கும் விரைநடைக்கும் இடைப்பட்ட போக்கு; *v.* இடைப்பட்ட நடையிற் செல்.

**rack [7]**, *v.* மண்டியிலிருந்து இன்தேறல் முதலியவற்றை வடித்திறக்கு.

**rack'et [1]**, *n.* பந்தாட்ட மட்டை; பனிமீது நடப்பதற்கான பந்தாட்ட மட்டைவடிவான மிதியடி.

**rack'et [2]**, *n.* அமளி, குழப்பம்; ஆரவாரம், பேரொலி; கூட்டுக் கிளர்ச்சி; தோழமை அகமகிழ்வு; களியாட்டக்கூச்சல்; கட்டுப்பாடற்ற நடத்தை; ஏய்ப்பு; தங்குதடையற்ற ஆதாயத் தொழில்முறை; ஏய்த்துப் பணம்பறிப்பதற்கான சூழ்ச்சித் திட்டம்; கடுந்தேர்வு, துன்பம்; *v.* மகிழ்வுநிரம்பிய வாழ்க்கை நடத்து, ஆர்ப்பாட்டத்துடன் இங்குமங்குந் திரி; (தொ.) stand the racket, சோதனைக்கு ஈடுகொடுத்துத் தேறிவா, செயல்விளைவுகளை எதிர்த்துநில்.

**racketeer'**, *n.* அடித்துப்பறிப்பவர், திட்டமிட்டு அச்சுறுத்திப் பணம் பறிப்பவர்.

**racketeer'ing**, *n.* அடித்துப்பறித்தல், வணிகர் முதலியோரிடம் திட்டமிட்டு அச்சுறுத்திப் பணம்பறித்தல்.

**rack'et-press**, *n.* பந்தாட்ட மட்டைக்கூடு, நரம்புக்கயிறுகள் பின்னிய பந்தடிகோலை வடிவங் குலையாமல் வைத்திருப்பதற்கான அழுத்து கருவி.

**rack'ets**, *n. pl.* நாற்கட்டப் பந்தாட்டம், இருவர் அல்லது நால்வர் ஆடும் பந்தாட்ட வகை.

**rack'et-tail**, *n.* வால்குருவி வகை, பந்தடிகோல் போன்ற வாலுடைய சிறு பறவை வகை.

**rack'ety**, *a.* பேரிரைச்சலான, மகிழ்வூக்கமுடைய.

**rack'-rail'way**, *n.* பற்றுதண்டவாளம், மலைமேற் செல்லும் இருப்பூர்திப்பாதையில் இரண்டு தண்டவாளங்களுக்கிடையிற் போகும் பற்கள் வெட்டப்பட்டுள்ள மூன்றாவது தண்டவாளம்.

**rack'-rent**, *n.* கடுநிலவாரம்; *v.* கடுநிலவாரம் பெறு.

**rack'-rent'er**, *n.* கடுநிலவாரஞ் செலுத்துபவர்; கடுநிலவாரம் வாங்குபவர்.

**rack'-wheel**, *n.* பற்சக்கரம், பற்கள் வெட்டப்பட்டுள்ள சக்கரம்.

***raconteur***, (பிர.) *n.* நொடிக்கதைகள் சொல்பவர்; *fem.* *raconteuse.*

**racoon'**, *n.* அமெரிக்க கரடியின விலங்குவகை.

**rac'quet**, *n.*=racket[1].

**ra'cy**, *a.* தாய்நிலச்சுவையுடைய; மூலமரபுப்பண்பு வழாத; தனிச்சுவை மணமுள்ள; தனிச்சிறப்பு வாய்ந்த; கருத்துக் கிளர்ச்சி தருகிற; உணர்ச்சி தூண்டுகிற; காரசாரமான; விறுவிறுப்புடைய.

**rad**, *n.*=radical.

**rad'ar**, *n.* ரடார், சேணளவி, தொலைநிலை இயக்கமானி, ஆற்றல் வாய்ந்த மின்காந்த அலை அதிர்வியக்கமூலம் தன்னிலையும்-விமானங்கள்-கப்பல்கள்-கடற்கரைகள் முதலியவற்றின் நிலைகளும் கண்டறிவதற்குரிய கருவி அமைவு; தொலைநிலை இயக்கமான முறை.

**rad'dle**, *n.* செங்காவி; *v.* செங்காவி பூசு; செவ்வண்ணச் சாயம் அப்பு.

**rad'ial**, *n.* ஆரை நரம்பு; ஆரை நாடி; *a.* கதிர்கள் சார்ந்த; கதிர்களாயுள்ள; கதிர்களைப்போல் அமைந்த; ஆரைபோல் சூழப் புறஞ்செல்கிற; ஆரங்களையுடைய; ஆரையின் நிலையுடைய; ஆரையின் திசையிலுள்ள; மையத்தினின்றும் நாற்றிசைகளிலும் செல்கிற வரிகளையுடைய; மையத்தினின்றும் விலகிச் செல்கிற, மையநின்று புறநோக்கி இயங்குகிற; முன்கை ஆரை எலும்புக்குரிய; (தொ.) radial axle, பாதை வளைவுக்குத் தக்கபடி அமைந்த இருசு.

**ra'dially**, *adv.* ஆரைகளைப்போல்; கதிர்களைப்போல்.

**rad ian**, *n.* (வடி.) ஆரைக்கோணம், ஆரையின் வட்டச் சுற்றுவரைமீது ஆரைநீளக் கூறுகொள்ளுங் கோணம்.

**rad'iance**, *n.* மினுக்கம், பிறங்கொளி, சுடரொளி.

**rad'iant**, *n.* ஒளிமையம்; வெப்பக்கதிர்மையம்; (வான்.) ஒளிப்பிழம்புமையம்; (வான்.) எரிமீன் சொரிவுத் தோற்ற மையம்; *a.* ஒளிகாலுகிற, ஒளிக்கதிர் உமிழ்கிற; களிப்பு-நம்பிக்கை-காதல் முதலியவற்றால் ஒளிவீசுகிற; ஒளிவகையில் கதிர்களாகப் புறம்போகிற; வனப்பு வகையில் பகட்டான, கண் கூசவைக்கிற; மையத்தினின்றும் நாற்புறமுஞ் செயலாற்றுகிற; (தாவ.) மையத்தினின்றும் நாற்றிசையும் நீண்டு செல்கிற; பரவுகிற; (தொ.) radiant heat, தாவு வெப்பம்; radiant point, கதிர்கள் அல்லது ஆரைகள் தோன்றிப் புறஞ்செல்கிற மைய இடம்; (வான்.) எரிமீன் பொழிவு மையமாகத் தோன்றும் இடம்.

**rad'iate**, *a.* விரிந்து செல் கதிர்களையுடைய; ஆரைகள்போல் அமைக்கப்பெற்ற உறுப்புக்களையுடைய; *v.* ஒளிக்கதிர்களை வீசு; வெப்பக்கதிர்களைப் பரப்பு; எறட்டு, ஒளி வகையில் சூழ்ந்து பரவு; வெப்பவகையில் கதிர்களாகப் புறஞ்செல்; மின்காந்த அலைகளைப் பரப்பு; மையப்புள்ளியிலிருந்து விலகிச் செல்; மைய இடத்தினின்று புறமாக வீசு; உயிர்த்துடிப்பு-அன்பு-களிப்பு முதலியவற்றைப் பரவச்செய்.

**radia'tion**, *n.* ஒளிக்கதிர்ச் சுற்றெறிவு; வெப்ப அலை பரவுதல்; கதிர்கள் சூழ்ந்து பாவுதல்; அலை பரப்பப்படுவது; மின்காந்த அலைகளாற் பரப்பப்படும் ஆற்றல்; ஆரைகளாயுள்ள அமைப்பு ஒழுங்கு.

**rad'iator**, *n.* ஒளிகாலுவது; வெப்பம் பரப்புவது; அறை வெப்பூட்டுவிக்கும் அமைவு; உந்துவண்டிப்பொறியின் வெப்பாற்றும் அமைவு.

**rad'ical**, *n.* மூலதத்துவம்; அடிப்படைக்கூறு; (மொழி.) வேர்ச்சொல், சொல்லின் பகுதி; (கண.) விசைமூலம்; விசைமூல அளவை; விசைமூலக்குறி; (வேதி.) மூல உறுப்பு, சேர்மத்தின் அடிப்படைக் கூறுயமைந்து சேர்மத்தின் இயல்பான வேதியியல் மாற்றங்களின்போது மாறுமலே இருக்கும் தனிமம் அல்லது தனிம அணு அல்லது அணுக்களின் கூட்டம்; (அரசியல்) தீவிர முன்னேற்ற வாதி, அடிப்படை மாற்றம் விழைவோர்; தீவிரவாதக் கட்சியைச் சேர்ந்தவர்; *a.* வேருக்குரிய; வேர் சார்ந்த; உள்ளியல்பார்ந்த, அடிப்படையான; ஆதாரமான, மூலமான; முக்கியமான; அடிமூலத்துக்குரிய; அடிமூலந் துருவுகிற; முழுமுதுமான; அரசியல்வாதிகள் வகையில முழுமாற்றம் விரும்புகிற; முற்போக்குக்கட்சியின் தீவிரப்பிரிவைச் சேர்ந்த; திட்டங்கள் வகையில் தீவிரவாதிகளால் கொணரப்பட்ட, தீவிரவாதிகளின் கோட்பாடுகளின்படியுள்ள; (கண.) விசைமூலஞ் சார்ந்த; (மொழி.) சொல்வேர் சார்ந்த; (இசை) ஒத்திசைப்புச்சுர இயைபு மூலத்திற்குரிய; (தாவ.) வேர்சார்ந்த; வேருக்கு அண்மையிலுள்ள நடுத்தண்டிற்குரிய; வேரிலிருந்தே முளைக்கிற; வேருக்கு அண்மையிலுள்ள நடுத்தண்டிலிருந்தே தோன்றுகிற; (தொ.) radical axis, (வடி.) சமத்தொடு வரை ஆயம்; radical heat, உயிர் வாழ்க்கைக்கு அவசியமான வெப்பம்; radical humour, உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத நீர்க்கூறு; radical sign, (கண.) விசைமூலக்குறி; radical word, (மொழி.) பகாபபதம்.

**rad'icalism**, *n.* முற்போக்குக்கட்சிக் கோட்பாடு; தீவிரவாத உணர்ச்சி.

**rad'icalize**, *v.* அடிப்படையானதாக்கு; மூலத்தன்மையுடையதாகு.

**rad'icle**, *n.* முளைவேர், சிறுவேர்; (உள்.) நரம்பின் அல்லது நாளத்தின் வேர்போன்ற உட்பிரிவு; (வேதி) மூல உறுப்பு, சேர்மத்தின் அடிப்படைக் கூறுயமைந்து சேர்மத்தின் இயல்பான வேதியியல் மாற்றங்களின்போது மாறுமலே இருக்கும் தனிமம் அல்லது அணு அல்லது அணுக்கூட்டம்.

**radic'ular**, *a.* முளை வேருக்குரிய; பல்-நரம்பு முதலியவற்றின் வேர் சார்ந்த.

**rad'io**, *n.* வானொலி, கம்பியில்லாச் செய்திப்பரப்பு; வானொலிப் பெட்டி, கம்பியில்லாச் செய்தி வாங்கும் அமைவு, வானொலிச் செய்தி; வானொலி ஒலிபரப்பு; *a.* வானொலிக்குரிய, கம்பியில்லாச் செய்திக்கான; வானொலிமூலம் அனுப்பப்படுகிற; *v.* வானொலிமூலம் அனுப்பு; வானொலிமூலஞ் செய்தி தெரிவி; வானொலித்தொடர்பு உண்டுபண்ணு; வானொலிமூலம் ஒலிபரப்பு; (தொ.) radio astronomy, கதிரியக்க வானியல் ஆய்வுத்துறை.

**radio-ac'tive**, *a.* பொருள் வகையில் கதிரியக்கமுடைய; கதிர்கள் வகையில் கதிரியக்கப் பொருள்களால் உமிழப்பட்ட.

**radio-activ'ity**, *n.* கதிரியக்கம்.

**radio-bal'ance**, *n.* அனல்வீச்சுச் செறிவுமானி.

**radio-carp'al**, *a.* ஆரை எலும்பினையும் மணிக்கட்டினையுஞ் சார்ந்த.

**radiogen'ic**, *a.* கதிரியக்கத்தினால் உண்டுபண்ணப்பட்ட; கதிரியக்கச் சிதைவினால் உருவான; வானொலிமூலமாக ஒலிபரப்பத்தக்க.

**radiogoniom'eter**, *n.* சைகை இயக்கமானி, கப்பல்களிலிருந்தும் விமானங்களிலிருந்தும் அனுப்பப்படும் கம்பியில்லாச் சைகைச் செய்திகளிலிருந்து அவை இருக்குந் திசையைக் கண்டுபிடிக்குங் கருவி.

**rad'iogram**, *n.* ஊடுகதிர்களினூற் பெறப்பட்ட நிழற்படம்; கம்பியில்லா ஒலிபரப்புச் செய்தி; தட்டிணை வானொலிப் பெட்டி.

**radio-gram'ophone**, *n.* தட்டிணை வானொலிப்பெட்டி; இசைத தட்டுபபர்டும் இணைப்பமைவுடைய வானொலிப்பெட்டி.

**rad'iograph**, *n.* வெயில்மானி, வெயிலின் செறிவையும் வெயில காயும் நேரத்தையும் பதிவு செய்வதற்கான கருவி; ஊடுகதிர் (X-rays) நிழற்படம்; *v.* ஊடுகதிர்களைக் கொண்டு நிழற்படமெடு.

**radiog'raphy**, *n.* ஊடுகதிர்ப் படமெடுப்பு; தந்தியில்லா அலையியககச செய்திமுறை; கதிரியக்க ஆய்வுத்துறை.

**radio-loca'tion**, *n.*=radar.

**radiol'ogy**, *n.* ஊடுகதிர்-கதிரியக்க ஆய்வுநூல்; ஊடுகதிர்-கதிரியககச மருத்துவம்.

**radiom'eter**, *n.* அலை ஆற்றல் திரிபு விளக்கக்கருவி, கதிரலை இயககம் இயக்க ஆற்றலாக மாறுவதைக்காட்டுங் கருவி; கதிரியக்கச் செறிவுமானி, வெப்பலை வீச்சுச் செறிவு அளக்குங் கருவி.

**radioph'ony**, *n.* ஒளி வெப்பலை ஒலியாக்கம், ஒளியலை வெப் பலைகளினுல ஒலி உண்டுபண்ணும் முறை.

**radios'copy**, *n.* ஊடுகதிர்மூலமான ஆய்வு.

**rad'iosonde**, *n.* மீவளிநிலைமானி, வளி மண்டலத்தின் பல வேறு தளங்களின் அழுத்தம் வெப்பநிலை ஈர்மைநிலைகளைக் குறித்து ஒலிபரப்புவதற்காக விமானங்களிலிருந்து விமானக் குடைமூலம் இறக்கப்படுஞ் சிறு வானொலிப்பரப்பமைவு.

**radio-tel'egram**, *n.* கம்பியில்லாத் தந்திமூலம் பெறப்படுஞ் செய்தி.

**radio-therapeut'ics, radio-the'rapy**, *n.* ஊடுகதிர்க் கதிரியக்க மருத்துவமுறை.

**rad'ish**, *n.* முள்ளங்கிச்செடி; முள்ளங்கிக்கிழங்கு.

**rad'ium**, *n.* கதிரியம், தார் வண்டல் திரள்களிலிருந்து பெறப் படும் கதிரியக்கமுள்ள உலோகத்தனிம வகை; (தொ.) radium emanation, கதிரம், கதிரியத்தின் சிதைவால் உண் டாகும் வளி வடிவக் கதிரியக்கத் தனிமம்.

**radium-ther'apy**, *n.* (மரு.) கதிரியத்தையோ அதன் விளை பொருள்களையோ பயன்படுத்தி நோய்தீர்க்கும் முறை.

**rad'ius**, *n.* முன்கை ஆரை எலும்பு; (வடி.) ஆரை, அரை விட்டம்; எதிர்வரை, குவிமையத்திலிருந்து நெளிவரையி லுள்ள ஒரு புள்ளிநோக்கிச் செல்லும் வரை; ஆரைக்கோடு, புறநிலைப் புள்ளியிலிருந்து வளைவரைப்புள்ளி நோக்கிச் செல் லுங்கோடு; வட்டத்தின் ஆரைகள்போன்ற வடிவுடைய பொருள், சக்கரக்கைகளில் ஒன்று; ஆரையளவான சூழ் நிலைப்பரப்பு; சுற்றுவட்டாரம்; (தாவ.) பூங்கொத்தின் புற விளிம்பு, குடைப்பூங்கொத்தின் விரிந்துசெல் கிளை; *pl.* rad'ii; (தொ.) radius vector, நிலைப்புள்ளியையும் வளை வரைப் புள்ளியையும் இணைக்கும் நேர்கோடு.

**rad'ix**, *n.* தோற்றுவாய், கருமூலம்; (கண.) கணிப்பின் அடி மூலம், அளவையின் கருமுதல்; *pl.* rad'ices.

**rad'on**, *n.* கதிரம், கதிரியக்கத்தின் சிதைவால் உண்டாகும் வளிவடிவக் கதிரியக்கத் தனிமம்.

**raff**, *n.* கும்பு.

**Raffaelesque'**, *a.*=Raphaelesque.

**raff'ia**, *n.* பணையினஞ் சார்ந்த மரவகை; பணையின மரவகை யின் ஓலையிலிருந்து எடுக்கப்படும் நார்.

**raff'ish**, *a.* தகாத, மானக்கேடான, ஒழுக்கங்கெட்ட; ஆற்ற லிழந்த தோற்றமுடைய.

**raf'fle[1]**, *n.* குலுக்குச் சீட்டு விற்பனை; *v.* குலுக்குச்சீட்டு விற்பனைத் திட்டத்திற் பெயர் சேர்த்துக்கொள்; குலுக்குச் சீட்டு மூலம் விற்பனைசெய்.

**raf'fle[2]**, *n.* கழிவுப்பொருள், குப்பைகூளங்கள்.

**raft**, *n.* மிதவை, தெப்பம், அவசரகாலக் கட்டுமரத்தோணி; மிதக்கும் பனிக்கட்டித்திரள்; *v.* மிதவையில் வைத்து அனுப்பு; தெப்பத்தில் ஏற்றிச் செலுத்து; மிதவையாக அமை; மிதவையில் ஏறிக் கடந்து செல்; மிதவையைச் செலுத்து.

**ra'fter[1]**, *n.* தோணி இயக்குநர்.

**ra'fter[2]**, *n.* இறைவாரக் கை, கைமரம்; *v.* இறைவாரக் கை மரம் இணைத்து அமைவி; அரை உழவுசெய், கலப்பையினூற் பெயர்க்கப்பட்டவை அடுத்த உழாப்பகுதியில் விழுமாறு உழு.

**rag[1]**, *n.* கந்தல், கந்தைத்துணி, பீற்றல்; துணிக்கீறல்; கப்பற் பாயின் சிறுதுணுக்கு; தாள் செய்வதற்கான கந்தைகூளம்; இடைச்செருகலுக்கான கந்தை; கொடி; கைக்குட்டை; திரை; செய்தித்தாள்; ஒழுங்கற்ற கிழிசல் விளிம்பு; (தொ.) glad rags, சிறந்த உடைகள்; in rags, கிழிந்துபோன; பழந் துணிகள் அணிந்துகொண்டிருக்கிற; lose one's rag, (பே-வ.) நிதானமிழந்து சினங்கொள்; rag fair, பழந்துணிக் கடை; rag paper, கந்தைத் துணிகளாற் செய்யப்பட்ட தாள்.

**rag[2]**, *n.* பலகை ஓடு, கூரைக்குப் பயன்படும் முரட்டுப் பலகை வகை; படிகைக்கல், கனத்த பலகைகளாக உடையும் கடின மான முரட்டுக்கல் வகை.

**rag[3]**, *n.* (இழி.) பகடிவதை; பேரிரைச்சலுடன் கூடிய முறை கேடான காட்சி; *v.* திட்டு, குற்றங்கூறு; தொந்தரை செய்; வேதனைப்படுத்து, முரட்டுத்தனமாகப் பகடி பண்ணு; பகடி செய்யும் வகையில் தங்கும் அறை முதலியவற்றை அலங் கோலப்படுத்து; வசைச்சொற்களால் தொல்லைப்படுத்து, கூச்சலிட்டுக் கலகம் பண்ணு; வதை.

**rag'amuffin**, *n.* கந்தலுடுத்தி அழுக்குப்பிடித்த கீழ்மகன்.

**rag-ba'by**, *n.* கந்தல் பொம்மை, சீலைப்பிள்ளை.

**rag'-bag**, *n.* கந்தல் பை, துண்டு துணுக்குச் சேமப்பை.

**rag'-bolt**, *n.* செறிதாழ், கழலாதபடி முட்கம்பி பொருத்தப் பெற்றுள்ள தாழ்ப்பாள்; *v.* செறிதாழினுல் இணை.

**rage**, *n.* சீற்றம், பொங்குவெஞ்சினம்; குமுறல்; மட்டுமீறிய வேட்கை; பொது விருப்பப்பாணி; வெறியார்வம்; உணர்ச்சி வேகம்; *v.* சீறியெழு, சினங்கொண்டெழு; வெறிகொண்டு பிதற்று, வெகுண்டு பேசு; சீற்றங்கொள்; காற்று வகையில் வாரி வீசு; கடல் வகையில் கொந்தளி; உணர்ச்சி வகையில் குமுறு; போர் உச்ச நிலையடை; நோய்வகையில் பீறியெழு; நோய் வகையில் மேலோங்கு; தடையின்றிச் செயற்படு; (தொ.) all the rage, நடப்பு முழுநயமாக; rage itself out, புயல் முதலியனவற்றின் வகையில் சுழன்றடித்து ஓய்வுறு.

**ra'gee**, *n.*=raggee.

**ragg'ed**, *a.* கந்தையான, கிழிந்த; கந்தையணிந்த; பம்பை பறட்டையான; விளிம்புநைந்த; தாறுமாறான விளிம் புடைய; ஏறுமாறான; கரடுமுரடான; திருத்தமற்ற; சிராய்ப்புவாய்ந்த; முட்பிளவுகள் நிறைந்த; அளவொவ்வாத, பொருத்தமற்ற யாப்பு வகையில் பிழைமலிந்த; (தொ.) ragged robin, செந்நிறக் காட்டுமலர்ச் செடிவகை; ragged school, ஏழைச் சிறுவர்களுக்கான இலவசப்பள்ளி.

**ra'ggee**, *n.* வரகு.

**Rag'lan**, *n.* மேலங்கி வகை.

**ragout'**, *n.* கொந்துகறிவாட்டு, கொந்திய இறைச்சியும் காய் கறிகளும் கலந்து சுவையூட்டி வதக்கிய உணவு வகை, *v.* கொந்துகறிவாட்டினைச் சமைத்துப் பக்குவப்படுத்து.

**rags**, *n. pl.* கந்தலாடைகள், நைந்து கிழிந்துபோன துணிகள்.

**rag'tag, rag'tag & bob-tail**, *n.* கும்பு.

**rag'time**, *n.* அமெரிக்க நீகிரோவர்களின் இசைப்பாடல் வகை; *a.* கேலிக்கூத்தான.

**rag'-wheel**, *n.* கண்ணிப்பற்சக்கரம், சங்கிலியின் கண்ணி களிற் பொருந்தும் பற்சக்கரம்.

**rag'wort**, *n.* சொரசொரப்பான இலைகளையும் மஞ்சள் மலர் களையுமுடைய செடிவகை.

**ra'hat lakoum'**, *n.* துருக்கிய மிட்டாய் வகை.

**raid**, *n.* சூறை; திடீர் விமானத்தாக்கு; திடீர்க் கடற்படைத் தாக்கு; படைப்பிரிவின் திடீர்த்தாக்கு; காவல்துறையினரின் திடீர்ச்சோதனை; *v.* திடீர்த்தாக்குதல் செய்; சூறையாடு; திடீர்சோதனையிடு; (தொ.) raid the market, எதிர்கால ஆதாயத்துக்காக விலைகளைத் தாறுமாருக்கு.

**raid'er**, *n.* திடீர்ப்புகுவாளர்; சூறையாடுவோர்; தாக்கும் விமானம்.

**rail**[1], *n.* தண்டவாளம்; கம்பி; கம்பியழி; கம்பித்தடை வேலி. கம்பி வலைகாப்பு; கம்பிக் கைப்பிடி; கதவின் படுகைக் கம்பிப்பிடி; வேலிக்கம்பி; வேலிப்பட்டிகை; *v.* கம்பி அழியிடு; இரும்பால் அல்லது மரச்சட்டங்களால் வேலிபோடு, விசிப்பலகை முதலியவற்றிற்கு அழிகம்பி அமைத்துக்கொடு; இருப்புப்பாதைக்குத் தண்டவாளங்கள் போடு; இருப்புப் பாதை வழியாகப் பண்டங்கள் அனுப்பு; இருப்புப்பாதை வழியாகப் பயணஞ் செய்; (தொ.) by rail, இருப்பூர்தி வழியாக; off the rails, சீர்கெட்டு, சரிவர வேலை செய்யாத நிலையில்.

**rail**[2], *n.* நாரையினப் பறவை வகைகள்.

**rail**[3], *v.* திட்டு, பழி, ஏசு, வசைச்சொல் வழங்கு.

**rail'-chair**, *n.* தண்டவாள அடிமரக்கொளுவி.

**rail'head**, *n.* முனைகோடி, போடப்பட்டுவரும் இருப்புப்பாதை எட்டுகிற கடைக்கோடி; (படை.) இருப்புப்பாதை கடந்த பாட்டைத் தொடக்கம்.

**rail'ing**[1], *n.* வேலியிடுதல்; வேலியிட உதவும் பொருள்.

**rail'ing**[2], *n.* திட்டுதல், வசைமொழி; *a.* திட்டுகிற.

**rail'ings**, *n. pl.* கம்பியழி, வேலி, அழியடைப்பு.

**raill'ery**, *n.* விளையாட்டுப்பேச்சு, கேலி.

**rail'man**, *n.* இருப்பூர்தி நிலையப் பணியாளர்.

**rail'-mo'tor**, *n.* இரயில் கோச்சு வண்டி.

**rail'road**, *n.* இருப்புப்பாதை; *v.* மட்டுமீறி முந்தித்தள்ளு.

**rails**, *n. pl.* பங்குமாற்றுக்களம் வகையில் இருப்புப்பாதைப் பங்குகள்; குதிரைப்பந்தயக் கம்பியழி வேலி.

**rail'way**, *n.* இருப்புப்பாதை; இருப்புப்பாதையமைப்பு; இருப்புப்பாதை நிறுவனம்; இருப்புப்பாதைத் தொகுதி; கனமிக்க ஊர்திகட்கான தண்டவாளப் பாதை; *v.* இருப்புப் பாதை வழியாகப் பயணஞ்செய்.

**rail'wayman**, *n.* இருப்பூர்தி நிலையப் பணியாளர்.

**raim'ent**, *n.* உடுப்பு.

**rain**, *n.* மழை; மழைபோன்ற பொழிவு; *v.* பெய், மழை பொழிவுறு; சொரியப்பெறு, பொழிவுறு; சொரிவி, பொழிவி; (தொ.) it never rains but it pours, நிகழ்ச்சிகள் பல ஒருங்கே சேர்வன; it rains cats and dogs, அடைமழை பெய்கிறது; rain or shine, மழை பெய்தாலும் பெய்யாவிட்டாலும்; right as rain, முற்றும் சரியாயிருக்கிறது.

**rain'-bird**, *n.* மரங்கொத்தும் பறவை வகை.

**rain'bow**, *n.* வானவில்; *a.* பல நிறங்களுடைய; (தொ.) rainbow dressing, கப்பலில் கொடிகளைப் பகட்டாகக் கட்டி வைத்தல்; rainbow trout, காலிபோர்னிய (Californian) நன்னீர் மீன்வகை; secondary rainbow, எதிர் வானவில், வானவில்லின் உட்புறமோ வெளிப்புறமோ காணப்படும் தலைகீழான நிற வரிசையுடைய துணை வானவில்.

**rain'-box**, *n.* நாடக அரங்கில் மழையொலிப் போலி.

**rain'coat**, *n.* நீர்புகா மேற்சட்டை.

**rain'-doctor**, *n.* மந்திரத்தால் மழைபெய்விப்போர்.

**rain'drop**, *n.* மழைத்துளி.

**rain'fall**, *n.* மழைபொழிவு; பெய்யளவு, குறிப்பிட்ட இடத்திற் குறிப்பிட்ட காலத்திற் பெய்யும் மழையின் அளவு.

**rain'-gauge**, *n.* மழைமானி.

**rain'-glass**, *n.* வளி அழுத்தமானி.

**rain'proof**, *n.* மழைக்காப்பு மேலங்கி; *a.* மழைக்காப்பான; மழைநீர் ஊடுருவ விடாத; *v.* மழைநீர் உட்புகவிடாமற்செய்.

**rains**, *n. pl.* மழைகாலம்.

**rain'tight**, *a.*=rainproof.

**rain'-water**, *n.* மழைநீர்.

**rain'-worm**, *n.* நாங்கூழ்ப்புழு.

**rain'y**, *a.* மழை பெய்கிற, மழைகாலமாயுள்ள; முகில் வகையில் மழை கருக்கொண்டுள்ள; காற்றுவகையில் மழை பெய்விக்கிற; (தொ.) rainy day, பண முடையான காலம்; இடர்ப்பாடான காலம்.

**raise**, *n.* ஊதிய வகையில் உயர்வு; 'போக்கர்' என்ற சீட்டாட்ட வகையில் பந்தயத்தொகை ஏற்றம்; 'பிரிட்ஜ்' என்ற சீட்டாட்டவகையில் கேள்வி எண்ணின் ஏற்றம்; பாட்டை வகையில் ஏற்றப்பகுதி; *v.* உயர்த்து; மேம்படுத்து; உயர் நிலைப்படுத்து; சிறப்புறுவி; மேனிலைக்குக் கொண்டுவா; மேனிலையில் வை; விழுமியதாக்கு; தூக்கு; ஏற்று; நிமிர்த்து; நிமிர்த்தி வை; விழி-பார்வை முதலியவற்றை மேனோக்கிச் செலுத்து; எழுப்பு; தட்டி உணர்த்து; செயற்படச்செய்; பேய் வகையில் வருவி; விழிக்கச்செய்; கிளர்ந்து எழச்செய்; உணர்வு கொளுத்து; எழுச்சியூட்டு; கட்டு; கட்டி எழுப்பு; உருவாக்கு; உளதாக்கு; விளைவி; நிலத்திலிருந்து பிரித்து எடு; ஈன்று புறந்தருவி; பெற்று அளி; பயிற்றுவித்து வளர்; வளர்த்து உருவாக்கு; வருவி, வரவழை; தருவி; குரல் வகையில் கேட்கக்கூடியதாக்கு; மேலும் உரத்ததாக்கு; முன்கொணர், பிரேரி; கிள, பிரச்சினை கிளப்பு; தூண்டு, செயலூக்கப்படுத்து; தொகை உயர்த்து; விலை மிகுதியாக்கு; மட்டத்தை உயர்வாக்கு, உயர்தளப்படுத்து; அளவை அதிகப்படுத்து; வரி வகையில் சுமத்து; வரி வகையில் திரட்டு; கட்டுப்பாடு அகற்று; முற்றுகை தவிர்; முற்றுகையை விட்டுவிடும்படி செய்; (கப்.) நிலம் காணப்பெறு; மற்றொரு கப்பல் காணப்பெறு; முயன்று பெறு; திரட்டிப் பெறு; (தொ.) raise a dust, குழப்பம் உண்டுபண்ணு; உண்மையை மறை; raise a laugh, சிரிக்கப்பண்ணு; raise bread, புளிப்புச் சத்தினால் அப்பம் பொங்கியெழச்செய்; raise Cain, raise hell, raise mischief, raise the devil, குழப்பம் அல்லது கலகம் உண்டுபண்ணு; raise cloth, துணியில் இழையெழச்செய்; தேங்காய்ப்பூப்பின்னல் இழை; raise money on, அடகுவைத்துப் பணம்பெறு; raise one from the dead, உயிர்ப்பி, மாண்டவரை மீண்டெழச்செய்; raise one's eyebrows, அசட்டை உணர்ச்சியுடன் பார்; திகைப்புறு; raise one's glass to, உடல் நலம் வாழ்த்திப் பருகு; raise one's hat, வணக்க அறிகுறியாகத் தொப்பியைத் தூக்கு; raise the country, நாட்டு மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டிவிடு; raise the market, raise the market upon, விலைகளை ஏற்றி நட்டம் உண்டுபண்ணு; raise the roof, மிகப்பேரொலி எழுப்பிப்பேசு; raise the wind, வேண்டிய பணத்தை எப்படியாவது திரட்டு.

**rais'in**, *n.* கொடி முந்திரிப்பழ வற்றல்; உலர் திராட்சை.

***raison d' etre***, (பிர.) *n.* தோற்ற மூலகாரணம், உளதானமைக்குக் காரணம்.

**rait**, *v.* சணல் வகையில் ஊறவைத்து மென்மையாக்கு; ஈரத்தாற் பதப்படுத்து; உலர்புல்வகையில் ஈரத்தினாற் புழுங்கிக் கெடு, அழுகு.

**raj**, (இ.) *n.* அரசு, இராச்சியம்.

**raja, rajah**, (ச., இ.) *n.* அரசன், மன்னன்; தலைவன்.

**Raj'poot, Raj'put**, *n.* இராசபுத்திரர், அரசகுல வீரமரபினர்.

**rake**[1], *n.* வறண்டி, வைக்கோல் வாரி; சம்மட்டம், கூழாங்கற்களைச் சம மட்டமாக்குங் கருவி; பரம்பு, மண் சமப்படுத்துங் கருவி; பரம்புக் கலம், சக்கரங்கள்மீது செல்லும் பரம்பு; சூதாட்ட மேடையிற் பணம் வாரி; *v.* வறண்டியைக் கையாளு, வாரு, பெருக்கு, கூட்டு; திரட்டு, திரட்டிச்சேர்; துடைத்தொதுக்கு; பெருக்கித் தள்ளு; துடைத்துத் துப்புரவாக்கு; பற்றியிழு; பறண்டு; வரிசையாக வேட்டிடு, சுற்றிச்சுடு; கப்பலின்மீது நீட்டுவாக்கில் நெடுகச்சுடு; துருவி நெடுகிலும் பார்; பரவலான காட்சி பெறு; துருவித் தேடு; கிண்டிக்கிளறு.

**rake**[2], *n.* தூர்த்தன், பரத்தன்.

**rake**[3], *n.* முற்பிதுக்கம்; உந்தி நிற்கும் அளவு; முன்துருத்தி நிற்கும் நிலை; உந்து கட்டுமானம்; செங்குத்து நிலையிற் கோட்டம்; சாய்வு, சரிவு; கிடைநிலையிற் கோட்டம்; *v.* கப்பலின் முன்பின் பகுதிகள் வகையில் மேற்பரப்பில் அடி வரை கடந்து சாய்ந்து நீட்டிக்கொண்டிரு; கப்பலின் பாய் மரம்-புகைப்போக்கி வகையில் பின்னோக்கிச் சாய்வுறு; மிதி வண்டி முற்கவட்டு வகையில் பின்னோக்கிச் சாய்வுகொள்; சாய்வாக்கு, சரிவுறு.

**rake'hell**, *n.*=rake[2].

**rake'-off**, *n.* (பே-வ.) வாணிகத் தரகு; வாணிகத் தள்ளுபடி; ஆதாயப் பங்கு.

**rak'ish**[1], *a.* தூர்த்தனான, சிற்றின்ப வேட்டையில் ஈடுபட்ட.

**rak'ish**[2], *a.* கப்பல்வகையில் சாய்ந்த பாய்மரங்களையுடைய; விரைந்து செல்லுந் தோற்றமுடைய; கடற்கொள்ளைக் கப்பலின் தோற்றமுடைய; மிடுக்கான, செயல் வீறுடைய, விரைசெயல் தோற்றமுடைய.

**rale**, *n.* (மரு.) நுரையீரலில் ஏற்படும் நோய்க் கோளாறு காரணமான நாடித்துடிப்பு.

**rallentan'do**, (இத்.) *v.* (இசை.) படிப்படியாக வேகத்தைக் குறை.

**rall'icar, rall'icart**, *n.* நால்வர் ஏறத்தக்க இரு சக்கர வண்டி.

**rall'y**[1], *n.* திரளணி, அணிமீட்சி; புதுமுனைப்பு; புத்தூக்கப் பேறு; வரிப்பந்தாட்டம் முதலியவற்றில் விரைபந்தடி; *v.* மீட்டணிதிரள்; வந்து கூடு; புத்தணிகூட்டு, புது முயற்சியில் கூடு; புதுமுனைப்புப் பெறு; மீட்டுந் தொடங்கு; புத்தாற்றல் பெறு, புத்துரங்கொள்; நோய் நீங்கிப் புதுநலம் அடை; புது நம்பிக்கை கொள், புது நம்பிக்கை பெறு; மயக்கந் தெளிவுறு; உயிர்ப்பி; மீட்டுயிர்பெறு.

**rall'y**[2], *v.* மென்னகையாடு, கேலிசெய்.

**Ram**[1], *n.* (வான்.) மேடராசி, தகர்மனை.

**ram**[2], *n.* ஆட்டுக்கடா, காயடிக்கப்படாத செம்மறியாட்டின் ஆண்; அரண்தகர்ப்புத் தூலப்பொறி, மதிற்சுவர்களைத் தகர்ப்பதற்குரிய உலோகப் பூணிட்ட பெருந்தூலம்; கப்பலின் தாக்கலகு, மற்றக் கப்பல்களைப் பக்கவாட்டில் சென்று தாக்குவதற்காக கப்பலின் முன்புறம் நீண்டு முனைந்துள்ள கூம்புறுப்பு; தாக்குகலம், தாக்கு முகப்புடைய போர்க்கப்பல்; அறைபொறியின் அடிப்பளு, கடைகாலை அடித்திறக்கும் யந்திரத்தின் பளுவான சுமை; திமிசு, நிலம் அடித்திறுக்கும் கட்டைப்பொறி; நீர்வலங்கொண்ட நீரிறைக்கும் இயந்திரம்; நீர்ம அமுக்கு இயந்திரம்; நீரழுத்தப்பொறியின் இயக்குதண்டு; *v.* திமிசு அடித்து இறுக்கு; இடித்துக் கெட்டிப்படுத்து; திமிசுக் கட்டை கையாளு; சுற்றியுள்ள நிலத்தை அடித்து இறுக்கி கம்பம்-செடி முதலியவற்றை உறுதிப்படுத்து; அடிவாரக் கம்பம் அறைந்து கீழே இறக்கு; துப்பாக்கியில் மருந்து வைத்துக் கோலினால் இடித்துக் கெட்டிப்படுத்து; திணித்து அடை; பெரிதும் வேதனைப்படுத்து; கப்பல் வகையில் முன்புறக் கூம்புறுப்பால் தாக்கு; மோது; வலுக்கட்டாயமாக மோதுவி; (தொ.) ram the argument home, வாதத்தை நன்கு வற்புறுத்து.

**ram**[3], *n.* (கப்.) படகின் முழுநீளம்.

**Ramadan'**, *n.* ரம்சான், பகற்பொழுதெல்லாம் உண்ணா நோன்பு மேற்கொள்ளப்படும் இஸ்லாமிய ஆண்டின் ஒன்பதாம் மாதம்.

**ram'al**, *a.* (தாவ.) கிளைசார்ந்த; கிளைக்குரிய; கிளையிலிருந்து தோன்றுகிற.

**ram'ble**, *n.* உலாவித்திரிதல், கால்போனபடி செல்லுதல்; *v.* கால் இழுத்தவாக்கில் நடந்துசெல்; மனம்போனபடி உரையாடு; தொடர்பின்றிப் பேசு; தொடர்பின்றி மனம்போனபடி எழுது.

**ram'bler**, *n.* குறிக்கோளின்றித் திரிபவர்; தொடர்பின்றிப் பேசுபவர்; தொடர்பின்றி எழுதுபவர்; தழுவு கொடிவகை ரோசா.

**ram'bling**, *a.* இங்குமங்கும் நடக்கிற, அலைந்துதிரிகிற; தொடர்பற்ற, துண்டுதுணுக்கான, பொருத்தம் இல்லாத; செடிகள் வகையில் படர்ந்து பரவுகிற, பற்றி ஏறுகிற; வீடு-தெரு முதலியவற்றின் வகையில் ஒழுங்காகத் திட்டமிடப்படாத.

**rambunc'tious**, *a.* (பே-வ.) வீண்சத்தம் போடுகிற.

**rambut'an**, *n.* மலேயாநாட்டு உயரமான பழமரவகை; மலேயாநாட்டு மரத்தின் இனிய சிவப்புப்பழம்.

**ram'ekin, ram'equin**, *n.* அச்சுப்பண்ணியம், வெண்ணெயுடன் ரொட்டித்துணுக்குகளும் முட்டையுங் கலந்து சிறு அச்சுக்களாக வேகவைக்கப்பட்ட பண்ணியம்.

**ram'ie**, *n.* முட்செடி நார்வகை.

**ramifica'tion**, *n.* கிளைத்தல்.

**ram'ify**, *v.* கிளைகொள்; கிளைகளாக்கு.

**ramm'er**, *n.* இடித்து இறுக்குபவர்; திமிசுக்கட்டை, மண்ணை அடித்திறுக்குங் கருவி.

**ramm'ish**, *a.* முடைநாற்றமான.

**ramose'**, *a.* கிளைகளுடன் கூடிய, கவர்விடுகிற.

**ramp**[1], *n.* சாய்ப்பிடை, கோட்டை அரணில் இரண்டு தளமட்டங்களை இணைக்குஞ் சாய்தளம்; மதில் முகட்டுச் சாய் விளிம்பு; கொடுவில் வளைவில் இருதிசைச் செவ்வுயரப்பகுதி வேறுபாடு; எழுவளைவு, படிக்கட்டு அழிக்கம்பியின் உள்வளைந்து மேல்நோக்கிய சாய்வளைவு; *v.* சிங்கத்தின் வகையில் முன்னங்கால்களைத் தூக்கிக்கொண்டு பின்னங்கால்களில் நில்; அச்சுறுத்தும் நிலை மேற்கொள், அச்சுறுத்தும் நிலையிலிரு; சீறி எழு; குமுறி எழு; சினங்கொண்டு அங்குமிங்கும் பாய்ந்தோடு; (க-க.) தளமேறிச்செல்; தளமிறங்கிச் செல்; சாய்ப்பிடை வைத்துக்கட்டு.

**ramp**[2], *n.* புத்தகத் தொகுப்பாளரிடம் கற்பனைக்கடன் சாக்கிட்டுப் பறிக்கப்படும் வல்லடி வழக்குப்பணம், கொள்ளைப்பணம்; மிகுவிலைக் கொள்ளை; மோசடி; *v.* கற்பனைக் கடனைச் செலுத்துமாறு கெடுபிடிசெய்; மோசடிசெய்.

**rampage'**, *n.* வன்முறைச்செயல், மூர்க்கமான நடத்தை; *v.* முரட்டுத்தனமாக நடந்துகொள், சினந்தெழு, சீறிப் பாய் கடுஞ்சினத்துடன் அங்குமிங்கும் பாய்ந்துசெல்.

**ramp'ant**, *a.* சீறி எழுகிற, எகிறுகிற; அடங்கொண்ட, அடங்காத் துடிப்புள்ள; மூர்க்கமான, கொந்தளிப்புடைய; தடையரு வளர்ச்சியுடைய, மட்டுமீறிய வளப்பம் வாய்ந்த; மேலெழுந்து செல்கிற, மீச்செலவுடைய; அடங்காத்துடிப்புடைய; கட்டற்ற கருத்து முனைப்புடைய; மட்டுமீறிய செயல்வாய்ந்த; தன்முனைப்பான; நிலைத்து நிற்கிற; (க-க.) கொடுவில் வளைவான வில்வளைவு வகையில் ஒரு பக்கத்தைவிட ஒருபக்கம் செவ்வுயரம் மிகுதியாகவுடைய; (கட்.) தாவுநிலையான, அரிமா முதலிய சின்னங்கள் வகையில் முன்கால் தூக்கிப் பின்காலில் எழுந்துநிற்கும் நிலையுடைய.

**ramp'art**, *n.* பதணம், மதிலுள் அமைந்த உயர்மேடை; அகப்பா, ஞாயிலமைந்து கற்பிடி சுவர் வாய்ந்த மண்மேடு; காப்பரண், வலிமைப்படுத்தப்பட்ட கோட்டைப்பகுதி; *v.* காப்பரண் செய், காப்புவலிமைப்படுத்து.

**ramp'ion**, *n.* தின்னத்தக்க வெண்கிழங்கு வேர்களையுடைய மணிவடிவ மலர்ச் செடிவகை.

**ramp'ire**, *n., v.*=rampart.

**ram'rod**, *n.* செறிகோல், துப்பாக்கிக் குழலைத் துப்புரவு செய்வதற்கும் மருந்து அடைத்து இடிப்பதற்கும் உரிய கோல்.

**ram'shackle**, *a.* இறுநிலையான, இடிந்துவிழுவது போலிருக்கிற; கலகலத்துப்போன.

**ram's'-horn**, *n.* செம்மறியாட்டுக்கடாக் கொம்பு; செம்மறியாட்டுக் கொம்புகள் போல் செய்யப்பட்ட சுருள் ஒப்பனை அணி.

**ram'son**, *n.* அகலிலை வெள்ளைப்பூண்டுச் செடி; இன்சுவை வெள்ளைப்பூண்டுச்செடி வேர்.

**ran**[1], *n.* திப்பநூல் நீட்டளவு.

**ran**[2], *v.* run என்பதன் இறந்தகாலம்.

**rance**, *n.* நீல வெள்ளை வரிப்புள்ளிகளுடைய செஞ்சலவைக் கல்வகை.

**ranch**, *n.* அமெரிக்க கால்நடை வளர்ப்புப் பண்ணை; *v.* கால்நடை வளர்ப்புப் பண்ணை நடத்து.

**ran'cid**, *a.* ஊசிப்போன சுவையுடைய; கெட்டுப்போன வெண்ணெயைப்போல் முடைநாற்றம் வீசுகிற.

**ranc'our**, *n.* கடுவெறுப்பு; மனக்காழ்ப்பு.

**rand**, *n.* செருப்பில் குதிகால் தோல்துண்டு; தென்னாப்பிரிக்க வழக்கில் ஆற்றுப்பள்ளத்தாக்கின் இருமருங்கிலுமுள்ள மேட்டுநிலங்கள்; (தொ.) the Rand, ஜோஹானிஸ்பரோ (Johannesburg) நகரம்.

**randan'**[1], *n.* மூவருகைப்புப்பாணி, படகில் நடுவர் திருகு தண்டாலும் மற்ற இருவர் துடுப்பாலும் உகைக்கும் முறை; மூவருகைப்புப்பாணியில் மூவரால் செலுத்தப்படும் படகு.

**randan'**[2], *n.* களியாட்டம், குடிவெறியாட்டம்; தங்குதடையற்ற குதியாட்டம்.

**ran'dem**, *n.* ஒன்றன்பின் ஒன்றாக மூன்று குதிரைகள் பூட்டிச் செலுத்தப்படும் வண்டி; *adv.* ஒன்றன்பின் ஒன்றாகப் பூட்டிய மூன்று குதிரைகளுடன்.

**ran'dom**, *n.* தொடர்பின்மை, குறிப்பின்மை; அங்கொன்று இங்கொன்றான முறைமை; *a.* தொடர்பினறி எடுக்கப்பட்ட, அங்கொன்று இங்கொன்றான; (க-க.) ஒழுங்கற்ற அளவும் வடிவமுங் கொண்ட கற்களினால் இயன்ற; (தொ.) at random, தொடர்பின்றி, குறிப்பின்றி, அங்கொன்று இங்கொன்றாக.

**ran'dy**, *a.* உரத்துப்பேசுகிற, பெருங்கூச்சலிடுகிற, ஆர்ப்பாட்டமான, வலங்கொண்ட; கால்நடை முதலியவற்றின் வகையில் மூர்க்கமான, அடங்காத; சிற்றின்ப நாட்டமுடைய; சிற்றின்ப நாட்டமாயிருக்கிற.

**ran'ee**, (இ.) *n.* அரசி; தலைவி.

**rang**, *v.* ring என்பதன் இறந்தகாலம்.

**range**, *n.* வரிசை, அணி; நிரை; நேர்வரை ஒழுங்கு; படி, அடுக்கு; தொகுதி; மலைகளின் தொடர்; கிடப்பு, திசைநிலை; அலைவு, திரிவு; புறவெளி: மேய்ச்சல் நிலம்; சுற்றுப்புறம்; தொலைவெல்லை; பரப்பெல்லை; அளவெல்லை; இயல்வெல்லை; நிகழ்வெல்லை; இயங்கெல்லை; செயல் எல்லை; எட்டுந்தொலை; வீச்சு, ஆற்றல் எல்லை; வேட்டின் தொலைவெல்லை; இலக்கின் தொலைவளவு; குறியிலக்குப் பரப்பெல்லை; ஏற்ற இறக்க எல்லை; வேறுபாட்டெல்லை; *v.* வரிசைப்படுத்து; அணியணியாக நிறுத்து; வரிசையுட்படுத்து, நிரல்பட வை; ஒருநிலைப்பட வகுத்தமை, குழுவினுட்படுத்து; வரிசைப்படு; ஒருநிலைப்படு; நிரல்படு; எல்லையிடைப்படுவி; எல்லையிடைப்படு; எல்லையிடையே வேறுபாடுறு; இடைப்பட இயங்கு; எல்லையிடையே இயல்வுறு; எல்லையுள் நிகழ்வுறு; ஒப்புடையதாயமை; பொருந்து; சரியிடம் பெறு; அலைந்து திரி, உலாவித்திரி; பரந்து செல்; பரவு; நெடுகச்செல், எங்கும் உலவுறு; எங்கும் நிலவு; துப்பாக்கிக் குண்டு முதலியவற்றின் வகையில் வீச்செல்லை உடையதாயிரு; (தொ.) range oneself, சமுதாயத்தில் நிலையான இடம் மேற்கொள்; திருமணஞ் செய்துகொண்டு வாழ்க்கையில் நிலைபெறு; ranging fancy, நிலையற்ற பற்று.

**range'-finder**, *n.* தொலைமானி, வேட்டின் இலக்குத் தொலை கண்டறி கருவி.

**Ran'ger**[1], *n.* அமெரிக்க படைவீரர்களில் ஒருவர்.

**ran'ger**[2], *n.* சுற்றித்திரிபவர்; காடுபேணுநர்; பூங்கா மேற்பார்வையர்; பெண் சாரணர்படை முதிர்நிலை உறுப்பினர்.

**ran'gers**, *n. pl.* புரவிப்படை வீரர் தொகுதி; படைக்கலந் தாங்கிய வீரர் தொகுதி.

**rank**[1], *n.* அணிவரிசை; படையின் அணிவகுப்பு; படையில் பக்கவாட்டான வரிசை; வாடகை ஊர்திகளின் அணிநிரை; சதுரங்கத்தில் புடை வரிசை; படி வரிசை; வரிசைப்படி; படிநிலை; அளவுப்படி வரிசை; உயர்படிமை; பெரும்படி; *v.* படை வீரர்களை அணிவகுப்பில் நிறுத்து; வகைப்படுத்து; படித்தரம் ஏற்படுத்திக் கொடு; படித்தரத்தில் முந்துநிலை பெறு; சரி இடம் பெறு; படிநிலை எய்தப்பெறு; நொடித்த நிலையத்தின் சொத்தின்மீது உரிமையாளர் பட்டியலில் இடம்பெறு; (படை.) அணிவகுத்துக் கடந்துசெல்; (தொ.) break rank, அணிவகுப்புக் கலைந்துசெல்; keep rank, அணிவகுப்பு குலையப்பெறுமல் இரு; persons of rank, பெருங்குடி மக்கள்: rank and fashion, உயர்வகுப்பினர்; rise from the ranks, சாதாரணப் படைவீரராயிருந்து மேற்பதவி பெற்று உயரு; தன் முயற்சியினால் உயர்வு பெறு; take rank of, முந்துதல்பெறு; the ranks, the rank and file, சாதாரணப் படைவீரர் நிலை; பொதுநிலைப் படைவீரர் தொகுதி.

**rank**[2], *a.* மட்டுமீறிச் செழிப்பான; நாகரிகமற்ற, கரடுமுரடான; களைகள் செறிந்த, களைகள் தோற்றுவிக்கும் பாங்குடைய; முடைநாற்றம் வீசுகிற; அருவருப்பான, ஊசிப்போன; வெறுப்புத்தருகிற, வெட்கங்கெட்ட; பாங்கற்ற; நடைநயமில்லாத, தூய்மையற்ற; மிகுமுனைப்பான, பிழைபாட்டுக்கு இடமில்லாத, பட்டாங்கமான, உக்கிரமான, பருத்த.

**rank'er**, *n.* பொதுநிலைப் போர்வீரர், படையணியில் ஒருவர்; பொது அணியிலிருந்து மேம்பாடு பெற்றுயர்ந்து ஆணைப் பதவிபெற்ற ஒருவர்.

**ran'kle**, *v.* புண்வகையில் உள்ளார வீங்குவுறு, சீழ்பிடித்து உறுத்தல்கொடு; பொருமை-ஏமாற்றம் ஆகியவற்றின் வகையில் மனத்தில் உறுத்திக்கொண்டேயிரு, ஓயாத்துன்பம் கொடுத்துக்கொண்டேயிரு; தொடர்ந்து வேதனை தந்து கொண்டிரு.

**ran'sack**, *v.* துருவித்தேடு, கிளறிப்பார்; வாரிக்கொள்ளையிடு.

**ran'som**, *n.* மீட்புப்பணம்; பிணையமீட்பு; போர்க்கைதியின் காவல்மீட்பு; உரிமைவிலை; கொள்ளை வரி, தீங்கிழைப்பிலிருந்து விலக்களிப்பதற்குரிய வன்முறைப் பணப்பறிப்பு; கழுவாய், பரிகாரம்; பெருந்தொகை; கொள்ளைவிலை; *v.* மீட்டுப்பெறு; கழுவாய் தேடு, எதிரீடுசெய்; பரிகாரந் தேடு; மீட்புப்பணம் பெற்று விடுவி; விடுதலைக்காகப் பணம் பெறு; விடுதலைப்பணம் கோரிப் பிணையம் வைத்திரு; விடுதலைப் பணங்கோரு; சலுகை கோரித் தடைக்காவலில் வைத்திரு; உரிமையை விலைகொடுத்துவாங்கு; (தொ.) hold one to ransom, மீட்புப்பணம் கொடுக்கும்வரை விடுதலை செய்யாமல் வைத்திரு; put to ransom, மீட்புப்பணம் கொடுத்தால் விடுவிப்பதாகக் கூறு.

**ran'som-bill, ran'som-bond**, *n.* கைப்பற்றப்பட்ட கப்பல் வகையில் மீட்புப்பணம் கொடுக்க உறுதிகூறும் ஒப்பந்தப் பத்திரம்.

**rant**, *n.* ஆரவாரவுரை, கடபுடா; பித்துத் தள்ளுதல், முடுக்கிசை; வசைச்சொல் மாரி; களியாட்ட ஆர்ப்பாட்டம்; ஆர்ப்பாட்டம்; முடுக்கிசை; *v.* பகட்டாரவாரமாகச் சொற்பொழிவாற்று; கண்டி, வசைமாரி வீசு; நாடகப் பாணியில் வாய்வீச்சடி; சமயமேடையில் கூச்சலிட்டு முழக்கஞ்செய்; களியாட்ட ஆர்ப்பாட்டஞ் செய்.

**rant'er**, *n.* ஆரவாரப்பேச்சாளர்; வீண் ஆர்ப்பாட்ட சமயவுரையாற்றுபவர்; 1810-இல் காணப்பட்ட முற்பட்ட மெதடிஸ்டு (Methodist) நிறுவனத்தைச் சேர்ந்தவர்; கும்மாளமிடுபவர்; இரைந்துபாடும் பாடகர்.

**ranuncula'ceous**, *a.* கிண்ணவடிவப் பொன்னிறப் பூஞ்செடியினஞ் சார்ந்த.

**Ranunc'ulus**, *n.* கிண்ண வடிவமான பொன்னிறப் பூக்களைக் கொண்ட செடிப்பேரினம்; *pl.* ranunc'uluses, ranunc'uli.

***ranz-des-vaches***, (பிர.) *n.* சுவிட்சர்லாந்து நாட்டுக் கோவலர் பாடும் பண்ணிசை.

**rap**[1], *n.* தட்டு, கொட்டு; கொட்டொலி; கதவு தட்டொலி; கதவு தட்டுங் கருவியின் ஓசை; ஆவியுலகத் தொடர்பில் எழும் கொட்டொலி; *v.* கொட்டு, தட்டு; மொழியிலடி,

முட்டியிலடி; தட்டொலி எழுப்பு; கண்டி; (தொ.) rap out, உணர்ச்சியினால் தூண்டப்பட்டுத் திடுமெனப்பேசு; ஆவிகள் வகையில் தட்டொலிகள் மூலஞ் செய்திகள் வெளியிடு.

**rap**[2], *n.* 120 கஜ நூற்கண்டு.

**rap**[3], *n.* அணு, துகள்.

**rapa'cious**, *a.* உயிர்வேட்டையாடுகிற, கொன்றிரை கொள்கிற; கொள்ளையடிக்கும் பாங்குடைய, வலிந்து பிறர் பொருள் பறிக்கிற; பேரிரை கொள்கிற; பேராசை பிடித்தலைகிற.

**rapa'city**, *n.* பேரிரைவேட்டை; கொடுங்கொள்ளை; வன்பறிகொள்ளை; கொள்ளை ஆதாயவேட்டை.

**rape**[1], *n.* அழிம்பு, வன்முறைப்பழிச்செயல், கற்பழிப்பு; நாட்டின் வகையில் வன்முறைக்கவர்வு; (செய்.) வன்கடத்தல்; ஆளை வலிந்து கைப்பற்றி எடுத்துச் செல்லுதல்; *v.* கற்பழி, வன்முறை அழிம்புசெய், வலுக்கட்டாயப்படுத்து; (செய்.) வலிந்து கைப்பற்றிக்கொண்டு செல்.

**rape**[2], *n.* இங்கிலாந்திலுள்ள ஸஸ்ஸெக்ஸ் (Sussex) மாவட்டத்தின் ஆறு ஆட்சிப்பிரிவுகளில் ஒன்று.

**rape**[3], *n.* எண்ணெய் விதைப் பயிர்ச்செடிவகை; (தொ.) wild rape, காட்டுக்கடுகு.

**rape**[4], *n.* தேறற் களிம்பு.

**rape'-cake**, *n.* எண்ணெய்ப் பிண்ணாக்கு வகை.

**rape'-oil**, *n.* மசகாகவும் சவர்க்காரம் செய்வதற்கும் பயன்படும் எண்ணெய் வகை.

**Raphaelesque'**, *a.* இத்தாலிய வண்ண ஓவியராகிய ரபேல் (Raphael, 1483-1520) பாணியிலுள்ள.

**raph'ia**, *n.* (தாவ.) ரபியா (raffia) என்பதன் தாவர இயற்பெயர்.

**rap'id**, *a.* விரைந்த, வேகமான; குறுகிய நேரத்தில் முடிக்கப்பட்ட; சரிவு வகையில் செங்குத்தான.

**rapid'ity**, *n.* விரைவு, வேகம்.

**rap'idly**, *adv.* விரைவாக, வேகமாக.

**rap'ids**, *n. pl.* செவ்விறக்கம், ஆற்றின் செஞ்சாய்வு; செவ்விறக்க விரை நீரோட்டம்.

**rap'ier**, *n.* குத்துவாள், சுரிகை.

**rap'ier-thrust**, *n.* திறமிகு விடை, திறமிக்க உடனடிச் சொல் துணுக்கு.

**rap'ine**, *n.* கொள்ளை, சூறை.

**rapparee'**, *n.* (வர.) முற்காலப் பணிச்சார்பற்ற ஐரிஷ் போர் வீரன்; கொள்ளைக்காரன்.

**rappee'**, *n.* காரமிக்க மூக்குப்பொடி.

**rapport'**, *n.* தொடர்பு; ஒத்திசைவு; உணர்ச்சிக்கிழமை; ஆன்ம நேயப்பாடு.

***rapprochement***, (பிர) *n.* மறுசீரிணைவு, நாடுகளிடையே மீண்டும் நல்லிணக்கநிலை ஏற்படுதல்.

**rapt**, *a.* பறித்துக்கொண்டுபோகப்பட்ட; கடத்திச்செல்லப்பட்ட; இவ்வுலகினின்றும் ஆவியுருவில் எடுத்தேகப்பட்ட; உணர்விழந்த; தன்னை மறந்த; இன்பத்தில் தன்னைமறந்த; தன்வயமற்ற.

**raptor'ial**, *n.* (வில.) கொடும்பறவையினப் பிரிவு; *a.* கொடும்பறவையினஞ் சார்ந்த; கொடும்பறவைப்பண்பு வாய்ந்த; கொடுவிலங்குப் பண்புவாய்ந்த; உயிர்வேட்டையாடுகிற, கொள்ளையிடுகிற.

**rap'ture**, *n.* களிபேருவகை; ஆனந்தப் பரவசம்; (இறை.) பிறிதிடம் உய்த்தல்; துறக்கத்து உய்த்தல்.

**rap'tured**, *a.* பெருங்களிப்பூட்டப்பெற்ற, களிபேருவகை கொண்ட.

**rap'tures**, *n. pl.* பெருமகிழ்ச்சி, தன்னை மறந்த இன்பம்; களிபேருவகைநிலை.

**rap'turous**, *a.* உவகை வெறிகொண்ட, பெருமகிழ்ச்சி கொள்ளுகிற.

**rar'a av'is**, (ல.) *n.* பெறலரும் பொருள்.

**rare**[1], *a.* அரிய, அரும்பொருளான, அபூர்வமான; அருநடப்பான, அடிக்கடி நிகழாத; வழக்கத்துக்கு மாறான, பொதுநிலை மீறிய சிறப்புடைய; மிக நேர்த்தியான; மிக வேடிக்கையான; தளர்வான, செறிவற்ற; (தொ.) rare earths, (வேதி.) உலோக வகைகளில் உயிரகைகள்.

**rare**[2], *a.* இறைச்சி வகையில் வேவுப்பக்குவம் வராத.

**rare'bit**, *n.* அனலில் வாட்டிய பாலேடு கலந்த உண்டி.

**rar'ee-show**, *n.* கண்காட்சிப்பெட்டி, பெட்டியில் வைத்து எடுத்துக்கொண்டு போகப்படும் காட்சிப்பொருள்; கண்காட்சி.

**rarefac'tion**, *n.* நொய்ம்மை, தளர்நிலை, செறிவின்மை.

**rar'efy**, *v.* தளர்த்து; அடர்த்திகுறை, செறிவிலாதாக்கு; நொய்மமையாகு. செறிவிலாதாகு; நேர்த்தியானதாக்கு; தூய்மைப்படுத்து; நுட்பமானதாக்கு.

**rare'ly**, *adv.* அரிதாக, அருநிகழ்வாக; அடிக்கடியில்லாமல், அருகலாக; நேர்த்தியாக, வழக்கத்துக்கு மாறாக, அபூர்வமாக.

**rar'ity**, *n.* அருமை, அருநிலை; வல்லொட்டு, அரும்பொருள்.

**ra'scal**, *n.* போக்கிரி, வீணன், கயவன்; *a.* பொதுநிலைக் குமபல் சார்ந்த; கொடுங்கொடிய.

**ra'scaldom**, *n.* கயமை; கீழ்மக்கள் கும்பு.

**rascal'ity**, *n.* போக்கிரித்தன்மை, வீணர்நடத்தை; கயவர் குழாம்.

**rase**, *v.*=raze.

**rash**[1], *n.* சினப்பு, வேனற்கட்டி, தோல் பகுதிகளின் வெடிப்பு.

**rash**[2], *a.* மட்டுமீறி விரைவேகமான; கண்மூடித்தனமான, மடத்துணிச்சலான; எண்ணாது துணிகிற.

**rash'er**, *n.* பன்றியிறைச்சியின் மெல்லிய கண்டம்.

**rash'ness**, *n.* முன் ஆய்வின்மை; மடத்துணிவு; பதற்றம்.

**rasp**, *n.* முரட்டு அரம்; அரம் போன்ற கரடுமுரடான பரப்பு; சோழி வகையின் நாக்கு; பூச்சி வகையின ஒலி எழுப்பும் உறுப்பு; அராவொலி, உராய்வொலி; கதவு திருகும் ஒலி; மயிர்க்கூச்சொலி; மயிர்க்கூச்சுணர்ச்சி; *v.* முரட்டு அரத்தினால் அராவு; சரவையாகச்சுரண்டு; மனத்தைப்புண்படுத்து, எரிச்சலூட்டு; சுரண்டியெடு; சுரண்டொலிசெய், கிறீச்சொலியிடு.

**ra'spatory**, *n.* அறுவை மருத்துவத்திற் பயன்படுத்தப்படும் முரட்டு அரம்.

**ra'spberry**, *n.* சிவப்பு வெள்ளை அல்லது மஞ்சள் நிறப் பழவகை; வெறுப்புக்குறிப்பு; *a.* பழ வகைக்குரிய; பழவகை போன்ற; பழவகை கொண்டு செய்யப்பட்ட; (தொ.) raspberry vinegar, தேம்பாகு வகை.

**ra'spberry-canes**, *n.* தின்னத்தக்க பழவகை தருஞ் செடிகள்.

**ra'sper**, *n.* அருமுள்வேலி.

**rass'e**, *n.* சிறு புனுகுப்பூனை.

**rat**[1], *n.* எலி; கட்சிமாறி, இடர்நேரத்திற் கட்சியை விட்டோடுபவர்; தொழிலினத் துரோகி, வேலை நிறுத்தத்திற் சேர மறுப்பவர்; வேலை நிறுத்தஞ் செய்பவர்களுக்குப் பதிலாக அமர்ந்து கொள்பவர், தொழிற்சங்க வீதங்களை விடக் குறைந்த கூலியை வாங்கிக்கொள்பவர்; *v.* எலிகளைக்கொல்லு; எலி வேட்டையாடு; அரசியல் துறையில் இடர் நேரத்திற் கட்சியை விட்டு ஓடிப்போ; (தொ.) smell a rat, ஐயங்கொள்.

**rat**[2], *v.* பழிசேர்க, ஒழிக.

**ra'ta**, *n.* நியூசீலந்து நாட்டுச் செம்மர வகை.

**rat'able**, *a.* நகராட்சி வரிகள் செலுத்துவதற்குரிய.

**ratafee'**, **ratafia'**, *n.* வாதுமைச் சாறு வகை; வாதுமைப் பிஸ்கோத்து; வாதுமைத் தேறல் வகை.

**rat'al**, *n.* வரிகள் விதிக்கத்தக்க தொகை; *a.* வரிவிதிப்பிற்குரிய.

**ratan'**, *n.*=rattan.

**rataplan'**, *n.* பறையொலி; *v.* பறையறை, பறையொலி எழுப்பு.

**ratatat′**, *n.*=rat-tat.

**rat′-catcher**, *n.* வீடுகளில் எலி பிடிப்பவர்; (பே-வ.) முறைமை சாராத வேட்டையுடுப்பு.

**ratch, ratch′et**, *n.* ஒருவழிப் பற்சக்கரத்தடையமைவு, சலாகைமீது அல்லது சக்கரமீது அமைந்த பற்களின் இயக்கத்துடன் ஒருவழி அசைந்து மறுவழித்தடுக்கும் தடைக் கோலமைவு; *v.* ஒருவழிப் பற்சக்கரத்தடை இணைத்தமை, பற்சக்கரத்தடை உருவங்கொடு.

**ratch′et-wheel**, *n.* ஒருவழித்தடைப் பற்சக்கரம்.

**rate**, *n.* தகவு, வீதம், விழுக்காடு; வேகமானம், வேகம்; கணிப்புவீதம்; நடைமுறைவீதம்; படியளவு; வரையளவு; சரி எதிரீட்டளவு; விலைவாசி; வரிவீதம்; கட்டண நிலவரம்; செலவுவீதம்; திணைவரி, சிறு திறவரி; தரம், படி; மதிப்பு; கப்பலின் தகுதிநிலை; கடலோடிகளின் படித்தரம்; நிலை, செய்வகை, முறை; *v.* மதிப்பீடுசெய்; விலை மதிப்பிடு; நாணயம் அல்லது உலோக வகையில் செலாவணி நிலவரப் படி மதிப்பீட்டுறுதி செய்; கணி, மதி, எண்ணு, கருது; வரிவீதத்துக்கு உட்படுத்து; காப்புறுதி வகையில் கட்டணஞ் சுமத்து; கப்பற்பணியாளர்கள் வகையில் வகைத் தரப் படுத்து; (தொ.) at any rate, எப்படியிருந்த போதிலும், மற்றவை எப்படியானாலும்; rate up, உயர்ந்த காப்பீட்டு வீதம் விதி.

**rate**[2], *v.* கடுமையாகக் கண்டி, சினங்கொண்டு கடிந்துரை.

**rate**[3], *v.* சணல்வகையில் ஈரம்பதப்படுத்து; புழுக்கிக்கெடு, அழுகவிடு.

**rat′el**, *n.* வளை தோண்டி வாழும் தென்னாப்பிரிக்க கரடியின விலங்குவகை.

**rate′payer**, *n.* வரிசெலுத்துவோர், திணைவரிக்கு ஆட்பட்டவர்.

**rath**, *n.* வரலாற்றுக்காலத்திற்கு முந்திய அரண்.

**rathe**, *a.* (செய்.) அலர்கிற, பிஞ்சுவிடுகிற.

**ra′ther**, *adv.* இன்னுஞ்சரியாகச் சொல்லுமிடத்தில்; பெரிதளவில்; இன்னும் மிக நுட்பமாகக் கூறுவதானல்; வேறெதுவுமன்று என்றுதான்; சிறிதுமாறுபட்ட நிலையில்; ஓரளவுக்கு; ஒரு சிறிதே; சற்றே; சற்றுமேம்பட விரும்பத்தக்கதாக; மேம்பட விரும்பித்தேரத்தக்கதாக; விரும்பத்தக்க மேம்பாடுடையதாக; (பே-வ.) உறுதியாகவே, ஐயமின்றி.

**rathe′-ripe, rath′-ripe**, *n.* முற்பட முதிரும் பயிற்றின வகை; முன்விளை ஆப்பிள்வகை; *a.* முன்னதாக முதிர்ச்சி பெறுகிற; பிஞ்சிற் பழுத்த; வயதுக்கு மீறிய அறிவுள்ள.

**ra′thskeller**, *n.* தேறல் விடுதி.

**ratifica′tion**, *n.* உறுதிசெய்தல்; செல்லுபடி.

**rat′ify**, *v.* உறுதிசெய்; செல்லத்தக்கதாக்கு.

**ratine′**, *n.* கடற்பஞ்சு போன்ற துணிவகை.

**rat′ing**[1], *n.* வீத அறுதிப்பாடு; வகைப்படுத்தல்; நகராட்சி வரி அறுதிப்பாடு; நகராட்சி வரி அறுதிததொகை; கப்பற் பணியாளர் பட்டியலில் ஒருவரது படிநிலை வகுப்பு; கப்பலோட்டியின் வகைமதிப்பு; வகைமதிப்புக்குரிய கப்பலோட்டி; பாரச்சார்பில் பந்தயப் படகின் வகை; பதவி ஆணை பெருத கப்பலோட்டி; வகைமதிப்புக்குரிய கப்பலோட்டிகளின் தொகுதி.

**rat′ing**[2], *n.* கடுஞ்சினக் கண்டனம்.

**ra′tio**, *n.* தகவு, வீதத்தொடர்பு, ஒன்றோடு ஒன்றனுக்குள்ள அளவையொட்டிய தொடர்பு; *pl.* ra′tios.

**ratio′cinate**, *v.* பகுத்தறிவைப் பயன்படுத்து; ஆராய்; முறைமையாக வாதிடு; முக்கூற்று வாதமுறையைக் கையாளு.

**ratiocina′tion**, *n.* ஆய்வாராய்வுமுறை; முழுநிறை ஆய்வுக் கூறு.

**ra′tion**, *n.* பங்கீடு, உணவு முதலிய பொருள்களின் ஆள் வீதபபாத்தீடு; வீதப்பங்கு, பங்குக்கூறு; படைத்துறையில் அன்றாட உணவுப்படி; அருந்தற்காலத் திட்ட உணவுக் கூறு; மளிகை-விறகு-துணி முதலிய பொருள்களில் ஆள் வீத உரிமைப்பங்கு; *v.* பங்கிடு செய், பொருள்கள் வகையில் திட்ட அளவு வரையறுத்துக்கொடு; (தொ.) ration card, பங்கீட்டு அட்டை; ration money, பங்கீட்டுப் பொருளுக்குப் பதிற் பணம்.

**ra′tional**, *a.* ஆறறிவுடைய, பகுத்தறிவு வாய்ந்த; அறிவாராய்ச்சிமுறை சார்ந்த; மட்டான; நேர்மை வாய்ந்த; நேரறிவு வாய்ந்த; அறிவுக்குப் பொருத்தமான; காரண காரியத் தொடர்புடைய; பொருத்தக்கேடற்ற; வரம்புமீறுத; மிகைபடாத; மடமை சாராத; பகுத்தறிவினடிப்படையிலமைந்த; சமயத்துறையில் ஆராய்ச்சிக்குப் பொருந்தாதன நீக்கிய; பழக்கவழக்கங்களில் பகுத்தறிவுக்கொவ்வாதன விலக்கிய; பெண்டிர் ஆடை வகையில் அங்கிபாவாடையின்றிக் குழலாடையுடைய; (கண.) மற்ற இயலெண்களுடன் கூருக்க நிலைத்தொடர்புடைய; (தொ.) rational horizon, நிலவுலகத்தின் மையத்தினூடு தொடுவானத்துக்கு ஒருபோகு ஆகவுள்ள தளம்; rational number, வேரளவை யல்லா எண்; rational quantity, வேர்நிலைச்சார்பற்ற அளவுரு; rational ratio, வேரளவை மேற்கொள்ளாத தகவு.

**rational′e**, *n.* அடிப்படைக்கோட்பாடு; பகுத்தறிவுக்கொத்த காரணம்; கொள்கைப்படியான தேற்ற விளக்கம்.

**ra′tionalism**, *n.* பகுத்தறிவுவாதம், சமயத்துறைத் தெய்விக நிகழ்ச்சிகள் உட்பட எல்லா வகைப்பட்ட செய்திகளிலும் பகுத்தறிவே மெய்ம்மையின் அடிப்படை என்று கொள்ளும் மனப்பாங்கு, அறிவாராய்ச்சிக் கோட்பாடு, மெய்ம் முடிவுகள் யாவுமே பகுத்தறிவுக்கொத்தவையாக இருந்து தீரவேண்டும் என்ற கோட்பாடு.

**ra′tionalist**, *n.* பகுத்தறிவுவாதி; *a.* பகுத்தறிவுவாதஞ் சார்ந்த; பகுத்தறிவுக் கொள்கை சார்ந்த.

**rational′ity**, *n.* பகுத்தறிவுக்குப் பொருத்தமாயிருக்குந் தன்மை; பகுத்தறிவுடைமை; பகுத்தறிவாராய்ச்சிப் பண்பு.

**rationaliza′tion**, *n.* அறிவுக்குப் பொருத்தமாக விளக்குதல்; அறிவார்ந்த விளக்கம்; பொருளுழைப்புக்காலங்களின் வீணழிவுத்தடுப்பு அமைதி; பொருந்துமுறை விளக்கச் செயல்.

**ra′tionalize**, *v.* பகுத்தறிவுக்கேற்ற விளக்கங்கூறு, நியாயங் காட்டி வாதிடு, ஆய்வறிவுக்கு இணங்கச்செய்; பகுத்தறிவு வாதியாயிரு; பகுத்தறிவு வாதியாகச் செயலாற்று; (கண.) விகிதமுரு மூலகங்களிலிருந்து விடுவி; பொருளியல் வகையில் தொழில் முறையிலே உழைப்பு-காலம்-பொருள்கள் வீணுவதைத் தவிர்த்துச் சீர்திருத்தஞ் செய்.

**ra′tionals**, *n. pl.* முன்பு மகளிர் பாவாடைக்குப் பதிலாக அணிந்துகொண்ட காற்சட்டை.

**ra′tions**, *n. pl.* உணவுப்பொருள்கள்; மளிகைச்சாமான்கள்.

**Rati′tae**, *n.* தட்டையான மார்பெலும்புடைய நெருப்புக்கோழி போன்ற பறக்காத பறவையினம்.

**rat′ite**, *a.* நெருப்புக்கோழிபோன்ற பறவாப் பறவையினஞ் சார்ந்த; பறவைகள் வகையில் தட்டையான மார்பெலும்புடைய.

**rat′lin, rat′line, rat′ling**, *n.* கப்பலின் பாய்மரக்கயிற் றேணியின் குறுக்குப் படிக்கயிறு.

**ratoon′**, *n.* கரும்புப்பயிர் அரிதாள் முளை; *v.* அரிதாள் முளைவிடு, புதுத்தளிர்விடு.

**Rats**, *int.* முழு முட்டாள்தனம்; நம்பமுடியாதது.

**rats′bane**, *n.* எலிப்பாசாணம்.

**rat′s′-tail**, *n.* எலிவால்; எலிவால் வடிவப் பொருள்; அரத்தின்வகை.

**rat′-tail**, *n.* மயிரற்ற குதிரைவால்; மயிரில்லாத வாலுடைய குதிரை; (தொ.) rat-tail spoon, பின்பக்கத்தில் வால் போன்ற நீண்ட கைப்பிடியுடைய கரண்டி.

**rat′-tailed**, *a.* எலியினது போன்ற வாலுடைய; எலிவால் போன்ற.

**rattan′**, *n.* பிரம்புப்பனை; பிரப்பங்கழி.

**rat-tat′, ratatat′, rat′-tat-tat′**, *n.* கதவுப்பிடியின் தட்டொலி.

**ratt′en**, *v.* தொழிற்கருவி கெடுத்துத் தீங்குசெய், கருவியழிவு வேலையால் தொழிலாளர்க்குக் குந்தகஞ் செய்; கருவியழிவால் தொழில் முதல்வர்க்கு நட்டம் உண்டுபண்ணு.

**ratt′er**, *n.* எலிகளைக் கொல்பவர்; எலிகளைப் பிடித்துக் கொல்லும் நாய்; இடர்நேருங்கால் கட்சியை விட்டோடுபவர்.

**rat′tle**, *n.* கிலுகிலுப்பை, கிலுக்கு விளையாட்டுக்கருவி; நச்சுப்பாம்பு வகையின் வாலில் உள்ள கிலுகிலுக்கும் முள் வளையங்கள்; கிலுகிலுக்கும் உலர் விதைகளையுடைய செடி வகை; கலகல ஒலி, ஆரவாரம், ஆர்ப்பாட்டம், மகிழ்ச்சிக் கூக்குரல்; பிதற்றல், சலசலப்பு, வம்பளப்பு; இடைவிடாது கலகலப்பாகப் பேசுபவர்; *v.* கிலுகிலுப்பொலி எழுப்பு; கிலுகிலுப்பொலி செய்; கிலுகிலுப்பையை ஆட்டி ஒலிசெய்; கதவு-பலகணிகளை ஆட்டிச் சடச்சட என ஒலியெழுப்பு; கதவு-பலகணிகள் வகையில் கடகடவென்று ஒலிசெய்; ஆராயா வெற்றுப்பேச்சு பேசு; சடசட என்று ஓட்டு; சடசடவென்று விழு; கடகடவென்று ஓடு; விரைந்து இயக்கு; விரைந்து செல்; விரைந்து பேசு; கடகடவென்று கூறு; விடாது ஒப்புவி; கிளர்ந்தெழு, ஆரவாரஞ் செய்; (பே-வ.) தூண்டி எழுப்பு, கிளர்ச்சியூட்டு; கலக்கமுண்டுபண்ணு; அச்சுறுத்து; வெருட்டு, அச்சுறுத்தித் துரத்து; விரைவுபடுத்து.

**rat′tle-bag**, *n.* கிலுகிலுப்பை.

**rat′tle-bladder**, *n.* மெல்லிய தோற்பைக் கிலுகிலுப்பை.

**rat′tle-box**, *n.* பெட்டி வடிவக் கிலுகிலுப்பை.

**rat′tle-brain**, *n.* வெற்றுமூளையர், அறிவற்றவர்.

**rat′tle-head**, *n.* குடுகுடுப்பையர், வெற்றுரையாடுபவர்.

**rat′tle-pate**, *n.* வெறுமூளையர், எளிதில் குணம் மாறுபவர்.

**ratt′ler**, *n.* குடுகுடுப்பையர், வெற்றுரையாடுபவர்; சரசர வென்று நடப்பவர்; விரைவாக வண்டியோட்டுபவர்; (பே-வ.) வாலில் கலகலவென்று ஒலிசெய்யும் முள் வளையங்களுடன் கூடிய அமெரிக்க நச்சுப்பாம்புவகை; செம்மையான அடி; இனத்தின் மிகச்சிறந்த உருமாதிரி.

**rat′tle snake**, *n.* சங்கிலிக்கறுப்பன் எனும் பாம்புவகை, வாலில் கலகலவென்று ஒலிசெய்யும் முள்வளையங்களுடன் கூடிய அமெரிக்க நச்சுப்பாம்பு வகை.

**rat′tletrap**, *n.* ஆட்டங்காணும் வண்டி; ஓட்டை உடைசலுடன் ஆட்டங்கொண்டு இயங்கும்பொருள்; *a.* ஓட்டை உடைசல்களுடன் ஆட்டங்காணுகிற.

**rat′tletraps**, *n. pl.* விந்தைத் துண்டு துணுக்குப் பொருள்கள், ஓட்டை உடைசல்கள்.

**rat′tling**, *a.* தடதட என ஒலிக்கிற; சுறுசுறுப்பான; *adv.* குறிப்பிடத்தக்க வகையில்.

**rat′-trap**, *n.* எலிப்பொறி; மிதிவண்டியின் பற்களமைந்த மிதிப்படி.

**ratt′y**, *a.* எலிபோன்ற; எலிகளாற் பீடிக்கப்பட்ட; துயர மிக்க நிலையில் உள்ள; சிடுசிடுப்புவாய்ந்த; எளிதிற் சினங் கொள்ளுகிற.

**rauc′ous**, *a.* கரகரப்பான, கம்மிய, கரட்டொலியுடைய.

**raught′y**, *a.* (பே-வ.) நுகர்ந்து மகிழ்தற்குரிய; வேடிக்கையிலுங் கிளர்ச்சியிலும் விருப்பமுடைய.

**rauque**, *a.* = **raucous.**

**rav′age**, *n.* பாடழிவு, அழிபாடு; *v.* பாழ்படுத்து, பாடழிவு செய்; கொள்ளையடி, சூறையாடு.

**rav′ages**, *n. pl.* அழிவினைவுகள்; சூறையாட்டின் அழிவுத் தடங்கள்.

**rave**[1], *n.* வண்டியின் கைப்பிடிக் கம்பியழி.

**rave**[2], *n.* சீற்ற ஆர்ப்பரிப்பு; காற்றின் குமுறல்; ஆர்ப்பொலி; *v.* வெறிகொண்டு ஆர்ப்பரி, மூர்க்கமாகப்பேசு; காற்று வகையில் கொந்தளித்தெழு; கடல்வகையில் கொந்தளித்தோலமிடு; மட்டுமீறிப் பாராட்டிப்பேசு; எல்லைமீறி மகிழ்ந்தார்ப்பரி; உளறு, பிதற்றுரையாடு.

**rav′el**, *n.* சிக்கல், முடிச்சு; சிதர்முனை, தேய்ந்து சிதைந்த ஓரம்; *v.* சிக்கலாக்கு, குழப்பு; சிக்கிக்கொள்; சிக்கல் நிலை பெருக்கு; நூல் முறுக்கவிழ்; சிக்கலகற்று; கூறுகப் பிரித்துக் காண்.

**rav′elin**, *n.* முற்றுகையிட்ட அரண்முன் உள்ள இருமுக அகழி.

**rav′eling**, *n.* முறுக்கவிழ்ப்பு; முறுக்கவிழ்ந்த நூல்.

**rav′en**[1], *n.* அண்டங்காக்கை; *a.* அண்டங்காக்கையைப் போலக் கரிய.

**rav′en**[2], *v.* கொள்ளையிடு, கொள்ளையடித்துக்கொண்டு செல்; இரை தேடித் திரி, கொள்ளைப்பங்கு நாடிச்செல்; பெருந்தீனி கொள்; கடும்பசியுடையவராயிரு.

**rav′enous**, *a.* இருஞ்சுகிற, கொடுங் கொள்ளையிடுகிற; பெருந்தீனி கொள்கிற; பெருந்தீனி அவாவுகிற; கடும்பசியுள்ள.

**raves**, *n. pl.* செருகுதட்டி, வண்டியின் கொள்ளளவை அதிகப்படுத்த அதன் பக்கங்களில் நிலையாக அல்லது தற்காலிகமாக இணைக்கப்படும் பணிச்சட்டம்.

**rav′in**, *n.* (செய்.) வழிப்பறி, கொள்ளை; வேட்டை; இரை கவர்வு, கொண்டி.

**ravine′**, *n.* குறுகிய மலையிடுக்கு, இடுக்குவழி, இடுங்கிய கணவாய்.

**ravined′**, *a.* நீர் அரித்தோடிய இடுக்குகளையுடைய, நெடு விடர்கள் அமையப்பெற்ற.

**rav′ings**, *n. pl.* சன்னிப்பிதற்றல்கள், தொடர்பற்ற அல்லது முறையற்ற பேச்சு.

**rav′ish**, *v.* வன்முறையாகத் தூக்கிக்கொண்டு செல்; வாழ்வினின்று பறித்துக் கொண்டுபோ; கண்காணுமற் கொண்டு செல்; கற்பழி; வசியப்படுத்து, தன்வயமிழக்கச் செய்.

**rav′ishing**, *a.* பரவசப்படுத்துகிற; கவர்ச்சியூட்டுகிற.

**raw**, *n.* உடலில் தோலுரிக்கப்பட்ட இடம், புண்ணான இடம்; கூருணர்ச்சியுள்ள இடம்; *a.* சமைக்கப்படாத; பச்சையான; கைவினைப்படா நிலையிலுள்ள, படைத்து உருவாக்கப்படாத, முழுவதுஞ் செய்துருவாக்கப்படாத; செப்பமற்ற; அனுபவமில்லாத, பயிற்சிபெறாத, திறமையற்ற, துறைக்குப் புதிய; தோல் உரிக்கப்பட்ட, சதை தெரியும்படியுள்ள, தோல் வகையில் உராய்ந்து தேய்ந்துவிட்ட, பச்சைப் புண்ணாயிருப்பதனால் தொட்டால் கூருணர்வுடைய; குளிர்மிக்க; ஈர நயப்புமிக்க; *v.* தேய்த்துப் புண்ணாக்கு; குதிரைமீது தேய்த்துக் கூருணர்வுடையதாக்கு; (தொ.) raw brick, பச்சைச்செங்கல்; raw deal, நேர்மையற்று நடத்துமுறை; raw edge, துணிவகையில் ஓர அமைவில்லா விளிம்பு; raw grain, ஊறவைத்து மாவாக்கப்படாத கூலம்; raw head and bloody bones, குழந்தைகளுக்குக் காட்டப்படும் பூச்சாண்டி, கதை சொல்லும் பாணிவகையில் மூடி மறைக்காமல் கோரமான வடிவம்; raw hide, பதனிடப்படாத தோல்; பதனிடப்படாத தோலாற் செய்யப்பட்ட கயிறு அல்லது கசை; raw material, மூலப்பொருள், செய்பொருளுக்குரிய மூல இயற்கைப்பொருள்; raw silk, புழுக்கூட்டிலிருந்து எடுத்த மேலீயாக உருளையிற் சுற்றப்பட்ட பட்டு; raw spirit, நீர்கலந்து ஆற்றல் மட்டுப்படுத்தப்படாத சாராயம்; touch one on the raw, கூருணர்ச்சியைத் தொடக்கூடிய வகையில் ஒருவரைப் புண்படுத்து.

**raw′-boned**, *a.* சதைப்பற்றில்லாத எலும்புகளையுடைய, எலும்புந் தோலுமான.

**ray**[1], *n.* ஒளிக்கதிர், கிரணம்; கதிர்வரை நேர்கோடு; ஒளிக்கற்றை, புள்ளியூடாகக் குவிந்துசெல்லும் கதிர்களின் குவிவு; விரிந்துசெல்லும் வட்ட வரையின் ஆரம்; வெப்பக்கதிர்; ஆற்றலலைக்கதிர்; சிற்றொளி; சிறிதளவு அறிவு விளக்கம்; அறிவு விளக்கத் தொடக்கம்; அறிவொளி; மகிழ்ச்சிக்கூறு; (தாவ.) கொத்துமலரின் ஓரப்பகுதி; (வில.) உடுமீன் வகையின் சினையுறுப்பு; *v.* கதிர்வீசு; ஒளிகாலு; நம்பிக்கைச் சுடர்விடு; எண்ண அலைதோன்று; (செய்) வீசு; வீசச் செய்; (தொ.) Becquerel rays, கதிரியக்கப் பொருள்கள் காலும்

கதிர்கள்; Rontgen rays, X rays, ஊடுருவு கதிர்கள், சாதாரண ஒளி புகமாட்டாத பல பொருள்களை ஊடுருவிச் செல்லுங் கதிர்கள்.

**ray**[2], *n.* திருக்கை மீன்.

**Ray'ah**, *n.* முஸ்லிமல்லாத துருக்கிய குடிவாழ்நர்.

**ray'on**, *n.* மரவிழைப்பட்டு, மரக்கூறினின்றும் இயற்றப்படும் செயற்கைப்பட்டு வகை.

**raze**, *v.* துடைத்தழி; மறக்க அடி, தரைமட்டமாக்கு; பாழடி, முழுதும் அழி.

**razee'**, *n.* (வர.) குறைகலம், மேல்தளங்களை அகற்றி உயரங் குறைக்கப்பட்ட கப்பல்; *v.* மேல் தளங்களை அகற்றிக் கப்பலின் உயரத்தைக் குறை.

**raz'or**, *n.* கூர்மென்கத்தி, சவரக்கத்தி.

**ra'zor-back**, *n.* சவரக்கத்தியின் விளிம்பு போன்ற கூர்மை யான முதுகு; முதுகந்துடுப்புடைய திமிங்கிலம்; கூர்முது குடைய பன்றிவகை; *a.* கூர்முகட்டு விளிம்புடைய.

**raz'or-bill**, *n.* சவரக்கத்தி வடிவ அலகுடைய பறவைவகை.

**raz'or-edge**, *n.* கூர்விளிம்பு, கூர்மையான மலைமுகடு, வேறு படுத்தும் வரை நுட்பப்பிளவு; நுண்ணய நெருக்கடி நிலைமை; (தொ.) be on a razor edge, be on a razor's edge, இடர்ப் பாடுகளிடையே பேராபத்தில் இரு.

**raz'or-fish, raz'or-shell**, *n.* சவரக்கத்தியின் பிடிபோன்ற இணைதோடுகளை உடைய நத்தைவகை.

**razz'ia**, (அரா.) *n.* சூறையாட்டு, எதிரிநாட்டினுட் புகுந்து கொள்ளையடித்தல்.

**raz'zle, raz'zle-daz'zle**, *n.* அருங்கருங் கூத்து; கிளர்ச்சிச் சும்மை; சுற்று வாகன ராட்டினம்.

**R-boat**, *n.* விசைக்கண்ணிவாரி, கடற்கண்ணிகளை வாரி யகற்றும் செர்மன் விரைவிசைக்கலம்.

**reach**, *n.* எட்டுதல்; சென்றெட்டும் ஆற்றல்; கை எட்டுந் தொலை; நீட்டெல்லை, எட்டுந் தொலை; ஆற்றல் எல்லை; செல்வாக்கு எல்லை; இயக்க எல்லை; செயல்வரம்பு; எட்டும் எல்லை, கிட்டும் வாய்ப்பெல்லை; தொடர்ச்சி; இடையறு நீள் எல்லை; பரப்பு; செல்வாக்குச் சூழல்; ஆற்றற் சூழல்; ஒரு நோக்காட்சியளவெல்லை; (கப்.) திசைமாற்றங்களுக்கு இடைப் பட்ட தொலை; *v.* எட்டு; கைநீட்டு; கைநீட்டித்தொடு; கைநீட்டிக்கொடு; கொண்டு கொடு; சென்றடை; சென்று சேர்; இலக்கை அடை; நோக்கம் நிறைவேறப்பெறு; எய்தப் பெறு; கருவிகளாற் சென்றெட்டப்பெறு; எறிபடைகளாற் சென்று அடையப் பெறு; நீண்டு கிட; பரந்துகிட; ஆற்றல் எல்லையாகக் கொள்; செல்வாக்கு எல்லையாகக் கொள்.

**react'**, *v.* எதிர்ச்செயலாற்று; எதிர்விளைவுறு; புறத்தூண்டு தலுக்கு எதிர்த்தாக்குச் செய்; இயல்மாறுபடு; எதிர்த்தடி; பின்னடை, பின்செல்; இயல்வெறுப்புக்கொள்; (வேதி.) எதிர்ச்செயல் எழுப்பு; பண்பு வெளிப்படுத்து.

**reac'tion**, *n.* எதிர்ச்செயல்; எதிர்விளைவு; அக எதிரசைவு, புறத் தூண்டுதலுக்கு எதிரான அக எதிரியக்கம்; கருத்து எதிரலை, சார்வெதிர்வுக் கருத்து; எண்ண இயற்படிவு, கருத் துத் தடம்; சூழ்விளைவு ஆற்றல்; மீட்சி, முன்னிலை மீள்வு; பிற்போக்கு; (படை.) எதிரடி, எதிர்த்தாக்கு; (வேதி.) புறத் தாக்குதலால் ஏற்படும் இயல்மாறுபாடு; பதிவு; விளைவு.

**reac'tionary**, *n.* பிற்போக்காளர், முன்னுள் அரசியல்நிலை களை மீட்டுங் கொண்டுவர முயல்பவர்; *a.* பிற்போக்கான, முன்னுள் அரசியல்நிலைகளை மீட்டுங் கொண்டுவர முயலுகிற.

**reac'tivate**, *v.* மீட்டுஞ் செயற்படுத்து, மறுபடியும் ஊக்க மூட்டு.

**read**[1], *n.* வாசிப்பில் ஒருமுச்சு; *v.* படி, பார்த்து அறி; வாசி, வாய்விட்டுப் படி; வாய்க்குள்ளாக வாசி, மனத்துக்குள்ளாகப் படி; உணர்ந்து படி, படித்துணர்; வழக்கமாகப் படி; ஏடு பயில்; கல், பாடங் கற்றுக்கொள், கற்றுணர்; எழுத்துருவிற் காண்; செய்தி கண்டுணர்; குறியீடு உணர்; குறிப்புப் பொருள் காண்; புதிர்விடுவி; மறைபொருள் காண்; உள்ளத்திற் பொருள்காண்; பொருட்படுத்து; பொருள் அளி; பொருள் வருவி; தொனிப் பொருள் வரவழை; கல்விநிலை யத்திற் பயில்வுறு; பாடபேதமாகக் கொள்; பாடபேதமாக இயலு; செய்தியைக் குறித்துக் காட்டு; எழுத்துருவிற் காட்டு; தொகை குறித்துக்காட்டு, அளவு குறித்துக்காட்டு; வாசிப்பதற்கு அமைவாயியலு; வாசகர் உளந்தூண்டு; வாசிப்பின் பயனுக இயக்கு; வாசிப்பின் பயனுகப் பெறு.

**read**[2], *v.* read [1] என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**read'able**, *a.* படிப்பதற்கினிய.

**readdress'**, *v.* முகவரி மாற்றியெழுது.

**read'er**, *n.* வாசிப்பவர்; படிப்பவர்; பொருள் கண்டுணர் பவர்; கையெழுத்துப்படிகளைப்பற்றிக் கருத்தறிவிப்போர்; அச்சகப்படி திருததுவோர்; உரத்துப் படிப்பதற்காகத் திருக்கோயில்களில் அமர்த்தப்படும் வாசிப்பாளர்; பல்கலைக் கழக உயர்விரிவுரையாளர், துணைப் பேராசிரியர்; மொழிப் பாடபுத்தகம்.

**rea'dily**, *adv.* மனமார, உடனடியாக, தடையின்றி.

**rea'diness**, *n.* உடனடி ஏற்பு; பணிவேற்பு; தடையிலா விருப்பம்; தடங்கலிலா எளிமை; ஆயத்த நிலை; செயல் விரைவுத்தகுதி; விரைவாதத் தகுதி; உடனடிச் செயலொருக்க நிலை.

**read'ing**, *n.* படித்தல்; வாசிப்பு; வாசிக்கும் ஆற்றல்; புத்தக வாசிப்பு, கல்விப்பரப்பு, இலக்கியப் பழக்கம்; சட்டப் பகர்ப்புகளின் மன்றவாசிப்பு முறை; பொதுமக்களுக்கான வாசிப்புப் பணியுதவி; பதிப்பின் பாடபேதம்; வாசிப்பிற் குரிய பொருள்; வாசிப்பின் கவர்ச்சிநிலை; வாசித்துணர் தற்குரிய பொருட்செறிவு; அளவுக்கருவிகள் காட்டுங் குறிப்பு; பொருள்கோள்; கொள்கருத்து; விளக்கமுறை; குறிப்புணர்வு.

**read'ing-room**, *n.* படிப்பகம்.

**rea'dy**, *n.* துப்பாக்கியின் வணக்கமுறைக்கு முன்னுள்ள உடனடி ஏந்துநிலை; *a.* உடனடியாகப் பயன்படுத்தத்தக்க, ஆயத்தமான; செயல்தகுதி நிலையிலுள்ள; முன்னேற்பாடு கள் முடிந்த; முன்னதாகக் கருவிகலங்கள் பூட்டிய; செயலுக்கு உடனடி ஒருங்கிய நிலையிலுள்ள; செயல் துணிந்த; முடிவாகத் தீர்மானத்துக்கு வந்த; தடங்கலற்ற; தட்டுத்தடங்கலின்றி ஒழுகுகிற; செயல்விரைவுடைய, விரைவெளிமையுடைய; முழுவிருப்புடைய; மனமார்ந்து முனைகிற; கைவசமான; எளிதிற் கிடைக்கும் நிலையிலுள்ள.

**rea'gency**, *n.* எதிர்த்தாக்காற்றல்; எதிர்த்தாக்குதல்.

**rea'gent**, *n.* (வேதி.) எதிர்த்தாக்காற்றல் மூலம் சேர்மத்தின் பொருட்கூறு கண்டுணர உதவும் பொருள்; எதிர்த்தாக்குதல் காட்டும் பொருள்; எதிர்த்தாக்காற்றல்.

**re'al**[1], *n.* ஸ்பானிய மாநிலங்களில் பயன்படுத்தப்பட்ட முற்கால வெள்ளி நாணயம்.

**re'al**[2], *n.* உளதாம் பொருள்; உள்ளதன் ஆர்வலர்; *a.* புறவுலகில் இருக்கிற; மெய்யான; போலியல்லாத; இயல்பான; செயற்கையல்லாத; மனமார்ந்த; பொருண்மை வாய்ந்த; பெயரளவில் அல்லாத; தோற்றமட்டில் அல்லாத; ஊகமல்லாத; புனைவல்லாத; நடிபபுப்போலியல்லாத; புறவேடம் அல்லாத; செல்லுபடியாகிற; புலன்களால் அறியப்படுகிற; மெய்த்தசைக் குருதியுடைய; மெய் உயிர்ப் புடைய; பொய்ம்மையல்லாத; உருபபுனைவற்ற; உள்ளார்ந்த; மெய்ப்பண்பார்ந்த; உயர்பண்பார்ந்த; நற்பண்பார்ந்த; உடைமை வகையில் நிலவரமான; (மெய்) சார்பிலா மெய்ம்மை வாய்ந்த; தற்சார்பான மெய்ம்மையுடைய; (தொ.) the real, பொருளியல் மெய்ம்மை.

**real'gar**, *n.* உள்ளிய இருகந்தகை; சாயமாகவும் வெடி மருந்துக் கூறுகவும் பயன்படும் செந்தாளகம்.

**re'alism**, *n.* கருத்து மெய்ம்மையியல், கருத்தியலான பொது எண்ணப் படிவங்களுக்குப் புறவாய்மை உண்டு என்று கூறிய முற்காலச் சமய அறிவுத்துறைக் கோட்பாடு; புற வாய்மையியல், புலனுல் அறியப்படும் பொருள்களுக்குப் புற வாய்மை உண்டென்னுங் கொள்கை; இயல்வாய்மை, இயல்புவழாமை, தப்பெண்ண மறைப்பின்மை; மரபுத்

திரிபின்மை ; செயல்திறக் கருத்து ; செயல்முறைக் கோட்பாடு ; இயற்கை வழுவாச் சித்திரிப்பு ; கலைத்துறைப் புறவாய்மை ; நுணுக்க விவரம் விடாச் சித்திரிப்பு.

**re'alist**, *n.* உள்ளதன் ஆர்வலர் ; செயல்துறைக் கோட்பாட்டாளர் ; புறவாய்மையாளர், கனவியலாளர் அல்லாதவர் ; *a.* புறவாய்மையுடைய.

**realis'tic**, *a.* புறவாய்மை வழாத; உயிர்த்தோற்றங் குன்றாத; இழிந்ததாயினும் அண்மையானது பற்றிய புறவாய்மைக் கோட்பாடு சார்ந்த.

**realis'tically**, *adv.* புறவாய்மைக் கோட்பாட்டின்படி ; புறவாய்மையுடன் ; செயல்திற மனப்பான்மையுடன் ; உள்ளதன்கண் ஆர்வமாக.

**real'ity**, *n.* மெய்ம்மை ; கற்பனையல்லாதது ; மூலப்பண்புக் கூறு ; உயிர்த்தோற்றம் ; பொருளின் மூல இயல்பு, வெளித் தோற்றங்கடந்த உள்ளார்ந்த தன்மை; புற இயல் மெய்ம்மை; மெய்யியல்பு.

**re'alizable**, *a.* கைகூடக்கூடிய ; காசாக மாற்றக்கூடிய ; செயலுருவாகத்தக்க; மெய்யாகக் காணத்தக்க; உணரத்தக்க.

**realiza'tion**, *n.* மெய்யாக்குதல் ; மெய்யாகக் காண்டல் ; உணர்தல் ; காசாக்குதல் ; கைகூடுதல், கைவரப்பெறுதல்.

**re'alize**, *v.* செயலுருவாக்கிக் காண் ; மெய்யுருவாக்கிக் காண் ; மெய்ம்மைத் தோற்றம் அளி ; மெய்யுருவாக்கிக் காட்டு; கருத்துருவாகப் புனைந்து காண்; தெளிவாக உணர்; விளக்கவிவரமாகக் காண்; நுணுக்க விவரங்களுடன் உணர்; உடைமை வகைகளைக் காசுருவாக்கிக் காண்; திரட்டிக்குவி ; விலையாகப் பெறு.

**re'ally**, *adv.* மெய்யாக, உறுதியாக, செயலுருவாக, நடைமுறையாக, சிறிதும் ஐயத்திற்கிடமின்றி.

**realm**, *n.* ஆட்சி ; அதிகார எல்லை ; மண்டலம், துறை.

***Real'politik***, (செர்.) *n.* நாட்டினக் கழிகாதல், தன் நாட்டினத்தவரின் வசிவளன்களுக்குப் பின்வைத்தே எதனையும் மதிக்குங் கொள்கை.

**re'altor**, *n.* நிலவரப் பண்ணைச் செயல்முகவர்.

**re'alty**, *n.* நிலவர உடைமை, தாவரச்சொத்து.

**ream**[1], *n.* 20 தாள்மடி, 480 தாள்கள் அடங்கிய கட்டு ; கழிவுச் சரியீடு சேர்த்து 500 தாள்கள் அடங்கிய கட்டு.

**ream**[2], *v.* உலோகத்தின் துளை பெரிதாக்கு ; துப்பாக்கித் தோட்டாவின் விளிம்பை வளைத்தகற்று ; கப்பற் பலகை இணைப்பைப் பொருத்துவதற்காகப் பிரித்தெடு.

**reams**, *n. pl.* எழுதுதாள்களில் அதிக எண்ணிக்கை.

**rean'imate**, *v.* புத்துயிர்கொடு ; பிழைப்பி, மீட்டும் உணர்வு வருவி.

**reanima'tion**, *n.* மீட்டு உயிர்ப்பூட்டல் ; மீட்டுயிர்ப்பு.

**reap**, *v.* அரி, அறுவடைசெய் ; அரிவாள்கொண்டு அரி ; அறுவடை குவி ; விளைபயன் துய்.

**reap'ing-hook**, *n.* அரிவாள்.

**reap'ing-machine**, *n.* அறுவடை இயந்திரம்.

**reappa'rel**, *v.* உடைமாற்றிப் புதிதாக அணி.

**reappear'**, *v.* மறுபடியுந் தோன்று.

**reappoint'**, *v.* மீட்டும் அமர்த்து ; மறுபடியுங் குறித்துறுதி செய்.

**reap'-silver**, *n.* அறுவடைப் பணிக்குப் பதிலாகப் பெறுங் காசு.

**rear**[1], *n.* கூழைப்படை, படையின் பிற்பகுதி ; பின்கோடி ; பின்புறம்; பின்பகுதி; (பே-வ.) மலங்கழி இடம்; *a.* பின்னால் உள்ள, பின்புறமான.

**rear**[2], *v.* உயர்த்து ; நிமிர்த்து ; எழுப்பு ; கட்டு ; தூக்கு ; தூக்கிப்பிடி ; வளர்த்து உருவாக்கு ; பயிற்றுவித்து வளர் ; ஊட்டி வளர் ; பேணிவளர் ; கல்வி பயிற்றுவித்து வளர் ; பயிரிடு; பண்ணை வளர் ; குதிரை வகையில் எகிறு, பின்னங் காலால் எறி.

**rear'-ad'miral**, *n.* கடற்படைத் துணைத்தலைவருக்கு அடுத்த பணியாளர்.

**rear'-arch**, *n.* சுவரின் உட்புற அணைப்பு வளைவு.

**rear'er**, *n.* வளர்ப்பவர்

**rear'-guard**, *n.* பின்னணிப் பாதுகாவற்படை, பின்வாங்கும் போது பின்புறம் பாதுகாக்க அனுப்பப்படும் காவற் படைப் பிரிவு ; (தொ.) rear-guard action, எதிரியுடன் பின்னணிக் காவற்படையின் கைகலப்பு.

**rearm'**, *v.* மீட்டும் படைக்கலம் ஏந்துவி ; புதுப்படைக் கருவிகள் தாங்குவி.

**rear'-vault**, *n.* வாயிலக மதில் உள்மாடம் ; பலகணி மதில் உள்மாடம்.

**rear'-ward**[1], *n.* = rear-guard.

**rear'ward**[2], *a.* பின்னோக்கிய, பின்னணி நோக்கிய, பின்புறஞ் சார்ந்த.

**rear'-ward**[3], **rear'-wards**, *adv.* பின்நோக்கி, பின்புறம் நோக்கி.

**re-ascend'**, *v.* மீட்டும் ஏறு.

**reason**, *n.* காரணம் ; ஏது, வாதகாரணம் ; வாத ஆதாரம் ; நம்பிக்கை ஆதாரம் ; செயல்விளக்க ஆதாரம் ; செயல் நோக்கம் ; செயல்நோக்க விளக்கம் ; நியாயம், உள்ளார்ந்த விளக்கம் ; முடிவுவிளக்கம் ; முகாந்தரம், செயற்காரணம் ; விளக்கக்கூற்று, விளக்க வாசகம் ; மெய்யறிவு, அறிவு கடந்த உணர்வு ; அறிவுரு, கடவுள் ; அறிவாராய்ச்சித் திறம் ; பகுத்தறிவின் முடிவு ; பகுத்தறிவுக்கு ஒத்தநிலை ; விவேகம், பகுத்தறிவு செயலாற்றும் நிலை ; நேர்மை ; ஒழுங்கு; உய்த்துணர்வு; வாதநேர்மை; பொருத்தமுடைமை, முரணின்மை ; யுக்தி, இயைபுணர்வு ; நேர்நெறி, நல்வழி ; நேரிய செயல் முறை ; நீதி, நேரிய நடத்தை ; நடைமுறை நலம் ; நடைமுறைக்கு உகந்த நலம் ; மாட்டொழுங்கு ; மட்டியல் நடை ; இயல்பொழுங்கு ; நல்லறிவு நிலை ; நல்லுணர்வு நிலை ; மயக்கமின்மை ; (அள.) நிமித்தம், முடிவு வலியுறுத்தும் ஆதாரம் ; *v.* வாதிடு ; ஆராய்ச்சி செய் ; சீர்தூக்கிப் பார் ; காரணகாரிய முறையில் விளக்கு; காரண காரியத் தொடர்பாக ஆராய்ச்சிசெய் ; அளவைநூல் முறைப்படி செய்திகளை அடுக்கிக்காட்டு ; பகுத்தறிவைப் பயன்படுத்து ; பகுத்தறிவுக்கு ஒத்ததாகக் காட்டு, யுக்திபூர்வமாகத் தருவி ; காரணகாரிய முறையில் ஆராய் ; பரிசீலனை செய் ; ஆய்ந்து முடிவுசெய், ஆராய்ச்சியால் முடிவுக்கு வா ; உய்த்தறிவால் உணர், யூகி ; விவாதி ; தர்க்கமிடு ; வாத முறையிற் பேசு ; வாதமுறையாகக் கூறு ; காரணகாரியமாக விளக்கு ; வாதிட்டு முடிவுசெய் ; வாதிட்டுப் பார், வாதத்துக்காகப் பேசிப்பார் ; வாதிட்டு இணக்குவிக்க முயல்; வாதத்தால் இணக்குவி ; எண்ணிப்பார், வாதத்துக்காகக் கருத்தில் ஆய்ந்து பார்.

**reas'onable**, *a.* வாதத்திற்கு ஒத்த ; வாதத்திற்கு இணங்குகிற ; நேரிய, நியாயமான ; பொருத்தமான, முரண்பாடற்ற; தகுதியான ; மட்டான, சமநிலையான ; கழிமிகையற்ற ; எதிர்பார்க்கத்தக்க ; போதிய.

**re-assem'ble**, *v.* மறுபடியுங் கூடு; மீண்டும் ஒருங்கு திரட்டு.

**re-assert'**, *v.* மற்றும் ஒருமுறை உறுதி செய், மீண்டும் வற்புறுத்திக்கூறு.

**re-asser'tion**, *n.* மறுமுறை வற்புறுத்தல் ; மற்றும் ஒரு முறை உறுதிசெய்தல் ; மறுமுறைத் துணிபுரை, துணிந்துரைத்ததையே மீட்டுந் துணிந்துரைத்தல்.

**re-assess'**, *v.* திரும்பவும் வரிவிதிப்புச் செய் ; புது வரிவிதிப்புச் செய் ; மறுவிலைமதிப்புச் செய், புதிதாக மீட்டும் விலைமதி ; மறு மதிப்பீடு செய், புதிதாக மீண்டும் மதிப்பிடு.

**re-assess'ment**, *n.* மறு வரிவிதிப்பு ; புது வரிக்கணிப்பு ; மறு விலைவிதிப்பு ; மறு மதிப்பீடு.

**re-assume'**, *v.* மறுபடியும் பாவனை செய் ; மீட்டும் ஊகஞ்செய் ; திரும்பவும் எண்ணு ; குத்துமதிப்பாக மறுபடியுங் கொள்.

**re-assump'tion**, *n.* மீட்டும் பாவணையாக மேற்கொள்ளுதல்; மறு ஊகம்; மறு தற்புணைவு; மறுபடியும் குத்து மதிபபாகக் கொண்டது.

**reassure'**, *v.* திரும்பவும் உறுதிசெய்; இழந்துவிட்ட நம்பிக்கையை மீட்டளி.

**reassur'ing**, *a.* திரும்பவும் நம்பிக்கையூட்டுகிற, ஐயப்பாடு அகற்றுகிற, அச்சந் தெளிவிக்கிற.

**Re'aumur**, *n.* ரியமூர் வெப்பநிலைமானி, உறைவரை சுன்ன மாகவும் கொதிவரை 80 பாகையாகவும் உள்ள தட்பவெப்ப மானி வகை.

**reave, reive**, *v.* (செய்.) தட்டிப்பறி; வல்லந்தமாகக் கைப் பற்று; வலிந்து கொண்டுபோ; அழிமதி செய்.

**rebaptize'**, *v.* மறுதீக்கை பெறுவி, மறுபடியும் பெயரீட்டு விழாச் செய்.

**reb'ate**[1], *n.* தொகை கழிப்பு, தள்ளிக்கொடுப்பு, குறைப்பு; தீர்வை தள்ளித் திருப்பிக் கொடுத்தல்.

**rebate'**[2], *v.* தொகையில் குறைத்துக்கொள், தள்ளிக்கொடு; தீர்வை மிகை திருப்பிக்கொடு.

**reb'ec, reb'eck**, *n.* இடைநிலைக்கால முந்நரப்பிசைக்கருவி வகை.

**reb'el**[1], *n.* கலகக்காரர்; ஆட்சி எதிர்ப்பாளர்; கட்டுப்பாடு எதிர்ப்பவர்.

**rebel'**[2], *v.* கலகஞ்செய், எதிர்க்கிளர்ச்சி செய்; கட்டுப் பாடெதிர்; ஆட்சியை எதிர்.

**rebell'ion**, *n.* எதிரெழுச்சி, படைக்கிளர்ச்சி; அடங்காமை, பணியாமை, எதிர்ப்புணர்ச்சி.

**rebell'ious**, *a.* ஆட்சியை எதிர்க்கிற, எதிர்த்தெழுகிற, படைக்கலங்களுடன் கிளர்ச்சி செய்கிற; அடங்காத, பணியாத; சட்ட ஆட்சி மீறுகிற; பிடிக்கு அமையாத; ஒழுங்குமீறிய; கையாளமுடியாத; (மரு.) மருத்துவ ஒழுங்கு கட்குக் கட்டுப்படாத, வகைதுறை மீறிய.

**rebell'ow**, *v.* (செய்.) உரக்க எதிரொலி செய்.

**rebind'**, *v.* புத்தகத்தை மறுமுறை கட்டு.

**re-birth'**, *n.* மறுபிறப்பு.

**rebite'**, *n.* செதுக்குத் தகட்டின் வடுப்பட்ட கூறு.

**reb'oant**, *a.* (செய்.) உரக்க எதிரொலி செய்கிற, ஓசை முழக்கமுடைய.

**rebound'**, *n.* எதிர்த்துள்ளல், எதிர்த்தாக்குவிசை; எதிர் வீச்சு; எதிர்முழக்கம், எதிரொலி, எதிர் உணர்ச்சித்தாக்கு; *v.* எதிர்த்து அடி; எதிர்த்துத் தாக்கு; செய்தவர் மீதே திருப்பித் தாக்கு.

**rebuff'**, *n.* மறுதலிப்பு; திடீர்த்தடுப்பு; முயற்சித்தடை; ஏமாற்றம்; சொட்டு; *v.* மறுதலி; எதிர்த்து அடி; நேரடி அவமதிப்புச் செய்; எள்ளல்; முயற்சி தடு; முகமுறிபபுச் செய்.

**rebuke'**, *n.* கண்டித்தல்; கடிந்துரை; கண்டனம்; மேலிடக் கண்டனம்; கண்டனக் குறிப்பாணை; *v.* கண்டி, கடிந்துரை; கண்டித்து ஆணையிடு; கண்டனங் குறிப்பிடு.

**rebuk'ingly**, *adv.* கண்டனமாக.

**reb'us**, *n.* ஓவிய ஒலியெழுத்துப் புதிர்.

**rebut'**, *v.* எதிர்த்துத் துரத்து; எதிர்த்துரை; தடுத்து நிறுத்து; கண்டனஞ் செய்; தவறென்று மெய்ப்பி.

**rebut'ment**, *n.* எதிர்த்துத் துரத்துதல்; கண்டனம்.

**rebutt'al**, *n.* எதிர்த்துரை; எதிரியின் சான்றெதிர்ச் சான்று.

**rebutt'er**, *n.* எதிர்த்துத் தள்ளுபவர்; எதிர்த்தடிப்பது; எதிர்த்துரைப்பவர்; எதிர்வாதி மறுப்பு.

**recal'citrance**, *n.* தனி முரண்டு; இசைவுக்கேடு; இணக்கக் கட்டளை மீறுகை, கீழ்ப்படியாமை; எதிர்ப்பு மனப்பான்மை.

**recal'citrant**, *n.* முரண்டன்; இசைவுக்கேடானவர்; கீழ்ப் படிய மறுப்பவர்; *a.* பிடிவாதமாய் எதிர்க்கிற; கீழ்ப் படியாத.

**recal'citrate**, *v.* ஒழுங்குமுறைகளை உதறித்தள்ளு; இணங்க மறு; கீழ்ப்படியாமலிரு.

**recalcitra'tion**, *n.* அருவருப்பான எதிர்ப்பு.

**recalesce'**, *v.* வெப்ப ஒளிர்வு மீதூரப்பெறு, வெண்சூடடைந் துருகும் இரும்பு வகையில் மீண்டும் வெப்ப ஒளிர்வுநிலைபெறு.

**recales'cence**, *n.* (இய.) வெப்ப ஒளிர்வுநிலை மீதூர்வு, இருமபு வெணசூட்டு நிலையிலிருந்து குளிர்ந்துவரும்போது மீண்டும் ஒளிர்தல்.

**recall'**, *n.* மீட்டழைப்பாணை, வெளிநாட்டுத் தொலையமர்வு வகையில் திருப்பியழைப்பு; பணி மாற்றாணை; தொலைப் பயணக் கப்பல்கள் வகையில் திரும்பாணை; குறியடையாளச் செய்தி மூலமான பயண அமர்வு நீக்கக் கட்டளை; மாற்றமைப்பு வாய்ப்பு, திருத்த அமைப்பு; *v.* மீட்டழைப்பாணையிடு, திருப்பியழை; கடல்கடந்த தொலைப்பணி மாற்றாணையிடு; வெளிநாட்டுத் தொலைப்பயண மீட்பாணையிடு; தாயக மீட்புக் கட்டளையிடு; பணிவிடுத்து மீளும்படி கட்டளையிடு; நெறி தடுத்துத் திருப்பு, கருத்துத் திருப்பி ஈர்த்துக்கொள்; மீட்டும் நினைவுக்குக்கொண்டுவா, நினைவுபடுத்திக்கொள்; நினைவு கொள்; நினைப்பூட்டு; தன் நினைவுகொள்வி; உயிர்ப்பி, நினைவு புதுப்பித்து ஊக்கு; முடிவு வகையில் மாற்று; கட்டளை வகையில் தள்ளுபடி செய்; செயல் வகையில் மாற்றியமை; கொடைப்பொருள் வகையில் திரும்பப் பெற்றுக்கொள்.

**recall'able**, *a.* திரும்ப அழைத்துக்கொள்ளத்தக்க.

**recant'**, *v.* சொன்ன சொல் மாற்று, முன்சொன்னது தவ றென்றோ சமய முரணென்றோ கூறி அதனைக் கைவிடு; கொண்ட கருத்தை மாற்றிக் கூறு; முன் ஏற்பு மறுத்துரை.

**recanta'tion**, *n.* மறுதலித்தல்.

**rec'ap**[1], *n.* (பே-வ.)=recapitulation.

**rec'ap**[2], *v.* (பே-வ.)=recapitulate.

**recapit'ulate**, *v.* தலைப்புக்களை வரிசையாகப் படித்துக் கொண்டு போ, பொழிப்பாகக் கூறு; திரும்பக் கூறு.

**recapitula'tion**, *n.* தொகுத்துக்கூறுதல்; சுருக்கக்குறிப்பு; தலைப்பு வரிசைப்படிப்பு; (உயி.) மரபுமலர்ச்சிப் படிகளை வரிசைப்படி கருவளர்ச்சியில் காட்டும் இயல்பு.

**recap'ture**, *n.* மீட்பு, திரும்பப்பெறுதல்; மறுகவர்வு, இழந்த நிலம் மறுபடியும் கைப்பற்றுதல்; மீட்ட பொருள், இழந்து கைப்பற்றியது; கருத்து மீட்டுப்பேறு; மறதியுட்பட்டதை மீட்டும் நினைவிற்குக் கொண்டுவருதல்; *v.* மீட்டு, மீட்டுப் பெறு; மறு பற்றீடு செய், மறுபடியும் கைப்பற்று; இழந்த நிலம் கைக்கொள்; முயன்று மறுபடியும் அடை; மறந்தது மீட்டும் நினைவுக்குக் கொண்டுவா.

**recast'**, *n.* புத்துரு; உருச்செப்பம் மறுசீரொழுங்கு; *v.* புது வடிவில் வார்த்துருவாக்கு; வரிசை சீர்திருத்து.

**recede'**, *v.* பின்செல், பின்னோக்கி நழுவு, பின்னோக்கிச் சரி வுறு; காட்சியிற் பின்னடைவுறு; பின்னே தொலைவாகச் சென்றுவிடு; பின்னடை; பின்புறமாக ஒதுங்கு; கருத்திற் பின்வாங்கு; ஈடுபாட்டிலிருந்து பின்னடைவுறு; உள்வாங்கு; சுருங்கித் தணிவுறு; தணிவுறு; இயல்பில் குறைவுறு; மதிப்பிற் குறைபடு; உரிமை வகையில் கை நழுவவிடு.

**receipt'**, *n.* பெறுகை, கைக்கொள்ளுகை; பெறுபொருள், பெறபபட்ட பணம்; பற்றுச்சீட்டு, பணம் பெற்றுக்கொண்ட தற்கான கையொப்பமுறி; பணம் பெறும் இடம்; முறைப் பட்டி, சமையல் துறையில் வேண்டும் பொருள்களின் பட்டிய லுடன் முறையும் கூறுஞ் சீட்டு; *v.* பெற்றுக்கொண்டதாகக் குறி, பற்றுச்சீட்டுப் பதி.

**receive'**, *v.* பெறு, ஏற்றுக்கொள்; கைக்கொள்; கொடுக்கப் பெறு; அனுப்பியதை எய்தப்பெறு; ஈட்டிப்பெறு; பரி சாகப் பெறு; சுமத்தப்பெறு; பொறுத்துக்கொள், தாங்கு; பெற்றமைவுறு, தாங்கிநில்; உட்கொள்; கொள்கலமாய் அமை; ஏற்றிணைத்துக்கொள், சேர்த்துக்கொள்; கொண்டு தன்வயப் படுத்திக்கொள்; வரவேற்புச்செய், விருந்தோம்பு; நல்வரவு கூறு, ஏற்றாதரவு காட்டு; வரவேற்று இடவசதி செய்து கொடு; தலைமை ஏற்றுக்கொள், கீழ்ப்படி; கருத்து வகையில்

ஆதரவுடன் ஏற்றுக்கொள் ; ஏற்றமைவுறு, உண்மையென ஒத்துக்கொள் ; (தொ.) receive the sacraments, திருவுணு வழிபாட்டு வினைமுறையிற் கலந்து பங்கேற்றுக்கொள்.

**received'**, *a.* பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட.

**receiv'er**, *n.* பெறுபவர், வாங்கிக்கொள்பவர் ; வரிபெறும் பணியாளர் ; உடைமை காப்பாளர், வழக்கிலிருக்கும் உடைமையைச் செயலாட்சி புரிய நீதிமன்றத்தாரால் நியமிக்கப்பட்டவர்; களவுகாப்பாளர், திருட்டுச்சொத்துக்களை வாங்கிக் கொள்பவர் ; களவுகாப்பகம், திருட்டுச்சொத்துக்களைப் பெற்றுக்கொள்ளுமிடம் ; பொறிக்காப்பு, இயந்திரத்தில் அல்லது கருவியில் கொள்கலமாகப் பயன்படும் பகுதி ; செவிக்குழல், தொலைபேசிக் காதுக்குழலமைவு ; அலைமாற்றுப்பொறி, அலை பரப்புக்களை ஒலியாகவோ ஒளியாகவோ மாற்றுவதற்கான அமைவு, வானொலிப்பெட்டி.

**recen'sion**, *n.* மூலபாடத்தைத் திருத்துதல்; மூலபாடத் திருத்தமைவு, திருத்தப்பட்ட மூலபாடம்.

**re'cent**, *a.* அணித்தான காலத்திற்குரிய, சிறிது காலத்திற்கு முன் நேர்ந்த; கொஞ்ச காலத்திற்கு முன் இருந்த; அமைக்கப்பட்டு நெடுங்காலம் ஆகியிராத ; அண்மையில்தான் தொடங்கப்பட்ட, புத்தம்புதிதான.

**re'cently**, *adv.* கால அண்மையில், சிறிது காலத்திற்குமுன், சற்றேமுந்தி.

**recep'tacle**, *n.* கொள்கலம், ஏனம் ; கொள் இடம் ; கொள் வெளி; (தாவ.) பொது அடித்தலம், ஆதானம்; மலர் உறுப்புக்களின் அடித்தடம் ; கொத்தின் நடுவச்சு.

**recep'tion**, *n.* வரவேற்றல் ; வரவேற்பு ; வரவேற்பளிப்பு ; வரவேற்பு ஏற்பாடு ; வரவேற்பு விழா ; வரவேற்புக்கூட்டம்; வரவேற்பு உபசரணை, வருகையாளர்க்குரிய மதிப்பாதரவு ; ஏற்பு ; ஏற்பிசைவு; எண்ணங்களின் ஏற்பமைவு; கருத்தின் ஏற்பாதரவு; கருத்து வகையில் இசைவேற்பு; உண்மையென ஒப்புக்கொண்டேற்றல்; மதிப்பின் தரம், மனிதர் வகையில் காட்டப்படும் மதிப்பின் மாதிரி ; உணர்ச்சிப்பாங்கு, திட்டம் முதலியவற்றின் வகையில் காட்டப்படும் உணர்ச்சிப்பாணி; கம்பியில்லாத் தந்திச் செய்தி ஏற்புமுறை; கம்பியில்லாத்தந்தியின் தருதிறம் ; (தொ.) reception order, பித்தர் மருத்துவமனையில் சேர்க்கும்படி பிறப்பிக்கப்படும் ஆணை ; warm reception, நல்லார்வ வரவேற்பு ; கடும் எதிர்ப்பு.

**recep'tionist**, *n.* வரவேற்பாளர்; நிழற்படவாணர்-பல்மருத்துவர் முதலியோர் வகையில் வாடிக்கை பிடிப்பவர்.

**recep'tion-room**, *n.* வரவேற்பறை.

**recep'tive**, *a.* ஏற்புத்திறமுடைய ; கருத்துக்களை வாங்கிக் கொள்ளக்கூடிய.

**recess'**, *n.* இடை ஓய்வு ; சட்டமன்ற இடை ஓய்வுக்காலம் ; விடுமுறைக்காலம் ; உள்ளிடம், தொலை ஒதுக்கிடம், உள் மறைவிடம் ; மலைத்தொடர் உள்வாங்கிய இடம் ; புழை மாடம், மாடக்குழி ; (உள்.) உறுப்பினில் ஏற்படும் உள் மடிப்பு ; *v.* மாடக்குழியில் வை ; தொலை ஒதுக்கிடத்தில் அமை ; பின் ஒதுக்கிவை ; மாடக்குழிகள் இணைத்தமை ; இடை ஓய்வுகளுடன் அமை ; (தொ.) take a recess, தள்ளிவை.

**rece'ssion**, *n.* பின்னடைதல் ; ஒதுங்குதல் ; பின்னடைவு ; பின்னொதுக்கம் ; பின்னோக்கிய புடைபெயர்வு ; பின்னோக்கிச் சரிவுறும் பகுதி ; வினையொழிவுக்காலம் ; வாணிக விலையிறக்கப்போக்கு, விலைமந்தம்.

**rece'ssional**, *n.* செலவிசைத் துதிப்பாடல், வழிபாட்டிற்குப் பின்னர்க் குருமார்களும் பாடற் குழுவினரும் போகும்போது பாடப்படும் துதிப்பாடல் ; *a.* சட்டமன்ற இடையொழிவுக் காலஞ் சார்ந்த ; (தொ.) recessional hymn, செலவிசைத் துதிப்பாடல்.

**recess'ive**, *n.* தவ்வுகூறு, பண்பு மரபு வகையில் ஒரு தலைமுறை இடைவிட்டுத் தாவிச் செல்கிற பண்பு ; *a.* பின்னடையும் இயல்புள்ள, ஒதுங்கிக்கொள்ளும் பாங்குடைய ; பண்பு மரபு வகையில் தலைமுறைகடந்து தோன்றுமியல்புடைய ; ஒலியழுத்த வகையில் சொல்லின் தொடக்க நிலைநோக்கிச் செல்லும் பாங்குடைய.

**Rech'abite**, *n.* குடிப்பழக்கத்தை முற்றும் ஒழித்தவர்.

**recharge'**, *n.* மின்விசை-வெடிமருந்து ஆகியவற்றின் மறுசெறிவு ; மின்விசை-வெடிமருந்து ஆகியவற்றின் மறு அடைப்பளவு ; மறுதாக்குதல்; மறுபடியுஞ் சாட்டப்படுங் குற்றம் ; *v.* துப்பாக்கியில் மருந்தினை மீண்டும் அடை ; மீண்டுங் குற்றஞ்சாட்டு ; புதிதாகத் தாக்கு.

*rechauffe*, (பிர.) *n.* மீண்டுஞ் சூடாக்கப்பட்ட உணவு ; இலக்கியப்படைப்பு வகையில் புத்திணைப்புச்சேர்ப்பு, புது வடிவில் பழைய பகுதிகளின் தொகுதி.

*recherche*, (பிர.) *a.* அரும்பெறலான ; அருமுயற்சியின் விளைவான ; அக்கறையுடன் வகுக்கப்பட்ட ; ஆராய்ந்து பொறுக்கியெடுத்த ; வலிந்து பொருள் கொள்ளப்பட்ட.

**rechri'sten**, *v.*=rebaptize.

**recid'ivism**, *n.* மீண்டுங் குற்றஞ் செய்யத் தலைப்படும் பான்மை.

**recid'ivist**, *n.* திரும்பக் குற்றஞ்செய்யத் தலைப்படுவோர்.

**re'cipe**, *n.* முறைப்பட்டி, சமையல் துறையில் சேர்மானங்களின் பெயரும் அளவும் முறையும் வழங்கும் குறிப்பு ; மருந்துக் குறிப்பு ; குறிப்பின்படியான மருந்து ; செயல் சாதனம் ; வகைதுறை ஏற்பாடு ; சூழ்திறம், உபாயம்.

**recip'iency**, *n.* பெறுதல் ; ஏற்பு ; ஏற்கும் பான்மை ; பெறுநிலை, ஏற்பவர் நிலை ; மனத்தில் வாங்கிக்கொள்ளத் தக்க இயல்பு.

**recip'ient**, *n.* பெறுநர், எதிர்வனர், ஏற்றுக்கொள்பவர் ; *a.* விரைவில் கருத்தில் வாங்கிக்கொள்ளக்கூடிய.

**recip'rocal**, *n.* எதிரிடை, சரி எதிரீடு ; (கண.) சினைமாற்று, பின்னத்தை முழு எண் ஆக்கவல்ல பெருக்கெண் ; *a.* இருமையுள் எதிரெதிர் அளாவிய ; கொண்டுகொடுப்புப் பாங்கான, பரஸ்பரமான ; செயல் வகையில் எதிர்தரவான, மறுதலைச் சரியீடான ; அதேவகையில் எதிரீடான ; (இலக்.) சொல்வகையில் எதிரெதிர்த்தொடர்பு குறிப்பதான ; (கண.) சினைமாற்றான, எண் வகையில் பின்னத்தைப் பெருக்கி முழு எண் ஆக்கவல்ல.

**recip'rocate**, *v.* கொண்டு கொடுப்புச்செய், ஏற்றெதிரிடை செய் ; பரிவருத்தனைசெய், இருவர் அல்லது இருபொருள் வகையில் தம்முள் செயல் எதிர்ச்செயலாற்று ; எதிரெதிர் அளாவு, சரிசமமாகத் திருப்பிக்கொடு, ஏற்றவாறு கைம்மாறு செய், செய்ததே பதிலுக்குச் செய் ; (இயங்.) தம்மிடை மாறிமாறிச் செயற்படு, மாறிமாறி எதிரெதிரியங்கு.

**recipro'city**, *n.* கொண்டுகொடுப்புப் பாங்கு ; செயல் எதிர்ச்செயற்பான்மை ; இருவர் அல்லது இரு பொருளிடைத் தம்முள் ஒத்தளாவிய பண்பு, பரஸ்பரம்; சரி எதிரீட்டுமுறை, நாடுகளிடையே வாணிகத்துறையில் உரிமை பரிமாற்றம்.

**recit'al**, *n.* ஒப்புவித்தல் ; ஒப்புவிப்பு, விவரக்குறிப்புகளை வரிசையாக எடுத்துரைத்தல்; பட்டியல் வாசிப்பு; தொடர்ந்து ஓதுதல், உரத்த வாசிப்பு ; நிகழ்ச்சியுரை, நிகழ்ச்சிகளை நிரல் படக் கூறுதல் ; செய்திகளைக் கூறும் ஆவணப்பகுதி ; ஓரே இசைவாணர் நடத்தும் இசை யரங்குக்காட்சி.

**recita'tion**, *n.* ஒப்புவித்தல் ; ஒப்புவிப்பு ; பாராயணம், காணாது ஒப்புவித்தல் ; மேடைச்சொற்பொழிவுக்கான உரைத்தொகுதி ; பாராப்பாட ஒப்புவிப்பு ; மனப்பாட ஒப்புவிப்புக்கேட்டல் ; மனப்பாட ஒப்புவிப்புப்பகுதி.

**recitative'**, *n.* கதைப்பாட்டுரை ; இசைநாடகவுரை; கதைப் பாட்டுரைப்பகுதி, இசைநாடகவுரைப்பகுதி.

**recite'**, *v.* நெட்டுருப்பண்ணி ஒப்புவி, மனப்பாடமாக ஓது, பாராயணஞ்செய் ; (சட்.) ஆவணத்திற் செய்தி விவரங்களை எடுத்துக்கூறு ; நிரல்படச்சொல், வரிசைப்படுத்திக்கூறு.

**recit'er**, *n.* ஓதுவார், ஒப்புவிப்பவர் ; வரிசைப்படுத்திக் கூறுபவர் ; பாராயணச் சுவடி.

**recit'ing**, *n.* ஒப்புவிப்பு; *a.* ஒப்புவிக்கிற ; (தொ.) reciting note, பாட்டின் பெரும்பகுதியிலும் பாடப்படும் பண்.

**recivilizaʹtion**, *n.* மீட்டும் நாகரிகப்படுத்துதல்.

**recivʹilize**, *v.* திரும்பவும் நாகரிகப்படுத்து.

**reck**, *v.* (செய்.) அக்கறைகொள்; கவலைப்படு, கவனஞ் செலுத்து; பொருட்படுத்து; பொருட்டாயிரு.

**reckʹless**, *a.* பொருட்படுத்தாத, அசட்டையான; எண்ணு மல் துணிகிற, துணிச்சலான, துடுக்கான; இடரைப் பொருட்படுத்தாத, விளைவைப்பற்றிக் கவலைப்படாத.

**reckʹlessness**, *n.* கவனமின்மை; முரட்டுத்தனம்.

**reckʹon**, *v.* எண்ணு, எண்ணிக்கையைக் கண்டறி; அளவைக் கண்டறி; மதிப்பிடு; கணி, கணக்கிடு; எண்ணிப்பார்; கணக்கிட்டு மொத்தம் பெறு; கணக்கில் சேர்த்துக்கொள்; வகையில் ஒன்ருகச் சேர்த்துக்கொள், வகையில் ஒன்ருகக் கருது; என்றுகருது; ஆய்ந்து முடிவுசெய், உறுதியென நம்பு, ஒருவருடன் கணக்குவழக்குத் தீர்த்துக்கொள்; நம்பு, நம்பியிரு, சார்ந்திரு, ஆதாரமாகக்கொள்; (தொ.) reckon without one's host, எதிர்ப்பு-இடர் முதலியவற்றைப் புறக்கணி.

**reckʹoner**, *n.* கணக்கிடுபவர்; கணக்கீட்டு வாய்ப்பாடு, கணிப்புச்சுவடி; (தொ.) ready reckoner, கணிப்புச்சுவடி, உடனுதவும் கணக்கீட்டு வாய்ப்பாட்டுச் சுவடி.

**reckʹoning**, *n.* எண்ணுதல், கணக்கிடுதல்; கப்பலிருக்கும் இடத்தை மதிப்பிட்டறிதல்; சாராயக்கடை விலைப்பட்டி; கணக்குத் தீர்த்தல், கணக்குத் தீர்ப்பு; (தொ.) day of reckoning, கழுவாய் செய்ய வேண்டிய காலம், பழிவாங்க வேண்டிய நாள்; dead reckoning, முழுதுறழ் கணிப்பியல் முடிவு, பதிவேட்டின் துணைகொண்டுமட்டும் கப்பலிருக்கும் இடத்தை மதிப்பிட்டறிதல்; out in one's reckoning, தப்புக் கணக்குப் போட்டு, எதிர்பார்த்து ஏமாற்றமுற்று.

**reclaimʹ**, *n.* திருத்துநிலை; மீட்புநிலை; பண்படுத்தப்படும் தகுதி; *v.* பழைய நிலைக்குக் கொண்டுவா, மீட்டும் நன்னிலைப் படுத்து; தீமை ஒழித்துச் சீர்ப்படுத்து; காடு கெடுத்து நாடாக்கு, பண்படுதது; நாகரிக நிலைக்குக் கொண்டுவா; சாகுபடியின்கீழ்க் கொண்டுவா; குற்ற நீக்கித் திருத்து; தீநெறியினின்று மீட்டு ஒழுக்கநெறிப் படுத்து; மீட்டுங் கோரு.

**reclaimʹable**, *a.* பண்படுத்தத் தக்க, சீர்திருத்தக் கூடிய; மறுபடியுங் கோரத்தக்க.

**reclamaʹtion**, *n.* இயல்நிலை மீட்டல்; நன்னிலை மீட்பு; மீட்கப்பட்ட நிலை; நிலச்சீர்திருத்தம்; ஆக்க மேம்பாடு; ஒழுக்கநிலைத் திருத்தப்பாடு; மறுதிருத்த ஆக்கம்; கைதிகளின் மறுசீராக்கம்; மறு கோரிக்கையாளர் மனு; அனைத்து நாட்டுச் சட்டம் வகையில் அயலரசிடம் அரசு கோரும் மீட்டொப்படைப்புக் கோரிக்கை.

***reclame***, (பிர.) *n.* எப்படியும் தன்னை நாடறியச் செய்வித்துக் கொள்ளுங் கலைத்திறம்.

**recʹlinate**, *a.* (தாவ.) கீழ்நோக்கி வளைந்துள்ள.

**reclineʹ**, *v.* சாய், சாய்ந்து கிடக்கும்படி செய்; நன்கு சாய்ந்து படுத்து ஒய்வுகொள்; பின்புறமாகச் சாய்ந்து கிட; ஒருக்கணித்துச் சாய்வாகப் படுத்திரு.

**reclotheʹ**, *v.* மீண்டும் உடை அணிவி, புதிதாக ஆடை அணிவி, புதிதாக மேற்கொள்ளுவி.

**recluseʹ**, *n.* ஆண்டி, துறவி; பெண்துறவி; ஒதுங்கி வாழ்பவர்; தனித்து வாழ்பவர்; தனிவாழ்வுப் பழக்கமுடையவர்; *a.* ஒதுங்கியிருக்கும் பாங்குள்ள, தனித்து வாழ்கிற.

**recoalʹ**, *v.* கப்பல் முதலியவற்றில் மீண்டும் நிலக்கரி நிரப்பு; கப்பலுக்கு மீண்டும் நிலக்கரி வழங்கியுதவு.

**recoatʹ**, *v.* மறுசாயம் பூசு.

**recogniʹtion**, *n.* ஏற்பு, அங்கீகாரம், தெரிந்துகொள்ளுதல், அறிந்துகொள்ளுதல்; ஒப்புக்கொள்ளப்பட்ட நிலை, ஒப்புக் கொள்ளுதல்; நிலையினை ஒப்புக்கொள்ளுதல்; ஏற்றுக்கொண்டதற்கான சைகை-அடையாளம் அல்லது குறிப்பு.

**recogʹnizance**, *n.* குறிப்பிட்ட செயலைச் செய்வதாக அல்லது செய்யாமலிருப்பதாக ஒருவர் நீதிமன்றத்துக்குமுன் அல்லது குற்றநடுவர்முன் எழுதிக்கொடுக்கும் சட்டக் கடப்பாட்டுப் பத்திரம்; குறிப்பிட்ட செயலைச் செய்வதற்காக அல்லது செய்யாமலிருப்பதற்காக ஈட்டுப்பணயமாகச் செலுத்தப்படும் பணம்.

**recogʹnizant**, *a.* நன்றியறிதலைக் காட்டிக்கொள்கிற, தெரிந்துகொண்டதாகக் காட்டிக்கொள்கிற; ஏதேனு மொன்றை அறிந்திருக்கிற, ஏதேனுமொன்றை அறிந்திருப்பதாகக் காட்டிக்கொள்கிற.

**recʹognize**, *v.* கண்டுணர், அடையாளங் கண்டுகொள், இனங் கண்டுகொள், இன்னர் என்பதை அறி; இயல்பு கண்டறி, தகுதி காண்; தகுதி ஒப்புக்கொள்; பாவித்து நடத்து; ஏற்பிசைவளி, ஏற்பிசைவு தெரிவி.

**recoilʹ**, *n.* எதிர்த்தாக்கு, மோதி எதிர்த்துத்துள்ளும் விசை; இயல் வெறுப்புணர்ச்சி; அதிர்ச்சிவேகம்; *v.* எகிறியெழு, எதிர்த்துத்துள்ளு; துப்பாக்கி வகையில் வேட்டினுல் துள்ளி எதிர்த்தடி; எதிர்த்தாக்கு விசையினுல் பின்னுக்கு உந்தப் பெறு; கடு வெறுப்புக்கொள்ளு, அதிர்ச்சியுற்றுப் பின்னடை.

**recoinʹ**, *v.* மறு கம்பட்டஞ்செய்; புதிதாகக் காசு பொறி, புதிதாக உருவாக்கு.

**recoinʹage**, *n.* புதிதாகக் காசு பொறித்தல்; மீண்டும் உருவாக்கப்பட்ட பொருள்.

**recollectʹ**, *v.* நினைத்துப்பார், நினைவுபடுத்திப்பார்; மீண்டும் நினைவுக்குக் கொண்டுவா; நினைவில் வைத்துக்கொள், ஞாபகப்படுத்திக்கொள்; சூழல்மீது கவனந் திருப்பு; உணர்ச்சிகளை ஒருநிலைப்படுத்து; கருத்துக்களை ஒருமுகப்படுத்துவி.

**recollecʹtion**, *n.* நினைவாற்றல், ஞாபகசக்தி; நினைத்துப் பார்த்தல், நினைத்துப் பார்க்கும் ஆற்றல்; பழைய நினைவு, முன்னினைவுச்செய்தி; நினைவெல்லை, நினைவாற்றல் சென்றெட்டுங் காலம்; கருத்தமைதி, கருத்து ஒருநிலைப்பாடு.

**recommendʹ**, *v.* பரிந்துரைகூறு; சிபாரிசுசெய்; புகழ்ந்தாதரவு காட்டு; ஏற்கச்செய், இசைவுடையதாக்கு; அறிவுரை வழங்கு; ஆலோசனைகூறு; பொறுப்பு ஒப்படை; முழுதும் ஒப்புவி.

**recommendaʹtion**, *n.* பரிந்துரை, சிபாரிசு; மதிப்பு, ஆதரவுப் பண்பு; ஏற்புக்குரிய கூறு; ஒப்புவிப்பு.

**recommendʹatory**, *a.* பரிந்துரையான, ஆதரவான; அறிவுரையின் இயல்புவாய்ந்த.

**recommitʹ**, *v.* சட்டப்பகர்ப்பு முதலியவற்றை மீட்டும் குழுவிற்கு மறுசீராய்வுக்கு அனுப்பு.

**recommitʹment**, *n.* மறுசீராய்வுக்கனுப்புதல்.

**recommittʹal**, *n.* மறுசீராய்வுக்கு அனுப்புதல்.

**recʹompense**, *n.* உழைப்பூதியம்; எதிரூதியம்; இழப்பீடு; கைம்மாறு; *v.* ஈடுசெய்; உழைப்பூதியம் அளி; கைம்மாறு செய்; எதிரீடுசெய்.

**recʹoncile**, *v.* இணக்குவி, சமரசப்படுத்து; வேற்றுமை அகற்று, முரண்பாடு நீக்கு, ஒத்திசைவி; ஏற்றமைவி, வேண்டாவெறுப்புடன் ஏற்றுச் செயலாற்றுவி; தூய்மைக் கேடு நீக்கு, தூய்மை செய்; தாய்த்திருச் சபையிலிருந்து சென்றவரைத் திரும்பச் சேர்த்துவை.

**reconciliaʹtion**, *n.* இணக்கம்; சமரசம்; பொருத்துவித்தல்; முரண்பாடு நீக்கம்; சூழல் ஏற்றமைவு.

**recʹondite**, *a.* மறைபொருள் வாய்ந்த; புரியாப்புதை குறிப்புக்கள் நிரம்பிய; பொருட் செறிவாழமுடைய.

**recondiʹtion**, *v.* கழற்றி எடுத்துச் சரிசெய்தமை, மறுசீரமைப்புச்செய், மீட்டும் நன்னிலைப்படுத்து.

**reconnʹaissance**, *n.* வேவுப்பணி, முன்சென்று புலங்காண்டல்; எதிரிபக்கஞ் சென்று தடங்காண்டல்; முன்னீடான ஆய்வு.

**reconnoiʹtre**, *v.* (படை.) வேவுகாண், முன்சென்று புலங்காண்; (படை.) எதிரிபக்கஞ் சென்று தடங்காண்; முன்னீடான ஆய்வுசெய்.

**reconstitʹuent**, *n.* சீராக்க மருந்து, *a.* மீட்டும் ஆக்கநலந் தருகிற, மறுபடியும் கட்டமைக்க உதவுகிற.

**recon'stitute**, *v.* மீட்டும் இணைத்துருவாக்கு, தனித்தனிக் கூறுகளை இணைத்து முழுமையாக்கு; திரும்பவும் அமை.

**rec'ord**¹, *n.* பதிவு; நிலைப்பதிவு; எழுத்துருப்பதிவு; பதிவுக் குறிப்பு; பதிவுக்குறிப்புத் தொகுதி; ஆவணம், பத்திரம்; பதிவேடு, ஆயப்பதிவேடு; பதிவு மூலம்; பதிவுச்சான்று; மூலச்சான்று; நிலைச்சான்று; விவரத்தொகுதி; செயற் குறிப்புத்தொகுதி; நினைவுப்பதிவு; படச்சின்னம்; நினைவுக் குறிப்பு; நினைவுச்சின்னம்; பதிலடையாளம்; அளவு கருவிப் பதிவு; இசைப்பதிவு; இசைப்பதிவுத்தட்டு; செயலூக்கம்; உச்ச எல்லை; (தொ.) beat the record, break the record, cut the record, முந்திய உச்ச எல்லை கடந்து மேற்செல்; off the record, பத்திரிகை வெளியிடுவதற்கு உரியதல்லாத; பணிமுறை சாராத; public records, பணிமனைகளுக்குரிய உத்தியோகத் தரப்பில்லாத பத்திர ஆதாரமூலங்கள்; உத்தியோகத் தரப்பில்லாத; Record Office, பதிவேட்டுப் பணிமனை; trial by record, முறைமன்ற முடிவுபற்றிய வழக்கில் ஆதார மூலங்களின் அடிப்படையாகச் செய்யப்படும் விசாரணை.

**record'**², *v.* பதிவுசெய்; எழுத்துருவிற் குறித்துவை; நினைவுக் குறிப்பாகக் குறி; பதிவேட்டில் குறித்துவை; நிலைச்சான்றுக்கு; பறவைகள் வகையில் பண்பயில், அடிக்குரலிற்பாடு; ஒலிப்பதிவுசெய்; இசைப்பதிவுசெய்; வானொலியில் ஒலிப் பதிவுசெய்து மீட்டும் வெளியிடு.

**record'er**, *n.* பதிவு செய்பவர்; எழுதி வைப்பவர்; குறிப்பவர்; நிலைச்சான்றுரைஞர்; நகரக் குற்ற விசாரணை நடுவர்; ஊர்க் குற்ற விசாரணை நடுவர்; கருவிகளின் பதிவு செய்யும் உறுப்பு; செங்குத்தியலான ஆங்கில வேய்ங்குழல் வகை.

**record'ing**, *n.* பதிவு செய்தல்; கம்பியில்லாத் தந்தித்துறை ஒலிப்பதிவு; ஒலிப்பதிவுக் கருவி; *a.* பதிவுசெய்கிற; (தொ.) recording angel, நல்வினை தீவினைகளைப் பதிவு செய்கிற தெய்வம்.

**re-count'**, *n.* தேர்தல் மறு எண்ணிக்கை; *v.* தேர்தலில் மறு எண்ணிக்கையிடு.

**recoup'**, *v.* குறை, தொகையில் சிறிது எடுத்துவைத்துக்கொள்; இழப்பீடு செய்.

**recoup'ment**, *n.* இழப்பீடு.

**recourse'**, *n.* வளத்துணை, துணையாதாரம்; புகலிடம்; போக்கிடம்; பின்னடைவுரிமை; நுழைவுரிமை; துணை பெறும் உரிமை, காப்படைவுரிமை; பணம்பெறும் உரிமை; (தொ.) have recourse to, துணைநாடு; வளத்துணையை நாடு; வளத்துணையை ஆதாரமாகக்கொள்; without recourse to, துணை நாடாமல், உதவி நாடாமலேயே.

**reco'ver**¹, *n.* வாட்போரில் வாளின் இயல்நிலை மீட்பு; *v.* திரும்பப்பெறு; மீட்டுரிமை பெறு; இழந்த ஆற்றல் கைவரப் பெறு; சட்டமூலம் உரிமையாகப் பெறு; இழப்பீடாக அடை; உயிர் உடல்நல முதலியன மீளப்பெறு; முன்னிலைமை கைவரப்பெறு; தளர்ச்சிக்குப்பின் இயல்பான நிலை மீண்டும் எய்தப் பெறு; மீட்புப்பெறு; திரும்பச் சென்றடையப்பெறு.

**re-cov'er**², *v.* புதிது பொதி, குடை முதலியவற்றிற்குப் புத்துறை இடு.

**reco'verable**, *a.* திரும்பப்பெறத்தக்க; மீட்கத்தக்க; முன்னிலையடையத்தக்க.

**reco'very**, *n.* திரும்பப்பெறுகை; மீட்பு; இழந்தது மீட்டெய்தப் பெறுகை; நோயிலிருந்து முன்னிலை எய்துதல்; இழந்த வலுப்பெறுதல்; மீட்டெழல், களைப்பு நீங்கப் பெறுதல்; உடைமை மீட்பு; உரிமை மீட்பு; மீட்டுப் பெறுமுறைமை; மீட்டெழு முறைமை.

**rec'reance, rec'reancy**, *n.* கோழைமை; கொள்கை கைதுறப்பு.

**rec'reant**, *n.* கோழை; கொள்கை கைதுறந்தவர்; *a.* கோழையான; கொள்கை கைதுறந்த.

**recreate'**¹, *v.* மீட்டும் படை.

**rec'reate**², *v.* புத்தூக்கம் அளி; பொழுது போக்குவி; நேரம் இன்பமாகக் கழிக்க உதவு; இன்பமூட்டு; இன்பக் கேளிக்கையில் ஈடுபடுத்து.

**recrea'tion**, *n.* ஓய்வுநேர இன்பப் பொழுதுபோக்கு; அயர்வகற்றும் இன்பம்; இன்பக்கேளிக்கை; இன்ப விளையாட்டு.

**recrea'tional**, *a.* பொழுதுபோக்குச் சார்ந்த.

**rec'reative**, *a.* பொழுதுபோக்க உதவுகிற; மகிழ்வளிக்கிற; நேரப்போக்கான.

**rec'rement**, *n.* குருதியிலிருந்து பிரிந்து மீட்டும் வந்து சேரும் நீர்மம்; சவறு, செத்தை.

**recrim'inate**, *v.* எதிர்க்குற்றச்சாட்டுச் செய், ஒருவருக்கொருவர் குற்றச்சாட்டுச் செய்துகொள்க.

**recrimina'tion**, *n.* எதிர்க் குற்றச்சாட்டு; பதில் குற்றச்சாட்டு.

**recrim'inative, recrim'inatory**, *a.* எதிர்க் குற்றச்சாட்டான.

**recrudesce'**, *v.* நோய் முதலியவற்றின் வகையில் புதிதாகக் கிளர்ந்தெழு.

**recrudes'cence, recrudes'cency**, *n.* திரும்பத் தோற்றுதல்.

**recrudes'cent**, *a.* மீட்டுங் கிளர்ந்தெழுகிற.

**recruit'**, *n.* புதுப்படைவீரர், படைத்துறையில் புதிதாகச் சேர்க்கப்பட்ட பயிற்சி பெறாத ஆள்; புதிதாகச் சேர்ந்தவர்; புத்தாள், திறமையற்றவர்; *v.* படைக்குப் புதிதாகச்சேர்; புது ஆளாக எடு; படைக்குப் புதிய ஆளெடுப்புச்செய்; குறைபாடு நிரம்பு; குறைபாடு நிரப்பு; இழப்புச் சரிசெய்; இழந்த நலம் பெறுவி; ஊக்கமூட்டு; புதுவலிமையூட்டு; புத்தூக்கம் பெறு; மீட்டுப்பெறு.

**rec'tal**, *a.* குதத்துக்குரிய; குத வழியான.

**rec'tangle**, *n.* நாற்கட்ட வடிவம்; நீள் சதுரம்.

**rectang'ular**, *a.* நாற்கட்ட வடிவான; நாற்கட்டக் கூறுடைய; செங்கோணப் பாங்கான; செங்கோண அமைப்புடைய.

**rectifica'tion**, *n.* தவறு நீக்கம்; திருத்தம்; வடிகட்டுத் தூய்மைப்பெருக்கம்.

**rec'tifier**, *n.* சரி செய்பவர்; திருத்துபவர்; வெறியம் துப்புரவுசெய்பவர்; துப்புரவு செய்யுங் கருவி; மாற்றுமின்னோட்டத்தை நேர்மின்னோட்டமாக மாற்றுங் கருவி.

**rec'tify**, *v.* திருத்தியமை; சரியாக்கு; சீர்திருத்தஞ் செய்; சரிசெய்; மாற்றித்திருத்து; பிழைநீக்கு; தவறு சரிசெய்; தீங்குகள் அகற்றிச் சரிசெய்; விடுபட்டதை நிரப்பு; மீண்டும் மீண்டும் வடிகட்டித் தூய்மைபெருக்கு; வளைவு முதலியவற்றின் வகையில் சரிசம நீள நேர்வரை காண்.

**rectilin'eal, rectilin'ear**, *a.* நேரான, நேர்கோடான; நேர்கோடாய் அமைகிற; நேர்கோடுகளால் ஆன; நேர்கோடுகளைப் பக்கங்களாகவுடைய.

**rectilinea'rity**, *n.* நேர்கோட்டியல்பு.

**rec'titude**, *n.* நேர்மை; நடுநிலை பிறழாமை; ஆன்மிக உறுதி.

**rec'to**, *n.* திறந்த ஏட்டின் வலப்பக்கம்; தாளின் முன்பக்கம்.

**rec'tor**, *n.* ஊர் வட்டகைக் குரு; பல்கலைக்கழக முகவர்; கலலூரி முகவர்; பள்ளிக்கூட முகவர்; சமய நிறுவன முகவர்.

**rec'torate**, *n.* பல்கலைக்கழக முகவர் பணி; ஊர்வட்டகைக் குருக்கள் பணி; முகவர் பணிக்காலம்.

**rector'ial**, *n.* பல்கலைக்கழக முகவர் தேர்தல்; *a.* பல்கலைக்கழக முகவருக்குரிய; ஊர்வட்டகைக் குருக்களுக்குரிய.

**rec'tory**, *n.* முகவர் ஆட்சிக்குரிய ஊர்வட்டகை; ஊர் வட்டகை முகவர் மனை.

**rec'tress**, *n.* பல்கலைக்கழகப் பெண் முகவர்; (பே-வ.) பல்கலைக்கழக முகவர் மனைவி.

**rec'tum**, *n.* பெருங்குடல் அடிக்கூறு, குதவாய்.

**recum'bency**, *n.* சாய்நிலை.

**recum'bent**, *a.* படுத்துக்கொண்டிருக்கிற, சாய்ந்திருக்கிற.

**recup'erate,** *v.* நோயிலிருந்து மீட்கப்பெறு ; நோயிலிருந்து மீளச்செய் ; களைப்பகற்றி முன்னை வலுப்பெறு ; களைப்பகன்றெழு ; இழப்பிலிருந்து மீளச்செய் ; இழப்பிலிருந்து மீள்வுறு.

**recupera'tion,** *n.* இழந்த வலு மீட்டுப் பெறுதல்; குணப்படுதல்; சீராதல்.

**recup'erative,** *a.* இழந்த வலிமையைத் திருப்பி அளிக்கிற ; சோர்வு அகற்றுகிற.

**recur',** *v.* மறுபடியும் நிகழ்வுறு ; திரும்பத் திரும்ப நிகழ் ; மீட்டும் கருத்தில் தோன்று ; திரும்ப நினைவுக்கு வந்து சேர் ; மீண்டும் கவனத்துக்கு வா ; திரும்ப எண்ணிப்பார் ; திரும்பவும் குறிப்பிடு ; (கண.) பதின்மானக் கீழ்வாய் வகையில் மீட்டும் மீட்டும் வந்த தொகையே வரப்பெறு.

**recur'rence,** *n.* மறுதரவு.

**recu'rrent,** *n.* எதிர்த்திசை திரும்பும் குருதிநாளம் ; எதிர்த்திசை திரும்பும் நாடி ; எதிர்த்திரும்பும் குருதிநாள நாடிகளில் ஒன்று ; *a.* நாடிநரம்புகளில் எதிர்த்திசை திரும்புகிற ; கிளை வகையில் எதிர்த்திசை திரும்புகிற; சுருள்மடியாகத் திரும்பத் திரும்ப நிகழ்கிற; அலைமடியாக விட்டுவிட்டுக் கால ஒழுங்கின்படி நிகழ்கிற.

**recu'rring,** *a.* திரும்பத்திரும்ப நிகழ்கிற; தொடர்ந்து வருகிற, வந்த தொகையே வருகிற ; (தொ.) recurring curve, மீட்டுந் தொடங்கிய பக்கமே திரும்பும் வளைவு ; recurring decimals, (கண.) சுருள்மடிப்பதின்மானம், பதின்மானக் கீழ்வாயில் வந்த தொகையே மீண்டும் வந்து கொண்டிருப்பது.

**recurv'ate,** *a.* பின்முக வளைவுடைய.

**recurv'ature,** *n.* பின்முக வளைவு.

**recurve',** *v.* பின் முகமாக வளை.

**rec'usance, rec'usancy,** *n.* ஆங்கிலத் திருச்சபை வழிபாட்டில் கலக்க மறுப்பு ; சட்ட அதிகாரிக்குப் பணிய மறுப்பு ; சட்டத்திற்குப் பணிய மறுப்பு.

**rec'usant,** *n.* ஆங்கிலத் திருச்சபை வழிபாட்டில் கலந்து கொள்ள மறுத்தவர் ; சட்டமுறை அதிகாரிக்குப் பணிய மறுப்பவர் ; சட்டப்படி நடக்க மறுப்பவர் ; *a.* (வர.) ஆங்கிலத் திருச்சபை வழிபாட்டில் கலந்துகொள்ள மறுத்துவிட்ட; சட்டமுறை அதிகாரிக்குப் பணிய மறுக்கிற ; சட்டப்படி நடக்கமறுக்கிற.

**red,** *n.* செந்நிறம் ; செந்நிறச் சாயல் ; கருஞ்சிவப்புக் கட்டிட மேசையில் செந்நிறப்பகுதி ; உருள்மையச் சூதாட்டமேடையின் செந்நிறப்பகுதி ; மேடைக்கோற்பந்தாட்டத்தின் செந்நிறப் பந்து ; கணக்காண்மை ஏட்டில் பற்றுப்பகுதி ; செந்துகில் ; முற்காலப் பிரிட்டனின் மூன்று கடற்படைப் பிரிவுகளில் ஒன்று ; முனைப்புக்கட்சி ; குடியரசுக்கட்சி ; அரசிலிகட்சி ; *a.* செந்நிறமான ; அழல் நிறமான ; குருதி நிறமான ; குருதி தோய்ந்த ; குருதிக்கொலை சார்ந்த ; வெட்டுக்கொலைத் தொடர்புடைய ; எரிப்பூட்டுச் செயல் தொடர்புடைய ; பலாத்காரமான ; புரட்சி சார்ந்த ; முனைத்த அரசியல் போக்குடைய ; பொதுவுடைமைக் கட்சிசார்ந்த ; ருசியப் பொதுவுடைமை ஆட்சி சார்ந்த; (தொ.) in the red, பொருளகக் கணக்குமீறிப் பணம் எடுத்த நிலையில், கடன்பட்டு ; red admiral, இறகில் செவ்வரி கொண்ட வண்ணத்துப்பூச்சி வகை ; red algae, செந்நிறக் கடற்பாசிவகை ; red cabbage, உப்பிலிடப் பயன்படுங் கோசு வகை ; red cedar, உயர்வெட்டு மரவகை; red cent, பழைய செப்புக்காசு வகை; red clay, கடலடிக் களிவகை ; குகை மண்வகை ; red cock, எரியூட்டழல் ; Red Crag, (மண்.) மண்ணியலூழியின் ஒரு கூறு ; Red Cross, செஞ்சிலுவையுடைய முற்கால ஆங்கில நாட்டுக்கொடி ; செந்நிறப் பின்னணியில் வெள்ளைச் சிலுவையுடைய சுவிட்சர்லாந்து நாட்டுக்கொடி ; செஞ்சிலுவைச் சங்கம் ; போரில் காயமுற்றவர்களைப் பேணும் உலகநாட்டு மன்ற (1864) உரிமைபெற்றுச் சிவப்புப் பின்னணியில் வெள்ளைச் சிலுவைக் குறியுடைய கொடிச்சின்னங் கொண்ட சங்கம் ; red dwarf, சிறிய செந்நிற விண்மீன் ; Red Ensign, பிரிட்டனின் வாணிகக் கப்பற்கொடிச் சின்னம் ; red giant, பெரிய செந்நிற விண்மீன் ; Red Indian, அமெரிக்கச் சிவப்பு இந்தியர் ; red meat, ஆடுமாடு ஆகியவற்றின் இறைச்சி ; red mass, குருமார் செவ்வாடையுடன் நடத்தும் திருமறை வழிபாடு; red pepper, மிளகாய் வகை; red rag, சினமூட்டுஞ் செய்தி; கிளறிவிடுஞ் செய்தி ; red rattle, சதுப்புநிலச் செடி வகை ; red riband, red ribbon, 'பாத்' நன்மதிப்புக் குழு (Order of the Bath) மேற்கொண்ட செந்நிற இழைக்கச்சை ; red snow, பாசிவகையினுல் செந்நிறம் ஊட்டப்பட்ட பனி ; red soldier, பன்றியின் தோலைச் செந்நிறமாக்கும் நோய்வகை; நோய் வகையில் தோல் செந்நிறமாகிய பன்றி ; red spider, கொடி முந்திரியைத் தாக்கும் பூச்சி வகை; red tape, கடும் விதிமுறைப்பாங்கு; red triangle, கிறித்தவ இளநம்பியர் கூட்டவையின் சின்னம்; red worm, தூண்டில் இரைப்புழுவகை; Royal Red Cross, தாதியர்க்கு 1883 முதல் வழங்கப்படும் பொற் பூ வகை ; see red, சீறியெழு ; குருதிவேட்கை கொள்.

**redact',** *v.* வெளியீட்டு வடிவில் பதிப்பி, முடிவான இலக்கிய உருக்கொடு ; எழுத்தாண்மையில் முடிவான பாடம் உருவாக்கு, ஒழுங்குபடுத்து.

**redac'tion,** *n.* வெளியீட்டுக்கான உருவாக்கம், படித்திருத்தம், பாட ஒழுங்கு அமைப்பு, புதிய பதிப்பு.

**redan',** *n.* இருமுகப்புக் கூம்புவடிவக் காவலரண்.

**red'-biddy,** *n.* தேறலும் திரிபுற்ற வெறியமும் கலந்த குடி வகை.

**red'-blood'ed,** *a.* செங்குருதி வாய்ந்த ; உயிர்ப்பாற்றல் நிறைந்த ; பண்படாத.

**red'-book,** *n.* செவ்வேடு ; உயர்குடியினர் பெயர்ப் பட்டியலேடு ; பெருமக்கள் உயர்பணியாளர் பட்டியல்-பணிமனை விதிகள் அடங்கிய அரசியல் விவர ஏடு.

**red'-box,** *n.* அமைச்சரது செந்நிறப் பேழை.

**red'-breast,** *n.* நெஞ்சில் சிவப்புத் தடமுடைய பாடும் பறவை வகை.

**red-'brick,** *a.* பல்கலைக்கழகக் கட்டிடவகையில் தற்காலப் பாணியிலமைந்த கட்டுமானக் கடைகாலுடைய.

**red'-bud,** *n.* இலைகளுக்கு முன் பூக்குஞ் செங்கழுநீர் நிறப் பூ மரவகை.

**red'cap,** *n.* படைத்துறைக் காவல் துறைவர் ; ஸ்காத்லாந்து நாட்டு அரண்மாளிகைப் பேய்.

**red'coat,** *n.* பிரிட்டன் நாட்டுப் படைவீரன்.

**red'-cowl,** *n.* ஸ்காத்லாந்து நாட்டு அரண்மாளிகைப் பேய், காவற்றுறை ஆள்.

**red'-currant,** *n.* புதர்வகையின் கொட்டையுள்ள செந்நிறக் கனி.

**redd'en,** *v.* சிவப்பாக்கு ; சிவப்பாகு.

**redd'ish,** *n.* சற்றே சிவப்பான.

**red'dle,** *n.* செங்காவி ; *v.* செங்காவி வண்ணமிடு.

**red'-dog,** *n.* மாவாலையின் கீழ்த்தர மாவு.

**redd'y,** *a.* சிறிது சிவப்பான ; சிவப்பு மயமான.

**rede,** *n.* அறிவுரை, கருத்துரை ; துணிவு, திட்டம் ; கதை நிகழ்ச்சி ; *v.* அறிவுரை கூறு, கருத்து உரை.

**redeem',** *v.* மீட்டுக்கொள், திரும்ப விலைக்கு வாங்கு; முயன்று திரும்பப்பெறு ; இழந்ததை மீண்டும் எய்துவி ; பேசிச்சரிப்படுத்திப்பெறு; பணங் கொடுத்து விடுதலை பெறுவி; பணங் கொடுத்து உயிர் காப்பாற்று; விடுவி; தப்புவி; காப்பாற்று; இடர் தடுத்தாட்கொள்; பழி தவிர்த்து ஆள்; பழியிலிருந்து கடைத்தேற்று ; கழுவாயாகு, பரிகாரம் அளி, பழிமறக்கச் செய்; வாக்குறுதி முதலியவற்றை நிறைவேற்று ; இழப்பீடு செய், சரியீடுசெய் ; குற்றவகையில் எதிரீடு செய்து அமை ; குறைநிரப்பு.

**redeem'er[1],** *n.* மீட்பவர்; மீட்டுத் தருபவர் ; விடுவிப்பவர்; பழிதவிர்ப்பவர் ; இடர் தடுத்தாட்கொள்பவர்.

**Redeem'er[2],** *n.* திருமீட்பர், இயேசுநாதர்.

**redemp'tion,** *n.* மீட்பு, இயேசுநாதரின் பழி தடுத்தாளுந் திறம்; இடர்காத்தளிக்குஞ் செய்தி; உரிமை விலைப்பணம்; கழுவாய், பரிகாரம்.

**redemp'tive,** *a.* மீட்டளிக்கிற; மீட்டளிக்க உதவுகிற; கழுவாய் செய்கிற.

**redeploy'ment,** *n.* தொழிற்சாலையில் விளைவுபெருக்கம் நாடிய புறவாய்ப்புநலச் சீர்திருத்த வளம்.

**red'-figured,** *a.* கிரேக்க குவளைகள் வகையில் கருநிறப் பின்னணிமீது சாயத்தோய்வில்லாச் செந்நிற உருவமுடைய.

**red'-fish,** *n.* 'சால்மன்' மீன்வகையின் பருவ ஆண்.

**red'-gum,** *n.* பல்முளைக்குஞ் சிறுவர்ஊற்றின் கோளாறு; செமெழுகுதரும் மலைவளர் மரவகை.

**red'-hand'ed,** *a.* கையுங் களவுமாக, குற்றஞ் செய்யும் நேரத்திற்கு உரிய.

**red'-hat,** *n.* போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்குங் குழுவினர்.

**red'head,** *n.* செந்தலையர், செம்மயிர் உடையவர்.

**red'-headed,** *a.* செந்தலையுடைய, செந்நிறத் தலைமயிருடைய.

**red'-heat,** *n.* செந்தழல் வெப்பு.

**red he'rring,** *n.* செந்நிற மீன்வகை வாட்டு, புகைவாட்டுப் பதனமிடப்பட்ட மீன்வகை, வேட்டைநாய் மோப்பவழி தவறுவதற்காகக் குறுக்கே கொண்டுசெல்லப்படும் மீன்வாட்டு; வாதத்திலிருந்து கவனந் திருப்பப் புகுத்தப்படும் ஆர்வச் செய்தி; (தொ.) draw a red herring across the track, வேறு திசையில் ஆர்வந் திருப்பிக் கவனத்தை மாற்று; neither fish nor flesh nor good red herring, உறுதியற்ற செய்தி, வரையறை இல்லாதது.

**red'-hot,** *a.* செந்தழலாக எரிகிற; கங்கான; பழுக்கக் காய்ச்சிய; உணர்ச்சி வேகமிக்க; ஆர்வமிக்க; கடுஞ்சினம் வாய்ந்த; (தொ.) red-hot poker, அழல்நிற மலர்த்துய் உடைய தோட்டச் செடிவகை.

***redif',*** (துரு.) *n.* துருக்கிய படைத்துறைச் சேமப்பிரிவு.

**redin'tegrate,** *v.* முழுமை மீட்டளி, திரும்பவும் முழுநிறை வடிவுக்குக்கொணர், நிறைநிலை புதுப்பித்தளி.

**redirect',** *v.*=readdress.

**redistribu'tion,** *n.* தேர்தல் தொகுதி யெல்லைமாற்றியமைத்தல், தேர்தல் வாக்குரிமை நிலைமாற்றம்.

**red'-lead,** *n.* வங்க உயிரகை, செஞ்சாயத்துக்குப் பயன்படும் வங்கச் செந்தூரம்.

**red'-legged,** *a.* செங்காலுடைய.

**red'-letter,** *a.* நீடு நினைக்கத்தக்க, புகழ் விழாவாகக் கருதத்தக்க; செந்நிறத்திற் குறியிடப்பட்ட; *v.* மகிழ்ச்சி விழாவாக ஆண்டுப் பட்டியிற் குறிப்பிடு; (தொ.) red-letter day, மகிழ்வுநாள், குறிப்பிடத்தக்க நாள்.

**red'-man,** *n.* அமெரிக்க செவ்விந்தியர்; பண்டை இரசவாதத்தில் செந்நிறப் பாதரசக் கந்தகை.

**red'ness,** *n.* செந்நிறம், சிவப்பு.

**red'olence, red'olency,** *n.* முனைப்பான மணம், இனிய வாசனை.

**red'olent,** *a.* முனைத்த மணமுடைய; தொடர்புண்மை நினைப்பூட்டுகிற.

**redou'ble,** *n.* ஆற்றலிரட்டிப்பு; தொகைப்பெருக்கம்; அளவுப் பெருக்கம்; விசைப்பெருக்கம்; சீட்டாட்டத்தில் இரட்டிப்பின் இரட்டிப்புக் கேள்வி; *v.* இருமடியாக்கு; ஆற்றல் இரட்டி, தொகை பெருக்கு; உருப்பெருக்கு; அளவுபெருக்கு; விசை பெருக்கு; சீட்டாட்டத்தில் இரட்டித்த கேள்வியின் இரட்டிப்புக் கேள்வி கேள்.

**redoubt',** *n.* புற அரண்; களக் காப்பரண்.

**redoubt'able,** *a.* கடுமிடல் வாய்ந்த, தோலாப் பேராற்றல் வாய்ந்த

**redoubt'ed,** *a.* ஆற்றல் சான்ற, உருத்தக்க, அஞ்சுவரு தோற்றமுடைய.

**redound',** *v.* துள்ளி எழு; இறுதியில் சென்று சேர்; விளைவாக உதவு; பெரும் பங்காற்றி உதவு; நலம் பெருக்க உதவு; புகழ் பெருக்க உதவு; சென்று திரும்பு; உரியவரிடமே திரும்பி வந்துசேர்; மடங்கிவந்து பயன்படு.

**red'poll,** *n.* செஞ்சூட்டுடைய பறவைவகையின் சேவல்; விதையடிக்கப்பட்டுச் செம்மயிர்போர்த்த கால்நடை.

**redress',** *n.* குறை தீர்வு, சீராக்கம்; மாற்றீடு; *v.* குறை வகையில் தீர்வுசெய், நேராக்கு, சீர்ப்படுத்து.

**red'start,** *n.* செந்நிற வாலுடைய பாடும் பறவை வகை.

**red tap'ery, red-tap'ism,** *n.* அலுவல் நடைமுறைக் கடுமை.

**red-tap'ist,** *n.* விதியொழுங்குக் கடுமையர்.

**reduce',** *v.* முன்னிலைக்குக் கொணர்; மீட்டுக்கொணர், மறுபடியும் சீராக்கு; உருமாற்று; மாற்றி இசைவி; கட்டளை வடிவத்துக்குக்கொணர்; வகுத்தமை, வகைப்படுத்து, வகையுட் கொணர்; கட்டாயப்படுத்திச் செயற்படுத்து; அடக்கி ஆள்; குறை; தாழ்த்து; சுருக்கு; வறுமைக்கு ஆட்படுத்து; வலிமை குன்றுவி; எளிதாக்கு; சிக்கல் குறை; குறுக்கு, அளவு சிறிதாக்கு; எடையிற் குறைபடு.

**redu'cer,** *n.* நிழற்பட மறிநிலைத் தகட்டின் செறிவு தளர்த்த உதவும் பொருள்.

**redu'cible,** *a.* குறைக்கப்படத்தக்க.

***reduc'tio ad absurd'um,*** (ல.) *n.* விளைவுப் பொருத்தமின்மை காட்டி முடிவு தவறென்று எண்பித்தல்; (பே-வ.) செயல்துறைக்கு ஒவ்வா அளவில் கொள்கை வலியுறுத்தல்.

**reduc'tion,** *n.* குறைப்பு; குறைபாடு, சுருக்கம்; குறைவு; உருமாற்றம்; எளிதாக்கம்; படக்குறுக்கம்; (தொ.) reduction to absurdity, விளைவுப் பொருத்தமின்மை காட்டி முடிவு தவறென்று எண்பித்தல்; (பே-வ.) செயல்துறைக்கு ஒவ்வா அளவில் கொள்கை வலியுறுத்தல்.

**reduit,** *n.* கோட்டையின் சேம அகவரண் காப்பிடம்.

**redun'dance, redun'dancy,** *n.* மிகை, நிறைவு.

**redun'dant,** *a.* கழிமிகையான, தேவைக்கு மேற்பட்ட; மிகையுரையான, கூறியது கூறலான; நிறைந்த.

**redup'licate,** *v.* இரண்டாக மடி; இரட்டு; (இலக்.) சொல்லாக்கத்தில் முதல் எழுத்து அல்லது முதல் அசையிரட்டுதல்.

**reduplica'tion,** *n.* இரட்டிப்பு; திரும்ப நிகழ்வு; இரட்டுறு நிகழ்வு; எதிர் படிவம்; (இலக்.) சொல்லாக்கத்தில் முதல் எழுத்து அல்லது முதல் அசை இரட்டுதல்; சொல்லாக்கத்தில் முதல் இரட்டிய பகுதி.

**redup'licative,** *a.* (இலக்.) சொல்லாக்கத்தில் முதல் எழுத்து அல்லது முதல் அசை இரட்டிப்புடைய; சொல்லாக்க இரட்டிப்புச்சார்ந்த; இரட்டிக்கும் போக்குடைய; இரட்டிப்பினுலான; திரும்ப நிகழும் இயல்புடைய.

**red'-water,** *n.* சிறுநீர்ச் செந்நிறமாக்கும் முறைக்காய்ச்சல் தொடர்புடைய ஆடுமாடுகளின் நோய்வகை.

**red'-wing,** *n.* பாடும் பறவை வகை; பறவை வகை.

**ree,** *n.* பறவை வகையின் பெண்.

**reeb'ok,** *n.* கூரிய கொம்புகளையுடைய தென் ஆப்பிரிக்க ஆட்டியல் மான்வகை.

**re-ech'o,** *v.* ஒலி எதிரொலியாக முழங்கு, எதிரொலி முழக்கஞ் செய்.

**reed,** *n.* நாணல் வகை; கொறுக்கை, கோரைப்புல்; இசைக் கருவி அழுத்துகட்டை; துளை இசைக்கருவி வாய்க்கட்டை; சேணியர் அச்சுக்கோல்; கூரை வேயும்படி பதப்படுத்தப்படும் கோதுமை வைக்கோல்; *v.* கோரைப்புல்லால் வேய்; கூரை வேய்வதற்காகக் கோதுமை வைக்கோலைப் பதப்படுத்து; செதுக்கு வேலையில் நாணல் போன்ற வரி ஒப்பனை செய்; துளை இசைக்கருவிகளில் வாய்க்கட்டை பொருத்து; (தொ.) broken reed, நம்பத்தகாத பொருள்: நம்பத்தகாதவர்; lean on a reed, வலிமையற்ற ஒன்றன்மீது சார்; உறுதியற்றவர்மீது நம்பிக்கை வை.

reed'-band, *n.* அழுத்துகட்டைகளையுடைய இசைக்கருவித் தொகுதி.

reed'-bird, *n.* பறவை வகை.

reed'-bunting, *n.* கருந்தலைப் பறவை வகை.

reed'-drawing, *n.* வாருகருவிமூலம் கோதுமை வைக்கோலை வேய் புல்லாக வாருதல்.

reed'ed, *a.* நாணல் நிரம்பிய; நாணல் உடைய.

reed'en, *a.* நாணலாலான.

reed'er, *n.* கூரைவேய்பவர்.

reed'grass, *n.* நாணற் புல்வகை.

re-ed'ify, *v.* திரும்பக் கட்டியமை; நைந்த பகுதியை மீண்டும் தழைக்கவை; இழந்த நம்பிக்கையை மீண்டும் வருவி.

reed'iness, *n.* நாணல் நிரம்பிய நிலை; நாணல்போன்ற தன்மை; நாணல்போன்ற ஒலியியல்பு.

reed'ing, *n.* நாணய விளிம்புச் சூழ்வரி; நாணல்போன்ற வரி ஒப்பனை.

reed'-instrument, *n.* அழுத்தக்கட்டைகளையுடைய இசைக் கருவி வகைகளில் ஒன்று.

reed'-knife, *n.* இசைமேளச் சுதி கூட்டுங் கருவி.

reed'-mace, *n.* இழை இறகு சூழ்ந்த விதைவகை.

reed'-rand, reed'-rond, *n.* நாணற் புதர்.

reed'-stop, *n.* ஒரே நிறுத்தக் கட்டையால் கட்டுப்படுத்த வல்ல இசைக் குழாய்த்தொகுதி.

reed'-war'bler, *n.* சதுப்புநில நாணற்புதர்களிற் கூடுகட்டி வாழும் பறவைவகை.

reed'y, *a.* நாணல் நிரம்பிய; நாணல்போன்ற; நாணலால் செய்யப்பட்ட; வலிமையற்ற; ஒடுங்கிய; புல்வகையில் திண்ணிய; நாணல் குழல்போன்ற ஓசை தருகிற; நிரம்பா மெல்லிசையான.

reef[1], *n.* (கப்.) பாய்மடிக்கூறு, பாய்களின் உச்சி அல்லது அடியில் அளவு சுருக்குவதற்கான மடிக்கூறுகளில் ஒன்று; *v.* பாய்மடிக்கூறு இழுத்துப் பரப்பினைச்சுருக்கு; முகட்டுப் பாய் சுருக்கு; துடுப்பு மேலிழுத்து உகைப்புத் தண்டின் நீளங் குறை; (தொ.) take in a reef, விழிப்புடன் மெல்லச் செல்; மெல்ல விழிப்புடன் நட.

reef[2], *n.* கடல் நீரடிப்பாறை; கடல் நீரடி மணல்மேடு; தங்கச் சுரங்கக் கனிப்பாறை; சுரங்க அடிப்பாறை; வைரச் சுரங் கத்தில் மணிப்பாறைசூழ் பாறை.

reef'er[1], *n.* (கப்.) பாய்மடி சுருக்குபவர்; (கப்.) முடிச்சு வகை இரட்டை முடிச்சு; திண்ணிய இருமார்பு வரிச்சட்டை.

reef'er[2], *n.* கஞ்சாச்சருகூட்டிய புகை குடிப்பதற்குரிய மயக்கப் பூஞ்சுருட்டு.

reef'ing-jacket, *n.* திண்ணிய இருமார்புவரிச் சட்டை.

reef'-knot, *n.* முடிச்சு வகை, இரட்டைமுடிச்சு.

reef'-point, *n.* கப்பற் பாயில் இணைத்துள்ள சிறு கட்டுக் கயிறு.

reek, *n.* ஆவி; புகை; புகையாவி; புழுக்கவாடை, வாடை வீச்சம்; ஊசல் நாற்றம்; புழுக்க ஆவி மண்டலம்; *v.* புகை யாவி வெளியிடு, புழுக்க ஆவி வெளியிடு, புழுங்கு; விரும்பத் தகாத வாடை பரப்பு.

reek'ie, *a.* புகையாவி வெளியிடுகிற; (தொ.) Auld Reekie, ஸ்காத்லாந்தின் தலைநகரான எடின்பரோ (Edinburgh).

reek'y, *a.* புகையாவி வெளியிடுகிற; புகையார்ந்த, புகை மண்டுகிற, புழுங்கி நாறுகிற.

reel, *n.* திருகுவட்டு, நூல்-கயிறு-பட்டு-காகிதம்-கம்பி முதலி யன வாங்கிச் சுற்றும் இயந்திரக்கருவி வகை; சுழல்வட்டு, தூண்டிற் கயிறைவேண்டும் நிலையிற்சுற்றி அவிழ்ப்பதற்கான அமைவு; சிட்டம், சுற்றிழையின் நீள அலகு; தையல்நூல் சுற்றி வைக்கப்படும் சிறு நீளுருளை; இயந்திரங்களில் சுழலும் பகுதி; ஏறத்தாழ ஆயிரம் அடி நீளம் கொள்ளும் திரைப்படத் தகட்டுச்சுருணை; சுறக்கம், சுழன்று தள்ளாடும் நிலை; எழுச்சி மிக்க ஸ்காத்லாந்து கூத்துவகை; *v.* திருகுவட்டில் சுற்று; வட்டுச்சுழற்றிக் கூட்டிலிருந்து பட்டுநூலிழை பிரித்தெடு; கதை-பாடல் முதலியவற்றை மடமடவென்று சொல்லிக் கொண்டுபோ; தத்துக்கிளி முதலியவை வகையில் 'க்ளிக்' என்று ஒலியெழுப்பு; கண்கள் வகையில் மயக்கத்தினால் சுழலு, தலைசுற்று; உள வகையில் மயக்கமடை; உறுதி யின்றி நில், தள்ளாடு, பக்கத்துக்குப் பக்கம் ஊசலாடு, தள்ளாடி நட, ஊசலாடி ஓடு; உடம்பிலோ உளத்திலோ ஆட்டங்கொள்ளு; வேகமாகச் சுழன்று தளர்வுறு; அசைந் தாடுவதாகத் தோன்று; ஸ்காத்லாந்துக் கூத்துவகை ஆடு; (தொ.) off the reel, right off the reel, நேரே தங்குதடை யின்றி, அடுத்தடுத்து விரைவாக; reel off, விரைவாக வெளி யிடு, தங்கு தடையின்றி வரவிடு; Virginia reel, அமெரிக்க நாட்டுப்புற ஆடல்வகை.

re-elect', *v.* மீண்டுந் தேர்ந்தெடு.

re-elec'tion, *n.* மறு தேர்தல்; மறுபடியுந் தேர்ந்தெடுத்தல்; திரும்பத் தேர்ந்தெடுக்கப்படல்.

re-emerge', *v.* மறைவிலிருந்து மீண்டும் வெளிப்படு.

reen, *n.* அகல்பெரும் பள்ளம்.

re-en'gine, *v.* கப்பலுக்குப் புதிய இயந்திர இணைப்புச்செய்.

re-en'ter, *v.* மீண்டும் நுழை; புதிதாக நுழை; மறுபடியும் பதிவுசெய்; செதுக்கு வேலை வகையில் இன்னும் ஆழமாக அகழ்.

re-en'trance, *n.* மறு நுழைவு; மறு உள்ளேற்ற வெற்றி; அரண் வகையில் உள் நோக்கிய திருப்பநிலை; புற அரண் கூம்புகளின் இடைப்பட்ட உள்வளைவு நிலை.

re-en'trant, *n.* உள்ளுறு திருப்பம்; *a.* உள்நோக்கித் திரும்புகிற.

re-en'try, *n.* மறுநுழைவு; (சட்.) மறித்துடைமைப்பேறு, மீண்டும் உடைமையாக்கிக் கொள்ளுதல்; சீட்டாட்ட வகை யில் தந்திரத்தினால் ஒருவர் கை மேலோங்கச்செய்யுஞ் சீட்டு; (தொ.) card of re-entry, சீட்டாட்ட வகையில் தந்திரத் தினால் ஒருவர் கை மேலோங்கச்செய்யுஞ் சீட்டு.

reeve[1], *n.* (வர.) முதன்மைக் குற்ற விசாரணை நடுவர்; கானடாவில் கிராம நகர்க்குழுத் தலைவர்.

reeve[2], *n.* மணற்பாங்கு இடங்களில் திரியும் பறவையினப் பெடை.

reeve[3], *v.* கயிற்றை வளையமூலமாகக் கோத்து இழு; மாக் கட்டை முதலியவற்றில் கயிறு வரிந்துகட்டு; கப்பல் வகையில் பனித்திரள் ஊடே செல்; மீன்திரள் ஊடுருவிச்செல்.

reeved, *v.* reeve[3] என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவங் களில் ஒன்று.

re-examina'tion, *n.* மறுமுறைச் சாட்சி விசாரணை; புனர் விசாரணை.

re-exam'ine, *v.* எதிர்வாதி குறுக்கு உசாவலின்பின் நிகழும் வாதிபக்க மறு சான்று உசாவல் செய், இரண்டாம் தடவைச் சாட்சி விசாரணை நடத்து; புனர்விசாரணை செய்.

re-ex'port[1], *n.* திருப்பேற்றுமதிச் சரக்கு, இறக்குமதியாய்ப் பின் ஏற்றுமதியாகும் பொருள்.

re-export'[2], *v.* திருப்பேற்றுமதிசெய், இறக்குமதியான சரக்கையே மீட்டும் ஏற்றுமதி செய்.

re-exporta'tion, *n.* திருப்பேற்றுமதி, இறக்குமதியான சரக்கையே மீட்டும் ஏற்றுமதி செய்தல்.

ref, *n.* (பே-வ.) காற்பந்தாட்ட அறிவுரை நடுவர்.

reface', *v.* கட்டிடத்துக்குப் புது முகப்பளி.

refec'tion, *n.* சிற்றுண்டி, உணவாகவோ பானமாகவோ உள்ள சிற்றூண்; சிற்றுணா, இலேசான உணவு.

refec'tory, *n.* துறவிமட உணவுக்கூடம்.

refer', *v.* குறிப்பிடு; சுட்டு; குறித்துப்பேசு; எடுத்துப்பார்; வேண்டும்போது உதவிநாடு; பற்றியதாயிரு, தொடர்புடைய தாயிரு; உரியதாக்கு; உரியதாகச் சுட்டு; குறித்தொதுக்கு; தொடர்புடையதாகக் கருது; தொடர்புடையதாக இணைக்க

கருது; தொடர்புபடுத்து; பொருட்படுத்து; உரிய வினை வாகச் சுட்டு; காரண காரியத் தொடர்புடையதாகக் கருது; மூலமாகக் குறிப்பிடு; கலந்தாராய்; கலந்தாய்வுத் தொடர்பு கொள்; நாடி ஆய்வுரை கோரு; தகவல் நாடிச்சென்று கேள்; நாடி அணுகு; வேண்டு, கோரிக்கைவிடு; சென்று உதவி கோரு; ஆற்றுப்படுத்து; தகவல்பெற அனுப்பு; பார்க்கும்படி ஏவு; மேவுவி; ஆய்வுரைக்காக அனுப்பு; மேற்கோளாளராகப் பரிந்துரைத்து அனுப்பு; தக்க மேற்கோளாக எடுத்துச்சுட்டு; ஆதாரமாகக்காட்டு; பிணை வகையில் சுட்டிக்காட்டு; பிணை பெற அனுப்பு; ஒப்புவி; ஒப்படை; (தொ.) refer to drawer, (சுவ. R. D.) பொருளகத்தில் காசோலைக்குப் பணம் கொடுக்க விரும்பாது எழுதும் வகையில் குறிக்கப்படும் வாசகம், 'பிறப்பித்தவரிடமே கலந்து கொள்க' என்னும் கட்டளைக்குறிப்பு.

**ref'erable**, *a.* மூலமாகக் குறிப்பிடத்தக்க; குறித்துக் கலந் தாய்வதற்குரிய; கலந்தாய்வுக்கு அனுப்பப்படத்தக்க; கலந் தாய்வுக்கு அணுகத்தக்க; ஒதுக்கப்படத்தக்க.

**referee'**, *n.* ஆட்ட நடுவர், ஆட்டக்காரணிகர்; *v.* நடுவ ராகச் செயலாற்று.

**ref'erence**, *n.* தொடர்பு, உறவு, பொருத்தம்; குறிப்பீடு, குறிப்புரை; சுட்டுரை, சுட்டுக்குறிப்பு; சுட்டுக்குறியீடு; புரட்டரவு, தேவை நோக்கீடு, தேட்டத் தேர்வு; தகவல் தேட்டம், குறிப்புத்தேட்டம்; தகவல் குறிப்புக் கோரிக்கை; துணையாதாரம்; மேற்கோள், சான்றுதாரம்; பிணை ஏற்பா தரவு; சான்றுதரவு; பரிந்துரைப்பு; மேவுவிப்பு; தகவலுக் கான ஒப்புவிப்பு; முடிவுக்கான ஒப்படைப்பு; பணியாணை உரிமையெல்லை; *v.* புத்தகத்தில் மேற்கோள் சுட்டுங் குறிப்புக்களை இணை; (தொ.) book of reference, பார்வைக் குரிய சுவடி; தேவை நோக்கீட்டுச் சுவடி; cross reference, மாட்டேற்றக் குறிப்பு; in reference to, தொடர்பாக, குறித்து, பற்றி; legislation by reference, சட்டத்தின் முற்சுட்டு வரைவாக்கப்பகுதி; reference bible, ஓரப்பிறிதிடச் சுட்டுக்களையுடைய விவிலிய ஏடு; reference library, மேற் கோள் நூலகம்; reference marks, உடுக்குறி முதலிய (* † ‡ § ||) சுட்டுக் குறியீடுகள்; terms of reference, ஆய்வுரிமை எல்லை வகுப்பு வாசகங்கள்; ஆய்வுரிமை வரம்பு; without reference to, எது எப்படியிருப்பினும், எவ்வாறு யினும்; with reference to, பற்றி, குறித்து; பற்றிய வகையில்.

**referen'dum**, *n.* பொதுமக்கள் வாக்கெடுப்பு, தனி ஒரு செய்தியில் தேர்தலுக்குரிய மக்கள் தொகுதியினர் அனைவரும் வாக்கெடுப்பு மூலம் நேரடியாக முடிவு செய்யும் குடியொப்ப முறை.

**referen'tial**, *a.* சுட்டு அல்லது மேற்கோள் அடங்கிய; வேறொன்றினைச் சுட்டுகிற அல்லது குறிப்பிடுகிற.

**ref'ill [1]**, *n.* மறு நிரப்பீடு; மறு நிரப்பீட்டுச் சேமத்தங்கற் பொருள்; வெடிமருந்தின் மறுசெறிவு; வெடிமருந்தின் மறு அடைப்பளவு.

**refill' [2]**, *v.* மீண்டும் நிரப்பு; வெடிமருந்தினை மீண்டும் நிறை.

**refine'**, *v.* மாசகற்று, துப்புரவு செய்; தெளிவாக்கு; அழகிய தாக்கு; நேரிதாக்கு; பண்பு மேம்படுத்து; நாகரிகமுடைய தாக்கு; சுவை நுட்பமூட்டு; ஒழுகலாறுகளைப் பண்படுத்து; புறத்தோற்றத்துக்கு மெருகிடு; தூய்மையாகு; தெளிவு படு; நாகரிக நடத்தை வளரப்பெறு; மென்மைநயம் மிகுதி யாகப் பெறு; மொழிவகையிற் செப்பஞ் செய்; கருத்துச் சொல் திட்ப நுட்பங் கையாளு; நேர்த்தி நுட்பங் கையாண்டு செம்மைப்படுத்து; நுட்பமான வேறுபாடுகள்செய்; மிகு நுட்பமாக விரிதது உரையாடு.

**refined'**, *a.* துப்புரவாக்கப்பட்ட; செப்பஞ் செய்யப்பட்ட; பண்பட்ட.

**refin'edly**, *adv.* நயநாகரிகமாக; வனப்புடையரென்ற நிலை மேற்கொண்டு.

**refine'ment**, *n.* தூய்மைப்பாடு; துப்புரவாக்கப்பட்ட நிலை; கருத்து நுட்பம், சுவை நேர்த்தி; மெருகேறிய ஒழுகலாறு; நுண்ணிய திறங்காட்டும் நிலை; திறமைமிக்க வேலைப்பாடு, நுணுக்க விரிவாக வகுத்தமைக்கப்பட்ட வேலைப்பாடு; நுட்பமான ஆய்வாராய்வுப்பண்பு; நுண்ணய வேறுபாட்டுத் திறம்.

**refin'er**, *n.* செம்மைப்படுத்துபவர், தூய்மையாக்குபவர்; தெளிவாக்குபவர்; சர்க்கரை-உலோகம் முதலியவற்றைத் தூய்மைப்படுத்தும் தொழில் மேற்கொண்டவர்.

**refin'ery**, *n.* தூய்மி.

**refit'**, *n.* செப்பநிலைச் சீர்திருத்தம்; *v.* கப்பலை மீண்டும் நன்னிலைப்படுத்தும் வகையில் சீர்திருத்து; கப்பல் வகையில் மீட்டும் பயன்படும்படி சீர்திருத்தம் பெறு.

**refit'ment**, *n.* கப்பலின் செப்பநிலைத்திருத்தம்.

**refla'tion**, *n.* பொருளியல் மறுவீக்கம், நாணய மதிப்பின் மீட்டுயர்வு.

**reflect'**, *v.* ஒளிக்கதிர்களை வாங்கி எறி; ஒளியை எதிரடித்துக் காட்டு; பளிங்கு வகையில் எதிர்நிழலிடு, நிழலுருப்படுத்திக் காட்டு; ஆழ்ந்து நினை, சிந்தனை செய்; மீட்டும் நினைவுக்குக் கொண்டுவா; திரும்பவும் நினைத்துப்பார்; பழைய நினைவு களில் ஆழ்; எதிர் விளைவாக வழங்கு; மேற்படிவி; விளைவி, வழங்கு; வசைக்கூறுபடிவி; வசைக்குறிப்பு எழுப்பு.

**reflect'ed**, *a.* எதிரொளியாக வீசப்பட்ட, ஒளிவகையில் எதிரடிக்கப்பட்ட; பிறரொருவரால் வழங்கப்பட்ட; பிறி தொன்றனிடமிருந்து பெறப்பட்ட; (தொ.) shine with reflected light, இரவல் ஒளியினால் ஒளிர்; பிறிதின் பண்பி னால் விளக்கமுறு; பிறரது மேம்பாட்டால் மேம்பாடுறு.

**reflect'ing**, *a.* ஒளி எதிரடிக்கிற; ஒளிக்கதிர்களை வாங்கி எறிகிற; நிழலுருக் காட்டுகிற; (தொ.) reflecting microscope, கண்ணாடி வில்லைகளுக்குப் பதிலாக உருக் காட்டும் பளிங்குகள் பயன்படுத்தப்படும் உருப்பெருக்காடி; reflecting telescope, குவிந்த உருப்பளிங்குச் சில்லால் காட்டப்படும் பொருளின் உருவைக் கண் வில்லைகளால் பெரிதாக்கிக்காட்டுந் தொலைநோக்காடி.

**reflect'ingly**, *adv.* ஆழ்ந்த நினைவுடன்; கண்டிக்குங் குறிப் புடன், வசைக்குறிப்புத் தோன்றும்படியாக.

**reflec'tion**, *n.* ஒளிக்கதிர் வகையில் வாங்கி எறிதல்; ஒளி வகையில் பட்டெறிதல், முட்டிமீளல்; பட்டெறிவு, பட்டெறி வெப்பு; பட்டெறி வண்ணம்; உருநிழலீடு, பிரதிபலிப்பு; உருநிழற்படிவு; உருநிழல், பிரதிபிம்பம்; உள்மடி நரப்பியக் கம், விருப்பாற்றலுக்கு உட்படாத உணர்ச்சியின் உட்கோட்ட விளைவான நரப்பியக்கம்; கண்டனக் குறிப்புடன் இகழ்தல்; ஏளனக்குறிப்பு, வசைக்குறிப்பு; அவப்பெயர் தேடித்தரல், புகழ்க்கறைப்படிவு; புகழ்க்கறை; உண்ணினைவாற்றல், தன்னுள் நிகழ்பவற்றைத் தானே உணர்ந்துகொள்ளும் மன ஆற்றல்; கருத்து, நினைவு; சிந்தனை, சிந்தனை தரும் விளக்கம்; சிந்தனை உரை, பொருள் பொதிந்த உரை, செறிமொழி; (தொ.) angle of reflection, பட்டெறிகோணம், உருத் தெறிகோணம், முட்டி மீண்ட கதிர்ப்பரப்பின் செங்குத்துக் கோட்டுடன் இயங்குங் கோணம்.

**reflec'tive**, *a.* தளப்பரப்பு வகையில் பட்டெறியவைக்கிற, பிரதிபலிக்கிற; உருநிழல்காட்டுகிற; சிந்தனையில் ஈடுபடும் பாங்குடைய; அமைந்தாய்கிற, ஆய்ந்து பார்க்கும் இயல்புடைய.

**reflec'tor**, *n.* கதிரெறிபரப்பு; கதிர்களை மீள எறியும் பொருள் அல்லது மேற்பரப்பு; உருநிழல் எறிதளம்; தெறி முகப்பு வில்லை, வேண்டிய திசையில் ஒளிவாங்கி மீளச் செய்வதற்குரிய உட்குழிவுடைய வில்லை; படிவுருக்காட்டும் அமைவு, உருக்காட்டமைவு தொலைநோக்கி; படிவமைவுச் சாதனம், பழக்க வழக்க மனக்கோட்டங்கள் உருப்படிவித்துக் காட்டும் அமைவு; படிவமைவாளர், உருப்படிவித்துக் காட்டுபவர்.

***reflet***, (பிர.) *n.* மட்பாண்டப் பளபளப்பு; மட்பாண்ட வண்ணவெட்டு.

ref'lex[1], *n.* எதிர்கிழல், நிழலுரு; எதிர் உருப்படிவு, மறு படிவுரு; துணைப்படிவுத்தோற்றம், இணை எதிர்ப்படிவம்; இணை துணைவிளைவு; படர் ஒளிவண்ணம்; ஓவியவகையில் பட்டெறி ஒளிவண்ண இயல்பமைவு; பட்டெறி ஒளி; பட்டுத்தெறி வண்ணம்; சார்புவண்ணப் புகழ்; புற உருத் தோற்றம், பண்புரு; இயல் நரப்பியக்கம், உடல் இயக்க வகையில் விருப்பாற்றலுக்கு உட்படாத தன்னியல் நிகழ்வு; *a.* தாக்கிமீண்ட, பின்னோக்கி மடங்கிய; ஒளிவகையில் பட்டெறிவான, எதிர்நிழலீடான; கருத்துவகையில் உண் மறிவான; சிந்தனைவகையில் தன்மீள்வான; உள்ளியக்க வகையில் தன்னெறிவான; விளைவுவகையில் செய்பவர்மீதே எதிர்மீள்வான; மூலத்தின்மீதே எதிர்த்துத்தாக்குகிற; உடல்சார்ந்த இயக்கவகையில் தன்னியல்வான, விருப்பாற் றலுக்கு உட்படாது புறத்தூண்டுதலடுத்துத் தானே இயங்கு கிற; (தொ.) reflex action, (உட.) மறிவினை, கருதாத் தன்னியல்வு செய்கை, மனத்தினால் கருதப்படாமல் புறத் தூண்டுதல் நேர்ந்தபோது நரம்புக்கிளர்ச்சிக்கு இணங்கத் தன்னியல்பாகத் தூண்டப்படும் உள்ளுறுப்பியக்கச்செயல்; reflex camera, முன்கட்சித் தேர்வமைவுடைய நிழற்படக் கருவி, படமெடுக்கும் நேரம்வரையில் உருவத்தைக் கண்டு குவிமையப்படுத்தக்கூடிய நிழற்படக் கைப்பெட்டி வகை; reflex light, பின்வரும் விசைவண்டியின் முகப்பு விளக்கொளி பட்டவுடன் சிவப்பு ஒளிகாலும் இயல்புடைய உருப்பளிங்கு வில்லை.

reflex'[2], *v.* பின்னோக்கி வளை.

reflexed', *a.* (தாவ.) பின்னோக்கித் திடீரென வளைந்த; கீழ்நோக்கித் திடுமெனத் திரும்பிய.

reflex'ible, *a.* முட்டிமீளும் இயல்புடைய.

refle'xion, *n.*=reflection.

reflex'ive, *n.* (இலக்.) தன்மறிவியற்சொல்; தன்மறிவியற் சொற்படிவம்; தன்மறிவியல் மறுபெயர்; தனிமறிவியற் பெயரடை; *a.* தன்மறிவான; செயல் செய்முதல்மீதே தாக்கு வது குறித்த; எழுவாயினையே செயப்படுபொருளாக மீட்டுங் குறித்த; தற்சுட்டான.

refloat', *v.* கரைதட்டிய கப்பலை மீட்டுங் கடலில் மிதக்கவிடு.

ref'luence, *n.* திரும்பிப் பாய்தல்; கடலலையின் வேலையிறக் கம்; குருதி மீட்சிப்பாய்வு.

ref'luent, *a.* திரும்பிப் பாய்கிற; கடலலை வேலை இறங்கு கிற; குருதி திரும்பி உட்செல்கிற.

ref'lux, *n.* பின்னோக்கிய நீரோட்டம், பின்னொழுக்கு.

refoot', *v.* காலுறை அடிப்பாகம் புதுப்பி.

refo'rest, *v.* மீட்டுங் காடாக்கு.

reforesta'tion, *n.* மீட்டுங் காடாக மாற்றுதல்.

reform'[1], *n.* சீர்திருத்தம், நலமேம்பாடு, சீரமைவு, மாற்றி யமைத்தல்; சீர்ப்பாடு, அரசியற் குறைநீக்கம்; ஊழல் நீக்கம்; சீராக்கம், சமயத்துறையில் செயல்துறைக் கண்டிப்புமிகுந்த புதுக்கிளை; சீர்மை, சட்டமாமன்ற உறுப்பாண்மையை முன் னிலும் நேர்மைவாய்ந்த அடிப்படையில் சீரமைத்தல்; *v.* சீர்திருத்து, சீர்ப்படுத்து; சீர்திருந்து, சீர்ப்படு; மாற்றியமை, புத்தமைவாக்கு; சீராக்கு, நலமேம்படுத்து; சீர்மைசெய், குறை நீக்கு, ஊழலகற்று; திருத்தங்கள்செய்; திருத்து; ஒழுக்கம் மேம்படுத்து; திருந்து, ஒழுக்க மேம்பாடுறு; தீங்குகளை அகற்றி ஒழி; (தொ.) Reform Bill, இங்கிலாந்தில் பாராளு மன்றப் பிரதிநிதித்துவத்தைச் சீர்ப்படுத்துவதற்காக 1831–2- இல் பிறப்பிக்கப்பட்ட சீர்திருத்தச் சட்ட வரைவு; Reform Club, இங்கிலாந்தின் விரிநிலை தழுவு கட்சியினரின் முன்னுள் தலைமையிடம்.

reform'[2], *v.* மீண்டும் உருவாக்கு; மீண்டும் உருவாகு.

Reforma'tion[1], *n.* ரோமன் திருச்சபையிலிருந்த குறைபாடு களை நீக்குவதற்காக 16-ஆம் நூற்றாண்டில் நடந்த கிறித்தவ சமயச் சீர்திருத்த இயக்கம்.

reforma'tion[2], *n.* சீர்திருத்துதல்; சீர்திருந்துதல்; சீர் திருத்தம், அரசியல்-சமய-சமுதாயத்துறைகளில் நல்லாக்கம் நோக்கிய அடிப்படை மாறுதல்.

re-forma'tion[3], *n.* மீட்டும் வகுத்தமைத்தல்; மறுசீராக்கம்; மீட்டுருவாதல்.

reform'ative, *a.* சீர்திருத்தும் பாங்குள்ள, சீர்ப்படுத்து வதையே நோக்கமாகக் கொண்ட.

reform'atory, *n.* இளைஞர் சீர்திருத்தச்சாலை, இளங்குற்ற வாளிகளின் சீர்திருத்தப்பள்ளி; *a.* சீர்திருத்தும் பாங்குள்ள, சீர்ப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்ட.

reformed', *a.* திருந்திய; சீர்திருத்தநெறி சார்ந்த; (தொ.) Reformed Churches, சமயச் சீர்திருத்த ஆதரவாளரான புரோட்டஸ்டாண்டு(Protestant)களுக்குரிய திருச்சபைகள்.

reform'er, *n.* சீர்திருத்தாளர்; சீர்திருத்தவாதி; 16-ஆம் நூற்றாண்டில் நடந்த சமயச் சீர்திருத்த இயக்கத்தலைவர்; 1831-2ஆம் ஆண்டுகளில் இங்கிலாந்தில் கொண்டுவரப்பட்ட சீர்திருத்தச்சட்ட வரைவினை ஆதரித்தவர்.

refract', *v.* கோட்டமுறு, கண்ணாடி-வளி-நீர்மம் முதலிய வேறுவேறு திட்பமுடைய ஊடக மாற்றங்களால் ஒளிக்கதிர்ச் சாய்வு மாறுபடு; கதிர் சிதர்வுறு; கதிர்ச்சிதர்மூலம் உண்டு பண்ணு; (வேதி.) வெடியம் போன்ற பொருள் வகையில் கதிர்ச் சிதர்வாராய்ச்சிமூலம் மாசின்மை விழுக்காடு அறுதி செய்.

refract'ing, *a.* ஒளிக்கதிர்க்கோட்டமுடைய; கதிர்ச்சிதர் வுடைய; (தொ.) refracting telescope, கதிர்க்கோட்டத் தொலைநோக்காடி.

refrac'tion, *n.* வக்கரிப்பு, கதிர்க்கோட்டம்; கதிர்ச்சிதர்வு; (தொ.) angle of refraction, வக்கரிப்புக்கோணம், கோட்ட விளைவரைக்கும் வக்கரிப்புத்தள நேருக்கும் இடைப்பட்ட கோணம்.

refrac'tive, *a.* ஒளிக்கதிர் விலக்கஞ் செய்கிற; ஒளிக்கதிர்க் கோட்டஞ் சார்ந்த.

refrac'tor, *n.* ஒளிக்கதிர்க்கோட்டம் உறுவிக்கும் பொருள்; கதிர்க்கோட்டத் தொலைநோக்காடி.

refrac'tory, *n.* உயர்வெப்பு ஏற்கும் பொருள்; *a.* படிமான மற்ற; ஒத்திசைவற்ற; எதற்கும் மசியாத; வசப்படுத்த முடியாத; முரண்டுபிடிக்கிற; கலாம் விளைக்கிற; பண்டு வத்துக்கு ஒத்துவராத; பொருள்கள் வகையில் உருக்கமுடி யாத, வேலைப்பாட்டிற்கு உட்படுத்த முடியாத.

refrain'[1], *n.* பல்லவி, பாடலின் கடைமடக்குவரி.

refrain'[2], *v.* தன்னை அடக்கிக்கொள்; செயல்வகையில் தவிர், விலக்கியமைவுறு.

refrangibil'ity, *n.* வக்கரிப்புத்தன்மை, கதிர்விலகு நீர்மை.

refran'gible, *a.* கதிர்க்கோட்டமுறுவிக்கத்தக்க.

refresh', *v.* புதுக்கிளர்ச்சியூட்டு, புதுவலுவூட்டு; புத்துயிர்ப் பூட்டு, சிற்றுணு அருந்து; சிறுபானம் பருகுவி; ஓய்வுமூலம் புத்தாக்கம் அளி; நினைவாற்றலைக் கிளறிவிடு; அனலைக் கிளர்ந்தெழச் செய்; மின்னாற்றலுக்குப் புது ஆக்கம் அளி; சிற்றுண்டி அருந்து; ஊக்கந்தருஞ் சிறுகுடி பருகு.

refresh'er, *n.* ஊக்குபவர்; உயிர்ப்பிப்பது; வலுவூட்டுவது, நாட்பட்டு நடத்திய வழக்கில் வழக்கறிஞருக்குக் கொடுக்கப் படும் மிகைப்பணம்; (பே-வ.) பானம்; புதுமுறை ஆதரவுப் பயிற்சி, வலுவூட்டும் மறு பயிற்சி; (தொ.) refresher course, புதுமுறை ஆதரவுப்பயிற்சி, மறு பயிற்சி.

refresh'ing, *a.* குளிர்தருப் போன்ற; கிளர்ச்சியூட்டுகிற, புது வலுவுண்டாக்குகிற.

refresh'ment, *n.* புதிய தெம்பு அளித்தல்; புதுவலுவாக்கம், புத்தூக்கப் பேறு; இளைப்பாற்றி, களைப்பாற்றரவு; சிற்ற ருந்தல்; அயர்வாற்றும் சிற்றுணு; விடாயாற்றி, தளர் வகற்றுஞ் சிறுகுடி; (தொ.) refreshment car, சிற்றுண்டி இரயிற்பெட்டி; refreshment room, சிற்றுண்டி நிலையம்; Refreshment Sunday, ஆங்கில-ரோமன் கத்தோலிக்க திருக் கோயில்களில் அப்பத்துண்டு-மீன் பற்றிய கதை படிக்கப் படும் கிறித்தவ நோன்புவிழாவின் நான்காவது ஞாயிற்றுக் கிழமை.

refresh'ments, *n. pl.* நொறுவல், சிற்றுண்டிபானங்கள்.

**refrig'erant**, *n.* உறை குளிரூட்டி, குளிரால் உறைபதனம் ஊட்டும் பொருள்; தட்ப இன்னிலையூட்டி, உடலுக்கு இனிய குளிர் உணர்ச்சியைக் கொடுப்பது; *a.* உறைவிக்கிற; உறை பதனமூட்டுகிற; தட்பநிலையூட்டுகிற; வெப்பாற்றித் தெம்பு உண்டுபண்ணுகிற.

**refr'igerate**, *v.* உறைவி; உறைகுளிரூட்டு; உறைபதனப் படுத்து; இனிய தட்பநிலைப்படுத்து.

**refrig'erator**, *n.* தட்பச்சேம அமைவு; குளிர்பதன அறை; குளிர்காப்புப்பெட்டி.

**refri'geratory**, *n.* பனிக்கட்டி விளைவிக்கும் அறை; உறை குளிரூட்டி, உறைபதன அமைவு; *a.* குளிரப்பண்ணுகிற.

**reft**, *v.* reave என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**ref'uge**, *n.* அடைக்கலம், புகலிடம்; பாதுகாப்பிடம்; இடர் காப்பிடம்; களைகணானர், தஞ்சமளிப்பவர், அடைக்கலங் கொடுப்பவர்; இடர்காப்புநெறி, இடர் உறுங்கால் மேற் கொள்ளப்படும் நெறி; நெறிகாப்பிடம், போக்குவரத்து நட மாட்டம் மிகுந்துள்ள பாட்டை நடு மேட்டிடம்.

**refugee'**, *n.* அகதி, சரணடைவோர்; புக்கிலாளர்.

**reful'gence**, *n.* பிறங்கொளி, திகழ் ஒளிவண்ணம்.

**reful'gent**, *a.* ஒளிருகிற, பிறங்கொளி வாய்ந்த; ஒளி திகழ் கிற, கதிரொளி வீசுகிற; பேரொளி வண்ணமான.

**refund'**, *n.* பண ஒடுக்கம், பண அடைப்பு, பொருள் திருப்பிக் கொடுத்தல்; *v.* பணம் மீட்டடை, திருப்பிக்கொடு; செலவு ஈடுசெய்; பதில் செய்; பெற்றதை மீளக்கொடு.

**refund'ment**, *n.* பண ஒடுக்கம்; பண மீட்டமைப்பு; பெற்றது திருப்பிக்கொடுத்தல்.

**re'furb'ish**, *v.* ஒளிரச்செய்; ஊக்குவி; புதுப்பி.

**refus'al**, *n.* மறுத்தல், மறுப்பு; மறுக்கப்பட்ட செய்தி; ஏற்பு மறுப்புரிமை, ஏற்கவோ மறுக்கவோ உள்ள முத லுரிமை.

**ref'use[1]**, *n.* கழிவு, குப்பை; மலம்; *a.* கழிகடையான, பயனற்றதெனத் தள்ளிவிடப்பட்ட.

**refuse'[2]**, *v.* மறு; ஏற்க இசைவின்மை தெரிவி; ஏற்றுக் கொள்ள மறு; வேண்டாமென்று துற; கொடுக்கமாட்டேன் என்று கூறு; பணிய மறுப்புத் தெரிவி; இசைய மறு; செய்ய விருப்பின்மை தெரிவி; மறுப்புக்கூறு; சீட்டாட்ட வகையில் முதலிறங்கின வகையிலேயே தொடர்ந்து ஆடத் தவறு; (தொ.) horse refuses, horse refuses fence, குதிரை வேலியைத்தாண்ட மறுக்கிறது.

**re-fuse'[3]**, *v.* மீண்டும் உருக்கிப் பற்றவை.

**ref'utable**, *a.* தவறென்று மறுக்கத்தக்க; நிராகரிக்கத்தக்க.

**refut'al**, *n.* மறுப்பு, பொய்யென எண்பித்தல்.

**refuta'tion**, *n.* மறுப்புரை, கண்டனக்குறிப்பு; தவறென்று நாட்டுதல், வாதிட்டு நிராகரித்தல்.

**refute'**, *v.* தவறென நாட்டு, மறுத்து வாதிடு, வாதிட்டுத் தள்ளு.

**regain'**, *v.* மீட்டும்பெறு; இழந்ததை மறுபடியும் எய்தப் பெறு; இழந்த உணர்வை மறுபடியும் அடை; இடவகையில் மீண்டுஞ் சென்றுசேர்; நிற்கும் நிலையை மீண்டும் அடை; (தொ.) regain one's feet, திரும்ப எழுந்து நில்; regain one's footing, இழந்த நிலையை மீட்டும் பெறு.

**reg'al**, *a.* அரசர்களுக்குரிய; அரசர்களால் ஆன; அரசருக்குத் தகுதியான; விருந்த.

**regale'**, *n.* அருஞ்சுவையுணவு; *v.* சுவைமிக்க உணவு வழங்கி மகிழ்வி; தேர்ந்த உணவளித்து அன்பாதரவு காட்டு; பேசி மகிழ்வூட்டு; இன்பம் நுகர்வி.

**regale'ment**, *n.* நல்விருந்தளித்தல்.

**regal'ia**, *n. pl.* முடிசூட்டு விழாக்களிற் பயன்படுத்தப் பெறும் அரசுரிமைச் சின்னங்கள்; சிறப்புரிமைக் கழகத்தின் அடை யாளம்; உயர்வகைப் பெருஞ்சுருட்டு.

**reg'alism**, *n.* அரசனின் சமயத்துறைத்தலைமைக் கோட்பாடு.

**regal'ity**, *n.* அரசுரிமைப் பண்பு; அரசுநிலை; கோனாட்சி; கோனாட்சியரசு; மன்னர் சிறப்புரிமை.

**regard'**, *n.* உன்னிப்பான நோக்கு; உறுத்த பார்வை; குறிப் பான நோக்கு, பொருள் பொதிந்த பார்வை; மரியாதை, மதிப்பு; கவனிப்பிற்குரிய செய்தி; கவனிப்பு, கவனம், அக்கறை; மதிப்பார்வப் பாராட்டு; வாழ்த்து; *v.* உற்றுப் பார், குறிப்பாக நோக்கு; மதிப்புக்கொடு; கவனிப்புக்கு உட் படுத்து; பொருட்படுத்து; கவனி; கருது, பாவி; தொடர் புடையதாயிரு; குறித்ததாயிரு; (தொ.) in one's regard, in regard to, with regard to, பற்றி, வகையில், குறித்து.

**regard'ant**, *a.* (கட்.) பின்னோக்கிப் பார்க்கிற; குறிப்பாக உற்றுப் பார்க்கிற, கூர்ந்து கவனிக்கிற; நீடு நோக்குகிற.

**regard'ful**, *a.* கவனஞ் செலுத்துகிற; மதித்து நோக்குகிற.

**regard'ing**, *prep.* பற்றி, வகையாகக் குறித்து.

**regard'less**, *a.* பொருட்படுத்தாத, மதித்துப்பாராத.

**regatt'a**, *n.* படகுத் திரளணி, போட்டிப் பந்தயப் படகுக் குழுமம்.

**regelate'**, *v.* பனிக்கட்டித் துண்டுத்துகள் குவியல் வகையில் புறமுருகி இணைந்துறை.

**re'gency**, *n.* பகர ஆட்சியாண்மை; பகர ஆட்சியாளர் பணி மனை; பகர ஆட்சியாளர் குழு; பகர ஆட்சிக்காலம்; பகர ஆட்சிக்குழுவின் பதவிக்காலம்.

**regen'erate**, *v.* திரும்ப உண்டுபண்ணு; புத்துயிரளி, புது வாழ்வூட்டு; புதுப்பிறப்பூட்டு, புதிய ஊக்கமளி, திருந்திய நலங்கள் தூண்டு; திருத்து, ஒழுக்கநிலை உயர்த்து; அருள் நிலை ஊட்டு, மேம்படுத்து; சீரமைப்புச் செய்.

**regenera'tion**, *n.* மறுபிறப்பு; இழப்புமீட்பு.

**regen'erator**, *n.* புது வாழ்வளிப்பவர், மேம்படுத்துபவர்; ஒழுக்கநிலை உயர்த்துபவர்; வெளியிடும் வெப்பத்தை மீட்டுந் தணலில் ஊட்டும் அமைவு.

**re'gent**, *n.* பகர ஆளுநர்; பல்கலைக்கழகச் சொற்போர் மன்றங்களில் தலைமை தாங்கும் முதுகலைஞர்; பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினர்; *a.* ஆட்சியாளராய் உள்ள.

**re'gicide**, *n.* அரசுக்கொலைஞன்; அரசுக்கொலையிற் பங்கு கொள்பவர்; அரசுக்கொலை; (தொ.) the regicides, இங்கி லாந்தில் முதலாம் சார்லஸ் மன்னன்மீது முறை விசாரணை செய்து சாத்தீர்ப்பு அளித்தோர்.

**regie**, *n.* அரசுத்தனியுரிமை, புகையிலை-உப்பு முதலிய வற்றின் வகையில் ஆட்சியாளர் மேற்கொள்ளுந் தனி ஆக்க வுரிமை.

**regime'**, *n.* நடப்பாட்சி; ஆட்சி நடப்பு; ஆட்சிமுறை; நடப்பிலிருந்த முறை.

**re'gimen**, *n.* ஆட்சிமுறை; (மரு.) நோயாளி நடைமுறைத் திட்ட அமைதி; திட்டமுறை உணவு; பத்தியம்; திட்ட முறை வாழ்க்கை; (இலக்.) சொல்லாட்சி இயைபுமுறை.

**re'giment**, *n.* படைவகுப்பணி; பீரங்கிப்படை வகுப்பணி; கவசப் பொறியூர்தி அணி; இயங்கு கோட்டை அணி வகுப்பு; *v.* படை வகுப்பணிகளாக்கு; பயிற்சிமுறை வகுப்பணிகள் அமை; துறைவகுத்தமை.

**regimen'tal**, *n.* படை அணிவகுப்பு உடை, படைத்துறை யுடை; *a.* படையணி வகுப்புச் சார்ந்த.

**regimenta'tion**, *n.* படைமுறைப்படுத்துதல், மையக்கட்டுப் பாட்டின்கீழ் வகுத்தமைத்து ஒருதிறமாக்குதல்; அணிவகுப் பமைப்பு முறை.

*Regin'a*, (ல.) *n.* ஆளும் அரசி, ஆட்சியுரிமைபெற்ற அரசி; நீதிமன்றங்களில் ஆட்சிப்பொறுப்பேற்ற அரசியின் சார்பு குறித்த சொல்.

**regin'al**, *a.* அரசிக்குரிய; அரசிக்கு ஏற்ற.

**re'gion**, *n.* திணைநிலப்பகுதி, நிலப்பரப்பு; பரப்பெல்லை; இடம், பரப்பிடம், பகுதி; உலகப்பகுதி; அண்டப்பகுதி; கடலின் பரப்பிடம்; வானவெளிப்பகுதி; உடலின் கூறு; உறுப்பின் பகுதி; (தொ.) lower regions, கீழுலகம், இறந் தோர் உலகம்; upper regions, வானவெளி; சுவர்க்கம்.

**re'gister**, *n.* அடங்கல், விவரப்பட்டியல் குறிப்பு ; பதிவேடு, இசைப்பேழையின் குழாய்த் தொகுதியிற் பொருத்தப்பெறும் அடைப்பு ; இசைக்குரலின் முழு விசையாற்றல் அளவு ; இசைக் கருவியின் விசையாற்றலளவு; இசைக்குரலின் உறுப் பாற்றலளவு ; தீத்தாங்கியில் கீழ் வாயினைச் சுருக்கியும் பெருக்கியும் கட்டுப்படுத்தும் வளித்தட்டு ; வேகம்-ஆற்றல் அளவுகளைப்பதிவுசெய்து காட்டும் சுட்டமைவு; தாளின் இரு புற அச்சமைவின் ஒத்தியைவு; நிழற்படக்கலையில் தகடு-ஒளிக் கதிர்த்திரைக் குவியம்-ஆகியவற்றின் ஒத்தியைபுநிலை ; *v.* விவரம் பதிவுசெய், பட்டியல் குறித்துவை ; எழுத்துருப் படுத்திவை ; உள்ளத்திற் குறி; பதிவேட்டில் எழுது ; பதி வேட்டில் எழுதுவி ; கருவி வகையில் பதிவுசெய் ; கருவி வகையில் சுட்டித்தெரிவி ; திரைப்படத் துறையில் முகக்குறி களால் தெரிவி ; அச்சு வகையில் இருபுறமும் கணக்காக ஒத்திரு ; அச்சு இருபுறமும் ஒத்திருக்கச் செய் ; (தொ.) register letter, பதிவு அஞ்சல்.

**re'gistrar**, *n.* பதிவாளர் ; பல்கலைக்கழகச் செயலர் ; அலு வலகப் பதிவீட்டாளர் ; பதிவேட்டை வைத்திருப்போர் ; பதிவீட்டலுவலர், பதிவீட்டலுவலகத்தார்.

**re'gistrary**, *n.* கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தின் பதிவாளர்.

**registra'tion**, *n.* பதிவீடு, பதிவு செய்தல் ; பதிவு செய்யப் பட்ட பொருள் ; இசைமேளத்தில் குழாய்த்தடைகளை ஒத்தி யைவு செய்தல் ; இசைமேளத்தில் குழாய்த்தடைகளை ஒத்தி யைவு செய்யுங் கலை.

**re'gistry**, *n.* பதிவீடு, பதிவு செய்தல்; பதிவேடுகள் வைக்கப் பெற்றுள்ள இடம், பதிவேட்டு அலுவலகம் ; (தொ.) servants' registry (office), காலி இடங்களையும் அவற்றிற்கு விண்ணப்பித்துள்ள வேலையாள்களையும் பற்றிய பட்டியல்கள் உள்ள பணியிடம்.

**Re'gius**, *a.* பல்கலைக்கழகப் பேராசிரியர் வகையில் மன்னுரிமை சார்ந்த, எட்டாம் ஹென்றியால் அல்லது அதற்கு இணையாகப் பிற்காலத்தாரால் நிறுவப்பெற்ற பல்கலைக்கழகப் பேராசிரியர் பதவி தாங்குகிற.

**reg'nal**, *a.* ஆட்சிக்குரிய ; (தொ.) regnal day, முடிசூட்டு ஆண்டுவிழா ; regnal year, ஆட்சியாண்டு.

**reg'nant**, *a.* அரசி வகையில் தன்னுரிமையால் ஆளுகிற ; (தொ.) Queen Regnant, அரசன் மனைவியாக அன்றித் தனக்கே வாய்த்த அரசுரிமையால் ஆளும் அரசி.

**regorge'**, *v.* வாந்தியெடு, கக்கிப்புறமாக்கு ; குறி அல்லது கால்வாய் முதலியவற்றிலிருந்து புறத்தே தள்ளி வெளி யேற்று ; மீண்டும் விழுங்கு.

**regrate'**, *v.* சில்லறை விற்பனையில் ஆதாயம் பெறும் நோக் குடன் மொத்தமாக வாங்கு; ஆதாயநாடி வாங்கிப் பதுக்கு, சில்லறை விற்பனை ஆதாயநோக்குடன் உணவுப் பொருள்களை மொத்தமாக வாங்கிச் சேமி.

**reg'ress**[1], *n.* பின்னிறக்கம், பின்னடைவு ; இழிதல், பின் னோக்கிச் செல்லும் போக்கு.

**regress'**[2], *v.* (வான்.) பின்னோக்கிச் செல்.

**regre'ssion**, *n.* பின்னடைவியக்கம் ; வளைவின் எதிர்ப்புறத் திருப்பம் ; மறிவு, தாழ்வுறல்.

**regret'**, *n.* இரங்கல், மறைவுற்றோர் பற்றிய துயரம்; வருத்தம், இழப்புப்பற்றிய மன உளைவு; ஏக்கம், விரும்பா நிகழ்வுபற்றிய துயர் ; கவலை, மீளாத் தவறுபற்றிய விசாரம் ; *v.* இழப் பிற்கு இரங்கு ; நிகழ்நிலைக்கு வருந்து; சென்றதற்கு ஏங்குறு; சென்றதை எண்ணிக் கவலைப்படு ; நிகழ்ச்சி பற்றி மன உளைவுறு ; (தொ.) express regrets for, தவறிற்காக வருந்து, மன்னிப்புக்கேள்.

**reg'ulable**, *a.* ஒழுங்குமுறைக்கு இடந்தரத்தக்க.

**reg'ular**, *n.* இயல்முறைச் சமயகுரு, சமயக் கட்டுப்பாடு களுக்குட்பட்டு முறைப்படி அமர்த்தப்பட்ட கிறித்தவ சமய குருமாரில் ஒருவர் ; இயற் பணிமுறைப் படைவீரர் முறை பமர்வுப் போர்வீரர் ; (பே-வ.) வாடிக்கைக்காரர் ; வழக்க மாக வருபவர் ; (பே-வ.) நிலையாக வேலைக்கு அமர்த்தப் பட்டவர் ; *a.* முறைப்பட்ட ; சொல்லொழுங்குடைய; வடி வொழுங்கு வாய்ந்த ; அமைப்பொழுங்குடைய ; நேர் கட்டு மானமுடைய ; விதிக்கு இணக்கமான ; சமய விதிகளுக்குக் கட்டுப்பட்ட ; சமயப் பிரிவுகளைச் சார்ந்த ; திருமடப் பிரிவு களைச் சார்ந்த ; சரியான தகுதியினையுடைய ; நேர் ஆக்க முடைய ; தொழிலில் நிலை ஈடுபாடுடைய ; நேர் ஈடுபாடு கொண்ட ; ஒரு தன்மைத்தாக நிகழ்கிற ; வழக்கமான; நிலை யான ; ஒழுங்கான ; ஆசார வழக்கமுறைமை வாய்ந்த ; வழக்காற்று முறைகளை மீறாத ; முற்றிலும் தொழிற்றுறை ஈடுபாடுடைய ; (பே-வ.) முழு நிறைவான ; ஐயத்திற்கிட மில்லாத ; (இலக்.) சொல் வகையில் இயல்பான மாறுபாட்டு முரண் அமைப்புடைய ; சொல்வகையில் எல்லா உருத்திரிப மைதிகளையும் ஏற்கிற ; சொல்லின் குறைவடிவமாயிராத ; (தொ.) regular army, நிலைப்போர்ப்படை; regular soldiers நிலைப் போர்வீரர்கள்.

**regula'rity**, *n.* ஒழுங்கு, முறைமை; உருவொழுங்கு; ஒரு சீர்த் தன்மை ; வேளை ஒழுங்கு ; காலந்தவறாமை.

**reg'ulate**, *v.* விதிக்குட்படுத்து, கட்டுப்பாட்டுக்குட்படுத்து ; சீராக்கு ; இயந்திரம்-மணிப்பொறி முதலியவை வகையில் ஒழுங்கிசைவுபடுத்து.

**regula'tion**, *n.* ஒழுங்குபடுத்துதல்; ஒழுங்குபடுத்தப்படுதல்; ஒழுங்குமுறை; வரையறை செய்யப்பட்ட விதி; அதிகாரத்தோ டொத்த கட்டளை ; நிபந்தனை, கட்டுப்பட்டு விதிமுறை.

**reg'ulator**, *n.* ஒழுங்கு செய்பவர் ; ஒழுங்கு படுத்துவது ; ஒழுங்கியக்கி, மணிப்பொறி-இயந்திரம் முதலியவற்றை ஒழுங் காக இயங்கவைக்குங் கருவி.

**Reg'ulus**[1], *n.* சிங்க ராசியிலுள்ள ஒளிமிக்க விண்மீன்.

**reg'ulus**[2], *n.* பொற்சூட்டுப் பறவைவகை ; (வேதி.) கனிமக் கலவையில் கீழ்த்தங்குந் தூய உலோகம்; கனிமக்கலவை அடி வண்டல் ; *pl.* reg'uli.

**regur'gitate**, *v.* திரும்ப வெளியே கொணர் ; எதிரேப்ப மிட்டு வாய்க்குக் கொணர் ; எதிர்க்களி, மீண்டும் வெளியே தள்ளு ; வெளியேறி ஒழுகு.

**rehabil'itate**, *v.* மறுசீரமை, முன்னைய நன்னிலைமைக்குச் சீரமைத்துக்கொணர் ; பழுதகற்றிச் சீர்ப்படுத்து ; மீட்டும் முன்னிலை நிறுவு ; இழந்த பதவியில் மீட்டும் அமர்த்து ; இழந்த உரிமையை மீட்டும் அளி ; நோய் நலிவின் இயலா நிலைகளகற்றி முன்போல் வாழ்க்கை நெறியுட்படுத்தி உதவு.

**rehabilita'tion**, *n.* மறுசீரமைப்பு.

**rehan'dle**[1], *v.*=recast.

**rehan'dle**[2], *v.* புத்துருக்கொடு, புதுச்சீரமைப்புச்செய் ; புது முறையில் வழங்கு.

**rehang'**, *v.* திருத்தியமை ; படங்களைத் திரும்பவும் எடுத்து மாட்டு.

**rehash'**, *n.* இலக்கிய ஏட்டுவகையில் ஊசலுடைசல்களின் ஒட்டுப்பொருத்தாக்கம்; *v.* ஊசலுடைசல்களை ஒட்டிப் பொருத்தி ஆக்கு; பழைய இலக்கியத்துக்குப் புத்துருவமளி.

**rehear'**, *v.* வழக்குமன்றத்தில் வழக்கினை மறு விசாரணைக்கு எடுத்துக்கொள்.

**rehears'al**, *n.* ஒப்புவித்தல், முதல் தொடங்கி முடிவுவரைத் திரும்பக் கூறுதல் ; ஒத்திகை; (தொ.) dress rehearsal, உடை ஒத்திகை.

**rehearse'**, *v.* திரும்பக்கூறு, ஒப்புவி, வரிசைப்படுத்திக் கூறு; பட்டியல் கொடு ; திரும்பக் கணக்கிடு ; ஒத்திகை நடத்து.

**rehouse'**, *v.* புதுமனை வாய்ப்பளி ; புதிது அமைத்துதவு ; புதிய உறையுளில் அமர்த்து.

**rehum'anize**, *v.* திரும்பவும் மனிதத்தன்மையூட்டு, மீட்டும் மனிதப் பண்புகளை ஏற்று.

**Reich**, *n.* செர்மன் குடியரசு ; நாசியர் ஆட்சிக்குரிய செர்மன் அரசு ; செர்மன் பேரரசு ; (தொ.) First Reich, செர்மனியின் தூய ரோமப் பேரரசு (962-1806) ; Second Reich, செர்மன் நாட்டுக் கூட்டுக்குடியரசு (1871-1918) ; Third Reich, நாசியர் ஆட்சிக்குரிய செர்மன் குடியரசு (1933-1945).

***Reichs'rat, Reichs'rath***, (செர்.) *n.* பண்டைய ஆஸ்திரிய பேரரசின் ஆட்சி மாமன்றம்.

**Reichs'tag,** (செர்.) *n.* செர்மன் சட்ட மாமன்றம்.

**re'ify,** *v.* பொருளாக்கு ; பொருளுருவாக்கு ; ஆளைப் பருப் பொருட்பான்மைப் படுத்து ; கருத்திற்கு உருக்கொடு ; பண்பினைப் பண்பியாக உருவகப்படுத்து.

**reign,** *n.* ஆட்சி ; தனியாணை ; தலைமையுரிமை ; உரிமை யாட்சி ; ஆட்சிச் செல்வாக்கு ; ஆட்சிக்காலம் ; மன்னன் ஆட்சிக் காலம் ; ஓர் அரசன் ஆட்சிக்கால எல்லை ; ஆட்சிப் பரப்பு, ஆட்சி எல்லை ; *v.* ஆட்சி செலுத்து ; அரசராயிரு; அரசியாயிரு ; அரச ஆணை செலுத்து ; இறைகொள் ; எங்கும் பரவியிரு ; மேலோங்கியிரு ; (தொ.) reigning beauty, அவ்வக்கால எல்லையில் மேலானவராக ஏற்றுக்கொள்ளப் பட்ட அழகி ; Reign of Terror, புரட்சியாளர்-எதிர்ப்புரட்சி யாளர் ஆகியோரின் கொலைவெறியாட்டக் காலம்; 1793-1794 ஆம் ஆண்டுக்காலப் பிரஞ்சுப் புரட்சிப்பகுதி.

**reimburse',** *v.* இறு, செலவு ஈடுசெய்.

**reimburse'ment,** *n.* இறுத்தல், செலவுசெய்த பணத்திற்கு ஈடுசெய்தல்.

**reim'port[1],** *n.* மீட்டிறக்குமதிச் சரக்கு, ஏற்றுமதியாகி மீட்டும் இறக்குமதியாகும் பொருள்.

**reimport'[2],** *v.* மீட்டிறக்குமதி செய், ஏற்றுமதியான சரக்கையே மீட்டும் இறக்குமதி செய்.

**rein,** *n.* குதிரையின் கடிவாள வார் ; அடக்கும் ஆற்றல், ஆட்சிப் பிடி, ஆட்சி அதிகாரம் ; *v.* கடிவாளத்தை இழுத்துப்பிடித்து அடக்கு ; ஆணைசெலுத்து ; கட்டுப்படுத்து ; தடு ; கட்டுப் பாட்டிற்குள் வை ; இழுத்துப் பிடி, அடக்கி வை ; (தொ.) assume the reins of government, ஆட்சிப்பணி மேற்கொள், ஆட்சி அதிகாரம் கைக்கொள் ; draw rein, குதிரையை நிறுத்து ; முயற்சி கைவிடு ; செலவைக்குறை ; drop the reins of government, ஆட்சிப்பணி துற ; அதிகாரத்தை விட்டுவிடு ; give horse the reins, give horse the rein, குதிரையைத் தன் விருப்பப்படி போகவிடு, மனம்போலப் போக விடு; give rein to one's imagination, give the reins to one's imagination, கற்பனையைத் தடைப்படுத்தாது செல்லவிடு, கற்பனைக்குக் கட்டுப்பாடற்ற வாய்ப்பளி.

**reincarn'ate[1],** *a.* மாறிப் பிறந்த.

**reincarn'ate[2],** *v.* மாறிப் பிற ; மறு அவதாரஞ்செய்.

**reincarna'tion** *n.* மறு பிறப்பு; மறு அவதாரம்.

**rein'deer,** *n.* பனிச்சறுக்கு வண்டிக் கலைமான் வகை.

***re infec'ta,*** (ல.) *adv.* நோக்கத்தை நிறைவேற்றாமல்.

**reinforce',** *n.* துப்பாக்கியின் தடிப்புப் பின்பகுதி ; வலிமை ஆதாரபபட்டை; *v.* மேலும் ஆட்கள் அனுப்பி வலுப்படுத்து; அளவுபெருக்கி வலிமைப்படுத்து ; துணைவளத்தால் வலுப் பெறச் செய் ; உணவூட்டி வலுவுண்டாக்கு ; புதிய குறிப்புக் களை அளித்து வாதத்திற்கு வலுவூட்டு ; (தொ.) reinforced concrete, இரும்புக்கட்டை-கம்பிகள் கொண்ட வார்ப்புக் காரை.

**reinforce'ment,** *n.* துணைவலு ; வலிமைபெருக்கப்பட்ட நிலை ; வலிமையூட்டும் பொருள்.

**reinforce'ments,** *n. pl.* கூடுதல் ஆள் ; துணைப்படை ; துணை ஆதாரப் பொருள்களின் தொகுதி.

**reingra'tiate,** *v.* மீண்டும் உகந்தவராகு, மீண்டும் அருளப் பெறு.

**reink',** *v.* திரும்பவும் மையினால் எழுது.

**reins,** *n. pl.* மூத்திரக் காய்கள் ; இடுப்பு.

**reinsert',** *v.* மீண்டுஞ் செருகு, திரும்பச் செருகு.

**reinstate',** *v.* மீண்டும் பழைய பதவியில் அமர்த்து ; பழைய நிலைக்குக் கொண்டுவா ; பழைய சலுகைகளைத் திரும்ப அளி ; முந்திய உடல் நிலைக்கு மீண்டும் கொண்டுவா ; தக்க ஒழுங்கு நிலைக்கு மறுபடியுங் கொணர்.

**reinsur'ance,** *n.* மறுகாப்பீடு, காப்பீட்டு இடையுறு பொறுப்பை மற்றொருவருக்கு மாற்றிக் கொடுக்கும் முறை.

**reinsure',** *v.* மறுகாப்புறுதி செய் ; காப்பு மாற்றீடு செய், காப்பீட்டேற்பாளர் வகையில் இடையுறு பொறுப்பை மற்றொருவருக்கு மாற்றிக்கொடு; காப்பீடு எடுத்துக்கொண்ட இடர்களுக்கு எதிராக மீண்டும் காப்புறுதி செய்.

**reinvest',** *v.* மீண்டும் ஆடை அணிவி ; மீண்டும் பதவியில் அமர்த்து ; மீண்டும் முதலிடு ; முதலீடு மாற்றி ஒப்படை.

**reinves'titure,** *n.* முழு உரிமையுடன் மீட்டும் பதவியில் அமர்த்துதல்.

**reinvest'ment,** *n.* மறு முதலீடு செய்தல் ; மறுமுதலீடு.

**reinvig'orate,** *v.* புதிய வலுவு அளி ; புத்துணர்ச்சியூட்டு.

***reis,*** *n. pl.* சிறு மதிப்புள்ள முற்காலப் போர்ச்சுகீசிய நாணயம்.

**reiss'uable,** *a.* காசுமுறிகள்-பணத்தாள்கள் வகையில் மறு வெளியீடு செய்யத்தக்க.

**reiss'ue,** *n.* மறுபதிப்பு, மாற்றுப்பதிப்பு, சிறிது உருமாற்றத் துடன் அல்லது விலைமாற்றத்துடன் பதிப்பிடும் மறு வெளி யீடு; *v.* மாற்றுப்பதிப்பாக வெளியிடு; திரும்ப வெளியிடு.

**reit'erate,** *v.* திரும்பக்கூறு, பன்முறை சொல் ; திரும்பத் திருமபசசெய்.

**reitera'tion,** *n.* கூறியது கூறல் ; வற்புறுத்திக் கூறுதல் ; திரும்பத்திரும்பச் செய்தல்.

**reit'erative,** *a.* வற்புறுத்திக்கூறுகிற ; திரும்பத்திரும்பச் செயயப்படுகிற.

**reiv'er,** *n.* வல்லந்தமாகப் பறிப்பவர் ; கொள்ளையடிப்பவர்.

**rej'ect[1],** *n.* விலக்கிவைக்கப்பட்டவர் ; படைத்துறையில் தகுதியற்றவராக ஒதுக்கப்பட்டவர் ; விலக்கப்பட்டது ; வாணிகத்துறையில் தரமில்லாததென்று மலிவிலை விற்பனைக் காக ஒதுக்கி வைக்கப்படும் பொருள்.

**reject'[2],** *v.* தள்ளு, ஏற்கத்தகாததென விலக்கு; தள்ளிவை; வேண்டா என்று ஒதுக்கு ; துறந்துவிடு ; மறுத்துவிடு ; வெளியேற்று ; வாந்தி எடு.

***rejectamen'ta,*** (ல.) *n. pl.* கழிவுப்பொருள்கள், குப்பை ; கடலினின்று வெளியே எறியப்படும் பொருள்கள்.

**rejec'tion,** *n.* மறுத்தொழிப்பு.

**rejoice',** *v.* மகிழ்ச்சியூட்டு, களி மகிழ்வெய்து ; மகிழ்ந்து கொண்டாடு, விழாவயர்.

**rejoi'cings,** *n. pl.* மகிழ்ச்சிக் கொண்டாட்டங்கள், விழாக் கள், பணடிகைகள்.

**rejoin'[1],** *v.* (சட்.) வாதியின் குற்றச்சாட்டிற்குப் பதிலளி ; விடையிறு ; உடனுக்குடன் பதிலளி ; எதிர்த்துக்கூறு, சுடச்சுட மறுமொழிகூறு ; தோழர்களோடு மீண்டுஞ் சேர் ; படைப்பிரிவில் மீண்டும் இணை.

**re-join'[2],** *v.* மீண்டும் இணை ; மீண்டும் ஒன்றுசேர்த்து வை.

**rejoin'der,** *n.* எதிருரை, மறுப்பு.

**rejuv'enate,** *v.* மீண்டும் இளமையூட்டு; இளமையின் வலிவும் பொலிவும் அளி ; திரும்பவும் இளமைபெறு.

**rejuvena'tion,** *n.* இளமை மீட்புப்பேறு, மீண்டும் இள நலம் வாய்க்கப்பெறுதல்.

**rejuvenesce',** *v.* மீண்டும் இள நலம் எய்தப்பெறு ; புத்திளமையூட்டு; (உயி.) உயிரணுக்கள் வகையில் மீண்டும் புத்துயிருணர்ச்சி நிரப்பு.

**rejuvenes'cence,** *n.* புத்திளமைப்பேறு.

**rejuv'enize,** *v.*=rejuvenate.

**re-kin'dle,** *v.* திரும்பக்கொளுத்து ; புதிதாகத்தூண்டு ; கிணடிவிடு.

**re-lab'el,** *v.* மீண்டும் பெயர்ச்சீட்டு ஒட்டு, மறுபெயரீடுசெய்.

**relapse',** *n.* மறுக்களிப்பு; முன்னிலை மறிவு, மறுவீழ்வு; நோய் நிலை வகையில் மீண்டும் சீர்கேடடைவு; *v.* தவறான செயல் களில் மீண்டும் சறுக்கிவிழு ; மீண்டும் தவறுசெய் ; திரும்ப வும் பிணிவாய்ப்படு ; நோய் வகையில் மீண்டும் நிலை மோசமாகு; பழைய நிலைக்கே மீண்டுஞ் சறுக்கு.

**relate′**, *v.* கூறு, விரித்துரை, தொடர்புபடுத்து; தொடர்பு நிறுவு; தொடர்புகொண்டதாயிரு, பற்றியதாயிரு.

**relat′ed**, *a.* எடுத்துரைக்கப்பட்ட; உறவுடைய; தொடர்பு படுத்தப்பட்ட; தொடர்பான, தொடர்புடைய; (தொ.) be related, உறவுகொண்டிரு; தொடர்புடையதாயிரு.

**relat′edness**, *n.* தொடர்புடைமை; உறவுடைமை.

**relat′er**, *n.* எடுத்துரைப்பவர், நுவல்வோர்.

**rela′tion**, *n.* எடுத்துரைத்தல்; கூற்று, விரித்துரை; (சட்.) சட்டத் தலைமை ஆட்பேரிடம் தரப்படும் வழக்கு விவரக் கூற்று; உறவு; தொடர்பு; உறவுமுறை; உறவினர்.

**relativ′al**, *a.* தொடர்புறவு சார்ந்த, உறவியலான.

**rel′ative**, *n.* தழுவியற்சொல்; தழுவியல் மறுபெயர்; உறவினர்.

**rel′ativism**, *n.* இடையுறவழிவுக்கோட்பாடு, பொருள்களின் இடையுறவுத்தொடர்பறிவன்றிப் பிறிதறிவில்லை எனுங் கொள்கை; *a.* தொடர்புடைய; (இசை.) இன உறவுடைய, ஒரே தாய் நரம்பினையுடைய; ஒருசார்பிசைவுடைய; சார்பியலான, ஒன்று மற்றொன்றன் சார்பான; இடைவீதநிலையான; ஒப்புநோக்கு முறையான; ஒப்பீட்டு முறையான; தொடர்பியலான, சூழ்நிலை சார்ந்த.

**relativ′ity**, *n.* சார்பியல் கோட்பாடு, அளவைகள் யாவும் ஒன்றையொன்று சார்ந்தன்றித் தனிநிலை இயல்புகள் உடையன அல்ல என்னும் ஐன்ஸ்டீன் (Einstein) ஆய்வுக் கொள்கை.

**relat′or**, *n.* (சட்.) வழக்கு விவரக்கூற்றுளர், சட்டத்தலைமை ஆட்பேரிடம் வழக்கு விவரக் கூற்றளிப்பவர்.

**relax′**, *v.* தொங்கலாக்கு; தளர்த்து; தசைநரம்புகளைத் தளரவிடு; தசைநரம்புகள் வகையில் தளர்வுறு; தொங்கலாக்கு; வலிவிழக்கச்செய்; நலியச்செய்; நலிவுறு; தொங்கலாகு; ஊக்கங் குன்றச்செய்; தணி, குறையச்செய்; தணிவுறு; முறுக்கு அவிழச்செய்; சுறுசுறுப்புக் குறையச்செய்; ஆவல் தணியச்செய்; கண்டிப்புத் தளர்த்து; ஊக்கங் குறைவுறு; முறுக்கு அவிழ்வுறு; சுறுசுறுப்புக்குறை; கண்டிப்புத்தளர்வுறு; (தொ.) relaxed throat, தொண்டைக்கட்டு வகை.

**relaxa′tion**, *n.* தண்டனை குறைப்பு; வரிக்குறைப்பு; இடை ஓய்வு; பொழுதுபோக்கு ஓய்வு; கண்டிப்புத்தளர்வு; தசை தளர்பீடு; கவனக்குறைவு.

**relay′** [1], *n.* இடைமாற்றீடு; இடைமாற்றுளர் குழுமம்; பணிமாற்றுப்படை; மாற்றுப் புதுவேட்டைநாய்த்தொகுதி; இடைமாற்றுப் பயணக்குதிரைத் தொகுதி; இடைமாற்றிடம்; படிமாற்றீட்டு ஓட்டப்பந்தயம்; படிமாற்றீட்டுப் பந்தயப்படிநிலை; ஆற்றல் வகைகளில் சேமத்துணைவளக் களஞ்சியம்; மின் பேராற்றல் கட்டுப்படுத்தும் துணையாற்றல் அமைவு; தந்தி வகையில் நெடுந்தொலை மின்வலிக்கு ஆதரவு தரும் திணை வளத்துணை; *v.* இடைமாற்றுப்படி நிலைகளாக வகுத்து ஏற்பாடுசெய்; இடைமாற்றுப்படிகள் அமை; இடை மாற்றீட்டு ஏற்பாடு செய்; இடைமாற்றீட்டிற்குரிய மாற்றுருப்படிகள் தருவி; வானொலியில் இன்னொரு நிலையத்தின் ஒலிபரப்பை அஞ்சல் செய்.

**re-lay′** [2], *v.* மறுபடியும் பாவு; திரும்பவும் இடு.

**relay′-race**, *n.* இடைமாற்று ஓட்டப்பந்தயம், அஞ்சல் ஓட்டப் பந்தயம்.

**release′**, *n.* விடுவிப்பு, விடுபாடு; கட்டுப்பாட்டுநீக்கம்; தவிர்ப்பு, விட்டொழிப்பு; உய்தி, துன்பநீக்கம்; இடர் நீக்கம், விடுதலை; கடமைக்கட்டவிழ்ப்பு; கடன்தளையறவு; துயர்ஒழிப்பு; வாழ்க்கைவிடுபாடு; கடன்விடுவிப்புப்பத்திரம்; உரிமைமாற்று; உடைமைமாற்று; உரிமைமாற்றுப்பத்திரம்; உடைமைமாற்றுப்பத்திரம்; இயந்திர விசையூட்டுப்பிடி; உரிமைத் துறப்பு; வெளியீடு, குறிப்பிட்ட காலத்தில் கிடைக்கும்படி செய்யும் ஏற்பாடு; வெளியீட்டுப்பொருள்; வெளியீட்டுமுறை; *v.* விடுவி; கட்டவிழ், தளையறு; அடிமை நீக்கி உரிமையளி; கிடைக்கும்படி செய்; வெளியிடு, திரைப்பட முதலியவற்றைப் பொதுமக்கள் பார்வைக்கு வெளிக்கொணர்; (சட்.) கடன் பொறுப்பினின்று விடுதலையளி; உரிமை விட்டுக்கொடு, உடைமை கைதுற; உடைமை மாற்றிக் கொடு.

**rel′egate**, *v.* குறிப்பிட்ட இடத்திற்கு நாடுகடத்து; கீழ்நிலைக்கு ஒதுக்கு; இழிந்த இடத்திற்கு அனுப்பு; செய்திமீது முடிவெடுக்கவோ செயற்படுத்தவோ பிறரிடம் ஒப்படை; செய்தி அறிய ஒருவரை உசாவு; தகவல் பெறும்படி அனுப்பு.

**relent′**, *v.* கடுமை தணிவுறு, கண்டிப்பைத் தளர்த்திக்கொள், மனம் இரங்கு, கனிந்திரங்கு, கருணை காட்ட இசைவுகொள்; செய்தற்கிரங்கு.

**relent′less**, *a.* கடுமை தணியாத; இரக்கம் அற்ற.

**rele′vancy**, *n.* பொருத்தம், இயைபு.

**rel′evant**, *a.* தொடர்புடைய, இயைபுடைய, பொருத்தமான.

**reliabil′ity**, *n.* நம்பத்தக்க தன்மை, நாணயம், நேர்மையான நடை; (தொ.) reliability trials, உறுதிப்பாட்டையும் தாங்கும் ஆற்றலையும் தேர்ந்தறிய உந்து ஊர்திகளை நெடுந் தொலைவுக்கு ஓட்டிப் பார்க்குஞ் சோதனை.

**reli′able**, *a.* நம்பத்தக்க; மாறா ஒப்பியைபு நிலையுடைய, ஒருபடித்தான; நல்லொழுக்கம் வாய்ந்த; நற்பண்பு உடைய.

**reli′ance**, *n.* பொறுப்புறுதி, நம்பிக்கை; நம்பிக்கைக்குரிய நிலை; நம்பிக்கைக்குரியது, நம்பிக்கைக்கு ஆதாரமானது.

**rel′ic**, *n.* திருச்சின்னம், பூசனைக்குரிய நினைவூட்டுப்பொருள்; நினைவுச்சின்னம்; எச்சமிச்சக் கூறு; வரலாற்றுச் சின்னம், சென்றகாலத்தை நினைவூட்டும் பழம்பொருள்.

**rel′ics**, *n. pl.* பிணம்; இறந்தோர் எச்சமிச்சக் கூறுகள்; அழிவுக்குத் தப்பி மீந்த துண்டுத் துணுக்குகள்.

**rel′ict**, *n.* தப்பிப் பிழைத்திருப்பவர்; விதவை; *a.* தப்பிப் பிழைத்திருக்கிற; (மண்.) சூழ்பொருள்கள் அகன்று தனித்து மீந்துள்ள.

**relief** [1], *n.* சுமைத் தணிவு; நோவு தணிவு; துயர்த்தீர்ப்பு; கவலை தணிப்பு, உபசாந்தி; இடர்காப்புதவி; இன்னல் தவிர்ப்புதவி; ஏழ்மைத்துயர் தணிப்புதவி, துணை உதவி; துணை வலியுதவி; ஆள்மாற்றுதவி; இடைமாற்று, சோர்வுணர்ச்சி அகற்றும் இடைவேறுபாடு; இடைமாற்றுக்கூறு; இடைத் தளர்வுக்கூறு; (தொ.) relief fund, இடர் உதவிநிதி, துணையுதவி நிதி.

**relief** [2], *n.* புடைப்பியல், நிலப்படத்தில் மேடுகளைப் படி அளவொத்த மேடுகளாகக் காட்டும் பண்பு; புடைப்பியல் செதுக்கோவியம்; புடைப்பியல் வாய்ப்புப் புடைப்பியல் பொறிப்பு; வண்ணவரைக் குறியீடுகளால் அமைக்கப்படும் புடைப்பியல் தோற்ற அமைவு; உருவரைத் தெளிவு; தோற்ற முனைப்பு; (தொ.) high relief, வன்புடைப்பியல், மெய்வடிவத்தினை மிகுதி அடுத்துள்ள அளவான புடைப்பியல்; low relief, புன்புடைப்பியல், மெய்வடிவத்திலிருந்து மிகுதியாய் வேறுபட்ட அளவுடைய புடைப்பியல்; relief map, புடைப்பியல் நிலப்படம்; வண்ண வரைக் குறியீடுகள் மூலம் புடைப்பியல் தோற்றம் அளிக்கப்பட்ட நிலப்படம்.

**relieve′**, *v.* நோவுதணி; துன்பந் துடை; துணையுதவி அளி; துணைப்படை அனுப்பி உதவு; முற்றுகை தகர்; பணியில் ஆள் மாற்றி உதவு; சோர்வகற்றும் இடைமாற்றாக உதவு; கலையில் இடைவேறுபாடு காட்டு; செறிவகற்றும் இடைத் தளர்வூட்டு; விடுபாடு செய்; பொறுப்பிலிருந்து விடுவி; முனைப்பளி; கெட்டிமைத்தோற்றங் கொடு; (தொ.) be relieved of a purse, பணப்பையைப் பறிகொடு; relieve one's feelings, கடுஞ்சொல் கொட்டி உணர்ச்சி தணித்துக்கொள்.

**reliev′ing**, *a.* பணித்துறையில் ஆள்மாற்றாக வருகிற, புதுப் பணிமாற்று ஆளான; இடைமாற்றான; இடை வேறுபாடு அளிக்கிற; விடுபாடுதருகிற; துணையுதவியாய் வருகிற; (தொ.) relieving arch, சுவரின் அடிப்பகுதிப் பளுக்குறைக்கும்படி உள்வரியாகக் கட்டப்படும் வில்வளைவு.

**reliev′o**, *n.* உருவரைத் தெளிவு; தோற்ற முனைப்பு; புடைப்பியல் வார்ப்பு; புடைப்பியல் பொறிப்பு; புடைப்பியல் வார்ப்புரு.

**reli'gion**, *n.* சமயம், மதம்; சமய அமைப்பு, திருச்சபை; கடவுள் நம்பிக்கை; கடவுளுணர்வு; சமயச்சடங்கு; சமய நிறுவனம், துறவியர் நிலயம், துறவமைப்பு.

**reli'gioner**, *n.* துறவிகள் சங்க உறுப்பினர்; சமய ஆர்வலர், சமய ஈடுபாடு மிக்கவர்.

**reli'gionism**, *n.* சமயமீதார்வம், சமயப் பிடிவாதம்.

**reli'gionize**, *v.* மெய்ச்சமய நெறிக்கு மாற்று; சமய ஆர்வம் தோய்வி, சமயவுணர்வூட்டு; சமயம்மீது ஆர்வங் காட்டு.

**reli'giose**, *a.* சமயப்பற்று தலைக்கேறிய.

**religios'ity**, *n.* சமய உணர்வுடைமை; சமய மீதார்வக் கோளாறுடைமை.

**reli'gious**, *n. sing. & pl.* நோன்பி; நோன்பிகள், சமய விரதங்களைப் பின்பற்றுவதாக நேர்வுறுதி கொண்டவர்கள்; *a.* சமய உணர்வில் தோய்ந்துள்ள; சமய மதிப்பார்வம் மிக்க; சமயப் பற்றுர்வம் வாய்ந்த; கடவுட்பற்று மிக்க; சமய ஈடுபாடுள்ள; சமயத்துறவோர் சங்கஞ் சார்ந்த; சமயத் தொடர்புடைய; சிறிதும் சமய நெறி பிறழாத, மனச்சான்று மீறுப் பண்புடைய.

**reline'**, *v.* சட்டை முதலியவற்றின் உள்வரி மாற்றியமை, புதிய உள்வரித்துணி இணை.

**relinq'uish**, *v.* கைநெகிழவிடு; விட்டுவிடு, கைதுற, ஒப்பு வித்துவிடு.

**relinq'uishment**, *n.* விட்டுவிடல்; கைதுறப்பு, கைவிடுதல்.

**rel'iquary**, *n.* நினைவுச்சின்னக் கொள்கலம்; நினைவுச்சின்னப் பேழை.

***reliq'uiae***, (ல.) *n. pl.* எச்சமிச்சங்கள்; (மண்.) திணைப்பகுதிக்குரிய மாவடை மரவடைச்சின்னங்கள்; (தாவ.) தண்டில் வாடி உலர்ந்த இலைகளின் எச்சமிச்சங்கள்.

**rel'ish**, *n.* சுவை மணச் சிறப்பு; தனிச்சுவை; அருங்கலவைப் பண்பு; உண்ணத் தூண்டும் நறுமணச் சுவை; கவரும் பண்பு; நறுஞ்சுவையூட்டு; உணவுச்சுவை ஆர்வம்; உணவு ஈடுபாட்டின்பம்; ஆர்வ ஈடுபாடு, இன்னல் விருப்பார்வம்; *v.* நறுஞ்சுவை மணமூட்டு; காரசாரமாக்கு; நுகர்ந்து மகிழ்; மகிழ்ந்து ஈடுபடு; சுவை நலமுணர்ந்து பார்; சுவையுடையதாயிரு; சுவைமணம் நினைவூட்டு; பண்புநலம் நினைவூட்டு; பண்புநயத்தடமுடையதாயிரு; சுவையுணர்வு பகட்டிக் காட்டு; பண்புநய உணர்வு பகட்டிக் காட்டு.

**reluc'tant**, *a.* விருப்பற்ற, ஆர்வமற்ற, அரைகுறை மனத்துடன் தயங்குகிற.

**relume'**, *v.* தீ வகையில் மீண்டும் மூட்டு; விளக்கு வகையில் மறுபடியுந் தூண்டு; திரும்பவும் ஒளிபெறச்செய்.

**rely'**, *v.* நம்பிக்கைவை; பொறுப்புறுதியுடையவராகக் கருது; ஏற்புடையதாகக்கொள்; நம்பிக்கைகொண்டு சார்வுறு.

**remain'**, *v.* மிஞ்சு, பயன்படுத்தியபின் எஞ்சியிரு; கழித்தபின் மீந்திரு, தொடர்ந்து நீடித்திரு; கைவசமாயிரு; அழியாது நிலைபெற்றிரு; தங்கு; தங்கியிரு; பின்தங்கியிரு; நிலவுறு; நிலைமாறுதிரு; இரு, தொடர்ந்திரு.

**remain'der**, *n.* மிச்சம்; எஞ்சியுள்ளவற்றின் தொகுதி; எஞ்சியுள்ளவர்களின் தொகுதி; (கண.) கழித்த மிச்சம்; வகுத்த மீதம்; மீப்பு, தேவைநிரம்பியும் விற்பனையாகாது மீந்துள்ள புத்தகப்படிகளின் தொகுதி; (சட்.) விருப்ப ஆவணத்தில் பின்விளைவுக்குரிய உரிமை; *v.* பதிப்பு முழுவதையும் விற்பனையாகா மீப்பாகக் கருதி ஒதுக்கு.

**remain'der-man**, *n.* விருப்ப ஆவணப் பின்விளைவுரிமையாளர்.

**remain'dership**, *n.* விருப்ப ஆவணப் பின்விளைவு உரிமை நிலை.

**remains'**, *n. pl.* எஞ்சியிருப்பது, மிச்சம்; மீந்த பகுதி; நாடு-குடும்பம் ஆகியவற்றின் எஞ்சிய பகுதி; கட்டிடத்தின் அழிபடாக்கூறு; உணவில் மிச்சில்; இருப்புமிச்சம்; வழக்காறற்றுப்போன பழக்க வழக்கத் தடங்கள்; பழமையின் அழியாப்பகுதி; பதிப்பிக்கப் பெறுமல் ஆசிரியரால் விட்டுச் செல்லப்பட்ட எழுத்து மூலங்கள்; உயிரற்ற உடல், பிணம்.

**re-make'**, *v.* திரும்பவும் ஆக்கு, மறுபடியும் உருவாக்கு.

**reman'**, *v.* புதிய ஆள் அமர்த்தி இணை; மீட்டும் மனிதத் தன்மைக்குக் கொண்டுவா; மறுபடியும் வீரம் ஊட்டு.

**remand'**, *n.* காவல் வைப்பு; *v.* மறுபடியும் அனுப்பு; மறுபடியும் காவலில் ஒப்படை; புதிய சான்றுகள் திரட்டி விசாரணை செய்வதற்காக மீண்டும் காவலுக்கு அனுப்பு.

**rem'anent**, *a.* மீந்துள்ள, எஞ்சியுள்ள; (தொ.) remanent magnetism, எஞ்சியுள்ள காந்த ஆற்றல்.

**rem'anet**, *n.* மீதியுள்ள பகுதி, எச்சம்; தள்ளிவைக்கப் பெற்ற வழக்கு; ஒத்திவைக்கப்பட்ட பாராளுமன்றச் சட்ட மூலம்.

**remar'gin**, *v.* புதிய ஓரங்கட்டு.

**remark'**, *n.* குறிப்புரை; கருத்துக்குறிப்பு; குறிப்பீடு; எழுத்துவடிவக் குறிப்பு, எழுத்துவடிவக் கருத்துக்குறிப்பு; குற்றங்குறை எடுத்துரைப்பு; கவனிப்பு, கருத்திற் கொள்ளுதல்; கூற்று; குறிப்புவாசகம்; *v.* கருத்திற் கொள்; குறிப்பிடு; கவனித்துப்பார்; கருத்துரை கூறு; கருத்து எடுத்துரை; குணங் குற்றங்கள் எடுத்துரை; கருத்து விளக்கங்கூறு.

**remark'able**, *a.* குறிப்பிடத்தக்க, கவனித்தற்குரிய, தனிச் சிறப்பிற்குரிய.

***remarque***, (பிர.) *n.* அடையாளம், செதுக்கோவியத் தட்டின் பழமை குறிக்க ஓரத்தில் எழுதப்பெறும் ஓவியக் குறிப்பு.

***remblai***, (பிர.) *n.* கோட்டை கொத்தளப் பிடிசுவர்கள் முதலிய அமைக்கப் பயன்படும் மண்; இருப்புப்பாதை மேடுகளை அமைக்கப் பயன்படும் மண்; சுரங்கத்தில் ஒதுக்கிச் சேமிக்கப்பட்ட மண்.

**Rembrandtesque'**, *n.* ரெம்ப்ரான்டு (1606-69) என்னும் டச்சு ஓவியர் கையாண்ட பண்பு, முனைப்பான ஒளிநிழல் வண்ண ஓவியப் பாணி; *a.* ரெம்ப்ரான்டு பாணியிலுள்ள.

**remed'iable**, *a.* சீர்ப்படுத்தக்கூடிய, தீர்வுகாணத்தக்க, பரிகரிக்கத்தக்க.

**remed'ial**, *a.* இழப்பீடு செய்யவல்ல, பரிகார நோக்கங் கொண்ட.

**remed'iless**, *a.* தீர்வற்ற, பரிகாரமில்லாத, குணப்படுத்த முடியாத.

**rem'edy**, *n.* தீர்வு; பரிகாரம்; நோய்தீர்க்கும் மருந்து; நோய் நீக்க வகை; ஈடுசெய்தல், சட்டவாயிலான இழப்பீடு; நாணயத்தின் எடையில் ஏற்கத்தக்க மாறுபாட்டளவு; *v.* குணப்படுத்து; திருத்து, சீர்ப்படுத்து, பரிகரி, ஈடுசெய்.

**remem'ber**, *v.* நினைவில் வைத்துக்கொள்; மறவாதிரு; உள்ளு; ஞாபகப்படுத்திக்கொள்; மனப்பாடமாகத் தெரிந்து வைத்திரு; பரிசுகொடு, சிறு கைக்கூலிகொடு, கொடுத்துச் சரிபண்ணு; வழிபாட்டு வேண்டுகோளிற் குறிப்பிடு; ஒருவர் உசாவினை வேறொருவருக்குத் தெரிவி.

**remem'brance**, *n.* நினைவில் வைத்திருத்தல்; நினைவில் வைத்திருக்கப்பெறல்; நினைவு; நினைவூட்டிக்கொள்ளுதல்; நினைவூட்டுப்பொருள்; நினைவுமலர்; நினைவுச்சின்னம்; நினைவாற்றல் எல்லை; (தொ.) put in remembrance, நினைப்பூட்டு; Remembrance Day, இரு உலகப் பெரும்போர்களிலும் (*1914-18, 1939-45*) இறந்துபட்ட வீரர்களின் நினைவாகக் கொள்ளப்படும் நாள், நவம்பர் 11 அல்லது அதற்கு அடுத்து முந்திய ஞாயிற்றுக்கிழமை.

**remem'brancer**, *n.* நினைப்பூட்டுபவர்; நினைப்பூட்டுவது; நினைவுக்குறிப்பு, நினைவுச்சின்னம்; மன்னர் கருவூல அலுவலர்; (தொ.) City Remembrancer, பாராளுமன்றக் குழுக்கள் முன்பு லண்டன் மாநகராட்சியின் பிரதிநிதியாகத் தோன்றும் அலுவலர்; King's Remembrancer, Queen's Remembrancer, மன்னருக்குச் சேரவேண்டிய தொகைகளைப் பிரிக்கும் அலுவலர்.

**remem'brances**, *n. pl.* கேட்புச் செய்திகள்; வாழ்த்துக்கள், மகிழ்ச்சி.

**remigrate'**, *v.* புலம்பெயர்ந்து மீள்.

remigra'tion, *n.* புலம்பெயர்ந்த மீள்வு.

remind', *v.* நினைப்பூட்டு, ஞாபகப்படுத்து.

remin'der, *n.* நினைவூட்டு, நினைவூட்டுச்செய்தி; ஞாபகப் படுத்துவதை நோக்கமாகக் கொண்டது; நினைப்பூட்டுக் கடிதம்.

remind'ful, *a.* நினைப்பூட்டுகிற, ஞாபகத்துக்குக் கொண்டு வருகிற.

reminis'cence, *n.* நினைவுக்குக் கொண்டுவரும் முயற்சி; முன்நினைவு; முன்நினைவுத்தொடர்பு, தொடர்நினைவு, பழைய நினைவின் தொடர்பான செய்தி; பழைய எண்ணம் நினை வூட்டுஞ் செய்தி; முன்னைய செய்தியின் பண்பை நினைவூட்டும் பொருள்; (தொ.) Platonic doctrine of reminiscence, எண் ணங்களெல்லாம் மூலமுதல் நினைவின் நினைவூட்டுக்களே யாகும் என்னும் கிரேக்க அறிஞர் பிளேட்டோ (Plato) வின் கோட்பாடு.

reminis'cences, *n. pl.* முன்நினைவுச்செய்திகளின் இலக்கிய வடிவான திரட்டு.

reminis'cent, *a.* பழஞ்செய்திகளை நினைவூட்டுகிற; பின் னோக்கும் பாங்குள்ள; சென்றவற்றைக் கருதுகிற; கவனித்து ஈடுபடுகிற; நினைவுத் தொடர்புகளையுடைய; கருத்து அலை களை எழுப்பக்கூடிய; ஒன்றை நினைப்பூட்டுகிற, ஒன்றைப் பற்றிய கருத்தைத் தோற்றுவிக்கிற.

reminiscen'tial, *a.* பழைய நினைவுகள் பற்றிய.

remise', *n.* தப்பா மறு குத்து; (சட்.) உரிமை விட்டுக் கொடுப்பு; *v.* தப்பாது விட்டெறி; (சட்.) உரிமையை மற் றொருவருக்கு ஒப்படைத்துவிடு; உடைமையை மற்றொரு வருக்கு மாற்றிவிடு.

remiss', *a.* கடமையில் கவனமற்ற; விழிப்பில்லாத, வழுவிய; விடுபட்ட.

remiss'ible, *a.* பண வகையில் செலுத்தப்படத்தக்க; அனுப் பப்படத்தக்க; குறைக்கப்படத்தக்க; மன்னிக்கப்படத்தக்க.

remi'ssion, *n.* பாவமன்னிப்பு; கடன் குறைத்தல்; தண்டனை குறைத்தல்; தண்டனை தவிர்ப்பு; ஆற்றல் குறைப்பு; செயல் தவறுகை; படித்தரக் குறுக்கம்; விளைவு குறைபடல்; அனுப்புதல்.

remiss'ive, *a.* குறையச்செய்கிற, தணியச்செய்கிற; மன்னிக்கிற

remit', *v.* மன்னித்தல் செய், பொறு; கடன் வகையில் வலிந்து வாங்குவதைத் தவிர்; தண்டனை வகையில் விதிக்காமலிரு; நிறைவேற்றாமலிரு; குறைந்துபோ; குறையச்செய்; தளர்த்து, இளக்கு; தணியச்செய்; செய்யாமலிரு, தவிர், நின்றுபோ; தீர்ப்புக்காக அதிகாரிக்கு அனுப்பு; வழக்கு வகையில் கீழ்நீதி மன்றத்திற்குத் திருப்பி அனுப்பு; முந்திய நிலைக்குப் போகச் செய்; தள்ளிவை, தாமதப்படுத்து; பணம் அனுப்பு; தொகை செலுத்து; அஞ்சல் மூலமாக அனுப்பு.

remitt'al, *n.* தண்டனைக்குறைப்பு; வழக்குமாற்றீடு, மற்றொரு நீதிமன்றத்திற்கு வழக்கினை அனுப்புதல்.

remitt'ance, *n.* பண அனுப்பீடு; அனுப்பிய தொகை; அனுப்பிய பொருள்.

remitta'nce-man, *n.* தாயகத் தொலை ஆதரவுவாணர், வேற்று நாட்டில் குடியேறித் தாயகத்திலிருந்து அனுப்பப் படும் பணத்தைக் கொண்டு வாழ்பவர், வெளிநாடுகளிலிருப் பதற்குப் பணம் கொடுக்கப்பெறுபவர்.

remittee', *n.* பணம் அனுப்பப்பெறுபவர்.

remitt'ent, *n.* இடைத்தளர் சுரம், இடையிடையே தணிந்து வரும் காய்ச்சல் வகை; *a.* காய்ச்சல் வகையில் இடையிடையே தணிந்து வருகிற.

remitt'er [1], *n.* தொலைவிடத்துக்குப் பணம் அனுப்புபவர்.

remitt'er [2], *n.* வழக்குமாற்றீடு, மற்றொரு நீதிமன்றத்தின் தீர்ப் பிற்கு வழக்கு அனுப்பப்படுதல்; (சட்.) வல்லுரிமை மாற்றீடு, உடைமையாளர் உடைமைக்குரிய இரு உரிமைகளில் உடை மையைத் தகவுடைய உரிமையடியாக மாற்றியமைத்தல்.

rem'nant, *n.* கழிவு, எச்சமிச்சம், எஞ்சியுள்ள சிலர்; கிழிவுத் துண்டிப்பு.

remod'el, *v.* புதிய மாதிரியில் அமை, புத்துருக்கொடு; புதுப் பித்துக் கட்டு.

remon'etize, *v.* உலோக மதிப்பு அளித்து முன்போலச் செலாவணி நாணயமாக்கு.

remon'strance, *n.* எதிர்வாத விளக்கம்; தடுப்புரைவாதம், கண்டனம்; குறை முறையீடு; பொது முறையீடு; செவி யறிவுறூஉ; (தொ.) the Grand Remonstrance, பெரும் பெயர் முறையீடு, பிரிட்டனின் பொதுமக்கள் மன்றத்தினர் 1641-இல் மக்கள் சார்பாக முதலாவது சார்லஸ் மன்னருக்குச் செய்துகொண்ட பொதுமுறையீடு.

remon'strant, *n.* வன்மையாக மறுப்பவர், இடித்துரைப் பவர்; *a.* வன்மையாகக் கண்டிக்கிற.

remon'strate, *v.* மறுப்புக்கூறு, செவியுறை கூறு.

remon'strative, *a.* மறுத்து விளக்கிக்கூறுகிற.

remon'tant, *n.* பன்முறை மலருஞ் செடிவகை; ரோசா; *a.* பன்முறை மலர்கிற.

rem'ora, *n.* கப்பலோட்டி மீன்; தடங்கல், இடையூறு.

remorse', *n.* கடுங்கழிவிரக்கம், உளநைவு, அகச்சான்றின் உறுத்தல்.

remorse'ful, *a.* சென்றதற்கு இணைகிற, நனி இரங்கும் இயல்புடைய.

remorse'less, *a.* இரக்கமில்லாத, கொடிய.

remote', *a.* நெடுந்தொலைவில் உள்ள, மிகச் சேய்மையான இடத்திலுள்ள; நெடுங்காலத்திற்கு முந்திய; நெருங்கிய உறவல்லாத்; பெரிதும் வேறுபட்ட, இயல்பிலேயே வேறான; நீளிடை விலகிய, தொலைக்கோடியான, ஒதுக்கமாயுள்ள; மிகச்சிறிய, நொய்ய.

remote'ness, *n.* சேய்மை.

remount' [1], *n.* புதுக்குதிரை; *v.* புதிய குதிரை வாய்ப்புக் கொடு.

remount' [2], *v.* மீண்டும் மேலே போ, மீண்டும் மேலே ஏறு; மூலத்துக்கே திரும்பிச் செல்; குறிப்பிட்ட சமயத்துக்கே திரும்பச் செல்.

remo'vable, *n.* அயர்லாந்தில் பதவியிலிருந்து நீக்கிவிடத் தக்க குற்றநடுவர்; *a.* எடுத்துவிடக்கூடிய, தள்ளிவிடத்தக்க; குற்றநடுவர் அலுவலர் வகையில் பதவியிலிருந்து நீக்கிவிடத் தக்க; மன்னர் அல்லது மேலதிகாரி விரும்புகிற காலம் வரையில் பதவிதாங்குகிற.

remo'val, *n.* நீக்கிவிடுதல்; இடம் பெயர்ப்பு, எடுத்துச் செல்லுதல்; இடமாற்றம்; விலகல்; இருப்பிட மாற்றம்; கொலை, கொன்றழிப்பு.

remove', *n.* நுண்படி, படித்தரம், சிறுகட்ட அளவு; சிறு தொலை; பள்ளிப்படிவ உயர்வு, மேற்படிவத்தேறுதல்; உணவு மேடையில் மறு உணவுத்தட்டம்; *v.* நீக்கு, விலக்கு; பெயர்த்து அகற்றிவை; வேறிடத்துக்கு மாற்று; பதவி மாற்று; பதவி நீக்கு; விலகுவி; அகற்றிக்கொண்டு செல்; இடமாற்று; அகல்; அகன்று செல், விலகிச்செல்; உணவு மேடையில் உணவுத்தட்டம் மாற்றிவை; உறவுமுறைமையில் நுண்ணளவில் விலகுவி; நிலைமாற்று, ஒழித்துக்கட்டு, பதவி யிலிருந்து நீக்கிவிடு; மேசையில் பரிமாறப்படும் உணவு வகை யில் ஒன்றற்குப் பின்னர் வா; (தொ.) remove mountains, அருஞ்செயல் நிகழ்த்து; அதிசயம் விளை.

removed', *a.* சேய்மையான; உறவுமுறை வகையில் படித் தரத்தில் விலகியுள்ள.

remo'ver, *n.* அகற்றுபவர்; எடுத்துச்செல்வது; சாமான் களை ஒரு வீட்டிலிருந்து மறு வீட்டிற்குக் கொண்டுசெல்பவர்.

remun'erate, *v.* உழைப்பூதியங்கொடு; பரிசளி; கைம் மாறுகு; உழைப்பு வகையில் ஈடுசெய்; உழைப்பவர் வகையில் உழைப்பீடு அளி.

remunera'tion, *n.* கைம்மாறு, பரிசு, சன்மானம், ஊதியம்.

remu'nerative, *a.* ஆதாயமான, பயன்தருகிற; (தொ.) remunerative enterprises, பயன்தரும் தொழில் முயற்சிகள்.

renaiss'ance, *n.* புத்துயிர்ப்பு; (வர.) 14-16-ஆவது நூற்றுண்டுகளில் நிகழ்ந்த கலை-இலக்கிய மறுமலர்ச்சி; மறுமலர்ச்சிக்காலம்; மறுமலர்ச்சி இயக்கக் கலை-சிற்பப்பாணி; *a.* மறுமலர்ச்சிக்காலஞ் சார்ந்த, மறுமலர்ச்சி இயக்கத்திற்குரிய.

ren'al, *a.* குண்டிக்காய்கள் சார்ந்த.

rename', *v.* மறு பெயரிடு.

rena'scence, *n.* புத்துயிர்ப்பு, புதுப்பிப்பு; கலை-இலக்கிய மறுமலர்ச்சி இயக்கம்.

renasc'ent, *a.* புத்துயிர் பெறுகிற, புதுவலிவு பெறுகிற.

rend, *v.* கிழி, திருகிப்பறி; இரண்டாகப் பிள; துண்டுதுண்டாகப் பிரி; (தொ.) shouts rend the air, கூச்சல் வானைப் பிளக்கிறது; turn and rend one, எதிர்பாராதிருக்கையில் ஒருவரைத் திட்டு.

ren'der, *n.* குடிவாரம், பண்ணை மேலாளருக்குக் குடியானவர் பணமாகவோ பொருளாகவோ ஊழியமாகவோ செலுத்தும் வாரம்; *v.* விட்டுக்கொடு; திருப்பிக்கொடு; ஈடாக அளி; சரிசெய்; ஒப்புவி; ஒப்படை; பணிந்துகொடு; முன்வை; முன்னிலைப்படுத்து; வழங்கு; செய்; ஆக்கு, ஆக்கியமை; காட்டு; உருப்படுத்திக்காட்டு; கலையுருப்படுத்திக்காட்டு; மொழிபெயர்; சொற்பெயர்; உருப்பெயர்; மாற்றியமை; கடனாற்று, ஆற்றியுதவு; ஆற்று; நடைமுறைப்படுத்து; உருக்கு; உருக்கிவடி; தெளிவாக வடித்திறு; கல்-செங்கல் ஆகியவற்றிடையே முதலீடாகக் குத்துச்சாந்து பூசு.

ren'dering, *n.* பாடபேத வடிவம், மொழிபெயர்ப்பு.

ren'der-set, *n.* சாந்தின் இருபூச்சு; *a.* இருதடவை பூசப்பட்டுள்ள; *v.* இரண்டுமுறை சாந்து பூசு.

ren'dezvous, *n.* குறியிடம், வழக்கமாகக் கூடுமிடம்; குறியிடச் சந்திப்பு; படைச்சந்திப்பிடம்; கப்பல்கள் கூடுமிடம்; *pl.* ren'dezvous; *v.* குறியிடத்திற் கூடு.

rendi'tion, *n.* மொழிபெயர்ப்பு; நாடகப்பாகத்தின் செயலுரு விளக்கம்; நாடகப்பகுதியின் நடிப்புத்திறம்; இசைப்பாட்டின் பாடல் உருவிளக்கம்; இசைப்பாடலின் பாடற்றிறம்.

ren'egade, *n.* கட்சிமாறி, கட்சியைக் காட்டிக் கொடுப்பவர்; கொள்கை துறந்தவர்; கட்சியை விட்டோடியவர்; சமய மாறுபவர்; *v.* கொள்கை துற.

renege', renegue', *v.* சீட்டாட்டத்தில் முதலில் இறக்கிய சீட்டு வகையிலேயே தொடர்ந்து ஆடத் தவறு.

renew', *v.* புதுக்கு, புதிதாக்கு; புத்தாக்கஞ் செய்; புத்துயிரளி; புத்தூக்கங்கொடு; புதுப்பி, மீண்டும் ஆக்கு; மீண்டுந் தொடங்கு; மீண்டுஞ்செய்; மறுபடியும் ஆக்கு; புது முயற்சி செய்; மாற்றிப் புதிது ஆக்கு; பழங்கூறுகள் மாற்றிப் புதுக் கூறுகள் பொருத்தியமை; புதிதுபோலாக்கு; மீண்டும் பழைய நிலைக்குக் கொணர்; மீண்டும் நிரப்பு; புது வலுவூட்டு; தொடர்ந்து செய்; தொடர்ந்து கூறு; இடையீட்டுக்குப்பின் மீண்டும் தொடர்; மீட்டும் வலியுறுத்து; கால அவதிப்படாமற் புதுப்பி.

renew'able, *a.* புதுப்பிக்கப்படத்தக்க.

renew'al, *n.* புதுப்பிப்பு; புதிய தொடக்கம்; புதுமுயற்சி; அவதி கடந்த நீட்டிப்பு.

ren'iform, *a.* குண்டிக்காய் வடிவமுள்ள.

renn'et[1], *n.* பால் உறையச் செய்வதற்கான வகைதுறை; பாலை உறைவிக்குங் கன்றின் குடற்சவ்வு.

renn'et[2], *n.* இனிப்பு ஆப்பிள் வகை.

renounce', *n.* சரியான சீட்டு வகை இல்லாதபோது பிறிது வகைச் சீட்டாடுதல்; பிறிது சீட்டு ஆடுவதற்கான வாய்ப்பு; *v.* துற; விட்டுக்கொடு; முறைப்படி கைதுறந்துவிடு; துறந்துவிட ஒப்புக்கொள்; தள்ளு, மறு, ஒப்புக்கொள்ள இணங்காதிரு; தொடர்பறுத்துக்கொள், உறவினைத் துற; பின்வாங்கிக்கொள்; நிறுத்து, நிறுத்திக்கொள்; சீட்டாட்டத்தில் முதலில் இறங்கிய சீட்டுவகையில் கைவசம் சீட்டு இல்லாமையால் வேறொரு வகைச் சீட்டு இறக்கி ஆடு; (சட்.) உரிமை அல்லது பதவியை மறு அல்லது கைவிடு; (தொ.) renounce the world, துறவு வாழ்க்கை மேற்கொள்.

ren'ovate, *v.* புதுப்பி, செப்பனிடு; புத்துணர்ச்சியூட்டு.

renova'tion, *n.* புதுப்பித்தல், பழைய நிலைக்குக் கொணர்தல்.

renown', *n.* புகழ், சீர்த்தி.

renowned', *a.* புகழ்சான்ற, சீர்த்திமிக்க.

rent[1], *n.* வாடகை, குடியிருப்புக்கூலி; வாரம், நிலத்தவணைக் குத்தகைத் தொகை; இயந்திர வாடகைத் தொகை; *v.* வாரத்துக்கு விடு; வாரத்துக்கு எடு; தவணைக் குத்தகைக்கு விடு; தவணைக் குத்தகைக்கு எடு; வாடகைக்கு எடு; வாடகைக்கு விடு; வாடகை கொடுத்துப் பயன்படுத்து; குடிக்கூலிக்கு விடப்பெறு; வாரம் விதி.

rent[2], *n.* கிழிசல்; கீறல்; பிளவு, வெடிப்பு; மேகங்களில் காணப்படும் இடையறவு; கெவி; மலைப்பள்ளம்.

rent[3], *v.* rend என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

ren'tal, *n.* குத்தகை வருமானம்; குத்தகைத்தொகை; வாடகைத் தொகை.

rent'-charge', *n.* நில வாரத் தொகை.

*rente*, (பிர.) *n.* முறை வாழ்க்கை வருமானம்; முறைப் பங்கு வருமானம்.

ren'ter, *n.* குடிக்கூலி செலுத்துபவர்; குத்தகைக்கு விடுபவர்; சுங்கங்களின் குத்தகை உரிமைக்காரர்; வரிக்குத்தகை உரிமையாளர்; காட்சிக் கொட்டகைப் பங்காளி.

rent'-free, *a.* வார விலக்களிக்கப்பெற்ற; வாடகையற்ற; இறையிலியான; *adv.* வார விலக்களிக்கப்பெற்று.

*rentier*, (பிர.) *n.* ஆண்டு வருமானத்தைக்கொண்டு வாழ்பவர்; சுகவாசி, வாழ்வதற்காக உழைக்க வேண்டாதவர்.

rent'-roll, *n.* குத்தகைவாரப் பதிவேடு; வாடகைப் பதிவேடு; குத்தகைவார வருமானம்.

rent'-service, *n.* வாரநில ஊழியம்; வாரநில இணையூழியக் கடமை.

renum'ber, *v.* தொடரெண் மாற்றியமை.

renuncia'tion, *n.* துறவு; கைதுறப்பு; தன்னலமறுப்பு; பதவிதுறப்பாவணம்; உரிமைத் துறப்புப்பத்திரம்.

reoccupa'tion, *n.* மீட்டமர்வாட்சி, மறுபற்றுட்சி.

reocc'upy, *v.* மீட்டும் அமர்வாட்சி கொள்; மறுபடியும் பற்றுட்சி பெறு.

reol'ogy, *n.* ஒழுகியல் நூல், பொருளின் ஒழுக்கையும் உருமாற்றத்தையும் பற்றிய ஆய்வுத்துறை.

reop'en, *v.* மறுபடியுந் திற; மீண்டுங் கிளப்பு.

reorganiza'tion, *n.* மறுசீரமைப்பு, புத்தொழுங்கமைப்பு; மீட்டுப் பிரித்திணைப்பமைதி.

reorg'anize, *v.* மறுசீரமை, மீண்டும் ஒழுங்கமைவு செய்; மீட்டும் பிரித்திணைத்தொழுங்கு செய்; புத்தமைவாக்கு.

re'ostat, *n.* மின் ஆற்றல் வழங்கீட்டை நெறிப்படுத்துவதற்கான அமைவு.

rep[1], *n.* பக்கவாட்டில் வரிவரியாயமைந்த துணிவகை.

rep[2], *n.* பள்ளிவழக்கு வகையில் மனப்பாடம் செய்துவைத்துள்ள பாடல் முதலியவை.

repaint[1], *n.* மீட்டும் வண்ணமுறுவிக்கப்பட்ட குழிப்பந்தாட்டப் பந்து.

repaint[2], *v.* மேல்வண்ணம் மீட்டுங்கொடு; மீட்டுஞ் சாயமிடு.

repair'[1], *n.* நாடிவருமிடம், வழக்கமாகச் செல்லுமிடம்; அடைதிரள், நாடிச்செல்வோர் தொகை; புகல், போக்கு; *v.* அணுகி மேற்கொள்; நாடு; அடிக்கடி செல், நாடி அடை; சென்றுஊடாடு; சூழ்ந்து குழுமு.

repair'[2], *n.* ஒக்கீடு, செப்பனிடுதல்; பழுதுபார்த்தல்; முற்சீரமைப்பு, முன்னிலை மீட்பு; சீர்ப்பாடு, நற்பயனீட்டுநிலை; சீர், நன்னிலை; செப்பநிலை, முழுநலம் அணுகிய நிலை;

*v.* செப்பனிடு, பழுதுபார்; செப்பஞ்செய்; மீண்டும் நன்னிலைக்குக் கொண்டுவா; புதுக்கு; திருத்து; குணப்படுத்து; மீண்டுஞ் சரிப்படுத்து; பழுது ஈடுசெய்.

**repair'able,** *a.* செப்பனிடத்தக்க; பழுதுபார்க்க வேண்டிய.

**repand',** *a.* (தாவ., வில.) அலைபோன்ற ஓரமுடைய; அலையலையான.

**rep'arable,** *a.* ஈடுசெய்யத்தக்க, இழப்புச் சரிசெய்யத்தக்க.

**repara'tion,** *n.* செப்பனிடுதல்; செப்பனிடப்பெறுதல்; இழப்பீடு செய்தல்; இழப்புச் சரிசெய்யும் எதிரீடு.

**repartee',** *n.* உடனெதிர் மொழி.

**reparti'tion,** *v.* மீண்டும் பங்கீடுசெய், மறுபடியும் பிரிவினைசெய்.

**repass',** *v.* சென்றவழியே மீள்.

**repass'age,** *n.* திரும்பச்சேறல், செல்வழி மீளல்.

**repast',** *n.* சாப்பாடு, சாப்பாட்டுக்காகப் பரிமாறப்பட்ட உணவு; சாப்பாட்டில் உட்கொள்ளப்பட்ட உணவு.

**repat'riate,** *n.* தாய்நாட்டுக்குத் திருப்பி அனுப்பப்பெற்றவர்; *v.* தாய்நாட்டுக்குத் திருப்பி அனுப்பு.

**repatria'tion,** *n.* தாயகத்திற்கு மீட்பிப்பு, தாய்நாட்டுக்குத் திருப்பி அனுப்புதல்.

**repay',** *v.* திருப்பிச் செலுத்து, பணந் திருப்பிக்கொடு; மாறுசெய், எதிர்பழி செய்; உழைப்பீடு செய்; கைம்மாறு செய்.

**repay'able,** *a.* திருப்பிச் செலுத்தப்படவேண்டிய, சேரவேண்டியதாயுள்ள.

**repay'ment,** *n.* மீட்டளிப்பு, திருப்பிக்கொடுத்தல்.

**repeal'** [1], *n.* எடுத்துவிடல்; தள்ளுபடி, நீக்கம்; ரத்து; *v.* தள்ளுபடி செய், நீக்கு, ரத்துச்செய்.

**Repeal'** [2], *n.* (வர.) ஓகான்னெல் (O'Connell) என்ற அயர்லாந்துத் தலைவர் கோரிய கிரேட் பிரிட்டன்-அயர்லாந்து ஒன்றியத்தின் கலைப்பு.

**repeal'er** [1], *n.* தள்ளுபடி செய்பவர்.

**Repeal'er** [2], *n.* (வர.) கிரேட் பிரிட்டன்-அயர்லாந்து ஒன்றியக் கலைப்பு ஆதரவாளர்.

**repeat',** *n.* கூறியது கூறல்; மறுபடியுஞ் செய்தல்; காட்சிமேடையில் மக்கள் விருப்பமீது காட்டப்படும் மறுமுறைக் காட்சி; (இசை.) மீண்டும் மீண்டும் பாடுதற்கான குறி; மீண்டும் மீண்டும் பாடுதற்கான பகுதியைக் குறிக்கும் அடையாளம்; சுவர் ஒட்டுத்தாளில் திருப்பித் திருப்பிவரும் உருவரைமாதிரி; வாணிகத்துறையில் முன்பு அனுப்பப்பட்டது போன்ற புதிய ஒப்படைப்புச்சரக்கு; புதிய ஒப்படைப்புச் சரக்கு அனுப்புவதற்கான வேண்டுகோள்; *v.* சொன்னதையே சொல்; மீண்டும் மீண்டும் ஒப்பி; செய்ததையே செய்; காட்டியதையே காட்டு; திரும்பத் திரும்ப நிகழ்; மீட்டும் மீட்டும் தோன்று; மறுபடியும் உருவாக்கு; போலிசெய், பார்த்துப் பின்பற்று; மணிப்பொறி வகையில் வேண்டும்போது கடைசிமணி-கால்மணி முதலியவற்றை மீண்டும் அடி; சுடுபடைக்கலங்கள் வகையில் மீட்டும் மருந்து அடைக்காமலேயே பலமுறை வேட்டுத்தீர்; (கண.) வந்த எண்ணே மீட்டும் மீட்டும் வரப்பெறு; (தொ.) repeat oneself, சொன்னதையே மறுபடியுஞ் சொல்.

**repeat'able,** *a.* திரும்பத்திரும்பச் செய்யத்தக்க; பிறரிடம் சொல்வதற்குத் தகுந்ததான.

**repeat'edly,** *adv.* திரும்பத்திரும்ப, அடிக்கடி; பலமுறை.

**repeat'er,** *n.* கூறியது கூறுபவர்; மீண்டும் மீண்டும் செய்பவர்; சொன்னதைச் சொல்லுவது; செய்ததைச் செய்வது; (கண.) ஒரே இலக்கம் அல்லது இலக்கங்கள் முடிவின்றி மீண்டும் மீண்டும் வரும் பதின்மானப்பின்னம்; வேண்டும்போது கடைசி மணி-கால்மணி முதலியவற்றை மீண்டும் அடிக்குங் கடிகாரம்; மறுபடியும் மருந்து அடைக்காமலே பலமுறை சுடும் படைக்கலம்; கடற்படைத்தலைவர் காட்டும் அடையாளத்தைப் பலமுறை காட்டுங் கப்பல்; அனுப்பிய தந்திச் செய்தியைத் தானாகவே திருப்பியனுப்புங் கருவி; தொலைபேசிச் சுருளிற் செருகப்படும் வெற்றிடக்குழல் பெருக்கி.

**repel',** *v.* துரத்து, ஓட்டு; தள்ளு, உந்தியெறி, விலக்கு; தடுத்து நீக்கு; தவிர்; தடைசெய்; வெறுப்புணர்ச்சி கொள்ளச்செய், உள்ளேவிட மறு; வெறுப்புடையதாயிரு, உவர்ப்பளி.

**repell'ent,** *a.* துரத்தித்தள்ளுகிற; தடுத்து நீக்கும் இயல்புடைய; தடுத்துநிறுத்தும் ஆற்றலுடைய; வெறுத்தொதுக்குகிற, வெறுப்புணர்ச்சியூட்டுகிற.

**rep'ent** [1], *a.* (தாவ.) நிலத்தின்மீது படர்கிற; நிலத்தடியூடாகப் படர்கிற.

**repent'** [2], *v.* நனியிரங்கு, பச்சாதாபங்கொள்; நடந்ததுபற்றி வருந்து; மனநோவுறு, உள்ளுறுத்தல்கொள்; செய்ததற்கிரங்கு; செயல் நினைந்தழுங்கு; எண்ணி மனநைவுறு.

**repent'ance,** *n.* கழிவிரக்கம்; செய்ததற்கு இரங்குதல்; கழிவிரக்கங்கொள்ளும் மனநிலை.

**repen'tant,** *a.* செய்ததற்கு மனம் அழுங்குகிற; சென்றதற்கு வருத்தந் தெரிவிக்கிற.

**repeo'ple,** *v.* புதிதாகக் குடியேற்று; மீண்டுங் குடிநிரப்பு; விலங்குகளைத் தருவித்து நிரப்பு.

**repercu'ssion,** *n.* எதிரொலி; உடனடி எதிரதிர்வு; தாக்குதலின் விளைவு.

**repercus'ive,** *a.* பின்விளைவுடைய; எதிரதிர்வுக்கு இடந்தருகிற.

**rep'ertoire,** *n.* கையிருப்புத்தொகுதி, இசைக்குழுவில் தெரிந்து நன்கு பழகிய சில உருப்படிகள்; நாடகக்குழுவில் தேர்ந்துருவாக்கப்பட்ட சில காட்சிகள்.

**rep'ertory,** *n.* அரும்பொருட் களஞ்சியம்; சேம வைப்பிடம்; செய்தி-தகவல்-எடுத்துக்காட்டுக்கள் ஆகியவற்றிற்குரிய அருவளக் கருவூலம்; கைவசத்தொகுதி.

**repetend',** *n.* (கண.) முடிவின்றி மீண்டும் மீண்டும் வரும் பதின்மானப் பின்ன இலக்கம்; திரும்பத்திரும்ப வருகிற சொல்; மீண்டும் மீண்டும் வருந் தொடர்; மடக்கு, பின்வருநிலைப்பாடற் பகுதி.

**repeti'tion,** *n.* செய்ததே செய்தல்; சொன்னதே சொல்லுதல்; மீண்டும் செய்யப்பெறல்; கூறியதுகூறல்; மனப்பாடஞ் செய்வதற்கான பகுதி; மறுநிலைப்படி, மறுபகர்ப்பு; கட்டளை; பண்ணினைத் திரும்ப விரைந்து மிழற்றும் இசைக்கருவித் திறம்.

**repeti'tional, repeti'tionary,** *a.* திரும்பத்திரும்ப நேரும் இயல்புள்ள; கூறியது கூறும் பாங்குள்ள; செய்யும் போக்குச் சார்ந்த; கூறியது கூறும் பகுதியுடைய.

**repiece',** *v.* மீட்டுந் துண்டுகளை ஒட்ட வை; மீட்டும் இணைத்து உருப்படுத்து.

**repine',** *v.* படபடப்புக்கொள், அலட்டிக்கொள்; மனம் உலைவுறு, உள அமைதி பெறுதிரு, அதிருப்திகொள்.

**repique',** *n.* முற்கெலிப்பு, 32 சீட்டுகளைக் கொண்டு இருவர் ஆடும் சீட்டாட்டத்தில் ஆட்டம் தொடங்குவதற்குமுன் சீட்டுகளைக் கொண்டே 30 புள்ளிகள் கெலித்தல்; *v.* சீட்டாட்ட வகையில் முற்கெலிப்பு மூலமே தோல்வியடையச் செய்; சீட்டாட்ட வகையில் முற்கெலிப்படை.

**replace',** *v.* பழைய இடத்திலேயே மறுபடியும் வை; அகற்றிப் பிறிதிடங் கொள்; விலக்கிப் பிறரிடம் கொள்; பின்னுற்றிடங் கொள், ஒருவருக்குப்பின் அவரிடம் பெற்றமர்; பதிலாக இடங்கொள்; பதிலாளாக இடங்கொள்; ஒருவர் இடத்தை மற்றொருவரைக் கொண்டு நிரப்பு; ஒன்றன் இடத்தை மற்றொன்றைக் கொண்டு நிரப்பு, மாற்றீடு செய், பதில் ஆள் தேடி அமர்வி.

**replace'ment,** *n.* பதிலமர்த்தீடு; பதில்வைப்பு; பதிலிடங் கொள்ளுகை; பதிலமர்வாளர்; பதிலிடங் கொள்ளும் பொருள்; மணி உருவியலில் மூலை விளிம்புகளுக்குப் பதிலாகத் தோற்றும் முகப்பு அல்லது முகப்புக்கள்.

**replant',** *v.* மறுபடியும் நடு; புதிதாக நடவு செய்.

replanta'tion, *n.* மறுநடவு.
rep'lay [1], *n.* திரும்பவும் ஆடப்பட்ட பந்தய விளையாட்டு.
replay' [2], *v.* திரும்பவும் பந்தயம் ஆடு.
replen'ish, *v.* மீள நிரப்பு, குறைநிரப்பு.
replen'ished, *a.* குறை நிரப்பப்பட்ட; நிரம்பிய; நிரம்பச் சேர்த்து வைக்கப்பட்ட.
replete', *a.* செறிவுற்று நிரம்பிய; குறைவற்ற வளமுடைய; நிரப்பிச் சேமித்துவைக்கப்பட்ட; பொங்கித்ததும்புகிற; திணிக்கப்பட்ட, அடைக்கப்பட்ட; தெவிட்டுநிலையடைந்த.
reple'tion, *n.* மிகுநிறைவு, தெவிட்டுநிலை; (மரு.) குருதி நிறைவு.
replev'in, *n.* விசாரணைக்கும் தீர்ப்புக்கும் உட்படுவதாகப் பிணைபடுவதன் பேரில் கடனுக்காகக் கைப்பற்றிய உடைமைகளைத் திரும்பக் கொடுத்தல்; கைப்பற்றப்பட்ட உடைமைகளைத் திரும்பப்பெறல்; கைப்பற்றிய உடைமைகளைத் திரும்பக் கொடுப்பதற்கான ஆணை; கைப்பற்றிய உடைமைகளைத் திரும்பக்கொடுப்பது பற்றிய வழக்கு.
replev'y, *v.* விசாரணைக்கும் தீர்ப்புக்கும் உட்படுவதாகப் பிணைபட்டுக் கைப்பற்றப்பட்ட சொத்தினைத் திரும்பப் பெறு.
rep'lica, *n.* உருவநேர்படி; நேர் பகர்ப்பு; மூலப்படம் எழுதியவரே தமது படத்திற்கு எடுத்த படி.
rep'licate, *n.* (இசை.) குறிப்பிட்ட சுரத்துக்குமேல் அல்லது கீழ் ஒரு பாலை அல்லது பல பாலைகள் விலகியுள்ள சுரம்; *a.* (தாவ.) தன் மீதே திரும்ப மடிக்கப்பட்ட; *v.* திரும்பச்செய்; நேர்படி எடு; திருப்பி மடி.
replica'tion, *n.* திரும்பி மடித்தல், மடிப்பு; பதிலிறுத்தல், மறுமொழி, வினவுக்குரிய விடை; (சட்.) பிரதிவாதியின் வாதத்திற்கு வாதியின் பதில்; எதிரொலி; படி; படியெடுத்தல்.
reply', *n.* விடை; மறுமொழி கூறுதல்; விடைவாசகம்; *v.* விடைகூறு; எதிருரை; எதிர்ச்செயலாற்று; (தொ.) reply paid, தந்திவகையில் பதிலுக்காக முன்கூட்டியே கட்டணஞ் செலுத்தப்பட்ட.
repoint', *v.* (க-க.) கல்-செங்கல் இடைவெளி இணைப்புக்களை மீட்டும் சாந்துபூசிச் செப்பமாக்கு.
*repondez s'ilvous plait*, (பிர.) (தொ.) பதிலளிக்க, மறுமொழி தருக.
report', *n.* பொதுமொழி, ஊர்ப்பேச்சு, வதந்தி; பொது மதிப்புரை, பொதுக்கருத்துப் போக்கு; அறிக்கை, கருத்து ஆய்வு முடிவு; குறிப்புரை, விவர அறிவிப்பு, விரிவுரை; அதிர்வொலி, வெடியோசை; *v.* அறிவி; தெரிவி; அறிக்கை கொடு; விரித்துரை, விவரங்கூறு; எடுத்துரை, கூறியவாறே எடுத்துக்கூறு; முறைப்படி செய்தி தெரிவி; முறைப்படி அறிக்கை செய்; முறைப்படி வருகை தெரிவி; பணிமுறையில் மேலிடத்திற்குத் தெரியப்படுத்து; கருத்தறிவிப்புச்செய்; பத்திரிகைக்குச் செய்தி அறிக்கையிடு; (தொ.) report progress, எந்த அளவு முன்னேறியுள்ளது என்பதை விரித்துரை.
report'age, *n.* செய்தித்துறைக்குரிய செய்தியறிவிப்பு; செய்தித்துறைக்குரிய செய்தியறிவிப்பின் தனிப்பாணி.
report'er, *n.* செய்தியாளர், நிருபர்.
repose' [1], *n.* ஓய்வு; செயலோய்வு; உழைப்பு நிறுத்தம்; அலைவின்மை; உலைவின்மை; உறக்கம்; அமைதியான நிலை; இளைப்பாறல்; மன அமைதி; கலை அமைதித்தோற்றம்; *v.* ஓய்வுகொள்; சார்த்து, அணையாகக்கொண்டு கிடத்து; ஓய்வுகொடு; இளைப்பாற்று; உறக்கத்தில் அமைந்திரு; சாப்படுக்கையில் கிடத்தப் பெற்றிரு; சார்ந்தமைவுறு; ஆதாரமாகக் கொண்டிரு.
repose' [2], *v.* நம்பியிரு.
repos'itory, *n.* கொள்கலம்; சேமவைப்பிடம்; சேமக்குவை; களஞ்சியம்; கருவூலம்; அரும்பொருட்குவை; காட்சிச்சாலை; கிடங்கு; கடை, விற்பனை இடம்; குதிரைத்தாமணி; இடுகாடு; நம்பகமானவர்; ஆன்மாக்களின் உறைவிடம்.
repossess', *v.* மீண்டும் பெறு, திரும்பவும் பெற்று நுகர்.
reposse'ssion, *n.* மீட்டும் பெறுகை.
repost', *n.* வாட்போரில் விரை எதிரடி; விரை எதிர் வெட்டுரை; *v.* விரை எதிரடி கொடு; விரை எதிர் வெட்டுரை கூறு.
repot', *v.* தொட்டிச்செடி வகையில் எடுத்துப் பெரிய தொட்டியில் மீட்டும் நடு.
*repousse*, (பிர.) *n.* புடைப்பகழ்வுச் சித்திரமாக மறுபுறமிருந்து அடித்துருவாக்கப்பட்ட உலோக ஒப்பனை வேலைப்பாடு; *a.* புடைப்பகழ்வுச் சித்திரமாக மறுபுறமிருந்து அடித்து உருவாக்கப்பட்ட.
repp, *n.*=rep [1].
repped, *a.* தட்டுமுட்டுப் பொருட்களுக்குப் பயன்படுத்தப்படும் துணி வகையில் கயிறு போன்ற மேற்புற இழைமானமுடைய.
reprehend', *v.* கண்டி; பழி கூறு, திட்டு; குற்றங்கண்டுபிடி.
reprehen'sion, *n.* கண்டனம், கடிந்துரை; பழிகூறல், திட்டு.
represent', *v.* உருமாதிரியாயமை; புற உருவங்கொடு; புற உருவாயமை; குறித்துக்காட்டு; சுட்டிக்காட்டு; குறியீடாகச்சுட்டு; சின்னமாயமை; நாடக மாந்தரை நடிகராகச் செயற்படுத்திக்காட்டு; விரிவுரைமூலம் உருப்படுத்திக்காட்டு; படமாக உருப்படுத்திக்காட்டு; சுட்டு; ஆயமைவுறு; பிரதிநிதித்துவம் பெற்றிரு; பொதுமக்கள் அவைக்கு உறுப்பினராகத் தேர்ந்தனுப்பப்பெற்றிரு; பெயராளராயிரு; பெயராண்மைகொள்; சார்பாளராயிரு; சார்பில் பேச உரிமைகொண்டிரு; முன்வை; தெரிவி; மனங்கொள எடுத்துரை; பாவி, கற்பனையில் உருவாக்கு; புனைந்து மனங்கொள்வி; பாவித்துரை; புனைந்து கூறு; புனைந்து சாட்டியுரை.
representa'tion, *n.* பெயராண்மை, பிரதிநிதித்துவம்; உருவமைப்பு; சுட்டுரை; விரிவுரை அமைதி; அறிவிப்பு, தெரிவிப்பு; சார்பாண்மையுரை; பாவிப்பு; பாவிப்புரை; புனையுரு; கருத்துரு; நாடக அரங்கக்காட்சி; ஒழுங்கமைவுக் காட்சி; முறையீடு; வாதம்; விளக்கவுரை; பிரதிநிதிகள் குழுமம்; மரபுரிமை ஏற்பு; (தொ.) proportional representation, சரிவீதப் பிரதிநிதித்துவ தேர்தல் முறை; சிறுபான்மையோரும் தம் எண்ணிக்கைக்கேற்ற வீதப்படி தேர்ந்தனுப்பப்படத்தக்க வகையில் அமைக்கப்பட்ட தேர்தல் முறை.
represen'tative, *n.* உருமாதிரி; வகைமாதிரி; கட்டளை மாதிரிப்படிவம்; பெயராள், பிரதிநிதி; ஆட்பெயர்; முகவர்; பதிலாள்; மரபுரிமையாளர்; பின்தோன்றல், பின்னுரிமையர்; *a.* உருமாதிரியான; குறியீடாயமைகிற; கருத்துருப் புனைவாற்றலுடைய; வகைமாதிரிப் படிவமான; வகை நிறைவுச் சின்னமான; தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளடங்கிய; தேர்வுப்பெயராண்மை அடிப்படையான; (தொ.) House of Representatives, அமெரிக்க மாமன்றக் கீழ் அவை; சட்ட சபை.
repress', *v.* அடக்கி ஒடுக்கு; வல்லந்தமாக அடக்கு; கீழ்ப்படுத்து; ஒலிக்காதபடி தடைசெய்; வெடிக்காதபடி தடு; உடையாதபடி தடு; கிளர்ச்சியை ஒடுக்கு; வெளிவிடாது அடக்கிவை; அவா-உணர்ச்சி முதலியவற்றை உணர்வு நிலையிலிருந்து விலக்கி உள்மனத்தினுள் ஒடுங்கவை.
repre'ssion, *n.* அடக்குமுறை; இயற்கைத் தூண்டுதல்களை அடக்கி ஒடுக்குதல்.
reprieve', *n.* இடை ஓய்வுக்காலம்; இடைவேளைத்தளர்வு; உயிர்த் தண்டனை நிறைவேற்றக்கால ஒத்திவைப்பு; மரண தண்டனை நிறைவேற்ற ஒத்திவைப்பு; உயிர்த்தண்டனைக் குறைப்பு; உயிர்த்தண்டனைக் குறைப்பாணை; உயிர்த் தண்டனை வகை மாற்றீடு; உயிர்த்தண்டனை வகை மாற்றீட்டாணை; *v.* இடை ஓய்வு அளி; மீட்டாதரி, விடுவிப்புச் செய்து ஆதரவுகாட்டு; மரண தண்டனை நிறைவேற்ற நாளை ஒத்திப்போடு; உயிர்த்தண்டனை நிறைவேற்றத்தை ஒத்திவை.

rep'rimand, *n.* பணிமுறைக் கண்டன அறிவிப்பு; மேலதிகாரியின் கடிந்துரை; *v.* பணிமுறைக் கண்டனந் தெரிவி; மேலாளர் வகையில் கடிந்துரை கூறு.

rep'rint [1], *n.* மறு அச்சுப்பதிப்பு, மறுபடி அச்சிட்ட ஏடு அல்லது கட்டுரை.

reprint' [2], *v.* மறு அச்சுப்பதிப்பாக அச்சிடு; ஆதிக திருத்தங்களில்லாமல் முன்னையதைப் போன்றே திரும்பவும் அச்சடி.

repris'al, *n.* பழிவாங்கு நடவடிக்கை; (வர.) பழி வாங்கு எதிரீட்டு நடவடிக்கை; ஆட்கள் பொருள்கள் வகையில் வலிந்த கைப்பற்றீடு; (தொ.) letters of reprisal, பழி எதிரீட்டு நடவடிக்கைக்கான அரசாங்க உரிமை ஆணை.

reprise', *n.* (சட்.) பண்ணை ஆண்டியல் செலவினப் பொறுப்பு; விட்ட இடத் தொடக்கம்.

reproach', *n.* வசைப்பண்பு, பழிக்கூறு; பழிமொழி, அவதூறு, இழிதகவு, இகழ்ச்சி; இடித்துரை, திட்டு, வசவு; கண்டனம்; *v.* கண்டி; குற்றங்கூறு; திட்டு; இடித்துரை, கடிந்து நோக்கு; (தொ.) term of reproach, வசையுரை, கண்டனந் தெரிவிக்குஞ் சொல்.

reproach'es, *n. pl.* நல் வெள்ளிக்கிழமை விழாவில் ரோமன் கத்தோலிக்க திருச்சபை வழக்கில் இயேசுநாதர் குறையீடும் மக்கள் எதிரேற்பு மொழிக்கூறும் குறித்துக்காட்டுந் திருப்பாடல்.

rep'robate, *n.* திருவிலார், கடவுளால் புறக்கணிக்கப்பட்டவர்; நெறிகெட்டவர்; கயவர்; பதிதர்; *a.* கடவுளால் புறக்கணிக்கப்பட்ட; நெறிகெட்ட, ஒழுக்கங்கெட்ட; பழி தோய்ந்த; *v.* குறைப்பட்டுக்கொள்; மன வெறுப்பைத் தெரிவி; கண்டனந் தெரிவி; கடவுள் வகையில் திருவழி, வீடுபேற்றினின்று விலக்கிவை.

reproduce', *v.* வேறுபடி உருவாக்கி எடு; உருவப்படி எடு; திரும்ப எடுத்து வழங்கு; இனம்பெருக்கு; இனப்பெருக்கமுறு.

reproduc'tion, *n.* மறு படி எடுப்பு; மறு படி; திரும்ப எடுத்து வழங்குதல்; இனப்பெருக்கம்.

reproof' [1], *n.* கடிந்துரை, கண்டனம்.

reproof' [2], *v.* மேலங்கி வகையில் மீண்டும் நீர்த்தடைகாப்பு அளி.

reprove', *v.* கடிந்துரை, கண்டி.

reprovi'sion, *n.* திரும்பவும் முன்னேருக்கஞ் செய்தல்; முன்னேற்பாட்டின்படி மீண்டுஞ் செய்தல்.

reps, *n.*=rep [1].

rep'tant, *a.* (தாவ.) நிலத்திற் படர்கிற.

rep'tile, *n.* ஊர்வன; இழிஞன்; *a.* ஊர்ந்து செல்கிற; இழிந்த, கீழான; ஈனமான; (தொ.) the reptile press, பணிமுறைசாரா அரசாங்கச் சார்புடைய செய்தித்தாள்கள்.

repub'lic, *n.* குடியரசு, பொதுவரசு; சமத்துவ சமுதாயக் குழு; சம உரிமை விலங்கினக்குழு; (தொ.) the republic of letters, இலக்கிய எழுத்தாளர்க் குழு; இலக்கியத்துறை.

repub'lican [1], *n.* குடியரசு ஆதரவாளர்; குடியரசுக் கொள்கையாளர்; *a.* குடியரசு சார்ந்த; குடியரசு அமைப்புடைய; குடியரசுத் தன்மையுடைய; பறவைகள் வகையில் பெருங் குழுவாகச் சமூக உணர்ச்சியோடு வாழ்கிற.

Repub'lican [2], *n.* மைய ஆற்றல் விரிவும் காப்புவரி முறையும் வேண்டும் அமெரிக்க கட்சியினர்; *a.* மைய ஆற்றல் விரிவும் காப்புவரி முறையும் வேண்டும் அமெரிக்க கட்சி சார்ந்த.

republish', *v.* மீண்டும் வெளியிடு, மறு வெளியீடு செய்.

repud'iate, *v.* மறுதலி, மறு, தொடர்பு துற, உடைமை துற, உரிமை கைவிடு; ஏற்க மறு; கீழ்ப்படிய மறு; மேலுரிமையை உதறித்தள்ளு; வேண்டாமென்று விலக்கு; வாக்குறுதி மறு; கடனை மறு; பொதுக்கடனைத் தள்ளுபடி செய்; கடமை துற; மனைவி வகையில் ஒதுக்கி வை, நீக்கு.

repudia'tion, *n.* தள்ளுகை, மதியாதிருத்தல்.

repugn', *v.* எதிர்ப்புத் தெரிவி; எதிராக முயற்சி செய்; வெறுப்பளி, வெறுப்புடையதாயிரு.

repug'nance, *n.* ஒத்திசையா நிலை; முரண்பாடு; வெறுப்பு.

repug'nant, *a.* நேரெதிரான, ஒத்திசையாத, முரண்படுகிற, பொருந்தாத; சுவையற்ற; (செய்.) எதிர்க்கிற, மீறிச்செல்கிற.

repull'ulate, *v.* புதிதாக முளை; நோய்வகையில் மீண்டுந் தொடங்கு.

repulse', *n.* தாக்கித் துரத்தீடு, தாக்குதல் முறிவு; தோற்கடிப்பு; படுதோல்வி; முகமுறிப்பு; மறுதலிப்பு; *v.* தாக்கித் துரத்து; தாக்குதல் முறியடித்துப் பின்னடைவி; வாதத்தில் தோற்கடி; நட்புக்காட்டுபவரிடம் முகமுறிப்புச்செய்; வேண்டுகோளை மறுதலி.

repul'sion, *n.* (இய.) வெறுப்பம், இடையெறிவுத்திறன், பொருள்கள் தம்மிடையே ஒன்றை ஒன்று உந்தித்தள்ளும் ஆற்றல்; வெறுப்பு, ஒருவர்மீது இயல்பாகத் தோற்றும் உவர்ப்புணர்ச்சி; (தொ.) capillary repulsion, புழைப்புற நீங்குதிறன், நுண்குழாயின் புறந்தொடாது விலகிநிற்கும் சில நீர்மங்களின் இயலாற்றல்.

repul'sive, *a.* வெறுப்பூட்டுகிற; வெறுத்தொதுக்குகிற; பாசமற்ற, கடுகடுப்புக் காட்டுகிற; ஒத்துணர்வில்லாத; (இய.) இடையெறிவுத் திறனுடைய, வெறுப்பார்ந்த; (செய்.) எதிர்ப்பளிக்கிற.

repurch'ase, *n.* மறுகொள்வினை, திரும்பவும் விலைக்கு வாங்குதல்; மறுகொள்வினைப் பொருள்; *v.* திரும்பவுங் கொள்முதல் செய்; விலைக்குவாங்கு.

repure', repur'ify, *v.* மீண்டும் தூய்மைப்படுத்து; முழுதும் நயப்படுத்து, முற்றிலும் மேன்மைப்படுத்து.

rep'utable, *a.* நற்பெயருடைய; மதிப்பு வாய்ந்த; மதிக்கத் தக்க.

reputa'tion, *n.* பொதுமதிப்பு; பொதுக்கருத்து மதிப்பீடு; நற்பெயர்; மதிப்பாண்மை; புகழ்.

repute', *n.* புகழ்ப்பெயர்; புகழ்; நன்மதிப்பு; *v.* மதி, கணி.

reput'ed, *a.* பெயர்பெற்ற, புகழ்ச்சியுற்ற; (தொ.) reputed owner, உடையாரெனக் கருதப்படுபவர்; reputed pint, 'பைண்ட்' எனப் போலியாகக் கொள்ளப்படும் அளவு.

reput'edly, *adv.* பொதுவாக நிலவும் கருத்தின்படி, பொது மதிப்பீட்டின்படி.

request', *n.* கோரிக்கை, வேண்டுகோள்; மனு, முறையீடு; வேண்டிக்கொண்ட பொருள்; வேட்பு, விரும்பப்பட்ட நிலை; தேவை, வேண்டப்படும் நிலை; *v.* வேண்டு, கோரு; வேண்டுகோள் செய், முறையிடு; வேண்டிக்கேள், வேண்டுமென்று கோரு; மன்றுடு, நயந்துகேள்; செயல்வகையில் குறையிரந்து கொள்; செயல்வகையில் கேட்டுக்கொள்; இசைவு வகையில் கோரு; (தொ.) by request, தெரிவிக்கப்பட்ட வேண்டுகோளுக்கு ஏற்ப.

requick'en, *v.* புத்துயிரளி.

req'uiem, *n.* இறந்தார் ஆவி அமைதியடைவதற்கான சிறப்பு வழிபாடு; அமைதி வழிபாட்டிற்கான இசை அமைப்பு; இரங்கற்பா, நெய்தற்பண்.

*requies'cant in pace*, (ல.) *n.* அவர்கள் ஆவிகள் அமைதியுறுக.

*requies'cat*, (ல.) *n.* மாண்டார் ஆவியின் அமைதி குறித்த வேண்டுதல்; சாந்தி.

*requies'cat in pa'ce*, (ல.) *n.* அவர் ஆவி அமைதியுறுவதாக.

require', *v.* வேண்டு, அவாவிக்கோரு; உரிமைக்கோரிக்கையிடு; செயற் கட்டளையிடு; ஆணைக்குறிப்புத் தெரிவி; வலிந்து கோரு; தேவைப்படு; இன்றியமையா நிலையுடையதாயிரு, அவசியப்படுவதாயிரு; அவசியமாயிரு.

require'ment, *n.* தேவை; கோரிக்கை; வேண்டப்படும் பொருள்.

req'uisite, *n.* இன்றியமையாத்தேவை, அவசியக்கூறு; வெற்றிக்குரிய முற்கூறு; தேவைப்பொருள்; *a.* சூழ்நிலைகளிடையே தேவைப்படுகிற; வெற்றிக்குத் தேவையான; தேவைப்படுகிற, செயல்துறைத் தேவையான.

**requisi'tion**, *n.* தேவைக்கோரிக்கை ; எழுத்துவழி வேண்டுகோள் ; பணித்துறைச் செயல்முறைக் கட்டளை ; படைப் பொருள் கோரிக்கைக் கட்டளை ; *v.* வேண்டுதற் கட்டளையிடு ; படைத்துறைக்கான பயனீட்டு ஆணைக்கோரிக்கை செய் ; படைத்துறைக்கான ஆணைக்கோரிக்கையிடு ; போர்ப்பொருள் நாடி ஆணையிடு ; தனிமுறை அழைப்பாணையிடு ; பொதுப்பணிக்கு எடுத்துப் பயன்படுத்திக்கொள் ; (தொ.) be under requisition, be in requisition, படைத்துறை ஆணை மீது பயன்படுத்தப்படும் நிலையில் இரு ; put in requisition, call into requisition, பயனீட்டு ஆணைகோரு.

**requite'**, *v.* கைம்மாறு செய் ; நல் ஈடுசெய் ; பரிசீடு செய் ; பதிலீடு அளி ; பதிலுக்குப்பதில் செய் ; தகையுறத் திருப்பிக் கொடு ; வஞ்சந் தீர், பழிக்குப்பழி வாங்கு.

**re-read'**, *v.* திரும்பப் படி, வாசித்ததையே மீண்டும் வாசி.

**re-reck'oning**, *n.* மறுகணிப்பு.

**rere'dos**, *n.* பலிபீடத்தின் பின்புறச் சுவரை மறைக்கும் வேலைப்பாடுடைய திரை.

*res*, (ல.) *n.* பொருள், உடைமை, சொத்து.

**resad'dle**, *v.* மீண்டுங் குதிரைக்குச் சேணங் கட்டு.

**resal'able**, *a.* திரும்ப விற்கத்தக்க.

**resale'**, *n.* மறு விற்பனை.

*res angus'ta domi'*, (ல.) *n.* வறுமை, வீட்டிலுள்ள இடர்ப் பாட்டுநிலை.

**rescind'**, *v.* அழி, மாற்று, நீக்கு, தள்ளுபடி செய் ; உத்தரவை மாற்று.

**rescis'sion**, *n.* அழித்தல், மாற்றல், நீக்குதல் ; உத்தரவைத் தள்ளுபடி செய்தல்.

**res'cript**, *n.* மீமிசை எழுத்து, எழுதப்பட்டதன் மேலாகத் திரும்ப எழுதிய எழுத்து ; மீட்டெழுத்து, மறுவரைவு ; மீட்டெழுதப்பட்டது ; அரசியல் எழுத்து விளம்பரம் ; ஆட்சியாளர் சாசனம் ; பணிமுறைக் கட்டளைப் படி ; போப்பாண்டவர் ஆணைப்பத்திரம் ; போப்பாண்டவர் மேல்நிலைத் தீர்ப்பு ; சட்டக் கருத்துக்களில் உதவிபுரியுமாறு வேண்டிய குற்ற நடுவரின் விண்ணப்பத்திற்கு ரோமப் பேரரசர் விடுத்த எழுத்துவழி மறுமொழிக்கட்டளை.

**res'cue**, *n.* இடர்மீட்பு ; மீட்புதவி ; இடர்காப்புதவி ; தீங்கிலிருந்து தடுத்தாளுகை ; சட்டமுரணான சிறை விடுவிப்பு ; உடைமை வகையில் வலிந்த மீட்பு ; *v.* காப்பாற்று ; விடுவி ; தப்புவி ; சட்டத்திற்கு முரணாக விடுவி ; வல்லந்தமாக உடைமையைத் திரும்பப்பெறு.

**research'**, *n.* ஆராய்ச்சி ; மெய்த்தேர்வு, புத்தாய்வு ; *v.* கூர்ந்தாராய், நுணுகிச் சோதனை செய் ; புத்தாய்வில் ஈடுபடு

**research'es**, *n. pl.* ஆராய்வுகள், பரிசீலனை, ஆராய்ச்சி.

**reseat'**, *v.* திரும்பவும் இருக்கையில் அமர்த்து ; நிலைக்கச் செய் ; திருக்கோயில் காட்சிக்கொட்டகை ஆகியவற்றின் வகையில் புதிய இருக்கைகள் இணை.

**resect'**, *v.* அறுவை மருத்துவத்தில் எலும்பு-குருத்தெலும்பு முதலியவற்றைச் சீவி நறுக்கு.

**resed'a** [1], *n.* சாயப்பொருள்தருஞ் செடிகள் உள்ளிட்ட செடியினம்.

*reseda* [2], (பிர.) *n.* வெளிறிய பச்சை வண்ணம்.

**reseek'**, *v.* மீண்டும் அடைய முயற்சி செய் ; திரும்பவுந் தேடு.

**reseize'**, *v.* திரும்பவுங் கைப்பற்று ; வல்லந்தமாகக் கைக்கொள் ; மீண்டுஞ் சட்டப்படி கைப்பற்று ; திரும்பவும் அமர்த்து.

**resell'**, *v.* வாங்கியதை மீண்டும் விற்பனை செய் ; வாங்கிய பின் விற்றுவிடு.

**resem'blance**, *n.* ஒப்பு, ஒத்திருத்தல், போன்றிருத்தல்.

**resem'ble**, *v.* போன்றிரு, ஒத்திரு, தோற்றத்தில் ஒன்றாயிரு.

**resent'**, *v.* கோபங்கொள் ; குற்றமாகக் கொண்டு சீற்றங் காட்டு ; வன்மங் கொண்டிரு.

**resent'ment**, *n.* சீற்றம் ; கடுஞ்சின எதிர்ப்பு ; மனக்கசப்பு, வன்மம்.

**reserva'tion**, *n.* தனி ஒதுக்கீடு செய்தல் ; தனி ஒதுக்கீடு ; இருக்கைகள்-அறைகள் வகையில் தனிநேர்வு செய்தல் ; தனிநேர்வு ; காப்பொதுக்கீடு ; காப்புவைப்பு ; காப்படக்கம், உள்ளடக்க மறைப்பு ; முக்கிய சொல் அல்லது வாசக மறைப்பு ; அடக்கி மறைக்கப்பட்ட செய்தி ; அடக்கி மறைக்கப்பட்ட பொருள் ; சேமத்தனியுரிமை, ஆளற்ற திருக்கோயில் மானியத்திற்கு ஆளமர்த்துவதற்குரிய போப் பாண்டவரின் உரிமை ; தனிச்சிறப்புரிமை, பாவமன்னிப் பளிக்கும் திருமடத்தலைவர்களின் உரிமை ; குறித்தொதுக்கீடு, திருவுணா வழிபாட்டில் அப்பச் சிறுபகுதியை திருநிலை மீத்து ஒதுக்கி வைத்துக்கொள்ளும் மரபு ; தனிப்பற்றொதுக்கீடு, உடைமை வழங்கீட்டாவணத்தில் வழங்காது தனி நலன் அல்லது உரிமை ஒதுக்கி வைத்துக்கொள்ளும் தனிப் பற்றீடு ; தனிப்பற்றொதுக்கீட்டு வாசகம் ; தனிக்காப்பு நிலம் ; தனி ஒதுக்கீட்டுப் பகுதி, தொல்குடிமக்களுக்கென ஒதுக்கப்பட்ட பகுதி ; தனிநலங்கள் குறித்துச் செய்யப்பட்ட ஒதுக்கீடு ; (தொ.) mental reservation, மனமொவ்வாமை ஒதுக்கம்.

**reserve'**, *n.* சேமஒதுக்கீடு ; கையிருப்பு மிகுவளம் ; கையிருப்புச்சேமத்தொகை ; மூலபலம், சேமக் கையிருப்புப் படை ; நெருக்கடி கால அழைப்புச் சேமப்படை, படைத்துறைச் செயல் துறையிலிருந்து நீக்கப்பெற்றும் இடைக்கால அழைப்புக்குரியவரடங்கிய சேமப்படை ; நெருக்கடிகால அழைப்புச் சேமப்படைவீரர் ; தேவைக்காலச் சேமவளா ஆட்டக்காரர், விளையாட்டுக்களில் தேவை ஏற்படும்போது பயன்படுத்திக்கொள்ள வைத்திருக்கும் பதிலாள் ; சேம ஒதுக்கீட்டுப்பொருள், எந்நேரத்திலும் பயன்படுத்த ஒருக்கமாக வைத்திருக்கும் பொருள் ; சேமவைப்பிடம், தனிப் பயனுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் இடம் ; பரிசு வாய்ப்பணுக்கப்பொருள், காட்சிச்சாலைப் பரிசுக்குரிய பொருள் தகுதியற்றதெனத் தள்ளுபடி செய்யப்பட்டால் அப்பரிசுக்குரிய அடுத்த தகுதி உடையதென்று தேரப்பட்ட பொருள் ; வரையறை ; விதிவிலக்கு ; கட்டுப்பாடு ; தனி முறைத்தகுதி இணைப்பு ; தன்னடக்கம் ; நாவடக்கம் ; சொல்லடக்க அமைதி ; சொற் செறிவமைதி ; நடையொதுக்கம் ; தனியொதுக்கப்பாங்கு ; தனியொதுக்க வேறுபாடு ; உள்ளடக்க மறைப்பு ; *a.* சேம இருப்பு வளமான ; சேம ஒதுக்கீடான ; தனிப்பயன்கருதி ஒதுக்கப்பட்ட ; *v.* சேமித்துவை ; சட்டப்படி சேமவைப்பாகத் தனிப்படுத்திவை ; விட்டுவை, பின் பயன்கருதி ஒதுக்கிவை ; கையிருப்பில் வைத்துக்கொள், வேறொரு தறுவாய் நோக்கிப் பயன்படுத்தாதடக்கிவைத்துக் கொள் ; கெடாது காத்துவை ; செலவழிக்காது மீத்துவை ; பயன்படுத்தாது பாதுகாத்து வை ; தனித்தெடுத்து வை ; தனியாருக்கெனக் குறித்துவை ; தனக்கென ஒதுக்கி வை ; தனிப்பயன்கருதிக் காப்பில் வை ; நெருக்கடி கால அழைப்புக் குரிய நிலையில் விட்டுவை ; முன்கூட்டியே குறித்து வை ; இறைவன் வகையில் அல்லது ஊழ்வகையில் முன்கூட்டியே தனிப்படக் குறித்தமை ; (தொ.) auction without reserve, sale without reserve, வேறுபேரமில்லாத உடனடி ஏல விற்பனை ; banker's reserve, பொருளகத்தின் இடர்க்காப்புச் சேமவளத் தொகை ; publish with all proper reserves, publish with all reserve, ஆதரவெழுத்தின்றி வெளியிடு ; reserve oneself for, ஏற்ற தறுவாய்வரும்வரை அதை எதிர் நோக்கி ஆற்றலை வெளிவிடாதடக்கி வைத்துக்கொண்டிரு ; reserve price, கடைக்குறைவிலை ; without reserve, முழுதும், வரையறை கட்டுப்பாடு தகுதி மாறுபாடுகளின்றி, எவ்வகை மாறுபாடுமில்லாமலே.

**reserved'**, *a.* அடக்கமான, ஒதுக்கமான, உணர்ச்சிகளை அல்லது கருத்துக்களை வெளியிடுவதில் தயக்கங் கொள்கிற ; பேச்சில் விருப்பமற்ற ; தனி ஒதுக்கீடு செய்யப்பட்ட, சேமக் காப்பீடு செய்யப்பட்ட, இடர்க்காப்புச் சேம ஒதுக்கீடு செய்யப்பட்ட ; (தொ.) reserved list, கடற்படையில் நடைமுறைச் செயல்துறை விலக்கீடு பெற்றபின் நெருக்கடிகால அழைப்புக்குரியவராகக் குறிப்பீடு செய்யப்பட்ட அதிகாரிகளின் தொகுதி ; நெருக்கடிகால அழைப்புக்குரியவர்களின்

பட்டியல்; reserved seats, தனிநேர்விருக்கைகள், நாடகம் முதலிய காட்சிகளில் முன்பணம் கட்டி ஒதுக்கீடு செய்யப் பட்ட இருக்கைகள்.

reserve's, *n. pl.* இடர்நிலை காப்புச் சேமப்படைப் பகுதி, நில-நீர்-வான் படைகளின் நெருக்கடி நேரத்தில் பின்வாங்கும் படைக்கு ஆதரவாகக் கையிருப்பில் வைக்கப்பட்டுள்ள தனிச் சேமப்படைப்பகுதி; நெருக்கடிகால அழைப்புச் சேமப்படைப் பகுதி.

reserv'ist, *n.* சேமப்படைவீரர்.

res'ervoir, *n.* நீர்த்தேக்கம், இயற்கையான அல்லது செயற்கையான நீர்ச்சேமிப்பு இடம்; நீர்த்தேக்கத் தொட்டி; இயந்திரத்தில் நீர்மம் வைக்கப்பட்டிருக்கும் பகுதி; உடலில் நீர்மம் தேக்கப்பட்டிருக்கும் பகுதி; சேமப் பொருட்களஞ்சியம்; சேம அறிவுக்களஞ்சியம்; பின்பயன்கருதிச் சேகரிக்கப்பட்ட உண்மைகளின் தொகுதி; *v.* களஞ்சியத்தில் சேர்த்து வை; (தொ.) reservoir pen, சேம ஊற்றுப்பேனா.

reset'[1], *n.* திருட்டுப்பொருள்களைப் பெறுதல்; தடையுத்தர வுக்கு ஆளானவர்களை வைத்தாதரித்தல்; *v.* திருட்டுப் பொருள்களைப் பெறு; களவுப்பொருள்கள் வகையில் வாங்கி வைத்துக்கொள்.

reset'[2], *v.* மணிக்கற்கள் வகையில் மாற்றிப் பதித்துவை.

resett'er, *n.* திருட்டுப் பொருள்களைப் பெறுவோர்.

reship', *v.* திரும்பவுங் கப்பலேற்றி அனுப்பு; மீட்டுங் கப்ப லேறிச் செல்.

reship'ment, *n.* மீட்டுங் கப்பலில் ஏற்றுதல்.

reside, *v.* குடிவாழ்வுபெறு, குடியிருப்பிடமாகக் கொள்; நிலை யாகத் தங்கியிரு; இருப்பிடத்திலேயே நீடித்துத் தங்கியிரு; பணிமனை இல்லங்களில் தங்கியிரு; உரிமை வகையில் நிலை பெற்றிரு; பண்புகள் வகையில் இயல்பாக நிலைகொண்டிரு; உரிமை வகையில் மரபுவழியாக அமைந்திரு.

res'idence, *n.* குடியிருத்தல்; குடியிருப்பாகக் கொள்ளல், குடியிருக்கத் தொடங்கல்; அலுவலர்களின் தங்கல் குடியிருப்பு; உறையுள், உறைவிடம்.

res'idency, *n.* (வர.) முன்னுள் இந்திய மன்னரவையின் கவர்னர் ஜெனரல் பேராளரின் பணிமனை.

res'ident, *n.* குடியிருப்பாளர், ஊர் அல்லது ஊர்ப்புறத்து நிலையாகத் தங்கியிருப்பவர்; புலம்பெயரா உயிரினம்; அயல்நாட்டவையில் அமைச்சராயிருப்போர்; காப்பரசுகளில் ஆட்சியாளர் பெயராள்; துணைக்காப்பரசின் ஆளுநர்; *a.* குடியிருக்கின்ற; பதியெழாப் பண்புடைய; புலம்பெயராத; தன் அலுவலகத்திலேயே தங்கியிருக்கிற; உறுப்பினர் பதவி யமர்வுடைய; தங்கியிருக்கக் கடமைப்பட்ட; உரிமை வகை யில் பிறப்புவழி உரியதான.

residen'tial, *a.* நகர ஊர்ப்பகுதிகள் வகையில் குடியிருப்புக் குரிய; குடியிருப்புக்குத் தகுதியான; தனிப்பட்டோர் மனை கள் இருக்கின்ற; குடியிருப்புத் தொடர்புடைய.

residen'tiary, *n.* குடியிருப்புக் குரு, சமயங் காரணமாக ஓரிடத்துக் குடியிருக்கக் கடமைப்பட்ட சமயகுரு; *a.* பணி மனை எல்லையில் குடியிருக்கக் கடமைப்பட்ட; பணிமனைக் குடியிருப்புத் தேவையுடைய; பணிமனைக் குடியிருப்புச் சார்ந்த.

res'identship, *n.* (வர.) முன்னுள் இந்திய மன்னரவையின் கவர்னர் ஜெனரல் பேராளர்நிலை; சார்பு நாடுகளில் பிரிட்டிஷ் ஆட்சிச் சார்பாளர் நிலை.

resid'ual, *n.* (கண.) கழித்துவந்த மீதி; (வேதி.) எரிபொருள் எச்சம்; ஆவி ஆக்கத்தில் மிச்சம்; *a.* (கண.) கழித்துவந்த, மீந்த; (வேதி.) எரிபொருளில் எஞ்சிய; ஆவி ஆக்கத்தில் மிஞ்சிய; கணிப்பில் விளக்கப்படாத கூறுன.

resid'uary, *a.* சொத்து வகையில் கடன் முதலிய பொறுப்புக் கள் போக மீந்த மதிப்புச்சார்ந்த; மிச்சமான; மீந்துள்ள; (வேதி.) எரிபொருளில் அல்லது ஆவியாக்கத்தில் எஞ்சி யுள்ள.

res'idue, *n.* மீதி, மிச்சம், எஞ்சியுள்ளது, மிச்சமாக விடப் பட்டது; வரி-கடன்-கொடை முதலியன போகச் சொத்தின் மிச்சம்.

resid'uum, *n.* (வேதி.) எரிந்த அல்லது ஆவியான பிறகு உள்ள எச்சம்; (கண.) கணிப்பில் விளக்கம் பெறுப் பகுதி; சமுதாய அடிநிலைக்கூறு.

resign'[1], *v.* பணிதுற, இராசிநாமாச் செய்; கைவிடு; கைதுறந்து ஒப்படை, விட்டுக்கொடு; கம்மென்றிரு, அமைந் தடங்கு.

re'-sign'[2], *v.* மீண்டுங் கையொப்பமிடு.

resigna'tion, *n.* பணிதுறப்பு, இராசிநாமா; விலகல் கடிதம்; விலகியிருத்தல்; குறைகூறுது பொறுத்துக்கொள்ளல்; அமைவடக்கம்.

resile', *v.* எதிர்த்தடி, எதிர்த்துத்தெறி, அமுக்கநீட்டலுக்குப் பின் முன்னுருவெய்து, வில்போல் நிமிர்; அமிழ்வுக்குப்பின் துள்ளி மிதந்தெழு; நலிவுக்குப் பின் எளிதில் முன்சீர்ப் பெறு; கவலை நீங்கி உடனடியாகக் களிகொள்.

resil'ience, *n.* எதிர்த்தடிப்பு, எதிர்த்தெறிப்பு, மீட்டெழுச்சி, எதிர்விசைப்பு; விரிவாற்றல், நீட்டாற்றல்; மனத்தின் விரி திறம், தொய்வாற்றல்.

resil'iency, *n.* விரிவாற்றல், நீட்டாற்றல்; தொய்திறம், நிலைமைக்குத் தக்கபடி மாறும் பண்புத்திறம்.

resil'ient, *a.* விரிவாற்றலுடைய; நீட்டாற்றலுடைய; தொய் திறமுடைய, நிலைமைக்குத் தக்கபடி மாறுதலடையக் கூடிய.

res'in, *n.* நீரில் கரையாத பற்றுற்றல் மிக்க மரப்பிசின் வகை; *v.* மரப்பிசினைத் தேய்; மரப்பிசினூட்டிச் செயலாற்று.

resipis'cence, *n.* மதிப் பேறு, திருந்தும் பண்பு.

resist', *n.* மேற்புற அரிப்புத் தடைப்பொருள்; சாயமிடப் பெருத காலிக்கோத்துணிப் பகுதிக்குரிய மேற்பரப்புத் தடை காப்புப்பொருள்; *v.* தடைசெய்; எதிர்த்துநில்; தடுத்து நில்; தடுத்து நிறுத்து; போக்குச் செறுத்துத் தடு; வெற்றி யாக எதிர்; எதிர்த்துத்தாக்கு; தாங்கிநில்; தாங்கும் ஆற்றல் பெற்றிரு; நுழைவு தடு; ஊடுபரவலைத் தடைசெய்; ஏற்க மறு; ஏற்காது புறந்தள்ளு; எதிர்ப்புச் செய்; எதிர்ப்புக் காட்டு; எதிர்ப்பு உருவாக்கு; பணிய மறு; பாதிக்கப் பெருதிரு; கலவாதிரு; மறுப்பளி; தவிர்; பழக்கந் தடை செய்; செயல் தடு; எதிர்முயற்சி செய்; தடுக்க முயற்சி செய்.

resis'tance, *n.* எதிர்ப்பு, தடுக்கும் ஆற்றல்; இடைமறிக்கும் ஆற்றல்; மின்சாரம்-காந்தம்-வெப்பம் வகையில் ஏற்காமை, மின்சார வகையில் மின்சாரத்திற்கு உறுதியான தடை யமைவு.

resistibil'ity, *n.* தடுக்கத்தக்க நிலை; எதிர்ப்பாண்மை யுள்ளது; எதிர்ப்பு ஆற்றல்.

*res judicata*, (ல.) *n.* முன்பே தீர்க்கப்பட்டதென்று வாதிக் கப்பட வேண்டாதது.

res'oluble, *a.* தீர்க்க வல்ல; கூறுகப் பிரிக்கத்தக்க; பகுத் துணரவல்ல.

res'olute, *a.* உறுதிகொண்ட; நெஞ்சுரங் கொண்ட; தயக்க மற்ற; பின்வாங்காத; கருமமே கண்ணுன.

resolu'tion, *n.* புதிர்விடுவிப்பு; ஐயநீக்கம்; சிக்கலறுப்பு; மன்றத் தீர்மானம்; கூட்டமுடிவு; மன்றத் தீர்மான நிறை வேற்றம்; கூட்டமுடிவெடுப்பு; தீர்மான வாசகம்; உறுப்புக் கூறுபாடு; கூறுபாடு; இயற்கூறுபாட்டுச் சிதைவு; பண் புறுதி; ஒழுக்க உரம்; செயல்துணிவு; (செய்.) அசை மாற்று, நெடிலசை ஒன்றினிடமாக இரு குறிலசை மாற்ற மைப்பு; (இசை.) பொருந்திசைமாற்று, பொருந்தா இசையின் பொருந்திசையான மாற்றமைவு; (மரு.) ஊமை வீக்க மறைவு, சீழ் வைப்பில்லாமலே வீக்கமறைதல்; (பொறி.) ஆற்றற் பிரிவீடு, ஒருமையாற்றலின்இடமாக மொத்தத்தில் அதற்கிணையான ஒன்றுக்கு மேற்பட்ட ஆற்றல்களை ஈடு படுத்தல்.

**res'olutive**, *n.* தசைகரைப்பு மருந்து, தசைகரைப்புமேற் பூச்சு; *a.* தசைகரைக்கும் ஆற்றலுடைய, கூறுக்கச் சிதை வூட்டுகிற; கரைகிற; (தொ.) resolutive condition, ஒப்பந்த கலைப்புக்குரிய நிபந்தனை.

**resolve'**, *n.* மனத்துணிபு, கருத்து உறுதிப்பாடு; (செய்.) உள்ள உறுதி; *v.* கரை; ஒருமை குலை; பகுதிகளாகப் பிரி; சிதைத்தொழி; மாற்று; மாறு; பகுத்தாய்ந்து எளிமை வாய்ந்ததாக மாற்று; பொருந்தா இசையைப் பொருந்திசைக்கு மாற்று; பொருந்திசையாக மாறு; தீர், விளக்கு, தெளிவி; அமைதிப்படுத்து, செய்திபற்றி முடிவெடு; உளவுறுதிகொள்; மனத்தில் ஆய்ந்து முடிவுசெய்; வாக்கெடுத்து முடிவுசெய்; தீர்மானம் மேற்கொள்; முடிவு செய்வி; துணிபு மேற் கொள்ளச்செய்.

**resol'vent**, *n.* (மரு., வேதி.) கழலை முதலியவற்றைக் கரைக் கும் மருந்து; கூறுபடுத்திக் கரைக்கும் மருந்து; கரைக்கும் பூச்சு; *a.* கழலை முதலியவற்றைக் கரைக்கிற; கூறுபடுத்திச் சிதைக்கிற.

**res'onance**, *n.* ஒலியலை எதிர்வு; அதிர்வொலிப்பெருக்கம், முழக்க அதிர்வு; நாடி அதிர்வு; (வேதி.) ஓரிணைதிற ஈரிணை திறங்களின் இடைப்பட்ட நிலை.

**res'onant**, *a.* எதிரொலிக்கின்ற; தொடர்ந்தொலிக்கின்ற; ஒலிமுழக்கஞ் செய்கின்ற; அதிர்ந்து முழங்குகிற; எதிர் எதி ரொலியாக முழங்குகிற; எதிரொலி முழக்கம் உண்டுபண்ணு கின்ற; ஒலி வாங்கி முழங்குகின்ற; ஒலி வழியே அதிர்வுற்று ஒலிபெருக்கிக் காட்டுகின்ற.

**res'onator**, *n.* ஒலி அதிர்வாற்றல் பொருள்; ஒலியதிர்வு அமைவு; இசையதிர்வு முழக்கக்கருவி; இசைக்கூறுக்கக் கருவி; இசைக் கலவையில் தனிக்கூறு பிரித்துக்காட்டுங் கருவி; தனி இசைக்கூறு ஏற்றதிரும் அமைவு.

**resorb'**, *v.* மீட்டும் உறிஞ்சு, மறுபடியும் உள்வாங்கு.

**resorb'ence**, *n.* மீட்டும் உட்கவர்கை.

**resorb'ent**, *a.* மீட்டும் உள்வாங்கிக்கொள்ளுகிற.

**resor'cin**, *n.* சாம்பரம் அரக்குச் சேர்க்கையால் ஏற்படுஞ் சாயக் கூட்டுப்பொருள்.

**resorp'tion**, *n.* மீண்டும் உறிஞ்சுதல், மறுபடியும் உள் வாங்கிக்கொள்ளுதல்.

**resort'** [1], *n.* போக்கிடம், புகலிடம்; வழிமுறை, செயல்வகை; வகை துறைக்கருவி; சார்துணை; நாடி ஊடாடும் இடம், அடிக்கடி சார்விடம்; பலருடன் கூடிச் சேர்விடம்; *v.* நாடி அடை, விரும்பியணுகு; துணையாக நாடு; வகைதுறை யாக மேற்கொள்; சென்று ஊடாடு, அடிக்கடி செல்; பல ருடன் சென்றுகூடு; (தொ.) in the last resort, கடைநிலை யாக, இறுதி வகைமுறையாக.

**resort'**, *v.* மீண்டும் அடுக்கு, மறுபடியும் வகைப்படுத்து.

**resound'**, *v.* எதிரொலி செய்; ஓசையைத் திருப்பியனுப்பு; முழங்கு; இடவகையில் ஒலி யெதிரொலியால் அதிர்வுறு; இட வகையில் நிரம்பி அதிர்வுற்று முழங்கு; திரும்பத் திரும்ப முழக்கஞ் செய்; அதிர்வூட்டிச் செல்; தொடர்ந்து முழக்கமிடு; எங்கும் முழக்கமாகப் பேசப்பெறு.

**resource'**, *n.* வழிமுறை, வகைமுறை வாய்ப்பு; வகைதுறை வளம், நடுவழி காணுந் திறம்; நுண்ணியத்திறம்; உதவி வாய்ப்பு, துணைவளம்; உதவியாதாரம்; வாய்ப்பு வளம், வகை துறை ஆதாரம்; பொழுதுபோக்கு வாய்ப்பு, ஓய்வு ஈடுபாடு.

**resour'ces**, *n. pl.* வள ஆதாரம், தேவை நிரப்பு வகைதுறை வாய்ப்பு; பணந் திரட்டு வகைமுறை வாய்ப்புக்கள்; நாடு முதலியவற்றின் வகையில் வன்மை வளவாய்ப்புத் தொகுதி.

**respect'**, *n.* மதிப்பு; கண்ணியம், நன்மதிப்பு; மதிப்புணர்ச்சி, போற்றுதல்; மதிப்புத் தன்மை; உன்னிப்பு, கவனிப்பு; தனிப்பற்று, மதிப்பு வேறுபாடு; தொடர்பு; வகை; கூறு; *v.* மதி, சிறப்புடையதாகக் கருது; மதிப்புக் காட்டு, உயர் வாகப் போற்று; கண்ணியமாக நடத்து; புண்படாமற் பார்த்துக்கொள்; ஆள் வேறுபாடு காட்டு, மதிப்பு வேறுபாடு காட்டு; தொடர்பாயிரு, குறித்ததாயிரு; (தொ.) in all respects, எல்லாக் கூறுகளிலும்; in respect of, குறித்து; no respect of person, ஆட்களுக்கான எவ்வகை மட்டுமிஞ்சிய மதிப்பும் இல்லை; with respect to, பற்றிய வகையில்.

**respectabil'ity**, *n.* ஆன்ற மதிப்புடைமை; சமுதாய மதிப் பிற்கு உரியராய் உள்ளவர்கள்; சமுதாய மதிப்பிற்கு உரிய ராய் உள்ளவர்.

**respec'table**, *a.* மதிப்புவாய்ந்த; போற்றத்தக்க; சமுதாய மதிப்புடைய; மதிப்புடைமை கருதிய; மதிப்பான தோற்ற முடைய; நடத்தைக்கேடற்ற; மதிப்புக் கேட்டுக்கு இடம் ஏற்படாத; மதிப்புக்குறைவற்ற; நல்லிடத்துக்குரிய தகுதி குறையாத; வருந்தி மதிப்புப் பேணுகிற; அஞ்சியஞ்சி மதிப்புவிடாமல் நடந்துகொள்ளுகிற; போதிய சிறப்புடைய; போதிய முக்கியத்துவம் வாய்ந்த; மட்டான நலம் வாய்ந்த; போதிய அளவான, கணிசமான; குறைவென்று கூறமுடி யாத; மட்டான தரமுடைய; மட்டான அளவுடைய; இடைத்தரப்பட்ட.

**respec'tables**, *n. pl.* மதிக்கத்தக்கவர்.

**respec'tably**, *adv.* மதிக்கத்தக்க அளவில்; மதிப்புடன்.

**respect'ful**, *a.* மதிப்பளிக்கின்ற.

**respec'tive**, *a.* உரிமைப்படியான, நிலைமைக்கேற்ற, தரத்துக் குகந்த; தனித்தனி உரிய.

**respec'tively**, *adv.* நிரனிறையாக, முறையே.

**respects'**, *n. pl.* வணக்கச் செய்தி.

**respell'**, *v.* மீட்டும் எழுத்துக்கூட்டு; ஒலியியல் முறைப்படி மாற்றி எழுது, ஒலிக்குறியீடுகளாக எழுது.

**res'pirable**, *a.* உயிர்க்கவல்ல, மூச்சாகப் பயன்படுத்தத்தக்க; மூச்சு விடத்தக்க.

**respira'tion**, *n.* உயிர்த்தல், மூச்சுவிடல்; உயிர்ப்புவினை; உயிர்ப்புமுறை; ஒருதடவை மூச்சு வாங்கிவிடுதல்; தாவரங் களின் உயிர்ப்பு.

**res'pirator**, *n.* உட்கொள்ளும் காற்றின் மாசகற்றி வெது வெதுப்பாக மூக்கும் வாயும் கவிந்து அணியப்பெறும் மெல்லிய வலைமூடிக்கருவி; (படை.) நச்சுவளிக் குண்டின் நச்சாவி தடுக்க அணியப்படும் வாய்மூக்கு வலைமூடி.

**respire'**, *v.* உயிர்த்தல் செய், மூச்சு வாங்கிவிடு; மூச்சுவாங்கு, மூச்சுவிடு; காற்றுவகையில் வாங்கி உயிர்த்தல் செய்; மீண்டும் உயிர்ப்பு வரப்பெறு; மூச்சுவிடத் தொடங்கு; மீண்டும் ஆர்வங்கொள்; மீண்டும் ஊக்கம்பெறு; ஓய்வு கொள்.

**res'pite**, *n.* இடை ஓய்வு; இடை அமைதி; கடமையிடையே சிறிதுநேரத் தளர்வு; தண்ட வகையில் அளிக்கப்படுந் தாமதம்; *v.* இடை ஓய்வளி; தண்டனை நிறைவேற்ற வகையில் காலந்தாழ்த்த இசைவளி; கடமை நிறைவேற்றத் தில் காலத்தளர்வு செய்; நோவு-கவலை ஆகியவற்றின் வகை யில் தற்காலிக நிவாரணமளி; (படை.) ஊதியத்தை இடை நிறுத்திவை.

**resplen'dent**, *a.* பிறங்கொளியுடைய.

**respond'**, *n.* கிறித்தவ திருக்கோயில் இறுதித் துதிப் பாடல்; மதகுருவின் பாடல் வரிக்கு எதிர்வரி; *v.* மறுமொழி கூறு; வாய்மொழியால் பதில் இறு; எழுத்துவழி விடை யளி; பதில் குறிப்புத்தெரிவி; உயிர்வகையில் உள்ளுணர்ச் சியை வெளிக்காட்டு; கிறித்தவ வழிபாட்டில் மதகுருவின் பாடலுக்கு எதிர்வரி அளி; செயல் வகையில் எதிர்ச்செயல் அளி.

**respon'dent**, *n.* விடையளிப்பவர்; வாதத்தில் கோட்பாட்டின் ஆதரவாகப் பேசுபவர்; எதிர்வாதி; பிரதிவாதி; *a.* மறு மொழி தருகின்ற; பதிலான; பிரதிவாதி நிலையான.

**response'**, *n.* மறுமொழி; திடீர்விடை; பதில்வாசகம்; எதிர்ச்செயல்; பதில்குறிப்பு; உயிர்வகையில் எதிருணர்ச்சிக் குறிப்பு; கிறித்தவ திருக்கோயிலில் இறுதித் துதிப்பாடல்; மதகுருவின் பாடல் வரிக்கு எதிர்வரி.

responsibil'ity, *n.* பொறுப்பு; பொறுப்புக்குரிய செய்தி.
respon'sible, *a.* பொறுப்புடைய; பொறுப்பறிந்த; பதில் சொல்லக் கடமைப்பட்ட; நம்பிக்கைக்குரிய; கண்ணியமான; பொறுப்புவாய்ந்த, பொறுப்பிற்குரிய; பொறுப்பு வகிக்கிற, ஆட்சிவகையில் மக்கட் பிரதிநிதித்துவம் வாய்ந்த.
respon'sions, *n. pl.* ஆக்ஸ்போர்டு இளங்கலைஞர் பட்டத்திற்குரிய மூன்று தேர்வுகளுள் முதல் தேர்வு.
respon'sive, *a.* மறுமொழி கூறுகின்ற; விடையாகக் கூறப்படுகிற; திருக்கோயிலில் மதகுருவின் பாடல் வரிக்கு எதிர் வரி கூறுகின்ற; செயலை நுட்பமாக உணர்ந்து பதில் செயல் செய்கிற; செல்வாக்கு வகையில் உட்பட்டு வளைந்து கொடுக்கிற; நுண்ணுணர்வுடன் எதிர்க்குறிப்பு அளிக்கிற; உணர்ச்சி ஏற்கும் பாங்குடைய; ஒத்துணர்வுமிக்க.
respon'sory, *n.* கிறித்தவ கோயிலில் இறுதித் துதிப்பாடல், உறழ்ச்சிப் பாடல்.
ressaldar', *n.* புரவிப்படைத் தலைவர்.
rest[1], *n.* ஓய்வு; இளைப்பாறுகை; செயலின்மை; அமைதி, மன உலைவின்மை; துயிலமைதி; படுத்திளைப்பாறுகை; இறுதியமைதி, மாள்வமைதி; தங்கிடம்; ஓய்விடம்; உதைகால்; ஆதாரம்; துப்பாக்கியின் குறியமைதிநிலை ஆதாரம்; (இசை.) இடைநிறுத்தம்; (இசை.) இடைநிறுத்தக் குறி; (இலக்.) அடியிடை நிறுத்தம்; வாசக இடைநிறுத்தம்; *v.* ஓய்வுகொள்; விடுபட்டிரு; ஓய்வுற்றிரு; இளைப்பாறு; துயிலமைதிகொள்; சாவில் அமைதிபெறு; தனிமை அமைதி கொள்; ஓய்வளி; இளைப்பாறுவி, சோர்வகற்றுவி; அமைந்திரு; அசையாதிரு; அமைந்த நிலையில் தொங்கலாயிரு; அசையாமல் பிடித்துக்கொள்; அமைதிப்படுத்து; ஆதாரமாகத் தாங்கப்பெற்று அமைந்திரு; ஆதாரமாகக்கொண்டிரு; சார்ந்திரு; பொறுத்திரு; சார்த்தி வைத்திரு; ஆதாரமாகக் கொண்டமைந்திரு; ஆதாரமாக்கு; நம்பியிரு; இடையே தங்கி ஓய்வுகொள்; தங்கியிரு; மேற்கிட; மீது படர்ந்துகிட; அசையாதிரு; தொடராது நின்றுவிடு; (தொ.) at rest, அமைதியான; கலக்கமற்ற; துன்பப்படாத; இறுதி ஓய்வு பெற்ற; ஆன்ம அமைதி பெற்ற; day of rest, ஓய்வு நாள், ஞாயிற்றுக்கிழமை; God rest his soul, ஆண்டவன் அவனுடைய ஆன்மாவுக்கு அமைதி கொடுப்பாராக; land was allowed to rest, நிலம் தரிசாக விடப்பட்டுள்ளது; lay to rest, புதை; rest on one's oars, rest upon one's oars, படகு செலுத்துவதை அப்பொழுதைக்கு நிறுத்தி ஓய்வுகொள்; கடும் வேலைக்குப் பின் இடையோய்வு கொள்.
rest[2], *n.* மீதி; மீந்தவை, மற்றவை; ஏனையோர்; கூறப்பட்டவை நீங்கலாக எஞ்சியவை; கூறப்பட்டவர் தவிர மற்றையோர்; பொருளகத்துறையில் சேமநிதி; வாணிகத்துறையில் இருப்புப் பொறுப்புக்கணிப்பு; வரிப்பந்தாட்டத்தில் விரைகெலிப்பெண் முடிவாட்டம்; சீட்டாட்டவகையில் ஆட்ட முடிவுகட்டும் பந்தய வைப்புச்சீட்டு; *v.* எஞ்சியிரு, மீந்திரு; (தொ.) for the rest, மற்றவற்றின் வகையில்; rest with, பொறுப்பில் விடப்படு.
rest[3], *n.* (வர.) கவச மார்புக்காப்பு, எறியும்பொழுது ஈட்டியின் அடிப்பகுதி பின் தாக்காதிருப்பதற்காக மார்பு கவசத்தில் பொருத்தப்பட்டிருக்கும் அமைவு.
restate', *v.* மீண்டும் எடுத்துரை; முன்னிலும் திட்பமாக எடுத்துக்கூறு.
restate'ment, *n.* மறுவிளக்க அறிக்கை; மறு வாக்குமூலம்.
res'taurant, *n.* உண்டிச்சாலை.
*restaurateur*, (பிர.) *n.* உண்டிச்சாலை முனைவர்.
rest'-balk, *n.* உழவுசால்களுக்கிடையே உழாது விடப்பட்ட கடுநிலத்துண்டு.
rest'-cure, *n.* மருத்துவ ஓய்வுமுறைச் சிகிச்சை.
rest'-day, *n.* ஓய்வு நாள்; ஞாயிற்றுக்கிழமை.
rest'ful, *a.* ஓய்வுக்குகந்த; அமைதி குலைக்கும் இடையூறுகளற்ற; சோர்வாற்றி அமைதியளிக்கிற.
rest'-house, *n.* வழிப்போக்கர் தங்கல்மனை, புகைவண்டி நிலையத்தருகிலுள்ள பிரயாணிகள் தங்கல்மனை.
res'tiff, *a.*=restive.
rest'ing-place, *n.* ஓய்வகம், இளைப்பாறுவதற்கென அமைக்கப்பட்ட இடம்; (தொ.) last resting place, கல்லறை.
res'titute, *v.* மீண்டும் ஒப்படை.
restitu'tion, *n.* மீட்டளிப்பு, உரியவரிடமே திரும்பவும் கொண்டு சேர்த்தல்; இழைத்த தீங்கிற்குரிய எதிர்மாற்றீடு; தொன்னிலைமீட்பு; நெகிழ்வின்பின் முன்னுரு மீட்சி.
res'tive, *a.* கட்டுப்பாட்டுக்குள் அமையாத, கட்டுப்பாட்டை மீறுகிற; குதிரை வகையில் அடங்காது முரண்டு செய்கிற, முன்னேறுமல் நின்றே பின்னேறிச்சென்றே அடம்செய்கிற; மீறத்துடிக்கிற.
rest'less, *a.* அமைதியற்ற; ஓய்வு தராத; மனவுலைவுடைய; ஆடிக்கொண்டிருக்கிற, அசைந்துகொண்டே இருக்கிற; படபடத்துக் கொண்டுள்ள, துடிதுடிக்கிற.
restora'tion, *n.* மீட்டளிப்பு; முற்பதவி அமர்த்தீடு; முன்னிலை மீட்பு; முன்வடிவ மீட்பு; முன்வடிவ மீட்டாக்கம்; மூலநிலைப் புனைவாக்கப்படிவம்; அழிந்த கட்டிடம்-மரபழிவுற்ற உயிர்-தாவரவகை ஆகியவற்றின் வகையில் மூலவடிவ மறுபுனைவாக்கம்; (தொ.) the Restoration, (வர.) பிரிட்டனில் 1660-இல் ஏற்பட்ட ஸ்டியூவர்ட் அரசமரபின் (Stuart dynasty) மறு வருகையாட்சி.
restora'tionism, *n.* பாவி வகையில் இறையருள் சேர்ப்பு; இறுதிநிலை மன்னின அருட்பேறு; இறுதிநிலை மன்னின அருட்பேற்றுக் கோட்பாடு, இறுதியில் எல்லா மனிதருக்கும் இறையருட்பேறு மீட்டும் வழங்கப்படும் என்ற கோட்பாடு.
resto'rative, *n.* நலமீட்பு மருந்து; நலிவு போக்கும் நல் உணவு; *a.* உடல் நலம் மீட்டளிக்கிற, நோய்நலிவகற்றி ஆக்கநலந் தருகிற; உடல்வலிமை தருகிற.
restore', *v.* திருப்பிக்கொடு; உடைமையாளரிடமே மீண்டும் ஒப்படை; உரிமை மீட்டளி; மதிப்பை மீட்டும் வழங்கு; மீண்டும் பதவியில் அமர்த்து; பண்டையநிலைக்குத் திரும்பக் கொண்டுவா; உடல்நலம் மீட்டும் பெறுவி; இயல் வலிமையினை மீட்டும் பெறச்செய்; நோய் தீரப்பெறுவி; திரும்பவும் நிறுவு; மீண்டும் கையாட்சிக்குக் கொண்டுவா; பழைய இடத்திற்குத் திருப்பிக் கொண்டுசேர்; பழைய இடத்தில் மீட்டும் வை; புதுப்பி; கட்டிடம்-ஓவியம்-சுவடி மூலபாடம் முதலியவற்றின் வகையில் கூட்டித் திருத்தி மாற்றியமைத்தோ மேற்பூச்சுப்பூசியோ மூலநிலைக்குக் கொண்டுவர முயலு; வாசகத்தில் விடுபட்ட சொல்லை மீண்டும் ஊகித்து நிரப்பு; மரபற்றுப்போன விலங்கு வகையில் விடுபட்ட உறுப்பைப்புனைந்து மீட்டிணை; அழிபாடு-மரபற்றுப்போன விலங்கு ஆகியவற்றின் வகையில் மூலவடிவமாகக் கருதப்படும் நிலைமையைப் புனைந்துருவாக்கு.
restrain'[1], *v.* அடக்கிவை; கீழ்ப்படுத்து; கட்டுப்படுத்திவை; கட்டுப்பாட்டின்கீழ்க் கொணர்; தடுத்துநிறுத்து; எல்லைக்குட்படுத்து; செயல்தடைசெய்; வலிந்து அடக்கு; சிறைப்படுத்து.
re-strain'[2], *v.* மீண்டும் ஊக்கஞ் செலுத்தி உழை; திரும்பவும் துன்பத்திற்குள்ளாக்கு; மறுபடியும் வடிகட்டு; மீண்டும் பழுதாக்கு.
restrained', *a.* கட்டுப்பட்ட; தளைப்பட்ட; தன்னடக்கத்துடன்கூடிய; தன்னடக்கங் காட்டுகிற; கட்டுப்பட்ட உணர்ச்சியுடைய.
restrain'edly, *adv.* தற்கட்டுப்பாட்டுடன்.
restraint', *n.* கட்டுப்பாடு; கட்டுப்பட்ட நிலை; கட்டுப்படுத்தும் ஆற்றல்; கட்டுப்படுத்தும் ஆற்றற்கூறு; தடுத்து நிறுத்தும் ஆற்றல்; தடை; மருத்துவப்பேணகத்தின் தடைக்கட்டு; தடுப்புக்காப்பு; தடைவரம்பு, கட்டுப்பாட்டெல்லை; வன்தடைமுறை; உரிமைத்தடை; உரிமைக்கட்டுப்பாடு; தன்னடக்கம்; மொழிநடை-பேச்சு-கலைத்துறை ஆகியவற்றின் வகையில் தற்கட்டுப்பாடு காரணமான திட்பச்செறிவு; (தொ.) restraint of princes, துறைமுகத்தில் கப்பல்கள் உள்வருவதற்கும் வெளிச்செல்வதற்கும் உரிய தடையாணை; without restraint, தட்டுத்தடங்கலின்றி, தாராளமாக.

**restrict'**, *v.* வரையறைப்படுத்து ; எல்லைக்குட்படுத்து ; அடைத்துவை.

**restric'tion**, *n.* வரையறை ; தடைக்கட்டு ; எல்லைக் கட்டுப் பாடு ; தடைவரம்பு.

**result'**, *n.* பின்விளைவு ; விளைபயன் ; பயன்முடிவு ; (கண.) தீர்வுமுடிவு ; *v.* விளைவுறு, உண்டாகு ; பயனில்வந்து முடிவுறு ; பலனாக அமை ; தீர்வுவிடையாக அமை ; (தொ.) without results, பயனின்றி, வீணாக.

**resul'tant**, *n.* (இய.) கூட்டு விளைவாக்கம், ஒரு புள்ளி மீதியங்கும் பல்திசைப் பல்லாற்றல்களின் மொத்த விளைவான ஒருதிசைப்பட்ட ஓராற்றல் விளைவு ; இணைவாக்க விளைவு ; *a.* பயனான, விளைவான ; இணைவாக்க விளைவான ; (இய.) கூட்டு விளைவாக்கமான.

***resume*** [1], (பிர.) *n.* பொழிப்பு, தொகுப்பு, சுருக்கம், சாரம்.

**resume'** [2], *v.* திரும்ப எடுத்துக்கொள் ; மறுபடியும் கைக் கொள் ; திரும்பவுந் தொடங்கு; மீண்டுந் தொடர்; திரும்பக் கூறு ; இடையீட்டின்பின் மீட்டுந் தொடர்ந்துகூறு ; பொழிப்பாகத் தொகுத்துரை ; திரும்பவும் எடுத்துரை.

**resumm'ons**, *n. pl.* சட்ட முறைப்பட்ட மறு அழைப்பாணை.

**resump'tion**, *n.* மறு தொடக்கம், புதுத்தொடக்கம்; விட்ட இடத்திலிருந்து மீண்டுந் தொடங்குதல்; புதுப் பொறுப்பேற்பு.

**resup'inate**, *a.* (தாவ.) இலைகள் வகையில் தலைகீழான, அடிப்பகுதி மேலேயுள்ள.

**resurge'**, *v.* மீண்டெழு ; மீட்டெழுவி ; உயிர்த்தெழு.

**resur'gence**, *n.* மீட்டெழுச்சி ; புத்தெழுச்சி ; புத்துயிர்ப்பு ; புத்தாக்கம்.

**resur'gent**, *a.* மீண்டெழுகிற ; புத்தெழுச்சி வாய்ந்த ; புத்தாக்கமுடைய ; புத்துயிர் பெற்றெழுகின்ற.

**resurrect'**, *v.* கல்லறையிலிருந்து எடு ; புதைகுழியிலிருந்து தோண்டி எடு ; மீண்டும் பழக்க வழக்கம் புதுப்பி ; மீண்டும் நினைவாற்றலைப் புதுப்பி.

**Resurrec'tion** [1], *n.* இயேசுநாதர் திருமீட்டெழுச்சித் திரு நாள் ; இயேசுநாதர் திருமீட்டெழுச்சி.

**resurrec'tion** [2], *n.* இறுதித்தீர்ப்பு நாளில் மாண்ட உயிர் களின் மீட்டெழுச்சி ; கல்லறைப் பிணத்திருட்டு; வழக்கழிந்த வற்றின் வகையில் வழக்காற்றுப் புத்துயிர்ப்பிப்பு ; அழிவி லிருந்து நன்னிலை மீட்பிப்பு ; செயலின்மையிலிருந்து புதுச் செயலூக்குவிப்பு ; மறந்ததன் வகையில் மறுநினைவூட்டு ; (தொ.) resurrection man, கல்லறைப் பிணந்திருடி ; resurrection pie, பழம்புதுப் பொதியப்பம், பழைய பண்டங் களின் எச்சமிச்சங்களைக்கொண்டு செய்த அப்பம்.

**resus'citate**, *v.* உயிர்ப்பி ; புத்துயிர்கொடு ; மீண்டும் நடை முறைக்குக் கொணர் ; மறுபடியும் பழக்கத்திற்குக் கொண்டு வா ; மீண்டும் ஊக்குவித்தியக்கு.

**ret**, *v.* சணல் வகையில் ஈரப்பதப்படுத்து ; வைக்கோல் வகை யில் நீரில் நனைந்து கெட்டுப்போ, அழுகிப்போ.

**reta'ble**, *n.* பலிபீடத்துக்குப் பின்புறமுள்ள நிலையடுக்கு.

**ret'ail**, *n.* சில்லறை விற்பனை, சில்லறை வாணிகம் ; *a.* விற் பனை வகையில் சில்லறையான ; வாணிக வகையில் சில்லறை யான; சில்லறை விற்பனை செய்கிற; சில்லறை வாணிகத்தில் ஈடுபட்ட; சில்லறை வாணிகத்தொடர்புடைய ; *v.* சில்லறை யாக விற்பனைசெய் ; தனித்தனியாக விவரங்கூறு ; செய்தி வகையில் பரப்பு ; செய்தி பரவவிடு, பலரிடங்கூறு ; *adv.* சில்லறையாக.

**retain'**, *v.* விடாது வைத்திரு ; உறுதியாகக் கைக்கொள் ; தொடர்ந்து கைக்கொண்டிரு ; வசமாக வைத்துக்கொள் ; கொடுத்து வழக்கறிஞரின் தொழிலுதவி நீடிக்கும்படி செய் ; அழிக்காது விட்டுவைத்திரு; நீக்காமல் கொண்டிரு; மறவாது கவனத்தில் வைத்திரு ; (தொ.) retaining fee, வேலைத் தொடர்புத் தொகை ; retaining force, (படை.) எதிர்ப் படைப்பகுதியைச் செயலற்றிருக்கச் செய்வதற்காக நிறுத்தப் படும் படை ; retaining wall, அணைசுவர், கரை உடைந்து படாமற் காக்குஞ் சுவர்.

**retain'er**, *n.* விடாது வைத்திருப்பவர் ; உறுதியாகக் கொண்டிருப்பது ; உழையர், பெருமகனின் உடன்துணைவர்; (சட்.) முறைப்படியான வைத்திருப்பு உரிமைப்பேறு ; வைத் திருப்பு உரிமைப்பேற்றுப் பத்திரம்; பணிநிலைத் தங்கவைப்பு; வழக்குரைஞர் தொடர்புரிமைக் கட்டணம்.

**ret'ake** [1], *n.* மீட்டும் படம்பிடித்தெடுத்தல், காட்சியின் மறு படப்பிடிப்பு ; காட்சியின் மறுபிடிப்புப்படம்.

**retake'** [2], *v.* திரைப்படத்திற்காகக் காட்சியை மறுபடம்பிடி.

**retal'iate**, *v.* பழிக்குப்பழி வாங்கு, செய்ததற்கெதிர் செய், பிறநாட்டு இறக்குமதி வரிக்கீடாக இறக்குமதிவரி விதி.

**retard'**, *v.* தடுத்து வேகங்குறை; தாமதப்படுத்து; (வான்.) கோளியக்கந் தடுத்து மந்தமாக்கு ; (இய.) அலை இயக்கத் திற்குத் தடங்கலாயிரு ; கணக்கிட்டுக் குறித்த காலத்திற்குப் பின் நிகழ் ; தாமதித்து வந்துசேர்.

**retarda'tion**, *n.* சுணக்கம், தாமதம் ; வேகக்குறைப்பு ; இயல்பான அல்லது கணக்கிட்ட நேரத்திற்குப்பின் நிகழ்வு ; காலந்தாழ்த்து வந்துசேருதல் ; (தொ.) retardation of tide, retardation of high water, நிறைமதிக்கும் வேலை நீரேற்றத் திற்கும் உள்ள இடைவெளி.

**retch**, *n.* குமட்டுதல் ; *v.* குமட்டலெடு.

**reten'tion**, *n.* விடாது வைத்திருத்தல் ; தேக்கிவைப்பு ; (மரு.) சிறுநீர்த்தேக்கம்; கழிவுப்பொருள் தேக்கம்.

**reten'tive**, *a.* தேக்கிவைப்பாற்றலுடைய ; ஈரவகையில் விடாது வைத்துக்கொள்கிற ; நினைவாற்றல் மிக்க, மறதி யற்ற ; (மரு.) அறுவையில் விலகாது பற்றிக்கொள்கிற.

***retenue***, (பிர.) *n.* தன்னடக்கம் ; அறிமடம்.

**re'tiary**, *n.* வலைச்சிலந்தி, வடிவியல்பாணியில் வலைபின்னும் சிலந்திவகை.

**ret'icence**, *n.* நாவடக்கம் ; அறிமடம் ; கலைமுனைப்பின்மை ; செய்திவிடாமை ; மோனப்போக்கு.

**ret'icent**, *a.* செய்தி வெளியிடாத ; பேசுதல் தவிர்க்கிற ; அறிமடமான.

**ret'icle**, *n.* தொலைநோக்காடிக் காட்சிவில்லை அளவைக்கு உதவும் நுண்வலைப் பின்னல்வரி.

**retic'ulate**, *v.* வலைப்பின்னலாக்கு ; வலைப்பின்னல் தோற்ற மளி ; குறுக்கு மறுக்காகக் கோடிடு ; கட்டங்கட்டமாக்கு.

**retic'ulated**, *a.* வலைப்பின்னல் அமைப்புடைய ; (க-க.) வயிரம்போன்ற சாய்சதுரவடிவில் அமைக்கப்பட்ட.

**ret'icule**, *n.* தொலைநோக்காடியிலுள்ள காட்சி வில்லையின் நுண்வலைப் பின்னல்வரி ; மகளிர் வலைக் கைப்பை ; தெற்கு வான விண்மீன் மண்டலவகை.

**retic'ulum**, *n.* அசைபோடும் விலங்குகளின் இரண்டாவது இரைப்பை ; வலைப்பின்னலமைப்பு ; வலைபோன்ற சவ்வு ; *pl.* retic'ula.

**ret'iform**, *a.* வலைபோன்ற ; சாய்சதுர வடிவான ; சாய்சதுர மாகப் பொருத்தப்பட்ட.

**ret'ina**, *n.* கண்விழியின் பின்புறத்திரை ; *pl.* ret'inas, ret'inae.

**ret'inue**, *n.* பரிவாரம், ஆயம்.

**retire'**, *n.* பின்வாங்கற் சமிக்கை ; *v.* பின்வாங்கு ; ஒதுங் கிச் சென்றுவிடு ; பின்னடை, தனிமையிடஞ் செல் ; படுக் கைக்குப் போ ; வேலையினின்று ஓய்வுபெறு ; தொழிலை விட்டுவிடு ; தேர்வு நாடுவதை விட்டுவிடு ; மரப்பந்தாட்ட வகையில் ஒரு சாராருடைய ஆட்டமுறையை வேண்டுமென்றே முடித்துக்கொள் ; அதிகாரி அல்லது தொழிலாளி வகையில் வேலையினின்று விலகும்படி வற்புறுத்து ; (படை.) பின் வாங்கும்படி ஆணையிடு ; நிதித்துறையில் செலாவணியி லுள்ள தாள் நாணயத்தை நிறுத்து ; (தொ.) retire from the world, துறவியாகு ; retire into oneself, கலந்து பழகா திரு ; பேச்சில் விருப்பமற்றிரு, பேசாதிரு

**retired'**, *a.* பின்வாங்கிய ; தன்னொதுக்கமான, கலந்து பழகாத ; ஒதுங்கிய ; தனிமை விரும்புகிற ; ஊழியத்தி

லிருந்து ஓய்வுபெற்ற; தொழிலை விட்டுவிட்ட; (தொ.) retired list, ஓய்வுபெற்ற அதிகாரிகளின் பட்டியல்; retired pay, ஓய்வுகால ஊதியம்; retired valley, தனிமை வாய்ந்த பள்ளத்தாக்கு, தனியொதுக்கமான இடைமலைப்பள்ளம்.

retire'ment, n. பின்வாங்குதல்; பின்னடைவு; பணி ஓய்வு, வேலையைவிட்டு விலகுதல்; ஒதுங்குதல்; ஒதுக்கம்; படுக்கப் போதல்; படுக்கை ஓய்வு; தனிமைநிலை, பிறர் பார்வையிற் படாநிலை; ஒதுக்கிடம்.

retir'ing, a. ஓய்விற் செல்கிற; ஓய்வுக்குரிய; ஓய்வுவேளை சார்ந்த; ஒதுங்கி வாழ்கிற; (தொ.) retiring pension, விருப்போய்வுச் சம்பளம், வேலையினின்று இடைவயதிலேயே ஓய்வு பெறுபவர்களுக்கு இசைந்தளிக்கப்படும் ஓய்வு ஊதியம்.

retir'ing-room, n. தங்கல் அறை; ஒதுக்கறை.

retort'[1], n. வாலை, காய்ச்சி வடித்தலிற் பயன்படுத்தப்படும் கீழ்நோக்கி வளைந்த கழுத்துடைய கண்ணாடி வடிகலம்; பாதரசத் துப்புரவுத்தொழில்-வளியாக்கத்தொழில்-எஃகுத் தொழில் ஆகியவற்றிற் பயன்படும் கொள்கலம்; v. வாலையிலிட்டுப் பாதரசத்தைத் தூய்மையாக்கு.

retort'[2], n. எதிருரை; பழியெதிர்ச்செயல்; v. எதிர்த்துச் சுடச்சுடப் பதிலிறு; எதிர்த்தாக்குரை கூறு; எதிர்த்துக் குற்றஞ்சாட்டு; வாதத்துக்கு எதிர்வாதங்கூறு; வாதித்தவருக்கு எதிராக வாதத்தைத் திருப்பு.

retor'ted, a. பின்னுக வளைக்கப்பட்ட, திரும்பி வளைந்த.

retor'tion, n. மடக்கி வளைப்பு; பின்னோக்கிமடிவு; வன்முறை எதிர்ச்செயல்; அனைத்துநாட்டுச் சட்டத்துறையில் பிறநாட்டுக் குடிகள்மீது பழிக்குப்பழிவாங்குஞ் செயல்.

retouch', v. திரும்பத்தொடு; திரும்பக் கைவைத்துச் செப்பனிடு.

retrace', v. மூலநோக்கிப் பின்சென்று ஆராய்; மீண்டும் அடியிலிருந்து தொடங்கு; திரும்பிப் பார்வையைச் செலுத்து; சென்றதை மீண்டும் மனத்திரையில் நினைத்துப்பார்; வந்த வழியே திரும்பிச்செல்; செய்த செயலை அழி.

retract', v. பின்னிடு; பின் இழு; பின்வாங்கு; உள்வாங்கு, சுருங்கு; பின்வாங்கிக்கொள்; உள்நோக்கிச் சுருக்கிக்கொள்; பின்னுக்கு இழுக்கத்தக்கதாயிரு; சுருக்கத்தக்கதாயிரு; உறுதி கைதுற; சொன்னசொல் மாற்று; சூளுரை திரும்பப் பெறு; கொள்கை மறு; கருத்துக் கைவிடு; கூறியது பொய் யென ஒத்துக்கொள்; தவறென ஏற்றுக்கொள்; தள்ளுபடி செய்; நாக்கு உள்ளிழுத்து உச்சரி; சதுரங்கத்தில் முந்திய காயின் இயக்கத்தை மறித்தியக்கு.

retracta'tion, n. தள்ளுபடி செய்தல்; உத்தரவை மாற்றுதல்; சொன்னதிலிருந்து பிறழ்வு; சூளுரை மாற்றுதல்; பின்னடைவு.

retrac'ted, a. உள்ளுக்கிழுக்கப்பட்ட; பின்னுக்குத் திரும்பிய; மாற்றப்பட்ட; தள்ளுபடி செய்யப்பட்ட; நாக்கை உள்ளேயிழுத்து உச்சரிக்கப்பட்ட.

retrac'tile, a. பின்னுக்கு இழுக்கப்படத்தக்க.

retrac'tive, a. பின்னுக்கிழுக்கக்கூடிய, பின்வாங்கும் இயல்புடைய; சதுரங்கத்தில் ஆடிய காய்வகையில் மறித்தாடக் கூடிய.

retrac'tor, n. இயந்திர உறுப்புக்களின் பின்னிழுப்பமைவு; பின்னீர்ப்புத் தசை; சதுரங்க ஆட்டத்தில் மறித்தாட்டம் அவசியமாக்கும் நிலை.

ret'ral, a. (இய., தாவ.) பின்புறஞ் சார்ந்த, பின்பக்கத்திய.

retrans'fer[1], n. இடமாற்ற மறிதலை, மீட்டிடமாற்றம்.

retransfer'[2], v. மறுபடியும் மாற்று, முன்னிடத்திற்கு அனுப்பு.

retransform', v. முன் உருவத்திற்கே மாற்று, மீட்டுரு மாற்று.

retranslate', v. மறுமொழிபெயர்ப்புச் செய்.

retransla'tion, n. மறுமொழிபெயர்ப்பு; மறிநிலை மொழிபெயர்ப்பு.

retransmiss'ion, n. மீட்டெதிருப்பு, திருப்பியனுப்பீடு.

retransmit', v. திருப்பியனுப்பு; மீட்டெதிர் கடக்கச்செய்; முன்னிலும் ஒருபடி கடந்து முன்னேறுவி.

re-trav'erse, v. மீட்டுங் குறுக்கே திரும்பிக்கடந்து செல்.

re-tread', v. மீட்டும் மிதி; மீண்டும் மிதித்துச்செல்; குழாய்ப் பட்டைக்கு மறு அடிப்பகுதி அமை.

retreat', n. பின்னடைவு; (படை.) பின்வாங்கல் நடவடிக்கை; பின்வாங்கிச் செல்கை; பின்னடைவுச் சமிக்கை; ஓய்வு; ஓய்வுநேரம்; ஓய்விடம்; (படை.) ஓய்வுச்சமிக்கை; (படை.) அந்திவேளை எக்காள இசைப்பு; தனியிடம்; ஒதுங்குநிலை, தனியிடஞ் சேர்வு; பாதுகாப்பிடம்; தற்காலிகச் சமய நோன்புக்கூடம்; பித்தர் பேணகம்; இயலார் பாதுகாப்பு மனை; உதவிநிதி பெறுவோர் புகலிடம்; v. பின்னடை; பின்னுக்குச்செல்; பின்வாங்கு; (படை.) பின்வாங்கல் நடவடிக்கை மேற்கொள்; (படை.) பின்னிடைந்தோடு, புறமுதுகிட்டுச்செல்; படைவகையில் இடம்விட்டுச்செல்; இடம் விட்டுக்கொடு; சூதாட்டத்தில் காயைப் பின்னுக்கு நகர்த்து; பின்செல்; பின்னோக்கிச் சென்று மறைவுறு; (தொ.) beat a retreat, retreat, மேற்கொள்வதைக் கைவிடு, முயற்சி தவிர்; intercept retreat of, தப்பி ஓடும் வழியைத் தடை செய்; make good one's retreat, பாதுகாப்பாகத் தப்பிவிடு, பத்திரமாக வெளியேறு; sound the retreat, பின்வாங்கொலி இயக்கு.

retrench', v. செலவினம் வெட்டிக்குறை; வெட்டிக்கழித்துத் தொகை மட்டுப்படுத்து; செலவினங் குறைத்துச் சிக்கனப் படுத்து; சிக்கனவழிகளைக் கையாளு; ஏடு முதலியவற்றின் வகையில் வெட்டிக்குறுக்கு; பகுதியினை வெட்டியெடு; (படை.) அணையரண் உள்ளகழ்மூலம் காப்பு வலிமையூட்டு.

retrench'ment, n. வெட்டிக்குறைப்பு; வெட்டுச்சிக்கனம்; நீடித்த பாதுகாப்புக்கான உள்ளரண் அமைப்பு.

retri'al, n. மறு விசாரணை, வழக்குமன்றத்தின் மறு கேள்வி முறை.

retribu'tion, n. முறைமைக் கைம்மாறு; பழியெதிர்ச்செயல்; வஞ்சத்தீர்வு.

retrieve', n. மீட்பு வாய்ப்பு, சீர்ப்பாட்டுக்குரிய வாய்ப்புநிலை; v. மீட்பி, தப்புவி, பிழைப்பி; காத்தளி; மறுபடியும் உயிர்ப்பூட்டு; மீட்டுக்கொடு; மீண்டும் நன்னிலைக்குக் கொணர், மீண்டுஞ் செழிப்புநிலைக்குக் கொண்டுவா; இழப்பீடுசெய்; பிழை காத்தமை; மறுபடியுஞ் செப்பஞ் செய்; மீண்டும் நினைவிற்குக் கொண்டுவா; முயன்று நினைவுபடுத்தி வெற்றிகாண்; மறைந்ததை மீண்டும் வெளிப்படுத்து; வேட்டைநாய் வகையில் காயம்பட்டு வீழ்ந்ததைத் தேடி எடுத்துக்கொண்டுவா, கண்டெடுத்துக் கொணர்.

retriev'er, n. மீட்பு ஞமலி, வேட்டையாடிக் கொன்ற விலங்குகளைத் தேடிக் கொண்டுவந்து சேர்க்கும்படி பழக்குவிக்கப்பட்ட நாய்.

retri'm, v. மீண்டும் ஒழுங்குசெய், திருத்தி மறுபடியும் புதுக்கு.

retroact', v. எதிர்ச்செயலாற்று; பின்னோக்கிச் செயற்படு; பின்னோக்கிய விளைவுடையதாயிரு, முன்மூல விளைவுடையதாயிரு.

retroac'tive, a. சென்றகாலச் செய்திகள் வகையில் பயன்படுத்தப்படுகிற; சென்றகால நிகழ்ச்சிகளைப் பாதிக்கிற; பின்னோக்கிச் செயற்படுகிற.

ret'rocede[1], v. பின்னோக்கி இயங்கு; பின்னடைந்து செல்; கீல்வாதம வகையில் உள்நோக்கித் தாக்கு.

retrocede'[2], v. ஆட்சிப்பரப்பினைத் திருப்பிக் கொடுத்துவிடு.

retroce'ssion, n. பின்னியக்கம்; பின் புடைபெயர்வு; ஆட்சிப்பரப்பின் மீட்டளிப்பு.

retrocess'ive, a. ஆட்சிப்பரப்பினைத் திருப்பிக் கொடுத்து விடுகிற; பின்னிடுகிற.

**ret'rochoir,** *n.* பெரிய திருக்கோயில்களில் உயர் பலிபீடத்துக்குப் பின்னுள்ள பகுதி.

**retroflec'ted, ret'roflex, ret'roflexed,** *a.* (உள்., தாவ.) பின்புறமாக வளைந்த.

**retroflex'ion,** *n.* பின்வளைவு.

**retrograda'tion,** *n.* (வான்.) விண்கோளப் பின்னிடைவுத் தோற்றம்; விண்கோளம் கிழக்கு மேற்காகச் செல்லும் இயக்கம்.

**ret'rograde,** *n.* பிற்போக்கு மனப்பான்மை; சீர்கெட்டுப் போனவர்; *a.* பின்னோக்கிச் செலுத்தப்பட்ட, பின்வாங்குகிற; திரும்ப இழிநிலைக்குச் செல்கிற, நலிவுறுகிற; தலைகீழான, நேர்மாறாகத் திருப்பப்பட்ட; (வான்.) விண்கோளம் வகையில் கிழக்கு மேற்காகச் செல்கிற; கோள்வகையில் ஞாயிறு நெறியிலே பின்னுக்குச் செல்வதுபோல் தோன்றுகிற; *v.* பின்னோக்கிச்செல், பின்னிடு; விலகிக்கொள்; நலிவுறு, பழைய நிலையடை; (வான்.) கோள் வகையில் ஞாயிறு நெறியில் பின்னுக்குச் செல்வதுபோல் தோன்று.

**retrogress',** *v.* பின்னுக்குச் செல், பின்னோக்கிப் போ; தரங்கெடு, படிப்படியாகச் சீரழிவுறு.

**retrogre'ssion,** *n.* பின்னோக்கிய செலவு, தலைகீழான இயக்கம்; பிற்போக்கு, பிற்போக்கு நிலைக்குத் திரும்புதல், முன்னேற்றத்தடை, நலிவு, சீரழிவு; (வான்.) ஞாயிறு நெறியில் கோள் பின்னுக்குப் போவதுபோன்ற தோற்றம்; விண்மண்டலம் கிழக்கு மேற்காகச் செல்லும் இயக்கம்.

**ret'roject,** *v.* பின்னுக்கு எறி.

**retropul'sion,** *n.* (மரு.) வெளிப்புற நோய் உட்புறத்துக்கு மாறுதல்.

**retrorse',** *a.* (வில.) பின்னோக்கி அல்லது கீழ்நோக்கி வளைந்த.

**ret'rospect,** *n.* பின்நாடிய நோக்கு; பின்காட்சி; சென்றகால நோக்கு; முன்னிகழ்வுகள் பற்றிய நினைவுக்காட்சி; முன்தொடர்புச் சுருக்கக்குறிப்பு.

**retrospec'tion,** *n.* மறித்துப் பார்த்தல்; பழைய நிகழ்ச்சிகளை மனங்கொளல்; முன்நிகழ்ச்சிச் சிந்தனையாழ்வு; முன்மரபுக் குறித்தல்; முன்மரபு போற்றுகை.

**retrospec'tive,** *a.* பின்னோக்கிய; முற்கால நிகழ்வுக்குரிய; முற்காலம் நோக்கிச் செல்லுகிற; (சட்.) சென்றகாலத்தையும் அளாவிய, முற்காலத்துக்கும் பொருத்தமான; முன்மரபையும் பாதிக்கிற.

**retrostern'al,** *a.* மார்பெலும்புக்குப் பின்னுகவுள்ள.

*retrousse,* (பிர.) *a.* மேல்நோக்கி வளைந்த, நுனி நிமிர்ந்த.

**retrover'sion,** *n.* பின்னோக்கித் திரும்புதல், பின்னுக்கு விழுதல்; இடம் பெயர்ந்து பின்செல்லுதல்.

**ret'rovert,** *v.* கோளாறுற்ற கருப்பை வகையில் பின்னுக்குத் திரும்பு.

**retry',** *v.*=**rehear.**

**rett'ery,** *n.* மென்சணலின் ஈர்ம்பதமனை.

**return',** *n.* மீட்சி, திரும்புகை; மீள்வரவு, திரும்பி வருகை; பின்னடைவு; மீட்டளிப்பு; திருப்பிக்கொடுப்பு; மீட்டளிப்புப் பொருள், திருப்பிக் கொடுக்கப்படுவது; விற்காது திருப்பித் தரப்படுவது; எதிர்மாற்று, ஈடு; எதிர்ச்செயல்; பதில், மறுமொழி; விளைவு, பயன்; மீட்டனுப்பீடு; வேட்பாளர் வகையில் தேர்ந்தெடுப்பு; தேர்ந்தெடுப்பு அறிவிப்பு; ஆணைத்தாள்மீது குறித்தனுப்பப்படும் நகர நாயகத்தின் அறிவிப்பு; விவர அறிக்கை, புள்ளி விவரங்களுடன் கூடிய பணிமுறை அறிவிப்பு; செலவு மீள்வுப் பயணச்சீட்டு; மறு பந்தய ஆட்டம், ஆள்மாறுது ஆடப்படுந் தொடர் ஆட்டம்; (க-க.) தொடர்மடக்குக் கட்டு, செங்கோணவாட்டாக மடங்கித் தொடரும் கட்டுமானப் பகுதி; *a.* திரும்புகிற; திரும்புவதற்குரிய; மாற்றுன, பதிலான; (க-க.) செங்கோணமாகத் தொடர்ந்த; *v.* மீள்; திரும்பிவா, திரும்பிச்செல்; திருப்பிக்கொடு; திருப்பிச்செலுத்து; திருப்பிஅனுப்பு; பந்து வகையில் திருப்பியடி; திரும்பவும் எடுத்த இடத்தில் வை; மறுமொழி கூறு; எதிர்த்துக்கூறு; கைம்மாறு கொடு; பலனளி; ஆதாயமளி; மாற்றுகக்கொடு, பதிலாகக்கொடு; பதில்செய்; எதிரீடாகச்செய்; முன்னையநிலை அடை; உரியவரிடமே சென்றுசேர்; உரிய இடமே சென்றடை; திரும்பவும் நாடு; முன்னேக்கிக் கவனஞ் செலுத்து; முந்திய செய்தியில் கவனஞ் செலுத்து; முந்திய காலத்தைப் பின்பற்று; சென்றகாலத்தில் நாட்டஞ் செலுத்து, மீண்டும் அணுகு; மீண்டுஞ் செய்; தேர்ந்தெடு; தேர்ந்தெடுத்தனுப்பு; தேர்ந்தெடுப்பறிவி; ஆணைக்கு அலுவல் முறையில் பதில் தெரிவி; (க-க.) கட்டிடப்பகுதி வகையில் வேறு திசையில் திரும்பித்தொடர்; (தொ.) by return, by return of post, மறு அஞ்சலில், எதிர்த்திசையில் அடுத்துப் புறப்படும் தபால் வழியாக; in return, பதிலாக; in return for, மாற்றாக, பதிலாக; செயல் விளைவாக, முயற்சியின் பயனாக; return game, return match, ஆடுவோர் மாறாமல் மறுபடியும் ஆடப்படும் பந்தய ஆட்டம்; return shock, மின்னலுக்குப்பின் தோன்றும் மின்கம்பி அதிர்ச்சி; return ticket, செலவு மீள்வுச்சீட்டு.

**return'able,** *a.* மீண்டும் ஒப்புவிக்கப்பட வேண்டிய; திருப்பி அனுப்பப்படத் தக்க; திருப்பி அனுப்பப்படவேண்டிய; சட்டப்படித் திருப்பி அனுப்பப்படவேண்டிய.

**returned',** *a.* திரும்பிவந்த; திருப்பி அனுப்பப்பட்ட; (தொ.) returned empties, திருப்பி அனுப்பிவிடப்பட்ட வெற்றுச் சிப்பப்பேழைகள்.

**return'ing,** *a.* திரும்புகிற; தேர்ந்தெடுத்தனுப்புகிற; (தொ.) returning officer, தேர்தல் அதிகாரி.

**return'less,** *a.* ஆதாயமற்ற; திருப்பி அனுப்பப்படக் கூடாத; மீட்டனுப்ப வேண்டாத.

**returns',** *n. pl.* அடுக்குமுறை வரவு, பலதடவை அடுத்தடுத்து வருகை; தொழில் முயற்சியின் ஆதாயம், தொழில் முயற்சியிலிருந்து கிடைக்குந் தொகைகள்; தொழில் முயற்சியிலிருந்துவரும் ஆதாயம்; காரங்குறைந்த குழாய்ப் புகையிலை வகை; (தொ.) many happy returns, many happy returns of the day, இன்றேபோல் என்றும் வாழ்க! பல்லாண்டு வாழ்க!

**retuse',** *a.* (தாவ., பூச்.) உட்பள்ளத்துடன் கூடிய, தடித்த நுனி வாய்ந்த.

**reun'ion,** *n.* பிரிந்தவர் கூட்டம்; நண்பர் நிலை; தலைக்கூடல், உணர்ச்சியொத்தோர் கூட்டிருக்கை.

**reun'ionism,** *n.* ரோமன் கத்தோலிக்க திருச்சபையும் இங்கிலாந்து திருச்சபையும் மீண்டும் ஒன்றுபடவேண்டுமென்ற விருப்பம்.

**reun'ionist,** *n.* ரோமன் கத்தோலிக்க திருச்சபையையும் இங்கிலாந்து திருச்சபையையும் மீண்டும் ஒன்றுக்க முயல்பவர்.

**reunite',** *v.* பிரிவின்பின் கூடு; மீட்டும் ஒன்றுபடுத்து; தணந்தாரைப் புணர்வி.

**reurge',** *v.* மீண்டும் வலியுறுத்தி வாதிடு; மறுபடியும் அழுத்தமாக வேண்டு.

**rev,** *n.* (பே-வ.) பொறியியக்க வகையில் சுழல், சுழற்சி; *v.* சுழலு; சுழற்று; வேகமாக இயங்கச்செய்; தொடக்கத்திலேயே பொறி விரைவாக இயங்கச் செய்.

**revac'cinate,** *v.* திரும்ப அம்மை குத்து.

**revaccina'tion,** *n.* மறுமுறை அம்மைக் குத்து.

**revalen'ta,** *n.* பயறு-வாற்கோதுமை மாவு ஆகியவற்றைக் கொண்டு செய்யப்படும் உணவுவகை.

**revaloriza'tion,** *n.* நாணய மதிப்பு மீட்பு, நாட்டின் நடப்பு நாணயத்தின் மதிப்பு பழைய நிலையடையச் செய்தல்.

**revalua'tion,** *n.* மறுமதிப்பீடு; மறுகணிப்பீடு.

**reval'ue,** *v.* மறுமுறை மதிப்பிடு; புதிதாகக் கணிப்பிடு.

*revanche,* (பிர.) *n.* பழிக்குப்பழி; எதிர் ஆட்டப்பந்தயம்; நாட்டுவாழ்வில் இழந்தது மீட்கத் துடிப்பார்வம்; பிரான்சு-செர்மன் போரில் தோற்றிழந்த நாடுகளை மீட்க பிரான்சு கொண்ட துடிப்பார்வம்.

**reveal'**[1], *n.* கதவு-பலகணி உட்புறப் பக்கச்சுவர்ப் பரப்பு.

**reveal'**[2], *v.* காண்பித்தருள்; திரை விலக்கிக் காட்டு; மறை வெளிப்படுத்து.

**revei'lle**, *n.* பள்ளியெழுச்சியொலி.

**rev'el**, *n.* விருந்துக் களியாட்டு; குடிவெறியாட்டு; களியாட்டு விழா; *v.* விருந்தயர்; களியாட்டயர்; அளவுமீறிக் குடி; மட்டற்ற மகிழ்ச்சியார்வங்கொள்; களியாட்டத்தில் பணத்தையுங் காலத்தையும் விணுக்கு; (தொ.) revel rout, குடிவெறியாட்டயருங் கூட்டம்.

**revela'tion**, *n.* வெளிப்படுத்துகை; திருவெளிப்பாடு; மறைவு வெளிப்பாடு, மறைவெளியிடுதல்; திரை நீக்கிக் காட்டல்; வெளிப்படு காட்சி; வெளிப்படுத்தப்பட்ட பொருள்; புதுக் காட்சி; புதுச்செய்தி; வியப்புக்குரிய செய்தி; அருள் வெளிப்பாட்டுச் செய்தி; அருண்மொழி; (தொ.) Revelations, the Revelation, the Revelations, (விவி.) புதிய ஏற்பாட்டின் இறுதி ஏடு.

**revela'tionist**, *n.* தெய்விக வெளிப்பாட்டில் நம்பிக்கை உள்ளவர்.

**rev'elry**, *n.* களியாட்டம்; கேளிக்கை விருந்து.

***revenant***, (பிர.) *n.* மாள்விலிருந்து மீண்டவர்; நாடு கடத்தப் பட்டுத் திரும்பி வந்தவர்.

**revendica'tion**, *n.* இழந்த நில மீட்புக் கோரிக்கை; இழந்த உரிமை மீட்புக்கோரிக்கை; இழந்த நில மீட்புப்பேறு; இழந்த உரிமை மீட்புப்பேறு.

**revenge'**, *n.* பழிக்குப்பழி; பழிக்குப் பழிவாங்குஞ் செயல்; பழிவாங்கும் எண்ணம்; கறுவும் உணர்ச்சி; தோற்றவர்களுக்குத் தரப்படுந் தோல்விதிருப்புவதற்குரிய மறு ஆட்ட வாய்ப்பு; *v.* பழிதீர்த்துக்கொள்; பழிக்குப் பழிசெய்து மன நிறைவுகொள்; பழிவாங்கிவிடு; பழிக்குப்பழி செய்.

**revenge'ful**, *a.* பழிவாங்கும் மனப்பான்மையுள்ள, பழி வாங்கும் முனைப்புடைய.

**rev'enue**, *n.* வருவாய்; தனித்துறைக்குரிய பெருவருமானம்; அரசிறை, அரசினரின் ஆண்டுவருவாய்; அரசியல் வருமானத் துறை; (தொ.) inland revenue, உள்நாட்டு வருவாய், வரிகளும் உள்நாட்டுத் தீர்வைகளுங் கொண்ட அரசியல் வருமானப்பகுதி; revenue cutter, சுங்க ஏய்ப்பினைத் தடுப்பதற்காக அமர்த்தப்படுங் கப்பல்; revenue officer, சுங்க ஏய்ப்பினைத் தடுப்பதற்காக அமர்த்தப்படும் அலுவலர்; வருவாய்த்துறை அலுவலர்.

**rev'enues**, *n. pl.* வருவாய் இனங்கள்.

**rever'berant**, *a.* (செய்.) எதிரொலிக்கிற; ஒளி-வெப்ப வகையில் எதிரலை பாய்வுடைய; பந்துவகையில் எதிர்த் தடிக்கிற.

**reverb'erate**, *v.* எதிரொலி, எதிரொலிக்கச்செய்; அனல்-ஒளி வகையில் தாக்கி மீளு; அனல்-ஒளிவகையில் தாக்கி மீளச்செய்; பந்து முதலியவை வகையில் எதிர்த்தடி, பின்னுக்குத் துள்ளு.

**reverb'erating**, *a.* எதிர்த்து அலைபாய்வுடைய; (தொ.) reverberating furnace, சுடப்படும் பொருள்மீது எதிர்அனல் வெப்புப் படும்படி அமைக்கப்பட்ட உலை; reverberating kiln, சுடப்படும் பொருள்மீது எதிர் அனல் வெப்புப் படும்படி அமைக்கப்பட்ட சூளை.

**reverbera'tion**, *n.* எதிரலைபாய்வு, அலையதிர்வு; உரறுதல், ஒலியதிர்வு, முழக்கம்.

**reverb'erator**, *n.* இரட்டொளி விளக்கு, ஒளி எதிரொளி அமைவுடன் கூடிய விளக்கு.

**revere'**, *v.* போற்று, உயர்வாக மதி; மதிப்பார்வங்காட்டு; பூசித்துப் பாராட்டு, தெய்வத்தன்மையுடையதாக உளத்தில் வைத்துப் பூசனைசெய்.

**rev'erence**, *n.* பெருமதிப்பு, போற்றரவு; பயபக்தி; போற்றுதலுக்குரிய தகுதி; போற்றுதலைக் காட்டுஞ் சமிக்கை; தலைவணங்கல்.

**rev'erend**, *n.* (சு. வ. Rev.) அருட்டிரு; *a.* போற்றுதலுக்கு உரிய; வயது வகையில் மதிப்பிற்குரிய; ஆள் வகையில் பண்புமதிப்பார்ந்த; இடவகையில் அருந்தொடர்புகள் கொண்ட; பழக்கவகையில் பழமை நலம்வாய்ந்த; சமய குருமாருக்கு உகந்த; சமயகுருநிலை வாய்ந்த; (தொ.) Most Reverend (Most Rev.), சமய மண்டலத்தலைவர் மதிப்பு வழக்கு; Right Reverend (Right Rev.), சமய வட்டத் தலைவரின் மதிப்பு வழக்கு; the Reverend (the Rev.), சமய குருவின் மதிப்பு வழக்கு; Very Reverend (Very Rev.), சமய வட்டகைத் தலைவரின் மதிப்பு வழக்கு.

**rev'erent**, *a.* மதிப்பார்வங் குறித்த, பூசித்துப் போற்றும் மனப்பான்மையுடைய, போற்றிப்பாராட்டுகிற.

**reveren'tial**, *a.* மதிப்பார்வமிக்க; பயபக்தியுடன்கூடிய; பணிவார்ந்த.

**rev'erie**, *n.* பகற் கனவு; தன்னைமறந்த ஆழ்ந்த சிந்தனை நிலை; பகற் கனவிலாழ்ந்த மனநிலையைக் காட்டுங் கருவியிசைக்கூறு.

***revers***, (பிர.) *n.* சட்டைவிரிமலர் விளிம்பு, உள்வரி வண்ணங் காட்டும்படி புறமடித்துத் திருப்பிய சட்டை-மார்புக்கச்சுகளின் ஓரப்பகுதி.

**revers'al**, *n.* புறமறிப்பு, தள்ளுபடி.

**reverse'**, *n.* மறுதலை; மறிநிலை, எதிர்மறை; பின்புறம்; நாணயத்தின் மறுபுறம்; இன்னல்; இடர்; அழிவு; தோல்வி; *a.* மறிதலையான; மறிநிலையான, எதிர்மறையான; மறுபுறமான; தலைகீழான; பின்புறமான; பின்புறமாகச் செயலாற்றுகிற; பின்புறம் தாக்குகிற; *v.* மறுபக்கமாகத் திருப்பு; தலைகீழாக்கு; நேர்மாறுக்கு; தலைமறி, தலைமாற்று; எதிர்ப்பண்புடையதாக்கு; எதிர்விளைவுடையதாக்கு; செயல்மாற்று, மாற்றிச்செய்; இயக்கத் திசை மாற்று; பின்புறமாகச் செலுத்து; ஆடல்துறையில் எதிர் புறமாகச் சுழலு; ஆணையை நீக்கு, உரிமை தள்ளுபடி செய்.

**rever'si**, *n.* பலகைக் கட்ட ஆட்டவகை.

**rever'sion**, *n.* திரும்புகை, முன்னைநிலை மீள்வு; முன்னை நிலைக்கு மீள்கிற ஒன்று; முன்னைப்பழக்கவழக்கச் சேர்வு; (உயி.) மரபு மடக்கம், மூலமரபு நோக்கிய பின்னிறக்க மாறுபாடு; (சட்.) உரிமை மீள்வரவு, உடைமையில் அல்லது உரிமைவகையில் குறிப்பிட்ட காலம் அல்லது நிகழ்ச்சி கழித்து வழங்கியவரிடமும் அவர் வழியிலுமே சென்றுசேர்தல்; (சட்.) உரிமை மேல்வரவு, உடைமை வகையில் குறிப்பிட்ட காலம் அல்லது நிகழ்ச்சி கழித்து இறுதியுரிமையாளரிடம் சென்றடைதல்; இறுதி நிலை வழியுரிமை, உடைமை அல்லது பணி வகையில் வழியுரிமையின் இறுதியான கையாட்சிப் பேறு; மாள்வில் கொடுக்கப்படவேண்டுந் தொகை; வாழ்க்கைக் காப்பீடு செய்தவரின் மாள்வின்மீது கொடுக்கப்பட வேண்டிய தொகை; உருநிலை மரபுரிமையுடைமை, பிறர் கைதுறப்பால் வருங்காலத்தில் பெறத்தக்கதாகவுள்ள உடைமை; மீதி, எச்சமிச்சம்.

**rever'sioner**, *n.* உரிமை மீள்வரவாளர்.

**revert'**, *v.* மடங்கி வந்தடை, உடைமை அல்லது உரிமை வகையில் மீள்வுரிமையாகச் சென்றுசேர்; பணிவகையில் இறுநிலை வழியுரிமையாக வந்தடை; முன்னிலைக்கு மீள்வுறு; மூலப்பண்படா நிலைக்கு மடங்கு; பேச்சில் பழைய செய்தியை மீண்டும் நாடு; எடுத்துக்கொண்ட தலைப்பிற்கு மீண்டுஞ் செல்; பழைய கொள்கைக்கே மீளு; பார்வையைப் பின்புறமாகத் திருப்பு.

**revert'ible**, *a.* உடைமை வகையில் மீள்வுரிமையாகச் செல்லத் தக்க.

**revet'**, *v.* அணைசுவரிடு, கோட்டையமைப்பில் மதில்-கொத்தளம் ஆகியவற்றிற்கு எதிரணையாகச் சுவரமை.

**revet'ment**, *n.* அணைசுவரீடு, பற்றுச்சுவர், அணைவடைவு.

**review'**, *n.* மறுசீராய்வு; மீட்டாய்வு; மறுசீர்ப்பாடு, ஏடு முதலியவற்றின் வகையில் மதிப்பாய்வுரை; மதிப்பாய்விதழ்; சென்றகாலநிலை ஆய்வு; நிகழ்ச்சிகள்-பொதுநிலைகள்-தொடர் வரலாறுகள் பற்றிய ஆய்வுக்கட்டுரை; (படை.) கடல்-நில-

வான் படைகளின் கூட்டணிப் பார்வையீடு ; மேல்வழக் காய்வு ; v. மறுபடியும் பார், மறுசீராய்வுசெய் ; திரும்பிப் பின்நோக்கு, பின்நோக்கஞ் செலுத்து ; மேலீடாகப்பார், பொதுநோக்குச் செலுத்து ; பார்வையிடு ; ஏடு வகையில் மதிப்பாய்வு செய் ; மதிப்பாய்விதழில் ஆய்வுரை எழுது ; வழக்கு வகையில் மேலாய்வு செய் ; (படை.) கூட்டணி மேற்பார்வையிடு.

review'er, n. ஏட்டின் மதிப்பாய்வுரையாளர்.

revile', v. திட்டு, வைதுரை.

revil'er, n. திட்டுபவர்.

revise', n. மறுபார்வைத்தாள், அச்சுத்துறையில் திருத்திய படிவம் ; v. திருப்பிப்பார், சரிபார், மறுபார்வையிடு ; மறு ஆய்வுசெய்து திருத்து ; திருந்திய வடிவங்கொடு, திருத்தங்கள் செய்து சீராக்கு ; மறு ஆய்வுசெய்து மாற்றியமை.

revi'sion, n. புனராய்வு ; திருத்தியமைத்தல் ; திருத்திய படிவம் ; திருத்த அமைவு ; மாற்றமைவு.

revi'sional, revi'sionary, a. சீராய்வுக்குரிய ; திருத்தமைவு சார்ந்த ; மாற்றமைவான.

reviv'al, n. மீட்டுயிர்ப்பித்தல் ; மீட்டுயிர்ப்பு ; மீட்டுணர் வளிப்பு ; மீட்டெழுச்சி ; உடல்-உள வகைகளில் புத்தூக்க அளிப்பு ; உடல்-உள வகைகளில் புத்தூக்க அடைவு ; புதுப்பிப்பு, மீட்டும் வழக்காற்றிற்குக் கொண்டு வருதல் ; புது மறு முயற்சி ; புத்தாக்கம் ; சமயத்துறைப் புத்தெழுச்சி ; புத்தெழுச்சி இயக்கம் ; புதுமலர்ச்சி, மறுமலர்ச்சி ; புதுத் தோற்றம்.

reviv'alism, n. சமயப் புத்தெழுச்சி இயக்கம் ; கட்டிடக்கலைப் பழம்பண்பு மீட்பியக்கம்.

reviv'alist, n. சமயப்புத்தெழுச்சி இயக்க ஆதரவாளர் ; கட்டிடக்கலைப் பழமைப்பண்பு மீட்பியக்க ஆதரவாளர்.

revive', v. மீட்டுயிர்பெறச் செய் ; மறுபடியும் உணர்வு கொள்வி ; மீண்டும் உணர்வுபெறு ; மீண்டெழு, பிழைத்தெழு ; புத்தூக்கம் அளி ; புத்தூக்கம் பெறு ; மீண்டும் வழக்காற்றிற்குக் கொண்டுவா ; மீண்டும் நடைமுறைக்கு வா ; புதுப்பி ; மீண்டும் புது முயற்சி செய் ; மறந்ததை நினைவிற்குக் கொண்டுவா ; (வேதி.) மீட்டும் இயல்நிலைக்குக் கொண்டு வா.

reviv'er, n. தூண்டுதலளிக்குங் குடி ; வண்ணம் புதுப்பிக்கும் பொருள்.

reviv'ify, v. மீட்டுயிர்ப்பளி ; மீட்டும் ஊக்கமூட்டு ; புத்துயிர்ப்பளி ; புத்தாக்கமூட்டு ; மீட்டும் புத்தெழுச்சியூட்டு.

revivis'cence, n. மீட்டுயிர்ப்பளிப்பு ; புத்தாக்கப்பேறு.

revivis'cent, a. மீட்டுயிரெழுச்சியுடைய ; புத்தாக்கம் பெற்ற.

reviv'or, n. மீள்வழக்கு, கட்சிக்காரர் இறந்ததும் வழக்கைப் புதுப்பிக்கும் நடவடிக்கை.

rev'ocable, a. அழிக்கத்தக்க, மாற்றிவிடத்தக்க.

revoca'tion, n. தள்ளுபடி செய்தல், மாற்றுதல்.

revoke', n. அழித்துவிடல் ; சீட்டாட்டத்தில் இனச்சீட்டிருந்தும் இறக்காது போதல் ; v. தள்ளுபடி செய் ; முடிவு மாற்றிவிடு, ஒழி ; திரும்பப்பெறு, பின்வாங்கிக்கொள்.

revolt', n. எதிர்க்கிளர்ச்சி ; ஆட்சி மீறிய எழுச்சி ; கிளர்ச்சி நிலை ; குழப்பம் ; எதிர்ப்புமனப்பான்மை ; இயல்வெறுப்பு, முரண்பாடு, வெறுப்பெதிர்ப்பு ; v. ஆட்சிமீறி எழு, எதிர்த்துக் கிளர்ச்சிசெய் ; மேலாட்சி தூக்கியெறி ; வெறுத்தெதிர் ; இயல்வெறுப்புக்கொள், வெறுத்தொதுக்கு ; அருவருப்புக் கொள் ; அதிர்ச்சியூட்டு.

revolt'ed, a. எதிர்த்தெழுகிற ; கிளர்ச்சிசெய்கிற ; அதிர்ச்சியூட்டப்பெற்ற.

revolt'ing, a. வெறுப்பூட்டுகிற, அருவருப்பான.

rev'olute', a. (தாவ.) பின்புறமாக உருட்டப்பட்டுள்ள.

revolu'tion, n. சுற்றுகை, சுழற்சி ; ஒரு தடவை சுற்றுஞ் சுற்று ; புரட்சி, அடிப்படை மாறுபாடு ; முழுநிறை மாறுபாடு ; பெருமாற்றம் ; திடீர் ஆட்சிமாறுபாடு ; மக்கள் எழுச்சியால் ஏற்படும் ஆட்சியாளர் மாற்றம் ; (தொ.) American Revolution, அமெரிக்க புரட்சி, பிரிட்டனின் ஆட்சியிலிருந்து அமெரிக்க ஐக்கிய நாடுகள் (1775-இல்) பெற்ற விடுதலை ; French Revolution, பிரஞ்சுப் புரட்சி, பிரான்சில் (1789-இல்) முடியாட்சி கவிழ்க்கப்பட்ட நிகழ்ச்சி ; Russian Revolution, 1917-இல் லெனின்-டிராட்ஸ்கி தலைமைகளில் நிகழ்ந்த ருசிய பொருட்டுறை அரசியற்புரட்சி ; the Revolution, இங்கிலாந்து புரட்சி, மன்னன் இரண்டாம் ஜேம்ஸ் (1688-இல்) துரத்தப்பட்ட நிகழ்ச்சி.

revolu'tionary, n. புரட்சியாளர் ; a. புரட்சியான, அடிப்படை மாறுபாடுகளையுடைய ; புரட்சிக்குரிய.

revolu'tionize, v. புரட்சிசெய், பெரு மாற்றம் புரி.

revolve', v. சுற்று, சுழல் ; உருள் ; உருண்டோடு ; சுற்றிச் செல், சுழன்றோடு ; உருட்டு ; வரிந்து சுற்று ; உள்ளத்தில் ஆழ்ந்துநினை.

revol'ver, n. சுழல் துப்பாக்கி, பலதடவை தொடர்ந்து சுடத்தக்க திருகமைப்புடைய வெடிக்கலம்.

revue', n. நையாண்டி நாடகம், நிகழ்ச்சிகளைக் கோத்துக் கேலியாக நடிக்குங் காட்சிக்கோவை.

revul'sion, n. திடீர்நிலைமாற்றம் ; திடீர் உணர்ச்சி வேறுபாடு ; (மரு.) மாற்றுறுப்புச் சிகிச்சை, மற்றோர் உறுப்பின் சிகிச்சையால் பழுதுபட்ட உறுப்பைச் சீர்செய்யும் முறை.

revul'sive, n. (மரு.) எதிருறுமுறை, மாற்றுறுப்புச் சிகிச்சையில் பழுதுபட்ட உறுப்பின் உறுத்தலுக்கு எதிராக மற்றோர் உறுப்பில் எதிருறுத்தல் தூண்டும் முறை ; a. எதிருறுமுறை சார்ந்த ; எதிருறுத்தல் உண்டுபண்ணுகிற.

reward', n. பரிசு, வெகுமானம், ஊக்க நன்கொடை ; உழைப்புக்குரிய விருப்பூதியம் ; நற்செயலுக்குரிய மதிப்புக் கைம்மாறு ; செயலுக்குரிய நேர்பயன் ; v. பரிசளி ; விருப்ப நன்கொடை வழங்கு ; நல்விளைவு நல்கு ; நேர்பயன் அளி.

reword', v. திரும்பவுஞ் சொல்லமை.

Rex, n. ஆளும் அரசர்.

Rey'nard, n. சம்புகன், பிரஞ்சுப் பழங்கதை மரபில் வரும் நரியின் பெயர் ; நரி.

rhab'domancy, n. மந்திரக்கோலினூற் குறிகூறுதல் ; தண்டுகம்.

Rhadaman'thine, a. நடு நேர்மையுடைய, நடுநிலையில் தவறு நீதிவாய்ந்த.

Rhadaman'thus, n. கிரேக்க புராணமரபில் கீழுலக நடுவர்களில் ஒருவர் பெயர் ; நடுநிலை தவறுத நீதிபதி.

Rhae'tian, n. ரோமப்பேரரசின் பகுதிக்குரிய பெயர் ; a. ரேய்ட்டியா சார்ந்த ; (தொ.) Rhaetian Alps, ஆல்ப்ஸ் மலைத் தொடரின் ஒரு பகுதி.

Rhaet'ic, a. (மண்.) இடையுயிரூழியின் முதற் பருவக் கடைசிப் பிரிவுக்குரிய.

Rhaeto-Romance', Rhaeto-Roman'ic, n. ஸ்விட்ஸர்லாந்திலுள்ள ரோமான்ஷ்-லாடின் முதலிய வழக்கு மொழிகளின் தொகுதி ; a. ரோமான்ஷ்-லாடின் முதலிய ஸ்விட்ஸர்லாந்திலுள்ள வழக்கு மொழிகளின் குழுவினைச் சார்ந்த.

rhap'sode, n. பழங்கிரேக்க பாணன் ; பண்டைக் கிரேக்கரிடையே வீரகாவியம் பாராயணஞ் செய்பவர்.

rhapsod'ic, a. வீரகாவியப்பகுதிக்குரிய ; வீரகாவியம் பாராயணஞ் செய்யும் பாணனுக்குரிய.

rhapsod'ical, a. வீரகாவியப்பகுதிக்குரிய ; வீரகாவியம் பாராயணஞ் செய்யும் பாணனுக்குரிய ; கட்டற்ற உணர்ச்சிக் கொந்தளிப்பு வாய்ந்த ; உள்ளம் முழுதும் ஈடுபட்டுத் தோய்ந்த.

rhap'sodist, n. வீரகாவியம் பாராயணஞ் செய்யும் பாணன் ; கட்டுக்கோப்பற்ற செய்யுள் எழுதுபவர் ; தொடர்பற்ற வற்றைப் பிணைத்துப் பேசுபவர்.

**rhap'sodize,** *v.* விரகாவியப்பகுதி பாராயணஞ் செய்; கட்டுக் கோப்புத் தளர்வான செய்யுள் இயற்று; தொடர்பற்ற வற்றைப் பிணைத்துப்பேசு; கட்டற்ற கற்பனை உணர்ச்சி யுடன் பேசு.

**rhap'sody,** *n.* விரகாவியப் பாராயணப்பகுதி; விரகாவியம்; கட்டற்ற உணர்ச்சிக்கற்பனை வாய்ந்த செய்யுள்; கட்டுக் கோப்புத் தளர்வான துண்டுத் துணுக்குக்கோவை; உணர்ச் சிக் கொந்தளிப்பான பேச்சு; (இசை.) பரிபாட்டு வகை, அளவொவ்வாப் பல்கோப்புக் கதம்ப இசை.

**rhat'any,** *n.* தென் அமெரிக்க மருந்துப்பூண்டு வகை; சாராயக் கலப்படச் சரக்காகவும் மருந்தாகவும் பயன்படும் தென் அமெரிக்க பூண்டுவகையின் வேர்ச்சத்து.

**rhe'a,** *n.* மூன்று கால்விரல்களையுடைய தென் அமெரிக்க நெருப்புக் கோழிவகை.

**Rhem'ish,** *a.* ரேய்ம்ஸ் (Rheims) நகரிலிருந்து (1882-இல்) வெளியிடப்பட்ட விவிலிய ஏட்டின் ஆங்கில ரோமன் கத்தோலிக்க மொழிபெயர்ப்புச் சார்ந்த.

**Rhen'ish,** *n.* மதுவகை; *a.* ரைன் (Rhine) ஆற்றுப்புற வட்டஞ் சார்ந்த.

**rhen'ium,** *n.* உலோகத் தனிம வகை, (கண்டுபிடிப்பு 1925).

**rheol'ogy,** *n.* பொருளின் ஒழுங்கு-மாறுபாடு ஆகியவற்றை ஆராயும் நூல்.

**rhe'ostat,** *n.* உந்துபொறி முடுக்கும் வகையில் மின்வலி இயக்கக் கட்டுப்பாட்டமைவு.

**rhes'us,** *n.* சிறு குரங்கு வகை; (தொ.) Rhesus factor (Rh-factor), குரங்கு வகையிலும் மனித இனத்திலும் குருதி யின் செங்குருமத்திற் காணப்படும் உறைமம் ஊக்குங்கூறு; Rhesus negative (Rh-negative), மனிதரிடையே குருதியில் உறைமம் ஊக்குங் கூறு செலுத்தப்படும்போது எதிர்ச்செயல் காட்டாத; Rhesus positive (Rh-positive), மனிதரிடையே குருதியில் உறைமம் ஊக்குங்கூறு செலுத்தப்படும்போது எதிர்ச்செயல் காட்டுகிற.

**rhet'or,** *n.* பண்டைக் கிரேக்க-ரோமரிடையே சொல்லாட்சித் திற ஆசிரியர்.

**rhet'oric,** *n.* சொல்லணிக்கலை; அணியிலக்கணம்; சொல் லணிக்கலை ஆய்வுநூல்; அணியிலக்கண நூல்; சொல்லாட்சிக் கலை; சொல்லாட்சித் திறம்; கவர்ச்சித்திறச் சொல்லாட்சி; பகட்டாரவாரச் சொல்லாட்சி; உணர்ச்சியற்ற வெற்றுரவார நடை; மனந்தோயா வெற்றுரவாரப்பேச்சு; பார்வை-செயல் ஆகியவற்றின் பிணிப்பாற்றல்.

**rheto'rical,** *a.* அணியிலக்கணஞ் சார்ந்த; அணியியல்பான, சொல்லாட்சிக்கலை சார்ந்த; சொல்லாட்சித் திறம் வாய்ந்த; பிணிப்பாற்றல் நோக்குடைய, சொற்கவர்ச்சியுடைய; வெற் றுரவாரச் சொல் நிரம்பிய; மேடைச்சொற்பொழிவுத் தன்மை வாய்ந்த; பகட்டாரவாரமாகப் பேசும் இயல்புடைய; உள் ளீடுபாடற்ற; (தொ.) rhetorical question, அறிவினு; உணர்ச்சிக் குறிப்புவினு.

**rhetori'cian,** *n.* பண்டைக் கிரேக்க-ரோமரிடையே சொல் லாட்சித் திறமை ஆசிரியர்; நாவல்லுநர்; மேடைப்பேச்சாளர்; அணியிலக்கண ஆசிரியர்; அணியிலக்கண அறிஞர்; சொல் லாட்சித் திறமுடையவர்.

**rheum,** *n.* வாதநீர், கபம், சளி; கண்ணீர்-வாயூறல் முதலிய வற்றிற்கு மூலமான சிலேத்தும நீர்.

**rheumat'ic,** *n.* வாதநோயாளி; *a.* வாதநோய் சார்ந்த; வாதநோயாற் பீடிக்கப்பட்ட; வாதநோய்க்கு ஆளான; வாத நோய் உண்டுபண்ணுகிற; வாதநோயால் உண்டான; (தொ.) rheumatic fever, கீல்வாதக் காய்ச்சல்; rheumatic walk, வாதத்தால் மரமரப்புற்ற கால்களுடன் நடக்கும் நடை.

**rheu'matism,** *n.* கீல்வாதம்.

**rheums,** *n. pl.* (பே-வ.) வாதநோவுகள்.

**rheu'my,** *a.* கபமுடைய; காற்றுவெளி வகையில் ஓதமான, ஈர நயப்புடைய.

**rhin'al,** *a.* (உள்.) நாசித்துளை சார்ந்த; மூக்குச் சார்ந்த.

**rhine**[1], *n.* அகல்மோரி, பெரிய திறந்த சாக்கடை.

**Rhine**[2], *n.* செர்மன் ஆற்றின் பெயர்; (தொ.) Rhine wine, ரைன் பள்ளத்தாக்குத் திராட்சை வெண் மது; Rhine wine yards, ரைன் பள்ளத்தாக்குத் திராட்சைத் தோட்டங்கள்.

**Rhine'stone,** *n.* பாறைப் படிக வகை; போலி வைரமணி.

**rhin'o**[1], *n.* (பே-வ.) பணம்; ரொக்க காசு.

**rhin'o**[2], **rhino'ceros,** *n.* காண்டாமிருகம், தகடுபோன்ற மடிப்புடைய தோலும் மூக்கில் ஒன்று அல்லது இரண்டு கொம்புகளுங் கொண்ட ஆப்பிரிக்க பெருவிலங்கு.

**rhinopharyn'geal,** *a.* உள்மூக்கு வளைசார்ந்த.

**rhinoplas'tic,** *a.* மூக்கின் குழைம அறுவை சார்ந்த.

**rhin'oplasty,** *n.* மூக்கின் குழைம அறுவை.

**rhiz'ocarp,** *n.* அழியாவேர்த் தாவரம்; நிலக்கீழ் காய்க்கு செடி-கொடி வகை.

**rhiz'ome,** *n.* வேர்த்தண்டு, வேர்கள் புறப்படுவதற்குரிய அடிநிலத்தண்டு.

**Rhode Isl'and,** *n.* அமெரிக்க தீவின் பெயர்; அமெரிக்க தீவினை உள்ளடக்கிய உறுப்பரசு; (தொ.) Rhode Island Red, அமெரிக்க கோழிவகை.

**Rhodes schol'ar,** *n.* ஆக்ஸ்போர்டில் பிரிட்டிஷ் நட்புறவு நாட்டவர்க்குரிய உதவிநிதி பெற்றிருப்பவர்.

**Rhod'ian,** *n.* கிரேக்க நாட்டையடுத்து நடுநிலக்கடலிலுள்ள ரோட்ஸ் தீவுக்குரியவர்; *a.* ரோட்ஸ் தீவுக்குரிய.

**rhod'ium**[1], *n.* நூக்க மரவகை; (தொ.) oil of rhodium, நூக்கமரவகைத் தைலம்.

**rhod'ium**[2], *n.* பிளாட்டினம் குழுவைச் சார்ந்த திண்ணிய வெண்ணிற உலோகத்தனிமம்; (தொ.) rhodium pen, ரோடியம் முனை பெற்றுள்ள ஊற்றுப் பேனு.

**rhododen'dron,** *n.* பெரிய மலர்களையுடைய பசுமைமாருச் செடிவகை.

**rhodosperm'ous,** *a.* செஞ்சிதல்களையுடைய.

**rhomb,** *n.* செவ்வகம், சாய்சதுரம், சரிசம பக்கங்களையுடைய இணைவகம்; வயிரவடிவப் பொருள்; வயிரக்கல்; வயிர வடிவத் தித்திப்புப்பண்டம்; ஆறு செவ்வகமுகப்புக்களை யுடைய மணியுருப்படிகம்.

**rhom'bic,** *a.* சாய்சதுர வடிவுடைய; மணியுருப் படிகவகை யில் ஒன்றுக்கொன்று செங்கோணமாக ஏற்றத்தாழ்வுடைய மூன்று ஊடச்சுக்களைக்கொண்ட.

**rhombohed'ral,** *a.* சாய்சதுரப் பிழம்புருவான; சாய்சதுரப் பிழம்புருச் சார்ந்த; சாய்சதுர மணியுருச்சார்ந்த; மணியுருப் படிக வகையில் முக்கோண வெட்டுவாயுடைய.

**rhombohed'ron,** *n.* ஆறு செவ்வக முகப்புக்களையுடைய பிழம்புரு; ஆறு சாய்சதுர முகப்புக்களையுடைய மணியுருப் படிகம்.

**rhom'boid,** *n.* செவ்விணைவகம், எதிரெதிர்ப் பக்கங்களும் கோணங்களும் மட்டுமே சரிசமமாயிருக்கும் இணைவகம்; தோட்பற்றுத் தசை, தோட்பட்டை எலும்பையும் முள்ளெ லும்பையும் இணைக்குந் தசைப்பற்று; *a.* செவ்விணைவக வடிவமுடிய; (தொ.) rhomboid muscles, தோட்பற்றுத் தசை.

**rhomboid'al,** *a.* தோட்பற்றுத்தசை வடிவுடைய; செவ் விணைவக வடிவான.

**rhom'bus,** *n.* செவ்வகம், சாய்சதுரம்; செவ்வக வடிவுடைய பொருள்; தட்டை மீன்வகை; *pl.* rhom'bi, rhom'buses.

**rhot'acism,** *n.* ரகரமோகம்.

**rhot'acize,** *v.* ரகர ஒலிப்படுத்து.

**rhu'barb,** *n.* பேதி மருந்து வகை; பேதிமருந்துதருஞ் செடி வேர்வகை; காய்கறிக்குப் பதிலாகப் பயன்படும் காம்புகளை யுடைய தோட்டச்செடிவகை; பொன் தவிட்டுநிறம்.

**rhumb**, *n.* சரிகுறுக்கை, நிரைகோடுகளனைத்தையும் ஒரே கோணத்தில் வெட்டும்வரை ; கப்பலின் திருப்பமிலா நேர் வழிவரை ; திசைகாட்டுங் கருவியின் இருபுடைத் திசைக் கிடையேயுள்ள (11°15′ பாகையளவுள்ள) கோணம்.

**rhumb′-line**, *n.* சரிகுறுக்கை, நிரைகோடுகளனைத்தையும் ஒரே கோணத்தில் வெட்டும்வரை ; கப்பலின் திருப்பமிலா நேர்வழிவரை.

**rhyme**, *n.* ஒலியியைபு, தொடைநயம் ; *v.* ஒலியியைபுபடச் செய், தொடைநயமாக அமை.

**rhym′ing**, *n.* ஒலியியைபுபடுத்துதல்; இயைபொலி தொகுப்பு; *a.* இயைபொலியாயமைகிற ; (தொ.) rhyming dictionary, தொடைமுறைச் சொற்களஞ்சியம்.

**rhy′thm**, *n.* சந்தம் ; ஓசையொழுக்கு; (இசை.) தாளலயக் கூறு; கலைத்துறையில் ஒத்திசைவுநயம்; (இயற்.) வன்திறம்-மென்திறம் இடைமாறிவரும் ஒழுங்கு இயல்பு.

**rhyth′mic, rhyth′mical**, *a.* ஓசையொழுக்குடைய, சந்த முடைய.

**ri′ant**, *a.* புன்னகை பூக்கிற ; நகைமுகமுடைய.

**rib**, *n.* பழு, விலாவெலும்பு ; விலாவெலும்பிறைச்சிக் கண்டம் ; இலை நரம்பு ; இறகுத்தண்டு ; பூச்சியின இறக்கைவரி ; உழவுசாலின் இடைவரி மேடு ; மணற்பரப்பின் அலைவரி ; பின்னல் மேல்வரி ; ஆதாரக்கை ; ஏந்துகோல் ; மணியிழை, மெல் இழைமத்துக்கு வலுக்கொடுக்கும் திண்ணிய வலைவரி இழை ; ஏந்தகல் ஒப்பனைவரி, மென்பரப்பைத் தாங்குவதற் கான குறுக்கு நெடுக்குக் கம்பிவரி ; வில்யாழின் விலா விளிம்பு ; குடைவரிக்கம்பி ; வானூர்தி இறக்கையின் குறுக்குக் கை ; கூரையைத் தாங்கும் வரிவில் வளைவு ; உத்தரக் கைமரம் ; மச்சின் உந்துகட்டை ; துணை ஆதாரப் பட்டிகை; பால வரிக்கை உத்தரம் ; கப்பலின் பக்கவளை வரிக்கட்டை ; சாரக் குறுக்குக்கட்டை ; சுரங்கத் தாதுவரிப்படுகை ; மலையின் கிளைத்தொடர் ; நகையாடல் வழக்கில் மனைவி ; பெண்; *v.* விலாவெலும்பு அமை; விலாவெலும்புபோல அமை; கிளை வரியாக அமை ; விலாவெலும்புபோற் செயற்படு ; இடை வரி மேடுபடும்படி உழு ; அரைகுறையாக உழு ; இடை வரிகள் இட்டமை ; குறுக்குநெடுக்கு வரிமேடு செறிவி ; குறுக்குக்கட்டையை வரம்பாகக்கொள் ; வரிக்கட்டத்தால் நிரப்பு ; (தொ.) false rib, வலுவில் பழு ; floating rib, தொங்கற்பழு, இணைப்பில் பழு ; short rib, குட்டையான பழு, மார்பு எலும்போடு இணையாது தனித்து நிற்கும் எலும்பு ; poke one in the ribs, இடித்துக் கவனந்திருப்பு ; smite under fifth rib, கத்தியால் குத்து; குத்து; sternal rib, true rib, மார்பு எலும்போடு இணைக்கப்பட்ட விலா வெலும்பு.

**rib′ald**, *n.* மதியா விதூடகர் ; *a.* ஆபாசமான.

**rib′aldry**, *n.* மட்டு மரியாதையின்மை ; ஆபாசம்.

**rib′and**, *n.*=ribbon.

**rib′anded**, *a.*=ribboned.

**ribb′and**, *n.* கப்பல் விலாக்கட்டைகளைப் பொருந்தவைக்குங் குறுக்குச் சிம்பு ; கப்பலைக் கரையிலிருந்து தள்ளும்போது சரியாமல் தடுக்கும் அண்டைக்கட்டை ; துப்பாக்கி மேடையின் தாங்குகட்டை ; படகுப்பால இணைப்புக்கட்டை.

**ribb′ing**, *n.* விலாவெலும்பு அமைப்பு ; விலாவெலும்புகள் போன்ற அமைவு.

**ribb′on**, *n.* இழைக்கச்சை, வாரிழை, இழைப்பட்டை; ஆடை ஒப்பனைக்குரிய கரைப்பட்டை ; நாடா, அணியிழைக்கச்சை ; பட்டிகைச்சின்னம் ; வீரத்திருத்தகை வகுப்பின் சின்னமான வார்ப்பட்டிகை ; ஆட்டக்குழுச் சின்னமான நிறக்கச்சை ; கல்லூரிக் குறியீட்டு வண்ணப்பட்டி ; பதவி குறிக்குஞ் சிறப்பு வண்ணக்கச்சை; மென்கீற்று ; வார்ப்பட்டைபோன்ற பொருள் ; வார்த்தகடு ; நெடுநீள் வரிப்பாதை ; நீள்வரிப் பகுதி; கந்தல், கிழிசல் கீற்று; தட்டச்சுப்பொறியின் மைவரி இழைவார் ; சிப்பியின் நாக்கு ; கைக்கடிகார விசைவில்; சுழலார வாள் ; (கட்.) குறுக்கை நுணுக்கம், சின்னத்தின் பரப்பில் வலது தலைப்பிலிருந்து இடது அடிப்புறம்வரைச் செல்லும் குறுக்குவரையின் எட்டில் ஒருகூறு ; *a.* இழைக்கச்சையாலான ; வண்ணப்பட்டைகளையுடைய ; *v.* இழைக்கச்சையால் அணிசெய் ; கரைப்பட்டையிடு ; வண்ணப்பட்டைகளிடு ; நிறக்கோடுகளிடு ; (தொ.) blue ribbon, காலுறைக் கச்சைச் சீரணியின் (Order of the Garter) சின்னமான நீலப் பட்டிகை ; துறைக்குரிய உச்ச உயர்தரச்சிறப்பு ; அமெரிக்காவில் 1878-இல் நிறுவப்பட்ட முழு மதுவிலக்குப் படையணியின் நீல இழைக்கச்சைச் சின்னம் ; ribbon building, ribbon development, நீள்வரிப்பாணிக் கட்டிடம், நகரின் புற நோக்கிய நெடுஞ்சாலையின் போக்கில் வீடுகள் கட்டுதல் ; Ribbon Society, இழைக்கச்சைக் கூட்டணி, பத்தொன்பதாம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட அயர்லாந்து ரோமன் கத்தோலிக்க மறைகுழு.

**ribb′on-fish**, *n.* நீண்டு ஒடுங்கிய தட்டைமீன் வகை.

**ribb′on-man**, *n.* இழைக்கச்சைக் கூட்டணி உறுப்பினர், அயர்லாந்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட ரோமன் கத்தோலிக்க மறைகுழுவின் உறுப்பினர்.

**ribb′ons**, *n. pl.* வண்டியோட்டுங் கடிவாள வார் ; (தொ.) handle the ribbons, take the ribbons, ஊர்தி செலுத்து, ஊர்தியை ஒட்டு.

**rib′es**, *n.* (தாவ.) நாவற்பழம் போன்ற கனிதருந் தாவரம்.

**rib′-grass**, *n.* குறுகல் இலை வாழை வகை.

**Rib′ston pipp′in**, *n.* ஆப்பிள்பழ வகை.

**rib′wort**, *n.*=rib-grass.

**Ricard′ian**, *n.* ரிகார்டோ (Ricardo) என்ற பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தொடக்கத்துக்குரிய பொருளியலறிஞர் கோட்பாட்டை ஆதரிப்பவர்; *a.* ரிகார்டோவின் பொருளியல் கோட்பாடு சார்ந்த ; ரிகார்டோவின் கோட்பாட்டை ஆதரிக்கிற.

**rice**, *n.* நெற்பயிர் ; நெல் ; அரிசி ; சோறு.

**rice′-beer**, *n.* தோப்பி, அரிசித் தேறல்வகை.

**rice′-bird**, *n.* சிட்டுக்குருவி வகை.

**rice′flour**, *n.* அரிசிமா.

**rice′-glue**, *n.* கஞ்சிப்பசை.

**rice′-grain**, *n.* நெல்மணி, தனி அரிசி.

**rice′-milk**, *n.* பாற்சோறு.

**rice′-paper**, *n.* ஓவியர் தாள்வகை.

**rich**, *a.* செல்வமுடைய ; இயற்கைவளஞ் செறிந்த ; செழிப்பான ; வளமார்ந்த; பெருவளம் தரத்தக்க ; வளப்பமிக்க ; விலை ஏறிய ; உயர்தரமான ; ஆடம்பரமான ; விரிவாக ஒப்பனை செய்யப்பட்ட ; வீறழகு வாய்ந்த ; சத்துள்ள, ஊட்டமிக்க ; பன்னலஞ்செறிந்த ; முழு நிறைவான ; பல் வளஞ்செறிந்த ; பல்வகைப் பெருக்கமுடைய ; வாய்ப்பு வள நலங்கள் செறியப்பெற்ற; பண்புவளமிக்க; தனிநலஞ் சிறந்த; குறிப்பிட்ட துறையில் வளமேம்பாடுற்ற ; நிறவகையில் திண்ணிய; ஓசைவகையில் நிறைகனிவார்ந்த; மணவகையில் செறிவான ; நிகழ்ச்சிகள் வகையில் கழி மகிழ்வூட்டுகிற ; பொழுதுபோக்குப் பண்பு நிரம்பிய ; நகைநலஞ் சிறந்த ; (தொ.) rich and poor, செல்வரும் ஏழையரும் ; the rich, செல்வர் ; செல்வவகுப்பு.

**Rich′ard**[1], *n.* ஏழை குறித்த சுட்டுப்பெயர் ; (தொ.) Poor Richard's sayings, பெஞ்சமின் பிராங்க்லின் (Benjamin Franklin) ஏழை ரிச்சர்டு (Poor Richard) என்ற புனைபெயரோடு வெளியிட்ட ஐந்தொகுதிகளில் வரும் பழமொழிகள் அல்லது மூதுரைகள்.

**Rich′ard**[2], **Rich′ard Roe**, *n.* இட ஒழிவு-வழக்கில் எதிர்வாதி குறித்த சுட்டுப்பெயர்.

**rich′es**, *n. pl.* செல்வவளம் ; சொத்து, உடைமை மிகுதி ; செல்வநிலை.

**rich′ly**, *adv.* முழுதும், முழுநிறைவாக ; தாராளமாக ; செறிவாக ; ஆடம்பரமாக ; செல்வச் செழிப்போடு ; வளநிறைவுடன்.

rick[1], n. வைக்கோற் போர்; தானியக்குவியல்; வைக்கோல்-தானியம் முதலியன வைப்பதற்கான பட்டடை; v. வைக்கோல் போரடைவு செய்; தானியக்குவியல் செய்; பட்டடை எழுப்பு.

rick[2], n. சுளுக்கு; வலி; v. சுளுக்கிக்கொள்; வேதனைக்கு உட்படுத்திக்கொள்.

rick'-barton, n.=rick-yard.

rick'etiness, n. உறுதியின்மை.

rick'ets, n. குழந்தைக் கணை.

rick'ety, a. கணைச்சூட்டுக்குரிய; கணைச்சூட்டினுற் பீடிக்கப்பட்ட; ஆள்வகையில் தள்ளாடி விழுகிற; தட்டுமுட்டு வகையில் நன்கிணைக்கப்பெருத; ஆட்டங்கொடுக்கிற; பொருள்கள் வகையில் உறுதியற்ற.

rick'sha, rick'shaw, n. ஆள் இழுப்புவண்டி.

rick'-stand, n. பட்டடைக்கால்நிலை, வைக்கோல்-தானியப் போர்களை நிலமட்டத்திலிருந்து உயர்த்துவதற்கான கற்றூண் தொகுதி.

rick'-yard, n. வைக்கோல்-தானியப் பட்டடைக்களம்.

ric'ochet, n. தவ்வல், குண்டு முதலியவற்றின் வகையில் நீர் மீது அல்லது நிலத்தின்மீது தத்திப்பாய்வு; v. குண்டு வகையில் தத்திப்பாய்; துப்பாக்கி-துப்பாக்கி சுடுபவர் வகையில் தத்திப்பாயும்படி சுடு.

ric'tus, n. அங்காப்பளவு, மனிதர் அல்லது விலங்கின் வாயகலம்; பறவை அலகின் விரிவகலம்; ஈரிதழ் மலரின் புழை வாயகலம்.

rid[1], a. தவிர்க்கப்பெற்ற, ஒழிவுற்ற; (தொ.) be rid of, தவிர்த்தமைவுறு, நீக்கி ஒழிவுறு; get rid of, ஒழித்தமைவுறு.

rid[2], v. விடுவி; தொலைத்தொழி; வெளியேற்று; துடைத்துத் துப்புரவாக்கு.

rid[3], v. rid[1] என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

ridd'ance, n. தொலைத்து முழுகுதல்; விடுவிப்பு.

ridd'el, n. திருக்கோயிற் பலிபீடத் திரைச்சீலை.

ridden, v. ride என்பதன் முடிவெச்சவடிவம்

rid'dle[1], n. விடுகதை; புதிர்; சொற்பொறி; கடுவினு; புதிரான ஆள்; திகைப்பளிக்குஞ் செய்தி; புரியாத பொருள்; v. புதிர்போடு; புதிராகப்பேசு; விடுகதைக்கு விடைகூறு; புதிர் விடுவி.

rid'dle[2], n. சல்லடை, கூலம்-சரளைக்கல்-கரித்தூள் முதலியன சலிப்பதற்கான பெரும்படி அரிதட்டு; நிமிர்ப்புத்தட்டம், கம்பியை நேராக்குவதற்கான ஊசிகள் நிரம்பிய தட்டம்; v. அரித்தெடு, சல்லடையிலிட்டுச் சலி; மெய்ம்மைதேர், சோதித்தறி; தவறென்று எண்பி; பிரித்தெடு; கப்பல்-ஆள் வகையில் துப்பாக்கிக் குண்டால் சல்லடையாகத் துளை; சரமாரியாகக் கேள்விதொடு, கேள்விகளால் திகைக்கவை.

ride, n. ஊர்திப்பயணம், வண்டிவகைகளில் அமர்ந்து வழிச் செல்லுகை; சுற்றுலா, குதிரை-மிதிவண்டி முதலியவற்றின் மீது சவாரி; முதுகின்மீதேறியமர்வு; முதுகின்மீதேறிச் செல்லுகை; சோலைவனத்தூடான சாலைவழி; புதிதாக எடுக்கப்பட்ட குதிரைவீரர் தொகுதி; v. மீதூர்ந்துசெல், குதிரை முதலியவற்றின்மீது சவாரிசெய்; ஏறிச்செல், ஊர்தி வகைகளில் இவர்ந்துசெல்; குதிரையை ஏவு, தாண்டு; இடத்தின் வகையில் குதிரைமீதிவர்ந்து கட; குதிரை ஏற்றம் பயில்; முதுகேறி அமர்; முதுகேறி அமர்ந்து செல்; கால் விரித்துத் தாவி ஏறியமர்; கால்விரித்துத் தாவி ஏறிச் செலுத்து; ஏறி அமர்வி; சவாரிக்குரிய இடமாய் அமை; தவழ்ந்து மித; மிதப்பதுபோன்றியங்கு; கப்பல்வகையில் நங்கூரமிட்டுக் கிட; முன்நீட்டிக்கொண்டிரு; கவிந்து மேலேறிக் கிட; எலும்பு முறிவுவகையில் எலும்புமீது எலும்பு ஏறியிரு; கப்பற் கயிறு வகையில் ஏறிச் சிக்கியிரு; அடக்கியாளு; ஏய்த்துவாழ்; தன்வயப்படுத்தி நடத்து; (தொ.) ride a-cock-horse, ride cock-horse, கால்விரித்து அமர்ந்து சவாரிசெய்; ride a ford, குதிரைமீதிவர்ந்து ஆற்றின் கடவு கடந்துசெல்; ride a hobby, ஆர்வக் கொள்கையை மிகைபடவற்புறுத்து; ride and tie, ஆள்மாற்றக் குதிரை அஞ்சலிப்பு, ஒருவர்க்கு மேற்பட்டவர் ஆள்மாற்றிக்கொண்டு ஒருவர் சிறிதுதொலை சவாரி செய்து குதிரையை மரத்தில் கட்டி விட்டுச் செல்ல அடுத்தவர் ஏறிச்செல்லும்முறை; ride bodkin, இருவரிடையே வைத்து நெருக்கு; ride for a fall, பொறுப்பற்ற தன்மையில் நடந்துகொள்; இடரை வருவித்துக்கொள்; ride off on, முக்கிய செய்தியை மழுப்பச் சிறுசெய்தியைப் பயன்படுத்து; ride on, ஏறி அழுத்தித் துன்புறுத்து; ஆதிக்கஞ் செலுத்து; கொடுமைப்படுத்து; ride one down, குதிரையை விரைந்து செலுத்திக் கடந்துசெல்; குதிரையை ஏவிவிடு; குதிரைமீதிருந்து தாக்கி எறி; வீழ்த்திக் குதிரையின் காலடியின்கீழ்ப்படுத்து; ride one off at polo, பக்கவாட்டில் நெருக்கித் தள்ளிவிட்டுச் செல்; ride one's horse at, குதிரையை ஏவிவிடு; ride one's horse to death, அளவுமீறிச் சவாரிசெய்து கொன்றுவிடு; முறையை மட்டுமீறிப் பின்பற்றித் தோல்வி வருவித்துக்கொள்; நகைத்திறத்தை வரம்பு கடந்து மிகவும் பயன்படுத்திச் சுவை கெடுத்துவிடு; விருப்பத் தொழிலை அளவுமீறிப் பின்பற்றிக் கெடுதொழிலாக்கிக்கொள்; ride out the storm, புயலைப் பொறுமையாகக் கடந்துசென்று பாதுகாப்படை; நெருக்கடியைச் சமாளித்துக்கட; ride over, குதிரைப் பந்தயத்தில் போட்டியில்லாமலே வெற்றிபெறு, மிக எளிதாக வெற்றிபெறு, ride to hounds, வேட்டை நாய்களை ஏவி வேட்டையாடு; நரிவேட்டையிற் கலந்துகொள்; ride up, முயன்று சிக்கலிலிருந்து விடுபடு.

rid'el, n.=riddel.

rid'er, n. குதிரைச்சவாரி செய்பவர்; ஊர்தி ஏறிச்செல்பவர்; ஏறிச் சவாரி செய்யக்கூடியவர்; (வர.) முற்கால எல்லைப்புறக் கொள்ளைக்காரர்களுள் ஒருவர்; ஆலந்து நாட்டுப் பொன் நாணயம்; நிறைகோலில் எடைநுண்ம இழைவமைவு; இயந்திரத்தின் ஏற்றிணைப்புப் பகுதி; இயந்திரப்பகுதிகளின் பால இணைப்பு; இயந்திரத்தின் தனி இயக்க மேற்பகுதி; கயிற்றின் மேன்முறுக்கிழை; கயிற்றின் தனிப்பட்ட புறமுறுக்குப்புரி; ஸ்காத்லாந்தில் பனிப்பரப்பில் ஆடப்படும் கல் வட்டாட்டத்தில் கற்பெயர்த்திடப்பெறுங் கல்; சட்டப் பகர்ப்பில் மேலொட்டு வாசகம்; சட்டப்பகர்ப்பின் மூன்ரும் முறைப் பரிசீலனையின்போது இணைக்கப்படும் திருத்த வாசகம்; சட்டப்பகர்ப்பின் மூன்ருமுறைப் பரிசீலனையில் பின்ஞெட்டு ஆதாரமூலம்; தீர்ப்பின் பிற்சேர்க்கை; தீர்ப்பின் தனிக் கருத்துரைப்பகுதி; தீர்ப்பின் பரிந்துரைப்பகுதி; இயல்பான தொடர்புடைய இணைப்புப் பிற்பகுதி; (கண.) பயிற்சித் துணைக்கடா

rid'ers, n. pl. வல்லிணையாப்புக்கள், கப்பற் கட்டுமானத்தை வலுப்படுத்தும் துணை மரக்கட்டைகள்; கப்பற் கட்டுமானத்தை உறுதிப்படுத்தும் இரும்புத்தகடுகள்.

ridge, n. கூடல்வாய், இருசரிவுகள் கூடும் மேல்வரை; சிமையம், குன்றின் ஒடுங்கிய நீள்வரை உச்சி; மலைத்தொடர்; மோட்டுவரை, நீண்டமோட்டின் வரைமுகடு; கரைமேடு, இடுங்கிய நீள்வரை மேடு; உழவுசாலின் இடைவரை மேடு; வரப்பு; தளப்பரப்பின் இடைவரம்பு; நீர்த்தேக்க இடைகரை; தோட்டச்செடியின் அணைகரை; பாத்திக் கட்டு; மேல் வரைக்கோடு, விளிம்புக்கோடு; கூர்வரை, முனைவரிசை; வக்குவரை முனைப்பு; v. நீள்வரைக் கூறுகளாகப்பிரி; இடைகரை மேடுகளிடு; இடை வரம்புகளிட்டுக்குறி; நீள்வரைக் கூறுகளாயமை; இடைகரைக் கூறுகளில் நாற்றுநடு; பரப்பில் சுரிப்புத்தோற்றம் உண்டுபண்ணு; வரிவரியாயமை; கடற்பரப்பில் நெடுந்திரை சுருட்டு, நீள்வரை மேடுகள்போன்ற தோற்றம் உண்டுபண்ணு.

ridge'-bone, n. தண்டெலும்பு.

ridge'-piece, n. கூரைமுகட்டு உத்தரம்.

ridge'-pole, n. நீள் கூடாரத் தளமட்ட நீள்கழி; கூரை முகட்டு உத்தரம்.

ridge'-tile, n. மோட்டுக் கூடல்வாய் ஓடு.

ridge'-tree, n.=ridge-piece.

ridge'way, n. மலைமுகட்டுப் பாதை.

**rid'icule**, *n.* ஏளனம், கேலி; எள்ளி நகையாடுஞ் செயல்; ஏளனத்துக்கு ஆட்பட்ட நிலை; கேலிக்குரிய நிலை; கேலிக்குரிய செய்தி; *v.* ஏளனஞ் செய், இகழ்ந்து கூறு; ஏளன நகைப்பிற்கு இடமாக்கு.

**ridic'ulous**, *a.* ஏளனமான, நகையாடத்தக்க; முட்டாள்தனமான; பொருத்தமற்ற.

**rid'ing[1]**, *n.* சவாரி செய்தல்; ஊர்தியேறிச் செல்லுதல்; காட்டிடையேயுள்ள சவாரிக்குரிய சாலை; தீர்வைத்துறை அதிகாரியின் வட்டகை; நங்கூரமிட்டுநிற்றல்; *a.* சவாரி செய்கிற; சவாரிக்குரிய; (தொ.) riding the fair, கூடல் விழாச்சடங்கு, கூடல்விழாக் கொண்டாட்டத்தை ஊர்வலத்துடன் தொடங்கும் வினைமுறைச்செயல்.

**rid'ing[2]**, *n.* ஆட்சிமண்டலம்; யார்க்ஷயரின் (Yorkshire) மூன்று ஆட்சிப்பகுதிகளுள் ஒன்று.

**rid'ing-breeches**, *n.* சவாரிக் காற்சட்டை.

**rid'ing-habit**, *n.* சவாரி உடை.

**rid'ing-lamp, rid'ing-light**, *n.* கப்பல் நங்கூர கால விளக்கு.

**rid'ing-robe, rid'ing-skirt**, *n.*=riding-habit.

**rifacimen'to**, (இத்.) *n.* இலக்கிய மறுபடிவம்; *pl. rifacimen'ti.*

**rife**, *a.* பெருநடப்பான, மிகுதியான; பொதுநடைமுறையான; வளமுறப்பெற்ற.

**Riff**, *n.* மொராக்கோ (Morocco) நாட்டிலுள்ள ரிப் (Rif) மாவட்டத்தைச் சார்ந்த தொல்குடி மரபினர்; *a.* மொர்ராக்கோ நாட்டு மாவட்டத்தைச் சார்ந்த; மொராக்கோ நாட்டு மாவட்டத் தொல்குடி மரபைச் சார்ந்த.

**rif'fle**, *n.* தக்கப்பள்ளம், அரிகாரர் அரிப்பில் பொன்னைத் தேக்கிக்கொள்ளும் பள்ளம்; *v.* அரிதட்டில் தக்கப்பள்ளம் உண்டுபண்ணு; சிறு சலசலப்புடன் தாளைத் திருப்பு; சீட்டுக்கட்டில் பகுதிகளின் மூலைகளை எதிரெதிரே புகுத்திக் கலை.

**riff'-raff**, *n.* கும்பு, இழிசினர்.

**ri'fle**, *n.* சுழல் துப்பாக்கி; சுழல் துப்பாக்கிக் குழலின் திருகு சுரை; *v.* புரிகுழல்வடிவில் சுரையமை; சுழல் துப்பாக்கியாற் சுடு; தேடிப்பிடித்துக் கொள்ளையிடு; கொள்ளைப்பொருளாகக் கொண்டுசெல்; (தொ.) Rifle Brigade, பிரிட்டிஷ் படைப் பகுதி.

**ri'fle-bird**, *n.* திண்பச்சை நிறமுள்ள ஆஸ்திரேலியப் பறவை வகை.

**ri'fle-corps**, *n.* விருப்பச் சேர்வாளரான சுழல் துப்பாக்கி வீரர்படை.

**ri'fle-green**, *n.* துப்பாக்கி வீரர் உடையின் திண்பச்சை நிறம்; *a.* திண்பச்சை நிறமான.

**ri'fle-grenade**, *n.* சுழல் துப்பாக்கி வெடிக்கலம்.

**ri'fleman**, *n.* சுழல் துப்பாக்கி வீரர்; பிரிட்டிஷ் துப்பாக்கிப் படைப்பிரிவின் உறுப்பினர்.

**ri'fleman-bird**, *n.*=rifle-bird.

**ri'fle-pit**, *n.* துப்பாக்கிவீரர்கள் மறைவாகநின்று சுடுவதற்கான குழி.

**ri'fle-range**, *n.* சுழல் துப்பாக்கிச் சுடும் எல்லை; வேட்டுக்களம், சுழல் துப்பாக்கிச் சுடும் பயிற்சிக்களம்.

**ri'fles**, *n. pl.* சுழல் துப்பாக்கிப் படையினர்.

**ri'fle-shot**, *n.* சுழல் துப்பாக்கி எல்லை.

**rift**, *n.* நிலப்பிளவு; பாறை வெடிப்பு; பிளவு; வெடிப்பு; கீறல்; மேகத்தில் இடைவெளி; *v.* பிள; வெடி; பிளந்து இரு வேறுக்கு; (தொ.) little rift within the lute, பைத்தியத்தின் தொடக்கநிலை; கலகத்தின் கருநிலை.

**rift'-vall'ey**, *n.* நிலவலயத் தோட்டின் உள் வீழ்வினால் ஏற்படும் செங்குத்தான பக்கங்களை உடைய பள்ளத்தாக்கு.

**rig[1]**, *n.* கூறமைவு, கப்பலின் பாய்மரம்-பாய் முதலியவற்றின் அமைப்புமுறை; ஆள்வகையில் ஆடை அமைதி; பொருள் வகையில் புற அமைவுத்தோற்றம்; *v.* கப்பல் வகையில் பாய்-பாய்மரம்-கயிறு முதலியன கட்டு; தேவைத் தளவாடங்கள் கொண்டு ஒருங்குவி; வானூர்தியின் உறுப்புகள் வகையில் இணைப்பமைவுசெய்; ஆடை திருத்து; பொருத்தமற்ற அற்பப்பொருட்களையும் விரைந்து இட்டுக்கட்டி அமை; (தொ.) rig out, rig up, முற்றுற ஒப்பனை செய்.

**rig[2]**, *n.* சூழ்ச்சி, ஏய்ப்பு; கடத்தல் நடவடிக்கை; *v.* மோசடியாகக் கையாளு; சூழ்ச்சியாக நடத்து; (தொ.) rig the market, விலைக்களத்தில் செயற்கையாக விலை ஏற்ற இறக்கஞ் செய்; வேண்டுமென்றே விலைகளை ஏற்றி இறக்கு.

**Rig'a**, *n.* பால்டிக் (Baltic) கடற்பகுதியிலுள்ள துறைமுகம்; (தொ.) Riga balsam, தேவதாரு மரவகையின் மருந்துத் தைலம்.

**rigadoon'**, *n.* கிளர்ச்சி இருவர் நடனவகை; கிளர்ச்சிஇருவர் நடன இசை.

**riges'cent**, *a.* விறைப்பாகிக் கொண்டிருக்கிற.

**rigg'er**, *n.* கப்பற் பாய்க்கயிற்றமைவாட்சியாளர்; வானூர்தியின் கம்பி கயிற்றமைவு ஒழுங்கு செய்பவர்; (இயந்.) மற்றொரு உருளையின் மேலுள்ள வார் வளையத்தால் இயக்கப்படும் உருளை; கப்பல் உந்துகட்டை, பாய்க் கயிறு இழுத்துக் கட்டுவதற்கான விலாப்புறத்தில் புறஞ்சென்று நீண்டிருக்கும் கோல்; குமிழ்க்கைப் பொறியாட்டக்காரர், மூன்று கைக்குமிழ்களில் பயிற்றுக்காயினை மாற்றிக் கவித்து மாயஞ் செய்யும் கைமாருட்ட ஆட்டக்காரர்; தனிக்கயிற்றுட்சிக்குரிய பாய்க் கப்பல்வகை.

**rigg'ing**, *n.* கப்பல் தளவாட முன்னெருக்கம்; கப்பல் தளவாடம்; பாய்க்கயிற்றமைவு, பாய்மரங்களின் நிலையியக்க ஆட்சிக்குரிய பாய்க்கயிறுகளின் தொகுதி; வானூர்திக் கம்பி கயிற்றமைவுத் தொகுதி.

**rigg'ing-loft**, *n.* கப்பற் கட்டுத்துறையிலுள்ள பாய்க்கயிற்றமைவுப் படிமேடை; திரையியக்க ஆட்சியிடம், நாடக மேடைத் திரைக்கயிறுகள் இயக்கப்படும் இடம்.

**right**, *n.* நேர்மை, நியாயம்; உண்மை; உரிமை; வலப்பக்கம்; *a.* நேரான, கோணலில்லாத; நேர் நிலையான, செவ்வான; சாயாத; கோண வகையில் 90 பாகையுள்ள, செங்கோண இயல்பான; செங்குத்தான; நேர்மையான, நன்னடத்தையுடைய; ஒழுக்க நேர்மையுடைய; ஏற்புடைய; பொருத்தமான; பிழையற்ற, திருத்தமான; நேர்வுரிமையுடைய; பக்கம்-கோடி முதலியவற்றில் கையாட்சிக்குரிய, பயனுக்குரிய; வழக்காட்சிக்குரிய; வருங்கால உரிமைக்குரிய; விரும்பத்தக்க; விருப்பத்திற்கு உரிய; நன்னிலையடைந்த; முழுமையான; உடல்நலம் வாய்ந்த; மனநலம் வாய்ந்த; தெளிந்த அறிவுநிலையிலுள்ள; குடிமயக்கற்ற; கிறுக்கில்லாத; மனநிறைவு அளிக்கிற; வசதியான; இன்பவாய்ப்பான; திண்ணமான; இடவகையில் வலமான; வலது பக்கஞ் சார்ந்த; சட்டமன்றங்களில் தலைவரின் வலதுப்பக்கம் இருக்கிற; நடைமுறை ஆட்சிக்கு ஆதரவான; அரசியலிற் புரட்சி முனைப்பற்ற; *v.* நேராக்கு; நேர்நிலைக்குக் கொண்டுவா; மீண்டும் நிமிர்த்து; நேர்நிலைக்கு மீள்; மீண்டும் நிமிர்நிலை எய்து; எண்பி; நேரென்று காட்டு; நன்னிலைக்குக் கொணர்; திருத்து; சீர்ப்படுத்து; ஒழுங்குபடுத்து; *adv.* நேராக; முற்றமுடிய; முழுநிறைவாக; உண்மையாக; திருப்தியாக; உடனடியாக; தயங்காமல்; (தொ.) all right, முழுதுஞ்சரி; as right as a trivet, as right as rain, மிக ஒழுங்காக; at right angles, செங்கோணம்பட, செங்குத்தாக; do one right, நேர்மைசெய்; நேர்மைகாட்டு; குடியில் உடனொத்தியலு; நலம் அவாவிப்பருகு; in one's own right, தன்னுரிமையாக; in one's right mind, நல்லறிவுநிலையில், அறிவு தெளிந்த நிலையில், in right of, தனிமுறை உரிமையின்படி; in the right, ஒத்துக்கொள்ளத்தக்க நிலையில், நேர்மையின் பக்கம்; on the right side of forty, இன்னும் நாற்பது வயது நிரம்பாத; put one's right hand to the work, தலைசிறந்த உதவியாளை வேலையிலீடுபடுத்து; put right, set right,

ஒழுங்குபடுத்து; சரிசெய்; மீண்டும் உடல்நலம் பெறச்செய்; தவறான கருத்துக்களைத் திருத்து; நியாயமெனக் காட்டு; right ascension, வான்மண்டல நிரைகோடு; right away, right off, உடனடியாக, தாமதமின்றி; right down, முற்ற முடிய, முழுதும்; தெளிவாக, பச்சையாக, நேர் கடுமுறையாக; right helm, கப்பலுக்கு நடுவில் பயின்கட்டையை வை; Right Honourable, பெருமகன் பட்டத்துக்குக் குறைந்தநிலை மதிப்புச்சுட்டு; அமைச்சர் குழுவினருக்கான விருது; மன்னர் அவை-உயர் அவை உறுப்பினர்கள் அமைச்சர்களுக்குரிய மதிப்புச்சுட்டு; right of entry, சட்டப்படி நுழைவுரிமை; right of way, வழிநடப்புரிமை.

**right'-about'**, *n.* பின்முன்னும்நிலை; நேர் எதிர்ப்பகுதி; (தொ.) right-about turn, right'-about face, வலதுபுறமாகத் திரும்பி முன் பின்னுதல்; அவசரமாகப் பின்வாங்குதல்; send to the right-about, உடனடியாகப் பணி நீக்கஞ் செய்.

**right'-and-left'**, *a.* வலதுபுறமும் இடதுபுறமுங் கொண்ட; இருபக்கமும் செவ்வொழுங்கு உடைய; இருபக்கங்களுக்கும் உரிய; துப்பாக்கி வகையில் இரு குழல்களும் சுடுகிற; (தொ.) right-and-left screw, இருமுனைகளிலும் எதிர்மாறான புரிசுரை கொண்ட திருகாணி; right-and-left shot, இரு கைகளிலுள்ள துப்பாக்கிக் குழல்களிலிருந்தும் சுடப்பட்ட குண்டு; இரு கைகளாலும் குத்துச்சண்டை வீரர் கொடுக்குந் தொடர் அடிகள்; Right Reverned, மாவட்டக் கிறித்தவ சமயத் தலைவருக்கான மதிப்புச்சுட்டு.

**right'-angled**, *a.* செங்கோணங் கொண்ட.

**right'eous**, *a.* நியாயமான, நேர்மையான; நன்னடத்தையுடைய, நன்னெறியில் வாழ்கிற; சட்டத்தை ஒட்டி நடக்கிற.

**right'eousness**, *n.* நேர்மை.

**right'ful**, *a.* நேர்மையான; நியாயமான; ஆள் வகையில் சட்டப்படி உரிமையுள்ள; நிறுவனம்-உடைமை வகையில் நேர் உரிமையான, உரிமைப்படி கைவந்த.

**right'-hand**, *a.* வலது பக்கத்தில் வைக்கப்பட்டுள்ள; (தொ.) right-hand man, துணைவலி; right-hand screw, வலம்புரியாணி.

**right'-handed**, *a.* வலக்கையரான; (தொ.) right-handed blow, வலது கையால் விழும் அடி, பலமான அடி; right-handed tool, வலது கை உபயோகத்திற்கேற்பச் செய்யப்பட்ட கருவி.

**right'-hand'er**, *n.* வலது கையால் விழுந்த அடி; வலக்கையர்.

**right'ly**, *adv.* சரியாக; நேர்மையாக; பொருத்தமாக; காரணம் காட்டக்கூடிய வகையில்.

**right'-mind'ed**, *a.* நேர்மைநோக்குக் கொண்ட, நியாயமான; நல்லெண்ணமுடைய.

**Rights**[1], *n. pl.* பாராளுமன்றத்தின் பழநிலை ஆதரவுக் கட்சியாளர்.

**rights**[2], *n. pl.* உண்மைநிலை; (தொ.) assert one's rights, stand on one's rights உரிமைகளைத் துறக்க மறு, உரிமைகளை வற்புறுத்து; by rights, நியாயமாக; நேர்மையடிப்படையில் கூறுவதானால்; put to rights, set to rights, ஒழுங்குபடுத்து.

**ri'gid**, *a.* விறைப்பான; கட்டுறுதியான; திமிர்த்த; வளைவு நெளிவற்ற; கட்டிறுக்கமான; வன்கடுமையான; விடாக்கண்டிப்பான; வளையாத; விட்டுக் கொடுக்காத.

**rigid'ity**, **rig'idness**, *n.* விறைப்பு; கட்டிறுக்கம்; வளைவு நெளிவின்மை; விடாக்கண்டிப்பு.

**rig'marole**, *n.* சுற்று வளைவுப்பேச்சு; தொடர்பற்ற நீளுரை; *a.* தொடர்பற்று நீண்ட.

**rig'or**, (ல.) *n.* (மரு.) காய்ச்சல் முதலியவற்றிற்கு முன்வரும் திடீர்க் குளிர் நடுக்கம், பனிப்பு.

**rig'orism**, *n.* வன்கடுமைப்பாங்கு; விதிமுறை அழுத்தக் கோட்பாடு, ஐயப்பாடான நிலையில் மிகக் கடுமையான முறையே பின்பற்றப்படவேண்டும் என்ற கொள்கை.

**rig'or mort'is**, (ல.) *n.* சாக்காட்டு விறைப்பு, சாவின் பின் ஏற்படும் உடல் விறைப்பு.

**rig'orous**, *a.* கடுங்கண்டிப்பான, சிறிதுகூட விட்டுக்கொடுக்காத; வன்கடுமையான; உலையா முயற்சியுடைய; இம்மியும் பிசகாத; இழையளவும் நெறிதவறாத; அணுப்பிழையாது கவனித்துச் செய்கிற; கடுஞ்சிக்கனமான.

**rig'our**, *n.* கடுமை; பஞ்சநிலையின் கொடுமை; தட்பவெப்பநிலைகளின் கடுமிகைபாடு; பருவரல், கடுந்துயர்; செயலிறுக்கம்; மன அழுத்தம்; ஒழுங்குமுறைக் கண்டிப்பு; நோன்பின் வன்கடுமை; விதிமுறை அழுத்தப்பாடு.

**rig'ours**, *n. pl.* கடும் நடவடிக்கைகள்; வன்கடுமைகள்.

**rig'-out**, *n.* ஒப்பனை ஆடையணித்தொகுதி.

**rig'-up**, *n.*=rig-out.

**riks'dag**, (சுவீ.) *n.* சுவீடன் நாட்டுப் பார்லிமெண்டு, ஸ்வீடிஷ் மாமன்றம்.

**rilie'vo**, (இத்.) *n.*=relievo.

**rille**, *n.* (வான்.) திங்கட் பரப்புப் பள்ளத்தாக்கு.

**rillettes'**, **rilletts'**, *n. pl.* பன்றிக்கறித் துவரன், பன்றி இறைச்சி-கோழிக்குஞ்சு நிணம் முதலியவை கலந்த கொத்துக்கறி.

**rim**[1], *n.* ஓரம், விளிம்பு; வட்ட ஓர விளிம்பு; திண்ணிய கரை விளிம்பு; புடைப்பான விளிம்புக் கரை; நீருருளையின் வெளிவிளிம்பு; சல்லடைச்சட்டம்; (கப்.) நீர்ப்பரப்பு; (செய்.) வளையம், வட்டவடிவப்பொருள்; *v.* வட்டவடிவ விளிம்பு இணைவி; ஓரம் அமைவி; விளிம்பாக அமை; ஓரமாக இயலு; (தொ.) golden rim, முடி, மகுடம்.

**rim**[2], *n.* (உறு.) வபை, அகட்டு உள்வரிச்சவ்வு, அடிவயிற்று உட்பகுதியைச் சூழ்ந்துள்ள நீரடங்கிய இரட்டைச் சவ்வுப் பை.

**rim'-brake**, *n.* சக்கர ஓரத் தடுப்புக்கட்டை.

**rime**[1], *n.*, *v.*=rhyme[1, 2].

**rime**[2], *n.* (செய்.) வெண்ணுரைபோன்ற உறைபனிப் படிவு; *v.* வெண்ணுரைபோன்ற உறைபனிப் படிவால் மூடு.

**rim'er**, *n.* உலோகத்துளையிடு கருவி.

**Rimm'on**, *n.* டமாஸ்கஸில் (Damascus) வணங்கப்பட்ட பண்டைத்தெய்வம்; (தொ.) bow down in the house of Rimmon, உள்ளார்ந்த கோட்பாட்டில் விட்டுக்கொடுத்துச் சமரசஞ் செய்.

**rim'ose**, **rim'ous**, *a.* (தாவ.) முழுதும் இடைப்பிளவுகள் கொண்ட.

**rind**, *n.* புறணி, தாவரங்களின் பட்டை; பழத்தோல்; காய்கறிகளின் புறத்தொலி; பாலேடு முதலியவற்றின்மேல் தோடு; பன்றியிறைச்சியின் மேல்தொலி; புறத்தோற்றம், மேற்புறம்; *v.* பட்டை உரி.

**rin'derpest**, *n.* கோமாரி.

**ring**[1], *n.* மோதிரம்; வளையம்; மூக்குவளையம்; கைவளையம்; சுற்றுப்பட்டை; கம்பிவளையம்; சுற்றுவளையம்; சுற்றுவிளிம்பு; வட்டு, வட்ட அமைவு; மேசைத்துண்டு பொருத்திவைக்கும் மரவட்டு; சங்கிலிக்கவசக்கண்ணி; வட்டவழி, திருகுநெறி; மரங்களின் சாலைவட்டம்; வட்டரங்கு; காட்சியரங்கு; மற்போர் அரங்கு; போட்டிப்பந்தய வளைவு; வட்டக்கோட்டை, வட்ட அரண் கட்டுமானம்; வளைய அடையாளம்; வரைவளையம்; மரப்பட்டையில் சுற்றுவரி வெட்டு; வெட்டு மரவரி வளையம்; மரத்தின் ஆண்டு வளர்ச்சி குறித்த வளையவரை; புற்கரணைமீது காளான் படர்வரை; புழுவின் உடல் வளையம்; சுரிப்பு, தோல் சுருக்கம்; புகையின் சுருள்; சுருளலை; அலைத்தடம்; நீரலைவட்டம்; தனிமுறைக்குழு; மக்கள் தனிக்கும்பு; வணிகர் தனிக்கூட்டு; அரசியல்வாதிகளின் கூட்டணி; (இய.) அணுவின் முற்றுக்கோவை; (வான்.) சனிக்கோளின் தட்டுவளையம்; *v.* மோதிரம் அணிவி; சூழ்ந்திரு; சுற்றிவளை; சுற்றிச்சுற்றிச்செல்; வளையமாகச்சுற்று; வேட்டையில் சுற்றிக் கலைத்து ஒருபுறமாகத் துரத்து; வேட்டையில் நரிவகையில் சுற்றியோடு

பருந்து முதலியன வகையில் வட்டமிட்டெழு ; எருதுவகையில் வளையத்தில் மாட்டு ; பன்றிவகையில் மூக்கில் வளையம் மாட்டு ; மரப்பட்டையில் சுற்றுவரி வெட்டிடு ; வட்டரங்கில் அமைவுறு ; வட்டரங்கில் கூடு ; வளையம்போல மாட்டு ; வட்டுவட்டாக அரி ; (தொ.) hold the ring, keep the ring, காட்சிகளைக் கவனித்துக்கொண்டு பிறர் தலையிடாமற் பார்த்துக்கொள் ; make rings round, மற்றவரைவிட விரைவாகச்செல் ; மற்றவரைவிட விரைவாகச் செயலாற்று ; ride at the ring, tilt at the ring, சவாரி செய்துகொண்டே தொங்கும் வளையத்தில் ஈட்டி எறி ; ring the shed, ஆஸ்திரேலிய வழக்கில் ஆட்டுமயிர் கத்தரிக்கும் போட்டியில் வெற்றிபெறு; the ring, குதிரைப்பந்தயப் பணய வாழ்க்கையர்.

ring[2], *n.* மணியடிப்பு ; மணியடிப்பொலி ; மணியோசை ; தொனி, குரலின் தனிப்பண்பு ; மணியடிப்பதுபோன்ற ஒலி ; நாதம், நாணயத்தின் கண்கண் என்ற அதிர்வொலி ; உலோகம் முதலியவற்றின் தட்டொலி; தொலைபேசி அழைப்பு மணி ஒலி ; *v.* மணி அடி ; மணிகளின் ஒலி எழுப்பு ; மணி வகையில் அதிர்வொலி எழுப்பு ; மணி ஓசை எழுப்பு ; தெளிவான உரத்த குரல் எழுப்பு ; இடவகையில் எதிரொலி செய் ; காதில் அதிர்வுற்று முழங்கு; காதுவகையில் மணி அடிப்பது போன்ற உணர்ச்சிபெறு ; நாணயத்தைச் சுண்டிப்பார் ; நாணய வகையில் சுண்டொலி எழுப்பு ; மணியடித்து நேரங் காட்டு ; மணியடித்து அழை ; வேலையாளை வரவழைக்க மணியடி ; தொலைபேசி வகையில் மணியடித்து அழைப்பாணை தெரிவி ; வரவு அல்லது போக்கு வகையில் மணியடித்து அறிவி ; (தொ.) ring at door, வாயில் அழைப்பு மணியடி ; ring bob major, எட்டுமணிகளை அடித்துத் தனிக்குறிப்பு இசைப்பு ஒலியெழுப்பு ; ring curtain down, நாடக அரங்கில் திரை இறக்கும்படி ஆணையிடு ; ring curtain up, நாடக அரங்கில் திரை தூக்கல் ஆணையிடு; ring false, தட்டிப் பார்த்ததில் போலியாகக் காணப்பெறு ; பண்பில் போலியாயிரு ; ring in, திருக்கோயிலில் இறுதிநேர அழைப்பு மணி அடி ; மணியடித்துப் புத்தாண்டுப் பிறப்பினைத் தெரிவி ; ring in one's ears, காதில் ஒலித்துக்கொண்டிரு ; ring in one's heart, நினைவில் வட்டமிட்டுக்கொண்டிரு ; ring off, தொலைபேசிப் பேச்சுத் தொடர்பை நிறுத்திவிடு ; ring out, மணியடித்துப் பழைய ஆண்டு கழிதலைத்தெரிவி; திடுமெனத் தெளிவாக உரத்த ஒலியெழுப்பு ; ring the bell, ஏவலாளை அழைப்பதற்காக மணியடி ; பெருவெற்றியடை ; கருத்துப் பொருள் தொடர் தொடங்கு; கருத்துப்பொருள் தொடருடன் ஒத்தியலு ; ring the bells backward, மணிகள் ஒத்திசைக்கும் ஒழுங்குமுறையை மாற்றியடி ; ring the changes, மணியடிப்புப் பாணியின் எல்லாத் திறங்களையும் கோவைப்படுத்தி அடி ; ஒருசிலவற்றையே மாற்றிமாற்றித் தொடர்ந்துசெய் ; ring the knell of, ஒழிப்பு அறிவி ; ஒழிப்பின முன்னறிவி ; ring true, தட்டிப்பார்த்ததில் நல்லதாகக் காணப்பெறு ; தனக்குரிய தனிச் சிறப்புப் பண்புடையதாயிரு ; ring up, மணியடித்து தொலைபேசியில் வந்து பேசச்செய்; ring up bell, கோயில்மணியை உயர்த்தி அடி.

ring'-bark, *v.* சுற்றுவரி வெட்டு, மரப்பட்டையில் வளையங்கள் வெட்டு.

ring'-bolt, *n.* வளைய மரை.

ring'-bone, *n.* எலும்புக் கரணை ; எலும்புக்கரணை நோய்.

ring'-cart'ilage, *n.* குரல்வளைக் குருத்தெலும்பு.

ring'-dove, *n.* காட்டுப்புறு வகை.

ringed[1], *a.* வளையத்தாற் சூழப்பட்ட ; வளையம்போன்ற அடையாளமுள்ள ; மோதிர வடிவமுடைய ; வளையங்கள் கொண்டுள்ள.

ringed[2], *v.* ring[1] என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

rin'gent, *a.* வாய் பிளந்துகொண்டிருக்கிற, இளிக்கிற ; (தாவ.) அங்காத்திருக்கிற.

ring'er, *n.* எறிவட்டாட்டத்தில் முளையைச்சுற்றி விழுந்து படியும் வளையம் ; வேட்டையில் வட்டமாக ஓடும் நரி ; மணியடிப்பதற்கான அமைவு.

ring'-fence, *n.* சுற்றடைப்புவேலி.

ring'-finger, *n.* மோதிரவிரல்.

ring'-goal, *n.* எறிகண்ணியாட்டம், கழிகளைக்கொண்டு சிறு வளையத்தை இலக்குநோக்கி எறியும் விளையாட்டுவகை.

ring'hunt, *n.* தீவளையவேட்டை, நெருப்பு வளையத்தைக் கொண்டு விலங்குகள் உட்பக்கம் துரத்தப்படும் வேட்டை முறை.

ring'leader, *n.* கலகத்தலைவன்.

ring'let, *n.* சிறுமோதிரம் ; காளான் படர்வால் ஏற்படும் கருநிறப் புல்வட்டம் ; மோதிரவடிவ அடையாளம் ; பனிச்சை, மயிர்ச்சுருள்.

ring'-lock, *n.* வளையப்பொருத்தப் பூட்டு, பல்வளையங்களைச் சரியாகப் பொருத்துவதன்மூலமே திறந்துமூடப்படும் பூட்டு வகை.

ring'-man, *n.* குதிரைப்பந்தயப் பணய வாழ்க்கையர்.

ring'-master, *n.* வட்டரங்கு மேலாளர்.

ring'-neck, *n.* மணிப்புரு ; மணிக்குருவி, கழுத்தில் வளையம் போன்ற அடையாளமுடைய குருவிவகை.

ring'-necked, *a.* கழுத்தைச்சுற்றி வண்ணப்பட்டையுடைய; கழுத்தில் வண்ணப்பட்டைகளையுடைய.

ring'-net, *n.* மீன்வலை வகை.

ring'-snake, *n.* சுருட்சிப் புல்வெளிப் பாம்பு வகை.

ring'-stand, *n.* மோதிர நிலைமாட்டி, விரல்மோதிரங்களை மாட்டி வைப்பதற்கான நிலைச்சட்டம்.

ring'-straked, *a.* (விவி.) உடம்பைச்சுற்றி வண்ண வளையங்களையுடைய.

ring'tail, *n.* நீலப்பருந்துவகையின் பெடை ; மூன்று வயதுக் குட்பட்ட கழுகு ; சுருள்வால் பூனைவகை.

ring'-tailed, *a.* பலவண்ண வளைய வாலுடைய ; நுனியிற் சுருண்ட வாலுடைய.

ring'-taw, *n.* வட்டக் கழற்சி ஆட்டம்.

ring'-the-bull, *n.* எறிவளையாட்டம், கொக்கி நோக்கி வளையம் எறியும் விளையாட்டுவகை.

ring'-wall, *n.* சுற்று அடைப்புச்சுவர்.

ring'-worm, *n.* படர்தாமரை நோய்.

rink, *n.* பனிக்கல் சறுக்காட்டத் திடல் ; பனிச்சறுக்காட்டக் களம் ; *v.* உருளை மிதியடியுடன் பனிப்பரப்பில் வழுக்கியோடு.

rinse, *n.* அலசுதல், அலம்பிக்கழுவுதல் ; *v.* அலம்பிக்கழுவு ; அலசிக்கொப்புளி, அலசிச் சுத்தம்செய் ; மேலாக ஊற்று ; இலேசாகக் கழுவு ; சவர்க்காரம்போக நீரில் தோய்த்து எடு ; அலசி அழுக்குப்போக்கு ; பருகி அருந்தியதை உட்செலுத்து.

ri'ot, *n.* கலகம் ; குழப்பம் ; ஒழுங்குக்கேடு ; அமைதிக்கேடு ; சட்டமீறிய செயல் ; கட்டறுத்த நடை ; மனம்போனபோக்கு; உணர்ச்சிக்கொந்தளிப்பு ; இன்பக் களியாட்டம் ; விருந்தாட்டக்கூத்து ; அமளி, ஆர்ப்பாட்டம் ; கும்மாளம் ; நெறிதவறின வாழ்க்கை ; கூடா ஒழுக்கம் ; வேட்டையில் வரையறையின்றிக் கண்டமோப்பம் பின்பற்றுதல் ; *v.* கலகஞ் செய், கலகத்தில் ஈடுபடு ; அமளிபண்ணு, ஆர்ப்பாட்டஞ் செய் ; கூத்தடி, கும்மாளமடி ; களியாட்டயர் ; வீணுகக் காலங்கழி ; நெறிதவறி வாழ் ; பணத்தை ஊதாரித்தனமாக செலவழி ; (தொ.) read the Riot Act, கலகச் செயலை நிறுத்திக் கலைந்துவிட வேண்டுமென்ற எச்சரிக்கைசெய் ; பெற்றோர் வகையில் அமைதி காக்கும்படி பிள்ளைகளுக்கு ஆணையிடு ; நடவடிக்கைகளை நிறுத்தும்படி எச்சரிக்கைசெய் ; run riot, மட்டின்றிச் செயலாற்று ; கட்டுப்பாடு மீறி நட ; நாவின் வகையில் எல்லைமீறிப்பேசு ; கற்பனைவகையில் வரம்பு கடந்து செல்.

ri'otous, *a.* பெருங்கலகஞ் செய்கிற ; பெருங் கலகத்தில் ஈடுபட்டுள்ள ; வரம்புமீறின ; ஒழுக்கங்கெட்ட ; அழிவழக்கான; சட்டம் மீறும் இயல்புள்ள ; சந்தடிமிக்க.

**rip**[1], *n.* பயனற்ற குதிரை; நோஞ்சல் குதிரை; குறும்புக் குதிரை; ஒழுக்கக்கேடன், கயவன்.

**rip**[2], *n.* பிளப்பு, கிழிப்பு; பிளவு, கீறல்; நீள்வெட்டு, நீள வாட்டில்பிளவு; *v.* வெட்டிப்பிள; கிழித்தெடு; கட்டையை நீளவாட்டில் வெட்டு; பாறையைப்பிள; பிளப்புறு; கிழிவுறு; திடுமென அறுந்து வந்துவிடு; ஓடு-வரிச்சல்களைப் பிரித்தெடு; பிளந்து இடைவெளி உண்டுபண்ணு; துளைத்து வழிசெய்; புண்ணைக் கிளறு; சண்டையைத் தூண்டிவிடு; பழைய செய்தியைக் கிளறு; துன்பத்தைக் கிளறிவிடு; கப்பல் வகையில் பாய்ந்துசெல்; தடுக்கமுடியா வேகத்துடன் முன்னேறு.

**rip**[3], *n.* அலைப்புற்ற கடல்நீர்ப்பரப்பு; கொந்தளிக்கும் ஆற்று நீர்ப்பரப்பு.

**ripar'ian**, *n.* ஆற்றங்கரை நில உரிமையாளர்; *a.* ஆற்றுப் படுகை சார்ந்த; ஆற்றங்கரையிலுள்ள.

**rip'-cord**, *n.* வான்குடை திறந்துகொள்ளச் செய்யுங்கயிறு.

**ripe**, *a.* விளைந்து முதிர்ந்த; காய் முற்றிய, பழுத்த; கனிந்த; தின்பதற்குரிய நலம் வந்துற்ற; அறுவடைக்குரிய செவ்வியுற்ற; பயன்படுத்துவதற்குரிய நிலையுற்ற; பருகுவதற்கு வாய்ப்பாயிருக்கிற; செயல் தொடர்பு கொள்வதற்குத் தகுதியுற்ற; முழு வளர்ச்சியடைந்த; பக்குவமான; தக்க பருவமுற்ற; செயல்முற்றிய; முன்னெருக்கங்கள் நிறைவுற்ற; செயலுக்கு ஆயத்தமான; ஆயத்த நிலையிலுள்ள; தகுதி முழுதும் பெற்ற; *v.* (செய்.) பழு, பழுக்கவை; (தொ.) persons of riper years, முதிர்ந்த அனுபவமுள்ளவர்கள்; soon ripe soon rotten, பிஞ்சிற் பழுத்தால் வெம்பிப் போம்.

**rip'en**, *v.* பழு; பழுக்க வை; முதிர்வுறு; அனுபவம்பெற்றுத் தேர்வுறு.

**riposte'**, *n.* வாட்போரில் விரைந்த எதிர்க்குத்து; எதிரடி, சுடுசொற் பதில், திறமையான நொடிப்பு விடை; *v.* விரைந்து எதிர்த்தாக்குதல் செய்; திறமையான எதிர்விடை கூறு.

**ripp'er**, *n.* கிழிப்பவர்; வெட்டிப்பிளக்கும் பொருள்; கூரையிலிருந்து ஓடு பிரிப்பதற்கான கருவி; சிராயடுக்குப்போக்கில் கட்டையை அறுப்பதற்கான இரம்பம்.

**ripp'ing**, *a.* (பே-வ.) நேர்த்தியான, மிகச்சிறந்த, இன்ப நுகர்ச்சிக்குரிய; முதல்தரமான; *adv.* மிகச்சிறந்ததாக.

**rip'ple**[1], *n.* சணல்வாரி; *v.* சணல் வாரியால் விதையகற்று.

**rip'ple**[2], *n.* சிற்றலை, அதிர்வலை; மயிர் அலையமைவு; இழைக்கச்சை அலைவளைவு; அலை எழுந்து விழும் இன்னொலி; *v.* நீர்ப் பரப்புவகையில் அலைப்புறு; சிற்றலைகளாக்கு; சிற்றலைகளாக அதிர்வுறு; அலைவரிகள் தோற்றுவி; சலசல ஒலிசெய்.

**rip'ple-cloth**, *n.* அலைவரித் துகில்.

**rip'ple-mark**, *n.* (மண்.) அலைப்பரிப்படையாளம், முன்னூழி நீர் அலைப்பினுல் அல்லது காற்றுவீச்சினுல் அடிநிலப் பாறையடுக்குகளில் தோன்றும் அரிப்புத்தடம்.

**ripp'let**, *n.* சிறு குறுந்திரை.

**rip'-saw**, *n.* பிளப்பு இரம்பம்.

**Ripuar'ian**, *a.* ரைன் ஆற்றங்கரையில் வாழ்ந்த பண்டைப் பிராங்குகளின் இனத்தைச் சார்ந்த; (தொ.) Ripuarian law, ரைன் ஆற்றங்கரையில் வாழ்ந்த பண்டைப் பிராங்குகள் கடைப்பிடித்த சட்ட ஒழுங்குமுறைத் தொகுதி.

**Rip van Win'kle**, *n.* பத்தாம் பசலிப்பேர்வழி, வழக்கிறந்த கொள்கையினர்.

**rise**, *n.* எழுச்சி, கதிரவன் தோற்றம்; தோற்றுவாய், ஆற்றின் பிறப்பிடம்; மேடு, குன்று; திடர், தேரி; பாதையேற்றம்; உயர்வு, முன்னேற்றம்; தோற்றம்; படி உயர்ச்சி; பதவி மேம்பாடு; மதிப்புயர்வு; விலையேற்றம்; கூலியேற்றம்; குரல் உயர்ச்சி; மீன்வகையில் நீர்ப்பரப்பிற்கு உயர்ந்துவரல்; வில் வளைவின் குத்துயர்ச்சி; படியின் நிலைக்குத்துப் பகுதி; *v.* எழு; பள்ளியெழு; உயர்; நிலத்தினின்று மேலெழு; உயரப் பற; வானிலெழு; மேன்மேல் உயர்ந்துசெல்; மேலே செல்; மேல்நோக்கிச் சாய்வாயிரு; வணக்கமுறையில் எழு; எழுந்து நின்று வரவேற்றுப் பாராட்டு; உயிர்த்தெழு; கூட்ட அமர்வு முடித்தெழு; மன்ற அமர்வு முடிவுறு; நிமிர்; நிமிர்ந்திரு; கிளம்பு; துள்ளு; ஆற்றுவகையில் பிறப்பிடமாகக் கொண்டெழு, புறப்படு; மேலெழுந்து தோன்று; வெளிப்படு; முனைப்பாகு; வளர்ச்சியுறு; ஓங்கு; மேம்படு; முன்னேறு; மேல்நிலை அடை; உயர்வுறு; பெருக்கமுறு; மேன்மேலும் மிகுதியாகு; பொங்கு; இயங்கத்தொடங்கு; விழித்தெழு; எழுச்சிகொள்; எழுச்சியுறு; மனத்தில் தோன்று; அமைதி குலைத்தெழு; வீறுகொண்டெழு; பணிவகற்றியெழு; கிளர்ந்தெழு; மீறியெழு; கிளர்ச்சி செய்; கலகஞ்செய்; சீறியெழு; வெறுத்தெழு; விளைவாகு; உண்டாகு; விளைவாகப்பெறு; தகுதி பொருந்தப்பெறு; (கப்.) உச்சியிலிருந்து அடியாகத் தோன்றப்பெறு; (தொ.) on the rise, விலை வகையில் ஏறிக்கொண்டே செல்லும் நிலையில்; rise above petty jealousies, அற்ப மன வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டவராயிரு, பெரும்போக்காயிரு; rise from the ranks, பொதுப் படைவீரர் நிலையிலிருந்து முயன்று ஆணைபெற்ற அதிகாரியாக மேம்பாடுறு; தன் முயற்சியினாலேயே உயர்; rise in the world, மேம்பட்ட சமூகப் படித்தரம் எய்து; rise to the occasion, நெருக்கடி நிலையைச் சமாளிக்கும் ஆற்றலுடையவராயிரு; take rise, உண்டாகு, தோன்று, தொடக்கங்கொள்.

**ris'er**, *n.* படுக்கையிலிருந்து எழுந்திருப்பவர்; எழுவது; இரண்டு படிகளின் மேற்பரப்புக்களை இணைக்கும் செங்குத்துப் பகுதி.

**risibil'ity**, *n.* சிரிப்பாற்றல்; சிரிப்பு விருப்பம்; சிரிப்பு.

**ris'ible**, *a.* சிரிக்கும் பாங்குடைய; நகைப்புச் சார்ந்த.

**ris'ing**, *n.* எழல், எழுந்திருத்தல்; உயருதல், உயர்ந்து செல்லுதல்; ஏற்றம்; அதிகரிப்பு, பெருக்கம்; மேற்பரப்பிற்கு வருதல்; முன்னேற்றம்; தோற்றம்; மறு உயிரெழுச்சி; இயேசுநாதரின் திருமீட்டெழுச்சி; கிளர்ச்சி; கலகம்; கட்டி, பரு, கொப்புளம்; *a.* ஏறுகிற; பெருகுகிற; உதிக்கிற, அடிவானத்துக்குமேலே வருகிற; முன்னேறுகிற; உயர்ந்து வளருகிற; இனி வளரவிருக்கிற, வருங்காலத்திற்குரிய; குறிப்பிட்ட வயதினை நெருங்குகிற; (தொ.) rising ground, ஏற்றமான மேட்டுநிலம்; the rising generation, வருங்கால மக்களாகிய இளைஞர்கள்.

**ris'ing-again**, *n.* இயேசுநாதரின் திருமீட்டெழுச்சி, மறு உயிர் எழுச்சி.

**risk**, *n.* இடர்வரவு, அபாய நேர்வு; வருநிலை இழப்பு; வருதீங்கு, எதிர்பாரா ஊறுபாடு; இடர்காப்பின்மை, எளிதில் தீங்கிற்கு ஆளாகும் நிலை; விளைவுக்குரிய பொறுப்பு; *v.* இடர்வரவிற்கு உட்படு; இழப்புநேர்விற்கு உள்ளாகு; மேல்வரவு துணிந்திறங்கு; வருவிளைவின் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முனை; (தொ.) at owner's risk, உரியோரது தனிப் பொறுப்பில்; run a risk, run risks, run the risk, take risks, வருமிடர் துணிந்து ஏற்றுக்கொண்டு செயலில் இறங்கு.

**risk'-money**, *n.* காசுக்கணக்கர் படி.

**ris'ky**, *a.* இடர்வரவு நிரம்பிய; அபாயமிக்க; பெருநட்டம் ஏற்படத்தக்க; கதை-நாடக வகைகளில் ஒழுக்கக்கேடு உண்டு பண்ணத்தக்க; மரபுநிலை ஆசாரங்கள் வகையில் புண்படுத்தக் கூடிய.

**risott'o**, *n.* அரிசிப் புழுக்கல்.

*risque*, (பிர.) *a.* கதை-நாடக வகைகளில் ஒழுக்கத்திற்கு ஊறு விளைக்கிற.

**riss'ole**, *n.* ரொட்டி மீன் வறை; இறைச்சி மீன் வறை.

*ritardan'do*, (இத்.) *adv.* இன்னும் மெதுவாக.

**rite**, *n.* கரணம், வினைமுறை, சமயச்சடங்கு; பழக்கவழக்க வினைமரபு; வழிபாட்டுமுறை.

**rit'ual**, *n.* சடங்குமுறை, கரணவியல்; சடங்கு முறையாற்றுகை; வினைமுறை முற்றுவிப்பு; *a.* சமய வினைமுறை சார்ந்த; வினைமுறைகளை உட்கொண்ட; வினைமுறைகளாலான; சடங்கியல்பான.

**rit'ualism**, *n.* சடங்குவெறி.

**rit'ualist**, *n.* சடங்குவெறியர்.

**rit'ualize**, *v.* சடங்கு வினைப்படுத்து; சடங்கார்வங் கொள்

**riv'age**, *n.* (செய்.) கரை, ஓரம்.

**riv'al**, *n.* எதிராள், போட்டியாளர்; காதலில் மாற்றார்; பரிசுவகையில் உடன் போட்டியாளர்; பொது இலக்கு நாடி இகலி நிற்பவர்; எதிர்மாற்றுப் பொருள்; போட்டியான செய்தி; ஒப்பிடுவதற்குரிய பண்பு; *a.* போட்டியிடுகிற; *v.* இகலு, எதிர்த்துப் போட்டியிடு; ஒப்பிடத்தக்கவராயிரு; ஒப்பிடத்தக்கதாயிரு.

**riv'alry**, *n.* இகல், போட்டி; போட்டியிடல்; போட்டிநிலை; போட்டியிடுபவராயிருக்கும் நிலை; போட்டி மனப்பான்மை, போட்டியுணர்ச்சி.

**riv'alship**, *n.* போட்டியிடுதல், ஒப்பாயிருக்க முனைதல்.

**rive**, *v.* கிழி, பிள, விள்ளு; திருகியிழு; வெட்டித்துண்டாக்கு; மேட்டுப் பட்டைகளுக்கான வரிச்சலாகப் பிளந்து எடு; பிளவுறு; அடிபட்டுக் கீறு; பிளவுறத்தக்கதாயிரு.

**riv'el** *v.* சுரிப்புறு; சுருங்கு.

**ri'ven**, *v.* rive என்பதன் முடிவெச்சம்.

**riv'er[1]**, *n.* ஆறு, நதி; வாழ்வுக்கும் சாவுக்குமிடையேயுள்ள எல்லைக்கோடு; ஒழுக்கின் பெருக்கு, தொடர் ஒழுக்கு; *a.* ஆறுசார்ந்த; ஆற்றில் வாழ்கிற; ஆற்றோரமாக வாழ்கிற; ஆற்றில் காணப்பெறுகிற; ஆற்றோரமாகக் காணப்பெறுகிற; (தொ.) river of blood, குருதியாறு; கொடுஞ்செயல் மிகுதி.

**riv'er[2]**, *n.* வரிச்சல் பிளப்பவர், கட்டையைப் பிளந்து மேட்டுப்பட்டை அமைப்பவர்.

**riv'erain**, *n.* ஆற்றங்கரையில் வாழ்பவர்; *a.* ஆற்றிற்குரிய; ஆற்றின் மருங்கு சார்ந்த.

**riv'er-bed**, *n.* ஆற்றுப்படுகை, ஆற்றின் அடித்தரை.

**riv'er-craft**, *n.* ஆற்றுப்படகு.

**riv'er-god**, *n.* ஆற்றுத்தெய்வதம்.

**riv'er-horse**, *n.* நீர்யானை.

**riv'erine**, *a.* ஆற்றின்மேல் உள்ள; ஆற்றினுடைய; ஆற்றோரமான.

**riv'erside**, *n.* ஆற்றோரம், ஆற்றின் கரையடுத்த இடம்; *a.* ஆற்றின் பாங்கருள்ள.

**riv'et**, *n.* குடையாணி, மறுபுறம் தட்டிப் பிணைத்திறுக்குதற்கான ஆணி; *v.* தாழ்ப்பாள் இறுக்கு; ஆணிகளைக்கொண்டு இணை அல்லது பிணை; உறுதியாக்கு, அசையாமல் நிலைப்படுத்து; ஒருமுகப்படுத்து, முழுக் கவனமும் செலுத்து; கவனத்தை முழுதுங் கவர்; கவனம்-பார்வை முதலிய வகைகளில் முற்றிலும் பற்றிப் பிடி.

**riv'eter**, *n.* ஆணி தறைபவர்; ஆணி தறையும் இயந்திரம்.

**riv'iere**, *n.* மணிமாலை; அடுக்கு மணிமாலை, பல கோவை மணிமாலை.

**riv'ulet**, *n.* சிற்றாறு, ஓடை; அந்துப்பூச்சி வகை.

**rix'-dollar**, *n.* (வர.) நாலரை அல்லது இரண்டேகால் ஷில்லிங்கு மதிப்புடைய முற்கால ஐரோப்பிய வெள்ளி நாணய வகை.

**roach[1]**, *n.* வெள்ளி மீன்வகை; (தொ.) as sound as a roach, முழுத்திடமான நிலையில்.

**roach[2]**, *n.* (கப்.) சதுரப்பாயின் அடியிலுள்ள கவிவு; *v.* கவிவுறு; குதிரைப்பிடரிமயிர் வகையில் குறுகத் தறி; குத்து வரியாக நில்.

**roach[3]**, *n.* கரப்பான் பூச்சி.

**roach'-backed, roach'-bellied**, *a.* மேற்கவிவான.

**road[1]**, *n.* பெருஞ்சாலை, ஒழுங்கை; road hog, கண்மூடித்தனமாக உந்துவண்டி அல்லது மிதிவண்டி செலுத்துபவர்; road house, பெருஞ்சாலை அருகிலுள்ள நாட்டுப்புறத் தங்கு மனை; royal road to, பெறுவதற்குரிய நேரான எளிய வழி; rule of the road, நிலம்-நீர்-வானெறிகளில் பாதைவிதி; take the road, புறப்படு; take to the road, ஆறலை செய்; the road, பெருஞ்சாலை.

**road[2]**, *v.* அடி மோப்பந் துணையாகத் தொடர்ந்து செல்.

**road'-book**, *n.* பெருஞ்சாலை வழிகாட்டி ஏடு.

**road'man**, *n.* சாலை செப்பனிடுபவர்; பெருஞ்சாலையர்.

**road'-metal**, *n.* சரளைக்கல்.

**roads**, *n. pl.* தங்குதுறை, கரையோரமாகக் கப்பல் நங்கூரமிட்டு நிற்பதற்குரிய துறை

**road'-sense**, *n.* சாலைச் செவ்வுணர்வு, வண்டியோட்டுந் திறம்.

**road'side**, *n.* பாட்டையோரம்; *a.* மரங்கள்-தங்குமிடம் ஆகிய வற்றின் வகையில் பாட்டையோரத்திலுள்ள.

**road'stead**, *n.* தங்குதுறை, கரையோரமாகக் கப்பல் நங்கூரமிட்டு நிற்கத்தக்க இடம்.

**road'ster**, *n.* தங்குதுறை நாவாய், கரையோரம் நங்கூரம் பாய்ச்சி நிற்குங் கப்பல்; பாட்டையோடி, பாட்டையில் செல்லுதற்குரிய குதிரை அல்லது மிதிவண்டி; அனுபவம் வாய்ந்த பயணி.

**road'way**, *n.* சாலையின் நடுப்பாகம், வாகனவழி.

**road'worthy**, *a.* பெருஞ்சாலையிற் செல்லுதற்குரிய.

**roam**, *n.* திரிதரல்; *v.* சுற்றித்திரி, ஒழுங்கின்றி நடந்துசெல்; திட்டமின்றிப் பயணஞ்செய்.

**roan[1]**, *n.* கபிலைப்பசு, புகர்நிறப் பசு; கபிலைநிறக் குதிரை, புகர்நிறக் குதிரை; *a.* விலங்குவகையில் கபிலைநிறமான, புகர்நிறமான, வெள்ளை-பழுப்புப் புள்ளிகளுடன் கூடிய கருஞ்சிவப்பு நிறத்தினையுடைய.

**roan[2]**, *n.* புத்தகக் கட்டடத்தில் பயன்படுத்தப்படும் பதனிட்ட மெல்லிய ஆட்டுத்தோல்.

**roar**, *n.* முழக்கம்; *v.* முழங்கு; குதிரைவகையில் நோய் காரணமாக மூச்சுவிடும்போது பேரொலி செய்; இடவகையில் பேரொலி நிரம்பியதாயிரு; எதிரொலி முழக்கஞ் செய்; கூட்டவகையில் கம்பலை எழுப்பு; உரத்த குரலில் இரை; கொந்தளிப்பாகப் பாடு; பேரொலியினால் செவிடுபடச்செய்; (தொ.) set table in a roar, மேடையருகே குழுமியிருப்பவர்கள் உரத்துச் சிரிக்கும்படி செய்.

**roar'er**, *n.* பேரொலி செய்பவர்; நோய்காரணமாக மூச்சு விடும்போது பேரொலி செய்யுங் குதிரை.

**roar'ing**, *n.* முழங்குதல்; முழக்கம்; குதிரை நோய்வகை; *a.* முழங்குகிற; கும்மாளமடிக்கிற; குடித்துக்கூத்தாடுகிற, கூச்சலான; கூச்சலிடுகிற; சுறுசுறுப்பான; (தொ.) roaring forties, கடலில் நிலவுலகத் தென் நேர்கோடு 40 பாகைக்குத் தெற்கே மேல்காற்றுப் புயலாக வீசும் பகுதி; roaring night, புயலடிக்கிற இரவு; விருந்துக் களியாட்ட இரவு; the roaring game, பனிக்கல் சறுக்காட்டம்.

**roast**, *n.* இறைச்சி வாட்டல், வதக்கிறைச்சித் துணையுண்டி; *a.* வாட்டப்பட்ட, வதக்கப்பட்ட; மிகுவெப்பமான; *v.* நெருப்பிற் காட்டி வதக்கு; காப்பிக்கொட்டை வறு; தண்டனை வகையில் தீப்பொசுக்கிவிடு; வெதுவெதுப்பூட்டிக் கொள்; இகழ்ந்து பேசு, ஏளனஞ்செய், கேலிபண்ணு; வதக்கப்பெறு; (தொ.) rule the roast, ஆதிக்கஞ் செலுத்து.

**roast'-beef**, *n.* வதக்கிய மாட்டிறைச்சி; (தொ.) roast-beef plant, கசக்கினால் புலால் நாற்றமடிக்கும் இலைகளையுடைய செடிவகை.

**roast'ing-jack**, *n.* மாட்டுகோல், அகப்பைக்கோல்.

**roast'er**, *n.* அனலில் வாட்டுபவர்; வாட்டுவதற்கான சூட்டடுப்பு வகை; கனியத்தை நீற்றுவதற்கான உலை; காப்பிக் கொட்டை வறுக்கும் இயந்திரம்; வதக்குப் பன்றியிறைச்சி; வாட்டுநிலை உருளைக் கிழங்கு.

**roast'-meat**, *n.* வதக்கிறைச்சி; (தொ.) cry roast-meat, எதிர்பாரா நற்பேற்றினை மடத்தனமாகப் பறைசாற்றிக் கொள்.

**rob**, *v.* பற்றிப்பறி, வழிப்பறிசெய், சூறையாடு, கொள்ளையிடு; உரிமை பறிபோக்கு; பறிபோக்குவி; சூறையாகப்பெறு; கொள்ளைகொண்டு போ; (தொ.) rob Peter to pay Paul, கடைத்தேங்காயெடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடை, ஒருவரைக் கெடுத்து மற்றொருவருக்கு நலஞ்செய்.

**robb'er**, *n.* கொள்ளைக்காரன், வலிந்து பறிப்பவன்.

**robb'ery**, *n.* வழிப்பறி, கொள்ளை, சூறை; அச்சுறுத்திப் பறித்தல்; (தொ.) daylight robbery, பகற்கொள்ளை, ஒளிவு மறைவற்ற வழிப்பறி.

**robe**, *n.* தளர்த்தியான மேலங்கி; உடுப்பு; *v.* உடுப்பு அணிவி, அங்கியிடு; உரிய உடை அணி; (தொ.) gentlemen of the robe, வழக்கறிஞர்; the long robe, சட்டத்துறை உடுப்பு; திருக்கோயில் குருமார் உடுப்பு.

**Rob'ert**, *n.* (பே-வ.) காவற்றுறையாள்.

**robes**, *n. pl.* பதவிக்குரிய நீண்ட மேலங்கி, படித்தரம் அறிவிக்கும் சிறப்புடை.

**rob'in, Rob'in**, *n.* மார்பு சிவந்த சிறுபறவை வகை; (தொ.) Robin Goodfellow, குறும்பு வாய்ந்த குறளித் தெய்வம்; Robin Hood, பிரிட்டனின் பேர்போன இடைநிலைக்காலக் காட்டுக்கொள்ளைவீரன்; இடைநிலைக்காலத்துக் காட்டுக் கொள்ளைக்கார வகையினன்; robin redbreast, மார்பு சிவந்த சிறுபறவை வகை; round robin, முதலீறு தெரியாவகையில் இடப்பட்ட வட்டவடிவக் கையெழுத்து விண்ணப்பம்

**Rob'in-run-the-hedge**, *n.* செந்நீல மலர்களும் குண்டிக்காய் வடிவ இலைகளும் உடைய நிலம்படர் கொடிவகை.

**rob'in's-eye**, *n.* கருஞ்சிவப்புச் சிறு மலர்ச் செடிவகை.

**rob'orant**, *n.* (மரு.) தெம்பு மருந்து; *a.* வலுவூட்டுகிற.

**rob'ot**, *n.* இயந்திர மனிதன், மனித உருவில் தானே இயங்கும் பொறி, மனிதனைவிடச் செயல்திறம் மிக்க தானியங்கு பொறி; இயந்திரம்போல் செயலாற்றும் மனிதன்; தானே இயங்குகிற போக்குவரத்து அடையாளக்குறிப் பொறி; பறக்கும் வெடிகுண்டு.

**rob'urite**, *n.* அனற்பிழம்பு வீசா வெடிமருந்துவகை.

**robust'**, *a.* உடற்கட்டுடைய; கட்டுரம் வாய்ந்த; வலுக் குறைவற்ற; வலுவூட்டும் பாங்குள்ள; ஊக்கமூட்டுகிற, வீரியமுள்ள; நல்லுறுதிமிக்க; நேர்மைப்போக்கான, பருமபோக்கான; நுண்ணய நெளிவுகளற்ற; சூதுவாதுகளினால் குழப்பமடையாத.

**robus'tious**, *a.* கூச்சலிடுகிற; ஆர்ப்பாட்டமான; தன் முனைப்புமிக்க.

**roc**, *n.* கதைமரபில் பெரும்பறவை; யானை தூக்கும் பறவை.

**roc'ambole**, *n.* வெங்காய இனச் செடிவகை; ஸ்பானிய நாட்டு வெள்ளைப் பூண்டு.

**roch'et**, *n.* வெள்ளைமேலங்கி.

**rock**[1], *n.* பாறை; பெருங்கல்; கடினத் தின்பண்டம்; (மண்.) கனியக்கூறுகலந்த மண்கலவைப்பகுதி; செறிகடுமை வாய்ந்த தின்பண்டவகை; பாறைகளிற் கூடுகட்டி வாழும் புறுவகை; (தொ.) blue rock, பாறைகளில் கூடுகட்டி வாழும் புறுவகை; built on the rock, founded on the rock, உறுதியான, வன்காப்பான; on the rocks, வறுமையுற்ற நிலையில்; Rock English, ஜிப்ரால்டரில் (Gibralter) பேசப்படும் ஆங்கில மொழி வழக்கு; Rock fever, ஜிப்ரால்டரில் காணும் குடற் காய்ச்சல் வகை; Rock of ages, இயேசுநாதர்; Rock scorpion, ஜிப்ரால்டரில் பிறந்தவர்; ஜிப்ரால்டரில் பிறந்தவரின் காட்டுப் பெயர்; run upon the rock, பாறைமேல் மோதி உடை; திடீர் அழிவு எய்து; see rocks ahead, கப்பல் வகையில் இடர் வருகை முன்னறி; இடர்க்குறி காண்; the Rock, ஜிப்ரால்டர்ப்பகுதி மேட்டுநிலம்.

**rock**[2], *n.* நூற்புக்கழி.

**rock**[3], *n.* அசைவாட்டம்; சிறிதுபோதைய ஊசலாட்டம்; *v.* ஊசலாட்டு; அசைந்தாடு; குலுக்கு; தடுமாறி நட; தங்கம் கலந்துள்ள மண்ணை அரிப்புத் தொட்டியிலிட்டுச் சலி; தங்கம் கழுவுவதற்கான அரிப்புத்தொட்டியை இயக்கு; தங்கம் கழுவுவதற்கான அரிப்புத்தொட்டியிலிட்டு ஆட்டு.

**rock'-bed**, *n.* அடிப்பாறை; பாறைப்பாங்கான அடித்தளம்.

**rock'-bird**, *n.* கடற்பறவை வகை.

**rock'-bottom**, *n.* (பே-வ.) அடிக்கீழ் மட்டம்.

**rock'-cork**, *n.* கல்நார் வகை.

**rock'-crys'tal**, *n.* படிகப்பாறை, நிறமற்ற படிகக்கல் வகை.

**rock'-dove**, *n.* = rock-pigeon.

**rock'-drill**, *n.* பாறை துளைப்புக் கருவி.

**rock'er**, *n.* அசைந்தாடச் செய்பவர்; ஆட்டுபவர்; தாலாட்டுபவர்; தொட்டில் அசைந்தாடச் செய்யுங் கீழ்ச்சட்டம்; பொற்சுரங்க வேலையில் தங்கத்தைக் கழுவும் அரிப்புத் தொட்டி; வளைந்த அலகுடைய சறுக்குக்கட்டை; சறுக்குக் கட்டை விளையாட்டு வகை; (தொ.) off one's rocker, வெறிபிடித்த.

**rock'ery**, *n.* சூரல் வளர்ப்புச் செய்குன்று, சூரல்போன்ற மலை வளர் செடியினங்களுக்காக இடையிடையே மண்பெய்த பாறை அடுக்குக்களின்மீது செயற்கையாக அமைக்கப்பட்ட பண்ணை; பாறை அடுக்கமைவுக் காட்சி.

**rock'et**[1], *n.* குழம்பு வைப்பதற்குப் பயன்படுகிற செடிவகை; மலர்களுக்காக வளர்க்கப்படுகிற செடிவகை.

**rock'et**[2], *n.* உந்து கூண்டு, அக எரிபொருளாற்றலால் தொலைக்கு அல்லது உயரத்துக்கு உந்தப்படும் தாளாலோ உலோகத்தாலோ ஆன நீள்வட்டு; உந்து கூண்டு வாணம்; சமிக்கை உந்துகூண்டு வாணம்; இடர்ப்பட்ட கப்பல்களுக்குத் துணையுதவிக் கயிறு கொண்டுசெல்லப் பயன்படும் உந்து கூண்டு; ஏவுகணை, பீற்றுவளியாற்றலால் இயக்கப்படும் அமைப்பு; *v.* ஏவுகணையினால் தாக்கு; ஏவுகணைபோல வீசி எறி; குதிரை வகையில் மேலெழும்பிக் குதி; குதிரையிவர்பவர் வகையில் பாய்ந்து குதி; வாணம்போல் பாய்ந்து செல்; விலை வகையில் திடீரென ஏறு; வான்கோழி வகையில் நேராக மேல் எழும்பிப் பற, விரைவாகவும் உயரமாகவும் பறந்து செல்.

**rock'etry**, *n.* ஏவுகணை ஆய்வு; ஏவுகணைக் கையாட்சி.

**rock'-goat**, *n.* வரையாடு, மலையாடு.

**rock'-hewn**, *a.* பாறையிலிருந்து குடையப்பட்ட.

**rock'ing-chair**, *n.* அசைந்தாட்டு நாற்காலி.

**rock'ing-horse**, *n.* அசைந்தாடும் விளையாட்டுக்குதிரை

**rock'ing-stone**, *n.* அசைந்தாடும் சமநிலைக் குண்டுக்கல்.

**rock'ing-turn**, *n.* சறுக்குக் கட்டை விளையாட்டு வகை.

**rock'-leather**, *n.* கல்நார் வகை.

**rock'ling**, *n.* சிறுமீன் வகை.

**rock'-oil**, *n.* நில எண்ணெய்; இயல்வரவான ரச கர்ப்பூரம்.

**rock'-paper**, *n.* கல்நார் வகை.

**rock'-ribbed**, *a.* பாறை விளிம்புகளையுடைய; வலுவான, உறுதியான, உறுதியாக நாட்டப்பட்ட.

**rock'-rose**, *n.* மஞ்சள் அல்லது இளஞ்சிவப்புநிற மலர்ப் புதர்ச்செடி வகை.

**rock'-sal'mon**, *n.* சிறு சுறாமீன் வகை.

**rock'-salt**, *n.* இந்துப்பு, கல்லுப்பு, அதிசாரம்.

**rock'-shaft**, *n.* இயந்திரங்களிற் சுழலாமல் முன்னும் பின்னும் அசைந்தாடுந் தண்டு, அசையுந் தண்டு.

**rock'-staff**, *n.* கொல்லன் துருத்தி விசைத்தண்டு.

**rock'-sucker**, *n.* விலாங்குபோன்ற கடல்மீன் வகை.

**rock'-tar'**, *n.* நில எண்ணெய்.

**rock'-whistler**, *n.* ஆல்ப்ஸ் மலைகளில் வாழும் அணில் போன்ற கொறிவிலங்கு வகை.

**rock'-wood**, *n.* கல்நார் வகை.

**rock'-work**, *n.* = rockery.

**Rock'y**[1], *n.* வட அமெரிக்க மலைத்தொடரின் பெயர்; *a.* வட அமெரிக்க மலைத்தொடருக்குரிய; (தொ.) Rocky Mountain goat, வட அமெரிக்க ஆட்டியல் மான்வகை; the Rockies, the Rocky Mountains, வட அமெரிக்க மலைத் தொடர்.

**rock'y**[2], *a.* பாறைகள் நிறைந்துள்ள; பாறை போன்ற; பாறைப் பாங்கான; பாறைபோல் உறுதியான; கரடுமுரடான.

**rock'y**[3], *a.* அசைந்தாடும் பாங்குள்ள; நிலையற்ற, தள்ளாடுகிற; ஆட்டங் கண்டுவிட்ட; குடிவெறியிலுள்ள; மனநிறைவளிக்காத, அருவருப்பான.

**rococ'o,** *n.* மிகு ஒப்பனைக் கலைப்பாணி, மலர்போன்ற உருவரை ஒப்பனைக் கலைப்பாணி; *a.* 1730 முதல் 1780 வரையில் ஐரோப்பாவில் நடைமுறையிலிருந்த கலைப்பாணி சார்ந்த; மனைப்பொருள்கள்-சிற்பம் முதலியவற்றின் வகையில் மிகு ஒப்பனையார்ந்த, மலர் போன்ற உருவரை ஒப்பனை செய்யப்பெற்ற; இலக்கிய நடைவகையில் அணிநயவளமார்ந்த; பழமைப்பட்ட, காலங்கடந்த.

**rod,** *n.* கழி, கோல்; மாத்திரைக்கோல்; செங்கோல்; அதிகாரச்சின்னம்; சாட்டை; அடிக்குங் கோல்; பிரம்புக்கட்டு; தண்டனைச் சின்னம்; பிரம்பு அல்லது பிரம்புக்கட்டுவடிவான தண்டனைச் சின்னக் குறியீடு; தூண்டில்; (உட.) கழி வடிவக் கட்டமைவு; உலோகக் கம்பி; இணைப்புக்கோல், இணைப்புத்தண்டு; இயந்திர நீளுருளை; அளவுகோல்; 11 முழ நீளம், நில அளவை அலகு; 121 சதுர முழப்பரப்பலகு; செங்கற்கட்டுமான வகையில் பரும அலகு, 306 கன அடி அல்லது 1½ அடி கனமுள்ள 272 சதுர அடி; (தொ.) a rod for one's own back, தன்தலையில் தானே வாரிப் போட்ட மண்; விலைக்குவாங்கிய சங்கடம்; Black Rod, பிரிட்டனின் பெருமக்கள் மன்றக் கட்டியர்; கோவள்ளுவரின் வேலைக்காரர்; have a rod in pickle for, உரிய காலத்தில் ஒறுத்தற்கு ஒருக்கமாயிரு; kiss the rod, தண்டனையைப் பணிவுடன் ஏற்றுக்கொள்; Napier's rods, கழிகளின் உதவி கொண்டே பெருக்குவதற்கும் வகுப்பதற்கும் ஜான் நேபியர் (1550-1617) கண்டுபிடித்த புத்தமைவு; spare the rod and spoil the child, பரிந்த இடம் பாழ், அடி உதவுவதுபோல் அண்ணன் தம்பி உதவமாட்டார்; the rod, பிரம்புத் தண்டனை.

**rode**[1], *v.* காட்டுக்கோழி வகையில் மாலைநேரத்தில் நிலம் நோக்கிப் பறந்து வா; கானுங்கோழி வகையில் இனப் பெருக்கப் பருவத்தில் மாலைநேரத்திற் பறந்துசெல்.

**rode**[2], *v.* ride என்பதன் இறந்தகாலம்.

**rod'ent,** *n.* கொறி விலங்கு; *a.* கொறிக்கிற; கொறிவிலங்கினஞ் சார்ந்த.

**rode'o,** *n.* கால்நடை வளைப்பிடம், சூடிடப்படுவதற்காகக் கால்நடைகள் வளைத்து வைக்கப்படுமிடம்; கால்நடை வளைப்பு; மாடோட்டியின் வளைப்புத்திறம்; மிதி உந்து வாணரின் கரணவேடிக்கை.

**rod'man,** *n.* தூண்டிலாளர்.

**rodomontad'e,** *n.* வீம்புப் பேச்சு, வீறுப்புரை; *a.* வீம்பு பேசுகிற, பெருமையடித்துக்கொள்ளுகிற; *v.* வீறுப்பு பேசு, பெருமையடித்துக்கொள், வீம்படித்துக்கொள்.

**rodomontad'er,** *n.* வீம்புரையாளர், வீறுப்புக்காரர்.

**rod'ster,** *n.* தூண்டிலாளர்

**roe**[1], *n.* சிறுமான்வகை; செங்கிற மானின் பிணை; சிறு மான் குழு; சிறுமான்கள்.

**roe**[2], *n.* மீன் சினைப்பு, மீன் முட்டைத் தொகுதி; ஆண் மீனின் விதை; ஆண் மீனின் கருநீர்; (தொ.) soft roe, ஆண் மீனின் கருநீர்.

**roe'buck,** *n.* இரலை, சிறு மான் கலை.

**roe'-corn,** *n.* மீன் சினை, மீனின் தனிமுட்டை.

**roe'-deer,** *n.* சிறு மான்பிணை.

**roe'-stone,** *n.* முட்டைக்கல், சுண்ண மணிக்கல்.

**roga'tion,** *n.* வேண்டுகோள், பிரார்த்தனை; (வர.) பண்டை ரோமாபுரி அதிகாரிகள் மக்கள்முன் கொணருஞ் சட்டம்.

**roga'tions,** *n. pl.* முந்நாட் பாசுரங்கள், இயேசுநாதரின் வான் செலவு விழா நாளுக்கு முந்தியுள்ள மூன்று நாள்களில் பாராயணஞ் செய்யப்படும் வழிபாட்டுப் பாசுரங்கள்; (தொ.) Rogation days, முந்நாட் பாசுரத்திற்குரிய மூன்று நாள்கள்; Rogation Sunday, முந்நாட் பாசுரத்திற்குரிய மூன்று நாள்களுக்கு முன்னைய ஞாயிற்றுக்கிழமை; Rogation week, முந்நாட் பாசுரத்திற்குரிய மூன்று நாள்கள் அடங்கிய வாரம்.

**Ro'ger,** *n.* நாட்டுப்புற ஆடல்வகை; நாட்டுப்புற ஆடல் இசைவகை; (தொ.) the jolly Roger, கடற்கொள்ளைக்காரரின் கறுப்புக்கொடி.

**rogue,** *n.* போக்கிரி, மோசக்காரன்; கயவன்; வஞ்சகன்; நாற்றுகளில் பறித்தெறியத்தக்க பொலிவற்ற செடி; மந்தையில் முரட்டு விலங்கு; சண்டிப் பந்தயக்குதிரை; குறும்பு வேட்டைக்குதிரை; (தொ.) rogue elephant, அழும்புசெய்யும் திருட்டு யானை; rogues' gallery, காவல் துறையினர் திரட்டி வைத்துள்ள குற்றவாளிகளின் நிழற்படங்கள்; rogues' Latin, குழூஉக்குறி; rogues' march, முரசடித்து வெளியேற்றும் போது வாசிக்கப்படும் ஏளனப்பாடல் இசைமெட்டு.

**rog'uery,** *n.* போக்கிரித்தனம், குறும்பு, மோசடி.

**rog'uish,** *a.* போக்கிரித்தனமான, குறும்பு செய்கிற, கயமைக் குணமுள்ள; கொடிய.

**roist,** *v.* களிக்கூத்தாடு.

**rois'ter,** *v.* பேரிரைச்சலிட்டுக் கூத்தாடு.

**rois'terer,** *n.* பெருங்கூச்சலிடுபவர்.

**Rol'and,** *n.* பிரஞ்சுப் பழங்கதைமரபில் ஆலிவர் (Oliver) என்பவனுடன் உத்தம நண்பனுகப் புகழப்படும் மன்னன் சார்லிமேனின் உடன்பிறந்தார் புதல்வன்; (தொ.) a Roland for an Oliver, பழிக்குப்பழி.

**role,** *rôle,* (பிர.) *n.* நடிகரின் பங்கு; தொழிற்கூறு; தனி மனிதர் கடமைக்கூறு; வாழ்க்கைப்பங்கு.

**roll**[1], *n.* சுருள், துணி-தாள் முதலியவற்றின் நீளுருளை வடிவாகச் சுருட்டிய படிவம்; சுருளோலை, சுருட்டப்பட்ட ஆவணம்; பதிவேடு; பெயர்ப்பட்டியல்; பட்டியல்; தொகுதி; திருகுசுருளப்பம்; பொதியப்ப உருளை; சிறு அப்பப்பாளம்; உருளை; திருகுவட்டு; நீளுருளை வடிவான பொருள்; நீளுருளை வடிவான சிப்பம்; வெண்ணெய்க்கட்டி; சவர்க்கார நீள் பாளம்; வார்ப்பட உருளை; ஏட்டின் அட்டை அச்சிடும் அழுத்த உருளை; கழுத்துப்பட்டை முதலியவற்றின் புறமடி வளைவு; (க-க.) சுருட்போதிகை; (தொ.) Master of the Rolls, பதிவகத் தலைவர்; மேல்நீதிமன்ற நடுவர்; roll of honour, சிறப்புறுவோர் பட்டியல்; strike off the rolls, பெயர்ப்பட்டியலிலிருந்து விலக்கு, குழுவிலிருந்து நீக்கிவிடு; swiss roll, பழப்பாகு உள்ளிட்டு வேகவைத்த சுருளப்பம்; the Rolls, ஆவணச்சேமக் கட்டிடங்கள்; மேல் நடுவரின் நீதி மன்றம்.

**roll**[2], *n.* உருள்வு; சுழற்சி; புரள்வு; சுழல்வாட்டம், சுழலும் பொருளின் சுழல்வான சாய்வாட்டம்; தள்ளாடி இயங்குதல்; தொடர்ந்த ஒலியதிர்வு; முரசின் தொடர்ந்த முழக்கு; இடியின் அடுக்கிய முழக்கம்; சொற்களின் தொடர்சந்த ஒழுக்கு; அலைபாய்வு; அலையியக்கம், அலையின் பின் அலையான தொடர் இயக்கம்; *v.* உருட்டு; உருள்; சுருட்டு; சுருள்; உருட்டித்திரட்டு; உருட்டிச்சேர்; சுருட்டி மடி, சுருட்டிக் கட்டு; உருளையால் அழுத்தித் தட்டையாக்கு; உருளைகளிடையே அழுத்திப் பதப்படுத்து; இடைவைத்து உருளுவி; சக்கரங்கள்மீது இயக்கு; ஊர்தியேறிச்செல்; உருட்டித்தள்ளு; உருண்டோடு; தங்குதடையற்று இயங்கு; சுழற்றித் திருப்பு; சுழன்று திரும்பு; கண் வகையில் சுழற்று; கண்விழிவகையில் உழலு; புரட்டு; புரளு; மிதந்துழலு; நீர்மத்தில் கிடந்து நெளிவுறு; தோய்ந்து கிடந்துருளு; எல்லையிலாவளம் கொழிக்கப்பெறு; குதிரை வகையில் மல்லாந்து கிடந்து கால்களை உதைத்துக் கொள்ளு; அசைந்தாட்டு, ஊசலாட்டு; அசைந்தாடு, ஊசலாடு; தள்ளாடச்செய்; தள்ளாடி நட; அலைபாய்; எழுந்தெழுந்தமிழ்; மேடு பள்ளமாய் இயலு; அலைபாய்ந்தோடு; முழக்கு; முழங்கு; மீண்டும் மீண்டும் அதிர்வொலி செய்; சந்த இசையுடன் தொடர்ந்து இயங்கு; சந்த இசையுடன் தொடர்ந்து படி.

**roll'-call,** *n.* வருகைப் பதிவேடு.

**rolled**, *a.* தகட்டிடை வைத்துப் பொதிந்து இரு உருளை களிடையே அழுத்தப்பட்ட ; தகடுவேய்ந்த ; (தொ.) rolled gold, பொன்முலாம் உலோகம், உலோகத்தின் மேலிடப்பட்ட மெல்லிய பொற்றகடு.

**roll'er**, *n.* உருளுபவர் ; உருளுவது ; மரம்-கல்-உலோகம் முதலியவற்றாலான குழவி ; பாட்டை செப்பனிடும் உருளை ; அழுத்த உருளிக்கட்டை ; அச்சுருளை ; அச்சு மையுருளை ; துணிசுருட்டு கட்டை ; புருவகை ; நீள்சுருளலை ; பளபளப் பான இறக்கையுடைய காக்கை இனப் பறவை வகை; பாடும் பறவை வகை; (தொ.) roller bandage, கட்டுத் துணிச் சுருள்.

**roll'ey**, *n.* பாரப்பொறிவண்டி, நான்கு தட்டை உருளைக் கட்டை வண்டி.

**roll'ick**, *n.* கொண்டாட்டம், களிமகிழ்ச்சி ; குதியாட்டம் ; *v.* கவலையின்றித் திரிந்து விளையாடு.

**roll'ing**, *a.* உருள்கிற; உருண்டோடுகிற; (தொ.) a rolling stone gathers no moss, அடிக்கடி இடமாறித் திரிபவன் செல்வனுகான்.

**roll'ing-pin**, *n.* மாப்பிசைந்து மொத்தையாக்கும் உருட்டு கட்டை.

**roll'ing-press**, *n.* அழுத்துபொறி.

**roll'ing-stock**, *n.* உருள் முதற்றெகுதி, இருப்புப்பாதைமேல் உருண்டுசெல்லும் இயக்கு பொறிகள்-வண்டிகள் முதலான வற்றின் தொகுதி.

**roll'-top**, *a.* மேசை வகையில் மடித்துத் திறந்து மூடக்கூடிய மேற்சட்டங்களையுடைய ; (தொ.) roll-top desk, மடித்துத் திறக்கும் மேற்சட்டச் சாய்மேசை ; வளைந்த சால் வரிகளில் நழுவிச்செல்லும் மூடிச் சாய்மேசை.

**rol'y-pol'y**, *n.* சுருள் பொலி அப்பம், பழப்பாகு மாவடைச் சுருள் அப்பம் ; குட்டைத் தட்டையன்.

***Rom***, (ரோ.) *n.* நாடோடிக்குழுவினர் ; *pl.* *Roma*.

**Roma'ic**, *n.* இக்காலக் கிரேக்க மொழி.

***Roma'ika***, (கிரே.) *n.* இக்காலக் கிரேக்க நடனம்.

**Rom'an**, *n.* பண்டை ரோமாபுரியினர் ; பண்டை ரோமா புரியில் வாழ்ந்தவர் ; பண்டை ரோமாபுரிப் பேரரசின் உறுப் பினர் ; பண்டை ரோமாபுரிவீரர் ; புனித ரோமப் பேரரசின் உறுப்பினர் ; ரோமாபுரி வாழ்நர் ; பொதுமுறை அச்சுரு மாதிரி; *a.* பண்டை ரோமாபுரி சார்ந்த; பண்டை ரோமாபுரி ஆட்சிப் பரப்புச் சார்ந்த ; பண்டைய ரோமாபுரி மக்களுக் குரிய ; பண்டை ரோமாபுரியினரால் ஆக்கப்பட்ட ; பண்டை ரோமாபுரியினர்க்கு இயல்பான ; இடைக்கால ரோமாபுரி சார்ந்த ; போப்பாண்டவர் நேராட்சிக்குரிய எல்லை சார்ந்த ; தற்கால ரோமாபுரிக்குரிய ; அச்செழுத்து வகையில் பொதுவழக்கிலுள்ள இயற்செவ்வுருவான ; (தொ.) Holy Roman Empire, 800-ஆம் ஆண்டில் சார்லிமேன் என்பவரால் புதுப்பிக்கப்பட்ட தூய ரோமப்பேரரசு ; King of the Romans, Emperor of the Romans, தூய ரோமப்பேரரசர் ; Roman alphabet, ரோமர்கள் வழங்கிய நெடுங்கணக்கு வகை, இக்கால மேலை ஐரோப்பிய நெடுங்கணக்கு ; Roman candle, வண்ணவெடிவகை, வண்ணப்பந்துகளை வெளிவிடும் குழல் மத்தாப்புவகை ; Roman nettle, களைச் செடிவகை ; Roman nose, உயர்ந்து சற்றே வளைந்த மூக்கு ; Roman numerals, ரோமர்கள் வழங்கிய எண் இலக்கமுறை ; Roman road, ரோமர் ஆட்சிக் காலத்திலிருந்து வழங்கிவருஞ் சாலை ; Roman School, ராபேல் (Raphael) என்பவரின் முறையைப் பின்பற்றிய வண்ண ஓவியப் பாணி ; Roman vitriol, செப்புக்கந்தகை.

**Rom'an Cath'olic**, *n.* கிறித்தவ ரோமன் கத்தோலிக்க சமயத்தினர் ; *a.* கிறித்தவ ரோமன் கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்த.

**Roman-Cathol'icism**, *n.* ரோமன் கத்தோலிக்க திருச்சபைக் கொள்கை செயலாட்சிமுறைத் தொகுதி.

**Romance'**[1], *n.* லத்தீன் வழிமொழிக்குழு, பண்டை லத்தீனின் வழிவந்த மொழிக்குழு; பிரஞ்சு-ப்ரோவென்ஷல் (Provencal)-இத்தாலியம் - ஸ்பானியம் - போர்ச்சுகீசு - ரொமான்ஷ் - ருமேனியம் முதலிய மொழிகளில் ஒன்று ; பண்டை லத்தீன் வழித்தோன்றிய முற்காலப் பிரஞ்சு மக்கள் பேச்சுமொழி ; *a.* பண்டை லத்தீனின் வழிவந்த மொழிக்குழுவினைச் சார்ந்த; பிரஞ்சு-ப்ரோவென்ஷல் - இத்தாலியம்-ஸ்பானியம் - போர்ச்சு கீசு-ரொமான்ஷ்-ருமேனியம் முதலிய மொழிகளில் ஒன்றைச் சார்ந்த.

**romance'**[2], *n.* முற்கால வீரகாதை, பண்பார்ந்த காதல்-வீர அருஞ்செயல்கள் நிரம்பிய இடைநிலைக்கால வீரகாவியம் ; கட்டற்ற கற்பனைக்கதை ; அருஞ்செயல் வீரப்பண்பு செறிந்த கதை ; வரலாற்றுச் சார்பான ஸ்பானிய மக்கள்பாடல் ; வாயல் புதினம், வியப்பார்வமிக்க அருநிகழ்ச்சிகள் நிறைந்த அகலக்கதை ; வாயல் இலக்கியம், இயல்கடந்த புதுமைக் கற்பனை இலக்கியம் ; வியப்பூட்டும் அருநிகழ்ச்சித் தொடர் ; மருட்கைவாய்ந்த அருநிகழ்ச்சி ; காதற்காவியம்; புத்தார்வக் காதல் வீரவாழ்வு ; கட்டற்ற கற்பனைக் காதல், காதற் கற் பனை ; புத்துணர்ச்சியூட்டுங் காதல் நிகழ்ச்சி ; புதுமைக் காதல் வீரச்சுவை ; புத்தார்வச்சுவை ; புத்தார்வக் கற்பனை நாட்டம் ; புத்தார்வக் கற்பனைச் சார்பு ; புத்தார்வமெழுப்புஞ் சூழற் பின்னணி ; இலக்கியம்-கலை வகையில் புத்தார்வ உணர்ச்சிக் கோட்பாடு ; அழகிய கட்டுக்கதை ; நம்பமுடியா உயர்வு நவிற்சி ; ஆர்வப் பொய்ப்புனைவு ; (இசை.) எளிய கட்டற்ற புதுப்புனைவுப்பாடல் ; *v.* புத்தார்வக்கதை எழுது ; புத்தார்வக்கதை கட்டிப்பேசு ; நீளப் பொய்ப்புனைந்துரை ; மனக்கோட்டை கட்டு; கட்டற்ற உயர்வு நவிற்சி மேற்கொள்; உண்மையை மிகைப்படுத்திக்கூறு.

**roman'cer**, *n.* முற்காலக் கற்பனைக்காதல் வீரகாவியவாணர்; கற்பனைக் கட்டுக்கதையாளர்.

***Rom'anes***, *n.* 'ஜிப்சி' மொழி, நாடோடிக்குழுவினர் மொழி.

**Romanesque'**, *n.* (க-க.) ரோமானிய வழிப்பாணி, பண்டை ரோமாபுரிப் பாணிக்கும் இடைநிலைக்காலத்திய 'காதிக்' பாணிக்கும் இடைப்பட்டநிலையில் வில்வட்ட வளைவுகளும் வளைவுமாடங்களும் மல்கிய சிற்பப்பாணி ; *a.* ரோமானிய வழிப்பாணி சார்ந்த.

**Roman'ic**, *n.* லத்தீன் வழிமொழிக்குழு; லத்தீன் வழிமொழி; *a.* ரோமர் வழிவந்த ; லத்தீன் வழிவந்த ; ரோமநாகரிக வழி மரபுக்குரிய ; லத்தீன் வழிமொழி பேசுகிற.

**Rom'anies, Rom'manies**, *n. pl.* ஜிப்சி இனத்தவர், நாடோடிக் குழுவினத்தவர் ; நாடோடிக் குழுவினர்கள்.

**Rom'anish**, *a.* ரோமன் கத்தோலிக்க வாடையுடைய.

**Rom'anism**, *n.* ரோமன் கத்தோலிக்க சமயக்கோட்பாடு.

**Rom'anist**, *n.* ரோமன் கத்தோலிக்க சமயத்தவர் ; லத்தீன் வழிமொழிக்குழு ஆய்வியலாளர் ; ரோமப் பழமை ஆய்விய லாளர் ; ரோமச்சட்ட வல்லுநர் ; *a.* ரோமன் கத்தோலிக்க சமயஞ்சார்ந்த.

**Roman'ity**, *n.* ரோமப்பேரரசின் நாகரிகம்; ரோமப் பேரரசின் செல்வாக்கு.

**Rom'ans**, *n. pl.* ரோமாபுரியினர் ; பண்டைய ரோமாபுரிக் கிறித்தவர்கள் ; விவிலிய நூலின் புதிய ஏற்பாட்டில் ஒரு பகுதி.

**Romansh'**, *n.* தென்கிழக்கு ஸ்விட்சர்லாந்திற் பேசப்படும் மொழிக்குழு ; *a.* தென்கிழக்கு ஸ்விட்சர்லாந்தின் மொழிக் குழு சார்ந்த ; ரோமான்ஷ் மொழி சார்ந்த.

**roman'tic**, *n.* புனைவியற்பாணியாளர், கலை-இலக்கியத்துறை களில் கட்டற்ற கற்பனைப் பண்பாதரவாளர் ; *a.* வீரகாதைக் குரிய ; காதல்-வீர உணர்ச்சிமிக்க ; காதற்காவியஞ் சார்ந்த ; காதற்கதையின் இயல்புவாய்ந்த ; காதற்காவியத்திற்கு ஏற்ற; காதற்காவியத்தின் சூழற்பின்னணியுடைய; கட்டற்ற புனைவாற்றல் வாய்ந்த ; புத்தார்வக் கற்பனை தூண்டுகிற ; கனவுருக்காண்கிற ; கனவுலகில் உலாவுகிற ; இயல்கடந்த நிகழ்ச்சிகள்கொண்ட ; இயல்பல்லாப் பண்புவாய்ந்த, விசித் திரத் தன்மையுடைய ; எதிர்பாராப் புத்தெழுச்சி தருகிற ;

உணர்ச்சிமுனைப்புடைய ; புதுமை உணர்ச்சிமிக்க ; புத்தார்வ மிக்க ; வியப்பார்வந் தூண்டுகிற ; பல்வண்ணவள முனைப்பு வாய்ந்த ; புனைவியற்பாணி சார்ந்த ; வாய்வியற் கட்டுப் பாடுகளுக்கு உட்படாத ; நடைமுறை உலகுடன் தொடர் பற்ற ; கட்டமைவைக் காட்டிலும் புத்தெழுச்சியில் நாட்டம் மிகவுடைய; முழுமுதலமைதியினும் சினை முனைப்பே கருதிய; (இசை.) எளிய கட்டற்ற புதுப்புனைவான.

roman'tically, *adv.* இயல்பல்லாத நிலையில் ; விசித்திரத் தன்மையுடன் ; உணர்ச்சி வசமாக; காதற்காவியப்பாங்கில்.

roman'tics, *n. pl.* வீரகாவியக் கருத்துக்கள் ; காதற்காவிய உணர்ச்சிகள் ; செயல்முறைக்கு ஒவ்வாத பேச்சு ; கற்பனைக் கனவுகள்.

Rom'any, Romm'any, *n.* ஜிப்சிகளில் ஒருவர், நாடோடிக் குழுவர் இனத்திலொருவர் ; ஜிப்சிமொழி, நாடோடிக் குழுவ ரின் மக்கள் மொழி; *a.* நாடோடிக்குழுவர் இனத்தைச் சார்ந்த.

romaunt', *n.* வீரகாதை.

Rome, *n.* ரோம் ; ரோமாபுரி அரசெல்லை ; ரோமப்பேரரசு ; ரோமாபுரித் திருச்சபை, கத்தோலிக்க திருக்கோயில்; (தொ.) do in Rome as Rome does, do in Rome as the Romans do, ஒப்புரவொழுகு ; Rome was not built in a day, ஆள்வினை யின்றி ஆக்கம் இல்லை.

romp, *n.* பைதலாள், ஓடியாடுஞ் சிறுமி; வலுவு விளையாட்டு, ஆட்டபாட்டம் ; விரை ஓட்டம் ; *v.* குழந்தைகள் வகையில் சேர்ந்து விளையாடு ; துரத்திப்பிடி ; மல்லாடு, சண்டையிடு ; கேளிக்கைவகையில் எளிய வெற்றியடை.

romp'er, romp'ers, *n. pl.* குழந்தை விளையாட்டு அங்கி.

*Roms*, *n. pl.* நாடோடிக்குழுவரின் மக்கள்.

ron'deau, *n.* மண்டலப்பா வகை.

ron'del, *n.* மண்டலிக்கும் பாவகை.

*ron'do*, (இத்.) *n.* பல்லவி வகை ; *pl. ron'dos.*

ron'dure, *n.* வட்டம்.

rone, *n.* கூடல்வாய்.

Ron'eo, *n.* படி எடுக்குங் கருவி ; *v.* படியெடு.

Ront'genogram, *n.* ஊடு கதிர் நிழற்படம்.

Rontgenog'raphy, *n.* ஊடுகதிர் நிழற்பட முறை.

rontgenos'copy, *n.* ஊடுகதிர் நிழற்படக் காட்சியாய்வு.

rontgenother'apy, *n.* ஊடுகதிர் நோய்நீக்கு முறை.

ront'gen rays, *n. pl.* ஊடுகதிர்; ராண்டுஜன் கண்டுபிடித்த நுண் அலைக்கதிர்.

rood, *n.* சிலுவை, இயேசுநாதர் உடல் அறையப்பட்டிருந்த கழுமரம் ; திருக்கோயில் இசைக்கூடத்தின் முன்னுள்ள பீடத்தின்மேல் அமைந்த குருசு ; பதினெருமுழக் கோல் ; பதினெருமுழக் கோற் சதுரம் ; காணிநிலம்.

rood'-arch, *n.* திருக்கோயில் இசைக்குழுக் கூடத்திற்கும் நடுப்பகுதிக்கும் இடையிலுள்ள வில்வளைவு.

rood'-beam, *n.* திருக்கோயில் சிலுவையுருவைத் தாங்கும் மரவிட்டம்.

rood'-cloth, *n.* நாற்பது நாள் நோன்பின்போது சிலுவையை மூடிவைக்குந் திரைத்துணி.

rood'-loft, *n.* திருக்கோயில் திரையிடப் படிமேடை.

rood'-screen, *n.* திருக்கோயில் திரைவகம்.

roof, *n.* கூரை, வீடு-கட்டிடம் முதலியவற்றின் மோடு ; வண்டியின் மூடாக்கு ; உச்சிப்பகுதி ; *v.* கூரையிடு ; கூரை யிட்டு மூடு ; கூரையாக அமை ; (தொ.) roof of the mouth, அண்ணம் ; the roof of the world, மிக உயர்ந்த மலைத் தொடர் ; under one's roof, ஒருவருடைய வீட்டில், ஒருவரது விருந்தினராக.

roof'-board, *n.* கூரை ஓடுகளுக்கு அடியிலுள்ள பலகைச் சட்டம்.

roof'er, *n.* (பே-வ.) விருந்துண்டவர் விருந்தளித்தவர்க்கு விடுக்கும் நன்றிமடல்.

roof'-garden, *n.* மாடித்தோட்டம்.

roof'-tree, *n.* மோட்டுவிட்டம், கூரையின் நீள் குறுக்குக் கட்டை.

rook[1], *n.* காக்கைவகை ; சீட்டாட்டத்தில் ஏமாற்றுக் காரர், அனுபவமற்ற சூதாட்டக்காரர்களை ஏமாற்றிப் பிழைப் பவர் ; *v.* ஏமாற்றிச் சூதாட்டங்களிற் பணங் கெலி ; வாடிக்கைக்காரர்களிடம் கொள்ளையடி; தந்திரஞ்செய்து பறி.

rook[2], *n.* சதுரங்க ஆட்டக் காய்களுள் ஒன்று ; (தொ.) rook pie, காகவகைக் குஞ்சின் இறைச்சி உள்ளீடான பண் ணிய வகை.

rook'ery, *n.* காக வகைகள் வாழிடம் ; காக வகை வாழுஞ் சாலை ; கடல்நாய்க் குடியிருப்பு ; தென்கடற் பறவைவகை யின் தங்கல் வரிசை ; நெருக்கக் குடியிருப்பு.

rook'ie, *n.* புத்தாள்.

rook'ling, rook'let, *n.* காக வகைக் குஞ்சு.

room, *n.* அறை, இடம், வாய்ப்பு, செயல் எல்லை ; வாய்ப் பெல்லை; *v.* அறைகள் வைத்திரு; இடங்கொடு, தங்க இடவசதி செய்துகொடு. (தொ.) in one's room, ஒருவருக்குப் பதிலாக; in the room of, ஒருவரை அடுத்துத்தொடர்ந்து; make room, இடம் ஒழித்துக்கொடு ; பதவி நீங்கு, பின்னுக்குப்போ ; ஓய்வுகொள் ; மற்றவரை நீக்கி இடம் ஒழித்துக்கொடு ; மற்றப் பொருள்களை அகற்றி இட ஒழிவுசெய்.

room'ing-house, *n.* வாடகை அறைகளுள்ள வீடு.

room'-mate, *n.* ஓரறைத்தோழர்.

rooms, *n. pl.* குடும்பத்தார் வசிக்கும் அறைகள், விடுதியில் குடும்பத்தினருக்கான இடம்.

room'y, *a.* இடவசதியுள்ள ; விரிந்தகன்ற.

roost[1], *n.* பறவைப் பொதும்பர்; கோழிக்கூண்டு; *v.* பறவை கள் வகையில் தூங்கு; ஆள் வகையில் சிறு துயில் கொள்ளு; உறங்குவதற்கான இடமளி ; இரவில் தங்கியிரு ; பறவை போல் உறங்கு ; (தொ.) at roost, படுக்கையில் அமர்ந்து ; ஓய்வாகக் குந்தியிருந்து ; curses come home to roost, இட்டவன் மேல் சாபம் திருப்பிக்கட்டும், கெடுவான் கேடு நினைப்பான் ; go to roost, இரவுபடுக்கைக்குச் செல்.

roost[2], *n.* வலிய கடற்சுழி.

roos'ter, *n.* வீட்டுச்சேவல்.

root[1], *n.* வேர் ; வேர்ப்பகுதி ; தழுவு கொடியின் கொளுவி ; பிடுங்கிநடும் இளவேர்ச்செடி ; வேருணவு ; மருந்துவேர் ; (விவி.) கான்முளை, பின்தோன்றல் ; உறுப்பின் அடி இணைப்புப்பகுதி; மணியின் ஒட்டுவாய்; மலையின் அடியுறை; மூலம், தோற்றுவாய் ; மூலகாரணம்; அடிப்படை, ஆதாரம்; தூர், அடிப்புறம் ; தொடர்ச்சி அல்லது வளர்ச்சிக்கான வழி வகை ; இன்றியமையாப்பொருள் ; மூலப்பண்பு ; (கண.) விசைமூலம் ; பெருக்கமூலம்; (மொழி.) வேர்ச் சொல், சொற் பகுதி ; (இசை.) அடிப்படைச் சுரம் ; *v.* வேர்விடு ; வேர் விடச் செய் ; உறுதியாக ஊன்றுவி ; அடிநிலம் பற்றுவி ; நிறுவு, நிலைபெறச்செய் ; வேர்பறித்து இழு ; தோண்டி வேருடன் பிடுங்கு ; (தொ.) lay axe to root of, அழிக்க முற் படு ; pull up by the roots, வேருடன் பிடுங்கு ; root out, வேருடன் அழி ; take root, strike root, வேர்க்கொள்.

root[2], *v.* நிலத்தைக் கிளறு ; கிண்டிக்கிளறு; தேடு; தேடிப் பார்.

root'age, *n.* வேர்க்கொள்ளுதல் ; வேர்க்கொண்ட நிலை ; வேர்களாற் பெற்ற உறுதி ; வேரின்பிடி ; வேர்த்தொகுதி, வேர்ப்பரப்பு.

root'-and-branch', *a.* முழுநிறைவான ; *adv.* வேரோடு, அடியோடு, ஒன்றும்விடாது, முழுவதும்.

root'-cap, *n.* வேர் நுனியுறை.

root'-cause, *n.* அடிப்படைக் காரணம்.

root'-climber, *n.* வேரினைப் பற்றிக்கொண்டு படருங் கொடி.

root'-crop, *n.* உண்ணத்தக்க வேரினையுடைய பயிர்வகை.

**root'ed**, *a.* வேர்க்கொண்ட ; வேர்களினுல் உறுதிபெற்ற ; உறுதியாக நாட்டப்பட்ட ; திடமாகப் பற்றிக்கொண்ட ; நிலை கொண்ட.

**root'edly**, *adv.* உறுதியாக, அசையாநிலையில்

**root'ery**, *n.* வேர்குற்றி மண்ணடைவு.

**root'-fast**, *a.* உறுதியாக வேரூன்றியுள்ள ; நிலையாக ஊன்றிய.

**root'-hair**, *n.* (தாவ.) வேர்த்துய், வேரின் நீருறிஞ்சு பகுதி.

**root'le**, *v.*=root[2].

**root'let, roots**, *n. pl.* சல்லிவேர்.

**root'-par'asite**, *n.* வேர் ஒட்டுத்தாவரம்.

**root'-pressure**, *n.* (தாவ.) வேர் அழுக்கம், செடியின் வெட்டுவாயில் பொங்கி வழியுஞ் சாற்றின் மேனேக்கிய அழுக்க ஆற்றல்.

**root'-stock**, *n.* (தாவ.) தண்டங்கிழங்கு, கிளைவேர்கள் தோன்றும் வேர்த்தண்டு.

**root'y**, *a.* வேர்கள் நிறைந்த ; வேர்கள்கொண்ட ; வேர்கள் போன்ற ; வேரின் இயல்பிணையுடைய.

**rope**, *n.* கயிறு ; சணலின் புரி முறுக்கு ; கம்பிவடம் ; தோல் வார் முறுக்கு ; முத்துவடம் ; வெங்காயக் கோவை ; மீன் சினையின் தொடர் வரிசை ; வெறியங்களில் உண்டாகும் கயிறு போன்ற பிசுக்குப்பொருள் ; கயிறுபோன்ற பசைப் பொருள் ; *v.* கயிற்றுல் கட்டு ; வரிந்து கட்டு ; கயிறு கொண்டு இறுக்கிப்பிணை ; மலையேற்றத்தின் வகையில் குழு வினரைக் கயிறுகொண்டு இணை ; ஆளைச் சேர்த்துக்கட்டு ; வண்டி முதலியவற்றைக் கட்டி இழுக்கக் கயிற்று வடங்களைப் பயன்படுத்து ; இடத்தைக் கயிற்றடைப்புச் செய்து வளை ; பந்தயத்தில் குதிரையைத் தடைசெய், கயிற்றை இழுத்துக் கெலிக்காதபடிக் குதிரையைத் தடைசெய் ; ஆட்டக்காரர் வகையில் முழு ஆற்றலையும் ஈடுபடுத்தாதிருந்து பந்தயத்தில் தோல்வியுறும்படி செய் ; கயிறு போன்றுருகு ; பிசுபிசுப்பாகு ; (தொ.) give one rope, give one rope enough to hang himself, give one plenty of rope, தலையில் மண்ணை வாரிப் போட்டுக்கொள்ளவிடு ; know the ropes, learn the ropes, put one up to the ropes, தனிச்செயல் துறைகளின் நிலவரங்களைக் கற்றுப் பழகிக்கொள் ; on the high ropes, தற்பெருமையுடைய, செருக்குமிக்க, தருக்குடைய ; on the rope, மலையேற்ற வகையில் கயிற்றுல் ஒன்ருகப் பிணைபட்ட நிலையில் ; rope in, கொள்கை முதலியவற்றில் முயன்று உடன் சேர்த்துக்கொள் ; வலையில் வீழ்த்து ; வசப்படுத்து ; இடவகையில் கயிறிட்டுச் சுற்றி வளை ; rope of sand, ropes of sands, நம்பத்தகாத காப்பு ; பற்றில்லாப் பந்தம் ; the rope, தூக்குக்கயிறு ; கயிற்று நடனத்திற்காக இழுத்துக் கட்டப்பட்ட உறுதிக் கயிறு ; the ropes, போட்டிப் பந்தய ஆட்டக்களச் சூழ்வேலிக்கயிறு.

**rope'-dancer**, *n.* கழைக்கூத்தாடி.

**rope'-dancing**, *n.* கழைக்கூத்தாட்டம்.

**rope'-drilling**, *n.* கயிற்றுல் இயங்கும் துறப்பணத்தால் துளையிடல்.

**rope'-ladder**, *n.* கயிற்றேணி.

**rope'-maker**, *n.* கயிறு முறுக்குபவர்.

**rope'making**, *n.* கயிறு முறுக்கு தொழில்.

**rope'manship**, *n.* கழைக்கூத்தாண்மை, கயிற்றின்மேல் நடத்தலிலும் பற்றி ஏறுதலிலும் தேர்ச்சி.

**rope'-moulding**, *n.* கயிறு முறுக்குபோலச் சுருள் வடிவச் செதுக்கு.

**rope'-quoit**, *n.* கப்பல்தள எறிவட்டாட்டத்திற்குரிய கயிறு வளைய வட்டு.

**ro'per**, *n.* கயிறு திரிப்பவர் ; பந்தயத்தில் கெலிக்காதபடிக் குதிரை கடிவாளக் கயிற்றை இழுத்துத் தடைசெய்பவர் ; பார்வை விலங்கு.

**rope'-ripe**, *a.* தூக்கில் இடத்தக்க.

**rop'ery**, *n.* கயிறு திரிக்குந்தொழில் ; வஞ்சகம், சூழ்ச்சி, கபடச்செயல்.

**rope's-end'**, *n.* சாடு கயிறு.

**rope'-soled**, *a.* கயிற்று அடிப்பகுதி வாய்ந்த.

**rope'-trick**, *n.* கயிற்றுமாயம், கயிற்றுதவியால் திடுமென மறையும் மாயமுறை.

**rope'-walk**, *n.* கயிற்றை முறுக்கும்போது பயன்படும் நீண்டு குறுகியநிலம்.

**rope'-walker**, *n.*=rope-dancer.

**rope'-walking**, *n.*=rope-dancing.

**rope'way**, *n.* கயிற்றுநெறி, சரக்குகளைக் கயிற்றுவழிப் பெயர்த்தனுப்பும் நெறி.

**rope'-work**, *n.* கயிறு முறுக்குவதற்குரிய சிறு நடைநிலம் ; கயிற்றுத் தொழிற்சாலை ; கயிற்றுத்தொகுதி ; கயிற்றுத் தொகுதியமைவு.

**rope'-yard**, *n.* கயிறுசெய்யும் நிறுவனம், கயிற்றுத் தொழிற்சாலை.

**rope'-yarn**, *n.* கயிற்றுப் புரியிழை.

**rop'ing**, *n.* கயிறு திரித்தல்.

**rop'y**, *a.* கயிறுபோன்ற ; பிசுபிசுக்கலான ; கயிறுபோன்ற வளைவு நெளிவுகளையுடைய.

**Roq'uefort**, *n.* ஆட்டுப்பாலிலிருந்து செய்யப்படும் உயர்தரப் பாலடைக் கட்டி.

**roq'uelaure**, *n.* (வர.) பதினெட்டாம் நூற்றாண்டில் வழங்கிய முழங்கால் வரையுள்ள ஆடவர் மேலங்கி.

**roq'uet**, *n.* மோதடி, புல்வெளி மரப்பந்தாட்டத்தில் பந்தால் எதிரியின் பந்தினை அடித்தல் ; *v.* மோதடி கொடு ; புல்வெளி மரப்பந்தாட்டத்தில் பந்துவகையில் எதிரி பந்துமீது மோது.

**rorq'ual**, *n.* முதுகுத் துடுப்புடைய திமிங்கில வகை ; செந்நிறத் திமிங்கிலம்.

**rort'y, raught'y**, *a.* களிமகிழ்வுடைய ; போக்கிரித்தனமான.

**ros'ace**, *n.* ரோசா மலர்வடிவப் பலகணி ; ரோசாப்பூ வடிவான அணி ; ரோசாப்பூ வடிவான இழைக்கச்சை முடிச்சு ; ரோசா மலர்வடிவ ஒப்பனைவரை.

**rosa'ceous**, *a.* ரோசாவினஞ் சார்ந்த ; ரோசாப்பூப் போன்ற.

**rosan'iline**, *n.* அவுரிநீலச் செஞ்சாயம்.

**rosar'ian**, *n.* ரோசா ஆர்வலர் ; ரோமன் கத்தோலிக்க வழிபாட்டுப் பாடற் பேரமைப்பின் உறுப்பினர்.

***rosar'ium***, (ல.) *n.* ரோசாத் தோட்டம்.

**ros'ary**, *n.* ரோசாத் தோட்டம், ரோசாப் பூஞ்செடிப் படுக்கை ; செப வழிபாடு, கிறித்தவ சமய வாய்முறை வழிபாடு ; செப முறை ஏடு ; செபமாலை.

**Ros'cian**, *a.* ரோஸ்கியஸ் (Roscius) (கி. மு. முதல் நூற்றுண்டு) என்ற புகழ்பெற்ற பண்டை ரோம நடிகரை ஒத்த ; நடிப்புத் திறமிக்க.

**rose**[1], *n.* ரோசா மலர் ; ரோசா செடி ; ரோசாச் சின்னம், இங்கிலாந்தின் தேசியச் சின்னம் ; ரோசாமலர்ச் சூட்டு ; விலங்கின் கொம்படித் தசைவரி ; பறவையின் கண்ணைச் சுற்றிய தசைவரி ; பூவாளியின் புழைமுகம் ; ரோசா வடிவப் பலகணி ; குருதிச் செந்நிறம் ; இளஞ் செந்நீல நிறம் ; *a.* இளஞ்சிவப்பான ; இளஞ் செந்நீலமான ; *v.* ரோசா நிறமாக்கு ; ரோசா போன்ற மணமுடையதாக்கு ; (தொ.) bed of roses, மகிழ்விருக்கை ; gather roses, gather life's roses, இன்பம் தேடியடை ; Golden rose, போப்பாண்டவரால் லெண்டுவிழா 4-ஆம் ஞாயிற்றுக்கிழமையன்று ரோமன் கத்தோலிக்க அரசருக்கு அல்லது நகரத்திற்கு வாழ்த்துதலுடன் அனுப்பப்பெறும் அணிமணி ; not all roses, மகிழ்தரும் வேலையன்று ; path strewn with roses, இன்பங்கள் நிறைந்த வாழ்க்கை ; Rose of Jericho, வதங்கிய பின்னும் ஈரநிலையில் இலைகள் மீண்டுந் தழைக்கும் இயல்புடைய செடி வகை ; rose without a thorn, கலப்பற்ற இன்பம் ; the rose,

தோலில் செக்கச் சிவந்த நிறத்தை ஏற்படுத்தும் காய்ச்சல் வகை ; the rose of, குறிப்பிட்ட பரப்பெல்லையில் ஒப்பற்ற அழகரசி ; Wars of the Roses, கி பி. 15-ஆம் நூற்றுண்டில் வெள்ளை ரோசா-சிவப்பு ரோசாச் சின்னங்களைக்கொண்ட இருதரப்பாரிடையே நடந்த அரசுரிமைப்போர்.

rose², v. rise என்பதன் இறந்தகால வடிவம்.

rose'-apple, n. செங்காவற் பழம் ; மகிழம்பழ வகை.

ros'eate, a. ரோசா வண்ணமுடைய.

rose'-bay, n. பூச்செடிவகை.

rose'bud, n. ரோசா அரும்பு ; அழகிய பெண் ; பருவப் பெண்

rose'-chafer, n. வண்டு வகை.

rose'-coloured, a. ரோசா நிறமான ; நம்பிக்கை தருகிற.

rose'-cut, a. பட்டையிடப்பட்ட, அரை உருள்வடிவில் பன் முகமாகச் செதுக்கப்பட்ட.

rose'-drop, n. சிவப்புக்கட்டி தோன்றும் தோல்நோய் வகை ; ரோசா மணத் தின்றி.

rose'-engine, n. கடைசல் பொறி அமைவு.

rose'-knot, n. இழைக்கச்சைப் பல்கவர் முடிச்சு.

rose'-lipped, a. ரோசாவண்ண இதழ்களையுடைய.

rose'mary, n. பசுமைமாரு நறுமண இலைச் செடிவகை ; நினைவுக்குறி

rose'noble, n. கி. பி. 15, 16-ஆம் நூற்றுண்டைச் சார்ந்த ரோசா சின்னம் பொறிக்கப்பெற்ற பொன் நாணயம்.

rose'ola, n. தட்டம்மையின் ரோசாப்பூப்போன்ற சிவந்த புள்ளி ; விளையாட்டம்மை வகை.

rose'-root, n. ரோசா மணந் தரும் வேர்ச் செடிவகை.

ros'ery, n. ரோசாத்தோட்டம்

ros'es, n. pl. மேனியின் ரோசா நிறச் செவ்வி ; இன்பம்.

rosette', n. இழைக்கச்சைப் பல்கெழுமுடி ; ரோசாவடிவப் பூவணி ; ரோசாவடிவப் பூ முடி ; ரோசாவடிவப் பலகணி ; பூமணி வைரம், ரோசாவடிவத்திற் பட்டையிட்ட வைரம் ; ரோசாவடிவ வரியமைவு ; (உயி., தாவ.) ரோசா வடிவ உறுப்பு ; (உயி.) ரோசாவடிவ உறுப்படுக்கமைவு ; (தாவ.) ரோசாமலர் போன்ற கொத்து ; (க-க ) ரோசாவடிவ ஒப்பனை மரபுச் சின்னம் ; (கண.) பூவிழைவரை, துருவ இணைவமை வறுதி வரிந்த இழையலைவட்டவரை.

rose'-water, n. பன்னீர் ; அன்புரை ; மென்முறை.

rose'window, n. ரோசாவடிவப் பலகணி.

rose'wood, n. கருங்காலி வகை.

Rosicru'cian, n. கிறிஸ்தியன் ரோசன்க்ரூஸ் என்பவரால் (1484-இல்) தோற்றுவிக்கப்பெற்ற மாயமறைத்துறைக் கழக உறுப்பினர் ; a. மாயமறைத்துறைக் கழகஞ் சார்ந்த.

ro'sier, n. ரோசா செடி.

ros'in, n. மண்டித் தைலம், கர்ப்பூரத் தைல வண்டல் ; v. யாழ் வில் நரம்புபோன்றவற்றிற்கு மண்டித்தைலத்தாற் பூச்சிடு ; மண்டித் தைலந் தடவு ; மண்டித்தைலம் மேலிடு.

Rosinan'te, n. வற்றி மெலிந்த குதிரை.

rosol'io, n. ஊட்ட இன்மருந்து வகை.

ros'ter, n. வேலைமுறையேடு ; பெயர்ப்பட்டியல்.

ros'tra¹, n. பேச்சுமேடை ; pl. ros'tre.

ros'tra², n. rostrum¹ என்பதன் பன்மை ; rostrum² என்பதன் பன்மை வடிவங்களில் ஒன்று.

ros'tral, a. தூபிவகையில் கப்பல் முகப்பு அலகுகளால் அணி யொப்பனை செய்யப்பட்ட ; (உயி.) அலகுபோன்ற உறுப்புச் சார்ந்த ; அலகுபோன்ற உறுப்பிலுள்ள.

ros'trate, a. (உயி.) முகப்பு அலகினையுடைய.

rostrat'ed, a. (உயி.) முகப்பு அலகினையுடைய ; (உயி.) அலகுறுப்பில் முடிகிற ; தூபிவகையில் கப்பல் முகப்பு அலகு களால் அணியொப்பனை செய்யப்பட்ட.

ros'trum¹, n. (வர.) பண்டை ரோமரின் போர்க்கப்பல் முகப்பு அலகு.

ros'trum², n. (உயி.) அலகுபோன்ற உறுப்பு.

ros'trums, n. pl. rostra¹ என்பதன் பன்மை வடிவங்களில் ஒன்று ; rostrum² என்பதன் பன்மை வடிவங்களில் ஒன்று.

ros'ulate, a. (தாவ.) இலைவகையில் ரோசா இதழ்கள்போல ஒன்றன்மேல் ஒன்ருக அடுக்கப்பெற்ற.

ros'y, a. சிவப்பு ரோசாவின் நிறமுடைய ; உடல்நலமுடைய, மலர்கிற ; செந்நிறம் படர்ந்த ; ரோசாமலர் போன்ற ; ரோசாப்பூவாலான ; ரோசாப்பூ நிரம்பிய ; ரோசா மலர்கள் உதிரப்பெற்ற ; (தொ.) rosy cross, கிறிஸ்தியன் ரோசன் க்ரூஸ் என்பவரால் 1484-இல் தோற்றுவிக்கப்பட்ட மாய மறைத் துறைக் கழகத்தின் செஞ்சிலுவைச் சின்னம்.

rot, n. அழுகல், ஆடுகளின் கொடிய நுரையீரல் நோய் ; மடமை ; மோசமான பேச்சு ; தவறுன வாதம் ; கோளாருன யோசனை; பேதமைப்பாதை; விரும்பத்தகா நிலை; மரப்பந்தாட் டத்தில் திடீர்த் தோல்வித்தொடர் ; போர்ப்படைவகையில் திடீர்த் தோல்வித்தொகுதி ; v. இயல்பான சிதைவுக்கு உள்ளாகு ; கேடுறு ; இழிவுறு ; வலிமைக் கேட்டால் வரவரக் கெடுதலுறு; பயன்படுத்தாமையால் மெல்ல மெல்ல அழிவுறு; அழிவுறச் செய் ; மோசமுறச் செய் ; வஞ்சப்புகழ்ச்சியாகப் பேசு, நையாண்டியாக உரையாடு.

rot'a¹, n. வேலைமுறைப் பட்டியல் ; வேலைமுறை.

Rot'a², n. ரோமன் கத்தோலிக்கர் மீயுயர் நீதிமன்றம்.

Rotar'ian, n. சுழல்கழக உறுப்பினர் ; a. சுழல்கழகஞ் சார்ந்த.

Rot'ary¹, n. சுழல்கழகம் ; சுழல்கழகப் பண்பு ; a. சுழல் கழகத்தை ஒத்த இலக்கமைப்புடைய; சுழல்கழகஞ் சார்ந்த ; (தொ.) Rotary Club, சுழல்கழகக் கிளை ; the Rotary, சுழல் கழகம் ; சுழல்கழக அமைப்பு ; சுழல்கழகக் கிளை.

rot'ary², n. அச்சுவகையில் சுழல்முறைப்பொறி ; a. சக்கரம் போலச் சுழல்கிற ; சுற்றிச்சுற்றி இயங்குகிற ; சுழற்சி இயல் புடைய; இயந்திர வகையில் உறுப்பின் சுழற்சியால் இயக்கப் படுகிற; (தொ.) rotary machine, சுழல்முறை அச்சுப்பொறி.

rot'ate¹, a. (தாவ.) சக்கர வடிவான ; மலர்வகையில் இதழ் கள் பூக் குழலின்றித் தட்டையாய் அடியிலிணைந்த.

rotate'², v. சுழற்று ; சுற்று, சுழல் ; சுற்றுமுறைப்படுத்து, மாற்றி மாற்றித் தொடர்ந்தமைவி ; சுற்றுமுறையில் அமை வுறு.

rota'tion, n. சுழற்சி ; சுழல்முறை, மாறிமாறித் தொடர்ந்து வரும் அமைவு ; சுற்றிவருந் தவணை ; (தொ.) by rotation, சுற்றிவருமுறையில் ; rotation of crops, பயிர் மண்டலிப்பு முறை.

rot'ative, a. சுழல் இயல்புடைய.

rotat'or, n. (உட.) சுழல்தசை, உறுப்பைச் சுழற்றுந் தசை நார்த் தொகுதி ; சுழலமைவு ; இயந்திரச் சுழலுறுப்பு.

rot'atory, a. சுழல்கிற.

rotch, rotche, n. சிறு கடற்பறவை வகை.

rote, n. பொருளுணரா மனப்பாடம்.

rot'-gut, n. கெட்ட வெறியவகை ; a. வயிற்றுக்குக் கேடு செய்கிற.

rot'ifer, n. வட்டுயிர் நுண்மம், சக்கரவடிவான நுண்ணிய உயிரினம்.

rot'ograph, n. கையெழுத்தேட்டின் நிழற்படம்.

rot'or, n. சுழலி, இயந்திரச் சுழல்பகுதி.

rott'en, a. அழுகிய ; சிதைந்துகெட்ட ; சிதைந்து நைந்த ; பழகிக் கிழிந்த ; நாட்பட்டு மக்கிய ; பட்டழிந்த ; இற்றுப் போன ; உள்தகர்வுற்ற ; பொடிபொடியாய் உதிர்கிற ; ஆடு வகையில் ஈரற் கோளாறு நோயுற்ற ; ஊழலான ; கெட்

டழிந்த; சமுதாயவகையில் சீரழிந்த; அரசியல்வகையில் கட்டழிவுற்ற; திறனழிவுற்ற; பதனழிவுற்ற; சுவைக்குத வாத; பயனற்ற; அருவருக்கத்தக்க; விரும்பத்தகாத; மோசமான.

**Rott'en Row,** *n.* இங்கிலாந்தில் உள்ள ஹைடு பூங்கா (Hyde Park) நடைப்பாதை; குதிரைச் சவாரிக்கு உகந்த இனிய இடம்.

**rott'en-stone,** *n.* மெருகுச் சுண்ண மணற்கல்.

**rott'er,** *n.* நாணிலி, பயனிலி.

**rotund',** *a.* வட்டவடிவமான; உருண்ட; தடித்துக் கொழுத்த; இதழ்வகையில் திரள் குவிவான; ஒலிவகையில் உருட்சி வாய்ந்த; பேச்சுவகையில் வாய் நிறைந்தொலிக்கிற; இலக்கியநடை வகையில் முழக்கமான, வீறமைவான.

**rotun'da,** *n.* வட்டாகரக் கட்டுமானம்; கவிமாடம்; வட்டக் கூடம்; வட்டவடிவ அறை.

**rotund'ity,** *n.* வட்டம், உருண்டை.

***roturier,*** (பிர.) *n.* சாதாரணக் குடிமகன்.

**rou'ble,** *n.* ருசிய நாணயம்; ருசிய நாணய மதிப்பலகு.

**roucou',** *n.* ஆரஞ்சுநிறச் சாயம்; ஆரஞ்சுநிறச் சாயந்தரும் தென் அமெரிக்க மரவகை.

**roue',** *n.* ஒழுக்கக்கேடன், பரத்தன், டம்பாச்சாரி.

**rouge[1],** *n.* ஒப்பனைச் செவ்வண்ணச் சாயம்; இரும்பு உயிரகைப் பொடி; சீட்டாட்ட வகையில் பணயம் வைப்பதற்குரிய இரு நிறக்குறிகளில் செங்குறி; *a.* கட்டியத்துறை வழக்கில் சிவந்த; *v.* சிவப்புநிறமூட்டு; செவ்வண்ணமூட்டி ஒப்பனை செய்.

**rouge[2],** *n.* ஈட்டன் (Eton) காற்பந்து விளையாட்டிற் கையாளப்பெறும் கெலிப்புக் கணிப்புமுறை.

**rough,** *n.* கடுந்தரை; குழிப்பந்தாட்டத்தின் வெட்டாப் புல் தரைக் கூறு; குதிரை இலாடத்தில் சறுக்குத் தடையாணி; வாழ்வின் இன்னா இடர்க்கூறு; போக்கிரி, கீழ்மகன்; இயன் முருட்டுநிலை, திருந்தாநிலை; திருந்தாநிலைப்பொருள்; மூல நிலைப்பொருள்; *a.* கரடுமுரடான; சொரசொரப்பான; அரம் போன்ற; உராய்வுடைய; வழவழப்பற்ற; ஏற்றத்தாழ் வான; மேடுபள்ளங்கள் நிறைந்த; பரும்படியான; நயமற்ற; திருந்தாத; ஒப்பனை செய்யப்படாத; மணிவகையில் பட்டை யிடப்படாத; மயிர்நீவப்பெறாத; மயிரடர்ந்த; பம்பையான; கோதிவிடப்பெறாத; கத்தரித்துவிடப்பெறாத; இழை வகையில் நெருடான; மெருகிடப்படாத; இலைவகையில் மென்தளிர் நிலை கடந்த; மென்மையற்ற; இளமைகடந்த; மெல்லிய லல்லாத; நெல்வகையில் உமிபோக்கப்பெறாத; செய்பொருள் வகையில் முற்றுவிக்கப்பெறாத; அரைகுறையான; கருமூல நிலையிலுள்ள; இயல்நிலையான; திட்ப நுட்பமற்ற; ஏக தேசமாக ஏற்கத்தக்க; தோராயமான; தேர்ச்சியற்ற; தொடக்கப்படி நிலையிலுள்ள; அமைதியற்ற; புயலால் அலைக்கப்பட்ட; கொந்தளிப்பான; கட்டுக்கடங்காத; கலக நிலையிலுள்ள; ஒழுங்கமைவற்ற; தயவற்ற; கண்ணோட்ட மில்லாத; அன்பாதரவில்லாத; கடுமை வாய்ந்த; உணர்ச்சி யற்ற; கொடுமையான; வன்முறையான; கடுமைமிக்க; உறு கண்டிப்பான; கடுகடுப்பு வாய்ந்த; சுவை வகையில் கடுப்புடைய; நடத்தை வகையில் மென்மையற்ற; பேச்சு வகையில் பண்பற்ற; பண்பாடில்லாத; நாகரிகமற்ற; கையாளுதல் வகையில் கருத்தற்ற, கவனிப்பற்ற; முரட்டுத் தனமான; வாழ்க்கை வகையில் இடரார்ந்த; துன்பநிறைந்த; அலைக்கழிவான; *v.* மயிரை எதிர்நீவிச் சிலிர்க்கவை; இறகு களை எதிர்நிலையில் கோதி உளர்வி; பரற்படிவின் எதிராகத் தடவு; உராய்வுசெய்; குதிரையை அடக்கு; குதிரை இலா டத்துக்குச் சறுக்குத்தடையாணியிடு; பருநிலையில் திட்டஞ் செய்; அரைகுறையாகப் பட்டையிடு; முதல்நிலை உருவரை யிடு; கண்ணாடி வில்லையை அரைகுறையாக மெருகிடு; கரடு முரடாக்கு; கடுமையாக நடத்து; *adv.* கரடுமுரடாக; முரட்டுத்தனமாக; அரைகுறையாக; தோராயமாக, பரு வெட்டாக; வன்முறையாக; (தொ.) cut up rough, தவறாக எடுத்துக்கொள், தவறாகக் கருது; give one a lick with the rough side of one's tongue, கடுமையாகப் பேசு; have a rough time, துன்பத்திற்கு ஆளாகு; in the rough leaf, விதையிலை கடந்த பருவத்தில்; over rough and smooth, மேடுபள்ளங்களின்மீது; நன்மை தீமைகளிற்பட்டு; rough and ready, மிக நேர்த்தியில்லாவிட்டாலும் காரியத்திற்குப் பயன்படத்தக்க; rough coat, சுவரில் சாந்தின் முதற்பூச்சு; rough coating, சுவரின் குத்துச்சாந்து பூச்சு; rough copy, பருமட்டப் படிவம்; rough in, முதல்நிலை உருவரையாக அமைவி; rough it, வரும் இன்னல்களையெல்லாம் தீரமாக ஏற்றமைவுறு, வாழ்க்கைநலங்களைத் துறந்து கடுஞ்செய லாற்று; rough leaf, கன்னி இலை, வளருஞ் செடியில் விதை யிலைக்குப்பின் முதலில் முளைத்த இலை; rough on, மிகவும் நெருக்கி இடர்ப்படுத்துகிற; தீவிர நெருக்கடி நிலையான; கடுமை வாய்ந்த அவப்பேறான; rough one up the wrong way, வெறுப்புறச் செய்; சினமூட்டு; rough out, உத்தேச மாக உருவாக்கிக் காண்; rough passage, கொந்தளிக்குங் கடல் வழிப்பயணம்; rough rice, குத்தப்பெறாத அரிசி, உமி போக்காத நெல்; rough tongue, துடுக்கு நாக்கு; rough work, கடும்வேலை; வன்முறைச்செயல்.

**rough'age,** *n.* தவிடு; பரும்படியுணவு, சக்கை.

**rough'-and-tum'ble,** *n.* துண்டுத்துணுக்குச் சண்டை, ஒழுங்கும் தொடர்பும் அற்ற தனித்தனிப் போர்நிகழ்ச்சிமுறை; *a.* ஒழுங்கற்ற; தாறுமாறான; குப்பைகூளமாயுள்ள; செயல் முறை விதிகட்கு மாறான.

**rough'cast,** *n.* காரைநீறு, சுவருக்குப் பூசப்பெறும் சரளைச் சுண்ணாம்பு கலந்த குத்துச்சாந்து; *a.* குத்துச்சாந்து பூசப் பெற்ற; வரைப்படம்-கட்டுரை முதலியவற்றின் வகையில் முழு நிறைவின்றி முடிக்கப்பட்ட, அரைகுறையாக முற்றுவிக்கப் பட்ட; *v.* சுவருக்குக் குத்துச்சாந்து பூசு; வரைப்படம்-கட்டுரை முதலியவற்றைப் புறக்கோட்டளவில் இயற்றிமுடி.

**rough'-dry,** *v.* ஆடைவகையில் பெட்டி போடாமல் காயவை.

**rough'-footed,** *a.* பறவைகள் வகையில் இறகுமூடிய காலுடைய.

**rough'-grind,** *v.* பரும்படியாகச் சாணைபிடி.

**rough'-hew,** *v.* உத்தேசமான உருவரை கொடு, பருமட்டாக உருவாக்கு.

**rough'-hound,** *n.* மீன் வகை.

**rough'legged,** *a.* குதிரை வகையில் மயிரடர்ந்த கால்களை யுடைய; பறவை வகையில் இறகுமூடிய கால்களையுடைய.

**rough'-neck,** *n.* போக்கிரி.

**rough'-rider,** *n.* குதிரை அடக்குபவர்; பயிற்சி பெறாத குதிரையை ஓட்டுபவர்; (படை.) உதிரிக் குதிரைப்படை வீரர்.

**rough'-shod,** *a.* குதிரை வகையில் ஆணித்தலைகள் நீட்டிக் கொண்டிருக்கும் இலாடத்தையுடைய; (தொ.) ride rough-shod, மிதித்துத் தள்ளு, மேலாட்சி செலுத்து.

**rough'-spoken,** *a.* மழுப்பிப்பேசாத, கடுகடுத்த பேச்சுடைய.

**roulade',** *n.* இன்னிசைநயம்; உருட்டு வண்ண வகை.

**rouleau',** *n.* சுருள், திருகுமடி; பொன் நாணய அடுக்கு.

**roulette',** *n.* சுழல்மைய மேசைக் கவருட்டம்; புரிகுழற் கருவி, மயிர்த் திருக்கு; அஞ்சல் வில்லைப் புள்ளிவரிக் கருவி; செதுக்கு வேலைக்குரிய சுழல் பல்வட்டுக்கருவி; (கண.) திரிவட்டணை, சுழல்வட்டப் புள்ளியின் திரிவளைவு.

**Roum'an, Rouman'ian,** *n.* ருமேனிய நாட்டவர்; ருமேனிய நாட்டுமொழி; *a.* ருமேனிய நாட்டைச் சார்ந்த; ருமேனிய நாட்டு மொழியைச் சார்ந்த.

**Roumansh',** *n.,a.*=Romansh.

**Roumel'iote,** *n.* ருமேலியா நாட்டவர்.

**roun'cival,** *n.* பெரும் பட்டாணி வகை.

**round[1],** *n.* உருண்டை, உருள்வடிவப் பொருள்; திரளை, உருள் பகுதி; உருளைக்கூறு; அப்பவட்டுக்கூறு; மாட்டிறைச்சித் துடைத்திரளைக்கூறு; வட்டம்; வளையம்; சுற்றுவரை; வட்டகை; சுற்றுப்பரப்பு; சுற்றெல்லை; வளைவு; திருகுசுருள்; ஏணிப்படி; வடிப்பாலைக் கொதிகலம், மூலை

மணிக்கூண்டு; சுழற்சி; சுழல்வியக்கம்; சுற்றலைவு, சுற்றிச் செல்லுகை; சுற்றுலா; பணிமுறைச் சுற்றுச்செலவு; நடைமுறை உலா; வாணிகச் சுற்றுவட்ட உலா; முழுமை; தொகுதி; நிறைசுற்று; தொடர்வட்டம்; தொகுதியின் பெருங்கூறு; ஆவர்த்தி; அலைவீச்சு; முறைவட்டம்; வட்ட வழி; மீள்வருநெறி; நடைமுறை உலாப்பாதை; திட்ட வரைநெறி; மற்போரில் ஆட்டமுறைவட்டம்; துப்பாக்கியின் சுற்றுவரிவேட்டு; கைகொட்டு ஆர்ப்பரிப்பின் அலையெழுச்சி; வட்டாகார நடனம்; வட்டாகார நடன இசை; திரும்பத் திரும்ப நிகழுஞ் செய்தி; நடைமுறை நிகழ்ச்சி; சுற்றடைவு, சுற்றிப் பங்கிடுவதற்கு வேண்டும் வரையளவு; படிமுறையளவு, ஒருதடவை கொடுப்பதற்குரிய அளவு; உள்வளை செதுக்குரு; குழைவியற் கலையில் திரள்பிழம்புரு; குழிப் பந்தாட்டத்தில் நிறைகுழித்தொகுதி; குழிப்பந்தாட்டத்தில் நிறைகுழியாட்டம், எல்லாக் குழிகளிலும் பந்து ஒருமிக்க விழும்படி ஆடுதல்; ஒத்திசைவுடைய கட்டளை இசைப்பாட்டு; *a.* கோளமான, உருள் வடிவான; வட்டமான; வட்டாகாரமான; வட்டுருளை வடிவான; வளைந்த; புறவளைவான; குவிவான, அரைக்கோள உருவான; கவிவான; அரைவட்டவடிவான; சூழ்வான; பொதிவான; உருட்சிதிரட்சி வாய்ந்த; கொழுத்த; உப்பிய; வட்டமாக இயங்குகிற; வட்டமாக இயக்கப்படுகிற; படுக்கை நிலையிற் சுழல்கிற; வட்டாகார இயக்கத்தை உட்கொண்ட; சென்று மீள்வான; முழுமையான; முழு மொத்தமான; தொகைவகையில் முழுவட்டமான; முழு உள்ளடங்கலான; குறைவற்ற, கேடற்ற; நன்னிலையிலுள்ள; குறைபடாத; நிறைவான, போதிய அளவான; தளர்த்தப்படாத; முழுவலிமை வாய்ந்த; ஆற்றல் மிக்க; ஊக்கமிக்க; மாறுதல் திரிதல் இல்லாத; திட்டவட்டமான; தொடர்ச்சிவாய்ந்த; இடையறுத; முறிவுபடாத; செவ்வளைவான, திரும்புகோணங்கள் இல்லாத; உருவரை வகையில் மெல்லிழைவான, மடங்கி நுடங்காத; இழை வியக்கமுடைய; நன்குமுடிவுற்ற; வாசக வகையில் இயன் முடிவு வாய்ந்த; கடுகடுப்பற்ற, கபடற்ற, சூதற்ற; மனந்திறந்து பேசுகிற, பேச்சு வகையில் மட்டுமழுப்பலில்லாத; தெளிவான, பட்டாங்கமான; பிழைபாடற்ற; ஓசை வகையில் முழக்கமான; ஒலிவகையில் நிறையுருட்சிவாய்ந்த; *v.* உருள்வடிவாக்கு; திரளுருவாக்கு; வட்டவடிவங்கொடு; உருட்சியாக்கு; முனைமழுக்கு; வளைவாக்கு; கோணமுனைப்புக்களகற்று; திருப்பங்களில்லாதாக்கு; செவ்வளைவாக்கு; மெல்லிழைவாக்கு; சுற்று, சுற்றிச்செல்; சுற்றியணைந்துசெல்; சூழ்ந்துவளை; சூழ்ந்துவளைந்துசெல்; சூழவளைத்து ஒருங்கு திரட்டு; திருப்பு, மடக்கிச் செலுத்து; திரும்பு, மடங்கிவா; சட்டென எதிருரைவீசு; காட்டிக்கொடு; *adv.* வட்டமாக; சுழல்வாக; வளைவாக; சுற்றி; அங்குமிங்குமாக; மீள, மடங்கி, புறப்பட்ட இடத்துக்கே திரும்பி; மீண்டும், முன்போல; வழக்கம்போல; மறித்து, எதிர்மாறான நிலையில்; எதிர்முகமாகத் திரும்பி; கால வகையில் முழுவதிலும்; சுற்றிலும்; நாற்புறமும்; நாற்றிசையிலும்; எங்கும்; எல்லா இடத்திலும் பரவலாக; இடத்துக்கு இடமாக; எல்லாருக்கும் தனித்தனியாக; ஒருவரிடமிருந்து ஒருவராக; எல்லாவற்றிற்கும் தனித்தனியாக; ஒன்றினிடமிருந்து ஒன்ருக; சுற்றிவளைத்து; சுற்றனுப்பாக; சுற்றுவிலகி; *prep.* சுற்றி; ஒவ்வொரு பகுதியாக; பல பகுதிகளிலும்; அருகாக; அடுத்து; பக்கமாகக் கடந்து; (தொ.) all round, சுற்றியெல்லாப்புறமும்; a round oath, பிறழ உணரமுடியாத சூளுரை; a round style, ஒழுகியல் நடை; a round sum, பெருந்தொகை; a round voice, மென்குரல்; ask one round, ஒருவரை அவர் வீட்டிலிருந்து தன் வீட்டுக்கு வரும்படி கோரு: at a round trot, பொதுவாக் எழுச்சியுடன்; be round with one, நன்கு உறைக்கும் உண்மைகளைக் கூறு; bring round, உணர்வுபெறச் செய்; தன்வயப்படுத்து; bring up with a round turn, திடீரெனச் சுண்டித்தடுத்து நிறுத்து; come round, சுற்றி வா; இயல்பாக நிகழ்; திரும்பு; சாதகமான மனமாறுதலடை; மயக்கந் தெளிவுறு; get round, பசப்பு, கெஞ்சு; மழுப்பு, தந்திரமாகத் தப்பித்துக்கொள்; go for a good round, நெடுந்தூரம் உலாவச் செல்; go the round, ஒருவரிடமிருந்து ஒருவராகப் பரவிச்செல்; in round numbers, ஏறத்தாழ, வட்டமாக, மொத்தத் தொகையாக; in the round, விளக்க விவரமாக, எல்லாக்கூறுகளும் முழுதும் காட்டப்பட்ட நிலையில்; குழைவியல் வகையில் எல்லாப் பக்கங்களிலிருந்தும் பார்க்கக்கூடிய நிலையில் அமைந்துள்ள; make one's rounds, go one's rounds, பணிமுறை வழக்கப்படி பார்வையிடுவதற்காகச் செல்; make the round of, சுற்றிச்செல்; order the car round, உந்துவண்டியைக் கொட்டிலிலிருந்து வீட்டுவாயிலுக்குக் கொணருமாறு ஆணையிடு; right round, முழுவதுஞ் சுற்றி; round about, சுற்றிலும்; பல திசைகளிலும்; வளையமாக, சுற்றிச்சுற்றி; அங்குமிங்கும்; மறுபுறமாக; ஏறத்தாழ; சுற்றிவளைத்துக் கொண்டு; round and round, சுற்றிச்சுற்றி; round bowling, மரப்பந்தாட்ட வகையில் கையைக் கிடைநிலையாக வீசிப் பந்தெறிதல்; round dog's ears, நாயின் காதுகளைக் குறுகத் தறி; round dozen, கொஞ்சமுங் குறையாத முழுப் பன்னிரண்டன் தொகுதி; round game, ஒவ்வொருவரும் தனக்காக என்றே ஆடிக்கொள்ளுகிற சீட்டாட்ட வகை; round of beef, மாட்டிறைச்சித் துடையெலும்பின் குறுக்கே வெட்டப்பட்ட கறித்துண்டு; round off, நேர்த்தியாகச் செயல்தீர்வு செய்து முடி; கூர்முனைகளை மழுக்கு; round on, பகைமையுணர்ச்சியோடு எதிர்த்து நில்; பேச்சில் மடக்கித் தாக்கு; round out, உருட்டி நிரப்பு; குறைநிரப்பு; round Robin, round robin, எவரது கையெழுத்து முதலது எனத் தெரியாதபடி வட்டமாகக் கையெழுத்திட்டுள்ள மனு; round to, கப்பலின் முன்புறத்தைக் காற்றடிக்கும் திசைநோக்கித் திருப்பு; round towel, உருளையின்மீது சுழலும் ஈரம் புலர்த்தும் நெடுநீளத்துணி; round up, சுற்றிவளைத்து ஒன்றுதிரட்டு; காவலர் வகையில் நாடிய ஆட்களைக் கண்டுபிடித்து சுற்றி வளைத்துக்கொள்; sleep the clock round, 12 அல்லது 24 மணி நேரம் கடிகாரத்தை நிறுத்திவை.

round'about, *n.* சுற்று வளைப்பு வழி; வட்டச்சுற்று வழி, போக்குவரத்து வண்டிகளெல்லாம் சுற்றிக்கொண்டு போக வேண்டிய இடம்; சுற்றுவளைப்புப்பேச்சு; குடை இராட்டினம்; வட்ட மண் அரண்; வட்டாகார நடனம்; *a.* சுற்றுவழியான; சுற்றுமுகமான, மறைமுகமான; சுற்றிவளைத்துக் கொண்டு பேசுகிற; மொட்டைக் கட்டையான, வாலோ பின் தொங்கலோ இல்லாத; கொழுத்த, பருமனான; *v.* இராட்டினமாகச் சுழல்; சுற்றிச்சுற்றிவா; (தொ.) lose on the swings what one makes on the roundabouts, பல ஏற்றத்தாழ்வுகளுக்குப் பிறகு தொடக்க நிலைக்கே வந்து முடிவுறு.

round'-arm, *a.* கைவகையில் ஏறத்தாழக்கிடைநிலையாகவீசும் இயல்புடைய; (தொ.) round-arm bowling, மரப்பந்தாட்ட வகையில் கையைக் கிடைநிலையாக வீசிப் பந்தெறிதல்.

roun'del, *n.* சிறுவட்டு, ஒப்பனை வாய்ந்த விருதுப் பதக்கம்; 10 அல்லது 13 வரியுள்ள இசைப்பாட்டு வகை.

roun'delay, *n.* அடுக்கிசையுடைய எளிய சிறு பாடல்வகை; பறவைப்பாடல்.

roun'der, *n.* சுற்றுபவர்; திரிபவர்; சுற்றுலாவாணர்; மெதடிஸ்டு சமயக்கிளையின் பிரசார உலாவாணர்; செய்பொருள்களுக்கு உருள்வளைவான உருக்கொடுப்பவர்; புத்தக மூட்டமைப்பவர்; செருப்பு அடித்தோல் வகுப்பவர்; வட்டக் குல்லாய் அமைப்பவர்; வட்டவடிவாக்குங் கருவி; ஆவர்த்தி, அலைவட்டம்; வட்டப்பந்தாட்டத்தில் கெலிப்பு வட்டம்.

roun'ders, *n. pl.* வட்டப்பந்தாட்டம், வட்டமாக அமைக்கப்பட்ட தளமுழுவதுஞ் சென்று ஒவ்வொரு ஆட்டக்காரரும் கெலிப்பதைக் கெலிப்பெண்ணுகக்கொண்ட பந்தாட்ட வகை.

round'hand, *n.* செவ்வுருள் எழுத்துமுறை; ஒவ்வோர் எழுத்தும் உருண்டையாகவும் அகலமாகவும் எழுதப்படும் கையெழுத்துப்பாணி; (தொ.) round-hand bowling, மரப்பந்தாட்ட வகையில் கையைக் கிடைநிலையாக வீசிப் பந்தெறிதல்.

Round'head, *n.* வட்டத்தலையர்; (வர.) பிரிட்டனில் 17-ஆம் நூற்றாண்டைய உள்நாட்டுப் போரின்போது இங்கிலாந்து மாமன்றக் கட்சி உறுப்பினர்.

**round'-house**, *n.* (வர.) காவல் வீடு ; சிறைச்சாலை ; (கப்.) கப்பல் மேல்தளப் பின்புறமுள்ள அறை.

**round'ish**, *a.* சற்றே வட்டமான ; சிறிது உருண்டையான.

**round'ly**, *adv.* முழுக்க முழுக்க ; செம்மையாக ; வெளிப் படையாக ; பேச்சில் கபடமின்றி ; வரையறையின்றி ; கண் டிப்பாக ; வட்டமாக, முழுவட்டத்தொகையாக.

**rounds**, *n. pl.* (படை.) சுற்றுக்காவல் மேற்பார்வை, காவல் வீரர்களைப் பார்வையிடுவதற்காகச் சுற்றி வருதல் ; (தொ.) grand rounds, (படை.) தளபதிக்கு அடுத்த உயர்படைத் துறை அலுவலரின் சுற்றுக்காவல் மேற்பார்வை ; visiting rounds, (படை.) நாள்முறைச் சுற்றுக்காவல் மேற்பார்வை.

**round'-shoul'dered**, *a.* முதுகுப்பக்கமாகக் கவிந்த தோள் களையுடைய.

**rounds'man**, *a.* வாணிகச் சுற்றுலாவாணர், மாதிரிச் சரக்கு களுடன் சுற்றிச் சென்று கொள்வினை ஆணைகள் சேகரித்து வருபவர்.

**Round'-Ta'ble**, *n.* வட்டமேசை ; சரிசம இருக்கைக்குழாம் ; பிரிட்டனின் பழங்கதைமரபில் மன்னர் ஆர்தரின் வீரர்க்குரிய வட்டமேசை; (தொ.) round-table conference, வட்டமேசை மாநாடு, சரிசமமுறை இணக்கப்பேச்சுக்கள் நடைபெறுவதற் குரிய கூட்டுக்குழு.

**round'-top**, *n.* கப்பற்கூம்பு முகட்டு மேடை, பாய்மர உச்சி யிலுள்ள மேடை.

**round'-up**, *n.* சுற்றிவளைப்பு, கால்நடைகளைச் சுற்றிவளைத்து ஒன்றுதிரட்டி ஓட்டுதல்; சூழ்வளைப்பு, காவல்துறையினர் தேடிக்கொண்டிருந்த பேர்வழிகளைக் கண்டுபிடித்துச் சுற்றிச் சூழ்ந்துகொள்ளுதல்.

**roup**[1], *n.* ஏல விற்பனை ; *v.* ஏல விற்பனை செய்.

**roup**[2], *n.* கோழிக்கோளாறு, கோழி முதலிய பறவைகளின் மூச்சுக்குழல்களைப் பீடிக்குந் தொற்றுநோய் வகை.

**rouse**[1], *n.* குடியாட்டு, குடிவெறியாட்டு, மிகு குடி ; (தொ.) give a rouse, பருகுவதற்குமுன் வாழ்த்துக்கூறு; வாழ்த்துக் கூறிப்பருகு ; take one's rouse, அளவுமீறிக் குடி.

**rouse**,[2], *n.* (படை.) பள்ளியெழுப்பு இசைமுழக்கு, காலை எழுப்பும் முரசு - கொம்புப் பண்ணிசை ; *v.* மறை விடத்திலிருந்து வேட்டை விலங்குகளைக் கலைத்து வெளிக் கொணர் ; துயிலெழுப்பு ; செயலின்மையினின்றும் எழுச்சி கொள்ளுவி ; தூண்டு, கிளறு ; சினமூட்டு ; உணர்ச்சி கொள்ளுவி ; உணர்ச்சியை வெளிப்படுத்துவி ; தூக்கந் தவிர், விரைசெயல் மேற்கொள், சுறுசுறுப்படை ; சாராயம் முதலியவற்றைக் காய்ச்சும்போது கலக்கிவிடு ; (கப்.) வடத்தை வலிமையுடன் பற்றியிழு ; (தொ.) rouse oneself, சோம்பல் தவிர்த்தெழு.

**rouse**, [3], *v.* மீன் உலர்பத வகையில் உப்புத்தூவு.

**rouse'about**, *n.* கப்பல்துறைக் கையாள்.

**rous'er**, *n.* எழுப்புகிறவர் ; எழுப்புவது ; வியப்புண்டாக்கு வது; திகைப்படையச் செய்வது; பச்சைப்பொய், அபாண்டப் புளுகு ; சாராயங் கலக்கு கருவி.

**Rousseau'ism**, *n.* ரூசோ கொள்கைக் கடைப்பிடிப்பு; சமயம்-அரசியல்-கல்வி முதலிய துறைகளில் ரூசோ (1712-78) என்ற அறிஞரின் கோட்பாடு.

**Roussillon'**, *n.* சிவப்பு இன்தேறல் வகை.

**roust'about**, *n.* கப்பல்துறைத் தொழிலாளர், கப்பல் மேல்தளக் கூலியாள்.

**rout**[1], *n.* கலகக்காரர் கும்பல் ; களியாட்டக்குழாம் ; (சட்.) கலவரக் கும்பு, முறையற்ற செயலில் ஈடுபட்டுள்ள மூவரின் அல்லது மூவருக்கு மேற்பட்டவரின் தொகுதி; கலகம்; கலவரம்; குழப்பம் ; சந்தடி, கூப்பாடு, கூச்சல் ; நிலைகுலைவு ; மாலை நேரவிருந்து; வரவேற்பு விருந்துக் கூட்டம் ; *v.* கலைத்து ஓட்டு, தோற்று நிலைகுலைவுற்றோடுவி.

**rout**[2], *v.* பன்றி முதலியவற்றின் வகையில் இரைக்காக நிலத்தை மூக்கினூற் கிளறு; நிலத்தைக்கெல்லு; பெயர்த்துப் புரட்டு ; கிளறித்தேடு, நாடியலை.

**route**, *n.* செல்வழி, புறப்படுமிடமுதல் சேர்விடம்வரை இடை கடந்து செல்லவேண்டிய விளக்க விவரமான பாதை; (படை.) படைசெல்லாணை ; *v.* குறிப்பிட்ட வழியாக அனுப்பு; குறிப் பிட்ட வழியாக அனுப்புவி ; குறிப்பிட்ட வழியாக அனுப்பும் படி கட்டளையிடு ; (தொ.) column of route, பெயர்வு அணி வகுப்பு நிரை, அணி வகுத்துச் செல்வதற்கான படைப்பகுதி அமைப்பு.

**route'-march**, *n.* படைப்பயிற்சியினர் தொலைச்செலவு.

**routine'**, *n.* நடைமுறையொழுங்கு ; மாறுக்கடைப்பிடி ; *a.* நடைமுறையான, கடைப்பிடியான.

**rove**[1], *n.* அலைவு ; குறிக்கோளின்றி மனம்போனபடி திரிவு ; *v.* இலக்கின்றித் திரி, சுற்றித் திரி, அங்குமிங்குஞ் செல் ; கண்கள் வகையில் நாற்புறமுஞ் சுழன்று பார் ; உயிருள்ள இரையைச் செருகி மீன்பிடி ; (தொ.) roving commission, உலாவுரிமை ஆணை, விசாரணைக் குழு சுற்றித்திரிந்து பணி செய்தற்குப் பெறும் உரிமை ; roving sailor, படர்கொடி வகை.

**rove**[2], *n.* முதிரா இழை, இழுத்துச் சற்றே முறுக்கப்படும் பஞ்சு-கம்பளம் முதலியவற்றின் சிம்பு ; *v.* இழுத்துச் சற்றே முறுக்கு.

**rove**[3], *n.* இறுக்குவட்டு, ஆணியை ஊடே செருகி இறுக்கப் படுகிற சிறு உலோகத் தகடு அல்லது வளையம்.

**rove**[4], *v.* reeve[3] என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவங் களில் என்று.

**rov'er**[1], *n.* அலைந்து திரிபவர் ; அம்பெறிவதற்கான குறி யிலக்கு ; தொலைவு இலக்குக்குறி ; புல்வெளி மரப்பந்தாட்ட வகையில் ஒரு முளை தவிர மற்றவற்றை அடித்து வீழ்த்திய பந்து ; மரமுளையை அடித்து ஆட்டத்தை முடிக்கவிருக்கும் ஆட்டக்காரர் ; கடற்கொள்ளைக்காரன் ; முதிர்நிலைச் சாரணச் சிறுவன்.

**rov'er**[2], *n.* முதிரா இழைப்பொறி, பஞ்சு-கம்பளம் முதலிய வற்றின் சிம்புகளை இழுத்துச் சற்றே முறுக்குவதற்கான கருவி ; முதிரா இழைப்பொறியைக் கவனித்துக்கொள்பவர்.

**row**[1], *n.* வரிசை ; நாடக அரங்குகளில் இருக்கைநிரை ; தோட்டச் செடிப் பந்தி ; (தொ.) a hard row to hoe, கடின மான வேலை ; Rotten Row, the Row, லண்டன் ஹைடு பூங்கா (Hyde park) பகுதி ; குதிரைச்சவாரி இடம்.

**row**[2], *n.* தண்டு உகைப்பு ; படகில் மகிழ்வுலா ; *v.* தண்டு உகை ; படகு செலுத்து ; படகில் ஏற்றிக்கொண்டு போ ; படகுப் போட்டியில் ஈடுபடு ; போட்டிப்பந்தயத்தில் பட கோட்டியாயிரு ; படகுவகையில் உகை துடுப்புகள் கொண்ட தாயிரு ; (தொ.) row down, விரைந்து படகுசெலுத்தித் தொடர்ந்து சென்றெட்டு ; row out, படகுப்போட்டிப் பந்த யத்தில் எதிரி களைப்படையும்வரை படகுசெலுத்து ; row over, படகுப்பந்தயத்தில் போட்டியில்லாமையால் வெற்றியடை.

**row**[3], *n.* (பே-வ.) குழப்பம், கலசல்; பூசல், வாதம்; கலக்கம், கொந்தளிப்பு ; அரவம் ; கலகம், சந்தடி, தாராளமான கை கலப்பு ; கண்டிக்கப்பெறுதல் ; *v.* அதட்டு, குற்றங்கூறு, கண்டனஞ்செய், திட்டு ; (தொ.) make a row, kick up a row, கூச்சல் எழுப்பு, மறுப்புத் தெரிவி ; town-and-gown row, ஆக்ஸ்போர்டிலும்-கேம்பிரிட்ஜிலும் பல்கலைக்கழகத்தின ருக்கும் ஊராருக்குமிடையே கைகலப்பு ; what is the row? என்ன செய்தி ?

**row'an**, *n.* இறகுபோன்ற இலைகளையும் சிவப்புப் பழங்களையு முடைய மரவகை ; செந்நிறப் பேரிப்பழவகை.

**row'-boat**, *n.* துடுப்புப் படகு.

**row-de-dow'**, *n.* போரொலி, சந்தடி, அமளி.

**rowd'iness**, *n.* போக்கிரித்தனம் ; முரட்டுக்குணம்.

**rowd'y**, *n.* போக்கிரி ; முரடன் ; பெருங்கூச்சலிடுபவன் ; *a.* போக்கிரித்தனமான ; முரட்டுக்குணம் வாய்ந்த ; பெருங் கூச்சலிடுகிற.

**row'dy-dow'dy**, *a.* அமளி செய்கிற, பெருங்கூச்சலிடுகிற.

**rowd'yish**, *a.* வீண் கலகஞ் செய்கிற.

**row'dyism**, *n.* போக்கிரித்தனமான நடத்தை.

**row'el**, *n.* தாற்றுச்சில்லு, குதி முள்ளின் முனையிலுள்ள பற்களமைந்த சுழலுஞ் சிறுவட்டு; நீரதுக்கு வட்டு, குதிரையின் உடம்பிலுள்ள நீர்க் கூற்றினை வெளிப்படுத்துவதற்குத் தோலுக்கும் தசைக்கும் இடையே செருகப்படும் மையத் துளையுடைய வட்டத் தோல் துண்டு; *v.* தாற்றுச்சில்லினால் கிளறித்தூண்டு; குதிரை உடலில் நீரதுக்கு வட்டுச் செருகு.

**row'lock**, *n.* உகைமிண்டு, படகுத் துடுப்புக்கு உகைப் பாதாரமான அமைவு.

**Rox'burghe**, *n.* புத்தகக் கட்டடப் பாணிவகை, பொன் எழுத்துடைய மூட்டுத்தோலும் வெட்டா அருகும் உடைய புத்தகக் கட்டடமுறை.

**roy'al**, *n.* (பே-வ.) அரச குடும்பத்தினர்; இரலை அரசு, 12 அல்லது அதற்கு மேற்பட்ட கொம்புமுனைகளையுடைய கலைமான்; முகட்டுக்கூம்பு, உச்சிப் பாய்மரம்; முகட்டுப்பாய், பாய்மரத்தின் உச்சிக்கு மேலுள்ள பாய்; *a.* அரசனுக்குரிய; அரசிக்குரிய; அரசுரிமை சார்ந்த; அரசு வழிவந்த; அரச குடும்பத்தைச் சேர்ந்த; அரசுப் பணியிலிருக்கிற, அரசர் ஆதரவு பெற்றுள்ள; அரசு முறையான; வீறார்ந்த; மாண்புடைய; பகட்டாரவாரமான; சிறந்த, உயர்ந்த; முதல்தரமான; பேரளவினதான, இயல்புமீறிய அளவினதான; (தொ.) battle royal, அடிதடி, கைகலப்பு; blood royal, அரசகுடும்பம்; princess royal, அரசரின் மூத்த மகள்; அரசரின் மூத்த மகளுக்குரிய பட்டம்; rhyme royal, ஏழ்வரிப் பா, ஒன்றுவது மூன்றுவது அடிகளும் இரண்டு நாலு ஐந்தாவது அடிகளும் இறுதி இருஅடிகளும் கடை ஒலி இயைபுடையதாகப் பத்து அசைகளையுடைய ஏழு அடிப்பாட்டு; Royal Academy, தேசிய மதிப்புவாய்ந்த கலை இலக்கியக் கழகம்; Royal Air Force, (சு-வ., R. A. F.) தேசிய மதிப்புவாய்ந்த விமானப் படை; royal arch, நற்கொத்தர் சங்க உயர்மதிப்புப்பட்டம்; royal blue, திண்ணிய ஒளிர்நீலநிறம்; royal burgh, மன்னரிடமிருந்து உரிமைப்பட்டயம் பெற்றுள்ள நகரம்; royal commission, மன்னரால் நியமிக்கப்பட்ட ஆய்வு ஆணைக் குழு; Royal Engineers, படைத்துறைசார்ந்த பொறியியற் பிரிவு; royal evil, கண்டமாலை நோய்; Royal Exchange, லண்டனில் உள்ள செலாவணி மாற்றுக் கட்டிடம்; royal fern, கவர்ச்சிமிக்க சூரல் வகை; Royal Flying Corps, கடற்படையுடனும் தரைப்படையுடனும் இணைந்துள்ள விமானப்படை; Royal Highness, இளவரசர்க்குரிய பட்டம்; மன்னுயர் திருமேனி; Royal Institution, விஞ்ஞான அறிவைப் பரப்புவதற்காக 1799-இல் காணப்பட்ட நிறுவனம்; royal jelly, தேனீ வகையில் ராணி ஈயின் உணவு; Royal Marines, போர்க் கப்பல்களில் பணிபுரியும் படை வீரர்கள்; royal marriage, துருப்புச்சீட்டு அரசனும் அரசியும்; royal mast, பாய்மர உச்சிப் பாய்மரம்; Royal Military Academy, பொறியியல்-பீரங்கிப் பயிற்சிப்படைஞர்களுக்கான நிறுவனம்; Royal Military College, காலாட் படை-புரவிப்படைப் பயிற்சிக்குரிய படைத்துறைக் கல்லூரி; royal oak, இங்கிலாந்து இரண்டாம் சார்லஸ் மன்னர் 1651-இல் ஒடி ஒளிந்துகொண்ட மரம்; royal octavo, $6\frac{1}{2}'' \times 10''$ கொண்ட புத்தக அளவு; royal palm, பனையினத்தைச் சேர்ந்த மரவகை; royal paper, எழுதுவதற்கான $24'' \times 19''$ அளவுள்ள தாள்; அச்சிடுதற்கான $25'' \times 20''$ அளவுள்ள தாள்; royal road to, இடர்ப்பாடின்றி எளிதில் எய்தும் வழி; நேர் செல்வழி; royal sail, பாய்மர உச்சிப் பாய்; Royal Society, இயற்கையறிவை வளர்ப்பதற்காக 1662-இல் காணப்பட்ட கழகம்; royal stag, இரலையரசு; royal standard, மன்னர் மரபுச் சின்னங்கள் பொறிக்கப் பெற்றுள்ள சதுரக்கொடி; royal tennis, வரிப்பந்தாட்டத்தின் முதல்வடிவமான வளைப்பந்தாட்டம்; the Royals, பிரிட்டிஷ் சேனையில் முதலாவதான காலாட் படை; போர்க்கப்பல்களில் பணியாற்றும் வீரர்கள்.

**roy'alism**, *n.* முடியரசுக் கோட்பாட்டுப் பற்று.

**roy'alist**, *n.* முடியரசுக் கோட்பாட்டாளர்; உள்நாட்டுப் போரில் அரசுக் கட்சியினர்; *a.* முடியரசுக் கோட்பாடு சார்ந்த; அரசுக் கட்சியினரின் சிறப்பியல்பான.

**roy'alties**, *n. pl.* அரச குடும்பத்தினர்; அரசரின் தனிச்சிறப்புரிமைகள்.

**roy'alty**, *n.* அரசு; அரசபதவி; அரசுரிமை; அரசர் அதிகாரம்; அரசி அதிகாரம்; மன்னர் தனிச்சிறப்புரிமை; அரச குடும்பம்; மன்னுரிமை, தனி மனிதருக்கு அல்லது நிறுவனங்களுக்கு மன்னர் வழங்கும் தனியுரிமை; கனிப்பொருள்கள் மீது வழங்கப்படும் மன்னுரிமை; நில உரிமைத்தொகை, சுரங்க வருவாய்கருதிக் குத்தகைக்காரர் நிலஉரிமையாளருக்கு வழங்கும் தொகை; புனைவுரிமைத்தொகை, புதுக்கண்டுபிடிப்பின் பயனீட்டாளர் கண்டுபிடிப்பாளருக்கு அளிக்குந் தொகை; விற்பனைப் பண விகிதம்; ஏடு வகையில் ஆக்கியோர்க்கு அளிக்கப்படும் பங்குவீத உரிமை.

**Roy'ston crow**, *n.* தலையுறையுடைய சாம்பல்நிறக் காக்கை வகை.

**rub**[1], *n.* தேய்ப்பு, துடைப்பு; உராய்வு; முடப்பந்தாட்டத்தில் நில ஏற்றத்தாழ்வு; முடப்பந்தாட்ட நில ஏற்றத்தாழ்வினால் ஏற்படும் தட்டுத்தடங்கல்; தடை, சிக்கல், இடைத் தொல்லை; *v.* தேய்; துடை; உரசித்தேய்; உராய்வுறு; உரசுநிலையுறு; உரசிக்கொள்; உராய்வுறச்செய்; துடைத்துத் துப்புரவாக்கு; துடைத்து ஈரம்புலர்த்து; துடைத்தகற்று; துடைத்தழி; தேய்த்துப் பளபளப்பாக்கு, துடைத்து மெருகிடு; தேய்த்து உருவரைப் படியெடு; தேய்த்தராவு; தேய்த்துப் புண்ணுக்கு; தேய்த்துக் கூராக்கு; தேய்த்துத் தோய்வி; தேய்த்தழுத்து; தேய்வுற்று நரை; தடவு, பூசு; தேய்த்துப்புதுப்பி; தேய்த்து விறுவிறுப்பாக்கு; புதுத் தெம்பு அளி; முடப்பந்தாட்டப் பந்துவகையில் தட்டுத் தடங்கலுறு; தட்டுத்தடங்கலுடன் செல்; தட்டுத்தடங்கல் கடந்துசெல்; (தொ.) rub against, rub on, உராய், உராய்ந்தியங்கு, ஒன்றுடனொன்று உராய்வுறு; rub down, தேய்த்தழுத்து, தேய்த்தமிழ்த்து; தேய்த்துக் குறுக்கு; தேய்த்துப்பிடித்துவிடு; உடலெங்குந் தடவித்தேடு; rub in, rub into, சல்லடை முதலியவற்றினூடாகத் தேய்த்துச் செலுத்து; படிப்பினை வகையில் வன்மையாக அறிவுறுத்து; செய்தி வகையில் தன் மதிப்புக்கெதிராக வலிந்து ஏற்கச்செய்; rub noses, காட்டு மக்கள்வகையில் மூக்குடன் மூக்குரசுதல்மூலம் ஒருவருக்கொருவர் வணக்கமுறை மேற்கொள்ளு; rub off, rub away, துணியின் வகையில் இழைமடி நீக்கு; புதுமை-நாணம் ஆகியவற்றின்வகையில் மெல்ல அகல்வுறச்செய்; புதுமை-நாணம் ஆகியவற்றின் வகையில் மெல்ல அகல்வுறு; rub of the green, rub on the green, முடப்பந்தாட்டத்தில் பந்துக்கு ஏற்படும் தற்செயலான வெளி இடையீட்டுத் தடங்கல்; rub one's hands, கைகளை ஒன்றோடொன்று தேய்த்துக்கொள்; மிக்க மனநிறைவு குறித்துக் கைகளைத் தேய்த்துக்கொள்; rub out, அழி, துடைத்தகற்று; rub over, பூசு, மேலே தடவு; rub shoulders with, நெருங்கிய தொடர்புகொள், தோழமைத் தொடர்பு கொள்; rub the wrong way, பூனைவகையில் இயல்பான போக்கிற் கெதிராகத் தடவிச் சினமூட்டு; முறைதெரியாமல் பழகிச் சிக்கலுண்டாக்கு; rub to powder, தேய்த்துத் தூளாக்கு; rub up, பளபளப்பாக்கு, புதுப்பி; நினைவாற்றலைப் புதுப்பி; புது விறுவிறுப்பூட்டு; rub up into paste, தேய்த்துக் கூழாக்கு; the rubs and worries of life, வாழ்க்கையின் துன்பங்களும் துயரங்களும்.

**rub**[2], = rubber[2].

**rub'-a-dub**, *n.* முரசொலி; *v.* முரசொலியெழுப்பு.

***ruba'to***, (இத்.) *n.* (இசை.) திரிபுக்காலச் சந்தம், உணர்ச்சிக்குத் தக்கவாறு கதி திரிபுறும் தாள அமைதி; *a.* (இசை.) திரிபு காலமான, உணர்ச்சிக்குத் தக்க காலகதியுடைய.

**rubb'er**[1], *n.* துடைப்பான், எழுதுகோல் வரையினை அழிக்கும் மென் தொய்வகத்துண்டு; மைவரை அழிப்பான்; இயங்கு பொறித் தடுப்புக்கருவி; துடைப்பவர்; மெய்ப்பிடிப்பாளர்; குளிப்பறைப் பணியாள்; துடைப்புக்கருவி; தேய்ப்புக் கற்றை; தேய்ப்புத்தாள்; முரட்டுத் துவட்டுத்துண்டு; மெருகுப்பட்டை; உராய்வுப்பொறி; இயந்திர உராய்வுறுப்பு; தீப்பெட்டியின் சொரசொரப்பான பரப்பு; உராய்வினால் இயக்கப்படுங் கருவி; இழைப்புச் செங்கல்; சமதளமற்ற இடம்; முடப்பந்தாட்டத்தில் தடங்கல்; புண்படுத்துஞ் செய்தி.

**rubb'er**[2], *n.* சீட்டாட்டவகைகளில் தொடர்ந்த மும்முறை ஆட்டம்; மூன்ருட்டத்தில் இரண்டாட்டக் கெலிப்பு; இரு திசைச் சமநிலயாளரின் மூன்றும் ஆட்டம்.

**rubb'er-neck,** *n.* பிறர் செய்தி அறியும் ஆவலர்.

**rubb'ers,** *n. pl.* புதைமிதி மேலோடு; ஆட்டுச் சிரங்கு.

**rubb'er-stamp,** *n.* தொய்வக முத்திரை; கைப்பொறிப்பு முத்திரை; பணிமுறைப் பூசகர்; *v.* கைப்பொறிப்பு முத்திரை யடி; ஆராயாது ஏற்றுக்கொள்.

**rubb'ery,** *a.* தொய்வகம் போன்ற; தொய்வுடைய, நெகிழ்வுடைய, நீட்சி மீட்சி வாய்ந்த.

**rubb'ing-stone,** *n.* மெருகுக் கல்.

**rubb'ish,** *n.* கழிவு கப்பி, சவறு, குப்பை கூளம்; பயனற்ற பொருள்கள்; பொருந்தாத கருத்து; அறிவு குறைந்த கருத்துரை.

**rubb'ishy,** *a.* பயனற்ற; அற்பமான.

**rub'ble,** *n.* இடிமானம், இடிந்த கட்டிடக் கற்கூளம்; கொத்தாத கட்டுமானக் கல்; கூழாங்கல்; பாறைகளை மூடியுள்ள கோண வெட்டுக்கற்களின் தொகுதி.

**rub'ble-work,** *n.* நயமற்ற கட்டிட வேலை.

**rub'-down,** *n.* தலை முதல் கால்வரை தேய்த்தல்; உடலெங்கும் தடவித் தேடுவதுபோன்ற உணர்ச்சி.

**rube,** *n.* நாட்டுப்புறத்தான்.

**rubefa'cient,** *n.* தோலைச் சிவக்க வைக்கிற மேற்பூச்சு மருந்துப் பொருள்; *a.* சிவப்பாக்குகிற.

**rubefac'tion,** *n.* சிவத்தல்; சிவப்பாக்குதல்.

**ru'befy, ru'bify,** *v.* சிவப்பாக்கு; (மரு.) தோலைச் சிவக்கச் செய்.

**ru'bicelle,** *n.* கெம்புக்கல், செம்மஞ்சள் நிறமுள்ள இரத்தினக் கல்வகை.

**Ru'bicon**[1], *n.* தயக்க வரம்பு, தாண்டியபின் முயற்சியிலிருந்து பின்னடைய முடியா எல்லைக்கோடு; (தொ.) cross the Rubicon, pass the Rubicon, செய்திரங்கா வினைமேற்கொள்.

**ru'bicon**[2], *n.* முன்மதிக்கெலிப்பு, சீட்டாட்ட வகையில் எதிரி நூறு கெலிப்பெண் பெறுவதற்குள் பந்தயம் கெலித்தல்; *v.* முன்மதிக் கெலிப்புப் பெற்று எதிரியைத் தோற்கடி.

**ru'bicund,** *a.* செவ்வரிவண்ணம் வாய்ந்த, முகவகையில் சிவந்த; ஆள் வகையில் சிவப்பான; உடல்நிறம் வகையில் செந்நிறமான.

**rubid'ium,** *n.* மென்மையான வெள்ளிய உலோகத் தனிம வகை.

**rubi'ginous,** *a.* துரு நிறமுடைய.

**ru'bious,** *a.* கெம்புக்கல் நிறமான, செந்நிறமுடைய.

**ru'bric,** *n.* இயல் மேல்வரி, அத்தியாயத் தலைப்பு; கையெழுத்தில் அல்லது அச்சில் செந்நிறமாகக் குறிக்கப்பட்ட சிறப்புப் பகுதி, தனிச்சிறப்புக்கூறு, செவ்வண்ணக் குறிப்பு; கவர்ச்சிக் கூறு; கட்டளை வரி, இறைவழிபாட்டு ஏட்டில் முனைப்பாகக் காட்டப்படும் நடைமுறைக் கட்டளைப்பகுதி; வீச்சுவரை, கையெழுத்தின் புற ஒப்பனைவரை; முடிவான செய்தி; *a.* செவ்வண்ணமான; செம்மைபடர்ந்த.

**rubri'cian,** *n.* செவ்வரி வல்லுநர், வழிபாட்டுச் சுவடிகளின் கட்டளை வரிகளில் தேர்ச்சியுடையவர்; வரியேகி, கட்டளை வரிப்படி நடப்பவர்.

**rub'-stone,** *n.* சாணைக்கல்.

**rub'up,** *n.* புது மெருகூட்டு; நினைவு புதுப்பிப்பு.

**ru'by,** *n.* கெம்புக்கல், மாணிக்கம்; ஆழ்ந்த செந்நிறத்திலிருந்து வெளிறிய ரோசா நிறம்வரை உள்ள மணிக்கல்வகை; கருஞ்சிவப்புச் சாயலுடைய செந்நிறம்; மூக்கில் அல்லது முகத்திலுள்ள செம்முகப்பரு; செந்நிறக் கொடிமுந்திரித் தேறல்; குத்துச்சண்டையில் குருதி; அச்செழுத்துவகை; *a.* செந்நிறமுடைய; *v.* செந்நிறச் சாயமூட்டு, செந்நிறமாக்கு; (தொ.) above rubies, அளவிடற்கரிய விலைமதிப்புடைய; balas ruby, spinel ruby, குறைந்த மதிப்புள்ள சிவப்புக்கல் வகை; ruby glass, செந்நிறமூட்டப்பட்ட கண்ணாடி; ruby throat, செந்நிறக் கழுத்துப் பாடும் பறவை.

**ruby-'tail,** *n.* பசுஞ் செந்நிறப் பின்புற மேல்பகுதியினை யுடைய பசுநீலப் பொன்வண்டுவகை.

*ruche,* (பிர.) *n.* ஓரக் குஞ்சம்; ஓரப் பின்னல்.

**ruck**[1], *n.* பந்தயத்தில் பின்தங்கிப் போனவர்களின் தொகுதி.

**ruck**[2], **ruc'kle**[1], *n.* சுரிப்பு, தோல் மடிப்புச்சுருக்கம்; *v.* சுரிப்பு விழச்செய்.

**ruc'kle**[2], *n.* சாநிலையர் களகளப்பொலி.

**ru'cksack,** *n.* வெரிந் பை, பிரயாணிகள் முதுகிற் சுமந்து செல்லும் பை.

**rudbeck'ia,** *n.* வட அமெரிக்க தோட்ட மலர்ச்செடிவகை.

**rudd,** *n.* சிறு நன்னீர் மீன்வகை.

**rudd'er,** *n.* பயின், சுக்கான், கப்பலின் திசைதிருப்பு கட்டை; வழிகாட்டுந் தத்துவம்; தேறலுக்கான மாவூறலைக்கிளறுந் துடுப்பு.

**rudd'erfish,** *n.* கப்பலைப் பின்தொடரும் மீன்வகை.

**rudd'iness,** *n.* சிவப்பு நிறம், குருதி நிறம்.

**rud'dle,** *n.* காவி; செம்மறியாட்டுக்கு அடையாளமிடப் பயன்படும் சிவப்புக்காவி; *v.* காவி யடி; சிவப்புக் காவியால் அடையாளமிடு.

**rudd'ock,** *n.* செம்மஞ்சள்நிற மார்புடைய பாடும் பறவை வகை.

**rudd'y,** *a.* செவ்வண்ணமான, செம்பவளநிறமான, ரோசா நிறமான; (தொ.) ruddy health, செவ்விய உடல்நலம்; ruddy youth, செவ்விள நலம்.

**rude,** *a.* நாகரிகமற்ற; திருந்தாத; இயல்பான நிலையில் உள்ள; சூதுவாதற்ற, கபடமற்ற; முரட்டுத்தனமான; கரடுமுரடாகச் செய்யப்பட்ட; பருக்கனுன; நயமற்ற; கலைத் திறமற்ற; நுண்ணயமற்ற; நுணுக்கத் திறமில்லாத; கடுகடுப்பான; தடுக்கமுடியாத; திடீரெழுச்சியுடைய; திடுக்கிடச்செய்கிற; உரமான, வலிய; ஊக்கமுள்ள; துடுக்கான; அவமதிக்கிற; தவறுக்கு வருந்தாத; வெறுப்பைத் தருகிற.

**rude'ly,** *adv.* அவமதிப்பாக; நாகரிகமின்றி, முரட்டுத்தனமாக.

**Ru'desheimer,** *n.* வெண்ணிறக் கொடிமுந்திரித்தேறல் வகை.

**ru'diment,** *n.* அடிப்படைக் கொள்கை; அடிப்படைக்கூறு.

**ru'diments,** *n. pl.* மூலக்கருக்கூறு; முதற்படிக்கூறு; மூல அடிப்படை அறிவு; முதற்படி அறிவு.

**rue,** *n.* செய்ததற்கிரங்கும் நிலை; *v.* செய்ததற்கிரங்கு; வினை வினுக்கு வருந்து

**rue'ful,** *a.* துயரார்ந்த; இரங்கத்தக்க.

**rue'fulness,** *n.* இரக்கம், அருள்; மனச்சோர்வு.

**rue'-raddy,** *n.* தோட்கோப்புக் கயிறு.

**rufes'cent,** *a.* (வில.) சற்றுச் சிவப்பான.

**ruff**[1], *n.* விறைப்புக்கொசகமுடைய முற்கால அகலக் கழுத்துப் பட்டை; பறவைகளின் கழுத்திறகு வளையம்; பறவைகளின் வண்ணக் கழுத்துவளையம்; வளர்ப்புப்புறு வகை.

**ruff**[2], *n.* உள்ளான் குருவியினப் பறவைவகை.

**ruff**[3], *n.* சிறு நன்னீர் மீன்வகை.

**ruff**[4], *n.* துருப்புச்சீட்டு; துருப்புச்சீட்டாட்டம்; துருப்புச்சீட்டு வாய்ப்பு மாறி மாறிவரும் பழைய சீட்டாட்டவகை; *v.* சீட்டாட்டத்தில் துருப்புச்சீட்டாடு.

**ruffed,** *a.* விறைப்புக்கொசுவக் கழுத்துப்பட்டையணிந்த; வண்ணக்கழுத்து வளையமுடைய; கழுத்திற்கு வளைய முடைய.

**ruff'ian,** *n.* முரடன், கொடியவன்; போக்கிரி, சட்டத்திற்கு முரணுகக் குழப்பம் விளைப்பவன்.

**ruff'le**, *n.* உலைவு, அமைதிகுலைவு; மயிர்கலைவு; திரைவுகோள்; இறகு உளர்வு; நீர் அலைவு; ஆடை ஓரக்குஞ்சம்; பறவைகளின் கழுத்துப்பட்டை; (படை.) முரசதிர்வு; குழப்பம்; கலைசல்; *v.* உலைவுறுத்து; அமைதிகுலை; இறகு உளர்வி; நீர்ப்பரப்புமைதிகெடு; ஆளின் பண்பு வகையில் குலையச்செய்; மெல்லிழைவு இழ; அமைதி இழ; தருக்கித்திரி; சண்டை வளர்த்துக்கொண்டு சுற்றித் திரி; (தொ.) ruffle up feathers, குளிரால் இறகு சிலிர்த்துக்கொள்; சின எழுச்சியால் இறகு உளர்வி.

**ru'fous**, *a.* (வில., தாவ.) செம்பழுப்பான.

**rug**, *n.* முரட்டுக் கம்பளம்; கம்பள விரிப்பு; தரைவிரிப்பு; (தொ.) hearth rug, கணப்படுப்பிற்கு முன் போடப்படும் தரைவிரிப்பு.

**Rugbei'an**, *n.* ரக்பி (Rugby) பள்ளி; ரக்பி பள்ளி உறுப்பினர்; *a.* ரக்பி பள்ளியைச் சார்ந்த.

**Rug'by**, *n.* ரக்பி காற்பந்தாட்டம், ஆடுவோர் பந்தினைத் தூக்கிச் செல்லக்கூடிய காற்பந்தாட்டம்.

**rugg'ed**, *a.* கரடுமுரடான; சொரசொரப்பான; மென்மையாக்கப்படாத; மெருகூட்டப்படாத; பணிவிணக்கம் அற்ற; திருத்தம் இல்லாத; கரகரப்பான ஒலியுடைய; கடுமையான; வளைந்துகொடுக்காத; கடுகடுப்பான; கடும் உழைப்பினை உட்கொண்ட.

**rugose'**, **ru'gous**, *a.* (தாவ.) சுருக்கங்கள் கொண்ட; சுருள் மடிப்புக்கள் வாய்ந்த; திரைந்த.

**ru'in**, *n.* முழுக்கேடு, பாடழிவு, படுவீழ்ச்சி; பாழ்நிலை; அழிபாடு, கட்டிடம்-நகரம் முதலியவற்றின் சீர்குலைந்த நிலை; தகர்வு; பொருளக நொடிப்பு; செல்வநிலை அழிவு; பொருளாதார வீழ்ச்சி; முழுச்சொத்திழப்பு; கற்பழிவு; அழிவுக்காரணம்; தீங்கிற்கு வழிவகுப்பது; *v.* பாழ்படுத்து; பாழ்நிலையடை; படுவீழ்ச்சியுறு; (தொ.) blue ruin, மோசமான தேறல்வகை; bring to ruin, அழி, பாழ்நிலைக்குக்கொணர்; go to rack and ruin, அழிந்துபடு; ruin girl, பெண்ணை எத்திக்கொண்டு போ; ruin one's new hat, வருங்கால வாய்ப்பு நலங்களைக் கெடுத்துக்கொள்.

**ru'inous**, *a.* சீரழிவான, அழிந்த நிலையிலுள்ள, சிதைந்த தன்மையிலுள்ள; அழிவுண்டாக்குகிற; கேடுபயக்கிற.

**ru'ins**, *n. pl.* இடிபாடுகள்; எஞ்சிய அழிபாடுகள்; அழிவு நிலையிலுள்ள கட்டிடப்பகுதிகள்; அழிவுநிலையிலுள்ள நகரப் பகுதிகள்.

**rule**, *n.* விதி, ஒழுங்கு; முறைமை, நியதி, ஒழுங்கமைதி; மரபொழுங்கு; வழக்கமுறை, நடைமுறை ஒழுங்கு; இயல் அமைதி, பொதுநியதி; கட்டளைவிதி, வகுத்துரைக்கப்பட்ட விதிமுறை; திருந்திய ஒழுங்குநிலை; வழிகாட்டுந் தத்துவம்; மேற்கோள் வரி; வகைமுறை; நடைமுறைவிதி; நடைமுறை ஆட்சி; பொதுநிலை வழக்காறு; நீதி, ஒழுக்கவிதி; கோட்பாடு; சட்டம்; கட்டுப்பாட்டொழுங்கு; சமயக்கட்டுப்பாட்டு விதிமுறைத்தொகுதி; ஆட்சி; அரசாட்சி; ஆட்சியுரிமை; ஆட்சியமைதி; மேலாண்மையுரிமை; ஆட்சிக்கட்டளை; நடுவர் கட்டளை முடிவு; நீதிமன்ற ஆணை; அளவுகோல்; நேர்வரி; கொத்தரின் தளமட்டத் தகட்டுக்கோல்; (அச்சு.) இடைவரித்தகடு; வரையச்சுப்பாளம்; அச்சில் அவாய்நிலைக் குறிப்புக்கோடு; அச்சில் வாசக இடைவெட்டுக் குறிப்புக் கோடு; கைதிகள் தனி ஒதுக்கிட வாழ்வுரிமை; *v.* ஆளு; ஆட்சி செலுத்து; மேலாளராயமை; மேலாண்மை செலுத்து; கட்டுப்படுத்தி நடத்து; அடக்கி ஆளு; அறிவுரை கூறி இயக்கு; வழிகாட்டி நடத்து; செல்வாக்காற்றலால் இயக்கு; மேலோங்கியிரு; விலைகள் வகையில் குறிப்பிட்ட படித்தரம் உடையதாயிரு; பண்டங்கள் வகையில் பொதுவான படிநிலையுடையதாயிரு; மன்றத்தில் தீர்வு வழங்கு, செய்தி வகையில் அதிகார தீர்ப்புக் கொடு; வரைதடி கொண்டு நேர் கோடு வரை; தாளில் இணைவரிகள் இடு; (தொ.) as a rule, பொதுவாக; வழக்கமாக, பெரும்பாலும்; bear rule, செல்வாக்குப் பெற்றிரு, மேலோங்கியிரு; be ruled, நல்லுரைகளைப் பின்பற்ற ஒருப்படு; நெறிப்படுத்தப்பெறு; by rule, ஒழுங்குமுறைப்படி, இயந்திரம்போல் செயலாற்றிக்கொண்டு; exception proves rule, விதிவிலக்கே விதியின் பொது ஒழுங்கை மெய்ப்பிக்கிறது; golden rule, பொன்போன்ற நடைமுறைவிதி, தான் பிறரிடம் எதிர்பார்ப்பதையே தானும் பிறர்க்குச் செய்க எனும் நீதி; hard and fast rule, வளைவு நெளிவற்ற வாய்பாடு; rule of faith, (இறை.) அடிப்படைச் சமய உண்மைகள் வகையில் இறுதி உறுதிப்பாட்டிற்குரிய திருமேற்கோள்; rule of the road, சாலை ஒழுங்குமுறை; rule of three, (கண.) முக்கவர்வு வழிமுறை, தகவுப் பொருத்தத்தின் மூன்று கூறுகள் கொடுக்கப்பட்டிருக்கையில் நான்காவதனைக் கண்டுபிடிப்பதற்கான விதி; rule of thumb, உடன் கைக்கொள்ளத்தக்க செயல்முறை வகை; rule out, தள்ளு; பொருத்தமற்றதென விலக்கு; தகுதியற்றதெனத் தீர்ப்பறிவி; rule the roast, முதன்மை வகி, முதல்வராயிரு; standing rule, நிலைவிதி, தன் நடைமுறையை ஒழுங்குபடுத்துவதற்காக நகராட்சி ஏற்படுத்திக்கொள்ளும் விதி; work to rule, வேலைநிறுத்த மனப்பான்மையுடன் விதிமுறை வேலை செய், வெளிப்படையாய் வேலைநிறுத்தஞ் செய்வதற்குப் பதிலாக ஒவ்வொரு விதியையும் கண்டிப்பாகக் கடைப்பிடிப்பதுபோற் காட்டித் திறமைக் குறைவுண்டாக்கு.

**rule'-joint**, *n.* மடக்குவரை அளவுகோல்.

**rule'less**, *a.* முறையற்ற, ஒழுங்கற்ற; விதிமுறைகள் இல்லாத; அடங்காத.

**ru'ler**, *n.* ஆளுநர்; அரசர்; வரைகோல்; வரைதடி, வரையுருளை.

**rules**, *n. pl.* (வர.) தனியுரிமை வரம்பு, தனியுரிமைபெற்ற கைதிகள் வாழ அனுமதிக்கப்படும் சிறைச்சாலையைச் சுற்றியுள்ள இடப்பரப்பு.

**ru'ling**, *n.* நடுவரின் தீர்வுமுடிவு; வாய்மொழித் தீர்வறிவிப்பு; நேர்கோடுகள் வரைவு; *a.* மேம்பட்டதான; பரவி நிலவுகிற; அரசியற்றுகிற; (தொ.) ruling passion, தூண்டுதலாயுள்ள உணர்ச்சி, மேம்பட்ட உணர்வெழுச்சி; ruling prices, நிலவர விலைகள்.

**rull'ey**, *n.* பாரவண்டி, தட்டையான நான்கு சக்கரக் கட்டை வண்டி வகை; பார உந்து, லாரி; *pl.* rull'eys.

**rum** [1], *n.* கரும்பிலிருந்து வடித்திறக்கப்படும் மதுபான வகை; வெறியூட்டுஞ் சாராயம்; (தொ.) rum row, மதுபானங்களைக் கள்ளக்கடத்தல் செய்யுங் கப்பல்கள் தடைப்பகுதிக்கு அப்பால் தங்குமிடம்.

**rum** [2], *a.* புதுமைவாய்ந்த, இயல்முரணிய, முன்பு அறிந்திராத, அரைக்கிறுக்கான; (தொ.) rum customer, ஊடாடினால் அபாயம் விளைக்கத்தக்க ஆள்; இடர்ப்பாடான விலங்கு; rum start, வியப்புத்தரும் நிகழ்ச்சி.

**Rum'an**, **Ruman'ian**, *n.* ருமேனியா நாட்டினர்; ருமேனிய மொழி; *a.* ருமேனியா நாட்டைச் சார்ந்த.

**Rumansh'**, *n.* ருமான்ஷ், கிழக்கு சுவிட்சர்லாந்தின் வடமேற்குப் பகுதியில் வழங்கும் மொழிவகை; *a.* ருமான்ஷ் மொழியிலுள்ள.

**rum'ba**, *n.* கியூபாநாட்டு நீகிரோவர் நடனவகை.

**rum'ble** [1], *n.* குமுறல், உறுமல் ஒலி; வண்டியின் பின் இருக்கை; *v.* உறுமு; இடி வகையில் குமுறு; நிலநடுக்க வகையில் குமுறல் ஒலி செய்; பாரவண்டி வகையில் அரைப் பொலி செய்; உறுமிக்கொண்டு செல்; இரைவொலி செய்யும் வண்டியிலேறிச் செல்; இரைவொலியுடன் பேசு.

**rum'ble** [2], *v.* ஆழம்பார், ஊடுருவி நோக்கு; நுணுகிக் கண்டுபிடி.

**rum'ble-tum'ble**, *n.* தள்ளாடிச்செல்கிற வண்டி; உருண்டும் இடறியும் செல்லும் இயக்கம்.

**rumbus'tious**, *a.* கும்மாளமிடுகிற, அமளிசெய்கிற.

**Rumel'iote**, *n.* ருமேலியா நாட்டினர், முற்கால பல்கேரியர்.

**ru'men**, *n.* தீனிப்பை, அசைபோடும் விலங்கின் முதல் இரைப்பை.

**ru'minant**, *n.* அசைபோடும் விலங்கு; *a.* அசைபோடுகிற, அசைபோடும் விலங்கினத்தைச் சேர்ந்த; நீளநினைக்கிற, ஆழ்ந்து சிந்திக்கும் பாங்குள்ள; ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருக்கிற.

**ru'minate**, *v.* அசைபோடு; நீளநினை, ஆழ்ந்து சிந்தி.

**rumm'age**, *n.* துருவிக்கண்டெடுத்த பொருள்கள்; துருவித் தேடுதல்; கந்தல்கூளக் குவியல்; தேட்டாராய்வு, சுங்க அலுவலர் வகையில் கப்பலைச் சோதனை போடுதல்; *v.* எங்கும் துருவித்தேடு, நுணுகிப் பரவலாக ஆராய்; சோதனைபோடு, கிளறிப்பார்; பலவற்றில் ஒன்றைத் தேடிப் பொறுக்கியெடு; தேடும் வேலையில் கலைத்துப் போடு, தேடுவதற்காக இங்குமங்கும் சிதறியெறி; (தொ.) rummage sale, இட ஒழிப்புப் பொருள் விற்பனை; அற நன்கொடை உதவிப்பொருள் விற்பனை.

**rumm'er**, *n.* பெரிய குடிநீர்க்கலம்.

**rumm'y**[1], *a.*=rum[2].

**rumm'y**[2], *n.* இரண்டு முழுச்சீட்டுக் கட்டுக் கொண்ட சீட்டாட்ட வகை.

**rum'our**, *n.* அலர், வதந்தி; *v.* அலர்கூறு, வதந்தி பரப்பு.

**rump**, *n.* பிட்டம்; விலங்கின் பின்பகுதி; பறவையின் பின்புறம்; தறிகட்டை, இகழ்ச்சிக்குரிய எச்சப்பகுதி; (தொ.) rump steak, மாட்டின் பிட்டத்துடை இறைச்சித் துண்டு; the Rump, (வர.) எச்ச மாமன்றம், பல கட்சி உறுப்பினர்கள் வெளியேற்றப்பட்ட பிறகு 1648-இல் தொடர்ந்திருந்த மாமன்றத்தின் எஞ்சிய பகுதி.

**rum'ple**, *v.* கசக்கிச்சுருட்டு, திரைத்துச்சுருக்கு, மடி, கசக்கி உருக்குலைத்துவிடு.

**rum'pus**, *n.* குழப்பம், கலகம்.

**rum'py**, *n.* மான் தீவிலுள்ள (Isle of Man) வாலில்லாப் பூனைவகை.

**rum'-runn'er**, *n.* (பே-வ.) மதுபானக் கள்ளக்கடத்தல் செய்பவர்; மதுபானக் கள்ளக்கடத்தல் செய்யுங் கப்பல்.

**rum'-shrub**, *n.* பழச்சாறுஞ் சாராயமுஞ் சேர்த்துச் செய்யப்படும் வலுவூட்டும் பானவகை.

**rum'-tum'**, *n.* தேம்ஸ் ஆற்று எளிய படகுவகை.

**run**, *n.* ஓட்டம்; ஓட்டப்பாணி; ஓட்டத் தொலைவெல்லை; ஓட்டநேர அளவு; ஓட்டப்படிமுறை, ஓட்டச்சுற்றுமுறை; சுற்றுவட்டமுறை; விரைநடை; சிறிது தூரப் பயணம்; நடமாட்டம்; ஊடாட்டம்; ஒழுக்கு, கசிவு; வீச்சு; ஒழுக்களவு; இயங்குநிலை; இயங்குநிலை நீட்டிப்பு; இயங்குகால அளவு; இயக்க எல்லை அளவு; பரவலான நடைமுறை; பரவல்; நடைமுறை நீட்டிப்பு; நடைமுறைக்கால அளவு; இருபத்துநான்கு மணிநேரத்தில் கப்பல் செல்லும் தொலைவு; பொதுப்போக்கு; இயக்கப்பாங்கு; நடைமுறை நிலவரம்; போகுந்திசை; போக்கின் உட்கிடக்கை; இயக்க மறைதிறவு; இயக்கச்சந்தம்; விரைவீழ்ச்சி; தொடர்பரப்பு; தொடர்நீட்சி; கோவை; தொடர் அடுக்கு; பருவம், தொடர்கால அளவு; நிகழ்ச்சிக்கோவை; திடீர்த்தேவை நெருக்கடி, பணக்கோரிக்கையாளர்களின் மொய்ப்பு; தேவைப்பெருக்கம்; பயனீட்டுப்பரப்பு; பெருவரவுவாய்ப்பு; பொதுத்தரம்; வகை; மாதிரி; விலங்கு-புள் வகையின் இனத்திரள்; இனத்திரள் பெயர்ச்சி இயக்கம்; இயங்கினப்பந்தி; விலங்குவகையில் செல்நெறித்தடம்; கோழி வளைப்படைப்பு; மேய்ச்சல் வெளிப்பரப்பு; ஓடுநீர் இடைத்தேக்கத் தொட்டி; கப்பலின் ஒடுங்கிய பின்புற அடிப்பகுதி; குண்டுவீச்சு விமானப்போக்கில் மாறுநேர் விசைப்பகுதி; துய்ப்பு; தங்குதடையற்ற நுகர்வாட்சியுரிமை; எங்கும் செல்லும் உரிமை; தையலில் தனிப்படி வரிசை; மீன்வகையின் களியாட்டம்; சிற்றோடை; ஓட்டமுறை, மரப்பந்தாட்டத்தில் முளை இடைப்பகுதியில் இருபக்க ஆட்டக்காரரும் ஆட்டமிழக்காது எதிரெதிர் ஓடுதல்; மரப்பந்தாட்ட ஓட்டமுறைக் கெலிப்பு எண்; தளக்கட்டுப் பந்தாட்டத்தில் ஒரு சுற்றுவட்டம்; (இசை.) விரை இசைப்புப்பகுதி; *v.* ஓடு; விலங்குகள் வகையில் விரைந்து செல், விரைநடை போடு; ஓட்டநடையாகச் செல்; தாவி ஓடு; ஓட்டநடையில் சவாரி செய்; அலைந்து திரி; பயணஞ் செய்; விமானத்தில் செல், பறந்து செல்; ஊர்தியில் விரைந்து செல்; கப்பல் பாய் விரித்துச்செல்; சக்கர வகையில் சுற்றிச் சுழல்வுறு; உருண்டு செல்; ஊர்தி வகையில் சக்கரமீது உருண்டோடு; தப்பி ஓடு; மறைந்தோடு; படை வகையில் பின்னிடைந்தோடு; விரை; செல்; பாய்ந்து செல்; படகு வகையில் பாய்ந்து செல்லுவி; புல்வெளி மரப்பந்தாட்டத்தில் பந்தினை வளையத்தினூடாக வீசி எறி; அவசரமாகச் செல், பரபரப்புக்காட்டு; மிதந்து செல்; கடந்து செல்; இடைவிடாது செல்; முட்டின்றிச் செல்; விலங்கு-புள் வகையில் இயங்கினக் குழுவாகச் செல்; மீன்வகையில் நேர்பாய்ச்சலில் செல்; கடல் மீன் வகையில் ஆற்றில் எதிராகப் பாய்ந்து செல்; செயலாற்று; பணிசெய்; தங்குதடையற்றுப் பணிசெய்; இயங்கு; தங்குதடையின்றி இயங்கு; இயங்கவிடப் பெறு; இயந்திர வகையில் சுழன்றியங்கு; நிகழ்வுறு; நடைபெறு; தடங்கலின்றி இயங்கு; மீட்டும் மீட்டும் இயங்கிக்கொண்டேயிரு; செல்லுபடியாயமைவுறு; காலவகையில் கழிதலுறு; சார்பாகச் சாய்வுடையதாயிரு; நடைமுறையிலிரு; வழக்காற்றில் இரு; முயற்சியின்றி இயல்வுறு; முடிச்சுவகையில் தளர்த்தியாயிரு; இழைவாயிரு; போக்குவரவுமுறையில் இரண்டு இடங்களுக்கிடையே இயங்கு; பரவு; நெருப்பு-வதந்தி ஆகியவற்றின் வகையில் வேகமாக இடத்துக்கு இடமாகப் பரவிச் செல்; கருத்துவகையில் தாவிச்செல்; மீது படர்ந்து செல்; மேவிச்செல், தொட்டுத் தொடாமல் செல்; ஒழுகு; பாய்வுறு; சொரிவுறு; சொட்டுச்சொட்டாய்க் கசிவுறு; கசியவிடு; வடிவுறு; பாய்வி; பெருக்கெடுத்தோடு; வளங்கொழி; பொங்கிப்பொதுளு; விலைவகையில் குறிப்பிட்ட தளமட்டமுடையதாயிரு; உருகு; மெழுகுதிரி வகையில் உருகிவடி; தொடர்ந்து நீடித்திரு; நீடித்தியங்கு; நீள்வுறு; சராசரியாயமைவுறு; கிட; தொடர்ந்துகிட; தொடர்பாயிரு; ஆகு; ஆகியுமை; அமைவுறு; தொடர்பாயமைவுறு; தொடர்ந்தமைவுறு; தொடர்ந்தியங்கு; முன்னேறிச்செல்; ஒன்றன்பின் ஒன்றுயமை; ஒன்றன்பின் ஒன்றாகச்செல்; மாறு; மேற்கொள்; முனைந்து மேற்கொள்; நடத்து; மேற்கொண்டு நடத்து; பின்பற்று; ஆட்படு; உள்ளாகு; தேடு; மேயவிடு; கள்ளக்கடத்தல் செய்; போக்கு; ஓட்டு; இட்டுச் செல்; தள்ளு; மோதுவி; முட்டுவி; மிகவும் நெருக்கடி செய்; நுழைவி; தடவுவி; உருக்கி ஊற்று; தேர்தலில் நிற்கவை; உட்செலுத்து; கொட்டிவிடு; கொண்டுசெலுத்து; இலகுவான தாவு தையலிடு; (இசை.) சந்தமாக இயங்கு; வேட்டை மேற்கொள்; பந்தயம் மேற்கொள்; ஓட்டப்பந்தயமிடு; போட்டியிடு; போட்டியின் விளைவில் இடம்பெறு; தேர்வுமுதலியன நாடி முனைவுறு; மரப்பந்தாட்டத்தில் கெலிப்பெண் எடுப்பதற்காக ஓட்டமுறை மேற்கொள்; மரப்பந்தாட்டத்தில் ஓட்டமுறைக்கு முனைந்தொருங்கு; பட்டியலில் அல்லது கணக்கில் பணம் கொடுக்குமுன் தொகை சேரவிடு; (தொ.) a run on the bank, பொருளகத்தில் உடன் பணம் நாடிய வாடிக்கைக்காரர்கள் மொய்ப்பு நெருக்கடி; a run on the continent, ஐரோப்பாவில் சிறு தொலைப்பயணம் போய் வருகை; at a run, ஓடிக்கொண்டு, வேகமாக; cannot get the run of, எவ்வாறு இயங்குகிறதெனத் தெரியவில்லை; have a good run, நல்ல வேட்டையாடு; கப்பலில் அல்லது இருப்பூர்தித் தொடரில் சுகமான பயணஞ் செய்; have a run for one's money, செலவிட்ட பணத்திற்கு முயன்று சிறிது இன்பம் நுகர்; he who runs may read, எளிதாக விளக்கப்பட்டுள்ளது; in the long run, முடிவாக, இறுதி விளைவாக; on the run, ஓடிக்கொண்டு; ஆரவாரஞ் செய்துகொண்டு; run about, ஆரவாரஞ்செய்; ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் அவசரமாகச்செல்; குழந்தைகள் வகையில் தங்குதடையின்றி விளையாடு; ஓடித்திரி; run a chance of being, அப்படியும் ஆவதற்கு வாய்ப்புடையதாயிரு; run across, தற்செயலாக எதிர்ப்படு; run after, கெஞ்சுதலுடன் பின்பற்றிச்செல்; நாடிச்செல்; தொடர்புநாடு; தொழில் வகையில் மிகு காலம் செலவிடு; run against, தற்செயலாக எதிர்ப்படு; run a scent, மோப்பம் பிடித்துக்கொண்டுபோ; run at, மோதித்தாக்கு; run away, ஓடிப்போ, ஓடி ஒளிந்துகொள்; காதலனுடன் ஓடிப்போ; குதிரை வகையில் தப்பித்துக்கொண்டு ஓடு; பந்தயத்தில் போட்டியிடாமல் வந்துவிடு; run away with, திருடி எடுத்துக் கொண்டுபோய்விடு; ஆளை இட்டுக்கொண்டுபோ; அவசரக்கருத்துக்கொள்; பணம் செலவுசெய்து தீர்; குதிரை வகையில் சவாரி செய்பவர்-வண்டி-வண்டியிலிருப்பவர்கள்

ஆகியவர்களோடு தப்பி ஓடு; run back over the past, கடந்த கால நிகழ்ச்சிகளைச் சுருக்கமாக எண்ணிப்பார்; run big, பெரிதாகவே காய்த்திரு; run blockade, முற்றுகைமுறி, தடைவளைப்பு மீறிச்செல்; run brandy, சாராயத்தைக் கள்ளக் கடத்தல் செய்; run business, வாணிகம் நடத்து; run down, அவசரமாகப் பார்த்துவிட்டுத் திரும்புவதற்காக ஓரிடத்திற்குப் போ; கடிகார வகையில் சாவி கொடுக்காததனால் நின்றுபோ; மிகுவேலையால் மெலிவுறு; உணவு போதாமையால் மெலிந்து போ; மேற்சென்று மோதிக்கொள்; மீதாக மோதித்தள்ளு; துரத்திச்சென்று பிடி; தேடிக்கண்டுபிடி; இகழ்ந்துரை; run dry, ஒழுக்குநின்றுவிடு, வற்றிப்போ; வற்றியிரு; run errands, run messages, செய்தி கொண்டு போகும் ஆளாகப் பணிசெய்; run foul of, மோதிக்கொள்; run hard, கடுமையாகப் போட்டியிடு; பலமுறை கேட்டு வற்புறுத்து; run in, நெருங்கிப்பாய்; காற்பந்தாட்ட வகையில் பந்தினை எதிரியின் இலக்கு வரைக்குமேலே கொண்டுசென்று தரையில் படச்செய்; அவசரமாகப் பார்த்துவிட்டுத் திரும்புவதற்காகச் சென்றுபார்; (பே-வ.) கைதுசெய்து சிறைக்குக் கொண்டு செல்; (பே-வ.) (வேட்பாளர்) தேர்தலில் வெற்றிபெறச்செய்; புதிய இயந்திரங்களை ஓடச்செய்து நன்கு செயற்படும் நிலைக்குக் கொண்டுவா; run in debt, run into debt, கடன்படு; run in head, காதுகளில் ஒலித்துக்கொண்டேயிரு; run in the blood, run in the family, வழிவழியான இயல்பினதாயிரு; run into, பழக்கத்திற்கு ஆட்பட்டுவிடு; ஒன்றுபட்டு இணை; இணைந்து தொடர்ச்சியாயிரு; மேற்சென்று மோதிக்கொள்; குறிப்பிட்ட அளவினைச் சென்றெட்டு; குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள பதிப்புக்கள் வெளியிடப்பெறு; run it fine, கண்டிப்பான தேவைக்கு மேற்பட மிகச்சுருங்கிய கால முதலிய வாய்ப்புக்கொடு; run low, குறைந்துபோ; போதாமலிரு; run off, தப்பி ஓடு; பொங்கிவழி; திடீரென மற்றொன்று விரி; தங்குதடையின்றி ஒப்பி; எழுதித்தள்ளு; நீர்மத்தை வடித்துப் போக்கு; பந்தயத்தில் சம ஆட்ட நிலைக்குப்பிறகு புது ஆட்டமூலம் முடிவுகாண், அறுதியாட்ட மூலம் முடிவு செய்; run of the mill or mine, ஆலை அல்லது சுரங்கத்தில் தேர்ந்தெடுக்கப்படாத பொதுநிலையான சரக்கு; run on, எழுத்தின் வரிவடிவு வகையில் இணையப்பெறு; தொடர்ந்து செயற்படு; காலக்கழிவாகு; சரளமாகப் பேசு; இடைவிடாமல் பேசு; பற்றியதாயிரு; (அச்சு.) முந்திய வரியிலுள்ளதைத் தொடர்ந்து தொடங்கு; முந்திய வரியிலுள்ளதைத் தொடர்ந்து தொடங்கச்செய்; run on book, புத்தகத்துக்குப் பெரிய கிராக்கி; run one close, run one hard, பந்தயம் முதலியவகைகளில் ஒருவருடன் கடுமையாகப் போட்டியிடு; run out, கால் வகையில் முடிவுறு; சரக்கிருப்பு வகையில் தீர்ந்துபோ; சரக்கின் சொந்தக்காரர் வகையில் இருப்பு தீர்ந்து போகப்பெறு; கொள்கலத்திலிருந்து கசிந்தொழுகு; மரப்பந்தாட்ட வகையில் பந்தடிப்பதற்காக மட்டை ஊன்றுமிடத்திலிருந்து முன்னால் வா; (கப்.) கயிறு நீட்டிவிடு; கப்பற் கயிறுவகையில் தளர்த்திவிடப்பெறு; உந்திநில்; போட்டியிலே குறிப்பிட்ட நிலையில் வெற்றி கைவரப்பெறு; போதிய கெலிப்பெண் முடிவுறப்பெறு; பந்தயம் நிறைவாக்கு; துப்பாக்கியை முன்னுற நீட்டு; மரப்பந்தாட்ட வகையில் மட்டைக்காரர் ஓட்டம் எடுக்கையில் அவரது இலக்குக்கட்டையை வீழ்த்து; ஓடியோடிக் களைப்படை; run out of, கையிருப்பினைச் செலவழித்துவிடு; run over, பொங்கிவழி; கொள்கலம் வகையில் பொங்கி வழியப்பெறு; பொழிப்புத் தொகுத்துரை; திரும்பக்கூறு; திரும்பிப்பார்; மேல்நோக்காகத் தொட்டுக் கொண்டு செல்; அவசரமாகப் பார்த்துவிட்டுத் திரும்புவதற்காக ஓரிடத்துக்குப்போ; படித்துப்பார்; வண்டி வகையில் விழுந்துவிட்டவர் மீது ஏறிச்செல்; run person, ஆளின் நடவடிக்கைகளை முறைப்படுத்து; run rapids, விரைந்த ஆற்று நீரோட்டத்திலே படகில் அடித்துச் செல்லப்பெறு; run riot, வரம்பிகந்து நடந்துகொள்; வரையறையின்றிப்பேசு; கட்டுப்பாடின்றிக் கற்பனைசெய்; run risks, இழப்புக்கு ஆளாகு; இழப்புக்குத் தன்னை ஆளாக்கிக்கொள்; run second, பந்தயத்தில் இரண்டாவதாக வா; run short, போதாதிரு; குறைபடு; run the gauntlet, ஊடணி வரிசைத் தண்டனைபெறு; அணிவரின் கண்டனத்துக்கும் ஆளாகு; run the show, மேலாதிக்கஞ் செலுத்து; run the streets, வீடற்ற குழந்தையாயிரு; run through, ஊடுருவிக்குத்து; ஊடே கோடு வரை; மிகு விரைவாக ஆய்வுசெய்; படித்துப்பார்; வெற்றியுடன் செய்து முடி; விரைந்து சுருக்கமாக வாசித்துமுடி; கண்மூடித்தனமாக விரைந்து பயன்படுத்தித்தீர்; முற்றும் பரவு; run to, அழிவு முதலியவற்றில் சிக்கிக்கொள்; குறிப்பிட்ட அளவை எட்டிப்பிடி; செலவுக்கு வேண்டிய பணம் உடையவராயிரு; முயற்சிக்கு வேண்டிய திறன் உடையவராயிரு; பண வகையில் செலவுக்கு அல்லது முயற்சிக்குப் போதுமானதாயிரு; ஆள்வகையில் முரட்டுத்தனம் வளர்வதற்கு இடங்கொடு; run to earth, வேட்டை விலங்கினை உறைவிடம் வரையில் துரத்திச்செல்; நெடுநேரம் தேடிக் கண்டுபிடி; run together, கலந்து பழகு, ஒன்றுசேர்; run to meet one's troubles, இடர்களை எதிர்பார்; run to seed, தாவர வகையில் நன்கு வளராமல் மிகுவிரைவில் விதை தரும் பாங்கு மேற்கொள்; எதிர்பார்த்திருப்பவருக்கு எதிர்பாரா ஏமாற்றமளி; வற்றிப்போ; வீணாகு; run up, அவசரமாகப் பார்த்துவிட்டுத் திரும்புவதற்காக ஓரிடத்திற்குப் போ; விரைவாக வளர்; விலைவகையில் விரைந்து ஏறு; தொகைப்படு; இலக்கவரிசையை மொத்தமாகக் கூட்டு; வெற்றிபெற்றவருக்கு அடுத்தநிலையிலுள்ள போட்டியாளராயிரு; கடனை விரைவாகக் குவித்துப்பெருக்கு; ஏலத்தில் எதிரி மிகு விலைகேட்கும்படி செய்துவிடு; விலை ஏறுவி; சுவர் கட்டிடம் முதலியவற்றை மிகு உயரத்துக்கு எழுப்பு; அவசரமாக எழுப்பு, உறுதியற்ற நிலையில் கட்டியமை; run upon, எதிர்பாராது சந்தி; எண்ணங்களில் மிகுதி தோய்ந்துவிடு; கருத்திலே நீடித்து ஈடுபடு; the common run of men, சராசரி மனிதர்கள்; the run of one's teeth, இலவச உணவு; the sands are running out, சலுகைக்காலம் முதலியன கழிவாகுந் தறுவாயிலிருக்கின்றன.

**run'about**, *n.* எளிய அமைப்பு விசைவண்டி; *a.* சுற்றித் திரிகிற.

**run'agate**, *n.* நாடோடி, ஊர்சுற்றி.

**run'away**, *n.* தப்பி ஓடியவர்; தப்பித்துக்கொண்டு ஓடுங் குதிரை; *a.* தப்பியோடுகிற; (தொ.) runaway knock, runaway ring, குறும்புக்காகக் கதவில் தட்டிவிட்டுப் போகுந் தட்டு; runaway marriage, உடன்போக்குத் திருமணம்.

**run'cible spoon**, *n.* முக்கவர்வு வெட்டுமுட்கரண்டி, மூன்று கவடுகளில் ஒன்று கரண்டிபோல் குழிவாக வெட்டும் முனையுடைய கவர்முள் வகை.

**run'cinate**, *a.* (தாவ.) இரம்பப் பற்களையுடைய; பின்னோக்கிய இதழ்களையுடைய.

**run'dale**, *n.* நிலத்துண்டு முறை; அயர்லாந்து நிலத்துண்டாட்ட முறை.

**run'-down'**, *n.* படைக்கலைப்பு வழியாக எண்ணிக்கைக் குறைப்பு; *a.* வலுவற்ற உடல்நிலையிலுள்ள.

**rune**, *n.* பண்டைச் செர்மானிய இனத்தவரது வரிவடிவ எழுத்து; மறைகுறி; மறைபுதிர்; மந்திரக்குறிப்பு; மந்திரச் சக்கரம்; மந்திர வாசகம்; மந்திரச்சொல், மந்திரத்தொடர்; மந்திரப்பாடல்; பின்லாந்துமொழிப் பாடல்; காண்டம், பின்லாந்து மொழிப் பாடற் பிரிவு.

**rune'-staff**, *n.* மந்திரக்கோல், பண்டைச் செர்மானிய இன எழுத்துருவம் பொறித்த கழி; பண்டைச் செர்மானிய இனத்தவரின் ஆண்டு வரிக்குறிப்பு.

**rung**[1], *n.* குறுக்குக் கம்பி; ஏணிப்படி; நாற்காலிக் குறுக்குச் சட்டம்; குறுக்கு ஆரவரிப் பட்டிகை; (தொ.) rung of Fortune's ladder, ஆகூழ் ஏணியின் ஒரு படி.

**rung**[2], *v.* ring என்பதன் முடிவெச்சம்-முற்கால இறந்தகால வடிவம்.

**ru'nic**, *n.* பண்டைய செர்மானிய இன வரிவடிவ எழுத்து மூலம்; திண்ணிய அணிவரி அச்சுருவகை; அந்துப்பூச்சி வகை; *a.* பண்டைய செர்மானிய இன எழுத்துருச் சார்ந்த; பண்டைய செர்மானிய இன எழுத்துருவிலுள்ள; பண்டைய செர்மானிய இன எழுத்துருக்குறிப்புடைய; கவிதை வகையில் பண்டைய ஸ்காண்டிநேவிய வகை மாதிரி சார்ந்த; உலோக

வேலைப்பாட்டிலும் பழஞ் சின்னங்களிலும் அணி ஒப்பனை வகையில் குறுக்குப்பின்னல் வரைகளையுடைய.

**run'-in,** *n.* இலக்கெடுப்பு, காற்பந்தாட்டத்தில் எதிரியின் இலக்கிற்கு மேலே பந்தினை எடுத்துச்செல்லுதல்; இறங்கு வீச்சு, விமான வகையில் வெடிகுண்டுகளைப் போடுவதற்கு முன் செல்லும் ஒரு சீரான வேகச்செலவு.

**run'let**[1], *n.* தேறல் மிடா.

**run'let**[2], *n.* சிற்றோடை.

**runn'el,** *n.* சிற்றோடை.

**runn'er,** *n.* ஓடுபவர்; ஓடுவது; ஓடுந் திறம் உடையவர்; ஓடிச் சென்றவர்; நாடுவிட்டு நாடு சென்றவர்; நாடு கடத்தப்பட்டவர்; பந்தய ஓட்டக்காரர்; தகவலேந்தி, தூது கொண்டுசெல்பவர்; இடையீட்டாளர்; செய்தித் தரகர், செய்தி தேடித்திரிபவர்; தகவலாளர்; சாரணர்; பொருளக ஆட்பேர்; பொருளகப்பணந் தண்டுபவர்; வேர்விடும் ஓடு கிளைத்தண்டு; பாரக்காப்புக் கயிறு, பாரஞ்சாம்பியை வலுப்படுத்துங் கயிறு; கள்ளக் கடத்தல்காரர்; காவல்துறைப் பணியாளர்; நழுவுவளையம்; கொளுவுகண்ணி; சறுக்கு வண்டியின் சறுக்கும் அடிப்பகுதி; சறுக்குக்கட்டையின் சறுக்குறுப்பு; சதுப்புநிலச் சறுக்குக் கட்டையின் புடையலகு; இழுப்பறையின் சறுக்கமைவு; பாரச் சறுக்குருளை; உலோக வார்ப்புச்சட்ட வார்ப்புப்புழை; ஒப்பனை மேசைவரித்துண்டு; ஏந்திரத் திரிகைக்கல்; அவரைவகைக் கொடி; வளர்ப்புத் தாரா வகை; நீர்ப்பறவை வகை; மீன்-கிளிஞ்சில் ஏற்றிச்செல்லுங் கப்பல்; துணை முதல்வர், போட்டிப்பந்தயத்தில் முதல்வர்க்கு அடுத்தபடியாக வருபவர்; போட்டி அறுதி ஆட்டம்வரை தொடர்ந்தாடுபவர்; முற்றுகையூடு செல்பவர்; முற்றுகையூடு செல்லுங் கப்பல்.

**runn'ing,** *n.* ஓட்டம்; விரைதல்; நடத்துதல்; நடைபெறுதல்; விரைவளவு; அவசரம்; *a.* ஓடுகிற; பந்தயத்தில் ஓடுகிற; வழக்கமாக ஓடிச்செல்லும் இயல்புடைய; நடப்பிலுள்ள; அலைந்துதிரிகிற; ஒன்றன்பின் ஒன்றான, தொடர்ந்த; தொடர்ச்சியான; ஒழுகலான; கசியவிடுகிற, வெளியேற்றுகிற; எளிதான; சுருக்கமான; ஓட்டமுறையில் செய்யப்பட்ட; ஓட்டமுறையுடன் செய்யப்பட்ட; அவசரமான; (தொ.) in the running, போட்டியில் வெற்றியடைவதற்குரிய வாய்ப்புள்ள; make the running, take up the running, முன் சென்று பிறருக்கு வழிகாட்டு, பிறர் இவ்வளவு வேகத்துடன் நடக்க வேண்டுமென நடந்துகாட்டு; out of the running, வெற்றியடைவதற்கான வாய்ப்புச் சிறிதுமின்றிப் போட்டியிடுகிற; வெற்றி வாய்ப்பற்ற; running account, நடப்புப் பதிவுக்கணக்கு; running commentary, மூலத்தோடு இணைந்த விளக்கவுரை; வானொலி நேர்முக வருணனை; running fight, துரத்துபவருக்கும் துரத்தப்படுபவருக்கும் இடையில் நடக்குஞ் சண்டை; running fire, (படை.) பல திசைகளிலிருந்து அடுத்தடுத்துச் சுடப்பெறும் துப்பாக்கி வேட்டுகள்; running footman, குதிரைவீரன் மருங்கே அல்லது வண்டி மருங்கே ஓடும் பணியாள்; running hand, தாளிலிருந்து பேனா முதலியவற்றை எடுக்காமலே இணைந் தோடும்படி வரையப்படுங் கையெழுத்து; running headline, running head, running title, பக்கந்தோறும் திரும்பத் திரும்ப வருந் தலைப்பு; மாறிமாறித் தொடர்ந்து வருந் தலைப்பு; running jump, ஓடுகுதி, ஓடிவந்து குதித்தல்; running knot, இழைவு முடிச்சு; சுருக்குக் கண்ணி; running lights, இரவு வெளி விளக்குகள்; running ornament, ஒப்பனைக்கூறு தொடர்ச்சியாகவுள்ள அணிகலன்; running power, இருப்புப் பாதையில் மற்றொரு நிறுவனம் வண்டி ஓட்டிக்கொள்ளும் உரிமை; running rigging, (கப்.) தொடர் பாய்க்கயிறுகள்; running sore, சீழ்பிடித்துள்ள புண்.

**runn'ing-board,** *n.* மோட்டார் வண்டியில் இருபுறமும் உள்ள மிதிபலகை.

**run'rig,** *n.*=rundale.

**runt,** *n.* குட்டை எருதுவகை; சிந்தியற்பொருள்; வளர்ப்பு மாடப்புறாவகை.

**run'-up,** *n.* வேட்டைநாய் முகப்புப்போட்டி, வேட்டையில் முயல் முதல் திசைதிருப்பத்துக்குள் வேட்டைநாய்களுக்கிடையிலுள்ள போட்டி; ஏற்றவீச்சு, விமானவகையில் வெடிகுண்டுகளைப் போடும்போது செல்லும் ஒருசீரான வேகச் செலவு.

**run'way,** *n.* கட்டைகளை இறக்குஞ் சறுக்குச் சாய்தளம்; வானூர்தி ஏற்ற இறக்க ஓடுபாதை.

**rupee',** *n.* ரூபாய், வெண்பொற்காசு.

**rup'ture,** *n.* முறிவு, தகர்வு; முறிந்தநிலை; இணக்க முறிவு; (மரு.) உறுப்பின் உறையூடு நெகிழ்வு, குடற்சரிவு; *v.* இறு, வெடி; முறிவுறு, தகர்வுறு; பிளவுறு; இணக்கமுறிவுறு; திருமண உறவு முறிவுறு; உறுப்புச்சரிவுறு; குடற்சரிவுறு; உறுப்புச்சரிவுக்கோளாறுக்கு ஆளாகு; குடற்சரிவுக்கோளாறுக்கு ஆளாகு.

**rur'al,** *a.* நாட்டுப்புறஞ் சார்ந்த; நாட்டுப்புறத்துள்ள; நாட்டுப்புறத்தைக் குறித்த; முல்லை சான்ற; உழவுத்தொழில் பற்றிய; கிராமப்புறஞ் சார்ந்த.

**rural'ity,** *n.* நாட்டுப்புறப் பண்பு.

**ruraliza'tion,** *n.* நாட்டுப்புறப் பண்பாக்கம்.

**rur'alize,** *v.* நாட்டுப்புறப் பண்புடையதாக்கு.

**ruridecan'al,** *a.* நாட்டுப்புறச் சமயவட்டத் தலைவருக்குரிய; நாட்டுப்புறச் சமயவட்டத் தலைமை சார்ந்த.

**Ruritan'ia,** *n.* புனைகதை நாடக மரபுகளில் நடு ஐரோப்பாவில் இருப்பதாகக் கருதப்படும் கற்பனைநாடு.

**ru'sa,** *n.* பெரிய மான்வகை.

**ruse**[1], *n.* சூழ்ச்சியேற்பாடு.

***ruse***[2], (பிர.) *a* பாசாங்காக நடிக்கிற, தந்திர உபாயமான; நரிக்குணம் வாய்ந்த.

**rush**[1], *n.* நாணற்புல்; நாணற்புல் தனித்தண்டு; புல்லீர்க்கு; துரும்பு; விலையற்ற பொருள்; *v.* புல் பிரம்புகொண்டு நாற்காலிக்கு அடியிடு; தரைமீது புற்பாயிடு.

**rush**[2], *n.* விசைப்பாய்ச்சல்; சாட்டம், வேகக்குதிப்பு; வேக விழ்ச்சி; திரக்கு, மொய்திரள், நெருக்கடி; நெருக்கியடிப்பு; வேகத்தாக்குதல்; வல்லந்த மோதல்; அவசர முற்போக்கு, ஆராயா விரைசெயல்; திரள் மொய்ப்பு; காற்பந்தாட்டத்தில் பந்தை நோக்கிய திரள்வேக மோதல்; புதிய தங்கத்தேட்ட வகையில் பாய்திரள் மொய்ப்பு; திரைப்பட வகையில் முதற் பதிவு, வெட்டா முன்காட்சி; *v.* பாய்ச்சு, வேகமாகப்பாய்; சாடு, பாய்ந்துசெல்; பாய்ந்து விழு; கீழே குதி; வேகமாக உருண்டோடு; தலைதெறிக்க ஓடு; வேகமாக வெட்டியிழு; நெருக்கித்தள்ளு; முண்டிக்கொண்டு செல்; தாவிச்சென்று தாக்கு; வேகத்துடன் சென்று மோது; அவசரப்பட்டு முன்னேறு; ஆராயாமல் விரைந்து செயல்செய்; அவசரப்படுத்து; வலிந்து ஆக்கு; வலிந்து மிகு அகவிலை கூறு; திடீரெனத் தாக்கிக் கைப்பற்று; (தொ.) a great rush of business, வேலையில் மிக்க நெருக்கடி; rush at, பாய்ந்து தாக்கு; rush for, rush on, சரக்குத் தேவை நெருக்கடி; rush hours, நெருக்கடி நேரம்; rush in, rush into, பாய்ந்து நுழை; ஆராயாமல் ஈடுபடு; rush into extremes, எல்லை மீறித் தீவிரமாக ஈடுபடு; rush into print, செய்தித்தாளுக்கு எழுதித்தள்ளு; புத்தகமாக வெளியிடு; rush one into danger, ஒருவரை அவசர அவசரமாக இடருக்குள் தள்ளிவிடு; rush past, கடந்து செல்; அருகாக வேகமாகச்செல்.

**rush'-bearing,** *n.* திருக்கோயில் விழாவிற்கு நிலத்தளத்தில் பரப்ப நாணல் கொண்டுசெல்லும் வினை; திருக்கோயில் விழா.

**rush'-candle,** *n.*=rushlight.

**rush'en,** *a.* நாணலாற் செய்யப்பட்ட.

**rush'es,** *n. pl.* நாணற்புதர்; நாணல்வார்.

**rush'light,** *n.* நாணலைத் திரியாகவுடைய மெழுகுவர்த்தி; அற்ப விளக்கு; ஆற்றல்குறைந்த ஒளி; சிறுதிற அறிவு.

**rush'like,** *a.* நாணல்போன்ற.

**rush'ring,** *n.* முற்கால நாணல் மோதிரம்

**rush'y**, *a.* நாணல் போன்ற; நாணற்புதர்கள் நிரம்பிய; நாணலாற் செய்யப்பட்ட.

**rusk**, *n.* மறுவறை ரொட்டித்துண்டு.

**Ruskin'ian**, *n.* பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த கலை சமுதாய எழுத்தாளராகிய ஜான் ரஸ்கின் என்பாரின் கொள்கைகளைப் பின்பற்றுபவர்; ரஸ்கின் என்பாரின் பாணியை மேற்கொண்டவர்; *a.* ரஸ்கின் என்பாரின் கொள்கைகளைப் பின்பற்றுகின்ற; ரஸ்கின் என்பாரின் பாணி பின்பற்றுகிற.

**Rusk'inism**, *n.* பத்தொன்பதாம் நூற்றுண்டில் கலை-சமுதாய எழுத்தாளரான ரஸ்கின் என்பாரின் கொள்கை.

**Rusk'inize**, *v.* ரஸ்கின் என்பாரின் கருத்திற்கு ஒத்ததாக்கு.

**Russ**, *n.* ருசியநாட்டவர்; ருசிய மொழி; *a.* ருசியநாடு சார்ந்த.

**Russ'ell, Russ'ell cord**, *n.* பஞ்சும் கம்பளியும் கலந்து நெய்யப்பெற்ற துணி வகை.

**russ'et**, *n.* (வர.) குடியானவரின் முறமுறப்பான செம்பழுப்பு ஆடை; செம்பழுப்புநிறம்; செம்பழுப்பு நிறமும் கெட்டித் தோலுமுடைய ஆப்பிள்வகை; *a.* செம்பழுப்பான.

**Ru'ssia, Ru'ssia leather**, (ருசிய.) *n.* புத்தகக்கட்டுத் தோல்.

**Ru'ssian**, *n.* ருசிய நாட்டவர்; ருசியநாட்டு மொழி; *a.* ருசிய நாட்டைச் சார்ந்த; ருசிய நாட்டுவரவான; (தொ.) Russian boots, முழந்தாளில் தளதளப்பாயுள்ள கால் புதையரண வகை.

**Ru'ssianize**, *v.* ருசியப் பண்பாக்கு.

**Russ'niak**, *n.* காலிஷியா என்னும் பகுதியிலுள்ள ருதேனிய (Ruthenian) மக்களினத்தவர்; ருதேனிய மக்களின மொழி; *a.* ருதேனிய இனஞ் சார்ந்த.

**rust**, *n.* இரும்புத்துரு; உலோகத்துரு; பூஞ்சை முதலிய செடி நோய் வகையால் துருநிறத்துத் துருபிடித்தநிலை; பயன் படாது கெட்டநிலை; செயல்படாமையாலுள்ள கேடு; செயல் படாத்தளர்வுநிலை; காளான் வகையால்வரும் புள்ளிநோய்; *v.* துருப்பிடி; துருப்பிடிப்புக்கு ஆளாகு; சூரல் வகையில் துருநிறங் கொள்; பயன்படாமல் கெடு; செயலின்மையால் கேடுறு; தரம் இழ; துருப்பற்று; அரித்துத்தின், கரம்பு; (தொ.) better wear out than rust out, வயதுகாலத்தில் சோம்பி உடல் கெடுப்பதைவிட உழைத்து இயல்பாகத் தளர் வுறுவது நன்று.

**rus'tic**, *n.* நாட்டுப்புறத்தார்; குடியானவர்; *a.* நாட்டுப்புற மான; நாட்டுப்புற மக்கள் தோற்றம் உடைய; நாட்டுப் புறத்தவர் பழக்கவழக்கங் கொண்ட; குடியானவர்க்குரிய தனியியல்பு பொருந்திய; போலிப்பசப்பற்ற; மெருகற்ற; நயமற்ற; அருவருப்பான, இயைபிசைவற்ற; பட்டிக்காடான, கோமாளித்தனமான; நுண்ணயமற்ற வேலைப்பாடுடைய; எழுத்துவகையில் ஒழுங்கற்ற வடிவாயமைந்த; (கட்.) ஒரு சீரான பொருத்துவாய்களற்ற, முரட்டுக் கட்டுமானமுடைய.

**rus'ticate**, *v.* நாட்டுப்புறப் பண்புடையவராக்கு; நாகரிக மற்றவராக்கு; பல்கலைக்கழக மாணவர்களைத் தண்டனை முறையாகச் சிறிதுகாலம் நாட்டுப்புறத்திற்கு அனுப்பிவை; (கட்.) கட்டுமான இணைப்புக்களில் மேடுபள்ள வரையிட்டுக் கரடுமுரடான மேற்பரப்பு அளி.

**rus'tily**, *adv.* துருப்பிடித்த நிலையில்.

**rus'tiness**, *n.* துருப்பிடித்த நிலை; துருப்பிடித்த தோற்றம்; பயன்படுத்தாமல் கெடும்நிலை; காலத்திற்கு ஒவ்வா நிலை.

**ru'stle**, *n.* சருகின் சலசலப்பொலி; ஆடையின் சரசர ஒலி; மழையின் சடசட ஒலி; *v.* சருகு வகையில் சலசலப்பொலி செய்; மழைவகையில் சடசட ஒலிசெய்; புதர்கள் வகையில் அசைந்தாடி அரவஞ் செய்; ஆடை பட்டணிமணி வகையில் சரசர ஒலிசெய்; சலசலப்பொலிப்புடன் செல்; சரசரக்கும் ஆடையணிந்திரு; சலசலப்பொலி செய்வி, ஆட்டிச் சல சலக்கப்பண்ணு; அலைவுறு; உணர்ச்சிவசப்பட்டு மனம் உலைவுறு; (பே-வ.) விரைவுபடுத்து; ஊக்க விரைவுடன் செல்; கால்நடைகள்-குதிரைகள் முதலியவற்றைத் திருடிச்செல்.

**ru'stler**, *n.* சலசலப்பொலி செய்பவர்; சலசலப்பது; உணர்ச்சி வயப்பட்டுச் செயற்படுபவர்; ஆடுமாடுகளை அல்லது குதிரை களைக் களவுசெய்பவர்.

**ru'stlingly**, *adv.* சரசரவென்று.

**rus'ty**[1], *a.* துருப்பிடித்த; துருப்பிடிப்பிற்கு உள்ளான; துரு வண்ணம் உடைய; கரிய உடை வகையில் காலத்தால் நிற மிழந்த; பழம்பசலியான; பழமைப்பட்ட; பழமைப்பட்ட தோற்றமுடைய; பழங்காலத் தோற்றமுடைய; முதுமைப் பட்ட; பயன்படுத்தாமையால் கேடுற்ற; காலத்தோடு ஒத்திய லாத; புறக்கணிப்பால் பழுதுற்ற; மெருகிடப்பட வேண்டிய; ஒலிவகையில் தவளைபோற் கத்துகின்ற; கரகரப்பான ஒலி யுடைய; 'கிரீச்சு' ஒலி செய்கின்ற.

**rus'ty**[2], *a.* ஊசிப்போன; பன்றியிறைச்சி வகையில் நாட் பட்டுக் கெட்டுப்போன.

***rut***[1], (ல.) *n.* செல்தடம், செல்தடப் படுகுழி; நெறிப்பட்ட தடம்; வழிவழிப்பட்ட முறை; பழமுறை; *v.* செல்தடம் படுவி, சக்கரச் செல்தடப் படுகுழிப் படுத்து.

**rut**[2], *n.* மதம்; விலங்கின் இணைவிழைச்சுப் பருவ எழுச்சி; சூடு; ஆண்மதப்பருவம்; *v.* இணைவிழைச்சு எழுச்சியுறு, பருவ வெதுவெதுப்புறு.

**ruth**, *n.* இரக்கம், கருணை; அளிது.

**ruthen'ium**, *n.* விழுப்பொன் வகை சார்ந்த அரிய திண்மத் தனிமவகை.

**ruth'erford**, *n.* கதிரியக்கச் சிதைவுவேக நுண் அலகு, நொடிக்குப் பத்திலக்கம் சிதைவலை வேகம்.

**ruth'ful**, *a.* இரங்கத்தக்க.

**ruth'less**, *a.* இரக்கமற்ற, கருணையற்ற; கொடிய.

**ruth'lessly**, *adv.* இரக்கமின்றி, கொடுமையாக.

**rutt'ish**[1], *a.* மதங்கொண்ட; விலங்காண் வகையில் இணை விழைச்சு இச்சைமிக்க.

**rutt'ish**[2], *a.* செல்தடப் படுகுழிகள் படுவிக்கிற; செல்தடப் படுகுழிகள் படத்தக்க.

**rutt'y**[1], *a.* செல்தடப் படுகுழிகள் நிறைந்த, மேடுபள்ளமான.

**rutt'y**[2], *a.* பருவ வெதுவெதுப்புமிக்க; இணைவிழைச்சு விருப்பம் நிரம்பிய.

**rux**, *n.* உணர்ச்சி வெறி, ஆத்திரம்.

**rye**, *n.* கம்புவகை, புல்லரிசி; கூலவகைப் பயிர்; கூலவகைத் தேறல்.

**rye'-grass**, *n.* காட்டுப்புல் வகை.

**rye'peck**, *n.* பரிசலை நிலைநிறுத்திவைக்க உதவும் இருப்புக் கழி.

**rym'er**, *n.* கழி அணை மதகுக்கம்பம்; கால்வாய்ப்பூட்டு மதகுக்கம்பம்.

**ry'ot**, (இ.) *n.* உழைப்பாளி, உழவர்.

**Sabae'an**, *n.* பண்டைய யெமன் (Yemen) பகுதியில் வாழ்ந்தவர்; *a.* பண்டைய யெமன் பகுதி சார்ந்த.

**Sab'aism**, *n.* விண்மீன் வழிபாடு.

**Sab'aoth**, *n. pl.* (விவி.) தேவர் படையணி; (தொ.) Lord of Sabaoth, கணநாதன், கடவுள்.

**sabbatar'ian**, *n.* வார ஓய்வுத்திருநாள் கொண்டாடும் யூதர்; ஞாயிற்றுக்கிழமை ஓய்வுநாள் கடப்பாடுடைய கிறித்தவர்; சனிக்கிழமை ஓய்வுநாட்குழுவினர்; ஏழாம்நாள் ஞான நீராட்டாளர்; *a.* வார ஓய்வுத்திருநாள் கொண்டாட்டக் கோட்பாடுகள் சார்ந்த.

**sabbatar'ianism**, *n.* வார ஓய்வுநாட் கோட்பாடு.

**sabb'ath**, *n.* ஓய்வுப்பருவம், வார ஓய்வுத்திருநாள்; யூதரின் ஏழாம்நாள் சனிக்கிழமை ஓய்வுப்பருவம்; கிறித்தவரின் ஏழாம் நாள் ஞாயிற்றுக்கிழமை ஓய்வுப்பருவம்; பேய்களின் ஆண்டு நடுநிசிக் கொண்டாட்ட வேளை; (தொ.) sabbath-day's journey, வார ஓய்வுத்திருநாளில் யூதர் பயணஞ் செய்ய அனுமதிக்கப்பட்ட ஐந்து பர்லாங் தூரம்; சிறு தொலைப் பயணம்.

**sabbat'ic, sabbat'ical**, *a.* வார ஓய்வுத்திருநாளிற்குரிய, வார ஓய்வுநாளிற்குப் பொருத்தமான; ஓய்வுக்கொண்டாட்ட நாள் போன்ற; ஓய்வு கொள்கிற; ஓய்வு தருகிற; (தொ.) sabbatical river, யூத மரபுரைப்படி வார ஓய்வுநாள் தவிர மற்ற நாளெல்லாம் பாய்வதாகக் கொள்ளப்பட்ட ஆறு; sabbatical year, யூத மரபின்படி நில வேளாண்மை நிறுத்தத்திற்கும் அடிமை விடுதலைக்கும் கடன் கை துறப்பிற்கும் உரிய ஏழாம் ஆண்டு.

**sabb'atize**, *v.* வார ஓய்வுத்திருநாள் மேற்கொள்; ஓய்வுப் பருவங் கடைப்பிடி.

**Sabe'an**, *n.*, *a.* = Sabaean.

**Sabell'ian**[1], *n.* (வர.) சபைன் (Sabines) சம்னிட்டி (Samnites) கம்பானியன் (Campanians) முதலிய பண்டைய இத்தாலிய இனமரபுக் குழுவினர்; *a.* பண்டைய இத்தாலிய இனமரபுக் குழுவகைக்குரிய.

**Sabell'ian**[2], *n.* கிறித்தவரிடையே கி பி. 3-ஆம் நூற்றுண்டில் மூவிறை உருக்களும் ஒரே இறையுருவின் மூன்று பண்புக் கூறுகளே என்ற சபெல்லியஸ் என்பாரின் கோட்பாட்டை உடையவர்; *a.* மூவிறை உருக்களும் ஒரே இறை உருவின் முப்படிவங்களே என்னும் சபெல்லியஸ் என்பாரின் கோட்பாட்டினைக் கொண்ட.

**Sab'ian**, *n.* கடவுள் நம்பிக்கையுடையவர்களுடன் திருக்குரானில் சேர்த்துக் கூறப்பட்ட சமயக்குழுவினர்; விண்மீன் வழிபாட்டாளர்; *a.* உண்மைக்கடவுள் நம்பிக்கை உடையோரென்று திருக்குரானில் குறிக்கப்பெற்ற சமயக் குழுவைச் சார்ந்த.

**sab'icu**, *n.* மரவேலைக்குப் பயன்படும் குயூபாத் தீவிலுள்ள மரவகை; குயூபாநாட்டு மரவகையின் தடி.

**Sab'ine**, *n.* பண்டைய இத்தாலிய மக்களினத்தவர்; *a.* பண்டைய இத்தாலிய மக்கள் இனக்குழுவைச் சார்ந்த.

**sa'ble**[1], *n.* குளிர்மண்டலக் கீரியின விலங்குவகை; கீரியின விலங்கு வகைத் தோல்; கீரியின விலங்குவகை மென்மயிர்; கீரி மயிர் வண்ணத் தூரிகை.

**sa'ble**[2], *n.* (கட்.) கரு வண்ணம்; (செய்.) கருநிறம்; கரிய மான்வகை; *a.* கரிய; இருளார்ந்த; புகைவண்ணமான; துயரார்ந்த; அச்சந் தரத்தக்க; (தொ.) his sable Majesty, பேயிறை, நரகரசு; sable antelope, தன் கலையினைக் கருநிறமாகக்கொண்ட தடித்த கொம்புடைய மான்வகை.

**sa'bles**, *n. pl.* துக்க உடுப்பு.

**sab'ot**, *n.* குடைவுமிதியடி, ஒரே கட்டையில் குடைந்து செய்யப்பட்ட பிரஞ்சுக் குடியானவர் புதையரணம்; மர அடியுடைய புதையரணம்; ஏவுகணையின் அடிவட்டு; பதிகால் தறியின் திண்முகப்பு; துளைக்கருவியின் துளைமுகப்பு.

**sab'otage**, *n.* நாசவேலை, அழிவுப்பணி; *v.* அழிவுவேலை செய், நாசவேலை புரி; அழி; பயனற்றதாக்கு.

**sab'oted**, *a.* பதிகால் தறி-துளைக்கருவி ஆகியவற்றின் வகையில் திண்கவச முகப்பிடப்பட்ட.

**sa'bre**, *n.* கொடுவாள், பட்டாக்கத்தி; கொடுவாள் இவுளி மறவன்; *v.* கொடுவாளால் வெட்டு; பட்டாக்கத்தியாற் காயப்படுத்து.

**sa'bre-bill**, *n.* பறவை வகை.

**sa'bre-cut**, *n.* கொடுவாள் வெட்டு; பட்டாக்கத்திக் காயம்; கொடுவாள் வெட்டுத் தழும்பு.

**sa'bretache**, *n.* இவுளியர் தோட்பை.

**sa'bre-toothed**, *a.* கொடுவாள் வடிவான பற்களையுடைய; (தொ.) sabre-toothed lion, sabre-toothed tiger, மரபற்றழிந்துபோன முன்னை விலங்கு வகை.

***sabreur***, (பிர.) *n.* கொடுவாள் இவுளிமறவர்.

**sab'ulous**, *a.* மணற்பாங்கான; மணலார்ந்த; (மரு.) ஊனீர் வகையில் பரலார்ந்த தோற்றமுடைய; (மரு.) சிறுநீர்ப்பைச் சிநீர் வகையில் சொரசொரத்த தோற்றமுடைய.

**sabu'rra**, *n.* (மரு.) வயிற்றில் தங்கும் பரற்கசடு.

**sac**, *n.* (உயி., தாவ.) உட்பை அமைவு, உட்பையறை; ஊனீர்ப்பைக் கட்டு; பெண்டிர் தளர் அங்கி.

**sacc'ate**, *a.* (தாவ.) பையாகப் புடைத்து வளர்ந்த; பையுள் இருக்கின்ற.

**sacc'harate**, *n.* வெல்லக்காடியின் காரச்சத்து.

**sacc'haride**, *n.* சர்க்கரை, கரும்பு வெல்லம்; கரியநீரகியிய லுடைய சர்க்கரைச் சேர்மம்.

**saccharifica'tion**, *n.* மாவை வெல்லமாக்குதல்; மாவை வெல்லமாக்கிய நிலை.

**sacc'harify**, *v.* மாவை வெல்லமாக்கு.

**saccharim'eter**, *n.* ஈரெதிர் நிலையுற்ற ஒளியால் வெல்லங்களைத் தேர்ந்தாயுங் கருவி.

**sacc'harin, sacc'harine**[1], *n.* தென் அமெரிக்க மரவகையினின்று எடுத்த தித்திப்புமிக்க மணி வெல்லம்.

**sacc'harine**[2], *a.* வெல்லம் போன்ற; வெல்லத்தை ஒத்த; வெல்லத்தினை உள்ளடக்கிய, வெல்லங்கலந்த.

**sacc'haroid**, *n.* சர்க்கரை ஒத்த பொருள்; *a.* (மண்.) சர்க்கரை ஒத்த சிறுமணித் திரளான.

**saccharom'eter**, *n.* நீர்ம வெல்லச்செறிவுமானி.

**sacc'harose**, *n.* சர்க்கரை, கரும்புவெல்லம்.

**sac'ciform**, *a.* பையறை வடிவான.

**sacc'ule**, *n.* சிறு பையறை; சிறு பையுறை போன்ற ஊனீர் சுரக்கும் உடற்பகுதி.

**sa'cerdocy**, *n.* சமய குருமாராட்சி; புரோகிதத்துவம்; புரோகித வினை; புரோகித நம்பிக்கை, புரோகிதப் பற்று.

**sa'cerdotage**, *n.* புரோகிதத்துவம்; புரோகித ஆட்சி; புரோகித ஆற்றல் மிகுதியான அரசு.

**sacerdot'al**, *a.* புரோகிதருக்குரிய; புரோகித இயல்பு வாய்ந்த; சமயகுருமாரின் பண்புடைய; சமய உரிமைபெற்ற குருமாருக்குச் சமயத்திருப்பணியுரிமைச் சிறப்பு நல்குகிற; உரிமை பெற்ற புரோகிதருக்கு இயற்கை இகந்த ஆற்றல்களை உரிமைப்படுத்துகின்ற; புரோகிதருக்கு மிகுந்த அதிகாரம் கோருகின்ற.

**sacerdot'alism**, *n.* புரோகிதம், புரோகித வினைமுறைமை; புரோகிதத்துவம்; புரோகித மனப்பான்மை; புரோகித நலம் பேணும் இயல்பு; புரோகிதர் இயற்கை கடந்த தனி ஆற்றலில் நம்பிக்கை; கடையுணு வழிபாட்டு வேள்வியை முன்னிட்டுக் கிறித்தவ சமயத் தலைவரும் புரோகிதரே என்ற கோட்பாடு.

**sacerdot'alist**, *n.* புரோகித ஆட்சி ஆதரவாளர்.

**sacerdot'alize**, *v.* புரோகித ஆட்சிக்குரியதாக்கு; புரோகிதமயமாக்கு.

**sacerdot'ally**, *adv.* புரோகித உரிமைமுறைப்படி.

**sa'chet**, *n.* சிறு நறுமணப்பை; வாசனைப் பொக்கணம்.

sack[1], *n.* சாக்கு, கோணிப்பை ; சாக்குகொள்ளும் அளவு ; சாக்கு அளவு எடை ; பணி நீக்கம் ; மாதர் தளதள அங்கி ; பட்டுத் தொங்கலாடை ; நெகிழ்வு மேற்போர்வைச் சட்டை ; *v.* கோணிப்பைக்குட் புகுத்து ; (பே-வ.) வேலையை விட்டுத் தள்ளு; (பே-வ.) போட்டியில் தோற்கடி; போரில் தோற்கடி; (தொ.) get the sack, வேலையினின்றும் தள்ளப்பெறு ; give one the sack, வேலையை விட்டுத்தள்ளு.

sack[2], *n.* சூறை, கொள்ளையாட்டு; *v.* வென்ற இடத்தைச் சூறையாடு, கொள்ளையிடு; கொள்ளையிடும்படி விடு; கள்வர் வகையில் கிடைத்த உடைமைகளையெல்லாம் கொள்ளையிட்டுக் கொண்டு செல்.

sack[3], *n.* (வர.) கானரி தீவுகளிலிருந்து இறக்குமதி செய்யப் பெற்ற வெண்ணிற மதுவகை.

sack'age, *n.* கொள்ளையடிப்பு, சூறையாட்டு.

sack'but, *n.* பேரிசைக்கருவி வகை.

sack'cloth, *n.* முரட்டுச் சணல்துணி.

sack'ful, *n.* கோணிப்பை நிறைவளவு.

sack'ing[1], *n.* முரட்டுச் சணலுடை.

sack'ing[2], *n.* கொள்ளையடிப்பு, சூறையாட்டு.

sack'less, *a.* கள்ளங்கபடற்ற ; வெள்ளையுள்ளம் படைத்த ; கேடற்ற ; பலக்குறைவு மனம்படைத்த.

sack'-race, *n.* கோணிப்பை போட்டி.

sacque, *n.*=sack[1].

sac'ral, *a.* (உள்.) இடுப்படி முக்கோண மூட்டெலும்பு சார்ந்த ; புனிதச் சடங்குகளுக்குரிய, புனிதச் சடங்கு களுக்கான.

sac'rament, *n.* அகநிலைப் புனித வினைமுறை; நெஞ்சார்ந்த புனிதச்சடங்கு ; புனித ஆன்மிகச்சின்னம் ; மறைநிலை மெய்ம்மை ; சமயத்துறை இரகசியம் ; மறைநிலை ஆற்றல் ; மறைநிலைத் திருச்சின்னம் ; இறை வாக்குறுதி ; இறைச் சான்று; புனிதச் சூளுறவு ; (வர.) பண்டை ரோமரிடையே வழக்கு மன்றக் கட்சிகளின் சான்றீடு ; (வர.) பண்டை ரோமப்படைவீரர் பணி ஏற்புறுதி ; கிறித்தவ சமய மெய் வினை ; *v.* புனித உறுதிமொழிமூலம் கட்டுப்படுத்து ; புனித வினைமுறைமூலம் உறுதிமொழியை வலுப்படுத்து.

sacramen'tal, *n.* துணைநிலை மெய்வினை, தீர்த்த ஆட்சி-சிலுவைக்குறி ஆகியவை போன்ற சமயப்புனிதச் சடங்கோடு ஒருபுடை ஒத்த வினைமுறை ; *a.* புனித வினைமுறைக்குரிய ; சமய மெய்வினை சார்ந்த; புனித வினைமுறை இயல்பு வாய்ந்த; சமய மறைநிலை மெய்ம்மைக்குரிய ; இறைச் சான்றிற்குரிய ; இறைச்சான்றியல்புடைய ; புனித உறுதிமொழி சார்ந்த ; புனித உறுதிமொழி இயல்புடைய ; கோட்பாடு வகையில் சமய மெய்வினைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கிற.

sacramen'talism, *n.* சமய மெய்வினைகட்கு முக்கியத்துவம் வழங்கும் பண்பு.

sacramen'talist, *n.* சமய மெய்வினைக்குப் பெருஞ்சிறப்பு அளிப்பவர்.

sacramental'ity, *n.* சமயச்சடங்கு மெய்வினை இயல்பு.

sacramen'tally, *adv.* சமய மெய்வினைகட்கு முக்கியத்துவம் அளிக்கும் முறையில்.

sacramentar'ian[1], *n.* சமய மெய்வினைகளுக்கு உயர்முக்கியத்துவங் கொடுப்பவர் ; *a.* சமய மெய்வினைகளுக்கு உயர் முக்கியத்துவங் கொடுக்கிற ; சமய மெய்வினைகளுக்கு உயர் முக்கியத்துவந் தரும் கோட்பாட்டை உள்ளடக்கிய.

sacramentar'ian[2], sacramen'tary, *n.* (வர.) கடையுணா வினைமுறையில் தேறல்-அப்பங்களில் மெய்யாக இயேசுநாதரின் குருதி-தசை இடம்பெற்றுள்ளன என்பதை மறுப்பவர் ; (வர.) கடையுணா வினைமுறையில் தேறல் - அப்பங்கள் குருதி தசைச் சின்னங்களே என்று கொள்பவர்; *a.* (வர.) கடையுணா வினைமுறையில் தேறல்-அப்பங்களில் இயேசுநாதரின் குருதி தசை மெய்யாகவே இடம் பெறுகின்றன என்பதை மறுக்கிற.

sacrar'ium, *n.* திருவுண்ணுழிகை, திருக்கோயில் கருமனை ; ரோமன் கத்தோலிக்க வழக்கில் திருவுணுக்கலக் கழுவுநீர் ஏற்று வெளிச்செலுத்துவதற்கான துளைநிரையுடைய கல் தட்டம்; (வர.) கோயில்வீடு, அரங்கு, பண்டை ரோமரிடையே வீட்டில் குடும்பத் தெய்வங்களுக்குரிய அறை.

sa'cre, *v.* ஆணையிட்டுக் கூறு, சத்தியஞ் செய்.

sac'red, *a.* கடவுட்கொத்த ; புனித ; சமயச் சார்பால் புனிதத் தன்மை பெற்ற ; சமயச் சார்புடைய; தெய்விகக்காப்புடைய; தனிமுறைச் சிறப்புத்தொடர்புடைய ; தனிமுறைப் புனிதத் தன்மை வாய்ந்த ; தனிமுறைச் சிறப்புடைய ; தனிக் காப் பொதுக்கீடு செய்யப்பட்ட ; தவிர்க்கமுடியாத, மீறமுடியாத ; (தொ.) sacred concert, சமயச் சார்புடைய இசை ; சமய இசை ; Sacred Heart, இயேசுநாதர் இதயம்.

sac'redness, *n.* புனிதம், தூயதன்மை.

sac'rifice, *n.* உயிர்ப்பலி ; பலியீடு ; வேள்வி; பலி, பலியிடப் படும் விலங்கு ; நிவேதனம், நேர்வு, திருப்படையல் ; நிவேதனப்பொருள், நேர்வுப்பொருள், படையற்பொருள்; தியாகம், தன்மறுப்பு ; கைதுறப்பு ; மனமார்ந்த விட்டுக்கொடுப்பு ; தன் இழப்பு, இழப்புநிலை; போரில் உயிர்த்தியாகம்; (இறை.) திருச்சிலுவைப்பாடு; (இறை.) கடையுணுப் படையல்; கடையுணு நேர்வுவழிபாடு ; *v.* உயிர்ப்பலியாகக் கொடு ; திருப் படையல் செய் ; பலியாக்கு ; தியாகஞ் செய் ; துற ; விட்டுக் கொடு ; நலங்குறைத்துக்கொள், சிறப்புக் குறைத்துக் கொள் ; துணைநிலைப்படுத்திக் கொள் ; தாழ்த்திக்கொள் ; குறைத்து மற்றொன்றிற்கு ஈடுபடுத்திக்கொள் ; மாளவிடு ; அழியவிடு ; வேள்விசெய்.

sacrifi'cial, *a.* உயிர்ப்பலிக்குரிய ; யாகத்துக்குரிய ; திருப் படையல் சார்ந்த.

sacrifi'cially, *adv.* வேள்விமுறையாக, பலியாக.

sac'rilege, *n.* திருவழிப்பு, புனிதத்தன்மையை மதியாது செய்யப்பட்ட அவச்செயல் ; தெய்வக்கேடு, அடாச்செயல் ; அனுசிதம், தகுதிக்கேடு ; புனித இடம் புகுந்து செய்யப்படுந் திருட்டு ; புனிதப்பொருள் தகர்ப்பு ; திருநிலையாளர்மீது ஆற்றப்படும் இன்னல்.

sacrile'gious, *a.* அடாத, புனிதத்துவத்தைப் பாழாக்கு கின்ற ; மதிப்புக்குலைக்கிற.

sac'ring, *n.* திருப்பணியமர்த்தீட்டு வினைமுறை, தீக்கை.

sac'ring-bell, *n.* புனிதச் சிறப்பு மணி.

sac'rist, *n.* திருக்கல நாயகம், மடம்-திருக்கோயில் ஆகிய வற்றின் திருக்கலங்களைப் பாதுகாத்து வைக்கும் அலுவலர்.

sac'ristan, *n.* ஊர் வட்டாரத் திருக்கோயில் மணியக்காரர்.

sac'risty, *n.* திருப்பூட்டறை, திருக்கோயில் திருக்கலம் ஆடை அணிமணிகளைப் பாதுகாத்துவைக்கும் அறை.

sac'rosanct, *a.* திருவார் திருவுடைய, புனிதத்தன்மை சான்ற; மீறொணாத ; இறைகாப்புடைய ; இடவகையில் மீறாத் திரு வாணைக் கட்டுக்காப்புடைய ; ஆள்வகையில் புனிதத் தன்மை யின் திருக்காப்புடைய; சட்டவகையில் தெய்விக ஆணையாதர வுடைய.

sac'rum, *n.* இடுப்படி மூட்டு முக்கோண எலும்பு.

sad, *a.* துன்பமிக்க ; துயரார்ந்த ; கிளர்ச்சியற்ற ; சோர்ந்த ; வருத்தந் தருகிற; வருந்தத்தக்க; வெறுக்கத்தக்க; ஒளியற்ற; வண்ண முனைப்பற்ற ; கெட்டியான ; பண்ணிய வகையில் மாச்செறிவுமிக்க ; (தொ.) in sad earnest, வினைமையுணர் வுடன், அமைந்து மனமார, முக்கியத்துவம் உணர்ந்த நிலையில் ; sad dog, திருந்தாக் கயவன்.

sadd'en, *v.* துயரமூட்டு, வருத்தமுண்டாக்கு ; துயரப்படு, வருந்து.

sad'dle, *n.* சேணம் ; கலணைவார், வண்டியின் ஏர்க்கால் தாங்குங் குதிரைச்சேணப் பகுதி ; சேண வடிவான இயந்திர உறுப்பு; இயந்திர உழுபடை இருக்கை; மிதிவண்டி இருக்கை; சேணவடிவுள்ள பொருள் ; இரு மேடுகளுக்கிடையேயுள்ள குவடு ; தந்திக்கம்ப முகட்டுக் கவட்டை ; இருபுற இடுப்புப் பகுதியுடன் கூடிய ஆட்டிறைச்சி ; மானிறைச்சியின் இருபுற

இடுப்பிணைத்த துண்டம்; *v.* சேணம்பூட்டு, கலணை அணிவி; பளு ஏற்று; பொறுப்புச் சுமத்து; வேலை சுமத்து; கடமையை மீதேற்று; (தொ.) in the saddle, குதிரை மீதமர்ந்துள்ள; பதவியிலுள்ள; அதிகாரஞ் செய்கிற; put saddle on right horse, உரியவர்மீது பழிசுமத்து; put saddle on wrong horse, குற்றமற்றவர்மீது குற்றஞ் சுமத்து.

**sad'dleback,** *n.* (க-க.) எதிரெதிரான இரு முக்கோணச் சுவர் முகடுகளுள்ள கோபுரக்கூரை; சேணவடிவ முகட்டினை யுடைய குன்று; கவிகை மோடு; கடற்பறவை வகை; முடாக்குடைய காக்கை வகை; கடற்சிங்க வகை ஆண்; வளர்ப்பின வாத்துவகை; வளர்ப்பினப் பன்றிவகை.

**sad'dlebacked,** *a.* கவிவான மேற்புற விளிம்புக் கோடு டைய; மையங்குவிந்து இருசிறைச் சரிவுடைய புறப்பக்கங் கொண்ட.

**sad'dle-bags,** *n. pl.* பொதி மூடைகள், சேணத்துடன் இணைந்த சோடிப் பைகள், நாற்காலிகளுக்கு மெத்தை-சுருள் வில் முதலியன வைப்பதில் பயன்படுத்தப்படும் சமுக்காள வகை.

**sad'dle-blanket,** *n.* சேணக்கம்பளம், சேணத்துணியாகப் பயன்படும் மடித்த சமுக்காளம்.

**sad'dle-boiler,** *n.* குடுவைக் கொதிகலம், கருவிகலங்களைச் சூடாக்குவதற்குப் பயன்படும் மேற்கவிவான கொதிகலம்.

**sad'dle-bow,** *n.* சேண வில்வளைவு முற்பகுதி.

**sad'dle-cloth,** *n.* சேணவிரிப்பு, சேணத்திற்கடியில் குதிரை முதுகின்மீது போடப்படும் துணி.

**sad'dle-fast,** *a.* சேணத்தில் உறுதியாக அமர்ந்துள்ள.

**sad'dle-girth,** *n.* குதிரை விலாவார்.

**sad'dle-horse,** *n.* சவாரிக் குதிரை.

**sad'dle-nosed,** *a.* வக்கை மூக்குடைய, மூக்குமேல்விளிம்பில் இடையே பள்ளங்கொண்ட.

**sad'dle-pillar, sad'dle-pin,** *n.* பொருத்துமுளை, மிதி வண்டி இருக்கைக் குதைகுழிவுக்குள் பொருந்தும் முளை.

**sad'dle-sick, sad'dle-sore,** *a.* சேண உராய் புண்ணுடைய.

**sadd'ler,** *n.* குதிரைத்தளவாட வணிகர்; குதிரைத்தளவாடஞ் செய்பவர்; (படை.) குதிரைத்தளவாடப் பணியாளர்.

**sadd'lery,** *n.* குதிரைத்தளவாடப் பணி; குதிரைத்தளவாடச் சேம அறை.

**sad'dle-tree,** *n.* சேணக்கட்டை, சேணச்சட்டம்; சேணவடிவ இலைகளுள்ள வட அமெரிக்க மரவகை.

**Sadd'ucee,** *n.* சதுசேயர், மாண்டவர் மீட்டெழுச்சிக் கோட் பாட்டையும் மரபுவிதிக் கட்டுப்பாடுகளையும் மறுத்த யூதக் கிளைச் சமய வகையின் உறுப்பினர்.

**sad'-iron,** *n.* தேய்ப்புப் பெட்டி.

**sa'dism,** *n.* கொடுவெறிக் காமம்; கொடுமை விருப்பம்.

**safa'ri,** (அரா.) *n.* வேட்டைக்குழு; வணிகச் சாத்து.

**safe**[1], *n.* சேமப்பெட்டி; தீத்தடைகாப்புப் பெட்டி; உணவுப் பொருட் காப்புப்பேழை.

**safe**[2], *a.* தீங்குறுத, சேதமடையாத; பத்திரமான, இடையூ றில்லாத; இடருக்குட்படாத; பாதுகாப்பளிக்கிற; தப்பி ஓடமுடியாதபடி தடைசெய்யப்பட்ட; தீங்கு விளைக்காதபடி தடுக்கப்பட்ட; விழிப்புள்ள; எச்சரிக்கையுடைய; புது முயற்சிகளைச் செய்யும் துணிவற்ற; தவறுத; கணிப்பில் தவறமுடியாத; நடுத்தரமான; ஏமாற்றுத; நம்பகமான; நம்பிக்கைக்குரிய; நம்பி ஏமாறமுடியாத; நிச்சயமாகச் செய்யக்கூடிய; கட்டாயமாக நிகழக்கூடிய; பொய்யாக முடியாத; மிகையுரையாக மாட்டாத; (தொ.) a safe catch, மரப்பந்தாட்டத்தில் அடித்த பந்து நிலத்தைத் தொடுவதற்கு முன் பிடித்தல்; மரப்பந்தாட்டத்தில் பந்தினைப் பிடிப்பதில் வல்லவர்; err on the safe side, மாற்றுவழிகளில் பத்திர மானதைத் தேர்ந்துகொள்; இடர் நேர்ந்தாலும் காப்பு மாறு திரு; error on the safe side, இடர்நேரினும் காப்புடைய வழு; safe and sound, பத்திரமாகவும் சிறிதும் சேதமுருமலும்; safe deposit, வைப்புக்காப்பிடம், காப்புறுதிப் பேழையுடைய காப்புறுதிக் கட்டிடம்; safe keeping, காப்பு வைப்பு, பாது காப்பாக வைத்திருத்தல்.

**safe'conduct,** *n.* வழியெல்லைக் காப்பீட்டுரிமை; வழி யெல்லைக் காப்பீட்டுரிமைச் சீட்டு.

**safe'guard,** *n.* வழியெல்லைக் காப்பீட்டுரிமை; வழியெல்லைக் காப்பீட்டுரிமைச் சீட்டு, காப்புக்கூறு; காப்புவாசகம்; காப்பு விதி; *v.* இடர்காப்புச் செய்; உரிமை வகையில் பாதுகாப்பளி, காப்புக்கூறு அமை; காப்புவிதி இணை; காப்பு வாசகஞ் சேர்.

**safe'guarding,** *n.* இடர்காப்பு; தடைகாப்பு, பாதுகாப்பு; *a.* இடர்காப்பான; தடைகாப்பான; (தொ.) safeguarding duties, காப்புத்தீர்வைகள், நேர்மையற்ற போட்டி தடுப்பதற் கான இறக்குமதி வரிகள்.

**safe'ty,** *n.* தீங்கின்மை; இடரிலா நிலை; எளிமைநிலை; தடை காப்பு நிலை; இடையூறேற்படாக் காப்புநிலை; பாதுகாப்பான நிலை; பாதுகாப்புறுதி நிலை; இடையூறு வராதென்று நம்பப் படும் நிலைமை; இணை விலக்கு மிதிவண்டி, தாழ்ந்த இருக்கை யுடைய மிதிவண்டி; துப்பாக்கி விசைவில்லுக்குரிய பூட் டமைவு; (தொ.) co-fficient of safety, காப்புறுதி வீதக் கூறெண்; factor of safety, காப்புறுதிக்கூறு; play for safety, இடர்களை விலக்கி விளையாடு; இடரிலா வழிநாடிச் செல்; safety curtain, நெருப்புக் காப்புத்திரை, அரங்கத்திற் கும் காட்சியாளர் பகுதிக்கும் இடைப்பட்டுள்ள நெருப்புக் காப்பீடுள்ள திரை; safety film, நெருப்புக் காப்புத்திரைத் தகடு; safety first!, எச்சரிக்கையைக் கற்பிக்கும் குறிக் கோளுரை, இடர்ப்பாதுகாப்புக்கு முதலிடந் தருக; safety fuse, காப்புத்திரியமைவு, தூரத்திலிருந்து தீவைத்து நெடு நேரம் சென்று வெடிக்கும்படி மெதுவாக எரியும் அமைப்புடைய திரியமைவு; (மின்.) இடர்காப்பு உருகுகம்பி; safety lamp, சுரங்க வளியிடர்காப்பு விளக்கு; safety match, காப்புத் தீக் குச்சு, பெட்டி தவிர வேறு எதில் உராய்ந்தாலும் தீப்பற்ற முடியாத தீக்குச்சி; safety razor, காப்பலகுக் கத்தி; sit on the safety valve, அடக்குமுறைக் கொள்கையைக் கையாளு, கீழுள்ளவர்கள் தங்கள் எண்ணங்களை வெளியிடாவண்ணஞ் செய்.

**safe'ty-bicycle,** *n.* தாழ்விருக்கை மிதிவண்டி.

**safe'ty-bolt,** *n.* துப்பாக்கி விசைப் பூட்டமைவு.

**safe'ty-glass,** *n.* பொறிவண்டிகளில் நொறுங்கிவிடாத் தடை காப்பமைவுடைய கண்ணுடி.

**safe'ty-light,** *n.* எச்சரிக்கை விளக்கு; எளிதாகத் தீப்பற்றுத விளக்கு.

**safe'ty-lock,** *n.* எளிதில் திறக்க முடியாத பூட்டு; துப்பாக்கி கள் தற்செயலாக வெடிக்காதபடி இருப்பதற்கான காப் பமைவு.

**safe'ty-paper,** *n.* இணைகாப்புத்தாள், பொருளகக் காசு முறிக்குரிய போலி செய்யமுடியாத தாள் வகை.

**safe'ty-pin,** *n.* காப்பூசி.

**safe'ty-plug,** *n.* வெப்ப எல்லையில் தானே உருகிவிடும் அமைவு.

**safe'ty-stop,** *n.* இயந்திரத் திடீர்விபத்துத் தடுப்பமைவு.

**safe'ty-valve,** *n.* அழுத்த எல்லை மிகும்போது தானே திறந்து கொள்ளும் அமைவு; கடுப்புதீர் சுருக்க வழி.

**saff'ian,** *n.* பதனிட்ட ஆட்டுத்தோல் வகை.

**saf'flower,** *n.* குசும்பச்செடி, இதழ்ச்சாயத்தில் பயன்படுத்தப் படும் செவ்வண்ணப்பொருள் தரும் புதர்ச்செடி வகை; உலர் குசும்பப் பூ; குசும்பச் செடியிலிருந்து எடுக்கப்படுஞ் சிவப்புச் சாயம்.

**saff'ron,** *n.* குங்குமப்பூ; குங்குமப்பூ நிறம்; *a.* குங்குமப்பூ நிறமுடைய; *v.* குங்குமப்பூ சேர்த்து நிறமூட்டு; குங்குமப்பூ நிறம் போலாக்கு; (தொ.) Bastard Saffron, குசும்பச் செடி; saffron cake, குங்குமப்பூ வில்லை; குங்குமப்பூ மண நிறம் ஊட்டப்பட்ட அப்ப வகை.

**saff'rony,** *a.* குங்குமப்பூ நிறமுடைய.

saf'ranin, saf'ranine, *n.* குங்குமப்பூவிலுள்ள நிறப் பொருள் ; நிலக்கீல் தரும் செம்மஞ்சள் நிறச்சாயம்.

sag, *n.* தொய்வு, வளைவு; புடைசாய்வு; தொய்வளவு; குறைவு; அமிழ்வு ; தணிவு ; விலை வீழ்வு; விலை குறைப்பு ; (கப்.) காற்றெதுக்கப் பக்கமாகச் செல்லும் இயல்பு; *v.* தொய்வுறு, தளர்வுறு ; பளுவினால் அல்லது அழுத்தத்தினால் அமிழ், தாழ்வுறு; பக்கவாட்டில் தொங்கு; தொய்வுறச் செய்; விலை வகையில் வீழ்வுறு ; கப்பல் வகையில் திசைவிட்டுக் காற்றெதுக்கப் பக்கமாகச் செல்.

sa'ga, *n.* புராணகதை, கற்பனைக் கதை ; ஐஸ்லாந்து அல்லது நார்வே நாட்டு இடைநிலைக் காலத்திய உரைநடை வீர காவியம்.

saga'cious, *a.* அறிவுக்கூர்மையுடைய ; மதிநுட்பமுடைய ; பழமொழி வகையில் அறிவுத்திறங் காட்டுகிற, மதிநுட்பம் விளக்குகிற ; விலங்குகள் வகையில் அசாதாரண அறிவுடைய.

saga'city, *n.* மதிநலம், அறிவுநுட்பம், புத்திசாலித்தனம்.

sa'gaman, *n.* புராணகதை ஆசிரியர், வீரகாவிய ஆசிரியர்.

sage[1], *n.* சமையலுக்குரிய மணப்பூண்டுவகை ; (தொ.) sage and onions, நறுமணமூட்டப்பட்ட கறிபொதிந்த அப்பம் ; sage cheese, மணமுள்ள இலைகளின் மணமும் சுவையுமூட்டப்பட்ட பாலடைக்கட்டி ; sage tea, மணப் பூண்டிலிருந்து இறக்கப்படும் மருந்து வடிசாறு.

sage[2], *n.* அறிவர் ; சாது ; அறிவாளி; மரபுவழி அறிவுக்குப் பேர்போனவர் ; *a.* ஆழ்ந்த அறிவுடைய ; செயலறிவுமிக்க ; நடுநிலையமைதி வாய்ந்த; அனுபவ அறிவு நிரம்பிய; ஆழ்ந்த அறிவுத்தோற்றமுடைய ; வீறமைதி வாய்ந்த ; (தொ.) the seven sages, பண்டைக் கிரேக்கரிடையே சிறந்த அறிவுரைமணிகள் தந்துள்ளவராகக் கருதப்பட்ட ஏழு அறிவர்கள்.

sage'-apple, *n.* நடுநிலக் கடலகப் பகுதிப் பழவகை.

sage'-brush, *n.* வட அமெரிக்க பாலைவெளிப் புதர்ச்செடி வகை.

sage'-cock, *n.* வட அமெரிக்க காட்டுச்சேவல்.

sage'-green, *n.* மங்கற் பச்சைநிறம்.

sage'-grouse, *n.* வட அமெரிக்க காட்டுக்கோழி வகை.

sage'-hare, sage'-rabbit, *n.* வட அமெரிக்க முயல்வகை.

sagg'ar, *n.* சூளைக் களிமண் உறை.

sagg'y, *a.* தொய்வுற்ற, தளர்ந்து தொங்குகிற.

Sagitt'a, *n.* அம்புவடிவ வடமீன்குழு.

sag'ittal, *a.* அம்புபோன்ற ; அம்பு வடிவுடைய.

Sagittar'ius, *n.* தனுராசி ; வடமீன் குழு.

sag'ittary, *n.* கிரேக்க புராண மரபில் குதிரையும் மனிதனும் இணைந்த உருவம் ; வில்லாளன்.

sa'gittate, sa'gittated, *a.* (தாவ., வில.) அம்புத்தலை போன்ற வடிவுடைய.

sag'o, *n.* சவ்வரிசி ; சவ்வரிசிதரும் பனையின மரவகை ; *pl.* sag'os.

sago'-palm, *n.* சவ்வரிசிப் பனைவகை.

Sahar'a, *n.* ஆப்பிரிக்க பாலைவனம்; வறண்ட நிலப்பகுதி.

Sah'ib, (அரா.) *n.* மதிப்பிற்குரியவர், பெருமகனர்.

Said[1], *n.*=Seid.

said[2], *v.* say என்பதன் இறந்தகாலம்.

saig'a, *n.* புல்வெளி ஆட்டியல் மான்வகை.

sail, *n.* கப்பற்பாய் ; கப்பல் பாய்களின் தொகுதி ; கப்பல் ; காற்றினால் இயக்கப்படும் கருவிப்பகுதி ; காற்றாடி அலகுப் பகுதி ; மீன்வகைகளின் முதுகுத்துடுப்பு; கப்பல் தளக் காற்றேட்டக் குழாய், சுரங்கக் காற்றேட்டக் குழாய்; குறிப்பிட்ட காலத்துக்குரிய கடற்பயணத் தொலைவு ; பாய்க்கப்பற் சுற்றுப்பயணம்; கடற்பயணம்; *v.* பாய்க்கப்பலில் பயணஞ் செய் ; பாயின் உதவியால் கடலிற் செல் ; கடற்பிரயாணஞ் செய் ; கடற்பயணம் புறப்படு ; கடலிற் பிரயாணஞ் செய் ; பறவைகள் வகையில் காற்றில் தவழ்ந்து செல்; மிதந்து செல்; மகளிர் வகையில் வீறமைதியுடன் நடந்து செல் ; கப்பலை இயக்கு ; கடலிற் செலுத்து ; வழுக்கிச் செல் ; சறுக்கிச் செல்; பொம்மைப்படகை மிதக்க விடு; (தொ.) crowd sail, வழக்க மீறிய மிகுதியான பாய்களைக் கட்டிக்கொண்டு செல்; full sail, எல்லாப் பாய்களையும் விரித்துக்கொண்டு ; முழு மூச்சுடன் ; hoist sail, பாய் உயர்த்து ; பாய் உயர்த்திச் செல் ; புறப்படு ; செயல் தொடங்கு ; lower sail, கப்பற் பாயை இறக்கு; வேகங் குறை ; make sail, அதிகப்படியான பாய்களை விரி ; sail close to the wind, sail near the wind, கிட்டத்தட்ட காற்றுக்கு எதிராக மிதந்துசெல் ; சட்டம் அல்லது நீதி வகையில் மீறும் எல்லைக்கு மிக அருகாமையில் செல்; set sail, பாய் விரித்துப் புறப்படு ; shorten sail, பாயின் பரப்பினைக் குறை ; strike sail, பாய்களின் உயரத்தைத் தணி ; take in sail, பாய்களைச் சுருக்கு ; பேராசைகளைக் குறைத்துக் கொள்; take wind out of sail, வாதச் செய்திகளை முன்னதாக எடுத்தாண்டு வாதமிடுபவரைச் செயலறச் செய் ; under sail, பாய்கள் விரித்த நிலையில், பாய் விரித்து.

sail'-arm, *n.* காற்றினால் இயக்கப்படும் இயந்திர அலகு.

sail'-axle, *n.* காற்றாடி இயந்திர ஊடச்சு.

sail'-broad, *a.* பாய்போல் விரிந்த.

sail'-cloth, *n.* பாய்க் கித்தான் வகை.

sailed, *a.* பாய்களுள்ள, பாய்கள் கொண்டுள்ள.

sail'er, *n.* பாய்மரக் கப்பல் ; பாய்ப்படகு.

sail'ing, *n.* கடற்பயணம் ; பாய்மரக் கப்பற் பயணம் ; கப்பல் புறப்படுகை ; கப்பலை இயக்கும்முறை ; கப்பல் இயக்கம் ; (தொ.) list of sailing, கப்பல் கால அட்டவணை ; plain sailing, முட்டிலா வேலை, எளிதாக இயங்கும் பணி.

sail'ing-master, *n.* பந்தயப் படகைச் செலுத்தும் அதிகாரி.

sail'ing-ship, sail'ing-vessel, *n.* பாய்மரக் கப்பல்.

sail'less, *a.* பாய்களற்ற.

sail'-loft, *n.* பாய்கள் செய்யப்படும் மோட்டு அறை.

sail'or, *n.* கடலோடி ; (தொ.) bad sailor, குமட்டல் நோயுறுங் கப்பலோட்டி ; good sailor, குமட்டல் நோயுறாத கப்பலோட்டி ; sailor hat, மகளிர் புல்தொப்பி ; மேனோக்கி வளைந்த விளிம்பும் தட்டையான உச்சியுமுடைய தொப்பி ; sailors' home, கடலோடிகளுக்கான எளிய கடற்கரை விடுதி; sailor's knot, கழுத்துக்குட்டை முடிப்பு வகை.

sail'or-man, *n.* கடலோடி.

sail'-yard, *n.* பாய்கள் விரித்துக் கட்டுவதற்குரிய பாய்மரக் கட்டம்.

sain'foin, *n.* விலங்குத் தீவனப் பயற்றினச் செடிவகை.

saint, *n.* அறச்சிகரம் ; அருட்டொண்டர், புனிதர், சமய முதல்வரால் புனிதராக அறிவிக்கப்பட்டவர் ; புனிதர் கணத்துள் சேர்க்கப்பட்டவர் ; மாண்ட திவ்வியர்; ஊர்-நாடு-இனம் ஆகியவற்றின் வகையில் காப்புடை மெய்யர் ; வானகப் புங்கவர் குழுவினரில் ஒருவர் ; தேவகணத்தவர் ; கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட திருவுடையார் ; கிறித்தவ திருச்சபை உறுப்பினர் ; போற்றுதலுக்குரியவர் ; தூயவர், சால்புடையவர் ; தூயவராகக் கருதப்படுபவர் ; தூயவராக நடிப்பவர் ; *a.* தூய்மையான ; தெய்விகத் தன்மையுடையவராகத் திருச்சபையினரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ; *v.* திருத்தொண்டராக்கு ; அருட்டொண்டர் பட்டியலிற் சேர் ; தூய திருத்தொண்டராக மதி ; (தொ.) order of St. Patrick, அயர்லாந்து நாட்டு வீரத்திருத்தகை விருது ; St. Agnes's Eve, ஜனவரி மாதம் இருபதாம்நாள் ; St. Agnes's Flower, பனிப்படலம், பனிச்சிதல் ; St. Andrew, தூயதிரு ஆண்ட்ரூ, ஸ்காத்லாந்து நாட்டின் ஆதரவாளரான புனிதர்; St. Andrew's cross, குறுக்குவெட்டு (X) வடிவச் சிலுவை ; நீலநிறப் பரப்பில் வெண் குறுக்குவெட்டுக் குறிகொண்ட ஸ்காத்லாந்து நாட்டுக் கொடி ; St. Andrew's Day, நவம்பர் முப்பதாம் நாள் ; St. Anthony's fire, பளபளப்புச் சிவப்புத்தோல் முக வீக்க நோய்வகை ; St. Anthony's nut, தின்னும் நிலக்

கொட்டை வகை; St. Barbara's cress, நடுநிலக் கடலகச் சிலுவைவடிவ மலர்ச்செடி வகை; St. Barnaby's thistle, சூரியகாந்தி குடும்ப முள்ளில்லாச் செடிவகை; St. Bartholomew, லண்டனிலுள்ள ஒரு மருத்துவ நிலயம்; St. Bernard's dog, St. Bernard, great St. Bernard, கலப்பின வேட்டைநாய் வகை; St. Cecilia, இசைக்குரிய காவல் புனிதர்; St. Crispin's Day, புதையரணத் தொழிலாளர் பண்டிகை நாள் (அக்டோபர் 25); St. Cuthbert's beads, அல்லிவடிவப் புதைபடிவக் கடல்வாழுயிர்த் தண்டின் கணுக்கள்; St. Dabeoc's heath, அயர்லாந்துநாட்டு அரும்புதர் வகை; St. David's Day, மார்ச்சு மாதம் முதல்நாள்; St. Elmo's fire, புயல்நேர ஒளிப்பந்து; St. George's, லண்டனிலுள்ள ஒரு மருத்துவமனை; St. George's cross, வெண்ணிறப்பரப்பிலுள்ள சிவப்புநிறச் சிலுவை; St. George's Day, ஏப்ரல் இருபத்து மூன்றும் நாள்; St. George's Hanover Square, பல திருமணங்கள் நிகழும் லண்டன் நகரத் திருக்கோயில்; St. Germain, Faubourg St. Germain, பாரிஸ் நகரத்தில் உயர்குடிமக்கள் பகுதி; St. Hubert's disease, வெறிநாய்க்கடியால் ஏற்படும் நீரச்ச நோய்வகை; St. Ignatius's bean, எட்டியின நச்சுச் செடிவிதை; St. James, St. James's, the Court of St. James's, பிரிட்டிஷ் அரசவை; லண்டனிலுள்ள தூயதிரு ஜேம்சின் மாளிகை; லண்டனிலுள்ள நாகரிகமிக்க பகுதி; St. John's bread, மொச்சை வகை; St. John's Day, டிசம்பர் இருபத்தேழாம் நாள்; St. Johnston's riband, St. Johnston's tippet, தூக்குக்கயிறு; St. John's wort, மஞ்சள் மலருள்ள செடிவகை; St. Leger, டன்காஸ்டர் (Doncaster) குதிரைப்பந்தயம்; St. Lubbock's day, பொருளக விடுமுறைநாள்; St. Martin's evil, குடிகாரத்தனம், குடிவெறி; St. Michael, கிச்சிலிப்பழ வகை; St. Michael and St. George, வீரத்திருத்தகைப் பட்ட அமைவு; St. Monday, குறைவான வேலையுள்ள நாள்; St. Nicholas's clerks, திருடர்கள்; St. Patrick, அயர்லாந்து நாட்டு ஆதரவுப் புனிதர்; St. Patrick's cabbage, பசுமைமாரு ரோசா இன வண்ணமலர்ச்செடி வகை; St. Patrick's Day, மார்ச்சு பதினேழாம் நாள்; St. Stephen's, பிரிட்டிஷ் மாமன்ற அவைக்களம்; St. Swithin's Day, ஜூலை பதினைந்தாம் நாள்; St. Valentine's Day, பிப்ரவரி பதினான்காம் நாள்; பறவைகள் இணைவதாகக் கருதப்பட்ட நாள்; St. Vitus's dance, நரம்பு நடுக்கு வலிப்புநோய் வகை; the St. Gotthard, ஆல்பைன் மலையிலுள்ள தூயதிரு கோதார்டின் கணவாய்; ஆல்ப்ஸ்மலைக் குடைவு இருப்புப் பாதை.

**saint'ed,** *a.* புனிதராக்கப்பட்ட; தூயதிருத்தொண்டராய் விட்ட; தூய்மையான, புனிதமான; விண்ணுலகேகிய; திருச்சபையினரால் திருத்தொண்டராகத் தேர்ந்து கொள்ளப்பட்ட.

**saint'ish,** *a.* புனிதர்போன்ற, திருத்தொண்டரையொத்த.

**saint'ism,** *n.* திருத்தொண்டர் இயல்பு, புனிதர் பண்பு; புனிதர் போன்ற நடிப்பு.

**saint'liness,** *n.* புனிதருக்குரிய பண்பு; புனிதத்தன்மை, அகத்தூய்மை; பழியின்மை; வாழ்க்கைத்தூய்மை.

**saint'ly,** *a.* புனிதருக்குரிய; திருத்தொண்டர் போன்ற; அடியாரின் பண்புடைய; புனிதரின் இயல்புவாய்ந்த; அகத்தூய்மை வாய்ந்த; புனிதமான; தெய்வத்தன்மை பொருந்திய; புனிதராக்கப்பெற்ற; புனிதராக மதிக்கப்பட்ட; புனிதருக்குத் தக்க, திருத்தொண்டருக்குகந்த.

**Saint Martin's-le-Grand,** *n.* மையப் பொது அஞ்சல் நிலயம்.

**Saint-Simon'ian,** *n.* காம்டே-டி-புனிதர் சைமன் (Comte-de-Saint Simon, 1760-1825) என்பவரது சமதருமக் கொள்கை ஆதரவாளர்.

**saith,** *n.* say என்பதன் நிகழ்கால ஒருமைப் பழைய வடிவம்.

**Sait'ic,** *a.* தொல்பழங்கால எகிப்தில் (26-30 மரபு மன்னர் காலங்களில்) தலைநகராயிருந்த சேயிஸ் (Sais) என்னும் நகரஞ் சார்ந்த; (தொ.) Saitic dynasties, தொல்பழங்கால எகிப்தில் சேயிஸ் நகரிலிருந்து ஆண்ட 26-30-ஆவது மன்னர் மரபினர்கள்.

**sake**[1], *n.* காரணம், பொருட்டு; நலம்; சார்பு; நிமித்தம்; வகை, செய்தி; (தொ.) for any sake, எவ்வழியினுலாவது; எக்காரணங் கொண்டாவது; for his name's sake, அவன் பெயருக்காக, அவன் பெயர் மதிப்பின் காரணமாக; for old sake's sake, பழங்காலத் தொடர்பின் நினைவாக; for the sake of, பொருட்டு.

***sake***[2], (ஜப்.) *n.* தோப்பி.

**sak'er,** *n.* பெண் வல்லூறு; பழம் பீரங்கிவகை.

**sak'eret,** *n.* ஆண் வல்லூறு.

**sa'ki,** *n.* தென் அமெரிக்க குரங்குவகை.

***sa'kia***, (அரா.) *n.* கவலைப்பொறி, நீருருளை.

**sal,** *n.* ஆச்சா, சாலமரம்.

**salaam',** (அரா.) *n.* வணக்கம்; *v.* வணங்கு.

**sal'able,** *a.* விற்பனைக்கேற்ற; பலரும் வாங்க விரும்புகிற; (தொ.) salable price, விற்பனை விலை.

**sala'cious,** *a.* காமவெறி கொண்ட.

**sal'ad,** *n.* இலையமுது; கிச்சடி.

**sal'ad-days,** *n. pl.* அனுபவமற்ற இளமை.

**sal'amander,** *n.* தீயில் வசிப்பதாக முற்காலத்திற் கருதப்பட்ட பல்லிவகை; மிகுவெப்பத்தைத் தாங்கக்கூடியவர்; தீயில் உறைவதாகக் கருதப்படுஞ் சிறு தெய்வம்; (வில.) நிலத்திலும் நீரிலும் வசிக்கும் வாலுள்ள விலங்கு வகை; துப்பாக்கி மருந்திற்குத் தீவைக்கும் பழுக்கக் காய்ந்த இரும்பு; முட்டை அப்பத்தைச் சிவக்க வைக்குஞ் சூடான இரும்புத்தகடு.

***sala'me***, (இத்.) *n.* உப்பிட்ட பூண்டுக்குழம்பு வகை.

**sal-ammon'iac,** *n.* நவச்சாரம், நவச்சியப் பாசகை.

**sal'angane,** *n.* மிசை கூடுகட்டி வாழும் தூக்கணங்குருவி வகை.

**salar'iat,** *n.* ஊதியம் பெறுநர், சம்பளம் வாங்கும் வகுப்பினர்.

**sal'ary,** *n.* ஊதியம், சம்பளம்; *v.* சம்பளங் கொடு.

**sale,** *n.* விற்பனை; விற்றல்; விற்ற அளவு; விற்ற தொகை; பொது விற்பனை, ஏல விற்பனை; குறைந்த விலைக்கு விற்பனை.

**sal'ep,** *n.* கிழங்குவகைச் சத்துணவு.

**salerat'us,** *n.* அப்பக் காரமாகப் பயன்படும் சாம்பரம்-உவரம் ஆகியவற்றின் தூய்மைக்குறைவான இருகரியகைகள்.

**sale'-ring,** *n.* ஏலமெடுப்போர் திரள்.

**sales,** *n. pl.* நடப்பு விற்பனை; விற்பனைத்தொகுதி.

**sales'man,** *n.* விற்பனையாளன்.

**sales'manship,** *n.* விற்பனையாளர் பணி; விற்பனைத்திறம்.

**sales'woman,** *n.* விற்பனை செய்பவள்.

**Sal'ian**[1], *n.* பிரஞ்சு நாட்டுப் பழங்குடி மரபொன்றைச் சேர்ந்தவர்.

**Sal'ian**[2], *a.* பண்டை ரோமாபுரிச் செவ்வாய்த் தெய்வப் புரோகிதர்களுக்குரிய.

**Sal'ic,** *a.* பிராங்கியர் (Franks) என்ற பிரஞ்சுப் பழங்குடியினஞ் சார்ந்த; (தொ.) Salic law, முற்காலப் பிரஞ்சு நாட்டிற் பெண்பாலார் வாரிசுரிமை விலக்குச்சட்டம்.

**sal'icet,** *n.* =salicional.

**sal'icin,** *n.* கசப்பு மரப்பட்டைச்சத்து மருந்து வகை.

**sali'cional,** *n.* துளையிசைக்கருவியின் மெல்லிசை மெட்டுக்குரிய அடைப்பு வகை.

**sal'icyl,** *n.* மரப்பட்டைவகை மருந்துச்சாறு

**sali'cylate,** *n.* மரப்பட்டைவகை மருந்துக்காடிம்; *v.* மரப்பட்டைவகை மருந்துக்காரமாக்கு; மரப்பட்டைவகை மருந்துக்காரத்தாற் செயலாற்று.

**salicyl'ic,** *a.* பட்டைவகை மருந்துச்சாற்றினைச் சார்ந்த; பட்டைவகை மருந்துச்சாற்றிலிருந்து ஆக்கப்பட்ட; (தொ.) salicylic acid, புரைமுறையாகவும் வாதமுறியாகவும் பயன்படும் பட்டைவகை மருந்துச்சாற்றுக் காடி வகை.

**sali'cylism**, *n.* பட்டைவகை மருந்துச்சாற்றுக் காடித் தன்மை.

**sali'cylize**, *v.* பட்டைவகை மருந்துச்சாற்றுக் காடியாக்கு.

**sali'cylous**, *a.* பட்டைவகை மருந்துச்சாற்றுக் காடித் தன்மை வாய்ந்த.

**sal'ience, sal'iency**, *n.* புறமுனைப்பு, முனைப்புடைப்பு; பிதுக்கம், துருத்திக்கொண்டுள்ள தன்மை; புறப்புடைப்புத் தோற்றம்; முகப்பு.

**sal'ient**, *n.* புறப்புடைப்புப் பகுதி; கோட்டையின் முகப்பு; அரண் வரிசையின் உந்துநிலைக்கூறு; கோட்டையின் புற முனைப்புக்கோணம்; *a.* புறமுனைப்பான, உந்தி நிற்கிற, புறப்புடைப்பான, முனைப்பிதுக்கமான; பார்வையான, சிறப் பான; முனைப்பாகத் தெரியவருகிற; முக்கியமான; துள்ளு கின்ற, குதிக்கின்ற; (செய்.) நீர்வகையில் குமுறி எழுகின்ற, துளும்புகின்ற; (மரு.) குருத்து நிலையான, தொடக்க முனை நிலையான; (தொ.) salient point, பழைய மருத்துவக் கருத்து மரபின்படி கருவில் முதலில் காட்சிதரும் இருதயம்; தொடக்க நிலை.

**sal'iently**, *adv.* முனைப்பாக; தெளிவாக; முதனிலையாக.

**salif'erous**, *a.* (மண்.) உப்பார்ந்த; உப்பார்ந்த அடுக்கு களுக்குரிய.

**sal'ine**, *n.* உப்பேரி; உப்பளம்; உப்புத் தொழிற்சாலை; உப்படங்கிய பொருள்; பேதிமருந்துப்பு; உப்புநீர்; *a.* உப்பார்ந்த; உப்புக்கள் கலந்த; உப்பியல்புடைய; வேதி யியல் வகையில் கார இயல்புடை உலோகங்கள்-வெளிமம் ஆகியவற்றின் காரங்களையுடைய.

**salin'ity**, *n.* உப்புத்தன்மை; உப்புச்சுவையுடைமை.

**salinom'eter**, *n.* நீர்ம உப்பியல்புமானி.

**Salique'**, *a.*=Salic.

**saliv'a**, *n.* வாயூறல்; உமிழ்நீர்; எச்சில்.

**sal'ivate**, *v.* வழக்கத்திற்கு மிகையாக உமிழ்நீர் ஊறச்செய்; பாதரசத்தின் துணையால் பெரிதளவில் வாயூறல் உண்டு பண்ணு; அளவிற்கு மிஞ்சி எச்சில் ஊறப்பெறு.

*salle*, (பிர.) *n.* கூடம்; அறை.

*salle-a-manger*, (பிர.) *n.* விருந்துக்கூடம், சிற்றுண்டி அறை.

*salle-d'attente*, (பிர.) *n.* ஊர்திநிலையத் தங்கலிடம்.

**sall'enders**, *n. pl.* குதிரைப் பின்கால் மூட்டு வெம்புண்.

**sall'ow**[1], *n.* குறுமர வகை; குறுமர வகையின் வளைவு நொசிவுடைய சுள்ளிக்கட்டை.

**sall'ow**[2], *a.* மனித உடலின் மேல்தோற்றம் வகையில் வெளிறிய பழுப்புநிறம் வாய்ந்த; *v.* வெளிறிய பழுப்புநிற மூட்டு.

**sall'owy**, *a.* குறுமரவகை செறிந்த.

**sall'y**[1], *n.* நொச்சித்தாக்கு, புறப்பாய்வு, முற்றுகையிடப்பட் டோர் வகையில் வெளியேறித் தாக்குதல்; திடீரெழுச்சி, திடீர்ச்செயல் முனைப்பு; பாய்வு; திடீர் அசைவு; திடீர்ப் பயணப் புறப்பாடு; திடீர்க்கற்பனை, மின்னல் புனைவுரை; நொடிப்பேச்சு, நகைத்திறத் துணுக்கு; சாட்டுரை, கேலிக் குறிப்புரை; *v.* வெளிவந்து தாக்கு; உலாப் புறப்படு, சிறு பயணம் புறப்படு; திடீரென வெளிச்செல்; ஆடி அசைவுறு.

**sall'y**[2], *n.* புடையெழுச்சி, மணியடிக்கத் தொடங்கும்போது உண்டாகும் முதல் அசைவு; கடைநிலை, மணியடித்து முடிந்த போது ஏற்படும் நிலை; மணியடிக்கும் கயிற்றின் கம்பிளி உள்வரியிட்ட கைப்பிடி.

**Sall'y**[3], *n.* சூடான அப்பவகை.

**sall'y-hole**, *n.* மணிக்கயிற்றுப் புழை, மணியடிக்குங் கயிறு சுவர்வழி செல்லும் புழைவழி.

**Sall'y Lunn**, *n.*=Sally[3].

**sall'y-port**, *n.* புடைவாயில், திட்டிவாயில்.

**salmagun'di**, *n.* கதம்ப உணவு, இன்கலவைக் கறிக்கொத்து மீன்-முட்டை-வெங்காயம் முதலியன கலந்து சுவைமண மூட்டப்பட்ட இறைச்சியுணவு; சில்லறைத் திரட்டு; பண்புக் கலவை.

**sal'mi**, *n.* கொத்துக்கறி வாட்டு; வேட்டைப்பறவையிறைச்சிக் கொத்துக்கறி வாட்டு.

**salm'on**, *n.* வஞ்சிரமீன் வகை, ஆற்றெதிர் சென்று முட்டை யிடும் இயல்புடைய உயர் உணவுமீன் வகை; *a.* வஞ்சிர வகை மீன் இறைச்சியின் நிறம் வாய்ந்த, ஒண் செம்பொன் நிறமுடைய.

**salm'on-ladder, salm'on-leap, salm'on-pass**, *n.* அணை மீனேணி, ஆற்றெதிர் செல்லும் வஞ்சிரமீன் வகைகள் எளிதில் ஏறிச்செல்லும்படி அணைகளில் ஏணிப்படிகள் போல் அமைக்கப்படும் நீரோட்டம்.

**sal'monoid**, *n.* வஞ்சிரவகை போன்ற மீன்; *a.* வஞ்சிரவகை மீன் போன்ற.

**salm'onsteak**, *n.* வஞ்சிரமீன் வகை வறுவல்.

**salm'ontrout**, *n.* வஞ்சிரமீன் போன்ற சிறுமீன்.

**Salomon'ian, Salomon'ic**, *a.* பண்டைய ஏபிரேயரின் புகழ் சான்ற சாலமன் (Solomon) என்பாருடைய; மன்னன் சால மனுக்குரிய; சாலமனின் பண்பு சான்ற; சாலமன் போன்ற.

*salon*, (பிர.) *n.* வரவேற்பு அறை; வரவேற்புக்கூடம்; புகழினர் பெருங்கூட்டு; (தொ.) *salon music*, வரவேற்பறை மெல் லிசை; *the Salon*, பாரிஸ் நகர் ஆண்டுமுறை ஓவியப் பெருங் காட்சி.

**saloon'**, *n.* அருந்தகப் பொதுக்கூடம்; தேறல் பொதுமனை, பொது வரவேற்பு மண்டபம்; கலைக் கண்காட்சி மண்டபம்; பொதுக் கேளிக்கைக்கூடம்; நடனக்கூடம்; மேசைக்கோற் பந்தாட்ட மண்டபம்; முடிதிருத்தகம்; ஊர்திப் பொது உணவுக்கூடம்; ஊர்தியில் தனிவாய்ப்புப் பொதுப்பெட்டி; இடைத்தடுப்புக்களில்லாத் தனிவாய்ப்பு வண்டி; விமானப் பயணிகள் கூடம்; விமானப் பொதுக்கூடம்; கப்பல் பயணிகள் பொதுக்கூடம்; கப்பல் முதல்வகுப்புக் கூடம்; (தொ.) dining saloon, ஊர்தி உணவகம்; saloon bar, தேறல் கூடம்; saloon car, உயர்மூடுகாப்பு உந்துவண்டி; saloon deck, உயர்தரப் பயணிகளுக்கு ஒதுக்கப்பட்ட கப்பல் தட்டு; saloon pistol, saloon rifle, அணிமை இலக்காகச் சுட்டுப் பழகுவதற்குரிய துப்பாக்கி வகை; sleeping saloon, ஊர்தியில் உறங்குகூடம்.

**saloon'-keeper**, *n.* தேறல் மனையாளர்.

**saloop'**, *n.* கிழங்குவகைச் சத்துணவு; சத்துநீர், லண்டன் தெருக்களில் முன்பு விற்கப்பெற்ற கிழங்குவகைச் சத்துப் பானம்; பட்டைநீர், வட அமெரிக்க மரப்பட்டைச் சத்துநீர்.

**Salop'ian**, *n.* ஷிராப்ஷயர் (Shropshire) மாவட்டத்தினர்; ஷிருஸ்பரி (Shrewsbury) பள்ளியிற் பயில்பவர்; *a.* ஷிராப் ஷயர் மாவட்டத்திற்குரிய; ஷிருஸ்பரி பள்ளியிற் பயில்கிற.

**salpigloss'is**, *n.* தோட்டப் பகட்டு மலர்ச்செடி வகை.

**sal'sify**, *n.* சதைப்பற்று வேர்ச்செடிவகை; கருஞ்சிவப்பு மலர்ச் செடிவகை.

**salt**, *n.* உப்பு; (வேதி.) உவரப்பாசிகை; (வேதி.) அடிப் படைக்காடி வேர்மக்கலவை, நீரகத்தினிடமாக உலோக அணுக்கள் இடம்பெற்றுள்ள காடிச்சேர்மம்; (வேதி.) பழைய வழக்கில் கரைதிறமும் சுவையும் எரிகாப்பும் உடைய திண்மம்; உவர்ச்சதுப்புநிலம்; வேலை உள்வாங்கு சதுப்பு நிலம்; சுவைத்திறம்; பதனநிலை; மட்டுநிலை; மிக முக்கிய பகுதி, மேம்பட்ட கூறு; மேம்படுத்துங் கூறு; நல்லெண்ணம்; கார்ப்பு, உறைப்பு; கடுப்பு, வசைத்திறம், புண்படுத்துந் தன்மை; காரசாரம்; சொல்திறம்; சொல்துடுக்கு; கரை பொருள்; கடலோடி; பழங் கடலோடி; உப்புத்தட்டம்; பேதிமருந்து; உவர்ப்பிரிவு; *a.* உப்புச் செறிவுற்ற; உப் படங்கிய; உப்பிலிட்ட; உப்புப்பதனமிட்ட; கைப்புச் சுவை யுடைய; கடுப்புடைய; உறைக்கின்ற; கடுமையான; கடு கடுத்த, துயரார்ந்த; ஆவல் தூண்டுகிற; கீழ்மையான, பட்டியல் கட்டணவகைகளில் அமிதமான; கடல்நீர்மேல்

**say'ing**, *n.* சொல்லுதல்; பழஞ்சொல்; முதுமொழி; (தொ.) goes without saying, சொல்லாமலே விளங்கும்; saying and doing, சொல்லுஞ் செயலும்.

**Sayyid**, *n.*=Sayid.

***sbi'rro***, (இத்.) *n.* இத்தாலிநாட்டுக் காவல்துறையினர்.

**scab**, *n.* அசறு, கடுந்தழும்பு; சிரங்கு; கால்நடைச்சொறி; தாவரப் பூஞ்சைக்காளான் நோய்; கசடன், அழுக்குப்பிடித்தவன்; கருங்காலி, வேலை நிறுத்தத்தில் சேர மறுப்பவர்; தொழிற்சங்கத்தில் சேர மறுப்பவர்; வேலைநிறுத்தஞ் செய்தவருக்குப் பதிலாக வேலைக்குச் செல்பவர்; *v.* புண்வகையில் பொருக்கு வை; கருங்காலியாக நட.

**scabb'ard**, *n.* வாளுறை; கத்தியுறை; (தொ.) fling away scabbard, throw away scabbard, இறுதிவரை போராட உறுதிபூண்.

**scabb'ard-fish**, *n.* ஓலைவாளை, வாளுறைபோல மின்னும் கடல்மீன் வகை.

**scabb'ed, scabb'y**, *a.* சொறி பிடித்துள்ள; சிரங்குநோய்க்கு ஆளான; இழிந்த, கொடிய; பயனற்ற.

**scab'ies**, *n.* சொறிசிரங்கு.

**scab'ious**, *n.* பல்வகை வண்ணமுடைய காட்டுச்செடி வகை; *a.* சொறிசிரங்கு பிடித்துள்ள, பொருக்குகள் நிறைந்த.

**scab'rous**, *a.* (வில., தாவ.) சொரசொரப்பான மேற்பரப்புடைய, பொருக்குகள் நிறைந்த; மிகு திறம்படக் கையாள வேண்டிய; இதவுக்கேடான; மட்டுமதிப்புடன் கையாள முடியாத.

**scad**, *n.* மீன்வகை.

**scaff'old**, *n.* சாரக்கட்டு, கட்டிடமெழுப்பும் வேலையாட்கள் பயன்படுத்துவதற்குரிய அழிக்கட்டுமானம்; பரண்கட்டு, வேட்டைக்காரர் தங்குமேடை; காட்சிமேடை, காட்சிப் பொருளுக்கான உயர் அழிச்சட்டமேடை; பார்வையாளர்க்கான மேடைக்கட்டு; ஆடரங்கமேடை; வேடிக்கை காட்டுபவர்களுக்கான மேடைக்கூண்டு; தூக்குமேடை, கோக்கா மரம்; நேராக ஆணைக் கொலைஞர் கையாலேயே பெறும் கொலைத் தண்டனை; பிணக்கூடு, முற்காலங்களில் இறந்த உடலை வைப்பதற்குரிய சட்டம்; பிணவைப்புச் சட்டம், இறந்த வேட்டை விலங்குகளின் உடலை வைப்பதற்குரிய அழிக்கூடு; (உயி.) முற்சட்டக்கூடு, கரு உயிரின் பின்வளர்ச்சிக்குரிய முற்படிவ அமைவு; கூண்டுச்சட்டம்; *v.* கட்டிடத்திற்குச் சாரக்கட்டுமானம் அமை; மேடைச்சட்டமீது காட்சிக்கு வை; தூக்கிநிறுத்து; பேணிக்கா; (தொ.) the scaffold, நேராக ஆணைக் கொலைஞர் கையாலேயே பெறுங் கொலைத் தண்டனை.

**scaff'olding**, *n.* சாரக்கட்டு அமைத்தல்; சாரக்கட்டு; சாரக் கட்டுக்கு வேண்டும் பொருள்கள்; ஓவியர் நிலைச்சட்டம்; தூக்குமேடைக்குரிய பகுதிகள்; காட்சிமேடை; பார்வையாளர் மேடைக்கட்டு; கூண்டுச்சட்டம்; மேடைச்சட்டமீது காட்சிக்கு வைப்பு; தூக்கி நிறுத்தல்; பேணிக்காப்பு.

**scaff'olding-pole**, *n.* சாரக்கம்பம், சாரக்கட்டைத் தாங்கும் மையத்தூண்.

***scag'lia***, (இத்.) *n.* இத்தாலிய சிவப்புச் சுண்ணக்கல்.

**scagliol'a**, *n.* ஒப்பனைக்கற் போலியாகச் செய்யப்படும் பசை நீற்றுக் கலவை வேலைப்பாடு.

**scal'able**[1], *a.* மீன்வகையில் செதிள்களகற்றக்கூடிய; விதைகள் வகையில் தோல் தோலாய் உரிக்கத்தக்க; பல்வகையில் கீற்றுக்கீற்றாக அகற்றத்தக்க; உலோகவகையில் சிம்பு சிம்பாக எடுக்கத்தக்க; தோல்வகையில் உரியத்தக்க; உலோக வகையில் தகடுதகடாக வருகிற; தோல்வகையில் வங்கு உருவாகிற; சிம்புசிம்பாக விழுகிற; சிதள்கள் வகையில் அவிழ்ந்து விழுகிற.

**scal'able**[2], *a.* எடைகோல் தட்டுகளில் வைத்து நிறுக்கத் தக்க.

**scal'able**[3], *a.* ஏறிக் கடக்கத்தக்க; ஏணிவைத்து ஏறத்தக்க.

**scala'riform**, *a.* (வில.) பூச்சி இறகு நரம்புகள் வகையில் ஏணிவடிவான; (தாவ.) மாறிமாறிக் கெட்டியும் தளர்வுமான சிம்புகளால் அமைவுற்ற.

**scal'awag**, *n.* கறளை விலங்கு; போதிய வளர்ச்சி பெறாத உயிர்; தீனியின்றி ஒட்டிக்குறுகிய விலங்கு; மூளையற்றவர், கவைக்குதவாதவர்; கயவர், போக்கிரி.

**scald**[1], *n.* சுடுபுண்; ஆவிப்பொக்குளம்; *v.* பொள்ளவை, சுடுபுண் உண்டுபண்ணு; ஆவிப்பொக்குளம் உருவாக்கு; கொதி நிலைக்குச் சற்றுக்குறைவாகச் சூடாக்கு; கொதிநீர் விட்டுக் கழுவு.

**scald**[2], *n.* ஸ்காண்டிநேவிய நாட்டுப் பாணர், பெரியோர்மீது பாட்டுக்கட்டிப் பாடும் மரபினர்.

**scald'ed**, *a.* கொடு வெஞ்சூடாக்கப்பட்ட.

**scald'ing**, *n.* பொள்ளவைப்பு, சுடுதல்; *a.* கொடு வெஞ்சூடான; (தொ.) scalding tears, வெந்துயர்க் கண்ணீர்.

***scald'ino***, (இத்.) *n.* இத்தாலிய நாட்டு வழக்கில் மண் தணல் தட்டு.

**scale**[1], *n.* செதிள்; உரிவை, தொலி, தோல் உரிபகுதி; தோடு; வங்கு; பொருக்கு; உமி; நெற்று; சிம்பு; புரை; சிராய்; படலம்; இரும்பு மேலடைப்பாளம்; ஊத்தை, பல் காறை; வேம்பாவின் உள்துரிசு; சிதலிலை; பூவடிச்சிதல்; புரியிழை, சிதலிறகு; *v.* செதிள் நீக்கு; தொலி, தோலுரி; புறத்தோடகற்று; பற்காரை எடு; இரும்பின் மேற்சிம்பெடு; செதிளுருவாக்கு; வங்குபற்று; சிம்புசிம்பாக எடு, படலம் படலமாக எடு; அடை அடையாக விழு; சிதல் சிதலாக உதிர், இற்றுவிழு.

**scale**[2], *n.* சீரை, துலாத்தட்டு; *v.* நிறைகோலில் வைத்து நிறு; நிறுக்கப்பட்ட பொருள்வகையில் நிறைகோலில் குறிப்பிட்ட எடையைக் காட்டு; (தொ.) throw sword into scale, படைவலிகொண்டு உரிமை நாட்டு; turn the scale, தீர்மானி, உறுதிசெய்.

**scale**[3], *n.* அளவுப்படி நிரை, சிறு அளவுக் கூறுகளின் வரிசை; ஏணிபோன்ற ஒழுங்கமைவு; தரவரிசைமுறை; (இசை.) சுரவரிசைப்பட்டி; (கண.) குறியீட்டுமுறையின் அடிப்படையான அளவுத்திட்டம்; ஒப்புமை அளவு; வீதக் குறிப்பு; திணைப்படப் படி அளவு விழுக்காடு; அளவுகோல், மாத்திரைக்கோல்; அளவுக்கீற்று அடையாளங்கள்; அளவு அறுதிப்பாடு; *v.* ஏணிவைத்து ஏறு; தொற்றித் தவழ்ந்து ஏறு; படி விழுக்காட்டளவில் வரைந்துகாட்டு; பொது அளவுவீதமுடையதாக்கு; பொதுவான அளவுவீதம் உடையதாயிரு; ஒரே அளவால் அளக்கத்தக்கதாயிரு; (தொ.) chromatic scale, அயலுருக்கள் விரவிச் செல்லும் இசைப் பட்டி; diatonic scale, இசை ஒலிகளையும் இடைவெளியையுங் கொண்டு இயங்குகிற இசைப்பட்டி; Gunter's scale, கணிப்பு முறை அளவுகோல்; on a large scale, பெரிய அளவில்; on a small scale, சிறிய அளவில்; on the scale of, விழுக்காட்டில்; scale down, படிப்படியான அளவு வீதத்தில் சிறிதாக்கிக் காட்டு; scale up, படிப்படியான அளவு வீதத்தில் பெரிதாக்கிக் காட்டு; sink in the scale, கீழ்மட்டத்திற்கு வந்துவிடு; sliding scale, ஒப்பான அல்லது உறழ்வான வீதச் சறுக்குக் கணிப்பு அட்டவணை; to scale, வீதமுறைப்படி ஒரு சீராக.

**scale'-arm'our**, *n.* செறிபாளப் போர்க்கவசம்.

**scale'-board**, *n.* நிலைக்கண்ணாடி-படம் முதலியவற்றின் பின்புற மென்மரப் பலகை.

**scale'-bor'er**, *n.* வேம்பாக்குழாய்களிலிருந்து துருப்பொருக்குகளை அகற்றுங் கருவி.

**scaled**, *a.* செதிள்களையுடைய; செதிள்கள் நீக்கப்பட்ட.

**scale'-fern**, *n.* செதிள்களையுடைய சூரல் இனம்.

**scale'-insect**, *n.* செதிற்பூச்சி, செடிகளில் இறுக்கமாக ஒட்டிக்கொண்டு கேடயம்போன்ற செதிலைச் சுரப்பிக்கும் பூச்சிவகை.

**scale'-moss**, *n.* செதிள்போன்ற இலைகளையுடைய பாசியொத்த செடிவகைகள்.

**scalene′**, *n.* ஒவ்வாச்சிறை முக்கோணம்; முதுகெலும்பையும் விலா எலும்புகளையும் இணைக்குந்தசை; *a.* ஒவ்வாச் சிறைகளையுடைய; (தொ.) scalene cone, அச்சு அடியைநோக்கிச் சாய்ந்துள்ள கூம்பு; scalene cylinder, அச்சு அடியை நோக்கிச் சாய்ந்துள்ள நீள் உருளை; scalene muscle, முதுகெலும்பையும் விலா எலும்பையும் இணைக்குந் தசை; scalene triangle, ஒவ்வாச் சிறை முக்கோணம்.

**scales**[1], *n. pl.* நிறைகோல், எடையளக்குங் கருவி; தராசுத் தட்டு; (தொ.) hold the scales even, நடுநிலையிலிரு; ஒருபாற் கோடாதிரு.

**Scales**[2], *n. pl.* (வான்.) துலாராசி.

**scale′winged**, *a.* பூச்சியின வகையில் செதிள்களால் மூடப்பட்ட நான்கு சிறகுகளையுடைய.

**scale′-work**, *n.* ஒன்றன்மீது ஒன்று அமைந்துள்ள ஒழுங்கமைவு ஒப்பனை, அடை அடுக்கமைவு.

**scall**, *n.* சொறி; (தொ.) dry scall, வன்சொறி, சிரங்கு; moist scall, மென்சொறி, கரப்பான் புண்.

**scall′awag**, *n.*=scalawag.

**scall′ion**, *n.* வெங்காய வகை.

**scall′op**, *n.* இரட்டைவரிச் சோழி; நத்தை வகை; புண்ணிய யாத்திரிகர் வரிச்சோழிச் சின்னம்; சிப்பி வறுக்கும் வட்டில்; உண்கல ஏந்துவட்டில்; *v.* வாணலியில் இட்டுப் பக்குவப்படுத்து; சிப்பிவரைபோன்ற ஓரவரி அணிசெய்.

**scall′ops**, *n. pl.* நத்தையோடு ஒத்த ஓரவரியுடைய அணி வகை.

**scall′op-shell**, *n.* சிப்பி, நத்தையோடு.

**scall′ywag**, *n.*=scalawag.

**scalp**, *n.* தலையுச்சிவட்டம்; உச்சிவட்டக்குடுமித் தோல்; அமெரிக்க செவ்விந்திய பழங்குடிமக்கள் வழக்கில் வெற்றிக்கு அறிகுறியாகக் கிழித்தெடுத்து அணிந்துகொள்ளப்படும் எதிரியின் வட்டக்குடுமித் தோல்; வன்பால் மலைமுகடு; திமிங்கிலத் தலை மேற்பகுதி; *v.* செவ்விந்திய வழக்கில் தோற்றவரின் குடுமித்தோலைக் கீறி எடு; ஈவிரக்கமின்றிக் குறை இறக்கு; (தொ.) out for scalps, போர்வழியை மேற்கொள்; தாக்குதல் போரில் இறங்கு; take scalps, தோற்றவன் குடுமித்தோல் கிழித்தெடு.

**scal′pel**, *n.* அறுவைக்கத்தி.

**scal′per**[1], *n.* செதுக்குவினைஞரின் உருள்முனை உளி; அறுவை மருத்துவர் அரம்.

**scalp′er**[2], *n.* செவ்விந்தியரின் குடுமித்தோல் அறுத்தெடுக்குங் கத்தி.

**scalp′less**, *a.* குடுமித்தோலற்ற, செவ்விந்தியர் வழக்கில் வெற்றி பெற்ற பகைவரால் குடுமித்தோல் பறித்தெடுக்கப் பெற்ற; மொட்டையான.

**scalp′-lock**, *n.* உச்சிவட்டத் தோற்குடுமி, செவ்விந்தியர் வழக்கில் வீர வெற்றிதோல்விக்கறிகுறியாகக் கொள்ளப்படும் உச்சிவட்டத்தோலுடன் விடப்படும் குடுமி.

**scal′priform**, *n.* உளி வடிவான முன்வாய்ப்பல்.

**scal′y**, *a.* செதிள்கள் மூடிய; செதிள்கள்போன்ற; கந்தையணிந்துள்ள; இழிதோற்றமுடைய; செதிள்களால் ஆன; செதிள்களாக உதிர்ந்துவிடும் பாங்குள்ள.

**scamm′ony**, *n.* கடும்பேதிமருந்தாகப் பயன்படும் பிசின் வகை; பிசின் வகைதரும் பின்னுகொடி வகை.

**scamp**[1], *n.* கயவன்; போக்கிரி; செல்லப்பெயர் வகை.

**scamp**[2], *v.* கடனுக்குப் பணியாற்று, அரைகுறை வேலை செய்.

**scam′per**, *n.* விரைகுதியோட்டம்; எழுச்சிமிக்க பாய்ச்சல்; இன்பக் குதிரைச்சவாரி; விரைவுப்பயணம்; வேக வாசிப்பு; *v.* விலங்கு வகையில் கலசலாக ஓடு; குழந்தைவகையில் எழுச்சியுடன் குதித்தோடு; குதியாட்டமிட்டுச் செல்; (தொ.) take scamper through, குதியாட்டமிட்டுச் செல்.

**scamp′ish**, *a.* போக்கிரித்தனமான; கயமைத்தனமான.

**scan**, *v.* அலகிடு; அசைசீர் பொருத்தம் தேர்ந்தாராய்; ஒத்திசைவு ஆய்ந்து காண்; ஓசைநயம் தோன்ற அமைவுறு; அசைசீர் சரியாக அமைவுறு; கூர்ந்துபார், நுணுகி ஆராய்ந்து நோக்கு; தொலைக்காட்சி வகையில் தொலைக்கனுப்பும்படி நிழல்-ஒளிக் கூறுகளைத் தனித்தனி பிரித்தெடு.

**scan′dal**, *n.* அவதூறு, பழிச்சொல்; ஊரலர், புறஞ்சொல்; பொது ஒழுங்குணர்வு குலைவு, நடைமுறை மரபு நயக்கேடு; பழிப்பு, இழிப்பு; பழிப்புக்குரிய செய்தி, இழிவுக்குரியது.

**scan′dalize**[1], *v.* மதிப்புக்குலை; அவமானம் உண்டுபண்ணு; மனம் புண்படுத்து; ஒழுங்குணர்வு குலைவி; நடைநய மரபுகளை அவமதி; நல்லெண்ணத்துக்கு அதிர்ச்சியூட்டு.

**scan′dalize**[2], *v.* (கப்.) பாய்ப்பரப்பைக் குறை.

**scan′dalous**, *a.* அவதூறான, அவமதிப்பான; ஒழுங்குணர்ச்சி குலைக்கிற;, நயநாகரிகப் பண்புக்கு மாறான; நன்பொறியாளர்க்கு அதிர்ச்சியூட்டுகிற; கண்டிக்கத்தக்க; இழிவான.

**scan′dalously**, *adv.* அவமதிப்பாக, இழிவாக, தகாத்தனமாக.

**scan′dalousness**, *n.* அவதூறான தன்மை.

***scan′dalum magnat′um***, (ல.) *n.* (வர.) பெரியவரை அவதூறு படுத்துதல்.

**Scandinav′ian**, *n.* டென்மார்க்-நார்வே-ஸ்வீடன்-ஐஸ்லண்டு முதலிய நாடுகளடங்கிய பரப்பிற்குரியவர்; ஸ்காண்டினேவிய மொழி இனக்குழு; *a.* ஸ்காண்டினேவிய நாடுகள் சார்ந்த; ஸ்காண்டினேவிய மொழி இனக்குழுச் சார்ந்த.

**scan′sion**, *n.* அலகீடு; யாப்பமைதி.

**scansor′ial**, *a.* பறவைகள் வகையில் பற்றி ஏறுகிற; பறவைகளின் காலடிகள் வகையில் பற்றி ஏறுவதற்கு ஏற்றவாறமைந்த.

**scant**, *a.* மிகக்குறைவான; போதாத; தாராளமற்ற, கைக்கடிப்பான; குறைபாடுடைய; *v.* கஞ்சத்தனம் பண்ணு; வேண்டாவெறுப்புடன் கொடு.

**scant′ling**, *n.* படியளவு; அளவுப்படி; அளவீடு; ஒதுக்கிய அளவுப்பங்கு; வெட்டுவாய் அளவு; வகைமாதிரி, உருப்படிவம்; படியளவுக் கருவி; வரிச்சல், 5 அங்குலத்திற்குக் குறைவான அகலத்திட்பங்களையுடைய மரப்பட்டியல்; சிறு அளவு; குறைவளவுத் தேவை; கட்டை-கல் வகைகளில் வெட்டிக் குறைக்கப்படவேண்டிய இலக்களவு; கட்டுமானப் பகுதிகளின் கட்டையளவு; கப்பற் பகுதிகளின் கட்டைஅளவு; மிடாவின் வைப்புநிலைச் சட்டம்.

**scan′ty**, *a.* சிறு அளவான; கொஞ்சமான; சிறிதும் போதா நிலையான; தேவைக்குப் பற்றாத; கஞ்சத்தனமாகக் கொடுக்கிற; வளமற்ற; குறைபாடான.

**scape**[1], *n.* (தாவ.) வேரிலிருந்து வளரும் காய்த்தண்டு; பூச்சிகளின் உணர்கருவியின் அடித்தளம்; இறகின் நடு நாளம்; தூணின் நிலைத்தண்டு.

**scape**[2], *n.* தப்பிப்பிழைப்பு; *v.* தப்பு.

**scape′goat**, *n.* பலியாடு, பழிக்கு இரை.

**scape′grace**, *n.* துடுக்குக்குழந்தை, இடருணிப்பிச்சு.

**scape′ment**, *n.*=escapement.

**scaph′oid**, *n.* (உள்.) படகுவடிவ எலும்பு; *a.* படகு வடிவான.

***scap′ula***, (ல.) *n.* தோள்பட்டை; *pl.* ***scap′ulae***.

**scap′ular**, *n.* சமயத்தலைவர் அணியும் தோளை மறைக்குஞ் சிறு அங்கி அல்லது உடுப்பு; சமயச்சங்கத்தில் நுழைவதற்கு அடையாளமாய் மடத்துத்துறவியரின் குறுந்தோளங்கி; சமயநிறுவன ஏற்புச் சின்னமான தோள்வரைத் தொங்கல் அணி; தோள்கட்டு; *a.* தோள்சார்ந்த; தோள்பட்டை சார்ந்த; (தொ.) scapular feathers, சிறகடியில் முளைக்கும் மெல்லிறகு.

**scap′ulo-hum′eral**, *a.* தோள்பட்டை மேற்கை இணைப்புச் சார்ந்த.

**scap'ulo-rad'ial**, *a.* தோள்பட்டை முன்கை கட்டெலும்பு இணைப்புச் சார்ந்த.

**scap'ulo-ul'nar**, *a.* தோள்பட்டை முன்கை உள்ளெலும்பு இணைப்புச் சார்ந்த.

**scar**[1], *n.* வடு; துயரம் முதலியவற்றின் நிலைத்த விளைவு; இலை முதலியன உதிர்ந்தமையால் செடியில் ஏற்பட்ட வடு; விதையின் காம்புவடு; *v.* வடுப்படுத்து; தழும்பு உருவாகப் பெறு.

**scar**[2], *n.* செங்குத்துப் பாறை.

**sca'rab**, *n.* பண்டைய எகிப்திய மரபில் தெய்வத்தன்மை பொருந்தியதாகக் கருதப்பட்ட வண்டு; வண்டுவடிவத் தாயத்து.

**scarabae'id**, *n.* வண்டினத்தின் வகை.

**scarabae'oid**, *n.* பண்டைய எகிப்திய மரபில் போலி வண்டுரு மணி; *a.* பண்டைய எகிப்திய மரபில் திருத்துாய வண்டு சார்ந்த.

**sca'ramouch**, *n.* வாயடிவீரன்.

**scarce**, *a.* அருமையான, போதாத, பற்றுக் குறையான; *adv.* மிக அருகலாக; (தொ.) make oneself scarce, (பே-வ.) ஒதுங்கியிரு; விலகியிரு.

**scarce'ly**, *adv.* மிக அருகலாக.

**scarce'ment**, *n.* சுவர் உள்விலகீடு; அரண்மதில் உள்வாங்கீடு; கரை உள் ஒதுக்கம்; சுவர் உள் விலகீட்டுக்கோணம்; அரண்மதில் உள்வளைவு குடுவை; கரை உள்வளைவுப் பள்ளம்.

**scarce'ness**, *n.* அருகல்நிலை, பற்றுக்குறை; தட்டுப்பாடு.

**scar'city**, *n.* பற்றுக்குறை, அருமைப்பாடு.

**scare**, *n.* கிலி, அடிப்படையற்ற அச்சம்; கலக்கம், படையெடுப்புப் பற்றிய பீதி; வாணிகத்துறையில் தேவையற்ற கவலை; *v.* கிலியூட்டு; தேவையின்றி அச்சுறுத்து; அறிவிலியைப் பீதியுறச்செய்; விலங்கைக் கலவரப்படுத்து; குழந்தைக்குப் பூச்சாண்டி காட்டு; (தொ.) scare away, அச்சுறுத்தி ஓட்டு.

**scare'crow**, *n.* புல்லுரு, புள்ளோட்டியாக வைக்கப்படுங் கொல்லைப் பொம்மை; பூச்சாண்டி; கந்தலாண்டி, அலங்கோல உடையணிந்தவர்; எலும்புந் தோலுமானவர்.

**scared**, *a.* பீதியுற்ற; (தொ.) scared face, பீதியுற்ற முகம்; scared impression, கிலியுற்ற தோற்றம்.

**scare'-head, scare'-heading**, *n.* பரபரப்புச் செய்தித்தாள் தலைப்பு.

**scare'monger**, *n.* வீண்கிலி பரப்புபவர்.

**scarf**[1], *n.* கழுத்துத்துண்டு, தோள்துண்டு; வல்லாவட்டு; கழுத்துப்பட்டிகை.

**scarf**[2], *n.* மரத்துண்டுகளின் வாய்ப்பொருத்தீடு; தோல் துணுக்குகளின் இணைப்பொருத்தீடு; உலோகப் பாளங்களின் மேலிணைப்பீடு; செதுக்குக் குதைப்பள்ளம், உள்வரிப்பள்ளம்; *v.* மரம்-தோல்-உலோகம் ஆகியவற்றினைச் சமநிலைப்படுத்திப் பொருத்து; திமிங்கில வகையை வெட்டிக்கண்டமாக்கு.

**scarfed**, *a.* கழுத்துப்பட்டிகை அணிந்த; கழுத்துச் சுற்றுத் துண்டு அணிந்த.

**scarf'-loom**, *n.* அகலமற்ற படிவங்களை நெய்யுந் தறி.

**scarf'-pin, scarf'-ring**, *n.* கழுத்துப்பட்டை ஊக்கு, கழுத்துப்பட்டை இணைப்பு வளையம்.

**scarf'-skin**, *n.* உரிவை, புறத்தோல்.

**scarf'-wise**, *a.* தோளிலிருந்து எதிர்ப்புற இடுப்புக்குச் செல்கிற, தோளின் குறுக்கான; *adv.* தோளின் குறுக்காக.

**scarifica'tion**, *n.* மேலீடான அறுவை; தோற்செதுக்கீடு; மண்கிளறல்; புண்கிளறல்.

**sca'rificator**, *n.* மேலறுவைக்கத்தி.

**sca'rifier**, *n.* கிளறுபடை, கீழ்மேலாய்ப் புரட்டாமல் நிலங் கிளறும் கவர்முள் உழவுக் கருவி; அதர்ப்பொறி, பாதை உடைத்து அமைக்கும் கூர்முள் இயந்திரம்; கிளறுபவர்; கிளறுவது.

**sca'rify**, *v.* மேற்போக்காக அறுவை செய்; தோலுரி; கடுந் தாக்குதலால் மனவேதனை உண்டுபண்ணு; கிளறுபடையால் நிலங்கிளறு.

**scar'ious**, *a.* (தாவ.) புல்லிதழ் வகையில் உமிபோன்ற, உலர் சருகான.

**scarlati'na**, *n.* செம்புள்ளி நச்சுக்காய்ச்சல் வகை

**scar'less**, *a.* வடுவற்ற, தழும்பில்லாத.

**scarl'et**, *n.* ஒண்சிவப்பு வண்ணம்; ஒண் சிவப்புநிற ஆடை; *a.* ஒண்சிவப்பு வண்ணமான; (தொ.) scarlet admiral, வண்ணத்துப்பூச்சி வகை; scarlet fever, செம்புள்ளி நச்சுக் காய்ச்சல் வகை; போர்வீரரைக் காதலிக்குங் கால நடப்பு; scarlet hat, கத்தோலிக்க திருத்துாதுவர் அணியுந் தொப்பி: கத்தோலிக்க திருத்துாதுவர்; scarlet rash, செம்புள்ளி அம்மைநோய் வகை; scarlet runner, சிவப்புமலருடைய படர்கொடி அவரை வகை; scarlet woman, scarlet whore, புறச்சமயகால ரோமாபுரி; போப்பாண்டவர் ஆட்சிக்குரிய ரோமாபுரி; உலகில் பற்றுர்வ மனப்பான்மை.

**scarl'et-grain**, *n.* சிவப்புச்சாயப் பூச்சிவகை.

**sca'roid**, *n.* கிளிமூக்கினஞ் சார்ந்த மீன்வகை; *a.* கிளிமூக்கினஞ் சார்ந்த; கிளிமூக்கின மீன்வகை போன்ற.

**scarp**, *n.* அரண் வகையில் அகழியின் உட்கரைச் சரிவு, உட்பக்கச் சரிவு; நேர்க்குத்தான சாய்வு; *v.* கரைப்பக்கஞ் செங்குத்தாக்கு; நேர்க்குத்தான சரிவாக்கு; அகழிக்கரையினை இரு பக்கமும் செங்குத்தான சரிவுடையதாக்கு.

**scar'us**, *n.* கிளிமூக்கும் ஒளிவண்ணமும் பொருந்திய மீன்வகை.

**scathe**, *n.* புண்.

**scathe'less**, *a.* தீங்கு செய்யாத.

**scath'ing**, *a.* புண்படுத்துகிற.

**scatol'ogy**, *n.* புதைபடிவச் சாணவியல்.

**scatoph'agous**, *a.* சாணந் தின்னுகிற.

**scatt'er**, *n.* சிதறல், துாவுதல்; *v.* சிதறு; துாவு; தெளி; கலைவுறு; சிதறலாக வீசு; அங்குமிங்கும் வீசு; இடையிடை துாவு; இடையிடை தெளி; பரவலாக எறி; சிதறலாகத் தெளி; மேகத்தைக் கலைவி; படையைச் சிதற அடி; துரத்தியடி; கலைந்தோடு; தனித்தனியாக்கு; துண்டுதுண்டாகப் பிரி; நாற்புறமும் பரப்பு; நாலாபுறமும் பரவு; நம்பிக்கை குலைவி; குலைவுறு; ஒளிசிதறிப் பரப்பு; ஒளிசிதறிப்பரவு; வெடித்துத் தெறித்தோடு.

**scatt'er-brain**, *n.* கவனக்குறைவானவர்.

**scatt'er-brained**, *a.* செறிந்த கவனமற்ற.

**scatt'ered**, *a.* சிதறலான, பரவலான; அங்குமிங்குமான, இடையிடையான; இடைவெளி மிக்க, ஒன்றிலிருந்து ஒன்று நெடுந்தொலை விலகிய; ஒருங்கிணையாத; துண்டுதுண்டான.

**scatt'eringly**, *adv.* சிதறலாக, அங்குமிங்குமாக.

**scaup, scaup'-duck**, *n.* கிளிஞ்சில் தின்னும் வாத்துவகை.

**scaup'er**, *n.*=scalper[1].

**scaur**, *n.*=scar[2].

**scav'enge**, *v.* தெருப்பெருக்கு; உள்வெப்பாலையிலிருந்து கழிநிலை வளி முதலியவற்றை வெளியேற்று.

**scav'enger**, *n.* தெருப்பெருக்குநர்; அழுகிய பொருள்களைத் தின்று வாழும் விலங்கு; ஆபாச எழுத்தாளர்; *v.* தோட்டியாயிரு; தெருப்பெருக்கு.

**scav'engery**, *n.* தெருப்பெருக்குங் கலை.

**scaz'on**, *n.* குறுந்துள்ளல் யாப்பு வகை.

***sce'na***, (இத்.) *n.* (இசை.) இசைநாடக உறுப்பு; விரிவான நாடகப் பாணியமைந்த தனிமொழி; கதையுரை விரவுறும் நாடகப் பாணித் தனிமொழி.

***scenar'io***, (இத்.) *n.* நாடகக்காட்சிப் பட்டியல், காட்சிப் பாகுபாடு-உறுப்பினர் தோற்ற விவரங்கள் முதலியவற்றின் தொகுதிக் குறிப்பு; நாடக உரையாடல்-இசை நடைமுறைக் குறிப்பேடு.

**scend**, *n.* அலைப்பாய்ச்சல் வேகம்; அலைப்பாய்ச்சல்; *v.* கப்பலவகையில் அலைபாய்வுறு, அலைப்பாய்ச்சலில் விழுந்து விழுந்தெழு.

**scene**, *n.* நாடகக் காட்சிப்பிரிவு, அங்கத்தின் உட்பிரிவு; வெளியிடக் காட்சி; சூழ்புலக்காட்சிக்கூறு; காட்சி ஓவியம்; காட்சித்திரை; திரைக்காட்சி; காட்சிக்குரிய நிலைக்களன்; நிகழ்விடம்; நிகழ்ச்சிக்குரிய இட அமைவு; கதைக்குரிய பின்னணிக்களம்; நாடகத்துக்குரிய நிலைக்களம்; நாடகக் காட்சிக்குரிய அரங்கம்; (தொ.) behind the scenes, திரைக்குப் பின்னால்; திரை மறைவில்; பொதுமக்கள் அறியாவண்ணம்; change of scene, காட்சி மாற்றம்; பயணத்தில் ஏற்படும் சூழ்நிலைமாற்றம்; don't make a scene, கல்லுணிவேடம் போடாதே; set scenes, காட்சியிணைப்பு.

**scen'ery**, *n.* இயற்கைக்காட்சி; சூழ்புலக்காட்சித் தொகுதி; திரைக்காட்சித் தொகுதி; காட்சித்திரைத் தொகுதி, நாடக மேடைக்காட்சித் துணைக்கருவித் தொகுதி.

**scen'ic**, *a.* திரைக்காட்சிக்குரிய; திரைக்காட்சி போன்ற; நாடகக் காட்சிபோன்ற; பட வகையில் நிகழ்ச்சிகளைக் கண் முன்னே கொண்டுவந்து காட்டுகிற; ஓவியக் காட்சி போன்ற; பகட்டான, கண்காட்சியான; நாடகத்திருப்பங்கள் வாய்ந்த; கருத்தைக் கவர்கிற; செயற்கையாரவாரமான; வேண்டு மென்றே மேற்கொண்டு காட்டப்பட்ட; (தொ.) scenic railway, காட்சி ஊர்தித்தொடர், பொருட்காட்சிவேடிக்கை இருப்புப்பாதை.

**scen'ically**, *adv.* காட்சிநல முறையில்; திரைக்காட்சி முறையில்.

**scenog'rapher**, *n.* நேர்க்காட்சி ஓவியர்; திரையோவியர்.

**scenograph'ic**, *a.* நேர்க்காட்சி ஓவியஞ் சார்ந்த; நேர்க் காட்சி அளவை வரைந்து காட்டுகிற.

**scenog'raphy**, *n.* நேர்க்காட்சி ஓவியம்; திரை ஓவியம்.

**scent**, *n.* மணம்; நறுமணம், வாசனை; வேட்டைநாய் வகையில் மோப்பம்; கூர்ந்துணரும் திறம்; *v.* முகர்ந்து பார்; முகர்ந்தறி; மோப்பம் பிடி; மோப்பம் பிடித்துக் கண்டுபிடி; இருப்பதாக ஐயுறு; நறுமணமூட்டு, வாசனையேற்று; (தொ.) cold scent, இலேசான மோப்பம்; false scent, வழிவிலகிய மோப்பம்; hot scent, வன்மையான மோப்பம்; on the scent, உளவறியும் வாய்ப்பான நிலையில்; put off the scent, போலி மோப்பத்தால் ஏய்; பொய்யான தோற்றங்காட்டி ஏமாற்று; scent out, மோப்பம்பிடித்துக் கண்டுபிடி; தேடிக் கண்டுபிடி.

**scent'-bag**, *n.* விலங்குடலின் நாறுபை; நரி-வேட்டைநாய் களின் மோப்பப் பயிற்சிக்கான பெருஞ்சீரகம் அடங்கிய செயற்கை மோப்பப் பை.

**scent'ed**, *a.* நறுமணம் ஊட்டப்பட்ட; நறுமணப்பொருள் நிரப்பப்பட்ட; (தொ.) scented caper, மணமுடைய தேயிலை வகை; scented fern, கிச்சிலியின் மணமுடைய சூரல் வகை.

**scent'-gland**, *n.* விலங்குகளின் நறுமணச்சுரப்பி.

**scep'sis**, *n.* மெய்ந்நூல்வகை ஐயம்.

**scep'tic**, *n.* முற்கால ஐயுறவுவாதி, பிரோ (Pyrrho of Ellis, கி. மு. 300) என்னும் அறிஞரின் அறிவு ஐயுறவுவாதக் கோட்பாட்டைப் பின்பற்றியவர்; தற்கால ஐயுறவுவாதி, பிரோவைப் பின்பற்றும் தற்கால அறிவு ஐயுறவுக் கோட்பாட்டாளர்; கிறித்தவசமய உண்மைகளில் ஐயுறவு கொண்டவர்; சமய ஐயுறவாளர்; புறச்சமயவாதி; நாத்திகர்; ஐயுறவு மனப்பான்மையுடையவர்; தனிக்கொள்கை வகையில் மெய்ம்மையினை ஐயுறுபவர்; தனிச்செய்தி வகையில் ஐயுறுபவர்; நல நம்பிக்கையற்றவர், நல வெறுப்புக் கோட்பாட்டாளர்.

**scep'tical**, *a.* ஐயுறவு மனப்பான்மையுடைய; முழுதும் நம்பி விட மறுக்கிற; ஆராயாது ஏற்க விரும்பாத; கேள்வி விசாரணை மனப்பான்மை கொண்ட; ஐயுறவுவாதியான; பிரோவின் ஐயுறவுவாதம் மேற்கொண்ட; ஐயுறவுவாதஞ் சார்ந்த; அறிவின் உறுதிப்பாட்டை மறுக்கிற; ஐயுறவு வாதத்தை ஆதரிக்கிற; ஐயுறவுவாதிகளின் கருத்துக்களால் தூண்டப்பட்ட.

**scep'ticism**, *n.* ஐயுறவுவாதம்; அறிவு ஐயுறவுக்கோட்பாடு; அறிவில் உறுதிப்பாடின்மை; முடிந்த கருத்து முடிவின்மை; தற்கருத்தற்ற தன்மை; இறைமை உறுதி மறுப்புக்கோட்பாடு, இறை ஐயுறவுக்கோட்பாடு; ஓயா ஐயுறவு; கிறித்தவ உண்மைகளில் ஐயுறவுடைமை; ஐயுறவு மனப்பான்மை.

**scep'tre**, *n.* செங்கோல்; அரசாணை.

**scep'tred**, *a.* செங்கோல் ஏந்துகிற; அரசனுக்குரிய.

*scha'denfreude*, (செர்.) *n.* பிறர் கேட்டில் மகிழ்வு.

**scha'ppe**, *n.* கழி பட்டிழை, கழியிழைப் பட்டு.

**sched'ule**, *n.* அட்டவணை; பொருட்பெயர்ப் பட்டியல்; சட்ட இணைப்பு; கால அட்டவணை; *v.* அட்டவணையாக உருவாக்கு; பட்டியலிற் குறி; பட்டியலிற் சேர்; (தொ.) on schedule, கால அட்டவணையிற் குறித்த.

**sched'uled**, *a.* குறிப்பிட்ட அட்டவணையிற் சேர்க்கப்பட்ட.

**scheik**, *n.*=sheikh.

**schem'a**, *n.* பொழிப்பு, சுருக்கம்; உருவரைப்படிவம்; இனப் பொதுவுருப்படிவம்; உருவரைப்படம்; திட்டம்; புனைவுருப் படிவம்; (அள.) மும்மடி அளவைமுறை; (இலக்.) சொல்லணி; *pl.* schem'ata.

**scheme**, *n.* திட்டம்; வகைதுறை ஏற்பாடு; இடநிலை விளக்க வரைப்படம்; வகை புணர்ப்புமுறைப் பட்டியல்; வகைமுறைப் பட்டி; முறைவகுப்பு, கால விவரப்பட்டி; கால அட்டவணை; செயற்படுத்துவதற்கான திட்டம்; உருவரைச் சட்டம்; பாடத்திட்டம்; செயல்வரைச்சட்டம்; சூழ்ச்சிமுறை; *v.* சூழ்ச்சி செய், மறைவாகத் திட்டம் வகு; வகைதுறைத் திட்டஞ் செய்.

**schem'er**, *n.* திட்டம் வகுப்பவர்; சூழ்ச்சியாளர், சதி செய்பவர்.

**schem'ing**, *a.* சதிசெய்கிற, மறை சூழ்ச்சியில் ஈடுபடுகிற; ஏற்பாடு வகுத்தமைக்கிற, வழிவகை செய்கிற.

*scherzan'do*, (இத்.) *adv.* (இசை.) விளையாட்டு முறையாக.

*scher'zo*, (இத்.) *n.* எழுச்சிமிக்க நடனத்தில் விரையியக்க அசைவு.

**schill'ing**, *n.* ஆஸ்திரேலிய நாணய வகை.

**schipp'erke**, *n.* வாலில்லாக் கருநாய், பெல்ஜிய நாய்வகை.

**schi'sm**, *n.* திருச்சபை உட்பிளவு; திருச்சபை உட்பிரிவினைக்குழு; கருத்து மாறுபாட்டு உட்குழு; உட்பிரிவினை தூண்டுங் குற்றம்; உட்பிளவு வளர்க்குங் குற்றம்.

**schismat'ic**, *n.* திருச்சபை உள்வேறுபாட்டுக் கொள்கையை உடையவர்; திருச்சபை உட்பிரிவினைக்குழுவின் வேறுபாட்டினை ஆதரிப்பவர்; திருச்சபை உட்பிரிவினைக்குழு உறுப்பினர்; திருச்சபையிலிருந்து பிரிந்துசென்ற குழுவினர்; சமுதாய உட்பிளவு ஆதரவாளர்; *a.* திருச்சபை உட்பிரிவினையை ஆதரிக்கிற; சமுதாயப் பிளவுக்குற்றமுடைய.

**schist**, *n.* கொடுவரிப் பாறை, பல்வகை கனிப்பொருட் படுகைகள் கொண்டு ஒழுங்கற்ற மெல்லிய தகடுகளாக உடையும் இலைபோன்ற அமைப்புடைய பாறைவகை.

**schizan'thus**, *n.* வண்ணமலர் ஆட்டைச்செடி வகை.

**schizomycete'**, *n.* நுண்மப் பிளப்பின உயிரி.

**schizophren'ia**, *n.* முரண் மூளைநோய், எண்ணம்-உணர்வு-செயல் முதலியவற்றில் தொடர்பற்ற மூளைக்கோளாறு வகை.

**schnapps, schnaps**, *n.* வெறிய வகை.

**schnau'zer**, *n.* இழைமயிர் உடைய செர்மன் வீட்டுவளர்ப்பு நாய்வகை.

**Schneid'er Troph'y**, *n.* படகடி விமானத்துக்கான (1913-இல் நிறுவப்பட்ட) அனைத்துலக விருதுப்பரிசு.

*schno'rrer*, *n.* யூத இரவலர்.

**schol'ar**, *n.* மாணவர்; புலவர்; கற்றறிவாளர்; சீடர், பல்கலைக்கழக ஆதரவுப் பயிற்சியாளர்; பெருமக்கள் பள்ளி ஆதரவுப்பயிற்சியாளர்.

**schol'ar-like**, *a.* புலவர்போன்ற.

**schol'arliness**, *n.* ஆழ்புலமை.

**schol'arly**, *a.* புலமை சான்ற; இலக்கியமேதைக்கு இயல்பான.

**schol'arship**, *n.* புலமை; உதவிச்சம்பளம்.

**scholas'tic**, *n.* இடைநிலைக்கால ஐரோப்பியப் பல்கலைக் கழகக் கணக்காயர்; இடைநிலைக்கால இறைமை வாத பண்டிதர்; தற்கால இறைமை வாதி; இயேசுகழகத்தில் பயிற்சி முடிந்து குருபதவி பெறு நிலையினர்; *a.* பல்கலைக் கழகஞ் சார்ந்த; பள்ளிக்கல்விக்குரிய; பள்ளிப்பயிற்சித் தொடர்பான; பள்ளி ஆசிரியருக்குரிய; கல்லூரிப் பயிற்சித் தலைவருக்குரிய; கல்வித்துறை சார்ந்த; கலைமுறையான; அறிவாராய்ச்சிமுறை சார்ந்த; நடைமுறை மரபுச்சார்பான; புலமைச்செருக்கு வாய்ந்த; இறைமை வாத பண்டிதரியல்புள்ள; இறைமை வாத பண்டிதருக்குரிய; மயிரிழைவாதம் புரிகிற; (தொ.) scholastic agent, ஆசிரியர்களுக்கு வேலை தேடித் தருபவர்; scholastic theology, வரையறை விளக்கங்களிலும் ஆதாரங்களிலும் கருத்துச் செலுத்தும் இறையியல் வாதம்.

**scholas'ticism**, *n.* சமயநுணுக்க முறை; மெய்ந்நூற் கருத்துத்தொகுதி.

**schol'iast**, *n.* உரையாசிரியர்; பண்டைய இலக்கண ஆசிரியர்.

**schol'ium**, *n.* ஓரக்குறிப்பு; விளக்கவுரை; கிரேக்க ரோமத் தொல் பேரிலக்கிய ஏட்டுப்பகுதிகளிற் பண்டை இலக்கண ஆசிரியரது விளக்கக்குறிப்பு; *pl.* schol'ia.

**school**[1], *n.* பள்ளி, கல்விச்சாலை; கலைக்கூடம்; தொழிற் பயிற்சிக்கூடம்; பள்ளிக்கட்டிடம்; பள்ளிக்கூட அறை; பள்ளிக்கல்வி; பள்ளிக்கல்விப்பருவம்; பள்ளிமாணவர் தொகுதி; இடைநிலைக்காலக் கலைவிரிவுரைக்கூடம்; பல்கலைக் கழகத் தனித் தேர்வுமுறைப் பயிற்சிப் பிரிவு; பல்கலைக்கழகத் தேர்வுக்கூடம்; சீடர் குழாம்; சீட பரம்பரை; ஆசிரிய மாணவக் கூட்டுக்குழு; தனிமுறைக் குழு; தனிமுறைக் கொள்கைக்குழாம்; அறிவர்-கலைஞர் முதலியவர்களைப் பின்பற்றுபவர்கள் தொகுதி; தனிமுறை மரபுக்குழு; தனி நடைமுறைப்பாணி பின்பற்றுபவர்கள் குழு; *v.* பள்ளிக்கு அனுப்பு; கல்வி அளி; பயிற்சி அளி; ஒழுங்குபடுத்து; கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவா; தனிமுறையில் பழக்கு; பயில்வித்துப் பழக்கப்படுத்து; பின்பற்றத் தூண்டுதல் அளி; (தொ.) continuation school, தொடக்கக்கல்வித் தொடர்புப் பள்ளி, தொடக்கப்பள்ளிப் படிப்போடு வேலையிற் சேர்ந்தவர்கள் ஓய்வுநேரத்தில் தொடர்ந்து படிக்க வசதியுள்ள பள்ளி; go to school, படி; பாடங்களைக் கவனி; கல்வி கற்கத் தொடங்கு; high school, உயர்நிலைப் பள்ளி; keep a school, தனிமுறைப்பள்ளி நடத்து; mixed school, இருபாலார் பள்ளி; normal school, ஆசிரியர் பயிற்சிமுறைப் பள்ளி; old school tie, ஒரே பள்ளியைச் சேர்ந்த பழைய உறுப்பினர்கள் அணியும் கழுத்துக்குட்டை; உணர்ச்சி அல்லது அளவு மீறிய வகுப்புப் பற்றுறுதி; primary school, தொடக்கப்பள்ளி; private school, தனியார் பள்ளி; public school, பெருமக்கள் பள்ளி; school divine, இறைமை வாதப் பண்டிதர்; school divinity, இறைமை வாதப் பண்டிதத்துறை; school doctor, இடைநிலைக்காலப் பல்கலைக்கழகக் கணக்காயர்; இறைமை வாதப் பண்டிதர்; பள்ளி மாணவர்களைப் பரிசோதிக்கும் மருத்துவர்; school house, பெருமக்கள் பள்ளியில் மையவிடுதி மனை; பெருமக்கள் பள்ளியில் தலைமையாசிரியர் இல்லம்; secondary school, இடைநிலைப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி; technical school, தொழிற்பயிற்சிப்பள்ளி; Tubingen school, பகுத்தறிவார்ந்த இறைமையியல் ஆய்வுத் துறை.

**school**[2], *n.* மீன்திரள், மீன் கூட்டம்; *v.* மீன்வகையில் ஒருங்குதிரள், கூட்டமாகச் சேர்.

**school'able**, *a.* கட்டாயப்பள்ளிப் படிப்பதற்குரிய வயதுடைய; பள்ளியில் படிப்பிக்கத்தக்க; பயிற்றுவிக்கத்தக்க.

**school'-board**, *n.* பள்ளி மேற்பார்வைக்குழு.

**school'-days**, *n.* பள்ளி நாட்கள்; பள்ளியிற் கழித்த காலம்.

**school'fellow**, *n.* பள்ளித்தோழர்; பழைய பள்ளித்தோழர்.

**school'fish**, *n.* கூட்டமாகத் திரியும் மீன்வகை.

**school'house**, *n.* பள்ளிக் கட்டிடம்.

**school'man**, *n.* இடைநிலைக்கால ஐரோப்பிய பல்கலைக்கழகக் கணக்காயர்; இறைமைவாத பண்டிதர்.

**school'master**, *n.* பள்ளித் தலைமையாசிரியர்; பள்ளி ஆசிரியர்.

**school'mate**, *n.* பள்ளித் தோழர்.

**school'miss**, *n.* அனுபவமற்ற இளநங்கை.

**school'mistress**, *n.* பள்ளித் தலைமையாசிரியை; பள்ளி ஆசிரியை.

**school'room**, *n.* பள்ளிக்கூட அறை; தனி வீடுகளிற் படிப்பதற்கான அறை.

**schools**, *n. pl.* பல்கலைக்கழகத் தனிமுறைத் தேர்வுகள்; (தொ.) in for his schools, பல்கலைக்கழகத் தேர்வு எழுதப் போகும் நிலையில், பல்கலைக்கழகத் தேர்விற்குரிய பயிற்சியில் சேர்ந்து; in the schools, பல்கலைக்கழகத் தேர்வுகளை நடத்துபவராய்; பல்கலைக்கழகத் தேர்வுகளில் கலந்துகொள்பவராய்; the schools, இடைநிலைக்காலத்திய பல்கலைக்கழகங்களின் பேராசிரியர் போதனைப் பயிற்சிகள்-வாதங்கள்.

**school'-ship**, *n.* பள்ளிப்பயிற்சி நிலை.

**school'-term**, *n.* பள்ளி வழக்குச்சொல்; பள்ளியாட்டைப் பிரிவு.

**school'tide**, *n.* பள்ளி நாட்கள், பள்ளிப்பருவம்.

**school'-time**, *n.* பள்ளித் தொடக்க நேரம்; பள்ளி திறந்திருக்கும் நேரம்; பள்ளிப்பருவம்.

**schoon'er**, *n.* பல பாய்களுடைய மரக்கலம்; உயரமான இன்தேறல் கண்ணாடிக்குப்பி; சாராய அளவைக் கலம்.

**schorl**, *n.* கருமணி வகை, மணிக்கல்லாகப் பயன்படும் மின்னாற்றலுள்ள கருநிறக் கனிப்பொருள்.

**schottische'**, *n.* பொஹிமிய (Bohemian) மென்னடன இசை.

**sci'agram**, *n.* ஊடுகதிர் நிழற்படம்.

**scia'graph**, *n.* ஊடுகதிர் நிழற்படம்; (க-க.) உட்புறம் தெரியும்படி வரையப்பட்ட செங்குத்துவெட்டு வரைப்படம்; *v.* ஊடுகதிர் நிழற்படம் எடு.

**sciag'raphy**, *n.* நிழற்கோட்டக்கலை, ஒளி நிழற்சாயலாக வரையுங் கலை; ஊடுகதிர் நிழற்படக்கலை; (க-க.) உட்புறம் தெளிவாகக்காட்டும் நேர்க்குத்து வெட்டு வரைப்படம் வரைதல்; (வான்.) நிழல்கொண்டு நேரமறிதல்.

**sciam'achy**, *n.* நிழலொடு சண்டை; கற்பனைச்சண்டை.

**sciat'ic**, *a.* இடுப்புச் சார்ந்த; இடுப்பு நரம்புக்குரிய; இடுப்பு நரம்பிணைப் பாதிக்கிற; இடுப்புச் சந்து வாதத்தால் அவதிப்படுகிற; இடுப்புக் கீல்வாயு ஏற்படத்தக்க.

**sciat'ica**, *n.* இடுப்புச் சந்துவாதம்.

**sci'ence**, *n.* அறிவியல், விஞ்ஞானம், நுணங்கியல்; விஞ்ஞான ஆராய்ச்சி முறைமைக் கூறுகளின் தொகுதி; இயல்நூல், இயற்கைப் பொருள்களை ஆராயும் நூற்றுறைகளின் தொகுதி; அறிவு; (தொ.) exact science, அளவறிவுக்குரிய இயல்நூல்; moral science, ஒழுக்க ஆய்வுத்துறை; natural science, இயல்நூல், இயற்கைப் பொருளாய்வுத்துறை; புறநிலை ஆய்வுநூல்; இயற்கையின் பருப் பொருள்களை ஆயும் நூல்தொகுதி; physical science, புறநிலை ஆய்வுநூல், இயற்கையின் பருப்பொருள்களை ஆயும் நூல்தொகுதி; political science, அரசியல் ஆய்வுத்துறை; pure sceince, எண்பொருள் இயல்நூல், தானே தெளிவாகத் தெரிகிற உண்மைகளினின்று வருவிக்கப்படும் இயல் ஆய்வு; the dismal science, அரசியற் பொருளாதார நூல்.

**scien'ter**, *adv.* (சட்.) மனமாரத் தெரிந்தே, வேண்டுமென்றே.

**scien'tial**, *a.* நுணங்கறிவு சார்ந்த; அறிவியல்பற்றிய.

scientif'ic, *a.* ஆய்வறிவு சார்ந்த; முறைப்படி அமைந்த; இயல் நூலாய்வுகளில் ஈடுபட்டுள்ள; இயல்நூலாய்வறிவின் துணையாதரவுடைய; இயல்நூல் வாய்மைசான்ற; இயல் நூலிற்குரிய திட்பநுட்பத்திறம் வாய்ந்த.

sci'entist, *n.* விஞ்ஞானி, நுணங்கறிவினர்.

scil'icet, *adv.* அஃதாவது, அஃது என்னவென்றால்.

Scillon'ian, *n.* சிலித் தீவுகளுக்கு (Scilly Isles) உரியவர், சிலித்தீவு வாணர்; *a.* சிலித் தீவுகளுக்குரிய.

scim'itar, *n.* முனைப்பகுதி அகன்ற கொடுவாள்.

scintill'a, *n.* தளதளப்பு, தீப்பொறி.

scin'tillant, *a.* தளதளப்பான; பொறி காலுகிற.

scin'tillate, *v.* பொறி காலு; சுடரிடு; மின்னி மினுங்கு, விட்டுவிட்டு ஒளிவீசு.

scintilla'tion, *n.* பொறி சிதறல், சுடரிடல்.

sci'olism, *n.* வெள்ளறிவு, புல்லறிவு.

sci'olist, *n.* வெள்ள றிவினர், புல்லறிவாளர்.

sciolis'tic, *a.* புல்லறிவாண்மையுடைய.

*sciol'to,* (இத்.) *adv.* (இசை.) கட்டுப்பாடின்றி; சுவைக்கேற்ப.

sciom'achy, *n.*=sciamachy.

sci'on, *n.* தளிர்முளை; கான்முளை, வழித் தோன்றல்.

Sci'ot, Sci'ote, *n.* 'சீயோ' (Scio) வில் வாழ்பவர்; *a.* 'சீயோ' வுக்குரிய, 'சீயோ'வில் வாழ்கிற.

*scir'e fa'cias,* (ல.) *n.* தீர்ப்பு வற்புறுத்தும் எழுத்தாணை.

sci'rrhus, *n.* காழ்க்கழலை, மகோதரம்.

sciss'el, *n.* உலோக வெட்டுக்கழிவு, கம்பட்டச் சேதாரம்.

sciss'ile, *a.* வெட்டுதற்குரிய.

sci'ssion, *n.* வெட்டுதல்; பிளப்பு; பிரிவு.

sciss'or, *v.* கத்தரி.

sciss'or-bill, *n.* கடற்பறவை வகை.

scissor'-bird, *n.* கத்தரிக்கோல் போன்ற வாலிறகுடைய பறவை வகை.

scissor'-blade, *n.* கத்தரிக்கோலின் அலகு.

sciss'orer, *n.* கத்தரிப்புத் தொகுப்பாளர்.

sciss'ors, *n. pl.* கத்தரிக்கோல்; (தொ.) buttonhole scissors, உள்வெட்டுக் கத்தரிக்கோல், துணியின் விளிம்புகடந்த வெட்டுத் தொடங்குவதற்கேற்ப அலகுகளுக்கிடையே தொடக்க இடைவெளியுள்ள கத்தரிக்கோல்; lamp scissors, விளக்குத்திரி வெட்டுவதற்கேற்ற வடிவுடைய கத்தரிக்கோல்; scissors and paste, வெட்டியொட்டல் ஏடு.

scissor'-tooth, *n.* வெட்டுப் பல்.

sci'urine, *a.* அணிலினஞ் சார்ந்த; அணில் போன்ற.

scler'a, *n.* வெள்விழிக்கோளத்தின் புறத்தோல்.

sclerench'yma, *n.* பவளக்காழ்; தாவர அகக்காழ்மம், கொட்டைக் காழ்மம், விதைத்தோட்டுக் காழ்மம்.

scleri'asis, *n.* (மரு.) இழைமக் காழ்ப்புக்கோளாறு; காழ்ப்புக் கோளாறு; கடுங்கழலை நோய்.

scleroderm'atous, scleroderm'ous, *a.* உயிரின வகையில் கடு மேல்தோடுடைய.

scler'ogen, *n.* தாவர உள்வரிக் காழ்மம், தாவர அணுமங்களின் உட்பரப்பின்மீது படிவுறும் கெட்டிப் பொருண்மம்.

scler'oid, *a.* (தாவ., வில.) காழ்த்துவிட்ட இழைம அமைப்புடைய.

sclerom'a, *n.* இழைமக் காழ்ப்புக்கோளாறு; *pl.* sclerom'ata.

scleromen'inx, *n.* மூளையுறை, மூலை-தண்டுவடம் ஆகிய வற்றை மூடியுள்ள சவ்வுறை.

scleros'is, *n.* (தாவ.) அணும உள்ளரிக் காழ்ப்பு; *pl.* scleros'es.

scleroskel'eton, *n.* தசையெற்பாக்கம், வான்கோழி முதலிய வற்றிற் காணப்படும் தசைநார்களின் எலும்புபோன்ற காழ்ப்புடைமை.

scleros'teous, *a.* தசையெற்பாக்கம் பெற்ற, தசைநார்க் காழ்ப்புற்று எலும்புபோலாகப்பெற்ற.

sclerot'ic, *n.* கண்ணின் வெண்சவ்வு, வெள்விழிக் கோளத்தின் மேல்தோல்; *a.* இழைமக் காழ்ப்புக் கோளாறு சார்ந்த; இழைமக் காழ்ப்புக் கோளாறின உடைய; கண்ணின் வெண்சவ்வுக்குரிய.

scler'ous, *a.* (நோய்., உயி., தாவ.) எற்பாக்கமான, காழ்த்து எலும்பாக்கப்பட்ட.

scobs, *n.* மரத்தூள், அறுப்புத்தூள்; சிம்பு செத்தை; களிம்பு.

scoff [1], *n.* கேலிச் சொல், ஏளன உரை; நையாண்டி; ஏளனப் பொருள்; *v.* ஏளனஞ்செய், கேலியாகப் பேசு; இழித்துரை.

scoff [2], *n.* உணவு; தீனி; *v.* விழுங்கு.

scold, *n.* நச்சரிப்பவள், விடாக்குறை கூறுபவள்; திட்டுதல்; *v.* திட்டு; குற்றஞ்சாட்டு; சண்டைக்கிழு.

scol'der, *n.* திட்டுபவர், குறை கூறுபவர்.

scol'ding, *n.* திட்டு, வசவு; *a.* திட்டுகிற.

scol'ex, *n.* நாடாப்புழுவின் தலை.

scolios'is, *n.* முதுகெலும்பின் பக்கவாட்டு வளைவு.

scol'lop, *n.*=scallop.

scolopa'ceous, scol'opacine, *a.* உள்ளான் குருவியினஞ் சார்ந்த.

scolopen'drine, *a.* பூரான் இனஞ் சார்ந்த, பூரான் போன்ற; பூரானுடன் தொடர்புடைய.

scolopen'drium, *n.* தூரல் வகை.

scom'ber, *n.* கானங்கெளுத்தி; கானங்கெளுத்தியின மீன் வகை.

scon, *n.*=scone.

sconce [1], *n.* மெழுகுத்திரி; மெழுகுவர்த்தி விளக்கு.

sconce [2], *n.* சிற்றரண்; கடவுத்துறை அரண்; கணவாய்க் காவலரண்; மறைதட்டி; காப்பிடம்; (பே-வ.) அடுப்படியடுத்த நிலை இருக்கைக் கல்.

sconce [3], *n.* ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் உணவுமேசைத் தவறுதலுக்கான குடிதேறல் பறிமுதல்; *v.* ஆக்ஸ்போர்டில் மேசை ஒழுங்குமுறை தவறியதற்குத் தண்டனையாகக் குடிதேறல் பறிமுதல் செய்; துணைவேந்தர் வகையில் பல்கலைக் கழக அலுவலர்மீது ஒழுங்குமுறைத் தவறுதலுக்கான தண்டத்தொகை விதி.

sconce [4], *n.* தலை, உச்சந்தலை.

scone, *n.* முக்குவடை, கோதுமை அல்லது வாற்கோதுமை மாவால் குழி இரும்புத்தட்டில் வேவிக்கப்படும் முக்கோண வடிவான பண்ணியவகை.

scoop, *n.* சட்டுவக்கரண்டி, வார்குவளை, கோப்பைக் கரண்டி; அறுவை குடைவுக்கருவி; பாலேடு அருந்து கரண்டி; கரித்தட்டு, கரிவாரும் கூடை; கொள்ளைலாபம், போட்டிக்கு முந்துபேராதாயம்; பத்திரிகைத் தனி உரிமைச்செய்தி, முந்துசெய்தி; *v.* அள்ளி எடு, வாரி எடு; கோரி எடு, முகந்தெடு; குடைந்தெடு, சூர்ந்தெடு; உட்குடைவாக்கு; விரைகொள்ளை ஆதாயமடி, போட்டியாளருக்கு முந்திக்கொண்டு பெருத்த லாபமடை; பத்திரிகைத்துறையில் செய்திவகையில் பிறருக்கு முந்திக்கொள்.

scoop'er, *n.* குடைந்தெடுப்பவர்; குடைந்தெடுப்பது; மொண்டெடுப்பவர்; மொண்டெடுப்பது; செதுக்குக்கலைஞர் கருவி; நீள் அலகுச் சதுப்புநிலப் பறவை.

scoop'-net, *n.* தூர்வாரி வலை, ஆற்றடியை வாரிப் பெருக்கும் வலை; நீள்பிடித் தூண்டில்வலை.

scoop'-wheel, *n.* சூழ்தொட்டிகளால் நீரிறைக்கும் சக்கரப் பொறி.

scoot, *n.* பாய்ச்சல், விரைசெயல்; *v.* ஓடு; சாடு, பாய்ந்து செல், சரேலென்று செல்.

**scoot'er**, *n.* மோட்டார் சைகிள்; சிறுவர் மிதிவண்டி; நீர்ப் படகு.

**scop'a**, *n.* மயிர்க்கற்றை; தேனீக்கள் வகையில் பூந்துகளைக் கொண்டுசெல்லும் காலடி மயிர்த்தூரிகை; *pl.* scop'ae.

**scop'ate**, *a.* மயிர்க்கற்றை கொண்ட; மயிர்க்கற்றை போன்ற.

**scope**, *n.* நோக்கம், குறியிலக்கு, நோக்கெல்லை, குறியிலக் கெல்லை; காட்சிப்பரப்பு, காட்சிப்பரப்பெல்லை; செயற் பரப்பு, செயற்பரப்பெல்லை; வாய்ப்பெல்லை; தங்குதடையற்ற செயல் உரிமை; கப்பல் சிறிது புடைபெயர்ந்தியங்குதற்கு இடந் தரும் நங்கூரக் கம்பிவடம்.

**scopif'erous**, *a.* மயிர்க்கற்றை தாங்கிய.

**scop'iform**, *a.* மயிர்க்கற்றை வடிவான.

**scop'ula**, *n.* மயிர்க்கற்றை; பூந்துகள் கொண்டுசெல்லும் தேனீயின் காலடி மயிர்த்தூரிகை; சிலந்தியின் ஆம்பி இழை, நூற்கும் சிலந்தியின் காலடி மயிர்த்தூரிகை.

**scop'ulate**, *a.* மயிர்த்தூரிகை போன்ற.

**scop'uliform**, *a.* மயிர்த்தூரிகை வடிவான.

**scorbut'ic**, *n.* சொறி நோயாளி, சொறிகரப்பான் பிடித்தவர்; *a.* பற்றுக்குறையினால்வரும் வயிறுவீக்கம் சொறி கரப்பான் முதலியவற்றுக்கு ஆளான, சொறிகரப்பான் பிடித்த.

**scorch**, *n.* கால்கொப்புளிக்கும் வெயில்; மிதிவண்டி அல்லது உந்துவிசை வகையில் தெறிவேகத்துடன் செலுத்துகை; *v.* கொப்புளிக்க வை; வாட்டு, தீயிலிட்டுக் கருக்கு, கரியாக்கு; சுட்டுப்புண்ணாக்கு; சூட்டினால் வெதுப்பு; வாட்டி வேதனை செய்; வறட்டு, வதங்குவி; விளைபுலங்கள் வகையில் சுட்டுப் பாழாக்கு; போரில் எதிரிக்குப் பயன்படாதழி; மிதிவண்டி அல்லது உந்துவிசை வகையில் தெறிவேகத்தில் இயக்கு; மிதி வண்டி அல்லது உந்துவிசை வகையில் தெறிவேகத்தில் ஏறிச் செல்.

**scorch'er**, *n.* எரியூட்டுபவர்; பொசுக்குபவர்; மிதிவண்டி அல்லது உந்துவிசையில் தலைதெறிக்க விரைபவர்; மிதி வண்டி அல்லது உந்துவிசையைத் தெறிக்க ஓட்டுபவர்; (பே-வ.) மாதிரிப் பொருள்.

**scorch'ing**, *a.* வாட்டுகிற; மிகுவெப்பமான; சுடுகிற; அழிவு செய்கிற.

**scorch'ingly**, *adv.* பொசுக்குகிற முறையில்.

**score**, *n.* வடு, வெட்டுக்குறி; கீற்றுக்குறி; அடிப்புக்கோடு, அழிப்பு வரை; அடித்த தழும்பு, இடவரைக்குறி; பந்தயங் களில் தொடங்கிடக்குறி; நிற்கும் இடக்குறி; கணிப்புருக் குறி; கணிப்புக்கீற்றுக்குறி; கடன் பொறுப்பு; கடன் பொறுப்பாண்மை; கணிப்புத் தலைப்பு; கணிப்பு அடிப்படை; ஆட்டக்கணிப்பு எண்; ஆட்டக் கணிப்பெண் பதிவு; ஆட்டக் கணிப்புப் பதிவேடு; மரப்பந்தாட்டக் கணிப்பெண் குறிப்பு; கெலிப்பு எண்; கெலிப்பு முடிவெண்; மிகைபாட்டு எண்; வென்று மேம்பாடு அளிக்கும் செய்தி; நற்பேறுடைய செய்தி; இருபதின் தொகுதி; 20 அல்லது 21 பொன்கொண்ட தொகை; நிலக்கரிவகையில் 20 முதல் 26 வரை மிடா அளவு; (இசை.) வரைவகுப்புக் குறியீடு; (இசை.) வரைக் குறியீட்டு வகுப்பிசை; *v.* வடுச்செய், வெட்டுக்குறியிடு; வரைகிழி; வரைகீறி அடித்துவிடு, கரி அல்லது சுண்ணங்கொண்டு கீற்றுக்குறியிடு; உள்வரியிடு; சால்வரியிடு; அடித்துத் துவை; மரப்பந்தாட்டத்தில் கெலிப்புப் பதிவி; கெலிப்பெண் பெறு; பதிவு செய்; வெற்றி மதிப்புப் பெறு, வெற்றி எய்தப்பெறு; செய்துமுடி; விஞ்சு; சாதகநிலை பெறு; நற்பேறடை; கணித்தெண்ணு; பற்றெழுது; குறைகளை மனத்தில் குறித்துவை; வாதத்தில் வீழ்த்து; (இசை.) குறியீடு வகுத்தமை; கருவிக்கிசைய இசைக்குறியீடு எடுத் தெழுது; கருவிக்கிசைய இசைக்குறியீடு மாற்று; (தொ.) compressed score, close score, short score, (இசை.) பல வகைக் குரல்களின் செறிசுருக்க இசைக்குறியீட்டு வரி; full score, பலவகைக் குரல்களுக்கும் உரிய தனித்தனி இசைக் குறியீட்டு வரித்தொகுதி: go off at score, ஒருபொருள்பற்றித் திடீரென்று ஆரவாரமாய்ப் பேசப் புறப்பட்டுவிடு; தனிப் பிடித்தமான பொருள்பற்றி ஆரவாரமாய்ப் பேசப் புறப்பட்டு விடு; pay off old scores, பழைய வர்மங்களைத் தீர்த்துக் கொள்; run up a score, கடனை வரைவிடு; score off, எதிர்த்து வெற்றி எய்து; விஞ்சு; வாதத்தில் படுதோல்வி யுறச் செய்; வாதத்தில் அவமதியுறுவி; score out, கோடிட்டு அடித்துவிடு; score under, கீழ்க்கோடிடு, அடியிற் கோடிடு.

**score'-book**, *n.* கெலிப்புப்புள்ளிகள் பதிவேடு.

**score'-card**, *n.* கெலிப்புப்புள்ளிப் பதிவு அட்டை.

**score'-sheet**, *n.* கெலிப்புப்புள்ளித் தாள்.

**scor'ia**, *n.* ஆவிப்புழைகளையுடைய எரிமலைக்குழம்புப்பொருள்; உட்கண்ணறைகளையுடைய எரிமலைக்குழம்புப் பாறைத் துண்டு; உலோக உருக்குக்களக் கசடு.

**scor'ification**, *n.* உலோகமாசாக்குதல்; ஈயம் வெங்காரம் சேர்த்து உலோகக் கனிப்பொருளின் மாற்றுத்தேர்வு.

**scor'ifier**, *n.* ஈயம் வெங்காரம் கலந்து உலோக மாற்றுத் தேர்பவர்.

**scor'ify**, *v.* உலோக மாசாக்கு; ஈயம் அல்லது வெங்கா ரத்தை உயர் உலோகத்தாதுவின் கூற்றோடு கலந்து மாற்றுத் தேர்வு செய்.

**scorn**, *n.* இகழ்ச்சி; ஏளனம்; வெறுப்பு; அவமதிப்பு; இழிவு; ஏளனப் பொருள்; *v.* ஏளனஞ் செய்; இகழ்ச்சிக்குரியதாகக் கருது; வெறுத்தொதுக்கு; தகாததெனத் தள்ளு.

**scorn'er**, *n.* இகழ்பவர்; வெறுத்தொதுக்குபவர்; தகாதென மறுப்பவர்.

**scorn'ful**, *a.* ஏளனஞ் செய்கிற; வெறுத்தொதுக்குகிற; இகழ்ச்சியான; இறுமாப்புடைய.

**scorn'fulness**, *n.* ஏளன வெறுப்புடைமை.

**Scorp'io**, *n.* விருச்சிக ராசி, தேளுரு வான்மனை.

**scorp'ioid**, *n.* (தாவ.) தேளின் கொடுக்குப்போன்ற மலர்க் கொத்துக்கூம்பு; *a.* (தாவ.) செடி வகையில் தேளின் கொடுக்குப்போல் மேல்நோக்கிச் சுருண்ட மலர்க்கூம்புடைய.

**scorp'ion**[1], *n.* தேள்; உலோகமுட்கள் உட்பதித்த சாட்டை; பண்டைக் கொட்டைக் கவணெறி பொறி வகை.

**Scorp'ion**[2], *n.*=Scorpio.

**scorp'ion-broom**, *n.* மஞ்சள்நிற மலரையுடைய புதர்ச்செடி வகை.

**scorp'ion-fish**, *n.* தலையிலும் செதில்களிலும் முள்ளுடை மீன் வகை.

**scorp'ion-plant**, *n.* பால்வெண்ணிற மலர்த் தாவர வகை.

**scorp'ion-shell**, *n.* நீள்முள்ளுடைச் சிப்பிவகை.

**scorzoner'a**, *n.* கறிக்கிழங்கு வகை.

**scot**[1], *n.* (வர.) முற்கால இறைவரி; மரபு வரி; கணிப்பு வீதப் பங்கு; (தொ.) scot and lot, வட்டத்து வரிச்சுமைகளிற் பங்கு.

**Scot**[2], *n.* அயர்லாந்திலிருந்து கி. பி. 6-ஆம் நூற்றாண்டில் ஸ்காத்லாந்திற்குக் குடிபெயர்ந்துசென்ற இனக் குழுவினர்; ஸ்காத்லாந்து நாட்டவர்.

**Scotch**[1], *n.* ஸ்காத்லாந்து தாழ்நிலங்களிற் பேசப்படும் ஆங்கில வட்டார வழக்குமொழி; *a.* ஸ்காத்லாந்து சார்ந்த; ஸ்காத்லாந்துநாட்டு மக்களுக்குரிய; ஆங்கிலமொழியின் ஸ்காத்லாந்து தாழ்நில வட்டார மொழி சார்ந்த; (தொ.) Scotch broth, காய்கறியோடு கலந்து சமைத்த வால்கோது மைக் கஞ்சியுணவு; Scotch collops, புலால் வெங்காயக் கதம்பம்; Scotch pebble, சிவப்பு மஞ்சள்வண்ண மணிக்கல் வகை; Scotch terrier, வன்மயிர்க் குறுங்கால் நாய் வகை; Scotch whisky, வால்கோதுமை மாவிலிருந்து வடிக்கப்பெற்ற ஸ்காத்லாந்து நாட்டு மதுவகை; Scotch woodcock, மீன் வறுவலுடன்கூடிய முட்டை.

**scotch**[2], *n.* நொண்டி ஆட்டக்கோடு; *v.* வெட்டிடு; வெட்டுப் புண்படுத்து; சிறிது பயனற்றதாக்கு

**scotch**[3], *n.* சக்கர அண்டைக்கட்டை; சக்கரம் உருண்டோ டாமல் தடுக்கும் ஆப்பு; *v.* சக்கரத்துக்கு அண்டைக்கட்டை கொடு, உருளாது தடையாப்புச் செய்.

**Scotch'-and-English,** *n.* கைதிகள் அடித்தளம்.

**scot'er,** *n.* பெருங் கடல்வாத்து.

**scot'-free',** *a.* அறவே கட்டணமில்லாத; தண்டனையில்லாத; கேட்டுக்கு இடமற்ற.

**sco'tia,** *n.* தூண்டிக்குழிவு.

**Scot'ism,** *n.* (வர.) டன்ஸ் ஸ்காட்டஸ் (மறைவு 1308) என்பாரின் மறை தத்துவக் கொள்கைகள்.

**Scot'ist,** *n.* டன்ஸ் ஸ்காட்டஸ் என்பாரின் மறை தத்துவக் கொள்கையாளர்.

**Scot'land Yard,** *n.* லண்டன் காவல்துறை நிலயம்; பிரிட்டன் தலைநகரப் போலிஸ்; இங்கிலாந்தின் குற்ற வேவுத்துறைத் தலைமையிடம்.

**scot'odin'ia,** *n.* தலைச்சுற்று, மயக்கம்.

**scot'ograph,** *n.* இருளில் எழுத உதவும் பொறி.

**scotom'a,** *n.* (மரு.) திரைநோய், பார்வைப் பரப்பெல்லையில் அரைகுறை மறைப்புக்கோளாறு.

**Scots,** *n., a.*=Scotch [1].

**Scots'man,** *n.* ஸ்காத்லாந்து நாட்டினர்; *pl.* Scots'men; (தொ.) flying Scotsman, லண்டன்--எடின்பரோ கடும் விரைவு ரயில்.

**Scots'woman,** *n.* ஸ்காத்லாந்துநாட்டுப் பெண்; *pl.* Scots'-women.

**Scott'ice,** (ல.) *adv.* ஸ்காத்லாந்து மொழியில், ஆங்கிலத்தின் ஸ்காத்லாந்து தாழ்நில வட்டாரவழக்கு மொழியில்.

**Scott'icism,** *n.* ஸ்காத்லாந்துமொழி வழக்காறு, ஆங்கில மொழியில் ஸ்காத்லாந்து தாழ்நில வட்டார வழக்குமொழிச் சொற்களோ சொற்றொடரோ கலக்கும் பண்பு.

**Scott'icize,** *v.* ஸ்காத்லாந்து நடைமுறைகளில் தோய்வி; ஸ்காத்லாந்துமக்கள் மாதிரியைப் பின்பற்று; ஸ்காத்லாந்து மக்கள் பழக்கவழக்கங்களைப் பார்த்துப் பின்பற்று; ஸ்காத்லாந்துமக்களின் மொழிமரபுகளைப் பின்பற்று.

**Scott'ish,** *a.*=Scotch [1].

**scoun'drel,** *n.* கயவன், போக்கிரி, ஒழுக்கமிலி.

**scour [1],** *n.* கால்வாய் நீரோட்ட வேகத்தின் துப்புரவுத்திறம்; கால்நடைகள் வகையில் வயிற்றுப்போக்கு; ஆடை தூய்மை செய்ய உதவும் பொருள்; *v.* தேய்த்துத் தூய்மைப்படுத்து; உரசிப் பளிபளப்பாக்கு; கால்வாய் துப்புரவு செய்; துறைமுகம் தூர்வுசெய்; குழாய் தூய்மைப்படுத்து; குடலை நன்றாகக் கழுவு.

**scour [2],** *v.* நாடி அலைந்துதிரி, சுற்றித்திரி; தேடியலை; துருவித் தேடு.

**scour'er,** *n.* தேய்த்துத் துப்புரவாக்குபவர்; தேய்த்துத் துப்புரவாக்கும் கருவி; தேய்த்துத் துப்புரவு செய்வதற்குரிய மணை; பேதிமருந்து.

**scourge,** *n.* சவுக்கு, சாட்டை; கசை; தெய்வதண்டனைக்குரிய கருவி; தெய்வதண்டனைக்குரிய கருவியாய் அமைபவர்; தெய்வதண்டனையாய்க் கருதப்படுங் கொள்ளைநோய்; *v.* சாட்டையாலடி; தண்டி; அடி; துன்புறுத்து; கொடுமைக்காளாக்கு; அலைக்கழிவுறுத்து, தொல்லைப்படுத்து; (தொ.) the white scourge, எலும்புருக்கி நோய்.

**scou'ring-rush,** *n.* தேய்ப்புத் துரிசாகப் பயன்படும் புதர்.

**scout [1],** *n.* சாரணர்; ஒற்றர், உளவாள்; வேவுகாணி, படைத்துறையில் எதிரியிடமிருந்து புலங்காண முயல்பவர்; செய்தி சேகரிப்பவர்; சுற்றுக்காவலர், திரிகாவலர்; வேவுக்கப்பல்; விரைதிரிவு விமானம்; ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக வழக்கில் கல்லூரிப் பணியாள்; மரப்பந்தாட்டத்தில் களக்காவலர்; கடற்பறவை வகை; *v.* சாரணர் பணிசெய்; (தொ.) boy scout, சாரணச்சிறுவன்.

**scout [2],** *v.* வெறுத்தொதுக்கு; பரிகசி; அவமதித்து உதறு.

**scout'master,** *n.* சாரணர் தலைவர், குருளையரின் ஆசிரியர்.

**scow,** *n.* தட்டைப் படகு.

**scowl,** *n.* முகச்சுளிப்பு, சுண்டிய முகத்தோற்றம்; சீற்றம், சிடுசிடுத்த பார்வை; *v.* சிடுசிடுப்புக்கொள், சீற்றமுகங் காட்டு, முகஞ்சுளி.

**scowl'ingly,** *adv.* கடுகடுப்புடன்; சீற்றத்தோடு.

**scrab'ble,** *v.* கிறுக்கித்தள்ளு; படபடத்துத் தேடித்தடவு; பரபரப்புடன் கொள்ளக் கைநீட்டித்துழாவு.

**scrag,** *n.* ஒற்றைநாடியானவர், மிக ஒல்லியானவர்; எலும்பு தோலானவர்; ஒட்டி மெலிந்த விலங்கு; வாடலான தாவரம்; தசை குறைந்த எலும்புத்துண்டு; ஆட்டுக்கழுத்திறைச்சி, ஆட்டிறைச்சியின் மோசமான கூறு; *v.* தூக்கிட்டுக்கொல்; கழுத்தை நெரித்து வதை; கழுத்து நெரிப்புத் தண்டனை கொடு; உதைபந்தாட்டத்தில் கழுத்தைப்பிடித்து நிறுத்து.

**scragg'ily,** *adv.* ஒல்லியாக.

**scragg'iness,** *n.* ஒடுசல்லியான தன்மை.

**scragg'y,** *a.* ஒடுசல்லியான, ஒல்லியான; குறுக்கு மறுக்கான.

**scram,** *int.* (பே-வ.) போ வெளியே; அப்பாற் செல்.

**scram'ble,** *n.* தொற்றி ஏறுகை, பற்றிப்பிடித்து முன்னேறுகை; இருஞ்சுகை, பற்றிப் பிடிப்புப்பேரவா; போட்டி; முந்துபோராட்டம்; மோட்டார் வெள்ளோட்ட வகை; *v.* தத்தித் தடவி ஏறு; தட்டித் தடவி முன்னேறு; இருஞ்சு, மீதார்வத்துடன் பற்றிப் பிடித்துக் கைப்பற்ற முனை; நெருக்கியடித்துப் போட்டியிடு, பிடிவலி கூட்டிப் போராடு; உருண்டு புரண்டு எடுக்கமுயல், தட்டித்தடவிப் பொறுக்கு; தட்டித் தடவிப் பொறுக்கும்படி எறி; முட்டை வகையில் வாணலியில் ஊற்றப்பமாக ஊற்றி வேகவை; (தொ.) scramble for pennies, குழந்தைகள் வகையில் தம்மிடையே தூவப்பட்ட காசுகளைப் பொறுக்க முட்டி இடித்துக்கொண்டு செல்.

**scram'bling,** *a.* தாறுமாறான, ஒழுங்கற்ற, குழப்பமான.

**scram'blingly,** *adv.* தாறுமாறாய்.

**scran,** *n.* மளிகைச்சாமான்.

**scrann'el,** *a.* ஒலிவகையில் கம்மிய, தாழ்ந்த, வலுவற்ற.

**scrann'y,** *a.* (பே-வ.) ஒல்லியான.

**scrap [1],** *n.* முறிவு துணுக்கு; ஓட்டை உடைசல்; உலோகச் சிம்பு சீவல்; சில்லறைப்பொருள்; சேடம்; உடைசல் படம்; செய்தித்தாளில் வெட்டி எடுத்த துண்டு; ஒட்டுப்படம்; கோது, சக்கை; *v.* கழிவுகூளத்திற் சேர்; கப்பல் முதலிய வற்றைப் பயனற்றதென ஒதுக்கித்தள்ளு; சரக்குகள் வகையில் வழங்காது ஒழித்துத்தள்ளு.

**scrap [2],** *n.* சண்டை, எதிர்பாராது தற்செயலாய் எழுந்த பூசல்; *v.* எதிர்பாராது தற்செயலாகச் சச்சரவில் இறங்கு.

**scrap'-book,** *n.* வெட்டியொட்டற் புத்தகம்.

**scrap'cake,** *n.* மீன் பிண்ணாக்கு, மீன்சக்கைச் செறிவு.

**scrape,** *n.* பிருண்டல்; உரசித்தேய்ப்பு; கறை தேய்த்தழிப்பு; சாயம் துடைத்தழிப்பு; குடைவு, உள்ளகழ்வு; எழுதுகோல் வகையில் இழுவை; உரசிழுவை, தேய்விழுவை; உராய்வியக்கம்; அடி உராய்வு, வணக்கமுறை வகையில் பின்னோக்கிய காலிழுவை; பிறண்டொலி; தேய்ப்பொலி; உராய்வொலி; உரசிழுவை ஒலி; முயல்வகையில் பறித்த மண் குவியல்; சிரைப்பு; தேய்வுரிவை, மென்தொலி; சிராய்ப்பு; உரசுபுண்; இடர்ப்பாடு; *v.* பிருண்டு; உரசித்தேய்; முனைப் பகற்று, பரப்பின் புடைப்பழி; நிரப்பாக்கு; தேய்த்து வழவழப்பாக்கு; மெருகிடு; பளபளப்பாக்கு; துடைத்து அழி; துடைத்தகற்று; உரசித் தேய்வுருவி; உரசிக் கறைப்படுத்து; உணவுக்கலம் துடைத்துத் துப்புரவாக்கு; உள்ளகழ்; செதுக்கிக்குடை; பரபரவென்று இழுத்துக்கொண்டு செல்; தேய்ப்பொலி உண்டுபண்ணு; உராய்வொலி எழும்படி காலைப் பின்னுக்கு இழு; கால் தேய்ப்பொலியால் குரல் கேளாமல் கீழடக்கு; இழுவை ஒலிசெய்; உராய்வொலி செய்; செதுக்கிச்செல், உராய்ந்து கொண்டு செல்; உராயும்படி செல்; மயிரிழை தப்பிச் செல்; சிறுகச் சிறுகத் திரட்டு; பிசுணித்தனம் பண்ணு; (தொ.) a scrape of the pen, பேனாவின் ஓர் இழுவை, கையெழுத்து, ஒரு சொல்,

ஒன்றிரண்டு சொல்லளவு; scrape acquaintance with, பழக்கப்படுத்திக்கொள்ள முயலு; scrape against the wall, scrape along the wall, சுவரில் உரசிக்கொண்டு சென்று தப்பு; scrape away, உரசித் தேய்வுறுவி; சுரண்டி அகற்று; scrape down, கால் தேய்ப்பொலி மூலம் பேச்சுக் கேட்காதவாறு அடக்கு; scrape one's boots, மிதியடி தூசு துடை; scrape one's chin, சிரை; scrape one's feet, அமைதியற்றுக் காலடியைத் தேய்த்துக்கொள்; காலடி தேய்த்துப் பிறர் பேச்சு ஒலியடக்கு; பண்பற்ற வணக்கமுறையில் காலைப் பின்னுக்கு இழுக்கும்போது தேய்ப்பொலி உண்டாகும்படி நடந்துகொள்; scrape through, மயிரிழை தப்பிச்செல், ஒருபடியாகத் தப்பிப்பிழை; scrape together, scrape up, கசடிக் கசடித் திரட்டு.

**scrap'er**, *n.* பிருண்டுவோர்; நாவிதர்; வில்யாழ் வாணர்; உராய்வது; செருப்படித் தோல்வார் கருவி; தோல் மெருகிடும் இயந்திரம்; பாதை மண்வாரிச் சமனிடும் இயந்திரம்; சுரண்டு கருவி; செதுக்கு கருவி; மண் கொத்திக் கிளறும் பறவை வகை.

**scrap'-heap**, *n.* எருக் குவை; ஓட்டை உடைசல் தொகுதி; (தொ.) scrap-heap policy, பழையன கழிக்கும் பண்பு.

**scrap'ing**, *n.* துருத்துடைப்பு; கறை துடைப்பு; உரசு தேய்ப்பு, மெருகீடு; சமப்படுத்துதல்; உரசொலி; சீவல் துணுக்கு.

**scrap'-iron, scrap'-metal**, *n.* கழிப்பிரும்பு, மறு உருக்கீட்டிற்குப் பயன்படும் இரும்பு.

**scrapp'ily**, *adv.* விட்டுவிட்டு, தொடர்பில்லாமல்.

**scrapp'iness**, *n.* முறிவுடைமை, தொடர்பின்மை.

**scrapp'y**, *a.* தொடர்பற்ற.

**scratch**[1], *n.* கீறல், பிருண்டல்; கீறுதடம்; கீறுகாயம்; கீறொலி; கீறல்கோடு, கீற்று; கீற்றுவரி, அவசர ஆணை வரி; கையொப்ப வரி; ஊருதல் சொரிந்து கொள்ளுகை; சொரிவு; சொரிதடம்; பந்தயத் தொடக்கவரை; தடங்கல் பந்தயத்தில் தடங்கலற்ற போட்டியாளர்; தடங்கல் பந்தயத்தில் தடங்கலற்ற போட்டியாளரின் போட்டித்தொடக்கம்; குத்துச் சண்டையில் போட்டியாளர் இட்டுச் செல்லப்படும் எல்லை குறித்த வரை; அரையளவான பொய்த்தலை; இன்மையளவு; மன உரத்தேர்வு; சிராய்த்துச் செல்லுதல்; *a.* அவசரமாக ஒருங்கு திரட்டப்பட்ட; பல்திற ஈட்டமான; பல்திறப்பட்ட; *v.* சுரண்டு; தடம்படாமற் சொரி; நகங்கொண்டு பிருண்டு; கீறு, முனைபட மேலீடாகக் கிழி; உகிர் நகங்களைப் பயன்படுத்து; கீறல் கோடிழு; கீறல் கோடுபோல எழுது; வேகமாக எழுது; புண்படுத்து; கீற்றடையாளமிடு; சொரிந்து ஊரல் தவிர்; பள்ளம்பறி; மண்ணைக் கிண்டிக் கிளறு; சுரண்டிச்சேர்; எழுத்தைக் கோடிட்டடி; மேற்கோடிட்டடி; பந்தய ஆள்-குதிரைப் பெயர்களைப் பட்டியலிலிருந்து அடி; போட்டியிலிருந்து பின்வாங்கிக் கொள்ளுவி; போட்டியிற் பின்வாங்கு; ஈடுபாட்டிலிருந்து பின்னடை; கரடுமுரடான பரப்பை ஊடறுத்துச் செல்; (தொ.) a scratch of the pen, கையெழுத்து; அவசர ஆணைவரி; come to the scratch, come up to the scratch, toe the scratch, சரியான காலத்தில் வருகையளி; தவறுது வருகையளி; scratch along, எப்படியோ வாழப் பார்; scratch man, தடங்கலற்ற தடங்கல் பந்தயப் போட்டியாளர்; scratch one's head, மனக்குழப்பங் காரணமாகத் தலையைச் சொரிந்துகொள்; scratch the surface of, மேலீடாகக் கீறிச்செல், ஆழ்ந்து உள் செல்லாதிரு.

**Scratch**[2], *n.* பேய்; (தொ.) old Scratch, பொல்லாத பேய்.

**scratch'-cat**, *n.* புறண்டு குழந்தை; பிருண்டு பெண்.

**scratch'-coat**, *n.* முதற் பூச்சு.

**scratch'-race**, *n.* தடையற்ற சமநிலைப் போட்டி.

**scratch'-wig**, *n.* ஒருபுறம் மறைக்கும் பொய்த்தலை.

**scratch'-work**, *n.* சுவர்க்கீறல் ஒப்பனை.

**scratch'y**, *a.* கீறல்போன்ற; சமநிலையற்ற; கீறலாக எழுதுகிற; பிருண்டும் தன்மையுடைய; உராய்வுடைய; உராய்வொலியுடைய; கவனக்குறைவான; நுட்பத்திறனற்ற; ஊருதலுடைய; கப்பலோட்டிகள் வகையில் தாறுமாறுகத் திரட்டப்பட்ட; கப்பலோட்டிகள் வகையில் ஒத்திணைந்து வேலைசெய்யாத; ஒருசீரல்லாத, ஒருதன்மையாகத் தொடராத

**scrawl**, *n.* கிறுக்கல், கிறுக்கல் எழுத்து; மோசமான எழுத்து, அவசர அவசரமாக எழுதிய குறிப்பு; அவசரக் கடிதம்; *v.* கிறுக்கித்தள்ளு; விளங்காத வகையில் எழுது; மோசமான எழுத்துக்களால் நிரப்பு; சிறுக்கல் வரைகளால் நிரப்பு.

**scrawn'y**, *a.* =scranny.

**scray**, *n.* கடற்குருவி வகை.

**scream**, *n.* அலறல், அலறொலி; அலறுங்குரல்; திடீர்க்கூச்சல்; அச்சக் கூக்குரல்; வேதனைக்கூக்குரல்; உரத்த நகைப் பொலி; இருப்பூர்தியின் விசை ஊதல் ஓசை; தடுத்தடக்க முடியாத கேலிக்குரிய செய்தி; எழுத்தாண்மையில் நடை உணர்ச்சிப் பாணிகளில் மட்டுமீறிய வற்புறுத்தல்; *v.* அலறு, அதிர்குரல் எழுப்பு; திடீர்க் கூச்சலிடு; அச்சக் கூக்குரலிடு; வேதனைக் கூக்குரல் எழுப்பு; கிறீச்சிடு; இருப்பூர்திவகையில் விசை ஊதல் ஒலிசெய்; கட்டுக்கடங்கா வகையில் சிரி; அலறுங் குரலில் கூறு; உணர்ச்சிக் கொந்தளிப்புடன் பேசு; உணர்ச்சிகளைத் தூண்டும் முறையில் எழுது; அடக்கமுடியாச் சிரிப்பூட்டு.

**scream'er**, *n.* அலறுவோர்; அலறுவது; கதறுவது; வேடிக்கை நிகழ்ச்சி காட்டுவோர், முள்போன்ற இறகுடைய பறவை வகை; அடங்காச் சிரிப்பூட்டும் நகைத்திறக் கதை; உணர்ச்சிக் கொந்தளிப்பூட்டுந் தலைப்பு; இனத்தின் அழகு மிக்க மேல்மாதிரி.

**scream'ing**, *a.* அலறுகிற; கிறீச்சிடுகிற; (தொ.) screaming farce, நகைப்பொருட் கூத்து.

**scream'ingly**, *adv.* அலறிக்கொண்டு; கதறியபடி; கிறீச்சிட்ட குரலில்.

**scream'y**, *a.* அலறும் இயல்புடைய; அலறும் பழக்கமுடைய; உணர்ச்சிக் கொந்தளிப்புடைய; உணர்ச்சிக் கொந்தளிப்பு ஊட்டுகிற; கட்டுக்கடங்காச் சிரிப்புடைய; அடக்கமுடியாச் சிரிப்பூட்டுகிற; அலறுங் குரலில் கூறப்பட்ட.

**scree**, *n.* மலையடிவாரக் கல்மண் கூளச்சரிவு; மலைப்பக்கச் சறுக்கு கற்கூளம்; சறுக்கு கற்கூளங்களையுடைய மலைப் பக்கச் சரிவு.

**screech**, *n.* கிறிச்சொலி, கூக்குரல்; அச்சக் கூவிளி; வேதனைக் கூக்குரல்; கோபக்கத்தல்; ஊளைக் கூக்குரல்; *v.* கிறிச்சொலி செய்.

**screech'-owl**, *n.* கோட்டான்; தீச்செய்தி கொண்டுவருவோர்.

**screed**, *n.* கந்தை, கிழிவு, சிலும்பல்; ஓரம்; துணுக்கு; நீளுரை; நெடுங்குறைக்கடிதம்; பாவுமேல்வரிப் பலகை; பாவுமேல்வரிப் பட்டி.

**screen**, *n.* தட்டி; இடைத்தடுப்பு; இடையீட்டுத் தடைச்சுவர், இடைமறிப்புப் பலகை; திருக்கோயில் முகப்பு ஒப்பனை மதில்; திருக்கோயில்முற்ற ஊடுசுவர்; மறைப்பு ஏற்பாடு; கட்டிட மறைப்புமுகப்பு; தடைகாப்பு ஏற்பாடு; பார்வை மறைப்பு; மறைப்பு மரச்சாலை; மறைப்புப் புகைத்திரை; படைத்துறை மறைப்பு நடவடிக்கை; வெப்ப இடைகாப்பு; மின்தடை காப்பு; காந்த ஊடுதடை; காற்றுமறிப்புக்காப்பு; மறைப்பு; பாதுகாப்பு; திரை; மறைப்புத்திரை; காட்சிப் படத்திரை; ஒளிப்படத்திரை; தொலைகாட்சித்திரை; நிலக்கரி மணல் முதலியவற்றிற்கான அரிதட்டி; நிழற்பட நுண்பதிவுச் சல்லடைப் பளிக்குத் தகடு; வண்ணநிழற்பட மூலவண்ணச் சல்லடைத் தகடு; அறிவிப்பு விளம்பரத்தட்டி; மரப்பந்தாட்ட இலக்குவரித்தட்டி; *v.* மறை; அரைகுறை மறைப்புச்செய்; இடையிட்டு மறை; தோற்றம் மறை; தடைகாப்புச்செய்; பாதுகாப்பளி; தடுத்துதவு; திரைமீது காட்டு; ஒளிக்காட்சியாகக் காட்டு; படக்காட்சியாகக் காட்டு; படக்காட்சி எடு; திரைப்படம் எடு; அரிதட்டியில் இட்டு அரி; அரித்துத் தேர்வுசெய்; ஆட்கள் வகையில் நுணுகத் தேர்ந்து தெரிந்தெடு; வகைப்படுத்தித் தேர்ந்தெடு; திரைப் படத்துக்குத் தக்கதாயமை; திரைக்காட்சியில் மேம்பட்டு விளங்கு;

(தொ.) a cavalry screen, மறைவரிப் புரவிப்படை, பகை ஒற்றர் தொடர்புகொள்ளாமல் தடுப்பதற்குரிய இடைத் தடுப்புக்காப்பான புரவிப்படைப் பிரிவு; screened coal, பரு நிலக்கரி, தூசி முதலியன கொழித்து நீக்கப்பட்ட நிலக்கரி; the screen, படக்காட்சித்திரை, திரைப்படம், திரைப்படத் துறை

**screen'ings**, *n. pl.* சல்லடைக்கழிப்பு.

**screen'-wiper**, *n.* கண்ணாடி துடைப்பான், மோட்டார் முகப்புக்கண்ணாடித் துடைப்பமைவு.

**screeve**, *v.* சாலை ஓவியம் வரை; இரப்புக்கடிதம் எழுது.

**screev'er**, *v.* சாலை ஓவியர், சாலை ஓவிய இரப்பர்.

**screw**, *n.* திருகாணி; திருகு சுரை, மேல்வரி அல்லது அகழ் வரிச் சுற்றுடைய நீள்குழை; திருகுவிசை, புரிசுரை இயக்க மூலம் ஏற்படும் ஆற்றல்; முறுக்காற்றல்; வல்லடி வற்புறுத் தாற்றல்; புரிவிசைக்கருவி; முற்கால பெருவிரல் நெரிக்கும் வதைக்கருவி; திருகு நெட்டி வாங்கி; கப்பலின் புரிவிசை யாழி; விமானச் சுழல் விசிறி; புரிவிசை இயக்கக்கப்பல்; திருக்கு, திருகுதல்; ஒரு சுழற்சி; பந்தின் சுழல்விசை; சுழல் வியக்கம்; தாள் பொட்டலக் குவிசுருள்; குவிசுருள் தாள் பொட்டலத்திலடங்கிய பொருள்; புகையிலைச்சுருள்; கட்டுக் குலைந்த குதிரை; சம்பளத்தொகை; கஞ்சன், கசடி; கசக்கிப் பறிப்பவர்; மூளை இணைப்புக்கூறு; *v.* திருகாணியால் இறுக்கு; திருகாணி இயக்கு; திருகி இறுக்கு; திருகாணி வகையில் திருகு; திருகாணிபோல் இயக்கு; யாழ் வகை களில் புரியாணி முறுக்கு; திருக்கு; சுழற்றித்திருப்பு; திடு மெனத்திருப்பு; கோட்டுவி; உருத்திரியப்பண்ணு; சுரிக்கச் செய்; முறுக்கு, வலுவேற்று; விசைத்திறம் பெருக்கு, செய லுக்கு ஒருக்கமாக்கு; பந்துவகையில் சுற்றிச் சுழலுவி; சுழன்றுசுழன்று செல்; வழிபிறழ்ந்து செல்; திருகத்தக்கதா யிரு; சுற்றிச்செல், சுற்றியணை; மாற்றியமைத்துக்கொள்; நெருக்கி வலியுறுத்து; அடக்குமுறை செய்; தொல்லைப் படுத்து; வலிந்து இணங்குவி; கசக்கிப்பிழி; திருகிப்பறி; தொல்லைப்படுத்தி வாங்கு; கசடு, கஞ்சத்தனம்பண்ணு; (தொ.) Archimedean screw, ஆர்க்கிமிடீஸ் என்ற பண் டைக்கிரேக்க அறிஞர் கண்டுபிடித்த புரிவிசை நீரேற்று பொறி; a screw loose, மூளைக்கோளாறுடையவர்; common screw, மரையாணி; differential screw, Hunter's screw, வெவ்வேறு புரிகளின் அளவு வேறுபாடுடைய தூக்கமைவு; endless screw, perpetual screw, பற்சக்கரத்தோடு இணைந்து அதனை இயக்கும் புரிகோல்; interrupted screw, புரியின் பகுதிகள் வெட்டியெடுக்கப்பட்டுள்ள திருகு; left-handed screw, இடம்புரித் திருகு; put the screw on, turn the screw, பணத்துக்காகப் படிப்படியாக நெருக்கு, இறுக்கிப்பிழி; screw coupling, குழாய்-கோல் முதலியவற்றின் முனைகளை இணைப்பதற்கான வலம்புரி இடம்புரிச் சுரை; screw gear, (இயந்.) திருகு சக்கரம்; பற்சக்கரத்துடன் கூடிய புரியுள்ள சுழல்தண்டு; screw press, அச்சகம் புத்தகக் கட்டடம் வகை யில் புரிவிசை அழுத்துகருவி; screw steamer, புரிவிசை நீராவிக்கப்பல்; screw up door, கதவைக் குறும்பாக ஆணி யால் இறுக்கிவிடு; screw up one's courage, உறுதி கொள்ளச் செய், உளவுரம் வருவி; screw valve, திருகு விசைத்தடுப்பு.

**screw'-bolt**, *n.* திருகு மரையாணி.

**screw'driver**, *n.* திருப்புளி.

**screwed**, *a.* (பே-வ.) குடித்து வெறியேறிய.

**screw'-jack**, *n.* பல் மருத்துவரின் பல்நெருக்கு கருவி; வண்டிச்சக்கர இருசினைத் தூக்குவதற்கான திருகுநிலை உதை கோலமைவு.

**screw'-pile**, *n.* புரிவிசை முளை, திருகுவிசையால் நிலத்தில் இறக்கப்படத்தக்க அடிப்பகுதியுடைய கழி.

**screw'-pine**, *n.* திருகிலைத் தாவரவகை.

**screw'-plate**, *n.* திருகுபுரிகள் வெட்டுவதற்கான தொளை களையுடைய எஃகுத் தகடு; திருகுவெட்டு அச்சுக்களை வைப் பதற்கான உலோகத் தகடு.

**screw'-propell'er**, *n.* திருகியல் சுழல் உந்துதண்டு.

**screw'-tap**, *n.* சுரை செய்வதற்கான கருவி.

**screw'-thread**, *n.* உடக்கு, திருகு புரி, திருகாணிச்சுரை உட்சுற்று.

**screw'wheel**, *n.* திருகு புரியாழி.

**screw'-wrench**, *n.* திருகு குறடு.

**screw'y**, *a.* திருகுபுரி போன்ற; முடுகியலான; சிறிது மதி மயங்கிய.

**scriba'cious**, *a.* எழுதுவதை வழக்கமாகக் கொண்டுள்ள.

**scrib'ble**[1], *n.* கிறுக்கல், அக்கறையின்றி எழுதப்பட்ட கையெழுத்து, கிறுக்கலாக எழுதப்பட்ட செய்தி; அவசர மாக எழுதப்பட்ட குறிப்பு; *v.* அவசரமாக எழுது, அக்கறை யின்றி எழுது, கிறுக்கலாக எழுது; இதழாசிரியனாயிரு; நூலாசிரியனாயிரு; செய்யுள் எழுது.

**scrib'ble**[2], *v.* கம்பளி-பருத்தி ஆகியவற்றைச் சரவையாகக் கோதிச் சிக்கெடு; சிக்கெடுக்கும் இயந்திரத்திலிட்டு வாங்கு.

**scribb'ler**[1], *a.* எழுத்தாளர்.

**scribb'ler**[2], *n.* கம்பளி-பருத்தி ஆகியவற்றைச் சரவையாகச் சிக்கெடுக்கும் இயந்திரம்.

**scribb'ling-diary**, *n.* நேர்வுக் குறிப்பேடு, வேண்டும்போது குறித்துக்கொள்வதற்கான நாட்குறிப்புச் சுவடி.

**scribe**, *n.* எழுத்தர்; படியெடுப்பவர்; செயல் துணைவர்; யூதரிடையே ஆவணப் பாதுகாப்பாளர்; யூதசமயவாதச் சட்ட வல்லுநர்; வரைகோல், செங்கல்-கட்டை ஆகியவற்றில் படிகாட்டும் வரையிடுவதற்குரிய கூர்ங்கருவி; *v.* வரை கோலாற் கோடிடு; குறி, குறியிடு; உள்வரியிடு; எழுத்த ராய் வினையாற்று.

**scribe'-awl, scrib'er**, *n.* வரைகோல், மரக்கட்டை-செங்கல் முதலியவற்றில் கோடுகள் வரைவதற்கான கூர்ங்கருவி.

**scrim**, *n.* உள்வரித் துணிவகை.

**scrimm'age**, *n.* பூசல், சச்சரவு, தெருச்சண்டை; ரக்பி காற் பந்தாட்டத்தில் முன்கள ஆட்டக்காரரின் பந்து சூழ் மொய் திரள்; *v.* சச்சரவில் ஈடுபடு; ரக்பி காற்பந்தாட்டத்தில் பந்தினை மொய்திரட்படுத்து.

**scrimp**, *v.* கஞ்சனாயிரு, இவறு.

**scrim'py**, *a.* போதாத, குறைவாயுள்ள.

**scrim'shank**, *v.* (படை.) கடமை நழுவவிடு.

**scrim'shaw**, *n.* கடலோடிகளது பொழுதுபோக்குக் கவின் வினை; *v.* கைவல் வினைசெய்.

**scrine, scrin'ium**, *n.* ஏட்டுப் பேழை, ஏட்டுச் சம்புடம்.

**scrip**[1], *n.* இரவலர் பை; பயணப் பை; புண்ணிய யாத்திரிகர் தூக்கு பை; புத்தகப் பை; தொங்கு பை.

**scrip**[2], *n.* எழுத்து; தாள் நறுக்கு; ஒதுக்கப்பட்ட பங்கு களுக்கான முன்னணிச் சான்றிதழ்; பங்குச் சான்றிதழ்த் தொகுதி.

**script**, *n.* (சட்.) ஆவண மூலம்; கைப்படியெழுத்து; கையெழுத்து முறை; கையெழுத்துப் படிவம்; கையெழுத்துப் படி; அச்சுருக் கையெழுத்துப் போலி; அச்சுருக் கையெழுத்து, வானொலிப் பேச்சேடு; திரைநாடகத் தட்டெழுத்துப்படி; தேர்வினர் விடைத்தாள்.

**scriptor'ium**, *n.* எழுதுகூடம்; *pl.* scripto'ria, scrip-tor'iums.

**scrip'tural**, *a.* திருநூல் சார்ந்த; திருநூல் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட; திருநூல் கருத்துக்களோடு இசைந்த; திருநூல் கருத்துக்களை வலியுறுத்துகிற; திரு நூலை மேற்கோள் காட்டுகிற; விவிலிய ஏடு சார்ந்த; விவிலிய நூற் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட; விவிலிய நூலை ஆதாரமாகக் கொண்ட.

**scrip'turalism**, *n.* விவிலியநூல் வாசகக் கடைப்பிடி.

**scrip'turalist**, *n.* விவிலியநூல் வாசகத்தினின்று பிறழாமல் நடப்பவர்.

**scrip'ture**, *n.* திருமறைநூல், சமயத் திருநூல் தொகுதி; விவிலிய ஏடு, கிறித்தவர் திருமறைநூல்; விவிலியநூல் மேற்கோள்; சாசனம்; *a.* திருநூல் சார்ந்த; திருநூலிலிருந்து எடுக்கப்பட்ட; விவிலிய ஏடு சார்ந்த; விவிலியநூல் மேற்கோளான; (தொ.) Holy Scripture, the Scriptures, விவிலிய ஏடு, கிறித்தவர் திருமறைநூல்.

**scrip'ture-read'er**, *n.* திருநூல் வாசிப்பாளர், ஏழைகளின் வீடுகளுக்குச் சென்று விவிலியநூல் வாசிப்பதற்கென அமர்த்தப்பட்டவர்.

**scriv'ener**, *n.* நெட்டெழுத்தாளர்; (தொ.) scrivener's palsy, எழுத்தாளர் முடக்குவாதம்.

**scrobic'ulate, scrobic'ulated**, *a.* (தாவ., வில.) வடுக்கலுள்ள, குழிவிழுந்த

**scrof'ula**, *n.* கண்டமாலே.

**scroll**, *n.* சுருள்; பத்திரச்சுருள்; முற்காலச் சுருள்வடிவச் சுவடி; வாசகம் பொறிக்கப்பட்ட அணியிழைப்பட்டை; வில்யாழின் தலைப்பு; கையெழுத்தின் அழகு வீச்சு; பட்டியல், அட்டவணை; முதற்படி வரைவு; (க-க.) சுருள்வடிவப் போதிகை; *v.* சுருட்டு; சுருள்வுறு; சுருள்வடிவ அணியொப்பனை செய்; (தொ.) scroll gear, (இயந்.) சுருள்பல் இசைவமைவு.

**scroll'-bone**, *n.* (உள்.) சுருள் எலும்பு.

**scroll'-head**, *n.* சுருள் முகப்பு, கப்பலின் முன்புறத்திலுள்ள சுருள் போன்ற ஒப்பனை வேலைப்பாடு.

**scroll'-lathe**, *n.* சுருட்கடைசற் பொறி.

**scroll'-saw**, *n.* மெல்லிழைவாள், சித்திர அறுப்புவேலையில் மெல்லிய பலகை அட்டைகளை அறுக்கப் பயன்படுத்தப்படும் ஒடுங்கிய இழைவாள்.

**scroll'-wheel**, *n.* (இயந்.) திருகிசையாழி, இயக்க இயைபுக்குரியதாகத் திருகு சுருளான பல்வரிசையுடன்கூடிய வட்டத்தகடு.

**scroll'-work**, *n.* சுருளொப்பனை.

**scroop**, *n.* கீறல் ஒலி; *v.* கீறி ஒலியெழுப்பு.

**scrot'al**, *a.* கோசத்திய, உயிரின விதைப்பை சார்ந்த.

**scrot'um**, *n.* அண்டகோசம், உயிரின விதைப்பை; *pl.* scrot'a.

**scrounge**, *v.* எடுத்துக்கொள், திருடு; இர.

**scrub**[1], *n.* தூறு, புதர்; புதர்நிலம், குறுங்காடு; தூறு நிறைந்த நிலப்பரப்பு; தேய்ந்த தூரிகைக்கட்டை; தேய்ந்த துடைப்பக்கட்டை; குறுமயிர் மீசை; கூழை விலங்கு; குறளர்; அற்பர், பொருட்படுத்த வேண்டாதவர்.

**scrub**[2], *n.* சுரண்டித் தேய்ப்பு; அழுத்தித் துடைப்பு; துப்புரவாக்குதல்; (பே-வ.) முறையான ஆட்டக்குழுச் சாராத ஆட்டக்காரர்; இரண்டாவதான ஆட்டக்குழு; வலுவற்ற ஆட்டக்குழு; குறை ஆட்டக்காரர்களையுடைய தளக்கட்டுப் பந்தாட்டம்; *a.* தளக்கட்டுப் பந்தாட்ட வகையில் முழுநிறை ஆட்டக்காரர்களைப் பெற்றிராத; *v.* அழுத்தித் தேய்; நிலக்கரி வளி முதலியவற்றினின்று பயனுடைய தனிப்பொருட்கூறுகளைப் பிரித்தெடு.

**scrubb'er**, *n.* தேய்த்துத் துப்புரவாக்குபவர்; கரி வளி தனிப்படுத்துவதற்கான அமைவு.

**scrubb'y**, *a.* வளர்ச்சி தடைப்பட்ட; குறுங்காடு நிறைந்த; இழிந்த.

**scrub'-oak**, *n.* அமெரிக்க கூழைக் கருவாலிவகை மரம்.

**scrub'-team**, *n.* தளக்கட்டுப் பந்தாட்டவகையில் குறை ஆட்டக்காரர்களையுடைய ஆட்டக்குழு.

**scruff**, *n.* பிடரி, கழுத்துப் பின்புறம்.

**scrum**, *n.* ரக்பி காற்பந்தாட்டத்தில் முன்கள ஆட்டக்காரரின் பந்துசூழ் மொய்திரள்; *v.* ரக்பி காற்பந்தாட்டத்தில் பந்தினை மொய்திரட்படுத்து; (தொ.) scrum half, ரக்பி காற்பந்தாட்டத்தில் பந்து மொய்திரட்படுத்தும் பின்னரை ஆட்டக்காரர்.

**scrumm'age**, *n.* ரக்பி காற்பந்தாட்டத்தில் முன்கள ஆட்டக்காரரின் பந்துசூழ் மொய்திரள்; *v.* ரக்பி காற்பந்தாட்டத்தில் பந்தினை மொய்திரட்படுத்து.

**scrump'tious**, *a.* (பே-வ.) மகிழ்ச்சி விளைக்கிற.

**scrunch**, *n.* பல்லரைப்பு ஒலி; மெல்லுதல், பல்லரைப்பு; சரளைமீது மிதித்தால் ஏற்படும் ஒலி; *v.* ஓசைபட மெல்லு; பல்லால் அரை; மிதித்துத் துவை; சரளைமீது நெரித்து நட; கசக்கு.

**scru'ple**, *n.* மிகச்சிறிய அளவு, இருபதுநெல் எடைகொண்ட அளவு; கரும நாண்; மனச்சாட்சிக் குத்தல்; நுணுக்க ஐயப்பாடு; *v.* உளச்சான்றின் தடுப்புணர்ச்சி கொள்; நாணுதல் செய்; நுணுக்க ஐயப்பாடு கொள்; நேர்மையுணர்ச்சி காரணமாக தீது செய்யத் தயங்கு; (தொ.) make no scruple to do, உள்ளூறு தயக்கமின்றிச் செய், மனம் ஒப்பிச் செய்; man of no scruples, தீமை செய்யத் தயங்காதவர்.

**scru'pulous**, *a.* பழிபாவத்திற்கு அஞ்சுகிற; சிறு பிழைக்கும் அஞ்சுகிற, எதிலும் யாரையும் புண்படுத்தக்கூடாதென்பதில் விழிப்போடிருக்கிற; அயரா உன்னிப்பு வாய்ந்த; சோர்வற்ற; வழுவாத, தவறுதலற்ற; இழையும் பிழையாத, சிறு நுணுக்கங்களையும் அசட்டை செய்யாதிருக்கிற; நுட்ப திட்பம் தவிராத; நுழை நுணுக்க நேர்மையுள்ள, சிறு நிகழ்ச்சிகளிலும் மனச்சான்றின்படி நடக்கிற; ஆசாரத்தில் மிகு நுட்பம் பார்க்கிற.

**scrutat'or**, *n.* நுண்ணாய்வாளர்; வாக்குரிமைச்சீட்டு ஆய்வாளர்.

***scrutin d'arrondissement***, (பிர.) *n.* அக வாக்களிப்பு முறை, பிரஞ்சு சட்டமாமன்றத் தேர்தல்வகையில் வாக்காளர் தமது உள்ளூர் வேட்பாளர்களுக்கே வாக்களிக்கும் முறை.

***scrutin de liste***, (பிர.) *n.* புற வாக்களிப்புமுறை, பிரஞ்சு சட்டமாமன்றத் தேர்தல் வகையில் வேட்பாளர்களின் மொத்த எண்ணிக்கையில் எந்த ஒரு தொகுதியினருக்கும் தொகுதியாகவே வாக்காளர் வாக்களிக்கும் முறை.

**scrutineer'**, *n.* நுண்ணாய்வுநர்; வாக்குரிமைத் தாள் ஆய்பவர்; குடவோலை ஆய்வாளர்.

**scru'tinize**, *v.* நுணங்கியாராய், கூர்ந்தாய்.

**scru'tiny**, *n.* நுண்ணாய்வு; ஆய்வு நோக்கு; வாக்குப் பதிவேட்டின் ஆய்வு.

**scry**, *v.* பளிக்குமணிமூலம் மறைநிலைக்காட்சி காண்.

**scry'er**, *n.* பளிக்குமணி மறைநிலைக் காட்சியாளர்.

**scud**, *n.* சறுக்கோட்டம், விரைமென்தவழ்வு, கருக்கொள்ளா மேகம், ஆவிவடிவாகக் கலைந்தேகும் முகிற்கணம்; *v.* விரைந்தோடு, நேராகத் தவழ்ந்து நழுவிச்செல்; மிதந்துசெல்; காற்றால் விரைந்து செலுத்தப்படு.

**scu'do**, *n.* பழைய இத்தாலிய வெள்ளி நாணயவகை.

**scuff**[1], *n.* கழுத்தின் புறப்பகுதி, பிடரி.

**scuff**[2], *v.* இழுத்து இழுத்து நட; உராய்.

**scuf'fle**, *n.* அடிபிடிசண்டை, கைகலப்பு, கலவர அமளி; மண்கிளறி, மண்வெட்டிவகை; மண் கிளறுபொறி; *v.* அடிதடிசண்டையில் ஈடுபடு.

**scug**, *n.* பள்ளி மாணவர் வழக்கில் பழகுபண்பற்றவர்.

**sculdugg'ery**, *n.* கற்பிழப்பு, இழிதகவு.

**scull**, *n.* கைத்தண்டு, ஒருவரே உகைக்கும் இருகைத்தண்டுகளில் ஒன்று; துழாவிப் படகு செலுத்துவதற்குப் பயன்படும் விசைத்துடுப்பு; *v.* தண்டுகளால் உகை; படகு செலுத்து.

**scull'er**, *n.* தண்டுகைப்பவர்; தண்டுகை படகு, விசைத்துடுப்பால் செலுத்தப்படும் படகு.

**scull'ery**, *n.* புறக்கடை, சமையற்கலங்கள் அலம்பும் அடுக்களைப் பின்பகுதி.

**scull'ion**, *n.* அடுக்களைச் சிற்றாள்.

**sculp**, *v.* (பே-வ.)=sculpture.

**scul'pin**, *n.* முள்ளுள்ள பெருந்தலைச் சிறுகடல் மீன்வகை.

**sculp'tor**, *n.* சிற்பி ; குழைவுக்கலைஞர் ; *fem.* scul'ptress.

**sculp'tural**, *a.* குழை ஓவியக்கலைக்குரிய ; செதுக்குகலை சார்ந்த ; சிற்பம் போன்ற ; சிற்பத்தொழில் சார்ந்த.

**sculp'ture**, *n.* செதுக்குகலை, குழை ஓவியக்கலை; சிற்ப வேலை; சிற்பவேலைப்பாடுடைய பொருள், சிற்பக்கலைப்படைப்பு ; (வில., தாவ.) தோடுகளின்மீது காணப்படும் மேடு பள்ள மான குறியீடுகள் ; *v.* சிற்ப வடிவில் அமை ; செதுக்குரு அமை ; குழை ஓவியக்கலைஞருகு ; சிற்பத் தொழில் செய்.

**sculp'tured**, *a.* செதுக்கப்பட்ட ; குழை ஓவியமாக உருவாக் கப்பட்ட ; (வில., தாவ.) தோடுகள்மேல் மேடுபள்ளமான அமைப்புடைய.

**sculp'turesque**, *a.* குழை ஓவியம் போன்ற ; சிற்பக்கலைப் படைப்பின் இயல்புடைய; சிலையொத்த; செதுக்குச்சித்திரத் தின் பான்மையுடைய.

**scum**, *n.* கலிப்பு நுரை, மாசேடு ; கசடு, கழிவு ; சவறு, சக்கை, செத்தை ; மக்கள்தொகையின் கழிகடை, கழிசடை மக்கள் ; *v.* மேற்பரப்பிலுள்ள கழிவு நுரையை எடு, கலிப்பு ஏட்டினை நீக்கு; மேற்கசடாய் அமை; கலிப்பேடாக உருவாகு; மேல்நுரைப்பு எய்தப்பெறு.

**scum'ble**, *n.* எண்ணெய்ச்சாய ஓவிய வகையில் வண்ண மென்னயப்பாடு ; *v.* எண்ணெய்ச்சாய ஓவிய வகையில் மென்பூச்சு மழுங்கலாக்கு.

**scun'cheon**, *n.* மூலைக்குறுக்குவிட்டம், எண்கோணத் தூபியைத் தாங்கும் சதுரக்கோபுர மூலைக் குறுக்குக் கல் விட்டம் ; மூலைக்குறுக்கு வில் வளைவு, எண்கோணத் தூபி யைத் தாங்கும் சதுரக்கோபுர மூலைக் குறுக்கு வில்வளைவு ; நில உள்வரி அகலம், கதவு நிலப்பக்கத்திற்கும் சுவரின் உட்புறத்திற்கும் இடையேயுள்ள கட்டுமானம்.

**scunn'er**, *n.* கடுவெறுப்பு ; வெறுப்பிற்குரிய பொருள் ; *v.* வெறுப்பூட்டு ; குமட்டு ; வெறுப்புக்கொள்ளு.

**scupp'er** [1], *n.* வடிபுழை, கப்பலில் தளத்தின் மேல்நீர்வடியும் பக்கவாட்டுத் துளை.

**scupp'er** [2], *v.* (பே-வ.) திகைப்பூட்டிப் படுகொலை செய் ; கப்பலை மூழ்கடி; கப்பலோட்டிகளை மூழ்கடி ; கொல், அழித் தொழி.

**scurf**, *n.* தோல்பொருக்கு, உதிர்தொலி, கழிதோல் ; வங்கு, பொடுகு ; மேற்புறச்செதிள்.

**scurf'iness**, *n.* தோற்பொருக்குள்ள தன்மை; பொருக்கார்ந்த இயல்பு.

**scurf'y**, *a.* தோற் செதிளுள்ள ; தோற்பொருக்கு உண்டு பண்ணுகிற ; பொருக்கார்ந்த ; பொருக்கு உட்கொண்ட ; பொருக்குப் போன்ற.

**scu'rril, scu'rrile, scu'rrilous**, *a.* கீழ்த்தரமான, இழி தகவான ; மிகவுங் கொச்சையான.

**scu'rrility**, *n.* கீழ்த்தர வசை ; இழிதகவுப் பேச்சு.

**scu'rry**, *n.* குறுநடை ஓட்டம், விரைந்த குறுகிய காலடி களால் ஓடுதல் ; குறுநடை ஓட்ட அரவம் ; குறுநடை ஓட்டக் குதிரைப் பந்தயம் ; *v.* குறுநடை ஓட்டமிடு, குறுகியகாலடி களுடன் விரைநடையாக ஓடு.

**scurv'y**, *n.* ஊட்டக்குறைக் கோளாறு, ஊட்டச் சத்துக் குறைவினால் ஏற்படும் சொறி கரப்பான்-பல் எகிர் வீக்க நோய் ; *a.* மிகக் குறைவான ; கீழான ; இழிந்த ; நேர்மை யற்ற ; வெறுக்கத்தக்க ; கெட்ட.

**scurv'y-grass**, *n.* ஊட்டக்குறைக் கோளாறு மருந்தாகப் பயன்படும் கடுகு குடும்பச் செடிவகை.

**scut**, *n.* குறுவால் ; முயல்-மான் முதலியவற்றின் வால்.

**scut'age**, *n.* (வர.) கேடய வரி, தண்டு மாற்றுவரி, நிலப் பண்ணை முறையில் மேலாளருக்குரிய படையூழியத்திற்கு மாற்றீடான வரி.

**scut'al, scut'ate**, *a.* கவசம் போன்ற, பாதுகாப்புத் தக டுடைய.

**scutch**, *n.* சணல்கோது கருவி ; சணல் கோதிய முரட்டு நார்ச்சக்கை ; *v.* சணல் ஈரப்பதநாரை அடித்துக்கோது.

**scutch'-blade**, *n.* சணல்கோது கருவி.

**scutch'eon**, *n.* கிடுகு, விருதுதாங்கிய கேடயம்; குலவிருதுப் பட்டயம், மரபுச்சின்னம் ; சாவித்துளையில் சுழலும் காப்புத் தகடு ; பெயர்ப்பட்டயம்.

**scutch'er, scutch'ing-sword**, *n.* சணல்கோது கருவி.

**scute**, *n.* மேல்தோடு, முதலை-ஆமை முதலியவற்றின் உடல் மேலுள்ள செதிள் அல்லது எலும்புக் கவசத்தகடு.

**scutell'ar**, *a.* பறவைக்காலின் வன்செதிள் சார்ந்த; வண்டின் மார்புப்பகுதிக் கவசத்தகடு பற்றிய; தாவரச் செதிள் சார்ந்த.

**scut'ellate**, *a.* செதிளடர்ந்த; தோடான; பூச்சிவகைகளின் மார்புவகையில் தோட்டில் பொதிந்த ; பறவைக்கால்கள் வகையில் செதிள் தகடுகள் செறிந்த; செதிள்தகடு போன்ற.

**scutella'tion**, *n.* செதிள் பொதிவமைதி ; தோடுபொதிவு.

**scutell'um**, *n.* (வில., தாவ.) தாவரங்கள்-வண்டுகள்-பறவை கள் முதலியவற்றின் மீதுள்ள சிறு தகடு போன்ற உறுப்பு ; பறவைக்காலின் வன்செதிள்களுள் ஒன்று ; *pl.* scutell'a.

**scutt'er**, *n.*, *v.*=scurry.

**scut'tle** [1], *n.* கரித்தட்டம், கரிக்குடுவை.

**scut'tle** [2], *n.* புகுமுகப்புழை ; மோட்டு நிறப்பு, மூடியுடன் கூடிய மோட்டுத்தொளை ; சுவர்முகம், அடைப்புடன்கூடிய சுவர்ப்புழைவாய் ; அடித்தளப் புகுமுகம், மூடித்திறக்கக் கூடிய கப்பல்தள அடிவாய்த்திறப்பு; இயக்கு இடைத்தளம், பொறிவண்டியில் இயந்திர உடற்பகுதி இணைப்புக்கூறு ; *v.* கப்பலில் துளையிடு ; கப்பலில் துளைகள் உண்டுபண்ணு ; கப்பலை மூழ்கடிக்க அடிப்புறத் தொளையைத் திறந்துவிடு ; கப்பலை மூழ்கடி.

**scut'tle** [3], *n.* விரைவோட்டம்; திடீர்ப்புறப்பாடு; தப்பியோடு தல்; கடுவேக மறைவு; *v.* விரைந்தோடு; துன்பம்-அபாயம் முதலியவற்றிலிருந்து தப்பிக் கடுகியோடு.

**scut'tle-butt, scut'tle-cask**, *n.* கப்பல் அடித்தளக் குடிநீர் மிடா.

**scut'um**, *n.* நிலக்கேடயம், பண்டை ரோமப் படைவீரரின் நீள்வட்ட அல்லது நீளரைவட்ட வடிவமான நெடும் பரிசை ; (உள்.) முட்டுச்சில்லு ; கவச மேல்தோடு, ஆமை-முதலை முதலிய உயிரினங்களின் வன் மேலோடு.

**Scyll'a**, *n.* கிரேக்க பழங்கதை மரபில் ஜேஸன் (Jason) என்ற வீரனின் கடற்பயணங்களின்போது ஒரு கரையில் பெருஞ்சுழி அமைந்த கடலிடுக்கில் மறுகரைப் பாறைமீது அமர்ந்திருந்த ஆறுதலைப்பூதம் ; (தொ.) between Scylla and Charybdis, ஆறுதலைப் பூதத்துக்கும் அழிகடற் சுழிக்கும் இடையாக, இருபேரிடர்களிடை அகப்பட்ட நிலையில்.

**scyph'us**, *n.* குடுவைக் குடிகலம், இரு கைப்பிடிக் குடி கிண்ணம் ; (தாவ.) கிண்ணம் போன்ற பகுதி.

**scythe**, *n.* புல்லரிவாள்; பயிர் அரிவாள்; முற்காலப் போர்த் துறைத் தேர்களின் இருபுறங்களிலும் இருசோடி இணைக்கப் பட்ட புடையலகு ; *v.* புல்லரிவாளால் வெட்டு, அரிவாளால் பயிர் அரி.

**Scyth'ian**, *n.* பண்டைய சித்தியக்குடியினர், கருங்கடலுக்கு வடக்கே உள்ள பகுதியில் வாழ்ந்தவர் ; *a.* பண்டைய சித் தியக் குடியினஞ் சார்ந்த ; கருங்கடலுக்கு வடபால் வாழ்ந்த பண்டைய இனஞ் சார்ந்த.

**'sdeath**, *int.* கோப - வியப்புக் குறிப்பு.

**sea**, *n.* கடல்; மாகடல்; நிலவுலகின் சூழ்நீர்ப்பரப்பு ; மாகடற் பகுதி ; கடல்வளாகம் ; கடல்வழி; பெருநீர்ப் பரப்பு; கடல் போன்ற பேரேரி, உள்நாட்டுக் கடல் ; வேலை ஏற்றத்தாழ்வு நிலை ; அலை ஏற்றத்தாழ்வு நிலை ; கடல்போன்ற எல்லையற்ற பெரும்பரப்பு ; கடல்போன்ற எல்லையற்ற பெருவெளி ; கடல் போன்ற எல்லையற்ற பெரிய அளவு ; வேலை, பொங்கோதம்; பேரலை; பெருங் கொந்தளிப்பு; *a.* கடலில் வாழ்கிற ; கடலிற்

பயன்படுத்தப்படுகிற ; கடலிற் செல்கிற ; கடலிற்குரிய ; கடலருகிலுள்ள ; கடலோரமான; கடல்போன்ற; கடலோடியான; (தொ.) a heavy sea, கொந்தளிக்குங் கடல்; arm of the sea, நெடுநீர்க்குடா, கடற் கூம்பு; as good fish in the sea as ever came out of it, பற்றுக்குறை இல்லாத வளப்பநிலை ; at sea, கடலிற் கரையினின்று மிகு தொலைவாக; கடலில் வழி தெரியாமல்; திக்குத்திசை தெரியாமல், திகைப்புறு நிலையில்; between the devil and the deep sea, இருதலைக்கொள்ளி எறும்புபோல, தர்மசங்கடமான நிலையில்; beyond seas, over seas, கடல்கடந்த நாடுகளில்; Brazen sea, Molten sea, யூதர் திரு அலம்பு வினைக்குப் பயன்படுத்திய பித்தளைக் கொப்பறை; closed sea, நாட்டின் ஆட்சி எல்லைக்குட்பட்ட கடல்; follow the sea, கப்பலோட்டியாகச் செல்; go to sea, கப்பலோட்டியாகப் போ, மீகாமனுகு; half seas over, எல்லைமீறிய குடிவெறியுடைய; மிகுதியாகக் குடித்த; inland sea, கடல் தொடர்பற்ற உள்நாட்டுப் பேரேரிப்பரப்பு; long sea, நீண்ட ஒழுங்கான அலைகள்கொண்ட கடல்; mistress of the sea, mistress of the seas, கடல் வல்லரசு, கடலாதிக்கம் மிக்க நாடு, கடற்படைச் செல்வாக்குள்ள நாடு; on the sea, கப்பலில் ; கடலடுத்த; கடற்கரையில் அமைந்த; put to sea, துறைமுகத்தை விட்டுப் புறப்படு; கரையை விட்டுத் தொலைவு செல்; sea acorn, கப்பல் அடியொட்டுச் சிப்பி; sea asparagus, மெல்லோடுள்ள நண்டுவகை; sea bear, துருவக் கரடி ; மென்மயிரோடுகூடிய கடல் நாய் ; sea canary, சீழ்க்கை ஒலியெழுப்பும் வெண்திமிங்கில வகை ; sea captain, கப்பல் தளபதி ; கடற்படைக் கப்பல் தலைவர் ; வணிகக் கப்பலின் தலைவர் ; sea change, கடலால் ஏற்படும் மாற்றம் ; உருமாற்றம் ; sea chestnut, முள் சூழ்ந்த வட்ட வடிவ ஓட்டிற்குள் வாழும் சிற்றுயிர் வகை ; sea coal, நியூ காசில் (Newcastle) என்னுமிடத்திலிருந்து கடல்மூலம் முன்பு கொணரப்பட்ட கரிவகை; sea coast, கடலோரப் பகுதி; sea colander, சிப்பல் தட்டுப்போன்ற துளைபட்ட இலைகள்கொண்ட கடற்பாசி வகை ; sea cook, (கப்.) வசைக் குறிப்பு ; sea crow, கடற் காகம்; sea cucumber, முட்டை வடிவ முள்ளார்ந்த கூட்டினையுடைய கடல்வாழ் உயிர்வகை; sea elephant, துதிக்கைபோன்ற உறுப்புடைய பெருங் கடல் நாய் வகை; கடற் கொள்ளைக்காரன்; sea fennel, ஊறுகாய்க்கு வழங்கப்படும் சதைப்பற்றுன இலைகள்கொண்ட கடலோரக் குன்றுப்பகுதித் தாவர வகை ; sea front, கடற்புற முகப்பு; கடல்நோக்கியுள்ள நகர்ப்பகுதி; sea furbelow, பழுப்புநிறக் கடற்பாசி வகை ; sea gherkin, முட்டைவடிவ முள்ளார்ந்த கூட்டினையுடைய கடல்வாழ் உயிர்வகை ; sea gilliflower, கடல் மலர்ச்செடி வகை; sea grape, ஊசியிலை மரவினஞ் சார்ந்த குத்துச்செடி வகை; sea grapes, மீன் வகை முட்டைத் தொகுதி; sea hedgehog, முட்டை வடிவ முட்கூட்டினையுடைய கடலுயிர் வகை; sea kale, மேசைப் பசுங்கறி உணவாகப் பயன்படும் இளமுளைப் பசுமைமாருச் செடிவகை; sea kidney, சிறுநீர்ப்பை வடிவுடைய உயிரினத் தொகுதி தாங்குந் தண்டமைப்பு; sea lace, நீண்ட கயிற்றிழை போன்ற இலைகளையுடைய கடற்பாசி வகை; sea lawyer, நொள்ளையர், கப்பல்துறை வழக்காற்றிற் குற்றங் காண்பதில் ஆர்வமுள்ளவர் ; sea lemon, மஞ்சள் நிறச் சிப்பி வகை ; sea leopard, புள்ளிகளுள்ள கடல்நாய் வகை ; sea level, கடல் மட்டம், கடல்மட்ட நிலை ; sea like looking glass, sea like a sheet of glass, அலைகளற்ற அமைதியான மேற்பரப்பினையுடைய கடல்; sea lily, அல்லி வடிவப் புதைபடிவக் கடல்வாழ் உயிரினம் ; sea lion, பேருருவக் கடல்நாய் வகை; Sea Lord, கடற்படை ஆட்சிக்குழு உறுப்பினர் ; sea melon, கடற்பூசணி, திறந்த செவுள்களும் தோடற்ற உடலுமுடைய கடல்வாழ் உயிரினவகை; sea mile, கடலில் ஒரு 'கல்' தொலைவு ; sea monster, பேருருவ விசித்திரக் கடல் விலங்கு ; sea moss, கடற்பாசி போன்ற முதுகெலும்பற்ற கீழ்நிலைக் கடல்விலங்கு வகை; பாசியினக் கடல் தாவர வகை ; sea mud, உரமாகப் பயன்படும் சதுப்புநில உப்புப்படிவு ; sea necklace, சரம் போன்ற சுரியோட்டுக் கோப்பியல் நத்தைத் தொகுதி; sea needle, ஈட்டிமீன் ; sea nettle, இழுது மீன் ; sea oak, கடற்பாசி வகை ; sea orange, ஓடற்ற செம்மஞ்சள்நிற உருள்வடிவுடைய கடல் நத்தை வகை ; sea otter, மிக உயர்ந்த கம்பளி ஈனும் கடல் நாய் வகை; sea parrot, பெரும்பள்ள அலகுடைக் கடற் பறவை வகை; sea pass, போர்க்காலங்களில் நொதுமல் அரசுகளின் கப்பல்களுக்குக் கொடுக்கப்படும் பயண இசைவுச் சீட்டு; sea peach, sea pear, தோல்போன்ற உறையினையுடைய கடல்நத்தை வகை; sea pie, sea piet, sea pilot, கப்பலோட்டிகளின் உப்பிட்ட இறைச்சிப் பண்ணிய வகை ; செவ்வலகுடைய நீந்தும் கடற்பறவை வகை; sea pincushion, மீன்வகையின் முட்டை ஓடு; sea pink, கடற்கரையோர ரோசா நிற மலர்ச்செடி வகை ; sea poacher, சிறு கடல்மீன் வகை ; sea power, கடல் வல்லரசு; sea pumpkin, கடற்பூசணி; திறந்த செவுள்களும் தோடற்ற உடலுமுடைய கடல்வாழ் உயிர்வகை; sea raven, பெருந்தலைச் சிறுமீன் வகை; sea robin, பருத்த தலையும் கவசமுடைய தாடைகளும் மூன்று கொடுக்கிழைகளும் கொண்ட மீன்வகை; sea rover, கடற் கொள்ளைக்காரர்; கடற் கொள்ளைக்காரர் கப்பல்; sea scouts, கடற் சாரணப் படையினர்; sea serpent, கடற் பாம்பு வகை; கடலிலிருப்பதாகக் கூறப்படும் பாம்பு போன்ற பேருயிர் வகை; sea snail, சிறு கடற் சேற்றுமீன் வகை ; sea snipe, கடல் உள்ளான் பறவை; seas of blood, ஈவு இரக்கமற்ற கொலை; sea squirt, தோல் உடை நத்தை வகை; sea strawberry, பல உணர் இழைகள் கொண்ட தொகுதி வாழ்வுடைய கடல்வாழ் உயிர்வகை; sea sunflower, கடற் பஞ்சு வகை, மணிவடிக் கடல்வாழ் உயிர்வகை; sea swallow, நீள் இறகுடைய கடற்பறவை வகை; sea whipcord, கடற் பாசி வகை ; ship a sea, படகுவகையில் கடல்நீர் உள்ளேறப் பெறு; short sea, ஒழுங்கற்ற கொந்தளிப்புடைய கடல் ; the four seas, பிரிட்டனைச் சூழ்ந்துள்ள நாற்றிசைக் கடல்கள்; the high seas, நண்கடற்பகுதி, நாட்டு ஆட்சியெல்லைக்குட்பட்ட கரையடுத்த மூன்றுமைல் கடற்பரப்பிற்கு அப்பாற்பட்ட பரந்துபட்ட நடுக்கடற் பகுதி; the seven seas, ஆர்டிக்-அண்டார்டிக்-வட பசிபிக்-தென் பசிபிக்-வட அட்லாண்டிக்-தென் அட்லாண்டிக்-இந்துமா கடல் ஆகிய ஏழு கடல்கள் ; when the sea gives up its dead, உயிர்த்தெழுதலின்போது.

sea'-anchor, *n.* புயல் நங்கூரம்.

sea'-anemone, *n.* கடற்பஞ்சு, கடலினடியில் வாழும் மணியுருவ உயிரின வகை.

sea'-angel, *n.* சுருமீன் வகை.

sea'-arrow, *n.* தூண்டில் இரையாகப் பயன்படும் நத்தைவகை.

sea'-bank, *n.* கடற்கரை மணல்மேடு; கடற்கரை; கடல் நீரைத் தடுத்து நிறுத்தக் கட்டிய செய்கரை.

sea'-barrow, *n.* மீன்வகை முட்டையோடு.

sea'-bat, *n.* நீண்டு பரந்தகன்ற துடுப்புடைய மீன் இனம்.

sea'beach, *n.* கடலோர மணற்கரை; கடற்கரையில் மண் சரளையாலான செய்கரை.

sea'-bells, *n.* கடற்கரை அடம்பு இன முறுகுகொடி வகை.

sea'-belt, *n.* தட்டைத் தோல்போன்ற இலையுடைக் கடற்பாசி வகை.

sea'-bird, *n.* கடற்பறவை.

sea'-biscuit, *n.* கப்பல் மாச்சில்லு.

sea'-blite, *n.* வாத்துக்கால் வடிவ இலைகள்கொண்ட உவர் சதுப்பு நிலச் செடிவகை.

sea'-blubber, *n.* இழுதுமீன் வகை.

sea'-blue, *a.* கடல்நீல வண்ணமான.

sea'board, *n.* கடற்கரை ; கடற்கரையோரப்பகுதி ; கடலடுத்த நாடு.

sea'boat, *n.* கொந்தளிப்புக்கடல் மரக்கலம்.

sea'-borne, *a.* கடல்மூலமான, கப்பல்மூலமாக அனுப்பப்படுகிற ; (தொ.) sea-borne commerce, கடல் வாணிகம் ; sea-borne goods, கப்பற் சரக்கு.

sea'-bow, *n.* கடல்நீர்த் திவலைகளில் எழும் வானவில்போன்ற பிரதிபலிப்பு.

**sea'-breeze**, *n.* கடற்காற்று, பகல்நேரத்தில் நிலத்தைநோக்கி வீசும் மென்காற்று

**sea'-brief**, *n.*=sea-letter.

**sea'calf**, *n.* கடல்நாய்,

**sea'-chart**, *n.* கடல் விளக்கவிவரப் படம்.

**sea'-chest**, *n.* கப்பலோட்டியின் பேழை.

**sea'-cliff**, *n.* கடலில் உருவாகும் செங்குத்துப் பாறை; கடலை நோக்கியுள்ள செங்குத்துப்பாறை.

**sea'-cloth**, *n.* நாடகமேடையில் கடற்கரை ஓவியத்திரை.

**sea'-cob**, *n.* கடற்பறவை வகை.

**sea'-cock**, *n.* கடற்பறவை வகை; மீன்வகை; கடல்நீரைக் கப்பலுக்குள் புகவிடக்கூடிய கப்பலின் பக்கத்தொளை.

**sea'-cow**, *n.* மிகப்பெரிய கடல் விலங்குவகை; கடற் சிங்கம்.

**sea'-dace**, *n.* ஐரோப்பிய கடல்மீன் வகை.

**sea'-devil**, *n.* கடற்பேய்; கடல்மீன் வகை.

**sea'-dog**, *n.* கடல்நாய்; கடல்மீன் வகை; எலிசபெத் அரசி காலத்தில் விரி கடலோடி; கடற்கொள்ளைக்காரர்.

**sea'-dott'erel**, *n.* தொகுதியாக வாழும் பறவைவகை

**sea'-dove**, *n.* துடுப்பாகப் பயன்படும் குட்டை இறகுடைய வடகடற் பறவைவகை.

**sea'-dragon**, *n.* சிறு திமிங்கில வகை.

**sea'drome**, *n.* மிதவை வானூர்தித் தளம்.

**sea'-duck**, *n.* கடல்வாத்து வகை.

**sea'-dust**, *n.* கடற்றூசி, நெடுந்தொலை நிலப்பகுதியிலிருந்து வந்து கடலில் விழும் தூசி.

**sea'-ear**, *n.* கடற்சிப்பி, உணவிற்குரிய காதுவடிவ சிப்பி வகை.

**sea'-eel**, *n.* பெரிய கடல்விலாங்கு வகை.

**sea'-fan**, *n.* பவள வகை.

**sea'farer**, *n.* கடலோடி; பரதவர்.

**sea'faring**, *n.* கடற்பயண வாழ்வு, வழக்கமாகக் கடலிற் பயணஞ் செய்தல்; *a.* கடற்பயண வாழ்விலீடுபட்ட.

**sea'-fight**, *n.* கடற்போர், கப்பற்சண்டை.

**sea'-fire**, *n.* கடலில் தோன்றும் இருளில் ஒளி.

**sea'-fishing**, *n.* கடல் மீன்பிடிப்புத் தொழில், கடலில் மீன் பிடித்தல்.

**sea'-floor**, *n.* கடலின் அடிப்பரப்பு, கடல் அடித்தளம்.

**sea'-flower**, *n.* கடற்பஞ்சு, மணிவடிவக் கடலடி உயிரினம்.

**sea'-foam**, *n.* கடல் நுரை.

**sea'-fowl**, *n.* கடற்புள் வகை.

**sea'-fox**, *n.* நீள்வால் சுறுமீன் வகை.

**sea'-gate**, *n.* வேலைவாய்ப் பள்ளத்தின் கடல்முகப்பு.

**sea'-gauge**, *n.* கப்பல் நீரில் அமிழும் அளவு; ஓசைசெய்யுங் கருவிவகை.

**sea'-girt**, *a.* கடலாற் சூழப்பட்ட.

**sea'-god**, *n.* கடல் தெய்வம்.

**sea'-goddess**, *n.* கடலணங்கு.

**sea'going**, *a.* ஆழ் கடலிற் செல்கிற: அடிக்கடி வழக்கமாகக் கடற்பிரயாணஞ் செய்கிற; கப்பல் வகையில் ஆழ்கடலிற் பயணஞ் செல்வதற்கேற்ற.

**sea'-green**, *n.* நீலங் கலந்த பசுமைநிறம்; *a.* நீலங்கலந்த பச்சை வண்ணமான.

**sea'-hog**, *n.* திமிங்கலம் போன்ற கடல் உயிரினவகை.

**sea'-horse**, *n.* கடல் தெய்வத்தின் இரதத்திற் பூட்டப்படுவதாகக் கூறப்படும் குதிரைபோன்ற தலையும் மீன்போன்ற வாலுமுடைய உயிரின வகை; கடற்சிங்கம்; குதிரை போன்ற தலையுடைய சிறுமீன் வகை; நீர்யானை.

**sea'-island cotton**, *n.* நீள்துய் உடைய நயமிக்க முன்னுட் பருத்தி வகை.

**sea'-king**, *n.* கடலரசன், முற்கால ஸ்காண்டிநேவிய கடற் கொள்ளைத் தலைவன்.

**seal**[1], *n.* கடல்நாய், நிலத்திலும் நீரிலும் வாழக்கூடிய கடல் வாழ் ஊனுணி விலங்குவகை; *v.* கடல்நாய் வேட்டையாடு; (தொ.) eared seal, கட்புலனுகும் புறச்செவிக் கடல்நாய்.

**seal**[2], *n.* முத்திரை, ஆவணத்தின்மீதிடும் பொறிப்படையாளம்; இலாஞ்சனை, ஆவணத்தின்மீது பதிப்பிக்கும் மெழுகு அல்லது ஈயத்துண்டின்மீதான பொறிப்பு; உடைபடாக் காப்பு முத்திரை; தாள் அல்லது உலோகத் தகட்டாலான உடைபடாத் தடைகாப்பிணைப்புப்பட்டி; முத்திரைக் குறிப்பு; பொறிப்பு அடையாளம்; முத்திரை அச்சு; முத்திரைச்சில்லு; பொறிப்பச்சுத் தகடு; செதுக்கப்பட்ட மணிக்கல்; முன்னறி பொறிப்பு; உறுதிச்சின்னம்; காப்புறுதிச்செய்தி; அடையாளச் சின்னம்; நிறைவேற்றச் சின்னம்; மறைவடக்க உறுதி; புழைகாப்பு மூடி; சாக்கடை வளிகாப்பு நீர்மம்; வளிச்சேமிப்புப் பொறியின் நீர்மம்; நீர்நாய் முதலியவற்றின் காலடித்தடம்; அல்லியின மலர்ச்செடி வகை; *v.* முத்திரை பொறிப்பிடு; முத்திரையிட்டு உறுதிச்சான்றளி; தனி உறுதிச் சான்ருக முத்திரையிடு; செயல்மூலம் உறுதிச் சான்று நிறுவு; தனி அடையாளம்பொறி; தனிப்படுத்தி ஒதுக்கிடு; விதித் தமைவி; குறித்தொதுக்கி வை; கடற்படை ஆட்சித்துறை வகையில் அரசாங்கக்கட்டளை முத்திரைக்குறியாக ஏற்றுக் கொள்; முத்திரைபொறித்து மூடு; பாதுகாப்பாக மூடு; பத்திரமாக அடைத்துவை; அடைத்துவைத்துப் பேணு; சீமைக்காரை வைத்து நாதாங்கி முதலியவற்றைச் சுவரில் பதியவைத்துப் பொருத்து; அடைப்பிடு; வழியடைப்புச் செய்; புழையடைப்புச் செய்; அடைப்பிட்டு நிறுத்து; மேல் நீர்மத்தால் வளித்தடைகாப்புச் செய்; மாற்ற முடியாதவாறு முடிவுசெய்; உறுதிப்படுத்து; மேலும் வலியுறவளி; இசைவு தெரிவி; தற்பொறுப்பு ஏற்றுக்கொள்; (தொ.) Fisher's Seal, தூய திரு பீட்டர் மீன் பிடிப்பதுபோன்ற அடையாளமுடைய போப்பாண்டவரின் இலச்சினை; is a sealed book to me, எனக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது, அதைப்பற்றித் தெரிவதற்கு எனக்கு வாய்ப்பில்லை; my lips are sealed, நான் பேசக்கூடாதவனுகிறேன்; privy seal, அரசர் தனி இலச்சினை; sealed pattern, கடற்படை ஆட்சிக்குழு-நிலையம் முதலியவற்றுல் கொடுப்பதற்கு ஏற்றதென ஒப்புக்கொள்ளப் பட்ட ஆடை-தளவாடம் முதலியவற்றின் கட்டளை மாதிரி; seal of love, அன்பின் அடையாளம், முத்தம்; குழந்தைப் பேறு; seal up, பாதுகாப்பாக அடைத்து வை; காற்று புகாதபடி பற்றுசுவைத்துப் பொருத்து; set one's seal to, ஒப்புதலளி; உறுதிப்படுத்து; the Great Seal, அரசுரிமை முத்திரை, பிரிட்டிஷ் மேல்மன்றத் தலைவர்பாலுள்ள பெரு முத்திரை; the seals, பெருமுத்திரை நாயகத்தின்பாலுள்ள முத்திரைகள்; மேல்மன்றத் தலைவர் இலாஞ்சனைகள்; நீதி மன்றத் தலைமை நடுவர் இலாஞ்சனைகள்; under sealed orders, குறிப்பிட்டபடி மாத்திரம் திறந்துபார்க்க வேண்டிய ஆணைகள்; windows must be sealed up, எல்லாத் துவாரங் களும் தாள் ஒட்டி அடைக்கப்பட வேண்டும்.

**sea'-legs**, *n.* கொந்தளிப்புக் கடலிலும் கப்பல்தளத்தின்மீதும் நடக்கும் ஆற்றல்.

**seal'er**, *n.* கடல்நாய் வேட்டையாடுவதற்குரிய கப்பல்.

**seal'ery, seal'-fishery**, *n.* கடல்நாய் வேட்டை.

**sea'-letter**, *n.* போர்க்கால நொதுமற் கப்பல் காப்புக்குறிப்பு, போரிலீடுபடாத நாட்டுக்கப்பலின் ஆட்கள்-சரக்குகள் முதலிய விவரமடங்கிய காப்புக்கடிதம்.

**seal'-fishing, seal'ing**, *n.* கடல்நாய் வேட்டையாடுதல்; கடல்நாய் வேட்டை.

**seal'ing-wax**, *n.* அரக்கு, முத்திரை மெழுகு.

**seal'-line**, *n.* கடல்வான்வரை, கடல்தள வானவிளிம்பு.

**seal'-pipe**, *n.* குமிழிக்குழாய், வளியாக்க அமைவில் நீரில் மூழ்கி வளி வெளிவிடும் குழாய்.

**seal'-ring**, *n.* முத்திரை மோதிரம்.

**seal'-rookery**, *n.* கடல்நாய் இனப் பண்ணை, கடல்நாய் இனம் பெருகும் இடம்.

**seal'skin**, *n.* பதனிடப்பட்ட கடல்நாய்த் தோல்; கடல்நாய்த் தோற் போலி.

**seal'wort**, *n.* அல்லியின மலர்ச்செடி வகை.

**Seal'yham, Seal'yham terrier**, *n.* அகழ்ஞாளி, சுறுசுறுப்பும் வலிமையுந் தோண்டும் இயல்புமுடைய சிறுநாய் வகை.

**seam**, *n.* தையல் விளிம்பு; பலகைகளின் பொருத்து; மூட்டுவாய்; பொருத்தின் இடைவெளி; தழும்பு, தைப்புத்தடம்; இலைத்தடம்; விதை அடித்தழும்பு; வெடிப்பு; வெட்டுவாய்; சுரிப்பு; இரண்டு மண்ணியல் படுகைகளின் இடைப் பிரிவுக் கோடு; அடர்த்தியான இரு படுகைகளுக்கிடையேயுள்ள தளர்த்தியான படுகை; (உள்.) எலும்பின் பூட்டுவாய்; காயத்தின் தைப்புவாய்; *v.* விளிம்பு அல்லது கரை அமை; தடமிடு; அடையாளமாகக் குறி; மூட்டுப்பிரி; மேல்வரி அமையுமாறு காலுறை பின்னு; தையலிட்டு இணை.

**sea'man**, *n.* முந்நீரன்; *pl.* sea'men.

**sea'manlike**, *a.* கடலாண்மைத் திறமுடைய.

**sea'manship**, *n.* கடலாண்மை, கப்பல்செலுத்துங் கலை.

**sea'-mark**, *n.* கடல் இட விளக்கக்குறி; கலங்கரை விளக்கம் வகை; கப்பலோட்டிகளுக்கு வழிகாட்டும் முனைப்படையாளம்.

**sea'-mat**, *n.* பவளப்புழுவினம் அமைக்குந் தட்டைப் பாறை.

**sea'-mew**, *n.* கடற்பறவை வகை.

**seam'ing-lace, seam'-lace**, *n.* மூட்டுவாய் மறைப்புப் பின்னல்.

**sea'-mouse**, *n.* ஒளிப்பிறக்கமுடைய கடற்புழு வகை.

**seam'-presser**, *n.* உழவுப்பரம்பு, உழுதபுலம் சமப்படுத்துங் கருவி; தையற்காரர் தேய்ப்புப்பெட்டி.

**seam'stress**, *n.* தையல் மடந்தை.

**seam'y**, *a.* தையல் மடிப்புவிளிம்பு தெரிகிற; மறுபுறஞ் சார்ந்த; கவர்ச்சி குன்றிய; மறைக்க விரும்புகிற; (தொ.) seamy side, உட்புறத் தோற்றம், வாழ்வு வகையில் மறுபுறத் தோற்றம், விரும்பத்தகா உட்புறத்தோற்றம்.

**se'ance**, *seance*, (பிர.) *n.* குழு அமர்விருக்கை, ஆய்வாராய்வுக்குழு அமர்வு; ஆவித் தொடர்பாய்வுக் குழுவிருக்கை; ஆவித் தொடர்புக் காட்சிக்குழு.

**sea'-nymph**, *n.* கடற்கன்னி.

**sea'-orb**, *n.* உருளிமீன், உருளையாக உப்பிக்கொள்ளும் இயல்புடைய மீன்வகை.

**sea'-owl**, *n.* கடல்மீன்வகை, வயிற்றுப்புற உறிஞ்சு தகட்டினுற் பொருள்களை இறுகப் பற்றிப்பிடித்துக்கொள்ளும் முட்கள் செறிந்த மீன்வகை.

**sea'-ox**, *n.* கடற் சிங்கம்.

**sea'-pad**, *n.* நட்சத்திர மீன்.

**sea'-pen**, *n.* இறகுபோன்ற கடல்வாழ் உயிரினம்.

**sea'-piece**, *n.* இயற்கைக் கடற்காட்சி ஓவியம்.

**seapi'et**, *n.* செந்நிற அலகும் காலுமுடைய நீந்து கடற் பறவை வகை.

**sea'-pig**, *n.* திமிங்கில இனச் சிறு கடல்விலங்கு வகை.

**sea'-pike**, *n.* ஈட்டிமீன்.

**sea'plane**, *n.* முந்நீர் விமானம், கடலிலிருந்தே ஏறி இறங்கும் அமைப்புடைய வானூர்தி.

**sea'port**, *n.* பட்டினம், துறைமுக நகரம்.

**sear**[1], *n.* துப்பாக்கித்தடுக்கு, துப்பாக்கிக் குதிரையின் பற்றுக் கொளுவி.

**sear**[2], *a.* இலைகள்-மலர்கள் வகையில் வதங்கிப்போன, உலர்ந்துவிட்ட; வயது வகையில் சோர்வுற்ற, வாட்டமடைந்த; *v.* வதங்கிப்போ, உணங்கிவிடு; சருகாக்கு; சூடிடு; சூடிட்டுத் தீயச்செய்; உணர்ச்சியறச் செய், மரத்துப்போகவை; (தொ.) the sear, பழுத்த இலை; வயது முதிர்ந்த பருவம், கிழப்பருவம்.

**search**, *n.* தேட்டம், தேடுதல்; தேடுமுயற்சி; நாடித்திரிதல்; புகுந்தாய்வு, சோதனை; தேர்வாய்வு, பரிசீலனை; ஆராய்ச்சி; தேடிக்காணும் முயற்சி; *v.* தேடு; நாடித்திரி; சோதனையிடு, புகுந்தாராய்; தடவிப்பார்; பரவலாகத் தேர்ந்துபார்; துருவி நோக்கு; நுணுகிக் காண முயலு; கிளறிக்காண முயலு; துருவிச்செல்; எங்கும் சென்று ஊடுருவு; கூர்ந்தாராய்; ஆராய்ச்சி செய்; முழுதுறழ்வாகப் பரிசீலனை செய்; (தொ.) be in search of, தேடிக்கொண்டிரு; right of search, நடுநிலை நாட்டுக்கப்பல்களை நிறுத்தி ஆய்வு செய்யும் உரிமை; search for, search of, நாடிய தேட்டம்; நாடிய ஆராய்வு.

**search'ing**, *n.* தேடுதல்; ஆய்தல்; கூர் ஆய்வு; ஊடுருவு நோக்கு; துளைப்பு, துளைத்துச் செல்லல்; *a.* தேடுகிற; ஊடுருவுகிற; (தொ.) searchings of heart, மனச்சான்றின் குத்தல் காரணமான ஐயுறவு மயக்கதயக்க ஊசலாட்டம்.

**search'light**, *n.* நீடொளி, எதிர்க்கதிர் விளக்கம், பாவொளி விளக்கம், ஒளி எதிரொளிக் கதிர்களைக் கற்றையாக ஒருமுகப்படுத்தும் ஒளி விளக்கம்; பாவொளி, எதிரி விமான முதலியவற்றை இருளிற் காண உதவும் கூம்பொளி விளக்கத்தின் ஒளிக்கற்றை.

**search'-party**, *n.* தேடுங்குழு, காணமற்போனவற்றைத் தேடிக் காண்பதற்குரிய குழாம்.

**search'-warrant**, *n.* சோதனை எழுத்தாணை.

**sear'ing-iron**, *n.* சூட்டுக்கோல்.

**sea'-room**, *n.* கப்பல் திருப்புதுறை, கடலில் கப்பல் திரும்புவதற்கு வாய்ப்பான இடம்.

**sea'-salt**, *n.* கடலுப்பு.

**sea'-scape**, *n.*=sea-piece.

**sea'-shore**, *n.* கடற்கரைப் பகுதி; (சட்.) வேலை ஏற்ற இறக்க இடைத்தளக்கரை.

**sea'sick**, *a.* கடற் குமட்டல் கோளாறுடைய.

**sea'sickness**, *n.* கடற் குமட்டல்நோய், கடலிற் கப்பல் இயக்கத்தால் ஏற்படும் குமட்டல்நோய்.

**seaside'**, *n.* கடலடுத்த இடம்; நற்கரை, உடல் நலத்திற்குகந்த நிலையான கடற்கரை வாழ்விடம்; நற்பாக்கம், விடுமுறைக் காலத்தில் தங்கும் வாய்ப்புடைய உடல் நலத்திற்குகந்த கடற்கரையிடம்.

**sea'-sleeve**, *n.* கணவாய் மீன், துரத்தப்பட்டால் கறுப்பு நீர்மத்தை வெளிப்படுத்தி மறையும் மீன்வகை.

**seas'on**, *n.* பருவகாலம், ஆண்டின் பெரும் பொழுதுகளில் ஒன்று; பருவம், செவ்வி; வேளை, உரிய தறுவாய்; குறிப்பிட்டகால எல்லை, வரையறையுடைய காலம்; பருவ முறை, வளர்ச்சி-வளம்-விலைவாசிநிலை-செயல்-நிகழ்ச்சி முதலியவற்றிற்குரிய இயல்பான காலம்; *v.* பக்குவப்படுத்து; கலந்து பதப்படுத்து; சுவைப்படுத்து; தனிச்சுவையூட்டு; முதிர்வுறச் செய்; காலத்தால் உரம் பெறுவி; தேர்ச்சியுறுவி; அனுபவ அறிவுந் திறமையும் உண்டுபண்ணு; தனித்திறமூட்டு; தனிப்பண்பு தோய்வி, பண்பூட்டித் தனித்திறம் உடைய தாக்கு; பழக்கப்படுத்து, சூழ்நிலைக்கேற்ற இயைவுத்திற மூட்டு; நகைத்திறத்தால் விறுவிறுப்பூட்டு; மாற்றுச்சுவை யேற்று; மிதப்படுத்து; முனைப்பு நீக்கி வழங்குதற்குரியதாக்கு; தனிச்சுவைக்கு உரியதாயியலு; (தொ.) a word in season, செவ்வியறிந்து கூறப்படுஞ் சொல்; close season, விலங்கு வகை வேட்டையாடப்படுவது தடுக்கப்பட்டுள்ள கால எல்லை; in season, கனிந்த, சரியான முதிர்ச்சியடைந்த, பயன்படுத்தும் நிலையிலுள்ள; தின்னத்தக்க நிலையுடைய; விலங்குவகையில் கொல்லப்படுவதற்கு இசைவளிக்கப்பட்டுவிட்ட; in season and out of season, எப்பொழுதும், பொருந்தும் வேளையிலும் பொருந்தா வேளையிலும்; open season, வேட்டையாடுவது அனுமதிக்கப் படுகிற கால எல்லை; out of season, பொருந்தாத.

**seas'onable**, *a.* பருவகாலத்திற்குத் தகுந்த; பருவகாலத்திற்கு இயல்பான, பருவகாலத்தில் வழக்கமாய்க் காணப்படும் வகை சார்ந்த; தறுவாய்க்கேற்ற.

**sea'sonal**, *a.* பருவகாலத்திற்குரிய, பருவகாலத்திற்கேற்ற.

**sea'soning**, *n.* பதப்பாடு, பக்குவப்படுத்துதல்; பக்குவம் செய்யும் முறை; புதுச்சூழலுக்கு இணங்க வைக்கும் முறை; சுவையூட்டுவதற்காகச் சேர்க்கப்படும் பொருள், சம்பாரம், மாசாலை; வைர இழைப்புத்தூள், வைரக்கல் வெட்டும் வகையில் மணி இழைப்பவரின் இயந்திரத்திற்கு ஊட்டப்படும் வைரக்கல் தூள்; கருப்பூச்சு, பதனிட்ட சாயத் தோலிற்குரிய வெண்கருப் பொருள் பூச்சு.

**sea'sonless**, *a.* பருவகால வேற்றுமையற்ற.

**seas'on-tick'et**, *n.* பருவச் சுழல் சீட்டு.

**seat**, *n.* இருக்கை, ஆசனம்; நாற்காலி; அரியணை; விசுப் பலகை, மணை; சேணம், குதிரை மேலிருக்கை; குதிரை-மிதிவண்டி முதலியவற்றின்மீது அமர்வு முறை; இருக்கை அமர்வு; இருக்கை அடிப்பகுதி; இயந்திர ஆதாரப்பகுதி; பிட்டப்பகுதி, காற்சட்டைப் பிட்டப் பாகம்; இருக்குமிடம்; அமைப்பிடம்; பண்பு வகையில் ஆதாரம், மூல இடம்; நாட்டுப்புற மாளிகை; நாட்டுபுறத் தோட்ட மாளிகை; இருக்கை உரிமை; மன்ற அமர்வுரிமை; உறுப்பினர் நிலை; மன்ற உறுப்பினர் பதவி; *v.* அமர்வி; இருத்து; அமர்வுகொள்; இருக்கைகள் பொருத்து; குறிப்பிட்ட எண்ணிக்கையான இருக்கைகளை இணைத்து வை; குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய இருக்கையை உடையதாயிரு; நாற்காலியின் அடிப்பகுதியைச் சீர்செய்; காற்சட்டையின் பிட்டப் பாகத்தைச் சரி செய்; நிலைகொள்ளுவி; குறிப்பிட்ட இடத்திற் பொருத்து; (தொ.) seat a candidate, வேட்பாளரைச் சட்ட மன்றத்திற்குத் தேர்ந்தெடுத்தனுப்பு; seat machinery, இயந்திரத்தை ஆதாரங்களின்மேல் அமைவி; take a seat, உட்காரு.

**sea'-tang, sea'-tangle**, *n.* கடற்பாசி வகை.

**seat'ed**, *a.* இருக்கையினை உடைய; இருக்கைகள் வாய்ந்த; உட்கார்ந்திருக்கிற; இடங் கொண்ட; குறிப்பிட்ட இடத்திலுள்ள; நிலையான, நிலைத்திருக்கிற.

**seat'ing**, *n.* இருக்கைகளில் அமர்த்துகை; இருக்கைகள் இணைப்பு; இருக்கை ஒழுங்கமைவு; தாங்கும் மேற்பரப்பு; இருக்கைகளுக்கான மூலப்பொருள்களின் தொகுதி.

**sea'-toad**, *n.* அகன்ற வாயுடைய மீனுண்ணும் மீன்வகை.

**seat'stick**, *n.* உட்கார உதவக்கூடிய நடையூன்றுகோல்.

**sea'-urchin**, *n.* கடல் ஊமத்தை; முட்களுள்ள முட்டை வடிவான கூட்டினையுடைய கடல் உயிர்வகை.

**sea'-wall**, *n.* கடல் தடுப்புச்சுவர்.

**sea'-walled**, *a.* கடல் தடுப்பமைவுடைய; கடல் சூழ்ந்த.

**sea'ward**, *a.* கடல் நோக்கிய, கடல் திசையான; நடுக்கடல் நோக்கிய, ஆழ்கடல் நோக்கிய; *adv.* கடல் நோக்கி; ஆழ்கடல் நோக்கி.

**sea'wardly**, *adv.* கடல் திசையாக.

**sea'-ware**, *n.* கடற்பாசி உரம்.

**sea'-way**, *n.* கடல்நெறி, கப்பல் செல்லும் பாதை; கருங்கடல்.

**sea'weed**, *n.* கடற்பாசி.

**sea'-whip**, *n.* பவள மிலாறு.

**sea'-whistle**, *n.* ஊதுபைம்மீன், ஊதலாகப் பயன்படும் பையுடைய மீன்வகை.

**sea'-wife**, *n.* பாறைபற்றி வாழும் பற்களும் முட்செதிள்களும் உடைய பகட்டுவண்ண மீன்வகை.

**sea'-wind**, *n.* =sea-breeze.

**sea'-wing**, *n.* ஈரிதழ்த்தோட்டு நத்தை வகை

**sea'withwind**, *n.* கடற்பாசி வகை.

**sea'-wolf**, *n.* கடல்மீன் வகை; கடற் கொள்ளைக்காரன்.

**sea'woman**, *n.* கடற்கன்னி; கடலணங்கு.

**sea'worthy**, *a.* கடற்பயணத்திற்குப் பொருத்தமான; கடலோடும் கட்டுர வலிமையுடைய.

**seba'ceous**, *a.* கொழுப்புச் சார்ந்த; கொழுப்பினை உடைய; (தொ.) sebaceous duct, மயிர்ப்பை நெய்மக்குழாய்; sebaceous follicle, மயிர்மூட்டுப்பை; sebaceous gland, மயிர்ப்பை நெய்மச்சுரப்பி; sebaceous humour, மயிர்ப்பை நெய்மம்.

**sebes'tan, sebes'ten**, *n.* மருந்தாக முன்பு பயன்படுத்தப் பட்ட திராட்சை போன்ற பழம்.

*sec*[1], (பிர.) *a.* இன்தேறல் வகையில் உலர்வான.

**sec**[2], (சு. வ.) *n.* =secant.

**sec'ant**, *n.* வெட்டுக்கோடு, ஒன்றிற்கு மேற்பட்ட இடங்களில் வளைவரையை வெட்டும் நேர்க்கோடு; குறுக்கை, வட்டத்தில் தொடுகோட்டின் செவ்வெட்டுக் கோட்டிற்கும் ஆரக் கோட்டிற்கும் இடையே உள்ள வீதம், செங்கோண முக்கோணத்தின் பிறிது கோண வகையில் சாய்வரை அடிவரைகளின் வீதம்; *a.* வரைவகையில் வெட்டிச் செல்கிற.

**sec'ateur**, *n.* தழைக் கத்தரிக்கோல், செடி கொடிகளை வெட்டுவதற்கான பெரிய கத்தரிக்கோல்.

*secc'o*, (இத்.) *n.* சுவரோவியம், உலர்சாந்துமீது தீட்டப்படும் வண்ண ஓவியம்.

**secc'otine**, *n.* பசைநீர், பசைக்கு மாற்றீடாகப் பயன்படுத்தப்படும் நீர்மவகை; *v.* பசைநீர் கொண்டு ஒட்டு.

**secede'**, *v.* பிரிந்து செல், குழுவின் உறுப்பினர் பதவியினின்றும் முறையாக விலகிக்கொள்; திருச்சபையிலிருந்து வெட்டிக் கொண்டு செல்; கூட்டிலிருந்து விலகிவிடு; அரசியல் அமைப்பிலிருந்து பிரிந்துவிடு.

**seced'er**, *n.* பிரிந்து செல்பவர்.

**secern'ent**, *n.* (உட.) சுரப்பு உறுப்பு; சுரப்பூட்டும் மருந்து; *a.* சுரப்பு ஊக்குவிக்கிற.

**sece'ssion**, *n.* பிரிந்துசெல்லுதல்.

**seclude'**, *v.* விலக்கிவை, ஒதுக்கிவை; தனிமைப்படுத்து.

**seclud'ed**, *a.* ஒதுங்கிய; பிறர் பார்வையிலிருந்து விலகிய; சமுதாயத் தொடர்பற்ற.

**seclu'sion**, *n.* ஒதுக்கிவைப்பு; தனிமை; ஒதுக்கம்; சமுதாயத் தொடர்பின்மை; மக்கள் தொடர்பின்மை; தனிநிலை, பிறர் பார்வையிற் படாநிலை; கலந்துபழகா நிலை; ஒதுக்குப்புற இடம்.

**sec'ond**[1], *n.* நொடி, விநாடி; விகலை, கோண அளவு வகையில் கலையில் அறுபதில் ஒரு கூறு; (இசை.) சுர இடைவெளி; (இசை.) இலயம், இடைவெளிச்சுர இயைபு; பந்தய வகையில் இரண்டாமவர்; பந்தய வகையில் இரண்டாவது; இரண்டாவது குதிரை; மாதத்தின் இரண்டாம் நாள்; அடுத்தவர்; அடுத்தது; சிறப்புத் தேர்வில் இரண்டாம் வகுப்பு; சிறப்புத்தேர்வில் இரண்டாம் வகுப்பாளர்; இன்னொருவர்; இன்னொன்று; மற்போரில் ஒருபக்கத்தாரின் துணை ஆதரவாளர்; ஆதரவாளர்; *a.* இரண்டாவதான; ஒன்று விட்ட, ஒன்றுவிட்டடுத்த; மற்றொரு, மற்றும் இன்னொரு; கூடுதலான; மறுமுறையான; உடன்துணையான; உடன் நிரப்பான; துணைமையான; கீழடங்கிய; இரண்டாம் படியான; அடுத்தபடியான; மூலமல்லாத, கிளைவரவான; கிளை நிலையான; வருநிலையான, பிறிதின் சார்புடைய; போன்றுள்ள, போன்றமைந்த; உருவகவரவான, அணிநிலை வரவான; அடுத்தபடியான; தாழ்நிலையான, கீழ்நிலையுடைய; (இலக்.) முன்னிலையான, பேசுபவர் முன்னின்று கேட்பவரைக் குறித்த; *v.* ஆதரி; ஆதரித்துரை; வழிமொழி, பின் மொழிந்துரை; ஆதரவு வழங்கு; உதவு; கைகொடுத்து ஆதரி; மேம்படுத்து; மற்போரில் பக்கத்துணைவராகச் செயலாற்று; பின்பற்று; பின்பற்றி நட; பின்பற்றி ஒப்பிணைவாகு; குறைநிரப்பு; உடனின்று நிறைவாக்கு; (இசை.) உடனொத்துநின்று பாடு; *adv.* இரண்டாவதாக, இரண்டாமிடத்தில்; (தொ.) a good second, நெருங்கிப் போட்டியிடுபவர்; a second, the second, மாத வகையில் இரண்டாவது நாள்; at second hand, கேள்வி மூலமாக, இடையிலுள்ளவர்

**serene'ly**, *adv.* அமைதியாக, பரபரப்பின்றி.

**sereni'ty**, *n.* அமைதி, சாந்தம்.

**serf**, *n.* அடிமை, பண்ணையாள்.

**serf'age, serf'dom, serf'hood**, *n.* அடிமைநிலை, கொத்தடிமைத்தனம்.

**serge**, *n.* முறுக்கிய கம்பளிச் சாய்வரித் துகில்; (தொ.) silk serge, தையல் உள்வரிப் பின்னற்பட்டு.

**serg'eant**, *n.* (படை.) தண்டுத்தலைவர்; காவல்துறை முகவர், பொதுக்காவல் வீரருக்கும் காவல் மேலாளருக்கும் இடைப்பட்ட நிலையினர்; முற்கால வழக்கில் உயர்வழக்குரைஞர்.

**serg'eant-fish**, *n.* பக்கவாட்டுக் கோடுகளையுடைய கடல்மீன் வகை.

**serg'eant-maj'or**, *n.* முற்காலப் பெருந்தரப் படைத்துறை அலுவலர்.

**sergette'**, *n.* மெல்லிய சாய்வரிக் கம்பளித்துகில்.

**ser'ial**, *n.* தொடர்கதை; பருவவெளியீடு, நாளிதழ், பத்திரிகை; *a.* தொடர்வரிசை சார்ந்த; தொடர்வரிசையிலுள்ள; தொடர்வரிசையாகவுள்ள; தொடர்வரிசையான; தவணைகளாக வெளியிடப்படுகிற; பருவந்தோறும் வெளியிடப்படுகிற; அரும்பு வகையில் மிகைப்படியான; (தொ.) serial number, தொடரெண்; வரிசைமுறையிலுள்ள வெளியீடு; serial rights, தவணை வெளியீடுகளின் பதிப்புரிமை.

**ser'ialist**, *n.* தொடர்கதை எழுத்தாளர்; தொடர்வரிசை எழுத்தாளர்.

**serial'ity**, *n.* தொடர்வரிசைநிலை; வரிசை முறைமை.

**ser'ialize**, *v.* தொடர்வரிசையாக ஒழுங்குபண்ணு, தொடர்வரிசையாக வெளியிடு.

**ser'ially**, *adv.* வரிசைமுறையில், ஒன்றன்பின் ஒன்ருக.

**ser'iate**, *a.* தொடராகவுள்ள, ஒன்றன்பின் ஒன்ருய் வருகிற; *v.* தொடர்வரிசைப்படுத்து; வரிசை ஒழுங்குபடுத்து; ஒன்றன்பின் ஒன்ருய் வருதற்கு ஏற்பாடு செய்.

**ser'iated**, *a.* தொடர்வரிசையாக்கப்பெற்ற, ஒழுங்குவரிசைப்பட்ட.

**seriat'im**, *adv.* வரிசைமுறைப்படி, நிரல்பட; ஒன்றன்பின் ஒன்ருக; கூறுகூருக.

**seria'tion**, *n.* வரிசைமுறை அமைப்பு; வரிசைத்தொடர்பு; தொடர்வரிசை ஒழுங்கு; வரிசையில் அமைவிடம்.

**Ser'ic¹**, *a.* பண்டைக் கிரேக்க வழக்கில் சீனு சார்ந்த.

**ser'ic²**, *a.* பட்டுச்சார்ந்த.

**seri'ceous**, *a.* (தாவ., வில.) பட்டுப்போன்ற, மென்மையும் பளபளப்பும் வாய்ந்த, பளபளப்பான மென்துய் அடர்ந்த.

**se'riciculture, se'riculture**, *n.* பட்டுப்புழு வளர்ப்பு; பட்டு மூலப்பொருளாக்கம்.

**seriem'a**, *n.* உரத்த குரலுடைய பெரிய பாம்புண்ணிப் பறவை வகை.

**ser'ies**, *n.* தொகுதி, ஒத்தபொருள்களின் ஈட்டம்; தொடர், ஒன்றன்பின் ஒன்ருகவருஞ் செய்திகளின் தொகுப்பு; வரிசை, ஏற்ற இறக்கமுறையான ஒழுங்கமைவு; அணி, பொதுமை அடிப்படையான கோப்பிணைப்பு; நிரை, வரிசையாக அமைந்த பொருள்களின் கூட்டு; தொடர்வெளியீடு; ஒரே காலவெளியீட்டுத் தொகுதி; ஒரே பொருள்பற்றிய கட்டுரைத்தொடர்; ஒரே நிலைய வெளியீடுகளின் குழுமம்; ஒரே பெயருடைய வெளியீட்டுத் தொடர்; ஒரே பதிப்பாசிரியரின் கோப்பிணைப்புத் தொகுதி; ஏட்டுவரிசை, அஞ்சல்தலை வெளியீட்டுத் தொகுதி; தொடர்பு, தொடர்ந்துவரும் நிலை; (வில.) இனத்தொகுதி; (இய.) மின்கல அடுக்கு வரிசை; (மண்.) தள அடுக்குத் தொகுதி, பொதுப்பண்புகளையுடைய அடுக்குகளின் தொகுதி; (வேதி.) தனிமத்தொகுதி; சேர்மத்தொகுதி; (கண.) உருக்கோவை, பொதுக்கூறுடைய உருக்களின் இணைதொடர்; *pl.* ser'ies; (தொ.) arithmetical series, மடிப்பெருக்கத் தொடர், படிப்படியாக ஒரே அளவில் கூடிக்குறைந்துகொண்டே போகும் உருத்தொகுதி; geometrical series, விசைப்பெருக்கத்தொடர், படிதோறும் ஒரே வீதத்தில் கூடிக்குறைந்துகொண்டே போகும் உருத்தொகுதி; in series, ஒழுங்காய் ஒன்றன்பின் ஒன்ருக வருகிற.

**se'rif**, *n.* (அச்.) முனைக்கட்டு, எழுத்துருவில் விளிம்பிற்குக் கட்டுருக் கொடுக்கும் நுண்வரைமானம்.

**se'rin**, *n.* பாடும் பறவை வகை.

**serinette'**, *n.* கூட்டுப்பறவைகளுக்குப் பாடக் கற்பிக்கும் இசைக்கருவி வகை.

**sering'a**, *n.* பிரேசில் நாட்டுப் பால்மர வகை.

**serio-com'ic**, *a.* விளையாட்டுடன் வினைமை கலந்த; சிந்தனைக் களிகிளர்ச்சி வாய்ந்த; ஆழ்ந்த கருத்தினை மனத்துட்கொண்டு வேடிக்கையாக நடிக்கிற; கருத்துக் களி நாடக இயல்புவாய்ந்த.

**serios'o**, (இத்.) *adv.* (இசை.) இசைக்குழுவினருக்கு இடப்படும் கட்டளை வகையில் வீறமைவுடன், விழுமிய முறையில்.

**ser'ious**, *a.* கருத்தார்ந்த; மேற்போக்கியல்பற்ற, கருத்தாழமுடைய, நல்லுணர்வு நிலையிலுள்ள, களிமயக்கமற்ற; வீறமைவான, கிளர்ச்சியற்ற; வினைமையுடைய, காரிய மனப்பான்மை கொண்ட; வினைத்திட்பமுடைய; மனமார்ந்த, கருத்தூன்றிய; உள்ளார்ந்த அக்கறையுடைய; கவலை எடுத்துக்கொள்கிற; விளையாட்டுத்தனமற்ற, பொறுப்புணர்ச்சி வாய்ந்த; கேலியல்லாத, உளமார்ந்து கூறப்பட்ட; வெறும் புகழ்ச்சியற்ற; ஒளிவுமறைவற்ற; அற்பமல்லாத; பொதுநடைமுறையில் இல்லாத; செயல்நோக்குடைய; நன்காய்ந்தமைந்து முடிவுசெய்யத்தக்க; அசட்டையாயிராத, செயல் முனைப்பான; இடரார்ந்த, கவலையுடன் கவனிக்கப்பட வேண்டிய; சீரிய, உயர்நோக்குடைய; அறத்துறைச் சார்புடைய, ஒழுக்கமுறைத் தொடர்புவாய்ந்த; உலகியல் சார்பற்ற, ஆன்மிகத்தொடர்புடைய; சமயத்துறைச் சார்பான; இறுதி ஈடேற்றத்தில் கருத்துடைய; (தொ.) serious politician, நிறைமுனைப்புடைய அரசியல்வாதி, தம் முழு கவனத்தையும் ஆற்றலையும் அரசியலில் ஈடுபடுத்துகிறவர்.

**se'riph**, *n.* = serif.

**serj'eant**, *n.* முற்கால வழக்கில் உயர்தர வழக்கறிஞர்; (தொ.) Common Serjeant, லண்டன் மாநகர அலுவலர்.

**serj'eant-at-arms**, *n.* நகரசபை வினைமுறை அலுவலர்; நீதிமன்ற வினைமுறை அலுவலர்; பாராளுமன்ற வினைமுறை அலுவலர்.

**serm'on**, *n.* விளக்கப் பேருரை, செவியறிவுறூஉ; *v.* விளக்கப் பேருரையாற்று.

**sermonet', sermonette'**, *n.* சிறு சமயச்சொற்பொழிவு.

**serm'onize**, *v.* சமயச்சொற்பொழிவினை எழுதி உருவாக்கு; திருக்கோயில் மேடையுரையாற்று; விளக்கவுரையாற்று; ஒழுக்க அறிவுரை கூறு.

**seropur'ulent**, *a.* ஊனீருஞ் சீழுஞ்சார்ந்த.

**serosanguin'olent**, *a.* ஊனீரும் குருதியுஞ் சார்ந்த.

**se'rotine**, *n.* செந்தவிட்டு நிறம்வாய்ந்த வௌவால் வகை.

**serot'inous**, *a.* (தாவ.) பருவநிலை கடந்த, பருவத்திற் காலந் தாழ்த்துத் தோன்றுகிற.

**ser'ous**, *a.* ஊனீர் சார்ந்த; நிணநீர் போன்ற; நீர்த்த; மோர்த்தெளிவு போன்ற; (தொ.) serous membrane, (உள்.) உள்ளுறுப்புக்களின் உள்வரியாகப் பொதிந்துள்ள ஊனீர் தோய்ந்த மென்சவ்வு.

**serp'ent**, *n.* பாம்பு; பெரியவகைப் பாம்பினம்; நயவஞ்சகர், நம்பிக்கைக்கேடு விளைப்பவர்; கயவர், இழிந்த நோக்கங்களுக்காக ஒட்டியுறவாடுபவர்; முற்காலத் துளை இசைக் கருவி வகை; (தொ.) Pharaoh's serpent, பண்டை எகிப்தியர் வழங்கிய பழங்கால எரிபாம்பு வாணம், பாம்பு போல எரியும்போது நெளிந்து வளைந்து நீளும் வேதியியல் பொருள்; serpent lizard, பண்டைக்கிரேக்க வழக்கில் நச்சுப் பாம்பு வகை; குறுங்காற் பல்லியின உயிர்வகை; the old Serpent, பேயிறை; the Serpent, பேயிறை; வட விண்மீன் குழுக்களில் ஒன்று.

**serp'ent-charmer**, *n.* பாம்பாட்டி, மகுடி ஊதுபவர்.

**serp'ent-eater**, *n.* பாம்புண்ணிப் பறவை வகை.

**serp'ent-grass**, *n.* பனிப்புல், ஆல்ப்ஸ் மலைப்பகுதிக்குரிய செடி வகை.

**serpen'tiform**, *a.* பாம்பு வடிவான.

**serp'entine**, *n.* அடர்பச்சை நிறப் பாறை வகை; வண்ணப் பாறைவகை, பாம்புவண்ண மெருகுக் கல்; பனிச்சறுக்கு விளையாட்டு வகையில் உருமாறிய சறுக்கு தட நெளிவரை; *a.* பாம்பிற்குரிய, பாம்பு போன்ற; நெளிகிற, வளைய வளையச் சுற்றுகிற; வளைந்து வளைந்து செல்கிற; சூழ்ச்சி இயல்புடைய; நயவஞ்சகமான; *v.* வளைந்து வளைந்து செல்; அலைந்து திரி; (தொ.) serpentine dance, வளைந்து வளைந்தாடும் நடன வகை; serpentine verse, முதல் இறுதிச் சொற்கள் ஒத்த செய்யுள் வரி; serpentine wisdom, ஆழ்ந்த அறிவு; the Serpentine, ஹைடு பூங்காவில் (Hyde Park) உள்ள ஒப்பனை நீர்நிலை.

**serp'entlike**, *a.* பாம்பு போன்ற; *adv.* பாம்பு போன்று, வளைந்து வளைந்து.

**serp'ent's-tongue**, *n.* சூரல்வகை.

**serpi'ginous**, *a.* (மரு.) படைச்சுற்று நோயினாற் பீடிக்கப் பட்டுள்ள; படர்கிற.

**serpi'go**, *n.* படர்நோய், படை.

**serp'ula**, *n.* திருகுகுழற் சிப்பிப்புழு, பாறைகளில் திரள் திரளாகத் திருகுமறுகலான குழல் தோடுகளின் உள்ளே வாழும் கடற்புழு வகை; *pl.* serp'ulae.

**se'rra**, *n.* (உள்., தாவ., வில.) இரம்பப்பல் விளிம்புடைய உறுப்பு; வாட்பல் அமைவு; இரம்பப்பல் ஓரம்; *pl.* se'rrae.

**serradill'a**, *n.* கால்நடைத் தீவன மணப்புல் வகை.

**se'rrate**[1], *a.* (உள்., தாவ., வில.) இரம்பப்பல்போல் வெட்டப் பட்ட.

**serrate'**[2], *v.* (உள்., தாவ., வில.) இரம்பப்பல் விளிம்பு அமைவி.

**serra'tion**, *n.* இரம்பப்பல் விளிம்பமைப்பு.

**se'rrefile**, *n.* கூழைப்படைப் பின்வீரர்.

**se'rricorn**, *n.* (வில.) இரம்பப்பல் உணரிழை வண்டு வகை; *a.* இரம்பப்பல் விளிம்புள்ள உணரிழைகளையுடைய.

**se'rried**, *a.* படைவீரர் வகையில் தோளோடு தோளாக இடை யீடின்றி நெருங்கிய; மரவரிசை வகையில் உட்செறிந்த; மிடைந்து அடர்ந்த.

**serrif'erous**, *a.* (வில., தாவ.) இரம்பம்போன்ற உறுப் புடைய.

**se'rriform**, *a.* இரம்பம் போன்ற வடிவமைந்த.

**serriros'trate**, *a.* பறவை வகையில் இரம்பப்பல் விளிம்புள்ள அலகுடைய.

**se'rrulate, se'rrulated**, *a.* நேர்த்தியான இரம்பப்பல் விளிம் புடைய, சிறு வெட்டுக்கீறல் வரிசைகளையுடைய.

**ser'um**, *n.* மோர்த்தெளிவு; குருதியின் ஒளியூடுருவும் நீர்த்த பகுதி; ஊனீர், உடலில் உணவிலிருந்து ஊறும் கொழுப்புக் கலந்த வெள்ளை நிணநீர்; (மரு.) பண்டுவப்பொருளாகப் பயன்படுத்தப்படும் விலங்கின் குருதி நிணநீர்; (தொ.) serum sickness, நிணநீரூசியால் உண்டாகும் கொப்புளக் காய்ச்சல்.

**serv'al**, *n.* நெடுங்காற் பூனை வகை.

**serv'ant**, *n.* வேலையாள்; ஊழியர்; ஏவலர்; பணியாளர்; ஊழியத்துறை உறுப்பினர்; ஆர்வத்தொண்டர்; நாகரிகப் பணிவுக் குறிப்புச்சொல்; (தொ.) civil servant, படைத் துறை சாராத அரச அலுவலர், அமைதிக்கால அரச ஊழியர்; public servants, அரசினர் பணியாளர், அரசாங்க அலுவலர் கள்; servant of servants, தொண்டர்க்குத் தொண்டர், போப்பாண்டவரின் பட்டம்.

**serv'ant-maid**, *n.* வேலைக்காரி.

**serve**, *n.* பந்தாட்டத்தில் தொடக்கப் பந்தடி; முதற்பந்தடி முறை; *v.* வேலைசெய்; பணியாளாயிரு, தொண்டூழியஞ் செய்; ஏவல் செய்; பணியாற்று, பணித்துறையில் ஊழியஞ் செய், பணித்துறையில் அமர்ந்திரு; தொண்டாற்று; பொதுப்பணி செய்; கடமையாற்று; உதவு; உதவியாயிரு; தேவை நிறை வேற்று; தேவைகளுக்கு உதவு; பயன்படு; நல்ல பயன் உடையதாயிரு; தக்க கருவியாயிரு; மூலப்பொருளாய் அமை வுறு; நோக்கம் ஈடேற உதவு; காரியத்திற்குப் பயன்படு; தேவை நிறைவேற்றத்தக்கதாக அமைவுறு; போதியதாயிரு; சாதகமாயிரு; உணவுமேசை ஒழுங்கு செய்; உணவு மேசையிற் பணியாற்று; பரிமாறு, உணவு விளம்பு; உணவு பக்குவஞ்செய்து வழங்கு; சட்டப்படி ஆளிடம் கொண்டு சேர்ப்பி; பங்கீடு செய்து வழங்கு; பணித்துறைக்காலம் பணிசெய்து கழி; தண்டனைக் காலம் தண்டனை அனுபவித் துத்தீர்; இயந்திரம்-துப்பாக்கி முதலியவற்றின் வகையில் இடையறவுறுமற் பேணு; நடைமுறைப்படுத்திப் பேணு; பொலிக்குதிரை வகையில் பெடையினைப் பொலிவி; நடத்து; தக்கபடி எதிரீடு செய்; பந்தாட்ட வகையில் பந்தடி, பந்தினைக் கையேற்று எறி; (தொ.) as memory serves, நினைவு வரும்போதெல்லாம்; as occasion serves, தக்க தறுவாய்நோக்கி; serve a sentence, தண்டனையை முழுக் காலமும் அனுபவி; serve gun, serve battery, துப்பாக்கி-பீரங்கிகள் ஆகியவற்றைச் சுட்டுக்கொண்டேயிரு; serve notice on, சட்டப்படி அறிக்கையை உரியவரிடம் ஒப்படை; serve one a trick, ஏமாற்று; serve one right, பட்டது அவனுக்குத் தகும்; serve one's apprenticeship, பயிற்சி பெறு; serve one's time, வழக்கமான காலத்திற்குப் பதவி தாங்கியிரு; தண்டனையை முழுக்காலமும் அனுபவி; serve out, பகிர்ந்துகொடு, பாத்தீடு செய்; செய்ததற்குத் தக்க எதிரீடு செய்; தண்டி; serve rope, (கப்.) வடத் தைக் கயிற்றால் வரிந்துகட்டிக் காப்புச் செய்; serve tables, உயிர்த் தேவை நாடாது உடல் தேவையே கவனி; serve the devil, கொடியவனாயிரு; serve the Lord, serve God, சமயப் பற்றுள்ளவராயிரு, ஒழுக்க சீலனாயிரு; serve the purpose of, பதிலாகப் பயன்படத்தக்கதாயிரு; serve the turn, serve one's turn, serve the need, serve one's need, போதிய அளவு நன்கு பயன்படு; உடனடித் தேவைக்குப் போதியதாயிரு; serve time, சிறைத்தண்டனை முதலியவற்றை அனுபவி; serve two masters, முரண்பட்ட இரண்டு கோட்பாடுகளுக் கிடையில் பிரிவுறு; serve up, உணவை மேசைக்குக் கொண்டுவா; serve with the same sauce, செய்தபடியே திருப்பிச் செய்.

**ser'ver**, *n.* உணவு பரிமாறுபவர்; சமயகுருவினுக்குரிய வழிபாட்டுவினைத் துணைவர்; முதற் பந்தெறியாளர்; உணவுத்தட்டம்; உண்ணுதற்குரிய கவர்முள்-கரண்டி.

**serv'ery**, *n.* பரிமாற்றகம்.

**Serv'ian**, *n.* செர்பியா (Serbia) நாட்டவர்; செர்பியா நாட்டு மொழி; *a.* செர்பியா நாட்டிற்குரிய; செர்பியா நாட்டு மொழிக்குரிய.

**Serv'ian wall**, *n.* பண்டை ரோமாபுரியில் குடியரசிற்கு முற்பட்டகால அரசன் செர்வியஸ் டல்லியஸ் (Servius Tullius) கட்டிய மதில்.

**serv'ice**[1], *n.* பணி; வேலை; ஊழியம், சேவை; கடமை; கடப்பாடு; பணிநிலை; பொதுப்பணி; அரசியற்பணி; உத்தியோகம்; ஊழியம்; சார்புநிலை ஊழியம்; பணித்துறை; பணித்துறை ஊழியம், ஊழியத்துறை; பணித்துறைக்கடமை; பணிக்கடம், போர்ச்சேவை; போர்த்துறைப்பணி; பணித்துறை ஊழியர் குழு; பணித்துறைப்பழக்கம், பணித்துறை அனுபவம்; நீடித்த அனுபவம்; சமயவினைமுறைத் தொகுதி; பூசனை முறை; கூட்டுவழிபாடு; வழிபாட்டுமுறை; வழிபாட்டு வாய்பாடு; வழிபாட்டு இசையமைப்பு; வழிபாட்டுத் திருக் கூட்டம்; உணவுமேசைப் பணிவிடை; உணவுமேசைக் கருவி கலத்தொகுதி; ஒருமுறை பரிமாறிய உணவு; பரிமாறல் ஒழுங்கு; வேலையாள் நிலை; வேலையாள் தொழில்; வேலைபார்க்கும் நிலை; தொண்டூழியம்; பணி விடை; பண்ணைக்கடமை; பண்ணைக்கடமை ஊழியம்;

குடிவாரக் கடமை; போர்க்கடமை; பொதுத்தொண்டு; பொதுநலச் சேவை; சமுதாயப்பணி; மக்கள் நல உதவி; பற்றுர்வத் தொண்டு, விருப்ப ஊழியம்; வருதி, ஆணை ஒருக்கம், விருப்பம் நிறைவேற்ற ஆயத்தமாயிருக்கும் நிலை; ஆணை ஏற்று நடக்க விரும்பிக் காத்திருக்கும் நிலை; நட்புதவி; உதவிநலம், துணைநலம்; அருளுதவி; தொண்டுதவி; கையடைவு, கைவச வாய்ப்பு; வாய்ப்புவளம்; காதற்கடப்பாடு, காதற்சேவை; பயனீடு; உபயோகம்; வினைநலம்; பயனுதவி; வணக்கவழிபாடு; வழிபாட்டுக்கடமை; பணிவிணக்க அறிவிப்பு; வணக்கமுறை; வணக்க அறிவிப்பு; வாழ்த்தறிவிப்பு; வழங்கீடு; வழங்கீட்டமைவு, வழங்கீட்டுத் திட்டம்; மின்வலி-வானொலி முதலியவற்றின் வகையில் பயன் வழங்கீடு; பயன்வாய்ப்பு; உதவித்திட்டம்; வாடிக்கைத்துணை நல ஏற்பாடு, ஊர்திவகைகள்-கப்பல்-விமானம் முதலியவற்றின் வகையில் குறித்த நேரத்திற்குரிய போக்குவரவுத் திட்ட அமைப்பு; பணித்துறை ஊழிய ஏற்பாடு; முயற்சிவிரை வமைவு; கயிற்றுப்புரி காப்பிழை; கடன் கரைப்புச் செல வினம்; பந்தாட்டத்தில் முதற் பந்தெறி; முதற்பந்தெறிப் பாங்கு; முதற்பந்தெறியின் ஆள்வரிசை முறை; *a.* நிலப்படைத் துறை சார்ந்த; கடற்படைத்துறை சார்ந்த; வான்படைத் துறை சார்ந்த; வேலைக்காரர்களுக்கான; *v.* உந்துகலம் முதலியவற்றிற்கான சீர்க்காப்பு ஏற்பாடு செய்; சீர்க்காப்பு முறை செய்; ஒக்கீடு செய்துகொடு; (தொ.) active service, போர்வீரர் களப்பணி; செயற்களப்பணி; at your service, ஆணைகளுக்குக் கீழ்ப்படியக் காத்திருக்கும் நிலையில்; எவ்வகையாகப் பயன்படுத்தினாலும் ஏற்கும் நிலையில்; full service, திருக்கோயில் பாடகர் குழாம் நடத்தும் கூட்டுவழிபாட்டிசை நிகழ்ச்சி; has seen service, போரில் சண்டை செய்திருக்கிருர், போர்வீரராக அனுபவம் பெற்றிருக்கிருர்; கப்பலோட்டியாக அனுபவம் பெற்றிருக்கிருர்; நெடுங்காலம் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது; நீடித்த உழைப்பின் அடையாளங்கள் காணப்படுகின்றன; in active service, on service, போர்ப்பணி செய்யும் நிலையில்; personal service, நிலப்பண்ணையாட்சிமுறை; மேலாண்மைக்குரிய வணக்க முறைக்கடமை; ஆணை-பற்றுணை வகைகளில் நேர்முக ஒப்படைப்பு; plain service, படிக்கப்படும் வழிபாட்டு வாய்பாடு; ஒப்புவிக்கப்படும் வழிபாட்டு வாசகம்; service area, வானொலி வகையில் பயனீட்டையடைவதற்குரிய பரப்பெல்லை; service book, பணிச்சுவடி; service by publication, ஆணை-பற்றுணை முதலியவற்றை வீட்டில் ஒட்டி அல்லது செய்தித்தாளில் வெளியிட்டுத் தெரியப்படுத்தல்; service by substitution, ஆணை-பற்றுணை முதலியவற்றை அயலாரிடம் கொடுப்பது மூலம் வெளியிடுதல்; service dress, அலுவற் சீருடை; service flat, வீட்டு வாய்ப்புக்கள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள வாடகைக் குடியிருப்பு வரிசை; service hatch, உண்டி தட்டுக்கள் உட்செலுத்தப்படுவதற்குரிய உணவுக்கூடப் புடைவழி; service pipe, நீர்-வளி வகையில் தலைக்குழாயிலிருந்து கட்டிடத்திற்குச் செல்லும் தனிக்குழாய்; take into one's service, வேலைக்கு எடுத்துக்கொள்; take service with, ஒருவரிடம் பணியாளாக அமர்வுறு; the civil service, படைத்துறை சாராத பொதுநிலை அரசுப்பணி; the covenanted service, ஒப்பந்த ஊழியப்பணி; பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் படைத்துறை சாராத இந்திய அரசுப்பணி; the fighting services, the services, கடல்-நில-வான் படைத்துறைகள்; yeoman service, yeoman's service, பெரும்பணி, காலத்திற் செய்த நலம்.

**serv'ice²**, *n.* சிறுபழங்களையுடைய பேரியின மரவகை.

**serv'iceable**, *a.* பயன்படத்தக்க, பயனுடைய; பணிசெய்யும் விருப்பமும் ஆற்றலும் உள்ள; பணிசெய்யக்கூடிய; நீடித்து உழைக்கக் கூடிய; ஒப்பனைப் பொருளாகவன்றி முரட்டு உபயோகத்திற்குத் தகுந்த; சாதாரணமாகப் பயன்படுத்தித் தீர்க்கப்படுவதற்குரிய.

**serv'ice-berry**, *n.* பேரியின மரவகையின் சிறு காய்.

**serv'ice-book**, *n.* சமய வழிபாட்டுச் சுவடி; தோத்திரப் பாடற்சுவடி.

**serv'ice-line**, *n.* வரிப்பந்தாட்ட வகையில் பந்தெல்லை வரையறைக் கோடு.

**serv'ice-tree**, *n.*=service².

**serviette'**, *n.* மேசைக் கைகுட்டை.

**serv'ile**, *a.* அடிமைத்தனமான; அடிமை சார்ந்த; அடிமையாயிருக்கிற; அடிமை போன்ற, கெஞ்சுகிற, கீழ்த்தர உணர்ச்சியுள்ள, இழிவான; முழுவதும் பிறரைச் சார்ந்திருக்கிற;

**servil'ity**, *n.* கொத்தடிமைத்தனம்; மட்டில் குழைவு, மிகுதி வணக்கங் காட்டுகை.

**serv'ing-man**, *n.* ஏவலர், வேலைக்காரர்.

**serv'itor**, *n.* ஊழியன், வேலைக்காரன், கையாள்; பணி மாணவர், ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் கல்லூரி நிதியுதவி பெற்றுக் குற்றேவல் புரியும் பட்டம்பெறு மாணவர்.

**serv'itude**, *n.* அடிமை வேலை; வேலையாள் நிலை; அடிமைப் பண்பு; அடிமைப்பட்ட வாழ்வு; நாடு வகையில் அயலாட்சிக்கு உட்பட்ட நிலை; மட்டற்ற கீழ்ப்படிவு; கட்டாய உழைப்பு; வேண்டாக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டிருக்கும் நிலை; உள்ளத்தின் அடிமைப்பாங்கு; ஆன்மிக அடிமைத்தன்மை; (சட்.) பிறர் உரிமைக்கு இடந்தரும் உடைமைப் பொறுப்பு; (தொ.) penal servitude, கடுஞ்சிறையீடு.

**serv'o-mot'or**, *n.* கப்பல் இயந்திர இயக்கம் பின்னேக்குவிக்கும் துணைவிசைப் பொறி.

**ses'ame**, *n.* எள்ளுச்செடி; எள்ளு விதை; (தொ.) open sesame, அராபிக்கதையில் கடைதிறப்பு மந்திரம்; மாயத் திறவு.

**ses'amoid**, *n.* தசைப்பற்றெலும்பு; *a.* எள்விதை வடிவமுள்ள, கணுப்போன்ற.

**ses'eli**, *n.* (தாவ.) வாடா வெண்மலர்களையுடைய குடைப் பூங்கொத்துச் செடியினம்.

**ses'quialter**, *n.* (பூச்.) சிறிய பொட்டினை உள்ளடக்கிய பெரிய பொட்டு; *a.* ஒன்றரைக்கு ஒன்ருன; மூன்றிற்கு இரண்டு என்னுந் தகவுப்படியுள்ள; ஒன்று கூடிய எண்ணுடன் எண்ணிற்கு உள்ள தகவுப்படி சார்ந்த.

**sesquial'tera**, *n.* (இசை.) இரண்டிற்கு மூன்று என்னுந் தகவுடைய இடையீடு.

**sesquial'teral**, *a.* மூன்றிற்கு இரண்டு என்னுந் தகவுப்படியுள்ள.

**sesquibas'ic**, *a.* (வேதி.) உப்புவகையில் அடிமம் மூன்றுகாடி இரண்டெனும் தகவிணைவுள்ள.

**sesquicentenn'ial**, *n.* நூற்றைம்பதாவது ஆண்டு நிறைவு விழா; *a.* நூற்றைம்பதாவது ஆண்டு நிறைவு விழாவினைச் சார்ந்த.

**sesquinon'al**, *a.* பத்திற்கு ஒன்பது என்னுந் தகவுப்படியுள்ள.

**sesquiocell'us**, *n.* (பூச்.) தனக்குள் சிறிய பொட்டு உடைய பெரிய பொட்டு.

**sesquioctav'al**, *a.* ஒன்பதுக்கு எட்டு என்னும் தகவுப்படியுள்ள.

**sesquiox'ide**, *n.* (வேதி.) இரு மூவுயிரகை, அடிமம் இரண்டினுக்கு உயிரகம் மூன்று தகவுள்ள சேர்மம்.

**sesquipedal'ian**, *a.* ஒன்றரை அடி நீளமான; சொல் வகையில் எளிதிற் கையாளமுடியாத; படாடோபமான, கல்விச்செருக்கினைக் காட்டுகின்ற.

**sesquip'licate**, *a.* குழியத்துக்குப் பெருக்கம் என்னுந் தகவுப்படியுள்ள.

**sesquiquar'tal**, *a.* ஐந்துக்கு நான்கு என்னுந் தகவுப்படியுள்ள.

**sesquiquin'tal**, *a.* ஆறுக்கு ஐந்து என்னுந் தகவுப்படியுள்ள.

**sesquisep'timal**, *a.* எட்டுக்கு ஏழு என்னுந் தகவுப்படியுள்ள.

**sesquisex'tal**, *a.* ஏழுக்கு ஆறு என்னுந் தகவுப்படியுள்ள.

**sesquisulph'ide**, *n.* (வேதி.) இருமுக்கந்தகை, அடிமம் இரண்டுடன் கந்தகம் மூன்று தகவுள்ள சேர்மம்.

**sesquiter'tia**, *n.* (இசை.) நான்குக்கு மூன்று என்னுந் தகவுடைய இடையீடு.

**sesquiter'tial**, *a.* நான்குக்கு மூன்று என்னுந் தகவுப்படியுள்ள.

**ses'quitone**, *n.* (இசை.) ஒன்றரைச் சுரம் உள்ள இடைவெளி.

**sess**, *n.* வரி, தீர்வை ; *v.* வரி விதி.

**sess'ile**, *a.* (தாவ., வில.) மலர்-இலை முதலியவற்றின் வகையில் காம்பற்ற; பூங்கொத்து வகையில் தண்டற்ற; கண் வகையில் இமையடியில் பதிக்கப்பெறாத; நேரடியாக ஒட்டிய, அடியற்ற.

**se'ssion**, *n.* கூட்டத்தொடர்வு; விசாரணைத்தொடர்வு; மாமன்ற அமர்வு ; அமர்வுக்காலம் ; அமர்வுநேரம் ; கூடுகைக்கும் ஒத்திவைப்பிற்கும் இடைப்பட்ட பருவம் ; கூடுகைக்கும் கலைகைக்கும் இடைப்பட்ட தொடர் அமர்வு ; பல்கலைக்கழகப் பருவம் ; பல்கலைக்கழக ஆண்டு ; (தொ.) Court of Session, ஸ்காத்லாந்திலுள்ள மீயுயர் நீதிமன்றம் ; in session, அமர்வு நிலையில்.

**se'ssional**, *a.* கூட்டத்தொடர் சார்ந்த ; கூட்டமர்விருக்கைக் காலத்திற்குரிய ; (தொ.) sessional order, அமர்வுக்கால எல்லைக்குரிய கட்டளை.

**sess'ion-clerk'**, *n.* ஸ்காத்லாந்தில் திருக்கூட்ட முறைமன்ற அலுவலர்.

**sess'ion-house**, *n.* முறை அமர்வுமன்ற மனை, ஸ்காத்லாந்தில் குருமார் திருச்சபையின் திருக்கூட்ட முறைமன்றம்.

**se'ssions**, *n. pl.* காலாண்டுப் பருவ உலாவியல் நடுவர் மன்றக் கூட்டமர்வு ; (தொ.) petty sessions, உசாவிலா உடனடித் தீர்ப்புக்கான நடுவர் கூட்டிணைவமர்வு மன்றம்.

**sess'ions-house**, *n.*=session-house.

**ses'terce**, *n.* பண்டைய ரோமரின் வெள்ளி நாணயம் ; *pl.* sester'tii.

**sester'tium**, *n.* பண்டைய ரோமரின் மதிப்புத்தொகை நாணயம், ரோமரின் ஆயிர வெள்ளிக்காசு பண்டை மதிப்புத் தொகை ; *pl.* sester'tia.

**sester'tius**, *n.*=sesterce.

**sestet'**, *n.* அறுவர் கூட்டுக்குரிய இசை ; ஆறிசைக் கருவிகளுக்குரிய பொது இசை ; ஆறன்தொகுதி ; பதினுன்கடிப் பாடல் வகையின் இறுதி ஆறு அடிகளின் தொகுதி.

**sesti'na**, *n.* அறுவட்டச் சித்திரப் பா, ஆறடி அறுபாவுறுப்பு மூன்று அடியுடன் இறும் தொகையாப்பு வகை.

**set**, *n.* தொகுதி ; இனம், ஓரினக்கூட்டு ; குவை, ஒருதன்மையான பொருள்களின் குவியல் ; ஈட்டம், ஓரினப்பொருள்களின் வரிசை ; கணம், வகைப்படுத்தப்பட்ட கும்பு ; இணைகோப்பு, வகுப்பமைவுற்ற முழுத்தொகுதி ; குழுமம், ஒரு வகைப்பட்டவர்களின் கூட்டிணைவு ; கும்பல், திரள்குழு ; தனிக்குழு ; நடனக்குழாம் ; ஆடல்தொகுதி ; கருவிகல முழுத்தொகுதி ; நாடகத் திரையமைவு ; திரைப்படச் செயற்கைக் காட்சியமைவு ; கம்பியில்லாத் தந்தியின் அலைவாங்கமைவு ; போக்கு ; சார்பு, செல்திசை ; சாய்வு ; கருத்துப் பாங்கு ; கருத்துச்சாய்வு ; அமைவுநிலை ; நிலை அமைவு ; தோற்றம் ; சாயல் ; கோட்டம், நிலைத்த வளைவு ; நிலவியலில் பாறையடுக்குகளின் புடைசரிவு ; இரம்பப்பற் சாய்வு ; இரம்பப்பற் சாய்வளவு ; ஆடைத் தொங்கல்நிலை ; மடிவுநிலை ; இறுக்கம், இறுகமைவு ; இறுகுநிலை ; நெசவில் கழியடர்த்திநிலை ; இழையடர்த்திநிலை ; ஆடையின் இழையடர்த்தி வகை ; குறுக்கு வரிக் கம்பளியின் கட்டம் ; கம்பளிக் கட்டப்பாணி ; வேட்டைநாய் மோப்பச் சுட்டீடு ; சுவரில் கடைசி மேற்பூச்சு ; அச்சடர்த்தியமைவு, அச்சுருக்களின் இடைவெளி அமைவு ; வளைகரடியின் பொந்து ; பொருத்தம் ; பொருத்தமுறை ; பொருத்தச்செவ்வி ; பாவுகற்பாளம் ; பாவுதளக்கட்டை ; சுரங்கவழித் தாங்கு மரச்சட்டம் ; வலைத்துறை, நிலவர வலைகளுடன் கூடிய மீன்துறை ; நாற்று முளை, நடுகிளைக் கீற்று ; குத்தகை ; சுரங்கக் குத்தகைக்கூறு ; தொடுகூறு, சுரங்கத் தொழில் வெட்டுவேலைக்கூறு ; குத்துத்திருகு வகைமுறை ; சூழல் ஒத்தியைவமைவு ; மிகைக் கெலிப்பெண் ஆட்டத் தொகுதி ; (செய்.) கதிரவன் அடைவு ; (பே-வ.) உடலின் கட்டமைவு ; *a.* உறுதியான ; வரையறுக்கப்பட்ட ; விதிக்கப்பட்ட ; வேண்டுமென்றே மேற்கொள்ளப்பெற்ற ; முன்னரே துணியப்பட்ட ; முன்னேற்பாடான ; முன்னரே ஒழுங்கமைவு பெற்ற ; முன்னரே முடிவுசெய்யப்பட்ட ; திட்டமிட்ட ; நிலைத்த ; கட்டிறுக்கமான ; இறுகிய ; உறைந்த ; செறிவான ; விறைப்பான ; *v.* கதிரவன் முதலிய வான்கோளங்களின் வகையில் அடைவுறு ; வை ; கிடத்து, படுக்க வை ; இடு ; நிறுத்திவை ; நிறுவு, நிலைநாட்டு ; அமர்வி, உட்கார்த்திவை ; அமைத்துவை ; அமைவி ; மேல்வை ; படும்படிவை ; ஒன்றுபடும்படி செய் ; பொருத்து ; ஒட்டு ; இறுக்கு ; இணைவி ; சேர் ; கூட்டியிணை ; இசைவி ; பூட்டு ; பதியவை ; உட்பதித்து வை ; உள்வை ; உட்பொதி ; செருகு ; ஒழுங்குறுத்து ; செப்பஞ் செய் ; சரியாக வை ; சரிநிலைப்படுத்து ; வேண்டியபடி வளை ; தலைமயிரை ஈரப்பதத்தில் அலையலையாக்கு ; வேண்டிய உருக்கொடு ; சீராக்கு ; குறிப்பிட்ட நிலைக்குக் கொணர் ; அமர்த்து, நியமி ; ஆக்கு ; உருவாக்கு ; ஏவு, தூண்டு ; இயக்கு ; அமர்ந்து செய்யும்படி தூண்டு ; ஈடுபடுத்து ; ஒருமுகப்படுத்து ; முனைவி ; ஒருங்குவி, சித்தமாக்கு ; உறுதிசெய், நிலவரப்படுத்து ; முடிவுசெய் ; தீர்மானி ; முன்வை ; முன்கொணர்ந்து வை ; காட்டு ; முன்மாதிரியாகக் கொள்ளுவி ; இயங்கு ; இயக்கந் தொடங்கு ; நடைமுறைக்கு வா ; தொடங்கு ; நாடிச் சாய்வுறு ; கடல்நீர்வகையில் வேலை பொங்கு ; வேகமடை ; அடித்துச்செல் ; விசைப்படு ; புகுந்து பரவு ; ஏறிப்பரவு ; உருவாகு ; பக்குவமெய்து ; குதிர்வுறு ; முதிர்வுறு ; காய்ப்புறு ; முட்டைகளைக் குஞ்சு பொரிக்க வை ; குஞ்சுபொரிக்கும் நிலைபெறு ; இறுகு ; உறை ; உறைப்பாகு ; வேட்டைநாய் வகையில் விறைப்புற்று மோப்ப உணர்ச்சி காட்டு ; ஆடைவகையில் உடலோடு பொருந்தியமை ; ஆடற்கலைஞர் வகையில் எதிரெதிராக வந்து ஒழுங்குநிலையுறு ; ஆட்டங்களில் கெலிப்பெண் முடிவுசெய் ; (தொ.) set about, முனைவுறு, தொடங்கு ; set apart, ஒதுக்கிவை ; பிரித்துவை ; set aside, ஒதுக்கிவை ; தள்ளிவை, விலக்கு ; புறக்கணி ; அவமதி ; தள்ளுபடி செய் ; set at defiance, எதிர்த்து நில் ; எதிர்த்துத் தடு ; செல்லாததாக்கு ; set at liberty, set free, விடுதலை செய் ; விடுவி ; set at naught, கேலிசெய், அவமதி ; புறக்கணி ; set a watch, set the watch, வீரர்களைப் படைகாவலுக்கு நிறுத்து ; set axe to, வெட்டத் தொடங்கு, அழிக்க முற்படு ; set back, தடைசெய், முன்னேற்றத்தைக் குலை ; set by, ஒதுக்கிவை, வருங்காலத்திற்காகச் சேர்த்து வை ; உயர்வாக மதி, உயர்வாகப் போற்று ; set clock, set watch, சரியான காலங்காட்டும்படி கடிகார முட்களை வை ; set close, அச்சுருக்களை நெருக்கமாக அடுக்கு ; set down, எழுத்தில் எழுதி வை, பதிவுசெய் ; குறி ; set down as, என்று குறிப்பிடு ; set down to, விளைவிற்குக் காரணமாகக் கருது ; set eggs, முட்டைகளைக் கோழியிடம் அடைகாப்பதற்காக வை ; set eyes on, காணு, நோக்கு ; set fair, தட்பவெப்ப வகையில் நல்ல காலநிலையாய் அமை ; நல் அறிகுறியுடையதாயிரு ; set fire to, தீமூட்டு, எரி, கொளுத்து ; தூண்டியெழுப்பு ; set foot, மிதி ; நட ; set forms, முன்னேற்பாட்டோடு அமைக்கப்பட்ட வாய்பாடு வினைமுறைகள் ; set forth, தெரியச்செய் ; அறிவி ; விரித்துரை ; தெளிவுறுத்து ; அழகுசெய் ; பயணந் தொடங்கு ; set forward, முன்னேற்றத்திற்கு உதவு ; முன்னேறத்தொடங்கு ; set fracture, எலும்பு முறிவைச் சரிசெய்து பொருத்து ; set hen, கோழியை அடைகாக்கச் செய் ; set in, தோன்று ; எழு ; நடைமுறைக்கு வா ; நிலைபெறு ; set movement on foot, செயல் தொடங்கு ; set off, அழகொப்பனையாகப் பயன்படு ; முனைப்பாகத் தோன்றச்செய், கவர்ச்சியை மிகுதிப்படுத்து ; மீதார்வத்துடன் பேச அல்லது சிரிக்கத் தொடங்கு ; புறப்படு ; set on, தூண்டு ; தாக்கும்படி கிளறிவிடு ; மேல் விழுந்து தாக்க நாயை ஏவு ; set one at ease, கூச்சத்தைப்போக்கு ; கவலை

நீக்கி அமைதிப்படுத்து; set one in the way, நடத்திச்செல், வழிகாட்டு; தொடக்க உதவிசெய்; set one on his way, பாதிவழி உடன் செல்; set one right, தவறைத் தெளிவு படுத்து; கண்டித்துத் திருத்து; set one's cap at, கவர்ச்சி செய்ய முயலு; காதலர் அன்பைப் பெற முயற்சி செய்; set oneself to do, செய்யத்தீர்மானி; set one's face against, set oneself against, விடாமல் எதிர்த்து நில், ஆதரிக்க மறு; set one's hand, ஆவணத்திற் கையொப்ப மிடு, பொறிப்பிடு; set one's hand to task, வேலை தொடங்கு, ஆரம்பி; set one's heart on, set one's mind on, set one's hopes on, உறுதியாக விரும்பு; எதிர்பார், பெறத் தீர்மானி, பெற்றுவிடுவதென உறுதிகொள்; set one's house in order, தன்னைச் சீர்திருத்திக்கொள்; set one's life on a chance, உயிரைப் பணயம் வைத்தாடு, உயிருக்குத் துணிந்து இறங்கு; set one's teeth, பல்லைக் கடித்துக்கொண்டு உறுதியாயிரு; set one's wits to, உடனுக வாதாடு; உடனுகத் தாக்கிப் போட்டியிடு; தீர்வுகாண முயற்சிசெய்; set on fire, தீ மூட்டு; தூண்டு; set paper, தேர்வு வினத்தாள் அமை; set person against, எதிராகத் தூண்டு; மீது வெறுப்புண்டாக்கு; set persons at the ears, set persons at variance, set persons at loggerheads, சண்டைமூட்டு, கலகம் உண்டாக்கு; set piece, கம்பவேடிக்கை; set point, பாதி ஆட்ட வெற்றிக்கு மேல் ஒரு புள்ளியே தேவைப்படும் புல்வெளிப் பந்தாட்டவகை; set sail, கப்பல் வகையில் பாய் உயர்த்து, பயணந் தொடங்கு; set saw, இரம்பத்தின் பற்களுக்குப் புறச்சாய்வு கொடு; set scene, கெட்டிக் கட்டமைப்புக்காட்சி; set shoulder to wheel, தோள்கொடுத்து முயற்சிசெய்; set speech, உருவமைத்த பேச்சு; set teeth on edge, நடுக்க முறச்செய்; வெறுப்படையச்செய்; set Thames on fire, குறிப்பிடத்தக்க பெருங்காரியஞ் செய்; set the fashion, காலப்பாங்கிற்கு வழிகாட்டியாய் அமை; set the pace, முன்னேற்றத்திற்கு வழிகாட்டியாயமை; set thing against another, ஈடுசெய், சரிக்கட்டு, ஈடாக அல்லது சரி எடையாக மதிப்பிடு; set to, சுறுசுறுப்பாகச் செய்யத் தொடங்கு; முனைப்பாகத் தொடங்கு; set up, குரல்வகையில் எழுப்பு; கட்டியெழுப்பு, நிறுவு; தொடங்கி வை; நிலைகொள், நிலைபெறு; போதுமான அளவு கொடுத்துதவு; எதிர்ப்பைத் தெரிவி; நோய்-மனவாட்டம் முதலியவற்றினின்று மீளச் செய்; set up for, நடி, பாவனை செய்; set wide, நிறைய இடம்விட்டு அச்சடி; thick set, அடர்த்தியாக நெருங்கி வளர்ந்த வேலி.

**seta'ceous**, *a.* தடித்த கட்டை முள் மயிரான; தடித்த கட்டை முள் மயிருடைய; தடித்த கட்டை முள் மயிர் போன்ற வடிவுடைய.

**set'-back**, *n.* தடை; தடங்கல்; பின்னடைவு.

**set'-down**, *n.* எதிர்பாரா மறுதலிப்பு; திடீர்த்தாக்குதல்.

**setif'erous, seti'gerous**, *a.* தடித்த கட்டை முள் மயிரினை யுடைய.

**set'-off**, *n.* சரியான எதிரீடு; தூக்கியெடுத்துக்காட்டும் எதிர் வண்ணம்; சரிசெய்யும் எதிர்மாற்று; சரி எதிரெடை; அழகொப்பனை அணிமணி; (க-க.) மேலுள்ள அகன்று செல்லும் பகுதியோடு இணைக்கும் சரிவு உறுப்பு.

**set'on**, *n.* (அறு.) ஊடிழைமம், அறுவையில் சிறப்பாக விலங்குடல் தோலடியூடாக ஊருதல் தடுப்பிற்காகவும் செயற்கைப் புண்மூலம் மருந்துச் சீநீர் பெறுவதற்காகவும் ஊடு செலுத்தப்படும் மயிர் அல்லது இழையாலான துய்க்கற்றை; ஊடுசீநீர், ஊடிழைமம் வழிப் பெறப்படும் செயற்கைச் சீநீர்.

**set'on-needle**, *n.* (அறு.) ஊடிழைம ஊசி, அறுவையில் சிறப்பாக விலங்குடல் தோலடியில் ஊடிழைமம் செலுத்தப் படுவதற்குரிய கருவிபூசி.

**setose'**, *a.*=setiferous.

**set'-out**, *n.* தொடக்கம்; அணியடுக்கு, காட்சிக்கு அடுக்கப் பட்ட பொருள்கள்; ஒப்பனை உண்கல அடுக்கு.

**set square**, *n.* முக்கவர், செங்கோண முக்கோண வடிவ வரைகருவி; சமன்முக்கவர், இருசமகோளுடைய முக்கவர்; வியன்முக்கவர், ஒன்றின் இரட்டிப்பான இருகோள் முக்கவர்.

**sett**, *n.* நெசவில் கழியடர்த்திநிலை; இழையடர்த்திநிலை; ஆடையின் இழையடர்த்திவகை; குறுக்குவரிக் கம்பளியின் கட்டம்; கம்பளிக்கட்டப் பாணி; பாவுகற்பாளம்; பாவுதளக் கட்டை; குத்தகை; சுரங்கக் குத்தகைக்கூறு; தொடுகூறு, சுரங்கத்தொழில் வெட்டுவேலைக் கூறு; நிலவர வலைகளுடன் கூடிய மீன்துறை; வளைகரடிப்பொந்து; நகரவை ஆட்சி யமைப்பு; சரிசெய் கருவி; மட்டச் சுத்தி; வார்ப்புளி; திருகு கொளுவி; தெள்ளுகம்பி.

**settee'**[1], *n.* சாய்விருக்கை.

**settee'**[2], *n.* இரண்டுமூன்று பாய்மரங்களையுடைய நடுநிலக் கடலகக் கப்பல் வகை.

**sett'er**, *n.* வைப்பவர்; பொருத்துபவர்; சரிசெய்பவர்; பொருத்துவது; சரிசெய்வது; தூண்டுபவர்; தூண்டுவது; மோப்பமுனைப்பு நாய், விறைப்பால் மோப்ப உணர்ச்சி காட்டும் நாய்; மோப்பநாய் வகை; திருடர் உள்ளாள், ஆட்களை ஏமாற்றித் திருடரிடம் கொண்டு சேர்ப்பிப்பவர்; ஒற்றர்.

**sett'er-on**, *n.* தூண்டுவோர்.

**sett'erwort**, *n.* விலங்கறுவையில் அடித்தோல் ஊடிழைம மாக முன்பு பயன்படுத்தப்பட்ட வேரையுடைய செடிவகை.

**sett'ing**, *n.* கதிரவனின் அடைவு; பொருத்துதல்; சரி செய்தல்; பதித்தல்; பாட்டின் இசையமைப்பு; தாய்க்கட்டு, மணிப்பதிப்புக்குரிய பின்னணிக்கட்டு; எடுத்துக்காட்டும் சுற்றணைவு, பின்னணியமைப்பு; எடுத்துக்காட்டுஞ் சூழல்; பின்னணி; சுற்றுப்புறம், சூழல்; காட்சியமைவு, அரங்க மேடைப் பின்னணியமைப்பு.

**sett'ing-board**, *n.* மேவடை, ஆய்வியலுக்காகப் பூச்சி மாதிரிகள் பொருத்திவைக்கப்படுங் கட்டை.

**sett'ing-box**, *n.* மேவடை நிலைப்பெட்டி, ஆய்வியலுக்கான பூச்சிமாதிரிகள் பொருத்திவைக்கப்படுங் கட்டைகள் செருகி வைக்கப்படும் நிலைப்பெட்டி.

**sett'ing-lotion**, *n.* தொய்வுநீர்மம், மயிர் மடிப்புக்கு வேண்டிய ஈரப்பதமளிக்கும் நீர்மம்.

**sett'ing-needle**, *n.* மேவடைஊசி, பூச்சி மாதிரிகளைக் காட்சிக்கட்டையில் பொருத்துங் குண்டுசி.

**sett'ing-rule**, *n.* கைக்கோப்பணி, அச்சுத்துறையில் எழுத் துருக்களை முன்னீடாக எடுத்து அடுக்கப் பயன்படுங் கைக் கட்டை.

**set'tle**, *n.* இழுப்பறை நீள்சாய்விருக்கை, உயர்சாய்மானமும் கைகளும் அடியில் அறைப்பெட்டிகளும் உடைய விசிப் பலகை; ஏந்துவிளிம்புப் பாறை; *v.* குடியேறு, குடியமர்வுறு; குடியேற்று, குடியிருத்து; நாடு வகையில் குடியேற்றம் நிறுவு, வாழ்குடிப்படுத்து; நிலைகொள்; நிலையமைதி கொள்; நிலையான வாழ்க்கைமுறை மேற்கொள்; நிலையான ஒழுங்குநிலைகொள், நிலையமைதிக்குக்கொணர்; மீட்டு ஒழுங் கமைதிக்குக் கொண்டு வா; நிலையான படிவமுறு; இறுகு; தங்குவி; தங்கு; தங்கியிரு; படிவுறு; படிந்தமிழ்வுறு; இரிவுறு, மெல்ல அமுங்கு; அமுங்கி மட்டத்தில் தாழ்வுறு; இரு; அமர், உட்கார்; அமர்வி; அமைவுறுவி; அமைவுறு; மேல்வந்து அமைவுறு, வந்துபடிவுறு; அமைதிகொள்; போக்கொழி; இயக்கந்தவிர்; அலைவுதவிர்; உலைவு ஒழி; ஓய்வுறு; ஓய்வு கொள்; அமைதியுறு; கலங்கல் தெளிவுறு; சரிசெய்தமை; விட்டுக்கொடுத்தமை; சச்சரவு இணக்குவி; ஒத்திணக்குவி; ஒத்திணங்கிப்போ; இசைவுறு, இசைவுறுவி; நிலைபெறு; ஒருவழிக்குக் கொண்டு வா; ஐயத்திற்கிடமற்றதாக்கு; அறுதிசெய்; தீர்வு செய்; முடிவுசெய்; முடிவுக்குக் கொண்டு வா; உறுதி செய்; உறுதிப்படுத்து; தெளிவுபடுத்து; ஒத்துமுடிவுசெய்; ஒருங்கு ஒத்துக்கொள்; கடன்தீர்; விலைகபட்டியலுக்குப் பணம் கொடுத்துத்தீர்; கணக்குத்தீர்; தொல்லை தவிர்த்தொழி; ஒழித்துக்கட்டு; கொல்லு; (சட்.) தானமாக எழுதிக்கொடு; (சட்.) வாழ்நாட் காலத்திற்கென எழுதிவை; (சட்.) பாத்தமைவுசெய், உடைமை உரிமையையும் அனுபவ உரிமையையும் வேறுவேருகப் பிரித்தெழுதி வை;

(தொ.) settle down, அமைதியுறு; படிவுறு; தங்கு; குடியமைத்திரு; அமைந்தாராய்; settle for me, எனக்குப் பதிலாகப் பணஞ் செலுத்து; என் பட்டியலுக்குப் பணங்கொடுத்துதவு; settle in, இரவுதங்க ஒருங்கு; settle person, ஆளை எதிர் வாதத்தால் அடக்கு; ஆளைக்கொன்றெழி; settle property on, உடைமையை நிலையாக எழுதிவை; settle up, settle up accounts, கணக்குப்பார்த்துத் தீர்.

**set'tled,** *a.* முடிவு செய்யப்பட்ட; உறுதியான; நிலையான; நிலவரமான; நிலவரக் குடியிருப்பியல்புடைய; வீடுகுடியான; குடியேற்ற அமர்வுற்ற; அமைந்த; ஒழுங்குபட்ட; தொடக்கநிலை கடந்த; மிகு உயர்வுதாழ்வற்ற, திடீர் ஏற்றத்தாழ்வில்லாத; ஐயத்திற்கிடமற்ற; கணக்குத்தீர்ந்த; கால நிலை வகையில் அமைதியான; (தொ.) settled estate, குறிப்பிட்ட நிபந்தனைகளின்கீழ் குடியிருப்போரால் வாழ்நாள் முழுவதற்கும் வைத்துக் கொள்ளத்தக்க சொத்து.

**set'tlement,** *n.* குடியேறுதல்; குடியேற்றம்; குடியிருப்பு, தனிக்குடியிருப்புக் குழு; கூட்டுவாழ்வுக் குழு; தொழிலாளர் குடியிருப்புத் தொகுதி; சமுதாய ஊழியக் குடியிருப்புக் குழு; அறுதி செய்தல்; அறுதியீடு; உறுதிப்பாடு; முடிவு; தீர்வு; கடனடைப்பு; பட்டியல்; பண அடைப்பு; கடன் தீர்வுப்பணம்; இரிவு; நிலம்-கட்டிடம்-சுவர் ஆகியவற்றின் அமிழ்வு; வேறுபாடு தீர்வு; பூசல் தீர்வு; நடுநிலைத்தீர்ப்பு; ஒத்திசைவு, ஒப்பந்தம்; அமர்வு, நியமனம்; வசையீடு, நிலவர ஏற்பாடு; நிலவர வருவாய் ஏற்பாடு; உடைமை உரிமை பற்றிய முழு வாழ்நாள் ஏற்பாடு; உடைமை உரிமை பற்றிய நிலவர ஏற்பாடு; நிலவர ஏற்பாட்டுப் பத்திரம்.

**sett'ler,** *n.* குடியேற்றத்தார், குடியிருப்பாளர்; வந்தேறி, குடிவரவாளர், புதிது குடியேறியவர்; அறுதிச்செயல்; வாத வகையில் முடிவுறுத்துஞ் செய்தி; முத்தாய்ப்பு நிகழ்ச்சி; தீர்வுசெய்பவர், அறுதிசெய்பவர்; ஐயப்பாடு அகற்றுபவர்; நடுநிலைத் தீர்ப்பாளர், பூசல் இணக்குவிப்பவர்; படிவுக்கலம்; சுரங்கப் படிவுக் கருவி.

**sett'ling-day,** *n.* பங்கு விற்பனைக்களத்தில் அரைத்திங்கள் கணக்கெடுப்பு நாள்.

**set'-up,** *n.* கட்டமைப்பு; கட்டமைப்புத்தோற்றம்; நிறுவன அமைப்புமுறை.

**set'wall,** *n.* கருநீலம் அல்லது வெள்ளை மலரினையுடைய மருந்து மலர்ப்பூண்டு வகை.

**sev'en,** *n.* ஏழு; எழுவர்; ஏழு பொருள்கள்; ஏழு குறித்த சீட்டு; ஏழு என்னும் அடையாளம்; ஏழு குழாய்; எழுவர் தொகுதி; ஏழன் தொகுதி; (தொ.) at sixes and sevens, குழப்பமுற்ற நிலையில், செய்வதின்னதென்று தெரியாமல்; the seven sleepers, கிறித்தவப் பழமைமரபில் கிறித்தவர் ஒடுக்கப்பட்ட காலத்தில் தூங்கி 200 ஆண்டுகளுக்குப்பின் கிறித்தவ உலகில் விழித்த எழுவர்.

**sev'en-day,** *a.* ஏழுநாளைய, ஏழுநாட்களுக்கான.

**sev'enfold,** *a.* ஏழுமடங்கான; *adv* ஏழுமடங்காக.

**sev'en-gills,** *n.* சுறா மீன் வகை.

**sev'en-league,** *a.* ஒவ்வொரு காலடியிலும் ஏழு பெருங்கல் அதாவது இருபத்தொரு கல் தொலைவு இட்டுச்செல்லும் ஆற்றலுடைய; (தொ.) seven-league boots, சித்திரக்குள்ளன் கதையில் வரும் ஏழுமுப்பெருங்கல் தாண்டுகால் புதையரணம்.

**sev'enpence,** *n.* ஆங்கிலநாட்டின் ஏழு செப்புத்துட்டு மதிப்பு; ஏழு செப்புத்துட்டுக்கள்.

**sev'en-penny,** *n.* ஆங்கிலநாட்டின் ஏழு செப்புத்துட்டு மதிப்பு விலையுள்ள புத்தகம்; *a.* ஏழு செப்புத்துட்டு மதிப்புள்ள; ஏழுசெப்புத்துட்டுப் பெறுமானமுள்ள.

**sev'en-score,** *n.* நூற்று நாற்பது; *a.* நூற்று நாற்பது எண்கொண்ட.

**seventeen',** *n.* பதினேழு; *a.* பதினேழு எண்கொண்ட; (தொ.) sweet seventeen, பருவ அழகி.

**seventeenth',** *n.* பதினேழாவது; பதினேழாமவர்; பதினேழில் ஒன்று; *a.* பதினேழாவதான; பதினேழில் ஒன்றான.

**sev'enth,** *n.* ஏழாவது; ஏழாமவர்; ஏழன்கூறு, ஏழில் ஒன்று; (இசை.) கேள்வியின் கடைசி அரைச்சுரம்; கடைசிச் சுரம்; அரைச்சுர இடைவெளிஇசை; *a.* ஏழாவது; ஏழில் ஒன்றான; (தொ.) in the seventh heaven, இன்பத்தின் உச்சநிலையில், கழிபேரின்ப நிலையில்.

**sev'enth-day,** *n.* சனிக்கிழமை; *a.* சனிக்கிழமையை ஓய்வுத் திருநாளாகக்கொள்கிற; (தொ.) Seventh-day Adventists, திருவாயிர வருகைக் கோட்பாட்டாளர்.

**sev'enthly,** *adv.* ஏழாவதாக.

**sev'enties,** *n. pl.* எழுபதுக் குறிப்படையாளங்கள்; எழுபதன் தொகுதிகள்; (தொ.) the seventies, 70 முதல் 79 வரையுள்ள ஆண்டுக்காலம்.

**sev'entieth,** *n.* எழுபதாவது; எழுபதாமவர்; எழுபதன் கூறு; *a.* எழுபதாவதான, எழுபதன் கூறான.

**sev'enty,** *n.* எழுபது; எழுபதின்மர்; *a.* எழுபது எண் கொண்ட; (தொ.) seventy times seven, எத்தனையோ பல; (தொ.) the seventy, பத்தாம் வியூக்கின் மாணவர்கள்; 71 உறுப்பினர்களைக் கொண்ட பழைய ஜெருசலத்து மீயுயர் நீதிமன்றம்; எழுபது மொழிபெயர்ப்பாளரால் கி. மு 270-இல் ஆக்கப்பெற்ற பழைய ஏற்பாட்டின் கிரேக்க மொழியாக்கம்.

**sev'enty-five,** *n.* பிரெஞ்சு துப்பாக்கி வகை.

**sev'enty-four,** *n.* 74 துப்பாக்கிகளை உடைய போர்க்கப்பல் வகை.

**sev'er,** *v.* ஒட்டறு, வேறாகப் பிரி; இணைப்பகற்று, இடையறவுசெய்; இடையிட்டுப் பிரி; இணைபிரித்துவை; திற, இடையீடு அகலமாக்கு, விடர்த்து; பிள, துண்டாடு; வெட்டு; கூறுபடுத்து; வேறுபடுத்தி வை; அறுபடு; தொடர்பறுத்துக் கொள்; பிரிந்து செல்; தனித்து வேறாகு; வேறுபடுத்திக் காட்டு; வேறுபட்டு நில்; (சட்.) கூட்டுப்பிரி, தனித்தனியாக்கு; (சட்.) கூட்டிலிருந்து பிரிந்து தனித்துச் செயலாற்று.

**sev'erable,** *a.* ஒட்டறுக்கத்தக்க, வேறாகப் பிரிக்கத்தக்க; கூறாக்கத்தக்க; பிரித்தெடுக்கத்தக்க; துண்டாடத்தக்க; (சட்.) தனித்தனி இணைபிரித்துக்கொள்ளத் தக்க.

**sev'eral,** *pron.* குறிப்பிடத்தக்க சில பேர், மட்டான தொகையினர்; மேற்குறித்தவருள்ளும் சிலர்; மேற்குறிப்பிட்டவற்றுள்ளும் சில; இரண்டிற்கு மேற்பட்டவர்; இரண்டிற்கு மேற்பட்டவை; *a.* பலவேறுபட்ட; தனித்தனியாக தத்தமக்குரிய பல்வேறு வகைப்பட்ட; தனித்தனி பல்வேறான; பல்வேறுமுறையான; இரண்டினுக்கு மேற்பட்ட; ஒன்றுக்கு மேற்பட்ட; (தொ.) collective and several responsibility, கூட்டாகவும் தனித்தனியாகவும் பொறுப்புடைய; joint and several bond, ஒருவருக்கு மேற்பட்டவரால் கையெழுத்திடப்பெற்று ஒவ்வொருவருக்கும் முழுக்கடன் தொகையும் தரும் கட்டுப்பாடுடைய பத்திரம்; several estate, பிறருடன் பங்கிடப்பெறாத சொத்து.

**sev'erally,** *adv.* வேறுவேறாக; தனித்தனியாக; யாவும் ஒவ்வொன்றாக.

**sev'eralty,** *n.* பங்கிடப்பெறாத உடைமைத் தனிமுழு நிலை.

**sev'erance,** *n.* துணிப்பு; துண்டாட்டம்; இணைபிரிப்பு; இணையறவு; கூட்டுப்பிரிவீடு; ஒற்றுமை குலைவு; (சட்.) வழக்கில் கூட்டுச்சிதைவு; உரிமைகளின் கூட்டுப்பிரிப்பு.

**severe',** *a.* கடுமுறையான; கடுமைமிக்க; கடுவினைமை வாய்ந்த; கண்டிப்புமிக்க; கடுகடுத்த; கடுவெறுப்பான; கண்ணோட்டமற்ற; கடூரமான; வெட்டென்ற, நிட்டூரமான; விட்டுக்கொடுப்பற்ற; மட்டுமழுப்பலில்லாத; செயலழுத்தமிக்க; வளையாத, தொய்வற்ற; கட்டிறுக்கமான; கடுஞ்செட்டான, கடுஞ் சிக்கனம்வாய்ந்த; கட்டெளிமைவாய்ந்த; மிகையற்ற; செறிவடக்கமான; தற்செறிவான; கடுந் தன்மறுப்பு வாய்ந்த; கடுந்தூய்மை வாய்ந்த; இன்பத்தொடர்பற்ற; இன்பம் அறவே துறந்த; அணியமை வொழிந்த; அழகுநயக் கூறற்ற; கடுஞ்சோதனைக்குரிய; விடா உழைப்புடைய; ஊக்கத்தளர்வற்ற; கடுமுயற்சிக்குரிய; மிகவருந்துகிற; பொறுத்தற்கரிய; அருந்திறல் வேண்டப்படுகிற; கடுவீறுடைய; கேலிக்கிடமற்ற; கடுவசையார்ந்த.

**severe'ly**, *adv.* கடுமையாக ; கண்டிப்பாக ; முழுவெறுப்புடன் ; (தொ.) let severely alone, முழு வெறுப்புடன் ஒதுக்கிவை, அறவே புறக்கணி.

**seve'rity**, *n.* கடுமை; வன்கண்மை; கடுகடுப்பு; கடுமுனைப்பு; உழைப்புத் தளராமை ; கடுஞ்சோதனை ; கடுந்தூய்மை ; செறிவடக்கம் ; தற்செறிவு ; கட்டெளிமை ; அழகுநயமற்ற தன்மை ; கடுஞ்செட்டு ; கட்டிறுக்கம் ; கண்ணோட்டமின்மை ; நெகிழ்வற்ற தன்மை ; செயலழுத்தம்.

**sev'ery**, *n.* (க-க.) பல்கெழுவளைவுக் குவிமாட மோட்டுப் பகுதி.

**Sev'ille o'range**, *n.* கசப்புக் கடார நாரத்தை வகை

**Se'vres**, *n.* சீனமங்குப் பாண்ட வகை.

**sew**, *v.* தை, தையலிடு ; ஊசி நூல் கையாளு ; தையற்பொறி இயக்கி வேலைசெய் ; துன்னூசியால் துன்னு ; தைத்திணை; தைத்து மூட்டிடு; தைத்து உருவாக்கு; ஆடை ஆக்கு; தையலிட்டுப்பொதி ; தைத்து அடை ; தைத்து உள்ளே மூடிவை; புத்தகத் தையல் போடு; அறுவைத் தையல் போடு; தைத்து ஒட்டுப்போடு ; (தொ.) sew one up, (பே-வ.) முற்றிலும் சோர்வுறுத்து ; வெறிமயக்கூட்டு.

**sew'age**, *n.* கழிநீர் ; சாக்கடை நீர் ; *v.* சாக்கடை நீரால் எருவூட்டு ; (தொ.) sewage farm, சாக்கடை நீர் எருவாகப் பயன்படுத்தப்பெறும் வயல் ; sewage grass, சாக்கடை நீர் உரமாக ஊட்டப்பட்ட நிலத்தில் விளையும் புல்.

**sewell'el**, *n.* அமெரிக்க நாட்டுச் சிறு வளை விலங்கு வகை.

**sew'en**, *n.*=sewin.

**sew'er[1]**, *n.* தைப்போர்.

**sew'er[2]**, *n.* (வர.) விருந்து மேசைப் பரிசாரகர்.

**sew'er[3]**, *n.* பொதுச்சாக்கடை, நகரக் கழிவுநீர்க் குழாய்,கழிவுநீர்க்கால் ; *v.* சாக்கடையில் கழியச் செய் ; சாக்கடை அமை.

**sew'erage**, *n.* சாக்கடைத் தொகுதி ; சாக்கடை அமைப்பு

**sew'er-gas**, *n.* சாக்கடை வளி.

**sew'er-rat**, *n.* பெருச்சாளி வகை.

**sew'in**, *n.* நன்னீர் உணவு மீன் வகை.

**sew'ing**, *n.* தையல், தைப்பு வேலை.

**sew'ing-machine**, *n.* தையற்பொறி.

**sew'ing-press**, *n.* புத்தகம் தைக்கும் பொறி.

**sewn**, *v.* sew என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**sex**, *n.* பால், பால் வேறுபாடு; பால் வேறுபாட்டுத் தன்மை; பால் வேறுபாட்டுணர்வு ; பாலார், பால்சார்ந்தவர் தொகுதி; *a.* பால் வேறுபாடு சார்ந்த ; ஒருபாலாருக்குரிய ; பால் வேறுபாடு காரணமான; *v.* பால்வகை திரித்துணர்; (தொ.) sex antagonism, பால்வேறுபாட்டு முரண் ; sex appeal, பால் வேறுபாட்டுக் கவர்ச்சி, பெண்பாலாரின் கவர்ச்சி ; sex instinct, பால் இயல்பூக்கம் ; sex urge, பாலுணர்ச்சி வேகம் ; இணைவிழைச்சு எழுச்சி ; the fair sex, the gentle sex, the softer sex, the weaker sex, the sex, பெண்பாலர் ; the sterner sex, ஆண்பாலர்.

**sexagenar'ian**, *n.* 59-க்கும் 70-க்கும் இடைப்பட்ட வயதுடையவர் ; *a.* 59-க்கும் 70-க்கும் இடைப்பட்ட வயதுடைய.

**sexagen'ary**, *a.* அறுபதிற்குரிய ; அறுபது அறுபதாய்ச் செல்லுகிற.

**Sexages'ima**, *n.*=Sexagesima Sunday.

**sexages'imal**, *a.* அறுபதின் கூருன ; அறுபதிற்குரிய ; பின்னங்களின் கீழ் எண் அறுபதின் விசைமடங்காகக்கொண்ட ; (தொ.) sexagesimal fractions, அறுபதின்மானச் சிற்றெண், கீழ் எண் அறுபதின் விசைமடங்காக வரும் பின்னம்.

**sexages'imally**, *adv.* அறுபதறுபதாய்ச் செல்லும் முறையில், அறுபதின் விசைமடங்காக.

**sexages'imals**, *n. pl.* அறுபதின்மானச் சிற்றெண்கள், கீழ் எண் அறுபதின் விசைமடங்காய்வரும் பின்னங்கள்.

**Sexages'ima Sunday**, *n.* திருநீற்றுப் புதனுக்கு முற்பட்ட ஞாயிற்றுக்கிழமை.

**sex'angle**, *n.* அறுகோணம், அறுகட்டம்.

**sexang'ular**, *a.* அறுகோணமான, அறுகட்டமான.

**sexcenten'ary, sexce'ntenary**, *n.* ஆறு நூற்றாண்டு, அறுநூறு ஆண்டுத்தொகுதி ; *a.* அறுநூற்றிற்குரிய; ஆறு நூற்றாண்டுக் காலத்துக்குரிய ; அறுநூறாவது ஆண்டுவிழாவுக்குரிய.

**sexdi'gitate**, *n.* ஆறு விரல்.

**sexenn'ial**, *a.* ஆறாண்டுகாலம் நீடிக்கிற ; ஆறாண்டிற்கு ஒருமுறை நடைபெறுகிற.

**sexenn'ially**, *adv.* ஆறாண்டிற்கு ஒருமுறையாக.

**sex'fid**, *a.* (தாவ.) அறு கவராய் வெடித்த; ஆறு பிரிவாய்ப் பிளந்த.

**sex'foil**, *n.* அறு கவரணி ; (க-க.) ஆறிதழ் வடிவம் ; ஆறிலைக் கூருன பலகணி ; (தாவ.) ஆறிலைச் செடிவகை.

**sexill'ion**, *n.* பத்துக்கோடி கோடி கோடி கோடி கோடி, ஒன்றன்பின் முப்பத்தாறு சுன்னங்களையுடைய பேரெண்.

**sexisyllab'ic**, *a.* சொல்வகையில் ஆறு அசைகளையுடைய.

**sexisyll'able**, *n.* ஆறசைச் சொல்.

**sexival'ent**, *a.* (வேதி.) ஆறு நீரக அணுக்களுடன் இணைகிற ; ஆறு இணைதிற இணைமங்களையுடைய.

**sex'less**, *a.* பால் பாகுபாடற்ற.

**sex'lessness**, *n.* பால் பாகுபாடின்மை.

**sexpart'ite**, *a.* ஆறாகப் பிரிக்கப்பட்ட.

**sext**, *n.* ஆறும் மணி வழிபாட்டுமுறை, உச்சிக்கால வழிபாடு.

**sex'tain**, *n.* ஆறடிச் செய்யுள்.

**sex'tan**, *a.* காய்ச்சல் வகையில் ஐந்துநாள் இடையிட்டு வருகிற.

**sex'tant**, *n.* கப்பலோட்டியின் கோணமானி ; நிலப்பரப்பாய்வுக் கோணஅளவுகருவி ; வட்டத்தின் ஆறில் ஒரு பகுதி.

**sexte**, *n.*=sext.

**sextet', sextette'**, *n.* (இசை.) அறுகுரலிசைப்புத் தொகுதி; (இசை.) ஆறுபாடகர் குழு ; (இசை.) ஆறு இசைக்கருவிக் கோப்பு ; (இசை) ஆறு இசைக்கருவியாளர்கள் கூட்டணி; ஆறன் தொகுதி ; அறுவர் தொகுதி.

**sextill'ion**, *n.*=sexillion.

**sex'to**, *n.* அறுமடி ஏடு, தாள்களை ஆறாய் மடிப்பதால் ஏற்படும் புத்தகம் ; *pl.* sex'tos.

**sextode'cimo**, *n.* பதினாறன் மடியேடு, தாள்கள் பதினாறாய் மடிக்கப்பட்ட புத்தகம்; பதினாறன் மடிப்புத்தாள்; பதினாறன் மடிப்புமுறை.

**sex'ton**, *n.* திருக்கோயில் மணிப்பணியாள், ஆடையணி திருக்கலக் காப்பும் புதைகுழி மேற்பார்வையும் உடைய திருக்கோயில் அலுவலர்.

**sex'ton-beetle**, *n.* முட்டைக்காக இறந்த விலங்குடல் சேமிக்கும் வண்டு வகை.

**sex'tuple**, *n.* ஆறுமடங்கு ; ஆறுமடங்குத்தொகை ; *a.* ஆறுமடங்கான ; *v.* ஆறுமடங்காக்கு ; ஆறால் பெருக்கு ; அறுமடங்காகு.

**sex'tus**, *n.* ஆண்பள்ளி வழக்கில் ஒரே பெயருடைய பலரின் பெயரடை மரபில் ஆறாமவன்.

**sex'ual**, *a.* பால் வேறுபாடு சார்ந்த ; பால்களுக்குரிய ; (தாவ.) வகை திரிபமைப்பு வகையில் பால் வேறுபாடு அடிப்படையாக வகுத்தமைக்கப்பட்ட ; (தொ.) sexual affinity, பாற்பொருத்தம், பாலீடுபாடு ; இருபாலாரும் தம்முள் கொள்ளுங் கவர்ச்சி ; sexual selection, பால் தேர்வு.

**sex'ualism**, *n.* பாலழுத்தம், பால்வகைக்கவனம்.

**sex'ualist**, *n.* பால்வகைச் செய்தி ஆர்வலர் ; (தாவ.) வகை அமைப்பில் பால் வேறுபாட்டுமுறையைப் பின்பற்றுபவர்.

**sex'uality**, *n.* பாற்றன்மை, ஆண்பெண்பாற் பண்பு.

**sex'ualize**, *v.* பாற்றன்மையூட்டு, பால்தன்மையுடையதாகக் குறிப்பிடு ; பாற்பண்புடையதாகக் கருது.

**sex'ually**, *adv.* பாற்றன்மைச் சார்பாக.

**sexval'ent**, *a.*=sexivalent.

**Seym**, *n.* போலந்துநாட்டு மாமன்றம்.

**sforzan'do**, (இத்.) *adv.* இசை இயக்கக் கட்டளைமரபில் அழுத்தத்துடன்.

**sfuma'to**, (இத்.) *a.* ஓவிய வகையில் தெளிவற்ற புறக் கோடுடைய.

**shabb'y**, *a.* அருவருப்புத் தருகிற; அலங்கோலமான, நைந்து கிழிந்த, கந்தலடைந்த; தாறுமாறாகக் கிடக்கிற; பஞ் சடைந்த தோற்றமுடைய; படுமோச நிலையிலுள்ள; அரு வருப்பான நடத்தையுடைய; மிகப் பழுதுபட்ட; இடிந்து தகர்ந்த, பாழடைந்த; மானக்கேடான; பஞ்சையான; உலோ பித்தனம் வாய்ந்த; கீழ்த்தரமான, கயவாளித்தனமான; இழிதக்க, கேவலமான; அற்பத்தனமான.

**shabb'y-genteel**, *a.* வறுமைமறைத்துச் செல்வத் தோற்றம் பேணும் அவதியுடைய.

**shab'rack**, *n.* குதிரைப்படைச் சேணத்துணி.

**shack**, *n.* குடில்.

**shac'kle**, *n.* கொண்டி, பூட்டு ஏற்கும் நிலைக்குறடு; சங்கிலி பூட்டும் கொளுவி; பூட்டின் துறட்டி; கைகால்களின் தளை களை இடையே இணைக்கும் நீள் தொடர்க்கண்ணி; தந்திக் கம்பிகளின் இடைகாப்புத்தடை: *v.* தளையிடு; தடங்கல் செய்; விலங்குமாட்டு.

**shac'kle-bolt**, *n.* முளையில்மாட்டுந் தாழ்; மாட்டு துறட்டி யுடைய பூட்டு.

**shac'kle-joint**, *n.* கொளுவிமாட்டி எலும்பு, மீன் வகை களில் மற்றோர் எலும்பின் துளையில் சென்று மாட்டும்படி அமைந்த வளைய வடிவான எலும்பு.

**shac'kles**, *n. pl.* விலங்கு; தளை; தடைகள், கைக்கட்டுக் கள்; காற்கட்டுக்கள்.

**shad**, *n.* முட்டையிட ஆற்றெதிர் செல்லும் உணவு மீன் வகை.

**shadd'ock**, *n.* கிச்சிலி இன மரவகை; கிச்சிலி இனப் பழவகை.

**shade**, *n.* நிழல், நிழலிடம்; குளிர்தடம்; ஒளி ஒதுக்கம்; ஒதுக்கிடம்; அரையிருள்; அந்தி மயங்கிருள்; நிழல் மறைப்பு; நிழலீடு, ஒளிமறைவு; அரைக்கருநிறம்; கருமை கலந்த நிறம்; நிறத்திண்மை; ஓவிய நிழற் கூறு; ஒளிக்குறைத் தடம்; பண்போவிய வகையில் நலிக்குறை, குறைபாட்டுக்கூறு; வருணனை வகையில் சோர்வுக்கூறு; சாயல், வண்ணப் படிநிலை; சாயலுடைய பொருள்; தரம், படிநிலை; நுண்படி, படிநுணுக்கம்; நுண்ணிடை வேறுபாட்டு நுட்பம்; நுண் திறம், பண்புநுணுக்கம்; மிகச் சிறிதளவு; நிழலுருவம், ஆவி; போலித்தோற்றம்; பொருட்போலி; அரை மெய்ம்மை; மங்கல்நிலை; தெளிவற்ற தன்மை; சாயை, உருநிழல்; படி நிழல், நிழற்படிவு; நிழல்வரை, உருநிழற் கோடு; முகத்தின் சோர்வுநிலை; மறைக்கும் பொருள்; தட்டி; திரை; சாளரத் திரை; சாளர மேற்கட்டு; கண்ணுடிப் பொதிகலம்; மூக்குக் கண்ணுடி ஒளிகாப்புச் சில்லு; ஒளித்தடை; வெப்புக்காப்பு; ஒளித்தடைப்பொருள்; வெப்புக்காப்புப் பொருள்; *v.* நிழல் கொடு; வெயில் மறை; ஒளிதடு; ஒளிபடாமல் இடையீடு செய்; தட்டியிட்டுத் தடு; திரையிட்டு மறை; திரையிட்டு ஒளி மட்டுப்படுத்து; கூரொளி மறைப்புச்செய்; கவித்துக் கூரொளியை மட்டுப்படுத்து; நிழலிடு, நிழல்படிவி; நிழலிட்டு மறை; நிழலிட்டு மங்குவி; இடைநின்று ஒளிதடு; நிழலடி, இருளாக்கு; இருள் மயங்குவி; முகக்களை குன்றுவி; கருமை யாக்கு; கருமை மயங்குவி; நிழலீடு செய்; ஓவிய நிழற்கூறு தீட்டு; ஓவியத்தில் கரிக்கோலால் நிழல்வரியடி; ஓவியத்தில் வண்ணக்கோலால் நிழற்படி வண்ணந் தீட்டு; நிழற் கறை யிடு; நிறத்தைப் படிப்படியாக மாற்று; நிறவகையில் படிப் படியாக மாறுபடு; படிப்படியாகத் திண்மையாக்கு; படிப் படியாக மென்மையாக்கு; படிப்படியாகத் திண்மையாகு; படிப்படியாக மென்மையாகு; கருத்தைப் படிப்படியாக மாற்று; கருத்து வகையில் படிப்படியாக மாறுபடு; (தொ.) go down to the shades, மாண்ட ஆவிகள் வாழும் கீழுலகு செல், இற, கீழ் உலகிற்குச் சென்றுவிடு; is the shadow of a shade, முற்றிலும் பொருண்மையற்றது, மெய் யெனத் தோற்றி மயக்கந்தரும் போலியானது; throw into the shade, மேம்பட்ட ஒளியால் இருந்த இடம் தெரியாமற் செய், புகழால் விஞ்சு, மேம்படு.

**shade'less**, *a.* நிழலில்லாத.

**shades**, *n. pl.* கதிரொளி மறைவிடம்; வெயில் ஒதுக்கிடம்; குளிர்தலம்; தேறல் கிடங்கு, மதுக்கல நிலவறைக்கூடம்.

**shad'iness**, *n.* நிழலார்ந்த நிலை; இரண்டக நடைப்பான்மை.

**shad'ing**, *n.* நிழலடிப்பு; நிழலீடு; நிழற்கோட்டு வரை; நிழலீட்டு வரைவு; நிழலீட்டுத் தோற்றம்; ஒளிநிழல் வேறு பாட்டுத் திறம்; ஒளிநிழற்பாடு; ஒளிநிழற்பாட்டு வரைவு; நுண்படி வேறுபாடு; நுண்படி வேறுபாடு காட்டல்; நிறை நுண்படி வேறுபாடு; நுண்படிக் குறைமானம்; இசைக் கருவியில் ஒலித்திரிபமைவு; விலையில் சிற்றிறக்கம்.

**shadoof'**, *n.* ஏற்றம், துலாமரம்.

**shad'ow**, *n.* உருநிழல், சாயை; நிழல்; படிநிழல், நிழற்படிவு; கருமைச்சாயல்; ஒளிமறைவு; இருட்படிவு; ஒதுக்கம்; தொலைமறைவு; புரியாநிலை; நிழலடிப்புக்கூறு, ஓவியத்தின் ஒளிமறைவுப்பகுதி; எதிர்நிழல், எதிருருவம்; படிமாதிரி; உருப்படிவ மாதிரி; ஒருசார் ஒப்பு; விடாத்தொடர்புப் பொருள்; பிரியாத் துணைவர்; பின்செல்பவர்; உழையர்; பணியாள்; ஒற்றர், விடாது பின் தொடர்ந்து ஒற்றுபவர்; இல்பொருள்; மாயை; வெறுந்தோற்றம்; பொருட்போலி; ஆட்போலி; ஆவியுரு; ஆவி, பேய்; மிகத்தேய்ந்த வடிவம்; மிக மெலிந்தவர்; சார்பு, ஆதரவு, துணைப்பாதுகாப்பு; முன் னறிகுறி; சிறுதடம், சிறிய அடையாளம்; சிறிதளவு; சிறு தூசு; துன்பம்; (கப்.) இளங்காற்றின்போது பயன்படும் சிறு பாய்; *v.* முன்குறித்துக்காட்டு; நிழலிட்டுக்காட்டு, உருவரையாகக் குறி; குறிப்பாகத் தெரிவி; உருவகமாகக் காட்டு; வருவதுணர்ந்து கூறு; விடாது தொடர்; விடாது தடம் பின்பற்று; பின்தொடர்ந்து ஒற்றுடு; (செய்.) மூடாக் கிட்டுக் கவிந்துபரவு; (தொ.) may your shadow never grow less, மெலிந்து போகாதிருப்பாயாக; இன்றுபோல் என்றும் இருப்பாயாக; not a shadow of, ஒரு சிறுதூசுகூட இல்லாது; shadow cabinet, பதவியேற்கத் தயாராக உள்ள எதிர்க்கட்சித் தலைவர்கள் குழு; shadow factory, போர் நெருக்கடியைச் சமாளிப்பதற்காக முன்கூட்டித் திட்டமிடப் பட்டுக் கட்டப்பட்ட தொழிற்சாலை; shadow of freedom, போலிச் சுதந்திரம்; valley of the shadow of death, கடுந் துன்பகாலம்.

**shad'ow-boxing**, *n.* கற்பனை எதிரியோடு பயிற்சிக் குத்துச் சண்டை.

**shad'ow-fight**, *n.* பயிற்சிக்காகக் கற்பனையெதிரியோடு போடுஞ்சண்டை; கற்பனைக்காக நிழலுருக்களுடன் இடுஞ் சண்டை; கற்பனைப்போராட்டம்.

**shad'ow-fig'ure**, *n.* நிழலுருவம், உருவின் நிழல்தோற்றம்.

**shad'ow-pan'tomime**, *n.* திரைநிழற் காட்சிக் கூத்து.

**shad'ow-play**, *n.* திரைநிழற் காட்சி நாடகம்; திரை நிழற் காட்சி.

**shad'ow-stitch**, *n.* ஏணிப்படி போன்ற பின்னல்வேலை வகை.

**shad'y**, *a.* நிழலார்ந்த; நிழலிலுள்ள; நிழல் தருகிற; மறை வான; ஒளிவுமறைவுப்பாடுடைய; கறையிணையுடைய; ஐயத்திற்கிடந் தருகிற; விரும்பத்தகாத; இன்னுத.

**shaft**, *n.* அம்பு; கணைக்கோல்; ஈட்டியின் காம்பு; எறிபடை, குந்தம்; கருவியின்பிடி; இறகின் தண்டு; கதிரில் ஒளிக் கால்; மின்னலின் கீற்று; சுரங்க வாயிற்குழி; சுரங்க வாயிற் சாய்குழி; ஊதுலைச் சுருங்கைக்குழாய்; சுரங்கச் செல்குழாய்; இயந்திரத்தின் சுழல்தண்டு; ஏர்க் கால்; நுகக்கால்; சிலுவையின் அடி; புகைக்கூண்டின் மோட்டுத்தண்டு; வண்டியின் ஏறுகால்; தூணின் நடுக் கம்பம்; தூபி, கோரி; கம்பம்; ஆதாரக் கம்பம்; பரு உறுப்புக் களை இணைக்கும் இணைக்கொம்பு; எலும்பின் இணைதண்டு; தூண்தொகையின் தனிக்கம்பம்; தூபியின் முனைமுகடு;

**shoe'less**, *a.* புதைமிதியற்ற.

**shoe'-lift**, *n.* =shoe-horn.

**shoe'-maker**, *n.* செம்மார், சக்கிலியர், புதைமிதி செய்பவர்.

**shoe'-string**, *n.* =shoe-lace.

**shog'un**, (ஜப்.) *n.* குடிவழிப் பதவிவகித்த முற்கால ஜப்பானிய படைத்துறைத்தலைவர்.

**shone**, *v.* shine என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**shoo**, *v.* 'சூ' என்று குரலெழுப்பு, பறவைகளை 'சூ'க் குரலெழுப்பி வெருட்டு ; *int.* பறவை வெருட்டு ஒலிக்குறிப்பு.

**shook**[1], *n.* மரவடை அடுக்கு, மிடாய்களை அடுக்காக வைக்கும் மர அமைவு ; *v.* மிடாய்களை மரவடை அடுக்கில் வைத்துச் செறி.

**shook**[2], *v.* shake என்பதன் இறந்தகாலம்.

**shoot**, *n.* வேட்டம், வேட்டையாடுதல் ; வேட்டைக் குழாம் ; வேட்டைச் செலவு ; வாடகை வேட்டைக்களம் ; அம்பெய்வு ; வேட்டெறிவு, துப்பாக்கி சுடுதல் ; எறிவு ; பாய்வு ; குறியிலக்குப் பந்தயம் ; வேட்டுப் போட்டிப் பந்தயம் ; திடீர்த் திடீர்க் குத்துவலி ; தறியின் ஓட இயக்கம் ; ஊடிழை ; இளந்தை, தாவரத்தின் புது வளர்ச்சி; முளை, தளிர்; மிலாறு, இளந்தளிர்க் கொம்பு ; அடிக்கிளை ; அடித்தண்டிலிருந்து வளரும் கொப்பு ; இளஞ்சினை, வேரிலிருந்து வளரும் கிளை ; விழுது, கிளையிலிருந்து வளரும் வேர் ; ஆற்றுச் சறுக் கோட்டம் ; ஆற்றுச் சரிவோடை ; சரக்குச் சறுக்குதளம் ; *v.* எய், அம்பு எறி ; வேட்டிடு, துப்பாக்கியால் சுடு ; மேல் விழும்படி கணை ஏவு ; மேல்விழுந்து துளைக்கும்படி துப்பாக்கிக் குண்டுவீசு ; குறிவைத்து எய் ; குறிவைத்து வேட்டிடு; எய்து கொல்லு ; துப்பாக்கியால் சுட்டுக்கொல்லு ; துப்பாக்கியால் சுட்டுப்பொசுக்கி அடக்குமுறை செய் ; எய்ய நன்கு பயன்படு ; வேட்டிடும் வகையில் நன்கு பயனளி ; எய்யப் பெறு; வேட்டுவகையில் வீசப்பெறு; வேட்டையாடு; வேட்டையாடும் பழக்கம் கொண்டிரு ; எறி ; வலையை வீசி எறி ; தாழ்ப்பாளை வீசித்தள்ளு ; சட்டென வெளியேற்று ; வேகமாக வெளிப்படுத்து ; திடுமென வெளியிடு ; வீசி உமிழ் ; வேகமாக விசிக்கொட்டு ; பீறிட்டு எறி ; நோக்கிப் பாய்ச்சு ; நோக்கிப் பீற்று ; சறுக்குதளத்தில் சறுக்கிச் செல் ; சறுக்குதளத்தில் சறுக்கிப் பாய்வுறு ; சறுக்கோட்டத்தில் சறுக்கிச் செல் ; பாய் ; பாய்ந்து செல் ; பீறி வெளியேறு ; பாய்ந்தொழுகு ; தெறித்தோடு ; மரப்பந்தாட்டப் பந்துவகையில் துள்ளாது நிலமட்டத்தில் தெறித்துச் செல் ; வேகமாக வெளிவா ; உருகிப்பாய் ; ஒளிவகையில் கதிர்வீசி எறி ; ஒளிக்கதிர் வகையில் எறிவுறு ; விரைந்து முன்செல் ; போட்டியில் விஞ்சி முன்னேறு ; உந்தினில், துருத்திக்கொண்டு நீண்டிரு ; முந்துறுத்து, முந்துற நீட்டு ; முளை, தளிர் விடு ; கிளைப்புறு ; விரைந்து வளர் ; மேலெழு, உயர்வுறு; திரைக்காட்சித்துறையில் படமெடு, படமாக்கு ; தச்சுத்தொழில்துறையில் தளவிளிம்புகளைத் துல்லியமாக எய்தப் பெறுவி ; உதைபந்தாட்ட வகைகளில் இலக்கு நோக்கிப் பந்தினை எறி ; படகு-கப்பல் முதலியவற்றின் வகையில் பாலம் முதலியவற்றினூடாக வேகமாகக் கொண்டு செல்லப்பெறு ; காட்சிக் கோணந்தோறும் வண்ணங்கள் மின்வெட்டும்படி நெசவுசெய்துருவாக்கு ; வண்ணங்களைத் திறம்படக் கலந்தியைவி ; (இழி.) விரும்புவதை விரும்பியபடியே செய்துகொள்ளு; (தொ.) shoot ahead, போட்டியாளரிடையே முன்னிலைக்கு விரைந்து செல் ; shoot a match, குறியிலக்கு நோக்கித் துப்பாக்கிவேட்டிடும் பந்தயத்தில் ஈடுபடு ; shoot Niagara, உயிர் வெறுத்து கடைசி முயற்சிசெய் ; shoot one's linen, சட்டைக்கை முகப்பை உதறி மணிக்கட்டை வெளிக்காட்டு ; shoot out one's lips, உதட்டைப் பிதுக்கி வெறுப்பைக் குறித்துக்காட்டு ; shoot rubbish, வண்டி-தொட்டி முதலியவற்றிலிருந்து குப்பையைச் சரித்துக் கொட்டு ; shoot the game over estate, உரிமை நிலத்தில் வேட்டையாடு ; shoot the moon, (இழி.) வாடகை தருவதைத் தவிர்க்க இரவோடு சரக்குகளை வெளியேற்று ; shoot the sun, (கப்.) வான் கோணமானிமூலம் நண்பகல் வேளையில் ஞாயிற்றின் சேணுயர்வு கணித்துக்காண் ; shoot through, நோவு வகையில் நரம்பூடாக ஏறிச்செல்லு; shoot up, விரைந்து வளர் ; உயரமாய் வளர் ; விலை வகையில் உயர்வுறு; ஊர்-நகர்-வட்ட-மாவட்டங்கள் வகையில் துப்பாக்கியால் சுட்டுப்பொசுக்குவது மூலம் கிடுகிடுக்கச்செய்து அடக்குமுறை செய் ; tooth shoots, பல் இடையிடையிட்டு நோவு தருகிறது.

**shoot'able**, *a.* வேட்டுக்கு இலக்காகத்தக்க ; வேட்டையாடுவதற்கு இடமாகத்தக்க.

**shoot'er**, *n.* எய்பவர் ; எய்வது ; வேட்டிடுபவர் ; வேட்டெறிவது ; குண்டு எறிவது ; வீசி எறிபவர் ; வீசி எறிவது ; பாய்பவர் ; பாய்வது ; மரப்பந்தாட்டத்தில் தெறிபந்து ; வேட்டுக்கலம்.

**shoot'ing**, *n.* எய்வு ; வேட்டெறிவு ; எறிவு ; பாய்வு ; சுடப்பெறல் ; படம் பிடித்தல் ; பந்தாட்டத்தில் வெற்றிப்புள்ளி எடுத்தல் ; சுட்டுப்பொசுக்கப் பயமுறுத்தல் ; தச்சு வகையில் இணைக்கும் பலகையோர இழைப்பு ; சிறப்பாகக் குறிப்பிட்ட வாடகைமீது நில எல்லையில் வேட்டையாடும் உரிமை ; வேட்டையாடுவதற்காகக் குத்தகைக்கு விடப்பட்ட நிலம் ; குத்துவலி, விரைவேக வேதனை ; *a.* எய்கிற ; வேட்டெறிகிற ; பாய்கிற ; திடீரென்று வருகிற ; வேட்டைச் சார்ந்த ; (தொ.) shooting star, எரிமீன், விண்வீழ் மீன் ; shooting war, கெடுபிடிப் போருக்கு மாறாக சுடுதலே நடைபெறும் போர்.

**shoot'ing-boots**, *n.* வேட்டைப்பருவ காலத்தில் அளிக்கப்படும் புதைமிதியடி.

**shoot'ing-box**, *n.* வேட்டைவாணரின் வேட்டைப்பருவத் தங்கிடம்.

**shoot'-ing-coat**, *n.* வேட்டைப் பருவ மேற்சட்டை.

**shoot'ing-gallery**, *n.* துப்பாக்கிப் பயிற்சி விளையாட்டுக்குரிய மணக்கூடம்.

**shoot'ing-iron**, *n.* (இழி.) துப்பாக்கி.

**shoot'ing-jacket**, *n.* வேட்டைப்பருவச் சொக்காய்.

**shoot'ing-range**, *n.* எய் பயிற்சித் தளம்.

**shop**, *n.* கடை ; விற்பனைக்களம் ; சில்லறை விற்பனை இடம் ; பட்டறை, தொழிற்களம் ; கருவித் தொழிலகம் ; பணிக்களம் ; செயற்களம் ; இடம் ; தொழில்துறை ; வாழ்க்கைத் தொழில் ; தொழிற்றுறை; துறை, பிரிவு; நிறுவனம்; தொழில் முறை ; செயல்முறை ; தொழில்முறைப்பேச்சு ; பேச்சுவிவகாரம் ; *v.* பொருள்கள் வாங்குவதற்குக் கடைக்குச் செல் ; வாங்குவதற்கு விற்பனைக்களம் நாடு ; வேலை கொடு; (இழி.) சிறைப்படுத்து; (இழி.) காட்டிக் கொடுப்பதன் மூலம் சிறைப்படுவி ; (தொ.) all over the shop, தாறுமாறாக ; குழப்பமாக, குழம்பிக்கிடக்கும் நிலையில் ; come to the wrong shop, தவறான ஆளிடம் செல் ; தவறான இடம் நாடு ; engineering shop, பொறிநுட்பப் பட்டறை ; pattern shop, தொழில் மனையின் மாதிரி அமைப்பாண்மை அரங்கம் ; shut up shop, செயல் நிறுத்திக்கொள் ; sink the shop, தொழில்துறைப் பேச்சுத்தவிர் ; தன்தொழில்துறையை மறைத்துக்கொள் ; the other shop, போட்டியான மறு நிறுவனம், எதிராளி நிறுவனம்.

**shop'-bell**, *n.* கடைமுகப்பு அழைப்பு மணி.

**shop'-boy**, *n.* கடைப்பணியாள்.

**shop'-girl**, *n.* கடை உதவிப்பெண், கடைப் பணிப்பெண்.

**shop'-keeper**, *n.* கடை உரிமையாளர் ; கடைக்காரர் ; கடை விற்பனையாளர் ; சில்லறை வணிகர் ; வணிகர் ; (தொ.) nation of shop-keepers, வணிக நோக்கமிக்க நாட்டினர், ஆங்கிலேயர்.

**shop'-lifter**, *n.* கடையிலிருந்து திருடுபவர்.

**shop'man**, *n.* கடையுரிமையாளர்; கடைக்காரர் உதவியாள்; *pl.* shop'men.

**shopp'ing**, *n.* பொருள் வாங்கக் கடைக்குச் செல்லல்; தேவைப் பொருள்கள் பார்க்கக் கடைக்குச் செல்லல்.

**shopp'y**, *a.* வாணிகஞ் சார்ந்த ; வாணிகத்துக்குரிய ; கடைகள் நிரம்பிய ; தொழில்முறை பற்றியே பேசுகிற ; தன் தொழில்துறை பற்றிய.

**shop'-steward**, *n.* தொழிற்சாலையில் தொழிலாளரால் தேர்ந்தெடுக்கப்பெற்ற தொழிலாளர் பிரதிநிதி.

**shop'-walker**, *n.* பெரிய விற்பனை நிறுவனத்தின் வாடிக்கையாளர் துணைமைப் பணியாளர்.

**shop'-window**, *n.* கடைக்காட்சி முகப்பு; பகட்டுக் கண்காட்சியிடம்; (தொ.) have every thing in the shop-window, எல்லாம் மேற்பகட்டாகக் கொண்டிரு.

**shop'-worn**, *a.* கடையில் நீடித்திருந்து பழுதுபட்ட; கடைக் காட்சிக்காக வைத்து மாசடைந்த.

**shore[1]**, *n.* கரை; கடற்கரை; நீர்க்கரை; (சட்.) கடலோர வேலை ஏற்ற இறக்க வரைகளின் இடை நிலையிடம்; (தொ.) in shore, நீர்வரையில்; கரையருகில்; கரைக்கு இன்னும் அணித்தாக.

**shore[2]**, *n.* உதைவரிக்கால், கப்பல் கட்டுதளத்தில் கப்பலைத் தாங்கி நிற்கவைப்பதற்காக விலாப்பக்கத்தினைத் தாங்கிச் சாய்த்து நிறுத்தப்படும் வரிக் கைக்கட்டைகள்; *v.* உதைவரிக்கால் கொடுத்துக் கப்பலை நிறுத்து; சாய்வரி கை கொடுத்து அண்டைகொடு.

**shore[3]**, *v.* shear என்பதன் முன்னைய இறந்தகால வடிவம்.

**shore'-boat**, *n.* கரையோரப் பயணப் படகு; கரைசெல் படகு.

**shore'-crab**, *n.* வேலை வரையிடை நண்டு.

**shore'-going**, *a.* கரைநோக்கிச் செல்கிற; கரைநோக்கிச் செல்லுதற்குரிய; கரையிலே வாழ்கிற.

**shore'-leave**, *n.* கரை செல்வதற்கான ஒழிவிசைவு.

**shore'less**, *a.* கரையற்ற.

**shore'line**, *n.* கரையோர வரை; கரைவரை; வலையைக் கரையுடன் இணைக்கும் கயிறு.

**shore'man**, *n.* கரைவாணன், கரையில் வாழ்பவர்; நிலவாழ்வினர்; மீன் தொழிலில் கரைமேற் செல்பவர்.

**shore'side**, *n.* கரைப்பக்க இடம்; *a.* கரையின் பக்கமுள்ள; *adv.* கரையின் பக்கத்தில்.

**shores'men**, *n. pl.* மீன் தொழிலில் கரைமேற் செல்பவர்கள்.

**shore'ward**, *a.* கரை நோக்கிய, கரையை நாடிய; *adv.* கரை நோக்கி, கரையை நாடி, கரையின் திசையில்.

**shore'wards**, *adv.* கரைநோக்கி.

**shor'ing**, *n.* உதைவரிக்காலிட்டுத் தாங்குதல்.

**short**, *n.* சுருக்கம், குறுக்கம்; சுருங்கிய அளவு, மணிச் செறிவு; குறில், குற்றுயிரொலி; குற்றசை; குறிற் குறி, குற்றுயிரொலி அடையாளம்; (பே-வ.) மின்வலியின் குறுக்கு வெட்டுப் பாய்வு; *a.* குறுகிய, நீளங் குறைந்த; குட்டையான, உயரங் குறைந்த; குள்ளமான; குறுகலான; இடங் குறுகிய; குறைந்த இடப்பரப்புடைய; காலங் குறுகிய; தொலை விளைவற்ற; உடனடி விளைவுடைய; குறுகியகால எல்லையுடைய; சிறிதுநேரத்தில் கடக்கக் கூடிய, அணித்தான; சிறிதுகாலமே பிடிக்கிற; விரைவில் செய்து முடிக்கத்தக்க; சுருங்கிய; குறைந்த அளவான; விரிவற்ற; சுருக்கமான; மணிச்செறிவான; ஏடு வகையில் குறைந்த பக்கங்களையுடைய; பத்திவகையில் குறைந்த வரிகளையுடைய; வாசக வகையில் குறைந்த சொற்களைக் கொண்ட; சிறுதிறம் வாய்ந்த; தாமதமற்ற; சோர்வு தட்டாத; இயல்பான எல்லையிற் குறைந்த; எதிர்பார்ப்பதில் குறைந்த; நேரான; சில சொல்லே சொல்லுகிற; சுற்றி வளைக்காத; வெடுக்கென்ற; நறுக்கென்ற; சுருக்கென்ற; வெட்டொன்று துண்டிரண்டான; எளிதில் உதிர்ந்து விடக்கூடிய, பொடிந்துவிடுகிற; உறுதியற்ற; மின்குறுக்கு வெட்டான, மின்வலி வகையில் தடையாற்றல் குறைந்த பக்கமான; எழுத்தொலி வகையில் குறிலான, மாத்திரையிற் குறைந்த; (பே-வ.) அசை வகையில் அழுத்தம்பெறுத; பங்குக்கள வகையில் கையிருப்பின்றி விற்கப்பட்ட, வருங்காலக் கையிருப்பு எதிர்நோக்கி விற்கப்படுகிற; *v.* மின்வலி வகையில் குறுக்குவெட்டாகப் பாய்வுறு; *adv.* சட்டென, திடுமென; சுருக்காக; எதிர்பாராமல், எதிர்பார்த்த சமயத்துக்கு முன்பாகவே; மொட்டையாக; சிறிதும் தும்பு விடாமல்; அருகேயுள்ள பக்கத்தில்; இடையிட்டு; (தொ.) a short hour, ஒரு மணிக்குக் குறைவான நேரம், ஒரு மணிக்குக் குறைவானதென்று தோன்றும் நேரம்; a short sea, சிதறுண்ட சிற்றலைகள்; at short sight, பணமுறி வகையில் காட்டியவுடனே தொகை கொடுக்கத்தக்க; be short with, மரியாதையின்றி நட; be taken short, திடீரென்று பேதி காணப்பெறு; bring up short, pull up short, திடீரென்று தடைசெய், திடுமென இடைநிறுத்தஞ் செய்; come short, நம்பிக்கை குலைவி, அவா நிறைவேற்றத் தவறு; cut short, சுருக்கு; வெட்டிச் சிறிதாக்கு; குறுக்கிட்டு வாயடைக்கச் செய்; fall short, போதாமலிரு; அரைகுறைபடு; திறமை குறைபடு; for short, சுருக்க வடிவமாக; in short, சுருங்கக் கூறுமிடத்து; in short supply, கிடைப்பதற்கரிதாக, அருகலாக; longs and shorts, கிரேக்க அல்லது லத்தீன செய்யுள்கள்; make short work of, விரைவில் முடித்துவிடு, சட்டென அழித்துவிடு, திடுமெனப் பயன்படுத்தித் தீர்; run short, மிகக் குறைவாயிரு; மிகக் குறை அளவினதாக ஆகிவிடு; sell short, கையிருப்பின்றி உடனடி வழங்க முடியாது விற்பனைபண்ணு; short bill, விரைவில் பணங் கொடுத்துத் தீர்க்கத் தேதி குறித்துள்ள பட்டியல்; short circuit, (மின்.) மின்வலிக் குறுக்கு வெட்டுப்பாய்வு; short clothes, short coats, வயதேறின குழந்தையின் இறுக்கமான அளவு போதா உடைகள்; short commons, குறைவளவான உணவு; short cut, குறுக்குவழி, சுருக்கு வழி; short date, காசுமுறி முதிர்வடைதற்குரிய அணிமைத்தேதி; short division, (கண.) குறுமுறை வகுத்தல், 12-க்குக் குறைந்த வகுக்கும் எண்ணினால் வகுத்தல்; விடை வருவதற்கான வழியை எழுதாமலே செய்யப்படும் வகுத்தல்; short drink, உணவுக்குமுன் அருந்தப்படுந் தேறல்; short head, குதிரைப் பந்தய வகையில் குதிரைத்தலை நீளத்திற் குறைவான தொலைவு; short leg, பின்னடியர், மரப்பந்தாட்ட வகையில் மட்டைக்காரருக்கு வலது பின்புறத்தில் அணித்தே நிறுத்தப்பட்டுள்ள எதிர்க்கட்சி ஆட்டக்காரர்; short metre, மூன்று மடி எட்டு சீரும் பிற ஆறு சீருங்கொண்ட நான்குவரித் தோத்திரப்பாடல்; short of, தவிர; அளவு குறைவாக; சற்றே குறைந்த நிலையில்; short of breath, குறுமூச்சு வாங்குகிற, மூச்சுத் திணறுகிற; short of hands, வேலையாள்கள் போதாநிலையில்; short rib, மறுபுறம் மூட்டுச்சேரா விலா எலும்பு; short sheep, குறுமயிருடைய ஆடு; short shrift, திடீர்த்தண்டனை, ஆராயா விரை தண்டிப்பு; short sight, அணுக்கப்பார்வைக் கோளாறு, குகைக்கண்; தொலைநோக்கின்மை; தொலைவிளைவு நோக்கிய ஆய்ந்தமைவறிவின்மை; short slip, மரப்பந்தாட்ட வகையில் மட்டையிலிருந்து நழுவியோடும் பந்துகளைப் பிடிப்பதற்காக நிறுத்தி வைக்கப்படும் ஆட்டக்காரர்களில் ஒருவர்; short story, சிறுகதை; புதின இயல்புடைய குறுங்கதை; short suit, நான்கிற்குக் குறைவான சீட்டுக்கள் கொண்ட ஆட்டச்சீட்டு வகை; short temper, எளிதில் சீற்றங்கொள்ளுமியல்பு; short time, வேலைவகையில் வாரநாள் குறைநேரத் திட்டம்; short ton, இரண்டாயிரம் கல் எடை அளவு; short wave, குற்றலை; பத்து முதல் நூறு மீட்டர்வரை நீளமுள்ள வானொலிச் சிற்றலை; short weight, குற்றெடை, ஒன்றுக்குக் குறைந்த அலகுடைய சில்லறை எடை; short whist, வெற்றியடைவதற்கு ஐந்து கெலிப்பெண்கள் வேண்டியுள்ள சீட்டாட்டநிலை, short wind, விரைமூச்சு வாங்குதல்; நீண்டநேரம் ஓடுவதற்கோ பேசுவதற்கோ எழுதுவதற்கோ ஆற்றலின்மை; something short, சாராயவகைச் சிறுபானம்; stop short, நின்றுவிடு; உடனே நிறுத்து; இறுதிவரை போகாது அமைவுறு; take short, take up short, வியப்பதிர்ச்சி கொள்; எதிர்ச்சூழல் நிலையில் சென்று பற்று; வெடுக்கென்று இடைமறி; take short views, குறுநோக்குக் கொள், முன் நிகழ்வனவற்றையே எண்ணிப்பார்; the long and the short of it, தொகுத்துக் கூறுதல்.

**short'age**, *n.* குறைபாடு, குறைவு; பற்றுக்குறை, குறைந்திருக்கும் அளவு.

**short'bread, short'cake**, *n.* உதிர் அப்ப வகை.

short'-cir'cuit, *v.* (மின்.) குறுக்கு வெட்டாகப் பாய்வுறு; குறுக்குவெட்டாக நிலம்பாவி மின்னோட்டம் நிற்கப்பெறு; அறுவைமருத்துவ வகையில் நடுவில் நேர்வழி தடைப்பட்டபோது குறுக்குவெட்டாக இடைத்தொடர்பு ஏற்படுத்து; சுருக்குவழி ஏற்படுத்திக்கொடு; சுற்றுவழி தவிர்.

short'-coat, *v.* வயதான குழந்தைவகையில் சற்றே இறுக்கமான உடுப்புகள் அணிவி.

short'coming, *n.* குறைபாடு; வழு, இழுக்கு, குற்றம்; கடமையிற் பிழை.

short'-dat'ed, *a.* குறுங்காலமான, குறித்துள்ள தேதியிலிருந்து சிறிது காலத்திற்கு மட்டுமே செல்லுபடியாகிற.

short'en, *v.* சுருக்கு, குறுக்கு; நுனி நறுக்கு, வெட்டிக் குறை; குறுகு; சுருங்கு; மரக்கல வகையில் பாய்பரப்பின் அளவைச் சுருக்கு; குழந்தைக்கு இறுக்கமான உடுப்பு அணிவி.

short'ening, *n.* வெட்டிக் குறைப்பு; சுருக்கம்; விரைவாக்கம், காலச் சுருக்கம்; மாப்பண்ணிய வகையில் மொறுமொறுப்பாய் இருப்பதற்குச் சேர்க்கப்படுங் கொழுப்பு.

short'fall, *n.* துண்டுவிழுதல்; துண்டாந் தொகை.

short'hand, *n.* சுருக்கெழுத்து; கண்ணெழுத்துமுறை.

short'hand'ed, *a.* வேலையாள்கள் போதாத, தொழிலாளர் குறைவாயுள்ள; குட்டைக் கைகளையுடைய.

short'-head, *v.* குதிரைப்பந்தயத்தில் குதிரைத்தலை நீளத்தை விடக் குறைவான தொலைவுக் குறைபாட்டினால் தோல்வியுறுவி.

short'horn, *n.* குறை மோழை, குறுங்கொம்புக் கால்நடை வகை.

short'-lived, *a.* சின்னாள் வாழ்வுடைய.

short'ly, *adv.* விரைவிலேயே, அதிக காலங்கடப்பதற்கு முன்பே; சிறிதுநேரத்திற்கு முன்பே; சிறிது நேரத்திற்குள்ளாக; சுருங்கச் சொல்லுமிடத்து; சுருக்கமாக; சுறுக்கென்று.

shorts, *n. pl.* சல்லடம், குறுங்காற் சட்டை; தவிட்டுக் குறுநொய், தவிடும் மாக்கரடுஞ் சேர்ந்த கலவை.

short'-sight'ed, *a.* அணுக்கப்பார்வைக் கோளாறுடைய; குறுநோக்குடைய; முன்னறி திறமற்ற.

short'-sight'edly, *adv.* முன்னறி திறமற்று, தொலைநோக்கின்றி.

short'-spo'ken, *a.* சொற்செட்டுடைய.

short'-tem'pered, *a.* எளிதிற் கோபங்கொள்ளுகிற.

short'-wind'ed, *a.* விரைவில் மூச்சுத்திணறுகிற, நீடித் துழைக்க முடியாத.

shot[1], *n.* துப்பாக்கிக் குண்டு; வெடிகுண்டு; சிதறுகுண்டு; இரவை குண்டுத்திரள்; எய்வு; எறிவு; வேட்டெறிவு; குண்டிலக்கெறிவு; கணை இலக்கெறிவு; குறி இலக்கெறிவு; ஓர் எறிவுமுயற்சி; துப்பாக்கியின் ஒரு வெடிதீர்வு; உடற்பயிற்சிக்கான எறிகுறி குண்டு; குண்டெறிவு, எறிகுண்டு வீச்சு; இலக்கெறிவு, குறி எறிவு; திடீர் ஊகம்; தற்செயல் எறிவு; யோக எறிவு; திடீர் நிகழ்வு; திடீர் முயற்சி; பாய் எல்லை, பாய்தொலை, இயங்காற்றலெல்லை; இயங்காற்றல் தொலை; இலக்கு வேட்டாளர்; இலக்குக்குறித் திறலாளர்; உணர்ச்சியிழக்கச் செய்யும் மருந்துவகையில் ஒருநிறை வேளை அளவு; மடக்கு, வெறிக்குடி வகையில் ஒரு மிடற்றளவு; ஒரு தடவை குடிப்பளவு; நிழற்படத்தின் ஒருவீச்சு; திரைப்படத்தின் ஒருவீச்செடுப்பு; நிலப்பாத்தி; *v.* குண்டு செறிவி; குண்டுகளால் எடைபெருக்கு; (தொ.) a shot in the locker, இன்னும் சேமவைப்பாக இருப்பது; big shot, பெருஞ்சுட்டுப் புள்ளி; chilled shot, திணிதோட்டுக் குண்டு, கவசம் துளைக்க வல்ல புறக்காழ்வூட்டப்பட்ட குண்டு; flying shot, பறக்கும் புள்மீது குறிவைத்தெறியப்பட்ட வேட்டு; make a bad shot, தவறாக ஊகி; Parthian shot, பிரிவுநேர வெடிதீர்வு; பிரிவு நேரக் கணையெறிவு; snap shot, திடுங் குறிவேட்டு; திடுங் குறி நிழற்பட எடுப்பு; stand shot, பணங்கட்டு.

shot[2], *n.* கணிப்பு; வழிமனையின் விலைப்பட்டி; வழிமனை விலைப்பட்டியில் ஒருவர் செலுத்த வேண்டிய பங்கு

shot[3], *v.* shoot என்பதன் இறந்த கால முடிவெச்ச வடிவம்.

shot'-firer, *n.* சுரங்கவெடிதீர்ப்பாளர்.

shot'-free, *a.* வேட்டுக்களிலிருந்து காப்பான; தீர்வையற்ற; வழக்கமான வரியற்ற; செலவில்லாத; தீங்கெதுவும் பெறாத.

shot'-gun, *n.* வேட்டைத்துப்பாக்கி, சிறு குண்டுகளுக்கான வழவழப்பான நுண்துளைவாயினையுடைய துப்பாக்கி.

shot'proof, *a.* துப்பாக்கிக்குண்டுகளால் துளைக்கப்பட முடியாத.

shot'-range, *n.* வேட்டெல்லை, துப்பாக்கிக்குண்டின் பாய்வெல்லை.

shott'ed, *a.* இரவை திணிக்கப்பட்ட; குண்டெடைப் பளுவாக்கப்பட்ட.

shot'-tower, *n.* இரவைக்குண்டு வார்ப்புருக்குக் கூண்டு.

should, *v.* shall என்பதன் இறந்தகாலம்.

shoul'der, *n.* தோள்; பறவையின் இறகடிப்பகுதி; தோள் மூட்டு, தோட்பட்டை; விலங்கின் தோட்பட்டை இறைச்சி; மலையின் முகட்டடிப்பகுதி; புட்டியின் தலைப்படிப் பகுதி; கருவியின் தலையடிப் பகுதி; சுமைதாங்கும் உறுப்பு; பொறுக்கும் பகுதி; (படை.) துப்பாக்கியைத் தோளில் சுமந்த போர் வீரர்நிலை; *v.* தோளினால் இடித்துத்தள்ளு, நெருக்கித்தள்ளு, முட்டிமோது; தோளினால் இடித்துத்தள்ளி வழியுண்டாக்கிக் கொண்டு செல்; சுமையைத் தோள்மேல் ஏற்றிக்கொள்; பொறுப்பேற்றுக்கொள்; (தொ.) by head and shoulders, வன்முறையாக; தலை கழுத்தளவாக மேம்பட்டு; மிக மேம்பட்ட நிலையில்; give the cold shoulder to, புறக்கணிப்புடன் நடத்து; ஆர்வமில்லாமல் ஓம்பு; தொடர்பில் உவர்ப்புக் காட்டு; have broad shoulders, சுமைதாங்கும் வலிமை பெற்றிரு; பொறுப்பினைத் தாங்கக்கூடிய திறமை கொண்டிரு; old head on young shoulders, சிறுமுதுக்குறைஞர்; put shoulder to wheel, set shoulder to wheel, அக்கறை கொண்டு முயல், பொறுப்புடன் முயற்சி கொள்; shoulder arms, (படை.) தோட்படை நிலைகொள், போர்வீரர் வகையில் துப்பாக்கியைத் தோள்மேல் சாய்த்து வலதுகையில் பிடித்துக் கொண்டிரு; shoulder-of-mutton sail, முக்கோணவடிவக் கப்பற்பாய்; shoulder to shoulder, ஒன்றிய முயற்சியுடன், பிளவுபடா அணிவகுப்புடன்; straight from the shoulder, அடிவகையில் செம்மையாக; திட்டுவகையில் நன்றாக உறைக்கும்படி.

shoul'der-belt, *n.* வல்லவாட்டு, குறுக்குத் தோள்பட்டி, தோள்மீதிருந்து எதிர்ப்புற விலாவடியாகச் சுற்றியிடும் பட்டைக்கச்சை.

shoul'der-blade, *n.* தோட்பட்டை எலும்பு.

shoul'der-brace, *n.* கூன்முதுகை நிமிர்த்தற்கான அமைவு.

shoul'dered, *a.* தோள்களை உடைய.

shoul'der-joint, *n.* தோள்மூட்டு.

shoul'der-knot, *n.* தோள் அணி ஒப்பனைப்பட்டிகை.

shoul'der-pegged, *a.* குதிரை வகையில் தோட்பட்டையருகே விறைப்புடைய, தோளசைக்க முடியாத.

shoul'ders, *n. pl.* முதுகுப்பட்டை, முதுகின் மேற்பாகம்; பாரந்தாங்கும் பகுதி.

shoul'der-strap, *n.* தோள் வார்ப்பட்டை; உடுப்பின் தோள் தொங்கல் வார்களில் ஒன்று; படைவீரரின் இடுப்புடை தாங்கும் தோள் வார்.

shout, *n.* கூச்சல்; மகிழ்ச்சி ஆர்ப்பரிப்பு; உடன்பாட்டு ஆரவாரம்; எதிர்ப்புக் கூப்பாடு, மறுப்புக் கூக்குரல்; கவனத்தை ஈர்க்கும் கூவிளி; உரத்த பேச்சு; *v.* ஆர்ப்பரி; கூச்சலிடு; கூப்பாடுபோடு; உரக்கப்பேசு; உரக்கச்சொல்; உரத்தகுரலில் தெரிவி; கூப்பிடு, கூவி அழை; (இழி.) தேறலகத்தில் எல்லாருக்குமாக மதுவழங்க ஆணையிடு.

**shove,** *n.* தள்ளுகை; அகக்காழ்வரி, சணல்தண்டின் நடுக் காழ்ப்பகுதி; *v.* தள்ளு, நெருக்கு; தள்ளிக்கொண்டு போ, உந்தி இயக்கு; உந்து, துருத்து; நெருக்கியடித்துக்கொண்டு செல், இடித்துத் தள்ளிக்கொண்டு செல்; தள்ளிவிடு; நகர்த்து, நகர்த்தி வை; ஒதுக்கி வை.

**shove'-half'penny,** *n.* கப்பல் தாயக்கட்ட ஆட்டம்.

**sho'vel,** *n.* மண்வாரி; பார்வாரி; வாருபடை, சுரங்கத்தில் நிலக்கரி முதலியன குடைந்துவாருங் கருவி; *v.* மண் வாரியால் அள்ளிப்போடு; பார்வாரியால் வாரு; வாரியிடு; அள்ளிக்கொட்டு.

**shov'elboard,** *n.* கப்பல் தாயக்கட்ட ஆட்டம்.

**shov'elful,** *n.* வாருபடை அளவு; *pl.* shov'elfuls.

**shov'el-hat,** *n.* அகல்விளிம்புத் தொப்பி.

**shov'el-head,** *n.* சுறாமீன் வகை; ஐவரித்தோட்டு மீன்வகை.

**sho'veller,** *n.* வாரிக்கொட்டுபவர்; அகல் அலகு வாத்து வகை.

**shov'el-nose,** *n.* தட்டையான அகல் அலகுடைய விலங்கு வகை.

**show,** *n.* கண்காட்சி; பார்வை அணி; பகட்டணி; பொருட் காட்சி அணி; வேடிக்கைக்காட்சி; வேடிக்கை விளையாட்டுக் காட்சி; வெளித்தோற்றம்; புறப்பகட்டு; பகட்டாரவாரம், படாடோபம், போலித்தோற்றம்; மெய்ப்பு, பிறர் மெச்சு வதற்காக மேற்கொள்ளப்படும் நடிப்புத்தோற்றம்; காட்டுகை; (இழி.) போலி நிறுவனம்; (இழி.) பாசாங்கு நடவடிக்கை; (இழி.) பிறரை ஏய்க்கும் வெற்றுவேட்டு நடவடிக்கை; (இழி.) போலி நடிப்பு, பிறர் மெச்சுவதற்கான நடைமுறை; (இழி.) தற்பகட்டு வாய்ப்பு, தற்பகட்டு நடவடிக்கை; (மரு.) கன்னிக்குட உடைவு, பிள்ளைப்பேறுக்கு முற்பட்ட நீர்மக் கசிவு; *v.* காண்பி; காட்டு; காட்சிக்கு முன்வை; பார் வைக்கு வழங்கு; பார்க்கவிடு; திறந்துகாட்டு; நீட்டிக் காட்டு; சுட்டிக்காட்டு; நடத்திக்காட்டு; வெளிப்படுவி, தோற்றுவி; தெரியச்செய்; தெளிவுபடுத்து; எண்பி, மெய்ப் பித்துக்காட்டு; பொருள் விளக்கு; அறிவுறுத்து; பயிற்றுவித் தறிவி; வழிகாட்டு; வழிகாட்டியாயுதவு; கொண்டுசென்று சுற்றிக்காண்பி; கட்புலனுகு; தோன்று; புலப்படு; முன் வந்து வெளிப்படக் காட்சியளி; (தொ.) dumb show, ஊமைக்கூத்து; give away the show, மறைசெய்தி வெளி யாக்கு; have nothing to show for it, சாதனைக்குச் சான்று எதுவுமில்லாதிரு; Lord Mayor's show, மதிப்புச் சின்னங் களான உந்துவண்டிகளின் ஊர்வலம்; on one's own showing, தானே ஒத்துக்கொண்டவற்றை வைத்துக்கொண்டு பார்த்தாலும்; show a clean pair of heels, தப்பியோடு; show a leg, படுக்கைவிட்டெழுந்திரு; show cause, செயல் விளக்கம் அளி; குற்றச்சாட்டிற்கு எதிரான காப்புரை கூறு; நியாயங்காட்டு; show fight, கீழ்ப்படிதலாகப் பணிந்து போகாதே, எதிர்க்கச் சித்தமாயிரு, முற்றிலும் படிந்து விடாமல் முனைப்புக்காட்டு; show forth, காட்சிக்கு வை, விளக்கிக் கூறு; show off, பயனுண்டாகும்வகையில் முனைப் பாகக் காட்டு; செல்வம் அல்லது திறமையைக் காட்டிக் கொள்வதன்மூலம் பிறர் மனத்தில் தன் மதிப்பின் தடம் பதியவை; show of hands, கைதூக்கி வாக்களித்தல்; show one in, உட்புகுவதற்காகக் கதவைத் திறந்துவை; show one out, வெளிச் செல்வதற்காகக் கதவைத் திறந்துவிடு; show one's colours, கட்சி இன்னதெனக் காட்டிக்கொள்; தன் இயல்பு இன்னதென வெளிப்படுத்திக்கொள்; show oneself, பலர் அறியச்செய்; show one's hand, உள் எண் ணங்களை வெளிப்படுத்து; show one the door, வீட்டை விட்டு வெளியே விரட்டு; show one the way, வழி இன்ன தென்று சொல், வழிகாட்டு, வழிகாட்டிக்கொண்டு கூடச் செல், வழிகாட்டிக்கொண்டு முன்னே செல்; முதலில் ஒரு காரியத்தைச் செய்வதன்மூலம் ஊக்கமளி; Show Sunday, ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக நிறுவன முதல்வர் ஆண்டு நினைவுவிழா நாளுக்கு முந்திய ஞாயிற்றுக்கிழமை; show the hoof, show the cloven hoof, தீத்திறங்காட்டு; show the white feather, கோழைத்தனங்காட்டு; show thing the fire, சற்றே சூடுகாட்டு; show up, முனைப்பாயிருக்கச் செய்; முனைப்பாயிரு; தெளிவாகத் தெரியும்படி செய்; தெளிவாகத் தெரியும்படி இரு; மோசடி முதலியவற்றை அம்பலப்படுத்து; (பே-வ.) தோன்று, வந்திரு.

**show'boat,** *n.* இயங்கு அரங்கமாகப் பயன்படும் நீராவிப் படகு.

**show'bread,** *n.* = shewbread.

**show'-case,** *n.* காட்சிக் கண்ணாடிப்பெட்டி.

**show'-down,** *n.* சீட்டுத் திறந்துவைப்பு; திட்ட வெளிப் படைத் தெரிவிப்பு; பட்டாங்கமான சச்சரவு.

**show'er**[1], *n.* மழைத்தாரை; குறும் பெயல், பாட்டமழை; கல்மழை, ஆலங்கட்டி வீழ்ச்சி; அம்புவகையில் மாரி போன்ற பொழிவு; குண்டுப்பொழிவு; மண்வாரியடிப்பு; தூசி வீழ்ச்சி; கற்களின் சொரிவு; *v.* மழை வகையில் தாரையாகப் பொழி; குறும் பெயலுறு; மழை போலப் பொழி; மழையெனச் சொரி; கொடை வகையில் வாரி வழங்கு.

**show'er**[2], *n.* காட்டுபவர், காட்சிக்கு வைப்பவர்; பயனுண் டாகும் வகையில் காட்டிவைக்கத்தக்க பொருள்.

**shower'-bath,** *n.* தூம்புதாரை; துவலைக்குழாய்.

**shower'y,** *a.* பாட்டமழை பெய்தலையுடைய; மழை விட்டு விட்டுப் பெய்கிற; தூற்றலான.

**show'girl,** *n.* அணிநடிகை, நடிப்பதற்காகவன்றி ஒப்பனைக் காகத் தோன்றும் நடிகை; காட்சியணங்கு.

**show'man,** *n.* காட்சிச்சாலை உரிமையாளர்.

**show'manship,** *n.* காட்சிச்சாலை விளக்க மேலாண்மைத் திறம்; சரக்குக்காட்சி விளக்கத்திறம்.

**show'-place,** *n.* காட்சியிடம், சுற்றுலாக்காரர் காட்சிக்குரிய இடம்; காட்சியரங்கம், காட்சிப்பொருள்கள் வைக்கப்படும் இடம்.

**show'-room,** *n.* காட்சிக்கூடம், சரக்குகளின் பகட்டான பொதுப் பார்வைக்குரிய அறை.

**show'-win'dow,** *n.* கண்காட்சிப் பலகணி, பார்ப்பதற் கெனப் பண்டங்கள் வைத்திருப்பதற்குரிய அல்லது மாட்டி வைப்பதற்குரிய சாளர அரங்கம்.

**show'y,** *a.* பகட்டிக் கொள்ளுகிற, ஆடம்பரமான; புறப்பகட் டான; ஒப்பனை முனைப்பான; போலியான.

**shram,** *v.* (பே-வ.) குளிரால் சுருக்கு, சுரிக்கச்செய், மரத்துப் போகச் செய்.

**shrank,** *v.* shrink என்பதன் இறந்தகாலம்.

**shrap'nel,** *n.* தெறிகுண்டு, உலோகத்துண்டுகள் நிரப்பிக் கூரிய சிம்பு சிராய்களாக வெடித்துத் தெறிக்கத்தக்க சிதறு வெடிகுண்டு.

**shred,** *n.* கந்தைக்கீற்று; துண்டு, துணுக்கு; கிழிசல்; உடைசல்; எச்சமிச்சங்கள்; மிகச் சிற்றளவு; *v.* துண்டு துண்டாகச் சிதறடி; கந்தல் கந்தலாகக் கிழி; (தொ.) tear an argument to shreds, வாதம் முற்றுந் தவறென எண்பி.

**shrew,** *n.* ஆண்மாரி, அடங்காப்பிடாரி; மூஞ்சூறு.

**shrewd,** *a.* ஆய்திறமிக்க, எஃகு நுட்பமுடைய; கூர்மதி வாய்ந்த; நுண்புலமிக்க; தேரறிவு வாய்ந்த; வகை திரிபுணர் வுடைய; நுண்ணுணர்வுத் தோற்றமுடைய; உறைப்பான, நோய் வகையில் உறுத்தலான; கடுத்த, குளிர் வகையில் கடிப்புமிக்க; (தொ.) a shrewd turn, பொல்லாங்கு; பகை மைச் செயல்.

**shrew'ish,** *a.* தூற்றும் பெண்டிரின் இயல்பு வாய்ந்த, ஆண் மாரியான, அடங்காப்பிடாரியான; எரிந்துவிழுகிற.

**shrew'-mouse,** *n.* மூஞ்சூறு; *pl.* shrew'-mice.

**shriek,** *n.* கிறீச்செனல், வீறிடுதல்; நோவுகாரணமான அலறல்; அச்சங் காரணமான கதறல்; உரத்த கூச்சல் ஒலி; *v.* கிறீச்சிடு, வீறிடு; அலறு; கதறு; பேய்ச் சிரிப்புச் சிரி; அடக்கமுடியாமல் சிரி; (தொ.) shriek out, வேதனைக்குரலிற் கூவு.

**shriev'alty**, *n.* மாவட்ட மணியப் பதவி ; மாவட்ட மணிய ஆட்சியெல்லை ; மாவட்ட மணியப் பதவிக்காலம் ; மாநகர் மணியப் பதவிக்காலம் ; அமைதிகாவலர் ஆட்சியெல்லை, அமைதிகாவலர் பதவிக்காலம் ; தேர்தல் முகவர் பதவி.

**shrift**, *n.* இரங்குவினை, சமய குருமாரிடம் பழிபாவங்களை வெளியிட்டுரைக்கை ; குறையேற்பிற்குப் பின்னுள்ள பாவமன்னிப்பு ; (தொ.) short shrift, குறுகிய தீர்ப்புத்தண்டனை இடையீடு.

**shrike**, *n.* கொல்பறவை வகை.

**shrill**, *a.* கீச்சிடுகிற, ஒலி வகையில் காதைத் துளைக்கிற, குரல் வகையில் கூரிய ; மன்றுடித் தொந்தரை செய்கிற ; பிடிவாதமாக வற்புறுத்துகிற ; *v.* (செய்.) கீச்சொலியிடு ; வற்புறுத்திக் கெஞ்சி முறையீடுசெய் ; கீச்சொலியுடன் பாடு.

**shrimp**, *n.* கூனிறால் ; குள்ளன் ; *v.* இறால்மீன் பிடிக்கச்செல்.

**shrine**, *n.* கோயில் ; புனிதப்பேழை ; வண்ணக் கல்லறை ; திருவிடம், தனிச்சிறப்புடைய புண்ணியத்தலம் ; தனிச்சிறப்புத்தொழுகையிடம் ; புனித நினைவுச்சின்னம் உள்ள இடம் ; *v.* திருச்சின்னமாக உட்கொண்டிரு ; கோயில் கொள்ளு, போற்றிவைத்துப் பேணு.

**shrink**, *n.* சிறுக்கம், சுரிப்பு ; திகைப்பு ; *v.* சிறுகு, குறுகு ; சுருங்கு ; சுரிப்புறு ; சிறிதாய்விடு ; திரைவுறு ; கம்பளி முதலியன சுருங்குவி ; உள்ளுக்கிழு ; கூசு, கூச்சங்கொள் ; பின்னிடு ; வெறுப்பினால் பின்வாங்கு ; அச்சத்தினால் பின்னிடைவுறு ; வெறுத்தொதுங்கி விலகு ; அஞ்சி விலகு ; தவிரும்படி விட்டுவிலகு ; வெறுப்புக் கொள்.

**shrink'age**, *n.* அளவுக்குறுக்கம், சுருக்குறல்; சுரிப்பு; சுருங்குமளவு.

**shrive**, *v.* குறை ஏற்பினைக் கேட்டுப் பழிபாவங்களினின்றும் விடுவி, நோன்பு வகுத்துக்கொடுத்துப் பழிபாவங்களினின்றும் விடுவி ; செய்ததற்கு இரங்குபவர் வகையில் பழிபாவங்களை ஒப்புக்கொண்டு விடுவிக்கப்பெறுதற்காகச் சமயகுருவினிடம் தன்னை ஒப்படைத்துக்கொள்.

**shrived**, *v.* shrive என்பதன் இறந்தகால வடிவங்களில் ஒன்று ; shrive என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**shriv'el**, *v.* திரைவுறுத்து ; திரைவுறு ; மடிப்பிட்டுச் சுருக்கு ; மடிப்புற்றுச் சுருங்கு ; கசக்கிச் சுருள்வி ; கசங்கிச் சுருள்வுறு ; வற்றிச் சுரிப்புறு ; சருகாக்கு ; சருகாகு ; வாடிவதங்குவி ; வடிவதங்கு.

**shriv'en**, *n.* shrive என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**shroff**, (அரா.) *n.* வட்டிக் கடைக்காரர் ; நாணய நோட்டநிபுணர் ; *v.* நாணயத்தைக் கூர்ந்தாராய், நாணய நோட்டம் பார்.

**shroud**, *n.* பிண முக்காடு, சவப்போர்வை ; மறை மூடாக்கு ; மறைத்து வைக்கப்பட்ட நிலை, தெரியாநிலை ; *v.* பிணத்தைப் போர்வையிட்டு மூடு ; மூடிமறை, உருத்தெரியாமல் மூடு.

**shroud'less**, *a.* பிண வகையில் மூடாக்கற்ற.

**shrouds**, *n. pl.* கப்பற் பாய்மரக்கயிறுகள்.

**shrove**, *v.* shrive என்பதன் இறந்தகால வடிவங்களில் ஒன்று.

**Shrove Tues'day**, *n.* திருநீற்றுப் புதன்கிழமைக்கு அடுத்து முந்திய செவ்வாய்க்கிழமை.

**shrub**[1], *n.* குத்துச்செடி ; புதர்ச்செடி, தூறு.

**shrub**[2], *n.* பழச்சாறும் சாராயமுங் கலந்த கிளர்ச்சியூட்டுங் குடிவகை.

**shrubb'ery**, *n.* புதர்ச்செடிக்குவை ; தோட்டப் புதர்ச்செடித் தொகுதி.

**shrubb'y**, *a.* குத்துச்செடி போன்ற ; தூறுன, புதரின் இயல்புடைய ; புதர்ச்செடிகள் நிறைந்துள்ள.

**shrug**, *n.* தோளசைப்பு, தோட் குலுக்கம் ; அசட்டைத் தன்மைக் குறிப்பு ; உள்ளார்ந்த ஏளனக்குறிப்பு ; உள்ளார்ந்த வெறுப்புக் குறிப்பு ; *v.* தோள் அசைத்து உயர்த்து ; அசட்டை நிலைக் குறிப்புத் தெரிவி ; ஏளனக் குறிப்புத் தெரிவி ; உள்ளார்ந்த வெறுப்புத்தெரிவி.

**shrunk**[1], *v.* shrink என்பதன் முடிவெச்சம்.

**shrunk**[2], **shrunk'en**, *a.* சுருக்கப்பட்ட, சுருங்கிய ; குறைக்கப்பட்ட, குறைவுற்ற ; திரைவுற்றுச் சுருங்கிய ; ஒட்டி உலர்ந்த ; குறுகிய.

**shuck**, *n.* உமி, புறத்தோல் ; ஓடு, புறத்தோடு ; விதையுறை ; *v.* தொலி உரி ; மேலோட்டை உடை.

**shudd'er**, *n.* நடுக்கம், அதிர்வு ; கிடுகிடுப்பு, திகிலாட்டம் ; வெறுப்பதிர்ச்சி ; *v.* திடீர் நடுக்கமுறு ; துணுக்குறு, திகிலுறு ; வெறுப்பதிர்ச்சியுறு.

**shuf'fle**, *n.* உராய்வியக்கம் ; காற் சறுக்கியக்கம் ; தத்துநடை ; அருவருப்பான போக்கு ; சறுக்கு நடனம் ; நிலைபெயர்வு ; இடப்பிறழ்வு ; ஓயாப் படபடப்பு ; கலைப்பீடு, சீட்டுக் குலுக்கீடு ; இடைவிரவீடு ; இடை உருவீடு ; குழப்படி ; ஒதுக்கீடு, தள்ளீடு ; தட்டிக்கழிப்பு ; இழுத்தடிப்பு ; கைமாருட்டம் ; திருகுதாளம், புரட்டு ; *v.* சறுக்கித்தள்ளு ; நகர்த்து, நிலை பெயர்த்து ; இடமாற்றிக் கொண்டிரு ; ஓயாது ஆட்டு ; படபடத்துக்கொண்டிரு ; நிலைபிறழ்ந்துகொண்டிரு ; உரசிக்கொண்டு செல் ; தட்டித்தடவிச் செல் ; கலைத்துவிடு, நழுவவிடு ; ஒதுக்கித் தள்ளு, மாற்றி வை ; சொற் புரட்டுச் செய் ; மழுப்பிவிடு ; நேர்விடை கூருமல் கடத்திக்கொண்டு செல் ; தட்டிக்கழி ; இழுத்தடி ; மாருட்டஞ் செய் ; சீட்டுக் கட்டை அழித்துக் கலை ; இடைவிரவு ; இடையுருவு ; இடையிடைக்கல ; உருத்தெரியாமல் கலை ; குழப்பியடி ; கால் தேய்த்துக் கொண்டு நட ; தத்திநட ; அருவருப்பாக இயங்கு ; சறுக்குநடனம் ஆடு ; (தொ.) double shuffle, மாறிமாறி இருகாலும் தேய்த்தாடும் சறுக்குநடனம் ; shuffle along, நெருக்கியடித்துச் செல் ; தட்டுத்தடவிச் செல் ; shuffle in, ஆடைவகையில் மேலே போட்டுக்கொள் ; shuffle off, ஒதுக்கித் தள்ளு.

**shuf'fle-board**, *n.* காய்க்கட்ட ஆட்டம்.

**shun**[1], *v.* தவிர்த்தொதுக்கு, வெறுத்துத் தள்ளு ; அறவே விலக்கு ; விட்டுவிலகியிரு ; விட்டொழி ; (தொ.) upon the shun, பார்க்கப் பெருமல் தப்பித்துக் கொள்வதில் நாட்டமுடைய.

**shun!**[2], *int.* attention என்பதன் சுருக்க வழக்கு.

**shun'less**, *a.* (செய்.) தவிர்க்கக்கூடாத, விலக்க முடியாத.

**shunt**, *n.* தடமாற்றம், கிளைப்பாதைக்கு மாறுதல் ; பக்கப் பாதைக்கு மாற்றப் பெறுதல் ; (மின்.) இடைகடத்தி, இரு மின்னேட்டங்களை இடைதடுத்திணைக்கும் மின்கடத்து கட்டை ; *v.* புகைவண்டியைத் தடம் திருப்பு ; மின்னேட்டத்தைக் கிளைவழியில் திருப்பு ; புகைவண்டி வகையில் வழிவிட்டுப் பக்கப்பாதைக்கு விலகிச்செல் ; விவாத வகையில் ஒத்திவை ; வாதத்தை அடக்கிவை ; திட்டத்தை ஒதுக்கிவை ; இடைநிறுத்தி வேறுபேச்சுக்கு மேற்செல் ; கடந்து செல் ; ஆள் வகையில் செயலற்றுப்போகச் செய்.

**shut**, *v.* மூடு ; கதவினை அடை ; வாயில் பொருத்தி வை ; பலகணி சார்த்து ; கண் பொத்திக்கொள் ; வாய் அடை ; பெட்டி மூடிவை ; துளை அடை ; புழை அடைப்பிடு ; துளைவாய் பொருத்து ; மூடுநிலையில் இயக்கு, மூடு திசையாகத் தள்ளு ; மூடிக்கொள், அடைப்புறு ; அடைபடு ; மூடக்கூடியதாயிரு ; சார்த்து நிலையுடையதாயமை ; வழிதடு ; தடுத்து நிறுத்து ; நுழைவு தடு ; கூம்புவி ; பொருந்துவி ; உறுப்புக்களை ஒருங்கிணை ; பரப்புச் சுருக்கு ; கூம்பு ; சுருங்கு ; உறுப்புக்கள் வகையில் ஒருங்கிணைவுறு ; இடுக்குவி ; இடுக்கப்பெற்று நசுங்குறுவி ; சுற்றிவளை ; நாற்புறமுங் கவி ; மூடிவுறுத்து ; முடிவுறு ; (தொ.) be shut of, (பே-வ.) விட்டு நீங்கிக் கொள் ; shut down, பலகணிக் கண்ணுடிச்சட்ட வகையில் கீழே இழுத்துமூடு ; தொழிற்சாலை வகையில் செயற்படாமல் நின்றுவிடு ; வேலை நிறுத்துவி ; shut in, உள்ளிட்டடை ; குன்று முதலியவை வகையில் சூழ் ; சுற்றிவளை ; தங்குதடையற்ற பார்வை தடு ; போக்குவரவு தடு ; shut off, தனிப்படுத்து ; பிரித்துத்தடு ; காற்று-நீர் முதலியவை வகையில்

வராமல் தடு; சமுதாயத்திலிருந்து தனியே பிரித்து வை; shut out, பார்வையினின்று மறைத்துவிடு; நடக்கக்கூடியதை நடக்காமற் செய்துவிடு; shut the door upon, எண்ணிப் பார்க்க மறுத்துவிடு; இயலாததாகச் செய்துவிடு; shut to, இறுக்கமாக மூடு; shut up, கதவுகள்-பலகணிகள் அனைத்தையும் மூடு; வீட்டை மூடித் தாழிடு; பெட்டி முதலியவற்றை இறுக்கமாக மூடு; நிலையாக மூடிவிடு, காவலில் அடை; பெட்டி முதலியவைகளில் வைத்துமூடிவிடு; (பே-வ.) வாய்மூடு, பதில் பேசாதிரு; shut up shop, தொழிற்கள வகையில் நாள்வேலை நிறுத்திவிடு; நிலையாகத் தொழிலை நிறுத்திவிடு.

shut'down, *n.* தொழிற்கள வகையில் அப்பொழுதைய கடையடைப்பு.

shut-in'[1], *n.* வீட்டை விட்டகலமுடியாத ஏலா நோயாள்; ஏலா உறுப்புக்குறை.

shut'-in[2], *a.* அடைக்கப்பட்ட, மூடப்பட்ட.

shut'-out, *a.* போட்டி தவிர்க்கின்ற; (தொ.) shut-out bid, சீட்டாட்ட வகையில் மேற்கேள்வி தடுக்கும் நோக்குடைய மீமிசைக்கேள்வி.

shutt'er, *n.* மூடுபவர், அடைப்பவர்; மூடுவது, அடைப்பது; கதவு-பலகணிகளில் நழுவடைப்புச் சட்டம்; இசைப்பெட்டியின் ஒலியடக்கிதழ்; நிழற்படக் கருவியில் ஒளித்தடுக்குத் திரை; *v.* கதவு-பலகணிகளில் நழுவடைப்புச் சட்டத்தை இழுத்துவிடு; கதவு-பலகணிகளுக்கு நழுவடைப்புச் சட்டம் பொருத்து; (தொ.) put up the shutters, நாள்வேலை நிறுத்திவிடு; தொழிலை நிறுத்திவிடு.

shut'tle, *n.* ஓடக்கட்டை, நெசவுத்தறி நாடா; தையல்பொறியின் அடியிழை செருகுங் கருவி; (தொ.) shuttle armature, (மின்.) மின்வட்டு, ஒற்றை மின்கம்பிச்சுருளையுடைய இரும்பு வட்டு; shuttle service, இருப்பூர்திக் கிளைப்பாதையில் சிற்றிடைப் போக்குவரவுமுறை ஏற்பாடு; shuttle train, கிளைப்பாதைச் சிற்றிடைப் போக்குவரவுமுறைத் தொடர் வண்டி.

shut'tlecock, *n.* நெட்டிப் பந்து.

shy[1], *n.* திடீரென விலகல், வெட்டி விலகுதல்; *a.* நாணமுடைய; அவைக்கூச்சமுடைய; அறைப்புடைய, ஒதுங்கும் இயல்புடைய; விலங்கு-புள் வகையில் அச்ச இயல்புடைய, எளிதில் கலவரமடைகிற; வெட்கமுறுகிற, புறங்காணப்பட விரும்பாத; பழகவிரும்பாத; ஒட்டாது விலகிச்செல்லும் இயல்புடைய; கூட்டத்துடன் தொடர்புகொள்ள விரும்பாத; செயலில் மனமற்ற; தயக்க இயல்புடைய; எளிதில் காட்சிக்குக் கிட்டாத; கண்டெய்த முடியாத; பிடிபடாத; எளிதில் விளங்கிக்கொள்ள முடியாத; விருப்பமில்லாத; (இழி.) இழிந்தநிலையிலுள்ள; *v.* கண்டு கலவரமடை; கேட்டுத் திடுக்கிடு; மனக்கலக்கமடை.

shy[2], *n.* எறிவு; *v.* எறி, வீசியெறி; அடைய முயலு.

Shyl'ock, *n.* கல்நெஞ்சக் கடுவட்டியாளர், விட்டுக்கொடுக்கும் பண்பற்றவர்.

shy'ness, *n.* நாணம், கூச்சம்; ஒதுங்குமியல்பு; தயக்க மனப்பான்மை.

si, *n.* (இசை.) இசைக்கேள்வியின் ஏழாவது சுரம்.

si'amang, *n.* வாலில்லாப் பெருங்குரங்கு வகை.

Siamese', *n.* சயாம் நாட்டவர்; சயாம் நாட்டுமொழி; *a.* சயாம் நாட்டைச் சார்ந்த; சயாம் நாட்டு மொழிசார்ந்த; (தொ.) Siamese cat, இளமஞ்சள் நிறமும் குட்டையான முடியும் உடைய வளர்ப்புப் பூனைவகை; Siamese twins, உடற்பகுதி இணைந்து பிறக்கும் இரட்டையர்; இணைபிரியா நண்பர்கள்; பிரிக்க இயலாத் தோழர்கள்.

sib, *a.* இன உறவுடைய, நெருங்கிய தொடர்புடைய.

Siber'ian, *n.* சைபீரியா மாநிலத்தில் வாழ்பவர்; சைபீரியக் குடியுரிமையாளர்; *a.* சைபீரியப்பரப்புக்குரிய; சைபீரியாவில் வாழ்கிற; (தொ.) Siberian dog, பனிச்சறுக்கு வண்டி யிழுக்கும் வளர்ப்பின நாய்வகை.

sib'ilance, *n.* சீறொலி இயல்பு, 'உசு' ஒலிப்பண்பு.

sib'ilant, *n.* சீறொலி, 'உசு' என்னும் ஒலி; *a.* சீறொலி சார்ந்த; எழுத்து வகையில் சீறொலியுடைய.

sib'ilate, *v.* சீறொலி எழுப்பு.

sib'ling, *n.* ஒரு தாய்வயிற்றுப் பிறப்பாளருள் ஒருவர்; ஒரே தாய்தந்தையுடையவர்களில் ஒருவர்; ஒரேமூல மரபினரை உடையவருள் ஒருவர்.

sibs, *n. pl.* உடன்பிறப்புக்கள், உடன்பிறந்த ஆண்கள் அல்லது பெண்கள்.

sib'ship, *n.* இனவுறவுப்பண்பு; குருதித்தொடர்பு; பொது மரபுத் தொடர்பு; ஒரு தாய் வயிற்றுக்குழு; ஒரே தாய் தந்தையினையுடையவர் குழாம்.

sib'yl, *n.* தேவராட்டி, குறிகூறும் பெண்; வருங்காலக் குறிகாரி; பழங்காலச் சூனியக்காரி.

sib'ylline, *a.* குறிகூறுந் தன்மையுடைய; பழங்காலத் தெய்வ உரை சார்ந்த; வருவதுரைக்கிற; மறைபுதிரான; விளங்காத, புரியாத; (தொ.) the sibylline books, பண்டை ரோமரிடையே குற்ற நடுவர் அடிக்கடி பயன்படுத்திய பழைய தெய்விகக் குறி உரைத் தொகுப்பு நூல்.

sic, (ல.) *adv.* அப்படியே, மேற்கோளாளர் கூறிய அதே நிலையில்.

Sican'ian, *n.* சிசிலி (Sicily) தீவின் தொல்பழங்குடியினர்; *a.* சிசிலி நாட்டுத் தொல்பழங்குடி சார்ந்த.

sicc'ative, *n.* புலர்த்துபொடி, நெய்வண்ண ஓவியம் எளிதில் உலரக் கலக்கப்படும் பொருள்; *a.* வண்ண ஓவிய நெய்யினை எளிதில் புலர்த்துந் திறமுடைய.

sice[1], *n.* பகடையின் ஆறு; பகடைக்காயிலுள்ள ஆறு என்ற எண்.

sice[2], (அரா.) *n.* குதிரைக்காரர்.

Si'cel, *n.* கிரேக்கருக்கு முற்பட கி. மு. 11-ஆம் நூற்றுண்டில் சிசிலித் தீவில் குடியேறிய பழங்குடி இனத்தினர்; *a.* சிசிலித் தீவின் தொல்குடி சார்ந்த.

Sicel'iot, *n.* சிசிலித் தீவில் குடியேறிய பண்டைய கிரேக்கர்கள்; *a.* சிசிலியில் குடியேறிய பண்டைய கிரேக்கர்களைச் சார்ந்த.

Sicil'ian, *n.* சிசிலித் தீவினர்; *a.* சிசிலித்தீவு சார்ந்த; சிசிலித் தீவுக் குடிமக்கள் சார்ந்த; (தொ.) Sicilian Vespers, (வர.) மாலை வழிபாட்டு நேரத்தில் சிசிலித் தீவில் 1292-ல் நிகழ்த்தப் பட்ட பிரஞ்சு நாட்டவரின் படுகொலை.

sick[1], *a.* நோய்ப்பட்ட; பிணியுற்ற; நோய்நொடிப்பட்ட; உடல்நலங்குன்றிய; குமட்டலுணர்ச்சியுடைய; வாந்தி எடுக்கிற; நோய்ப்பட்டோருக்குரிய; நோஞ்சலான; இளைத்த, ஒட்டி உணங்கிய; நன்னிலையற்ற; முழுதும் சோர்வுற்ற, மிகுகளைப்புற்ற; உளச்சோர்வுடைய; கிளர்ச்சியற்ற; கிளர்ச்சியற்ற தோற்றமுடைய; மனஉளைச்சலுடைய; சலிப்புற்ற; கழிமிகுதியால் உவர்ப்புக் கொண்டுவிட்ட; பின்விளைவுகளால் துன்புறுகிற; அவலநிலைப்பட்ட; கப்பல் வகையில் சீர்குலைவுற்ற, சீரமைப்பு வேண்டிய நிலையிலுள்ள; (தொ.) be sick, feel sick, குமட்டல் உணர்ச்சிகொள்; make sick, குமட்டல் உணர்ச்சிகொள்ளுவி; the Sick Man, (வர.) துருக்கிப் பேரரசு; turn sick, வாந்தி உணர்ச்சிகொள்.

sick[2], *v.* ஏவு, தூண்டு.

sick'bay, *n.* கப்பல் மருத்துவ அறை.

sick'-bed, *n.* நோயாளிப் படுக்கை; நோய்நிலை, நோய்க் காரணமான ஏலாநிலை.

sick'-ben'efit, *n.* நோய்ப்படி.

sick'-call, *n.* மருத்துவ உதவி நேரமறிவிக்கும் படைத்துறைக் குழலோசை.

sick'en, *v.* நோயுறு; பிணிவாய்ப்படத் தொடங்கு; நோய் நிலையுறு; நோய்க்குறி காட்டு; நோய் அறிகுறிகள் காணப்பெறு; குமட்டு; வெறுப்புக்கொள்; அருவருப்பு அடை; சலிப்புக்கொள்; கழிமிகையால் உவர்ப்புறு; களைப்புறச் செய்; களைப்புறு; சோர்வுணர்; மன உளைவுறு; கேடுறு; வரவர மோசமாகு; சலிப்பூட்டு, உவர்ப்பூட்டு; மேலும் வலிமையிழ; நோஞ்சலாகு; வரவர இளை.

**sick'-flag**, *n.* தொற்று நோய்க்குறிகாட்டும் மஞ்சட்கொடி; தொற்றுக் கப்பற்கொடி; தொற்றுெருக்குத் தடையிடம் குறித்துக் காட்டுங் கொடி.

**sic'kle**, *n.* அரிவாள், செதுக்குகத்தி; குறுங்கைக் கொடுவாள்; சிங்கராசி.

**sick'-leave**, *n.* நோவு விடுப்பு.

**sic'kle-bill**, *n.* அரிவாள் அலகுப பறவை வகை.

**sic'kle-feather**, *n.* வளைந்த வாலிறகு.

**sic'kle-wort**, *n.* மருத்து மூலிகை வகை.

**sick'lied**, *a.* நோயால் நலிவுற்ற தோற்றமுடைய; வெளிறிய; உரமிழந்த.

**sick'liness**, *n.* வெளிறிய தோற்றம்; நோய்ப்பட்ட நிலை.

**sick'-list**, *n.* (படை.,கப்.) பிணிப்பட்டவர் பட்டியல்; (தொ.) on the sick-list, நோய்ப்பட்டு, பிணிவாய்ப்பட்டு; ஏலா நிலையில்.

**sick'ly**, *a.* நோயினுற் பீடிக்கப்பட்ட; நோய்ப்பட்ட தோற்ற முடைய; நோய்நலிவுற்று மெலிந்த; சோகைபடிந்த; வெளிறிய தோற்றம் வாய்ந்த; நலிவுற்றுத்தளர்ந்த; வலிமை குன்றிய; உரமற்ற; நோயாளிக்குரிய; நோய்நிலைக்குறிகுறியான; நோய் விளைவிக்கிற; குமட்டச்செய்கிற; வெறுக்கச் செய்கிற; உடல்நலங் கெடுக்கிற; உடல்நலத்துக்கொவ்வாத; வளர்ச்சி குலைக்கிற; மனநலத்துக் கொவ்வாத; மனநலம் கெடுக்கிற; வாழ்வில் அக்கறையூட்டாத; தேய்ந்துநலிந்த, மங்கலான; தெளிவில்லாத; *v.* சோகைத்தோற்றமூட்டு, வெளிறிய தோற்றமுறுவி; நோய்நிலை படர்வி; *adv.* நோய்ப் பட்ட நிலையில்; மெலிவுற்று; நலிந்த நிலையில்.

**sick'ness**, *n.* நோய்நிலை, உடல்நலமின்மை, நலங்குன்றிய நிலை; நோய்; வாந்தி; குமட்டல் உணர்ச்சி; (தொ.) falling sickness, காக்காய் வலிப்பு, இசிப்புநோய்; sleeping sickness, கொடுமயக்கத் துயில்நோய், ஈ வகையின் கடியால் ஏற்படும் ஆப்பிரிக்க கொடுநோய்; sleepy sickness, மூளை அழற்சி காரணமான தூக்க மயக்க நோய் வகை.

**sick'-room**, *n.* நோயாளி அறை.

**Sicul'ian**, *n.*, *a.* = Sicel.

**Sic'ulo-Arabian**, *n.* சிசிலித் (Sicily) தீவில் திரித்தமை வுற்ற அராபிய மொழி.

***sic vol'o sic jub'eo***, (ல.) *n.* விலக்க முடியாத ஆணை; (தொ.) என் விருப்பமும் கட்டளையும் இதுவே.

***sic vos non vob'is***, (ல.) (தொ.) செயல் உனது புகழ் பிறரது.

**side**, *n.* பக்கம்; அணிமை; அயலிடம்; எல்லை; கரை; இடம்; இடப்பகுதி; பக்கச்சுவர்; பக்கப்பரப்பு; திசை; திசை முகப்பு; கோணம்; கோணச்சாய்வு; எல்லைத்தளம்; தளமுகப்பு, பிழம்புருவின் பரப்புக்கூறு; எல்லைவரை; புயம், வரைகட்டத்தின் பக்கவரை; எல்லைப்புறம்; அக அணிமை எல்லை; விலா; விலங்கின் விலா இறைச்சி; கிளை; கிளை மரபு; பக்கக் கால்வழி; புறநிலை; புறக்கூறு; சினை; கூறு; பிரிவு; இயல்புச்சார்பு; துறை; உருக்கூறு; பண்புக்கூறு; பண்பமைவு; புறம், இருசார் பரப்புகளில் ஒன்று; தாளின் ஒருபுறம்; தாள், தாள் துண்டு; அகப் புறப் பகுதிகளில் ஒன்று; முன்பின் பகுதிகளில் ஒன்று; நீள்வாட்டான எல்லை களில் ஒன்று; அணிமையெல்லை; பாரிசம், வல இடப்பக்கங் களில் ஒன்று; இருதிசைக்கோடி மூலைகளில் ஒன்று; கட்சி, இரு திசைக் குழுக்களில் ஒன்று; சார்பு; போட்டிக் கருத்துக்களில் ஒன்று; தரப்பு, வழக்கில் இருசார்புகளில் ஒன்று; சாரி, கட்சியின் இருதிசை முனைப்புக்குழுக்களில் ஒன்று; சிறைப் புறம், ஆட்டக்களப் பக்கப்பகுதிகளில் ஒன்று; மேடைக் கோற் பந்தாட்டத்தில் பந்தின் புடைச்சுழற்சியடி; (இழி.) வீம்புரை, வீருப்பு; *v.* பங்குகொள்; ஒன்றுபட்டு ஒரே பக்கத்திலிரு; பக்கச்சார்பாயிரு; இருகூருக்கு; ஒதுக்கித் தள்ளு; (தொ.) as a side line, on the side, துணைவேலையாக; blind side, கவனந்திரும்பாத பக்கம்; born on the wrong side of the blanket, குழந்தை வகையில் முறைகேடாகப் பிறந்த, சட்டத்திற்குமுரணுகப் பிறந்த; cantoris side, திருக் கோயில் பாடகர் குழுவில் இயக்குநர் புறமிருந்து பாடும் பகுதி யினர்; credit side, வரவுப்பகுதி; debit side, பற்றுப் பக்கம்; decani side, திருக்கோயில் பாடகர் குழுவில் வட்டத்துணைத் தலைவர் அமரும் தென்சிறைப்பகுதி சார்ந்தவர்கள்; epistle side, திருக்கோயில் பலிபீடத்தின் தென்கோடிப்பகுதி; gospel side, திருக்கோயில் பலிபீடத்தின் வடகோடிப் பகுதி; have a strong side, தேர்ந்த ஆட்டக்காரர் குழு வைத்திரு; off side, அப்பாற்பகுதி, காற்பந்தாட்டத்தில் பந்திற்கும் எதிரியின் இலக்கிற்கும் இடைப்பட்ட ஆட்டக்களப் பகுதி; on side, இப்பாற்பகுதி, எதிரிபக்கம் பந்து செல்லும் பகுதி வரையுள்ள களப்பகுதி; on the light side, மட்டற்று இறுக்கமாய், மிகு இறுக்கத்தால் பயனற்று; on the long side, மட்டற்று நீளமாக, மிகு நீளத்தால் பயனற்று; on the right side of forty, நாற்பது வயதிற்குக் குறை வான; on the shady side of forty, on the wrong side of forty, நாற்பது வயதிற்கும் மேற்பட்ட; on the short side, மட்டுமீறிக் கட்டையாக, நீளம் போதாமல் பயனற்று; on the wrong side of the door, உள்ளே நுழையாத நிலையில்; on this side the grave, உயிருடன்; right side of cloth, துணியின் பார்வைப் பக்கம்; seamy side, ஆடையின் தையல் கள் தெரியும் உட்புறம்; கவர்ச்சியற்ற பகுதி; shake one's sides, வாய்விட்டுக் குலுங்கச் சிரி; side by side, அருகரு காக, நெருங்கி; இணையாக; தோழமையுடன்; ஒருவருக் கொருவர் உதவியாக; side issue, கவனத்தைத் திருப்பும் செய்தி; side line work, பக்கப்பணி, முக்கிய அலுவலி லிருந்து வேறுபட்ட துணை அலுவல்; side wind, புடை வீசு கால், பக்கநோக்கிவீசும் காற்று; ஒரு பக்கத்திலிருந்து வரும் காற்று; மறைமுகச் செல்வாக்கு; எதிர்பாராத துணைத்திறம்; சுற்றுமுகச் செயற் கருவி; silver side, மாட்டிறைச்சியின் செம்பகுதி; take sides, ஒருதலை தழுவு; சேர்ந்து ஆதரி; wrong side of cloth, துணியின் பார்வையற்ற மறுபுறம்.

**side'-arms**, *n.pl.* இடுப்பிற் செருகிவைக்கத்தக்க படைக்கருவி கள், கத்தி-உடைவாள் முதலியன.

**side'-band**, *n.* கம்பியில்லாத் தந்தியில் சம அதிர்வுப்பட்டி.

**side'-bet**, *n.* சீட்டாட்டத்தில் இடைப்பந்தயம்.

**side'board**, *n.* உணவுக்கூட நிலையடுக்கு; வண்டியின் நிலைத் தட்டு, உந்துகலத்தின் பக்க மிதிபலகை.

**side'bone**, *n.* புள்ளிறைச்சியில் சிறகடிச் சிறு கவை எலும்பு.

**side'-box**, *n.* நாடக அரங்கில் பக்க இருக்கை.

**side'burns**, *n.* பக்கக் குறுமீசை மயிர்.

**side'-car**, *n.* மிதிப்பொறிப் பக்க இருக்கை; அயர்லாந்தின் இருசக்கரப் பயண வண்டி; மிதிவண்டிப் பக்க இருக்கை.

**side'-chain**, *n.* அணுத்திரளில் மூலவளையத்துடனிணைந்த அணு இணைத்தொடர்; *a.* அணுத்திரள் மூலவளைய இணைத் தொடரான; (தொ.) side-chain theory, அணுத்திரள் வளைய இணைத்தொடர்க் கோட்பாடு.

**side'-chapel**, *n.* திருக்கோயிற் சிறகுத் தொழுகை மாடம்.

**side'-comb**, *n.* அழகுச் சாய்செருகு சீப்பு.

**side'-cutting**, *a.* பக்கவெட்டுக்குழி, இருப்புப்பாதை-கால் வாய் ஆகியவற்றின் கரைகளுக்காக அருகே வெட்டப்பட்ட பக்கப்பள்ளம்.

**sid'ed**, *a.* பக்கத்தினையுடைய; பக்கங்களில் தட்டையாக்கப் பட்ட; பக்க முகப்புக்களையுடைய.

**side'-dish**, *n.* துணையுண்டி; துணைக்கறி; சிறப்புத் துணைக் கூட்டு.

**side'-door**, *n.* பக்கக்கதவு; திட்டிவாசல்.

**side'-drum**, *n.* கண்முரசு, முரசறைவோனின் பக்கத்தில் தொங்கவிடப்பட்டிருக்கும் இருதலைச் சிறு போர் முரசம்.

**side'-face**, *n.* சிறங்கணி தோற்றம், ஒருபுடைத் தோற்றம்.

**side'-glance**, *n.* ஒசிந்த நோக்கு, கடைக்கணோக்கு; ஓரக் காட்சி; இடைச் சுட்டுக்குறிப்பு.

**side'-issue**, *n.* கிளை வினைவு; கிளைச்செய்தி.

**side'light,** *n.* பக்க விளக்கு ; துணைவிளக்கம், இடைஇடை அணிவிளக்கம் ; இடைவிளக்கத்துணுக்கு ; இயங்கு கப்பலின் இடப்புறச் செவ்விளக்கு ; இயங்கு கப்பலின் வலப்புறப் பச்சை விளக்கு.

**side'-lines,** *n.* ஆட்டக்களத்தின் எல்லைகடந்த அணிமைப் பகுதி ; எல்லைப்பக்கத் தொலைவிடம்.

**side'ling,** *a.* பக்கவாட்டான ; புடைச்சாய்வான ; *adv.* பக்கவாட்டாக ; புடைச்சாய்வாக.

**side'lock,** *n.* ஓரக்குடுமி ; ஓரக்கொண்டை ; ஓரமுடி.

**side'long,** *a.* ஓரச்சாய்வான ; *adv.* ஒருக்கணிப்பாக, ஓரச் சாய்வாக.

**side'-note,** *n.* ஓரக்குறிப்பு, பக்கக்குறிப்பு.

**side'-on',** *a.* பக்கமுனைப்பான, பக்கம் முன்புறமாகத் தெரியும்படியான ; *adv.* பக்கமுனைப்பாக முன்னே தெரியும்படியாக.

**side'-path,** *n.* கிளைப்பாதை ; தெருவோர நடைபாதை.

**side'-post,** *n.* வாயிற்கம்பம் ; பக்கத்தூண்.

**sid'er,** *n.* கட்சியாளர், ஒருதலையாதரவாளர்.

**sider'eal,** *a.* நாண்மீன் சார்ந்த, உடுக்கள் சார்ந்த ; (தொ.) sidereal day, நாண்மீனியக்கக் கணிப்புக்காலம், மீநாள் ; sidereal time, நாண்மீன் சார்ந்த காலக் கணிப்புமுறை ; sidereal year, நாண்மீன் இயக்கக் கணிப்பு ஆண்டு.

**side'-road,** *n.* துணைப்பாதை ; கிளைப்பாதை.

**siderog'raphy,** *n.* எ∴கின் மேற் செய்யப்படும் செதுக்கு வேலைப்பாட்டுப்பாணி.

**side'-saddle,** *n.* புடைச்சேணம், இரு கால்மிதிகளையும் ஒரு புறமாகக்கொண்ட சேணப் பின்னிருக்கை ; (தொ.) side-saddle flower, பூச்சியுண்ணுஞ் சாடிவடிவ மலரினையுடைய செடி.

**side'-seat,** *n.* ஊர்திச் சிறைப்புற இருக்கை, ஊர்தியில் இரு புறத்திலும் பக்கம் நோக்கியிருக்கும் இருக்கை.

**side'-show,** *n.* துணைக்காட்சி, சில்லறைக்காட்சி, இடைக் காட்சி.

**side'-slip,** *n.* பக்கச்சறுக்கல் ; ஓரச்சாய்வு ; விலாத்தல், விமானத்தின் ஓரச்சாய்வியக்கம் ; தப்புப்பிள்ளை, முறைகேடாகப் பிறந்த குழந்தை; நாடக அரங்கின் காட்சிமாற்றப் பக்க அறை ; *v.* பக்கவாட்டில் சறுக்கு ; விலாத்து, விமான வகையில் ஓரமாகச் சாய்ந்தியங்கு.

**sides'man,** *n.* திருக்கோயில் துணைக்காவலர்.

**side'-splitting,** *a.* பெருஞ்சிரிப்பை உண்டாக்குகிற ; சிரிப்பு வகையில் விலாப்புடைக்கச் செய்கிற.

**side'-step,** *n.* பக்கவாட்டு அடிபுடைபெயர்ப்பு, பக்கநோக்கிய அடிபெயர்ப்பு ; ஏறுகாற்படி ; வண்டியில் கால் வைத்து ஏறுவதற்கான பலகை ; *v.* பக்கவாட்டில் விலகித்தப்பு ; காற்பந்தாட்டத்தில் தட்டிக்கழி.

**side'-stroke,** *n.* புடைவீச்சடி ; பக்கவீச்சு; பக்கநோக்கிய வீச்சு ; பக்கவாட்டிலிருந்து வரும் அடி ; இடைவரு செயல் ; தற்செயல் நிகழ்வு ; நீச்சலில் கைவீச்சடி.

**side'-track,** *n.* பக்கப் பாதை; இடைப்பிறிதுநெறி; *v.* பக்கப் பாதையில் திரும்பு ; வேறு பாதையில் திருப்பு ; ஒதுக்கிவை; தள்ளிப்போடு ; பின் கவனிப்பதற்காக ஒத்திவை.

**side'-view,** *n.* பக்கவாட்டுக் காட்சி.

**side'walk,** *n.* ஓர நடைபாதை.

**side'ward,** *a.* பக்கவாட்டான, பக்கம்நோக்கிய; பக்கம்நாடிய; பக்கத்திருந்து செல்லுகிற ; *adv.* பக்கவாட்டாக, பக்க நோக்கி.

**side'wards,** *adv.* பக்கவாட்டாக பக்கம்நோக்கி.

**side'way, side'ways,** *a.* பக்கவாட்டான ; பக்கமாகச் சாய்ந்த ; *adv.* பக்கவாட்டாக ; பக்கமாகச் சாய்ந்து.

**side'-wheel,** *a.* நீராவிக்கப்பல் வகையில் பக்கத் துடுப்பாழி அமைவுற்ற.

**side'wise,** *a.* பக்கமான ; பக்கம்நோக்கிய ; *adv.* ஒருபக்கத்தில் ; ஒருபக்கம் நோக்கி.

**si'di, si'di-boy,** *n.* ஆப்பிரிக்கன் ; நீகிரோ.

**sid'ing,** *n.* புடையிணை பாட்டை, வண்டிகளைத் திசை திருப்புவதற்காக இருப்புப்பாதைக்குப் பக்கமாகப் போடப்பட்ட சிறிய பக்க இருப்புப்பாதை ; ஒதுங்குபாட்டை, ஓடாத புகை வண்டி ஒதுங்கி நிற்பதற்கான பக்கத் தண்டவாளம் ; ஒருதலை ஆதரவு ; துணை ஆதரவு ; *a.* ஒருபக்க ஆதரவான ; துணை ஆதரவான.

**si'dle,** *v.* அஞ்சியொதுங்கு ; ஒருபக்கமாகப் பின்னிடை ; பக்கவாட்டாகச் சாய்வுறு.

**Sidon'ian,** *n.* சைடன் நகரத்தவர்; *a.* சைடன் நகரஞ் சார்ந்த.

**siege,** *n.* முற்றுகை ; சுற்றிவளைப்பு ; முற்றுகைக்காலம் ; முற்றுகையீடு ; முற்றுகைக்கு ஆட்படுதல்; ஆள்வகையில் சுற்றி மொய்ப்பு ; கருத்து நெருக்கீடு, தங்கருத்துக்குக் கொண்டுவரும் வன்முறை நெருக்கு முயற்சி ; *v.* முற்றுகையிடு ; (தொ.) lay siege to, முற்றுகையிடத் தொடங்கு ; push the siege, முற்றுகையைக் கடுமையாகத்தொடர் ; raise the siege of, முற்றுகையைக் கைவிடு ; stage of siege, முற்றுகைநிலை, பொதுமுறைச் சட்ட நடைமுறை ஒதுக்கி வைக்கப்படும் போர்க்கால நிலை ; stand a long siege, நீடித்த முற்றுகையைத் தாங்கி நில்.

**siege'-basket,** *n.* அரண் கட்டுமானப் பாளச் சட்டம், அரண் கட்டுதலில் அல்லது பொறியமைத்தலில் மண்ணால் நிறைக்கப்பட்ட பிரம்பால் அல்லது உலோகப் பட்டைகளாலான நீள் உருளைச் சட்டம்.

**siege'-gun,** *n.* நிலப்பீரங்கி, பாரச் சுடுகலம்.

**siege'-train,** *n.* முற்றுகைச் சாதனத் தொகுதி, முற்றுகைக்கான பீரங்கி முதலியவற்றின் தொகுதி.

**siege'-works,** *n. pl.* முற்றுகைப்பாடுகள், காப்பரண்-மறைகுழி முதலியவற்றின் தொகுதி.

**Sieg'fried line,** *n.* இரண்டாம் உலகப்போரில் பிரஞ்சு எல்லையோரச் செர்மன் அரண்வரிசை.

**Sienese',** *n.* சீயெனு நகரத்தவர் ; *a.* சீயெனு நகரத்தைச் சார்ந்த; (தொ.) Sienese school, 13, 14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஓவியமுறைக் குழு.

**sienn'a,** *n.* சீயெனு மண், சாயப்பொருள் தரும் காவிக் களி மண்வகை.

**Siennese',** *n.*=Sienese.

**sie'rra,** *n.* வாட்பாறை மலை, வாட்போலக் கரடுமுரடாக அமைந்த மலைவகை.

**sies'ta,** *n.* நண்பகல் குறுந்துயில்.

**sieve,** *n.* சல்லடை ; சலித்துப் பிரிக்கும் கருவி, அரிதட்டு ; அளவு வரிக்கூடை ; வரிக்கூடை அளவு ; ஓட்டைவாயர் ; மறை காவாது வெளியிடும் இயல்பினர் ; *v.* சல்லடையிலிட்டுச் சலி ; அரிதட்டிட்டு அரி.

***siffleur,*** (பிர.) *n.* சீழ்க்கைக் கலைஞர் ; *fem. siffleuse.*

**sift,** *v.* அரித்தெடு ; சலித்துப் பிரித்து எடு ; சலித்துத் தரம் பிரி ; அரி, தெள்ளு, கொழி ; துளைகளுள்ள கரண்டியால் தூவு ; பனி முதலியவற்றின் வகையில் தூவலாகப் பெய் ; ஒளிக்கதிர் சிதறப்பெறு; திரித்தாய்ந்து மெய் அறி ; நன்மை தீமை பிரித்துணர் ; பண்பு திரித்தறி.

**sigh,** *n.* நெட்டுயிர்ப்பு ; பெருமூச்சொலி ; ஏக்கம் ; ஆழ்துயர் ; மிக்க ஆறுதல் உணர்வு ; *v.* நெடுமூச்செறி ; பெருமூச்சுவிடு; பெருமூச்சோடு தெரிவி ; பெருமூச்சுப் போன்று ஒலியெழுப்பு; ஏக்கங் கொள் ; (தொ.) sigh for, அவாவி ஏங்குறு ; sigh of relief, பேராறுதல் ; sigh out, ஏக்கத்துடன் குறிப்பிடு, பெருமூச்சுடன் கூறு.

**sight,** *n.* பார்வை ; கண்பார்வை, பார்க்கும் திறம் ; காட்சி; காணப்படுவது ; தோற்றம் ; காணப்படுதல் ; காணக்கூடியது ; கண்காட்சிப்பொருள் ; காட்சிக்குரியது ; காண்டக்க பொருள்; காட்சி எல்லை; நுண்நோக்கு; அறிதிறம் ; கருத்து; மதிப்புணர்வு ; (பே-வ.) பெரிதளவு ; *v.* காண், அருகில்

சென்று பார்; காணுமளவில் அருகாகு; விண்கோளம் முதலியவற்றைக் கருவிகொண்டு நுண்ணிதின் நோக்கு; துப்பாக்கிக்குக் காட்சியமைவு இணை; துப்பாக்கிக்குக் காட்சியமைவு சரிசெய்; வான்கோளநிலமானிக்குக் காட்சியமைவு பொருத்து; தொலைநோக்கியின் துணைகொண்டு வான்கோளங்களைப் பார்வையிடு; சரியாக இலக்குவை; (தொ.) a sight for sore eyes, எவரும் காண அவாவும் பொருள்; எவரும் காண அவாவும் ஆள்; விரும்பி வரவேற்கப்படுகிற விருந்தாளி; at first sight, முதல் தோற்றத்திலேயே, கண்டவுடனேயே; at sight, on sight, பார்த்தபின்; கண்டு; be in sight, பார்க்கக்கூடிய நிலையிலிரு, தெளிவாகத் தெரியலுறு; catch sight of, get a sight of, காணு, காணத்தொடங்கு; come in sight of, தோன்று; காணுமளவு அணுகுதலுறு; heave in sight, காணப்பெறு; in sight, கண்முன் தோன்றும் நிலையுடைய; அருகான; விரைவில் வர இருக்கிற; know by sight, தோற்றத்தால் மட்டுமே அறி, முற்பழக்கமில்லாதிரு; long sight, வெள்ளெழுத்து, தொலைப்பார்வைக் கோளாறு; lose sight of, காணப்பெறுதிரு, காட்சியிலிருந்து மறையப்பெறு; loss of sight, பார்வையிழப்பு, குருடாதல்; make a sight of oneself, இயல்பிற்கு மாறாக உடையுடுத்து; near sight, short sight, அணுக்கப் பார்வைக்கோளாறு; முன்னறிவின்மை; out of sight, மறைந்த; காண முடியாத; payable at sight, காசோலை வகையில் கண்டவுடன் கொடுக்கக்கூடிய; play music at sight, முற்பயிற்சியில்லாமலே இசைமிழற்று; put out of sight, மறை; ஒதுக்கு, புறக்கணிப்புச்செய்; second sight, அகவிழி, நுண்ணுணர்வுத்திறன், தொலை நிகழ்வறிதிறம், வருங்காலம் அறி திறம், இயல்பாக உய்த்தறி திறன்; see the sights, அருங்காட்சிகளைக் காண்.

**sight'less**, *a.* கண்ணற்ற; (செய்.) காண் முடியாத.

**sight'ly**, *a.* காணத்தக்க; காட்சி வனப்பமைந்த.

**sight'-singing**, *n.* காட்சியிசைப்பு, இசைமானத்தாளைப் பார்த்துப் பாடுதல்.

**sight'worthy**, *a.* காணத்தக்க.

**si'gillate**, *a.* மட்கலங்கள் வகையில் சித்திரப்பதிவுப் படிவங்கள் கொண்ட; (தாவ.) முத்திரைபோன்ற அடையாளங்கள் கொண்ட.

**sig'mate**, *a.* எஸ் (s) என்ற எழுத்தின் வடிவம் உடைய; *v.* எஸ் என்ற எழுத்தைச் சேர்; எஸ் என்ற ஒலியை உடனிணை.

**sigmat'ic**, *a.* கிரேக்கமொழி இலக்கணத்தில் 'எஸ்' என்ற எழுத்திணைந்து உருவான.

**sig'moid**, *n.* எஸ் என்ற எழுத்துப்போன்ற வடிவு, எதிரெதிரான வளைவு; *a.* எஸ் போன்று வளைந்த.

**sign**, *n.* குறி, இடுகுறி வரை; அடையாளம், நினைவுக்குறி; அறிகுறி, அடையாளக் குறிப்பு; அறிவிப்புக்குறி, தெரிவிப்புக்குறி; தனிச்சிறப்புக் குறி; சின்னம், சுட்டுகுறி; குறியீடு, தெரிந்த எழுத்துக்குப் பதிலாக மேற்கொள்ளப்படும் தெரியவரா எழுத்து; மறைகுறியீடு, குழூஉக்குறிச் சின்னம்; சைகை, கையடையாளம்; மெய்யுறு குறிப்பு; செயற்குறிப்பு; சாடை, நினைவூட்டுக் குறிப்பு; விளம்பரக் குறியீடு; மரபுக்குறி; சான்றுக்குறி; எண்பிக்கும் அடையாளம்; முன் அறிகுறி; முன்னம், எதிர்ப்புக்குறி; எச்சரிப்புக்குறி; நோயின்குறி; இடர்க்குறி, உற்பாதம்; இராசிச்சின்னம், வான்மனைக்குறி; *v.* குறியீடு செய்; குறித்துக்காட்டு; அடையாளம் இடு; சைகை காட்டு; சைகைமூலந் தெரிவி; சைகைமூலங் கட்டளையிடு; சைகைமூலம் வேண்டு; கையொப்பமிடு; கையொப்பமிட்டு ஒப்புதல் தெரிவி; கையொப்பமூலம் உத்தரவாதஞ் செய்; கையொப்பமூலம் பணி ஏற்புச்செய்; கையொப்பமூலம் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்; (தொ.) deaf and dumb signs, செவிட்டுமரர்களுக்குரிய தடவுக்குறி எழுத்துமுறை; make no sign, மனநிலை தெரிவியாதிரு, தன்கருத்துக் காட்டாதிரு, வாளாவிரு; minus sign, negative sign, கழித்தற்குறி (—), எதிர்மறை அளவுக்குறி (—), அன்மைக்குறி; positive sign, plus sign, கூட்டற்குறி (+), நேர் ஆக்கக்குறி (+); sign and countersign, எதிரெதிர்புரிவுக்குரிய ஈரிணை அடையாளக்குறி; sign manual, தனது கையொப்பம், அரசர் கையொப்பம்; signs of the times, காலப் போக்கின் சின்னங்கள்; the sign of the cross, குருமார் வாழ்த்தில் மெய்ம்மீதிடும் சிலுவைவடிவ விரற்குறி; பக்தி உணர்ச்சிக்காட்டும் சிலுவைவடிவ விரற்குறியீடு.

**sig'nal**, *n.* சுட்டுக்குறி; சமிக்கை; பொது அறிவிப்பு அடையாளம்; முன் அறிகுறி; முன் அறிவிப்புச் சுட்டு; சாடைக் குறிப்பு, மறைகுறிச் சைகை; அடையாளச் செய்தி அறிவிப்பு; தொலை விளக்கக்குறி; தொலைக்காட்சிக் குறி; *a.* குறிப்பிடத்தக்க, தனிச்சிறப்பு வாய்ந்த; வாய்ப்பான, தகவுடைய, மிகச் சரியானதாகக் கொள்ளத்தக்க; முனைப்பாகத் தெரிகிற, தொலை விளக்கமான; எடுத்துக் காட்டாயுள்ள, முன்மாதிரியான; *v.* குறித்துக்காட்டு; சைகைகாட்டு, சாடையால் தெரிவி; சுட்டுக்குறி காட்டு, அடையாள அறிவிப்புச் செய்தி அனுப்பு; சுட்டுக்குறி மூலம் ஏவு; (தொ.) code of signals, சுட்டுக்குறித் தொகுதி, கடற்படைத்துறை-படைத்துறை முதலியவற்றில் செய்திகள் அனுப்புவதற்காக அமைக்கப்பட்ட அடையாளங்களின் தொகுப்பு; Royal Corps of Signals, படைத்துறை மறைகுறிச் செய்தி அறிவிப்புக்குழு; signal of distress, இடர்ச்சுட்டுக்குறி அறிவிப்பு, கப்பலில் துப்பாக்கி வேட்டுத்தீர்வு மூலமான இடர் உதவி வேண்டுகோள்; signal strength, கம்பியில்லாத் தந்தியின் சுட்டுக் குறிச் செய்தி ஏற்பாற்றல்.

**sig'nal-book**, *n.* சுட்டுக்குறித் தொகுப்பேடு, படைத்துறை-கடற்படை முதலியவற்றில் சிக்கலான செய்திகள் அனுப்புவதற்காக ஒழுங்குசெய்து அமைக்கப்பட்ட சைகை அடையாளத் தொகுப்பு நூல்.

**sig'nal-box, sig'nal-cab'in**, *n.* அடையாள அறிவிப்புக் கூண்டு, இருப்புப்பாதையோரமாக அமைந்த சைகைச் செய்தி அனுப்பும் கருவிக்குடில்.

**sig'nalize**, *v.* குறிப்பிடத்தக்கதாக்கு, தனிச்சிறப்புடையதாக்கு; நீடு நினைவுக்குறியாகச் செய், பெரிதும் விளங்கச் செய்.

**sig'nal-man, sig'neller**, *n.* சைகைச் செய்தி அனுப்புவோர்.

**sig'natory**, *n.* உடன்படிக்கையில் கையொப்பமிட்டவர்; கையொப்பமிட்ட கட்சியினர்; *a.* உடன்படிக்கையிற் கையொப்பமிட்ட.

**sig'nature**, *n.* கையொப்பம்; கைச்சாத்து, பெயர் முதலெழுத்துக் கையொப்பம்; கைநாட்டு, கையொப்பக் குறிச்சுட்டு; அச்சு முழுமடித்தாள் வரிசை எண்; அச்சு முழுத்தாள் வரிசைக்குறி; (தொ.) key signature, இசைமானத் தொடக்கத்தின் தாள எடுப்புக் குறிப்பு; signature tune, தனிக் கோவைக் குறியீட்டுப் பண்.

**sign'board**, *n.* விளம்பரப் பலகை.

**sig'net**, *n.* தனிமுத்திரை; கையொப்ப இணைகுறி முத்திரை; (தொ.) the signet, சிறப்பு அரச முத்திரை.

**sig'net-ring**, *n.* முத்திரை மோதிரம், பொறிப்புக்கணையாழி.

**signif'icance**, *n.* தனிமுறைச் சிறப்பு; உட்பொருள்; தனி விளைவு வளக்கூறு; உட்கருத்து; குறிப்பு நுட்பம்.

**signif'icant**, *a.* குறிப்பிடத்தக்க; தனிப்படக் கவனிப்பதற்குரிய; புறக்கணித்துவிடத் தகாத; தனிச் சிறப்பு வாய்ந்த; உள்ளார்ந்த சிறப்புடைய; விளைவுவளக் கூறுடைய; உட்கருத்துவளஞ் செறிந்த; குறிப்புவளஞ்சான்ற; உட்பொருளார்ந்த.

**signif'icantly**, *adv.* குறிப்பிடத்தக்க வகையில், தனிக்குறிப்புடன், தனிக்கவனிப்பிற்குரிய முறையில்.

**significa'tion**, *n.* தனிப்பொருள்; பொருள்நுட்பம்; உட்குறிப்பு, உட்பொருள்; தனிக்குறிப்பீடு.

**signif'icative**, *a.* தனிக்குறிப்புடைய, தனிப்பொருட் சுட்டுடைய; குறிப்பு வளஞ்சான்ற; தனிச்சிறப்புடைய.

**sig'nify**, *v.* குறித்துக்காட்டு; அடையாளமாய் அமை; தனிச்சின்னமாய் அமை; பின்விளைவு காட்டு; பயன்வளமுடையதாயிரு; விளைவுவளக் கூறுடையதாய் அமை; பொருள்படு;

கருப்பொருளுடையதாயிரு ; உட்குறிப்புடையதாயிரு ; தனிக் கருத்துப் புலப்படுத்து ; படிப்பிணை வழங்கு ; தனிச்சிறப் புடையதாயிரு ; குறிப்பிடத்தக்கதாய் அமை ; கவனிப்பிற் குரியதாயிரு ; புறக்கணிக்கத்தகாததாயிரு ; தெரிவி, அறிவி.

**si'gnor, signo're,** (இத்.) *n.* திரு., இத்தாலிய வழக்கில் மண மான ஆடவர்பெயர் முன்னடைச்சுட்டுக் குறிப்பு; திருவாளர், நன்மகன்.

**signo'ra,** (இத்.) *n.* திருவாட்டி, இத்தாலிய வழக்கில் மணமான பெண்டிர் பெயர் முன்னடைச்சுட்டுக் குறிப்பு; திரு வுடையாள், நன்மகள்.

**signorin'a,** (இத்.) *n.* செல்வி, திருநிறைசெல்வி, இத்தாலிய வழக்கில் மணமாகாத பெண்பெயர் முன்னடைச்சுட்டுக் குறிப்பு ; நங்கை, இளம்பெண்.

**sign'-painter,** *n.* விளம்பரப்பலகை ஓவியர்.

**sign'-post,** *n.* கைகாட்டி ; வழிகாட்டிமரம் ; தெருப்பெயர்ப் பலகை.

**sign'-writer,** *n.* விளம்பரப் பலகை எழுத்தோவியர்.

**Sikh,** *n.* சீக்கியர், பஞ்சாபிலுள்ள சீக்கிய இனத்தவர் ; சீக் கிய சமயத்தவர் ; சீக்கிய வீரர் ; *a.* சீக்கிய இனஞ் சார்ந்த; சீக்கிய சமயஞ் சார்ந்த.

**Sikh'ism,** *n.* சீக்கிய சமயம், பஞ்சாபில் குருநானக் (1469-1538) என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட சமயம்.

**sil'age,** *n.* வளிகாப்புப் பதனமுறை, பசுந்தீவனத்தின் கால் புகாக் குழிபதன அல்லது பேழைப்பதன முறை ; *v.* தீவன வகையில் கால்புகாக் குழிபதனஞ் செய் ; பசும்புல் வகையில் வளிபுகாப் பேழைப்பதனஞ் செய்; பதனக்குழியிலிடு; பதனப் பேழையிலிடு.

**sil'ence,** *n.* அரவமின்மை ; மோனம் ; சந்தடியின்மை ; வாளாமை ; வாய்விடா அமைதி ; பேசாமை ; வாயாடாமை; செய்தி வெளியிடாமை ; மெய்ம்மை வகையில் வாயடக்கம் ; மறைகாப்பமைதி ; *v.* ஓசையமர்த்து ; வாயடங்கச் செய்; பேச்சடங்கு; பேசாதிருக்கச்செய்; விவாதத்தில் எதிராளியை அடக்கிவிடு ; எதிர்வாதத்திற்கு இடமில்லாமற் செய்துவிடு ; எதிரி துப்பாக்கி-பீரங்கி முதலியவற்றின் வகையில் செயல் படாததாக்கு; (தொ.) break silence, முதலிற்பேசு; in silence, பேசாமல் ; பேச்சுமூச்சின்றி ; அமைதியாக ; keep silence, பேசாதிரு ; put to silence, சொற்போரில் எதிராளியின் வாயடக்கு ; எதிராளியை வாதத்தால் தோல்வியுறச்செய்.

**si'lenced,** *a.* வாயடக்கப்பட்ட ; செயலற்ற நிலைப்படுத்தப் பட்ட.

**sil'encer,** *n.* பேசாதிருக்கச் செய்பவர் ; ஓசைபடாதிருக்கச் செய்யும் அமைவு.

**sil'ent,** *a.* ஓசையற்ற, சந்தடியில்லாத ; அரவமற்ற ; பேசாத, வாய்விடாத ; உரையாடாத ; செய்தி வெளியிடாத ; மறை காத்தடக்குகிற ; சதி முதலிய வகையில் பேசப்படாத ; அமைதியான, அடக்கமான ; அமரிக்கையான ; உள்ளார்ந்த; மறைசெயலுடைய ; செய்திவகையில் பிறருக்குத் தெரியாத ; மறைத்து வைக்கப்பட்ட ; விளம்பரப்படுத்தப்படாத ; வர லாறு முதலியன வகையில் ஒன்றும் தெரிவிக்காது செல்கிற ; எழுத்துவகையில் ஒலிப்பற்ற ; திரைப்பட வகையில் குரலிணை வற்ற; துப்பாக்கி முதலியன வகையில் ஓசைபடாத; தொழிற் பங்காண்மை வகையில் செயற்படாத ; மோனமுறை பின் பற்றுகிற; (தொ.) silent film, பேசாப்படம், இயங்கு திரைப் படம் ; silent letter, ஊமை எழுத்து, ஒலிக்கப்பெறுத எழுத்து ; ஒலிவடிவுபெறு வரிவடிவு ; silent partner, வாணி கத்துறையில் தொழில் நடைமுறையில் பங்குகொள்ளாத பங்காளி; the silent system, சிறையில் கைதிகளை எப்பொழு தும் பேசாமல் வைத்திருக்கும் முறை.

**sil'ently,** *adv.* பேசாமல் ; அமைதியாக ; ஓசைபடாமல் ; மறைவாக.

**Silen'us,** *n.* வயிறுதாரி.

**sile'sia,** *n.* மென்துகில் வகை.

**silhouette',** *n.* நாடகத்திரைமீது காட்டப்படும் திண்ணிழ லுருவம், பக்கம் நோக்கிய உருவரை நிழல்வடிவம் ; பக்கம் நோக்கிய உருவரைக் கருவடிவம் ; *v.* பக்கம்நோக்கிய புற வெட்டு உருவரைக் கருவடிவமாகக் காட்டு ; திண்ணிழலுரு வாகத் திரையிற் படிவி ; திண்ணிழலுருப்படிவி ; (தொ.) in silhouette, திண்ணிழலுருப்படிவாக.

**sil'ica,** *n.* கன்ம ஈருயிரகை, மணலிலும் பளிங்குக்கல் வகை களிலும் பெருங்கூருய் அமைந்த மணற் சத்து ; *a.* மணற் சத்துச் சார்ந்த.

**sil'icate,** *n.* மணற்சத்து உப்பு.

**sil'icated,** *a.* மணற் சத்தார்ந்த ; மணற்சத்துடன் கலக்கப் பட்ட ; மணற்சத்துச் செறிந்த; மணற்சத்து மேற்பூசப்பட்ட.

**sili'ceous,** *a.* மணற்சத்தார்ந்த, மணற்சத்தடங்கிய.

**sili'cic,** *a.* மணற்சத்திற்குரிய ; மணற்சத்திலிருந்து பெறப் பட்ட.

**silicif'erous,** *a.* மணற்சத்தடங்கிய.

**silicifica'tion,** *n.* மணற்சத்துக் கலப்பு ; மணற்சத்தூட்டு வளம் ; மணற்சத்தாக்கம் ; மணற்சத்துச் செறிப்பு ; மணற் சத்தணுப்பகர இணைவு.

**sili'cify,** *v.* மணற்சத்தூட்டு ; மணற்சத்துக் கலந்து வள மாக்கு ; மணற்சத்தாய் மாற்று ; மணற்சத்துச் செறிவி ; மணற்சத்து அணுப்பகர இணைவாக்கு.

**sili'cious,** *a.*=siliceous.

**sil'icon,** *n.* கன்மம், மணற்சத்திற் பெரிதளவாயுள்ள தனிமம்.

**sil'iqua,** *n.* கடுகு இனமரவகை நெற்று ; *pl.* sil'iquae.

**silk,** *n.* பட்டு ; பட்டுத்துகில் ; பட்டிழை ; செயற்கைப்பட்டு ; செயற்கைப்பட்டுத்துகில் ; செயற்கைப் பட்டிழை ; சிலந்தி நூல் வகை; நீல-மாணிக்கக்கல் வகைகளின் தனி மெல்லொளி; (பே-வ.) அரசுச் சார்பு வழக்குரைஞர் ; *a.* பட்டினாலாய ; (தொ.) artificial silk, செயற்கைப்பட்டு ; நார்ப்பட்டு ; make a silk purse out of a sow's ear, பண்பு குறைந்தவரிட மிருந்தே மிகுபண்புவளம் பெறு ; take silk, அரசுச்சார்பு வழக்குரைஞராகு.

**silk'-cotton,** *n.* இலவு, இலவம்பஞ்சுமரம் ; இலவம்பஞ்சு.

**sil'ken,** *a.* பட்டாலான ; பட்டுப்போன்ற ; மென்னயமான ; பட்டொளி வீசுகிற ; இன்னயமிக்க ; இன்பசப்பான.

**silk'-fowl,** *n.* பட்டியல் இறகுடைய பறவை வகை.

**silk'-gland,** *n.* பட்டுப்புழுவின் பட்டுநீர்மச் சுரப்பி.

**sil'kiness,** *n.* பட்டுப்போன்ற பண்பு ; மென்பட்டியல்பு.

**silk'-reel,** *n.* பட்டுநூல் திரிவட்டு.

**silk'-winder,** *n.*=silk-reel.

**silk'worm,** *n.* பட்டுப்பூச்சி.

**sil'ky,** *a.* பட்டுப் போன்ற ; மெல்லிழைவான ; இன்னழகு வாய்ந்த; மென்னய நேர்த்தியுடைய; (தொ.) silky manner, இதவான நடத்தை.

**sill,** *n.* பலகணிப்படிக்கல் ; பலகணிப் படிக்கட்டை ; வாயிற் படிக்கல் ; வாயிற்படிக் கட்டை ; கப்பல்கட்டுத்துறை வாயில் அடித்தளக்கட்டு.

**sill'abub,** *n.* பாற் பாசடை, பாலேடு-தேறல்-பசைமங்கலந்த கூழமுதுணவு.

**sill'ily,** *adv.* மடத்தனமாக, சிறுபிள்ளைத்தனமாக, அறி வற்று, சூதுவாது தெரியாநிலை காரணமாக.

**sill'iness,** *n.* மடமை ; முதிரறிவின்மை, அறிவுக்குறை; மன உரமின்மை ; சிறுபிள்ளைத்தனம் ; சூதுவாதறியாத் தன்மை; கேடற்ற சிறுமை ; அற்பத்தனம் ; இரங்கத்தக்க நிலை ; கர வின்மை.

**sill'y,** *n.* மட்டி, மடவோர்; கேடிலி; *a.* மடமை வாய்ந்த; சூது வாதறியாத; சிறுபிள்ளைத்தனமான; முதிரறிவற்ற; மன உர மற்ற; அற்பத்தனமான; கள்ளமற்ற, கரவில்லாத; அறிவற்ற; இரங்கத்தக்க ; கேலியான ; மரப்பந்தாட்டத்தில் ஆட்டக்கார ருக்கு மிக நெருங்கிய ; (தொ.) silly point, silly short leg, மரப்பந்தாட்டக்காரருக்கு மிக அண்மையிலுள்ள கெலிப்பு.

**sil'o,** *n.* பசுந்தீவனப் பதனக்குழி; வளிபுகாப் பசும்புல் பதனப் பேழை; *v.* பசும்புல்லைப் பதனக் குழியிலிடு; பசுந்தீவனத்தைப் பதனப் பேழையிலிட்டு வை.

**silt,** *n.* வண்டல், சேற்றுப்படிவு; *v.* வண்டலிடு, சேருகப் படிவுறு; வண்டலிட்டடை.

**Silur'ian,** *n.* பண்டைப் பிரிட்டனின் பழங்குடி வகையினர்; *a.* (மண்.) தொல்லுயிரூழியில் மீன்பருவத்திற்கு முந்தியகூறு சார்ந்த; தண்டிலிப் பருவத்தின் கடைக்கூற்றினுக்குரிய.

**sil'va,** *n.* காட்டுமரங்கள்.

**sil'van,** *a.* முல்லைத்திணைக்குரிய, காட்டுநிலஞ் சார்ந்த, காட்டுக்குரிய; காடுநிறைந்த; காட்டுப்புறஞ் சார்ந்த; நாட்டுப்புற வாழ்விற்குரிய.

**sil'ver,** *n.* வெள்ளி; வெள்ளிப்பணம், வெள்ளி நாணயம்; வெள்ளிக்கலம்; வெள்ளிக்கலத் தொகுதி; வெள்ளித்தட்டம்; வெள்ளிநகை; வெள்ளி அணிமணித்தொகுதி; வெள்ளிப் பாளம்; வெள்ளிக்கலவை; வெள்ளிப்பூச்சுக்கலவை; நிழற் படத்தாளைப் பதப்படுத்தும் வெள்ளி உப்பு; *a.* வெள்ளியாலான; தலை முதன்மைக்கடுத்த; தலைமைச் சிறப்பிற்கு ஒருபடி மட்டுமே குறைந்தபடியான; *v.* வெள்ளிப்பூச்சிடு; வெள்ளித்தகடு பொதி; நிலைக்கண்ணாடிக்குப் பாதரசப்பூச்சிடு; வெள்ளித்தோற்றங் கொடு; வெள்ளிய பளபளப்புநிறம் அளி; நரைக்கச் செய்; வெள்ளிதாக்கு; நரை; வெள்ளிதாகு; வெள்ளிபோன்றதாக்கு; வெள்ளிபோன்றதாகு; (தொ.) born with a silver spoon in one's mouth, உயர் இன்ப வாய்ப்புடன் பிறந்த; every cloud has a silver lining, ஒவ்வொரு துன்பத்திலும் அஃததற்குரிய ஆறுதற்கூறு உண்டு; fulminating silver, வெடிமருந்துவகைத் தூள்; German silver, nickel silver, பூச்சிடப் பயன்படும் வெள்ளிக்கலவை, வேலைப்பாட்டுக்கான வெள்ளிக்கலவை; silver fir, இலைகட்கு அடியில் இரட்டை வெள்ளிக்கோடுகள் உடைய தாவரவகை; silver Latin, இலத்தீன் வரலாற்றில் பொற்காலத்தை அடுத்துவந்த மொழியிலக்கியம்; silver leaf, வெள்ளி மென்தகடு; silver paper, வெண்ணிறப் பசுமென்தாள்; (பே-வ.) தகரச்சுருள்; silver plate, வெள்ளித்தட்டு; வெள்ளிக்கலங்கள் தொகுதி; silver point, வெள்ளி முனைப் பட வரை முறை; silver print, நிழற்படத்துறையில் வெள்ளியுப்பால் உணர்வூட்டப்பெற்ற நிழற்படத் தாளிலுள்ள நேர்படி; silver sand, தோட்ட ஒப்பனைக்குரிய வெண்மணல்; silver screen, உயர்வகைத் திரைப்படத் திரை; உயர்தரத் திரைப்படத் துறை; silver side, மாட்டிறைச்சியின் சிறந்த பகுதி; silver solder, வெள்ளிப் பற்றுசு; silver standard, வெள்ளிநாணய அடிப்படைச் செலாவணிமுறை; silver streak, இங்கிலாந்து கடற் கால்வாய்; silver thaw, நிலத்தளப்பனிப் பளபளப்பு; silver wedding, திருமண வெள்ளிவிழா, இருபத்தைந்து ஆண்டு மணவாழ்வு நிறைவுவிழா; the silver age, இலத்தீன் இலக்கிய வரலாற்றில் அகஸ்டஸ் காலத்தை அடுத்துவந்த பருவம்; கிரேக்க தெய்வமரபில் ஜியூஸ் (Zeus) ஆட்சிக்காலம்.

**sil'ver-bath,** *n.* நிழற்படத்திற்கான வெள்ளிவெடியகிக் கலவை நீர்மம்; நிழற்படத்திற்கான வெள்ளிக் கலவைநீர்மத் தட்டம்.

**sil'ver-fish,** *n.* வெள்ளிமீன்; புத்தகங்களிலும் பூசணத்திலும் காணப்படும் வெண்ணிறப் பூச்சி வகை, இராமபாணம்.

**sil'ver-foil,** *n.* வெள்ளி ஓலை, மிக மெல்லிய வெள்ளித்தகடு; வெள்ளி ஓலைச்சுருள்.

**sil'ver-fox,** *n.* வெண்முனைக் கருவால் நரி வகை.

**sil'ver-gilt,** *n.* வெள்ளிமுலாம்; மஞ்சள் வண்ணப் போலி முலாம் பூச்சு.

**sil'ver-grey,** *n.* ஒண்சாம்பர் நிறம்; *a.* ஒண்சாம்பர் நிறம் வாய்ந்த.

**sil'veriness,** *n.* வெள்ளிபோன்ற தன்மை.

**sil'ver-plating,** *n.* வெள்ளிப்பூச்சு.

**sil'ver smith,** *n.* வெள்ளிக் கம்மியர்.

**sil'ver-stick,** *n.* அரண்மனை மெய்காப்பாளர் தலைவர்.

**sil'ver-tongued,** *a.* நாநலம் படைத்த.

**sil'ver-top,** *n.* புல்நோய் வகை.

**sil'ver-weed,** *n.* வெள்ளிலையடியுடைய பாதையோர மஞ்ச மலர்ச்செடி.

**sil'very,** *a.* வெள்ளி போன்ற.

**sil'viculture,** *n.* மரவளர்ப்புக்கலை காடுவளர்ப்புக்கலையின் மர வளர்ப்புப் பிரிவு.

**sim'ian,** *n.* மனிதக்குரங்கு வகை; *a.* மனிதக்குரங்குவகை போன்ற; வாலில்லாக் குரங்கியல்புடைய.

**sim'ianoid,** *a.* மனிதக்குரங்கு வகை போன்ற; வாலில்லாக் குரங்கியல்புடைய.

**sim'ilar,** *n.* போன்றது; உருவொத்தது; பண்பொத்தது; *a.* ஒரு நிலைப்பட்ட; ஒருவகைப்பட்ட; பண்பொத்த; உருவொத்த; ஒன்றுடனொன்றொத்த; தம்முள் ஒத்த; (வடி.) உருக்கள் வகையில் கூறுகள் ஒத்த, வரை கட்டங்கள் வகையில் கோணங்கள் ஒப்பான.

**sim'ilarity,** *n.* ஒப்புடைமை, ஒத்த தன்மையுடைமை; ஒரே வகைமை; கூறொப்பு.

**sim'ilarly,** *adv.* அதுபோலவே; ஒத்த தன்மையிலேயே; தம்முள் ஒப்பாக.

**sim'ile,** *n.* உவமை, ஒப்புமையணி.

**simil'itude,** *n.* ஒப்பனை, போன்றிருக்குந்தன்மை; போலியொப்புமை, போலிப் புறத்தோற்றம்; உவமை, ஒப்புமை; எதிரிணை, உருவ நேர்படி.

**sim'ilize,** *v.* உவமையாக்கு; உவமையைப் பயன்படுத்து, உவமையால் விளக்கு.

**simm'er,** *n.* மென்கொதிப்பு, திளைப்பு; உட்புழுக்கம், உணர்ச்சிகளின் அடங்கிய உட்கொதிப்பு; சிரிப்பின் அடங்கிய உட்குலுக்கம்; *v.* கொதித்துத் திளைப்புறு, தளதளப்புறு; உட்புழுக்கமுறு, உணர்ச்சிகளின் வகையில் உட்கொதிப்புறு; சிரிப்பினல் உள்ளூரக் குலுக்கமுறு.

**sim'nel-cake,** *n.* அணிகிளர் மாவேடு, கிறிஸ்துமஸ் முதலிய விழாக்காலங்களுக்குரிய கோல அணி வேலைப்பாடுமிக்க அப்பம்.

**simon'iac,** *n.* கோயில் மானியங்களை விற்று வில்லங்கஞ் செய்பவர்.

**simoni'acal,** *a.* திருப்பணி விலைப்பழி சார்ந்த; சமயப்பணி உயர்வுகளை வாங்கி விற்கும் குற்றத்திற்குட் பட்ட.

**simoni'acally,** *adv.* திருப்பணி விலைப்பழியாக.

**Sim'on Pure,** *n.* உண்மை ஆள்; உண்மைச்சரக்கு

**sim'ony,** *n.* கோயில் மானியப் பேரம்.

**simoom',** (அரா.) *n.* பாலைவன ஊதை.

**simp,** *n.* (பே-வ.) முட்டாள்.

**sim'per,** *n.* பேய்மாலச்சிரிப்பு; *v.* அசட்டுச் சிரிப்புச் சிரி; போலி முறுவல் கொள்.

**simp'eringly,** *adv.* இளித்துக்கொண்டு, போலிப் புன்முறுவலோடு.

**sim'ple,** *n.* எளிமை; மூலிகை, மருந்துப்பூண்டு; மூலிகை மருந்து; *a.* எளிய; கடுமையற்ற; கடுமுயற்சி தேவைப்படாத; எளிதில் விளங்குகிற; ஐயத்திற்கு இடனற்ற; வெளிப்படையான; சிக்கலற்ற; ஒப்பனையற்ற, சிறப்பணியில்லாத; அழகு மிகுதியற்ற; தற்பெருமையற்ற; பணிவார்ந்த; சிறப்பற்ற, பொதுநிலையான; உயர்குடி சாராத; தாழ்நிலைப்பட்ட; சூழ்ச்சியற்ற, பாசாங்கற்ற; கபடில்லாத; எளிதில் நம்புகிற, எதிலும் ஐயம்கொள்ளாத; சூதுவாதற்ற, குழந்தை போன்ற; சிறுபிள்ளைத்தனமான; வெள்ளறிவுடைய; அறிவுமுதிராத; மடமைவாய்ந்த; முதிராத, முதிர்வளர்ச்சியற்ற; திறமையற்ற, அருந்திறலற்ற; கல்லாத, நாகரிகப்பாங்கறியாத; நாட்டுப்புறப் பாங்கான; கலைப்பாங்கற்ற; உயர் இன்ப நுகர்வற்ற; இன்ப வாழ்வு வாய்ப்பற்ற; இன்பவாய்ப்பு வளஞ் சாராத; தனியான, ஒற்றையான; நேரான; சமநிரப்பான; ஒருசீரான; ஒரே வகைப்பட்ட; கூட்டிணைப்பற்ற; கலப்பற்ற; பிறிதியைபற்ற; கட்டற்ற; திரிபற்ற, கூடுதல் குறைவற்ற; இயற்போக்கான,

தேர்ந்து கொள்ளப்படாத; ஒரே மூலக்கூறுடைய, பிரிக்க முடியாத; பிரிவு உட்பிரிவுகள் இல்லாத; பொறிவகையில் இயல் விசையார்ந்த, இயந்திர ஆற்றலில்லாத; எலும்பு முறிவு வகையில் தசைச் சிக்கலற்ற; வட்டிவகையில் இயற்கணிப்பான, கூட்டுவட்டியில்லாத; கருத்துவகையில் பகுத்தாயப்பட முடியாத; வாசக வகையில் தனிநிலையான, உறுப்பு உள்ளுறுப்புகளற்ற; (தாவ.) இலைவகையில் தனி ஒற்றையான, பல்கூட்டிலையல்லாத; (தாவ.) மலர்சூலக வகையில் ஒற்றைக் கருவகங் கொண்ட; (கண.) தொகை வகையில் ஒரே எண்ணால் குறிப்பிடத்தக்க; (கண.) கூட்டல் வகையில் ஓரினஞ் சார்ந்த; (கண.) ஒப்புருவகையில் உய்வுருவின் விசைப்பெருக்க வடிவு உட்கொள்ளாத; (கண.) எண்வகையில் பின்னக் கலப்பற்ற; (தொ.) a simple quantity, ஒற்றை எண்ணால் உணர்த்தக்கூடிய அளவை; induction by simple enumeration, தேர்வு வகுப்புகள் இல்லாமல் இங்குமங்குமாகச் சான்றுகள் எடுத்துப்பெற்ற முடிவு; in simple beauty, அணி செய்யப்பெறாத; simple addition, ஒற்றைப்படை எண் கூட்டல்; simple equation, நேர் ஒப்புரு, விசைப்பெருக்க உரு இல்லாத ஒப்புரு; simple forms of life, கூர்தல் முறையில் முதிரா முதல்நிலையில் உள்ள உயிர் உருக்கள்; simple fracture, தசைச் சிக்கலற்ற தனிநிலை எலும்புமுறிவு; simple idea, மூலக் கூறுகளாய்ப் பகுக்க இயலாத எளிய கருத்து; simple interest, தனிவட்டி; simple leaf, கூட்டிலையல்லாத தனி முழுநிலை இலை; simple machine, விசையாக்கமற்ற பொறி; simple sentence, தனிநிலை வாசகம்.

**sim'ple-heart'ed,** *a.* எளிய உள்ளங்கொண்ட.

**sim'ple-mind'ed,** *a.* எளிய மனம் படைத்த, சூதுபயில்வற்ற.

**sim'ple-mind'edness,** *n.* எளிய மனமுடைமை.

**sim'pleness,** *n.* எளிமை.

**sim'pler**[1], *n.* பூண்டுவளத் திரட்டாளர்; பூண்டுவள வல்லுநர்.

**sim'pler**[2], *a.* simple என்பதன் உறழ்படி.

**sim'pleton,** *n.* எளிதில் ஏமாறுபவர்; எதையும் எளிதில் நம்புபவர்; உலகியலறியாதவர், அரைகுறை அறிவுடையவர்.

***simpli'citer,*** (ல.) *adv.* நேர்நிலையாக, தொடர்பு முறையின்றி; கட்டுப்பாடின்றி; கூடுதல் குறையின்றி, நேரடியாக; முழுமை நிலையிலேயே, முற்றுறழ்வாக.

**simpli'city,** *n.* எளிமை.

**sim'plify,** *v.* எளிமையாக்கு; செய்ய எளிதாக்கு; புரியுமாறு செய்; சிக்கலகற்று; நேர்நிலையாக்கு; சுருக்க வடிவாக்கு; எளிய வடிவாக்கு.

**sim'plism,** *n.* செயற்கை எளிமை, போலியெளிமை.

**sim'plist,** *n.*=simpler[1].

**sim'ply,** *adv.* எளிமையோடு.

**simulac'rum,** *n.* வடிவம், உருத்தோற்றம்; நிழலுரு; போலியுரு; போலிச்செய்தி; *pl.* simulac'ra.

**sim'ulant,** *a.* உருப்போலியான.

**sim'ulate,** *v.* பாவித்தல் செய்; போலியாக நடித்துக்காட்டு; போன்றுநடி; போன்றுநட; பிறிதுரு மேற்கொள், மாற்றுருக்கொள்; உணராததை உணர்வதாகக் காட்டிக்கொள்; சொற்போலியாகு, சொல் வகையில் போலியாக ஒத்த பிறிது சொல்லின் வடிவம் மேற்கொள்.

**simula'tion,** *n.* பாவிப்பு, பாசாங்கு, போலிநடிப்பு; போலி செய்தல்; உருப்போலி; செயற்போலி; உணர்ச்சிப்போலி.

**simultane'ity,** *n.* உடனிகழ்வு; சமகால நிகழ்ச்சி.

**simultan'eous,** *a.* உடனிகழ்வான.

**simultan'eously,** *adv.* உடனிகழ்வாக.

**simurg',** (பெர்.) *n.* பெர்சிய பழங்கதை மரபுவழக்கில் மாபெரும் பறவை வகை.

**sin,** *n.* பழிவினை, பாவம்; தீவினைப்பயன்; பாவ உணர்ச்சி; புனிதக்கேடு, சமயநெறி திறம்பல்; அறக்கொலை; பொல்லாங்கு; தீங்குநிலை; தீவினை; *v.* பாவமிழை; பொல்லாங்கிழை; பழிக்கறைப்படுத்து; தீங்கிற்காளாக்கு; நன்றிக்கேடு செய்; (தொ.) the seven deadly sins, செருக்கு-வெஃகல்-காமம்-வெகுளி-பெருந்தீனி-அழுக்காறு-மடி ஆகிய பெரும்பாவங்கள்.

**Sinait'ic,** *a.* சினாய்மலை சார்ந்த; சினாய்த் தீவக்குறை சார்ந்த.

**Sinanthrop'us,** *n.* பீகிங் குரங்குபோன்ற புதைபடிவ மனிதன்.

**sin'apism,** *n.* கடுகுப்பற்றுப் போடுதல்; கடுகுப்பற்று.

**since,** *adv.* அதன்பின்னாக, காலவகையில் குறிப்பிடப்பட்ட காலமுதலாக அதன் பிறகு; இதற்குமுன்னாக, காலவகையில் நிகழ்காலத்திலிருந்து குறிப்பிட்ட இறந்தகாலம் வரை; *prep.* முதற்கொண்டே, முதலாகவே, இறந்தகால வழக்கில் குறிப்பிட்ட காலத்திலிருந்து; பின்னாக, குறிப்பிட்ட காலத்துக்குப் பிற்பட்டு நிகழ்காலத்துக்குள்ளாக; *conj.* இருந்து இதுவரை, இறந்தகால வழக்கில் நிகழ்ச்சிக்காலத்திலிருந்து தற்சமயம் வரை; என்பதனால், என்ற காரணத்தால்.

**sincere',** *a.* உள்ளார்ந்த; மனமார்ந்த; நேர்மைவாய்ந்த; வாய்மை தவறாத; உண்மையான, நடிப்பற்ற; பாசாங்கற்ற; நாணயமான.

**sincere'ly,** *adv.* உள்ளார, மனமார்ந்த நிலையில்; உண்மையாக, நாணயமாக.

**since'rity,** *n.* வாய்மை; நேர்மை; மனமார்ந்த நிலை; கபடின்மை.

**sin'ciput,** *n.* முன்மண்டை, நெற்றியிலிருந்து உச்சிவரையுள்ள தலைப்பகுதி.

**sine**[1], *n.* நெடுக்கை, செங்கோண முக்கோணத்தின் பிறிது கோண எதிர்வரை அடிவரைவீத அளவு.

***sin'e***[2], (ல.) *prep.* இல்லாமல், பெற்றிராமல்.

**sin'-eater,** *n.* பழி தின்றி, இறந்தவர் பிணத்தருகிருந்து அப்பந்தேறல் அருந்துவதால் அவர் பாவத்தை ஏற்பதாகக் கருதிக் கூலிக்கமர்த்தப்பட்டவர்.

**sin'-eat'ing,** *n.* சபிண்டிச் சாப்பாடு.

**sin'ecure,** *n.* உம்பளமானியப் பணி, ஆன்மிகப் பணியின்றி ஊதியமும் பெருமையும் தரும் திருக்கோயில் அலுவல்; உம்பளப்பணி; *a.* உம்பளமாணியப்பணி வாய்ப்புடைய; உம்பளப் பணியளிக்கிற.

**sin'ecured,** *a.* உம்பளப்பணி வாய்ப்பு அளிக்கப்பெற்ற.

**sin'ecurism,** *n.* உம்பள மானியப்பணி நிலை; உம்பளப் பணிப்பேறு.

**sin'ecurist,** *n.* உம்பள மானியப்பணி பெறுவோர்.

***sin'e di'e,*** (ல.) *adv.* எல்லை வரையறையின்றி, நாள் குறிப்பிடாமல் ஒத்திப் போடப்பட்டு, நாள் குறிப்பிடாமல்.

***sin'e qua non,*** (ல.) *n.* இன்றியமையாத் தகுதிக்கூறு, உயர்நிலையான முற்படு காரணக்கூறு.

**sin'ew,** *n.* தசைப்பற்று, தசைநார்களை எலும்புடன் இணைக்கும் இழைமம்; தசைநாண்; தசைப்பற்றின் இழை நரம்பு; தசைநாண் துணுக்கு, தசைப்பற்றுக் கூறு; *v.* தசைநாராய் அமை; இணைத்துப்பிடி, பற்றிப்பிணை; தாங்கு; ஆதார வலிமையாயிரு.

**sin'ewed,** *a.* தசைநாணுடைய; தசைப்பற்று வலிமையுடைய; தசைப்பற்றுச் செறிவுடைய.

**sin'ewiness,** *n.* தசைப்பற்றுடைமை; தசைப்பற்றுச் செறிவுடைமை; செறிவலிமை, சலாகைத்திரட்சி, செறிந்து திரண்டு ஒடுங்கிய உடலுடைமை.

**sin'ewless,** *a.* தசைப்பற்றற்ற; வலிவற்ற; வலிமையாதாரக் கூறுகள் வாய்க்கப்பெறாத.

**sin'ews,** *n. pl.* தசைநார்கள், தசைநார்த்தொகுதி; தசைவலிமை; உடல்வலிமை; கம்பியுருட்சி நிலை; உடம்பின் ஒடுங்கிய செறிதிரட்சிநிலை; வன்தளைக்கட்டு; ஆதாரவலிமை; ஆதாரவன்மைவளக் கூறுகள்; (தொ.) the sinews of war, போர்வலிமை வாய்ப்பாதாரக் கூறுகள், பணம்-படைக்கலம்-அரண் முதலிய வளச்சேகரம்.

**sin'ewy**, *a.* தசைநாண்போன்ற; தசைப்பற்றுக்குரிய; தசைப் பற்றுடைய, தசைநாண் திரட்சியுடைய; சலாகைத்திரட்சி யுடைய, செறிவுருட்சியான; உடல் வகையில் திரண்டுருண் டொடுங்கிய; வலிமைமிக்க, திண்ணிய.

**sinfoni'a**, *n.* புகுமுக ஒத்திசைவு.

**sin'ful**, *a.* பாவமான, பழியார்ந்த.

**sin'fully**, *adv.* தீவினையாக, பாவநிலையில்; பாவஞ்செய்யும் நிலையில்; பாவ உணர்ச்சியுடன்; பாவத்தோடு.

**sin'fulness**, *n.* பாவமுடைமை, குற்றமுடைமை.

**sing**, *v.* பாடு, இன்னிசையெழுப்பு; வாய்ப்பாட்டிசை; பண் ணிசை; பறவைகள் வகையில் இன்னிசைக் குரலெழுப்பு; வண்டுகள் வகையில் பொம்மென்றிசை முரலு; இனிய சீழ்க்கையொலியிசை; இழுமென் ஒலி இயக்கு; பாட்டுக் கட்டு, கவிபாடு; தாள ஒலியெழுப்பு, தொடர் ஒலியெழுப்பு; காற்று-நீரோடை-கொதிகல முதலியவற்றின் வகையில் இன் தொடர் ஒலிசெய்; முறைமுறை மிழற்று; மீட்டும் மீட்டும் ஒரே செயல் செய்; போற்று, பாராட்டு; தாலாட்டு; இணக்க நிலைப்படுத்து; இயம்பு, பாடித்தெரிவி; (தொ.) sing another song, sing another tune, சுதி இறங்கிவிடு, தொனி மாறிப் பணிந்துபேசு, பணிவு மேற்கொண்டு விடு; sing in, புத் தாண்டிற்கு வரவேற்புக் கூறி அழை; sing into good humour, நலங்குகூறி இணங்குவித்தமை; sing one's praises, எப் பொழுதும் புகழ்ந்து கொண்டிரு, புகழ்ந்துபாராட்டு; sing out, உரக்கக்கூவு, கத்து; புத்தாண்டு வகையில் விடை கொடுத்தனுப்பிவிடு; sing small, பணிவான தொனி மேற் கொள்; சுதி இறங்கப்பெறு; தொனி மாறுபட்டுப் பணிவு தோன்றப்பெறு; தலைக்குனிவடை; தன்மதிப்புக் குலைவுறு; sing to sleep, தாலாட்டி உறங்கவை; இணக்குவித்து அமைதிப்படுத்து; துடிப்படக்கி அமைவி.

**sing'able**, *a.* பாடத்தக்க; இசைக்கத்தக்க.

**singe**, *n.* வெம்பல், மேலீடான வெதுப்பீடு; தீய்ப்பு, நுனி பொசுக்கீடு; *v.* வாட்டி வெதுப்பிவிடு; நுனிபொசுக்கி விடு; சுட்டு ஓரம் சுருக்கிவிடு; மேற்புறம் தீய்ந்துபோகச் செய்; தீய்ந்து கருகு; வெம்பிப் புறம் வெதுப்புறு; புகழ் வகையில் ஊறு வருவி; கேடு உண்டாக்கு; (தொ.) singe fowl, singe pig, கோழி-பன்றி முதலியவற்றின் வகையில் மேன்மயிர் கருகத் தீயிலிட்டு வாட்டு; singe King of Spain's beard, (வர.) ஸ்பெயின் அரசன் நாட்டுக் கடற்கரைகளைக் கொள்ளையிடு; singe one's feathers, singe one's wings, துணிச்சற் செயல்களில் இறங்கிச் சிறிது கேடு எய்தப்பெறு; singe person's hair, சிகை ஒப்பனையில் மயிர்முனை கருக்கி யமைவி.

**singed**, *a.* தீப்பட்டுப் புறங்கருகிய; இடர்கடந்தபின்னும் அதன் விளைவுக்கு ஓரளவு ஆளான; இடர்த்தழும்புடைய; (தொ.) singed cat, புறத்தோற்றத்தைக் காட்டிலும் நல்லவர்.

**sing'er**, *n.* பாடுவோன்; பாடுவது; பாடும் பறவை; கவிஞர்; இசையாளர்.

**Singhalese'**, *n.* சிங்களவர்; சிங்களமொழி; *a.* சிங்களவர்க் குரிய; சிங்களமொழிக்குரிய; இலங்கைக்குரிய.

**sing'ing**, *n.* பாடுதல்; உட்செவி இரைச்சல்; *a.* பாடுகிற; (தொ.) have a singing in one's ears, காதுகளுக்குள்ளே இரைச்சல் ஏற்படுவதுபோன்ற உணர்ச்சி பெறு; singing flame, குழாயினிடமாக இசையொலி எழுப்பும் அனற்பிழம்பு; singing sand, நடக்கும்போது பண்ணுரொலி எழுப்பத்தக்க சீரளவுடைய பருமணல்.

**sing'ing-man**, *n.* பாடுவோன்; குழலோன்.

**sing'ing-master**, *n.* இசையாசிரியர், ஓதுவார்.

**sing'ing-voice**, *n.* மெய்க்குரல், சாரீரம், பாட்டுடன் இழை யுங் குரல்; பாட்டெனா இசைக்குங் குரல்.

**sin'gle**, *n.* ஒற்றை; ஒண்டி, சோடியில் உடனிணையற்ற ஒன்று; தனியன், இணைகூட்டிலிருந்து பிரிவுற்றுநிற்கும் ஒன்று; உதிரி, பலவற்றின் தொகுதியில் ஒன்று; இருவர் தனி ஆட்டம்; ஒற்றை ஆட்டக்கெலிப்பு வட்டம்; ஒற்றை ஆட்டக் கெலிப்பு; மரப்பந்தாட்ட ஒருகுறிக் கெலிப்பு; சீட்டாட்ட வகையில் சிறுதிற ஆட்டக்கெலிப்பு; *a.* தனியான, ஒற்றை யான; இரண்டற்ற; ஒண்டியான; சோடிபெறாத; இணை வுறாத; மணமாகாத; தனித்த, கூட்டல்லாத; உதிரியான, பலவற்றில் பிரிந்துநிற்கிற; தனித்தனியான; சேராது நிற் கிற; பிரிவுறாத; பகுபடாத; கூறுபடுத்த முடியாத; குறைவுபடாத; ஒன்றுபட்ட; தனிமுழுமையான; முழு நலமுடைய; தன்முழுமைவாய்ந்த; பிறிதுதொடர்பற்ற; பிறிது கலப்பற்ற; ஒருதனிக்கூறான; பல்கூட்டற்ற; இடை யீடற்ற; ஒரேஒருவரான; ஒன்று கூடவுமான; ஒருவர் கூடவு மான; இடையறாத, ஒன்றே ஒன்றான; ஒருமடியான, இருமடியல்லாத; ஒருதடவையான, பலதடவையற்ற; தனி ஒருவருக்குரிய; தனி ஒருவருக்கான; தனி ஒருவரால் செய் யப்பட்ட; தனி ஓரிணைக்குரிய; ஒரு தொகுதிக்குரிய; ஒரு குடும்பத்திற்குரிய; தனி ஒருவருக்கான; ஒற்றைக்கொற்றை யான; தனி நிலையான; தனி ஒதுக்கமான; தன்னந்தனி யான; துணையற்ற; தனிப்பட்ட; தனித்தன்மைவாய்ந்த; ஒரு தனியான; வழக்கத்திலில்லாத; புதுமைவாய்ந்த, அபூர்வமான; ஈடிணையற்ற; உளைவுறாத; ஒருமுகப்பட்ட; ஒருங்கிசைவான; இரண்டகமற்ற; சூழ்ச்சியற்ற; ஒளிவு மறைவற்ற; பூவகையில் ஒரேவரிவட்ட இதழ்களையுடைய; மலர்வகையில் இழைதிரி இதழ்களற்ற; தேறல்வகையில் உரமூட்டப்படாத; தேறல்வகையில் குறுதிறமான; *v.* பொறுக்கியெடு; பிரித்தெடு; தனித்துச் சுட்டு; தனித்துத் தேர்ந்தெடு; (தொ.) a single eye, ஒருநோக்கு, காரிய நோக்கு; ஒருகுறியில் ஒருமுகப்பட்ட கருத்து; single bed, ஒருவருவருக்கான படுக்கை; single blessedness, மணமாகா நிலை; single combat, மற்போர்; இருவர் நேர் நேர் கை கலப்பு; single court, புல்வெளி மரப்பந்தாட்ட முதலிய வற்றில் இருவராடு களம்; single entry, ஒருவழிமுறைக் கடைக்கணக்குப்பதிவு; single eye-glass, ஒருகண் கண் ணாடி; single file, ஒற்றைவரிசை, ஒருவர் ஒருவரான நீள் வரிசை; single flower, தனி முழுமலர், ஒரே காம்பின் ஒரே மலர்; ஒற்றைப் பூவிதழ்வட்டம் உடைய மலர்; single game, பக்கத்துக்கு ஒருவராக இருந்தாடும் ஆட்டம்; single heart, single mind, ஒருநோக்குடைய உள்ளப்பாங்கு; இரண்டக மற்ற எளிய மனப்பான்மை; single house, ஓரறைத்திட்ப முடைய வீடு; single life, single state, மணமாகாநிலை; single man, single woman, மணமாகாதவர்; single room, ஒருவர்க்கான அறை; single ticket, ஒருதிசைப் பயணச் சீட்டு; single wicket, முதல்தொடக்கநிலை மரப்பந்தாட்டம்.

**sin'gle-acting**, *a.* ஒருதிசையியக்கமான, நீராவி இயந்திர வகையில் உந்து தண்டின் ஒருபக்கமட்டுமே நீராவி ஏற்கிற.

**sin'gle-breasted**, *a.* உடுப்பு வகையில் ஒற்றைவரிசைக் குமிழிமாட்டிகளை உடைய.

**sin'gle-cut**, *a.* அரவகையில் ஒருதிசை வெட்டுவரிகளை உடைய.

**sin'gle-eyed**, *a.* ஒருமுகக் குறியான, கருமமே கண்ணான.

**sin'gle-fire**, *a.* வெடிக்கலவகையில் வெடித்தபின் திரும்பப் பயன்படுத்த முடியாத.

**sin'gle-handed**, *a.* பிறர் உதவியில்லாத; தனியாக நின்று செய்யப்பட்ட; *adv.* பிறர் உதவியில்லாமல்.

**sin'gle-hearted**, *a.* ஒரே நோக்கமுடைய; ஒருமுகப்பட்ட உணர்வுடைய; ஒரே பற்றுடைய.

**sin'gle-loader**, *n.* வெடிக்கலம் செருகப்படவேண்டிய துப் பாக்கி.

**sin'gle-minded**, *a.* ஒரே நோக்கமுடைய, ஒருமுகப்பட்ட உள்ளமுடைய, ஒருமுகச் சிந்தனை வாய்ந்த.

**sing'le-mind'edness**, *n.* ஒருமுகச் சிந்தனை, ஒருமுக நோக்கம், ஒருமுகப்பட்ட மனப்பான்மை; எளிய உளப்பண்பு.

**sing'leness**, *n.* ஒருமுகப்பட்ட தன்மை; தனிமை; ஒருமை; தனிமைத்தன்மை; புதுமை.

**sin'gle-stick**, *n.* சிலம்பாட்ட ஒற்றைக் கோல்.

**sing'let,** *n.* மார்புச்சட்டை, சட்டைக்கு அடியில் அணியப் பெறும் கையில்லாத உட்சட்டை.

**sing'leton,** *n.* சீட்டாட்டவகையில் ஒற்றை ஆட்டச்சீட்டு ; ஒரேபொருள் ; ஒரே குழந்தை.

**sing'ly,** *adv.* தனியாக ; தனி ஒருவனுக ; தானுக, தாமாக, பிறர் துணையின்றி ; ஒன்றென்றுக, தனித்தனியாக ; ஒவ்வொருவராக.

**sing'song,** *n.* இழுபறிச் சும்மை; சலிப்பூட்டும் சந்த இசைப்பு; மாறு ஒரேநிலை மெட்டு ; அடுக்கொலிப் பாட்டு ; இழுத்த பேச்சு ; இசையிழுப்பு வாசிப்பு ; முன்னேற்பாடற்ற திடீர் வாய்ப்பாட்டு அரங்கு ; பயிலாப் பாடற்குழு அரங்கம் ; சமுதாயக் கூட்டுப்பாடற்குழுக் கூட்டம்; *a.* சலிப்பூட்டும் சந்தம் வாய்ந்த ; மாறுநிலை மெட்டாக இசைக்கப்பட்ட ; இசையிழப்பாக வாசிக்கப்பட்ட ; *v.* இழுத்திசை; இசையிழுப்பாக வாசி; இழுத்திசைத்துப் பேசு ; இசையிழுப்பாக ஒப்பி.

**sing'ular,** *n.* (இலக்.) ஒருமை எண் ; ஒருமைச்சொல் ; ஒருவர்; ஒன்று ; *a.* ஒற்றையான ; ஒருதனியான ; ஒப்பிணைவற்ற ; உவமையற்ற தனித்தன்மை வாய்ந்த ; தனிப்பட்ட ; தலைசிறந்த; சராசரிக்கு மேற்பட்ட, பொது நீங்கிய சிறப்புடைய; அரிய, புதுமை வாய்ந்த; வியக்கத்தக்க; இயன் மாறுபாடான; மரபுக்கு மாறுன ; வழக்கில்லாத, அபூர்வமான ; மிகப் பொருத்தமான ; (இலக். ) ஒருமை எண்ணுக்குரிய ; (தொ.) all and singular, மொத்தமாகவும் தனித்தனியாகவும் எல்லாஞ் சேர்ந்த.

**singula'rity,** *n.* தனித்தன்மை, தனி ஒருநிலை ; அருநிலைப் பண்பு ; அருநிகழ்வுநிலை ; அருவாய்பிணைவு ; அறியாப் புதுமை ; விசித்திரம் ; வியக்கத்தக்க தன்மை ; தனிச்சிறப்புக் கூறு ; ஒப்பிணைவின்மை ; ஒப்பிணைவற்ற செய்தி ; வழக்கிலில்லா நிலை ; இயன்மாறுன செய்தி ; முன்காணுப் பண்பு ; புதுமை நிகழ்வு ; ஒருமைத்தன்மை ; ஒன்றனிலை.

**singulariza'tion,** *n.* ஒருமையாக்கம்; சிறப்பறிகுறியாக்கம்.

**sing'ularize,** *v.* ஒருமைவடிவம் ஆக்கு ; பன்மையிலிருந்து போலி ஒருமை வடிவு உருவாக்கு ; குறிப்பிடப்பட்டதாக்கு, தனிச்சிறப்பூட்டு ; சிறப்பறிகுறியாக்கு.

**sing'ularly,** *adv.* தனிப்பட்ட முறையில் ; அருநிலையிணைவாக ; வியக்கத்தகு முறையில்.

**Sinhalese',** *n., a.* = Singhalese.

**sin'ister,** *a.* (கட்.) கேடயத்தின் இடப்புறமான ; வேடிக்கையாக இடமான ; தீக்குறியான ; கெடுநோக்குடைய ; கெட்ட இயல்புடைய ; கெட்ட ; கொடிய.

**sinis'tral,** *a.* சங்கு முதலியவற்றின் வகையில் மறிநிலைப்புரியான, இடம்புரியான.

**sinistroce'rebral,** *a.* மூளையின் இடபாற் பாதி சார்ந்த.

**sin'istrorse,** *a.* கொடிவகையில் இடஞ்சுழியான.

**sin'istrous,** *a.* குறும்பான, தவருன.

**sink,** *n.* சாக்கடைப்புதைகுழி ; அங்கணம், அடுக்களைக் கழிநீர்த்தொட்டி ; கழிகடை, கழிவுப்பொருள்களின் தேங்கிடம் ; வறற் குட்டை, ஆற்றுநீர் சென்றுவியாகி வற்றிவிடும் இடம்; தேக்கப்புதைகுழி, ஆற்றுநீர்சென்று உள்ளூறி வற்றும் சகதிக் குட்டை ; சேற்றுத்தலை, வடிகால் வசதியற்ற தேங்கிடம் ; தளமையப் பள்ளம் ; தொடுகுழி, ஒடுங்கிய செங்குத்தான ஆழ்பள்ளம் ; நாடக அரங்கில் திரை இயங்கு கொட்டில் ; (மண்.) பாதாளக்குழி, சுண்ணப் படுகையிடையே நீர்சென்று மறையும் ஆழ்புழை ; *v.* ஆழ்வுறு ; தாழ் ; அமிழ்வுறு ; மூழ்குறு ; மூழ்கி மறைவுறு ; புதைவுறு ; புதையுண்டுமறைவுறு ; கதிரவன் வகையில் அடைவுறு ; ஆழ்த்து, அமிழ்த்து; மூழ்குவி ; தாழ்த்து ; தணிவி; குனிவி; தரங்குறைவி; அடக்கு; புதை ; புதைத்துமறை ; தோன்றுதடக்கி வை ; மறைத்துவிடு ; ஒதுக்கிவை ; ஒளித்துவை ; சூதாக மறைத்துவை ; கூருது விடு ; ஒன்றி இழைவித்துவிடு ; கலந்து ஒன்றுபடும்படி செய்வித்துவிடு ; மெல்ல வீழ்வுறு ; இற்றுவிடு ; நொறுங்கி அமைவுறு ; அழுங்கி இருந்துவிடு ; இழி, படிப்படியாக இறங்கு ; இறக்கப்பெறு ; இறக்கமுறு ; கீழ்நோக்கு ; கீழ்நோக்கிச்சாய் ; பள்ளமாகச் சரிவுறு ; பள்ளம் விழப்பெறு ; உட்குழிவுறு ; தளத்தில் அமிழ்வுறு ; தணிவுறு ; குறைவுறு ; குனிவுறு ; அமிழ்ந்தமைவுறு ; அடியில் படிவுறு ; உள்ளூறிச்செல் ; உறிஞ்சப்பெறு ; உள்வாங்கிக்கொள் ; நுனிதோய்வுறு ; நன்கு பதிவுறு ; உளம்படிவுறு ; படிதாழ்வுறு ; மதிப்பிழ ; படிப்படியாக வலுவிழந்துகொண்டு செல் ; மெல்ல மறைந்துவிடு; படிப்படியாகப் புலப்படாமற் போ; தோண்டு; மேற்படிவி ; சார்த்து ; ஊடுருவித்துளை ; ஆழ்ந்து உட்செல் ; நுழைவி, புகுத்து; நுழை, புகு; ஒழித்துவிடு, அழி; நிறுத்து; நீக்கு ; கைவிடு ; துறந்துவிடு ; களைந்துவிடு ; அழிவுறு ; நாசமாய்ப்போ ; செதுக்கு ; வந்து அமைவுறு ; அடிக்கடி எடுக்கமுடியாத கணக்கீட்டில் முதலீடு செய் ; தகாத முதலீடு செய்து இழ ; (தொ.) have sunk in, கன்னங்கள் வகையில் உட்குழிவுற்றன; மெலிந்தன; கண்கள் வகையில் உட்குழிவுற்றுள்ளன ; prices sink, விலைவாசிகள் இறங்குகின்றன ; river sinks, ஆற்றுநீர் வடிந்து குறைவுறுகிறது; sink a die, பொறிப்புக்கட்டையில் புடைப்பசழ்வு செய் ; sink a fact, செய்தியை வெளியிடாது அமைதியாக வைத்திரு ; sink in, சாய வகையில் ஊறித்தோய்வுறு ; sink in one's estimation, மதிப்பில் தாழ்வுறு ; sink into, ஆழ்ந்து பதிவுறு ; sink money, எளிதில் திரும்பப் பெறமுடியாத துறையில் முதலிடு ; தகா முதலீட்டுப் பணமிழ ; sink oneself, தன்னை அடக்கிக்கொள் ; தன்னலங்களை அடிப்படுத்தி வை ; sink one's head on one's chest, தலைகவிழ்வுறு ; sink one's own interests, தன்னல மறந்து செயலாற்று ; sink well, கிணறு அகழ் ; voice sinks, குரல் கம்முகிறது.

**sink'able,** *a.* மூழ்கடிக்கத்தக்க ; அமிழத்தக்க.

**sink'er,** *n.* தாழ்த்துபவர் ; அமிழ்த்துபவர் ; தாழ்த்துவது ; அமிழ்த்துவது, அமிழ்த்தும் பாரம்; தூண்டில்பளு; ஆழமானி எடைகுண்டு.

**sink'ing,** *n.* தாழ்தல் ; அமிழ்தல் ; அமிழ்த்துதல் ; மூழ்கடிப்பு ; அமுங்கும் உணர்ச்சி, மன ஊக்கஇழப்பு ; *a.* அமிழ்கிற ; தொலைத்திற நிலவரப் பயனேக்கிய ; கடனழிவுநோக்கிய.

**sink'ing-fund,** *n.* கடனடைப்பு நிதி, கடனைப் படிப்படியாகக் குறைப்பதற்காக வருமானத்திலிருந்து ஒதுக்கப்படும் ஒதுக்கீட்டுச் சேமவைப்பு நிதி.

**sinl'ess,** *a.* பழிபாவமற்ற, தீவினைசாராத; அறநெறி தவருத, புனித நிலையுடைய.

**sin'lessly,** *adv.* பாவமின்றி ; அறநெறித் தவறின்றி.

**sin'lessness,** *n.* பாவமின்மை, புனித நிலை.

**sinn'er,** *n.* பாவி ; தீங்கிழைத்தவர்.

**sinn'et,** *n.* (கப்.) மணிக்கயிறு, புரிமுறுக்கேற்றிய திண்கயிறு.

**sin'-offering,** *n.* பழிமாற்றுவினைப் பலியீடு ; பழிமாற்றுவினைப்படையல்.

**Sin'o-Japanese,** *n.* சீனர் ஜப்பானியர் இணைந்த தொகுதி.

**sinol'ogist,** *n.* சீனமொழி நாகரிக வரலாற்றுப் பண்பாட்டாய்வு நூலாளர் ; சீனமொழி நாகரிகப் பண்பாய்வுத்துறை மாணவர்.

**sin'ologue,** *n.* சீனச் செய்திப் புலமையாளர்.

**sinol'ogy,** *n.* சீனமொழி நாகரிகப் பண்பாட்டாய்வு நூல், சீனமொழி வரலாறு-கலை-பழக்கவழக்கங்கள் முதலியவற்றைப் பற்றிய அறிவாராய்ச்சித்துறை.

**Sin'ophobe,** *n.* சீனரை வெறுப்பவர், சீனப்பண்பாட்டெதிர்ப்பாளர்; *a.* சீனரை வெறுக்கின்ற, சீனப்பண்பாட்டை எதிர்க்கின்ற.

**sin'ter,** *n.* வெந்நீரருவிப் படிவம்.

**sin'uate,** *a.* (தாவ.) அகப்புற அலைவளைவார்ந்த ஓரங்களையுடைய.

**sinua'tion,** *n.* (தாவ.) ஓர அகப்புற அலைவளைவுடைமை.

**sinui'tis,** *n.* = sinusitis.

**sinuos'ity,** *n.* பாம்பு வளைவுடைமை ; பாதை வகையில் இடக்கு முடக்கான வளைவுநெளிவு ; ஆறுவகையில் திருக்குமறுக்கான வளைவுடைமை.

**sin'uous,** *a.* பன்மடி வளைவுகளுடைய ; பாம்புபோன்ற ; திருக்குமறுக்கான ; அலைபோல் வளைவுடைய ; வளைந்து வளைந்து செல்லுகிற.

**sin'us,** *n.* (உள்., வில.) எலும்பு உட்புழை ; பைக்குழிவு ; (மரு.) புண்ணின் உட்புரை ; (மரு.) பிளவை, குறுவாயுடைய புரையோடிய புண் ; (தாவ.) இலையோரப் பிரிவுகளிடைப் பட்ட உள்வளைவு ; *pl.* sin'uses.

**sinusi'tis,** *n.* மூளையின் மூக்கிணை எலும்புப்புழையழற்சிக் கோளாறு.

**Sioux,** *n.* வட அமெரிக்க செவ்விந்திய பழங்குடிமரபுக் குழுவினர் ; *a.* வட அமெரிக்க செவ்விந்திய பழங்குடிமரபுக் குழுவினைச் சார்ந்த.

**sip,** *n.* உறிஞ்சுதல், சிறுகச் சிறுக உறிஞ்சிக் குடித்தல் ; ஒருதடவை உறிஞ்சுதல் ; ஒருதடவை உறிஞ்சளவு ; சிறு வாயளவு நீர்மம் ; *v.* உறிஞ்சு ; உறிஞ்சி உறிஞ்சிக் குடி ; வாய் வைத்து உறிஞ்சி மாந்து ; சிறுகச் சிறுகக் குடி.

**si'pahee,** (இ.) *n.* சிப்பாய், படைவீரன்.

**siph'on,** *n.* தூம்புகுழாய், கவான்குழாய், மேல்வளைந்து புறக்கிளைமட்டம் தாழ்ந்த குழாய் ; உந்துகுப்பி, கவிகைத் தாழ்குழல்வழி நீருகைக்கும் வளிச்செறிவூட்டிய நீர்ப்புட்டில் ; சிப்பிகளின் உறிஞ்சுகுழல் ; தூம்புக் கால்வாய் ; *v.* கவான் குழாய்வழி கொண்டுசெல் ; கவிகைத் தாழ்குழல்வழி ஒழுகு ; (தொ.) siphon barometer, அடி சிறிது மேல் வளைந்த அழுத்தமானி.

**siph'onage,** *n.* கவான்குழாய் வழி இயக்கம்; கவான்குழாய்ப் பயன்பாடு.

**siph'onal,** *a.* கவான்குழாய்க்குரிய ; கவான்குழாய் சார்ந்த ; கவான்குழாய்வழி இயக்கம் போன்ற ; கவான்குழாய் போன்ற.

**siph'on-bottle,** *n.* உந்துகுப்பி, கவிகைத்தாழ்குழல்வழி நீருகைக்கும் வளிச் செறிவூட்டிய நீர்ப்புட்டில்.

**siph'on-cup,** *n.* உந்துதிரி மசகுக்கலம், நுண்புழைச் செயலாற்றலால் வேண்டிய பகுதிக்குத் திரிமூலம் மசகுநெய் கொண்டுய்க்கும் அமைவு.

**siph'onet,** *n.* தேங்கசிவிழை, தேன்போன்ற பொருளைப் புறங்கசியவிடும் செடிப்பேன் வகையின் இரு குழாய்களுள் ஒன்று.

**siph'on-gauge,** *n.* நீர்த்தேக்க அழுத்தமானி; பாதரசமடங்கிய கவான்குழாய் மூலம் நீர்த்தேக்க அழுத்தம் காட்டும் அமைவு.

**siphon'ic,** *a.* கவான்குழாய் போன்ற ; கவான்குழாய்க்குரிய ; கவான்குழாய்வழி இயக்கம் உடைய ; கவான்குழாயின் பயன்பாடுடைய.

**siphonog'amy,** *n.* பூவிழைப் பொலிமானம்.

**siph'uncle,** *n.* சிப்பிவகைகளின் உறிஞ்சுகுழல் ; பூச்சிவகைகளின் உறிஞ்சிழைத் தூம்பு ; தேங்கசிவிழை, தேன்போன்ற பொருளைப் புறங்கசியவிடும் செடிப்பேன் வகையின் இரு குழாய்களுள் ஒன்று.

**sipp'et,** *n.* உண் கவளம், அப்பத்துண்டு.

***si quis,*** (ல.) *n.* ஊர்வட்டக்கோயில் சமய குருபதவி அமர்த்திட்டுக் காலப் பொது அறிவிப்பு.

**sir,** *n.* தகவாளன் ; வீரத்திருத்தகை அடைமொழி ; தகவாளர் விளிக்குறிப்புச்சொல் ; ஐயா ! ஐய ! *v.* தகவாளர் என்ற அடையுடன் குறிப்பிடு ; ஐயா என்று விளித்தழை.

**sirc'ar,** (பெர்.) *n.* அரசியலார், சர்க்கார் ; ஆட்சித் தலைவர் ; மனை மேற்பார்வையாளர் ; நாட்டாண்மைக் கணக்கர்.

**sird'ar,** (பெர்.) *n.* ஆணைத்தலைவர், தளபதி.

**sire,** *n.* தகப்பன் ; தாதை, முன்னோன் ; (செய்.) விலங்கில் தந்தை ; பொலிகுதிரை ; விடை, பொலிவிலங்கு ; பெரியோர் முன்னிலைப்படுத்தும் விளிக்குறிப்புச்சொல் ; *v.* பொலிகுதிரை குறித்த வகையில் பொலிவி ; ஆண் விலங்கு வகையில் பொலிவி, ஈனுவி.

**siree',** *n.* =sirrah.

**sir'en,** *n.* நீரணங்கு, புள்ளணங்கு, கிரேக்க புராணமரபில் தலைப்பகுதி பெண்ணுருவான புள்வடிவ மருட்டிசைப் பெண் தெய்வதங்களில் ஒன்று ; மோகினித்தெய்வம், மயக்கிசை மங்கை ; மருட்டும்பொருள், மயக்கமூட்டுஞ் செய்தி ; இனிய பாடகி, இன்னிசை மாது ; எச்சரிக்கைச் சங்கொலி, அபாயச் சங்கு, மின்சங்கநாதம் ; நீர்வாழ் பால்குடி விலங்கினத்தின் வகை.

**siren'ian,** *n.* நீர்வாழ் பால்குடி விலங்கினத்தின் வகை ; *a.* நீர்வாழ் பால்குடி விலங்கினத்தின் வகை சார்ந்த.

**sirg'ang,** *n.* காக்கையின ஒண்பசும் பறவை வகை.

**siri'asis,** *n.* கடுங்கதிர் வீச்சு.

**Si'rius,** *n.* அழல்மீன்.

**sirk'ar,** (இ.) *n.*=sircar.

**sirl'oin,** *n.* எலும்பு உள்ளடக்கிய மாட்டின் இடுப்பு மேற்பகுதி இறைச்சி.

**sirn'ame,** *n.*=surname.

**sirocc'o,** *n.* வேனில் வெங்காற்று ; உணங்கு பொறி.

**si'rrah, sirree',** *n.* சின இறுமாப்பு விளிக்குறிப்புச்சொல், அட அப்பனே !

**sir'up,** *n.*=syrup.

***sirvente',*** (ல.) *n.* கட்டளை அங்கதப்பாட்டு, தனி யாப்பு முறையமைந்த முற்கால வசைப்பா வகை.

**sis'al,** *n.* தாழையின நாரிழைத் தாவரவகை ; தாழையின நாரிழை.

**sis'kin,** *n.* கூண்டுகளில் வளர்க்கப்படும் பச்சைநிறப் பாடும் பறவை வகை.

**siss'oo,** (இ.) *n.* தேக்க மர வகை.

**sis'ter,** *n.* உடன்பிறந்தாள், தங்கை, தமக்கை, பொதுத்தாய் தந்தையரையுடைய உடன்பிறப்பாட்டி ; சகோதரி ; அரை உடன்பிறப்பு, பெற்றோரில் ஒருவரைப் பொதுவாகக் கொண்டு உடன்பிறந்த பெண் ; உற்ற தோழி, பாசமிக்க பாங்கி ; துணைவி, உடனொத்த குழுவினள் ; உடன்கூட்டாளிப் பெண் ; நங்கை, மனித இனமளாவிய அன்புக்குரிய பெண் ; சமயக்குழுத் துணைவி ; கன்னித்துறவுக் குழுவினள் ; சமுதாயசேவைக் குழாத்தினள் ; தலைமைச் செவிலிப்பெண் ; உருவக வழக்கில் உடனிணைபண்பு ; உடனிணைகூறு ; (தொ.) Fatal Sisters, Sisters three, Three Sisters, கிரேக்க புராண மரபில் பால்வரைத் தெய்வ அணங்கினர் மூவர் ; lay sister, பிறபணிகளுடன் கிறித்தவ சமயப்பணியும் செய்யும் அறத்துறை நங்கை ; Little Sisters of the poor, பிரஞ்சு ரோமன் கத்தோலிக்க ஏழைமக்கள் சேவைக்குழு மாதர் ; Sister Anne, மற்றொருவருக்காகக் காத்திருந்து பணியாற்றும் பெண் ; sister of charity, சமயத்துறை ஏழைமக்கள் பணிக்கழகத்தின் பெண் உறுப்பினர் ; sister of mercy, மருத்துவமனைச் செவிலியாகப் பணியாற்றும் ரோமன் கத்தோலிக்க சமயத் துறவுக் கழகப் பெண் உறுப்பினர் ; sister ships, உடனிலைக் கப்பல்கள், ஒரேமாதிரியாகக் கட்டப்பட்ட கப்பல்கள்.

**sis'ter-german,** *n.* நேரடி உடன்பிறந்தாள், பெற்றோரிருவரையும் பொதுவாக உடைய உடன்பிறப்பாட்டி.

**sis'terhood,** *n.* உடன்பிறந்தாள் நிலை; உடன்பிறப்பாட்டியர் உறவு ; உடன்பிறப்புப் பாசக்குழு ; சமயப் பிரிவின் உடனுழைப்புக்குழு ; சமயத்துறை ஏழைமக்கள் சேவைக்குழு.

**sis'ter-hook,** *n.* இருகண்ணிக்கொளுவி, கயிறினை உள்ளே புகவிட்டதும் எட்டு போன்ற வடிவில் மூடிக்கொள்ளும் இரட்டைக்கொளுவி.

**sis'ter-in-law,** *n.* நாத்தூண் நங்கை, நாத்தினர்; கணவனின் உடன்பிறந்தாள் ; உடன்பிறந்தான் மனைவி, அண்ணி, கொழுந்தி; மனைவியின் உடன்பிறந்தாள், மதினி, மைத்துனி

**sis'terly,** *a.* உடன்பிறந்தாள் போன்ற ; உடன்பிறப்பு நங்கைக்குரிய பாசமுடைய.

**Sis'tine,** *a.* சிக்ஸ்டஸ் (Sixtus IV) என்ற பெயர் கொண்ட போப்பாண்டவரைச் சார்ந்த; (தொ.) Sistine chapel, மைக்கேலேஞ்சிலோ (Michelangelo) கலைஞரின் ஓவியங்களை யுடைய 'வாட்டிகன்' (Vatican) நகரத் திருக்கோயில்; Sistine Madonna, ராபேல் (Raphael) என்ற இத்தாலிய கலைஞரின் அன்னை மரியாள் ஓவியம்.

**sis'trum,** *n.* பண்டைய எகிப்திய சமயத்துறைக் கிலுகிலுப் பொலிக் கருவி; *pl.* sis'tra.

**sisyphe'an,** *a.* கிரேக்க பழங்கதை மரபிற்குரிய சிசிபஸ் (Sisyphus) போன்ற, ஓய்வொழிவற்ற கடுவீண் உழைப்பிற்கு ஆட்பட்ட.

**sit,** *v.* அமர், உட்காரு; பறவைகள் வகையில் கிளையில் கால் களை வளைத்துக் குந்தியிரு; விலங்குகள் வகையில் கால் மடித்து உட்கார்ந்திரு, கோழி-பறவை வகையில் அடை காத்திரு; குதிரையின்மீது இவர்ந்திரு; உயிரற்ற பொருள் கள் வகையில் ஒரே நிலையிலிரு; தவிசில் இருந்தாட்சி செய்; பதவியில் வீற்றிரு; தீர்ப்பாளர் பொறுப்பை மேற்கொண்டு அமர்ந்திரு; தேர்வில் அமர்ந்தெழுது; தேர்வில் வேட்பாளரா யிரு; இயங்காதிரு; உணவு வகையில் செரியாத நிலையிலிரு; பொருந்தியிரு; இரு, அமைவுறு; மன்றவகையில் அமர்விருக்கை கொள்ளு, கூடியிரு, கூட்ட நிகழப்பெறு நிலையிலிரு; (தொ.) make one sit up, (பே-வ.) கடுமையான உழைப்பிற்கு உட் படுத்து; வியப்புக்குரியவராக்கு; shoot bird sitting, பறவை யைப் பறக்காது குந்தியிருக்கும் நிலையில் இலக்குவைத்து வீழ்த்து; shoot hare at sitting, முயல் ஓடாதிருக்கும்போது இலக்குவைத்து வீழ்த்து; sit at home, சோம்பியிரு; sit down, அமர்ந்திரு; செயலற்றிரு; (படை.) கோட்டையைக் கைப் பற்றுமுன் சூழ வளைத்துக்கொண்டிரு; sit down under, ஏளனம் - பழிப்பு முதலியவற்றிற்குப் பணிவுடன் கீழ்ப்படித லுறு; sit for, தேர்வுவகையில் அமர்வுற்று எழுது; ஓவிய வகையில் கலைமாதிரியாக முன்னால் அமர்வுறு; சட்ட மா மன்றத்தொகுதி வகையில் பிரதிநிதியாக அமர்வுபெற்றிரு; sit heavy, உணவு வகையில் செமிக்காமலிரு; sit in, (பே-வ.) பெற்றோர் இல்லாதபோது குழந்தையைப் பார்த்துக் கொள்ளும் பணிசெய்பவராயிரு; sit in judgement, பிறரை விசாரணைசெய்யும் உரிமையை மேற்கொள்; குற்றங் கண்டு பிடி; sit loosely, தளர்த்தியாயிரு, கட்டுப்படுத்தாதிரு; sit on, sit upon, முறைகாண் ஆயத்தினர் வகையில் கருத் தாராய்வுக் கூட்டத்தில் வைத்து ஆலோசனை செய்; sit on horse's head, வீழ்ச்சியுற்ற குதிரைத் தலைமீது உட் கார்வதன்மூலம் அதனை அடக்கி அமைதிப்படுத்தி வை; sit on one's head, கண்டித்தொறுத்து வை; ஒறுத்தடக்கு; sit out, நடவடிக்கையில் பங்குகொள்ளாது ஒதுங்கியிரு; முடியும்வரை இரு; புறத்தே இரு; sit over, சீட்டாட்டக் காரர் வகையில் இடப்பக்கத்திலிருந்து சாதகநிலைபெறு; sit tight, (பே-வ.) உறுதியாக அமர்ந்திரு, அசைக்கமுடியாத வாறு இரு; கவனங்குலையவிடாது உன்னிப்பாயிரு, ஊச லாட்டத்திற்கு இடங்கொடாமலிரு; sit under, சீடராயிரு, சமயகுருவின் போதனை கேட்டுப் பின்பற்றுபவருள் ஒருவரா யிரு; sit up, நிமிர்ந்து உட்கார்; படுத்த நிலையினின்று எழுந்து உட்காரு; படுக்கைக்குச் செல்லாது நெடுநேரம் விழித் திரு; sit up and take notice, திடீரென்று அக்கறை காட்டு; sit well, உடைவகையில் பொருத்தமாயிரு, உடலுக்கு அமைப்பாயிரு; குதிரைவகையில் மேலேறிச் சரியாக அமர்ந் திரு; want to sit, அடைகாத்திரு; தற்சிந்தனையிலாழ்ந்திரு.

**sit'-down,** *n.* வேலை செய்யாதமர்ந்திருக்கை; *a.* வேலை செய்யா தமர்ந்திருக்குங் கட்டுப்பாடுடைய; (தொ.) sit-down strike, உள்ளமர்வு வேலை நிறுத்தம்.

**site,** *n.* குறியிடம், வரைநிலையிடம்; புரையிடம், எல்லை வரை யறைப்பட்ட இடம்; இடவெல்லை; மனையிட எல்லை; மனைக்காக விடப்பட்ட இடம்; கட்டிடத்திற்கான இடம், நிவேசனம்; நகருக்காக ஒதுக்கி விடப்பட்ட இடம்; *v.* சரியான இடங்குறி; குறியிடத்தமை.

**sit'fast,** *n.* சேணக்கரடு, குதிரைமுதுகில் சேண உராய்வமுத் தத்தால் ஏற்படும் காழ்ப்புக்கட்டி.

**sitiol'ogy,** *n.* = sitology.

**sitiophob'ia,** *n.* = sitophobia.

**sitol'ogy,** *n.* உணவுமுறை நூல்.

**sitophob'ia,** *n.* உணவு வெறுப்புக்கோளாறு.

**sitt'er,** *n.* உட்கார்ந்திருப்பவர், அமர்ந்திருப்பவர்; முன்னிலைக் காட்சிமாதிரி; ஓவியத்திற்கு மாதிரியாக உட்காருபவர், ஓவியத்திற்கு உட்காருபவர்; அடைகாப்புக்கோழி; அமர் கையிலே இலக்கு வைத்துச் சுடத்தக்க பறவை, எளிதாக இலக்கு வைத்துச் சுடத்தக்க பறவை; (தொ.) bad sitter, சரியாக அடைகாக்காத கோழி; good sitter, நன்றாக அடை காக்குங் கோழி.

**sitt'er-in',** *n.* குழந்தைப் பராமரிப்பாளர், பெற்றோரில்லாத நேரத்திற் குழந்தைகளை உடனிருந்து பாதுகாக்கும் பொறுப்பு ஏற்றவர்.

**sitt'ing,** *n.* உட்கார்ந்திருத்தல்; குந்துகை; அமர்வு; அமர்வு நேரம்; மன்ற அமர்விருக்கை, மன்ற அமர்விருக்கைக் காலம்; அடைகாப்பு; முட்டை ஓரீடு, ஒருதடவை அடைகாக்கப்பட்ட முட்டைத்தொகுதி; திருக்கோயிலில் ஒதுக்கிவைக்கப்பட்ட அமர்விடம்; *a.* உட்கார்ந்திருக்கிற, அமர்ந்திருக்கிற, அடை காக்கிற; அமர்விருக்கை கொண்டிருக்கிற, கூடியுள்ள.

**sitt'ing-room,** *n.* அமர்வுக்கூடம், இளைப்பாறுதற்கான அறை; போதிய இட அகலம்.

**sit'uate**[1], *a.* = situated.

**sit'uate**[2], *v.* இடவரைவுறுத்து, இடங்குறித்தமை; எல்லைப் படுத்தியமை; சூழமைவுறுத்து.

**sit'uated,** *a.* இடவரையுற்ற, இடவமைவுற்ற; எல்லையமை வுற்ற; சூழமைவுற்ற; சூழ்நிலையிலுள்ள; சூழமைப்புடைய.

**situa'tion,** *n.* இடவெல்லை அமைதி; சூழிட அமைதி; சுற்றுச் சார்பு நிலை, சூழமைதி; சூழமைவு; நிலைமை; வாய்ப்புவள நிலை; அமர்வுநிலை, படிநிலை; பதவி; தொழில்நிலை; பதவிப் படிநிலை; நெருக்கடிநிலை; நெருக்கடிக்கட்டம்.

**sitz'-bath,** *n.* விலாக்குளியல்.

**Si'va,** *n.* சிவன், சிவபெருமான்.

**six,** *n.* ஆறு; ஆறு என்ற எண்; ஆறு பொருள்கள்; அறுவர்; ஆறு எண்கொண்ட சீட்டு; ஆறுபுள்ளிகள்கொண்ட பகடைக் காய்; *a.* ஆறான, ஆறு எண்கொண்ட; (தொ.) at sixes and sevens, குழப்பமான நிலையில், அலங்கோலமாக, தாறுமாறாக; double sixes, இரண்டு ஆறுகள் வரும்படியான பகடை வீச்சு; six and eight, six and eight pence, வழக்குரைஞரின் பொது நிலைப்பட்டியற் குறிப்பீடு; six of one and half-a-dozen of the other, பெயரளவான வேறுபாடு; six to one, உயர் வீதத்தில், மிகப் பெரும்பாலாக; two and six, இரண்டரை வெள்ளி.

**six'ain,** *n.* ஆறு அடிச் செய்யுள்.

**six'er,** *n.* மரப்பந்தாட்டத்தில் ஆறு கெலிப்பெண் வரத்தக்க பந்தடி.

**six'es,** *n. pl.* ஒரு பவுண்டு எடையில் செய்யப்பட்ட ஆறு மெழுகுத் திரிகள்; (தொ.) long sixes, 8 அங்குல நீளமான ஒரு பவுண்டு ஆறு மெழுகுத்திரி; short sixes, 4 அங்குல நீள மான ஒருபவுண்டு ஆறு மெழுகுத்திரி.

**six'fold,** *a.* அறுமடங்கான; *adv.* அறுமடங்காக.

**six'footer,** *n.* ஆறடி உயரமுள்ளவர்; ஆறடி உயரமுள்ளது; ஆறடி நீளமுள்ள பொருள்.

**six'pence,** *n.* ஆறு செப்புக்காசு மதிப்புடைய வெள்ளி நாணயம்; கணக்கீட்டில் ஆறு செப்புக்காசு மதிப்பு.

**six'penny,** *n.* ஆறு செப்புக்காசு மதிப்புடைய நாணயம்; *a.* ஆறு செப்புக்காசு மதிப்புடைய; மலிவான, மிகக்குறைந்த விலையுடைய; விலைமதிப்பு குன்றிய; அற்பமான.

**six'-shooter,** *n.* அறுகுழல் துப்பாக்கி.

**sixte,** *n.* வாட்போரில் வலக்கை வலப்புறவாட்டத் தடுப்புநிலை.

**sixteen',** *n.* பதினாறு; பதினறுவர்; பதினாறு பொருள்கள்; *a.* பதினாறான.

sixteen'mo, *n.* =sextodecimo.

sixteenth', *n.* பதினாறாவது; பதினாறுமவர்; பதினாறிலொன்று; *a.* பதினாறாவதான ; பதினாறிலொன்றான.

sixth, *n.* ஆறாவது; ஆறுமவர்; ஆறில் ஒருகூறு; ஆறாவது பகுதி; ஆறாவது படிவம்; *a.* ஆறாவதான; ஆறில் ஒன்றான.

sixth'ly, *adv.* ஆறாவதாக ; ஆறாவது இடத்தில்.

six'ties, *n. pl.* அறுபதன் தொகுதிகள்; (தொ.) the sixties, நூற்றாண்டில் 60 முதல் 69 வரையுள்ள ஆண்டுகள்; வாழ்வில் 60 முதல் 69 வரையுள்ள வயதுகாலம்.

six'tieth, *n.* அறுபதாவது ; அறுபதாமவர் ; அறுபதி லொன்று ; *a.* அறுபதாவதான ; அறுபதில் ஒன்றான.

six'ty, *n.* அறுபது; அறுபது என்னும் எண்; அறுபதின்மர் ; அறுபது பொருள்கள் ; *a.* அறுபதான, அறுபது எண் கொண்ட.

six'ty-four-mo, *n.* ஆறுதடவை மடித்த அறுபத்து நாலு பக்க ஏடு ; அறுமடிப்பேட்டளவு.

siz'able, *a.* பெரிய அளவான ; மட்டான அளவுடைய ; வாய்ப்பான அளவுவாய்ந்த ; போதிய அளவுடைய.

siz'ar, *n.* கல்லூரி-பல்கலைக்கழகங்களில் உதவிப்படி பெறும் உழைப்பு மாணவர்.

size [1], *n.* பருமன், பெருமை சிறுமை நிலை ; உருவளவு ; நீள உயரக் குறிப்பு ; நீளஅகலத் திட்பக் குறிப்பு ; பரப்பெல்லை அளவு ; நீள அகல அளவுக்குறிப்பு ; பரும வரையளவு ; பரும மட்டளவு ; கட்டளைப் பரும அளவு ; பரப்பெல்லை வரையளவு; பரப்பெல்லை மட்டளவு; கட்டளைப் பரப்பெல்லை அளவு ; முத்து வகைதிரிப்புப் பட்டி, முத்துக்களை வகைப் படுத்தும் பட்டிகை ; உணவு-குடிநீர்ம வகைகளில் முகத்த லளவுப்படி ; உணவு-குடிநீர்ம வகைகளில் நிறுத்தலளவுப் படி; மெய்ந்நிலமதிப்பு; கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக வழக்கில் உணவு குடிப் பாத்தீட்டளவு ; *v.* வகைபடுத்தி வை; வகை மாதிரியாகப் பிரி ; வகை மதிப்பிடு ; ஆள் வகையில் பண்பு மதித்து முடிவுசெய் ; கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக வழக்கில் உணவு குடி பாத்தீட்டுக் கட்டளை அளவு கோரு ; கட்டளை யளவு கோரிப்பெறு ; கட்டளையளவிற் சிறப்பு மிகை கோரு ; (தொ.) size up, அளவை மதிப்பிடு; ஆளைப்பற்றி மதிப்பிட்டுத் தீர்ப்புக்கூறு, ஆளைமதிப்பிடு.

size [2], *n.* சலவைப்பசை; தாள் மெருகீட்டுப்பிசின்; *v.* துணிக்குக் கஞ்சிப்பசையிட்டு மொறுமொறுப்பாக்கு; தாளுக்கு மெருகுப் பசையிட்டுப் பளபளப்பாக்கு.

sized [1], *a.* அளவெடுக்கப்பட்ட; குறிப்பிட்ட அளவினையுடைய.

sized [2], *a.* பசையூட்டப்பெற்ற.

siz'er [1], *n.* அளவெடுப்பவர் ; அளவெடுப்புக்கருவி; (பே-வ.) குறிப்பிடத்தக்க பெரிதான அளவுடைய பொருள்.

siz'er [2], *n.*=sizar.

size'stick, *n.* சக்கிலியின் கால் அளவெடுப்புக்கோல்.

siz'ing [1], *n.* வகைப்படுத்துதல் ; வகைமாதிரிப்படுத்துதல்.

siz'ing [2], *n.* பல்கலைக்கழக வெண்ணெய் அரங்கத்திலிருந்து கட்டளை மிகையளவு கோருதல்.

siz'y, *a.* பசையார்ந்த, பிசுபிசுப்பான.

siz'zle, *n.* சுரசுரப்பொலி, தாளிப்பொலி ; *v.* சுரசுரப்பொலி செய், வறுப்பொலி செய்.

sjam'bok, *n.* காண்டை வார்க்கசை, காண்டாமாவின் தோல் வாரானான சவுக்கு ; *v.* காண்டை வார்க்கசையால் அடி.

skain, *n.*=skean.

skain'-dhu, *n.*=skean-dhu.

skald, *n.* பாணன், ஸ்காண்டினேவிய வீரகாதைக் கவிஞன்.

skat, *n.* செர்மனியில் மூவராடும் சீட்டாட்ட வகை.

skate [1], *n.* சாய்சதுரவடிவுடைய பெரிய கதிர்க்கைக் கடல்மீன் வகை.

skate [2], *n.* பனிச் சறுக்குப் புதைமிதி; கடுந்தள வழுக்கு நடைக் கட்டை; *v.* பனிமீது சறுக்கிச்செல்; கடுந்தரையில் வழுக்கிச் செல் ; அடிக்கோலம் அமையும்படி சறுக்கிச்செல் ; சறுக்கிச் சென்று குறிப்பிட்ட உருவம் வரைவி ; (தொ.) skate over thin ice, செயல் நயத்திறந் தேவைப்படும் பொருள்பற்றிப் பேசு.

ska'ting-rink, *n.* செயற்கைச் சறுக்குபனிப் பரப்பு; செயற்கை வழுக்கு தளம்.

skean, *n.* பண்டைக் கெல்டிக் இனத்தாரின் குத்துவாள்.

skean'-dhu, *n.* பண்டைக் கெல்டிக் இனத்தாரின் முழந்தாள் செருகு உடைவாள்.

skedad'dle, *n.* (பே-வ.) விரைவோட்டம், உடனடிக்கலைவு ; *v.* விரைவாக ஓடிப்போ, ஓடிச்சிதறு.

skee, *n.*, *v.* = ski.

skein, *n.* நூற்கண்டு; பட்டிழைக் குழைச்சு; பறக்கும் காட்டு வாத்துக்குழு ; சிக்கு முடிச்சு ; குழப்பம்.

skel'etal, *a.* எலும்புக்கூடு சார்ந்த; எலும்புக்கூட்டின் இயல்பு வாய்ந்த ; எலும்புச்சட்டத்துக்குரிய.

skeletog'enous, *a.* எலும்புக்கூட்டை உருவாக்குகிற; எலும் புக்கூடாக உருவாகிற ; எலும்புக்கூடாக உருவாகத்தக்க.

skeletog'raphy, *n.* எலும்புக்கூட்டின் நூல்முறை வழாக் கண்டாய்வு விரிவுரை.

skeletol'ogy, *n.* எலும்புக்கூட்டாய்வு நூல்.

skel'eton, *n.* கங்காளம், எலும்புக்கூடு, இறந்த உடலின் தோல்தசை நீங்கிய எலும்புருவம் ; எலும்பமைப்புச் சட்டம்; தாவரங்களின் உள்வரிச்சட்டம்; அமைப்புச்சட்டம்; ஆதாரச் சட்டம் ; படங்களின் புறவரிச்சட்டம் ; உருவரைக் கோடு ; எச்சமிச்சம், அழிவின் எஞ்சியபகுதி ; தேய்வுற்ற பகுதி, முக்கியகூறு ; ஆக்கவரிச்சட்டம், இடைநிரப்பி ஆக்குவதற் குரிய உருச்சட்ட அமைவு, சிறந்தகூறு ; திட்டத்தின் மூல அமைப்புக்கூறு ; (பே-வ.) வற்றல் உடம்பினை உடையவர், எலும்புந்தோலும் ஆனவர் ; (அச்சு) மேல்வரி அச்சுரு; *a.* நிலைவரிச்சட்டமான ; உருவரைச்சட்டமான ; மூல அமைப் பான ; எலும்புந் தோலுமான, ஒட்டி மெலிந்த ; (தொ.) family skeleton, skeleton in the closet, skeleton in the cupboard, skeleton in the house, அயலாரிடமிருந்து மறைக் கப்படும் அவமான மறைசெய்தி ; skeleton at the feast, மகிழ்ச்சியினைக் கெடுக்கும் ஒன்று ; மகிழ்வில் குறுக்கிடும் கவலை; skeleton crew, கப்பற் குழுவின் நிலவர மூலக்கருவரைத் தொகுதி ; skeleton drill, குறிவரைப்பயிற்சி, படைப்பிரிவு களைக் கயிறுகக் குறிக்கொண்டு இன்றியமையாச் சில வீரர் மட்டும் படைச்சார்பில் மேற்கொள்ளும் படைப்பயிற்சி ; skeleton key, எல்லாப் பூட்டுகளுக்கும் பொருந்தும் சாவி ; skeleton regiment, படைப்பிரிவில் நிலவர மூலக்கருவரைக் குழு.

skel'eton-face, *a.* மெல்லிய கீற்றுக்களாலான ; (தொ.) skeleton-face type, மெல்லிய கீற்றுக்களால் ஆன அச்சுரு.

skel'etonize, *v.* எலும்புக்கூடாக்கு ; சதைப்பகுதியை நீக்கி வெறும் எலும்பாக்கு ; இலைகளின் நரம்பிடை இழைமப் பகுதியை நீக்கு; நுணுக்க விவரங்களை நீக்கிவிட்டு முக்கிய கூறுகளை மட்டும் காட்டு.

skelp, *n.* வீச்சொலி, பளாரென்ற அறை வீச்சொலி; *v.* அறை கொடு ; பளாரென்று கொடு ; அடி ; விரைந்து செல்.

skene, *n.*=skean.

skene'-dhu, *n.*=skean-dhu.

skep, *n.* மரவரிக்கூடை; பிரப்பங்கூடை; வைக்கோல் அல்லது பிரம்பாலான தேன்கூடு.

skep'sis, *n.*=scepsis.

skep'tic, *n.*=sceptic.

sketch, *n.* திட்ட உருவரை ; முதல்நிலை மாதிரி ; நிரம்பாப் படிவம் ; வெள்ளோட்ட வரைப்படி ; தேர்வியல் ஓவியம் ; முதனிலைக் குறிப்பு ; கருப்பொருள் தொகுதி ; சுருக்கமாதிரி; நினைவுவரிக் குறிப்பு, கருத்தோட்டப் பதிவு ; துண்டுத் துணுக்குத் தொடர் ; நிரம்பா எண்ணக்குவை ; மேலோட்ட வருணனை ; நினைவோட்டக் கட்டுரை ; தனிப்பாட்டு வரி ;

மேல்வரி நாடகக் காட்சி; *v.* மாதிரிப்படம் வரை; உருவரை தீட்டு; நிரம்பா நிலைப்படிவம் ஆக்கு; ஏகதேசமாகத் தீட்டு; விட்டுவிட்டு வரை; பெரும்படி வடிவாக எழுது; முக்கிய கூறுகளை எடுத்துக்காட்டு; கருப்பொருள் விரித்துரை; கருத்தோட்டம் பதிவுசெய்; மேலோட்டமாக வருணித்துச் செல்; குறிப்பாக எடுத்துரை; சுருக்கமாக எடுத்தெழுது.

**sketch'-block, sketch'-book,** *n.* வரைதாள் தொகுப்பேடு.

**sketch'-map,** *n.* புனையா வரை படம்.

**sketch'y,** *a.* திருத்தமுருத; நுணுக்கவிளக்கங்களற்ற; விரையோட்டக் குறிப்பான; முழுமையுருத; மட்டான; குறைவான.

**skew,** *n.* சாய்வு, சரிவு, கோட்டம்; ஒருக்கணித்த பார்வை; சாய்தளப்பரப்பு; மதிலணைப்பின் சாய்முகடு; முக்கோண மதிலின் சாய்முகடு; முக்கோண மதிலைத் தாங்கும் வரிக்கற் பட்டிகை; *a.* சாய்வான, சரிந்த; (கண.) நுட்பச் செவ்விசைவுத் திரிபுடைய; பக்கவாட்டான; சிறக்கணிப்பான, ஒருபாற்சாய்வான; கோணலான; *v.* சிறக்கணி; ஒருக்கணிப்பாக்கு; சாய்வாக்கு; புடைச்சரிவாக்கு; *adv.* கோணலாக; (தொ.) skew bridge, சாய்குறுக்குப்பாலம், இருபுறப்பக்கங்களிடையே சாய்வாகச் செல்லுங் கட்டுமானம்; skew chisel, சாய்வுளி, சாய்வு விளிம்புத் தறிப்புக் கருவி; skew curve, முப்படைச் சாய்வு வளைவு, தன்தளங்கடந்த சாய்வுடைய மூவளைவை வளைவு; skew wheel, சாய்பற் சரிவுச்சக்கரம், ஒன்றையொன்று இயக்கும்படி அமைக்கப் பட்ட வேறுவேறு தளத்திற் சுழலும் சாய்பற் சக்கர அமைவு.

**skew'back,** *a.* சாய்வுதைவு.

**skew'bald,** *a.* கலவைநிறப் பட்டைகளையுடைய, திட்டுத் திடலாகப் பன்னிறக் கலவையான; குதிரை வகையில் வெண்ணிறப் பட்டைகள் வாய்ந்த.

**skew'er,** *n.* பற்றுகரண்டி, பக்குவப்படுத்தப்படும் இறைச்சியைப் பற்றிப் பிடிக்கும் கௌவுகோல்.

**skew'-eyed,** *a.* ஓரக்கண் பார்வையுடைய, சாய்விழியுடைய.

**skew'whiff,** *adv.* (பே-வ.) சிறக்கணித்து நோக்கியவாறு, ஓரப்பார்வையாக.

**ski,** *n.* பனி நடைக் கட்டை, பனியிற் சறுக்கிச்செல்ல உதவும் நெடுநீள்கட்டை; *v.* பனி நடைக் கட்டையிட்டு நட.

**skiag'raphy,** *n.*=**sciag'raphy.**

**skid,**[1] *n.* அண்டைக்கட்டு, ஆதாரத் தடைக்கட்டை; தடை ஆப்பு, சக்கரம் உருளாமல் தடுக்கும் உதைசிம்பு; தென்னு கட்டை, சக்கரத்தை உந்தித்தள்ளும் சாய்வு உந்துவிசைக் கட்டை; சேற்றுநிலத்திற் சக்கரத்தின் சுழலாச் சறுக்கீடு; விசைத்தடுக்கு, இறக்கத்தில் சக்கரத்தின் விசையுருட்சி தடுக்கும் அமைவு; கப்பலின் முட்டுத்தாங்கி; விமானச் சறுக்கு சக்கரம்; புடைச் சறுக்கல்; பக்க நோக்கிய சறுக்கீடு; *v.* அண்டைகொடு; முட்டுக்கொடு, ஆதாரங்கொடு; உதை கட்டை கொடுத்துச் சமதளமாக்கு; தடையாப்பிடு, தடுக்கினுல் தடுத்து நிறுத்து; தென்னுகட்டையால் உந்தித்தள்ளு; தடைகாப்புச் செய்; சக்கரத் தடைப்பூட்டிடு; சக்கர வகையில் சுழலாது சறுக்கு; புடைச்சறுக்கவிடு, நழுவிச்செல்; முட்டுக் கட்டையாயமை, அடிப்படையாகு.

**ski'd**[2], *v.* ski என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

**skid'-fan,** *n.* சக்கரச் சுழற்சித் தடைகாப்பு.

**sk'ier,** *n.* பனி நடைக் கட்டையைப் பயன்படுத்துபவர்.

**skies,** *n. pl.* வானிடம், வான்முகடு; (தொ.) be raised to the skies, வானுறப்பெறு, மேலுலகம் சென்றெய்தப்பெறு; laud to the skies, உயர்வுநவிற்சியாகப் புகழ், மட்டின்றித் துதி.

**skiff,** *n.* வள்ளம், மெல்லுகைப்புடைய பரிசல்.

**skif'fle,** *n.* பல்லிய இசைவகை; (தொ.) skiffle group, தும்புருவகை இசையினை மையமாகக்கொண்ட பல்லிய இசைக்குழு.

**ski'ing,** *n.* பனி நடைக் கட்டையிட்டு நடத்தல்.

**ski'-jor'ing,** *n.* பரிமா இழுவையாட்டம், பனி நடைக் கட்டை மீது குதிரையால் இழுக்கப்பட்டு ஆடும் விளையாட்டுவகை.

**skil'ful,** *a.* தேர்ச்சித்திறம் வாய்ந்த, பயில்திறமையுள்ள; நயத்திறம் காட்டுகின்ற; அருநயத்திறம் வாய்ந்த; கைத் திறமிக்க; தனியாற்றல் படைத்த; செயல்திறனுர்ந்த.

**skil'fully,** *adv.* தேர்ச்சித்திறமையுடன், செயற்றிறனுடன்.

**skill,** *n.* தேர்ச்சித்திறம்; பயில்திறம்; செயற்றிறம்; பயிற்சி பெற்ற திறமை; கைத்திறம்; தனித்திறனுற்றல்; இன்திறம்; நுண்ணயத்திறம்; சாமர்த்தியம்; சூழ்ச்சித்திறம்.

**skilled,** *a.* திறமைகொண்ட, தனித்திறம் காட்டுகின்ற; செயற்றிறனுர்ந்த; திறமை காட்டுகின்ற; தேர்ச்சித்திறமைக் குரிய; (தொ.) skilled labour, திறமைத்தொழில்; தனித் திறமும் பயிற்சியும் தேவைப்படும் தொழில்துறை; திறமைத் தொழிலாளர் குழு; திறமைத்தொழிலாளர் துறை; skilled workman, செயற்றிறத் தொழிலாளர்.

**skill'et,** *n.* உலோகக் குடுவை, நீண்டபிடியும் கால்களும் கொண்ட சிறு சமையற்கலம்.

**skill'-less,** *a.* தனித்திறமையற்ற; திறமையில்லாத; எதுவும் தெரியாத.

**skills,** *v.* (அரு.) பயனுடையதாயிருக்கிறது.

**skill'y,** *n.* தெளு, நீராளமான கஞ்சி நீர்மம்.

**skim,** *v.* ஏடெடு, நீர்மத்தில் மேலீடாக ஆடை எடு; மேலீடாகச் சீவி எடு; மேவிச்செல், மேலீடாகச் செல்; தடவிச்செல்; அடிதொட்டுச் செல்; நழுவிச்செல்; தவழ்ந்துசெல்; மிதந்து செல்; காற்றில் மெல்லப் பரவிச்செல்; மேலோட்டமாகப் படி; மேற்பரப்பில் இயங்கு; ஆழ் ஈடுபாடின்றிச் செயலாற்று; மேலீடாகப் பார்; சிறந்த கூறுகளைமட்டும் கவனித்தெடு; (தொ.) skim milk, ஆடை அகற்றப்பட்ட பால்; skim the cream off, சிறந்த பகுதியை எடுத்துக்கொள்; செம்பாகத்தை நீக்கிவிடு.

**skimm'er,** *n.* ஏடு எடுப்பவர், ஆடை பிரித்தெடுப்பவர்; ஏடு எடுக்கும் கரண்டி; மெல்விசைப்படகு; நீர்தத்திப்புள், நீர்வாழ் பறவைவகை; மிதந்து செல்பவர்; தவழ்ந்து செல்பவர்; மேலீடாகச் செயலாற்றுபவர்; மேலோட்டமாக வாசிப்பவர்; முக்கிய கூறுகளைத் திரட்டி எடுத்துக்கொள்பவர்.

**skim'-milk,** *n.* ஏடு எடுத்த பால்.

**skimm'ing-dish,** *n.* (இழி.) தட்டை அடிப்பகுதியினையுடைய பந்தய விசைப்படகு; விரை மெல்விசைப்படகு.

**skimp,** *v.* படி அள; அளந்து கொடு; இவறு, கருமித்தனஞ் செய்.

**skimp'ingly,** *adv.* கருமித்தனமாக.

**skimp'y,** *a.* கருமித்தனமார்ந்த.

**skin,** *n.* மெல்லியல் தோல்; தொலி, தோலின் ஓர் உரி; மனித உடலின் தோல்; சிறுவிலங்குத் தோல்; தோலடை; தோலின் ஓர் அடுக்கு; உயிரிகளின் மேற்புரை; பச்சைத் தோல், மயிருடன்கூடிய உரிவை; பதத்தோல், மயிர் நீங்கிய உரிவை; தோற்சரக்கு, தோல்செய் பொருளுக்கான மூலப் பொருள்; தோற்கலம், முழு விலங்குத்தோலாலான கொள்கலக் குடுவை; ஊறுபடாநிலை; மெய்ப்பு முழுமை; காய்கனிப் புறத்தொலி; மெல்லிய புறத்தோடு; மேல்தாள், புறச் சவ்விதழ்; தாவரப் புற உரி; புறப்பட்டை; கப்பல் புறத்தகடு; மென்ருள், இடை இதழ்ச்சவ்வு; பட்டை உரி; *v.* தொலி, தோலை உரி, தொலி போக்கு; மேல்தோல் விலகுவி, தோலை விடர்த்து; புண்மீது புதுத்தொலி மூடு; புண்வகையில் புதுத் தொலி மூடப்பெறு; மென்தோலால் மூடு; மென்தோலில் பொதி; (பே-வ.) ஆடை உரிந்துவிடு; துகிலுரி; மற்றெரு வரின் புற உடை நீக்கு; மேலுடை அகற்றிவிடு; (இழி.) பணம்பறி; உடைமை பறி; ஏய்த்துப்பறி; (தொ.) change one's skin, பண்பு மாறப்பெறு, ஒழுகலாற்றில் புரட்சிகரமாக மாறிவிடு; dark skin, கருவண்ண மேனி; escape by the skin of one's teeth, escape with the skin of one's teeth, மயிரிழையில் உயிர்தப்பிப் பிழை; fair skin, நன்னிற மெய், செம்மேனி; get under one's skin, (பே-வ.) வலிமையாகப் பற்றிக்கொள்; கருத்தைப் பெரிதும் ஈர்த்து அக்கறை

கொள்ளுவி; மிகு தொந்தரவூட்டுவதாயிரு; inner skin, true skin, தோலின் தலேக்கூறு, அடித்தொலி, தோலின் அடிப்பகுதி; only skin and bone, மிக மெல்லிய; ஒல்லியான, ஒற்றை நாடியான, எலும்புந் தோலுமான; outer skin, தோலின் மேலுரி, தோற்புறச் சவ்வு; save one's skin, ஊறின்றித் தப்பிப்பிழை, பாதுகாப்புடன் தப்பிச் செல்; thick skin, தோல் உறைப்பின்மை; மான உணர்ச்சியின்மை; குற்றச்சாட்டுப் பொருட்படுத்தாமை; thin skin, எளிதில் ஊறுபடுந்தன்மை; மெல்லுணர்ச்சியுடைமை; குற்றச்சாட்டிற்கு உள்ளுடையும் இயல்பு; with a whole skin, காயமடையாமல்; ஊறுபடாமல்.

**skin'-bound**, *a.* கட்டிறுக்கமான, சதையின் மேல்தோலே இறுக்க இழுத்துப் போர்த்தப்பெற்ற.

**skin'-deep**, *a.* மேற்போக்கான; நுனிப்புல்லார்ந்த; மேலீடான; ஆழமற்ற, திட்பமற்ற; ஆழ் உணர்ச்சியற்ற; உட்செறிவற்ற; நீடித்து நிலேக்கமுடியாத.

**skin'-effect**, *n.* புறம்பரவு விசை, ஒற்றைமாற்று மின்வலி வகையில் மின்கடத்தியின் புறநிலேயடுக்குச் சுற்றிச்செல்லும் தன்மை.

**skin'flint**, *n.* கருமி, கஞ்சன்.

**skin'-friction**, *n.* கப்பல்வகையில் பக்கநீர் உராய்வுத்திறம்.

**skin'ful**, *n.* நீர்மவகையில் தோற்குடுவை அளவு.

**skin'-game**, *n.* உருட்டுப்புரட்டு, ஏய்த்துப்பறிப்பு.

**skin'-grafting**, *n.* உயிர்த்தோல் ஒட்டுமருத்துவம்.

**skink**, *n.* குறுங்காற் பல்லி வகை.

**skin'less**, *a.* தோலற்ற; புறத்தோல் மிகுதியில்லாத; உணர்ச்சி குன்றிய.

**skinned**, *a.* புதுத்தோல் பொதியப்பெற்ற; தோலுரிக்கப்பட்ட; (தொ.) keep one's eyes skinned, (இழி.) எச்சரிக்கையாயிரு; கவனமாயிரு.

**skinn'er**, *n.* தோல் உரிப்பவர்; தோல் பொதிபவர்; தோல் பதனிடுபவர்; தோல் வாணிகர்.

**skinn'iness**, *n.* எலும்புந் தோலுமாய் இருத்தல்.

**skinn'y**, *a.* எலும்புந் தோலுமான.

**skip** [1], *n.* குதி, துள்ளல்; குதியாட்டம்; துள்ளுநடை, விரைந்து மெல்லடியிட்டு நடத்தல்; *v.* குதி; துள்ளு; ஆட்டுக்குட்டிவகையில் துள்ளிக்குதி; குழந்தைகள்வகையில் குதியாட்டமிடு; தவ்வாட்டமாடு, சிறுவர் சிறுமியர் வகையில் தவ்வுகயிருட்டமிட்டுத் தாவி விளேயாடு; துள்ளிநட, விரைந்து மெல்லடியிட்டு நட; குதித்து மகிழ், உவகையுடன் துள்ளு; தவ்விநட; தாவிச்செல்; விரைந்து இடம்பெயர்; சட்டென மாறு; எட்டி மறைவுறு; விட்டுவிட்டுத்தாவு; புத்தகத் தாள்களேத் தள்ளிக்கொண்டுபோ; மேலீடாக இடைவிட்டு விட்டு வாசி; இடையிடையே குறிப்பிட்டு மேற்செல்; இடையிடையே கவனம் செலுத்திச்செல்.

**skip** [2], *n.* கல்லூரி ஏவலாளன்; டப்ளின் கல்லூரி வழக்கில் கல்லூரிச் சாரணர்.

**skip** [3], *n.* முடப்பந்தாட்டத் தலேவர்; பனிக்கற் சறுக்காட்டத்தில் இயக்குநர்.

**skip** [4], *n.* சுரங்கவகையில் ஆட்கள் ஏற்ற இறக்கக் கூண்டு; பொருள் ஏற்ற இறக்கக்கூடை.

**skip'jack**, *n.* குதிக்கும் பொம்மை; மீன்வகை; வண்ணத்துப் பூச்சி வகை; தத்தும் விட்டில்வகை.

**skipp'er**, [1], *n.* குதிப்பவர்; தாவி நடப்பவர்; குதியாட்டமிடுபவர்; குதிப்புது; தாவிச் செல்வது; தாவுகயிருட்டம் ஆடும் சிறுவன்; தாவுகயிருட்டம் ஆடும் சிறுமி; மீன்வகை; வண்ணத்துப்பூச்சி வகை; தத்தும்விட்டில் வகை.

**skipp'er** [2], *n.* கப்பல் மீகாமன்; வாணிகச் சிறுகலத் தலேவன்; வானூர்தி வலவர்; ஆட்டக்குழுத் தலேவர்; (தொ.) skipper's daughters, உயர் வெண்டலே அலேகள்.

**skipp'et**, *n.* ஆவணக்கூடு, முத்திரைப்பத்திரங்களேக் காத்துப் பேணி வைக்கும் உருட்சி மரப்பெட்டி.

**skipp'ing**, *n.* குதியாட்டம்; *a.* குதியாட்டமிடுகிற; தவ்வுகிற; அடிக்கடி மாறுகிற; தலேதிரிந்த, தறுதலேயான.

**skipp'ing-jack**, *n.* தத்துக்கட்டை, குழந்தை விளேயாட்டுப் பொருள்; தத்துக்கிளி, விட்டில் வகை; மீன் வகை.

**skipp'ingly**, *adv.* தாவுநடையுடன், துள்ளிக்குதித்து, மகிழ்வுடன் குதித்தாடு நிலேயில்.

**skipp'ing-rope**, *n.* தவ்வாட்டக் கயிறு, சிறுவர் சிறுமியர் தாவு விளேயாட்டுக்கயிறு.

**skirl**, *n.* கிறீச்சொலி; பைக்குழல் இசைக்கருவி ஒலி; *v.* பைக்குழல் இசைக்கருவிபோல் கிறீச்சிடு.

**skirm'ish**, *n.* சில்லறைச்சண்டை, இடைவரவான சிறு கைகலப்பு; எல்லேப்பூசல்; சிறுகலகம்; சிறுதிறப் போராட்டம்; வாய்ச்சண்டை, சிறு வாக்குவாதம்; *v.* சில்லறைச்சண்டையிடு, சிறு பிரிவுகட்கு இடையே போரிடு; ஒழுங்கற்ற வகையில் சச்சரவிடு; முற்சிந்தனேயற்ற நிலேயிற் பூசலிடு; சிறுபோரிடு; சில்லறை வாக்குவாதஞ் செய்.

**skirm'isher**, *n.* பூசலாளர், சச்சரவிடுபவர்; சிறுபோர் விளேவிப்பவர்; சில்லறை விவாதத்தில் ஈடுபடுபவர்; ஒழுங்கற்ற சுற்றுமுறைச் சொற்போரிடுபவர்.

**ski'rret**, *n.* நீர்வாழ் காய்கறிப் பூண்டுவகை.

**skirt**, *n.* அங்கித்தொங்கல், சட்டைக் கீழ்விளிம்பு; பெண்டிர் அரைப்பாவாடை; ஓரம், விளிம்பு; எல்லே; மதிப்புக் குறைவான புறப்பகுதி; (இழி.) பெண்டு, பெண்; *v.* ஓரமாகச் செல்; விளிம்பினேச் சுற்றிச்செல்; ஓரம் கடந்துசெல்; அருகாகச் செல்; அருகில் அமைந்திரு, ஓரமாக அமைந்திரு.

**skirt'-dancer**, *n.* பாவாட்டம் ஆடுபவர், ஆடை காற்றில் பரவி அழகுத்தோற்றம் தருமாறு ஆடும் ஆடலோர்.

**skirt'-dancing**, *n.* பாவாட்டம், ஆடை காற்றில் தவழ்ந்தாடி அழகுதருமாறு ஆடும் ஆட்டம்.

**skirt'ed**, *a.* பாவாடை அணிந்த; தொங்கலேயுடைய; ஓரமாகக் கொண்ட; ஓரமாகச் சூழப்பட்ட; சுற்றுவிளிம்பாக உடைய; அருகே உடைய.

**skirt'ing**, *n.* ஓரம், எல்லே, தொலேயோரப் பகுதி; பாவாடைத் துணி; அங்கித் தொங்கல்துணி; அகச்சுவரோரப்பட்டி; ஆடைவிளிம்பு; ஓரம், அருகு; கிணற்றுத் தோவளப் பாவுதளம்.

**skirt'ings**, *n. pl.* மாட்டிறைச்சியின் மலிவான பகுதிகள்; தரங்குறைந்த பகுதி ஆட்டுமயிர்.

**skirt'less**, *a.* தொங்கலற்ற; பாவாடையற்ற.

**skirts**, *n. pl.* தொலேயோரப்பகுதிகள், முனேக்கோடிப் பகுதிகள், எல்லேப்புறங்கள்; அக எல்லேகள்; புற எல்லேகள்.

**skit** [1], *n.* சிறு வசைத்துணுக்கு; சிறு நையாண்டி அங்கதம்; சிறு கேலிக்கட்டுரை; வசை வெடிப்புரை; சிறுதுணுக்கு.

**skit** [2], *n.* (பே-வ.) குவை; குழு, கூட்டு; தொகுதி.

**skitt'er**, *v.* காட்டுக்கோழிவகையில் நீர்மீது விசிறியடித்துக் கொண்டு செல்; நீர்மீது தத்தி இறக்கையடித்தெழு; நீரில் தத்திச் சிறகடித்துக்கொண்டு அமர்; தூண்டிலே நீர்மீதாக இழுத்து மீன்பிடி.

**skitt'ish**, *a.* வெருட்சியுள்ள; மருட்சியடைகிற; குதிரை வகையில் மருளுகிற, மருண்டு கலேகிற; பெண்டிர்வகையில் நிலேயற்ற பண்புடைய, சபலத்தன்மையுடைய; அறைப்புடைய, கூச்சமுள்ள; மனம்போல நடக்கிற, கண்டபடி ஒழுகுகிற; ஏறுமாருய் இயல்கின்ற; பகட்டி மினுக்குகிற, பசப்பியூடாடுகிற; பொய்க்காதல் புரிகின்ற, காதல் விளேயாட்டுடைய; விளேயாட்டுத்தனமான; களியாட்டில் ஈடுபட்ட; சுற்றித்திரிகின்ற; கட்டிலமையாத; துடிப்புமிக்க; இளமை பகட்டிக் கொள்கிற.

**skitt'ishness**, *n.* குதிரை முதலியவகையில் மருட்சி; நடுக்கம்; நாணம்; விளேயாட்டுத்தனம்; எரிச்சலுடைமை; அலேவுடைமை; பெண்கள்வகையில் சபலத்தன்மை; அமைதியின்மை; கட்டிலமையாமை; விளேயாட்டுப் பண்பு; மனம்போல நடத்தல்; ஏறுமாருய் இயலல்; கண்டபடி நடத்தல்; மயக்கித் திரிதல்; பகடித்தனம்; பசப்பு; பொய்க்காதல்

புரிதல்; விளையாட்டுப்பண்பு; துடிதுடிப்பு; வேடிக்கை ஈடுபாடு; சோம்பித் திரிதல்; இளமைப்பகட்டு நடிப்பு; குறிக்கோளின்மை; பயனின்மை.

**skit'tle**, *v.* மரப்பந்தாட்ட வகையில் ஆட்டக்காரரை அடுத் தடுத்து விரைவில் வெளியாக்கு.

**skit'tle-pins**, *n. pl.* எறிகட்டையாட்டம், பந்தினுல் அடித்து வீழ்த்தும் ஒன்பது கட்டைகள்கொண்ட ஆட்டம்.

**skit'tles**, *n.* எறிகட்டையாட்டம், பந்தினுல் அடித்துவிழச் செய்யும் ஒன்பதுகட்டைகள்கொண்ட ஆட்டவகை; *int.* படு மோசம்! அறிவின்மை! மூடத்தனம்! (தொ.) beer and skittles, வேடிக்கைப் பொழுதுபோக்கு, நேரப்போக்கு விளையாட்டு.

**skive**, *v.* அடையடையாய் எடு, தோலை விடர்த்து உரி; பட்டையிடு, மணிக்கல் பரப்பினை அரைத்துத் தீட்டு.

**skiv'er**, *n.* சீவுகத்தி, தோலைச்சீவப் பயன்படும் வெட்டுகருவி; சீவுவதால் பெற்ற மென்றோல், தோலாடை, தோலுரி.

**skivv'y**, *n.* (பே-வ.) வீட்டு ஊழியப் பெண்டு.

**sku'a**, *n.* பெருங் கடற்பறவை வகை.

**skuldugg'ery**, *n.*=skullduggery.

**skulk**, *n.* கரந்திருப்பவர்; தாக்கப் பதுங்கியிருப்பவர்; *v.* கரந்திரு; பதியமிட்டிரு; தாக்கும் நோக்குடன் பதுங்கிக் காத்திரு; பதுங்கி ஓடு, இடர்க்காலத்து நழுவி விடு; கடமை தவிர்; பார்வையிலிருந்து தப்பு; காட்சியிலிருந்து தப்பி மறை.

**skulk'er**, *n.* கரந்திருப்பவர்; தனிக் காரணமாகத் தாக்கு வதற்கு மறைந்திருப்பவர்; ஆபத்துநேரத்தில் விலகியோடு பவர்; நழுவிவிடுபவர்; கடமை தவிர்பவர்; பார்வையி லிருந்து தப்பி மறைபவர்.

**skulk'ing**, *n.* கரந்திருத்தல்; தப்பியோடுதல்; *a.* கரந்திருத்த லுடைய; அச்சம் காரணமாக மறைந்திருத்தலுடைய; ஆபத்து நேரத்தில் விலகிவருகிற; கடமை தவிர்தலுடைய; பார்வையி னின்றும் தப்பி மறைகிற.

**skull**, *n.* தலையோடு, கபாலம், மண்டையோடு; (தொ.) skull and crossbones, சாக்குறிப்புச் சின்னம், குறுக்கை வடிவான இரு துடையெலும்பிடையிட்ட தலையோட்டுரு.

**skull'-cap**, *n.* முதியவர் மனையக அணியான மென்பட்டுத் தலைக்கவிகைத் தொப்பி; மண்டைவடிவ மலருடைய செடி வகை.

**skullduggery**, *n.* (பே-வ.) சூழ்ச்சி; தகாவழி நடத்தை, தவருன பழக்கம்.

**skulled**, *a.* மண்டையோட்டையுடைய.

**skunk**, *n.* முடைவளிமா, முடைவளிபீற்றித் தப்பிக்கொள்ளும் இயல்புடைய பூனைவடிவக் காட்டுவிலங்கு வகை; முடை வளி மாவின் மென்மயிர்த்தோல்; முடைநாற்றமுடையவர்; வெறுக்கத்தக்கவர், கயவர்.

**Skup'shtina**, *n.* யூகோஸ்லாவிய மாமன்றம்.

**sky**, *n.* வானம், ஆகாயம்; வான்முகடு; தட்பவெப்பச் சூழல்; சூழ்நிலை; சுவரில் படம் மாட்டப்படும் உயர்வரிசைத் தளம்; வானீலம்; *v.* மரப்பந்தை உயர உதைத்தேற்று; படத்தைச் சுவரில் உயரமாக மாட்டு; ஓவியர் படத்தைச் சுவரில் உயரமாக மாட்டு; (தொ.) sky pilot, கேலி வழக்கில் புரோ கிதர்; under the open sky, திறந்த வெளியில், வெட்ட வெளியில்.

**sky'-blue**, *n.* வானீலம்; *a.* வானீல வண்ணமார்ந்த.

**sky'-born**, *a.* கவிதை வழக்கில் தெய்வப் பிறப்புற்ற.

**sky'-clad**, *a.* வேடிக்கைவழக்கில் ஆடையற்ற; திகம்பரமான.

**Skye**, *n.* ஸ்காத்லாந்துநாட்டுச் சிறு சடைநாய் வகை.

**sky'er**, *n.* மரப்பந்தாட்டத்தில் மீயுயர் பந்து உதை.

**Skye te'rrier**, *n.*=Skye.

**sky'ey**, *a.* வானுர்ந்த; வான்போன்ற; வானிலை சார்ந்த.

**sky'-high**, *a.* விண் முட்டிய; *adv.* வானளாவ உயர்ந்து; வானளாவி.

**sky'lark**, *n.* வானம்பாடி; *v.* துள்ளி விளையாடு, குதித் தாடு; களி கிளர்ச்சிகொள்; கேலிக்கூத்தாடு; குறும்பு செய்; குறும்பாட்டமாடு; வேடிக்கை விளையாட்டுகள் செய்; முரட்டு விளையாட்டில் ஈடுபடு; பொறிச் சூழ்ச்சி செய்.

**sky'less**, *a.* வானற்ற.

**sky'light**, *n.* மேல்தளச் சாளரம்; மோட்டுப் பலகணி.

**sky'line**, *n.* அடிவான்; வானவிளிம்பு; பின்னணி வான வரிக்கோடு; ஓவியப் பின்னணி வான்வரை; (தொ.) on the skyline, வான விளிம்பான, வானகப் பின்னணி யுடன் தெரிகிற.

**sky'-parlour**, *n.* மீமுகட்டுமாடம், மிக உயர்ந்த கட்டிட உச்சிமேடை.

**sky'-rocket**, *n.* சேணெறிவாணம், வானில் நேராக உயர்ந்து பாயும் வாணவெடி; *v.* வானேக்கி நேரே உயர்ந்து விசை யுடன் செல்.

**sky'sail**, *n.* தலைமைக் கப்பற்பாயின் மேலுள்ள சிறுதிறப்பாய்.

**sky'-scape**, *n.* இயற்கை வான்காட்சிப் படம்.

**sky'-scrape**, *n.* தலைமைக் கப்பற்பாயின் மேலுள்ள சிறு திறபபாய்.

**sky'-scraper**, *n.* வானளாவி, சேண்மாடம், விண்தொடு கட்டிடம்; உயர்புகைக்கூண்டு; (கப்.) முகட்டு முக்கோணச் சிறுதிறப்பாய்.

**sky'-sign**, *n.* மீமுகட்டு விளம்பரம், உயர் கட்டிடங்களின் உச்ச உயர் இடங்களிற் காட்டப்படும் ஒளிவிளக்க விளம்பரம்.

**sky'-tinc'tured**, *a.* வான்வண்ணச் சாயலுடைய.

**sky'ward**, *a.* வானேக்கிய; *adv.* வானேக்கி.

**sky'wards**, *adv.* வானேக்கி.

**sky'way**, *n.* வானெறி.

**sky'-writing**, *n.* புகைவரி எழுத்து, வானூர்தி விளம்பரங் களில் பயன்படுத்தப்பெறும் புகைக்கோட்டு எழுத்துமுறை.

**slab**[1], *n.* பாளம்; இழைப்புத்தட்டம்; மரக்கட்டையறுப்பம்; சிலாத்துண்டம்; *v.* பாளமாக்கு, தட்டப்படுத்து, சிலைத் துணுக்கறு.

**slab**[2], *a.* களிபோன்ற, நீர்ம வகையில் கெட்டியாய் ஒட்டிக் கொள்ளுந் தன்மையுள்ள; பசைக்களியான.

**slabb'er**, *n.*=slobber.

**slabb'iness**, *n.* சேற்றுநிலை, சகதித்தன்மை.

**slabb'y**, *a.* சேருன, சகதியான.

**slab'-sid'ed**, *a.* ஒடுங்கிநீண்ட.

**slab'-stone**, *n.* பாளக்கல், பாளம்பாளமாகப் பிளவுறுங் கல்.

**slack**, *n.* தொகாப்புரி, சுற்றிவரிவதற்குரிய சுற்றுக்கயிற்றுப் பகுதி; தொங்கல் வரி, அரைக்கச்சையின் சுற்றெச்சப்பகுதி; வாணிகத்துறையில் மந்தமான பருவம்; தளர் ஆட்டம்; தளர் விடம்; (பே-வ.) மந்தநிலை, சோம்பற்கட்டம், இளைப்பாறு பருவம்; (பே-வ.) தடை எதிர்ப்பு; துடுக்குத்தனம்; கரிக்கற் கட்டைக்கான நிலக்கரித்தூள்; கடல்வேலைத் தேக்கநிலை மீன் வலை இழுவை; *a.* தொய்வான, தளதளப்பான; தளர்த்தி யான; முறுக்கப்படாத; கட்டப்படாத; மந்தமான; தேக்க முடைய; சோம்பலுடைய; மயக்கதயக்கமுடைய; செயன் முனைப்பற்ற; செயலற்ற; இளகலான, இறுக்கமற்ற; சோர்வுடைய; செய்யத்தவறுகிற; தவறுவதற்கிடமளிக்கிற; விடுபாடுடைய; உன்னிப்பில்லாத, கவனிப்பற்ற; அக்கறை யற்ற, ஆர்வங் குன்றிய; அசட்டையான; (ஒலி.) தளர் ஓசையுடைய, ஓசைச்செறிவற்ற; *v.* தளர்த்தியாக்கு; தளர்த்திவிடு; தளதளப்பாக்கு; தளரவிடு; (பே-வ.) முனைப் புக் குறையவிடு; செறிவுகுறைவி; முனைப்புக்குறை; செறிவு குறை; அசட்டையாயிரு; ஆற்றிக்கொள்; இளைப்பாறு; சோம்பலாக இரு; சுண்ணவகையில் நீற்று; *adv.* தொய் வாக; தளர்வாக; கவனியா நிலையில், அசட்டையாக; ஆர்வ மின்றி, அக்கறையில்லாமல்; சோர்வாக, செய்யத்தவறி; போதாநிலையில்; அரைகுறையாக; (தொ.) keep a slack hand, keep a slack rein, பொறுப்பின்றிச் சவாரி செய்;

பொறுப்பின்றி ஆட்சிசெய்; slack in stays, (கப்.) போக்கு வரவில் மந்தமான; slack lime, சுண்ணும்பு நீறு; slack off, முனைப்புக்குறைவி; ஊக்கங் குறைவுபடு; தளர்த்து; தளர்த்திவிடு; slack up, ஊர்திவகையில் நிறுத்தற்குமுன் விரைவு தணி; slack water, வேலை இறக்க ஏற்றத் தேக்கநிலை; slack weather, சோம்பலூட்டும் பருவநிலை.

**slack'-bake,** *v.* அரை வேக்காடாக்கு.

**slack'en,** *v.* தளர்த்தியாக்கு; தளர்த்திவிடு; தளதளப்பாக்கு; தளர்த்து; செறிவுகுறைவி; முயற்சி முனைப்புக் குறையவிடு; செறிவு குறைவுறு; முனைப்புக்குறை, கவனிப்பின்றி விடு; அசட்டையாயிரு; (பே-வ.) ஆற்றிக்கொள்; இளைப்பாறு; சோம்பலாக இரு.

**slack'er,** *n.* சோம்பியிருப்பவர்; வேலையில் விருப்பமில்லா திருப்பவர்; செயல் முனைப்பற்றவர்; தளர்த்துபவர்; சோர் வுடையவர்.

**slack'-handed,** *a.* கைச்சோர்வுடைய; செயற்சோர்வுடைய.

**slack'ly,** *adv.* சோர்வாக, அரைகுறையாக.

**slack'ness,** *n.* இளக்கம்; தளர்ச்சி; மந்தம்; முனைப்புக்கேடு; ஆர்வக்கேடு, சோர்வு; பின்னிடைவு.

**slacks,** *n. pl.* தளர்காற்சட்டை.

**slag,** *n.* மண்டூரம், தாதுமண்டம், உருக்கிய சுரங்க உலோகக் கசடு; இரும்புக்கிட்டம், சம்மட்டியால் அடிக்கப்பட்ட காய்ச்சிய இரும்பில் எழும் இரும்புக்கரியக உயிரகைச் சிம்பு; செங்கல் கடும்பதக்கட்டி, சுடுவேக்காட்டில் சூளையில் ஏற்படும் செங்கற்கட்டி; கொல்லுலைச் சாம்பற்கட்டி; காரோடு, எரிமலைக்குழம்பின் இறுகிய சாம்பற்கட்டி; *v.* தாதுமண்டம்படுத்து; இரும்புக்கிட்டமாக்கு; செங்கற் கடும் பதக்கட்டியாக்கு; சாம்பற்கட்டியாக்கு; உலோகக் கசடுபடு; கடும்பதக்கட்டிபடு; சாம்பற்கட்டியாகு.

**slagg'y,** *a.* உலோகக்கிட்ட வடிவான; மண்டூர இயல்பான; தாதுமண்டமாகக் கிட்டிய; கடும்பதச் செங்கல் சார்ந்த; எரிமலைச்சாம்பற்கட்டியார்ந்த.

**slag'-wool,** *n.* கனிம இழைக்கம்பிளி, உலோகக்கிட்டப் பாகூடான நீராவியால் இழைக்கப்படுஞ் செயற்கைக் கம்பளி.

**slain,** *v.* slay என்பதன் முடிவெச்சம்.

**slake,** *v.* விடாய் தணி; பழியவா நிறைவுசெய்; சுண்ண வகையில் நீற்று, நீருடன் கலந்து நீருக்கு.

**slake'less,** *a.* (செய்.) விடாய் வகையில் தணியாத, தணிக்க முடியாத; பழியுணர்ச்சி வகையில் தீராத, எளிதில் தீர்க்க முடியாத.

**sla'lom,** *n.* தடங்கல் பனிச்சரிவாட்டம், இடைத்தடைகள் மூலம் நெறி ஒழுங்குபடுத்தப்பட்ட கீழ்நோக்கிய சரிவான பனிச்சறுக்காட்டக் கேளிக்கை; தடங்கல் படகுப்போட்டிப் பந்தயம்.

**slam,** *n.* தடால் ஒலி; தடாற்கதவடைப்பு; சீட்டாட்ட முழு வரிசைக் கெலிப்பு; *v.* கதவைத் தடாலென அடை; கதவு வகையில் தடாலென மூடிக்கொள்; தொப்பென்று வை; (பே-வ.) அடி, மோது, புடை, தட்டு; எளிதில் வெற்றி கொள்; (தொ.) grand slam, சீட்டாட்ட வகையில் 13 பந்தயக் கெலிப்பு; little slam, சீட்டாட்ட வகையில் 12 பந்தயக் கெலிப்பு.

**sla'nder,** *n.* அவதூறு; பழிதூற்றுரை, பொல்லாங்குரை; பொய்க்குற்றச்சாட்டு; (சட்.) பொய்யுரைப் பழி; *v.* பழி தூற்று; பழித்துரை; பொய்ப்பழி கூறு; பொய்யுரைப் பழிசுமத்து, நற்பெயர் கெடு, பெயர் கறைப்படுத்து.

**sla'nderer,** *n.* அவதூறு பேசுபவர், பழிதூற்றுபவர்.

**sla'nderous,** *a.* அவதூறான, பழிதூற்றுகிற.

**slang,** *n.* கொச்சைவழக்கு; கொச்சைச்சொல்; கொச்சை வழக்குத்தொடர்; இழிதகவான குழூஉக்குறி வழக்கு; *v.* கொச்சை மொழிகளால் தூற்று, பச்சையாகத் திட்டு.

**slang'y,** *a.* கொச்சை வழங்கும் இயல்புடைய; கொச்சையின் இயல்புவாய்ந்த.

**slant,** *n.* கோட்டம்; சாய்வு, சரிவு; சாய்வுநிலை, சரிநிமிர் வில்லா நிலை; மட்டச்சாய்வு, சமதளமில்லாநிலை; வசைக் குறிப்பு; இகழ்ச்சி; மறைமுகக்கண்டனம்; சாய்வுச் சார்பு, நோக்கு, கருத்துச்சார்பு; *a.* (செய்.) சாய்வான, சரிவான; கோணமான; *v.* சரிவாகு; சரிவாக்கு; கோட்டமுறு, நேர் கோட்டிலிருந்து விலகிச் செல், நிமிர்கோட்டிலிருந்து திறம்பு; கிடைக்கோட்டிலிருந்து விலகிச்செல்; (தொ.) a slant of wind, சார்தகவான காற்றுவீச்சு, நல்வாய்ப்பான காற்று; on a slant, on the slant, சாய்வாக, பக்கம்நோக்கி.

**slantendi'cular, slantindi'cular, slantingdi'cular,** *a.* (பே-வ.) நிமிர்வரையல்லாத, சாய்வுவாட்டமான, சாய் முகமான.

**slant'ing,** *a.* சாய்வான.

**slap,** *n.* அறை, உள்ளங்கை அடி; *v.* கை ஓச்சி அடி; அறை; *adv.* அடி அதிர்ச்சியுடன். திடீரென்று; எதிர்பாராமல்; முழுதளவாக; நிறைவாக.

**slap-bang',** *adv.* மூர்க்கமாக, வன்முறையாக; முழக்கமாக; கூச்சலிட்டுக்கொண்டு; தலைகீழாக, பதற்றமாக.

**slap'dash** [1], *n.* வேகப்பாய்ச்சல்; மும்முரவேலை; ஆவேசச் செயல்; குத்துச்சாந்து; சுண்ணும்புஞ்சரளைக்கல்லுங் கலந்த சுவர்ப்பூச்சு நீறு; *a.* வேகமாகச் செல்கிற, மும்முரமாகப் பாய்கிற; இடையிடைச் செய்யப்பட்ட, கண்ட கண்டபடி செய்யப்பட்ட; மேலீடாகச் செய்யப்பட்ட, முனைப்பின்றிச் செய்யப்பட்ட; *v.* குத்துச்சாந்திடு; குத்து மதிப்புருவாகச் சித்தஞ் செய்.

**slapdash'** [2], *adv.* மடத்துணிச்சலுடன்; ஆவேசத்துடன்.

**slap'jack,** *n.* அடை, வறட்டப்பம்; சிங்காரப்பெட்டி, நறு மண முகத்தூள் வைக்கும் தட்டைப்பெட்டி.

**slapp'ing,** *n.* அறை, மொத்தடி; *a.* மிகுவிரைவான; மிக விரும்பத்தக்க, மிகப் பெரிய; கணிசமான; *adv.* மிகு விரைவாக, மிக நன்ருக.

**slap'stick,** *n.* சூத்திரக்கோல், வளைந்து கொடுக்கும் இரு பிளவாயுள்ள கோமாளியின் கைப்பிரம்பு; கீழ்த்தர அமளிக் களி நாடகம்; *a.* கோமாளியின் சூத்திரக்கோலைக் கையாள் கிற; கீழ்த்தர நகைச்சுவை நாடக இயல்புடைய.

**slap'-up,** *a.* (பே-வ.) புத்தம் புதுப்பாணி சார்ந்த, நாட் பாணியான.

**slash,** *n.* வீச்சடி; வீக்கடி; வீச்சடித்தடம்; கீறற்காயம்; வெட்டுச் சிதைவுத்தடம்; பிளவுத்தடம்; வெட்டுச்சிதைவுக் கூளம்; *v.* வீக்கு, சுளீரென அடி; கத்தியால் தாக்கு; வாளால் மொத்து; கசையாலடி, சாட்டையால் சொடுக்கு; குத்திக்கீறு; வெட்டிப்பிள; வெட்டிச்சிதை; (படை.) கொப்புக்கவரரண் எழுப்புவதற்காக மரங்களை வெட்டி வீழ்த்து; (தொ.) slashed sleeve, உட்கிடக்கை தெரியும் படியான நீள் பிளவுகளையுடைய கைக்கடைப்பகுதி; slashing criticism, ஒளிமறைவு இல்லாத கண்டனம்.

**slat** [1], *n.* பாவுதிரைப் பட்டிகை, பலகணித் திரைக்குப் பயன் படுத்தப்படும் நீண்ட மெல்லிய மரச்சிம்பு; வரிச்சல், ஓடுபரப்பு வதற்கான மோட்டு மரச்சட்டம்; (பே-வ.) சாமியோடு, மெல்லிய மோட்டுப்பாவோடு.

**slat** [2], *v.* மோதியடி, கப்பற் பாய்-கயிறுகள் முதலியவற்றின் வகையில் சடசடவென்றடித்துக்கொள், தொப்புத் தொப் பென்று சென்று மோது.

**slate** [1], *n.* பலகைக்கல்; அடுக்கடைப்பாறை, தட்டையான மென்மையான பலகைகளாக எளிதில் பிளக்கப்படவல்ல பசுநீலச் சாம்பல்நிறப் பாறை வகை; சிறுவர் எழுதுவதற்கான மரச்சட்டமிட்ட கற்பலகை, பலகைக் கல்லேடு; *a.* கற்பலகை சார்ந்த; கற்பலகையினுற் செய்யப்பட்ட; கற்பலகை நிறமான, மென்கருநீலமான; *v.* மோடு வகையில் பலகைக்கல் கொண்டு வேய்; பலகைக்கல்லால் மூடு; கற்பலகையில் குறி; கற்குச்சி யால் மயிர் நீவியெடு; பதவி முதலியவற்றில் அமர்த்து; பதவி அமர்வுக்காகப் பெயர் குறிப்பிடு; (தொ.) a slate loose, சிறு கோட்டி; clean the slate, பொறுப்புகளைவிட்டு நீங்கிக் கொள்; பொறுப்புகளைத் துறந்துவிடு.

**slate²**, *v.* (பே-வ.) திறனாய்வில் நூலாசிரியரைக் கடுமையாகக் கண்டி; திட்டு, இடித்துரை, தாளி.

**slate'-black**, *n.* சற்றே நீலங்கலந்த இளம்பசுங் கருநிறம்; *a.* இளம்பசுங் கருநீல நிறமான.

**slate'-blue**, *n.* மங்கலான கரும்பசு நீலநிறம்; *a.* மங்கிய கரும்பசு நீல நிறமான.

**slate'-club**, *n.* கூட்டுநலக்குழாம், சிறு வாரப்பங்குத் தொகையுடன் கூட்டுத்துணையுதவி நலம் நாடி அமைக்கும் குழு அமைப்பு.

**slate'-colour**, *n.* பசுநீலக் கரும்பழுப்பு நிறம்.

**slate'-coloured** *a.* பசுநீலக் கரும்பழுப்பு நிறம்வாய்ந்த.

**slate'-grey**, *n.* இளம்பசுநீலச் செம்மஞ்சள் நிறம்; *a.* இளம் பசுநீலச் செம்மஞ்சள் நிறமான.

**slate'-pencil**, *n.* பலப்பம், கற்பலகைக் குச்சி.

**slat'er**, *n.* பலகைக்கற் பாவோடு வேய்பவர்; பலகைக்கற் குச்சி, தோல் நுண்மயிர் களைவதற்கான கற்பலகை அலகுடைய கருவி வகை; (பே-வ.) மரப்பேன்.

**slate'-writer**, *n.* திப்பிய வரைவு வித்தகர்.

**slate'-writing**, *n.* திப்பிய எழுத்து; மூடிய கற்பலகையில் எழுத்து வருவிக்கும் வித்தை.

**slatt'ern**, *n.* நடைகேடி, ஒழுங்கற்றவள், தூய்மையற்றவள்.

**slatt'ernly**, *a.* ஒழுங்கற்ற, தூய்மையற்ற.

**slat'y**, *a.* கற்பலகை சார்ந்த; கற்பலகை போன்ற; (தொ.) slaty clearage, அடுக்குத்தளத்துக்கு முரணான வரிப்பிளவமைவு.

**slaught'er**, *n.* மாக்கொலை; படுகொலை; நூழிலாட்டு; *v.* படுகொலை செய், நூழிலாட்டு; இரக்கமின்றிக் கொல்; விலங்குகளை வெட்டித்தள்ளு; இறைச்சிக்காக வெட்டிக்குவி; (தொ.) slaughter of the innocents, மாமன்ற வழக்கில் காலம் போதாமையால் பருவ அமர்வின் இறுதியில் சட்டப் பகர்ப்புகளைக் கைவிடல்.

**slaught'er-house**, *n.* இறைச்சிக்கொட்டில்; படுகளம்.

**slaught'erous**, *a.* படுகொலை செய்யும் பாங்குடைய; கொலைத் தொழிலுடைய, அழிவுசெய்கிற.

**Slav**, *n.* ஸ்லாவிய இனத்தவர், கிழக்கு ஐரோப்பாவின் பெரும்பகுதியிற் பரவியுள்ள ருசியர்-பல்கேரியர்-சைலீசியர்-பொஹீமியர் உள்ளிட்ட இனத்தைச் சேர்ந்தவர்; *a.* ஸ்லாவிய இனஞ் சார்ந்த; ஸ்லவானிக் மொழி சார்ந்த; ஸ்லவானிக் மொழிபேசும் மக்கள் சார்ந்த; ஸ்லவோனியா சார்ந்த.

**slave**, *n.* அடிமை, தொழும்பர்; பிறராட்சிக்குட்பட்டவர்; அடிமை வேலையாள்; தன்னுரிமையற்றவர்; வணங்கி வாழ்பவர்; அடிமைப்பண்புடையவர்; பழக்கத்திற்கு அடிமைப்பட்டவர்; மாடாய் உழைப்பவர்; ஓய்வொழிவற்றவர்; தன்னுண்மையிழந்தவர்; *v.* அடிமைபோல் வேலை செய், தொண்டூழியம் புரி; அடிமையாக்கு; அடிமையாக நடத்து; (தொ.) slave States, (வர.) அமெரிக்க ஐக்கிய நாடுகளின் முன்னுள் தென்பாற்பகுதி.

**slave'-ant**, *n.* அடிமை எறும்பு, எறும்புச் சமுதாயத்தில் கட்டாயப்படுத்தி வேலை வாங்கப்படும் எறும்பு.

**slave'-bangle**, *n.* வங்கி, தோட்காப்பு.

**slave'-born**, *a.* பிறப்படிமையான, அடிமையாகப் பிறந்த; அடிமைகளாயுள்ள பெற்றோர்களுக்குப் பிறந்த.

**slave'-driver**, *n.* கங்காணியர், அடிமைகளைக் கட்டாய வேலைவாங்கி மேற்பார்வையிடுபவர்; கடுமையாக வேலை வாங்குபவர்.

**slave'-grown**, *a.* அடிமைகளின் வேலையினால் விளைவிக்கப்பட்ட.

**slave'-holder**, *n.* அடிமை முதலாளி, அடிமைகளை உடைமையாக வைத்திருப்பவர்.

**slave'-hunt**, *n.* அடிமைவேட்டையாட்டம், அடிமைகளாகக் கடத்திச் செல்ல ஆட்களை வேட்டையாடுதல்.

**slave'-hunter**, *n.* அடிமை வேட்டையாளர், ஆட்களை வேட்டையாடிப் பிடித்து அடிமைகளாக விற்பவர்.

**slav'er¹**, *n.* அடிமைவாணிகக் கப்பல்; அடிமைவாணிகர்.

**slav'er²**, *n.* சொள்ளு, கோழை, சாளைவாய்நீர், கடைவாயொழுகுநீர்; அடிமைப் புகழ்ச்சி, கீழ்த்தர முகப்புகழ்ச்சி; *v.* சொள்ளு வழியவிடு; கோழை வடிவுறு; துணியின்மீது சாளைவாய்நீர் ஒழுகவிடு; முத்தமிடுகையில் மற்றொருவர் கன்னத்தில் எச்சிற்படச் செய்.

**slav'ery¹**, *n.* அடிமைமுறை; தன்னுரிமையற்ற நிலை, சுதந்திரமின்மை, அடிமையின்நிலை; அடிமைகளை உடைமையாக வைத்திருக்கும் வழக்கம்; அடிமைப்பண்பு; கட்டுண்டநிலை; தன்னுண்மையின்மை; தன்னுட்சியிழப்பு; சோர்வுறச்செய்யும் உழைப்பு, அடிமைவேலை.

**slav'ery²**, *a.* எச்சில் ஒழுகவிடுகிற.

**slav'ey**, *n.* பணிப்பெண், (பே-வ.) உணவுமணைப் பணிமகள்.

**Sla'vic**, *n.* ஸ்லாவிய இனத்தவர் மொழி; *a.* ஸ்லாவிய இனஞ் சார்ந்த.

**slav'ish**, *a.* அடிமைத்தனமான; அடிமைகளின் இயல்புகள் வாய்ந்த; தன்மதிப்பற்ற; தாழ்வான, தன் மதிப்பற்றுப் பின்பற்றுகிற; கெஞ்சிப் பணிகிற, இழிவான; (தொ.) slavish imitation, தனக்கெனத் தனித்தன்மையின்றிப் பின்பற்றுதல், ஆராயாமற் பின்பற்றும் பண்பு.

**slav'ishly**, *adv.* அடிமைத்தனமாக, தற்பண்பின்றி.

**slav'ishness**, *n.* அடிமை மனப்பான்மை; தற்பண்பற்றுப் பின்பற்றும் இயல்பு.

**slavoc'racy**, *n.* அடிமையுடைமையாளர்குழு; அடிமை முதலாளிகள் ஆட்சி; அடிமை உடைமையாளர் ஆற்றல்.

**slav'ocrat**, *n.* அடிமை முதலாளி; அடிமை உடைமைமுறை ஆட்சியின் ஆதரவாளர்.

**Slavon'ian**, *n.* ஸ்லாவிய இனத்தவர்; ஸ்லாவிய இனத்தவரின் மொழி; ஸ்லவோனியாவில் வாழ்பவர்; *a.* ஸ்லாவிய இனஞ் சார்ந்த; ஸ்லவோனியா சார்ந்த.

**Slavon'ic**, *n.* ஸ்லாவிய இனத்தவர்களின் மொழி; *a.* ஸ்லாவிய இனத்தவர் சார்ந்த.

**Slavon'icize**, *v.* ஸ்லா வியஇனப் பண்பூட்டு, ஸ்லாவிய இனப்பண்புமயமாக்கு.

**Slav'ophil, Slav'ophile**, *n.* ஸ்லாவிய இனத்தவர்களுக்குச் சாதகமானவர், ஸ்லாவியர்களுக்கு நண்பர்; *a.* ஸ்லாவியர்களுக்குச் சார்தகவான, ஸ்லாவியர்கள் பக்கச்சார்பான.

**Slav'ophobe**, *n.* ஸ்லாவிய இனத்தவர்களுக்குப் பகையானவர், ஸ்லாவிய இனப் பண்பு வெறுப்பவர்; *a.* ஸ்லாவிய இனத்தவர்களுக்குப் பகையான; ஸ்லாவிய இனப்பண்பு வெறுக்கிற.

**slaw**, *n.* கோசுக்கீரை இனக் குழம்புணவு.

**slay**, *v.* கொல்; அழி; (செய்.) வேட்டையாடி அழிவுசெய்

**sleaz'y**, *a.* துகில் வகையில் உறுதியற்ற; இழைம வகையில் நொய்தான; (பே-வ.) ஒழுக்கங்கெட்ட.

**sled**, *n.* சிறு பனிச் சரக்குகலம்; சரக்குகள் கொண்டுசெல்வதற்கான பனிச்சறுக்கு இழுப்புவண்டி; முற்காலத்தில் தூக்கிடுவதற்குரியவரை இழுத்துச் செல்லும் வண்டி; *v.* சறுக்கு வண்டியில் இட்டுக்கொண்டு செல்; சறுக்குகலத்திற் செல்.

**sledge¹**, *n.* பனிச்சறுக்கூர்தி; சறுக்குகலம், சரக்குக் கொண்டுசெல்லும் நிலச்சறுக்கிழுப்பு வண்டி; *v.* பனிச் சறுக்கூர்தியிற் செல்; பனிச்சறுக்கூர்தியிற் பயணஞ் செய்; சறுக்குகலத்திற் கொண்டுசெல்.

**sledge²**, *n.* கொல்லுலைக்கூடம், கருமானின் சம்மட்டிக்கூடம்.

**sledge'-hammer**, *n.* கொல்லுலைக்கூடம், கருமானின் சம்மட்டிக்கூடம்; *a.* உலைக்கூடத்தால் அடிக்கும் ஆற்றலுடைய, சம்மட்டியடி அடிக்கிற; (தொ.) sledge-hammer argument, sledge-hammer style, சம்மட்டியடிப்பாணி; sledge-hammer blow, சம்மட்டியடி.

**sleek**, *a.* பட்டிழைவான, மென்னெுசிவான ; மென்மையும் வழவழப்பும் வாய்ந்த ; மென்பளபளப்பான ; *v.* பட்டிழை வாக்கு, மென்னெசிவாக்கு ; மென்மையும் வழவழப்பும் உடையதாக அழுத்தித்தடவு, மென்பளப்புப்பட வருடு.

**sleep**, *n.* உறக்கம், தூக்கம் ; உயிரினங்களின் பருவச் செறி துயில் நிலை ; ஒருமுறைத்துயில் ; துயில்நேரம் ; நீடமைதி, ஓய்வு ; அசைவின்மை ; கவனியாதிருத்தல் ; துஞ்சுதல், சாவு ; *v.* உறக்கத்தில் ஆழ்ந்திரு, தூங்கிவிடு, துயில்கொள்; தூங்கிக்கழி ; தூங்கி நிலைமாறப்பெறு ; செயலற்றிரு ; செயலடங்கியிரு ; அமைந்திரு ; உணர்ச்சியற்றிரு ; சோம்பியிரு ; அக்கறையற்றிரு ; எழுச்சியற்றிரு ; அசைவற்றிரு, அசைவிலதாய்த் தோன்று ; கல்லறையிற்கிட ; இரவுநேரத்தில் தங்கியிரு ; கலவிசெய் ; இடவகையில் தூங்க வாய்ப்புடையதாயிரு ; (தொ.) beauty sleep, நள்ளிரவுக்கு முந்திய துயில், புதுக்கிளர்ச்சி விளைக்கும் தூக்கம் ; fall on sleep, உறங்கிவிடு ; இற ; go to sleep, உறங்கிவிடு ; let sleeping dogs lie, தொல்லைகளைக் கிளறிவிட்டுக் கொள்ளாதே ; sleep in, நெடுநேரந்தூங்கு ; sleeping partner, உழைக்காத கூட்டாளி ; sleep like a top, ஆழ்ந்த உறக்கங்கொள் ; sleep on a question, sleep upon a question, sleep over a question, சிக்கலைத் தள்ளிவைத்துப்பார் ; sleep that knows not breaking, இறப்பு ; sleep the clock round, 12 அல்லது 24 மணிநேரம் தூங்கு ; the sleep of the just, ஆழ்ந்த உறக்கம் ; top sleeps, பம்பரம் விரைசுழற்சியில் அசைவற்றுத் தோன்றுகிறது.

**sleep'er**, *n.* தூங்குபவர் ; வாரை, விட்டக்குறுக்குக்கை ; குறுக்குவிட்டம் ; தண்டவாளக் குறுக்கைக்கட்டை ; தொடர் வண்டித் துயிற் பெட்டி.

**sleep'iness**, *n.* தூக்கக் கலக்கம்.

**sleep'ing**, *n.* உறங்குதல் ; உறக்கம் ; *a.* உறங்குகிற ; உறங்குவதற்குரிய ; உறக்கமூட்டுகிற ; உறக்கத்துடன் இயலுகிற.

**sleep'ing-bag**, *n.* துயிற்பை, வழிப்போக்கர் தூங்குவதற்காகப் பயன்படுத்தும் பை.

**sleep'ing-car, sleep'ing-carrg'iage**, *n.* துயிற்பெட்டி, துயில்வாய்ப்பிடம் அமைக்கப்பெற்றுள்ள இருப்பூர்தித் தொடர்வண்டிப் பெட்டி.

**sleep'ing-draught**, *n.* தூக்கமருந்து, துயில் தூண்டுங் குடிநீர்மம்.

**sleep'ing-sick'ness**, *n.* ஈ வகையின் கடியினுல் வரும் கொடிய ஆப்பிரிக்க நச்சு நோய்வகை.

**sleep'ing-suit**, *n.* தூக்கநேரத் தளர் உடுப்பு.

**sleep'less**, *a.* உறக்கமற்ற ; உறங்காது கழிக்கப்படுகிற ; உறக்கமின்மைக்குக் காரணமான.

**sleep'-walk'er**, *n.* தூக்கத்தில் நடப்பவர், தூக்கநடப்புக் கோளாறுடையவர்.

**sleep'-walk'ing**, *n.* தூக்கத்தில் நடத்தல், தூக்கநடப்புக் கோளாறு ; *a.* தூக்கத்தில் நடக்கிற, தூக்கநடப்புக்கு ஆளான.

**sleep'y**, *n.* சோம்பேறி ; கவனிக்காதிருப்பவர் ; *a.* உறங்கி வழிகின்ற, அரைத்தூக்க நிலையிலுள்ள ; தூங்குவதற்கு ஒருங்கியுள்ள ; வழக்கமாகவே சோம்பலான ; வழக்கமாகவே எதிலும் நாட்டஞ் செலுத்தாத ; கிளர்ச்சியில்லாத ; பழங்கள் வகையில் சுவையற்று உலர்ந்துபோன ; (தொ.) sleepy sickness, மயக்கத்தோடு கூடிய மூளைவீக்க நோய்.

**sleep'yhead**, *n.* சோம்பலுள்ளவர் ; கவனிக்காதிருப்பவர்.

**sleet**, *n.* ஆலங்கட்டி மழை ; *v.* கல்மழை பெய், ஆலங்கட்டியாக மழை பெய் ; (தொ.) it sleets, கல்மழை பெய்கிறது, ஆலங்கட்டியாக மழை பெய்கிறது.

**sleeve**, *n.* சட்டைக்கை, கையினை மறைக்குஞ் சட்டைப் பகுதி ; குழல் அகஞ்செருகப்பட்ட பெருங்குழல் ; கம்பியுருளை அகஞ் செருகப்பட்ட குழல் ; (கப்.) காற்றுத்திசை காட்டும் பாய்க் கூம்பு ; (தொ.) have card up one's sleeve, சீட்டினைச் சட்டைக் கைப்புறம் மறைத்து வைத்திரு ; have card up one's sleeve, have plan up one's sleeve, தனிப்பட வேறு திட்டத்தை உரிய சமயம் வரும்வரை மறைத்துவைத்துக்கொண்டிரு ; laugh in one's sleeve, நமட்டுச்சிரிப்புச்சிரி, உள்ளுக்குள்ளாகச் சிரித்துக்கொள் ; lawn sleeves, மாவட்டச் சமய முதல்வரின் நேர்த்தியான நார்த்துணிச் சட்டைக்கை ; leg-of-mutton sleeve, மணிக்கட்டிறுக்கச் சட்டைக் கை ; mandarin sleeve, முழங்கைக்குக் கீழே திறந்த தளர்த்தியான சட்டைக்கை ; roll up one's sleeves, turn up one's sleeves, சண்டைசெய்ய ஒருக்கமாகு ; வேலைசெய்ய ஒருங்கு ; wear one's heart upon one's sleeve, உணர்ச்சிகளை வெளிப்படையாகக் காட்டு.

**sleeve'-coupling**, *n.* மேவுகுழல் ; குழாய்கள் இடையிணைப்புக் குழல் ; இயந்திரத் தண்டச்சுக்கள் இடையிணைப்புக் குழாய்.

**sleeve'-fish**, *n.* கணவாய் மீன்வகை.

**sleeve'less**, *a.* கைப்பகுதியற்ற ; பயனற்ற, வீணான ; (தொ.) sleeveless errand, வீண் பயணம்.

**sleeve'-link**, *n.* சட்டைக்கைக் குமிழ்மாட்டி.

**sleeve'-nut**, *n.* இடையிணைப்பு உறழ்சுரை.

**sleeve'-valve**, *n.* இழையுருளைத் தடுக்கிதழ்.

**sleigh**, *n.*, *v.*=sledge.

**sleigh'-bell**, *n.* சறுக்குவண்டிக் குதிரைச் சேணச் சிறு மணி.

**sleight**, *n.* கைத்திறன், கைப்பழக்கம் ; அருந்திறன் ; செயற் சதுரப்பாடு.

**sleight'-of-hand'**, *n.* கைத்திறமுறை ; செப்பிடுவித்தை ; கைச்சாலவித்தை ; வாட்போரின் கைவீச்சுத்திறம், கைவீச்சு நயம்.

**slen'der**, *a.* ஒடுங்கிய ; அகலங் குறைந்த ; பருமனில் குறைந்த ; கம்பிபோன்ற ; ஒல்லியான, நுடங்கிய ; நொய்ய ; மிகச் சிறிய, நுண்ணிய ; குறைவாயுள்ள, போதாத ; சாரமற்ற ; வளமற்ற.

**slen'derness**, *n.* மென்மை, நுண்மை.

**slept**, *v.* sleep என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**sleuth'-hound**, *n.* மோப்ப வேட்டைநாய் வகை ; துப்பறிபவர் ; தடங்காண் வல்லுநர் ; புலனறி வல்லுநர்.

**slew** [1], *n.* உடன் திருப்பம் ; விசைத்திருப்பீடு ; திடீர்த்திருவெட்டு ; விசை ஊசலாட்டம், உடன்விலங்கல் ; திடீர்ப்புடைபெயர்விடம் ; *v.* ஊடச்சின்மேல் திடுமெனத் திரும்பு, சுழன்று திரும்பு ; திடுமெனப் புடைபெயர்.

**slew** [2], *v.* slay என்பதன் இறந்தகாலம்.

**slice**, *n.* துண்டம் ; பூழி, கூறு ; பங்கு ; பகுதி ; வரிவரியாக நறுக்கிய துணுக்கு ; மெல்லிய கண்டம், இறைச்சிச்சீவல் ; அப்ப அரிகண்டம் ; வகுத்தளிக்கப்பட்ட கூறு ; கிட்டிய பகுதி ; சுரண்டுகத்தி, ஓலை அலகுடைச் சுரண்டு கருவி ; மெல்லுணவுக்கரண்டி ; சுரண்டுகோல், உலைக்களத் துப்புரவுக் கரண்டி ; உலைக்களப் பற்று குறடு, தணலிலிருந்து பொருள்களை எடுப்பதற்கான கருவி ; *v.* துண்டுதுண்டாக நறுக்கு ; பூழிபூழியாக அரி ; அரிந்து கூறுக்கு ; படலம் படலமாகச் சீவு ; துண்டி ; அரிவது போன்று துடுப்பியக்கி உகை ; குழிப்பந்தாட்ட மட்டையினை வெட்டுப்பாணியில் இயக்கு ; பந்தினை வெட்டுவாக்காக அடித்து வலப்புற ஆட்டக்காரரிடம் அனுப்பு.

**slice'-bar**, *n.* சுரண்டுகோல், உலைக்களத் துப்புரவுக்கரண்டி.

**slick**, *a.* கைத்திறமிக்க ; தரங்கெடாத, செயற்குளறுபடியினுல் கெடுக்கப்படாத ; திறம்பட்ட, அட்டியின்றி செய்துமுடிக்கப்பட்ட ; *v.* மழமழப்பாக்கு, மெருகுத்தோற்றங் கொடு, சீர் நயப்படுத்து ; *adv.* நேரடியாக, முழுதுறழ்வாக, சரிநுட்பமாக.

**slick'er**, *n.* நீர்க்காப்பு மேற்சட்டை ; மெருகுகருவி ; மோசக்காரர், மோசஞ் செய்யக்கூடியவர்.

**slid**, *v.* slide என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**slid'able**, *a.* நெகிழ்த்தித் தள்ளத்தக்க, இழைவுடைய.

**slide,** *n.* சறுக்கல், இழைவியக்கம்; பனிச்சறுக்கிழைவு; பனித்தளச் சறுக்கிழைவுத்தடம்; பனிச்சறுக்கிழைவுத்தளம்; பனிச்சறுக்காட்டத்தளம்; வரியிழைவு, ஒருதிசை நேரிழைவாக நழுவிச்செல்லும் நிலை; சாய்விழைவுத்தளம், சாய்சறுக்குத் தளம்; இயந்திர இழைப்பகுதி; இழைவுறுப்பு; இழைகதவம்; செருகிழைவு, உரிய இடத்தில் இழைவாகச் செருகிவைக்கப் பட்ட பொருள்; இழைவூக்கு, தலைமயிரொப்பனையில் செருகி வைக்கும் கவரூசி; ஆய்வாடிகளின் காட்சிவில்லை; *v.* நழுவிச் செல்; வழுக்கியோடு நழுவிச்செல்லுவி; இழைந்துசெல்; பனிப்பரப்புமீது சறுக்கிச் செல்; சறுக்குக்கட்டைமீது சறுக்கிச் செல்; சறுக்காட்டமிடு; தங்குதடையின்றி எளிதிற் செல்; தன்னுணர்ச்சியின்றிச் செல்; நழுவிசுகர்வுறு, மெல்லிழை வாகப் படிப்படியாகச் செல்; (தொ.) let things slide, பொருட்படுத்தாதிரு; slide over delicate subject, நுட்ப நயங்களைத் தொடாமலே விட்டுச்சென்றுவிடு.

**slide'-caliper,** *n.* நுண்விட்டமானி, நழுவு நுண்படிக்கல முடைய விட்டமளக்கும் கருவி.

**slid'er,** *n.* பனிச்சறுக்கிச் செல்பவர்; வழுக்கிச்செல்பவர்; சறுக்கிச் செல்வது; இழைந்தோடும் உறுப்பு; தாள்வில்லை களுக்கிடையிலுள்ள குளிர்பாலேடு; சேதாமை, சிவந்த வயிறு டைய ஆமை வகை.

**slide'-rule,** *n.*=sliding-rule.

**slide'-valve,** *n.* இழைவடைப்பு.

**slide'-way,** *n.* இழைவரி, இயந்திரத்தில் உறுப்பு வழுக்கி இயங்குவதற்கிடமளிக்கும் பகுதி.

**slid'ing-door,** *n.* செருகிழைகதவம், குடுமியின்மீது இயங் காமல நீள்தொளையூடே பக்கவாட்டில் இழுக்கப்படுங் கதவு.

**slid'ing-keel,** *n.* இழைவுகட்டை, படகு பக்கவாட்டிற் சாயாமல் தடுக்கும் அடிமட்ட மையப்பலகை.

**slid'ing-rule,** *n.* உறழ்படியளவைக்கோல், நுண்ணளவு காட்டும் நழுவுபடியுடைய அளவுகோல்.

**slid'ing-scale,** *n.* உறழ்வுபடிவீதம், தீர்வை-வரி முதலிய வற்றின் வகையில் படிப்படியாக ஏறியிறங்கிச் செல்லும் திட்ட வீத அளவுமுறை.

**slid'ing-seat,** *n.* நெகிழ்விருக்கை, பந்தயப் படகில் துடுப்பு வலிப்பவரின் உடலசைவுக்கேற்ப நெகிழ்ந்தசைந்து கொடுக் கும் அமர்வுப் பீடம்.

**slight,** *n.* ஏளன அவமதிப்பு, புறக்கணிப்பேளனம், உரிய மரியாதை காட்டத்தவறுதல்; *a.* மெல்லிதான; ஒல்லியான; நொய்தான தோற்றமுடைய; முக்கியமல்லாத, கவனிக்க வேண்டாத, சிறிய அளவான; மிகுதியாயிராத, முழுநிறைவா யிராத; போதாத; அருகலான, குறைவாயுள்ள; மிகச் சிறிதான; *v.* பொருட்படுத்த வேண்டாத வகையில் நடத்து அல்லது பேசு; ஏளன அவமதிப்புச்செய்; மரியாதை காட்டத் தவறு; வெளிப்படையாக அசட்டை செய்; (தொ.) put a slight upon, அசட்டை செய், புறக்கணி; அவமதிப்புச்செய்; slight over, முற்றமுழுக்கப் புறக்கணி, வேண்டுமென்றே கவனியாதிரு.

**slight'ing,** *n.* புறக்கணிப்பு; ஏளன அவமதிப்பு; *a.* ஏளன மாக அவமதிப்புச் செய்கிற; புறக்கணிக்கிற.

**slight'ingly,** *adv.* ஏளன அவமதிப்பாக; மரியாதைக்குறை வாக.

**sli'ly,** *adv.* சிறுசூழ்ச்சிமுறையுடன், நுண்ணயச் சூழ்ச்சியுடன், மறைந்து முறையாக, மூடுதந்திரமாக.

**slim,** *a.* மெல்லிய, ஒடுங்கிய; ஒல்லியான; இடுங்கிய, நீள் பொருள்களில் மிகக்குறைந்த சுற்றளவுள்ள; ஒரு கைக்குள் அடங்குகிற; நொய்தான கட்டமைப்புடைய; மிகச் சிறிய வடிவமுடைய; சூழ்ச்சிமிக்க, பொல்லா பூகமிக்க; தீவினை யஞ்சாத; *v.* ஒடுங்கியதாக்கு, உடல் வகையில் ஒல்லியாவதற் குரிய வழிவகைகளைக் கையாளு.

**slime,** *n.* வண்டற்சகதி, படிசேறு; தொழி, குழைசெழி; சேறூர்ந்த பொருள்; களிம்புப் பசைமண்; குழம்பு வடிவ நிலக்கீல்; சீதக்கட்டு; மீன்கசிவுக்களிம்பு; உடல்தசைப் பொருள்; மாசு, அழுக்கு; ஒழுக்கங்கெட்ட நிலை, தன்மதிப் பற்ற அடிமைப்பண்பு; *v.* சேறு பூசு; களிம்பு தடவு; பாம்பு வகையில் இரைவிழுங்குமுன் ஈரப் பதமாக்கு; (இழி.) நெறிபுறக்கணித்து எப்பாடுபட்டாயினும் செயலை வெற்றிக் குக் கொண்டுசெல்.

**slime'-gland,** *n.* களிம்புச்சுரப்பி, நத்தைஇன வகையில் பசைநீர் சுரக்குங் கழலை.

**slime'-pit,** *n.* நிலக்கீல் கிடங்கு.

**slim'iness,** *n.* சேறூர்ந்த தன்மை; பிசுக்குத்தனம்.

**slim'y,** *a.* சகதியான; குழைசேற்றுத் தன்மைவாய்ந்த; சேறு பூசப்பட்ட; செழி நிறைந்த; சீதக்கட்டார்ந்த; களி யார்ந்த; சீதங்கட்டியுள்ள; பிசுபிசுக்கலான; வழுக்குகிற; பிடிக்கு வசப்படாத; கெஞ்சி ஏய்க்கிற; வெறுக்கத்தக்க வகையில் முகப்புகழ்ச்சி செய்கிற; தன் மதிப்புக்கேடான அடிமைப்பாங்குடைய.

**sling**[1], *n.* கவண், கல்லெறி கருவி; கவண்கயிறு, கல்லெறி கயிற்று முடிச்சு; உறி, தொங்கல் கயிறு; தொங்கல் முடிச்சு, கயிற்றுத்தொங்கல், தொங்கற்கட்டு; காயம் பட்ட உறுப்புக் கான ஏந்துகட்டு; *v.* எறி; கவண் எறி; மேலிடு; உறியில் தொங்கவிடு; கட்டித்தூக்கு; மேலிருந்து தாங்கப் பெறும் படி அமை; தூங்கு, தொங்கு; தூக்கு கயிற்றினால் மேலேற்று; இடமாற்று; (தொ.) slung shot, அடிவார்க் குண்டு, வீணர்களால் ஆயுதமாகப் பயன்படுத்தப்படும் மணிக் கட்டோடு தோல்வாரால் இணைக்கப்பட்ட உலோக உருண்டை.

**sling**[2], *n.* கள் வகை.

**sling'-cart,** *n.* தொங்கற் பளுவண்டி, பளுக்கள் ஊடச்சில் கட்டித் தொங்கவிடப்பட்டு எடுத்துச் செல்லும் வண்டி.

**sling'-dog,** *n.* பாரஞ்சாம்பிக் கொளுவி.

**slink**[1], *v.* மறைந்து நழுவு, ஒளிந்தோடு; வெட்கத்தால் ஓடி மறைவுறு; வெள்கிப் பின்னிடைவுறு; நாணி ஒதுங்கிச் செல்; குற்ற உணர்ச்சியுடன் தலைகுனிந்து செல்; கோழைத் தனமாகப் பதுங்கிச்செல்; அஞ்சியொடுங்கு.

**slink**[2], *n.* சிதடு, விலங்கு வகையில் அரைகுறை வளர்ச்சி யோடு பிறந்த கன்று, முழுவளர்ச்சியுறுமுன் பிறந்த கன்று; *v.* முதிராக் கன்று ஈனு; முழுவளர்ச்சியுறாக் கன்று போடு.

**slip,** *n.* சறுக்கல்; வழுக்கல்; எதிர்பாராப் பிழை; தவறு; நாச்சோர்வு; சொற்சோர்வு; எழுத்துச்சோர்வு; கட்டுப் பாட்டில் தளர்வு; ஒழுக்கவழு, நடத்தைத்தவறு; தப்புதல், பிழைத்தல்; சிறுதுண்டு; சுழி, கம்பு; மரப்பட்டிகை; வரிச் சல்; வார்; தும்பு; தாள்பட்டி, தாள் நறுக்கு; நீண்டொடுங் கிய இடம்; ஆட்டக்கள ஓரம்; சிறுகிளை, நாற்றுமுளை; ஒட்டுக்கொம்பு; கான்முளை, மரபுக்கொழுந்து; ஆட்டக் களப்பந்துதவிச் சிறுவர்; சிறு தட்டை மீன்வகை; கப்பல் துறை வகையில் சாய்தளக் கட்டுதுறை; கப்பல்துறை வகை யில் சாய்தள இறங்குதட்டு; மட்பாண்டச் சித்திரவேலைப் பாட்டிற்காக அப்பப்படும் களி; திடீர்த் தளர்த்து விசை; விசைத் தோல்வார்; விமான ஊடக விசைத்தடையளவு; தலையணை உறை; தளர்த்தியான ஆடை; உட்கச்சு; உள் ளங்கி; உட்பாவாடை; கத்திரி-இடுக்கி-பற்றிறுக்கி முதலிய வற்றின் வகையில் பற்றுத்தளர்த்து விசையமைவு; *v.* சறுக்கு; வழுக்கிவிடு; வழுக்கி விழு; வழுகு; நழுவு; கால் இடறப் பெறு; கால்வகையில் இடறு; நழுவிச்செல்; நழுவிவிடு; தப்பிமறை; பிடிக்கு அகப்படாமல் தப்பு; வழுக்கித்தெறி; பிடிப்பு நழுவவிடு; தப்பு, தப்பிப்பிழைத்தோடு; இடை புகுத்து; மெல்ல நுழைவி; திருட்டுத்தனமாகச் செருகு; திருட்டுத்தனமாக நுழை; மெல்லப் புகு; மெல்ல வை; நழுவிச் சென்று பொருந்து; நழுவி இயங்கு; வழுக்கி இயங்கு; வழுவு; தெரியாத் தவறு செய்; வந்துசேர்; அறியா நிலை யில் வந்தமை; தானே வந்திணை; முதிராக்கன்று ஈனு; (தொ.) a slip of a boy, மிகவும் ஒல்லியான சிறுவன்; give one the slip, பிடியிலிருந்து தப்பிவிடு, தெரியாமல் நழுவி மறைந்துவிடு, ஏய்த்துச் சமாளித்துவிடு; let slip the dogs of war, போர்தொடங்கு; slip along, பெருவேகத்திற் செல்; slip anchor, கப்பலை நங்கூரப் பிடியினின்று விடுவி; slip away, slip off, செல்விடை பெறுமல் நழுவிச்செல்;

கழற்றி எறி; கழன்று போ; slip grey hounds, பற்று விசைத் தோல்வாரமுத்தி வேட்டைநாய்களைப் பாய்வி; slip of the pen, எழுத்துச் சோர்வு; slip of the tongue, சொற்சோர்வு, நாத்தவறு; there's many a slip 'twixt the cup and the lip, கைக்கு எட்டியது வாய்க்கு எட்டுவதில்லை.

**slip'-carriage, slip'-coach,** *n.* புகைவண்டி நழுவுபெட்டி; நிற்காமலே கழற்றிவிடப்படத்தக்க தொடர்வண்டிப் பெட்டி.

**slip'-cover,** *n.* சேமக்காப்புறை, பயன்படாது இருக்கிற தட்டுமுட்டுப் பொருள்களுக்குப் போடும் வரித்துணி உறை.

**slip'-galley,** *n.* செருகறைப்பெட்டி, அச்சுருப்படிவங்களை வைக்கும் நீள்குறுந் தட்டு.

**slip'-hook,** *n.* விசைக்கொக்கி, தேவைப்பட்டவுடனே விடுவிப்பதற்குரிய கொக்கி அமைவு.

**slip'-knot,** *n.* உருவாஞ்சுருக்கு, இழுத்தவிழ்க்கக்கூடிய முடிச்சு; ஒரே இழுப்பினுல் அவிழ்க்கக்கூடிய முடிச்சு; நழுவு சுருக்கு, கயிற்றினில் மேலுங் கீழும் இழுத்துக்கொள்ளக் கூடிய முடிச்சு; நெகிழ்வுச்சுருக்கு, கண்ணி தளர்த்தவும் இறுக்கவும் வல்ல முடிச்சு.

**slip'on, slip'over,** *n.* உருவுசட்டை, கொளுவிகளைக் கழற்ருமல் தலைவழி மாட்டிக்கொள்ளக்கூடிய உடை; *a.* சட்டை வகையில் தலைவழி எளிதாக மாட்டிக்கொள்ளக்கூடிய.

**slipp'er,** *n.* தொடுதோல், செருப்பு, மனையுள் வழங்கப்படும் தளர்மிதியடி; இறக்கங்களில் உருட்சி தடுக்கும் சக்கரத் தடைகாப்பு; விடுவேடர், வேட்டையில் விசைவார் அழுத்தி நாய்களை ஏவிவிடுபவர்; பனிச்சறுக்கு சகடம்; *v.* செருப்பால் அடி.

**slipp'er-bath,** *n.* சாய் கவிகைத்துறை, மூடாக்குடைய செருப்பு வடிவக் குளிப்புத்தொட்டி.

**slipp'erwort,** *n.* மிதியடிபோன்ற மலருள்ள செடிவகை.

**slipp'ery,** *a.* வழுக்கலான, தள வகையில் சறுக்குகிற; வழு வழுப்பான; நிலைகொடுக்காத; பிடிகொடாத; நிலையற்ற; அடிக்கடி மாறுபடுகிற; நம்பத்தகாத; கணித்துப்பார்க்க இடந்தராத, வரையறுக்கமுடியாத.

**slipp'y,** *a.* வழுக்குகிற.

**slip'-rope,** *n.* கப்பல்தள நங்கூரப் பிணைப்பின் உருவு கயிறு.

**slips,** *n. pl.* நாடகமேடைத் திரைவீழ்த்துமாடம்; நாடக மேடைப் புடைநிலையரங்கம்; குளிப்புக் காற்சட்டை.

**slip'shod,** *a.* அரைகுறையாக அணியப்பெற்ற; அரைகுறையாக அமைந்த; கவனக்கேடான; ஒழுங்குகேடான; சீர்குலைவான; கட்டமைவுகுன்றிய; துப்புரவுகெட்ட; முறைமை பிழைத்த; அசட்டைத்தனமான; பராமுக மனப்போக்கு வாய்ந்த.

**slip'slop,** *n.* படுசேறு; ஒழுங்கற்ற எழுத்துமுறை; கருத்துக் குழப்பமான எழுத்தாண்மை; உணர்ச்சிக்குழப்பமான எழுத்துத்தொகுதி; வெற்றெனத் தொகுப்பு, பயனில் சொல்பாரிப்பு; வெற்றுணர்ச்சிப்பேச்சு; சத்தற்ற குடிதேறல்; பாழ்ங் கஞ்சி, வெறு நீராளமான உணவு; சுவையற்ற செய்தி; *a.* அரைகுறையாக அமைந்த; சீர்குலைவான; கட்டமைவு குன்றிய; துப்புரவுகெட்ட; முறைமையற்ற; பராமுகப் போக்குவாய்ந்த.

**slip'-stream,** *n.* பின்கால்விசை, வானூர்திச் சுழல்விசிறியின் பின்னுந்து காற்றோட்டம்.

**slip'-up,** *n.* (பே-வ.) இழுக்கம், பெருங்குறை.

**slip'way,** *n.* கப்பல்கட்டுதுறைச் சாய்தளம்; கப்பல் இறங்கு துறைச் சாய்மேடை.

**slit,** *n.* சிறுபுழை; பிளப்பு, கீற்று, சிறுவெடிப்பு; சிறுவெட்டு; *a.* பிளந்த, நீளவாட்டாகக் கிறிய; வெடிப்புடைய; *v.* கீறு; நீட்டுவாட்டாகப் பிள; சிறுபிளவு உண்டாக்கு; குறுக நறுக்கு, துண்டு துண்டாக அரி.

**slith'er,** *v.* (பே-வ.) ஒழுங்கின்றிச் சறுக்கிச் செல், சறுக்கித் தடுமாறு; ஒழுங்கின்றி வழுக்கிக்கொண்டு போ.

**slitt'ing-rollers,** *n.* நெக்குவெட்டுருளை, தகடுகளை இடையிட்டு அழுத்திக் கீறும் உருளை இணைக்கருவி.

**slit'-trench,** *n.* படைக்கல இடுவரைப்பள்ளம்; (படை.) நீள் இடுகுழி, மறை அகழ்.

**sliv'er,** *n.* சிராய், சிம்பு; வரிச்சல், மரத்துண்டு; தூண்டில் இரையாகப் பயன்படும் சிறுமீன் விலாக்கண்டம்; *v.* சிராய்களாகக் கீறியெடு; சிம்புகளாகப் பிள; மீன் விலாக்கண்டம் கீறியெடு.

**slobb'er,** *n.* சொள்ளு, சாளைவாய்நீர், வடிகோழை; சிணுங்குரை, கொஞ்சற்பேச்சு; ஆபாசமுத்தம், எச்சில் வெறிமுத்தம்; *v.* கோழை வழியவிடு; முத்தமிட்டு எச்சிற்படுத்து; முத்தமிட்டு ஆடைகெடு வேலைசெய், குளறுபடிவேலை செய்; காரியத்தைக் குழப்பு.

**slob'-ice,** *n.* பனிச்சேருூர்ந்த மிதவைப் பனிக்கட்டி.

**sloe,** *n.* கற்ருழை வகை.

**slog,** *n.* கடுங்குருட்டடி, குருட்டுக்கைவாக்காக வீழ்த்தப்பட்ட கனத்த அடி; கடும் வேலையில் மூழ்குதல்; *v.* குத்துச்சண்டையில் குருட்டுவாக்காகக் கடுமையான அடிகொடு; பந்தாட்டத்தில் கடுங்குருட்டடி அடி; விடாது கடுநடை நட; விடாது கடுவேலை செய்.

**slog'an,** *n.* போர்க்குரல்; கட்சிப் போராட்ட ஊக்கொலி; கொள்கைக்குரல்; இலக்குரை; மேற்கோளுரை; விளம்பரக் கவர்ச்சிவாசகம்; மரபுநெறியுரை, வாய்பாடுரை.

**sloid,** *n.* மரச்செதுக்கற் பயிற்சி.

**sloop,** *n.* சிறிய ஒற்றைப் பாய்மரக்கப்பல்; சிறு வேவுலாக் கப்பல்; (தொ.) sloop of war, (வர.) துப்பாக்கி கொண்டு செல்லும் போர்க்கப்பல்.

**slop[1],** *n.* சேறு; சிதறிய நீர்மம்; குட்டை; தெறித்த நீர்; கோமலம்; *v.* சிதறு; சொட்டு; சேறு தெறி; சேற்றில் நட; கலத்தில் கவிந்து வழி; சேற்றுநீரால் அழுக்காக்கு; சேற்றுநீர் வகையில் அழுக்காக்கு; உணர்ச்சி பொங்கி வழி; (தொ.) slop over, பீறிடு, பாய்ந்து வெளிப்படு; அழுங்கு, சிணுங்கு.

**slop[2],** *n.* தளர் உடை.

**slope,** *n.* சாய்வு, சரிவு; சரிவுநிலை; சாய்வளவு; சாரல்; மேட்டுநிலப்பகுதி அல்லது சரிவு நிலப்பகுதி; சாய்தளப் பரப்பு; தளக்கோட்டம், கிடைநிலையில் சிறிதளவு சரிவு; நிலைக்கோட்டம், நிமிர்நிலையில் சிறிதளவு சரிவு; மேல் நோக்கிய சாய்வு; கீழ்நோக்கிய சரிவு; துப்பாக்கியைத் தோளில் சாய்த்து நிற்கும் போர்வீரர்நிலை; படைவீரனின் துப்பாக்கிச் சாய்வேந்துநிலை; *v.* சரித்துத்திருப்பு; சரிவாக்கு; சாய்ந்துபடு; சாய்வுடையதாயிரு; சாய்வாகு, சரிவுறு; மேல்நோக்கிச் சாய்வுகொள்; கீழ்நோக்கிச் சரிவுறப் பெறு; (தொ.) slope arms, தோளின்மேல் துப்பாக்கியைச் சரிவாக வைத்துநில்.

**slop'-pail,** *n.* படுக்கை அறை அழுக்கு வாளி.

**slopp'y,** *a.* பாதைவகையில் குழைசேறுூர்ந்த; நீர்க்குட்டைகள் நிறைந்த; படுநனைவான, நீர்தோய்ந்த; நிலத்தள வகையில் அழுக்கு நீரால் நனைந்த; மேசைவகையில் அழுக்குநீர் தெறித்த, அழுக்குநீர் துளும்பிய; வேலை வகையில் ஒழுங்கற்ற; பணிவகையில் முற்ற முடியாத; தொழில்வகையில் அரைகுறையான; உணர்ச்சி அல்லது பேச்சுவகையில் மேலீடான உணர்ச்சியுடைய, உணர்ச்சிப் பசப்புடைய.

**slop'-room,** *n.* கப்பலில் கப்பலோடிகளுக்கு அளிக்கப்படும் ஆணை உடை-படுக்கைகளின் சேம அறை.

**slops[1],** *n. pl.* அளறு, பாழ்ஞ்சேறு; கழிவுநீர், கலங்கல் நீர்; பாழ்ங்கூழ், நீராளமான கஞ்சி; இளங்கலவைத் தேறல், சாராயச் செறிவுகுன்றிய பான வகை; அடுக்களைக் கழிவுகல அடைசல்; படுக்கையறைக் கூளம்.

**slops[2],** *n.* தளர் காற்சட்டை; ஆணை உடை, கப்பலோட்டிகளுக்கு தைத்துக்கொடுக்கப்படும் உடை; ஆணை விரிப்பு.

**slop'-seller** *n.* தைத்த உடைகள் விற்பவர்.

**slop'-shop**, *n.* தைத்த உடைகள் விற்கும் கடை.

**slot**[1], *n.* இயைவடுப் பள்ளம், இயந்திரத்தில் மற்ரொரு பகுதியுடன் பொருந்தி இயைவதற்கான துளை அல்லது கீறல் அல்லது பள்ளம்; துளைவிளிம்பு, இயந்திரத்தில் நாணயம் விழுவதற்குரிய வடிவளவுத்துளை; மறைபொறிக்கதவம், நாடகமேடையில் தோன்ருப் பொறிவழி; *v.* இயந்திரத்தில் இயைவடுப்பள்ளம் அமை; துளை விளிம்பு அமை.

**slot**[2], *n.* மான்தடம், வேட்டையில் காலடித்தடத்தால் அறியப்படும் மான் சென்ற நெறி.

**sloth**, *n.* மடிமை; மரங்களில்வாழும் கரடிபோன்ற தேவாங்கினஞ் சார்ந்த பால்குடி விலங்குவகை.

**sloth'-bear**, *n.* தேனுண்ணுங் கரடிவகை.

**sloth'ful**, *a.* சோம்பலான.

**sloth'-monkey**, *n.* தேவாங்கு வகை.

**slot'-machine**, *n.* காசுவீழ்வியங்குபொறி, துளைவிளிம்பில் காசுபோடுவதனுல் இயங்குங் கருவி.

**slot'-me'ter**, *n.* காசுவீழ்வு அலகீட்டுக்கருவி, காசுவீழ்வதனுல் அலகு குறித்துக்காட்டுங் கருவி.

**slott'ing-machine**, *n.* துளைவிளிம்புபெட்டி செய்யும் அமைவு.

**slouch**, *n.* குனிவு, தலைதொங்கவிட்ட நிலை; கவிழ்வுநிலை; கவிழ்நடை, குனிந்தபோக்கு; கூனல்தோற்றம்; அருவருப்பான தோற்றம், கீழ்நோக்கிய தொப்பிவிளிம்புச் சாய்ப்பு; திறமைகெட்ட வேலை; செப்பமற்றவேலை; தட்டிக்கழிப்புப் பணி; ஏடாகோடத் தோற்றமளிக்குங் கோமாளி; *v.* தலையைத் தொங்கவிடு; கூனிநட, அருவருப்பாக நட; குந்திநில்; உட்கார்; தொப்பியின் ஒருபுற விளிம்பினைக் கீழ்நோக்கிச் சாய்வுறுவி.

**slough'**[1], *n.* சதுப்புநிலப் பள்ளம்; சதுப்புநிலத் தேக்கம்; சேற்றுத்தலைக் காயல், சதுப்பார்ந்த கழிநிலம்; (தொ.) the Slough of Despond, பாவச்சேற்றுக்குழியில் அழுந்திக் கிடக்கும் நிலை.

**slough**[2], *n.* பாம்புரிவை; விலங்குகழற்றி, பறவை உதிர்த்த இறகு; உயிரினம் கழித்த உறுப்பு; எறிந்த சட்டை; தோல் பொருக்கு, அசறு; கழித்து ஒதுக்கப்பட்ட பழக்கவழக்கக் கூறு; *v.* மேலுரிபோக்கு; சட்டைகழற்று; சட்டைபோல் கழற்றி எறி; சட்டைபோற் கழன்று விழு; உதிர்ந்து விழு; கழித்து விடு.

**Slov'ak**, *n.* ஸ்லவோனிய மக்களுள் ஒருவர்; ஸ்லவோனிய மக்களின் மொழி; *a.* ஸ்லவோனிய மக்களில் ஒருவர் சார்ந்த; ஸ்லவோனிய மக்களின் மொழிசார்ந்த.

**slo'ven**, *n.* ஒழுங்கற்றவர்; தூய்மையற்றவர்; அழுக்கானவர்; கவலையற்றவர்; பொறுப்பற்றவர்; சோம்பேறி; ஒழுங்குமுறையற்றவர்; *a.* சோம்பலான; ஒழுங்கற்ற; தூய்மையற்ற.

**Slovene', Sloven'ian**, *n.* தென் ஸ்லவோனியர், யூகோஸ்லாவியாவிலுள்ள ஸ்லவோனிய மக்களுள் ஒருவர்; தென் ஸ்லவோனியமொழி, யூகோஸ்லாவியாவிலுள்ள ஸ்லவோனியர் மொழி; *a.* யூகோஸ்லாவியாவிலுள்ள ஸ்லவோனிய மக்களுள் ஒருவர் சார்ந்த; தென் ஸ்லவோனிய மொழி சார்ந்த, யூகோஸ்லாவியாவிலுள்ள ஸ்லவோனிய மக்கள் மொழிக்குரிய.

**slo'venly**, *a.* துப்புரவுகெட்ட, தூய்மையற்ற; ஒழுங்குமுறையற்ற; ஒழுங்கற்ற; அக்கறையற்ற; சோம்பலான; *adv.* சோம்பலாக; அக்கறையின்றி, பொறுப்பின்றி; ஒழுங்குமுறையின்றி.

**slow**, *a.* மெதுவான, மந்தமான; காலந்தாழ்த்துகிற, தாமதமான; படிப்படியான; தாமதமாகச் செல்கிற, சுணங்குகிற, கூரறிவற்ற, முட்டாள்தனமான; விருப்பற்ற; கிளர்ச்சியற்ற, எழுச்சியில்லாத; சோர்வூட்டுகிற; நிழற்படக் கண்ணுடி வகையில் சிறு தொளையுடைய; பரப்புவகையில் தாமதத்திற்குக் காரணமாகிற; *v.* மெள்ளச்செலுத்து; வேகங்குறை; *adv.* மந்தகதியில், மெதுவாக; காலங்கடந்து, தாமதமாக.

**slow'coach**, *n.* செயல் மந்தமானவர்; அறிவுமந்தமானவர், நுண்ணறிவற்றவர்; கருத்துக்களிற் காலத்தாற் பிற்பட்டவர்.

**slow'-match**, *n.* வெடிமருந்து பற்றவைப்பதற்குரிய நெடுந்திரி.

**slow'-worm**, *n.* நிலப்புழு வகை; பாம்பிற்கும்-பல்லிக்கும் இடைப்பட்ட தீங்கற்ற சிற்றுயிர்வகை.

**sloyd**, *n.*=sloid.

**slub**, *n.* கம்பளிப்புரியிழை, முன் அடிப்படை அரைமுறுக்குக் கம்பளி இழை; *v.* கம்பளியைப் புரியிழையாக்கு, முன் அடிப்படை அரையளவாக முறுக்கு.

**slubb'er**, *v.* கவனமின்றிச் செய்; அரைகுறையாகச்செய்; குளறுபடியாகச் செய்; எச்சிற்படுத்து; உமிழ்நீர் ஒழுகவிடு.

**sludge**, *n.* குழைசேறு; பனிச்சேறு, சாக்கடைக் கசடு.

**slue**, *n.*, *v.*=slew[1].

**slug**[1], *n.* இலையட்டை, தோட்டச்செடிகளை அழிக்கும் ஓடற்ற நத்தை வகை; *v.* இலையட்டைகளைச் சேகரித்து அழி.

**slug**[2], *n.* பரற்குண்டு, ஒழுங்கற்ற வடிவுடைய துப்பாக்கிக் குண்டு; பருங்குழை, உலோக மொத்தை; உருக்கச்சு இயந்திரத்தில் கோத்த வரிப்பாளம்.

**slug**[3], *n.* குருட்டடி.

**slug'-abed**, *n.* தூங்குமூஞ்சி.

**slugg'ard**, *n.* சோம்பேறி; மந்தமானவர்; *a.* சோம்பேறியான.

**slugg'ish**, *a.* மந்தமான, மடிமைவாய்ந்த; எளிதில் அசையாத; மெதுவாகச் செல்கிற; உணர்ச்சித்திறங் குன்றிய.

**sluice**, *n.* மதகு, வாய்மடை, கண்மாய்; மதகு வருநீர்; மதகு வடிநீர்; கண்மாய் வருகால்; கண்மாய் மறிகால்; வாய்க்கால், தூம்புவாய்க்கால்; கட்டு நீரோடை; அலம்பீடு; *v.* மதகு அமை, வாய்மடை வகுத்தமை; மதகுநீர்த் தேக்கு, மதகிலிருந்து வெள்ளம் பெருகச்செய்; அலம்பு; மீதாக நீர்பாய்ச்சு, தூம்புநீர்பீற்று; வெள்ளத்தின் வகையில் பீறிப்பாய்வுறு.

**sluice'-gate**, *n.* மதகு, மடைவாய்.

**sluice'-valve**, *n.* மதகுச்சீப்பு, மடையடைப்பு.

**sluice'-way**, *n.* தூம்புவாய்க்கால், கட்டுநீரோடை, செயற்கைக் கால்வாய்.

**sluit**, *n.* கால்வாய், தென் ஆப்பிரிக்க வழக்கில் ஒடுங்கிய வாய்க்கால்.

**slum**[1], *n.* அழுக்குத்தெரு; அங்கணம், புழக்கடை; நாராசப் பின்கடைச்சந்து; *v.* அழுக்கடை சென்று ஆய்வுசெய்.

**slum**,[2] *n.* மசகெண்ணெயின் மசகியல்பற்ற கூறு, மசகெண்ணெயில் பயன்பாட்டின்போது உண்டாகும் பிசுக்குள்ள மண்டி.

**slum'ber**, *n.* ஆழ்துயில், அயர்ந்த உறக்கம்; *v.* அயர்ந்து உறங்கு; (தொ.) slumber away, தூங்கிக் காலங்கழி, உறங்கிக் காலத்தை வீணுக்கு.

**slum'berer**, *n.* தூங்குபவர்; தூங்குவது.

**slum'berous**, *a.* தூக்கமார்ந்த.

**slum'berously**, *adv.* தூக்கச் சோர்வுடன்.

**slum'ber-suit**, *n.* தளர்காற்சட்டை.

**slumm'ock**, *v.* (பே-வ.) பேராவலுடன் விழுங்கு; அவசரமாக விழுங்கு; ஒழுங்கற்ற வகையில் நட; அருவருப்பான முறையிற் பேசு.

**slump**, *n.* மந்தம், திடீர் விலை வீழ்ச்சி, படுவிலை இறக்கம்; மறுக்கம், திடீர் அக்கறைக் குறைவுநிலை; *v.* திடீரென விலையிறங்கு; வெற்றி கிட்டாமற்போ; முழுத்தோல்வியுறு.

**slung**, *v.* sling[1] என்பதன் இறந்தகாலம்.

**slunk**, *v.* slink[1] என்பதன் இறந்தகால-முற்றெச்ச வடிவம்.

**slur,** *n.* கறை ; களங்கம், புகழ்மீது ஏற்பட்ட இளிவரவு ; அவதூறு, இகழ்க்குறிப்பு, பழிச்சாட்டு ; மறைகறை ; தெளிவற்ற மறைப்புத்தன்மை ; தெளிவின்மைக்கூறு ; தெளிவற்ற ஒலிப்பு ; (இசை.) முடுகுக்குறி, விரைவோட்ட இணைப்புக்குறியீடு ; *v.* தெளிவின்றி உச்சரி; தெளிவின்றி எழுது ; விரைந்தொருங்கொலித்துத் தெளிவற்றதாக்கு ; எழுத்தின்மேல் எழுதித் தெளிவற்றதாக்கிவிடு; குளறிப்பேசு; சொல்வதில் மெல்ல விட்டுச்செல் ; மெல்லவிட்டுக் குறிப்பிடு ; விளங்காமல் விரைந்து குறிப்பிடு ; (இசை.) முடுகிசைக்குறியிடு; (இசை) விரைந்திணைத்து முடுகிசையாகப் பயில் ; குற்றங்குறைகளைப் பொருட்படுத்தாது தள்ளிவிடு ; மறைத்துக்காட்டு ; குறைத்துக் காட்டு ; நடத்தையில் மாசுண்டாக்கு ; ஆள்மேல் கறை ஏற்படுத்து ; சாட்டிப்பேசு ; குத்திக்குறிப்பிடு.

**slu'rry,** *n.* சீமைக்காரை செய்வதற்கான நீர்மப்பொருட் கலவை; மின்துறை உள்வரிச்சாந்து, மின்னோட்டத்தை மாற்றியமைக்க உதவும் பொறியின் உள்வரியினைச் சீர்செய்யப் பயன்படும் நுண்மணல்-களிமண் கலந்த அரைநீர்மக் கலவை.

**slush,** *n.* அளறு, குழைச்சகதி ; பனிச்சேறு, அரைகுறையாக உருகிய பனிக்கட்டி ; மடத்தனமான உணர்ச்சிக்குவை, சிறுபிள்ளைத்தனமான உணர்ச்சிநிலை.

**slut,** *n.* இழிமகள், ஒழுங்கற்றவள் ; அழுக்குப்பிடித்தவள் ; பிணவு, பெண்ணாய் ; கந்தல் மெழுகுதிரி, மெழுகுதிரியாகப் பயன்படுத்தப்பெறும் கொழுப்பார்ந்த கந்தல்துணி ; இளம் பெண்.

**sly,** *n.* ஒளிவுமறைவு ; மறைமுகத்தன்மை ; *a.* படுசூழ்ச்சி வாய்ந்த ; நயமிக்க சூழ்ச்சித்திறனுடைய ; மறைமுகமாகச் செய்யப்படுகிற ; மறைவடக்கமான ; கரவடமான ; மறைவமைதியுடைய; திருட்டுத்தனமான; கரவுபயில்கிற; மறைந்தொழுகிற , ஊமைக் குசும்புவாய்ந்த ; வெளித்தோன்றாக் குறும்புத்தனமுடைய ; புதைகுறிப்புடைய; மறைமுகமாகச் சாட்டிக்கூறுகிற ; மறைமுகக் கேலி கிண்டலான ; வசைக் குறிப்பார்ந்த ; நயமாகக் குத்திக்காட்டுகிற ; (தொ.) on the sly, தனிப்பட்ட முறையில், விளம்பரமின்றி, மறைமுகமாக ; sly dog, மறைவடக்கமான இன்பவேடர், தன் சிறுகுற்றங்களை அல்லது இன்பநாட்டங்களை இரகசியமாக மறைத்து வைத்திருப்பவர்.

**sly'-boots,** *n.* செல்லவழக்கில் உள்ளார்ந்த சூழ்ச்சித்திறமிக்கவர், எமப்பேர்வழி.

**sly'ness,** *n.* தந்திரம், திருட்டுத்தனம்.

**slype,** *n.* இடையூடுவழி, மாவட்டத் தலைமைத் திருக்கோயிலினின்று கட்டளைக்குருக்கள் கூடுமிடத்திற்குச் செல்லும் இடைச்சுவர்கடந்த உள்ளிடைவழி.

**smack**[1], *n.* சிறுபதக்கூறு, முனைமுகக்கூறு; சிறிதளவு, உணவின் சிறுகூறு ; சுவைமணத்திற நுட்பம் ; சார்புச் சுவைத்திறம்; சார்புமணத்திறம்; சார்பண்புக் கூறு; ஒன்றன் உயிர்த்துடிப்புக்கூறு ; *v.* சார்பதமுடையதாய் அமை ; சார்புச்சுவை மணத்திறமுடையதாயிரு; சார்புப்பண்புக் கூறுடையதாயிரு; சார்பான உயிர்த்துடிப்புடையதாயிரு ; சார்பான சாயலுடையதாயிரு ; எதிர்பாராச் சுவைத்திறமுடையதாயிரு ; சுவைச் சாயலுடையதாயிரு ; துணைச் சுவைத்திறமுடையதாயிரு.

**smack**[2], *n.* சிறு வெடிப்பொலி; சடாரொலி, சவுக்கின் சுடக்கொலி ; சவுக்கின் சுடக்கு ; சப்புக்கொட்டொலி, உதடுகளின் வெடிப்பொலி; சிவ்வொலி, கடிமுத்த ஒலி; கடிமுத்தம்; கடிவினை, ஆர்வ முயற்சி ; *v.* அறைகொடு, தடாலென்று அடி ; சுடக்கொலி செய், சவுக்கைச் சடாரென்று அடி ; சவுக்கு வகையில் சடாரென்று அடிக்கப்பெறு ; சப்புக்கொட்டு, உதட்டைத் துழாவிச் சுவைகாண் ; வருசுவை நினைந்து மகிழ் ; வருவதெண்ணி மகிழ்வுகொள் ; சிறு வெடிப்பொலி செய் ; சில்லொலிபட முத்தமிடு.

**smack**[3], *n.* மீன்பிடிப்பதற்கான சிறிய ஒற்றைப் பாய்மரக் கப்பல்.

**smack'er,** *n.* சிவ்வொலியுடன்கூடிய முத்தம் ; படீர் அறை, தடாலொலியுடன்கூடிய அடி; போற்றத்தக்க மாதிரி, தனிச் சிறப்புப்பொருள் ; பெரும் பேர்வழி ; அமெரிக்க வெள்ளி.

**smacks'man,** *n.* திமிலோட்டி, மீன்பிடிக்கும் ஒற்றைப்பாய் மரக் கபபலோட்டி.

**small,** *n.* நொய்ய கூறு, ஒடுங்கிய பகுதி; நுண்பொடி நிலக்கரி; *a.* சிறிய, உருவில் பெரிதல்லாத; சிற்றளவான, அளவில் குறைந்த; குறுகலான, சில்றெல்லையுடைய, பரப்பில் குறுகிய ; ஒடுக்கமான ; ஒல்லியான ; சிலவான, சிறு எண்ணால் குறிக்கப்பட்ட ; மட்டளவான, மிகுதி என்று குறிக்கத்தகாத ; சிறுகூறுகள் கொண்ட ; நுண்பரலாாந்த ; நுண்ணிழைவான ; சிறுதிறமான, சிறிதளவில் செயலாற்றுகிற ; பொதுநிலைக்கூறான, சிறப்பற்ற முக்கியத்துவமற்ற ; முன்னணியிலில்லாத ; மறைந்தொதுங்கியுள்ள ; சமுதாயத்தில் தாழ்ந்த ; தாழ்மையான ; ஏழ்மையான ; பணிவார்ந்த ; சிற்றியலான ; அற்பமான ; சிறுபுத்தியான ; சிறுநோக்குடைய ; குறுகிய மனப்போக்குடைய ; தாராள மனப்பான்மையில்லாத; சிறுமதிப்புடைய; சில்லறையான, நாணயங்களிடையே மேன்மதிப்பற்ற ; வெள்ளி செமபுக் காசுவான ; சராசரியிற் குறைந்த ; மதிப்பளவிற் குறைந்த ; தேறல் வகையில் நீராளமான, வெறியச்சத்துக் குறைவான ; *adv.* தாழ்தொனியில் ; மெள்ள; மென்மையாக ; சில்லறையாக; (தொ.) feel small, look small, தாழ்வுணர்ச்சிக்குரியவராயிரு ; great and small, பெரியவரும் சிறியவரும், செல்வரும் ஏழையரும, in a small way, அடக்கமாக, சிற்றளவில்; on small scale, உரு ஒத்திசைவான சிறிய அளவில் ; small beer, நீராளமான குடிதேறற்கலவை ; small capitals, குறுந்தரத் தலைப்புவடிவ எழுத்துக்கள் ; small change, சில்லறை நாணயங்கள் ; small craft, படகுத்தொகுதி, small debt, சிறுதிறக்கடன், சிறுதிற மனற எல்லைக்குட்பட்ட கடன் தொகை ; small fry, இளஞ் சிறுவர் சிறுமியர் ; அற்ப உயிர்கள் ; சிறுதிற உயிர்கள் ; small gross, நூற்றிருபது உருப்படிகளின் தொகுதி, பத்து டஜன் ; small hand, பொதுநிலை வரைவு எழுத்து ; small holder, சிறுதிற நிலமுடையவர் ; small holding, சிறுதிற நில உடைமை, குத்தகையளவுக்குக் குறைவான நில உடைமை ; small hours, நள்ளிரவு கழிந்த நேரம் ; small letters, தலைப்பு வடிவல்லாத பொது வரைவு எழுத்துக்கள் ; small pica, அச்செழுத்து வடிவளவு வகை ; small talk, பொதுமுறை உரையாடல் ; the small of the back, இடுப்பின் பின்பகுதி ; the still small voice, மனச்சான்று, மனவுறுத்தல்.

**small'age,** *n.* காட்டு மணப்பூண்டுவகை.

**small'-arms,** *n.* தூக்கிச்செல்லக்கூடிய வெடிக்கலங்கள்.

**small'-clothes,** *n.* முழங்காலளவு குறுங்காற் சட்டை.

**small'-mind'ed,** *a.* குறுகிய மனப்பான்மையுடைய.

**small'pox,** *n.* பெரிய அம்மைநோய், வைசூரி.

**smalls,** *n. pl.* ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக 'இளங்கலைஞர்' பட்டத் தேர்வுகள் மூன்றில் முதன்மைத்தேர்வு ; (பே-வ.) சலவை அழுக்குச் சிறுதுணிகள்.

**small'-sword,** *n.* குத்துவாள்.

**smalt,** *n.* நீலவண்ணமாக்கிய கண்ணாடி ; கண்ணாடிக்குரிய நீலவண்ணப்பொடி.

**smarm'y,** *a.* (பே-வ.) உவட்டுகிற, தெவிட்டுகிற.

**smart,** *n.* கடுப்பு; கடுநோவு; உள்வலி, உட்குத்தல் குடைவு ; அகநைவு, உளவேதனை ; உள்ளழுங்கல் ; உள்ளூறுபாடு ; *a.* கடுமையான ; உறைப்பான ; கூர்மையான ; கூரறிவுத்திறம் வாய்ந்த ; சொடிசுரணையுள்ள, மிடுக்குடைய ; சுறுசுறுப்பு வாய்ந்த, படுசுட்டியான; வினைத்திறமிக்க; வாய்ப்பு நலங்களில் கருத்தூன்றிய ; சூழல் வாய்ப்புக்களைப் பயன்படுத்துவதில் விழிப்பான; பேர வாய்ப்புநலங்களில் உன்னிப்பான ; விரைவூக்கமிக்க ; சுறுசுறுப்பார்ந்த ; விரைதுடிப்புடைய ; விறுவிறுப்பான தோற்றமுடைய; நடைவீறார்ந்த; உடை வீறார்ந்த ; மடிதற்ற, உடைவரிந்து கட்டிய; முறுக்கு விடாத; மெருகு குலையாத, புதுநலம்விடாத, உடைவகையில் கச்சிதமான ; நாகரிகப்பாங்கில் முனைத்த ; தயங்காத, உடனடியான; உடனுக்குடனான, *v.* கடுப்பாயிரு; கடுநோவளி; உள் வேதனையடை, உள்ளாரக் குத்தல் குடைதலுறு ; கெடு

விளைவுகளை அனுபவி; (தொ.) smart alec, smart aleck, வந்தபின் காப்போர், திறமையாக இருந்திருக்க விரும்புபவர்; smart dealing, நேர்மையற்ற நடத்தை அளவிற்குச் செல்லக் கூடிய தன்னலமார்ந்த திறமை; smart for, தக்க விளைவினை அனுபவி, உரிய தண்டனை பெறு.

smart'-money, *n.* இழப்பீட்டுத்தொகை, குற்றத் தண்ட வரி.

smart'ness, *n.* சுறுசுறுப்பு, துடிதுடிப்பு.

smart'weed, *n.* நீர்மிளகுச்செடி.

smash, *n.* தகர்வு, நொறுங்கீடு; மோதல், வன்தாக்கு; வன் குத்து, வல்லடி; பேரழிவு; படுவீழ்ச்சி; படுதோல்வி; பேரிடர்; சீரழிவு; நிலை குலைவு; நிறுவன வகையில் நொடிப்பு; வாணிகத்துறையில் தொடர் நெருக்கடித் தொகுதி; நறுந் தேறல் நீர்க்கலவை, பனிக்கட்டியுடன் நீரும் வெறியமும் கலந்து நறுமணச் சுவையூட்டிய கலவைப் பான வகை; புல்வெளி வரிப்பந்தாட்டத்தில் வலைதாண்டு வன்பந்தடி; (இழி.) செல்லா நாணயம்; *v.* தகர், நொறுக்கு; வேகத்துடன் மோது, அடித்து வீழ்த்து; நிர்மூலமாக்கு; சின்னாபின்னப் படுத்து; நிலையவகையில் நொடிப்புறு, முறிவுறு; தகர்வுறு, சின்னாபின்னப்படு, நிர்மூலமாகு; ஊர்திவகையில் மற்றோர் ஊர்திமீது மோதித்தாக்கு; ஆள்மீது சென்று மோது; ஊர்தி வகையில் தடங்கல் மோதியடி; முட்டியால் வன்குத்து விடு; படையை நிலைகுலையச்செய்து தோற்கடி; புல்வரிப்பந்தாட் டத்தில் பந்தினை வலைகடந்து மோதியடி; போலி நாணயத் தைச் செலாவணியிற் பரப்புவி; *adv.* மோதுதலாக, மோதித் துண்டு துண்டாகத் தகர்வுற்று; (தொ.) a smashing blow, தகர்வடி, தாக்கறை, வன்திறல் தாக்கு; go to smash, கெடு, கெட்டுப்போ; சீர்குலைவுறு; அழிந்துபோ.

smash'-and-grab, *a.* தகர்பறிச் சூறையான; (தொ.) smash-and-grab raid, பலகணிகளை உடைத்துப் பொருள் களைப் பறித்துச் செல்லுதல்.

smash'er, *n.* உடைப்பவர், நொறுக்குபவர்; தூளாக்குவது; வன்றிறல்வாதம்; விசைத் தாக்கடி; படுவீழ்ச்சி; போலி நாணயம் செலாவணியிற் பரப்புபவர்; இன்னதிர்வுக் கவர்ச்சி யூட்டும் அழகி.

smash'-hit, *n.* மாபெரு வெற்றி, குறிப்பிடத்தக்க பெருங் கெலிப்பு.

smash'ing, *n.* தகர்ப்பு; நொறுக்கீடு; *a.* தகர்க்கிற; கடு விசையார்ந்த; மோதுகிற; (இழி.) மிகச்சிறந்த, கவர்ச்சி மிக்க.

smash'-up, *n.* முற்ற முழுக்க நொறுங்கிப் பாழாகுதல்.

smatch, *n.*=smack[1].

smatt'erer, *n.* நுனிப்புல் மேய்பவர், புல்லறிவாளர்.

smatt'ering, *n.* நுனிப்புல்லறிவு.

smear, *n.* மேற்பூச்சு; அழுக்குத்தடம்; எண்ணெய்க்கறை; *v.* பூசு; அப்பு; மெழுகு; மேல்தடவிவிடு; எண்ணெய்ப் பூச்சிடு; பிசுக்குடைய பொருளின் தடமிடு; அழுக்குக்கறை படியவை; குறியடையாளமிடு; கறைப்படுத்து; உருவரை அடித்தழி; துடைத்தழி; அடித்துக் குழப்பி விளங்காமற் செய்; புகழ் வகையில் குலைவி, இகழ்க்கறை உண்டாக்கு.

smear'iness, *n.* பிசுக்குடைமை; கொழுப்பார்வு; பிசுபிசுப்பு; மேற்பூச்சுப்பண்பு.

smear'y, *a.* ஒட்டுப் பிசுக்கான; பசையான; கொழுப்பார்ந்த; பிசுபிசுத்த; கறையுடைய; மேற்பூச்சுடைய.

smec'tite, *n.* வெண்களி, கறைதுடைப்புக் களிமண் வகை.

smeech, *n.* எரிவாடை, கருகுமணம், புகைநாற்றம்.

smeg'ma, *n.* மாணிநுதித் தோல் மடிப்பிடைக் களிக் கசிவு.

smell, *n.* மணம், நாற்றம்; வீச்சம், முடைநாற்றம்; முகர் வுணர்வு; தனிமுகர்வுச் செயல்; வாடை, மண அலை; மணக் கூறு; தனி மணத்திறம்; தனிச் சுவைமணம்; தனிப்பண்புத் திறம்; உரிய தற்பண்புக்கூறு; பண்பின் சாயல்; *v.* மோந்துபார்; நாற்றம் உணர்; மணம் வீசு, கமழ்வுறு, நாறு; முடைவீசு; மணம் உட்கொள்; நறுமணம் உளளிழு; முகர்ந் தறி; மணத்தால் உணர்; வேட்டைநாய் வகையில் மோப்பங் காண்; மோப்பத்தால் அறி; மோப்பத்தடம் உணர்; மண அலையால் உளதாம் தன்மை அறி; உளதாதல்பற்றிய ஐயங் கொள்; தேர்ந்து காண்; முன்னுணர்ந்துகொள்; தேர்ந்து கண்டறி; தேர்ந்து மெய்ம்மைநாடு; மெய்ம்மை உய்த்துணர்; மண அலை பரப்பு; மண அலை பரவப்பெறு; தனிமணம் கமழ்வுறு; தனிமணம் உடையதாயிரு; தனிவாடையுடையதா யிரு; தனிப்பண்புடையதாயிரு; தனித்திறம் உடையதா யிரு; சாயலுடையதாயிரு; சார்புடையதாயிரு; நினை வூட்டுவதாயிரு; சார்புகுறித்த எண்ணம் தூண்டுவதாயிரு; (தொ.) smell a rat, நேர்மைக்கேடென்று ஐயங்கொள்ளத் தொடங்கு, ஏதோ தவறென்று ஐயுறு; smell at, மோந்து பார்; வெறுப்புடன் மோந்துபார்; வெறுப்புக்குறிப்புக் காட்டு; smell of, சாயலுடையதாயிரு; பண்பு நினைவூட்டுவதாயிரு; smell of jobbery, தொழில்தேட்ட ஊழல்கூறு; smell of the lamps, இரவின் கடு உழைப்பினால் உருவாக்கப்பட்டதென்ற தோற்றம்; smell of the shop, மட்டுமீறிய தொழில்துறைச் சார்பான பண்பு; smell out, மணத்தால் கண்டுணர்; தேர்ந்துகண்டறி; உற்றுக்கண்டறி; சூனியத்தால் அறி.

smell'er, *n.* மணம் நுகருபவர், மணத்தால் அறிபவர்; மூக்கு; வன்மையான குத்து; மூஞ்சியடி, மூக்கின்மீது விழும் வன்றிறலடி.

smell'ing-bottle, *n.* நவச்சிய முகர்புட்டி.

smell'ing-salts, *n.* நவச்சிய முகர்வுப்பு மருந்து.

smelt[1], *n.* சிறந்த சிறு உணவு மீன் வகை.

smelt[2], *v.* ஒருங்குருக்கு, உலோகம்பெறச் சுரங்கப்பொருளை உருக்கு; உருக்கிப் பிரித்தெடு, சுரங்கப்பொருளை உருக்கு வதன்மூலம் உலோகம் பிரித்தெடு.

smelt[3], *v.* smell என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவங் களில் ஒன்று.

smew, *n.* சிறு வாத்துவகை.

smil'ax, *n.* படர்செடி வகை; நன்னாரிச்செடி வகை; ஒப்பனைச் செடிவகை.

smile, *n.* முறுவல்; மென்சிரிப்பு; முகமலர்ச்சி, நகைமுகத் தோற்றம்; புன்னகைக் குறிப்பு; ஏளனநகை; இகழ்ச்சி நகை; புறக்கணிப்புக் குறிப்பு; தனிமுறை மென்னகை; *v.* புன் முறுவல் செய்; நகைமுகங் காட்டு; உவகைக்குறிப்புக் காட்டு; வெறுப்புக்குறி காட்டு; இகழ்ச்சி காட்டு; ஐயப்பாடு குறிப்பிடு; புன்னகைமூலம் தெரிவி; முறுவல்மூலம் குறிப்பிடு; தனிக் குறிப்புடன் முறுவலி; முறுவலிப்பினால் துயர்நீக்கு; புன்னகை யினால் மகிழ்வித்து உளநிலை இயைவி; இன்முகங் காட்டு; மகிழ்வாதரவு தெரிவி; நல இயைவுணர்த்து; இன்னலம் குறி, இன்னலங் குறித்துக்காட்டு; (தொ.) smile at, வியப்புத் தெரிவி; ஏளனந் தெரிவி; smile on, நன்று செய், சாதக மாயிரு.

smirch, *n.* மாசு, அழுக்கு; கறை, வடு; தழும்பு; *v.* அழுக் காக்கு; மாசுகற்பி; கறைப்படுத்து.

smirk, *n.* இளிப்பு; அறிவற்ற ஏளன நகைப்பு; அற்பச் சிரிப்பு; *v.* இளி, போலிச் சிரிப்புக்கொள்.

smit, *v.* (செய்.) smite என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

smitch, *n.*=smeech.

smite, *n.* (பே-வ.) அடி, தாக்கு; முயற்சி; *v.* அடி, தாக்கு; வாளால் வீக்கு, வெட்டு; கொல்லு; முற்றிலும் தோற்கடி, கடுந்தோல்வியுறச்செய்; கடுந்தண்டனை அளி; நோய் வகையில் பீடித்தல்செய்; தொல்லைகள் வகையில் பற்றிப்பிடி; அவாவகையில் கவர்ந்தீர்த்துப் பிடித்தாட்டு; அழகுவகையில் பற்றி வீழ்த்து; காதல் வகையில் ஆட்டிப்படைத்து ஆட் படுத்து; திடுமென வந்துறு; திடுமென வந்து கேடுசெய்வி; துன்புறுத்து; மனம் புண்படுத்து; வீழ்த்து, வீழ்ச்சியுறுவி; (தொ.) smite off, வெட்டியெறி.

**smith,** *n.* கம்மியர், உலோக வேலையாளர்; கொல்லர், இரும்படிப்பவர்; உருவாக்கத் தொழிலர்; *v.* கம்மியர் வேலை செய்; உருவாக்கு, உருக்கிப் படைத்தாக்கு.

**smithereens', smith'ers,** *n. pl.* தூள்கள், துண்டு துணுக்குகள், சுக்குநூறு.

**smith'ery,** *n.* உலோகத்தொழிலாளர் பட்டறை; கொல்லர் பட்டறை; கப்பற்படை நிலையப்பட்டறை.

**Smith'field,** *n.* லண்டனிலுள்ள இறைச்சிக்கடை.

**smi'thy,** *n.* பட்டறை; கொல்லுலை, கொல்லன் உலைக்களம்; கொல்லர் தொழிற்கூடம்.

**smitt'en¹,** *a.* கடிக்கப்பட்ட; நோய்வகையில் பீடிக்கப்பட்ட; ஆசைவகையில் பற்றப்பட்ட; கவர்ச்சிவகையில் பாதிக்கப்பட்ட; பெருந்துன்ப வகையில் மிகுதியும் ஆட்பட்ட.

**smitt'en²,** *v.* smite என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**smock,** *n.* குழந்தை முழு மேலங்கி; பெண்டிர் உள்ளாடை; *v.* சுருக்கக் கண்ணறை ஒப்பனை செய், ஆடையில் முகட்டுச் சுருக்கம் வைத்துத்தைத்துத் தேன் கூடுபோன்ற கண்ணறை ஒப்பனைவேலைப்பாடு செய்.

**smock'-frock,** *n.* முகட்டுக் கொய்வகப் புறச்சட்டை, முகட்டுச் சுருக்கம் வைத்துத்தைத்த தொழிற்கள வேலையாளின் உட்சட்டை வடிவப் புற உடுப்பு.

**smock'ing,** *n.* சுருக்கக் கண்ணறை ஒப்பனை உடுக்கை, முகட்டுச் சுருக்கத்துடன் தேன்கூடுபோன்ற கண்ணறை ஒப்பனை வேலைப்பாடுடைய உடுப்பு.

**smock'-mill,** *n.* முகட்டுப்பகுதிமட்டும் சுழலும் காற்றுவிசை ஆலை.

**smog,** *n.* புகைப்பனி மூடாக்கு, புகையார் மூடுபனி.

**smoke,** *n.* புகை; புகையாவி; புகைப்படலம்; ஆவி; புகை போன்ற பொருள்; எரிபொருளாவி; ஆவிச் சுழலலை; நீராவிப் படலம்; பனியாவி; தூசிப்படலம்; உறைபனி மூடாக்கு; வெற்றுப்பொருள், பயனில்பொருள்; வெறுமை, இல்பொருள்; புகையிழுப்பு, ஒருமுறை புகைகுடிப்பு; (இழி.) சுருட்டு; (இழி.) பூஞ்சுருட்டு; *v.* புகைவுறுவி; புகைவுறு; புகைந்தெரி, எரியாது புகைந்துகொண்டேயிரு; கருகு, உட்புகைவுறு; புகை வீசு; புகை வெளியிடு; நீராவி வெளிவருவி; ஆவி வெளியேற்று; கருக்கு, புகைக்கறைப் படுத்து; புகைக் கரியேற்று; புகைக் கருமையூட்டு; புகைபடிவி; தெளிவற்றதாக்கு; புகைச்சுருட்டுக் குடி; புகைக்குழல் உறிஞ்சு; பூஞ்சுருட்டுப் புகையாகு; புகையை உள்ளிழு; புகையை வெளியூது; புகை மண்டுவி, புகைப்போக்கி வகையில் புகையை மடித்து அறைக்குள்ளேயே செலுத்து; புகை மண்டு; மூச்சுத் திணறடி; புகையடிக்க வை, உணவு புகைமண்டிச் சுவை கெடுவி; புகையூட்டித் துப்புரவு செய்; புகைப்பதனமிடு; புகைசெலுத்திப் பூச்சிபொட்டு அழி; புகைகுடித்து உடல் நலம் பாழாக்கு; புகைகுடி மூலம் ஆக்கிப்படை; ஐயங்கொள்; துப்புக் கண்டுபிடி; கூர்ந்து புலங்காண்; தொடர்ந்து வேவாடு; பின்பற்றிக் கவனி; (தொ.) end in smoke, பயனுள்ள விளைவின்றி முடி; like smoke, மிகு விரைவாக; no smoke without fire, நெருப்பின்றிப் புகையாது, இல்லாமற் பிறவாது, put that in your pipe and smoke it, கிடைத்த கண்டன உரைபற்றி மீண்டும் அமைதியாக ஆழ்ந்து நினைந்தாய்வு செய்; smoke out, முழுநிறை தேர்வாய்வுமூலம் கண்டுணர்.

**smoke'-ball,** *n.* புகைத்திரை ஏவுகுண்டு, மூடாக்குப் புகைப்படலமிடப் பயன்படும் விசைக்குண்டு; உறிஞ்சுவளிக் குளிகை; காசநோய் மருந்தாக ஆவி உள்ளிழுக்கப் பயன்படும் மாத்திரை.

**smoke'-bell,** *n.* மச்சடி விளக்குக்காப்பு, தொங்கல்விளக்கின் மேல்தளக் காப்பான மணிக்கவிகை.

**smoke'-black,** *n.* புகைக்கரி.

**smoke'-consumer,** *n.* புகைவாங்கி.

**smoked,** *a.* புகைபடிவிக்கப்பட்ட; புகைப்பதனஞ் செய்யப்பட்ட; (தொ.) smoked glass, புகைக்கண்ணுடி, கதிரவனைக் காண்பதற்காகப் புகையால் கருமையாக்கப்பட்ட கண்ணுடி; smoked wood, புகையூட்டிப் பதப்படுத்தப்பட்ட மரக்கட்டைகள்.

**smoke'-dried,** *a.* புகையுலர் பதனமிடப்பட்ட, புகையூட்டி உலர்த்தப்பட்ட.

**smoke'-hole,** *n.* புகைவாய், எரிமலைக்குவட்டில் ஆவி வெளிப்படும் புழைவாய்.

**smoke'-house,** *n.* இறைச்சி-மீன் புகைப்பதன மனை; புகைப்பதன இறைச்சிச் சேமிப்புக் கிடங்கு.

**smoke'-jack,** *n.* மீவளி வெப்பவிசைத் திருப்புபொறி, அகப்பைக் கோலை மேற்செல் வெவ்வளிமூலமே திருப்பிவிடும் விசைக்கருவி.

**smoke'proof,** *a.* புகைக்காப்புடைய, புகை ஊடுருவாத, புகையாற கெடாத.

**smok'er,** *n.* புகைஞர், வழக்கமாகப் புகைகுடிப்பவர்; புகைப்பதனஞ் செய்பவர், புகைப்போர் பெட்டி, தொடர்வண்டியில் புகைகுடிப்பதற்கென ஒதுக்கிவிடப்பட்ட பெட்டி; புகைகுடிப்பதற்கு வாய்ப்பிசைவளிக்கும் இசைநிகழ்ச்சி.

**smoke'-rocket,** *n.* வடிகால் ஒழுகிடம் காண்பதற்குதவும் புகைப்பீறறமைவு.

**smoker's heart,** *n.* அளவுமீறிய புகைப்பழக்கத்தால் ஏற்படும் குலைப்பைக் கோளாறு.

**smoke'-screen,** *n.* (படை.) படைத்துறைக் காட்சிமாருட்டப் புகைத்திரை நடவடிக்கை.

**smoke'-stack,** *n.* கப்பல் புகைப்போக்கி.

**smoke'-stone,** *n.* மதுநிறமணி, மஞ்சள்நிற மணிக்கல் வகை

**smoke'tight,** *a.* புகை நுழையமுடியாத, புகை புகாத.

**smok'ing,** *n.* புகைதல்; புகைப்பு; புகைகுடிப்பு; புகைப் பழக்கம்.

**smok'ing-cap,** *n.* புகைபிடிப்பவர் அணிவதற்குரிய ஒப்பனைப்பாணித் தொப்பி வகை.

**smok'ing-car, smok'ing-carriage, smok'ing-compartment,** *n.* தொடர்வண்டியில் புகைப்பு வாய்ப்பிசைவுப் பெட்டி.

**smok'ing-concert,** *n.* புகைபிடிப்புக்கு இசைவளிக்கும் இசை நிகழ்ச்சி.

**smok'ing-jacket,** *n.* புகைபிடிப்பவர் அணிவதற்குரிய ஒப்பனைப்பாணிச் சட்டை வகை.

**smok'ing-room,** *n.* புகைப்பறை.

**smok'y,** *a.* புகை வெளியிடுகிற; புகையார்ந்த; புகையால் மறைக்கப்பட்ட; புகையால் தெளிவற்றதாக்கப்பட்ட; புகையால் கறையூட்டப்பட்ட; புகைபற்றிய, புகைபிடித்த; புகையால் கருநிறமேற்றப்பட்ட; புகைபோன்ற; (தொ.) smoky quartz, மதுநிற மணி, மஞ்சள்நிற மணிக்கல் வகை.

**smolt,** *n.* வஞ்சிர மீன்வகை.

**smooth,** *n.* வழவழப்பிடம், மெல்லிழைபுத்தன்மை; *a.* வழவழப்பான, மிருதுவான; மெல்லிழைவான, உராய்வற்ற; அழுத்தமான, சொரசொரப்பற்ற; சமதளமான, மேடுபள்ளமற்ற; வழுக்கையான, உரோமமற்ற; மெல்லமைதிவாய்ந்த, உலைவற்ற; நீர்ப்பரப்பு வகையில் அலையாடாத; மேற்பரப்பு வகையில் சுரிப்பற்ற, திரைவற்ற; கசங்காத, மடிப்புவரியற்ற; தட்டுத்தடங்கலின்றிச் செல்கிற; தடங்கலின்றிக் கடந்து செல்லக்கூடிய; இணக்கமான; இழைவிசைவான; ஒத்தியல்பான; ஊடிழைவான; ஒலி வகையில் வல்லோசையற்ற, மெல்லிசைவான, குரல் வகையில் மெல்லிசையான, கரகரப்பாயிராத; சொல் வகையில் மென்னயமான; தொனி வகையில் கடுமையற்ற; சுவைநயமிக்க; இன்னயமிக்க; *v.* வழவழப்பாக்கு, சொரசொரப்பு நீக்கு; சமநிரப்பாக்கு, மேடுபள்ளமகற்று; மெல்லிழைவாக்கு, உராய்வகற்று; மெருகிடு, பளபளப்பாக்கு; மெல்லிழைவாக்கு; வழவழப்பாகு; மெல்லிழை

வாகு; சமதளப்படுத்து; சரிநிரப்பாக்கு; மேடுபள்ளங்களகற்று; இடைமுனைப்பகற்று, முனைப்பு புடைப்புக்களை அகற்று; தடைகளகற்று, எளிதாக்கு, சுரிப்பகற்று, சுருக்க நீக்கு; மடிப்பு வரி துடைத்தழி; சொரசொரப்பு தேய்த்தொழி; முரண்பாடகற்று; வேற்றுமை சரிசெய்; இணக்குவி; அமைவி; ஆற்றுவி; உலைவகற்று; ஒத்தியைவி; இழைந்தியைவி; சிக்கல்களகற்று; தொல்லைகளில்லாதாக்கு; குறைபாடுகளை மூடிமழுப்பு; இன்சொல்லுரை; இன்புகழ்ச்சி கூறு; இழைவாக நட; (தொ.) in smooth water, கடலில் புயலற்ற நிலையில்; தொல்லையற்ற நிலையில், துன்பங்களைக் கடந்து; smooth away difficulties, இடர்ப்பாடுகளைக் களை, இடையூறு குறை; smooth breathing, தடங்கலற்ற மூச்சு; (இலக்.) கிரேக்க மொழியில் முதனிலை உயிரெழுத்தின் மீதுள்ள உறழ்வற்ற ஒலி; கிரேக்க முதனிலை உயிரெழுத்தின் மீதிடும் உறழ்வற்ற ஒலியிசைப்புக்குறிப்பு; smooth face, அமைந்த முகம்; தீய குறிப்புக்களை வெளிக்காட்டாதடக்கிச் செயற்கையமைதி காட்டும் போலிமுக அமைதி; பகைமை கரந்தடக்கிய நடிப்பு நட்பமைதி, smooth hair, இழைவாகப் படிந்த மயிர்ப்பரப்பு; smooth over differences, வேற்றுமைகளைக் குறை; வேற்றுமைகளை மழுப்பு; smooth passage, தடங்கலற்ற போக்கு; எளிய வழி; வில்லங்கமற்ற வழி வகை; பெருந்தொல்லைகளற்ற பயணம்; smooth things, முகப்புகழ்ச்சியாகப் பேசு; போலியாய்வுரை பேசு; கரவடததுடன் ஆதரவுகாட்டு; ஒப்புக்குப்பேசு; smooth verse, இன்னிழைவான பா சந்த இலய இனிமையுடைய யாபபு.

**smooth'-bore,** *a.* துப்பாக்கிக்குழல் வகையில் வரியிழைவற்ற, அழுத்த ஊடிழைவான, தள ஊடிழைவான, துப்பாக்கிக் குழல் வகையில் வரியிழைவாக வெட்டப்படாத.

**smooth'en,** *v.* வழவழப்பாக்கு இழைவாக்கு; முண்டுமுடிச்சின்றி நிரபபாக்கு; சமதளப்படுத்து; இணக்கி இயக்குவி; இன்னயைப்படுத்து.

**smooth'-faced,** *a.* வழவழப்பான முகமுடைய; மெல்லிழைவான மேறபரபபிணயுடைய; இனிய தோற்றமுடைய; தாடியற்ற; சுருக்கமற்ற; நம்பி ஏற்கததக்க, சரியானதாகத் தோற்றுகிற, ஒத்துக்கொள்ளத்தக்க புறத்தோற்றமுடைய.

**smooth'ing-iron,** *n.* சலவைத்தேய்ப்புப் பெட்டி.

**smooth'ing-plane,** *n.* தச்சரின் இழைப்புளி.

**smooth'spoken, smooth'-tongued,** *a.* நாநயம் படைத்த; சொல்லிணககநயம உடைய; நயநாகரிகப்பேச்சுடைய; மெல்லமைதியுடன் பேசுகிற; புகழ்ந்து மழுப்பும் இயல்புடைய; நம்புதற்குரிய இயல்புவாய்ந்த, நம்பத்தக்க முறையிற் சொல்லப்படுகிற.

**smote,** *v.* smite என்பதன் இறந்த காலம்.

**smo'ther,** *n.* புகை; பூந்தணல்; அகக்கொந்தளிப்பு, உட்குமைவுநிலை; அடர்தூசிப்படலம்; செறிதிவலைத்திரள்; திண்புகைப்பிழம்பு; மூச்சுத்திணறல்; திக்குமுக்காட்டம்; *v.* திணற அடி, திக்குமுக்காடவை; மூச்சு முட்டச்செய்து கொல்லு; அடர்த்தழி; மூட்டமிடு; அடர்த்துமூடாப்பிடு; தீயை மணல்சாம்பர் முதலியவற்றினால் அடர்த்து மூடாப்பிட்டு மூத்துவிடு; அடர்த்தணைத்துக்கொள்; அடர்த்தடிப்படுத்து; செயலடங்குவி; தோன்றாதடக்கிவிடு, உள்ளடக்கிவை; சதுரங்கத்தில் அரசுகாயை அசையமுடியாமல் தடுத்தடைப்புச் செய்துவிடு; (அரு.) திணற அடிக்கப்பெறு; (அரு.) கீழடங்கு; (தொ.) smothered mate, சதுரங்க ஆட்டத்தில் தன் சார்புக்காயாலேயே தடுப்படைப்புச் செய்யப்பட்ட அரசுகாய்

**smo'thery,** *a.* திக்குமுக்காட வைக்கிற; மூச்சுவிடமுடியாது செய்கிற; அடர்த்தணைத்துவிடுகிற.

**smoul'der,** *n.* அழல், புற அனற்கொழுந்தின்றி உட்கனன்றெரியுந் தீ; உட்கனல்வு, உட்புழுக்கம்; *v.* அழன்றெரி, புற அனறகொழுந்தின்றி உள்ளார நின்றெரி; உட்கனல்வுறு, உட்கனிவுற்று எரிவுறு, கருகு, புகைந்தெரி, அடங்கிய ஆற்றலுடன் எரி; தீய்வுறு, காணுநிலையிற் பொசுங்குறு; புழுங்கிக் கொண்டிரு, உணர்ச்சிகள் வகையில் உள்ளார நின்றெரித்துக் கொண்டிரு; புறந்தெரியாமல் உள்ளே விளைந்துகொண்டிரு; தன்னறிவில்லாமலே கனிவுற்றுப் பெருகிக்கொண்டிரு; தீய்ந்துகொண்டிரு, கருகிக்கொண்டிரு; வெளித்தோன்றும் விளைவுகளின்றி உள்ளே வளர்ந்துகொண்டிரு.

**smudge[1],** *n.* பொட்டுக்கறை, அழுக்குத்தடம்; அழிதடம், வரியடிப்புக் கறை; உருவிலாக்குறி மொத்தை; தெளிவற்ற மைத்தடக்கறை; *v.* பொட்டுக்கறையிடு, அழுக்குத்தடம் உண்டாக்கு; மைகொட்டி அழுக்காக்கு; அடிப்புக் கறைத் தடம் உண்டுபண்ணு; அடை அப்பித் தெளிவிலாதாக்கு; தூய்மைகெடு; பெயர்மீது மாசு கற்பி; புகழுக்குக் களங்கம் வருவி.

**smudge[2],** *n.* தீமூட்டம், வீட்டுப்புறவெளியில் பூச்சிபொட்டுக்களைத் தடுத்துக்காப்பதற்காக எழுப்பப்படும் புகைமூட்டம்.

**smug,** *n.* ஆகுல நீர்மையர், ஆரவாரப்பேர்வழி; தளுக்கித் திரிபவர்; புத்தகப்புழு; பல்கலைக்கழகக் கேளிக்கைகளில் கலந்துகொள்ளாதவர்; தன்மேட்டிமைத்தனம்; *a.* அற்பத் தன்னிறைவுடைய, தன்னிலே தான் மகிழ்ந்து திரிகிற, உயர்வுள்ளாத; ஆரவாரமான.

**smug'gle,** *v.* கள்ளவாணிகஞ் செய், கள்ளக்கடத்தல் செய், சட்டவிரோதமாகச் சரக்குகள் கடத்து; இரகசியமாக அனுப்பு; ஒளித்துச் சேர்த்துவை.

**smug'gler,** *n.* கள்ளக்கடத்தலாளர், கள்ள வாணிகர்.

**smug'gling,** *n.* கள்ளக்கடத்துதல், கள்ள வாணிகம்.

**smut,** *n.* கரிக்கசடு; கரிக்குச்சு; கரிக்கீற்று; புகைக்கரியால் ஏற்படும் கறை; கீழ்த்தரப்பேச்சு; கீழ்த்தரச்சொற்கள்; இழிதகைக்கதை; கருக்கல் நோய், கூலநோய் வகை; *v.* கரிக்கீற்றிடு; கரியால் அடையாளமிடு; கூலவகையில் கருக்கல் நோயால் தாக்கப்படு; கருக்கல் நோய்க் காளான் வகையில் கூலவகையினைத் தாக்கு.

**smut'-ball,** *n.* காளான் வகை.

**smutch,** *n., v.* = smudge[1].

**smut'mill,** *n.* கருக்கல் நோய்க்காளானால் பாதிக்கப்பட்ட கூலததைத் துப்புரவுப்படுத்தும் இயந்திரசாலை.

**Smyrn'iot, Smyrn'iote,** *n.* துருக்கிநாட்டில் ஸ்மிர்ணு (Smyrna) நகரில் வாழ்பவர்; *a.* ஸ்மிர்ணு சார்ந்த.

**snack,** *n.* சிற்றிடையுணவு, விரைசிற்றுணு; (தொ.) go snacks, பங்குவைத்துக்கொள்.

**snaf'fle,** *n.* வாய்வடம், குதிரைக்கடிவாளத்தின் ஒற்றைவாய்ப் பொருத்து கம்பி; (தொ.) ride one on the snaffle, மெல்ல அடக்கு, படிப்படியாக வசப்படுத்து.

**snaf'fle-bit,** *n.* குதிரைக்கடிவாளத்தில் நெருக்குவடியற்ற வாய்வடம்.

**snaf'fle-rein,** *n.* குதிரைக்கடிவாளத்தின் வாய்வடக் கயிறு.

**snag,** *n.* முளை, குற்றி; முறிமுளை முகடு; கோறைப்பல், பலலின் கோறைமுகடு; முறிந்த அடிமரக்கட்டை; நீரடி முட்டுக்கட்டை, கலங்களின் நெறி தடுக்கும் ஆறு-கடல்களின் நீரடிவேர் அல்லது கட்டை முளைப்பு; எதிர்பாராத் தடங்கல், மறைமுக முட்டுக்கட்டை; *v.* கலத்தை நீரடி முட்டுக்கட்டையில் கொணடு முட்டிவிடு; முட்டி வடுப்படு; முட்டிக் கீறலுறு; நீரடிக்கட்டையில் மாட்டிக்கொள்; தடுத்துநிறுத்து; எதிர்பாராத் தடங்கலிடு; ஒழுங்கறத் தறி; ஆற்றுப்படுகையில் முட்டுக்கட்டைகளை அகற்று; கட்டுத்தறியின் முனைமுகடழி, முனை ஒழுங்குபடுத்து.

**snail,** *n.* நந்து, நத்தை; உணவாகப் பயன்படும் நந்தூன்; தோட்ட நத்தை, தோட்டச்செடிகளை அழிக்கும் சிற்றுயிர் வகை; இலையட்டை, இலைவடிவ நத்தை; மந்தமானவர், சுறுசுறுப்பற்றவர்; மெல்ல நகரும் விலங்கு; நந்தாழி, மணிப்பொறியில் மணியடிப்பினை ஒழுங்குசெய்யும் நந்துவடிவப் பல்வட்டமைவு; சுருள்வடிவ நெற்றுவகை; சுருள்வடிவ நெற்றினையுடைய பயிற்றினம்; *v.* தோட்ட நத்தையை அழி; தோட்ட நத்தை வேட்டையாடு; நத்தைவேகத்தில் செல்.

**snail'-clover**, *n.* திருகுநெற்றுக்களையுடைய பயிற்றினச் செடிவகை.

**snail'ery**, *n.* நத்தைப்பண்ணை, உணவிற்கான நத்தைகள் வளர்க்குமிடம்.

**snail'-fish**, *n.* அகடொட்டுமீன், ஒட்டிக்கொள்வதற்கான வயிறுறுப்புற உறிஞ்சு கருவியுடைய மீன்வகை.

**snail'-slow**, *a.* நத்தைபோன்று நகர்கிற ; மிகவும் மந்தமான.

**snail'-trefoil**, *n.*=snail-clover.

**snail'-wheel**, *n.* நந்தாழி, மணிப்பொறியில் மணியடிப்பை ஒழுங்குபடுத்தும் நத்தை வடிவப் பல்வெட்டுச்சக்கரம்.

**snake**, *n.* பாம்பு ; பாம்புபோன்ற பல்லி வகை ; நன்றிகெட்டவர் ; நம்பிக்கைக் கேடு விளைப்பவர் ; உணர்ச்சியற்ற மனிதர் ; *v.* பாம்புபோல் இயங்கு ; நெளிந்து நெளிந்து செல் ; (தொ.) cherish a snake in one's bosom, warm a snake in one's bosom, பாம்பிறகுப் பால்வார் ; raise snakes, wake snakes, குழப்பம் உண்டுபண்ணு ; கடுமையான சச்சரவுதொடங்கு ; see snakes, குடிவெறி வலிப்பு வரப்பெறு, குடிவெறிப் பதற்றங் கொள் ; snake in the grass, குழிபறிப்பவர் ; மறைவு அபாயம் ; snake lizard, காலற்ற பல்லி வகை.

**snake'-bird**, *n.* நீண்ட கழுத்துள்ள மீனுண்ணும் பறவை வகை.

**snake'-bite**, *n.* பாம்பு கடி.

**snake'-charmer**, *n.* பிடாரன், பாம்பாட்டி.

**snake'-charming**, *n.* பாம்பாட்டி வித்தை.

**snake'-cult**, *n.* பாம்பு வணக்கம்.

**snake'-dance**, *n.* பாம்பு நடனம்.

**snake'-eel**, *n.* வால்செதிளற்ற விலாங்குவகை.

**snake'-fence**, *n.* மரக்கிளை வேலி.

**snake'-fly**, *n.* ஒடுங்கிய நெஞ்சுடைய ஈ வகை.

**snake'like**, *a.* பாம்புபோன்ற ; *adv.* பாம்பு போன்று.

**snake'-locked**, *a.* பாம்புகளைத் தலைமயிராகக் கொண்ட.

**snake'-root**, *n.* அமெரிக்க வேர்வகைகளில் ஒன்று.

**Snakes**, *int.* கோபக்குறிச் சொல்.

**snakes'head**, *n.* அல்லிமலர்ச் செடிவகை.

**snake'-stone**, *n.* புதைபடிவ நத்தையினத் தோட்டு வகை ; பாம்புகடி மருந்துக்கல்.

**snake'-weed**, *n.* திருகு கிழங்கு ஊன்வண்ண மலர்ச்செடி வகை.

**snake'-wood**, *n.* தென் அமெரிக்க மரவகை.

**snak'ily**, *adv.* பாம்புபோன்று ; மெல்ல ; எதிர்பாரமல் ; ஆர்வமின்றி ; நயவஞ்சகத்துடன்.

**snak'iness**, *n.* பாம்புபோன்ற தன்மை, பாம்புச் செறிவுடைமை ; பாம்பினியல்பு.

**snak'ish**, *a.* பாம்பு போன்ற தோற்றமுடைய.

**snak'y**, *a.* பாம்படர்ந்த, பாம்பின் தோல்லைகளுக்கு இடம் தருகிற ; பாம்புபோன்ற தோற்றமுடைய ; பாம்பு போன்ற நஞ்சுடைய ; சூழ்ச்சியும் வஞ்சகமும் உடைய ; உணர்ச்சியற்ற, நன்றியறிவற்ற.

**snap**, *n.* சுடக்கொலி ; நொடிப்பொலி ; சிறுவெடிப்பொலி ; சடக்கொலி, பொருக்கென அடைத்துக்கொள்ளும் ஒலி ; வளைகாப்பு விற்பொருத்து ; நிழற்பட நொடிப்பெடுப்பு ; கடும்பனியுறைவு ; சீடைவகை, பொருபொருப்பான சிறு பண்ணியம் ; சீட்டாட்டவகை ; சிறுதிற நடிப்புப்பாணி ; குறுகியகால நடிப்பு ஏற்பாடு ; சொடி ; தெம்பு ; செயலூக்கம் ; மொழிநடை விறுவிறுப்பு ; புத்தார்வச் சுவை ; (பே-வ.) மிக எளிய செயல் ; எதிர்பாராத் திடீர் நிகழ்ச்சி ; திடீர் ஏற்பாடு ; *a.* திடீரான, எதிர்பாராது இடைவந்த, நொடியான ; அதிர் வூட்டுகிற ; விரைதீர்வான ; *v.* ஒடி, சடக்கென நொடியச்செய் ; சடக்கென நொடிவுறு ; முறி, அறுந்துவிடு ; துண்டுபடுத்து, அறுந்துவிடச்செய் ; சுடக்கிடு ; சடக்கெனும் ஒலிசெய் ; வெடி, சிறுநொடிப்புறு ; சடக்கென மூடுவி ; பொருக்கென அடைத்துக்கொள் ; திடீரென்று கௌவு ; நாய் வகையில் சடக்கென்று கடி ; கைத்துப்பாக்கி வெடிதீர் ; கைத்துப்பாக்கி வகையில் வெடிதீர்வுறு ; நிழற்பட நொடிப்பெடு ; சட்டென நிழற்படமெடு ; உரியவராறியாமல் உடனடிநிழற்படமெடு ; கடுகடுத்துப்பேசு ; சீறிவிழு, சினந்துபேசு ; திடுமென இடையிட்டுப்பேசு ; பொறுக்கி எடு ; திடுமென இயங்கு ; திடீரெனச் செயல் செய், சட்டென முடிவுசெய் ; சட்டென ஒத்துக்கொள் ; *adv.* திடுமென ; தடாலென ; சடக்கென்ற ஒலியுடன் ; (தொ.) cold snap, சிறுதிறக் கடும் பனியுறைவு ; pistol snap, கைத்துப்பாக்கி வெற்று வேட்டு ; scotch snap, (இசை.) அழுத்தக்குற்றிசை தொடர்ந்த நெட்டசை இசைப்பு ; snap at, கடிக்க முயற்சி செய் ; சிடுசிடுப்புடன் பேசு ; snap at bait, snap at chance, snap at offer, ஆவலோடு ஏற்றுக்கொள் ; snap off one's nose, முரட்டுத்தனமாகத் தலையிடு ; கோபத்தோடு குறுக்கிட்டுத் தடைசெய் ; snap one's fingers at, விரல்களைச் சுடக்கிட்டுக் காட்டி வெறுப்பைத் தெரிவி ; snap one's head off, snap one's nose off, எரிச்சலோடு முரட்டுத்தனமாக மறுமொழி பகர் ; snap out, எரிச்சலோடு சொல், கடுகடுப்போடு பேசு ; snap the clasp, ஒலியெழும்படி பற்களை இறுக மூடிக்கொள்.

**snap'-bolt, snap'-lock**, *n.* கதவை மூடும்பொழுது தானே பூட்டிக்கொள்ளும் வில்லமைவுத் தாழ்ப்பாள், விற்பொருத்துத் தாழ்ப்பாள் ; விற்பூட்டு.

**snap'-hook**, *n.* பற்றிவிடாக்கொளுவி.

**snap'-link**, *n.*=snap-hook.

**snap'-lock**, *n.* விறபூட்டு.

**snapp'ing**, *n.* நொடிப்பு ; சுடக்கீடு ; கடிப்பு ; சிடுசிடுப்பு ; கடுகடுப்புப்பேச்சு ; *a.* நொடிக்கிற ; கடிக்கிற ; சுடக்கிடுகிற ; கடுகடுப்பான.

**snapp'ish**, *a.* உறுமுகிற, சிடுசிடுப்பான ; விரைவும் கடுகடுப்புமுடைய.

**snapp'y**, *a.* படுவிரைவான ; ஆர்வமாகக் கடிக்கும் இயல்புடைய ; திடுமெனச் செயலாற்றுகிற.

**snap'shot**, *n.* நிழற்பட நொடிப்பெடுப்பு ; *v.* நொடிப்பு நிழற்படமெடு.

**snare**, *n.* கண்ணி ; பொறி, சூழ்ச்சி ; சோதனை ; மாயக் கவர்ச்சிப்பொருள் ; (மரு.) கழலையறுவையில் பயன்படுத்தப்படும் கம்பிச்சுருக்கு கண்ணி ; *v.* கண்ணியிட்டுப்பிடி ; பொறி வலைப்படுத்து ; சூழ்ச்சியில் சிக்கவை.

**snares**, *n. pl.* பக்கமுரசத்தில் முடுகிசைக்கான அடிவார் முறுக்கு.

**snarl**[1], *n.* உறுமுதல் ; உறுமலொலி ; *v.* நாய்வகையில் உரத்த குரலோடு உறுமு ; ஆள் வகையில் நாய்போன்று எரிந்து விழு ; சிடுசிடுப்புக்கொள் ; முணுமுணுப்புக்கொள் ; குறைபட்டுக்கொள்.

**snarl**[2], *n.* முடிச்சு, சிக்கு, கரணை ; *v.* முறுக்கு ; சிக்குப் படுத்து ; சிக்காகு ; உறழ்வொப்பனை செய் ; உலோகக் குடுவையின் உட்புறத்தே கொட்டுவதனுல் புறத்தே புடைப்பு வேலைப்பாடமைவித்து அழகுசெய்.

**snatch**, *n.* கைக்கொள்ளுகை ; பற்றி எடுப்பு ; பறிப்பு ; வலிந்த பற்றீடு ; பறிக்கக் கைநீட்டுதல் ; பறிக்கும் நோக்குடைய திடீர்க் கைநீட்டம் ; வெஃகுதல், பிடுங்கார்வம் ; கவரும் ஆர்வ அவா ; சிறு பகுதி ; சிறிது நேர நிகழ்வு ; ஆர்வக் கவ்வுதல் ; *v.* கைக்கொள், பற்றியெடு ; பறித்தெடு ; திடீரெனக் கைப்பற்று ; வலிந்து பற்று ; கேட்காது எடுத்துக்கொள் ; பறி, பிடுங்கு, வலிந்துபற்று ; பறித்துக்கொண்டு செல் ; இடரினின்று மயிரிழையில் தப்புவித்துக் காப்பாற்று ; கடுமுயற்சியுடன் பெறு ; பறிக்கக் கைகளை நீட்டு ; வாய்ப்பு நோக்கிப்பெற முனை.

**snatch'-block**, *n.* (கப்.) கயிற்றுப்புழையுடைய மூடு கப்பி.

**snatch'es**, *n. pl.* இடையிடை முயற்சித் துணுக்குகள் ; பாட்டு வகையில் இடையிடைப்பகுதிகள் ; நினைவுத்துணுக்குகள் ; பேச்சில் இங்கொன்றும் அங்கொன்றுமான பகுதிகள் ; இடையிடைச் சிறு சிறு கூறுகள்.

**snatch'y**, *a.* இடையிடைவிட்ட, ஒழுங்கற்ற.

**sneak**, *n.* அற்பக்கோழை; கோட்சொல்லி; மரப்பந்தாட்டத்தில் நிலத்தின் நெடுக வீசப்பட்ட பந்து; *v.* திருட்டுத்தனமாகப் பதுங்கிச் செல், அஞ்சியஞ்சிப் பின்னிடு, மறைந்து ஒதுங்கி நழுவு; (இழி.) திருடிக்கொண்டு செல்; (இழி.) பள்ளி வழக்கில் கோட்சொல்லு.

**sneak'ers**, *n. pl.* மென்மிதிகள், ஓசையற்ற மிதியடிகள்.

**sneak'-thief**, *n.* கள்ளன், திறந்தவீட்டில் கதவு-பலகணி வழிப் பதுங்கிக் களவு செய்யுந் திருடன்.

**sneck**, *n.* விசைக்கதவுத்தாழ், விசை; *v.* விசைப்பூட்டுப் பொருந்துவி, விசைக்கதவின் தாழிடு.

**sneer**, *n.* ஏளன இகழ்ச்சி; இகழ்ச்சிப்பார்வை; அலக்கழிப் புரை, ஏளனப்பேச்சு; கேலிநகை; *v.* இகழ்ச்சியாகச் சிரி; ஏளனச் சொற்கள் பேசு; தலைகுனியச் செய்; ஏளனக்குறியால் அவமதிப்புச்செய்; ஏளனத்தால் மகிழ்ச்சி கொள்.

**sneeze**, *n.* தும்மல்; *v.* தும்மு; (தொ.) not to be sneezed at, அவமதிக்கத்தகாத.

**snick**, *n.* குறுவெட்டு; சிறு வெட்டுவாய்; மரப்பந்தாட்ட வகையில் பந்தின் சிறு சாய்வடி; *v.* குறுவெட்டிடு; வடுப் படுத்து; சிறு கீறல்போடு; மரப்பந்தாட்டவகையில் பந்தின் போக்கினைச் சற்றே சாய்வாகத் தட்டி விலக்கு.

**snick'er**, *n.* குதிரையின் கனைப்பு; வாயிளிப்பு; *v.* கனை; இளி.

**snickersnee'**, *n.* (நகைச்.) சூர்க்கத்தி.

**snide**, *n.* (இழி.) போலிநகை; கள்ள நாணயம்; *a.* போலியான, செல்லாத, கள்ளப்பட்ட.

**Snid'er, Snider rifle**, *n.* பிட்டச் சுழல்துப்பாக்கி, பின் வழியே மருந்துகுண்டு அடைக்கப்பெறும் சுழல்துப்பாக்கியின் பழைய வகை.

**sniff**, *n.* மோப்பு, மோந்து பார்க்கை; மூச்சுவலிப்பு, வன்மையாக மூக்குவழிக் காற்றுறிஞ்சுகை; மூச்சு வலிப்பொலி; காற்று வலிப்பளவு, ஒருதடவை உறிஞ்சு காற்றளவு; காற்றின் சுற்றுவீச்சு, சிறு காற்றலை; காற்றின் சிறுவீச்சளவு; மண அலை; *v.* மூச்சுவலி, வன்மையாக மூக்குவழி காற்று உறிஞ்சு; சிவ்வொலி செய், மூச்சு வலிப்பொலி செய்; மூச்சு வலிப்பு மூலம் ஏளனக்குறிப்புக் காட்டு; மூச்சுவலித்து வெறுப்புக் குறித்துக்காட்டு; மூச்சுவலித்து இகழ்ச்சி தோற்றுவி; சிவ்வொலிமூலம் மனக்குறை குறித்துக்காட்டு; நாய் வகையில் சுற்றி மோந்துபார்த்துக் காலைக்கடிக்க வட்டமிடு; மோந்துபார், சிவ்வென்றுறிஞ்சி மோப்பம் நோக்கு; நீர்ம வகையில் சற்றே உறிஞ்சு குறிப்புக் காட்டு; காற்றுவகையில் சற்றே உள்வாங்கி நோக்கு; மணவகையில் சற்றே உள் வாங்கிப் பார்; தேறல் மணத்திறங் காண்; மலர்முகர்ந்து மணநுகர்வுறு; ஊன் முகர்ந்து மணக்கூறு நோக்கு.

**sniff'y**, *a.* (பே-வ.) வெறுப்புக்கிடமான, இகழ்ச்சிக்குரிய; கெடுநெடியுடைய.

**snift'ing-valve**, *n.* ஏகுழி, நீராவிப்பொறி உந்துதண்டுக் குழலின் காற்று வெளிவிடுந் தடுக்கிதழ்.

**snigg'er**, *n.* அடக்கு சிரிப்பு; *v.* அடக்கு நகை புரி.

**snig'gle**, *v.* தூண்டிரைப்படுத்து, வளையில் தூண்டிரை புகுத்தி விலாங்குமீன் பிடி.

**snip**, *n.* கத்தரிப்பு; நறுக்கு, கொய்வு, தறிப்பு, நறுக்கீடு; (பே-வ.) தையற்காரர்; (பே-வ.) ஒட்டப்பந்தய வழக்கில் கட்டுறுதி நிகழ்வு, கட்டாயமாக நேரிடக்கூடிய ஒன்று; *v.* நறுக்கு; நுண்ணிதாக வெட்டு; கத்தரி.

**snipe**, *n.* உள்ளான்குருவி, நீளலகுப் புள்வகை; *pl.* snipe; *v.* உள்ளான்வேட்டைக்குச் செல்; (படை.) மறைவிடத்திலிருந்து எய்; தொலைவிலிருந்து சுடு; பதுங்கித் தொலை இலக்குவைத்துச் சுட்டுக்கொல்லு.

**snipe'-eel**, *n.* நீடலகு விலாங்கு.

**snipe'-fish**, *n.* நீளலகு மீன்வகை.

**snipp'et**, *n.* சிறுவெட்டுத் துண்டு, நறுக்குத்துண்டு; கத்தரிப்புத் துணுக்கு; சிறு பறவை வகை.

**snipp'ets**, *n pl.* துண்டுதுணுக்கறிவு; துண்டுதுணுக்குத் தகவல்கள்; அரைகுறைத் துணுக்குகள், எச்சமிச்சங்கள்.

**snipp'ety**, *a.* சிறுதிறமான, பயனற்ற; துண்டுதுணுக்குகள் கொண்ட.

**snipp'ing**, *n.* வெட்டுத்துண்டு, நறுக்கு.

**snipp'y**, *a.* துண்டுதுணுக்கான; கஞ்சத்தனமான.

**snip-snap-snor'um**, *n.* வட்டச்சீட்டாட்ட வகை, குழந்தைச் சீட்டுவிளையாட்டு.

**snip'y**, *a.* உள்ளான்குருவி போன்ற.

**sniv'el**, *n.* மூக்கொழுக்கு; சளி, சிணுக்கம், தேம்பல்; கொஞ்சிப்பசப்பல்; நீலிக்கண்ணீர் வடிப்பு; பசப்புப் பேச்சு; *v.* மூக்குநீர் ஒழுகவிடு; சிணுங்கு, கண்ணீருங் கம்பலையுமாயிரு; குழந்தைபோலக் கரை, ஏங்கியழு; அழுதுபசப்பு; நீலிக்கண்ணீர் வடி, போலி ஒப்பாரி வை, அழுது ஏமாற்று.

**snob**, *n.* பிலுக்கர், தளுக்கர், போலிப்பகட்டர்; நடிப்புப் பெருமையாளர்; பதவி வேட்டையாளர்; போலிக் குடி மதிப்பாளர், போலி உயர்வுதாழ்வுக் கணிப்பாளர்.

**snobb'ery**, *n.* நாகரிகப்பகட்டு; போலி உயர்வுப்பகட்டு; போலி உயர்வுதாழ்வுக் கணிப்பு; போலி உயர்வுதாழ்வு வேறுபாட்டுப் பண்பு; போலி ஒய்யார நடை.

**snobb'ish**, *a.* போலி ஒய்யாரமான; பகட்டிறுமாப்புடைய.

**snobb'ishness**, *n.* போலி நாகரிகப்பகட்டு மனப்பான்மை; போலி உயர்வுப்பகட்டு.

**snob'ling**, *n.* புதுநிலைப் பிலுக்கர், அற்பப் பகட்டர்.

**snoboc'racy**, *n.* போலிப்பகட்டர் குழுமம்.

**snoek**, *n.* உணவுக்குரிய பெரிய கடல்மீன் வகை.

**snood**, *n.* இழைக்கச்சை, ஸ்காத்லாந்தில் கன்னிமைக்கு அறிகுறியாகக் கருதப்பட்ட மயிர்க்கொடி; கடற் செம்படவர் தூண்டிற்கயிறு இணைக்குஞ் சிற்றிழை.

**snook** [1], *n.* கடல்மீன் வகை.

**snook** [2], *n.* துச்சக்குறிப்பு, மூக்கின்மேல் பெருவிரலை வைத்து மற்ற விரல்களை விரித்துக்காட்டும் சைகை.

**snook'er**, *n.* மேடைக்கோற் பந்தாட்ட வகை.

**snook'ered**, *a.* மேடைக்கோற் பந்தாட்டக்காரர் வகையில் பந்தினை நேரடியாக அடிக்கமுடியாத நிலையிலுள்ள; தோல்வியுற்ற

**Snooks!**, *int.* துச்சக்குறிப்புக் காட்டும் இடைச்சொல்.

**snoop**, *v.* (பே-வ.) அழையா வீட்டில் நுழை; வட்டமிட்டு ஒட்டுப்பார்; திருட்டுத்தனஞ் செய்.

**snoop'er**, *n.* தகாவழித் தலையீட்டாளர், தனக்குத் தொடர்பில்லாதனவற்றுள் நுழைந்தாய்பவர்.

**snoot'y**, *a.* (பே-வ.) தன்னகந்தையுடைய.

**snooze**, *n.* கண்ணயர்வு, பகல்நேரச் சிறுதுயில்; *v.* கண்ணயர்வுறு, பகல்நேரத்திற் சிறுதுயில் கொள்; கருத்தில்லாமல் சோம்பிக் கழி.

**snore**, *n.* குறட்டை; *v.* குறட்டைவிடு; குறட்டை விட்டுக் கொண்டே காலங்கழி; குறட்டையிடும் நிலையில் எய்தப்பெறு.

**snort** [1], *n.* மூக்கின் சீறல்; சீறொலி; நீராவிப்பொறியின் பீற்றொலி; *v.* செறுமு, குதிரைவகையில் மூக்குவழிச் சீறு; செறுமலொலி செய்; செறுமி எதிர்ப்புத் தெரிவி; சீறிக் கொட்டு, சீற்றத்துடன் உரை.

**Snort** [2], *n.* மூக்குளிப்புக்கலம், நீண்டநேரம் நீரில் மூழ்கியிருக்க வல்ல நீர்மூழ்கிக் கப்பல்.

**snort'er**, *n.* செறுமுபவர்; (பே-வ.) உருமுப்புயல், பேரிரைச்சலான புயற்காற்று; விறுவிறுப்பாட்டம், புயல்வீச்சு நடனம்.

**snot**, *n.* (பே-வ.) மூக்கொழுகல்; கயவன்.

**snott'y**, *n.* (பே-வ.) கப்பற் பணியாள்; *a.* மூக்கு வடிகிற; மூக்குச்சளியினால் அழுக்கடைந்த; (பே-வ.) நீசனான; (பே-வ.) தொந்தரவூட்டப்பட்ட, சிடுசிடுப்பான.

snout, n. முகறை, நீள்மூக்கு; மூஞ்சி, நீள் அலகு; கூர்முக வாய், கூம்புகூறு; குழாய் மூக்கு.

snout'-beetle, n. நீள் அலகு விட்டில்வகை.

snout'ed, a. கூர்முகறையுடைய, நீள்மூக்குடைய; கூர்முகம் பொருத்தப்பெற்ற; நீள்மூக்கு வடிவமுடைய.

snout'-ring, n. முகறை வளையம்; வேர்காப்பு வளையம், செடிகளை வேருடன் கிளறுவதைத் தடுப்பதற்காகப் பன்றியின் மூக்கிலிடப்படும் வளையம்.

snout'y, a. முனைத்த நீள்முகறையுடைய; நீள்முகறைபோன்ற; தன்னகந்தையுடைய, திண்ணக்கமுடைய.

snow[1], n. வெண்பனி; பனித்திரை; பனிமழை; பனி வெண்பொருள்; பனித்திரள்; பனிச்சேறு; பனிக்குழம்பு; பனிச்சாந்து; வெண்டுகில்; ஒரு பனிப்பருவமுறை; நாரை; வெண்சீமை இலந்தைக்கனிவகை; கரிய ஈருயிரகைக் குழம்பு; (பே-வ.) உடல் மரமரப்பூட்டும் தென் அமெரிக்க செடி மருந்துச்சரக்கு வகை; v. வெண்பனி பெய்; வெண்பனி தூவு, பனிமழை பெய்; வெண்பனி சிதறுவி; வெண்பனிபோல் பொழிவுறு; (தொ.) snow bunting, கறுப்பு-வெள்ளை நிறமான வடதுருவக் குருவிவகை; snowed in. snowed up, பயணஞ் செய்ய முடியாதபடி வெண்பனி தேங்கிய; வெண்பனி அடைப்புண்ட; snowed plume, பனிக்கற்றை, பனிச்சிதல்; snow under, வெண்பனியினுல் மூடு; பெரிய எண்ணிக்கை வலுவினுல் விஞ்சி விடு; the snows of seventy years, நரைமயிர்.

snow[2], n. சிறிய இரு பாய்மரக் கப்பல் வகை.

snow'ball, n. பனித்திரள், எறிபொருளாகப் பயன்படும் பனி மொந்தை; திரள்பிழம்பு நிதி, பங்கு வரியாளர் ஒவ்வொருவரும் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள பங்கு வரியாளர்களைச் சேர்க்கவேண்டுமென்னும் திட்டப்படி வளரும் நிதி; பழப்பொதியடை, அரிசிமாவில் ஆப்பிள் பழம் வைத்துச் சமைத்த பிட்டு; v. பனித்திரளையால் அடி; பனித்திரளையாலடித்துப் பந்தயம் விளையாடு.

snow'ball-tree, n. வட்டப் பனிமலர்ச் செடிவகை.

snow'-berry, n. வெள்ளைப்பழங்களையுடைய தோட்டப்புதர்ச் செடி வகை.

snow'-bird, n. வெள்ளைக்குருவி வகை.

snow'-blind, a. பனிக்குருடான, பனிப்பாள ஒளிவீச்சினுல் விழிப்பார்வை மந்தமாக்கப்பட்ட.

snow'-blind'ness, n. பனிக்குருடு, பனிப்பாள ஒளிவீச்சினுல் ஏற்படும் பார்வைக்கேடு.

snow'-blink, n. பனிவுருநிழல், வானத்தில் தோன்றும் பனிப் படலத்தின் ஒளிநிழல்.

snow'-boots, n. pl. பனிப்பாதுகை, பனியில் நடப்பதற்கான புதைமிதியடி.

snow'-bound, a. பயணஞ்செய்ய முடியாதபடி பனிச்சேற்றினுல் தடைப்பட்ட.

snow'-cap, n. வெள்ளைச்சூட்டுடைய பாடும்பறவை வகை.

snow'-capped, a. பனிமூடிய முகட்டினையுடைய.

snow'-drift, n. காற்றினுல் ஒதுக்கிக் குவிக்கப்பட்ட பனித்திரள்.

snow'drop, n. வெண்மலரினையுடைய செடிவகை.

snow'-fall, n. வெண்பனி வீழ்வு; பனிவீழ்வளவு, ஒருதடவை பெய்த பனியின் அளவு; பனியளவலகு, குறிப்பிட்ட இடத்தில் ஓர் ஆண்டிற்பெய்த பனியின் அளவு.

snow'-field, n. வெண்பனிக்களம், பனிப்பரப்பு; மலைப்பகுதிப் பனிப்பரப்பு; நிலையான துருவ வெண்பனிப்பரப்பு.

snow'-flake, n. பூம்பனி, வெண்பனித்திவலை, பனிக்கீற்று.

snow'-gauge, n. பனிவீழ்வுமானி.

snow'-goggles, n. pl. மலை ஏறிகளின் பனி ஒளிவீச்சுக் காப்பான கறுப்பு மூக்குக்கண்ணுடி.

snow'-goose, n. சிறகுநுனி கருப்பாயுள்ள வடதுருவ வெள்ளை வாத்து வகை.

snow'-grouse, n. சதுப்புநிலக் கோழிவகை.

snow'-guard, n. மோட்டிற் பனிசறுக்காதபடி தடுக்குங் கட்டை.

snow'-ice, n. பனி உறைபாளம், ஒளி ஊடுருவாத பனி உறைகட்டி.

snow'-leop'ard, n. சிறு வேங்கைவகை.

snow'less, a. பனியற்ற, பனி பெய்யாத.

snow'-line, n. பனிவரை எல்லை, வெண்பனி நிலையாகத் தங்கியிருக்கும் உயர் எல்லைவரை.

snow'-man, n. வெண்பனித்திரளைப் பொம்மை; பனிமனிதன், பனிமண்டலங்களில் வசிப்பதாகக் கருதப்படுபவர்.

snow'-on-the-moun'tain, n. வெண்மலர்களையுடைய தோட்டசெடிவகை.

snow'-owl, n. பெரிய வெள்ளை ஆந்தை வகை.

snow'-plant, n. செம்பனிப்பாசி, பனியில் விளைந்து அதற்குச் சிவப்பு வண்ணமூட்டும் நுண்ணுருவான பாசி வகை.

snow'-plough, n. பனிவாரி, பாதைகளினின்றும் பனி அடைவுகளை அகற்றுவதற்கான கருவி.

snows, n. pl. பனிப்பெயல், பனித்திரள்.

snow'-shoes, n. pl. பனிமிதியடி; பனி நடைக்கட்டை.

snow'-shovel, n. பனிவாரு தட்டு.

snow'-slip, n. சறுக்கு பனிப்பாறை.

snow'-storm, n. பனிப்புயல், பனிச்சூறை.

snow'-white, a. பனிபோல் வெள்ளிய.

snow'y, a. பனி மிகுந்துள்ள; பனிமூடப்பட்ட; திண் பனி போன்று வெண்மையான; தூய வெண்மைநிறமான; தூய்மையான; (தொ.) snowy owl, பெரிய வெள்ளைநிற ஆந்தை வகை.

snub, n. மொட்டைக்கண்டிப்பு; சப்பையடி, மட்டையடி; மதிப்புக்குலைப்பு; மானக்குலைவு; இடைநிறுத்தீடு; திடீர் நிறுத்தம்; வாயடைப்புவாதம்; (அரு.) சப்பை மூக்கு, குறுங்குத்து மூக்கு; கட்டுத்தறி, குற்றி; a. மூக்குவகையில் சப்பையான, குறுங்குத்தான; மூக்குவகையில் மேல்நோக்கி வளைந்த நுனியுடைய; v. மொட்டையாகக் கண்டி; வெடுக்கெனத் திட்டு; அதட்டியடக்கு; கண்டித்தடக்கு; மட்டந் தட்டிவிடு; குறுக்கிட்டு வாய்மூடுவி; அவமதித்தடக்கு; அடக்கி இழிவுபடுத்து; மூட்டுத்தனமாக இழிவுபடுத்து; திடுமென நிறுத்து, இடைமறித்து நிறுத்து; வளர்ச்சி தடைப்படுவி; கப்பலைத் தடுத்துநிறுத்து; கப்பல்கட்டுதறியிற் கயிறு சுற்றுவதனுல் கப்பற்போக்கை நிறுத்து.

snubb'er, n. மட்டந்தட்டுபவர், மொட்டைக் கண்டிப்பாளர்; கட்டுதறி; அதிர்ச்சி தாங்கி.

snubb'ing, n. கடுந்திட்டு; மொட்டைக்கண்டனம்; அதிரடி.

snubb'ing-post, snub'-post, n. குதிரைக் கட்டுதறி; படகுக் கட்டுதறி.

snuff[1], n. உறிஞ்சுதல், மோப்பம்பிடித்தல்; மூக்குத்தூள்; மூக்கு உறிஞ்சு மருந்துப்பொடி; சிட்டிகையளவுப்பொடி; பொடியிடல்; சீறல்; v. மூக்கினுல் உறிஞ்சு; மோப்பம் பிடி; மூக்குப்பொடியிடு; (தொ.) take thing in snuff, பிடிக்காமல் சீற்றமுறு, மனவருத்தப் பட்டுக்கொள்; up to snuff, நன்கு தெரிந்திருந்தே, ஏமாருத நிலையில்.

snuff[2], n. ஒளி மழுங்கச் செய்யும் புகைநெடிக்கரி; பயனில் எச்சம்; கசடு, மண்டி; பதர்; தேய்ந்த செருப்புத்தோல்; v. கரள்திரி அகற்று; மெழுகுதிரிக்கரி கத்தரி; கத்தரித் தணையச் செய்; பொன்றுவி, மாள்வி.

snuff'-&-butter, a. பழுப்புமஞ்சள் நிறமான.

snuff'-box, n. மூக்குத்தூள் சிமிழ், பொடிமட்டை.

snuff'-colour, n. மஞ்சள்பழுப்புநிறம், பொடிநிறம்.

snuff'-dish, n. மெழுகுதிரிக் கத்தரிக்கோல் வைப்பதற்குரிய தட்டு.

snuff'er, n. மூக்குப்பொடியர்.

**snuff'ers**, *n. pl.* மெழுகுதிரி விளக்கின் கரள்திரிக்கரிக் கத்தரிப்புக்கருவி.

**snuff'er-tray**, *n.* மெழுகுதிரிவிளக்கின் கரள்திரிக்கரிக் கத்தரிக்கோல் வைப்பதற்குரிய தட்டு.

**snuf'fle**, *n.* உறிஞ்சீடு; மோப்பம்பிடிப்பு, முகர்ந்துபார்த்தல்; மூககுறிஞ்சும் ஒலி; மூக்கியல்தொனி; மூக்கியல் தொனிக் குரல்; மூக்கியல்தொனிப் பேச்சு; *v.* மூக்குறிஞ்சு; மோப்பம் பிடி; மூக்குறிஞ்சுவதுபோன்ற ஒலி எழுப்பு; மூக்கினூற் பேசு; மூக்கினுள்ளாக முனகு; நீர்க்கோப்புக் கொண்டவரைப் போலப் பேசு.

**snuff'-mill**, *n.* மூக்குத்தூள் தொழிற்சாலை; மூக்குப்பொடிச் சமிழ்

**snuff'-mull**, *n.* மூக்குப்பொடிச் சிமிழ்.

**snuff'y**, *a.* மூக்குத்தூள் போன்ற; மூக்குத்தூள் மணம் வீசுகிற; மூக்குத்தூள்பட்டு அழுக்காகிவிட்ட; மூக்குத்தூளின் தடம் உடைய; சடுசிடுப்பான; எளிதில் சீற்றங் கொளகிற.

**snug**, *a.* இன்கதகதப்பான; இன்னலகாப்பான; இன்பப் பாதுகாப்பான; நல்வாய்ப்பிழைவான; இன்ப நலத்துக் குகந்த; சொகுசுவாய்ந்த; ஓயிலார்ந்த; அரும் பொதிவான; இன்னைதுக்க நிலையான; பெரிதும் போதிய, மட்டான தேவைகளுக்கு முழுதும் போதுமான தாயிருக்கிற.

**snugg'ery**, *n.* அடைப்புகளினல் நன்கு சூழப்பட்ட இடம்; ஒருவரது தனிமறை அறை; பதுங்கிடம்; சத்திரத்தின் இன்தேறல் அறையடுத்த துணைக்கூடம்.

**snug'gle**, *v.* வெதுவெதுப்பிற்காக நெருங்கி நகர்ந்துகொள்; கதகதப்புநாடி நெருங்கியமர்வுறு; அருகழைத்து வைத்துக் கொள்; குழந்தையை அரவணைத்துக்கொள்.

**so**, *adv.* அப்படி; அவ்வாறு; அம்முறையில்; அவ்வண்ணம்; அவ்வளவு; அதுபோல; அதன்படி; இவ்வகையில்; இந் நிலையில்; இதன்பயனுக; இதே காரணத்தினுல்; இவ்வாருக; நாளடைவில்; படிப்படியாக; மிக, மிகுதியாக; எவ்வளவோ; அதேவிதமாக; என்றபடி; ஒருவழியாக; *conj.* எனில், என்ருல், எப்படியென்ருல்; என்றஅளவில்; என்றபடியே; என்ற அளவுக்கு; என்றவாருக; அதன்பின்; அப்படியே; அவ்வாறே; எனவே; ஆகவே; ஆதலினுல்; ஆகையினுல்; மொத்தத் தில்; *int.* நன்று; சரி; ஆகட்டும்; போதும்; அப்படியே நில்; அசையாதிரு; சும்மாயிரு; (தொ.) and so forth, and so on, என்றிவ்வாறே, என்றிப்படியே; இன்னேரனன பிற; not so much as, அவ்வளவிற்குக் குறைவாக, அதற்குச் சமமல்லாமல் or so, அல்லது அதற்குச் சற்றேறக் குறைந்த அளவாக; quite so, நீ சொன்னபடியே, அதுதான் சரி; so as, என்றவிதமாக, என்றிருக்குமானுல்; என்றபடி; so as to, பொருட்டு, நிமித்தமாக; so be it, சரி, இருக்கட்டும், நல்லது, அதுபற்றிக் கவலையில்லை; so far, so far forth, இந்த நேரம் வரை, இவ்வளவில், இம்மட்டிலும்; so help me God!, மன்பூர்வமாய் ஆணையிடுகிறேன்; so long, நாம் மீண்டும் சந்திக்கிறவரையில் வாழி; போய்வா; so long as, என்ற நிலை இருக்கும்வரை; so many, அத்தனை; என்ற அத்தனை; so much, அவ்வளவு; என்ற அளவில்; என்ற அளவுக்கு; so much as, என்ற அதே அளவுள்ள; so much for, இதோடு அது முடிந்தது, அதைப்பற்றி இனிபபேசவில்லை; so please you, தங்களுடைய தயவினுல், தாங்கள் திருவுளம் பற்றினுல்; so so, மிக நல்லதும் மிகத் தீயதுமல்லாத, நடுத் தரமான, முக்கியத்துவமற்ற; so—so, எந்த அளவோ அந்த அளவுக்கு; so that, என்ற நோக்கத்திற்காக; என்ற விளைவு எதிர்நோக்கி, என்ருகும்படி; so to say, so to speak, இப்படிச் சொல்லலாம் என்ருல்.

**soak**, *n.* ஊறித்தோய்வு; முட்டநனைவு; ஈர்ம்பதம்; *v.* ஊறப் போடு; ஊறித் தோய்வுறு; முட்ட நனைவி; முட்டநனைவுறு; நீர் ஈரம் வகையில் ஊடாகத் தோய்ந்து பரவு; பொருள் வகையில் நீர் அல்லது ஈரம் ஊடாகத் தோய்ந்து பரவப்பெறு; பொருள் வகையில் நீர்மம் உறிஞ்சு; நீர்ம வகையில் ஊறிப் பரவு; ஈர்ம்பதங் கொள், ஈரக் கனிவுறு; விடாமல் குடி; தொடர்ந்து மிகுதியாகக் குடி; கிடந்து குடி; பணம் கட்டணம் வரி முதலியவற்றின் வகையில் முறையற்ற வகையில் பறி.

**soak'age**, *n.* ஊறித்தோய்வு நிலை; ஊறவைப்பு; முட்ட நனைப்பு; முட்ட நனைவு; ஈரக்கனிவு, ஊறிச் செல்லுதல்; ஊறு நீர்மம், ஊறிப்பரவின நீர்மம்.

**soak'er**, *n.* நனைப்பவர்; நனைப்பது; உறிஞ்சுபவர்; உறிஞ்சுவது; விடாக்குடியர்; முற்ற நனைவிக்கும் மழை.

**so'-and-so**, *n.* இன்ன இன்ன பேர்வழி; இன்ன இன்ன பொருள்.

**soap**, *n.* சவர்க்காரக்கட்டி, சவர்க்காரம்; (இழி.) இச்சகம், முகமன், இன்பசப்புரை; *v.* சவர்க்காரமிடு; சவர்க்காரமிட்டுத் தேய்; சவர்க்காரம் பூசு; உடம்பில் சவர்க்காரக்கட்டி தேய்த் துக்கொள்; (தொ.) soap opera, வானெலிப் பகல் நிகழ்ச்சிக் கோவை; soft soap, நீர்மவடிவான சாம்பரச் சவர்க்காரம்; இச்சகப் பேச்சு, முகமனுரை.

**soap'-berry**, *n.* நெய்க்கொட்டான் கொட்டை.

**soap'-boiler**, *n.* சவர்க்காரம் செய்பவர், சவர்க்காரத் தொழிலாளர்.

**soap'-boiling**, *n.* சவர்க்காரஞ் செய்தல், சவர்க்காரத்தொழில்.

**soap'-box**, *n.* சவர்க்காரப்பேழை; வழிப்போக்குப் பேச்சாளர் மேடை.

**soap'-bubb'le**, *n.* சவர்க்காரநீர்க் குமிழி.

**soap'-nut**, *n.* நெய்க்கொட்டான் கொட்டை, பூவந்திக் கொட்டை.

**soap'-plant**, *n.* சவர்க்காரமாகப் பயன்படுங் கூறுடைய செடி வகை.

**soap'-pod**, *n.* சிகைக்காய்.

**soap'-root**, *n.* சவர்க்காரமாகப் பயன்படும் வேரையுடைய செடிவகை.

**soap'-stone**, *n.* சவர்க்காரக்கல், மாக்கல், பட்டுக்கல்.

**soap'-suds'**, *n. pl.* சவர்க்கார நுரைநீர்.

**soap'-works**, *n.* சவர்க்காரத் தொழிற்சாலை.

**soap'-wort**, *n.* நறுமண மலர்ச்செடிவகை.

**soap'y**, *a.* சவர்க்காரம் போன்ற; சவர்க்காரம் பூசப்பட்ட; சவர்க்காரம் ஊறிய; சவர்க்காரத்தின் இயல்புடைய; பிசுக் குள்ள; வழவழப்பான; பூசி மெழுகுகிற; பசப்பலான; முகப்புகழ்ச்சியான.

**soar**, *v.* உயரப் பற, வானளாவப் பற; உயர்தளத்தில் வட்ட மிடு, உயர்வானவெளியில் சிறகடிக்காமல் மிதந்து தவழ்.

***soa've, soavemen'te***, (இத்) *adv.* (இசை.) இசைக்கட்டளை வழக்கில் மென்னயமாக, இன்கனிவுடன்.

**sob**, *n.* விம்மல்; விம்மியழுகை; இணைவு; *v.* விம்மியழு, தேம்பியழு, தேம்பு; சோர்ந்து இணைவுறு.

**sob'er**, *a.* மருளற்ற, மயங்காத; குடிமயக்கமற்ற; மிதக்குடிப் பழக்கம் உடைய; வெறியற்ற; உணர்வமைதி வாய்ந்த; மிகை எழுச்சியற்ற; தன்னடக்கம் வாய்ந்த; அமைந்தடங்கிய; குமுறலற்ற, கலங்காத, ஆர்ந்தமைந்த; நல்லறிவு நிலையி லுள்ள; அறிவுத்தெளிவுடைய; அமைவடக்கமான; வரம்பு மீறிய கிளர்ச்சியற்ற; நடுநிலையமைதி வாய்ந்த; மிகைப்படுத் தப்படாத; நேரியலான, புனைவல்லாத; மட்டியலான; நிலை யமைவான, மாறிக்கொண்டேயிராத; நிற வகையில் பகட் டாகத் தோன்ருத, மென்னய அமைதி வாய்ந்த; *v.* மட் டாக்கு, மட்டமைதிப்படுத்து; எழுச்சி தணி; நடுநிலையமைதி யூட்டு; புனைவெழுச்சி மட்டுப்படுத்து; மட்டமைதியுறு; எழுச்சி தணிவுறு; நடுநிலையமைதியுறு; நேரியற்படு, புனை வெழுச்சி மட்டுப்படு.

**sob'er-sides**, *n.* அமைதியான எழுச்சியற்ற மனிதர்.

**sob'er-suited**, *a.* (செய்) துயருடுப்பு அணிந்த.

**Sobra'nje**, *n.* பல்கேரியநாட்டு மாமன்றம்.

**sobri'ety**, *n.* மிதக்குடி நிலை; மதுவிலக்கிய நிலை; தெளிந்த அறிவுடைய நிலை, சமநிலை, உணர்ச்சிவசப்படாத நிலை, அமைதி நிலை; வீறமைதி.

**sob'riquet**, *n.* சாட்டுப்பெயர்; புனைபெயர்.

**sob'-stuff**, *n.* அவலச் செய்தி; அழுகைப் படம்.

**soc'age**, *n.* ஊழிய மானியம்.

**so'-called**, *a.* என்ற பெயரால் அறியப்படுகிற; பெயரளவிலான.

**socc'age**, *n.*=socage.

**socc'er**, *n.* (பே-வ.) உதைபந்தாட்டம், இலக்குக்காவலர் தவிர வேறு எவரும் பந்தினைக் கையால் தொடக்கூடாதென்ற வரையறையினையுடைய காற்பந்தாட்ட வகை.

**sociabil'ity**, *n.* தோழமை.

**so'ciable**, *n.* திறந்த ஈரெதிரெதிர் சாய்விருக்கை நாற்சக்கர வண்டி; ஈரிணைவிருக்கை மிதிவண்டி; ஈரிணைவிருக்கை முச்சக்கர மிதிவண்டி; எதிரெதிர் கவைச் சாய்விருக்கை, எதிரெதிர் அமர்விற்குரிய வளைவெதிர் வளைவு வடிவமான இணைவிருக்கை; *a.* கூடிப்பழகும் இயல்பு வாய்ந்த; சமுதாயப் பழக்கத்துக்குகந்த; எளிதில் கலந்துரையாடுகிற; தாராளமாக ஊடாடிப் பழகுகிற; பிறருடன் எளிதில் உரையாடி மகிழ்கிற; கூடியிருப்பதற்குகந்த; சமுதாய வெறுப்பற்ற; தோழமை விரும்புகிற; கூட்ட வகையில் நட்பிணக்கம் வாய்ந்த; விதிமுறை வற்புறுத்தலற்ற; விறைப்பாய் ஒதுங்கியிராத; எளிதில் அடுத்துப் பழகுவதற்கு இடமளிக்கிற.

**so'ciableness**, *n.* சமுதாய ஒப்பரவு.

**so'ciably**, *adv.* நட்பிணக்கமாக; சமுதாயத் தோழமையுணர்ச்சியுடன்.

**so'cial**, *n.* பொது அளவளாவற் கூட்டம்; தோழமைக் கூட்டம்; விருந்துணவுக்குழாம், கூட்டருந்தற் குழூமம்; *a.* சமுதாயஞ் சார்ந்த; சமுதாயத்திற்குரிய; சமுதாயத்திலுள்ள; சமுதாய நோக்கிய; சமுதாய உறுப்பினர்களடங்கிய; சமுதாயப் பொதுவான; சமுதாயக் கூட்டான; கூடி வாழ்கிற; இணைந்து வாழ விரும்புகிற; கூட்டுவாழ்வு அவாவுகிற; தனிவாழ்க்கை விரும்பாத; ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்கிற; ஒன்றினை ஒன்று சார்ந்துள்ள; சமுதாயக் கூட்டுறவான; கூட்டாகத் தொழிற் பங்கீட்டினைக் கையாள்கிற; கூட்டில் அங்கமான; பொது அளவளாவலுக்குரிய; ஒத்துறவாடுகிற; ஒத்துணர்கிற; கூடிமகிழ்கிற; (தொ.) social plants, கூட்டு வாழ்வுச் செடிவகைகள்; social science, மன்பதை நூல், மனித சமுதாயத்தின் வளர்ச்சிபற்றிய ஆய்வுத்துறை; social security, சமூகப் பாதுகாப்பு, வேலையின்மையும் வறுமையும் தாக்காதிருப்பதற்குரிய நிலை; social service, பொதுநலத் தொண்டு; the social contract, சமூக ஒப்பந்தம், அரசியல் சமூகத்தாருக்கும் அரசுக்கும் இடையே வெளிப்படையாகவோ குறிப்பாகவோ நிகழ்ந்ததாக அறிஞர் ரூசோ (Rousseau) கொண்ட ஒப்பந்தம்; சமூக ஒப்பந்தம் என்ற அறிஞர் ரூசோவின் ஏடு; the social evil, பரத்தைமை; the Social war, ரோம் அரசின் இத்தாலிய நட்பு நாடுகள் தங்களுக்கு ரோமின் குடிமக்கள்நிலை வழங்குமாறு ரோம் அரசின்மீது கி. மு. 90 முதல் 88 வரையில் நடத்திய போர்.

**so'cialism**, *n.* பொதுநலக்கூட்டுத் தத்துவம், சமதருமம்; உடைமைப் பொதுமைக் கோட்பாடு, பொதுநலனை முன்னிட்டுத் தனிப்பட்டவர்களின் உரிமையைக் கீழ்ப்படுத்த வேண்டுமென்னுங் கோட்பாடு; (தொ.) Christian socialism, கிறித்தவ சமதருமம், கிறித்தவ அறநெறி அடிப்படையாகக் கூட்டுப் பொதுநலம் நாடும் 19-ஆம் நூற்றாண்டிடைப் பகுதிக்குரிய இயக்கம்; socialism of the chair, சீர்திருத்தச் சமதருமம், தொழிற்சாலைச் சட்டங்கள் நோய் மூப்புக்காப்பீடு முதலியவற்றால் பாட்டாளி மக்கள் நிலைச் சீர்ப்பாடு நாடிய கோட்பாடு.

**so'cialist**, *n.* சமதருமவாதி, பொதுநலக் கூட்டுக்கொள்கைப் பற்றாளர்.

**socialis'tic**, *a.* சமதரும அடிப்படையான; கூட்டுப்பொதுநலஞ் சார்ந்த; சமதருமக்கொள்கை சார்ந்த.

**socialis'tically**, *adv.* சமுதாயக் கூட்டடிப்படையில்; சமதரும முறையில்; கூட்டுப் பொதுநலமாக.

**so'cialite**, *n.* நயநாகரிகச் சமுதாயத்தில் இடம் பெற்றவர்.

**social'ity**, *n.* சமுதாயச் சார்பாயிருத்தல்; சமுதாயச் சார்பு; சமுதாயத் தொடர்பு; சமுதாயப் பழக்கம், கூட்டு வாழ்வுப் பண்பு; நட்பூடாட்டம்; கூடிக்களிப்பு; கூட்டுறவுப்பான்மை; அளவளாவற் பாங்கு; சமுதாய நடைமுறைச் சடங்கு, சமுதாய ஆசாரம்.

**so'cialize**, *v.* சமுதாயஞ் சார்ந்ததாகப்பண்ணு, கூட்டுப் பொதுநல அடிப்படையின்பேரில் நிறுவு.

**soci'ety**, *n.* மன்பதை, சமுதாயம், கூட்டுவாழ்வுக்குழு; கூட்டிருக்கை; நட்புக்குழு; தோழமை; சேர்க்கை; சமுதாய வாழ்வு; சமுதாயப்பாங்கு; சமுதாய அமைப்பு; சமுதாயப் பழக்கவழக்கத் தொகுதி; குடிமை, உயர்குடி வகுப்பு; நாகரிக சமுதாயம்; நாகரிகப்பண்புக் குழு; பண்புடையோர் குழு; மேனிலைமக்கள் தொகுதி; மேனிலை வகுப்பு: மேனிலைத் தொடர்புடையோர் குழு; உயர் விருந்தோம்பற் சூழல்; சங்கம், கூட்டுக்கழகம், கூட்டுறவுக் குழு; சேவைக்குழு, கொள்கைக்குழு; கோட்பாடு வரையறையுடைய கழகம், பொதுக் குறிக்கோட் கழகம்; *a.* நவநாகரிகக் குழுவினருக்குரிய; உயர்வகுப்பினர்களுக்கான; உயர்குடியினரிடையே ஊடாடுகிற; நாகரிகப் பாங்குடைய; உயர் வகுப்பினரிடையே வழங்குகிற; (தொ.) pests of society, சமுதாயக் கீடங்கள், சமூகத்தினைக் கெடுத்து வாழ்பவர்கள்; Royal Society, 1662-இல் நிறுவப்பட்ட பிரிட்டனின் தேசிய அறிவியல் வளர்ச்சிக் கழகம்; Society of Friends, ஓசைபடாச் சேவையில் முனைந்த கிறித்தவ கிளைச்சமயக் குழுவினர்; Society of Jesus, (சு-வ; S.J.) இக்னேஷியஸ் லயோலா (Ignatius Loyola) என்பவரால் 1533-இல் நிறுவப்பட்ட இயேசுநாதர் சங்கம்; society verse, நடப்புச் செய்தி பற்றிய எளிய நகைச்சுவை வாய்ந்த செய்யுள் வகை; the Societies, 1681 முதல் அமைக்கப்பட்டு ரிச்சர்டு காமிரான் (Richard Cameron) என்பவரைப் பின்பற்றும் கிறித்தவசமயக் குழுவினர்.

**Socin'ian**, *n.* இத்தாலி நாட்டில் 16-ஆம் நூற்றாண்டில் எழுந்த இறைமையியற் கோட்பாட்டினர்; *a.* 'சோசினஸ்' என்னும் பெயர்கொண்ட இருவரது கோட்பாட்டின்படியுள்ள, இத்தாலியில் 16-ஆம் நூற்றாண்டில் நிலவிய இறைமைக் கோட்பாட்டுப் பிரிவினைச் சார்ந்த.

**sociol'ogy**, *n.* மன்பதை நூல், மனித சமுதாயத்தின் வளர்ச்சி-இயல்பு-சட்டங்கள் ஆகியவைபற்றிய ஆய்வுத்துறை.

**sock**[1], *n.* குறுங்காலுறை, முட்டுவரை எட்டாக் காலுறை; வெப்ப நிலை காக்கும் புதைமிதி உள்வரித்தோல்; முற்கால ரோமாபுரிக் களிநாடக நடிகனின் மென்புதைமிதி; களிநாடகம்; (தொ.) pull up your socks, முயற்சிசெய்ய வலுவூட்டிக்கொள்.

**sock**[2], *n.* கைமுட்டி அடி; எறிபடைத்தாக்கு; *v.* முட்டிகொண்டு பந்தை ஏவியடி; எறிபடையால் தாக்கு; *adv.* முட்டியடியாக; எறிபடைத்தாக்காக.

**sock**[3], *n.* பள்ளிவழக்கில் மிகைநேரத் திண்பண்டம்; நொறு, சிறு தீனி; *v.* பள்ளி வழக்கில் தின்பண்ட விருந்தளி; நொறு வழங்கு; சிறுதீனி உட்கொண்டு பழகிவிடு.

**sockdol'ager, sockdol'oger**, *n.* (இழி.) தீர்வு அடி; தீர்மான வாதக்கூறு.

**sock'er**, *n.*=soccer.

**sock'et**, *n.* குதை குழி, குழைச்சுகுழிப் பொருத்தில் குழைச் சேற்கும் குழிவு; விழிப்பள்ளம்; எலும்புப் பொருத்துக் குழி; பல்லடிக் குழி; மெழுகுதிரிக் குழல்; குழிப்பந்தாட்ட மட்டையின் கோலடி அடி; *v.* குழிப்பொருத்தில் வை: தக்க குழிப் பொருத்து அமைவி; குதைகுழியில் வைத்துப் பொருத்து; குழிப்பந்தாட்ட மட்டையின் கோலடியாலடி.

**sock'eted**, *a.* குதைகுழியில் பொருத்தப்பெற்ற; குதைகுழியில் வைத்துப் பொருத்தப்பெற்ற; குழிப்பந்தாட்டப் பந்துவகையில் கோல்முனையால் தள்ளப்பட்ட.

**sock'et-pipe**, *n.* குழாய் ஏற்கும் குழாயின் அகல்முனைப் பொருத்து

**sock'eye**, *n.* கருநீல விலையுயர் மீன்வகை.

**socks**, *n. pl.* குறுங்காலுறை.

**so'cle**, *n.* (க-க.) பீட அடிப்பகுதி; பூங்குடுவைப் பீடம்; சிலையடிக்கட்டை.

**Socrat'ic**, *n.* சாக்ரட்டீஸ் (Socrates கி. மு. 469-399) என்ற கிரேக்க அறிஞரைப் பின்பற்றுபவர்; சாக்ரட்டீஸின் மாணக்கர்; *a.* பண்டைக் கிரேக்க அறிஞர் சாக்ரட்டீஸுக்குரிய; சாக்ரட்டீஸ் கோட்பாட்டுக்குரிய; சாக்ரட்டீஸின் முறைசார்ந்த; கடாவிடையாகச் செல்கிற, வினாவிடையாக இயல்கிற; (தொ.) Socratic irony, தெரியாத கேள்விபோல் விடைகூறுபவரின் அறியாமைகாட்டித் திண்டாட வைக்கும் பாங்கு; Socratic method, கடாவிடைமுறை, வினாவிடை ஆய்வுநெறி.

**sod**[1], *n.* புற்கரண், கரண்கட்டி; புற்கரண்பாளம்; புல்தளம், புல்தரை; புல்தரை மேல்பாளத்துண்டு; *v.* புற்கரணல் மூடு; புல்மேடிடு; புல்தரைப் பாளங்களை மேலிட்டு நிரப்பு; (தொ.) under the sod, கல்லறையில், புதைகுழியில்.

**sod**[2], *v.* seethe என்பதன் பழைய இறந்தகால வழக்கு.

**sod**[3], *n.* செயற்கைப்புணர்ச்சி ஆடவர், ஒத்த பாற்புணர்ச்சி ஆடவர்.

**sod'a**, *n.* உவர்க்காரம், வெடிய கரியகி, வெடியக் கரிய ஈருயிரகி; காரவளிநீர், பேரழுத்தமேற்றிக் கரிய ஈருயிரகையூட்டப் பட்ட குடிநீர்.

**sod'a-fountain**, *n.* காரவளிநீர்ச் சேமிப்புத்தொட்டி; காரவளிநீர் சேமிப்பு வாய்ப்புடைய அருந்துமனை; காரநீருக்கான அழுத்தப்பொறி.

**sodal'ity**, *n.* சமயச் சார்புடைய தோழமைக் கூட்டுறவுக் குழுமம்.

**sodd'en**[1], *a.* நீர்மத்தில் தோய்ந்த; நீர்மத்தில் செறிவுற்றூறிய, முட்ட நனைவுற்ற; திண்பசைவான, ரொட்டி வகையில் பிசைந்த மாப்போன்ற; கனமான; ஈரமான; குடியிலூன்றிய தோற்றமுடைய; மட்டியான, மந்தமான; *v.* நீர்மத்தில் தோய்; முற்றிலும் நனை; ரொட்டி வகையில் மாப்போன்றதாக்கு; கனமானதாக்கு; ஈரமானதாக்கு; நனைவுறு; தோய்வுறு; ஈரமாகு; ஈரப்பசையுடையதாகு.

**sodd'en**[2], *v.* seethe என்பதன் பழைய முடிவெச்ச வழக்கு.

**sodd'enness**, *n.* நீர்மத் தோய்வுநிலை; முழுநனைவு; ஈரப்பசைப்பு; ரொட்டிவகையில் மாப்போன்ற நிலை; பசைக்கெட்டிநிலை; ஈரமான நிலை.

**sodd'ing**, *n.* புற்கரண் பொதிவு; *a.* புற்கரணிட்டு மூடுதற்குதவுகிற.

**sodd'y**, *a.* புற்கரணூர்ந்த, புல்மேடான.

**sodi'c**, *a.* வெடிய மூலக்கூறு சார்ந்த.

**sod'ium**, *n.* வெடியம், உப்பின் மூலத்தனிமம்.

**sod'omite**, *n.* ஒருபால் புணர்ச்சி ஆடவர்.

**sod'omy**, *n.* முட்டிமை.

**soev'er**, *adv.* இருப்பரேயாயினுங் கூட; இருக்குமேயானுலுங் கூட.

**sof'a**, *n.* அகல் தவிசு, நீள் சாய்விருக்கை; சாய்வுக்கட்டில்.

**sof'a bed**, **sof'a bedstead**, *n.* தவிசணை, பகலில் இருக்கையாகப் பயன்படும் படுக்கை.

**soff'it**, *n.* மச்சடிச் சித்திரம்; வளைவடிச் செதுக்குமானம்; படிக்கட்டடி வரைவொப்பனை, விட்ட அடிச்சிற்பம்.

**sofi'**, *n.* = sufi.

**sofi'sm**, *n.* = sufism.

**soft**, *n.* அறிவுரமற்றவர்; *a.* மென்மையான; மெத்தென்ற; பசுமையான; மெல்லிழைவான; மிருதுவான; சொரசொரப்பற்ற; நெகிழ்வான; தொய்வியலான; அமிழ்வியலான; குழைவுடைய; மசிவான, நொசிவான; தகடாக அரைக்கத்தக்க; இழைவுடைய; கம்பியாக இழுக்கப்படத்தக்க; மிகு தளர்த்தியான; தளர் தொங்கலான, தொப்புத்தொப்பென்ற; நீர் வகையில் கனியுப்புச் சத்துக்களற்ற; சமையலில் மென்பொலிவுள்ள; சலவையில் மென்கலிப்புள்ள; வான் வகையில் மந்தாப்பான; வானிலை வகையில் சிலுசிலுத்த, மழைவாட்டமான; பனிக்கட்டிவகையில் உருகுநீரார்ந்த; ஈர்ம்பதமான; அமைதி வாய்ந்த; அமைந்த தோற்றமுடைய; சுமுகமான; அமைவடக்கமான; சௌமியமான; கோமளமான; மட்டியலான, மிதமான; உருவரை வகையில் முனைப்பற்ற; நிற வகையில் செறிவற்ற; வரைவகையில் மெல்லிழைவான; கோணவகையில் குழைவளைவான; மெல்லமைவான, மெத்தனமான; ஒலிவகையில் மெல்லினிமையான; ஓசைவகையில் தாழ்வான; உரத்ததல்லாத; நயமான, கரகரப்பற்ற; இழைவிசையான; உறைப்பற்ற; கடுஞ்சுவையற்ற; சுவைமுனைப்பற்ற; ஒளிமுனைப்பற்ற; ஒளிர்வு முனைப்பற்ற; கண்ணுறுத்தாத; பருவெட்டல்லாத; நல்லிணக்கமான; வணக்க இணக்கமான; கடுகடுப்பற்ற; சிடுசிடுப்பற்ற; கனிந்த, அளிந்த; இன்னயமான; இன்னலமான; உளக்கனிவுடைய; இரக்கம் வாய்ந்த; ஒத்துணர்வான, அனுதாபம் வாய்ந்த; எளிய; செயற்கெளிமை வாய்ந்த; கடுமையற்ற; உரமற்ற; உறுதியற்ற; வலுவற்ற; ஆண்மைகுன்றிய; மெல்லியல்பு வாய்ந்த; பெண்ணியலான; (ஒலி.) மெய்யெழுத்துக்கள் வகையில் தளர்வுறழ்வான; ஒலிகள்வகையில் மெல்லதிர்வான; *adv.* பைய, மெள்ள; பதுக்கமாக; *int.* சற்றுப்பேசாதிரு; மெள்ள; ஒரு சிறிதே பொறு! (தொ.) soft breathing, உரவற்ற மூச்சு; உரவற்ற ஒலிப்பு; soft coal, மட்கரி, நிலக்கீல் தரும் கற்கரி வகை; soft corn, தொய்வாணி, கால்விரலிடைத் தோற்காழ்ப்பு; soft currency, தாள்நாணயம்; soft drink, சாராயச் சத்தற்ற மது; soft goods, துகிற் சரக்கு; soft nothings, காதற் பேச்சுக்கள்; soft palate, அடியண்ணம்; soft pedal, இசைமேளத்தில் தாழ்குரல் மிதிகட்டை; soft roe, மீன் ஆண் கரு நீர்; soft sawder, பாராட்டுரை; முகமனுரை; புகழ்ச்சி மொழி; soft soap, நீராளமான சவர்க்காரம்; இச்சகப்பேச்சு; soft solder, மென்பற்றுசு, எளிதில் உருகும் உலோகங்களைப் பற்றவைப்பதற்குப் பயன்படுத்தப்படும் பொருத்துப்பொருள்; soft stone, இரும்பு; soft tack, (கப்.) அப்ப உணவு; soft wicket, மரப்பந்தாட்ட ஈர்ம்பத நிலம்.

**sof'ta**, (துரு.) *n.* இஸ்லாமிய சமயவிதிமுறை மாணவன்.

**soft'-boil**, *v.* அரைவேக்காடாற்று.

**soft'-boiled**, *a.* அரைவேக்காடான.

**sof'ten**, *v.* மென்மைப்படுத்து; கனிவுறுத்து; கனிவுறு; குண்டு வீச்சால் எதிரிபக்கத் தற்காப்பு வலுவைக் குறை.

**sof'tener**, *n.* மென்மைப்படுத்துபவர்; கனிவுறுத்துபவர்; நயமுறுத்துபவர்; மென்மைப்படுத்துவது, பதப்படுத்துவது; நீரை மென்மைப்படுத்தும் பொருள்; உலோகம் குழைவு படுத்தும் காப்பு.

**sof'tening**, *n.* நயப்படுத்துதல், நயப்பாடு, கனிவுறுத்துதல், கனிவுறவு; மூளைநலிவுக் கோளாறு.

**soft'footed**, *a.* மெல்ல நடக்கிற.

**soft'-hearted**, *a.* இரக்க நெஞ்சமுடைய.

**soft'-heart'edness**, *n.* இரக்க நெஞ்சமுடைமை.

**soft'ly**, *adv.* மென்மையாக, மெள்ள, பதமாக.

**soft'ness**, *n.* மென்மை, பசுமை; கனிவு; நயம்; நல்லிணக்கம்; நீரின் கனி உப்புச்சத்தின்மை; இழைவு, குழைவு.

**soft'-pedal**, *v.* இசைமேளத்தில் கட்டையைத் தாழ்த்தி மிதித்துத் தாழ்குரற் படுத்து.

**soft'-shell**, *n.* மென்ருேட்டு நண்டு; மென்ருேட்டு நண்டின உயிர்; *a.* மென்ருேடுடைய; கொள்கையில் மட்டியலான, அமைவியலான.

**soft'-shelled**, *a.* மென்ருேடுடைய; கொள்கையில் மட்டமைவான.

**soft'-soap**, *v.* சவர்க்கார நீர்மம் பூசு; தன் காரியத்துக்காக இன்பசப்புரை கூறு.

**soft'-spo'ken**, *a.* இன்னயமான குரலுடைய; இன்னயப் பண்பு வாய்ந்த; பேச்சுநளினம் வாய்ந்த.

**soft'-witted**, *a.* அறிவு முதிர்வுருத.

**soft'-wood**, *n.* ஊசியிலைக்காட்டு மரக்கட்டை.

**soft'y**, *n.* மண்டு, மட்டி, அறிவிலி.
**sogg'iness**, *n.* ஓதநீர்மை, நீர்மத் தோய்வு ; ஈரக்கசிவு.
**sogg'y**, *a.* நீர்மத்தில் தோய்ந்த ; நீரூறிய, தொப்பென நனைந்த ; ஓதமான, ஈரக்கசிவான.
**soh**, *int.* போதும் ! நிறுத்து ! இந்த அளவிலேயே நில் !
**Soho'** [1], *n.* வெளிநாட்டு அருந்தகங்களை மிகவுடைய லண்டன் மாநகர் வட்டகை.
**soho'** [2], *int.* குதிரை ஊக்கொலிக் குறிப்பு
***soi-disant***, (பிர.) *a.* தற்சூட்டான, தானே தனக்குச் சூட்டிக் கொண்ட ; தற்பாவனையான ; போலியான, நடிப்பியலான.
***soigne***, (பிர.) *a.* கவினுர்ந்த, மகளிர் ஒப்பனைப்பெட்டி வகையில் நுண்ணிய கைவினை வேலைப்பாடமைந்த.
**soil** [1], *n.* நிலம் ; மண் ; நிலவுலகக்கோளத்தின் மேற்பரப்புத் தளம் ; (தொ.) one's native soil, தாயக நிலம், பிறப்பிடச் சூழல்.
**soil** [2], *n.* மாசு ; கறை ; அழுக்குத்தடம் ; அழுக்கின் மேற் பூச்சு ; தூய்மைக்கேடு ; சாக்கடைக்குழி ; வேட்டையாடப் பட்ட விலங்கின் சதுப்புநிலப் பதுங்கிடம் ; *v.* அழுக்காக்கு ; மாசுபடுத்து ; கறைப்படுத்து ; தூய்மைக்கேடு செய் ; அழுக் கேற விடு.
**soil** [3], *v.* தழைவெட்டு, கால்நடைகளுக்குப் புதிதாக வெட்டப் பெற்ற பசுந்தழைத் தீவனம் இடு.
**soiled**, *a.* கறைப்பட்ட ; அழுக்கான.
**soil'less**, *a.* மட்பாங்கான நிலமற்ற, மண்ணற்ற.
**soil'-pipe**, *n.* கழிநீர்க் குழாய் ; கழிநீர் செல்லுங் குழாய்.
**soil'ure**, *n.* திட்டு, கறை.
**soil'y**, *a.* அழுக்கான.
**soir'ee**, *n.* மாலைநேரக் குழுமம் ; மாலைநேர உரையாடற் குழாம் ; அந்தி இசைக்குழு ; மாலைவேளைகூடும் சேவைநலக் குழாம்.
***soixante-quinze***, (பிர.) *n.* பேர்பெற்ற பிரஞ்சு துப்பாக்கி வகை, 1914-18 போரில் புகழ்பெற்றிருந்த 75 மில்லி மீட்டர் அளவுடைய பிரஞ்சு துப்பாக்கி.
**soj'ourn**, *n.* இடைத்தங்கல் ; குறுந் தங்கல்.
**soj'ourner**, *n.* குறுந் தங்கலர்.
**soke**, *n.* திணைநிலை முறைமன்றத் தீர்ப்புரிமை ; திணைநிலை முறைமன்றத் தீர்ப்புரிமையுடைய வட்டகை.
**Sol** [1], *n.* ஞாயிறு, கதிரவன்.
**sol** [2], *n.* (இசை.) கேள்வியின் ஐந்தாம் இசைமானம்.
**sol'a**, *n.* தட்டைப்பயிர் வகை ; நெட்டிவகை.
**sol'ace**, *n.* ஆறுதல் ; துயராற்றரவு, துன்பத்தில் தேற்றரவு நிலை ; நோவிடை ஆற்றரவு ; சோர்வகற்றும் செய்தி ; *v.* ஆறுதலளி, தேற்றரவு செய், துயராற்று ; சோர்வகற்று, முசிவுநீக்கு.
**so'lan, sol'an-goose**, *n.* கடற்பறவை வகை.
**solan'um**, *n.* அழகுத்தழைக் கொடிமலர்த் தோட்டச் செடியினம்.
**sol'ar**, *a.* ஞாயிற்றியலான ; கதிரவனுடைய ; பகலவன் தொடர்புடைய, ஞாயிற்றுக் கணிப்புமுறையான ; (தொ.) solar flowers, பகற்பொழுதில் சிலமணி நேரங்களே மலர்ந் திருக்கும் பூவினம் ; solar month, இரவி, சரியாகக் கதிரவ னாண்டின் பன்னிரண்டில் ஒரு பகுதி ; solar plexus, உந்தி நரப்புமுடி வலை ; solar system, கதிரவன் மண்டலம், கதிரவனுடன் கதிரவன் ஈர்ப்பாற்றலால் பாதிக்கப்படும் கோள்கள் கோளங்கள் ஆகியவற்றின் தொகுதி.
**sol'arism**, *n.* கதிரவன் புராணமரபுக்கதை மைய நம்பிக்கை.
**sol'arist**, *n.* கதிரவன் புராணமரபுக்கதை மைய நம்பிக்கையாளர்.
**solar'ium**, *n.* மருத்துவநலம் கருதிய கதிரொளிக் கண்ணாடி மனை, அழகுக்கதிரொளிக் கண்ணாடி மனை.
**solariza'tion**, *n.* வெயில்பட வைப்பமைப்பு.
**sol'arize**, *v.* வெயில்பட வை.
**sola'tium**, *n.* ஆறுதல் தொகை, இழப்பீட்டாற்றரவுப் பொருள்.
**sold**, *v.* sell என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.
**soldanell'a**, *n.* தோட்டப்பயிர்ச் மலைச்செடி வகை.
**sol'der**, *n.* பற்ருசு, உலோகங்களைப் பற்றவைத்திணைக்கப் பயன்படும் சிறுதிற உலோகம் ; பற்றுப்பொருள் ; இடையிணைப்பு ; சந்து செய்பவர் ; *v.* பற்ருசு வை ; பொடிவைத்து ஊது ; (தொ.) hard solder, உயர் கொதிநிலைப் பற்ருசு ; soft solder, இளங் கொதிநிலைப் பற்ருசு.
**sol'dering-iron**, *n.* பற்ருசுச் சூட்டுக்கோல், பற்ருசு வைக்கப் பயன்படும் கொதிநிலைச் சூட்டுக்கோல்.
**sol'dier**, *n.* பொருநர் ; படைவீரர் ; ஆர்வத்தொண்டுப் படைவீரர் ; விளையாட்டுப்பொம்மைப் படைவீரர் ; தனிப் போர்வீரர் ; நாட்டுப் பயிற்சிப்பணிப் படைவீரர் ; களப்படைத் தலைமைத் திறம் சான்றவர் ; போர்ச்சேவை புரிபவர் ; (கப்.) வேலைக் கழிப்பிணி, மட்டம் போடுபவர் ; வீரமுடையவர் ; வீரத் தோற்றமுடையவர் ; போர் அனுபவம் பெற்றவர் ; சமய மாற்ற மீ ஆர்வலர், சமயப்பணி வெறியர் ; படைவீர வகுப்புச் சார்ந்த எறும்பினம் ; விட்டில் வகை ; மீன்வகை ; செம்மீன் வகை ; கறையான் ; நண்டுவகை ; போர்வீரராகச் சிறுவரால் வைத்து விளையாடப்படும் பட்டையினையுடைய வாழையினம் ; சுவரின் இடை குத்துநிலைச் செங்கல் ; அதிட்ட வேட்டையாளர் ; *v.* படைவீரராகச் சேவைசெய் ; (கப்.) வேலைக்குச் செல்லாது நில் ; (தொ.) come the old soldier over, மிகுந்த பட்டறிவு காரணமாக மேலாண்மைத்தனம் செலுத்த முனைதலுறு ; every inch a soldier, முற்றிலும் போர்வீரத் தோற்றமுடையவர் ; முழுநிறை ஆற்றலுடைய போர்வீரர் ; old soldier, முதுவீரன் ; பட்டறிவாளன் ; காலிக் குப்பி ; சுருட்டு நுனி ; red soldier, பன்றி நோய்வகை ; soldier of Christ, கிறித்தவ மதமாற்ற ஆர்வலர் ; கிறித்தவ சமயப்பணி ஆர்வலர் ; soldier of fortune, பணிவேட்பர் ; soldier orchis, எஃகுக் குல்லாய் ஒத்த புறவிதழ்களுடைய பூ வகை ; soldier's wind, (கப்.) போய்வர ஏற்ற காற்று ; the unknown Soldier, அறியாப் போர்வீரன், தாய்நாட்டின் தியாகத்திற்கு எடுத்துக்காட்டாகத் தேர்ந்தெடுக்கப் பெற்ற 1914-18 உலகப் போரில் மாண்ட அடையாளம் அறியப்பெரு வீரனின் உடல்.
**sol'diery**, *n.* படைவீரர் குழாம் ; படைவீரப் பண்பு ; திணைநிலைப் படைவீரர் தொகுதி.
**sol'do**, *n.* இத்தாலியநாட்டு அரைப்பென்னி மதிப்புடைய காசு ; *pl.* sol'di.
**sole** [1], *n.* உள்ளங்கால் ; அடிபதி விலங்குகள் வகையில் அகங்கால் ; செருப்பு-புதைமிதி ஆகியவற்றின் வகையில் காலடித்தோல் ; காலுறை வகையில் உள்ளங்காற் பகுதி ; கருவிகளின் அடித்தளம் ; இயந்திர அடித்தளம் ; பொருளின் அடித்தடம் ; வண்டியில் அடிப்பலகை ; கலப்பை அடித்தட்டு ; குழிப்பந்தாட்ட மட்டையின் அடிக்கட்டை ; தச்சர் சீவுளியின் அடிப்பாளம் ; அடுப்பின் நிலத்தளம் ; கதவு-பலகணியின் அடிச்சட்டம் ; புத்தக மேலட்டை அடிவிளிம்பு ; அடிச்சில்லு, அடிக்கட்டுமானம் ; (மண்.) செருகு பாறையின் அடிப்பரப்பு ; *v.* செருப்புக்குக் காலடித்தோலிடு.
**sole** [2], *n.* தட்டை உணவுமீன் வகை.
**sole** [3], *a.* ஒரே ஒருவரான ; தனித்த, ஒரே ஒன்ருன ; தனி ஒன்ருன ; தனி ஒருவரான, பிறர்க்குரிமையற்ற, தனி உரிமையான ; பிறிதுவிலக்கான ; பிறருடன் பங்கு கொள்ளாத ; பிறிதுடன் கூறுபடாத ; பிறிது துணையற்ற ; உடனிணைவற்ற ; உடன் கூட்டற்ற ; (தொ.) corporation sole, தனி மனிதருரிமைப்பட்ட கூட்டாண்மை ; feme sole, (சட்.) மணமாகா மாது ; தனிச்செல்வநிலையுரிமையுடைய மணமான மாது.
**sole'-channel**, *n.* புதைமிதித் தையற் புதை பள்ளவரை.

sol'ecism, *n.* இழுக்கு, பண்புச்சோர்வு; இலக்கணப்பிழைக் கூறு; எழுத்துவழு; பேச்சுவழு; நடத்தைக் கோளாறு; மரபுவழு; ஆசாரப்பிழை; பண்புக்கோட்டம்; நாகரிக நடைத் தவறு.

sol'ecist, *n.* வழுவாளர்; செயற் சோர்வாளர்; தவறு செய்பவர்.

solecis'tic, *a.* இழுக்கான; வழுவுடைய; சோர்வுடைய, குறைபாடுடைய; சிறு தவறிழைக்கின்ற.

sole'-leather, *n.* புதைமிதியில் அழுத்தப்பெற்ற காலடித் தோல்.

sole'ly, *adv.* மட்டிலுமே, மாத்திரமே.

sol'emn, *a.* வீறுார்ந்த, பெருமிதமான; பயபக்தி தோற்று விக்கத்தக்க; அச்ச அமைதியூட்டுகிற; வினையார்ந்த; நடை முறை தவருத, முறைமை வழாத; பயபக்தியுடன் கூடிய; மதிப்பார்வமிக்க; சிறப்பு நிரம்பிய; மதிப்பேறிய தோற்றம் வாய்ந்த; பிறர் உளங் கௌவி ஈர்த்துத் தன்வயப்படுத்துகிற; ஆழ்ந்த உணர்ச்சியீடுபாடு உடைய; ஆர அமர முடிவெடுக்கப் பட்ட; மனப்பூர்வமாகச் செய்யப்பட்ட; திட்டமிட்டுச் செய்யப் பட்ட; ஆர்ந்தமைந்த; அமைவாரவாரமான; வேண்டு மென்றே வினைமை நீட்டித்துச் செய்யப்பட்ட; சடங்கொடு பட்ட.

sol'emnness, *n.* வீறமைதி; இறுமாந்த தன்னிறைவு; வினைமையமர்வு; வினைமை ஈடுபாடு; வீறுார்ந்த தன்மை; முறைவழாமை; மதிப்பார்வம்; மதிப்பார்வ அமைதி; ஆர் வமர்வுத் தன்மை; வினையார்ந்த தோற்றம்; பகட்டார வாரம், ஆரவார மதிப்பு; ஆழ்ந்தமைந்த ஈடுபாடு; துயரார்ந்த தோற்றம்; ஆரவாரச் செயல்நீட்டிப்பு; சடங்கியைவு.

solem'nity, *n.* வினைமுறைக்கூறு, சடங்கு; விழாமுறை, விழாக் கொண்டாட்டம்; மதிப்பார்வம்; பயபக்தி உணர்ச்சி; ஆர்வ நிறைவமைதி; வினைமை முக்கியத்துவம்; சிறப்பமைதி; மதிப்பார்வத் தோற்றம்; பற்றுார்வுத் தோற்றம்; பகட்டார வாரம்; ஆரவார அமைதி.

solemniza'tion, *n.* வினைமுறை நிறைவேற்றம்; வினைமுறை ஒழுங்கீடு; விழாமுறைக் கொண்டாட்டம்; திருமண வினை முறை ஒழுங்கீடு.

sol'emnize, *v.* வினைமுறை நிறைவேற்று; முறைப்படி கொண் டாடு; வினைமுறைப்படி முற்றுவி; வினைமுறைப்பட்டதாக்கு; வினைமுறை ஒழுங்குசெய்; சிறப்பமைவுடையதாக்கு; சிறப் புறக் குறித்துக்காட்டு; ஆசாரமாக்கு.

sol'emnly, *adv.* மதிப்பார்வத்துடன்; வினைமுறை வழாமல்; முறைப்படி; வீறமைதியுடன்; பகட்டாரவாரமாக; பயபக்தி யூட்டும் முறையில்.

sol'en, *n.* சிப்பிபோன்ற விதைவகை; ஈரோட்டுச் சிப்பியின வகை.

solen'oid, *n.* மின்கம்பிச்சுருள் உருளை.

sole'-plate, *n.* இயந்திர அடித்தட்டு.

sol'-fa', *n.* சுரவரிசை வாய்பாடுநிலை அறுதிமுறை; *v.* சுர வரிசை வாய்பாடு நிலை அறுதிசெய்.

solfe'ggio, *n.* சுரவரிசை வாய்பாடுநிலை அறுதி; சுரவரிசை வாய்பாட்டு ஆளத்திப் பயிற்சி.

solferi'no, *n.* கருஞ்சிவப்பு வண்ணச் சாயப் பொருள்.

soli'cit, *v.* வேண்டிக்கேள்; பரிந்துகோரு; வருந்தி வேண்டுதல் செய்; மன்றாடு; அணுகிக் கேள்; பரிந்தழை; கெஞ்சிக்கேள்; வற்புறுத்திக் கேள்; அணுகி ஆதரவு நாடு; வலிந்தழை.

solicita'tion, *n.* வேண்டுதல்; பரிவுக்கோரிக்கை, வற்புறுத்தி வேண்டுதல்; ஆர்வ அழைப்பு; ஆர்வ ஆதரவுக்கோரிக்கை; பொதுமகளிர் வலிந்தழைப்பு; பரிந்துரை, தூண்டுதலுரை.

soli'citor, *n.* பரிந்து கேட்பவர்; ஆதரவு கோருபவர்; வழக்கீட்டு ஆலோசகர்; வழக்குரைஞர்.

Soli'citor-General, *n.* அரசுத் தலைமை வழக்குரைஞர்; அரசியல்சட்டத் தலைமை ஆலோசகர்.

soli'citous, *a.* ஆவல் கொண்டுள்ள; வேணவாவுடைய; ஆர்வ விருப்புடைய; அக்கறை கொள்கிற; கவலைப்படுகிற.

soli'citously, *adv.* அக்கறையுடன், ஆர்வ விருப்புடன், கவலையுடன்.

soli'citude, *n.* ஆர்வ அக்கறை, உள்ளார்ந்த கவலை.

sol'id, *n.* பிழம்பு, நிலைச்செறிவுடைய அணுத்திரள் உருக் கோப்பு; திண்மம், மூவளவை உருப்படிவம்; *a.* பிழம்புரு வான; மூவளவைக் கூறுகளையுடைய; நீள அகல உயரங் களையுடைய; திட்பம் வாய்ந்த, குழைவற்ற; கெட்டியான; உட்பொள்ளலாயிராத; செறிவடிவமான; இடைவெளியற்ற; இடையீடற்ற; திண்ணிய; உறுதி வாய்ந்த; நிலைத்த ஒரு சீர் வடிவுடைய; ஒரே முழுமையான; முழு மொத்தமான; முற்றிலும் ஒருங்கிணைந்த; கட்டிறுக்கமான; உறுதியாகக் கட்டப்பட்ட; ஆழ்ந்த அடிப்படையிட்ட; திறமான; கட்டுறுதி யான; நம்பத்தக்க; தொட்டுணரத்தக்க; உண்மையான; தற்புனைவற்ற; போலியல்லாத; தாறுமாறுய் இல்லாத; அற்பமாயில்லாத; கணிசமான; பிழம்பியலான; திண்பொருள் சார்ந்த; நீரியலல்லாத; வளியியலல்லாத; அசையாத; உருப் படியான; படையணி வகையில் முகப்புநீளமொத்த உள்ளாழ முடைய; (தொ.) a solid man, உறுதியான நிதிநிலை உடைய வர்; செயற்கள அறிவு நிரம்பப்பெற்றவர்; a solid vote, ஒருமித்த வாக்களிப்பு; ஒருமனமான வாக்களிப்பு; ஐயுறவுக்கு இடமற்ற வாக்களிப்பு; உறுதியான தேர்தல் வாக்கு; be solid for, go solid for, ஆதரவளிப்பதில் உறுதியாயிரு; solid angle, பல்தளக் கோணம், ஒரு புள்ளியில் சந்திக்கும் பலதளக் கோணங்களின் தொகுதி; solid colour, வண்ண வகையில் முழுதுறழ்வான, ஒப்பனைப்படிவல்லாத; solid consideration, ஆழ்ந்த ஆய்வு; solid foot, கன அடி; solid printing, வரியிடையீடற்ற நெருங்கிய எழுத்தச்சு; solid square, ஒத்த ஆழமும் நீளமும் உடைய படையணி; solid tire, உட்புழைவு இல்லாத சக்கரப்பட்டை; the solid South, அமெரிக்க கூட்டரசில் தொடர்ந்து குடி யாட்சிக் கட்சிக்கு வாக்களிக்கும் தென் மாநிலத் தொகுதி.

solida'rity, *n.* கூட்டொருமை; கட்டொருமைப்பாடு; முழு மொத்தக் கட்டுப்பாட்டுணர்வு; கூட்டுப் பொறுப்புணர்வு.

sol'idary, *a.* கட்டொருமைப்பாடுடைய; கூட்டுப்பொறுப்பு வாய்ந்த; பல்கூட்டிணைவான.

sol'id-drawn, *a.* திண்ணிழைவான, குழாய்வகையில் கெட்டிக் கம்பியிலிருந்து இழுக்கப்பட்ட.

solid'ifiable, *a.* இறுகுவிக்கத்தக்க, செறிவூட்டப்பெறக் கூடிய.

solidifica'tion, *n.* உறைவிப்பு; இறுகுவிப்பு; உறைவு; இறுகுதல்; நீர்ப்பொருள் கெட்டிப்பொருளாதல்.

solid'ify, *v.* திண்மமாக்கு, இறுகலாக்கு, நீர்மப் பொருளைக் கெட்டிப்பொருளாக்கு; உறை, இறுகு, கெட்டியாகு; திண்ணி தாகு, செறிவுறு.

solid'ity, *n.* பிழம்பியல்பு; கெட்டிமை; செறிவு; திட்பம்; நிலைத்த தன்மை; நிலையமைதி; நல்லமைதி, உறுதி; பிழம் பளவு.

sol'idly, *adv.* கெட்டியாக; உறுதியாக; கட்டொருமையாக; முழுமனத்துடன்; இடையீடின்றி.

solidung'ular, solidung'ulate, *a.* ஒற்றைக் குளம்புடைய

sol'idus, (ல) *n.* (வர.) ரோமப் பேரரசர் கான்ஸ்டண்டைனல் வழங்கப்பெற்ற பொன் நாணயம்; ஆங்கில வெள்ளிக் குறிப்பு

solifid'ian, *n.* நம்பிக்கை நியாயக் கோட்பாட்டாளர்; வீடு பேற்றிற்குக் கடவுள் நம்பிக்கையொன்றே போதும் என்னும் கோட்பாட்டாளர்.

solil'oquist, *n.* தனி மொழியாளர்; நாடகத்தில் தானே உரை யாடிக்கொள்பவர்.

solil'oquize, *v.* தனிமொழியாடு; தனிமொழியாக்கு.

solil'oquy, *n.* தனிமொழி; நாடகத் தனிமொழிப் பகுதி.

sol'iped, *n.* ஒற்றைக்குளம்பு விலங்கு, கவையடியில்லா விலங்கு; *a.* ஒற்றைக் குளம்புடைய.

**sol'ipsism,** *n.* (மெய்.) ஆன்மைக நித்தியவாதம், ஆன்மா ஒன்றே அறியத்தக்கதும் நிலைபேறுடையதும் ஆகும் என்னுங் கோட்பாடு.

**sol'ipsist,** *n.* ஆன்மைக நித்தியவாதி, ஆன்மா ஒன்றே அறியத் தக்கதும் நிலைபேறுடையதுமாகும் என்னுங் கோட்பாடுடையவர்.

**solitaire',** *n.* காதணி; சட்டைக் குமிழ்; ஒரேபாளமான சட்டைக் கைமாட்டி; பரற்குழிப் பலகை ஆட்டம்; பலகையில் சுழற்சிக்குண்டுகளால் ஆடும் பல்லாங்குழி போன்ற விளையாட்டு; தனி ஒருவர் சீட்டாட்ட வகை; அமெரிக்க பறவை வகை; தனிவாழ்க்கைத் துறவி.

**solitaire'-board,** *n.* பரற்குழி ஆட்டப் பலகை; பல்லாங் குழிப் பலகை.

**sol'itarily,** *adv.* தனிமையாக, தனிவாழ்வாக, தனிவாழ்வுப் பண்போடு; ஒதுங்கிய நிலையில், கூடிப்பழகாத நிலையில்.

**sol'itary,** *n.* துறவி, ஒற்றைக்கட்டை; *a.* தனிமை வாய்ந்த; தனித் தொதுங்கி வாழ்கிற; தனி ஒதுக்கப்பண்புடைய; கூடி வாழாத; சமுதாயக் கூட்டுவாழ்வுப் பண்பற்ற; துணையற்ற; ஒற்றையான; தனித்த, தனி ஒன்றான; ஒத்திணையற்ற; (தொ.) solitary ants, கூட்டமாய் வாழாத எறும்பு வகைகள்; solitary bees, கூட்டமாய் வாழாத தேனீ வகைகள்; solitary confinement, தனி அறைச் சிறையடைப்பு; தனி அடைப்பு; கண்காணுச் சிறையடைப்பு.

**sol'itude,** *n.* தனிமை; தனி இயலமைதி; ஏகாந்தம்; தனியிடம்; ஆள் நடமாட்டமற்ற இடம்.

**sol'mizate,** *v.* நிலைச்சுரமுறை கையாளு.

**solmiza'tion,** *n.* நிலைச்சுரமுறை; நிலைச்சுரமுறை கையாளுதல்.

**sol'o,** *n.* தனிக்குரலிசை, தனிக்குரல் வாய்ப்பாட்டு; தனிக் கைவரிசை ஆட்டம், சீட்டாட்டத்தில் தனிப்பொறுப் பாட்டம்; பக்கவண்டியில்லாத மோட்டார் சைகிள்; சீட்டில் ஐந்து பொறிக் கெலிப்புக் கேள்வி; விமான வகையில் துணையிலாத் தனிப்பறப்பு; *a.* துணையற்ற; தனியான; *adv.* துணையின்றி; தனியாக.

**sol'oist,** *n.* தனிக்குரலிசைஞர்; தனிக்கருவி இசைஞர்; விமானத் தனிவலவர்.

**Sol'omon,** *n.* புகழ்பெற்ற இஸ்ரேல்நாட்டு அரசர் பெயர்; தன்னேரில்லாப் பேர்றிவாளர்.

**Solomon'ic,** *a.* புகழ்பெற்ற இஸ்ரேல் அரசர் சாலமோனைச் சார்ந்த; சாலமோனின் வியத்தக்க அறிவாற்றல்களையுடைய.

**Sol'omon's seal,** *n.* அல்லியின மலர்ச்செடி வகை.

**Sol'on,** *n.* ஏதென்ஸ் நகர மனு, சட்டஞானி; மூதறிஞர்.

**sol'stice,** *n.* கதிர்த்திருப்பம், கதிர்மண்டலத் திரும்புமுகம், சங்கிராந்தி (ஜூன் 21, டிசம்பர் 22), கதிரவன் கதிர்வீதியில் எய்தும் இடம்.

**solsti'tial,** *a.* கதிர்த்திருப்பஞ் சார்ந்த, சங்கிராந்திக்குரிய.

**solubil'ity,** *n.* கரையுந்தன்மை.

**sol'uble,** *a.* கரையத்தக்க; புதிர்வகையில் விடுவிக்கத்தக்க; கடாவகையில் தீர்வுகாணத்தக்க, தெளிவுகாணக்கூடிய; (தொ.) soluble glass, செயற்கைக் கற்களைக் கடினப்படுத்தத் தயாரிக்கும் வெடியப் படிக்கக் கலவை; முட்டை முதலிய வைக்கப் பயன்படும் வெடியப் படிக்கக் கலவை.

**sol'us,** *adv.* நாடக அரங்க வழக்கில் தனியாக; தனிமையில்.

**sol'ute,** *n.* கரைவம், கரைசலிற் கரைவுற்ற பொருள்.

**solu'tion,** *n.* கரைவு; கரைவுநிலை; கரைசல்; நீர்மத்தில் நீர்ம இழைக் கலவை, நீர்மத்தில் வளி இழைக் கலவை; ஐயந்தீர்வு; புதிர் விடுவிடுப்பு; விளக்கம்; தீர்வு முடிவு; தொய்வகக் கரைசல்; கூறு பிரிப்பு; தனிப்பு, தனித்துப் பிரிக்கப்பட்ட நிலை; ஆக்கச் சிதைவு, கூட்டுப் பிரிவீடு; இணைவறவுக் கோளாறு; நோய்நெருக்கடிக் கட்டம்; *v.* தொய்வகக் கரைசல் புறவரியிடு; தொய்வகக் கரைசலால் ஒட்டு; தொய்வகக் கரைசலாற் செப்பனிடு; (தொ.) in solution, கரை நிலையில்; உறுதியற்ற நிலையில், மாறுபடுநிலையில், தெளிவாக உருப்படா நிலையில்; solution of continuity, அறுவை மருத்துவம் வகையில் முறிவு காரணமாகத் தசைநார்கள் தனிப்படுத்தப் பெற்றிருக்கும் நிலை; solution of triangles, கோணியல் வகையில் மறுகூறு தீர்வு, முக்கோணத்தில் அறு கூறுகளில் தராதன காணும் முறை.

**solu'tional,** *a.* கரைசல் சார்ந்த, கரைசலான; தீர்வு சார்ந்த; தீர்வான.

**solu'tionist,** *n.* புதிர்விளக்கவாணர், செய்தித்தாள் புதிர்கள் விடுவித்தலைத் தொழிலாக உடையவர்.

**sol'utive,** *a.* கரைகிற; கரைக்கும் இயல்புடைய; இளக்குகிற.

**Solut'rian,** *a.* குகைமனித நாகரிககாலஞ் சார்ந்த, பிரான்சில் சொல்யூட்ரிக் குகையில் கண்டெடுக்கப்பெற்ற படிவங்களால் குறிக்கப்பெறும் பழங்கற்காலஞ் சார்ந்த.

**solvabil'ity,** *n.* கரையுந்தன்மை; தீர்வுநிலை, விடைகாணத் தக்க இயல்பு.

**sol'vable,** *a.* விளக்கக்கூடிய; சிக்கறுக்கக் கூடிய; விடை காணக்கூடிய; தீர்வுசெய்யத்தக்க; விடுவிக்கக்கூடிய; கரையக்கூடிய.

**sol'vate,** *n.* வரையளவு, கரைவி-கரைமம்-கரைவான்-கரைப்பான் ஆகியவற்றின் ஒரு குறிப்பிட்ட அளவு இணைப்பு.

**solve,** *v.* கரை, நீர்மத்திற் கலந்திழைவி; அவிழ்வுறுவி; முறுக்கவிழ்; தளர்த்து; புதிர்விடுவி; கடாவகையில் தீர்வு செய்; சிக்கறு; விளக்கு; தெளிவாக்கு; விடைகாண்.

**sol'vency,** *n.* கரைதிறம்; இணைதிறம்; கடன்தீர்வுத்திறம்.

**sol'vent,** *n.* கரைமம், கரைக்கும் ஆற்றலுடை நீர்மம்; கரைப்பி, இணையும் பொருளைத் தன்வயப்படுத்தி இழைவிக்கும் ஆற்றலுடைய பொருள்; கரைப்புத்திறப் பண்பு, நம்பிக்கை பழக்கவழக்க மரபுகள் வகையில் படிப்படியாக மெல்லத் தன்வயமாக்கிவிடும் பண்பு; *a.* கரைதிறமுடைய; இணை திறமுடைய; இணைந்து வயப்படுத்தும் ஆற்றலுடைய; சேர்ந்து முனைப்பழிக்கும் திறமுடைய, நம்பிக்கை பழக்க வழக்கமரபுகள் வகையில் இணைந்து படிப்படியாகத் தளர்த்தியகற்றும் பண்புடைய; செயலோடியான, கடன்தீர்வுத் திறமுடைய, கடன்தீர்த்துத் தொழிலைத் தொடர்ந்து நடத்துந் திறலோடிருக்கிற.

**solv'er,** *n.* கரைப்பது; கரைப்பவர்; விளக்குபவர், விடுவிப்பவர்; விடைகண்டுபிடிப்பவர்; சிக்கறுப்பவர்.

**somat'ic,** *a.* உடற்கூறு சார்ந்த, உடற்பிழம்பியலான, உடல் சார்ந்த, உயிர்க்கூற்றிற்குப் புறம்பான, மனஞ்சாராத; (தொ.) somatic death, முழு உடம்பழிவு.

**somatogen'ic,** *a.* உடம்பில் தோன்றுகிற, உடலிற் பிறக்கிற இயல்புடைய.

**somatol'ogy,** *n.* உடலுயிரியல்நூல், உயிருள்ள உடலைப் பற்றிய ஆய்வுத்துறை; பொருள்களின் நிலையியக்க அளவை ஆய்வியல்; உடல்மெய்க்கூற்றியல் நூல்; உடல் உள்ளுறுப்பியல், உடலியல் ஆய்வுத்துறை.

**som'bre,** *a.* இருளார்ந்த; மங்கலான; கிளர்ச்சியற்ற; சோர்வூட்டுகிற; துயரம் நிரம்பிய.

**sombrer'o,** *n.* அகல் விளிம்புத் தொப்பி.

**som'brous,** *a.* = (செய்.) sombre.

**some,** *pron.* சிலர்; சில; கொஞ்சம், சிறிது; ஏதோ கொஞ்சம்; ஒரு சிறிதளவேனும்; *a.* ஏதோ சில; இனமறியப்படாத சில; யாரோ ஒரு; ஏதோ ஒரு; குறிப்பிட்ட சில; கொஞ்சம், ஒருசிறிது; கணிசமான சில; போதிய அளவான சில; குறிப்பிடத்தக்க சில; மட்டான சில; போதிய அளவான; கணிசமான அளவுடைய; குறிப்பிடத்தக்க அளவான; எதிர்பார்த்ததிலும் மிகுதியான; போற்றத்தக்க அளவான; மதிப்பான சில; ஓரளவாகக் குறிப்பிடத்தக்க; புறக்கணிக்கத்தகாத அளவான; சிறிதளவாவது; குத்தாயமான, சற்று ஏறத்தாழ்வான; *adv.* (இழி.) ஓரளவில்; (தொ.) some one else, வேறொரு ஆள்; வேறு யாரோ ஒருவர்; some one else's, வேறு ஒருவருடைய.

**some'body**, *n.* குறிப்பிடத்தக்கவர், பெருஞ்சுட்டு; *pl.* some'bodies; *pron.* யாரோ ஒருவர்; இனமறியப்படாத ஒருவர்.

**some'how**, *adv.* எப்படியோ, ஏதோ ஒரு வகையில், எவ்வாறேனும்; ஏதோ ஒருவழியாக.

**some'one**, *n.* குறிப்பிடத்தக்கவர், முக்கியமானவர்; *pron.* யாரோ ஒருவர்; இனமறியப்படாத ஒருவர்; பழக்கப்படாத ஒருவர்; புதிதான ஒருவர்.

**so'mersault**, *n.* குட்டிக்கரணம், தலைகுப்புறவீழ்வு; *v.* குட்டிக்கரணமிடு; (தொ.) double somersault, இரட்டைக் குட்டிக்கரணம்.

**so'merset**[1], *n.*, *v.* = somersault.

**so'merset**[2], *n.* துடுப்பியற் சேணம்; வளையச் சேணம்

**Somerset House**, *n.* ஆவணச்சேமவைப்பு மனை, எண்பிக்கப்பட்ட ஆவணங்களும் - உள்நாட்டு ஆயத்துறை அலுவலகங்களுங் கொண்ட லண்டன் மாநகர மாளிகை.

**some'thing**, *pron.* ஏதோ ஒன்று; ஏதாயினும் ஒன்று; இனமறியப்படாத ஒன்று; நினைவில்லாத ஏதோ ஒன்று; சிறிதளவு; ஏதோ கொஞ்சம்; ஒத்துக்கொள்ளப்படவேண்டிய அளவு; பாராட்டத்தக்க அளவு; பாராட்டத்தக்க செய்தி; மதிப்புவாய்ந்தவர்; *adv.* மட்டான அளவில்; ஓரளவு; சிறிது, சற்றே.

**some'time**, *a.* முன்னொரு நாளைய, முன்னொரு காலத்திய; *adv.* சில காலமாக, கொஞ்சநேரம், கொஞ்சநாளாக; ஏதோவொருசமயம்; ஏதோ ஒருகாலத்தில்; எப்பொழுதாவது ஒருசமயம்; முன்பு ஒருகாலத்தில்.

**some'times**, *adv.* சிலவேளைகளில்.

**some'way**, *adv.* ஏதோ ஒருவழியாக.

**some'ways**, *adv.* ஏதோ ஒருவழியில்; ஏதோ ஒருவகையில்.

**some'what**, *pron.* ஏதோ ஒரு சிறிதளவு; சிறிதளவே; *adv.* சற்றே; சிறிதளவில், ஓரளவில், ஏறக்குறைய.

**some'when**, *adv.* ஏதோ ஒரு சமயம், எப்போதோ ஒரு தடவை.

**some'whence**, *adv.* எங்கிருந்தோ.

**some'where**, *adv.* ஏதோ ஓரிடத்தில், ஒரோவிடத்து.

**some'whither**, *adv.* ஏதோ ஓரிடத்திற்கு.

**some'wise**, *adv.* ஏதோ ஒருவகையில், ஏதோ ஒருவழியாக.

**som'ite**, *n.* உடற்கண்டம், ஒருசீர்ப்பட்ட விலங்குடற் பகுதி; தசைத்துண்டம்.

**somnam'bulance**, *n.* துயில்நடைக் கோளாறு; உறக்கத்தில் நடத்தல்; துயிலியக்கப் பிணி; துயிலியக்கந் தூண்டும் மூளைக் கோளாறு.

**somnam'bulant**, *n.* துயில்நடையர்; *a.* உறக்கத்தில் நடக்கிற.

**somnam'bulate**, *v.* உறக்கத்தில் நட.

**somnam'bulism**, *n.* துயில்நடை; துயில் இயக்கம்; துயில் நடைப்பண்பு; துயிலியக்கந் தூண்டும் மூளை நிலை; (தொ.) artificial somnambulism, துயில் வசியம்.

**somnif'erous**, *a.* உறங்கச்செய்கிற, உறக்கந்தூண்டுகிற; மயக்கந் தருகிற.

**somnil'oquence, somnil'oquism**, *n.* உறக்கத்திற் பேசும் பழக்கம்.

**somnil'oquist**, *n.* உறக்கப் பேச்சாளர்.

**somnil'oquous**, *a.* உறக்கத்திற் பேசும் பழக்கமுடைய.

**somnil'oquy**, *n.* = somniloquence.

**somnip'athist**, *n.* துயில் வசியத்திற்கு ஆளானவர்.

**somnip'athy**, *n.* துயில்வசியம்.

**som'nolence, som'nolency**, *n.* தூக்க மயக்கம், உறக்கச் சடைவு; துயில்நிலை; உறக்கமயக்க நிலை.

**som'nolent**, *a.* தூக்கமயக்கமுடைய; உறக்கச்சடைவான; அரைகுறைத் தூக்கநிலையிலுள்ள; சோர்வுள்ள; உறக்கந் தூண்டுகிற; (மரு.) அறிதுயில் நிலையான, விழிப்புநிலைக்கும் தூக்க நிலைக்கும் இடைப்பட்ட நிலையிலுள்ள.

**somnolesc'ent**, *a.* அரைத்துயில் நிலையான.

**som'nolism**, *n.* வசியத்துயில்.

**son**, *n.* மகன், புதல்வன்; ஆண்குழந்தை; கால்வழி, பின்மரபினன்; முதியவர் இளையவரை அழைக்கும் விளிக்குறிப்பு; (தொ.) one's father's son, தந்தையைப் போன்ற தனயன், தந்தைக்கேற்ற சிறப்புடைய மைந்தன்; son of a gun, திருட்டுப்பயல், இகழ்ச்சிக்குரியவர்; son of Belial, பேய் மகன், சைத்தான்குட்டி; நெறிகெட்டவர்; கடவுளால் கைவிடப்பட்டவர்; son of the soil, நாட்டுக்குடிமகன்; பழங்குடிமகன்; குடியானவர், வேளாளர்; வட்டவகையில் நன்கு அறிமுகமானவர்; son of toil, son of Mars, போர்வீரர்; Sons of Liberty, Sons of the American Revolution, Sons of the Revolution, அமெரிக்கநாட்டுப் பற்றுளர் அமைப்புக்கள்; the Son, the Son of God, சேய் இறை; the Son of Man, இயேசுநாதர், இறைவனுல் வாக்களிக்கப்பட்ட யூதரின் மீட்பாளர்; ஆதாமின் வழித்தோன்றல்.

**son'ant**, *n.* குரலொலி, மெல்லொலி; *a.* வன்கணமல்லாத, குரலொலியுடைய.

**sona'ta**, *n.* சில்வழி இசைப்பா, அடிப்படை இசைப்பு மாருமல் ஒரு கருவி அல்லது இரு கருவிகளுக்குரியதாய்ச் சந்த வேறுபாடுகளுடன் பாடப்படும் முக்கூறுபாடுடைய பதம்; (தொ.) sonata form, இருபொருள்மீது மாறிமாறிவரும் உருவாக்கப்பட்ட சில்வழி இசைப்பா.

**sonat'ina**, *n.* குறுஞ்சில்வழி இசைப்பா.

**song**, *n.* பாடல்; பாட்டு, இசைப்பா; எதுகை அமைந்த சிறு பாவகை; இசைப்பதம், சந்தயாப்பு; கவிதை; மிடற்றிசை, வாய்ப்பாட்டு, குரற்பாட்டு; பாட்டின் மெட்டு; பறவையின் இன்னிசைப்பு; வண்டினத்தின் முரல்வு; பண்ணூர் குரல்; பாட்டுக்குறிக்கும் பொருள்; வழக்கமான பண்பு; பேச்சுப்பயில்முறை; வகைமுறை; வீணுரவாரம்; அற்பச் செய்தி, சிறுதிறப்பொருள்; (தொ.) for a song, for an old song, மிகச்சிறுவிலை கொடுத்து, அற்பவிலையில்; song form, (இசை.) இசைப்பதம், முதற்பகுதியும் மூன்றும் பகுதியும் ஒத்திருந்து வேறுபட்ட இடைப்பகுதியுடைய முக்கூற்று இசைப்பாடல் அமைப்பு; Song of ascents, Song of degrees, மீட்புபெற்ற யூதர்கள் பற்றிய தாவீதின் பாட்டு; Song of Songs, Song of Solomon, சாலமனின் பாடலேடு.

**song'-plugging**, *n.* வல்லந்தப் பாடற் பரப்பீடு.

**song'-sparrow**, *n.* வேலியில் ஊடாடும் இசைப்பறவை வகை.

**song'ster**, *n.* பாடகர்; இசைஞர்; பாடும்பறவை; கவிஞர்.

**song'stress**, *n.* பாடகி, பாண்மகள்.

**song'-thrush**, *n.* இன்னிசைப் பறவை வகை.

**son'ic**, *a.* ஒலிசார்ந்த; ஒலியலைகளுக்குரிய; (தொ.) sonic barrier, ஒலிவிசை எதிர் அழுத்தம், ஒலிவிசையடுத்து வரும் வேகங்களுக்குக் காற்று எதிர்வழங்கும் எதிரமுத்த விசை.

**sonif'erous**, *a.* ஒலியுண்டாக்குகிற; ஒலிகடத்திச் செல்லுகிற.

**son'-in-law**, *n.* மருமகன், மகள் கணவன்.

**sonn'et**, *n.* ஈரேழ்வரிப்பா, பதினான்கு வரிகள் கொண்ட செய்யுள் வகை; சிறு உணர்ச்சிப்பாடல் வகை; *v.* ஈரேழ்வரிப்பா எழுது; ஈரேழ்வரிப்பாவினுற் போற்றிப்புகழ்; (தொ.) sonnet sequence, ஈரேழ்வரிப்பாத் தொடர்நிலைச் செய்யுள்.

**sonneteer'**, *n.* ஈரேழ்வரிப் பாவாணர்; *v.* ஈரேழ்வரிப்பா இயற்று; ஈரேழ்வரிப்பாவாற் பராவிப் பாராட்டு.

**so'nny**, *n.* சிறுகுறு புதல்வன்; புதல்வனைச்சுட்டிய விளிக்குறிப்புச்சொல்.

**son'obuoy**, *n.* வேவுமிதவை, வானூர்தியிலிருந்து கடற்பரப்பில் வீசப்பட்டுக் கடலடியில் நீர்மூழ்கி இயக்க விவரங்களைக் கண்டுணர்ந்து விமானத்துக்குத் தகவல் தெரிவிப்பதற்குரிய அமைவுடைய கடல் மிதவை.

**sonom'eter**, *n.* ஒலிமானி; செவிப்புல ஒலி உணர்வுமானி.

**sonores'cent**, *a.* கதிரலைவொலியுடைய, திண்தொய்வகம் போன்ற பொருள்களின் வகையில் வெப்பச்சுடரியக்க அலை களுக்கேற்ற ஒலி எழுப்புகிற.

**sonorif'ic**, *a.* ஒலிசெய்கிற ; மிடற்றொலி அல்லாத ஒலி எழுப்புகிற, ஒலிபடுகிற ; முழங்கொலி செய்கிற ; நிறை ஓசையுடைய ; மணியோசையுடைய, அடித்தால் கணீர் கணீர் என்று ஒலிக்கிற.

**sonor'ous**, *a.* ஆர்ப்பொலியுடைய; இரட்டுகிற ; முழங்கொலி செய்கிற ; நிறை ஓசையுடைய; உரத்த குரலுடைய; (தொ.) sonorous figures, ஒலியதிர்வு உருப்படிவங்கள், ஒலி அதிர் வால் மணற்பரப்பில் ஏற்படும் உருமாதிரிகள்; sonorous rale, நுரையீரல் நோய்களில் கேட்கும் நாடி இரைவு.

**son'sy**, *a.* கொழுகொழுத்த ; ஆகூழுடைய.

**sooj'ee**, (இ.) *n.* கோதுமை மா ; சுகியம், கோதுமை மாப் பண்டம்.

**soon**, *adv.* விரைவில், காலதாமதமின்றி ; குறுகிய காலத்தில்; சீக்கிரமாக ; குறிப்பிட்ட காலத்துக்கு முந்தியே, முன்ன தாகவே ; (தொ.) as soon as, அதே சமயத்திலேயே, என்ற வுடனேயே ; sooner or later, முன்னோ பின்னோ எப்போதா வது, கட்டாயம் ஏதாவது ஒரு சமயத்திலாவது.

**soop**, *v.* பெருக்கு, புழுதியகற்று.

**soot**, *n.* புகையொட்டு ; அட்டைக்கரி ; புகைக்கரித் தடம் ; புகைக்கரிக் கறை ; புகைக்கரி எரு ; *v.* கரிப்புகையால் மூடு.

**soot'-cancer**, *n.* ஒட்டடைப்பற்று, ஒட்டடையடிப்பவர் களுக்கு ஏற்படும் விதைப்பைநோய் வகை.

**soot'erkin**, *n.* கணப்படுப்பின்மேல் உட்காருவதால் வருவித் துக்கொள்ளப்படும் மறுகுழவி ; கருச்சிதைவு.

**soot'flake**, *n.* புகைக்கரி ஒட்டடை.

**sooth**, *n.* வாய்மை, மெய்ம்மை ; (தொ.) in good sooth, மெய் யாகவே.

**soothe**, *v.* நோவுவகையில் ஆற்று ; வேதனை வகையில் தணி ; துயர்வகையில் ஆறுதல் வழங்கு ; உணர்ச்சிகளை மட்டுப் படுத்து; மெல்லமைதிப்படுத்து; மெல்லமைவூட்டு; மென்னய வுரையாற்று ; இன்னுரை கூறி மகிழ்வி ; முகமனுரை ; தற்பெருமைக்கேற்றபடி பேசு ; உணர்ச்சிகளைத் தட்டிக் கொடு.

**sooth'er**, *n.* பால்குடி குழந்தைகளுக்கான தொய்வகச் செயற்கைப் பாற்காம்பு.

**sooth'fast**, *a.* உண்மையுள்ள ; நம்பிக்கைக்குரிய ; உறுதி யான, நிலையான.

**sooth'ing**, *a.* ஆறுதலான, உணர்ச்சிகளை மெல்லமைதிப் படுத்துகிற.

**sooth'ingly**, *adv.* தணிவாக ; சாந்தப்படுத்தும் வகையில் ; முகப்புகழ்ச்சியாக.

**sooth'sayer**, *n.* கணியர், நிமித்திகர்.

**soot'ily**, *adv.* புகைக்கரியால் அழுக்கடைந்து.

**soot'iness**, *n.* புகையார் தன்மை ; புகைக்கரி மாசு ; புகைக் கரியால் அழுக்கடைந்த தன்மை.

**soot'less**, *a.* புகையற்ற, புகைக்கரிபடாத.

**soot'-wart**, *n.*=soot-cancer.

**soot'y**, *a.* புகையார்ந்த ; புகைபோன்ற ; புகைக்கரி நிறமான, கரிய ; புகைபற்றிய, புகையடர்ந்த ; புகையடைந்து மங்கிய; புகைக்கரியால் அழுக்கடைந்த.

**sop**, *n.* வாயிரை, விலங்குகளை அமைதிப்படுத்த அளிக்கப் படும் உணவுத்துண்டம் ; வாய்த்திணி, தொல்லைதடுத்து வைப்பதற்குரிய சிறுபொருள் ; துவைச்சில்லு, ஆணத்தில் தோய்த்த பொங்கப்பத் துண்டு; தாண், காய்கறி-இறைச்சிச் சாறு ஆகியவற்றில் தோய்ந்த அப்பத்துணுக்கு, வாயுறை; மனக் குறை தணிப்பதற்கு அளிக்கப்படுவது; தேற்றுசலுகை, கையுறை, கைக்கூலி, இலஞ்சம் ; சேறு ; குட்டை; தோய்வு; *v.* அப்பத்துண்டினைக் காய்கறி இறைச்சி வேவூறலில் தோய வை; துண்டு முதலியவற்றால் உறிஞ்சுதல் மூலம் நீர்மம் ஒத்தி யெடு ; முட்ட நனைவுறு ; முட்ட நனைவி, தோய்வி, ஊறுவி; (தொ.) milk sop, ஊக்கமற்ற இளைஞன், செயல் தெம்பிலாத மனிதன் ; sop in the pan, பொரித்த அப்பம் ; sop to Cerberus, வாய்க்கரிசி, கைக்கூலி, இலஞ்சம்.

**soph'ism**, *n.* பொறிவாதம், வாத ஏய்ப்பு ; தெறிவாதம், குதர்க்கம் ; போலிவாதம்.

**soph'ist**, *n.* பண்டைய கிரேக்கரிடையே தொழில்முறைப் பயிற்சி ஊதியமற்ற வாத மெய்விளக்கியலாசான் ; வாயடி வாதி, குதர்க்கவாதி, போலிவாதஞ் செய்பவர் ; வாதப் புரட்டர்.

**soph'ister**, *n.* கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக வழக்கில் இரண்டா வது அல்லது மூன்றாவது ஆண்டு மாணவர் ; டப்ளின் பல் கலைக்கழக வழக்கில் மூன்றாவது அல்லது நான்காவது ஆண்டு மாணவர்.

**sophis'tic, sophis'tical**, *a.* போலி நியாயமான ; தெறி வாதமான, வாயடிவாதமான ; குதர்க்கமான ; ஏமாற்றுதற் கான போலி வாதஞ் சார்ந்த; வாதவகையில் போலிநுணுக்க ஆய்வுடைய.

**sophis'ticate**, *v.* போலிவாதப்படுத்து ; போலியாக வாத நுணுக்கம் பயிலு ; வாதத்திற்காகப் பொருளைத் திரித்துக் கூறு ; வாதத்துக்கியைய மூலபாடத்தைத் திரிக்க முற்படு ; தெறிவாதஞ் செய் ; குதர்க்கமுறை பயன்படுத்து; உலகியல் ஆரவாரப்பண்பேற்று ; எளிமைகெடு ; செயற்கைப் பண் பூட்டு ; போலியாக்கு; தேறல் வகையிற் கலப்படஞ் செய்.

**sophis'ticated**, *a.* சொற்புரட்டான ; வாதப்புரட்டான ; நடைமுறை அறிவடிப்படையான ; உலகியலாரவாரப்பண்பு பயின்ற, சமுதாயச் செயற்கைப்பண்பாடுடைய ; உலகியல் தெரிந்து அதற்கொத்து நடக்கிற; உருட்டுப்புரட்டுத் தெரிந்த; இயல்பெளிமை கைவிட்ட, சூதுதெரிந்த.

**sophistica'tion**, *n.* சொற்புரட்டு ; வாதப்புரட்டு ; போலி வாத நுணுக்கம்; செயற்கைப்பண்பாடு; கலப்படஞ் செய்தல்; தூய்மைக்கேடு ; கலப்படம்.

**sophis'ticator**, *n.* கலப்படஞ் செய்பவர் ; தூய்மை கெடுப் பவர்.

**sophi'stry**, *n.* போலிவாத நுணுக்கம் ; குயுக்திவாதம் ; குதர்க்கம், போலிமுறைவாதம் ; சொற்புரட்டு ; போலி நீதி.

**soph'omore**, *n.* பல்கலைக்கழகத்தின் இரண்டாம் ஆண்டு மாணவர்.

**Soph'y**, *n.* (வர.) பதினாறும்-பதினேழாம் நூற்றாண்டுகளி லிருந்த பெர்சிய அரசமரபு மன்னர்.

**soporif'erous**, *a.* உறக்கம் உண்டாக்குகிற.

**soporif'ic**, *a.* துயிலூட்டுகிற.

**sopp'ily**, *adv.* முட்ட நனைவுற்ற நிலையில்; ஏளன உணர்ச்சிப் பசப்புடன்.

**sopp'iness**, *n.* முழுநனைவு, தொப்பூறல் ; ஏளன உணர்ச்சிப் பசப்பு.

**sopp'y**, *a.* முற்றநனைந்த ; தொப்புத்தொப்பென்று ஊறிய ; நன்கு தோய்வுற்ற ; (பே-வ.) ஏளன உணர்ச்சிப்பசப்பு நிறைந்த.

**sopra'no**, *n.* உச்சக்குரலிசை, பெண்குரல், சிறுவன் குரல் ; உச்சக்குரலிசைப்பாளர், உச்ச இசைப்பாடகர் ; உச்சக் குர லிசைப்பாடகர் ; *pl.* sopra'nos, sopra'ni.

**sor'a**, *n.* கரோலினா நாட்டுச் சதுப்புநிலப் பறவை வகை.

**sorb**, *n.* ஊசியிலை மரவகை ; அதன் பழம்.

**sorb'-apple**, *n.* ஊசியிலைப் பழமரவகை.

**sorb'ate**, *n.* ஊசியிலை மரவகையின் கனியிலிருந்து எடுக்கப் படும் உப்பு.

**sorbefa'cient**, *n.* (மரு.) உறிஞ்சும் இயல்புள்ள மருந்துச் சரக்கு ; *a.* உறிஞ்சும் இயல்புள்ள.

**sorb'et**, *n.* பானகம், ஷர்பத்து.

**sorb'ic**, *a.* (வேதி.) ஊசியிலை மரவகைக் கனியிலிருந்து எடுக்கப்பட்ட உப்புச்சார்ந்த.

**Sorbonne'**, *n.* (வர.) பாரிஸ் பல்கலைக்கழகத்தின் இறைமை இயல் துறை; பாரிஸ் கலைக்கூட மனை; பாரிஸ் இயல் இலக்கியக் கலைக்கூட மனை.

**sor'cerer**, *n.* படுசூனியக்காரன், மந்திரவாதி.

**sor'cery**, *n.* படுசூனியம், மாயக்கலை; மாந்திரீகம்; மாய மந்திரத்திறம்.

*sordamen'te*, (இத்.) *adv.* (இசை.) வாய் ஒலித்தடங்கலிட்டு; அடங்கிய மென்குரலாக.

**sord'id**, *a.* கீழ்த்தரமான, இழிந்த; கருமித்தனமுடைய; நச்சுப் பேராசை கொண்ட; படுகேடான, படுமோசமான; சேறூர்ந்த, கறையார்ந்த; மாசடைந்த; தூய்மையற்ற; வண்ண வகையில் அழுக்கேறிய தோற்றமுடைய; விலங்கு தாவர வகையில் துப்புரவற்ற.

**sord'idness**, *n.* இழிதகவு; மாசுடைமை.

**sord'ine**, *n.* (இசை.) வளி இசைக்கருவியின் தக்கையடைப்பு; நரப்பிசைக்கருவியின் நரப்படக்கி.

**sore**, *n.* பரு; ஊறுபாடு; வெம்புண்; நைவூறுபாடு; புண்பட்ட இடம்; பொறி வேதனைத்தலம், தொடப் பொறுக்காத பகுதி; சொல்லப்பொறாத செய்தி; எரிச்சலூட்டும் காரியம்; நினைக்கப்பொறாத துயரம்; பருவரல், துன்பம்; *a.* புண்பட்ட; நலிவுற்ற; நோய்ப்பட்ட; நொய்வுடைய, உள் நோவுடைய; கொடிய; வேதனை தருகின்ற; நோவு பொறுக்கலாற்றாத; எரிச்சல் தருகிற; தொடப்பொறாத; நினைக்கப்பொறாத; கடுந்துயரளிக்கிற; துயரார்ந்த; நினைத்து வருந்துகிற, நினைத்து வருந்துவதற்குரிய; கடுமையான; *v.* புண்படுத்து; வேதனையூட்டு; *adv.* கடுநோவு தருவதாக; அருந்துயரளிப்பதாக; எரிச்சலுடன்; கடுமையாக; ஆவலுடன்; மிகவும், மிகுதியாக; மிக மோசமாக; (தொ.) sore eye, கண்ணோவு; sore head, அதிருப்தியாளர்; sore subject, நினைத்தால் துன்பந்தருஞ் செய்தி; sore throat, தொண்டைக்கட்டு, தொண்டை அழற்சி.

**so'rel**, *n.* மூன்றாட்டை மான்கலை.

**sore'ly**, *adv.* மிகக் கடுமையாக; கடுவேதனையுடன்.

**sor'ghum**, *n.* சோளவகைப் பயிர்.

**sor'icine**, *a.* மூஞ்சூறு சார்ந்த.

**sorit'es**, *n.* தொடர்வாத முறை; அரும்பிசி.

**sorit'ical**, *a.* அரும்புதிர் வகையான.

**sorn**, *v.* அழையாது நுழை.

**sorn'er**, *n.* அழையா விருந்தினர்.

**sorop'timist**, *n.* மாதர் சுழற்கழக உறுப்பினர்.

**soro'rity**, *n.* தங்கை தமக்கை முறை; கல்லூரி மகளிர் சங்கம்.

**soros'is**, *n.* (தாவ.) தசைப்பற்றுடைய பல்சுளைக் கூட்டுக் கனி.

**so'rra**, *adv.* அயர்லாந்து வழக்கில் அல்ல, அல்லவேயல்ல.

**so'rrel**[1], *n.* கார இலைக் களைப்பூண்டு வகை.

**so'rrel**[2], *n.* செந்தவிட்டுநிறம்; இரலை, மூன்றாட்டை மான் கலை; *a.* செம்பழுப்புநிறமான, செந்தவிட்டு வண்ணமான.

**so'rrily**, *adv.* வருந்தத்தக்க முறையில், மோசமாக.

**so'rrow**, *n.* மனத்துயரம்; கவலை, வருத்தம்; கழிவிரக்கம், பின்வருந்துநிலை; துக்கம், இழப்பு வருத்தம்; இன்னா நிகழ்ச்சி, இடும்பை; துயர்க் கொண்டாட்டம்; புலம்பல், அழுதரற்றல்; *v.* துயருறு; வருந்து; இழப்புக்கிரங்கு, இழவு கொண்டாடு; எண்ணிப் புலம்பு; (தொ.) the Man of Sorrows, இயேசு நாதர்.

**so'rrower**, *n.* துயருறுவோர்; வருந்துவோர்.

**so'rrowful**, *a.* துயரமான, வருந்திய தோற்றமுடைய, கவலையான.

**so'rrowfully**, *adv.* கவலையுடன், வருத்தத்துடன், துயரத்துடன்.

**so'rrowfulness**, *n.* துயரமுடைமை; வருத்தமுடைமை; கவலையுடைமை.

**so'rrowing**, *n.* அழுகை; துயரிலாழ்வு; துக்கம், இழப்புக் கொண்டாட்டம்; *a.* துயருறுகின்ற; பிரிவிற்கு வருந்துகின்ற; இழப்பிரங்குகின்ற.

**so'rrow-stricken**, *a.* துன்பத்தால் அலைவுற்ற.

**so'rry**, *a.* வருத்தப்படுகிற; கழிவிரக்கங் கொள்ளுகிற; வருத்தங் கொள்ளுகிற; சிறு தவறுக்கு வருந்துகிற; துன்பந் தருகிற; இரங்கத்தக்க; வருந்தத்தக்க, அவலத் தோற்றமுடைய; இலக்கிய வகையில் இழிந்த, தகுதியற்ற; ஆபாசமான; *int.* வருத்தந் தெரிவிப்புக் குறிப்பு; (தொ.) in a sorry plight, மோசமான நிலையில், இரங்கத்தக்க நிலையில்; in sorry clothes, அழுக்கு உடையில்; sorry excuse, மனநிறைவில்லாத சாக்கு போக்கு.

**sort**, *n.* வகை, மாதிரி; ஒத்த குழு, கும்பு; வகுப்பு, ஒத்த பண்புடைய குழு; படித்தரம்; ஒருமாதிரி; வகைமாதிரி, போலி மாதிரி; வழி, விதம்; (அச்சு.) தனி எழுத்துருத் தொகுதி; *v.* வகைப்படுத்து; வகைப்படுத்திப் பிரி; வகை வேறுபடுத்து; வகை ஒழுங்குபடுத்து; வகுத்துத் தேர்ந்தெடு; இணக்குவி; திருத்து; விதையடி; (பே-வ.) ஒருகை பார்த்துவிடு; (தொ.) after a sort, in a sort, ஒரு வகையில்; ஒருமுறையாக; a sort of, ஏதோ ஒருவகையான; ஒருவகைப்பட்ட; be hard on sorts, run hard on sorts, தனி எழுத்துருத் தொகுதிகள் பல குறைபட்டிரு; in some sort, இலக்கிய வழக்கில் ஓரளவிற்கு; of a sort, பேருக்கு ஏற்ற சீரில்லாத, பெருமையில்லாத; of sorts, (பே-வ.) பேருக்கு ஏற்ற சீரில்லாத, பெருமையில்லாத; வகைப்படுத்தப் பெறாத, கலந்த, பல்வேறு வகைப்பட்ட; சில்லறை வகையான; out of sorts, உடனலக் குறைவாக; (அச்சு) எழுத்துருக்கள் குறைந்த நிலையில்; sort of, (பே-வ.) ஒருவழியில், என்று சொல்லலாம்; that's your sort, நன்றாகச் செய்துளாய்.

**sort'able**, *a.* வகைப்படுத்தக் கூடிய; வகைபிரித்துத் தேரக் கூடிய; பலவகைகளை உட்கொண்ட.

**sort'er**, *n.* வகைப்படுத்த வல்லவர்; வகைப்படுத்துபவர்; அஞ்சல் நிலையக் கடித வகை பிரிப்பாளர்.

*sort'es*, (ல.) *n. pl.* ஏட்டுத் திருவுளக் குறிப்பறிதல், திருக்குறிப்புச் சாத்து; (தொ.) *sortes Biblicae, sortes Sacrae*, விவிலிய ஏட்டுத் திருக்குறிப்புச் சாத்து; *sortes Homericae*, ஹோமரின் காப்பியத் திருக்குறிப்புச் சாத்து; *sortes Virgilianae*, விர்ஜிலின் காப்பியத் திருக்குறிப்புச் சாத்து.

**sort'ie**, *n.* உழிஞைத்தாக்கு, முற்றுகைப்பட்ட வீரரின் அரண் புறப் பாய்வுத்தாக்குதல்.

**sort'ilege**, *n.* திருவுளச்சீட்டுத் திருக்குறிப்பறிவு.

**sorti'tion**, *n.* திருவுளச் சீட்டுக் குலுக்கல்.

**sor'us**, *n.* (தாவ.) குவியல்; கொத்து; சூரல், சிதலுறைக் கொத்து.

*S O S*, *n.* கையறவறிவிப்பு, ஆரஞர் அறிவிப்பு; அவசர உதவி நாடுங்குரல்.

**so'-so**, *a.* சுமாரான; நல்லதும் கெட்டதும் அல்லாத, *adv.* சுமாராக.

*sostenu'to*, (இத்.) *adv.* (இசை.) தொடர்ந்து நீடித்த முறையில்.

**sot**, *n.* களிமகன்; *v.* வெறி மயக்குறு.

**Soth'eby's**, *n.* லண்டன் கையெழுத்துப்படி அச்சுப்படிப் புத்தக விற்பனைக்கூடம்.

**Soth'ic**, *a.* எரிமீனுக்குரிய, அக்கினி நட்சத்திரம் சார்ந்த; எரிமீன் எழுச்சிக்குரிய 1460 அல்லது 1461 ஆண்டு வட்டஞ் சார்ந்த; (தொ.) Sothic cycle, 1460 அல்லது 1461 ஆண்டுகளடங்கிய எரிமீன் ஆண்டுவட்டம்; Sothic year, எகிப்திய ஆண்டு, எரிமீன் ஆண்டு வட்டக் கணிப்புக்குரிய ஆண்டு.

**sott'ish**, *a.* விடாக்குடிப் பழக்கமுடைய; மிடாக் குடியரான.

**sott'ishness**, *n.* விடாக்குடிப் பழக்கம், மிடாக்குடி வெறி மயக்கம்.

*sott'o vo'ce*, (இத்.) *adv.* தனக்குத்தானே, அடங்கிய குரலில்.

**sou**, (பிர.) *n.* (வர.) பிரஞ்சு சில்லறைக்காசு, பிரஞ்சு வெள்ளியில் நூற்றில் ஒரு பங்கு.

**soubrette**, (பிர.) *n.* பணிப்பெண்; குறும்புச்சிறுமி.

**sou'car**, (இ.) *n.* வட்டிக்கடைக்காரர், வட்டித் தொழிலர்.

**sou'chong**, *n.* இளந்தளிர்த் தேயிலையாற் செய்யப்படும் கடும் பானம்.

**Soudanese'**, *n.* ஆப்பிரிக்க சூடான் பகுதிக்குரியவர்; *pl.* Soudanese'; *a.* சூடான் பகுதிக்குரிய; சூடான் பகுதி இன மக்களுக்குரிய.

**sou'ffle** [1], *n.* (மரு.) நாடி மொருமொருப்பு, மென்னுடியதிர்வொலி.

**souffle** [2], (பிர.) *n.* பொங்கு நுரையப்பம், மென்னுரை பொங்கச் செய்யப்பட்ட முட்டை வேவப்பம்; *a.* மென்னுரை பொங்கச் செய்யப்பட்ட.

**sough**, *n.* ஏங்கொலி; அலறுெலி; இலையூடெழும் காற்றின் குலவை ஒலி.

**sought**, *v.* seek என்பதன் இறந்த-காலமுடிவெச்ச வடிவம்.

**soul**, *n.* உயிர்நிலை, ஆன்மா; உயிர்; பிராணி; ஆள், மனிதர்; மாண்டவர் உயிர், ஆவி; மாண்டவர்; வாழ்வுயிர்; வாழ்பவர்; உயிர்நலம்; ஆன்மநலம்; அருள்நிலை, இறையருளுக்குப் பாத்திரமாம் நிலை; தன்மான நிலை; ஒழுக்க அடிப்படை; பண்புவகையில் புனிவார் திருவுரு; புனிவார் திருவுருவானவர்; குறிக்கோள் உரு; குறிக்கோள் உருவினர்; குறிக்கோள் மாதிரி; தலைமைக் கூறு; தலைவர்; இயக்கு முதல்; இயக்குமுதல்வர்; சத்து, உயிர்க்கூறு; உள்ளுறை கருப்பொருள்; முக்கிய கூறு; மூலக்கூறு; கருமூலம்; உள்ளுயிர்; உள்ளுயிர்க் கூறு; உள்ளுயிர்போன்றவர்; உள்ளுயிர்க்கூறு போன்றவர்; ஊக்கம், உணர்வாற்றல்; தெம்பு, அறிவாற்றல்; இதயம், உணர்வாற்றலின் இருப்பிடம்; மனம், அறிவாய்வின் இருப்பிடம்; உள்ளம், அவா ஆர்வப் பிறப்பிடம்; தன்னிலை, தான் எனும் தன்மைக்கூறு; தன் தனிநிலை; தன் தனிநிலைக் கூறு; முழுமைநிலைக் கூறு; நிலையான கூறு; அழியாக்கூறு; பெருந்தகைமைக் கூறு; உள்ளார்ந்த வாய்மைக் கூறு; வாத்தின் நுரையீரல்; வில்யாழின் குரல் தண்டு; (தொ.) the soul of honour, சான்றாண்மையின் உயிர்; பெருந்தகையாளர்; upon one's soul, உயிர்மேல் ஆணையாக.

**soul'-destroying**, *a.* ஆன்மநல அழிவுக்குக் காரணமான, உயிரழிவு செய்கிற.

**soul'ful**, *a.* உணர்ச்சிப் பண்பார்ந்த; அறிவுப் பண்புடைய; உணர்ச்சி கொளுத்துகிற; அறிவுப் பண்பு புலப்படுத்துகிற; உயர் உணர்ச்சிநலம் அறிவுப் பண்பு கிளறுகிற; தூண்டுகிற.

**soul'less**, *a.* உயிரற்ற; உயிராற்றலற்ற; உயிர்த்துடிப்பற்ற; எழுச்சியற்ற; கிளர்ச்சியற்ற; ஆன்மநலமற்ற; அறிவுத்திறமற்ற; உணர்ச்சித் திறமற்ற; கவர்ச்சியற்ற; சத்தற்ற; மன அமர்வற்ற, உள்ளார்வமற்ற; வேண்டா வெறுப்பான.

**soul'-stirring**, *a.* உயிர் ஆற்றல் ஊக்குகின்ற; எழுச்சியூட்டுகிற; அறிவாற்றல் கிளறுகிற; உணர்ச்சி தட்டி எழுப்புகிற.

**soul'-subduing**, *a.* உயிரடக்குகிற, உணர்ச்சி அமிழ்த்துகிற.

**sound** [1], *n.* ஒலி; ஓசை; ஒலியலை அதிர்வு; சந்தடி; கேள்விப் புலன்; தொனி; பொதுப்போக்கு; சுட்டுக்குறிப்பு; உளக் குறிப்பு விளைவு; கேள்வி; கேட்கப்படுஞ் செய்தி; ஊரலர், வதந்தி; கேள்வித்தொலைவு; *v.* ஓசைபடு; கேட்கப்படு; ஒலிக்கப்படு; முரசுவகையில் முழங்கு; முரசினை முழக்கு; முழக்கித் தெரிவி; முழங்குவி; கூறு; தெரிவி; குறித்துச் சுட்டு; தோற்று; தொனிப்படு; பொருள்படுவதாகத் தோன்று; நாடிவகையில் தட்டித் தொனிகண்டுணர்; ஊர்திச் சக்கரங்கள் வகையில் கொட்டித் தேர்ந்துபார்.

**sound** [2], *n.* கடலிடுக்கு, கடற்கால்; அழி, கடல் இடை கழி; கணவாய் மீன்; மீனின் காற்றுப்பை.

**sound** [3], *n.* அறுவைப்புண் கிளறுகருவி; *v.* ஆழம்பார்; அடித்தடம் ஆராய், ஆழ்தடப் பொருள்களை மேலே கொணர்ந்து ஆய்வுதளமூலம் அடித்தடநிலை காண்; மீவிசும்புநிலை அளவுப் பதிவெடுத்து ஆராய்; கிளறு கருவியாற் கிளறு; மீன் வகையில் முங்குளி, நீரடிக்கு மூழ்கு; உளவறி, ஆளின் கருத்துவிருப்பங்கள் வகையில் உசாவி நிலையறிய முனை.

**sound** [4], *a.* முழுநலம் வாய்ந்த; முழுமையான; உடையாத; உட்கீறலற்ற; ஊறுபடாத; கேடுறாத; முழுநிறைவான; குறைவற்ற; உலைவற்ற; குலைவற்ற; நிறைநலமான; பிழைபடாத; வழுவற்ற; சரியான; நேர்மைவாய்ந்த; வாதமுறையில் நல்லாதாரமுடைய; பழுதற்ற; சீர்கேடற்ற; உரம்வாய்ந்த; அடிவகையில் வலங் கொண்ட; கூனற்ற; கடன் தீர்வாற்றல் வாய்ந்த; ஓடுதிறல் வாய்ந்த; உறக்க வகையில் ஆழ்வமைவான; *adv.* உலைவற்று, ஆழ்வமைதியுடன்.

**sound'-board**, *n.*=sounding-board.

**sound'-bow**, *n.* மணிநா அடிக்குங் கூண்டு விளிம்பு.

**sound'er** [1], *n.* காட்டுப்பன்றிக் கூட்டம்; இளம்பன்றியேறு.

**sound'er** [2], *n.* முழக்குபவர்; முழங்குபவர்; முழங்குவது; ஓசைபடுவது; ஒலியெழுப்புவது; தந்திவாங்கு கருவி.

**sound'er** [3], *n.* உளவறிபவர்; முங்குளிப்பவர்; முங்குளிக்கும் திமிங்கிலம்; ஆழ்தட ஆய்கருவி; மீவிசும்பு ஆய்கருவி; அறுவைக் கிளறுகருவி; வேலை ஆழமானி, எதிரொலி நேரமூலம் ஆழமறியுங் கருவி; (தொ.) flying sounder, கப்பலின் வேகங் குறைக்காமலே ஆழம் அளக்குங் கருவி.

**sound'-film**, *n.* பேசும்படம்.

**sound'-hole**, *n.* யாழுந்தி, நரப்பிசைக்கருவியின் பத்தர்ப் புழை.

**sound'ing**, *n.* ஆழங்காண்டல்; ஆழமாய்வு; அடித்தடத் தேர்வாய்வு; மீவிசும்புநிலையாய்வு; பிறர் மனநிலைவிருப்ப உளவறிவு; அறியப்பட்ட ஆழம், (தொ.) sounding promises, ஆரவார உறுதிமொழி; sounding rhetoric, ஆரவாரச் சொல்லணி.

**sound'ing-apparatus**, *n.*=sounding-line.

**sound'ing-balloon**, *n.* மீவிசும்பாய்வுக் கூண்டு.

**sound'ing-board**, *n.* ஒலித்தடைத் தட்டி, மேடைமீது ஒலி பரவுதல் தடுத்து முன்செலுத்தும் மென்புலகை மேற்கட்டி; இசைக் கருவியில் ஓசைபெருக்கு கட்டை.

**sound'ing-lead**, *n.* கடலாழமானியின் அடி ஈயக்குண்டு.

**sound'ing-line**, **sound'ing-machine**, *n.* கடலாழமானி

**sound'ing-rod**, *n.* அடித்தேக்க மானி, கப்பலில் அடித்தேங்கு நீரளவு காணும் கருவி.

**sound'ings**, *n. pl.* ஆழ்தட ஆய்வுக்குரிய கடலிடம்; ஆழமிலாக் கடலிடம்; சிற்றுழத்தலம், ஆழமானி இழைநீளத்துக் குட்பட்ட ஆழமுடைய இடம்; கரையோரத் தலம்; (தொ.) be in soundings, ஆழங்குறைந்த இடத்திலிரு, கரையோரமாயிரு; come into soundings, ஆழங் குறைந்த இடமணுகு, கரையணுகு.

**sound'less**, *a.* ஒலியற்ற.

**sound'ness**, *n.* முழுநலமுடைமை; நிறைநலத்தன்மை; நன்னிலை; ஊறுபடா நிலை; பழுதுபடா நிலை; உடைபடா நிலை.

**sound'-post**, *n.*=sound-hole.

**sound'-track**, *n.* திரைப்படத்தட்டின் ஒலிவரி.

**sound'-wave**, *n.* ஒலியலை.

**soup**, *n.* வடிசாறு; இளம் வழக்கறிஞர்க்குத் தரப்படும் அரசியற் சார்பு வழக்குக் குறிப்பு; (தொ.) in the soup, இடர்ப்பாட்டில், தொல்லையில்.

**soupcon**, (பிர.) *n.* மிகச் சிறு அளவு; முனிமுகம், சிறுசுவைக் கூறு.

**soup'-kitchen**, *n.* கஞ்சித் தொட்டி, ஏழைகட்குக் கஞ்சி ஊற்றுமிடம்.

**soup'maigre**, *n.* காய்கறிப் பாழ்ங்கூழ், நீராளக் காய்கறி வடிசாறு.

**soup'-plate**, *n.* ஆழ்குழி வடிசாற்றுத் தட்டம்.

**soup'-ticket**, *n.* கஞ்சிச் சீட்டு.

**sour**, *a.* புளிப்பான ; புளித்த ; புளிக்க வைக்கப்பெற்ற ; புரைத்த ; காய்ப்புளிப்பான ; புளிப்பு வாடையுள்ள ; மண் வகையில் ஈரக் கசிவான ; ஆள்வகையில் கடுகடுப்பான ; எரிந்து விழுகிற ; வெறுப்புத் தட்டிய ; மனநிலை வகையில் சிடுசிடுப்பான ; முகத்தோற்ற வகையில் சீறிய, வெறுப்புக் காட்டுகிற ; *v.* புளிப்பாக்கு ; புளிப்பாகு ; ஆள்வகையில் கடுகடுப்புறு ; எரிச்சலுறுவி ; வெறுப்புத் தட்டச்செய் ; வெறுப்புக்கொள்.

**source**, *n.* தோற்றுவாய், மூலம் ; தலையூற்று, ஆற்றின் பிறப்பிடம் ; அடிமூலம், மூலமுதல் ; ஆதாரம், வளமூலம் ; மூலகாரணம் ; தூண்டுமுதல், ஏவுமுதல் ; மூல ஆதார ஏடு, முன் ஆதாரம்.

**source'-book**, *n.* பெட்டக நூல்.

**sourdine'**, *n.* இசைப்பெட்டியின் மெல்லிசையழுத்தத் தடுப்பு.

**sour'dough**, *n.* பனிமண்டல விறலர், அலாஸ்காவில் ஒன்றிரண்டு குளிர்பருவங் கழித்தவர் ; முதுவர், ஓரிடத்திலேயே நீடுவாழ்பவர்.

**sour'ish**, *a.* புளிப்பார்ந்த ; சற்றே புளிப்பான ; சற்றே சிடுசிடுப்பான.

**sour'ly**, *adv.* புளிப்பாய் ; கடுகடுப்பாக ; சிடுசிடுப்புடன்.

**sour'ness**, *n.* புளிப்பு; புளிப்புடைமை; கடுகடுப்பு; எரிச்சல்; சிடுசிடுப்பு.

**sour'sop**, *n.* மேலை இந்தியத்தீவுகளிலுள்ள பழமரவகை ; மேலை இந்தியத்தீவுகளிலுள்ள பழவகை.

**souse**, *n.* உப்பிலிட்டது, ஊறுகாய்; உப்புக்கண்டம்; உப்புத் தசைக் கண்டம் ; உப்பிலிட்ட பன்றித்தலை ; உப்பிலிட்ட பன்றிக்காது ; உப்பிலிட்ட பன்றிக்கால் ; முட்டாணைவு ; ஈரத்தோய்வு ; நீர்ம அமிழ்வு ; முழு அமுக்கீடு ; *v.* உப்பிலிடு; ஊறவை ; ஊறுகாய் போடு ; நீர்மத்தில் தோய்வுறுத்து ; நீரில் அமுக்கு ; மீதாக நீர்கொட்டு ; முட்டாணைவி ; குடியில் தோய்வி; *adv.* தலைகுப்புற, தொப்பென்று, திடுதிப்பென்று.

**sou'tache**, *n.* ஓரத் தையல் ஒப்பனை வாரிழை

**soutane'**, *n.* குருமார் நீளிறுக்க உள்ளங்கி.

***souteneur***, (பிர.) *n.* பரத்தை பங்கன், வேசியோடு உறவு கொண்டு அவள் ஊதியத்தில் வாழ்பவன்.

**south**, *n.* தெற்கு ; தென்றல் ; நாட்டுத் தென்பகுதி ; *a.* தெற்கில் உள்ள ; தெற்கில் வாழ்கிற; தென்பகுதியிலுள்ள; காந்தமுனை வகையில் தெற்கு நோக்கிய ; *v.* தெற்குநோக்கி நகர் ; திங்கள் வகையில் குறிப்பிட்ட இடத்தின் சேண் செல் மைவரை கட ; *adv.* தெற்கில் ; தெற்கு நோக்கி ; தென் திசைக்கு அருகில் ; (தொ.) south by east, தெற்கிலிருந்து தென்கிழக்குநாடிச் சிறிது கிழக்காக ; South Pole, தென் துருவம்; South Sea, தென்பசிபிக் மாகடல்; South Sea Bubble, (வர.) 1720-இல் நொடித்துப்போன ஸ்பானிஷ் அமெரிக்க வாணிகக் கழகம் குறித்த வழக்குச்சொல் ; உருப்படாத திட்டம் ; south wind, தென்திசைக் காற்று, தென்றல்.

**south'-bound**, *a.* தெற்கு நோக்கிய.

**south'-country**, *n.* நாட்டின் தென்பகுதி.

**south'down**, *n.* ஹாம்ப்ஷயர்-சஸ்ஸக்ஸ் பகுதிச் செம்மறியாட்டு வகை ; *a.* செம்மறியாட்டுவகையில் ஹாம்ப்ஷயர்-சஸ்ஸக்ஸ் பயிற்சியினவகை சார்ந்த

**South Downs**, *n.* இங்கிலாந்தில் ஹாம்ப்ஷயர் (Hampshire) சஸ்ஸக்ஸ் (Sussex) பகுதி.

**south'-east**, *n.* தென்கிழக்குத் திசை ; தென்கிழக்குப் பகுதி ; தென்கிழக்குக் காற்று, தென்கிழக்கிலிருந்து வீசுங்காற்று ; தென்கீழ்கால் நிலம், தென்கிழக்குக் காற்றின் வழியில் கிடக்கும் நிலப்பகுதி; லண்டன் அஞ்சல்துறைத் தென்கிழக்கு வட்டம் ; *a.* தென்கீழ்த் திசையான ; தென்கிழக்கிலுள்ள ; தென்கிழக்கிலிருந்து வீசுகிற; தென்கிழக்கு நோக்கிய; *adv.* தென்கிழக்காக.

**southeas'ter**, *n.* தென்கிழக்குக் காற்று.

**south-east'erly**, *a.* தென்கிழக்கு நோக்கிய ; தென்கிழக்கிலிருந்து வருகிற ; *adv.* தென்கிழக்கு நோக்கி ; தென்கிழக்கிலிருந்து.

**south-east'ern**, *a.* தென்கிழக்கில் உள்ள ; தென்கிழக்குத் திசையில உள்ள; தென்கிழக்குக்குரிய; தென்கிழக்குத் திசைக்குரிய.

**south-east'ward**, *n.* தென்கிழக்கிலுள்ள பகுதி ; *a.* தென்கிழக்கு நோக்கிய ; *adv.* தென்கிழக்கு நாடி.

**south-east'wardly**, *a.* தென்கிழக்கு நோக்கிய; *adv.* தென்கிழக்கு நோக்கி.

**south-east'wards**, *adv.* தென்கிழக்கு நோக்கி.

**south'er**, *n.* தென்திசைக் காற்று; *v.* தெற்குநோக்கித் திரும்பு

**south'ering**, *a.* தென்முகமாகத் திரும்புகிற.

**sou'therly**, *a.* தெற்கு நோக்கிய ; காற்று வகையில் தெற்கிலிருந்து அடிக்கிற ; *adv.* தெற்காக ; தெற்கிலிருந்து.

**sou'thern**, *n.* தென்திசைவாணர், தெற்கத்தியார்; தெற்கில் குடியிருப்பவர் ; *a.* தெற்கான ; தெற்கினைச் சார்ந்த ; தெற்கில் உள்ள ; தெற்கு நோக்கியுள்ள ; காற்று வகையில் தெற்கிலிருந்து வீசுகிற; தென்பாங்கு ஆன ; (தொ.) Southern Confederacy, தென் அமெரிக்க நாடுகள் நேசக் குழு ; Southern Cross, சிலுவை வடிவிலமைந்த நான்கு வான் மீன்கள் கொண்ட முனைப்பான தென் வானகோள விண்மீன் குழு: Southern Hemisphere, நிலவுலகத் தென்பாதிக்கோளம்; Southern States, அமெரிக்காவின் தெற்கு நாடுகள் குழு.

**sou'therner**, *n.* தெற்கத்தியார் ; தெற்கில் வாழ்பவர் ; தென்னரசுவாணர், அமெரிக்க ஐக்கியநாட்டுத் தென்னரசுக் குழுவினர்.

**sou'thernmost**, *a.* மிகவும் தெற்கான, தெற்குக் கடைசியான, தென்கோடியான.

**sou'thernwood**, *n.* மருக்கொழுந்து, தமனகம்.

**south'ing**, *n.* தெற்கியக்கம், தெற்காக நகர்வு, வானகோளம்-கப்பல் முதலியவற்றின் வகையில் குறிப்பிட்ட இடத்தின் சேண் செவ்வரை கடத்தல்.

**South Kensington**, *n.* தென் கென்சிங்குடனில் உள்ள பொருட்காட்சிச் சாலைகள் ; தென் கென்சிங்குடன் காட்சிச் சாலைத் தொடர்புடைய கலை-கல்வி பண்பாட்டுச் சூழல் ; *a.* தென் கென்சிங்குடன் காட்சிச்சாலை சார்ந்த ; தென் கென்சிங்குடன் காட்சிச்சாலைக் கலை-கல்வி பண்பாட்டுச் சூழல் சார்ந்த.

**south'paw**, *n.* இடங்கையர் ; இடக்கை ஆட்டக்காரர் ; *a.* இடங்கை வாய்ப்பான ; இடக்கைப் பழக்கமுடைய.

**sou'thron**, *n.* தெற்கத்தியார், ஸ்காட்டிஷ் வழக்கில் ஆங்கிலேயர் ; *a.* ஆங்கிலஞ் சார்ந்த ; ஆங்கிலேயருக்குரிய.

**south'ward**, *a.* தெற்கு நோக்கிய, தெற்கே செல்கிற; தெற்கு நாடிய ; தெற்கே உள்ள ; *adv.* தெற்குநோக்கி ; தெற்கில், தெற்குப் பக்கமாக.

**south'wards**, *adv.* தெற்காக, தெற்குநோக்கி.

**south'-west**, *n.* தென்மேற்கு, தென்மேற்குத் திசை ; தென்மேற்குப் பகுதி ; லண்டன் அஞ்சல் நிருவாக மாவட்டம்.

**southwes'ter**, *n.* தென்மேற்குக் காற்று ; கழுத்தைக் காக்க அகன்ற விளிம்புள்ள நீர்த்தடைகாப்புத் தொப்பி.

**souv'enir**, *n.* நினைவுப்பொருள் ; நினைவுமலர்.

**sov'ereign**, *n.* இறைவன்; முடிமன்னன் ; மீமுதல்வர், தனியுரிமை ஆட்சி முதல்வர் ; ஆங்கிலப் பொன் நாணயம், கட்டாளைத் தங்கக்காசு ; *a.* இறைமையுடைய ; தனியுரிமை ஆட்சியுடைய ; முதன்மை நிலையுடைய ; இறைமை சான்ற, மீமுதன்மையுடைய ; தலைமை உரிமை சார்ந்த ; தனியாணை செலுத்துகிற ; உயர்வற உயர்ந்த, தனியாற்றலுடைய, வல்லமை சான்ற ; மிக நல்ல.

**sov'ereignty**, *n.* இறைமை, மீமுதல் ஆட்சித் தலைமையுரிமை.

**Sov'iet, sov'iet,** *n.* ருசியநாட்டுத் தலைமை இணைகூட்டவை; ருசிய நாட்டுக் கூட்டரசு; ருசியநாட்டுப் புரட்சி அரசியல்; ருசிய நாடு; *a.* ருசிய அரசுக்குரிய; ருசிய நாட்டிற்குரிய; (தொ.) the Soviet, ருசியா; Union of Soviet Socialist Republics, (சு-வ. U.S.S.R.) ருசிய அரசுப்பேரவை.

**sow** [1], *n.* பெண்பன்றி; பெண் வளைக்கரடி; கொழுத்த சோம்பேறிப் பெண்; உருக்கிரும்பு வார்ப்புத் தொட்டி; வார்ப்பிருப்புப் பாளம்.

**sow** [2], *v.* விதை தூவு, விதைப்புச் செய்; விதை நாற்றுப் பயிரிடு; பரந்து தூவு; மேற்பரப்பிவிடு; பண்புகளைப் பரப்பு; (தொ.) reap what one has sown, முற்பகல் செய்தது பிற்பகல் விளையப்பெறு; sow wind and reap the whirlwind, செய்தீவினைக்கு மேற்படத் தீவிளைவு பெறு.

**sowar',** (பெர்.) *n.* குதிரைப் படைவீரன்.

**sow'back,** *n.* தாழ் மணற்கரை.

**sow'bread,** *n.* பன்றிக்குணவாகும் கிழங்குச்செடி வகை.

**sow'-bug,** *n.* மரவட்டை, வள்ளட்டை.

**sow'er,** *n.* விதைப்பவர்.

**sow'ing,** *n.* விதைத்தல், விதைப்பு.

**sow'kar,** *n.* = soucar.

**sown,** *v.* sow [2] என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**sow'-thistle,** *n.* பாற்சாறும் மஞ்சட்பூவும் உடைய முட்செடி வகை.

**soy,** *n.* சோயா மொச்சைக்குழம்பு வகை.

**soy'a bean,** *n.* சோயா மொச்சை, சோயா அவரை.

**soy'a flour, soy'a meal,** *n.* சோயா அவரை மாவு.

**soy'a oil,** *n.* சோயா அவரை எண்ணெய்.

**soz'zle,** *n.* குடிவெறி; *v.* குடிவெறி கொள்.

**soz'zled,** *a.* மட்டுமீறிக் குடித்த; போதையேறிய.

**spa,** *n.* கனிப்பொருள் நீரூற்று; பெல்ஜியத்திலுள்ள நல்வாழ்விடம்.

**space,** *n.* இடைவெளி, நிரப்பிடம்; வெளியிடம், அம்பரம்; சேணிடம், விண்வெளி; அகலுள், இடப்பரப்பு; இட எல்லை; இடைத் தொலைவு; கால அளவு; கால இடையீடு; (அச்சு.) எழுத்திடைவெளி; தட்டச்சில் சொல்லிடைவெளி அமைவு; *v.* இடத்தமை; இட ஒழுங்கமைவி; இடைவெளியிட்டமை; இடைவெளியிடு; இடைவெளிவிட்டமை; அகலிடையீடுவிட்டமைவி; (தொ.) space out, (அச்சு.) அகலிடையீடிட்டமைவி, இடைவெளி அகலமாக்கு.

**space'less,** *a.* இட அளவையற்ற, இடநிரப்புப் பண்பில்லாத; இடமற்ற; இடைவெளியற்ற.

**spa'cer,** *n.* தட்டச்சில் இடைவெளியமைவு.

**space'-ship,** *n.* விண்வெளி விசையூர்தி.

**space'-time,** *n.* (மெய்.) இட-காலத் தொடரளவை, இடத்தின் மூலவளவையுடன் காலமிணைந்த இழைவளவையான நாலளவைத்திறம்.

**space'-travel,** *n.* விண்வெளிப் பயணம்.

**space'-writer,** *n.* செய்தித்தாள்களில் வெற்றிடம் நிரப்ப எழுதுவோர்.

**space'-writing,** *n.* செய்தித்தாள்களில் வெற்றிடம் நிரப்ப எழுதி வைத்துக் கொள்ளுதல்.

**spa'cing,** *n.* இடையிடம் விடல்.

**spa'cious,** *a.* பரந்த, இடமகன்ற; போதிய இட அகலமுடைய, தாராள வாய்ப்புடைய, வள நிறைவுடைய.

**spa'ciousness,** *n.* இட அகற்சி, பரப்பகலம்; போதிய பரப்புடைமை, இடவாய்ப்பு வளம்; இட வாய்ப்பு நிறைவு.

**spade,** *n.* மண்வாரி, மண்வெட்டி; மண்வாரி அலகு வெட்டாழம்; மண்வாரிபோன்ற கருவி; கொழுவெட்டு, திமிங்கிலக் கொழுப்பை வெட்டி எடுக்கும் வெட்டுக்கத்தி; சீட்டு வகையில் ஒன்று, கருநிற மண்வாரிச்சின்னச் சீட்டு; *v.* மண்வாரியால் வெட்டு; கொழுவெட்டால் திமிங்கிலக் கொழுப்பை வெட்டியெடு; (தொ.) call a spade a spade, மறை திரையின்றிப் பேசு; வெளிப்படையாகப் பேசு; spade bayonet, மண்வெட்டியாகப் பயன்படக்கூடிய அகலத் துப்பாக்கிச் சனியன்; spade guinea, (வர.) பிரிட்டனில் மண்வாரிவடிவக் கேடயம் பொறித்த மூன்றும் ஜார்ஜ் காலத்திய பொன் நாணயம்; spade husbandry, மண்வெட்டி வேளாண்மை, உழுதலுக்குப் பதிலாக மண்வெட்டியால் ஆழமாகவெட்டிப் பயிரிடும்முறை.

**spade'ful,** *n.* வாரளவு, மண்வெட்டியால் வெட்டி எடுக்கப்படும் அளவு.

**spade'-work,** *n.* முன்னெருக்க வேலை, முன்வெட்டு வேலை.

**spadg'er,** *n.* ஊர்க்குருவி.

**spadi'ceous,** *a.* பாளை சார்ந்த; பாளை போன்ற; பாளையினையுடைய.

**spad'icose,** *a.* பாளை சார்ந்த, பாளை போன்ற.

**spadille',** *n.* சீட்டாட்ட வகையில் உயர் சீட்டு.

**spad'ix,** *n.* (தாவ.) பாளை, உறையுள் பொதிந்த மலர்க்கொத்துக் குலை.

**spad'o,** *n.* (சட்.) மலடன்; மலட்டு விலங்கு.

***spaghett'i,*** (இத்.) *n.* திரி இடியப்ப வகை.

**spah'ee, spah'i,** *n.* (துரு.) *n.* முற்காலத் துருக்கி நாட்டுக் குதிரைப்படை வீரன்; பிரஞ்சு அல்ஜீரிய குதிரை வீரன்.

**spake,** *v.* செய்யுள் வழக்கில் speak என்பதன் இறந்த காலம்.

**spal'der,** *n.* நொறுக்காளர், சுரங்க வேலையில் தாதுப் பொருள்களை வகைப்படுத்தும் பொருட்டுச் சிம்புகளாக உடைப்பவர்.

**spall,** *n.* சிம்பு, சிராய்; *v.* சிம்புகளாக நொறுக்கு; சுரங்கவேலை வகையில் தாதுப்பொருள்களை வகைப்படுத்துவதற்காகச் சிம்புகளாக உடை.

**spalpeen',** *n.* வீணன், அயர்லாந்துநாட்டு வழக்கில் கீழ்மகன்.

**spam,** *n.* தகரப்பேழையில் அடைக்கப்பட்ட இறக்குமதி உணவுப்பொருள்.

**span** [1], *n.* சாண் அளவு, அரைமுழம், ஒன்பது அங்குலம்; தாவகலம், ஆறு-பால வகைகளில் கோடிக்குக் கோடியான முழு இடைநீளம்; வில்விட்டம், பால வகையில் ஆதாரக் கம்பங்களிடையேயுள்ள தனி வளைவு அளவு; பாவளவு, வானூர்தி இறக்கை முனையிலிருந்து இறக்கை முனையளவான இடையகல அளவு; (கப்.) சுருளை, நிலையாதாரக் கயிற்றில் இரு ஆதாரங்களுக்கிடைப்பட்ட ஒருமடி அளவு; இறக்கை மாடம், பல்கவிவான கட்டுமானமுடைய செடிகொடி வளர்ப்புக் கண்ணுடிமனை; வீச்சளவு, இடை நேர்தொலை; காலத் தொடர் வீச்சளவு; கால வரையறையளவு; முழு வீச்சளவு; முழுக்கால அளவு; குறுகிய இட அளவு; குறுகிய கால அளவு; வீச்செல்லை; எட்டு தொலை, கிட்டு தொலை; புலனுணர்வு வீச்செல்லை; மனம் பற்றெல்லை; அறிவு வீச்செல்லை; இணைகோவை, குதிரை இணை தொகுதி; *v.* கவிந்து இணை, தழுவி இணை; அளாவியிரு; கவிந்திரு; தாவிச் செல்; அளாவிக்கிட; இணைத்துக்கிட; அளாவி இணைத்திரு; தன் எல்லைக்குள்ளாகக் கொண்டிரு; இணைத்துப் பாலமமை; சாணிட்டளை; கையால் அள; தொடர்பாயிணைத்து நினைவிற் கொணர்; கருத்தில் மதித்து நோக்கு.

**span** [2], *v.* செய்யுள் வழக்கில் spin என்பதன் இறந்த காலம்.

**span'-dogs,** *n.* இணைகம்பிப் பற்றிறுக்கி, வெட்டுமரத்தைப் பற்றும் வளைவுகள் உடைய இரும்புக் கம்பி.

**span'drel,** *n.* கவான்முக்கு, கவான் வளைவுக்கும் அது கவிந்த செங்கோண வட்டத்திற்கும் இடைப்பட்ட மூலையிடம்.

**span'gle,** *n.* ஆடை ஒப்பனையில் பயன்படுத்தும் மின்மினித்தகடு, ஜிகினு; மினுங்குஞ் சிறுபொருள்; சிறு பகட்டணி; *v.* மின்வட்டுமணி பொருத்தி ஒப்பனை செய்.

**span'gled,** *a.* ஜிகினு வேலை செய்யப்பட்ட.

**span'gly**, *a.* மினுங்குகிற, மின்வட்டுமணி போன்ற.

**Span'iard**, *n.* ஸ்பெயின் நாட்டார்.

**span'iel**, *n.* குச்சு வேட்டைநாய், மடிகாதும் வழவழப்பு உடலும் பணிவார்ந்த பண்புமுடைய வேட்டைநாய் வகை; வளர்ப்பு நாய்வகை; அடிவருடி, கெஞ்சும் அடிமைப் பண்புடையவர்; (தொ.) King Charles's spaniel, குச்சு வேட்டைநாய் வகை; water spaniel, வேட்டையில் கொன்ற நீர்க்கோழிகளை மீட்டுவரப் பழக்குவிக்கப்பட்ட நாய் வகை.

**Span'ish**, *n.* ஸ்பானிய மொழி; *a.* ஸ்பானிய நாட்டைச் சார்ந்த; ஸ்பானியர்கள் பற்றிய; ஸ்பானிய மொழி சார்ந்த; (தொ.) ride the Spanish mare, மரக்கட்டைமீது கால்விரித்து அமர்வதனைத் தண்டனையாகப் பெறு; Spanish Armada, (வர.) இங்கிலாந்தின்மீது 1588-இல் படையெடுத்துத் தோல்வியுற்ற ஸ்பானிய நாட்டுக் கப்பற்படை; Spanish bayonet, அல்லியினச் செடிவகை; Spanish broom, புதர்செடிவகை; Spanish chestnut, உண்ணுஞ் செந்தவிட்டு நிறக் கொட்டை வகை; Spanish cress, உறைப்பிலைச் செடிவகை; Spanish dagger, அல்லியினச் செடிவகை; Spanish fly, கொப்புளம்-தாதூக்கம் உண்டுபண்ணும் தூள் வகைக்குப் பயன்படும் பசுமைநிற ஈ வகை; Spanish grass, தாள் செய்யப் பயன்படும் புல்வகை; Spanish juice, அதிமதுரப் பிழிவு; Spanish main, தென் அமெரிக்காவின் வடகிழக்குக் கரை; Spanish needles, களைச்செடி வகை; Spanish walk, குதிரையினது போன்று உயர்த்திச் செல்லும் நடை; Spanish windlass, இழைநெம்பு கட்டை, கயிறிழை இறுக்க நெம்புகோல்போல் பயன்படும் கட்டை; the Spanish, ஸ்பானிய நாட்டுமக்கள்; ஸ்பானிய நாட்டவர்; walk Spanish, ஓசையின்றி நட; அடிமேலடிவைத்து நட; கட்டாயத்தின் மீது நடக்கச் செய்; War of the Spanish succession, (வர.) 1701-1704-ல் நடைபெற்ற ஸ்பானிய அரசுரிமைப்போர்.

**spank**, *n.* பிட்டத்து அடி; *v.* பிட்டத்தில் அறை; அடித்து விரைந்து ஓடச்செய்.

**spank'er**, *n.* பிட்டத்தில் அறைபவர்; விரைநடைக் குதிரை; (பே-வ.) குறிப்பிடத்தக்க பெரிய ஒன்று; அதிர்ச்சிதரும் ஒன்று; மிகு கவர்ச்சியான மனிதன்; (கப்.) நடுக்கள முன் பின்புறக் கப்பற் பாய்.

**spank'ing**, *n.* பிட்ட அறை, பிட்ட உதை; பிட்ட அறை கொடுத்தல்; *a.* (பே-வ.) கவர்ச்சியான; குறிப்பிடத்தக்க; அருஞ்சிறப்புடைய, நேர்த்தியான; *adv.* கவர்ச்சியாக; குறிப்பிடத்தக்கவாறு; நேர்த்தியாக.

**span'less**, *a.* (செய்.) அளத்தற்கரிய, கவிந்திணைக்கப்பட முடியாத.

**spann'er**, *n.* கவிந்திணைப்பவர்; கவிந்திணைப்பது; புரிமுடுக்கி, திருகு முடுக்கும் அல்லது கழற்றும் கருவி; பாலத்தின் குறுக்குச்சட்டம்; இயந்திரத்தில் ஒருபோகு இயக்கத்திலுள்ள இணைப்புச்சட்டம்; (தொ.) throw a spanner into the works, திடுமெனத் தடங்கல்முறை செய்துவிடு, எதிர்பாராத் தடங்கல் ஆற்றல்களுக்கு ஆட்படுத்திவிடு.

**span'-roof**, *n.* சமச்சரிவுக் கூரை.

**span'-worm**, *n.* கம்பளிப் புழு.

**spar** [1], *n.* கப்பற் பாய்மரக் கழி; *v.* கப்பற் பாய்மரக் கழியினைப் பொருத்து; கழிகொண்டு ஆழமற்ற திட்டுக் கடந்து கப்பலைச் செலுத்து.

**spar** [2], *n.* ஒளிர்வற்ற சிம்புப் படிகவகை; (தொ.) calcareous spar, இயல்வரவான சுதையக்கரிகை, அறுகோண மணியுருவுடைய சுண்ணகச் சரக்கு; Derbyshire spar, Iceland spar, கண்ணடி செய்யப் பயன்படும் ஒளி ஊடுருவும் சுதையக் கரிகை.

**spar** [3], *n.* மற்குத்தியக்கம், குத்துச்சண்டை செய்வதுபோன்ற கைமெய் இயக்கம்; கோழிச் சண்டை இயக்கம்; *v.* மற்குத்தியக்கங் காட்டு, கைமுட்டியால் தாக்குவதுபோலவும் தடுப்பதுபோலவும் சாடைகாட்டு; குத்துச்சண்டை செய்; சொற்களைப் பரிமாறிக் கொள்.

**spa'rable**, *n.* குற்றுணி, புதைமிதியடிகளின் அடித்தோல் குதிகாற்பகுதி பொருத்தப் பயன்படும் தலையற்ற ஆணி வகை.

**spar'-buoy**, *n.* கழிமுனை மிதவை, நிமிர்முனைப் பாய்மரக் கழியடியில் இணைக்கப்பட்ட மிதவைக்கட்டை.

**spar'-deck**, *n.* கப்பலின் முழுநீள மேல்தளம்.

**spare**, *n.* காப்புறுப்பு, இயந்திரங்கள் பொறிகள் ஊர்திகள் வகையில் வேளைக்காப்பீட்டு உதிரி உறுப்பு; *a.* அருகலான, குறைவான; மட்டான; போதாத; ஒல்லியான, மெலிந்த; கஞ்சத்தனமான; செட்டான, சிக்கனமான; போதிய அளவினும் மிக்க; தனக்குப்போக மீந்த; மீத்தளிக்கக்கூடிய; மீதத்திலிருந்து கொடுக்கத்தக்க; பொதுத்தேவைக்கு மேற்பட்டதான; விட்டுக்கொடுக்கக்கூடிய; நெருக்கடி வேளைக்காக ஒதுக்கிவைக்கப்பட்ட; *v.* கொல்லாமல் விடு; அழிக்காமல் விடு; அழியாமற் பேணு; தண்டிக்காமல் விடு; கேடு செய்யாமல் விடு; மன்னித்துவிடு; பிழைத்துப்போக விடு; விட்டுவை; விட்டுவிடு; இல்லாமற் கழி; செலவிடாமல் மீத்துவை; காத்துவை; சொல்லாமல் விடு; மீத்து வழங்கு; மீதத்திலிருந்து கொடு; கடுந்தேவைக்குரியது போக மீதத்தைக் கொடு; அவசர ஈடுபாடுபோக மீத நேரங் கொடு; மிகுதேவைபோக மீத்துக்கொடுக்க இயலும் நிலையிலிரு; சிறிது கொடுத்தருள்; செட்டாக இடு; மட்டாகச் செலவிடு; (தொ.) spare diet, சிறிதளவான உணவு, சிக்கன உணவு, பத்திய உணவு; spare his feelings, உணர்ச்சி புண்படுத்தாதிரு, உணர்வுப்பண்பறிந்து நட; spare me, spare my life, என்னைக் கொல்லாது விடு, என்னைத் தப்பித்துக்கொள்ளவிடு; என்னைத் தொந்தரவுபடுத்தாதிரு; spare parts, உதிரியுறுப்புக்கள்; spare room, விருந்தினர்க்கான அறை, மிகுதிப்படியான அறை; spare the rod and spoil the child, அடியாத மாடு படியாது, அடி உதவுவதுபோல் அண்ணன் தம்பி உதவமாட்டார்; to spare, தேவைக்கு மேற்பட்ட அளவான.

**spare'rib**, *n.* செட்டெலும்பு, மிகவும் கொஞ்சமான இறைச்சியோடு கூடிய பன்றியின் மேல் விலா எலும்பு.

**spar'ger**, *n.* தேறல் வடித்தலில் தூவுகலம்.

**spar'ing**, *a.* கைக்கடிப்பான, கையிறுக்கமான, மிகக்குறைந்த அளவில் செலவுசெய்கிற; (தொ.) sparing partner, மற்குத்துத் துணைவர், குத்துச் சண்டைப் பயிற்சியில் ஒருவரைப் பயிற்றுவிப்பதற்காக அமர்த்தப்பட்டவர்.

**spar'ingly**, *adv.* செட்டாக, சுருக்கமாக.

**spar'ingness**, *n.* செட்டு; கையிறுக்கம்; கைச்சுருக்கம்.

**spark**, *n.* தீப்பொறி; சுடர்ப்பொறி; மின்விசைப்பொறி; அனற்கூறு; ஒளிர்முனை, மணிக்கல்லின் சுடர்முகப்பு; மின்னுந் துகள்; மினுங்கும் பொருள்; உயிர்ப்பு, உயிர்த்துடிப்பு, அறிவுத்துடிப்பு; பண்புத்திறம்; தூண்டுதிறம்; மகிழ்நன், ஒய்யாரன்; காதற்கொழுந்து; இன்பண்பாளர், சமுதாயத்திற் பழகுதற்கினியவர்; *v.* அனற்பொறி காலு, சுடர்ப் பொறி வெளியிடு; மின்பொறியுமிழ்; (மின்.) மின்னோட்டம் தடைப்படும் இடத்தில் மின்பொறி உண்டாக்கு; மகளிரிடையே காதல்தோழனுயமை; பழகினியனுயிரு; (தொ.) as the sparks fly upward, இயற்கை நியதியின் விலக்க முடியா உறுதித்தன்மையுடன்; fairy sparks, அழுகிய தாவரப் பொருட்களினின்று வெளிப்படும் சுடர் ஒளிர்வுப் பொருள்; strike sparks out of person, எழுச்சிமிக்கு உரையாடும்படி ஆளைத் தூண்டு; அறிவாற்றலோடு பேசும்படி தூண்டுதலளி.

**spark'-arrester**, *n.* மின்பொறிக் காப்பமைவு, மின்கருவிகளில் தீப்பொறியால் சேதம் உண்டாகாதபடி தடுக்கும் அமைவு.

**spark'-gap**, *n.* மின்விசைப்பொறி தாவும் மின்முனை இடைவெளிநெறி.

**spark'ing-plug**, *n.* உந்துபொறி-உள்வெப்பாலைகளில் வெடிக்கலவைக்கு அனற்பொறியூட்டும் அமைவு.

**spark'ish**, *a.* களிகிளர்ச்சிவாய்ந்த, பகட்டொய்யாரமான.

**spar'kle**, *n.* ஒளிர்வு; சுடர்வு; மினுக்குறவு; *v.* மின்னு மினுங்கு, ஒளிவிடு; சுடரிடு; பளபளப்புறு, பிறங்குறு.

**spark'less**, *a.* அனல் வகையில் பொறியற்ற ; பிறங்கொளியில்லாத.

**spark'let**, *n.* சிறுபொறி ; வளியூட்டும்பொறி, வளியூட்டு நீர்நிலையங்களிற் பயன்படுத்தப்படும் கரிய உயிரகியூட்டும் துணைக்கருவித் தொகுதிச் சிறுபொறி.

**spar'kling**, *a.* மின்னுகிற ; சுடர்விடுகிற : (தொ.) sparkling wines, சிறு குமிழ்வடிவில் கரியக வளி வெளிவிடுகிற இன்தேறல் வகைகள்.

**spark'-plug**, *n.*=sparking-plug.

**sparks**, *n. pl.* தந்தியில்லாக் கம்பி இயக்குபவர்.

**spa'rrow**, *n.* ஊர்க்குருவி, சிட்டுக்குருவி ; (தொ.) house sparrow, சிட்டுக்குருவி, இல்லுறை குருவி.

**spa'rrow-grass**, *n.* தண்ணீர் விட்டான் கொடி.

**spa'rrow-hawk**, *n.* பருந்துவகை.

**spar'ry**, *a.* சிம்புபோன்ற, சிம்பு வடிவான; சிம்புகள் நிறைந்த.

**sparse**, *a.* அடர்த்தியற்ற, நெருக்கமல்லாத ; அருகலான ; (வில., தாவ.) ஒழுங்கற்ற இடைவெளிகளில் நிகழ்கிற.

**sparse'ly**, *adv.* அடர்த்திக் குறைவாக.

**Spart'acist**, *n.* செர்மன் புரட்சியில் 1918-ஆம் ஆண்டில் ஸ்பார்டகஸ் (Spartacus) என்ற தீவிரவாதக் குழு உறுப்பினர் ; *a.* ஸ்பார்டகஸின் தீவிரவாதக் கட்சியைச் சேர்ந்த ; ஸ்பார்டகஸ் தீவிரவாதக்குழு உறுப்பினர் சார்ந்த.

**Spart'an**, *n.* பண்டைக் கிரேக்க நாட்டில் ஸ்பார்டா (Sparta) நகரத்தவர்; ஸ்பார்டா நகர்-அரசுக் குடிமகன்; கட்டெளிமைப் பொறுதிவீரப் பண்புகளையுடையவர் ; *a.* ஸ்பார்டாவைச் சார்ந்த ; கட்டெளிமைப் பொறுதி வீரப் பண்புகளையுடைய.

**spa'sm**, *n.* இசிப்பு, தசைக்கடுஞ் சுரிப்பு; திடீர்வலித் துடிப்பு; முறுகு தசைவேதனை ; முறுகயர்ச்சி ; (தொ.) clonic spasm, திடீர் அலையலையாக வருந் தசைச்சுரிப்புக் கோளாறு ; functional spasm, தொழில்துறை சார்ந்துவரும் தனிவகைத் தசைச்சுரிப்புக் கோளாறு ; tonic spasm, தொடர்ச்சியான தசைச்சுரிப்புக் கோளாறு.

**spasmod'ic**, *a.* தசைச்சுரிப்புக்கோளாறுகளுக்கு ஆட்பட்ட; விட்டுவிட்டு இசிப்பிற்கு ஆட்பட்ட ; வலிப்பு நோயால் ஏற்பட்ட ; விட்டுவிட்டு நிகழ்கிற ; (தொ.) spasmodic efforts, விட்டுவிட்டுச் செய்யும் முயற்சி.

**spas'tic**, *n.* வலிப்புவாதத்துக்கு ஆட்பட்டவர் ; மூளை இசிப்புவாத நோயாளி ; *a.* (மரு.) விட்டுவிட்டு நிகழ்கிற ; தசைச்சுரிப்புச்சார்ந்த ; இசிப்பினால் ஏற்படுகிற ; இசிப்பு நோய்க்கு ஆட்பட்ட ; வெட்டிவெட்டி இசிக்கிற.

**spas'tically**, *adv.* இசிப்பாக.

**spastic'ity**, *n.* இசிப்புநோய்க் கூறு, இசிப்புநோய்க்கு ஆட்படும் இயல்பு.

**spat** [1], *n.* முட்டை, சிப்பிமுட்டை; கிளிஞ்சில் முட்டை; *v.* சிப்பி வகையில் முட்டையிடு; காளான் வகையில் கருவிழை படர்வி.

**spat** [2], *v.* spit என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்

**spatch'cock**, *n.* அவசரத்திற்கொன்று சமைக்கப்பட்ட கோழி; *v.* (பே-வ.) தந்தியில் அதிரடியாகச் சொற்களைப் புகுத்து

**spate**, *n.* ஆற்றுவெள்ளம், பொங்குவெள்ளம்.

**spathe**, *n.* (தாவ.) மடல், பாளைப் புறத்தோடு.

**spath'ic**, *a.* சிம்புகள் சார்ந்த ; சிம்புகள்போன்ற ; எளிதிற் பிளக்கிற.

**spa'tial**, *a.* இடஞ்சார்ந்த, இடமகன்ற; இடத்தொடர்புடைய; இடப்பண்பிற்குரிய.

**spats**, *n. pl.* கணுக்காலுறை, குறுங்காலுறை.

**spattee'**, *n.* மேற்பொதி காப்பு, குழந்தைகளும் மகளிரும் புதைமிதிமேல் அணியுங் கம்பளிக் காலுறை.

**spatt'er**, *n.* சேறடிப்பு ; துளிசிதறடிப்பு ; தட்டொலி, தடதடவொலி ; *v.* சேறடி ; நீர்மத்துளி சிதறடி ; அழுக்குத் தெறிக்கவை; ஆள்மீது மண்வாரி வீசு; ஆள்மீது அவதூறு படர்வி.

**spatt'erdashes**, *n.* மேற்காப்புக் காலுறைக் குப்பாயம், அழுக்குநீர் சிதறி மேற்படாமற் காக்கும் காலுறை மேற்காப்பு.

**spat'ula**, *n.* வண்ணங்குழைக்கும் தட்டலகுக் கரண்டி ; (அறு.) நாவழுத்திப் பிடிக்குங் குறடு.

**spat'ulate**, *a.* அகன்ற கத்திபோன்ற, தட்டைக் கரண்டி வடிவுடைய.

**spat'ule**, *n.* பந்தடி மட்டைபோன்ற உறுப்புப்பகுதி; (வில.) பறவையின் வால்முனை.

**spav'in**, *n.* குதிரைப் பின்னங்கால் மூட்டு நோய்வகை ; (தொ.) blood spavin, bog spavin, நிணநீர்க் கசிவால் ஏற்படும் குதிரையின் பின்னங்கால் முழந்தாள் மூட்டு விரிவு நோய் ; bony spavin, எலும்புப்பொருட் கசிவால் ஏற்படும் குதிரை முழந்தாள் மூட்டுநோய் வகை.

**spawn**, *n.* உறுகீழின உயிர்களின் கரு, சினை, முட்டை ; மீன் சினை, மீன் முட்டை ; இழிவழக்கில் கால்வழிமரபு ; பூசண வலை, பூஞ்சைக்காளானிலுள்ள நாரியற் காளான் கருவிழை ; *v.* மீன்-தவளை-நத்தை-சிப்பி முதலியவற்றின் வகையில் முட்டையீனு; இழிவழக்கில் பிள்ளைகளைப் பெறு; முட்டைகள் அல்லது இளமீன் வகையில் குஞ்சுபொரிக்கப்பெறு ; (தொ.) spawn of the devil, spawn of Cobden, பேயின் கான்முளைகள் ; போக்கிரிகள், வீணர்கள் ; தங்கு தடையற்ற வாணிகக் கோட்பாட்டாளர்.

**spay**, *v.* பெண் விலங்கு வகையில் கருப்பை அகற்று, மலடாக்கு.

**speak**, *v.* பேசு ; கூறு, சொல்லு ; உரையாடு ; மேடையில் சொற்பொழிவாற்று ; மன்றங்களில் உரையாற்று ; உச்சரி, சொற்களை ஒலி; கருத்துத் தெரிவி; தனிக்கருத்து வெளியிடு; மெய்ம்மை வகையில் ஒளியாது தெரிவி; எழுத்துருவில் குறிப்பிடு, கருத்து வரை ; மொழிவகையில் பேசத்தெரிந்தவராயிரு, பேச இயலுபவராயிரு ; ஓவிய வகையில் உயிர்த்துடிப்புக் காட்டு, குறிப்பிடத் தக்கதாயிரு; செயலாற்றலுடையதாயிரு; சான்றுயமை, சான்று பகர்வதாயிரு; நாய்வகையில் கட்டளைப்படி குரை ; குரல்கொடு ; குயிலுறு, இசைக்கருவி வகையில் இசைக்குரல் எழுப்பப்பெறு ; கப்பல்வகையில் செய்தித் தொடர்பு மேற்கொள்ளு ; (தொ.) nothing to speak of, குறிப்பிடத்தக்கதொன்றுமில்லை ; so to speak, இவ்வாறு சொல்லலாமானால்; speak by the book, சரிநுட்பத் தகவல்களுடன் பேசு ; speak for, சார்பாளராகப்பேசு ; பதிலாகப் பேசு ; உணர்ச்சிகளுக்கு மாறின்றி எடுத்துரை ; speak freely, தங்குதடையின்றி முழுக்கருத்தைத் தெரிவி ; speak like a book, வழக்காசார மொழியில் பேசு, தன்னுணர்ச்சி தற்கருத்துப் படாமல் பேசு ; speak of, குறிப்பிடு, தெரிவி, கூறு ; speak one fair, வணக்க இணக்கமாகப் பேசு, மட்டு மதிப்புடன் உரையாடு; speak one's mind, கருத்தை வெளிப்படையாகத் தெரிவி ; speak out, speak up, உரத்துப்பேசு ; தாராளமாகப் பேசு, தடையின்றிப் பேசு ; முழுக்கருத்தைத் தெரிவி, உள்ளார்ந்த எண்ணத்தை வெளிப்படக்கூறு ; speak to, விளித்துக்கூறு, கண்டு பேசு, உரையாடு ; speak volumes for, போதிய சான்றுகள் தருவதாயிரு; நன்கு எண்பித்து விளக்குவதாயமை ; பண்புகளை வெளிப்பட எண்பித்துக் காட்டு ; speak well for, பண்புகளை எண்பித்து வெளிப்படக் காட்டு ; speak without book, விவரங்களையெல்லாம் நினைவினின்றே எடுத்துக்கூறு.

**speak'er** [1], *n.* பொதுமேடைப்பேச்சாளர், சொற்பொழிவாளர்.

**Speak'er** [2], *n.* அவைத்தலைவர், சபாநாயகர், மக்கள் அவையில் மன்ற அமைதிகாக்கும் பொறுப்புடைய தலைவர்.

**speak'ing**, *n.* பேசுதல், உரையாடுதல்; சொற்பொழிவாற்றுதல் ; *a.* பேசுகிற ; பேசுவதற்குப் பயன்படுகிற ; (தொ.) generally speaking, பொதுவாக, மேலீடாகக் கூறுமிடத்து; legally speaking, சட்டமுறைப்படி; not on speaking terms, பேசும் அளவிற்கு அறிமுகமில்லா நிலையில்; பேச்சுத்தொடர்பு இல்லாமல் முகமுறிவு ஏற்பட்டு ; roughly speaking, குத்துமதிப்பாக; speaking acquaintance, உரையாடல் அளவிற்கே பழக்கமானவர் ; speaking likeness, ஓவிய வகையில் உயிர்ப்பண்பின் மறுபடிவமாயிருக்குந் தன்மை strictly speaking

கண்டிப்பாகச் சொல்லப்போனால், திட்டவட்டமாக அறுதியிட்டுச் சொன்னால்.

**speak'ing-trumpet,** *n.* குரல் உய்க்குங் கருவி.

**speak'ing-tube,** *n.* ஒலிசெலுத்து குழாய்.

**spear,** *n.* ஈட்டி, வேல்கம்பு, எஃகுமுனை கொண்ட வேட்டை எறிகருவி; படைவீரர் எறிவேல்; மீனெறி வேல்; மீன் குத்தும் ஈட்டி; *v.* வேல்கொண்டு எறி; ஈட்டியாற் குத்து; குத்தி ஊடுருவு; நீள்தண்டாக முளைத்து எழு; (தொ.) spear side, குடும்பத்தின் ஆண்வழி மரபு, ஆண் கால்வழி.

**spear'head,** *n.* ஈட்டிமுனை, தாக்குதலை நடத்துவதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆள் அல்லது குழு; தாக்குமுகப்பு.

**spear'man,** *n.* வேல் வீரன், வேல்கொண்டு போரிடும் காலாட் படை வீரன்; *pl.* spear'men.

**spear'mint,** *n.* தோட்டப் புதினுக்கீரை வகை.

**spec,** *n.* (பே-வ.) சூதாட்ட முயற்சி; துணிவு வாணிகம்.

**spe'cial,** *n.* சிறப்புமுறைக் காவல்துறையினர்; சிறப்புமுறைப் புகைவண்டி; சிறப்புமுறைத் தேர்வு; செய்தித்தாள் வகையில் சிறப்பிதழ்; *a.* தனிவகையான, சிறப்பு முறையான; சிறப்பியல்புடைய; பொதுநிலை மீறிய; குறிப்பிட்ட காரணத்திற்கான; தனிச் செறிவுடைய; தனி முனைப்புடைய; தனிப் படிமுறையான; தனிப்பட்ட அளவுடைய; (தொ.) special case, வழக்குமன்றத்தில் வழக்காடிகளாற் சேர்ப்பிக்கப்படும் தனிமுறைச் செய்தித் தெரிவிப்பு வாக்குமூலம்; தனித்தன்மை வாய்ந்த வழக்கு, சிறப்புமுறை வழக்கு; தனிமுறை நிகழ்ச்சி; விலக்கான செய்தி; special constable, சிறப்புமுறைக் காவல்துறை அலுவலர்; special edition, சிறப்புப் பதிப்பு, இடைப்பட்ட பிந்திய செய்திகளைச் சேர்த்து வெளியாகும் இதழ்ப்பதிப்பு; special licence, முன்னறிவிப் பின்றிக் கால இடக் கட்டின்றி மணவினைக்கு வகை செய்யுந் தனியுரிமைச்சீட்டு; special logic, தனிமுறை நியாயம்; special pleader, தனிமுறைக் கருத்துரை வழக்குரைஞர்; special pleading, (சட்.) புதுச்செய்தி அடிப்படையான வாதம்; (பே-வ.) பகட்டான போலிவாதம்; (பே-வ.) சார்பு வாதம்; special verdict, வழிமுறைத் தீர்ப்பு, எண்பிக்கப் பட்ட மெய்ம்மைகளை மட்டுங் காட்டி முறைமன்றத்தின் முடிவுக்கு விட்டுவிடுந் தீர்ப்பு.

**spe'cialism,** *n.* தனித்துறை ஈடுபாடு; தனித்துறைப் பயிற்சி; தனித்துறைப் பயிற்சிப்பண்பு.

**spe'cialist,** *n.* வல்லுநர், சிறப்பாய்வறிஞர், தனித்துறை நிபுணர்.

**specialis'tic,** *a.* தனித்துறை வல்லாண்மை சார்ந்த; தனித் துறையாய்விற்குரிய.

**special'ity,** *n.* தனிக்கூறு, சிறப்புக் கூறு, தனிப்பண்புக் கூறு; தனிமுறைச் சிறப்புத்தொழில்; தனிமுறைச் சிறப்புச் செயல்; தனிச்சிறப்புரிமைச் செய்பொருள்; தனி உழைப்புத் துறை; தனிக்கவனிப்புத் துறை.

**specializa'tion,** *n.* தனித்துறைப்பாடு; தனித்துறைப்பயிற்சி; வகைதிரிபுப் பெருக்கம்; வகைதிரிபேற்றம்; தனிப் பண்பு வளர்ச்சி; தனி வேறுபாட்டு வளர்ச்சி; சிறப்புப்படை நியமம்.

**spe'cialize,** *v.* தனித்துறை வல்லுநராயிரு; துறை வல்லுந ராக்கு; தனித்துறைப் பயிற்சி மேற்கொள்; தனித்துறை ஆய்வில் மேன்மேலும் ஆழ்ந்துசெல்; தனித்துறைப் படுத்து; பொருட் குறுக்கஞ் செய்; தனிவகையாக்கு; தனியியற்படுத்து; தனிப் பண்பூட்டு; தனித்தன்மை உடையதாக்கு; தனிச் செறிவூட்டு; பண்பு முனைப்பாக்கு; தனியியற்படு, தனித் தன்மையுடையதாகு; தனிப்படுத்து; தனிப்படக் குறிப்பிடு; வரையறுத்துக் குறிப்பிடு; தனி வரையறைப்படுத்து; தனி விளக்கமளி; வகை திரிபுறுத்து; வகை பிரித்துக் காட்டு; (உயி.) தனி வேறுபாடு பெருக்கிக் காட்டு; தனி வேறுபாடு உடையதாகு.

**spe'cialty,** *n.* தனிமுறைச் சிறப்புத்தொழில்; தனிச்சிறப் புப் பண்டம்; தனிச்சிறப்புச் செயல்; தனி உழைப்புத்துறை; தனிக் கவனிப்புத்துறை; (சட்.) முத்திரை ஒப்பந்தம்; முத் திரை ஆவணம்.

**spe'cie,** *n.* நாணயம்.

**spe'cies,** *n.* (தாவ., உயி.) வகை பிரிவு; (அள.) வகை மாதிரி, இனத்தில் மேலும் வகைபிரிக்க முடியாதபடி சிறிதான தனியுருக்களடங்கிய குழு; படிவம்; போன்றிருப்பது; சமயத்துறையில் திருவுணவின் புற வடிவம்; (சட்.) புற உருவமைப்பு; *pl.* spe'cies; (தொ.) origin of species, உயிரினவகை வேறுபாட்டுத் தோற்றம், உயிரின வகை வேறுபாட்டு மலர்ச்சி; உயிரின மலர்ச்சி; the species, our species, மனிதவினம்.

**specif'ic,** *n.* தனிப் பிணிமருந்து; தனிநோய்ப் பண்டுவ முறை; *a.* திட்ட வட்டமான; தெளிவான; வரையறுத்துக் குறிக்கப்பட்ட; திட்ட வட்டமான குறிப்புக்களையுடைய; மருந்துவகையில் தனி நோய்க்குரிய; மருந்து வகையில் தனிப்பயனுறுதி வாய்ந்த; தனிவகை சுட்டிய; தனிவகைப் பட்ட; தனிவகைப் பண்புத் தொடர்பான; தனிச்செய்தி சார்ந்த; தனிமுறைச் சார்புடைய; தனிவகைக்கு மட்டுமேயுரிய; தனிவகை பிரித்துக்காட்டுகிற; வகைபிரிவுக்குரிய; தீர்வை வகையில் எடை முதலியன பொருட்படுத்தாமல் அளவு ஒன்றினையே கணிப்படிப்படையாகக் கொண்ட; (தொ.) specific cause, தனிப்பட்ட காரணம்; குறிப்பிட்ட நோய்க்கேயுரிய காரணம்; specific centre, வகைபிரிவுக் குரிய மூலப்பகுதி; specific gravity, வீத எடைமானம்; specific heat, வீத வெப்பமானம், குறிப்பிட்ட அளவை ஒருபாகை வெப்பு உயர்த்துவதற்கான வெப்ப அளவின் நீரொப்பீட்டெண்; specific medicine, தனிப்பிணி மருந்து, குறிப்பிட்ட நோய்க்குரிய பயனுறுதி வாய்ந்த மருந்து; specific name, (உயி.) வகைச்சுட்டு, இனத்தின் வகைச் சுட்டுப் பெயர்க்கூறு.

**specifica'tion,** *n.* தனிக்குறிப்பீடு; தனித்தனி விவரக் குறிப்பீடு; விளக்க விவரம்; தனி ஒதுக்கீடு; இனக் குறிப் பொதுக்கீடு; காப்புரிமை மனுவின் பொருள் ஆக்க விவரக் குறிப்பு; (சட்.) தனி உரிமையாகக் கருதப்படும் பொருளின் கூட்டாக்க முறை.

**specifica'tions,** *n. pl.* சிற்பியின் முழு வேலைப்பாட்டுப் பொருள் ஆக்கத்திட்ட விவரம்; பொறியியலாளரின் முழு வேலைமானத் திட்ட விவரம்.

**spe'cify,** *v.* பெயர் சுட்டிக் குறிப்பிடு, தனிப்படக் குறித்துக் காட்டு; விளக்க விவரமாகக் கூறு; இன வகை விரி விளக்கங் குறிப்பிடு; இனம் இனமாகக் குறி; சிற்பி வகையில் முழு வேலைமானத் திட்டத்தில் உட்படுத்தி இணை.

**spe'cimen,** *n.* வகைமாதிரி, உருமாதிரி; எடுத்துக்காட்டு மாதிரி, விளக்க மாதிரிச்சான்று; மாதிரித் துணுக்கு; சான் றிலக்கம், சிறப்புயர் மாதிரி; மேல்வரிச் சான்று; (தொ.) specimen page, மாதிரிப் பக்கம்; specimen signature, மாதிரிக் கையொப்பம்.

**speciol'ogy,** *n.* தோற்றுவாய் ஆராய்வுநூல்.

**spe'cious,** *a.* புறப்பகட்டான, போலியான, வெளிக்குச் சரி யாகத் தோன்றுகிற; நம்பக்கூடிய தோற்றமுள்ள.

**speck**[1], *n.* சிறுபுள்ளி, மாசு; கறை; தூசு; அழுக்கின் சிறு துகள்; பழத்தின் மேலுள்ள புள்ளி, பழத்தின் அழுகற் பகுதி; *v.* புள்ளிகள் இடு; கறைப்படுத்து; புள்ளிகள் அமையப் பெறுவி.

**speck**[2], *n.* கொழுவிய இறைச்சி, கொழுப்பார்ந்த பன்றி இறைச்சி; கடல்நாய்க் கொழுப்பு; திமிங்கிலக் கொழுப்பு.

**spec'kle,** *n.* சிறு புள்ளி, பொட்டு, கறை; *v.* புள்ளிகள் இடு; பொட்டுக்களால் நிரப்பு; கறைப்படுத்து.

**specksioneer', specktioneer',** *n.* மண்டா, கயிறுகட்டப் பட்ட திமிங்கில எறிவேல்.

**specs,** *n. pl.* (பே-வ.) மூக்குக்கண்ணாடி.

**spec'tacle,** *n.* பொதுக்காட்சி, பொதுமக்களுக்கான காட்சி; கண்காட்சி, காணத்தக்க காட்சி.

**spec'tacled,** *a.* மூக்குக்கண்ணாடி அணிந்துள்ள; விலங்கு கள் வகையில் மூக்குக்கண்ணாடி போன்ற குறியுள்ள; (தொ.) spectacled bear, தென் அமெரிக்க கரடி வகை.

**sponsor'ial**, *a.* பெயர்த்தந்தைபோன்ற; பெயர்த்தாய் போன்ற; ஆதரவாளருக்குரிய; ஆதரவான; பொறுப் பேற்பாதரவான; பேராதரவாளருக்குரிய; நல உத்தரவாதி யான, பிறரொருவருக்காகத் தன்னைப் பொறுப்பாளியாக்கிக் கொள்கிற.

**spon'sorship**, *n.* பெயர்த்தந்தை நிலை; பெயர்த்தாயர் நிலை; ஏற்பாதரவு, ஊக்க ஆதரவு; நல உத்தரவாதம்.

**spontane'ity**, *n.* தன்விருப்ப நிலை; தன்விருப்பியல்பு, புறத் தூண்டுதலில்லாமை; (உயி.) இயல்பாயியங்கும் நிலை, அகத் தூண்டுதலால் இயலும் நிலை.

**spontan'eous**, *a.* தன் விருப்பான; தானே இயங்குகிற; தன்னியலார்ந்த; புறத்தூண்டுதலற்ற; புறக்காரணமில் லாத; முயற்சியில்லாதெழுகிற; பேணாது வளர்கிற; நோக்கமற்ற; (உயி.) இயல்பான, உள்ளார்ந்த அகத்தூண்டுத லான; (தொ.) spontaneous combustion, தன்னக வேதி யியல் எரிமானம்; spontaneous generation, தன்னியல் உயிர்த்தோற்றம்; spontaneous suggestion, தற்கருத்துத் தூண்டுதல்.

**spontan'eously**, *adv.* தானாகவே; தன்னியல்பாகவே; வலிய; தன்விருப்பாக; புறத்தூண்டுதல் இல்லாமலே; புறக்காரணம் எதுவுமின்றியே; பேணி வளர்ப்பாரில்லாமலேயே; முயற்சி யில்லாமலே, எண்ணா நிலையிலேயே; தன்னக வேதியியல்பிறு லேயே; தற்பிறப்பாகவே.

**spontan'eousness**, *n.*=spontaneity.

**spontoon'**, *n.* படைவீரரின் குத்துவாள் வகை.

**spoof**, *n.* (இழி.) ஏமாற்று விளையாட்டு; சீட்டாட்ட வகை.

**spoof'er**, *n.* (இழி.) எத்தன்.

**spook**, *n.* பேய்; ஆவி உருவம்.

**spook'ish, spook'y**, *a.* பேய் உருச்சார்ந்த; பேய்த்தன்மை யான.

**spool**, *n.* கண்டு, நூல்சுற்றிவைக்கும் வட்டு; திரைப்படத் தில் தகடு சுற்றிவைக்குந் தண்டு; தூண்டில் கைப்பிடிமுனையி லுள்ள சுழல் உருளை; *v.* கண்டுமீது சுற்று.

**spoon**[1], *n.* கரண்டி; கரண்டி வடிவப்பொருள்; கரண்டியுரு வான துடுப்பு; குழிப்பந்தாட்டக் குமிழ்மட்டை; சுழல்மின் னிரை, இரைபோலத் தூண்டில்மீன் கவரும் சுழல் உலோகத் தகடு; *v.* கரண்டியால் எடு; கரண்டியால் எடுத்தருந்து; சிறிது சிறிதாக எடுத்தருந்து; தூண்டிலில் சுழல்மின்னிரை கொண்டு மீன்பிடி; புல்வெளி மரப்பந்தாட்டத்தில் தள்ளுபந் தடி அடி; மரப்பந்தாட்டத்தில் பந்தை மெல்ல அடி; மட்டையால் பந்தை ஏந்தியனுப்பு; (தொ.) apostle spoon, கைப்பிடியில் திருச்சீடர் வடிவங்கள் பொறித்த கரண்டி, born with silver spoon in mouth, பிறக்கும்போதே செல் வச் சிறப்புடன் தோன்றிய; dessert spoon, பழ உணவுக் கரண்டி; egg and spoon race, கரண்டி முட்டை ஓட்டப் பந்தயம்; table spoon, மேசைக் கரண்டி; பெரிய கரண்டி; tea spoon, தேநீர்க் கரண்டி; சிறு கரண்டி.

**spoon**[2], *n.* கபடற்றவர்; நாணமில் காதலர்; *v.* ஏதிலாக் காதல்கொள்; (தொ.) be spoons on, அசட்டுத்தனமான காதல் கொண்டிரு.

**spoon'-beak**, *n.* கரண்டிபோன்ற அலகுடைய பறவை வகை.

**spoon'-bill**, *n.* கரண்டிபோன்ற அலகுடைய பறவை வகை.

**spoon'er, spoon'erism**, *n.* சகாரம், தலைப்பெழுத்துத் தற் செயல் மாற்று வழக்கு, தொடர்களில் தொடக்க எழுத்துக்களை மாற்றி அமைக்குஞ் சொற்பாணி; (எ-டு) அல்லன் மல்லல்= மல்லன் அல்லல்.

**spoon'-fed**, *a.* கரண்டியிலூட்டி வளர்க்கப்பட்ட; சிறுகச் சிறுகக் கூறிப் பயிற்றுவிக்கப்பட்ட; செயற்கையாக ஊக்கி ஆதரிக்கப்பட்ட, நாட்டுத்தொழில்கள் வகையில் இறக்குமதி வரிகளாலோ நன்கொடையுதவியாலோ வலிந்து வளர்க்கப் பட்ட.

**spoon'ful**, *n.* கரண்டியளவு.

**spoon'ily**, *adv.* மேலீடான உணர்ச்சிப்பகட்டுடன்; விளை யாட்டுத்தனமான காதற்பாங்கில்; மெல்லினிமையாக.

**spoon'-meat**, *n.* பாலுணவு; குழந்தை உணவு.

**spoon'ness**, *n.* மேலீடான உணர்ச்சிப் பகட்டு; விளையாட்டுக் காதல்.

**spoon'-net**, *n.* கரைமீன் வலை.

**spoon'y**, *n.* (இழி.) அரைகுறைப் பேதை; சிறுபிள்ளைத் தன மான காதலன்; *a.* உரமற்ற; மேலீடான உணர்ச்சி உடைய; இன்கவர்ச்சியான; காதற்பாங்குடைய; மெல்லினிமையான.

**spoor**, *n.* மோப்பத் தடம்; *v.* மோப்பத்தடமறிந்து பின்பற்றிச் செல்.

**spoor'er**, *n.* மோப்பத்தால் தடம் பின்பற்றுபவர்.

**sporad'ic**, *a.* சிதறலான; தொடர்ச்சியற்ற.

**sporad'ical**, *a.* (அரு.) =sporadic.

**sporan'gium**, *n.* (தாவ.) சிதல்விதையுறை.

**spore**, *n.* (தாவ.) சிதல்விதை, தாவர வகைகளில் புத்தினம் பிறப்பிக்கவல்ல இலைச்செதிள்போன்ற நுண்துகள்; (உயி.) கருவியல் நுண்மம், புது உயிராக வளரத்தக்க உயிர்ம நுண்மம்; விதை; கருவணு; கருமூலம், விதைமூலம்.

**sporogen'esis**, *n.* சிதலாக்கம், சிதல்விதை உருவாதல்; கரு வியல் நுண்மம் உருவாதல்.

**sporo'genous**, *a.* சிதல்விதை உருவாக்குகிற; கருவியல் நுண்மம் தோற்றுவிக்கிற.

**spo'rran**, *n.* நுண்மயிர்ப் பை, ஸ்காத்லாந்து மேட்டு நில வாணர் அணியும் நுண்மயிர் போர்த்த பை.

**sport**, *n.* விளையாட்டு; வீர விளையாட்டு; போட்டி விளையாட்டு; உடற்பயிற்சி விளையாட்டு; பந்தய விளையாட்டு; வன்மை விளையாட்டு; மனைப்புற ஆர்வ ஈடுபாடு; கேளிக்கை; நேரப் போக்கு; பொழுதுபோக்கு; களியாட்டம்; இன்பக் கேளிக்கை; இன்ப வாழ்வு; வேடிக்கை, விநோதம்; புதுமைக்கவர்ச்சி, புது மாற்ற ஆர்வம்; நகையாட்டு, களிகிளர்ச்சி; கேலி, கிண்டல், குறும்பாட்டம்; விளையாட்டுப்பொருள்; எடுப்பார் கைப் பிள்ளை; நகையாட்டுக்குரியவர்; வேடிக்கை விளையாட்டுக் காரர்; இன்மகன், நன்மகன், தோழமைக்கினியவர்; இன்ப வாணர், சூழின்ப அலைபரப்புபவர்; விளையாட்டுவீறமைவாளர், போட்டியில் நேர்மையும் பெருந்தன்மையுமிக்க சால்புடை யவர்; (உயி.) மரபுப் பிறழ்வுரு, வழக்கமான மரபியலினின்று மாறுபட்டுத்தோன்றும் உயிர் அல்லது தாவரம்; *v.* விளை யாடு; துள்ளிக்குதி, குதியாட்டமாடு; துள்ளிமகிழ்; கிளர்ச்சி யுடன் பொழுதுபோக்கு; விளையாட்டில் ஈடுபடு; கள ஆட் டங்கள் பயில்; விளையாட்டாகச் செயலாற்று, எளிமையாகக் கருதிப் புறக்கணித்து நட; (தொ.) athletic sport, ஓடுதல்-குதித்தல்-எடை தூக்கல் முதலிய உடற்பயிற்சி விளையாட்டு; have good sport, வேட்டையில் வெற்றியுறு; வேட்டையில் நாடிய வேட்டை விலங்கு-பறவை முதலியவற்றைக் கைப் பற்றி மீள்; in sport, நகையாட்டாக, கேலியாக; வேடிக்கை யாக; make sport of, கேலிக்குரியதாக்கு; கேலிசெய்.

**sport'ful**, *a.* களிகிளர்ச்சியுடைய, மகிழ்வான.

**sport'ing**, *a.* துள்ளி விளையாடுகிற; விளையாட்டில் ஈடுபட் டுள்ள; விளையாட்டுத்துறையில் அக்கறையுடைய; விளை யாட்டுப் போட்டிக்குரிய சால்புடைய; பெருந்தன்மையான, எதிரிக்கு நேர்மை காட்டுகிற; (தொ.) sporting chance, ஒருவேளை கிடைக்கும் தற்செயற் பேறு; ஆர்வமுயற்சியாளர் எதிர்பார்க்கத்தக்க தற்செயலடைவு; sporting conduct, எதிராளியிடம் பெருந்தன்மையுடைய நடத்தை; sporting man, விளையாட்டில் அக்கறையுடையவர்; sporting offer, எதிராளிக்கு வாய்ப்புப்பேறு அளிக்கும் செய்திவழங்கீடு.

**sport'ingly**, *adv.* விளையாட்டாக; பொழுதுபோக்காக; கேலியாக; பெருமனத்துடன்.

**sport'ive**, *a.* விளையாட்டுத்தனமான; களிகிளர்ச்சியுடைய; காதலூடாட்டமுடைய; வேண்டுமென்றே செய்கிற.

**sport'ively**, *adv.* விளையாட்டாக.

**sport'iveness**, *n.* விளையாட்டுப் பண்பு; களிகிளர்ச்சி; காதலூடாட்டம்.

**sports**[1], *n. pl.* போட்டிப் பந்தயங்கள்.

**sports**[2], *a.* போட்டி விளையாட்டுகளுக்கு ஏற்ற; (தொ.) sports car, போட்டிப்பந்தயத்துக்குரிய உந்துகலம்; sports coat, sports jacket, போட்டிவிளையாட்டு உடுப்பு.

**sports'field**, *n.* போட்டிப்பந்தயக் களம்.

**sports'man**, *n.* போட்டிப்பந்தய ஈடுபாட்டாளர்; வேட்டை ஈடுபாட்டாளர்; பெருந்தன்மையானவர், விட்டுக்கொடுப்பவர்; வாழ்க்கையை விளையாட்டாகக் கருதுபவர்.

**sports'manlike**, *a.* போட்டிப்பந்தய வீரனுக்குத் தகுதியான; போட்டிப் பந்தய வீரச்சால்புடைய; போட்டி நேர்மையுடைய; ஏனையோர்க்கும் சரிநிகர் வாய்ப்பளிக்கிற; மன்னித்து மறக்கும் பண்புடைய.

**sports'manship**, *n.* விளையாட்டுத் துறைச் சால்புடைமை; போட்டிநேர்மை மனப்பான்மை; ஒத்தஉரிமை எதிராளிக்குத் தரும் பாங்கு; மன்னித்து மறக்கும் பண்பு; வீரப்போட்டி விளையாட்டுக்கு என்றும் ஒருங்கியுள்ள நிலை.

**sports'woman**, *n.* போட்டிப்பந்தயங்களில் விருப்பார்வமுடைய மாது; வேட்டை விருப்பமுடைய பெண்; மனைப்புற ஈடுபாடுகளில் அக்கறை காட்டும் அரிவை.

**spo'rular**, *a.* சிறு சிதல்விதை சார்ந்த; சிறு கருவணுக்குரிய.

**spo'rule**, *n.* சிறுசிதல்விதை; சிறு கருவியலணு.

**spot**, *n.* இடம்; குறியிடம், குறிப்பிட்ட இடம்; பொருளின் தனியிடக்கூறு; சரிநுண்ணிடம்; புள்ளி; கறை; மைப்பொட்டு; அழுக்குத்தடம்; தனித்தடம்; சுட்டி; சிறு துணுக்கு; சிறிதிடையீடு, சிறிதுகாலம்; குடிவகையில் சிறிதளவு; ஞாயிற்றுமண்டலத்தின் இருட்புள்ளி; மேடைக் குறியிடம், மேசைக்கோற்பந்தாட்டத்தில் மேடைக்கோடி நடுவிலுள்ள கருவிட்டப்புள்ளி; குறியிலக்கொளி; குறியிலக்கொளி விளக்கு; நெற்றியில் சுட்டியுடைய வெண் மாடப்புறு; மீன்வகை; வேலை வகையில் சிறு நுணுக்கிடம்; ஒழுக்கக் கறை; குறை, குறைபாடு; (இழி.) குதிரைப் பந்தயத்தில் வெற்றிபெறும் வாய்ப்புக்குறிப்பு; குதிரைப் பந்தயத்தில் வெற்றிபெறும் வாய்ப்புக் குறிக்கப்பட்ட குதிரை; *v.* புள்ளியிடு; கறைப்படுத்து, அழுக்காக்கு; புகழ்கெடு, புகழுக்குக் கறை உண்டாக்கு; புள்ளிகளால் குறிப்பிடு; புள்ளியடையாளப்படுத்து; பொருளைப் புள்ளிகளால் தனிப்படக் குறியிட்டுக்காட்டு; பொருள் வகையில் புள்ளிகளால் தனிப்படக் குறியிட்டுக் காட்டப்பெறு; புள்ளியிட்டுக் குறித்துக்காட்டு; சரியிடம் குறி; சரியிடம் குறித்துக்காட்டு; சுட்டிக்காட்டு; கண்டுபிடி; இனம் அறி; அடையாளம் கண்டு இனம் கண்டுபிடி; வானூர்தியிலிருந்து எதிரியின் அமைவிடம் குறித்துணர்; (பே-வ.) குதிரைப்பந்தயத்தில் வெற்றிபெறும் வாய்ப்புடைய குதிரையினைக் காட்டு; (தொ.) knock spots off, knock the spots off, எளிதாக மேம்பட்டு விஞ்சியிரு; on the spot, அந்தச்சமயத்தில் அந்த இடத்திலேயே, உடனடியாக அந்த இடத்திலேயே; அக்கணமே; அங்கேயே; இடர்க்கட்டத்தில்; ஆள் வகையில் முழுதும் விழிப்புடைய நிலையில்; நிலைமைக்கு முற்றிலும் ஒத்தபடி; சமயத்திற்கு ஏற்றவாறு நடக்கும் திறனுடையவராய்; விளையாட்டு முதலிய வகையில் ஊக்கமான நிலையில், ஆயத்த நிலையில்; put on the spot, (இழி.) சதிக்கொலைக்குக் குறிப்பிடு; படுகொலை செய்; spot cash, கையில் பணம்; உடனே பணங்கொடு.

**spot'-ball**, *n.* கரும்புள்ளியால் வேறுபடுத்திக்காட்டிய வெள்ளைப் பந்து.

**spot'-barred game**, *n.* ஒற்றைக் காப்பறவாட்டம், மேசைக் கோற்பந்தாட்டத்தில் காப்பறவுக்கட்டு இருமுறை ஒத்துக் கொள்ளப்படாத ஆட்ட வகை.

**spot'less**, *a.* குறிப்பிட்ட இடம் அற்ற; கறையற்ற; தூய.

**spot'lessly**, *adv.* கறையின்றி, அறத்தூயதாக.

**spot'lessness**, *n.* கறையற்றிருத்தல், முழுத்தூய்மை.

**spot'light**, *n.* நாடகமேடை விளக்கு வட்டம்.

**spots**, *n. pl.* உடனடிப் பணத்திற்கு விற்கப்படும் வாணிகப் பொருள்கள்.

**spot'-stroke**, *n.* காப்பறவுக்கட்டு, மேசைக்கோற்பந்தாட்டத்தில் சேமப் பகுதிக்குத் தொலைவிலுள்ள சிவப்புப் பந்தின் கைப்பற்றீடு.

**spott'ed**, *a.* புள்ளியிட்ட; புள்ளிகள் நிரம்பிய; புள்ளியிட்டுக் குறித்துக் காட்டப்பட்ட; கண்டுபிடிக்கப்பட்ட; தனியே குறிக்கப்பட்ட; ஐயுறவுக்குரிய; (தொ.) spotted dog, நாய் வகை; (இழி.) உலர்முந்திரிப்பழம் விரவிய அப்பவகை; spotted fever, மூளை அழற்சிச் சன்னிநோய்.

**spott'edness**, *n.* புள்ளியுடைமை, தனிப்படக் குறிக்கப்பட்ட தன்மை.

**spott'er**, *n.* எதிரியமைவிடங் கண்டுபிடிப்பவர்; விமானத்திலிருந்து சரியிடங் கண்டு குறிப்பவர்.

**spott'iness**, *n.* புள்ளியுடைமை, தூய்மையின்மை.

**spott'y**, *a.* புள்ளியுடைய, தூய்மையற்ற.

**spous'als**, *n. pl.* மணவினை.

**spouse**, *n.* வாழ்க்கைத்துணை; கணவன்; மனைவி.

**spout**, *n.* குழாய்விளிம்பு; கிண்ணிமூக்கு; கெண்டிவாய்க் குழல்; மோட்டுத் தூம்பு; மதகுவாய்; பீற்றுவாய்; நீர்த்தாரை; எழுநீரூற்று; கூல முதலியவற்றின் கொட்டு தாரை; திமிங்கில ஊற்றுவாய்த் தாரை; நீர்விலங்குகளின் உயிர்ப்புப்புழை; கூலமுதலியவற்றை இயந்திரத் தொட்டி நோக்கிக்கொண்டுசெல்லும் பாய்கால் தட்டு; அடைமானக் கடையின் பொருள் தூக்கிக் காட்டுபொறி; அடைமானக் கடை; நீர்வீழ்ச்சி; *v.* பீற்று; கொட்டு; தாரையாக ஊற்று; கொப்பளி; பீறி வெளிப்படு; கொட்டுறு; பாய்ந்தொழுகு; தாரையாக ஒழுகு; திமிங்கில ஊற்றுவாய் கொப்பளி; தொடர்ந்து முழங்கு; ஊற்றுமடை திறந்தாற்போல் பேசு; சொற்பொழிவாற்று; (தொ.) be up the spout, அடைமானக் கடையில் அடைமானத்துக்கு வைக்கப்பெறு.

**spout'er**, *n.* கொப்பளிப்பவர்; கொப்பளிப்பது; எண்ணெய்க் கிணற்றின் எழுநீரூற்றுவாய்; ஊற்றுவாய் கொப்பளிக்கும் திமிங்கிலம்; திமிங்கில வேட்டைக்கப்பல்; சொற்பொழிவாளர்.

**spout'-hole**, *n.* திமிங்கிலத்தின் உயிர்ப்புப்புழை ஊற்றுவாய்த் தாரை.

**spout'less**, *a.* குழல்வாயற்ற; தூம்பற்ற; பீற்றுவாய் விளிம்பற்ற; திமிங்கில வகையில் ஊற்றுவாய்த் தாரையற்ற.

**spout'y**, *a.* மிதக்கும்போது நீர் பீற்றுகிற.

**sprag**, *n.* உந்துகலச் சக்கரத் தடுப்புக் கட்டை; சுழற்சித் தடுப்புக் கம்பி; சக்கரம் பின்னுருளாது தடுக்கும் காப்பமைவு.

**sprain**, *n.* சுளுக்கு; சுளுக்கு வீக்கம்; *v.* சுளுக்குவி, கணுக்கால்-மணிக்கட்டு முதலியவற்றின் வகையில் முறுகுவி.

**spraints**, *n. pl.* நீர்நாய் விட்டை.

**sprang**, *v.* spring என்பதன் வழக்கமான இறந்தகால வடிவம்.

**sprat**, *n.* அயிரைபோன்ற சிறு உணவு மீன்வகை; (பே-வ.) சவலை, மெலிந்த குழந்தை; *v.* அயிரை வகைச் சிறுமீன் பிடி; (தொ.) throw a sprat to catch a herring, throw a sprat to catch a mackerel, throw a sprat to catch a whale, கெண்டையிட்டு வரால் பிடி, பெரிது பெறச் சிறிது இழ.

**sprat'-day**, *n.* அயிரை வகைச் சிறுமீன் பருவம்படுநாள், நவம்பர் 9-ஆம் நாள்.

**sprawl**, *n.* சப்பைக்கிடை, கைகால் பரப்பிக்கொண்டு கிடக்கும் நிலை; சப்பாணி நடை, கைகால் பரப்பிக்கொண்டு செல்லும் இயக்கம்; *v.* கைகால் பரப்பிக்கிட, பரப்பு முழுவதும் நிரப்பிக்கிட; கைகால் பரப்பிக்கொண்டு அருவருப்பாக நட; செடி வகையில் தாறுமாறுகக் கிளைபரப்பிக்கொண்டு வளர்; கையெழுத்து வகையில் ஏறுமாறான வரைகளை உடையவையாயியலு; (படை.) ஒழுங்கின்றிக் கலப்பாகப் பரவு.

**spray**[1], *n.* திவலை, சிதறு நுண்டுளி; தூவானம், மழை அல்லது அலையோர ஈரத்திவலைக் காற்று; சிதறுகலத்தின் சிதறலை நுண்டுளி; மருத்துநீர்ச் சிதறனுத்திவலை; அணுத் திவலைச் சிதறலுக்கான மருத்துநீர்க்கலவை; *v.* நுண்டுளி சிதறடி, திவலை தூவு; திவலையை மேலே மோதுவி; திவலை பீற்று, திவலை தூவிப் படிவி; நீர்மத்தை நுண்துளிகளாக்கிச் சிதறடி.

**spray**[2], *n.* தளிரிளங்கிளை; பூங்கொம்பு; கிளைப்பூங்கொத்து; பூங்கொம்பணி, பூந்தளிர்க்கொம்பு உருவாகப் புனையப்பட்ட அணிமணி; கப்புக்கவர்க் கிளைப்பு, கப்புக்கவர் போன்ற வடிவமைவு; *v.* கப்புக்கவராகக் கிளைப்புறு; கப்புக்கவராகப் பரவுறு; (தொ.) a spray of diamonds, தளிர்-இலை வேலைப் பாடமைந்த வைர அணிமணி; spray drain, கழனியின் கப்புக்கவர் வடிவான வடிகால்.

**spray'board**, *n.* திவலை தாங்கி, படகின் பக்கமீது திவலைகள் பட்டுக் கெடாமல் தடுக்கும் பலகை.

**spray'er**, *n.* பூவாளி, தெளி வாளி.

**spray'ey**[1], *a.* பூங்கொத்தார்ந்த; தளிர்க்கிளை வடிவான.

**spray'ey**[2], *a.* நீர்த்திவலை வடிவான.

**spread**, *n.* படர்வு, பரவுதல்; பரப்பீடு, பரப்புதல்; விரிவு; மலர்தல்; அகலம்; வீச்சு; விரிவெல்லை, பரப்பெல்லை; படர்ச்சித் திறம், விரிவகற்சித் திறம்; மேற்படர்வு, வாணிக வழக்கில் சரக்கின் ஆக்க மதிப்புக்கும் விற்பனை விலைக்கும் இடையேயுள்ள மிகை; (பே-வ.) விருந்துணவு, விருந்து; *v.* விரிவுறு; பரவு; விரி; பரப்பு; விரிவாக்கு; அகலமாக்கு; பரவச்செய்; எங்கும் பரவலாக்கு; பரவி இடங்கொள்; பரப்பீடு செய், பிரசாரஞ் செய்; பரப்பிக்காட்டு; விரித்துக்காட்டு; பரந்து கவி; பரந்துமூடு; (தொ.) spread oneself, (இழி.) அகம் பாவத்துடன் பேசு.

**spread'-eagle**, *n.* (கட்.) விரிசிறைக் கழுகுருவம்; நாணயப் பொறிப்பு வகையில் விரிசிறைக் கழுகுவடிவம்; சிறைவிரி கழுகாட்டம், உள்ளங்கால் உள்விளிம்பிரண்டும் ஒன்று முன் ஒன்று பின்னுக ஒருங்கே உறைபனிமீது சறுக்கிச செல்லும் ஆட்டவகை; (கப்.) கைகால் பரப்பிப் பாய்க்கயிறுகளில் கட்டி அடிக்குந் தண்டனைக்கு உட்பட்டவர்; (பே-வ.) முதுகூடாக அறுத்துப் பரப்பி வைக்கப்பட்ட கோழி இறைச்சி; *a.* பகட்டாரவார முழக்கமிக்க; ஆரவாரத் தேசியப்பற்றுர்வங் கொண்ட; ஆரவார நாட்டுப்பற்றுர்வ முழக்கங்கொண்ட; தற்பெருமையுடைய; *v.* பரப்பு; உரிய எல்லைகடந்து நிலவு; கைகால் பரப்பிவைத்துக் கட்டு; விரிசிறைக் கழுகுவடிவம் வெட்டி அமை; ஆரவாரப் பேச்சுப்பேசு; ஆரவார நாட்டுப் பற்றுர்வ முழக்கமிடு.

**spread'-over**, *n.* விரிபரப்பீடு; நேர ஏற்பமைவாக்கம், இடுங்கிய மணிக்கூறுகளைத் தனித்தேவைகளுக்கேற்ப அமைத்துக் கொள்ளும் பாங்கு.

**spree**, *n.* குதியாட்டம், தங்குதடையற்ற மிகுகிளர்ச்சி; களியாட்டு; குடிவெறியாட்டம்; *v.* குதியாட்டமிடு; களியாட்டயர்.

**sprent**, *a.* தெளிக்கப்பெற்ற, கவிந்து பரவப்பெற்ற.

**sprig**, *n.* சிறுகிளை; முளை, தண்டு; இளந்தளிர் ஒப்பனை அணி; தலையற்ற சிற்றுணி; இளைஞன், சிறுவன்; *v.* தளிர்க் கிளைபோன்ற ஒப்பனைசெய்.

**sprigg'y**, *a.* சிறுகிளைகள் நிரம்ப உள்ள; சிறுகிளை போன்ற.

**spright'liness**, *n.* களிகிளர்ச்சி, அகமகிழ்வுநிலை; எழுச்சி; உயிர்த்துடிப்பு; சுறுசுறுப்பு.

**spright'ly**, *a.* எழுச்சிமிக்க, களியார்வமிக்க; சுறுசுறுப்பான, கிளர்ச்சி வாய்ந்த, மகிழ்ச்சி நிரம்பிய.

**sprig'tail**, *n.* கூர்முனை வால் தாரா; சதுப்பு நிலக் கூர்வால் கோழி வகை.

**spring**, *n.* குதிப்பு, பாய்வு, துள்ளல்; திடீர் இயக்கம்; பின்வெட்டு, பின்னெறிவு, பின்னுதைப்பு விசை; நெகிழ்ச்சித் திறம்; பாய்திறம்; திருகு சுருள்வில், விசைவில்; வில்வளைவு விசை; அதிர்ச்சி தாங்கும் வில்லமைவு; வில்வளைவின் பக்க உயர்ச்சி; விசைமூலம்; அகத்தூண்டுதல்; நோக்கம்; தொடக்கம்; தோற்றம்; எழுச்சி; இளவேனில், தளிர்ப்புப் பருவம்; ஊற்று; எண்ணெய்க் கிணறு; ஊற்றுப் பள்ளம் வேலை ஏற்ற உச்சநிலை; இருமைப்பருவ வேலை ஏற்றம், ஞாயிறு-திங்கள் ஆகிய இரண்டினுலும் ஏற்படும் கடல்நீர்ப் பருவ எழுச்சியலை; உத்தரத்தின் மேல்நோக்கிய வளைவு; பலகையின் தலைப்பு; ஒழுக்கு முதலியவற்றின் கசிவுத்தொடக்கம்; (கப்.) கப்பல் நிலைக்கயிறு; (கப்.) பாய்மர வெடிப்பு; நார்வே நாட்டு நடனவகை; நார்வே நாட்டு நடன வகையின் இசை; கிளர்ச்சி வாய்ந்த நடன இசை; *v.* துள்ளு, குதி; பாய், தாவிக்குதி; விசையுடன் பாய், கட்டறுத்துத் தெறித்துப் பாய்; திடுமென இயங்கு, விரைந்தியங்கு; மேலெழுந்து பாய்வுறு; குதித்தோடு; விசையுடன் தெறித்தோடு; திடுமெனத் தோன்று; தோற்றமுறு; எதிர்பாராது தோன்று; எழு; வீறியெழு; மேலெழுந்து தோன்று, தோன்றப் பெறு; வெளிப்படு; உருவாகு; விளைவாகு; விளைவாகத் தோன்று; மரபுவழித் தோன்று; தளிர்ப்புறு; விரைவளர்ச்சி அடை; திடுமெனத் தோற்றுவி; கட்டைவகையில் திருகுறு; வெடிப்புறு; பிளவுறு, கீறு; வேட்டை விலங்குகள் வகையில் கிளறி வெளிப்படுத்து; ஊர்திகளுக்கு வில்விசையூட்டு; சுரங்கக் கண்ணிகளை வெடிக்க வை, (கட்.) கடற்புயலால் பலகை தளர்ந்து கழலப்பெறு; (தொ.) air spring, pneumatic spring, காற்றமுக்க விசை வில்; bow spring, cee spring, பிறை வளைவு விசைவில்; spring a butt, கடற்புயலால் கப்பற் பலகையின் முனை இறுக்கந் தளர்வுறுத்து spring a leak, கப்பல் வகையில் ஓட்டை விழப்பெறு; நீர் உள்வரப்பெறு; spring a mine, சுரங்கவெடி வெடிக்க வை; spring balance, வில்விசை நிறைகோல்; spring bed, வில்வைத்த படுக்கை; spring fever, (பே-வ.) இளவேனிற்காலச் சோர்வு; spring gun, விற்பொறித் துப்பாக்கி, ஆள் அல்லது விலங்கு தன்மேல் இடறியதும் வெடிக்குமாறு அமைக்கப்பட்ட துப்பாக்கி வகை; spring her luff, spring the luff, கப்பல் வகையில் பயின்கட்டையைத் தளர்த்திப் பாய் விரித்துக் காற்று வாக்கில் போகவிடு spring mattress, சுருள் வில் வைத்த மரச் சட்ட மெத்தை அமைவு; spring tide, இருமை வேலை ஏற்றம், கதிரவன்-திங்கள் இரண்டின் ஈர்ப்பாலும் ஏற்படும் கடல் நீர் எழுச்சியலை; spring water, ஊற்றுநீர்.

**spring'al, spring'ald**, *n.* சுறுசுறுப்பு இளைஞன்.

**spring'beam**, *n.* (கப்.) இடையாதாரமில்லா நெடுந்தூலம்; இயந்திரச் சம்மட்டி முதலியவற்றில் வழங்கப்படும் அழுத்த விசைக் கோல்.

**spring'-board**, *n* தாவு விற்பலகை, குதிப்பதற்கு உந்துவிசை தரும் மிதிபலகை.

**spring'bok**, *n.* தென் ஆப்பிரிக்க மானியல் ஆட்டுவகை.

**Spring'boks**, *n.* தென் ஆப்பிரிக்கர்கள்; தென் ஆப்பிரிக்க காற்பந்தாட்டக் குழுவினர்.

**spring'-box**, *n.* சுருள்விற் பெட்டி.

**spring'-carr'iage, spring'-cart**, *n.* வில் வண்டி.

**spring'-clean'**, *v.* முற்றிலுந் துப்புரவு செய்.

**spring'-clean'ing**, *n.* முழுநிறை துப்புரவு.

**springe**, *n.* சிறு வேட்டைக் கண்ணி.

**spring'er**, *n.* குதிப்பவர், துள்ளுபவர்; (க-க.) வளைமுகடு தொடங்கும் பகுதி; கவானின் அடிக்கல்; மஞ்சடைப்பு மேல் முகட்டின் அடிக்கல்; இடைக்கோணமுள்ள வில் வளைவின் கைம்மரம்; குள்ள நாய்வகை; திமிங்கிலகிலம்; தென் ஆப்பிரிக்க மானியல் ஆட்டுவகை.

**spring'-halt**, *n.* குதிரையின் திடீர் நொண்டித்தனம்.

**spring'-head**, *n.* வேலை ஊற்றுக்கண்; ஆற்றுத் தொடக்கம்.

**springs**, *n. pl.* வேலையேற்றப் பருவங்கள்.

**spring'tide**, *n.* இளவேனிற் பருவம்; வேலையேற்றப் பருவங்கள்.

**spring'time**, *n.* இளவேனிற் பருவம்.

**spring'y**, *a.* நொசிவான; நெகிழ்திறமுடைய; வில் வைத்த; துள்ளுகிற; நடை வகையில் மென்பதிவான.

**sprink'le**, *n.* தூறல்; சிறுமழை துளிப்பு; *v.* தெளி, தூவு, நுண் துகள் சிதறு; பரப்பின்மீது தெளி; பரப்பின்மீது தூவு; சிதறவிடு; சிறுதுளிகளாக விழு; சிறுதுகளாகச் சிந்து.

**sprink'ling**, *n.* தெளிப்பு; சிற்றளவு; புத்தகக் கட்டட வேலை வகையில் விளிம்பு வண்ணப் புள்ளியீடு; இங்குமங்குமாகச் சில; இங்குமங்குமாகச் சிலர்.

**sprint**, *n.* குறுவிரைவோட்டம்; *v.* சிறு தொலைவு முழு விரைவுடன் ஓடு; குறிப்பிட்ட தொலை விரைந்தோடு.

**sprit**, *n.* மரக்கலப் பாய்க் குறுக்குக் கோல்.

**sprite**, *n.* கூளி, மாயச் சிறுதெய்வம், பூதம்.

**sprit'sail**, *n.* குறுக்குக்கோலினால் விரிவாக்கப்பட்ட பாய்.

**sprock'et**, *n.* கண்ணிப்பல், சங்கிலிக்கண்ணிச் சக்கரப்பல்.

**sprock'et-wheel**, *n.* சங்கிலிக்கண்ணிப் பற்சக்கரம்.

**sprout**, *n.* தளிர்; நொய்முளை; இளந்தண்டு; சிறு கிளைக்கப்பு; *v.* தளிர், வளரத் தொடங்கு; கப்புக்கவர் வெடி; கப்புக்கவர் வெளிப்படுத்து; மேலெழும்பு, உயரமாக வளர்; தளிர்த்து வெளிப்படுத்துவது மூலமாக உண்டாக்கு; (தொ.) Brussels sprouts, கோசுக் கீரை வகை.

**spruce**[1], *n.* குளிர்மண்டல ஊசியிலை மரவகை.

**spruce**[2], *a.* ஒழுங்கான, உடைச்செப்பமிக்க; தோற்ற வகையில் நேர்த்தியான; *v.* நாகரிகப் பாங்கான தோற்றங் கொள்.

**spruce'-beer'**, *n.* குளிர்மண்டல ஊசியிலை மரவகையிலிருந்து செய்யப்படுங் குடிவகை.

**sprue**[1], *n.* உருகிய உலோக வார்ப்புக் குழி; வார்ப்புக் குழியில் இறுகிய உலோகம்.

**sprue**[2], *n.* வெப்பமண்டலத் தொண்டைநோய் வகை.

**spruit**, *n.* வறண்ட ஓடை, தென் ஆப்பிரிக்காவில் மழைகாலத்தில் மட்டும் நீரோடும் ஆழ வாய்க்கால்.

**sprung**[1], *a.* (பே-வ.) வெறிமயக்கத்திலுள்ள.

**sprung**[2], *v.* spring என்பதன் முடிவெச்ச வடிவம்; spring என்பதன் அருவழக்கான இறந்தகால வடிவம்.

**spry**, *a.* சுறுசுறுப்பான, கிளர்ச்சி வாய்ந்த.

**spry'er**, *a.* spry என்பதன் உறழ்படி வடிவம்.

**spry'est**, *a.* spry என்பதன் ஏற்றுயர்படி வடிவம்.

**spud**, *n.* களைக்கொட்டு; திண் குறும்பொருள்; (பே-வ.) உருளைக்கிழங்கு; *v.* களைக்கொட்டினால் கொத்தி அகற்று.

**spud'dle**, *v.* (பே-வ.) பயிற்சியின்றித் தோண்டு.

**spudd'y**, *a.* தடித்துக் குட்டையாயுள்ள.

**spue**, *n.* கக்கல்; *v.* வாந்தியெடு; வாந்தி செய்வி.

**spume**, *n.* நுரை; *v.* நுரைப்புறு; நுரைபொங்கப்பெறு.

**spumes'cence**, *n.* நுரைப்பு; நுரைபோன்ற தன்மை.

**spumes'cent**, *a.* நுரைபோன்ற; நுரை பொங்குகிற.

**spun**[1], *a.* நூற்கப்பட்ட; (தொ.) spun glass, உருகிய நிலையில் நூலாக இழுக்கப்பட்ட கண்ணாடி; கண்ணாடியிழை, spun gold, பொற்சரிகை; spun silk, மலிவான பட்டுநூல், கழிவுப் பட்டுநூல் கலந்த பருத்திநூல்; spun yarn, முறுக்கு வடம்.

**spun**[2], *v.* spin என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**spunge**, *n.*, *v.*=sponge.

**spunk**, *n.* துணிவு, மனவுரம்; தீப்பொறி.

**spunk'y**, *a.* கிளர்ச்சியார்வம் மிக்க; சீறியெழும் பாங்குடைய.

**spun'-out**, *a.* நொய்தாக நூற்கப்பட்ட; நீட்டிவிடப்பட்ட.

**spur**, *n.* குதிமுள், குதிரைவிலாவில் குத்தி ஊக்கும் தாற்றுமுள்; தாற்று விளிம்புச் சுழல்வில்லை; தூண்டுகோல், தூண்டுவிசை; குதிமுள் வடிவப்பொருள்; சேவலின் கால்புடைப்பு; போர்ச்சேவல் கால் செருகு செயற்கை எஃகுமுள்; பக்கமலை; பனி மிதியடிக் கம்பிமுள்; மரமேறும் மிதிமுள் கட்டை; கோட்டைப் புறமதிற் கோணம்; (தாவ.) மலரின் இதழ் இளைழத் தொங்கல்; குறுங்கிளை, பூ அல்லது காய் தாங்கும் சிறுகிளை; புல்நோய் வகை; நோயுற்ற புல்விதை; *v.* குதிரையைக் குதிமுள்ளினாற் குத்து; தூண்டு; குதிமுள் பொருத்தியமை; முழுவிரைவுடன் குதிரை இவர்ந்து செல்; (தொ.) gilt spurs, வீரத் திருத்தகைப் பட்டத்திற்குரிய சின்னம்; need the spur, தூண்டுதல் தேவைப்படு; மந்தமாயிரு, சோம்பலாயிரு; on the spur of the moment, முன்னேற்பாடின்றி; உடனடிச் செயலாக; put spurs to, set spurs to, குதிரையைக் குதிமுள்ளினாற் குத்தி விரைவுபடுத்து, தூண்டு; தாற்றுமுள் பொருத்து; போர்ச்சேவலுக்குச் செயற்கை எஃகுமுள் இணை; spur a willing horse, தேவையற்ற வகையில் நெருக்கு, தானாகச் செல்வதைத் தாக்கிச் செலுத்த முற்படு; spur royal, 15 ஷில்லிங்கு மதிப்புள்ள முதலாவது ஜேம்ஸ் காலப் பொன் நாணயம்; win one's spurs, (வர.) வீரத் திருத்தகைப் பட்டம் பெறு; தனி மேம்பாடுறு, புகழ்பெறு.

**spurge**, *n.* உறைப்பான பால்போன்ற சாறுடைய செடிவகை.

**spur'ious**, *a.* போலியான; பெயர்ப்பொருத்தமற்ற, மூலமரபு மாறுட்டமுடைய; (வில.) உறுப்புவகையில் பொய்த்தோற்றமான, செயல் செய்யாமல் தோற்றமட்டும் உடையதான.

**spurl'ing-line**, *n.* (கப்.) பயின் சுட்டுவரி, பயின்கட்டை திருப்பும் சக்கரநிலையைக் காட்டும் கல இயக்காழி இணைத்த கம்பிவடம்.

**spurn**, *n.* வெறுத்தொதுக்கீடு; ஏளனப் புறக்கணிப்பு; இகழ்வெறிவு; *v.* எற்று, உதைத்துத்தள்ளு; வெறுத்தொதுக்கு; ஏளன வெறுப்புடன் நடத்து; இகழ்ந்து புறக்கணி.

**spu'rrey**, *n.*=spurry.

**spur'rier**, *n.* குதிரைக் குதிமுள் செய்பவர்.

**spu'rry**, *n.* நறுமண மலர்ச்செடி வகை.

**spurt**[1], *n.* பீறித்தெறிப்பு; திடீர்க் குறுவேகம்; *v.* பீறித்தெறி; விட்டுவிட்டுப் பீறியடி; திடீர்க் குறுவேகங் கொள்.

**spurt**[2], *n.* திடீர்ப் பொங்கிவழிவு; பீற்றுநீர்த் தாரை; *v.* நீர்த்தாரையாகப் பொங்கிவழி நீராவியாகப் பீறி வெளிப்படு; நீர்மம் பொங்கிவழியச் செய்; நீராவிபீற்றி வெளிப்படச் செய்.

**spur'-wheel**, *n.* பற்சக்கரம்.

**spur'wort**, *n.* மஞ்சிட்டி வகை, வயல்களில் தோன்றும் களைச்செடி வகை.

**sput'nik**, *n.* புடவித்துணைக்கோள், நிலவுலகைச் சுற்றும்படி ருசிய நாட்டவர் 1957-இல் முதலில் விடுத்த செயற்கைக்கோள்.

**sputt'er**, *n.* பிதற்றல், எச்சில் தெறிக்கும் பேச்சு; விரைந்த பேச்சு, தொடர்பிசைவற்ற பேச்சு; *v.* ஒலியெழ எச்சில் உமிழ்; பிதற்று, தொடர்பிசைவின்றிப் பேசு, விரைந்து பேசு, உணர்ச்சி வேகத்தோடு பேசு.

**sput'um**, *n.* உமிழல்; இருமல்நோய்ச் சளி; *pl.* spu'ta.

**spy**, *n.* ஒற்றர், வேவுபார்ப்போர்; *pl.* spies; *v.* வேவுபார், ஒற்றறி.

**spy'glass**, *n.* சிறு தொலைநோக்காடி.

**spy'hole**, *n.* ஊடுபுழை, சுவர்க் கதவு ஒற்றுத்துளை.

**squab**, *n.* கட்டுருளி, கொழுத்துக் குட்டையான ஆள்; சிறகு முளையாப் புறாக்குஞ்சு; திண்டு; மெத்தைத் தவிசு, பஞ்சுறைப் பீடம்; *a.* கொழுத்துக்குட்டையான, சிறுத்துத் தடித்த; *adv.* தொப்பென்று; (தொ.) squab pie, சமைத்த புறாக்கறி; ஆட்டிறைச்சி மசியல்.

**squa'bble**, *n.* பூசல்; கைகலப்பு, கூச்சலுங் குழப்பமுமான சச்சரவு; *v.* பூசலிடு, கூச்சலிட்டுச் சச்சரவு செய்; (அச்சு.) எழுத்துருக் கோப்புக் கலைத்துவிடு.

**squabb'y**, *a.* சிறுத்துத் தடித்த.

**squab'-chick**, *n.* இறக்கை முளையாக் கோழிக்குஞ்சு.

**squacc'o**, *n.* சிறு தலைச்சூட்டுடைய நாரையினப் பறவை; *pl.* squacc'os.

**squad**, *n.* (படை.) பயிற்சிப் படைவீரர் திரள்; குழுமம், சிறு மக்கள் திரள்; (தொ.) awkward squad, தகுதி வாய்க்கப் பெறாத புதுப்படைவீரர் கூட்டம்; flying squad, விரை கருவி கல வாய்ப்புடைய காவல்துறைப் படை; squad drill, தொடக்கநிலைப் பயிற்சி.

**squa'dron,** *n.* படையணிப் பிரிவு; புரவிப்படைப் பெரும் பிரிவு; கலப்படை, இயந்திரக் கருவிகலப் படையின் பிரிவு; ஒழுங்கணி; சிறப்பணிப் போர்க்கப்பற் படைப்பிரிவு; விமானப்படையின் குழுமம்; *v.* படையணி வகு.

**squa'dron-leader,** *n.* ஒழுங்கணித் தலைவர்; அணித்தலைவர்.

**squail'er,** *n.* எறிகழிக் குண்டு, அணில்கள் போன்றவற்றை எறியும் ஈயக் குமிழ்க் கோல்.

**squails,** *n. pl.* மேசைவட்டாட்டம், வட்டமான மேசை அல்லது பலகையின்மீது சிறு மரவட்டு கொண்டு விளையாடும் ஆட்டவகை.

**squa'lid,** *a.* அழுக்கடைந்த தோற்றமுடைய; இழிநிலையான; ஏழ்மைப்பட்ட.

**squall,** *n.* பேய்ப்புயல்; பனி ஊதைப் புயற்காற்று; பனிப்புயல் மழை; *v.* வீறிட்டலறு, ஊளையிடு; வீறிட்ட ஒலியுடன் பேசு, ஊளைக்குரலிற் பேசு; (தொ.) arched squall, கவிமுகிற்புயல், நில நடுக்கோட்டருகே கருமேகங்கள் கவான் வடிவில் திடீரெனத் திரள்வதனுல் வீசுங் காற்றுமழை; black squall, கரும்பேய்மழை, கருமேகத்துடன் கூடிய திடீர்ப் புயற்காற்று மழை look out for squalls, இடர் நேராவண்ணம் முன்னெச்சரிக்கையாயிரு; white squall, ஒண் பேய்மழை, மப்புமந்தார மற்ற வானிலையில் மேகங்கள் கூடாமலேயே திடீரென வீசுங் காற்று மழை.

**squall'y,** *a.* திடீர்க் காற்றுமழை மிகுதியாகவுள்ள; திடீர்க் காற்று மழையினுல் பாதிக்கப்படுகிற; புயலாகச் சீறியடிக்கிற; கொந்தளிக்கிற; புயலார்ந்த; பேய்ப்புயலடிக்கும், நிலையிலுள்ள.

**squal'oid,** *a.* சுருவிற்குரிய; சுருமீன் போன்ற.

**squa'lor,** *n.* கழிகடை நிலை; அழுக்கடைந்த தோற்றம்; ஏழ்மைத் தோற்றமுடைய நிலை; குப்பைகூளமான நிலை.

**squam'a,** *n.* (தாவ., வில.) செதிள், சிம்பு; செதிள்போன்ற இறகு; செதிள்போன்ற எலும்புப்பகுதி; *pl.* squam'ae.

**squam'iform,** *a.* செதிள்போன்ற.

**squam'osal,** *n.* செதிள்போன்ற செப்பை எலும்புப்பகுதி; *a.* செதிள்போன்ற.

**squam'ose, squam'ous,** *a.* செதிள்களால் மூடப்பட்ட; செதிள்போன்ற; செதிள்களால் ஆன.

**squam'ule,** *n.* சிறு செதிள்.

**squa'nder,** *v.* சிதறு, கலைத்துவிடு; வீணிற் செலவுசெய்.

**squa'nderer,** *n.* ஊதாரி, வீண்செலவு செய்பவர்.

**squanderman'ia,** *n.* ஊதாரிவெறி.

**square,** *n.* சதுரம், சரிசம நாற்கட்ட வடிவம்; நாற்கட்ட வடிவம்; சதுரவடிவப் பொருள்; ஏறத்தாழச் சதுரவடிவமான பொருள்; நாற்கட்ட வடிவப் பொருள்; சதுரக்கட்டம், தாயக் கட்டக் குறுக்குக் கட்டங்களில் ஒன்று; சதுக்கமுன்றில், நாற்புறமும் மரங்களும் கட்டிடங்களும் சூழ்ந்துள்ள நாலு கட்டு முற்றம்; சதுக்கம், நான்கு தெருக்களாற் சூழப்பட்ட கட்டிடங்களின் தொகுதி; செங்கோணளவி, செங்கோணங்களை வரைவதற்கான அல்லது சரிபார்ப்பதற்கான நேர் முக்கோண வடிவக்கருவி; செங்நிலை; கட்டளைப்படிவம், ஏற்புடை மாதிரி; மிசைப் பெருக்கம், எண்ணின் இருவிசைத் தற்பெருக்க விளைவு; நாற்கட்டக் காலாட்படைப் பிரிவு; சதுரப்பாணி, குறுக்குநெடுக்கு வரிசை ஒருங்கமைய எழுதப்படும் முறை; 100 சதுர அடித்தள அளவு; *a.* சதுர வடிவான; நாற்கட்டமான; நிமிர்கோணுன, செங்கோணமாகத் திரும்பியுள்ள; சரிசதுக்கமான, செங்கோணமான; சரிசமநீள அகலமுடைய; உயரத்துக்குப் பொருந்தாத மிகை அகலமுடைய; செங்கோணவாட்டான, முக்குப்பிடிப்பான; சீராக ஒழுங்கு செய்யப்பட்ட, நன்னிலையிலுள்ள; முழுநிறைவான; சிறிதும் விட்டுக்கொடுக்காத, விடாப்பிடியான; ஒழுங்குடைய, நேர்மையான; சீரான நிலையமைதியோடு கூடிய, ஒருசீரான, மாறுபாடற்ற; சரிக்குச் சரியான, மாறுசெய்து சரிசமமான; ஆட்ட நடனவகைகளில் நால்வர்க்குரிய; *v.* சதுரமாக்கு; நாற்கட்ட வடிவினதாக்கு; வெட்டுமரத்துக்குச் செங்கோண மூலை விளிம்புகளைக் கொடு; எண்ணினைத் தற்பெருக்கமாக்கு; வட்ட வகையில் பரப்பளவைச் சதுர அளவையாக்கிக் கூறு; பொருத்துவி, பொருத்திக் காட்டு; பொருந்து, இசைவுறு, சரிசெய்; அறுதிசெய், தீர்த்துவிடு, தொகை செலுத்திவிடு; (பே-வ.) கைக்கூலி கொடு; இலஞ்சங்கொடுத்துச் சரிப்படுத்து; விறைப்புடன் நடந்துகொள், குத்துச்சண்டைக்காரர்நிலை மேற்கொள்; குத்துச்சண்டைக்காரர்நிலை மேற்கொண்டு முறைத்து நோக்கிச்செல்; குழிப்பந்தாட்ட வகையில் போட்டிப் பந்தயத்தின் கெலிப்பெண்களைச் சரிசமமாக்கு; ஆட்டத்தில் எடுத்த எண்ணிக்கையளவினைச் சரிசமமாக்கு; (கப்.) குறுக்குச் சட்டங்களை அடிக்கட்டைக்குச் செங்கோணமாகக் கிடைநிலையில் வை; (கப்.) தளை வட்டுக்களைக் கிடைநிலையில் வை; கப்பற் பாய்மரக் கயிற்றேணியின் குறுக்குப் படிக்கயிறுகளை மற்றப் படிக்கயிறுகளுக்கிணையாகக் கிடைநிலையில் வை; *adv.* செங்கோணமாக; உறுதியாக; நேரடியாக; ஒருசீராக, சரிசமமாக; நேர்மையாக, உண்மையாக; (தொ.) all square at the turn, square at the turn, குழிப்பந்தாட்டத்தில் இருதிறப் போட்டியாளர் வகையிலும் கெலிப்பெண் ஒரே நிலைப்பட்ட; a square deal, நேர்மையான ஒப்பந்தம்; நெறிமுறை திறம்பாது நடத்தும் பாங்கு; be on the square, நற்கொத்தராயிரு; by the square, மிகு சரிநுட்பமாக; fair and square, முழுநிறை நேர்மையான, வளைவு நெளிவற்ற; சூழ்ச்சிநுண்ணயமற்ற, களங்கமற்ற; ஐயத்திற்கிடமில்லாத; சூழ்ச்சி நுண்ணயமின்றி; களங்கமில்லாமல்; ஐயத்திற்கிடமின்றி; get square with creditors, கடன்காரர்களுக்குப் பணம் திருப்பிக் கொடுத்துவிடு, கடன்காரர்களிடம் சமரசமாக ஒத்துப்போ; hollow square, நடுவில் மூட்டைகளுக்கு இடம்விட்டு நாற்கட்ட வடிவில் அணிவகுத்து நிறுத்தப்பட்ட காலாட்படைப் பிரிவு; நடுவே ஆணைத் தலைவர்க்கிடம் விட்டு உள்நோக்கி நிறுத்தப்பட்ட நாற்கட்ட அணிவகுப்பு; how squares go, விவகாரங்கள் நடந்துகொண்டிருக்கும் பாங்கு; magic square, மாயச் சதுரம், நேர்-குறுக்கு-சாய்வாக எவ்வழிக்கூட்டினுலும் ஒரே தொகை வரும்படி அமைக்கப்பட்டுள்ள எண் வரிசைச் சதுரம்; on the square, நம்பத்தக்க வகையில், நேர்மையாக; out of square, செங்கோணமாயிராமல்; ஏற்புடை மாதிரியாய் அமையாமல்; perfect square, நேரியல் எண் மூலமுடைய மிசைப்பெருக்கம்; square accounts with, பழிவாங்கு, வஞ்சந் தீர்; square a person, ஒருவருக்குக் கைக்கூலி கொடு; square knot, இரட்டை முடிச்சு; square leg, இடப்புறச் சரி நேராட்டக்காரர், மரப்பந்தாட்ட வகையில் மட்டைக்காரருக்கு இடப்புறத்தில் அவருக்கு நேர்க்கோட்டிலுள்ள பந்து வீச்சாளர்; இடப்புறச் சரிநேரிடம், மரப்பந்தாட்ட வகையில் மட்டைக்காரருக்கு இடப்புறத்தில் அவருக்கு நேர்க்கோட்டிலுள்ள பந்து வீச்சாளர் இருக்குமிடம்; square measure, சதுர அளவை, மிசைப்பெருக்கக் கணிப்பு; square number, மிசைப்பெருக்க எண், எண்ணின் தற்பெருக்க விளைவான தொகை; square peg in round hole, இடத்துக்கு ஒவ்வாத ஆள்; square root, மிசைப்பெருக்க மூலம், எண்ணை மிசைப்பெருக்கமாகக் கொண்ட மூல எண்; square sail, பாய்மரத்திற்குக் குறுக்காகத் தொங்கவிடப்படும் நாற்கட்டமான உப்பற்பாய்; square the circle, செய்ய முடியாததன்கண் முயலு; square up, கணக்குத் தீர்த்துக்கொள், கொடுக்கவேண்டியதைக் கொடுத்துத் தீர்த்துவிடு; square up to, எதிர்த்துநின்று சமாளி.

**square'-built,** *a.* கட்டுருளியான, சதுரவடிவத்தை நினைப்பூட்டுகிற, உயரத்தை நோக்கும்போது சற்றுக் கூடுதலாகவே அகன்றிருக்கிற.

**square'face,** *n.* (பே-வ.) சாராய வகை.

**square'ly,** *adv.* சதுரமாக; நேர்மையாக.

**square'-rigged,** *a.* இணைவரிக்கட்டான, முக்கியமான பாய்கள் பக்கவாட்டான கயிறுகளால் பாய்மர நடுவுடன் இணைக்கப்பெற்ற.

**square'-toes,** *n.* சதுர வடிவில் முடியும் கால்விரல்களையுடையவர்; சதுர வடிவில் முடியும் புதைமிதிகளையுடையவர்.

**squa'rrose, squa'rrous,** *a.* (தாவ.,வில.) கரடுமுரடான செதிள் திரளமைவுடைய.

**squars'on,** *n.* பெரியதனச் சமய குரு, பண்ணையாராகவும் சமய குருவாகவும் இருக்கும் ஒருவர்.

**squash[1],** *n.* பிழிசாறு; துவையல்கூளம், கசக்கிப்பிசைந்த மொத்தை; மக்கள் திரள்; மெத்தனவு, மென்மைப்பொருளின் வீழ்ச்சி; மெத்தென வீழ் ஒலி; ஐம்பந்தாட்டம், மெத்தென்ற பந்துகள் கொண்டு ஐவராடும் ஆட்டம்; *v.* கசக்கு, பிசை; நொறுக்கு; பிழி அழுத்திச் சாறெடு; அடையாக நெரித்திடு; கூழாகும்படி நசுக்கு; நெருக்கி மொய்; திரளாக அடைவுறு; நெருக்கியடித்து வழியுண்டாக்கிக்கொண்டு செல்; சுடுசொல் கூறி ஒருவர் வாயெடுக்கவொட்டாமல் அடக்கு; (தொ.) squash hat, மென்மையான ஒட்டுக்கம்பளத் தொப்பி; squash rackets, ஐம்பந்தாட்டம், மென்பந்தால் ஐவராடும் ஆட்டம்.

**squash[2],** *n.* சுரைக்கொடி வகை.

**squash'y,** *a.* கூழான, களியான, குழம்பான; ஊறவைக்கப் பட்ட; தட்டையாக நசுக்கப்பட்ட.

**squat,** *n.* குந்துகை, குந்தியிருக்கும் நிலை; குட்டையான தடித்த மனிதர்; *a.* குந்தியிருக்கும் நிலையிலுள்ள; ஆள் வகையில் தடித்துக்குட்டையான, சிறுத்துக் கொழுத்த; *v.* தரையில் குந்து, குந்திக்கொண்டிரு; குந்தியிருக்கச் செய்; விலங்குகள் வகையில் தரையையொட்டிப் பதுங்கியிரு; (பே-வ.) உட்காரு, அமர்.

**squa'tter,** *n.* குந்தியிருப்பவர், குந்துபவர்; ஆஸ்திரேலிய வழக்கில் அரசியல் நிலமேய்ச்சல் உரிமையாளர்; கால்நடை உடைமையாளர்; சட்டக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட நில உடைமையாளர்; தாவளம் போடுபவர், உரிமையின்றிப் பொதுநிலத்தில் தங்குபவர்; யாருமில்லாத வீட்டை அதிகார மின்றி உடைமையாக்கிக் கொள்பவர்.

**squaw,** *n.* அமெரிக்க செவ்விந்தியப் பெண்; அமெரிக்க செவ் விந்திய வழக்கில் மனைவி.

**squawk,** *n.* கிறீச்சொலி; பறவையின் அலறல்; அச்சக் கூவிளி; வேதனைக் கூக்குரல்; *v.* கிறீச்சிடு; பறவை வகை யில் அலறு; அச்சக் கூவிளி கூட்டு; வேதனைக்குரல் எழுப்பு.

**squaw'-man,** *n.* செம்மனை வெள்ளையர், அமெரிக்க-இந்தியப் பெண்ணை மணந்துகொண்ட வெள்ளையர்.

**squeak,** *n.* கீச்சொலி; மயிரிழைத் தப்பிப்பிழைப்பு; பெயரள வான வெற்றி; *v.* சுண்டெலிபோலக் கீச்சொலி எழுப்பு; மசகிடாத கீல் போலக் கிறீச்சொலி எழுப்பு; கீச்சென்ற ஒலி யிற்பேசு; (பே-வ.) கூட்டாளியைக் காட்டிக் கொடு; (தொ.) narrow squeak, மயிரிழையில் தப்பிப்பிழைத்தல், பெயரள வான வெற்றி.

**squeak'er,** *n.* கீச்சொலி எழுப்புகிறவர்; மாடப்புறுக் குஞ்சு; காட்டிக் கொடுப்பவர்; கீச்சொலி விளையாட்டுப் பொம்மை.

**squeal,** *n.* குழந்தையின் கீச்சொலி; வீல்வீல் என்ற குழந்தைக் கதறல்; குழந்தையின் மகிழ்ச்சிக் கூச்சல்; பன்றியின் கிறீச் சொலி; *v.* குழந்தை வகையில் கீச்சொலியிடு; குழந்தை வகையில் வீல்வீல் என்று கதறு; குழந்தை வகையில் மகிழ்ச்சி யால் கூவு; பன்றிவகையில் கிறீச்சிடு; கீச்சென்ற ஒலி யுடன் பேசு; (பே-வ.) வரிவிதிப்பை எதிர்த்து வீறிட்டெழு; (பே-வ.) கூட்டாளியைக் காட்டிக்கொடு; (தொ.) make one squeal, (பே-வ.) அச்சுறுத்திப் பணம் பறி.

**squeal'er,** *n.* கீச்சிடுபவர்; புறுக்குஞ்சு; கூட்டாளியைக் காட்டிக் கொடுப்பவர்.

**squeam'ish,** *a.* குமட்டுகிற; கூர்சுவையுடைய; எதிர் பார்க்கிற.

**squee'gee,** *n.* (கப்.) தொய்வக விளிம்புள்ள ஈரம்புலர்த்து கருவி, (நி-ப.) ஈரம் புலர்த்து தூரிகை; (நி-ப.) ஈரம் புலர்த் தும் உருளைக்கருவி; *v.* (கப்.) தொய்வக விளிம்புள்ள கருவி யினால் ஈரம் புலர்த்து; (நி-ப) துடைப்புத் தூரிகையால் ஈரம் போக்கு; புலர்த்துருளையால் ஈரந்துடை.

**squeeze,** *n.* பிழிவு; நெரிப்பு; கசக்கீடு; பிசைவு; கூட்ட நெருக்கடி; ஆள்நெருக்கம்; ஈரத் தாள் அல்லது மெழுகில் எடுக்கப்படும் அழுத்து தடம்; வரிப்பிழிவு, வலிந்துபெறும் வரிப்பணம்; சட்டவரம்பிகந்த தரகு; கொள்முதல் சரக்கில் வேலையாட்கள் வலிந்து பறிக்கும் நூற்று விழுக்காடு; *v.* பிழி; கசக்கு; பிசை; அழுத்திப்பிடி; திணித்து உட்செலுத்து, வலிந்து நுழைவி; நெருக்கியடித்து வழியுண்டாக்கிக் கொண்டுசெல்; வலிந்து பறித்து அலைக்கழியச் செய்; கசக் கிப் பெறு; கட்டாயப்படுத்திச் செயலாற்று, வல்லந்தமாகச் செய்வி; அச்சுறுத்திப்பெறு; விடாது கெஞ்சிப்பெறு; மிக முயன்று வருவி; நாணயம் முதலியவற்றின் பொறிப்படை யாளமெடு; (தொ.) squeezed orange, இனிப் பயன்படாத பொருள்; முழுதும் பயன்படுத்தப்பட்டதனுல் இனிப் பயன் படாதவர்; squeeze play, சீட்டாட்ட வகையில் எதிரி முக் கிய சீட்டினைக் கழித்துவிடும்படி செய்யும் ஆட்டம்; தளக்கட் டப் பந்தாட்ட வகையில் மூன்ருந்தள ஆட்டக்காரர் தளம் மீள உதவும்படி எறியப்படும் அணிமை அகக்களப் பந்தெறி; squeeze the orange, நற்கூறுகளையெல்லாம் எடுத்துவிடு.

**squeez'er,** *n.* பிழிபவர், கசக்குபவர்; வலிந்து பணம் பறிப் பவர்; வல்லந்தமாகச் செய்விப்பவர்; பிழிவுகருவி; பிழிவு இயந்திரம்; பிழியும் இயந்திரப்பகுதி; உருக்கிரும்புக் குழம் பில் குமிழிபோக்கும் இயந்திரக் கருவி.

**squelch,** *n.* (பே-வ.) மிதித்துத்துவைப்பு; தரைமட்ட அரைப்பு; நுண் சேற்று ஒலி, சளக்கொலி; தொப்பென மோதுதல்; உரு விலாக் குழம்பு; மொத்தை எதிர்ப்புரை; *v.* மிதித்துத் துவை; உதைத்துத் தரை மட்டமாக அரை; காலால் தேய்த்துக் குழம் பாக்கு; சப்பையாக அரை; ஒழித்து விடு; திகைக்க வை; வாயடைத்துவிடச் செய்.

**squib,** *n.* கையெறி வாணவெடி; கையெறி சுரிவாண வெடி; வசைப்பாடல்; வெடிமருந்துக் குழல்; *v.* வசைப்பாடல் இயற்று.

**squid[1],** *n.* தூண்டில் இரையாகப் பயன்படும் சிப்பிமீன் வகை; செயற்கைத் தூண்டில் இரை; *v.* சிப்பிமீன் தூண்டில் இரை வைத்து மீன்பிடி; இரையிட்டு மீன்பிடி.

**squid[2],** *n.* நீர்மூழ்கியினைத் தாக்கும் பீரங்கி.

**squiff'y,** *a.* மட்டாகக் குடித்த.

**squil'gee,** *n., v.*=squeegee.

**squill,** *n.* சிறுநீர் தூண்டும் மருந்தாகவும் பேதிமருந்தாகவும் பயன்படும் அல்லியினப் பூண்டு; அல்லியினச் செடிவகை.

**squill'-fish,** *n.* நத்தை வகை; மேல்தோடுடைய உயிரின வகை.

**squinch,** *n.* (க-க.) உள் வளைவுக் கட்டுமானம்.

**squint,** *n.* ஒருக்கணிப்புக் கண், பக்கவாட்டுப் பார்வை; கள்ளப் பார்வை; மனச்சாய்வு, விருப்பச்சார்வு; சார்வு நாட்டம்; திருக்கோயிற் சுவரில் சாய்வுப் புழைவாய்; (பே-வ.) நொடிப் பார்வை, கணக்காட்சி; *a.* ஒருக்கணித்த பார்வையுடைய; *v.* சிறக்கணித்துப் பார்.

**squint'-eyed,** *a.* ஒருக்கணிப்புப் பார்வையுடைய.

**squire,** *n.* மாவட்டத் தலைமை நிலக்கிழார்; வீரத் திருத்தகை யின் துணையாள், வீரத் திருநம்பி, வீரத்திருத்தகையாகும் அவாவுடன் வீரத்திருத்தகைத் துணைவனுகச் செல்லும் துணை வன்; வனிதையர் வழிகாட்டி; *v.* வழித்துணை செல்.

**squire'arch,** *n.* நிலக்கிழார் ஆட்சிவகுப்பைச் சேர்ந்தவர்.

**squire'archal,** *a.* நிலக்கிழார் ஆட்சிசார்ந்த.

**squire'archical,** *a.* நிலக்கிழார் ஆட்சிக்குரிய.

**squire'archy,** *n.* நிலக்கிழார் ஆட்சி, 1832-ஆம் ஆண்டு சீர் திருத்த மசோதாவிற்கு முன்னிருந்த நிலக்கிழார் ஆட்சிச் செல்வாக்கு; நிலக்கிழார் வகுப்பு.

**squireen',** *n.* சிறுநிலக் கிழார்; அயர்லாந்தின் சிறுநிலக் கிழமையாளர்.

**squirm,** *n.* புரள்வு, நெளிவு; (கப்.) வடக்கயிற்றின் முறுக்கு; *v.* புரண்டுபுரண்டு நெளி; மலைப்புக் கொள்; மனம் உலைவுறு.

**squi'rrel,** *n.* அணில்.

**squi'rrel-fish'**, *n.* கூர்முட்கள் போர்த்த மீன்வகை.

**squi'rrel-hawk**, *n.* அணில்களைத் தின்னும் பருந்துவகை.

**squi'rrel-monkey**, *n.* அணில்வாற் குரங்கு.

**squi'rrel-tail**, *n.* வாற்கோதுமையினப் புல்வகை.

**squirt**, *n.* பீற்றுக்குழல்; விளையாட்டுப் பீற்றுகுழல்; பீற்று நீர்த்தாரை; பீற்றுதாரை; (பே-வ.) அற்பத் தற்பெருமைக் காரர்; *v.* பீற்றுகுழலாற் பீற்று; தூளியற்பொருளைத் தாரையாக வெளியேற்று; நீர்மவகையில் பீறிச்செல், தாரையாகச் செலுத்தப்படு.

**squirt'-gun**, *n.* விளையாட்டுப் பீற்றுகுழல்.

**squish**, *n.* தாரை நீரொலி; *v.* பிலிற்றொலி செய்.

**St.**, *n.* saint என்பதன் சுருக்க வடிவம்.

**stab**, *n.* குத்து; கத்திக்குத்து; உடைவாள் தாக்கு; குத்துக் காயம்; வசைத்தாக்குதல்; மனம் புண்படுநிலை; *v.* குத்துக் கத்தியால் தாக்கு; உடைவாளால் வெட்டு; குத்தக் குறிவை; புண்படுத்து; மனத்தை ஊறுபடுத்து; உணர்ச்சிகளுக்கு ஊறுபாடு உண்டாக்கு; பெயரைக் கெடு, புகழைக் கறைப் படுத்த முயற்சிசெய்; சுவரில் சாந்து பூசுவதற்குமுன்னுல் கடப்பாரை போன்ற கருவியால் குத்திச் சொரசொரப்பாக்கு; (தொ.) stab in the back, புறம் பழிப்பு; மறை அவதூறு; புறம்பழிப்புச் செய்; மறை அவதூறு செய்.

**Stab'at Mat'er**, (ல.) *n.* அன்னை மரியாள் அருந்துயர்ப் பாடல்.

**stabil'ity**, *n.* உறுதி; திடநிலை; உலைவின்மை; உரம்; சம நிலை மீட்சியாற்றல்; துறவியர் துறவுமட வாழ்க்கைப் பணி யுறுதி.

**stabiliza'tion**, *n.* உறுதிநிலைப்பாடு; உலைவின்மை; தங்க மூலம் நாணய நிலைபேருக்கல்.

**stab'ilize**, *v.* நிலைப்படுத்து; நிலவரமாக்கு; திடப்படுத்து.

**stab'ilizer**, *n.* நிலைப்படுத்துபவர்; நிலைப்படுத்துவது; விமானச் சமநிலையூட்டும் மிகைத்தளம்; விமானச் சமநிலையமைவு; கப்பல் நிலைப்படுத்தும் அமைவு; வேதி மாறுபாடு தடுக்கும் கூறு.

**sta'ble**[1], *n.* தொழுவம்; பந்தயக்குதிரைத் தொகுதி; பரிமா நிறுவன அமைப்பு; *v.* கொட்டிலிற் குதிரைகளைக் கட்டு; கொட்டிலில் இருப்பதுபோலக் கட்டுண்டு தங்கியிரு; (தொ.) cleanse Augean stables, அழுக்குக் கும்பலை அப்புறப் படுத்து.

**sta'ble**[2], *a.* நிலையான, உறுதியான, நிலையாக நிறுவப்பட்ட; எளிதில் அசைக்கமுடியாத; அழிக்கவொண்ணாத; திடமான; உலைவிலாத; (தொ.) stable equilibrium, உறுதிச் சமநிலை.

**sta'ble-companion**, *n.* ஒரே கொட்டிற் குதிரை; பள்ளித் தோழர்.

**sta'ble-room**, *n.* கொட்டிலில் இடம்.

**sta'bles**, *n. pl.* (படை.) இலாயப் பணித்துறை.

**stab'ling**, *n.* இலாயத் தங்கல்வசதி.

**stab'lish**, *v.* நிறுவு; ஊன்றுவி; நிலைநிறுத்து; அமை.

**stacca'to**, (இத்.) *a.* (இசை.) விட்டுவிட்டுப் பாடவேண்டிய; *adv.* திடீர் விரைதுடிப்புடன்.

**stack**, *n.* வைக்கோற் போர்; உலர்புல் போர்; மோடார்ந்த கூலக்குவியல்; தானியக் கதிர்க்கூம்பு; சுழல் துப்பாக்கிக் குவட்டடுக்கு; கழி அடுக்குக் குவியல்; கூப்பு, 108 கன அடிக் கட்டை அளவு; புகைப்போக்கிகளின் கும்பு; கப்பல் அல்லது ஊர்திவகையில் புகைக்கூம்பு; ஸ்காத்லாந்து நாட்டு வழக்கிலும் ஆர்க்னித்தீவுகள் வழக்கிலும் கடற்கரையோரக் கொடும்பாறை; *v.* போராகக் குவி; கூம்பாக எழுப்பு; குவியலாகக் குவித்து வை; விமானதளத்தில் விமானக்கட்டளை வகையில் பல்வேறுன மட்டங்களில் பறக்கும்படி கூறு.

**stack'-funnel**, *n.* வைக்குவைப் புனல்.

**stac'te**, *n.* யூதர் அத்தர்.

**stactom'eter**, *n.* துளிமானி.

**stadd'le**, *n.* பற்றுக்கோல்; கட்டுத்தறி.

**stad'holder**, *n.*=stadtholder.

**stad'ium**, *n.* பண்டைக் கிரேக்க வழக்கில் 202 கெச நீளமுள்ள நீட்டலளவை; பண்டைக் கிரேக்க வழக்கில் ஓட்டப் பந்தய வெளி; விளையாட்டரங்கம், பயிற்சிவிளையாட்டுக் களரி; (மரு.) நோயின் பருவம்.

**stadt'holder**, *n.* (வர.) ஆளுநர், நெதர்லாந்து வழக்கில் மண்டல ஆட்சித் தலைவர்; (வர.) நெதர்லாந்து வழக்கில் மன்னர் ஆட்பேர்; (வர.) நெதர்லாந்துக் குடியரசின் ஒன்றிய மாகாணங்களில் தலைமைக் குற்ற நடுவர்; (வர.) டச்சுக் குடியரசின் தலைவர்.

**staff**[1], *n.* கழி, கோல்; நீள்முளை, நெடுங்கழி; வடி, கைப் பிரம்பு; கைத்தடி; ஊன்றுகோல்; ஆதாரம்; கொடிக்கம்பம், கொடி இணைவரிச்சட்டம்; கைத்தண்டம், பணிச்சின்னம்; ஆட்சிக்கோல், ஆட்சிச் சின்னம்; நில அளவைக்கோல்; கடல்மட்ட மானி; இருப்பூர்தி தனிநெறி செல்வதற்கான இசைவாணைச் சின்னமான எறிதண்டம்; அறுவைக்கத்திக் குரிய முன்தூண்டலகு; (தொ.) flag staff, கொடிமரம்; Jacob's staff, மட்டக்கோல், தூரத்தையும் உயரத்தையும் அளக்கும் நில அளவையரின் இருப்புப் பூணிட்ட கோல்; pastoral staff, நல்லாயர்கோல், மாவட்டக் கிறித்தவசமய குருவின் முன்பாகக் கொண்டுசெல்லப்படுந் தடி; staff of life, தலைமை உணவுப்பொருள்; staff system, இசைவாணை எறி தண்டமுறை, ஒற்றைப் புகைவண்டிப் பாதையிற் செல்ல இசைவிணக்கமறிவிக்கும் குறியாக வலவனிடம் தண்டம் எறிந்து காட்டும் முறை.

**staff**[2], *n.* (படை.) பணித்துணைவர் குழாம்; பணிமனைகளில் மேலாளரின் துணை அலுவலர்குழாம்; *v.* நிறுவன அலுவலர் குழாம் அமைவி; (தொ.) regimental staff, படைப்பிரிவு உயர் பணியாளர் தொகுதி; staff college, பணித்துறையினரின் பயிற்சிக் கல்லூரி; staff duty, படைப்பணியினின்று பிற பணியமர்வு.

**staff**[3], *n.* (இசை.) இசைமான வரிவடிவுப்பதிவில் விசைவரிச் சட்டம்; *pl.* staves.

**staff**[4], *n.* கட்டிடக் கட்டுமானத்திற்குரிய காரைக் கலவை.

**staff'-sergeant**, *n.* ஆணைபெருத படைத்துறை உயர் அலுவலரின் பயிற்சி அதிகாரி.

**staff'-surgeon**, *n.* கடற்படை உயர்படி அறுவை மருத்துவர்; மருத்துவமனையில் வேலைபார்க்கும் படைத்துறை மருத்துவர்.

**staff'-tree**, *n.* அமெரிக்க புதர்ச்செடி வகை.

**stag**, *n.* கலைமான், ஆண்மான்; காளைமாடு, முழுவளர்ச்சி யுற்றபின் விதையடிக்கப்பட்ட காளை; பங்குமாற்றுக் களத்தில் உடனடியாக ஆதாய விற்பனை நோக்கத்துடன் புதுப்பங்கு கோருபவர்; (இழி.) வகைதுறையற்ற இருப்புச் சரக்கு வணிகர்.

**stag'-beetle**, *n.* கொம்பன் வண்டு, கலைமான் கொம்புபோன்ற நிமிர் தாடையலகுடைய வண்டுவகை.

**stage**, *n.* அரங்கு, நாடகமேடை; சாரமேடை, கொல்லத்து வேலைக்காரரின் கட்டுமானத் துணைச்சட்டம்; பார்வைத் தட்டம், உருப்பெருக்காடியில் பார்க்கப்படும் பொருள் வைக்குந்தட்டு; நாடகம்; நாடகக் காட்சி; நாடக இலக்கியம்; நாடகக் கலை; நாடகத் தொழில்; நடிப்புக் கலை; நடிப்புத் தொழில்; படிநிலை, வளர்ச்சியில் எய்தியுள்ள பருவம்; முன்னேற்றப் படி; வரிசை அடுக்கு; வேலைப்படி; செயற்கூறு; செயற்களம்; செயலரங்கம்; துறை; வழிக்கட்டம், உந்தூர்தித் தொலைவுக் கூறு; நிறுத்து நிலை, உந்தூர்தி நிறுத்துமிடம்; அஞ்சல்வண்டி, படிமுறைப் பயணவண்டி; (மண்.) மண்ணூழிப்பிரிவுக் கூறு; *v.* நாடகமாகக் காட்டு; மேடையில் நடித்துக் காட்டு; நாடகக் காட்சிபோல நடைமுறைப் படுத்திக் காட்டு; நாடகப்பாணியமை; நாடக வகையில் மேடைக்காட்சிக்குப் பொருத்தமாயமை; (தொ.) hanging stage, தொங்குசாரம், வண்ணம் பூசுபவர்கள் நின்று வேலை செய்வதற்காகத் தொங்கவிடும் சாரமேடை; stage direction, நாடகமேடை நடைமுறைக் குறிப்பு; stage door, நாடக

மேடைப் பக்க வாயில்; stage effect, நடிப்புத் திறப்பாடு; நடிப்புத் திறப்பாட்டிற்குரிய கூறு; நாடக நடிப்பியல்புப் பண்புக் கூறு; stage fever, மேடைக் காய்ச்சல், நாடகத்தில் நடிக்க வேண்டுமென்னும் அடக்கமுடியா ஆர்வம்; stage fright, மேடைக் கூச்சம்; மேடை நடுக்கம்; stage manager, சூத்திரதாரர், மேடைக் கண்காணிப்பாளர்; ஒத்திகை மேற் பார்வையாளர்; stage right, நாடக நடிப்புரிமை.

**stage'-coach,** *n.* அஞ்சல்முறை வண்டி, இடையிடையே பயணக் கட்டடங்களில் மாற்றுக்குதிரை வசதி ஏற்பாடுகளுடன் செல்லும் வண்டி.

**stage'-coachman,** *n.* அஞ்சல்வண்டி வலவர்.

**stage'craft,** *n.* நாடகமேடைக் கலை.

**sta'ger,** *n.* அனுபவமிக்கவர்; (தொ.) old stager, பழம் புள்ளி.

**stage'-struck,** *a.* மேடைத் திணறலுடைய.

**stag'-evil,** *n.* குதிரைகளின் வாய்ப்பூட்டு நோய்.

**stagg'ard,** *n.* நான்காண்டு நிறைந்த கலைமான்.

**stagg'er,** *n.* தள்ளாட்டம்; தடுமாற்றம்; தயக்கம், கருத்து ஊசலாட்டம்; (இயந்.) விமான முதலிய கட்டுமான வகையில் முந்துறு தளநீட்டம்; தளக்கவிவு; தளத் திருகுமறுகீடு; *v.* தள்ளாடு; தடுமாறு; நடையின்போது தலைக்கிறக்கமுறு; தயங்கு, கருத்தில் ஊசலாடு; தள்ளாடுவி; தடுமாறுவி; தலைசுற்றுவி; தயக்கமுறுவி; ஆட்டங்கொடுக்கச் செய்; ஏறு மாறாக அமைவி; வண்டிச்சக்கர ஆரைகளை மாறிமாறி வல மிடம் திருப்பியமை; நாட்பட்டியில் ஓய்வுநாள் வேலை நேரங் களை மாறுபடக் குறி.

**stagg'erer,** *n.* தள்ளாடுபவர்; தள்ளாடுவது; தடுமாறுவிப் பவர்; தடுமாறுவிப்பது; தயங்குபவர்; மனவுறுதி இழக்கப் பண்ணும் விவாதம்; ஒழுங்கு குலைக்கும் நிகழ்ச்சி; இடை யிட்டுத் தடைப்படுத்தும் நிகழ்ச்சி; தடுமாற்ற நிகழ்ச்சி.

**stagg'ers,** *n. pl.* தலைமயக்கம்; குதிரை-கால்நடைகளின் மூளை-தண்டுவட நோய்வகை.

**stag'-horn,** *n.* சிதல்விதை உறைகள்கொண்ட பாசிவகை; பவளக்கொடி வகை.

**stag'horn fern,** *n.* கலைமான் கொம்புபோன்ற இலைகளை யுடைய சூரலவகை.

**stag'horn moss,** *n.*=stag-horn.

**stag'hound,** *n.* பெரு வேட்டைநாய்; மான்வேட்டை நாய்.

**sta'ging,** *n.* நாடக மேடையேற்றம்; நாடகமேடை நடிப்பு; வண்டி அஞ்சல் செய்தல்; சாரக்கட்டு, கட்டிடத்திற்கான சாரங்கட்டுதல்; (தொ.) staging port, விமானப் பயணத்தில் நிலவரமான இடைத் தங்குதளம்.

**Sta'girite,** *n.* ஸ்டாகிரா என்னும் பண்டை கிரேக்க நகரினர்; பண்டை கிரேக்க அறிஞர் அரிஸ்டாட்டில்.

**stag'nant,** *a.* நீரொழுக்கற்ற; ஓடாத, பாயாத, அசையாது நிற்கிற; கிளர்ச்சியற்ற, மந்தமான, செயலற்ற, சோம்பி யுள்ள; கெட்டுப்போன, நலங்கெட்ட.

**stag'nate,** *v.* நீர்மவகையில் ஓட்டமற்றிரு, பாயாது தேங்கி நில்; செயலற்று இயங்கு; வாழ்க்கை வகையில் தேக்கமடைந் திரு, மாறுபாடில்லாது சோர்வுற்றிரு; உள்ளத்தின் வகையில் சுறுசுறுப்பற்றிரு, சோம்பியிரு; ஆள்வகையில் கிளர்ச்சி யற்றிரு; தொழில்வகையில் மந்தமாயிரு.

**stagnic'olous,** *a.* சதுப்புநிலத்தில் வாழ்கிற; தேங்கல்நீரில் வளர்கிற.

**stag'-party,** *n.* ஆடூஉக்குழாம், ஆடவர்மட்டும் கொண்ட குழு.

**sta'gy,** *a.* நாடகப் பாணியிலுள்ள; நாடகப் பண்புமிக்க; பகட்டு நடிப்பான; புறப்பகட்டான.

**staid,** *a.* எழுச்சியற்ற, கிளர்ச்சியற்ற; ஒருநிலைப்பட்ட.

**stain,** *n.* கறை; அழுக்கு; நிறவேறுபாடு; நிறவேறுபாட்டுத் தடம்; கறை உண்டாக்கும் பொருள்; சாயப்பொருள்; குற்றம், குறைபாடு; *v.* கறைப்படுத்து; அழுக்காக்கு, மாசுபடுத்து; நிறங்கெடு; நிறம் மாறுபடுத்து; நிறம் மங்கலாக்கு; சிறிதளவு வெளிறிய சாயலூட்டு; புதுநிறமூட்டு; புகழுக்குக் களங்கம் விளைவி; பெயருக்குப் பழி ஏற்று; மரம்-கண்ணாடி முதலிய வற்றிற்குப் புதுவண்ணச் சாயல் கொடு; உருப்பெருக்காடியில் பார்க்கும் பொருளுக்குச் சாயமேற்று; சுவர் ஒட்டுத்தாளுக்கு நிறப்படிவமேற்று; (வேதி.) உட்படிவம் வெளித் தெரியும் படி கூறுகளின் நிறம் வேறுபடுத்திக் காட்டு.

**stain'less,** *a.* மாசற்ற, கறையற்ற; களங்கமற்ற, குறையற்ற; குற்றத்தடமில்லாத; துருவற்ற, எஃகுவகையில் நிறமியக் கலப்பால் துருவுக்கும் அரிப்புக்கும் இடமளிக்காத; (தொ.) stainless steel, துருப்பிடிக்கா எஃகு; குருவைக்கலப்பு வெண் பொன்.

**stair,** *n.* ஏணிப்படி, படிக்கட்டு.

**stair'-carpet,** *n.* படிக்கட்டு விரிப்பு.

**stair'-case,** *n.* படிக்கட்டு; (தொ.) cork screw staircase, சுழற் படிக்கட்டு, திருகுசுழலாகச் செல்லும் ஏணிப்படி.

**staired,** *a.* படிக்கட்டிணையுடைய; படிக்கட்டுப்போல் வகைப் படுத்திய.

**stair'foot,** *n.* படிக்கட்டுகளின் அடியில் இருக்கும் சமதளப் பரப்பு.

**stair'head,** *n.* படிக்கட்டு மேடை, படிக்கட்டு உச்சியில் இருக்கும் சமதளமான இடம்.

**stair'-rod,** *n.* படிச்சலாகை, படிதோறும் படிக்கட்டு விரிப்பை அமைவுறப் பொருந்தச்செய்யும் கழி.

**stairs,** *n. pl.* படிக்கட்டு, ஏணிப்படிகளின் தொகுதி; (தொ.) below stairs, வீட்டின் அடித்தளத்தில்; வேலைக்காரர்களுக் குரிய இடத்தில்; down stairs, கீழ்த்தளத்தினை நோக்கி, கீழ்த்தளத்திற்கு; flight of stairs, pair of stairs, படிக் கட்டின் ஒரு தளக்கட்டம்; up stairs, வீட்டின் மேல்தளத் திற்கு.

**stair'-tower, stair'-turret,** *n.* சுழற்படிக்கட்டுக் கூண்டு.

**stair'way,** *n.* படிக்கட்டு வழி, படிக்கட்டு.

**staith, staithe,** *n.* கப்பல்களில் ஏற்றுவதற்கான வாய்ப்பு வசதிகளையுடைய கரையோர நிலக்கரிக் கிடங்கு.

**stake,** *n.* கூர்ச்சு, மரமுளை; வேலிநடுகழி; எல்லைக்குற்றி; அடையாளக் கம்பம்; கொழுகொம்பு, ஆதாரக் கழி; கட்டை வண்டிச் சுற்றோரக் குத்துக்கழி; கட்டுத்தறி; எரிப்புத் தண்டக் கம்பம்; எரிப்புத்தண்டம்; ஈயவேலையாளின் பட்டடைக்கல்; ஓட்டப் பந்தயத்தொகை; பணயம், பந்தயப்பொருள்; துணிவீடுபொட்டுப் பொருள், ஆக்க அழிவுக்குத் துணிந்து ஈடு படுத்தும் பொருள்; வேணவாப் பிணைப்பு, ஆக்க இழப்பு களில் உள்ள அக்கறை; பங்கீடுபாடு; போட்டிக் குறியிலக்கு, போராட்டக் குறியிலக்கு, முயற்சிக் குறியிலக்கு; சாவுக்குறி, உயிரிழந்தும் காத்தற்குரிய குறிக்கோள் தத்துவம்; குறிக் கோள் பரிசு, வெற்றிதோல்விப் போட்டிக்குரிய குறிக் கோளான பரிசு; ஆதாயநட்டங்கட்குரிய ஒன்று; இடர் ஊசலாட்ட நிலை; *v.* முளையில் பிணை; மரமுளைகளைக் கொண்டு இறுக்கு; கொழுகொம்பினை ஆதாரமாகக் கொடு; குத்துக்கழிகள் மூலம் காப்புறுதி செய்; கழிகள் இணைவி; நடுகழிகளால் அடைப்புச் செய்; குற்றிகள்கொண்டு எல்லை குறி; கழுவில் ஏற்று, கழுமரத்தில் குத்தி ஊடுருவ வை; ஓட்டம் வை; பந்தயப்பொருளாக வை; துணிந்து ஈடுபடுத்து; துணிவு காட்டிப் பணயமாக வை; (தொ.) at stake, இடர் நிலையில்; வெற்றிதோல்வி உறுதியற்ற போராட்ட நிலையில்; போராடி நாட்டவேண்டிய நிலையில்; be condemned to stake, suffer at stake, எரிப்புத்தண்டனை பெறு; have a stake, உண்மையான பிணைப்பு அக்கறை கொண்டிரு; stake off, வேலை அடைப்புச்செய்; stake out, எல்லைகுறித்துக் காட்டு; stake out a claim, எல்லைகுறித்து உரிமை கோரு.

**stake'-boat,** *n.* நெறிகுறிப் படகு, படகுப்பந்தயப் பாதை குறியிட்டுக் காட்டுதற்காக நிறுத்தப்பட்டுள்ள படகு.

**stake'-net,** *n.* கழித்தொங்கல் வலை, மரமுளைகளில் தொங்க விடப்படும் மீன்வலை.

**stakes,** *n. pl.* பணங்கட்டி ஆடும் பந்தயம், குதிரைப்பந்தயப் பணயம்; குதிரைப்பந்தயம்.

**stalac'tiform**, *a.* தொங்கூசிப்பாறை வடிவான.

**stal'actite**, *n.* தொங்கூசிப் பாறை, கடலோரக் குகைகளில் பாறையின் கரைசல் துளி வீழ்வால் மோட்டிலிருந்து தொங்கலாகக் கீழ்நோக்கி ஊசிவடிவில் வளரும் சுண்ணக் கரியகைப் பாறை.

**Stal'ag**, (செர்.) *n.* செர்மன் படைத்துறைச் சிறைக்கொட்டில்; ஆணைபெறுப் பணியாளர்களுக்கும் பிறருக்கும் ஒதுக்கப்படும் படைத்துறைச் சிறைக்கூடாரம்.

**stalag'ma**, *n.*=stalagmite.

**stal'agmite**, *n.* பொங்கூசிப் பாறை, கடலோரக் குகைகளில் பாறையின் கரைசல் துளி வீழ்வால் நிலத்தினின்று மேல் நோக்கி ஊசிவடிவில் வளரும் சுண்ணக் கரியகைப் பாறை.

**stalagmit'ic**, *a.* பொங்கூசிப்பாறை வடிவான.

**stale**[1], *a.* மட்கிய; நாட்பட்ட, சலித்துவிட்ட; கட்டுக்குலைந்த; மலர்ச்சி இழந்த; *v.* புதுமையற்றதாக்கு; நலங்கெடுவி; சலிப்புண்டாக்கு.

**stale**[2], *n.* சிறுநீர்; குதிரைச் சிறுநீர்; *v.* சிறுநீர் கழி.

**stale**[3], *n.* பொறிப்புள், பிற பறவைகளை வலைப்படுத்த உதவும் பறவை; கையாளாக்கப்பட்டவர்; கேலிக்கு இலக்கானவர்.

**stale'mate**, *n.* இக்கட்டுநிலை; காயடைப்புநிலை, சதுரங்க ஆட்டவகையில் அரசுகாய் அடைபடாமலே காய்கள் அசைக்க இடமில்லாதிருக்கும் நிலை; *v.* இக்கட்டுநிலைப் படுத்து; சதுரங்க ஆட்ட வகையில் காயடைப்பு நிலைக்கு உட்படுத்து.

**Stal'inism**, *n.* ருசிய பொதுவுடைமைச் சர்வாதிகாரியான ஸ்டாலின் (Josef V. Stalin, 1879-1953) என்பாரின் அரசியற் கோட்பாடு.

**stalk**[1], *n.* காம்பு; தண்டு; தாள்; காலடி, தேறல் கிண்ணத்தின் அடித்தண்டு; தாறு, இயந்திர நடு உருளை; கருவிகளின் இடைத்தண்டு; நெடும் புகைபோக்கி; ஒடுங்கிய இடையிணைப்புக் கூறு; உறுப்பின் அடி இணைப்பாதாரம்; (தாவ.) மரவினத்தின் நடுத்தண்டு; (உயி.) விலங்கின் தண்டுபோன்ற அமைவு; (க-க.) தண்டமைவணி ஒப்பனை; *v.* தண்டகற்று, காம்பகற்று.

**stalk**[2], *n.* வீறுப்புநடை; ஓசைபடாப் பின்னொட்டு நடை; பதுங்கல் வேட்டையாட்டம்; *v.* வீறுப்பு நடையிடு; பதுங்கிப் பின்பற்றிச் சென்று வேட்டையாடு; ஒளிந்து மறைந்து சென்று வேட்டை விலங்கினைப் பின்பற்று.

**stalked**, *a.* தண்டுடைய; தண்டுபோன்ற உறுப்புடைய, காம்புகொண்ட.

**stalk'-eyed**, *a.* நண்டினை ஒப்பத் தண்டுபோன்ற உறுப்பின் மீதமைந்த கண்களையுடைய.

**stalk'ing-horse**, *n.* வேட்டையாளர் பின்மறைந்து செல்லப் பெறும் குதிரை; நொண்டிச்சாக்கு, போலிக்காரணக் குறிப்பு.

**stall**[1], *n.* இலாயத்தின் தனிக்கொட்டில்; தொழுவத்தின் தனி அடைப்பு; சந்தையின் தனி விற்பனைச் சாவடி; கடைக் கட்டிடத்தின் விற்பனைக் காட்சியரங்கு; கடையின் காட்சிப் பொருள் அடுக்குமேடை; திருக்கோயிற் பாடகர் பந்தியில் திருச்சபைச் சமயகுரு மாடம்; சமயகுரு பதவி; சமயகுரு பதவிக்குரிய மதிப்புயர்வுப் படி; நாடகக்கொட்டகை இருக்கையணி அடுக்கு; கொட்டகைத் தனி இருக்கை; நிலக்கரிச் சுரங்கத் தொழிற்பட்டறை மாடம்; நிலையிடம், நிற்குமிடம்; நிலையறை; கதவிலா ஒற்றைத் தனியறை மாடம்; விரற்கூடு; விமான விசையிழப்பு, பறப்பதற்குப்போதிய விமான வேகங் குறைபடல்; தேக்கநிலை; *v.* தனிக்கொட்டிலில் அடை; தனிக்கொட்டிலில் அடைத்துக் கொழுக்கவை; பனி அளற்றில் அழுந்திச் சிக்கிக்கொள்; ஊர்தி-இயந்திரங்கள் ஆகியவற்றின் வகையில் இயக்கம் தடைபட்டு நில்; விமான வகையிலும் விமானி வகையிலும் வேகக்குறைவால் நிலைகுலைவுறு; தனிச் சாவடியில் தங்கு; பலருடன் உறைவிடம் பங்குகொள்.

**stall**[2], *n.* தட்டுமாறி, திருடன் தப்பியோட வழிசெய்யும் அவனது கூட்டாளி; *v.* சொற்சிலம்பமாடு, வாதமுறை உரையாடல் பயில்; முட்டுக்கட்டையிடு; தாக்குக்காட்டு; தடைதாமதமுறை இடைஞ்சல்கள் உண்டாக்கு; தடுப்பு முறைகள் கையாளு; (தொ.) stall off, தட்டிக்கழித்து விலக்கு, பொறித்தட்டால் தப்பித்துக்கொள்ளு.

**sta'llage**, *n.* சந்தையில் விற்பனைச் சாவடியிடம்; அங்காடி விற்பனைச்சாவடிக் கட்டணம்; சந்தையில் விற்பனைச்சாவடி இடவுரிமை; பொருட்காட்சிக் கடைக் கட்டணம்.

**stalled**, *a.* விலங்கு வகையில் கொட்டிலில் வைக்கப்பட்ட; கொழுக்க வைக்கப்பட்ட.

**stall'enger**, *n.*=stallinger.

**stall'feed**, *v.* தனிக்கொட்டிலில் வைத்துக் கொழுக்கவை.

**stall'ing**, *n.* தொழுவ அடைப்பு.

**stall'inger**, *n.* சந்தைச் சாவடியாளர்.

**stall'ion**, *n.* பொலிகுதிரை.

**sta'lwart**, *n.* வல்லவர்; கட்சியின் வன் கடைப்பிடியாளர்; *a.* உரமிக்க, கட்டுறுதிவாய்ந்த; வீரமிக்க, மனவுரம்வாய்ந்த; உலையா உறுதியுடைய; வன் கடைப்பிடி வாய்ந்த.

**stam'en**, *n.* மலரிழை, மலரின் ஆணுறுப்பு.

**stam'ina**, *n.* கருவகக்கூறு, அடிப்படைக்கூறு; உள்ளுரம்; தாங்கும் உறுதி; அடிவலு.

**stam'inal**, *a.* மலரிழை சார்ந்த; பூவிழைக்குரிய; பண்புரஞ் சார்ந்த.

**stam'inate**, *a.* மலரிழைகளையுடைய, பூவிழைவாய்ந்த; மலரிழைமட்டுமேயுடைய, சூலகம் இல்லாத.

**stamin'eal**, *a.* பூவிழைகளையுடைய; பூவிழைகள் அடங்கிய.

**staminif'erous**, *a.* மலரிழைகளையுடைய.

**stam'inode, stamino'dium**, *n.* பொலிவற்ற பூவிழை, மலட்டுமலரிழை.

**stamm'er**, *n.* கொன்னல், திக்குவாய்ப் பண்பு; *v.* கொன்னு, திக்கிப் பேசு, தெற்றிப் பேசு.

**stamm'erer**, *n.* திக்குவாயர், தெற்றுவாயர்.

**stamp**, *n.* பொறிப்பு; முத்திரை, பொறிப்புத் தடம்; நாணயப் பொறிப்பு; பொறிப்பாணி, முத்திரைக் கருவி; பொறிப்புரு, முத்திரைக்குறியீடு; பொறிப்புச் செதுக்குருப்படிவம்; அஞ்சல் தலை; வரியொட்டுத் தலை; பொறிப்படையாளம், தனிப் பொறிப்புக் குறி; இலாஞ்சனை, தனி அடையாளம்; தனிச் சிறப்புக்குறி; சின்னம், தனியுரிமைக் குறி; கனி உலோக ஆலைகளின் நொறுக்கு பொறி; அழுத்தப் பொறி; வெட்டழுத்தப் பொறி; தனிப் பண்பு, தனிமரபுக் குணம்; தனிப் பண்புச் சாயல்; தனிவகை; வகை; பண்பு; பண்புத்தரம்; மதிப்புத்தரம்; அத்தாட்சி, சான்றுரிமை; உரிமைச்சான்று, சான்றுறுதி; *v.* தடம்பொறி; முத்திரையிடு, உலோகம்-வெண்ணெய்-தாள் முதலியவற்றின்மீது பொறிப்படையாளமிடு; நாணயத்தில் பொறிப்பிடு; கனி உலோகங்களை இயந்திரப்பொறியிலிட்டு நொறுக்கிப் பொடியாக்கு; ஓங்கிமிதி, நிலத்தில் காலால் அறை; அஞ்சல்தலை ஒட்டு; வரி ஒட்டுத் தலை இணை; தனிப்பண்பு கொடு; தனித்தன்மை குறித்துக் காட்டு; நிலையாகப் பதிவி; நினைவில் பதியவை; (தொ.) stamp out, மிதித்தழி; ஒழி, தடமற அழி; ஒழித்துக்கட்டு; கிளர்ச்சி வகையில் அடக்கு.

**stamp'-collector**, *n.* அஞ்சல்தலை சேகரிப்பாளர்.

**stamp'-duty**, *n.* ஆவண வரி, ஆவணங்கள் மீது ஒட்டுத்தலை வழியாக இடப்படும் வரி.

**stampede'**, *n.* மிரள் திரளோட்டம், கால்நடைகள் முதலியவற்றின் பொதுக் கிலியால் ஆன திரட்பாய்ச்சல்; திரள் உடைவோட்டம், மக்கட்கும்பலின் குழப்பமான கலசலோட்டம்; அழிமிதித்தடிப்பு, நெருக்கியடிப்பு; மக்கட் கும்பலின் பொதுமதிச்செயல்களின் தொகுதி; விலங்குத் திரளின் குழப்ப அழிமதி; *v.* கிலியால் திரளாக உடைந்தோடு; நெருக்கியடித்தோடு; மிதித்துத்தள்ளி அழிமதிசெய்.

**stam'per**, *n.* முத்திரை பொறிப்பவர்.

**stamp'ing**, *n.* பொறிப்பீடு; தடம்பொறிப்பு; தலை ஒட்டுதல், ஒட்டுத் தலை பதித்தல்; காலாலறைதல்; பதியவைப்பு; *a.* பொறிப்பீடு சார்ந்த; பொறிப்பிடுகிற, காலாலறைகிற.

**stamp'ing-machine'**, *n.* நாணயப் பொறிப்பு இயந்திரம்; பித்தளை உலோகங்களில் பொறிப்பிடும் கருவி; உலோகங்களை நொறுக்கிப் பொடியாக்கும் இயந்திரம்.

**stamp'ing-mill**, *n.*=stamp-mill.

**stamp'-machine**, *n.* தாளரைப்புப் பொறி, தாள் செய்வதற்காக கந்தற் கூளங்களைக் கூழாக்கும் பொறி.

**stamp'-mill**, *n.* கனி உலோகங்களை நொறுக்கித் தூளாக்கும் ஆலை.

**stamp'-office**, *n.* அஞ்சல் தலை விற்பனை நிலையம்.

**stamp'-paper**, *n.* ஆவணம், வரித்தலைத்தாள், அரசாங்க வரித்துறை முத்திரை பொறிக்கப்பட்ட தாள்.

**stance**, *n.* பந்தடிநிலை, குழிப்பந்தாட்ட-மரப்பந்தாட்ட வகையில் ஆட்டக்காரர் பந்தடிக்கும்போது நிற்கும் நிலையமைதி.

**stanch**[1], *v.* குருதியோட்டம் தடைசெய்; காயத்தில் குருதிப் போக்கொழி.

**stanch**[2], *a.*=staunch[1].

**sta'ncheon**, *n.* கம்பம்; தூண்; பலகணிச் செங்குத்துச் சலாகை; தட்டியின் நிலைக்கம்பி; செங்குத்தான ஆதாரக் கட்டை; தாங்கிநிற்கும் உதைகால்; கால்நடைகள் கடவாது தடுக்கும் குத்துக்கழி; தொழுவக் குத்துக்கழி அடைப்பு; (கப்.) செங்குத்தான ஆதாரவிட்டம்; *v.* ஆதாரக்கட்டை இணை; உதைகால் அமை; குத்துக்கழியிட்டு இடைவழி அடை; கழி அடைப்பு அமை; கால்நடைகளைக் கழி அடைப்பில் பிணி; உதைகாலால் உறுதிப்படுத்து; உதைகாலுடன் இணைத்து உறுதிப்படுத்து.

**stand**, *n.* நிற்றல், நிற்குஞ் செயல், நிலை; நிற்குமிடம்; நிற்கும்நிலை; நிற்கும் முறை; நிலைகோள், மேற்கொள்ளும் நிலை; நிறுத்கம்; நிறுத்தீடு; இயக்கத் தேக்கநிலை; இயக்க முடிவு; எதிர்ப்புநிலை; தடுப்புநிலை; பின்னிடா உறுதிநிலை எதிர்ப்பு; எதிர்ப்புக்காக மேற்கொள்ளும்நிலை; நிலையமைதி; உருவமைதி; தொடர்பு நிலையமைதி; வளர்ச்சிநிலை; திகைப்பு நிலை; வகையிழப்புநிலை; ஆடை வகையில் நிறைதொகுதி; பறவை வகைகளின் கூட்டம்; வளர்பயிர்த்தொகுதி; ஆஸ்திரேலிய வழக்கில் காட்டுவளத் தொகுதி; காட்டுவெட்டுமரக்கள அமர்விடம்; வாடகை வண்டி நிலையிடம்; கொட்டகை மேடையிடம்; கொட்டகைப் பார்வையாளர் தங்கிடம்; பொது உந்துகல உந்தூர்தித் தங்கல் நிலையம்; பொது உந்தூர்தி இடைநிறுத்த நிலை; நாடக உலாமன்ற இடைத்தங்கற் காட்சியிடம்; நிலைக்கொளுவி; ஆடை நிலைமாட்டி; நிலையடுக்கு; நிலைப்பேழை; சந்தைக்கடை அடுக்குப்பேழை; நிலைமேடை, இசைக் குழுவினர் முதலியோர் இருப்பதற்கோ நிற்பதற்கோ உரிய தனி உயர் இடம்; வழக்குமன்ற நிலைக்கூண்டு; *v.* நில்; நேராக நில்; நிமிர்ந்து நில்; நிமிர்ந்தமைவுறு; எழுந்து நில்; சென்று நில்; நிறுத்து; நிறுவு; நிமிர்த்தி வை; நிமிர்த்தி நிறுத்து; இருத்து; வை; இயங்குவதை நிறுத்திக்கொள்; இயங்காதிரு; அசையாதிரு; ஓடாதிரு; அமைந்திரு; ஆமைவுற்றிரு; அமையப்பெற்றிரு; விடப்பட்டிரு; இரு; காணப்படு; நிலைமையில் சிக்கு; நிலைகொள்; நிலை மேற்கொள்; ஏற்றுநில்; வழக்கு வகையில் உட்படு; ஆட்பட்டிரு; திசையிலிரு; நேர்வுறு; வந்தெய்தப்பெறு; நிலையெய்து; குறித்து அக்கறைகொண்டிரு; பொருத்தமாயிரு; சட்டைசெய்; இடத்தில் நிலைபெற்றிரு; நிலைகொண்டிரு; எதிர்த்து நில்; தாங்கு; பொறுத்துக்கொண்டிரு; பொறுத்துக்கொண்டு நிலையாயிரு; விடாதிரு; தொடர்ந்திரு; நீடித்திரு; இயங்குநிலையிலேயே தொடர்புறு; நடைமுறையிலிரு; வழக்காற்றிலிரு; செல்லுபடியாகும் நிலையில் நீடித்திரு; மாறுதிரு; கெடாதிரு; மயிரிழை விடாமல் வலியுறுத்து; தொடர்புநிலையிலிரு; உறவுநிலையிலிரு; தயங்கு; தடைகூறு; நலம்பெற்றிரு; நலமுடன் தொடர்ந்திரு; உயரமுடையவராயிரு; உயரமுடையதாயிரு; விலைபெறு; செலவு வை; தேறல் முதலியன வகையில் தன் செலவில் வழங்கு; வேட்டைநாய்வகையில் வேட்டை விலங்கினைச் சுட்டிக்காட்டுங் குறிப்புடன் நிமிர்ந்து நில்; (கப்.) கடலிற் செல்; (தொ.) band stand, இசைக்குழு மேடை; grand stand, குதிரைப்பந்தய அகல்வெளியில் உயர்காட்சி மேடை; stand and deliver, போகாதே-நின்று மடியிலுள்ளதைக் கொடுத்துவிடு என்ற ஆறலைக் கள்வனின் ஆணை; stand at bay, போக்குமுட்டி எதிர்த்து நில்; stand at ease, stand easy, கால்களை அகலவைத்து இயல் தளர்வு நிலையில் நில்; stand by, அருகில் நில்; ஒருங்கியிரு; கொள்கையாகக் கடைப்பிடித்து நில்; விட்டுக்கொடாதிரு, சார்பில் இரு; உறுதிமொழிக்குக் கட்டுப்பட்டிரு; மாறுதிரு; (கப்.) நங்கூர வகையில் கைக்கொள், கைக்கொள்ளச் சித்தமான நிலையில் இரு; stand camera, முக்காலிச் சட்டமீதமைத்த படம் பிடிக்குங் கருவி; stand clear, தொடர்பின்றி நில்; விலகியிரு, தலையிடாதிரு; stand down, சான்றுக் கூண்டிலிருந்து இறங்கு; நிலைமையிலிருந்து விலகு; (படை.) கடமை முடிந்து விலகு; stand fast, உறுதியாக நில்; அசையாது நில்; பாதுகாப்பாக நில்; stand fire, எதிரிக்கு இடங்கொடாமல் அவர்கள் விடும் குண்டுவீச்சுக்களைத் தாங்கு, stand for, பகரமாயிரு; கோட்பாடு வகையில் பொருள் குறித்து நில்; பணித் தேர்வு நாடுபவராக இரு; சட்டமன்றத் தேர்தல் தொகுதிக்கு வேட்பாளராக இரு; சார்பாதரவாளராயிரு; (கப்.) நாடிச் செல்; stand from, இடத்தில் தொடங்கிப் பயணம் மேற்கொள்ளு; stand in, உள்ளிணைவாக நில்; சேர்ந்திரு; stand in for, பேராளாக நில்; ஆட்பேராகச் செயலாற்று; stand in one's light, மறைத்துக்கொண்டு நில்; உரிய வாய்ப்புக்களைக் கெடு; stand in the breach, தாக்குதலைத் தாங்கு, எதிர்ப்பைச் சமாளி; stand in with, இணைந்து கூட்டாகச் சேர், உடந்தையாய் இரு; stand of arms, தனியாளின் கலத்தொகுதிகள்; stand of colours, படைப்பிரிவுக் கொடிகள்; stand off, விலகிச்செல்; தூரத்திலேயே வைத்திரு; நெருங்கிப் பழகாது இரு; நெருங்கிப் பழகவிடாது நட; தற்காலிகமாகப் பணி தவிர்த்திரு; stand off and on, (கப்.) குறிப்பிட்ட இடக்காட்சி மாறுபடாதபடி கரையை நோக்கி மாறிமாறி முன்னும் பின்னுமாகச் செல்; stand on, (கப்.) சென்ற வழியே தொடர்ந்து செல்; stand on, stand on ceremony, stand upon ceremony, பிறழாது கடைப்பிடி, வலியுறுத்து; stand one in, விலை பிடிப்பதாயிரு; stand one in good stead, சார்பில் மிகுநலமுடையதாயிரு, நல்ல வாய்ப்பாக வந்தமைவுறு; stand one's ground, வாதத்தில் பிடிவிடாதிரு, நிலைமை விட்டுக்கொடுக்காதிரு; stand on one's own bottom, தற்சார்புடனிரு; stand out, முனைப்பாயிரு; stand over, தள்ளிவைக்கப் பெறு; stand to, கட்டுப்பட்டிரு; வேலையைத் தொடங்கு; விடாது பற்றி நில்; (படை.) தாக்குவதற்குச் சித்தமான நிலை மேற்கொண்டிரு; stand to it, உறுதியாகத் தொடர்ந்து செயலாற்று, விடாமல் நடத்து; அழியாமற் காத்துவா; உண்மையென வற்புறுத்து; stand to sea, (கப்.) கடலிற் செல்; stand to win, வெற்றியுறு நிலையிலிரு; கெலிக்கு நிலையில் இரு; ஆதாயம்பெறும் நிலையில் இரு; நலமேபெறும் வாய்ப்புடையவராயிரு; stand up, எழு, எழுந்து நில், நிமிர்ந்து நேராக இரு; stand up for, ஆதரி; குறிக்கோள் வகையில் சார்வுநலங் காட்டு; stand up to, ஆண்மையோடு எதிர்த்து நில்; இடர் நிலைகளைப் பொருட்படுத்தாது சமாளி; stand up with, நடனத்தில் ஆடுபவரோடு இணைந்து ஆடு; பிறருடன் ஒப்ப இணைந்து செயலாற்று; take the stand, சான்றுக்கூண்டில் ஏறு.

**stan'dard**, *n.* பதாகை, படையணிக் கொடி; போர்க்கொடி; கொடி; புரவிப்படைப் பிரிவின் சின்னக்கொடி; விருதுக் கொடி; பொங்கெழுச்சிச் சின்னம்; கொடி வலவர், கொடி ஏந்திச்செல்பவர்; பள்ளிக்கூட வகுப்பு; பொதுத்திட்ட அளவை; கட்டளைப் படியளவு; முத்திரை நிறை அளவு; வரையளவு; குறியளவு; இலக்களவு; இயன் மதிப்பளவு; மரபமைதி, சமுதாய நியதி; மேல்வரி நேர்த்தி, முன்மாதிரி உயர்வுநயம்; ஏற்புடை மாதிரி; ஏற்புடைச் சமயக் கோட்பாட்டு வாசகம், ஏற்புடைக் கோட்பாட்டுப் பாடம்; பொன் நிறை நன்மாற்று; நாணயப் படித்தகவு; நாணய உலோகத் தகவு மதிப்பு; மட்டியல்; நிகர அளவு; சராசரிப்பண்பு; தரம், படிநிலை; படித்தரம், படிநிலைத்தளம்; வெட்டுமர அளவு அலகு; நிலத்தூண், நிலைக்கால், ஆதாரச் சட்டம்; நிமிர்நிலை அமைவு; நிலைநீர்க் குழாய்; நிமிர் வளிக்குழாய்; நிமிர்நிலை மரம்; மரநிலை ஒட்டினச் செடி, மரத்துடன் ஒட்டிணைத்து

மரம்போல் ஆதாரமின்றி நிற்கும் நெடுஞ்செடி ; தும்பிமலர்க் கொடியிதழ், வண்ணத்துப்பூச்சி வடிவான மலரின் முகட்டிதழ் ; கொடியிறகு, கொடிபோல ஆடும் வால் இறகு ; விடு மரம், தறிபட்ட செடிகளிடையே வளரவிடப்படும் தனிமரம் ; (கட்.) மரபுச்சின்ன நிலைக்கொடி ; *a.* சரி திட்டமான ; ஒரு நிலைப்படியான; வரையளவான; தரப்படுத்தப்பட்டுள்ள; மரபமைதி வழுவாத; கட்டளையளவார்ந்த; கட்டளை நயமார்ந்த; முன் மாதிரி நேர்த்தியுடைய ; இனநலமார்ந்த; ஏற்புடை நேர்த்தி நயம் வாய்ந்த ; நீடு பயன்மதிப்புடைய ; குறிமதிப் பார்ந்த; இயன் மதிப்பார்ந்த; நிமிர்நிலையான; நிமிர்ந்து செல்கிற ; நிமிர்நிலை வளர்ச்சியுடைய ; (தொ.) double standard, இரட்டை உலோக நாணய மதிப்புத் தகவு ; gold standard, பொன்நாணய மதிப்புத் தகவு; monetary standard, நாணய மதிப்புத் தகவு, நாணயத்தில் பொன் வெள்ளியுடன் பிற உலோகக் கலவைக்குரிய ஏற்புடை மதிப்பு விழுக்காடு; multiple standard, பல்பொருள் விலைநிகரக் கணிப்பு மதிப்பு ; silver standard, வெள்ளி நாணய மதிப்புத் தகவு ; standard lamp, தொலை ஒளி நிலைக் கம்பவிளக்கு ; standard language, செம்மொழி, பொதுநிலை மொழி ; standard novel, சீர்சான்ற அகலக்கதை, எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட நலங்களையுடைய புனைகதை ; standard of living, வாழ்க்கைத்தரம் ; standard pound, கட்டளைப் படிக்கல்லெடை ; standard yard, அளவைக்கெசம் ; tabular standard, பல்பொருள் விலை நிகர மதிப்புப் பட்டி.

**stand'ard-bearer,** *n.* தலைவர், பதாகைவீரர்.

**standardiza'tion,** *n.* தர அளவுப்பாடு.

**stan'dardize,** *v.* வரையளவுப்படுத்து ; தர அளவுப்படுத்து.

**stan'der,** *n.* நிற்பவர்.

**stand'-in,** *n.* பகர ஆள், ஆட்பேர்.

**stan'ding,** *n.* நிற்றல், நிலை ; மதிப்பீடு ; புகழ் ; நிலைமை ; தகுதி ; காலநீட்சி ; கால வரையறை ; *a.* நின்றுகொண்டிருக்கிற ; நிலையான ; நிலைபெற்றிருக்கிற ; நிலவரமான, அப்போதைக்குச் செய்யப்பெறுத ; (தொ.) all standing, எல்லாம் இருந்தவாறே இருக்கிற; முழுதும் ஆடையணிந்து சித்தமாய் இருக்கிற ; (கப்.) பாய்களை இறக்கவும் நேரமின்றி நிற்கிற ; standing corn, அறுவடையாகாத கதிர் ; standing jump, முன்னுற ஓடாது தாண்டல் ; standing orders, நிலையாணைகள்; standing rigging, கப்பலின் நிலைப்பட்ட உறுதியான கயிறுகள் ; standing water, தேங்கிக்கிடக்கும் நீர்.

**stan'ding-room,** *n.* நிற்க இடம்.

**stan'dish,** *n.* மைக்கூடு.

**stand'-off,** *n.* இடைநிலையாளர், காற்பந்தாட்டத்தில் முன்னணிக் கோடிக்கும் பின்னணிக் கோடிக்கும் இடை நிற்பவர்; (தொ.) stand-off half, காற்பந்தாட்டத்தில் முன்னணிக்கு வந்து பந்து உந்தும் இடைநிலையாளர்.

**stand-off'ish,** *a.* தனித்து ஒதுங்கி நிற்கிற, ஒதுங்கிநிற்கும் போக்குடைய ; கலகலப்பாகப் பழகாத.

**stand'pat,** *v.* சீட்டு உருவாது ஆடு; கொண்ட கொள்கையே உறுதியாகக் கடைப்பிடித்திரு, விட்டுக்கொடுப்பற்றுப் பிடி முரண்டாயிரு.

**stand-patt'er,** *n.* உறுதியாக நிற்பவர், கொண்ட கொள்கை விடாதவர் ; அரசியற் கடும் பிற்போக்காளர், அரசியல் மேடைப் பிடியாளர், மேடையிற் பேசப்படும் கொள்கைகளின்படி நடப்பவர்; காப்புவரிக்கட்சி விதிப் பிடிவிடாதவர்.

**stand'-pipe,** *n.* நிலைகுத்துக் குழாய்.

**stand'point,** *n.* நோக்குநிலை, நோக்கு திசை.

**stand'-rest,** *n.* சாய்கோக்காலி, நிலைச்சட்டத்தில் நிற்பவரைத் தாங்கும் ஓவியரின் சரிவுமுகட்டுக் கோக்காலி.

**stand'still,** *n.* முழுநிலை நிறுத்தம், அசையாநிலை ; இயங்கா நிலை, இயங்கமுடியா நிலை; *a.* இயங்காத; அசையாத; நிலை நட்டமான ; இயக்கங் கைவிட்ட ; இயக்கந் தடை செய்யப்பட்ட.

**stand'-up,** *a.* நிமிர்வான ; கழுத்துப்பட்டி வகையில் செங்குத்தாக நிற்கிற ; சண்டைவகையில் வினையார்ந்த, மனமார்ந்த, விட்டுக்கொடுப்பு எண்ணமற்ற.

**stan'hope,** *n.* திறந்த இருசக்கர வண்டி ; திறந்த நான்கு சக்கர வண்டி.

**Stan'hope press,** *n.* ஸ்டான்ஹோப் பெருமகனுர் கண்டு நிறுவிய அச்சக மாதிரி.

**Stan'hope lens,** *n.* முரண் குவிவாடி, இருபுறமும் வேறு வேறு முரணுன குவிவுகளையுடைய கண்ணுடிச்சில்லு.

**stan'iel,** *n.* சிறு வல்லூறு வகை.

**stank,** *v.* **stink** என்பதன் இறந்தகால வடிவங்களில் ஒன்று.

**stann'ary,** *n.* வெள்ளீயச் சுரங்கம் ; வெள்ளீயச்சுரங்கமுள்ள மாவட்டம்.

**stann'ate,** *n.* ஈயத்திராவக உப்பு.

**stann'ic,** *a.* வெள்ளீயஞ் சார்ந்த ; மீ எடைதிற வெள்ளீயஞ் சார்ந்த; நாலிணைதிற வெள்ளீயத்துக்குரிய; (தொ.) stannic acid, வெள்ளீயக் காடி.

**stannif'erous,** *a.* வெள்ளீயம் அடங்கிய.

**stann'ous,** *a.* ஈரிணைதிற வெள்ளீயஞ் சார்ந்த.

**stan'za,** *n.* செய்யுட் பத்தி; அடிவரையறைச் செய்யுள்; கிரேக்க இலத்தீன் மொழிகள்வகையில் நாலடிப்பாட்டு.

**stan'za'd, stan'zaed,** *a.* அடிவரையறைப் பாக்களாய் யாக்கப்பெற்ற ; அடிவவரயறைப் பா அமைப்புற்ற.

**stanza'ic,** *a.* அடிவரையறைச் செய்யுள் சார்ந்த.

**sta'ple[1],** *n.* கொண்டி ; நாதாங்கி ; தாழ்செருகுகுழை ; புற்குழல், துளை இசைக்கருவியின் புல்வாய்களை உள்ளடக்குங் குழல் ; தைப்புமுள், கம்பித்தையலில் வழங்கும் வளைமுள் இறுக்கி; *v.* கொண்டியிடு; கொண்டியிட்டிறுக்கு; கொண்டியிட்டடை ; தாழிடு ; தாழிட்டு அடை ; தைப்பு முள்ளிட்டுத் தைத்திறுக்கு.

**sta'ple[2],** *n.* முக்கிய வாணிகப் பொருள் ; மூலப்பொருள், ஆக்கப்பொருளுக்கு மூலமான அடிப்படைச் சரக்கு ; இழை, துய் ; இழைப் பண்பு, இழைத் தரம் ; *a.* முக்கியமான ; அடிமூலமான ; *v.* தரப்படி வகைப்படுத்து.

**stap'ler[1],** *n.* முக்கிய பொருள் வணிகர் ; கம்பளியைத் தரப்படுத்தி வாணிகஞ் செய்பவர்.

**stap'ler[2],** *n.* தாள் தைப்புமுட்கருவி.

**sta'pling-machine,** *n.* தாள் தைப்பு முட்கருவி.

**star[1],** *n.* விண்மீன், வான்வெள்ளி ; வான்வெளிக் கோளம், நட்சத்திரம்; ஐம்முனை வடிவப்பொருள்; உடுவடிவப் பதக்கம்; உடுவடிவ விருதுச்சின்னம் ; உடுக்குறி ; விலங்கின் சுட்டி ; குதிரைமுக வெண்சுட்டி; பல்தெருச்சந்தி; சேணிடப் பொருள்; அரும்பொருள்; ஒண்பொருள்; பற்றுர்வத்துக்குரியவர், பக்திக்குரியவர் ; பொதுமக்கள் உளங்கவர்ந்தவர் ; புகழ் நடிகர் ; புகழ் நடிகை, புகழ் ஒளி சான்றவர் ; முதன்மைச் சிறப்புடையது ; நற்பேறு, குருட்டுயோகம்; உடுமீன்; விண்மீன் வடிவ மீன்வகை; மேசைக்கோற்பந்துக் கூட்டாட்டத்தில் மூவாய்ப்புக்களும் கடந்த சிறப்பாட்ட வாய்ப்பு ; *a.* விண்மீன்களுக்குரிய ; விண்மீனல் குறித்துக்காட்டப்பட்ட ; ஒளிமிக்க, முதன்மையான; தலைசிறந்த; புகழ் ஒளிசான்ற; *v.* வீண்மீன் போல ஒளிவீசு; உடு உருக்கள் பதி; உடு உருக்களால் அணிசெய் ; பட்டியலில் பெயர்மீது உடுக்குறி அடையாளமிட்டுக் காட்டு; ஐங்கதிர் வட்டவடிவாகக் கீறு; ஐங்கதிர் வட்டக்கூறுகளாகச் சிதறடி ; புகழ்நடிகராக்கு ; தலைசிறந்த நடிகராகக் காட்டு ; காட்சி அல்லது திரைப்படத்திற்குத் தலைசிறந்த நடிகராகக் கொள் ; முக்கிய நடிகராக விளங்கு ; முக்கிய நடிகராகத் தோன்று ; பொதுமக்கள் கவனங் கவர் ; மேசைக் கோற்பந்துக் கூட்டாட்டத்தில் மூவாய்ப்புக்கும் கடந்த சிறப்பாட்ட வாய்ப்புப் பெறு ; (தொ.) binary stars, சுழலிணை விண்மீன், ஒன்றை ஒன்று சுற்றும் இரு விண்மீன்கள் தொகுதி ; bright particular star, தனிமனிதர் பக்திக்குரியவர் ; மனிதர் வழிபாட்டுக்குரிய ஒன்று ; double stars, இணை விண்மீன், ஒன்ருகத் தெரியும் இரட்டை விண்மீன் ;

evening star, மாலைவெள்ளி, வெள்ளிக்கோள்; film star, திரைப்பட மின்னொளி, படவுலக நட்சத்திரம், புகழ்சால் நடிகர்; literary star, இலக்கியப் புகழ்வாணர்; morning star, காலை வெள்ளி, வெள்ளிக்கோள், சுக்கிரன்; multiple stars, பன் மீன், ஒரு விண்மீன் போலத் தோன்றும் பன்மீன் குழு; north star, polar star, pole star, வடமீன், துருவ நட்சத்திரம்; shooting star, எரிமீன், விரைவாக நகர்ந்து மறையும் சிறு மீன்; Star Chamber, உடனடி உயர் தீர்ப்புமன்றம்; star of Bethlehem, குவளையின மலர்ச்செடி வகை; Star of India, பிரிட்டிஷ் இந்திய நேரடி ஆட்சி நினைவாக 1861-இல் நிறுவப்பெற்ற வீரத்திருநிலை விருது வரிசை; stars and stripes, அமெரிக்க ஐக்கியநாட்டுத் தேசியக் கொடி; the star system, ஓரிரண்டு புகழ்சான்ற நடிகர்களைக் கொண்டு இரண்டாந்தர நிறுவனங்கள் படவெற்றிநாடும் முறை.

star², *n.* புல்வகை.

star'-apple, *n.* மேற்கிந்தியக் கனிமர வகை; மேற்கிந்தியக் கனிவகை.

star'-blasting, *n.* ஆட்சிக்கோள்களின் நச்சுப்பலன்.

starb'oard, *n.* (கப்.) வலப்பக்கம், கப்பலில் முன்னோக்கி யுள்ளவரது வலதுகைப்புறம்; *v.* கப்பலின் பயின்கட்டையை வலப்புறமாகத் திருப்பு; பயின்கட்டையை வலப்புறமாகத் திருப்பி வை.

star'-bright, *a.* விண்மீன்போலச் சுடர்வீசுகிற.

star'-catalogue, *n.* உடுப்பட்டி, விண்மீன்கள் பெயர் முதலிய விவரங்களடங்கிய பட்டியல்.

starch, *n.* மாச்சத்து, பசைமாப்பொருள்; கஞ்சிப்பசை; மொறமொறப்பு, நெகிழ்வின்மை; விறைப்பு நடை; வெற்றுசார நடை; *a.* சரிநுட்பமான; ஆசார நுணுக்கம் வாய்ந்த; *v.* கஞ்சிப்பசையால் மொறமொறப்பாக்கு; நெகிழ்வற்ற வெற்றுசாரப் பண்பூட்டு.

starched, *a.* கஞ்சிப்பசையிட்ட; மொறமொறப்பான; மொறமொறப்பாக்கப்பட்ட; விறைப்பான; ஆசார முறையான, உணர்ச்சியற்ற; விறைப்புநடை வாய்ந்த.

starch'edly, *adv.* விறைப்பாக, உணர்ச்சியின்றி, ஆசார முறையாக.

starch'edness, *n.* கஞ்சிப்பசையிட்ட நிலை; மொறமொறப்புப் பண்பு; உணர்ச்சியற்ற ஆசாரப்பண்பு; விறைப்பாசார நடைப்பண்பு.

starch'iness, *n.* மாச்சத்துடைமை; மாப்பசைத் தன்மை; கஞ்சிப் பசையார்ந்த நிலை; நெகிழ்வற்ற விறைப்புடைமை; ஆசாரமுறைப் பண்பு.

starch'ly, *adv.* சரிநுட்பமாய்; ஆசார நுணுக்கமாக.

starch'ness, *n.* சரிநுட்பப் பண்பு; ஆசார நுணுக்கத் தன்மை.

starch'y, *a.* மாச்சத்துடைய; பசைமாவார்ந்த; கஞ்சிப்பசையார்ந்த; மொறமொறப்பான; ஆசார நுணுக்கம் பார்க்கிற, ஆசார விறைப்புநடை வாய்ந்த, வெற்றுசாரமுறையான.

star'-crossed, star'-crost, *a.* ஆட்சிக்கோள்களின் தீவினைவுகளினால் கேடுற்ற.

star'dom, *n.* நாடகப்புகழ் நடிகர்நிலை; திரைப்படப் புகழ் நடிகர்நிலை; மக்களார்வப்புகழ் நிலை.

star'-drift, *n.* உடுக்குழுவியக்கம், நிலை விண்மீன்குழுக்களின் நிலவுலகப் புடைபெயர்வு சாராத தற்சார்பான பொதுநிலை இயக்கம்.

star'-dust, *n.* விண்வெளித் தூசி, உருகுவெள்ளிச் சிதைவால் வானவெளியில் இயங்குறும் தூசிப்பொருள்; தூசித்துகள் போலத் தோன்றும் மிகுதொலை விண்மீன் படலம்.

stare, *n.* உறுத்த பார்வை; ஊன்றிய பார்வை; இமையா விழிப்பு; நீடித்த அகல் விழிப்புநோக்கு; உருட்சி நோக்கு; மருட்சிப்பார்வை; வியப்பார்வ நோக்கு; திகைப்பு நோக்கு; மடமை நோக்கு; பற்றார்வ நோக்கு; ஏக்க நோக்கு; வேணவா நோக்கு; *v.* உறுத்து நோக்கு; ஊன்றிப் பார்; விழித்து நெடுநேரம் நோக்கியிரு; பேந்தப் பேந்த விழி; திகைப்புடன் விழித்து நோக்கு; வியப்பார்வத்துடன் கூர்ந்து நோக்கு; பற்றார்வத்துடன் நோக்கு; முனைப்பாக முன்வந்தெய்து; திடுமென வந்து திகைக்க வை; கண்கூடாகத் தெரியவா; விழித்து நோக்கி அச்சுறுத்து; விழித்து நோக்கி அச்சுறுத்திச் செயலாற்று; விழித்து நோக்கி எதிர்ப்புத் தெரிவி; (தொ.) stare one in the face, திடுமென முன் வந்தெய்தித் திகைக்க வை, திடுமென வந்தெய்தி அச்சுறுத்து.

star'er, *n.* உறுத்து நோக்குபவர்; வேணவா நோக்காளர்.

star'finch, *n.* செவ்வாற் குருவி.

star'fish, *n.* உடுமீன், ஐந்து அல்லது பல புறமுனைப்புக்களையுடைய வட்டமீன் வகை.

star'gaze, *v.* விண்மீன்களை உற்றுநோக்கு; வானோக்கு; (பே-வ.) வானூலாய்வு செய்; பகற்கனவு காண்; மனக்கோட்டை கட்டு.

star'-gazer, *n.* வானோக்கி; (பே-வ.) வானூலார்; மனக்கோட்டை கட்டுபவர்; பகற்கனவு காண்பவர்; முகட்டுவிழி மீன்வகை.

srar'-gazing, *n.* வானோக்கு; வானூல்; மனக்கோட்டை.

star'-grass, *n.* புல்வகை.

sta'ring, *a.* முனைப்பான; அச்சுறுத்துகிற; திகைப்பூட்டத் தக்க; அருவருப்பூட்டத்தக்க; *adv.* முனைப்பாக; அச்சுறுத்துவதாக; திகைப்பூட்டுவதாக; அருவருப்பூட்டுவதாக; (தொ.) staring mad, முனைப்பான கிறுக்குடைய; staring red, முனைப்புச் சிவப்பான; staring waistcoat, முனைப்பாக அருவருப்பூட்டத் தக்க இடுப்புச்சட்டை.

star'ingly, *adv.* முனைப்பாக.

star'-jelly, *n.* களிப்பாசி, குழம்புபோன்ற பசைப்பண்புடைய இழைத்துய்கள் பரப்பும் பசுநீலப் பாசிவகை.

stark, *a.* விறைப்பான; முறைப்பான; (செய்.) வலிமையான; உறுதியான; விடாப்பிடியான; கலப்பற்ற; தனி நிலையான; புற அணியற்ற; முழுதளவான; மறைவு பொதிவற்ற; *adv.* முட்டமுழுக்க, முற்றிலும்.

star'less, *a.* விண்மீன் அற்ற.

star'let, *n.* சிறுதிற விண்மீன்.

star'light, *n.* விண்மீன் ஒளி; *a.* விண்மீன்களால் ஒளி தரப் பெற்ற; விண்மீன் ஒளி பரவிய.

star'like, *a.* விண்மீன் ஒத்த.

starl'ing¹, *n.* போலி செய்யும் ஆற்றலுடைய பூவையினப் பறவை வகை.

starl'ing², *n.* திண்டுவரி, பாலத்தின் தின்டைச்சுற்றிப் பாதுகாப்பிற்காக இடும் பெருந்தூண் தொகுதி.

star'lit, *a.* விண்மீன் வெளிச்சங் கொண்ட.

starr'y, *a.* விண்மீன் ஆர்ந்த; உடுவுருக்களால் அணி ஒப்பனை செய்யப்பட்ட; உடுக்களடங்கிய; உடுக்களிலிருந்து வருகிற; விண்மீன்கள் போன்ற; விண்மீன்கள் போன்று ஒளிருகிற.

starr'y-eyed, *a.* கனவியலாளரான, கற்பனையுலகிலே திரிகிற.

stars, *n. pl.* யோகம், நல வாய்ப்பு.

star'-shell, *n.* ஒளி வெடிப்புக்குண்டு, விண்ணில் வெடித்து ஒளியால் எதிரி இருப்பிடங் காட்டும் வெடிகுண்டு.

star'-spangled, *a.* உடு உருக்களால் அணி செய்யப்பட்ட.

star'-stone, *n.* நீல மணிக்கல் வகை.

star'-stream, *n.* விண்மீனோட்டம், உடுமண்டலத்தின் இரு புடைபெயர் வியக்கக் குழுக்களில் ஒன்று.

start, *n.* திடுக்குறவு, திடீர் அதிர்வெறிவு; திடீர் இயலதிர்வு, தன்னையறியாமலே திடுமென ஏற்படும் அதிர்ச்சி; திடீர் வெட்டசைவு; திடீர் வியப்பதிர்ச்சி; திடீர் நடுக்குறவு; எதிர்பாரா நடுக்க உணர்வு; திடீர்ப்பீற்று; திடீர் வலி; திடீர் எழுச்சி; விட்டியங்குநிலை, இடைவிட்டெழும் சிறுதிற அசைவியக்கம்; விட்டெழுச்சி, இடைவிட்டெழும் குறு முயற்சி; தொடக்கம்; தொடங்குதல்; தொடக்குவிப்பு, தொடக்க இயக்குவிப்பு; புறப்பீடுகை; புறப்படுவிப்பு; தொடக்க ஊக்காதரவு; முதல்நிலை ஆதரவு; பந்தயத்தில் தொடக்க இடம்; பந்தயத்தில் தொடக்க வேளை; பந்தயத்தில்

தொடக்க நிலையான இடம்விடு சலுகை; பந்தயத்தில் தொடக்கத்திற்குரிய நேரச்சலுகை; *v*. திடுக்கிடு, திடீர் அதிர்வுறு; திடீர் வியப்பதிர்வுறு; திடுமென நோவு அதிர்வுறு; திடீர் வெட்டசைவுறு; திடுமெனப் புடைபெயர்வுறு; வெட்டுமர வகையில் திடீர்ப்பெயர்வுறு, இரிவுறு, வெட்டுமர வகையில் திடுமெனக் கீழமர்வுறு; பெயர்வுறச் செய்; பெயர்ச்சியுணர்; திடுமென எழு; மேலெழு; மனத்தில் எழு; காட்சியில் தோன்று; புறப்படு; தொடங்கு; பயன்படுத்தத் தொடங்கிவிடு; செயல் தொடங்கிவிடு; தொடக்க முயற்சியிலீடுபடு; முன்னேற்பாடுகள் செய்; தொடக்கமுறு; இயங்குவி; தொடங்குவி; நிறுவு; புதுவதாகத் தோற்றுவி; தொடங்கி நடத்து; விடாது தூண்டுதலளி; இயங்கிக்கொண்டே இருக்கும்படி செய்; மணிப்பொறியைத் திருக்கிவிடு; உந்துகல இயந்திரப் பொறியை முடுக்கிவிடு; தொடக்க உதவி செய்; ஊக்காதரவு வழங்கு; முதல்நிலை ஆதரவு அளி; உந்து, துருத்தி நில்; திறம்பு; விரி, மலர்வுறு; தளர்வுறு, கழலு; துள்ளிப் பாய், தெறித்தோடு; பீறி வெளிப்படு; வெளிப்படுத்து; கலைவுறு; கலை; ஒழுகுறு; ஒழுகுவி; வேட்டைவிலங்கு வகையில் மறைவிடத்திலிருந்து கலைத்து வெளிப்படுத்து; (கப்.) மிடாவிலிருந்து தேறல் வடித்தெடு; (தொ.) a rum start, (பே-வ.) அரியதொரு நிகழ்ச்சி, வியப்புத்தரும் நிகழ்ச்சி; by fits and starts, விட்டுவிட்டு; start one doing, செய்துகொண்டே இருக்கும்படி செய், விடாது செய்யத் தூண்டிவிடு; start up, திடுமெனத் தோன்று; to start with, முதன்முதலாக; தொடக்க நிலையில், முற்பகுதியாக.

**start'er**, *n*. தொடங்குபவர்; முடுக்குபவர்; வேட்டை விலங்கைக் கலைப்பவர்; கிளப்புபவர்; புதுவதாகத் தொடக்கஞ் செய்பவர்; வினைத்தொடக்கம் புரிபவர்; வாணிகம்-தொழில் ஆகியவற்றின் வகையில் வினைமுதலாகுபவர்; தொடக்க உதவி புரிபவர்; ஓட்டப்பந்தயத் தொடக்க அடையாளங் காட்டுபவர்; (கப்.) மிடாவிலிருந்து தேறல் வடிப்பவர்; பந்தயத்தில் புறப்பட ஆயத்தமாயுள்ள குதிரை; போட்டியாளர் பந்தயத்தில் புறப்பட ஆயத்தமாயுள்ளவர்; வேட்டையாட்டுத் தொடங்கி வைக்கும் நாய்; இயந்திர இயக்கந் தொடங்கி வைக்கும் அமைவு; தொடக்கமுறைக் கருவி.

**start'ing**, *n*. திடுக்கிடுகை; திடுக்கிடுவிப்பு; புறப்படுகை; புறப்படுவிப்பு; தொடங்குதல்; நிறுவுகை, தொடங்கிவைப்பு; நிறுவன வினை; நடைமுறைத் தொடக்கம்; ஓட்டப் பந்தயத் தொடக்க அடையாளங் காட்டல்; வேட்டை விலங்குக் கலைப்பு; (கப்.) தேறல் வடிப்பு; *a*. புறப்படுகிற; புறப்படுவிக்கிற; தொடங்குகிற; தொடக்கத்துக்குரிய; முதற்படியான; தொடங்கி வைக்கிற; தொடக்க ஊக்கமான; இயந்திர இயக்கந் தொடங்கி வைக்கிற; ஓட்டப்பந்தயந் தொடங்கி வைக்கிற.

**start'ing-gate**, *n*. அகற்றுத் தடைவாயில், குதிரைப்பந்தயத்தில் ஓட்டந் தொடங்குங் கணத்தில் அகற்றப்படவல்ல தடைவாயில்.

**start'ing-post**, *n*. தலைக்கால், போட்டிப்பந்தய ஓட்டம் தொடங்குமிடம் குறித்த கம்பம்.

**start'ing-prices**, *n*. தொடக்கநிலை மதிப்பு, குதிரையின் பந்தயத் தொடக்கநிலை வெற்றி தோல்வி வாய்ப்புமதிப்பு.

**star'tle**, *v*. திடுக்கிடுவி, திடுக்குறச் செய்; திடீர் அதிர்ச்சியுறச் செய்; வியப்பதிர்வுறச் செய்; எதிர்பாராது மலைப்பதிர்ச்சியுறச் செய்.

**start'ler**, *n*. திடுக்குறச் செய்பவர்; திடுக்குறச் செய்வது; வியப்பு மலைப்பதிர்ச்சி தருவது.

**start'ling**, *a*. வியப்பதிர்ச்சியூட்டுகிற; எதிர்பாரா அதிர்ச்சி தருகிற; வியப்பதிர்ச்சி தரவல்ல; எதிர்பாரா அதிர்ச்சி தரத்தக்க.

**start'lingly**, *adv*. திடுக்குறும்படி; அதிர்ச்சியூட்டத்தக்கதாக.

**start'up**, *n*. திடீர்ப் பெருவாழ்வினர்.

**star'-turn**, *n*. ஆடல் பாடலரங்கில் முக்கியமான நிகழ்ச்சி.

**starva'tion**, *n*. பட்டினி; பட்டினி கிடத்தல்; பட்டினி போடுதல்; பட்டினிச் சாவு; உணவின்றி வதைத்தல்; உணவின்றி வருந்தல்; பசிபட்டினி நிலை; நல்குரவு, மிகுதியான வறுமை; (பே-வ.) பசியுறல்; கடுந்துன்பம்; கடுந்துன்பமுறுவித்தல்; தணியா வேட்கை; உள வறுமை; அறிவு வறுமை; இல்லா நிலை; இல்லாநிலைப் படுத்தல்; கோட்டையினுள் எதிரி ஆட்களைப் பட்டினியிட்டுச் சரணடைவித்தல்.

**starve**, *v*. பட்டினியால் இற; பட்டினியிடு; பட்டினியிட்டுக் கொல்; பட்டினி கிட; வறுமையுறு; பசியால் அழியச்செய்; பசியால் அழி; கடு வேட்கையுறு; கடு வேட்கைப்படுத்து; குளிர் முதலியவற்றால் கடுந்துன்பமுறுவி; மிக மோசமான நிலைக்கு உட்படுத்து; இல்லா நிலையிலிரு; இல்லா நிலைப்படுத்து; உள வறுமைப்படு; உள வறுமையூட்டு; அறிவு வறுமைப்படு; அறிவு வறுமைப்படுத்து; அரணக எதிரி ஆட்களைப் பட்டினியிட்டுச் சரணடைவி.

**starve'ling**, *n*. பட்டினி கிடப்பவர்; பற்றுக்குறை உணவுடையவர்; உணவில்லாது அவதிப்படும் விலங்கு; பற்றுக்குறை உணவால் அவதியுறும் உயிர்; *a*. பட்டினி கிடக்கிற; பற்றுக்குறை உணவுடைய.

**star'-wheel**, *n*. தள்ளு சக்கரம்.

**stas'is**, *n*. (மரு.) குருதியோட்ட நிறுத்தம்.

**stat'able**, *a*. கூறுதற்குரிய; அறிவிக்கக்கூடிய; வகுத்துரைக்கத்தக்க.

**state[1]**, *n*. நிலை; நிலைமை; அமைவுநிலை; நிலையமைதி; இருப்பமைதி; சூழுறவுநிலை; வாழ்க்கைநிலை; படிநிலை; இயற்கூறு; வாழ்க்கைப் படிநிலை; மதிப்புநிலை, படிவரிசை; உயர் தகுதி; ஆடம்பரம்; உயர்வீறமைதி; ஆட்சியின அரசு; நாட்டரசு; தனியரசுநாடு; நாடு; கூட்டரசுத் தனியுறுப்பு; அமெரிக்க கூட்டரசுறுப்பு; இந்திய கூட்டரசுறுப்பு; மன்னுயம், அரசியல் சமுதாயம்; பொது அரசுக்குழு; நாட்டின் அரசு; தனி நாட்டினம்; உயர் அரசியல்துறை; மக்கள் ஆட்சித்தர வகுப்பு; உலகியல் ஆட்சித்துறை; சமய ஆட்சியல்லாத நாட்டாட்சித் தலைமை; தவிசிருக்கை, அரியணை; விதானம், மேற்கட்டி; பொதுப்பார்வை நிலை, இறந்தவர் உடல்வகையில் பொதுமக்கள் பார்க்கும்படியாக வைத்திருக்கும் நிலை; புத்தகப் பதிப்பின் வேறுபடு படி; செதுக்குரு இடைநிலைப்பாளம்; செதுக்குரு இடைநிலைப்பாள அச்சுப்படி; *a*. அரசினஞ் சார்ந்த; ஆட்சிநிலைக்குரிய; நாட்டாட்சிக்குரிய; நாட்டரசு பற்றிய; கூட்டாட்சி உறுப்பரசுக்குரிய; அரசுமுறைப்பட்ட; நாட்டரசுப் பொதுவான; அரசுநிலை வினைமுறை சான்ற; அரசுரிமை நிலையான; அரசுநிலைத் தனி உரிமைசான்ற; அரசுநிலை மறை உரிமைப்பட்ட; உயர் அரசியலுக்குரிய; பொதுமக்களுக்குரிய; பகட்டாரவாரமான; பகட்டணி வாய்ந்த; (தொ.) chair of state, அரியணை; அரசு கட்டில்; free state, அடிமை முறைக்கு இடந்தராத நாட்டரசு; in state, உரிய வினைமுறைகள் எல்லாவற்றுடனும்; அரசுமுறை வினைமுறைகளுடன்; keep state, மதிப்பைக் காத்துக்கொள்; பிறர் அணுகுதற்கு அரியராய் இரு; lie in state, இறந்தவர் உடல்வகையில் பொது இடத்தில் எல்லோரும்வந்து காணும்படி வைக்கப்பெறு; Papal States, States of the Church, நடு இத்தாலியில் உள்ள போப்பாண்டவரின் உலகியல் உரிமை ஆட்சிப்பகுதிகள்; slave state, அடிமை முறை இடம்பெற்றுள்ள அரசு; Southern States, ஒன்றுபட்ட அமெரிக்க கூட்டரசின் தென்பகுதி அரசுகள்; state call, (பே-வ.) அரசு வினைநிலை அழைப்பு; state craft, ஆட்சிக்கலை; ஆட்சித்தொழில்; state criminal, அரசியல் குற்றவாளி; State Deparment, அயலரசுத் துறை; state document, state paper, அரசுமுறை ஆதாரப் பத்திரங்கள்; state prisoner, அரசியற் கைதி; அரசுப் பகைமைக் குற்றக் கைதி; பெருங் குற்றக் கைதி, உடைமை பறிமுதல் மாள்வு முதலிய தண்டனைகளுக்குரிய குற்றக்கைதி; state religion, தேசிய சமயம்; state rights, அடிப்படை அரசுரிமைகள், அமெரிக்க கூட்டரசுக்கு விட்டுக்கொடுக்கப்படாத தனியரசுரிமைகள்; state services, அரசுப்பணிகள், அரசு ஊழியங்கள்; States General, நெதர்லாந்து சட்ட

மன்றம்; 1789-க்கு முற்பட்ட பிரஞ்சுநாட்டுச் சட்டமன்றம்; State Socialism, அரசுப் பொதுவுடைமை, தேசியமயமாக்க வேண்டுமென்ற கோட்பாடு; state socialist, அரசுமுறைப் பொதுவுடைமையாளர், பொதுநலத் துறைகளையும் முக்கிய தொழில்களையும் தேசியமயமாக்கவேண்டுமென்ற கோட்பாட்டை ஆதரிப்பவர்; state trial, அரசுமுறை உயர் வழக்குக் கேள்விமுறை, அரசினரே வழக்காடும் அரசியல் துறைக் குற்ற வழக்குவிசாரணை.

**state²**, *v.* கூறு; வகுத்துரை; வாக்குமூலமாகத் தெரிவி; எழுத்து வழி அறிவி; குறிப்பிடு; விவரமாகக் குறிப்பிடு; உறுதியாகக் கூறு; வரையறுத்துக் கூறு; (கண.) வகை தொகையாக எடுத்துக்காட்டு.

**stat'ed**, *a.* குறிப்பிட்ட; முன்கூறப்பட்ட; குறித்துரைக்கப் பட்ட; வரையறுத்துரைக்கப்பட்ட.

**stat'edly**, *adv.* அறிவித்தபடி; தெரிவித்த முறையில்; வரையறுத்தவாறே.

**state'less**, *a.* நாடற்ற, நாட்டுக் குடியுரிமை எதுவும் பெற்றிராத.

**state'lily**, *adv.* பகட்டாரவாரமாக.

**state'liness**, *n.* வீறமைதி, பெருமிதத்தன்மை; மதிப்புயர்வு; விழுமிய தோற்றம்; வீறார்ந்த சந்தமுடைமை; நடைவீறு.

**state'ly**, *a.* வீறார்ந்த; பெருமிதமான; மதிப்பார்ந்த, ஒய்யாரமான; விழுமிய தோற்றமுடைய, கம்பீரமான; சந்த வீறமைதி வாய்ந்த; வீறுநடை சான்ற; பகட்டாரவாரமிக்க; *adv.* வீறமைதியுடன்; ஒய்யாரமாக; பகட்டாரவாரமாக.

**state'ment**, *n.* கூறுதல், பகர்தல்; கட்டுரைத்தல்; அறிவிப்பு, வாக்குமூலம்; கூற்று, செய்தி, கூறப்பட்ட ஒன்று; விவர அறிவிப்புப் பட்டி; விவரம்; விவர வாசகம்; (தொ.) monthly statement, மாதமுறை அறிவிப்பு.

**state'monger**, *n.* போலி அரசியல்வாதி.

**stat'er**, *n.* பண்டைக் கிரேக்க நாணயம்.

**state'-room**, *n.* அரசுத்துறைத் தனியறை; கப்பல் தனிநிலைத் துயிற்கூடம்.

**states'man**, *n.* அரசியல் மேதகை, அரசியல் மெய்ஞ்ஞானி; ஆட்சி வல்லுநர்; இராசதந்திரி; பொதுநல மேதகை; பெருஞ்செயற் பண்பாளர்; வட இங்கிலாந்தின் சிறு தன்னுழைப்பு நிலக்கிழார்; *pl.* states'men; (தொ.) the Elder Statesmen, தேசியச் சிற்பிகள்; ஜப்பான் நாட்டில் 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புதுத்தேசியம் உருவாக்கிய அரசியல் வகுப்பினர்.

**states'manlike**, *a.* அரசியல் மேதகைமை சான்ற, பெருஞ்செயற் பண்பு வாய்ந்த, சான்றாண்மைமிக்க.

**states'manly**, *a.* அரசியல் மேதகைக்குரிய, பெருஞ்செயற் பண்புசான்ற, பெருந்தகைச் சால்புமிக்க.

**states'manship**, *n.* அரசியல்மேதகைப் பண்பு; அரசியல் நயத்திறம்; பெருந்தகை வீறு.

**stat'ic**, *a.* நிலையான; நிலையமைதிப் பண்புடைய; இயங்காத, அசைவற்ற; சமநிலை அமைதிகொண்ட; (தொ.) static ataxia, விழாமலோ தடுமாறாமலோ நிற்க முடியாத நிலை; static water, அழுத்தத்திற்கு உட்படாத் தேக்க நிலைத் தருவிப்பு நீர்.

**stat'ical**, *a.* நிலையமைவியல் சார்ந்த; நிலையமைதிப்பண்பு சார்ந்த; இயங்காத, நிலையமைவான; சமநிலையமைதியுடைய; (தொ.) statical electricity, நிலையியல் மின்னாற்றல்; statical pressure, நிலையியல் அழுத்தம்.

**stat'ically**, *adv.* நிலையமைதி முறையில், இயங்கா அமைதி முறையில், நிலையமைவியலின்படி.

**stat'ics**, *n.* நிலையமைவியல், இயங்காநிலையமைதி அல்லது சமநிலையமைதி கொண்ட பொருள்களின் தன்மைகளை ஆராயும் இயற்பியலின் பகுதி.

**sta'tion**, *n.* நிற்றல்; நிற்குநிலை; வழக்கமாக நிற்கும் இடம்; இருப்பூர்தி நிற்புநிலை; இருப்பூர்தி நிலையம்; உந்தூர்தி நிற்புநிலை; காவல்துறை நிலையம்; கிளைநிலைக் கிடங்கு; அலுவலகக்கிளை; தங்கிடம், தங்கல் மனை; இடைத்தங்கல் இடம்; இடைத்தங்கல் மனை; வரையிடம், குறிப்பிட்ட காரியத்துக்காக ஒதுக்கப்பட்ட இடம்; பணியிடம்; பணி இலக்கிடம்; பணித்துறையிடம்; காவற் பணியிடம்; இடநிலை; நிலையிடம்; இட அமைவு; தானம், அமைவிடம்; வாழ்க்கை நிலை; நிலைத்தரம்; சமுதாயப் படிநிலை; பணித்துறைப் படித்தரம்; பணித்துறை; வாழ்க்கைத்துறை; ஆஸ்திரேலிய வழக்கில் ஆட்டுக்கிடைவெளி; ஆஸ்திரேலிய வழக்கில் ஆட்டுக்கிடைவெளி மனை; திருச்சபை உண்ணாநோன்பு; ரோமாபுரி நகரின் புண்ணிய உலாவழி மாடக்கோயில்; திருக்கோயிலில் சிலுவையேற்ற உருப்படிவங்கள் பதினான்கில் ஒன்று; நிலைத்தளம், படைத்துறைப் பணியாளர்க்குரிய அமைதிகாலத் தங்கற் குடியிருப்பு; (எல்.) குறியிடம், அளவைமூலக் குறிப்பிடம்; (தாவ.) இயல் வளர்நிலையிடம்; (வில.) இயல் வாழ்வு நிலையிடம்; *a.* நிலையத்திற்குரிய; தங்கிடத்திற்குரிய; பணிமனைக்குரிய; *v.* இடம் அமர்த்திக்கொடு; இடத்தில் அமர்த்து; குறியிடத்தில் நிறுத்து; இடத்தில் நிறுத்திவை; தங்கவை; இட்டுவை; அமர்த்திவை; (தொ.) life-boat station, உயிர் காப்புப் படகு வைப்பிடம்; naval station, கடற்படைத் தாவளம், போர்த்துறைக் கப்பல் கட்டவும் பழுது பார்க்கவும் தங்கவும் வாய்ப்புடைய இடம்; police station, காவல்துறை நிலையம்; radio station, வானொலி நிலையம்; railway station, இருப்பூர்தி நிலையம்; station of the cross, சிலுவையேற்ற உருவங்கள் பதினான்கில் ஒன்று.

**sta'tionaries**, *n. pl.* நிலையியற் படைவீரர்கள், நிலையியற் படை.

**sta'tionariness**, *n.* இடம் பெயரா நிலை; இயங்கா நிலை.

**sta'tionary**, *n.* இடம்பெயராதவர்; *a.* நிலையிருப்பான, இடம் பெயராத; இடம்பெயர்த்துக் கொண்டுசெல்ல இயலாத; இடத்துக்கிடம் கொண்டுசெல்லப்படாத; நிலையமர்விற்குரிய; தூக்கிச் செல்வதற்குரியதல்லாத; அளவு மாறாத; தொகை மாற்றமில்லாத, கூடுதல் குறைதலற்ற; பண்பு மாற்றமில்லாத; கோளினங்கள் வகையில் நிரைகோட்டில் நிலையாயிருப்பதாகக் காட்சியளிக்கிற; திணைகாலஞ் சார்ந்த, நோய்கள் வகையில் தனியிடம் தனிவேளை சார்ந்த; (தொ.) stationary air, உயிர்க்கும்போது வெளியேறாமல் உயிர்ப்புப் பையுள் தங்கியிருக்கும் வளி; stationary disease, திணைகால நிலைநோய், சூழல் காரணமான குறிப்பிட்ட கால இடத்திற்குரிய நோய்.

**sta'tion-bill**, *n.* (கப்.) ஆளமர்வுப்பட்டி.

**sta'tion-calendar**, *n.* வண்டி கால வரிசைப் பட்டி, ஒவ்வொரு மேடையிலும் வண்டிகள் புறப்படுதற்குரிய காலங் காட்டும் பட்டியல்.

**sta'tioner**, *n.* பணிகல விற்பனையாளர், எழுதும் பொருள்கள் விற்பவர்; (தொ.) Stationers' Company, முற்கால லண்டன் மாநகர் ஏட்டுப்பதிவுரிமை நிறுவனம்; Stationers' Hall, முற்கால லண்டன் மாநகர் ஏட்டுப் பதிவுரிமை நிறுவனத்தின் பணிக்கூடம்.

**sta'tionery**, *n.* எழுதும் பொருள்கள்.

**sta'tion-house**, *n.* காவல்துறை நிலையம்.

**sta'tion-master**, *n.* இருப்பூர்திநிலையத் தலைவர்.

**sta'tion-pointer**, *n.* குறியிடச் சுட்டுமுள், வரைபடங்களில் இடஞ்சுட்ட உதவும் முக்கவர் கோணவடிவக் கருவி.

**sta'tions**, *n. pl.* கடற்படைக் கப்பற் பணியாளர் பாளையக் குடியிருப்பு.

**stat'ist**, *n.* புள்ளிவிவரத் தொகுப்பர்; அரசியற்கலையறிஞர்.

**statis'tical**, *a.* புள்ளித்தொகுப்பியல் சார்ந்த; கணிப்பியலான.

**statisti'cian**, *n.* புள்ளிவிவரத் தொகுப்பாளர்.

**statis'tics**, *n. pl.* புள்ளித்தொகுப்பியல்.

**statistol'ogy**, *n.* சமூகப்புள்ளிவிவரநூல்.

**stat'ocyst**, *n.* (தாவ.) மரவகையின் சமநிலை உணர்வுறுப்பு; புவியீர்ப்புணர்வதாகக் கருதப்படும் தாவரப்பசைப் பொருள்துகள் உயிர்மம்.

**stat'olith,** *n.* தாவரப் பசைப்பொருள் துகள்; தாவரச் சமநிலை உணர்வுறுப்பிலுள்ள தொடர்பற்ற நுண்பிழம்பு

**stat'or,** *n.* (மின்.) உந்துமின்கல நிலைக்கூறு, மின்னாற்றல் பிறப்பிக்கும் பொறியில் அசையாதிருக்கும் பகுதி; (தொ.) stator armature, சுழல்விலா உந்துமின்கலம்.

**stat'oscope,** *n.* நீரில்லாத நுண்ணமுத்தமானி, நுட்ப அழுத்த வேறுபாடு காட்டும் நீர்மம் வழங்காக் காற்றழுத்த மானி.

**stat'uary,** *n.* சிற்பி, குழைபொருட் கலைஞர்; சிற்பக் கலை; *a.* சிலைகளுக்குரிய; சிலைகளுக்கான; (தொ.) statuary art, சிற்பக்கலை; statuary marble, சிற்ப வெண்சலவைக்கல்.

**stat'ue,** *n.* உருவச் சிலை; படிமம்.

**statuesque',** *a.* சிலை போன்ற; வீறமைதி சான்ற; பெருமித அழகு வாய்ந்த

**statuesque'ness,** *n.* சிற்பச் சிறப்புடைமை, சிலை போன்ற பண்பு.

**statuette',** *n.* சிறுபடிமம், சிற்றுருப் படிமம், சிறுதிறச் சிலை.

**stat'ure,** *n.* உயர்த்தி, ஆள்வகையில் உடலுயர்வளவு.

**stat'us,** *n.* சமுதாயப் படிநிலை; உறழ்நிலை, தகுநிலை.

***status quo,*** (ல.) *n.* இதுகாறும் உள்ள நிலை.

***status quo ante,*** (ல.) *n.* முன்பிருந்த நிலை.

**stat'utable,** *a.* நிலவரச்சட்ட இசைவுடைய; மன்ற ஆணைச் சட்டத்திற்குகந்த; நிலவரச் சட்டப்படியான; மன்ற ஆணைச் சட்ட விதிக்கியைந்த.

**stat'utably,** *adv.* நிலவரச் சட்டபடி; மன்ற ஆணைச் சட்டப்படி.

**stat'ute,** *n.* மன்ற நிறைவேற்றுச் சட்டம்; செயற்படும் எழுத்து வடிவச் சட்டம்; நிரந்தரவிதி; கூட்டுரிமைக் கழகச் சட்டம்; விவிலிய வழக்கில் தெய்விகச் சட்டம்; (தொ.) declaratory statute, சட்ட விளக்க வரையறைச்சட்டம்; private statute, தனிமனிதரைமட்டுமே பாதிக்குஞ் சட்டம்; statute law, எழுத்து வடிவச் சட்டம்; statute at large, முழு விரிவுச் சட்டம்.

**stat'ute-book,** *n.* நிறைவேற்றுச் சட்டத் தொகுப்பு.

**stat'ute-roll,** *n.* சட்டத் தொகுப்பு.

**stat'utory,** *a.* சட்டமாக இயற்றப்பெற்ற; சட்டப்படி தேவைப் படுகிற, சட்டத்தால் கட்டுப்பாடாகச் சுமத்தப் பெறுகிற.

**staunch[1],** *n.* நம்பிக்கையுறுதியான, முழுதும் நம்பத்தக்க; விடா நன்றியுள்ள; முற்றிலும் பற்றுறுதியுள்ள; கப்பல் வகையில் நீர்புகமுடியாத; காற்றுப்புகமுடியாத.

**staunch[2],** *v.*=stanch[1].

**staunch'ly,** *adv.* நம்பிக்கையுறுதியுடன்; நன்றி மீறுமல்; நீர்புகாததாய்; காற்றுப் புகாததாய்.

**staunch'ness,** *n.* விடாப்பற்றுறுதி; வழுவா நம்பிக்கை யுறுதி; நன்றி பிறழாமை; நீர்புகா நீர்மை; காற்றுப்புகாத் தன்மை.

**staur'oscope,** *n.* முனை ஒளிதேர் கருவி, மணி உருப்படிகமீது கோடி முனைப்பொளியால் ஏற்படும் விளைவுகளை ஆயுங்கருவி.

**stave,** *n.* மிடா வரிப்பட்டிகை; கோல்; கம்பி, சலாகை; நீளுருளை; கிணற்றுத் தோவளப் படியடுக்கு வளையம்; நீளுருளைப் படியடுக்கு வளையம்; பழு, ஏணிப்படி; பா, செய்யுட் பத்தி; (இசை.) இசைமான வரிவடிவுப்பதிவில் விசைவரிச் சட்டம்; *v.* உடைத்துவிடு; தகர்த்துவிடு; வரிப்பட்டிகையை முறி; வரிப்பட்டிகைகளை நொறுக்கு; பெட்டியை உருத்தெரியாமல் சிதை; தொப்பியை உருத் தெரியாது கசக்கு; நொறுங்கு, துண்டு துண்டாகு; உடைத்துத் துளையிடு; மிடா-படகு ஆகியவற்றில் புழைசெய்; கோலால் துரத்து; தடுத்து நிறுத்து; தடுத்தகற்று; தட்டித் தடு; தடுத்துக் கடத்தி விடு; தாமதப்படுத்து; வரிப்பட்டிகை இணை; வரிப்பட்டிகை இணைத்துச் செப்பஞ் செய்; பழுதுபார்த்துச் சரிசெய்; அழுத்தத்தால் உலோகத்தைக் கட்டுறுதிப்படுத்து; (தொ.) stave and tail, கரடி வெருட்டாட்டத்தில் நாய்வாலைப் பிடித் திழுத்துக் கோலிடையிட்டு வெருட்டி நிறுத்து; இடையிட்டுத் தடு; stave in, மிடா-படகு ஆகியவற்றை உடைத்துத் துளையிடு; தொப்பி-பெட்டி முதலியவற்றை நொறுக்கி உருத் தெரியாதாக்கு; stave it out, வெற்றி கிடைக்கும்வரை போராடு; stave off, தடுத்து நிறுத்து.

**staved,** *v.* stave என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவங் களில் ஒன்று.

**stave'-rhyme,** *n.* மோனை; பழங்கால டியூட்டானியர் கவிதையில் முதலெழுத்தியைபு.

**staves,** *n. pl.* staff[3], stave என்பவற்றின் பன்மை.

**staves'acre,** *n.* நச்சு விதை வகை; மூட்டைகொல்லி நச்சு விதைவகை.

**stay[1],** *n.* தங்கல்; தங்கியிருப்பு; குடியிருப்பு; தங்கியிருப்புக் காலம்; குடியிருப்புக்காலம்; தடுப்பு; தடை; தடுத்து வைப்பு, தற்காலிக நிறுத்தம்; இடைநிறுத்தம்; நிறுத்தம்; தடுப்படக்கம்; பொறுதியாற்றல், சகிப்புத் திறம்; ஊன்று கோல், ஆதாரம்; (சட்.) நடைமுறைத் தடை; (சட்.) தீர்ப்பு வகையில் நிறைவேற்றத் தடை; *v.* தங்கு; தங்கியிரு; காத்திரு; இருந்த இடத்திலேயே இரு, அகலாதிரு, வேறிடம் போகாதிரு; பொறுத்திரு, தாங்கியிரு; நீடித்திரு; தடு; நிறுத்து; நிறுத்திக்கொள்; தடுத்தடக்கு; தீர்ப்பு வகையில் ஒத்திவை; உதைகால் கொடுத்துத் தாங்கு; அண்டை கொடுத்து ஆதரி; ஆட்டத்தில் புறநீக்கப்படாதிரு, புறமாகா திரு; (பே-வ.) இடையில் சிறிது நிறுத்திக்கொள், சற்றுப் பொறுத்துக் கொள்; (தொ.) has come to stay, (பே-வ.) நிலைத்துவிட்டது; வழக்காற்றிற்கு வந்துவிட்டதாய்க் கருதப் பட வேண்டும்; stay one's stomach, அப்பொழுதைக்குப் பசிபோக்கு.

**stay[2],** *n.* பாய்மரம் தாங்குங் கயிறு; பாய்மரக் குறுக்கு மரச் சட்டம் தாங்கும் கயிறு; *v.* பாய்மரக் கயிறுகளால் தாங்கு; கப்பலை வேறு பாய்மரக் கயிறுகளால் பிணை; (தொ.) miss stays, பாய்மரக் கயிற்றால் கட்டத்தவறு; ship is in stays, ship is hove in stays, கப்பல் கயிற்றிலிருந்து கயிற் றுக்குத் தவ்விக்கொண்டிருக்கிறது.

**stay'-at-home,** *n.* வீட்டுவாசல் தாண்டாதவர்; *a.* வீட்டி லேயே அடைபட்டிருக்கிற.

**stay'-bar,** *n.* கட்டிட உதைகால்; இயந்திர அண்டைக் கட்டு.

**stay'-bolt,** *n.*=stay-bar.

**stay'-down strike,** *n.* உள்ளிருப்பு வேலைநிறுத்தம்.

**stayed,** *a.* பெண்டிர் வகையில் இறுக்கு வார்க்கச்சிட்ட.

**stay'er,** *n.* தங்குபவர்; நிறுத்துபவர்; தடுப்பவர்; தங்குவது; நிறுத்துவது; தடுப்பது; அண்டை கொடுப்பவர்; அண்டை கொடுப்பது, உதைகால்; ஆட்டப்பந்தயம் முதலியவற்றில் நீடித்து ஆடியிருப்பவர்; ஆட்டப்பந்தயம் முதலியவற்றில் நீடித்திருப்பது; நீடித்திருக்குந் திறமுடையவர்; நீடித்திருக் குந் திறமுடையது.

**stay'ing,** *n.* தடுப்பு; நீடிப்பு; நீடித்திருப்பு; *a.* நீடிக்கிற, நீடித்திருக்கிற; தடுக்கிற.

**stay'ing-power,** *n.* சோர்வுறு ஆற்றல்.

**stay'-in strike,** *n.* உள்ளிருப்பு வேலைநிறுத்தம்.

**stay'-lace,** *n.* பெண்டிர் இறுக்க வார்க்கச்சிழை.

**stay'less,** *a.* தடுக்கப்பட முடியாத; இடையே நிற்காத; இடைநிறுத்தமற்ற; ஆதாரமற்ற; நிலையற்ற; பெண்டிர் வகையில் இறுக்க வார்க்கச்சற்ற.

**stay'-maker,** *n.* பெண்டிர் இறுக்க வார்க்கச்சுச் செய்பவர்.

**stays,** *n. pl.* பெண்டிர் இறுக்க வார்க்கச்சு.

**stay'sail,** *n.* கயிறு தாங்கும் பாய்மரம்.

**stead,** *n.* இடம்; நிலை; (தொ.) in person's stead, ஆளின் இடத்தில்; will stand one in good stead, நலம் பயக்கும்.

**stead'fast,** *a.* நிலையுறுதியுடைய; மாறா நிலையான; ஊன்றிய; உலைவிலாத; தடுமாற்றமற்ற.

**stead'fastly**, *adv.* நிலையாய்; உறுதியாய்.

**stead'fastness**, *n.* உறுதியுடைமை; நெகிழ்வின்மை.

**stea'dily**, *adv.* ஒருநிலைப்பட; சமநிலையாய்; நடுக்கமில்லாமல்; நீடுறுதியாய்.

**stea'diness**, *n.* தளரா உறுதி; நிலைமாறாத் தன்மை.

**stea'ding**, *n.* பண்ணையகம், கட்டிடங்களுடன் இணைந்த பண்ணை வீடு.

**stea'dy**, *n.* கையாதாரம்; கைப்பிடி ஆதாரம்; கையணை ஆதாரம்; கருவி ஆதாரம்; வேலைப்பாட்டுக் கல்லணைப் பட்டடை; பணி ஆதாரப் பட்டடை; குமிழ்மாட்டி வேலைப்பாட்டின் உறுதிப் பிடிப்புக்கருவி; சீப்புச்செய்பவர் இருபுறக்கூர்வாள்; மாறாநிலைக் காதலர்; மாறாநிலைத் தோழமையாளர்; *a.* உறுதியான; ஊன்றிய; வலிமை வாய்ந்த ஆதாரத்தினையுடைய; ஆடாத; அசையாத; நடுக்கமற்ற; ஊசலாட்டமற்ற; தள்ளாடாத, தடுமாற்றமற்ற; கொந்தளிப்பற்ற; நிலையான; நிலையுறுதியான; நிலவரப்போக்குடைய; மாறுபாடற்ற; ஒரே வேகமுடைய; ஒரே வகை மாறுதலையுடைய; ஒரே திசைப்பட்ட; ஒரேசீரான; ஒருநிலை ஒழுங்குபட்ட; ஒருமட்டளவான; மாறாச் செந்நிலையுடைய; படுவிரைவற்ற; வழுவாத; அரைகுறையாய் நின்றுவிடாத; மனநிலையுறுதியுடைய; நடைஒழுங்குடைய; தளராத; நேரிய பழக்கவழக்கமுடைய; குடிவெறியற்ற; நடை நேர்மையுடைய, வேலை ஒழுங்குடைய; *v.* உறுதியாக்கு; ஒருநிலைப்படுத்து; ஒருசீராக்கு; ஒழுங்குபடுத்து; சமநிலைப்படுத்து; சரிநிலைப்படுத்து; நேராக்கு; உறுதியாகு; ஒருநிலைப்படு; ஒழுங்குபடு; சமநிலைப்படு; நேராகு; ஒருசீராகு; (தொ.) keep ship steady, கப்பல் முகப்பின் நெறியில் மாறுபாடு இல்லாது செலுத்து; steady on, (பே-வ.) நில்.

**steady'-going**, *adj.* நிலைத்த செயலுடைய; நிலைத்த பழக்கமுடைய.

**steak**, *n.* இறைச்சிக்கண்டம்; மீன்துண்டம்; (தொ.) Hamburg steak, மாட்டிறைச்சிக்கண்ட வறுவல்.

**steal**, *v.* திருடு; மறைவாக எடு; வஞ்சகமாகக் கவர்; எதிர்பாராது சென்றெடுத்துக்கொள்; வலிந்து சென்று பெறு; சூழ்ச்சிகளால் கைவரப்பெறு; பதுங்கிச்செல்; ஒளிந்துசெல்; (தொ.) steal a march on, தாண்டிச்செல், விஞ்சு; செயலில் முந்திக்கொள்; தெரியா நிலையில் மேம்படு; steal one's thunder, ஒருவர் கண்டுபிடிப்பை அவருக்கெதிரே பயன்படுத்து.

**steal'er**, *n.* கள்வர்.

**stealth**, *n.* களவு; மறைவு; இரகசியம்; கரவு; மறைவான நடவடிக்கை; கரவான செய்தி; (தொ.) by stealth, வஞ்சகமாக.

**stealth'ily**, *adv.* கரவாய், மறைவாய்.

**stealth'iness**, *n.* கரவுடைமை; களவு.

**stealth'y**, *a.* கரவான; மறைவான; வஞ்சகமான; மறைந்து பதுங்கிச் செல்கிற.

**steam**, *n.* வெள்ளாவி, குளிர்விக்கப்பட்ட நீராவியின் கட்புலனான நீர்த்திவலைகளின் தொகுதி; ஆவி; (பே-வ.) உடலூக்கம்; *v.* உணவை நீராவியில் வேகவை; புழுக்கு, நீராவியால் கட்டைகளை வளையும்படி பதப்படுத்து; ஆவியில் அவி; நீராவி வெளியிடு; நீராவித் திவலையை வெளிவிடு; ஆவி வெளியிடு; திவலை ஆவி வெளியிடு; ஆவியாக எழு; நீராவியாக எழு; நீராவியாற்றலால் இயங்கு; நீராவியாற்றல் மூலம் செல்; நீராவிக்கல மூலம் செல்; (பே-வ.) ஊக்கமாக வேலை செய்; (பே-வ.) வேகமாக முன்னேறு; (தொ.) dry steam, நீர்த்திவலைகள் இல்லா நீராவி; get up steam, சிறப்பு முயற்சிக்குப் புத்தூக்கம் நாடு; saturated steam, கொதிநிலை வெப்ப நீராவி, நீரின் தொடர்புகொண்டு அதன் வெப்பநிலையுடைய நீராவி; steam gun, நீராவித் திறத் துப்பாக்கி, நீராவியால் இயக்கப்பெறுந் துப்பாக்கி; steam hammer, நீராவித்திறச் சம்மட்டி; steam navvy, நீராவித் திற அகழ்வுப்பொறி; steam plough, நீராவித்திறக் கலப்பை; steam tug, இழுவை நீராவிக்கப்பல், கப்பல் முதலியவற்றை இழுக்கப் பயன்படும் நீராவிக்கப்பல்; steam winch, நீராவித் திறக் கம்பி முறுக்குக் குறடு; superheated steam, மீகொதி நீராவி; wet steam, நீர்த்திவலைகள் உள்ள நீராவி.

**steam'boat**, *n.* நீராவிப்படகு.

**steam'boiler**, *n.* இயந்திர நீராவிக் கொதிகலம்.

**steam'-box**, *n.* இயந்திர நீராவிக் கொள்கலம்; கொதிகலத்திலிருந்து இயக்குருளைக்கு நீராவி செல்லும் இடையிலுள்ள கொள்கலம்.

**steam'-chest**, *n.* = steam-box.

**steam'-coal**, *n.* நீராவிக் கொதிகல உயர்தர நிலக்கரி.

**steam'-colour**, *n.* நீராவிமூலம் கெடாநிலைக் கெட்டிமைப் படுத்தப்பட்ட வண்ணம்.

**steam'-cylinder**, *n.* நீராவிப்பொறியின் இயக்குருளை.

**steam'-dome**, *n.* = steam-box.

**steam'-driven**, *a.* நீராவியால் இயக்கப்படுகிற.

**steam'-engine**, *n.* நீராவி இயந்திரம், நீராவி விசையாக்கப் பொறி.

**steam'er**, *n.* நீராவிக்கப்பல்; நீராவியால் இயங்கும் ஊர்தி; நீராவியால் இயங்கும் தீயணைப்புப் பொறி; நீராவி இயந்திரம், நீரை ஆவியாக்கும் பொறி; சமையல்துறை அவிகலம்; வெள்ளாவிக் கலம், நீராவியால் பொருள்களைப் புழுங்க வைக்கும் பாத்திரம்; ஆவியாக்குபவர்; ஆவியாக்குவது; புழுக்குபவர்; புழுக்குவது.

**steam'-gas**, *n.* பெருஞ் சூடேற்றப்பெற்ற நீராவி.

**steam'-gauge**, *n.* நீராவி அழுத்தமானி.

**steam'-heat**, *n.* நீராவி ஆக்கவெப்பு, குளிர்நீரை ஆவியாக்கத் தேவைப்படும் வெப்ப அளவு; நீராவி எறிவெப்பு, வெப்பூட்டு பொறியில் நீராவி வெளியிடும் வெப்ப அளவு.

**steam'iness**, *n.* நீராவி போன்ற தன்மை; நீராவி நிரம்பிய நிலை; நீராவிப் படிவுநிலை; ஆவியாகுந் தன்மை.

**steam'-jacket**, *n.* நீராவிச் சட்டை, நீராவி இடைவழி ஊடு சென்று வெப்பூட்டும்படி அமைக்கப்பட்ட இயந்திர இயக்குருளையின் புறத்தோடு.

**steam'-launch**, *n.* நீராவிப்படகு.

**steam'-packet**, *n.* சில துறைமுகங்களிடை மாத்திரம் இயங்கும் நீராவிக்கலம்.

**steam'-port**, *n.* இயந்திர நீராவி செல்புழைவாய்.

**steam'-power**, *n.* நீராவி ஆற்றல்.

**steam'-roller**, *n.* அரைப்புப் பொறியுருளை; கனத்த பலம்; *v.* இயந்திர உருளை அரைப்பதுபோல் அரைத்துச் செல்.

**steam'ship**, *n.* நீராவிக் கப்பல்.

**steam'-tight**, *a.* நீராவி புகாக் காப்புடைய.

**steam'-trap**, *n.* நீர்புகவிட்டு நீராவி தடுக்கும் அமைவு.

**steam'-whis'tle**, *n.* நீராவித்திற ஊதுகுழல்.

**steam'y**, *a.* நீராவி சார்ந்த; நீராவி போன்ற; நீராவி நிரம்பிய; நீராவியாகிற; ஆவி வெளிவிடுகிற.

**ste'arate**, *n.* கொழுமைக் காடியின் உப்பு.

**stea'ric**, *a.* கொழுமஞ் சார்ந்த.

**ste'arin, ste'arine** [1], *n.* கொழுமம், கொழுப்பின் திண்மக் கூறு.

**ste'arine** [2], *a.* கொழுமத்தால் ஆன.

**ste'arinery**, *n.* கொழும ஆக்கத் தொழில்.

**ste'atite**, *n.* சவர்க்காரக் கல், அழுக்குப்போக்க உதவும் நுரைக்கல் வகை.

**steatit'ic**, *a.* சவர்க்காரக் கல் சார்ந்த.

**ste'atocele**, *n.* விதைப்பை வீக்கம், அண்ட வாயு.

**steato'ma**, *n.* பையகப்பட்ட விதைவீக்கம்.

**steatopy'gia**, *n.* பிட்டக் கொழுப்புப் புடைப்பு.

**steatopy'gous**, *a.* பிட்டக் கொழுப்புப் புடைப்புடைய.

**steed,** *n.* புரவி, போர்க்குதிரை.

**steed'less,** *a.* இவுளியிழந்த.

**steel,** *n.* எஃகு, பலபடியாகக் கடுப்பூட்டத்தக்க தேனிரும்புக் கரியக் கலவை; உருக்கு, சிறிது கரியங்கலந்த இரும்பு; ஒழுக்கறை, திண்ணிய இரும்பு வகை; எஃகு வெட்டுக்கருவி; ஒழுக்கறைக்கருவி; உருக்கிலான உறுப்புடைய கருவி; சாணை, கத்தி தீட்டும் பொறி; தீட்டு கருவி; பனிச்சறுக்கல் மிதியடி; இறுக்க மார்க்கச்சின் இரும்புறுப்பு; தீக்கடை இரும்பு, கல்லில் தட்டி நெருப்பெழுப்பும் இரும்புக்கோல்; எஃகுச்செதுக்குருப்பாளம்; கடுந்திட்பம்; நீடுழைப்புத்திறம்; நம்பக உறுதிப்பாடு; இரும்படங்கிய மருந்துவகை; (செய்.) போர்வாள்; *a.* எஃகிலான; எஃகு போன்ற; திண்ணுறுதி வாய்ந்த; *v.* எஃகுக் கடுமையூட்டு; கடுந்திட்பமூட்டு; உறுதியாக்கு; இதயத்தை வன்கண்மைப்படுத்து; நரம்புகளைக் கட்டுறுதிப்படுத்து; தளராப்பண்பூட்டு; இரக்கமிலாப் பண்பேற்று; விடா உறுதியளி; (தொ.) a grip of steel, இரும்புப்பிடி, மிகவும் இறுக்கமான பிடிப்பு; a heart of steel, எஃகு போன்று உறுதிவாய்ந்த இதயம்; Bessemer steel, பெஸ்ஸமர் முறைப்படி செய்யப்பட்ட எஃகு; cold steel, வெடிமருந்தில்லா இரும்புப் படைக்கலம், வாள், ஈட்டி; muscles of steel, உறுதியான தசைநார்கள்; steel engraving, எஃகுச் செதுக்குரு வேலை; எஃகுச் செதுக்குத் தகடு, எஃகுத் தகட்டிலிருந்து செதுக்கி உருவாக்கப்பட்ட அச்சுருப்பாளம்; steel glass, வழவழப்பாக்கிய எஃகிலான முகம்பார்க்குங் கண்ணாடி; steel wool, எஃகுச்சீவல், கலங்கழுவப் பயன்படும் எஃகுச்சீவல் இழை.

**steel'-blue,** *n.* எஃகு நிழலொளிபோன்ற நீலவண்ணம்; *a.* எஃகு நீலமான, இளநீலமான.

**steel'-clad,** *a.* எஃகுறை அணிந்த; எஃகுக்கவசம் அணிந்த.

**steeled,** *a.* எஃகிலான; எஃகு வேய்ந்த; எஃகு முனையுடைய; உறுதி வாய்ந்த; நரம்பு வகையில் கட்டுறுதிவாய்ந்த.

**steel'-gray, steel'-grey,** *n.* சாம்பல் நீலநிறம்; *a.* சாம்பல் நீல நிறமுடைய.

**steel'-headed,** *a.* இரும்புத்தலையுடைய; இரும்புத்தலைப் புடைய.

**steel'ify,** *v.* எஃகாக்கு; எஃகாக மாற்றிவிடு.

**steel'iness,** *n.* எஃகுத்திட்பம், வளைக்க முடியாத கடுமையுடைமை; எஃகுறுதி, நெகிழ்வற்ற உறுதிப்பாடு.

**steel'ing,** *n.* எஃகுவேய்தல்; எஃகுப்பண்பூட்டுதல்.

**steel'-plate,** *n.* எஃகுத் தகடு; எஃகுப்பாளத் தகடு.

**steel'-plat'ed,** *a.* எஃகுத்தகடு வேய்ந்த.

**steel'-trap,** *n.* வில்விசையமைந்த எஃகுப்பொறி.

**steel'ware,** *n.* எஃகுப் பொருட்கள்.

**steel'work,** *n.* எஃகு வேலைப்பாடு.

**steel'-worker,** *n.* எஃகு வேலையாள்; எஃகுத் தொழிற்சாலை ஆள்.

**steel'-works,** *n. pl.* எஃகுத் தொழிற்சாலை.

**steel'y,** *a.* எஃகிலான; எஃகுபோலக் கடினமான.

**steel'yard,** *n.* தராசுப் பொறிவகை.

***steen'bok,*** (டச்.) *n.* தென் ஆப்பிரிக்க ஆட்டியல் மான்வகை.

**steen'ing,** *n.* கிணற்றின் உட்கட்டுக் கல்வரிசை.

**steep¹,** *n.* செங்குத்துச் சரிவு; கொடுங்குத்துப் பாறை; *a.* செங்குத்தான; செங்குத்தான பக்கமுடைய; செங்குத்தெழுச்சியுடைய; படுவீழ்வான, செங்குத்து வீழ்வான; தலைகுப்புறவான; மிகக் கடினமான; கதை முதலியவை வகையில் மிகைப்படுத்தப்பட்ட; நம்ப முடியாத; (பே-வ.) அடாவிலையான, அடிப்பறி செய்கிற, தகாத, அநியாயமான.

**steep²,** *n.* தோய்வூறல் முறை; தோய்வூறல் நீர்மம்; தோய்வூறலுக்குரிய நீர்மம்; புரையூட்டுவதற்குரிய பொருள்; *v.* தோய்ந்தூறவை; தோய்வுறுத்து; நீர்மத்தில் முழுக்காட்டு; முற்றிலும் நனைவி; தோய், ஊறு; முட்டநனைவுறு; செறிவுறத் தோய்ந்தூறு; செறிந்து பரவு; ஆழ்ந்த ஈடுபாடு கொள்வி; ஆழ்ந்த நிறை புலமை கொள்வி; (தொ.) be steeped in, ஆழ்ந்து தோய்வுற்றவராயிரு; ஆழ் நிறை புலமையுடையவராயிரு.

**steep'en,** *v.* செங்குத்தாக்கு; மேன்மேலும் செங்குத்தாக்கு; வரவரச் செங்குத்தாகு.

**steep'er,** *n.* தோய்த்தூற வைப்பவர்; தோய்வூறற் கலம்.

**stee'ple,** *n.* கோரி, தூபி, ஊசிக்கோபுரம்; கோபுரக்கூம்பு.

**stee'plechase,** *n.* இடர்பல கடக்கும் குதிரை ஓட்டப் பந்தயம்.

**stee'ple-crowned,** *a.* தொப்பி வகையில் நீடுசி முனைமுகட்டினையுடைய.

**stee'pled,** *a.* தூபியினையுடைய; கோபுர வகையில் கூம்பினையுடைய; தூபி வடிவான; கூம்புவடிவான.

**stee'plejack,** *n.* தூபி முகடேறிப் பழுதுபார்ப்பவர்.

**stee'ple-top,** *n.* குவி ஊற்றுவாய்களையுடைய துருவப் பகுதித் திமிங்கிலம்.

**stee'plewise,** *a.* தூபி வடிவான; கோபுரக்கூம்பு வடிவான; *adv.* தூபிவடிவாய்; கோபுரக்கூம்பு வடிவாய்.

**steep'ly,** *adv.* செங்குத்தாய்; திடுமென உயரும் நிலையில்; தலைகீழாக.

**steep'ness,** *n.* செங்குத்து நிலை; செங்குத்துயர்வு; செங்குத்து வீழ்வு; மிகுகடுமை.

**steep'y,** *a.* (செய்.) செங்குத்தான.

**steer¹,** *n.* காயடிக்கப்பட்ட எருது; காளை, விடை எருது.

**steer²,** *v.* கப்பல்வகையில் திசையறிந்து செலுத்து; ஊர்திகள்-உந்துகலம் முதலியவற்றின் வகையில் இயக்குபிடிமூலம் வழியறிந்து ஓட்டு; விமான வகையில் வழிப்படுத்திச் செலுத்து; ஆள்வகையில் உடனிருந்து வழிகாட்டு; வழிக்கொண்டுசெல்; திசையறிந்து திருப்பு; குறிப்பிட்ட திசையில் செலுத்து; இலக்குநோக்கி உய்த்துச்செல்; செயல்வகையில் கட்டுப்படுத்தி ஆட்சிசெய்; ஆட்சிவகையில் நடாத்து; வாழ்க்கைவகையில் நெறியறிந்து நடத்து; (தொ.) steer clear of, தடைபடாமல் விலகிச்செல், முட்டுப்பாடின்றிச் செல்; முட்டுப்பாடின்றி விலக்கிச் செலுத்து.

**steer'able,** *a.* வழிகாட்டத்தக்க; திசையறிந்து திருப்பத்தக்க.

**steer'age,** *n.* வழிச்செலுத்துஞ் செயல்; வழிச்செலுத்தும் அனுபவத் திறம்; செயலாட்சித் திறம்; நடத்துவதற்குரிய கருவிகல சாதனம்; போர்க்கப்பல் வகையில் சிறுதிறப் பணியாளர் தனியிடம்; கப்பல் இயக்குமுறை இடம்; பயின் கட்டையின் இயங்குதிற விளைவு; கப்பலின் போக்கமைவு; கப்பலின் குறைந்த கட்டணப் பகுதி; *a.* குறைந்த கட்டணப் பகுதிக்குரிய; (தொ.) steerage passengers, குறைந்த கட்டணக் கப்பல் வழிப்போக்கர்.

**steer'age-way,** *n.* பயின்கட்டை செயற்படுவதற்கு வேண்டிய கப்பலின் குறைந்த அளவு வேகம்.

**steer'er,** *n.* வழிகாட்டுவோர், வழிசெலுத்துவோர், திசை திருப்புவோர்.

**steer'ing,** *n.* வழிச் செலுத்துகை; வழிதிருப்புகை; செயல் கட்டாட்சி; *a.* வழித் திருப்புகிற; வழிச்செலுத்துகிற; செயல்முறை கட்டுப்படுத்துகிற; (தொ.) steering committee, வழிப்படுத்துங் குழு.

**steer'ing-gear,** *n.* இயக்கு கருவியமைவு.

**steer'ing-wheel,** *n.* உந்துகல இயக்காழி.

**steer'ling,** *n.* விதையடித்த இளங்காளைக் கன்று.

**steers'man,** *n.* கப்பலின் இயக்குநர்; செயல் இயக்குநர்.

**steers'manship,** *n.* கப்பல் இயக்குதிறம்; நடைமுறை இயக்கு திறம்.

**steeve¹,** *n.* (கப்.) தொடுவான் கோணம், கப்பல் முன்புற உந்துகோலுக்கும் அடிவானுக்கும் இடையேயுள்ள கோண நிலை; *v.* (கப்.) கப்பல் முன்புற உந்துசட்ட வகையில் தொடுவான் கோணிடு; முன்புற உந்து சட்டத்தினைத் தொடுவான் கோணிடுவி.

**steeve**[2], *n.* (கப்.) திணிகோல், கப்பலில் இடமமையச் சரக்குகளைத் திணித்துவைக்க உதவும் நீள் மரச்சட்டம்; *v.* திணிகோலால் திணித்து வை.

**Stein'berger**, *n.* ரைன் ஆற்றுப் பகுதி வெண்மது வகை.

**stein'bock**, *n.* காட்டு வெள்ளாடு.

**stel'e**, *n.* நடுகல், பெயர்வரி பொறித்த கல்லறைச் சிலை.

**stell'ar**, *a.* விண்மீனுக்குரிய, உடுக்கள் சார்ந்த.

**stell'ate**, *a.* விண்மீன்போல அமைவுற்ற; விண்மீன்போலப் புறநோக்கிய சினையுடைய; (தொ.) stellate leaves, தண்டைச் சுற்றிச் சுழல்வரிசையாயுள்ள இலைகள்.

**stell'ated**, *a.*=stellate.

**stell'enbosch**, *v.* (படை. இழி.) நயமுறை விலக்கீடு செய், புறக்கணித்து வை.

**stellif'erous**, *a.* விண்மீன் உட்கொண்ட; உடுக்கள் தாங்கிய; உடுக்குறியுடைய; உடுக்குறிகள் நிரம்பிய; உடு வடிவங்கள் கொண்ட.

**stell'iform**, *a.* விண்மீன் உருவான, உடுவடிவான.

**stell'ular**, *a.* சிறு விண்மீன் வடிவான; சிறு விண்மீனுருக்கள் பதிக்கப்பெற்ற; சிறு விண்மீன் போன்ற.

**stell'ulate**, *a.* சிறு விண்மீன் போன்ற.

**stem**[1], *n.* நடுத்தண்டு; உடற்பகுதி; மரவகைத் தண்டு; இலையடி; இலை-பூ-காய்-கனி வகைகளில் காம்பு; இடைத்தண்டு, தேறல் கலத்தின் உடற்பகுதிக்கும் அடிப்பகுதிக்கும் இடைப்பட்ட காம்புபோன்ற பகுதி; புகைக்குழாய் நிமிர் குழற்பகுதி; கைம்மணிப் பொறிகளின் சுழலுறுப்புக்கள் வகையில் மைய நிமிரச்சு; இசைக்குறிகளின் நிமிர்வரைப் பகுதி, குறித்தலைப்புக்களிலிருந்து மேலுங்கீழும் செல்லுங் கோடு; சொல்லடித்தண்டு, சொற்சிதைவின் மாறாப் பகுதி; மரபுக் கால்வழிக்கொடி; குடும்பக் கால்வழிக்கொடி; இனக் கால்வழிக்கொடி; (கப்.) வளைமுகம், முகப்பு முன்னுள்ள வளைகட்டை; (கப்.) முகப்புக் கட்டை, அடிக்கட்டையின் முன்வளைவு; *v.* தண்டு இணைவி; தண்டு பொருத்து; தண்டு அகற்று; தண்டுகொண்டு முட்டு; தண்டு வளரச்செய்; புகையிலை அடிக்காம்பகற்று; எதிர்த்து நில்; முட்டித்தாக்கு; வளர், கிண்டெழு; தோன்று; மூலமாகக் கொண்டு மேலெழு, தோன்றி வளர்வுறு; (தொ.) false stem, (கப்.) கிழிகட்டை, முகப்புக்கட்டைமுன் நீர் கிழித்துச்செல்ல உதவும் பொய் வளைமுகப் பகுதி; from stem to stern, கப்பல் முகப்பிலிருந்து பின்கோடி வரை; இக்கோடியிலிருந்து அக்கோடிவரை; கப்பல் முழுவதிலும், அடியிலிருந்து முடிவுவரை; stem from, மூலமாகக் கொண்டு அதனின்றும் தோன்று; stem in, தோன்று, உற்பத்தியாகு.

**stem**[2], *v.* தடு; அணையிடு; எதிர்த்து முன்னேறு; திணித்து அடை.

**stem'less**, *a.* தண்டற்ற; காம்பற்ற.

**stem'let**, *n.* சிறு தண்டு.

**stemm'a**, *n.* குடும்பக் கொடிவழி; கால்வழி; குலமுறை; (வில.) தனிநிலைக் கண், கூட்டுக்கண் தொகுதியில் சினை நிலைக்கண்; *pl.* stemm'ata.

**stemmed**[1], *a.* தண்டுடைய; தண்டகற்றப்பட்ட; புகையிலை அடிக்காம்பு அகற்றப்பட்ட.

**stemmed**[2], *v.* stem[1], stem[2], என்பவற்றின் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**stemm'er**, *n.* புகையிலைக் காம்பு நீக்குபவர்; திராட்சைப்பழக் காம்பரி கருவி; சுரங்கத்துக் குழாயில் வெடிதிணிப்பவர்; வெடி தீர்க்குங் கம்பி.

**stemm'ing**, *n.* தடுப்பு; அடைப்பு; திணிப்பு.

**stem'ple**, *n.* படிக்கட்டை, சுரங்கத்தில் ஏறப் பயன்படும் குறுக்குக் கட்டைகளுள் ஒன்று.

**stem'winder**, *a.* சாவியில்லாக் கைக்கடிகாரம், மைய நிமிரச்சுச் சுற்றுவதன்மூலம் இயங்காழி இயக்கப்பெறும் மணிப்பொறி.

**Sten**, *n.* பளுக்குறைந்த இயந்திரத் துப்பாக்கி.

**stench**, *n.* முடை, புழுங்கிய நாற்றம்.

**stench'-trap**, *n.* சாக்கடைக் காற்றடைப்பு.

**sten'cil**, *n.* படியெடுப்பு உள்வெட்டுத் தகடு; ஒப்பனைக்கோல உள்வெட்டுப்படிவத் தகடு; உள்வெட்டுத் தகட்டுமூலமான வரைபடி; உள்வெட்டுத் தகட்டுமூலமான ஒப்பனைக் கோலம்; *v.* உள்வெட்டுத் தகட்டுப்படியெடு; உள்வெட்டுத் தகட்டு ஒப்பனைக்கோலம் பதிவி; உள்வெட்டுத் தகடுமூலம் ஒப்பனை செய்.

**sten'ciller**, *n.* உள்வெட்டுச் செதுக்குருத் தகட்டினால் எழுதுபவர்.

**sten'cil-plate**, *n.* உள்வெட்டுச் செதுக்குருத் தகடு.

**Sten gun**, *n.*=Sten.

**stenoch'romy**, *n.* பல் வண்ண அச்சு, ஒரேபதிவில் பல வண்ணங்களை அச்சிடும் முறை.

**sten'ograph**, *n.* சுருக்கெழுத்துரு; சுருக்கெழுத்துப் பொறி.

**sten'ographer**, *n.* சுருக்கெழுத்தாளர்.

**steograph'ic**, *a.* சுருக்கெழுத்திற்குரிய.

**stenograph'ically**, *adv.* சுருக்கெழுத்து முறையில்.

**stenog'raphist**, *n.* சுருக்கெழுத்தாளர்.

**stenog'raphy**, *n.* சுருக்கெழுத்துக் கலை.

**Sten'tor**, *n.* வெண்கலத் தொண்டையர்.

**stentor'ian**, *a.* பெருங் குரலுடைய, சிம்மக்குரல் வாய்ந்த.

**sten'torphone**, *n.* குரற்பெருக்கீட்டு அமைவு.

**step**,[1] *n.* அடி, கால்வைப்படி; அடிப்படிவு, காலடிவைப்பு; அடிச்சுவடு; காலடி, ஒரு காலடித் தொலைவு; காலடி ஓசை; பலர் காலடி அரவம்; விலங்குக் காலடி ஒலி; காலடிப் பாங்கு; நடை; நடைப்பாங்கு; நடனத்தில் காலிடும் பாங்கு; படிக்கட்டை; படிக்கல்; ஏணிப்படி; படிக்கட்டுப் படி; வாசற்படி; வண்டி மிதிபடி; இட்டேணி, சார்வணை வேண்டாக் கூம்பேணி; படிபோன்ற அமைவு; படிநிலை; கட்டம்; பகுதி; கூறு; ஏற்ற இறக்கப் படி; போக்குவரவுப் படி; வளர்ச்சிப் படி; இயக்கப் படி; தொடர்பமைவின் கூறு; தொடர்பின் கூறு; சிறிது தொலைவு; சிறிதளவு; சிறிது முயற்சி; முயற்சி; ஏற்பாடு; நடவடிக்கை; தச்சுவேலையில் கட்டைமேல் அறையப்பட்ட நிமிர்கட்டை; இயந்திர நிலைத்தண்டின் அடியணை; படைத்துறையில் பதவி உயர்வுப் படி; (கப்.) பாய்மரப் பீடம்; *v.* கால்வை; அடியெடுத்து வை; அடிபெயர்த்து வை; அடிபெயர்; சிறுதொலை செல்; சிறு தொலை வா; நட; நடனமிடு; காலடியாலளை; காலடி போல அமைவுறுவி; காலடிபோல ஒழுங்குசெய்; (கப்.) பாய்மரத்தைப் பீடத்தின்மேல் நிறுத்து; (தொ.) a step from life to death, விரை மாறுதல்; மிகச் சிறுதொலை; break step, பிறருடன் ஒத்த அடியெடுத்து வைக்கத் தவறு; but a step, சிறு தொலைவு தான்; false step, பிழை; நெறிபிறழ்வு; in step, பிறருடன் ஒத்து அடியெடுத்து வைக்கிற; முரசொலிக்கு ஒப்ப அடியெடுத்து வைக்கிற; நடனத்தில் தாளம் பிசகாத; ஒழுங்கான; keep step, பிறருடன் ஒத்து அடி வை; ஒத்தியலு; ஒத்தியங்கு; mind your steps, எச்சரிக்கையாய் இரு; one step, ஒரு காலடி; ஒருபடி; ஒற்றை அடி நடன வகை; out of step, ஒத்த அடியெடுத்து வைக்காத; ஒழுங்கற்ற; step aside, நெறி திறம்பு; விலகு; மற்றொன்று விரி; step by step, படிப்படியாக; மெல்ல; எச்சரிக்கையாக; ஒவ்வொரு நிலையாக; step high, காலை உயரத்தூக்கு; குதிரை வகையில் எகிறு; குதித்துக் காலெறி; step in, நுழை; உள் வா; தலையிடு; step it, நடனமிடு; step on it, (இழி.) அவசரப்படு; step on the gas, உந்துகல வகையில் மிதிபடி அழுத்தி வேகம் விரைவுபடுத்து; step out, தாண்டி அடி வை; step short, குறுக அடியெடுத்து வை; step this way, இவ்வழி வருக; step through a dance, முறைப்படி காலிட்டு நடனமிடு; step up, துரிதப்படுத்து; வேகம் மிகுதிப்படுத்து; அளவைப் பெருக்கு; மின்மாற்றி மூலம் மின்விசைத்திற அளவு பெருக்கு; turn one's steps to, திசைநாடித் திரும்பு; two step, இரட்டை அடி நடனவகை; watch your steps, எச்சரிக்கையாயிரு.

**step'brother**, *n.* தந்தை மனைவி மகன்.

step'child, *n.* மாற்றுள் மகவு ; மாற்றுன் மகவு.

step'dame, *n.* மாற்றுந்தாய், புறக்கணிப்புக் காட்டும் மாற்றுந்தாய்.

step'-dance, *n.* காலடித் திறமைகாட்டும் கடுவித்தை நடனம்.

step'daughter, *n.* மாற்றுள் மகள்.

step'father, *n.* தாயின் கணவன்.

Stephanot'is, *n.* மெழுகுப்பசையார்ந்த மணமிக்க மலர்ச் செடி வகை.

step'-in, *n.* மகளிர் உள்ளுடுப்பு.

step'-ladder, *n.* கூம்பேணி ; திட்டமிட்ட முன்னேற்றப் படிநிலை.

step'mother, *n.* தந்தையின் மனைவி.

step'motherly, *a.* மாற்றுந்தாய் போன்ற; கடுமையும் புறக்கணிப்புங் காட்டுகிற.

step'ney, *n.* சேமச்சக்கரம் ; உரிமை மகளிர்.

step'parent, *n.* தாயின் மறுகணவன் ; தந்தையின் மறு மனைவி.

steppe, *n.* வன்பாலை.

stepp'er, *n.* காலடி எடுத்து வைப்பவர்.

stepp'ing, *n.* காலடி எடுத்துவைத்தல்; செல்லல்; நுழைதல் ; *a.* காலடி எடுத்துவைக்கிற ; செல்கிற; கால் வைப்பதற்குரிய.

stepp'ing-stone, *n.* சகதிமேற் கல் ; நீர் தாண்டற் கல் ; படி வளர்ச்சிக்கு வழி.

step'sister, *n.* மாற்றுநிலை உடன்பிறந்தாள், மாற்றுந்தாய் மகள் ; தாயின் மறுகணவன் புதல்வி.

step'son, *n.* மாற்றுரிமை மகன், கணவனின் மறுமனைவி புதல்வன் ; மனைவியின் மறுகணவன் மகன்.

step'wise, *a.* படிகள் போல ; *adv.* படிப்படியாக.

stercora'ceous, sterc'oral, *a.* மலஞ் சார்ந்த ; சாணத்திற்குரிய ; வண்டல் சார்ந்த.

stere, *n.* கன சீரலகு, 35.3 கன அடி அளவு.

ste'reo, *n.* பாள அச்சுத்தகடு; திட்பக்காட்சிக் கருவி அமைவு ; *a.* பாள அச்சுச்சார்ந்த ; திட்பக்காட்சி சார்ந்த.

ste'reobate, *n.* கட்டிட அடித்தளப் பாளம், கட்டிடம் எழுப்பப்படுவதற்குரிய திட மேடை.

stereobat'ic, *a.* கட்டிட அடித்தளப் பாளத்திற்குரிய.

stereochem'istry, *n.* சேணிலை வேதியியல், விண்வெளியில் உள்ள அணுத் தொடர்பால் பாதிக்கப்பெற்ற பொருளியைபு நிலை பற்றி ஆயும் வேதியியல் பிரிவு.

ste'reochrome, *n.* பளிக்குநீர்வண்ணச் சுவரோவியம்.

ste'reochromy, *n.* பளிக்குநீர் வண்ணச் சுவரோவியமுறை, பளிக்குநீரால் கெட்டிப்படுத்தப்பட்ட நிறமுடைய சுவரோவிய முறை.

ste'reogram, ste'reograph, *n.* திட்பக்காட்சிக் குறிப்புப் படம் ; திட்பக்காட்சிக் குறிப்பு வரைபடம் ; திட்பக்காட்சிப் படம், திட்பக்காட்சிக் கருவியமைவிற்கான இருகோண நிலைப் படங்களுள் ஒன்று.

stereograph'ic, stereograph'ical, *a.* திட்பக்காட்சி சார்ந்த ; திட்பக்காட்சிக் கருவியமைவுக்குரிய.

stereog'raphy, *n.* திட்பக் காட்சி அமைவுமுறை.

stereophon'ic, *a.* பலதிசை வரவுத் தொனியுடைய, ஒலி வகையில் பல திசையிலிருந்து வருவது போலமைந்த.

stereops'is, *n.* இருவிழி இயைகோணக் காட்சி, இரு விழி இருகோண நிலைப்படக் காட்சியமைவு முறை.

stereopt'icon, *n.* ஒருபடி இருகாட்சி விளக்கு

ste'reoscope, *n.* திட்பக்காட்சிக் கருவியமைவு, இருகண்ணும் இருகோண நிலைப்படங்கள் காணப்படுவதன்மூலம் மொத்தத் திட்பக்காட்சி தோற்றுவிக்குங் கருவி.

stereoscop'ic, *a.* திட்பக்காட்சிக் கருவியமைவு சார்ந்த.

stereos'copist, *n.* திட்பக்காட்சியாளர், திட்பக்காட்சிக் கருவியமைவாளர்.

ste'reoscopy, *n.* திட்பக்காட்சிக் கருவியமைவு முறை.

ste'reotype, *n.* பாள அச்சு அட்டைத்தகடு ; உருவச்சில் அடித்த பகுதியைப் பாளமாக அட்டை முதலிய படிவுப் பொருளில் எடுத்து மறு அச்சிற்குப் பயன்படுத்தப்படும் தகடு; பாள அச்சுத்தகடு வழங்கீடு ; பாள அச்சுத் தகட்டாக்கம் ; மாறாப் படிவுரு, நெகிழ்வற்ற உருச்சட்டம்; நிலைத்த உளநிலைப் படிவம் ; *a.* பாள அச்சுத்தகட்டால் எடுக்கப்பட்ட ; பாள அச்சுமுறை சார்ந்த ; *v.* பாள அச்சுத் தகட்டிலெடு ; பாள அச்சுத் தகடுகொண்டு அச்சிடு, மாறுநிலைச் சட்டமாக்கியமை; மாறுநிலைப்படுத்து; மாறுச்சலிப்பூட்டு, மாறுநிலைமூலம் உவர்ப்பூட்டு ; நுட்பநுணுக்கம்விடாது எல்லாக் கூறுகளையும் மரச் சட்டம்போலாக்கி விடு ; மாறு மரபுமுறைப்படுத்து.

ste'reotype-block, *n.* பாள அச்சுத்தகடு இணைத்த கட்டை.

ste'reotyped, *a.* பாள அச்சுப்பதிவு செய்த ; மாறு உருப் படிவமாய்விட்ட ; கால இடநிலை வேறுபாடற்ற ; கடினமாக்கப்பட்ட ; மாற்றமுடியாத.

ste'reotyper, *n.* பாளத் தகட்டு அச்சிடுவோர்.

ste'rile, *a.* தரிசான ; விளைவற்ற ; மலடான ; வளமற்ற ; வறண்ட ; ஊதியந் தராத ; கனியீனாத ; நுண்மத் தீர்வான, நோய்நுண்மங்கள் ஒழிக்கப்பெற்ற ; மொழிநடை வகையில் செழுமையற்ற, கவர்ச்சியற்ற, சலிப்பூட்டத்தக்க.

steril'ity, *n.* மலடு ; இனப்பெருக்கத் தகுதியின்மை ; தரிசு நிலை, விளக்கமற்ற தன்மை ; மொழிநடை வளமின்மை ; புது வளமின்மை ; உரமின்மை ; ஆற்றல் வளமின்மை ; நோய் நுண்மத் தீர்வு நிலை.

steriliza'tion, *n.* நோய்நுண்மத் தீர்வாக்கம் ; கருத்திற வளங்கெடுத்தல் ; கருவளக் கேடு ; வளக்கேடு ; உரச் சத்தின்மை ; உரவளக் கேடு.

ste'rilize, *v.* நோய்நுண்மத் தீர்வுசெய்; நோய்நுண்மம் ஒழி; இனப்பெருக்கத்திறம் அழி; மலடாக்கு; விளைவற்றதாக்கு; வள மற்றதாக்கு ; புதுவள ஆக்கங்கெடு ; வறிதாக்கு ; தரிசாக்கு.

ste'rilizer, *n.* நோய்நுண்ம ஒழிப்புப்பொருள்; நுண்ம ஒழிப்பாளர் ; நுண்மம் ஒழிப்பது ; நுண்ம ஒழிப்புக்கருவி.

sterl'et, *n.* உணவுவகைச் சிறுமீன்.

sterl'ing, *n.* பிரிட்டிஷ் முத்திரைப்பணம் ; பிரிட்டன் செலாவணிப் பொன் ; கட்டளை மதிப்புவாய்ந்த பிரிட்டிஷ் பணம் ; ஒரு செம்பு மதிப்புடைய பழைய பிரிட்டிஷ் வெள்ளி நாணயம்; *a.* பிரிட்டிஷ் கட்டளை நாணய மதிப்புடைய, முத்திரைப்பண மதிப்பு வாய்ந்த ; அப்பட்டமான, முகப்புமதிப்புக்குக் குறையாத ; உயர் உலோக வகையில் மெய்ம்மாற்றுள, பட்டய மாற்று வாய்ந்த ; மெய் மதிப்பார்ந்த ; உள்ளார்ந்த மதிப்புடைய ; தன்னிலை மதிப்புடைய ; அப்பழுக்கற்ற ; மாற்றுக் குறையாத ; வாசி தீர்வான ; புறப்பகட்டுத் தோற்றமற்ற ; (தொ.) sterling area, சேமப் பொதுநாட்டணி, சேம நிதியைத் தமக்குள் பொதுவாகக் கொண்டு தம் செலாவணி நாணயத்தைத் தாராளமாக மாற்றிக்கொள்ளுகிற நாடுகளின் தொகுதி.

stern[1], *n.* கப்பல் பின்புறம் ; படகின் பின்பகுதி ; பிட்டம் ; தறித்த வால் ; நரிவேட்டைநாயின் வால் ; (தொ.) from stem to stern, கப்பல் முழுதும் ; stern foremost, கப்பல் இயக்க வகையில் பின்னோக்கி ; stern sheets, பின்கடை இருக்கை, படகில் தண்டுகைப்பவர்க்குப் பின்னுள்ள பயணிகளின் இருக்கை.

stern[1], *a.* கடுமையான ; முறைப்பான; கடுகடுப்பான; வெடுவெடுப்பான, பல்லைக் கடித்துக்கொண்டிருக்கிற ; கண்டிப்பான ; ஒழுங்குமுறை இறுக்கமான ; வற்புறுத்திப் பணிய வைக்கிற ; இரக்கமற்ற ; நெளிவு நெகிழ்வு அற்ற.

sternal'gia, *n.* மார்புவலி, இடமார்பு நோய்.

stern'-board, *n.* கப்பற் பின்புற இயக்கம் ; திரும்புதலில் வேக இழப்பு.

**stern'-chase,** *n.* கப்பல் பின் தொடர்வு; கப்பல் பின் துரத்தீடு.

**stern'-chaser,** *n.* கப்பல் பின்புறப் பீரங்கி; கப்பல் பின் துரத்தீட்டில் பயன்படும் பீரங்கி.

**stern'-fast,** *n.* கட்டுத்தளை, கப்பலைக்கட்டும் கப்பல்துறைக் கயிறு அல்லது சங்கிலி.

**stern'-frame,** *n.* கப்பல் பின்புறச் சட்டம்.

**stern'ly,** *adv.* கடுமையாக; கடுகடுப்பாய்; மிக கண்டிப்பாக; இரக்கமற்று; நெகிழ்வற்று; விட்டுக் கொடுப்பின்றி.

**stern'most,** *a.* கப்பலின் பின்கோடியான, பின்புறப் பின் கோடியான.

**stern'ness,** *n.* கடுமை; முறைப்பு; கடுகடுப்பு; கண்டிப்பு; இரக்கமற்ற தன்மை, நெகிழ்வற்ற தன்மை.

**sternoclavic'ular,** *a.* மார்பெலும்பு-கழுத்துப்பட்டை எலும்பு சார்ந்த.

**stern'-post,** *n.* பயின்கந்து, கப்பல் திரும்புகட்டை தளைக்கப் பட்டிருக்கும் குத்துத்தறி.

**stern'um,** *n.* மார்பெலும்பு, விலா எலும்புகளை இணைக்கும் மார்பு நடுவரை எலும்பு.

**sternuta'tion,** *n.* தும்மல்.

**sternut'ative,** *n.* தும்மவைக்கும் பொருள்; *a.* தும்மலைத் தூண்டுகிற.

**sternut'atory,** *n.* தும்மல் தூண்டும்பொருள்; *a.* தும்மலைத் தூண்டுகிற.

**stert'orous,** *a.* குறட்டைவிடுகிற.

*stet,* (ல.) *v.* முன்போல் நிற்க, மூலப்படி விடுக; அச்சகத் திருத்தப்படிக் கட்டளைக் குறி வகையில் அடித்ததை அடியா நிலையில் விடுக்க; மூலப்படி விடுப்புக் கட்டளைக்குறி இடு.

**steth'oscope,** *n.* இதயத்துடிப்பு மானி; *v.* கருவிகொண்டு இதயத்துடிப்பு அறி.

**stethoscop'ic,** *a.* இதயத் துடிப்பாய்வு சார்ந்த.

**stethos'copist,** *n.* இதயத்துடிப்பு ஆய்பவர்.

**stethos'copy,** *n.* இதயத்துடிப்பு ஆயுங்கலை.

**stev'edore,** *n.* கப்பற் சுமையாள்.

**stew** [1], *n.* புழுக்கல் உண்டி, சிறிது நீருடன் நீடித்து வேக வைத்து வதக்கிய உண்டி வகை; குழப்பநிலை; கடுஞ்சினக் குமுறல்நிலை; திகைப்புநிலை; *v.* புழுக்கல் உண்டிசமை, புழுக்கு, வேகவைத்து வதக்கு; புழுக்கமுறு, மிகு வெப்பமும் மிகை ஈரமும் ஒருங்கே கொண்டு வாதைப்படு; (தொ.) in a stew, புழுங்கிக் குமுறும் நிலையில்; (பே-வ.) கவலையால் கலக்கமுற்று; கோபத்தால் குமுறிக்கொண்டு; திகைத்துக் குழப்பமுற்று; stewing pears, பச்சையாய்த் தின்னக்கூடிய தல்லாத பேரிவகை, புழுக்கியே தின்னவேண்டிய பேரி வகை; stew in one's own grease, stew in one's own juice, யாருதவியுமின்றித் தன் காரியத்தைத் தானே பார்த்துக் கொள்; the tea is stewed, தேநீர் கடுங்கசப்பாயிருக்கிறது.

**stew** [2], *n.* மீன்குட்டை; செயற்கைச் சிப்பிப் படுகை.

**stew'ard,** *n.* மேலாளர்; கண்காணி; செயன்முகவர்; செயலாட்சித் துணைவர்; உசாமுறையர்; கருவூலக் காவலர்; ஒழுங்கு காப்பாளர்; சொத்து மேற்பார்வையாளர்; பெருமனை உள்படு கருமத்தலைவர்; பண்ணைமேலாளர்; நிறுவன மேலாளர்; கல்லூரித் தேவைப் பொறுப்பாளர்; சங்க உடைமைக் காப்பாளர்; சங்கக் கருவூலக் காப்பாளர்; தொழிற் சங்கச் சரக்குக் காப்பாளர்; தொழிற்சங்கக் கருவூலக் காப்பாளர்; உணவுப் பொருள் துறை மேலாளர்; கப்பற் பிரயாணிகளின் தேவை கவனிப்பவர்; போட்டிப் பந்தயக்கள ஒழுங்கு காப்பாளர்; நடனக்குழு இயக்கு துணைவர்; திருமண அரங்கச் செயலாட்சியாளர்; விருந்துக்கூட்டச் செயல் முகவர்; கண்காட்சிக் கண்காணியர்; தொழில் முகவர்; கட்டிய முதல்வர்; திருகூட்டக் கருவூலக் காப்பாளர்; உயர் நீதிமன்றப் பொதுப்பணியாளர்; பொருளாளர்; (தொ.) Lord High Steward of England, பெருந்தகை முகவர், முடிசூட்டுதலுக்கும் பெருமக்கள் உசாமுறைத் தலைமைக்கும் உரிய உயர்பணி முதல்வர்; Lord Steward of the Household, அரண்மனைச் சிறப்பு அலுவலர்.

**stew'ardess,** *n.* பெண் மேலாளர்; பெண் செயல்முகவர்.

**stew'ardship,** *n.* சொத்து மேற்பார்வைப் பொறுப்பு; செயன் முகமை; கண்காணியர் பணி; பெருமனை உள்படு கருமத் தலைமை; ஒழுங்குகாவலர் பொறுப்பு.

**stew'-pan,** *n.* புழுக்கு கலம், வதக்கு சட்டி.

**stews,** *n. pl.* பரத்தையர் சேரி; விலைமகளிர் விடுதி.

**sthen'ic,** *a.* இதயக் குருதிக்குழாய்த் துடிப்பு மிகுந்த.

**stich'omyth, stichomyth'ia,** *n.* உறழ் கலியடி வகை.

**stick,** *n.* கம்பு, கழி, குச்சி; கைத்தடி, ஊன்றுகோல்; பிரம்பு; குணில், முரசடி கோல்; மாத்திரைக் கோல், மந்திரக் கோல்; இசைக் கோல், இசையியக்குநர் கைக்கழி; யாழ்வில்; சுள்ளி; தும்பு, சிறுதுணுக்கு; நீள்துண்டு; நீள் பிழம்பு; ஒடுங்கிய மரச்சட்டம்; சர்க்கரை அச்சு; சவர்க்காரக்கட்டி; அரக்குக் குச்சு; சுண்ணக் காம்பு; அச்சுக்கோப்புக் கட்டை; மரத்தடி; விறகுக் கட்டை; கணிப்புக் கோல், கணக்குக் குறிகள் பதிந்த கட்டை; கம்பி; பந்துமட்டை; வானூர்தியிலிருந்து எறியப்படும் குண்டுகளின் நீள்தொடர்த் தொகுதி; ஊக்கமற்றவர்; சிறப்பற்றவர்; சமுதாய மதிப்பற்றவர்; விறைப்பாக நிற்பவர், உழையாதவர்; (பே-வ.) (கப்.) பாய் மரக் குறுக்குக்கட்டை; *v.* குத்து; கூர்முனைபாய்ச்சு; குத்தி நுழைவி; குத்தி ஊடுருவு; குத்திவை; முனை குத்திவை நட்டுவை; முனை ஒட்டிவை; முனைகுத்திவைக்கப் பெறு; முனை குத்தி நில்; நட்டமாக நில்; செருகிவை; துருத்தி நிற்கவை; நீட்டு; முந்துறக்காட்டு; துருத்தி நில்; நீண்டிரு; முந்துறத் தோன்று; பசைதடவி ஒட்டு; ஒட்டிவை, பொருத்திவை; ஒட்டுறு, ஒட்டியிரு; பற்று; பற்றிநில்; விடாதுபற்றியிரு; விடா உறுதியுடனிரு; ஒட்டிக்கொள்; ஒட்டிக்கொண்டிரு; இயங்க முடியாதிரு; இயக்கந் தடைபட்டுநில்; ஆழ்ந்து பதி; அழுந்து; சிக்கு; மனத்துள் உறை; கம்பு இணை; கம்பு வைத்திணை; செடிகொடிகளுக்குக் கொழுகொம்பு அமை; அச்சுக்கோப்புக் கட்டையில் வைத்திணை; அச்சுக்கோப்புக் கட்டையில் வைத்து ஒழுங்குபடுத்து; (தொ.) as cross as two sticks, மிக எறுமாறான, தனிப்பட ஒருவர்மீதொருவர் வெறுப்புக்கொண்ட; beat to sticks, முற்றும் தோல்வியுறுவித்து மேம்படு; cut one's stick, புறப்பட்டுச் சென்றுவிடு, விட்டுச்செல்; devil on two sticks, இருதலைப் பம்பர விளையாட்டு, இருதலைப் பம்பரத்துடன் இரு குச்சிகள் இணைத்த கயிற்றையுங் கொண்டு ஆடும் விளையாட்டு வகை; in a cleft stick, முன்பின் போகமுடியா நெருக்கடி நிலையில்; it sticks in my throat, என்னால் அதை விழுங்கமுடியவில்லை; என்னால் அதை அப்படியே ஏற்றுக்கொள்ள முடியவில்லை; stick at, செய்யத் தயங்கு; செயலிற் பிடிவாதமாயிரு; stick at nothing, எதைக் கருதியும் பின்னடையாமல் இரு; எதற்குங் கூசாது செயல்செய்; stick by, பற்றிக் கொண்டு உறுதியாயிரு; பற்றுறுதி கடைப்பிடி; stick'em up, கைகளை மேலே தூக்கு; சுடப்பெறு; stick fast, இறுகச் சிக்கு, வெளியேற முடியாதவாறு சேற்றில் அகப்பட்டுக்கொள்; stick in, காநத்தூன்றி விடாமுயற்சி செய்; காயக்கட்டு வகையில் காயத்தில் ஒட்டிக்கொண்டிரு; stick indoors, வீட்டில் அடைபட்டிரு; stick in one's gizzard, செரிக்க முடியாததாயிரு; ஏற்றமைய முடியாததாயிரு; stick in the mud, சேற்றில் அழுந்து அல்லது அழுத்து; பிற்போக்குடையவராயிரு; stick it, stick it out, (பே-வ.) சூழமைவுகளைப் பொறுத்துக்கொண்டிரு; stick it into, வேண்டுமென்றே மிகுவிலைகூறு; stick it on, (பே-வ.) மிகுவிலைகூறு; நிகழ்ச்சிகளை மிகைப்படுத்திக் கூறு; stick like a bur, ஒழித்துக்கட்ட முடியாததாயிரு; stick on a horse, குதிரையேற்றத்தில் குதிரையினால் தள்ளப்படாமல் தப்பித்துக்கொள்; stick one up, திகைப்படையச் செய்; stick out, முன்னால் துருத்திக் கொண்டிரு; எதிர்ப்பு விடாதிரு; stick out a mile, (பே-வ.) வெளிப்படையாயிரு; stick out for higher price, குறைந்த விலைக்குக் கொடுக்க மறுத்துவிடு; stick to, ஒட்டிக்கொண்

டிரு ; பிறிதொன்று நாட்டமின்றி ஒன்றியிரு ; ஊன்றியிரு ; stick to it, இடைவிடாது முயலு, முயற்சி கைவிடாதிரு ; stick to the point, குறியிலக்கு விலகாதிரு ; எடுத்த செய்தி யன்றி வேறொன்றில் கவனந்திருப்பாதிரு ; stick to word, கொடுத்த வாக்கினைக் காப்பாற்று ; stick up, எழுந்து நில் ; பொருளகம்-அஞ்சல் ஊர்தி ஆகியவற்றின் வகையில் ஏறி அச்சுறுத்திக் கொள்ளையடி ; stick up a target, இலக்கு நாட்டு ; stick up for, ஆதரித்துப்பேச முனை, ஆதரவில் ஊன்றியிரு ; stick up to, பணிந்து போகாமல் எதிர்த்து நில் ; stuck up, (பே-வ.) முற்றும் திகைப்புற்ற நிலையில் ; the big stick, படுகட்டாயம், வல்லடி ; want the stick, பிரம்பாலடிக்க வேண்டிய நிலைபெறு.

**stick'er**, *n.* ஒட்டுபவர் ; ஒட்டிக்கொண்டிருப்பவர் ; ஒட்டிக் கொள்வது ; பன்றிகள் முதலியவற்றைக் கொல்பவர் ; வெளி யேற்றப்பெற முடியாது விரைந்து கெலிக்கவும் செய்யாது நீடித்து ஆடும் ஆட்டக்காரர் ; ஊடுருவிக் குத்தும் படைக் கலம் ; விருந்தாளியாக வந்து நெடுங்காலம் தங்கியிருப்பவர் ; ஒட்டிக்கொள்ளும் தாள் நறுக்கு ; இசைப்பெட்டியின் விசைக் கட்டையிலிருந்து இயங்காற்றலைச் செலுத்தும் செங்குத்துக் கோல்.

**stick'ful**, *n.* அச்சுக்கோப்புக் கட்டை நிறை அளவு.

**stick'ing-plaster**, *n.* புண்ணொட்டுப் பசைத்துணி.

**stick'-in'sect**, *n.* சுள்ளிப்பூச்சி, சிறு கிளைச் சுள்ளி போன்ற தோற்றமுடைய பூச்சிவகை.

**stick'-in-the-mud**, *n.* பழங்கால நடையுடை மேற்கொண் டவர், பத்தாம் பசலி ; *a.* காலத்தால் பிற்பட்ட ; பிற்போக் குடைய.

**stick'jaw**, *n.* (பே-வ.) மென்று தின்பதற்குக் கடினமான தின்பண்ட வகை.

**stick'le**, *v.* போட்டிப்பந்தயத்தை ஒழுங்குசெய் ; நடுமை வகி ; இடையிட்டுத்தடு ; போராடு, போர்க்கெழு ; விதிமுறை அழுத்தங் காட்டு ; விதிமுறைப் பிடிமுரண்டு செய் ; சமரசப் படுத்தி வை ; இருதிறப் போட்டியையும் ஒழித்து வை ; விதி முறை அழுத்தஞ் செய்.

**stic'kleback**, *n.* முள் திமில் மீன், முதுகில் கூரிய முள் ளெலும்புகளையுடைய சிறு ஆற்று மீன்வகை.

**stick'ler**, *n.* முறைப்படுத்துபவர் ; நடுவர் ; இடையீட்டாளர் ; ஆதரவாளர், சார்புத்துணையாளர் ; விடாப்பிடியாளர் ; குருட் டாதரவாளர் ; ஆரவார விடாப்பிடி வாதாட்டாளர், சிறு திறப் பொருளுக்காக விடாப்பிடியாக வாதாடுபவர் ; (தொ.) a great stickler for, எப்போதும் குருட்டாதரவாளரா யிருப்பவர்.

**stick'-up**, *a.* (பே-வ.) கழுத்துப்பட்டை வகையில் மேல் நோக்கித் துருத்திக்கொண்டிருக்கிற, மடித்துவிடாமல் விறைப்பாக நிமிர்ந்து நிற்கிற.

**stick'y**, *a.* ஒட்டுப்பசை வாய்ந்த ; தொட்டால் ஒட்டிக் கொள்ளுகிற ; பசையான, களியான ; வளையாத, குற்றங் காணும் இயல்புடைய ; ஓயாத்தடை எழுப்புகிற ; துன்பத் துக்கும் வெறுப்புக்கும் இடமான.

**stick'y-back**, *n.* ஒட்டுநிழற்படம், பின்புறம் பசை தடவப் பட்டுள்ள சிறு நிழற்படம்.

**stiff**, *n.* பிணம் ; ஒன்றுக்கும் உதவாதவர் ; சொல்லியுந் திருந்தாதவர் ; (இழி.) ஆள்மாற்றிக் கொடுக்கக்கூடிய தாள் முறி ; (இழி.) விறைப்பாயிருப்பவர் ; (இழி.) விறைப்பாய் இருப்பது ; *a.* விறைப்பான ; தொய்வற்ற ; நெகிழ்வற்ற ; வளையாத ; கட்டிழுப்பான ; முறுகலான ; வலிமைவாய்ந்த ; முரட்டுத்தனமான ; விட்டுக்கொடுக்காத ; சமரசத்துக்கு இடங் கொடாத ; ஒத்திணங்கிப் போகாத ; எளிமை நலமற்ற ; வலிந்த, வலிந்து செயலாற்றுகிற ; இயலெளிமையற்ற ; செயற்கைத்திறம் வாய்ந்த ; தன்னியல்பாய் இயங்காத ; மரச் சட்டம் போன்ற ; ஆசாரமுறைப்பட்ட ; இன்னயமில்லாத ; பண்புநயமற்ற ; நடைவிறைப்பான ; பழகி ஊடாடாத ; தாராளமாய்ப் பழகுதலற்ற ; உயிர்ப்பற்ற, உயிரோட்ட மிழந்த ; தருக்குடைய ; தற்செருக்கு வாய்ந்த ; பிடிவாதமான ; விடாப்பிடியான ; அடம்பிடிக்கிற ; செறிவுமிக்க ; அடர்த்தி மிக்க ; குடிவகையில் காரமிக்க ; ஊடுருவுதற்கரிய ; பசை- களி ஆகியவற்றின் வகையில் மிகக் கெட்டியான ; மிகத் திண்ணிய ; எளிதிற் குழையாத ; குழைவியல்பற்ற ; குழைத்து உருவாக்கமுடியாத ; கட்டிறுக்கமான ; தடை யாற்றல் மிக்க ; அருமுயற்சியான ; கடுமைவாய்ந்த ; கடின மான ; கடும் உழைப்பிற்குரிய ; எளிதில் சமாளிக்கமுடியாத ; அருந்திறம் தேவைப்படுகிற ; மிகுந்த ஆற்றல் தேவைப் படுகிற ; கடத்தற்கரிதான ; ஏறுதற்கரிதான ; இறங்குதற் கரிதான ; உணர்தற்கரிதான ; கடுந்தேர்வான ; தடைப்பட்டு இயங்குகிற ; தடங்கல் உண்டுபண்ணுகிற ; சிக்குப்படுகிற ; சிக்கி இயங்குகிற ; மட்டற்ற ; கட்டாயமான ; ஊன்றிய ; திடீர் ஏற்றம்வாய்ந்த ; விலைவகையில் ஏற்றமிக்க ; வாணிகக் கள வகையில் விலைநெகிழ்வற்ற ; நொந்த நிலையுடைய ; உட லுறுப்பு வகையில் மட்டுமீறிய முன்னுழைப்பால் இயங்குகை யில் நோவு தருகிற ; (கப்.) நிமிர்ந்துநிற்கிற ; (தொ.) a stiff bow, தன்விருப்பற்ற வெற்றுசார வணக்கம் ; a stiff denial, உறுதியான மறுப்பு ; a stiff glass of rum, செறிவான தேறலின் ஒரு குவளையளவு ; a stiff hinge, சிக்குகிற கொளுவித் திருகி, கட்டிறுக்கமான கொளுவித் திருகி ; a stiff price, மிகுவிலை ; bore stiff, மிகமட்டுமீறிப் பொறுக்க முடியா அளவில் சலிப்பூட்டு ; keep a stiff upper lip, நிலை கலங்காத மனவுறுதி கொண்டிரு ; scare stiff, மட்டுமீறிய அளவில் கிலியூட்டு ; stiff manners, உள்ளுணர்ச்சியற்ற புறப்பகட்டாரவாரம் ; stiff market, விலைநெகிழ்வற்ற நிலை ; விலைகள் ஒரே படியில் நிற்கிற வாணிகக்கள நிலை ; stiff neck, தலையை நோவின்றித் திருப்ப முடியாத கீல்வாத நோய் ; stiff one, stiff un, தேர்ச்சிமிக்க உடற்பயிற்சிப் போட்டியாளர் ; பிணம் ; stiff reception, உள்வெறுப்புடன்கூடிய வெற்றுசார வரவேற்பு ; கடும் எதிர்ப்பு ; stiff ship, பாய்விரிக்கப்பட் டிருக்கையில் சாய்வுறுக் கப்பல் ; தலைகீழாகக் கவிழாத கப்பல்.

**stiff'-bit**, *n.* கலினம், இணைப்புகளற்ற குதிரைக்கடிவாளம்.

**stiff'en**, *v.* விறைப்பாக்கு, மேலும் விறைப்பூட்டு ; விறைப் பாகு, பின்னும் விறைப்பாகு ; பின்னும் கடுமைப்படுத்து ; பின்னும் கடுமையாகு ; மேலும் செயற்கைத் தன்மையூட்டு ; மேலும் செயற்கைத் தன்மையுடையதாகு.

**stiff'ener**, *n.* விறைப்பாக்குபவர் ; விறைப்பாக்கும் பொருள் ; சிப்பத்தை இறுக்கிக் கெட்டிப்படுத்துவதற்குப் பயன்படும் பொருள்.

**stiff'ening**, *n.* விறைப்பாக்குதல் ; விறைப்பு ; இறுக்க மாக்குதல் ; இறுக்கம் ; கடுமையாக்குதல் ; கடுமை முனைப் பாக்கம் ; *a.* மேலும் விறைப்பாகிற ; இறுக்கமாகி வருகிற ; கடுமை முனைப்பாகிற.

**stiff'-neck**, *n.* கழுத்துப் பிடிப்பு நோய் ; குளிர்கடுங் காற்றால் வரும் கழுத்து இறுக்கம் ; பிடிவாதமுடையவர்.

**stiff'-necked**, *a.* பிடிமுரண்டான, இணங்காத.

**stiff'ness**, *n.* பிடிவாதம் ; விறைப்பு.

**sti'fle[1]**, *n.* குதிரை பின்கால் மேல்மூட்டு ; குதிரை பின்கால் மேல்மூட்டு நோய்.

**sti'fle[2]**, *v.* நெரித்து விடு, திணற அடி, திக்குமுக்காடச் செய், மூச்சு விடுவதை நிறுத்திக் கொல்லு, காற்றினை அகற்றிக் கொல்லு ; முத்தங்கள்—பரிசுகள்—அன்பு முதலியவற்றால் மூழ்கடித்துவிடு ; சாம்பல் முதலியவற்றைக் குவித்துத் தீயினை அணைத்துவிடு ; சாம்பல் முதலியவற்றால் தீயினைக் குறைத்துவிடு ; அடக்கிவை, முழுதும் மறை ; முழுதும் மறைத்து வைக்கும்படி செய் ; பிறரறியாமல் வைத்திரு, வெளித்தெரியாமல் மூடிமறை ; உள்வைத்து முழுவதும் மூடி விடு ; மூச்சுத் திணறு.

**sti'fle-bone**, *n.* குதிரை பின்கால் மூட்டெலும்பு ; குதிரை முழங்காற் சில்லு.

**sti'fle-joint**, *n.* குதிரை பின்கால்மூட்டு.

**sti'fle-shoe**, *n.* குதிரையின் பின்கால் மூட்டு இலாடம், மூட்டு நோயுள்ள காலைப் பயன்படுத்தி நோய்நீக்க உதவும்படி நோயுறுக் கால்மூட்டுக்கு இடப்படும் இலாடம்.

**stig'ma¹**, *n.* புகழில் ஏற்படும் இழுக்கு; நற்பெயருக்கு ஏற்படுங் கறை; சூட்டுத்தழும்பு; (தாவ.) சூலக முகடு, பூவின் கருவகப் புழைவாய் முகடு.

**stig'ma²**, *n.* கறை, வடு; புகழ்மாசு, திருச்சபை வழக்கில் இறையருளால் திருத்தொண்டருக்கு நேர்வதாகக் கருதப் பட்ட சிலுவையேற்றத் தழும்பு; தனிக்குறி, தனி அடையாளம்; கெடுகூறு, கெடுதடம்; (மரு.) தனிநோய்க்கூறு, நோய்க்குரிய சிறப்பியல்புக்கூறு; (உள்., வில.) மறு; மச்சம்; கசி பொட்டு; *pl.* stig'mata.

**stigmat'ic**, *n.* வடுவுடையவர்; அருவருப்பான உருவமுடையவர், உருத்திரிபுற்றவர்; திருச்சபை வழக்கில் அருட்டழும்பு பெற்றவர்; *a.* புகழில் மாசுற்ற; இழுக்கியல்புடைய; நற்பெயர்க் கறையுடைய; நற்பெயர்க்கறை இயல்புவாய்ந்த; சூடிடப்பட்ட; சூட்டுக்குறியுடைய; விகாரமான, அருவருப்பாக உருத்திரிபுற்ற; ஒருமுகப்புடைய, கண்விழி வகையில் ஒருமுகப்புக்கேடு அற்ற.

**stigmat'ical**, *a.*=stigmatic.

**stig'matism**, *n.* புகழ் மாசு; வடுப்பட்ட நிலை.

**stig'matist**, *n.* அருள் வடுவுற்றவர்.

**stigmatiza'tion**, *n.* அவதூறு; மாசுரை; படிமாசு, கற்பிக்கப்பட்ட மாசு; குற்றச்சாட்டு; வடுப்படு செயல்; கசி பொட்டேற்றுவிப்பு.

**stig'matize**, *v.* வடுப்படுத்து, நற்பெயருக்குக் கறை வருவி; அவதூறு கூறு, இகழ்கற்பி; குற்றப்பழிச்சாட்டிற்கு ஆளாக்கு; பழிக்குரியவராகக் குறிப்பிடு; உரிய பழிக் கூறுகச் சுட்டியுரை; சூட்டுத்தழும்பிடு; கசிபொட்டேற்று, அறிதுயில் வசியத்தால் குருதிக் கசிபொட்டுக்கள் ஏற்படும் படி செய்.

**stig'matose**, *a.*=stigmatic.

**stikk'e**, *n.* வளைமதில் வலைப்பந்தாட்டம், புல்வெளி வரிப் பந்தாட்டத்தைப் போன்று ஒன்பதடி உயரச் சுவர்களாற் சூழப்பட்ட களத்து மையத்தில் வலைகட்டி ஆடப்படும் விளையாட்டு வகை.

**stile¹**, *n.* கடவேணி, சுவரின் அல்லது வேலியின் மீது ஒரு புறம் ஏறி மறுபுறம் இறங்குவதற்கான படி அல்லது படிக் கட்டுகளின் தொகுதி.

**stile²**, *n.* நிலைவரிச்சட்டம், கதவு சுவர் வேலி முதலியவற்றின் பாவு கூற்றில் நிலைக்கம்ப உறுப்பு.

**stilett'o**, *n.* சுரிகை, குறுவாள்; துளையாணி, சிறு கண்ணியின் நுண்புழைகள் செய்வதற்கான குத்தூசி; *pl.* stilett'oes, stilett'os; *v.* சுரிகையால் குத்து.

**still¹**, *n.* மோன அமைதி; இயங்கா நிழற்படம், இயங்கு படத்தின் கூறல்லாத நிழற்படம்; *a.* அசைவற்ற, இயக்கமற்ற; ஓசையற்ற, சந்தடியில்லாத; அசைவோ சந்தடியோ இல்லாத; அலையாடாத; அலைவற்ற; உலைவற்ற; உயிர்ப்பற்ற; செயலற்ற; உயிரில்லாத; ஒளிராத, பளபளப்பற்ற, மினுங்காத; *v.* அமைதியாக்கு; ஆற்று; அமைதிப்படுத்து, கொந்தளிப்புத் தணியவை; அசைவறச் செய்; ஓசை அமர்த்து; ஒலியடக்கு; வாயடங்கச்செய்; அமைதியுறு; *adv.* இடைவிடாது; வழக்கமாக; எப்போதும்; அடிக்கடி; இன்னும், முன்போலவே இனியும்; இக்காலத்திலுங்கூட; கடந்த காலத்திலுங்கூட; வருங்காலத்திலுங்கூட; எனினும், அப்படியிருந்தாலும், இருந்தபோதிலும்; இவை ஒருபுறமிருக்க, அதற்கு மாறாக; மேலும், ஆயினும்; (தொ.) in the still of the night, இரவின் அமைதியில்; keep still, அசையாமலிரு; பேசாதிரு; அடங்கியிரு, பொறு; stand still, அசையாமல் நில்; still birth, செத்துப் பிறவு; still hock, ஒளிர்ந்து பிறங்காத மதுவகை; still life in painting, உயிரில்பொருள் ஓவியம்; still small voice, சிறு அகக்குரல், மனச்சான்று; still waters run deep, அடக்கமுடையார் அறிவிலர் என்றெண்ண வேண்டா, நிறைகுடம் நீர் தளும்பாது.

**still²**, *n.* வாலை, வெறிய நீர்மங்களைக் காய்ச்சி வடித்திறக்குவதற்கான கலம்; *v.* (செய்.) வடி; வடித்திறக்கு; வாலையில் வடித்துச் சாராயமாக்கு.

**still'age**, *n.* விசித்தட்டு, நீர்க்கசிவு வடிவதற்காகப் பொருள்களை நிலத்திற் படாமல் வைத்திருப்பதற்குரிய விசிப்பலகைச் சட்டம்.

**still'-born**, *a.* செத்துப்பிறந்த.

**still'-bugle**, *n.* அமைதி ஆணை ஊதல், அடுத்த ஆணைவரை கப்பலோட்டிகள் அசைவற்றிருக்கவேண்டுமென்னும் ஆணை குறித்த குழலூதல்.

**still'-fish**, *v.* நங்கூரப் படகிலிருந்து மீன்பிடி.

**still'ing, still'ion**, *n.* மிடாவடை, மிடாவுக்கான ஆதாரச் சட்டம்.

**still'ness**, *n.* அசைவின்மை; அமைதி.

**still'-room**, *n.* வாலை அறை; பெரிய வீடுகளில் வீட்டுப் பாதுகாப்புப் பொறுப்புடையவரின் சரக்கறை.

**still'y¹**, *a.* அமைதியான, ஓசையற்ற, அசைவற்ற.

**stil'ly²**, *adv.* அமைதியாக, பேசாமல்; அசையாமல்.

**stilt**, *n.* தாவுநடைக்கோல், சிறுவர் விளையாட்டில் தாவி மிதித்தேறி நின்று தாண்டி நடக்கப் பயன்படுத்தும் பொய்க்கால் இரட்டை நெடுங்கழி; நெட்டுயர் உதைகால்; நாரையின நெடுங்காற்புள்; (பே-வ.) கலப்பைக் கைப்பிடி; *v.* தாவு நடைக்கோல்மீது நிற்கவை; மிக உயரமாக்கு; (தொ.) on stilts, தாவடிக்கோல்மீது உயர்த்தப்பட்ட நிலையுடைய; போலி உயரமுடைய; ஆரவாரப் பகட்டான, ஆரவார ஓசையுடைய.

**stilt'-bird**, *n.* நாரையின நெடுங்காற்புள்.

**stil'ted**, *a.* தூக்கி உயர்த்திக் காட்டப்பட்ட, போலி உயரமுடைய; இலக்கிய நடை வகையில் போலி ஆரவாரப் பகட்டுடைய, வெற்றாரவார ஒலியுடைய; (தொ.) stilted arch, (க-க.) தூண் தலைப்புறுப்பின்மேல் எழும் கவான் வளைவு.

**Stil'ton**, *n.* உயர்தரப் பாலடைக்கட்டி வகை.

**stilt'-petrel**, *n.* நெடுங்காற் சிறு கடற்பறவை வகை.

**stilt'-plov'er**, *n.*=stilt-bird.

**stilt'-sandpiper**, *n.* ஈர மணல் வெளிகளில் திரியும் நெடுங்காற் பறவை வகை.

**stilt'-walker**, *n.*=stilt-bird.

**stil'us**, *n.*=stylus.

**stim'ulant**, *n.* கிளர்ச்சியூட்டி; தூண்டி எழுப்பும் பொருள்; ஊக்குபண்பு; எழுச்சியூட்டுந் திறம்; கிளர்ச்சியூட்டும் மருந்து; தூண்டி எழுப்பும் உணவு; வெறிக்குடி; *a.* கிளர்ச்சியூட்டுகிற; (மரு.) விரை உயிர்த்திறம் ஊட்டுகிற.

**stim'ulate**, *v.* கிளர்ச்சியூட்டு; உயிராற்றல் தூண்டி எழுப்பு; தாற்றுக்கோலால் தூண்டு; செயல் விரைவுபடுத்து.

**stim'ulating**, *a.* விரைவூக்கந் தருகிற, கிளர்ச்சியூட்டுகிற, ஊக்கம் ஊட்டுகிற.

**stim'ulative**, *a.* செயலூக்கும் பாங்குள்ள, உயிராற்றல் தூண்டும் இயல்புடைய.

**stim'ulator**, *n.* கிளர்ச்சியூட்டுபவர், உயிராற்றல் தூண்டுபவர்; புறத்தூண்டுதற் கருவி.

**stim'ulus**, *n.* புறத்தூண்டுதல்; புறத்தூண்டுதல் தரும் பொருள்; நல்லாயர் கைக்கோல் முனை; திருமடத்தலைவர் கோல்முகடு; (உயி.) உயிர்த்தசையியக்கந் தூண்டும் பொருள்; (தாவ.) கொடுக்குமுனை; நச்சுப்பூச்சி முள்; *pl.* stim'uli.

**stim'y**, *n., v.*=stymie.

**sting**, *n.* கொடுக்கு, கொட்டும் உறுப்புமுனை; பாம்பின் நச்சுப் பல் முனை; பூச்சி வகையின் கொட்டும் உறுப்பு; (தாவ.) கொடுக்கு உறுப்பு, நச்சுப் பூச்சிமுள் ஏிழை; கொட்டுதல், கொடுக்கெறிதல்; கொட்டுப்புண், கொட்டுதலால் ஏற்படுங் காயம்; கடுப்பு, கொட்டுதலால் ஏற்படும் நோவு; குத்துமுள், குத்துமுனை; தாக்குமுனை; தாக்காற்றல்; நோவுறுத்தும் கருவி; தீங்கிழைக்கும் ஆற்றல்; வேதனைக் கடுமை; கொடும் பகைமை; ஆற்றல்முனை, விசைமுகப்பு; கூர்மை; விறுவிறுப்பு; திறமிக்க சொல் துணுக்கின் தாக்குதிறம்;

*v.* கொட்டு, கொடுக்கினுல் தாக்கு; கொட்டிக் காயம் உண்டு பண்ணு; கடுப்பு உண்டுபண்ணு; கொட்டி நோவுறுத்து; மனவேதனையூட்டு; சுறீரெனத் தாக்கு; கொட்டும் ஆற்றல் பெற்றிரு; வேதனையூட்டும் ஆற்றல் பெற்றிரு; கொட்டும் ஆற்றலைப் பயன்படுத்து; ஏய், மோசடிக்குள்ளாக்கு; கடுப்புக் கொள், கொட்டினுற் போன்ற வேதனைகொள்; கைப்பற்று; சிக்கவை; (இழி.) பெருஞ்செலவுக்குள்ளாக்கு, கடுஞ்செல வில் சிக்கவை; (தொ.) this air has no sting in it, காற்று வீச்சு வலுக் குறைந்துளது; this bowling has no sting in it, இந்தப் பந்துவீச்சு முனைப்பற்றது.

**sting'aree**, *n.* = sting-ray.

**sting'-bull**, *n.* புரை புண் உண்டாக்கவல்ல மீன் வகை.

**sting'er**, *n.* கடுநோவூட்டுபவர்; கொட்டுவது.

**sting'-fish**, *n.* = sting-bull.

**stin'giness**, *n.* கஞ்சத்தனம், கடும்பற்றுள்ளம்.

**sting'ing-nettle**, *n.* காஞ்சொறி வகை.

**sting'less**, *a.* கொடுக்கற்ற, கொட்டாத.

**sting'-nettle**, *n.* = stinging-nettle.

**sting'o**, *n.* கார மதுவகை.

**sting'-ray**, *n.* வாள்போன்ற வாலால் தாக்கும் மீன்வகை.

**sting'-winkle**, *n.* சிப்பிகளைத் துளைக்கும் கொடுக்கிழை யுடைய சிப்பி வகை.

**stin'gy**, *a.* கஞ்சத்தனமான, கையிறுக்கமான.

**stink**, *n.* கவிச்சி, அருவருப்பான முடைநாற்றம்; *v.* முடை வீசு; அருவருப்பான முடைநாற்றம் உடையதாயிரு; (இழி.) முடைநாற்றத்தைக் கூர்ந்துணர்; (தொ.) stink in nostrils of, அருவருப்பூட்டுவதாயிரு; அருவருப்பூட்டுபவராயிரு; stink of money, தகாவழிப் பேர் எடுத்து நன்கறியப்பட்ட பணக்காரரா யிரு; stink one out, முடைநாற்றத்தினுல் துரத்து.

**stink'-alive**, *n.* இறந்தபின் விரைந்து முடைநாற்றம் வீசும் மீன் வகை.

**stink'ard**, *n.* முடைநாற்றமுடையவர்; முடைநாற்ற விலங்கு; முடைநாற்றம் வீசுகிற வளைக்கரடி வகை.

**stink'-ball**, *n.* நச்சாவி எறிகடம், கொள்ளைக் கப்பல்களால் கடற் போரில் எதிரி கப்பல் முன் உடைக்கப் பயன்படுத்தப் பட்ட முற்கால நச்சாவிக் குடுவை.

**stink'-bomb**, *n.* கவிச்சிக் குண்டு, முடைநாற்ற வெடிகுண்டு.

**stink'er**, *n.* முடைநாற்றமுடையவர்; முடைநாற்ற விலங்கு; முடைநாற்றக் கலம்; முடைநாற்றக் கடற்பறவை வகை; அரு வருப்பான மனிதர்; அருவருப்பான பொருள்; அருவருப்பான ஒன்று.

**stink'-horn**, *n.* கவிச்சிக் காளான், முடைநாற்றம் வீசும் காளான் வகை.

**stink'ing**, *a.* முடைநாற்றமுடைய; அருவருப்பான; வெறுக்கத் தக்க; (தொ.) stinking badger, முடைநாற்றம் வீசும் வளைக் கரடி வகை.

**stink'ing-weed, stink'ing-wood**, *n.* கவிச்சிவாகை, முடை வீசும் நிலவாகை வகை.

**stink'-pot**, *n.* முடைநாற்றக் கலம்; கப்பற்போரில் முன்பு பயன்படுத்தப்பட்ட நச்சாவிக்கலம்; கெடுகேடன்; கெடு கேடான பொருள்.

**stinks**, *n. pl.* (இழி.) வேதியியல்; (இழி.) இயல்நூல்; (இழி.) வேதியியலாளர்; (இழி.) இயல்நூலறிஞர்.

**stink'-stone**, *n.* கவிச்சிக் கல், வெட்டியெடுக்கும்போது புழுங் கல் வாடை வீசுகிற சுண்ணும்புக் கற்பாறை வகை.

**stink'-trap**, *n.* முடையடைப்பு, சாக்கடைப் புழையிலிருந்து முடைநாற்றம் பரவுதல் தடுக்கும் அமைவு.

**stint**, *n.* வழங்கீட்டு எல்லை வரையறை; தட்டுப்பாடு, முட்டுப் பாடு; எல்லைக்கட்டு வரையறை; படிவரையளவு, படியளிப் பளவு; ஒதுக்கப்பட்ட பங்கீட்டெல்லை; தவணை முகப்பு அளவு, நிலக்கரிச்சுரங்கத்தில் வேலைத்தவணை முறையில் வெட்டி எடுக்கப்படவேண்டிய பரப்பளவு; *v.* கசடி வழங்கு, வரைந்தளி; கையிறுக்கம் பண்ணு, அடக்கிச் செலவழி; முடைப்பட்டு வாழ்; வேண்டா வெறுப்புடன் கொடு; செயல் வகையில் விட்டொழி; (தொ.) without stint, வரையாது, முயற்சி குன்றுமல்.

**stint'ed**, *a.* கசட்டளவான, கருமித்தனமான.

**stint'edly**, *adv.* கடுஞ்செட்டாக.

**stint'er**, *n.* கஞ்சன்.

**stint'ing**, *n.* கசடுதல்; *a.* கசடுகிற.

**stint'less**, *a.* கசடாத; அளவு வரையாத.

**stip'ate**, *a.* (தாவ.) நெருக்கமான, செறிவாக அமைந்த.

**stipe**, *n.* (தாவ., வில.) தண்டு, காம்பு; விலங்குகளில் உறுப்புத் தாங்கும் காம்புபோன்ற ஆதாரம்; (தாவ.) சூலக அடியைத் தாங்கும் ஆதாரம்; இலைபோன்ற உறுப்பின் காம்பு; நாய்க்குடைத்தண்டு.

**stip'el**, *n.* (தாவ.) சிற்றிலைச் செதில் உறுப்பு.

**stip'ellate**, *a.* (தாவ.) சிற்றிலைச் செதில் உறுப்புடைய.

**stip'end**, *n.* உதவிப்பணம்; உதவிச்சம்பளம், பயிற்சிக்கால உதவி ஊதியம், பரிசூதியம், வரைகூலி; பருவப்படி; சமய குருவின் வாழ்க்கைப்படி.

**stipen'diary**, *n.* உதவிச்சம்பளம் பெறுபவர்; பயிற்சிக்கால உதவிப்பணம் பெறுபவர்; ஊதியம் பெறும் அமைதிக்காப்பு நடுவர்; *a.* பருவ ஊழியவூதியம் பெறுகிற; உதவிப்படிச் சம்பளம் வாங்குகிற; பயிற்சிக்கால உதவிப்பணம் பெறுகிற; (தொ.) stipendiary magistrate, ஊதியம்பெறும் அமைதிக் காப்பு நடுவர்.

**stip'es**, *n.* (தாவ., வில.) = stipe.

**stip'ple**, *n.* புள்ளி ஓவியம், புள்ளிகளிட்ட வேலைப்பாடு; *v.* புள்ளிகளாற் செதுக்கு; புள்ளிகளால் வண்ண ஓவியந்தீட்டு; புள்ளியிட்டுப் படம் வரை; புள்ளிகளாற் படம் வரையும் முறை கையாளு.

**stipp'led**, *a.* புள்ளியிட்ட; புள்ளி ஓவியமுறையான.

**stip'ple-graver**, *n.* செதுக்கோவியர் புள்ளியிடு கருவி.

**stipp'ler**, *n.* புள்ளிமுறை ஓவியம்.

**stipp'ling**, *n.* புள்ளி முறை ஓவிய வரைவு.

**stip'ulate** [1], *v.* ஒப்பந்தப்படுத்து, முன்வரை செய்; உடன் படிக்கை வகையில் முக்கிய பகுதியாகக் குறிப்பிடு; தனிப் பட வற்புறுத்து; உடன்படிக்கையின் கூருகக் கோரு; பேரத்தின் கூருக வேண்டு.

**stip'ulate** [2], *a.* (தாவ.) இலையடிச் செதில்களையுடைய.

**stip'ulated** [1], *a.* வரையறுத்து ஒப்புக்கொண்ட.

**stip'ulated** [2], *a.* (தாவ.) = stipulate [2].

**stipula'tion** [1], *n.* ஒப்பந்தம்; வரையுறூஉ.

**stipula'tion** [2], *n.* (தாவ.) இலையடிச்செதில் அமைதல்; இலை யடிச் செதில்களின் ஒழுங்கமைவு; இலையடிச் செதில்களின் கட்டமைப்பு.

**stip'ule**, *n.* இலையடிச்செதில், இலைக்காம்பின் அடிப்புற இலை வடிவ உறுப்பு.

**stir**, *n.* அசைவு; சிற்றதிர்வு; அலைவு; சிற்றுலைவு; படர் அலையதிர்வு; சலசலப்பு; கலக்கம்; கிளர்ச்சி; எழுச்சி; பரபரப்பு, தூண்டுதல்; செயல்விரைவு; கிளறுதல்; கிண்டுதல்; *v.* அசை; அசையச்செய்; அலைவுறு; அதிர்வுறு; சல சலப்புறு; அலைவி, ஆடுவி; கலைவுறு; நகரு; கலைவுறுத்து; பெயர்வுறு, அடிபெயர்த்துவை; இடம் பெயர்த்துவை; செல், ஏகு; திரி, நடமாடு; கலக்கு; கலக்கி மேலெழச்செய்; கலங்குவி; கிண்டு; கிளறிவிடு; கிளறித்தூண்டு; தூண்டி இயக்கு; கிளர்ந்தெழு; படுக்கை விட்டகல்; கிளர்ச்சியூட்டு; செயல்விரைவுபடுத்து; கலைவி; உலைவி; உணர்ச்சி கிளறு; (தொ.) make a great stir, மிகவும் விவாதிக்கப்பெறு; மிகு உணர்ச்சி தூண்டு; stir abroad, வெளிநாடு செல், வெளியே திரி; stir forth, stir out, வெளியே செல்; stir one's bile, வெறுப்பூட்டு; stir one's blood, உணர்ச்சி கொந்தளிக்க வை; அவாத்தூண்டு; இனவெழுச்சியூட்டு; stir one's stumps

(பே-வ.) விரைந்து செல்; வேகமாக நட; stir one's wrath, சினமூட்டு; stir the fire, தீக்கிளறு; உணர்ச்சி தூண்டிவிடு; குழப்பம் தூண்டு; stir up, தூண்டு, கிளர்ச்சியூட்டு; ஊக்குவி, எழுச்சியுண்டாக்கு; கலக்கு, கிளறிக் கலக்கவை.

**stir'about**, *n.* கஞ்சி, கூழ்; ஆரவாரக்காரர், குழப்பமும் சந்தடியும் உண்டாக்குபவர்; *a.* விரைந்து திரிகிற; விரை செயலார்ந்த; விரை ஆரவாரமான; குழப்பமும் சந்தடியும் உண்டாக்குகிற.

**stirk**, *n.* ஈனுக்கடாரி, ஓராட்டை இளங்கடாரி; ஓராட்டை விடை எருதுக்கன்று.

**stirp'iculture**, *n.* தனித்தேர்ந்தெடுப்பு முறை இனப் பெருக்கம்.

**stirps**, *n.* (சட்.) குலமுதல்வர், முன்னோர்; (வில.) குடிவழி.

**stir'rer**, *n.* கிளறு கரண்டி; கலகமுண்டாக்குபவர்; குழப்பு பவர்.

**stirr'ing**, *n.* கலக்குதல்; கிளறுதல்; விரைவதிர்வு; உணர்ச்சி தூண்டும் நிலை; *a.* கலக்குகிற; விரைவதிர்வுடைய; உணர்ச்சி தூண்டுகிற.

**sti'rrup**, *n.* அடிக்கொளுவி; அங்கவடி, உதைவுபிடிப்பு

**sti'rrup-bone**, *n.* பால்குடி உயிரின் அங்கவடி வடிவ செவிச் சிற்றெலும்பு.

**sti'rrup-cup, sti'rrup-dram**, *n.* புறப்பாட்டுக் குவளை, பரி ஏறி அமர்ந்தவர்க்கு அன்பளிப்பு இன்தேறற் குவளை.

**sti'rrup-pump**, *n.* தீயணைப்பு மிதிப்பொறி.

**stitch**, *n.* தையல்; தைப்பு, ஒரு தையல் ஈடு; தையலிழை; தையற்பாணி; புத்தகக் கட்டிட வேலையில் எல்லாக் கூறு களையுஞ் சேர்த்த ஒரு முழுநிறைத் தையலீடு; கந்தைத் துண்டு; கப்பல் பாய்த்துணுக்கு; விலாக்குத்தல் நோய், உண்டவுடன் ஓடுவதால் ஏற்படும் பக்கவாட்டுக் குத்துவலி; *v.* தை; தையல் போடு; தைத்திணை; தையலால் அணி செய்; வளைத்துத் தையலிட்டுப் பொதிவுசெய்; (தொ.) a stitch in time saves nine, நகத்தால் கிள்ளாததைப் பின் கோடரி கொண்டுதான் வெட்ட வேண்டும்; drop a stitch, பின்னல் வேலையில் ஓர் இழையைத் தவறவிட்டுத் தொடர்ச்சி குலைவி; has not a dry stitch on him, முழுக்க நனைந்து விட்டான்; put a stitch, put stitches, அறுவை மருத்துவ வகையில் காயத்திற்குத் தையல் போடு; stitch up, தைத்து மூட்டு, தைத்துச் சீர்செய்.

**stitch'-craft**, *n.* தையற்கலை.

**stitch'ing-horse**, *n.* சேணத் தையல் வேலைக்கான பொருளைத் தாங்கி நிற்கும் பற்றுச்சட்டம்.

**stitch'-wheel**, *n.* தொளை போடுவதற்கான சேணம் தைப் பவரின் வெட்டுவாய்ச் சக்கரம்.

**stitch'wort**, *n.* விலாக் குத்துநோய்க்கு மருந்துச் செடிவகை.

**stith'y**, *n.* கொல்லன் பட்டடை, உலைக்களம்.

**stiv'er**, *n.* டச்சுக் காசு.

**sto'a**, *n.* பண்டைக் கிரேக்க சிற்பவேலையில் வாயில் முகப்பு; *pl.* sto'ae; (தொ.) the stoa, நுழைமாடம், முகமண்டபம்.

**stoat**[1], *n.* பட்டிழை மயிர்த்தோலுடைய கீரியின விலங்கு வகை; பட்டிழைமயிர்க் கீரியினத்தின் வேனிற்கால இழை மயிர்த் திரிபுரு.

**stoat**[2], *v.* கிழிசலைத் தை, ஆடை விளிம்பிணைக் கண்ணுக்குப் புலப்படா இழையிட்டுத் தை.

**stock**, *n.* அடிமரம்; தறி, குற்றி; தூர், பயிர் அடிக்கட்டை; அடிமுனைத்தண்டு; ஒட்டுத்தாய்த் தண்டு, ஒட்டுக்கன்று இணைக்கப்படும் தாய்மூலத்தாவரம்; தம்பம், தூண்; உயிரற்ற கட்டை; சடப்பொருள்; இயங்காக் கெட்டிப்பொருள்; நில வரப் பொருள்; இடுதடியன், மட்டி, மடையன்; கருவிகளின் பிடி; பொருள்களின் உடற்பகுதி; பட்டடை; இயந்திரப் பகுதிகளின் அடிக்கட்டை; நிலைச்சட்டம், தாங்கும் ஆதாரச் சட்டம்; துப்பாக்கிக் கைப்பிடி; நங்கூரக் குறுக்குக் கட்டை; பெட்டி, தொட்டி; விறைப்பான முற்காலத் தோல் கழுத்துப் பட்டை; முறுகல் கழுத்துப்பட்டி; காலடியுறை; அடுப்படித் திரணை; கைம்முதல்; கையிருப்புச் சரக்கு; கையிருப்புச் சரக்கு வளம்; சேமிப்புக்கிடங்கு; விற்பனைச் சரக்குத்தொகுதி; வாணிகம் தொழில் ஆகியவற்றின் தேவைப்பொருட் சேகரம்; தொழிலகக் கருவிகலச் சேகரம்; பண்ட ஆக்கமூலப் பொருட் சேமம்; பொதுநிதி; மூலநிதி; பொதுக்கடன் நிதிமூலப் பங்கு; கடன் மூலப்பத்திரம்; பங்குமுதல் தொகுதி; பண்ணை உயிர்வளம், பண்ணையின் உயிரினத்தொகுதி; தோட்டச் செடிவகை; மரபுக் கால்வழிமூலம்; இனமூலம்; குடிமூலமரபு; மூதாதை, இனமூலவர்; மூலம்; இனம்; குடி; இனத் தொடர்பு; இனப்புகழ் மதிப்பு; சீட்டுக்கட்டின் பகுத்து வழங்கிடாப்பகுதி; இறைச்சி எலும்பு ஆகியவற்றின் கொதி சாறு; கருகுலைச்செங்கல்; *a.* இருப்பிலுள்ள; வழக்கமாகவே கையிருப்பான; சேமித்து வைக்கப்பட்ட; நிலவரமான, நிலையாக வைக்கப்பட்ட; கட்டளைப் படிவமான; நிலையாகப் பணியமர்வு பெற்ற; பொதுவழக்கான, அடிப்பட்ட வழக் கான; பழக்கமாக வழங்கப்பட்ட; *v.* கையிருப்பில் வை; வாங்கிச் சேகரித்து வை; வாணிகம் தொழில் ஆகியவற்றின் வகையில் தேவைப் பொருள்களைச் சேர்த்து வை; சேமிப் பிடத்தில் இடு; கடையில் சரக்கிட்டு நிரப்பு; துப்பாக்கியை அடிக்கட்டையுடன் இணை; பண்ணைக்கு உயிர்வளம் தருவி; ஆற்றில் மீன்வளம் இடு; நிலத்தில் நிலையான பசுமைவளம் பரப்பு; புல்வளம் பரப்பு; கட்டையாக வளரச்செய்; அடிக் கட்டை வளர்ச்சி தோற்றுவி; வேருடன் கல்லியெடு; பசுவை விற்பதற்கு முன் பால் கறக்காமல் தேங்கவிடு; தொழுமரத்திலிட்டுத் தண்டி; (தொ.) buy stock, வட்டி யுரிமைக் கடன் மூலபத்திரம்வாங்கு; dead stock, தொழிலில் ஈடுபடுத்தாத மூலதனம், முடங்கிக்கிடக்கும் கையிருப்பு; விற்பனையாகாச் சரக்கு; fat stock, உணவிற்காகக் கொழுக்க வைக்கப்பட்ட விலங்கு; gazing stock, தூற்றலுக்கு ஆட் பட்டவர்; தூற்றலுக்கு உட்பட்டது; have in stock, கையிருப்பாக வைத்திரு; hold stock, வட்டியுடைய கடன் மூலப்பத்திரம் கைக்கொண்டிரு; laughing stock, ஏளனத் திற்கு ஆளானவர்; lock stock and barrel, முழுதும், அடியோடு, வேருடனும் கிளையுடனும்; paper stock, தாள் செய்வதற்குப் பயன்படும் மூலப்பொருட்கூளம்; polyp stock, (வில.) சிப்பி இன உயிர்களின் கூட்டுவாழ்வுச்சட்டம்; preferred stock, preference stock, ஊதிய முன்னுரிமை யுடைய பங்குமுதல்; stock certificate, பங்குமுதல் சான் றிதழ்; stock company, நாடக அரங்கத்தின் சேம உடைமைக் குழு; stock exchange, பங்குமாற்றுக் களம், பங்குகள் விற்கவும் வாங்கவும் கூடிய இடம்; stock lock, புறக்கதவி லுள்ள பேழைப் பூட்டு; stock of bit, துளைக் கருவிகளைத் திருப்புஞ் சட்டம்; stocks and stones, உயிரற்ற பொருள்கள்; சுறுசுறுப்பற்றவர்; take stock, கையிருப்புச் சரக்கினை மதிப்பிட்டு வை; ஆதாய நட்டக் கணக்குப் பார்; take stock in, அக்கறை கொள்; take stock of, கூர்ந்துநோக்கிப் பண்புணர்; the Stock Exchange, லண்டன் மாநகரில் பங்கு மாற்று வணிகர் கழகக் கட்டிடம்.

**stock'-account**, *n.* சரக்கிருப்புக் கணக்கு.

**stockade'**, *n.* கழியரண், குத்துக்கட்டைகளை இணைத்து நிறுத்தி அமைத்த தற்காலிக அரண்; *v.* கழியரண் செய்; மரமுளைகள் சூழ நட்டு அரண்செய்.

**stock'-book**, *n.* இருப்புக் கணக்கேடு.

**stock'-breeder**, *n.* கால்நடை வளர்ப்பவர்.

**stock'broker**, *n.* பங்குத் தரகர்.

**stock'broking**, *n.* பங்குத்தரகு.

**stock'-car**, *n.* கால்நடைப் பாரவண்டி.

**stock'-farm**, *n.* கால்நடை வளர்ப்புப்பண்ணை, வளர்ப்புயிரினப் பண்ணை.

**stock'-farmer**, *n.* கால்நடைப்பண்ணை வைத்துப் பேணுபவர்.

**stock'-gang**, *n.* இரம்பக்கோவை, மரத்தை அறுக்கும் பல் இரம்பச் சட்டம்.

**Stock'holm tar**, *n.* கப்பற் கட்டுமானத்திற் பயன்படும் நிலக் கீல் வகை.

stock'inet, stock'inette, *n* தொய்வுடைய உள்ளாடைக்குரிய பின்னல் துகில் வகை.

stock'ing, *n.* காலுறை; (தொ.) elastic stocking, நரம்பு நோய் அறுவைப்பண்டுவத் தொய்வுக் காலுறை வகை; white stocking, குதிரை முதலியவற்றின் வகையில் நிறம் வேறுபட்ட காற்பகுதி.

stock'ingette, *n.* = stockinet.

stock'ing-frame, stock'ing-loom, stock'ing-machine, *n.* காலுறை துன்னு கருவி.

stock'-in-trade, *n.* கையிருப்புச் சரக்கு, வாணிக விற்பனைப் பொருள் தொகுதி; கையிருப்புத்திறமை; உளவாய்ப்புவளம்.

stock'ist, *n.* சரக்குச் சேமிப்பாளர்.

stock'-jobber, *n.* பங்குக்கள ஆதாயவேட்டையாளர்.

stock'-jobbery, *n.* பங்குக்கள ஆதாயவேட்டை; பங்குக்கள ஆதாய வேட்டை வாணிகம்.

stock'less, *a.* கையிருப்பற்ற; அடிக்கட்டையற்ற.

stock'list, *n.* பங்குக்கள விலைப்பட்டி; பங்குக்கள விலைப் பட்டி வெளியிடும் பருவ இதழ்.

stock'man, *n.* கால்நடைக் காவலாளர்.

stock'-market, *n.* பங்குமாற்று வாணிகக்களம், பங்கு மாற்று வாணிகம்.

stock'-owl, *n.* பெரிய ஆந்தை வகை.

stock'-pile, *n.* மூலப்பொருட் சரக்குச் சேகரம், முட்டுப்பாட்டுக் காலத்தில் மூலப்பொருளுக்காகச் சேகரித்த செய்பொருள் குவை; *v.* மூலப்பொருட்சரக்குச் சேகரம் செய்.

stock'-piling, *n.* மூலப்பொருட் சரக்குச் சேகரிப்பு, முட்டுப் பாட்டுக் காலத்தில் மூலப்பொருளுக்காகக் கழிந்த செய் பொருள்களைச் சேகரித்தல்.

stock'-pot, *n.* கொதிசாற்றுக்கலம், கொதிசாறு சமைக்கும் கலம்.

stock'rider, *n.* பரிமேலாயர், ஆஸ்திரேலிய வழக்கில் குதிரை மீதிவர்ந்து திறந்த வெளிகளில் கால்நடைகளைக் காத்துப் பேணுபவர்.

stocks, *n. pl.* கப்பல்தள நிலவர மரச்சட்டம்; தொழுமரம், முற்காலத்தில் கைகால் செருகிவைத்துப் பொருத்தித் தண் டிக்கப் பயன்படுத்தப்பட்ட இரு பிளவான தொளை மரச் சட்டம்; பொதுநிதி; (தொ.) on the stocks, கப்பல் வகையில் கட்டுமான நிலையில் உள்ள; the stocks, நிதிப்பத்திர அடிப் படையான நாட்டின் பொதுக்கடன்.

stock'-still', *a.* சிறிதும் அசைவற்ற நிலையில் உள்ள; *adv.* சிறிதும் அசைவற்ற நிலையில்.

stock'-taking, *n.* இருப்புக்கட்டுதல், கையிருப்புக்கணிப்பு, கையிருப்புக் கணக்கு மதிப்பீடு.

stock'-whip, *n.* குறுங்கைக் கசை, குறுகிய கைப்பிடியும் நீண்ட வாரும் கொண்ட ஆயர் சவுக்கு, குறுங்கைச் சவுக்கு.

stock'y, stugg'y, *a.* பருத்துக் குட்டையான, குறுங்கட்டுடலுடைய; குட்டையாகவும் உறுதியாகவும் அமைந்த.

stock'yard, *n.* கால்நடைப் பட்டி, கால்நடைக் கொட்டில் முற்றம்.

stodge, *n.* வனுச்சாப்பாடு; பேராசைப் பெருந்தீனியர்; *v.* பேராவலோடு உண்.

stodg'y, *a.* திணிப்புற்ற; கொழுப்புற்ற; மந்தமான.

*stoep*, (டச்.) *n.* முகப்புத் தாழ்வாரம்.

stog'ie, stog'y, *n.* கனமான புதைமிதி; *a.* கனத்த.

Sto'ic, sto'ic, *n.* சீனோ (Zeno கி. மு. 308-261) என்ற பண்டைக் கிரேக்க அறிஞரின் மாணவர்; கிரேக்க அறிஞர் சீனோவின் கோட்பாட்டாளர், இன்பதுன்ப நடுநிலைக் கோட் பாட்டாளர்; கடுந் தன்னடக்க வாதி; நடுநிலை உள்ளத் துரவோர்; *a.* சீனோவின் கோட்பாட்டுக் குழுவினுக்குரிய; சீனோவின் கோட்பாடுசார்ந்த; இன்பதுன்ப நடுநிலையுணர்வுக் கோட்பாடு சார்ந்த; இன்பதுன்ப நடுநிலை உணர்வுடைய; கடுந் தன்னடக்கம் வாய்ந்த; (தொ.) Stoic philosopher, இன்பதுன்ப நடுநிலைக்கோட்பாட்டாளர்; விருப்புவெறுப் பற்றவர், கடுநோன்பாளர்.

sto'ical, *a.* இன்பதுன்ப நடுநிலைக் கோட்பாடு சார்ந்த; இன்ப துன்ப நடுநிலை உணர்வுடைய; கடுந் தன்னடக்கம் வாய்ந்த; சீனோவின் கோட்பாட்டுக் குழுவினுக்குரிய; சீனோவின் கோட் பாடு சார்ந்த.

sto'ically, *adv.* கடுந் தன்னடக்கத்துடன்.

Sto'icism, *n.* பண்டைக் கிரேக்க அறிஞர் சீனோவின் கோட் பாடு; இன்பதுன்ப நடுநிலைக் கோட்பாடு; விருப்பு வெறுப் பற்ற நிலை, கடுந் தன்னடக்கம்; கடுந் தேவைக்கட்டுப்பாட்டு நிலை; தன்முனைப்பழித்த கடுந்துறவு நிலை.

stoke, *v.* உலைக்கு எரிபொருளூட்டிப் பேணு; உலையனலுக்கு விறகூட்டி வளர்; நீராவி இயந்திரத்துக்கு எரிபொருளூட்டி வளர்; எரியூட்டாளராகச் செயலாற்று; (பே-வ.) விரைந்து உணவுகொள்.

stoke'hole, stoke'hold, *n.* நீராவிக் கப்பலின் உலைக்கள அறை.

stok'er, *n.* உலையூட்டி, நீராவி இயந்திரத்துக்கு எரிபொரு ளூட்டுபவர், நீராவிக்கப்பல்களின் இயந்திர உலைகளுக்குக் கரி போடுபவர்; தூளைகாப்போர்; எரிபொருளூட்டும் கருவி; (தொ.) mechanical stoker, எரியுலைகளுக்குத் தானுக எரி பொருளூட்டும் அமைவு.

stole[1], *n.* பண்டை ரோமாபுரி மாதர் புறஅங்கி; சமயகுரு மாரின் தோளணிப்பட்டி; மாதர் தோளாடை அங்கி.

stole[2], *n.* = stolon.

stole[3], *v.* steal என்பதன் இறந்த காலம்.

sto'len[1], *a.* திருடப்பட்ட; மறைவிற் செய்த.

sto'len[2], *v.* steal என்பதன் முடிவெச்சம்.

stol'id, *a.* எழுச்சியற்ற, கிளர்ச்சியற்ற; உணர்ச்சியற்ற; மந்தமான; விடாப்பிடியான.

stol'on, *n.* விழுதுக்கிளை, வேர்விட்டுப் புது வளர்ச்சி தோற்று விக்கும் படர்நிலை அல்லது சாய்நிலைக் கிளை; ஓடுமுளைத் தண்டு, பாசி வகையில் இலை தோற்றுவிக்கும் அடிநிலைப் படர் தண்டு; (வில.) தண்டுவம், கூட்டுயிரிலிருந்து தண்டுவேர் போல் வளரும் புறவளர்ச்சி.

sto'ma, *n.* பைம்புழை, செடியினத்தின் பசும்பகுதிகளின்மேல் தொலியூடாக வளியுயிர்க்க உதவும் நுண்புழைவாய்; *pl.* sto'mata.

sto'mach, *n.* இரைப்பை; அகடு, அடிவயிறு; அசைபோடும் விலங்குகள் வகையில் செரிமானப் பைகளில் ஒன்று; பசி யார்வம்; பசிச்சுவை; விருப்பச்சார்பு; சார்பொருக்கம், தாங் குரம்; அக்கறைச்சார்பு; ஊக்கச் சார்பு; *v.* சுவைத்து உண்; உண்ணப்பெறு; சுவைவிரும்பு, நுகர்; பொறு; ஏற்றுச் சமாளி; (தொ.) coat of the stomach, அகட்டின் உள்வரிச் சளிச்சவ்வு; coats of the stomach, வபை, சளிச்சவ்வுத்தசை அடுக்கு; fourth stomach, true stomach, செரிமான இரைப் பை, அசைபோடும் விலங்கின் நான்காவது இரைப்பை; proud stomach, high stomach, தற்பெருமை, வீறுப்பு.

sto'mach-ache, *n.* வயிற்றுவலி, வயிற்றுநோவு.

sto'mach-cough, *n.* சிறுகுடல் அழற்சி இருமல்.

sto'macher, *n.* அகட்டங்கி; மகளிர் முன்றானை முகப்பு; செமிப்பு மருந்து.

stomach'ic, *n.* செமிப்பு மருந்து; *a.* அகடுசார்ந்த; செரி மானத்திற்கு உதவுகிற; பசி தூண்டுகிற.

sto'mach-pump, *n.* அகட்டுப்பீற்று, வயிற்றினின்று வெளி யேற்றவோ அல்லது வயிற்றுள் செலுத்தவோ பயன்படும் பீற்று குழல்.

sto'mach-staggers, *n.* குதிரைவாத வலிப்பு.

sto'mach-tooth, *n.* குழந்தைகளின் முதற்பல்.

sto'mach-tube, *n.* இரைப்பைத் துப்புரவுக்குழாய்

stom'atal, *a.* பைம்புழை சார்ந்த.

**stomat'ic,** *a.* பைம்புழைக்குரிய.
**stomatit'is,** *n.* வாய்ப்புண், வாய் அழற்சி.
**stomatodae'um,** *n.* இரைப்பைக்குழாய் முடிவின் உட்குவிவாக்கம்.
**stomato-gas'tric,** *a.* வாய் இரைப்பை சார்ந்த.
**stomatol'ogy,** *n.* வாய்நோய் மருத்துநூல்.
**stomodae'um,** *n.*=stomatodaeum.
**stone,** *n.* கல்; மணிக்கல்; மணி; பாறைத் திண்பகுதி; பொருளின் திண் கூறு ; கல்போன்ற பொருள் ; கூழாங்கல் வடிவுடைய பொருள்; ஈரல் கல்; 14 பவுண்டு எடை; கொட்டை; வித்து ; விதைக்கொட்டை ; ஆலங்கட்டி ; *a.* கல்லாலான ; *v.* கல்லாலெறி ; பழங்களிலிருந்து விதை நீக்கு ; கல் முகப்பமை ; கல் பாவு ; கல்கொண்டு செய் ; (தொ.) artificial stone, சீமைக்காரை வகை ; break stones, பாதைக்காகக் கல்லுடை ; கடும் உழைப்புச் செய் ; வறுமையுடன் வாழ்வு நடாத்து ; cast a stone at, throw a stone at, நடத்தையிற் குறை கூறு ; Cornish stone, வெள்ளைக் களிமண் ; give a stone for bread, போலி உதவி செய் ; இரக்கமின்றி நடத்து ; kill two birds with one stone, ஒரே கல்லில் இரு மாங்காய் அடி ; leave no stone unturned, தேவைப்பட்ட எல்லா முயற்சிகளையும் செய்து பார்த்துவிடு ; mark with a white stone, இன்ப நாளாகக் குறி ; meteoric stone, விண் வீழ் கல் ; rolling stone, வேலையை விட்டு அடிக்கடி மாறுபவர் ; shower of stones, கல்மாரி; மலைகளிடையே கற்சரிவு; stone circle, குத்துக்கல் வளையம் ; stone's cast, stone's throw, கல்லெறி தொலைவு ; stones will cry out, கல்லையுங் கதற வைக்கும் பெருங்குற்றம் ஆகும் ; stone to death, கல்லெறிந்து கொல் ; the stone age, கற்காலம்.
**stone'-axe,** *n.* கற்கோடரி.
**stone'blind,** *a.* முற்றிலுங் குருடான.
**stone'-blue,** *n.* வெளிறு நீலம், வெண்மை கலந்த அவுரி நீலம் ; *a.* வெளிறு நீலமான.
**stone'-borer,** *n.* நத்தை இன வகை.
**stone'-break,** *n.* ஆல்ப்ஸ் பகுதி சார்ந்த ரோசா மலர்ச்செடி வகை.
**stone'-buck,** *n.* ஆப்பிரிக்க ஆட்டியல் மான்வகை.
**stone'-butter,** *n.* படிக்கார வகை.
**ston'-cast,** *n.* கல்லெறி தொலை.
**stone'chat,** *n.* சிறு பறவை வகை.
**stone'-coal,** *n.* மட்கரி, நிலக்கீல் சத்தற்ற நிலக்கரி வகை.
**stone'-colour,** *n.* சாம்பல் நிறம்.
**stone'-coloured,** *a.* சாம்பல் நிறமான.
**ston'-crop,** *n.* சுவர்-பாறை ஆகியவற்றின்மீது படரும் கொடி வகை.
**stone'-curlew,** *n.* திண்காற் பறவை வகை.
**stone'-cutter,** *n.* கற்கருமான்.
**stone'-cutting,** *n.* கல்லுடைப்பு வேலை.
**sto'ned,** *a.* கல்லெறிவுற்ற ; கல்நீக்கப்பட்ட; விதையெடுத்த; கல்லையுட்கொண்ட.
**stone'-dead,** *a.* செத்துத் தீர்ந்த.
**stone'-deaf,** *a.* முழுச்செவிடான.
**stone'-dresser,** *n.* கட்டிடக்கல் செப்பனிடுபவர்.
**stone'-eater,** *n.* நத்தை வகை.
**stone'-fence,** *n.* (இழி.) மதுக்கலவை வகை.
**ston'-fern,** *n.* செதிலுடைய சூரல் வகை.
**stone'-fly,** *n.* ஆற்றுக்கல்லடி முட்டைப்புழுவுக்குரிய ஈ வகை.
**stone'-fruit,** *n.* கொட்டையுடைய பழம்.
**stone'-gall,** *n.* மணற் பாறைக் களிமண் திரள்.
**stone'-hammer,** *n.* கற்சம்மட்டி.
**stone'-horse,** *n.* பொலி குதிரை.
**stone'less,** *a.* கல்லற்ற ; கொட்டையில்லாத.
**stone'man,** *a.* கற்குவியல் ; கல்லறைக் கற்குவியல்.
**stone'-mar'ten,** *n.* அடிப்புறம் வெள்ளையான கீரி வகை.
**stone'-parsley,** *n.* முட்புதர்ச்செடி வகை.
**stone'-pine,** *n.* குடை வடிவ இத்தாலிய செந்தூர மரவகை.
**stone'-pit,** *n.* கற்சுரங்கம்.
**stone'pitch,** *n.* கெட்டிக் கீல்வகை.
**stone'-plover,** *n.* திண்காற் பறவை வகை.
**ston'er,** *n.* கல்லெறியுநர் ; கற்சுமையாளர்.
**stone'-rag,** *n.* காளான் வகை.
**stone'-rue,** *n.* சிற்றிலைச்சூரற் செடிவகை.
**stone'-saw,** *n.* கல் இரம்பம், மணல் உதவியோடு கல் அறுக்க உதவும் பல் இல்லா இரும்பு இரம்பம்.
**stone'-snipe,** *n.* வட அமெரிக்க திண்காற் பறவை வகை.
**stonewall',** *v.* கற்சுவரிட்டுத் தடு.
**stonewall'ing,** *n.* ஆரமர் விளையாட்டு, மரப்பந்தாட்டத்தில் மிகுந்த எச்சரிக்கையுடன் பந்து மட்டையைக் கையாளல் ; ஆஸ்திரேலிய அரசியல் வழக்கில் பாராளுமன்ற முட்டுக் கட்டையீடு.
**stone'ware,** *n.* மாக்கல் பாண்டம்.
**stone'weed,** *n.* கல்போன்ற விதையுடைய முற்கால மருந்துச் செடிவகை.
**stone'work,** *n.* கற்கொத்து வேலை ; கற்கட்டிட வேலை.
**stone'wort,** *n.* வேலிப்பூண்டு வகை
**ston'ify,** *v.* கல்லாக்கு.
**ston'ily,** *adv.* கல்லாய்.
**ston'iness,** *n.* கல்போன்ற தன்மை ; கல்மனம்.
**ston'y,** *a.* கல்லார்ந்த ; முழுதும் கல்லான ; கல்லுள் புதைவுற்ற ; கல் மூடிய ; கற்பாவிய, கல் நிறைந்த ; கல்போலக் கடினமான ; கற்செறிவுடைய ; உறுதியான ; ஊன்றிய ; கல்லாய்விட்ட ; *adv.* கல்போன்று ; கல்லாய் ; கல்நிறைந்து ; கல்லார்ந்து ; (தொ.) stony heart, கல் நெஞ்சம்.
**ston'y-hearted,** *a.* ஈவிரக்கம் இல்லாத.
**stood,** *v.* stand என்பதன் இறந்த-கால முற்றெச்ச வடிவம்.
**stooge,** *n.* கோமாளியின் உடந்தையாள்; நகைச்சுவை நடிகர்; கேலிக்கு இலக்கானவர் ; துணையாள் ; உடந்தையாள் ; இழிந்த காரியங்களுக்குப் பயன்படும் தோழர் ; இழிவான கையாள்; கைக்கருவியாள், உட்கை ஆள்; விமானமோட்டப் பயின்று வருபவர்; *v.* நிலத்தளத்தோ டொட்டிப் பறந்து திரி.
**stook,** *n.* கதிர்க்கொத்தடுக்கு, களத்தில் நிறுத்திவைக்கப்பட்ட கூலக் கதிர்க்கற்றையடுக்கு ; *v.* கதிர்களைக் குவித்தடுக்கு.
**stool,** *n.* முக்காலி ; குந்துமணை ; கால்மணை, முழந்தாளிடுவதற்கான விசிப்பலகை; பலகணி ஓரச்சட்டம்; கழிபட்டி, மலங்கழிக்கும் இடம் ; கழிமலம் ; அடிமுளைக்கட்டை, தளிர்க்கும் தூர்க்கட்டை ; கண்ணிப்புள் அமர்கழி ; *v.* வேரிலிருந்து முளைவிடு ; மலங்கழிக்கச் செல் ; மலங்கழி ; (தொ.) camp stool, கூடாரக் குந்துமணை, மடக்கி எளிதில் கொண்டு போகத்தக்க மணை ; fall between two stools, இரு வழித் தயக்கத்தால் இரண்டும் இழ ; go to stool, மலங்கழிக்கச் செல்; music stool, இசைப்பெட்டி வாசிப்பவர்க்கான உயரம் இசைவு செய்யத்தக்க குந்துமணை ; stool of repentance, செய்ததற்கிரங்கும் தகாநடத்தையர் அமரும் முக்காலி.
**stool'-ball,** *n.* சசெக்ஸ் (Sussex) பகுதியில் பெண்கள் விளையாடும் மரப் பந்தாட்ட வகை.
**stool'-pigeon,** *n.* கண்ணிப்புள்ளாகப் பயன்படும் புழு ; ஏய்ப்புக்கருவி ஆள் ; காவற்றுறைத் துப்பறியுநர்.
**stoop[1],** *n.* குனிவு; இறக்கம்; தலையிறக்கம்; முற்சாய்வு; உடல் வளைவு ; படித்தாழ்வுறவு ; கழுகுப்பாய்வு ; *v.* குனி; தலைதாழ்த்து ; உடல்கூனிக் குறுகு ; படிதாழ்வுறு ; முன்னேக்கிச் சாய்வி ; சாய்வுறு ; பணிந்து செல் ; கழுகுப் பாய்வுறு ; (தொ.) stoop to conquer, வளைந்து கொடுத்து வெற்றிபெறு.

**stoop**[2], *n.* =stoup.

**stoop**[3], *n.* படிவாயில், வாயிற்படி ; வாயிற் குறடு.

**stoop'ing**, *a.* குனிந்த, தலைதாழ்த்திய, வளைந்த.

**stop**, *n.* நிறுத்தம் ; ஓய்வு ; இடைநிறுத்தம் ; இடை ஓய்வு ; நிறுத்திடம், உந்துகலம் முதலியன நிறுத்தப்படும் இடம் ; தடை ; இயக்க ஓய்வு ; இடையறவு ; இடையூறு ; இயக்க விசைத்தடுப்பு ; இயக்கங் கட்டுப்படுத்தும் அமைவு ; நிறுத்து கருவி ; தடைக்கருவி ; தடுக்கிதழ் ; தடுப்புவிசைக்குமிழ் ; சீட்டாட்டத்தில் தடுப்புச்சீட்டு ; ஒலியியலில் இடைச்சவ்வு ; (நி-ப.) புழை ஒளித்தகடு, ஒளிபரவவிடாத மையப்புழையுடைய ஊடுதகடு ; (ஒலி.) தடையொலி, உறுப்புக்கள் முட்டி வளிப்போக்கு தடைப்படுவதால் ஏற்படும் ஒலி ; (கப்.) நிறுத்தக்கட்டிழை, இயக்கம் தடுப்பதற்காகக் கட்டும் குறுங்கயிறு ; (கப்.) முட்டுக்கை, தலைமைப்பாய்மர முகட்டுக் காதாரமான தாழ் பாய்மரக் குறுக்குக்கைகள் இரண்டில் ஒன்று ; (இசை.) நரம்புதடாவழுத்தம் ; (இசை.) சுர விசை மாறுபாட்டமைவு ; (இசை.) இசைமேளத்தில் நிரலிசைக் குழல் தொகுதி ; (இசை.) இசைமேளத்தில் நிரல் இசை விடுப்புக்குமிழ்; (இசை.) விரலடைப்புப்புழை ; (இசை.) விரற் புழையடைப்பு ; உணர்ச்சிவகை இயக்கும் பேச்சுத்திறம் ; *v.* நிறுத்து ; தடுத்துநிறுத்து ; தடு ; தடைபடுத்து ; முட்டுக் கட்டையிடு ; பின்னிடைவி ; வழியடை ; புழை அடை ; அடைப்பிடு ; ஒழி ; செயல் ஒழி ; விலக்கி ஒழி ; இல்லாதாக்கு ; இயக்கம் ஓய்வுறுத்து ; பந்து வகையில் தடுத்து ஏற்றுக் கொள்; பந்தை அடித்து நிறுத்து; தடையாணையிடு; தடுத்து விடும்படி ஏவு ; தடைநடவடிக்கை எடு ; நிறுத்தாணையிடு ; நிறுத்தும்படி செய் ; இசைவு மறு ; இடையறவுசெய் ; நில் ; தடைப்பட்டுநில்; அடைபட்டு நில்; முடிவுறு; செயல் ஒழிவுறு; ஓய்வுறு ; இடையறவுறு ; தொடர்ச்சியறுபடு ; தயங்கி நில் ; இடை ஓய்வுகொள் ; இடையில் தங்கு ; (பே-வ.) தங்கி வாழ்ந்திரு; (பே-வ.) தங்கியிரு; (பே-வ.) காத்திரு; நிறுத்தப் புள்ளியிடு ; நிறுத்தப்புள்ளிகளையிடு ; தோட்டக்கலைவகையில் கிள்ளி வளர்ச்சி தடைப்படுத்து ; (இலக்.) இடைநிறுத்தமிடு ; (கப்.) கட்டுத் தும்பால் இறுக்கு ; (இசை.) நரம்புதடவி அழுத்தி அதிர்வுநீளம் பெருக்கு, சுரமாறுபாடு செய் ; (தொ.) come to a full stop, நிறுத்து; நின்றுவிடு ; put a stop to, முற்றுப்புள்ளி வை ; நிறுத்து ; stop a bullet, (இழி.) குண்டு பட்டு மாள்வுறு ; stop a gap, அப்பொழுதைக்கு நிறைவு செய் ; stop a tooth, பற்பள்ளம் நிரப்பு ; stop a wound, புண்ணில் குருதிக்கசிவு தடு ; stop blow, குத்துச் சண்டையில் அடிவிழாது தடு ; stop blow with one's head, நகைத்திற வழக்கில் உதை வாங்கிக்கொள் ; stop dead, stop short, திடீரென நிறுத்து; stop down, (நி-ப.) புழை ஒளித் தகட்டால் காட்சிவில்லையை மங்கலாக்கு ; stop off, பயன்படுத்தாத வார்ப்படத்தின் பகுதியை மணலால் நிரப்பு ; stop off, stop over, பயண வகையில் இடையில் நிறுத்து ; stop one's ears, கேட்க மறு ; செவிகொடுக்க மறு ; stop out, காப்புப் பூச்சுப் பூசு ; stop the way, தடையாய் இரு ; தடைசெய்.

**stop'-clock**, *n.* நிறுத்தமைவுச் சுவர்க்கடிகாரம்.

**stop'cock**, *n.* நெகிழ்வுக்குழாய் ; மூடவும் திறக்கவும் வல்ல குழாய் அமைவு.

**stop'-collar**, *n.* தடைக்கட்டு வளையம், இயந்திர உருளையின் இயக்கத்தை எல்லைப்படுத்திக் காக்கும் தடையமைவு.

**stop'-cylinder**, *n.* அச்சுப்பொறி வகை.

**stop'-drill**, *n.* சுழல்வெல்லைத் தடுக்குடைய துளையிடு கருவி வகை.

**stop'-gap**, *n.* தற்கால இசைவு ஏற்பாடு, இடைக்கால இட நிரப்புச்செய்தி.

**stop'-key**, *n.* சுரமாற்ற இசைக்கருவித் தடைத்திருக்கு.

**stop'-knob**, *n.* சுரமாற்ற இசைக்கருவித் தடைக்குமிழ்.

**stop'-off**, *n.* பயண இடைமுறிப்பு.

**stop'-order**, *n.* பங்குக்களத் தரகருக்குத் தரப்படும் விற்பனை நிறுத்த ஆணை.

**stop'-over**, *n.* பயண இடைமுறிப்பு.

**stopp'age**, *n.* நிறுத்தம் ; நிறுத்துதல் ; தடுப்பு ; வேலை இடைமுறிவு ; இயந்திரவேலை முறிவு ; வேலைமுடிவு ; பிடிப்புத் தொகை, சம்பளத்தில் கொடுக்காமல் நிறுத்தி வைக்கும் தொகை.

**stopped**, *a.* நிறுத்தப்பட்ட ; அடைக்கப்பட்ட ; (தொ.) stopped pipe, மேல் நுனி அடைக்கப்பெற்று ஒரு பிடி தாழ் விசைமானமுடைய துளையிசைக்கருவி.

**stopp'er**, *n.* நிறுத்துபவர் ; தடுப்பவர் ; நிறுத்துவது ; தடுப்பது ; அடைப்புமூடி ; குமிழ்மூடி ; கண்ணாடிக் குப்பி மூடி ; அள்ளுக்கயிறு, கட்டுத்தும்பு ; *v.* கட்டுத்தும்பாற் கட்டு, அள்ளுக்கயிற்றால் இறுக்கு.

**stopp'er bolt**, *n.* (கப்.) அள்ளுவளையம், அள்ளுக்கயிறு கட்டும் வளையம்.

**stopp'er-knot**, *n.* புரிமூடி, அள்ளுக்கயிற்றின் புரிமுறுக்கால் ஏற்பட்ட முனை.

**stopp'ing**, *a.* நிறுத்தல் ; தங்கல் ; தடுத்தல் ; பல் இடுக்கடைப்பு ; நரம்பு தடவல் ; *a.* நிறுத்தலுக்குரிய ; தங்கலுக்குரிய ; காப்பிற்குரிய ; (தொ.) double stopping, இசைக் கருவி வகையில் ஒருங்கு இருநரம்பு தடாவல்.

**stopp'ing-brush**, *n.* காடி அரிப்பு வேண்டா இடத்தில் காப்புப்பூச்சிடும் தூரிகை.

**stopp'ing-out**, *n.* செதுக்குவேலையில் அரிப்புக் காப்பீடு ; (நி-ப.) ஒலித்தடைக் காப்பீடு.

**stopp'ing-place**, *n.* இடைநிறுத்திடம்.

**stop'-plate**, *n.* இருசு வரைத்தகடு, உராய்வுத்தடைக்குழைகள் மீது மோதாமல் இருசு தடுக்கும் அமைவு.

**stop'ple**, *n.* குப்பியின் மூடியடைப்பு ; *v.* அடைப்பிட்டு மூடு.

**stop'-press**, *n.* கடைசிநேரச் செய்தி, செய்தித்தாள் வகையில் அச்சிடத் தொடங்கியபின் சேர்க்கப்பெற்ற செய்தி.

**stop'-valve**, *n.* நீர்மத் தடுக்கிதழ் அடைப்பு.

**stop'-volley**, *n.* வலைத்தெறியடி, வரிப்பந்தாட்ட வகையில் வலைக்கு நெருங்கிய நிலையில் தடுப்புண்டு மறுபக்கத்தில் விழும் விசைப்பந்தடி.

**stop'-watch**, *n.* விசையழுத்த மணிப்பொறி, ஓட்டப்பந்தயங்களில் நினைத்த கணம் துவக்குதற்கும் நிறுத்தற்கும் உரிய பொறி அமைவுடைய கைக்கடிகாரம்.

**stor'able**, *a.* குவித்து வைக்கத்தக்க.

**stor'age**, *n.* சரக்குக்குவிப்பு ; சரக்குச் சேமிப்பு முறை ; சரக்குச் சேமிப்பிடம் ; பண்டசாலைச்சரக்குச் சேமிப்புக் கட்டணம் ; மின்வலிச் சேமிப்பு ; (தொ.) cold storage, குளிர் பதனச் சேமிப்பு ; storage battery, மின்சேம கலம்.

**stor'ax**, *n.* குங்குலிய வகை, சிலாபுட்பம்.

**store**, *n.* சேமிப்புக்குவை; குவியல், பெருந்திரள்; பெருவளம், ஏராளம் ; தொகுவளம் ; பண்டாரம், களஞ்சியம் ; கிடங்கு, கொட்டாரம் ; மண்டி, சரக்குவிற்பனைக் கடை ; தனிவிற்பனை நிறுவனம்; விற்பனைக்கூடம்; திரட்சி; சேம இருப்புக் குவை; பல்பொருள் தருவிப்பரங்கம் ; வழங்கீட்டரங்கம் ; *a.* பயனுக்கிய வைப்பிருப்பான, வருங்காலப் பயனீட்டுக்குரிய ; கிடங்கினுக்குரிய ; உடனடிப் பங்கீட்டுக்குரியதாக வினைமுற்றுவிக்கப்பட்ட ; *v.* சேர்த்து வை ; தொகுத்து வை ; இருப்புவளம் திரட்டி வை ; குவித்து வை ; தற்காலிகமாகத் திரட்டி வைத்திரு ; வருங்காலத்தில் பயன்படச் சேமித்து வை ; கொட்டாரத்திலிட்டு வை ; கொள், அடங்கத்தக்கதாயிரு ; கொள்ளும் அளவுடையதாயிரு, கொள்கலமாயிரு, சேகரித்து வைக்கத்தக்கதாயிரு ; நிரப்பி வை ; செறிவளப்படுத்தி வை ; மின் ஆற்றல் வகையில் செறித்தடக்கி வை ; (தொ.) in store, ஒருங்கிய நிலையில்; வரவிருக்கும் நிலையில்; எதிர்பார்ப்பதற்கு உரிய நிலையில்; set store by, வருங்கால மிகுபயனுக்கு உரியதாகக் கருது ; பெருமதிப்புடையதாகக் கணி; மிக முக்கியமானதாக எண்ணு; store cattle, இன்னுங் கொழுக்கவைக்கப்படாத கால்நடைகள் ; store clothes, உடனணி ஆடைகள், உடனடி வழங்கத்தக்க நிலையில் செயல் முற்றுவித்த உடைகள்.

**store'house**, *n.* களஞ்சியம், பண்டகசாலை, சரக்குக் கருவூலம்.

**store'keeper**, *n.* சரக்கறைக் காவலன்; பண்டகசாலைக் காப்பாளன்; விற்பனைக் கடையாள்; விற்பனையாகாச் சரக்கு

**store'-room**, *n.* கிடங்கு, சரக்குச் சேமிப்பறை; அரங்கு; அறைவீடு; வீட்டின் பொருட் சேம அறை.

**stores**, *n. pl.* தனிப்பொருட் சேமக் குவை; பயனீட்டுச் சரக்குக் குவை; வழங்கீட்டுப்பொருள் சேகரம்; (தொ.) department stores, பணித் துறை விற்பனை நிலையம்; marine stores, பழங்கப்பலிலிருந்த சரக்குகள்; military stores, படைத்துறைத் தேவைப்பொருட் குவை; naval stores, கடற் படைத்துறைத் தேவைப்பொருட் குவை.

**store'-ship**, *n.* கடற்படைத்துறைச் சரக்குகள் கொண்டு செல்லுங் கப்பல்; படைத்துறைச் சரக்குதவிக் கப்பல்.

**stor'ey**, *n.* மாடிநிலை, கட்டிடத்தள அடுக்கு.

**stor'eyed**, *a.* மாடியுடைய; கட்டிட வகையில் அடுக்குத் தளங்களையுடைய.

**stor'ey-post**, *n.* தளக்கால், மேல்தளம் அல்லது மேல்தளச் சுவரைத் தாங்கிநிற்கும் உத்தர ஆதாரக் கம்பம்.

**stor'iated**, *a.* சித்திர அணி செய்யப்பட்ட, நுணுக்க விரிவான அணி ஒப்பனைகள் செய்யப்பெற்ற.

**stor'ied**[1], *a.* காவியப்புகழ் வாய்ந்த; வரலாற்றுப்புகழுடைய; பாடுபுகழ் வாய்ந்த; பழங்கதைக் குறிப்புக்கள் வரையப் பெற்ற; வரலாற்றுக் குறிப்புக்கள் நிறைந்த; பழங்கதையணி ஒப்பனைவாய்ந்த; வரலாற்றணி சிறந்த.

**stor'ied**[2], *a.*=storeyed.

**stork**, *n.* கொக்கு, நாரை; (தொ.) King Stork, மிகவும் கொடுமைப்படுத்தும் ஆட்சியாளர்.

**storks'-bill**, *n.* நாரையலகு போன்ற காயுடைச் செடிவகை.

**storm**, *n.* புயல், சூறாவளி; சீற்றத்தின் மூர்க்கப்பாய்வு; எறிபடைகளின் வெறிப்பொழிவு; சீறொலியின் உக்கிரவீச்சு; ஆரவாரப் புயலடிப்பு; வெறியாட்டம்; மூர்க்கத் தாக்குதல்; அரண்தாக்குப் பிடிப்பு; மக்கள் உள்ளங்களின் வகையில் முழுநிறை கவர்ச்சிவெற்றி; *v.* புயல் வகையில் குமுறியெழு; மழை வகையில் வாரியடி; பெருவளி வகையில் வீசியடி; புயல்போல் சுழற்றியடி; கடுஞ்சினத்தால் சீறியெழு; வெறியாட்டமாடு; வீறுப்புப் பேசு; ஏசிப்பேசு; உள்ளத்தின் வகையில் உட்குமுறலுறு, உட்புகைவுறு; மூர்க்கமாகத் தாக்கு; உக்கிரமாக அரண் தாக்கிப்பற்று; உள்ளங்களின் வகையில் முழுநிறை கவர்ச்சி வெற்றி நாட்டு; (தொ.) storm and stress, தனி மனிதன் வாழ்வில் அமைதியற்ற நிலை; இனவாழ்வில் அமைதியற்ற கட்டம்; storm in a teacup, அற்பப் பொருள் பற்றிய பேராரவாரம்; சிற்றிடைப் புயல்; take by storm, அரண் தாக்கிப் பிடி; முற்றுகையிட்டுக் கைக் கொள்; ஒருவரைக் கவர்ச்சியால் ஆட்கொண்டுவிடு.

**storm'-beaten**, *a.* அலைக்கழிக்கப்பட்ட; வாழ்க்கைத் தொல்லைகளுக்கு ஆட்பட்டு நைந்த.

**storm'-belt**, *n.* புயல் மண்டலம், புயல்கள் வழக்கமாக மிக அடிக்கும் பகுதி.

**storm'-bird**, *n.* கடற்பறவை வகை.

**storm'bound**, *a.* புயலால் பயணம் செய்யமுடியாமல் துறைமுகத்தினுள் அடைபட்டுள்ள.

**storm'-card**, *n.* புயல் நெறிவிளக்க வரைபடம், புயலின் போது அதன் மைய ஆற்றல் நெறிகள் கணித்துத் தருநெறி காட்ட உதவும் கடலோடியின் கணிப்பு விளக்க விவர வரைபடம்.

**storm'-centre**, *n.* புயல் மையம்; குழப்பக் கருமூலம், நெருக்கடி மையச்செய்தி.

**storm'-cloud**, *n.* புயல்மேகம்; புயல்வரவு முன்னறிவிக்கும் முகிற்கீற்று; பேரிடர் முன்னறிகுறி; இடர் விளைவிக்குஞ் செய்தி.

**storm'-cock**, *n.* பறவை வகை.

**storm'-cone**, *n.* புயற்குறிக்கூம்பு, வன்காற்று வடக்கிருந்து அடிப்பதை மேல்நோக்கியும் தெற்கிருந்து வருவதைக் கீழ் நோக்கியும் காட்டும் கீலடித்த கித்தான் கூம்புக்குறி.

**storm'-door**, *n.* வன் புற மிகைக்கதவு, புயற்காலத்துக்கென மிகையாக வெளிப்புறத்தில் அமைக்கப்பட்ட துணைக்கதவு.

**storm'-drum**, *n.* பெரும்புயல் எச்சரிக்கைக்குறி, புயற்குறிக் கூம்புடன் கடும்புயல் எச்சரிக்கையாக இணைத்துக் காட்டப் படும் வட்டுருளை அடையாளம்.

**storm'er**, *n.* முற்றுகையிட்டுத் தாக்குவோர், உழிஞையர்.

**storm'ful**, *a.* புயலார்ந்த.

**storm'-glass**, *n.* புயலாடி, வானிலைப்பொறி.

**storm'ily**, *adv.* புயலாய்; ஆர்ப்பாட்டமாய்.

**storm'iness**, *n.* புயன்மை; ஆர்ப்பாட்டம்.

**storm'ing**, *n.* முற்றுகை; *a.* முற்றுகையில் ஈடுபட்டிருக்கிற; திடீர்த்தாக்குதலுக்குரிய.

**storm'ing-party**, *n.* தாக்கணி, தாக்க ஆணை தரப்பெற்ற படைப்பிரிவு.

**storm'less**, *a.* புயலற்ற.

**storm'-pet'rel**, *n.* கடற்பறவை வகை.

**storm'proof**, *a.* புயற்காப்பான; புயலாற் சேதமுறாத; புயல் தாங்க அமைக்கப்பட்ட.

**storm'-sail**, *n.* திண்ணிய சிறு கப்பற்பாய்.

**storm'-signal**, *n.* புயல் எச்சரிக்கை அடையாளம்; பெரு நிகழ்வின் தொடக்கம்.

**storm'-tossed**, *a.* புயலால் அலைக்கழிக்கப்பட்ட; இடர்களால் மொத்துண்ட.

**storm'-trooper**, *n.* அதிர்ச்சிப்படையின் வீரன்; இரண்டாம் உலகப்போரில் நாசி செர்மன் மின்னல் தாக்குப்படையின் வீரன்.

**storm'-troops**, *n. pl.* திடீர் அதிர்ச்சிப் படைப்பிரிவுகள்; இரண்டாம் உலகப் போரில் நாசி செர்மன் மின்னல் தாக்குப் படைப்பிரிவுகள்.

**storm'-wind**, *n.* கடும்புயற்காற்று.

**storm'-window**, *n.* வன் புற மிகைச்சாளரம், புயற்காலக் காப்பாகப் பலகணியுடன் மிகையாகப் புறத்தே அமைக்கப் படும் பலகணி.

**storm'y**, *a.* புயலார்ந்த; அடிக்கடி புயல் எழுகின்ற; புயல் எழும் நிலையில் உள்ள; புயல்போற் குமுறியெழுகிற; கொந்தளிப்பான; அமைதியற்ற; அடங்காத; கடுந்திறலார்ந்த; ஆரவார ஆர்ப்பாட்டமான.

**storm'-zone**, *n.* புயல் மண்டலம், புயல்செல்லும் பகுதி.

***stor'ting, stor'thing***, *n.* நார்வே நாட்டு மாமன்றம்.

**stor'y**[1], *n.* கதை; நிகழ்ச்சி; செய்தி; நிகழ்ச்சி விவரம்; விரிவுரை; விளக்கம்; ஆதாரச்செய்தி; ஆற்றொழுக்கான தொடர்செய்திக் கோவை; முழுநிலைப் பின்னணி விளக்கம்; சென்ற கால வரலாறு; தோற்ற வளர்ச்சி விவரம்; கதைக் கூறு, இலக்கியப் படைப்பில் நிகழ்ச்சிக்கூறு; பத்திரிகை எழுத்தாண்மைக்கூறு; பத்திரிகைச்செய்தி; பத்திரிகைக் கட்டுரை; நொடிக்கதை, உபகதை; இடைநிகழ்ச்சி; துணுக்குரை; அருஞ்சுவைதரும் விளக்கம்; கேள்விச்செய்தி; அறிவிப்பு; வாய்மொழிக் கூற்று; சாட்டுரை; புனைவுரை, சார்பு வாய்மொழி; நம்பமுடியாச் செய்தி; பழங்கதை, காலங் கடந்த செய்தி; பலரறி செய்தி; பேர்போன செய்தி; கட்டுக் கதை; பொய், புளுகு; அருங்கதை; புனைகதை; (தொ.) short story, சிறுகதை, குறுங்கதை, ஒரே நிகழ்ச்சியைக் கொண்டு புனையப்பெற்ற சிற்றிலக்கியக் கதைப்படைப்பு; to make a long story short, சுருக்கிக் கூறுவதானால், விவரங்களை விட்டு விட்டுக் குறிப்பாகப் புலப்படுத்துவதானால், குறிப்பாக.

**stor'y**[2], *n.*=storey.

**story'-book**, *n.* கதைப்புத்தகம்.

**stor'y-maker,** *n.* கதைஞர்.

**stor'y-making** *n.* கதைக்கலை.

**stor'y-poem,** *n.* காதை, கதைப்பாடல்.

**stor'y-teller,** *n.* கதை கூறுவோர்; கதைஞர், கதைகூறு கலைஞர்; கதை எழுத்தாளர்; கதையளப்பவர்; குழந்தை வழக்கில் பொய்யர், புளுகர்.

**stor'y-telling,** *n.* கதைக்கலை.

**stot,** *n.* (பே-வ.) இள எருது; இளங்காளை.

**stoup,** *n.* குடுவை; குடிகலம்; இன்தேறல் மேசைக்கலம்; தீர்த்தக்கெண்டி.

**stout,** *n.* வீரியமிக்க கடுந்தேறல் வகை; *a.* தடித்த; முரடான; பருத்த உடலுடைய; கட்டுடல் வாய்ந்த; திடமான; வலிமை வாய்ந்த; வீரமிக்க; அஞ்சாத்தக்க; வெல்ல முடியாத; துணிவுமிக்க; உரமிக்க; ஊக்கமுள்ள; மனவுறுதி வாய்ந்த; இணங்கிப்போகாத; பிடிவாதமுள்ள; (தொ.) a stout heart, உறுதியான நெஞ்சு; நெஞ்சுரம்; தீரம்; stout fellow, வெல்ல முடியாதவன்.

**stout'heart'ed,** *a.* நெஞ்சுரமிக்க; வீரமிக்க; உளவலிமை வாய்ந்த.

**stout'-heart'edly,** *adv.* நெஞ்சுரத்துடன், தீரமாக; விடாப் பிடியுடன்.

**stout'-heart'edness,** *n.* நெஞ்சுரமுடைமை; உளவலிமை யுடைமை; வீரமுடைமை.

**stout'ish,** *a.* தோற்றத்தில் பருத்த; ஓரளவு தடித்த.

**stout'ly,** *adv.* விடாப்பிடியாய், உறுதியுடன்.

**stout'ness,** *n.* பருத்ததன்மை, தடிப்பு; விடாப்பிடியுடைமை, உறுதிப்பாடு.

**stove[1],** *n.* கணப்படுப்பு; செயற்கை வெப்ப வீடு; *v.* செயற்கை வெப்ப வீட்டில் வளரச்செய்.

**stove[2],** *v.* stave என்பதன் இறந்தகால வடிவங்களில் ஒன்று.

**stove'-pipe,** *n.* கணப்படுப்புப் புகைசெல் குழாய்; (தொ.) stove-pipe hat, உயரமான பட்டுத்தொப்பி.

**sto'ver,** *n.* தீவனம், மாத்தீனி.

**stow,** *v.* செம்மிவை, நன்கு செருகி ஒழுங்குபடுத்திவை; வாய்ப்பாகத் திணித்து வை; சேகரித்து வை; (இழி.) விலக்கித்தள்ளு, பழக்கத்துக்கு இடங்கொடாதிரு; (தொ.) stow away, கப்பலில் கடலிற் செல்லும்வரை கட்டணங் கொடாமல் ஒளித்திரு.

**stow'age,** *n.* தொகுப்பு; தொகுப்பறை; தொகுப்புக் கூலி.

**stow'away,** *n.* கட்டணமில்லாக் கரவுப்பயணி, கப்பலிற் கட்டணமில்லாமலே ஏறி ஒளிந்திருப்பவர்.

**stow'-wood,** *n.* செம்மு கட்டை.

**strabis'mus,** *n.* மாறுகண் பார்வை, ஓரக்கண்ணுய்ப் பார்த்தல்; மாறுகண்.

**strabot'omy,** *n.* விழிவெட்டறுவை, ஓரக்கண் பார்வை நீக்க விழிமண்டலம் பிளக்கும் கண் அறுவை.

**strad'dle,** *n.* இடப்பு, கால்பரப்பிய நிலை; அகட்டமர்வு, கால் விரித்துட்காரும் நிலை; கவட்டுநடை, கால்பிளந்த நடை; அருவருப்பான நிலை; அருவருப்பான போக்கு; இருவழிப் படர்வு, தொட்டுத்தொடா நிலை, இரண்டுங்கெட்ட நிலை; கவர்வுநிலை, வேட்டு வகையில் முன்பின் கவிவுநிலை; வரை கவிவுக் குத்தகை, பங்குக்கள வகையில் குறிப்பிட்ட விலையில் வாங்கவும் விற்கவும் உரிமையளிக்குங் குத்தகை; சுரங்கப் பகுதி ஆதாரக்கம்பம்; *v.* இடவு, கால்பரப்பிக்கொண்டிரு; அகட்டித்தமர்; கவட்டித்து நட; கால்பரப்பிக் குதிரைமீ திவர்ந்து செல்; இரண்டுங்கெட்ட நிலை குறி, ஆற்றிலொரு கால் சேற்றிலொரு காலாக நில்; அகலப்பரப்பி வை; பரவலாக வேட்டிடு, முன்பின் கவித்து வேட்டிடு; பரவலாக வேட்டிட்டுக் கண்கண்ணுகத் துணை, வேட்டிட்டுப் பரவலாகத் துளைகளிட்டு நிரப்பு.

**strafe,** *n.* பரவல் குண்டுவீச்சு; குண்டுவீச்சுத் தொல்லை; உதிர் வேட்டெறிவு; தாக்குதல்; கண்டனம், கடிந்துரை; அடி, உதை; வசவு; *v.* பரவலாகக் குண்டுவீசு; உதிர் வேட்டிடு; குண்டு வீசித் தொல்லை கொடு; தாக்கு; கண்டி, கடிந்துரை.

**strag'gle,** *v.* பிரிந்துசெல்; வழிவிலகிச்செல்; சிதறிச்செல்; குறிக்கோளின்றித் திரி; இங்குமங்குமாகச்செல்; கட்டுக் குலைவுறு; இங்கொன்றுமங்கொன்றுமாயிரு; இடையிடையே நிகழ்; செடியின வகையில் நீண்டு கிளையாக வளர்.

**strag'gler,** *n.* அலைந்து திரிபவர்; திட்டமின்றிச் செல்பவர்; வழிவிலகிச் செல்பவர்; பிரிந்து செல்பவர்; கலைந்து செல்பவர்.

**strag'gling,** *n.* அலைந்து திரிதல்; *a.* அலைந்து திரிகிற; திட்டமின்றிச் செல்கிற; வளைந்து வளைந்து செல்கிற; சிதறலான, இங்கொன்றும் அங்கொன்றுமான.

**strag'glingly,** *adv.* அலைவுதிரிவாக; வளையவளைய; இங்கொன்றும் அங்கொன்றுமாக; சிதறலாக; படரலாக.

**straight,** *n.* நேர்நிலை; ஓட்டப்பந்தய நேர்நெறி; ஓட்டப் பந்தய நேர்நெறிப்பகுதி; ஓட்டப்பந்தய இறுதி நேர்நெறிக் கட்டம்; நேர்வான்நெறி; நேர்வான் நெறிப்பகுதி; சீட்டாட் டத்தில் நேரெண் வரிசை; நெறி நேர்மை, நன்னடத்தை; *a.* நேரான; வளையாத; கோணாத; ஒரே திசையில் செல்கிற; திசை திரும்பாத; நெறி விலகாத; குறி நேரான, குறி வகையில் இலக்குத் தவறாத; அடி வகையில் குறி தவறாத; மூலத்திலிருந்து நேர்வரவான; சரியான; நேர்மட்டமான; செவ்வான; செவ்விசைவான; சரிசமமான; நேரடியான; சுற்றிவளைக்காத; உடனடியான; நேர்முகமான; மறைமுக மல்லாத; சரி ஒழுங்கான; ஒழுங்கு வழாத; விதிமுறை பிசகாத; நேர்மை வாய்ந்த; கரவடமற்ற; சூதுவாதற்ற; நடத்தை வகையில் நெறி திறம்பாத; திறந்த மனப்பான்மை யுள்ள; நேர்நிமிர்வான; சரியாத; வளைந்து கொடுக்காத, விட்டுக்கொடுப்பற்ற; மட்டுமழுப்பற்ற; தருக்கமுறை பிற ழாத; உணர்ச்சிவசப்பட்டு வழுவாத; போட்டி வகையில் நேர்மை தவறாத; மாறுதலற்ற; எளிய; சிக்கலற்ற; கலப் பற்ற; நீராளமாக்கப்படாத; தேறல் வகையில் கலப்பட மல்லாத; சீட்டாட்ட வகையில் எண் நேர்வரிசைப்பட்ட; *v.* நேராக்கு; *adv.* நேர்கோடாக; நேர்வரிசையாக; வளையா மல்; கோணாமல்; வளைந்து வளைந்து செல்லாமல்; குறுக்கு வெட்டாக; ஒழுங்காக; நேரடியாக; உடனடியாக; சரி யான திசையில்; நேராக; சரியாக; தயக்கமில்லாமல்; குறி நோக்கி நேரே; நிமிர்வாக; நேர்மட்டமாக; மட்டுமழுப்ப லின்றி; நேர்மையுடன்; கரவடமின்றி; நெடுகிலும், முழுதுங் கடந்து; (தொ.) a straight fight, முழுமுச்சுச் சண்டை; நேரடிச் சண்டை; நேரடி மோதல்; put things straight, சிக்கல் தீர், சரிசெய், ஒழுங்குபடுத்து; ride straight, சுற்றி வளைத்துச் செல்லாமல் வேலிகளைத் தாண்டிச்செல்; straight arch, கூரிய இருநேர்பக்கமுள்ள கவான் வளைவு; straight eye, நேரினின்று சிற்றிழை கோடுவதையும் நுணுகிக் காணவல்ல கண்பார்வையாற்றல்; straight face, கடுத்த முகம்; straight hair, கோரை முடி, சுருளற்ற நேர்முடி; straight jet, சுழல் விசிறியற்ற பீற்று விமானம்; straight legs, தெற்றுக் காலற்ற நிலை, நேரான கால்கள்; straight off, தயக்கமின்றி; சுணக்கமின்றி; straight thinking, தருக்கமுறைப்பட்ட சிந்தனை; உணர்ச்சிகளால் ஊசலாடாத சிந்தனை; straight tip, ஓட்டப்பந்தயம் பற்றிய நம்பத்தக்க உயர்தளத்திலிருந்து பெற்ற செய்திக்குறிப்பு; the straight ticket, திரிபு மாறு பாடுகளற்ற கட்சி நடைமுறைத் திட்டம்.

**straight'-cut,** *a.* புகையிலை வகையில் பட்டிழைபோன்று நெடுகலான துய்களாக வெட்டப்பட்ட.

**straight'-edge,** *n.* நேர்நுட்பக்கோல், ஆய்வியல் முறையில் நேர்நுட்பமான ஒருபுறம் கொண்ட அளவுகோல்.

**straight'-eight,** *n.* எண்வட்டு உந்துகலம், வரிசையாக எட்டு நீளுருளைகளைக்கொண்ட மோட்டார்வண்டி.

**straight'en,** *v.* நேராக்கு; வளைவை நிமிர்த்து; நேராகு.

**straightfor'ward,** *a.* நேர்மையுள்ள, கபடமில்லாத, ஒளிவு மறைவற்ற; செயல் வகையில் சிக்கலற்ற, குழப்பமற்ற.

**straightfor'wardly,** *adv.* நேராக; ஒழுங்காக, கபடமின்றி, ஒளிவுமறைவின்றி, சிக்கலின்றி.

**straightfor'wardness,** *n.* ஒளிவுமறைவின்மை; கடமை-செயல் முதலியவற்றில் சிக்கலின்மை.

**straight'way,** *adv.* உடனே, உடனடியாக.

**strain,** *n.* இழுவை, நெட்டிழுப்பு; இழுவிசை, இழுவை யாற்றல்; பளுத்திறம், பளுமானம்; விசை அழுத்தம்; விசைப்பேற்றம், ஆற்றல் சுமை; நலிவு, விசைப்பேற்றத் தளர்வு; விசைப்பேற்றக் கட்டிரிவு; முயற்சிக்கடுமை; உழைப்புத்திறக் கடுமை; செயற்கைத்திறக் கூறு; செயற்கைத் திறத் தோற்றம்; உழைப்பலுப்பு; படுகளை, நலிசோர்வு; மிகுமுயற்சி, வழக்கமீறிய முயற்சி; சிரமம்; சுளுக்கு; பண்ணிசைக்கூறு; பா ஓசைக்கூறு; வாசகப்போக்கு; தொனி; பாங்கு; பாணி; முறை; வகை; இயற்கூறு; மரபுக்கூறு; மரபுக் கால்வழி; மரபுக் கால்வழிக் கூறு; பண்புக்கூறு; இயல்புக்கூறு; *v.* இழு; வலித்திழு; கடுமுயற்சி செய்; கடுமுயற்சியுடன் நாடு; பெருநெருக்கடிகளுக்கிடையே முயலு; நேரெதிர்ப்புகளுக்கிடையே அருமுயற்சி செய்; ஆனமட்டும் முயலு; மட்டுமீறி முயற்சி செய்; முழுதும் ஈடுபடு; காரியம் கெடும் அளவுக்கு எல்லைகடந்து முயலு; எல்லைகடந்து ஈடுபடுத்திக் கெடு; திருகு; பிழிந்தெடு; பொருள் திரித்து மாற்று; நோக்கம் திரித்து வேறுபடுத்து; ஆவி அணைத்துக்கொள்; இறு, அரிப்பிலிட்டு வடித்திறு; அரித்தெடு, இறுத்தெடு; நீர்ம வகையில் அரிப்பினூடாக வடி; (தொ.) a strained interpretation, a strained sense, வலிந்து கொள்ளப்படும் பொருள்; on the strain, முழு ஆற்றலும் ஈடுபடுத்தப்பட்ட நிலையில்; strain a point, தகுதி எல்லைகடந்து வலியுறுத்து, விதியை வலிந்து திரித்துச் சலுகைகளைப் பெருக்கிக்கொள்; மனச்சான்று வற்புறுத்தலைத் தட்டிக்கழி; strain at; strain out, விதிமுறை எண்ணிக் கடுந்தயக்கம் காட்டு; strain courtesy, மட்டுமீறி வணக்கமுறை காட்டு; பண்பின்றி நட.

**strained,** *a.* வலிந்து தோற்றுவிக்கப்பட்ட; வற்புறுத்திச் செய்யப்பட்ட; வலுக்கட்டாயத்திலு லுண்டான; முயன்று மேற்கொள்ளப்பட்ட; செயற்கைத்தன்மை வாய்ந்த; தன்னியலானதல்லாத; (தொ.) ship is strained, கப்பற்பகுதிகள் நிலைதிரிக்கப்பட்டுள்ளன; strained relationship, உள் முறிந்த உறவு; நீடிக்கமுடியாது நிலைதிரிந்த உறவு; செயற்கைத்தன்மை வாய்ந்த தொடர்பு.

**strain'edly,** *adv.* வலிந்து; செயற்கையாய்.

**strain'er,** *n.* அரிப்பவர்; அரிப்பது; அரிப்பு; சல்லடை வடிதட்டு, சிப்பல்.

**strain'ing-beam, strain'ing-piece,** *n.* (கப்.) இடைக் கூம்புவிட்டம், மோட்டு விட்டக்கூம்பின் இரு நிமிர்கால்களை இணைக்கிற கிடைமட்ட உத்தரம்.

**strains,** *n. pl.* இசை; பா; இசையெழுச்சி; கவிதையாப்பு; (தொ.) inspiriting strains, எழுச்சியூட்டும் இசை; உயிர்ப்பூட்டும் செய்யுள்; martial strains, போர் ஆர்வமூட்டும் இசை; போர்வீரமூட்டும் கவிதை; pathetic strains, துயரார்ந்த பண், சோக இசை; அவலச்சுவைக் கவிதை.

**strait,** *n.* கடற்கால், கடல் இடுக்கு; நீர்க்கால், இருநீர்நிலைகளின் இடைகழி; *a.* இடுக்கமான, ஒடுங்கிய; எல்லைக்குட்பட்ட; இடுக்கப்பட்ட; இடுக்குகிற; கட்டிறுக்கமான; சூழ்ந்திறுக்குகிற; கடுமையான; (தொ.) Straits Settlements, மலாக்கா சிங்கப்பூர் முதலிய பகுதிகளை உள்ளடக்கிய பழைய பிரிட்டிஷ் ஆட்சிப்பகுதி; the Straits, மலாக்கா கடற்கால்.

**strait'en,** *v.* கட்டுக்குள் இறுக்கு; இடுக்கு; இடுகலாக்கு; இன்னலுக்கு உட்படுத்து.

**strait'ened,** *a.* இடுக்கப்பட்ட, நெருக்கடிக்கு ஆட்பட்ட.

**strait'-laced,** *a.* கடுமையான ஒழுக்கக் கண்டிப்புடைய; பகட்டான மயிரிழை விதிமுறைக் கண்டிப்புடைய; கடுஞ் சமயத்தூய்மையுடைய; ஒழுக்கமுறைக் கசடான; குறுகிய நடைமுறைக் கொள்கையினையுடைய; பெண்டிர் வகையில் போலிப்பயிர்ப்புடைய, பகட்டு நாணமுடைய.

**straits,** *n. pl.* இக்கட்டான நிலை, இடைஞ்சல்; வறுமை, நல்குரவு; துன்பம்.

**strake,** *n.* நீள்வரிப்பட்டி, கப்பலின் முன்பகுதியிலிருந்து பின் பகுதி வரையுள்ள தொடர்ச்சியான பலகை அல்லது தகட்டு அடைப்பு.

**stramin'eous,** *a.* வைக்கோல் சார்ந்த, வைக்கோல் போன்ற; வைக்கோல் நிறமுடைய; நொய்தான; பயனற்ற, கவைக்குதவாத.

**stramon'ium,** *n.* ஊமத்தைச்செடி வகை; ஊமத்தை இலை-காயிலிருந்து எடுக்கப்படும் கபநோய் மருந்து.

**strand**[1], *n.* கடலோரம்; ஏரிக்கரை; ஆற்றங்கரை; *v.* கப்பல் வகையில் தரைதட்டு; இக்கட்டுட்படுத்து; முடைப்படுத்து; தனியே துணையின்றி விட்டுச்செல்.

**strand**[2], *n.* புரியிழை, முறுக்கிழை; உட்கூறு, கூட்டின் ஓர் ஆக்கக்கூறு; *v.* அவிழ், ஒரு புரியைப் பிரித்தெடு.

**strand'ed,** *a.* இக்கட்டினுட்பட்ட; பொருள்முடையால் செயலிழந்த; கருவியின்றிச் செயலற்றுள்ள; தனித்துப் பின் தங்க விடப்பட்ட.

**strange,** *a.* நொதுமலான, முன்பின் தெரியவராத; பழக்கமற்ற; பழக்கப்படாத; எதிர்பாராத; தனக்குரியதல்லாத; இனமறியப்படாத; அன்னியமான; வழக்கமீறிய; பொதுப்பண்பு கடந்த; பொதுநிலை மீறிய; புத்தியல்பு வாய்ந்த; தனிப்பட்ட தன்மை வாய்ந்த; தனிப் போக்குடைய; விசித்திரமான; இயற்கைக்கு மாறுபட்ட; இயல்பு திரிந்த; விளங்காத; காரணங் கூறமுடியாத; தடுமாற்றந் தருகிற; (தொ.) make it strange, இடர்ப்பாடுகளை உண்டாக்கிக்கொள், விருப்பமின்மை காட்டு; strange woman, பரத்தை, விலைமகள்.

**stran'ger,** *n.* வெளியார்; வெளிநாட்டவர்; தொலை நாட்டவர்; தொலை ஊரினர்; பழக்கமற்றவர்; புதியவர்; ஏதிலார்; புதுவட்டாரத்தவர்; புதுவரவாளர், விருந்தினர்; உறவினரல்லாதவர்; புதிது பிறந்த குழந்தை; உறுப்பினரல்லாதவர்; அக்கறையற்றவர்; அக்கறைக்குரியவரல்லாதவர்; பழகாதவர்; விவரமறியாதவர்; அறியாதவர், தெரியாதவர்; விருந்து குறிப்பதாகக் கருதப்படுஞ் செய்தி.

**strang'le,** *v.* குரல்வளை நெரி; சங்கை நெரித்துக் கொல்; மூச்சுத் திணற அடித்துக் கொல், திக்குமுக்காட வை; கழுத்துப்பட்டிகை வகையில் கழுத்தை அழுத்து; இயக்கம்-உணர்வு வகையில் அடக்கு, வெளிவிடாது கீழ்ப்படுத்தி வை.

**strang'lehold,** *n.* சாப்பிடி, வர்மப்பிடி; அரசியல் துறையில் தனியார் ஆதிக்கப்பிடி; செல்வத்துறையில் தனிமனிதர் ஆக்க அழிவுக் கைப்பிடி.

**strang'les,** *n. pl.* குதிரை-கழுதை ஆகியவற்றின் நீர்க் கோப்புத் தொற்றுநோய்.

**strang'le-weed,** *n.* ஒட்டுயிர்ச்செடி வகை.

**strang'ulate,** *v.* கழுத்தை நெரித்துக் கொல்; அழுத்தி இயக்கந் தடு; (மரு.) அழுத்தமூலம் குருதியோட்டந் தடு.

**strang'ulated,** *a.* நெரிவுற்ற, வழி இடுங்கிய.

**strangula'tion,** *n.* அமுக்கம், அழுத்தத்தடை.

**strang'ury,** *n.* நீர்க்கடுப்பு நோய்; சூடுபிடிப்புக் கோளாறு; கட்டுக்கோளாறு, கட்டுப்போடுவதால் செடிகளில் உண்டாகும் நோய்.

**strap,** *n.* வார்; தோல்பட்டை; உலோகப்பட்டை; இணைப்புக் கீலின் தகடு; (தாவ.) சிறுமலர் வகைகளின் நாக்கு வடிவப் பகுதி; *v.* வாரினுற் கட்டு; பட்டையினுல் இணை; கசை வாரால் அடி; தோல்வாரில் கத்தி தீட்டு; (மரு.) அறுவைக் காயத்தின் பகுதிகளை ஒட்டுப்பசை வாரால் இணைத்துக்கட்டு; (தொ.) the strap, கசையடி.

**strap'-hanger,** *n.* வார்தொங்கலர், உந்துவண்டி-புகைவண்டி ஆகியவற்றில் நின்று செல்லும் பயணர்.

**strap'-laid,** *a.* கயிற்று முடைவான, பட்டை முடைவான.

**strap'less,** *a.* உடை வகையில் தோட்பகுதியற்ற.

**strap'-oil,** *n.* கசையடி.

**strappad'o**, *n.* முற்கால வார்த்தொங்கீட்டுத் தண்டனை; *pl.* strappad'os; *v.* வார்த்தொங்கீட்டுத் தண்டனையால் சித்திரவதைக்கு ஆளாக்கு.

**strapped**, *a.* வாரிட்ட.

**strapp'ing**, *n.* கசையடி வாரால் அடித்தல்; வார்த்தொழில் மூலப்பொருள்; வார்க்கட்டை; பட்டையினால் இணைப்பு; கட்டுறுதிப் பட்டை; *a.* தாட்டியான, நெட்டுறுதியான, கட்டுறுதியுடைய.

**strap'work**, *n.* வார்முடைவுப் போலி அணி ஒப்பனை.

**strap'-wort**, *n.* களைச்செடி வகை.

**strass**, *n.* மணிக்கற் களி, செயற்கை மணிக்கற்கள் செய்ய உதவும் பசை.

**strat'a**, *n. pl.* அடுக்குகள், படுகைகள்; சமுதாய வகுப்புப் படிகள்; (மண்) நில அடுக்குப்படிவம். (தொ.) strata of society, சமுதாயத்தின் வகுப்புப் படிநிலைகள்.

**strat'agem**, *n.* சூழ்ச்சித்திட்டம்; தந்திரம்.

**strate'gic**, *a.* போர்த்திறஞ் சார்ந்த; போர்த்திற முக்கியத்துவம் வாய்ந்த; போர்த்திற நோக்கங்கொண்ட; போர்த்திற நடவடிக்கைக்குப் பயன்படத்தக்க; போர்த்திற நடவடிக்கை சார்ந்த; குண்டுவீச்சு வகையில் எதிரியின் பொருளியல் நிலைமன அமைதிநிலை ஆகியவற்றைச் சீர்குலைக்கும்படி திட்டமிடப்பட்ட.

**strate'gist**, *n.* போர்த்திற வல்லுநர், படையாட்சி நடவடிக்கைகளில் தேர்ந்தவர்; போர்த்திறம் வாய்ந்தவர்.

**strateg'us**, *n.* போர்முறைத் தலைவர்; பண்டைக்கிரேக்க நாட்டு ஏதென்ஸ் நகரில் ஆண்டுக்கொருமுறை அமர்த்தப்படும் படைத்தலைவர் பதின்மருள் ஒருவர்; *pl.* strate'gi.

**strat'egy**, *n.* படைத்தலைமைத்திறம்; போர்முறைத்திறம்; படை நடத்துமுறை; போர்க்கலை; சூழ்ச்சிமுறை.

**strath**, *n.* அகன்மலைத்தாக்கு, அகன்ற மலைப்பள்ளத்தாக்கு.

**stratic'ulate**, *a.* (மண்.) அடுக்கியலான, அடுக்கடுக்குப் படுகைகளாக அமைந்துள்ள.

**stratifica'tion**, *n.* அடுக்கமைவு, அடுக்கடுக்கான படுகைகளாக அமைதல்.

**strat'ified**, *a.* படுகைகளாக அமைந்த.

**strat'iform**, *a.* அடுக்கியல் வடிவான, படுகையடுக்குக்களையுடைய; அடுக்கியற் படிவுடைய, படுகையடுக்குக்களாக உருவாகிற.

**strat'ify**, *v.* படுகைகளாக உருவாக்கு; படுகை அடுக்குக்களாகப் படிவுறுத்து; அடுக்கடுக்காக அமைவி.

**stratig'raphy**, *n.* அடுக்கியற் படிவாய்வு; அடுக்கியற் படிவாக்கக் கூறுகளின் தொகுதி.

**strato-ci'rrus**, *n.* மங்கல் பஞ்சியல் பாவடிமுகில்.

**stratoc'racy**, *n.* படைத்துறை ஆட்சி; படைவீரர் ஆதிக்கம்.

**strat'ocruiser**, *n.* மீவளி மண்டல வானூர்தி, வளிமண்டலத்தின் மேன்முகட்டுத் தளத்திற்குச் செல்லத்தக்க விமானம்.

**strato-cum'ulus**, *n.* பாவடித்திரள் குவிமுகில், மழை பெயலற்ற திரள் குவிமுகில்.

**strat'osphere**, *n.* மீவளி மண்டிலம், தட்பவெப்பநிலை உயரத்திற்கேற்ப மாறுமல் நிலையாக இருக்கும் வளி மண்டிலத்தின் ஏழு கல்லுயரத்திற்கு மேற்பட்ட அடுக்கு.

**stra'tose**, *a.* படுகைகளாக உள்ள.

**strat'um**, *n.* அடுக்குப் படுகை; (மண்.) நில அடுக்கு, படிநிலைப்பாளம்; சமூகத்தரம், சமுதாயப் படிநிலை; *pl.* strat'a.

**strat'us**, *n.* பாவடி முகில், தளமட்ட நிலையிலுள்ள தொடர் மேகப் படலம்; *pl.* strat'i.

**straw**, *n.* வைக்கோல்; அரிதாள்; கூரைவேய் புல்; தொப்பி முடைவதற்கான வைநூர்; படுக்கை பின்னுவதற்கான வைக்கோலிழை; (தொ.) catch at a straw, மூழ்காமல் காக்கச் சிறுதுரும்பையும் பிடி, பேரிடரில் சிறுதிற உதவியையும் ஆர்வமாக நாடு; in the straw, பேறுகால நிலையிலுள்ள; make bricks without straw, போதிய வசதியின்றி வேலை செய்யத் தொடங்கு; man of straw, வைக்கோற் பொம்மை, எதிரியாக வைக்கப்பெற்ற கற்பனை மனிதன்; போதுமான வாழ்க்கை வளமற்ற ஆள்; straw vote, சோதனைக்காக நடத்தப்படும் முறைசாரா வாக்கெடுப்பு; the last straw, கடைசித் துரும்பு, கடைசிப் பீலி.

**straw'berry**, *n.* வெங்நிற விதைகள்கொண்ட சிவப்புப் பழவகை; பழச்செடி வகை; பழமர வகை; (தொ.) the strawberry leaves, கோமகன் படிநிலை; கோமகன் முடியிலுள்ள இலையடையாளக் குறி.

**straw'berry-mark**, *n.* செம் மறு, மென்சிவப்புநிறமான உடலின் நிலை மச்சம்.

**straw'-board**, *n.* வைக்கோல் அட்டை.

**straw'-colour** [1], *n.* வைக்கோல்நிறம், வெளிறுமஞ்சள்நிறம்.

**straw'-colour** [2], **straw'-coloured**, *a.* வெளிறிய மஞ்சள் நிறமான.

**straw'-plait**, *n.* வைக்கோல் புரியிழை, வைக்கோல் தொப்பிப் புரியிழை.

**straw'-rope**, *n.* வைக்கோல்புரி.

**straw'-stem**, *n.* உருவடித்தண்டு, தேறல் குடிகலத்தில் உருவி உருவாக்கப்படும் அடித்தண்டு; உருவடிக்குவளை; உருவடித்தண்டுடைய குடிகலம்.

**straw'-worm**, *n.* நீர்வாழ் முட்டைப்புழு வகை.

**straw'y**, *a.* வைக்கோலாலான; வைக்கோல் போன்ற.

**straw'-yard**, *n.* வைமுற்றம், கால்நடைகளுக்காக வைக்கோல் தூவப்பட்ட முற்றம்.

**stray**, *n.* அனாதைக் கால்நடை; திரிவிலங்கு, உடையவரற்ற விலங்கு; திக்கற்றவர், இருப்பிடமற்றவர்; அனாதைக் குழந்தை, கவனிப்பாரற்ற பிள்ளை; கேட்பாரற்ற பொருள்; மரபுரிமையற்று அரசாங்கத்திற்கு உடைமையாகும் பொருள்; *a.* சுற்றித்திரிகிற; குறிக்கோளின்றி அலைகிற; சிதறலான, பரவிய; இடைவிட்டு நிகழ்கிற, விட்டுவிட்டு நிகழ்கிற; அவ்வப்போது நிகழ்கிற; அவ்வப்போது காணப்படுகிற; அவ்வப்போது வருகிற; எதிர்பாராது நிகழ்கிற; *v.* மந்தையை விட்டுப் பிரிந்து போ; இடத்தைவிட்டு விலகிப்போ; வழி தவறிப் போ; சுற்றித்திரி; அலைந்துதிரி; நெறிகெட்டு அலை; நடத்தை கெட்டு அலை; ஒழுக்கப்பாதை தவறி நட.

**strays**, *n. pl.* வானொலித்துறை இடைத்தடங்கலொலி.

**streak**, *n.* கீற்று, நீண்டு மெலிந்த ஒழுங்கற்ற கோடு; ஒளி வரை; ஒளிநிற வரி; மின்வரி; விளிம்பொளி வரி, நிறத்தால் வேறு பிரித்தறியக்கூடிய விளிம்பு; வண்ணக்கோடு, பின்னணியிலிருந்து நிறவேறுபாடுடைய கோடு; பளீரொளி; சிறு கூறு; சிறுவிளிம்புக் கூறு; *v.* வரிகள் இடு; நிறக் கீற்றுக்களிடு; வண்ண விளிம்பிட்டுக் காட்டு; மின்னல்போல் விரைந்து செல்; (தொ.) have a silver streak, முகில் வகையில் ஒளிவரை உடையதாயிரு; தீங்குகள் வகையில் சிறிதேனும் நலம் உடையதாயிரு; துயர்வகையில் சிறிது நம்பிக்கை ஒளி உடையதாயிரு; like a streak, like a streak of lightning, விரைவாக, வேகமாகத் தோன்றி மறையும் நிலையில்.

**streaked**, *a.* கோடிட்ட; ஒளிக் கோடிட்ட; வண்ணக் கோடுடைய; ஒளிக்கோடு வாய்ந்த; சிறுகூறுகக் கலந்த.

**stream**, *n.* ஓடை; சிற்றாறு; ஆறு; வெள்ளம்; ஆற்றோட்டம்; வெள்ளப்பாய்வு; நீரொழுக்கு; நீர்த்தாரை; கடல் நீரோட்டம்; நீர்ம ஒழுக்கு; காற்றொழுக்கு; பாய்வளி; பொருள்களின் பாய்விசை ஒழுக்கு; பொதுப்போக்கு; செலவு; தொடர் இயக்கம்; மக்கட் புடைபெயர்ச்சி; பாய்ந்துசெல்லுந் திரள்; *v.* ஒழுகு; பாய்; பாய்ந்தோடு; நீரோடைவகையில் ஒழுகிச் செல்; பாய்ந்து செல்; ஒழுகிச்சென்று விழு; பாய்ந்துசென்று கல; நீரோடு செல்; மிதந்துசெல்; மிதந்தோடு; மிதந்து பரவு; நீரோடைபோல் பாய்வுறு; காற்றில் மிதந்துசெல்; காற்றில் பற; காற்றில் அலையாடு; தொங்கலாகக் காற்றில் வீசிப் பற; அரிப்பிடு, கனிப்பொருளுக்காகக் கலவைமண்

அலம்பு; கதிர்கள் வகையில் பரவிச்செல்; குருதிவகையில் பீறிட்டுப்பாய்; குருதிவகையில் கசிந்தோடப் பெறு; கண்ணீர் வகையில் வழிந்தோடப்பெறு; மழைநீர் வகையில் ஒழுகியோடப் பெறு; நீண்டுசெல், நீண்டிரு; தொடர்புறு; தோன்றிப் படர்; (தொ.) down stream, ஆற்றோடு, ஆற்றின் விழுவாய் நோக்கி; go with the stream, ஆற்றுப்போக்கிலே போ; எல்லோரும் போகிற போக்கில் செல்; பிறர் செய்வது போல் செய்; up stream, ஆற்றோட்டத்திற்கெதிராக, ஆற்றின் தலைவாய் நோக்கி.

**stream'-anchor,** *n.* இழுவை நங்கூரம், கப்பலை நிலநோக்கி இழுக்கும்போது பயன்படும் சிறு நங்கூரம்.

**stream'er,** *n.* காற்றிற் பறக்குந் துகிற் கொடி; ஒளிக்கதிர் வீச்சு; ஒளிக்கதிர்க் கோடு; உலோக அரிப்பாளர்.

**stream'-gold,** *n.* நீரோட்டப் படுகைப் பொற்றுகள்.

**stream'ing,** *n.* பாய்வு; ஒழுக்கு; பாய்வுப்போக்கு; கொடி பறத்தல்; ஒளிப்பாய்வு; *a.* பாய்ந்தோடுகிற; மிதந்தோடுகிற; வீசிப் பாய்கிற; நீரோட்டமுடைய; வழிந்தோடுகிற; காற்றில் வீசிப்பறக்கிற; வழிந்தோடப்பெற்ற; ஒளிப்பாய்வுடைய.

**stream'line,** *n.* இழைவரி, ஒழுகு நீர்மம் பின்பற்றும் இயல் தளக்கோடு; *v.* இழைவரியுடையதாக்கு; இழைவரி வடிவங் கொடு; (தொ.) streamline shape, இழைவரி வடிவம், உறுகுறைவான எதிர்ப்பழுத்தந் தரத்தக்க இயலெளிமை வளைவு வாய்ந்த வடிவம்.

**stream'ling,** *n.* சிற்றோடை, சிறு நீரோட்டம்.

**stream'y,** *a.* நீரோட்டம் நிறைந்த; நீரோடைகள் மலிந்த; நீரோட்டமாகப் பாய்கிற.

**street,** *n.* தெரு, வீதி; பண்டை ரோமர்களின் கற்பாவிய பாட்டை; இடைவழி, இடைப்பிளவு; தரகர் குழு; (தொ.) get the key of the street, have the key of the street, இரவில் தங்க இடமின்றி வீதியிலிரு; in the street, பங்குக்கள வாணிக வகையில் வேலைநேரங் கடந்து; Lombard street, பொருளகங்கள் வட்டித் தொழிலாளர் நிரம்பிய லண்டன் மாநகர்த் தெரு; man in the street, பொதுநிலை மனிதர், பொதுமக்களில் ஒருவர்; on the streets, பரத்தைமை வாழ்வு நிலையில்; street arab, அனாதைக் குழந்தை, வீடற்ற குழந்தை; street cries, அங்காடிக் குரல்கள்; street orderly, தோட்டி, தெருத் துப்புரவுத் தொழிலாளி; the street, Fleet Street, பத்திரிகைத் துறை.

**street'ed,** *a.* தெருக்களுள்ள.

**street'ful,** *n.* தெருநிறை அளவு.

**street'-room,** *n.* தெருவிடம், தெருவின் இடவாய்ப்பு.

**streets,** *n. pl.* பரத்தைமைத் தொழில்.

**street'-sweeper,** *n.* தோட்டி; தெருப்பெருக்குஞ் சுழல் பொறி.

**street'-walker,** *n.* பரத்தை.

**street-'ward** [1], *n.* தெருக் கண்காணிப்பாளர்.

**street'ward** [2], *a.* தெரு நோக்கிய; *adv.* தெருநோக்கி.

**street'way,** *n.* தெருப்பாதை.

**strength,** *n.* வலிமை; ஆற்றல்; உறுதி; உடலாற்றல், உடலுறுதி; வல்லமை நிலை; வலு அளவு; வலிவுத்தரம்; வன்மைக் கூறு; தடுப்பாற்றல்; மனத்திட்பம்; வலு; ஊக்கம்; வலிமை தருவது; வன்மையாக்குந் திறம்; தொகையளவு; எண்மொத்தம்; அடக்க எண் அளவு; வீத அளவு; மொத்தத்தில் வந்திருப்போர் வீத அளவு; வல்லிடம், அரண்; (தொ.) measure one's strength with, வலுத்தேர்வு செய்; on the strength, (படை.) படைவீரர் பெயர் குறிப்பீட்டுப் பட்டியலின்படி; on the strength of, என்ற நம்பிக்கையின் மேல்; என்ற தைரியத்தின் பேரில்.

**streng'then,** *v.* வலுவூட்டு; வலிவுபடுத்து.

**stren'uous,** *a.* விடாமுயற்சியுள்ள, விரைவூக்கமுள்ள, ஆற்றலுடைய; வலுவான; சுறுசுறுப்புள்ள; தளர்வற்ற; தளர்வுறாத; ஆர்வப் பற்றுறுதி வாய்ந்த.

**stren'uously,** *adv.* ஊக்கத்தோடு; விடாமுயற்சியுடன்; விரைவூக்கமாக; சுறுசுறுப்பாக; தளர்வின்றி.

**Streph'on,** *n.* ஆர்வக் காதலர்; (தொ.) Strephon and Chloe, ஆர்வக் காதல் துணைவர்.

***strepitos'o,*** (இத்.) *adv.* இசைக்குறிப்பு வகையில் உரத்த ஆரவாரத்துடன்.

**streptococc'us,** *n.* சங்கிலி நுண்மம், நுண்மப் பிளப்புக்குப் பின்னும் ஒட்டிக்கொண்டிருக்கும் நுண்மவகை; *pl.* streptococc'i.

**streptomy'cin,** *n.* நுண்மங்களிலிருந்து கிடைக்கும் நுண்ம எதிர்ப்புப்பொருள்.

**stress,** *n.* அழுத்தம், இறுக்கவிசை; அமுக்கம், பாரவிசை; நெருக்கடி, சூழ் அடர்ப்பு; தவிர்க்க முடியா அவசர நிலை; வற்புறுத்தீடு; வலியுறுத்தீடு; சொல்லின் அசையூற்றம், அழுத்தவிசை; வாசகத்தின் சொல்லழுத்தம்; ஜப்தி, கடனுக்கான கைப்பற்றீடு; *v.* வற்புறுத்து; ஊன்றியுரை; வலியுறுத்திக் கூறு; அசையூற்றங் கொடு; அசையூற்றக் குறியிடு; வாசக வகையில் சொல்லழுத்தங் கொடு; இயந்திர விசையழுத்தம் அளி; (தொ.) driven by stress of, under stress of, வேறுவழியின்றி; lay stress on, வற்புறுத்து, அழுத்திக் கூறு.

**stressed,** *a.* சொல்வகையில் விசையழுத்தமுடைய; அசை வகையில் விசையழுத்தம் பெற்ற; வற்புறுத்திக் கூறப்பட்ட.

**stress'ful,** *a.* அழுத்தவிசையுடைய; அழுத்திக் கூறுகிற.

**stress'less,** *a.* அழுத்தவிசையற்ற.

**stretch,** *n.* நீட்டுதல்; நீட்ட நிலை; நீட்டம்; பற்றியிழுப்பு; வல்லிழுப்புநிலை; விரிவுப்பாடு; விரிவியல்பு; ஓரம், கோடி, மூலை; நெடுவெளி, இடையறவில்லா அகல் பரப்பு; கால நீடெல்லை; தாவெல்லை, ஒருதிசை நீடெல்லை; வீச்சளவு, முயற்சியின் ஒரு விடாமூச்சளவு; விடாத் தொடர் எல்லை; நேர்கட்டம், பந்தயப் பாதையில் திரும்பா நேர்திசைப் பகுதி; உச்ச எல்லை, ஆற்றலின் முழுநிறைவளவு; உயர்வு நவிற்சி மிகைப்பாடு; (இழி.) ஓராண்டுச் சிறைத் தண்டனை; *v.* நீட்டு, நீள்வுறுத்து; பரப்பு; விரிவாக்கு; விரியச்செய்; நேராக்கு; தொய்வு நீக்கு; நிமிர்த்து; நெளிவெடு; மடிப்பகற்று; பற்றி இழு; இழுத்திறுகலாக்கு; தசைநாண்களை விறைப்பாக்கு; வலித்திழு; நீட்டிக்கிடத்து; பரப்பி வை; முழுதுற நீட்டு; எட்டி நீட்டு; முழு விரிவுபடுத்து; முழுதளவு முயற்சி செய்; செல்லுமட்டுஞ் செலுத்து; அளவுமீறி நீட்டு; அளவுமீறிச் செலுத்து; வல்லந்தப்படுத்து; மிகைப்படுத்து; சொற்பொருள் வகையில் எல்லைமீறி விரிவுபடுத்து; நீள்; குறிப்பிட்ட நீளமுடையதாயிரு; நீண்டுகிட; பரவுறு; குறிப்பிட்ட பரப்புடையதாயிரு; பரந்து கிட; உடல் நீட்டிக் கிட; நீளத்தக்கதாயிரு; விரியத்தக்கதாயிரு; நீளும் இயல்புடையதாயிரு; விரியும் இயல்புடையதாயிரு; நெகிழ்வாற்றலுடையதாயிரு; இழுத்துத் தொங்கவிடு; (இழி.) தூக்கிலிடு; (தொ.) at a stretch, on a stretch, ஒரே மூச்சில்.

**stretch'er,** *n.* நீட்டுபவர்; விரித்து வைப்பவர்; நீட்டுவது; விரித்து வைப்பது; கையுறை-தொப்பி முதலியன விரித்து வைப்பதற்குரிய கருவி; ஓவியர் திரை உறுதிச்சட்டம்; தூக்கு கட்டில், நோயாளி-காயம்பட்டோர் ஆகியவர்களை இட்டுச்செல்லும் தூக்குபடுக்கை; படகுத் தண்டுகைப்பு விட்டம்; இயந்திரக் கிடைநிலை உறுப்பு; இயந்திரக் குறுக்குச் சலாகை; சுவர்முகப்பு நீளவாட்டுக் கிடைச் செங்கல்; மிகை நவிற்சி; புளுகு.

**stretch'er-bond,** *n.* சுவர்முகப்பு நீளவாட்டுச் செங்கல் அமைப்புமுறை.

**strew,** *v.* சிதறு, தூவு; சிதறுண்ட சிறு பொருட்களால் அரைகுறையாக மூடு.

**strewed,** *v.* strew என்பதன் இறந்தகாலம்; strew என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**strewn,** *v.* strew என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**stri'a,** *n.* (உள்., தாவ., வில., மண்.) படுவரி, மேற்பரப்பில் உள்ள படுகைக்கோட்டு வரி அடையாளம்; படுகை மடிப்பு வரை; கிடைச்சாய்வரி; படுவரித்தொகுதி; கணிப்புவடு, சாய்வரிக் குறிப்பு; சாய்வரி இடைவிளிம்பு; *pl.* stri'ae.

**stri'ate**, *a.* சால்வரி வாய்ந்த, வரிவரியான கிடைநிலைப் பள்ள மார்ந்த ; *v.* வரிவரிப் பள்ளமாக்கு.

**stri'ately**, *adv.* வரிவரிப் பள்ளமாய்.

**stria'tion**, *n.* வரிவரிப் பள்ளம் அமைத்தல் ; வரிவரிப்பள்ள அமைப்பு.

**stri'ature**, *n.* வரிவரிப் பள்ளப் பாங்கு.

**strick'en**[1], *a.* துன்பப்பட்ட; நோயால் பீடிக்கப்பட்ட; அடி பட்ட, வேட்டையில் காயமேற்ற; மூதூர்ந்த, முதுமையேறிய; (தொ.) stricken field, கைகலப்புப் போர்க்களம் ; stricken heart, புண்பட்ட உள்ளம் ; துயரார்ந்த உள்ளம் ; stricken hour, அடித்த மணி ; stricken in years, முதுமையால் தளர்வுற்ற.

**strick'en**[2], *v.* strike என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று.

**stric'kle**, *n.* தலைதட்டுக்கோல், முகத்தலளவையில் தலைதட்டி யளப்பில் பயன்படுத்தப்படுங் கோல்.

**strict**, *a.* கண்டிப்பான ; தட்டுத்தளர்வற்ற, விட்டுக்கொடுப் பற்ற, மட்டுமழுப்பலில்லாத ; வரம்பு மீறுத; விதிவிலக்கிற்கு இடந்தராத; சொற்பொருள் வகையில் திரிபு தளர்விற்கு இட மற்ற.

**strict'ly**, *adv.* கண்டிப்பாக.

**strict'ness**, *n.* கண்டிப்பு.

**stric'ture**, *n.* கண்டனம் ; மிகு கட்டுப்பாடு ; குற்றங்குறை தெரிவிப்பு ; இறுக்கம் ; வழியடைப்புச் சிக்கல் ; (மரு.) நாடி நரம்பு நாளங்கள் வகையில் நெரிசற் கோளாறு.

**stride**, *n.* தாவு அடி ; நீள அடியெல்லை ; *v.* தாவி நட, நீளடி யிட்டு நட; குதிரைமீது கால் பரப்பியமர்; ஏறிச்சவாரிசெய் ; (தொ.) get into one's stride, தொடக்கநிலை கடந்து படிந்து ஒழுங்காக வேலைசெய்யும் நிலை அடை ; take a thing in one's stride, தடைகளை இடறிக்கொண்டே செல் ; குறிப்பிடத்தக்க பெருந்தடைகளின்றி எளிதாக முன்னேறிச் செல்.

**stri'dence**, *n.* உரத்த கடுங்குரல்.

**strid'ent**, *a.* உரத்த கரகரப்பொலியுடைய.

**strid'ently**, *adv.* உரத்த கரகரப்பொலியுடன்.

**strid'ulant**, *a.* உராய்வினுல் கிறீச்சொலி செய்கிற, பூச்சிகள் வகையில் கரகரப்பான ஒலி எழுப்புகிற.

**strid'ulate**, *v.* (பூச்.) கரகரப்பொலி செய், பூச்சியினங்கள் வகையில் கரகரப்பான உடலுறுப்புக்களை உரசுவதால் அரு வருப்பான ஒலியெழுப்பு.

**stridula'tion**, *n.* கிறீச்சொலி, பூச்சிகளின் கரகரப்பான உராய்வொலி.

**strid'ulator**, *n.* கிறீச்சொலி செய்பவர்; கரகரப்பொலி எழுப்பு வது ; கரகரப்பொலி செய்யும் பூச்சி ; உராய்வு மூலம் கரகரப் பொலி எழுப்பும் பூச்சியுறுப்பு.

**strife**, *n.* சச்சரவு, சண்டை ; பூசல் ; வாதம், சொற்போர் ; பிணக்கு நிலை ; மனப்போராட்ட நிலை ; மோதல் நிலை; உள் வேறுபாடு, முரண்பாட்டு நிலை.

**stri'gil**, *n.* தேய்ப்புப்பட்டை, முற்கால வழக்கில் குளிப்புத் தேய்ப்புப் பொருள்.

**strig'ose, strig'ous**, *a.* (தாவ.) முள்மயிருடைய, கட்டை குட்டைச் செதிள் உடைய.

**strike**, *n.* தட்டு, தட்டொலி ; தலைதட்டுக்கோல், முகத்தலள வையின் தலை தட்டியளக்கும் மட்டக்கோல்; வேலைநிறுத்தம்; வாணிகத் திடீர் வெற்றி ; குருட்டடிப் புதை வளப்பேறு, நில எண்ணெய் தங்கம் முதலிய அடிநிலவளம் கண்டெய்துவதில் எதிர்பாரா நற்பேறு; வான்தாக்கு, வானத்திலிருந்து செய்யும் தாக்குதல் ; தாழ்க்குழி, பூட்டின் தாழ்பொருந்தும் குழிவு ; தளக்கட்டப் பந்தாட்டத்தில் திட்டமிட்ட பந்தடி முயற்சி ; (இழி.) அச்சுறுத்துக் கொள்ளை, அரசியல் சட்டம் கொணர்வ தாக அச்சுறுத்திப் பொருள்பறிப்பு; (மண்.) படுகைக் கிடை மட்டவரை ; *v.* அடி, அறை ; கருவிகொண்டு தாக்கு; ஓங்கி வெட்டு ; குத்து ; கொட்டு ; மிதி ; மோது ; தட்டு ; முட்டு ; கப்பல் வகையில் சென்று தட்டுறு ; மணிப்பொறி வகையில் அடித்து நேரங்காட்டு; மணிவகையில் அடித்து ஒலியெழுப்பு; மணி அடித்துத் தெரிவி ; வெடி ஒலி எழுப்பு ; தீக்குச்சு வகையில் தட்டிப்பற்று ; தீப்பெட்டி வகையில் தட்டிப் பற்றுவதாயிரு ; தீக்கல் வகையில் தட்டிப் பொறியெழுப்பு ; வீசி அடி; விசிறி எறி; விசையுடன் அனுப்பு; பந்து வகையில் எட்டியடி ; சென்று தட்டுறு ; மோதப்பெறு ; கையொடு கை தட்டு ; வன்முனைப்புடன் சென்று தொடர்புகொள் ; சென்றெட்டு ; சென்றழுத்து ; அழுத்து ; அச்சடி ; முத்திரை பதியவை ; குத்தி உட்செலுத்து ; துளைத்து இறுக்கு ; உள் திணி ; உட்பாய்ச்சு ; ஊடுருவிச்செல் ; வேர்வகையில் பாய விடு ; அச்சம் முதலிய உணர்ச்சிகளை ஏற்றி நிலைகுலைவி ; இடையிட்டு நுழை; மனத்தில் பதியவை; மனங்கொள்ளுவி; புலங்கொள்ளுவி ; மனத்தில் சென்று பதிவுறு ; மனத்தில் படு ; புலங்கொளப் பெறு ; கருத்தில் தென்படு ; கவனத் துக்கு வந்துறு; நினைவுக்கு வா; அடித்துத் துவை; துவைத் துருவாக்கு ; தம்பட்டமடி ; உருவாக்கு ; கருத்துருவாக்கு ; கருத்துருவாகப் பெறு ; ஆக்கிச்சமை, போலாக்கு ; முனைப் பாக வந்து விழு ; வந்து மேல்விழு ; மின்னல்-இடி வகையில் வந்துவிழு ; வந்து நேர்வுறு ; தூண்டில் வகையில் மீன்வந்து சிக்கப் பெறு; வலிமையுடன் வந்தடை; அதிர்ச்சியூட்டும்படி வந்தடை ; முனைப்பாகப் படு ; முனைப்பாகத் தெரிய வரலுறு; திடுமென மேற்கொள்; புதிது மேற்கொள்; நாடகப்பாணியில் சட்டென மாறுநிலை மேற்கொள் ; ஆட் புதுப்பழக்கம் நட்பு ஆகியன வந்தெய்தப்பெறு ; பாதையில் சென்றெய்து ; பாதையில் செல் ; நாடு, நாடி எழு ; நாடித்திரும்பு ; புறப் பட்டுச் செல் ; செயலில் முனை ; செய்துமுடி ; செய்து நிறை வேற்று ; தாவிச்செல் ; வேகமாகச் செல் ; பாய்வுறு ; தனிப் படக் குறித்துக்காட்டு ; நோய் வகையில் பீடித்தல்செய் ; தொடர மறு ; கோடு முதலியன வரை ; பெயர்-எழுத்து முதலியனவற்றை அடித்து வெட்டு ; அகற்று ; வேலை நிறுத்தஞ் செய் ; தலைதட்டி அள ; ஐந்தொகை பார் ; கணக்கு முடித்துக் காட்டு ; சராசரி காண் ; முறைகாணுயம் ஒப்புருப்படுத்து, இருதிறத்தாரும் சரி எண்ணிக்கை கழிக்கச் செய்து முறைகாணுயம் ஒப்புடையதாக்கு; கொடி தாழ்த்து; சரணடை ; கப்பற்பாய் இறக்கு ; கூடாரம் இறக்கு ; பண் மீட்டி எழுப்பு ; இசைக்கருவி மிழற்று ; (தொ.) ship strikes, கப்பல் பகைவரிடம் அடைக்கல மாகிறது ; sit-down strike, உள்ளிருப்பு வேலை நிறுத்தம் ; stay-in strike, கைகட்டு வேலைநிறுத்தம் ; strike a bargain, பேரம் முடி, விலை வகை யில் ஓர் ஒப்பந்தத்துக்கு வா ; சமரசமான முடிவு காண் ; strike all of a heap, (பே-வ.) குழப்பு, திகைக்க வை ; strike at the root of, வேரொடு சாய் ; வீழ்த்து ; அடியோ டழி ; strike down, அடித்து வீழ்த்து ; வெட்டி வீழ்த்து ; strike dumb, திகைப்பால் பேசமுடியாமற் செய் ; strike hands, கைமேல் கையடிப்பதன் மூலம் உடன்படிக்கை ஒப்புதல் தெரிவி ; strike home, நேரடியாகத் தெளிவுறுத்து; strike in, பேச்சில் தலையிடு, இடையீடுசெய் ; strike into gallops, துள்ளிக்குதி ; குதிரையைப் பாய்ந்தோடவிடு ; strike me dead, என் உயிர்மீதாணையாக ; strike off, வெட்டியெறி ; வெட்டி வீழ்த்து ; பெயர் வகையில் அடித் தகற்று ; அச்சிட்டு முடி ; strike oil, எண்ணெய்மட்டம் எட்டு ; எண்ணெய் ஊற்றுக் கண்டுபிடி ; strike one blind, ஒரே அடியில் குருடாக்கு ; strike one's flag, கப்பலை அடைக் கலமாக்கு ; கோட்டையை வென்ற எதிரியிடம் ஒப்புவி ; கப்பற்படைத் தலைமைப் பதவியை விட்டுக்கொடு; strike out, தோளால் இடி ; நீச்சலில் கை கால் பயன்படுத்து ; பனிச் சறுக்கில் காலைப் பயன்படுத்து ; அடிக்கக் குறிநோக்கு ; திட்டவகையில் உருவாக்கு ; strike out a line for oneself, தனக்கென ஒரு வழி காண்; strike the track, வழிமேல் செல்; strike up, பண்ணுலிக்கத் தொடங்க இசை வகையில் மிழற்று; strike up an acquaintance, தற்செயலாக விரைந்து புதுப்பழக்கம் வளர்த்துக்கொள் ; strike upon an idea, புதுக் கருத்து வரப்பெறு ; திடீரென்று புது எண்ணம் கொண்டு விடு ; strike weapon up, strike weapon down, strike weapon aside, அடியால் தட்டிக்கழி ; strike while the iron is hot, காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்.

**strike'-a-light,** *n.* சக்கிமுக்கிக் கல் கருவி.

**strike'bound,** *a.* வேலைநிறுத்தத்தால் செயலற்றுப்போன.

**strike'-breakers,** *n.* கருங்காலிகள், வேலைநிறுத்தம் செய்வோர் இடத்தை நிரப்பக் கொண்டுவரப்படுபவர்கள்.

**strike'-measure,** *n.* முகத்தலளவைத் தலைதட்டுக் கோல்.

**strike'-pay,** *n.* தொழிலாளர் நிறுவனம் தரும் வேலைநிறுத்தக் காலக் கூலி.

**strik'er,** *n.* தீப்பொறி ; சக்கிமுக்கிக் கருவி ; வேலைநிறுத்தஞ் செய்பவர் ; பந்தாட்டக்காரர்.

**strik'ing,** *n.* அடித்தல் ; அடித்தழிப்பு ; அச்சடிப்பு ; வாள் வெட்டுதல் ; படைக்கலத் தாக்குதல் ; *a.* அடித்தற்குரிய ; அடிக்கிற ; வேலைநிறுத்தஞ் செய்கிற ; முனைப்பான ; கருத்தைக் கவர்கிற, கருத்தீர்க்கிற ; கவர்ந்துபற்றுகிற.

**strik'ing-distance,** *n.* அடிப்பதற்கொத்த அருகாமை.

**strik'ing-force,** *n.* தாக்காற்றல்மிக்க வன்படை, குறுகிய கால விசைத்தாக்குபடை ; தாக்குவிசை.

**strik'ingly,** *adv.* கருத்தைக் கவருமுறையில் ; முனைப்பாக.

**strik'ingness,** *n.* கருத்தைக் கவருந்தன்மை, ஈர்ப்பரவு.

**string,** *n.* கயிறு ; மென்கயிறு ; நூற்கயிறு, திண்ணிய நூல் ; மணியிழை ; கட்டுத்தளை ; இழைக்கச்சை ; அணியிழை ; அணிமணி ஊடிழை ; சரடு, கோவை ஊடிழை ; தாம்பு வார், தோற் கயிறு ; நாய்வார் ; செருப்புவாரிழை ; கம்பி ; ஏணிக் கைபிடிக் கம்பி ; பந்தயக் கயிற்று வேலியடைப்பு ; நரம்பு ; நாண் ; வில்நாண் ; இசைக்கருவி நரம்பு ; நரம்பிசைக் கருவியாளர் தொகுதி ; பந்துமட்டை நரம்பு ; பாவைநாண், சூத்திரக்கயிறு; நெற்றிழை, அவரை நெற்றிடை நார் ; நீள்குலை ; இழையரம் ; தூக்குக்கயிறு ; தொடர், கோவை ; வரிசை ; நீள்திரள் ; அடுக்கம் ; வாம்பரி அணி, பந்தயப்பயிற்சிபெற்ற ஓர் இலாயத்துக் குதிரைத் தொகுதி ; வரிப்பந்தி, குதிரை ஒட்டகை ஆகியவற்றின் வரிசை ; மேடைக்கோற் பந்தாட்டக் கெலிப்புக் கணிப்புக் குமிழ்க் கோவை ; கெலிப்பெண் ; கெலிப்பெண் பந்தடி ; (இழி.) கேலிக்கூத்து ; *v.* நூற் கயிறு இணை ; இழைக்கச்சையூட்டு; வார்பொருத்து ; சரடு இணை ; கயிறுகள் இணைவி ; மணியுருக்களை ஊடிழையில் கோத்தமைவி ; நூலில் இணை ; கயிற்றை உருவிவிடு ; கயிறுக நீட்டு ; நூலாக இழு ; இழையாக நீளு ; திரிதிரியாகு ; புரைவுறு, பசைவகையில் நார் நாராகு ; அவரை நெற்றில் நார் உரி ; கட்டியிறுக்கு ; உறுதிப்படுத்து ; முறுக்கேற்று ; நாணேற்ற வாய்ப்பாக வில்லை வளைத்துப் பிடி ; தக்க செவ்வியேற்று ; (செய்.) இசைக்கருவி நரம்பேற்று ; மட்டுமீறி முறுக்கேற்று; மேடைக் கோற்பந்தாட்டத்தில் ஆட்டத்தொடக்கத் தேர்வாட்டமாடு ; (பே-வ.) தூக்கிடு ; (இழி.) கேலிக்கூத்தாக்கு ; (தொ.) harp on one string, ஒரு பொருளையே பன்னிப்பன்னிப் பேசு; have person on a string, தன் விருப்பம்போல் ஆட்டி வைக்கும் நிலையில் வைத்திரு ; pull the strings, பின்னணியிலிருந்து ஆட்டுவி; திரைமறைவிலிருந்து இயக்குவி; மறைவில் செல்வாக்கைப் பயன்படுத்து ; string alphabet, குருடர் கயிற்றுமுடிச்சு எழுத்துமுறை ; string band, நரம்பிசைக் கருவிகள் மட்டுங்கொண்ட பல்லியக் குழு ; string up, (பே-வ.) தூக்கிட்டுக் கொல் ; touch a string, குறிப்பிட்ட உணர்ச்சியை உள்ளத்தில் எழுப்பு; touch the strings, இசைக் கருவியை இயக்கு; இசைக்கருவி நரம்புகளை மீட்டு; உணர்ச்சிகளை இயக்கு ; two strings to one's bow, செயல் வெற்றிக்கு ஒன்றிற்கு மேற்பட்ட வாய்ப்புக்கள்.

**string'-bark,** *n.* இழைநார்ப்பட்டை.

**string'-board,** *n.* ஏணிப்படி நிலைக்கட்டு.

**string'-course,** *n.* கட்டிடச் சுற்றுவரி மேடை.

**stringed,** *a.* நரம்புகள் இணைக்கப்பட்ட; நரம்பிசைக் கருவிகள் சார்ந்த.

**strin'gency,** *n.* கடுமை ; கண்டிப்பு ; கட்டிறுக்கம் ; விதிமுறை நெகிழ்வின்மை; இழைவிடா நுட்பம்; கடும் பணமுடை.

**stringen'do,** (இத்.) *adv.* (இசை.) மேன்மேலும் விரைவுடன்.

**strin'gent,** *a.* விதிமுறை வழாத, கெடுபிடியான ; சட்டக் கட்டுப்பாடு வகையில் கட்டிறுக்கமான, நீக்குப்போக்கு விடாத ; செயற்கடுமை வாய்ந்த, செயல்துறைக் கட்டாயக் கண்டிப்பு மிக்க ; மயிரிழை விட்டுக்கொடாத ; தொய்விலை வற்ற ; சரிநுட்பம் வாய்ந்த ; வழுவிடாத ; தவறுதலில்லாத ; ஐயுறவுக்குச் சிறிதும் இடமற்ற ; வாணிகக்கள வகையில் பண இறுக்கமான ; கடுமுடை நெருக்கடியான ; தசை சுருக்கும் ஆற்றல் உள்ள.

**string'er,** *n.* கோப்பவர் ; கோப்பது ; நாணேற்றுபவர் ; படிக்கட்டு இடையிணை தளம் ; மரச்சட்டக் கிடைக்கம்பி உறுப்பு ; கப்பற் குறுக்குவிட்டக் கட்டை ; சுரங்கக் கனிப் பொருட்கால்.

**string'-halt,** *n.* குதிரையின் பின்னங்கால் குலுக்குநடை.

**string'less,** *a.* கயிறற்ற ; கோப்பற்ற.

**string'-piece,** *n.* மரச்சட்ட இணைப்பு விட்டம்.

**strings,** *n. pl.* நரம்பிசைக்கருவிப் பல்லியக்குழு; நரம்பிசைக் கருவியாளர் தொகுதி ; நரம்பிசைக்கருவியாளர் இசைப் பங்கு ; செயல் குழப்ப நிலைகள் ; கொடைப் பொருளுடன் இணைக்கப்படும் ஒப்பந்த விதிகள்.

**string'y,** *a.* இழையான ; நார் நாரான ; இழையோடுகிற.

**string'y-bark,** *n.* நாரியல் பசையும் பட்டையுமுடைய மர வகை.

**strip,** *n.* கீற்று, பூழி, வரிக்கண்டம், நீள்வரித்துண்டு ; தாளின் நீண்டொடுங்கிய கூறு ; தோல்வார் ; கட்டைவார்த் துணுக்கு ; இழைக்கச்சை ; நீள்வரித் துண்டு நிலம் ; நில நீள்வரிக் கூறு ; நீளிடைக்கூறு ; வரிச்சல் நீள்பலகைத் துண்டு ; சிறு துண்டு ; துணுக்கு ; சிம்பு ; உலோக வார்ப் பட்டை ; சுருளியல் வார்ப்பட்டை ; பந்தய ஓட்டம்-உதை பந்தாட்டம் ஆகியவற்றிற்கான சிற்றுடை ; பத்திரிகை நகைச்சுவைப் படப்பத்தி ; *v.* உரி ; தோல் நீக்கு ; சட்டை கழற்று ; ஆடை அகற்றுவி ; உடை கழற்று ; ஆடை களை ; மேலுறை நீக்கு ; வறிதாக்கு ; அணிமணி கழற்று ; உடைமை பறித்தகற்று; சொத்து இழக்கப்பண்ணு; சார்பில்லா தாக்கு; பண்பு நீக்கு ; உரிமை பறி ; பதவியிலிருந்து தாழ்த்தி விடு ; கட்டிடத்திலுள்ள தட்டுமுட்டுப் பொருள்களை ஒழிவு செய் ; கப்பற் பாய்மரமகற்று ; பசுவின்பாலை ஒட்டக் கறந்துவிடு ; விட்டு நீக்கு ; விட்டொழியச்செய் ; பிய்த்தெடுத்தகற்று ; உரித்தெடுத்தகற்று ; பறித்தெடுத்திழக்கச் செய் ; பறித்து வாங்கு ; புகையிலை வகையில் நரம்பு கிழித்தெடு, தண்டகற்று; புரிசுரை வகையில் புரியிழை அகற்று; இல்லாதாக்கிவிடு ; புரிசுரை வகையில் புரியிழ ; உரிந்து விழு ; கழலு ; கையோடு வந்துவிடு ; ஏவுகணை வகையில் சுழல்வின்றிக் கழன்று வெளிச்செல் ; (தொ.) air strip, விமானத்திட்டு ; strip one to the skin, முழுக்கத் துகிலுரி.

**stripe,** *n.* நீள்வரி ; கம்பிக்கரை ; வண்ணக்கோடு ; பட்டை வரி; *v.* வண்ணக்கோடிடு, கம்பிக்கரையிடு; பட்டை வரியிடு; வரித்தடமிடு, வரி அடையாளமிடு ; கசையடி கொடு.

**striped,** *a.* கோடிட்ட ; கம்பிக்கரையிட்ட; வண்ணப்பட்டையிட்ட.

**stripe'less,** *a.* கோடில்லாத.

**stripes,** *n. pl.* கசையடி; சாட்டையடிகள்; கசையடித் தழும்புகள் ; (பே-வ.) புலி ; படைத்துறை மதிப்பு வாரிழைக்கச்சை; (தொ.) get one's stripes, உயர்நிலையுறு ; உயர்பதவிச் சிறப்புப்பெறு ; lose one's stripes, இழிநிலையுறு ; இருக்கும் பதவியினின்றும் இழிநிலை எய்து ; stars and stripes, அமெரிக்க தேசிய கொடி.

**strip'-leaf,** *n.* நரம்பு நீக்கிய புகையிலை.

**strip'ling,** *n.* கான்முளை, சிறுவன், சிறு பையன் ; முழு வளர்ச்சியுறாச் சிறுவன்.

**stripped,** *a.* ஆடையுரியப்பட்ட ; கொள்பொருள் அகற்றப் பட்ட ; உடைமை பறிக்கப்பட்ட.

**stripp'er,** *n.* உரிபவர் ; நரம்பு கிழிப்பவர்.

**stripp'ing,** *n.* உரிவு ; பறிப்பு.

**stripp'ings,** *n. pl.* ஒட்டக்கறந்த பால், கடைசியாகக் கறந்த பால்.

**strip'-tease,** *n.* பொழுதுபோக்குத் துகிலுரி காட்சி.

**strip'y,** *a.* கோடு போன்ற, கம்பிக்கரை போன்ற.

**strive,** *v.* முயலு ; கடுமுயற்சி செய் ; உழைத்துப் பாடுபடு; வருந்தி முயலு, முழு வலிமையும் ஈடுபடுத்தி முயற்சிசெய் ; மனமார முயற்சி செய்; போராடு; போட்டியிடு; நாடி முயலு, நாட்டங்கொண்டு செயலாற்று ; (தொ.) strive after, strive for, நாடி முயலு, விரும்பி முயற்சி செய் ; குறிக் கொண்டு பாடுபடு; strive against, strive with, சச்சரவிடு, போராடு, எதிர்; உணர்ச்சி வகையில் எதிர்த்து ஆட்கொள்ள முயலு.

**striv'en,** *v.* strive என்பதன் முடிவெச்சம்.

**strob'ile,** *n.* தேவதாரு மரவகையின் குவிகாய்.

**strode,** *v.* stride என்பதன் இறந்தகாலம்.

**stroke**[1], *n.* அறை, அடி ; வீச்சு, தாக்கு ; அடி அதிர்ச்சி, தாக்கதிர்வு ; வீச்சுக்கோடு ; கீறல் வரை, கையெழுத்தின் ஒரு கீறல் ; ஓவியர் வரைக்கீற்று, தூரிகையின் ஒரு கீற்று வரை ; மணி அடிப்பொலி, மணி நாவின் ஒரு தாக்கொலி ; துடுப்பின் ஓர் இழுப்பு, ஒருமுறை தண்டு வலிப்பு; பின்தண்டு உகைப்பவரின் முன்னோடித்தண்டு வலிப்பு ; கையின் ஒரு வீச்சு ; இயக்க அசைவின் ஒருதிசைத் தனி வெட்டியக்கம் ; செயலின் ஒரு வீச்சு ; முயற்சியின் ஒரு மூச்சு ; ஒருவிசை முறை ; நோயின் ஒரு வன்தாக்கு ; மின்னல் இடி ஆகிய வற்றின் ஒரு திடீர் வீழ்வு ; இடரின் ஒரு மோதல் ;. திடீர் வாய்ப்பு நேர்வு, வாய்ப்பின் குருட்டடிக்கூறு ; பந்தடி ; அரு நுட்பப் பந்தடி ; பந்தடி அருநுட்பம் ; அருநுட்பம் ; மேதை மையின் நுண் அருந்திறக்கூறு ; கணநேரச் செயல் ; சிறு செயல் ; சிற்றருஞ்செயல் ; அருவிசைச் செயல் ; அருவிசை நிகழ்வு ; நொடிப்பு ; கணம் ; *v.* பின்தண்டுகைப்பவர் வகை யில் முன்னோடித் தண்டுவலித்துக் காட்டு; முன்னோடித்தண்டு வீச்சடிப்பு ஒத்துத் தண்டுகை; ஊடுவரையிடு; கோடு அடித்து வெட்டு ; (தொ.) finishing stroke, இறுதி வீச்சு ; முடிவுச் செயல் ; கடைசி நிறைவுச் செயல் ; stroke of business, வாணிகத் திடீர் ஆக்கம் ; stroke of genius, மேதைத்திறம் ; stroke of luck, ஆகூழ்ப்பேறு ; stroke of piston, உந்து தண்டின் முன்பின் இயக்கம் ; stroke out, அடித்து வெட்டு ; with a stroke of the pen, ஒரு வரியில் ; எளிதாக.

**stroke**[2], *n.* நீவல், கோதுதல் ; தட்டல், தட்டு ; தடவல், வருடல் ; *v.* தட்டிக்கொடு ; தடவு ; நீவு, கோது ; வருடு ; (தொ.) stroke one down, தடவிக் கொடு, சினந்தணிவி ;. stroke one's hair the wrong way, stroke one the wrong way, எரிச்சலூட்டு, கோபமூட்டு.

**strok'ing,** *n.* தைவரல் ; *a.* தடவுகிற, தட்டிக்கொடுக்கிற ; அன்பளாவலுடைய.

**strok'ingly,** *adv.* தட்டிக்கொடுக்கும் பண்புடன், தைவரும் பாணியில்.

**stroll,** *n.* சிற்றுலா, ஓய்வுநேரச் சிறு சுற்றுலா ; திரிதரல் ; அருங்காட்சிக்குழுவினரின் சுற்றரவு; *v.* சுற்றித்திரி; நாடோடி யாகத் திரி ; ஓய்வுநேர உலா மேற்கொள் ; உலாவரல் அருங் காட்சிக் குழுவினராகச் சுற்று.

**stroll'ing,** *n.* உலாவரவு, சுற்றித்திரிவு; *a.* உலாவரவுடைய, சுற்றித்திரிகிற.

**strom'a,** *n.* (உயி.) உயிர்ம உட்சட்டம், உயிர்ம உட்பிழம்புச் சட்டக்கூறு ; *pl.* strom'ata.

**stromat'ic,** *a.* உயிர்ம உட்சட்டஞ் சார்ந்த, உயிர்ம உட் பிழம்புச் சட்டக்கூறு சார்ந்த.

**strong,** *a.* வலிமை வாய்ந்த, பலமான ; வல்லமை வாய்ந்த ; வெல்திறமிக்க, தோலாத ; செல்வாக்குமிக்க, செல்திறமிக்க ; உடலுரமுடைய; உடல்நல உறுதியுடைய; ஆற்றல் வாய்ந்த; திண்ணிய, கெட்டியான ; திடமான, உரம் வாய்ந்த; உறுதி வாய்ந்த, கட்டுறுதியான ; வளையாத ; முறியாத ; ஊடுருவ இடந்தராத ; உடையாத ; கிழியாத ; தேய்வுறாத ; கலைக்க முடியாத ; நிலையான; நிலைநிறுத்தப்பட்ட; தாங்குந் திறமை யுடைய; தாக்குப் பிடிக்கக்கூடிய; மாற்ற முடியாத, மாறாத; வன்தாக்குடைய, வலிமையுடன் செயலாற்றுகிற; செய்லூக்க முடைய ; ஊக்க உரமுடைய ; பயன் முனைப்பான ; வினை யூக்கமுடைய ; வேகமார்ந்த ; முடிவுநோக்கி விரைகின்ற ; ஐயுறவற்ற ; மயக்க தயக்கமற்ற ; பண்பில் மேம்பட்ட ; நிற வகையில் முனைப்பான ; பேச்சுவகையில் கடுமையான; கடுஞ் சொல் வழங்குகிற ; வேதியியல் பொருள்களின் வகையில் இணைவாற்றல் மிக்க ; செயலாற்றல் மிக்க ; மன உறுதி யுடைய ; பற்றுறுதி வாய்ந்த ; உணர்ச்சி வேகமுடைய ; எண்ணிக்கையில் மிக்க ; எண்தொகையளவுடைய ; செறி வார்ந்த ; பிறபொருட் கலப்பு மிகக் குறைந்த ; காரமான ; மது வகையில் வெறிமிக்க ; ஊசிப்போன ; தீவாடை யுடைய; புளிப்பான ; சொல் வகையில் பொருட்செறிவு மிக்க ; மொழி நடை வகையில் சுருக்கச்செறிவும் உணர்வாற்றல் முனைப்பும் உடைய ; (இலக்.) சொல் அழுத்த வகையில் விசையார்ந்த ; (இலக்.) வன்திரிபியலான, வினைச்சொல் வகையில் உள்ளுயிர் மாறுதலால் படிவமாற்றமுறுகின்ற ; வாணிகக்கள வகையில் ஒரேபடித்தாக விலையேற்றமுறுகிற ; (தொ.) by the strong arm, by the strong hand, வன்முறையால் ; வலிந்த வகை யாக ; come strong, go it strong, இறப்பச் செய் ; செயலில் நெடுந்தொலைவு செல் ; going strong, நலமொடு, புகழொடு ; have a strong hold upon, have a strong hold over, ஆட்டிப் படை ; மிகுந்த செல்வாக்குறு ; strong breath, வாடை, தீ நாற்றம் ; strong butter, ஊசிப்போன வெண்ணெய் ; strong character, பண்புமுனைப்பு ; ஊக்க உரமுடையவர் ; strong cheese, புளிப்புப் பாற்கட்டி ; strong drink, strong waters, வெறியூட்டும் மது வகைகள்; strong head, வெறிமந் தாங்குதிறன் ; strong language, கடுமொழி ; வசைமொழி ; strong man, திறமிக்க செயலாட்சியாளர்; ஆளுந்திறமுடைய வர் ; strong measures, கடும் நடவடிக்கை ; strong meat, திண்ணிய உணவு; வலிய உள்ளங்களே ஏற்கத்தக்க செய்தி; strong point, மிகுதிறக் கூறு ; strong situation, காண் போர் உள்ளத்தை உருக்குங் கதை-நாடகப் பகுதி.

**strong'-box,** *n.* வன்காப்புப் பெட்டி ; சேமக்காப்புப் பேழை.

**strong'hold,** *n.* அரண்காப்பு ; கோட்டை ; வன் காப்பிடம்; புகலிடம் ; தஞ்சம் ; பிடிப்பிடம் ; வன்காப்பானவர்.

**strong'ish,** *a.* வலிமைப்பகட்டான ; சற்றே மிகுவலிமை வாய்ந்த.

**strong'ly,** *adv.* வலிமையுடன் ; திண்ணிதாக ; உறுதியாக; வேகமாக ; வற்புறுத்தி.

**strong'-minded,** *a.* வன்னெஞ்சமுடைய ; பெண்கள் வகை யில் ஆண்களோடு இணையான அறிவு-சட்ட உரிமை வேண்டுகிற.

**strong'-room,** *n.* வன்காப்பறை ; சேமக்காப்பறை.

**stron'tia,** *n.* மஞ்சள் நிற அரு உலோக வகையின் உயிரகை.

**stron'tian,** *n.* மஞ்சள்நிற அரு உலோக வகையின் உயிரகை ; *a.* மஞ்சள் நிற அரு உலோக வகையின் உயிரகையாலான.

**stron'tium,** *n.* மஞ்சள் நிற அரு உலோக வகை.

**strop,** *n.* தீட்டு வார் ; இழுப்புப் பட்டை ; *v.* வாரில் தீட்டு.

**strophan'thin,** *n.* நெஞ்சுவலிமைக்கான தாவர நச்சுப்பசை மருந்து வகை.

**stroph'e,** *n.* பண்டைய கிரேக்க நடனப்பாடல் வகையில் இசைக் குழுவின் முதற்பாடற் கூறு ; எதிர்ப்பாடற் கூறு; செய்யுட் கூறு.

**strove,** *v.* strive என்பதன் இறந்த காலம்.

**strow,** *v.* strew என்பதன் பழைய வடிவம்.

**strowed,** *v.* strow என்பதன் இறந்த காலம்.

**strown,** *v.* strow என்பதன் முடிவெச்சம்.

**struck,** *v.* strike என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**struc'tural,** *a.* கட்டமைப்புச் சார்ந்த ; கட்டிட அமைப்பிற் குரிய ; அமைப்பாண்மைத்திறஞ் சார்ந்த.

**struc'turally**, *adv.* அமைப்பு முறையில்; கட்டிட அமைப்பு முறைப்படி.

**struc'ture**, *n.* கட்டிட அமைப்பு; கட்டிடம்; கட்டமைப்பு; அமைப்புமுறை; அமைப்புச்சட்டம்; கட்டமைப்புப் பொருள்; கட்டமைக்கப்பட்ட ஒன்று.

**struc'tureless**, *a.* அமைப்புமுறையற்ற; ஒழுங்கின்றிக் கட்டப்பட்ட.

**strug'gle**, *n.* போராட்டம்; கைகலப்புச் சண்டை; கடும் பூசற் போட்டி; கடும் எதிர்ப்பு மல்லாட்டம்; அயரா அரும் பாடு; விடாப்பிடி எதிர்ப்பு முயற்சி; இடரெதிர்த்த நீடித்த கடுமுயற்சி; பேரெதிர்ப்பு முயற்சி; திமிறியடிப்பு; துடிதுடிப் பாட்டம்; *v.* எதிர்த்துப் போராடு; சச்சரவிடு; எதிர்த்து மல்லாடு, கடும் எதிர்ப்புக்காட்டு; நீடித்த கடுமுயற்சி செய்; கடும்போட்டியிடு; முண்டியடித்துக்கொண்டு செல்; திமிற முயலு, கைகால் அடித்துக்கொண்டு விடுபட முயற்சி செய்; துடிப்பாட்டமாடு; (தொ.) struggle for existence, உய்யப் பிணக்கம், வாழ்க்கைப் போட்டி.

**strugg'ler**, *n.* போராடுவோர், கடும் எதிர்ப்பாளர், கடு முயற்சி செய்பவர்.

**struld'brug**, *n.* சாகா வரமுடை முதிர்வர்.

**strum**, *n.* நாணுளர்வு, நரப்பிசைக்கருவியின் நரம்பு முரல்வு; நரப்பிசைக்கருவியின் தந்தித்தெறிப்பு; *v.* நாணுளர்.

**strum'a**, *n.* கண்டமாலை நோய்; குரல்வளைச்சுரப்பி வீக்கம்; (தாவ.) திண்டுபோன்ற உறுப்புத்தடிப்பு; *pl.* strum'ae.

**strum'pet**, *n.* பொதுமகள், வேசி.

**strung**, *v.* string என்பதன் இறந்தகாலம்.

**strut**[1], *n.* தத்துநடை; வீண்பெருமை நடை; *v.* தத்துநடை நட; வீண்பெருமையோடு நட.

**strut**[2], *n.* விட்டக்காழ், விட்டத்தின் குறுக்காக உறுதிநாடி இடப்படும் இரும்பு அல்லது மர ஆப்பு; *v.* விட்டக்காழ் கொடுத்து வலுப்படுத்து.

**Stru'thio**, *n.* நெருப்புக்கோழி வகை.

**struth'ious**, *a.* நெருப்புக்கோழிக்குரிய; நெருப்புக்கோழி போன்ற; நெருப்புக்கோழியினஞ் சார்ந்த.

**strutt'ing**, *a.* தத்தி நடக்கிற, செருக்குநடையுடைய.

**strych'nia, strych'nine**, *n.* எட்டிச்சத்து, முனைத்த தாவர நஞ்சுவகை; நரப்பு மருந்தாகப் பயன்படும் நச்சுமருந்து வகை.

**stub**, *n.* மர அடித்தூறு; பல் அடிக்கட்டை; எழுதுகோலின் தேய்ந்த அடிக்குற்றி; நாய்வாலின் தறிகட்டை; கொழுந்தாணி, மொட்டை ஆணி; இலாடத் தேய்விரும்பு; தாள்முறி அடித் துண்டு; *v.* தூறை வேரோடு கல்லியெடு; அடித்தூறு அகற்று; வெட்டி அடிக்கட்டையாக்கு; அடிக்கட்டையில் அடித்துக் காயப்படுத்து; அடிக்கட்டைமீது மோது; அடிக் கட்டை மோதுவதுபோல் மொட்டை முனைமீது மோதப் பெறு; புகைச்சுருட்டு அடிக் குச்சினை அழுத்துவித்தவி, அடிக் குச்சினை அவித்தடக்கு.

**stubbed**, *a.* தறித்துவிடப்பட்ட; அடிக்கட்டையாக விடப் பட்ட; தூறுவடிவான; அடித்தூறு செதுக்கி அகற்றப்பட்ட; அடிக்கட்டைபோல மொட்டை மொழுக்கையான.

**stubb'iness**, *n.* மொட்டை மொழுக்கையாயிருத்தல்; அடிக் கட்டை நிறைந்திருத்தல்.

**stubb'ing**, *n.* கட்டையெடுத்தல்; கட்டைவிடல்; அடிக் கட்டை செதுக்கீடு.

**stub'ble**, *n.* அரிதாள்கட்டை; அரிதாள் கட்டைப்பரப்பு; அறுவடையான வயல்; அரிதாள்; வைக்கோல்; கத்தரித்த முடி, முடி அடிமயிர்க்கற்றை; தாடி அடிக்கற்றை; குறுகக் கத்தரித்த தாடி; மழிப்பின் அடிமயிர்க்கற்றை; கட்டைவிட்ட தாடியின் முரட்டுமழிப்பு; புதர்க்கற்றை; குறுமயிர்க்கற்றை.

**stubb'led**, *a.* அரிதாள் கட்டைபோன்ற; அரிதாள் கட்டை போர்த்துள்ள.

**stubb'le-fed**, *a.* அரிதாள்கட்டையிடை வளரும் குறும்புல் தின்று வளர்கிற.

**stubb'le-field**, *n.* அறுவடையான வயல்.

**stubb'le-rake**, *n.* அரிதாள் வாரி.

**stubb'ly**, *a.* அரிதாள்கட்டை நிறைந்த; அரிதாள்கட்டை போர்த்துள்ள.

**stubb'orn**, *a.* பிடிவாதமான; இசையாத; கீழ்ப்படியாத; முரடான; நெகிழ்வற்ற; எளிதில் உருகாத; எளிதில் இணையாத; வசப்படுத்த முடியாத; அடங்காத.

**stubb'y**, *a.* அடிக்கட்டைகள் நிறைந்த; அடிக்கட்டைகளால் மூடிய; மொட்டை மொழுக்கையான.

**stub'-mortise**, *n.* அரைகுறைப் பொருந்துகுழி அமைவு.

**stubs**, *n. pl.* ஆணி இலாடம் முதலிய பழைய இரும்புப் பொருட்குவை.

**stub'-tenon**, *n.* அரைகுறைப் பொருந்து முளை அமைவு.

**stucc'o**, *n.* குழைகாரை, சுவர்ப்பூச்சுச் சிற்ப ஒப்பனைக்குரிய அரைசாந்து; *pl.* stucc'oes; *v.* குழைகாரை பூசு.

**stuck**, *v.* stick என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**stuck'-up**, *a.* (இழி.) மாட்டிக்கொண்டு தவிக்கிற.

**stud**[1], *n.* குமிழ்; குமிழ் முகப்பு; ஒப்பனைக் குமிழ்ப் புடைப்பு; ஒப்பனைக் குமிழ்முனைப்புப் பரப்பு; பெருந்தலை ஆணி; இருதலைக் குமிழ்மாட்டி; கழுத்துப்பட்டை முகப்பின் ஈரிணைதலைக் குமிழ் மாட்டி; வரிச்சலறையப்படும் குத்துக் கழி; தாற்றுமுள்; குறுமுளை; குறுங்கிளை, கிளை அடித்தூறு; *v.* குமிழ்முகப்புகளால் அணிசெய்; குமிழ் முகப்புகளால் வலிவூட்டு; சிதறலாகப் பொருத்து.

**stud**[2], *n.* பொலிகுதிரைப் பண்ணை; பண்ணைப் பொலி குதிரைத் தொகுதி; பொலிகுதிரைத் தொகுதி; பந்தயக் குதிரைத் தொகுதி; வேட்டைக் குதிரைக் குழுமம்; பயிற்சிக் குதிரைக்கும்பு; வண்டிக்குதிரைக் கும்பு; உடையவர் ஒருவர்க் குரிய குதிரைத்தொகுதி; உடையவர் ஒருவர்க்குரிய உந்து கலத்தொகுதி; *a.* பயிற்சிக்கான; பொலிவூட்டிற்கான.

**stud'-bolt**, *n.* மரை திருகாணி.

**stud'-book**, *n.* குதிரை மரபுவழி ஏடு.

**studd'ed**, *a.* பதிக்கப் பெற்ற; நெருக்கமாகப் பொருத்தப் பெற்ற; தூவப்பெற்ற; எங்குஞ் சிதறலாக அமைந்த.

**studding'-sail**, *n.* (கப்.) மென்காற்றுக்காலத் தொங்கல் மிகைப்பாய்.

**stud'ent**, *n.* மாணாக்கர்; உதவி நிதி பெறும் ஆராய்ச்சி மாணவர்.

**stud'entship**, *n.* மானியம் பெறும் ஆராய்ச்சி மாணவர் நிலை.

**stud'-farm**, *n.* குதிரை வளர்ப்புப் பண்ணை.

**stud'-horse**, *n.* பொலிகுதிரை.

**stud'ied**, *a.* திட்டமிட்டுச் செய்யப்பட்ட; வேண்டுமென்றே செய்யப்பட்ட; உன்னோக்குடன் மேற்கொள்ளப்பட்ட; மன மார்ந்து மேற்கொள்ளப்பட்ட; செயற்கையான, மனமறிந்த.

**stud'iedly**, *adv.* மனமார, தெரிந்து, திட்டமிட்டு, செயற்கைப் பண்புடன்.

**stud'iedness**, *n.* தெரிசெயல் நிலை; செயற்கை நடைப் பண்பு.

**stud'io**, *n.* கலைவினையரங்கம், கலைக்கூடம்; ஓவியர் பணி யரங்கம்; சிற்பியின் தொழிற்கூடம்; படப்பிடிப்பு மனை, நிழற்படத் தொழிலகம்; பட எடுப்பு வளாகம், திரைப்பட எடுப்பு அரங்கம்; வானொலி பரப்பரங்கம்; *pl.* stud'ios.

**stud'ious**, *a.* கல்வியார்வமுடைய; படிப்பீடுபாடுடைய; முயற்சி அக்கறையுடைய; முயற்சி வேட்கையுடைய; மன மார்ந்து செய்யப்படுகிற; முனைத்த அக்கறையுடைய; ஆர்வ மிக்க; ஆவல்மிக்க; கடும் உழைப்பு மேற்கொள்கின்ற.

**study**, *n.* படிப்பு, கல்வி, வாசிப்பு; ஆராய்ச்சி, ஆழ்நிலை ஆய்வு; ஆழ்நிலை ஏடாய்வு; கூராய்வு; நுண்ணாய்வு; ஐயநிலைத் தேர்வாராய்வு; பயிற்சி ஆய்வு; கலைத்துறைப் பயிற்சிப்பணி; இசைப்பயிற்சி வாய்பாடு; ஓவியர் பயிற்சித் தேர்ச்சிப்படம்; அறிவாராய்ச்சித் துறை; ஆராய்ச்சிக்குரிய துறை; அறிவாராய்ச்சி ஏடு; கலை ஆராய்ச்சி ஏடு; ஆராய்ச்சி

ஏடு; ஆராய்ச்சியின் முதற்படி முயற்சி; விருப்பார்வம்; ஆர்வ உழைப்பீடுபாடு; ஆர்வமுயற்சி; ஆர்வமுயற்சிக்குரிய ஒன்று; ஆர்வக்கவலைக்குரிய செய்தி; சிந்தனைக்குரிய செய்தி; நடிப்புக்குரிய உருப்பாடம்; நடிப்புப்பகுதி மனப்பாடஞ் செய்பவர்; ஆய்வறை; படிப்பறை; கலைப்பணியறை; *v.* கருத்தூன்றிப் படி; கூர்ந்து பயிலு, ஊன்றி அறிவுத்திறம் பெறப் பாடுபடு; அறிவு நோக்கமாகக் கொள்ளு; கல்வி பயிலு; தேர்வுநாடிப் படி; தேர்வுத்துறைநாடிப் பயிற்சி மேற்கொள்; ஆராய்ச்சி செய்; அறியமுயலு; தேர்ந்தாராய்; மனமார எண்ணிப்பார்த்து வகுத்தாராய்வு செய்; ஆலோசனை செய்; ஆலோசனைக்கு எடுத்துக்கொள்; ஆலோசித்துக் கண்டுபிடி; நுணுகிக் காண்; கூர்ந்து கவனி; நோக்கி ஆராய்; நுணுகி ஆராய்; சிந்தனையுடன் நோக்கு; தன்னைமறந்த சிந்தனையில் ஆழ்வுறு; குறித்து அக்கறை கொள்; குறித்துக் கவலைப்படு; கருத்தூன்றி முயற்சிசெய்; செய்து முடிக்கப் பாடுபடு; இடைவிடாது முயலு; இடை விடாது சமாளிக்க முயற்சி செய்; காத்திருந்து கவனஞ் செலுத்திப்பார்; மனமார எண்ணிப் பார்; செயல் செய்வதன்முன் பிறர் விருப்பம்-உணர்ச்சிகள்-நலச்சார்வு எதிர்வுகளை எண்ணிப்பார்; (தொ.) continue your studies, ஆராய்ச்சிகளை மேற்கொண்டும் நடத்து; in a brown study, சூழல் மறந்த சிந்தனையில் ஆழ்ந்து; make a study of, கவனமாக ஆராய்; தனித்துறை அறிவு பெற முயல்; study one's part, நாடகவகையில் தனக்குரிய நடிப்புப்பகுதியைப் பாடஞ்செய்; நடிப்புப் பகுதியை மனப்பாடஞ் செய்ய முயல்; நடிப்பிற் கருத்துச் செலுத்து; study out, கடுஞ் சிந்தனையால் கண்டுபிடி; study up, தேர்வுக்கான பயிற்சி மேற்கொள்; தேர்வு முதலியவற்றிற்கு ஒருங்கியிரு.

**stuff,** *n.* மூலப்பொருள், ஆக்கமூலச் சரக்கு; மூலப்பொருள் தொகுதி; உணவுச் சரக்கு; சரக்கு, பண்டம், பொருள்; கருப்பொருள்; சத்து, சாரம்; கம்பளிப் பண்டம், பட்டுப் பருத்தி நேரியல் சணலல்லாத துகிற் பொருள்; தனிமுறைச் செய்பொருள், தனிமுறைக் கலவை; மருத்துக் கலவை; மூட்டை முடிச்சுத் தொகுதி; பணம்; குடிச்சரக்கு, மது; பத்திரிகைப்படி, ஏட்டுப்படி; பத்திரிகைச் செய்தி; ஏட்டுச் செய்தி; எழுத்துருச் செய்தி; செய்தி; கழிபொருள், இழிபொருள்; செத்தை; (இழி.) காரியம், வழக்கமான வேலை; (இழி.) புளுகு, ஏய்ப்புரை, வீணுரை; *v.* திணித்து வை, அமுக்கிவை; செருகி அடை, நிரப்பு, நிரப்பியடை, வைத்துத் திணி; இடம் நிரப்பு; உணவைத் திணித்தடை; தின்று கொழுக்கவை; பேருண் கொள், தின்று கொழு; திணித்துப் பெரிதாக்கு; உள் திணித்து உப்பவை; புள்-விலங்கு முதலிய வற்றின் வகையில் உள்ளீடகற்றித் தோலில் பஞ்சு முதலியன திணித்துவை; புளுகு; (தொ.) doctor's stuff, மருந்து; garden stuffs, green stuffs, காய்கறிகள்; household stuff, மனைத் துணைப்பொருள்கள், தட்டுமுட்டுப் பொருள்கள்; inch stuff, ஓரங்குலக் கனமுடைய பலகை; stuff child, குழந்தைக்கு மிகுதி உணவு கொடு, ஊட்டிக் கெடு; stuff goose, வாத்தினைத் தீனியால் கொழுக்கவைத்து வளர்; the stuff, (பே-வ.) கிடைக்குஞ் சரக்கு; கிடைக்கும் கட்டுமான மரம்; கிடைக்கும் பணம்; கிடைக்கிற கிளிஞ்சல் வகை; கிடைத்துள்ள மாணவர்.

**stuffed,** *a.* திணித்து வைக்கப்பட்ட; சேமப்பொருள் நிரம்பிய; உணவுப்பொருள் சேகரம் உடைய, மூக்கடைத்துக்கொண்ட; தொண்டையடைத்துக் கொண்ட; (தொ.) stuffed bird, உறைதிணிப் பறவையுரு; stuffed fowl, பூரணம் செருகி வைக்கப்பட்ட கோழி இறைச்சி; stuffed shirt, (பே-வ.) மதிப்பற்ற வெற்றுப்பகடி.

**stuff'er,** *n.* அடைப்போன்; அமுக்குவோன்; விழுங்குவோன்.

**stuff'-gown,** *n.* துணைநிலை வழக்கறிஞர் மேலங்கி, பட்டிழையலாது கம்பளியாலியன்ற மேலங்கி.

**stuff'ing,** *n.* திணிப்பு; உள்திணித்து வைப்பதற்குரிய பொருள்; பூரணம், பண்ணிய உள்ளீடு.

**stuff'ing-box,** *n.* காற்று முதலிய உட்புகாவாறு இயங்க வல்ல உள்திணிப்புப் பொறி அமைவு.

**stuff'y,** *a.* புழுக்கமான; இறுக்கமான; நெரிசலான; மூச்சுவிட முடியாத; மூச்சுத் திணறச் செய்கிற; காற்றோட்டம் போதாத; ஊசிப்போன; கெட்டுப்போன; மட்கல் நாற்றம் அடிக்கின்ற; பழைய; காளான் படிந்த; சினமுடைய; முகஞ் சுளித்திருக்கிற, சிடுசிடுப்பான.

**stul'tify,** *v.* வீணாக்கு, பயனற்றதாக்கு; முட்டாளாக்கிக் கொள்; முன்செயலைப் பொருளற்றதாக்கு; நகைப்பிற்கிடமாக்கு; கேலிக்குரியதாக்கு; வினைவற்றதாக்கு; முன்பின் முரணான செயலால் விளைவுகெடு.

**stum,** *n.* புளிக்காத திராட்சை மது; புது மது; *v.* புளிக்காதிருக்கச் செய்; நுண்மக்காப்புப் பொருளின் உதவியால் மிடாவில் சாராயம் மேலும் புளிக்காதவாறு செய்.

**stum'ble,** *n.* தடுமாற்றம்; தடுக்கி வீழ்வு; *v.* தடுமாறு, இடறு; தடுக்கி விழு; தடுக்குறு; அறியாப் பெருந்தவறு செய்; தற்செயலாக வந்தெய்தப் பெறு; தயக்கங்காட்டு; சிறுநுட்பக் காரணங்களால் மயக்க தயக்கங் கொள்; தயக்கக் காரணமாயிரு, மயக்க தயக்கந் தூண்டு.

**stum'bling-block,** *n.* முட்டுக்கட்டை; தடை.

**stum'er,** *n.* (இழி.) விலைமதிப்பற்ற காசுமுறி; கள்ள நாணயம்; போலித் தாள்நாணயம்.

**stump,** *n.* அடிக்கட்டை; மர அடித்தார்; பயனற்ற குற்றி, உடைந்த பல்; துண்டித்த உறுப்படி; எழுதுகோலின் கடையெச்சத் தேய்வு; துடைப்பானின் கடைக்குறை; பேச்சாளர் பயன்படுத்தும் கட்டைமர மேடை; மரப்பந்தாட்ட நிலைக்கழிகள் மூன்றனுள் ஒன்று; ஓவியர் தாள் சுருணைத் துடைப்பான்; *v.* தட்டுத்தடவென நட; புதிர்போடு, மலைக்க வை; மரப்பந்தாட்ட வகையில் பந்துக்குறியைக் குலைவுறச் செய்து தன்னிடம் விட்டுப்போன ஆட்டக்காரரை அகற்று; அரசியல் ஆவேசக் கிளர்ச்சியுரை நிகழ்த்து; அரசியல் ஆவேசக் கிளர்ச்சியுரை நிகழ்த்திக் கொண்டு தம் தேர்தல் வட்டாரஞ் சுற்றிச்செல்; ஓவியர் வரைவில் தாள்சுருணையைத் துடைப்பானாக அழிக்கப் பயன்படுத்து; (தொ.) draw stumps, விளையாட்டை முடித்துவிடு; on the stumps, (பே-வ.) அரசியல் பேச்சு அல்லது கிளர்ச்சியில் ஈடுபட்டுள்ள; stump orator, அரசியல் கிளர்ச்சி ஆவேசப் பேச்சாளர்; கடற்கரைப் பேச்சாளர்; stump up, (இழி.) வழக்கில் பணங்கொடு; வேண்டிய பணத்தைக்கொடு.

**stump'y,** *a.* கட்டை குட்டையான.

**stun,** *n.* அதிர்ச்சி; *v.* அதிர்ச்சியூட்டு; திகைப்பூட்டு; பொறி கலங்கவை; காதுவகையில் செவிடுபட வை; போதங் கெடு; உணர்விழக்கச் செய்; ஆற்றலிழக்கச் செய்; செயலடங்குவி; செயல் விஞ்சி மேற்செல்.

**Stun'dism,** *n.* விவிலியத்தின் ருசிய மொழிபெயர்ப்பினைச் சான்றாகக் கொள்ளும் புதுமைக் கிறித்தவ நெறி.

**Stun'dist,** *n.* ருசிய நாட்டுப் புதுமைக் கிறித்தவ நெறியாளர்.

**stung,** *v.* sting என்பதன் இறந்தகால முடிவெச்சம்.

**stunk,** *v.* stink என்பதன் இறந்தகால வடிவங்களுள் ஒன்று; stink என்பதன் முடிவெச்சம்.

**stunn'er,** *n.* அதிர்வூட்டுபவர்; (இழி.) முதல்தரமானவர்; (இழி.) முதல்தரமான செய்தி.

**stunn'ing,** *a.* அதிர்ச்சியூட்டுகிற; பொறி கலங்கவைக்கிற; திகைப்பூட்டுகிற; செவிடுபட வைக்கிற; உணர்விழக்கச் செய்கிற; ஆற்றலிழக்கச் செய்கிற; செயலடங்குவிக்கிற; செயல் விஞ்சி மேற்செல்கிற; (இழி.) மிகச் சிறந்த; முதல் தரமான; மிக வரவேற்கத்தக்க, களிமகிழ்வூட்டத்தக்க; முற்றுறழ்வான.

**stunt[1],** *n.* பகட்டுவித்தை; விளம்பரத் தந்திரம், உணர்ச்சி கிளறுஞ் செய்தி; புகழ்நோக்க முனைப்புச் செயல்; பொதுக் கவர்ச்சிச் செய்தி; *v.* பகட்டுவித்தை காட்டு; புகழ்நோக்க முனைப்புச் செயல் செய்; விளம்பரத் தந்திரங் கையாளு.

**stunt[2],** *v.* குட்டையாக்கு; வளர்ச்சி குறை.

**stunt'ed,** *a.* வளர்ச்சி தடைப்பட்ட; குறுக்கப்பட்ட.

**stupe**[1], *n.* ஒத்தடக் கம்பளித்துணி; அறுவைக் கட்டுத்துணி; *v.* ஒத்தடக் கம்பளித்துணியிட்டுக் கட்டு; ஒத்தடங் கொடு; அறுவைக்கட்டுத் துணியிடு.

**stupe**[2], *n.* (இழி.) முட்டாள்.

**stupefac'tion**, *n.* உணர்வுமழுக்கம், திகைப்பு, மட்டுமீறிய வியப்பதிர்ச்சி; மட்டிமைப்படுத்துதல்.

**stup'efy**, *v.* உணர்வு மழுங்கச் செய்; வியப்பதிர்ச்சியுறச் செய்; மட்டிமையாக்கு.

**stupen'dous**, *a.* மருட்பெரிய, மிகப்பெரிய.

**stup'eous**, *a.* (பூச்.) நீள் நெகிழ் செதிளுடைய.

**stup'id**, *n.* (பே-வ.) முட்டாள்; *a.* மதிகெட்ட; மந்தமான; மதி நுட்பமற்ற; கவர்ச்சியற்ற; சோர்வு தருகிற.

**stupid'ity**, *n.* மதிகேடு, அறிவு மழுக்கம்.

**stup'or**, *n.* மசணத்தன்மை, மதிமயக்க நிலை; உன்மத்த நிலை, உணர்விழந்த தன்மை; மந்தநிலை, உணர்வுக் கிளர்ச்சியற்ற நிலை; வியப்பதிர்ச்சி; செயலற்ற திகைப்பு நிலை.

**stup'orous**, *a.* (மரு.) உன்மத்த நிலையுடைய, மதிமயக்கம் வாய்ந்த.

**stup'ose**, *a.* (வில.) நீள்முடிக் கற்றையுடைய; (தாவ.) நீள் இழைக்கற்றையுடைய.

**stur'died**, *a.* ஆடுகள் வகையில் தலைச்சுற்றுக் கோளாறுடைய, நாடாப் புழுவினுற் பாதிக்கப்படும் மூளை நோயுடைய.

**sturd'y**[1], *n.* ஆட்டுத்தலைச்சுற்றுக் கோளாறு, நாடாப் புழுவினுல் ஏற்படும் ஆட்டுமூளை நோய்.

**sturd'y**[2], *a.* கட்டுறுதி வாய்ந்த; உருண்டுதிரண்ட; திண்ணுடலுடைய; வல்லுறுதிமிக்க; திண்ணிய, துணிவுமிக்க; முரடான, முரட்டுத்தனமிக்க; அடங்காத; பிடிவாதமான.

**stur'geon**, *n.* சுறு வடிவுடைய இன்னுணவு மீன் வகை.

***Sturm und Drang***, *n.* நாட்டு வாழ்வில் கொந்தளிப்புக்காலம்; தனி வாழ்வில் அமைதியில்லாப் பருவம்.

**stutt'er**, *n.* திக்கல், கொன்னல்; தெற்றிப் பேசும் வழக்கம்; *v.* திக்கு, தெற்றிப் பேசு.

**stutt'erer**, *n.* தெற்றுவாயர்.

**sty**[1], *n.* பட்டி, பன்றிக்கிடை, பன்றித்தொட்டி; இழிந்த குடில்; அழுக்கடைந்த அறை; வரம்பிகந்த ஒழுக்கக்கேட்டிடம்; *pl.* sties; *v.* கிடையில் அடை; பன்றிகள் வகையில் கிடையில் அடைத்து வை.

**sty**[2], *n.* இமைவீக்கம், கண்கட்டி; இமைக்குரு, கண்ணிமையிலுண்டாகுஞ் சிறுகட்டி; *pl.* sties.

**stye**, *n.* = sty[2].

**Sty'gian**, *a.* கிரேக்க புராண மரபில் கீழை ஆவியுலக எல்லையிலுள்ள ஆறு ஸ்டிக்ஸ் (Styx) சார்ந்த; கீழுலகஞ் சார்ந்த; நரகஞ் சார்ந்த; இருளார்ந்த.

**style**[1], *n.* எழுத்தாணி, பழங்கால எழுதுகருவி; கூர்முனையுடைய சிறுகோல்; (செய்.) கரிக்கோல், பென்சில்; மைக்கோல், பேனு; எழுதுகோல் வடிவுடைய பொருள்; செதுக்கூசி; கதிர் மணிப்பொறியின் கம்பம்; முள்ளெலும்பு; (தாவ.) சூலக இடைத்தண்டு; எழுத்துநடை; பேச்சு நடை; செயற்பாணி; நாகரிகப்பாங்கு; காலத்திறம்; வளர்ப்பு முறைப் பண்பு; குழுவின் தனியியல்பு; தனிமனிதர் சிறப்பியல்பு; தனி மேம்பாடு, வகை; மாதிரி; ஒப்பனைப்பாணி; கலைப் பண்பின் மாதிரி, கட்டுமானப்பண்பு மாதிரி; பெயர்க்குறிப்பு மாதிரி; விவர வாசகம்; முழுப்பெயர்; *v.* பெயர் குறிப்பிட்டுச் சுட்டு; பெயரால் சுட்டி வழங்கு, பெயரால் குறித்துரை; (தொ.) baroque style, 17-வது 18-வது நூற்றுண்டுகளின் கலைப்பாணி; Gothic style, இடைநிலைக்காலக் கூர் மாடச் சிற்பப் பாணி; impressionist style, விரி துணுக்கக் கூறுகளில்லாத பொதுமை நோக்குப் பாணி; monumental style, நினைவுச் சின்னத்திற்குரிய எழுத்துரு வகை; perpendicular style, இங்கிலாந்தில் 1350 முதல் 1600 வரை வழங்கிவந்த திருக்கோயிற் கட்டிடக்கலைப் பாணி; pre-Raphaelite style, ரபேல் (Raphael 1483-1520) என்னும் இத்தாலிய ஓவியரின் காலத்திற்குமுன் வழங்கிய வண்ண ஓவியப்பாணி; renaissance style, மறுமலர்ச்சிக்கால உடுப்புப்பாணி.

**style**[2], *n.* = stile.

**styl'et**, *n.* மெல்லிய கூர்ங்கருவி; சிறு குத்துவாள்; நுண் புழைசெய் கருவி; உள்ளிட்டு விறைப்பாக்கும் அறுவைக் கம்பி; அறுவைத் துழாவு கருவி.

**styl'iform**, *a.* எழுதுகோல் போன்ற; பன்றிமுள் போன்ற.

**styl'ish**, *a.* நயநாகரிகமான; பகட்டிக்கொள்ளுகிற; புது நடைப் பாணியுடைய; கவர்ச்சித்தோற்றமுடைய.

**styl'ist**, *n.* தகுநய நடையாளர்.

**stylis'tic**, *a.* தகுநய நடை சார்ந்த.

**styl'ite**, *n.* கந்து முனிவர், தூண் உச்சியில் வாழ்ந்த இடைக் காலத் துறவி.

**styl'ize**, *v.* மரபுச்சட்டமாக்கு; மரபொழுங்கு சார்ந்த நடைமுறை விதிகளுக்கு இணக்குவி, மரபொழுங்கு முறைப்படுத்து.

**styl'o**, *n.* (பே-வ.) = stylograph; *pl.* styl'os.

**styl'obate**, *n.* தூண்வரிசை அடித்தொடர்.

**styl'ograph**, *n.* கம்பிமுனை மைக்கோல்.

**stylohy'oid**, *a.* (உள்., வில.) நாவடி முள்ளெலும்பு சார்ந்த.

**styl'oid**, *n.* பொட்டெலும்பின் புறநீட்டமான முள்ளெலும்பு; *a.* முள் மயிர்போன்ற; முள்ளெலும்பு வடிவான; (தொ.) styloid process, பொட்டெலும்பின் புறநீட்டமான முள்ளெலும்பு.

**stylomaxill'ary**, *a.* தாடை முள்ளெலும்பு சார்ந்த.

**styl'us**, *n.* எழுத்தாணி, பழங்கால எழுதுகருவி; கதிர்மணிப் பொறிக்கம்பம்; (தாவ.) சூலக இடைத்தண்டு.

**stym'ie**, *n.* குழியணிமைநிலை, குழிப்பந்தாட்ட வகையில் பந்து குழியிலிருந்து ஆறு அங்குலமாயிருக்கும் நிலை; *v.* குழிப்பந்தாட்ட வகையில் குழியணிமைநிலை உண்டுபண்ணு.

**styp'tic**, *n.* குருதிதடுப்பான்; *a.* குருதிவடிவதை நிறுத்துகிற.

**styr'ax**, *n.* பிசின்மர வகை; பிசின்செடி வகை.

**Sty'rian**, *n.* ஆஸ்டிரியாவின் ஸ்டிரியா மாவட்டத்தவர்; *a.* ஸ்டிரியா மாவட்டஞ் சார்ந்த.

**Styx**, *n.* கிரேக்கபுராண வழக்கில் கீழுலகத்தைச் சூழ்ந்துள்ள ஆற்றின் பெயர்; (தொ.) cross the Styx, இறந்துபோ.

**Suab'ian**, *n.* செர்மனியிலுள்ள ஸ்வாபியா (Swabia) மாகாணத்தவர்; *a.* ஸ்வாபியா மாகாணஞ் சார்ந்த.

**suabil'ity**, *n.* வழக்குத் தொடரத்தக்க நிலை; வழக்குத் தொடர்தகவு.

**su'able**, *a.* வழக்குத்தொடரத்தக்க.

**sua'sion**, *n.* இணங்குவிப்பு, இணங்குபண்பு.

**suave**, *a.* மென்னயம் வாய்ந்த; அமைதிநலஞ் சார்ந்த; இணக்கநலம் வாய்ந்த; கனிவான; இனிமைநலமார்ந்த.

***suav'iter in mod'o fort'iter in re***, (ல.) *adv.* மென்பட்டு உறை போர்த்த இரும்புக்கையுடன்; மென்னயமாகவும் உறுதியாகவும்.

**sub**[1], *n.* (பே-வ.) படைத்துறைத் துணைஅலுவலர்; நீர்மூழ்கிக் கப்பல்; பங்குவரி; நிலைவரி, பத்திரிகைக் கட்டணம்; பதிலாள்; பதிலானது; *v.* பதிலாளாகச் செயலாற்று.

***sub***[2], (ல.) *prep.* கீழே.

**subabdom'inal**, *a.* (வில.) அடிவயிற்றிற்குக் கீழுள்ள.

**suba'cid**, *a.* சற்றே காடிப் புளிப்பான.

**subacid'ity**, *n.* சற்றே புளிப்பான தன்மை.

**subacid'ulous**, *a.* சற்றே காடிப்புளிப்புடைய.

**sub-ac'rid**, *a.* சற்றே புளிப்பான.

**sub-acute'**, *a.* சற்றே கூரிய; மட்டான அறிவுக்கூர்மையுடைய; (மரு.) முனைப்பக்கும் நாட்பட்ட சீர்கேட்டிற்கும் இடைநிலைப்பட்ட.

**subae'rial**, *a.* திறந்த வான்வெளியிலுள்ள ; நிலப்பரப்பின் மீதான.

**suba'gency**, *n.* துணைமுகவர் நிலை, கீழ்ப்பட்ட ஆட்பெயர் நிலை ; வாணிகத் துணை ஆட்பெயர்நிலை ; விற்பனைத் துணைப் பெயராட்சி.

**suba'gent**, *n.* துணைமுகவர், கீழ்நிலை ஆட்பெயர்.

**subahdar'**, *n.* சுபேதார், இந்தியப் படைப்பிரிவின் தலைவர்.

**subal'pine**, *a.* தாவர வகையில் ஆல்ப்ஸ்மலைச் சூழ்வாரத்திற் குரிய ; ஆல்ப்ஸ்மலைத் தாழ்வாரத்திற்குரிய.

**sub'altern**, *n.* கீழ்நிலைப்பணியாளர் ; துணைநிலைத்தலைவர் ; துணைநிலையாளர்; கீழ்நிலையாளர்; (அள.) சினைநிலைவாசகம் ; *a.* கீழ்நிலை வகுப்பிற்குரிய ; துணைமையான ; துணைநிலை சார்ந்த ; கீழ்நிலைப்பணிகளுக்குரிய ; அடுத்த கீழ்ப்பணி சார்ந்த; அடுத்தடுத்துக் கீழ்ப்பணிகளுக்குரிய; (அள ) வாசக வகையில் முழுப்படர்வற்ற, சினை நிலையான.

**subalter'nate**, *n.* (அள ) முழுப்படர்வு வாசகத்திற்குரிய குறிப்பு வாசகம்; *a.* கீழிணக்கமான; (தாவ.) எதிர்நிலையாகும் பாங்குள் ஒற்றைமாற்றுல் இயல்கிற.

**subalterna'tion**, *n.* (அள.) ஓரினக்குறிப்பு முழுப்படர்வு வாசகத் தொடர்புறவு.

**subalter'nity**, *n.* கீழுறுநிலை, துணைமைநிலை.

**suban'al**, *a.* குத அணிமைவாய்ந்த, எருவாய் அடுத்துக் கீழுள்ள.

**subang'ular**, *a.* சற்றே கோணவடிவான.

**subap'ennine**, *a.* இத்தாலிநாட்டு அபினைன் மலையடிவாரத் திற்குரிய.

**subapostol'ic**, *a.* இயேசுநாதரின் திருத்தொண்டர்களுக்குப் பிற்பட்ட காலத்திய.

**subappear'ence**, *n.* துணைமைத்தோற்றம், கிளைத்தோற்றம்.

**subaquat'ic**, *a.* நீரடியான, நீரின் கீழுள்ள ; ஒரு சார்பு நீர் வாழ்வுப் பழக்கமுடைய.

**subaq'ueous**, *a.* நீரின் கீழுள்ள.

**subarboresc'ent**, *a.* ஓரளவு மரம்போன்ற.

**subarc'tic**, *a.* வடதுருவ ஓர அணிமையிலுள்ள.

**subarc'uate**, *a.* வில் வளைவு போன்ற.

**subarcua'tion**, *n.* வில் வளைவினுள் வில்வளைவமைப்பு.

**subar'id**, *a.* ஓரளவு பாலையான.

**subarra'tion, subarrha'tion**, *n.* நகில்விலை; நிச்சயார்த்தம்.

**subas'tral**, *a.* நிலவுலகுக்குரிய.

**subat'om**, *n.* அணுவின் உட்கூறு.

**subatom'ic**, *a.* அணு உட்கூறமைவு சார்ந்த ; அணு உட் டுகள் மாறுபாட்டுக்குரிய.

**subatom'ics**, *n. pl.* அணு உட்கூறமைவியக்க ஆய்வியல்

*subaud'i*, (ல.) *v.* நினைவாக இட்டு நிரப்பிக்கொள்க.

**subauditi'on**, *n.* அவாய்நிலை ; தொனிக்குறிப்பு ; எச்சப் பொருள்கோள், உய்த்துணர நிற்றல்.

**subax'illary**, *a.* அக்குளுக்குக் கீழுள்ள ; (தாவ.) காம்புக் கவட்டுக்குக் கீழான.

**sub-bas'al**, *a.* அடியளாவிய; அடித்தளத்துக்குக் கீழ்ப்பட்ட.

**sub'-base'**, *n.* அடித்தள அகடு.

**subb'ing**, *n.* பதிலாளாக வேலைசெய்தல் ; பதிலாட்பணி ; வேலை வேளை இடை முன்பணம்.

**sub'-branch**, *n.* கீழ்நிலைக்கிளை.

**sub'-breed**, *n.* வளர்ப்பினக் கிளைவகை.

**subcant'or**, *n.* திருக்கோயில் தலைமைப்பாடகர் துணைமைப் பதிலாள்.

**subcau'dal**, *a.* வாலின் கீழுள்ள.

**subceles'tial**, *a.* வானகத்துக்குக் கீழுள்ள.

**subcen'tral**, *a.* மையத்தின் கீழுள்ள; மையத்திற்கருகிலுள்ள.

**sub'chan'ter**, *n.*=subcantor.

**sub'class**, *n.* இன உட்பிரிவு.

**subclav'ian, subclavic'ular**, *a.* கழுத்துப்பட்டை எலும் பிற்குக் கீழுள்ள.

**subcommitt'ee**, *n.* உட்குழு ; குழுப்பிரிவு.

**subcon'scious**, *n.* அரை உணர்வுத்தளம், உளத்தின் அடி யுணர்வுத்தளம் ; அரையுணர்வுத் தளச்செயல் தொகுதி ; *a.* அரையுணர்வுத் தளஞ் சார்ந்த, அடியுணர்வுக்குரிய.

**subcontig'uous**, *a.* நெருக்கத்திலுள்ள ; தொடும் நிலையி லுள்ள.

**subcon'tinent**, *n.* துணைக்கண்டம், கண்டத்தின் தனிப் பண்புடைய பகுதி, தனிப்பண்புடைய பெரும்பரப்பு ; சிறு கண்டம்.

**subcontinent'al**, *a.* துணைக்கண்டப் பண்புடைய.

**subcontin'uous**, *a.* முற்றிலுந் தொடர்ச்சிபெருத.

**subcon'tract** [1], *n.* உள் ஒப்பந்தம்.

**subcontract'** [2], *v.* உள் ஒப்பந்தஞ் செய்துகொள் ; கீழ்க் குத்தகை ஏற்றுக்கொள் ; கீழ்க்குத்தகை விடு.

**subcontract'or**, *n.* கிழொப்பந்தக்காரர் ; துணைக் குத்தகை யாளர், உட்குத்தகையாளர்.

**subcontrari'ety**, *n.* (அள.) குறைநிலை முரண், முற்கோள் களின் சிறிது முரண்பட்ட தொடர்பு.

**subcon'trary**, *n.* குறைநிலைமுரண், சிறிதளவு முரண்பட்ட முற்கோள் ; *a.* குறைநிலை முரணுன, சிறிது முரண்பாடான.

**subcord'ate**, *a.* இதய வடிவணுக்கமுடைய, ஏறத்தாழ நெஞ்சுக்குலை வடிவான.

**subcorn'eous**, *a.* (வில.) கொம்பணவிய, கொம்பினைப்போல் கெட்டியான பகுதியின் கீழுள்ள ; ஏறத்தாழக் கொம்பு போன்ற.

**subcort'ical**, *a.* மரப்பட்டையில் உள்ளூரிக்கு அடியிலுள்ள.

**subco'sta**, *n.* வண்டுச்சிறகின் விளிம்போர நரம்புச்சட்டம்.

**subcos'tal**, *n.* வண்டுச்சிறகின் விளிம்பயல் நரம்புச்சட்டம் ; *a.* விலாவெலும் படுத்த; வண்டுச்சிறகின் விளிம்பயலான.

**subcran'ial**, *a.* மண்டையோட்டிற்குக் கீழுள்ள.

**subcrys'talline**, *a.* ஓரளவு பளிங்குபோன்ற.

**sub'cul'ture**, *n.* இரும்டிச்செய்முறை வளத்தொகுதி, நுண்ம வகையில் செய்முறை வளத் தொகுதியிலிருந்து பெறப்பட்ட செய்முறைவளத் தொகுதி.

**subcutan'eous**, *a.* தோலடியான, தோலின் கீழான.

**subcylin'drical**, *a.* வட்டணிமை வடிவான, ஏறக்குறைய நீள் உருளை வடிவான.

**subdeac'on**, *n.* துணைநிலைக் கோயிற்குரு.

**subdecan'al**, *a.* துணைமைக் கோயிற்குரு சார்ந்த.

**subdec'uple**, *a.* பத்தில் ஒரு கூறு கொண்ட.

**subdelir'ium**, *n.* (மரு.) தொடக்கநிலைச்சன்னி.

**subdiac'onate**, *n.* துணைமைக் கோயிற்குரு பதவி ; துணை நிலைக் கோயிற்குரு நிலை.

**sub'-divide'**, *v.* உட்பிரிவு செய்.

**subdivi'sion**, *n.* உட்பிரிவு; வட்டகைப்பிரிவு, உள்வட்டகை; கீழ்வட்டகை ; உட்பகுப்பு.

**subdivis'ional**, *a.* உட்பிரிவு சார்ந்த ; கீழ்வட்டகை சார்ந்த.

**subdivis'ive**, *a.* உட்பகுப்பான, உட்பகுப்புச்சார்ந்த.

*sub divo*, (ல.) *adv.* வானத்தின் கீழ், திறந்தவெளியில்.

**sub'dolous**, *a.* தந்திரமுள்ள, சூழ்ச்சிமிக்க.

**subdom'inant**, *n.* (இசை.) ஐந்தாவது சுரத்திற்குக் கீழ்ப் பட்ட சுரம் ; *a.* மிகமுனைப்பாய் இராத.

**subdors'al**, *a.* (வில.) வெங்களாவிய, சிறிதே முதுகின் மேற் புறத்திலுள்ள.

**subdou'ble**, *a.* (கண.) தலைமாற்றிரட்டியான.

**subdu'al,** *n.* கீழ்ப்படுப்பு, கீழடக்கம், வென்று ஆட்சிசெய்தல்.
**subduce', subduct',** *v.* (அரு.) பின்வாங்கிக்கொள், திரும்ப எடு; தள்ளுபடி செய், குறை, கழித்துவிடு.
**subduc'tion,** *n.* கழிப்பு; தள்ளுபடி, குறைப்பு.
**subdue',** *v.* அடிப்படுத்து, கீழ்ப்படுத்து; ஆட்சிக்கு உட்படுத்து; தோல்வியுறச்செய்; முற்றும் தன்வயப்படுத்து, பழக்கி ஆட்கொள்ளு; ஒழுங்குமுறை படியவை; மென்மையாக்கு, இளகச்செய்; முனைப்பினைக் குறை, படம் வகையில் வண்ணச்செறிவை இளக்கு; மட்டுப்படுத்து, தணிவி.
**subdued',** *a.* அடங்கிய, உள்ளடங்கலான; கம்மிய, குரல் வகையில் அடங்கிய தொனியையுடைய.
**subdu'er,** *n.* கீழடக்குபவர்.
**subdu'ple,** *a.* ஒன்றிற்கு இரண்டான தகவுடைய.
**subdup'licate,** *a.* (கண.) பெருக்க மூலங்களின் தகவுப் பொருத்தமுடைய.
**subed'it,** *v.* உதவிப் பதிப்பாசிரியராகச் செயலாற்று.
**subed'itor,** *n.* செய்தித்தாள் துணையாசிரியர்.
**subedito'rial,** *n.* துணைத்தலையங்கம்; *a.* துணையாசிரியரைச் சார்ந்த; துணையாசிரியருக்குரிய.
**subeq'ual,** *a.* ஏறத்தாழ ஒத்த.
**suberect',** *a.* செங்குத்துச் செலவான.
**suber'eous, sube'ric, sub'erose,** *a.* நெட்டி போன்ற, தக்கை சார்ந்த.
**sub'fam'ily,** *n.* விலங்கியல் பாகுபாட்டு வகையில் ஓர் இனப் பெரும் பிரிவு.
**subfeb'rile,** *a.* (மரு.) சற்றே காய்ச்சலான, உடம்பின் வெப்பம் இயல்நிலைக்குச் சற்றே மிகுந்திருக்கும் நிலையுடைய.
**subfeu',** *v.* பண்ணைநிலவுரிமை மானிய வகையில் கீழ்மானியமாக அளி.
**subfeuda'tion,** *n.* கீழ்மானிய அளிப்பு.
**subfeud'atory,** *a.* கீழ்மானியமாக அளிக்கப்படுகிற; கீழ்மானியச்சார்பான.
***sub fin'em,*** (ல.) *adv.* அத்தியாயத்தின் இறுதியடுத்து.
**sub'flavour,** *n.* அடங்கிய மனச்சுவை, முதன்மையல்லா விரை.
**sup'flora,** *n.* பூவினுட்பூ.
**sub'form,** *n.* உள்ளுருவகை; துணைப்படிவம்.
**sub'fusc,** *a.* மங்கலான, முனைப்பற்ற நிறமுடைய.
**subgene'ric,** *a.* துணையினஞ் சார்ந்த, இனத்தின் முதன்மைப் பிரிவு சார்ந்த.
**sub'genus,** *n.* துணையினம், இனத்தின் முதன்மைப்பிரிவு.
**subgla'cial,** *a.* சறுக்கு பனிக்கட்டிப் பாளத்தின் கீழான.
**subglob'ular,** *a.* ஓரளவு கோளவடிவுள்ள.
**sub'group,** *n.* தொகுதி உட்பிரிவு.
**sub'head,** *n.* துணைவகுப்பு; துணைப்பத்தி; துணைத்தலைப்பு.
**sub'head'ing,** *n.* துணைத்தலைப்பு.
**Sub-Himalay'an,** *a.* இமயமலையடிவாரத்திலுள்ள; இமயமலைக்குக் கீழுள்ள.
**subhu'man,** *a.* மனித இனத்துக்குக் கீழ்நிலைப்பட்ட; மனிதப் பண்புகளுக்குக் குறைந்த; மனிதப் பண்புகளை நினைப்பூட்டும் இயல்புகளைப் பெற்றுள்ள.
**subhum'eral,** *a.* தோளுக்குக் கீழிடப்பட்ட; தோளுக்குக் கீழே உள்ள.
**subimag'o,** *n.* ஈ வகையில் முதல் சட்டையுரிக்கு முற்பட்ட சிறகு முளைத்த வடிவம்.
**subincis'ion,** *n.* அடிவிருத்த சேதனம்.
**subinfeud'ation,** *n.* பண்ணை நிலவுரிமை வகையில் கீழ்மானிய அளிப்பு.
**subinfeud'atory,** *n.* கீழ்மானியதாரர்; *a.* கீழ்மானியமாக அளிக்கப்பட்ட.
**subinspec'tor,** *n.* துணைமேற்பார்வையாளர்; துணை ஆய்வாளர்; காவல் துறைத் துணைமேலர்.
**subintellec'tion,** *n.* அவாய்நிலைக்கோள்.
**subintell'igence,** *n.* அவாய்நிலைக்குறிப்பு.
**subintelligen'tial,** *a.* தொக்குநிற்கும் குறிப்புப் பொருளுடைய.
**subintellig'itur,** *n.* தொக்குநிற்கும் பொருள்.
**subintroduce',** *v.* மறைமுகமாக உட்புகுத்து; மெல்ல இடைச்செருகவிடு.
**subja'cent,** *a.* கீழாக அமைந்திருக்கிற; அடிநிலையான.
**sub'ject[1],** *n.* குடிமகன், குடிமகள், பிரஜை; ஆளப்படுபவர்; ஆட்சிக்கு உட்பட்டவர்; நாட்டில் மன்னரல்லாத ஒருவர்; வாழ்குடி; குடியுரிமையாளர்; குடியாள், குடியானவர்; குடியாண்மை ஏற்பவர்; கீழுரிமையாளர்; அடங்கியவர், ஆட்பட்டவர்; ஆணைக்கு உட்பட்டவர்; ஆணைக்கு உட்பட்ட நாட்டின் குடி; தலைப்பு; தலைப்புப் பொருள்; எடுத்துக்கொண்ட பொருள்; தெரிவிக்கப்படுஞ் செய்தி; வாதச்செய்தி; வருணனைக்குரிய பொருள்; ஏட்டின் நுதல்பொருள்; அடிப்படைப் பொருண்மைக்கூறு; ஆதாரப்பொருள்; தனிநிலைப் பொருள்; பண்பி, பண்புக்குரிய பொருள்; ஆய்வுப்பொருள்; சட்ட உரிமைக்குரிய பொருள்; சட்ட ஆய்வுக்குரிய செய்தி; ஆய்வுத்துறை வகை; படிப்புத்துறை வகை; கல்வித்துறைப் பொருள்; (மெய்.) அகநிலைப் பொருள்; உணர்வு முதல், அறிவு முதல், அக உணர்வு; அகம், உள்ளம்; ஆன்மா; உணர்வு விழிப்புடைய ஆன்மத்திறம்; செயல் முறைக்குரிய பொருள்; மருத்துவமனை ஆய்வுக்குரிய செய்தி; அறுவைக்குரிய ஆள்; தனிநோய்ப்பண்டுவத்திற்குரிய நோயாளி; செயல்விளக்க ஓவியம்; கலைஞன் கலைநோக்கக் கூறு; இசை மூலச் செய்தி; இசைமூலப் பதம், இசைக்கு முக்கியமான சொல் அல்லது தொடர்; மருத்துவத்துறையில் பகுத்தாய்வுக்குரிய பிணம்; உணர்ச்சிக்குரிய தூண்டுமுதல்; தோற்றச்சூழல் காரணம்; ஆள், பேர்வழி; வசியத்தில் எளிதில் மசியத்தக்க ஆள்; (இலக்.) எழுவாய்; (அள.) எழுவாய்ப்பகுதி; *a.* ஆட்சிக்கு உட்பட்ட; குடியுரிமையுடைய; தற்சார்புரிமையற்ற; பிறிது மேலாண்மை ஏற்ற; பிறிதாட்சி மேலுரிமை ஏற்ற; பிறருக்குக் கீழடங்கிய; கீழடக்கப்பட்ட; சட்டத்திற்குக் கட்டுப்பட்ட; கடமைப்பட்ட; நோய்க்குஆட்பட்ட; செயலுக்கு உள்ளான; ஆட்படத்தக்க நிலையிலுள்ள; உள்ளாகத்தக்க நிலையிலுள்ள; நேர்வுநிலையிலுள்ள; (செய்.) கீழுள்ள, கீழாக அமைந்திருக்கிற; *adv.* என்ற நிலையின் பேரில்; என்ற கட்டுப்பாட்டின் மீது; உட்பட்டு; (தொ.) be held subject, அடக்கி வைக்கப்பட்டிரு; hold one subject, கீழடக்கி வை; கீழடங்கியவராகக் கருது; பொறுப்புடையவராக்கி வை; subject and object, அகமும் புறமும், தானும் தான் அல்லாததும்; ஆன்மாவும் ஆன்மா அல்லாததும்; அறிவானும் அறிபொருளும்; subject to, சார்பு நிலையில்; உட்பட்டு; சார்ந்திருக்கும் நிலையில், என்னும் ஊகத்தின்பேரில்; the liberty of the subject, அரசியலமைப்போடு இசைவான ஆட்சியில் குடிமக்களுக்கு உறுதி செய்யப்பட்டுள்ள காப்புரிமை.
**subject'[2],** *v.* அடிப்படுத்து, கீழடக்கு; கீழ்ப்படுத்து; ஆட்படச்செய்; செயலுக்கு உள்ளாக்கு; விளைவுக்கு உரியதாக்கு.
**sub'ject-heading,** *n.* பொருள் அட்டவணை.
**subject'ify,** *v.* அகநிலைப்படுத்து, அகநிலைச்சார்பாக்கு.
**subjec'tion,** *n.* அடிப்படுத்துதல், கீழ்ப்படுத்துதல்; ஆட்சிக்குட்பட்ட நிலை; கீழ்ப்படிந்த நிலை; அடிமை நிலை; தன்னுரிமையற்ற நிலை.
**subjec'tive,** *n.* (இலக்.) எழுவாய் வேற்றுமை; *a.* (மெய்.) அக உணர்வு நிலைக்குரிய, அக எண்ணஞ் சார்ந்த, தன் உள்ளுணர்வுக்குரிய; உணர்ந்தறியும் 'தான்' சார்ந்த; கற்பனை நிலையான; கலை-கலைஞர்கள் வகையில் தனி மனப்போக்குக்கு முனைப்புத் தருகிற, தனி முரண்பாட்டினையே பெரிதுஞ் சார்ந்திருக்கிற; புற உண்மைகளை உள்ளபடிக் காட்டாத; (இலக்.) எழுவாய் சார்ந்த; (தொ.) subjective case, எழுவாய் வேற்றுமை.

**subjec'tivism,** *n.* அகநிலை வாய்மைக்கோட்பாடு, அறிவெல்லாம் உள்ளுணர்வு சார்ந்ததேயன்றிப் புறவாய்மை தேர்ந்து துணியத்தக்கவையல்ல என்ற கோட்பாடு.

**subject'ivist,** *n.* அகநிலைவாய்மைக் கோட்பாட்டாளர்; அகநிலைவாய்மைக்கே பெருமதிப்புக் கொடுப்பவர்; அக உணர்வுச் சார்பாளர்.

**subjectivist'ic,** *a.* அகநிலை வாய்மைக் கோட்பாட்டுச் சார்பான, அகநிலை வாய்மைக் கோட்பாட்டு முனைப்பான.

**subjectiv'ity,** *n.* அகநிலை, உள்ளுணர்வுச் சார்பு.

**subject'ivize,** *v.* அகநிலை மயமாக்கு; உள்ளுணர்வு நிலைப்படுத்து.

**sub'ject-matter,** *n.* முதல் பொருள், கூறப்படுஞ் செய்தி, அடிமூலச் செய்தி, உட்கிடைப் பொருள்.

**sub'ject-ob'ject,** *n.* உணர்வில் உருவாகும் புறப்பொருட் படிவம்.

**subjoin',** *v.* பின்னொட்டு; இறுதியிற் சேர்.

**subjoin'der,** *n.* பிற்குறிப்பு, துணை ஒட்டுக்குறிப்பு.

**sub'joint,** *n.* துணைமைக்கணு மூட்டு, பூச்சி வகைகளின் கைகால் மூட்டு உட்பிரிவுகளில் ஒன்று.

***sub jove,*** (ல.) *adv.* பண்டை ரோமர் புராண வழக்குப்படி வானவர் வேந்தன் ஜூபிட்டரின் கீழ்.

**sub'judge,** *n.* கீழ்முறைமன்ற நடுவர், சதரமீன்.

***sub jud'ice,*** (ல.) *adv.* நீதிமுறைமன்ற விசாரணை நிலையில்; இன்னும் தீர்மானிக்கப்படாத நிலையில்; இன்னும் இருதரப்புடையதாக, விவாதிக்கப்படத்தக்கதாக.

**sub'jugate,** *v.* அடிப்படுத்து, கீழ்ப்படுத்து; தோல்வியுறச் செய், வென்று வயப்படுத்து; கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டு வா; அடிமை நிலைப்படுத்து.

**subjunc'tion,** *n.* கீழிணைப்பு, பின்னொட்டிணைப்பு; பின்னிணைப்புப்பகுதி.

**subjunc'tive,** *n.* (இலக்.) வினைச்சொல்லின் கருத்துப் புனைவியல் பாங்கு; கருத்துப் புனைவியல் பாங்கு வினையுரு; *a.* துணைக்கீழிணைப்பான, பின்னொட்டான; (இலக்.) வினைச்சொல் வகையில் கருத்துப் புனைவியல் பாங்கான.

**sub'kingdom,** *n.* (வில., தாவ.) இனத்தின் துணைப்பெரும் பிரிவு.

**sublan'ceolate,** *a.* (தாவ.) ஓரளவு ஈட்டித்தலை போன்ற வடிவுடைய.

**sublapsar'ian,** *n.* வீழ்ச்சிமீட்சிப் புகழ்வீற்றுக் கோட்பாட்டாளர், இறைவன் தன்புகழ் வீறுதோன்றப் பலரை வீழ்ச்சிக்கும் சிலரை மீட்சிக்கும் தேர்வு செய்கின்றானென்ற கிறித்தவ சமயக் கிளையின் கோட்பாட்டைப் பின்பற்றுபவர்; *a.* வீழ்ச்சி மீட்சிப் புகழ்வீற்றுக் கோட்பாட்டினைச் சார்ந்த.

**sublate',** *v.* (அள.) மறு; (மெய்.) உயர்தளப்படுத்து.

**subla'tion,** *n.* (செய்.) உயர்தளப்பாடு.

**sub'lease** [1], *n.* உட்குத்தகை, கீழ்க்குத்தகை.

**sublease'** [2], *v.* உட்குத்தகைக்கு விடு, மறுகீழ்க் குத்தகைக்கு விடு.

**sublessee',** *n.* கீழ்க்குத்தகை பெற்றவர்.

**subless'or,** *n.* கீழ்க்குத்தகைக்கு விட்டவர்.

**sublet',** *n.* கீழ்க்குத்தகைக்கு விடுதல்; *a.* கீழ்க்குத்தகைக்கு விடப்பட்ட; *v.* கீழ்க்குத்தகைக்கு விடு.

**sublibrar'ian,** *n.* உதவி ஏடகர், புத்தக நிலையத் துணைத் தலைவர்.

**sublieuten'ant,** *n.* துணைத்தரப் படைத்தலைவர்; சிறு துணைமைப் பணித் தலைவர்.

**sub'limate,** *n.* பதங்கம், ஆவி உறைபடிவு, சூடேற்றி ஆவியாக மாற்றிப் பின்னர் கெட்டியாக ஆறவிடப்பட்ட சரக்கு; *a.* பதங்கமாக்கப்பட்ட; *v.* உயர்வுபடுத்து; ஆவி உறைபடிவாக்கு; நயமாக்கு, மேன்மைப்படுத்து, தூய்மையாக்கு; (தொ.) corrosive sublimate, பாதரசப் பாசிகை.

**sublima'tion,** *n.* மேம்பாடுறுவிப்பு; பதங்கமாதல்; ஆவி உறைபடிவாக்கம்; ஆவி உறைபடிவு; ஆவி உறைபடிவாக்கத் தூய்மைப்பாடு; நிறைவெய்திய நிலை, உயர்வு; உருமாற்ற மேம்பாடு; உணர்ச்சி மேம்பாடு, இயல்புணர்ச்சி சார்ந்த ஆற்றல்; தன்னையறியாமலேயே உயர்குறிக்கோள்களை நோக்கித் திரும்புதல்.

**sublime',** *n.* மேதகு செய்தி; மீதுயர் கருத்து; விழுமிய நடை; *a.* மேனிலையார்ந்த; விழுமிய, மாண்பு வாய்ந்த; மேதகு சிறப்பு வாய்ந்த; வியப்பார்வத்திற்குரிய; வீறமைவார்ந்த; செம்மாந்த, பெருமிதப் போக்குடைய; இறுமாந்த; விளைவு பற்றி அஞ்சாத்தன்மை வாய்ந்த; கவலையற்ற மேலாவித்தனப் போக்குடைய; (உள்.) தோலடியான, மேற்பரப்படுத்துக் கீழுள்ள; *v.* பதங்கமாக்கு, ஆவியுறை படிவாக்கு; பதங்கமாகு, ஆவிஉறை படிவாகு; பதங்க ஆக்கத்திற்கு உள்ளாகு; தூய்மைப்படுத்து; புடமிட்டு உயர்வுடையதாக்கு, பண்புமாற்றி விழுமியதாக்கு; தூய்மைப்படு; உயர்வுடையதாகு.

**sublim'inal,** *a.* தூண்டுதல் புலப்பாட்டெல்லைக்குக் கீழ்ப்பட்ட, புலப்படாத் தூண்டுதல் நொய்ம்மையுடைய; (தொ.) subliminal self, உள்ளுணர்வான்மா, ஆன்மாவின் அடங்கிய உள்ளுணர்வுப்பகுதி.

**sublim'ity,** *n.* விழுப்பம், உயர்நிலை; மேம்பாடு, மேதகைமை, எண்ணம்; பெருந்தகைமைப் பண்பு; இறும்பூது, மதிப்பச்சமும் வியப்பார்வமுமுடைய மனக்கிளர்ச்சி; இறும்பூதூட்டுஞ் செய்தி; உயர்முகடு; நிறைவெய்திய நிலை.

**sublinea'tion,** *n.* அடிவரையீடு.

**subling'ual,** *a.* அடிநாக்கின் கீழான.

**sublitt'oral,** *a.* கரையடுத்தருகே வாழ்கிற; கரையிலிருந்து சிறிதே விலகி வளர்கிற.

**sublun'ar,** *n.* (செய்.) இம்பர், இவ்வுலக வாணர்; *a.* இம்மை சார்ந்த, பூவுலகிற்குரிய.

**sub'lunary,** *a.* திங்களுக்குக் கீழான, மதிக்கீழான.

**sublu'nate,** *a.* பிறையணுக்க வடிவுடைய.

**subluna'tion,** *n.* அரைகுறை இடப்பிறழ்ச்சி.

**submachine'-gun,** *n.* இயந்திரக் கைத்துப்பாக்கி.

**submamm'ary,** *a.* மார்படுத்த.

**sub'man,** *n.* விலங்கு நிலை மனிதர், மனிதப்பண்பு குன்றியவர்.

**submar'ginal,** *a.* விளிம்பருகான, புறவெல்லைக்கோடிக்கு மிக அணித்தான; எல்லைக்குச் சிறிது உட்பட்ட.

**sub'marine,** *n.* நீர்மூழ்கி, கடலில் மேற்பரப்படியே மூழ்கிச் சென்று தாக்கவல்ல போர்க்கப்பல்; கடலடி வாழ்பவர்; கடலடி வாழ்வுயிர்; *a.* கடலின்கீழ் இருக்கிற; கடலடியிற் செயற்படுகிற; கடலடியிற் பயன்படுத்தப்படுகிற; கடலின்கீழ் அமைக்கப்பட்ட.

**submarin'er,** *n.* நீர்மூழ்கிக்கப்பற் பணியாளர்.

**sub'master,** *n.* பள்ளித் துணையாசிரியர்.

**submaxill'ary,** *a.* கீழ்த்தாடை சார்ந்த; கீழ்த்தாடைக்கடியிலுள்ள.

**submed'iant,** *n.* (இசை.) சுரவரிசை வகையின் ஆறுவது சுரம்.

**submen'tal,** *a.* (உள்.) மோவாயின் கீழான.

**submerge',** *v.* மூழ்கடி; நீருக்கடியில் வை; நீருள் அமிழ்த்து; வெள்ளத்தில் மூழ்குவி; வெள்ளப்பெருக்கிற்கு உள்ளாக்கு; மேற்சென்று வெள்ளம் பெருக்குவி; நீர்மூழ்கிக்கப்பல் வகையில் நீரில் அமிழ், நீர்நிலையின் அடிக்குச் செல்; வறுமை துயர் முதலியவற்றிற்கு ஆட்படுத்திச் செயலற்றவராக்கு.

**submerged',** *a.* அமிழ்ந்த; நீருள் ஆழ்ந்த; வெள்ள மீதூரப்பெற்ற; நீரினுள் வளர்கிற; வறுமைத்துயரில் முற்றிலும் ஆழ்ந்த.

**submer'gence,** *n.* அமிழ்த்தீடு; அமிழ்வு.

**submerse',** *v.* (அரு.) அமிழ்த்து.

**submersed',** *a.* (தாவ.) நீருள் வளர்கிற.

**submers'ible**, *n.* எளிதமிழ்வுப்படகு, விரும்பினுல் எளிதில் மூழ்கடித்துவிடக்கூடிய படகு; *a.* நீரில் மூழ்கடித்துவிடக் கூடிய.

**submer'sion**, *n.* அமிழ்த்தீடு; மூழ்கடிப்பு; அமிழ்வு; நீரில் அமிழ்ந்துள்ள நிலை, நீரில் மூழ்கியிருத்தல்.

**submi'cron**, *n.* நுணங்கணு, சிறப்பு நுண்ணேக்காடி யின்றிக் காணமுடியாத நுண்ணணு.

**submi'ssion**, *n.* பணிதல்; கீழப்படிவு; சரணடைவு; பணி வடக்கப்பண்பு; பணிவான நடத்தை; பணிவிணக்கம்; பணி வமைதி; முழுநிறை தன்னெப்படைப்பு; கீழ்ப்படிவு மனப் பான்மை; அனுப்பீடு, ஒப்படைப்பு; வழக்குமன்றத்தில் வழக்குரைஞர் நடுவர் வகையில் முன்னிலைத் தெரிவிப்பு; முன் னிலைத் தெரிவிப்புரை; முறையீடு.

**submiss'ive**, *a.* பணிவமைதி வாய்ந்த; வளைந்துகொடுக்கும் பாங்குள்ள, இணங்கிப்போகிற.

**submit'**, *v.* சரணடை, கீழ்ப்படி; ஆய்வுக்காக எடுத்துரை; தெரிவி; பணிவிணக்கத்தோடு வற்புறுத்து; விட்டுக்கொடு; எதிர்க்காமலிரு; விலகிக்கொள்; இடங்கொடு.

**submon'tane**, *a.* மலை அடிவாரத்திலுள்ள; மலையடியிலுள்ள.

**submuc'ous**, *a.* (உள்.) சளிச்சவ்வின் கீழிருக்கிற.

**submul'tiple**, *n.* சரி ஆக்கக்கூற்றென், ஓர் எண்ணை மீத மில்லாமல் வகுக்கிற மற்ருேர் எண்; *a.* சரி ஈவான, சரிநேர் கூருன.

**subnarcot'ic**, *a.* ஏறத்தாழத் தூக்கமயக்கம் ஊட்டுகிற, இள மறமறப்பூட்டுகிற.

**subnas'al**, *a.* மூக்கின்கீழ் அமைந்த.

**subnasc'ent**, *a.* அடியில் வளர்கிற.

**subna'tural**, *a.* இயல்நிலைக்குக் குறைவான.

**subneu'ral**, *a.* நரப்புக்கணுவுக்கு அடுத்துக்கீழான, நரப்பு நாணுக்குக் கீழான.

**subni'veal, subniv'ean**, *a.* பனியடியிலுள்ள, பனிக்குக் கீழுள்ள.

**subnor'mal**, *n.* (வடி.) ஊடச்சுவரை மீது செங்கோட்டின் படிவு; *a.* இயல் நிலைக்குக் குறைவான.

**subnormal'ity**, *n.* இயல்நிலைக்குக் குறைந்த தன்மை.

**suboccip'ital**, *a.* (உள்.) பிடரியெலும்பின் கீழான.

**subocean'ic**, *a.* (மண்.) மாகடல் அடிக்குக் கீழே இருக்கிற; மாகடலுக்குக் கீழே நிகழ்கிற.

**suboc'tuple**, *a.* எட்டின் ஒரு கூறுகொண்ட; 1:8 என்னும் தகவுப்படியுள்ள.

**suboc'ular**, *a.* கண்ணின் கீழுள்ள.

**suboesopha'geal**, *a.* உணவுக்குழாய்க்கு அடியிலுள்ள.

**suboper'cular**, *a.* மீன் செதிளுறை எலும்புக்குக் கீழான.

**suboper'culum**, *n.* மீன் செதிளுறை எலும்பு.

**suborb'ital**, *a.* கட்குழியின் கீழுள்ள.

**sub'order**, *n.* (உயி.) இனக்குழுமத்தின் உட்பிரிவு; இனங் களின் தொகுதி.

**subord'inal**, *a.* இனக்குழும உட்பிரிவு சார்ந்த; இனக்குழும உட்பிரிவின் இயல்புள்ள, இனக்குழும உட்பிரிவின் தரமான.

**subord'inate**, *n.* கீழ்ப்பணியாளர், ஒருவர்கீழ்ப் பணிசெய் பவர்; *a.* கீழ்நிலைப்பட்ட, கீழ்ப்படியான; துணைமையான; இரண்டாம் படியான; குறைந்த முக்கியத்துவம் வாய்ந்த; சிறப்புக்குன்றிய; தரம் குன்றிய; அடிமைபோல் நடக்கிற; (இலக்.) வாசக உறுப்பு வகையில் சார்பியலான; (இலக்.) இடைச்சொல் வகையில் சார்பியல் உறுப்புக்களை முதலுடன் இணைக்கிற; *v.* கீழ்நிலை எய்துவி; குறைந்த முக்கியத்துவ முடையதாக்கு; சிறப்புக்குன்றியதாக நடத்து; குறைவுடைய தாக மதிப்பிடு; கருவி நிலைக்குத் தாழ்த்து; கருவியாக மட் டுங் கருது; (தொ.) subordinate clause, சார்புறுப்பு வாசகம்; subordinate conjunction, சார்புறுப்பிணைவிடைச் சொல்.

**subordina'tion**, *n.* துணைமைநிலை; கீழ்நிலை; துணைமை நிலைக்கு இறக்குதல்; கீழ்நிலை எய்துவித்தல்; கீழடக்கம்; குறைந்த முக்கியத்துவம்; குறைந்த படித்தரம்; பணிவு; படிப்படி இறக்க ஒழுங்கு; படிப்படி இறக்கக் கவான் உள் வளைவுத்தொகுதி.

**subordina'tionism**, *n.* பின்னிறக்கக்கோட்பாடு, கிறித்தவ மூவொருமைத்துவத்தில் முதலாவதற்கு இரண்டாவதும் மூன் ருவதுந் தாழ்ந்தவை யென்னுங் கோட்பாடு.

**subor'dinative**, *a.* பணிவடக்கப் பாங்குள்ள; துணைமை நிலைக்குரிய; துணைமைநிலை குறித்த.

**suborn'**, *v.* கைக்கூலிகொடுத்து வசப்படுத்து.

**subo'vate**, *a.* ஏறத்தாழ முட்டைவடிவான.

**subpharyn'geal**, *a.* தொண்டையடி சார்ந்த.

**subphren'ic**, *a.* வயிற்றுவிதானத்திற்குக் கீழான.

**subpil'ose**, *a.* சிறிதே மயிர்மூடிய.

**subpleur'al**, *a.* (உள். மரு.) நுரையீரலுறைக்கு அடியி லுள்ள.

**sub'plot**, *n.* துணைக்கதைக் கூறு, துணைநிகழ்ச்சிக் கூறு.

**subpoen'a**[1], *n.* முறைமன்ற அழைப்புஆணை; *v.* முறைமன்ற அழைப்பு ஆணைப்பத்திரஞ் சேர்ப்பி.

*sub poena*[2], (ல.) *adv.* தண்டனைக்குட்பட்டு.

**subpol'ar**, *a.* ஏறத்தாழத் துருவ மண்டல இயல்புள்ள; கிட்டத்தட்ட துருவ மண்டலத்திலிருக்கிற; (வான்.) துருவ விண்முனைக்கு நேர் கீழேயுள்ள.

**subpref'ect**, *n.* துணைப்படையாட்சியாளர்; பண்டை ரோமா புரியில் துணை ஆட்சிஅரங்கத் தலைவர்; துணைச்சட்டாம் பிள்ளை.

**subpref'ecture**, *n.* துணைப்படையாட்சியாளர் பதவி; பண்டை ரோமாபுரியில் துணை ஆட்சி அரங்கத் தலைமைப் பதவி; துணைச்சட்டாம்பிள்ளை நிலை.

**sub'pri'or**, *n.* மடத்துத் தலைவருக்கு அடுத்துக் கீழுள்ள துறவி; *fem.* sub'pri'oress.

**subpyram'idal**, *a.* ஏறத்தாழக் கூம்புகோபுரவடிவான.

**subquadrang'ular**, *a.* ஏறத்தாழ நாற்கட்ட வடிவான.

**subquad'rate**, *a.* ஏறத்தாழ நாற்கட்ட வடிவமான.

**subquin'tuple**, *a.* 1:5 என்னும் தகவுப்படியுள்ள.

**subrectang'ular**, *a.* ஏறத்தாழ நாற்கோணமான, ஏறத் தாழ நாற்கட்டமான.

**sub'rector**, *n.* ஊர் மதகுருவின் அதிகாரம்பெற்ற பிரதிநிதி; கல்விநிலைய முகவர் உரிமைபெற்ற ஆட்பெயர்.

**subref'erence**, *n.* அரைகுறைக் குறிப்பீடு, மறைமுகக் குறிப்பீடு.

**sub'regional**, *a.* விலங்கியல் நிலவியலின் மாவடைப் பரப்பின் துணைப்பிரிவு சார்ந்த.

**sub'rent**, *v.* கீழ்வாடகைக்கு விடு.

**subrep'tion**, *n.* புரட்டீட்டு, புரட்டுரையினுல் ஒன்றைப் பெறுதல்; அதிரடிப்பேறு, அதிரடியால் ஒன்றைக் கைப் பற்றுதல்.

**subret'inal**, *a.* கண்விழித்திரைக் கீழான.

**subrhomboid'al**, *a.* ஏறத்தாழச் சாய்சதுரவடிவான.

**subroga'tion**, *n.* (சட்.) கடன் பற்றுரிமை மாற்றீடு.

*sub ros'a*, (ல.) *adv.* மறைசெய்தியாக, இரகசியங் காக்க வேண்டுமென்னும் வாக்குறுதியுடன்.

**subsac'ral**, *a.* விலங்கின் முக்கோணக் குத எலும்பிற்குக் கீழுள்ள; மனிதனின் முக்கோணக் குத எலும்பின் முன்னுள்ள.

**subsatura'tion**, *n.* ஏறத்தாழ முழுநிறை செறிமான முடைமை.

**subscap'ular**, *a.* விலங்கின் தோள்பட்டை எலும்பிற்குக் கீழுள்ள; மனிதர் வகையில் தோள்பட்டை எலும்பிற்கு முன் னுள்ள.

**subscribe'**, *v.* அடியில் எழுது, ஆவணத்தின் அடியிற் பெயரெழுது; கீழ்க் குறிப்பிடு; அடியொப்பமிடு, அடிக் கையெழுத்திடு; கொள்கை அல்லது தீர்மான வகையில் பற்றுார்வந் தெரிவி; நன்கொடைப் பங்காளர் பட்டியில் பெயரெழுது; நன்கொடை கொடு; நன்கொடை கொடுப்பதாகக் கூறு; பொதுநிதிக்குத் தொகை வழங்கு; பொதுநோக்கத்திற்குத் தொகை அளி; பொதுநிதிக்கு நிதி திரட்டு; பொது நோக்கத்துக்கு நிதி திரட்டு.

**subscrib'er**, *n.* நிலவரியாளர், ஒப்பந் தெரிவிப்பவர்; ஆதரவாளர்; கையொப்பக்காரர்; (தொ.) the subscriber, அடியிற் கையொப்பமிட்டிருப்பவர்.

**sub'script**, *a.* (இலக்.) கிரேக்க எழுத்துக்களுடனே எழுத்தாக அடியில் எழுதப்பட்ட.

**subscrip'tion**, *n.* அடியில் எழுதுதல்; அடியெழுத்து, கீழே எழுதப்பட்டது; கடையெழுத்து, கையொப்பம்; இசைவிணக்கம், ஒப்புதல் தெரிவிப்பு; நிலவரி; சந்தா; உறுப்பினர் கட்டணம்; தவணைவரி விற்பனை முறை; நிதி-கழகம் முதலியவற்றிற்குத் தொகை வழங்கீடு; கையொப்பப் பணம்.

**sub'secive**, *a.* பின்னும் மீந்திருக்கிற, தேவைக்கு மேற்பட்ட.

**sub'section**, *n.* உட்பிரிவு.

**subsell'ium**, *n.* மடிப்பு நிமிர்விருக்கை, திருக்கோயிலில் நிற்கும்போது சார்பளிப்பதற்காக மறிநிலையில் மடக்குடைய இருக்கை; *pl.* subsell'ia.

**subsen'sible**, *a.* உணர்ச்சி வரம்புக்குக் கீழுள்ள.

**subsep'tule**, *a.* 1 : 7 என்னுந் தகவுப்படியுள்ள.

**sub'sequent**, *a.* பின்தொடர்ந்து வருகிற; பிற்பட்ட; பின்தொடர்பான; அடுத்துவந்த, பிற்காலத்தியதான; பிற்பட நேர்ந்த.

**sub'sequently**, *adv.* பின்னர், அடுத்து, பிறகு, அதன்பின்.

**subser'ous**, *a.* நிணநீர்ச்சவ்வின் கீழுள்ள.

**subserve'**, *v.* செயல்துணையாகப் பயன்படு; உகந்திரு, அனுகுணமாயிரு; சார்வாயிரு, சாதகமாயிரு; வளர்ச்சிக்கு உதவு.

**subser'vience**, *n.* கருவிப்பயனுடைமை; கருவிமட்டான பயனுடைமை; கெஞ்சுநிலை, அடிமைநிலை; அடிவருடிப்பண்பு.

**subserv'ient**, *a.* துணைக்கருவியாகப் பயன்படுகிற; கெஞ்சுகிற, அடிமைப்பண்புடைய; அடிவருடி வாழ்கிற.

**subsess'ile**, *a.* முற்றிலும் காம்பற்றதல்லாத.

**subsex'tuple**, *a.* 1 : 6 என்னுந் தகவுப்படியுள்ள.

**sub'-shrub**, *n.* அடிப்புதர்.

**subshrubb'y**, *a.* அடிப்புதர் இயல்பான; அடிப்புதர் நிறைந்த.

**subside'**, *v.* சிறிது சிறிதாக வற்று; சிறிது தணி; வடிந்துபோ; மறைந்துபோ; நிலம் வகையில் சரிந்து விழு, பரப்பு வகையில் அமிழ்வுறு; இரிவுறு, கட்டிட வகையில் நிலமட்டத்திற்குக் கீழ் அமர்வுறு, கப்பல் வகையில் நீர்மட்டத்திற்குக் கீழ் அழுங்கு; நீரின் இடை மிதவைப் பொருள் வகையில் மெல்ல அடியில் படிவுறு; ஆள் வகையில் கீழமைவுறு; அடங்கியமர்வுறு; செயலொடுங்கியிரு, எழுச்சியற்றிரு, அமைவுறு; தணிவுறு; ஆறு.

**sub'sidence**, *n.* தணிதல், வடிந்து வருதல்; அமிழ்வு; அமைவு; படிவுறுதல்; அமர்வு; ஒடுங்குதல்.

**subsid'iary**, *n.* உதவுபவர், உதவியாளர்; உதவிப்பொருள்; உதவிப்பொருள் வழங்குபவர்; உதவுவது; உதவிப்பொருள் வழங்குவது; கிளை ஆட்சி நிறுவனம், மற்றொரு நிறுவனத்தால் பாதிக்குமேற் பங்கெடுக்கப்பட்டு அதன் ஆட்சியின் கீழுள்ள நிறுவனம்; *a.* துணையாகப் பயன்படுகிற; குறைநிரப்பியுதவுகிற; உடனுதவியான; நிறுவனம் வகையில் துணையாதரவு பெறுகிற, மற்றொரு நிறுவனத்தால் பாதிக்குமேல் பங்கெடுக்கப்பட்டு அதன் ஆதிக்கத்திலிருக்கிற; படை வகையில் உதவிப்பொருள் பெற்ற, மற்றொரு நாட்டினுல் கூலிக்கு அமர்த்தப்பெற்ற.

**sub'sidize**, *n.* துணையாதரவு அளி; படைகளுக்கு வெளிநாட்டிலிருந்து உதவிகொடு; அரசாங்க வகையில் தொழில்களுக்கு உதவிப்பொருள் கொடு.

**sub'sidy**, *n.* (வர.) படி உதவிப்பொருள், உதவித்தொகை; தனிவரி, குறிப்பிட்ட தறுவாயில் விதிக்கப்படும் வரி; நல்லாதரவுத் தொகை, படைத்துறை கப்பற்படை உதவிக்காக மற்றொரு நாடு வழங்கும் பணம்; ஊக்கத்தொகை, தொழில் அறத்துறைச் சார்பாக அரசின் பணவுதவி.

*sub silen'tio*, (ல.) *adv.* பொதுமக்கள் அறியாமல், சந்தடியின்றி.

**subsist'**, *v.* உளதாகு; பிழைத்திரு; பிழைத்துவாழ்; வாழ்ந்து கொண்டிரு; மெய்ம்மையாயிரு; உயிர்காத்துக்கொண்டிரு, உயிர்தாங்கியிரு; வாழ்க்கைக்குரியன பெறு; வாழ்க்கைக்குரியன பெற்று வாழ்; உயிர்வாழ்வுக்குரியன கொடுத்துதவு.

**subsis'tence**, *n.* வாழ்வு; பிழைப்பு, பிழைப்பாதாரம்; வாழ்வுத் தேவை, பிழைப்புவழி, சீவனோபாயம்; வாழ்க்கைத்தொழில்; (தொ.) subsistence money, வாழ்க்கைப் படி; பிழைப்பூதிய முன் பணம்.

**sub'soil**, *n.* கீழ்மண், அடிமண்; *v.* அடிமண்ணைக் கிளறி இறுக்கந் தளர்த்து.

**sub'soiler**, *n.* அடிமண் கிளறுபவர்.

**sub'soiling**, *n.* ஆழ் அடிமண் உழவு; கண்காணுச் செயல் முறைகள்.

**subso'lar**, *a.* கதிரவனுக்கு நேர்கீழான; நிலவுலகப் பரப்பிடத்தின் வகையில் கதிரவன் நேர் உச்சிக்கு வருகிற.

*sub specie*, (ல.) *adv.* தோற்றப்படி; காட்சிக்கோணத்தில்.

*sub specie aeternitatis*, (ல.) *adv.* நிலைபேறுடைமை முறைமையில்; உள்ளார்ந்த மெய்யியல்பின்படி.

**sub'spe'cies**, *n.* துணைவகை, வகையின் பெரிய உட்கிளை.

**subspecif'ic**, *a.* துணைவகை சார்ந்த; துணைவகையின் இயல்புடைய; ஏறத்தாழத் தனிவகை ஒட்டிய.

**subsphe'rical**, *a.* ஏறத்தாழ உருண்டை வடிவான.

**subspin'ous**, *a.* ஓரளவு முள்ளுடைய.

**sub'stage**, *n.* அடித்தட்டு, நுண்ணோக்காடியில் காட்சிச் சில்லுக்குக் கீழுள்ள கருவிகலப்பகுதி.

**sub'stance**, *n.* பொருள்; பண்டம், பொருளின் உருவகை; பிழம்பு; பண்பி, பண்புக்கு அடிப்படையான பொருட்கூறு; காட்சியின் அடிப்படைக்கூறு; நிகழ்ச்சியின் இன்றியமையாப் பகுதி; அடிப்படை, ஆதார முக்கியமான பகுதி; சாரம்; உயிர்நிலைப்பகுதி; கருமூலம்; கருப்பகுதி; உட்கரு; கருப்பொருட் செய்தி; உடற்கூறுன பகுதி; கருத்துரை; சுருக்கம்; உண்மைப்பொருள்; உண்மையாயிருப்பது, கற்பனையில்லாதது; மூலப்பொருள்; திண்மை, கெட்டிமை; திண்ணிய தகுதி, திட்டமான மதிப்பு; மெய்ப்படி உடைமை; செல்வநிலை, சொத்து.

**substan'tial**, *a.* பொருண்மையுடைய; பொருளியலான, சடமான; பிழம்புருவான, திடப்பொருளான; கெட்டியான; செறிவான; கருத்துள்ள; தடித்த; வலிமையான; நொய்தாகாத; உறுதியான; நீடித்துழைக்கக்கூடிய; வாணிகத் துறையில் கட்டுறுதியான; மெய்யான; உள்ளபடியாயிருக்கிற; பொய்த் தோற்றமல்லாத; அனுபவபூர்வமான; செயல்துறையில் கண்ட; பயனுடைய; சாரமான; முக்கியமான; உண்மையான முக்கியத்துவம் வாய்ந்த; மெய்ம்மதிப்புடைய; மெய்த்தகுதி வாய்ந்த; பெரும்பகுதியான; உருப்படியான, கணிசமான; போதிய அளவான; சொத்துடைய; போதிய செல்வமுள்ள.

**substan'tialism**, *n.* புறப்பொருள் வாய்மைக்கோள், இயற்காட்சிகளுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் அடிப்படையான புறநிலை மெய்ம்மைக் கூறுகளே உண்டு என்று கொள்ளுங் கோட்பாடு.

**substan'tialist**, *n.* புறப்பொருள் வாய்மைக் கோட்பாட்டாளர்.

**substan'tialize**, *v.* மெய்யாக்கு: மெய்ப்படிவங் கொடு; செயல்வாய்மைப்படுத்து; மெய்வாழ்வியல்பூட்டு; மதிப்புடைய தாக்கு; முக்கியமானதாக்கு; போதிய அளவுடையதாக்கு; மெய்யாகு; மெய்யாகப்பெறு; மெய்ப்படிவம் பெறு; செயல் வாய்மைப்படு; மெய்ந்நிலை எய்து; மதிப்புடையதாகு; முக்கிய மானதாகு; போதிய அளவுடையதாகு.

**substan'tially**, *adv.* மெய்ந்நிலையில், பொருண்மை வகை யில்; காரிய அளவில்; உருப்படியான முறையில்; முக்கிய கூறுகளில்; கணிசமான நிலையில்; போதிய அளவில்; மொத் தத்தில்; ஏறத்தாழ, கிட்டத்தட்ட; பெரிய அளவு மாறுத லின்றி; சொல்லின் பொருளளவில்.

**substan'tiate**, *v.* எண்பி, மெய்ப்பி; உறுதிப்படுத்து, கண் கூடாகக் காட்டு; காரணங் காட்டி விளக்கு; எடுத்துக் காட்டுக்களுடன் வலியுறுத்து.

**substantiv'al**, *a.* (இலக்.) பெயர்ச்சொல்லின் இயல்பினதான.

**substantiv'ally**, *adv.* பெயர்ச்சொல்லின் இயல்பினதாக.

**sub'stantive**, *n.* தன்னிலைப் பெயர்ச்சொல்; லத்தீன கிரேக்க முதலிய பண்டை மொழி வழக்கில் பெயரடையல்லாத பெயர்ச்சொல்; *a.* நிலையான; தனியியலான, பிறிதின் சார்பற்றுத் தனி இருப்புக் கொண்ட; அறிவு வகையில் உய்த்தறிய வேண்டியதல்லாத; தன்னிலையான, துணைமை நிலையினதாயிராத; தற்சார்பியலான, ஒட்டு நிலையினதா யிராத; தனிநிலையான, சார்பு நிலையினதாயிராத; (படை.) பொருள் நிலையான, பணி வகையில் மதிப்பியலாகவோ-மதிப்புரிமைப்பேருகவோ-தற்காலிகமாகவோ இராத; (இலக்.) கிரேக்க லத்தீன முதலிய பண்டை மொழிகள் வகை யில் பெயர்சொற்களுள் பெயரடை உட்படுத்தாத தனி யியலான.

**sub'stantively**, *adv.*=substantivally.

**sub'station**, *n.* துணை நிலையம்.

**substell'ar**, *a.* விண்மீனுக்கு நேர்கீழான, நிலவுலகப்பரப்பு வகையில் விண்மீன் உச்சமாகத் தெரிவதற்கிடமான.

**subster'nal**, *a.* மார்பெலும்பிற்குக் கீழான.

**sub'stitute**, *n.* பதிலாள், மாற்றுள்; பதிற்பொருள்; மாற்றுப் பொருள், பகரப்போலி; *v.* பதில் ஏற்பாடு செய், பதிலாள் அமர்த்து, மாற்றீடு செய்; பரிமாற்றமாகக் கொடு.

**substitu'tion**, *n.* பதிலீடு; பதில்வைப்பு; ஆள் மாற்றீடு; பொருள் மாற்றீடு; பதிலாள் நிலை; மாற்றுப்பொருள் நிலை; (வேதி.) அணுமாற்றீடு, அணுத்திரண்மத்தில் திரண்மம் பிளக்காமலேயே அணுவினிடம் அணுவாக மாறுபடல்; (தொ.) substitution product, (வேதி.) பதிலீட்டு விளைவு.

**substrat'um**, *n.* கீழடுக்கு, அடித்தள அடுக்கு; கீழாக இருப்பது; அடிநிலைப் பாளம்; அடிநிலத் தளம்; அடிநிலைக் கூறு; அடிமூலக் கூறு, பண்புகள் செறிந்த மூலக்கூறு; அடி உயிர்த்தளம், செடியின வளர்ச்சித்தளம்; அடிவாழ்வுத் தளம், உயிரின வாழ்விற்குரிய தளம்; *pl.* substrat'a.

**substruct'**, *v.* கீழேகட்டு; அடிப்படையிடு, கடைகாலிடு.

**substruc'tion**, *n.* கிழ்க் கட்டுமானம்.

**substruc'tural**, *a.* கிழ்க் கட்டுமானஞ் சார்ந்த.

**substruc'ture**, *n.*=substruction.

**sub'style**, *n.* கதிர்மணி வட்டத்தில் கோல் அமைந்துள்ள வரை.

**subsult'ive, subsult'ory**, *a.* வெட்டி வெட்டி இயக்குகிற, சுரித்திழுக்கிற.

**subsult'us**, *n.* நடுக்கியக்கம்.

**subsume'**, *v.* எடுத்துக்காட்டுச் செய்திகள் வகையில் விதியின் கீழ் உட்படுத்திக் குறிப்பிடு.

**sub'surface**, *a.* மேற்பரப்பகத்திற்குக் கீழே.

**sub'tack'**, *n.* ஸ்காத்லாந்து வழக்கில் கீழ்க் குத்தகை.

**sub'tacks'man**, *n.* ஸ்காத்லாந்து வழக்கில் கீழ்க் குத்தகை எடுப்பவர்.

**sub'tan'gent**, *n.* ஊடுவரையில் தொடுவரை நீட்டம்.

**subtem'perate**, *a.* மட்டணவிய, மித மண்டலத்தைவிடச் சற்றே குளிர்மிக்க.

**sub'tenancy**, *n.* கீழ்க்குடிவாரம்.

**sub'tenant**, *n.* கீழ்க்குடிவாரத்தார்.

**subtend'**, *v.* (வடி.) நாண்வரை-முக்கோணப் பக்கம் ஆகிய வற்றின் வகையில் கோணத்திற்கு எதிர்வீழ்வாயிரு.

**subtense'**, *n.* (வடி.) எதிர்வீழ்வரை, கோண வகையில் எதிர் வீழ்வாகும் நாண்வரை அல்லது முக்கோணப்பக்கம்.

**sub'terfuge**, *n.* நழுவமைப்பு, தப்புச்சாக்கு; சூழ்ச்சித்தலைக் கீட்டு வாதமுறை; திருக்கு மறுக்கு வாதம்.

**subterh'uman**, *a.* மனித இயல்பிற் குறைந்த; மனிதனுக்குக் கீழ்ப்பட்ட.

**subternat'ural**, *a.* இயல்நிலைக்குக் கீழான, இயற்கை நிலை யிற் குறைந்த.

**subterposi'tion**, *n.* கீழ்வைப்பு; கீழ் உள்ள நிலை.

**subterran'ean**, *n.* பொதியறை வாழ்வோர்; பொதியறை; *a.* நிலத்திற்குக் கீழான, அடிநிலத்தினூடான, சுருங்கை வழியாயமைந்த; மறைவழியான.

**subterran'eously**, *adv.* அடிநில வழியாக; மறைமுகமாக; மறைவழியூடாக.

**subthora'cic**, *a.* மார்புக் கூட்டிற்குக் கீழேயுள்ள.

**sub'til, sub'tile**, *a.*=subtle.

**subt'ilize**, *v.* நொய்தாக்கு, நுண்மையதாக்கு; தூய்மைப் படுத்து; நயமுடையதாகு.

**subt'ilty**, *n.*=subtlety.

**sub'title**, *n.* ஏட்டுத் துணைத்தலைப்பு; சுருக்கத்தலைப்பு; பக்க மோடும் தலைப்புத்துணுக்கு; இரண்டாம் பெயர்; திரைப் படச் சுருளின் முனைப்பான முகப்புரை.

**su'btle**, *a.* நுட்பமான, நுட்பநுணுக்கமான; நொய்தினும் நொய்தான; சூட்சுமமான; நுண்ணயம் வாய்ந்த, மென்னய மிக்க; உள்ளார்ந்த நுணுக்கமுடைய; நுழைபுலம் வாய்ந்த, கூர்த்தமதியுடைய; கூருணர்வுடைய; நுட்பவேறுபாடுடைய; நுட்பவேறுபாடுகள் காண்கிற; நுட்பமாகச் செய்யப்பட் டுள்ள; மென்படர்வான; மறைநுட்பம் வாய்ந்த; புலம்படா நுணுக்க இரகசியமான; பிடிகொடாதிருக்கிற; நழுவிச் செல் லுந் திறமுடைய; பின்தொடர முடியாத, நுண்ணயச் சூழ்ச் சித் திறமிக்க; இரண்டகமான.

**subt'lety**, *n.* நுட்பநுணுக்கம்; நுண்ணயம், நயநுணுக்கம்; நுழைநுட்பம்; மயிரிழை நுணுக்கம்; நுண்ணய வேறுபாடு; மயிரிழை வேறுபாட்டு நுட்பம்; நுழைபுலம்; மதிநுட்பம்; கூருணர்வு; மறைநுட்பம்; மர்மத்திறம்; பிடிகொடாத்திறம்; புரியாத் திறநுட்பம்; நழுவுதிறம்; தட்டிக் கழிப்புத் திறம்; நுண்ணயச் சூழ்ச்சித்திறம்; ஈரடி, இரண்டகத்தன்மை; நுட்ப நேர்த்தி நயம்.

**subt'ly**, *adv.* நுண்ணயத்துடன், மென்னயமாக; மெல்லிழைவு நயத்துடன்; கூருணர்வுடன்; நுண்ணயச் சூழ்ச்சித்திறம்பட.

**subton'ic**, *n.* (இசை.) சுதிக்கு அடுத்த கீழ்சுரம்.

**subtop'ic**, *n.* உருக்கெடுக்கும் நகரக் கட்டுமானப்பகுதி; அரு வருப்பான ஊர்க் கட்டுமானப்பகுதி.

**subtract'**, *v.* கழி; நீக்கு; அகற்று; பிரித்தெடு; பின்வாங் கிக் கொள்; தொகையிலிருந்து பகுதியை எடுத்துவிடு.

**subtrac'tion**, *n.* கழித்தல், நீக்கல், பின்வாங்கிக்கொள்ளுதல், எடுத்துவிடல், கொடாமல் வைத்துக்கொள்ளுதல்; (கண.) கழிப்புமுறை, வேற்றுமை கண்டுபிடிப்புமுறை.

**subtrac'tive**, *a.* கழித்தலைக் குறிக்கிற, நீக்கிவிடும் பாங் குள்ள, குறைத்துவிடும் இயல்புடைய; எதிர்மறையான.

**subtract'or**, *n.* நிறமகற்றி, குறிப்பிட்ட நிறமகற்றத்தக்க ஒளிக்கதிர் அரிப்பு.

**sub'trahend**, *n.* (கண.) குறைக்கப்படவேண்டிய எண்.

**sub'treas'urer**, *n.* துணைக் கருவூலத் தலைவர்.

subtreas'ury, *n.* துணைக்கருவூலம், துணைப்பண்டாரம், துணைக்கஜானு.

sub'tribe, *n.* (வில., தாவ.) துணைக்குழுமம்.

subtri'ple, *a.* (கண.) 1 : 3 என்னும் தகவுப்படியுள்ள.

subtrop'ic, subtrop'ical, *a.* வெப்பமண்டலம் அணவிய, ஏறத்தாழ வெப்பமண்டல நிலை சார்ந்த.

subtrop'ics, *n. pl.* வெப்பமண்டல அணிமையிடம்.

sub'ulate, sub'uliform, *a.* (தாவ., வில.) தமரூசி வடிவுடைய.

subumbrell'a, *n.* இழுதுமீன் குடையுறுப்பின் அடிப்புறம்.

subung'ual, *a.* குளம்படிக்குரிய ; நக அடிக்குரிய.

subung'ulate, *a.* (வில.) குளம்புகளும் பல கால்விரற் கூறுகளும் ஒருங்கேயுடைய.

sub'urb, *n.* புறநகர், புறஞ்சேரி.

suburb'an, *n.* புறநகர்வாணர், நகர்ப்புறவாசி; *a.* புறநகர் சார்ந்த; புறநகரிலுள்ள; புறநகரில் வாழ்கிற; புறநகர் இயல்பு வாய்ந்த; புறநகருக்குரிய தனிப்பண்புவாய்ந்த; நகர் நாடு ஆகிய இரண்டின் நற்பண்புகளும் அமையாத; கவலையற்ற இன்பவாழ்வு வாய்ப்புடைய; குறுகிய மனப்பான்மையுடைய; அரைகுறைப் பண்பாடுகொண்ட.

Suburb'ia, *n.* லண்டன் சுற்றுவாரம், லண்டன் நகரச் சுற்றுப்புற வட்டகைகளும் அவற்றில் வாழ்பவர்களும் அடங்கிய தொகுதி.

suburs'ine, *a.* சற்றே கரடிபோன்ற, ஏறத்தாழக் கரடியின் பண்புடைய.

sub'variety, *n.* வகையுள் வகை.

sub'vassal, *n.* குடியாளின் குடியாள், உட்பண்ணையாள்.

subven'tion, *n.* உதவித்தொகை.

subver'sion, *n.* தோல்வி ; வீழ்வு ; அழிவு.

subvers'ive, *a.* கவிழ்க்கிற; நிலைகுலைவிக்கும் பாங்குள்ள.

subvert', *v.* கவிழ்த்து, தலைமறிவாக்கு; தலைகீழாய்ப் புரட்டு; நிலைகுலைவி ; சீர்கெடச்செய் ; அழி, பாழாக்கு, வீழ்ச்சியுறச் செய்.

subvert'ebral, *a.* தண்டெலும்பின் அடியிலுள்ள ; தண்டெலும்புக் கண்டங்களின் கீழுள்ள.

subvert'ical, *a.* பெரும்பாலும் செங்குத்தான.

subvit'reous, *a.* சற்றே பளிங்குபோன்ற ; அரைகுறைப் பளிங்கியல்புடைய.

*sub vo'ce*, (ல.) *adv.* இத் தலைப்பின்கீழ்.

subwar'den, *n.* துணைப் பாதுகாவலர்.

sub'way, *n.* சுரங்கப்பாதை ; சுரங்க இருப்புப்பாதை.

succades', *n. pl.* இன்பழப்பாகீடு, தேம்பாகில் இடப்பெற்றுச் சர்க்கரையில் பதப்படுத்தப்பெற்ற பழவகை.

succedan'eous, *a.* மாற்றீடான, பதிலாக வழங்கத்தக்க, முடைக்காலப் பதிலீடான.

succedan'eum, *n.* பகரமறுபொருள், மாற்றுப்பொருள்; பகரமாற்ருள்; மறுமருந்து, உற்றுழிப் பயன்படும் மறுமருந்துப் பொருள்; போலிப் பொன் மாற்றீட்டுப் பல், பொன்னுக்குப் பதிலான போலிப் பொற்கலவையாலான பல்.

succeed', *v.* வெல் ; வெற்றியுறு ; வெற்றிபெறு ; நோக்கம் ஈடேறப் பெறு ; முன்னேறு, நல்வளம்பெறு ; வெற்றிகாண் ; செயல் வகையில் வெற்றியுடன் முடிவுறு ; திட்டவகையில் வெற்றியடை ; தொடர், பின்வந்து தொடர்வுறு ; பதவியில் பின்வரலுறு ; மரபில் தொடர் ; தொடர்ந்து கால்வழியில் வரலுறு ; உடமை வகையில் மரபுரிமையாகப் பெறு ; அடுத்து நிகழ்வுறு.

succeed'ing, *a.* பின்வருகிற ; அடுத்துவருகிற ; பின்வந்த ; அடுத்துவந்த ; தொடர்ந்த ; பின்னுள்ள ; வரவிருக்கிற.

succen'tor, *n.* இசைக்குழுத் தலைவரின் ஆட்பேர்.

*succes d'estime*, (பிர.) *n.* ஏறத்தாழ நல்ல வரவேற்பு.

*succes fou*, (பிர.) *n.* ஆரவாரவெற்றி.

success', *n.* வெற்றி ; நற்பயன் ; ஈடேற்றம் ; நோக்க நிறைவேற்றம் ; ஆக்கம், செல்வப்பேறு ; புகழாக்கம், புகழுயர்வு ; புகழ்ப்பேறு ; பதவி உயர்வு ; பதவிப்பேறு ; வெற்றி எய்தியவர் ; புகழாக்கம் பெற்றவர் ; வெற்றிச் செய்தி ; புகழாக்கச் செய்தி ; உருவெற்றியாளர், உருப்போடப் பயிற்சிபெற்று வெற்றிபெற்ற மாணவர் ; விளைவு.

success'ful, *a.* வெற்றியார்ந்த; செயல்வகையில் நிறைவேறிய ; வெற்றிக்குரிய, வெற்றிக்கு வழிவகுக்கிற ; ஆள் வகையில் வெற்றிகண்ட ; வெற்றியாக்கமுடைய.

success'fully, *adv.* வெற்றியுடன், பயனிறைவுடன்; ஆக்கமாக.

succe'ssion, *n.* தொடர்ச்சி ; தொடர்வு ; வரிசை ; அடுத்தடுத்து வருகை ; ஒன்றன்பின் ஒன்றுவருதல் ; தொடர்ந்து வருவன ; மரபுரிமை ; தாய உரிமையுடையவர் வரிசை ; மரபுவழி ; அரசுக்கால்வழி ; பதவியுரிமை ; தாயவுரிமை ; குருவழிக் கால்மரபு ; ஆன்மிக மரபு ; சமயத் திருவுரிமை மரபு ; (உயி.) உயிரிகள் வளர்ச்சி வழிமுறை; (தொ.) apostolic succession, திருமரபுரிமை, இயேசுவின் திரு மாணவர் வழிவரும் ஆன்மிக மேலாண்மை யுரிமை ; in succession to, பின்உரிமையாளராக ; பின் உரிமைகொள்பவராய் ; law of succession, மரபுரிமைச் சட்டம் ; plant succession, திணைநிலத்தில் தொடரும் தாவர வரிசைத்தொகுதி ; succession duties, சொத்தில் கால்வழியுரிமை வரிகள்; succession house, படிப்பேணுமனை, தாவரங்களைச் சூழலுக்கியைவிப்பதற்காகப் படிப்படியான மாறுபாடுகளுடன் வாய்ப்பு வசதி செய்யப்பட்டுள்ள பேணுமனை.

success'ional, *a.* மரபுரிமை சார்ந்த.

success'ionist, *n.* பரம்பரைக் கோட்பாட்டாளர், இயேசுவின் திருமாணவ உரிமைமரபு இன்றியமையாத் தொடர்புடையதென்று நம்புபவர்.

succes'ive, *a.* தொடர்ந்து வருகிற, இடையீடின்றித் தொடர்கிற ; இடைவிடா வரிசை முறையான.

success'ively, *adv.* தொடர்வதாய் ; வரிசையாய் ; இடையீடற்றதாய் ; தொடர்ச்சியாய் ; நிரனிரையாக, வரிசைமுறைப் படியாக.

success'or, *n.* பின்வருவோர் ; மரபில் பின் தொடர்வோர் ; பின்னமர்வாளர் ; தொடர்வது.

success'orship, *n.* பின்மரபுத் தோன்றல்நிலை ; பின்னுரிமையாளர் நிலை ; மரபுத்தொடர்ச்சி முறைமை; மரபுத்தொடர்ச்சி; ஆள் வகையில் மரபுரிமைபற்றிய நிலை.

succinct', *a.* செறிவான ; செறிக்கப்பெற்ற ; சுருக்கமான ; மணிச்சுருக்கமான.

succinct'ly, *adv.* செறிவாக, மணிச்சுருக்கமாக.

succinct'ness, *n.* செறிவு ; மணிச்சுருக்கத்தன்மை.

succ'ory, *n.* நீலமலர்வகை ; போலிக்காப்பிப்பொடி வகை, சிக்கரி.

succ'otash, *n.* அவரை சோள வேவல் பண்டம்.

succ'our, *n.* உற்றுழி யுதவி, காலத்தாற் செய்த உதவி ; படையுதவி ; உதவிக்கு வரும் படை ; *v.* உற்றுழியுதவு ; இடரில் உதவிக்கு வா ; இடுக்கணிடையே உதவி வழங்கு.

succ'uba, succ'ubus, *n.* துயின் மோகினி, துயிலும் ஆடவருடன் வன்புணர்ச்சி புரிவதாகக் கருதப்படும் பெண் பேய்.

succ'ulence, *n.* சாற்றுச்செறிவு; சாறுதசைக் கண்ணிறுக்கத் தன்மை.

succ'ulent, *a.* சாறுகட்டிய, சாற்றுச்செறிவான ; சாறு ததும்பலான ; சாறுதசைக் கண்ணிறுக்கம் உடைய ; (தாவ.) மென்கொழுந் தசையுடைய, கனிவுச் செறிவுடைய.

succumb', *v.* அடியிற் கிட, நெடுஞ்சாண்கிடையாகக் கிட ; ஆற்றலிழந்து பணி; எதிர்ப்பாற்றலிழந்து சரணடை; விட்டுக் கொடுத்துவிடு; பணிந்து விடு; முழுதும் தோல்வியணை; வலியிழந்துவிடு; கவர்ச்சி வகையில் தன்னடக்க ஆற்றலழிவுற்றுக் கெடு; நோய் முதலியவற்றிற்கு ஆளாகி மாள்வுறு; மாள்வுறு.

**succurs'al**, *n.* நிறுவனத்தின் கிளை ; *a.* திருக்கோயில் வகையில் துணைமையான ; கிளைநிலையான.

**such**, *n.* அத்தகையது ; அவ்வகைப்பட்டது; அது ; அத்தகையவை; அவ்வகைப்பட்டவை; அவை ; மேற்கூறப்பட்டது ; மேற்கூறப்பட்டவை ; குறிப்பிடப்பட்டவர் ; குறிப்பிடப்பட்டவர்கள் ; *pron.* அத்தகைய ஒன்று ; அம்முறையான ஒன்று; அவ்வகைப்பட்டவை ; அவ்வகைப்பட்டவர்கள் ; என்பது போன்றது; என்பது போன்றவை; என்பது போன்றவர்; என்பது போன்றவர்கள்; *a.* அதே வகையான; அதே அளவான, அவ்வகைப்பட்ட ; அப்படிப்பட்ட ; அத்தகைய ; அவ்வியல்புடைய; அந்த அளவான ; அவ்வளவு பெரிதான ; இம்மாதிரியான ; இதுபோன்ற; கூறப்பட்ட முறையான ; குறித்த முறையான ; இந்நிலைக்கொத்த ; இந்நிலையில் உய்த்துணரத்தக்க ; இச்சூழலுக்கேற்ற ; மேற்சொல்லப்பட்ட ; மேற்சொல்லப்பட்ட வகையான; எவ்வளவோ நல்ல; எத்துணையோ மோசமான; என்று கூறும் அளவான; எவ்வளவோ-அவ்வளவான; (தொ.) all such, அத்தகைய எல்லாரும்; அத்தகைய எல்லாம்; அத்தகைய எல்லா ; as such, என்ற முறையில் ; such as, என்பதொத்த ; என்பவர் போன்ற ; என்பனபோன்ற ; எடுத்துக்காட்டாக ; such as it is, இது இவ்வகையாயிருப்பதனுல், இவ்வாறிருக்கும் நிலையில், என்ற நிலையிலேயே.

**such'-and-such'**, *n.* இன்னின்னுர், *a.* இன்னின்ன.

**such'like**, *n.* அம்மாதிரியானவர் ; அவ்வகைப்பட்டது ; அவ்வகைப்பட்டவை ; *a.* அவ்வகையான ; அதுபோன்ற.

**suck**, *n.* சப்புதல், உறிஞ்சுதல்; பால்குடிப்பு, பால்சுவைப்பு; சப்புக்கொட்டுதல், வாய் உறிஞ்சுசெயல் ; பால்சுவைப்பு வாய்ப்பு ; மார்புச் சப்புப்பால்; சிறிதளவு சாராயக் குடிப்பு ; சிறிதளவு சாராய வடிப்பு ; சாராயக்குடி மடக்களவு ; (இழி.) பள்ளிச்சிறுவர் வழக்கில் இனிப்பு ; (இழி.) பள்ளிச்சிறுவர் வழக்கில் பெருத்த ஏமாற்றநிலை ; படுதோல்வி ; *v.* பசப்பு, உறிஞ்சு ; மார்பு சப்பு ; விலங்கு மடியில் பால்குடி ; சப்பிக் குடி, உறிஞ்சிக்குடி ; பருகு ; உறிஞ்சிக் குடித்துவிடு ; நக்கு ; நாவினுல் துழாவு ; உதட்டால் அதுக்கு ; அதுக்கி உள்ளிழு ; குழாய் வகையில் உறிஞ்சொலி செய் ; நீர்ச்சுழி வகையில் உள்வாங்கு ; ஈர்த்துக்கொள் ; உள்வாங்கி உலர்வி ; உள்ளிழுத்துச் சுவறவிடு ; உட்கொள் ; நலங்கவர் ; பயனுதாயங்கொள் ; மனத்தில் வாங்கிக்கொள் ; அனுபவமற்ற நிலையுடையவராயிரு, குழந்தை நிலையிலிரு ; (இழி.) பள்ளிச்சிறுவர் வழக்கில் கெஞ்சிப்பசப்பு, அடிமைத்தனமாகக் கெஞ்சி வசப்படுத்த முயலு ; (தொ.) give suck, பால்கொடு ; பால் உறிஞ்சவிடு ; pump sucks, குழாய் உறிஞ்சும் ஒலி செய்கிறது; suck dry, ஒன்றுமில்லாதபடி உறிஞ்சு; ஈரங்கவர்ந்து உலரச்செய் ; suck in, உறிஞ்சு ; நீர்ச்சுழி முதலியவற்றின் வகையில் உள் இழுத்துக்கொள், அகப்படுத்து ; suck one's brains, பிறர் கருத்தை வாங்கிப் பயன்படுத்திவிடு ; suck up, உறிஞ்சு ; முழுதும் உறிஞ்சிவிடு ; முழுதும் புலர்த்திவிடு; (இழி.) அண்டிப்பிழை; பல்லைக்காட்டிக் கெஞ்சு ; what a suck ! என்ன படுதோல்வி !

**sucked**, *a.* உறிஞ்சப்பட்ட ; (தொ.) sucked orange, நலம் இழந்த பொருள் ; நன்மை ஏதும் எஞ்சாத பொருள் ; சப்பியொதுக்கிய சக்கை.

**suck'er**, *n.* உறிஞ்சுவோர் ; உறிஞ்சுவது ; பன்றிக்குட்டி ; திமிங்கிலக்கன்று ; பால்மாருக் கன்று ; அனுபவமற்றவர்; குழந்தை போன்றவர் ; ஒட்டுயிரி ; ஒட்டுறிஞ்சி, அட்டை ; உறிஞ்சி வாழ்பவர் ; சப்பு இனிப்புப்பண்டம், துப்புமிட்டாய்; உறிஞ்சு மீன்வகை ; உறிஞ்சலகு மீன்வகை ; நீடுமெல்லலகு மீன்வகை ; பற்றலகு மீன்வகை ; பற்றலகுப் பகுதி ; உறிஞ்சு குழாயின் உந்துதண்டு ; உறிஞ்சுகுழாயின் ஊடிணைப்புக் குழல் ; தை, தூரடித் தாவர இளங்கன்று ; இயந்திரப் பற்றுறுப்புப் பகுதி; பற்றுத்தூக்கி, பற்றீர்ப்பு விளையாட்டுக் கருவி ; தூரடி முளை, தண்டு நில அடித்தளிர்முளை ; வேர்த் தளிர்முளை ; கிளைத்தளிர்முளை ; காம்படிக் கவட்டுந் தளிர் முளை ; *v.* தூரடிக் கன்றுகள் அகற்று ; பக்கமுளைகள் தறி ; கிளைமுளைகள் கழி ; தைவிடு ; கிளைமுளைவிடு ; பக்கக்கன்று விடு.

**suck'ing**, *a.* உறிஞ்சுகிற, பால் மறக்காத; பால்மணம் மாருத; பழக்கமற்ற; அரும்புகிற; தொடக்க நிலையில் உள்ள; (தொ.) sucking bottle, பாற்புட்டில்; sucking child, பாலருப்பிள்ளை.

**suck'ing-disk**, *n.* உறிஞ்சலகு, பற்றலகு.

**suc'kle**, *v.* பால்கொடு ; பால்குடிக்க விடு.

**suck'ling**, *n.* பால்குடி மறவாக் குழந்தை ; பால்குடி மாருக் கன்று.

**suck'-up**, *n.* அண்டிப் பிழைப்பவர் ; பல்லைக்காட்டிப் பிழைப்பவர்.

**suc'rose**, *n.* கருப்புவெல்லம்.

**suc'tion**, *n.* உறிஞ்சுதல் ; ஒத்தியெடுத்தல், உறிஞ்சியெடுத்தல் ; உள்வாங்குதல், பற்றீர்ப்பு.

**suc'tion-fan**, *n.* பதருறிஞ்சி, தானியத்திலிருந்து பதர் வாங்கிவிட உதவும் உறிஞ்சு விசிறி.

**suc'tion-plate**, *n.* ஒட்டண்ணம், செயற்கைப் பல்தாங்கி.

**suc'tion-pump**, *n.* இறைப்புக் குழாய்ப்பொறி.

**suctor'ial**, *a.* உறிஞ்சு வாய்ப்புடைய ; பற்றூன்று வாய்ப் பிணைப்புடைய ; உறிஞ்சீர்ப்பு வலிமையுடைய ; உறிஞ்சு உறுப்பு இணைவுடைய ; பற்றுறுப்பு இணைவுடைய ; உணவுறிஞ்சாற்றலுடைய.

**sudar'ium**, *n.* மாயத்திருவோவியம், மாயமான இயேசுநாதரின் சித்திரம் ; திருத்தலைக்குட்டை, இயேசுநாதர் தலை தூழ் கைக்குட்டை ; மாயப் பொறிப்புக்குட்டை, மாயமான இயேசுநாதர் தலைப்பொறிப்புக்கொண்ட தூயதிரு வெரொணிக்காவின் (St. Veronica) கைக்குட்டை.

**sudator'ium**, *n.* புழுக்கறை ; வியர்ப்புக்கூடம்.

**sud'atory**, *n.* புழுக்கமருந்து, வியர்ப்பூட்டும் மருந்து ; *a.* வியர்ப்பூட்டுகிற.

**sudd**, *n.* ஒழுக்குத் தடுப்பு மிதவைக்கூளம் ; தற்பொழுதைய அணை.

**sudd'en**, *n.* திடுநிகழ்வு ; *a.* திடீரென்ற ; திடுநிகழ்வான ; எதிர்பாரா நிகழ்வான; முன்னெச்சரிப்பற்ற; திடுவிரைவான; வழக்க மீறிய வேகமுடைய; மின்வெட்டுப்போன்ற; துள்ளித் தெறிப்பான ; *adv.* திடுமென, உடனடியாக ; (தொ.) all of a sudden, all on a sudden, of a sudden, on a sudden, on the sudden, உடனடியாக, திடீரென்று.

**sudd'enly**, *adv.* உடனடியாக ; எதிர்பாராமல்.

**sudd'enness**, *n.* திடீரெனல், திடீர் நிகழ்வுநிலை.

**sudorif'erous**, *a.* சுரப்பி வகையில் வியர்வை வெளிப்படுத்துகிற.

**suds**, *n. pl.* சவர்க்கார நீர் நுரை.

**sue**, *v.* வழக்காடு; வழக்கிடு; மீது வழக்குத்தொடு; மன்றுடு, முறைமன்றத்தில் வாதாடு; வாதாடு; மனுச்செய்; முறையிடு; வேண்டு ; கெஞ்சிக்கேள் ; குறையீடு தெரிவி ; குறையிரந்து வேண்டுவி; மணங்கோரு; மண இணைவுநாடு; மணவினையிற் கோரு ; (தொ.) sue for, குறையிர ; வழக்காடு ; sue for the hand of, மணவினை கோரு ; sue in court, sue person, வழக்காடு ; sue out, முறைமன்றத்தில் மனுச்செய்து மன்னிப்புப் பெறு ; மனுச்செய்து அதன்மீது அறுதியாணை பெறு.

**suede**, *n.* துறுதோல், கையுறை காலுறை முதலியவற்றிற்குப் பயன்படுத்தும் பதனிடப்படா வெள்ளாட்டுக் குட்டித்தோல் வகை; துறுதோல் நிறம்; *a.* துறுதோலாலான; துறுதோல் நிறம் வாய்ந்த.

**su'et**, *n.* ஊன் கொழுப்பு, எருது-ஆடு முதலியவற்றின் குண்டிக்காயிடைச் சேரும் திண்கொழும்பொருள்.

**suff'er**, *v.* வருந்து ; நோவுறு ; துன்புறு ; துயருறு ; இடுக்கணுறு ; அவதியுறு ; இழப்புக்கு ஆளாகு ; தீங்குறு, தீமைக்கு ஆளாகு ; ஒறுக்கப்பெறு, தண்டனைக்கு ஆளாகு ; சாத்தீர்ப்புப் பெற்றவர் வகையில் கொலைத்தண்டனைக்கு உட்படு ; விடு, இசைவளி ; விளைவுக்கு உள்ளாகு, பாதிக்கப் பெறு ; செயலுக்கு உட்படு ; படு, தாங்கு ; நுகர் ; வாளா பொறுத்துக்கொண்டிரு ; ஏற்றமைவுறு.

**suff'erance**, *n.* ஏற்பமைவு; தடை எதிர்ப்பின்மை; மெல்லிசைவு, தாட்சணியம், வாய்பேசா விட்டுக் கொடுப்பு; விட்டுக் கொடுப்பிணக்கம், மறுப்பின்மையாலேயே ஏற்படும் ஒப்புதல்; துயருழப்பு, துன்பம், அவதி; சகிப்புத்தன்மை, பொறுதி யாற்றல்; (பழ.) பணிவுடைமை; கப்பற் சரக்கேற்ற இசைவுரிமை.

**suff'erer**, *n.* துன்புறுவோர்; படுவோர், செயல்வகையில் ஆளாவோர்; செயலாற் பாதிக்கப்படுபவர்.

**suff'ering**, *n.* துன்பம்; *a.* துன்பப்படுகிற.

**suff'ete**, *n.* பண்டைக் கார்தெஜ் (Carthage) நகராட்சியின் முறைமன்ற நடுவருள் ஒருவர்.

**suffice'**, *v.* போதுமானதாயிரு; ஏற்ற அளவினதாயிரு; மனநிறைவு ஏற்படுத்துவதாயிரு; தேவைகளை நிறைவேற்றுவதாயிரு; (தொ.) suffice it to say, அவ்வளவு சொல்வதே போதும்.

**suff'icience**, *n.* = sufficiency.

**suffi'ciency**, *n.* போதிய அளவு; போதிய செல்வம்; மட்டளவான சொத்துடைமை; போதிய வளம்; போதிய வாய்ப்பு வளம்; நிறைவு மனப்பான்மை; போதிய தகுதியுடைமை; போதிய திறமையுடைமை; போதிய தகுதி; போதிய திறமை.

**suffi'cient**, *n.* போதுமான அளவு; போதுமானது; தேவைக்குப் போதிய அளவு; *a.* போதிய, போதுமான; போதிய அளவான; தேவைக்கு ஏற்ற; போதிய எண்ணிக்கையுடைய; போதிய திறமையுள்ள.

**suffi'ciently**, *adv.* போதிய அளவில், தாராளமாக.

**siff'ix** [1], *n.* விகுதி, பின்னொட்டாய்ச் சேர்ந்த சொல்லுறுப்பு; பின்னொட்டு, பிற்கூறு.

**suffix'** [2], *v.* விகுதி சேர்; சொல்லமைப்பில் பின்னொட்டுச் சேர்; பின்னிணை, பின்னொட்டு.

**suff'ocate**, *v.* திக்குமுக்காட்டுவி, மூச்சுத் திணற வை; மூச்சுத்திணறும் உணர்ச்சி உண்டுபண்ணு; மூச்சுவிட முடியாமற் செய்; பேச முடியாமற் செய்; திக்குமுக்காடு, மூச்சுத் திணறும் உணர்ச்சிபெறு; மூச்சுவிடத் திணறு.

**suff'oca'tion**, *n.* மூச்சுத் திணறல்.

**suff'ragan**, *n.* சமயத்துறைத் துணையாதரவுப் பணியாளர்; சமயத்துறை மாவட்டத் தலைவர் துணையாதரவாளர்; மேனிலைச் சமயத் தலைவர்க்குத் துணையாதரவாளரான சமய மாவட்டத்தலைவர்; *a.* சமயத்துறைத் துணையாதரவுப் பணியாளரான; (தொ.) suffragan bishop, சமயத்துறை மேனிலைத் தலைவர்க்கு ஆதரவான மாவட்டத் தலைவர்.

**suff'raganship**, *n.* சமயத்துறைத் துணையாதரவாளர் பணி; மேனிலை முதல்வர் துணையாதரவாளரான சமய மாவட்டத் தலைவர் பணி.

**suff'rage**, *n.* வாக்குரிமைச் சீட்டு; வாக்குரிமை; வாக்காளர் ஆதரவு, தேர்தல் வழியில் வாக்குரிமையாளர் இசைவளிப்பு; இசைவிணக்கம், மனமார்ந்த ஒப்புதலாதரவு; வாக்களிப்புரிமை; கருத்தாதரவு; சமய குருவுக்கு எதிர்குரலாகச் செய்யப்படும் திருக்கோயில் திருக்கூட்ட விண்ணப்ப அறிவிப்பு; இடைநேர வழிபாடு.

**suffragette'**, *n.* பெண்வாக்குரிமைப் போராட்ட அணங்கு, மகளிர் வாக்குரிமைக்காகப் போராடிய பெண்.

**suff'ragist**, *n.* வாக்குரிமை எல்லை விரிவு ஆர்வலர்; வாக்குரிமைச் சிறப்பை வற்புறுத்துபவர்.

**suffu'migate**, *v.* கீழிருந்து புகை படர்வி.

**suffuse'**, *v.* மேற்கொட்டு; மேற்படர்வுறு; மேற்பூசு.

**suffu'sion**, *n.* மேற்படர்வு; மேற்பூச்சு; உட்கனிவுத்தோய்வு, நிரம்பி வழிவு.

**Suf'i**, *n.* இஸ்லாமிய மறைமெய்ஞ்ஞானி.

**Su'fic**, *a.* இஸ்லாமிய மறைமெய்ஞ்ஞானத்துறை சார்ந்த. இஸ்லாமிய மறைமெய்ஞ்ஞானியர்க்குரிய.

**Su'fism, Su'fiism**, *n.* இஸ்லாமிய மறைமெய்ஞ்ஞானம்; இஸ்லாமிய மறைமெய்ஞ்ஞானக் கோட்பாடு,

**su'gar**, *n.* சர்க்கரை; இன்மொழி; முகமன்; மருந்தின் சர்க்கரைப்பூச்சு; (வேதி.) வெல்லச்சத்து; சர்க்கரைச் சத்துப் பொருள்; *v.* சர்க்கரை கல; சர்க்கரைகலந்து இனிப்பூட்டு; தித்திப்பூட்டு; (இழி.) அரைகுறை மனத்துடன் வேலை செய், சோம்பேறியாக வேலை செய்.

**su'gar-basin**, *n.* சர்க்கரைத் தட்டம்.

**su'gar-bean**, *n.* அவரை வகை.

**su'gar-beet**, *n.* சர்க்கரைவள்ளி, தித்திப்பான சாறுடைய கிழங்குதரும் செடிவகை.

**su'gar-bird**, *n.* மலர் மது உறிஞ்சும் பறவை வகை.

**su'gar-candy**, *n.* கற்கண்டு.

**su'gar-cane**, *n.* கரும்பு.

**sug'ar-coated**, *a.* சர்க்கரை மேற்பூச்சுடைய, கட்டி பூசிய.

**sug'ared**, *a.* சர்க்கரை கலந்த; இனிப்பூட்டப்பட்ட; சர்க்கரை மேற்பூச்சிடப்பட்ட; சர்க்கரைப் பொதிவிட்ட.

**su'gar-gum**, *n.* இனிப்புத் தழையுடைய ஆஸ்திரேலிய பிசின் மரவகை.

**su'gar-house**, *n.* சர்க்கரை ஆலை.

**sug'ariness**, *n.* குமட்டுந் தித்திப்பு; சர்க்கரை யியல்பு; சர்க்கரை போன்ற தோற்றம்; சர்க்கரை நிறைந்திருத்தல்.

**sug'aring**, *n.* தித்திப்பூட்டல்; சர்க்கரைப்பொதிவு; மரவகைச் சர்க்கரைப்பூச்சு; மரவகைச் சாற்றிலிருந்து சர்க்கரை எடுப்பு.

**su'garless**, *a.* சர்க்கரை யில்லாத; இனிமையற்ற.

**sug'ar-loaf**, *n.* சர்க்கரைக் கட்டி.

**su'gar-maple**, *n.* சர்க்கரைச் சாற்று மரவகை.

**su'gar-mill**, *n.* கருப்பாலை, சர்க்கரை ஆலை.

**su'gar-mite**, *n.* வெல்லப்பூச்சி, பதனிடாச் சர்க்கரையை மொய்க்கும் பூச்சிவகை.

**su'gar-orchard**, *n.* சர்க்கரை தரும் சாறுடைய மரத் தோப்பு.

**su'gar-palm**, *n.* சர்க்கரை தரும் பனை இன மரவகை.

**su'gar-plum**, *n.* இனிப்பு மிட்டாய்; காய்ச்சிய சர்க்கரைப் பாகுருண்டை.

**su'gar-refiner**, *n.* சர்க்கரைத் தூய்மையாளர்.

**su'gar-refinery**, *n.* சர்க்கரைத் தூய்மைத் தொழிற்சாலை.

**su'gar-refining**, *n.* சர்க்கரையைத் தூயதாக்குந் தொழில்.

**su'gar-wrack**, *n.* இன்தேறல் தருங் கடற்பாசி வகை.

**su'gary**, *a.* சர்க்கரை போன்ற; சர்க்கரைத் தோற்றமுடைய; சர்க்கரைச் சுவையுடைய; தித்திப்புடைய; சர்க்கரை நிரம்பிய; குமட்டும் தித்திப்புடைய; திகட்டும் இனிப்புடைய.

**suggest'**, *v.* புதுக்கருத்துத் தெரிவி, யோசனை கூறு; புதிது எடுத்துக் கூறு; குறிப்பிடு; ஏற்புநாடி முன்வை; பிரேரணை செய்; ஆய்வுரைக்கு வை, திட்டம்-கோட்பாடு-கருத்து ஆகியவற்றின் வகையில் முன்னிலைப்படுத்து; ஆய்வுதவியுரையாகக் கூறு; குறிப்பாகச் சொல், மறைமுகமாகச் சுட்டிக்குறிப்பிடு; சுற்றுமுகமாகக் குறி; தொனிப்பொருள் தோற்றுவி, ஒன்று உணர்த்தி மற்றொன்று குறி; குறிப்புக் காட்டு, மெல்ல நினைவூட்டு; கருத்துத்தூண்டு, உளத்தில் கருத்துப்படிவம் எழுப்பு; தொடர்புறவாக உளத்திற் கருத்து எழுப்பு; மறைமுகமாகக் கருத்தில் புகுதரவு செய்; மெல்லக் கருத்துப் படியவை; கருத்துப் படியவிடு; உள்ளத்தின் போக்கைத் தன் வயப்படுத்தி ஆள்; (தொ.) the thing suggests itself, கருத்துத் தானாக மனத்தில் எழுகிறது.

**suggest'ed**, *a.* உய்த்துணர் வகையான; புறமிருந்து குறிக்கப்பட்ட; கருத்துத் தூண்டுதல் முறையான.

**suggestibil'ity**, *n.* குறிப்பாகத் தெரிவிக்குந் திறம்; குறிப்புப்பொருள் ஆற்றல்; வசியத்துக்கு ஆட்படத்தக்க நிலை; கருத்துத் தூண்டுதலுக்கு உட்படத்தக்க தன்மை.

**suggest'ible**, *a.* குறிப்பாகக் கூறத்தக்க; தொனிப்பொருள் படுகிற; கருத்துத் தூண்டுதலுக்கு உட்படத்தக்க; கருத்து வசியத்துக்கு ஆட்படத்தக்க.

*sugges'tio fal'si*, (ல.) *n.* பிறழவைப்பு ; பொய்யை மெய் போல் வைப்பு.

**sugges'tion**, *n.* புதுக்கருத்து, யோசனை ; குறிப்பீடு ; குறிப்புரை ; முன்வைப்புரை, பிரேரணை ; தூண்டுரை ; தூண்டுதல் கருத்து ; கருத்துத்தூண்டுதல் ; தொனிப்பொருள் ; (தொ.) full of suggestion, சிந்தனையைத் தூண்டுகிற ; பல்வேறு புதுக் கருத்துக்களை எழுப்புகிற.

**suggest'ionism**, *n.* உளத்தூண்டுதல் மருத்துவம் ; தூண்டுதல் வசியக் கோட்பாடு, வசியம் கருத்துத்தூண்டுதல் வினைவே என்ற கொள்கை.

**suggest'ionize**, *v.* தூண்டுதல் வசியம் செய்.

**sugges'tive**, *a.* குறிப்பாகத் தெரிவிக்கிற ; தூண்டு குறிப்பினை உட்கொண்ட ; குறிப்புப் பொருளுடைய; கருத்துத் தூண்டுகிற ; உள்ளத்தைத் தட்டி எழுப்புகிற ; சிந்தனையைக் கிளறுகிற ; கருத்து விறுவிறுப்பூட்டுகிற ; உளவசியம் சார்ந்த.

**sugges'tively**, *adv.* குறிப்பாக, மறைமுகமாக, கருத்துத் தூண்டு முறையில்.

**sugges'tiveness**, *n.* குறிப்புப் பொருட் செறிவு ; குறிப்பில் தெரிவிக்கும் தன்மை ; கருத்துத் தூண்டுதல் ; குறிப்புப் பொருள் நயம்.

**su'i**, (ல.) *a.* தன்னுடைய ; தம்முடைய.

**suicid'al**, *a.* தற்கொலையான ; தற்கொலை சார்ந்த ; தன் ஆக்க நல அழிவு நாடிய ; தற்கேடான, தானே தன்னைக் கெடுத்துக்கொள்கிற.

**suicid'ally**, *adv.* தற்கேடாக, தன்னைத்தானே கெடுத்துக் கொள்ளும் முறையில்.

**su'icide**, *n.* தற்கொலை; (சட்.) வேண்டுமென்றே தன் உயிரைத் தான் வாங்கிக்கொள்ள முயலும் குற்றம் ; (சட்.) தற்கொலைஞர், வேண்டுமென்றே தன் உயிரைத் தான் வாங்க முயன்ற குற்றவாளி ; தன் ஆக்கநல அழிப்பு, வருநலத் தன்னழிப்பு.

*su'i gen'eris*, (ல.) *a.* தானே தனி ஓர் இனமான ; ஒப்புவமையற்ற; தனித்தன்மை வாய்ந்த; பிற பகுதிகளில் அடங்காத.

*su'i jur'is*, (ல.) *a.* சட்டப்படி முழுத் தன்னுரிமையுடைய ; முழு வயதும் தகுதியும் வாய்ந்த.

**su'illine**, *a.* பன்றி இனக்குழுமஞ் சார்ந்த.

**suit**, *n.* வழக்கு ; வழக்கீடு ; சட்டப்படியான வழக்குத் தொடுப்பு ; கோரிக்கை ; விண்ணப்பம் ; மனு ; வேட்டம், காதல் கூர்வு ; காதல் ஆர்வ வேண்டுகோள் ; தொகுதி ; தொடர்கோவை ; ஒருதரமான வரிசை ; பயனீட்டுப்பொருள் தொகுதி ; சீட்டின் ஒருவகைத் தொகுதி ; தொடுத்த சீட்டு வகை ; அங்கி, முழு ஆடைத்தொகுதி ; ஒரே நிற ஆடைத் தொகுதி; ஒரு தவணை கப்பற்பாய்க்குழுமம் ; ஒரே நேரப் போர்க்கவசத் தொகுப்பு ; *v.* இசைவாக்கு ; ஏற்பமைவுடைய தாக்கு ; சேர்த்தியாக்கு; இயைந்த அழகுடையதாக்கு ; பயன்படும் தகுதியுடையதாக்கு; சேர்த்திணைவி; இணங்கியமைவி; பொருத்தமாயமைவி; இசைவுறு; இணங்கியமை; பொருத்தமாயமை ; கால-இடச்சூழல் வகையில் வாய்ப்புடையதாயிரு ; ஏற்றதாயிரு ; மனதுக்கு உகந்ததாயிரு ; பிடித்தமாயிரு ; பயன்படும் தகுதியுடையதாயிரு ; சேர்த்தியாயிரு ; இயைந்த அழகுடையதாயிரு ; (தொ.) dress suit, மாலையுடுப்பு ; follow suit, இறக்கிய சீட்டுவகை வழி ஆடு ; அதனையே செய் ; long suit, சீட்டாட்டத்தில் மூன்றுக்கு மேற்பட்ட சீட்டு ; make suit, பணிவாக வேண்டு, விண்ணப்பம் வற்புறுத்து ; short suit, சீட்டாட்டத்தில் நான்குக்குக் குறைவான சீட்டு; strong suit, தனி வலிமைக்கூறு.

**suitabil'ity**, *n.* பொருத்தம் ; தகுதி ; சேர்வு ; ஏற்பமைதி ; விருப்பேற்பு; இயைவு ; உகந்த தன்மை.

**suit'able**, *a.* பொருத்தமான ; இசைவான ; இணக்கமான ; சரியான ; தக்க ; வேண்டிய அளவான ; சூழலுக்கேற்ற ; நிலைமைக்கேற்ற ; தறுவாய்க்கேற்ற ; கருத்துக்கியைந்த ; நோக்கத்துக்குகந்த ; சேர்வான, அழகியைவான ; தக்க செவ்வியாயமைந்த ; விரும்பத்தக்க , ஏற்றமையக்கூடிய.

**suit'ably**, *adv.* தகுதியாக ; பொருத்தமாக ; சேர்வாக, இயைவாக ; தக்கபடி ; தறுவாய்க்கேற்றபடி ; விருப்பப்படி ; ஏற்பமைவாக.

**suit'case**, *n.* கைப்பெட்டி, தூக்குபேழை.

**suite**, *n.* பின்செல் குழு, பரிவாரம் ; புடைவரு சுற்றம், தோழமைக் குழு ; ஊழியர் தொகுதி ; கோவை, ஒருசீர்த் தொகுதி ; உடைமை வரிசைத்தொகுதி; அறைத் தொகுதி; தட்டுமுட்டுப் பொருள் தொகுதி ; இசைக்கருவிக் குழாம் ; நடன அடுக்கிசை வரிசை.

**suit'ed**, *a.* நன்கு பொருத்தப்பட்ட ; சேர்வியைவான ; வாய்ப்பமைந்த ; முழுமை அங்கியணிந்த.

**suit'ing**, *n.* மகளிர் உடுக்கை.

**suit'or**, *n.* வழக்குத் தொடுப்போர் ; காதலர், காதல் கூர்பவர் ; மண இணைவு நாடும் ஆடவர்.

**suit'ress**, *n.* வழக்குத் தொகுப்பவள் ; கோரிக்கையிடும் பெண் ; மண இணைவு நாடும் அணங்கு.

**Suk'ey**, *n.* (பே-வ.) கொதிகெண்டி.

**sul'cate**, *a.* (தாவ., உள்.) வரிப்பள்ளமுடைய, மீதாக இயங்குவதற்குரிய வடுவாயினையுடைய.

**sulk**, *v.* ஊடு, பிணங்கு ; சிணுக்கமுறு, முகத்தைக் கோட்டிக் கொண்டிரு.

**sulki'ness**, *n.* துனி.

**sulks**, *n. pl.* ஊடல்.

**sul'ky**, *n.* ஒற்றையாட் குதிரை வண்டி, ரேக்ளா ; *a.* பிணங்குகிற ; சிணுக்கமான ; முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டிருக்கிற ; முகக்கோட்டமுடைய ; கோப வெறுப்பார்ந்த ; சிடுசிடுப்பான ; பேசாதிருக்கிற ; செயலற்றிருக்கிற ; கத்திக் கொண்டிருக்கிற, கலந்து பழகாது தனி ஒதுக்கமாயிருக்கிற.

**sull'age**, *n.* சாக்கடைச் சகதி, மாசு ; குப்பைகூளம்.

**Sull'an**, *a.* பண்டை ரோமாபுரி அரசியல் தலைவரான சல்லா (Cornelius Sulla) என்பவருக்குரிய ; சட்ட வகையில் சல்லா என்பவரால் நிறைவேற்றப்பட்ட.

**sull'en**, *a.* கோபித்த மௌனமுடைய ; முரண்டு பிடிக்கிற ; பராமுகமாயிருக்கிற ; சிடுசிடுப்பான ; துயரார்ந்த ; ஊடாடிப் பழகாத.

**sull'enness**, *n.* பிணக்குநிலை ; நாணம்.

**sull'ens**, *n. pl.* சிடுசிடுப்பு, ஊடல்.

**sull'y**, *v.* கறைப்படுத்து, களங்கமுண்டாக்கு ; மாசூட்டு, அழுக்காக்கு ; தூய்மை கெடு ; புகழ் கெடு, நற்பெயர் கெடு.

**sulpham'ic**, *a.* கந்தக நவியச் சார்பான, கந்தகக் காடிக்குரிய நவச்சாரக் காடியினின்று எடுக்கப்பட்ட.

**sul'phate**, *n.* கந்தகி, கந்தகக்காடியின் உப்பு ; (தொ.) sulphate of copper, மயில்துத்தம், துரிசு, நீலத்துத்தம் ; sulphate of iron, அன்ன பேதி ; sulphate of magnesium, பேதி உப்பு, வெளிமக் கந்தகி ; sulphate of sodium, உவரக் கந்தகை ; sulphate of zinc, நாக கந்தகி, வெண் துத்தம்.

**sul'phide**, *n.* கந்தகை.

**sul'phite**, *n.* கந்தகியம்.

**sulphocyan'ic**, *a.* கந்தக நச்சுக்கலவை சார்ந்த.

**sul'phonal**, *n.* வசிய மயக்க மருந்து ; நோவு உணர்வு நீக்க மருந்து.

**sulphonam'ides**, *n.* வேதிப்பொருள் நுண்மக்கொல்லி.

**sulphona'tion**, *n.* கந்தகக்காடியின் செயற்பாடு.

**sulphon'ic acid**, *n.* கந்தகக் காடியின் செயலால் ஏற்படுங் காடிவகை.

**sul'phovin'ic**, *a.* கந்தக வெறியமான, கந்தகக்காடி வெறியக் கலவை சார்ந்த.

**sul'phur**, *n.* கந்தகம் ; வண்ணத்துப் பூச்சி வகை ; முற்கால வழக்கில் மின்னல் கருமூலம் ; முற்கால வழக்கில் நரகத் தீ மூலம் ; *a.* வெளிறிய மஞ்சள் நிறமான ; *v.* கந்தகங்

தடவு; கந்தகப் புகையூட்டு; (தொ.) flowers of sulphur, கந்தகக் கலவை மஞ்சட் பொடி; milk of sulphur, கந்தகக் கலவை வெண்பொடி; roll sulphur, தூய கந்தக வாரச்சு.

**sul'phurate**, *v.* கந்தகச் செறிவூட்டு; கந்தகப் புகையூட்டு; கந்தக வினைமையூட்டு, கந்தகத்தின் செயலுக்கு ஆளாக்கு.

**sul'phur-bottom**, *n.* மஞ்சள் அகட்டுத் திமிங்கிலம்.

**sulphur'eous**, *a.* கந்தகஞ் சார்ந்த; கந்தகம் போன்ற; கந்தகத்தின் தோற்ற இயல்புகளையுடைய; (தாவ.) வெளிறிய பசுமஞ்சள் நிறமான.

**sulphurett'ed**, *a.* கந்தகக் கூட்டுடைய; (தொ.) sulphuretted hydrogen, கந்தக நெடியுடைய நீரகவளி.

**sulphur'ic**, *a.* (வேதி.) உயர் இணைதிறக் கந்தகச் சேர்வுடைய; (தொ.) sulphuric acid, கந்தகக் காடி; sulphuric ether, கந்தக விண்மம், மயக்க மருந்தாகப் பயன்படும் நீர்ம வகை.

**sul'phurize**, *v.* = sulphurate.

**sul'phurous**, *a.* (வேதி.) கீழ்நிலை இணைதிறக் கந்தகச் சேர்வுடைய; (தொ.) sulphurous acid, கந்தகியக் காடி.

**sul'phur-spring**, *n.* கந்தக நீரூற்று.

**sul'phur-wort**, *n.* மஞ்சள் மலருடைய மூலிகை வகை.

**sul'tan**, *n.* இஸ்லாமிய வழக்கில் அரசர்; பகட்டுவண்ணப் பறவை வகை; துருக்கி மரபுடைய வெண்ணிற வீட்டுக் கோழி வகை.

**sulta'na**, *n.* இஸ்லாமிய வழக்கில் அரசி; துருக்கிநாட்டு அரசரின் தாய்; துருக்கிநாட்டு அரசரின் மனைவி; துருக்கி நாட்டு அரசரின் மகள்; அரச மாதேவி; பகட்டுவண்ணப் பறவை வகை; விதையற்ற உலர் முந்திரிப்பழ வகை.

**sul'taness**, *n.* இஸ்லாமிய வழக்கில் அரச மாதேவி; அரசரின் தாய்; அரசர் மனைவி; அரசர் மகள்.

**sul'try**, *a.* புழுக்கமான; காற்று இறுக்கமான; உள்வெப்பு மிக்க; மனநிலை வகையில் உணர்ச்சிமிக்க, மனவெழுச்சி மிக்க.

**sum**, *n.* தொகை; மொத்தம், கூட்டுத்தொகை; எண்; விடை எண்; பணத்தொகை; சுருக்கக் குறிப்பு; பயிற்சிக் கணக்கு; *v.* கூட்டு, தொகையாக்கு; மொத்தத் தொகையாகத் தெரிவி; முழுக் கூட்டுத்தொகையாகச் சேர்; பொழிப்பாகக் கூறு; கருத்துக்களைத் தொகுத்துச் சுருக்கிக்கூறு; (தொ.) in sum, சுருக்கமாக, பொழிப்பாக; lump sum, முழு மொத்தத்தொகை; sum and substance, சுருக்கம், பொழிப்பு, சாரம்; sum of things, பொதுவாழ்வு நலம், முழுமைத்தொகுதி; sum total, ஆக மொத்தம், கூட்டு மொத்தம், முழு மொத்தத்தொகை; sum up, இருதரப்புச் சான்றுகளையும் சுருக்கித் திரும்ப நினைவிற்குக் கொண்டு வந்து தொகுத்துரை; the sum, கூட்டுத்தொகை; the sum product, பெருக்கல் தொகை; the sum quotient, வகுத்து வந்த தொகை, ஈவு; the sum remainder, கழித்துவந்த தொகை, மிச்சத்தொகை.

**sum'ac, sum'ach**, *n.* தோல் பதனீடு-சாயம் ஆகியவற்றிற்குப் பயன்படும் உலர்த்திய இலைத்தூள்; சாயப்பதனீட்டு இலைத்தூள் தருஞ் செடிவகை.

**Sumer'ian**, *n.* தொல்பழங்காலச் சுமேரிய மொழி; தொல் பழங்காலச் சுமேரியர்; *a.* சுமேரிய, பாபிலோனிய நாகரிகத்தின் முற்பட்ட தொல்பழங்கால நாகரிக மரபு சார்ந்த.

**summ'arily**, *adv.* மொத்தமாக; திடுதீர்வாக, மொத்தத் தீர்வாக; வழக்குவகையில் கேள்விமுறையின்றி, விசாரணை நடவடிக்கைகள் எதுவும் இல்லாமலே, சுருக்கவகையாக.

**summ'arist**, *n.* தொகுப்பாளர், திரட்டாளர், சுருக்கிப் பொழிப்புரை தருபவர்.

**summ'arize**, *v.* பொழிப்பாக்கு, சுருக்கிக்கூறு; கூட்டு மொத்தமாக்கு; பொழிப்பாகு, மொத்தமாக அமை.

**summ'ary**, *n.* சுருக்கம், தொகுப்பு, பொழிப்பு; சுருக்கத் திரட்டு; *a.* சுருக்கமான, மணித்திரட்டான; கேள்விமுறையற்ற, வழக்குவகையில் விசாரணை முறையின்றி முடிவு செய்யப்பட்ட; நடவடிக்கைகளில் அதிரடியான, திடுதீர்வான, மொத்தத் தீர்வான; கடைசியான.

**summa'tion**, *n.* கூட்டுதல்; கூட்டுத்தொகைக் கண்டுபிடித்தல், ஆகமொத்தங்காணல்.

**summ'er** [1], *n.* கோடைக்காலம், மே மாதம் முதல் ஜூலை மாதம் வரையுள்ள முதுவேனிற் பருவம்; வாழ்வின் ஆண்டு; *a.* கோடைக்குகந்த; *v.* கோடைக்காலத்தைக் கழி; கால்நடைகளைக் கோடைக்கால மேய்ச்சலுக்கு ஓட்டிச்செல்; (தொ.) British double summer time, double summer time, வேனில் இருநிலைக் கணிப்புநேரம், வேனிற்காலத்தில் மணிப்பொறியில் இரண்டுமணி முன்னாக வைக்கப்பட்ட செயற்கை முறை நேரம்; Indian summer, வறட்சி வெப்பமுடைய வட அமெரிக்க இலையுதிர்காலம்; St. Luke's summer, அக்டோபர் மாத நடுவில் எதிர்பார்க்கப்படும் நல் இன்பப்பருவம்; St. Martin's summer, நவம்பர் மாத இடையில் வரும் மிக இனிமையான பருவகாலம்; summer lightning, தொலைவில் காணப்படும் மின்னொளிப் பரப்பு; summer school, கோடைச் சிறப்புப் படிப்பகம்; summer time, வேனில் ஒருநிலைக் கணிப்புநேரம், வேனிற்காலத்தில் மணிப்பொறியில் ஒருமணி நேரம் முன்னாக வைக்கப்பட்ட செயற்கைமுறை நேரம்.

**summ'er** [2], *n.* தளமட்ட விட்டம்.

**summ'er-house**, *n.* வேனிலகம், வேனிற்காலத்திற்கென அமைக்கப்பட்ட தோட்டவீடு.

**summ'erly**, *a.* வேனில்போன்று ஒளியுங் கதகதப்பும் உள்ள.

**summ'ertide, summ'ertime**, *n.* வேனிற்பருவம்.

**summe'ry**, *a.* வேனிற்காலம் போன்ற; வேனிற்பருவத்திற்கு ஏற்ற.

**summ'it**, *n.* கொடுமுடி, உச்சி, சிகரம்; உச்சநிலை, மீயுயர் படிநிலை; *a.* மேல்தள அரசியல் தலைமைசார்ந்த.

**summ'itless**, *a.* சிகரமற்ற.

**summ'it-level**, *n.* உச்ச உயர்தளம், உச்ச மேல்மட்டம்.

**summ'on**, *v.* அழைப்பாணையிடு; நீதிமன்ற வகையில் வர வாணையிடு, வழக்கெதிரி அல்லது சான்றாளரை வருகை தரும்படி கட்டளையிடு; நகர் அரண்வகையில் சரணடையும்படி அறிவி; கூட்ட அழைப்பு விடு; வரவழை; வரும்படியாகக் கூவியழை; ஆற்றல் முதலியவற்றை வரவழைத்துக்கொள்; (தொ.) summon up, ஒருங்குகூட்டு; மனவுறுதி-ஆற்றல் முதலியவற்றை ஒருங்குதிரட்டு.

**summ'ons**, *n. pl.* அழைப்பாணை; முன்னிலைப்பாட்டுக் கட்டளையாணை; அழைப்பாணைச் சீட்டு; கட்டாயநிலை அழைப்பு; *v.* முறைமன்ற அழைப்பாணை விடு.

**summ'um bon'um**, (ல.) *n.* உச்ச உயர்குறிக்கோள் நலம், அறமுறை இறுதி இலக்குநலம்.

**sump**, *n.* கட்டுதொட்டி, சுரங்கம்-இயந்திரம் ஆகியவற்றின் கழிவுநீர்ச் சேகரத்திற்கான கட்டுகுழி; கட்டுகுட்டம், எண்ணெய் முதலியவற்றிற்கான சேகரக்கிணறு; கொட்டு தட்டம், உருக்கிய உலோகத் தேக்கத்தொட்டி; கொட்டளம், உப்பு நீர் தேங்குவதற்கான உப்பளத் தேக்கம்; வடிகுட்டை, வண்டல் பிரித்து நீர் உள்வாங்கும் பள்ளம்.

**sum'pit, sum'pitan**, *n.* எறிகுழாய், மலாய்நாட்டில் வழங்கும் நச்சு எறிகணை வீசவல்ல நீள் ஊதுகுழல்.

**sump'ter**, *n.* பொதிகுதிரை; பொதிவிலங்கு ஓட்டி.

**sump'ter-horse**, *n.* பொதிகுதிரை.

**sump'ter-mule**, *n.* கோவேறு கழுதை வகை.

**sump'ter-pony**, *n.* மட்டப் பொதிகுதிரை.

**sump'tion**, *n.* (அள.) முற்றரவு, மூவளவையின் பெருநிலை வாசகம்.

**sump'tuary**, *a.* செலவினைக் கட்டுப்படுத்துகிற; (தொ.) sumptuary law, sumptuary edict, நாட்டு நலத்திற்காகத் தனிச் செலவினங்களைக் கட்டுப்படுத்துஞ் சட்டம்.

**sump'tuous**, *a.* முதல்தரமான, மதிப்பேறிய, பெருஞ்செலவு பிடிக்கிற, பணம் வாரிச் செலவிட்டுச் செய்யப்பட்ட; வளங்குன்றாத; தாராளமான; உயர்வளமிக்க.

**sump'tuously,** *adv.* குறைவிலா உயர்வளத்துடன்.

**sump'tuousness,** *n.* பொங்குயர்வளம், பொங்குமா நிறைவு.

**sun,** *n.* ஞாயிறு, கதிரவன், சூரியன்; கோள்மண்டல மையம்; வான்கோளங்களின் மண்டல மையம்; சுற்றுக்கோள்களை யுடைய நிலை விண்மீன்; வெயில், கதிரவன் வெப்பம்; கதிரவ ஞெளி; முகட்டுப் பல்தொகை ஒளிவிளக்கம்; பேரொளி விளக்கம்; புகழ்ப்பேரொளி; மேம்பட்ட பொருள்; விஞ்சு பண்பு; விஞ்சு முதன்மைப் பண்பாளர்; (செய்.) ஆண்டு; (செய்.) பகல்; *v.* வெயில் காய்வி, கதிரவஞெளிபட வை; வெயில் காய்; (தொ.) against the sun, இடஞ்சுழித்து, இடஞ்சுற்ருக, வலமிருந்து இடமாக; a place in the sun, நல் வாய்ப்பான நிலை; between sun and sun, from sun to sun, ஞாயிறு தோற்றத்திற்கும் மறைவிற்கும் இடைப்பட்ட; hail the rising sun, adore the rising sun, புதிதாக ஆட்சிக்கு வருபவர்களைப் புகழ்ந்து கொண்டாடு, புதிதாகப் பதவியேற்ற வர்களைக் கெஞ்சி நலம்பெறு; have been in the sunshine, have the sun in one's eyes, குடித்த நிலையிலிரு; his sun is set, its sun is set, வளமான காலம் முடிந்துவிட்டது; வாழ் நாள் முடிந்துவிட்டது; hold a candle to the sun, பழமொழி மரபு வழக்கில் தேவைக்கு மேற்பட்ட செயல்செய்; 'கொல்லத் தெருவில் ஊசி விலைகூறு'; let not the sun go down upon your wrath, உன்னுடைய வெகுளியை ஒருநாளோடு நிறுத்திக்கொள்; make hay while the sun shines, 'காற் றுள்ளபோதே தூற்றிக்கொள்'; mock sun, போலிக் கதிரவன்; rise with the sun, காலையில் எழுந்திரு; Rising Sun, ஜப்பா னிய அரசின் சிறப்புப்பட்டம்; see the sun, உயிரோடிரு; sun and planet, கிளைச்சக்கரம் தாய்ச்சக்கர இயக்கத்திலும் மாறுதல் செய்யும்படி தற்சுற்றும் முழுச்சுற்றும் உடைய பற் சக்கர இணைப்பு; sun drawing water, sun's eyelashes, sun's backstays, (கப்.) கதிரவஞெளி முகில் திவலை ஊடுருவு சிறப்புத் தோற்றம்; Sun of righteousness, இயேசு பெரு மான்; take the sun, ஞாயிற்றின் ஒளி மேல் விழும்படி மேலுடையின்றியமர்; ஞாயிற்றின் நடுநிரல் கோட்டுக் குத் துயரத்தைக் கணக்கிடு, சூரியனின் நடுப்பகல் உயரத்தைக் கண்டுபிடி; the midnight sun, வட-தென்துருவப் பகுதி களின் ஞாயிற்றுத்தோற்றம்; under the sun, உலகில்; with the sun, வலஞ்சுழித்து, வலச்சுற்ருக, இடமிருந்து வலமாக.

**sun'-bath,** *n.* வெயில் காய்வு, வெயில் முழுக்காட்டு, ஞாயிற் றுக் கதிர்கள் உடலிற்படும்படி இருத்தல்.

**sun'beam,** *n.* ஞாயிற்றுக்கதிர், பகலொளிக் கதிர்.

**sun'-bird,** *n.* பருதிப்புள், பகட்டுவண்ண இறகுத்தொகுதி யுடைய பறவை வகை.

**sun'-blind,** *n.* ஒளித்திரை, பலகணி ஒளிமறைப்பு மேற்கட்டி.

**sun'-bonnet,** *n.* வெயில்காப்புத் தொப்பி, முகத்தையும் கழுத் தையும் வெயிலினின்றுக் காக்கும் அமைவுடைய தொப்பி.

**sun'-bow,** *n.* ஒளிவில், நுண்திவலை முதலியவற்றின்மீது வெயில்படும்போது தோன்றும் பன்னிற வில்வளைவு.

**sun'burn,** *n.* வெங்குரு, வெயிலினுல் முகங்கன்றிச் சிவந் திருத்தல்.

**sun'-burner,** *n.* பகன்மை விளக்கு, நடுமோட்டுப் பல்தொகை ஒளிக் குமிழ்விளக்கம்.

**sun'burnt,** *a.* வெயில்வாட்டான, வெயிலினுற் கன்றிச் சிவந்த, வெயிலில் அடிபட்டுக் கறுத்த.

**sun'burst,** *n.* கதிர்வட்டவாணம், கதிரவனையும் கதிர்களையும் ஒத்து ஒளிவிடும் வாணவேடிக்கை; கதிர்வட்ட அணி, ஞாயிற்றுவட்டக்கதிர் போன்ற அணிவகை.

**sun'-cult,** *n.* ஞாயிற்று வழிபாட்டு மரபு, ஞாயிற்று வழி பாட்டுச் சமயப் பண்பு மரபுக்கூறு.

**sun'-cured,** *a.* வெயிலிற் பதனிட்ட, வெயிலில் உணக்கிப் பக்குவப் படுத்தப்பட்ட.

**sun'dae,** *n.* தேங்கனிப்பாலேடு, பழம்-கொட்டைகள் முதலியன கலந்த குளிர்பாலேடு.

**sun'-dance,** *n.* ஞாயிற்று நடனம், கதிரவனைப் போற்றி வட அமெரிக்க இந்தியர்கள் ஆடும் ஆட்டம்.

**Sun'day,** *n.* ஞாயிற்றுக்கிழமை, வாரத்தின் முதல்நாள்; வார ஓய்வுநாள்; வார வழிபாட்டு நாள்; (தொ.) Hospital Sunday, மருத்துவ நிதிநாள், உள்ளூர் மருத்துவ மனைகளுக்காகத் திருக்கோயில்களில் நிதி திரட்டும் ஞாயிற்றுக்கிழமை; Low Sunday, மீட்டெழுச்சி நாளுக்கு அடுத்த ஞாயிற்றுக் கிழமை; month of Sundays, நீள் நெடுங்காலம்; Palm Sunday, மீட்டெழுச்சி நினைவான குருத்தோலை விழாநாள்; Rogation Sunday, விண்ணேற்ற நாளுக்கு முந்திய ஞாயிற்றுக் கிழமை; Show Sunday, ஆக்ஸ்போர்டுப் பல்கலைக் கழகத்தில் நிறுவன முதல்வர் விழாவிற்கு முந்திய ஞாயிற்றுக்கிழமை; Sunday best, மிகச்சிறந்த உடை; Sunday letter, ஆங்கில நெடுங்கணக்கின் முதல் ஏழு எழுத்துக்களில் ஒன்று; ஆண்டுக் குறிப்பேட்டில் ஞாயிற்றுக்கிழமைகளுக்கு இடப் படுங் கணிதமுறைக் குறியீட்டெழுத்து; Sunday saint, சிறப் பாக ஞாயிறன்று சீலமும் நோன்புங் கடைப்பிடிப்பவர்.

**Sun'day-school,** *n.* சமய போதனைக்காக ஞாயிறன்று நடத்தப்படும் பள்ளி.

**sun'der,** *v.* (செய்.) வேறுக்கு, பகுதிகளாகப் பிரி, துண்டி, தனித்திருக்கச் செய்.

**sun'dew,** *n.* நுண்பனிச் செடி, நுண்திவலை சொட்டும் துய் களையுடைய சிறு செடி வகை.

**sun'-dial,** *n.* கதிர் மணிப்பொறி, கதிர்நிழற் கடிகை.

**sun'-dog,** *n.* கதிரவன் விளிம்பொளிப் போலிவட்டம்.

**sun'down,** *n.* கதிரவன் மறைவு, சூரியாத்தமனம்.

**sun'downer,** *n.* ஊர்சுற்றி, அந்தி உணவுக்குமட்டும் வருந் தொழிலாளி; அந்திப்பொழுது அருந்துங் குடிவகை.

**sun'-dried,** *a.* வெயிலில் உலர்ந்த; வெயிலில் உணக்கப் பெற்ற.

**sun'dries,** *n. pl.* எஞ்சியவை; சில்லறை உருப்படிகள்; தனி யாகக் குறிப்பிட வேண்டியிராத துணைப்பொருள்கள்.

**sun'-drops,** *n.* அமெரிக்க அந்திமந்தாரப் பூவகை.

**sun'dry,** *n.* ஆஸ்திரேலிய மரப்பந்தாட்டத்தில் நேரடிப் பந்தெறியின்றிப் பெறப்பட்ட கெலிப்புப்புள்ளி; *a.* சில்லறைப் பட்ட, சிலபல, எவையோ சில; பல்வகைப்பட்ட; (தொ.) all and sundry, ஒவ்வொருவரும் எல்லாரும், ஒவ்வொன்றும் எல்லாமும், மொத்தமாகவுந் தனித்தனியாகவும்; எவரும் விடாது ஒவ்வொருவரும்.

**sun'fish,** *n.* பருதிமீன், வட்டவடிவப் பெருமீன் வகை.

**sun'flower,** *n.* சூரியகாந்தி வகை.

**sung,** *v.* sing என்பதன் முடிவெச்ச வடிவம்; முற்கால வழக்கில் sing என்பதன் இறந்தகால வடிவம்.

**sun'-glasses,** *n.* வெயில்காப்புக் கண்ணுடி.

**sun'-glow,** *n.* ஞாயிற்றுப் பரிவேடம், கதிரொளி வட்டம்.

**sun'-god,** *n.* ஞாயிற்றிறை, செங்கதிர்த் தேவன்.

**sun'-hat, sun'-helmet,** *n.* வெயில்காப்புத் தொப்பி.

**sunk,** *v.* sink என்பதன் முடிவெச்ச வடிவங்களில் ஒன்று; முற்கால வழக்கில் sink என்பதன் இறந்தகால வடிவம்.

**sunk'en[1],** *a.* ஆழ்ந்த; குழிந்த; குழிவிழுந்த, குழிபோ லாழ்ந்த.

**sunk'en[2],** *v.* sink என்பதன் முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**sun'light,** *n.* வெயில்; வெயிலொளி; பகலொளி.

**sun'like,** *a.* ஞாயிறுபோன்ற, கதிரவன் போன்ற.

**sun'lit,** *a.* கதிரவன் ஒளியூட்டப்பட்ட; கதிரவஞெளி தங்கு தடையின்றிப் படுகிற.

**sun'-myth,** *n.* ஞாயிற்றியக்கங்களை விளக்குவதாகக் கருதப் பட்ட பழமரபுக் கதைக்கூறு; ஞாயிற்றுச் சார்பான பழங் கதைத் தொகுதி.

**sunn,** *n.* சணல், சடம்பு, குத்திரம்.

**Sunn'a, Sunn'ah,** *n.* இஸ்லாமிய மரபில் நபிநாயக வாய்மொழிப் பதிவாகக் கொள்ளப்படுங் கட்டளைச்சட்டம்.

**sunn'-hemp',** *n.* சணல்.

**Sunn'i, Sunn'ite,** *n.* இஸ்லாமிய மரபுக் கிளையினர்.

**sunn'y,** *a.* ஞாயிறு சார்ந்த; கதிரவனிடத்திலிருந்து வருகிற; ஞாயிறு போன்ற; கதிரவனொளி பரவிய; கதிரொளி வண்ணம் பெற்ற; ஞாயிற்றொளியால் வெதுவெதுப்பூட்டப்பட்ட; பொன்னொளி பூத்த; புன்னகை பூத்த; இன்னொளி வீசுகிற; களையார்ந்த; ஒளிபடர்ந்த; மகிழ்வார்ந்த; இன்பமார்ந்த; இன்களிவார்ந்த; (தொ.) the sunny side, ஞாயிறொளிபடும் பக்கம்; வாழ்வின் இன்பக்கூறு; பொருள்களின் இன்பப் பக்கம்.

**sunnya'see,** (ச.) *n.* துறவி.

**sun'-parlous,** *n.* கதிர் ஒளிமாடம், கண்ணாடிச்சுவர்களும் பெரிய பலகனிகளுங் கொண்ட வெயில் வாய்ப்புக்கூடம்.

**sun'-picture, sun'-print,** *n.* நிழற்படம்.

**sun'-proof,** *a.* வெயில் உறைக்காத; வெயில் காப்பான.

**sun'-rays,** *n.* மறை ஊதாக்கதிர்கள், நோய்தீர்க்கப் பயன்படுங் கதிரவனின் அப்பால் ஊதாநிறக் கதிர்கள்.

**sun'rise,** *n.* கதிரவன் உதயம்; புலர்காலை.

**sun'set,** *n.* அந்திநேரம்; மாலைச் செவ்வான்; கதிரவன் மறைவு.

**sun'shade,** *n.* சாளர விதானம், பலகணி மேற்கட்டி; சிறுகுடை.

**sun'shine,** *n.* கதிரவன் ஒளி, ஞாயிற்றொளி, கதிரொளிப் பரப்பு, கதிரொளி படர்ந்த பரப்பு; இனிய வானிலை; இயன் மகிழ்ச்சி; இன்னொளி வளம்; செல்வ வளம், செல்வ நிலை; இன்ப வேளை; (தொ.) sunshine recorder, ஞாயிற்றொளி மானி.

**sun'-snake,** *n.* பாம்பணி, மையத்தில் வட்டமான பாம்பு வளைவுடைய பூணணி வகை.

**sun'-spot,** *n.* ஞாயிற்றுக் கறைத்தடம், ஞாயிற்றின் பரப்பில் எப்பொழுதாவது காணப்படுங் கரும் புள்ளிகளுள் ஒன்று.

**sun'-star,** *n.* விண்மீன் வடிவச் சிவப்புமீன் வகை.

**sun'-stone,** *n.* சூரியகாந்திக் கல், படிகக்கல் வகை.

**sun'stroke,** *n.* வெயில் வெப்பத்தாக்கு நோய்.

**sun'struck,** *a.* வெயிற் கடுமையினால் தாக்குண்ட, வெயில் தாக்கி மயக்கமுற்ற.

**sun'-up,** *n.* (பே-வ.)=sunrise.

**sun'-worship,** *n.* ஞாயிற்று வழிபாடு.

**sun'-worshipper,** *n.* ஞாயிறு வழிபாட்டாளர்.

**sup,** *n.* வாய் கொள்ளுமளவுள்ள நீர்மம்; *v.* தேநீர் முதலிய வற்றை உறிஞ்சிக்குடி; கரண்டியிலெடுத்துச் சிறிது சிறிதாகக் குடி; இரவுணவு அருந்து; இரவுணவாகக் கொள்; இராச் சாப்பாடு வழங்கு; உணவு வகையில் இரவுணவாக அமைவுறு.

**sup'er,** *n.* (பே-வ.) மிகை நடிகர்; மிகைப்படியானவர், வேண்டப்படாத ஆள்; முதன்மையற்றவர்; கண்காணிப்பாளர்; மிகுசெலவில் உருவாக்கப்பட்ட திரைப்படம்; மேம்பட்ட மிகு நேர்த்தி வாய்ந்த துணி; அரு நுட்பமான பண்டம்; *a.* மிக மேன்மையான, மிக நுட்பமான; அளவு வகையில் சதுரமாயுள்ள; பரப்பளவையான.

**sup'erable,** *a.* கடக்கக்கூடிய, வென்று சமாளிக்கத்தக்க.

**superabound',** *v.* பெரிதும் மலிந்திரு, மிக நிரம்பியிரு, மட்டுமீறி ஏராளமாயிரு.

**superabun'dance,** *n.* மிகு நிறைவளம்; பொங்குமாவளம்; மிகுமலிவு.

**superabun'dant,** *a.* மிக ஏராளமான, மட்டுமீறிய வளமார்ந்த.

**superacute',** *a.* மட்டுமீறிய நுட்பம் வாய்ந்த; அளவு மீறிய கூர்மதியுடைய; மிகைப்படக் கூரிய.

**sup'eradd',** *v.* மிகைப்படியாகச் சேர், மேற்கொண்டு கூட்டு.

**sup'eradd'ed,** *a.* மிகைப்படியாகச் சேர்க்கப்பட்ட; அளவு மீறிக் கூடிய; மேற்கொண்டு கூட்டப்பட்ட.

**sup'eraddi'tion,** *n.* மிகைப்படிச் சேர்ப்பு; மிகை.

**superalt'ar,** *n.* புனித மேற்பீடம், புனிதமாக்கப்படாத பலிபீடத்தின்மேல் வைக்கப்படும் புனிதமாக்கப்பட்ட கற்பாளம்.

**superan'al,** *a.* குதத்திற்கு மேலுள்ள.

**superangel'ic,** *a.* தேவதூது நிலைக்கும் மேம்பட்ட; மட்டுமீறிய புனிதத் தன்மையுடைய, திப்பியங் கடந்த.

**superann'uate,** *v.* பழமைப்பட்டதாக்கு; மிகப் பழமைப் பட்டுவிட்டதென்று கருது; மிகு பழமை காரணமாக ஒதுக்கித் தள்ளு; மூப்புக் காரணமாக ஒதுக்கி வை; வேலையினின்று வயது காரணமாக ஒதுக்கி விடு; வேலையினின்று மூப்புக் காரணமாக விலக்குவி; ஓய்வூதியங் கொடுத்து விலகச் செய்; குறைந்த தகுதியினையும் பெறாத மாணவரை நீக்கும்படி கோரு.

**superann'uated,** *a.* பழமைப்பட்டுப் போன; பழமை காரணமாகப் பயன்படுந் தகுதியற்றுப்போன; ஏலா மூப்படைந்துவிட்ட; வேலைவயது கடந்த.

**superannua'tion,** *n.* பழமைப்பட்டுவிடல்; பழமைப்பாடு; மிகு மூப்படைவு; மிகு மூப்பறிவிப்பு; மிகு மூப்புகாரணமான விலக்கீடு; மூப்போய்வளிப்பு; மூப்போய்வு உதவித் தொகை; வேலைவயது கடத்தல்; ஓய்வுகாலப் படி.

**supera'queous,** *a.* நீருக்குமேலேயுள்ள, நீர்ப்பரப்புக்குக் கீழ்ப்படாத; நீர்ப்பரப்பின்மீதான.

**superb',** *a.* உயர்மதிப்பு வாய்ந்த, கவர்ச்சியூட்டி ஆட்கொள்ளுகிற, சிறந்ததான; தனி வீறார்ந்த; முதல்தரமான; மிக மேம்பட்ட.

**superbipart'ient,** *a.* மூன்றில் இரண்டுகூறு கூடுதலான.

**superbiquin'tal,** *a.* ஏழுக்கு ஐந்து என்ற தகவுப்படியான.

**superbiter'tial,** *a.* ஐந்துக்கு மூன்று என்ற தகவுப்படியான.

**superb'ly,** *adv.* தனி நேர்த்தியுடன், மிகச் சிறப்பாக, முதல் தரமாக.

**supercal'ender,** *v.* தாள்-துணி வகையில் மெருகுப்பெட்டியிட்டு மட்டுமீறிய மெருகளி.

**supercal'endered,** *a.* துணி-தாள் வகையில் மட்டுமீறி மெருகிடப்பட்ட; உருளை இயந்திரத்தினால் அழுத்துவதன் மூலம் பெரிதும் மழமழப்பாக்கப்பட்ட.

**supercan'opy,** *n.* மேல்விதானம்; புறநிலை மேற்கட்டி.

**sup'ercargo,** *n.* வாணிகக் கப்பற் சரக்கு விற்பனைப் பொறுப்பு மேலாள்; *pl.* sup'ercargoes.

**superceles'tial,** *a.* வான் கடந்த; வானத்திற்கு மேற்பட்ட; மட்டுமீறிய புனிதத்தன்மையுடைய; திப்பியங்கடந்த.

**sup'ercharge[1],** *n.* அளவு மீறிய நிரப்பீடு; மட்டுமீறிய சுமை; மிகைக் கட்டணம்; (கட்.) மிகைப் பொறிப்பு.

**supercharge'[2],** *v.* மட்டுமீறி நிரப்பு; அளவு மீறித் திணி; மட்டின்றி ஏற்று; அளவுகடந்து சுமத்து; எல்லையின்றி அழுத்த மிகுதிப்படுத்து; பொது அளவு கடந்து கட்டணம் ஏற்று; (கட்.) மிகையாகப் பொறிப்பிடு.

**supercharg'er,** *n.* உந்துகலம் விமான முதலியவற்றின் வகையில் மீவிசைக் காற்றடைப்புக் குழாய்; உள்வெப்பாலை மீவிசை அழுத்தமூட்டுவதற்கான அமைவு.

**supercil'ary,** *a.* (உள்., வில.) புருவங்கள் சார்ந்த, கண்ணுக்கு மேலேயுள்ள.

**supercil'ious,** *a.* இறுமாப்பான, ஆணவம்பிடித்த; மேம்பட்டவரெனச் செருக்கிக் கொள்கிற; அசட்டையாய் நடந்து கொள்கிற; அவமதிப்பாக நடத்துகிற.

**supercil'iousness,** *n.* ஏக்கழுத்தம்; அகம்பாவம்.

**superciv'ilized,** *a.* மட்டுமீறிய நாகரிகப் புறப்பகட்டு வாய்ந்த.

**sup'erclass,** *n.* (வில., தாவ.) பெரும்படி வகுப்பு, ஒன்றுக்கு மேற்பட்ட பிரிவுகளை உட்கொண்ட வகுப்பு.

**supercolum'nar**, *a.* (க-க.) தம்ப மேற்கட்டான ; தூண்களின் வரிசைக்கு மேலே கட்டப்பட்ட.

**supercolumnia'tion**, *n.* அடுக்கியல் அமைதிக் கட்டுமானம், ஓர் ஒழுங்கமைதியின் மீது பிறிதோர் ஒழுங்கமைதியாக அமைந்த கட்டடக் கலை.

**supercool'**, *v.* நீர்ம வகையில் உறையாது உறைநிலைக்குக் கீழே குளிர வை.

**superdread'nought**, *n.* மீ வலிமைப் போர்க்கப்பல்.

**supere'go**, *n.* மேல்மனம், கீழ்மனத்தின் செயலை இடித்துரைத்துக் கட்டுப்படுத்துந் தன்மைவாய்ந்த மேல்மனக்கூறு.

**supereleva'tion**, *n.* குறுக்குவாட்டம், தண்டவாள வளைவுப் புற உயர்வு.

**superem'inence**, *n.* மீ மேம்பாடு, மிசை மேல்தரம்.

**superem'inent**, *a.* தேவைக்கு மேற்பட்ட மிகு மேம்பாடுடைய ; மட்டுமீறிய உயர்தரமுடைய.

**supereroga'tion**, *n.* மீச்செயல், தேவைக்கு மேற்பட்ட செயல் ; மீநலச் செயல், செய்யக் கடமைப்பட்டிருப்பதைவிட அதிகமாகச் செய்தல் ; மீமிகை ; அவசியமின்மை ; (இறை.) சேம வினைநலம், பாவிகளுக்குப் பயன்படுத்த உதவத்தக்க மிகைச் சேமிப்பான புண்ணியத் தொகுதி.

**supererog'atory**, *a.* கடமை தாண்டிய மீநலத்தன்மையுடைய, தேவைக்கு மேற்பட்ட ; தவிர்க்கக்கூடிய ; மிகையான, அவசியமற்ற.

**superessen'tial**, *a.* உச்சநிலை முதன்மை வாய்ந்த ; பொதுநிலை தாண்டிய முதன்மையுடைய.

**supereth'ical**, *a.* ஒழுக்கவியல் எல்லைக்கு மேம்பட்ட, அறத்தளத்திற்கு மேம்பட்ட.

**superexalt'**, *v.* மிகு மேல்தரத்திற்கு உயர்த்து.

**superexalta'tion**, *n.* மீமிசை உயர்வு ; மிகு மேல்தர உயர்த்தீடு.

**superex'cellence**, *n.* மீமிகு நேர்த்தி, இயல்நிலை கடந்த மேம்பாடு, மற்றவைகளைவிட மிகுநலம்.

**superex'cellent**, *a.* மற்றவைகளைவிட மிகச் சிறந்த, இயல்நிலை கடந்த அளவிற்கு மேம்பட்ட.

**sup'erfamily**, *n.* பெருங்குடும்பம் ; (உயி.) பெருங் குழுமம், இனத்திற்குங் கீழ்ப்படியிலுள்ள இனவகைகளுக்கு மேற்பட்ட பிரிவு.

**superfatt'ed**, *a.* மிகு கொழுப்பு வாய்ந்த, சவர்க்காரம் வகையில் மட்டுமீறிய கொழுப்புக் கலந்துள்ள.

**superfecunda'tion, superfeta'tion**, *n.* (உட.) மிகைச் சூலுறவு, முன்பே சூல் கொண்டுள்ள நிலையில் மேலும் கருக்கொள்ளுநிலை.

**superfi'cial**, *a.* மேலீடான, மேலெழுந்தவாரியான ; மேற்போக்கான ; மேற்புறத்திற்குமட்டும் உரிய, மேற்புறத்தில் மட்டுமுள்ள, ஆழமற்ற ; ஆழ்ந்து செல்லாத ; தொட்டுத் தொடாத ; அளவை வகையில் பரப்பளவையான ; (தொ.) a superficial person, ஆழ்ந்த அறிவற்றவர் ; நுனிப்புல் மேய்பவர் ; உணர்ச்சி வகையில் தொட்டுத் தொடாமல் நடப்பவர் ; superficial knowledge, மேற்புல்லறிவு.

**superficial'ity**, *n.* மேலீடான தன்மை ; ஆழமற்ற தன்மை.

**superfi'cially**, *adv.* மேலீடாக, மேலெழுந்தவாரியாக, மேற்போக்காக.

**superfi'cies**, *n.* புறப்பரப்பு ; *pl.* superfi'cies.

**sup'erfine**, *a.* மீமிசை நேர்த்தியான, வாணிகமுறையில் தனி மேம்பாடுடைய தரம்வாய்ந்த ; நயத்திரிபு நுணுக்கங் காண்கிற, நுட்பநய நுணுக்க வேறுபாடு காண்கிற.

**superflu'id**, *n.* கதிரத் தனிம வகையில் காணப்படும் உராய்வற்ற தன்மை.

**superflu'ity**, *n.* மீமிகை, தேவை கடந்த அளவு.

**super'fluous**, *a.* மீமிகையான, வேண்டியதற்கு மிகுதியான ; மேல் மிச்சமான ; தேவைப்படாத.

**super'fluousness**, *n.* மீமிகை.

**superfor'tress**, *n.* 'சேணரண்', ஆற்றல் வாய்ந்த வெடிகுண்டு விமான வகை.

**superfront'al**, *n.* பலிபீட முன்தொங்கல் திரை.

**superfuse'**, *v.* மேல் ஊற்று ; மேலும் படர்வி.

**superfu'sion**, *n.* மேலூற்றரவு ; மேல்படர்வு.

**superheat'**, *n.* மீவெப்பு, கொதிநிலைக்கு மேற்பட்ட வெப்பம்; மீவெப்புநிலை ; மீவெப்பு அளவு ; *v.* மிக அதிகமாக வெப்பூட்டு, கொதிநீர்நிலைக்கு மேற்பட்டு நீராவியைச் சூடாக்கு.

**superheat'er**, *n.* மீ வெப்பமைவு, நீராவியைக் கொதி நீர்நிலைக்கு மேல் வெப்பூட்டுவதற்கான அமைவு.

**superhet'** (சு. வ.), **superhet'erodyne**, *n.* வானொலி விசைத்தகைப்பு ஏற்புமுறை; வானொலி விசைத் தகைப்பேற்பு முறைப் பயனீடு.

**sup'erhive**, *n.* தேனடைபெட்டி மேல்முகடு, தேனீவளர்ப்புப் பெட்டியின் பிரித்து எடுத்துவிடக்கூடிய மேற்கூடு.

**superhum'an**, *a.* மீமானிடமான, இயலுலகு கடந்த ; தெய்விகமான, மனித ஆற்றலுக்கு மேற்பட்டதான.

**superhuman'ity**, *n.* மனிதநிலை கடந்த தன்மை, மீமானிடம்.

**superhu'manize**, *v.* மனிதப்பண்பு கடந்ததாக்கு ; மனித எல்லை கடந்த பண்பூட்டு.

**superhum'anly**, *adv.* மனித எல்லை கடந்து ; இயல் கடந்த ஆற்றலாக ; தெய்விக ஆற்றலால்.

**superhum'eral**, *n.* தோள்களில் அணி ஆடை ; யூதமத குருமாரின் உடுப்பு ; ரோமன் கத்தோலிக்கக் குருக்களின் சடங்கு காலச் சதுரத் தோள்பட்டிகை ; மாவட்ட சமயத்தலைவரின் கம்பளி உடுப்பு.

**superimpose'**, *v.* அடுக்கி மேல் வை, ஒன்றன்மேல் ஒன்றாக வை ; மேன்மேலடுக்கு.

**superimposed'**, *a.* மேலும் பாரமேற்றப்பட்ட ; பாரம் மேன்மேல் ஏற்றப்பட்ட ; மேலும் பளு சுமத்தப்பட்ட; மேலடுக்கப்பட்ட.

**superimposi'tion**, *n.* மேற்சுமத்தீடு.

**superimpregna'tion**, *n.* மிகைச் சூலுறவு, முன்பே சூல் கொண்டுள்ள நிலையில் மேலும் கருக்கொள்ளும் நிலை.

**superincum'bent**, *a.* மேற்கிடக்கின்ற.

**superinduce'**, *v.* மேலும் புகுத்து ; மேன்மேலாகத் தூண்டு; மிகையாக வளர்ச்சி தூண்டு ; மேல் மிகையாக்கு.

**superinduce'ment**, *n.* மேற் புகுத்தீடு ; மேன்மேல் தூண்டுதல்.

**superinduc'tion**, *n.* மேற்புகுத்தீடு, மேற்சுமத்தீடு.

**superinstitu'tion**, *n.* மானிய மேலமர்த்தீடு, ஏற்கெனவே ஆள் இருக்கிற திருக்கோயில் மானியத்தில் மற்றொருவரை அமர்த்துதல்.

**superintend'**, *v.* மேலாண்மை செய், நடைமுறை மேற்பார்வையிடு, கண்காணி.

**superinten'dence**, *n.* மேற்பார்வை ; கண்காணிப்பு ; மேலாண்மை ; செயல் மேலாட்சி.

**superinten'dency**, *n.* கண்காணிப்பாளர் பணி; கண்காணிப்பாளர் ஆட்சி வட்டகை.

**superinten'dent**, *n.* கண்காணிப்பாளர் ; காவல்துறை மீமேலர்.

**superinten'dentship**, *n.* கண்காணிப்பாளர் பதவி.

**super'ior**, *n.* மேல்நிலையர், மேம்பட்ட நிலையுடையவர் ; தகுதி மேம்பட்டவர் ; மேலவர் ; திருமட முதலவர் ; கன்னித் துறவியர் திருமடத்தலைவர் ; *a.* மேம்பட்ட ; மேனிலைசார்ந்த; மேல் தகுதியுடைய ; உயர்தரமான ; மேல்தளஞ் சார்ந்த ; உயரிடஞ்சார்ந்த, பண்புயர்ந்த ; வகுப்புத்தொகுப்பு முறை வகையில் விஞ்சிய அகல்விரிவுடைய ; பொதுநிலை கடந்த ; வழக்கத்துக்கு மேம்பட்ட ; மட்டுநிலை தாண்டிய ; சராசரி நிலைகடந்த ; (தாவ.) புல்லிவட்டத்தின் அல்லது சூல் பையின்

மேல் அமைந்துள்ள ; ஒரு துறையில் மேம்பட்ட அல்லது பெரிய, மேம்பட்ட தொடர்புடைய ; உயர் வகை சார்ந்த ; உயர் வகுப்பினரான ; மதிப்பேறிய ; உயர்மதிப்பு வாய்ந்த ; உயர்பாவனையுடைய ; உயர்வுடையவராகக் கருதிக் கொள்கிற; வீறுப்பாக நடந்துகொள்கிற; பணிந்து போகாத, ஆட்படாத ; விட்டுக்கொடுக்காத, சலுகைள் காட்டாத ; கைக்கூலி முதலியவற்றிற்கு மசியாத ; உறுப்பு வகையில் மேற்கவிவான ; இறகு வகையில் சிறிது மேன்மடிவான ; (தாவ.) கருவக வகையில் மேல்நிலைகொண்ட ; (அச்.) வரை மேலான ; (தொ.) rise superior to, பாதிக்கப்பெறுமலிரு ; அடக்கி மேம்படு; விலக்கிப் பண்புமேம்பாடு கொள் : superior figures, வரிமேல் இலக்கங்கள் ; superior genus, மேல் இனம், மேம்பட்ட அகல்விரிவான இனம் ; superior letters, வரிமேல் எழுத்துக்கள் ; superior numbers, மிகுதியுடைய எண் ; மிகுதி ; superior planets, புறக்கோள்கள், ஞாயிற்றி லிருந்து நிலவுலகைவிடத் தொலைவிலுள்ள கோள்கள் ; superior wings, (வில.) மேற்கவி முன்சிறகுகள்.

**super'ioress**, *n. fem.* கன்னிமாடத் தலைவி, கன்னித்துறவியர் மடத்துத் தலைவி.

**superio'rity**, *n.* மேம்பாடு, உயர்வு.

**supe'riorly**, *adv.* மேலிடத்ததாக ; மேம்பட்டதாக.

**superja'cent**, *a.* அடுத்துமேற்கிடக்கிற.

**super'lative**, *n.* (இலக்.) பெயரடை வகையில் ஏற்றுயர் படி ; (இலக்.) பெயரடை வினைஅடை ஆகியவற்றின் ஏற்றுயர்படி வடிவம் ; (இலக்.) ஏற்றுயர்படியிலுள்ள சொல் ; உச்ச உயர்நிலை ; உச்ச உயர்தரம் ; *a.* மிகவுயர்ந்த தரஞ் சார்ந்த.

**superlun'ar, superlun'ary**, *a.* இவ்வுலகத்திற்குரிய தல்லாத, உலகியலுக்கு மேம்பட்ட.

**sup'erman**, *n.* மீமனிதர், மனித எல்லைகடந்த குறிக்கோட் பண்பு நிறைவாளர், தேவநிலையாளர்.

**supermed'ial**, *a.* நடுத்தரத்திற்கு மேற்பட்ட.

**supermol'ecule**, *n.* அணுத்திரளை, அணுத்திரளாகச் செயற் படும் அணுத்திரளிணைவு.

**supermun'dane**, *a.* உலகியற் செய்திகளுக்கு அப்பாற் பட்ட.

**supernac'ulum**, *n.* சிறப்புயர் இன்தேறல் ; இன்தேறல் நிறைகலம் ; *adv.* இறுதித்துளிவரை ; முடிவுவரை, முழு தாக.

**supern'al**, *a.* (செய்.) வானுலகத்திற்குரிய ; மேலுலகுக் குரிய ; வானவெளி சார்ந்த ; தெய்வத்தன்மையுடைய ; மேன்மையான ; விழுமிய.

**supernat'ant**, *a.* புறப்பரப்பில் மிதக்கிற.

**supernata'tion**, *n.* புறப்பரப்புமிதப்பு ; நீர்மநெகிழ்ம மேல் நிலை ; தளமிதப்பு.

**superna'tural**, *n.* இயல்நிலை கடந்தவர் ; தேவர் ; தெய்வம்; தெய்வ நிலையினர் ; உலோகாதீதம், இயற்கைமீறிய பொருள்; *a.* இயற்கை கடந்த ; இயற்கைமுறைக்குளடங்காத ; இயன் முறைக் காரணகாரியத் தொடர்புக்கு அப்பாற்பட்ட; வியக்கத் தக்க, தெய்விக அருநிகழ்வான; தெய்விக ஆற்றல் சுட்டிய ; ஆவித்தொடர்புடைய.

**superna'turalism**, *n.* இயற்கை கடந்த நிகழ்வு ; தெய்விக அருநிகழ்வு நம்பிக்கை.

**superna'turalist**, *n.* இயற்கைக்கு அப்பாற்பட்டதில் நம்பிக்கையுள்ளவர்.

**superna'turalize**, *v.* இயல்மீறிய நிலைப்படுத்து, இயல்கடந்த அருநிகழ்வாக்கு.

**supernorm'al**, *a.* பொதுநிலை கடந்த; பொதுக்காட்சிக்கு அப்பாற்பட்ட ; அருநிலையினை ; இயல்நிலைக்கு அப்பாற்பட்ட படிவமுடைய ; இயல்நிலைக்கு மேற்பட்ட எண்ணிக்கையுள்ள; பொதுமீறிய அளவுள்ள, பொதுமீறிய பண்புடைய.

**sup'ernum'erary**, *n.* மிகையாள் ; மிகைப்பொருள் ; சில் லறை வேலைகளுக்கென வைத்துக்கொள்ளப்படும் மிகுதிப்படி யான ஆள் ; பேசவேண்டியிராத நடிகர் ; *a.* மிகையான, குறிப்பிட்ட-வழக்கமான-வேண்டிய எண்ணிக்கைக்கு மேற் பட்ட.

**sup'eroctave**, *n.* (இசை.) மீசுரக்கட்டை, முதன்மைச் சுரத் திற்கு இருபாலைகளுக்கு மேற்பட்ட கேள்விக்கட்டை.

**sup'erorder**, *n.* (உயி.) உயர்தரக் குழுமம், இனக் குழுமத் திற்கும் வகுப்பிற்கும் இடைப்பட்ட தரம்.

**superord'inary**, *a.* பொதுமுறைக்கு மேற்பட்ட, பொது நிலைக்கு மேம்பட்ட.

**superord'inate**, *n.* மேம்பட்ட பதவித் தரத்தினர் ; மேம் பட்ட தரத்தினர் ; *a.* பதவித்தர மேம்பட்ட ; (அள.) வாசக இனமுழுமைத் தொடர்புடைய ; *v.* மேம்பட்ட தரத்தினராக்கு; மேம்பட்ட தரத்ததாக்கு.

**superordina'tion**, *n.* (அள.) வாசக வகையில் இனமுழு மைத் தொடர்பு.

**superorga'nic**, *a.* உடலமைதி கடந்த, உளஇயல் சார்ந்த ; மேலான அமைப்பாண்மைக்குரிய, மன்பதைச்சார்பான.

**superovula'tion**, *n.* கருவணுப்பெருக்கம் ; இனக்கூற்றூசி யீட்டினால் பசுவுக்கு உண்டாகும் செயற்கைக் கருநுண்மப் பெருக்கம்.

**superpa'rasite**, *n.* (உயி.) ஒட்டொட்டு, ஒட்டுயிரின் ஒட்டுயிர்.

**superphos'phate**, *n.* எரியக்காடி பெரிதுங்கலந்துள்ள எரியகி.

**superphys'ical**, *a.* மீப்பொருளியலான, பருப்பொருளிய லுக்கு அப்பாற்பட்ட, பருப்பொருள்நிலைக்கு மேம்பட்டதான.

**superpose'**, *v.* மேற்கிடத்து ; மேல்வைத்திணைவி ; ஒருங் கியைவி ; மீதாகச் செங்குத்தாக்கு.

**superposed'**, *a.* மேற்கிடத்தப்பெற்ற ; மேல்வைக்கப்பட்ட ; மேலொருங்கியைந்த.

**superposi'tion**, *n.* மேற்கிடை ; மேல்வைப்புநிலை.

**superquadripart'ient, superquadriquin'tal**, *a.* (கண.) 9க்கு 5 என்னும் தகவுப்படியுள்ள.

**superre'alism**, *n.* மட்டுமீறிய நேரியல் கலை வாய்மைப்பாடு.

**superroy'al**, *a.* தாள் பருமானத்தில் மீமேம்பாட்டளவுடைய, எழுதுதாள் வகையில் 19½க்கு 27½ அங்குல அளவுடைய ; அச்சுத்தாள் வகையில் 20½க்கு 27½ அங்குல அளவுடைய.

**su'persalt**, *n.* மீயுப்பு, காடித்தன்மை மிக்க உப்பு.

**supersat'urate**, *v.* மீச்செறிவூட்டு.

**supersatura'tion**, *n.* மீச்செறிவு.

**superscribe'**, *v.* முகட்டில் வரை ; மேல் எழுது.

**sup'erscript**, *a.* வரைக்குமேல் குறிக்கப்பட்ட ; மேலிடத்தி லுள்ள.

**superscrip'tion**, *n.* முகட்டுவரைவு ; மேல் எழுதப்பட்டது.

**supersede'**, *v.* தள்ளி வை, ஒதுக்கு ; பணியிலிருந்து நிறுத்து ; பதிலாக்கு, பதிலாக்கி வை ; ஒருவரிடத்தில் மற் றொருவரை அமர்த்து ; இடம்பற்றிக்கொள், அகற்றி இடங் கைக்கொள் ; அகற்றிப் பணி கைக்கொள் ; அகற்றி உரிமை கைப்பற்றிக்கொள்.

***supersed'eas***, (ல.) *n.* நடவடிக்கை நிறுத்தாணை.

**supersen'sible**, *a.* புலனுணர்வுக்கு எட்டாத ; புலனுணர் வெல்லை கடந்த.

**supersen'sitive**, *a.* உறுகூருணர்வுடைய, மிகுநுட்ப உணர்வுத்திறம் வாய்ந்த.

**supersen'sory**, *a.* நன்குணரப்பட்ட புலன்களிலடங்காப் புது புலனுணர்வுடைய.

**supersen'sual**, *a.* புலன்களுக்கு அப்பாற்பட்ட ; மட்டு மீறிய புல இன்ப ஈடுபாடுடைய.

**supersen'suous**, *a.* புலன்களுக்கு அப்பாற்பட்ட.

super'sesquial'teral, *a.* (கண.) 5 : 2 என்னுந் தகவுப்படியுள்ள.

supersesquiter'tial, *a.* (கண.) 7 : 3 என்னுந் தகவுப்படியுள்ள.

superse'ssion, *n.* தள்ளிவைப்பு ; ஒதுக்கிவைத்தல், ஒதுக்கிவைக்கப்பெறுதல்; பதிலிட்டகற்றீடு ; அகற்றிப்பதிலமர்த்தீடு ; மேல்வைப்பு, மேற்புகுத்தீடு; உரிமை ஒதுக்கீடு; உரிமை மேற்கடப்பு, உரிமை புறக்கணிக்கப்பட்டுப் பிறிதொருவர்க்கு வழங்கப்பட்டுவிடல்.

sup'ersolid, *n.* மூன்றுக்கு மேற்பட்ட பருமான அளவைகள் உடைய பிழம்பு.

superson'ic, *n.* சேணலே, ஒலி விரைவு கடந்த அலே ; *a.* ஒலி விரைவு கடந்த ; கேள்வி எல்லே தாண்டிய ; ஒலி விரைவு கடந்த நிலேயுடைய, ஒலி கடந்த, சேணலே சார்ந்த ; விமான வகையில் ஒலியைவிட விரைவாகச் செல்கிற.

superson'ics, *n. pl.* சேணலேகள், ஒலிகடந்த விரைவுடைய அலேகள் ; சேணலேயாய்வியல்.

sup'ersound, *n.* கேளா ஒலியலே, கேட்க முடியாத அளவுக்கு விரைவான ஒலி வகை அதிர்வு.

superspi'ritual, *a.* மட்டுமீறிய ஆன்மிகச் சார்புடைய.

su'perstate, *n.* மேலிட அரசு ; அரசுநிலே கடந்த பெருநிலே அரசு.

supersti'tion, *n.* மூடநம்பிக்கை ; போலிக்கோட்பாடு ; தெய்விக அருநிகழ்வு நம்பிக்கை ; இயற்கை கடந்த ஆற்றலச்சம் ; அறியாநிலேக்கிலி ; தவறுன மதிப்பச்சம் ; குருட்டுப் பழக்க வழக்கம் பின்பற்றும் பண்பு.

supersti'tious, *a.* குருட்டு நம்பிக்கை வாய்ந்த ; போலிப் பற்றுடைய, விளங்காதவற்றைப் பற்றிய ஆதாரமற்ற அச்சங்கொண்டுள்ள ; தெய்விக அருநிகழ்வு நம்பிக்கையுடைய ; இயற்கை கடந்த ஆற்றல் நம்பிக்கைகொண்ட ; இயற்கை கடந்த ஆற்றல் நம்பிக்கை சார்ந்த.

superstrat'um, *n.* (மண்.) மேற்படிவடுக்கு.

superstruct', *v.* மேற்கட்டுமானம் எழுப்பு; மீதாகக் கட்டு.

superstruc'tion, superstruc'ture, *n.* மேற்கட்டுமானம் ; மேற்கட்டடம், கட்டட மேற்கட்டுமானப்பகுதி.

supersubstan'tial, *a.* பருப்பொருள் கடந்த, பருப்பொருளியலுக்கு அப்பாற்பட்ட.

supersubt'le, *a.* நுண்ணிதின் நுண்ணிய, உறுநுட்பமான; மட்டுமீறிய நுட்பம் வாய்ந்த.

supersubt'lety, *n.* நுட்பத்துள் நுட்பம் ; உறுமிகு நுட்பம்; மட்டுமீறிய நுட்பம்.

sup'ertax, *n.* மீவரி, மிகைவருமான மேல்வரி.

supertellur'ic, *a.* நிலமேலான, நிலத்தடியல்லாத.

supertem'poral[1], *a.* தலேப்பொட்டெலும்புகளுக்கு மேலுள்ள.

supertem'poral[2], *a.* காலங்கடந்த, நிலேபேறுடைய.

superterrene', superterres'trial, *a.* நிலத்துக்கு மேலேயுள்ள, நிலமேற் காணப்படுகிற.

sup'ertonic, *n.* (இசை.) சுர வரிசையில் முதன்மைச் சுரத்திற்கு அடுத்து மேலுள்ள சுரம்.

supertripart'ient, supertriquar'tal, *a.* (கண.) 7 : 4 என்னுந் தகவுப்படியுள்ள.

supertubera'tion, *n.* மீ கிழங்காக்கம், கிழங்குகளின்மேல் கிழங்குகள் உருவாதல்.

supervacan'eous, *a.* கழிமிகையான, தேவைக்கு மேற்பட்ட.

supervene', *v.* இடையிட்டு நிகழ்வுறு, இடைமுறித்து நடைபெறு ; இடைபிறிதாக வந்தமைக ; ஒன்றினேயடுத்துப் பிறகு வா.

superven'tion, *n.* இடையுறவு, இடையீட்டு நிகழ்வு ; இடையீட்டு நிகழ்ச்சி.

supervise', *v.* மேற்பார்வையிடு, மேலாட்சியுரிமையுடன் கவனித்து நெறிப்படுத்து.

supervi'sion, *n.* மேற்பார்வை, மேலாட்சி.

supervi'sor, *n.* மேற்பார்வையாளர்.

supervis'ory *a.* மேற்பார்வைக்குரிய, மேலாட்சி சார்ந்த.

su'pervolute, *a.* (தாவ.) பக்கவாட்டிற் சுருண்ட.

sup'inate, *v.* அங்கை மலர்வி, உள்ளங்கை மேலிருக்குமாறு திருப்பு.

supina'tion, *n.* கை மலர்விப்பு, கை மலர்த்தீடு, உள்ளங்கை மேற்புறமாயிருக்கும்படி கைவிரிப்பு.

supina'tor, *n.* கைக்கீல் தசை.

sup'ine, *n.* (இலக்.) லத்தீன்மொழித் தொழிற்பெயர்; (இலக்.) ஆங்கிலமொழிச் செயவெனெச்சம்; *a.* மல்லாந்த, செயலற்றுக் கிடக்கிற ; செயலற்ற ; கடுமுயற்சி செய்யும் மனமில்லாத ; படுசோம்பலான.

supine'ness, *n.* செயலறவு, செயலறுதல் ; கழிமடிமை.

supp'er, *n.* அத்தாளம், இரவுணவு, நாளின் இறுதிச் சிற்றுணவு ; *v.* இரவுணவளி.

supp'erless, *a.* இரவுணவற்ற.

supp'ertime, *n.* இரவுணு நேரம்.

supplant', *v.* குப்புறத்தள்ளு, அகற்று ; பிடுங்கியெறி.

sup'ple, *a.* தொய்வுடைய, எளிதில் வளேக்கக்கூடிய ; குழைவான, நினேத்தபடி மாற்றக்கூடிய ; பணிவிணக்கப் பண்புள்ள, வெளிப்படை எதிர்ப்புச் செய்யாத; உள்ளுறுதியற்ற; பணிந்து தப்பிப்பிழைத்துப் போகிற ; கெஞ்சிப் பசப்புகிற ; *v.* நெகிழ்வுடையதாக வளர் ; குழைவுடையதாக்கு.

sup'ple-jack, *n.* முறுகி வளரும் வன்புதர்ச் செடி வகை ; புதர்ச் செடி வகையின் உறுதி வாய்ந்த பிரம்பு.

sup'plement[1], *n.* துணேநிறைவு, குறைநிறைவுக்கூறு; பத்திரிகைச் சிறப்பு மலர் ; பிற்சேர்ப்பு ; (வடி.) நிரவுகோண், கோணத்துடன் இணேந்து நேர்க் கோணமாகும் துணேக் கோணம்.

supplement'[2], *v.* குறை நிரப்பு ; இணேந்து நிறைவாக்கு, இணேந்து வளமூட்டு ; இணேத்து நிறைவூட்டுவி, இணேத்து வளம்பெருக்குவி.

supplement'al, supplement'ary, *a.* குறைநிரப்பான, இணேவு நிறைவான; இணேகூட்டான, இணேவளமான ; பிற்சேர்வான.

supp'leness, *n.* நெகிழ்குழைவு.

supp'liance, *n.* வேண்டுதல், குறையிரத்தல்.

supp'liant, *n.* குறையிரப்போர் ; *a.* தாழ்ந்து வேண்டுதல் செய்கிற, பணிந்து குறையிரக்கிற ; பணிந்து குறையிரத்தலேக் காட்டுகிற.

supp'licant, *n.* கெஞ்சி வேண்டுபவர்; *a.* கெஞ்சி வேண்டுகிற.

supp'licate, *v.* தாழ்மையாக மனுச்செய்துகொள் ; பணிந்து குறையிர ; கெஞ்சிக் கேள்.

supp'licating, *a.* கெஞ்சுகிற, குறையிரக்கிற.

supp'licatingly, *adv.* கெஞ்சி வேண்டும் முறையில், கெஞ்சுதலாக.

supplica'tion, *n.* குறையிரத்தல், கெஞ்சிக்கேட்டல், பணிவு மனு.

supp'licatory, *a.* குறையிரக்கிற, கெஞ்சி வேண்டுகிற ; தாழ்மையுள்ள, பணிவான.

suppli'er, *n.* வழங்குபவர் ; ஏற்படுத்திக் கொடுப்பவர் ; சேகரித்தளிப்பவர்; வேண்டுவன அளிப்பவர்; தேவை நிரப்புபவர்.

supplies', *n. pl.* வழங்கீட்டுப் பொருள்கள் ; தரவுப்பொருள்கள் ; (படை.) தேவைப்பொருள்கள், துணேக்கலப் பொருள்கள்.

**supply'**[1], *n.* அளிப்பு, வழங்கீடு, தரவு, தேவை நிரப்பீடு, வேண்டியதை அமைத்துக் கொடுத்தல்; வழங்கப்பட்டுள்ள பண்டம்; கையுறு பொருள்; *v.* அமைத்துக்கொடு, ஏற்படுத்திக்கொடு, வழங்கு, தேவைப்பொருளைத் தருவித்துக் கொடு; பற்றுக்குறை நிரப்பு, தேவையை நிறைவு செய்; இழப்பினைத் தவிர்க்க உதவு; பதிலாளாக நிரப்பு; (தொ.) in short supply, கிடைப்பது அரிதான நிலையில்; supply and demand, தரவும் தேவையும், பொருளியல் துறையில் கிடைப்பும் தேவையும்; supply department, தரவுத்துறை.

**su'pply**[2], *adv.* எளிதில் வளைக்கக்கூடியதாய், நெகிழ்வுடன், குழைவாக.

**support'**, *n.* துணை, உதவி; துணை வலு, பக்க வலிமை, பின்பலம்; கைத்துணை, ஊக்குதவி; ஆதரவு; ஆதரவாயுள்ள நிலை; ஆதாரம், பளுத்தாங்கும் பொருள்; உதைகால்; நாற்காலி முதலியவற்றின் நிலைக்கால்; பக்க வலிமை தருவது; பின்பலமாவது; ஆதரவாயுள்ள செய்தி; வாழ்க்கைக்கு ஆதரவான தொழில்; உறுதி தருவது; ஆதரிப்பவர்; துணை தருபவர்; உதவியாளர்; துணைவலுவானவர்; பின்பலமானவர்; பக்கவலிமையானவர்; காத்துப்பேணுபவர்; பாதுகாப்பாளர்; புகழ்நடிகர் துணைவர், நடிப்புப்பகுதியில் உதவுபவர்; *v.* தாங்கு; சும; ஏந்திநில்; பளுவுக்கு ஆதாரமாயிரு; உதைகாலாயிரு; ஆதாரங் கொடு; உதைகால் கொடு; அண்டைகொடு; தூக்கிப் பிடி; வலுக்கொடு; வலிமைப்படுத்து; தூக்கிச்செல்; விழாமல் தடு; அமிழாமல் தடு; ஆதரி; ஆதரவளி; ஆதரவாயிரு; வைத்துப்பேணு; காப்பாற்று, துணையாதரவளி; ஊட்டிவளர்; உணவுகொடுத்து ஆதரவு செய்; உணவு வகையில் ஊட்டமளி; உரமளி; ஊக்கமளி; வாழ்க்கையாதரவு செய்; பிழைப்பாதாரம் வழங்கியாதரி; வேண்டுவன கொடுத்துக் காப்பாற்று; உதவு; துணைசெய்; நிலைநிறுத்த உதவு; ஊக்கி உதவு; ஊக்கி நடைமுறைப்படுத்த உதவு; நீடித்து உழைக்க உதவு; சார்பாளராயிரு; சார்பாளராயிருந்து உதவு; உடனிருந்துதவு; உடந்தையாயிரு; பக்கபலமாயிரு; பின்பலமாயிரு; கருத்தாதரி; கருத்தாதரவு செய்து உடந்தையாயிரு; ஏற்றுதரி; ஏற்றுதரவுகாட்டு; ஆதரித்துப் பேசு; ஆதரவு தெரிவி; ஆமோதி, வழிமொழி; வாத ஆதாரங் கொடு, எடுத்துக்காட்டால் உறுதிப்படுத்து; எடுத்துக்காட்டு விளக்கங்களால் வலிமையூட்டு; விளக்கச் செய்திகளால் உறுதிப்படுத்து; பொறு; ஏற்றுஅமை; உடனொத்த ஒரே மேடையில் ஈடுபட்டிரு; ஒத்த கருத்துக் கொண்டிரு; ஒப்புதல் அளி; நிலைவரி செலுத்தி ஆதரவு காட்டு; நடிகர் துணைவராயிரு; நடிப்பில் பங்குறுப்பு மேற்கொள்; நாடக உறுப்பின் பகுதி மேற்கொண்டு நடி; நாடக உறுப்பின் பண்போவியங் கெடாது நடிப்பிற் பேணு; (தொ.) support institution, நிறுவனத்திற்கு நிதியுதவி அளித்து ஆதரி; support lecturer, சொற்பொழிவாளருக்குத் துணையாக மேடையில் தோன்று; support trench, துணை அகழ் குழி, சுடுகுழிக்கும் சேமப் பதுங்கு குழிக்கும் இடைப்பட்ட நடு அகக்குழி.

**support'able**, *a.* தாங்கத் தக்க; ஆதரிக்கத் தக்க.

**support'ably**, *adv.* தாங்கத் தக்கதாய்; ஆதரிக்கத் தக்கதாய்; நேர்மையானதாக.

**support'er**, *n.* ஆதரவாளர்; பொறுப்பு ஏற்பவர்; ஆர்வலர்; (கட்.) இணையான ஈருயிர்கள் கேடயத்துக்கருகில் நிற்பதாகவோ அல்லது அதைப் பற்றியிருப்பதாகவோ அமைக்கும் அமைவு.

**support'ing**, *a.* துணையான; ஆதரவான; (தொ.) supporting film, supporting pictures, நிகழ்ச்சி நிரலில் குறைந்த முக்கியத்துவம் உடைய திரைப்படம்; துணைத் திரைப்படம்.

**support'less**, *a.* ஆதரவற்ற, ஆதாரமற்ற.

**suppose'**, *v.* புனைவாகக் கொள்; முற்கோளாகக் கொள்; ஊகமாகக் கொள்; என்று கொள்; என்று முடிவுசெய்யும் நிலையிலிரு; என்று கருதிக்கொள்; என்று வைத்துக்கொள்; என்று ஐயுறவுறு; என்று நினைக்க விரும்பு; என்று பெரும்பாலுங் கருது, தற்கோளாகக் கருது, காரணமின்றித் தானாகக் கருதிக் கொள்.

**supposed'**, *a.* புனையப்பட்ட, கற்பிதமான; நம்பப்பட்ட; இருப்பதாகக் கருதப்பட்ட; உய்த்துணரப்பட்ட; உத்தேசமாக வைத்துக்கொள்ளப்பட்ட, முற்கோளாக எடுத்துக்கொள்ளப்பட்ட; (இசை.) இசைமானக் குறிவகையில் அடிவரையிட்ட; (இசை.) கீழே தனிக்குறிப்புடைய; (இசை.) சுரக் கேள்வியில் அடிப்படையான.

**suppos'edly**, *adv.* உய்த்துணர் முறையில்; ஊகமாகக் கொள்ளப்பட்டபடி; தவறாகக் கொள்ளப்பட்ட நிலையில்; பாவனைப்படி, ஊகமுற்கோட்படி.

**supposi'tion**, *n.* பாவித்தல்; பாவிப்பு; புனைவுக்கோள், தற்காலிகப் புனைவியல் கருத்து; ஊகம்; ஊகக் கருத்து; பாவனை, உய்த்துணர் புனைவு; ஊகமதிப்பு, உத்தேசம்; நம்பிக்கை, நம்பப்பட்ட கருத்து; முற்கோள், சங்கற்பம், ஊக முடிவு; தற்கோள், தன்னுண்மைக் கருத்து.

**supposi'tious**, *a.* புனைவான; கற்பிதமான; கருதிக்கொண்டபடியான; பாவனை பண்ணியவாறான.

**suppositi'tious**, *a.* போலியான; உண்மையல்லாத.

**suppos'itory**, *n.* (மரு.) உட்கரை குளிகை, மலக்குடல்-சிறுநீர்த் துளையுள் நுழைத்து அங்கேயே கரையவிட்டுவிடப்படுங் கூருருளை அல்லது நீளுருளை வடிவான குளிகை.

**suppress'**, *v.* அடக்கு; வலிந்துசெயல் தடு; வன்முறையில் கட்டுப்படுத்து; தற்போக்குத் தடு; தன்னுரிமை கெடு; வலிந்து வளர்ச்சி தடைப்படுத்து; உணர்ச்சி அமுக்கி வை; வன்முறையால் செயலற்றதாக்கு; கீழடக்கி வை; அடக்குமுறை செய்; நசுக்கு; வலிந்து அழி; மட்டுப்படுத்து; உள்ளடக்கிவை; மறைத்தடக்கு; தெரியப்படுத்தாதிரு; வெளியிடாது மறைத்து வை; வெளிப்படுத்தாது அடக்கு; அச்சிட்டு வெளியாக்காதிரு; வெளிப்படுத்தப்பட்டதைத் திரும்பப்பெறு; வெளிப்படுத்தப்பட்டதைச் செலவிடாதிரு; (மரு.) நோயின் பேசுகுத் தடு; குருதிப்போக்கு நிறுத்து; (மரு.) நோய்வகையில் புறப்போக்கடக்கி அகமறிவாக்கு.

**suppressed'**, *a.* கீழடக்கப்பட்ட; வலிந்து கட்டுப்படுத்தப்பட்ட; அடக்குமுறை செய்யப்பட்ட; நோய் வகையில் புறமடக்கி அகமறிவாக்கப்பட்ட; உணர்ச்சி வகையில் புறமடங்கி அகத்திருக்குற்ற; அடங்கிய வேகமுள்ள.

**suppre'ssion**, *n.* அமுக்கம்; மறைப்பு; அடக்குமுறை; குருதிக்கசிவு நிறுத்தம்.

***suppres'sio ver'i***, (ல.) *n.* மறைத்துவைப்பு; திரித்துரைவைப்பு.

**supp'urate**, *v.* சீழ் வை; சலம் பிடி; சீக்கட்டு, புரைத்துச் சீக்கொள்; உட்புண்ணுகு.

**suppura'tion**, *n.* சீழ் வைப்பு; சீக்கட்டு.

**supp'urative**, *n.* சீழ்வைப்புத் தூண்டும் மருந்து; *a.* சீழ் வைப்புடைய; சீழ்வைப்புத் தூண்டுகிற.

***sup'ra***, (ல.) *adv.* மேலே; மேற்கண்டவாறு; முற்காட்டியவாறு; முன்னுள்ளபடி.

**supra-an'illary**, *a.* நரம்புக்கவிட்டுக்கு மேலிருந்து எழுகிற.

**supracil'iary**, *a.* புருவத்திற்கு மேலுள்ள.

**supraclavic'ular**, *a.* கழுத்துப்பட்டை எலும்புக்கு மேல் நிலையான.

**supracost'al**, *a.* விலாவெலும்பு மேலுள்ள; விலா எலும்புக்கு மேலேயுள்ள.

**supralapsar'ian**, *n.* முன்மூல ஊழறுதிக்கோட்பாளர், மனித இனப்படைப்புக்கும் பழிநேர்வுக்கும் முற்பட்டே தனி மனிதரின் ஊழ் அறுதி செய்யப்பட்டுவிட்டதென்னும் கிறித்தவ சமயக் கிளைக்கோட்பாட்டாளர்; *a.* முன்மூல ஊழறுதிக் கோட்பாடுடைய; முன்மூல ஊழறுதிக்கோட்பாட்டுக்குரிய; முன்மூல ஊழறுதிக் கோட்பாட்டாளரைச் சார்ந்த.

**supralapsar'ianism**, *n.* முன்மூல ஊழறுதிக்கோட்பாடு, மனித இனப்படைப்புக்கும் பழிநேர்வுக்கும் முற்பட்டே தனி மனிதரின் ஊழறுதி செய்யப்பட்டுவிட்டதென்ற கிறித்தவ சமயக்கிளையாளர் கோட்பாடு.

**supramaxill'ary**, *n.* மேல்தாடை; மேல்தாடைக்கு மேற்பட்ட பகுதி ; *a.* மேல்தாடைக்குரிய ; மேல்தாடைக்கு மேற்பட்ட.

**supramun'dane**, *a.* உலகியற்கு அப்பாற்பட்ட; உலகியலிலும் உயர்ந்த.

**supra-orb'ital**, *a.* கண்குழிகட்கு மேலுள்ள.

**supraren'al**, *a.* சிறுநீர்ப்பைக்கு மேல் உள்ள.

**suprasens'ible**, *a.* புலன்களுக்கு எட்டாத, புலனுணர்வுக்கு அப்பாற்பட்ட.

**supratemp'oral**, *a.* கால அளவைக்கு அப்பாற்பட்ட ; செவித்தடத்திற்கு மேற்பட்ட.

**suprem'acy**, *n.* உச்ச உயர்நிலை ; தனிமுதன்மை ; மீயுயர்வு; மீயுயர்வுடைமை ; உச்ச உயர்நிலைமேலாண்மை ; உச்ச உயர் மேலாட்சி ; தனிமுதல் ஆதிக்கம் ; மீயுயர் ஆணையுரிமை.

**supreme'**, *n.* உயரிடம் ; உயர்வதிகாரம் ; *a.* உயர்வான ; உச்ச உயர்நிலைக்குரிய ; உச்ச உயர்படி சார்ந்த ; உச்ச உயர் பதவிக்குரிய ; யாவருக்கும் மேலான ; எதனினுஞ் சிறந்த ; ஒப்புயர்வற்ற ; ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ; (தொ.) Supreme Court of Judicature, மீயுயர் முறைமன்றம்; supreme Pontiff, போப்பாண்டவர் ; the Supreme, the Supreme Being, கடவுள்.

**supreme'ly**, *adv.* தவ, கழிநனி, உச்ச உயர் அளவாக.

**sur'a, sur'ah**[1], *n.* (அரா.) இயல், திருக்குரானில் உட்பிரிவுப் பெயர்.

**sur'ah**[2], *n.* சாய்வரி மென்பட்டு வகை.

**sur'al**, *a.* பின்காலின் கெண்டைச்சதைப் பகுதி சார்ந்த.

**surat'**, *n.* சூரத்துப் பருத்தி வகை; சூரத்துப் பஞ்சாடை வகை.

**surcease'**, *n.* போக்கு முடிவு, இயக்க நிறுத்தம் ; *v.* நின்று விடு, ஓய்வுறு.

**sur'charge**[1], *n.* மிகப்பளு ; மிகுதிப்படிச் சுமைநிலை ; மிகு படிக் கட்டணம் ; தண்டக் கட்டணம் ; மிகுபடிச் சேகரிப்பு ; அஞ்சல்துறை மிகுவரிப் பொறிப்பு ; அஞ்சல்துறைப் புதுக் குறிப் பொறிப்பு ; மிகை வரி ; மிகைவீத வரி ; மின்வலி மிகை வழங்கீடு ; தணிக்கை ஏற்புருத் தொகை ; கணக்குத்துறை யில் விடுபட்ட தொகைக்குச் சரியீடான பற்று நிரப்பு ; சுவர் முகட்டுக்கு மேற்பட்ட நிலைத் தடைப்பளு.

**surcharge'**[2], *v.* மிகு பளுவேற்று ; மிகு சுமையேற்று ; மிகுதிப்படி செறிவூட்டு ; கழிமிகையாக நிரப்பு ; மிகு கட்ட ணஞ் சுமத்து ; மிகு கட்டணம் வாங்கு ; தண்டவரியிடு ; தணிக்கையேற்புருத் தொகை கட்டுவி ; கணக்கு விடுபாட் டுச் சரியீட்டுத் தொகை கட்டுவி ; பற்று விடுபாடு சுட்டிக் காட்டு ; முதல் அச்சீட்டளவிற்கு மேற்பட அச்சிடு.

**surcharged'**, *a.* மிகு பளுவாக ஏற்றப்பட்ட; மிகு கட்டணம் விதிக்கப்பட்ட ; மிகு செறிவான ; பண்பு வகையில் நன்கு தோய்ந்து செறிவுற்ற.

**surcharge'ment**, *n.* மிகு கட்டண விதிப்பு ; மிகு பளு வேற்றம்.

**surcharg'er**, *n.* மிகு கட்டணம் விதிப்பவர் ; மிகு பளு ஏற்று பவர்.

**sur'cingle**, *n.* குதிரைச்சேண வரிப்பட்டை ; ஆங்கிலத் திருச் சபைக்குரிய குருமார் உள்ளங்கிக் கச்சை ; ஸ்காத்லாந்து நாட்டுக் குருமார் கரும்பட்டு உள்ளுடைக் கச்சை ; *v.* குதி ரைக்குச் சேணவரிக்கச்சை கட்டு ; கம்பளம்-விரிப்பு முதலிய வற்றைக் குதிரைச் சேணவரிப்பட்டை கொண்டு கட்டு.

**sur'coat**, *n.* கவசமேலங்கி, கவசத்தின் மேல் அணியும் நெகிழ் மேலங்கி.

**surc'ulose, surc'ulous**, *a.* (தாவ.) பக்கக் கன்று வெடிக் கிற, கிளை முளைகளை உண்டுபண்ணுகிற.

**surd**, *n.* (கண.) முருட்டெண், பகுபடா எண் ; இடக்குப் பின்னம், பதின் கூற்றில் தீராக் கீழ்வாய் ; (ஒலி.) வன்கண ஒலி, அதிர்வற்ற வல்லோசை மெய் ; *a.* (கண.) எண் வகையில் முருடான ; கீழ்வாய் வகையில் இடக்குப் பின்ன மான.

**sure**, *a.* ஐயுறவு இல்லாத ; உறுதி கொண்ட ; கட்டாயம் எதிர்பார்க்கிற ; உறுதியாக நம்புகிற ; ஐயுறவுக் கிடனற்ற; உறுதியான ; நம்பத்தக்க ; தவறாத ; பிழைபட்டுப் போகாத; கட்டாயமான; மெய்யான; நிலவர மெய்ம்மையுடைய; நடை முறை உறுதி வாய்ந்த ; திடமான ; ஐயுறவுக்கிடனின்றி உறுதிப்பாடுடைய ; *adv.* கட்டாயமாக, உறுதியாக ; மெய் யாகவே ; (தொ.) as sure as eggs, as sure as a gun, (பே-வ.) நிச்சயமாக ஆணையிட்டுக் கூறும்படி உறுதியாக ; a sure draw, தவறாது வேட்டை விலங்கைக் கையகப்படுத்தும் இடம், கட்டாயமாக ஆள் வசப்படும் இடம் ; a sure shot, தவறாக் குறி ; தவறாக் குறி இலக்காளர் ; திறமிக்க வல்லுநர்; make sure, உறுதி செய்து கொள்; ஐயத்திற்கிடமற உறுதிப் படுத்திக்கொள் ; நன்கு அறிந்துகொள் ; make sure of, மெய்யாகக் கண்டுணர் ; ஐயுறவுக்கு இடனின்றிக் காண் ; sure card, உறுதியாக வெற்றி பெறத்தக்க திட்டம் ; கட் டாய வெற்றிக்குரிய செய்தி ; sure enough, எப்போதைக் குமே பேருறுதியான ; போதிய உறுதியான ; நடைமுறை உறுதியான.

**sure'-footed**, *a.* தவறாக அடியெடுத்து வைக்காத; தடுமாறாத, செயல்திட்பம் மிக்க.

**sure'ly**, *adv.* உறுதியாய் ; கட்டாயமாய் ; நிச்சயமாக ; ஐயமின்றி ; நடைமுறை பிழையா நிலையில்.

**sure'ty**, *n.* கட்டாய நிலை, உறுதி; பிணையம், பிணைப்பொருள்; உத்தரவாதம்; பிணை ஆள் ; (தொ.) find surety, பிணை யாள் தேடு ; of a surety, உறுதியாக ; stand surety, பிணை யாய் நில்.

**surf**, *n.* அலை ; நுரை நீர்த்தடம், ஓத நீர்த்திரை, கடல்நுரைத் திரள் ; பொங்கோதம், அலை பொங்குங் கடற்கரை நீர்ப் பரப்பு.

**surf'ace**, *n.* பரப்பு ; மேற்பரப்பு ; மேலீடான தளப்பரப்பு ; (வடி.) நீள அகலப் பரப்புடைய முகப்புத்தளம் ; *v.* தாள் முதலியவற்றில் சிறப்பு மேற்பரப்பு அமை ; பரப்புமெருகு முற்றுவி ; நீர்மூழ்கிக் கப்பல் வகையில் மேற்பரப்பிற்கு வா ; (தொ.) curved surface, வளைதளப் பரப்பு, புள்ளிகள் நேர் வரையில் அமையாதநிலையுடைய பரப்பு; developable surface, மடிவு சுருள்வின்றி சமதளமாக்க வல்ல பரப்பு; plane surface, சமதளப் பரப்பு, புள்ளிகள் நேர்வரையில் அமையும் பரப்பு.

**surf'ace-colour**, *n.* முனைப் பச்சுமை நிறம், உருக்கள் உட் செதுக்காக இல்லாமல் முனைப்புவடிவாக அமையும் அச்சில் பயன்படும் மைக்குரிய நிறம்.

**surf'ace-craft**, *n.* அலைமேவு கலம், நீர்மூழ்கியல்லாத கப்பல் தொகுதி.

**surf'aced**, *a.* பரப்பையுடைய ; மெருகிட்ட.

**surf'ace-mail**, *n.* நிலவழி அஞ்சல்.

**surf'ace-man**, *n.* இருப்புப்பாதை ஒழுங்கு காப்பாளர்.

**surf'ace-printing**, *n.* முனைப்பச்சு, உருக்கள் உட்செதுக் காக இல்லாமல் முனைப்புவடிவாக அமையும் அச்சுமுறை.

**sur'facer**, *n.* தள மெருகிடுபவர் ; தள மெருகிடுவது ; தள மெருகீட்டுக் கருவி.

**surf'ace-ship**, *n.* அலைமேவு கலம், நீர்மூழ்கியல்லாத கப்பல்.

**surf'ace-tension**, *n.* நீர்ம அலைவியக்க ஆற்றல், நீர்ப்பரப்பின் மீது காணப்படும் நீர்ம நெகிழ்வமுக்க ஆற்றல்.

**surf'ace-vessel**, *n.* அலைமேவு கலம், நீர்மூழ்கியல்லாத கப்பல்.

**surf'ace-water**, *n.* மேல் ஓடுநீர் ; நில மேற்பரப்பின் மீதாக ஓடும்நீர் ; சாக்கடை நீர்.

**surf'acing**, *n.* தள மெருகீடு ; தள மெருகீட்டுப் பொருள் ; பொன்தேட்ட நாடிய மேல்தளப் படிவுமண் அரிப்பு.

**surf'-bird**, *n.* நெய்தனிலப் பறவை வகை.

**surf'board**, *n.* அலைமிதவைப் பலகை ; *v.* மிதவைப் பலகை கொண்டு அலை அளாவிச் செல்.

**surf'boarding**, *n.* அலை மிதவையாட்டம், அலைமிதவைப் பலகைகொண்டு அலையளாவிச் செல்லுதல்.

**surf'boat**, *n.* அலைத்தோணி, அலைமீது செல்லும்படி நொய்ம்மைக் கட்டுமானமுடைய கரையோரப் படகு.

**surf'eit**, *n.* மடுப்பு, கழிமிகைத் துய்ப்பு; உணவின் மித மிஞ்சிய அளவு; குடியின் வரம்பு; தெவிட்டல்; எதுக்களிப்பு; கழிமிகை அருவருப்பு; திகட்டுவளம், தேக்குவளம்; *v.* பெருந்தீனி புகட்டு; வரம்பின்றி ஊட்டு; மிதமிஞ்சித் துய்ப்பி; மட்டுமீறி நுகர்; வெறுப்பூட்டு; அருவருப்பூட்டு; வெறுப்புக்கொள்; அருவருப்புக்கொள்.

**surf'-man**, *n.* அலைத்தோணி வல்லுநர், கரைமோதலைமீது செல்லும்படி நொய்ம்மைக் கட்டுமானமுடைய கரையோரப் படகை உகைக்குந் திறமுடையவர்.

**surf'-riding**, *n.* அலைத்தோணியுய்ப்பு, கரையோரப் படகு உகைப்பு

**surf'y**, *a.* நுரையார்ந்த; மோதலை வாய்ந்த; கரையோரப் பாறையுடைய.

**surge**, *n.* அலையெழுச்சி; வீங்கு நீர்வேலை, பொங்கோதம், அலையெழுச்சிப் பரப்பு; நுரைநீர்த்தடம், மோதலைப் பரப்பு; அலை மோதல்; அலை எழுச்சி தாழ்ச்சி; அலைபாய் வாட்டம், அலைநீர் போன்ற முன்பின் ஊசலாட்ட இயக்கம்; திரள் குழுமத்தின் முன்பின் பாய்வாட்டம்; இழுப்புவடத் தொய் வாட்டம்; *v.* பொங்கு; பொங்கிப் பொங்கியெழு; கொதித்தெழு; குமுறியெழு; அலைபாய்; அலைபாய்ந்தெழு; எழுந்தெழுந் தலையாடு; எழுந்து தளர்ந்தாடு; சறுக்கிப் பின்னிடைவுறு; கப்பற் கயிறு வகையில் வெட்டிப் பின்னுக்குப் பாய்வுறு; சக்கர வகையில் முன்னேறுமலே சுழலு; அலையலையாக அனுப்பு; திடுமெனப் பின்வெட்டித் தொய்வாகத் தளர விடு.

**sur'geon**, *n.* அறுவை மருத்துவர்; அறுவை மருத்துவ வல்லுநர்; முற்கால நாடோடி மருத்துவர்; கடற்படைத் துறை மருத்துவர்; படைத்துறை மருத்துவர்; படைத்துறை மருத்துவமனைப் பணியாளர்.

**sur'geon-fish**, *n.* கத்திவால் மீன்.

**sur'gery**, *n.* அறுவை மருத்துவம்; மருத்துவர் மருந்தக ஆய்வுரைக் கூடம்; (தொ.) clinical surgery, நோயர் படுக்கையறை அறுவைப் படிப்பு; conservative surgery, உறுப்புத் துண்டாடல் தவிர்த்த அறுவை மருத்துவம்; plastic surgery, குழைப்பொருள் ஒட்டறுவை.

**sur'gical**, *a.* அறுவை மருத்துவஞ் சார்ந்த; அறுவை மருத்துவருக்குரிய; அறுவைக்கு வேண்டிய; அறுவையினுல் ஏற்பட்ட.

**sur'gy**, *a.* பொங்கி யெழுகிற.

**sur'icate**, *n.* தென்னுப்பிரிக்கக் கீரியின விலங்கு வகை.

**surloin**, *n.*=**sirloin.**

**surl'y**, *a.* பண்பு நயமற்ற, முரட்டுத்தனமான; எரிந்து விழுகிற, சீறுமுகமுடைய.

**surm'aster**, *n.* பள்ளித் துணையாசிரியர்.

**surmise'**, *n.* ஊக ஐயுறவு; ஐயுறவு ஊகம்; ஊக மதிப்பு; பொருளின் இயல்புபற்றிய ஊகம்; ஊக உணர்வு, பொருளின் இருப்புப் பற்றிய ஊகம்; *v.* ஊகித்து ஐயுறு; ஐயுற்று ஊகி; உய்த்துணர்; ஊக மதிப்பிடு; முன்னரே ஊகி; ஊகித்து முற்குறிப்பிட முயல்.

**surmount'**, *v.* முகடேறு, உச்சிக்கண் செல்; அடுத்துர்ந்து வெல்.

**surmount'able**, *a.* ஏறிக் கடக்கத் தக்க; கடத்தற்குரிய; எதிர்த்துச் சமாளிக்கத் தக்க; வெல்லற்குரிய; அடக்கி ஆள்வதற்குரிய.

**surmull'et**, *n.* செந்நிறக் கடல்மீன் வகை

**surn'ame**, *n.* குடிப்பெயர், குடும்பப் பெயர்; வேறு பெயர்; பட்டப் பெயர்; சிறப்புப் பெயர்; *v.* சிறப்புப்பெயர் கொடு; குடிப்பெயரிட்டு வழங்கு; குடும்பப் பெயர் கொடு.

**surpass'**, *v.* மேம்படு; செயலில் விஞ்சு; பண்பில் மேற் பட்டிரு.

**surpass'ing**, *a.* விஞ்சிய, மிக மேம்பட்ட, தலைசிறந்த.

**surpass'ingly**, *adv.* தலைசிறந்த நிலையில்.

**surp'lice**, *n.* குருமார் வழிபாட்டுநேர வெண்ணிறத் தளர் மேலாடை அங்கி; (தொ.) surplice choir, வெண்ணிறத் தளர் மேலாடை அங்கி அணிந்த பாடற்குழு.

**surp'lus**, *n.* மிகை; நிதியாண்டின் செலவிற்கு மேற்பட்ட வருமான மிகுதி; தேவைக்கு மேற்பட்ட கையிருப்பு.

**surp'lusage**, *n.* விஞ்சு மிகை.

**surpris'al**, *n.* திடீர்ச்செயல், அதிரடிச் செயல்.

**surprise'**, *n.* எதிர்பாரா அதிர்ச்சி; திடீர் வியப்பு; திடுக்கீடு; மலைப்பு, திடீர்த் திருப்பம்; எதிர்பாரா நிகழ்ச்சி; அதிர்ச்சி தருஞ் செய்தி; *v.* திடுமெனத் தாக்கு; திடுமெனக் கைப்பற்று; திடீரென வந்துறு; காப்பற்ற நிலையில் வந்துபற்று; வியப்பூட்டு; மலைப்பூட்டு; திகிலூட்டு; திகைக்க வை; எதிர்பார்த்ததற்கு மாறாக இயங்கு; வியப்பளி; எதிர்பாராது சிக்கவைத்துவிடு.

**surprised'**, *a.* அதிர்ச்சியுற்ற.

**surpris'edly**, *adv.* அதிர்ச்சியுற்று, கலக்கமுற்று.

**surpris'ing**, *a.* திடும் வியப்பூட்டுகிற, எதிர்பாரா அதிர்ச்சி யூட்டுகிற, திடீரடியான.

**surpris'ingly**, *adv.* திடீரடியாக.

**su'rra**, *n.* வெப்பமண்டலக் குருதிக்குறைநோய் வகை.

**surre'alism**, *n.* வரம்பில் அகவாய்மைக் கோட்பாடு, அடிமன இயல்பு காட்டக் கனவின் தன்மையொத்த தொடர்பிணைவுக் காட்சிகளைக் காட்ட முயன்ற 20-ஆம் நூற்றாண்டுக் கலை இலக்கியப் பாணி.

**surrebut'**, *v.* வாதி வகையில் எதிர்வாதி மறுப்புரைக்கு எதிருரை கூறு.

**surrebutt'er**, *n.* எதிர்வாதி மறுப்புரைக்குரிய வாதியின் எதிருரை.

**surrejoin'**, *v.* வாதி வகையில் எதிர்வாதி மறுப்புரைக்கு மறுமொழி கூறு.

**surrejoin'der**, *n.* எதிர்வாதி மறுப்புரைக்குரிய வாதியின் மறுமொழி.

**surren'der**, *n.* சரணடைவு, தன்னெப்படைப்பு; முழுநிறை கீழ்ப்படிவு, முழுநிறை விட்டுக்கொடுப்பு; முழுநிறை ஒப்புக் கொடுப்பு; பொருள் ஒப்புவிப்பு; பொருள் கைதுறப்பு; உரிமை விட்டுக்கொடுப்பு; *v.* சரணடை; சரணடைந்து ஒப்புக்கொடு; பணிந்துவிடு, கிழடங்கி விடு; பணிந்து விட்டுக் கொடு; கைவிடு; கைதுறந்து விடு; (தொ.) surrender value, வாழ்வுக் காப்பீட்டு மீட்புத் தொகை மதிப்பு.

**surrepti'tious**, *a.* கள்ளத்தனமான; நேர்மையற்ற; மறையாக வைக்கப்பெற்ற; வஞ்சகமான.

**su'rrey**, *n.* பெட்டிவண்டி, இருவர் இருக்கையுடைய நொய் தான நாற்சக்கர வண்டி.

**su'rrogate**, *n.* துணைக்குரு; பெயராள்.

**su'rrogateship**, *n.* துணைக் குரு பதவி.

**surround'**, *n.* சூழ்விரி, சுவர்கட்டும் கம்பளத்திற்கும் இடையே யான தரை விரிப்பு; சூழ்விருக்கை; *v.* சூழ்; சுற்றியிரு; சூழ்ந்தமை; சுற்றிச் செல்; சூழ்ந்து மொய்; சுற்றி வளை; சுற்றி மூடு; சுற்றிக்கொள்; முற்றுகை செய்

**surroun'dings**, *n. pl.* சுற்றுச் சூழல்கள்.

**surs'um cord'a**, (ல.) *n.* சமயச் செவியறிவுறூஉ, வழிபாட்டு முன்னுரை நிகழ்த்துமுன் குரு மக்கட்குக் கூறும் நன் மதிப் பேருரை.

**surt'ax**, *n.* கூடுதல் வரி; வருமான வரி எல்லைக்கு மேலாக வருவாய்க்கு ஏற்றவாறு படிப்படியாய் உயர்த்தப்பெறும் வரி.

**surt'out**, *n.* புறமேற்சட்டை.

**surveill'ance**, *n.* நுணங்கு மேற்பார்வை, கவனக் கண் காணிப்பு.

**surv'ey¹**, *n.* சுற்றுப்பார்வை; சுற்றுநோட்டம்; மேற்பார்வை; மேல்விசாரணை; சுற்றாய்வு; பொது மதிப்பாய்வு; மதிப்பீடு; நில அளவீடு; மனையளவை; எல்லையளவை; கண்டெழுத்து, நில அளவாய்வுத் துறை; மேலீடான ஆராய்ச்சி.

**survey'²**, *v.* பொதுவாகப் பார்வையிடு; சுற்றி நோக்கு; மேற்பார்வையிடு; கவனித்துப் பார்; கண்டாராய்; கண்டாய்வு செய், கட்டட முதலியவற்றின் வகையில் பரிசீலனை செய்; நுணுக்க விவரமாராய்; பொது விவரங்கள் கண்டு மதிப்பிடு; எல்லையள; அளவாய்வு செய்; அளவாய்வுக் கூறுகள் பதிவு செய்து திரட்டு; திட்டவரைபடத்திற்கான விவரங்கள் சேகரி.

**survey'or**, *n.* அளவாயர், நில அளவாய்வாளர்; எடை மட்டாய்வாளர்; கண்டுகட்டாளர்; மேற்பார்வையாளர்; கண்காணிப்பாளர்.

**surviv'al**, *n.* உய்வு, பிழைத்தெஞ்சி நிற்றல்; பிழைத்து வாழ்வு, தொடர்ந்து மாளாது வாழ்தல்; நீடு நிலவல், அழியாது தொடர்ந்து நிலவுதல்; முன்மரபெச்சம், அழியாது தொடர்ந்து எஞ்சி நிற்கும் முற்பட்ட ஆள் அல்லது உயிர் அல்லது பொருள் அல்லது பண்பு அல்லது செய்தி; (தொ.) survival of the fittest, தகுதிமரபு வளர்ச்சி, வல்லனவற்றின் வாழ்வுவளம், கூர்தல்நெறிப் போட்டியில் ஆற்றலுடையன காலத்தைப் புறங்கண்டு வாழ்தல்.

**survive'**, *v.* தொடர்ந்து வாழ், தொடர்ந்து நிலவு; தொடர்ந்திரு; காலத்தைப் புறங்கண்டு வாழ்; எஞ்சிப்பிழை; எஞ்சியிரு, பிறவற்றின் முடிவுக்குப் பின்னும் நீடித்திரு; உயிர் பிழைத்திரு; இடர்வகையில் தப்பி வாழ்.

**surviv'or**, *n.* பிழைத்து வாழ்பவர், மற்றவர் வாழ்வுகடந்து வாழ்பவர்.

**surviv'orship**, *n.* எச்சவுரிமை, கூட்டுடைமையில் மறு பங்காளிக்குப் பின் எஞ்சியிருப்பவர்க்குரிய முழு உடைமை உரிமை.

**susceptibil'ities**, *n. pl.* மென்னய உணர்ச்சிகள்.

**susceptibil'ity**, *n.* மசிவியல்பு; கூர்ந்துணரும் பண்பு; எளிதில் பாதிக்கப்படுந் தன்மை; இயலுணர்ச்சிச் சார்பு.

**suscep'tible**, *a.* மசிவியல்புடைய, தொய்வுடைய, எளிதிற் பாதிக்கப்படக் கூடிய; எளிதாக மாறுபடுத்தப்படக் கூடிய; எளிதிற் புறத்தடம் பதிய விடுகிற; எளிதில் உள்ளாக்கத் தக்க; எளிதில் ஆளாகக் கூடிய; எளிதாக உட்படுகிற; கொள்ளத் தக்க; ஏற்குந்தன்மை வாய்ந்த; மேற்கொள்ளத் தக்க; உண்டுபண்ணத் தக்க; ஏற்படத் தக்க; இயற் சாய்வுடைய; இயலாற்றற் பாங்குடைய; இயற்சார்புப் போக்குடைய; கூர்ந்துணருந் தன்மையுடைய; கூருணர்வு கொள்ளத் தக்க; எளிதில் உணர்ச்சிக்கு ஆளாகக் கூடிய; தொடப்பொறு மெல்லியல்பு வாய்ந்த; கூரிய உணர்ச்சியுடைய.

**suscep'tive**, *a.* உணர்வேற்புடைய; உணர்வேற்கிற; உணர்வேற்புச் சார்ந்த.

**susi**, (இ.) *n.* பட்டிழைக் கோடிட்ட பருத்தியாடை வகை.

**sus'pect¹**, *n.* ஐயத்திற்கிடமானவர், ஐயுறவுக்குரிய பேர்வழி; *a.* ஐயப்படுவதற்குரிய; குறைக்கிடமான.

**suspect'²**, *v.* ஐயுறவுகொள்ளு, ஐயப்படு; இருக்கலாமா என்று கருது; அயிர்ப்புறு; அவநம்பிக்கை கொள்ளு; நம்பமறு; நம்பாதிரு; அரைகுறையாக நம்பு; ஊகி; ஊகமாகக் கொள்; உத்தேசமாகக் கருது; தவருக எண்ணு; ஐயச் சார்பு கொள்; உறுதியில்லை என்று கருது; ஐய மனப்பான்மைகொள்; குற்றவாளியென்று ஐயுறு; மெய்யென்று ஐயுறு; தவறென்று நம்பு; ஓயா ஐயுறவுப் பழக்க முடையவராயிரு.

**suspect'ed**, *a.* ஐயுறவுக்குட்பட்ட; (தொ.) a suspected criminal, குற்றவாளியென ஐயுறப் பெற்றவர்.

**suspend'**, *v.* தொங்கவிடு; அந்தரத்தில் நிறுத்து; ஆதாரமின்றி நிற்க வை; இடைத்தொங்கலாக்கு; நீர்மத்தில் மேலுமில்லாமல் கீழுமில்லாமல் இடை மிதவலாக வை; இயக்கமின்றி நிற்க வை; இடை நிறுத்தி வை; முடிவு செய்யாமல் வைத்திரு; செயற்படாமல் வைத்திரு; தற்காலமாகத் தள்ளி வை; தற்காலமாக ஒத்திப்போடு; பதவியிலிருந்து தற்காலமாக நீக்கி வை; தற்காலமாகச் செல்லுபடி ஆகாதென்றறிவி; தற்காலமாக உரிமை தடுத்து வை; தற்காலமாக உறுப்பினர் பதவியிலிருந்து ஒதுக்கிவை; (தொ.) suspend payment, பொருளக வகையில் கொடுக்க வேண்டிய தொகை கொடுக்க முடியாமலிரு; பொருளக முறிவுநிலையை ஒப்புக்கொள்.

**suspend'ed**, *a.* தொங்கவிடப்பட்ட; அந்தரமாக நிறுத்தப்பட்ட; நிறுத்தி வைக்கப்பட்ட; நீக்கி வைக்கப்பட்ட; (தொ.) suspended animation, சாவில்லாமல் உணர்ச்சியற்றுக் கிடக்கும் நிலை; suspended judgement, ஒத்திவைக்கப்பட்ட தீர்ப்பு; முடிவு செய்யா நிலை; அறிவாற்றல் இயங்கா நிலை.

**suspend'er**, *n.* தொங்க விடுபவர்; தொங்க விடுவது; தள்ளி வைப்பவர்; தள்ளி வைப்பது; பற்றிறுக்கு இணைவு; காலுறை தலைப்பு மாட்டி.

**suspense'**, *n.* தற்கால நிறுத்தம்; இடைநிறுத்தம்; இடை ஓய்வு; உறுதியற்ற நிலை; எதிர்பார்ப்பு நிலை; சொல்லாது தாழ்க்கும் நிலை; செயலற்ற நிலை; இரண்டுமற்ற நிலை; இடைத் தயக்கநிலை; உரிமை வகையில் தற்கால நிறுத்தி வைப்பு; (தொ.) keep one in suspense, காக்க வை; எதிர்பார்க்க வை; ஆர்வ அளப்புற வை; மறைத்து ஆவல் பெருக்கு; suspense account, சிட்டைக் கணக்கு.

**suspen'sion**, *n.* தொங்குதல்; ஒத்தி வைத்தல்; தற்காலப் பதவி நீக்குதல்; இடை ஓய்வுநிலை, தொங்கல் நிலை; (தொ.) suspension bridge, தொங்கற் பாலம்.

**suspen'sive**, *a.* தற்காலத் தடையாய் நிலவுகிற; (தொ.) suspensive veto, தற்கால எதிர்த் தடுப்பு வாக்கு.

**sus. per coll.**, (ல.) *n.* தூக்குக்கட்டளைக் குறிப்பு, தூக்கிலிடப்படுக என்னுங் குறிப்பு.

**suspi'cion**, *n.* ஐயுறவு; அயிர்ப்பு; அரைகுறை நம்பிக்கை, அரைகுறை எண்ணம்; அரைகுறை எண்ணச்சாயல்; அவநம்பிக்கை; ஐய உணர்வு; ஓயா ஐயுறவுப்பழக்கம்; சமுசய மனப்பான்மை; ஐயத்திற்கு ஆட்படுநிலை, ஐயங் கொள்வதற்குரிய நிலை; ஊகம்; ஐயுறவச்சம், வேண்டா நிலைபற்றிய ஐயுறவு; அரைகுறை அச்சநிழல்; ஆதாரமற்ற எண்ணம்; சிறிதளவு, சிறு சாயற்கூறு; *v.* (பே-வ.) ஐயுறு, ஐயுறவு கொள்.

**suspi'cious**, *a.* ஐயப்பாடான; உறுதியற்ற; ஐயுறவுக்குரிய; ஐயங்குறித்த; ஐயுறுகிற; ஐயுறவு சுட்டுகிற; ஐயுறவு நிறைந்த; ஐயுறத் தக்க, ஐயுறுதற்கிடமான; பல ஐயங்களைத் தோற்றுவிக்கத்தக்க; ஐயப்படுதற்குரிய ஆதாரங்கொண்ட; எதற்கெடுத்தாலுஞ் சந்தேகங் கொள்கிற; ஓயா ஐயுறவுப் பழக்கமுடைய; ஐயுறவு மனப்பான்மையுடைய; எவரையுஞ் சந்தேகக் கண்கொண்டு பார்க்கிற; தவருன எண்ணமுடைய.

**suspira'tion**, *n.* நெடுமூச்சு; பெருமூச்சு விடல்.

**suspire'**, *v.* (செய்.) ஆழ்ந்த மூச்சுவிடு, பெருமூச்சு விடு.

**sustain'**, *v.* பளுத்தாங்கு; தாங்கிப்பிடி; விழாமல் தடுத்து நில்; அமிழாமல் தடுத்து நிறுத்து; ஆதாரமாயிரு; ஆதாரங்கொடுத்து நிறுத்து; நிலைகுலையாது தாங்கு; காத்துப் பேணு; ஊக்குதலளி; ஆதரி; ஏற்றுதரவு காட்டு; உரமூட்டு; எதிர்ப்பதற்கான வலிமை வழங்கு; நிலைநாட்டு; உறுதிசெய்; வாத ஆதாரங்கொடு; வாத ஆதாரங்களால் வலியுறுத்து; மெய்ப்பி; எண்பித்துக் காட்டு; ஆதரவாகத் தீர்ப்பளி; ஏற்றுப் பாராட்டு; பாராட்டி ஆதரி; மேவிக் கொண்டுசெல்; தொடர்ந்து நடத்து; நீடித்து நடக்கச்செய்; நீடித்து உழைக்கச்செய்; தளராமல் தொடரச்செய்; விடாது ஊக்கு; தளராமற் கொண்டுசெலுத்து; மேற்கொண்டு நடத்திச்செல்; திறம்பட நடத்திக்காட்டு; படு; கொள்ளு; அடை, எய்து; ஆளாகு; முறைமன்ற ஆணைவகையில் சட்டப்படி ஏற்றமைவுறு.

**sustained'**, *a.* தொடர்ந்த; விடா உறுதி வாய்ந்த; தளராது நீடித்த.

**sustain'ing,** *a.* தாங்கிப் பிடிக்கிற; வலுவாதாரமான; வலுக்கொடுக்கிற; வலுவூட்டுகிற.

**sustain'ment,** *n.* நீடிப்பு; தொடர்வு; ஆதரவு; ஊட்டம்.

**sus'tenance,** *n.* உடலோம்பல்; வாழ்வாதாரம்; ஊட்டப் பண்பு; உள்ள ஊட்டம்; அறிவூட்டம்.

**sustenta'tion,** *n.* வாழ்க்கை ஆதரவு; (தொ.) sustentation fund, குருமார் உதவி நிதிக்காகத் திரட்டப்பெறுந் தொகை.

**susurra'tion,** *n.* குசுகுசுவெனல்; முணுமுணுப்பு.

**susu'rrus,** *n.* முணுமுணுப்பு.

**sut'ler,** *n.* பாசறை அங்காடியர்.

**su'tor,** *n.* சக்கிலியர்.

**Sut'ra,** (ச.) *n.* நூற்பா, சூத்திரம்; சூத்திரத்தொகுதி.

**suttee', sati',** (ச.) *n.* உடன்கட்டை, உடன்கட்டையேறல்.

**su'ture,** *n.* பொருத்துவாய், மண்டையோட்டுப் பொருத்து வாய்; எலும்புப் பொருத்துவாய்; அறுவை மருத்துவத்தில் தையல்; *v.* காயத்துக்குத் தையலிடு.

**suz'erain,** *n.* ஆண்டை, பண்ணை நிலவுரிமை மேலாளர்; ஆட்சி மேலாளர்; உச்ச உயர் ஆட்சி உரிமையாளர்; மேலாட்சியாளர்; மேலாட்சி அரசு; *a.* உச்ச உயர் மேலுரிமையுடைய; மேலாட்சிக்குரிய, மேலரசு நிலையான.

**suz'erainty,** *n.* மேலாதிக்க உரிமை; மேலாட்சி நிலை; மேலரசு நிலை.

***svelte,*** (பிர.) *a.* மெல்லிழைவான; உடல்வகையில் மென்கட்டான, பெண்டிர் உடல்வகையில் ஒசிந்த, துவள்கிற; மொழி நடை வகையில் திண்ணிழைவான; கலை வகையில் எளிமையுந் திட்பமும் வாய்ந்த.

**swab,** *n.* துடைப்புத்துண்டு, கப்பல் துணித்துடைப்பம்; ஒத்துபட்டை, அறுவை மருத்துவத்தில் பயன்படும் உறிஞ்சு பஞ்சுறை; நோய் நுண்ம ஆய்வெடுப்புக் கசிவு நீர்மம்; (இழி.) கப்பல் அலுவலாளரின் தோளணிக்கச்சை; அருவருக்கத்தக்க ஆள்; *v.* துடைப்புத் துண்டால் துடை; ஒத்து பட்டையால் ஈரம் ஒத்தியெடு.

**swabb'er,** *n.* துடைப்புத்துண்டு பயன்படுத்துபவர்; துடைக்கும் பஞ்சுறை; சீட்டாட்ட வகையில் பந்தய உரிமைப் பங்குச்சீட்டு.

**swabb'ers,** *n. pl.* பந்தய உரிமைப் பங்குச் சீட்டுடைய சீட்டாட்ட வகை.

**Swab'ian,** *n.* ஸ்வேபியா நாட்டவர்; *a.* ஸ்வேபியா நாட்டிற் குரிய.

**swa'ddle,** *v.* வரிந்து சுற்றிப்பொதி; கெட்டியான மேலுடை போர்த்து.

**swadd'ling-bands, swadd'ling-clothes,** *n.* அணையாடை, குழந்தை பொதியாடை; அடக்கி வைக்கும் ஆற்றல்கள்; செயல் சிந்தனை உரிமைகளைக் கட்டுப்படுத்துஞ் செயற்கைச் சூழல்கள்.

***Swade'shi,*** (ச.) *n.* சுதேசி, வெளிநாட்டுப் பொருள்களை விலக்கிய இந்திய இயக்கம்.

**swag,** *n.* (இழி.) கொண்டி; கறுப்புச் செல்வம், அரசியற் கொள்ளை ஆதாயம்; ஆஸ்திரேலிய வழக்கில் நாடோடியின் அல்லது சுரங்கத் தொழிலாளரின் கைப்பை.

**swage,** *n.* பணியிரும்பு பதிவச்சுப்பொறி; *v.* பதிவச்சுருப் பொறியால் பணியிரும்பில் வடிவங் கொடு.

**swage'-block,** *n.* பதிவச்சுருக் கட்டை, பணியிரும்பை உரு வாக்குவதிற் பயன்படும் துளை பள்ளங்களையுடைய கட்டை.

**swagg'er,** *n.* வீம்புநடை; வீரப்புப்பேச்சு; தருக்கு நடத்தை; ஆணவப்போக்கு; வெற்று வீரப்புரை; சுறுசுறுப்பு; *a.* பகட்டணியான; *v.* செம்மாந்து செருக்கி நட; வீரப்பாக நடந்துகொள்; வெற்றுரவாரப்பகட்டுப் பேசு; வெற்று வீரப்பு அள, தற்பெருமையான புளுகுகள் பேசு.

**swagg'er-cane,** *n.* போர்வீரர் பிரம்பு.

**Swahi'li,** (அரா.) *n.* கிழக்காப்பிரிக்க 'பாண்டு' இன மக்கள்.

**swain,** *n.* பட்டிக்காட்டிளைஞன்; குடியானவன்; முல்லை நிலக் கவிதைக்குரிய நாட்டுப்புறக் காதலன்; மன அவா வாளன்.

**swale,** *v.* (பே-வ.) எரி; கொளுத்து; கருகு, கரியாகு; மெழுகுதிரி வகையில் இளகு.

**swa'llet,** *n.* பாதாள ஓடை; ஆறு உட்பாயும் அடிநிலக் குகை.

**swa'llow**[1], *n.* தொண்டைக்குழி, தொண்டை உணவுக்குழாய்; விழுங்குதல்; விழுங்கும் அளவு; *v.* விழுங்கு; அகப்படுத்து; வளைந்து சூழ்; உள் அமிழ்த்திக்கொள்; உள் ஈர்த்துக்கொள்; உள் இழுத்துக்கொள்; உறிஞ்சு; உட்கொள்; வறிதாக்கு; இல்லாதாக்கு; அழி; ஒழித்துவிடு; பேச்சுவகையில் ஆரா யாது நம்பி ஏற்றுக்கொள்; எதிர்க்காது ஏற்றுக்கொள்; பொறுத்துக்கொள்; ஏற்றமைந்துவிடு; பொறுமையுடன் ஏற்றுக்கொள்; இகழ்ச்சி பொறு; சொன்னசொல் மாறு; சூளுரை மாற்று; மென்று விழுங்கு, விழுங்குதல் போன்ற தாடை அசைவு காட்டு; (தொ.) swallow a camel, முடியா ததையும் முடி; swallow hole, சுண்ணும்புக் குழி, சுண் ணும்புக்கல்லில் பெய்குழல் ஒத்த வடிவுடைய குழி.

**swa'llow**[2], *n.* தூக்கணங்குருவி வகை; (தொ.) one swallow does not make a summer, "ஒரு மரம் தோப்பாகாது."

**swa'llow-dive,** *n.* நீள்கை முக்குளிப்பு.

**swa'llow-fish,** *n.* பெருந்தலைக் கடல்மீன் வகை.

**swa'llow-hawk,** *n.* கவைமுள்வால் பருந்துவகை.

**swa'llow-tail,** *n.* கவைமுள் வால் பறவை வகை; வண்ணத்துப்பூச்சி வகை; தொங்கல்வால் துகிற்கொடி முனை.

**swa'llow-tailed,** *a.* ஆழ் கவை முள்வடிவ வாலுடைய; (தொ.) swallow-tailed coat, தொங்கிழை மேலங்கி.

**swa'llow-wort,** *n.* மஞ்சள்நிற மலர்ப்பூண்டு வகை.

**swam,** *v.* swim என்பதன் இறந்த காலம்.

**swa'mi,** (ச.) *n.* கடவுட்சிலை; கடவுள்; அடியார்; குரு.

**swa'mi work,** *n.* இறைப்பணிக் கலம், தெய்வ உரு வேலைப் பாடு தாங்கிய வெள்ளி வேலைப்பாட்டுப் பொருள்.

**swamp,** *n.* சதுப்புநிலம்; சேறு, சகதி; அழுவம்; *v.* சேற்றில் சிக்குவி; நீர் வகையில் கீழ் அமிழ்த்திவிடு, மேலெழுந்து பொங்கு, வெள்ளக்காடாக்கு; சேருக்கு; பெரிய அளவில் தாக்க விடு; செயலறச் செய்; விழுங்கு; மறைத்துவிடு; புலனுகா வாறு செய்துவிடு; கவனத்தை இருட்டடிபடச் செய்துவிடு.

**swan,** *n.* அன்னம், எகினப்புள்; கவிஞர்; விண்மீன் குழுக் களுள் ஒன்று.

**swan'dive,** *n.* இருகை நீட்டிய முக்குளிப்பு.

**swan'-flower,** *n.* பகட்டுவண்ண மலர்வகை.

**swan'-goose,** *n.* நீள்கழுத்துச் சீன வாத்துவகை.

**swan'-herd,** *n.* அன்னப்புட் பொறுப்பாளர், அன்னப்புள் அலகுக் குறியிடும் அரசியல் அதிகாரி; அன்னப்புள் மேய்ப்பர்.

**swank,** *n.* வெற்றுரவாரம்; மொட்டைப்புளுகு; *v.* (இழி.) வீரப்புக்காட்டு; வெற்று வீரப்புப் பேச்சுப் பேசு, வெற்று வீரப்புரை கூறு.

**swank'y,** *a.* மொட்டைப்புளுகான; பகட்டான.

**swan'-maiden,** *n.* செர்மன் கதைவழக்கில் தூவி ஆடை யணிந்து அன்னமாகிவிடத்தக்க மாயநங்கை.

**swan'-mark,** *n.* அன்னப்புள் அலகுக்குறி, உடையவர் அறி விக்க அன்ன அலகுக் குறியீடு.

**swan'-mussel,** *n.* நன்னீர் வாழ் பெரிய சிப்பிவகை.

**swan'-neck,** *n.* வெளிச்செல் நீர்க்குழாயின் வளைமூக்கு.

**swann'ery,** *n.* அன்னப்புட் பண்ணை, அன்னப்பறவை வளர்க் கும் இடம்.

**swann'y,** *a.* அன்னம் போன்ற.

**swan's'-down, swan's'down,** *n.* அன்னத்தூவி; மென் கம்பளி; தறித்த மென்றுய்ப்பருத்தித் துணிவகை.

**swan'-shot,** *n.* பரும்படித் துப்பாக்கிக்குண்டு.

**swan'-skin**, *n.* சாய்வரிக் கம்பளித்துணி வகை.

**swan'song**, *n.* இறுதிப்பாடல், இறக்குந்தறுவாயில் அன்னம் பாடுவதாகக் கருதப்படும் இனிய பாடல்; கடைசிப்படைப்பு.

**swan'-upping**, *n.* அன்னப்புட் குறிநாள், தேம்ஸ் ஆற்றிலுள்ள அன்னங்களை எடுத்துக் குறியிடும் ஆண்டின் நாள்.

**swap**, *n.*, *v.*=swop.

**Swaraj'**, (ச.) *n.* தம்மாட்சி, சுயராச்சியம்.

**sward**, *n.* புற்றரை, குறும்புல் பரப்பு; பசும்புல் வெளி; கரண் நிலம்.

**sward'ed, sward'y**, *a.* புல்வெளியினால் மூடப்பட்ட, பசும் புற்றரை கொண்ட, கரணிட்ட.

**sware**, *v.* பழங்கால வழக்கில் swear என்பதன் இறந்த காலம்.

**swarf**, *n.* மரச்சிம்பு; மரச்சீவல்; உலோகச்சிம்பு செத்தை.

**swarm[1]**, *n.* வண்டின் மொய்திரள்; பறவைத் தொகுதி; விலங்கின் தொகுதி; தேனீக்கூட்டம்; *v.* மொய், திரளு; அடர்த்தியாயிரு; திரளாக இயங்கு; தேனீக்கள் வகையில் குடிபுறஞ் செல்வதற்காக ஒன்றுகூடு; கூட்டமாகத் திரள், பெரும் எண்ணிக்கையாயிரு; இடவகையில் நெருக்கமாயிருக்கப் பெறு.

**swarm[2]**, *v.* பற்றியேறு, கயிறு-மரம்-கழி முதலியவற்றின் மீது ஏறு; மரம் ஏறுவதுபோல் பற்றிக்கொண்டு கயிற்றில் ஏறு.

**swarm'-cell, swarm'-spore**, *n.* சிறகல்லிச்சிதல்; அணு உயிர்ச்சிதல்.

**swart**, *a.* (பழ.) கருநிறங் கொண்ட.

**swar'thily**, *adv.* கருமையாக.

**swar'thiness**, *n.* கருமை.

**swar'thy**, *a.* கரிய, கருநிறங்கொண்ட.

**swash**, *n.* அலம்பொலி, நீர்மோதி அலம்பும் ஓசை; வளைவுக்கோடு; *v.* கடுமையாக மோது; தெறி; (தொ.) swash dash, வளைவுக்கோடு.

**swash'buckler**, *n.* முரடன், எளியோரைத் துன்புறுத்துபவன்; அடியாள், கூலிக்கு அடிதடி செய்யும் போக்கிரி.

**swash'-plate**, *n.* ஊசலியைவுச் சுழற் பல்வட்டு, மூனையை மேலும் கீழுமாக இயங்குவிக்கும் பற்சக்கரச் சாய்வியைவு வட்டு.

**swas'tika**, *n.* மங்கலக்குறி, சுவஸ்திகை (卐).

**swat**, *v.* நையப் புடை.

**swatch**, *n.* (பே-வ.) மாதிரி; துணிக்கு மாதிரி

**swath**, *n.* புல் அரிதாள்; அறுவடை அரிதாள் கட்டை; புல் தளக்கட்டை, ஒருமுறை வெட்டிய புல்லின் அடிக்கட்டைத் தளம்.

**swathe**, *n.* புண்கட்டுத் துணி, கட்டுத்துணி மடி; *v.* கட்டுத் துணியால் இறுக்கிக்கட்டு; பல ஆடைகளால் அல்லது துணிகளால் சுற்றிப் போர்த்து.

**swatt'er**, *n.* ஈக்கொல்லி.

**sway**, *n.* அசைவு, ஊசலாட்டம்; தள்ளாட்டம்; கையாட்சி, அரசியல் ஆதிக்கம்; *v.* தள்ளாடு; அசைந்தாடு; ஊசலாடு, அப்படியும் இப்படியுமாக ஆடு; சாய்ந்தாடு; அலையாடு; ஒழுங்கின்றி இங்குமங்கும் அசை; தடுமாறு, தயங்கு, ஒரு முடிவிற்கு வாராது மன அலைவுறு; ஊசலாட்டு, அங்குமிங்கும் ஆடச்செய்; அசைவினை ஒழுங்குபடுத்து, பிடித்தாட்டு; ஆட்சி செய்; செல்வாக்குப் பெற்றிரு; செல்லும் திசையைக் கட்டுப்படுத்து.

**swayed, sway'-backed**, *a.* குதிரைவகையில் இயற்கைக்கு மாறுகக் குழிந்த முதுகுடைய.

**sweal**, *v.*=swale.

**swear**, *n.* சூளுரை; *v.* ஆணையிடு; ஆணையிட்டுக்கூறு; உறுதி கூறு; உறுதியாகக் கூறு; ஆணைநேர்ந்து வை; ஆணையிடுவி; (தொ.) swear by, (பே-வ.) பெயரால் ஆணையிடு; சான்றுக ஆணையிடு; swear in, ஆணையிட்டுப் பணி தொடங்குவி; swear off, விட்டுவிடுவதாகச் சூளுரை கூறு; swear the peace against, இடர் நேருவதற்குக் காரணமானவரென்று ஆணையிட்டுக் கூறு; swear to, ஆணையிட்டு உறுதி கூறு, ஆணையின்பேரில் ஆள் அடையாளம் உறுதி செய்.

**swear'ing**, *n.* சூளுரை; ஆணைமொழி.

**swear'-word**, *n.* கீழ்த்தரச் சூளுரை.

**sweat**, *n.* வியர்வை; வியர்ப்பு நிலை; கடுமுயற்சி; கடு உழைப்பு; அரும்பாடு; தளர்வுழைப்பு, கடு உடலுழைப்பு, குறைகூலிக் கடுவேலை; அயர்வடிப்புழைப்பு; கட்டநட்டம்; பொடிநீர், வியர்வை போன்ற ஆவிநீர்ப்பரப்பு; வியர்ப்பு வலிப்பு; வியர்வை நோய்; ஆர்வத் துடிப்பு; (இழி.) படைவீரன்; (பே-வ.) வியர்ப்பு விறுவிறுப்பு, ஆர்வக்கவலை நிலை; *v.* வியர்வை வெளியிடு; வியர்த்துக்கொட்டு; வியர்வை சிந்து; வேர்க்கச் செய்; வேர்வையால் நனைந்துவிடு; வேர்வையால் அழுக்காக்கு; ஈர ஆவி வெளியிடு; ஆவி கசியவிடு; ஆவி பனிப்பிடு; ஈர்ந்துளி கவியச்செய்; குருதி கசியவிடு; குருதி கக்கு; குருதி பொடிப்பிடு; மர வகையில் பிசின் கசியவிடு; அச்சத்தால் வியர்ப்பு விறுவிறுப்படை; பிழைக்கு வருந்து; பிழைக்குத் தண்டனையுறு; பாடுபடு, கடும் உழைப்புச் செய்; வியர்க்க வியர்க்க வேலை செய்; குறைகூலிக்கு மாடாய் உழை; பட்டினி எல்லைக் கூலிபெற்று வேலைசெய்; கட்டநட்டம் படு; கடு உழைப்பு வாங்கு; குறைகூலிக்கு வருத்தி வேலை வாங்கு; பட்டினிக்கூலி உழைப்பிலீடுபடுத்து; மட்டு மீறிய நீண்டநேர வேலை வாங்கு; போட்டியைப் பயன்படுத்தி முடிந்தவரை உழைப்பைச் சுரண்டு; தாக ஆதாயம் பெறு; பணம் பறி; கூடியமட்டும் பணம் கறந்துவிடு; கொள்ளை வட்டி வாங்கு; ஆள் அல்லது குதிரை வகையில் வியர்க்க வியர்க்கப் பயிற்றுவி; குதிரை வியர்வை தேய்த்துத் துடைத்தகற்று; சுவர் வகையில் மேற்பரப்பில் ஈரங்கட்டு; புகையிலை-தோல் ஆகியவற்றின் வகையில் ஆவியில் புழுக்கிப் பதப்படுத்து; உலோகப் பகுதிகளைப் பரப்பின் இழைவால் ஒன்றுபடுத்திப் பொருத்துவி; நாணயத்திலிருந்து பொன்னெடுத்துத் தகா ஆதாயம் பெறு; நாணயங்களைப் பையிலிட்டுக் குலுக்கிப் பொன்னளவு குறைத்துவிடு; (தொ.) in the sweat of one's brow, by the sweat of one's brow, கடும் உழைப்பினால்; old sweat, வயது முதிர்ந்த வீரன்; sweating system, வியர்வை சிந்த வேலைவாங்குந் திட்டம்.

**sweat'-cloth**, *n.* குதிரைச் சேணத்தின் அடியிற் போடப்படும் மென்கம்பளம்.

**sweat'-duct**, *n.* வியர்வை நாளம்.

**swea'ter**, *n.* வியர்வை சிந்துபவர், வியர்வை சிந்தப் பாடுபடும் தொழிலாளி; கனமான கம்பளிச் சட்டை.

**swea'ter-girl**, *n.* (பே-வ.) ஈர்க்கிடைபோகா மார்பணங்கு.

**swea'ter-gland**, *n.* வியர்வைச் சுரப்பி.

**sweat'iness**, *n.* வியர்ப்புடைமை; கடும் உழைப்புடைமை.

**swea'ting**, *n.* வியர்த்தல்; வியர்ப்பு; *a.* வியர்க்கிற; வியர்ப்பூட்டுகிற.

**sweat'ing-bath**, *n.* வியர்வைக் குளியல், வியர்வை உண்டாக்குவதற்கான குளிப்பு.

**sweat'ing-iron**, *n.* குதிரை தேய்ப்பிரும்பு.

**sweat'ing-room**, *n.* குளிப்புக் கூட வியர்ப்பு அறை.

**sweat'ing-sickness**, *n.* லண்டனின் 15, 16-ஆம் நூற்ருண்டுக்கால வியர்வைக் காய்ச்சல் கொள்ளைநோய்.

**sweat'shop**, *n.* மாடுழைப்புக் கூடம், மாடாய் உழைப்பு வாங்கும் தொழிற்சாலை.

**sweat'y**, *a.* வியர்க்கிற, வியர்வையுள்ள; வியர்ப்பு விறுவிறுப்பான.

**Swede[1]**, *n.* ஸ்வீடன் நாட்டவர்.

**swede[2]**, *n.* ஸ்வீடன் நாட்டுக் கிழங்கு வகை.

**Swedenbor'gian**, *n.* ஸ்வீடன் நாட்டு இமானுவேல் ஸ்வீடன்பர்க்கு (Emanuel Swedenborg, 1688-1772) என்பாரின் புதுத் திருச்சபையினர்; ஸ்வீடன்பர்க்கின் புதுத்திருச்சபைக் கோட்பாட்டினர்; *a.* ஸ்வீடன்பர்க்கு சார்ந்த; ஸ்வீடன்பர்க்கு

திருச்சபைக்குரிய; ஸ்வீடன்பர்க்கு திருச்சபைக் கோட்பாட்டுக்குரிய.

**Swed'ish**, *n.* ஸ்வீடன் நாட்டவர்; ஸ்வீடிஷ் மொழி; *a.* ஸ்வீடன் நாட்டைச் சார்ந்த; ஸ்வீடிஷ் மொழி சார்ந்த.

**sween'y**, *n.* தசைத்தேய்வுறவு; குதிரைத் தோள் தசைத் தேய்வுறவு.

**sweep**, *n.* வீச்சு, அகல்வளைவியக்கம்; புடைவீச்சு; அலை வீச்சு; அலையாட்டம்; அகல் ஊசலாட்டம்; சுற்றுவீச்சியக்கம்; பாய்ச்சல்; மோதாற்றல், மோதுவேகம்; வீசு நடை, வாங்குநடை, பீடுநடை; மேலோட்டப் பார்வை; வேகப் பார்வை; சுற்றுப் பார்வை; சுற்றுக்காட்சி; வாங்குவளைவு; நீள்வளைவகற்சி; அகல்வளைவுப் பாதை; கட்டிட முகப்பின் அகல்வளைவுப்பாதை; பாதையின் அகல்வளைவு; பாதையின் அகல் வளைவுக் கூறு; மலையின் அகல் வளைவு; மலையின் அகல் வளைவுப் பகுதி; சாய்வுத் திருப்பம்; ஏணிப் படிக்கட்டின் ஒரு வளைவுத் திருப்பம்; வீச்செல்லை, வீச்சளவு; அகல் பரப்பளவு; வளாகம், வளைவகல் பரப்பு; அகல் பெரும்பரப்பு; சுற்றுவளைவெல்லை, சுற்றகல் எல்லை; அலக்கீடு, மனை தூர்த்துப் பெருக்கல்; அலகீட்டாளர், தூர்த்துப் பெருக்குபவர்; தூர்த்துப் பெருக்கிய குப்பை கூளம்; புகைப்போக்கி துடைப்பவர்; துடைத்தழிப்பு; விரைதுடைப்பு; விடாத்துடைப்பு; ஏற்றம், துலா; அடிப்பு நீர்க்குழாயின் கைப்பிடி; சீட்டு முழுநிறை பிடிப்பு; நீள்வீச்சுத் துடுப்பு; காற்றேடா நிலைப் பாய்க்கப்பல்; குதிரைப்பந்தயச் சூதாட்டம்; கப்பிவாரி, சுரங்கவளம் - மீன் வளம் ஆய்ந்து காண்பதற்குரிய கப்பி இழுவை; *v.* தூர், துடைத்தகற்று; அலகிடு, துடைப்பத்தால் பெருக்கிக்கூட்டு; வாங்கி வளைந்து செல்; விரிந்தகன்று செல்; நீண்டு வளைந்து அகன்று கிட; எங்கும் பரந்தகன்று செல்; எங்கும் பரந்தகன்று ஓடவிடு; எங்கும் பரந்தகன்று தேடு; கண்வகையில் சுற்றி ஓடவிடு; பார்வை வகையில் பரவி மேவவிடு; சுற்றிநோக்கு; சுற்றி ஆராய்; பாய், வீசு; வீசியடி, வீசிச்செல்; வீசியடித்துச் செல்; பாய்ந்துசெல்; வேகமாகப் பறந்து செல்; மோது வேகத்துடன் செல்; புடைவீச்சாக இயக்கு; ஒளிவீசிச் செல்; அடித்து வாரு, வாரியடி; வீசி எறி; வாரிக்கொண்டு செல்; விரைந்து உரசிக்கொண்டு செல்; அராவிச் செல்; உராய்ந்துகொண்டு செல்; தேய்த்துக்கொண்டு செல்; மேவிச் செல்; இசை நரம்பு வகையில் தடவு; தடவிச்செல்; மேலோடிச் செல்; தவழ்ந்து செல்; ஆடை வகையில் நிலமீது பாவு; இழைந்தோடிச் செல்; மிதந்தோடிச் செல்; இழுத்து வலித்து நட; விரைந்து கடந்து செல்; காற்றில் மிதந்து செல்; ஆடை வகையில் காற்றிலாடிச் செல்; மேலோட்டமாகப் பரவு; நெளிந்து நீள்வளைவாகச் செல்; நீள இழுத்துச் செல்; ஆடை வகையில் நிலமீது பாவும்படி இழுத்துக்கொண்டு செல்; நீள வீசிச் செல்; மேலாடை வகையில் காற்றிலாடவிட்டுச் செல்; வீறு அமைதியுடன் செல்; வீசுநடையிடு; பீடுநடை நடந்து செல்; பெருக்கித் தள்ளு; பெருக்கி அகற்று; வீசியடித்து அகற்று; விரைந்தகற்று; முற்றிலும் அகற்றிச் செல்; இல்லாதாக்கு; துடைத்தழி; வேகமாக அழித்தகற்று; படகு வகையில் நீள் துடுப்பால் துழாவி இயக்கு; குண்டுவீச்சு வகையில் எங்கும் பரப்பி வீசு; தேர்தல் தொகுதி வகையில் பெருவாரியான வாக்குகளைப் பெற்று வெற்றிபெறு; சீட்டாட்ட வகையில் எல்லாச் சீட்டுக்களையும் ஒருசேரப் பிடி; பந்தய வகையில் எல்லாப் பரிசுகளையும் பெறு; மீன்வலை வகையில் மீன்களைப் பெருவாரியாக வாரிக்கோட்டு; தூர்வாரியால் அரித்துத் தேடு; சுரங்க வளம்-மீன் வள வகைகளில் கம்பி இழுவைக்கொண்டு பரந்து தேடி ஆராய்; (தொ.) make a clean sweep, முற்றிலுந் துடைத்து அகற்று; பழமை முழுதும் அகற்றிவிடு; sweep everything into one's net, வரும் எல்லாவற்றையும் பற்றிக் கொள்ளு; sweep the board, சூதாட்டப் பணையத் தொகை அனைத்தையும் கெலித்துப் பெறு; கிடைக்கக்கூடிய பரிசுகள் அனைத்தையும் பெறு; பிறருக்கின்றி எல்லாவற்றையும் பெற்றுவிடு; sweep the horizon, அடிவானத்தைக் கண்ணால் கூர்ந்து நோக்கு; முற்றிலுந் துருவித் தேடு; sweep the seas, கடலின் எல்லாத் திசைகளிலும் சென்று அங்குள்ள எதிரிகளைத் துடைத்தழி; sweep the strings, இசைக்கருவி நரம்புகளை விரைவாகத் தடவி வாசி.

**sweep'er**, *n.* துடைப்பம்; தோட்டி, துப்புரவு செய்பவர், துடைத்தழிப்பவர்.

**sweep'ing**, *n.* தூர்த்துப்பெருக்குதல்; *a.* தூர்த்துப் பெருக்குகிற; வீசியடிக்கிற; வீசிச்செல்கிற; விரைந்து செல்கிற; அடித்துக்கொண்டு போகிற; பீடுநடையிடுகிற; மிகப்பரந்த, விரிவகல்வான; முழு வியாபகமான; விதிவிலக்கற்ற, விலக்கு வரையறையற்ற.

**sweep'ingly**, *adv.* வீசியடிக்கும் முறையில்; முழுமொத்தமாக; விதிவிலக்கின்றி; விலக்கு வரையறைகளில்லா நிலையில்.

**sweep'ingness**, *n.* விலக்கு வரையறையின்மை; முழுப்பரவல் நிலை; கழி மிகையுரை.

**sweep'ings**, *n. pl.* பெருக்கிய குப்பைகள்; கழித்து விலக்கிய சப்புச் சவறுகள்.

**sweep'-net**, *n.* வீச்சுவலை, ஓடுவலை; பூச்சி நூலாய்வாளரின் கவிகை வலை.

**sweep'-seine**, *n.* மிதவை அடிவாரி வலை, அடியில் பளுவும் மேலே மிதவைகளும் கொண்ட பெரிய மீன் வலை.

**sweep'stake, sweep'stakes**, *n.* குதிரைப்பந்தயச் சூதாட்டம்.

**sweet**, *n.* இனிப்பு, தித்திப்புப்பண்டம், மிட்டாய்; இன்கூறு, இனிமைப்பகுதி; இனியார், காதற் கண்மணி; அன்பிற்கு உரியார்; *a.* இனிய, இனிப்பான; இனிப்பு மிகுதியான; தெவிட்டுகிற; குமட்டுகிற; நறுஞ்சுவை வாய்ந்த; இன்மணம் உடைய; இன்னோசையுடைய; இன்னிழைவான; கார உண வல்லாத; காரம் ஊட்டப்படாத; புளிக்காத; புளிப்பேற்றப் படாத; உறைப்பற்ற; உப்புப் பதனிடப்படாத; உறைப்பு ஊட்டப்படாத; ஊசாத; கெடாத; நன்னிலையிலுள்ள; புத்தம் புதிய நிலையிலுள்ள; இன்னலம் வாய்ந்த; நிறைநலமார்ந்த; மென்னயம் வாய்ந்த; மெல்லிழைவான; கவர்ச்சியான; கண்கவர் வனப்புடைய; அழகான; மகிழ்ச்சியூட்டுகிற; மெல்லிணக்கமுடைய; மெல்லமைதி வாய்ந்த; முற்றெளிமை வாய்ந்த; தட்டுத்தடங்கல் அற்ற; அரிய, அன்புக்குரிய; பற்று மிக்க; பிடித்தமான; பாசத்தில் இழைந்த; காதல் கூர்வுடைய; பசப்புகிற; (தொ.) a sweet tooth, இனிப்புப் பண்டங்களில் விருப்பு; at one's own sweet will, விரும்பும்பொழுது; ஒருதலை முடிவாக; தன்முனைப்பாக; ஆணவமாக; sweet going, இன்பப்பயணம், ஒழுங்கமைதியுடைய பாதையில் தடையின்றிச் செல்லும் ஊர்திச்செலவு; sweet oil, ஒலிவ நெய்; sweet on, sweet upon, காதல் கொண்டு; மிகவும் நேசமாக; மோகமாக; பாசத்தில் மயங்கி; sweet pea, நறுமண மலர்களுள்ள தோட்டச் செடி வகை; sweet potato, சர்க்கரை வள்ளிக்கிழங்கு; sweet root, அதிமதுரம்; sweet rush, மணமுள்ள தண்டங்கிழங்குப் புல்வகை; sweet sultan, தோட்ட மலர்ச்செடி வகை; sweet water, குடிதண்ணீர், நல்ல தண்ணீர்; taste sweet, இனிப்பாயிரு; உகந்ததாயிரு; விருப்புக்குரியதாயிரு.

**sweet'bread**, *n.* கன்றிறைச்சியுணவு; கன்றின் கணையக் கறி; கழுத்துக் கணையச் சுரப்பி.

**sweet'-briar, sweet'-brier**, *n.* மணங்கமழும் இலைகளையுடைய ரோசா வகை.

**sweet'en**, *v.* இனிப்பூட்டு, இனிப்பாக்கு; இனிமையுடையதாக்கு; மனத்திற்கேற்றதாக்கு; விருப்புடையதாக்கு; மகிழ்வுடையதாக்கு.

**sweet'ener**, *n.* இனிப்பூட்டுபவர்; இனிப்பூட்டுவது, இனிப்பூட்டும் பண்பு.

**sweet'ening**, *n.* இனிப்பூட்டுதல்; *a.* இனிப்பூட்டுகிற.

**sweet'-gale**, *n.* சதுப்புநில மணமலர்ச் செடிவகை.

**sweet'heart**, *n.* கண்ணாட்டி, காதலி; கண்ணாளன், காதலன்; *v.* காதல் நாடு, காதல் நாட்டங்கொள்.

**sweet'ing**, *n.* இனிப்பு ஆப்பிள் பழவகை.

**sweet'ish**, *a.* சற்று இனிப்புடைய.

**sweet'-john**, *n.* மண மலர்ச்செடிவகை.

**sweet'ly**, *adv.* இனிமையுடன்; இன்னயத்துடன்; கவர்ச்சியாக.

**sweet'meat,** *n.* மிட்டாய், பாகிலிட்ட பழம்; இன்பண்டம்; பாகிலிட்ட பழ வற்றல்.

**sweet'ness,** *n.* இனிமை; இன்மணம்; ஓசையின்மை; இன்னயப் பண்பு; இன்கவர்ச்சியுடைமை.

**sweets,** *n. pl.* இனிய உணவு வகை; இனிப்புப் பிட்டு; இன்களி; இன்பழப்பாகு; இன்பாலேடு; இன்மணம்; இனிய தேறல் வகை; தேம்பாகுச் சுவையூட்டப்பட்ட தேறல்; இன்குழம்பூட்டப்பட்ட இதய நறு மருந்து; மனமகிழ்வூட்டும் பொருள்கள்; விருப்பூட்டுஞ் செய்திகள்; இன்பநுகர்வுகள்.

**sweet'-savoured,** *a.* இன்சுவை வாய்ந்த.

**sweet'-scent'ed,** *a.* நறுமணமுடைய.

**sweet'-sop,** *n.* அமெரிக்க வெப்பமண்டலப் பசுமை மாருப் பழச்செடி வகை; இனிய சதைப்பற்றுள்ள அமெரிக்க வெப்ப மண்டலப் பழவகை.

**sweet'-stuff,** *n.* இனிப்புப் பண்டம்; மிட்டாய்.

**sweet'-tem'pered,** *a.* இன்னயமுடைய, இனிய பண்புடைய.

**sweet'-william,** *n.* மணமலர்ச் செடிவகை.

**sweet'y,** *n.* இன்பண்டம், மிட்டாய்.

**swell,** *n.* வீங்குதல்; வீக்கம்; வீங்கிய நிலை; வீங்கும் இயல்பு; ஊதல், உப்புதல்; விரிவு; பருமம், சீரான வடிவிற் பருமனுன பகுதி; பொங்குதல், பொக்கம், எழுச்சி; அலையெழுச்சி; அலை பொங்குதல், பொங்கலை எழுச்சி; மேடு, இட உயர்வு; ஓசை உயர்ச்சி; இசைக் கருவியில் ஓசை ஏற்றத் தாழ்வமைவு; (இசை.) சுர இழிபிறக்கம் அடுத்த திடீர் ஏற்றத் தொகுப்பு; ஒய்யாரக்காரர், பகட்டாரவாரமான புதுப்பாணி நடையுடைதோற்றத்தினர்; எடுப்பான நடையுடைதோற்றத்தினர்; கவர்ச்சியான தோற்றமளிப்பவர்; (பே-வ.) ஆட்சி வகுப்பினர், பெரியதனக்காரர், சிறப்பு மிக்கவர்; திறமை சான்றவர்; உயர்நிலையினர்; *a.* சிறப்பு மிக்க; பகட்டான, நேர்த்தி மிக்க உடையணிந்த; முதல்தர நிலையிலுள்ள; *v.* பெருக்கமுறு; பருமனுகு; ஊது, உப்பு; புடைப்புறு; வீங்கு; உயர்வுறு; மேடுபடு; மேடாக அமைவுறு; பொங்கு; பொங்கி எழு; பொங்கலையாக எழு; எல்லைமீறிப் பெரிதாகு; படிப்படியாகப் பெருக்கமடை; பெரிதாக வளர்; அடங்காது மீறி எழு; உள்ளடங்காது பெருமைகொள், பெரிதாக்கு; பெருக்கு; சேர்ந்து மேலும் பெருக்கமாக்கு; ஊத வை, உப்ப வை; வீங்குவி; புடைக்கச் செய்; பெருமையுறு; தற்பெருமை கொள்; பெருமைகொள்ளு; தற்பெருமையூட்டு; (தொ.) heart swells, உணர்ச்சியால் நெஞ்சுப் பையே விரிந்துவிடும் போலாகு; swelling oratory, செயற்கைப் பகட்டான சொற்பொழிவு; தற்பெருமையுடைய உரைப்பெருக்கு; swell like a turkey-cock, வீறுப்பாயிரு, வீண் ஆரவாரத்தோற்றம் மேற்கொள்; swell mob, swell mobsmen, பெருங்குடி மக்களைப்போல் பகட்டாக உடையணியும் முடிச்சுமாறிகள்.

**swell'-box,** *n.* இசைக்கருவியில் ஓசை ஏற்ற இறக்க அமைவுக் குழற்பகுதி.

**swell'dom,** *n.* (இழி.) பகட்டு நாகரிக உலகம்.

**swelled**[1], *a.* வீங்கிய; உப்பிய; ஊதிப் புடைத்த; பொங்கிய; (தொ.) swelled head, தற்பெருமை.

**swelled**[2], *v.* swell என்பதன் இறந்த காலம்; swell என்பதன் முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**swelled'-head'ed,** *a.* தற்பெருமை கொண்ட, வீறுப்புடைய, பகட்டாரவாரமான

**swell'-head'ed,** *a.* கர்வங்கொண்ட.

**swell'ish,** *a.* ஆடை அணிவதிற் பகட்டும் பெருமையுங் கொண்ட; செயற்கை ஆடம்பரம் மேற்கொள்கிற; போலித் தனமான; பகட்டித் திரிகிற.

**swell'-organ,** *n.* மிதிகட்டையால் ஒலியொழுங்கு செய்ய வல்ல இசை மேள வகை.

**swell'-pedal,** *n.* இசைப்பெட்டியில் ஒலியை ஒழுங்குபடுத்தும் மிதியடிக்கட்டை.

**swell'-rule,** *n.* (அச்.) நடுமணிக்கோடு, நடுவில் பருத்து இருமுனைகளிலும் ஒடுங்கிச் செல்லுங்கோடு.

**swel'ter,** *n.* புழுக்க மிக்க வானிலை, வெப்பமும் அழுத்தமும் மிக்க காற்றுமண்டலம்; *v.* புழுங்கு; புழுக்கத்தால் அயர்வுறு; புழுங்கித் தளர்வுறு; புழுங்கி அளிவுறு.

**swel'tering,** *a.* புழுங்குகிற; புழுக்கமான; புழுக்கமிக்க.

**swept**[1], *a.* தூர்த்துப் பெருக்கப்பட்ட; துடைத்துத் தூய்மையாக்கப்பட்ட.

**swept**[2], *v.* sweep என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**swept'back,** *a.* பின்னேந்தலான, விமான இறக்கைகளின் புறப்பகுதி வகையில் பின்னோக்கி வளைந்த.

**swept'wing,** *a.* பின்னேந்து இறக்கையுடைய, விமான வகையில் புறப்பகுதி பின்னோக்கி வளைந்த இறக்கைகளையுடைய.

**swerve,** *n.* விலகீடு, நெறிபிறழ்வு; நெறிபிறழ்வுச் செயல்; நெறிபிறழ்வுக்குரிய செய்தி; திசைதிரிவு, போக்குக்குலைவு; நிலை உலைவு; பிறழ்வியக்கம்; பந்தின் பிறழ்வெறிவு; பிறழ்வெறிவுப் பந்து; *v.* விலகிச்செல்; பிறழ்வுறு; நெறிதிறம்பு; நிலை திரிவுறு; திசை - தடம் பிறழ்வுறு; சாய்ந்தொதுங்கு; வெட்டித் திரும்பு; அலைவுறு, தடுமாற்றங்கொள்; வழிவிலகுவி, நெறிபிறழ்வுறு; சாய்ந்தொதுங்குவி, வெட்டித் திரும்புவி; அந்தரத்தில் போக்குப் பிறழ்வுறப் பந்தெறி.

**swift,** *n.* நீள்சிறைப் பறவை வகை; பல்லி வகை; புரு வகை; திரிவட்டம், நூல் சுற்றுவதற்குரிய சுழல்வட்டு; *a.* விரைவான, வேகமான; திடுமென்ற, மின்னீடான, திடீரென வந்து திடீரெனச் செல்கிற; உடனடியான, விரைந்து செயல்படுகிற; செயல் திறத்தில் துடிப்பு மிக்க; சொல் திறத்தில் துடியான; (செய்.) சுணங்காத, தாமதமற்ற; *adv.* விரைவாக; உடனடியாக; தமாதமின்றி.

**swift'-footed,** *a.* விரைந்த நடையுடைய, வேகமாகச் செல்லக்கூடிய.

**swift'-handed,** *a.* வேகமாக எழுதக்கூடிய; விரைந்து செயலாற்றக்கூடிய.

**swift'-winged,** *a.* வேகமாகப் பறக்கக்கூடிய; விரைந்து செல்லக்கூடிய.

**swig,** *n.* மிடற்றளவு மது; *v.* குடித்து வாழ்த்து.

**swill,** *n.* கீழ்த்தரக் குடிவகை; பன்றித் தொட்டி; கழுவு நீர்; கழுவுகை; ஒருதடவைக் குடிப்பு; *v.* அலம்பு, நீராற் கழுவு; மிதாக நீரூற்று, விசையுடன் நீர்பீற்றியடி; பேராவலுடன் பருகு.

**swim,** *n.* நீச்சல், நீந்து; மிதப்பு; மீன்மடு, ஆற்றில் மீன் மிகுதி ஊடாடும் பகுதி; செயலோட்ட மையம், மைய நடைமுறைப் போக்கு; (அரு.) மீன் உள்வளிப் பை; *v.* நீந்து; நீர்மத்தின் மேற்பரப்பில் மித; நீந்திக் கட; நீச்சல் போட்டியிற் கலந்துகொள்; குதிரை-நாய் முதலியவற்றை நீந்திக் கடக்கச் செய்; விரைவாகச் செல், நழுவியக்கமாக விரைந்து செல்; தலை சுற்றப் பெறு; வெள்ளக் காடாக்கு; பொங்கிப் பெருகு; பொங்கி வழி; ததும்பி நில்; (தொ.) in the swim, நடப்பு நிகழ்ச்சிகளில் ஈடுபட்டு; swim like a stone, swim like a tailor's goose, swim to the bottom, நீரில் மூழ்கிப் போ, மூழ்கி இறந்துபடு; swim with the tide, swim with the stream, ஊருடன் ஒத்து வாழ்.

**swim'-bladder,** *n.*=swimming-bladder.

**swimm'er,** *n.* நீந்துபவர்; நீந்துவது.

**swimm'eret,** *n.* நீந்தும் ஆற்றலுடைய தோட்டு உயிரிகளின் கால்.

**swimm'ing,** *n.* நீச்சல்; தலைசுற்றல்; மிதப்பு; *a.* நீந்துகிற; நீந்துவதற்குதவுகிற; (தொ.) swimming eyes, கண்ணீர் ததும்புகிற கண்கள்; கண்ணீர் ததும்பிய நிலை.

**swimm'ing-bath,** *n.* நீச்சல் குளம்.

**swimm'ing-bell,** *n.* இழுதுமீன் வகையில் மணிவடிவ நீந்தும் உறுப்பு.

**swimm'ing-belt,** *n.* நீச்சல் பட்டிகை

**swimm'ing-bladder**, *n.* உள்வளிப் பை, மீனின் மிதவைக் காற்றுப்பை உறுப்பு.

**swimm'ingly**, *adv.* எளிதாக, தங்குதடையின்றி, விரைவாக.

**swimm'ingness**, *n.* நீந்துநிலை ; மிதப்புநிலை ; கண்ணின் நிறைந்த நிலை.

**swimm'ing-pond, swimm'ing-pool**, *n.* நீச்சல் குளம்.

**swimm'ing-stone**, *n.* கடற்பஞ்சு போன்ற மென்படிகக் கல் வகை.

**swimm'y**, *a.* தலைசுற்றுகிற.

**swin'dle**, *n.* மோசடி, ஏமாற்று, சூழ்ச்சி ; ஏமாற்று திட்டம்; ஏமாற்றுபொருள், போலியாகக் காட்டப்படும் பொருள் ; போலி ஆள் ; *v.* ஏமாற்று, மோசடி செய்; ஏமாற்றிப் பணம் பறி.

**swin'dler**, *n.* மோசடியர், ஏமாற்றுக்காரர், சூழ்ச்சிக்காரர்.

**swine**, *n.* பன்றி ; பன்றி போன்றவர் ; பேராசை பிடித்தவர் ; முரடர் ; கீழானவர் ; *pl.* **swine.**

**swine'-bread**, *n.* உணவைப் பக்குவப்படுத்தப் பயன்படும் காளான் வகை.

**swine'-cress**, *n.* சிலுவை வடிவ இலையுடைய கரம்புநிலச் செடிவகை.

**swine'fever**, *n.* பன்றி நுரையீரல் தொத்துநோய் வகை.

**swine'-fish**, *n.* பெருந்தீனிக் கடல்மீன் வகை.

**swine'-herd**, *n.* கேழலர், பன்றி மேய்ப்பவர்.

**swine'-plague**, *n.* பன்றி நுரையீரல் தொத்துநோய்.

**swine'-pox**, *n.* சின்னம்மை நோய் வகை.

**swin'ery**, *n.* பன்றித் தொகுதி ; பன்றிப் பண்ணை, பன்றி வளர்ப்பிடம் ; பன்றி இயல்பு ; பேராசை ; கீழ்மை ; சிற்றின்பப் பற்று ; முரட்டுத்தனம் ; அழுக்கடைவு.

**swine's'-snout**, *n.* வாளிலைச் செடிவகை.

**swine'-stone**, *n.* உரைத்தால் நாறும் சுண்ணக் கல்வகை.

**swine's-succ'ory**, *n.* சூரியகாந்தியின நீலமலர்ச் செடிவகை.

**swine'-sty**, *n.* பன்றிப் பட்டி.

**swing**, *n.* ஊஞ்சல் ; ஊஞ்சலாட்டம் ; ஊசலாட்டம் ; முன்பின் அசைவாட்டம் ; தொய்வாட்டம் ; அலையாட்டம், அலைபாய்வு, விரை அலைவியக்கம் ; வீச்சு, வீச்சியக்கம் ; ஊசலாட்ட வீச்செல்லை ; நடைநேரக் கைவீச்சு; செயல் வீச்செல்லை, இயற்கையான செயலின் தோற்ற வளர்ச்சி தளர்ச்சி ஓய்வெல்லை ; இயல் வீச்செல்லை, இயல்பான எழுச்சி தளர்ச்சியெல்லை ; தனி அலைபாய் ஓய்வு எல்லை ; செயல் பொழுதெல்லை, செயல் எல்லைநேரம் ; தாராள வீச்சாட்டம், ஏராளச் செயற்சலுகை ; பந்துமட்டையின் வீச்செல்லை; ஆட்சிக் கைப்பிடி ; செயலாட்சி ஆற்றல், தூண்டுதல் ; வேக வீச்சுச் சந்தம், வேக வீச்சியக்க இசை ; இழுப்பிசையியக்கம் ; ஏராள உள்ளலை வேறுபாடுகளையுடைய சிக்கல் வாய்ந்த இழுப்பிசை ; தாள லய வசைக்கூத்து ; ஊசல் தொங்கிருக்கை ; ஊசல் தொங்குவண்டி ; *v.* ஊஞ்சலாட்டு ; ஊஞ்சலாடு ; ஊஞ்சலாடி மகிழ் ; ஊசல்போலத் தாராளமாக அசைவதற்கேற்பத் தொங்கவிடு ; ஊசலியாகத் தொங்கலுறு ; ஊசலாட்டு ; ஊசலாட்ட இயக்கந் தூண்டு ; ஊசலாடு ; தூக்கிலிடு ; தூக்கில் தொங்கு ; அலையாடு ; இங்கும் அங்கும் ஆடு ; முன்னும் பின்னுமாக அசைந்தாடு ; வீசி ஆடு, வீசிச்செல் ; வீசு, வீசியெறி ; வீசி இயக்கு; வீசி இயங்கு ; உருண்டோடு; சுழற்று ; சுழலு ; வழுவி ஒதுங்கு, விலகு ; ஆடி அசைந்து இயங்கு ; கைவீசி நட ; தாராளமாக ஆடி அசைந்துகொண்டு போ ; மணி வகையில் ஆடி ஒலி எழுப்பு ; அலையாட்டத்தால் செய்தி தெரிவி; ஊசலாட்டத்தால் அளவை காட்டு ; தொங்கு கம்பி மூலம் இடம் விட்டு இடம் பெயர்த்தனுப்பு ; செயற் கட்டுப்படுத்து ; கட்டுப்படுத்தி ஆட்கொள் ; இழுப்பிசை உண்டுபண்ணு ; இழுப்பிசை பயில்; இழுப்பிசையாகப் பயில் ; திசைகாட்டுங் கருவியைச் சோதிக்கும் வகையில் கப்பலைச் சுற்றித் திருப்பு ; கப்பல் வகையில் சுற்றித் திரும்பு ; (தொ.) in full swing, சுறுசுறுப்பாக; let it have its swing, ஊசலி போலஇயங்கித் தானாக நிற்கட்டும்; அதன் போக்கில் விடப்படட்டும் ; no room to swing a cat, மிகக் குறுகிய இடம் ; swing a hammock, ஏணையை ஆட்டு; swing bridge, இழுவைப் பாலம், கப்பல் போவதற்காக முழுதுமாகவோ-பகுதியாகவோ இழுத்துக்கொள்ளக்கூடிய பாலம் ; swing for it, தூக்கிடப்பெறு ; swing plough, சக்கரமற்ற கலப்பை ; swings and round-abouts, ஊசல் குடை இராட்டினம் ; the swing of the pendulum, மாறுபடும் இயல்பு, கட்சிகள் மாறிமாறிப் பதவிபெறும் நிலையற்ற இயல்பு.

**swing'-back**, *n.* பின்விளைவு, செயலெதிர் விளைவு; சாய்த்துச் சரிப்படுத்தும் நிழற்படக் கருவியின் பிற்பகுதி.

**swing'boat**, *n.* ஊசல் தொங்குவண்டி, சட்டத்திலிருந்து தொங்கவிடப்பட்டு இங்குமங்கும் ஆடும் படகு வடிவ ஊர்தி.

**swing'-door**, *n.* தொங்கற்கதவு, எந்த வழியும் திறக்கக் கூடிய அமைவுடைய கதவு.

**swinge**, *v.* பலமாக அடி, கடுமையாக அறை.

**swinge'ing**, *a.* மிகப்பெரிய ; அடிக்கிற ; மிதிக்கிற.

**swing'er**, *n.* ஊஞ்சலாடுபவர் ; ஊசலாடுபவர் ; ஊசலாடுவது; ஆறணைவுக் குதிரைப்பூட்டில் நடுவிணை; ஒருமுகப்படா இசைப் பதிவுத் தட்டு ; தசையில் கொளுவி வீச்செறி பந்து, அந்தரத்தில் திசைமாற விட்டெறிந்த பந்து.

**swing'-handle**, *n.* குழைபிடி, குழைபொருத்துடைய வளைவுக் கைப்பிடி.

**swing'ing**, *n.* ஊஞ்சலாட்டுதல்; ஊஞ்சலாடுதல்; ஊஞ்சலாட்டம் ; ஊசலாட்டுதல் ; ஊசலாடுதல் ; ஊசலாட்டம், அலையாட்டம் ; அசைவாட்டம் ; தொங்குதல் ; வானொலி அலையதிர்வு வேறுபாடு ; (பே-வ.) தூக்கில் தொங்குதல் ; ஊசித்தொங்கட்டம் ; *a.* ஊஞ்சலாட்டுகிற, ஊஞ்சலாடுகிற ; ஊசலாட்டுகிற; ஊசலாடுகிற ; ஊசலாட்டந் தூண்டுகிற ; அலையாடுகிற ; அலையாட்டமுடைய ; தொங்கலான ; தூக்கி எடுக்கக்கூடிய, மடியக்கூடிய ; ஆடி அசைகிற ; ஆடி இயக்குகிற ; வீசி நடக்கிற ; சுற்றித் திரும்புகிற ; சுற்றித் திருப்பக்கூடிய ; தங்குதடையற்று எளிதாக இயங்கக்கூடிய ; வீசுகிற ; வீச்சான.

**swing'ing-boom**, *n.* சிறு பாயை நீட்டிப்பிடிக்கும் கப்பல் உந்துகட்டை.

**swing'ing-post**, *n.* குடுமிக்கம்பம்.

**swin'gle**, *n.* சணல் சிக்குவாரி, சணலை அடித்து நாரைப் பிரித்தெடுக்குங் கருவி ; சாட்டை வார்த்தொங்கல் ; *v.* சணல் சிக்குவாரிகொண்டு துப்புரவு செய்.

**swing'le-hand**, *n.* சணல் சிக்குவாரி, சணலடித்து நார் பிரிக்குங் கருவி.

**swin'gle-tree**, *n.* நுகத்தடி ; ஏர்நுகம் ; சணல் சிக்குவாரிக் கட்டை.

**swing'ling**, *n.* சணல் சிக்குவாருதல்.

**swing'ling-stock**, *n.* சணல் சிக்குவாரி.

**swing'ling-tow**, *n.* சணற் சிக்கம்; சணலிற் செப்பமற்ற பகுதி.

**swing'-shelf**, *n.* தொங்கல் நிலையடுக்கு.

**swing'-stock**, *n.* சணல் சிக்குவாரிக் கட்டை, சணலடித்துச் சிக்கம் பிரிக்கும் மழுங்கல் மேல்முனையுடைய செங்குத்து மரக் கட்டை.

**swing'-tree**, *n.* ஏர்க்கால் நுகத்தடி.

**swin'ish**, *a.* பன்றிபோன்ற; கீழ்மைக் குணமுடைய; பேராசையுள்ள ; சிற்றின்பம் அவாவுகிற ; பெருந்தீனி தின்கிற ; முரடான.

**swipe**, *n.* சப்பையடி, மரப்பந்தாட்டத்திற் கவனமற்ற கடுமையான பந்தடி ; *v.* சப்பையடி அடி, கவனமின்றிக் கடுமையாகப் பந்தினை வீசியடி ; மட்டுமீறிக் குடி ; (இழி.) திருட்டுத்தனமாகப் பறித்தோடு.

**swipes**, *n. pl.* மண்டிக்குடிவகை, மட்ட வகை மது.

**swip'er**, *n.* பந்தாட்டத்தில் மட்ட அடி அடிப்பவர் ; மட்டுமீறிக் குடிப்பவர்.

**swip'ey,** *a.* மாத்தேறலால் போதையூட்டப்பட்ட.

**swirl,** *n.* நீர்ச்சுழிப்பு, நீர்ச் சுற்றோட்டம்; மீன் பாய்ச்சலால் ஏற்படும் நீர்ச்சுழற்சி; காற்றின் சுழலோட்டம்; *v.* சுழித்தோடு; நீர்சுழித்தோடு; காற்று வகையிற் சுழன்று வீசு; நீர் காற்று ஆகியவற்றின் வகையில் சுழலோட்டத்தில் அடித்துச்செல்.

**swish[1],** *n.* விசிப்பொலி, காற்றுமீது வெட்டி வீசும் ஒலி; கசையடிப்பொலி; கசையடி, பிரம்படி; *v.* விசிப்பொலி செய், பிரம்பு கொண்டு ஒலியுண்டாகும்படி வீசு; கசையிருல் வளி மீது வெட்டி ஒலியெழச்செய்; பிரம்பால் அடி, கசையடி கொடு; காற்றூடுருவிச் செல்லும் ஒலி செய்; காற்றூடொலியெழ விரைந்து பறந்து செல்; சறுக்குச் சறுக்கென வெட்டு.

**swish[2],** *a.* (பே-வ.) சுறுசுறுப்பான, அழகாக உடையணிந்த.

**Swiss,** *n.* ஸ்விட்சர்லாந்து நாட்டவர்; *a.* ஸ்விட்சர்லாந்து நாட்டைச் சார்ந்த; (தொ.) Swiss French, ஸ்விட்சர்லாந்திற் பேசப்படும் பிரஞ்சு மொழித் திரிபு வழக்கு; Swiss German, ஸ்விட்சர்லாந்திற் பேசப்படும் செர்மன் மொழித் திரிபு வழக்கு; Swiss guards, பிரஞ்சு நாட்டிற் பண்டு அமர்த்தப்பட்டிருந்த ஸ்விட்சர்லாந்து நாட்டு ஊதியப் படையாட்கள்; Swiss roll, பழப்பாகு உள்ளிட்டு வேகவைத்த சுருளப்பம்.

**switch,** *n.* மிலாறு; மென்கூர்ங் கழி; மெல்லொசிவான கம்பி; வெட்டுவீச்சு, வீச்சடி; விளாசல், கசையடி; கம்பியிணைவு; திருப்பன், இடுமுடி, கூந்தல் ஒப்பனைக்கான சவுரிமுடிக் கற்றை; கடைகோல், முட்டை பால் கலந்தடிக்குங் கருவி; மின்விசை மாற்றுக்குமிழ்; இருப்பூர்தி நெறிமாற்றமைவு; நெறிமாற்றமைவின் புடைபெயர் தண்டவாளப் பகுதி; திடீர் விலகல்; திடீர்த்திருப்பம், நெறிமாற்று, விசைமாற்று, இன மாற்று; சீட்டாட்ட வகைமாற்று; மின்விசைமாற்றுச் சட்டகை; தொலைபேசி நெறியிணைப்புப் பட்டிகை; *v.* விளாசி அடி; விளாசு; கசையின வீசியடி; உராசு, உரசிச் செல்; முட்டை பால் அடித்துக் கலக்கு; கத்தரித்து விடு; வெட்டித் திருப்பு; திடுமென விலகு; திடுமெனத் திருகு; திடுமெனப் பற்று; திடுமெனத் தட்டிப் பறி; திடுமென மாற்று; திடுமென மாறு; மின்விசைக்குமிழ் இயக்கு; நெறி மாற்றமைவு இயக்கு; உந்துகலத்தை விசைக்குமிழ் இயக்கி ஓட்டு; ஊர்தி நெறிமாற்றமைவு இயக்கு; திசை மாற்று; வகை மாற்று; சீட்டாட்டக் கேள்வி வகையில் மற்றோர் இனத்திற்கு மாற்று; கருத்தின் போக்கை மாற்று; எண்ணத்தை வேருெரு பொருளுக்கு மாற்று; பேச்சின் போக்கை மாற்று; தொலைபேசித் தொடர்பமைவை இயக்கு; ஆள்வகையில் தொலைபேசித் தொடர்பு ஏற்படச் செய்; (தொ.) switch off, மின்விசை தொடர்பறவு செய்; switch off from, தொலைபேசி வகையில் மற்றொருவரிடமிருந்து தொடர்பறவு செய்; switch on, மின்விசைத் தொடர்புபடுத்து; switch on to, ஆள்வகையில் தொலைபேசித் தொடர்புபடுத்து; switch out of, தட்டிப் பறி; switch over, நெறி மாற்று.

**switch'back,** *n.* மலையூர்தி, செங்குத்துச் சரிவுகளில் ஏறவோ இறங்கவோ ஆன வளைவு நெளிவு இருப்புப்பாதை; இறக்க விசை ஏற்ற ஊர்தி, விழாக் காட்சிகளிலும் மற்றும் அமைக்கப்பட்டு ஏற்ற இறக்கங்களில் இறங்கு விசையிலேயே இயங்கும் தொடர் ஊர்தி.

**switch'-bar,** *n.* இருப்புப்பாதை விசைக்குமிழ்ப் பகுதி; மின்னோட்ட விசைக்குமிழ்ப் பகுதி.

**switch'board,** *n.* மின்தொடர்பிணைப்புப் பலகை.

**switch'-lever,** *n.* மின்குமிழ் நெம்புகோல்.

**switch'-man,** *n.* இருப்பூர்தித்துறை நெறிமாற்றமைவாளர்.

**switch'-plant,** *n.* செதிளிலைச்செடி வகை.

**swith'er,** *n.* தயக்கம்; பதற்றம்; *v.* தயங்கு, குழம்பு, பரபரப்புறு.

**Swit'zer,** *n.* ஸ்விட்சர்லாந்து நாட்டவர்.

**swiv'el,** *n.* சுழல்மூட்டு, ஒன்றின்மீது ஒன்று சுழலும்படி அமைத்த பொருத்து; *v.* சுழல்மூட்டுமேல் திரும்பு, சுழல்மூட்டாகத் திருகு.

**swiv'el-eye,** *n.* ஓரக்கண்.

**swiv'el-eyed,** *a.* ஓரக்கண் வாய்ந்த.

**swiv'el-gun,** *n.* சுழலச்சுத் துப்பாக்கி.

**swiv'el-hook,** *n.* சுழல்மூட்டுக் கொக்கி.

**swizz'le,** *n.* கூட்டுவெறித் தேறல்; *v.* அளவுமீறிக் குடி.

**swizzle'-stick,** *n.* கூட்டுவெறித் தேறல் நுரையெழக் கலக்குங் கழி.

**swoll'en[1],** *a.* பொங்கிய; வீங்கிய; புடைத்த; பெரிதாக்கப்பட்ட; (தொ.) swollen estimates, புடைப்பு மதிப்பீடுகள்.

**swoll'en[2],** *v.* **swell** என்பதன் முற்றெச்ச வடிவங்களுள் ஒன்று.

**swoon,** *n.* மயக்கம், மூர்ச்சை; *v.* மயக்கமடை; இசை வகையில் படிப்படியாக எழுச்சி குறைந்து தேய்வுறு.

**swoop,** *n.* இருஞ்சுதல், பருந்துப் பாய்ச்சல், வன்பறவை வகையில் இரைநாடிக் கீழ்நோக்கிய திடீர்ப்பாய்ச்சல்; திடீர்ப் பாய்வுத் தாக்குதல்; திடீர்த் தட்டிப்பறிப்புக் கொள்ளை, பல்திரள் பொருளும் திடுமென ஒருங்கு தட்டிக்கொண்டு போகுஞ் செயல்; *v.* இருஞ்சு, கழுகுபோல் கீழ்நோக்கி இரை மீது பாய்; மேல்வந்து பாய்; நெடுந்தொலைவிலிருந்து பாய்ந்து வந்து திடீர்த்தாக்குதல் செய்; கொத்தாகத் தட்டிப்பறி.

**swop,** *n.* பண்டமாற்று, பொருள்வகை மாற்று.

**sword,** *n.* வாள்; இருகூர்வாள்; குத்துவாள்; உடைவாள்; துப்பாக்கிமுனைக் கத்தி; வாள்போன்ற கருவி, வாட்பட்டை; வாள்மீன் அலகு; பேராற்றல்; வல்லமையாற்றல்; படையாற்றல்; போர்; வாளாற்றல் தீர்வு; வாளழிவு; போரழிவு; வாளால் மாள்வு; போரால் மாள்வு; கடுநீதிப் பண்பு; பழிக்குப்பழிக் கொள்கை; ஆட்சிவலிமைப் பண்பு; வலிமை; வல்லமைப் பண்பு; (தொ.) cavalry sword, கொடுவாள், பட்டாக்கத்தி; court sword, dress sword, உடைவாள், சிறப்பு நாட்களில் அணியப்படுங் கத்தி; cross swords, measure swords, வாட்போரிற் போட்டியிடு, வல்லமைப் போட்டியில் முனை; draw the sword, போர் தொடங்கு, சண்டையில் இறங்கு; dwelling sword, small sword, குத்தலகு வாள்; fire and sword, அலைகொலை; put to the sword, கொல்லு; scutching sword, சணல் வாரி, சணலடித்து நார் பிரிக்குங் கருவி; sheathe the sword, போர் நிறுத்து, சண்டை நிறுத்து; the sword, போர்; போர்விளைவு; போர் முறைத் தீர்ப்பு; போர் வல்லமை; படையாட்சி; the sword of justice, நடுவர், நீதிபதி; the sword of the spirit, கடவுள் திருமொழி; throw one's sword into the scale, படைக்கலங்கள் கொண்டு உரிமை வலியுறுத்து.

**sword'-arm,** *n.* வலது கை, வாள் பிடிக்குங் கை.

**sword'-bearer,** *n.* வாள்மங்கலர், வாளேந்தி முன்செல்வோர்.

**sword'-belt,** *n.* உடைவாள் தொங்கல் வார்.

**sword'-bill,** *n.* நீள் அலகு இசைப்பறவை வகை.

**sword'-cane,** *n.* கத்தி உள்செருகலான கைத்தடி.

**sword'-cut,** *n.* வாள் வெட்டு, வாட்புண்; வாட்டழும்பு.

**sword'-dance,** *n.* வாளாட்டம், வாளோச்சு நடனம்; வாள் மேல் நடனம்.

**sword'-flighted,** *a.* வாட்சிறையுடைய, பறவை வகையில் தனிநிறம் வாய்ந்த வாள்போன்ற மடிந்த நிலைச்சிறகுகளை யுடைய.

**sword'-grass,** *n.* அரிவாட்புல் வகை.

**sword'-guard,** *n.* வாள்பிடியின் கைகாப்பு.

**sword'-hand,** *n.* வலக்கை.

**sword'-knot,** *n.* வாள் கைப்பிடிகுஞ்சம்.

**sword'-law,** *n.* படைத்துறை ஆட்சி நிலை.

**sword'like,** *n.* வாள் போன்ற; வாள் வடிவுடைய.

**sword'-lily,** *n.* கத்திவடிவ இலைகளையுடைய அல்லி வகை.

**sword'-play,** *n.* வாள் விளையாட்டு; வாட்போர்; சுளுகு.

**sword'-proof,** *a.* வாளுக்கு அருத; வாட்குத்தினைத் தாங்க வல்ல, வாள் காப்பான.

**sword'-rack**, *n.* வாள்மாட்டு சட்டம்.

**sword'sman**, *n.* வாள்வீரர், வாட்போர் வல்லுநர்.

**swords'manship**, *n.* வாட்போர்த்திறம்.

**sword'-tail**, *n.* நடு அமெரிக்க நன்னீர்மீன் வகை.

**swore**, *n.* swear என்பதன் இறந்த காலம்.

**sworn**[1], *a.* சான்று பகரப்பட்ட; கையெழுத்திட்டு உறுதி யளிக்கப்பட்ட; ஆணைக்குக் கட்டுப்பட்ட; உறுதிமொழி எடுத்துக்கொண்ட; ஆணையிட்டது போன்று உறுதியான; மாருத, பற்றுறுதி கொண்டுள்ள; (தொ.) sworn broker, தொழிலில் உண்மையாயிருக்க உறுதி எடுத்துக்கொண்ட தரகர்; sworn enemies, வெளிப்படை எதிரிகள்; தீவிரப் பகைவர்; sworn in, பதவியேற்பு வகையில் உறுதிமொழி எடுத்துக்கொண்டுள்ள.

**sworn**[2], *v.* swear என்பதன் முற்றெச்ச வடிவம்.

**swot**, *n.* (இழி.) கடும் பாடப்பயிற்சி, பொட்டை மனப் பாடம்; *v.* கடுமுயற்சி செய்து படி.

**swum**, *v.* swim என்பதன் முற்றெச்ச வடிவம்.

**swung**, *v.* swing என்பதன் இறந்தகால-முற்றெச்ச வடிவம்.

**Syb'arite**, *n.* சிபாரிஸ் (Sybaris) என்ற இத்தாலி நாட்டுப் பண்டைக் கிரேக்க குடியேற்ற நகரத்தார்; ஊதாரிச் செல வினர்; சொகுசு வாழ்வினர்.

**sybarit'ic**, *a.* சொகுசு வாழ்வுடைய.

**syb'aritism**, *n.* ஊதாரி வாழ்வுக் கொள்கை.

**syc'amine**, *n.* (விவி.) கரு முசுக்கட்டை மரம்.

**syc'amore**, *n.* அத்தியின மரவகை.

**syce**, *n.* வேலையாள்.

**sycee'**, *n.* சீன முத்திரை வெள்ளிக்கட்டி, சீன நாட்டில் நிறுத்து நாணயம்போல வழங்கப்பட்ட மாற்று முத்திரை யிடப்பட்ட வெள்ளிப்பாளம்.

**sychnocarp'ous**, *a.* (தாவ.) பலமுறை கனி தருகிற; வற்ரு வளந்தருகிற.

**sycon'ium**, *n.* (தாவ.) அத்தியினக் காய், பல்விதைகளாக முதிர்வுறும் முதிராச் சதைத்தோடு; *pl.* sycon'ia.

**syc'ophancy**, *n.* அண்டிப்பிழைப்பு, ஒட்டி வாழ்வு; கொத் தடிமைத்தனம்.

**syc'ophant**, *n.* அண்டிப் பிழைப்போர்; கெஞ்சிப் பிழைப்பவர்; கொத்தடிமையர்.

**sycophan'tic**, *a.* அண்டிப் பிழைக்கிற; ஒட்டி வாழ்கிற; கெஞ்சிப் பிழைக்கிற; அடிமைத்தன மிக்க.

**sycos'is**, *n.* கத்திப் பரு, தாடைத் தோல்நோய்.

**sy'enite**, *n.* களிமப் பாறை வகை.

**syll'abary**, *n.* அசையெழுத்து முறை, மொழிகளில் எழுத்துப் போலப் பயன்படும் அசைக் குறியீட்டு முறை.

**syllab'ic**, *a.* அசை சார்ந்த; அசைக்குரிய; அசை வடிவான; அசைபோன்ற; அசைமுறையான; முழு அசைக்குறியீடான; அசை ஒலியுடைய, அசை அசையாக ஒலிக்கிற.

**syllab'icate**, *v.* அசைப்படுத்து; அசை அசையாக அலகிடு; அசை அசையாகப் பிரி; அசை அசையாக ஒலி.

**syllabica'tion**, *n.* அசை அலகீடு; அசைப்பிரிவீடு; அசை யொலிப்பு.

**syllabifica'tion**, *n.* அசைப்பிரிவீடு; அசையலகு முறை.

**syllab'ify**, *v.* அசை ஆக்கு, அசை அசையாகப் பிரி, அசை அலகிடு.

**syll'abize**, *v.* அசையாகப் பிரி.

**syll'able**, *n.* அசை; *v.* அசை அசையாய் உச்சரி; தெளிவாய் உச்சரி; (செய்.) பெயர் குறி, சொற்குறியிடு.

**syll'abus**, *n.* பாடத்திட்டம்; வேலை நடைமுறைத் திட்டம்; சொற்பொழிவுத் தலைப்புக்குறிப்புத் தொகுதி; ரோமன் கத்தோலிக்க வழக்கில் போப்பாண்டவரால் கண்டிக்கப்பட்ட கொள்கை நடைமுறைத் தொகுதிப்பட்டியல்.

**syllep'sis**, *n.* ஒருவழித் தழுவல் மயக்க அணி; (இலக்.) ஒரு வழித் தழுவல் வழக்கு; *pl.* syllep'ses.

**syllep'tic**, *a.* ஒருவழித் தழுவல் மயக்க அணி சார்ந்த; (இலக்.) ஒருவழித் தழுவலான.

**syll'ogism**, *n.* (அள.) முக்கூற்று முடிவு; விதிதரு முறை வாதம்; நேரியல் வாத முறை; (தொ.) false syllogism, போலி முக்கூற்று முடிவு; பிழை முக்கூற்று முடிவு.

**syllogis'tic, syllogis'tical**, *a.* (அள.) முக்கூற்று முடிவு சார்ந்த; விதிதரு முறையான; நேரியல் வாத முறையான.

**syll'ogize**, *v.* முக்கூற்று முடிபு பயன்படுத்து; விதிதரு முறை பயன்படுத்து; வாதங்களை முக்கூற்று முறையில் செறிவி; விதியை முக்கூற்று முறைப்படி வருவி.

**sylph**, *n.* ஆரணங்கு; ஐம்பெரும்பூதம் சார்ந்த தெய்வதம்; நிலத்தெய்வதம்; நீர்த்தெய்வதம்; அழல்தெய்வதம்; இம் மென ஒலிக்கும் பறவை வகை.

**syl'van**, *a.* முல்லை சார்ந்த.

**syl'viculture**, *n.* காடு வளர்ப்பு.

**sym'bion, sym'boint**, *n.* ஒத்துடன் நிற்றி, ஒருங்கொத் தியை வாழ்வுத் திறமுடைய உயிர்களுள் ஒன்று

**symbios'is**, *n.* இணைவாழ்வுத் திறம், ஒத்தியை வாழ்வுப் பண்பு.

**symbiot'ic**, *a.* இணைதிற வாழ்வுத் திறமுடைய.

**symbiot'ically**, *adv.* இணைவாழ்வுத் திறம்பட; இணை வாழ்வுத் திறச் சார்பாக.

**sym'bol**, *n.* சின்னம், அடையாளம்; இடுகுறி, பொதுக் குறியீடு; நினைவுக்குறிப்புச் சின்னம்; பொதுநிலைக் குழூஉக் குறி; தனித்துறைக் குழூஉக் குறி; *v.* (அரு.) அடை யாளமாயிரு; குறித்துக் காட்டு.

**symbol'ic, symbol'ical**, *a.* குறியீடாயமைந்த; அடை யாளமான; உருவக வடிவான, குறியீட்டுருவான.

**sym'bolism**, *n.* குறியீட்டமர்வு.

**sym'bolize**, *v.* சின்னமாயமை; அடையாளமாயிரு; சங்கேத மாகத் தெரிவி, குறித்துக்காட்டு; குறியீட்டாற் குறிப்பிடு; குறியீடுகளால் தெரிவி; உருவகமாகக் குறிப்பிடு; உருவகச் சார்பு புகுத்து.

**symmet'ric, symmet'rical**, *a.* செவ்வொழுங்கான; செஞ் சீரான; செப்பமுடைய; (தாவ.) சரிசீரமைவுடைய, உறுப்புக் களை ஒத்த எண்ணிக்கையுடையனவாகக் கொண்ட.

**symmet'rically**, *adv.* ஒத்தியைவாக; செவ்வொழுங்காக.

**symm'etry**, *n.* செவ்வொழுங்கு; இருபுடை இயைவு; உறுப்பு ஒப்பியைவழகு; செப்பம், ஒத்திசைவு, செஞ்சீர்மை, ஒத்த கூறுகள் ஆக்கவல்ல அமைவு; (தாவ.) சரிசீரமைவு, உறுப் புக்கள் ஒத்த எண்ணிக்கையுடையனவாக அமையுந் தன்மை.

**sympal'mograph**, *n.* ஒலியலைப் பதிவுக்கருவி.

**sympathet'ic**, *n.* பரிவதிர்வுத் தொகுதி, ஒப்பியைவதிர்வு மண்டலம்; உடனதிர்வு நரம்பு; பைங்கணர், வசிய ஆற்ற லுக்கு எளிதில் ஆட்படத்தக்க தனி இயல்புடையவர்; *a.* ஒத்துணர்வுக்குரிய; ஒத்துணர்வுடைய; ஒத்துணர்வு காரண மான; ஒத்துணர்வு தூண்டக்கூடிய; பரிவிரக்கஞ் சார்ந்த; பரிவிரக்கமுடைய; பரிவிரக்கந் தூண்டுகிற; பரிவிரக்கங் காட்டுகிற; பரிவிரக்கங் குறித்த; பரிவிரக்கந் தெரிவிக்கிற; பரிவிரக்கம் உண்டுபண்ணுகிற; உணர்வலையால் தூண்டப் பட்ட; உணர்வதிர்வலை தூண்டுகிற; உணர்வதிர்வலை களைச் சூழப் பரவவிடுகிற; வாசகர் உளந் தொடுகிற; பரி வதிர்வு சார்ந்த; உடனதிர்வியைபுடைய; உடனதிர்வொலி யுடைய; (தொ.) sympathetic ink, மாய மை, வெப்பத் தொடர்பூட்டிலன்றிக் கட்புலனாகாத மை; sympathetic landscape, தொடர்புறவால் உணர்ச்சி தூண்டுங் காட்சிப் படம்; sympathetic nerve, உடனதிர்வலை நரம்பு; தண் டெலும்பு கடந்து செல்லும் இருநரம்புகளுள் ஒன்று; sympathetic pain, தொடர்புணர்ச்சியால் ஏற்படும் நோவு; sympathetic resonance, வளிநிலைத் தொடர்புறவு காரணமாக ஏற்படும் ஒலியதிர்வு; sympathetic sound, வளிநிலைத்

தொடர்புறவு காரணமாக ஏற்படும் ஒலி ; sympathetic strike, பரிவு வேலைநிறுத்தம், ஒத்துணர் வேலை நிறுத்தம் ; sympathetic string, வளிநிலைத்தொடர்பு காரணமாக ஒலி யதிர்வுக்கு உட்படுங் கயிறு.

**sym'pathize**, *v.* ஒத்துணர்வு காட்டு ; உடனுணர் ; பரிவிரக்கங்கொள் ; மற்றவர் மனப்பாங்கு உணர் ; உட னிரங்கு ; ஒத்தியைபுகொள் ; உடனதிர்வு கொள்.

**sym'pathy**, *n.* ஒத்துணர்வு; உணர்ச்சி ஒருமைப்பாடு ; ஒத்த உள்ளுணர்வீடுபாடு ; ஒத்துணர்வாற்றல், உடனுணர்வுத் திறம் ; பரிவு ; பரிவிரக்கம் ; உணர்வொத்தியைபு; கருத்து ஒப்பியைபு ; ஒத்தியைபதிர்வு ; உடனதிர்வுத் தொடர்பு.

**sympel'mous**, *a.* இணைமடக்கான, பறவை வகையில் கால் விரல்கள் ஒருங்குமடங்கும்படி விரல் நரம்பு நாண்கள் ஒருங் கிணைவு பெற்றுள்ள.

**sympet'alous**, *a.* மலர்வகையில் ஒருங்கிணை இதழ்களை யுடைய ; செடிவகையில் ஒருங்கிணை இதழ் மலரினையுடைய.

**sym'phile**, *n.* விருந்துயிர், எறும்பு-கறையான் சமுதாயத் தில் உடன்வாழும்படி வைத்து வளர்க்கப்பட்ட உயிர் ; பயில் வுயிர், எறும்பு-கரையான் சமுதாயத்தில் வைத்துப் பேணி வளர்க்கப்படும் உயிர்.

**sym'philism**, *n.* பயில்வுயிர்ப் பண்பு, எறும்பு-கறையான் சமுதாயத்தில் விருந்துயிராகவோ பயில்வுயிராகவோ பிற உயிர் வைத்து வளர்க்கப்படும் பண்பு.

**sym'philous**, *a.* பயில்வுயிர் இணைவுப் பண்புடைய.

**symphon'ious**, *a.* இசை வகையில் ஒத்திசைவான ; ஓசை வகையில் ஒத்தியைந்த.

**sym'phonist**, *n.* சுரமேளம் பாடுபவர் ; சுரமேள இசை இயற்றுநர்.

**sym'phony**, *n.* இயைவுகொள் பல்லியம் ; கூடுகொள் இன் னியம்.

**symphyll'ous**, *a.* கூட்டிலைவாய்ந்த, ஒருங்கியைந்த இலை களையுடைய.

**symphys'eal**, *a.* கூட்டிணைவளர்ச்சி சார்ந்த ; ஒருங்கிணைந்து வளர்கிற.

**symphyseot'omy**, *n.* கூட்டிணை வளர்ச்சி அறுவை.

**sym'physis**, *n.* கூட்டிணை வளர்ச்சி ; எலும்பொருங்கிணைவு; கூட்டுக் கணு.

**symphyt'ic**, *a.* கலந்திணைந்து வளர்ந்த.

**sympiesom'eter**, *n.* நீரோட்ட வேகமானி ; அழுத்தவளி யிணைவுப் பாரமானி ; நீர்மத்துடனிணைவாக அழுத்தமிக்க வளியும் அழுத்த அளவையாகப் பயன்படுத்தப்படும் வளி மண்டல அழுத்தமானி.

**sympod'ial**, *a.* கிளைத்தொடர் தண்டுருவான, கணுத்தோறுங் கிளையே தண்டாகத் தொடர்கிற.

**sympod'ially**, *adv.* கிளைத்தொடர் தண்டுருவாக, கணுத் தோறுங் கிளையே தண்டாகத் தொடரும் வகையில்.

**sympod'ium**, *n.* கிளைத்தொடர்த் தண்டு, கணுத்தோறுங் கிளையே தண்டாக அமையும் தண்டமைவு.

**sympos'iarch**, *n.* புணர்கூட்டாயர் ; கூட்டுலா விருந்து முதல்வர் ; பத்திரிகைக் கட்டுரையரங்கத் தொகுப்பு முதல்வர் ; பொதுமேடைக் கருத்தரங்கத் தலைவர்.

**sympo'siast**, *n.* கருத்தரங்கிற் பங்குபெறுவோர்.

**sympos'ium**, *n.* கருத்தரங்கு ; கருத்துக் கோவை ; கூட்டுலா விருந்து.

**symp'tom**, *n.* நோய்க்குறி ; தனிச்சிறப்புக்குறி ; (தொ.) objective symptoms, நோயாளிக்கு மட்டுமன்றிப் பிறர்க்குந் தெரியும் நோய்க்குறிகள் ; subjective symptoms, நோயா ளிக்குமட்டுந் தெரியும் நோய்க்குறிகள்.

**symptomat'ic**, *a.* நோய்க்குறி சார்ந்த ; தனிப்படக் குறித்துக் காட்டுகிற ; நேரறிகுறியான ; மேல்வருகை குறித்த ; மேற் படர் வளர்ச்சி குறித்துக்காட்டுகிற.

**symptomat'ics**, **symptomatol'ogy**, *n.* நோய்க்குறி ஆய்வியல் ; நோய்க்குறி நூல்.

**sympto'sis**, *n.* தேய்வு, மெலிவு.

**synaer'esis**, *n.* ஈருயிர் எழுத்துக்கள் ஒன்றுதல், ஐபோலாதல்.

**synaesthe'sia**, *n.* பிறிதிட உணர்வு, உறுத்திய இடத்தன்றிப் பிறிதிடம் ஊறுணர்வு ஏற்படுங் கோளாறு ; பிரிது நுகர் வுணர்வு, நுகர்ந்தவர் நுகர்வுப் பொருளை மாறுபட உணரும் உணர்வு.

**synago'gical**, *a.* யூத வழிபாட்டுத் திருக்கூட்டஞ் சார்ந்த ; யூதத் திருக்கோயிலுக்குரிய.

**syn'agogue**, *n.* யூதர் திருக்கோயில் ; யூதர் வழிபாட்டுத் திருக்கூட்டம் ; யூத சமயத் திருக்கூட்டங் கூடுமிடம்.

**synallagmat'ic**, *a* ஒருவர்க்கொருவர் கட்டாயமான, பரஸ் பரம் அனுசரிக்க வேண்டிய.

**synaloeph'a**, *n.* ஈற்றுயிர் வருமொழி முதலுயிரோடு ஒன்று தல்.

**synan'therous**, *a.* பூவிழைக் குழலியான, பூவிழைகள் சூலகம் சுற்றிய குழலாயிழைந்து பூந்துகட் பைகளை ஏந்திய.

**synan'thous**, *a.* மலர்ப்பொலிவுடைய, மலரும் இலைகளும் ஒருங்கே தோன்று நிலையுடைய

**synan'thy**, *n.* மலர்ப்பொலிவு.

**synaphe'ia, synaphei'a**, *n.* குளகத்தொடர்பு.

**syn'archy**, *n.* கூட்டு இறைமை.

**synarthros'is**, *n.* அசையா மூட்டுவாய்.

**syn'carp**, *n.* தொகைக்கனி, அத்திக்காய் போன்ற பல் காய் ஒருதோட்டுத் தொகுதி.

**syncarp'ous**, *a.* கனி வகையில் தொகையான ; தொகைக்கனி யினையுடைய ; அத்தியினஞ் சார்ந்த.

**synchondros'is**, *n.* குருத்தெலும்புப் பிணைப்பு.

**synchore'sis**, *n.* வாதமுறைச் சலுகை, ஊக்கர் ஒடுக்கம்.

**syn'chronal**, **synchron'ic**, **synchron'ical**, *a.* ஒரே காலத்தில் நிகழ்கிற, ஒரே காலத்தில் ஒருங்கு நிகழ்கிற.

**synch'ronism**, *n.* ஒருங்கு நிகழ்வு ; நிகழ்வொருமை ; ஒரே காலத்திற்குரிய நிகழ்ச்சி ; ஒரே கால நிகழ்ச்சிகளுள் ஒன்று ; வரலாற்றில் சமகால இணைவுக் காட்சித் திட்டம் ; பல்நிகழ்வுக் கூற்றிணைக் கதைக் காட்சி ; தொலைக்காட்சி - திரைப்படத் துறைகளில் ஒளி ஒலி ஒன்றிப்பு.

**synchroniza'tion**, *n.* ஒரேகால நிகழ்வு ; ஒருகணத் தொகை நிகழ்வு ; பல்நிகழ்வொருகண இசைவு.

**synch'ronize**, *v.* ஒரே காலத்ததாக நிகழ் ; ஒத்த காலத்தன வாகக் குறி ; மணிப்பொறிகளைச் சமகாலங்காட்டுவி ; காலக் கட்டளைப்படுத்து ; ஒத்த காலத்தவராகக் குறிப்பிடு.

**synchro'tron**, *n.* மின்மவிசைப் பெருக்கமூட்டப் பயன்படும் மின்காந்த விசை இணைவமைவு.

**syn'chysis**, *n.* தீப்பொறிக்கண்ணோய் ; சொற்குழப்பம்.

**synclas'tic**, *a.* முற்றிலும் உட்குழிவான.

**synclin'al**, *n.* (மண்.) மைவரை மடிவுப்படுகை ; *a.* (மண்.) மையச் சாய்வான, ஒருபுள்ளி நாடச் சாய்வுத் தளமாயுள்ள ; மைவரைச்சாய்வான, ஒரு கோட்டில் முற்றிலுஞ் சாய்வுத் தளமாயுள்ள.

**syn'cline**, *n.* (மண்.) மைவரை மடிவுப்படுகை.

**synclino'rium**, *n.* இடையுறழ்வுகளையுடைய பெரு மைவரை மடிவுப்படுகை.

**syn'copate**, *v.* இடைக்குறைப்படுத்து ; (இசை.) ஓசையில் இழுப்பிசையாக்கு, செயற்கையாக அழுத்தமாற்றிச் சந்தத் தைத் தற்காலிகமாக வேறுபடுத்து.

**sync'opated**, *a.* இடைக்குறுக்கமான.

**syncopa'tion**, *n.* (இலக்.) இடைக்குறைப்படுத்துதல்.

**sync'ope**, *n.* (இலக்.) இடைக்குறை ; இடையசைக்குறை ; சொல்லின் இடையெழுத்துக் குறைவடிவம் ; (மரு.) குருதி மயக்கம், குருதியழுத்தக் குறையால் ஏற்படும் உணர்விழப்பு ;

(இசை.) அழுத்தமாற்றச் சந்தத் திரிபு; (இசை.) குரலிணைவால் ஏற்படும் சுர இழைவு.

**syncop'ic, syncop'tic,** *a.* இடைக்குறை சார்ந்த; இடைக் குறுக்கம் உடைய.

**syn'cotyled'onous,** *a.* இரு கதுப்பிணைவான.

**syncre'tic,** *a.* சமரசஞ் சார்ந்த.

**syn'cretism,** *n.* சமரசப் பண்பு; சமயக் கிளைகளிடையே சமரச இணைப்பு; பல்சமய இணைப்புக் குளறுபடி.

**syn'cretist,** *n.* பொதுச்சமய முயற்சியாளர்.

**syncretis'tic,** *a.* பொதுச்சமய சமரச முயற்சிக்குரிய.

**syn'cretize,** *v.* ஒருமைப்படுத்த முயலு.

**sync'ro-mesh,** *n.* உந்துவிசை மாற்றமைவு, உந்து வண்டி களில் விசைமாற்றுப் பற்சக்கர இடை உராய்வமைவு; *a.* உந்துவிசை மாற்றமைவு சார்ந்த, பற்சக்கர விசைமாற்றுக்கு உதவும் வகையில் தற்காலிகச் சமவிசை பேணும் வகையில் இடைஉராய்வு அமைவுடைய.

**syncyt'ium,** *n.* பல கருவுள் உயிர்ம அணு, கருவுட்கள் பலப் பல அடங்கினும் ஒரே உயிர்மமா யமைந்து செயலாற்றும் ஊன்மத் திரள்; *pl.* syncy'tia.

**syndac'tyl, syndac'tylous,** *a.* இடைத்தோலால் ஒன்றுபட் டிணைந்த விரல்களையுடைய, வாத்தின் கால்விரல்கள் போன் றிணைந்த.

**syndac'tylism,** *n.* இடைத்தோல் விரலிணைவமைவு.

**syndesmog'raphy,** *n.* எலும்பிணைப்புத் தசைநாண் பற்றிய ஆய்வியல் விவர விரிவுரை.

**syndesmol'ogy,** *n.* எலும்பிணைப்புத் தசைநாண் ஆய்வு நூல்.

**syndesmos'is,** *n.* எலும்புத் தசைநாண் இணைப்பு.

**syndesmot'ic,** *a.* எலும்புத் தசைநாண் இணைப்புச் சார்ந்த.

**syndet'ic,** *a.* இணைப்பிடைச்சொல் சார்ந்த; இணைப்பிடைச் சொல்லைப் பயன்படுத்துகிற.

**syn'dic,** *n.* கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக மாமன்ற ஆட்சிக் குழுவினர்; மாநகராட்சிமன்ற உரிமைமுறைப் பேராள்; சுங்க உரிமைப் பேராள்; வணிகச் சங்க உரிமைப் பேராள்; குற்ற நடுவர்; மாநகராட்சிமன்ற முதல்வர்; பண்டைக் கிரேக்க நாட்டில் முறைவர், நடுவர், உரிமைத் தூதுவர்.

**syn'dical,** *a.* செயலுரிமைப் பேராளர் சார்ந்த.

**syn'dicalism,** *n.* தொழிற்சங்க ஆட்சி இயக்கம், வேலை நிறுத்த முதலிய நடைமுறைச் செயல்கள் மூலம் தொழிலாளரே உற்பத்தி யுரிமையைத் தம்பால் மாற்றி யமைத்துக்கொள்ளும் நோக்கமுடைய இயக்கம்.

**syn'dicate,** *n.* கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக மாமன்ற ஆட்சிக் குழு; வணிக மன்றக் கூட்டவை, பொதுநல நோக்குடன் அமைக்கப்பட்ட வணிக மன்றங்களின் கூட்டு; உரிமை விளம்பரக் குழு, இலக்கியப் படைப்புக்களின் உரிமைகளை வாங்கி ஒரே சமயத்தில் பத்திரிகைகளில் விளம்பரப்படுத்து வதற்கென அமைந்த குழு; குத்தகைக் குழு, வேட்டை-மீன் பிடிப்பு ஆகிய துறைகளில் உரிமைகளைக் குத்தகையாகப் பெற்றுக்கொள்ளும் குழு; *v.* ஆட்சிக்குழுவாக உருவாக்கு; உரிமைக்குழுவாக அமைவி; உரிமைக் குழுவாகச் செயலாற்று; ஆட்சிக்குழுவாகச் செயற்படு; குழுவாக நின்று உரிமை பெற முயலு.

**syndica'tion,** *n.* உரிமைக் குழு நிறுவுகை; உரிமைக் குழு அமைவு; ஆட்சிக் குழுவாகச் செயலாற்றுதல்; ஆட்சிக் குழு, உரிமைக் குழு.

**syndica'tor,** *n.* பொருட்கூட்டமைப்பின் சார்பிற் கொடுக்கல் வாங்கல் செய்பவர்.

**syn'drome,** *n.* நோய்க்குறி ஒத்திசைவு, ஒத்திசைவு நோய்க் குறித் தொகுதி.

**syne,** *adv.* இருந்து, வேளையிலிருந்து, காலந்தொட்டு.

**synec'doche,** *n.* (இலக்.) ஆகுபெயர், சினையாகு பெயர்; முதலாகு பெயர்.

**syner'esis,** *n.* உயிரெழுத்து ஒன்றுதல்.

**syn'esis,** *n.* (இலக்.) பொருட்கொண்டுகூட்டு, அன்வய அமைப்பு.

**syngen'esis,** *n.* இருபாலணுப் பொலிவுக் கருவாக்கம்.

**syn'gnathous,** *a.* மீன் வகையில் கூம்பாக ஒட்டியிணைந்த தாடைகளையுடைய.

**synizes'is,** *n.* (இலக்.) ஈர் உயிரொலி ஒன்றிய உச்சரிப்பு; விழித்திரை மூடாக்கு, பார்வையிழக்கும்படி விழித்திரை கவிதல்; இன அணுமக் குறைமம், கருவணுப் பிளவீட்டுப் பருவத்தில் நிறக்கீற்றொதுக்கம்

**syn'od,** *n.* குரு மன்றம், சமய குருமாரின் குழு; குருமார் கூட்டம்; மாவட்டக் குருமார் சபை; நாட்டுக் குருமார் பேரவை; உலகக் குருமார் மாநாடு; சமய ஆட்சிக் குழு முறைமன்றம்; சொற்போர்க் கூட்டம்; (வான்.) கோள்-விண்மீன் குழுமம்.

**synoe'cious,** *a.* தாவரங்களுள் ஆண் பெண் உறுப்புக்களை ஒருங்கே ஒரு கொத்தினுட் கொண்ட; முரண் தொடையான.

**syn'onym,** *n.* ஒரு பொருட் பன்மொழி; இணைபொருட் சொல்.

**synonym'ic,** *a.* ஒருபொருட் பன்மொழி சார்ந்த; இணைபொரு ளுடைய.

**synonym'ity,** *n.* ஒரே பொருளுடைமை; பொருளொப் புடைமை.

**synon'ymous,** *a.* ஒரே பொருள் உடைய, ஒருபொருட் பிற சொல்லான.

**synon'ymy,** *n.* ஒருபொருட் பல சொல் வழக்கு உத்தி, ஒரே பொருளுடைமை; அழுத்தம் பற்றி ஒருபொருட் பல சொல் வழங்கும் முறை; ஒரு பொருட் பலசொல் தொகுதி; இணை பொருட் சொல்லாய்வு; ஒரு பொருட் பன்மொழி ஆய்வு ஏடு.

**synop'sis,** *n.* பொருட் சுருக்கம்; பொழிப்பு மணிச்சுருக்கம்; செறிவு; *pl.* synop'ses.

**synop'tic, synop'tical,** *n.* வாய்மொழியார், விவிலிய ஏட் டின் ஆசிரியர் மாத்யூ-மார்க்-லியூக் ஆகியோருள் ஒருவர்; *a.* பொழிப்பான; பொதுச்சுருக்க விவரமான; (தொ.) synoptic chart, (வானிலை.) பொதுக் காலநிலை விவரப்படம்; synoptic gospels, அருட்டிரு ஜான் அல்லாத மற்றை ஆசிரியரது பொது விவிலியம்.

**synop'tist,** *n.* பொதுத்தொகுப்பாளர்; அருள்மொழி விவரம் தந்துள்ள அருட்டிரு மாத்யூ-மார்க்-லியூக் ஆகிய மூவருள் ஒருவர்.

**synosteol'ogy,** *n.* உடல் மூட்டிணைப்பு நூல்.

**synosteos'is, synostos'is,** *n.* எலும்புக்கூட்டொருமை.

**synov'ia,** *n.* உயவுநீர், எலும்பு மூட்டிணைப்புள் கசிவுறும் உயவுநீர்மம்.

**synov'ial,** *a.* உயவுநீர்மஞ் சார்ந்த; உயவான, இயக்கத் துக்கு வேண்டிய இளக்கந் தருகிற.

**syntac'tic, syntac'tical,** *a.* சொற்றொடரியலான, சொற் றொடர்பு சார்ந்த.

**syntag'ma,** *n.* முறைத்தொகுப்பு; *pl.* syntag'mata.

**syn'tax,** *n.* சொற்றொடரியல்.

**syntec'tic, syntec'tical,** *a.* இளகலான; உருகுகிற; மெலி வான.

**syntex'is,** *n.* இளகல்; உருகல்; மெலிதல்.

**syn'thesis,** *n.* கூட்டிணைப்பு; இணைப்பாக்கம்; பல்பொருட் சேர்க்கை; கூட்டு, கலவை; உறுப்பிணைவு; கூறிணைவாச கம்; (அள.) கருத்துக் கூட்டாக்கம்; ஆக்கக்கோள்; தொகுப்புக்கோள்; (வேதி.) செயற்கைச் சேர்மப்பொருள் ஆக்கம்; (மொழி., இலக்.) சொற்கூட்டிணைப்பாக்கம், முன் வைப்பின்றி உருபு விகுதிகளாலேயே சொல் திரிபாக்கமுறை; (அறு.) மீட்டிணைப்பு, அறுத்துப் பிரிக்கப்பட்ட பகுதிகளைச் சேர்த்தல்.

**syn'thesist,** *n.* தொகுப்பிணைவாளர்.

**syn'thesize,** *v.* சேர்த்திணை ; பல்பொருள் ஒன்றுசேர்த்து இணை ; இணைத்துருவாக்கு ; தொகுத்து நோக்கு.

**synthet'ic,** *a.* கூட்டிணைப்பு முறை சார்ந்த ; கூட்டிணைப்பா லான ; கூட்டிணைப்பிற்குரிய ; கூட்டிணைப்புட்கொண்ட ; கூட்டியிணைத்து உருவாக்கப்பட்ட ; பல்பொருளாக்கமான ; இணைப்பாக்கமான ; செயற்கைச் சேர்மமான ; தொகுத்துப் பார்க்கிற.

**synthet'ical,** *a.* இணைவிப்பான ; பல்பொருளாக்கமான ; கூட்டிணைப்பு முறை சார்ந்த ; தொகுப்பு நோக்குடைய.

**syn'thetist,** *n.* பொருட் கூட்டிணைப்பாளர் ; தொகுத்துக் காண்பவர்.

**syn'thetize,** *v.* தொகுத்துக் காண்.

**syn'thronus,** *n.* மாவட்டக் குருவின் பலிபீடப் பின் இருக்கை.

**syn'tonic,** *a.* சேணொலிக் கருவிகலத்தில் அதிர்வுகள் இயை கின்ற.

**syn'tony,** *n.* சேணொலிக் கருவிகலத்தில் அதிர்வுகளின் இசைவு.

**syph'er,** *v.* பலகை இழைத்திணை, பலகை வகையில் ஓரங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக அமையும்படி மேற்பரப்பைச் சரிசீராக இழைத்தமை.

**syph'er-joint,** *n.* இழைப்பிணைப்பு, பலகை வகையில் ஓரங் களை ஒன்றன்மேல் ஒன்றுக்கி மேற்பரப்பை இழைத்து ஏற் படுத்தும் இணைப்பு.

**syph'ilis,** *n.* கிரந்தி, மேகப் புண் ; (தொ.) primary syphilis, முதனிலை மேகப் புண், சில உறுப்புக்களைமட்டுந் தாக்குந் தொடக்கநிலை மேக நோய் ; secondary syphilis, துணைநிலை மேகப் புண், தோல் மென்றோலி முதலியவற்றையுந் தாக்கும் மேக நோய் ; tertiary syphilis, இறுதிநிலை மேகப் புண், எலும்பு-தசை-மூளை முதலியவற்றையுந் தாக்கும் மேக நோய்.

**Sy'riac,** *n.* பண்டைய சிரியா நாட்டு மொழி, மேலை அராமிய மொழி ; *a.* பண்டைய சிரியாநாட்டு மொழியிலுள்ள.

**Sy'rian,** *n.* சிரியா நாட்டவர் ; *a.* சிரியா நாட்டிற்குரிய.

**sy'ringe,** *n.* பீற்றுகுழல் ; விசைப்பீற்று மருந்தூசி ; தோட்ட விசைக் குத்து ஊசி ; *v.* பீற்றுகுழலால் நீரிறை ; நீர்பீற்று ; விசைப்பீற்று மருந்து குத்திச் செலுத்து ; தாவரத்திற்கு விசைப்பீற்று மருந்துநீர் குத்திச் செலுத்து ; நீர்த்தாரையுள் செலுத்தி அலம்பு ; (தொ.) hypodermic syringe, பீற்று மருந்தூசி.

**syrin'geal,** *a.* காது உட்குழாய் சார்ந்த.

**sy'ringes,** *n. pl.* syrinx, என்பதன் பன்மை வடிவங்களுள் ஒன்று.

**syringit'is,** *n.* காது உட்குழாயழற்சி நோய்.

**syringot'omy,** *n.* காது உட்குழல் அறுவை.

**sy'rinx,** *n.* நாணற்கீற்றுகளால் ஆன இசைக்கருவி வகை ; (தொல்.) எகிப்திய கல்லறைகளில் உள்ள ஒடுங்கிய கற் குடைவு வழி ; காது உட்குழாய், தொண்டையிலிருந்து காதுக்குக் காற்றுக் கொண்டுசெல்லும் நுண்குழல் ; பறவை களின் உள்தொண்டையிலுள்ள பாடும் உறுப்பு ; *pl.* sy'rinxes.

***sy'rtis,*** (ல.) *n.* புதைமணல், மணற் புதைகுழி ; *pl. syr'tes.*

**sy'rup,** *n.* இன்கொழுநீர், தேங்கூழ் ; மருந்தொடு கலந்த இன்தேம்பாகுநீர் ; கூழ்ப்பதநீர், செறி கரும்புச்சாறு ; வெல் லப்பாகு ; (தொ.) golden syrup, பாகு வகையின் வாணிகப் பெயர்.

**syssarcos'is,** *n.* எலும்பிடைத் தசைத்தொடர்பு.

**systal'tic,** *a.* விரிந்து சுருங்குகிற ; விரிந்து சுருங்கித் துடி துடிக்கிற.

**sys'tem,** *n.* முறை, ஒழுங்கு ; முறைமை, ஒழுங்குடைமை ; ஒழுங்குமுறை ; வகைமுறை ; வகுப்பு தொகுப்புமுறை ; அமைப்புமுறை ; செயல் ஒழுங்கமைதி முறை ; உடல் ; திட்டம் ; அமைப்பு ; விதிமுறைச் சட்ட அமைப்பு ; அமைப் பாதாரம் ; கட்டுக்கோப்பு முழுமைத்தொகுதி ; தொகுதி வட்டம் ; கோவை ; கோசம் ; மண்டலம் ; கோப்பு ; அண்டம் ; சேர்வை ; முழுநிறை வட்டம் ; பல்பெருக்கத் தொகுப்பு ; ஒருங்கியங்கும் கருவித் தொகுதி ; ஒருமுகப்பட்ட பல்கிளைப் பரப்பு ; ஒரே ஆக்கப் பண்புடைய கூறுகளின் முழுமொத்தம் ; தொடர்புடைய பல்பொருள் குவை ; ஒருசீர் ஆன வரிசை ; ஒரு பயனேக்கிய உறுப்புத் தொகை ; விளக்கக் கோட்பாட்டு வகை ; அறிவு விளக்கக் கோவை ; அறிவியல் கோட்பாட்டுத் தொகுதி ; சமயக்கொள்கைப் பரப்பு ; (மெய்.) விளக்கவகைக் கோட்பாடு ; (இயற்.) மணியுருப்படிவின் தனி அமைவுவகை ; (வான்.) அண்டம், ஒருங்கியங்கு கோளத் தொகுதி ; (இசை.) வரித்தொகுப்புக் குறிமுறை ; (மண்.) அடுக்குப் படுகைப் பரப்பு ; (இலக்.) கிரேக்கமொழி வழக்கில் வரிப் பாத் தொடர் கோவை ; (தொ.) digestive system, செரிமான கோசம் ; mountain system, மலையடுக்குத் தொகுதி ; muscular system, தசை மண்டலம் ; nervous system, நரம்பு மண்டலம் ; Ptolemaic system, டாலமி கால வானநூற் கொள்கை ; railway system, இருப்பூர்தித் தொகுதி ; இருப் பூர்திப் பெரு நெறி அமைப்பு ; river system, ஆற்றுத் தொகுதி, ஆறும் உடனுறுகளுஞ் சேர்ந்த பரப்பு ; solar system, ஞாயிற்று அண்டம், ஞாயிறும் அதன் சார்புச் சுற்றுக்கோளங் களும் அடங்கிய மண்டலம் ; system of government, ஆட்சி முறை ; system of philosophy, மெய்விளக்கக் கோட்பாட்டு முறை ; system of pulleys, கப்பிக்கோவை, ஒருங்கியங்கு கப்பித் தொடர் வரிசை ; the system, உடல் அமைப்பு.

**systemat'ic,** *a.* முறையான ; முறைப்படுத்தப்பட்ட ; திட்டப் படியான ; திட்டமிட்டுச் செய்யப்பட்ட ; இடைவிடாப் பழக்கம் ஆக்கப்பட்ட ; முழுநிறை முனைப்புடைய ; விட்டு விட்டு நிகழாத ; முழுமனம் ஊன்றிச் செய்த ; சிறிதும் இடைவிடாத.

**systemat'ically,** *adv.* முறையாக ; ஒழுங்காக ; முறை தவ றாமல் ; ஒழுங்கு குலையாமல் ; விடாத்தொடர் பழக்கமாக ; திட்டமிட்டு ; திட்டமிட்டபடி ; முழுநிறைவாக ; எதுவும் விட்டுவைக்காமல் ; முழுநிறை முனைப்புடன் ; முழுதும் மன மூன்றி.

**sys'tematism,** *n.* முறைமை.

**sys'tematize,** *v.* முறைப்படுத்து ; ஒழுங்குபடுத்து ; திட்ட முறையாக்கு ; இடையறாப் பழக்கப்படுத்து ; முழுநிறை வாக்கு.

**system'ic,** *a.* (உட.) உடலமைப்பு முழுதுஞ் சார்ந்த ; உடலின் ஓர் உறுப்பு மட்டிலுஞ் சாராத.

**sys'tole,** *n.* (உட.) நெஞ்சுப்பைச் சுருங்கியக்கம் ; குருதி நாளச் சுருங்கியக்கம்.

**systol'ic,** *a.* நெஞ்சுப்பைச் சுருங்கியக்கஞ் சார்ந்த.

**sys'tyle,** *a.* தூண் வகையில் நெருக்க அமைவுடைய.

**sys'tylous,** *a.* (தாவ.) ஒன்றுபட்ட சூலகங்களையுடைய.

**syz'ygy,** *n.* உவவுக்காலம் ; உவவுநிலை ; இரட்டையடி ; (வான்.) கோள் இணைவு நிலை ; கோள் எதிர்வு நிலை.

**T**, *n.* 'டி' என்னும் ஆங்கில எழுத்துவடிவம்; 'டி' என்னும் ஆங்கில எழுத்துவடிவான பொருள்; (தொ.) cross the T's, நுட்ப நுணுக்கங் கவனி; எடுத்துக் கொண்ட செய்தியை வற்புறுத்து; marked with a T, திருடன் என்று பதிவு செய்யப்பட்ட; to a T, துல்லியமாக.

**ta**, *n.* குழந்தை வழக்கில் நன்றிக்குறிப்பு.

**tab**, *n.* கீற்று; கீற்றுத் தொங்கல்; கந்தல் இழை; வார்; புதைமிதி வாரின் பூண்; தொங்க விடுவதற்கான முனை; தொப்பியின் காதருகான தொங்கல்; (படை.) பதவி உரிமைக் கழுத்துப்பட்டைச் சின்னம்; கணிப்புக் குறிப்பு; *v.* (பே-வ.) வரிசைப்படுத்து; அட்டவணையில் அமை; பதிவு செய்.

**tab'ard**, (வர.) *n.* முரட்டாடை, ஏழையர் அணியும் புற ஆடை; படைவீரர் கவசப் புற ஆடை; மன்னிலச்சினை பொறித்த கட்டியர் மேலங்கி.

**tab'aret**, *n.* நீர்வரைப் பட்டுக்கோடுகளிட்ட கருவிகல மூடு துணி வகை.

**tabasheer', tabashir'**, *n.* வேய்மணி, மூங்கில் கணுமூளையிலிருந்து மருந்துக்குப் பயன்படுத்தப்படும் மணி வகை.

**tabb'y**, *n.* நீர்மடிப் பட்டுத்துகில் வகை; கருங்கோட்டுப் பூனை வகை; விட்டில் வகை; வம்பளக்குங் கிழவி; சீமைக்காரை வகை; *v.* நீர்மடி வரையிடு, ஆடையில் அலையொத்த வடிவு படியச்செய்.

**tabb'y-cat**, *n.* பெண்பூனை; பேரிளம்பெண்; வம்படிமேடைப் பெண்.

**tabb'y-moth**, *n.* விட்டில் வகை.

**tabefac'tion**, *n.* சோகை, மிகுமெலிவு.

**tab'erdar**, *n.* ஆக்ஸ்போர்டு அரசியார் கல்லூரி மாணவர்.

**tab'ernacle**, *n.* கூடாரமனை, புடைபெயர் குடில்; குடம்பை, மனித உடல்; கோயிற் சாவடி; யூதர் அலைவுகாலங் குறித்த வழக்கில் திருக்கோயிற் கூடாரம்; வழிபாட்டுப் பாடம்; கடையுணுக் கொள்கலம்; (க-க.) புரைமாடம்; மேற்கட்டியிட்ட மாடக்குழி; மேற்கட்டியிட்ட உச்சி; உள்மடிப் பாய்மரம், பாலங்கட்கு அடியிற் செல்லும்போது தாழ்த்தற்குரிய இரு தூணிடைக் குடைகுழிவுடைய பாய்மரம்; *v.* தங்கிடங் கொடு; தங்கலுறு; (தொ.) Feast of Tabernacles, இலையுதிர்கால விழா, யூதர் வாழ்வின் உலாவியற் பருவ நினைவூட்டு விழாநாள்.

**tab'ernacle-work**, *n.* (க-க.) மாட வரிசை வேலைப்பாடு, சித்திர அமைப்புடைய கற்செதுக்கணி வேலைப்பாடு.

**tab'es**, *n.* (மரு.) சோகை, மிகுமெலிவு.

**tabes'cence**, *n.* உடல் வற்றியுலர்தல், உடல்மெலிவுக் கோளாறு.

**tabes'cent**, *a.* வற்றியுலர்ந்த, உடல் மெலிந்துணங்கிய.

**tabet'ic**, *n.* முள்ளந்தண்டு மெலிவுநோய், கைகால் விளங்காமை; *a.* முள்ளந்தண்டு மெலிவு நோயுற்ற, கைகால் விளங்காக் கோளாறுற்ற.

**tab'ic, tab'id**, *a.* உடல் மெலிந்துணங்கிய, உடல்மெலிவுக் கோளாறுடைய.

**tab'inet**, *n.* பட்டு-கம்பளித் துகில்.

**tab'lature**, *n.* மேசைச்சித்திரம்; சுவரோவியம்; இசைக்குறிமானம்.

**ta'ble**, *n.* மேசை; மடக்குமேசைப் பாதி; ஆட்டமேசை; சூதாட்டமேசை; பட்டறைமேசை; இயந்திரப் பழுது வேலைப்பாட்டு மேசை; உணவுமேசை; விருந்துமேசை; விருந்துப் பந்தி; பந்தி உணவளவு; பந்தி வரிசைமுறை உணவு; பந்தி உணவுநயம்; விருந்தினர் குழு; குழுமம், குழுத்தொகுதி; சமதள நிலம்; மேட்டுச் சமநிலம்; கல்லறை மேடை; கல்வெட்டிற்கான பட்டிகைக்கல்; மணிக்கல்லின் பட்டைமுகப்பு; இரு சமதள மணியுருப் பிழம்பு; அணிகுட்டை முகப்புவிளிம்பு; மரத்துண்டுச் சதுக்கம்; கற்பாளம்; தள அடுக்கு; கபாலத் தளமட்டம், மண்டையோட்டின் இருதளப் பரப்புக்களில் ஒன்று; சட்டப் பட்டிகை; சட்ட வகுப்பு; வகுப்புமுறை; தொகுதி; தொகுதி வரிசை; ஓவியச் சட்டப் பலகை; பலகைச்சட்ட ஓவியம்; (க-க.) தளக்கட்டடப்பகுதி; மணிவாசகம், மணிச்சுருக்க எழுத்துமூலம்; எண் குறிப்புச் செய்திப் பட்டிகை; (கண.) அளவைப்பட்டி; அளவை வரிசைப்பட்டி; பட்டியல்; பாடத்திட்டத் தொகுதி; பாட அட்டவணை; அட்டவணை; விளக்க அட்டவணை; *a.* மேசைக்குரிய; உணவுமேடைக்கான; மேசைபோன்ற; உணவு வேளை சார்ந்த; *v.* அட்டவணைப்படுத்து; சட்டமன்ற மேசை மீது வை; பண்டம் வை, உடனடி பணங்கொடு; விவாதத்திற்கு வை; உணவுமேடை வாய்ப்புச்செய்துகொடு; கட்டைகளைப் பொருந்தும்படி தொகுத்திணைத்து வை; (கப்.) பாய்களுக்கு ஓரமிட்டு வலிமைப்படுத்து; ஒதுக்கி வை; (தொ.) at table, மேசையில்; உண்ணும்போது; உணவு நேரத்தில்; உண்ணும் நிலையில்; lay on the table, சுணக்குவி; ஒத்திப்போடு; செயற்படாமல் வைத்திரு; be on the table, சுணக்கமடை; செயற்படாமற் கிட; நீடித்து ஒத்திப்போடப்பட்ட நிலையில் இரு; the tables of covenant, the tables of testimony, the tables of the law, the two tables, பத்துக் கட்டளைகள்; the twelve tables, கி.மு. 451-450-இல் வெளியிடப்பட்ட முதல் ரோமாபுரிச் சட்டங்கள்; turn the tables on, தலைகீழாக்கு, எதிர்முகமாகத் திருப்பி விடு; under the table, உண்டபின் குடித்து மேசையின்கீழ் உருண்டுகிடக்கும் நிலையில்.

**tab'leau**, *n.* காட்சி வண்ணப்படம், கண்காட்சி ஓவியப் பட்டி; வாய்பேசா ஆட்கூட்டரங்கு, செயலற்ற திடுநிலை; இக்கட்டுநிலை; பொருமுக எழினி, நாடகமேடையில் இரு திசைச் சந்திப்பு மூடுதிரை; *pl.* tab'leaux; *int.* இதோ பார் காட்சியை, அந்தோ! (தொ.) tableau curtains, பொருமுக எழினி; tableau vivant, பாவைபோன்ற உயிர்க்காட்சி.

**ta'ble-beer**, *n.* பொது உணவுத்தேறல் வகை.

**ta'ble-book**, *n.* நினைவுக்குறிப்பேடு; அழகுக்கு மேசைமேற் புத்தகம்.

**ta'ble-clamp**, *n.* மேசைப் பற்றிறுக்கி.

**ta'ble-cut**, *a.* மணிக்கல் வகையில் முகப்புத் தட்டையாகச் செதுக்கப்பட்ட.

***table d'hote***, (பிர.) *n.* உணவகத்தில் உண்டிப் பொதுமேசை.

**ta'ble-flap**, *n.* மேசை மடக்கு விளிம்பு.

**ta'ble-land**, *n.* மேட்டுச் சமவெளி.

**ta'ble-leaf**, *n.* புடைபெயர்க்கவல்ல மேசை விளிம்பு.

**ta'ble-money**, *n.* படை உயர்பணியாளர் விருந்துபடிச் செலவு; சங்க உணவுச்சாலை வரி.

**tab'let**, *n.* பட்டயத் தகடு, வரைபட்டிகை; எழுதுதற்குரிய தந்த ஏட்டு வில்லை; எழுத்துருச் செதுக்கப்பட்ட பலகைத் துண்டு; தகட்டுப்பாளம்; மாத்திரை, பொதி குளிகை.

**tab'le-talk**, *n.* அளவளாவு; மேசையுரையாடல்.

**ta'ble-tennis**, *n.* மேடை வரிப்பந்து; மேடை வரிப்பந்தாட்டம்.

**ta'ble-tomb**, *n.* ரோமானியரின் தட்டை உச்சிக்கல்லறை.

**tab'lets**, *n. pl.* வரைப்பட்டித் தொகுதி.

**ta'ble-ware**, *n.* மேசைத் தட்டுமுட்டுக் கலம்.

**ta'ble-water**, *n.* குடிக்க நீர்.

***tablier***, (பிர.) *n.* மகளிர் சிறு தூசாடை; மகளிர் முன்றானை.

**tab'loid**, *n.* மாத்திரை; செய்திச் சுருக்கம்; சுருக்கச் செய்தித் திரட்டு; *a.* செய்தித் திரட்டான, சுருக்க முறையான; (தொ.) tabloid journalism, செய்தித் திரட்டுமுறைப் பத்திரிகை.

**taboo'**, *n.* தடைக்கட்டு; சமூகக்கட்டு; தடைவிலக்கு; தள்ளி வைப்பு; தொடக்கூடாப் புனிதப்பொருள்; தொடாப்புனிதர்; *a.* தடைக்கட்டான; ஒதுக்கிவைக்கப்பட்ட; தொடாப் புனிதமான; *v.* விலக்கி வை; ஒதுக்கி வை; சமூகக் கட்டுச்செய்; தடைக்கு உட்படுத்து.

**tabooed'**, *a.* விலக்கப்பட்ட ; தடைக்கட்டுச் செய்யப்பட்ட ; ஒதுக்கி வைக்கப்பட்ட.

**tab'or**, *n.* பணவை, சிறு முரசு.

**tab'ouret**, *n.* குறுமணை ; துன்னல்வேலைச் சட்டம்.

**tabu'**, *n., a., v.*=taboo.

**tab'ula**, (ல.) *n.* (உள்.) தட்டைத் திண்ணெலும்புப் பகுதி ; *pl.* *tab'ulae* ; (தொ.) *tabula ras'a*, எழுத்தழிக்கப் பட்ட எலும்புப்பட்டிகை, எழுத்திலாப்பட்டிகை ; தனி முற் கருத்தற்றதாகக் கற்பிக்கப்படுங் குழந்தை உள்ளம்.

**tab'ular**, *a.* மேசைபோல் தட்டையான ; மெல்லடையடுக் கான ; பட்டியல் வடிவான ; பத்திகளாக ஒழுங்குபடுத்தப் பட்ட ; (தொ.) tabular difference, கணக்குப் பட்டியல் களில் அடுக்குமூல வேறுபாடு ; tabular form, அட்டவணை வடிவம் ; tabular statement, அட்டவணைவடிவ அறிக்கை ; tabular values, அட்டவணைப்படுத்திக் கண்ட மதிப்பளவைக் கூறுகள்.

**tab'ulate**, *a.* தட்டைப் பரப்புடைய ; மெல்லிய தடுக்கடுக் கான ; *v.* பட்டியற்படுத்து ; தட்டைப்பரப்புக்கொடு.

**tabula'tion**, *n.* பட்டியற்படுத்துதல் ; பட்டியல் வடிவம் ; அட்டவணை.

**tab'ulator**, *n.* பட்டியற்படுத்துபவர் ; பட்டியற்படுத்துவது, பட்டியற்படுத்துங் கருவி.

**tac'amahac**, *n.* மரப்பிசின் வகை ; மணப்பிசின் வகை.

**tac'-au-tac'**, *n.* சிலம்பத் தட்டுமறிப்பு ; வாட்போரில் விரை தாக்குத் தடைகாப்பு நடவடிக்கை ; விரைதாக்கெதிர்த்தாக்கு.

*ta'ce*, (ல.) *v.* வாயை மூடு, பேசாமலிரு ; (தொ.) *tace is Latin for a candle*, பேசாமலிரு என்னுங் குறிப்பு ; ''முடித்துவிடு'', ''திரைபோடு''.

*ta'cet*, (ல.) *v.* (இசை.) நிறுத்துக ; பாட்டு நிற்கட்டும் ; மேளம் நிறுத்து.

**tach, tache**, *n.* (விவி.) தொடரில் ஒரு கண்ணி, இடை யிணைப்புக் கொளுவி.

**tachom'eter**, *n.* விசைமானி.

**tachom'etry**, *n.* விசைமான முறை, விரைவுவீத அளவு முறைமை.

**tachycard'ia**, *n.* (மரு.) இதயத் துடிதுடிப்புக் கோளாறு.

**tachygraph'ic, tachygraph'ical**, *a.* பண்டைக் கிரேக்க ரோமரின் சுருக்கெழுத்துமுறை சார்ந்த.

**tachyg'raphy**, *n.* பண்டைக் கிரேக்க ரோமரின் சுருக் கெழுத்து முறை.

**tach'ylyte**, *n.* பளிங்குபோன்ற கந்தகப்பாறை வகை.

**tachylyt'ic**, *a.* பளிக்குக் கந்தக இயலான.

**tachym'eter**, *n.* நில அளவாய்வாரின் விரை இடக் குறிப் பெடுப்புக் கருவி.

**ta'cit**, *a.* வாய்விட்டுச் சொல்லாத ; மௌனமான.

**ta'citly**, *adv.* வாய் பேசாமல், குறிப்பறிந்து.

**ta'citness**, *n.* சொல்லாடாக் குறிப்பு.

**ta'citurn**, *a.* சொற்செட்டான ; மிகுதியாகப் பேசாத.

**taciturn'ity**, *n.* சொற்செட்டு ; சொல்லாடாமை.

**tack**, *n.* பொருத்தாணி, கம்பள முதலியன குத்திவைக்குந் தட்டைத்தலைக் கொக்கி ; நீள் ஒட்டுத்தையல் ; தையல் ஒட்டுத் துண்டு ; (கப்.) பாய்மூலைத் தளைக்கயிறு ; (கப்.) தளைக் கயிற்றுப் பாய்மூலை ; (கப்.) ஒட்டுத் தளைப்பு, பாய்மூலைத் தளைக்கட்டு ; (கப்.) பாய் இழுப்புச் சாய்வுநிலை ; (கப்.) தற் காலச் சிறு திசைமாற்றம் ; (கப்.) கோணல் மாணலான போக்கின் ஒரு சாய்வு வெட்டிழுப்பு ; சிறு பிறழ்வு, சிறு கொள்கை மாற்றம் ; நடைமுறைப் பிறழ்வு, செயலாட்சி முறையில் சிறு மாற்றம் ; பசையொட்டு, வண்ணச் சாய ஒட்டுப் பசைப்பு ; உணவு, தீற்றி ; *v.* கம்பளம் முதலிய வற்றைப் பொருத்தாணியால் பொருத்தி வை ; நீள் ஒட்டத் தையலிடு ; ஒட்ட வை ; மெல்ல இணை, மெல்லிணைப்புச் செய் ; சேர்த்துக் கொள், கைப்பற்றி மெல்லத் தனதாக்கிக் கொள் ; மெல்லத் தன்னுரிமைப்படுத்திக் கொள் ; (கப்.) பாய் சிறிது பெயர்த்திழு ; பாய் திருப்பிக் கப்பல்நெறி மாற்றஞ் செய் ; (கப்.) செல்திசையை மாற்று ; நிலைமாற்று ; கொள்கை மாற்று ; நெறி மாற்று ; நடத்தை மாற்று ; சாய்த்துத் திருப்பு ; வளைந்து வளைந்து செல் ; (தொ.) hard tack, மாச் சில்லு ; soft tack, மெல்லுண்டி, ரொட்டி.

**tack'-driver**, *n.* பொருத்துளி, ஆணிகளைத் தானே வைத்து உள்ளிறுக்குங் கருவி.

**tack'-hammer**, *n.* பொருத்து சுத்தி.

**tack'ing**, *n.* பொருத்தாணி அறைவு ; ஒட்டுத் தையலீடு ; கைப்பற்றல் ; உரிமை கொள்ளல் ; (சட்.) பின்னடைமான முன்னுரிமை, பண மசோதாப் பின்னொட்டு வாசகம், மேலவை ஏற்புக்கான பண மசோதாவின் பின்னிணைப்பு விளக்கம் ; ஒட்டிணைப்பு ; பின்னொட்டு ; நெறி திருப்புதல் ; வெட்டி வெட்டிச் செல்லல் ; வளைந்து வளைந்து செல்லல்.

**tac'kle**, *n.* கப்பற்பாய் இழுப்புக் கருவிகலம் ; கயிறு கப்பி கலன் ; மீன்பிடி கருவிகலன், உருளை நெம்புகருவிகலன் ; பந்தாட்டத்தில் தடுப்புப் பற்றிப் பிடிப்பு ; ஆட்டக் கருவி கலன் ; தொழிற் கருவிகலன் ; முயற்சிக் கருவிகல அமைவு ; *v.* பற்று ; பிடி ; சமாளி ; ஊக்கத்துடன் முயற்சிசெய் ; எதிர்த்துப் போராடு ; உதைபந்தாட்ட வகையில் ஆட்டக் காரனைத் தடுத்து நிறுத்து.

**tac'kle-block**, *n.* கயிறுருள் கப்பி.

**tac'kle-fall**, *n.* கப்பி இணைகயிறு.

**tact**, *n.* விரகு, சாமர்த்தியம் ; (இசை.) தாளம், கைத்தாள இலயக்குறிப்பு.

**tact'ful**, *a.* விறல் நிறைந்த, சாமர்த்தியமான.

**tac'tic** [1], *n.* போரணி நடைமுறைத் திட்டம் ; போர்த்துறை நடைமுறைச் செய்தி ; சூழ்ச்சித்திறமுடைய செயல்முறை.

**tac'tic** [2], *a.*=tactical.

**tac'tical**, *a.* போர்த்திறஞ் சார்ந்த, படையாட்சித்திறஞ் சார்ந்த ; குண்டுவீச்சு வகையில் நிலநீர்ப் போர்த்துறை நடவடிக்கைகளுக்குத் துணையாதரவான ; செயல்திறத் திட்டம் வாய்ந்த ; திறமார்ந்த திட்டமிட்டுச் செய்யப்பட்ட ; திறமார்ந்த திட்டமுடைய ; ஒழுங்கு சார்ந்த, வகுப்பு முறை சார்ந்த.

**tacti'cian**, *n.* போர்த்துறை ஆட்சித்திற வல்லுநர் ; போரணிச் செயல் திற வல்லுநர் ; படையாட்சித் திறலாளர்.

**tac'tics**, *n.* போர்த்திற ஆட்சி, படையணித்திறம், போர்க்கள அணியமைப்புத்திறம் ; படைத்திறச் சூழ்ச்சிமுறைகள் ; சூழ்ச்சிமுறை, தந்திரோபாயம்.

**tac'tile**, *a.* தொட்டறியக்கூடிய ; ஊறுணர்வுப்புலஞ் சார்ந்த ; ஊறுணர்வால் உணரப்பட்ட ; புலஞ்சென்று தொடுகிற ; ஊறுணர்ச்சிக் குறிப்பு வாய்ந்த, தொடுவதுபோன்ற உணர்ச்சி தருகிற ; திட்ட உணர்வு தருகிற ; வண்ணச் சாய வகையில் திண்மையுணர்வூட்டுகிற ; வண்ணச்சாயக் கலைத்துறையில் திண்மையுணர்வூட்டுமுறை சார்ந்த.

**tac'tilist**, *n.* உற்றறி ஓவியர்.

**tactil'ity**, *n.* தொடும்நிலை ; தொடும்நிலையுணர்வு.

**tac'tism**, *n.* (உயி.) தூண்டுதலுக்கேற்ற இயக்கம்.

**tac'tless**, *n.* நயத்திறமற்ற, செயல்திற நயமற்ற.

**tac'tual**, *a.* ஊறுணர்வு சார்ந்த ; ஊறுணர்வால் பிறப்பிக்கப் படுகிற.

**tactual'ity**, *n.* தொடுமுணர்வுநிலை ; தொடும்நிலை.

**tad'pole**, *n.* தலைப்பிரட்டை, தவளை தேரை போன்றவற்றின் வாற்பிழுக்கைவடிவப் புனிற்றிள நிலையுயிர்.

*taed'ium vit'ae*, (ல.) *n.* (மரு.) வாழ்க்கை வெறுப்புணர்ச்சி, தற்கொலை புரியத் தூண்டும் வாழ்க்கை வெறுப்பு.

**tael**, *n.* சீன வெள்ளி ; சீன எடை அலகு.

**taen'ia**, *n.* (க-க.) கிரேக்க சிற்ப 'டோரிக்' வகை மரபின் தூண் முகட்டுறுப்புப் பட்டை ; சுருள் கட்டு ; குடற்புழு ; கிரேக்க ரோமர் வழக்கில் தலைமயிர்க் கச்சை ; தலைப்பட்டி ; (உள்.) மூளையின் இழைக்கச்சைபோன்ற பகுதி; *pl.* taen'iae.

**taen'ioid**, *a.* தலைப்பிரட்டை போன்ற வடிவுடைய ; குடற்புழு போன்ற.

**taff'erel**, *n.* கப்பல் பின்புறக் கைப்பிடிக் கம்பியழி ; கப்பல் பின்புற மேல்பகுதி.

**taff'eta**, *n.* பட்டுத்துணி வகை.

**taff'rail**, *n.* கப்பல் பின்புறக் கைப்பிடிக் கம்பியழி.

**Taff'y**[1], *n.* (பே-வ.) வெல்ஷ் நாட்டவர்.

**taff'y**[2], *n.*=toffee.

**taf'ia**, *n.* பாகிலிருந்து இறக்கிய மதுவகை.

**tag**, *n.* முடியிழை ; கந்தல் நுனி ; தொங்கல் கந்தைக் கீற்று ; ஒட்டுச்சீட்டு ; பம்பைமுடி ; பறட்டை மயிர்க்கற்றை ; கம்பிளியின் தொங்கிழை ; கூளம் ; வால்நுனி ; இழைக்கச்சைப் பூண் ; புதைமிதிப் புறக் கொளுவி ; முகவரித் தொங்கல் சீட்டு ; கதையின் இறுதி நீதிவாசகம் ; அரங்கமேடை இறுதிப் பேச்சு ; பாட்டின் பல்லவி ; பஞ்சடைந்த மேற்கோளுரை ; கேட்டுக் கேட்டுச் சலித்த சொற்றொடர் ; சலித்துப்போன சொல்லடுக்கு ; தொட்டு விளையாட்டு, ஓடிப்பிடிப்பு விளையாட்டு ; *v.* இழைக்கச்சைக்குப் பூண் பொருத்து ; ஒட்டிழை சேர் ; கம்பளிக் கந்தல் சிலும்பல்களைக் கத்தரி ; பின் ஒட்டு இணை ; இலக்கியப் படைப்பு வகையில் பின்னுரை இணை ; பல்லவி இணை ; எதுகை மோனை இணை ; எதுகை மோனை இயைபுகள் தொடு ; பஞ்சடைந்த மேற்கோள்கள் இணை ; சலித்துப்போன சொல்லடுக்கு இணை ; பின்னொட்டிச் செல் ; அணுக்கமாகப் பின்பற்றி நட ; விடாது பின்பற்று ; ஓடிப்பிடிப்பு விளையாட்டில் பின்பற்றித் தொட்டுவிடு.

**taget'es**, *n.* சாமந்தியின மலர்ச்செடி வகை.

**tagg'er**, *n.* ஓடிப்பிடிப்பு ஆட்டத்தில் ஓடிப்பிடிப்பவர் ; பின்னொட்டுபவர் ; பின்னிணைப்பவர் ; பூண்தகடு, மெல்லிய இருப்புத் தகடு ; ஈயப் பூச்சுத் தகடு.

**tag'-rag**, *n.* குப்பை கூளம் ; இழிமக்கள்.

**tag'-sore**, *n.* செம்மறியாட்டின் பருநோய் வகை.

**tag'tail**, *n.* புழுவகை ; அண்டிப் பிழைப்பவன்.

**tahsil'**, (இ., அரா.) *n.* வரித் தண்டல் வட்டம், தாசில்தார் ஆட்சிப்பகுதி.

**tahsil'dar**, (இ., அரா.) *n.* தாசில்தார், வட்டகைத் தண்டலர்.

**tai'ga**, *n.* ஊசியிலைப் புதர்க்காடு.

**tail**, *n.* வால் ; வால் போன்ற பொருள் ; நீண்டொடுங்கிய பொருள் ; நீண்டொடுங்கிய இடம் ; வால் போன்ற பகுதி ; நீள் இழைக்கூறு ; வாற்பகுதி ; தும்பு ; பின்பகுதி ; பின்புறம் ; பின்வருகூறு ; இளைஞர் முற்கால மேலங்கி வகை ; தாளின் அடிப்புறம் ; சடைப்பின்னல் ; பூம்புறம், நாணயத்தின் தலையல்லா மறுபுறம் ; பட்டாம் பூச்சி இறகுப் பின்கூறு ; பறவை பிட்ட இறகு ; ஒட்டின் புறநுனி ; கட்டுமானக் கல்லின் உள் நுனி ; காற்றாடி வாற்கூறு ; வால்மீனின் பின்பகுதி ; ஊர்வலத்தின் பின்கோடி ; பின்னணி வரிசை ; உழையர் வரிசை ; ஆடைத்தொங்கல் வரிசை ; பாட்டின் இறுதி இசைப்பு ; புயற்பின் அமைதிக் கூறு ; நீரோட்டத்தின் வேகமமைந்த பின்வருபகுதி, அகழின் முதல்நிலை வெட்டுக்கூறு ; ஆட்டக்குழுவில் திறமை குறைந்தவர் பகுதி ; கண் கடை ; மீன்கணத்தின் அடிநீர்ப் பின்கூறு ; துருக்கிய வழக்கில் மதிப்புக்குறியான குதிரைவாற்சூட்டு ; எழுத்து வரி வடிவு வகையில் அடிவரைப் பகுதி ; *v.* வால் இணை, வால் அமை ; வாலாயமைவுறு ; வாலைப் பிடித்திழு ; வால் துணித்தகற்று ; காம்பு கிழி, தண்டகற்று ; காற்றுடிக்கு வாற்கூறிணை ; கனியின் தும்பு அகற்று ; வால்போல் இணை ; பின்னொட்டி இணை ; முனையுடன் முனை பொருத்தியிணை ; பின்தொடர் ; பின்னொட்டிச் செல் ; பின்பற்று ; பின்பற்றி உளவாடு ; ஒடுக்கமாகச் செல் ; சென்று தேய்ந்திறு ; வாலாடுவதுபோல் ஆடு ; கட்டுமானக் கல்வகையில் உள்நுனி இணைத்திறுக்கு ; பின்சென்று மேய் ; (கப்.) கடல்வேலை ஏற்ற இறக்கத்துடன் மிதந்தோடு ; (இழி.) பறவையை அரைகுறையாகக் கொல்லு ; (தொ.) a tail of attendants, உழையர் அணிவரிசை ; at the tail of a cart, வண்டியின் பின்புறத்தில் ; make head or tail of, புரியும்படி செய் ; புரிந்துகொள்ளு ; tail after, நெருங்கிப் பின்தொடர் ; tail away, tail off, பின்னிடு ; சிதறிப் பின்னிடு ; tail in, கட்டுமானக் கல்லை உள் நுழைத்து இறுக்கி இணை ; tail margin, தாள் பக்கத்தின் அடி ; tail of the eye, கடைக்கண் ; tails up, எழுச்சியுடைய ; tail to the tide, tail up and down stream, நங்கூரமிட்ட கப்பல் வகையில் வேலை ஏற்ற இறக்க அலையோடு அலையாய் அலைவுறு ; turn tail, புறங்காட்டு ; twist the lion's tail, அரியை இடறு ; with the tail between the legs, அடங்கியொடுங்கி.

**tail**[2], *n.* (சட்.) வரையறுத்த உடைமையுரிமை ; ஒருவர் அல்லது அவர் வழியினர்க்கு வரையறுக்கப்பட்ட உடைமை ; *a.* வரையறுக்கப்பட்ட உரிமையுடைய.

**tail'bay**, *n.* நீரணைப்பூட்டின் வடிவாய்வழித் தேக்கம்.

**tail'-board**, *n.* புடைபெயர்க்கத்தக்க வண்டிப் பின்பகுதி.

**tail'-braid**, *n.* சட்டை விளிம்புக் காப்பு.

**tail'-coat**, *n.* பின்வெட்டுச் சட்டை, தொங்குவால் சட்டை.

**tail'-end**, *n.* கடைக்கோடி ; முனைகோடி.

**tail'-ender**, *n.* கடைசியாய் வருவது, கடைக்கோடி, கடைக்குட்டி.

**tail'-ends**, *n.pl.* கழிதானியங்கள்.

**tail'er**, *n.* பின்னொட்டிணைப்பவர் ; கட்டுமானக் கல் பதிப்பவர்.

**tail'-feather**, *n.* மயிற்பீலி ; வாலிறகு.

**tail'-gate**, *n.* நீரணைப்பூட்டின் வடிவாயில்.

**tail'ing**, *n.* வாலமைப்பு ; வாலிணைப்பு ; பின்னொட்டல் ; கட்டுமானக் கல் வகையில் மறைமுனைப் பகுதி ; அச்சகத் தேய்வு.

**tail'ings**, *n.pl.* பதர், கூலக் கழிபொருள் ; கனிப்பொருட் கழிவு.

**tail'less**, *a.* வாலற்ற ; வாற்பகுதியில்லாத.

**tail'-light**, *n.* பின்புற விளக்கு.

**tail'or**, *n.* தையற்காரர் ; *v.* தையற்காரனுயிரு ; தையற்காரனாகப் பணி செய் ; ஆடையணி தைத்தமை ; உடையமைத்தணி ; ஆடை தைத்திணை ; ஆடையமை ; (தொ.) ride like a tailor, மோசமாகச் சவாரி செய் ; tailor's chair, காலற்ற நாற்காலி, குந்திருக்கை ; tailor's cramp, கட்டைவிரல் மரமரப்பு ; tailor's twist, வான்பட்டு நூல் இழை.

**tail'or-bird**, *n.* இலைகளைத் தைத்திணைத்துக் கூடமைக்கும் பறவை வகை.

**tail'ored**, *a.* தைத்து உருவாக்கப்பட்ட.

**tail'oring**, *n.* தையல் வேலை.

**tail'or-made**, *n.* தையற்காரரால் ஆக்கப்பட்ட ; மகளிர் ஆடைவகையில் தையற்காரரால் கட்டிறுக்கமாகத் தைக்கப்பட்ட.

**tail'-piece**, *n.* ஏட்டின் இறுதிப்பக்கக் கடையணி ஒப்பனை ; இறுதிப்பகுதி ; இசைக்கருவி இழைகளின் மரத்தாலான முக்கோணக் கடைக்கோப்பு அணி.

**tail'pipe**, *n.* உறிஞ்சுகுழாய்.

**tail'-race**, *n.* ஆலை அடிக்கால்வாய் வடிதேக்கம், நீராழி இயக்க ஆலையின் சக்கரத்தின் அடிநீர்த் தேக்கம்.

**tails**, *n. pl.* நாணயப் பூமுகம் ; ஆடை அடிமுன்றானை.

**tail'-spin**, *n.* வானூர்தியின் சுழல் கழுகுப்பாய்ச்சல்.

**tain**, *n.* வெண்மெல் தகடு ; முகக்கண்ணாடியின் முகட்டுக் காப்புத் தகரம்.

**taint**, *n.* கறை ; தடம் ; குறி ; உள்ளார்ந்த கேடு ; ஊழல் குறி; நோய்க்குறி; ஊழல் நிலை; தீட்டு; இகழ்த்தடம்; கேடு; பழி ; நோயுற்ற நிலை ; *v.* கறைப்படுத்து ; கெடு, கேடுறுத்து; ஊழற்படுத்து ; நோயுறுத்து ; தீட்டுப்படுத்து; கெட்டுப்போ, கேடுறு ; ஊழற்படு ; சார்ந்து கேடுண்டாக்கு ; மணங்கெடு ; நிறங் கெடு ; தொற்றுநோய் ஊட்டு ; நலிவுறு ; தொற்றுக்கு ஆளாகு.

**taint'ed**, *a.* கறைப்பட்ட ; பழுதான ; பழிசேர்ந்த.

**Tai'-ping'**, *n.* (வர.) சீனநாட்டில் 1850-64-இல் நடந்த சீனப் புரட்சியில் பங்கு கொண்டவர்.

**taj**, (அரா.) *n.* இஸ்லாமிய துறவியரின் நீண்ட தொப்பி அல்லது குல்லாய்.

**Taj Mahal'**, *n.* ஆக்ராவில் உள்ள வியப்பு மண்டபம்.

**take**, *n.* எடுப்பு ; ஏற்பு ; கொள்வினை ; கைப்பற்றீடு ; கொள் அளவு ; எடுத்த அளவு ; பிடித்த அளவு ; ஒரு தவணை அளவு ; ஒரு நேர வேட்டையில் கிட்டிய அளவு ; ஒரு வலை வீச்சில் கிட்டிய மீன் அளவு ; ஒரு தவணை அச்சடிப்புப்படிகளின் தொகுதி ; மேடைவகையில் ஒரு காட்சியின் கட்டணப்பிரிவு ; ஒரு திரைப்படப் பிடிப்பு ; திரைப்படப் பிடிப்புக்குரிய காட்சி ; *v.* எடு ; பிடி ; பற்று ; கௌவு, வாயிற்கொள் ; கருவியால் பற்றி எடு ; எடுக்கப் பெறு ; கைப்பற்று ; அகப்படுத்து ; சிறைப்படுத்து ; வென்று கைக்கொள் ; முற்றுகையிட்டுக் கைவசமாக்கு ; வேட்டை மூலம் பெறு ; வலையிட்டுப் பிடி ; பொறியிற் சிக்கவைத்துப் பெறு ; பொறியில் வீழ்த்து ; ஏமாற்றப்பெறு ; அடை ; எய்தப்பெறு ; உரிமையாகப் பெறு ; வென்று பெறு ; ஆதாயமாகப் பெறு ; பங்காகப் பெறு ; ஊதியமாகப் பெறு ; தேர்வுப்பட்டமாகப் பெறு ; செயல் வெற்றியுறு ; உடைமையாகக் கொள்ளு ; மரபுரிமையாகப் பெறு ; வாடகையிற் கொள்ளு ; மணவினையிற் கொள்ளு ; திடுமெனக் கைப்பற்று; தனதாகப் பற்று ; எடுத்துக்கொள் ; பறி ; பறித்தெடு ; கொள்ளையிற் கொள் ; பறிமுதல் செய் ; வரியாகப் பெறு ; பயன்படுத்திக்கொள்; பொறுப்பு ஏற்றுக்கொள்; சென்றடை; புகலிடங் கொள் ; உணவாகக் கொள்ளு ; விழுங்கு ; குடி, பருகு ; மூச்சு உட்கொள் ; உள்வாங்கு ; நுகர் ; விலையிற் கொள், வாங்கு ; உணர் ; மனங்கொள் ; மனம்பற்று ; மனத்தில் வாங்கிக்கொள் ; புரிந்துகொள் ; பொருள்கொள் ; பொருள்படுத்திக் கொள் ; ஊகி ; உய்த்தறி, உய்த்துக்காண் ; மதித்துணர் ; கவர்ந்து ஈர் ; கவர்ச்சிசெய் ; கவர்ச்சிகொள் ; கவர்ச்சியுட்படுத்து ; வசப்படுத்து ; ஆர்வ விருப்பத்தைப் பெறு ; புகழ் அடை ; எண்ணு ; கருது ; பாவி ; வைத்துக் கொள், கருதிக்கொள் ; புனைந்து மேற்கொள் ; நம்பு ; மெய்ம்மைஎனக் கொள் ; உறுதியாக ஏற்றுக்கொள் ; நம்பகமாகக் கொள் ; உசாவி உறுதிசெய் ; தெரிந்தெடு ; தேர்ந்துகொள் ; தேடிக்காண் ; கண்டுபிடி ; கண்டெய்து ; ஒப்புக்கொள் ; சங்கத்தில் சேர்த்துக்கொள் ; ஏற்றுக்கொள் ; பொறுப்பு ஏற்றமைவுறு ; விரும்பி ஏற்றமை ; ஏற்றுநடத்து ; பொறுப்புத் தன்மையுடன் ஏற்றமைவுறு ; ஏற்றுச் சமாளி ; ஏற்றுச் சரிக்கட்டிக்கொள் ; மேற்கொள்ளு ; நாடி மேற்கொண்டுவிடு ; பயிற்சி ஏற்றுக்கொள் ; ஈடுபடு ; முயற்சியில் முனை ; செய் ; நடைமுறைப்படுத்து ; வேலை வகையில் தொடங்கு ; வருகையளி ; பார்வையிடு ; பேட்டிகாண் ; திடுமென எய்துவி ; வந்துறு ; நிகழ் ; நிறைவேற்றப்பெறு ; பயன் நிறைவுறு ; பயன்விளைவுடையதாயிரு ; தாக்கு விளைவுடையதாயிரு ; தேர்வுக்கு அமர் ; தூக்கு ; கொணர் ; கொண்டு வா ; கொண்டுசெல் ; இட்டுச்செல் ; ஊர்தியில் உடன்கொண்டுசெல்; ஏறிச்செல்; துணைசெய்; வழித்துணையாயிரு ; படு ; ஆளாகு ; தொற்றுக்கு உட்படு ; நோய்க்கு ஆட்படு ; காலம் பிடிப்பதாயிரு ; செலவுபிடிப்பதாயிரு ; செலவாகு ; செலவழித்துத்தீர் ; தேவையாக்கு, அவசியமாக்கு ; அகற்று; கழி, குறை ; குறைபடுவி ; குறைவு உண்டுபண்ணு; அளந்துகுறித்தெடு ; எழுது ; எழுதிக்கொள் ; குறித்து வை ; பதிவுசெய் ; படப்பதிவு செய் ; நிழற்படமெடு ; மரபுமூலமாகக் கொள் ; (தொ.) novel did not take, புதினம் புகழ் பெறவில்லை; take account of, கணக்கிற் கொள்; பொருட்படுத்து; கவனத்திற்கொள் ; கருத்தில் வைத்துக்கொள் ; take advantage of, பயன்படுத்திக்கொள்ளு ; சலுகை எடுத்துக்கொள்ளு; take advice, அறிவுரைப்படி நட ; take after, சாயல் ஒத்திரு ; பண்பொத்திரு ; பண்பில் அணுக்கமாகப் பற்று ; take aim, குறி பார், இலக்கு வை ; take as read, படித்ததாகக் கருதிக்கொள் ; take back, திரும்பப்பெறு ; (பே-வ.) சொற்களைத் திரும்பப்பெறு; take bit between teeth, கட்டுப்பாடு ஒதுக்கு, கட்டுப்பாடுமீறிச் செயல் செய் ; take by storm, முற்றுகையிட்டுப் பிடி ; take care, கவனமாய் இரு ; எச்சரிக்கையாய் இரு ; காப்புடனிரு ; புறக்கணிக்காதிரு ; take care of, காத்துப்பேணு ; கவனமாகப் பாதுகாப்புச்செய் ; முன்னெச்சரிப்பாயிரு ; செய்து நிறைவேற்றும் ஆற்றலுடையதாயிரு; take down, எழுது; சொல்வதனை எழுதிக்கொள்; எழுதியெடு ; எழுத்தில் பதிவுசெய் ; கீழினமாக்கு; எளிதாக்கு; சுருக்கு; வகுப்பில் மேற்படிக்குச் செல்; இடித்துத் தகர்; தகர்த்தழி ; உணவுக்கூடத்துக்கு இட்டுச்செல் ; take earth, நரி வகையில் வளையுட்புகு ; ஆள் வகையில் ஒளி ; take effect, செயற்படு; நடைமுறைப் படு; take exception to, எதிர்த்துத் தடங்கல் பேசு; மறு; take for, ஒன்றைமற்றொன்றெனக்கருது; வேறொன்றாகத் தவறாகக் கருதிக்கொள் ; take from, குறைப்படுத்து ; குறை ; வலுக்குறைவு உண்டுபண்ணு ; take heart of grace, மனம் தேறுதலடை ; take heed, முன்னெச்சரிப்பாயிரு ; take in, இசைவு அளி ; கீழடக்கு ; பெறு, பெற்றுக்கொள் ; நிலவரியாளராயிரு ; வரவேற்பளி ; ஆள் வகையில் வரவேற்பு அறையிலிருந்து விருந்தறைக்கு இட்டுச்செல் ; உட்படுத்தி வளைத்துக்கொண்டிரு, உள்ளடங்கலாகக் கொள் ; தன் எல்லையுடன் சேர்த்துக்கொள் ; இறுக்கு ; பாய் மடி, சுருட்டு ; பற்று, உணர், மெய்யென ஏற்றுக்கொள் ; சிறிதாக்கு ; புரிந்துகொள் ; கருத்தில் செறி ; மனதில் வாங்கிக் கொள் ; பொய் அறிக்கையினை நம்பு ; take in hand, கைக் கொள் ; மேற்கொள் ; பொறுப்பு மேற்கொள் ; take into one's confidence, நம்பிக்கைக்குரியவராகக் கொள் ; take into one's head, கருதிக்கொள் ; தனிக் கருத்துத் தலைக் கொள் ; கற்பனை செய்துகொள் ; நம்பிக்கை கொள் ; செயல் புரிய உறுதிகொண்டுவிடு ; take it easy, எளிதாகக் கொள்; கவலைப்படாதிரு ; take it for granted, இருப்பதாக வைத்துக் கொள் ; வாதத்துக்காக ஏற்றுக்கொள் ; take it ill of one, தவறாகக் கருது ; take it kindly of one, அன்பு உதவியாகக் கருது ; take it out of, பழிவாங்கு ; மனநிறைவு பெறு ; பிழியுமட்டும் பிழிந்தெடுத்துவிடு ; வலுக்கெடு ; வெளியிடப் பெறு; take leave of, விடைபெறு ; take my word for it, you may take it from me, என் சொல்லை நம்பு ; take no account of, பொருட்படுத்தாதிரு, புறக்கணி ; take notice, அறிவிப்புப் பெறு ; அறிவிப்புப்பற்றிய எச்சரிப்புக்கொள் ; take notice of, கவனி ; குறித்துச்செல் ; take off, அகற்று ; அப்பால் இட்டுச்செல் ; விமான வகையில் நிலத்திலிருந்து எழு ; வேட்டைநாய் வகையில் பின்னிடு ; உடைகளை ; ஆடை முதலிய அப்புறப்படுத்து ; விலையில் ஒரு சிறு குறைவு செய் ; போலிசெய்து நையாண்டி காட்டு ; விழுங்கு ; பார்த்துப் போலிசெய்து நடி ; take off one's hat, வியந்து போற்று ; take on, வேலை மேற்கொள் ; பொறுப்பு ஏற்றுக்கொள் ; கப்பல்-ஊர்தி-விமானம் முதலியவற்றில் ஏற்றிக்கொள் ; புனைந்து மேற்கொள் ; வேலைக்கு எடுத்துக் கொள் ; (பே-வ.) வருத்தமுறு ; take one's chance, தறுவாயினைப் பயன்படுத்திக்கொள் ; வருவாய்ப்பு எதுவாயினும் ஏற்றுக்கொள் ; take one's life in one's hand, துணிந்து செயலாற்ற முற்படு ; take one's readers with one, கற்போர் நாட்டங் கவர்ந்து ஈர்க்கும் பண்புடையவராயிரு ; take one's time, மெல்லச்செய் ; விரைபடாமல் செய் ; take on one to, take orders, மேலிடத்திலிருந்து ஆணைகொள் ; கட்டளை மேலிடமாகக்கொள் ; சமயப் பணித்துறை அமர்வு பெறு ; சமயப்பணி ஏற்றமை ; take out, உள்ளிருந்தகற்று ; வெளிவரச்செய்; புறமாக்கு; பிரித்தெடு; வெளிப்படுத்து ; உடனுகப் புறஞ்செல்; கேட்டுப் பெறு, மனுவின்மீது பெறு; பதிலீடாகப் பெறு ; take over, பொறுப்பேற்றுக்கொள், உடைமைமாற்றிப் பெறு ; take part, பங்குகொள் ; செயலில் துணைசெய் ; செயலில் உடனிருந்து உதவு; நடவடிக்கையில் கலந்துகொள்; வாதத்தில் கலந்துகொள் ; take person down a peg or two

படியிறக்கு ; மதிப்புக்குறைவி ; எளிமைப்படுத்திவிடு ; take person on at golf, உடனுக ஆட்டம் ஆடு; take place, நிகழ்; take precedence, முன்னிகழ்வுறு ; முன்னுரிமைகொள் ; take sides, கட்சிசேர் ; take silk, பட்டுக்கு மாற்று, உயர்பொருள் பெறு ; மன்வழக்குரைஞராக உயர்வுபெறு ; take stock, இருப்புக் கணக்கெடு ; தன் வலியறி ; take the bull by the horns, இடுக்கண் எதிர்த்து நில் ; take the nonsence out of person, ஒறுத்துப் பேதைமை நீக்கு ; பேதைமை நீக்குஞ் செயல் செய் ; take the wall of, நய இணக்கமுறை காட்ட மறு ; take things to heart, எண்ணி மிக மனவேதனைப்படு ; குறித்து மிக வருத்தமடை ; take to, மேற்கொள் ; ஈடுபடத் தொடங்கு ; பழகி ஈடுபடு; பழக்கத்தில் நாடு ; எளிதில் விரும்பி ஈடுபடு; ஆர்வமாக ஈடுபட விரும்பு; ஆர்வமாக நாடு ; விரும்பு ; சூழ்நிலைக்கேற்ப இசைவித்துக்கொள் ; take to task, ஒறுப்புக்கு உள்ளாக்கு ; கண்டித்துக் கேட்டு ஒறுக்க முற்படு ; take up, தூக்கு, பிடித்துயர்த்து ; பயன் படுத்தத் தேர்ந்தெடு ; உட்கொள் ; உறிஞ்சு ; உள் வாங்கு ; ஈடுபடுத்திவிடு, முழுதும் ஆட்கொள்ளவிடு ; இடம் முழுதுங்கொள் ; இடையீடின்றி நிரப்பு ; எடுத்துக்கொள் ; ஏற்றிக்கொள் ; மேற்கொள் ; மேம்பாட்டுக்குப் பாடுபடு ; ஆதரி ; பேச்சாளரைத் திடுமென இடைபட்டுத் தடு ; மேற் கொள்ள முற்படு ; பேச முற்படு ; விசாரணை முதலியவற்றின் வகையில் மேலும் தொடர முற்படு ; மீண்டும் தொடர் ; கழன்றதை மீண்டும் எடுத்து இறுக்கு ; கடனுக்குத் தொகை தர முன் வருகையளி ; take upon, துணி, துணிவுடன் முயற்சி மேற்கொள் ; பொறுப்புத் தன்மீது கொண்டுவிடு ; take upon oneself, பொறுப்பு மேற்கொள் ; புனைந்து மேற் கொள் ; துணிவாகக் கருத்துக்கொள் ; take up the cudgels for, ஆதரித்துப் போராட முற்படு; take up the gauntlet, போரழைப்பை ஏற்று முற்படு ; take up the glove, போரழைப்பை ஏற்றுக்கொள் ; take wind, வதந்தியாகப் பரவு ; take up wife, மனைவியாகக் கொள் ; take up with, துணையாகு ; கூட்டாகு ; போராடத் தோழமையாகு.

**take'-down**, *n.* படியிறக்கம், மதிமுறிவு.

**take'-in**, *n.* ஏமாற்று ; மோசடி ; பித்தலாட்டம்.

**take'-leave**, *n.* விடைப்பேறு, பிரிவுபசாரம்.

**tak'en**, *v.* **take** என்பதன் முடிவெச்சவடிவம்.

**take'-off**, *n.* கேலிப்படம், நையாண்டிப் படம், நின்று குதிப் பதற்குரிய மேடு ; நின்று நீரில் குதித்தற்குரிய இடம் ; விமானம் ஓடி எழுவதற்குரிய இடம் ; விமானம் நிலத்தி லிருந்து உயர்தல் ; பின்வாங்குதல், பின்னிடைவு ; பந்தாட் டத்தில் பிற பந்துகளை இயக்காது முட்டிமேற்செல்லும் பந்தடி.

**take'-over**, *n.* புதுப்பொறுப்பேற்பு ; பொறுப்பு மாற்றீடு ; *a.* பொறுப்பு மாற்றீடு செய்கிற.

**tak'er**, *n.* எடுப்பவர், பிடிப்பவர்; பந்தயம் ஏற்பவர்; குத்தகைக் காரர்.

**take'-up**, *n.* (இயந்.) இறுக்கமைவு ; இயந்திரத்தில் பட்டை கள் முதலியவற்றை இறுக்கும் அமைவு.

**ta'kin**, *n.* திபேத்திய மறிமான்.

**tak'ing**, *n.* எடுத்தல் ; கலக்கம், மனக்குழப்பம் ; *a.* கவருந் தன்மையுடைய ; தொற்றுந் தன்மை உடைய.

**tak'ings**, *n. pl.* கொள்முதல் பணம், வாணிகத்தில் இட்ட தொகை ; வாணிக வரவினத் தொகுதி ; கட்டண வசூல்.

**ta'ky**, *a.* கவர்ச்சி வாய்ந்த.

**tal'apoin**, *n.* இலங்கை-தாய்லாந்து நாட்டுப் புத்த துறவி ; குரங்கு வகை.

***talar'ia***, (ல.) *n. pl.* சிறகு மிதியடி.

**tal'botype**, *n.* நிழற்பட எடுப்புமுறை, டால்பட் (W.H. Talbot, 1840) கண்ட நிழற்பட எடுப்புமுறை.

**talc**, *n.* வெளிமக் கன்மகி ; (பே-வ.) காக்காய்ப்பொன் வகை ; *v.* காக்காய்ப் பொன்வகை பயன்படுத்திப் பதஞ்செய்.

**tal'cite**, *n.* ஆப்பிரகம் கட்டிக் காக்காய்ப்பொன்.

**tal'cum**, *n.* வெளிமக் கன்மகி ; காக்காய்ப்பொன் வகை ; (தொ.) talcum powder, நறுமணச் சுண்ணம்.

**tale**, *n.* கட்டுக்கதை ; கற்பனை வருணனை ; உருக்கமிக்க மெய் வரலாறு ; கதை ; கோள், புறங்கூற்று ; தீக்குறளை ; கூற்று ; விரிவுரை ; கூற்றுமுறை ; (செய்.) எண்ணிக்கை, மொத்தம் ; (தொ.) tale of a tub, புனைகதை; tell one's own tale, குறிப் பிட்ட நிகழ்ச்சிபற்றித் தான் நினைப்பதையே சொல்லு ; tell tales, நுணைகூறு, குற்றங்கண்டுரைக்கும் பணி மேற் கொண்டவராயிரு ; tell tales out of school, மறைசெய்தி களை வெளியிடு ; thing tells its own tale, விளக்கந் தேவை யின்றித் தானே விளக்கமாயுள்ளது, பொருள் மிகு விளக்கமா யுள்ளது.

**tale'bearer**, *n.* கண்டுணி, புறந்தூற்றுபவர் ; நுணைகூறு வோர், அலருரையாளர்.

**tale'bearing**, *n.* பழிகூறுதல் ; *a.* பழிகூறுகிற.

**tal'ent**, *n.* தனித்திறமைக்கூறு ; செயற்றிறம் ; மனத்திறன் ; தனித்திறலாண்மைக்குழுமம், அறிவாற்றல்களிற் சிறந்தவர் கள் தொகுதி, பண்டைக் கிரேக்க-ரோம-அசீரிய வழக்கில் எடை அலகு ; பணக்கணிப்பு அலகு ; (தொ.) the talent, (இழி.) விளையாட்டுத்துறை ஆக்கவாய்ப்பு வேட்டைத் திறலாளர்.

**tal'ented**, *a.* செயற்றிறம் வாய்ந்த ; மனத்திறம் உடைய.

**tal'ent-money**, *n.* ஆட்டப் பரிசூதியம், மிகச்சிறந்த ஆட்டத் திற்காக மரப்பந்தாட்டத் தொழிலருக்கு அளிக்கப்படும் நல்லூதியம்.

***tal'es***, (ல.) *n.* (சட்.) ஆய அழைப்பாணை, முறைகாண் ஆயத் தினர்களை அழைப்பதற்கான எழுத்தாணை ; எண்ணிக்கைக் குறை நிரப்புதற்காக அழைக்கப்படும் முறைகாண் ஆயத்தி னர் பட்டியல் ; (தொ.) pray a tales, (சட்.) முறைகாண் ஆயத்தினரின் எண்ணிக்கைக் குறையை நிரப்பும்படி கோரு.

**tales'man**, *n.* (சட்.) அழைப்பாயர், முறைகாண் ஆயத்தினர் எண்ணிக்கைக் குறையை நிரப்புதற்காக அழைத்து அமர்த்தப் படுபவர்.

**tale'teller**, *n.* கதைசொல்பவர் ; புறங்கூறுபவர்.

**Taliaco'tian**, *a.* டக்ளியாகோசி (Tagliacozzi 1546-99) என் னும் இத்தாலிய அறுவை மருத்துவருக்குரிய, உடலிலிருந்தே கூறெடுத்துப் புதுமூக்கு ஆக்கும் அறுவைமுறை சார்ந்த ; (தொ.) Taliacotian operation, புதுமூக்காக்க அறுவை, அறுவைமருத்துவ முறையினுல் கை அல்லது நெற்றிக்கூறு ஒட்டிப் பின் அறுவை செய்து புதிய மூக்கு உருவாகும்படி செய்யும் முறை.

**tal'ion**, *n.* பழிக்குப் பழி.

**tal'iped**, *n.* கோணற்காலர் ; கோணற்கால் விலங்கு ; *a.* கோணற் காலுடைய; (வில.) கரடியின விலங்கு வகையில் இயல்மீறிய திருகுமுறுகலான கால்களையுடைய.

**tal'ipes**, *n.* கோணற்கால் ; கோணற்காலுடைமை ; கால்கள் திருகுமுறுகலாக அமைந்திருத்தல்.

**tal'ipot, tal'iput**, *n.* தாளிப்பனை, விசிறி வடிவ இலைகளை யுடைய பனைவகை.

**tal'isman**, *n.* தாயத்து, மந்திரக்காப்பு, இரட்சை, மந்திரக் கவசம் ; மந்திரச்சக்கரம்.

**talk**, *n.* உரையாடல் ; நேர்முகப்பேச்சு ; மேடையுரை, உரை யாடல் முறைச் சிறு சொற்பொழிவு ; கலந்துரையாட்டு ; வானொலிப்பேச்சு ; பேச்சு ; வம்பளப்பு ; வாயாடல் ; உரை யாடற் செய்தி ; வதந்திக்குரிய செய்தி ; *v.* உரையாடு ; கலந்துபேசு ; பேச்சுமுறைச் சிறு சொற்பொழிவாற்று ; சொல்லாடு, கருத்துத்தெரிவி ; பேசு ; உரை ; கூறு; வாயாடு; விவாதி ; பேச்சுப்பயில் ; பேச்சுத்திறம் உடையவராயிரு ; குறிப்பிட்ட மொழியில் பேசுபவராயிரு ; கம்பியில்லாத் தந்திச் சைகை மூலம் செய்தி அனுப்பு ; ஓயாது பேசு ; பேசிக் குறிப் பிட்ட நிலைக்கு ஆளாக்கு ; பேசி அமைவி, பேசிக் குறிப்பிட்ட நிலை உண்டுபண்ணு ; (தொ.) be talked about, அலர் தூற் றலுக்கு ஆளாகு ; end in talk, உருப்படியாக ஒன்றும் நடக்காமல் வெறும் பேச்சிலேயே முடிவுறு ; small talk,

பொதுநிலைச் சமுதாய முறை உரையாடல்; talk about, குறித்து விவாதஞ் செய்; talk against time, சட்டமன்றத்தில் நேரங்கழிவதற்காகவென்றே பேசிக்கொண்டேயிரு; talk at, சாட்டிப்பேசு, நேரடியாகப் பேசாமலேயே பிறிது நிலையிற் கூறு; talk away, பேசித்தீர், பேசியே காலங்கழி; talk back, எதிர்ப்பாக மறுமொழிகூறு; talk big, தற்புகழ்ச்சியாகப் பேசிக்கொள்; talk cold turkey, talk turkey, (பே-வ.) உண்மை என்ன என்பதை அப்படியே சொல்லு; talk down, பெருங்கூச்சலிட்டுப் பேசியடக்கு; எதிராளி பேசவிடாமற் பேசிவிடு; talk out, சட்டமன்றத்தில் சட்டவரைவு-தீர்மானம் ஆகியவற்றின் வகையில் ஒத்திவைப்பு நேரம் வரையில் விவாதத்தை நீடிப்பது மூலமாக நிறைவேறுமற் செய்; talk over, சற்று அதிகமாகவே விவாதஞ்செய்; பேசித் தன் வசப்படுத்து; talk person round, அறிவுறுத்தி இணங்கவை; talk round, சுற்றிவளைத்துப் பேசிக்கொண்டிரு; talk shop, உரையாடலிடையே தொழில் பற்றிப்பேசு; talk tall, வீம்பு பேசு; talk through one's hat, மிகைப்படுத்திக்கூறு, பிதற்று; talk to, முன்னிட்டுக்கூறு; (பே-வ.) குற்றங்கூறு, திட்டு; மனம்விட்டுப்பேசு; talk up, ஒன்றைப்பற்றிப் பிறர் அக்கறை கொள்ளுமாறு பேசு; tall talk, வெற்றுப் பெருமிதப்பேச்சு, தகரடி, வீரப்புரை.

**ta'lkative**, *a.* பேச்சில் விருப்பமுடைய; வாயாடியான, மிகு பேச்சுப் பேசுகிற.

**ta'lkee-ta'lkee**, *n.* சிதைவு ஆங்கிலம்.

**ta'lkies**, *n. pl.* பேசும்படங்கள்.

**ta'lking**, *n.* உரையாடல்; பேச்சு; வம்பளப்பு; *a.* பேசுகிற; உரையாடுகிற; பேச்சாற்றலுடைய; சொற்களினால் தெரிவிக்கிற; உணர்ச்சி காட்டுகிற; பொருள் பொதிந்த.

**talk'ing-to**, *n.* கடிந்துரை, கண்டனம்.

**tall**, *a.* நெட்டையான; உயரமான; நெடிது வளர்ந்த; உயர்ந்தோங்கிய; ஆள்வகையில் சராசரிக்கு மேற்பட்ட உயரமுடைய; சூழ்ந்துள்ள பொருள்களைவிட நெடிய; உயர அளவுள்ள; எல்லைகடந்த; பேச்சுவகையில் தற்புகழ்ச்சிமிக்க; உயர்வு நவிற்சியான; மிகையளவான; அறிவிற்குப் பொருந்தாத; வெற்றுரவாரமான, *adv.* தற்புகழ்ச்சியாக; வெற்றுரவாரமாக; பொருந்தாப் புளுகாக; (தொ.) a tall man of his hands, செய்திறமிக்க பணியாள்; போர்வீரர்; talk tall, வீம்பு பேசு; tall copy, மேலும்கீழும் அகன்ற வெற்றிடமுடைய புத்தகம்; tall hat, நீள் உருளைவடிவத் தொப்பி; tall man, எடைமாருட்டஞ் செய்யப்பட்ட கவறுகள்; tall talk, செருக்குப் பேச்சு.

**tall'age**, *n.* (வர.) முற்கால வரிவிதிப்புமுறை; கரம், தீர்வை.

**tall'boy**, *n.* இழுப்பறைகள்கொண்ட உயரமான படுக்கையறைப்பெட்டி; புகைப்போக்கியின் முகட்டுக்குழல்.

**tall'ier**, *n.* கணக்கு ஒத்துப்பார்ப்பவர்.

***tall'ith***, (எபி.) *n.* வழிபாட்டின்போது யூதர்கள் அணியும் கழுத்துக்குட்டை.

**tall'ow**, *n.* கொழுப்பு, விலங்கின் உருக்கிய நிணம்; *v.* கொழுப்புப் பூசு, மசகிடு; ஆட்டினைக் கொழுக்க வை.

**tall'ow-chand'ler**, *n.* மெழுகுதிரி செய்து விற்பவர்.

**tall'ow-drop**, *n.* உருள்பட்டையீடு, ஒருபுறம் அல்லது இருபுறமும் கவிகை வடிவிலிருக்கும்படி மணிக்கற்களை வெட்டும் முறை.

**tall'ow-face**, *n.* பாண்டு மேனியர், வெளிறிய நிறமுடைய மனிதர்.

**tall'y**, *n.* கணிப்பு வரிக்கோல்; புள்ளிவெட்டுக் கணிப்பு, புள்ளிக்கணக்கீடு; கணிப்பெண், கணிப்பளவு; கொடுக்கல் வாங்கல் பதிவுச்சின்னம்; கணக்குப் பற்றடையாளக் குறி; கணக்கேட்டுப் பதிவில் அடையாளக் குறி, தனி அடையாளக் குறியீடு; கணிப்புக்கோல் வரி, கணிப்புக்கோலின் சரிபாதிப் பிளவுச் சட்டம்; கணிப்பு எதிர்வரிக்கோல், எதிர்முறி; எதிர்ப்பதிவுமுறி, எதிர்முறிச்சான்று; ஒத்திசை எதிரிணை; கணிப்புத்தொகுதி அலகு; அலகுத்தொகுதி எண்; பேரெண், தொகுதி நிறைவெண்; பெயர்முறி, செடிகொடிப் பெயர் குறித்து ஒட்டப்பட்ட துண்டுமுறி; அடையாளப் பலகைத் துண்டு; அடையாளத் தகடு; அடையாளச் சீட்டு; ஒட்டுத்துணுக்கு; சரி ஒப்பாயுள்ள பொருள், எதிரிணை, இருமடிப் பகர்ப்பின் மறுபடிவம்; *v.* கணிப்புவரிக் கோலில் புள்ளி பதிவுசெய், ஈரடிக்கணிப்புப் பதிவுசெய்; எதிரிணைக் கணக்குமூலம் பதிவு செய்; சரியொப்புக் கணக்கு முறைப்படி கணக்கிடு; கணக்கு வகையில் இருதிற ஒத்திசைவாக்கு; ஒத்திசைவாகச் சரிக்கட்டு; சரியொப்பாயிரு, ஒத்திசைந்து போ; (கப்.) கப்பற் பாய்க்கயிற்றை விறைப்பாய் இழு; *adv.* காமக்கிழத்தியாக, வைப்பாட்டியாக; (தொ.) buy goods by the tally, பன்னிரண்டு-நூறு என்ற கணக்கில் சரக்குகளை வாங்கு; horticultural tallies, செடிகளின் பெயர்ச்சீட்டுகள்; live tally, திருமணமின்றியே கணவன் மனைவியாகக் கூடிவாழ்; tally system, tally trade, தவணை ஒப்படைப்புப் பற்றுக் கணக்குமுறை.

**tall'y-clerk**, *n.* நாவாய் ஒப்புக்கணிப்பாளர், கப்பற் சரக்குகளைப் பட்டியலைக்கொண்டு சரிபார்ப்பவர்.

**tall'y-ho'**, *n.* வேட்டைநாய் ஊக்கொலி, நரியைக் கண்டதும் வேட்டையர் வேட்டைநாய்களை நோக்கி எழுப்பும் ஒலி; *v.* நரிவேட்டையில் நாய் ஊக்கொலி செய்; நரிவேட்டையில் ஊக்கொலிகளால் வேட்டை நாய்களை ஏவு; *int.* வேட்டைநாய் ஊக்கொலிக்குறிப்பு.

**tall'yman**, *n.* புள்ளிவெட்டுக் கணிப்பு வரிக்கோலர், கணிப்புக்கோல் வைத்திருப்பவர்; தவணைக் கடனீட்டுக் கடைவணிகர்; படிமுகவர், மாதிரிகளைக் காட்டிச் சரக்குகளை விற்பவர்; வைப்பாட்டியுடன் வாழ்பவர்.

**tall'y-sheet**, *n.* கணிப்பு வரித்தாள், சரியொப்புக் கணக்குத்தாள்.

**tall'y-shop**, *n.* தவணையடைப்புக் கடனீட்டுக்கடை.

**tal'ma**, *n.* ஒருவகை மேலாடை.

**tal'mi-gold**, *n.* பொன் மெருகுக்கட்டி, மெல்லிய பொன் முலாம் பூசிய பித்தளை.

**Tal'mud**, *n.* யூத வேதம், யூதர்களின் சட்டம்-மரபு வழிக்கதை ஆகியவற்றின் தொகுப்பு; பாபிலோனிய யூதர் திருமறை.

**Tal'mudist**, *n.* யூதர் சட்டம்-மரபு வழிக்கதை ஆகியவற்றின் தொகுப்பு நூலறிஞர்; யூத வேதப் பயிற்சி மாணவர்; ஆய்வறிஞர்; யூதவேத அறிஞர், யூதவேதத் தொகுப்பாளர்.

**Talmudis'tic**, *a.* யூதவேதஞ் சார்ந்த.

**tal'on**, *n.* வள்ளுகிர், கொடும்பறவையின் கூர்நகம்; சீட்டாட்டத்தில் சீட்டு வழங்கீட்டுக்குப் பிறகு எஞ்சியிருக்கும் சீட்டுகள்; தாழ்க்கடை, பூட்டில் திறவுதள்ளும் தாழ்க்கூறு; (க-க.) வங்கிவளைவு, பாம்பு வடிவ இரட்டை வளைவுச் சித்திர வேலைப்பாடு; வாள் அலகின் பின்னடி வக்கு.

**taluk**, (இ.) *n.* வட்டம், தாலுகா; தனியுடைமைப் பெரும் பரப்பு.

**taluk'dar**, (இ.) *n.* வட்டகை வரியாட்சியாளர்; பெருநில உரிமையாளர்.

**tal'us**, *n.* (உள்.) கணுக்கால்; கணுக்கால் எலும்பு; கோணக்கால் வகை; மேல்நோக்கி ஒடுங்கிச்செல்லுஞ் சுவர்ச்சரிவு; (மண்.) மலையடிக்குவியல்; *pl.* tal'i.

**taman'dua, tam'anoir**, *n.* எறும்பைத் தின்னுந் தென்னுப் பிரிக்க கரடியின உயிர்வகை.

**tam'arack**, *n.* அமெரிக்க ஊசியிலை மரவகை.

**tam'arin**, *n.* மயிரடர்ந்த வாலுடைய சிறு தென் அமெரிக்க குரங்கு வகை.

**tam'arind**, *n.* புளி; புளியமரம்.

**tam'arind-fish**, *n.* புளியிட்டு ஆக்கிய மீன்கறி.

**tam'arisk**, *n.* இறகுபோன்ற கிளைகளையுடைய நெய்தல்நிலச் செடிவகை.

**tama'sha**, (அரா.) *n.* வேடிக்கைக்காட்சி, காட்சிக்கோலம்; பொழுதுபோக்கு விளையாட்டு.

**tam'bour**, *n.* தம்பட்ட வகை, ஒருகட் பெருமுரசு; துன்னல் வட்டு, பூவேலைக்குரிய இருவட்டிணை சட்டம்; பூவேலைப் பட்டுத்துகில்; தூணின் நடுப்பகுதியிலுள்ள வட்டுருளைக் கல்; கட்டுமானங்களின் வட்டப்பகுதி; திருக்கோயில் முக மண்டபத்தின் மடக்குத் தலைவாயில்; முரசொலி யெழுப்பும் மீன்வகை; முரசுவடிவ மீன்வகை; கோட்டைப்பாதை வேலி யரண் காப்பு; கோட்டைவாயில் அகழரண் காப்பு; *v.* இணை வட்டுச் சட்டத்தில் பூ வேலை செய்; பூ வேலைத் துன்னல் செய்.

**tam'bourin**, *n.* சேண்டை, பிரான்சிலுள்ள பிராவென்சு (Provence) பகுதியின் வழக்காற்றிலுள்ள நீண்டொடுங்கிய முரசுவகை; சேண்டை நடனவகை; சேண்டைநடன இசை யமைப்பு.

**tambourine'**, *n.* கஞ்சிரா, ஒருகட் சிறுபறை வகை; ஆப் பிரிக்க புறாவகை.

**tame**, *a.* பழகிய; நன்கு பழக்கப்படுத்தப்பட்ட; படிமான மான; வசப்படுத்தப்பட்ட, சொற்கேட்டு நடக்கும்படி செய் யப்பட்ட; முரட்டுத்தன்மையற்ற; மூர்க்கத்தன்மை குறைக்கப் பெற்ற; (பே-வ.) நில வகையில் பயிர் செய்யப்பட்ட; செடிவகையில் பயிர் செய்து உண்டாக்கப்பட்ட; பணிந்து போகிற; ஊக்கமற்ற; துடிப்பற்ற; கிளர்ச்சியற்ற; செய லாற்றலற்ற; பண்பு முனைப்பற்ற; *v.* பழக்கு; பணிய வை; படிமானமுடையதாக்கு; வசப்படுத்து; மூர்க்கத் தன்மை குறை; அடக்கு; பழக்கி இணக்குவி; கீழ்ப்படுத்து, தடுத்து நிறுத்து, செருக்குக் குலை; (தொ.) tame cat, தொழும் பர், பயன்படுபவரென்று பொறுத்துக் கொள்ளப்பட்டு அண்டி வாழ்பவர்; tame poison, நச்சுமாற்று வேர்.

**Tam'il**, *n.* தமிழ்மொழி; தமிழர்.

**Tamil'ian**, *n.* தமிழர்; *a.* தமிழ்மொழி சார்ந்த; தமிழர் சார்ந்த.

**Tamm'any**, *n.* நியூயார்க் நகரிலுள்ள அமெரிக்க ஒன்றிய அரசின் குடியாட்சிக் கட்சி மைய அமைப்பு; அரசியல் ஊழ லுக்குரிய இடம்; (தொ.) Tammany Hall, நியூயார்க் நகரத்திலுள்ள குடியரசுக் கட்சியின் மையப்பணிமனைக் கட்டிடம்; அரசியல் ஊழல்களுக்குரிய இடம்.

**Tamm'uz**, *n.* பண்டைப் பாபிலோனியரின் ஞாயிற்றுத் தெய்வம்; யூத ஆண்டின் பத்தாம் மாதம் (சூன்-சூலை).

**tamm'y**[1], *n.* அரிப்பு; பளபளப்பான கம்பளித் துகில்வகை.

**tamm'y**[2], **tam-o'-shan'ter**[2], *n.* குவட்டுத் தொப்பி, வட்ட அடிப்பகுதியினையுடைய விரிமுகட்டுத் தொப்பி.

**tamp**, *v.* வெடிப்பாற்றல் பெருக்கும்படி வெடிச்சுரங்க வாயில் களிமண் திணித்துவை; பாட்டைச் சல்லியை அடித்திறுக்கு.

**tam'pan**, *n.* தென் ஆப்பிரிக்க கால்நடை நச்சு உண்ணிவகை.

**tamp'er**[1], *n.* பாட்டையினை அடித்து நிரப்பாக்குபவர்; அடித்து இறுக்குபவர்; பாட்டைச் சம்மட்டி, சரளைகளை அடித்திறுக்கும் குத்துக்கட்டை; வெடிச்சுரங்கம் நிரப்பி வெடிவைப்பதற்கு ஆவனசெய்பவர்; அடிசம்மட்டி, கொல்லத்துக்காரரின் கருவி.

**tam'per**[2], *v.* தலையிட்டுக் கெடு; குறுக்கிட்டுத் தொந்தரவு செய்; இடையிற் புகுந்து மாற்றம் உண்டுபண்ணு; விருப்ப ஆவணம்-கையெழுத்துப்படி முதலியவற்றில் உரிமைபெறாத மாற்றங்களைச் செய்; இரகசியமாகக் கையாடிக்கெடு; கைக் கூலி கொடுத்து வசப்படுத்து; இரகசியமாகத் திருப்பு.

**tamp'ing**, *n.* வெடிக்குழியில் களிமண் இட்டு நிரப்புதல்; வெடிக்குழியில் இட்டு நிரப்பப்படும் பொருள்.

**tam'pion**, *n.* துப்பாக்கி வாய்முகப்பின் மரக்கட்டை அடைப் பான்; இசைப்பேழைக் குழலின் உச்சி அடைப்பு.

**tam'pon**, *n.* குருதிப்போக்கினை நிறுத்துவதற்கான அடைப்பு; தலைமுடிச் செருகு திண்டு; *v.* அடைப்பான் கொண்டு துளை அடை.

**tamponade'**, **tam'ponage**, **tam'ponment**, *n.* அடைப்புப் பயனீடு, அறுவை மீறுத்துவத்தில் அடைப்பானைப் பயன் படுத்துதல்.

**tam'tam**, *n.* = tomtom.

**tan**[1], *n.* (கண.) இடுக்கை, செங்கோண முக்கோணத்தில் செங்குத்து வரைக்கும் கிடை வரைக்கும் இடையேயுள்ள வீதம்.

**tan**[2], *n.* தோல் பதனிடும் பட்டை; ஆவாரம் பட்டை; சீமை ஆலின் பட்டை; ஆவாரம்பட்டை நிறம், மஞ்சள் பழுப்பு வண்ணம்; வெயிற்பட்ட மேனிநிறம், வெண்கலச்சாயல்; பாட்டையிலிடப்படும் ஆவாரம்பட்டைச் சக்கை; *a.* மஞ்சள் பழுப்பு நிறமான; *v.* தோல்பதனிடு; பச்சைத்தோலைப் பத னிட்ட தோலாக மாற்று; வெயில்பட விட்டுப் பழுப்பு நிற மாக்கு; வெயிலிற் காய்ந்து காய்ந்து பழுப்பு நிறமாகு; கடும்பதப் படுத்து, போலிச் சலவைக்கல்-மீன் வலைகள் ஆகிய வற்றைக் கெட்டிப்படுத்து; (பே-வ.) அடி, நையப்புடை; (தொ.) flowers of tan, ஆவாரப்பட்டைப் பசைப்புக் காளான்; kiss the tan, குதிரைமீதிருந்து எறியப்பெறு; spent tan, ஆவாரம் பட்டைச் சக்கை, சாறெடுக்கப்பட்ட ஆவாரம் பட்டை நைவு; the tan, (பே-வ.) வட்டரங்கு.

***ta'na***, (இ.) *n.* படைத்துறைத் தளம்; காவல் நிலையம்.

***tan'adar***, *n.* படைத்துறைத் தளத் தலைவர்; காவல்நிலையத் தலைவர்.

**tan'ager**, *n.* தென் அமெரிக்க ஒண்சிறைக் குருவி வகை.

**Tan'agra**, *n.* பண்டைக் கிரேக்க நகரம் ஒன்றின் பெயர்; டனுக்ராவில் செய்யப்பட்ட செந்நிறமான சிறு சுட்டகளிமண் உருவச் சிலை; (தொ.) Tanagra figurine, Tanagra statuette, பண்டை டனுக்ராவில் செய்யப்பட்ட செந்நிறச் சிறு உருவச் சிலை.

**tan'-balls**, *n.* ஆவாரந் தட்டை, ஆவாரச் சக்கை.

**tan'dem**, *n.* வரியிணைக் குதிரை வண்டி, ஒன்றன்பின் ஒன்றாக இணைத்த இரட்டைக் குதிரை வண்டி; வரியிணை இருக்கை மிதிவண்டி, வரியிணை இருக்கை முச்சக்கர மிதிவண்டி; *a.* மிதிவண்டி வகையில் இருக்கைகள் ஒன்றன்பின் ஒன்றாக அமைந்துள்ள; குதிரைகள் வகையில் ஒன்றன்பின் ஒன்றாகப் பூட்டப்பட்ட; (தொ.) drive tandem, குதிரைகளை ஒன்றன் பின் ஒன்றாகப் பூட்டி ஓட்டு.

***tand'stickor***, (ஸ்வீ.) *n.* உராய்வதால் தீப்பற்றும் ஸ்விடன் நாட்டுத் தீக்குச்சி.

**tang**[1], *n.* முனை, விளிம்பு; நுதி, கொடுக்கு முனை; உந்து பகுதி; கொழுமுனை; கவர்முள் முகடு; கத்திவால் மீன்; கைப்பிடிக்குள் இருக்கும் உளியின் பகுதி; உறைப்பான சிறப்புச் சுவைநயம்; காரப்பண்பு; தனி நெடி; வேற்று வாடை; நீடுசுவை; விடா நெடுமணம்; தனிச் சிறப்பியல்பு; சாயல், சார்பெச்சப் பண்பு; *v.* நீள்முனை அமைத்துக்கொடு; உறைப்புச் சுவையினால் அல்லது நெடியினால் தாக்கு.

**tang**[2], *n.* கடற்பாசி வகை.

**tang**[3], *n.* குணத்தொனி, வில் நாண் ஒலி; *v.* குணத்தொனி யெழுப்பு; டங்கார நாதஞ் செய், கணீர் முழக்கமிடு; உலோகத் துண்டுகளை அடிப்பதுமூலமாகத் தேனீக்கள் அமரும்படி தூண்டு.

**tan'gency**, *n.* தொடுவரை நிலை, வட்டத்தின் ஒருபுள்ளி தொட்டுப் பின் தொடாது விலகிச் செல்லுங் கோட்டு நிலை; தொட்டுத் தொடாநிலை, மீண்டிணையாத் தொடுநிலை; மீண் டணையாத் தொடுநிலை; வெட்டாது சறுக்கிச் செல்லும் நிலை.

**tan'gent**, *n.* (வடி.) தொடுவரை, வட்டத்தினை ஒரு தடவை மட்டும் தொட்டுப் பின் விலகிச் செல்லுங் கோடு; (கண.) இடுக்கை, செங்கோண முக்கோணத்தில் செங்குத்து வரைக் கும் கிடைவரைக்கும் இடையேயுள்ள வீதம்; *a.* வெட்டாமல் தொடுகிற; (தொ) at a tangent, தொட்டுத் தொடா நிலையில்; வரவரவிரிந்து விலகிக்கொண்டே போகும் நிலை யில்; fly off at a tangent, go off at a tangent, செய்தியை விட்டு அறவே விலகிச்செல்; விவாதத்தில் வேறொன்று விரி; tangent of an angle, இடுக்கை, செங்கோண முக்கோணத் தில் செவ்வரை அடிவரை இடைவீதம்.

**tan'gent-balance**, *n.* வெள்ளிக்கோல், அளவுக்கூறுகள் குறிக்கப்பெற்ற தண்டின் நிலையினால் எடைகாட்டும் நிறை கோல்.

**tangen'tial**, *a.* தொடுவரை சார்ந்த ; தொடுவரையின் திசையில் செல்கிற ; தொடுவரைபோற் செல்கிற ; ஒரு தடவை தொட்டு மீண்டுந் தொடாத ; விலகிச் செல்கிற ; விட்டு விலகிச் செல்கிற.

**tangen'tially**, *adv.* தொடுவரையின் திசையில், விலகித் தன் தனிப்போக்கிலே செல்லும் நிலையில் ; விலகிச் செல்லும் நிலையில்.

**Tangerine'**, *n.* மொராக்கோ (Morocco) வில் உள்ள டாங்கியர் (Tangier) நகரவாணர் ; தட்டையான சிறிய கிச்சிலிப் பழ வகை ; *a.* டாங்கியர் நகரஞ் சார்ந்த.

**tan'ghin**, *n.* மடகாஸ்கர் (Madagascar) என்னும் தீவுக்குரிய நச்சுக் கொட்டையினையுடைய மரவகை.

**tan'gible**, *a.* தொட்டுணரத்தக்க ; பிழம்பியலான ; திட்பமுடைய ; தெளிவான ; உறுதியான ; தெளிவாகப் புரியக்கூடிய ; ஐயமற்ற ; மருட்சி தராத ; நிலையான ; மாயத் தோற்றமாயிராத ; (சட்.) உருப்படியான.

**tang'le[1]**, *n.* கடுஞ்சிக்கல் ; சிக்கல் வாய்த்த களம் ; கந்தறுகோலம், தாறுமாறான பின்னல் கூளம் ; கடுமுடிச்சு ; குழம்பிய நிலை ; கடும்புதிர் ; அள்ளடிக்கரண்டி, மிக நுண்ணிய கடல்வாழுயிரிகளை அள்ளி மேலே கொண்டு வருவதற்கான அமைவு ; *v.* பின்னிச் சிக்குப்படுத்து ; சிக்கிக்கொள் ; சிக்கலில் அகப்பட்டுக்கொள்; பொறியில் அகப்படுத்து, சிக்க வை; இடர்களில் தொடர்பு படுத்து ; மாட்டிவை.

**tan'gle[2]**, *n.* கடற்பாசி வகை.

**tan'glefoot**, *n.* வெறிச் சாராயம் ; வெறியூட்டுங் குடி வகைகள்.

**tang'ly**, *a.* ஒன்றேடொன்று பின்னிச் சிக்குற்ற ; குழம்பிய ; குழப்பமடையும் பாங்குள்ள.

**tang'o**, *n.* தென் அமெரிக்க நடனவகை ; *pl.* tang'os ; *v.* தென் அமெரிக்க நடனவகை ஆடு.

**tan'gram**, *n.* புதிர்வெட்டுக் கட்டம், ஏழு துண்டுகளாக வெட்டப்பட்டு வெவ்வேறு வடிவங்களிற் பொருத்தக்கூடிய சீன சதுரக்கட்ட விளையாட்டுப் பொருள்.

**tan'ist**, *n.* (வர.) கெல்டிக் (Celtic) இனத்தலைவருக்குச் சட்டப்படி நிலையுறுதியான பின்னுரிமை யுடையவர், ஆளுபவருக்கு அடுத்தபடியான இனத்தின் தலைமூத்த வீரர்.

**tan'istry**, *n.* கெல்ட்டிக் இனத் தலைமைவகையில் மரபுத் தேர்வுரிமை முறை, குடும்பத்தைச் சேர்ந்தவர்களில் முன்பே தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவர் பின்னுரிமை யடையும் ஏற்பாடு

**tank**, *n.* குளம் ; நீர்த்தேக்கத் தொட்டி ; தொடர்வண்டி நீர்ச் சேமிப்புக்கலம் ; வெடிக்கோட்டை, இயங்கும் பீரங்கிப் படை வண்டி ; (தொ.) tank drama, பொங்கெழுச்சி நாடகம், மூழ்குவதனின்றுங் காப்பதைக் காட்டுவதற்காகத் தண்ணீரே பயன்படுத்தப்படும் எழுச்சி மிக்க நாடகம்; tank engine, எரிபொருள் நீர்ச்சேமத் தொட்டிகளை உடன் கொண்டுசெல்லும் பொறிவண்டி.

**tank'age**, *n.* நீர்மவகையில் தொட்டித் தேக்கச்சேமிப்பு ; தொட்டித் தேக்கக் கட்டணம் ; தேக்கத் தொட்டி கொள்பரும அளவு ; கழிவுக் கொழுப்பு எருவகை.

**tank'ard**, *n.* மிடாத்தொட்டி, மேல்மூடியுள்ள பெரிய குடிகலம்; மிடாவிலுள்ள பானம்; மிடாத்தொட்டி கொள்ளுமளவு.

**tank'-buster**, *n.* (இழி.) வெடிக்கோட்டைத் தாக்குவிமானம், வெடிக்கோட்டை எதிர்ப்புப் பீரங்கிகளையுடைய விமானம்.

**tank'er**, *n.* எண்ணெய்க் கப்பல், பெரிய அளவில் எண்ணெய் எடுத்துச் செல்வதற்கான தொட்டிகளையுடைய கப்பல்.

**tan'-liq'uor**, *n.* தோல்பதச்சாறு, தோல் பதனிடுவதில் பயன்படுத்தப்படும் நீர்மம்.

**tann'age**, *n.* தோல் பதனீடு.

**tann'ate**, *n.* (வேதி.) தோல்பதத் துவர், ஆவாரப்பட்டைத் துவர்ப்பொருள் உப்பு.

**tanned**, *a.* தோல்வகையில் பதனிடப்பட்ட; பழுப்புநிறமாக்கப்பட்ட.

**tann'er[1]**, *n.* தோல் பதனீட்டாளர்.

**tann'er[2]**, *n.* ஆங்கில அரைவெள்ளி நாணயம்.

**tann'ery**, *n.* தோற்கிடங்கு, தோற்பதனீட்டகம், தோல் பதனிடுஞ்சாலை.

**tann'ic**, *a.* தோல் பதனீட்டுப் பட்டை சார்ந்த ; தோல் பதத்துவர் சார்ந்த.

**tannif'erous**, *a.* பட்டைப் பதத் துவர் தருகிற.

**tann'in**, *n.* பதத் துவர், நச்சுக்கொட்டை பட்டை ஆகிய வற்றிலிருந்து எடுக்கப்பட்டு மை-தோல் பதனீடு ஆகியவற்றில் பயன்படும் நிறமற்ற படிகப்பொருள்.

**tann'ing**, *n.* தோல் பதனீடு ; தோல் பதனிடுந் தொழில்.

**tan'rec**, *n.* புழுவுணி, மடகாஸ்கர் (Madagascar) தீவிற்குரிய புழுப்பூச்சியுண்ணும் பால்குடி உயிர்வகை.

**tan'sy**, *n.* ஆயிரந்தழைப்பூண்டு ; (தொ.) like a tansy, மிகு துல்லியமாக.

**tantaliza'tion**, *n.* ஆவல்காட்டி ஏய்ப்பு, ஏங்கவைப்பு ; தொடர்ந்து நீடித்த ஏமாற்றம்.

**tan'talize**, *v.* ஆவல்காட்டி ஏய், எளிதிற் கிடைப்பதுபோல் தோற்றுவித்து ஏமாறச்செய் ; ஏங்கவை, காட்டிக்காட்டி மறை.

**tan'talum**, *n.* வெம்மம், வெப்பத்தினாலும் திராவகச் செயற்பாட்டினாலும் பாதிக்கப்படாத வெள்ளை உலோகத் தனிம வகை.

**Tan'talus[1]**, *n.* வானிறை செல்வன், கிரேக்க புராணமரபில் தண்ணீர் இருந்தும் குடிக்க முடியாமலும் பழங்கள் இருந்தும் தின்னமுடியாமலும் தண்டிக்கப்பட்டவன்.

**tan'talus[2]**, *n.* நாரையினப் பறவைவகை ; ஏங்குநிலைக் குடிகலப்பேழை, கண்ணுக்குத் தெரிந்தும் கிடைக்க முடியாதபடி வடிதேறற் கலங்கள் பூட்டி வைக்கப்பட்ட நிலையறைச்சட்டம்.

**Tan'talus-cup**, *n.* மாய ஏங்குருச் சாடி, தாடையளவும் உறிஞ்சு தாழ்கவிகைக் குழாய் பொருத்தப்பெற்ற மனித உருவமைந்த நீருறிஞ்சிக்குழாய்த் தத்துவத்தை விளக்கும் விளையாட்டுக் கலம்.

**tan'tamount**, *a.* சரி ஒப்பான, ஒப்பமைவாயுள்ள, உடனொப்பான.

**tantar'a**, *n.* அடுத்தடுத்த எக்காள முழக்கம் ; தொடர்ந்த கொம்பு முழக்கம்.

**tantiv'y**, *n.* கூவிளி, வேட்டைக் கூக்குரல் ; விரைவியக்கம் ; நாலுகாற் பாய்ச்சல், வேகப்பாய்வு, தாவு குதி; *a.* விரைவான, வேகமான ; *v.* பாய்ந்துசெல் ; பரபரப்புக்கொள், அவசரங்காட்டு ; *adv.* விரைவாக, வேகமாக.

*tan'tra*, (ச.) *n.* தெய்வ பூசனைக்குரிய மந்திரதந்திரங் கூறும் ஏடு ; விதி ; சடங்கு.

**tan'trism**, *n.* தந்திர சாத்திரக் கோட்பாடு.

**tan'trist**, *n.* தந்திர சாத்திரக் கோட்பாட்டாளர் ; தந்திர சாத்திர முறை பின்பற்றுபவர் ; தந்திர சாத்திர ஆர்வலர்.

**tan'trum**, *n.* வெறியெழுச்சி.

**tan'-yard**, *n.* பதனீட்டுச்சாலை, தோல் பதனீட்டகம்.

**Tao'ism**, *n.* தாவ் நெறி, சீன மெய்விளக்கியலாரான லாவ்-தசே (Lao-tsze, கி.மு. 604) என்பாரின் சமயக் கோட்பாடு.

**tap[1]**, *n.* வடிமுளை, பாய்குழல்; மிடாவின் பாய்குழல் அடைப்பு; தனிச் சிறப்புமுறை வடிப்புத்தேறல்; வடிதேறல் அருந்தகஅறை ; புரியாணி உள்வரி இழைப்புக் கருவி; ஆணிவேர் ; *v.* மிடாவிற்குக் குழாய்முளை பொருத்து ; மிடாவில் துளையிடு; மிடாவில் துளையிட்டு நீர்மத்தை வெளியேற்று ; வடியவிடு ; (மரு.) கொழுப்புநீரினைக் குத்தி வெளியே எடு ; கொழுப்பு நீரினை வடிப்பதற்காகத் துளையிடு ; மரத்தைக் குத்திச் சாறு வடியவிடு; ஊடுருவி நுழை; புகுந்து தொடர்புகொள், வாணிகத் தொடர்பு நிறுவு ; விண்ணப்பஞ் செய்துகொள், வேண்டு ; பற்றி உரையாடத் துவங்கு; தந்திக்கம்பி மின்வலிப் பகுதி திருப்பிவிட்டுச் செய்தியை இடையிட்டுத் தடு ; புரியாணி உள்வரி இழைத்துருவாக்கு ; (தொ.) on tap,

மிடாவகையில் பாய்குழல் அடைப்பு பொருத்தப்பெற்றுள்ள ; தேறல் வகையில் பாய்குழல் அடைப்பிட்ட மிடாவிலுள்ள ; தேறல் வகையில் வடித்து எடுக்கப்படுவதற்கு ஆயத்தமா யுள்ள ; பொருளக முறிவகையில் வேண்டும்போது வரை யறை வீதப்படி பெறத்தக்க.

**tap**[2], *n.* தட்டு, மென்முறைக் கொட்டு ; கொட்டொலி, தட்டும் அரவம் ; *v.* தட்டு, மெல்லக்கொட்டு ; கோல்கொண்டு தட்டு ; கதவு தட்டு, கதவில் கொட்டு ; மிதியடிக் குதித்தோல் பொருத்து ; (தொ.) be on one's taps, ஏதாவது ஒன்றன் பொருட்டுச் சுறுசுறுப்பாயிரு.

***ta'pa***, *n.* மரவுரி, பசிபிக் தீவுகளில் ஆடையாகவும் விரிப் பாகவும் பயன்படுத்தப்படும் மரப்பட்டை.

**tap'-borer**, *n.* மிடாத் துளைப்புத் துறப்பணம்.

**tap'-dancing**, *n.* காற் கொட்டுத் தாள நடனவகை.

**tape**, *n.* தளைப்புப் பட்டை வார், சிப்பங்கட்டி யிறுக்குவதற் குரிய நீண்டொடுங்கிய பட்டை ; வார்க்கச்சை, பந்தய இலக் குக் கம்பங்களிடையே மாட்டிவிடப்படும் இழைப்பட்டை ; வார்ப்பட்டை, இயந்திரக் கப்பிகளில் சுழலும் திண் துகில் வார் ; வாரிழைத்தாள், தந்திப் பதிவுக்குரிய தொடரிழைத் தாள்பட்டை ; முடி ஒப்பனைவாரிழை ; தொலைத் தந்திப் பதிவுக் குரிய நீள்சுருள் வார்த்தாள் ; நீட்டளவை வார் ; (இழி.) வடி தேறல் ; புத்தகக் கட்டட வேலையில் பூட்டுத்தளை வார் ; *v.* தளைவாரால் கட்டு ; கட்டுவார் வழங்கு ; புத்தகக் கட்டட வேலையில் தாள்பூட்டுக்களைத் தளைவாரால் பிணி ; ஆள் வகையில் நீட்டளவை வாரால் அள ; ஆளின் பண்புக் கூறுகளை மொத்தமாக மதிப்பிட்டள ; இயந்திர வார்ப் பட்டைகள் இணை ; இயந்திரங்களுக்கு வார்ப்பட்டைகள் இணைவி ; தந்திப்பதிவு முதலியவற்றிற்கான வாரிழைத்தாள் இணைவி ; (தொ.) breast the tape, பந்தயத்தில் வெற்றி பெறு, பந்தய இலக்குவார்மீது மார்புறமோதி வெற்றியடை ; red tape, சடங்கார்வம், சிவப்புநாடா.

**tape'less**, *a.* வார்பட்டையில்லாத ; அளவைவாரில்லாத.

**tape'-line, tape'-meas'ure**, *n.* நீட்டளவை வார், நெகிழ் வுடைய உலோகம் அல்லது துணிப்பட்டையாலான அளக்கும் நாடா.

**ta'pen**, *a.* வார்ப்பட்டையாலான ; இழைக்கச்சை வடிவான ; நாடாபோன்ற.

**tap'er**[1], *n.* மெழுகுதிரிப்பட்டை, மெழுகுத் துணியாலான மெல்லிய வாரிழைத்திரி ; மெழுகு தோய்ந்த விளக்குத்திரி ; *a.* (செய்.) தேய்ந்து தேய்ந்து செல்கிற ; *v.* நுனி நோக்கிச் சிறுத்துச்செல்கிற ; *v.* நுனிநோக்கிச் சிறுத்துச்செல் ; தேய்ந்து தேய்ந்து செல்லுவி.

**ta'per**[2], *n.* நீட்டளவை வாரால் அளப்பவர் ; அளவைவார் பயன்படுத்துபவர்.

**tap'estry**, *n.* சுவரின்மீதான திரைச்சீலை ; தட்டுமுட்டுக்கல மீதான சித்திரத் தொங்கலாடை ; ஓவியத்திரை ; ஓவியத் திரைச்சுருள்.

**tape'worm**, *n.* நாடாப் புழு, ஒட்டுயிரான வயிற்றினுட் புழு வகை.

**tapioc'a**, *n.* மரவள்ளிச் செடி ; மரச்சீனி, எழிலைக் கிழங்கு.

**tap'ir**, *n.* காண்டாமிருகத் தொடர்புடைய பன்றிபோன்ற விலங்கு வகை.

**tap'is**, *n.* மேசைத்துணி மீதிட்ட நிலை, திரைமீதான நிலை ; ஆய்வுக்குரிய நிலை ; சிந்திக்க வேண்டிய தன்மை ; (தொ.) be on the tapis, come on the tapis, ஆய்வுக்குரியதாயிரு ; யோசிக்கப்படுவதாயிரு.

**tapote'ment**, *n.* (மரு.) சதைப்பிடிப்புத் துறையில் அழுத்தித் தட்டுதல் முறை.

**tapp'et**, *n.* தட்டியக்கப் பிதுக்கம்.

**tap'rate**, *n.* அரசியற் பொருளக முறியின் நடைமுறைக் கட்டணம்.

**tap'room**, *n.* தேறல் விற்பனைக்கூடம் ; தேறல் பருகும் அறை.

**tap'-root**, *n.* ஆணி வேர்.

**taps**, *n. pl.* படைவீரர் குடியமைப்பில் உணவுக்கான மணி யோசை ; படைவீட்டில் விளக்கணைப்பாணை அடையாள முரசறைவிப்பு.

**tap'ster**, *n.* தேறல்மனைப் பணியாள், சாராயக் கடையில் தேறல் வடித்தெடுப்பவர்.

**tar**[1], *n.* கீல், கரிஎண்ணெய் ; *v.* கீல் பூசு, கரிஎண்ணெய் தடவு ; கீல்போர்த்து, கரி எண்ணெயாட்டு ; (தொ.) tar and feather, தண்டனையாகக் கீல் பூசி மேலே இறகுகளை ஒட்டி மூடு ; tarred with the same brush, tarred with the same stick, ஒத்த குறைகளையுடைய.

**tar**[2], *n.* கடலோடி, கப்பலோட்டி ; (தொ.) jack tar, கட லோடி, கப்பலோட்டி.

**ta'radiddle**, *n.* (பே-வ.) புளுகு ; பொய்.

**tar'afern**, *n.* உணவாகப் பயன்படும் நியூசிலாந்துநாட்டுச் சூரல்வகை.

**tarantass'**, *n.* ருசிய நாற்சக்கர வண்டி வகை.

**tarantell'a, tarantelle'**, *n.* இத்தாலியில் விரை சுழலாட்ட நடனம் ; விரை சுழலாட்ட இசை ; பெருஞ்சிலந்திக் கடிக்கு மாற்றெனக் கருதப்பட்ட விரை சுற்றுட்டம்.

**taran'tula**, *n.* பெருஞ்சிலந்தி வகை.

**taran'tular**, *a.* பெருஞ்சிலந்தி வகை சார்ந்த.

**taratan'tara, taratantar'a**, *n.* எக்காள ஒலி ; கொம்பு முழக்கொலி.

**tarax'acum**, *n.* சாமந்தியினச் செடிவகை ; சாமந்தியினச் செடி வகையிலிருந்து எடுக்கப்பெற்ற மருந்து வகை.

**tar'-board**, *n.* புத்தகக் கட்டட வேலைப்பாட்டிற் பயன்படும் கீல்பசை ஒட்டு அட்டை.

**tarboosh'**, (அரா.) *n.* துருக்கிக் குல்லாய் வகை.

**tar'-brush**, *n.* கீல்பூசு தூரிகை ; (தொ.) a touch of the tar-brush, நீகிரோவர் மேனிநிறச் சாயல், நீகிரோவர் குருதிக் கலப்புநிலை.

***tardamen'te***, (இத்.) *adv.* (இசை.) மெதுவாக.

**Tardenois'ean**, *a.* (தொல்.) இடைக் கற்காலத்திற்குரிய.

**tard'igrade**, *n.* மெல்ல நகரும் உயிர்வகை ; *a.* மெதுநடை யுடைய.

**tard'ily**, *adv.* மசணையாய், மெத்தனமாய் ; தாமதமாய்.

**tardi'ness**, *n.* மசணைத்தன்மை, மடிமை, மெத்தனம்.

***tard'o***, (இத்.) *a.* (இசை.) மெதுவான ; *adv.* மெதுவாக.

**tard'y**, *a.* மசணையான, மெத்தனமான ; மெல்ல நகருகிற ; தாமதமான ; அசட்டைத்தனமான ; பின்தங்குகிற ; தயங்கு கின்ற.

**tare**[1], *n.* கால்நடைத் தீவனமாகப் பயன்படும் புதர்ச்செடி வகை.

**tare**[2], *n.* சரக்குப்பெட்டியின் வெறும் பெட்டியெடை ; உந் தூர்தியின் எரிபொருள் இணையாத் தனி எடை ; (வேதி.) பொருள் எடையீட்டில் எடைக்கல எடைமானம் ; *v.* பெட்டி எடை உறுதிசெய் ; வெற்றெடை காண் ; தனியெடை கணி ; (தொ.) tare and tret, (கண.) தனி எடை கணிப்புமுறை.

**targe**, *n.* பரிசை, சிறுகேடயம்.

**targ'et**, *n.* குறியிலக்கு, வில்லெறி - கணையெறி - எறிபடை வேட்டு ஆகியவற்றிற்கான இலக்குக் குறியீடு ; குறிவட்டம், இலக்குக் குறியீடான வட்டவடிவப் பொருள் ; வேட்டுக் குறியிலக்கான குறிச்சதுரம் ; வேட்டிலக்கு, வேட்டுக்கு உட் பட்ட இடம் ; நோக்கம், செயற்குறி, கருதிய பயன் ; எதிர் நோக்கிய விளைவு ; குறிநோக்க மதிப்பு, மதிப்பிலக்கு ; இருப்புப்பாதையின் வட்ட அடையாளச் சமிக்கைக் குறியீடு ; ஆட்டுக்குட்டியின் கழுத்து-மார்பு இறைச்சி ; பரிசை, சிறு வட்டக் கேடயம் ; (தொ.) target ship, வேட்டுக் குறியிலக் காகப் பயன்படுத்தப் பெறும் பழங் கப்பல்.

**tar'get-card**, *n.* குறியிலக்கு வட்ட அட்டை.

**Targ'um,** *n.* எபிரேய மறையின் பழமையான அரமேயிக் மொழிப்புரைகளுள் ஒன்று.

**Targum'ic,** *a.* பழைய ஏற்பாட்டின் அரமேயிக் வடிவம் பற்றிய.

**ta'riff,** *n.* காப்புவரி; ஏற்றுமதி இறக்குமதிச் சுங்கவரி; காப்புவரிக் கட்டணப் பட்டி; ஏற்றுமதி இறக்குமதி வரிக்கான சட்டமுறை; ஏற்றுமதி இறக்குமதிச் சரக்கு வகைகளுக்கான வரிச்சட்டம்; *v.* காப்பு வரி விதி; காப்புவரிக்கான பொருள்விலை மதிப்புச் செய்; (தொ.) preferential tariff, தனிநாடுகளின் இறக்குமதி வகையில் குறை காப்புவரிச் சலுகை; retaliatory tariff, எதிரீட்டுக் காப்புவரி, தன்னாட்டுப் பொருள்களுக்குப் பிறநாடுகள் போடும் வரிகட்கு ஈடுசெய்யப் பிறநாட்டுப் பொருள்களுக்கு விதிக்கப்படும் வரி; tariff reform, காப்புவரிச் செஞ்சீர்திருத்தப்பாடு, சுங்கவரி ஏற்றத் தாழ்வுகளைச் சரிசெய்யுஞ் சீர்திருத்தத் திட்டம்; tariff wall, காப்புவரித் தடை வரம்பு.

**tarl'atan,** *n.* மென்துகில் வகை.

**tarm'ac,** *n.* விமானதள ஓடுபாதைக் காரெண்ணெய்க் கும்மாயம், பாட்டை போடுவதற்குரிய சாம்பற்கசடுகலந்த கீல்கலவை.

**tarmacad'am,** *n.* காரெண்ணெய்க் கும்மாயம், பாட்டை போடுவதற்குரிய கற்கூளமும் சாம்பற்கசடும் கலந்த கீல் கலவை; *v.* கீலிட்டு மூடு.

**tarn,** *n.* நெடுஞ்சுனை, மலைமீதுள்ள சிற்றேரி.

**tarn'al,** *a.* படுசாபமுடைய.

**tarna'tion,** *n.* படுசாபம் உறுதல்.

**tarn'ish,** *n.* கறை; வடு; குறை; மேல்மாசு, கனிப்பொருள் மீது படரும் மாசுப்படலம்; *v.* ஒளிமழுங்குவி; ஒளிர்வு குறையச்செய்; கறைப்படுத்து; வண்ணங்கெடு; ஒண்மை யிழ; கறைப்படு; நிறம் மங்கு; (தொ.) a tarnished reputation, களங்கப் புகழ்.

**ta'ro,** *n.* சேம்பினக் கிழங்குவகை; *pl.* tar'os.

**ta'roc, tar'ot,** *n.* முற்காலச் சீட்டு, முன்பு வழக்கிலிருந்த 78 சீட்டுள்ள கட்டுச்சீட்டுகளுள் ஒன்று; முற்காலச் சீட்டாட்டம், 78 சீட்டுள்ள கட்டுவைத்து ஆடும் ஆட்டம்.

**tarp'an,** *n.* தார்த்தாரி பகுதிக்குரிய காட்டுக்குதிரை.

**tarpaul'in,** *n.* கருங் கித்தான், காரெண்ணெய்ப் பதமிட்ட நீர்க்காப்புடைய முரட்டுத் துணிவகை; கருங் கித்தான் மேற்கட்டி; கருங் கித்தான் திரைச்சீலை; கருங் கித்தான் தொப்பி; (பழ.) கடலோடி.

**Tarpei'an rock,** *n.* (வர.) உருளிப்பாறை, பண்டை ரோமரிடையே குற்றவாளிகளைக்கொண்டு உருட்டித் தள்ளிவிடுவதற்குரிய கொடும்பாறை.

**tarp'on,** *n.* கடல்வேட்டைக்கு இலக்காகும் தென் அமெரிக்க பெருமீன் வகை.

**ta'rradiddle,** *n.* பொய், புளுகு.

**ta'rragon,** *n.* நறுமணப்பொருள்வகை.

**Tarragon'a,** *n.* ஸ்பானியநாட்டு மதுவகை.

**ta'rrass,** *n.* எரிமலைக் காரை, சீமைக்காரையாக முன் பயன்படுத்தப்பட்ட எரிமலைக்குழம்புப் பொருள்.

**ta'rrock,** *n.* கடற்பறவை வகை; கடற்பறவை வகையின் குஞ்சு.

**tar'ry**[1], *a.* காரெண்ணெய் சார்ந்த; கீலெண்ணெய் போன்ற; கீல்பூசிய.

**ta'rry**[2], *v.* தங்கியிரு; காத்திரு; வரவு சூத்தமை; தோன்றச் சுணங்கு.

**tars'al,** *a.* கணைக்காலெலும்பு சார்ந்த; கணைக்கால் சார்ந்த.

**tars'ia,** *n.* பல்வண்ண ஒட்டிணைப்பு மரவேலைப்பாடு.

**tars'ier,** *n.* பெருவிழியுடைய சிறு தேவாங்குவகை.

**tars'us,** *n.* கணைக்கால் எலும்பு; பறவைக்கால் கீழ்ப்பகுதி; (பூச்.) கீழ்க்கால் கடைப்பகுதி; கண்ணிமை ஒட்டுத்தசை; *pl.* tars'i.

**tart**[1], *n.* பொதியப்பம், பழங்கள் உட்பொதிந்த பண்ணியம்; (பே-வ.) சிறுக்கி; வேசி.

**tart**[2], *a.* காரமான; கடும் புளிப்பான; கடுப்பான; வெடுக்கென்ற, துடுக்கான, வெட்டொன்று துண்டு இரண்டான; (தொ.) a tart rejoinder, துடுக்கு மறுமொழி.

**tart'an**[1], *n.* பல்வண்ணக் கட்டக்கோடிட்ட ஸ்காத்லாந்து மேட்டுநில மக்கள் கம்பளி ஆடைவகை; கட்டமிட்ட துணி வகை; ஸ்காத்லாந்து மேட்டுநிலப் படைவீரர்; (அரு.) ஸ்காத்லாந்து மேட்டுநிலத்தார்.

**tart'an**[2], *n.* நிலநடுக்கடலில் வழங்கும் ஒற்றைப் பாய்மரக் கப்பல் வகை.

**Tart'ar**[1], *n.* தார்த்தாரி பகுதியினர்; தார்த்தாரி இனத்தவர், துருக்கிய-கோசக்கியர் உள்ளிட்ட மக்கட் குழுவினர்.

**Tart'ar**[2], *n.* முரடர், அடங்காதவர், இசைவுகேடர்; தாக்குபவரை எதிர்தாக்கித் திடீரெனப் பிடித்துக்கொள்பவர்; (தொ.) catch a Tartar, தன்னிலும் வலியவருடன் மோதிக்கொள்; பிடிப்பதற்கு மாறாகப் பிடிபடு.

**tart'ar**[3], *n.* மிடாவிளிம்புப் பொருக்கு; பல் ஊத்தை; குடலிளக்க மருந்துவகை; (தொ.) cream of tartar, மருந்துக்குப் பயன்படும் சாம்பர இருபுளியகிக் கலவை; tartar emetic, பேதி-வாந்தி மருந்துவகை.

**Tartar'ean,** *a.* கிரேக்க புராண வழக்கில் கீழுலகக் காவற் கிடங்கு சார்ந்த.

**Tartar'ian,** *a.* தார்த்தாரி இனஞ் சார்ந்த.

**tarta'ric,** *a.* புளியகஞ் சார்ந்த; புளியகத்திலிருந்து பெறப்பட்ட; (தொ.) tartaric acid, புளியகக் காடி.

**tartariza'tion,** *n.* புளியகக் கலப்பு, புளியகஞ் சேர்ப்பு; புளியகப் பண்பூட்டல்.

**tart'arize,** *v.* புளியகத்துடன் கல; புளியகஞ் சேர்; புளியகப் பண்பூட்டு.

**Tar'tarly,** *a.* தார்த்தாரிய இனத்தவர் போன்ற; கடுமுரடான, கொடுந் தோற்றமுடைய.

**Tart'arus,** *n.* கிரேக்க புராணத்தில் கீழுலகக் காவற்கிடங்கு; கீழுலகத் தண்டனையிடம்.

**tart'let,** *n.* பொதியப்பத்துண்டு.

**tart'ly,** *adv.* வெடுக்கென்று; கடுப்புடன்.

**tart'ness,** *n.* கடுகடுப்பு, வெடுவெடுப்பு; காரச்சுவையுடைமை; கடும் புளிப்புச் சுவை.

**tart'rate,** *n.* புளியகக் காடியின் உப்புச் சத்து.

**Tartufe', Tartuffe',** *n.* ஆஷாடபூதி.

**tartuffe'ism,** *n.* பாசாங்குச் சமயப்பற்று, போலிச்சமய வேடம்.

**tar'-water,** *n.* மருத்துக் குளிர்நீர்; மருந்தாகப் பயன்படும் காரெண்ணெய் வளிநீர்.

**task,** *n.* இடுபணி; வேலைச்சுமை, கடமைப் பொறுப்பு, கடும் உழைப்பு; கட்டளைப்பாடம், பள்ளிப் படிப்பிற்கு வகுத்தமைக்கப்பட்ட திட்டப் பாடப்பகுதி; *v.* பணி சுமத்து; வேலைவாங்கு; பணிக்கடம் ஒழுங்கமைத்துக் கொடு; கடும் உழைப்பு வாங்கு; கண்டித்தொறு; மிக நெருக்கித் தொல்லை கொடு; (தொ.) take person to task, கண்டித்தொறு, கண்டிப்புக்கு உட்படுத்து.

**task'-force,** *n.* வேலைக்காரப்படை, சிறப்புக்கடமைப்படை, தனிப் பொறுப்பளிக்கப்பட்ட படைப்பிரிவு.

**task'master,** *n.* பணி ஏவுநர், எடுபிடி மேலாளர்.

**task'-mistress,** *n.* பணியிறைவி, எடுபிடிப் பிராட்டி.

**Tasman'ian,** *n.* டாஸ்மேனியா தீவில் வாழ்பவர்; *a.* டாஸ்மேனியா தீவினைச் சார்ந்த.

**Tass**[1], *n.* சோவியத் ஒன்றியத் தந்தி நிறுவனம்.

**tass**[2], *n.* குடிகலம், குடிவகைச் சிறிதளவு, சாராய மடக்களவு.

**tass'el,** *n.* மெத்தை தலையணையோர ஒப்பனைத் தொங்கிழைத் தொகுதி; தொங்கற் குஞ்சம்; தொப்பி இழைச்சூட்டு; தாவரக்

கதிரிழைச் சூட்டு; சோளவகைக் கதிர்க்குஞ்சம்; சுவடிப் பக்க அடையாள இழைக்கச்சை; ஆடைச்சரிகைப் பட்டை; *v.* குஞ்சம் அமை; ஒப்பனைத் தொங்கலமை; தாவர வளர்ச்சி நாடிக் கதிரிழைச் சூட்டுக் கொய்தகற்று, தாவரவகையில் கதிரிழைச் சூட்டுவிடு.

**tast'able,** *a.* சுவைக்கத்தக்க.

**taste,** *n.* சுவை; நாச்சுவை; உணவுச்சுவை; நாவுணர்வு; சுவையுணர்வு; சுவைத்திற உணர்வு; சுவை நுகர்வு; சுவைக்கூறு; சுவை நுட்பம்; சுவை நுட்பநயந் திரித்தறிவுணர்வு; சுவைமாதிரி; சுவைத் துணுக்கு, சுவை நுகர்ந்து காண்பதற்குப் போதிய அளவு; சிறிதளவு; விருப்பம்; நாட்டம்; ஈடுபாடு; தனியவா; பற்றார்வம்; விருப்பார்வம்; அழகுணர்வு; கலைநய உணர்வு; நயத்திரிபுணர்வு; நய நுட்ப உணர்வு; சுவைநயப் பாங்கு; நய நாகரிகப் பாங்கு; *v.* சுவைபார்; சுவைகாண்; சுவைநுகர்; சுவைமாதிரி காண்; சுவைமாதிரி கொள்; சுவைத்திறம் நுகர்; சிறிது உட்கொள்; இனிது துய்; அனுபவி; உணவு வகையில் சுவையுடையதாயிரு; சுவைக் கூறுடையதாயிரு; சுவைச் சார்புடையதாயிரு; சுவைத்திற நினைவூட்டுவதாயிரு; (தொ.) good taste, நலத்தின்கண் நாருடைமை, நல்லதன்கண் இயல் புணர்ச்சி; taste of the whip, அடி அனுபவ உணர்வு, to one's taste, ஒருவர் விரும்புமாறு.

**taste'ful,** *a.* சுவைநயமார்ந்த; உணவு வகையில் நன்கு சுவைக்கத்தக்க சிறப்புடைய; பொருள்வகையில் இனிய நய நலமுடைய; சுவைத்திறமிக்க; ஆள்வகையில் சுவை யுணர்வுத் திறமுடைய.

**taste'fully,** *adv.* சுவையுணர்வுடன்; சுவை நயமுடையதாய்; நயநல உணர்வுடன்; நயநல முடையதாய்.

**taste'fulness,** *n.* சுவையுடைமை.

**taste'less,** *a.* சுவையற்ற; சப்பென்ற; தனிச்சுவை எதுவுமற்ற; சுவைப்பண்பில்லாத; கலைச்சுவை யற்ற; சுவை நயத் திரிபுணர்வற்ற; மொழி நடை வகையில் நாகரிக மற்ற.

**tas'ter,** *n.* சுவைத் தேர்வாளர்; ஏட்டுத்தரங் காண்பவர்; முன்னுணியர்; சுவைக்கலம், மதுவின் சுவை பார்ப்போரால் பயன்படுத்தப்பெறும் சிறு மதுக்கிண்ணம்; சுவைத் துணுக்கூரி, பாலடைக் கட்டியினின்றும் சிறு மாதிரித் துணுக்கு எடுக்கப் பயன்படுங் கருவி.

**tas'tily,** *adv.* சுவையுணர்வுத் திறத்துடன், சுவைநல மிக்கதாக.

**tas'ty,** *a.* (பே-வ.) சுவையான; நறுஞ்சுவை யுடைய; நய நல மிக்க.

**tat,** *v.* பின்னி முடிபோடு.

**ta-ta',** *int.* போய் வருக.

**Ta'tar,** *n.* = Tartar[1].

**ta'tou,** *n.* கீழறுக்கும் இயல்புடைய தென்அமெரிக்க விலங்கு வகை.

**tatt'er,** *n.* கந்தல்; தொங்கல் கிழிசல் கீற்று; கிழிசல் தாள் துண்டு; *v.* கந்தலாகக் கிழி; கந்தலாகு.

**tatterdemal'ion,** *n.* கந்தலாண்டி, கந்தலாடையன்.

**Tatt'ersall's,** *n.* லண்டன் மாநகரக் குதிரைச் சந்தை.

**tatt'ing,** *n.* ஓரப் பின்னற் குஞ்சவேலை.

**tat'tle,** *n.* கதைப் பேச்சு; கோளுரை; *v.* வம்பள; பிதற்று; சோம்பேறிப் பேச்சுப்பேசு.

**tatt'ler**[1], *n.* வம்பளப்பாளர், பொருத்தமின்றிப் பேசுவோர்; மணற்புறப் பறவை வகை.

**tattoo'**[1], *n.* படை அந்திமுரசு; இராணுவ இரவுக்காட்சி; *v.* விரல் தாளமிட்டுச் சோம்பியிரு; (தொ.) the devil's tattoo, மேடைமீது தாளம் போடுதல்.

**tattoo'**[2], *n.* பச்சை குத்தல்; *v.* பச்சை குத்திக்கொள்.

**tatt'oo**[3], (இ.) *n.* மட்டக் குதிரை.

**tatt'y,** (த.) *n.* தட்டி, இலாமிச்சைவேர்த் தடுக்கு.

**tau,** *n.* T என்னும் கிரேக்க எழுத்து; T என்னும் எழுத்து வடிவத்தையுடைய மீன்வகை; (தொ.) tau cross, T என்னும் எழுத்து வடிவுடைய சிலுவை.

**Tauch'nitz,** *n.* ஐரோப்பாக்கண்டப் பிரயாணிகளிடையே பெருவழக்கான பிரிட்டிஷ் அமெரிக்க நூல் வெளியீட்டு வரிசையின் ஏடு.

**taught,** *v.* teach என்பதன் இறந்தகாலம்.

**taunt**[1], *n.* இடித்துரை, பழித்துரை; *v.* பழி, குற்றங்கூறு, குத்திப்பேசு, இடித்துரை, திட்டு; வெறுப்புடன் வசவுகூறு.

**taunt**[2], *a.* (கப்.) பாய்மர வகையில் உயர்ந்த, நெடிய.

**taunt'ing,** *a.* குற்றங்கூறுகிற; பழித்துரைக்கிற.

**taunt'ingly,** *adv.* கடும் பழிப்பாக.

**taur'ine,** *a.* காளை போன்ற; எருத்தினை ஒத்த; ஆன்விடை சார்ந்த; இடப வான்மனைக் குரிய.

**taurom'achy,** *n.* மாட்டுப்போர்; காளைமாட்டுச் சண்டை.

**Taur'us,** *n.* இடப வான்மனை, வைகாசி வீடு.

**taut,** *a.* (கப்.) விறைப்பான, கயிறு வகையில் கட்டிறுக்கமான; நெகிழ்வற்ற; கப்பல் வகையில் நல்ல நிலையில் உள்ள.

**taut'en,** *v.* கயிறு வகையில் கட்டிறுக்கமாக்கு.

**tautolo'gical,** *a.* பயனில் அடுக்கான, கூறியது கூறுகிற.

**tautol'ogy,** *n.* கூறியது கூறல்; ஒரு பொருட்சொல்லடுக்கு.

**tautoph'ony,** *n.* வந்த ஒலியே திரும்பவருதல்.

**tav'ern,** *n.* அருந்தகம்; உணவு குடி-வழங்கும் பொதுவிடுதி.

**taw**[1], *n.* கோலி விளையாட்டு; கோலி விளையாட்டுக் கள வரம்பு; கோலி.

**taw**[2], *v.* வெண்தோல் பதனிடு, பட்டைப்பதச் சாறின்றி உப்புப்படிகார நீரிலிட்டுத் தோய்வித்துத் தோற்பதஞ் செய்.

**tawd'rily,** *adv.* வெறும் பகட்டாக.

**tawd'riness,** *n.* வெற்றுப் புறப்பகட்டு; போலிப் பகட்டுடைமை.

**tawd'ry,** *n.* போலிப் பகட்டுப்பொருள்; தகுதியற்ற பகட்டணி ஒப்பனைப் பண்பு; *a.* வெறும் பகட்டான; உள்ளீடற்ற; போலித் தோற்றமுடைய; தகுதியற்ற வெறும் பகட்டணி பூண்ட.

**taw'er,** *n.* தோல் வெண் பதனீட்டாளர்.

**taw'ery,** *n.* தோல் வெண்பதனீட்டகம்; தோல் வெண் பதனீட்டுத் தொழில்.

**tawn'iness,** *n.* பழுப்பு நிறம்.

**tawn'y,** *a.* பழுப்பு மஞ்சளான; தோல் பதனீட்டு நிறமான.

**taws, tawse,** *n.* தெறிவார், குழந்தைகளை அடிக்கும் பிளவுத் தோல் வார்.

**tax,** *n.* வரி, திறை; கடுஞ்சுமை; பெரும் பாரம்; தாங்க முடியாத் தொல்லை; பெருங்கட்டம்; துயர்க் கடமைச்சுமை; *v.* வரி விதி; வரி மதிப்பிடு; தாங்க முடியா நிலைப்படுத்து; வரி விதிப்பிற்குரிய ஆள் பதிவுசெய்; கடும்பளுச் சுமத்து; வற்புறுத்திக் கோரு; வற்புறுத்திப் பெறு; வலிந்து செயலாற்றுவி; குற்றஞ் சாட்டு; (சட்.) இசைவளிப்பது அல்லது மறுப்பது முன்னிட்டு மதிப்பினங்களை ஆய்வுசெய்; (தொ.) capitation tax, தலைவரி; direct tax, நேர்முகவரி; entertainment tax, களிக்கைவரி; income tax, வருமான வரி; indirect tax, மறைமுக வரி; profession tax, தொழில் வரி; single tax, ஒருமுனை வரி; மேல் வளர்ச்சிபற்றிக் கணக்கின்றி நிலமீது விதிக்கப்படும் வரி, tax one's memory, வருத்தி நினைவிற் கொண்டு வரமுயலு.

**taxabil'ity,** *n.* வரி விதிக்கத்தக்க தன்மை.

**tax'able,** *a.* வரி விதிக்கத்தக்க.

**tax'ableness,** *n.* வரி விதிக்கத்தக்க நிலையுடைமை.

**taxa'tion,** *n.* வரி விதிப்பு.

**tax'-collector,** *n.* வரி வசூலிப்பவர், தண்டலர்.

**taxed'-cart**, *n.* சிறுவண்டி வகை; வரிச்சலுகை வண்டி, குறைவரி அல்லது முழு விலக்குக்குரிய உழவு-வாணிக வகைக்கான இருசக்கர வண்டி.

**tax'eme**, *n.* (மொழி.) இலக்கணச் சிறுக்கக்கூறு.

**tax'-farmer**, *n.* வரிக் குத்தகையாளர்.

**tax'-free**, *a.* வரியற்ற; இறையிலியான.

**tax'-gatherer**, *n.* தண்டலர்.

**tax'i**, *n.* வாடகை மோட்டார்; வாடகை விமானம்; *v.* வாடகை உந்துவண்டியிற் செல்; வாடகை உந்துவண்டியில் இட்டுச்செல்; விமானத்தை வானேறுமுன் நிலத்தில் இயக்கு; விமானத்தை வானேற்று முன் நீரில் இயக்கு; *pl.* tax'is.

**tax'icab**, *n.* வாடகை மோட்டார்.

**tax'i dancer**, *n.* காசுக்குக் கூடியாடும் மகள்.

**tax'idermist**, *n.* தோற்பாவைக் கலைஞர்.

**tax'idermy**, *n.* தோற்பாவைக்கலை, பஞ்சடைத்து உயிர்த் தோற்றமுடையன போல விலங்கு-புள் தோல் பயன்படுத்துங் கலை.

**taxi'-man**, *n.* வாடகை மோட்டார் ஓட்டி.

**taxim'eter**, *n.* வாடகைவண்டிக் காசுமானி.

**tax'in**, *n.* மரவகைப் பிசின் பொருள்.

**tax'ing-master**, *n.* முறைமன்றத்தில் செலவுமதிப்புமீது வரி விதிப்பவர்.

**tax'iplane**, *n.* வாடகை விமானம்.

**tax'is**, *n.* பண்டைக்கிரேக்க படைப்பிரிவு வகை; (இலக்.) வரிசை ஒழுங்கமைதி; (வில.) வகுப்பு தொகுப்புமுறை; (உயி.) முழு எதிர்வியக்கம், புறத்தூண்டுதலால் உயிர்ம முழுதும் எதிரியங்குறுதல்; (அறு.) பிடிப்பு முறை, உறுப்பு இயலமைவு வருவிக்கக் கையழுத்தம் பயன்படுத்தும் முறை.

**taxol'ogy**, *n.* வகுப்பு தொகுப்புமுறை ஆய்வியல்.

**taxonom'ic, taxonom'ical**, *a.* வகுப்பு தொகுப்புமுறை சார்ந்த.

**taxonom'ically**, *adv.* வகுப்பு தொகுப்புமுறையடிப்படையாக.

**taxon'omist**, *n.* வகுப்பு தொகுப்புமுறையாளர்.

**taxon'omy**, *n.* இயலின் வகுப்பு தொகுப்புமுறைக்கூறு; வகுப்புதொகுப்பு முறை இயல்.

**tax'payer**, *n.* வரி செலுத்துவோர்.

***taz'za***, (இத்.) *n.* அடிவைத்த கமண்டலம்.

**tchick**, *n.* சுச்சூ ஒலி; நாத்துறுத்தொலி; *v.* சுச்சூ ஒலி செய், நாத்துறுத்தொலி செய்.

**tea**, *n.* தேயிலைச்செடி; தேயிலை, தேயிலைச்செடியின் இலை; தேநீர்; தேநீரோடு கொள்ளும் எளிய பிற்பகல் உணவு; இலைச்சாற்றுக் குடிநீர்; சிறு குடிநீர்; *v.* தேநீர் அருந்து; தேநீர் அளி; (தொ.) black tea, இடையிடை உருளையிலழுத்திக் கரியுடன் வறுக்கப்பட்ட தேயிலை; green tea, உருளையிலழுத்தி உடன் வறுக்கப்பட்ட தேயிலை; Russian tea, பாலில்லாது எலுமிச்சையோடு கிடைக்குந் தேநீர்.

**tea'-caddy**, *n.* தேயிலைப்பெட்டி.

**tea'-cake**, *n.* தேநீரோடு உண்ணும் பண்ணிய வகை.

**teach**, *v.* கற்பி, படிப்பி; கல்வி ஆசிரியராய் இரு; விளக்கு; காட்டு; கற்பிக்குமுறையில் விரித்துரை.

**teachabil'ity**, *n.* கற்பிக்கப்படும் இயல்பு.

**teach'able**, *a.* கற்பிக்கத்தக்க; கற்க விரும்புகிற.

**teach'er**, *n.* கல்வி ஆசிரியர், கணக்காயர்.

**teach'ership**, *n.* கல்வி ஆசிரியர் பணி; கணக்காயர் நிலை.

**tea'-chest**, *n.* தேயிலைப் பெட்டகம்.

**teach'ing**, *n.* கற்பித்தல்; படிப்பினை; பாடம்; கற்பிக்கப்பட்ட செய்தி; கற்பித்த மெய்ம்மை; போதிக்கப்பட்ட கோட்பாடு.

**tea'-cloth**, *n.* தேநீர் அருந்தக மேசைவிரிப்பு; தேநீர் வரித்துணி; தேநீர்க்கலந் துடைக்குந் துணிக்குட்டை.

**tea'cup**, *n.* தேநீர்க் குவளை; (தொ.) storm in a tea cup, ஒன்றும் இல்லாததற்கு ஊர் கூடிவிட்டது.

**tea'cupful**, *a.* தேநீர்க் குவளை அளவு.

**tea'-fight**, *n.* (பே-வ.) தேநீர் விருந்து.

**tea'-garden**, *n.* இன்பத்தோட்ட வளாகம்.

**tea'-gown**, *n.* வீட்டில் பெண்டிர் மாலை நேர மெல்லாடை.

**Teague**, *n.* (இழி.) அயர்லாந்து நாட்டவர்.

**tea'-house**, *n.* தேநீரகம்.

**teak**, (த.) *n.* தேக்குமரம்.

**tea'-kettle**, *n.* தேநீர்க் கெண்டி; தேநீர்க் கொதிகலம்.

**teal**, *n.* குறுவடிவ நன்னீர் வாத்துவகை; *pl.* teal.

**tea'-leaf**, *n.* தேயிலை; தளந் துடைக்கப் பயன்படும் தேயிலைச் சக்கை.

**team**, *n.* கூட்டணி, ஒருங்கு ஒருதரப்பாக ஆடும் விளையாட்டுக் குழுமம்; ஒருதரப்பு ஆட்டக்குழு; குடும்பு, ஒருங்கிணைவான தொழிலாளர் இணைகுழு; பிணையல், ஒன்றாக நுகத்தில் பிணைக்கப்படும் விலங்குத் தொகுதி; பண்ணை விலங்குத் தொகுதி; அணி வரிசை, ஒருங்கு பறக்கும் பறவைகளின் இனை கூட்டு வரிசை; (பே-வ.) கலப்பை இழுப்புச் சங்கிலி; (பே-வ.) சங்கிலி; *v.* குடும்பினுக்கு வேலையளி, தொழிலாளர் குழுவின் தொழிற் குத்தகையொத்த குடும்பன் வாயிலாகக் குழுவுக்கு வேலையமர்த்திக்கொடு; பிணையலிற் குதிரையினை ஒருங்கு பூட்டு; குதிரைகளை நுகத்திற் பூட்டு.

**team'er**, *n.* குதிரைப் பிணையல் ஓட்டி, ஏரில் கட்டிய குதிரைகளை ஓட்டுபவர்; குடும்பன், தொழிலாளர் இணைகுழுவின் குத்தகையேற்ற கண்காணி.

**team'-spir"it**, *n.* கூட்டணி மனப்பான்மை, கூட்டொருமையுணர்வு.

**team'ster**, *n.* குதிரைப் பிணையல் ஓட்டி, ஏரில் கட்டிய குதிரைகளை ஓட்டுபவர்; கூட்டணி முதல்வர்.

**team'wise**, *adv.* பிணையலாக, விலங்குகள் வகையில் பிணையலாகப் பிணைக்கப்பட்டு; பிணைக்குழு பிணைக்குழுவாக.

**team'-work**, *n.* கூட்டணி முயற்சி, இணைகூட்டுவேலை; ஒன்றுபட்ட ஒத்துழைப்பு.

**tea'-party**, *n.* தேநீர் விருந்து.

**tea'-plant**, *n.* தேயிலைச் செடி.

**tea'-pot**, *n.* தேநீர்க் கெண்டி.

**teap'oy**, *n.* முக்காலி; சிறுமேசை.

**tear**[1], *n.* கிழிவு; கீறுதல்; கிழிசல், கீறல், பொத்தல்; (இழி.) வேகப் பாய்ச்சல்; *v.* கிழி; கிழியச்செய்; பிளவுறச்செய்; கிழித்து உருவாக்கு; கிழித்தெடு; பிய்த்திழு, பற்றியிழு; பிடித்திழு; வெட்டியிழு; இழுத்துப் பறி, பறி; பறித்தெடு; சூர்ந்தெடு; இடித்துத் தகர்; சின்னாபின்னமாக்கு; குலைவி; பிளவு உண்டுபண்ணு, வேற்றுமை உண்டுபண்ணு; அகற்று; பிரி, பிரித்தெடு; வேறுபடுத்து; ஊறுசெய்; துயர்க்காளாக்கு; அலைக்கழிவுறுத்து; கிழிபடு, கிழிசலாகு; கீறலுக்கு ஆளாகு; பிளவுறு; வேகமாகப்பாய்; பாய்ந்தோடு; பாய்ந்து செல்; துளைத்துச் செல்; மூர்க்கமாகச் செயலாற்று; சீறியெழு; சீறிவிழு; (பே-வ.) பரபரப்புடன் செல்; (இழி.) ஆளின் நல்வாய்ப்புக் கெடு; (இழி.) திட்டங்குலைவி; (இழி.) அழி, இறுதிக்கேடு செய்துவிடு; (தொ.) tear away, பிய்த்திழு; துண்டுதுண்டாக்கு; வேண்டா வெறுப்பாக அகலச் செய்; tear down, இடித்து வீழ்த்து, பிய்த்தழி; அழி; வீழ்த்து; அகற்று; பாய்ந்து செல்; tear off, கிழித்தெடு; பறி; சூர்ந்தெடு; tear oneself away, பிரிய விரும்பாத நிலையில் பிய்த்துக்கொண்டு செல், விருப்பமின்றிப் பிரிந்து செல்; tear out, கிழித்தெறி; tear up, வல்லந்தமாகப் பிய்த்தகற்று; துண்டுகளாகக் கிழி, துண்டுதுண்டாக்கு; அழித்தகற்று.

**tear**[2], *n.* கண்ணீர்; சொட்டு; பிசின் துளி; வீழ்துளி; துளி போன்ற பொருள்; (தொ.) crocodile tears, நீலிக்கண்ணீர்; in tears, அழுகிற, கண்ணீர் விடுகிற, கலங்குகிற; துயரார்ந்த; tears of strong wine, இன்தேறல் குவளை உட்புறத் துளிகள்.

**tear'away**, *a.* வேகமாகச் செல்கிற, மும்முரமாகப் பாய்கிற.

**tear'-bag**, *n.* கண்ணீர்ப் பை.

**tear'-duct**, *n.* கண்ணீர் நரம்புக்கால், கண்ணீர் நரம்பிழை.

**tear'ful**, *a.* கண்ணீர் சிந்துகிற, அழுகிற ; வருத்தந் தருகிற.

**tear'fully**, *adv.* கலங்கிய கண்ணுடன் ; அழுகையுடன் ; இரங்கத்தக்க நிலையில்.

**tear'fulness**, *n.* அழுகை ; கண்ணீருங் கம்பலையுமான நிலை, வருத்தந்தரும் நிலை.

**tear'-gas**, *n.* கண்ணீர்ப் புகை.

**tear'-gland**, *n.* கண்ணீர்ச் சுரப்பி.

**tear'ing**, *n.* கிழித்தல் ; பாய்தல் ; *a.* கிழிக்கிற ; பிய்க்கிற ; பாய்கிற ; வேகமான ; மூர்க்கமான ; திணற அடிக்கிற.

**tear'less**, *a.* கண்ணீரற்ற ; வருத்தமற்ற ; கண்ணீர் வற்றிய.

**tea'-rose**, *n.* தேநீர் மணந்தரும் ரோசா வகை ; ரோசாமலர் வகை.

**tear'-pit**, *n.* மான்களின் கண்களுக்கடியிலுள்ள மெழுகு போன்ற பொருள் ஊறுவிக்குஞ் சுரப்பி.

**tear'-shell**, *n.* கண்ணீர்ப்புகைக் குண்டு.

**tear'-stained**, *a.* கண்ணீர் படிந்த.

**tear'y**, *a.* கண்ணீர் சிந்துகிற ; கண்ணீர் ததும்புகிற, கலங்கிய கண்களையுடைய ; அழுகிற ; அழுகிற இயல்புடைய.

**tease**, *n.* அலக்கழிப்பவர் ; நையாண்டிசெய்பவர் ; நச்சுப் படுத்தல் ; நையாண்டி ; குமைப்பு ; அலக்கழிப்பு ; *v.* நச்சுப் படுத்து, சிறு குறும்புகள் செய்து தொல்லைகொடு; குமை, நையாண்டி செய்து தொந்தரை கொடு ; அலக்கழி, தொல்லைப் படுத்தி வேண்டு ; செய்யும்படி தொல்லைப்படுத்து ; கோது, சணல் கம்பளி முதலியவற்றின் வகையில் சிக்கெடு, தனித் தனி இழையாக அமையும்படி வாரு.

**teas'el**, *n.* முள்ளி ; இழைபூரி, ஆடையில் துய்யிழைப் பரப்பு உண்டுபண்ணுவதற்கான பொறி; *v.* முள்ளிகொண்டு ஆடையில் துய்யிழை தென்று.

**teas'er**, *n.* நையாண்டியாளர் ; தொந்தரவு கொடுப்பவர் ; கடா, கடினமான புதிர் ; கடும் பிரச்சினை ; செய்து சமாளித் தற்கரிய வேலை ; சமாளிப்பதற்குக் கடினமானது.

**tea'-service**, *n.* தேநீர் வழங்கீட்டுப்பணி; தேநீர் வழங்கீட்டு ஊழியத்துறை ; தேநீர் வழங்கீட்டுக் கருவிகலத் தொகுதி.

**tea'-set**, *n.* தேநீர் விருந்துகலத் தொகுதி.

**tea'sing**, *n.* தொந்தரவு செய்தல்.

**teat**, *n.* முலைக்காம்பு ; விலங்கின் மருக்கீற்று.

**tea'-table**, *n.* தேநீர் மேசை; (தொ.) tea-table conversation, பொழுதுபோக்கு உரையாடல்.

**teat'ed**, *a.* முலைக்காம்புள்ள.

**tea'-tray**, *n.* தேத்தட்டம்.

**tea-urn**, *n.* தேநீர்க் கொதிகலம்.

**tech'nical**, *a.* தொழில் நுட்பமான, தனித்துறைக்குரிய ; தொழில்துறை சார்ந்த ; தொழில் நுட்பத் துறை சார்ந்த ; இயல் நுட்பத் துறைக்குரிய ; கலைநுட்பத் துறை சார்ந்த ; கலையியலான ; சட்ட நுணுக்கஞ் சார்ந்த ; சட்டமுறைப் பட்ட.

**technical'ity**, *n.* தொழில்நுட்பம் ; துறைநுட்பக் கூறு ; துறைநுட்ப வேறுபாடு ; துறைமரபு, துறை வழக்கு, பரி பாடை.

**techni'cian**, *n.* தொழில்நுட்ப வல்லுநர்; தனித்துறை நுணங் கியல் வல்லுநர்.

**Tech'nicolor**, *n.* திரைப்படத் துறையில் வண்ண நிழற்பட முறை.

**tech'nics**, *n. pl.* தனித்துறை மரபுகள்; தொழில்நுட்பக் கூறு கள் ; துறை நுணுக்க மரபுகள், துறைச் சொற்கள் ; துறை நுணுக்கப் பாணிகள் ; தனிச் செய்முறைத் திறங்கள் ; தொழில்துறை முறைகள் ; தொழில்துறை நுணுக்கங்கள்.

**technique'**, *n.* உத்தி, தனித்துறைமுறை நுட்பம் ; கலை பாணி ; கலை நுணுக்கத் திறம் ; கலை நுணுக்கக் கூறு ; இயல் நுட்பக் கூறு ; தொழில்துறை நுட்பம் ; தனிச் செய் முறைத் திறம்.

**technoc'racy**, *n.* தொழில்நுட்ப அறிஞராட்சிக் கோட்பாடு, சமூகத்தின் பொதுநலனுக்காக நாட்டின் தொழில்வளத்தைத் தொழில் நுணுக்கந் தெரிந்தவர்களே நடத்த வேண்டுமென்று 1930-இல் ஏற்பட்ட கொள்கை.

**tech'nocrat**, *n.* தொழில்நுட்ப அறிஞராட்சிக் கோட்பாட் டாளர்.

**technol'ater**, *n.* துறைநுணுக்கப் புதுமையார்வலர்.

**technol'atry**, *n.* துறைநுணுக்கப் புதுப்பொறியார்வம்.

**technol'ogy**, *n.* தொழில்நுட்ப ஆய்வுநூல், தொழில் துறை விஞ்ஞானம்; தொழில்நுணுக்கத் துறை ; தொழில் நுணுக்கப் பயிற்சி ; தொழில் நுணுக்கத்துறைச் சொல் தொகுதி ; மனித இன ஒப்பீட்டுக் கலைவளர்ச்சி ஆய்வுநூல்.

**tech'y**, *a.* எரிந்துவிழுகிற.

**tectol'ogy**, *n.* கட்டமைவியல் நூல், உயிரியைத் தனி உயிர் மங்களின் கூட்டமைவாக ஆயும் உயிரியல் துறை.

**tecton'ic**, *a.* கட்டமைவுக்குரிய, கட்டுமானஞ் சார்ந்த ; (மண்.) பாறை அமைப்புவகையில் சிதைவினால் ஏற்படும் மாறுதல் காரணமான.

**tecton'ics**, *n. pl.* அழகுக் கட்டுமானக் கலை, கட்டிடங்களின் முழு அமைப்பழகு பற்றிய கலை; கட்டமைவழகுக் கலை, கருவி கலப் பொருள்களின் முழு அமைப்பழகு பற்றிய கலை.

**tector'ial**, *a.* மேற்பரப்பு பொதிவுருவான, பொதிவுறை வடி வான.

**tectri'ces**, *n. pl.* மூடிறக்கை, பக்க இறகுகள் வால் முதலிய வற்றினை மூடும் இறகுகள்.

**ted**, *v.* புல்-வைக்கோல் முதலியவற்றின் வகையில் உலருவதற் காகப் புரட்டிப் போடு.

**Tedd'y bear**, *n.* பொம்மைக் கரடி.

*Te De'um*, (ல.) *n.* காலைத் துதிப்பாடல்.

**ted'ious**, *a.* மனச் சோர்வூட்டுகிற, உளச் சலிப்பூட்டுகிற, முசிவூட்டுகிற.

**ted'ium**, *n.* மனச்சோர்வு, உளச்சலிப்பு, முசிவு.

**tee** [1], *n.* T என்னும் எழுத்து ; T என்னும் எழுத்துவடிவப் பொருள் ; T எழுத்துவடிவக் குழாய்.

**tee** [2], *n.* எறிவட்டாட்டம்-முடப்பந்தாட்டம்-பனிக்கற் சறுக் காட்டம் ஆகிய விளையாட்டு வகைகளில் எய்குறி இலக்கு ; தடை ஏதுமற்ற குழிப்பந்தாட்டத் தொடக்கப் பந்தடி இடம் ; பந்தடி மேடை, பந்து வைத்தடிக்கும் சிறு மணல் மேடை, பந்தடியிடச் சும்மாடு, பந்து வைத்தடிக்க உதவும் மரம்-இரப்பர் முதலியவற்றாலான சிறு சாதனம்; *v.* பந்தினைப் பந்தடி மேடைமீது வைத்து அடி ; பந்தினைப் பந்தடியிடச் சும்மாடுமீது வைத்தடி.

**tee** [3], *n.* அணிகுடை முகடு, பொன்முலாம் பூசப்பட்ட உச்சி மீதுள்ள குடைவடிவக் கோபுர முகட்டொப்பனை.

**teem** [1], *v.* இனவளமுற்றிரு, பெருக்கமுற்றிரு, மொய்த்திரு, வளம் பொலிவுற்றிரு, பொங்கிவழியும் நிறைவளம் பெற்றிரு; (பழ.) ஈனு.

**teem** [2], *v.* கவிழ்த்துக் கொட்டு, கொட்டி வறிதாக்கு, முழுதும் வெளியே ஊற்றிவிடு.

**teen** [1], *n.* பதின்மூன்று முதற் பத்தொன்பதுவரை வயது ; பதின்மூன்று முதற் பத்தொன்பதுவரை வயதுடையவர் ; *a.* பதின்மூன்று முதல் பத்தொன்பதுவரை வயதுள்ள ; (தொ.) teen age, teen years, பன்னிரண்டுக்கும் இருபதுக்கும் இடைப்பட்ட வயதுப்பருவம்.

**teen** [2], *n.* (பழ.) வருத்தம், துன்பம் ; இடையூறு, கேடு.

**teen'ager**, *n.* பதின்மூன்று முதல் பத்தொன்பதுவரை வய துடையவர்.

**teens,** *n. pl.* பதின்மூன்று முதல் பத்தொன்பதுவரையுள்ள வயதுக்குரிய ஆண்டுகள்.

**teen'y,** *a.* குழந்தை வழக்கில் மிகச்சிறிய.

**teeth,** *n. pl.* tooth என்பதன் பன்மை.

**teethe,** *v.* பல்முளைக்கப் பெறு; பல் அமைவி, பல் பொருந்துவி.

**teeth'ing,** *n.* பல் முளைப்பு; பல்முளைக்கும் நிலை; பல் முளைக்கும் பருவம்.

**teetot'al,** *a.* முழு மதுவிலக்குச் சார்ந்த; முழு மதுவிலக்கு ஆதரிக்கிற; (பே-வ.) மொத்தமான, முழுவதான, முழு நிறைவான, குறைவிலாத.

**teetot'alism,** *n.* முழுநிறை மதுவிலக்கு.

**teetot'aller,** *n.* மதுவை அறவே விலக்கியவர்.

**teetot'ally,** *adv.* முற்றிலும், முழுநிறைவாக, தீர, முழுநிறை மதுவிலக்குக் கோட்பாட்டின்படி.

**teetot'um,** *n.* அதிட்டப் பம்பரம்; கைச்சுற்றுப் பம்பரம்; (தொ.) like a teetotum, அதிட்டப் பம்பரம்போற் சுழல்கிற.

**teg,** *n.* ஈராட்டை மறி.

**teg'ular,** *a.* ஓடு சார்ந்த; ஓடு போன்ற; ஓடுபோல் அடுக்கப் பட்ட; ஓடு வேய்ந்த.

**teg'ularly,** *adv.* ஓடு போன்ற, ஒன்றன்மேலொன்று கவிந்த தன்மையாக.

**teg'ulated,** *a.* ஒன்றன்மேல் ஒன்று கவிந்தமைந்த, ஓடுபோல் ஒன்றன்மேலொன்று கவிந்தமைந்த தகடுகளாலான.

**teg'ument,** *n.* பொதிவை, விலங்குடலின் இயற்கை மேற் போர்வை.

**teg'umental,** *a.* பொதிவை சார்ந்த, விலங்குடல் மேற் போர்வைக்குரிய.

**teg'umentary,** *a.* பொதிவையின் தன்மையுடைய; விலங் குடலின் மேற்போர்வையியலான.

**tehee',** *n.* இகழ்ச்சி நகை; கேலிச் சிரிப்பு; *v.* இளி, கொக்கரி; ஏளனமாக நகை.

**Te'ian,** *a.* பண்டைய கிரேக்க கவிஞரிடையே தியாஸ் (Teos) என்னுந் தீவுக்குரிய; தியாஸ் தீவிற் பிறந்த அனக்ரியான் (Anacreon) என்னுங் கிரேக்க கவிஞனுக்குரிய.

**teind,** *n.* பதின்மை வரி, ஸ்காத்லாந்துநாட்டு வழக்கில் பத்தில் ஒரு பங்கு வரி; மகன்மை.

**teknon'ymy,** *n.* சேய்வரு பெயர்மை, குழந்தையினின்று பெற் றோருக்குப் பெயர் வழங்கும் முறைமை.

**telaesthes'ia,** *n.* (உள.) தொலைவுண்ணுேக்கு உணர்வு, காணுத்தொலை நிகழ்ச்சிகளையும் புலன்கடந்த காட்சிகளையும் நேரே காணும் ஆற்றல்.

**telaesthet'ic,** *a.* (உள.) தொலைவுண்ணுேக்கு உணர்வு சார்ந்த.

**tel'amon,** *n.* தூணில் ஆணுரு; *pl.* tel'amones.

**telaut'ogram,** *n.* வரைவுருத் தந்திச் செய்தி.

**telaut'ograph,** *n.* வரைவுருத் தந்தி, தொலைச் செய்தியை எழுதிக்காட்டுந் தந்தி.

**telautograph'ic,** *a.* வரைவுருத் தந்திமுறை சார்ந்த.

**telautog'raphy,** *n.* வரைவுருத் தந்திமுறைமை.

**tele-arch'ics,** *n. pl.* சேணியக்கு திறல், வானூர்தி வகையில் கம்பியில்லாத் தந்திமூலம் தொலைவியக்கங் கட்டுப்படுத்தும் முறை.

**telebarom'eter,** *n.* சேணிலை வளியழுத்தமானி.

**tel'e-car,** *n.* தந்தியுந்து, தந்திச்செய்தியை வாங்கவும் உடனடி யாக முகவரியாளரிடம் சேர்க்கவும் வாய்ப்புள்ள உந்துகலம், சேய்மைச்செய்தி இணைப்பு.

**tel'ecast,** *n.* தொலைக்காட்சி நிகழ்ச்சி, தொலைக்காட்சி மூலம் அனுப்பப்படும் வானொலி நிகழ்ச்சி; தொலைக்காட்சி நிகழ்ச்சித் திட்டம்.

**telecommunica'tion,** *n.* தொலைப்போக்குவரத்து, தந்தி-கடலடி வடக்கம்பி-கம்பியில்லாத்தந்தி-தொலைபேசி முதலியன வழியாகத் தொலைச்செய்தி அறிவிப்புமுறை.

**tel'econ,** *n.* வானொலித் தொலைமுறை மாநாட்டு அமைவு, வானொலி - தந்திவட இணைப்பு மூலம் தொலைக்காட்சித் திரை யில் செய்தி ஒளியிட்டுக்காட்டிப் பலர் ஒருங்கு கலந்தாய்வு செய்ய உதவும் அமைவு.

**tel'e-deltos,** *n.* தந்தியுந்துகலத் தாள், தந்தியுந்துகலத்தில் செய்தி அச்சடிக்கப் பயன்படுத்தும் தாள்.

**tel'edu,** *n.* முடைநாற்றம் வீசும் தென்கிழக்காசிய வளைக்கரடி வகை.

**tel'efilm,** *n.* தொலைக்காட்சித் திரைப்படம்.

**telegen'ic,** *a.* தொலைக்காட்சியில் பரப்பத்தக்க.

**teleg'ony,** *n.* (உயி.) மாற்றுத்தந்தைமரபுப் பண்பு, தாயின் ஓர் ஆண்வழிச் சேயில் முந்திய ஓர் ஆண்வழியின் தாக்கு விளைவு தோற்றும் அரும்பண்பு.

**tel'egram,** *n.* தந்திச் செய்தி, கம்பி.

**tel'egraph,** *n.* தந்திப்பொறி, தந்தி முறைக்குரிய கருவிகலத் தொகுதி; இருப்புப்பாதைக் கைகாட்டிமரம்; சேய்மைக் காட்சிப் பட்டி, மரப்பந்தாட்டக் களத்தில் தொலைவில் தெரியத்தக்க கெலிப்பெண்-குதிரை எண் முதலியன காட்டுங் குறிப்புப் பலகை; *v.* தந்தியடி, தந்திச் செய்தி அனுப்பு.

**tel'egraph-board,** *n.* சேய்மைக்காட்சிப் பட்டி, தொலைவி லிருந்தே காணுதற்கு வாய்ப்பாகக் கெலிப்பெண்-குதிரை எண் முதலியன இட்டுக் காட்டும் பலகை.

**tel'egrapher,** *n.* தந்தித்துறையர், தந்திக்கருவி இயக்குபவர்.

**tel'egraphese',** *n.* தந்திமொழி, தந்திக்குறிப்புமொழிக் குறி யீட்டு மரபு; *a.* தந்திமொழியிலுள்ள.

**telegraph'ic,** *n.* தந்தித்தொடர்பான; தந்தி முறையில் சுருக்கமான; சொற்சுருக்கமுள்ள; தேவையற்ற சொற்கள் விலக்கப்பட்ட.

**teleg'raphist,** *n.* தந்தித்துறையர்.

**tel'egraph-key,** *n.* தந்தி மின்னோட்ட இயக்கமைவு, தந்தித் துறையில் மின்னோட்டத்தைப் பாய்ச்சவோ தடுக்கவோ வகை செய்யும் பொறியமைவு.

**tel'egraph-line,** *n.* தந்திக்கம்பி நெறி.

**tel'egraph-plant,** *n.* தானதிர் தாவர வகை.

**tel'egraph-pole, tel'egraph-post,** *n.* தந்திக் கம்பம்.

**tel'egraphy,** *n.* தந்திக்கலை.

**tel'e-juke,** *n.* தொலைக்காட்சிப் பாடற்பெட்டி, துளையில் காசிட்டுக் குமிழ் அழுத்தியவர்க்கு விரும்பிய பாடல் பாடிக் காட்சி காட்டும் பெட்டி.

**telekin'ema,** *n.* தொலைக்காட்சிமூலம் திரைப்படங்கள் காட்டுந் திரைக் காட்சி.

**telekines'is,** *n.* (உள.) சேய்மை இயக்குதிறம், தொடர் பின்றியே தொலைவில் உள்ள பொருளை இயக்கும் அருந்திறம்.

**tel'emark,** *n.* வெட்டுத்திருப்பம், பனிச்சறுக்காட்டத்தில் திசைமாற்ற நாடிய திறம்பட்ட தேர்ச்சித்திருப்பம்; வெட்டு நிறுத்தம், பனிச்சறுக்காட்டத்தில் திடீர்நிறுத்தம் நாடிய வெட்டுத் திருப்பீடு.

**telemechan'ics,** *n.* வானிலை இயக்குதிறல்; தொலைவிலுள்ள இயந்திரங்களை வான் அலையாற்றல்மூலம் இயங்கச்செய்யுங் கலை.

**telem'eter,** *n.* தொலைவுமானி, நில அளவையிலும் பீரங்கிச் சுடு பயிற்சியிலும் தொலைவுகணிப்பதற்கான கருவி.

**telemet'ric,** *a.* தொலைவுமானி அளவை சார்ந்த.

**telem'etry,** *n.* தொலைவுகணிப்பியல்.

**teleolo'gical,** *a.* இயல்திட்டவாதஞ் சார்ந்த; இயல்திட்ட வாத அடிப்படையான.

**teleolo'gically,** *adv.* இயல்திட்டவாதமுறைப்படி.

**teleol'ogism,** *n.* இயல்திட்டவாதக் கோட்பாடு.

**teleol'ogist**, *n.* இயல்திட்டவாதக் கோட்பாட்டாளர்.

**teleol'ogy**, *n.* இயல்திட்டவாதம், இயற்கை நிகழ்ச்சிகளின் காரணகாரியத் தொடர்புகள் தற்செயல் நேர்வுகளல்ல-இறுதி விளைவு நோக்கிய ஒரே மூலத்திட்ட அமைப்பின் கூறுகளே- என்ற வாதம்.

**teleosaur'us**, *n.* மரபற்றுப்போன புதைபடிவ முதலையின விலங்கு.

**telepath'ic**, *a.* சேணிலை உணர்வாட்சி சார்ந்த, சேணிலை உணர்வாட்சித் திறத்திற்குரிய.

**telepath'ically**, *adv.* சேணிலை உணர்வாட்சி முறைப்படி.

**telep'athist**, *n.* சேணிலை உணர்வாட்சியாளர்; சேணிலை உணர்வாட்சிப் பயிற்சியாளர்; சேணிலை உணர்வாட்சியில் நம்பிக்கையுடையவர்.

**telep'athize**, *v.* சேணிலை உணர்வாட்சி தூண்டு.

**telep'athy**, *n.* சேணிலை உணர்வாட்சி, வசிய இயக்காட்சி, ஐம்புலத் தொடர்பின்றியே தொலைவிலிருப்பவர் உள்ளத்தை மன ஆற்றலால் இயக்குந் திறம்.

**tel'epheme**, *n.* தொலைபேசிச் செய்தி.

**tel'ephone**, *n.* தொலைபேசி; *v.* தொலைபேசிமூலம் செய்தி அனுப்பு; தொலைபேசி மூலம் பேசு.

**tel'ephoner**, *n.* தொலைபேசியிற் பேசுபவர்; தொலைபேசி வழங்குபவர்.

**telephon'ic**, *a.* தொலைபேசி சார்ந்த.

**telephon'ically**, *adv.* தொலைபேசி முறையில்.

**teleph'onist**, *n.* தொலைபேசித்துறைப் பணியாளர்; தொலைபேசிப் பொறியியக்குநர்.

**teleph'ony**, *n.* தொலைபேசிச் செய்தித்தொடர்பு, தொலைபேசி முறை, தொலைபேசிக் கலை.

**telepho'tograph**, *n.* தொலை நிழற்படம்.

**telephotograph'ic**, *a.* தொலை நிழற்படஞ் சார்ந்த, தொலை நிழற்பட முறைக்குரிய

**telephotog'raphy**, *n.* தொலை நிழற்பட முறை, தொலை நோக்காடியுடன் நிழற்படக் கருவி இணைத்த நிழற்பட எடுப்பு முறை.

**teleporta'tion**, *n.* கற்பனைப் பொருட்பெயர்வு, தொலைவிலிருந்தே பொருள்களை அந்தரமாக்குதல் புடைபெயர்த்தல் முதலியன செய்யும் ஆற்றல்.

**tel'eprinter**, *n.* தந்திமுறைத் தட்டச்சுப்பொறி, தொலைபேசி இணைப்பகத்தின் மூலம் தந்திச்செய்தியைத் தட்டச்சடிக்கும் பொறி.

**teleprompt'ter**, *n.* தொலைபேசி உதவித்தாள், தொலைபேசித் துறையில் காண்பவர்க்குப் புலனுகாமலே பேசுபவர்முன் காட்டப்படும் பேச்சின் அச்சிட்ட பெரிய எழுத்தமைவு.

**tel'e-radio**, *n.* தொலைக்காட்சி வானொலிகள்.

**tel'e-ran**, *n.* வானியக்குதிறல், தொலைபேசி சேணளவி மூலம் விமானத்திரையில் செய்திகாட்டி விமானம் இயக்கும் முறை.

**telerecord'ing**, *n.* தொலைக்காட்சிப் பரப்புக்கான நிகழ்ச்சித் திட்டம்; தொலைக்காட்சிக்கான நிகழ்ச்சிப் பதிவு.

**tel'ergy**, *n.* (உள.) சேணிலை உணர்வாட்சித்தாக்கு, சேணிலை உணர்வாட்சியினுல் இயக்கப்படுபவர் மூளையின்மேற் செயற்படுவதாக உணரப்படும் தாக்கு விளைவு.

**tel'escope**, *n.* தொலைநோக்காடி, தொலைப்பொருளை அருகாகவும் பெரிதாகவும் காட்டுங் கருவி; *v.* உறுப்புக்கள் ஒன்றனுள் ஒன்றுகப் புகுத்தி அடக்கு; பகுதிகள் ஒன்றனுள் ஒன்றுகப் புகுந்தடங்கும்படி அழுத்து.

**telescop'ic**, *a.* தொலைநோக்காடி சார்ந்த; தொலைநோக்காடி கொண்டு ஆற்றக்கூடிய; தொலைநோக்காடியால் காணக்கூடிய; தொலைநோக்காடிபோலச் செயலாற்றுகிற; தொலைநோக்காடிபோல் அமைக்கப்பட்ட.

**telescop'iform**, *a.* தொலைநோக்காடி வடிவான.

**teles'copist**, *n.* தொலைநோக்காடியைப் பயன்படுத்துபவர்.

**teles'copy**, *n.* தொலைநோக்காடி அமைக்குங் கலை; தொலைநோக்காடியைச் செயற்படுத்துங் கலை.

**tel'eseme**, *n.* மின்னியக்கச் சைகைப்பொறி.

**tel'etherapy**, *n.* கதிரியக்கப் பண்டுவம், புற்றுநோய் முதலியவற்றில் உடலின் உள்ளிழைமங்களைக் கதிரியக்கக் கதிர்களால் குணப்படுத்தும் முறை.

**telethermom'eter**, *n.* சேய்மை இயக்குதிறல் வெப்பமானி.

**tel'eview**, *n.* தொலைக்காட்சி நிகழ்ச்சி.

**tel'eviewer**, *n.* தொலைக்காட்சி நிகழ்ச்சி காண்பவர்.

**tel'evise**, *v.* தொலைக்காட்சி வழியே நிகழ்ச்சி பரப்பு.

**tel'evision**, *n.* தொலைக்காட்சி; ஒலி இணைப்புடன் கம்பி மூலமோ வானொலி அலைமூலமோ காட்டப்படுங் காட்சி; தொலைக்காட்சி நிகழ்ச்சி, தொலைக்காட்சிவழிப் பெறப்படுங் காட்சி.

**televi'sor**, *n.* தொலைக்காட்சிக் கருவி, தொலைக்காட்சியை வாங்கி வழங்குங் கருவி.

**tell**, *v.* கூறு; எழுத்துமூலம் எடுத்துரை; தெரிவி; பலரறியக் கூறு; வெளியிடு, உரை, பேசு; செய்தி கொடு, விளக்கம் அளி; விரித்துரை; தகவல் கூறு; அறுதியிட்டுரை; பிரித்துணர், வேறுபாடு கண்டறி; வேறுபடுத்திக் கூறு; உறுதியளி, உறுதி கூறு; முனைப்பான விளைவு உண்டுபண்ணு; குறிப்பிடத்தக்க முறையில் பயனிறைவுடையதாயிரு; தொகை எண்ணு, தொகைப்படுத்திக் கூறு; பொதுமக்கள் அவையில் வாக்குகளை எண்ணு; உருமாலை எண்ணு; வேண்டு; கட்டளையிடு; ஏவு; (தொ.) take a telling, மறுமுறை கூறத் தேவையின்றி ஏவியபடியே செய்; tell a story, கதை சொல்; பல செய்திகளைப் பின்னணியாகக் கொண்டிரு; tell fortunes, குறிசொல்லு, வருவதுரை; tell off, தொகை எண்ணிமுடி; தனி வேலைக்காகப் பிரித்தனுப்பு; திட்டு, கண்டித்துரை; tell on, குழந்தை வழக்கில் கோள் உரை; tell one's beads, வழிபாட்டு மணியுரு எண்ணியுருட்டு; tell tales, கெட்ட எண்ணத்தோடு இரகசியங்களை வெளியிடு; கோள் சொல்; tell the world, வெளிப்படையாகக் கூறு, உறுதியாகக் கூறு; that tells a tale, அதனுள் ஓர் உட்குறிப்பு இருக்கிறது, அது ஏதோ ஒன்றை வெளியிடுகிறது.

**tell'able**, *a.* எடுத்துச் சொல்லத்தக்க, கூறக்கூடிய; கூறத்தக்க.

**tell'er**, *n.* கூறுபவர், எண்ணுபவர்; வாக்குகள் எண்ணுபவர்; பணம் கொடுக்கல் வாங்கல் செய்யும் எழுத்தர்; பொருளகப் பணப் பொறுப்பாளர்.

**tell'tale**, *n.* கோட்சொல்லி; பிறர் மறைவெளியிடுபவர்; பிறர் குறை கூறுபவர்; உள்ளநிலைகாட்டும் பொருள்; உள்ள நிலை காட்டும் செய்தி; உள்ள நிலை வெளியிடும் சூழ்நிலை; ஆள் வருகை முதலிய நிகழ்ச்சிகள் குறியிடும் சாதனம்; நிகழ்ச்சிப் பதிவீட்டுக்கருவி; (கப்.) பயின் கட்டை முள், சுக்கான் நிலையினைக் காட்டும் சக்கரத்தருகிலுள்ள முள்; கப்பல் நெறியியக்கும் மீகாமன் அளவுக் கருவி; (தொ.) telltale compass, கப்பல் நெறியியக்கும் மீகாமன் அளவுக்கருவி.

**tell'ural**, *a.* நிலவுலகுக்குரிய, இவ்வுலகஞ் சார்ந்த.

**tellur'ian**, *n* நிலவுலகவாணர்; *a.* நிலவுலகு சார்ந்த; நிலவுலகில் வாழ்கிற.

**tellur'ion**, *n.* பொழுதுவட்டங் காட்டி, பகல்-இரவு மாறுதலையும் பருவ மாறுதல்களையும் காட்சி விளக்கமாகக் காட்டுங் கருவி.

**tellur'ium**, *n.* (வேதி.) மண்மம், எளிதில் உடையத்தக்க அரிய வெண்ணிற உலோகத்தனிமம்.

**te'lotype**, *n.* அச்சுத்தந்தி முறை; அச்சடிக்கும் மின் தந்தி முறை; அச்சுத்தந்திச் செய்தி.

**tel'pher**, *a.* சரக்கு ஊர்தி வகையில் மின்னுற்றலால் இயங்குகிற.

**tel'son**, *n.* தோட்டுயிரின் அகட்டுறுப்பில் கடைசிக் கண்டம்.

**Telugu**, *n.* தெலுங்கு மொழி.

tem'enos, *n.* கருவறை; பண்டைக்கிரேக்க வழக்கில் புனிதக் கோயிலிடம்; *pl.* tem'ene.

temerar'ious, *a.* (செய்.) மடத் துணிச்சலான, அடங் கொண்ட.

teme'rity, *n.* மடத் துணிச்சல்.

Tem'pe, *n.* கிரேக்க இலக்கிய வழக்கில் தெசலி (Thessaly) பகுதியில் ஒப்பற்ற அழகுடையதாகக் கருதப்பட்ட பள்ளத் தாக்கு; ஒப்பில் அழகிடம்.

tem'per, *n.* பக்குவமான கலவை; உறுதி அல்லது கெட்டி யான தன்மை; விளைவுநிலை; உலோகங்களின் உறுதிநிலை; மனநிலை; எரிச்சல்; கோபம்; *v.* பக்குவமாகப் பதப்படுத்து; களிமண் முதலியவற்றைச் சரியாகத் தண்ணீர் விட்டுப் பிசைந்து பக்குவப்படுத்து; உலோக வகையில் சரியான கடும் பத நெகிழ்வுச்செவ்வி வருவி; செம்பதமாக்கு, எஃகு வகை யில் அடுத்தடுத்து வெப்ப மூட்டிக் குளிரச் செய்வதன் மூலம் சரியான உறுதியும் நீட்டிப்பு ஆற்றலுமுடைய நிலைக்குக் கொணர்; திருத்து, சிறிது மாற்று; தணி, மட்டுப்படுத்து; குறை; அடக்கு, கட்டுப்படுத்து; சுதிசேர், இசைக்கருவி யினைக் குறிப்பிட்ட சுருதிக்கேற்பச் சரிசெய்து மீட்டு; (தொ.) bad temper, எரிச்சலான மனநிலை, கோபம்; good temper, நல்ல மனநிலை, சுமுகமான உளநிலை; keep one's temper, control one's temper, சினங் கொள்ளாதிரு; lose one's temper, சினங்கொள், கோபப்படு; out of one's temper, கோபநிலையுற்ற; எரிச்சலுடைய; show temper, கடுகடுப்புக் காட்டு; வெடுவெடுப்புடனிரு.

tem'pera, (இத்.) *n.* பற்றோவிய முறை, கெட்டிச்சாய வண்ண ஓவிய முறை, காரை அல்லது சுண்ண மீது முட்டை மஞ்சட் கருவும் பசையும் சேர்த்த வண்ணக் கலவை கொண்டு அழியாவண்ணம் தீட்டும் பாணி.

tem'perament, *n.* மெய்ந்நிலைக்கூறு, உணர்ச்சி செயல் களுக்கு அடிப்படையாக இயல்பின் அமைந்த உடல்நிலைப் பாங்கு; இயல்பான உடல் உளநிலை; மனப்போக்கு; உளப் பாங்கு; உணர்ச்சியியல்பு; (இசை.) எல்லாச் சுரங்களுக்கும் ஒத்ததாக அமையும் அடிப்படைச் சுதிமட்டுப்பாடு; (தொ.) equal temperament, (இசை.) சரிசம சுதி மட்டுப்பாடு, எல் லாச் சுரங்களுக்கும் உரிய நடுவமைதிச்செவ்வி நிலை.

temperamen'tal, *a.* இயல்பான உடற்பாங்கிற்குரிய; உடல் உளப்பாங்கிற்குரிய; தனித்தனி மனப்பாங்கிற்குரிய.

tem'perance, *n.* தன்னடக்கம்; நடுவுநிலையுடைமை; மட்டு நடை; நடைச் செவ்வி; நாவடக்கம்; மட்டான உணவு-குடிப்பழக்கம்; மதுவருந்தலில் மட்டுவிடாநிலை, வெறிக்குடித் துறப்பு; (தொ.) temperance hotel, வெறிக்குடிகள் வழங்காத அருந்தகம்; temperance league, குடிவகைகள் கட்டுப்பாட் டுக்கழகம்; குடியொழிப்புக் கழகம்; temperance movement, குடிவகைக் கட்டுப்பாட்டு இயக்கம்; குடியொழிப்பு இயக்கம்; temperance society, குடிவகைகள் கட்டுப்பாட்டுச் சங்கம், குடியொழிப்புச் சங்கம்.

tem'perate, *a.* மட்டான, மிதமான; தன்னடக்கமுள்ள; நடை யமைதி வாய்ந்த; தற்கட்டுப்பாடுடைய; உணவு-குடிவகை முதலிய நுகர் பொருட்களில் அளவோடிருக்கிற; மெட்டான; மட்டான தட்பவெப்பமுடைய; (தொ.) north temperate zone, வடபால் நடுவெப்பநிலை மண்டலம்; கடக இரேகைக் கும் வடதுருவ வட்டத்திற்கும் இடைப்பட்ட மண்டலம்; south temperate zone, தென்பால் நடுவெப்பநிலை மண்டலம், மகர இரேகைக்கும் தென்துருவ வட்டத்திற்கும் இடைப்பட்ட மண்டலம்; temperate zone, நடுவெப்பநிலை மண்டலம்.

tem'perative, *a.* மட்டுப்படுத்துந் திறமுடைய; மட்டியல் பண்பூக்குகிற; அமைதிப் படுத்தக்கூடிய.

tem'perature, *n.* தட்பவெப்ப நிலை; தட்பவெப்ப அளவு; (மரு.) உடலின் இயல்வெப்ப நிலை; (பே-வ.) உடலில் இயல் நிலைக்கு மேற்பட்ட வெப்பநிலை; (தொ.) normal temperature, இயல் தட்பவெப்ப நிலை; உடலின் இயல்வெப்பநிலை, 98·4° பாரன்ஹைட்; take one's temperature, நோய்நிலையில் தட்பவெப்ப நிலை மாறுபாட்டினைக் கண்டறி; temperature curve, தட்பவெப்ப நிலை மாறுபாடு பதிவித்துக் காட்டும் வளைகோடு.

tem'pest, *n.* புயல்; மழை கலந்த சூறுவளி; மனக்கொந் தளிப்பு.

tempes'tuous, *a.* புயலார்ந்த; கடுங் கொந்தளிப்புடைய; சீற்றமிக்க.

Tem'plar [1], *n.* (வர.) திருநிலைக் காப்பு வீரர், கிறித்தவரின் திருநாடான பாலஸ்தீன் (Palestine) செல்லும் புண்ணிய யாத்திரிகர்களின் பாதுகாப்பு நாடி கி.பி. 1119-இல் அமைக்கப் பட்ட திருநிலைக் காப்பு வீரர் நிறுவனத்தின் உறுப்பினர்; மதுவிலக்குக் கழக உறுப்பினர்; அமெரிக்க நற்கொத்தர் சங்க உறுப்பினர்; குடியொழிப்புக் கழகத்தினர்; (தொ.) Good Templars, குடியொழிப்புக் கழகத்தார்.

Tem'plar [2], tem'plar [3], *n.* லண்டன் மாநகர முறைவர் கழகக் கட்டிடங்களில் இடம் பெற்றுவாழும் மாணவர்.

tem'ple [1], *n.* கோயில்; வழிபாட்டிடம்; இறைவன் உறையும் இடம்.

Tem'ple [2], *n.* திருநிலைக்காப்பு வீரர் நிறுவனக் கட்டிடம்; (தொ.) Inner Temple, Middle Temple, இங்கிலாந்தில் வழக்குரைஞர் நுழைவு இசைவுதரத் தனியுரிமையுடைய நாற் பெருஞ் சங்கங்களுக்குரிய கட்டிடங்களுள் இரண்டு; Temple Bar, லண்டன் நகர் மேற்குப்புற நகராட்சி எல்லைவரம்பினைக் குறித்த புறவாயில்; the Temple, கிறித்தவ புனித தலயாத் திரிகர்களுக்குப் பாதுகாப்பளிக்கும் திருநிலைக்காப்புப் போர் வீரர்களுக்கான லண்டன் நிறுவனம்.

tem'ple [3], *n.* செவித்தடம், கன்னப்பொட்டு.

tem'ple [4], *n.* குறுக்குக்கழி, தறியில் துணியை நீட்டிவைத் திருப்பதற்கான அமைவு.

tem'plet *n.* வார்ப்பட அளவுச்சட்டம்.

*tem'po*, (இத்.) *n.* விசைவேகம்; உணர்ச்சிவேகம்; நிகழ்ச்சி வேகம்; நடைவேகம்; போக்குவேகம்; வேகவீதம்; தனி முறை வேகப் பண்பு; (இசை.) காலநடை வேகமுறை.

tem'poral, *n.* கன்னப்பொட்டெலும்பு; *a.* இம்மைக்குரிய; இவ்வாழ்விற்குரிய, உலகியல் சார்ந்த; நிலையற்ற; காலஞ் சார்ந்த; காலங்குறிக்கிற; கன்னப்பொட்டுச் சார்ந்த; (தொ.) temporal and spatial, காலமும் இடமுஞ்சார்ந்த; temporal augment, ஆதி நீடல், கிரேக்க இலக்கண வழக்கில் தொடக்க உயிரெழுத்தை நீட்டி உச்சரிப்பதாலான சாரியை; temporal lords, பிரிட்டிஷ் மாமன்றத்தில் சமயத்துறை சாரா அரசியற் பெருமக்கள்; temporal power, போப்பாண்டவரின் உலகியல் துறை உரிமையாற்றல்.

temporal'ities, *n. pl.* சமய நிறுவன உலகியற்சொத்துக் கள்-வருமானங்கள்.

temporal'ity, *n.* காலச்சார்பு; காலச்சார்புநிலை; காலதத்துவம், காலச்சார்புத் தன்மை; இம்மைச்சார்பு; இம்மைச்சார்பு நிலை; உலகியல் நலங்குறித்த பொருள்; (சட்.) தற்காலிகத் தன்மை.

tem'poralty, *n.* சமயச் சார்பற்ற பொதுநிலை மக்கள்; பிரிட்டிஷ் மாமன்றத்தில் சமயத்துறை சாரா அரசியற் பெரு மக்கள் தொகுதி.

tem'porary, *n.* சிறிதுகால வேலையர்; *a.* சிறிதுகாலத்துக்கே யுரிய; அப்பொழுதைக்கான.

temporiza'tion, *n.* தட்டிக்கழிப்பு; காலங்கடத்தீடு; சமய சஞ்சீவித்தனம்.

tem'porize, *v.* காலத்திற்கேற்ப ஒட்டியொழுகு, சந்தர்ப்பம் போல் நட; சுற்றுச்சூழலுக்கு ஆளாகிவிடு; காலம் பெற ஒழுகு.

tem'porizer, *n.* காலத்திற்கேற்ப நடப்பவர்; காலந் தாழ்த்து பவர்.

tem'porizing, *n.* தட்டிக்கழித்தல்; வெற்றுச்சமரசம்; *a.* தட்டிக்கழிக்கிற; விட்டுக்கொடுத்துச் சமரசஞ்செய்கிற.

tem'porizingly, *adv.* தட்டிக்கழிப்பாக; சமரச விட்டுக் கொடுப்புடன்.

**temporofa'cial**, *a.* கன்னப் பொட்டுப் பகுதியும் முகமுஞ் சார்ந்த.

**tempt**, *v.* மயக்கி வசப்படுத்து ; ஆசையூட்டி ஏய் ; (விவி.) சோதனை செய்துபார், உறுதி தேர்ந்துபார் ; (விவி.) எதிர்த்துச் சினமூட்டு.

**temptabil'ity**, *n.* கவரத்தக்க தன்மை ; மருட்சியூட்டத்தக்க நிலை ; சோதனைக்கு ஆளாகத்தக்க தன்மை.

**temp'table**, *a.* மயக்கி வசப்படுத்தத்தக்க ; மருட்சியூட்டத்தக்க.

**tempta'tion**, *n.* மருட்சி ; மருட்சிக்குரிய செய்தி ; கவர்ச்சியூட்டுதல் ; கவர்ச்சி ; கவர்ச்சிப்பொருள் ; கவர்ச்சிக்கூறு ; அணுப்பு, ஆசைகாட்டி ஏய்ப்பு ; ஆர்வச் சோதனை ; தீய கவர்ச்சி.

**temp'ter**, *n.* மயக்கி ஈர்ப்பவர் ; கவர்ச்சியூட்டுபவர் ; தீய தூண்டுதல் வழங்குபவர் ; தீமைக்குத் தூண்டுவது ; கருத்தைக் கவருபவர் ; கருத்தைக் கவரும் பொருள் ; (தொ.) the Tempter, பேயிறை, சாத்தான்.

**tempt'ing**, *n.* மருட்சிப்படுத்துதல் ; சோதனைக்கு உட்படுத்துதல் ; கவர்ச்சியூட்டுதல் ; ஆசைகாட்டி ஏய்த்தல் ; *a.* கவர்ச்சியூட்டுகிற ; மருட்சியூட்டுகிற ; அணுப்புகிற, ஆசைகாட்டி ஏய்க்கிற ; கடுஞ்சோதனை செய்கிற.

**tempt'ingly**, *adv.* ஆசைகாட்டி ஏய்ப்பதாக

**temp'tress**, *n.* ஆசைகாட்டி ஏய்ப்பவள் ; கடுஞ் சோதனைக்கு ஆளாக்குபவள்.

**ten**, *n.* பத்து ; பதின்மர் ; பத்துப் பொருள் ; பத்துடைய அளவுப் பொருள் ; பத்தென்னுஞ் சீட்டு ; பத்துக் கெலிப்பெண் ; பகல் பத்துமணி ; இரவு பத்துமணி ; பல ; எவ்வளவோ பல ; (வர.) பத்துப்பொன் வரிமதிப்புடைய வாக்காளர் ; (தொ.) hart of ten, கொம்பில் பத்துக்கிளைகளுள்ள கலைமான் ; the upper ten, the upper ten thousand, நய நாகரிக மக்கள்.

**tenabil'ity**, *n.* நிலைக்கக்கூடிய தன்மை.

**ten'able**, *a.* நிலைக்கக்கூடிய ; பண வகையில் குறிப்பிட்ட காலத்திற்கு வைத்திருக்கக்கூடிய.

**ten'ace**, *n.* குறட்டுப்பிடிப்பு, சீட்டாட்டத்தில் எதிரி சீட்டு வகை உச்ச இனத்தின் மேல்கீழினம் கைவசமாக உடைய நிலை ; குறட்டுப்பிடிச் சீட்டு, சீட்டாட்டத்தின் எதிரி சீட்டு வகை உச்ச இனத்தின் மேல்கீழினமாகக் கைவசமுள்ள சீட்டிணை.

**tena'cious**, *a.* விடாப்பிடியான, குரங்குப்பிடியான; சொத்து வகையில் விடாது இறுகப்பற்றிக்கொள்கிற ; உரிமை வகையில் உறுதியாகப் பற்றிக்கொள்கிற ; கொள்கை வகையில் விடாது மேற்கொள்கிற; நினைவாற்றல் வகையில் மறக்க விடாது உள்ளத்தில் ஊன்றியுள்ள ; ஒட்டிக்கொண்டுள்ள ; ஊற்றமாகப் பற்றிக்கொள்ளுகிற; பசைப்பற்றுள்ள ; விடாது இணைந்துள்ள, எளிதிற் பிரிவுபடாத, மிகு கெட்டியான.

**tena'city**, *n.* விடாப்பிடி ; விடாப்பற்று ; விடா உறுதி ; கெட்டிமை ; நினைவாற்றல் வகையில் ஊற்றம்.

**tenac'ulum**, *n.* அறுவை மருத்துவர் பற்றுகொக்கி.

**tenail', tenaille'**, *n.* ஞாயில் இடைவரி, அரண்வகையில் இரு ஞாயில்களிடைச் சுவருக்கும் முதலகழுக்கும் இடைப்பட்ட புறக்கட்டுமான மேடை.

**ten'ant**, *n.* குடியிருப்பவர் ; குத்தகைக்காரர் ; சொத்துவழக்கில் எதிர்வாதி ; (சட்.) சொத்தின் தனிநிலை உரிமையாளர் ; *v.* கீழ்க்குடிவாரத்தில் கொண்டிரு ; குடியிரு ; (தொ.) tenant farmer, வாரப்பயிர் செய்பவர் ; குத்தகைக்குப் பயிர் செய்பவர் ; குடிவாரப் பயிர் செய்பவர் ; tenant right, குத்தகையுரிமை ; குடிவார உரிமை.

**ten'antable**, *a.* தங்கிவாழத்தக்க ; இடவகையில் குடியிருக்கத்தக்க ; குடிபுகத்தக்க.

**ten'antry**, *n.* குடியிருப்பவர் தொகுதி ; குடியாள் வகுப்பு.

**tench**, *n.* நன்னீர் மீன் வகை.

**tend**[1], *v.* நாடு, நாடியியங்கு ; நோக்கிச் சாய்வுறு ; இயற்சார்புகொள் ; வழியேகு, வழிப்படு , இயற்போக்குடையதாயிரு, இயற்பாங்குடையவராயிரு ; உகந்ததாயிரு ; உதவு ; துணைப்பண்பாயிரு, துணைமைகொள் ; நேர்வுறு, நேரிடு.

**tend**[2], *v.* காத்துப்பேணு ; பராமரி, பாதுகாப்புச்செய் ; வளர்த்தாதரி ; பேணிவளர் ; கவனமாகப் பார் ; வேண்டுவன செய்துதவு : நோயாளி வகையில் உடனிருந்து பேணு ; (கப்.) நங்கூரமிட்ட நிலையில் காவல் செய்.

**ten'dency**, *n.* போக்கு ; சார்பு ; இயற்சாய்வு மனப்பாங்கு.

**tenden'tious**, *a.* குறிக்கோள் பரப்பும் வகையிலுள்ள.

**ten'der**[1], *n.* பாதுகாப்பவர் ; காத்துப் பேணுபவர் ; உடனிருந்து உதவுபவர் ; உய்ப்புதவிக் கப்பல், பெரிய கப்பலுக்கு வேண்டிய எரிபொருள் கொண்டுசென்று உதவுஞ் சிறு கப்பல் ; துணையுதவிக் கப்பல் ; உய்ப்புதவிப் பெட்டி.

**ten'der**[2], *n.* ஒப்பந்தப்புள்ளி, குறிப்பிட்ட விலை வீதத்தில் பொருள் வழங்குவதற்கான இசைவேற்பு ; குத்தகையேற்பு, குறிப்பிட்ட தொகைக்கு வேலை முடித்துக்கொடுக்கும் பொறுப்பேற்பு ; வழங்குதற்கான இசைவு ; வழங்குதற்கிசைந்த பொருள் ; (சட்.) தடங்கலற்ற ஒப்படைப்பு ; (சட்.) ஏற்பு மறுக்கமுடியாச் செலாவணி ; *v.* ஒப்பந்தப்புள்ளி கொடு ; ஒப்பந்தப்பணி மேற்கொள் ; ஏற்புக்கு ஒப்புவி ; முறைப்படிக் கொடுக்க முன் வா ; முறைப்படிப் பொருள் ஒப்படைத்துவிடு ; தர இசைவு தெரிவி ; தொகை வழங்கு ; கையடைவு செய் ; தர முற்படு ; எழுத்துமூலம் ஒப்பந்தப்புள்ளி ஏற்பாட்டிற்கு ஏற்பளி ; (தொ.) legal tender, சட்ட ஏற்புச் செலாவணி ; make a tender, ஒப்பந்தப்புள்ளி கொடு ; plea of tender, நல்லெண்ண ஒப்படைப்பு வாதம், வாதியை மனநிறைவு செய்ய எப்போதும் விருப்புற்று இப்போது நீதி மன்றத்துக்கு நேரிலும் பணங்கொண்டு வந்திருக்கிறார் என்ற வாதம்.

**ten'der**[3], *a.* இளமையான ; முதிராத ; இளநயம் வாய்ந்த ; மென்மையான ; கடுமையற்ற, முரடற்ற ; கடினமற்ற ; நொய்தான ; மெல்லமைதி வாய்ந்த ; வலுவற்ற ; பாசமிக்க ; இன்கனிவுகொண்ட ; இரக்கமான ; விருப்பு மிகுந்த ; அன்பாதரவான ; கரிசனையுடைய ; பரிவுமிக்க ; தீமைக்கு அஞ்சுகின்ற ; நுட்பநயம்வாய்ந்த ; தொட்டால் பொறுக்காத ; கவனமாகக் கையாளத்தக்க ; ஊறுபொரு மென்மையுடைய.

**ten'der-eyed**, *a.* அமர்ந்த கண்ணுடைய.

**ten'der-foot**, *n.* புதர்க்காட்டுக்குப் புதிதாக வந்த ஆள் ; புது ஆள்.

**ten'der-hearted**, *a.* கனிந்த இதயமுடைய, இளகிய நெஞ்சுடைய.

**ten'der-heart'edness**, *n.* உளக்கனிவு.

**ten'derling**, *n.* ஆண்மையற்றவன், கோழை, பேடித்தனமானவன் ; குழந்தைப்பிள்ளை, மிகுசெல்வத்தால் கெட்டழிந்தவன்.

**Ten'derloin**[1], *n.* நியூயார்க்கு வட்டார நகரங்கள் சார்ந்த கேளிக்கைப் பகுதிகள்.

**ten'derloin**[2], *n.* மாட்டுத் துடையிறைச்சியின் மென்பகுதி.

**ten'derly**, *adv.* மென்மையாக; மென்கனிவாக ; ஆதரவாகப் பேணி.

**ten'derness**, *n.* இளமென்மை ; இன்கனிவு ; இரக்கம்.

**tenderom'eter**, *n.* காய்ப்பத மானி.

**ten'dinous**, *a.* தசைநாண் சார்ந்த.

**ten'don**, *n.* தசைக்கோடியிலோ சதைத்தொடர்புற்றோ உள்ள வல்லிழைமத் தளை ; (தொ.) tendon of Achilles, குதிகாலைப் பின்கால் தசையுடன் பிணைக்கும் தசைத்தளை ; குதிகாலைப் பிணைக்குந் தசைநாண்.

**ten'dril**, *n.* தளிர்க்கை, கொடிகளின் தளிரிழை

**ten'ebrae**, *n.* (ல.) *pl.* வாரக்கடைத் துதிப்பாடல், புனித வாரத்தில் ஒன்றன்பின் ஒன்றாய் மெழுகுவர்த்திகள் அணைக்கப்படும் கடைசி மூன்று நாட்கட்குரிய வழிபாட்டுப் புகழ்ச்சிப் பாடல்.

**tenebrif'ic**, *a.* இருளுண்டுபண்ணுகிற ; (தொ.) tenebrific stars இரவுண்டுபண்ணுவதாகக் கருதப்பட்ட விண்மீன்கள்.

**ten'ebrous,** *a.* (பழ.) இருண்ட, மனத்துயரார்ந்த.

**ten'ement,** *n.* குடியிருப்பு மனை, குடியிருப்பறை ; சிறுநிலக் கிழமை, சிறு கிழார்நிலம் ; (சட்.) நிலையான உடைமை வகை.

**tenemen'tal, tenemen'tary,** *a.* குடியிருப்பறைகள் சார்ந்த ; அறைகள் வகையில் குடியிருப்பிற்குரிய.

**ten'ement-house,** *n.* குடியிருப்பறைத் தொகுதிகளையுடைய வீடு.

**tenes'mus,** *n.* (மரு.) சூடுபிடிப்பு, நீர்ச்சுருக்கு ; மலச்சிக்கல் ; மலச் சுருக்கு ; அடிக்கடி மலங் கழிக்க விழைவு ; அடிக்கடி சிறுநீர் கழிக்க விழைவு.

**ten'et,** *n.* தனிமனிதர் கொள்கை ; தனிக்குழுக் கோட்பாடு ; தத்துவக் கூறு, சித்தாந்தக் கூறு.

**ten'fold,** *a.* பத்துமடங்கான ; *adv.* பத்துமடங்காக.

**tenigue',** *n.* தசைச்சோர்வு.

**ten'ite,** *n.* மரச் சத்துக் குழைம வகை, புதிதாக்கப் பெற்றுள்ள செயற்கை மூலப்பொருள்.

**tenn'er,** *n.* (பே-வ.) பத்துப் பொன் தாள்நாணயம் ; பத்து வெள்ளித் தாள்நாணயம்.

**tenn'is,** *n.* வரிப்பந்து ; வரிப்பந்தாட்ட வகை ; (தொ.) lawn tennis, புல்வெளி வரிப்பந்தாட்டம் ; tennis arm, tennis elbow, வரிப்பந்தாட்டத்தால் வரும் கை நோய்.

**tenn'is-court,** *n.* வரிப்பந்தாட்டக் களம்.

**ten'on,** *n.* பொருத்து முளை, எதிர்க்குழியில் பொருந்தச் செய்யப்பட்ட முளை ; *v.* பொருத்து முளை செய் ; முளை செதுக்கிப் பொருத்து.

**ten'or,** *n.* நிலையான போக்கு ; பொதுப்போக்கு ; நடைமுறை வழி ; பேச்சுப்பாங்கு ; எழுத்துத்தொனி ; செல்திசை ; கருத்துச் செல்திசை ; (சட்.) உள்நோக்கம் ; (சட்.) சரிபகர்ப்பு ; (இசை.) ஆடவர் உச்சக் குரல் இசை ; உச்சவொலிக்கருவி இசை ; உச்ச இசைக்குரல் ஆடவர் ; கருவிவகை இசை ; (தொ.) tenor bell, மணித்தொகுதித் தலைமை ஓசைமணி ; tenor voice, உச்சக் குரலொலி

**ten'orist,** *n.* உச்சக்குரலோன் ; உச்சக்குரல் இசைக்கருவி வாசிப்பவர்.

**tenot'omy,** *n.* தொட்டிக்கால் வகையில் தசை நாண் அறுவை.

**ten-poun'der,** *n.* (வர.) முன்னாளில் பத்துப் பொன் வரி மதிப்புடைய சட்டமன்ற வாக்குரிமையாளர்.

**ten'rec,** *n.* மடகாஸ்கர் தீவின் வாலில்லா முள்ளெலி வகை.

**tense[1],** *n.* (இலக்.) வினைவடிவம், காலங்காட்டுவது.

**tense[2],** *a.* விறைப்பான ; முறைப்பான ; முறுகலான ; இறுக்கமான ; செறிவிறுக்கமான ; நா நரம்புகள் விறைப்பாக்கி ஒலி செய்யப்பட்ட ; *v.* விறைப்பாக்கு ; விறைப்பாகு ; முறைப்பாகு.

**tense'less,** *a.* காலவேறுபாடற்ற.

**tense'ness,** *n.* விறைப்புடைமை ; முறைப்புடைமை.

**ten'sible,** *a.* விறைப்பாக நீட்டத்தக்க.

**ten'sile,** *a.* விறைப்பாக்கத்தக்க ; இழுத்து விறைப்பாகக் கட்டக்கூடிய ; (தொ.) tensile force, விறைப்பாற்றல் ; முறைப்பாற்றல்.

**tensil'ity,** *n.* விறைப்பாக்கப்படுந் தன்மை.

**ten'sion,** *n.* கட்டிழுவை, வலித்திழுப்பு ; வலித்திழுப்பு நிலை ; வலிப்புப்பறிப்பு ; இழுப்புவிசை ; அடர்த்தி நிலை ; இழுவை உலைவு ; அடங்கிய விசையுணர்ச்சி நிலை ; மனத்தாக்கலைவு ; உளஅலைவு நிலை ; வளிவிரிவு அழுத்த நிலை ; உட்புயல் அமைதி நிலை ; வளிவிரிவகல்வாற்றல் ; மன வலி இயக்க ஆற்றல் ; (ஒலி.) செறிவழுத்தநிலை ; (இயந்.) இழுப்புலைவு, சமநிலையாற்றல் அல்லது இயங்காற்றல் காரணமான இழைம உறுப்புக்களின் அலைவு ; *v.* கட்டிழுவை செய் ; வலிப்பிழுப்புக்கு ஆளாக்கு ; இழுப்பு நிலைக்கு உட்படுத்து ; உலைவுசெய்.

**ten'sion-rod,** *n.* அலைவுக்கட்டை, இயந்திரத்தின் உலைதாங்குறுப்பு

**ten'sity,** *n.* விறைப்புடைமை ; முறைப்புடைமை.

**ten'son,** *n.* பண்டை நாடோடிப் பாடகரின் போட்டிப்பாடல் ; போட்டிப்பாடல் உறுப்பு.

**ten'sor,** *n.* (உள்.) நீட்டுத்தசை.

**tent[1],** *n.* கூடாரம் ; தற்காலிகக் களமேடை ; கம்பளிப்பூச்சி வகைகளின் தொகுதி இழை விதானம் ; *v.* கூடாரமிடு, மேற் கூடாரமமை ; கூடாரத்தில் தங்கு ; (தொ.) bell tent, மணிக்கூடாரம், நடுவில் ஒரு குச்சியுடைய கூடாரம் ; dart tent, இருட்டுக்கொட்டில், நிழற்படத்துறையில் மனைபுறப் படப்பிடிப்புக்குப் பயன்படுத்தப்பெறும் இடம்பெயர்த்துக் கொண்டுபோகத்தக்க அமைவு.

**tent[2],** *n.* செருகிழை, புண்வாய் மூடாதிருக்கச் செருகும் கந்தல் துணிச்சுருள் ; *v.* புண்வாய் மூடாதிருக்கச் செருகிழை திணித்து வை.

**tent[3],** *n.* ஸ்பெயின் நாட்டுச் செம் மது ; புனித வழிபாட்டு மது.

**ten'tacle,** *n.* பற்றிழை, துழாவுதற்கும் இயங்குதற்கும் பயன்படுத்தப்படும் உயிர்களின் உணர்ச்சிக்கொடுக்கு ; (தாவ.) உணர்ச்சியிழை.

**ten'tacled,** *a.* பற்றிழை வாய்ந்த.

**tentac'ular,** *a.* பற்றிழை சார்ந்த, உணர்ச்சிக்கொடுக்கிற் குரிய.

**tentac'ulate,** *a.* பற்றிழையுடைய.

**ten'tative,** *n.* முற்கோள், தேர்வுமுறைக் கோட்பாடு ; *a.* தேர்வுமுறையாகச் செய்யப்பெறுகிற ; தற்காலிகமாகக் கொள்ளப்பெறுகிற.

**ten'tatively,** *adv.* தேர்வுமுறையாக, சிறுபொழுதை முறையாக.

**tent'-bed,** *n.* கூடார மேற்கவிகை, கூடார வடிவாயமைந்த படுக்கை விதானம்.

**ten'ter[1],** *n.* பொறுப்புக் காப்பாளர், தொழிற்சாலையில் இயந்திரப் பாதுகாப்புப் பொறுப்பாளர்.

**ten'ter[2],** *n.* உணக்குபொறி, ஆடை காயும்போது சீர்நேரா யமைய உதவும் ஆடையுணக்கு துறட்டி ; சீர்ப்பொறிக் கொடுக்கு ; (தொ.) on the tenters, ஊசலாட்ட வேதனை நிலையிலிரு.

**ten'terground,** *n.* துணி உணக்கு கட்டக்களம்.

**ten'ter-hook,** *n.* உணக்குபொறிக் கொக்கி ; (தொ.) be on tenter-hooks, ஊசலாட்ட வேதனை நிலையிலிரு.

**tent'-fly,** *n.* கூடார முகட்டுத்திரைக் கவிகை ; கூடார வாயிற் புழைத் தட்டிக்கதவு.

**tenth,** *n.* பத்தாவது ; பத்தில் ஒன்று ; *a.* பத்தாவதான ; பத்தில் ஒன்றான.

**tenth'ly,** *adv.* பத்தாவதாக

**tent'-peg,** *n.* கூடார நிலைமுளை.

**tent'-pegging,** *n.* கூடாரமுளைத் தூக்காட்டம், குதிரைப் படைவீரர் ஓட்ட வேகத்திலேயே ஈட்டி முனையில் கூடார முளையைக் குத்தி எடுக்கச் செய்யும் குதிரைப்படைப் பயிற்சியாட்டம்.

**ten'uis,** *n.* வன்கண மெய்யின் இயல் ஒலிவடிவம், ஓசையற்ற ஒலி எழுத்து ; *pl.* ten'ues.

**tenu'ity,** *n.* இழைமை, கம்பிபோன்ற ஒல்லியான தன்மை, மெல்லிதாந் தன்மை, தடிப்பின்மை ; நொய்ம்மை, வாயு போன்ற அடர்த்தி குன்றிய தன்மை ; நெகிழ்வுநிலை, நீர்மம் போலச் செறிதிட்பமற்ற தன்மை ; எளிமை, பகட்டின்மை.

**ten'uous,** *a.* ஒல்லியான ; மெல்லிய ; நொய்தான, அடர்த்தியற்ற ; நுண்ணிய ; வேறுபாடு வகையில் நுட்பநுணுக்கமான.

**ten'ure,** *n.* உடைமையுரிமை ; உரிமைநுகர்வு ; உடைமையுரிமைக் காலம் ; உரிமை நுகர்வுக் காலம் ; ஊழிய உரிமை ; பதவிக் காலம் ; உரிமைநிலை.

***tenu'to,*** (இத்.) *a.* (இசை.) முழுநேரம் இசைக்கப்படுகிற.

*teocall'i*, *n.* மேட்டுத் தளி, மெக்சிக்கோ நாட்டுக்கூர்ங் கோபுரக் கோயில்.

tep'ee, *n.* அமெரிக்க இந்தியர் கூடாரம்.

tepefac'tion, *n.* வெதுவெதுப்பாக்கல்; வெதுவெதுப்பு.

tep'efy, *v.* வெதுவெதுப்பாக்கு; வெதுவெதுப்பாகு.

teph'igram, *n.* (வானிலை) வளிநிலையடுக்கு வரைபடம், வளிமண்டலப் படிநிலைகளின் தட்பவெப்பப் பதிவு வரைபடம்.

teph'rite, *n.* பொதுநிலை எரிமலைப் பாறை.

tep'id, *a.* வெதுவெதுப்பான, சற்றே சூடான.

*tepidar'ium*, (ல.) *n.* வெதுவெதுப்பறை, பண்டை ரோமரிடையே குளிப்புக் கூடத்தின் இடைநிலை வெப்ப அமைவுடைய அறை.

tepid'ity, tep'idness, *n.* வெதுவெதுப்பு; மிதச்சூடு.

ter, (ல.) *adv.* (இசை.) மும்முறையாக.

terai', *n.* வெயில்தொப்பி வகை.

te'raph, *n.* யூதர் வழிபாட்டுச்சிலை; சிலை; *pl.* te'raphim.

teratogen'ic, *a.* கோர உருப்பிறப்புச் சார்ந்த.

terato'geny, *n.* கோர உருப்பிறப்பு, கோர உருப்பேறு.

teratolo'gical, *a.* விந்தைப் பிறப்பான; வியத்தகு.

teratol'ogist, *n.* வியப்புரு நூலார்; புனைந்துரையாளர்.

teratol'ogy, *n.* விந்தைப்பிறப்பு நூல்; உயர்வுநவிற்சி.

terce, *n.* மூன்றில் ஒருகூறு.

ter'cel, *n.* ஆண் வல்லூறு; இராசாளிச் சேவல்.

tercen'tenary, *n.* முந்நூற்றாண்டு நிறைவுவிழா; *a.* முந்நூருண்டு சார்ந்த, முந்நூருண்டு நிறைவிற்குரிய.

tercentenn'ial, *a.* முந்நூருண்டு சார்ந்த, முந்நூற்றாண்டு நிறைவிற்குரிய.

ter'cet, *n.* மும்மை, மூன்றன்தொகுதி; அடியியைபுத் தொடையினையுடைய ஒரே மூன்றடிப்பாடல்; இருசுர நேரத்திற் பாடப்படும் மூன்று சுரத்தொகுதி.

te'rebene, *n.* தொற்றுத்தடை மருந்து வகை, தேவதாரத்தைலத்துடன் கந்தகக்காடி கலந்து பெறப்படும் நீரகக் கரிய வகை.

tereb'ic, *a.* சரளமரஞ் சார்ந்த; தேவதாரத் தைலவகை தரும் மரத்திற்குரிய.

te'rebinth, *n.* சரளமரம், தேவதாரத் தைலவகை தரும் மரம்; (தொ.) oil of terebinth, சரளத் தைலம், தேவதாரத் தைல வகை.

terebin'thine, *a.* சரள மரஞ் சார்ந்த; தேவதாரத் தைல வகை சார்ந்த.

te'rebra, *n.* பூச்சி வகையின் முட்டையிடும் உறுப்பு; துளை படை, பண்டை ரோமரிடையே சுவர் துளைக்கும் பொறி; துறப்பணம், துளைக்குங்கருவி; தமருசிபோன்ற தோட்டுறுப்பினையுடைய உயிரினம்; *pl.* te'rebrae.

ter'ebrant, *a.* துளைக்கிற; துளைத்து முட்டையிடும் உறுப்பினையுடைய.

te'rebrate, *a.* ஆங்காங்குச் சிதறலாகத் துளைக்கண்களையுடைய; முட்டையிடும் உறுப்பினையுடைய; துளையிடுங் கருவியினைக்கொண்ட; *v.* துளை.

tered'o, *n.* கப்பல் துளையிடும் புழு.

terg'al, *a.* முதுகு சார்ந்த; பின்புறஞ் சார்ந்த.

tergem'inate, *a.* (தாவ.) தண்டு கிளைகள் ஈரிரு கவர்களாய் முளைக்கிற.

ter'giversate, *v.* இரு பக்கம் வளை; தன்முதுகுப் பக்கமாகத் தானே திரும்பிப்பார்; சட்டையை அகப்புறமாகத் திருப்பு; கொள்கை மாற்று; கொள்கை கைவிடு; கட்சி மாற்று; கட்சி கைவிடு; முரண்பாட்டுக் கருத்துக்கள் பேசு, முரண்பாட்டு அறிக்கைகளிடு; வாதந் தட்டிக்கழி.

tergiversa'tion, *n.* இருபக்கப் பேச்சு; முன்பின் முரண் மொழிவு; கொள்கை முரண்பாடு; கொள்கை மாற்றம்; கட்சி கைதுறப்பு; வாதந் தட்டிக்கழிப்பு.

ter'giversator, *n.* முன்பின் முரண்மொழிபவர்.

term, *n.* பருவம், வரைபொழுது, வரையறைக்காலம்; குறித்த நாள்; சிறப்பு நிகழ்ச்சிகளுக்காகத் திட்டப்படுத்தப்பட்ட வேளை; பருவ முடிவு, கால இலக்கு; கால எல்லை; எல்லை; சொற்கூறு; (அள.) வாசகக் கருத்துக்கூறு; (கண.) வீதத்தின் சினை எண்; (கண.) எண்ணுருக்கூறு, பல் கூற்றுத்தொடர் எண்ணில் கூட்டல் கழித்தல் குறிகளாற் பிரிக்கப்பட்ட எண் பகுதி; *v.* கழறு, பெயரிட்டுக்கூறு; சொல்லாற் குறிப்பிடு; சொல்லாற் குறிப்பிட்டுக் கூறு; (தொ.) keep a term, கல்லூரி-பள்ளி நீடிருக்கைப் பருவ முழுதும் வருகைப்பதிவு கொடுத்து வா.

term'agancy, *n.* அடங்காப்பிடாரித்தனம்.

Term'agant[1], *n.* (வர.) பிடாரி.

term'agant[2], *n.* சண்டி; வாய்ப்பட்டி; அடங்காப்பிடாரி; வசைமாரி பொழிபவள்; *a.* பெண் வகையில் ஆர்ப்பாட்டஞ் செய்கிற, அடங்காப்பிடாரியான, முரட்டுத்தனமான.

term'inable, *a.* முடிக்கத்தக்க; முடிவுபெறத்தக்க, குறிபிட்ட காலத்திற்குப் பின் முடிவிற்கு வரத்தக்க.

term'inal, *n.* கடைமுடிவு, கடைக்கோடி; பாதை முனைக் கோடி; ஊர்தி எல்லைக்கோடி, இருப்புப்பாதை சென்று முடியுமிடம்; வானெறி எல்லைமுனை; திறந்த மின்தொடரின் வரைகோடி; *a.* இறுதியான; எல்லைக்கோடியான; முடிவிடத்துக்குரிய; எல்லை முடிவுசெய்கிற; கல்லூரி-பள்ளி-பல்கலைக் கழகங்களுக்குரிய ஆண்டுப்பருவஞ் சார்ந்த; ஆண்டுப்பருவந் தோறும் நடைபெறுகிற; முறைமன்ற நீடிருக்கைக் காலத்துக் குரிய; (தாவ.) தண்டின் கிளையற்ற நுனிமுகட்டுக்குரிய; (தாவ.) கிளையின் நேர்முகட்டுக்குரிய; (வில.) கணுக்கள் வகையில் கடைக்கூற்றுக்கு முற்பட்ட, கடைக்கூற்றுடன் முடிகிற; (தொ.) terminal accounts, ஆண்டுப்பருவக்கணக்கு; terminal guidance, ஏவு வான்கலச் செலவில் முற்படி இயக்கு ஆட்சி; terminal joint, கடைக்கணு; terminal leave, கடைச் சேமிப்பு விடுப்பு, படைத்துறையில் இறுதி ஓய்வின்போது மிகை ஊதியந்தரு முறையில் சேர்த்துவைத்து எடுத்துக் கொள்ளப்படும் விடுப்பு; terminal subscription, ஆண்டுப் பருவ இசைவுக் கட்டணம்; terminal value, இறுதி ஈவு; (கண.) தொடரின் சுருக்க முடிவு மதிப்பு.

termina'lia, *n.* கோடிக் காவற்றெய்வ விழா.

term'inate, *a.* எல்லைக்குரிய, எல்லையான; எல்லையாயமைகின்ற; முடிவுக்குரிய; முடிவுக்கு வருகின்ற; முடிவுற்ற; ஈருன, எழுத்து அல்லது ஒலி வகையில் சொல்லின் இறுதிக் குரிய; *v.* எல்லைப்படுத்து; வரையறைப்படுத்து; முடித்துவிடு, நிறுத்து, முடிவு செய், இறுதி செய்; இறுவாயாகு; குறிப்பிட்ட எழுத்தில் அல்லது அசையில் முடி.

termina'tion, *n.* முடிவு; விகுதி, இறுதிநிலை.

termina'tional, *a.* (இலக்.) விகுதிசார்ந்த; இறுதிநிலை சார்ந்த.

ter'minative, *a.* முடிக்கக்கூடிய, இறுவாயாகக்கூடிய; முடிவுதெரிவிக்கிற, நிறைவு குறிக்கிற; வரையறைப்பட்ட; தனிநிலையுறுதியான, முடிந்த முடிவான.

ter'minatively, *adv.* முடிந்த முடிவாக.

term'inator, *n.* முடிவு செய்பவர்; முடிப்பது; ஒளி நிழல் இடைவரை, வானொளிக் கோளங்களின் இருளையும் ஒளியையும் வேறுபடுத்துங் கோடு.

ter'minatory, *a.* முடிக்கிற; இறுதிசெய்கிற.

term'iner, *n.* (சட்.) அறுதியீடு, உறுதிச்செயல்; (தொ.) oyer and terminer, மாவட்ட ஆணமன்றத்தில் கேள்வி முறையும் அதன் மீதான அறுதியீடும்.

term'inism, *n.* வரையுய்திக் கோட்பாடு, கிறித்தவ சமயத் துறையில் கழிவிரக்கத்தால் மன்னிப்பு உய்தி பெறுதற்கு ஒவ்வொருவருக்கும் குறித்த கால எல்லை வரையறை உண்டெனுங் கொள்கை; (மெய்.) பொதுப்பதப் போலிமைக் கோட்பாடு.

**terminolo'gical,** *a.* பதப் பயனீட்டாய்வு நூலுக்குரிய ; பயனீட்டுச் சொற்றெகுதிக்குரிய ; துறைச்சொல் தொகுதிக்குரிய ; துறைச்சொல் சார்ந்த ; (தொ.) terminological inexactitude, அவைபடு வழக்கில் பொய், வாயன்மை.

**terminol'ogically,** *adv.* பதப் பயனீட்டாய்வு நூல் முறையில், துறைச்சொல் என்ற முறையில்.

**terminol'ogy,** *n.* பதப்பயனீட்டாய்வு நூல்; பயனீட்டுச் சொற்றெகுதி, கலை இயல்களுக்குரிய துறைச்சொல் தொகுதி ; துறைச்சொல்.

**Term'inus**[1], *n.* பண்டை ரோமர் வழக்கில் எல்லைத் தெய்வம்.

**term'inus**[2], *n.* முடிவிடம், முனைக்கோடி, கடைக்கோடி ; இருப்புப்பாதை முடிவிடம் ; சதுரத் தூணில் முடியும் மார்பளவு மனித உரு ; *pl.* term'inuses ; term'ini ; (தொ.) (ல.) *terminus ad quem,* முடிவு முடிகின்ற கோடி ; (ல.) *terminus a quo,* தொடக்கம், தொடங்குகிற கோடி.

**termitar'ium,** *n.* கறையான் கூண்டு, கறையான் புற்று ; தேர்வாய்வுப்புற்று.

**term'itary,** *n.* கறையான் புற்று.

**term'ite,** *n.* செல், கறையான்.

**term'less,** *a.* வரையறையற்ற, கால எல்லையறுதியற்ற ; நிபந்தனையற்ற.

**term'ly,** *a.* பருவத்திற்குரிய, சட்டமன்ற-முறைமன்ற வகையில் நீடிருக்கைக்காலத்திற்குரிய, பருவப்படியான ; பருவந்தோறும் நிகழ்கிற, பருவந்தோறுங் கொடுக்கப்படுகிற ; *adv.* பருவப்படி, பருவந்தோறும்.

**term'or,** *n.* (சட்.) குறிப்பிட்ட காலக் குத்தகையர் ; குறிப்பிட்ட கால உரிமையர்.

**terms,** *n. pl.* சொற்றெகுதி, வாசகம் ; சொற்பாங்கு, வாசகப்போக்கு ; மொழி, பேச்சுப்பாணி ; கட்டுப்பாடுகள், நிபந்தனைகள் ; ஒப்பந்த விதிமுறைகள் ; ஆசார நடைமுறை விதிகள் ; விலைமுறைத் திட்டம், விலைவீதம் ; ஒப்பந்த விலை ; கேள்வி விலை ; கோரு விலை ; செயல் எல்லை ; தொடர்பு ; படிநிலை ; (தொ.) bring persons to terms, இணங்குவி, நிபந்தனைகளை ஒப்புக்கொள்ளச் செய் ; come to terms, இசைந்திணங்கு ; விட்டுக்கொடு ; contradiction in terms, பதமுரண், எதிர்ப்பத இணைவு ; eat one's terms, வழக்குரைஞர் தேர்வுக்குப் பயிற்சி மேற்கொள் ; in terms, சொல்வடிவாக ; விளக்கமாக ; வெளிப்படை மொழியுருவில் ; in terms of, தனித்திறமான மொழியில் ; தனித்திற அலகாகக்கொண்டு ; make terms, உடன்பாடு செய் ; on speaking terms, பேச்சுத் தொடர்புக்குரிய அளவு நட்பிணக்கத்துடன், பொதுநிலை இணக்கத்துடன் ; பேசுமளவு நன்கு பழக்கப்பட்டு ; on terms, நட்புறவுடன் ; சரிசமநிலையில் ; set terms, வரையறுக்கப்பட்ட நிபந்தனைகள் ; திட்டமிடப்பட்ட கட்டுப்பாடுகள் ; stand upon terms, நிபந்தனைகளை வலியுறுத்து ; விதிமுறை வற்புறுத்து ; terms of reference, உசாவெல்லை, ஆய்வுக்குரிய பொருள் எல்லை ; ஆய்வுக்குரிய செய்திகளின் வரையறை ; terms of trade, terms of years, நிலத்தின்மீது சிறிது காலத்துக்கான வருமானத் தொடர்பு ; சரக்குகளின் இறக்குமதி ஏற்றுமதி விலைகளிடையே வீதம்.

**tern**[1], *n.* நீள் மூக்குடைய கடற்பறவை வகை.

**tern**[2], *n.* மும்மை, மூன்றன் தொகுதி ; முக்கூட்டுப் பரிசுச்சீட்டு, யோகச்சீட்டில் மூன்று ஒருங்கிணைந்து பெரும் பரிசுக்குரியதாகுந் தொகுதி ; முக்கூட்டுச் சீட்டுப் பரிசு ; *a.* மூன்றாக வரிசைப்படுத்தப் பெற்ற.

**ter'nal,** *a.* மும்மடங்கான.

**tern'ary,** *a.* மூன்றால் ஆன ; மூன்று மூன்றாக இணைவுற்ற ; (கண.) மூன்று திரிபெண்ணுருக்களையுடைய.

**tern'ate,** *a.* மூன்றாக வரிசைப்படுத்தப்பட்ட ; (தாவ.) மூன்று சிறுஇலைகள் கொண்ட ; மூன்று ஒருசுற்றாக அமைவுற்ற.

**terne, terne'-plate,** *n.* மட்டத்தகரம், ஈயம் மிகுதிகலந்த வெள்ளீயத்தாற் பூசப்பட்ட மட்டத்தகடு.

**Terpsich'ore,** *n.* இசையாடற்றெய்வம்.

***te'rra,*** (ல.) *n.* நிலம்.

***te'rra carios'a,*** (ல.) *n.* உலோக மெருகூட்டுக்கு உதவும் சுண்ணாம்புக்கல் வகை.

**te'rrace,** *n.* ஒட்டு, படிவரிசை ; அடுக்குத்தளக் கட்டுமானம் ; தட்டட்டி, மட்டுப் பாமாடி ; முகப்பு மேடை, மேல்தளம் ; காட்சியரங்க மேடையிருக்கை ; சாய்வாரத்தின் மீதமைந்த மாடவரிசை ; மாடமனை வரிசை ; புடைதிறப்பான படியடுக்கு மேடை ; படியடுக்குத் தளவரிசை ; படியடுக்குத் தளமேடு ; தட்டையான மேட்டுச்சி, சரிவிடையே தட்டையான தளம் ; ஏ. படியடுக்குத் தளமேடையமை ; ஒட்டு ; படியடுக்குத் தளமேடையமைத்து இணைவி ; படியடுக்குத் தளமேடையாய் உருவாக்கு ; மட்டுப் பாமாடி அமைவி ; மட்டுப்பாமாடியாக்கு.

**te'rraced,** *a.* ஒட்டப்பட்ட.

**terracott'a,** *n.* கடுமட்பாண்டம், மெருகூட்டாத மட்பாண்டம் ; கடுமட்கலம் ; கடுமண்ணுக்கச் சிலை ; கடுமட் சிற்றுருச் சிலை ; செம்பழுப்பு வண்ணம் ; *a.* செம்பழுப்பு வண்ணமான.

**ter'ra-cul'ture,** *n.* மண்ணைப் பண்படுத்துதல், வேளாண்மை.

***te'rrae fil'ius,*** *n.* நாட்டு மண்ணிலேயே பிறந்தவன், பழங்குடி மகன் ; எளிய குடிப்பிறப்புடையவன்.

***te'rra firm'a,*** (ல.) *n.* திண்ணிலம் ; கரம்பு நிலம் ; நிலம்.

**terrain',** *n.* திணைநிலம், நில இயலில் தனித்தன்மையுடையதாகக் கருதப்படும் நிலப்பகுதி ; போர்த்துறையில் தனித்திறங்களுடையதாகக் கருதப்படும் நிலப்பகுதி.

***te'rra incog'nita,*** (ல.) *n.* தெரியா நிலம், புது இடம் ; தெரியாப்பொருள், தெரியாத்துறை.

***te'rra Japon'ica,*** (ல.) *n.* தோற்பதனிடப் பயன்படுத்தப்படும் தாவரச்சாற்றுச் சரக்கு.

**terramare',** *n.* மண்படிக உரம் ; எரியக்காடி உப்பு எலும்புகள் முதலியன அடங்கியுள்ள மக்கிய மண்படிவு உரம் ; வரலாற்றுக்காலமுன் குப்பைகூளப்படிவம்.

**terramy'cin,** *n.* நுண்ம ஒட்டுயிர்ப்பகை மருந்துச் சரக்கு வகை.

**terran'eous,** *a.* (தாவ.) நிலவளர்ச்சியான, நிலமீது வளர்கிற.

***terra ner'a,*** (இத்.) *n.* ஓவியர் வண்ண மைவகை.

**te'rrapin,** *n.* உணவு ஆமைவகை.

**terraq'ueous,** *a.* நிலமும் நீருங்கொண்ட ; நிலமும் நீருங் கொண்ட நிலவுலகஞ் சார்ந்த.

**terra'rium,** *n.* நிலவாழுயிர்களின் பேணகச்சாலை.

***te'rra ross'a,*** (இத்.) *n.* செம்மண் வகை.

***te'rra sigilla'ta,*** (இத்.) *n.* பொரிமண், எளிதில் சுட்டுக் கெட்டியாக்கத்தக்க மண்வகை.

***te'rra ver'de,*** (இத்.) *n.* வண்ணப் பசுமண்.

**terrene',** *n.* உலகம் ; திணைநிலம், நிலவகை ; *a.* நிலவுலகஞ் சார்ந்த ; நிலவுலகில் வாழ்கிற ; மண்ணுக்குரிய, இவ்வுலகு சார்ந்த.

**terr'eplein,** *n.* கொத்தளப் பீரங்கி மேடு, கைப்பிடிச்சுவருக்குப் பின்னால் பீரங்கிகள் ஏற்றிவைக்கப்படுங் கோட்டை மதிலின் மேற்புறம் ; கள அரணில் பீரங்கி வைப்பிடம்.

**terres'trial,** *n.* நிலவுலகினர், நிலவுலகில் வாழ்பவர் ; *a.* நிலவுலகஞ் சார்ந்த ; தெய்விகமல்லாத ; இம்மைக்குரிய ; உலகியல் பற்றுடைய, சமயப்பற்றற்ற ; நிலவுலகப்பரப்புக்குரிய ; வானமண்டலஞ் சாராத ; நிலப்பரப்புக்குரிய, நீர்ப்பரப்பல்லாத, கடற்பரப்பல்லாத ; (வில.) நிலத்தில் வாழ்கிற ; (தொ.) a terrestrial globe, நிலவுலகங் குறிக்கும் உருண்டை ; terrestrial magnetism, நிலவுலகக் கோளக் காந்த விசை ; terrestrial reference guidance, ஏவுகல நிலம் படர் இயக்காட்சி, செல்வழி மின்காந்த ஈர்ப்பாற்றல்களைப் பின்பற்றும் தனித் திற ஆற்றல்களை ஏவுகலம் தன்னகமே கொண்டு செல்லும் ஏவுகல இயக்காட்சிமுறை ; terrestrial telescope, புவியியல் தொலைநோக்கி.

**thought'fully**, *adv.* முன்னுலோசனையுடன்.

**thought'fulness**, *n.* முன்னுலோசனையுடைமை ; ஒத்துணர்வுடைமை ; ஆழ்சிந்தனை நிலை.

**thought'less**, *a.* சிந்தனையற்ற ; முன்னுய்வற்ற ; ஆராயாது துணியப்பெற்ற ; ஆராயாது துணிகிற ; பிறர் உணர்வைப் பற்றிக் கவலையற்ற ; ஒத்ததறியும் உணர்வற்ற.

**thought'lessly**, *adv.* சிந்தனையற்று ; முன்னுய்வின்றி ; பிறர் எண்ணம் மதிக்காமல்.

**thought'lessness**, *n.* சிந்தனையின்மை ; முன்னுய்வின்மை, முன்கருதலின்மை ; பிறர் உணர்ச்சி பாராமை.

**thought'-reader**, *n.* தொலைவிலுணர்பவர்; பிறர் எண்ணங் கண்டுணர்பவர்.

**thought'-reading**, *n.* தொலைவிலுணர்தல், பிறர் எண்ணங் கண்டுணர்தல்.

**thought'-trans'ference**, *n.* தொலைவிலுணர்தல், உள ஆற்றல்வழி உளம் இயக்குவிக்கும் ஆற்றல்.

**thought'-wave**, *n.* நினைவலை ; திடீர் நினைவு ; திடீர்த் தூண்டுதல் எண்ணம் ; அலைவடிவாகக் கற்பிக்கப்படும் நினைவியக்கம் ; எண்ணங்களின் பரவும் ஆற்றல் ; கூட்டத்தினரிடையே பரவும் உணர்வாற்றல் ; கும்பலுணர்வாற்றல் இயக்கம் ; எண்ண அலை, நினைவின் தொனி ஆற்றல் ; தொலைவிலுணர்தலில் பிறர் எண்ணஞ் செயல்களை இயக்குமாற்றலுடையதாகக் கருதப்படும் நினைவலையியக்கம்.

**thous'and**, *n.* ஆயிரம் ; ஆயிரத்தொகுதி ; மிகப்பல ; *a.* ஆயிர எண்ணிக்கையுடைய ; ஆயிரக்கணக்கான ; மிகப் பலவான ; (தொ.) one in a thousand, ஆயிரத்தில் ஒருவர்; அரும்பண்பாளர் ; அரும்பொருள் ; அரும்பண்பு.

**thous'andfold**, *a.* ஆயிரமடங்கான ; *adv.* ஆயிரமடங்காக.

**thous'and-pound**, *a.* ஆயிரங் கல் எடையுடைய ; ஆயிரம் பொன் விலைபிடிக்கிற ; ஆயிரம் பொன் விலைமதிப்புடைய.

**thous'andth**, *n.* ஆயிரமாவது ; ஆயிரமாவர் ; பலவற்றின் பின்வருவது ; ஆயிரத்திலொரு கூறு ; *a.* ஆயிரமாவதான ; ஆயிரத்தில் ஒன்ருன ; எத்தனையோ பலவற்றிற்குப் பின் வருகிற.

**thra'ldom**, *n.* அடிமை நிலை.

**thrall**, *n.* அடிமை, தொழும்பர் ; அடிமை நிலை ; *a.* அடிமையுற்ற ; *v.* அடிமைப்படுத்து.

**thrash**, *v.* விளாசு, புடை; மோதி மோதி அடி, மீண்டும் மீண்டும் நையப்புடை ; தோற்கடித்தடக்கு ; அடக்கியாளு ; வென்று மேம்படு ; கப்பலின் துடுப்பாழி வகையில் நீர்மீது மோதி வாரியிறைத்துச் செல் ; கப்பல் வகையில் அலைகள் மீது மோது; கப்பல் வகையில் நீர் கிழித்துச் செல்; கப்பல் வகையில் காற்றெதிர்த்துச்செல்; சூடடி, கதிரடி ; (தொ.) thrash out, திரும்பத்திரும்ப ஆய்வு செய்து முடிவுகாண்.

**thrash'er**, *n.* சுரு வகை ; நரிச்சுரு ; புடைக்கும் ஆள் ; புடைக்கும் பொறி ; புடைப்பவர்.

**thrash'ing**, *n.* புடைத்தல், நைய அடித்தல் ; *a.* நைய அடிக்கின்ற ; தாக்குகின்ற ; புடைக்கின்ற.

**thrason'ical**, *a.* வீம்படிக்கிற, தற்பெருமை பேசுகிற.

**thread**, *n.* நூல் ; மென்கம்பியிழை ; சரடு, இழைமுறுக்கு ; பொன்-வெள்ளிச்சரிகை இழை ; மரையாணியின் திருகிழை ; தையல் மூட்டுவாய் விளிம்பு; கனிப்பொருள் மெல்லூசியிழை; துணியின் நெய்விழை ; இணைக்கும் நுண் இழை ; நாரிழை ; துய்யிழை ; இழைபோன்ற பொருள், ஒருங்கிய பிழம்புரு ; கம்பியாய் இழுக்கப்பட்ட சிம்பு ; தொடர்பற்ற தொங்கல் இழை ; முடிக்காதுவிட்ட செய்தி ; *v.* நூலை இழை ; இழையை ஊடுசெலுத்து ; ஊசிவகையில் நூலை நுழைவி ; உருமணிகளைச் சரட்டில் இழைத்துக் கோத்திடு ; இழையில் இழைவி ; சங்கிலியின் கண்ணிகளைக் கோத்திணை ; இணைத்துச் சேர் ; இடுங்கிய வழியே இழைந்து செல் ; கூட்டத்திடையே நெருக்கி வழியமைத்துக்கொண்டு செல் ; இழை அமைத்து இணை, இழைபொருத்து ; (தொ.) gather up the threads, தனித்தனி ஆய்வு முடிவுகளை இணைத்துத் தொடர்புபடுத்திக் காட்டி ஒருமுகப்படுத்து ; hang by a thread, மயிரிழையில் தொங்கு, அந்தர நிலையில் இரு ; the thread of life, வாழ்நாள் இழை ; thread and thrum, சகட்டுமேனியாக ; நல்லதுங் கெட்டதும் ஒருங்கு கலந்த நிலையில்.

**thread'bare**, *a.* இழையிழையான, கந்தல் கந்தலான ; உடுத்துக் கிழிந்த ; பழம்பஞ்சடைவான.

**thread'bareness**, *n.* தேய்ந்து நைந்த கந்தல்கூள நிலை ; வழங்கிவழங்கி அலுத்துப்போன நிலை.

**thread'iness**, *n.* நூல்போன்ற தன்மை ; மெல்லிழை நிலை ; கந்தலான நிலை.

**thread'-lace**, *n.* பின்னல் நூலிழை.

**thread'-mark**, *n.* கண்ணிழை, பணத்தாளில் வண்ணப் பட்டிழையால் உள்ளீடாக இடும் நீர்க்கோடு.

**thread'-needle**, *n.* ஊசிநூல்கோப்பு விளையாட்டு.

**thread'-paper**, *n.* நூல்மடித் தாள், நூல்கற்றை சுற்ற உதவும் மென்தாள்வகை.

**thread'worm**, *n.* கீரைப்பூச்சி, குழந்தைகளின் மலக்குடலில் உள்ள நூலிழைபோன்ற புழு.

**threa'dy**, *a.* நூல்போன்ற ; இழைவான ; ஒடுங்கிய.

**threat**, *n.* அச்சுறுத்துதல், பயமுறுத்தல் ; மருட்டல் ; இடர் பின் வருநிலை ; தீமை முன்னறிவிப்பு ; தீமை முன்னறிகுறி ; அச்ச எச்சரிப்பு ; இடர்முன்னெச்சரிப்பு ; (சட்.) தகா வன்முறை அச்சுறுத்து செயல், உரிமை தாக்கச்சுறுத்து ; பொல்லாங்குச்சுறுத்தல்.

**threa'ten**, *v.* அச்சுறுத்து ; வன்முறையாகப் பயமுறுத்தல் செய் ; ஊறு நிகழுமென எச்சரிக்கை செய் ; ஒறுக்கப்போவதாக அறிவி ; பின்வருவதற்கு அறிகுறியாயிரு, பின்வரவு காட்டு; கேடுபெருகும் போக்குடையதாகத் தோன்று ; (தொ.) clouds threaten, சூழ்நிலை அச்சுறுத்துகிறது.

**threa'tening**, *a.* அச்சுறுத்தலான.

**three**, *n.* மூன்று ; மூன்றெனும் எண் ; மூன்றெண்குறி, மூன்றிலக்கக்குறி, மூன்றன்தொகுதி ; மூவர் ; இரவு மூன்றுமணி, பிற்பகல் மூன்றுமணி; மூன்றெண் சீட்டு; மூன்றெண் பகடை ; மூன்றெண் கெலிப்பு ; *a.* மூன்று எண்ணிக்கையுடைய ; (தொ.) the three R's, அடிப்படைக் கல்வி, படித்தல்-எழுதுதல்-கணக்கு (reading-writing-arithmetic) ஆகியவை சேர்ந்த தொடக்க அறிவுத்தொகுதி; Three in One, கிறித்தவ சமயக் கடவுண்மை வகையில் மூவொருமைத்திறம்.

**three'-deck**, *a.* கப்பல் வகையில் மூன்று தளங்களையுடைய.

**three'-deck'er**, *n.* முத்தளக் கப்பல், துப்பாக்கித் தளவரிசைகள் மூன்றினையுடைய போர்க்கப்பல் ; முத்தொகுதிப் புதின ஏடு.

**three'-dimen'sional**, *a.* முத்திற அளவையுடைய, நீள அகல உயரமுடைய, இடச் சார்பான மூவளவுடைய ; மூவளவைக் காட்சித்திறமுடைய.

**three'fold**, *a.* மும்மடங்கான ; மும்மடியான ; *adv.* மும்மடங்காக ; மும்மடியாக ; மூவடுக்காக.

**three'-foot**, *a.* மூவடி அளவுடைய.

**three'-han'ded**, *a.* மூவராலாடப்படுகிற.

**three'-lane**, *n.* மூவழிப் பாதை ; *a.* முக்கவர் சந்தான.

**three'-legged**, *a.* மூன்று கால்களையுடைய ; மூன்று கால்களே பயன்படுகிற ; (தொ.) three-legged race, இருவர் இடைக்காற்கட்டு ஓட்டப்பந்தயம்.

**three'-mast'er**, *n.* முப்பாய்மரக் கப்பல்.

**three'-month'ly**, *n.* காலாண்டிதழ்.

**three'ness**, *n.* மும்மை, மூன்ருயுள்ள நிலை.

**three'-pair**, *n.* மூன்ருவது மாடிக்குரிய அறை ; *a.* மூன்ருவது மாடியிலுள்ள.

**three'-part**, *a.* முக்கூறுடைய; (இசை.) மூவருக்கான.

**three'-parted**, *a.* முக்கூறுடைய.

**three'-per-cents'**, *n.* அரசாங்க முச்சதமானக் கடன்பத்திரம், நூற்றுக்கு மூன்று விழுக்காடு வட்டியுடைய அரசினர் கடன் தாள்கள்.

**three'-pile**, *n.* வேறுவேறு போக்குடைய மூவடை ஒட்டுப் பலகை; *a.* மூவிழைப் பூத்தொங்கலுடைய; மூவிழை யுடைய; மூவடையடுக்கிய.

**three'-piled**, *a.* மூவிழைப் பூத்தொங்கலுடைய; மூவடுக்கிய; மூவடுக்குயரமான.

**three'-ply**, *n.* மூவிழை அல்லது மும்மடிப்புடையது; மூவிழை ஒட்டுப்பலகை.

**three'-point**, *a.* முக்கூட்டிறக்கமுடைய, விமான வகையில் இரு சக்கரங்கள் வால்புற உருளை ஆகிய முப்பகுதி மீதும் ஒருங்கே ஒரே நேரத்தில் வந்திறங்குகிற; (தொ.) three-point landing, முக்கூட்டிறக்கம்; பிசகற்ற முழு நல் லிறக்கம்.

**three'-pricker**, *n.* (இழி.) முக்கூட்டிறக்கம், விமான வகை யில் இரு சக்கரங்களும் வால்புற உருளையும் ஒரே சமயத்தில் நிலம்பட இறங்குதல்; மிகச் சரியான செய்தி, முதல்தரச் செய்தி.

**three-quart'er**, *n.* புடை அரைப்புற ஆட்டக்காரர்; முக்கால்; *a.* முக்காற் கூறுன; முக்காற்பங்கு எண்ணிக்கையுடைய; வழக்க அளவில் முக்காற் கூறுன; பட வகையில் இடுப்பளவு காட்டுகிற; முக்காற்பங்கு முகங் காட்டுகிற; *adv.* முக்காற் பங்காக; முக்காலளவு எண்ணிக்கையுடன்.

**three'score**, *n.* அறுபது; அறுபதாண்டு; *a.* அறுபது எண்ணிக்கை கொண்ட; (தொ.) threescore and ten, எழுபது.

**three'-sid'ed**, *a.* முப்பக்கமுடைய.

**three'some**, *n.* மூவர் தொகுதி; மூவர்க்குரிய விளையாட்டு; மூவர்க்குரிய நடனம்; *a.* மூவர்க்குரிய; மும்மடியான, மும் மடங்கான.

**three'-speed**, *a.* ஒலிப்பதிவுத்துறையில் வாலாயமான மூவிசைக்கும் இயைவுடைய.

**thremmatol'ogy**, *n.* மாவடை மரவடை பயிற்பின வளர்ப்பு நூல்.

**threnet'ic, threnet'ical**, *a.* ஒப்பாரி போன்ற, புலம்புகிற.

**threnod'ial, threnod'ic**, *a.* ஒப்பாரி சார்ந்த.

**thren'odist**, *n.* ஒப்பாரிக் கவிஞர்.

**thren'ody**, *n.* ஒப்பாரி, இழவுநேரப் புலம்பற் பாட்டு.

**thresh¹**, *n.* சூட்டடிப்பு; *v.* விளாசு, வீக்கு; அடித்துத் துவை; மிதித்துத் துவை; சூட்டடிப்புப் பொறியால் கூலக்கதிர்களைத் துவை.

**thresh²**, *n.* கோரைவகைப் புதர்ச்செடி.

**thresh'el**, *n.* சூட்டடிப்புக்கோல்; சூட்டடிப்புக்கோல் போன்ற படைக்கலம், கவை முட்படை.

**thresh'er**, *n.* சூட்டடிப்பவர்; சூட்டடிப்புக் கோல்; சூட் டடிப்புப் பொறி; சூட்டடிப்புப் பொறியின் துவைப்புறுப்பு; சுருவகை, நரிச்சுரு.

**thresh'er-shark**, *n.* சுருவகை, நரிச்சுரு.

**thresh'er-whale**, *n.* திமிங்கிலகிலம்.

**thresh'ing**, *n.* சூட்டடிப்பு.

**thresh'ing-floor**, *n.* சூட்டடிப்புக் களம்.

**thresh'ing-machine**, *n.* சூட்டடிப்புப் பொறி.

**thresh'ing-mill**, *n.* சூட்டடிப்பு ஆலை.

**thresh'old**, *n.* வாயிற்படி, நுழைவாயிற் படிக்கல்; நுழை வாயில்; முகப்பு; தொடக்கம்; தொடக்க நிலை; கருஉணர்வு நிலை, உணர்வுநிலையின் அடி எல்லை; புறத்தூண்டுதலுக்கான அக எதிரீட்டுத் தொடக்கம்; *a.* தொடக்க நிலையிலுள்ள; தொடக்க நிலையான; விமானத்துறையில் விசையாற்றலின் உறுதாழ்மட்டம்; (தொ.) threshhold of consciousness, (உள.) உணர்வுக் கருநிலை, தூண்டுதல் விளைவுணர்ச்சி புலப் படாக் கீழ் எல்லை, உணர்ச்சியைத் தோற்றுவிப்பதற்குத் தேவையான நரம்புக்கிளர்ச்சியின் மிகக் குறைந்த அளவுநிலை; threshold rate, புதுத் தொழிலாளர் தொடக்கக் கூலித்தரம்.

**threw**, *v.* throw என்பதன் இறந்தகால வடிவம்.

**thrice**, *adv.* மும்முறை; மூன்று தடவை; மிக உச்ச நிலை யாக.

**thrice'-blessed**, *a.* மிகத்தெய்விகமான, மிகுதியும் போற்றத் தக்க.

**thrice'-favoured**, *a.* உச்ச நிலையில் நல்லாதரவு பெற்றுள்ள.

**thrid'ace**, *n.* வலிநீக்க மருந்தாகப் பயன்படும் கோசுக்கீரை வகையின் கெட்டிச்சாறு.

**thrift**, *n.* செட்டு; சிக்கன ஆட்சி; செல்வ ஆக்க நிலை; செல்வ வளம்; செல்வ நிலை வளர்ச்சி; ஆதாய ஆக்கத்தொழில்; தாவர வகை.

**thrif'tily**, *adv.* சிக்கனமாய், செட்டாக, செல்வ ஆக்கத் துடன்.

**thrif'tiness**, *n.* சிக்கனமுடைமை; செல்வ ஆக்கமுடைமை.

**thrift'less**, *a.* சிக்கனமற்ற; ஊதாரித்தனமான; உருப் படாத.

**thrif'ty**, *a.* செட்டான; சிக்கன ஆட்சியுடைய; முன்னேற்ற மான; செல்வ வளமுடைய; செல்வ ஆக்கந் தருகிற.

**thrill**, *n.* சிலிர்ப்பு, புளகாங்கித உணர்ச்சி; கிளர்ச்சி அலை; நரம்புத்துடிப்பதிர்வு; (மரு.) நாடி அசைவதிர்வு; (இழி.) உணர்வார்வக் கதை; *v.* சிலிர்ப்பூட்டு; புளகாங்கிதங்கொள்; உணர்ச்சியதிர்வலை பரப்பு, உணர்வலைக் கிளர்ச்சியுறு; நாடி நரம்புளர்வுறுத்து; துடிப்பதிர்வுறு; எழுச்சியூட்டு, கிளர்ச்சி யுறுவி; கிளர்ச்சிகொள்; உணர்ச்சி வகையில் அணு அணு வாகப் பரவுதலுறு; அச்சம் முதலிய உணர்ச்சிகளால் உள நடுக்குறு, உள்விதிர்விதிர்ப்புறு.

**thrill'er**, *n.* உணர்ச்சியார்வமிக்க கதை; உணர்வார்வ நாடகம்.

**thrill'ing**, *a.* உணர்ச்சியார்வம் ஊட்டுகிற; கிளர்ச்சியூட்டு கிற; சிலிர்ப்பூட்டுகிற; விதிர்விதிர்க்கிற.

**thrips**, *n.* திராட்சைச் செடியரிக்கும் பூச்சி வகை.

**thrive**, *v.* ஆக்கவளமுறு; செழித்தோங்கு.

**thriv'en**, *v.* thrive என்பதன் முடிவெச்ச வடிவம்.

**thr'iving**, *a.* ஆக்கமான; வளமான; முன்னேறுகிற.

**throat**, *n.* மிடறு, தொண்டை; உணவுக்குழாய்; குரல்வளை; முச்சுக்குழல்; குரல்; இடுக்கமான பகுதி; ஆற்றின் பாறை யிடைப்பகுதி; சிற்பப்பகுதியின் அடிப்பள்ளம்; (கப்.) பாய் மரக் குறுக்குக் கட்டையடிப்பகுதி; விமானத் துறையில் ஏவு கல இயந்திரத்தின் இடுங்கிய பகுதி; *v.* செலுத்து; பள்ளஞ் செய்; புகுத்தித் திணி; (தொ.) cut one another's throats, ஒற்றுமையின்றித் தம்முள் ஒருவர் குரல்வளையை ஒருவர் நெரிப்பவராய் நட; cut one's own throat, தற்கொலைத் திட்டம் மேற்கொள்; give person the lie in his throat, பச்சைப்புளுகு கூறுவதாகக் குற்றஞ்சாட்டு; lie in one's throat, பச்சைப்புளுகு கூறு; sore throat, தொண்டைக் கட்டு, தொண்டை அழற்சி; thrust down one's throat, திணி; வேண்டாததை வற்புறுத்தி ஏற்கச் செய்.

**throat'iness**, *n.* தொண்டை கம்மிய நிலை; கரகரப்பு.

**throat'y**, *a.* தொண்டை கட்டிய; கரகரப்பான; கனத்த ஆழ் குரல் வாய்ந்த; பெருமிடறுடைய; தொண்டைச்சதைப் புடைப் புடைய; தொண்டைத்தோல் தொங்கலாகவுள்ள; (ஒலி.) மிடற்றியலான, மிடற்றில் ஒலிக்கிற.

**throb**, *n.* துடிப்பு; நாடியதிர்வு; கிளர்வதிர்வு; *v.* துடி, அதிர்வுறு; உள்விதிர்விதிர்ப்புறு.

**throbb'ing**, *n.* துடிப்பு, அதிர்வடிப்பு; *a.* அதிர்வுற்றுத் துடிக்கிற; பதைக்கிற.

**throbb'ingly**, *adv.* துடிதுடிப்புடன்; பதைபதைப்புடன்

**throe**, *v.* (அரு.) வேதனைப்படு.

**throes**, *n. pl.* வேதனைத்துடிப்பு; வயாநோவு, பிரசவ வேதனை ; பிறப்புத்துன்பம்.

**thrombos'is**, *n.* குருதியுறைவு ; நாடிநாளங்களிற் குருதிக் கட்டு.

**throne**, *n.* தவிசு ; அரசு கட்டில் ; சிம்மாசனம் ; போப்பாண்டவரின் கோமுறை இருக்கை ; கிறித்தவ திருச்சபைத் தலைவர்க்குரிய திருப்பீடம் ; தெய்வங்களின் மூன்றும் வரிசை ; *v.* அரியணையில் ஏற்று.

**throned**, *a.* தவிசேற்றப்பட்ட ; அரசு கட்டில் ஏறிய ; தவிசமர்வுற்ற ; தவிசமர்ந்த.

**throne'less**, *a.* அரியணையற்ற.

**throne'-room**, *n.* தவிசுக்கூடம், நாளோலக்கம்.

**throng**, *n.* மொய்திரள் ; திரள்குழுமம், பொருள்களின் செறிதொகுதி ; செறிகுழு, கும்பல் ; நெருங்கிய கூட்டம், கும்பல் நெருக்கடி ; *v.* இடங்கொளாது மொய் ; ஆட்கள் வகையில் கூடு, குழுமு ; பொருள்கள் வகையில் திரள்வுறு; கொண்டு திணி, சென்று செறி ; கூடிநெருக்கு ; கூட்டமாய்ச்செல், நெருங்குறு ; (இழி.) ஆளை நெருக்கு, ஆள்மீது நெருக்கடி செய்.

**thro'stle**, *n.* பாடுங் குருவி வகை ; நூற்புக்கதிர், பருத்தி-கம்பளம் முதலிய நூற்கும் பொறி.

**thro'stle-frame**, *n.* நூற்புக்கதிர், பருத்தி கம்பளம் முதலிய நூற்கும் பொறி.

**throt'tle**, *n.* தொண்டைக்குழி ; குரல்வளை ; இயந்திரத்தில் நீராவி செல்லும் வழியைக் கட்டுப்படுத்துந் தடுக்கிதழ் ; *v.* தொண்டையை நெரி ; குரல்வளை நெரித்துத் திக்குமுக்காடவை ; கழுத்தை நெரித்துக்கொல்லு ; தடுக்கிதழ் முடுக்கி நீராவிப்போக்கைத் தடு.

**throt'tle-valve**, *n.* நீராவியைக் கட்டுப்படுத்துந் தடுக்கிதழ்.

**through**, *a.* முற்றூடான, முழுவதும் ஊடாகச்செல்கிற; நேர்நெட்டூடான, இடைநில்லாது முழுநீளமுஞ் செல்கிற ; நேர் குறுக்கூடான, பக்கத்துக்குப் பக்கமாக முழுஅகலமுஞ் செல்கிற ; ஊர்தி வகையில் இடைமாறுது நேரே செல்கிற ; இடைநில்லாது முழுநீளமுஞ் செல்கிற ; ஊடுருவலான, முழுதும் ஊடுருவித் துளைக்கிற ; கடைபோகிய ; முழுதும் முடித்துவிட்ட, வேலை தீர்நிலை எய்திய ; *adv.* ஊடாக, முற்றிலும் ஊடுருவலாக ; நெடுகிலும், ஒருகோடியிலிருந்து மறுகோடி வரையிலும்; குறுக்கூடாக, ஒருபக்கமிருந்து மறுபக்கம் வரையிலும் ; முழுதூடாக, அடிமுதல் முடிவரை ; இடையூடாக ; முழுவதும் ; கடைபோக, இடைநில்லாமல், இடைநிறுத்தாமல் ; நிறைதீர்வு எய்திய நிலையில் ; *prep.* முழுதூடாக, ஒரு கோடியிலிருந்து மறுகோடியளாவி ; குறுக்கூடாக, ஒருபக்கமிருந்து மறுபக்கமளாவி ; இடையூடாக, இடைவழியாக, வழியாக, மூலமாக ; வாயிலாக ; துணையாக ; கருவியாகக் கொண்டு, ஆல் ; காரணமாகக்கொண்டு ; விளைவாக ; விளைகேடாக ; ஊடுகடந்து ; முழுதுங் கடந்து ; முழுதுந் தீர்வுற்ற நிலை எய்தி; பொறுப்புத் தீர்நிலையுடன்; (தொ.) all through, எங்கும் ; எப்போதும் ; through and through, துருவி ஊடுருவி, ஆராய்ந்து ; துருவித்துருவி ; எல்லாப்பகுதியிலும்; எல்லா வகையிலும்.

**through'out**, *adv.* எங்கணும் ; எல்லாவகையிலும் ; *prep.* முழுதூடாக ; துருவித்துருவி ; அடியிலிருந்து முடிவுவரை.

**through'-put**, *n.* தொழிலில் ஈடுபடுத்தப்பட்ட மூலப்பொருள் தொகுதி.

**through'-stone**, *n.* உந்துகல், சுவர்கடந்து நீண்டு நிற்குங் கல்.

**throve**, *v.* thrive என்பதன் இறந்தகால வடிவம்.

**throw**, *n.* எறிதல்; வீச்சு ; பகடை எறிவு ; மீன்தூண்டில் எறிவு ; எறிபடை எறிவு ; எறிபடை எறி தொலைவு ; எறிபடை வீச்செல்லை, எறிபடை செல்லக்கூடிய எல்லை ; மற்போரில் வீழ்த்தடிப்பு ; மரப்பந்தாட்டத்தில் முறையற்ற பந்தெறிவு ; (மண்., சுரங்.) பாறைமடிவு ; (மண்., சுரங்.) படிக வீழ்வு ; (மண்., சுரங்.) படிகமீதடைவு ; விரைசுழல் இயக்க அமைவு ; விரைசுழல் இயக்கப் பொறி ; *v.* எறி ; பழி வகையில் மேற்சுமத்து ; பந்து எறி ; மற்போரில் கீழே வீழ்த்து ; குதிரை வகையில் எகிறித் தள்ளிவிடு ; ஆடையை அசட்டையாக மேலிடு ; பாம்பு வகையில் தோலுரி ; முயல் வகையில் குட்டிபோடு ; புறவகையில் குஞ்சுபொரி ; பகடை எறிந்தாடு; பட்டிழை முறுக்கிக்கட்டு; பாணையைச் சக்கரத்தில் வனை ; பார்வை வகையில் விரைந்து செலுத்து, உறுப்புக்கள் வகையில் விரைந்து திருப்பு ; விரைந்து நீட்டு ; பந்தயம் முதலியவற்றில் வேண்டுமென்றே இழப்பை வருவித்துக்கொள் ; வலிப்பு நோய் வகையில் எய்தப்பெறு; (இழி.) மார்பு வகையில் மூச்சிழுத்து விரித்து நிமிர்வாக நில் ; (இழி.) விருந்து வகையில் வழங்கு ; (தொ.) a stone's throw, கல்லெறி தொலை, சிறுதொலை ; throw away, கைதுற ; தொலைத்தழி ; throw back, மூலமரபின் பண்புக்குப் பின்னிடைவுறு ; throw cold water on, ஆர்வமிழக்கச் செய்; ஊக்கங் கெடு ; throw down the glove, மற்போருக்கு அழை, போரழைப்பு விடு ; throw dust in one's eyes, throw dust in the eyes of, கண்ணில் மண்தூவு ; மோசடியால் ஏமாற்று ; throw good money after bad, இழப்பைச் சரிசெய்யப் பேரிழப்புறு ; throw in, throw into the bargain, மிகையாக வழங்கு, மிகுவிலையின்றிப் பேரத்திேைடு சேர்த்தளி ; மிகையாகச் சேர் ; கேட்காமலே சேர்த்துக்கொடு ; throw in a word, இடையிட்டுச்சொல்லு ; தற்செயலாக இடையிட்டுச் செய்தியுரை ; throw in one's lot with, இன்பதுன்பங்களில் பங்குகொள்; துணிந்திறங்கு ; throw light on the matter, சிக்கலறுக்கும் புது விளக்கம் அளி ; விளக்க உதவு ; throw off, ஒழி ; தொலை ; நீக்கு ; throw one a kiss, வழியனுப்பு முறையில் கையில் முத்தமிட்டு அக் கையை வீசிக்காட்டு ; throw one a rope, அமிழ்பவனுக்குக் கயிற்றை எறிந்து உதவு ; உற்றிடத்துதவு ; throw oneself into, முனைப்பாக ஈடுபடு ; throw oneself on, throw oneself upon, மனமார நம்பியடை; நம்பியிரு ; முழுவலிமையுடன் தாக்கு ; throw one's eye up, உறுத்து மேலே பார் ; throw open, விரிவாகத் திற ; எல்லோர்க்குந் திறந்து வை ; throw out, வெளியே வீசி எறி ; நீக்கு ; தள்ளி வை ; விரிவுக்கூறுகக் கட்டு ; பாலத்துறையாகக் கட்டு ; பெருங்கட்டுமானமாக எழுப்பு ; வெளியிடு ; கருத்துத்தெரிவி ; சாட்டியுரை ; சட்டமன்றத்தில் சட்டப் பகர்ப்பை ஏற்காது மறுத்துவிடு ; சொல்-செயல்-தவறு ஆகியவற்றிலிருந்து கவனம் மாற்று ; மரப்பந்தாட்டத்தில் எறிந்து பந்தடிப்போனைப் புறத்தாக்கு ; throw over, கைவிடு ; உதறித் தள்ளிவிடு, உறவு துறந்துவிடு ; பொறுப்பு எறிந்துவிடு ; throw over board, கழித்துத்தள்ளு ; எறிந்துவிடு ; துறந்துவிடு ; throw up, மடக்குக்கதவுகளை உயர்த்தித் திற ; திற ; கைகள் வகையில் தூக்கு ; வேலை கைதுறந்துவிடு ; வாந்தியெடு ; throw up the sponge, மற்போரில் தோல்வியை ஒப்புக்கொள் ; எதிர்ப்பைவிட்டுப் பணிந்துவிடு.

**throw'-away**, *n.* இலவசத் துண்டுவிளம்பரம் ; இலவசத் துண்டுவிளம்பர ஏடு; பத்திரிகைத்துறைச் செய்தி வெளியீடு.

**throw'-back**, *n.* மரபு மூலப் பின்னெறிவு, மூலமரபின் பண்புக்குப் பின்னிடைதல் ; மரபுமூலப் பின்னெறிவுச் செய்தி.

**throw'-down**, *n.* நாட்டுவெடி, பட்டாசு, வீட்டிலேயே கையாற் செய்யப்படும் விளையாட்டு எறிவெடி.

**throw'er**, *n.* எறிபவர்.

**throw'ing**, *n.* எறிவு ; *a.* எறிகிற.

**throw'ing-table**, *n.* குயவர் சக்கரம்.

**thrown**, *v.* throw என்பதன் முடிவெச்சம்.

**thrown'-out**, *n.* வேண்டாப்பொருள் எறிவு ; வேண்டாது எறிந்த பொருள்.

**thrown'-silk**, *n.* பட்டு முறுக்கிழை.

**throw'-off**, *n.* வேட்டைத்தொடக்கம் ; பந்தயத்தொடக்கம்.

**throw'ster**, *n.* பட்டிழை முறுக்குபவர்.

**thrum**[1], *n.* பாவிழைத் தொங்கல் விளிம்பு, பாவு வெட்டியெடுக்கப்பட்ட பிறகு தறியிலிருக்கிற நூல் தொங்கல் ; பாவிழைத் தொங்கல் நூல் ; விடுநூல், உதிரி இழை ; உதிரி

இழைக்குஞ்சம்; இழைநுனிப் பகுதி; துரட்டு இழைத் துணுக்கு; கழிவுநூல்; நூல் கழிவு; *v.* கழிக்கப்பட்ட நூல் கொண்டு ஆக்கு; கழிவுநூல்கொண்டு ஓரமிடு; நூல் கழிவினுல் பொதிவுசெய்.

**thrum**[2], *n.* திறமையற்ற யாழ்நாண்தெறிப்பு; சலிப்பூட்டும் இசை நரம்புளர்வு; தட்டுக்கொட்டுத் தாளம், சோம்பேறித் தனமான விரற்கொட்டு; தட்டுக்கொட்டுத் தாள ஒலி; இசை நாண் தெறிப்பொலி; *v.* திறமையற்ற வகையில் இசைநாண் தெறி; சலிப்பூட்டும் வகையில் யாழ் நரம்புளர்; வேலையின்றி மேசைமீது விரல் கொட்டிக்கொண்டிரு, தட்டுக் கொட்டுத் தாளமிடு; இசைநாண் தெறிப்பொலி செய்; தட்டுக்கொட்டுத் தாள ஒலி எழுப்பு.

**thrumm'y**, *a.* பாவிழைத் தொங்கலாலான; கழிவுநூல் போன்ற; தளர் தொங்கலிழை போன்ற.

**thrush**[1], *n.* பாடும் பறவை வகை.

**thrush**[2], *n.* சள்ளை நோய், குழந்தைகளுக்கு வாயிலுங் கழுத்திலும் வரும் மென்புடைப்புநோய் வகை; புரவிநோய் வகை, குதிரைக்காலடி நடுவிலுள்ள தொய்வுப் பொருளின் வீக்கம்.

**thrust**, *n.* நெக்கித் தள்ளுகை; உந்துகை; துருத்தி நீட்டுகை; குத்தித் தாக்குகை; தள்ளுவிசை; நெக்காற்றல்; (படை.) பகை அணி ஊடுருவு முயற்சி; நாட்டு மீச்செலவு முயற்சி; வலிந்த படைக்கலக் கூர்முனைத்தாக்கு; இடிப்புரை, குத்துரை, சொட்டுரை; விமான உந்துவிசை; (க-க.) பாரப் புடைவிசை, தாக்கு விசைப்பு, கட்டுமானக் கூறுகள் ஒன்றன்மீது ஒன்றன் பளுச்சென்று தாக்கும் விசை; பாரவிசை, சுரங்கத்தூண்கள் மேற்பளுத் தாங்காது நொறுங்குதல்; உந்துவிசை வானெறித் துறையில் ஏவுகலத்தினை முன்னேக்கி உந்தும் இயந்திரவிசை; *v.* நெக்கித் தள்ளு; திடுமென உந்தித் தள்ளு, குத்து; திடுமெனக் குத்தி ஊடுருவு; தள்ளிக்கொண்டு செல்; முந்திக் கொண்டிரு, முந்திக்கொண்டு செல்; புகுத்து; தகாமுறைத் தலையீடு உண்டுபண்ணு; புகு; தகாத் தலையீடுசெய்; வலிந்து உட்செலுத்து; வலிந்து உட்செல்; (தொ.) home thrust, சரியான குத்து; ஒருவர் மனத்தில் சுறுக்கெனத் தைக்கிற சொட்டுரை.

**thrust'-block**, *n.* குழைமுட்டு, சுழல் பொறிகளில் சுழலச்சின் முனையழுத்தத்தைத் தாங்குவதற்கான குழைகுண்டு அடிமுட்டு.

**thrust'er**, *n.* நெக்குபவர்; தள்ளுவது; உந்தித் தள்ளிக் கொண்டு செல்பவர்; தலையிடுபவர், இடையே குறுக்கிடுபவர்; முந்து இடக்காளர், நெருக்கியடித்துக்கொண்டு முந்துவதனுல் மற்றவர்களுக்கோ வேட்டைநாய்களுக்கோ இடர் விளைக்கும் நரிவேட்டைக்காரர்.

**thrust'-hoe**, *n.* மண்கோரி, உந்தித் தள்ளிச் செயற்படுத்தப் படும் மண்கிளறு கருவி.

**thud**, *n.* மெத்தொலி, மென் பொருள் வீழ் ஒலி; *v.* மெத்தொலி செய்; மெத்தொலியுடன் விழு.

**thug**, (இ.) *n.* கொள்ளைக்காரர்; முற்கால இந்தியக் கொள்ளைக் கூட்டத்தினர்; கழுத்தறுப்பாளர், வழிப்பறியர்; போக்கிரி.

**thugg'ee**, **thugg'ery**, **thugg'ism**, (இ.) *n.* வழிப்பறிக் கொள்ளை.

**thu'lia**, *n.* வடமகை, வடமம் என்ற உலோகத் தனிம வகையின் உயிரகை.

**thu'lite**, *n.* நார்வே நாட்டிற் காணப்படுஞ் சாய்சதுர மணி உருவமுடைய தனிமப்பொருள்.

**thu'lium**, *n.* வடமம், உலோகத்தனிம வகை.

**thumb**, *n.* கட்டைவிரல், கைப் பெருவிரல்; விலங்குகளின் கட்டைவிரல்; *v.* பெருவிரலாற் கையாண்டு தேய் அல்லது அழுக்காக்கு; கட்டைவிரல்படக் கையாளு; கட்டைவிரல் பட்டுத் தேய்வுறுத்து; ஏட்டைக் கட்டை விரல் படுதலால் அழுக்காக்கு; கட்டைவிரலால் மாசுபடுத்து; பெருவிரலால் தொடு; பெருவிரல் தொட்டுக் கையாளு; பெருவிரல் அழுத்து, ஆபாசமாகக் கையாளு; கருத்து முனைப்பாக வாசி; பெருவிரலால் சைகை செய்; இசைப்பெட்டியின் விரற்கட்டைகளை நயமின்றிக் கையாளு; அருவருப்பாக இசைமிழற்று; (தொ.) bite one's thumb, பழிவாங்குவதாக அச்சுறுத்துங் குறிகாட்டு; by rule of thumb, கோட்பாட்டளவினதாயிராமல், அனுபவ முறையை அடிப்படையாகக் கொண்டு; have one's fingers all thumbs, அருவருப்பாகச் செயலாற்று, நயமின்றிக் கையாளு; keep one's thumb on, மறை கா, மறை செய்தியை வெளியிடாதிரு; under one's thumb, ஒருவரது ஆதிக்கத்தின்கீழ்.

**thumb'-blue**, *n.* சிறு கட்டிவடிவ நீலச்சாயம்.

**thumbed**, *a.* பெருவிரலினையுடைய; பெருவிரல் தடம்பட்ட; கைபட்டுத் தேய்வுற்ற.

**thumb'-index**, *n.* ஏட்டோரக் கைத்தடவரிசை.

**thumb'less**, *a.* பெருவிரலற்ற.

**thumb'ling**, *n.* குள்ளன்.

**thumb'-nut**, *n.* திருகுமரை.

**thumb'-piece**, *n.* பெருவிரலாலழுத்தத்தக்க குமிழ்; பெருவிரல் வைக்க இடந்தருங் கூறு.

**thumb'pot**, *n.* சிறு பூக்குடுவை.

**thumb'-print**, *n.* துப்பு அறியப் பயன்படும் பெருவிரற் சுவடு, ஆள் இனமறியப் பயன்படுத்தப்படும் பெருவிரல் அடையாளம்.

**thumb'screw**, *n.* விரற்கமு, பெருவிரற் கிட்டி, கைப்பெருவிரல்களை நசுக்கிச் சித்திரவதை செய்யும் முற்காலக் கருவி.

**thumb'-tack**, *n.* ஓவியர் குத்தூசி, ஓவியத்தாளைப் பட்டியில் குத்திவைப்பதற்கான ஊசி.

**thumb'y**, *a.* பெருவிரல் அடையாளத்தால் அழுக்குற்ற; பெருவிரல்போன்ற; அருவருப்பான தோற்றமுடைய; ஆபாசமாக நடந்துகொள்கிற; அருவருப்பாக இயங்குகிற.

**thumm'im**, *n.* வாய்மொழித் தாயித்து உரு, குறி சொல்வதற்குப் பயன்படும்படி யூத உயர் மதகுரு மார்பணியில் வைத்திருந்த இரு தாயித்துருக்களுள் ஒன்று; (தொ.) thummim and urim, வாய்மொழித் தாயித்துருவிணை.

**thump**, *n.* பேரடி, பலத்த அடி; *v.* மொத்து, நையப்புடை.

**thum'per**, *n.* செம்மையாக அடிப்பவர்; பலமாக மொத்துவது.

**thump'ing**, *n.* மொத்துதல்; *a.* மிகப்பெரிய.

**thun'der**, *n.* இடியோசை; இடியேறு; பேரொலி; *v.* இடி, இடியொலி முழக்கு; பெருமுழக்கஞ் செய்; உரக்க அடித்துச் சூளுரை.

**thun'der-and-light'ning**, *n.* ஒண்ணிறத் திண்சாம்பர் வண்ண ஆடை; *a.* ஒண்ணிற வண்ணங்கள் வாய்ந்த.

**thun'derbolt**, *n.* இடியேறு; மின்னலின் கருக்கூறு எனக் கருதப்படுங் கோல்; தீமின் கல், இடிவீழ்வெச்சம் எனக் கருதப்பட்ட பாறைவகை; கடுந் தெறுமொழி; பயங்கர சாபம்.

**thun'derclap**, *n.* இடிமுழக்கம்; இடி முழக்கமொத்த செய்தி; எதிர்பாராப் பயங்கர நிகழ்ச்சி; திடீர்ப்பேரிடர்.

**thun'dercloud**, *n.* மின்செறிமுகில், மின் இடிமேகம்.

**thun'derer**[1], *n.* உரக்க அச்சுறுத்திப் பேசுபவர்.

**Thun'derer**[2], *n.* 'ஜூபிடர்' (Jupiter) என்னும் பண்டை ரோமரின் பெருந்தெய்வம்; (பே-வ.) 'டைம்ஸ்' (the Times) என்னும் செய்தித்தாள்.

**thun'dering**, *n.* இடிமுழக்கம்; *a.* இடி இடிக்கிற; இடி முழக்கஞ் செய்கிற, இடியோசைபோன்ற ஒலி வெளிப்படுத்துகிற; (பே-வ.) வழக்கத்திற்கு மாறுன; குறிப்பிடத்தக்க, தனிச் சிறப்புக்குரிய, தனிப்பட்ட; உறுதியான, தெளிவான; *adv.* வழக்கத்திற்கு மாறுக; குறிப்பிடத்தக்கதாக, தனிச்சிறப்புக் குரியதாக, தனிப்பட்டதாக; உறுதிப்பாடாக.

**thun'deringly**, *adv.* இடி முழக்கமாக; ஓங்கு முழக்கத்துடன்; கோபாவேசத்துடன்; ஆர்ப்பாட்டமாக; மிக உரத்து.

**thun'der-jet**, *n.* கொரியா நாட்டுப் போரில் வழங்கப்பெற்ற அமெரிக்க பீற்றுவிமான வகை.

**thun'derless**, *a.* இடியற்ற ; இடியாத.

**thun'derous**, *a.* இடியோசை போன்ற ; பேரச்சந் தருகிற.

**thun'der-peal**, *n.* இடி முழக்கம், இடியதிர்வு.

**thun'ders**, *n. pl.* பெருங் கண்டனம், இடித்துரை, அச்சுறுத்தல்கள்.

**thun'der-shower**, *n.* இடிமழை.

**thun'derstorm**, *n.* இடிமின் புயல்.

**thun'derstrike**, *v.* இடிபோற்சென்று மோது.

**thun'der-stroke**, *n.* இடிவீச்சு.

**thun'derstruck**, *a.* இடியேறுண்ட ; திகைப்படைந்த.

**thun'dery**, *a.* இடியுடன் கூடிய ; இடியோசை குறித்துக் காட்டுகிற.

**thur'ible**, *n.* தூபக்கலம், நறும்புகைக் குடுவை, குங்கிலியக் கலயம்.

**thur'ifer**, *n.* தூபக்கலமேந்தி.

**thurif'erous**, *a.* நறுமணப்புகை தருகிற.

**thurifica'tion**, *n.* நறும்புகையூட்டு.

**Thurs'day**, *n.* வியாழக்கிழமை ; (தொ.) Holy Thursday, திரு வியாழன், இயேசுநாதர் ஆவி நீத்த நாளாகிய புது வெள்ளிக்கிழமைக்கு முந்திய வியாழக்கிழமை ; இயேசுநாதரின் விண்ணேற்ற நாள் ; Maundy Thursday, ஈஸ்டர் விழாவிற்கு முந்திய வியாழக்கிழமை.

**thus**, *adv.* இப்படி, இவ்வாறு, இவ்வகையாக ; குறிப்பிட்ட முறையில் ; குறிப்பிடப்படவிருக்கும் முறையில் ; இதற்கு இயைய ; கூறியாங்கு ; இதனால் ; இதன் விளைவாக ; இதன் படி ; (தொ.) thus far, இந்த எல்லைவரை ; thus much, இந்த அளவுக்கு.

**thus'ness**, *n.* (பே-வ.) இவ்விதமாயிருக்கும் நிலை.

**thwack**, *n.* தடியடி ; மொத்துகை ; *v.* மொத்து, தட்டையான பொருளால் தட்டு.

**thwack'er**, *n.* மொத்துபவர் ; மொத்துகட்டை.

**thwack'ing**, *n.* மொத்துகை ; *a.* மொத்துகிற ; மொத்துவதற்குப் பயன்படுகிற.

**thwaite**, *n.* (அரு.) புது வன்னிலம், திருத்திய கரம்புநிலம்.

**thwart**, *n.* ஏமாற்றம், குலைவு ; தடை ; படகின் குறுக்கு விசிப்பலகை ; *a.* (பழ.) குறுக்கான ; *v.* செயல்குலைவி, தடைசெய் ; விருப்பங்கெடு; ஆர்வங் குலை; *adv.* (பழ.) குறுக்காக, மூலைவாட்டாக ; *prep.* (பழ.) குறுக்காக, கடந்து, மூலைவாட்டாக.

**thwart'ingly**, *adv.* ஏறுமாறாக, குலைக்கும் முறையில்.

**thwart'-ship**, *a.* கப்பலின் குறுக்காகவுள்ள.

**thwart'-ships**, *adv.* கப்பலின் குறுக்காக.

**thy**, *pron.* (பழ.) உன்னுடைய, உனது, உன்.

**thyl'acine**, *n.* ஓநாய் வகை.

**thyme**, *n.* நறுமணக் கறியிலைச் செடியின வகை.

**thym'ol**, *n.* ஆற்றல்மிக்க நச்சரிவகை.

**thym'us, thymus gland**, *n.* (உள்.) கழுத்துக் கணையச் சுரப்பி ; *pl.* thym'i.

**thym'y**, *a.* நறுமணச் செடிவகை போன்ற ; நறுமணச் செடி வகை மலிந்துள்ள ; நறுமணமுடைய.

**thyr'oid**, *n.* (உள்., வில.) கேடயச் சுரப்பி, கழுத்திலுள்ள நாளமற்ற சுரப்பி ; சங்குவளைக் குருத்தெலும்பு, குரல்வளையின் முக்கிய குருத்தெலும்பு; விலங்குக்கேடயச் சுரப்பிச்சத்து மருந்து ; *a.* கேடய வடிவமுள்ள ; குரல்வளைக் குருத்தெலும்புடன் தொடர்புடைய ; கேடயவடிவக் குறிகள் நிரம்பிய ; (தொ.) thyroid body, thyroid gland, கேடயச் சுரப்பி ; விலங்குக் கேடயச் சுரப்பிச்சத்து மருந்து ; thyroid cartilage, சங்குவளைக் குருத்தெலும்பு.

**thyrotroph'in**, *n.* கேடயச்சுரப்பி ஊக்கும் நன்மருந்து.

**thyrs'us**, *n.* மணிக்கோல், கிரேக்க பாக்கஸ் (Bocchus) என்ற தெய்வம் கையில் ஏந்தியுள்ள ஒப்பனைக்கோல் ; *pl.* thyrs'i.

**thyself'**, *pron.* (பழ.) நீயே ; உன்னையே ; உனக்கே.

**ti**, *n.* உண்ணுங் கிழங்கினையுடைய மரவகை.

**tiar'a**, *n.* பாரசிக நாட்டு மன்னர் மணிமுடிப்பாகை; பாரசிகப் பெருமக்கள் சாய்முடிப்பாகை ; போப்பாண்டவரின் முக்குவட்டுக் குவிமணிமுடி ; போப்பாண்டவர் பதவி.

**tiar'a'd**, *a.* தலைப்பாகை அணிந்துள்ள.

**tib'ia**, *n.* (உள்.) முன்கால் எலும்பு ; பூச்சிகள் காலின் நான்காவது மூட்டு; சமைத்த கோழிக்காலின் கீழ் மூட்டு; *pl.* tib'iae.

**tib'ione**, *n.* எலும்புருக்கிநோய்க்கெதிராகப் பயன்படும் மருந்துச்சரக்கு.

**tic**, *n.* முகச்சுரிப்பு வலி, முகத்தசைகளின் இசிப்புநோய்.

**ticc'a**, (இ.) *a.* ஒப்பந்தத்தில் அமர்த்திக்கொள்ளப்பட்ட, வாடகைக்கு எடுக்கப்பட்ட.

**tice**, *n.* குப்புறுபந்து, மரப்பந்தாட்ட வகையில் மட்டைக்காரர் நிற்குமிடத்துக்கு அடுத்து முன் விழும்படி வீசப்பட்ட பந்து.

**tick**[1], *n.* 'டிக் டிக்' என்ற மணிப்பொறியின் ஒலி ; (பே-வ.) நொடி, இமைப்பொழுது ; ஓட்டப்பந்தயத் தரகரின் கைச்சைகை ; புட்குறி, பட்டியல் இனங்களைச் சரிபார்த்ததற்கடையாளமான சிறு கோட்டுக்குறி ; *v.* மணிப்பொறி வகையில் 'டிக்டிக்' என்ற ஒலி செய் ; சரிபார்த்ததற்கடையாளமாகச் சிறு புட்குறியிடு ; (தொ.) in two ticks, கணப்பொழுதில்; tick off, சரிபார்த்ததற்கடையாளமாகப் புட்குறியிட்டுச் செல்; (இழி.) குற்றங்கூறு, அதட்டு; tick over, இயக்க இணைப்புப் பிரி, உள்வெப்பாலை வகையில் சக்கர நெம்புகோல் இணைப்புப் பிரிக்கப்பட்டு மெதுவாக இயங்கு.

**tick**[2], *n.* உண்ணி, நாய்-ஆடுமாடுகளைப் பற்றியுள்ள நச்சு ஈ வகை.

**tick**[3], *n.* உறை, படுக்கை-மெத்தை முதலியவற்றின் புறப்பொதிவுத்துணி ; முரட்டு உறைத்துணி வகை.

**tick**[4], *n.* (பே-வ.) நாணயக்கடன் ; *v.* கடன்கொடு ; கடன் பொறுப்பில் வாங்கு ; கடன் பொறுப்பில் விற்பனை செய்.

**tick'er**, *n.* 'டிக்' ஒலி செய்யும் பொருள் ; (பே-வ.) கைக்கடிகாரம் ; தந்திப் பதிவுநாடா ; நெஞ்சுப்பை.

**tick'et**, *n.* பயணச்சீட்டு ; நுழைவுச்சீட்டு ; இசைவுச்சீட்டு ; உரிமைச் சீட்டு; விலைக்குறிப்புச் சீட்டு; (படை., இழி.) பணி நீக்கம் ; வாடகையிட அறிவிப்பு அட்டை ; கட்சி வேட்பாளர்களின் பட்டியல் ; கட்சிக் கோட்பாடுகள் ; (பே-வ.) சரியான உருப்படி, சரியான செய்தி ; *v.* விலைச்சீட்டை யிணை, விற்பனைக்கான பொருள்மீது பெயர்-விலை முதலியவை குறிக்கப் பெற்றுள்ள தாள் நறுக்கு ஒட்டு ; (தொ.) straight ticket, ஒரே அரசியற் கட்சி வேட்பாளர்.

**tick'et-day**, *n.* சீட்டு நாள், பங்குமாற்றுத்துறை வகையில் இரண்டு வாரத்திற்கொருமுறை கணக்குத் தீர்க்கப்படும் நாளுக்கு முந்திய நாள்.

**tick'et-night**, *n.* குறிக்கொள் காட்சியிரவு, விற்ற நுழைவுச் சீட்டுகளின் எண்ணிக்கைக்குத் தக்கவாறு அவரவர் வரவு பங்கிட்டுக்கொள்ளும் ஏற்பாடுடைய நாடகம் நடக்கும் இரவு.

**tick'et-of-leave'**, *a.* சிறைப்புற உரிமையுடைய, தண்டனைக் காலம் முடிவடைவதற்கு முன் சில கட்டுப்பாடுகளுடன் செல்லும் உரிமையுடைய.

**tick'et-porter**, *n.* பட்டயச் சுமைக்கூலியர்.

**tick'ing**, *n.* முரட்டு மெத்தை உறைத்துணி.

**tic'kle**, *n.* அக்குளுப்பு, மெய்க்கூச்ச உணர்ச்சி; மரப்பந்தாட்டத்தில் பந்துமட்டை உராய்வு ; *v.* அக்குளுத்தல் செய், மெய்க்கூச்சமுண்டாக்கு, நரம்புக்கிளர்ச்சியும் நகைப்பும் தோன்றும்படியாக இலேசாகத் தொடு; அக்குளுப்பு உணர்ச்சி பெறு ; இதமாக உணர்ச்சி கிளறிவிடு, வேடிக்கை காட்டு, பொழுதுபோக்காக மகிழச் செய்; மீன் வகையைக் கையினால் பிடி.

**tick'ler**, *n.* அக்குளுப்பவர் ; கூச்சமுண்டாக்குவது ; திகைப் பூட்டுகிற செய்தி ; நுண் கடா, நுட்ப நுணுக்கம் வாய்ந்த பிரச்சினை ; இறகுத் தூரிகை.

**tick'lish**, *a.* எளிதிற் கூச்சம் உண்டுபண்ணுகிற ; எளிதில் அக்குளுப்புக்கு ஆளாகிற ; அக்குளுப்பு வகையில் கூருணர் வுடைய ; அருநுட்பம் வாய்ந்த, நுட்ப நுணுக்கமான, கவன மாகக் கையாள வேண்டிய.

**tick'-tack'**, *n.* நாடியடிப்பு, இருதயத் துடிப்பு.

**tick'-tick**, *n.* குழந்தை வழக்கில் கைக்கடிகாரம்.

**ticpolong'a**, *n.* புள்ளி விரியன், கொடு நச்சுப் பாம்பு வகை.

**tid'al**, *a.* வேலை ஏற்ற இறக்கஞ் சார்ந்த ; வேலை ஏற்ற இறக் கத்தினைப் பொறுத்து உண்டான; வேலை ஏற்ற இறக்கத்தினல் இயக்கப்படுகிற ; ஏற்ற இறக்கமுடைய, பொங்குதலும் வடி தலும் உடைய ; (தொ.) tidal air, மூச்சுயிர்ப்பு வளி, உயிர்ப் பின்போது உயிர்ப்பீரலின் உள்நோக்கியும் புறநாடியும் போய் வரும் வளி; tidal basin, வேலை ஏற்ற இறக்கங்களால் பாதிக் கப்படும் உட்கரைத் துறைமுகம் ; tidal dock, வேலை ஏற்ற இறக்கங்களுக்குட்பட்ட நாவாய்க்குறடு ; tidal river, முகத் துவாரத்திலிருந்து சிறிது தொலைவரையில் கடல் ஓதங்களால் பாதிக்கப்படுகிற ஆறு ; tidal wave, கடலோதம், நிலவுலகு சூழ் வேலை ஏற்ற இறக்க அலைச்சுழற்சி ; மாபேரலை ; நில அதிர்வுப்பேரலை ; பொங்குணர்ச்சிக் கொந்தளிப்பு.

**tidd'ler**, *n.* குழந்தை வழக்கில் சிறு முள்மீன் வகை.

**tidd'ly-winks**, *n.* வட்டுச் சுண்டாட்டம், மேசையின் நடுவி லுள்ள தட்டத்தில் விழும்படி சிறுவட்டச் சில்லுகள் விரலினுற் சுண்டியெறியப்படும் ஆட்டவகை.

**tide**, *n.* வேலை அலைவு, வேலை ஏற்ற இறக்கம்; பொங்கோதம், வீங்கு நீர்வேலி ; பருவம் ; தறுவாய் ; வாய்ப்பு ; செவ்வி, வாய்ப்பு வேளை ; விழா ; காலம் ; ஒழுக்கு ; நீரோட்டம் ; (செய்.) வெள்ளம் ; (செய்.) ஆறு; (செய்.) கடல்; *v.* வேலை அலைவில் அலைவுறு ; வேலை அலைவின் போக்கிற் செல்; வேலை அலைவியக்கத்தோடு துறைமுகத்தின் உள்ளும் புறம்புஞ் செல்; வேலை அலைவுமூலஞ் செயலாற்று ; வேலை அலைவைப் பயன்படுத்திக்கொண்டு காரியமாற்று ; வேலை அலைவெனப் பாய் ; வேலை அலைவெனக் கொண்டுசெல் ; வேலை அலைவைப் பயன்படுத்தி வழிதொடர் ; இடக்குகளைக் கடந்து செல் ; ஏறிக் கடந்துசெல், கடந்து சமாளித்து வெற்றிகொள்; (தொ.) high tide, வேலை ஏற்றம், அலையெழுந்து முன்னேறுங் கடல் வெள்ளம் ; low tide, வேலை இறக்கம் ; meteorological tide, காற்று இயக்கங் காரணமான வேலை ஏற்ற இறக்கங்கள் ; tide over, இடக்குகள் வகையில் கடந்துசெல்; கடந்து சமா ளித்து வெற்றி பெறு ; work double tides, இராப்பகலாக வேலை செய்.

**tide'gate**, *n.* வேலை மதகுவாய்.

**tide'less**, *a.* வேலையலைவற்ற.

**tide'-lock**, *n.* வெள்ளப்பூட்டமைவு.

**tide'-rip, tide-rips**, *n.* வேலைநீர் அமளி, எதிரெதிர் வேலை அலைவு, நீரோட்டங்களினுல் தோன்றும் கடல் கொந்தளிப்பு நிலை.

**tides'man**, *n.* துறைமுகச் சுங்கக்காவலர், துறைமுகக் கப்பல் களிற் சென்று சுங்கம் பிரிப்பவர்.

**tide'-table**, *n.* வேலை அலைவுக்கால அட்டவணை.

**tide'-waiter**, *n.* துறைமுகச் சுங்கக் கப்பல்துறை காவலர், துறைமுகத்திற்கு வந்ததும் சுங்க விதிகளை நடைமுறைப் படுத்துவதற்காகக் கப்பலில் ஏறும் சுங்க அலுவலர்.

**tide'-way**, *n.* வேலை அலைவு நெறிக்கால்.

**tid'ings**, *n. pl.* செய்தி, செய்தி விவரம்.

**tidol'ogy**, *n.* வேலை அலைவாய்வு நூல்.

**tid'y**, *n.* சாய்மான அணியுறை, நாற்காலிச் சாய்வக ஒப்பனை யுறை ; தும்புக்கலம் ; *a.* துப்புரவான ; விருத்தியான ; நேர்த்தியான; செப்பமிக்க; செந்நலஞ் சான்ற; ஒழுங்கமைதி வாய்ந்த; சீரமைவான தோற்றமுடைய; மட்டியல் நல முடைய ; மட்டான உடல் நலமுடைய ; அப்பழுக்கற்ற ; தோற்ற வகையில் செஞ்சீரான ; ஆடை வகையில் சீரொழுங் கான ; அறை வகையில் தூய்மைப்பாடான ; பழக்கவழக்க வகையில் திருந்திய ; நடைவகையில் நல்லாக்கமான; ஆள் வகையில் நடையுடை தோற்ற அமைதி குன்றாத ; *v.* துப்புர வாக்கு ; சீராக்கு ; திருந்த அமைவி ; சீர்திருத்தியமை ; செப்பஞ் செய் ; (தொ.) street tidy, குப்பைத்தொட்டி.

**tie**, *n.* கட்டு ; தளை ; இணைப்பு, பிணைப்பு ; முடிச்சு ; கட்டும் பாணி ; பிணைக்கும் பொருள் ; கயிறு ; சங்கிலி ; கட்டுக் கோப்புக்கூறு; இணைப்புக்கோல்; பிணைப்புத் தண்டு; வரிக் கை, வாரிகளை இணைக்கும் ஊடுசட்டம் ; தண்டவாளப் படு கைக் கட்டை; கழுத்துக்கச்சை; கழுத்து மணிக்கட்டு; பாசத் தளை ; பாசக்கடப்பாடு ; பாசக் கட்டுப்பாடு ; பாசத்தடை ; ஆட்டப் போட்டிச் சமநிலை ; இருதிறக் கெலிப்புச் சமநிலை ; பெருங்குழுப் போட்டியில் அங்கமான சில்குழுப்போட்டி ; கடும்போட்டி எதிர்ப்பு ; ஆட்டத்தில் வெற்றி தோல்வியற்ற நிலை, ஆட்டப் பந்தயச் சிக்கல் நிலை ; (இசை.) நெளிவரை, சமநிலைச்சுர இணைவுக்குறி ; *v.* கட்டு ; கட்டி இணை ; பிணை ; ஒன்றுபடுத்து ; இணைத்துக்கட்டு ; கழி முதலியவற்றுடன் சேர்த்துப் பிணை; ஆள் வகையில் கைகால்களைக் கட்டு; மிதியடி இழைக்கச்சை பூட்டு ; தலையணை இழை கட்டு ; இழைக்கச்சை அணிமுடிச்சு அமைவி; கழுத்துக் கச்சையில் அணி முடிச்சு ஆக்கு ; கழுத்து மணிக்கட்டினை அமைவி ; வாரிக்கட்டை களை வரிக்கைகளால் இணை ; தூண்டில் முகப்பை ஈத்தோற்ற முற வளைவி ; கட்டுப்படுத்து ; தளைப்படுத்து ; வரையறைப் படுத்து ; கடப்பாடு மூலந் தடைப்படுத்து ; வசப்படுத்து ; செயலடக்கு ; கீழ்ப்படுத்து ; போட்டிச் சமநிலை பெறு ; கெலிப்பெண் சமநிலைப்படு ; ஆட்டத்தில் வெற்றி தோல்வி யற்ற நிலை பெறு, போட்டிச் சிக்கலுறு; சரிசம வெம்போட்டி யில் முனை ; கடும் போட்டி எதிர்ப்பு நிலை கொள் ; (இசை.) சமநிலைச் சுரங்களை நெளிவரையால் இணை ; (இசை.) சம நிலைச் சுரம் பயில் ; (இசை.) நெளிவரை குறி ; (தொ.) tie up, செயல் கட்டுப்படுத்து, செயலுரிமை வரையறு ; நிபந்தனை மூலஞ் செயல் கட்டுறுத்து ; தடைப்படுத்தி வை ; கட்டி வை.

**tie'-beam**, *n.* வரிக்கை, கைம்மரங்களை இணைக்கும் கிடை ஊடுசட்டம்.

**tie'-in**, *a.* விற்பனைப் பேரக் கட்டான.

**ti'er [1]**, *n.* கட்டுபவர்.

**tier [2]**, *n.* அடுக்கு, வரிசை, பத்தி ; படியடுக்கின் வரிசை, *v.* வரிசைகளாக அடுக்கு.

**tierce**, *n.* குறுமிடா, மிடாவளவில் மூன்றில் ஒருகூறு கொள் ளும் சிறுமிடா ; முகத்தலளவைக்கூறு, குறுமிடாவளவு; மூன்று நேர்சீட்டு வரிசை ; வாட்போரின் மூன்றன் தடை காப்புத் தாக்குநிலை; கிறித்தவத் திருச்சபை வழக்கில் மூன்றும் நாண்முறை ஓரை வழிபாடு; (பழ.) மூன்றில் ஒன்று; (இசை.) மூவிணை சுர இடையீடு ; (இசை.) மூவிணை சுரம்.

**tier'cel**, *n.* இராசாளிச் சேவல்.

**tier'cet**, *n.* (இசை., யாப்.) மூன்றடிப் பாட்டு.

**tie'-up**, *n.* முட்டுப்பாட்டுநிலை, தடைநிலை ; சிக்கல் ; இருப்புப் பாதைத் தொழிலாளர் வேலைநிறுத்தம்.

**tie'-wig**, *n.* பொய்ம்மயிர், பின்புறம் நாடாவைக் கொண்டு கட்டப்படும் பொய்ம்மயிர்த் தொப்பி.

**tiff**, *n.* ஒரு வாயளவு சாராயம் ; சிறிதுநேரச் சிடுசிடுப்பு ; சிறு பூசல் ; *v.* சிறிது சிறிதாக உறிஞ்சிப் பருகு, குடி ; கடு கடுப்புக் கொள் ; சிற்றுண்டி அருந்து.

**tiff'any**, *n.* மெல்லிய வலைத்துகில் வகை.

**tiff'in**, *n.* சிற்றுண்டி, சிற்றுணு ; *v.* சிற்றுண்டி உட்கொள்.

**tig'er**, *n.* புலி ; கடுவாய் ; வேங்கை ; (பே-வ.) ஆட்டத்தில் வெல்லமுடியாத எதிரி ; கொடுமைக்காரன் ; அடாதுடிக் குடியன் ; குதிரைவண்டித் துணைப் பணியாள், சிறு வண்டி யில் தலைவனுடன் செல்லும் குதிரைக்காரன் ; வீர்ப்பொலி ; பாராட்டு மூவிளிகள் தொடர்ந்த ஆர்ப்பரிப்பு ; *int.* (படை.) பேசாதிரு, வாய்மூடிக்கொண்டிரு ; (தொ.) tiger badge, இமயஏற்றக் கழகத்தார் கொடுக்கும் திறமை மதிப்புச் சின்னம் ; work like a tiger, வெறியாற்றலுடன் வேலைசெய்

**tig'er-bee'tle**, *n.* கொடிய பொறி வரிவண்டுவகை.

**tig'er-cat**, *n.* புலிவடிவ வரிப்பூனை.

**tig'er-eye'**, *n.* வைடூரிய வகை, புலிக்கண்ணொத்த மணிக்கல் வகை.

**tig'erish**, *a.* புலிபோன்ற ; புலிபோன்ற கொடுமை வாய்ந்த.

**tig'erism**, *n.* வீம்பு நடை, வீரூப்புப்பேச்சு.

**tig'er-lil'y**, *n.* புலிநிற மலர்களையுடைய அல்லி வகை.

**tig'er-moth**, *n.* பொறிவரி விட்டில்.

**tight**, *a.* நெருக்கமான ; செறிவான ; அடர்த்தியான ; இறுக்க மான ; இறுக்கப் பிடிப்புடைய ; திணித்து வைக்கப்பட்ட ; பிடி வகையில் அழுத்தமான ; மிதியடி வகையில் பிடிப்பழுத்த மான ; விறைப்பாயுள்ள ; தளராத, தொங்கிழைவில்லாத ; காற்றுப்புகாத ; நீர்புக இடங்கொடாத ; ஒழுகாத ; இட நெருக்கடியுடைய ; புழுக்கமான, அசையாத ; உறுதியாகப் பற்றுகிற ; கடுமையான ; இக்கட்டான ; கடுமுயற்சி வேண்டி யுள்ள ; பேருழைப்பினால் உண்டான ; செப்பமிக்க தோற்ற முடைய ; கட்டொழுங்கான ; பணவகையில் முடையான, பெறற்கரிதான நிலையுடைய ; ஆள்வகையில் முடைப்பட்ட நிலையுடைய ; கைக்கடிப்பான, பணஞ் செலவிட மனமில்லாத ; (பே-வ.) கட்குடியில் மூழ்கியிருக்கிற ; *adv.* இறுக்கமாக, நெருக்கமாக, அடர்த்தியாக, நீர் காற்று முதலியன உட்புக விடாமல்.

**tight'en**, *v.* இறுக்கு ; மேலும் இறுக்கமாக்கு ; இறுக்கி முடுக்கு ; அடர்த்தியாகு, விறைப்பாகு.

**tight'ener**, *n.* இறுக்குபவர் ; இறுக்குவது ; (உள்.) நீட்டுந் தசை ; எளிதிற் செரிக்காத உணவு.

**tight'-fist'ed**, *a.* கையிறுக்கமான, கஞ்சத்தனமுள்ள.

**tight'ish**, *a.* சற்றே இறுக்கமான.

**tight'-lace'**, *a.* அரையிறுக்கிய ; *v.* அரையிறுக்கு, அரைக் கசை.

**tight'-la'cer**, *n.* அரையை இறுக்குவது, இறுக்க அரைப் பட்டி.

**tight'-la'cing**, *n.* இறுக்க ஆடையால் அரை ஒடுக்குதல்.

**tight'-lipped**, *a.* வாய்விடாத, செய்தி எதுவும் கூறிவிடாது அடக்கி வைக்கும் இயல்புடைய, பிறருடன் எளிதில் பேசாத.

**tight'ly**, *adv.* இறுக்கமாய்.

**tight'rope**, *n.* கழைக்கூத்தாடி நடக்குங் கயிறு ; வித்தை காட்டுபவர்கள் நடக்குங் கயிறு.

**tights**, *n. pl.* கழைக்கூத்தாடிகளின் உடலிறுக்க உடைகள்.

**tight'wad**, *n.* (இழி.) கையிறுக்கமானவர்.

**tig'on**, *n.* வேயரிமா, வேங்கையாணுக்கும் அரிமாப் பெடைக் கும் பிறந்த ஒட்டுவிலங்கு வகை.

**tig'ress**, *n.* பெண்புலி ; புலிபோன்ற கொடுமையுடைய பெண்.

**ti'grine**, *a.* புலிபோன்ற.

**ti'groid**, *a.* புலிபோன்ற.

**ti'ka**, *n.* நெற்றி அழகுப் பொட்டு, திலகம்.

**tike**, *n.* கீழின நாய் ; இழிஞன்.

**til'bury**, *n.* (வர.) சிறு குதிரை வண்டி.

**tile**, *n.* ஓடு ; மோடு வேய்வதற்குரிய சுட்ட களிமண் தகடு ; பாவோடு ; மணி ஓடு ; (பே-வ.) பட்டுத்தொப்பி ; *v.* ஓடுவேய், ஓடுகளால் மூடு ; நற்கொத்தர் கேண்மைக்கழக வகையில் வாயிற் காவலரைக் கதவண்டை நிறுத்திப் பிறர் கூட்டத்தில் புகுவதைத் தடு ; மறை காக்க வேண்டுமெனக் கட்டுப்படுத்து ; (தொ.) Dutch tile, விவிலியக் கதைச்சித்திரம் தீட்டப்பட் டுள்ள நீலவண்ண ஓடு ; have a tile loose, சற்றே கிறுக்குப் பிடித்தவராயிரு ; on the tiles, ஒழுக்கக் கேடுற்ற நிலையில் ; tile tea, செங்கல் வடிவுடைய தேயிலைக்கட்டி.

**til'er**, *n.* ஓடுகள் செய்பவர் ; ஓடுகள் வேய்பவர்.

**til'ery**, *n.* ஓட்டாலை, ஓடுகள் செய்யுமிடம்.

**till**[1], *n.* கல்லாப்பெட்டி, கடையில் கொடுக்கல்வாங்கல் மேடையிலுள்ள பணச்செருகு பெட்டி.

**till**[2], *n.* களிமணற்கட்டி, கற்பாளங்கள்-மணல் முதலியன கொண்டுள்ள விறைப்பான களிமண் ; (மண்.) பனியடிக் களிமணல் பாறை, கற்பாளங்களும் கூழாங்கற்களும் உட் கொண்டு பனியடியில் உருவான கற்பொடி மேடு.

**till**[3], *v.* பயிர்செய் ; பயிர்களுக்காக நிலத்தைப் பண்படுத்து.

**till**[4], *prep.*, *conj.* வரை, வரையில், வரைக்கும்.

**till'able**, *a.* உழுது பயிரிடத்தக்க.

**till'age**, *n.* உழுதுபயிரிடுதல் ; உழுதொழில், வேளாண்மை ; உழுபுலம்.

**till'er**[1], *n.* உழுது பயிரிடுபவர் ; வேளாளர்.

**till'er**[2], *n.* பயின் கால், கப்பற் சுக்கானைத் திருப்புவதற் கான கைப்பிடி.

**till'er**[3], *n.* தாவரப் பக்கக்கன்று, தூறடிப்பயிர் ; இளமரம் ; உறிஞ்சு தளிர்க்கை, ஒட்டுறிஞ்சு வேர் ; *v.* குருத்துக்கள்விடு, முளைகள் தோன்று.

**till'er-chain**, *n.* பயின்தளை, சுக்கான் கைப்பிடியையும் திருப்புவிசைச் சக்கரத்தையும் இணைக்குஞ் சங்கிலி.

**till'er-rope**, *n.* பயின்கயிறு, சுக்கான் கைப்பிடியையும் திருப்பு விசைச் சக்கரத்தையும் இணைக்குங் கயிறு.

**till'ite**, *n.* கடுங்களிமணல் உறைபாறை.

**tilt**[1], *n.* சாய்நிலை ; ஒருக்கணித்த நிலை ; சரிவு, சாய்வு ; சாய் பிடித் தாக்கு, எதிரியை அல்லது இலக்கினை ஈட்டி கொண்டு தாக்குதல் ; மோதுவிசைக் குத்து ; ஈட்டிப்போர் ; இருவர் கைகலப்புப்போர் ; குறுக்கைக்கோற்குறி, தூண்டில் கொக் கியை மீன் கவ்வியதென்பதைக் காட்டுவதற்கான குறுக்குக் கொம்புகளாலான அமைவு ; பெரிய கொல்லுலைச் சம்மட்டி ; *v.* சாய்நிலை கொள்ளுவி ; சாய்நிலை மேற்கொள் ; சரிவுறு ; கப்பல் வகையில் சாய்ந்து கவிழ் ; ஈட்டிகொண்டு தாக்கு ; பெரிய கொல்லுலைச் சம்மட்டியால் எஃகு முதலியவற்றை அடித்துருவாக்கு ; படக்காட்சி-தொலைக்காட்சி வகையில் குறிப்பிட்ட பொருளைப் படமெடுப்பதற்காக நிழற்படச் சில்லை கீழ்மேலாக இயக்கு ; (மண்.) அடுக்குகள் வகையில் செங்குத்துக் கோணத்தில் சாய்வுறு ; (தொ.) full tilt, முழு வேகத்தில், நிறை ஆற்றலுடன் ; தலைகீழ் விசையுடன்.

**tilt**[2], *n.* வண்டிக் கித்தான் போர்வை ; வண்டி மேற்கட்டி ; படகு மேற்கவிகை ; கூடாரம் ; குடிசை ; *v.* வண்டிக்குக் கித்தான் போர்வையிடு ; மேற்கட்டியிடு ; கவிகையிடு.

**tilt'-boat**, *n.* பெரிய கவிகைப்படகு.

**tilth**, *n.* ஏராண்மை, பயிர்த்தொழில் ; உழவாழம்.

**tilt'-hammer**, *n.* பெரிய கொல்லுலைச் சம்மட்டி.

**tilt'-yard**, *n.* வையாளி வீதி.

**tim'bal**, *n.* குடமுழா வகை.

***timbale***, (பிர.) *n.* அச்சப்பம், கிண்ண வடிவ அச்சுச் சட்டத் திற் சமைக்கப்படும் உணவு வகை.

**tim'ber**, *n.* மரத்துண்டு, கட்டை, வெட்டுமரம், கட்டிடம்-தச்சு வேலை முதலியவைகளுக்கென்று ஒருக்கஞ் செய்யப்பட்ட மரக்கட்டை ; கட்டிடம்-தச்சு வேலைக்குரிய கட்டை தரும் மரங்கள் ; காடு ; மரத்துண்டு, உத்தரம்.

**tim'bered**, *a.* இணைத்துருவாக்கப்பட்ட ; மரத்தினுற் கட்டப் பட்ட ; வெட்டுமரங்கள் அமைக்கப்பெற்றுள்ள ; மரங்கள் நிறைந்த.

**tim'ber-head**, *n.* (கப்.) தூலத்தலைப்பு, கயிறுகளை இறுக்கிக் கட்டுவதற்குப் பயன்படும் கப்பல் பக்க தூல முனை.

**tim'ber-hitch**, *n.* (கப்.) கயிற்றை மரச்சட்டத்துடன் இணைக்கும் முடிச்சு.

**tim'bering**, *n.* வெட்டு மரங்களின் திரள் ; மரவேலைப்பாடு.

**tim'ber-toe, tim'ber-toes**, *n.* மரக்காலர்.

**tim'ber-wolf**, *n.* பெரிய சாம்பல் நிற ஓநாய் வகை.

**tim'ber-yard**, *n.* மரக்கடை ; மரக்கிடங்கு ; மரப்பந்தாட்ட வகையில் மட்டைக்காரரின் இலக்குக்கட்டை.

**tim'bre**, *n.* ஒலிப்பண்பு.

**tim'brel**, *n.* சிறு முரசுவகை, கஞ்சிரா.

**time[1]**, *n.* காலம் ; பொழுது ; வேளை ; குறித்த நேரம் ; சமயம்; பருவம், ஊழி ; காலப்பகுதி, காலப்பிரிவு, காலக்கூறு ; கட்டம் ; தறுவாய் ; தடவை ; மடங்கு ; கால அளவு, நேர அளவு; கால நீட்டிப்பளவு, கழியும் வேளை; கடிகாரம் காட்டும் நேரம் ; காலக்கணிப்பு ; கணிப்புக்காலம் ; காலநிலை ; கால வாய்ப்பு ; வாய்ப்புக்காலம்; வாய்ப்புவேளை; ஓய்வான வேளை; அவகாசம் ; ஆங்காலம் ; உரியகாலம் ; பொருந்தும்வேளை ; வாலாயநேரம் ; வழக்கவேளை ; செல்காலம் ; செல்லுபடிக் காலம் ; கால எல்லை, கால அவதி ; கொடுக்கப்பட்ட கால எல்லை ; பணிக்கால எல்லை ; ஆயுள் எல்லை ; சாக்காலம் ; ஆள் வகையில் சிறப்புவளவேளை ; சிறப்புப் பருவம் ; வாழ்க்கை நிலை ; இன்ப துன்பநிலை ; காலப்போக்கு, கால நிகழ்ச்சிப் போக்கு ; மாத்திரை ; (இசை.) தாளம் ; (இசை.) காலகதி, விரைவுப்படி ; *a.* காலத்திற்குரிய ; வருங்காலத்திற்குரிய ; குறித்த காலத்துக்கென்று வகுத்தமைக்கப்பட்ட ; காலத்தால் கணக்கிடப்படுகிற; காலத்தில் செயலாற்றுகிற; *v.* நேர அறுதிசெய் ; நேர ஒழுங்குசெய் ; குறித்த காலத்திற்கென்று வகுத்தமை ; நேரம் தேர்ந்தெடுத்தமை ; தேர்ந்தெடுத்த நேரத்தில் செய் ; நிகழ்ச்சிநேரத்தைக் குறி ; நிகழ்ச்சிவேளை வகுத்தமை ; பயணநேரம் திட்டஞ்செய் ; நிகழ்ச்சிவேளையைக் கணித்தறுதிசெய் ; (இசை.) தாளமிடு ; (இசை.) காலகதி பின்பற்று ; காலகதி அறுதிசெய் ; காலகதி ஒத்துப்பயில் ; காலகதிக்கிசைய அமை ; காலகதி குறி ; *int.* நேரமாயிற்று ; சரியான நேரம் இது ! (தொ.) apparent time, கதிரவன் உதயக்கணிப்பு நேரம் ; astronomical time, நிகரக் கதிரவன் முறைக்கால அளவு ; at all times, எப்போதும்; at one time, குறிப்பிட்ட ஏதோ ஒரு காலத்தில் ; at the same time, ஒரே நேரத்தில் ; அவ்வாறுயினும் ; at times, அவ்வப்போது ; சிற்சில வேளைகளில் ; beat time, தாளமிடு, கோலாட்டித் தாளங் காட்டு ; கையால் தாளமிடு ; தாளத்தைப் பின்பற்று ; தாளத்திற்கியையச் செயலாற்று ; behind the times, முன்னேறுமல் பின்தங்குகிற ; be near her time, பேறுகாலம் அணிமைத்தாகப்பெற்றிரு; between times, இடையிடையே ; இடைநேரங்களில் ; bide one's time, காலங் கருதியிரு ; by times, முன்னதாக; முன்கூட்டி; close time, தடையீட்டுக்குரிய காலம், சட்டப்படி பறவைகளையும் மீன்களையும் பிடிப்பது தடைசெய்யப்பட்ட காலம் ; common time, (இசை.) இரண்டு அளவையுள்ள தாள வகை ; do time, சிறைத் தண்டனையனுபவித்துக் கொண்டிரு ; for a time, சிறிதுகாலம் ; கொஞ்சநாட்களுக்கு ; for the time being, தற்காலமாக ; அந்தநேரத்தில் ; from time to time, அவ்வப்போது ; gain time, காலங்கருதி நாட்கடத்து ; போதிய நேரம் பெறுவதற்காகக் காலங்கடத்திக்கொண்டிரு ; Greenwich time, பிரிட்டனின் கட்டளைக்கணிப்புமுறைக் காலம் ; in good time, போதிய அளவு முந்தி ; சிறிதுநேரம் விட்டு முன்னதாக ; (அரு.) மெய்யாகவா ? ; in no time, மிகு விரைவாக ; கண்ணிமைப்போதில் ; keep time, நேரந் தவறுதிரு ; ஆடல் பாடல் நடைகளில் தாளத்திற்கியையச் செயலாற்று ; வேலையாட்கள் நேரங்களைக் குறித்துவை ; make time, இழந்த நேரம் சரிசெய் ; வாய்ப்புப் பெறு ; many a time, பலகால், பலதடவையாக ; on a time, upon a time, முன் ஒருகால் ; ஏதோ ஒரு காலத்தில் ; on time, குறித்த நேரத்தில்; குறித்த நேரம்வரை; out of time, பருவந் தவறி, காலமன்றியும் ; serve one's time, பயிற்சியாளனுகப் பணியாற்று ; sidereal time, தோற்றவியல் வருநெறிக் கணிப்புக்காலம் ; take time, நேரம்பிடி ; take time by the forelock, முன்கூட்டி வாய்ப்பைப் பற்றிக்கொள் ; the time of day, நேரம், மணி ; the time of one's life, தனிச் சிறப்புடைக் கிளர்ச்சிமிக்க காலம்; தனிச்சிறப்புடைய இடர்க்காலம்; time after time, அடிக்கடி ; time and again, பன்முறை ; time immemorial, time out of mind, நினைவு கடந்தகாலம், எல்லையில் காலம்; upto time, நேரந் தவறுத; நேரந் தவறுமல்.

**Time[2]**, *n.* காலச் செல்வன், காலதேவன்.

**time'-ball**, *n.* கால அறிவிப்புக் குண்டு, வான்காட்சிக்கூடத்தில் சராசரி காலமறிவிக்க விழ விடப்படுங் குண்டு.

**time'-bargain**, *n.* காலக் குறிப்புப் பேரம், குறிப்பிட்ட வருங் காலத்தில் விற்பனைக்கான உடன்படிக்கை.

**time'-beguil'ing**, *a.* எளிதில் நேரம்போக்க உதவுகிற.

**time'-bill**, *n.* கால அட்டவணை.

**time'-bomb**, *n.* கால இடையீட்டு வெடிகுண்டு, போட்டபின் அல்லது வைக்கப்பட்டபின் குறிப்பிட்ட நேரத்தில் வெடிக்க வல்ல குண்டு.

**time'-card**, *n.* வேலைநேரக் கணக்கு அட்டை.

**timed**, *a.* குறித்த நேரத்திற்கெனத் திட்டமிட்டமைத்த ; திட்டம் அமைக்கப்பட்ட.

**time'-expired**, *a.* தவணைகடந்த, காலகதியாகிவிட்ட.

**time'-exposure**, *n.* நிழற்படத்துறையில் சிறிதுநேர ஒளி படவைப்பு.

**time'-fuse**, *n.* கால இடைக்கொளுத்தமைவு, குறித்த நேரத்தில் எரிய அல்லது வெடிக்க உதவும் எரி திரி.

**time'-gun**, *n.* காலக் குறிப்புவேட்டுத் துப்பாக்கி ; காலக் குறிப்பு வேட்டு.

**time'-honoured**, *a.* தொன்மை மாட்சியுடைய.

**time'keeper**, *n.* நேரப் பதிவாளர் ; நேரத்தைச் சரிவரக் காட்டுங் கடிகாரம் ; தாளமிடுபவர்.

**time'-killer**, *n.* நேரத்தை வீணடிப்பவர்; நேரத்தை வீணுக்க உதவுவது ; சோம்பற் பொழுதுபோக்கு.

**time'-killing**, *n.* நேர வீணடிப்பு ; *a.* சோம்பற் பொழுது போக்கான ; நேரம் வீணுக்குகிற.

**time'-lag**, *n.* காரண காரிய நிகழ்ச்சி இடையீடு ; கால இடையீடு.

**time'less**, *a.* காலக் கணிப்பற்ற ; கால வரம்பற்ற ; முடிவற்ற ; என்றுமுள்ள.

**time'-limit**, *n.* கால வரம்பு ; நேர எல்லை.

**time'liness**, *n.* செவ்வி தவறுமை ; குறித்தகாலந் தவறுமை ; செவ்வி சான்ற தன்மை ; காலத்தாற் பயன்படுந் தன்மை ; விரும்பியபொழுது நிகழும் இயல்பு.

**time'ly**, *a.* குறித்தநேரத்தில் நிகழ்கிற ; செவ்வி தவறுத ; கால வாய்ப்பான ; காலத்திற்குப் பொருத்தமான ; வேண்டிய பொழுது நிகழ்கிற ; *adv.* காலப் பொருத்தமுடன், சரியான நேரத்தில், விரும்பிய நேரத்தில் ; காலவகையில் வாய்ப்பாக.

**time'piece**, *n.* மேசைக் கடிகாரம், மாடக் கடிகாரம்.

**tim'er**, *n.* காலத் திட்டமிடுபவர், சரிநேர முன்னேற்பாட்டாளர்.

**times**, *n. pl.* வாழ்க்கை நிலைகள் ; கால நிலைகள் ; பருவ நிலைகள் ; காலச் சூழல்கள்.

**time'-server**, *n.* சந்தர்ப்பவாதி.

**time'service**, *n.* சந்தர்ப்பவாதம்.

**time'-serving**, *n.* சந்தர்ப்பவாதம் ; *a.* சந்தர்ப்பவாதியான, காலந்தோறும் கருத்தை மாற்றிக்கொள்கிற.

**time'-sheet**, *n.* வேலைநேரக் கணக்கட்டைத் தாள்.

**time'-table**, *n.* கால அட்டவணை.

**time'-work**, *n.* காலக் கணிப்பூதிய வேலை.

**tim'id**, *a.* எளிதில் மருளுகிற ; பயங்கொள்ளியான ; வெட்கி ஒதுங்குகிற.

**timid'ity**, *n.* ஒஞ்சிப்பு ; பீதியியல்பு.

**tim'idness**, *n.* ஒச்சம்.

**tim'ing**, *n.* காலத்திட்ட அமைப்பு ; சரிநேர முன்னேற்பாடு.

**timoc'racy**, *n.* செல்வராட்சி, மதிப்பராட்சி.

**timocrat'ic**, *a.* செல்வராட்சி சார்ந்த.

**tim'orous**, *a.* எளிதில் அஞ்சுகிற.

**torch**, *n.* கைப்பந்தம், கைப்பந்த மின்விளக்கு ; சுளுந்து ; ஒளிக்கம்பம்; *v.* பந்தங் காட்டு; பந்தத் துணைக்கொண்டு ஒளி காட்டு ; பந்தத் துணைக்கொண்டு வழிகாட்டு ; (தொ.) carry the torch, ஒருதலைக் காதல்கொள்.

**torch'-bearer**, *n.* பந்தமேந்தி ; ஒளிகாட்டி ; வழிகாட்டி, முனைவர், புதுவழி முனைந்து பின்மரபினருக்கு வழிகாட்டுபவர் ; முன்னணித் தொண்டர் ; புத்தறிவு கொளுத்தியவர்.

**torch'-bearing**, *n.* பந்தமேந்துதல் ; ஒளிகாட்டுதல் ; *a.* பந்தமேந்துகிற, ஒளிகாட்டுகிற.

**torch'-fishing**, *n.* இராப்பந்த மீன்வேட்டை, இரவிருளிற் பந்தத் துணைக்கொண்டு செய்யும் மீன்வேட்டை.

**tor'chon**, *n.* கலத்துடைப்புத்துணி ; (தொ.) torchon board, சொரசொரப்பட்டை, சொரசொரப்பான தாள் மூடிய அட்டைப் பலகை ; torchon lace, கலத்துடைப்புத்துணி ; சொர சொரப்புத் துணி வகை ; torchon mat, சொரசொரப்புத் தாளாலான ஓரச்சட்டம் ; torchon paper, சொரசொரப்புத் தாள் வகை ; நீர்வண்ண ஓவியங்களுக்கான சொர சொரப்புத் தாள்.

**torch'-race**, *n.* பந்த ஒளி ஓட்டப் பந்தயம்.

**torch'-singer**, *n.* காதற்புலம்பு பாடற்காரிகை, காதலன் கைதுறப்பால் புலம்பிப்பாடும் அணங்கு.

**torch'-song**, *n.* காதற்புலப்பப்பாடல் ; 1930-ஆம் ஆண்டில் பொதுமக்களார்வப் பாராட்டுப்பெற்ற காதற் கடுவேதனைப் புலப்பப்பாடல்.

**tore**, *v.* tear என்பதன் இறந்த காலம்.

**to'reador'**, *n.* ஸ்பானிய மஞ்சிவிரட்டு வீரர்.

**toreut'ic**, *a.* உலோகச் சித்திரச் செதுக்கணிச் சிற்பம் சார்ந்த; புடைப்பு அகழ்வுச் செதுக்கிழைக் கலை சார்ந்த.

**to'rii**, *n.* ஜப்பானிய ஷிண்டோ கோயில் முகப்புவாயில்.

**torm'ent** [1], *n.* படுநோவு ; மனவேதனை ; வேதனைதருஞ் செய்தி ; கடுந்தொல்லை.

**torment'** [2], *v.* வதை, வேதனைக்கு உட்படுத்து ; தொந்தரவு கொடு.

**torm'entil**, *n.* குருதிப்போக்கு நிறுத்தும் பூண்டுவகை.

**torment'ing**, *a.* வேதனைப்படுத்துகிற.

**tormen'tor**, *n.* அலைக்கழிப்பவர் ; வேதனை தருவது ; உண வுண்ணுதற்குரிய கவைமுட் குறடு ; மரமடிக்கும் பரம்புச் சகடம்.

**torm'ina**, *n.* சூலை, கடும் வயிற்றுவலி.

**torn**, *v.* tear என்பதன் முடிவெச்சம்.

**tornad'ic**, *a.* சூறைப்புயல் சார்ந்த ; சுழல்வளிபோன்ற.

**tornad'o**, *n.* சுழல்வளி, சூறைப்புயல் ; *pl.* tornad'oes.

**torped'o**, *n.* மின்திறமுடைய மீன்வகை ; வெடிக்கண்ணி ; சுரங்கவெடி ; நீர்மூழ்கிக்குண்டு ; *pl.* torped'oes ; *v.* நீர்மூழ்கிக்குண்டினுல் தாக்கு; நீர்மூழ்கிக்குண்டினுல் தாக்கியழி; தகர், மோதிக்கெடு, செயலற்றதாக்கு, பயனற்றதாக்கு.

**torped'o-net**, *n.* நீர்மூழ்கிக்குண்டுகளைத் தடுக்கும் வலை.

**torp'id**, *n.* உணர்ச்சியற்ற, மரமரப்புற்ற ; கழிமடிமை வாய்ந்த ; (உயி.) செறிதுயில் கொள்கிற, செயலற்ற பருவத் துயில்கொள்கிற.

**torpid'ity**, *n.* மரமரப்பு, உணர்ச்சியற்ற தன்மை ; மசணைத் தன்மை, கழிமடிமை.

**torp'ify**, *v.* மரமரப்பூட்டு, உணர்ச்சியற்றதாக்கு.

**torp'or**, *n.* மரமரப்பு ; படுமந்தம், கழிமடிமை ; கழிமடமை.

**Torps**, *n.* (கப்., இழி.) நீர்மூழ்கிக்குண்டு இயக்குநர்.

**torq'uate, torq'uated**, *a.* (வில.) கழுத்தில் வண்ணச் சுருள்மயிர்ப்பட்டையினையுடைய.

**torque**, *n.* முறுக்குப்பதக்கம்.

**torrefac'tion**, *n.* வறட்சிப்படுத்துதல் ; வறட்சி.

**to'rrefy**, *v.* வறட்சியாக்கு ; பொரியச்செய்.

**to'rrent**, *n.* விசைநீரோடை ; பாய்நீரோட்டம் ; விசைமாரி, விசைப்பொழிவு.

**torren'tial**, *a.* விசைமாரியான.

**torren'tially**, *adv.* விசைமாரியாக.

**to'rrid**, *a.* கடுவெப்பான ; வறட்சிமிக்க ; நிலவகையில் கரம்பான ; காய்ந்துபோன ; (தொ.) torrid zone, வெப்பமண்டலம், நிலவுலக உருண்டையின் வெப்பமிக்க மையமண்டலம்.

**to'rridity**, *n.* வெப்பநிலை ; வெப்பமண்டலநிலை ; வறட்சி, காய்வு.

**tors'el**, *n.* சுவரின் உத்தரந் தாங்குகட்டை ; கட்டுமானச் சுருளணி.

**tor'sion**, *n.* திருக்கு, முறுக்கு, திரிப்பு ; திருக்குவிசை ; திருக்குவிசை விளைவான தளர்வு ; (தொ.) torsion balance, நுண்விசைமானி, திருகுகம்பி மூலமாக நுண்விசையளக்குங் கருவி.

**tor'sional**, *a.* முறுக்கேறிய.

**tors'o**, *n.* சிலைமுண்டப்பகுதி ; உடல்முண்டப்பகுதி ; அரைகுறை வேலை ; *pl.* tor'sos.

**tort**, *n.* (சட்.) பொல்லாங்குக் குற்றம்.

**tort-fea'ser**, *n.* பொல்லாங்குக் குற்றவாளி.

**torticoll'is**, *n.* கழுத்துச்சுளுக்குவாதம் ; கழுத்துப்பிடிப்பு.

**tort'ile**, *a.* முறுக்கேறிய ; (தாவ.) சுருள்வான.

**tortil'ity**, *n.* முறுக்குடைமை.

**tor'tious**, *a.* (சட்.) பொல்லாங்குக் குற்றம் பற்றிய.

**tort'oise**, *n.* ஆமை.

**tort'oise-shell**, *n.* ஆமை ஓடு ; (தொ.) tortoise-shell butterfly, ஆமை ஓட்டுநிற வண்ணத்துப் பூச்சி ; tortoise-shell cat, ஆமைஓட்டுநிறப் பூனை வகை.

**tortuos'ity**, *n.* வளைவுநெளிவுடைமை ; சுற்றிவளைந் துள்ளமை ; கவடுசூது நிறைவு ; நேர்மையில்லாமை.

**tor'tuous**, *a.* வளைவுநெளிவுமிக்க.

**tor'turable**, *a.* சித்திரவதை செய்யத்தக்க.

**tor'ture**, *n.* சித்திரவதை ; கடுநோவு, படுவேதனை, ஆரஞர் ; *v.* சித்திரவதைசெய் ; வதைத்து வலியப்பெறு.

**tor'turer**, *n.* சித்திரவதை செய்பவர்.

**tor'turing**, *n.* சித்திரவதை செய்தல் ; *a.* சித்திரவதை செய்கிற.

**tor'turous**, *a.* சித்திரவதை செய்கிற.

**to'rula**, *n.* மதுநுண்மம் போன்ற காளான் நுண்மவகை ; *pl.* to'rulae.

**tor'us**, *n.* பீடப்புடை வளையுறுப்பு, வளைய வடிவ வெளியேற்று குழாய்; (தாவ.) மலர் இதழடி; தண்டின் வளைமுனை ; (உள்.) தசையின் மெல்வளைவுக் கோடி ; *pl.* tor'i.

**Tor'y**, *n.* முற்காலப் பிரிட்டன் பழமைச்சார்புக் கட்சி.

**Tor'yism**, *n.* முற்காலப் பிரிட்டனின் பழமைச் சார்புக் கட்சிக் கொள்கை.

**tosh**, *n.* (இழி.) குப்பைகூளம் ; பிதற்றல் ; மரப்பந்தாட்டம்-புல்வெளிப்பந்தாட்டம் முதலியவற்றின் வகையில் சிரமமில்லாத எளிய பந்தடி.

**tosh'er**, *n.* (இழி.) உதிரியர், எந்தக் கல்லூரியையுஞ் சேர்ந்திராத பல்கலைக்கழக மாணவர்.

**toss**, *n.* சுண்டீடு, நாணய வகையில் சுண்டியெறிவு ; சிங்கம் பட்டு, நாணயச்சுண்டு விளையாட்டு ; சுண்டீட்டு முடிவு ; குருட்டடி முடிவு, எறிதலைமுடிவு, தலைவெட்டசைப்பு ; தலை திடுநிமிர்வு ; தலையின் இகழ்ச்சிக்குறிப்புவெட்டு ; ஏளனக் குறிப்புத் தலையசைப்பு ; குதிரைவகையில் தூக்கியெறிவு ; பந்து வகையில் எற்றெறிவு, தெறிப்புயர்வு ; *v.* சுண்டியெறி; நாணயத்தைச் சுண்டிப்போடு ; திடுமெனத் தலையை வெட்டியசை ; எருது முதலியவற்றின் வகையில் கொம்பினுல் தூக்கியெறி ; திடுமெனச் செயலாற்று ; சுண்டிப்போட்டுச் சிக்கல் தீர்வுகாண் ; தேர்வு முதலியவற்றின் வகையில் நாணயச்

சுண்டிட்டிஞல் முடிவறிய முயல்; விட்டெறி; சிந்தனையின்றி வீசியெறி; அலட்சியமாகத் தூக்கிப்போடு; பொருள்வகையில் கையில் வைத்து ஆட்டிக்காட்டு; உயர்த்திப் பிடித்துக் காட்டி வணக்கம் தெரிவி; இப்படியும் அப்படியுமாகப் புரட்டு; மேலுங் கீழுமாக ஆட்டி அலைக்கழிவு செய்; தூக்கிப்போட்டு அலைக்கழிவு செய்; முன்னும் பின்னுமாகப் பிடித்தாட்டு; படுக்கையில் இப்படியும் அப்படியும் கிடந்து புரள்; அமைதியின்றி அசைந்தாடிச் செல்; வெட்டி ஊசலாடு; கடல்-கப்பல்-மரக்கிளை முதலியவற்றின் வகையில் திடீர்திடீரென்று முன்னுக்கும் பின்னுக்குமாக அலைந்தாடு; கொழி, புடைத்துப் பிரித்தெடு; (தொ.) toss off, தேறல் வகையில் ஒரே மூச்சிற் குடித்துவிடு; வேலைவகையில் வேகமாக முடித்துவிடு, அதிக முயற்சியின்றிச் செய்துமுடி; toss out, ஒப்பனை செய்; அலங்கரித்துக்கொள்; toss up, சுண்டிப் போடு; பூவா தலையா எனப் பார்; அவசரமாகச் சமையல் செய்.

**toss'pot**, *n.* குடிகாரர்.

**toss'-up**, *n.* சுண்டியெறிவு, நாணயச் சுண்டீடு.

**toss'y**, *a.* அவமதிப்புச் செய்கிற.

**tot** [1], *n.* சிறுகுழந்தை; (பே-வ.) மிடற்றளவு, சிறிதளவு மது.

**tot** [2], *n.* (பே-வ.) கூட்டப்பட வேண்டிய இலக்கங்கள்; *v.* கூட்டு.

**tot'al**, *n.* மொத்தம்; மொத்த எண்ணிக்கை; மொத்தத் தொகை; *a.* மொத்தமான; முழுமையான; முழுவதுங் கொண்ட; எல்லாம் அடங்கிய; அனைத்துமுட்கொண்ட; முழுதுறழ்வான, கலப்பற்ற; *v.* கூட்டு, மொத்தங் கண்டுபிடி; தொகையாகு; தொகைப்படு; மொத்தமாகு; தொகை வரையில் உயர், வரை தொகையில் உயர்வுறு; (தொ.) total abstainer, முழு மதுவிலக்கர்; total abstinence, முழுக்குடி தவிர்ப்பு; total war, முழுவலிமை ஈடுபாட்டுப் போர், கருவி கல ஆற்றல்கள் முழுதும் ஈடுபடுத்தப்படும் யுத்தம்; பாடழிவுப் போர்.

**totalitar'ian**, *n.* சர்வாதிபத்திய ஆட்சி ஆதரவாளர்; *a.* சர்வாதிபத்தியமான, தனிக்கூட்டரசான, தனி ஒருகட்சியாதிக்கமுடைய; எதிர்க்கட்சிக்கு இடங்கொடாமல் எல்லாவற்றின் ஆதிக்கமும் ஒரே ஆட்சிக்குழுவிற்குரியதாயிருக்கும் ஆட்சிமுறை சார்ந்த; (தொ.) totalitarian state, சர்வாதிபத்திய அரசு.

**totalitar'ianism**, *n.* சர்வாதிபத்தியம், சர்வாதிபத்திய ஆட்சிமுறை.

**total'ity**, *n.* முழுமை; பகுபடா நிலை, முழுநிறைவு, கூட்டு மொத்தம்.

**tot'alizator**, *n.* தானியங்கிப் பந்தயக் கணிப்புப் பொறியமைவு, மொத்தப் பணயத்தொகையை வெற்றிக்குதிரையின் மேல் பந்தயங்கட்டியவர்களிடையே பங்கிடும் பொருட்டு பணயங்களின் எண்ணிக்கையையும் தொகையையுங் காட்டும் அமைவு.

**tot'alize**, *v.* மொத்தமாகத் திரட்டு; மொத்தங் கண்டுபிடி; தானியங்கிப் பந்தயக் கணிப்புப் பொறியமைவைப் பயன்படுத்து.

**tot'ally**, *adv.* முழுதும், முற்றும்; ஒன்றுவிடாமல், மொத்தமாக; பாகுபாடின்றி.

**tote** [1], *n.* ≗ totalizator.

**tote** [2], *v.* கொண்டுபோ, மரத்தடி-துப்பாக்கி-தளவாட முதலியவற்றின் வகையில் எடுத்துச்செல்.

**tot'em**, *n.* குலமரபுச்சின்னம், இனமரபுக் குறியாகக் கொள்ளப்படும் விலங்கு-தாவர-இயற்பொருட் சின்னம்; (தொ.) totem stage, குலச் சின்னங்கள் இனப்பெயர்களாகவும் வழிபாட்டுப் பொருள்களாகவுங் கொள்ளப்படும் மனப்பண்பு நிலை.

**tot'emism**, *n.* இனமரபுச் சின்ன முறைமை, சமுதாயப் பொறுப்புகட்டுப்பாடு ஆகியவைகளைக் குலமரபுச் சின்ன அடிப்படையில் கொள்ளும் வாழ்க்கை முறை.

**tot'emist**, *n.* இனமரபுச் சின்னக் குழுவினர்.

**totemis'tic**, *a.* இனமரபுச் சின்னஞ்சார்ந்த.

**tot'em-post**, *n.* குலமரபுச் சின்னக் கம்பம், குலச்சின்னங்கள் செதுக்கி அல்லது மாட்டி வைக்கப்படுங் கம்பம்.

**t'o'ther, to'ther**, *pron.* மற்றொருவர், மற்றொன்று; *a.* மற்ற.

**tott'er**, *v.* தள்ளாடு; தள்ளாடி நட; தளர் நடையிடு; கோபுரம்-அரசு-திட்டம் முதலியவை வகையில் ஆட்டங் காணப்பெறு, சரிந்து விழுந் தறுவாயிலிரு.

**tott'ering**, *a.* தள்ளாடுகிற; நிலைகொள்ளாத; விழும் நிலையிலுள்ள.

**tott'ery**, *a.* உறுதியற்ற, நடுங்குகிற, ஆட்டங் கண்டுவிட்ட.

**toucan', toucan**, *n.* மிகப்பெரிய அலகுடைய அமெரிக்க வெப்பமண்டலப் பறவை.

**touch**, *n.* தொடுகை, தொடு செயல்; படுகை, மேற்படுநிலை; தொடுநிலை; தொட்டநிலை; பட்டநிலை; தொட்டுணர்வு; தொடுபுலம், ஊறுணர்வு; உற்றறிவு, மெய்தொடு உணர்வு, உடலிற்படும் உணர்ச்சி; அணுகியநிலை, நெருங்கியநிலை; தொடர்பு; தொக்கு, தொடக்கு; இடைத்தொடர்பு; உளத் தொடர்பு; உணர்வின் பரவுதிறம், ஒட்டுப்பண்பு, சார்புக் கூறு; சிறு கூறு; தடம்; நேர்த்திக்குறி; நேர்த்தி; சிறுவடு; குறை; மென்தடம்; சாயல்; சாயற்கூறு; பண்புக்கூறு; நினைவூட்டும் பண்பு; உணர்வுக் கூறு; சிறுவிளைவுக் கூறு; வினைத்திட்பம்; விளைவுத்திறம்; பலிப்பு, முழுப்பயன்; நிறைவேற்றம்; தூரிகை மேல்வீச்சு, மெல்லிழுப்பு, மென்துடைப்பு; மெல் வரைக்கூறு; மென்னிறக் கூறு; மென் சாயற்கூறு; சுவைநுட்பம்; தனிக்கூறு; தனிப்பண்புக் கூறு; தனி உயிர்ப்பண்பு; தனி நுட்பம்; உயிர்நுட்பம்; தொழில் நுட்பம்; கலைநுட்பம்; கலை வெற்றி நுணுக்கம்; வேலைப்பாட்டு நுட்பம்; பாணி நுட்பம்; தொடுசெவ்வி, தொட்டியங்குந் தனித்திறம்; கருவி இயக்குந் திறம்; செவ்வி நிலை, கருவியின் தனிச் செயலிசைவுத் திறம்; சிறு திருத்தம்; வீணை முதலிய கருவி வகையில் தைவரவு; ஆட்டக்கள எல்லை வெளி ஓரம்; எஃகுத் தண்டின் காந்த அணுக்கச் செறிவு; உரைகல்; சோதனைமுறை; தொட்டு விளையாட்டு; (இழி.) திருட்டுத்தனம்; (இழி.) திருட்டுவழிப் பொருள்; கறுப்புப் பொருள்; (இழி.) கொள்ளை விலைப்பொருள்; *v.* தொடு; விரலால் தீண்டு; மேலே கைவை; மேலே படும்படி வை; மேலே படு; தொட்டிரு; தொட்டுக்கொண்டிரு; கொண்டு தொடு; தொடுநிலை பெறு; தொடுவி; சென்று படுவி; சென்று படு; சென்றடை, சென்று சேர்; நிலையைச் சென்றெட்டு; அணுகு; நெருங்குறு; சென்று காண்; இடையே சிறிது தங்கிச்செல்; பயணத்திடையே கடந்து செல்; கப்பல் வகையில் உணவு-நீர்-எரிபொருள்களுக்காக மட்டும் துறைமுகத் தொடர்புகொண்டு செல்; தலைப்படு; தொடர்புகொள்; ஈடுபடு; செய்யத்தொடங்கு; இடைப்படு; தலையிடு; பலித்தலுறு, முழுப்பயன் நிறைவேற்றமடை; சுட்டியதாயிரு, பற்றியதாயிரு; பாதித்தல் செய், செயல் வகையில் தாக்குறு; புண்படுத்து, நெஞ்சில் உறுத்து; நட்டத்துக்கு ஆளாக்கு; தீங்கு இழை; பகைத் தொடர்புகொள்; உள்ளம் உருக்கு; மனம் கனிவி; உணர்ச்சி இயக்கு; இரக்கங்கொள்வி; குறித்து எழுது; சுட்டியுரை; சுட்டிக் குறிப்பிடு; எடுத்துரை; சுட்டிச்செல்; பற்றி வருணி; எழுதுகோலால் மெல்லத் தீட்டு; தூரிகை வகையில் மெல்லத்துடைத்துச் செல்; தூரிகை கொண்டு மெல்லத் தொட்டிழு; மெல்ல உருவரை தீட்டு; மெல்ல ஒளி நிழல் படிவம் தீட்டு; சிறு மாறுதல் செய்; சிறிது மாற்றியமை; சற்றே பாதித்தல்செய்; சிறுகச் சிறுகச் செப்பம் செய்; சிறு திருத்தஞ் செய்; தூண்டு, இயக்கு, தொட்டு இயக்கு; மணி வகையில் மெல்ல அடி; தொப்பி வகையில் வணக்கம் தெரிவிக்கும் முறையில் மெல்லத் தொட்டுக் காட்டு; பொன் வகையில் உரைத்து மாற்றறி; வீணை நரம்பு வகையில் மெல்ல மீட்டு; கருவி கையாளு; (வடி.) வட்டத் தொடுவரையாய் அமைவுறு; (தொ.) at a touch, தொட்டமாத்திரத்தில், இலேசாகத் தொட்டால்கூட; in touch, தொடர்பு கொண்டு, நேரடி உறவு கொண்டுள்ள நிலையில்; near touch, நெருங்கிய மழிப்பு; out of touch, தொடர்பற்ற நிலையில், உறவுகொண்டிராத நிலையில்; royal touch, கண்டமாலை தீர்வுக்குரியதாக முன்பு கருதப்பட்ட அரசரின் தொடுநிலை;

touch and go, வாகன வகையில் பட்டும் படாததுமாய்ச் செல்; touch off, அவசரமாக மாதிரிச் சித்திரம் வரை; ஒருவரது உருமாதிரியை விரைந்து வரை; பீரங்கி வெடிதீர்; touch of nature, சிறப்பியல்பான குணம், தனித் தன்மையான போக்கு; (பே-வ.) பிறர் இரக்கங்கொள்வதற்கு ஏதுவான உணர்ச்சி வெளிப்பாடு; touch on, touch upon, குறித்துச் சுருக்கமாகக் கூறு; குறித்துச் சுருக்கமாக எழுது; இடையே குறிப்பிடு; touch one home, touch one to the quick, ஒருவரது கூருணர்வுப் பகுதியில் தொட்டுவிடு; பாச உணர்ச்சிகளைப் புண்படுத்து; touch pitch, சந்தேகப் பேர் வழிகளுடன் ஊடாடு, இரண்டகமான காரியங்களில் ஈடுபடு; touch up, திருத்து; தீர்மான வேலைகள் செய்; சாட்டையால் குதிரையை அடி; நினைவைத் தூண்டு.

touch'able, *a.* தொடக்கூடிய; தீண்டத்தக்க

touch'-body, *n.* தொடுபிழம்பு.

touch'-box, *n.* துப்பாக்கிப் பற்றவைக்கும் உரசுபெட்டி.

touch'-corpuscle, *n.* தொடுநுண்மம்.

touch'-down, *n.* தொடுபந்தெடுப்பு, காற்பந்தாட்ட வகையில் ஆட்டக்காரர் குறியிலக்கிற்கு அப்பால் தரையிலுள்ள பந்தினைக் கையால் தொட்டெடுத்தல்.

touched, *a.* சற்றே கிறுக்கான; சிறிதே கலந்த, சிறிது உடலுக இழைந்த; உணர்வு கனிவிக்கப்பட்ட.

tou'cher, *n.* தொடுபவர்; தொடுவது.

touch'es, *n. pl.* மென் கைத்திறக் கூறுகள்; (தொ.) finishing touches, தீர்வுக் கூறுகள்.

touch'hole, *n.* கொளுத்து வாய், பீரங்கிக்குத் தீ வைப்பதற் கேதுவான சிறு தொளை.

touch'ily, *adv.* எளிதிற் சினங்கொள்ளு முறையில்; வெடு வெடுப்பாக; தொட்டாற் சிணுங்கியாக.

touchi'ness, *n.* தொடப் பொருத்தன்மை; முன் சினம், எரிந்துவிழுந் தன்மை.

tou'ching, *a.* உருக்கமான, உளங்கனியச் செய்கிற, துயரார்ந்த; *prep.* பற்றி, குறித்து.

touch'ingness, *n.* உருக்கமுடைமை; கனிவூட்டுந் தன்மை.

touch'-judge, *n.* காற்பந்தாட்ட நடுவர்.

touch'last, *n.* குழந்தைகளின் விளையாட்டு வகை.

touch'less, *a.* ஊறுணர்ச்சியற்ற; பிடிபடாத.

touch'-line, *n.* காற்பந்தாட்டக் களத்தின் பக்க எல்லைக் கோடு.

touch'-me-not, *n.* தொட்டாற் சிணுங்கி.

touch'-me-not'ish, *a.* தொடப்பொருத.

touch'-needle, *n.* உரையாணி, பொன் மாற்றுப் பார்ப்பதற்குரிய கட்டளைப் பொன்னுணி.

touch'paper, *n.* உரைதாள், வெடிமருந்தைத் தீக்கொளுவுதற்குதவும் வெடியுப்பில் தோய்த்தெடுத்த தாள்.

touch'piece, *n.* மன்னர் திருக்கை பட்டவர்க்கு முன்பு வழங்கப்பட்ட பதக்கக் காசு.

touch'-plate, *n.* ஈயக்கலவை வேலையாளின் பணிப்பொறிப்புத் தடம்.

touch'stone, *n.* கட்டளைக் கல், பொன் வெள்ளி உரைகல்.

touch'wood [1], *n.* தாய்ச்சி மரம், தாய்ச்சி விளையாட்டு, சிறுவன் மரத்தைக் தொட்டுவிட்டால் அவனைத் துரத்திப் பிடிக்கக் கூடாதென்ற விதி ஏற்பட்டுள்ள சிறுவர் விளையாட்டு வகை.

touch'wood [2], *n.* பற்றுக்கட்டை, தீப்பற்றவைக்க உதவும் பொருளாகப் பயன்படுத்தப்படும் மக்கிப்போன கட்டை.

tou'chy, *a.* கூருணர்வுடைய, முன்கோபியான; தொட்டாற் சிணுங்கியான.

tough, *n.* போக்கிரி, தெருச்சுற்றி வீணன்; *a.* கெட்டிப்பான, உரப்பான, நெகிழ்வும் விறைப்பும் வாய்ந்த; கட்டுறுதியான, ஒடிக்க முடியாத, வெட்ட முடியாத; கட்டுவிடாத, களிமண் வகையில் விடாது ஒட்டிக்கொள்கிற; கட்டுறைப்புள்ள, இன்னல் பொறுக்கவல்ல; கடுந் துணிவுள்ள, எதற்குமஞ்சாத; கடுமுனைப்பான; திண்ணிய வலிமையுள்ள; உரம் வாய்ந்த; விட்டுக்கொடுக்காத; பிடிவாதமுடைய; கடுமைவாய்ந்த, சிக்கல் வகையில் விடுவிக்க முடியாத; ஊழ் வாய்ப்பு வகையில் கொடிய, துன்பம் விளைக்கிற, கடுமையான, செயற் கடுமையான; மகிழ்ச்சிதாராத; முரடான; கீழ்ப்படியாத; மிகு கலகம் விளைக்கிற; தொடர்ந்து குற்றஞ் செய்யும் பாங்குள்ள.

tough'en, *v.* கெட்டிப்பாக்கு; வலிவுள்ளதாகு; விறைப்பாகு; முனைப்பாக்கு; முனைப்புடையதாகு; கடுமையாக்கு; கட்டுறுதியாகு; உறுதிப்படு; கடிதாகு; விறைப்பாகு.

tough'ener, *n.* கெட்டிப்படுத்துபவர்; உரப்பி, கெட்டிப் படுத்துவது.

tough'ening, *n.* கெட்டிப்படுத்தல்; *a.* கெட்டிப்படுத்துகிற.

tough'ish, *a.* சற்றே கெட்டிப்பான.

tough'ness, *n.* உரப்பு, கெட்டிப்புடைய தன்மை; விடாப்பிடி; உறுகடுமை; கடுமுனைப்பு; பணியா முரட்டுத்தனம்.

toupee', *n.* பொய்மயிர்த் தொப்பி, தலையின் வழுக்கைப் பகுதியை மூடுவதற்காக அணியும் செயற்கை மயிர்ப்பட்டை.

tour, *n.* சுற்றுப் பயணம்; இன்பச் சுற்றுலா; சிறு தொலைப் பயணம்; சிறு தொலை நடை; சிறு சூழ்வரவு, குறிக்கோளின்றித் திரிந்துவரும் சிறு பயணம்; (படை.) போர்ப் பணியில் குறிப்பிட்ட நேரவேலை, தளநிலையத்திற் கழிக்கவேண்டிய கால எல்லை; *v.* சுற்றுப் பயணஞ் செல்; இன்பச் சுற்றுலா வாற்று; சூழ்வரலுறு; நாட்டினூடே சுற்றுலாப் போ; (தொ.) the grand tour, (வர.) முற்கால வழக்கில் கல்வி முற்றுவ் பெறுவிப்பதற்கான வெளிநாட்டுலாவரவு.

tour'aco, *n.* வண்ணப் புள், பல்வண்ணச் சிறகும் முனைப்பான சூட்டுமுடைய பெரிய ஆப்பிரிக்க பறவை வகை.

tourbill'ion, *n.* திருகுசுருள் வாணம், சுருள் தீப்பிழம் பெனத் தோன்றுமாறு வானவெளியிற் சுழலும் வாணவெடி வகை.

*tour de force*, (பிர.) *n.* ஆற்றற் பரிசோதனை.

tour'er, *n.* சுற்றுப்பயணஞ் செய்வதற்குத் தகுதியான நீண்ட உந்துவண்டி.

tour'ing, *n.* சுற்றுலாப்போக்கு; சுற்றுப்பயணம்; *a.* சுற்றுலா வருகிற; சுற்றுலாவிற்குரிய.

tour'ing-car, *n.* சுற்றுலா உந்துகலம்.

tour'ism, *n.* சுற்றுலாவாண்மை; சுற்றுலாத்திட்டம்; சுற்றுலா ஏற்பாடுகள்.

tour'ist, *n.* சுற்றுலாவாணர், சுற்றுப்பயணஞ் செய்பவர்.

touris'tic, *a.* சுற்றுப்பயணத்திற்கு உரிய.

tour'malin, tour'maline, *n.* துவரைமல்லி, பல்வகை மின் திறமிக்க பல்வண்ணக் கனிமப்பொருள் வகை; புட்பராகக் கல் வகை.

tour'nament, *n.* திறமைப் போட்டிப் பந்தயக் காட்சி; (வர.) வீரப் போட்டிப் போரணியரங்கக் காட்சி.

tour'nay, *n.* மணிக்கவிப்பாடை, இருக்கைகளுக்கான முறுக்கு கம்பிளி அச்சுத்துகில்.

tour'ney, *n.* போட்டிப் போரணியரங்கக் காட்சி; *v.* போட்டிப் போரணிக் காட்சிப்போட்டியிற் கலந்துகொள்.

tourn'iquet, *n.* குருதித் தடுப்புக்கருவி, அழுத்திப்பிடிப்பது மூலமாக நாடியிலிருந்து குருதி கசியாமல் நிறுத்துங் கருவி.

*tournure*, (பிர.) *n.* வளைவு, உருவரை வளைவு; புறவரித் தொங்கல், உடுப்பின் பின்புறத் தொங்கல் ஒப்பனை.

tou'sle, *v.* அலங்கோலமாக்கு, செப்பங்கெடு.

tous'y, *a.* பறட்டை மயிருள்ள, செப்பமில்லாத; பம்பையான, தலைமுடிவகையில் ஒழுங்கற்ற.

tout, *n.* வாடிக்கைத் தேட்டம்; தரகு பிடிப்பாளர்; இலாய முடாடி, பந்தயப் பயிற்சிக் குதிரை வேவாளி; *v.* வாடிக்கை பிடி; வற்புறுத்தித் தொந்தரவு செய்; பந்தயப்பயிற்சிக் குதிரை விவரங்கள்பற்றி வேவுபார்.

tout'er, *n.* தரகர்.

**tow** [1], *n.* கட்டியிழுப்பு ; கயிறு கட்டியிழுத்தல் ; கயிறுகொண்டு கட்டியிழுக்கப்பெறல் ; ஆட்டிவைப்பு ; ஆட்கொள்கை ; *v.* கட்டியிழு ; இழுத்துக்கொண்டுபோ, ஆள் வகையில் நிலமீது கட்டியிழுத்துச்செல் ; வலையை நீரின்மீதாக இழு ; வலையிட்டு உயிரின மாதிரிகள் தேர்ந்தெடுத்துத் திரட்டு.

**tow** [2], *n.* சணற் கரடு, சணற்கூளம்.

**tow'age**, *n.* கட்டியிழுப்பு ; கயிறுகட்டியிழுப்புக் கட்டணம்.

**toward** [1], *a.* (பழ.) பாங்குடைய, தகவான, பணிவிணக்க முள்ள.

**toward** [2], **towards**, *prep.* திசையாக, பக்க நோக்கி, திக்கு நாடி ; வகையில், இடத்தில்; வகையாக, பொறுத்து, தொடர் பாக ; வேண்டி, பொருட்டு ; அணித்தாக.

**tow'-car**, *n.* மீட்பமைவூர்தி, பாழடைந்த அல்லது சேற்றி லழுந்திய உந்துகலங்களை மீட்டுச் சிறுபழுது பார்க்கும் அமை வுடைய ஊர்தி.

**tow'el**, *n.* துவாலை, துவட்டுகுட்டை ; *v.* துவாலையினால் ஈரம் புலர்த்து ; (இழி.) அடித்துத் துவை ; (தொ.) a lead towel, துப்பாக்கிக் குண்டு ; throw in the towel, குத்துச்சண்டை வகையில் தோல்வியை ஒப்புக்கொள்.

**tow'el-horse**, *n.* குட்டை புலர்சட்டம், துவாலைகளைப் போட்டு வைப்பதற்கான நிலைச்சட்டம்.

**tow'er** [1], *n.* கோபுரம், தூபி, சிகரம் ; அரண், காப்பிடம், காப்பாளர், ஆதரவாளர் ; *v.* உயர், ஓங்கு, எழும்பு, சூழ இருப்பவற்றைவிட மேம்படு ; கழுகு வகையில் விண்ணகந் தாவிப்பற, விண்ணில் பறந்து உலவு, அடிபட்ட பறவை வகையில் செங்குத்தாக உயரப் பாய்ந்து செல் ; (தொ.) ivory tower, ஒதுங்கிய இன்பமாடி, மனித வாழ்க்கையின் கடுமைகளிலிருந்து தொலைவாய் ஒதுங்கிய இடம் ; tower of strength, உறுவலி.

**tow'er** [2], *n.* கயிறு கட்டி யிழுத்துச் செல்பவர் ; கயிறு கட்டி யிழுத்துச் செல்வது ; கயிறு கட்டி யிழுத்துச்செல்லும் விலங்கு.

**tow'ering**, *a.* உயரமான, ஓங்கிய; மேம்பட்ட; மிகுதியான.

**tow'ery**, *a.* கோபுரங்களையுடைய ; ஓங்கியுயர்ந்த.

**tow'ing**, *n.* கட்டியிழுத்தல் ; *a.* கட்டியிழுக்கிற ; கட்டியிழுக் கப் பயன்படுகிற.

**tow'ing-line**, *n.* கட்டியிழுப்பதற்குப் பயன்படுத்தப்படும் கம்பிவடம் அல்லது கயிறு.

**tow'ing-net**, *n.* இழுவை வலை.

**tow'ing-path**, *n.* நீர்க்கரைக் கட்டியிழுப்பு வழி.

**town**, *n.* நகரம் ; பட்டணம் ; (வர.) புரிசைநகர், சுவர் அல்லது வேலியாற் சூழப்பட்ட வீடுகளின் ஈட்டம் ; பெருந் திரளான குடியிருப்பு வீடுகளின் தொகுதி ; நகரவாணர் தொகுதி ; தலைமை நகரம் ; அருகாமை நகரம் ; (தொ.) go to town, (இழி.) தானே சென்றுவிடு ; man about town, நவநாகரிகமான உடையுடன் நகரில் வேலையின்றிச் சுற்றித் திரிபவர் ; paint the town red, கலவர எழுச்சி உண்டு பண்ணு ; talk of the town, town talk, ஊரார் பேச்சு ; பொதுப்பேச்சு ; town and gown, ஊராரும் பல்கலைக் கழகத் தாரும் ; town council, நகராட்சிக் குழு, நகரசபை; town hall, நகரமண்டபம்.

**townee'**, *n.* புறத்தார், பல்கலைக்கழக உறுப்பினராயிராம லேயே பல்கலைக்கழக நகரத்தில் வாழ்பவர்.

**town'-plann'ing**, *n.* நகர அமைப்பு.

**towns'folk**, *n.* பட்டண வாழ்வினர் ; நகரவாழ்நர்.

**town'ship**, *n.* பண்ணையுரிமைக் குடியிருப்பு ; பண்ணைக் குடியிருப்புச் சமுதாயம் ; பண்ணைவட்டாரக் குடியிருப்பு ; பண்ணைவட்டாரக் குடியிருப்புச் சமுதாயம் ; பண்ணைவட்டா ரம் ; ஊர்க்கோவிலக வட்டாரம் ; பேரூரிலடங்கிய ஊர் வட்டாரம்; முன் தனியூராயிருந்த வட்டாரப்பகுதி; தனியுரிமை வட்டகை, அமெரிக்காவிலும் கானடாவிலும் தன்னாட்சியுரிமை யுடைய வட்டப்பகுதி ; ஆறு சதுரக்கல் பரப்புடைய மாவட்டப்பகுதி ; ஆஸ்திரேலிய வழக்கில் நகரமைப்புத் திட்ட மனை ; கூட்டுக் குடிவாரப்பண்ணை ; நகர் ஆட்சி வட்டாரம் ; தன்னாட்சி நகரம் ; நகர மாவட்டம்.

**towns'man**, *n.* பட்டணவாசி, நகர்வாழ்நர்.

**towns'people**, *n.* நகரத்தார்.

**tow'-rope**, *n.* இழுவைக் கயிறு.

**toxaem'ia**, *n.* குருதி நச்சூட்டு.

**tox'ic, tox'ical**, *a.* நஞ்சு சார்ந்த, நச்சியலான ; (தொ.) toxic anaemia, நச்சுக் குருதிச் சோகை ; toxic epilepsy, நச்சுக் காக்காய் வலிப்பு.

**toxi'cally**, *adv.* நச்சியல் முறையாக.

**toxica'tion**, *n.* நச்சூட்டுதல்.

**toxi'city**, *n.* நஞ்சியல்பு.

**toxicol'ogist**, *n.* நச்சூட்டாய்வு நூலார்.

**toxicol'ogy**, *n.* நச்சூட்டாய்வு நூல்.

**toxicoman'ia**, *n.* நஞ்சார்வ நோய்.

**toxicopho'bia**, *n.* நச்சூட்டச்சக் கோளாறு.

**tox'in**, *n.* நோய் நச்சு, நோய்நுண்ம நச்சூட்டுப்பொருள் ; அழுகல் நச்சுக்கூறு ; அழிதசை நஞ்சு ; அழிதாவர நஞ்சு.

**toxoph'ilite**, *n.* வில்லாண்மைக் கலையார்வலர் ; வில் லாண்மைக் கலை மாணவர் ; *a.* வில்லாண்மைக்கலை சார்ந்த.

**toy**, *n.* குழந்தை விளையாட்டுப்பொருள், பொம்மை; சிற்றழகுப் பொருள் ; சிறு விளையாட்டுக் கருவி; வேடிக்கைப்பொருள்; அற்பமுயற்சி, செயன்முறைக்கொவ்வாத் தொழில் ; ஓய்வு நேர விருப்பார்வத்தொழில் ; *v.* சிறுபிள்ளைத்தனமாக நட, விளையாடு ; களிமகிழ்வுகொள்.

**toy'er**, *n.* பொம்மை விளையாட்டாளர் ; இன்ப விளையாட் டாளர் ; பொறுப்புணராதவர்.

**toy'ing**, *n.* விளையாட்டுத்தனம் ; பொறுப்புணராமை ; *a.* விளையாடி மகிழ்கிற ; பொறுப்புணராத.

**toy'ish**, *a.* விளையாட்டுத்தனமிக்க ; பொறுப்புணர்வின்றி நடக்கிற.

**Toyn'bee Hall**, *n.* லண்டன்மாநகரத்தில் 1884-இல் நிறுவப் பட்ட முதல் பல்கலைக்கழகக் குடியேற்றப்பகுதி.

**toy'shop**, *n.* பொம்மைக்கடை.

**toy'some**, *a.* விளையாட்டுத்தனமான ; பொறுப்பின்றி ஆடி மகிழ்கிற.

**trab'eate, trab'eated**, *a.* கட்டுமான வகையில் தூலங் களையே பயன்படுத்துகிற ; வில் வளைவு பயன்படுத்தாத.

**trabea'tion**, *n.* தூலக்கட்டுமானமுறை, வில்வளைவுகளைப் பயன்படுத்தாது தூலங்களைமட்டுமே பயன்படுத்துங் கட்டு மானம்.

**trabec'ula**, *n.* (உள்.) உறுப்பின் ஆதாரத் தசைமம்; உறுப் பின் ஆதார நரம்புநாளம் ; (தாவ.) தண்டுபோன்ற புற வளர்ச்சி ; *pl.* trabec'ulae.

**trac**, *n.* கரையிறங்கரண், படையும் படைக்கலங்களும் இறங் கிச் செல்லும் சுழல்நெறி அமைவுடைய நிலை நீரியங்கிக்கலம்.

**trace** [1], *n.* தடம் ; சுவடு; பதிவடையாளம் ; துப்பு ; செல் வழித் தடம் ; விட்டுச்சென்ற அடையாளம் ; அறிகுறித் தடயம் ; சிறுதடம் ; சிறிதளவு ; *v.* வரை ; உருவப்படம் எழுது ; எல்லை குறி ; வழி அமை, வடிவமைதி குறி ; வருந்தி உழைத்து எழுது ; உருவரை பதியவைத்துப் படி எடு ; தடம் பின்பற்று ; துப்புத் தேடு ; தேடிக் கண்டுபிடி ; சுவடுகளை ஆய்ந்து தேர் ; பாதை பின்பற்றி நெடுகச்செல்.

**trace** [2], *n.* கடிவாள இழுவை வார் ; (தொ.) in the traces, நுகத்தடியில் பூட்டப்பட்டு ; நாள்முறை வேலையில் ஈடுபட்டு ; கட்டுப்பட்டு ; வேலையினின்றும் ஓய்வுபெற்றிரா நிலையில் ; kick over the traces, கீழ்ப்படியாதிரு, அடங்காதிரு.

**trace'able**, *a.* வரையப்படத்தக்க ; வரைபடம் வகையில் படி யெடுக்கத்தக்க ; பின்பற்றத்தக்க; தடம் கண்டுபிடிக்கத்தக்க; மூலம் கண்டறியத்தக்க; கண்டுபிடிக்கத்தக்க; தேடிக் காணக் கூடிய.

**trace′-horse,** *n.* இழுவைக் குதிரை ; வண்டிக் குதிரை ; மலையேற்றத் துணை இழுப்புக்குதிரை.

**tra′cer,** *n.* வரைபடப் படி எடுப்பவர் ; வரைபடப் படி எடுப்புக் கருவி ; நரம்பாய்வு தேர்வுக்கருவி ; (படை.) வாற்புகை ஏவுகலம், பீறிட்டுக்கொண்டு செல்லும் புகைத்தடம் ; வாற்புகை பீற்றிச்செல்லும் ஏவுகலம் ; தடம் பதிவேதி, செய்முறைக்கூறு பின்பற்றிய வழியைப் பதிவுசெய்து காட்டும் பயன்வேதிப்பொருள் ; தடங்காண் மெய்யூடகம், மனித உடம்பிற்குள் செலுத்தப்பட்டுச் செல்வழி காண்பிக்கும் இயல்புடைய செயற்கைக் கதிரியக்க ஓரகத் தனிமம்.

**tra′cery,** *n.* கல்லிற் செதுக்கப்படும் சித்திர அணியொப்பனை வேலைப்பாடு; ஒழுகியல் வரியணி ஒப்பனை, பூச்சியிறகில் காணப்படுவது போன்ற ஒழுகிச்செல்கிற உருவரைக் கோடுகளாலான ஒப்பனைத் தோரணி.

**trache′a,** *n.* (உள்., வில.) குரல்வளை ; (பூச்.) உயிர்ப்புக் குழாய், பூச்சிவகைகளில் புற இணைப்புக் காற்றுக் குழாய்களுள் ஒன்று ; (தாவ.) நீர் வளி செல் நுண் புழைக்கால் ; *pl.* trache′ae.

**trach′eate,** *a.* மூச்சுக்குழல் உடைய ; நுண்புழைக்கால் உடைய.

**tracheit′is,** *n.* (மரு.) குரல்வளை அழற்சி.

**trach′eocele,** *n.* (மரு.) குரல்வளைச் சுரப்பி வீக்கம், குரல்வளை தொங்குசதையாக வீங்கி ஆறுத நோய்க்கோளாறு.

**tracheot′omy,** *n.* (அறு.) மூச்சுக்குழல் துளைப்பறுவை.

**trachom′a,** *n.* (மரு.) கண்ணிமையரிப்பு நோய்.

**trachyphon′ia,** *n.* குரல் கரகரப்பு.

**trach′yte,** *n.* சொரசொரப்பான அழற்பாறை வகை.

**tra′cing,** *n.* படியெடுப்பு ; வரைபடப் படி; பதிவெடுப்புப் படி.

**tra′cing-cloth,** *n.* மெருகச்சுத் துணி.

**tra′cing-paper,** *n.* படியெடுப்புத் தாள்.

**track,** *n.* தடம், சுவடு ; வழிகாட்டுந் தடங்களின் வரிசை ; கால்தடப்பாதை; செல்வழி ; கால்துவை பாட்டை ; அடிபட்ட வழி, வழங்கித் தேய்ந்த பாதை; செயற்கையாகச் செப்பஞ்செய்து உருவாக்கப்பட்ட பந்தயப்பாதை, தண்டவாளப் பாதை ; இயங்கரண் சுழல்நெறிப் பட்டை ; இயந்திரக் கலப்பைச் சுழல்நெறிப்பட்டை ; வண்டிச்சக்கரங்களுக்கிடைப் பட்ட குறுக்குத்தொலைவு; *v.* தடம் பின்பற்று ; பின்தொடர்; நீரிலிழுத்துச்செல், கரையிலிருந்துகொண்டு படகைக் கயிறு கட்டியிழு ; ஒரே ஒழுங்கில் ஓடு ; சக்கரங்கள் வகையில் முன் சக்கரத்தின் தடம்பற்றியே பின்சக்கரம் செல்லுமாறு ஓடு ; (தொ.) beaten track, போய் அடிபட்ட தடம் ; முன் அடிபட்டுத் துவைந்த பாதை; பழகிப்போன வழி, in one's tracks, (இழி.) நின்ற அதே இடத்திலேயே ; நின்ற நேரம் இடம் மாறாமல் ; keep track of, முழுவிவரந் தெரிந்துவைத்துக் கொண்டிரு ; போக்கு வளர்ச்சிகளைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிரு ; make tracks, (இழி.) விரைவிற் செல்லு.

**track′age,** *n.* கயிறுகட்டியிழுப்பு ; கட்டிழுப்புக் கட்டணம்; இருப்பூர்திப் பாட்டைத் தொகுதி ; இருப்பூர்திப் பாட்டைத் தொகுதியின் மொத்த அளவு.

**track′-clearer,** *n.* பாதைத் தடைவிலக்கி ; முன்னெறிகாப்பு, பின்னெறிகாப்பு.

**tracked,** *a.* சுழல்நெறிப் பட்டைகள் அமைக்கப்பெற்றுள்ள.

**track′er** [1], *n.* தடம்பார்த்துச் செல்பவர் ; பின்பற்றிச் செல்வது ; பாதை போடுபவர் ; பாதை பரிசோதிப்பவர் ; இசைப் பேழை இயந்திரத்திலுள்ள மர இணைப்புக்கோல்.

**track′er** [2], *n.* கட்டியிழுப்பவர் ; கட்டியிழுக்குங் கயிறு ; இழுப்புக்கயிறு ; உறுப்பின் இழுக்குங் கூறு.

**track′less,** *a.* பாதையற்ற ; தடமற்ற ; அடியிட்டு நடக்கப் பெறாத ; தண்டவாளங்களின்றி ஓடுகிற.

**track′mobile,** *n.* இருப்புந்து, ஊர்திப் பகுதிகளை இடமாற்றப் பயன்படும்படி தண்டவாளத்திலும் பாதையிலுஞ் செல்ல வல்ல உந்துகலம்.

**tracks,** *n. pl.* அடிச்சுவடுகள், கால்தடப் பதிவுகள்.

**track′-suit,** *n.* ஓட்டப்பந்தயப் பயிற்சியாளர் உடை.

**tract** [1], *n.* நிலப்பரப்பு வெளி, பரந்துகிடக்கும் நிலம் ; திணைநிலம் ; வட்டாரம் ; (உள்.) உறுப்பின் தசைமண்டலம்; உறுப்பின் இடைப்பரப்பு ; (பழ.) கால அளவு, காலப் பரப்பு.

**tract** [2], *n.* சிறு ஆய்வுக்கட்டுரை ; சமய ஆய்வுக் கட்டுரை ; ரோமன் கத்தோலிக்க திருச்சபை வகையில் துதிப்பாடல் வகை ; (தொ.) Oxford Tracts, Tracts for the Times, சமயத் துறை இயக்கஞ் சார்பாக ஆக்ஸ்போர்டில் 1833-இல் வெளியிடப்பட்ட ஆய்வுக் கட்டுரைகள்.

**trac′table,** *a.* எளிதாக இணக்குவிக்கக்கூடிய ; எளிதிற் பயிற்றுவிக்கத்தக்க ; பணிவிசைவான ; எளிதிற் கையாளத்தக்க ; கையாட்சிக்கு ஒத்திசைந்து போகக்கூடிய ; எளிதில் உருவாக்கத்தக்க ; இசைவிழைவான.

**Tractar′ian,** *n.* ஆக்ஸ்போர்டில் 1833-இல் தொடங்கப்பட்ட சமயத்துறை இயக்கப்பற்றாளர்.

**Tractar′ianism,** *n.* ஆங்கிலத் திருச்சபையில் கத்தோலிக்க நடைமுறைகளைப் புதுப்பிக்கும் முறையில் 1833-இல் தொடங்கப்பட்ட ஆக்ஸ்போர்டு சமயத்துறை இயக்கம்.

**trac′tate,** *n.* ஆராய்ச்சிக் கட்டுரை, ஆய்வுத் தனியேடு.

**trac′tion,** *n.* மேற்பரப்பிழுவை, மேற்பரப்பின் நெடுக இழுத்துச் செல்லல் ; தசைச்சுரிப்பு, தசைப்பரப்பிழுப்பு.

**trac′tional,** *a.* மற்றொன்றினை இழுப்பதற்குரிய.

**trac′tion-engine,** *n.* இழுவை இயந்திரம்.

**trac′tion-wheel,** *n.* இழுவை இயந்திரச் சக்கரம்.

**trac′-tive,** *a.* இழுக்கிற.

**trac′tor,** *n.* இழுவை இயந்திரம், பாட்டையில் அல்லது வயலில் பெரும் பளுவை இழுப்பதற்கான நீராவி இயங்குபொறி ; இயந்திரக் கலப்பை ; முகப்பியந்திர விமானம் ; இயக்கு பொறியை முன்புறமுடைய விமானம் ; இழுவை உந்துவிசைக் கலம் ; தெவ்வுக்காப்பு, விஞ்ஞானப் புனைவுக்கதைவாணர் வழக்காற்றில் சேண்கலப் பகைப்பிழம்பழிப்பமைவு.

**trade,** *n.* வாணிகம் ; தனிமனிதர் வாழ்க்கைத் தொழில் ; வாணிகக் கொடுக்கல் வாங்கல் தொழில் ; வாணிகப் பண்டமாற்று ; வாணிகத்தொடர்பு ; ஒரு தொழில் துறையினர், ஒரு தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் தொகுதி ; கொடுக்கல் வாங்கல் தொடர்பு ; பரிமாற்றம் ; *v.* வாணிகஞ் செய் ; வாங்கி விற்பனைசெய்; வாணிகத் தொடர்புகொள் ; வாணிகச் சரக்கு எடுத்துச்செல் ; வாணிகக் கொடுக்கல் வாங்கல் செய், வாணிகப் பண்டமாற்றுச் செய் ; பழகி ஊடாடு ; வாணிகமாகப் பயன்படுத்தி வாழ்க்கை நடத்து ; ஊதியத் தொழிலாகக் கொள் ; தொழிலாகப் பயன்படுத்து ; (தொ.) Board of Trade, வாணிகத் தொழிலரங்கக் குழு, அரசாங்கத் தொழில்-வாணிகத் துறை ; domestic trade, home trade, உள்நாட்டு வாணிகம் ; foreign trade, ஏற்றுமதி-இறக்குமதி வாணிகம் ; பல நாட்டுச் சரக்குகளின் பண்டமாற்று ; free trade, கட்டற்ற வாணிகம், சுங்கவரி-காப்புவரி-கட்டுப்பாடு முதலியவையற்ற வாணிகம் ; Jack of all trades, பல்தொழில் வல்லவர், எதையுஞ் செய்யக்கூடியவர் ; the trade, (பே-வ.) உணவுப்பொருள்கள் சேகரித்தளிக்க உரிமை பெற்றவர்கள் ; (கப்.) கடற்படையின் நீர்மூழ்கிக்கப்பற்பிரிவு ; Trade Board, சட்டமுறைத் தொழிற் பூசல் தீர்வுக்குழு ; trade cycle, வாணிக நிலை ஏற்றத்தாழ்வு அலைவட்டம் ; trade mark, வாணிக உரிமைக்குறி ; தனிமுறைச் சிறப்பு வழக்காறு ; trade name, வாணிகப்பெயர் ; வாணிக வழக்காற்றுப் பெயர் ; trade on, தன்னலத்திற்குப் பயன்படுத்திக் கொள் ; trade price, இனத்தொழிலர் விற்பனை விலை ; trade show, அகமுறைக்காட்சி, கொட்டகைக்காரர்களுக்கும் திறனாய்வாளர்களுக்கும் தனிப்படக் காட்டப்படும் புதிய திரைப்படக் காட்சி ; trade union தொழிற்சங்கம் ; trick of the trade, வாணிகத் தந்திரம், போட்டியில் வெற்றிகாணும் நடைமுறை.

**trade′-in,** *n.* பகுதிப் பணத்திற்கு ஈடாகக் கொடுக்கப்படுவது.

**trad'er**, *n.* வாணிகர் ; வாணிகக் கப்பல்.

**trades**, *n. pl.* தடக்காற்றுகள், அட்லாண்டிக்-பசிபிக் மாகடற் பகுதிகளில் குறுக்குக்கோடு 30° வடக்கு தெற்குக் குட்பட்ட வெப்பமண்டலத்தினுள் நில நடுக்கோட்டினை நோக்கி நிலவுலகச் சுழற்சி காரணமாக மேற்காக விலகி இடைவிடாமல் வீசும் கடற்றுறைக் காற்றுகள்.

**trades'man**, *n.* வாணிகத்தொழிலர், வாணிகத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர் ; கடைக்காரர், கடை வைத்திருப்பவர் ; கைவினைஞர், பொறித்துறை வினைஞர்.

**trades'people**, *n.* கடைக்காரர் ; வாணிகமக்கள் ; வாணிக வகுப்பினர் ; கைவினைஞர் வகுப்பு.

**trade-un'ionism**, *n.* தொழிற்சங்க முறை.

**trade-un'ionist**, *n.* தொழிற்சங்க முறை ஆதரவாளர் ; தொழிற்சங்க உறுப்பினர்.

**trade'-wind**, *n.* தடக்காற்று.

**trad'ing**, *n.* வாணிகஞ் செய்தல் ; வாணிகத் தொழில் ; கொடுக்கல் வாங்கல் ; ஊதியத்தொழில் ஈடுபாடு ; *a.* வாணிகஞ் செய்கிற ; வாணிகத்துறை சார்ந்த ; ஆதாய நோக்குடைய ; கைக்கூலி வாங்கும் இயல்புடைய ; (தொ.) trading estate, தொழிற்பண்ணை, தொழிலகஞ் சார்பாக நடத்தப்படும் பண்ணை.

**tradi'tion**, *n.* மரபு ; கர்ண பரம்பரை, செவி வழி மரபுரை, வழிவழிச்செய்தி ; (சட்.) வாய்மொழிக் கட்டளை மரபு ; மரபுரைத் தொகுதி, மரபுரை வகுப்பு.

**tradit'ional**, *a.* மரபார்ந்த, வழிவழி மரபான, வரன்முறையான ; வாய்வழி மரபான ; செவிவழி மரபான; சம்பிரதாயமான.

**tradi'tionalism**, *n.* சம்பிரதாய முறைமை; சமயத்துறையில் மட்டுமீறிய வரன்முறைக் கோட்பாடு ; (மெய்.) சமய அருண்மரபு வற்புறுத்தீடு.

**tradi'tionalist**, *n.* சம்பிரதாயப் பற்றுடையவர்.

**traditionalis'tic**, *a.* வரன்முறை மரபு சார்ந்த, வழிவழிவந்த; வரன்முறை மரபு வற்புறுத்துகிற ; சம்பிரதாயச் சார்பான.

**trad'itor**, *n.* (வர.) பணிவிணக்கவாணர், முற்காலக் கிறித்தவ சமய வரலாற்றில் அடக்குமுறைக்குப் பணிந்தவர், அடக்குமுறைக்குப் பணிந்து அருமறை நூல்களையும் திருக்கோயில் உடைமையையும் ஒப்படைத்துவிட்டவர் ; *pl.* traditor'es, trad'itors.

**traduce'**, *v.* பழித்திகழ், பழிதூற்று ; இழித்துரை ; திரித்திகழ்ந்து காட்டு.

**traduce'ment**, *n.* திரிப்பிகழ்வு ; தூற்றரவு.

**tradu'cer**, *n.* திரிப்பிகழ்வாளர் ; தூற்றுபவர்.

**tradu'cian**, *n.* உயிர் முதற்பெருக்கக் கோட்பாட்டாளர், உயிர்களின் உடம்பைப்போலவே உயிர் முதலும் இனவழிப் பெருக்கத்தால் ஆக்கமுறுகிறது என்னுங் கோட்பாட்டாளர்.

**tradu'cianism**, *n.* உயிர் முதற்பெருக்கக் கோட்பாடு.

**tradu'cible**, *n.* தூற்றத்தக்க ; இகழத்தக்க.

**Trafal'gar Square**, *n.* லண்டன் மாநகரத்துப் பெருஞ் சதுக்கம் ; பொதுக்கிளர்ச்சி ஆர்ப்பாட்டத்திற்குரிய இடம்.

**traff'ic**, *n.* வாணிக நடவடிக்கை ; தனிச்சரக்கு வகையில் வாணிகம் ; வாணிகத்தொடர்பு ; கொடுக்கல் வாங்கல் தொடர்பு; வாணிகப் போக்கு வரவு; போக்குவரவுத் தொடர்பு; போக்குவரவு நடமாட்டம்; ஊர்தித்துறை நடவடிக்கைகள் தொகுதி ; போக்குவரவுத்துறை ஆளேற்ற அளவு ; பண்டங்களின் இடப்பெயர்வு; சரக்குஇடப்பெயர்வளவு; ஆள்-சரக்குப் போக்குவரவுத் தொகுதி ; போக்குவர வடர்த்தி அளவு ; செயல்வகைத் தொடர்பு ; *v.* வாணிகஞ் செய் ; வாணிகத் தொடர்புகொள் ; கொடுக்கல் வாங்கலில் ஈடுபடு ; பண்டமாற்று மேற்கொள் ; இழிதொழில் வாணிகஞ் செய் ; (தொ.) traffic circle, ஒரு திசைச் சுற்றுவழிப்பாதை, இடைவெட்டு இடம்புரிச் சுற்று அமைவு.

**traff'icator**, *n.* சுட்டு முட்கை, உந்துவண்டித் திசை காட்டுங் கை.

**traff'icked**, *v.* traffic என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**traff'icking**, *n.* வாணிகஞ் செய்தல் ; வாணிகத்தொடர்பு கொள்ளல் ; இழிதொடர்பு கொள்ளல் ; *a.* வாணிகத்தொடர்பு கொள்கிற ; இழிதொடர்பு கொள்கிற.

**trff'icless**, *a.* போக்கு வரவற்ற.

**traff'ic-lights**, *n. pl.* சந்தி வழிகாட்டி நிற அடையாள விளக்கம்.

**traff'ic-man'ager**, *n.* ஊர்திப்போக்குவரத்து மேற்பார்வையாளர்.

**traff'ic-returns**, *n. pl.* போக்கு வரவு பற்றிய காலமுறை விவர அறிக்கைப் பட்டியல்.

**trag'acanth**, *n.* மருந்துப்பிசின் வகை ; காலிக்கோ கட்டடத்துக்குப் பயன்படும் பிசின்.

**traged'ian**, *n.* துயர்நாடக ஏட்டாசிரியர், துயர்நாடக எழுத்தாளர் ; துயர்நாடக நடிகர்.

**tragedienne'**, *n.* துயர்நாடக நடிகை ; துயர்நாடக ஏட்டாசிரியை.

**tra'gedy**, *n.* துன்பியல் நாடகம் ; துன்பக்கதை ; அவல நிகழ்ச்சி ; இடர் ; பெருவிபத்து.

**tra'gic, tra'gical**, *a.* துன்பியல் நாடகஞ் சார்ந்த ; துயர் நிறைந்த ; பெருவருத்தந் தருகிற ; வாழ்விறுதிக்குரிய ; வரும் கடுந்துயர் முடிவு சுட்டிய ; (தொ.) tragic circumstances, இரங்கத்தக்க சூழல் ; tragic irony, அவல நகை, நவிலும் நடிகன் அறியாது அவையோர்க்கு மட்டுமே வரவிருக்கும் இடரினைக் குறிப்பில் தெரிவிக்கும் உள்ளுறை முரண் சுவை ; tragic scene, மனத்தை உருக்கும் அவலக் காட்சி ; tragic voice, அவலத்தொனி, சோகக் குரல்.

**tra'gically**, *adv.* அவலமாய் ; வருந்தத்தக்க முறையில் ; பின் வரும் இடரின் முன் குறிப்பாக.

**tragicom'edy**, *n.* இன்பியல் துன்பியல் கலவை நாடகம், இன்பியல் முடிவுடைய துன்பியல் நாடகம்.

**tragicom'ic, tragicom'ical**, *a.* இன்பதுன்பக் கலவை நாடகஞ் சார்ந்த ; இன்பதுன்பக் கலவையான.

**trag'opan**, *n.* கொம்புபோன்ற முனைப்புடைய பகட்டு வண்ணக் கோழிவகை.

**trail**, *n.* தோகை, நீள்வாற் பகுதி ; பின்புற நீள்தொங்கல் ; ஆடை நீள்தொங்கல்; நத்தை முதலியவற்றின் ஊர்தடம் ; நிலத்திழுப்புத் தடம் ; ஒளிசெல் தடம் ; விண்மீன் செல்தட ஒளிக்கோடு ; புகைச்சுருள் தடம் ; செல்தடம் ; பீரங்கி வண்டியின் பின்புற அடிப்பகுதி ; *v.* நிலத்திலிட்டு இழுத்துச்செல்; தடம் பின்னுக விட்டுச்செல் ; துப்பாக்கி முதலியவற்றைக் கையில் தொங்கலாகத் தூக்கிச் செல் ; தடம் பின்பற்றிச் செல் ; மோப்பந் தொடர் ; தடந்தேடிக் கண்டுபிடி ; இழுத்திழுத்து நட ; சோர்வுடன் தளர்ந்து தள்ளாடிக்கொண்டே மெள்ள மெள்ள நட ; பின்னிடைவுற்றுச் செல் ; பின்னே கிடந்து தொங்கு ; நெடுநீளமாக நீண்டுகிட ; நெடுநீளமாக மிதந்து தாழ்வுறு ; வளைந்து வளைந்து செல் ; முன்னே வழி காட்டிக்கொண்டு செல் ; வீசி வாங்கிச் செல்வுறு ; கிடந்து தொங்கு ; தொங்கலாகக் கிடந்தாடு ; கிடந்து படர் ; தழுவிப் படர்ந்தேறு ; கவிந்து படர்ந்து தொங்கு ; (சித்.) தோகை வரி ஒப்பனை செய் ; (பே-வ.) கேலிசெய் ; (தொ.) at the trail, (படை.) துப்பாக்கியைக் கையில் தொங்கலாகக் கிடை நிலையில் கொண்டபடி ; trail one's coat, வலியச் சண்டைக்கு இழு.

**trail'er**, *n.* நெடுநீளமாக இழுத்துச் செல்பவர் ; நெடுநீளமாக இழுத்துச்செல்வது ; தடங் காண்பவர் ; மோப்பம் பிடிக்கும் நாய் ; படர்கொடி ; இழுவைக்கலம், இழுக்கப்படும் வண்டி ; முனைமுக நாட்படம், புதிதாக முன்கூட்டிக் காட்டப்படும் மாதிரி விளம்பரத் திரைப்படம் ; ஊர்திமனை, உந்துகலம் இழுக்கும் குடியிருப்பு வண்டி.

**trail'ing**, *n.* இழுத்துச்செல்கை ; தடம் பின்பற்றுகை ; நீள் தொங்கல் ; நெடுநீளமாகப் பின்செல்கை ; படர்வு ; *a.* இழுத்துச் செல்கிற ; தவழ்கிற ; தொங்குகிற ; படர்கிற.

**train[1]**, *n.* இரயில்வண்டி; வண்டித்தொடர்; தொடர் ஊர்தி ; ஊர்திச் சக்கர இணைப்புக்கோவை ; விலங்கு கால்நடை வரிசை ; பின்தொடர் ஆயம், பரிவாரம் ; இழுவைப் பின் தொங்கலாடை ; ஆடைப் பின்தொங்கல்; பாவாடைத் தொங்கல் ; மோப்பத் தூண்டில் ; மோப்ப இழுப்புச்சாதனம் ; பின்னெட்டுத் தொங்கல் ; தோகை, வால் இறகுத் தொங்கல் ; தொடர் இறகுக்கோவை ; சுரங்க எரிபொருள் கண்ணித் தொடர் ; தொடர்கோவை ; தொடர்வரிசை ; நீள்வரிசை ; நீளணி ; படைத்துறைக் கருவிகல அணி; சங்கிலித்தொடர்பு; (பழ.) நேர்மைச் செவ்வி, ஒழுங்கு நேர்த்தி ; *v.* பயிற்று; பயிற்சியளித்துத் தக்க நிலைக்கு உருவாக்கு ; விரும்பியபடி பழக்கு ; வேண்டும் செயல் செய்யப் பழக்கப்படுத்து ; குதிரை முதலியவற்றின் வகையில் பயிற்றுவித்துச் செவ்வியூட்டு ; செடிகொடி மரங்களை விரும்பிய வடிவுறக் கத்தரித்துச் செப்பனிடு ; உடற்பயிற்சியினால் உடலை உருட்சிதிரட்சியுடைய தாக்கு; முயன்று பழக்குவித்து விரும்பிய பண்புடையதாக்கு; முயன்று பண்பு மாற்றியமை ; பயின்று பழகு ; அம்பு-துப்பாக்கி வகையில் குறிவைத்துப் பழகு ; இலக்காகக் கொள்ளு; துப்பாக்கிக் குண்டு வகையில் குறி பிழை ; (தொ.) in fine train, மிகச் செம்மையாக; in the train of, பின்தொடர்ந்து ; உழையர் வரிசையில் ஒருவராக; பின்விளை பயனாக; miss one's train, ஊர்தியேறத் தவறிவிடு ; குறிக்கொண்ட திட்டம் நிறைவேறப்பெறுமல் சறுக்கிவிடு.

**train[2]**, *n.* திமிங்கில நெய்.

**train'-band**, *n.* (வர.) முற்கால லண்டன் நகர்க் காவற் படைப் பிரிவு.

**train'-bearer**, *n.* பின்தாணையர், ஆடைத் தொங்கலேந்தி.

**trained**, *a.* பயிற்றுவிக்கப்பட்ட ; திறமைபெற்றுள்ள ; தேர்ந்த ; உழையர் வரிசையினையுடைய.

**trainee'**, *n.* பயிற்சியர்.

**train'er**, *n.* பயிற்சியாசிரியர் ; பந்தயங்கட்குப் பயிற்சி தருபவர்.

**train'-ferry**, *n.* புகைவண்டியைக் கடற்பகுதிமீது கடத்தி விடுங் கப்பல்.

**train'ing**, *n.* பயிற்சி ; (தொ.) in-service training, வேலையிலிருந்தே பயிற்சி பெறுதல்.

**train'ing-bit**, *n.* சண்டிக் குதிரை வாய்ப்பூட்டு.

**train'ing-college**, *n.* ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி ; பயிற்சிக் கல்லூரி.

**train'ing-school**, *n.* ஆசிரியப் பயிற்சிப் பள்ளி ; பயிற்சிப் பள்ளி.

**train'ing-ship**, *n.* கடற்படைப் பயிற்சி நாவாய்.

**train'less**, *a.* தொடர்ச்சியற்ற ; ஊர்தியற்ற ; இருப்பூர்தி இல்லாத.

**train'-mile**, *n.* இரயில் மைல், இரயிலோட்டத் தொலைவு அலகு.

**train'-oil**, *n.* திமிநெய், திமிங்கிலக் கொழுப்பெண்ணெய்.

**trait**, *n.* தனிக்கூறு ; தோற்றக்கூறு ; சாயற்கூறு, படத்தின் பண்புத்திறம் ; பழக்கவழக்க வகையில் தனிக்கோட்டம்; பண்பின் தனித்திறக் கூறு.

**trait'or**, *n.* துரோகி, காட்டிக் கொடுப்பவன்; இனப்பகைவன்.

**trait'orous**, *a.* துரோகமான ; மீறியெதிர்க்கிற ; நம்பிக்கை மோசஞ் செய்கிற; கடமை எறிந்து நடக்கிற; நட்புக்கேடான; நன்றிக்கேடான.

**trait'orously**, *adv.* துரோகமாய்.

**trait'ress**, *n.* காட்டிக்கொடுப்பவள் ; சதிகாரி.

**traj'ect[1]**, *n.* கடவு, கடத்தல் ; பரிசல் கடவுத்துறை ; இடமாற்றம்.

**traject'**, *v.* கடந்து இட்டுச்செல், கடந்து கொண்டுசெல் ; கடக்கச்செய் ; கடந்து அனுப்பு, இடம் பெயர்த்தனுப்பு.

**trajec'tion**, *n.* உந்தீடு, தள்ளிவிட்டனுப்புதல், உளத்தில் உந்துதடப் பதிவீடு.

**trajec'tory**, *n.* விசைவீச்சு வளைவு; தடங்கலிலா நிலை ஏவுகல வளைவீச்சு நெறி ; (வடி.) சமவெட்டு வளைகோடு, வளைவுக் கூறுகள் பலவற்றையும் சமகோணத்தில் வெட்டும் வளைவரை.

**tram[1]**, *n.* அமிழ்தண்டூர்தி, பொதுவீதிகளில் அமிழ்தண்டவாளத்தின்மீது செல்லும் உந்துகல ஊர்தி; அமிழ் தண்டவாளப் பாட்டை ; அமிழ்தண்டவாளம் ; சுரங்கச் சரக்கேற்று வண்டி; *v.* அமிழ்தண்டூர்தியிற் செல் ; அமிழ் தண்டூர்தியிற் கொண்டு செல்.

**tram[2]**, *n.* ஈரிழைப் பட்டுநூல்.

**tram[3]**, *n.* நீள்வட்ட வரை கருவி.

**tram[4]**, *n.* இயந்திரத்தில் இசைவிழைவுப் பொறியமைவு.

**tram'-car**, *n.* அமிழ் தண்டூர்தி, டிராம் வண்டி.

**tram'-line**, *n.* அமிழ்தண்டூர்திப்பாட்டை, அமிழ்தண்டவாளப் பாட்டை.

**tramm'el**, *n.* மும்மடிப் பை வலை ; புள்வலை ; தொழுமரம், தண்டனைக் கால்கட்டை ; கால்நடைக் கொண்டிக் கட்டை ; நீள்வட்ட வரை கருவி ; அகப்பைமாட்டி ; இயந்திரத்தில் இசை விழைவுப் பொறியமைவு ; சிறைக்கட்டு, தளைக்கட்டு ; *v.* தொழுமரத்தில் இடு, தொழுமரத்திலிட்டுப் பூட்டித் தண்டனை செய் ; கொண்டிக்கட்டை மாட்டு ; கால் கட்டிடு; தளையிடு ; செயலில் தடங்கல் செய்.

**tramm'el-net**, *n.* மும்மடிப் பை வலை.

**tramon'tane**, *n.* அப்பாலையர், ஆல்ப்ஸ் (Alps) மலைத்தொடருக்கு வடக்கே வாழ்பவர் ; அன்னியர் ; நாகரிகமற்றவர் ; *a.* அப்பாலைய, ஆல்ப்ஸ் மலைத்தொடருக்கு வடக்கிலுள்ள.

**tramp**, *n.* மிதிப்பொலி, கால்மிதித்து நடக்குமோசை ; புதைமிதியோசை ; குதிரைக் குளம்பொலி ; கடுமிதிநடை ; கால்நடைப் பயணம் ; மண்வாரி மிதிப்பவர் புதைமிதி காப்புத்தகடு ; மண்வாரிக் கால்மிதித் தகடு; பனிமிதிக் காப்புத்தகடு ; தெருச்சுற்றி ; பாட்டைசுற்றி ; நாடுசுற்றி ; வேலைதேடிச் சுற்றி ; நாடோடி ; கடல்சுற்றி வாணிகச்சரக்குத் தோணி ; தனி விலக்கோ நெறியோ இல்லாமல் வேண்டிய வழித் திரியும் சரக்கு விற்பனைப்படகு ; *v.* மிதி ; மிதித்து நட, காலழுத்தி நட ; கால்நடையாகவே கட ; வேலையின்றித் திரி ; தெருச் சுற்றியாய் வாழ் ; *adv.* உரத்த காலடி ஓசையுடன்.

**tramp'er**, *n.* கால்நடைப் பயணி.

**tram'ple**, *n.* மிதிப்பொலி ; காலறைவொலி ; மிதிப்பு ; மிதிக்குஞ் செயல் ; *v.* மிதித்துத் துவை ; அறைந்து மிதி ; சவட்டி நசுக்கு, காலின் கீழிட்டரை ; மிதித்து நட ; மேலேறி மிதி ; முரட்டுத்தனமாய் நட ; வெறுப்புடன் நட.

**tram'pler**, *n.* மிதிப்பவர்; மிதித்துத் துவைப்பவர்; கொடுமைப் படுத்துபவர்.

**tram'pling**, *n.* மிதித்துத் துவைப்பு ; மிதித்தரைப்பு ; *a.* மிதித்துத் துவைக்கிற ; மிதித்தரைக்கிற.

**trampolin'**, **trampoline'**, *n.* வீழ்தடுப்புறை, கழைக்கூத்தாடிகள் பயன்படுத்தும் திண்ணுறை மெத்தை.

**tramp'-pick**, *n.* கடப்பாறை, நெம்புதுடுப்பு.

**tram'road**, *n.* அமிழ் தண்டவாளப்பாட்டை ; பாவுபாட்டை.

**tram'-stop**, *n.* அமிழ் தண்டூர்தி நிறுத்திடம்.

**tram'way**, *n.* அமிழ் தண்டூர்திப் பாட்டை, அமிழ் தண்டவாளப் பாட்டை.

**trance**, *n.* சுழுத்தி நிலை, மெய்ம்மறதி நிலை ; திப்பிய மயக்கம், தன்னிலையழிந்த வெறியாட்டு நிலை ; திப்பிய உவகை, வெறி மகிழ்ச்சி ; தன்வயமிழந்த நிலை ; வசியவெறி மயக்கம் ; (மரு.) தன்மறதி நிலை; (மரு.) வெறி மயக்க நிலை, உயிர்க்கூறெடுங்கிச் சூழலுணர்வு முழுதும் ஓய்வுற்ற நிலை ; *v.* (செய்.) தன்னைமறந்து ஈடுபடுவி, பரவசப்படுத்து ; தன்னை மறந்த கவர்ச்சியுட் படுத்து ; பெருமகிழ்ச்சிக்குள்ளாக்கு.

**tranq'uil,** *a.* சாந்தமிக்க; நீடமைதி வாய்ந்த; வீறமைதி சான்ற; கலங்காத.

**tranquill'ity,** *n.* நீடமைதி, சாந்தி; உலைவின்மை.

**tranquilliza'tion,** *n.* அமைதியூட்டல்; அமைதிப்படுத்துதல்.

**tranq'uillize,** *v.* அமைதிப்படுத்து; உலைவகற்று.

**tranq'uillizer,** *n.* அமைதி செய்பவர்; நோவகற்றும் மருந்து.

**tranq'uillizing,** *a.* அமைதியூட்டுகிற.

**tranq'uillizingly,** *adv.* அமைதியூட்டும் முறையில்.

**transact',** *v.* செயல் முறையாற்று, நடைமுறைப்படுத்து; தொழில் முறை வகையில் நடத்து.

**transac'tion,** *n.* தொழில் நடைமுறை; தொழில் முறைச் செயலாட்சி; வாணிக நடவடிக்கை; தொழின்முறை நடவடிக்கை; இடைபாடு, தொழின்முறைத் தொடர்பு; (சட்.) சட்ட உரிமை பாதிக்குஞ் செயல்; (சட்.) இருதிற விட்டுக் கொடுப்புச் சமரசம்.

**transac'tions,** *n. pl.* நிலைய அறிக்கைகள், நிலைய வெளியீடுகள்.

**transac'tor,** *n.* செயல் முறையாளர், நடத்துபவர்; தொழின் முறை நடவடிக்கையாளர்.

**transal'pine,** *n.* அப்பாலையர், ஆல்ப்ஸ் (Alps) மலைத் தொடருக்கு வடக்கே வாழ்பவர்; *a.* அப்பாலைய, ஆல்ப்ஸ் மலைத்தொடருக்கு அப்பாலுள்ள.

**trans-Appalach'ian,** *a.* இத்தாலி நாட்டில் அபலேஷியன் மலைத்தொடர் கடந்த.

**transatlan'tic,** *a.* அட்லாண்டிக் (Atlantic) மாகடலுக்கு அப்பாலுள்ள.

**trans-Caucas'ian,** *a.* காக்கஸஸ் மலைக்கு அப்பாலுள்ள.

**transceiv'er,** *n.* வானொலி இருமைக் கருவி, ஒலி வாங்கவும் அனுப்பவும் பயன்படும் இரு திசைக்கருவி.

**transcend',** *v.* எல்லை கடந்து மேம்படு; அனுபவ வரம்பு மீறு, அறிவின் பிடிக்கு அப்பாற் செல்; எல்லை கட, வரம்பு மீறு.

**transcen'dence, transcen'dency,** *n.* கடந்த நிலை; அறிவு வரம்பு கடந்த நிலை, தத்துவங் கடந்த நிலை; விஞ்சிய நிலை, மனவாசகங் கடந்தமை.

**transcen'dent,** *n.* கடந்த நிலையுடையது; தத்துவங் கடந்த பொருள்; கட்டுவரம்புகளற்ற பொருள்; *a.* எல்லைகடந்த, வரம்பு மீறிய; விஞ்சிய, மேம்பட்ட; இனத்துட் சிறந்த, மீஉயர்வு வாய்ந்த, தலைசிறந்த; அனுபவ எல்லை தாண்டிய; எல்லையற்ற ஆராய்ச்சி நுணுக்கமுடைய; ஆராய்ச்சிச் சிக்கல் வாய்ந்த; வரம்புமீறிய கற்பனைத் திறங்கொண்ட; கேவல நிலையான, கடவுள் வகையில் பற்றுக்கோடுகள் அற்ற; புலனுகர்வுக்காட்சிக்கு அப்பாற்பட்ட, காண்டு (Kant) என்ற மெய்விளக்க அறிஞர் கோட்பாட்டின்படி பற்றியுணர முடியாத, அறிகூறினுள் அடங்காத; நடுநிலைக்கால மெய்விளக்கக் கோட்பாட்டின்படி மெய்ப்பொருள் வகுப்பு முறைகள் பத்திலும் அடங்காத, மெய்ப்பொருள் வகுப்பு முறைக்கு அப்பாற்பட்ட.

**transcenden'tal,** *n.* கடந்த தத்துவம்; அறிவெல்லை கடந்த கருத்து; அறிவெல்லை கடந்த கருத்துச் சுட்டிய பதம்; *a.* காண்டு (Kant) என்ற மெய்விளக்க அறிஞரின் தத்துவஞ் சார்ந்த; காண்டு என்பாரின் கோட்பாட்டினுல் குறிக்கப்பட்ட; காண்டு என்பாரது கொள்கைத் திறங்கள் செறிந்த; காண்டு என்பாரின் கொள்கைப்படி அனுபவங் கடந்ததாயினும் அனுபவங்களுக்கு மூலாதாரமான; நடுநிலைக்கால மெய்விளக்கக் கோட்பாட்டின்படி மெய்ந்நிலை வகுப்பு முறைகள் பத்தினுள் அடங்காது அவற்றிற்கு அப்பாற்பட்ட; புறப்பொருள்கள் யாவும் அகநிலை வெளிப்பாடுகளே என்ற ஷெல்லிங் (Schelling) என்பாரின் மெய்விளக்கஞ் சார்ந்த; புறநிலை அறிவு தாண்டிய; இயற்கை கடந்த; மனித எல்லைக்கு அப்பாற்பட்ட; பகுத்தறிவுக் கெட்டாத, அறிவெல்லை கடந்த; பொருண்மை நிலை கடந்த, கனவியலான; எல்லைமீறிக் கருத்தியலான, மட்டுமீறிய கற்பனைத் திறம் வாய்ந்த; (பே-வ.) தெள்ளிதிற் புலப்படாத, தெளிவற்ற; (பே-வ.) புரியாத, விளங்காத; (கண.) வரைநிலை எண்கள் கொண்டு தொடர்புபடுத்திக் காட்டமுடியாத; (தொ.) transcendental curve, வரைவில் அளவை குறித்த வளைகோடு; transcendental object, அறிய முடியா அறிவு மூலப்பொருள்.

**transcenden'talism,** *n.* ஷெல்லிங் (Schelling) - எமர்சன் (Emerson) ஆகியோரின் மெய்விளக்கக் கோட்பாடு; அனுபவங் கடந்த அறிவின் மூல தத்துவ ஆராய்ச்சி; அனுபவச் சார்பற்ற மனத்தின் மூல அறிவுத் தத்துவப் பகுதி ஆராய்ச்சி; மெய்விளக்கத் துறையின் தெளிவற்ற மருட்சியூட்டுங் கூறு.

**transcenden'talist,** *n.* ஷெல்லிங் (Schelling) - எமர்சன் (Emerson) ஆகியோரின் மெய்விளக்கக் கோட்பாட்டாளர்; அனுபவங்கடந்த அறிவு மூலதத்துவ ஆராய்ச்சியாளர்.

**transcenden'tally,** *adv.* தனிமுதன்மையாக, கடந்த நிலையில்.

**transcenden'tly,** *adv.* எல்லை கடந்து, உச்ச நிலையில்.

**transcontinen'tal,** *a.* கண்டங்கள் கடந்து செல்கிற.

**transcribe',** *v.* பார்த்துப் படியெடு, பார்த்து எழுது; மேல் ஒலிபரப்புக்கீ பதி, இனி ஒலிபரப்புவதற்காகப் பதிவு செய்து வை.

**transcrib'er,** *n.* பார்த்தெழுதுபவர், பார்த்துப் படி செய்பவர்.

**tran'script,** *n.* எழுத்துப்படி.

**transcrip'tion,** *n.* படியெடுத்தல்.

**transcrip'tive,** *a.* கைப்படி எடுப்பான.

**transcult'uration,** *n.* இடைமாறுதற் காலப் பண்பு மாற்றம்.

**transcu'rrent,** *a.* குறுக்காய் ஓடுகிற; குறுக்கு மறுக்காகச் செல்லுகிற.

**transdu'cer,** *n.* விசைமுறை மாற்றமைவுக் கருவி; நுண்ணிடை இயக்கமானி.

**transec'tion,** *n.* குறுக்கு வெட்டு; குறுக்கு வெட்டுப் பகுதி; குறுக்கு வெட்டு முகப்பு.

**tran'sept,** *n.* புடைச்சிறை, சிலுவை வடிவான திருக்கோயிலின் குறுக்குக் கைப்பகுதி.

**trans'fer** [1], *n.* இடமாற்றம்; பணியிட மாற்றீடு; தலை மாற்றம், புடைமாற்று; பொருளின் கைமாற்றிக் கொடுப்பு; மாற்றி வழங்கீடு; உடைமை மாற்றீடு; உரிமை மாற்றீடு; பொறுப்பு மாற்றீடு; பத்திர மாற்றீடு; உரிமை மாற்றுப் பத்திரம்; பட உருப்பதிவு மாற்றீடு; உருப்பதிவு மாற்றீட்டுப் படம்; ஒட்டுப்படம், தாள் மாற்றி ஒட்டக்கூடிய விளையாட்டுப்படம்; படைப்பிரிவு மாற்றீட்டு வீரர்; மாற்றீட்டுப் பொருள்; மாற்றப்படவேண்டிய பொருள்; மாற்றப்படத்தக்க சீட்டு.

**transfer'** [2], *v.* இடம் விட்டு மாற்று; புடைமாற்று; தலைமாற்றியமை; திட்டவகையில் இடைமாற்றியமை; ஆள் வகையில் பணிமாற்றலாக்கு; பொருள் கைமாற்றிக்கொடு; ஆள்மாற்றி வழங்கு; உடைமை மாற்றிக்கொடு; மாற்றி ஒப்படை; உரிமை மாற்றீடு செய்; பொறுப்பு மாற்றீடு செய்; பத்திர மாற்றிக்கொடு; படத்தைப் பரப்பில் இடமாற்று; பட வகையில் வேறு பரப்பிற்கு மாற்றுதல் செய்; இட மாற்றித் தீட்டு, பார்த்து வேறிடத்தில் தீட்டு; சுவர் பலகை முதலியவற்றிலிருந்து எடுத்து வரை; பார்த்து எடுத்து எழுது.

**transferabil'ity,** *n.* மாற்றுரிமை, மாற்றலாந் தன்மை.

**trans'ferable,** *a.* மாற்றத்தக்க, மாற்றுரிமை வாய்ந்த; (தொ.) the transferable vote, மாற்று வாக்கு; ஒற்றை மாற்று வாக்கு முறை.

**trans'fer-book,** *n.* உடைமை-பங்கு முதலியவற்றின் வகையில் மாற்றீட்டுப் பதிவேடு.

**trans'fer-days,** *n. pl.* தேசியப் பொருளகத்தின் இணைப்பு நிதி நாட்கள், இணைப்பு நிதிக் கொடுக்கல் வாங்கலுக்காக ஒதுக்கப்பட்டுள்ள சனி ஞாயிறு நீங்கிய வார நாட்கள்.

**transferee′**, *n.* பணியிடம் மாற்றப்படுபவர்.
**trans′ference**, *n.* இடமாற்றீடு; பணியிட மாற்றீடு; திட்ட இடைமாற்றம்; மாற்றிக் கொடுப்பு; மாற்றி வழங்கீடு; மாற்றி ஒப்படைப்பு; படைத்தள மாற்றம்.
**trans′fer-ink**, *n.* படியொட்டு மை, ஒட்டுத்தாளிலிருந்து படிக்கல்லுக்கு மாற்றப்படும் படத்திற்கான மை.
**trans′feror**, *n.* (சட்.) பத்திரம் மாற்றிக் கொடுப்பவர்.
**trans′fer-paper**, *n.* ஒட்டுத்தாள்.
**transferr′er**, *n.* இடமாற்ற ஏற்பாடு செய்பவர்; இடமாற்றுபவர்; இடமாற்றிக்கொண்டு செல்பவர்; மாற்றி வைப்பவர்; பணியிட மாற்றுபவர்; பணிமாற்று ஏற்பாடு செய்பவர்; மாற்றிக் கொடுப்பவர்; உரிமை மாற்றீடு செய்பவர்; பத்திர மாற்றீடு செய்பவர்; படமாற்றொட்டாளர்; அச்சுப்படி மாற்றுபவர்; பத்திர மாற்றிக் கொடுப்பவர்.
**transfigura′tion[1]**, *n.* தோற்ற மாற்றம்; நிலை மாற்றம்; தோற்றப் பொலிவுப் பேறு.
**Transfigura′tion[2]**, *n.* இயேசுநாதரின் திருவுரு மாற்றம்; திருவுருமாற்ற நாள்; திருவுருமாற்றத் திருநாள்.
**transfig′ure**, *v.* தோற்ற மாற்று; உருமாற்று; உயர்நிலைப் படுத்து.
**transfix′**, *v.* குத்தியூடுருவச் செல்; குத்திப் பதித்து வை; குத்தி நிற்கச் செய்; விறைத்து நிற்கச் செய்; ஊன்றி நிற்கச் செய்.
**transfi′xion**, *n.* குத்தி ஊடுருவுகை; (அறு.) அறுவையில் புடைக்குத்தீடு, உறுப்பறுவைக்கு முன் உள்ளிருந்து புறமாக இழைமங்களை அகற்றுவதற்கான பூர்வாங்கச் செயலாக உறுப்பின் குறுக்காகச் செய்யும் வரிக்குத்தீடு.
**transform′**, *v.* உருமாற்று; தோற்றம் மாற்றுவி; பண்பு மாற்றஞ்செய்; அமைப்பு மாறுபாடு செய்; பெரு மாறுதல்கள் செய்து தோற்றமாற்று; கூறுக்க மாறுபாடு உண்டு பண்ணு; பெரு மாறுபாடுகளால் பண்பு மாறுவி; மின்னியல் மாற்று, மின்னியல் மாறுபாடுறு; இயல்பு மாறுவி; உரு மாறு, தோற்ற மாறு; இயல் மாறு; கூறுக்க மாறுபாடுறு; பண்பு மாறுபாடுறு.
**transform′able**, *a.* உரு மாற்றத்தக்க, தோற்ற மாற்றத்தக்க; படிமாற்றத்தக்க, நிலைமாற்றத்தக்க.
**transforma′tion**, *n.* தோற்ற மாற்றீடு; தோற்ற மாற்றம்; தோற்ற மாறுபாடு, மாறிய தோற்றம்; உருமாற்றீடு; உரு நிலை மாற்றம்; உருமாறுபாடு; மாறிய உருவம்; பொருளாக்க மாறுபாடு; அமைப்பு மாறுபாடு; நிலைமாற்றீடு; நிலைமாற்றம்; பொய்ம்மயிர்த் தொப்பி, மகளிர் செயற்கை முடி; அபிநயக் கூத்தில் இறுதிக் கோமாளியாட்ட மாறுபாட்டுக் காட்சி; (உட.) குருதிச் செறிவு மாற்றம்; (மரு.) உடலின் இழைம மாறுபாட்டுக் கோளாறு, ஓர் உறுப்பின் இழைமம் இன்னோருறுப்பின்பால் படரும் நோய்நிலைக்கூறு; (இய.) பொருள் நிலை மாறுபாடு, திட்ப நீர்ம வளிவடிவங்களில் பொருள்களுக்கு ஏற்படும் இடைநிலை மாற்றம்; (கண.) அளவைப் படிமாற்றீடு; (கண.) அளவைப் படிமாற்றம்; (கண.) படி மாறிய அளவை; (தொ.) transformation scene, அபிநயக் கூத்தில் இறுதிக்கோமாளியாட்ட மாறுபாட்டுக் காட்சி.
**transform′ative**, *a.* உருமாற்றும் இயல்புடைய; உறுமாற்றுப் போக்குடைய; உருமாறும் பாங்குவாய்ந்த; உரு மாற்றஞ் சார்ந்த.
**transformed′**, *a.* உருமாற்றப்பட்ட; மாறுபடு தோற்றம் வாய்ந்த; படிமாறிய; நிலைமாறிய; உருத்திரிபுற்ற.
**transform′er**, *n.* உருமாற்றுபவர்; தோற்றம் மாற்றுபவர்; உருமாற்றுவது; மின்னியல் விசை மாற்றமைவு.
**transform′ism**, *n.* (உயி.) உயிரின மலர்ச்சியிடையே இன வகைமாற்றம்; (உயி.) உயிரின மலர்ச்சியிடையே இனவகை மாற்றக் கோட்பாடு; (உயி.) நுண்ம ஒருங்கியைவாக்கக் கோட்பாடு, நுண்ணுயிர்கள் கூட்டமைவாகச் சேர்ந்தே உறுப்பமைதியுடைய உயர் உயிரினங்கள் தோன்றுகின்றன என்னும் உயிரியற் கோட்பாடு.
**transform′ist**, *n.* (உயி.) இனவகை மாற்றக் கோட்பாட்டாளர்; (உயி.) நுண்ம ஒருங்கியைவாக்கக் கோட்பாட்டாளர்.
**trans-fron′tier**, *a.* எல்லைப்புறந் தாண்டிய; இந்தியாவில் எல்லைப்புற மாகாணங் கடந்த.
**transfuse′**, *v.* கலத்திலிருந்து கலத்திற்கு ஊற்றிக் கல; ஊடு கலக்கச் செய், ஒன்றுடன் ஒன்று கலந்து இழையச் செய்; பிறிது குருதியூட்டு, பிறர் குருதியேற்று, ஒருவர் அல்லது ஒன்றன் குருதியை இன்னொருடம்பினுட் புகுத்து; குருதி நீர்மமேற்று, குருதி இழப்பு ஈடு செய்யக் குருதி நீர்மத்தை நாடி நாளங்களில் குத்தி உட்செலுத்து; பிறிது குருதியூட்ட மூலம் பண்டுவஞ் செய்; ஊடுபடர்வி, ஊடுருவிப் பரவச் செய்; பண்பூட்டு, பண்பு படர்வி; படர்வித்துப் பண்புமயமாகச் செய்.
**transfu′sion**, *n.* பிறிது குருதியேற்றம்; ஊடு கலப்பு; ஊடுபடர்வு; ஊடுபடர்விழைவு; பண்புக் கலப்பிழைவு.
**transfu′sionism**, *n.* பிறிது குருதியேற்றுப் பண்டுவ ஆதரவுக் கோட்பாடு.
**transfu′sionist**, *n.* பிறிது குருதியேற்றப் பண்டுவ நம்பிக்கையாளர்.
**transfus′ive**, *a.* ஊடுகலக்கும் இயல்புடைய; ஊடுகலக்கும் ஆற்றலுடைய; ஊடுகலக்கச் செய்யக்கூடிய.
**trans-Ganget′ic**, *a.* கங்கையாறு கடந்த.
**transgress′**, *v.* மீறு; வரம்பு கடந்து செயலாற்று; ஆணை திறம்பு; மாறுக நட; பெரும்பிழை செய்; பழிச் செயல் செய்.
**transgre′ssion**, *n.* ஆணை பிழைப்பு, மீறுவினை; வரம்பு கடப்பு; மாறு நடத்தை; பழிச்செயல்.
**transgre′ssional**, *a.* மீறுகை சார்ந்த; தெய்வ ஆணை மீறுகைக்குரிய.
**transgre′ssive**, *a.* மீறும் இயல்புடைய; தெய்வ ஆணை திறம்புதல் சார்ந்த; பழிசேர் போக்குடைய.
**transgress′or**, *n.* மீறுவோர்; மாறி நடப்போர்; வரம்பு கடப்போர்.
**transhum′ance**, *n.* கால்நடைப் பருவகாலப் புடையெழுச்சி, பருவகாலத்திற்கு ஏற்றபடி மேய்ச்சலுக்காகக் கால்நடைகளை இடத்துக்கிடம் கொண்டேகுஞ் செயல்.
**transhume′**, *v.* கால்நடைகளைப் பருவகாலத்திற்கேற்ப மேய்ச்சல் நிலமாற்றி ஓட்டிச்செல்.
**trans′ience, trans′iency**, *n.* நிலையாமை; சிறுபோதைய நிலை; நிலையற்ற தன்மை; உறுதிப்பாடற்ற தன்மை; கணத்தில் மாறுபடும் நிலை; சிறுதிற இயல்பு; அறவே முக்கியத்துவமின்மை.
**trans′ient**, *a.* நிலையற்ற சின்னாள் வாழ்வுடைய; உறுதியற்ற தன்மை வாய்ந்த; கணத்தில் மாறுகிற; (இசை.) சிறு சிணைத்திறமான, நிலையான முக்கியத்துவமற்ற, இடைவரவான.
**transil′iency**, *n.* தவளைப்பாய்ச்சு.
**transil′ient**, *a.* தவளைப்பாய்ச்சான, தத்திச்செல்கிற.
**transillumina′tion**, *n.* (மரு.) ஊடுறுப்பொளியூட்டம், ஆய்வின் பொருட்டு உறுப்பினூடாகக் கூரொளிக் கதிர்களைச் செலுத்துதல்.
**transisth′mian**, *a.* நிலச்சந்து கடந்த, நில இடுக்கிற்கு அப்பாலான.
**transist′or**, *n.* மின்மப் பெருக்கி; ஆற்றற் சிக்கனமுடைய காற்றெழிப்பில்லா மின்விசைப் பெருக்கு கருவி.
**trans′it**, *n.* புடைகடப்பு; ஊடுகடப்பு; புடைபெயர்வு போக்கு, செல்கை; இடங்கடப்பு, கடந்துசெல்கை; கொண்டுய்ப்பு; சரக்குப் புடைபெயர்ச்சி; கடப்பிடைவழி; செல்நெறி; (வான்.) காட்சிநிலைக் கோட்கடப்பு, புறத்தோற்ற நிலையில் வான்கோளங்கள் திணைநிலை மை வரை கடந்து செல்கை; (வான்.) கதிர்க்கடப்பு, வான்கோளங்கள் கதிரவன் விட்டம்

கடந்து செல்கை; கோட் கதிர்க்கடப்பு, வெள்ளி புதன் கோளங்களின் கதிர்க்கடப்பு; (வான்.) கோள்விட்டக்கடப்பு, பெருங்கோள விட்டத்தைச் சிறுகோள் கடந்து செல்லல்; கடப்பு வட்டக் கருவி; நுண்ணலகீட்டிணையுடைய கோட் கடப்பு அளவை வட்டக் கருவி; கோட்கடப்பு மைவரைக் காட்சித் திருப்பு கருவி; தளமட்டக் கோணமானி; *v.* கடந்து செல்; ஊடுகட; சிறுகோள் வகையில் பெருங்கோள் வட்டத்தின் விட்டங்கட; புதன் வெள்ளி ஆகியவற்றின் வகையில் கதிரவன் விட்டங் கட; கடந்துகொண்டு செல்; கடந்து கொண்டு செல்வி; தொலைநோக்காடியைக் கிடைநிலையில் திருப்பு.

**trans'it-circle**, *n.* கோட் கடப்பு வட்டக் கருவி, நுண்ணலகீட்டிணையுடைய கோட்கடப்பளவை வட்டக் கருவி.

**trans'it-duty**, *n.* ஊடு சுங்கவரி, பகுதியூடாகச் செல்வதற்குரிய சுங்கக் கட்டணம்.

**trans'it-instrument**, *n.* கோட்கடப்பு மைவரைக் காட்சித் திருப்பு கருவி.

**transi'tion**, *n.* கடந்து செல்கை; ஊடுசெல்கை; கடந்துசெல் நிலை; ஊடுசெல் நிலை; புடைபெயர்வு, நிலைதிரிவு; இடைபெயர்வு நிலை; மாற்ற இடையீட்டு நிலை; இடைமாறுபாட்டு நிலை; புடைபெயர்வுப் பருவம்; நிலைத்திரிபுப் பருவம்; இடைநிலைக்காலம்; இடைமாறுபாட்டுக் காலம்; மாறுபட்டு வரும் வேளை; கலைத்துறை இடைமாறுதல் காலம், கலைப் பாணி மாறுதல் நிலையடைந்து வந்த இடைக்காலம்; (க-க.) இடைநிலையூழி, நார்மன் ஊழி-முற்பட்ட ஆங்கில ஊழி ஆகியவற்றிற்கு இடைப்பட்ட மாறுதல் கால இடையூழி; *a.* இடைமாறுதலுக்குரிய.

**transi'tional**, *a.* புடைபெயர்வுக்குரிய; நிலைதிரிபான; இடைமாறுபாட்டுக் குரிய; இடைமாறுபாட்டுக் காலஞ் சார்ந்த; இடை மாறுபாட்டுக் காலத்தின் பண்புகளையுடைய; இடைமாறுதல் கால மாதிரியான; இடைக்காலத்திற்குரிய; தற்காலிகமாகத் திட்டமிட்ட; எழுத்துரு பேச்சு முதலியவற்றின் வகையில் பிரிவுகளிடையே இடையிணைப்பான, இடைநிலைச் சார்பான.

**transi'tionally**, *adv.* இடைமாறுதல் குறிக்கும் முறையில், இடைமாறுதலாய்.

**trans'itive**, *n.* (இலக்.) செயப்படுபொருள் குன்றுவினை; *a.* செயப்படுபொருள் குன்றுவினை சார்ந்த.

**trans'itively**, *adv.* செய்யப்படுபொருள் குன்று வினையாக, செயப்படுபொருள் குன்று வினைப்பொருளில்.

**trans'itorily**, *adv.* சின்னாள் வாழ்வுடையதாக.

**trans'itoriness**, *n.* விரைந்தழியும் இயல்புடைமை, கணத்தில் அழியுந்தன்மை; நிலையாமையுடைமை.

**trans'itory**, *a.* கணத்தில் மறைகிற; நிலையுறுதியற்ற, நிலையாமையுடைய.

**trans'it-theodolite**, *n.* திருப்பாடித் தளமட்டக் கோணமானி, மறிநிலைப்படுத்தத் தக்க தொலை நோக்காடியுடைய நிலைஅளவைக் கருவி.

**translat'able**, *a.* மொழிபெயர்க்கத்தக்க; உருமாற்றத்தக்க; மறுபெயர்ப்புக்குரிய.

**translate'**, *v.* பெயர்; மொழி பெயர்; மொழிபெயர்ப்புப் பணியாற்று; மொழிபெயர்த்துப் பயிலு; எளிதில் மொழி பெயர்க்கத்தக்கதாயிரு; பெயர்த்துரை; மறு பெயர்ப்புச் செய்; கருத்து வகையில் சொல்லாக மாற்று, சொல்லுருப் படுத்திக் கூறு; கருத்தைச் செயல் துறையில் உருப்படுத்திக் காட்டு; உள் எண்ணத்தைத் தெளிவாக விளக்கியுரை; கடும் புதிர் வகையில் பொருள்புரிய எடுத்து விளக்கு; கருத்து-பண்புக்கூறு-பாணி ஆகியவற்றின் வகையில் கலைத்துறையிலிருந்து கலைத்துறைக்குப் பெயர்த்துப் புகுத்து; சைகை-குறிப்பு-பண்புகளுக்குக் கருத்துவிளக்கந்தெரிவி; துறையிலிருந்து துறைக்கு இடைபெயர்ப்புச் செய்; உருமாற்று; புத்துருப்படுத்து; வடிவு மாற்று; பழமையை மாற்றிப் புதிதாக்கு; நிலைமாற்று; பண்பு மாற்று; தந்திச் செய்தியை வாங்கி மீட்டும் அனுப்பு; பணிக்குப் பணி மாற்றுதல் செய்; சமயத் தலைவரைப் பணியிலிருந்து வேறு பணிக்கு மாற்று; சமயத் தலைவரை இடமாற்றுதல் செய்; உயிருடன் மேலுலகத்துக்குக் கொண்டு செல்; பொறியினைச் சுழலாமல் புடை பெயரச்செய்; இயந்திரத்தை எல்லா உறுப்புக்களும் ஒரே திசை நோக்கும் நிலையில் இயங்குவி; (இய.) நிலைமாற்றமின்றிப் புடைபெயர்.

**transla'tion**, *n.* மொழி பெயர்த்தல்; மொழிபெயர்ப்பு; இடப்பெயர்ப்பு; சூழல் மாற்றீடு; பணியிடப் பெயர்ப்பு; சமயப்பணி மாற்றீடு; சமயத்துறையர் இடமாற்றீடு; மொழி பெயர்ப்புப் படிவம்; மொழிபெயர்ப்பேடு; பழமைப் புதுக்கீடு; தந்தி மறு அனுப்பீடு.

**transla'tional**, *a.* மொழிபெயர்ப்புச் சார்ந்த; மறுபெயர்ப்புக்குரிய; உருமாற்றத்துக்குரிய; இயந்திர ஒரு திசையியக்கஞ் சார்ந்த; இடைமாற்றமான; பண்புமாற்றமான, துறை மாற்றமான; பணிமாற்றஞ் சார்ந்த.

**transla'tor**, *n.* மொழிபெயர்ப்பாளர்.

**trans'latory**, *a.* மொழிபெயர்ப்பான; மொழிபெயர்ப்புக் குரிய.

**translit'erate**, *v.* எழுத்துப் பெயர்ப்புச் செய்; எழுத்துக் கெழுத்து விடாமல் பகர்ப்புச் செய்.

**translitera'tion**, *n.* எழுத்துப் பெயர்ப்பு; எழுத்துப் பெயர்ப்பு முறை.

**translit'erator**, *n.* எழுத்துப் பெயர்ப்பாளர்.

**translocate'**, *v.* தாவர உள்நிலைப் புடைபெயர்ச்சி உண்டு பண்ணு.

**transloca'tion**, *n.* தாவர உள்நிலைப் புடைபெயர்ச்சி.

**translu'cence**, *n.* ஒளி யுருவல் நிலை, ஒளிக்கதிர் கடப்பியல்பு, அரை ஒளி ஊடுருவலான நிலை, ஒளிக்கதிர் செல்லவிட்டு உருக்காட்சி கடக்கவிடாத நிலை.

**translu'cency**, *n.* ஒளி யுருவல் தன்மை, ஒளிக்கதிர் கடப்பியல்பு, ஒளிக்கதிர் ஊடுருவும் இயல்பு.

**translu'cent**, *a.* ஒளி யுருவலான, அரை ஒளி ஊடுருவலான, ஒளிக்கதிர் கடந்து வீசத்தக்க; ஒளிக்கதிர் ஊடுருவ விட்டும் உருக்காட்சி கடக்கவிடாத; (பே-வ.) தெளிவான.

**translu'cid**, *a.* (அரு.) உள்வெளி தெரிகிற.

**trans'lunary**, *a.* திங்கட்கோளுக்கு அப்பாற்பட்ட; கனவியல் காட்சியான, உருவெளித்தோற்றமான.

**transmarine'**, *a.* கடல் கடந்த.

**trans'migrant**, *n.* நாடூடே கடப்பவர்; நாட்டிலிருந்து நாட்டுக்குச் செல்லும் வழியில் ஒரு நாட்டைக் கடந்து செல்லும் அயலவர்; *a.* நாடூடே கடக்கிற, வேற்று நாட்டிற்குச் செல் வழியில் நாட்டைக் கடந்துசெல்லுகிற.

**trans'migrate**, *v.* இடமாற்றிச் செல்; உறைவிடமாறிச் செல், தங்கிடம் விட்டுத் தங்கிடஞ் செல்; நாடுவிட்டு நாடு செல்; உயிர் வகையில் பிறப்பு விட்டு மறு பிறப்புறு, உடல் மாறிப் பிற.

**transmigra'tion**, *n.* இடமாறிப் பெயர்வு, இடம் விட்டிடம் பெயர்கை; கூடுவிட்டுக் கூடு பாய்தல்; நாடுவிட்டு நாடு செல்கை; உயிர்நிலை வகையில் உடல் விட்டு உடல் மாற்றுப் பெயர்வு; மாறிப் பிறப்பு, புனர் ஜன்மம்; மறுபிறப்புக் கோட்பாடு; நாடுவிட்டு நாடு பெயர்வு; தங்கிடப் பெயர்வு; (மரு.) உயிர்மங்களின் வகையில் சவ்வூடு பரவுகை.

**transmigra'tionism**, *n.* மாறிப் பிறப்புக் கோட்பாடு, மறு பிறப்புக் கோட்பாடு.

**transmigra'tionist**, *n.* மாறிப்பிறப்புக் கோட்பாட்டாளர்.

**transmi'grative**, *a.* நாடுவிட்டு நாடு பெயர்ந்து செல்லும் இயல்புடைய, இடம்விட்டு இடம் பெயருந் தன்மையுடைய; அடிக்கடி தங்கிடம் மாற்றுகிற; நாடு மாறுதலால் விளைகிற; தங்கிட மாற்றத்தால் விளைகிற.

**trans'migrator**, *n.* நாடுவிட்டு நாடு பெயர்பவர்.

**transmig'ratory**, *a.* நாடூடே கடப்புச் சார்ந்த.

**transmissibil'ity** *n.* அனுப்பீட்டு நிலை, கொடுத்தனுப்பத் தக்க இயல்பு; ஊடுகடத்தீட்டியல்பு; வாங்கி வழங்கீட்டியல்பு; விசை வகையில் இணைப்புறவுத் தகவு; ஒலிபரப்பப் படுந் தன்மை.

**transmiss'ible**, *a.* அனுப்பப்படத்தக்க; செய்தி வகையில் அனுப்பித் தரக்கூடிய; ஊடுகடத்தப்படத்தக்க; இட மாற்றி அனுப்பத்தக்க; மரபுவழிச் செல்ல விடத்தக்க; விசை வகையில் இணைப்பீடு செய்தனுப்பத்தக்க, கைவழி அனுப்பத் தக்க; வாங்கி வழங்கத்தக்க; கொடுத்தனுப்பக் கூடிய.

**transmi'ssion**, *n.* அனுப்பீடு; அனுப்பீட்டு முறை; மரபுவழியுய்ப்பு, வழி செல்லவிடுகை; ஒலி ஒரப்பீடு, வானொலி வகையில் அலைபரப்பீடு; வானொலி ஒலிபரப்புச் செய்தி; விசை ஊடிணைப்பு; விசையூடிணைப்பமைவு; ஊடுகடத்தீடு; இடையீட்டனுப்பீடு; கைவழி அனுப்பீடு; கொடுத்தனுப்பீடு; ஒப்படைப்பு; செலுத்தீடு.

**transmiss'ive**, *a.* கருத்தறிவிப்பிற்குரிய.

**transmit'**, *v.* கைமாற்றிக் கொடு; கைவழி அனுப்பு; ஒப்படை; செலுத்து; வாங்கி வழங்கு; கொடுத்தனுப்பு; மூலமாக அனுப்பு; இடமாற்றி அனுப்பு; மரபுவழிச் செல்லவிடு; கால எல்லை கடந்து வரவிடு; ஊடு செல்லவிடு; ஊடு கடத்தியனுப்பு; ஊடுகடத்தியாயிரு; வாயிலாக அமை, ஊடுகடக்க விடும் இடையீடாக அமைவுறு; இடை நின்று தொடர்பு படுத்து; இணைப்புக் கருவியாய் இயங்கு; இயந்திர உறுப்புக்களிடையே விசையுறுப்பின் விசை ஏற்று இயங்குறுப்பினை இயக்கு; வானொலி வகையில் செய்தியினை அனுப்பு; ஒலிபரப்பி வகையில் கொண்டு சென்று பரப்பு.

**transmitt'able**, *a.* அனுப்பத்தக்க; செய்தி வகையில் ஊடனுப்பத்தக்க; ஒலிபரப்பவல்ல.

**transmitt'al**, *n.* ஒலிபரப்பனுப்பீடு; கொடுப்பீடு; ஊடுகடத்தீடு.

**transmitt'er**, *n.* அனுப்புவோர்; அனுப்பித்தருவோர்; ஒலிபரப்ப அனுப்புவோர்; ஒலிபரப்பனுப்பீட்டுக் கருவி; செய்தி அனுப்புவோர்; இடையிணைப்பவர்.

**transmogrifica'tion**, *n.* உருமாருட்ட வித்தை.

**transmog'rify**, *v.* உருமாருட்ட வித்தை காட்டு.

**transmutabil'ity**, *n.* பொருண்மாற்றியல்பு, ஒன்று மற்றொன்றாக மாறுபடத்தக்க நிலை; உருமாற்றியல்பு; பண்பு மாற்றியல்பு; இரசவாத ஆற்றல், பொன் மாற்றுச் சித்தியல்பு; (வடி.) அளவு மாருத வடிவ மாற்றியல்பு; (உயி.) உயிரின வகை மாறுந்தன்மை.

**transmut'able**, *a.* பொருணிலை மாறுமியல்புடைய; பொருளியல்பு மாற்றத்தக்க; உரு மாற்றத்தக்க; பண்பு மாற்றத் தக்க; நிலை மாற்றத்தக்க.

**transmuta'tion**, *n.* பொருணிலை மாற்றுதல், படிமாற்றம், பொருணிலை மாற்றம்; திரிபு; உருத்திரிபு, உருமாற்றம்; பண்பு மாற்றம்; நிலைமாற்றம், இரசவாதம், பொன்மாற்றுச் சித்து, கீழின உலோகங்களைப் பொன்னுக்குந் திறம்; (வடி.) அளவுமாரு உருக்கட்ட வடிவமாற்றம்; (உயி.) உயிரின் வகைமாற்றம்.

**transmuta'tionist**, *n.* படிமாற்ருளர், பொருணிலை மாற்றஞ் செய்பவர், உருமாற்றுபவர்.

**transmut'ative**, *a.* படிமாற்றத்தக்க, பொருள்நிலை மாற்றக் கூடிய; உருமாற்றத்தக்க; பண்பு மாற்றத்தக்க; உருமாற்றஞ்சார்ந்த, உருமாற்றப் போக்குடைய; உருமாற்றத்திற்கு உதவுகிற.

**transmute'**, *v.* படிமாற்று, பொருணிலை மாற்று; பண்பு மாற்று; தரமாற்று.

**transmut'er**, *n.* படிமாற்றுபவர்; உருமாற்றுபவர்; பண்பு மாற்றுபவர்; நிலைமாற்றுபவர்; தரமாற்றுபவர்; படிமாற்றுவது; தரமாற்றுவது.

**transnorm'al**, *a.* இயல்புக்கு அப்பாற்பட்ட, இயல்பு கடந்த.

**transocean'ic**, *a.* மாகடலுக்கு அப்பாலுள்ள; கடல் கடந்து செல்கிற; கடல்கடத்தல் சார்ந்த, கடலைக் கடந்து பறக்கிற.

**tran'som**, *n.* வாசற்படிநிலைக் குறுக்குக் கட்டை; குறுக்குக் கட்டைக் கம்பி; பலகணி மேற்கட்டை; மேற்கட்டைக் கம்பி; வெங்கை, கப்பல் பின்புறக் குறுக்கு விட்டச் சட்டம்; அறுப்புவாட்குழிக் குறுக்குச் சட்டம்; பின்னுதாரக் குறுக்குக் கம்பிப் பாளம்.

**transon'ic**, *a.* ஒலி விசையுடைய; மணிக்கு 780 கல் தொலை விசையுடைய.

**transpar'ence**, *n.* ஊடுகாணிலை, ஒளிமுழுதூடுருவு தன்மை; பளிங்கியல்பு, கண்ணுடி போன்ற தன்மை; தெளிவாக உள்ளுருக் காட்டும் நிலை; தெளிவாகத் தெரியும் நிலை; படிகத் தெளிவு, மாசுமறுவற்ற நிலை; களங்கமின்மை, ஒளிவு மறைவின்மை; மறைப்பின்மை; ஆழ் அறிவின்மை; எளிது காணிலை; மறைக்குந் திறமையின்மை; ஒளிப்பட விளக்கத் தகடு; பளிக்குருத்தகடு; கண்ணுடி மீதமைந்த ஒப்பனையான நிழற்படத்துறை அணிநேர் படத் தகடு; ஒளித் திரை வரையுருக் காட்சிப்பட்டி, பின்னணியில் ஒளியினைக்கொண்ட படம்-எழுத்துரு விளம்பரப் பட்டிகை ஆகியவற்றையுடைய துணி அல்லது பயணப் பட்டிகை; பல்திற ஒளி ஊடுருவு திறனும் திட்பமும் உடைய உருப்பளிங்குக்கலம்.

**transpar'ency**, *n.* கண்ணுடி போன்றிருக்கும் தன்மை; தெள்ளத் தெளிந்த தன்மை; ஒளிவின்மை; கரவடமற்ற தன்மை: மறைப்பின்மை; எளிதில் தெரிவரு நிலை; ஆழ் அறிவின்மை; இருபுற விளம்பரக் கண்ணுடித் தகடு, இருதிசை காணும்படி வெட்டியொட்டப்பட்ட எழுத்து அல்லது வரைபடமுடைய கண்ணுடித் தகடு; வண்ணத் திரைப் படத் தகடு, வண்ண ஒளி ஊடுருவும் நேர்நிழற்படத் தகடு.

**transpar'ent**, *a.* தெள்ளத் தெளிந்த, ஒளி முழுதூடுருவலான; படிகம்போன்ற; மறைப்பற்ற; எளிதிற் புலப்படுகிற; எளிதில் உள்ளீடு விளங்குகின்ற; எளிதில் அம்பலமாகத் தக்க; தெள்ளத்தெளிவான; மாசு மறுவற்ற; களங்கமில்லாத; ஒளிவு மறைவில்லாத; எளிதில் கண்டுகொள்ளக்கூடிய; உள்மறைப்பில்லாத; சூதற்ற; பாசாங்கற்ற; அடித்தலம் தெளிவாகக் காட்டுகிற; நிற வகையில் உள் வண்ணத் திறம் தெளிவாகக் காட்டும் நிலையில் மெல்லீடான.

**transpar'ently**, *adv.* ஒளி ஊடுருவத் தக்கதாய்; எளிதிற் புலப்படும்படி.

**transpierce'**, *v.* ஊடுருவித் துளை.

**transpir'able**, *a.* ஆவியாகத் தக்க; வெளிவரத்தக்க.

**transpira'tion**, *n.* ஆவி வெளியீடு; வியர்வாவி யெறிவு, உயிரினங்கள் உடலின் மேல்தோல் வழியாகவோ நுரையீரல் வழியாகவோ நீர்மத்தை ஆவியுருவாக வெளியேற்றுஞ் செயல்; (தாவ.) நீர்ம ஆவியெறிவு, தழை நுண்புழை வழியாகத் தாவரங்கள் நீர்மத்தை ஆவி வடிவில் வெளியேற்றுதல்; (இய.) நுண்புழையாவி யெழுச்சி, நுண்புழைக்கால்கள் வழி அழுத்து நீர்மம் ஆவியாய் எழும் நிலை.

**transpir'atory**, *a.* ஆவி வெளியிடுவதற்குரிய; ஆவி வெளியிடுகிற.

**transpire'**, *v.* ஆவி வெளிவிடு; ஆவியாக வெளியிடு; ஆவியாக வெளிவரலுறு; ஆவியாய்ச் செல், ஆவியாகிவிடு; மறைவெளிப்படு, அம்பலமாகிவிடு; வியர்வாவி எறி, உயிரினங்கள் வகையில் உடல் மேல்தோல் வழியாகவோ நுரையீரல் வழியாகவோ நீர்மத்தை ஆவியுருவாக வெளியேற்று; (தாவ.) நீர்ம ஆவியெறி, தாவர வகையில் தழை நுண்புழை வழியாக நீர்மத்தை ஆவியாக வெளியாக்கு; (இய.) நுண்புழை எழு, நீர்மம் அல்லது வளி வகையில் அழுந்தச் செறிவினுல் நுண்புழைக்கால்வழி மேலெழுந்துயர்வுறு; (இழி.) நிகழ்வுறு.

**transplant'**, *v.* எடுத்து நடு; பறித்து நடு; பெயர்த்து நடு; நாற்றெடுத்து நடு; மறு பயிராக்கு; மறு நடவாக்கு; மறு நடவுக்கு ஏற்றதாயிரு; மறு குடியேற்று; வேறிடத்துப் புது வாழ்வு வாழச் செய்; அகற்றிப் புதிதமைவுறுத்து; (மரு.) அறுவையில் உயிர்த்தசை இழைமத்தை உடலில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற் பெயர்த்துப் பொருத்து; (மரு.) அறுவையால் உயிர்த்தசை இழைமத்தை ஒருவர் உடலிலிருந்து எடுத்து இன்னொருவர் உடலிற் பொருத்து.

**transplant'able**, *a.* மாற்றி நடத்தக்க, பெயர்த்து நடவு செய்யத்தக்க.

**transplanta'tion**, *n.* மறு நடவு ; மறுகுடியமைப்பு.

**transpla'nter**, *n.* மறு நடவாளர், இடமாற்றி நடுபவர் ; பறித்து நடுபவர் ; பெயர்த்துப் பொருத்துபவர் ; புதுக்குடியமைப்பு நிறுவுபவர் ; செடியுரி, செடியை மூட்டு மண்ணுடன் கோரி எடுக்குங் கருவி ; மரமூட்டுரி, மரத்தை மூட்டு மண் கட்டுடன் பெயர்த்தெடுப்பதற்குரிய இயந்திரக்கருவி.

**transpon'tine**, *a.* பாலங்கடந்த ; லண்டன் நகரில் தேம்ஸ் (Thames) ஆற்றுக்கப்பாலுள்ள ; நாடக வகையில் கீழ்த்தர உணர்ச்சி முனைப்புடைய.

**trans'port**[1], *n.* போக்குவரத்து; சரக்கேற்றப் புடைபெயர்ப்பு; போக்குவரவு சாதனம் ; ஊர்தி, வாகனம் ; படைத்துறைப் புடை பெயர்வுச் சாதனம்; படைத்துறை ஊர்தி ; படையேற்று கப்பல்; (வர.) நாடு கடத்தப்பெற்ற கைதி ; எக்களிப்பு, தன்னை மறந்த வெறியுணர்ச்சி.

**transport'**[2], *v.* இடம் பெயர்த்தெடுத்துச் செல் ; இடம் விட்டு இடங் கொண்டு செல் ; குற்றக் குடியிருப்புக்குக் கைதியை அனுப்பு ; எக்களிப்பூட்டு, தன்னை மறந்த வெறியுணர்ச்சி கொள்வி.

**transportabil'ity**, *n.* ஏற்றிக்கொண்டு செல்லத்தக்க நிலை ; குற்றக் குடியிருப்புக்கு அனுப்பப்படத்தக்க நிலை ; நடுகடத்து நிலை.

**transport'able**, *a.* ஏற்றிக்கொண்டு செல்லத்தக்க ; போக்குவரத்துச் சாதனங்களில் ஏற்றியனுப்புதற்குரிய ; குற்றக் குடியிருப்புக்கு அனுப்பத்தக்க ; நாடு கடத்தத்தக்க.

**transporta'tion**, *n.* சரக்கேற்றப் புடைபெயர்ச்சி, சரக்கேற்றப் போக்குவரத்து ; ஏற்றி அனுப்பீடு ; ஏற்றிச் செல்லப்படுதல் ; நாடு கடத்தல், குற்றக் குடி இருப்புய்ப்பு ; நாடு கடத்தப்பெறல், நாடு கடத்திக் குற்றக் குடியிருப்புக்கு அனுப்பப்பெறுதல், நாடு கடத்துத் தண்டனை ; சரக்கனுப்பிசைவுச் சீட்டு, சரக்கிசைவு முறி.

**transport'er**, *n.* சரக்கேற்றப் புடைபெயர்ச்சிப் பொறுப்பாளர் ; ஏற்றிச் செல்பவர் ; ஏற்றிச் செல்வது ; பெயர்ப்பியக்கு பொறி, இயந்திரப் பகுதிகளுக்கான விரை புடைபெயர்ப்புக்கருவி.

**trans'port-rider**, *n.* கொண்டேகியர், தென் ஆப்பிரிக்க வழக்கில் வண்டியில் சரக்குகளை கட்டணம் பெற்று இட்டுச் செல்லுபவர்.

**trans'port-ship**, *n.* படைத்துறைப் பயனீட்டுக் கப்பல்.

**transpos'al**, *n.* இடப்பரிமாற்றம்.

**transpose'**, *v.* இடம் பிறிதாக்கு ; சொல் வரிசைமுறை மாற்று ; (கண.) சிறைமாற்று, சமன்பாட்டில் மறு புறத்துக்கு மாற்று ; (இசை.) சுரமாற்றி எழுது ; சுரமாற்றி வாசி; வரைநிலையல்லாப் பிறிது இசைப்பு இசைப்பி.

**transpos'er** *n.* முறை மாற்றுபவர் ; வரிசை மாற்றுவது.

**transpos'ing**, *n.* இடமாற்றி வைப்பு ; *a.* இடமாற்றி வைக்கிற ; (தொ.) transposing instrument, இசைப்பு மாற்றியமைத்துப் பாடும் இசைக் கருவி.

**transposi'tion**, *n.* மாற்றி வைப்பு ; மாற்றி வைக்கப் பெறுவது.

**transposi'tional**, *a.* மாற்றி வைப்புச் சார்ந்த ; ஒழுங்கு வரிசை மாற்றலான.

**transpos'itive**, *a.* முறை மாற்றப் பெறுகிற.

**trans-ship'**, *v.* கப்பலிலிருந்து கப்பலுக்கு மாற்று ; ஊர்தியிலிருந்து ஊர்திக்கு மாற்று.

**trans-ship'ment**, *n.* கப்பல் மாற்றம், சரக்குகள் வகையில் கப்பலிலிருந்து கப்பலுக்கு மாற்றல் ; ஊர்தி மாற்றம், ஊர்தியிலிருந்து ஊர்திக்கு மாற்றல்.

**transubstan'tiate**, *v.* பொருண்மை மாற்றுறு, ஒரு பொருள் வகையில் இன்னொரு பொருளாக மாறிவிடு.

**transubstantia'tion**, *n.* பொருண்மை மாற்றம் ; ஒரு பொருளை இன்னொரு பொருளாக மாற்றிவிடுதல், பொருள் மாற்றமைவு, ஒரு பொருள் இன்னொரு பொருளாக மாறியமைந்துவிடல் ; கிறித்தவ சமயத்துறையில் திருக்கோயில் வழிபாட்டு அப்பமும் மதுவும் முழுதுமே இயேசுவின் திருவுடல் குருதிகளாக மாறிவிடுகிறதென்ற கோட்பாடு.

**transuda'tion**, *n.* சவ்வூடு கசிவு.

**transud'atory**, *a.* சவ்வூடு கசிவான.

**transude'**, *v.* சவ்வூடு கசிவுறு.

**transuran'ian**, *a.* மீவிண்மத் தனிமஞ் சார்ந்த.

**transuran'ic**, *a.* (வேதி.) மீவிண்ம இயலான, விண்மத்தினும் உயர் அணு எண் உடைய.

**transvers'al**, *n.* ஊடு வெட்டுக்கோடு, வரித்தொகுதி வெட்டுங் கோடு ; *a.* ஊடுவெட்டுகிற, கோடு வகையில் பல்வரித் தொகுதியினை வெட்டிச் செல்கிற ; குறுக்கிட்டுச் செல்கிற, குறுக்கான, பக்கத்திலிருந்து பக்கஞ் செல்கிற.

**transversal'ity**, *n.* ஊடுவெட்டாண்மை, பல்வரித் தொகுதியை ஊடுவெட்டுக் கோடாக நின்று ஊடு வெட்டுந் தன்மை.

**transvers'ally**, *adv.* குறுக்காக, பக்கத்திலிருந்து பக்கமாக.

**transverse'**, *n.* குறுக்கீட்டுத் தசை, குறுக்கீடாகச் செல்லுந் தசைநார் ; *a.* குறுக்காயமைந்த ; புடைகுறுக்கான ; பக்கத்துக்குப் பக்கமான ; குறுக்கீடாகச் செல்கிற.

**transverse'ly**, *adv.* குறுக்காக, பக்கத்திலிருந்து பக்கமாக.

**transver'sion**, *n.* குறுக்காக்கம், குறுக்காக்குதல் ; குறுக்காண்மை, குறுக்காயிருக்கும் நிலை ; பறிவு ; நேர்நிலை திறம்புதல்.

**transvest'**, *n.* இன்னொருவர் உடையை எடுத்து அணி ; ஆடவர் வகையில் பெண்ணின் உடையை அணிந்துகொள் ; பெண்டிர் வகையில் ஆணுடையை அணிந்துகொள்.

**transves'tite**, *n.* உடைமாறி அணிந்தவர்.

**tran'ter**, *n.* அங்காடிக் கூடையர் ; சுமை தூக்கி.

**trap**[1], *n.* பொறி ; பொறியமைப்பு ; வலைப்பொறி ; புள்வலை ; கண்ணி ; வீழ்த்துகுழி ; சூழ்ச்சிப் பொறி ; சதித்திட்டம் ; அகப்படுத்தும் முன்னேற்பாட்டுச் சூழ்ச்சிப் பொறி ; அகப்படுத்தும் முன்னேற்பாட்டுச் சூழ்ச்சி ; கவணம், புள்ளெறி பொறி ; கவணை, பந்தெறி பொறி ; பந்து உந்து கூடு, மட்டையால் நுனிப்புறம் அடித்தவுடன் குதிப்புறும் பந்தை விசையுடன் உந்தும் புதைமிதி வடிவ மரக்கூடு ; முடைவளி முடக்கு, முடைவளி அகற்றும் அமைவுடைய குழாய் வளைவுக்கூறு ; வளி அடைப்புப் பொறி ; வளி அடைப்பு மூடி ; விசைப்பொறிக் கதவம் ; சுளு வண்டி, மைய முதுகுப்புறத்துடன் இருதிசை இருக்கைகளையுடைய இரு சக்கர வண்டி வகை, சுரங்கக் காலதர்ப்புழை ; விசைப்பூட்டுமறை இடர், இடர்ப்பொறி, திடீரெனவரும் இடர்க்கூறு ; நாடக அரங்க மேடையடியிடம் ; துணியில் டகர வடிவக் கிழிசல் ; ஏவுகல விசைகாப்புப்பகுதி ; *v.* பொறியமை, பொறி உண்டாக்கு ; பொறி வை ; கண்ணி வை ; வலைப்பொறியிடு ; பொறி வைத்துப் பிடி ; கண்ணியில் சிக்கவை ; வலையிலகப்படுத்து ; பொறியமைவு செய் ; சூழ்ச்சிக்குள் வீழ்த்து ; எதிர்பாராது இடருட்படுத்து ; வடிகால் குழாய் முதலியவற்றில் வளிப்பொறி அமை ; குழாயில் வளி ஆவி அடைப்புச் செய் ; நீராவி வகையில் தடுத்துக் குழாய் அடை ; நாடக அரங்கு வகையில் மேடையடி அமைவு ஏற்படுத்து

**trap**[2], *n.* படிக்கற் பாறை, படிக்கல் தூண் வரிசை வடிவ அழற்பாறை வகை.

**trap**[3], *n.* (மண்.) தளக் குமைவு.

**trap**[4], *v.* குதிரைக்குச் சேண முதலியன பூட்டு ; ஆடையணிமணி பூட்டி ஒப்பனைசெய்.

**trap'-cellar**, *n.* நாடக அரங்கமேடை அடியிடம்.

**trap'-cut**, *a.* மணிக்கல் வகையில் படியடுக்கிப் பட்டையிட்ட.

**trap'door**, *n.* அடிநிலப் புழைக்கதவு ; மோட்டுப் புழைக்கதவு; பொறிக்கதவு.

**trapes**, *n.* அலங்கோலமான பெண்; கடுநடை; *v.* கடுநடை நட; சிறு வேலைகளுக்காக அலைந்துதிரி.

**trapeze'**, *n.* ஊசுதண்டு, உடற்பயிற்சிக்கான ஊசலாடும் சலாகை; விரிந்த அடிப்பகுதியினையுடைய பெண்டிரின் உடைவகை.

**trapez'ial**, *a.* கோடக வடிவான, எச்சிறையும் இணையா நாற்கட்ட வடிவான.

**trapez'iform**, *a.* ஊசுதண்டு வடிவான, உடற்பயிற்சிக்கான ஊசலாடும் சலாகை போன்ற.

**trapez'ium**, *n.* வியனகம், இருசிறை இணைகோடுடைய நாற்கட்டம்: *pl.* trapez'ia, trapez'iums.

**trapezohe'dron**, *n.* கோடகை, பக்கம் எதுவும் இணைவாயிராத நாற்கட்ட வடிவான முகப்புக்களையுடைய பிழம்புரு.

**trap'ezoid**, *n.* கோடகம், எச்சிறையும் இணைகோடாயிராத நாற்கட்டம்; *a.* கோடக வடிவான; கோடகஞ் சார்ந்த; நாற்கட்ட வகையில் எச்சிறையும் இணைவில்லாத.

**trap'-fall**, *n.* பொறித்தட்டு; வீழ்த்த வல்ல இடர்ப்பொறி மூடாக்கு; வீழ்த்து குழி.

**trap'-ladder**, *n.* மோட்டுப்படியேணி.

**trapp'ean**, *a.* படிக்கற் பாறை சார்ந்த, படிக்கற் பாறை இயல்புடைய.

**trapped**, *a.* பொறியுட்பட்ட; அகப்பட்ட; சூழ்ச்சியுட்பட்ட.

**trapp'er**, *n.* கண்ணி வைப்பவர்; புள் வலைஞர்; வலைவாணர்; சுரங்கக் காற்றூட்டுப் புழை காப்பவர்.

**trapp'iness**, *n.* சூழ்ச்சி, வஞ்சகம், துரோகம்.

**trapp'ings**, *n. pl.* குதிரைக்கலணை, அணிமணியாடைத் தொகுதி; உடைமை மூட்டை முடிச்சுத் தொகுதி.

**trapp'oid**, *a.* படிக்கற் பாறைக்குரிய.

**trapp'ose**, *a.* படிக்கற் பாறை சார்ந்த.

**trapp'y**, *a.* (பே-வ.) சூழ்ச்சியான; வஞ்சகமான.

**traps** [1], *n.* கையேணி, தூக்கிச் செல்லத்தக்க ஏணி.

**traps** [2], *n. pl.* தட்டுமுட்டு உடைமைப் பொருள்கள்.

**trash**, *n.* குப்பை, கூளம், செத்தை; சருகு; சப்புச்சவறு; எரு; தாள்; தரமில் இலக்கியப் படைப்பு; பேதமைப் பேச்சு; *v.* தோகை நீக்கு, கரும்பின் புறத்தாள்களை அகற்று.

**trash'ery**, *n.* குப்பை கூளத்தொகுதி.

**trash'-house**, *n.* கழிவுமனை, கரும்புச் சக்கைசவறு கழிவுப் பொருள்களைச் சேமித்துவைக்கும் இடம்.

**trash'-ice**, *n.* நீரிற் கலந்த பனிக்கட்டித் துண்டு.

**trash'ily**, *adv.* குப்பைகூள வடிவாய், குப்பைகூளம்போல.

**trash'iness**, *n.* குப்பைகூளத்தன்மை.

**trash'y**, *a.* குப்பைகூளமான, பதரான, சவறான.

**trass**, *n.* சீமைக்காரையாக இறக்குமதி செய்யப்பெற்ற எரிமலைக் குழம்புப்பொடி.

*trattori'a*, (இத்.) *n.* சமையற்காரர் கடை.

**traum'a**, *n.* புற அதிர்ச்சிப்புண், அடிவேதனைப் படுகாயம்; (உள.) உணர்வதிர்ச்சிக் கோளாறு; *pl.* traum'ata, traum'as.

**traumat'ic**, *n.* புற அதிர்ச்சிப்புண் மருந்து; *a.* புற அதிர்ச்சிப் புண் சார்ந்த; புற அதிர்ச்சிப் புண்ணுக்குரிய.

**traum'atism**, *n.* நோயுற்ற நிலை; அதிர்ச்சியுற்ற நிலை.

**trav'ail**, *n.* வேதனை; பிள்ளைப்பேற்று வலி, இடுப்புவலி; கடுமுயற்சி, பெருமுயற்சி; *v.* இடுப்புவலி அடை; பெருமுயற்சி செய்.

**trav'el**, *n.* பயணம்; வீச்செல்லை, இயந்திரப் பகுதியின் இயக்க எல்லை; *v.* பயணஞ் செய்; இயந்திர வகையில் தடம் வழி இயங்கு; இயந்திரப் பகுதி வகையில் நெறிவழி இயங்குறு; கண் வகையில் மெல்ல எங்குஞ் சுற்றிப்பார்; மான் முதலிய விலங்குகள் வகையில் மேய்ந்துகொண்டே மெல்ல நகர்வுறு; நெடுந் தொலைவு கடந்துசெல்; தூரங் கட; நிதானமாகச் செல், கால்நடை மந்தைகளைத் தொலை நடக்கவிடு.

**trav'elled**, *a.* பயண அனுபவம்பெற்ற.

**trav'eller**, *n.* பயணி, வழிப்போக்கர், பிரயாணஞ் செய்பவர், வாணிகப் பிரயாணி; பயண அனுபவம் பெற்றவர்; நகரும் பொறியுறுப்பு; சேண் தண்டவாளப் பாரஞ் சாம்பி; (தொ.) traveller's tale, மொட்டைப் புளுகு, வெளிநாட்டுப் பயணத்திற் கண்டதாகச் சரடு.

**trav'elling**, *n.* பயணம்; *a.* பயணத்திற்குரிய; பயணஞ் செய்கிற.

**trav'elogue**, *n.* பயண நூல்.

**trav'els**, *n. pl.* பயண நூல்.

**trav'el-soiled**, *a.* பயணத்தால் அழுக்கடைந்த.

**trav'el-stained**, *a.* பயணக் கறையுண்ட.

**trav'el-worn**, *a.* பயணத்தாற் கசங்கி நைவுற்ற, பயணத்தாற் கந்தலான.

**trav'erse**, *n.* குறுக்கூடு வழி; குறுக்குமறுக்கு வழியின் தனித்திருப்ப வளைவு; ஊடு கட்டுமானம், கட்டிடத்தை ஊடு கடந்து செல்லுங் கட்டுமானப்பகுதி; கோட்டை உள்வழிக் கவிகை அணைமதில்; அகழின் மடிப்புக்கோணப் பகுதி; அகல்மேடை, திருக்கோயில் முழு அகலப் படித்திரணை; விலங்கதர், கொடுஞ் சரிவுடுத்த மலைப்பாதையின் குறுக்கு வெட்டுப் பகுதி; சிறைவரிக்கோடு, நிலவளவைச் சிறைவரைக் கோண இணைப்புக்கோடு; நிலவளவைக் கோண்வரை அளவு முறை; தடை, தடங்கல்; தடைகட்டை; குறுக்கீடாகக் கிடப்பது; இடையூறு; இடுக்கண்; இடைத்தட்டி; திரை; திரை மறைவுக்கூடம்; குறுக்கெல்லை; புயல்சுழி வழிச் செல்லுங் கப்பலின் குறுக்குமறுக்கு நெறி; இயந்திரப் பகுதியின் குறுக்குவாட்டியக்கம்; துப்பாக்கி இலக்குப்புடைத் திருப்பம்; வாட்போரில் ஒரு வீச்சு எதிர்வீச்சுமுறை; (சட்.) குற்றச்சாட்டுக் குறிப்பீட்டின் மறுப்பு; (வடி.) ஊடு வெட்டுக்கோடு, தொகுதிப்பட்ட பல வரைகளையும் வெட்டுங் கோடு; (பழ.) தடங்கற் சூழ்நிலைக்கூறு; *a.* (கட்.) கேடயத்தில் குறுக்காகச் செல்கிற; கப்பல் போக்கு வகையில் குறுக்கான; *v.* குறுக்காகக் கிட; கட்டுமான வகையில் குறுக்கூடாக அமைவுறு; குறுக்காகச் செல்; குறுக்காகத் திருப்பு; குறுக்கே திரும்பு; மேலீடாக அங்குமிங்குஞ் செல்; குதிரை வகையில் குறுக்குவாட்டாகச் செல்; கடந்து செல்; கடந்து பயணஞ் செய்; ஊடு கட; குறுக்காகக் கட; மீதாகக் கடந்துசெல்; முழுதும் ஒரே வீச்சில் கட; முழுதும் விரித்துரைத்துவிடு; தலைப்புச்செய்தி முழுவதும் முடித்துவிடு; விரைந்து தொகுத்துக் கூறிவிடு; செய்தி முழுதும் தொடர்ச்சியாக வாதிடு; குறுக்குமறுக்கான வழியில் ஒரு படித்திருப்பங் கட; குறுக்கு வெட்டுத் திருப்பத்தில் செல், மலை வழியில் கொடுஞ்சரிவு முகப்பிற்குக் குறுக்காகக் கடந்துசெல்; நில அளவை வகையில் சிறைவரிக் கோடு இணை; சிறைவரிக்கோடு அள; துப்பாக்கியைப் புடைதிருப்பு; துப்பாக்கி இலக்குவகையில் வலது இடது புறங்களில் திரும்பு; திசைகாட்டி ஊசிவகையில் சுற்றி இயங்கு; கடிகாரமுள் வகையில் சுற்றிக்கட; கப்பி வகையில் கயிற்றின்மீதாக இழைந்துசெல்; மரக்கட்டையின் பரல் போக்கிற்குக் குறுக்காகச் சீவுளியால் இழை; குறுக்கிடு; தடு; தடைசெய்; போக்குக் குலைவி; ஆர்வங் கெடு; திட்டங்களைத் தடங்கல்செய்து குலைவி; எதிர்ப்புச் செய்; எதிர்வாதிடு; மறு; வழக்குரையில் மறுத்து வாதிடு.

**trav'erser**, *n.* கடப்பவர்; குறுக்கிடுபவர்; எதிர்ப்பவர்; குறுக்கிடுவது; குறுக்கிட்டுக் கிடப்பது; திருக்கு நேர்வுப் பட்டி, இருப்புப்பாதையில் குறுக்குமறுக்குப் போக்கு நேர் வழிக் கணிப்பிற்கு உதவும் பட்டியல்.

**trav'erse-table**, *n.* திருக்குநேர்வுப் பட்டிகை, புயல் சுழி நேரக் கப்பல் குறுக்குமறுக்குப் போக்கின் நேர் கடப்புத் தொலைவுக் கணிப்பிற்கு உதவும் அட்டவணை.

**trav'ersing**, *a.* கடந்து செல்கிற; குறுக்கிட்டுச் செல்கிற.

**trav'ertin, trav'ertine**, *n.* பொரிப்படிகக் கல், இத்தாலி நாட்டின் சுண்ணப்படிவான புழை நிரம்பிய இளம்பொன் னிறக் கட்டடக்கல் வகை.

**trav'esty**, *n.* நையாண்டிப்போலி ; கேலிக்குரிய போலிமை நடிப்பு ; இலக்கிய நையாண்டிப் புனைவு ; *v.* நையாண்டிப் போலிசெய் ; ஏளனப்போலி செய், போலிசெய்து நகைக்குரிய தாக்கு ; இலக்கிய ஏட்டினைப் போலி நையாண்டிச்செய்.

**trav'olator**, *n.* தானியங்கு பாதை, நடவாமலே ஆட்கள் கொண்டு சேர்க்கப்படும் அமைவு.

**trawl**, *n.* பெரும் பை வலை, மிதக்குங் கட்டையிணைந்த அகன்ற வாயுடன் கடலடியில் வாரிச்செல்லும் பைபோன்ற பெரிய மீன்வலை ; நீள்மிதவைத் தூண்டில், குறுந் தூண்டில்கள் பல இணைக்கப்பட்ட மிதவையினையுடைய நீள் தூண்டில் ; *v.* பெரும் பைவலையைப் பற்றி இழு ; பெரும் பைவலையிட்டு மீன்பிடி.

**trawl'-boat**, *n.* பெரும் பைவலைப் படகு.

**trawl'er**, *n.* பெரும் பைவலை இழுப்பவர் ; பெரும் பைவலை இழுப்புப் படகு.

**tray**, *n.* தட்டம் ; மரவை.

**trea'cherous**, *a.* கடமையுணர்வு கொன்ற ; நம்பிக்கைத் துரோகமான ; வஞ்சித்து ஒழுகுகிற ; கீழறுப்பான, பொறுப்புக் குலைவான ; நட்புக்கேடான ; காட்டிக்கொடுக்கிற.

**trea'cherously**, *adv.* நம்பிக்கைத்துரோகமாய் ; நன்றி கொன்ற விதமாய்.

**trea'chery**, *n.* நம்பிக்கைத்துரோகம் ; நன்றிக்கொலை, கீழறுப்பு,

**trea'cle**, *n.* பாகு ; (பே-வ.) இழுது சர்க்கரை, கூழ்வெல்லம்; உருண்டைவெல்லம் ; மரவகைத் தீஞ்சாறு ; நச்சுக்கடி காப்பு மருந்துவகை ; நச்சுக் காப்பு மருந்துவகை ; நச்சுக்கடி மாற்று மருந்துவகை ; நச்சுமாற்று மருந்துவகை ; பசப்புக் கவர்ச்சி ; பசப்புக் கவர்ச்சிப் பண்பு ; *v.* விட்டில்களைப் பிடிப்பதற்காக மரத்திற் பாகு தடவு ; இன்பாகு பூசு ; இன்பாகு பூசி மருந்து கொடு.

**trea'cle-mustard**, *n.* செடிவகை.

**trea'cliness**, *n.* தீம்பாகுத்தன்மை ; இழுதுத்தன்மை ; பசை யினிப்பு.

**treac'ly**, *a.* தீம்பாகு சார்ந்த ; தீம்பாகு போன்ற ; பசை யினிப்பு வாய்ந்த.

**tread**, *n.* மிதிப்பு ; மிதிப்பொலி ; நடையொலி ; நடப்புப் பாங்கு ; பறவைச் சேவல் வகையில் இணைவிழைச்சு ; மிதிகட்டைத் தொய்வக உறை ; மிதிகட்டைப் பொதி தகடு ; நிலந் தொடும் சக்கர அடிப்பகுதி ; தண்டவாளந் தொடும் ஊர்திச் சக்கர அடிப்பகுதி ; புதைமிதியின் அடித்தோல் ; ஏறுபடிக் காலின் மிதிகட்டை ; மிதிகட்டைப் பாவுதொலை, மிதிவண்டியின் மிதிகட்டைகளின் இடைத்தொலைவு ; முட்டை மஞ்சட் கருவின் வெண்புள்ளி ; *v.* மிதி ; நட ; மீதுநட ; மிதித்து நட ; நடைபோடு ; மெல்ல நட ; மேலே நட ; மிதித்துத் துவை ; அழுத்து ; காலால் அரை ; மிதித்தியக்கு ; மிதித்தாக்கு, கொடிமுந்திரிப்பழங்கள் வகையில் மிதித்துச் சாறெடு ; பறவைச் சேவல் வகையில் இணைவிழைச்சாற்று ; மெல்லச் செயலாற்று ; நடந்துகொள் ; (தொ.) tread on air, தலைகால் தெரியாத மகிழ்ச்சிகொள், தன்னை மறந்த இன்பங்கொள் ; tread on one's corns, tread on one's toes, புண்படுத்திவிடு, புண்படுத்திப் பகைமைப்படுத்திக்கொள் ; tread under foot, காலின் கீழிட்டு மிதி ; அழி ; வெறுப்புடன் நடத்து ; where no foot may tread, where angels fear to tread, பண்புயர்வான இடத்தில், நுட்ப நயம் உணரவேண்டிய இடத்தில்.

**tread'-board**, *n.* படி முகடு, படிக்கட்டுகளின் உச்சப்படி ; ஏறுபடிக்காலின் மிதிகட்டை.

**trea'dle**, *n.* இயந்திர விசை நெம்புகட்டை ; *v.* நெம்புகட்டையை மிதித்து அச்சு யந்திரம் இயக்கு.

**trea'dle-machine**, **trea'dle-press**, *n.* மிதியச்சுப் பொறி, மிதித்தியக்கும் அச்சு இயந்திரம்.

**tread'ler**, *n.* மிதிபொறி இயக்குபவர் ; மிதியச்சுப்பொறி இயக்குபவர்.

**tread'mill**, *n.* மிதி செக்குருளை ; செக்கடி வேலை.

**tread'-wheel**, *n.* மிதி செக்குருளை.

**treas'on**, *n.* அரசெதிர்ப்புக் குற்றம், இராசத் துரோகம் ; கீழறுப்பு வேலை; நட்புக்கொலை; நம்பிக்கை மோசம்; (தொ.) high treason, இராசத் துரோகம் ; petty treason, குடும்பத் துரோகம், கணவர் கொலை ; எசமானர் கொலை.

**treas'onable**, *a.* இராசத் துரோகக் குற்றஞ்சார்ந்த.

**treas'on-felony**, *n.* அரசைக் கவிழ்க்கச் செயல்.

**treas'onous**, *a.* இராசத் துரோகமான.

**trea'sure**, *n.* அரும்பொருட் குவை ; செல்வம் ; புதையல் ; அரும்பொருள் ; *v.* செல்வமெனப் போற்று ; மதிப்புடைய தாய் வைத்துப் பாராட்டு ; சேமித்துப் போற்றி வை.

**trea'sure-city**, *n.* (விவி.) சரக்கு—வெடிமருந்துக் கிடங்குள்ள நகரம்.

**trea'sure-house**, *n.* பண்டாரம், அரும்பொருட் களஞ்சியம்.

**trea'surer**, *n.* கருவூலத்தார் ; பொருளாளர்.

**trea'surership**, *n.* கருவூலப் பொறுப்பாளர் பதவி ; கருவூலப் பொறுப்பாளர் நிலை ; பொருளாளர் பதவி.

**trea'sure-trove**, *n.* புதையல், படுபொருள்.

**trea'sury**, *n.* கருவூலம், பண்டாரம்; கருவூல மனை, பண்டாரக் களம் ; கருவூலத்துறை ; அரசுப் பொதுவருவாய்த்துறை யரங்கம் ; (தொ.) Treasury bench, சட்ட மாமன்றத்து ஆளுங்கட்சி இருக்கைகள் ; treasury bill, அரசினர் கடன் மாற்றுப் பத்திரம் ; treasury note, தாள் நாணயம், காசுத் தாள், நோட்டுப் பணம் ; Treasury warrant, அரசுப் பொருளக ஆணை.

**treat**, *n.* இன்ப விருந்து, இன்பந் தருஞ்செய்தி, மகிழ்ச்சியான பொழுதுபோக்கு ; விருந்துபசாரம் ; உபசரிப்பு விருந்துணவு வழங்கீடு ; வழங்கீட்டுணவு ; *v.* நடத்து ; தொடர்புகொண்டு நடந்துகொள், சார்பாக நடந்துகொள் ; பாவி ; பாவித்து நடத்து ; ஆள்வகையில் மருத்துவம் பார் ; நோய்ப்பட்ட உறுப்பு வகையில் மருத்துவப் பண்டுவஞ் செய்; செய்முறைப்படுத்து; கையாளு; கலந்து செயல்முறையூட்டுவி; வேதிமுறைப்படுத்து ; கொண்டு பதப்படுத்து ; கொண்டு தேர்வுமுறை செய் ; தேர்வுமுறையிற் செயற்படுத்து ; விருந்து உபசாரஞ் செய்; உபசரித்து விருந்தளி; தேர்தலில் வாக்காளர்களுக்கு உணவு முதலிய சலுகைகள் வழங்கு ; தேர்தலில் வாக்காளர்களுக்கு உணவு முதலிய சலுகைகள் வழங்குவி ; தன்செலவில் உணவு-நேரப்போக்கு முதலிய வாய்ப்புக்களுக்கு ஏற்பாடு செய்துதவு ; ஒப்பந்தப் பேச்சுவார்த்தை நடத்து ; பேரஞ்செய் ; குறித்து வாதிடு ; குறித்துப் பேசு ; குறித்து எழுது ; குறித்து வருணித்துரை ; கலையுருப்படுத்திக்காட்டு ; கலை சார்ந்த பண்பூட்டிக்காட்டு ; கலைத்துறையில் தீட்டிக் காட்டு ; இலக்கியப் பண்பு கையாளு ; இலக்கியப் பண் பிழைவித்துக் காட்டு ; இலக்கிய வகையில் பொருளாக விரித்துரை ; (தொ.) Dutch treat, அவரவர் உணவை அவரவரே கொண்டு வந்து உண்ணச் செய்யும் விருந்துபசரிப்பு ; stand treat, விருந்துச் செலவை ஏற்றுக்கொள்.

**treat'able**, *a.* ஒப்பந்தப் பேச்சு நடத்தத்தக்க ; செய்முறை செய்யத்தக்க ; நடத்தத்தக்க ; பதப்படுத்தத்தக்க ; வாதிக்கத் தக்க.

**treat'er**, *n.* நடத்துபவர் ; பதப்படுத்துபவர் ; கையாளுபவர்.

**treat'ing**, *n.* நடத்துகை ; கலந்து செயற்படுத்துகை ; உணவு முதலியன தன்செலவில் கொடுத்தல் ; பேரஞ்செய்தல்.

**treat'ise**, *n.* ஆய்வுக் கட்டுரை.

**treat'ment**, *n.* நடத்துதல் ; நடத்துமுறை ; மருத்துவப் பண்டுவம் ; கலை வகையில் தீட்டிக் காட்டும் முறை ; வேதிமுறைச் செயற்பாடு.

**treat'y** *n.* ஒப்பந்தம் ; நேச உடன்படிக்கை ; கூட்டுறவு ஏற்பாடு, கூட்டு ஏற்பாடு ; (தொ.) treaty port, உடன்படிக்கை மூலம் அயல் நாட்டு வாணிகத்திற்கு இடந்தரும் துறைமுகம்.

**tre'ble**, *n.* மும்மடங்கு ; முக்கூறுருயுள்ளது ; சீட்டாட்ட வகையில் கெலிப்பு அலகுக்கூறு ; (இசை.) பெண்டிர் உச்சக்குரல், சிறுவன் உச்சக்குரல் ; *a.* மும்மடங்கான ; மும்மடியான, முக்கூறுன ; மூன்றால் பெருக்கப்பட்ட ; மூன்றுதடவை யாக்கப்பட்ட ; (இசை.) பையன் குரல் வகையில் உச்ச நிலைப்பட்ட ; *v.* மும்மடங்காக்கு ; மூன்றால் பெருக்கு ; மும்மடங்காகு, மூன்றால் பெருக்கப்படு ; மும்மடங்கு மிகு.

**tree**, *n.* மரம் ; வெட்டுமரம், மரத்தடி ; மரக்கட்டை ; மரவடிவப் பிழம்பு ; கிளையமைப்புரு ; உலோக மணியுருப்படிவம் ; மர உருவமுடைய விளக்கப்படம் ; கால்வழி மரபு விளக்கம்; கொடிவழி விளக்கம் ; மரக்கருவி ; (பழ.) தூக்குமரம் ; (பழ.) சிலுவை ; *v.* விலங்குகளை மரத்தின் பக்கமாக அடைக்கலம் புகச்செய் ; ஆள் வகையில் ஒருமுகப்படுத்தி நெருக்கு, பிறவழியடைத்து ஒருவழித் தஞ்சம் புகும்படி வல்லந்தநிலை உண்டாக்கு ; புதை மிதியைக் காலுருக்கட்டைமீது புகுத்தி விரியச்செய், காலுருக் கட்டைமீது புதைமிதியை உருப்படுத்து; (தொ.) family tree, கொடிவழி விளக்கப்படம் ; tree of life, tree of knowledge, வாழ்க்கைத்தண்டு, ஆதாமுக்காக விவிலிய ஏட்டின்படி இறைவன் ஏதென்ஸில் நிறுவின அறிவு மரம்.

**tree'-calf**, *n.* புத்தக வகையில் மரம்போன்ற ஒப்பனை வரியுடன் கூடிய கன்றுத்தோற் கட்டடம்.

**tree'-creeper**, *n.* மரமோடிப் புள், பூச்சுக்களைப் பிடிக்க மரத்தின்மீது ஓடும் பறவை வகை.

**tree'-fern**, *n.* பெருஞ்சூரல், மரவடிவச் சூரல்.

**tree'-frog**, *n.* தேரை.

**tree'less**, *a.* மரமற்ற.

**tree'-milk**, *n.* இலங்கையில் பாலாகப் பயன்படுத்தப்படும் மரவகை வடிநீர்.

**tref'oil**, *n.* மூவிலைச் செடிகொடி வகை ; மூவிலைச் சித்திர ஒப்பனைப்பாணி ; முக்கூற்றுப் பொருள் ; *a.* மூவிலைப்பட்ட, முக்கூறுன, முக்கவரான.

**tref'oiled**, *a.* மூவிதழான.

**trek**, *n.* மாட்டுவண்டிப் பயணம்; குடிபெயர்ச்சிப் பயணம்; கூட்டுக் குடிபெயர்வு; குடிபெயர்ச்சிப் பயண இடைநிறுத்தக் கெடுவு ; *v.* மாடு வகையில் வண்டியை வலித்துப் பாரம் இழு ; சுமையைத் தாங்கிக்கொண்டு செல் ; மூட்டை முடிச்சுகளுடன் இடம்பெயர்ந்து செல்.

**trekk'er**, *n.* மாட்டுவண்டியிற் பயணஞ் செய்பவர்.

**trell'is**, *n.* பின்னல்தட்டி; குறுக்குக் கம்பிப்பின்னல் அமைவு; *v.* பின்னல்தட்டி அமை ; குறுக்குக் கம்பிப் பின்னல் அமை.

**trem'ble**, *n.* நடுக்கம் ; நடுக்கநோய் வகை; துடிப்பதிர்வு ; *v.* நடுங்கு ; அஞ்சி நடுங்கு, பதற்றங்கொள் ; உதறல்கொள் ; இலைகள் வகையில் அதிர்வுறு ; ஊசலாடு.

**trem'bler**, *n.* நடுங்குபவர்; மின்காப்பதிர்வு, தானுக அதிர்ந்து மின்விசைக் காப்பொழுங்கு செய்யும் அமைவு; மின்விசை மணி.

**trem'bling**, *n.* நடுங்குதல், நடுக்கம்; *a.* நடுங்குகிற; (தொ.) trembling poplar, இளங்காற்றிலும் நடுங்கும் இயல்புடைய மரவகை.

**trem'bly**, *a.* துடிதுடிக்கிற ; அதிர்வுறுகிற.

**tremen'dous**, *a.* பேரச்சந் தரத்தக்க; வல்லமைமிக்க; பேராற்றல் வாய்ந்த ; வியப்பார்வத்திற்கு உரிய ; மிகப்பெரிய.

**trem'olant**, *n.* இசைக்கருவியில் துடிப்பதிர்வூட்டும் அமைவு.

**trem'or**, *n.* துடிப்பதிர்வு ; இலை நடுக்கம் ; குரல் அதிர்வு ; உடல் அதிர்வாட்டம் ; சிலிர்ப்பு, உறுப்பின் கூச்ச அதிர்வு ; அச்ச நடுக்கதிர்வு ; கூச்செறிவு.

**trem'orless**, *a.* நடுக்கற்ற.

**trem'ulous**, *a.* குரல் நடுங்குகிற ; கை பதறுகிற ; உறுப்புத் துடிக்கிற ; இலை வகையில் துடித்ததிர்வுறுகிற ; கோடு வகையில் நடுக்குறு கைகளால் எழுதப்பட்ட ; அஞ்சி நடுங்குகிற ; உரமற்ற ; எளிதில் அஞ்சுகிற ; தடுமாற்றமுடைய.

**trem'ulousness**, *n.* நடுக்கம் ; துடிப்பதிர்வு.

**trench**, *n.* (படை.) அகழ்வெட்டு ; மறைகுழி ; ஆழ்சால்வரி, உழவுசால் ; நீள்வரிப்பள்ளம் ; திரைதோல் ; *v.* அகழ்வரி தோண்டு ; உழவுசால் வரியிட்டு மண்புரட்டிப் போடு ; மரத்தில் வரிப்பள்ளமிடு ; அகழ் அமைத்துக்கொண்டு முன்னேறு ; வழியமைத்துக்கொண்டு செல் ; முனைந்து மேற்செல் ; எல்லை மீறிப் பிறர் உரிமையில் நுழை, (தொ.) trench foot, நெடுநேரம் ஈரத்தில் நிற்பதால் ஏற்படும் கால்நோய் ; trench warfare, அகழிச்சண்டை, இருதிறத்தினரும் எதிரெதிர் வரிசை அகழிகளில் பதுங்கியிருந்து செய்யுஞ் சண்டை.

**trench'ancy**, *n.* குத்துந்தன்மை, வெட்டுந்தன்மை ; கடுப்பு, உறைப்பு.

**trench'ant**, *a.* குத்தலான, வெட்டுகிற ; கூரிய, ஊடுருவிச் செல்லுந் தன்மையுடைய ; உறைப்பான.

**trench'er** [1], *n.* அகழி வெட்டுபவர்.

**trench'er** [2], *n.* தட்டு, மரவை ; உண்டாட்டு மகிழ்வு ; தின்னுதல் ; *a.* உண்ணுதல் சார்ந்த, சாப்பிட வருகிற.

**tren'cherman**, *n.* நன்றாகச் சாப்பிடுபவர்.

**trend**, *n.* போக்கு ; இயக்கச் சாய்வு ; செல்திசை ; நாட்டம், மனப்போக்கு ; மனத்தேட்டம், விருப்பு வெறுப்புப்பாங்கு ; கருத்துப்போக்கின் சார்வு ; நிகழ்ச்சிகளின் பொதுப்போக்கு ; *v.* குறிப்பிட்ட திசை நோக்கியிரு, குறிப்பிட்ட பக்கம் நோக்கி வளை ; குறிப்பிட்டபடி திரும்பு ; குறிப்பிட்ட பக்கஞ்செலுத்தப் படத்தக்கவராயிரு ; பொது மனச்சாய்வு-பொதுப்போக்குடையவராயிரு; குறிப்பிட்ட பக்கஞ் செலுத்தப்படத்தக்கதாயிரு ; போக்குடையதாயிரு ; சார்புடையதாயிரு.

**tren'tal**, *n.* முப்பது வழிபாடு, இறந்தவர் ஆன்ம சாந்திக்காக முப்பது வழிபாடு.

**trepan'** [1], *n.* கபாலத் துளையூசி, அறுவை மருத்துவ வகையில் மண்டையில் தமரிடுங் கருவி ; சுரங்கத் துளைக்கருவி ; *v.* கபாலத் துளையூசியால் மண்டையோட்டினைத் துளை.

**trepan'** [2], *v.* பொறியில் சிக்கவை ; கண்ணியில் அகப்படுத்து, வசியப்படுத்து.

**trepang'**, *n.* சீன நத்தைக் குழம்புணவு.

**trephine'**, *n.* நுண்திருக்கு, செப்பமிக்க கபாலத் துளையூசி ; *v.* நுண்திருக்கினல் மண்டையோட்டைத் துளை.

**trep'id**, *a.* நடுங்குகிற.

**trep'idant**, *a.* நடுங்கும் இயல்புடைய.

**trepida'tion**, *n.* நடுநடுக்கம் ; பீதி, கிலி ; பரபரப்பு ; துடிதுடிப்பு, படபடப்பு ; கலக்கம் ; மனக்குழப்பம் ; நடுக்குவாதம், பக்கவாதத்தால் ஏற்படும் உறுப்பு நடுக்கம்; முற்காலக் கருத்துப்படி கதிர்வீதியின் ஊசலாட்டம்.

**trepid'atory**, *a.* நடுங்கும் பாங்குடைய.

**tres'pass**, *n.* வரம்புகடப்பு, எல்லை மீறுகை ; நெறி திறம்பல், ஆணை மீறுகை ; சட்ட மீறுகை ; பிறர் உரிமைத் தலையீடு ; உடைமை மீச்செலவு ; *v.* வரம்புகடந்து செல் ; உரிமை எல்லை கடந்து நட ; ஆணை மீறு, அழையாது நுழை ; பிறர் உடைமையில் தலையிடு ; பிறர் உரிமையில் தலையிடு ; நேர்மையற்ற உரிமை கோரு ; வரம்பு மீறிய சலுகை எடுத்துக்கொள் ; தகாச்சலுகை எடுத்துக்கொள் ; ஒழுங்கு மீறு, தீங்கு செய்.

**tres'passer**, *n.* வரம்பு கடப்பவர், அத்துமீறுபவர்.

**tress**, *n.* மயிர்க்கற்றை, பனிச்சை ; கொண்டை, பெண்களின் மயிர்ச்சுருள் ; *v.* பனிச்சையிடு, கூந்தலைப் புரிகுழல்களாகப் பின்னு.

**tressed**, *a.* பனிச்சையிடப்பட்ட, புரிகுழல்களாகப் பின்னப்பட்ட, புரிகுழல்களாயுள்ள, புரிகுழல்களையுடைய.

**tress'es**, *n.pl.* அளகம், பெண்ணின் கூந்தல்.

**tress'y**, *a.* புரிகுழல்களையுடைய, புரிகுழல் போன்ற.

**tre'stle**, *n.* சாய்கால், மேசை முதலியவற்றின் சாய்வான உதைகால் இணைகளுள் ஒன்று, சார்விட்டக்கால், அடிக்கடி கூட்டியிணைக்கப்பட்ட சாய்வான தாங்குகால் சட்டம் ; பால உதைகால் சட்டம் ; (கப்.) பாய்மர உதைகால் சட்டம்.

**tret,** *n.* சேதார ஈட்டுக் கழிவு.

**trews,** *n. pl.* காற்சட்டை.

**trey,** *n.* சீட்டில் மூன்று ; பகடையில் மூன்று, முப்புள்ளிப் பகடை.

**tri'able,** *a.* முறைமன்ற விசாரணைக்குரிய ; வழக்காடற் குரிய.

**tri'ad,** *n.* மும்மை, மூன்றுகொண்ட தொகுதி ; (வேதி.) மூவிணைதிறத் தனிமம் அல்லது உறுப்பு ; (இசை.) மூன்று சுரங்கள் ஒத்திசைக்கும் இயைபு, ஒத்திசைக்குஞ் சாதாரண சுர இயைபு; முக்கவரான அமைவுடைய வேல்ஸ் நாட்டு இலக் கியப்புனைவு வகை.

**triadelph'ous,** *a.* (தாவ) மூன்று அடைவுகளாயுள்ள பூவிழைகளுடன் கூடிய.

**tri'age,** *n.* வகைப்படுத்துதல் ; உடைத்த காப்பிக்கொட்டை.

**tri'al,** *n.* முயற்சி ; தேர்வாய்வு, சோதனை ; சோதனை முறை ; பலப்பரிட்சை ; கேள்வி முறை, வழக்கு விசாரணை ; சோதனை செய்பவர் ; பருவரல், கடுந்துன்ப அனுபவம் ; தேர்வு முறைக் கான மாதிரிச் செய்தி ; வெள்ளோட்ட முயற்சி ; ஒத்திகை யாட்டம் ; ஆய்வுக்குழுத் தேர்வாட்டம் ; பந்தயத் தேர்வாய் வுப்போட்டி ; *a.* தேர்வாய்விற்குரிய, தேர்வாய்வு முறை யான ; வாணிகத்துறையில் மாதிரி பார்ப்பதற்காகச் செய்யப் படுகிற ; (தொ.) on trial, தெரிந்து தெளிதலுக்காக; தேர் வாய்வுக்குரிய, சோதனைகளுக்கான.

**trian'drous,** *a.* (தாவ.) மூன்று பூவிழைகளுடன் கூடிய.

**tri'angle**[1], *n.* முக்கோணம், முக்கட்டம், மூன்று சிறைகளை யுடைய உருவரைக்கட்டம் ; கட்ட வரைவி, கட்டவரைக்குப் பயன்படும் முக்கோணக் கருவி ; (கப்.) மூன்று மரச் சட்டங் களாலான பாரந்தூக்கும் அமைவு ; (இசை) எஃகியம், அடித்து இன்னொலி எழுப்புதற்குரிய முக்கோண வடிவ எஃகுக் கம்பி.

**Tri'angle**[2], *n.* வடக்கு விண்மீன் குழுக்களுள் ஒன்று.

**triang'ular,** *a.* முக்கோண வடிவமைந்த ; முச்சிறையான, மூன்று பக்கங்களையுடைய ; மூன்று மூலைகளுள்ள ; மும்மடி யான, எண் வகையில் முக்கோணத்தில் பதிவிட்டுக் காட்டக் கூடிய ; முக்கூட்டான, மூவரிடைப்பட்ட ; முக்கவரான.

**triang'ularity,** *n.* முக்கோணத்தன்மை ; முக்கவர்வு ; முக் கட்ட நிலை ; முத்திசை நிலை ; மும்முனை நிலை.

**triang'ulate,** *a.* (வில) முக்கோணத்தடம் உடைய, முக் கோண அடையாளங்களை உடைய ; *v.* முக்கோணவடிவம் உடையதாக்கு ; நில அளவையில் நிலப்பரப்பினை முக்கோ ணங்களாகப் பிரி ; நில அளவைத் துறையில் முக்கோணங் களாக வகுத்தளவை செய்.

**triangula'tion,** *n.* முக்கோணவழி அளவீடு.

**triap'sidal,** *a.* முச்சாய்ப்புடைய; (க-க.) பல பக்கங்களுள்ள மூன்று வளைவு ஒதுக்கிடங்கள் கொண்ட.

**tri'arch,** *n.* நாட்டின் மும்மைப் பிரிவுகளுள் ஒன்றின் தலைவர்.

**tri'archy,** *n.* மூவராட்சி ; முக்கூட்டரசு.

**tri'as,** *n.* (மண்) நடு உயிரூழி முதற் பிரிவிற்குரிய நிலக்கருப் பாறை அடுக்கு.

**triat'ic,** *a.* (கப்.) பாய்மரங்களை இணைக்கிற.

**triatom'ic,** *a.* மூவணுக்கள் உடைய.

**triax'ial,** *a.* மூவூடச்சுடைய.

**trib'adism, trib'ady,** *n.* பெண்களிடையே இயல் முரணிய பாலினப் புணர்ச்சி.

**trib'al,** *a.* குலமரபுக்குழு சார்ந்த ; குலமரபு நாகரிகப்படியி லுள்ள ; மூலக் குலமரபுச் சின்னமான.

**trib'alism,** *n.* குலமரபு அமைப்புமுறை ; குலமரபமைப்பு மனப்பான்மை ; குலமரபுப்பற்று.

**trib'ally,** *adv.* குலமரபு அமைப்பு முறையில், குலமரபு அமைப்பு முறைப்படி.

**tribas'ic,** *a.* (வேதி.) காடிப்பொருள்கள் வகையில் பதிலீடு செய்யத்தக்க மூன்று நீரக அணுக்களையுடைய.

**tribe,** *n.* குலமரபுக் குழு; இனமரபுக் குழு; நாகரிகத் தொடக்க காலச் சமுதாயம் ; நாகரிகமற்ற இனக்குழு.

**tribes'man,** *n.* குலமரபுக் குழுவினர் ; ஒரு குடும்பினர் ; தம் இனத்தவர்.

**trib'let, trib'olet,** *n.* படியுருளை, உலோகப்பொருள் உரு வாக்கப் பயன்படும் உருள்தடி.

**tribom'eter,** *n.* உராய்வுமானி, உராய்வினை அளப்பதற்கான பனிச்சறுக்குவண்டி போன்ற அமைவு.

**tribula'tion,** *n.* கொடுந்துன்பம், இன்னல்.

**tribun'al,** *n.* நீதிபதி இருக்கை, முறைமன்றத் தலைமை இருக்கை; தீர்ப்புமன்றம்; தீர்ப்புரிமைப் பீடம், தீர்ப்பு அதிகார முடைய அமைப்பு.

**trib'une,**[1] *n.* (வர.) உரிமைக் காவலர் ; படைத்துறை அலு வலர் ; பணத்துறை அலுவலர் ; மக்களார்வத் தலைவர், கிளர்ச்சித் தலைவர் ; (தொ.) the Tribune செய்தித்தாளின் பெயர் ; tribune of the people, மன்னுரிமைக் காவலர்.

**trib'une**[2], *n.* பண்டை ரோமரிடையே நீதிமாளிகையில் நடுவர் உயர் பீடம் ; திருவீற்றிருக்கை, மாவட்டச் சமயமுதல் வரின் திருவிருக்கை ; திருவீற்றிருக்கை மாடம், மாவட்டச் சமய முதல்வரின் திருவிருக்கைகொண்ட அரை வட்ட ஒதுக் கிடம் ; உரைமேடை, பிரெஞ்சு மக்கள் மன்றத்தில் பேச்சாளர்கள் நின்றுபேசும் மேடை ; பொதுப்பேருரை மேடை.

**trib'utary,** *n.* திறை செலுத்தும் நாடு ; திறை செலுத்தும் அரசர் ; கிளையாறு, உபநதி ; *a.* திறைசெலுத்துகிற, கப்பங் கட்டுவதற்குட்பட்ட ; ஆறு வகையில் உடனிணை கிளையாக வுள்ள, பெரிய ஆற்றில் நீர்பெருக உதவுகிற ; துணையான ; உடனுதவியான.

**trib'ute,** *n.* கப்பம், திறை ; திறை செலுத்துவதற்குட்பட்ட நிலை ; பங்களிப்பு, துணையுதவி ; மனமார்ந்த போற்றரவு ; தகுதிப்பாராட்டு ; புகழுரை ; பாராட்டுச் சின்னம் ; மதிப்பீ டாக அளிக்கப்படும் பரிசு ; நன்மதிப்புச் சின்னம் ; நன்மதிப் புச் சின்னமான அன்பளிப்பு ; பணி மதிப்பீட்டுக் கொடை ; காதல் ஆர்வப்பரிசு ; காதல் பாராட்டுரை ; காதல் ஆர்வ அன்பளிப்பு; காதல் மதிப்புச் சின்னம்; நிவேதனம், படையல்; போற்றுதலுரை ; (சுரங்.) சுரங்கத் தொழிலாளி செய்த வேலைக்காக அவருக்குக் கொடுக்கப்படும் விளைவுப் பங்கு அல்லது அப் பங்குக்கு ஈடான பொருள்.

**tricap'sular,** *a.* (தாவ.) மலர் வகையில் மூவிதையுறைகள் கொண்ட ; (வில.) முப்பொதியுறைகள் கொண்ட.

**tric'ar,** *n.* முச்சக்கர உந்துகலம் ; முச்சக்கர மோட்டார்.

**tricarp'ous,** *a.* மூன்று காய்களைத் தாங்கிய ; மூன்று சூலறைகள் கொண்ட.

**trice,**[1] *n.* கணநேரம்.

**trice**[2], *v.* (கப்.) பற்றியிழுத்து உயர்த்து ; பற்றி இழுத்து உறுதிப்படுத்து, கட்டியிறுக்கு.

**tri'cel,** *n.* செயற்கைப் பட்டிழை.

**tricenten'ary,** *n.* முந்நூறும் ஆண்டுவிழா ; *a.* முந்நூறாண்டு களுக்குரிய ; முந்நூறாண்டுகளுக்கு ஒரு முறையான.

**tri'ceps,** *n.* (உள்.) முப்புரித்தசை, மேற்கையின் பின்புறத்தி லுள்ள பெருந்தசை ; *a.* தசை வகையில் முப்புரியான.

**trichi'asis,** *n.* (மரு.) இழைநீர்ம நோய், சிறுநீரில் மயிர் போன்ற இழைகள் காணப்படும் நோய்வகை ; மார்புக்கட்டு, சூற்பெண்டிரின் மார்புநோய் வகை ; இமை உள்ளிடைவு நோய், கண் இரப்பை மயிர்கள் உள்நோக்கித் திரும்பி யிருக்குங் கோளாறு ; பம்பை நோய்.

**trich'ina,** *n.* (வில.) இழைப்புழு, மனிதர்-பன்றி-எலி உடலில் ஒட்டுண்ணியாகப் புகுந்து பேரிடர் நோய் விளைவிக்கும் புழு வகை ; *pl.* trich'inae.

**trichini'asis,** *n.* இழைப் புழுநோய்.

**trichiniza'tion,** *n.* இழைப் புழுத் தாக்கீடு.

**trichinop'oli,** (த.) *n.* சுருட்டுவகை

**trich'inosed,** *a.* இழைப்புழுநோய்க்கு ஆட்பட்ட நிலையிலுள்ள.

**trichinos'is,** *n.* (மரு.) இழைப்புழு நோய்.

**trichinot'ic, trich'inous,** *a.* இழைப்புழு நோயினால் பீடிக்கப்பட்ட; இழைப்புழு நோய்க்குரிய.

**trichloreth'ylene,** *n.* சாயக் கரைவுத் துணைச்சரக்கு வகை; நோவுத்தடை மருந்துவகை; உயர்தர உலர்சலவைநீர்மம்.

**trichlor'ide,** *n.* (வேதி) முப்பாசிகை, மூன்றுபாசிக அணுக்கள் கொண்ட சேர்மம்.

**trich'ogen,** *n.* கூந்தல் வளர்க்கும் மருந்துக் கலவை.

**tricho'genous,** *a.* மருந்து வகையில் கூந்தல் வளர்க்குந் தன்மையுடைய.

**trichol'ogist,** *n.* (இழி.) மயிர்முடி நூல் விற்பன்னர், தலைவாரி ஒப்பனைசெய்யுந் திறமுடையவர்.

**trichol'ogy,** *n.* மயிர் முடிநூல்.

**trich'ome,** *n.* (தாவ.) மேற்றுய், செடியின் மேந்தோலினின்றே தோன்றி வளரும் மென்மயிரிழை; (தாவ.) மேற்செதிள், செடியின் மேந்தோலில் வளருஞ் சிம்பு; (தாவ.) மேந்தோல் வளர்ச்சிக்கூறு.

**tri'chord,** *n.* (இசை.) முந்நரப்பியாழ்; (இசை.) முத்தந்திக் கின்னரப்பெட்டி, சுரத்திற்கு மூன்று தந்தியுள்ள இசைக் கருவி வகை; *a.* மூன்று தந்திகளையுடைய; கின்னரப்பெட்டி வகையில் ஒவ்வொரு சுரத்திற்கும் மூன்று தந்திகளையுடைய.

**trichos'is,** *n.* (மரு.) முடியமைப்பு; மயிர்நோய்.

**trichot'omous,** *a.* மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ள; முத்திற வகுப்பிற்குரிய; முக்கவராயுள்ள; உடல்-உயிர்-ஆன்மா என்ற மனித இயல்புப் பிரிவுசார்ந்த.

**trichot'omy,** *n.* மூவகுப்பு முறை; முக்கவர்ப் பிரிவுமுறை; உடல்-உயிர்-ஆன்மா என்ற மனித இயற் பிரிவு.

**trichromat'ic,** *a.* மூவண்ணத் திறமான; முந்நிறக் காட்சித் திறமுடைய, கண் வகையில் சிவப்பு-பச்சை-ஊதா ஆகிய மூன்று நிறங்களையே உணரும் பொதுநிலை ஆற்றல் வாய்ந்த.

**trick,** *n* பொறி; சூழ்ச்சி; மோசடி ஏற்பாடு; வஞ்சகச்செயல்; தனிக் கைத்திறம்; தனிப்பாங்குத்திறம்; சிறப்பியல்பு; கலை இலக்கியத் தனிப்பாங்கு, தனியியல்புப் பழக்கம்; குறும்புச் செய்கை, அறிவிலாச்செயல்; அவமதிப்புத் தருகிற நடத்தை; நையாண்டி விளையாட்டு; பொறிச் செயல்; போலிச் செயல்; பொறிநுட்பம்; மாயத் தோற்றம்; ஆட்டச் சுற்று முறை, சீட்டாட்ட வகையில் ஒரு சுற்று ஆட்டம்; சுற்றுருட்டச் சீட்டு, சீட்டாட்டத்தில் ஒரு சுற்று ஆடப்படும் சீட்டுகளின் தொகுதி; ஒரு சுற்றுருட்டக் கெலிப்பெண்; (கப்.) பயின்முறை, சுக்கான் திருப்புமிடத்தில் இருக்கவேண்டிய முறைநேரம்; *a.* சூழ்ச்சி வாய்ந்த; போலியான; மோசடி செய்தற்கான; சுளு வழியான; சுளுவிற் சமாளிக்கச் சிறந்த வழியான; *v.* பொறி செய்; சூழ்ச்சிசெய்; மோசடிசெய்து ஏமாற்று. மோசஞ் செய்; வஞ்சி; பொருள் இழக்கச்செய்து ஏமாற வை; குழப்பமடைவி; தோல்வியுறுவி; எண்ணியபடி நிறைவேற்றவிடாது செய்; மனக் கசப்பூட்டு; எதிர்பாராத் தோல்வி கொள்ளச் செய்; குறும்புச் சேட்டைகள் செய், பொறியணி செய், நயத்திற ஒப்பனை செய், கைத்திறங் காட்டி ஆடையணிபூட்டு; (தொ.) trick of the trade, வாணிகத் தந்திரம், வாணிக நுட்பம்; trick scene, பொறிக் காட்சி, திரையை இறக்காமலேயே தோற்றுவிக்கப்படுங் காட்சியமைவு.

**trick'ery** *n.* மோசடி; வஞ்சனை; குறும்புச்செயல்.

**trick'ish,** *a.* சிறு சூழ்ச்சி செய்கிற; குறும்புத்தனமான.

**tric'kle,** *n.* வடிதாரை, அசறுபாய் நீரொழுக்கு; *v.* வடி, கசி; துளித் துளியாக விழு; சிறு தாரையாக வடி.

**trick'let,** *n.* சிற்றோடை.

**trick'ly,** *a.* கசிந்தொழுகுகிற, துளித்துளியாக விழுகிற.

**trick'ster,** *n.* ஏமாற்றுபவர்; குறும்பு விளையாட்டுக்காரர்.

**trick'sy,** *a.* விளையாட்டுத்தனமான; கருத்தற்ற; குறும்புத்தனமான.

**trick'-track,** *n.* இரட்டைக்கட்ட ஆட்டம், தலைக்குப் பதினைந்து காய்களுடன் இருவர் ஆடுஞ் சிக்கலான கட்ட ஆட்ட வகை.

**trick'y,** *a.* சூழ்ச்சியுள்ள, வஞ்சனையுள்ள, தந்திரமான; ஏய்க்கும் பாங்குடைய.

**tri'clene,** *n.* உயர்தர உலர் சலவை நீர்மம்.

**triclin'ium,** *n.* சுற்றுச் சாய்மேசை, பண்டைய ரோம் நாட்டில் மூன்று பக்கங்களில் சாய்விருக்கைகளுடைய உணவு மேசை; சுற்றுச் சாய்மேசை அறை; *pl.* triclin'ia.

**tri'colour,** *n.* முந்நிறக் கொடி; *a.* முந்நிறமுடைய.

**tri'corn,** *n.* மும்முனைத் தொப்பி; *a.* மூன்று கொம்புகளையுடைய.

**tri'corne,** *n.* மும்முனைத் தொப்பி.

**tricorp'oral, tricorp'orate,** *a.* (கட்) மூவுடம்பு ஒருதலை வடிவான.

**tricotyled'onous,** *a.* (தாவ.) முக்கதுப்பு விதையினையுடைய; முக்கதுப்பினையுடைய.

**tricrot'ic,** *a.* (உட) முத்துடிப்பான, நாடி வகையில் மூன்று துடிப்புக்களையுடைய.

**tricus'pid,** *a.* மூன்று முனைகளையுடைய.

**tri'cycle,** *n.* மும்மிதி, முச்சக்கர மிதிவண்டி; *v.* முச்சக்கர மிதிவண்டியேறிச் செல்.

**tri'cyclist,** *n.* மும்மிதிவாணர், முச்சக்கர மிதிவண்டி ஏறிச் செல்பவர்.

**tridac'tyl, tridac'tylous,** *a.* கைவிரல்கள் மூன்றுடைய; கால்விரல்கள் மூன்றுடைய.

**trid'ent,** *n.* முக்கவர்ச்சூலம், திரிசூலம்.

**triden'tate,** *a.* மூன்று பற்கதுப்புக்களையுடைய; முக்கவரான.

**tridimen'sional,** *a.* மூவளவை சார்ந்த, நீள அகல உயரமென்னும் இடமூவளவைகளைக் கொண்ட.

**tridomin'ium,** *n.* மும்மடி ஆட்சி.

**trid'uo, trid'uum,** *n.* முந்நாள் வழிபாடு; முந்நாள் இடையீடு.

**tried,** *a.* தேர்ச்சிபெற்ற; நீள அனுபவமுடைய; நன்மை தீமை பட்டறிந்த; பட்டுத்தேறிய.

**trienn'ial,** *n.* மூவாண்டுப் பயிர்; மூவாண்டுக்கால நற்கதி நேர்வு வழிபாடு, மூவாண்டு நிறைவு விழா; *a.* மூவாண்டிற்கு ஒரு முறை நிகழ்கிற.

**tri'er,** *n.* முயல்பவர், தேர்ந்தறிபவர், வழக்கு ஆய்பவர்; தேர்வு, சோதனை முறை.

**tri'erarch,** *n.* போர்க்கலத் தலைவர், பண்டைக் கிரேக்கரிடையே போர்க்கப்பல் அதிகாரி; போர்க்கல முதல்வர்.

**tri'erarchy,** *n.* பண்டைக் கிரேக்கரிடையே போர்க்கலத் தலைவர் பதவி; பண்டைக் கிரேக்கரிடையே போர்க்கலத் தலைவர் பணி; போர்க்கல முதன்மை நேர்வுமுறை.

**trifa'cial,** *n.* முத்திற உணர்வு நரம்பு, இயக்கம்-ஊறுணர்ச்சி-சுவை ஆகிய மூன்றையுந் தூண்டும் மண்டை நரம்பு; *a.* மண்டை முத்திற உணர்வு நரம்பு சார்ந்த.

**trif'id,** *a.* (தாவ., வில) முப்பிரிவுடைய, முப்பிளவுடைய, முக்கவருடைய.

**tri'fle,** *n.* சிறுக்கம், அற்பம்; சிறு தொகை; சிறு மென்பண்ட வகை, பாலேடு அல்லது முட்டை வெண்கரு-பழம்-வாதுமை முதலியன கொண்டு செய்யப்படுந் தின்பண்டம்; சிறுவங்கம், வெள்ளீயமுங் காரீயமுங் கலந்த சாம்பல் நிற உலோகக் கலவை; *v.* விளையாட்டுத்தனமாகப் பேசு; பொறுப்பற்ற விதமாகச் செயலாற்று; சிறுபிள்ளைத்தனமாக நட; குறும்பாக நடந்துகொள், காலத்தை வீணாக்கு; ஆற்றலைச் சிதற அடி; பணத்தை வீணாக்கு.

tri'fler, *n.* விளையாட்டுக்காரர்; அற்பச் செய்திகளில் தலையிடுபவர்; கேலி கிண்டல் செய்பவர்; பொறுப்பற்றவர்.

tri'fle-ring, *n.* புதிர் வளைய வகை.

trif'ling, *a.* அற்பமான, சிறுதிறமான; அற்ப மதிப்புள்ள; பொருட்படுத்தத் தக்கதல்லாத; கலை வகையில் நேரப்போக்கு மனப்பான்மையுடைய.

triflor'al, triflor'ous, *a.* (தாவ.) மூன்று மலர்கள் கொண்ட.

trifo'cal, *a.* மூக்குக் கண்ணாடி வகையில் தொலை அணிமை நடுமைக் காட்சி முகப்புக்களை ஒருங்கேயுடைய.

trifol'iate, *a.* (தாவ.) இலை வகையில் மூவலகுடைய; (தாவ.) செடியின வகையில் மூவலகிலைகளையுடைய.

trifol'iated, *a.* (தாவ.) இலை வகையில் மூவலகுடைய; (தாவ.) செடிகள் வகையில் மூவலகிலைகளையுடைய; (க-க.) மூவிலை ஒப்பனையுடைய.

tri'form, tri'formed, *a.* மூன்று பகுதிகளாலான; மூவுருவங்களையுடைய.

trifurc'ate, *a.* முக்கிளைகளாக்கப்பட்ட; *v.* மூன்று கூறுகளாகப் பிரி.

trig, *n.* தடுப்புக்கட்டை, முட்டுக்கட்டை; சக்கரந் தடுப்பதற்கான செருகு ஆப்பு; *a.* முறுக்கான; படுநேர்த்தியான; விறுவிறுப்பான; *v.* முறுக்காக அணிசெய்; நேர்த்தியாக்கு; விறுவிறுப்பாக்கு; உதைகொடுத்து நிறுத்து; சப்பைக் கட்டையிடு; தடுப்புக் கட்டையிட்டுத் தடு.

trig'amist, *n.* ஒரேசமயம் மூன்று மனைவியரையுடையவர்; ஒரேசமயம் மூன்று கணவரை உடையவர்.

trig'amous, *a.* ஒரே சமயத்தில் மூன்று கணவரையுடைய; ஒரேசமயத்தில் மூன்று மனைவியரையுடைய; மும்முறை மணந்த; (தாவ.) ஒரே கொத்தில் ஆண் பெண் இணைபாற் பூக்களையுடைய.

trig'amy, *n.* ஒரே சமயத்தில் மூன்று கணவரையுடைமை, ஒரே சமயத்தில் மூன்று மனைவியரையுடைமை; திருச்சபைச் சட்ட வழக்கில் மூன்றும் முறை மணம்.

trigem'inal, *n.* முத்திற உணர்வு நரம்பு, இயக்கம்-உணர்ச்சி-சுவை ஆகிய மூன்றையுந் தூண்டும் மண்டை நரம்பு; *a.* மும்மடங்கான; முக்கவரான, முத்திற உணர்வு நரம்பு சார்ந்த.

trigem'inus, *n.* முத்திற உணர்வு நரம்பு, இயக்கம்-உணர்ச்சி-சுவை ஆகிய மூன்றையுந் தூண்டும் மண்டை நரம்பு

trigg'er, *n.* விசை வில், துப்பாக்கி விசையிழுப்பு; வினைத் தொடர் தொடக்குஞ் செய்தி.

tri'glot, *a.* மூன்று மொழிகளில் உள்ள.

trig'lyph, *n.* மூவரிப்பட்டை, பழங் கிரேக்க சிற்ப முறையில் தூண் தலைப்புப் பீட முகப்படியின் நிமிர்நிலை மூவரிப் பள்ளக்கூறு.

trig'on, *n.* முக்கோணவுரு; முக்கவட்டியாழ், பண்டைக் கிரேக்கர் வழங்கிய முக்கோணவுருவ யாழ்; பண்டைக் கிரேக்கரிடையே வழங்கிய மூவரிடைப் பந்தாட்டம்; (வான்.) வானவீதியில் 120° இடைப்பட்ட மூன்று இடைக்குறிகளுள் ஒன்று; (வான்.) மூவிராசித் தொகுதி, பன்னிரண்டு இராசிகளையும் மூன்று மூன்றுக்த் தொகுத்த நான்கு தொகுதிகளுள் ஒன்று.

trig'onal, *a.* முக்கோணவுருவமைந்த; மூன்று பக்க முகப்புக்களையுடைய; அறுகோணத்தில் பாதியுருவான; செவ்வூடான, ஊடச்சினைச் சுற்றி 120° சுழன்று தன்னுருவே ஆக்குகிற; வான்மண்டல இராசித்தொகுதி சார்ந்த; வான்மண்டல இராசி இடைக் குறியீடு சார்ந்த; (தாவ., வில.) முக்கோண வெட்டு வாயினையுடைய.

trigoneut'ic, *a.* (பூச்.) ஆண்டில் மும்முறை குஞ்சு பொரிக்கிற.

trigon'ic, *a.* முக்கோண உருவான; இராசித் தொகுதி சார்ந்த.

trigonom'eter, *n.* முக்கோண அளவைத் தீர்வு கருவி; கோண இயலாய்வாளர்.

trigonomet'ric, trigonomet'rical, கோணவியலான, முக்கோணக் கோணச்சிறைக் கணிப்பாய்வு சார்ந்த, திரிகோண கணிதஞ் சார்ந்த.

trigonom'etry, *n.* கோணவியல், முக்கோணத்தின் கோணச் சிறை வீதங்களைக் கணித்தாயுங் கணக்கியல் துறை, திரிகோண கணிதம்.

trig'onous, *a.* வெட்டுவாயில் முக்கோணவுருவான; வெட்டுவாய் ஏறத்தாழ முக்கோண வடிவில் அமைகிற.

tri'gram, *n.* மூவெழுத்து வரைவு; முக்கோட்டு வடிவம்.

tri'graph, *n.* ஓரொலி மூவெழுத்துத் தொகுதி.

trig'ynous, *a.* (தாவ.) மலர் வகையில் முச்சூலகங்களையுடைய.

trihed'ral, *a.* (வடி.) மும்முகப்புகளையுடைய.

trijug'ate, trijug'ous, *a.* (தாவ.) மூன்று சோடிகளையுடைய; மூன்று சோடிகளாக ஒழுங்கமைவுற்ற.

trilab'iate, *a.* (தாவ.) மூவிதழுடைய; (வில.) மூவிதழுறுப்புக்களையுடைய.

trilat'eral, *n.* முக்கோணம்; *a.* (வடி.) மூன்று பக்கங்களாலான; மூன்று சிறைகள் சார்ந்த; முக்கூட்டான, நடவடிக்கைகள் வகையில் மூன்று கட்சிகளையுடைய.

tril'by, tril'by hat, *n.* மென்மயிர்க் கம்பளத் தொப்பி.

trilemm'a, *n.* மூவழிச்சிக்கல், முக்கவர் ஊசலாட்டம்.

trilin'ear, *a.* (கண.) மூன்று கோடுகளையுடைய

triling'ual, *a.* மூன்று மொழிகளிலுள்ள; மூன்று மொழிகளைப் பயன்படுத்துகிற.

trilit'eral, *a.* மூவெழுத்துக்களாலான; மூன்று மெய்யெழுத்துக்களில் பெரும்பாலான பகுதிகளைக்கொண்ட.

trilit'eralism, triliteral'ity, *n.* மூன்றுமெய் அடி வேருடைமை.

tri'lith, *n.* முக்கூட்டுக் கல் தொகுதி; (தொல்.) சுமைதாங்கி வடிவக் கல்மேடை.

trill, *n.* நீடதிர்வொலி; நடுங்கொலி; பறவை நீள்முரல்வு; அதிர்வொலி, ரகர-றகர வொலிகள்; *v.* அதிர்வொலி செய்; அகவு, பறவை வகையில் நீள் முரல்விசை எழுப்பு.

trill'ing[1], *n.* மும்மணிப் பளிங்கு, மும்மணியுருப் படிவம்; மூவீற்றுக் குழவி, ஒரே பிறப்பில் மூன்று குழந்தைகளுள் ஒன்று.

trill'ing[2], *a.* அதிர்வொலியான, நடுங்கொலியான.

trill'ion, *n.* பதினுயிரங்கோடி கோடி; அமெரிக்க-பிரஞ்சு வழக்குகளில் நூறுயிரங்கோடி; *a.* பதினுயிரங்கோடி கோடியான; அமெரிக்க-பிரஞ்சு வழக்குகளில் நூறுயிரங் கோடியான.

trilob'ate, *a.* மூன்று மடல்களையுடைய.

tri'lobite, *n.* முக்கூற்றுடலினையுடைய தொல்லுயிருழி விலங்கின வகை.

trilobit'ic, *a.* தொல்லுயிருழி முக்கூற்றுடலுயிரின வகை சார்ந்த.

triloc'ular, *a.* மூன்று கண்ணறைகளுடன் கூடிய

tril'ogy, *n.* துன்பியல் நாடக மூன்றன் தொகுதி; மூன்றன் தொகுதி.

trim, *n.* செவ்வொழுங்கு, சீர்நிலை; சரிசெப்பம்; இசைவொழுங்கமைதி; ஒத்திசைவமைதி; வரிசை ஒழுங்கு, கத்தரிப்பு ஒழுங்கு; (கப்.) பாய்மர நிலைத்தொடர்பு; அணியமைதி; தொடர்பமைதி; இசைவுப் பொருத்த நிலை; மனநிலையமைதி; செயல் திருத்தம்; *a.* செவ்வொழுங்கான; வரியமைவான; திருத்தநலம் வாய்ந்த; சீரமைவான; கவர்ச்சியமைவான; பொலிவமைவான; நன்கு பேணப்பட்ட; செவ்வெட்டான, வரைநலமுடைய; உருச்செப்பமுடைய; *v.* (பே-வ.) கண்டி; (பே-வ.) வன்கண்மையுடன் திட்டு;

(பே-வ.) அடித்து நொறுக்கு; (பே-வ.) பணம்பறித்து ஏய்த்துவிடு; (பே-வ.) பேரத்தில் துயர்நிலைக்காளாக்கு; ஒழுங்குபடக் கத்தரி; மிகை நீக்கு; செப்பஞ்செய்; துப்புரவு செய்; ஒழுங்குபட அடுக்கிவை; பிசிரகற்று; தூசகற்று; விளக்குக் கரி நீக்கு; நேர்த்தியாக்கு; உடை ஒப்பனை செய்; அணிச் செப்பஞ் செய்; ஓர ஒப்பனை செய்; மீன்கண வகையில் கரையோரமாகச் செல்; (கப்.) சரக்குப் பளுவைச் சரியொப்ப நிலைப்படுத்து; (கப்.) பாய்த்திரைகளைக் காற்றுக்கேற்பச் சரி செய்தமை; அரசியலில் நடுநிலைச் செவ்வி கண்டு பின்பற்று; எக்கட்சியுஞ் சாரா்து நட.

**trimen'sual**, *a.* மும்மாத வாரியான, மூன்று திங்கள்களுக் கொருமுறை நிகழ்கிற.

**trim'erous**, *a.* (தாவ.) முக்கூறுகளையுடைய; மும்மூன்று களாயுள்ள பாகங்களையுடைய; (வில.) மூன்று மூட்டுக்களை யுடைய.

**trimes'ter**, *n.* மும்மாதம்; கல்வியாண்டில் ஒரு பருவம்.

**trim'eter**, *n.* மூவளவை யாப்பு, லத்தீன்-கிரேக்க மொழிகளில் குறில் நெடில் அசையார்ந்த மூவிருசீரடிப்பாட்டு; *a.* மூவிணைச் சீரியையுடைய.

**trimeth'ylene**, *n.* நீரகக் கரியம் அடங்கிய மயக்க மருந்துச் சரக்கு.

**trimet'rogen**, *n.* வானிழற்பட முறை, வானில் மூன்று கோணங்களிலிருந்து ஒரே வேளையில் எடுக்கும் நிழற்பட இயைபு.

**trim'ly**, *adv.* நல்லொழுங்காய்; நல் வரிசையாய்; நற்றூய் மையாய்; நற்பொலிவாய்.

**trimm'er**, *n.* ஆடை சீராக்குவோன்; நடுநிலையாளர்; கத்த ரிப்புக் கருவி வகை; விறகு தாங்கும் அணைப்புவிட்டக் கட்டை.

**trimm'ing**, *n.* கத்தரிப்பு, செவ்விதாக்குதல்.

**trimm'ings**, *n.* ஓர ஒப்பனைத் தொங்கல், ஓர ஒப்பனை.

**trim'ness**, *n* நல்லொழுங்கு, நல்வரிசை; நற்றூய்மை; நற் பொலிவு.

**trimorph'ism**, *n.* (உயி., தாவ., இய.) மூவுருத்திறம், மூன்று தெளிவான உருவங்களில் தோன்றுதல்.

**trimorph'ous**, *a.* (உயி., தாவ., படிக அமைப்பாய்வியல்) மூவுருத்திறமான, மூன்று தெளிவான உருவங்கள் வழிப் படுகிற.

**trin**, *n.* ஒரீற்று முப்பிறப்பு; மூவிரட்டை.

**trin'ary**, *a.* மும்மடங்கான.

**trine**, *n.* (வான்.) கோள் விரிகோண இடைவு, இரு கோள்கள் 120° பாகை விரிகோணத்திலுள்ள நிலை; *a.* மும்மடியான; மும்மடங்கான; முக்கூறுன, முப்பகுதியாகிய.

**trinerv'ate** *a.* மூன்று நரம்புகளையுடைய.

**trin'gle**, *n.* திரைக் கம்பி.

**trinitar'ian**, *n.* இறை மூவொருமைக் கோட்பாட்டாளர்.

**trinitar'ianism**, *n.* இறை மூவொருமைக் கோட்பாடு.

**trinitrotol'uene, trinitrotol'uol**, *n.* பெருவிசை வெடி மருந்து வகை.

**trin'ity**, *n.* மும்மை; மூன்றன் தொகுதி; மும்மூர்த்தம்; கலைத்துறை மூவொருமைக் குறிப்படிவு.

**trink'et**, *n.* சிற்றணி; சிறு நகை; வேடிக்கைச் சிறுக்கம்.

**trink'etry**, *n.* சிறுநகைத் தொகுதி, சிறு அணிமணித் தொகுதி.

**trinod'al**, *a.* (உள்., தாவ.) மூன்று மூட்டுக் கணுக்களை யுடைய.

**trinom'ial**, *a.* தொகை வகைவிரியான.

**trinom'ialism**, *n.* தொகை வகை விரிப் பாகுபாடு

**tri'o**, *n.* மும்மை, முப்பொருள் தொகுதி; மூவர்; முக்கூட் டிசை, மூவருக்கான இசையமைப்பு; முக்கூட்டிசைப்பு, மூவர் கூடியிசைத்தல்.

**tri'ode**, *a.* சேனெலி அடைப்பிதழ்களின் வகையில் மூன்று மின் முனைப்புடைய.

**Trion'es**, *n.pl.* கலப்பை விண்மீன் குழு.

**tri'or**, *n.* முறைகாணுயத் தீர்வுநடுவர்.

**triox'ide**, *n.* (வேதி.) மூவுயிரகை, உயிரக அணுக்கள் மூன்று கொண்ட சேர்ம வகை.

**trip**, *n.* சிறு பயணம்; சிறு கடற்செலவு; சிற்றுலா; சிறு நடை; சிறுதொலைப் போக்குவரவு; இன்பப் பயணம்; மென் னய நடனம்; நடை இடறுகை, கால்தடுமாற்றம்; இடறு விப்பு; பயணத்தடவை; *v.* மென்னய நடையிடு, மெல்லென ஓடு; சிறு பயணம் மேற்கொள்; இன்னுலாச்செல்; நடை தடுமாறு; வழுவு, நேர்மை திறம்பு; காலிடற வை; கையுங் களவுமாய்ப் பிடி; (கப்.) நங்கூரந் தளர்த்து; (கப்.) பாய்மரக் கைகளைக் கிடை நிலையிலிருந்து நிமிர் நிலைக்கு மாற்று; இயந்திரத்தடையைத் திடீரென விலக்கி ஓடவிடு.

**tripart'ite**, *a.* முப்பகுதிகளாகப் பிரிக்கப்பட்ட; (தாவ.) இலை வகையில் அடிவரை முப்பிரிவாய்ப் பிரிந்த; மூன்று கட்சிகளிடைப்பட்ட, மூவரிடைப்பட்ட.

**triparti'tion**, *n.* முக்கூட்டு ஒப்பந்தம்; முப்பாற் கட்டுப் பாடு; முப்படி உடன்படிக்கை.

**tripe**, *n.* எருதின் அடிவயிற்றிறைச்சி, முதன்மைக் குட லிறைச்சி'; கழிவுக் குடற்கொடி; (இழி.) கீழ்த்தரப்பொருள்.

**tripe'man**, *n.* மாட்டுக் குடலிறைச்சி தயாரிப்பவர்; மாட்டுக் குடலிறைச்சி விற்பவர்.

**trip'ery**, *n.* எருதுக் குடலிறைச்சி விற்குமிடம்; எருதுக் குடலிறைச்சி தயாரிப்பிடம்.

**tripet'alous**, *a.* (தாவ.) மூவிதழ்களையுடைய.

**tripe'wife, tripe'woman**, *n.* மாட்டுக் குடலிறைச்சி விற் பவள்; மாட்டுக் குடலிறைச்சி தயாரிப்பவள்.

**trip'-hammer**, *n.* சாய்வுச் சம்மட்டி.

**triphib'ian**, *n.* நில-நீர்-வான்வழிப் போர்த்திறலாளர்; *a.* நில-நீர்-வான்வழிப் போர்த்திறம் வாய்ந்த.

**triphib'ious**, *a.* நில-நீர்-வான் ஆகிய மூவழிகளிலும் செல்லத் தக்க.

**triph'thong**, *n.* (ஒலி.) மூவிணை உயிரொலி.

**triphyll'ous**, *a.* மூவிலைகளையுடைய.

**tri'plane**, *n.* முத்தள வானூர்தி, ஒன்றன்மீதொன்றாக முத் தளங்களையுடைய விமானம்.

**tri'ple**, *n.* மும்மடியாக்கம்; *a.* மும்மடங்கான; முக்கூறுன, முப்பகுதிகளாயுள்ள; முக்கூட்டான, ஒப்பந்த வகையில் மூன்று நாடுகளிடையே செய்யப்பட்ட.

**trip'let**, *n.* மூன்றன் தொகுதி; ஒத்திசைக்கும் மூன்று பாவடித் தொகுதி; (இசை.) இரு சுர நேரத்தில் ஒருங்கிசைப் பாக இணைக்கப்படும் முச்சுரத்தொகுதி.

**trip'licate**, *n.* முப்படித்தொகுதி; *a.* மும்மடியான; முப்படி யான; *v.* மும்மடங்காக்கு, முப்படியாக்கு.

**triplica'tion**, *n.* முப்படியாக்கம்; முப்படித்தொகுதிக்குரிய மறுமொழி.

**trip'licature**, *n.* முப்படியாக்கம்.

**trip'lice**, *n.* முக்கூட்டு ஒப்பந்தம்.

**tripli'city**, *n.* மூன்றாய் உள்ள நிலை; மும்மடி நிலை.

**trip'od**, *n.* முக்காலி; முக்கால் தட்டு; நிழற்படத்துறை முக்கால் நிலைச்சட்டம்.

**trip'oli**, *n.* தேய்ப்புக் கல்.

**trip'os**, *n.* கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகச் சிறப்புப் பட்டத் தேர்வில் வெற்றிபெற்ற மாணவர் பட்டியல்; நன்மதிப்புப் பட்டத் தேர்வில் வெற்றிபெற்றவர்.

**tripp'er**, *n.* இன்னுலாச் செல்பவர்; குதித்து நடனமாடுபவர், காலை வாரிவிடுபவர்.

**tripp'ing**, *n.* குதிநடை; குதிநடனம்; இடறுவித்தல்; இடறல்; *a.* குதிநடையிடுகிற; குதிநடனமாடுகிற; இடறுவிக்கிற; இடறுகிற.

**tript'ane**, *n.* விமானத்துக்குரிய ஆற்றல்மிக்க எரிபொருள்.

**trip'tych**, *n.* மும்மடிமேசை.

**tripud'iate**, *v.* குதித்துக்கூத்தாடு; மகிழ்ச்சி ஆரவாரஞ் செய்.

**trir'eme**, *n.* மூவரித்தோணி, பண்டைக் கிரேக்கரிடையே மூவரிசைத் துடுப்புகளையுடைய போர்க்கப்பல்.

**Trisag'ion** (கிரே.) *n.* கீழைத் திருச்சபை வழக்கில் முத்துதிப் பாடல்.

**trisect'**, *v.* முக்கூறுக்கு.

**trisec'tion**, *n.* முக்கூறுக்கம்.

**trisect'or**, *n.* முப்பாற்பாகுபாடு செய்பவர்; முக்கூறுக்குபவர்.

**trisect'rix**, *n.* கோணத்தை முப்பாற் பாகுபாடு செய்யும் சமன்பாட்டு வளைவரைகோடு.

**tris'mus**, *n.* வாய்க்கட்டு நோய்.

**trist'ful**, *a.* (அரு.) சோர்வான, முகச்சடைவான.

**trisyllab'ic**, *a.* சொல் வகையில் மூவசையுடைய.

**trisyll'able**, *n.* மூவசைச் சொல்.

**tritag'onist**, *n.* கிரேக்க நாடக வழக்கில் மூன்றுவது நிலை நடிகர்.

**trite**, *a.* பழகிச் சலித்துப்போன, வழங்கி அலுத்துப்போன, சாதாரணமான.

**tri'theism**, *n.* முக்கடவுட் கோட்பாடு, மூவிறைக் கொள்கை.

**tri'theist**, *n.* மூவிறைக் கொள்கையாளர்.

**tritheis'tic, tritheis'tical**, *a.* மூவிறைக் கொள்கை சார்ந்த.

**trit'ium**, *n.* (வேதி.) நீரக ஓரகத்தனிமம், நீரகத்தின் மும்மட்ங்கு அணு எடையுடைய பிறிதுருத் தனிமம்.

**Trit'on** [1], *n.* பண்டைக் கிரேக்க கடற்றெய்வம்.

**trit'on** [2], *n.* உடும்பு வகை, பல்லியின உயிர்வகை; நீரக ஓரகத் தனிமத்தின் கருவுள்

**trit'urable**, *a.* நுண்ணயப் பொடியாக அரைக்கத்தக்க.

**trit'urate**, *v.* நுண்தூளாக்கு, நுண்ணயப் பொடியாக்கு; மாவகை அரை; பின்கடைவாய்ப் பல்லால் நொறுங்க அரை.

**tritura'tion**, *n.* நொறுங்குதல், நுண்பொடியாக்கம், நுண்ணயத் தூளாக அரைத்தல்; மாவாக்குதல்.

**trit'urator**, *n.* நொறுங்க அரைப்பவர்; நொறுங்க அரைப்பது; தூளரைப்புக்கருவி; மாவரை கருவி; குழியம்மிக் குழவி.

**tri'umph**, *n.* வெற்றி அணிவகுப்பு; வாகை விழா; வெற்றிச் சிறப்பு; *v.* வாகைசூடு; வெற்றிகொண்டிரு; வெற்றி எக்களிப்புக் கொள்.

**trium'phal**, *a.* பெருவெற்றி சார்ந்த; வெற்றி விழாவிற்குரிய; வெற்றி ஊர்வலத்திற்குரிய.

**trium'phant**, *a.* வெற்றிக் களிப்புடைய.

**tri'umphing**, *a.* வென்று மேம்படுகிற.

**trium'vir**, *n.* பணிமூவொருவர்.

**trium'virate**, *n.* பணிப்பெரு மூவர்; பணி மூவர் அலுவலகம்; பணி மூவர் தொகுதி.

**tri'une**, *n.* மூன்றொன்றுனமை; *a.* மூன்றொன்றுன.

**triun'ity**, *n.* மூவொருமை.

**triv'alent**, *a.* (வேதி.) மூவிணை திறமுடைய, மூன்று அணுக்களுடன் இணையும் இயல்புகொண்ட.

**triv'et**, *n.* அடுப்படிக் கோக்காலி; சமையற் கலந்தாங்கி; முக்கவர்த் தாங்குசட்டம்; (தொ.) right as a trivet, நிலைபேறுடைய, நன்றுகிய.

**triv'ial**, *a.* மிகச் சிறுதிறமான, நொய்தின் நொய்தான; சாரமற்ற; மிகப் பொது நிலைப்பட்ட, பழகிச் சலிப்பூட்டுகிற.

**triv'ialism**, *n.* மிகச் சிறு செய்தி; அற்பக் கருத்துரை.

**trivial'ity**, *n.* சிறப்பில் பண்பு; சாதாரணம்.

**triv'ialize**, *v.* மிக அற்பமாகக் கருது.

**tri-week'ly** *n.* முக்கிழமை வெளியீடு.

**troat**, *n.* மதமான் குரல், இணைவிழைச்சுப் பருவக் கலைமானின் கரைவு; *v.* கரப்பொலி கொடு, கலைமான் வகையில் இணைவிழைச்சுப் பருவக் கரைவு எழுப்பு.

**troc'ar**, *n.* (மரு.) நீரெடுப்புக்கருவி, மகோதரம் போன்ற நீர் நோய் வகையில் உடலிலிருந்து நீர் எடுக்க உதவிய முற்கால மருத்துவக் கருவி.

**trocha'ic**, *n.* நெடில் குறில் ஈரசைச் சீர் யாப்புச் செய்யுள்; *a.* நெடில் குறில் ஈரசையாலான; நெடில் குறில் ஈரசைச் சீரா லான; நெடில் குறில் ஈரசைச்சீரடி யாப்பாலான.

**troch'ee**, *n.* பண்டை லத்தீன-கிரேக்க மொழி வழக்கில் நெடில் குறில் ஈரசைச்சீர்; ஆங்கில மொழி வழக்கில் அழுத்த அசை அழுத்தமில் அசை ஆகிய ஈரசைச் சீர்.

**troch'il, troch'ilus**, *n.* குருவி வகை; முரலுஞ் சிறு புள் வகை; முதலைப் பற்களைப் பொறுக்குவதாகப் பண்டு குறிக்கப்பெற்ற பறவை வகை.

**troch'lea**, *n.* (உள்.) கப்பி போன்ற அமைவு; கப்பிபோன்ற உறுப்பு; கப்பிபோன்ற பகுதி; *pl.* troch'leae.

**troch'oid**, *n.* (உள்.) குழைச்சுப் பொருத்து; (வடி.) பல்லக்கு வளைவு, வரை மீது சுழல் வட்டத்தினுட் புள்ளி இயக்கங்காட்டும் வளைகோடு; (வில.) பம்பரச் சங்கு, பம்பர வடிவான சங்கு; *a.* (உள்.) குழைவு சுழல்வான, தன் ஊடச்சின் மீது தானே சுழல்கிற.

**trochoid'al**, *a.* பம்பரச்சங்கு வடிவான.

**trochom'eter**, *n.* ஊர்திச் செலவுத் தொலைமானி.

**trod**, *v.* tread என்பதன் இறந்த காலம்; tread என்பதன் முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**trodd'en** [1], *a.* மிதிபட்ட; மேல் மிதித்து நடந்த; காலரைபட்ட.

**trodd'en** [2], *v.* tread என்பதன் முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**trog'lodyte**, *n.* குகை வாழ்நர்; துறவி; குருவி வகை; குரங்கு வகை.

**trog'lodytism**, *n.* வரலாற்றுக்கு முற்பட்டகாலக் குகை வாழ்நர் பற்றிய கோட்பாடு.

**troik'a**, *n.* ருசிய நாட்டில் வண்டி வகையில் முன்னேடும் மூன்று குதிரைத் தொகுதி; ருசிய நாட்டில் முன்னேடும் மூன்று குதிரைத் தொகுதியுடைய வண்டி.

**Troj'an**, *n.* திராய் (Troy) நகர்வாணர், பண்டைக் கிரேக்க வீர காப்பியக் கதைக்களமான திராய் நகரினுக்குரிய குடிவாணர்; விடாப்பிடி வீரர், உறுதியுடன் போராடுபவர்; உரவோர்; உறுதியுடன் தாங்குபவர்; *a.* திராய் நகருக்குரிய.

**troll** [1], *n.* ஸ்காந்திநேவிய மரபில் பூதம், அச்சந்தரும் வேதாளம்.

**troll** [2], *n.* விட்டிசைப் பாடல், அடுத்தடுத்து அலையலையாகப் பாடப்படும் பாடல்; மீன் தூண்டில் வரிக்கயிற்றுச் சுருள்; மீன் படகுக் கரண்டி; *v.* விட்டிசைத்துப் பாடு, கவலையின்றிப் பாடு; தூண்டிலிட்டு மீன் பிடி.

**troll'ey, troll'y**, *n.* தள்ளுவண்டி; கொட்டுவண்டி, சாய்த்துக் கொட்டத்தக்க தள்ளுவண்டி வகை; விற்பனைத் தள்ளுவண்டி; வேசரி வண்டி, கழுதை இழுக்கும் விற்பனை வண்டி; தொழிலாளர் செல்லும் இருப்பூர்தித் தட்டுவண்டி; உணவுமேடைச் சுழல் சக்கர மேசைத்தட்டு; மின் ஊர்திக்கம்பி யிழையுருளை;

**troll'ey-lace**, *n.* கம்பித் துன்னல் இழை

**troll'ey-pole**, *n.* மின்னூர்திக் கூம்பு, மின்னூர்தியில் மின் கம்பியுடன் இழையும் உருளை தாங்கிக் கோல்.

**troll'op,** *n.* பொதுமகள், வேசி.
***trom'ba,*** (இத்.) *n.* (இசை,) எக்காளம், ஊதுகொம்புக் கருவி.
**trom'bone,** *n.* பேரிசைக் கொம்பு.
**trom'bonist,** *n.* பேரிசைக் கொம்பூதுபவர்.
**tromm'el,** *n.* (சுரங்.) சுழல்மிடா, தாதுப்பொருள்களைத் தூய்மை செய்யுஞ் சுழல் நீளுருளைக் கலம்.
**tromom'eter,** *n.* நில அதிர்வலைமானி.
**trompe,** *n.* ஊதுலையடுப்பு.
**troop,** *n.* படைப்பிரிவு, பட்டாளம்; தானை, குதிரைப் படைப் பிரிவுத்தொகுதி; தானைத்தலைமை; குதிரைப்படைப் பிரிவுத் தொகுதித் தலைமை; பீரங்கிப்படைத் தொகுதி; கவசப்படைத் தொகுதி; அணிவகுப்புப்படை முரசொலி; இசைஞர் குழு; விலங்குக் குழு; மக்கள் கூட்டம்; *v.* குழுமு; படைதிரளு; அணிவகுப்பாக இயங்கு; பல் குழுவாக விரைந்தோடு.
**troop'er,** *n.* படைக்குதிரை; படைக்கப்பல்.
**tropae'olum,** *n.* படர்கொடி வகை.
**trope,** *n.* சொல்லணி வழக்கு; உருவக வழக்கு; சமய வழி பாட்டு உரையின் அணிநயச் சொற்றொடர்.
**troph'ic,** *a.* நரம்பு வகையில் உணவூட்டஞ் சார்ந்த.
**tro'phied,** *a.* வெற்றிநினைவுச் சின்னம் பதித்து வைக்கப் பட்ட; வெற்றிச் சின்னம் வழங்கப்பட்ட; பரிசில் வழங்கப் பட்ட.
**trophoneuros'is,** *n.* நரம்புக் கோளாறினால் ஏற்படுஞ் செமிப்புக்குறைவு.
**troph'y,** *n.* வெற்றிச்சின்னம்; வாகைப்பூ; வாகைப்பதக்கம்; வெற்றி நினைவுக் கட்டுமானம், வெற்றிநினைவுத் தூண், வெற்றி நினைவுமாடம்; வெற்றிநினைவுக்குறி; வெற்றித்திறை; பரிசிற்பொருள்; *v.* வெற்றி நினைவுச்சின்னம் பதித்துவை; வெற்று நினைவுச்சின்னமாக்கு; பரிசில் வழங்கு.
**trop'ic,** *n.* வெப்பமண்டல எல்லைக்கோடு, நிலநடுக்கோட்டி லிருந்து வடக்கே அல்லது தெற்கே 23 பாகை 27 கலை தொலைவில் நிலவுலகைச் சுற்றியுள்ள வட்டக்கோடு; *a.* வெப்பமண்டலஞ் சார்ந்த.
**trop'ical,** *a.* நிலவுலக வெப்பமண்டலப் பகுதி சார்ந்த; வெப்ப மண்டலப் பகுதிக்கேயுரிய; வெப்பமண்டல நிலையை நினைவூட்டுகிற.
**tropicopol'itan,** *n.* வெப்பமண்டலத்தில் வாழும் உயிர் வகை; வெப்ப மண்டலத்தில் வளருந் தாவர வகை.
**trop'ics,** *n.pl.* நிலவுலக வெப்பமண்டலப் பகுதி.
**tropol'ogy,** *n.* உருவக வழக்கு விளக்கம்.
**trop'opause,** *n.* சேணிடை, வளிமண்டிலத்திற்கும் மீவளி மண்டிலத்திற்கும் இடைப்பட்ட சிற்றிடை அடுக்கு.
**trop'osphere,** *n.* அடிவளிமண்டிலம்.
***tropp'o,*** (இத்.) *adv.* (இசை) ஓரளவு மிக்கதாக.
**trot,** *n.* தவ்வுநடை; துள்ளுநடை; குதிரையின் கெச்சைநடை; கெச்சைநடை உலா; சிறுதொலைக் கெச்சைநடை; தவ்வு நடைப் பயிற்சி; தவ்வுநடைவேகம்; வேலைவகையில் தவ்வு வேகம்; இடைவிடா விரை போக்குவரவு; தொடர் சுறு சுறுப்பு நடவடிக்கை; தத்துநடைக் குழந்தை; *v.* தவ்வு நடை போடு; குதிரை வகையில் கெச்சைநடை போடு; குதிரையைத் தவ்வுநடைபோடுவி; ஆள்வகையில் மட்டான விரை ஓட்டமிட்டுச் செல்; தொலைவினை ஓடிக்கடந்து செல்; மட்டான விறுவிறுப்புடன் நடவடிக்கையில் ஈடுபடு; பகட் டாகச் செய்துகாட்டி வீறுப்படை; (தொ.) trot out, கொண்டுவந்து நடத்திக்காட்டு; வந்து பகட்டு; விரைந்து வெளியே செல்.
**troth,** *n.* மெய்யுறுதி, உரை வாய்மை; *adv.* மெய்யாக.
**trott'er,** *n.* தவ்வு நடையர்; தவ்வு நடையிடுவது; கெச்சை நடைக் குதிரை.
**trott'ers,** *n. pl.* ஆட்டுக்கால் இறைச்சி; பன்றிக்கால் இறைச்சி.
**trot'yl,** *n.* (வேதி.) ஆற்றல்மிக்க வெடிமருந்து.

**trou'badour,** *n.* யாழ்ப்பாணர், பிரெஞ்சுநாட்டுப் பிரவென்சு (Provence) பகுதியிலிருந்து தொடங்கி மேலை ஐரோப்பா வெங்கும் பதினோராம் நூற்றாண்டில் பரவி இயங்கிய நாடோடி இசைப் பாடகர்.
**trou'ble,** *n.* குழப்பம், தொந்தரவு; தொல்லை; அலைக்கழிப்பு; மனக்கலக்கம்; சிறு மனக்கசப்பு; நோய்ப்பீடிப்பு; நோய்; இடர்ப்பாடு; துயர்க்காரணம்; (சுரங்.) சிறு கோளாறு; சிறு தொல்லை; *v.* தொல்லைப்படுத்து; தொந்தரவு செய்; கவலையூட்டு; கவலைப்படுத்து; கவலைப்படு; கடு முயற்சி மேற்கொள்ளுவி; கடுமுயற்சி மேற்கொள்; உள்ளத்தை அலைக் கழிவுறுத்து; கலக்கு; (தொ.) trouble one for, அதனை எடுத்துத் தருக எனக் கேள்.
**trou'ble-shooter,** *n.* (பே-வ.) இயந்திரக் கண்காணி, இயந் திரக் கோளாறு கண்டுதிருத்தும் பணியாளர்; தொழில்துறை வழக்குநடுவர்.
**trou'blesome,** *a.* தொல்லை தருகிற; அலைக்கழிப்பான.
**trou'blesomeness,** *n.* தொந்தரவு; தொல்லை.
**trou'blous,** *a.* (பழ.) தொல்லை நிறைந்த; கிளர்ச்சிகளுக் குரிய; அலைவுற்ற, கலக்கமுற்ற.
**trough,** *n.* தொட்டி; தண்ணீர்த்தொட்டி; விலங்குக் குடி நீர்த்தொட்டி; கழுநீர்த் தொட்டி.
**trounce,** *v.* நச்சரி; அடித்து ஒறு; கடுமையாகக் கண்டி; வன்மையாகத் தண்டி.
**troun'cing,** *n.* நச்சரிப்பு, அடித்தொறுப்பு, கடுங்கண்டிப்பு.
**troupe,** *n.* நடிகர் குழு; கழைக்கூத்தாடியர் குழு.
**troup'er,** *n.* நடிகர்குழு உறுப்பினர்.
**trous'ered,** *a.* காற்சட்டையிட்ட, காற் சிராய் அணிந்த.
**trous'erings,** *n. pl.* காற்சட்டைத் துணிகள்.
**trous'ers,** *n.pl.* காற்சட்டை; தளர் கால்சிராய்; பெண்டிர் தளர் காற்குழாய்.
**trous'er-stretcher,** *n.* காற்சட்டைத் திண்காழ், காற் சட்டை வடிவு குலையாது வைக்கப் பயன்படுங் கருவி.
**trousseau', trou'sseau,** *n.* மணப்பெண் ஆடையணிமணித் தொகுதி; *pl.* trousseaus'; trousseaux'.
**trout,** *n.* நன்னீர் உணவு மீன் வகை.
**trout'-coloured,** *a.* குதிரை வகையில் வெள்ளையில் கறுப்பு-கருஞ்சிவப்பு-செம்பழுப்புப் புள்ளியிட்ட.
**trout'ing,** *n.* நன்னீர் மீன்வகை பிடித்தல்.
**trout'-stone,** *n.* புள்ளிகளுடைய கலவைப் பரற் கற்பாறை வகை.
**trout'y,** *a.* நன்னீர் மீன்வகை நிரம்பிய; நன்னீர் மீன்வகை போன்ற.
***trouvaille,*** (பிர.) *n.* புதையல், எதிர்பாரா நன்மை.
**trove,** *n.* புதையல், படுபொருள்.
**trov'er,** *n.* (சட்.) தற்பொருளீட்டம், சொந்தப்பொருட் சேர்ப்பு; தற்பொருள் மீட்பு.
**trow'el,** *n.* சட்டுவக் கரண்டி; *v.* சாந்து பூசு.
**troy, troy weight,** *n.* பொன்-வெள்ளி எடை அளவை முறை.
**tru'ancy,** *n.* மட்டம்போடுதல், விடுப்பிசைவு பெறாது பணிக் குச் செல்லாமை.
**tru'ant,** *n.* மட்டம் போடுபவர், வேலைக்குச் செல்லாதிருப் பவர்; *a.* சோம்பித் திரிகிற; கடமைவிட்டலைகிற; (தொ.) play truant, மட்டம்போடு; விடுப்பிசைவு பெறாமலே பள்ளிக்குச் செல்லாதிரு.
**truce,** *n.* தற்காலப் போர் நிறுத்த உடன்பாடு; தற்காலப் போர்நிறுத்தம்; போரிடையே இடை ஓய்வுப்பருவம்; இடை ஓய்வு; இடை நிறுத்தம்.
**tru'cial,** *a.* போர்நிறுத்த உடன்பாட்டிற்குக் கட்டுப்பட்ட; போர்நிறுத்த உடன்பாட்டில் கையொப்பமிட்ட.

**truck**[1], *n.* பாரக்கட்டைவண்டி, இருப்புப்பாதையில் சரக்கேற்றிச் செல்லும் மொட்டைத் தட்டுவண்டி ; ஊர்தி நிலையச் சுமைகூலியாட்களின் தள்ளுவண்டி ; படைத்துறைப் புடைபெயர்ப்பு உந்துவண்டி ; இருப்பூர்தியின் சக்கர அடிச்சட்டம் ; (கப்.) பாய்மர உச்சித்தட்டு ; *v.* கட்டைவண்டியில் இட்டுச்செல் ; தள்ளுவண்டியில் இட்டுத்தள்ளு.

**truck**[2], *n.* பண்டமாற்று; பரிமாற்றம்; வாணிகச் சிறு சரக்கு; சந்தைச் சரக்கு, வாணிகத் தோட்டச் சரக்கு ; படைக்கூலி ; *v.* பரிவர்த்தனை செய்துகொள் ; தொடர்பு வைத்துக்கொள் ; (தொ.) truck system, வேலையாட்களுக்குச் சம்பளப் பணத்திற்குப் பதில் பண்டங் கொடுத்தல்.

**truck'age**[1], *n.* மொட்டை வண்டியுய்ப்பு.

**truck'age**[2], *n.* பண்டமாற்றுச் சரக்குக் கொடுக்கல்வாங்கல் மாற்றீடு.

**truck'er**, *n.* பண்டமாற்றுச் செய்பவர் ; கூவி விற்பவர்.

**truck'-farm**, *n.* சந்தை வாணிகக் காய்கறிப்பண்ணை

**truck'ing**, *n.* பண்டமாற்று வாணிகம் ; கூவி விற்பனை.

**truc'kle**, *n.* அடிக்கட்டில், படுக்கையினடியில் தள்ளிச் செருகும்படி சக்கரமிட்ட தாழ்வான படுக்கை ; முற்கால வேலையாட்களின் படுக்கை ; *v.* கெஞ்சு; கீழ்ப்படி; அடிவருடு.

**truc'kle-bed**, *n.* அடிச்செருகு கட்டில்.

**truck'ler**, *n.* அடிவருடி, கெஞ்சி வாழ்பவர்.

**truck'ling**, *n.* அடிவருடுதல், கெஞ்சிப்பிழைப்பு.

**truc'ulence, truc'ulency**, *n.* கொடுமுரட்டாட்சி, இரக்கமற்ற அடக்குமுறைப்பண்பு, வலிந்து மேற்சென்று தாக்குங் கொடும்பண்பு.

**truc'ulent**, *a.* இரக்கமற்ற கொடுந்தாக்குதல் பண்புடைய; கடுமுரட்டுத்தனங் காட்டுகிற.

**trudge**, *v.* உலைந்து நட, சிரமப்பட்டு நட.

**trudg'en**, *n.* கையை மாற்றி மாற்றித் தூக்கி நீச்சாடல்.

**true**, *a.* உண்மையான ; அறிவுக்குப் பொருத்தமான ; சரியான ; கொள்கைக்கு ஏற்ற ; நன்றியுணர்வுடைய ; விசுவாசமான ; பிறழாத, ஒரு நிலையான, உண்மைப்பற்றுமிக்க ; பற்றுறுதிவாய்ந்த ; நேர் நிலையிலுள்ள ; உருவகையில் சீர் நிலையில் உள்ள ; *v.* கருவிகளைச் சரியான நிலைக்குக் கொண்டு வா ; கருவிகளைச் சரியான வடிவிற்குக் கொண்டு வா ; *adv.* உண்மையாய் ; (தொ.) true bill, முறைப் பேராயத்திடம் அளிக்கப்படுங் குற்றச்சாட்டுப் பகர்ப்பு.

**true'-blue**, *n.* சால்புறுதியாளர், கொள்கை பிறழாதவர் ; *a.* சால்புறுதி வாய்ந்த, கொள்கையில் ஊன்றிய.

**true'-born**, *a.* உண்மை உயர்குடித் தோன்றிய.

**true'-bred**, *a.* இனமரபுத் தூய்மையுடைய.

**true'-heart'ed**, *a.* உண்மை தவருத ; உள்ளம் பிறழாத.

**true'-love**, *n.* உள்ளக் காதலி ; இதயக் காதலன் ; பிறழாக் காதலர் ; காதலங்கண்ணி ; நாலிதழ்ப் பூவுரு ; *a.* உண்மைக் காதலுக்குரிய.

**true'-love knot, true'-lover's knot**, *n.* காதலங்கண்ணி, காதலடையாளமான இருமடிப் பின்னல் முடிச்சு ஒப்பனையிட்ட கழுத்துப்பட்டி.

**truf'fle**, *n.* பூங்கிழங்கு, சுவையூட்டாகப் பயன்படுங் காளான் வகையின் நிலவடிக்கட்டை.

**truf'fled**, *a.* பூங்கிழங்கார்ந்த, காளான் வகையின் அடிநிலக் கட்டையிட்டுச் சுவையூட்டப்பட்ட.

**trug**, *n.* பால்மரவை, மரப் பாற்கலம்.

**tru'ism**, *n.* வெள்ளிடை மெய்ம்மை, அங்கை நெல்லிக்கனி ; யாவரும் அறிந்தது.

**trull**, *n.* (பழ.) விலைமகள்.

**tru'ly**, *adv.* உண்மையாக ; மெய்யாகவே ; நன்றியாக.

**Tru'man Doctrine**, *n.* அமெரிக்க ஐக்கிய அரசுத் தலைவர் ட்ருமன் 1947-இல் தொடங்கிவைத்த தொலைநாடுகளுக்குப் பொருளாதார உதவிசெய்யும் அமெரிக்க கோட்பாடு.

**trumeau**, (பிர.) *n.* வாயில் நடுநிலைத்தூண் ; வழி ஊடுதூண் வரிசை ; வழி ஊடு குறுஞ்சுவர் ; *pl.* *trumeaux*.

**trump**[1], *n.* துருப்புச் சீட்டு; துருப்புப் பிடியாட்டம், முற்காலச் சீட்டாட்ட வகை.

**trump**[2], *n.* எக்காளம், ஊதுகொம்பு ; ஊதுகொம்பொலி.

**trump**[3], *n.* (அரு.) தடங்கல், வழித்தடை ; *v.* வழித்தடை செய், தடங்கலிடு ; சாட்டியுரை ; பொய்புனைந்து இட்டுக் கட்டிக்கூறு.

**trumped'-up**, *a.* இட்டுக்கட்டப்பட்ட ; பொய்யாகப் புனைந்து காட்டப்பட்ட.

**trump'ery**, *n.* வெற்றுப் பகட்டணி ; சத்தற்றது, உள்ளீடற்றது ; முட்டாள்தனம் ; *a.* வீண்பகட்டான ; ஏமாற்றுன; பயனற்ற

**trump'et**, *n.* எக்காளம், ஊதுகொம்பு ; பித்தளையாலான பல்லியக் கருவி ; பேரிசைப் பேழையில் எக்காள உறுப்பு ; தூதுவர் ; *v.* எக்காளமிடு ; ஊதுகொம்பால் அறிவிப்புச் செய் ; யானைவகையில் பிளிறு ; (தொ.) blow one's own trumpet, தற்பெருமை பேசு ; feast of trumpets, யூதரின் ஆண்டுத் தொடக்கவிழா.

**trump'et-call**, *n.* எக்காள நாதம் ; போர்க்கழைப்பு.

**trump'et-conch**, *n.* கடற்சங்கு வகை.

**trump'eted**, *a.* எக்காள முழக்கித் தெரிவிக்கப்பட்ட ; முழக்கால் அறிவிக்கப்பட்ட.

**trump'eter**, *n.* எக்காள ஒலியெழுப்புபவர் ; படைத்துறை எக்காள இசைப்புவீரர் ; புகழ்பாடுபவர்.

**trum'peting**, *n.* எக்காள இசைப்பு ; பிளிறுகை ; புகழ்ந்து பாடுதல் ; *a.* பிளிறுகிற ; புகழ்ந்து பாடுகிற

**trump'et-ma'jor**, *n.* படை எக்காளத்தர் தலைவர்.

**trump'et-tongued**, *a.* எக்காளக்குரல் எழுப்புகிற ; உரத்துப் புகழ்பாடுகிற.

**trump'et-tree, trump'et-wood**, *n.* செவ்விந்தியர் எக்காளத திற்குப் பயன்படுத்தும் பொள்ளலான மரவகை.

**trunc'al**, *a.* உடற்பகுதி சார்ந்த ; அடிமரஞ் சார்ந்த.

**trunc'ate**, *a.* குறைக்கப்பட்ட ; தலை வெட்டப்பட்ட ; முனை முறிக்கப்பட்ட ; கூழையாக்கப்பட்ட ; திடுமென முடிகிற ; பறவை வகையில் இறகு பிய்க்கப்பட்ட ; (தாவ.) தலைப்பு முறிக்கப்பட்ட ; (தாவ.) தழை குறைக்கப்பட்ட ; *v.* தலை வெட்டிக் குறை ; தலைப்பகுதி நீக்கு ; முனைமுறி ; முனை மழுக்கலாக்கு ; திடுமென முடிவுறு ; (தாவ.) தழை குறை, கொப்புக்களை முறி ; (உயி.) இறகு நீக்கு ; (உயி.) மட்ட மழுக்க வடிவமைவி.

**trunc'ately**, *adv.* முனைமழுக்கமாய்.

**trunca'tion**, *n.* முனை சேதிப்பு ; உறுப்புக் குறைப்பு ; மொட்டையாக்குதல் ; மட்ட மழுக்கம்.

**trunc'ature**, *n.* (உயி.) பறவை வகையில் இறகுநீக்கம் ; (உயி.) மட்டமழுக்க வடிவம்.

**trun'cheon**, *n.* செண்டு, குண்டாந்தடி ; காவல்துறையில் குறுந்தடி ; பணித்துறைக்குரிய உரிமைக்கோல் ; (கட்.) கோமகனுருக்குரிய கைத்தடிச் சின்னம்.

**trun'dle**, *n.* சிறு சக்கர உருளை ; மேசை படுக்கை முதலியவற்றின் புடைபெயர்ப்பு அடியுருளை ; உருள் பற்சக்கரம் ; சிறுவர் விளையாட்டுக் கப்பி வளையம் ; தாழ் உருளைச்சகடம் ; அடிச்செருகு கட்டில் ; பாரஞ் சாம்பியின் அடிவட்டு ; (கட்.) பொன் இழைச் சுருள்வட்டு ; *v.* உருட்டு ; சுழற்றி ஓட்டு ; உருட்டித்தள்ளு ; சுற்றிவிடு ; மரப்பந்தாட்டத்தில் பந்தைச் சுழற்றியெறி.

**trun'dle-bed**, *n.* அடிச்செருகு கட்டில்.

**trund'ler**, *n.* உருட்டி ஓட்டுபவர்.

**trunk**, *n.* அடிமரம் ; முண்டம், உடம்பின் நடுப்பெரும் பகுதி; உடம்பு ; உடற் பகுதி, பொருளின் நடுமையக் கூறு ; மையப் பெரும்பகுதி ; சிலையின் உடற்கூறு ; சிலைப்பீடத்தின் நடுப் பகுதி ; யானைத் தும்பிக்கை ; பயணப்பேழை ; சேமப் பெட்டி ;

மீன் சேமப்பேழை ; தூண் நடுக்கம்பம் ; இயந்திர மைய ஊடுருளை ; நடு ஊடச்சு; பொள்ளலான இயந்திர ஊடுதண்டு ; சுரங்கப் பேரலம்பு தொட்டி ; சுரங்க நடு விசிறித் தொட்டி ; சுரங்க நடுத் தாம்பு குழாய் ; பாதைப் பெருநீள் நெறி ; இருப்புப்பாதை மைய ஊடுநெறி ; பேசுகுரற் குழாய் ; நீர்க் குழாய் வகையில் மூட்டுக்குழாய் ; வடிநீர்க்குழாய் வகையில் மூட்டிணைப்புக்கால் ; தொலைபேசி இணைப்பு வகையில் ஊடிணைப்புத் தொடர்பு ; *v.* சுரங்க அலம்பு தொட்டிமூலம் தாதுப்பொருள்களைப் பிரித்தெடு.

**trunk'-call,** *n.* நெடுந்தொலைபேசி ; நெடுந் தொலைப் பேச்சு.

**trunk'drawers,** *n.* குறுங் காற்சட்டை.

**trunk'ful,** *n.* பயணப்பேழை நிறைந்த அளவு.

**trunk'-hose',** *n.* அரைக்கச்சைச்சட்டை.

**trunk'ing,** *n.* சேமப்பொதிவு, பெட்டியிலிட்டு அடைத்தல்.

**trunk'less,** *a.* நடுப்பகுதியற்ற ; உடற்பகுதியற்ற ; அடிமர மற்ற ; தும்பிக்கையற்ற.

**trunk'-line,** *n.* இருப்புப்பாதை நேர்வழி ; தொலைபேசி நேரடிணைப்பு.

**trunk'-mail,** *n.* பயணப்பேழை.

**trunk'-maker,** *n.* சேமப்பேழை செய்பவர்.

**trunk'-nail,** *n.* ஒப்பனைத்தலைப்புடைய ஆணி.

**trunk'-road,** *n.* பெருவழி.

**trunks,** *n.pl.* குறுங்காற்சட்டை ; திரிகுழிக் குண்டாட்டம்.

**trunn'ion,** *n.* தாங்குருளை, பீரங்கி ஆதார இணைக்கம்பங்கள் இரண்டில் ஒன்று ; வெப்பாலை தாங்கும் நீராவிக்குழாய்.

**truss,** *n.* உதைவணைப்பு, தாங்கணைவு, ஆதாரக்கட்டு ; உறுப்பு முறிவிற்குரிய பஞ்சுறை பொதிவுக்கட்டு ; துணர், கொம்பு முடித்திரள் பூங்கொத்து ; வைக்கட்டு, வைக்கோற் கட்டு அளவலகு, 36 கல் எடைக்கட்டு அளவு; கூரை ஆதாரக் கட்டுமானம் ; பால அணைவுக்கட்டுமானம் ; (கப்.) இரும்படிக் கட்டு, பாய்மர அடிநிலைக் கைகளின் இரும்பிணைப்புக் கட்டுமானம் ; *v.* தாக்கமைவுக் கட்டுமானம் அமை ; பற்றிக் கட்டு ; குற்றவாளியைத் தூக்கில் இடு ; பருந்து வகையில் பறக்கும்போதே பறவையைக் கூருகிர்களால் பற்றிப்பிடித்துக் கொண்டு செல் ; இழைக்கச்சையிறுக்கி மாட்டு ; துணி வைத்தடை ; சுருட்டிக்கட்டு ; கொசுவம் வை ; குடலிழுத்துச் சுருக்கு ; (பழ.) ஆடை வரிந்திறுக்கு.

**truss'-bridge,** *n.* தாங்கமைவுப் பாலம்.

**truss'es,** *n. pl.* குழற்காற்சட்டைகள்.

**trust,** *n.* நம்பிக்கை ; நம்பிக்கை யுறுதி ; பொறுப்பு ; நல்லெண்ணம், நல்லெண்ண உறுதிப்பாடு, பற்றுமானம் ; தஞ்சம் ; நம்பிக்கை உறுதிப்பாட்டிற்குரிய இடம் ; பற்றுக்கோடு, நம்பிக்கை உறுதிப்பாட்டிற்குரியவர் ; அடைக்கலப் பொருள் ; வாணிக நம்பிக்கை ; அபயம், அடைக்கலமாக ஒப்படைக்கப் பட்டவர் ; பொறுப்பாண்மை, பொறுப்புணர்ச்சி ; கடன் நாணயப் பொறுப்பு ; பொறுப்பான பாதுகாப்பு ; தரும சொத்து ; பொறுப்பாட்சி நிலையம் ; பொறுப்பாண்மை, பொறுப்பாட்சிக் குழு ; வாணிகக் கூட்டுறவுக் குழு ; போட்டி தவிர்ப்பதற்குரிய கூட்டு நிறுவனம் ; பொறுப்பாட்சி நிறுவனப் பத்திரம் ; *a.* நம்பகமாக ஒப்படைக்கப்பட்ட ; பொறுப்பாட்சி நிறுவனத்திற்குரிய ; *v.* நம்பிக்கை வை ; நம்பு ; நம்பியிரு ; முழுமையுஞ் சார்ந்திரு ; நம்பிக்கையுடையவராயிரு ; நம்பிக்கை உறுதிப்பாடுடையவராயிரு ; நம்பிக்கை கொள் ; மெய்யாகக் கொள், மெய்யாக ஏற்றுக்கொள் ; உறுதியாகக் கருது ; நம்பி எதிர்பார் ; நம்பி ஒப்படை, பொறுப்புடன் ஒப்புவி ; (தொ.) Brains Trust, அரசியல் ஆலோசகர் குழு ; நிபுணர் குழு ; கேள்விகளுக்கு உடன் விடைதரும் நிபுணர் கூட்டுக் குழு ; breach of trust, சட்டப்படியான கடமைப்பொறுப்பு மீறிய குற்றம், நம்பிக்கைத் துரோகம் ; in trust, நம்பிக்கையாக; பொறுப்புணர்ச்சியுடன்; ஓம்படையாக; பொறுப்பாக; பாதுகாப்பில் ; பொறுப்பாட்சியடிப்படையில் ; on trust, நம்பிக்கைமீது, நம்பிக்கையின் பேரில், பிறர் சொல்வதை நம்பி ; நாணயத்தை நம்பி ; trust property, பொறுப்பாட்சி உடைமை ; தரும சொத்து ; trust stock, பொறுப்பாட்சியாளர் சட்டபடி முதலிட்டு வைக்கத்தக்க இனம் ; trust territory, பொறுப்பாட்சிக்கு விடப்பட்ட பகுதி.

**trust'-deed,** *n.* பொறுப்பாவணம், பொறுப்பாட்சி நிறுவனப் பத்திரம்.

**trustee',** *n.* அறக் காப்பாளர், தருமகர்த்தா ; கழகம் ; (பே-வ.) பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் ; (தொ.) trustee stock, பொறுப்பாட்சியாளர் சட்டப்படி முதலிட்டு வைக்கத்தக்க இனம்.

**trustee'ship,** *n.* பொறுப்பாண்மை.

**trust'ful,** *a.* நம்பிக்கையுடைய, நம்புகிற ; ஐயுறவு மனப்பான்மையற்ற ; நம்பி மறை செய்திகளைத் தெரிவிக்கிற ; நம்பிக்கை கொண்ட, நம்பியிருக்கிற ; உளமொன்றிய.

**trust'fully,** *adv.* பாச நம்பிக்கையுடன் ; நம்பி ஏற்கும் முறையில்.

**trust'fulness,** *n.* நம்புந்தன்மை

**trus'tily,** *adv.* பொறுப்புணர்ச்சியுடன், நம்பிக்கைக்குப் பாத்திரமாக.

**trus'tiness,** *n.* நாணயம், பொறுப்புணர்ச்சி.

**trust'worthiness,** *n.* நம்பகம், நம்பிக்கைக்குப் பாத்திரமான தன்மை.

**trust'worthy,** *a.* நம்பகமான, நம்பத்தக்க ; நம்பிக்கை கொள்ளத்தக்க.

**trus'ty,** *n.* நன்னடத்தை சலுகைக்குரிய கைதி ; *a.* நம்பிக்கைக் குரிய ; உண்மையான ; நம்பகமான ; உறுதி வழாத ; பொறுப்பார்ந்த.

**truth,** *n.* உண்மை ; மெய்ம்மை, உண்மைச் செய்திகளின் முழுத்தொகுதி ; தத்துவம், ஆழ்ந்த உண்மைச்செய்தி ; மெய்யுறுதிப்பாடு ; உண்மையுடைமை ; இசைவு, பொருத்தம் ; மெய்யான செய்தி ; அனுபவ உண்மை, அனுபவ விளைவான அறிவுச்செய்தி ; நிலையான மெய்ப் பொருள், மெய்யான உரை, தெய்வக்கட்டளை ; (தொ.) God's truth, கலப்பற்ற உண்மை ; gospel truth, மாறா மெய்ம்மை ; சான்று மெய்ம்மை ; மறை மொழி ; மறைநூல் கண்ட உண்மை ; home truths, ஆள் வகையில் விரும்பாத உண்மைச் செய்திகள் ; truth serum, (பே-வ.) உண்மை கூற வைக்குஞ் சரக்கு, மயக்க மருந்தான வெடியக் கலவை ; truth to tell, உண்மையைக் கூறுவதானால்.

**truth'ful,** *a.* உண்மையே பேசுகிற ; உண்மையான ; சொல் தவறாத ; கடமை தவறாத ; நட்பு மீறாத.

**truth'fully,** *adv.* உண்மையாக ; சொல் தவறாமல்.

**truth'fulness,** *n.* உண்மையுடைமை ; பற்று மாறாமை.

**truth'less,** *a.* பொய்யான ; நம்பிக்கையற்ற.

**truth'lessness,** *n.* வாய்மை தவறுகை, பொய்ம்மை; வாக்குத் தவறுதல்.

**try,** *n.* முயற்சி முனைவு, ஒரு தடவை முயற்சி ; முயற்சித் தேர்வு ; முயற்சி வாய்ப்பு ; இலக்கடி முயல்வுரிமை, காற் பந்தாட்டத்தில் பந்தை எடுத்துச்சென்று வைத்து இலக்கடிக்கும் உரிமை ; இலக்குவரை உரிமை, பந்தை இலக்கு வரையில் கொண்டுய்ப்பதனால் ஆட்டக்காரர் பெறும் மூன்று கெலிப் பெண் உரிமை ; *v.* முயற்சி செய், முயலு ; தேர்ந்தாராய், சோதனை செய் ; பொருள் வகையில் தேர்ந்து பார், சோதித்துப் பார் ; எடுத்துப் பார் ; செயல் வகையில் முயன்று பார் ; ஆள் வகையில் தொடர்புகொண்டு பார், வேலையில் அமர்த்திப் பார் ; ஈடுபடுத்திப் பார் ; தேர்ந்து விளைவு நாடு ; வழங்கிப் பார் ; நுகர்ந்து காண் ; அனுபவத்தில் கண்டறி ; மருந்து வகையில் பயன்படுத்திப் பார் ; பொருள் வகையில் மருந்தாகப் பயன்படுத்திப் பார் ; பண்புக்குரிய கடுஞ் சோதனையாயமை ; கடுஞ் சோதனைக்கு உள்ளாக்கு ; துன்பத்திற்கு உட்படுத்து ; வருத்து, வருத்த மூட்டு ; பாரமாயமை ; முறைமன்ற விசாரணைக்கு உட்படுத்து ; குற்ற விசாரணை புரி ; தேர்ந்து தீர்வு செய் ; தள மெருகீட்டுக் கடைசித் தீர்வு செய், இழைப்பு முற்றுவி ; உலோகம்கொழுப்பு எண்ணெய் முதலிய

வற்றின் வகையில் கொதி உருக்கீட்டு முறைகளால் துப்புரவு செய்; புடமிட்டுக்காண்; தேர்ந்தெடு; தேர்ந்து பிரித்தெடு; ஆடை வகையில் போட்டுப் பார், உடுத்திச் சரிபார்; (தொ.) try bcak, வேட்டை நாய் வகையில் மோப்ப வழியே திரும்பி வா; வேட்டை நாய்களைத் திரும்ப அழை; முன்சொன்னதையே மீண்டுங் குறிப்பிடு; திரும்பி வா; try for, அடைய முயல்; பணி வகையில் மனுப்போடு, மனுப்போட்டு முயற்சி செய்; பணி வகையில் பெறப் போட்டியிடு; try out, ஆய்ந்து தேர்ந்தெடு; நன்கு தேர்ந்தாராய்.

**try'er**, *n.* மரப் பந்தாட்டத்தில் கெலிப்புற அருமுயற்சி செய்பவர்.

**try'ing**, *n.* முயலுதல்; *a.* கடுஞ் சோதனையான; மிகக் கடுமைவாய்ந்த; தாங்க முடியாத் தொல்லைகள் தருகிற.

**try'ingly**, *adv.* மிகக் கடுநிலையுடையதாக.

**try'ing-plane**, *n.* மெருகு தீர்வு இழைப்புளி.

**try'ing-square**, *n.* மூலமட்டப் பலகை; ஒருபுறம் மரக்கட்டையும் மறுபுறம் இரும்புமாக அமைந்த தச்சர் சதுரக் கருவி.

**try'-on**, *n.* உடையணிந்து பார்த்தல்; (பே-வ.) ஏமாற்றும் முயற்சி.

**tryp'anosome**, *n.* உறக்க நோய் முதலிய உண்டு பண்ணும் குருதி ஒட்டுயிர் வகை.

**tryp'sin**, *n.* கணையச்சுரப்பிநீரின் கருநிலை நொதிக்கூறு.

**try'sail**, *n.* (கப்.) பகரப்பாய், புயற் காலத்தில் சிறுகலங்கள் பயன்படுத்தும் பாய்வகை.

**tryst**, *n.* இடந் தலைப்பாடு, குறியிடச் சந்திப்பு; *v.* குறியிடந் தலைப்பாடு ஏற்பாடு செய்; குறியிடந் தலைப்பாட்டிற்குரிய கால இடங் குறிப்பிடு; குறியிடஞ் சந்திக்க உறுதி கொடு.

**try'-works**, *n.* திமிங்கிலக் கொழுப்புச் சுத்தி செய்வதற்கு உதவும் கருவிகல அமைவு.

**tsar**, *n.* முன்னாள் வழக்கில் ருசியநாட்டுச் சக்கரவர்த்தி.

**tsar'evich, tsar'evitch**, *n.* முன்னாள் வழக்கில் ருசிய நாட்டுச் சக்கரவர்த்தி மகன்.

**tsarev'na**, *n.* ருசிய சக்கரவர்த்தி மகள்; ருசிய சக்கரவர்த்தி மகனின் மனைவி.

**tsar'ism**, *n.* ருசிய சக்கரவர்த்தி ஆட்சி; வன்முறையாட்சி.

**tsar'ist**, *n.* ருசிய சக்கரவர்த்தி ஆட்சி ஆதரவாளர்; வன்முறையாட்சி ஆதரவாளர்.

**tsarit'sa**, *n.* ருசியநாட்டுச் சக்கரவர்த்தினி.

**tsesar'evich, tsesar'evitch**, *n.* ருசிய சக்கரவர்த்தியின் மூத்தமகன்; ருசிய சக்கரவர்த்தி பீட அரசுரிமையாளன்.

**tset'se**, *n.* ஆப்பிரிக்கா கண்டத்துக் கொடு நச்சு உண்ணி வகை, கால் நடைகளைக் கடித்து உயிரைப் போக்கிவிடும் ஆப்பிரிக்க ஈ வகை.

**tsot'si**, *n.* தென்னாப்பிரிக்க பழங்குடிக் குழந்தை.

**tuan'**, *n.* திருவாளர்; தலைவர்.

**tub**, *n.* தொப்பறைத் தொட்டி; தொட்டி அளவு, சிறுமிடா; மிடாநிறை அளவு; மிடாவடிவப் பொருள்; திருக்கோயில் உரை மேடை; பஞ்சுறை தேய்ப்புக்குளியல்; வட்டக் கல் தொட்டி, பஞ்சுறை தேய்ப்புக் குளியலுக்குரிய தட்டையான குடுவைத் தொட்டி; சுரங்கக் குழிபதி தொட்டி; சுரங்கத் தாதுப் பொருள்களைக் கொண்டுசெல்லும் கூடைப்பெட்டி; பயிற்சிப்படகு; *v.* வட்டக்கல்தொட்டியில் குளிப்பாட்டு; பஞ்சுறை தேய்த்துக் குளி; அலம்பு; அலம்புறு; தொட்டியில் செடி நடு; தோணியில் படகுப் பயிற்சி பெறு; சுரங்கக் குழிக்கு உள்வரிச் சட்டக் காப்பிடு.

**tub'a**, *n.* எக்காளவகை, பித்தளைத் துளையிசைக் கருவி வகை.

**tub'age**, *n.* குழாய்வடிவப் பொருள்; குழாய்ச் செருகீடு; துப்பாக்கி உட்குழாய்ச் செருகீடு, வலிமைப்படுத்துவதற்காகத் துப்பாக்கிக் குழாயினுள் இன்னொரு குழாயினைச் செருகி வைத்தல்; (மரு.) உட்குழாய்ச் செருகீட்டு முறை.

**tub'al**, *a.* குழாய் சார்ந்த.

**tub'ar**, *a.* குழாய் வடிவான.

**tub'ate**, *a.* குழாயினை உட்கொண்ட; குழாய் வடிவான; குழாய் உருவாக்குகிற; உட்புழையுடைய.

**tu'ba uteri'na**, *n.* கருக்குழாய்.

**tub'ber**, *n.* மரமிடாத் தொட்டியமைப்பவர்; குளிப்பாளர்; குளிப்பாட்டுபவர்; அலம்புபவர்.

**tubb'iness**, *n.* மிடாப்போன்ற தன்மை; உருள்வு திரள்வு; மசணைத் தன்மை.

**tub'bing**, *n.* மரமிடாத் தொட்டியமைப்பு; மரமிடாத் தொட்டி அமைப்புச் சாதனத் தொகுதி; குளிப்பாட்டு; குளிப்பு; அலம்புறவு.

**tubb'ish**, *n.* மிடாப்போன்ற; உருள்திரள்வான.

**tubb'y**, *a.* தொட்டி வடிவான; உப்பிய வட்ட வடிவமான; வெற்று மிடாப்போன்று ஒலிக்கிற; ஊழற் சதையான; இசைக்கருவி வகையில் கம்மிய ஒலியுடைய.

**tube**, *n.* குழாய்; வளியிசைக்கருவியின் குழற் பகுதி; குழல் வடிவப்பொருள்; வண்ணப்பொருள் வைக்கப்படும் குழாய் வடிவக் கொள்கலம்; குழாய்வடிவ உறுப்பு; சுவாசக்குழாய்; லண்டன் நகரக் குழாய்வடிவ அடி நில இருப்புப்பாதை; *v.* குழாய் இணை; குழாய் அமை; குழாயில் அடை; லண்டன் அடிநிலக்குழாய் இருப்புப் பாதையில் செல்; (மரு.) குதிரைக் குரல்வளைக் குழலில் குழாய் பொருத்து.

**tubed**, *a.* குழாய் இணைத்த; குதிரை வகையில் குரல்வளைக் குழாயில் குழாய் செருகப்பட்ட.

**tube'-flower**, *n.* அழகுச்செடி வகை.

**tub'er**, *n.* கிழங்கு; தண்டங்கிழங்கு, சதைப் பற்றூர்ந்த அடி நிலத் தண்டு; கட்டி; கழலை; உருள்புடைப்பு; வீக்கம்.

**tub'ercle**, *n.* எலும்புப்புடைப்பு; கழலை; கழலைப்புற்று; (தாவ.) சிறு முடிச்சு வேர்; சிறு கிழங்கு.

**tub'ercled**, *a.* எலும்புப் புடைப்புடைய; கழலை வாய்ந்த.

**tuberc'ular**, *a.* கழலை வடிவான, கணுக்கணுவாகப் புடைத்த, எலும்புப் புடைப்புக்களையுடைய; வேர் முடிச்சுக்களையுடைய.

**tubercularizа'tion**, *n.* எலும்புருக்கி நோய்க்குள்ளாக்குதல்.

**tuberc'ularize**, *v.* எலும்புருக்கி நோய்க்கு உட்படுத்து.

**tuberc'ulate**, *a.* கழலைகள் நிரம்பிய; வேர்முடிச்சுக்கள் நிறைந்த.

**tubercula'tion**, *n.* எலும்புப் புடைப்புறுதல்; கழலையாக்கம்; வேர்த்திரளையாக்கம்.

**tuberc'ulin**, *n.* எலும்புருக்கிநோய் மருந்துவகை.

**tuberc'ulize**, *v.* எலும்புருக்கி நோய்க்குள்ளாக்கு.

**tuberc'uloid**, *a.* கழலைபோன்ற, எலும்புப் புடைப்புப் போன்ற.

**tuberc'ulose**, *a.* எலும்புப் புடைப்புடைய; கழலைப் புற்றுடைய.

**tuberc'ulosed**, *a.* எலும்புருக்கி சார்ந்த; கழலைகள் நிரம்பிய.

**tuberculos'is**, *n.* எலும்புருக்கி நோய், க்ஷயரோகம்; (தொ.) pulmonary tuberculosis, நுரையீரல் எலும்புருக்கி நோய்.

**tuberc'ulous**, *a.* கழலைப் புற்றுநோயினையுடைய.

**tuberif'erous**, *a.* கிழங்கினையுடைய; கிழங்கு விளைவிக்கிற.

**tub'eriform**, *a.* கிழங்குருவான.

**tub'erose**[1], *n.* வெண்ணிற மணமலர்ச்செடி வகை.

**tub'erose**[2], *a.* முண்டு முடிச்சார்ந்த; முண்டு முடிச்சுத் தாங்கிய; கழலை நிரம்பிய; கிழங்கு நிரம்பிய.

**tuberos'ity**, *n.* முண்டு முடிச்சுத் தன்மை; கிழங்கார்ந்த தன்மை.

**tub'erous**, *a.* முண்டு முடிச்சு ஆர்ந்த.

**tube'-shell**, *n.* குழல்வடிவச் சிப்பி வகை.

**tympan'ic,** *a.* செவிப்பறைச் சவ்வு போன்ற ; செவிப்பறைச் சவ்வுபோலச் செயற்படுகிற ; (உள்.) செவிப்பறைச் சவ்வு சார்ந்த.

**tympanit'es,** *n.* குடல்வாயு வீக்கம், குடலுள் காற்றால் ஏற்படும் அடி வயிற்று வீக்கம்.

**tympanit'ic,** *a.* குடல்வாயு வீக்கஞ் சார்ந்த.

**tmpanit'is,** *n.* செவிப்பறைச் சவ்வழற்சி.

**tym'panum,** *n.* (உள்.) இடைச்செவி, புறச்செவிக்கும் அகச்செவிக்கும் இடைப்பட்ட பகுதி ; செவிப்பறைச் சவ்வு ; வாத்தின் வளிக்குழாய் முகப்பு ; (க-க.) முக்கோண முகப்பு ; (க-க.) முக்கோண வாயில் ; (க-க.) முக்கோணப் படிவாயில் ; ஆற்று நீரிறைப்பு வட்டு ; சாலழுத்து செக்குப்பொறி ; *pl.* tym'pana.

**Tyn'wald,** *n.* மான் தீவின் மக்கள் மாமன்றம்.

**typ'al,** *a.* மாதிரி சார்ந்த ; உரு மாதிரிக்குரிய.

**type,** *n.* மாதிரிப் படிவம் ; எடுத்துக்காட்டுரு ; பொது உரு மாதிரி ; அமைப்புரு ; வகை மாதிரி ; வகை திரிபு மாதிரி ; மாவடை தலைமைப் பகுப்பு வகை ; தொகுதி மாதிரி ; (வேதி.) பண்பு மாதிரி ; பதக்கப் பொறிப்புப் படிவம் ; நாணயப்பொறி வடிவம் ; தட்டச்செழுத்துரு ; (அச்சு.) எழுத்துரு ; *v.* மாதிரியாயிரு ; தட்டச்சுப் பொறியியக்கு, தட்டச்சடி ; (தொ.) type genus, இனக்குழுவின் தலை மாதிரி இனம் ; type species, இனத்தின் தலை மாதிரி வகை.

**type'-bar,** *n.* வரி அச்சுப்பொறியின் வரிப்பாளம் ; தட்டச்சுப் பொறியின் அச்சுருக் கம்பி.

**type'-cast,** *v.* நடிப்பு இயல் நிலைப்படுத்து, நாடகத்துறையில் நடிகருக்கு இயல்பாக உரிய பாகமே கொடுத்து நடிக்க வை ; நடிகர் தோற்றத்திற்குத் தக்கபடியேயுள்ள நடிப்புப் பகுதி கொடுத்து நடிக்க வை ; ஒரு பாகமே கொடுத்து மீட்டும் மீட்டும் நடிக்கச் செய்.

**type'-high,** *n.* அச்சுருக்கட்டை வகையில் கட்டளைச் செவ்வுயர்வுடைய, '918 அங்குல முனைப்பு உயர்வுடைய.

**type'-hold'er,** *n.* முத்திரைப்பொறிக் கைப்பிடி.

**type'-met'al,** *n.* அச்சு உலோகக்கலவை.

**type'script,** *n.* தட்டச்சுப்படி, தட்டச்சடித்த வரைபடிவம் ; தட்டச்சுப் பகர்ப்புப்படி ; வரைவியல் அச்சுரு எழுத்து, கையெழுத்துப் போலியான அச்செழுத்துரு ; தட்டியல் அச்சுரு எழுத்து, தட்டச்சுருப் போலியான அச்செழுத்துரு.

**type'-setter,** *n.* அச்சுக் கோப்பவர் ; அச்சுக்கோப்புப் பொறி.

**type'-setting,** *n.* அச்சுக்கோப்பு ; அச்சுக்கோப்படுக்கம் ; *a.* அச்சுக் கோக்கிற ; (தொ.) type-setting machine, அச்சுக் கோப்புப் பொறி.

**type'-wheel,** *n.* விளிம்பச்சுருச் சக்கரம், தட்டச்சு வகையிலும் அச்சுத் தந்தியிலும் பயன்படுத்தும் புடைப்பெழுத்துரு விளிம்புடைய சக்கரம்.

**type'write,** *v.* தட்டச்சடி ; தட்டச்சுப் படியெடு.

**type'writer,** *n.* தட்டச்சுப்பொறி.

**typhlit'ic,** *a.* குடல்முளை அழற்சிக்குரிய ; அழற்சி வகையில் குடல் முளை சார்ந்த.

**typhlit'is,** *n.* குடல்முளை அழற்சி.

**typh'oid,** *n.* நச்சுக் காய்ச்சல் ; குடற் காய்ச்சல் ; *a.* நச்சுக் காய்ச்சல் சார்ந்த, காய்ச்சல் வகையில் நச்சுப்பண்பு வாய்ந்த, செம்பழுப்புப் பொட்டுகளுடன் மயக்கமும் பெருத்த வலிவுக் கேடும் உண்டுபண்ணுகிற.

**typhoid'al,** *a.* நச்சுக் காய்ச்சல் சார்ந்த.

**typhoman'ia** *n.* நச்சுக் காய்ச்சல் சன்னி.

**typhon'ic,** *n.* கடும்புயல் சார்ந்த ; சீனக்கடற் பருவப்புயல்களுக்குரிய.

**typhoon',** *n.* கடும் புயல், சண்ட மாருதம்.

**typh'ous,** *a.* நச்சுக் காய்ச்சல் சார்ந்த.

**typh'us,** *n.* நச்சுக் காய்ச்சல், சன்னிக் காய்ச்சல்.

**typ'ic,** *a.* மாதிரி சார்ந்த.

**typ'ical,** *a.* உரு மாதிரியான ; வகை மாதிரியான ; மாதிரி எடுத்துக்காட்டான ; வகை இனம் ஆகியவற்றின் செய்தி புற மாதிரிகளுடன் ஒத்த ; குறியடையாளமான ; வகை மாதிரிக்குரிய ; வகை மாதிரிக்குப் பொருத்தமான ; குறிப்பிடத்தக்க.

**typ'ically,** *adv.* மாதிரிக் குறியீடாய் ; வகை மாதிரிக்குப் பொருத்தமாக.

**typifica'tion,** *n.* வகை மாதிரியாக்குதல் ; வகை மாதிரியாக எடுத்துக் காட்டுதல் ; எடுத்துக் காட்டாயமைதல்.

**typ'ifier,** *n.* மாதிரியாக்குபவர் ; மாதிரியாக்குவது.

**typ'ify,** *v.* மாதிரியாகக் காட்டு ; முன் மாதிரியாகு ; வகையாகு ; பண்புக்குறியாகு ; குறித்துக் காட்டு.

**typ'ist,** *n.* தட்டெழுத்தாளர்.

**typ'o,** *n.* (பே-வ.) அச்சாளர், அச்சுக் கோப்பாளர் ; *pl.* typ'os.

**typog'rapher,** *n.* அச்சுக்கலையாளர் ; அச்சிடுபவர் ; அச்சுக் கோப்பாளர்.

**typograph'ical,** *a.* அச்செழுத்துச் சார்ந்த, அச்செழுத்திலேயே உள்ள ; அச்சிடு முறைக்குரிய ; அச்சடிப்பதில் ஏற்பட்ட.

**typograph'ically,** *adv.* அச்செழுத்துச் சார்ந்ததாய் ; அச்சு வடிவச் சார்பாக ; அச்சிட்ட முறையில் ; அச்சிட்ட நிலையில்.

**typog'raphy,** *n.* அச்சுக்கலை ; அச்சிடும் பாணி ; அச்செழுத்து வடிவம் ; அச்சுருத் தோற்றம்.

**typ'olite,** *n.* பதிகல், உருவப் படிவு பெற்ற கல் ; புதைபடிவ உருவுடைய கல்.

**typolo'gical,** *a.* (உயி., தொல்.) மாதிரிப்படிவ வரன்முறையைச் சார்ந்த ; (விவி.) முற்படிவக் கோட்பாட்டுச் சார்பான.

**typol'ogy,** *n.* (உயி.) மாதிரிப்படிவ வரன்முறை மரபாய்வுத்துறை ; (தொ.) படிமாதிரி மரபாய்வுத்துறை ; (விவி.) முற்படிவக் கோட்பாடு, விவிலியப் புதிய ஏற்பாட்டின் செய்திகள் யாவும் இனமாதிரிகளாகப் பழைய ஏற்பாட்டிலேயே குறித்துக் காட்டப்பட்டுள்ளன என்று கருதுங் கோட்பாடு.

**typ'onym,** *n.* (உயி.) வகைச்சுட்டு, வகையடிப்படையாக அமைந்த பெயர்.

**typon'ymal,** *a.* வகைச்சுட்டுச் சார்ந்த, வகைப்பெயர் குறித்த.

**typonym'ic,** *a.* வகைச்சுட்டுச் சார்ந்த, வகைப்பெயர் குறித்த.

**tyr'anness,** *n.* கொடுங்கோலரசி.

**tyrann'ic,** *a.* (அரு.) கொடுங்கோன்மையான.

**tyrann'ical,** *a.* கொடுங்கோலனுக்குரிய ; கொடுங்கோன்மையான ; தன்னுணவமான.

**tyrann'ically,** *adv.* கொடுங்கோன்மையாக ; உறுகொடுமையுடன்.

**tyrannicid'al,** *a.* கொடுங்கோலரைக் கொல்லுகிற.

**tyrann'icide,** *n.* கொடுங்கோலரை அழித்தல் ; கொடுங்கோலரைக் கொல்லுநர்.

**ty'rannize,** *v.* கொடுங்கோன்மை செய் ; அடக்குமுறையாற்று ; கொடுமைப்படுத்து.

**ty'rannous,** *a.* கொடுங்கோலாட்சி வாய்ந்த ; தன்னுணவம் பிடித்த ; அடக்குமுறைப் படுத்துகிற ; வலிந்தடக்குகிற.

**ty'ranny,** *n.* கிரேக்க வழக்கில் வல்லாட்சி ; கொடுங்கோன்மை, சட்டமீறிய ஆட்சி ; கொடுங்கோன்மைச் செயல் ; அடக்குமுறை.

**tyr'ant,** *n.* கிரேக்க வழக்கில் வல்லாளன் ; கொடுங்கோலன், சட்டமீறிய ஆட்சியாளர் ; தன்னுணவக்காரர் ; அடக்குமுறையாளர்.

**tyr'ant-bird, tyr'ant-flycatcher,** *n.* கிளைபற்றி அமரும் அமைவுடைய அமெரிக்க பறவை வகை.

**tyre[1],** *n.* ரப்பர் டயர்.

**tyre[2],** (த.) *n.* தயிர்.

**tyr'ocidine,** *n.* (மரு.) நுண்மநாசினி வகை.

**Tyrolese',** *n.* இத்தாலி எல்லையில் ஆஸ்திரியா நாட்டிலுள்ள டைரால் பகுதி வாணர்; *pl.* Tyrolese'; *a.* டைரால் பகுதியில் வாழ்கிற ; டைரால் பகுதி சார்ந்த.

**tyr'othricin,** *n.* (மரு.) நுண்மநாசினி வகை.

**tyrotox'icon,** *n.* பாலழிம்பு, பால் அல்லது பாலாடையில் ஏற்படும் அழிபொருள் வகை.

**Ty'rrhene, Tyrrhen'ian,** *n.* இத்தாலியில் வாழ்ந்த பண்டை எட்ரஸ்கன் (Etruscan) இனத்தவர் ; *a.* பண்டை எட்ரஸ்கன் இனஞ்சார்ந்த.

**Tzigane',** *n.* அங்கேரி (Hungary) நாட்டு ஜிப்ஸி இனத்தவர்; *a.* அங்கேரிநாட்டு ஜிப்ஸி இனஞ் சார்ந்த; அங்கேரி நாட்டு ஜிப்ஸி இனத்தவருக்குரிய ; அங்கேரி நாட்டு ஜிப்ஸி இனத்தவரின் இசை சார்ந்த.

**Uberous**, *a.* நிறையப் பால்தருகிற ; செழிப்புடைய.
**u'berty**, *n.* படுபயனுடைமை ; செழிப்பு.
**ubi'ety**, *n.* இடத்தமைவு, இடச்சூழல்.
**ubiquitar'ian**, *n.* (இறை.) நிறை திருமேனிக் கோட்பாட்டாளர், இயேசுநாதரின் திருவுடலம் யாண்டும் உளதென்னுங் கோட்பாட்டில் நம்பிக்கையுடையவர்.
**ubiquitar'ianism**, *n.* நிறை திருமேனிக் கோட்பாடு, இயேசுநாதரின் திருவுடலம் யாண்டும் உளதென்னுங் கோட்பாடு.
**ubiq'uitary**, *a.* ஒரேசமயத்தில் எங்கும் உள்ள.
**ubiq'uitous**, *a.* எங்கும் நிறைந்திருக்கிற, எங்குங் காணப்படுகிற.
**ubiq'uitously**, *adv.* எங்கும் நிறைந்து.
**ubiq'uity**, *n.* எங்கும் நிறைந்திருத்தல் ; ஒரே நேரத்திற் பல இடங்களில் இருத்தல்.
***ub'i sup'ra***, (ல.) *adv.* ஏடு வகையில் முற்குறித்த இடத்தில்.
**U'-boat**, *n.* செர்மன் நீர்மூழ்கிக் கப்பல்.
**U'-bolt**, *n.* கொண்டி, வளைபகர வடிவான தாழ்ப்பூட்டு.
**udd'er**, *n.* விலங்கின் பால்மடி.
**udd'ered**, *a.* பால் மடியினையுடைய.
**udom'eter**, *n.* மழைநாழி, மழைமானி.
**udomet'ric**, *a.* மழைமானி சார்ந்த.
**ugh**, *int.* வெறுப்புக்குறிப்பு.
**ug'lify**, *v.* அழகற்றதாக்கு.
**ug'lily**, *adv.* அழகற்றதாக.
**ug'liness**, *n.* உட்கம், அருவருப்புத்தோற்றம்.
**ug'ly**, *n.* அழகிலி ; நுதல்வரித் தொங்கல், பெண்டிர் 19-ஆம் நூற்றாண்டிடையே அணிந்துவந்த மெல்வரித் தொப்பியின் ஒளி மறைப்புத் தொங்கல் திரை ; *a.* அருவருப்புத் தருகிற ; அருவருக்கத்தக்க ; வெறுக்கத்தக்க ; விரும்பத்தகாத ; அழகற்ற ; அருவருப்பான நடத்தையுடைய ; தீமையென்ற ஐயுறவுக்கு இடந்தருகிற; தீய இயல்பு வாய்ந்த; நாணயக்கேடான ; வெட்கக்கேடான ; இழிந்த ; அறத் தீய ; விரும்பத்தகாத் தூண்டுதல் தருகிற ; மன அமைதி குலேக்கிற ; கடுங்குறிப்புக் காட்டுகிற ; அஞ்சத்தக்க ; அச்சந்தூண்டுகிற ; வருவது குறித்து நன்னம்பிக்கை யூட்டாத; (தொ.) an ugly customer, எதிரி, பேரிடர் தரத்தக்க பேர்வழி; ugly duckling, சேற்றில் முளைத்த செந்தாமரை, முட்டாள் எனக் கருதப்பட்ட குடும்பத்தில் தோன்றும் மேதை.
**Ug'rian, Ug'ric**, *a.* உக்ரிய, பின்லாந்து நாட்டு மக்களின வகை சார்ந்த.
**uh'lan**, *n.* (வர.) பாய்மா வீரன், விரைந்து செல்லும் ஈட்டி ஏந்திய குதிரை வீரன்.
**Uit'lander**, *n.* அயலார், தென்னாப்பிரிக்க வழக்கில் வெளி நாட்டவர்.
**ukase'**, *n.* மேலிட உத்தரவு, ருசிய வழக்கில் எதேச்சாதிகார ஆணை.
**ukule'le**, *n.* ஹவேய் தீவின் வழக்கில் நான்கு நரம்பு யாழ் வகை.
**ul'cer**, *n.* சீழ்ப்புண் ; இழிபண்பு ; பேரழிவு பரப்புங் கூறு, ஒழுக்கம் பெரிதுகெடுக்குஞ் செய்தி ; *v.* சீழ்ப்புண்படுத்து ; சீழ்ப்புண்ணாகு.
**ul'cerable**, *a.* சீழ்ப்புண்ணாகத்தக்க.
**ul'cerate**, *v.* சீழ்ப்புண்ணுறுத்து ; சீழ்ப்புண்ணாகு ; சீழ் வை ; சீழ்ப்புண்ணால் பாதிக்கப்பெறு, சீழ்ப்புண்ணாய் மாற்று ; சீழ்ப் புண்ணாய் மாறு ; அழிவு பரப்பு ; கேடுபரப்பு ; தீமை பரவப் பெறு.
**ulcera'tion**, *n.* சீழ்ப்புண்ணாதல், இரணமாதல்.
**ul'cerative**, *a.* புரைபாடுடைய, சீழ்ப்புண்ணாகத்தக்க.
**ul'cered**, *a.* சீழ்வைத்துப் புண்பட்ட ; அழிகேடுற்ற.
**ul'cerous**, *a.* புரையோடிய, சீழ்ப்புண்ணான.
**U'lema**, *a.* உலாமா, இஸ்லாமிய சமயப் பேரறிஞர்.
**uli'ginose**, *a.* (தாவ.) சேற்றில் வளர்கிற.
**ull'age**, *n.* வாணிக அளவுக்குறை, வாணிக வழக்கில் அளவையில் குறைபடுங் கூறு ; ஆவிச் சேதாரம், ஆவியாய்ப் போனதனுல் எற்படும் குறைவிழப்பு ; கசிவுச்சேதாரம், கசிவொழுக்குக்களால் ஏற்படும் குறைவிழப்பு ; (இழி.) மண்டி, அடிக்கசடு ; *v.* சேதாரங் கணி ; சேதாரப்படுத்து ; சேதாரத்துக்குச் சரியீடு செய்து கொடு.
**ul'na**, *n.* அடிமுழ எலும்பு, முன்கை அடியெலும்பு, முன்கையின் ஈரெலும்புகளில் அடியிலுள்ள பேரெலும்பு ; *pl.* ul'nae.
**ul'nar**, *a.* அடிமுழ எலும்பு சார்ந்த, முன்கை அடியெலும்பு சார்ந்த.
**ul'ster**, *n.* அரைக்கச்சையினையுடைய நெகிழ் நீளங்கி; (தொ.) Ulster custom, அயர்லாந்தில் குடிவார உரிமை வகை.
**ul'stered**, *a.* அரைக்கச்சையுடைய நெகிழ் நீளங்கியணிந்த.
**ulter'ior**, *a.* உள்முகமான, வெளித்தோன்ருத ; பின்னணி நிலையான ; காட்சிக்கு அப்பாற்பட்ட.
**ulter'iorly**, *adv.* உள்மறை நோக்கமாக.
***ul'tima***, (ல.) *a.* இறுதிநிலையான ; கடைநிலையான ; அப்பால் நிலையான.
**ul'timate**, *a.* இறுதியான ; கடைமுடிவான ; யாவுங் கடந்த; மூலாதாரமான ; கருவடிப்படையான ; ஆதிகாரணமான.
**ul'timately**, *adv.* கடைசிமுடிவாக.
**ul'tima Thul'e**, *n.* அறிமுகமில்லாச் சேணிலம்.
**ultimat'um**, *n.* கடைசி அறிவிப்பு ; இறுதி எச்சரிக்கை ; அடிப்படைச் செய்தி.
***ul'timo***, (ல.) *a.* சென்ற மாதத்திய.
**ultimogen'iture**, *n.* கடைமுறையுரிமை, கடைசிமகன் மரபுரிமை எய்தும் முறை.
**ul'tra**, *n.* கடுந்தீவிர வாதி ; *a.* கடுந்தீவிர வாதியான ; கடுந்தீவிரக் கருத்துக்களை ஆதரிக்கிற ; கடுந்தீவிரமான.
**ul'tra-classical**, *a.* கடுமுனைப்பான பண்டை உயர்தனிச் செம்மொழிப் பண்புடைய.
**ul'tra-fashionable**, *a.* தீவிரப் புதுநடைப்பாணி யார்வமுடைய.
**ul'traism**, *n.* கடுந்தீவிரவாதப் போக்கு ; கடுமுனைப்புக் கோட்பாடு.
**ul'traist**, *n.* கடுந்தீவிர வாதப் போக்கினர் ; அரசியல் கடுந்தீவிரப் போக்கினர் ; சமயக் கடுந்தீவிரப் போக்கினர் ; கட்சியில் கடுமுனைப்பான போக்கினர் ; கடுவெறியர்.
**ultramarine'**, *n.* உறுகடனீலம், கந்தகக் கன்மகியிலிருந்து கிடைக்கும் நீலவண்ணப் பொருள் ; *a.* கடல்கடந்த பகுதியிலமைவுற்ற.
**ul'tramicrometer**, *n.* உறுநுண்ணளவைமானி, அங்குலத்தின் பத்து லட்சத்தில் ஒரு கூறினையும் நுண்ணிதாகக் கணிக்கும் அளவைமானி.
**ultrami'croscope**, *n.* புடையொளி நுண்ணோக்காடி.
**ultramicroscop'ic**, *a.* உறுமிகுநுட்பமான, நுண்ணோக்காடி கொண்டுங் காணமுடியாத அளவில் மிகச் சிறிதான.
**ultramon'tane**, *n.* ஆல்ப்ஸ் (Alps) மலைத்தொடருக்குத் தெற்கில் வாழ்பவர் ; இத்தாலி நாட்டவர் ; போப்பின் மீயுரிமைக் கோட்பாட்டாளர், போப்பாண்டவருக்கே சமயப் பேராணை உரிமை உண்டு என்னுங் கொள்கையாளர் ; *a.* ஆல்ப்ஸ் மலைத்தொடருக்குத் தெற்கே அமைந்த, இத்தாலி நாட்டினைச் சார்ந்த ; போப்பின் மீயுரிமைக் கோட்பாடு சார்ந்த ; சமயத்துறையில் போப்பாண்டவர்க்கே பேராணையுரிமை உண்டு என்னுங் கோட்பாட்டினையுடைய.
**ultramon'tanism**, *n.* போப்பாண்டவரின் மீயுரிமைக் கோட்பாட்டாதரவு.

**ultramun'dane**, *a.* நிலவுலகிற்கு அப்பாலான ; கதிரவன் மண்டலத்திற்கு அப்பாலான ; உலகியல் வாழ்வு கடந்த ; வேறு பிறப்புச் சார்ந்த.

**ultrason'ic**, *a.* ஒலியலை வகையில் செவிப்புலங்கடந்த ; கேட்கப்படாத ; வேக வகையில் ஒலிவிசை கடந்த ; விமான வகையில் ஒலி கடந்த விசையில் செல்லத்தக்க ; (தொ.) ultrasonic waves, கதழ் ஒலியலை.

**ultrason'ics**, *n.* கதழ் ஒலியலை அதிர்வாய்வுத் துறை.

**ultra-vi'olet**, *a.* அப்பாலூதா நிறமான, கட்புலனுகா நிறப்பட்டையின் ஏழு நிறங்களில் ஊதாக் கதிர்களுக்கு அப்பாலான.

***ul'tra vir'es***, (ல.) *adv.* தன்னுரிமைக்கு அப்பாற்பட்ட நிலையில், அதிகாரத்திற்கு மேற்பட.

**ul'ulant**, *a.* அலறுகிற, ஊளையிடுகிற.

**ul'ulate**, *v.* அலறு, கதறு, ஊளையிடு.

**ulula'tion**, *n.* அலறல், ஊளையிடல்.

**um'bel**, *n.* (தாவ.) குடைப் பூங்கொத்து, குடைவடிவ உருள் கொத்தான பூக்குலைத் தொகுதி.

**umbellif'erous**, *a.* குடைப்பூங்கொத்துக்கள் தாங்கிய ; குடைப்பூங்கொத்துக்களையுடைய ; சிவப்பு முள்ளங்கியினஞ் சார்ந்த.

**umbell'iform**, *a.* குடைப்பூங்கொத்து வடிவான.

**um'ber**, *n.* பழுப்புச் செங்காவி ; மீன் வகை ; நாரையின ஆப்பிரிக்க பறவை வகை ; *a.* செங்காவி நிறமான ; பழுப்புக் காவி நிறமான ; *v.* செங்காவி நிறந் தோய்வி ; பழுப்புக் காவி நிறந் தோய்வி ; (தொ.) burnt umber, பழுப்புச் செங்காவி வண்ணம் ; raw umber, செங்காவி.

**um'ber-bird**, *n.* நாரையின ஆப்பிரிக்க பறவை வகை.

**um'bery**, *a.* செங்காவி நிறமான.

**umbil'ical**, *a.* கொப்பூழ் சார்ந்த ; நடுவிடஞ் சார்ந்த ; மரபு வகையில் பெண்வழித் தொடர்புடைய ; (தொ.) umbilical cord, கொப்பூழ்க்கொடி.

**umbil'icate**, *a.* உந்தி யுருவுடைய ; கொப்பூழினையுடைய.

**umbilica'tion**, *n.* உந்திக்குழிவு, கொப்பூழ்க்குழி போன்ற குழி.

**umbilic'us**, *n.* உந்தி, கொப்பூழ்க்குழி ; திருகுசிப்பி மையப் பள்ளம் ; (தாவ., வில.) கொப்பூழ்வடிவக் குழிவு ; (வடி.) வளைகோடுகள் இணைமையம்.

**umbilif'erous**, *a.* கொப்பூழினையுடைய ; கொப்பூழ்போன்ற குழிவினையுடைய.

**um'biliform**, *a.* உந்தியுருவான, கொப்பூழ்க்குழி வடிவான.

**um'ble-pie'**, *n.* மான் குடற் பண்ணியம்.

**um'bles**, *n. pl.* மானிறைச்சியின் குடற்கொடி இதயப்பை ஈரற்குலை முதலிய பகுதி.

**um'bo**, *n.* கொம்மை, கேடய நடுவிடக் குமிழ்முனை ; (தாவ., வில.) குமிழ்முனைப் புடைப்பு ; சிப்பியின் புடைப்பு முனை ; காளான் குடைமுகடு ; குமிழ் ; முனைப்பு ; *pl.* um'bos, um'bones.

**um'bonal**, *a.* குமிழ்முனை சார்ந்த ; புடைப்பு முனையுடைய ; குமிழ் முனைப்பு போன்ற.

**um'bra**, *n.* உருநிழல் ; நிழலிடம் ; நிழலுரு, ஆவியுரு, பேயுரு ; ஒட்டு விருந்தினர் ; (வான்.) கோள் மறைப்பில் செறிநிழற் கூறு ; (வான்.) கதிரவன் கறைப்பொட்டின் கருமையம் ; *pl.* um'brae.

**um'brage**, *n.* புண்ணுற்ற உளநிலை ; (செய்.) நிழல், உணர்ச்சி ஊறுபாடு, ஏளன அவமதிப்புக்கு ஆட்பட்ட உணர்ச்சி ; (செய்.) தஞ்சம், நிழல் மறைப்புத்தருஞ் செய்தி ; (தொ.) take umbrage under, தஞ்சமுறு ; தலைக்கிடாகக் கொள்.

**umbrage'ous**, *a.* நிழல்தருகிற ; நிழலாகவுள்ள.

**um'bral**, *a.* நிழற் கரு மையஞ் சார்ந்த ; (வான்.) கோள் மறைப்புச் செறி நிழற்கூறு சார்ந்த.

**umbrell'a**, *n.* குடை ; போர்விமான விதானம் ; எதிரி விமானத்தாக்குத் தடுப்பதற்கான குண்டுவீச்சு அழல் திரை ; நீந்து குடையுறுப்பு, இழுதுமீனின் நீள்வுசுருக்கு இயல்புடைய நீந்து உறுப்பு ; குடைச்சிப்பி.

**umbrell'a-bird**, *n.* ஆரைகள் போன்ற தலைச்சூட்டுடைய தென்னமெரிக்க பறவை வகை.

**umbrell'a'd**, *a.* குடையுடன் கூடிய ; குடைபிடித்த.

**umbrell'a-shell**, *n.* குடைச்சிப்பி.

**umbrell'a-tree**, *n.* குடை போன்ற கிளைகளையுடைய மர வகை ; குடைபோன்ற புதர்ச் செடி வகை ; குடைபோல வளர விடப் பயிற்றுவிக்கப்படும் மரம்.

**Um'brian**, *n.* இத்தாலி நாட்டில் பண்டை அம்பிரியாவின் மொழி ; பண்டை அம்பிரியா பகுதிவாணர் ; *a.* இத்தாலி நாட்டில் அம்பிரியாவினைச் சார்ந்த.

**umbrif'erous**, *a.* நிழல் தருகிற.

**um'iak**, *n.* பெண்கள் இயக்கும் வடதுருவப் பகுதிப் படகு.

**um'laut**, *n.* ஒத்திசைவு முன்னுயிர் மாற்றம், செர்மானிய மொழிக் குழுவில் பின்வரும் உயிரொலிகட்கு இசைய முன்னுயிரில் ஏற்படும் மாறுபாடு.

**um'pirage**, *n.* நடுவர் நிலை ; நடுவர் செயல் ; நடுவர் உரிமை.

**um'pire**, *n.* நடுவர், காரணிகர் ; நொதுமலாளர் ; *v.* நடுவராகச் செயலாற்று ; ஆட்டத்தில் நடுவராய் இரு.

**um'pireship** *n.* நடுவர் பதவி.

**ump'teen**, *a.* (இழி.) ஏதோ சில.

**'un** [1], *pron.* (பே-வ.) ஒன்று ; ஒருவர் ; யாரோ ஒருவர் ; ஏதோ ஒரு பொருள்.

**UN** [2] *n.* = United Nations.

**un'a**, *n.* ஒற்றைப்பாய்ப் படகு வகை.

**unabashed'**, *a.* நாணங்கெட்ட ; வெட்கமற்ற ; துணிந்த ; அஞ்சாத.

**unaba'ted**, *a.* குறைக்கப்படாத, தணிக்கப்படாத ; குறையாத, தணியாத.

**una'ble**, *a.* இயலாத ; ஏலாத.

**unabridged'**, *a.* சுருக்கப்படாத ; முழுமையான.

**unabsolved'**, *a.* கழுவாய் செய்யப்படாத, விமோசனஞ் செய்யப்படாத.

**unacadem'ic**, *a.* கல்வி நிறுவனச் சார்பற்ற ; கலைத்துறைப் பண்பற்ற.

**unaccent'ed**, *a.* அசையழுத்தம் அற்ற ; அழுத்தக்குறி இடப்படாத.

**unaccept'able**, *a.* ஏற்கமுடியாத.

**unaccomm'odating**, *a.* ஒத்திசைவுப் பண்பற்ற ; விட்டுக் கொடுக்கும் இயல்பு இல்லாத.

**unaccom'panied**, *a.* உடன் அனுப்பப்படாத ; உடன்கூட்டில்லாத ; இசை வகையில் கருவித்துணையற்ற, பக்கத்துணையற்ற.

**unaccom'plished**, *a.* நிறைவேறப்பெறாத.

**unaccount'able**, *a.* காரணங் கூறமுடியாத, விளக்கப்பட முடியாப் புதிரான.

**unaccount'ably**, *adv.* காரணங் காட்ட இயலாத வகையில்.

**unaccus'tomed**, *a.* பழக்கப்படாத ; வழக்கமானதல்லாத.

**unacknowl'edged**, *a.* ஒப்புக்கொள்ளப்படாத ; ஏற்பிசைவளிக்கப்படாத.

**unacquaint'ed**, *a.* அறிமுகம் அல்லாத.

**unadapt'able**, *a.* மாற்றியமைத்துக்கொள்ள முடியாத.

**unadopt'ed**, *a.* மகன்மை கொள்ளப்படாத ; மேற்கொள்ளப்படாத ; கைக்கொள்ளப்படாத.

**unadul'terated**, *a.* கலப்படஞ் செய்யப்படாத ; தூய்தான

**unadvis'able**, *a.* பொருத்தம் அற்ற ; நல்லதல்லாத ; ஆதரிக்கத்தகாத.

**unaffect'ed**, *a.* பாதிக்கப்படாத ; பாவனையாக மேற்கொள்ளப்படாத ; இயல்பான ; நடிப்பற்ற.
**unaid'ed**, *a.* உதவி செய்யப்படாத.
**unalloyed'**, *a.* கலப்பற்ற.
**unal'terable**, *a.* மாற்றியமைக்க முடியாத ; மாறாத.
**unambi'tious**, *a.* உயர் வேட்கையற்ற.
**unam'iable**, *a.* கேண்மைப் பாங்கில்லாத.
**unanch'or**, *v.* நங்கூரந்தளர்த்து ; நங்கூரம் தளர்வுறு ; தளர்த்து ; தளர்வுறு ; பற்றுநீக்கு ; பற்றற்றிரு ; கப்பல் வகையில் நங்கூரத்தை உயர்த்திப் பயணத்திற்குப் புறப்படு.
**unan'imated**, *a.* உயிர்ப்பூட்டப் பெறாத ; எழுச்சியற்ற.
**unanim'ity**, *n.* ஒரு மனதுடைமை ; ஒருமுகப் போக்கு ; கருத்துவேறுபாடின்மை.
**unan'imous**, *a.* ஒருமித்த ; கருத்தொருமைப்பட்ட ; கருத்து வேறுபாடற்ற ; ஒத்த கருத்துடைய ; ஒருமனதாகத் தீர்மானிக்கப்பட்ட.
**unan'imously**, *adv.* ஒருமனதாக.
**unan'swerable**, *a.* பதிலுரைக்க முடியாத.
**unan'swered**, *a.* பதில் கூறப்படாத ; கைம்மாறு செய்யப்படாத.
**unapostol'ic**, *a.* போப்பாண்டவர் சார்ந்த மரபுக்கு மாறான ; போப்பாண்டவர் ஆணை பெற்றிராத.
**unappa'rent**, *a.* வெளிப்படையாகத் தோற்றாத ; தெளிவாக விளங்காத.
**unappeas'able**, *a.* ஆற்றமுடியாத, ஆறாத.
**unappeased'**, *a.* தணியாத ; ஆற்றப்பெறாத.
**unappre'ciative**, *a.* போற்றாத; நலம் பாராட்டாத; சரியாக மதிப்பிடாத.
**unapprehen'sive**, *a.* உள்ளத்தில் வாங்கிக்கொள்ளும் ஆற்றலற்ற ; வருநிலைபற்றிய கவலையில்லாத.
**unapproach'able**, *a.* அணுக முடியாத; எட்டா உயர்வுடைய; காட்சிக்கெளிமையல்லாத ; கலவாமல் விலகியிருக்கிற.
**unappro'priated**, *a.* உடைமையுரிமை யாக்கப்பட்டிராத ; உடைமையாக எடுத்துக்கொள்ளப்பட்டிராத.
**unapproved'**, *a.* ஏற்றமைவுறப்பெறாத ; ஏற்றுக்கொள்ளப் பட்டிராத.
**unapprov'ing**, *a.* ஒப்புதல் தாராத ; இசைவளியாத.
**unapt'**, *a.* தகுதியற்ற, பொருத்தமற்ற.
**unarm'**, *v.* படைக்கலங்கள் இழக்கச் செய் ; விசை கெடு, தீங்கற்ற தாக்கு.
**unarmed'**, *a.* படைக்கலம் அற்ற ; பாதுகாப்பற்ற ; பாதுகாப்புப்பெறாத ; துணையாதரவற்ற.
**una'rmoured**, *a.* போர்க்கவசமற்ற.
**unarraigned'**, *a.* விசாரணைக்குக் கொண்டுவரப்படாத.
**unarranged**, *a.* ஒழுங்கற்ற ; வரிசைப்படுத்தப்படாத.
**unarrayed'**, *a.* அணி வகுக்கப்பெறாத.
**unart'ful**, *a.* திறமையற்ற ; கலைத்திறனற்ற ; கபடற்ற.
**unartic'ulate**, *a.* செவிப்புலப்படாத, கேட்காத.
**unartifi'cial**, *a.* இயற்கையான, செயற்கையல்லாத.
**unartist'ic**, *a.* கலைச்சுவையற்ற.
**unascend'able**, *a.* ஏற முடியாத.
**unascertain'able**, *n.* உறுதியாய் அறிய முடியாத.
**unashamed'**, *a.* வெட்காத.
**unasked'**, *a.* வேண்டப்பெறாத ; அழைக்கப்பெறாத.
**unas'pirated**, *a.* ஒலி-எழுத்து ஆகியவற்றின் வகையில் மூச்சொலி கலக்கப்பெறாத, தடை ஒலி வகையில் உரழ்வற்ற.
**unaspir'ing**, *a.* உயர்நாட்டமற்ற, தன்னுயர்வு நாடாத.
**unassail'able**, *a.* தாக்க முடியாத ; மறுத்துக் கூறமுடியாத.
**unassailed'**, *a.* தாக்கப்பெறாத ; எதிர்ப்பற்ற.
**unassayed'**, *a.* தேர்ந்து காணப்படாத ; நோட்டங் காணப் பெற்றிராத.
**unassign'able**, *a.* வரையறுத்து ஒதுக்க முடியாத, விவரமாகக் குறிக்க முடியாத.
**unassigned'**, *a.* ஒதுக்கி வழங்கப்படாத, விவரமாகக் குறிக்கப்படாத.
**unassim'ilable**, *a.* செரிமானமாக்க முடியாத; தன்னியலாக்க முடியாத.
**unassim'ilated**, *a.* செரிமானமாக்கப்படாத; உடனிழைவற்ற.
**unassist'ed**, *a.* உதவியற்ற, தனியான.
**unassuage'able**, *a.* ஆற்றப்பெற முடியாத, தணிக்கப்பெற முடியாத.
**unassuaged'**, *a.* ஆறாத, தணியாத.
**unassum'ing**, *a.* தற்பெருமையற்ற, பகட்டிக்கொள்ளாத ; அடக்க ஒடுக்கமான.
**unattached'**, *a.* பற்றுதலில்லாத ; பல்கலைக்கழக மாணவர் வகையில் எந்தக் கல்லூரியையும் சேர்ந்திராத ; அஞ்சல் தலை வகையில் ஒட்டப்பெறாத ; வண்டிகள் வகையில் கோக்கப்படாத ; உடனிணைக்கப் பெறாத ; தொடர்பற்ற ; தனித்துண்டான ; (சட்.) கடனுக்காகக் கைப்பற்றப்பட்டிராத ; (படை.) படைப்பிரிவுடன் வகுத்தமைக்கப் பெறாத.
**unattain'able**, *a.* கிட்ட மாட்டாத.
**unattain'ed**, *a.* கிடைக்கப்பெறாத.
**unattaint'ed**, *a.* கறைப்படாத ; குற்றவாளி என முடிவு செய்யப்படாத.
**unattempt'ed**, *a.* முயற்சி செய்யப்பெறாத ; தாக்குதலுக்கு ஆட்படாத ; தொடங்கப்பெறாத.
**unattend'ed**, *a.* உடன் துணையற்ற, உடன் வருபவர் எவரும் அற்ற.
**unattend'ing**, *a.* கவனிக்காத ; உடன் செல்லாத.
**unattent'ive**, *a.* (அரு.) கவனமற்ற.
**unattest'ed**, *a.* சான்றுறுதி செய்யப்படாத.
**unattire'**, *v.* உடையகற்று ; சிறப்புடை நீக்கு.
**unattired'**, *a.* உடையற்ற ; சிறப்புடை அணியாத.
**unattract'ive**, *a.* கவர்ச்சியற்ற ; அழகற்ற.
**un'au**, *n.* கரடிபோன்ற கால் விரல்கள் இரண்டினையுடைய தென் அமெரிக்க விலங்கு வகை.
**unaugment'ed**, *a.* இணைத்துப் பெரிதாக்கப்படாத ; சேர்த்து விரிவாக்கப்படாத ; (இலக்.) சாரியை அற்ற.
**unauthen'tic**, *a.* அதிகாரஞ்சாராத ; முறைப்படி உறுதி செய்யப்படாத.
**unauthen'ticated**, *a.* சான்றுறுதி செய்யப்படாத ; ஆதாரத்துடன் தெளிவாக உறுதிப்படுத்தப்படாத ; உண்மையானதென்று எண்பிக்கப்படாத.
**unauthentic'ity**, *n.* முறைப்படி உறுதி செய்யப்படா நிலை.
**unauthor'itative**, *n.* அதிகார முத்திரையற்ற.
**unau'thorized**, *a.* இசைவாணை கொடுக்கப்பெறாத ; முறைகேடான ; அனுமதியற்ற ; உரிமையற்ற.
**unavail'able**, *a.* கிடைக்காத ; கைவசமாக இல்லாத.
**unavail'ing**, *a.* பயனற்ற, வீணான, விழலுக்கு இறைத்த நீரான.
**unavenged'**, *a.* பழிதீர்க்கப்படாத.
**unavert'ed**, *a.* தடுத்து நீக்கப்பெறாத.
**unavoid'able**, *a.* தவிர்க்கக் கூடாத ; தவிர்க்க முடியாத.
**unavowed'**, *a.* ஒப்புக்கொள்ளப்பெறாத.
**unaware'**, *a.* தெரிந்திராத நிலையில் உள்ள, செய்திதெரியாத.
**unawares'**, *n.* திடுக்கீடு ; *adv.* எதிர்பாராத வகையில், திடுமென ; தன்விழிப்பற்ற நிலையில்.

**unawed'**, *a.* அஞ்சி ஒடுங்காத, அச்சுறுத்தி ஒடுக்கப் பெறாத.
**unbacked'**, *a.* ஆதரிக்கப்படாத ; ஆதரவாளரற்ற.
**unbaff'led**, *a.* ஊக்கந் தடைப்படாத, மருண்டுவிடாத.
**unbag'**, *v.* பையினின்றும் வெளியே எடு.
**unbail'able**, *a.* பிணையில் விடத்தகாத.
**unbait'ed**, *a.* தூண்டிலிரையற்ற; தூண்டியிழுக்கும் கவர்ச்சியற்ற.
**unbaked'**, *a.* வேகாத; அரைகுறை வேக்காடுடைய; முதிராத
**unbal'ance**, *n.* சமன்சீரின்மை ; *v.* சமநிலைகேடு.
**unbal'anced**, *a.* சமன்சீர் கெட்ட ; சீரமைதி குறைந்த ; நடுநிலையற்ற, மனங் குழம்பிய ; கணக்கு வகையில் வரவு செலவு சரிக்கட்டிவராத, நல்லறிவுநிலையில்லாத ; திடீர் உணர்ச்சிகளுக்கு ஆட்படுகிற
**unbal'last**, *v.* எடைப்பாரம் இல்லாததாக்கு ; கப்பலிலிருந்து அடிச்சுமை இறக்கு.
**unbank'**, *v.* சாம்பல் அகற்றி விரைந்தெரிவுறச் செய் ; எரி கவிகை மூடி அகற்றி விரைந்தெரியச் செய்.
**unbaptized'**, *a.* ஞானமுழுக்குச் செய்விக்கப்பெறாத, தீக்கை செய்யப்பெறாத.
**unbar'**, *v.* தாழ் அகற்று ; கதவு திற.
**unbarbed'**, *a.* முள் முனையற்ற ; கொடுவரி முள்ளற்ற ; கத்தரிக்கப்பெறாத, ஒப்பனைபெறாத ; குதிரை வகையில் காப்புக் கவசமற்ற.
**unbare'**, *v.* திறந்துகாட்டு.
**unbarked'**, *a.* பட்டையுரிக்கப்பெறாத.
**unbarred'**, *a.* தாழிடப்படாத ; அடைக்கப்பெறாத.
**unbarr'icade**, *v.* தடையரண் நீக்கு, தடைவேலி அகற்று.
**unbash'ful**, *a.* கூச்சம் அற்ற.
**unbathed'**, *a.* குளிப்பாட்டப்படாத ; நீர் தோயப்பெறாத.
**unbatt'ered**, *a.* நொறுங்காத ; சேதம் உறாத.
**unbe'**, *v.* இல்லாதாக்கு, இல்லாதிரு ; இல்பொருளாகு, இன்மையாகு.
**unbear'**, *v.* விறைப்புக் கடிவாளத்திலிருந்து விடுவி.
**unbear'able**, *a.* பொறுத்துக்கொள்ள முடியாத, தாங்க இயலாத.
**unbeat'able**, *a.* தோற்கடிக்க முடியாத ; தோலாத.
**unbeat'en**, *a.* அடித்துத் துவைக்கப்பெறாத ; தோற்கடிக்கப் பெறாத ; தோலாத ; ஊக்கங் குலையாத.
**unbecom'ing**, *n.* (மெய்.) தோற்ற ஒடுக்க இடைப்படு நிலை, பொருள்கள் உளதாம் நிலையிலிருந்து இலதாம் நிலையுறுவதற்கு முற்பட்டதாகக் கருதப்படும் இடையீட்டு நிலை ; *a.* ஒவ்வாத, பொருந்தாத ; தகுதியற்ற, தகுதிக்கேடான ; தோற்றக்கேடான ; நல்லாக்கமற்ற ; உடை தொப்பி முதலியன வகையில் இசைவுக்கேடான.
**unbed'**, *v.* படுக்கையினின்று எழுப்பு ; படுக்கையிலிருந்து வெளியேற்று.
**unbefitt'ing**, *a.* பொருத்தமற்ற ; தகுதிக்கு அடுக்காத.
**unbefriend'ed**, *a.* நட்பாதரவில்லாத ; துணையுதவியற்ற.
**unbeget'**, *v.* பிறப்பழி, பிறப்புத் தடு.
**unbegged'**, *a.* வேண்டப்படாத ; கெஞ்சப்படாத.
**unbegott'en**, *a.* பெற்றெடுக்கப்படாத ; கருவில் தோன்றாத.
**unbeknown'**, **unbeknownst'**, *a.* தெரிந்திராத ; முற்றும் அறியப்படாத.
**unbelief'**, *n.* நம்பிக்கையின்மை ; அவநம்பிக்கை.
**unbeliev'able**, *a.* நம்பமுடியாத
**unbeliev'er**, *n.* நம்பாதவர் ; நாத்திகர்.
**unbeliev'ing**, *a.* தெய்வ அருள்வெளிப்பாட்டில் நம்பிக்கையற்ற.
**unbelov'ed**, **unbeloved'**, *a.* காதலிக்கப்பெறாத ; பாசத்துக்கு ஆளாகாத.
**unbend'**, *v.* வளைவு நிமிர்த்து ; வளைவு நிமிர் ; இறுக்கம் அகல்வுறு; மனப்பளுக் குறைவுறுத்து; மனப்பளு குறைவுறு ; கட்டுப்பாடு தளர்த்து ; (கப்.) சட்டங்களிலிருந்தும் பாய்த்துணியை அவிழ்த்துவிடு.
**unbend'ed**, *a.* வளைக்கப்பெறாத ; வளைவு நிமிர்க்கப்பட்ட.
**unbend'ing**, *n.* நெகிழ்வுறுதல் ; இறுக்கத் தளர்வு ; *a.* வளையாத ; விட்டுக்கொடுக்காத.
**unben'eficed**, *a.* மானியம் பெற்றிராத.
**unbenefi'cial**, *a.* நலந்தராத, சாதகமாய் இராத.
**unben'efited**, *a.* நலம்பெறாத, பயனடையப் பெறாத.
**unbenight'ed**, *a.* இரவுக்கு ஆட்படாத ; இருள் சூழப்பெறாத.
**unbent'**, *a.* வளைக்கப்படாத ; வளையாத.
**unberu'fen**, *a.* அழைக்கப்பெறாத ; பழித்தெய்வ வகையில் வீம்பு வீறுப்புரைக்குப் பின் அழையாது வந்து தோற்றுகிற.
**unbeseem'**, *v.* பொருத்தமற்றிரு, ஒவ்வாததாயிரு.
**unbeseem'ing**, *a.* தகுதியற்ற.
**unbesought'**, *a.* வேண்டப்படாத, கேட்காமலே வழங்கப்படுகிற.
**unbespeak'**, *v.* சான்றுதரவு காட்டியதை மறு ; குறித்துக் காட்டியதை அன்றென ஆக்கு ; முன்கூட்டிப் பேசிவைக்கப்பட்டதை மறு.
**unbespok'en**, *a.* குறித்துக்காட்டப்பெறாத, சான்றுதரவு தரப்படாத, முகங்கொடுத்துப் பேசப்பெறாத.
**unbestowed**, *a.* வழங்கப்பெறாத.
**unbett'erable**, *a.* மேலும் மேம்படுத்த முடியாத.
**unbett'ered**, *a.* மேலும் திருத்தமாக்கப்படாத.
**unbi'as**, *v.* சார்பகற்று ; நடுநிலைப் படுத்து.
**unbi'ased**, *a.* நடுநிலையான ; பாரபட்சமற்ற, ஒருபாற் கோடாத.
**unbib'lical**, *a.* விவிலிய நூலில் இராத ; விவிலிய ஏட்டின் படி அமையாத.
**unbidd'en**, *a.* ஆணையிடப்பெறாத ; கோரப்படாத, தற்போக்கான.
**unbind'**, *v.* பிணைப்பு அகற்று, கட்டுக்கழற்று.
**unbind'ing**, *n.* கட்டவிழ்ப்பு ; தளர்த்தீடு ; கட்டவிழ்த்து விடுவிப்பு ; *a.* தளர்த்துகிற ; சட்டத்தின் கட்டுப்பாட்டுக்கு உட்படாத.
**unbitt'**, *v.* (கப்.) கப்பல் தளக் கம்பத்திலிருந்து கயிற்றினை அவிழ்.
**unbitt'ed**, *a.* கடிவாள வாய் முள்ளிடப்படாத ; அடங்காத, மீறிய.
**unblam'able**, *a.* குற்றங்கூற முடியாத.
**unblamed'**, *a.* குற்றஞ்சாட்டப்படாத.
**unbleached'**, *a.* வெளுக்கப்படாத ; நிறம் போக்கப்படாத.
**unblem'ished**, *a.* கறைப்படாத ; தூய.
**unblench'ing**, *a.* தயங்காத.
**unblend'ed**, *a.* கலப்பிணைவற்ற.
**unbless'**, *v.* சபி.
**unblest'**, *a.* அருளற்ற, திரு அழிவான.
**unblind'**, *a.* குருடல்லாத ; *v.* குருட்டுத் தனம் ஒழி ; கண் கட்டு அவிழ்.
**unblind'ed**, *a.* குருடு நீக்கப்பட்ட.
**uublind'fold**, *v.* கண்கட்டு அவிழ்.
**unblink'ing**, *a.* கண்வெட்டாத, கண்ணிமைக்காத ; அஞ்சாத.
**unbliss'ful**, *a.* பேரின்பக் கேடான ; இன்பக்கேடான ; துன்பகரமான.

**unblock'**, *v.* தடைநீக்கு, தடங்கலினின்றும் விடுவி.

**unblood'ed**, *a.* குருதிக்கறையுருத; குதிரை வகையில் நன் மரபுவழிவராத.

**unblood'y**, *a.* குருதிக்கறையுருத.

**unblott'ed**, *a.* கறைப்படுத்தப்படாத; துடைத்து அழிக்கப் படாத.

**unblown'**, *a.* மலர் வகையில் விரியாத; காற்றினுல் வீசியெறியப் படாத.

**unblunt'ed**, *a.* முனைமழுங்கப் பெருத.

**unblush'ing**, *a.* முகஞ் சிவப்புருத; நாணமுருத.

**unbod'ed**, *a.* எதிர்பார்க்கப்படாத.

**unbod'ied**, *a.* உடலற்ற; உருவற்ற; உடல் தோன்ருத.

**unbod'ing**, *a.* எதிர்பார்த்திராத.

**unbolt'**, *v.* தாழ் அகற்று, கதவு திற

**unbolt'ed**, *a.* தாழிடப்படாத; தாழ் அகற்றப்பட்ட, அரித்தெடுத்துப் பிரிக்கப்படாத, புடைக்கப் படாத.

**unbone'**, *v.* எலும்பு பிரித்து எடு.

**unbonn'et**, *v.* வணக்கஞ் செலுத்தும் வகையில் தொப்பியை எடு; தலைக் கவிகையை அகற்றிவிடு.

**unbooked'**, *a.* புத்தகத்தில் பதிவு செய்யப்பெருத; ஒதுக்கி வைக்கப்பெருத, குறித்து ஒதுக்கி வைக்கப்பெருத; நுழைவுச் சீட்டுப் பதிவு செய்யப்பெருத; இலக்கியச் சார்பற்ற.

**unbook'ish**, *a.* புத்தகப்புலமை சாராத; ஏட்டறிவு சாராத.

**unboot'**, *v.* ஆளின் புதை மிதிகளைக் கழற்று; புதை மிதியடி கழற்றி வை.

**unborn'**, *a.* பிறவாத; இன்னும் பிறந்திராத; வருங்காலத்துக்குரிய.

**unborr'owed**, *a.* கடனுக வாங்கப்பெருத; இரவலாகப் பெற்றிராத.

**unbo'som**, *v.* எண்ணங்களை வெளியிடு; மறை உணர்ச்சிகளை வெளியிட்டுரை.

**unbo'somer**, *n.* ஒளிவுமறைவின்றி வெளியிட்டுரைப்பவர்; வெளிப்படுத்துபவர்.

**unbott'omed**, *a.* அடித்தளம் அற்ற.

**unbought'**, *a.* வாங்கப்படாத; விலைக்குப் பெருத; விலை மூலம் பெற முடியாத, கைக்கூலியால் வசப்படுத்த முடியாத.

**unbound'**, *a.* கட்டவிழ்க்கப்பட்ட; கட்டுத் தளர்த்தி விடப் பட்ட.

**unbound'ed**, *a.* வரையறையற்ற; தங்குதடையற்ற.

**unbowed'**, *a.* வளையாத, வணங்காத; அடக்கமுடியாத.

**unbow'el**, *v.* குடலைப்பிடுங்கு; வெறுமையாக்கு; திற, வெளியிடு.

**unbox'**, *v.* பெட்டியிலிருந்து வெளியில் எடு; நாடகக் கொட்டகை இருக்கையிலிருந்து வெளியேற்று.

**unbrace'**, *v.* காலுறைக் கச்சைமாட்டிகளை அகற்று; செறிவு தளர்த்து; நரம்புகளைத் தளரவிடு.

**unbraced'**, *a.* தளர்த்திவிடப்பட்ட.

**unbracing'**, *a.* தளர்த்திவிடுகிற.

**unbraid'**, *v.* புரிமுறுக்கு அவிழ், பின்னல் குலை.

**unbraid'ed**, *a.* புரிமுறுக்காத; பின்னி இழைக்காத.

**unbranch'ed**, *a.* கிளைக்காத.

**unbreach'able**, *a.* முறியாத, தகர்க்க முடியாத.

**unbreached'**, *a.* தகர்க்கப்படாத, முறிக்கப்படாத.

**unbreak'able**, *a.* உடைக்க முடியாத; உடையாத.

**unbreath'able**, *a.* மூச்சுவிடக்கூடாத; பேசவிடக்கூடாத.

**unbreathed'**, *a.* மூச்சுவிடாத; வெளியிடப்படாத.

**unbreathed'-on**, *a.* காற்று மேற்படாத, வசைக்காற்று தீண்டாத.

**unbred'**, *a.* நன்கு பயிற்றுவிக்கப்படாத; நற்பயிற்சியற்ற.

**unbreech'**, *v.* பீரங்கியின் பின்தளை அகற்று; காற்குழாய் கழற்று.

**unbridged'**, *n.* பாலமிடப் பெருத; இணைக்கப் பெருத

**unbri'dle**, *v.* கடிவாளம் அகற்று; தடை நீக்கு.

**unbri'dled**, *v.* கடிவாளம் இடப் பெருத; கட்டற்ற.

**unbr'oken**, *a.* உடைபடாத; அடக்கப் பெருத; இடையீடற்ற.

**unbroth'erly**, *a.* உடன்பிறப்புக்கு ஒவ்வாத.

**unbru'ised'**, *a.* காயமுருத, நைவுருத.

**unbrushed'**, *a.* துடைக்கப்படாத; தூரிகையால் திருத்தப் படாத.

**unbuck'le**, *v.* வார்ப்பூட்டினைத் தளர்த்து.

**unbuild'**, *v.* கட்டழி; கட்டிடம் தகர்; ஆக்கியதை அழித்து விடு.

**unbuilt'**, *a.* கட்டப்படாத; மேலே கட்டிடம் எழுப்பப் பெருத.

**unbur'den**, *v.* சுமை யிறக்கு.

**unbur'dened**, *a.* சுமையேற்ற பெருத.

**unbur'ied**, *a.* புதைக்கப் படாத.

**unbur'nished**, *a.* பளபளப்பாக மெருகிடப்படாத.

**unburnt'**, *a.* எரிக்கப்படாத; சுட்டுப் பொசுக்கப்படாத; தீப் புண்படாத

**unbutt'on**, *v.* பித்தான் நீக்கு.

**uncage'**, *v.* கூண்டிலிருந்து விடுவி

**uncal'culated**, *a.* கணக்கற்ற, கணக்கில் அடங்காத.

**uncalled'-for**, *a.* வேண்டாத, அவசியம் அல்லாத.

**uncan'did**, *a.* உளநேர்மையற்ற, சூதுடைய.

**uncan'dour**, *n.* கபடம், சூதுடைமை.

**uncann'ily**, *adv.* மாயத்திறம்பட.

**uncann'iness**, *n.* மாயத் திறம்; இயற்கை மீறிய திறம்.

**uncann'y**, *a.* இயற்கை மீறிய; இயலறிவு கடந்த; மாயமான.

**uncanon'ic, uncanon'ical**, *a.* விதிமுறை தழுவாத, திருச்சபை மரபுமுறை திறம்பிய.

**uncan'onize**, *v.* திருச்சபைச் சான்றுரிமை மறு; திருச்சபை மரபுமுறை திறம்பியதென அறிவி.

**uncan'onized**, *a.* திருத்தொண்டர் நிலையற்ற; திருச்சபைச் சான்றுரிமையற்ற; திருச்சபை சான்றுரிமை மறுக்கப்பட்ட.

**uncap'**, *v.* குல்லாயை எடுத்துவிடு.

**uncapsiz'able**, *a.* கவிழ்க்க முடியாத.

**uncared'-for**, *a.* கவனிக்கப்படாத.

**uncar'ing**, *a.* கவலைப்படாத; கவலையற்ற.

**uncart'**, *v.* வண்டியிலிருந்து சுமையிறக்கு.

**uncase'**, *v.* உறையினின்று எடு; பெட்டியினின்று வெளியே எடு; தோலுரி; உரித்தெடு.

**uncastra'ted**, *a.* விதையடிக்கப்படாத.

**uncat'alogued**, *a.* அட்டவணைப்படுத்தப்படாத.

**uncaught'**, *a.* பிடிக்கப்பெருத; அகப்படாத.

**uncaused'**, *a.* உண்டுபண்ணப்பெருத; படைக்கப் பெருத.

**uncaut'erized**, *a.* சூடிடப்பெருத; திராவகத்தால் தீய்க்கப் பெருத; அறுத்துச்சுடப்படாத.

**unceas'ing**, *a.* இடைவிடாத, தொடர்ச்சியான.

**uncel'ebrated**, *a.* கொண்டாடப் பெருத; புகழற்ற, பாடப் பெருத.

**uncens'ored**, *a.* கண்டிக்கப்பெருத; தணிக்கை செய்யப் பெருத.

**unceremo'nious**, *a.* முறைமை திறம்பிய; ஆசாரக் கட்டற்ற; சம்பிரதாயமற்ற; மரியாதையற்ற.

**unceremo'niously**, *adv.* மட்டுமரியாதை விட்டு, முரட்டுத் தனமாக.

**uncer'tain,** *a.* உறுதியில்லாத ; ஐயப்பாடான ; ஐயப்பாட்டு நிலையிலுள்ள ; நம்பியிருக்க முடியாத ; மாறுபடக்கூடிய ; ஏற்றத்தாழ்வுகளுக்குரிய ; திரிபுடைய, நிலையற்ற.

**uncer'tainty,** *n.* உறுதியின்மை, திண்ணமிலா நிலை, ஐயப்பாட்டு நிலை.

**uncertif'icated,** *a.* சான்றிதழ் வைத்துக்கொண்டிராத.

**uncer'tified,** *a.* சான்றுறுதி பெற்றிராத ; சான்றுறுதிப் பாடற்ற ; உத்தரவாதமற்ற.

**unchain',** *v.* சங்கிலி தகர் ; கட்டறு ; அவிழ்த்துவிடு.

**unchained',** *a.* கட்டவிழ்க்கப் பெற்ற ; தளையற்ற.

**unchall'engeable,** *a.* எதிர்ப்பற்ற ; போட்டிக்கு இடமற்ற ; எதிர்வாதமற்ற.

**unchall'enged,** *a.* எதிர்ப்பற்ற ; *adv.* எதிர்ப்பில்லாமல்.

**unchan'cy,** *a.* அவப்பேறான ; எதிர்ப்புக்கேடான, அபசகுனமான ; இயற்கை மீறிய ; ஆபத்தான ; மாயமான ; கூச்செறிவுண்டுபண்ணுகிற.

**unchangeabil'ity,** *n.* மாறுபடா நிலை.

**unchange'able,** *a.* மாற்ற முடியாத ; மாறாத.

**unchanged',** *a.* மாற்றமற்ற ; *adv.* மாற்றம் இல்லாமல்.

**unchan'ging,** *a.* மாறாத ; நிலையான.

**uncharge',** *v.* சரக்கு இறக்கு, பாரம் இறக்கு.

**uncharged',** *a.* கட்டணம் விதிக்கப்பெறாத ; பாரம் ஏற்றப் பெறாத.

**unchar'itable,** *a.* தாராள மனப்பான்மையற்ற ; விட்டுக் கொடுப்பற்ற ; குற்றங் கண்டுபிடிக்கிற ; தீர்ப்பில் கடுமையாயிருக்கிற, இரக்கமற்ற.

**unchar'ity,** *n.* தாராள மனப்பான்மையின்மை ; விட்டுக் கொடுப்பு மனப்பான்மையின்மை.

**unchar'nel,** *v.* புதை குழியிலிருந்து வெளியே எடு.

**unchart'ed,** *a.* விவரமாக வரைபடம் குறிக்கப்படாத ; வரைபடத்திற் குறிக்கப்படாத ; கடற்பரப்பு வகையில் நன்கு அறியப்படாத.

**unchart'ered,** *a.* பட்டயம் பெறாத ; சான்றுரிமையற்ற.

**uncha'ry,** *a.* தாராளமாக வழங்கத் தயங்காத.

**unchaste',** *a.* தூய்மைகெட்ட ; கற்பு நெறி வழுவிய.

**unchast'ened,** *a.* தண்டித்துத் திருத்தப்பட்டிராத ; படிமானம் பண்ணப்படாத ; படிமானமாகாத.

**unchasti'sable,** *a.* தண்டித்துத் திருத்த முடியாத; தண்டித்து அடக்க முடியாத.

**unchastised',** *a.* தண்டித்து அடக்கப்படாத, கண்டிக்கப் படாத.

**unchas'tity,** *n.* கற்பின்மை, கற்பு நெறி தவறுதல்.

**unchecked',** *a.* தடுக்கப்படாத ; *adv.* தடுக்கப்படாமல்.

**uncheered',** *a.* கிளர்ச்சியூட்டப்படாத. ஊக்கப்படாத.

**uncheer'ful,** *a.* கிளர்ச்சியற்ற, நகைமுகம் இல்லாத.

**unchiv'alrous,** *a.* சால்பற்ற, வீரப்பெருந்தகைமையற்ற, பெண்பாலருமை யறிந்து காப்புக்கடன் பூணாத, கருணைமறம் இல்லாத.

**unchos'en,** *a.* தெரிந்தெடுக்கப்படாத, தேர்வுபெறாத.

**unchrist'en,** *v.* பெயரீட்டுவிழா வொழித்துவிடு ; பெயரீட்டு விழாப் பெயரை மாற்றிவிடு.

**unchrist'ened,** *a.* பெயரீட்டுவிழா நடத்தப் பெறாத ; பெயரிடப்படாத ; திருப்பெயரற்ற.

**unchris'tian,** *a.* கிறித்துவப் பண்புக்கு மாறான.

**unchris'tianize,** *v.* கிறித்தவ சமயத்திலிருந்து மாறும்படி செய் ; கிறித்தவர் இயல்பிலிருந்து மாறுவி.

**unchron'icled,** *a.* வரலாற்றிற் குறிக்கப் படாத, வரலாறுக எழுதித் தொகுக்கப்படாத.

**unchurch',** *v.* திருச்சபை விலக்குச் செய், திருச்சபை உறுப்பினருக்குரிய உரிமை அகற்று.

**un'cia,** *n.* பண்டைய ரோமரின் வழக்கில் பன்னிரண்டில் ஒன்று ; சிறு நாணய வகை ; அவுன்சு எடை ; அங்குலம் ; *pl.* un'ciae.

**un'cial,** *n.* முற்காலச் சதுர மேல்நிலை வடிவான எழுத்து வகை ; *a.* முற்காலச் சதுர மேல்நிலை எழுத்து வடிவான ; அங்குலத்திற்குரிய.

**uncif'erous,** *a.* கொக்கியையுடைய.

**un'ciform,** *a.* கொக்கி வடிவான.

**UNCIO,** *n.* (வர.) சான்பிரான்ஸிஸ்கோவில் 1945-இல் நடைபெற்ற ஐக்கிய நாடுகள் அமைப்பின் முதல் அமைப்பாக்க மாநாடு.

**uncir'cumcised,** *a.* சுன்னத்துச் செய்யாத ; யூத-இஸ்லாமிய வழக்கில் புறச்சமயஞ் சார்ந்த ; தூய்மையற்ற.

**uncircumci'sion,** *n.* விருத்தசேதனமின்மை, சுன்னத்துச் செய்யப்படா நிலை ; யூத-இஸ்லாமிய வழக்கில் புறச்சமயத்தார் தொகுதி.

**uncircumstan'tial,** *a.* மிகச்சிறு நுணுக்க விவரங்களிற் கருத்துச் செலுத்தாத.

**unciv'il,** *a.* வினயமற்ற ; பண்பறியாத.

**unciv'ilized,** *a.* நாகரிகம் அற்ற; காட்டுமிராண்டித்தனமான.

**unclad',** *a.* பூணப்பெறாத ; அணியப்பெறாத ; ஆடையற்ற.

**unclaimed',** *a.* வேண்டப்படாத ; கேட்பாரற்ற ; உரிமை கோரப்படாத.

**unclasp',** *v.* பிடிதளர்த்து ; திற.

**unclassed',** *a.* வகுக்கப்படாத ; வகைப்படுத்தப்படாத.

**unclass'ical,** *a.* உயர்தனிச் செம்மொழியல்லாத, பண்டைக் கிரேக்க-லத்தீன் மொழிகளுக்கு ஒவ்வாத ; இலக்கிய வடிவமைதி வலியுறுத்தாத.

**unclass'ified,** *a.* வகுத்தமைக்கப்படாத ; வகைப்படுத்தப் படாத.

**unclass'ify,** *v.* வகுப்பமைவிலிருந்து எடு ; வகுப்பமைவு குலை ; காப்புப் பட்டியலிலிருந்து எடுத்துவிடு.

**un'cle,** *n.* தந்தையுடன் பிறந்த ஆண், சிற்றப்பன், பெரியப்பன் ; தாயுடன் பிறந்த ஆண், அம்மாமன் ; தாயுடன் பிறந்தாளின் கணவன்; தந்தையுடன் பிறந்தாளின் கணவன்; வயதில் மூத்த உறவினர்; வயதில் மூத்த அன்புடையர் ; மூத்த நண்பர் ; (பே-வ.) மூத்தார்.

**unclean',** *a.* துப்புரவற்ற ; அழுக்கடைந்த ; நச்சுப்பட்ட ; கற்புநெறி வழுவிய ; சிற்றின்பச் சார்பான ; கெட்ட.

**uncleaned',** *a.* அலம்பப்படாத, துப்புரவு செய்யப்படாத.

**unclean'liness,** *n.* துப்புரவுக்கேடு.

**unclean'ly,** *a.* துப்புரவு கெட்ட.

**unclean'ness,** *n.* துப்புரவுக்கேடு ; துப்புரவுக்கேடான தோற்றம்.

**unclear',** *a.* தெளிவற்ற ; விளங்காத.

**uncleared',** *a.* அகற்றப்படாத; தூர்த்துப் பெருக்கப்படாத; துப்புரவாகத் துடைக்கப்படாத.

**unclench',** *v.* இறுகு பிடியினின்றும் தளர்த்து, பற்றுத் தளர்த்து ; தளர்வுறு ; திற.

**uncler'ical,** *a.* திருச்சபைச் சமய குருவுக்குரிய சிறப்பியல் பற்ற, திருச்சபைச் சமய குருவுக்குத் தக்கதாயிராத.

**unclew',** *v.* முறுக்குத் தளர்த்து ; சுருளிணைச் சுற்றவிழ் ; மடிப்பு நிமிர்த்து ; விரித்துத் திற.

**unclipped', unclipt',** *a.* கத்தரிக்கப்படாத ; வெட்டப் படாத ; தறிக்காத.

**uncloak',** *v.* மேலுடுப்பினை அகற்று ; மேற்போர்வை நீக்கு, தளர் மேலுடுப்பினை எடுத்துவிடு ; வெளிக்காட்டு.

**unclog',** *v.* தடங்கலகற்று.

**unclogged',** *a.* தடுக்கப்பெறாத, தடைப்படாத.

**unclois'ter,** *v.* துறவுமடத்திலிருந்து விடுவி ; துறவுமடத்தினின்றும் நீக்கு.

unclois'tered, *a.* தனிமடத்திற்குப் புறம்பான; தனிமடத்தில் வாழாத.
unclose', *v.* அடைப்பகற்று; திற.
unclosed', *a.* மூடாத, அடைபடாத; திறக்கப்பட்ட.
unclothe', *v.* ஆடை அகற்று; உரித்தெடு; பதவிபறி.
unclothed', *a.* ஆடையற்ற; பண்பு நீங்கிய நிலையில் உள்ள; பதவி நீங்கிய நிலையில் உள்ள.
uncloud', *v.* முகில் திரை நீக்கு; மறைப்பு அகற்று.
uncloud'ed, *a.* முகில் திரையற்ற; மறைப்பற்ற; துயர்ப் படலம் நீங்கப்பெற்ற.
uncloud'y, *a.* மேகமற்ற; தெளிவான; துயரப் படலம் இல்லாத.
unclubb'able, *a.* கூடிவாழ்வுத் தகுதியற்ற, சமுதாயப் பாங்கற்ற.
unclutch', *v.* கைப்பிடி விடு, பிடிப்புத் தளர்த்து.
unc'o, *n.* அயலான்; செய்தித் துணுக்கு; குறிப்பிடத்தக்க செய்தி; *a.* புதுமையான, விநோதமான; வழக்கத்துக்கு மாறான; அஞ்சத்தக்க; குறிப்பிடத்தக்க; பெரிய; *adv.* மிகவும்; குறிப்பிடத்தக்கதாக.
uncock', *v.* வெடி தீராவண்ணம் பீரங்கி விசையை மெல்லக் கீழே விடு; வைக்கோல் கோப்பைப் பிரித்துப் பரப்பு, உலர்புற் குவியலைப் பிரித்துக் கலை.
uncoff'ined, *a.* சவப்பெட்டியில் அடக்கம் செய்யப்பெறாத.
uncoil', *v.* சுற்றுப் பிரித்தெடு, சுருளினைப் பிரி; திருகு சுருளை விரி; சுருட்டியபடியே விரி; சுருள்வு அகற்றி விரிவுறு; திருக்குப் புரியகற்று; திருகுபுரியகல்வுறு.
uncoined', *n.* நாணயமாக அடிக்கப்பெற்றிராத; புனைந்து கட்டப்பட்டிராத.
uncollect'ed, *a.* திரட்டப்படாத.
uncol'oured, *a.* வண்ணம் ஊட்டப்படாத.
uncombed', *a.* சீவப்பட்டிராத; கோதப்பெறாத.
uncombine', *v.* பிரிவுறு; கூட்டுப்பிரிவுறுத்து; கூட்டுப் பிரிவுறு.
uncome'liness, *n.* வனப்பின்மை; விரும்பத்தகாத்தன்மை; வெறுப்பூட்டும் நிலை.
uncome'ly, *a.* அழகற்ற, நடைநயமற்ற, அருவருப்பான.
uncom'fortable, *a.* நலக்கேடான; மகிழ்ச்சியில்லாத; ஆறுதல் அளிக்க முடியாத.
uncom'forted, *a.* ஆறுதலளிக்கப்பெறாத; ஆறுதல் பெறாத
uncommend'able, *a.* பரிந்துரைக்கத் தகாத; பாராட்டிப் பேசத் தகாத.
uncommend'ed, *a.* பரிந்துரைக்கப்படாத; பாராட்டி உரைக்கப்படாத.
uncommer'cial, *a.* வாணிகத் தொடர்பற்ற; வாணிகக் கோட்பாடுகளுக்கு மாறான.
uncommit'ted, *a.* செய்யப்படாத; பொறுப்பு ஏற்றுக் கொள்ளாத; சிக்காத; பொறுப்பு ஒப்படைக்கப்பெறாத; சிறைக்கு அனுப்பப்படாத; முந்திய தீர்ப்புக்குக் கட்டுப் படாத, முன்தீர்ப்பினால் பாதிக்கப்பெறாத.
uncomm'on, *a.* பொதுப்படையாயிராத, வழக்கத்திற்கு மாறான, தனிச் சிறப்புக்குரிய.
uncommu'nicable, *a.* தொடர்புகொள்ளத் தகாத; தொடர்பு கொள்ள முடியாத; சொல்லத் தகாத; செய்தித் தொடர்பு கொள்ள முடியாத; வெளியிட்டுப் பேச முடியாத.
uncommu'nicated, *a.* தெரிவிக்கப்படாத; செய்தி வகையில் அனுப்பப்படாத.
uncommu'nicative, *a.* வெளியிட்டுப் பேசாத; வாயடக்க மான; சற்றே ஒதுங்கிய மனப்பான்மையுடைய.
uncommu'ted, *a.* மாற்றித் தரப்படாத.
uncompan'ionable, *a.* தோழமைக்கு ஒவ்வாத; அளவளாவிப் பழகாத.
uncompass'ionate, *a.* இரக்க உணர்வற்ற, கருணை இல்லாத.
uncom'pensated, *a.* சரியீடு செய்யப்படாத.
uncomplain'ing, *a.* குறை கூறாத; மனக்குறைப்படாத.
uncom'plaisant, *a.* நயமுடன் இணங்கி வாராத; ஏற்பமைவுப் பாங்கற்ற.
uncompliment'ary, *a.* பாராட்டுதல் குறிக்காத.
uncomply'ing, *a.* இணங்காத.
uncompound'ed, *a.* கூட்டிணைவற்ற, கலந்திணைக்கப் படாத; தனியான, தனித் தூய்மையான.
uncomprehend'ed, *a.* உணரப்படாத, மனத்தால் பற்றப் படாத.
uncom'promising, *a.* இணங்கிப் போகாத; சமரசத்திற்கு இடந்தாராத.
unconcerned', *a.* தொடர்புடையதாயிராத; கவலையற்ற; அக்கறையற்ற.
unconcert'ed, *a.* முன்கூட்டி ஒருங்குகூடித் திட்டமிடப் பெறாத.
unconcil'iatory, *a.* விட்டுக்கொடுக்கும் பண்பற்ற.
unconcoct'ed, *a.* நன்கு செரிமானமற்ற; அரைகுறை வாய்மையுடைய; நன்கிணையாத.
uncondemned', *a.* குற்றவாளியென்று முடிவு செய்யப் படாத; கண்டனத் தீர்ப்பளிக்கப்படாத; பழிக்கப்படாத; தீர்த்தொதுக்கப்படாத; பயனற்றதென்று கைவிடப்பட்டு விடாத.
uncondi'tional, *a.* நிபந்தனையற்ற.
uncondi'tioned, *a.* நிபந்தனையற்ற, கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டிராத, தட்டுத்தடங்கலற்ற.
unconfessed', *a.* ஒப்புக்கொள்ளப்பட்டுவிடாத.
unconfirmed', *a.* உறுதிப்படுத்தப்படாத, வலியுறவு பெறாத, நிலைநாட்டப் பெறாத.
unconfor'ming, *a.* ஒத்திசைந்து போகாத.
uncongeal', *v.* இளகு, உருகு.
unconge'nial, *a.* ஒத்துவாராத; நலத்திற்கு ஒவ்வாத; இன அமைவற்ற.
unconject'ured, *a.* ஊகிக்கப்படாத.
uncon'jugal, *a.* கணவன் மனைவியர் தொடர்புக்கு ஒவ்வாத, மணவாழ்வுப் பண்பிற்குத் தகாத.
unconnect'ed, *a.* தொடர்பற்ற.
uncon'querable, *a.* வென்றடக்க முடியாத; பணிய வைக்க இயலாத.
uncon'quered, *a.* வெல்லப்படாத; *adv.* வெல்லப்படாமல்.
unconscien'tious, *a.* மனச்சான்றுக் கட்டுப்பாடற்ற; மனச் சான்றைக் கவனிக்காது நடக்கிற.
uncon'scionable, *a.* மனச்சான்றுக் கட்டுப்பாடற்ற; தீவினையஞ்சாத; பழிதேர்ந்த; தீமை செய்யத் தயங்காத; அறக்கொடிய; மனச்சான்று உறுத்தலற்ற; (தொ.) unconscionable bargain, (சட்.) நிறைவேற்றக்கூடாத அளவிற்குப் படுமோசமான ஒப்பந்தம்.
uncon'scious, *a.* உணர்வு நிலையற்ற; தன்னுணர்வற்ற.
uncon'secrate, *v.* புனிதங் கெடு.
unconsid'ered, *a.* நன்கு ஆலோசிக்கப்படாத; ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளப்படாத.
unconsoled', *a.* ஆறுதலற்ற.
unconsol'idated, *a.* கெட்டிமைப்படாத, ஒன்றாக இணைக்கப் படாத.
unconstitu'tional, *a.* அரசியலமைப்பிற்கு முரண்பட்ட; முறையற்ற.

**unconstrained′**, *a.* வலிந்து தோற்றுவிக்கப்படாத; வலுக் கட்டாய நிலையில் செயலாற்றுத.

**unconsumed′**, *a.* செலவழித்துத் தீர்க்கப்படாத; பயன் படுத்தித் தீர்க்கப்படாத; எரிந்து முற்றிலும் அழிவுறாத; செலவாகிவிடாத.

**uncontain′able**, *a.* உள்ளடக்கி வைக்கமுடியாத.

**uncontam′inated**, *a.* மாசுபடுத்தப்படாத, கறைப்படாத.

**uncon′templated**, *a.* எண்ணிப்பாராத; எதிர்பாராத.

**unconten′tious**, *a.* வாதப்படாத, இருதரப்பினரிடையே சச்சரவுக்குரியதல்லாத.

**uncontest′able**, *a.* மறுக்கமுடியாத, எதிர்த்துரைக்க முடியாத.

**uncontest′ed**, *a.* போட்டியற்ற; *adv.* எதிர்ப்பு இல்லாமல்.

**uncontract′ed**, *a.* சுருக்கப்பெறாத; குறுக்கமுறாத.

**uncontrolled′**, *a.* கட்டுப்படுத்தப்படாத; கட்டுப்பாட்டிற்கு உட்படாத; கட்டுக்கடங்காத.

**uncontrovert′ed**, *a.* மறுத்துரைக்கப்படாத, எதிர்த்து வாதாடப்படாத.

**unconvert′ed**, *a.* நிலைமாற்றப்பட்டிராத; உரு மாற்றப் பெறாத; மனமாற்றப்பட்டிராத; சமயம் மாற்றப்படாத.

**unconvert′ible**, *a.* மாற்றப்பட முடியாத.

**unconvict′ed**, *a.* குற்றத் தீர்ப்பளிக்கப்பெறாத, குற்றவாளி யென்று தீர்ப்பளிக்கப்பெறாத.

**unconvinced′**, *a.* மெய்யென்று ஏற்கமுடியாத நிலையிலுள்ள.

**uncope′**, *v.* வேட்டைப் பயிற்சிக்குரிய கீரியின விலங்கு வகையில் வாய்மூடி அகற்று.

**uncord′**, *v.* தளையவிழ்த்து விடுவி.

**uncork′**, *v.* அடைப்பு எடுத்துவிடு; அடைப்பு நெட்டி எடுத்துத் திற.

**uncorrect′ed**, *a.* திருத்தப்படாத.

**uncorrob′orated**, *a.* ஒத்து உறுதிப்படுத்தப்படாத.

**uncorrod′ed**, *a.* அரிக்கப்படாத.

**uncorrupt′ed**, *a.* அழுகலாகாத; கெடுக்கப்படாத.

**unc′os**, *n. pl.* செய்தி.

**uncourt′liness**, *n.* நயநாகரிகமின்மை; அரசவைக்குரிய ஒழுகலாறின்மை.

**uncouth′**, *a.* பண்பு நயங்கெட்ட; நடைநயங் கெட்ட; அருவருப்பான.

**uncov′er**, *v.* மூடியை எடு; திற; போர்வை அகற்று.

**uncowl′**, *v.* தலைமூடாக்கு அகற்றி முகத்தைத் திறந்து காட்டு; மடத்துத் துறவி நிலையினின்றுந் தாழ்த்து.

**uncreate′**[1] *a.* படைக்கப்படாமலேயே உளதாயிருக்கிற.

**uncreate′**[2], *v.* துடைத்தழி, ஒழித்துக்கட்டு.

**uncrea′ted**, *a.* இன்னும் படைக்கப்பட்டிராத; தான்தோன்றி யான.

**uncrea′tedness**, *n.* படைக்கப்படாமை; தன்னியல் தோற்றம்; படைக்கப்படா நிலை.

**uncrea′ting**, *a.* படைக்காத, படைப்புத் தொழிற் செய்யாத.

**uncrit′ical**, *a.* சீராய்வற்ற; திறனுய்வு முறைப்படாத.

**uncross′**, *v.* கால்மேல் கால் போட்டிருப்பதை எடு; கை கட்டியிருப்பதை அகற்று; குறுக்காக வைக்கப்பட்டுள்ள நிலையினின்று மாற்று.

**uncrossed′**, *a.* காசோலை வகையிற் குறுக்குக்கோடுகளிடப் பெறாத.

**uncrown′**, *v.* முடியிழக்கச் செய், அரசபதவியிலிருந்து நீக்கு.

**uncrowned′**, *a.* முடிசூட்டப்பெறாத; மணிமுடி இல்லாத.

**uncrystalliz′able**, *a.* படிக உருப்படாத; மணி உருப்படச் செய்ய முடியாத.

**uncrys′tallized**, *a.* மணியுருப்பெறாத; உருப்படியாகாத.

**unc′tion**, *n.* முழுக்கு, அபிடேகம்; எண்ணெய் முழுக்கு; (மரு.) தைல முழுக்கு; (மரு.) தைலப்பூச்சு; சமயத் துறைத் திருமுழுக்கு; முழுக்கெண்ணெய், முழுக்குநெய், முழுக்குத் தைலம்; முகப் புகழ்ச்சியுரை; பசப்புரை; சொல்லின் உணர்ச்சி யூட்டுப் பண்பு; சொல்லின் பக்தியூட்டுப்பண்பு; பேச்சுப் பரிவு, சொற்பாசம்; சமயப் பசப்பு; இறையருள், கருணை; சுவையுணர்வு; போலிப் பக்தியுணர்வு; போலிப்பக்தி; பக்தி நடிப்பு; நடிப்பார்வம்.

**unctuos′ity**, *n.* குழைவு; பசப்பு; போலிப் பரிவு.

**unc′tuous**, *a.* எண்ணெய்ப் பிசுக்குடைய; நெய்க்குழைவு வாய்ந்த; தைலப் பதமுடைய; நெய்மம் நிறைந்த; பாசப் பரிவு மிக்க; உணர்ச்சியார்வமிக்க; சுவையார்வங் காட்டுகிற.

**uncult′ivable**, *a.* பயிரிட முடியாத; பண்படுத்தப்பட முடியாத.

**uncul′tivated**, *a.* பயிரிடப்படாத; பண்படுத்தப்படாத; மேம்படுத்தப்படாத.

**uncul′tured**, *a.* பண்பாடற்ற; நய நாகரிகமற்ற; நாகரிகமடையாத.

**uncum′bered**, *a.* பளுவால் தடைப்படுத்தப்படாத; கால் கட்டற்ற; வில்லங்கமற்ற.

**uncured′**, *a.* நோய் வகையில் குணப்படாத; நோய் குணமடையப் பெறாத; பதனிடப்படாத.

**uncurl′**, *v.* சுருள் அவிழ்; முறுக்குப் பிரி.

**uncurr′ent**, *a.* நடமாட்டத்தில் இல்லாத, வழக்காறற்ற.

**uncurtailed′**, *a.* வெட்டிக் குறைக்கப்படாத, குறுக்கப் படாத; உரிமையகற்றப்படாத.

**un′cus**, *n.* உறுப்பின் வளைவாக்கப் பகுதி; *pl.* un′ci.

**uncus′tomed**, *a.* தீர்வை விதிப்புக்கு உட்பட்டிராத; தீர்வை செலுத்தியிராத; வழக்கமற்ற; பழக்கப்பட்டிராத.

**uncut′**, *a.* வெட்டப்படாத; புத்தக வகையில் விளிம்பு வெட்டி ஒழுங்கு செய்யப் பெறாத, வெட்டித் தறிக்கப் பெறாத விளிம்புகளையுடைய; (பே-வ.) புத்தக வகையில் மடிப் பறுத்துத் திறக்கப்படாத; மணிக்கல் வகையில் பட்டையிடப் பெறாத; (தொ.) uucut gem, தோளா மணி.

**undamned′**, *a.* மீளாத் தண்டனைக்கு ஆட்படாத; நரக தண்டனைக்குரியதாகாத; கடும்பழிக்கு ஆளாகாத.

**undat′ed**, *a.* தேதியிடப்பெறாத.

**undaunt′ed**, *a.* நடுக்கமற்ற, அஞ்சிப் பின்வாங்காத; உறுதி தளராத.

**un′de**, *a.*=undee.

**undebarred′**, *a.* தடை செய்யப்படாத; தடுத்து நிறுத்தப் படாத.

**undebased′**, *a.* தாழ்வுபடாத; இழிக்கப்படாத.

**undebat′ed**, *a.* வாதிடப் பெறாத.

**undecayed′**, *a.* பதனழியாத; சிதைவுறாத.

**undeceiv′able**, *a.* ஏமாற்றப்பட மாட்டாத.

**undecid′ed**, *a.* முடிவு செய்யப்படாத; தீர்மானிக்கப்படாத.

**undeci′pherable**, *a.* குறிப்புக் கண்டுகொள்ள முடியாத; அடையாளம் அறியப்பட முடியாத; புரிந்துகொள்ள முடியாத.

**undeci′sive**, *a.* தயக்க நிலையான.

**undecked′**, *a.* அணி செய்யப்பெறாத; பூட்டுவிக்கப்பெறாத; கப்பல் வகையில் தளமில்லாத.

**undeclared′**, *a.* அறிவிக்கப்பெறாத; வெளிப்படக் கூறப் பெறாத.

**un′dee**, *a.* (கட்.) அலை வடிவான.

**undefend′ed**, *a.* காப்பற்ற, நன்கு பாதுகாக்கப்பட்டிராத; ஆள் வகையில் துணையில்லாத, பாதுகாப்பில்லாத; வழக்கு வகையில் எதிர்வழக்காடப் பெறாத.

**undefied′**, *a.* எதிர்க்கப்படாத; எதிர்ப்பற்ற.

**undefiled′**, *a.* தூய்மை கெடாத.

**undefin'able**, *a.* வரையறுத்துக் கூறமுடியாத.
**undefined'**, *a.* வரைவிளக்கப்படுத்தப்படாத.
**unde'ify**, *v.* தெய்வத்தன்மை நீக்கு.
**undel'egated**, *a.* பேராளாக அனுப்பப் பெறாத; ஆட்பேர் உரிமை பெறாத.
**undeliv'ered**, *a.* ஒப்படைக்கப்பெறாத; முகவரியாளரிடஞ் சேர்ப்பிக்கப்படாத; பெற்றெடுக்கப்படாத.
**undelud'ed**, *a.* மயக்கத்திற்குட்படாத, மயங்கா நிலையுடைய.
**undemand'ed**, *a.* உரிமையாகக் கேட்கப்படாத; கோரப்படாத; வேண்டப்படாத.
**undemocrat'ic**, *a.* குடியாட்சிக்கு ஒவ்வாத, ஜனநாயகப் பண்பற்ற.
**undemon'strative**, *a.* கருத்தை வெளிப்படக் காட்டிக் கொள்ளாத; அடக்க நடையுள்ள.
**undeni'able**, *a.* மறுக்கமுடியாத; கட்டாயமாக ஒத்துக் கொள்ளக்கூடிய.
**undenomina'tional**, *a.* சமய வகையில் குறிப்பிட்ட எக் கிளையினருக்கும் தனி உரிமைப்படாத; கிளைவகை சாராத.
**undepend'able**, *a.* நம்பத் தகாத.
**un'der**, *a.* கீழுள்ள, கீழ்ப்பக்கமான; அடிப்புறமான; தாழே உள்ள; கீழ்த்தரத்திலுள்ள; கீழ்ப்பட்ட; *adv.* கீழே; தாழே; அடியில்; கீழ் நிலையில்; கீழ் நோக்கி; *prep.* கீழே; அடியில்; கீழ் நிலையில்; கீழ் நிலைக்கு; உள்ளே; உட்புறமாக; கீழாக; குறைந்த நிலையில்; ஆதரவில்; கீழ்ப்பட்டு; மாணவராக; நிலையில்; உட்பட்ட நிலையில்; ஆட்பட்டு; பளுவினால்; மேற்கொள்ளப்படும் நிலையில்; ஆட்சிக்குட்பட்டு; கட்டப்பட்டு; எதிர்பார்த்த நிலையில்; சார்த்தி; சான்றுடன்; வினைவாக; காலத்தில்; வடிவில்; ஆட்சியில்; மேற்பார்வையில்; காரணமாக; (தொ.) sink under the load, பளுத் தாங்காமல் அழுந்து; துன்பமுறு; speak under one's breath, குசுகுசுவெனப் பேசு; முணுமுணுத்துப் பேசு, முனங்கு; under a cloud, துயருட்பட்ட; பழிப்புக்காட்பட்ட, ஐயுறவுக் காளான; நல்லாதரவு இழந்த நிலையுடைய; under arms, போர் அணியில்; போர்த் தொழிலில்; under hatches, கப்பல் தளத்திற்குக் கீழே; கண்காணுமல்; வேலை செய்ய வேண்டியிரா நிலையில்; கைது செய்யப்பட்டு, காவலில் வைக்கப்பட்டு; தாழ்த்தப்பட்டு; உயிரிழந்து; under his belt, அவர் வயிற்றில்; under one's nose, மிக அருகிலேயே; ஒருவருக்கு முன்னிலையிலேயே, ஒருவர் எதிரிலேயே; under one's wing, ஒருவரது காப்பில், பாதுகாப்பில் வைக்கப்பட்டு.
**underact'**, *v.* குறையுற நடி, உணர்ச்சியின்றி நடி.
**underac'tion**, *n.* துணைவினை, துணைமைச் செயல்; துணைப் போர் நிகழ்ச்சி.
**underac'tor**, *n.* துணை நடிகர்.
**un'der-age'**, *a.* வயது வாராத; முதிராத.
**undera'gent**, *n.* துணைமை முகவர்.
**underarm'**, *a.* கையகங் கொண்ட; கையகமான; கையைத் தோளின் கீழாகக் கொண்ட.
**un'derbearer**, *n.* பிணந்தூக்கி, ஆசந்தி சுமப்பவர்.
**un'derbelly**, *n.* மென்தடம்; மர்மத்தலம்.
**un'derbid'**, *v.* குறைந்த விலையில் கொடுக்க முன்வரலுறு; குறைந்த தொகைக்குக் கேள்; சீட்டாட்ட வகையில் மதிப்புக் குக் குறைவாகக் கேள்வி கேள்.
**underbidd'er**, *n.* குறைவிலைக்கு விற்பவர்; குறைவிலைக்குக் கேட்பவர்; சீட்டாட்ட வகையில் மதிப்புக்குக் குறைந்து கேள்வி கேட்பவர்; உச்சக் கேள்வியாளருக்கு அடுத்த உயர் கேள்வியாளர்.
**un'derbite'**, *v.* உலோக அகழ்வுச் செதுக்கு வேலைக்காரர் வகையில் வேண்டிய அளவிற்கு அரித்து அகழாதிரு.
**un'der-board**, *adv.* (அரு.) இரகசிய வழியில், மறைவழி வகையாக.
**un'derbough**, *n.* அடிக்கிளை.
**un'der-boy**, *n.* பள்ளிக் கீழ்வகுப்புப் பையன்; கீழ்நிலைப் பள்ளிச் சிறுவன்.
**un'derbreath**, *n.* அடங்கிய குரலொலி; வதந்தி.
**underbred'**, *a.* நற்பயிற்சியில்லாத; பயிற்சிப்பண்பு போதாத.
**un'derbridge**, *n.* பாலம், மேற்பாலம் அல்லாத பொதுநிலைப் பாலம்.
**un'der-brush**, *n.* அடி வளர்ச்சி, அடிவளர்ச்சிப் புதர்; பெரு மரங்களுக்கு அடியில் வளரும் சிறுபுதர்த் திரள்; குறுமரத் திரள்; *v.* அடி வளர்ச்சி அகற்று; குறுமரத் திரள் வெட்டு; அடி வளர்ச்சிப் புதர் வெட்டித் திருத்து.
**underbuild'**, *v.* கீழே கட்டு, கீழ்க்கட்டிட மூலம் உதைமானங் கொடு.
**un'der-builder**, *n.* துணைமைக் கட்டிடப் பணியாளர்; கீழ்நிலைக் கட்டுமான வேலையாள்.
**un'derbuy'**, *v.* குறைமதிப்பு விலைக்கு வாங்கு; முன் வாங்கிய விலைக்குக் குறைத்து வாங்கு.
**un'dercarriage**, *n.* வண்டியின் அடிக்கட்டு; விமானத்தின் நிலம்படர் பகுதி; விமானத்தின் மையப் பகுதி.
**un'dercast**, *n.* சுரங்கத்திற் பாட்டையடியூடு செல்லுங் காற்றூட்டு நெறி.
**un'dercharge**[1], *n.* குறை கட்டணம்.
**un'dercharge'**[2], *v.* குறை கட்டணங் கோரு; சரக்கு வகையில் குறைவிலைக்குக் கொடுக்க முன்வா.
**underclad'**, *a.* குறையாடையணிந்த.
**un'derclay**, *n.* இயற் களித்தள அடுக்கு, சுரங்க நிலக்கரிப் படிவிற்கு அடியிலுள்ள களிமண் அடுக்கு.
**un'der-clerk**, *n.* துணைமைநிலை எழுத்தர்.
**un'dercliff**, *n.* மடிப்பாறை, குன்றின் விழுமானங்களால் ஆன அடிவாரத் தளம்.
**un'dercook**, *n.* துணைச் சமையற்காரர்.
**un'dercool**, *v.* குறை குளிர்வூட்டு; போதா அளவில் குளிர் வூட்டு.
**un'der-coun'tenance**, *n.* அகமுகத் தோற்றம், முகத் தோற்ற அகநிலைப் பின்னணி.
**underco'ver**, *a.* மறைமுகமான, இரகசிய முறையான; மறைமுகமாகச் செய்யப்பட்ட; மறைமுகமாக வேலைசெய்கிற; ஒற்று முறையான, வேவு சார்ந்த; (தொ.) under-cover agent, குற்றவாளிகளோடு கரந்து கலந்து சான்று தொகுப்பவர்.
**un'dercovert**, *n.* வேட்டை உயிரினங்களின் புதர் மறைவிடம்.
**un'dercraft**, *n.* சிறு சூழ்ச்சி, பொறித் தந்திரம்.
**un'dercroft**, *n.* நிலவறை மாடம்; திருக்கோயில்களுக்கு அடியிலுள்ள புதைமாடம்; (வில.) சிறுபள்ளம்; (வில.) குழாய்ச் சுரப்பி.
**un'dercurrent**, *n.* அடி நீரோட்டம்; அடியொழுக்கு; சொல்லின் தொனி; பேச்சின் அடிக்குறிப்பு; மனத்தின் உள் நோக்கம்; உள்ளுணர்ச்சி; *a.* அடியொழுக்கான; மறைவாக இயங்குகிற; உட்குறிப்பான, உள் நோக்கமான; உள்ளுணர்ச்சி வடிவான.
**un'dercut**[1], *n.* மாட்டிடுப்பு இறைச்சி அடிக்கண்டம்; குத்துச்சண்டையில் மேல்நோக்கிய குத்து.
**undercut'**[2], *a.* கீழ்வெட்டான; அடியிலிருந்து மேல்நோக்கி வெட்டுதற்குரிய; அடிவெட்டின் விளைவான; *v.* கீழிருந்து மேல்நோக்கி வெட்டு; அடிவெட்டித் தொங்கலாக்கு.
**un'derdeck**, *n.* கப்பல் அடிநிலைத்தளம்.
**underdevel'op**, *v.* வளர்ச்சி குறைப்படுத்து.
**underdevel'oped**, *a.* வளர்ச்சி நிறையாத.
**underdid'**, *v.* underdo என்பதன் இறந்த காலம்.
**underdo'**, *v.* குறைவாகச் செய்.

**underdog'**, *n.* உழப்பவர் ; அல்லலுறுபவர் ; தோல்வியுறும் நாய்.

**underdose'**, *v.* மருந்து வகையில் குறையளவு கொடு.

**un'derdrain**[1], *n.* ஆழ் வடிகால், அடிநிலச் சாக்கடை.

**underdrain'**[2], *v.* ஆழ் வடிகால்மூலம் நீரை வெளியேற்று; அடிநிலச் சாக்கடை அமை.

**underdraw'**, *v.* குறைவுபட வரை ; மட்டமான அளவில் தீட்டு ; மெய்ம்மை குறைவுபட எடுத்துக்காட்டு.

**under-driv'en**, *a.* கீழிருந்து இயக்கப்படுகிற.

**un'derearth**, *a.* அடிநிலஞ் சார்ந்த, நிலத்தடியிலுள்ள.

**underemploy'ment**, *n.* வேலை பற்றுக்குறை.

**under-espi'al**, *n.* கீழ்த்துறை ஒற்றர்.

**underes'timate**, *n.* குறைவு மதிப்பீடு ; *v.* குறைவாக மதிப்பிடு.

**under-expo'sure**, *n.* (நி-ப.) குறை ஒளியூட்டு, குறையொளி மேவுவிப்பு.

**underfe'd**, *a.* போதிய உணவளிக்கப் பெறாத ; சத்துணவு போதாத.

**underfeed'**, *v.* குறையுணவு அளி.

**underfire'**, *v.* போதிய அளவிற்குக் குறைவாகச் சுடு ; போதிய தீயிடாதிரு ; போதிய அளவிற் குறைவாக வேகவை.

**underfired'**, *a.* அரைகுறையாக வெந்த.

**un'derflow**, *n.* உள்ளொழுக்கு.

**un'derfoot**[1], *a.* அடக்கி ஒடுக்கப்பட்ட.

**underfoot'**[2], *v.* கீழேகட்டி ஆதாரமாக்கு, கீழ்க்கட்டுமான ஆதாரங்கொடு ; *adv.* அடிக்கீழ் ஆக, காலின் கீழிட்டு.

**undergo'**, *v.* அனுபவி; படு ; பட்டறி ; ஆளாகு.

**undergrad'uate**, *n.* பட்ட முன் மாணவர்.

**undergraduette'**, *n.* (பே-வ.) பட்டப் பயிற்சி மாணவி.

**un'derground**[1], *n.* கீழுலகம் ; கீழ்நிலம் ; அடிநிலம், அடிநில இடம் ; தாழ்நிலம், பள்ள இடம் ; அடிநிலக்களம், அடித்தளம் ; அடிநில இருப்புப்பாதை ; இரகசிய இயக்கம் ; இரகசியக் கட்சி ; இரகசிய இயக்கத்தவர் ; இரகசிய எதிர்ப்பு முயற்சி ; *a.* அடிநில, நிலத்தின் கீழான ; மறைவகையான, இரகசியமான, தலைமறைவான, அரசியல் வகையில் தலைமறைவாகத் திரிகிற.

**underground'**[2], *adv.* நிலப்பரப்பின்கீழ், நிலத்தடியில் ; இரகசிய வகையாக, தலைமறைவாக ; அரசியல் துறையில் தலைமறைவாகத் திரிகிற நிலையில்.

**underground'er**, *n.* தலைமறைவாகத் திரிபவர்.

**un'dergrove**, *n.* குறுஞ்சோலை, குறும்புதர்த் தொகுதி.

**un'dergrowth**, *n.* தூறு, புதர்க்காடு; குறுவளர்ச்சிப் புதர், மரத்தின் கீழ்ப்புதர் வளர்ச்சி ; அடிவளர்ச்சி ; தடைப்பட்ட வளர்ச்சி ; குறுமரத் திரள்.

**un'derhand**[1], *n.* கீழ்நிலை, பாதகமாகும் நிலை ; அகப் பந்தடி, கையின் கீழ்ப்புறமாக அடிக்கும் பந்தடி ; *a.* மறைவான ; மறைவுவகையான ; மறை சூழ்ச்சி வாய்ந்த ; திருட்டுத்தனமான ; நயவஞ்சகமான ; மறைவாகச் செய்யப்பட்ட.

**underhand'**[2], *adv.* மறைவாக ; கைகள் முழங்கைக்குக் கீழாக.

**underhand'ed**, *a.* மறை முறையான ; இரண்டகத்தன்மை வாய்ந்த ; வேலை வகையில் ஆட்குறைவுடைய, ஆள்முடையான ; *adv.* மறைமுறையாக, நயவஞ்சகமாக ; வேலை வகையில் ஆள்முடையாக.

**un'derhung**, *a.* மோவாய் வகையில் மேற்செருகலான, மேல்வாய் கடந்து கீழ்வாய் செல்கிற ; துருத்து கீழ்வாயுடைய ; கீழ்த்தண்டவாளத்தின்மேல் உருள்கிற.

**underjaw'**, *n.* கீழ் மோவாய்.

**un'derjawed**, *a.* கீழ் மோவாய் தடித்த ; கீழ் மோவாய் முன் துருத்தி முனைப்பாயிருக்கிற.

**underkeep'er**, *n.* துணைநிலைக் காவலாள்.

**un'der-king**, *n.* உதவி மன்னர் ; குறுநில மன்னர்.

**un'der-kingdom**, *n.* சிற்றரசு, உதவி ஆட்சி.

**underlaid'**, *v.* **underlay**[2] என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**underlain'**, *v.* **underlie** என்பதன் முடிவெச்சம்.

**un'derlay**[1], *n.* அடி ஆதாரம், அடித்தாங்கல் ; அடிக்கிடைத்தாள், அச்செழுத்துருக்களை உயரப்படுத்துவதற்காக அவற்றின் அடியில் வைக்குந் தாள் ; கம்பள அடிவைப்பிற்குரிய நீர்காப்புத்தாள் ; நீர்காப்பு அடி விரிப்பட்டை ; (சுரங்.) சாய் உலோகக் கருப் பாறை ; சாய் சுரங்க வழி.

**underlay'**[2], *v.* அடியில் வை ; அடி ஆதாரமாக இடு ; அடித்தாங்கலாக வைத்து உறுதிசெய் ; (அச்சு.) அச்செழுத்துருக்களின் கீழே அடிக்கிடைத் தாளை வை ; (சுரங்.) சாய்கோட்டமுறு, செங்குத்து நிலையினின்றுஞ் சாய்வுறு.

**underlay**[3], *v.* **underlie** என்பதன் இறந்த காலம்.

**un'derlayer**[1], *n.* அடியடுக்கு, அடியடை; அடித்தளப் பகுதி; அடிப்படை.

**underlay'er**[2], *n.* (அச்சு.) அடிக்கிடைத்தாள் வைப்பவர் அடி ஆதாரம் வைப்பவர்.

**un'derlease**[1], *n.* கீழ்க்குத்தகை.

**underlease'**[2], *v.* கீழ்க்குத்தகைக்கு விடு.

**underlet'**, *v.* குறைமதிப்பான குடிக்கூலிக்கு விடு ; கீழ்க்குடிக்கூலிக்கு விடு.

**underlett'er**, *n.* கீழ்க்குடிக்கூலிக்கு விடுபவர் ; குறை குடிக்கூலிக்கு விடுபவர்.

**underlie'**, *v.* அடியிற் கிட ; உள்ளீடாயிரு ; அடிப்படையாய் அமைவுறு.

**un'derline**[1], *n.* அடிவரி, நாடக நுழைவுச் சீட்டடியிலுள்ள மறு ஆட்ட முன்னறிவிப்பு ; அடி விளக்க வரி, படத்திற்கு அடியிலுள்ள விவர வரி.

**underline'**[2], *v.* அடிக்கோடிடு ; வற்புறுத்திக்கூறு ; வற்புறுத்திக் காட்டு ; வலியுறுத்து.

**un'derlinen**, *n.* உள்ளாடை ; சில்லறை உள்ளுடை.

**un'derling**, *n.* கீழாள் ; கொத்தடிமை.

**underly'ing**, *a.* கீழுள்ள, அடியிலுள்ள ; அடிநிலையான ; உள்ளார்ந்த ; கூர்ந்து கவனித்தாலன்றி வெளிப்படையாகத் தெரியாத ; ஆதாரமான ; அடிப்படையான, மூலாதாரமான ; (தொ.) underlying form, (மொழி.) மாறுபடாச் சொல்லிடைக்கூறு, சொல்லிடை மாறுபடாப் பொருள் நிலைக்கூறு.

**underman**[1], *n.* கீழாள், துணையாள்; கீழ்ப்படியினர் ; அவலநிலைப்பட்டவர்.

**underman'**[2], *v.* குறைந்த பணியாட்களுடன் இயங்குவி.

**undermanned'**, *a.* பணியாட்கள் போதாமல் நடத்தப்படுகிற.

**undermas'ted**, *a.* (கப்.) மிகச்சிறு பாய்மரமுடைய ; (கப்.) பற்றுக்குறைப் பாய்மரமுடைய.

**undermen'tioned**, *a.* கீழே குறிக்கப்பட்ட.

**undermine'**, *v.* கீழறு ; அடிநிலம் அரித்துவீழ்த்து ; கடைகால் தகர் ; மறைகேடு செய், மறை சூழ்ச்சியால் அழி ; கண்டுபிடிக்க முடியா வகையில் தீங்கு செய்.

**undermi'ner**, *n.* கீழறுப்பவர் ; அரிப்பவர் ; கீழறுப்பது ; அரிப்பது; அழிவுக்காரர்; அழிவுப்பொருள்; மறை சூழ்ச்சியாளர்.

**undermi'ning**, *n.* கீழறுப்பு ; அடியறுத்தழிப்பு ; அடியறுப்பழிவு ; மறை சூழ்ச்சி அழிவுவேலை ; *a.* கீழறுக்கிற ; அடியரிக்கிற ; அடியறுத்தழிக்கிற ; மறை சூழ்ச்சி செய்தழிக்கிற, அடியரித்துக் கெடுக்கப் பார்க்கிற.

**un'dermost**, *a.* கீழ்க்கோடியான ; மிகவும் கீழ்நிலையிலுள்ள.

**un'dern**, *n.* முற்பகல்; பிற்பகல் முற்பகுதி; (அரு.) காலை ஒன்பது மணி வேளை ; சிற்றுண ; கைம்மைச் சிறுவாடு, ஸ்காத்லாந்து சட்டவழக்கில் கணவன் மரபுரிமை வருவாயில் விதவை மணவிக்குரிய மூன்றில் ஒரு பங்கு.

**underneath'**, *n.* கீழ்ப்பரப்பு ; அடிப்பகுதி ; *a.* கீழ்ப்பகுதியிலுள்ள ; அடிப்பகுதிக்குரிய ; *adv.* கீழே, அடியில் ; *prep.* கீழாக, அடியூடாக.

**un'dernote**, *n.* அடங்கிய தொனி ; (இசை.) உட்சுரம்.

**undernot'ed**, *a.* கீழே குறிப்பிட்ட.

**un'derntime**, *n.* நண்பகல் உணவு நேரம்.

**underpaid'**, *a.* போதாச் சம்பளத்திற்கு உழைக்கிற.

**un'derpass**, *n.* அமெரிக்க வழக்கில் அடிநிலவழி ; சுருங்கை, இருப்புப்பாதை வழி.

**un'derpassion**, *n.* உள்ளீடான உணர்ச்சிவேகம் ; அடங்கிய உணர்ச்சிவேகம்.

**underpay'**, *v.* குறை சம்பளங்கொடு ; குறைவாகக் கட்டு.

**underpay'ment**, *n.* குறைவாகப் பணஞ் செலுத்துகை ; குறைசம்பளம்.

**underpeo'pled**, *a.* குறை மக்கள்தொகையுடைய ; போதா மக்கள் எண்ணிக்கையினையுடைய ; வாழ்குடி குறைவான.

**underpin'**, *v.* (க-க.) கீழ்க்கட்டுமான ஆதரவு அமை, கீழ்க் கட்டுமானத்தால் தாங்கு.

**underpinn'ing**, *n.* அடியுதவுக் கட்டுமானம்.

**un'derplay[1]**, *n.* அடிச் சீட்டாட்டம், உயர்சீட்டிருக்கும் போது தாழ்ந்த சீட்டை ஆடுதல்; மறைநுட்ப அலையியக்கம், கண்காணுப் பின்னணியியக்கம்.

**underplay'[2]**, *v.* அடியாட்டமாடு, சீட்டாட்டத்தில் உயர் சீட்டை வைத்துக்கொண்டு கீழ்ச்சீட்டு ஆடு.

**un'derplot**, *n.* கதையுட்கதை ; உள்ளீடான கதைப்பகுதி ; உட்சூழ்ச்சி ; பொறிச்சூழ்ச்சி.

**un'derpraise**, *v.* தகுதிக்குக் குறைவாகப் புகழ்.

**un'derpriv'ileged**, *n.* சமுதாய அடிநிலை வகுப்பு; *a.* உரிமையிற் குறைந்த.

**underprize'**, *v.* மிகக் குறைவாக மதி ; குறைவிலை மதிப்பீடு செய் ; தகுதி குறைத்து மதி.

**under-produc'tion**, *n.* பற்றுக்குறையான உற்பத்தி ; வழக்கத்திற்குக் குறைவான விளைச்சல்.

**un'derproof**, *a.* கட்டளைக் காப்புச் செறிவிற்கும் கீழ்நிலையுடைய.

**underprop'**, *v.* கீழ் உதைவுகொடு ; கீழ் உதைவு கொடுத்துத் தாங்கு.

**underquote'**, *v.* நேர்விலைக்குக் குறைத்துப் புள்ளி கொடு ; குறைவிலை கூறு.

**un'derrate[1]**, *n.* குறைபட்ட விலைவீதம், தகுதிக்குக் குறைவான விலைவீதம்.

**underrate'[2]**, *v.* குறைத்து மதி ; தகுதி குறைவாகப் பேசு ; தகுதி குறைவாக நடத்து.

**under-reck'on**, *v.* குறை கணிப்புச் செய், குறைவாகக் கணித்து மதிப்பிடு.

**under-ripe'**, *a.* முற்றும் பழுக்காத.

**un'derroof**, *n.* அடிநிலைமோடு, மோட்டின்கீழ் மோடு.

**underrun'**, *v.* அடியோடு ; கீழாக ஓடு ; அடியூடாகக்கிட ; (கப்.) ஊடெடுத்துச் சரிசெய், வடக்கம்பியைக் கப்பல்தளத்தின் ஒருபக்கமாக மேல் எடுத்துப் பழுதுபார்த்துச் சரி செய்து மறுபக்கமாகக் கீழே இடு.

**un'derschool**, *n.* அடிநிலைப்பள்ளி, கீழ்த்தர நடுநிலைப் பள்ளி.

**underscore'**, *v.* அடிக்கோடிடு ; வற்புறுத்து.

**un'der-sec'retary**, *n.* நேருதவிச் செயலர்.

**un'derself**, *n.* அடியுணர்வாண்மை, தன்னுணர்வுநிலை கடந்த அகநிலை உள்ளம்.

**undersell'**, *v.* குறைவிலைக்குப் பகர் ; போட்டியில் குறைவிலை விற்பனை செய் ; மதிப்புக் குறைபடுத்து.

**un'derseller**, *n.* குறைவிலைக்கு விற்பவர்.

**un'dersense**, *n.* ஆழ்புலத் திறம் ; துணைப்புலன், ஆரும் புலன் ; தன்னுணர்வு கடந்த நுண்ணுணர்வுத் திறம், இயலுணர்வுத்திறம்.

**un'der-servant**, *n.* துணை வேலையாள், கீழ்நிலைப் பணியாள்.

**un'derset[1]**, *n.* (கப்.) அடிநிலை எதிர் நீரோட்டம் ; (கப்.) கீழ்நிலை எதிர்க்காற்றுவீச்சு.

**underset'[2]**, *v.* கீழ்க்கட்டுமான உதைவு ஆதாரம் அமை ; உதைவு ஆதாரங்கொடு ; கீழ்க்குடிக்கூலிக்கு விடு.

**un'dershapen**, *a.* சரியுருவமைவற்ற, சரியான உருவம் அமையாத.

**un'dershoot[1]**, *n.* வானூர்தி இறக்க வகையில் சிறிது இடப்பெயர்ச்சி.

**undershoot'[2]**, *v.* சிறிதே குறைவுற்றுச் சென்றெட்டத் தவறு.

**un'dershot**, *a.* அடிவிசைத்த, நீர்விசைச் சக்கர வகையில் அடியில் நீரோடல் வாயிலாக இயக்கப் பெறுகிற ; மோவாய் வகையில் கீழ்ப்புறந் துருத்திய.

**un'dershrub**, *n.* குறும்புதர் வகை.

**un'derside**, *n.* அடிப்புறம், கீழ்ப்பக்கம், அடிப்பரப்பு.

**undersign'**, *v.* கீழே கையொப்பமிடு.

**undersigned'**, *a.* அடியிற் கையொப்பமிட்ட.

**un'dersized**, *a.* பற்றுப் பரும அளவுடைய ; குறைவடிவான, குள்ளமான.

**un'derskin**, *n.* அடித்தொலி, தோலடி மென்தோல்.

**un'derskirt**, *n.* உட்பாவாடை ; அடிப்பாவாடை, அடியோர ஆடைத்தொங்கல்.

**un'dersky**, *n.* வானடி, வான வளாகத்தின் அடிப்பக்கம்.

**un'dersleeve**, *n.* அடித்துணைக் கைம்மடி, கழற்றக்கூடிய சட்டைக் கைமடிப்படியிலுள்ள கைமடிப்பு.

**un'dersoil**, *n.* அடிமண் ; அடிநிலமண் ; அடிநிலம்.

**un'dersong**, *n.* பல்லவி, பாடலின் பன்முறை மடக்குவரி, இடைமடக்கு வரி ; (இசை.) உட்சுரத் தொடர்வு.

**understaffed'**, *a.* பணியாளர் எண்ணிக்கை போதாத.

**understand'**, *v.* அறி ; உணர் ; புரிந்துகொள் ; பொருள் தெரிந்துகொள் ; இயல்பு அறிந்துகொள் ; பாங்கு அறி ; போக்கு உணர் ; சிறப்புக் கண்டுணர் ; காரணம் இன்னதென்று கண்டுகொள் ; குறிப்பறி, நோக்கமறி ; ஆள் வகையில் பண்பறி ; செயல்வகை தெரிந்திரு ; கருத்தில் வாங்கிக்கொள் ; மனத்தில் வாங்கிக்கொள், கிரகித்துக்கொள் ; உய்த்துணர், குறித்துணர் ; அவாய் நிலையாகக் கொண்டுணர் ; கேள்வியுறு, கேள்விப்படு ; (தொ.) be given to understand, கேட்டறிந்திரு, கேள்விப்படு.

**understand'able**, *a.* அறியக்கூடிய ; ஒத்துணர்ந்து பார்க்கக்கூடிய ; ஒத்துணர்ந்து காணப்படத்தக்க.

**understand'er**, *n.* அறிபவர் ; ஒத்துணர்பவர் ; ஆதரவாளர்

**understand'ing**, *n.* அறிவாற்றல், உணருந் திறம் ; அறிவு, உள்ளத்தின் அறிவுத்திறம் ; பற்றுணர்வுத் திறம், புரிந்துகொள்ளும் ஆற்றல் ; பொருளறி திறன் ; மனத்தின் வாங்கு திறன், கருத்தேற்புத் திறம் ; உடன்பாடு ; மன ஒத்திசைவு ; உள் உடன்படிக்கை, ஒப்புக்கொள்ளப்பட்ட செய்தி ; *a.* புரிந்துகொள்ளும் ஆற்றலுடைய ; உய்த்தறி திறமை வாய்ந்த ; ஒத்துணர் திறமுடைய ; மனத்தில் வாங்கிக் கொள்ளும் ஆற்றலுடைய.

**understate'**, *v.* குறைத்துக் கூறு ; மெய்ம்மைநிலை குறைத்தியம்பு.

**understate'ment**, *n.* குறையுரை ; குறைமதிப்பீட்டுரை.

**un'dersteer**, *n.* உந்துகலத்தில் திருப்பாழியின் மட்டுமீறிய மெல்லிசைப்பு.

**un'derstock[1]**, *n.* (பழ.) காலுறை.

**understock'[2]**, *v.* குறைபடக் கையிருப்பு வழங்கு, கடை-பண்ணை ஆகியவற்றின் வகையில்போதாக் கையிருப்பு வழங்கு.

**understood'**[1], *a.* தொக்கி நிற்கிற; குறிப்பால் உணரப் பட்ட.

**understood'**[2], *v.* **understand** என்பதன் இறந்தகால-முடி வெச்ச வடிவம்.

**un'derstrapper,** *n.* கீழ்த்தர வேலையாள்; இழிஞர்.

**un'derstrapping,** *a.* கீழ்நிலையிலுள்ள, பணிவகையில் அடி நிலையிலுள்ள.

**un'derstratum,** *n.* அடிப்படுகை, கீழடை; *pl.* un'derstrata.

**un'derstudy,** *n.* கையிருப்பு நடிகர்; கையிருப்பு அலுவலர்; *v.* கையிருப்பு நடிகராகச் செயலாற்று; மாற்று ஆளாகப் பயில்.

**undertake',** *v.* ஏற்றுக்கொள்; மேற்கொள்; செயல் வகையில் செய்ய ஒப்புக்கொள்; நிறைவேற்ற உறுதிகொடு; பொறுப்பீடுபாடு கொள்; பொறுப்பு மேற்கொள்; கடப்பாடு நிறைவேற்ற மேற்கொள்; பிணைகொடு; உத்தரவாதமளி; (பழ.) மற்போர் அழைப்பு ஏற்பிசைவு தெரிவி; (பழ.) சொற்போர் அழைப்பு ஏற்பிசைவளி; (பே-வ.) சாச்சடங்குப் பொறுப்பு கொள்.

**underta'ken,** *v.* **undertake** என்பதன் முடிவெச்சம்.

**un'dertaker,** *n.* ஏற்பவர்; வெட்டியான், சாச்சடங்கு மேற்பார்வை கொள்பவர்; (வர.) மாமன்றத் தரகர்; சலுகை பெற்று முற்கால மாமன்றத்தில் அரசர் வருமானப் பகர்ப்புக் களை நிறைவேற்றித்தரும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட செல்வாக்குடைய மனிதர்.

**undertak'ing,** *n.* பொறுப்பேற்பு; பொறுப்பேற்புப் பணி; கடும் பணி, துணிவு வினை; சாச்சடங்கு மேற்பார்வை.

**under-ten'ancy,** *n.* உட்குடிக்கூலி முறைமை.

**un'der-tenant,** *n.* உட்குடிக்கூலியாளர்.

**un'dertime,** *n.* குறைவரை நேரம், தொழிலாளர் சட்டப்படி ஒப்பந்த வேலை நேர எல்லைக்குக் குறைந்த நேர எல்லை.

**undertimed',** *a.* (நி-ப.) போதிய நேரம் ஒளிபட வைக்கப் படாத.

**un'dertint,** *n.* அடங்கிய உள்வண்ணம்; ஒளியூடுருவும் உள் வரி வண்ணம்.

**un'dertone,** *n.* அடங்கிய குரல்; உள்தொனி; தாழ் குரல்; மங்கிய வண்ணம்; மறைகுறிப்புத் தொனி; மறைகுறிப்புப் பண்பு; மறைகுறிப்பு நிறம்; மாறுபட்ட இடைத்தொனி; மாறுபட்ட இடைக்கூறு; இடைத்தொனி; உடலின் தாழ் நிலை நாடி.

**un'dertoned,** *a.* அடங்கிய குரலுடைய; தாழ்குரலுடைய; அடங்கிய தொனியுடைய; தொனியில் குறைபட்ட; செவ்வி போதாத.

**undertook',** *v.* **undertake** என்பதன் இறந்த காலம்.

**un'dertow,** *n.* அடியோட்டம், அடி எதிரோட்டம், ஓட்டத் திற்கு எதிரான கீழோட்டம்; அலைத்தேக்கம், பின்வாங்கும் அலையின் தேங்கு நீர்க்கட்டு; பின்விசைத் தேக்கம்.

**un'dertrick,** *n.* பொறித்தட்டு வீழ்வு; சீட்டுக் கைத்திறங் களில் சற்றே குறைபடும் முடிவு.

**undervalua'tion,** *n.* குறை மதிப்பீடு.

**underval'ue,** *v.* குறைமதிப்பிடு; குறைத்து மதிப்பிடு; தகுதி குறைத்து மதிப்பிடு; மதிப்புக்குறை; ஏளனமாகக் கருது.

**underval'uer,** *n.* குறைமதிப்பீட்டாளர், குறைவாக மதிப் பவர், மதியாதவர்.

**un'dervest,** *n.* உட்குடுத்துணி; உட்சட்டை.

**un'derviewer,** *n.* நிலக்கரிச்சுரங்க அடிநிலை வேலை மேற் பார்வையாளர்.

**un'dervoice,** *n.* அடங்கிய குரல்.

**un'derwater,** *n.* அடிநிலை நீர், நிலை அடியோட்ட நீர்; அடி யோட்டம், நீர்ப்பரப்பின்கீழ் எதிர் ஒழுக்கு; *a.* நீரடியிலுள்ள; நீரில் மூழ்கிய; நீர் உண்ணெறி சார்ந்த, கடல் நீரடி நெறிக் குரிய.

**un'derwear,** *n.* உள் உடுப்பு.

**un'derweight,** *n.* பளுக்குறைபாடு; சிறு எடை.

**underwent',** *v.* **undergo** என்பதன் இறந்த காலம்.

**un'derwing,** *n.* அடியிறகுக் குறியுடைய அந்துப்பூச்சி வகை.

**un'derwit,** *n.* குறையறிவு; அரைகுறை அறிவுத்திறம்; நிரம் பாச் சொற்றிறம்.

**un'derwood,** *n.* தூறு, புதர்க்காடு.

**un'derwork**[1], *n.* அடிக்கட்டு; கீழ்க்கட்டுமானம்; துணைமை நிலை வேலை; கீழ்த்தர வேலை; மறைமுக வேலை, சூழ்ச்சிச் செயல்

**underwork'**[2], *v.* அடிவெட்டுவேலை செய், கீழறுப்புவேலை செய்; கீழரித்தழி; கவிழ்ப்புவேலை செய்; குறைவேலை செய்.

**underworked',** *a.* குறைவேலை வாங்கப்பட்ட; போதிய வேலை வாங்கப் பெறாத.

**underwork'er,** *n.* கீழ்வேலையாள், அடிநிலை வேலையாள், சூழ்ச்சியாளர்; அழிவு வேலையாள்; கவிழ்ப்பு வேலையாள்.

**underwork'man,** *n.* அடிநிலை வேலையாள்.

**un'derworld,** *n.* கீழுலகம்; பாதாளம்.

**underwrite',** *v.* கடற்பொருள் காப்பீட்டு ஆவணத்தை எழுதிக்கொடு; கடற்பொருள் காப்பீட்டுத் தொழில் செய்; பொதுமக்கள் வாங்கா நிறுவனத்துப் பங்கெல்லாம் வாங்க முயல்; கீழே எழுது; கீழ்க்கையொப்பமிடு; நிலவரியாளராகச் சேர்.

**un'derwriter,** *n.* கடற்பொருள் காப்பீடு செய்பவர்; பொதுமக்கள் வாங்கா நிறுவனப் பங்கெல்லாம் வாங்குபவர்.

**un'derwriting,** *n.* கடற்பொருட் காப்பீடு; அழிகளப் பங்கு மொத்தக் கொள்முதல் செயல்.

**underwrought',** *v.* **underwork** என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

**undescend'able, undescend'ible,** *a.* இறங்க முடியாத.

**un'desert,** *n.* தகுதியின்மை, தகுதிக்கேடு.

**undeserve',** *v.* தகுதியற்றவராயிரு; தகுதியிழ.

**undeserved',** *a.* தகுதியற்ற; ஏற்றதல்லாத; அநியாயமான.

**undeser'ving,** *a.* தகுதியில்லாத, தகுதி கெட்ட.

**undesigned',** *a.* கருதப்பட்டிராத; திட்டமிட்டு வகுக்கப் பட்டிராத.

**undesign'ing,** *a.* திட்டமிடாத; முன்கூட்டித் திட்டம் வகுக்காத; உள்நோக்கம் அற்ற

**undesirabil'ity,** *n.* விரும்பத்தகா நிலை; வேண்டாத்தன்மை.

**undesi'rable,** *n.* விரும்பத்தகாதவர்; *a.* விரும்பத்தக்கதா யிராத, வெறுப்புத் தருகிற.

**undespair'ing,** *a.* மனச்சோர்வுபட்டுவிடாத.

**undespoiled',** *a.* பாழ்படாத.

**undestroyed',** *a.* அழியாத; அழிக்கப்பெறாத.

**undetect'ed,** *a.* கண்டுபிடிக்கப்பெறாத; துப்புக் காணப் பெறாத.

**undeter'minable,** *a.* தீர்வுசெய்ய முடியாத.

**undeter'mined,** *a.* முடிவு செய்யப்பட்டிராத, மனவுறுதி யற்ற.

**undeterred',** *a.* தடைப்படாத, தடுக்கப்படாத.

**undevel'oped,** *a.* முழு வளர்ச்சியுறாத; முதிர்வுறாத.

**undid',** *v.* **undo** என்பதன் இறந்தகாலம்.

**un'dies,** *n. pl.* (இழி.) பெண்டிர் அடிப்புற உள்ளாடை.

**undifferen'tiated,** *a.* திரித்துணரப்படாத; வேறுபடுத்தப் படாத.

**undigest'ed,** *a.* செரிமானமாகாத, சீரணிக்கப்படாத; நன்குரு மனதில் வாங்கிப் பதிய வைக்கப்படாத.

**undig'nified,** *a.* உயர் மதிப்பமைதியற்ற; உயர்நிலைக்குப் பொருத்தமற்ற.

**undig'nify**, *v.* மதிப்புக்கெடு.
**undilu'ted**, *a.* கலப்புறாத.
**undimin'ished**, *a.* குறையாத ; குறைவற்ற.
**un'dine**, *n.* அலைநீர்த் தேவதை ; நீரரமகளிர்.
**undiscerned'**, *a.* புலப்படாத ; நுணுகிக் காணப்படாத.
**undiscern'ible**, *a.* நுணுகிக் காணமுடியாத.
**undisc'ipline**, *n.* கட்டுப்பாடின்மை ; கட்டொழுங்கின்மை.
**undisc'iplined**, *a.* கட்டுப்பாடு பயிற்றுவிக்கப் பெறாத, கட்டுப்பாடில்லாத ; ஒழுங்குப்பயிற்சி பெறாத ; ஒழுங்கற்ற ; ஒழுங்கீனமான.
**undisclosed'**, *a.* வெளிக்காட்டப்பெறாத ; மறைக்கப்பட்ட.
**undiscom'fited**, *a.* தோல்விகொள்ளாத ; சிறிதும் மன உலைவுறாத.
**undiscov'erable**, *a.* கண்டுபிடிக்கப்பட முடியாத ; வெளிப் படுத்திக் காண முடியாத.
**undiscov'ered**, *a.* கண்டுபிடிக்கப்படாத.
**undismayed'**, *a.* மலைப்புறாத ; ஊக்கங் குலைவுறாத.
**undispatched'**, *a.* அனுப்பிவிடப்பெறாத ; விரைந்து செய்து முடிக்கப்பெறாத ; தீர்க்கப்படாத ; ஒழிக்கப்படாத ; கொன்று முடிக்கப்படாத.
**undispensed'**, *a.* பரிமாறப்படாத ; பங்கிட்டுக் கொடுக்கப் படாத ; அருள்முறை வழங்கப்பெறாத ; மருந்து வகையில் அளிக்கப்பெறாத ; துறக்கப்படாத.
**undisposed'**, *a.* ஒழுங்குபடுத்தப்பெறாத ; தீர்வு செய்யப் படாத.
**undispu'ted**, *a.* வாதத்திற்கு இடமற்ற ; வாத எதிர்ப்பற்ற.
**undisting'uishable**, *a.* வேறுபிரித்தறிய முடியாத.
**undisting'uished**, *a.* புகழ் பெற்றிராத ; தனிப்படுத்திக் காட்டப்படாத.
**undisting'uishing**, *a.* வேறுபடுத்திக் காணாத.
**undistort'ed**, *a.* உருச் சிதைவுறாத ; உருக் குலையாத ; வானொலி வகையில் ஒலிக் கோளாறுக்கு உள்ளாகாத.
**undistract'ed**, *a.* கலக்கமுறாத ; அமைதி குலையாத ; ஈடுபாடு குலையாத.
**undistrib'uted**, *a.* பகிர்ந்து வழங்கப்படாத ; பரப்பீடு செய்யப்படாத ; பரவலாகக் காணப்படாத ; பரவலாக்கப் பெறாத ; பரந்து காட்டாத, சொல் வகையில் பொருளெல்லை பரந்துசென்று குறிக்காத ; (தொ.) undistributed middle, (அள.) அகல்வில் பொதுச்சொற்கோளாறு, தரவு வாசகங்கள் இரண்டிற்கும் பொதுவான சொல்லை ஒன்றிலேனும் முழுப் பரவற் பொருளில் வழங்காததனால் ஏற்படும் வாத வழு.
**undisturbed'**, *a.* உலையாத, குலையாத ; குலைவுறுத்தப் பெறாத ; அலைக்கப் பெறாத ; நிறையமைதி வாய்ந்த ; அமைதி குலைவற்ற.
**undivi'ded**, *a.* பகுக்கப்படாத ; இடையீடற்ற, தொடர்ச்சி யான ; முழுமையான ; கருத்து வேறுபாடில்லாத.
**undo'**, *v.* கெடு ; அழி ; துடைத்தழி ; கவிழ்த்து ; அவிழ் ; பிரி ; ஆடை வகையில் களைந்தகற்று ; நற்பெயரைக் கெடு ; கற்பழி; ஒழுக்கஞ் சிதைவி ; புதிர் விடுவி ; பிரச்சினை தீர்வுசெய் ; கழல் வுறு ; அவிழ்வுறு ; தளர்வுறு ; செய்த செயல் குலைவுறு.
**undoable'**, *a.* அழித்தக்க ; மாற்றிச் செய்யத்தக்க ; ஒழிக் கத்தக்க ; செய்ய முடியாத.
**undock'**, *v.* துறைமுகத்தளத் துறையிலிருந்து வெளியேற்று.
**undo'er**, *n.* அழிப்பவர் ; ஒழிப்பவர் ; குலைப்பவர்.
**undo'ing**, *n.* அழிவு ; அழிப்பு ; அவிழ்ப்பு ; அழிவுவேலை.
**undomes'ticate**, *v.* வீட்டுப் பழக்கமற்றதாக்கு ; விலங்கு களை மனித வாழ்க்கைச் சூழற் பழக்கமற்றதாக்கு.
**undomes'ticated**, *a.* பயிற்றுவிக்கப்படாத ; வசப்படுத்தப் படாத.
**undone'**[1], *a.* மாற்றிச் செய்யப்பட்டுவிட்ட ; அழிக்கப்பட்ட.
**undone'**[2], *a.* செய்யப்பட்டிராத ; செயல் முற்றுப்பெறாத.
**undone'**[3], *v.* undo என்பதன் முடிவெச்சம்.
**undoomed'**, *a.* நரக தண்டனைக்கு ஆளாக்கப்படாத ; பழித் தண்டத்துக்கு உட்படாத.
**un'dose**, *a.* அலை அலையான, அலைவளைவு வடிவான.
**undoub'le**, *v.* மடிப்பவிழ் ; முகிழ்ப்புறு ; திற.
**undoubt'able**, *a.* ஐயுறவு கொள்ளமுடியாத.
**undoubt'ed**, *a.* ஐயத்திற்கு இடமற்ற, உறுதியான.
**undoubt'edly**, *adv.* ஐயமின்றி, உறுதியாக.
**undrain'able**, *a.* வடிக்க முடியாத ; வடிகாற்படுத்த முடியாத ; வடிகாலிட்டு வடியவிடப்பட முடியாத ; வடிகாற் படுத்திச் சீர்திருத்தமுடியாத
**undrained'**, *a.* வடியவிடப்படாத ; வடியவிட்டு அகற்றப் படாத.
**undramat'ic**, *a.* நாடகப் பண்பற்ற; நாடகத்திற்கு ஒவ்வாத.
**undrape'**, *v.* தொங்கல் ஒப்பனை களை ; போர்வையகற்று ; திறந்துகாட்டு ; துகிலகற்று.
**undraped'**, *a.* அணித்துகில் தொங்கலற்ற ; தொங்கலணி ஒப்பனையற்ற.
**undraw'**, *v.* பின்னிழு ; பின்வாங்கு.
**undrawn'**, *a.* பின்னிழுக்கப்பட்ட ; உருவப்படாத ; பால் வகையில் கறக்கப்படாத.
**undreamed'-of**, **undreamt'-of**, *a.* கனவில்கூடக் கண் டறியப்படாத.
**un'dress**, *n.* பொதுநிலை ஆடை ; அசட்டையாக அணிந் துள்ள தளர்த்தி உடை ; தளர் உள்மனையாடை ; *a.* பொது நிலை உடை அணிந்த ; *v.* ஆடை களை.
**undressed'**, *a.* ஆடை களையப்பெற்ற ; ஆடை அணிந் திராத
**undrilled'**, *a.* துளையிடப்பெறாத.
**undrink'able**, *a.* குடிக்க முடியாத, பருகத் தகாத.
**undue'**, *a.* தகுதிக்கு மேம்பட்ட ; மட்டுமிஞ்சிய ; தகாத.
**uu'dulancy**, *n.* அலைபாய்வு.
**un'dulant**, *a.* அலைபாய்கிற ; எழுந்தெழுந்து வீழ்கிற ; (தொ.) undulant fever, கணுக்கள்-நுரையீரல் அழற்சி யுடன் கூடிய நடுநிலக் கடலகக் காய்ச்சல் வகை.
**un'dulate**, *a.* அலையலையான ; அலையலையான ஓரங்களை யுடைய ; *v.* அலையாடு ; அலைபாய்வுறு.
**un'dulated**, *a.* அலையலையான ஓரங்களையுடைய ; அலையலை யான வடிவுடைய.
**un'dulating**, *a.* அலையலையாகச் செல்கிற ; அலையூசலாடுகிற ; அலையலையான மேடுபள்ளங்களையுடைய.
**undula'tion**, *n.* அலைபாய்வு ; அலைபோன்ற தோற்றம் ; ஏற்ற இறக்கம் ; அலையூசலாட்டம்.
**un'dulatory**, *a.* அலையியக்கஞ் சார்ந்த ; அலையலையான ; மேடுபள்ளமான.
**undu'ly**, *adv.* நேர்மையின்றி ; தவறாக ; முறையற்று.
**undy'ing**, *a.* இறவாத ; அழிவற்ற.
**unearned'**, *a.* ஈட்டப்பெறாத.
**unearth'**, *v.* தோண்டியெடு ; மண் கிளறி வெளிப்படுத்து ; கண்டு வெளிப்படுத்து ; ஆராய்ந்து காண் ; கண்டு விளக்க மாக்கு ; வேட்டை வகையில் நிலவளையிலிருந்து நரியை வெளியே துரத்து.
**unearthed'**, *a.* தோண்டியெடுக்கப்பட்ட.
**unearth'liness**, *n.* தெய்விகத்தன்மை ; ஆவியுலக இயல்பு ; பொதுவியல்பு கடந்த தன்மை.
**unearth'ly**, *a.* நிலவுலகிற்கு உரியதல்லாத ; பொது இயல்பு கடந்த.
**uneas'ily**, *adv.* வாழ்க்கைநலக் குறைவாக ; அமைதி குலை வுற்று ; மனஉட்குலைவுடன்.

**uneas'iness**, *n.* மன உலைவு; உடல்நலமின்மை; வாய்ப்பு நலக்குறைவு; மன அமைதியின்மை.

**uneas'y**, *a.* உடல்நல வசதி குன்றிய; மன உலைவு கொண்டுள்ள; அமைதி குலைக்கிற.

**uneconom'ic**, *a.* கட்டுப்பிடியாகாத.

**uneconom'ical**, *a.* சிக்கனமாயிராத.

**uned'ited**, *a.* பதிப்பிக்கப்பட்டிராத, இதற்கு முன் வெளியிடப்பட்டிராத; வகைதொகை செய்யப்பட்டிராத; திருத்தி உருவாக்கப்படாத.

**uned'ucated**, *a.* கல்வியறிவு பெறாத.

**uneffaced'**, *a.* துடைத்தழிக்கப்படாத.

**uneffect'ed**, *a.* செயல் முற்றுவிக்கப்பெறாத.

**unemo'tional**, *a.* உணர்ச்சிவயப்படாத.

**unemployed'**, *a.* பயன்படுத்தப்படாத; வேலையற்ற, வேலையமர்வு பெறாத.

**unemploy'ment**, *n.* வேலையின்மை; பயன்படுத்தப் பெறுமை, பயன்படாமை.

**unend'ing**, *a.* முடிவில்லாத; இடையறாத.

**unen'terprising**, *a.* தாளாண்மையற்ற, முயற்சி முனைப்பற்ற.

**unenum'erated**, *a.* எண்ணிக் கூறப்படாத; எண்ணிக்கையிடப்படாத.

**unen'viable**, *a.* பொறாமைகொள்ளத்தக்கதாய் இராத; ஆள் வகையில் சிறப்பற்ற; பொருள் வகையில் அற்பமான; பண்பு வகையில் விரும்பத் தக்கதல்லாத.

**uneq'uable**, *a.* ஒரு சீராயிராத, சமனற்ற.

**une'qual**, *a.* ஒன்றற்கு ஒன்று ஒவ்வாத; ஏறுமாறான.

**un'equalled**, *a.* ஒப்பிலியான, தனக்குவமையில்லாத.

**uneq'uitable**, *a.* நேர்மையற்ற; சரிசம நேர்மை காட்டாத.

**unequiv'ocal**, *a.* இரு பொருள்படாத, ஈரொட்டாயிராத; தெளிவான, ஐயப்பாட்டிற்கு இடமில்லாத.

**unerr'ing**, *a.* தவறிழைக்காத; மயிரிழை பிழையாத; குறி தவறாத.

**UNESCO**, *n.* உலக நாடுகள் கல்வி-விஞ்ஞான-பண்பாட்டுக் கழகம்; ஐ. நா. குழுக்களுள் ஒன்று.

**unescort'ed**, *a.* உடன் துணை செல்லப்பெறாத.

**unespied'**, *a.* கண்ணுக்குத் தப்பிய; புலப்படாத; கண்டு பிடிக்கப்படாத.

**unessayed'**, *a.* தேர்ந்து காணப்படாத.

**unev'en**, *a.* சரிசம நிலையற்ற; ஒருசீராயிராத; மேடுபள்ளமான.

**une'venly**, *adv.* ஏற்றத்தாழ்வாக; மேடுபள்ளமாக.

**unevent'ful**, *a.* குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் எவையும் நடந்திராத; சிறப்பற்ற.

**unev'idenced**, *a.* சான்றுகளால் தெளிவுபடுத்தப்படாத.

**unexcep'tionable**, *a.* குற்றங் காண முடியாத.

**unexcep'tionally**, *adv.* விலக்கின்றி.

**unexpec'ted**, *a.* எதிர்பார்க்கப்படாத, திடீரென்ற.

**unex'piated**, *a.* கழுவாய் செய்யப்படாத; பரிசளிக்கப் படாத; ஈடுகட்டப்படாத.

**unex'pired**, *a.* காலாவதியாகாத; குத்தகை முதலியவற்றின் வகையில் இன்னும் நடப்பில் இருக்கிற; இறவாத; அணைந்து போகாத.

**unexplored'**, *a.* புதிதாய்ந்து காணப்படாத; புத்தாய்வாக நாடப்பெறாத.

**unexpressed'**, *a.* கூறப்படாத; வெளிப்படத் தெரிவிக்கப் படாத; வெளிப்படத் தோற்றாத; மறைவான; உள்ளடக்கமான; தொக்கு நிற்கிற.

**unfail'ing**, *a.* தவறாத; குறைபடாத; என்றும் உதவுகிற.

**unfair'**, *a.* நேர்மையற்ற; இரண்டகமான, உள்ளொன்று புறமொன்றான, ஒரகமான.

**unfaith'ful**, *a.* வாய்மை வழுவிய; மனச்சான்று மீறி நடக்கிற; கடமை தவறிய; நம்பிக்கைக்கேடு செய்கிற.

**unfamil'iar**, *a.* பழக்கப்பட்டதாய் இராத; முன்பின் அறியப் படாத.

**unfanned'**, *a.* விசிறிகொண்டு வீசப்பெறாத; தூசி புடைக்கப் பெறாத.

**UNFAO**, *n.* ஐக்கியநாட்டமைப்பின் உணவு-வேளாண்மை அமைப்பு.

**unfath'omable**, *a.* ஆழங்காண முடியாத.

**unfath'omed**, *a.* ஆழங் கண்டறியப்படாத.

**unfa'vourable**, *a.* சார்பாயிராத, சாதகமல்லாத.

**unfett'ered**, *a.* விலங்கு அகற்றப்பட்ட; தளை நீக்கப்பட்ட.

**unfil'ial**, *a.* மகப்பண்பிற்கு ஒவ்வாத.

**unfin'ished**, *a.* முடிக்கப்படாத; முடியாத; முழுநிறைவற்ற, அரைகுறையான.

**unfit'**, *n.* தகுதியற்றவர்; *a.* தகுதியற்ற, இசைவில்லாத, பொருத்தமில்லாத; பொருந்திய நிலையிலிராத; *v.* தகுதியற்ற வராக்கு, ஆற்றல் கெடு, தகுதி கெடு.

**unfit'ness**, *n.* தகுதிக்கேடு.

**unflag'ging**, *a.* சோர்வுறாத, தளராத.

**unfledged'**, *a.* சிறகு முளைக்கப்பெறாத; முதிர்வுறாத; ஆள் வகையில் தேர்ச்சியுறாத.

**unflinch'ing**, *a.* அஞ்சி விலகாத, பின்வாங்காத.

**unflinch'ingly**, *adv.* தயக்கமில்லாமல், சிறிதும் பின்வாங்குதலின்றி.

**unfold'** [1], *v.* மடிப்பு அவிழ்; பரப்பி வை; திறந்து வை; திறந்துகொள்; விரிவுறு; எண்ணங்களை வெளியிடு; திட்டந் தெரிவி; படிப்படியாகத் திறந்து காட்டு; படிப்படியாக வளர்ச்சியுறு.

**unfold'** [2], *v.* பட்டியினின்றும் ஆடுகளை விடுவி.

**unfold'ed**, [1], *a.* மடிக்கப்பெறாத; மடிப்பு அவிழ்க்கப்பெற்ற; திறக்கப்பட்ட.

**unfold'ed** [2], *a.* பட்டியில் அடைக்கப்பெறாத.

**unfold'er**, *n.* திறந்துகாட்டுபவர்.

**unfold'ing**, [1], *n.* மடிப்பவிழ்வு; திறந்து காட்டுதல்; திறத்தல்; *a.* மடிப்பவிழ்கிற, திறந்து காட்டுகிற.

**unfold'ing** [2], *n.* பட்டியிலிருந்து வெளியேற்றுவிப்பு; *a.* பட்டியிலிருந்து வெளியேற்றுவிப்பதற்குரிய வேளை சார்ந்த.

**unforda'ble**, *a.* ஆறு வகையில் கடக்க முடியாத; கடக்கும் இடம் இல்லாத; ஆழம் மிக்க.

**unforesee'able**, *a.* எதிர்பார்க்க முடியாத.

**unforgett'able**, *a.* மறக்க முடியாத, நினைவில் நீடித்துத் தங்குகிற.

**unforgiv'able**, *a.* மன்னிக்க முடியாத.

**unfor'tunate**, *n.* அவப்பட்டவர், நலங்கெட்டவர், துரதிட்டம் பிடித்தவர்; *a.* அவப்பட்ட, ஆகூழில்லாத.

**unfruc'tuous**, *a.* காய்கனி வளமற்ற; பயன் விளையாத, பயன்வளமற்ற.

**unfruit'ful**, *a.* காய்கனிவளம் தாராத; குழந்தை ஈனாத; பயனற்ற; செழிப்பற்ற, வறண்ட; ஆக்கவளமற்ற; ஊதியம் அளிக்காத, ஆதாயந்தாராத.

**unfu'elled**, *a.* எரிபொருளூட்டப்பெறாத.

**unfulfilled'**, *a.* நிறைவேறப்பெறாத; முற்றாத; சொல் வகையில் உறுதிப்படி நடக்கப்பெறாத.

**unfumed'**, *a.* புகையூட்டப்பெறாத.

**unfund'ed**, *a.* அரசியல் நிதிவகையில் வகுப்பொதுக்கீடற்ற, கடன் வகையில் அரசியலாரின்திற நிதிகளுக்குப் பொதுப் படையாகத் திரட்டப்பட்டிராத; பொது நிதியில் முதலீடு செய்யப்பட்டிராத, சேமநிதிப் பத்திரங்களாக இராத.

**unfurl′**, *v.* கப்பல் பாயினை அவிழ்த்துவிரி; கொடியை அகலப் பறக்கவிடு; சுருள் விரிவுறுத்து; சுருள் பிரிவுறு; பரவிச் செல்; பரவு.

**unfur′nished**, *a.* வழங்கப்பெருத; துணைக்கல இணைப்பு வசதி செய்யப்படாத.

**ungen′erous**, *a.* பெருந்தன்மையற்ற; குறுகிய நோக்குடைய.

**unge′nial**, *a.* நல்லிசைவாயிராத; பரிந்து ஊக்கமளிக்காத, அன்பாதரவாயிராத; பண்படாத.

**ungen′tlemanly**, *a.* பண்பாளருக்கு ஒவ்வாத.

**unglazed′**, *a.* மெருகிடப்பெருத.

**ungrace′ful**, *a.* இயல்நயமற்ற.

**ungra′cious**, *a.* இரக்கமற்ற.

**ungrammat′ic, ungrammat′ical**, *a.* இலக்கண விதிகளுக்கு மாருன.

**ungrate′ful**, *a.* நன்றி கெட்ட.

**ung′ual**, *a.* நகம்போன்ற; உகிர்கொண்ட; குளம்பு போன்ற; குளம்பு கொண்ட.

**unguard′ed**, *a.* காப்பற்ற; முன்பின் பாராத, சிந்தித்துச் செயலாற்ருத, கருத்தற்ற.

**unguard′edly**, *adv.* நா காவாமல்; சிந்தித்துப் பாராத நேரத்தில்; காப்படக்கம் இல்லாமல்.

**ung′uent**, *n.* நெய், நறுமணத் தைலம்; மசகாகப் பயன்படும் மென்பொருள்.

**unguic′ular**, *a.* நகமுடைய, உகிர்வாய்ந்த.

**unguif′erous**, *a.* உகிர்கொண்ட; உகிர்தாங்கிய.

**ung′uiform**, *a.* உகிர்வடிவான.

**ung′uis**, *n.* நகம்; உகிர்; பூச்சியின் காலடிமுனை; இதழ்முனை.

**ung′ula**, *n.* உகிர்; குளம்பு; கொடும் பறவையின் உகிர்; *pl.* ung′ulae.

**ung′ulate**[1], *n.* (வில.) இறந்த கருவினை வெளியேற்றும் வளைகருவி; தலை தறிக்கப்பட்ட கூம்பு.

**ung′ulate**[2], *n.* குளம்புடைய விலங்கு; *a.* குளம்புவாய்ந்த.

**ung′uled**, *a.* (கட்.) தனி வண்ணம் தோயப்பெற்ற உகிர் உடைய; தனிவண்ணந் தோயப்பெற்ற குளம்புகளையுடைய.

**ung′uligrade**, *a.* குளம்பு மீதாக நடக்கிற.

**ungum′**, *v.* பிசின் இல்லாததாக்கு; பிசின் தடவி ஒட்டப்பட்ட நிலையினின்றும் நீக்கு.

**ungyve′**, *v.* விலங்கு அகற்று.

**ungyved′**, *a.* விலங்கு அகற்றப்பெற்ற; கட்டற்ற.

**unhacked′**, *a.* சிதைக்கப்பெருத, வெட்டி நைக்கப்படாத.

**unhack′neyed**, *a.* சலித்துப் போகாத.

**unham′pered**, *a.* தடைப்படாத; *adv.* தடைப்படுத்தப் படாமல்.

**unhapp′ily**, *adv.* நற்பேறின்றி, துரதிட்டவசமாக; வருந்தத்தக்க வகையில்.

**unhapp′y**, *a.* நற்பேறற்ற, துரதிட்டமுடைய; துயர் மிகுந்த; வருத்தந் தரத்தக்க; வருந்தத் தக்க.

**unhasp′**, *v.* கொளுவியிலிருந்து கழற்று; கொண்டி எடுத்துத் திற.

**unhatched′**[1], *a.* குஞ்சு பொரிக்கப்பெருத.

**unhatched**[2], *a.* வரிகள் செதுக்கப்பெருத.

**unhaunt′ed**, *a.* மனை வகையில் பேயாட்டமற்ற; பேய் ஊடாடாத.

**unhealth′ful**, *a.* உடல்நலக்கேடு உண்டுபண்ணுகிற.

**unheal′thy**, *a.* உடல்நலமற்ற, பிணி இயல்புடைய; உடல் நலத்திற்கு உகந்ததாயிராத.

**unheard′**, *a.* கேட்டறியாத; வழக்கு வகையில் கேள்விமுறை வழங்கப்பெருத.

**unhearsed′**, *a.* பாடையற்ற.

**unheed′ed**, *a.* கவனிக்கப்பெருத, அக்கறை காட்டப்பெருத.

**unhelp′ful**, *a.* உதவும் பாங்கற்ற.

**unhes′itating**, *v.* தயக்கமற்ற; தயங்காத; உடனடிச் செயல் செய்கிற.

**unhidd′en**, *n.* ஒளித்து வைக்கப்பெருத; ஒளிவற்ற; மறைவில் இராத.

**unhistor′ic, unhistor′ical**, *a.* வரலாற்றுச் சிறப்பற்ற; வரலாற்று வாய்மையற்ற; வெறும் புனைவான; கட்டுக்கதை போன்ற.

**unho′ly**, *a.* திருநிலை சாராத, புனிதமற்ற; தீங்கான, பொல்லாங்கு நாடுகிற; படுகேடான.

**unhon′oured**, *a.* மதித்துப் பாராட்டப்பெருத; பாராட்டிப் போற்றப்படாத; சிறப்புப்பட்டம் வழங்கப்பெருத; காசுமுறி வகையில் மதித்துப் பணம் வழங்கப்பெருத.

**unhurt′**, *a.* ஊறுபடாத; காயமுருத; கேடுருத; தீங்கிற்கு ஆட்படாத.

**unhurt′ful**, *a.* தீங்கிழையாத, தீங்கு செய்யாத.

**unhus′banded**, *a.* கணவனற்ற; திருத்தப்படாத.

**unhusk′**, *v.* உமிபோக்கு.

**unhygien′ic**, *a.* உடல்நலத்திற்கு ஒவ்வாத.

**uniax′al, uniax′ial**, *a.* ஒற்றை ஊடச்சுக்கொண்ட.

**uniax′ially**, *adv.* ஒற்றை ஊடச்சுடையதாக.

**unicam′eral**, *a.* ஒற்றை அவையினையுடைய.

**unicam′eralism**, *n.* ஒரே சட்டமன்ற அமைவுமுறை; ஒரே சட்டமன்ற அமைவுக்கோட்பாடு.

**unicam′eralist**, *n.* ஒரே சட்டமன்ற அமைவுக் கோட்பாட்டாளர்.

**unicap′sular**, *a.* ஒற்றை விதையுறைகொண்ட.

**UNICEF**, *n.* ஐக்கியநாடுகளமைப்பின் உலகநாடுகள் குழந்தை நல அவசர ஏற்பாட்டு நிதி.

**unicell′ular**, *a.* ஒற்றை உயிர்மக் கூறுடைய.

**unicol′our, unicol′oured**, *a.* ஒருநிறங்கொண்ட, ஒரு வண்ணஞ் சார்ந்த,

**un′icorn**, *n.* வியன்சினைமா, ஒற்றைக்கொம்பன், ஒற்றைக் கொம்புகொண்ட குதிரைவடிவக் கற்பனை விலங்கு.

**un′icorn-fish, un′icorn-whale**, *n.* ஒண்சினைத் திமி, ஒற்றைத் தந்தமுடைய வடதுருவத் திமிங்கிலம்.

**unicorn′ous**, *a.* ஒற்றைக் கொம்புடைய.

**un′icorn-shell**, *n.* செதிள்முள் நத்தை, ஓட்டு விளிம்பில் முள்ளுடைய நத்தைவகை.

**unicos′tate**, *a.* ஒற்றை விலா வெலும்புடைய.

**unicus′pid**, *n.* ஒற்றைக் குவட்டுப் பல்; *a.* பல் வகையில் ஒற்றைக் குவடுடைய.

**un′icycle**, *n.* ஒற்றைத் தனியாழி, ஒற்றைச்சக்கர மிதிவண்டி.

**unide′a′d**, *a.* கருத்து வறுமையுற்ற, கருத்துக்கள் எவையுங் கொண்டிராத.

**unide′al**, *a.* இலக்கியலற்ற; மீக்கோளாகாத; குறிக்கோட் பண்பற்ற; உயர் இலக்காகக் கொள்ளத் தகாத; புதுமை உணர்ச்சியற்ற.

**unident′ified**, *a.* அடையாளங் கண்டுணரப்படாத.

**unifica′tion**, *n.* ஒன்ருக்கம், ஒருமைப்படுத்துதல்.

**u′nified**, *a.* ஒன்றுபட்ட; ஒருங்கிணைக்கப்பட்ட.

**u′nifier**, *n.* ஒன்றுபடுத்துபவர்; ஒன்றுபடுத்துவது.

**uniflor′ous**, *a.* ஒற்றை மலர்கொண்ட.

**unifol′iate**, *a.* ஒற்றை இலைகொண்ட.

**un′iform**, *n.* சீருடை; பணித்துறைக் கட்டளையுடுப்பு; *a.* ஒருசீரான; வடிவொத்த; அமைப்பொத்த; மாருநிலையுடைய; வேறுபாடற்ற; ஒரேமாதிரியான; *v.* சீருடையாக்கு; சீருடை அணிவி.

**uniform'ity**, *n.* ஒருருப்படுத்துதல்.
**un'ify**, *v.* ஒருமைப்படுத்து ; ஒருங்கிணை.
**unigen'iture**, *n.* ஒற்றைப் பிறப்பு, ஓர் ஈற்றில் ஒற்றையாகப் பிறத்தல்.
**unilat'eral**, *a.* ஒருபக்கமான ; (தொ.) unilateral contract, ஒரு சார்பாளரை மட்டுங் கட்டுப்படுத்தும் ஒப்பந்தம்.
**uniling'ual**, *a.* ஒரே மொழி சார்ந்த.
**unilit'eral**, *a.* ஒரே எழுத்துச் சார்பான ; ஒரே எழுத்து முறை சார்ந்த.
**unillumed'**, *a.* விளக்கேற்றப்பெருத ; ஒளி பெருத.
**unillu'minating**, *a.* ஒளிவிளக்கந் தராத; புத்தறிவு விளக்கம் வழங்காத.
**unillu'mined**, *a.* நிறை யொளி விளக்கம் பெருத ; பகட்டொளி வீசப்பெருத ; ஆன்மிக ஒளியூட்டப்பெருத.
**unill'ustrated**, *a.* பட விளக்கம் இல்லாத ; சான்றுகாட்டப் படாத.
**unilobed'**, *a.* ஒரு தொங்கலிதழ் உடைய.
**unilob'ular**, *a.* ஒரு சிறு தொங்கிதழ் உடைய.
**uniloc'ular, uniloc'ulate**, *a.* ஒற்றைக் கண்ணறை உடைய.
**unimag'inable**, *a.* கற்பனை செய்ய முடியாத.
**unimag'inative**, *a.* கற்பனைத்திறமற்ற ; கற்பனைச் சிறப்பற்ற ; எழுச்சியற்ற ; உரை நடை போன்ற ; பொது நிலைப் பட்ட, பொதுயாப்பு நிலையுடைய.
**unimpaired'**, *a.* ஊறுபடுத்தப்படாத, கெடாநிலையுடைய, கேடுருத, ஆற்றல் குறைபடாத.
**unimpeach'able**, *a.* குற்றச்சாட்டிற்கு அப்பாற்பட்ட.
**unimped'ed**, *a.* தடைபடாத; (ஒலி.) குரல்வளையில் உராய்தலின்றி உச்சரிக்கப்படுகிற.
**unimport'ant**, *a.* சிறப்பற்ற.
**unimpress'ive**, *a.* பதியவைக்கும் நிலையில் இல்லாத.
**unimpugn'able**, *a.* பழித்துக் கூறமுடியாத, எதிர்த்துரைக்க முடியாத.
**unincor'porated**, *a.* இணைந்து ஒன்றுபடுத்தப்படாத ; கூட்டிணைவு ஆக்கப் பெருத ; உடனிணைவாக்கப் பெருத.
**unin'dexed**, *a.* சுட்டுவிரல் இல்லாத ; புத்தக வகையில் குறிப்பு விளக்க அட்ட வணையில்லாத.
**uninfect'ed**, *a.* நோய் தொற்றப்பெருத.
**uninflamed'**, *a.* அழற்சியுருத ; எழுகிளர்ச்சியூட்டப்பெருத.
**uninflamm'able**, *a.* தீப்பற்றுத ; எளிதில் சினங்கொள்ளாத.
**uninflat'ed**, *a.* காற்றூட்டி உப்ப வைக்கப்பெருத ; வீங்காத; தற்பெருமையூட்டப்பெருத.
**uninflect'ed**, *a.* சொல் வகையில் இலக்கணத்திரிபு பெருத, இலக்கணத் திரிபற்ற.
**unin'fluenced**, *a.* தாக்கு விளைவுருத ; புறச் செல்வாக்கிற்கு ஆட்பட்டு மாறும் பாங்கற்ற.
**uninfluen'tial**, *a.* செல்வாக்குத்திறம் இல்லாத.
**uninformed'**, *a.* தகவல் உணராத ; செய்தி தெரியாத ; பரந்த அறிவில்லாத.
**uninform'ing**, *a.* அறிவுரை தாராத ; தகவல் கூருத ; புறங் கூருத ; காட்டிக்கொடுக்காத.
**uninhib'ited**, *a.* தடைக்கட்டுச் செய்யப்படாத.
**unini'tiated**, *a.* தீக்கை செய்யப்பெருத ; சமயக்கூட்டில் சேர்க்கப்படாத.
**unin'jured**, *a.* தீங்குருத ; கெடுதலுக்கு ஆளாகாத ; ஊறு உருத.
**uninquir'ing**, *a.* உசாவு மனப்பான்மையற்ற.
**uninquis'itive**, *a.* அறிவுத் துடிப்பற்ற ; பிறர் செய்திகள் அறியும் அவாத் துடிப்பற்ற ; பிறர்மறை அறியும் ஆர்வமில்லாத.
**uninscribed'**, *a.* உள்வரி குறிக்கப்படாத ; கல்வெட்டுக் குறிக்கப்பெருத ; அடையாளக்குறிப்பு இடப்படாத ; பதிவாளர்க்குப் பங்குவடிவில் கடனுக அளிக்கப்பெருத.
**uninspired'**, *a.* எழுச்சியற்ற ; அகத்தூண்டுதலற்ற.
**uninspir'ing**, *a.* உணர்ச்சி தூண்டாத, கவர்ச்சியற்ற
**uninstruct'ed**, *a.* கற்பிக்கப்படாத ; அறிவுறுத்தப்படாத.
**uninstruct'ive**, *a.* புத்தறிவூட்டாத, நல்லறிவு கொளுத்தாத.
**uninsured'**, *a.* உறுதிப்படுத்தப்படாத ; காப்புறுதி செய்யப் படாத.
**unin'tegrated**, *a.* முழுமையாக்கப் பெருத ; உருச்செவ்வியுறுத்தப்படாத.
**unintell'igent**, *a.* கூர்மதியற்ற.
**unintelligibil'ity**, *n.* புரியாத்தன்மை, தெளிவின்மை.
**unintell'igible**, *a.* விளங்காத, தெளிவில்லாத.
**unintell'igibly**, *adv.* தெளிவின்றி, புரியாமுறையில்.
**unintend'ed**, *a.* மனங்கொள்ளப்படாத ; உட்கருதப்பெருத ; செயல் வகையில் செய்யுமுன் எண்ணப்படாத.
**uninten'tional**, *a.* எண்ணிச் செய்யப்படாத.
**unin'terested**, *a.* அக்கறை கொள்ளாத ; கவர்ச்சியுருத.
**uninterrup'ted**, *a.* இடையே தடைப்படுத்தப்படாத, இடையருத.
**uninu'clear, uninu'cleate**, *a.* தனி ஒரு கருவேயுடைய.
**uninured'**, *a.* பழகித் தேராத ; காய்த்துப் போகாத ; வலுவூட்டப் பெருத.
**uninven'tive**, *a.* படைப்பாய்வு அற்ற.
**uninvert'ed**, *a.* தலைகீழாக்கப் பெருத ; கவிழ்த்தப்பெருத.
**uninvest'ed**, *a.* பதவியமர்த்தப் பெருத; பதவிச்சின்னம் இணைவிக்கப் பெருத ; அரண் வகையில் முற்றுகை செய்யப்பெருத.
**un'ion, Un'ion**, *n.* ஒற்றுமை ; ஒன்றியம், கூட்டரசு ; இணைப்பு ; கூடுகை, சந்திப்பு ; கூட்டிணைப்பு ; திருமணம் ; வட்டாரக் குழுமம் ; கூட்டுக்குழு ; தொழிற் சங்கம் ; தொழிற்சங்கக் கூடம் ; இணைப்புக்குழு ; இணைப்புச் சங்கம் ; இணைப்புச் சங்கக்கூடம் ; கொடியின் இணைப்புக்குறி ; குழாயின் இணைப்புக்கூறு ; சாராயத் தெளிகைத்தட்டம் ; கலவை இழைம ஆக்கத்துகில் ; கலவை அங்கி ; பல்கலைக்கழகப் பேரவை ; பொதுச்சங்கம் ; பொதுச்சங்கக் கட்டிடம்.
**un'ionism, Un'ionism**, *n.* தொழிற்சங்கக் கோட்பாடு ; தொழிற்சங்க ஆதரவுக்கொள்கை ; (வர.) பிரிட்டன்-அயர்லாந்து (1707) இணைப்பு ஆதரவுக் கோட்பாடு ; (வர.) அமெரிக்க உள்நாட்டுப் போர்க்காலப் பிரிவினை எதிர்ப்பு இயக்கம்.
**un'i'onized**, *a.* மின் மயமாக்கப்படாத.
**unip'arous**, *a.* ஓர் ஈற்றில் ஒன்றுமட்டும் ஈனுகிற ; (தாவ.) ஒற்றைக் கிளையுடைய.
**unipart'ite**, *a.* பகுபடாத, பிரிக்கப்படாத.
**un'iped**, *a.* ஒற்றைக் காலினையுடைய.
**unipers'onal**, *a.* இறை உருவக்கோட்பாடு வகையில் ஓர் உருவாகவேயுள்ள ; (இலக்.) வினைச்சொல் வகையில் மூவிடங்களில் ஒன்றில்மட்டுமே கையாளப்படுகிற.
**uniplan'ar**, *a.* தனித்தள இயலான, ஒரு தளத்தில் மட்டும் கிடக்கிற.
**un'ipod**, *n.* (நி-ப.) நிழற்பட ஒற்றைக்கால் நிலைச்சட்டம்.
**unipol'ar**, *a.* (உயி.) உயிர் அணு வகையில் ஒரு திற முனைப்பாற்றலேயுடைய ; (மின்.) ஒருதிற முனைப்பு விசை மட்டுமே கொண்ட.
**unipolar'ity**, *n.* ஒருபுற முனைப்புடைமை.
**unique'**, *n.* தனியொன்று, தனித்தன்மை வாய்ந்தது ; ஒருதனி, ஈடிணையற்ற பொருள் ; *a.* தன்னேரில்லாத.
**unique'ly**, *adv.* தனிச்சிறப்புப்பட.
**unique'ness**, *n.* அருந்தனிப்பண்பு.

unirad'iate, unirad'iated, *a.* (உயி.) கதிர்வட்டுயிர்கள் வகையில் ஒரே கதிர்க்கூம்பினைக் கொண்ட.

uniser'ial, unise'riate, *a.* ஒரே வரிசைப்பட்ட, ஒருவரிசையில் அடுக்கப்பட்ட.

unisex'ual, *a.* (உயி.) ஓர் உயிர் ஒருபாலேயான; (தாவ.) ஒரு செடி அல்லது மலரில் ஒருபாற்கூறு மட்டுமேயுடைய.

unisexual'ity, *n.* தனியுயிர்ப் பால்வேறுபாட்டுப் பண்பு; தாவரத் தனிநிலைப் பால்வேறுபாட்டுப் பண்பு.

un'ison, *n.* ஒத்தியைவு; (இசை.) இசை ஒத்திசைவு; (இசை.) சுர ஒத்தியைவு; ஒத்தியைவிடையீடு; (இசை.) சுர ஒத்தியைவு நிலை; ஒத்தியைவுநிலை; முழு இசைவிணைவு; *a.* சுர ஒத்தியைவான; முழு இசைவிணைவான.

unis'onal, *a.* பண் ஒத்திசைவு சார்ந்த.

unis'onance, *n.* இசை ஒத்திழைவு, சுர இழைவு.

unis'onant, *a.* இசைவகையில் ஒத்திழைவான, சுர இழைவான.

unis'onous, *a.* பண் ஒத்திழைவுடைய.

unisul'cate, *a.* (தாவ., வில.) ஒற்றைவரிப் பள்ளமுடைய.

un'it, *n.* ஒன்று; ஒருமம்; ஒருவர்: தனி ஒருவர்; தொகுதியுள் ஒருவர்; அலகு, மூல அலகு; எண்ணலகு அடிப்படை; அலகடிப்படை அளவு; தொகுதியுள் தனி ஒன்று; கணிப்பு அடிப்படைக்கூறு.

un'itage, *n.* அலகளவு.

Unitar'ian[1], *n.* தனியொருமைக் கோட்பாட்டாளர், கிறித்தவ சமயத் துறையில் இறை மூவொருமை மறுத்துத் தனியொருமையை வலியுறுத்தும் தனித் திருச்சபை உறுப்பினர்.

unitar'ian[2], *n.* தனியொருமைவாதி, அரசியல்துறையில் ஒரு தனிமை அரசுக்கோட்பாட்டை ஆதரிப்பவர்; மைய வலிமைக் கோட்பாட்டாளர், கூட்டரசில் மைய ஆட்சி வலிமையினை ஆதரிப்பவர்; *a.* ஒருதனியான; ஒருமைப்பட்ட, ஒருநிலை உடைய; (கண.) ஒன்றலகு வாயிலான.

Unitar'ianism, *n.* இறை வகையில் தனிஒருமைக் கோட்பாடு.

un'itary, *a* அலகு சார்ந்த; அலகுகள் பற்றிய; தனி முழுமையான; தனியொன்றான; ஒற்றுமை வாய்ந்த; ஒருசீர்மை கொண்ட; முழுமையான, பின்னப்படாத; ஒன்றன் அடிப்படையான; (கண.) ஒன்றூடான, ஒன்றை ஊடலாகக் கொண்டு கணிக்கப்படுகிற.

unite', *v.* ஒன்றாக்கு; கூட்டி இணைவி; ஒன்றாகச் சேர்த்திணை; கூட்டிணைப்பாக்கு; ஒற்றுமைப்படுத்து; ஒத்துழை; ஒருங்கு கூடு; ஒன்றாகச் சேர்; கூடி இணைவுறு; ஒன்றாகு; ஒன்றுபடு; ஒன்றாயிழை.

uni'ted, *a.* ஒன்று சேர்க்கப்பட்ட, ஒருங்கிணைக்கப்பட்ட; ஒற்றுமைப்பட்ட; ஒன்றுபட்ட; ஒருங்குகூடிய; கூடியிணைந்த; கூட்டிணைவான; (தொ.) United Kingdom, பிரிட்டிஷ் கூட்டரசு, இங்கிலாந்தும் ஸ்காத்லாந்தும் வட அயர்லாந்தும் சேர்ந்த அரசு; United Nations (U.N.), ஐக்கிய நாடுகள் அமைப்பு, பல நாடுகள் சேர்ந்து 1945-ஆம் ஆண்டில் அமைத்த உலகநாடுகள் நிறுவனம்; United States, அமெரிக்க ஐக்கிய கூட்டரசு நாடுகள்.

un'itism, *n.* ஒருமைவாதம், ஏகவாதம்.

un'itize, *v.* தனியொன்றாகக் கணி; தனிமமாகக் கொள்.

un'ity, *n.* ஒற்றுமை; ஒருமை, ஒன்றாந்தன்மை; தனிமுழுமை, தன்னிறைவுடைய தனிக்கூறு; கூட்டொருமை, கலை-இலக்கியத் துறைகளில் கால-இட-நிகழ்வு முதலியவற்றின் கூட்டமைவொருமைப்பாட்டுக்கூறு; ஒன்று எனும் எண்; (சட்.) பன்முக வார ஒருமை, பலர் கூட்டுக்குடிவார உரிமை; (சட்.) தொகுவாரம், ஒருவர் கூட்டுடைமையாகவுள்ள பல் குடிவாரத் தொகுதி; (கண.) ஒருமை அளவு, அளவை மாறுமற் பெருக்கத்தக்க எண்.

univ'alence, univ'alency, *n.* (வேதி.) ஓரிணை திறம், வேதிப்பொருளியைவில் அணுக்கள் ஓரணுவுடன் இணையுந் திறமுடையவையாயிருத்தல்.

univ'alent, *a.* (வேதி.) ஓரிணைதிறமுடைய, வேதிப்பொருளின் இயைவில் அணுக்கள் ஓரணுவுடன் இயையும் திறமுடையனவாகப் பெற்ற.

un'ivalve, *n.* ஒற்றைச்சிப்பி நத்தை வகை; *a.* நத்தை வகையில் ஒற்றைச் சிப்பிகொண்ட.

unival'vular, *a.* ஒற்றைச் சிப்பியினையுடைய.

univa'riant, *a.* ஒரு சிறுபுடை இயக்கத் தன்னுண்மையே உடைய.

univers'al, *n.* (மெய்.) அகல் பொதுவிரி, இயல்பாகப் பல பொருள்களுக்கும் உரித்தாகக் கொள்ளத்தக்க பொது மூல அடிப்படைக் கருத்துப்படிவம்; (அள.) முழுவிரி வாசகம், கருத்து முழுவதன் பயன்மானத்தையும் விடாதுசுட்டும் முழு நிறைகூற்று வாசகம்; *a.* இயற்கை முழுதளாவிய, இயல் உலகளாவிய; முழு மொத்த விரிவுடைய; உலக முழுதளாவிய; இன முழுதளாவிய; முழுநிறை பொருளகற்சி வாய்ந்த; எல்லாவற்றையும் உள்ளடக்கிய; எங்கும் உள்ள; உலக முழுதேற்புடைய; எங்கும் நடைபெறுகிற; எல்லாராலும் செய்யப்படுகிற; எல்லாக் காலத்திற்கும் உரிய; எல்லாவற்றிற்கும் பொருந்துகிற.

univers'alism, *n.* மா மன்னுய்திக் கோட்பாடு, மனித இன முழுமைக்கும் மீட்புக் கிடைக்கும் என்ற கிறித்தவ சமயப் பிரிவினரின் கோட்பாடு.

univers'alist, *a.* மா மன்னுய்தியர், மனித இனம் முழுமைக்கும் மீட்புக் கிடைக்கும் என்ற கோட்பாடுடைய கிறித்தவ சமயப் பிரிவின் உறுப்பினர்.

universal'ity, *n.* வரைவின்மை, அகண்ட தன்மை; முழு நிறைவகற்சி; எங்குமுண்மை; நிலை மெய்ம்மை, என்றுமாறு மெய்ம்மை; (கண.) பொருள் முழுதகற்சிச் சுட்டு.

univers'alize, *v.* முழுதகல் விரிவுபடுத்து, பன்முக அகற்சிப் படுத்து, இயலுலகளாவுவி; உலகளாவுவி; இனமளாவுவி; முழுநிலை நிலவரப் பண்பாக்கு; (அள.) இனச்சுட்டு முழுதளாவுவி, பொருள்சுட்டு முழுவிரிவளாவுவி.

un'iverse, *n.* இயலுலகு, பிரபஞ்சம்; படைப்பு முழுமை, உலக முழுமை; மனித இன முழுமை; (அள.) சுட்டு முழுமை, குறிப்பிட்ட இனப்பரப்பு முழுமைத்தொகுதி.

universita'rian, *n.* பல்கலைக்கழகத்தைச் சேர்ந்தவர்; *a.* பல்கலைக் கழகஞ் சார்ந்த, பல்கலைக்கழகத்திற்குரிய, பல்கலைக் கழகத் தனியுரிமையான.

univers'ity, *n.* பல்கலைக்கழகம்; பல்கலைக்கழக உறுப்பினர் தொகுதி; பல்கலைக்கழக ஆட்சிக்குழு; (தொ.) University Extension, பல்கலைக்கழக விரிவகம்.

universol'ogy, *n.* படைப்பாய்வு நூல்; மன்னல ஆய்வு நூல்.

univ'ocal, *a.* தனிஅலகுச் சொல், ஒரு பொருள் ஒருசொல்.

unja'ded, *a.* சோர்வுறுத்தப் பெறாத, இளைத்துவிடாத.

unjust', *a.* நேர்மைக்கேடான.

unjus'tifiable, *a.* நேர்மையென நிலைநாட்ட முடியாத.

unjus'tified, *a.* நேர்மையற்ற

unkempt', *a.* பம்பை பறட்டையான, தலைசீவாத, தலைமுடி வாரப் படாத; ஒழுங்கற்ற.

unkenned', unkent', *a.* (பழ.) தெரியவாராத, தெரியாத.

unkind', *a.* இரக்கமற்ற, அன்பில்லாத; கடுகடுப்பான, இனிமையற்ற.

unkin'dled, *a.* கொளுத்தப்பெறாத; விளக்கு வகையில் ஏற்றப்பெறாத; தீப்பற்றவைக்கப் பெறாத; உணர்ச்சி புதிது தூண்டப் பெறாத; தூண்டி எழுப்பப்படாத.

unkind'liness, *n.* பாசமின்மை, அன்பின்மை.

unkind'ly, *a.* இயற்கைக்கு மாறான; இரக்கமற்ற; *adv.* இரக்கமின்றி, கொடுமையாக.

unkind'ness, *n.* இரக்கமின்மை.

unking', *v.* அரசபதவி இழக்கச்செய்; அரசர் இல்லாமற் செய்.

*v.* மேற்செல்; மேலே வா; முன்னேறு; மேலே வை; தூக்கு, உயர்த்து; உடனெழு, கிளர்ந்தெழு; உடனடியாகத் தொடங்கு; துணிந்து செயலாற்று; துணிகரமாகத் தலையிடு; உடனடியாகத் தெரிவி; உடனடியாக எடு; உடனடியாகச் செய்; நீரோட்டத்திற்கு எதிராகச் செல்; அன்னப்புட்கள் வகையில் உடையவர் குறியீடு முன்னிட்டு ஆற்றில் எதிரிட்டுச் செலுத்து; *adv.* மேலே; உயரத்தில்; மேல்நோக்கி; மீதாக; உயர்வாக; உயரிடத்தில்; உயர்மட்டத்தில்; உயர்படியில்; உயர்தொகையாக; உயர்விலையில்; உயரிடத்திற்கு; உயர்மட்டத்திற்கு; உயர்நிலைக்கு; உயர்படிக்கு; உயர்தொகைக்கு; உயர்விலைக்கு; தலைநகரில்; தொலைமேலிடத்தில்; மையநோக்கி; தலைநகரை நோக்கி; தொலைமேலிடநோக்கி; முன்னேறி; முன்னேற்ற நிலைக்கு; உள்ளாக, உள்ளிடநோக்கி; வடபால்; வடதிசை நோக்கி; நிமிர்ந்து, நிமிர்வாக; எழுந்து, விறைப்பாக; விறுவிறுப்பாக, செயல் முறுக்குடன்; எழுச்சியுடன்; கிளர்ந்தெழுந்து; எழுச்சிகொண்டு; எதிராகக் கிளர்ச்சியில் முனைந்து; செயலுக்கொருங்கி, ஆயத்தமாக; முனைப்பாக; உக்கிரமாக; தீவிரமாக; உரத்து; செறிவுற்று; திடுமென; முக்கியமாக; செயலுருப்பட; தொலைவாக; எல்லையாக; வரையிலும்; அணிமை வரை; குறித்த இடத்துக்கு; அளவில்; கைவசமாக; காவலாக; பாதுகாப்பாக; ஆகச் சேர்த்து; முழுவதும்; தீர; முற்றுற, முற்றிலும்; வேலை முடித்து; விழிப்பாக; நெருக்கமாக; சரிவர; நடைமுறை வகையாக; கோளாறாக; படுக்கையை விட்டு; குதிரை வகையில் முதுகின் மீது; பள்ளி-கல்லூரி வகையில் தங்குமனையில்; தேறல் வகையில் சப்பென்று; சட்டமன்ற வகையில் ஒத்திப்போட்டு; (கப்.) காற்றுத் திசையில்: *prep.* மேல்; மீதாக; மேலேறி; மீதாக ஏறி; ஊடாக மேலேறி; முன்னேறி; நெடுகிலும் முன்னோக்கி; உள்ளேறி; மேலிடத்துக்கு; உயர் இடத்துக்கு; உயர் பகுதிக்கு; தொலைப் பகுதிக்கு; உட்பகுதிக்கு; மேலேறி உயர் இடத்தில்; மேடுநோக்கி; தொலைவாக; தொலைவிடம் நோக்கி; உயர்நிலைக்கு; மேல்நோக்கி; உள்ளிடம் நோக்கி; ஊர்தி வகையில் மைய இடநோக்கி; தலைநகர் நோக்கி; ஆறு வகையில் நீரோட்டத்துக்கு எதிராக; (தொ.) all up with, இனி நம்பிக்கைக்கு இடமில்லா நிலையில்; be up against, முழு ஆற்றலுடன் எதிர்; be up to, ஒருக்கமாயிரு; ஏற்ற துணிவுடையவராயிரு; give up, கைவிடு; விட்டுவிடு; சரணடை; நம்பிக்கையிழ; hard up, பணம் முடைப்பட்ட நிலையில்; make up, நிறைவு செய்; பற்றாக்குறை நிரப்பு; not up to much, வளமற்ற, வறிதான; save up, சிறிது சிறிதாகச் சேமித்துத் திரட்டு; speak up, உரக்கப் பேசு; time is up, காலம் தீர்ந்துவிட்டது; காலம் ஆய்விட்டது; turn up, திருப்பு; கவிழ்த்து; திடுமென நிகழ்; up and down, மேலும் கீழும், இங்குமங்கும், நடுநேர்நிமிர்வாக; எங்கும்; எல்லாப் பகுதியிலும்; up and down promotion, மேன்மேலாக்க முறை, தொழிலாளர் துறையில் திறமையுடையவர்க்கு மேன்மேல் உச்சநிலை வரை உயர்வுதந்து பிறநிலையங்கட் கனுப்பி வைக்கும் முறை; up country, நாட்டின் உட்பகுதிநோக்கி; up in arms, கிளர்த்தெழுந்து போருக்கு ஒருங்கிய நிலையில்; ups and downs, ஏழுச்சி-வீழ்ச்சி; விழுந்து எழும் நிலம்; இன்பதுன்பங்கள், நன்மைதீமைகள், நலங்கள் இடர்ப்பாடுகள்; up to, வரை; எல்லை வரை; அணிமை சூழலுட்பட; எல்லை வரை மூழ்கலாக; செய்யும் நிலையில்; செயல் தகுதி முற்றிய; செய்ய ஒருங்கி; சார்பான பொறுப்பாக, சார்பான கடப்பாடாக; (பே-வ) செயலீடுபாடு கொண்டு; செய்யும் எண்ணத்துடன்; up to anything, எதற்குந் துணிந்த; up to date, நாளது வரையிலாக; காலத்தோடொட்டிய வளர்ச்சியுடைய; புதுப்பாணியில் அமைந்த; up to the mark, கட்டளையளவிற் குன்றாத, வேண்டுமளவிற் குறையா நேர்த்தியுடைய; up town, நகரினுள்; நகரின் வாழ்பகுதியில்; நகரின் வாழ்பகுதிநோக்கி; up with, சரிசம நிலையாக, உடனொப்பிணைவாக; தோளொடு தோளான நிலையில்; எழுந்திரு; எடு; மேற்செல்; இங்கே வா; புறப்படு; எழுந்து பேசு; well up in, நன்கு தேர்ந்த அறிவுடைய, நன்கு பயின்று தேர்ச்சியுடைய.

**up-a-dai'sy, ups-a-dai'sy,** *int.* குழந்தைக்கு ஊக்கங் கொடுக்கும் குறிப்பு, "எழுந்திரம்மா!"

**up-along',** *adv.* பாதை வகையில் முன்நோக்கி நெடுக, மேல்நோக்கி.

**up'-and-com'ing,** *a.* படுவிழிப்பான; படுமுனைப்பான; படுமுயற்சிவாய்ந்த.

**up'-and-down',** *a.* மேடுபள்ளமாகச் செல்கிற; அலைபாய்வான.

**upa'nishad,** (ச.) *n.* உபநிடதம்.

**up'as,** *n.* நச்சுமரம், மலாய் நாட்டு மரவகை; நச்சுமரச்சாறு; தீயாற்றல்; தீச்செயல்; தீச்செல்வாக்கு

**upbear',** *v.* தூக்கிப் பிடி; தாங்கிப்பிடி.

**upbeat',** *n.* இலேசு, தாளத்தில் மேனோக்கிய அழுத்தமற்ற மெல்லடி

**upbind',** *v.* கட்டுப்போடு; ஒன்றாக இணைத்துக்கட்டு.

**upblaze',** *v.* கொழுந்துவிட்டெரி.

**upblew',** *v.* **upblow** என்பதன் இறந்த காலம்.

**upblow',** *v.* மேல்நோக்கி எறி; மேல்நோக்கி வீசு; காற்று வகையில் எழு.

**up'blown, upblown'[1],** *a.* உப்பிய, ஊதிப்பெருத்த.

**upblown'[2],** *v.* **upblow** என்பதன் முற்றெச்சம்.

**upbore',** *v.* **upbear** என்பதன் இறந்தகாலம்.

**upborne'[1],** *a.* மேலே தூக்கிப் பிடிக்கப்பட்ட; ஏந்தி நிறுவப்பட்ட; மேலே கொண்டு செல்லப்பட்ட; தாங்கி ஏற்றப்பட்ட.

**upborne'[2],** *v.* **upbear** என்பதன் முற்றெச்சம்.

**upbound',** *v.* **upbind** என்பதன் இறந்தகால-முற்றெச்ச வடிவம்.

**upbraid',** *v.* கடிந்துகொள்; குற்றங்கூறு; குற்றங் கண்டு கண்டி, திட்டு.

**upbraid'ing,** *n.* கடிந்துகொள்ளுதல்; குற்றங் கூறல்; *a.* கண்டிக்கிற; குறைகாண்கிற.

**up'break[1],** *n.* தகர்வு; கலைவு.

**upbreak'[2],** *v.* பிள; கலை; பிரி; துண்டுபடுத்து.

**up'bringing,** *n.* வளர்ப்பு முறை; கல்வி பயிற்றுவிப்பு.

**upbrought',** *v.* **upbring** என்பதன் இறந்தகால-முற்றெச்ச வடிவம்.

**upbuild',** *v.* கட்டியெழுப்பு.

**upbuild'ing, up'building,** *n.* கட்டியெழுப்புதல்; வளர்த்துருவாக்கல்; பேணிவளர்ப்பு.

**upbuoy'ance,** *n.* மேல் மிதப்பு.

**upburn'ing,** *a.* மேல்நோக்கிக் கொழுந்துவிட்டு எரிகிற.

**up'burst[1],** *n.* வெடிப்பெழுச்சி, வெடித்து மேலெழுகை.

**upburst',** *v.* வெடித்து மேலெழு, மேலெழுந்து வெடி.

**upburst'ing,** *a.* மேலெழுந்து வெடிக்கிற, வெடித்து மேலெழுகிற.

**up'cast[1],** *n.* எறிவு, எறிதல்; மேலெறிவு, மேல்நோக்கிய வீச்செறிவு; மேலே தூக்கி எறியப்பட்ட பொருள்; (மண்.) மடிப்பெறிவின் நிமிர்வுயர்வளவு; *a.* மேலே எறியப்பட்ட.

**upcast',** *v.* மேல்நோக்கி எறி.

**upcast'-shaft,** *n.* காலெறி புழைவாய், காற்று வெளியேற்றும் சுரங்கப் புழைவாய்.

**upcatch',** *v.* எட்டிப்பிடி.

**upcaught',** *v.* **upcatch** என்பதன் இறந்தகால-முற்றெச்ச வடிவம்.

**upcoast',** *adv.* கடற்கரை கடந்து உள்ளாக.

**upcome',** *n.* விளைவு; பலன்; செயல் முக்கியத்துவமுடைய கட்டம், தத்துறு சமயம்.

**up'-coming,** *a.* வர இருக்கிற; விரைவில் வர இருப்பதுசார்ந்த.

**up'country[1],** *n.* உள்நாடு, நாட்டு உட்பகுதி, உள்நிலம்; *a.* உள்நாடு சார்ந்த; உள்நாட்டுப் பகுதிக்குரிய, உள்நாட்டுப் பகுதியிலுள்ள.

**upcoun'try**[2], *adv.* உள்நாட்டுப் பகுதியில், நாட்டில் உள்ளாரா.
**up'date**, *v.* காலத்துக்கு ஒத்த புத்தம்புது நிலைக்குக் கொணர்.
**upflash'ing**, *a.* பளிச்சென்று மின்னிடுகிற.
**up'flow**[1], *n.* மேல்நோக்கிய ஒழுக்கு.
**upflow'**[2], *v.* மேல்நோக்கி ஒழுகு.
**upflung'**, *a.* மேல்நோக்கி எறியப்பட்ட.
**upfoll'ow**, *v.* நெருங்கிப் பின்தொடர், அடுத்துத்தொடர்.
**upfurl'** *v.* சுருட்டிக் கட்டு.
**upgath'er**, *v.* ஒன்றுதிரட்டு.
**up'grade**, *n.* மேல்நோக்கிய சாய்வு; மேற்போக்கு; *a.* மேல்நோக்கிய, மேல்நோக்கிச் சாய்வான; *v.* பதவி உயர்த்து; திறம் உயர்த்து; சரக்கு நயம் உயர்த்து; தாழ் சரக்கினை உயர்தரத்தேற்று.
**up'growth**, *n.* வளர்ச்சி; வளர்ச்சிமுறை; மேனோக்கி வளர்ந்த கட்டமைவு.
**up'hand**, *a.* கையிலெடுத்து உயர்த்தப்பட்ட.
**uphang'**, *v.* தொங்கவிடு.
**upheap'**, *v.* குவித்து வை.
**upheav'al**, *n.* உயர்த்துதல்; பொங்குதல்; (மண்.) நிலத்தள உயர்வெழுச்சி; பொங்கெழுச்சி.
**upheave'**, *v.* பொங்கியெழு, புடைத்தெழு; எழுச்சியுறு.
**upheld'**, *v.* **uphold** என்பதன் இறந்தகால-முற்றெச்ச வடிவம்.
**up'hill**[1], *n.* செங்குத்து மலைச்சரிவு.
**up'hill**[2], *a.* மேல்நோக்கிச் சாய்ந்துள்ள; செங்குத்துச் சாய்வான; எளிதிற் செய்ய இயலாத, கடுமையான, கடினமான.
**uphill'**[3], *adv.* மலையில் மேல்நோக்கி; கடுமுயற்சியுடன்.
**uphoard'**, *v.* குவித்து வை, குவித்துத் திரட்டு.
**uphold'**, *v.* நேராக வை; நேராக நிறுத்து; தாங்கு; பற்றி நில்; ஆதரவளி; செயலில் முனைந்து நில், விடாப்பிடியாக நில்; விடாப்பிடியாகப் பின்பற்று; உறுதியாகக் கடைப்பிடி.
**uphold'er**, *n.* தாங்குவோர், ஆதரவாளர், காப்புறுதியாளர்; விடாப்பிடியாகப் பற்றி நிற்பவர்; கடைப்பிடி உறுதியாளர்.
**uphol'ster**, *v.* தட்டுமுட்டுக்கல வாய்ப்பணி ஒப்பனை செய்; இருக்கை சாய்விருக்கைகளுக்குத் திண்டுறை தைத்திணைவி; மெத்தை-சுருள் வில் முதலியன இணைவி; மெத்தையமைவி; பொதியுறையமைவி.
**uphol'sterer**, *n.* வண்டி மெத்தை-திண்டு வேலைக்காரர்.
**uphol'sterer-bee**, *n.* இருல்தும்பி, தேன்கூட்டுக் கண்ணறை ஒப்பனைத் தேனீ.
**uphol'stery**, *n.* வண்டி மெத்தை-திண்டு வேலை.
**uph'roe**, *n.* (கப்.) தனைபுழைக்கட்டை, மேற்கட்டி ஒழுங்கு செய்ய உதவும் கயிறுபுகு நீள் மரக்கட்டைப் பாளம்.
**uphurl'**, *v.* மேற்சுழற்றி எறி.
**upjet'**, *v.* கீண்டெழு, மேலெழுந்து பீறு.
**up'keep**, *n.* பேணிக்காப்பு; பேணிகாக்கும் பொறுப்பு.
**upknit'**, *v.* தைத்து மூட்டு, தைத்திணை; சமரசப்படுத்து, இணக்குவி.
**uplaid'**, *v.* **uplay** என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.
**up'land**, *n.* உள்நாடு, நாட்டின் உட்பகுதி; அகமலை நாட்டுப் பகுதி; மேட்டு நிலம்; *a.* உள்நாட்டிலுள்ள, நாட்டு உட்பகுதியிலுள்ள, மேட்டு நிலத்திலுள்ள.
**up'lander**, *n.* அகமலை நாடர்; மேட்டுநிலத்தார்.
**upland'ish**, *a.* தொலைநாடு சார்ந்த; முரட்டு நாட்டுப்புறஞ் சார்ந்த; பண்படாத.
**uplay'**, *v.* குவி, திரட்டு, சேர்த்து வை.
**uplead'**, *v.* மேதகு வழிகாட்டு.
**upleap'**, *v.* துள்ளிக் குதி.
**upled'**, *v.* **uplead** என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.
**up'lift**[1], *n.* உயர்வு; மேம்பாடு; முன்னேற்றம்; வள ஆக்கம்; வாழ்க்கைத்தர உயர்வு; அறிவொழுக்க வளர்ச்சி; ஆன்மிக நல உயர்வு; (மண்.) நிலப்படுகை எழுச்சி.
**uplift'**[2], *v.* உயர்த்து; மேம்படுத்து; வள ஆக்கமூட்டு; ஒழுக்கநல மூட்டு; ஆன்மிக நல முன்னேற்றம் அமைவி.
**uplift'ed**, *a.* தூக்கிய; மேல்நோக்கிய.
**uplift'er**, *n.* உயர்த்துபவர்; மேம்படுத்துபவர்.
**uplift'ing**, *n.* மேம்படுத்துதல்; *a.* மேம்படுத்துகிற.
**uplight'ed**, *n.* ஒளியேற்றப்பட்ட.
**up'-line**, *n.* மையநோக்கிய ஊர்திகளுக்கான இருப்புப்பாதை.
**uplock'**, *v.* பூட்டி வை.
**up'lying**, *a.* மேடான; மேட்டு நிலத்திலுள்ள.
**up'make**, *n.* ஆக்கம்; ஆக்கமுறை; மனநிலைப்பண்பாக்கம்.
**up'making**, *n.* பத்திரிகைப் பக்க அமைப்பாக்கம், கப்பல் அடித்தள நிரப்பாக்கம்,
**up'most**, *a.* உச்ச உயர் நிலையிலுள்ள; முதன் முதலான.
**upon'**, *prep.* மேற்பட, மீதமைவாக, மேலே.
**upped**, *v.* **up** என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.
**upp'er**[1], *n.* புதைமிதி மேற்பகுதி; மேற்பல்; *a.* மேலான, மேலேயுள்ள; மேல்நிலையிலுள்ள; மேலிடஞ் சார்ந்த; உயரத்திலுள்ள; மேலிடத்திலமைந்த; முகட்டிலுள்ள; மேற்பகுதிக்குரிய; மேற்பாதி சார்ந்த; வலிமை மிக்க; வகுப்பு வகையில் மேம்பட்ட; மன்ற வகையில் மேலான, உயர் படியான; எழுத்து வகையில் மேலினமான, தலைப்புருவான, பெரும்படியான; இசைக்கருவி ஆணி வரிசை வகையில் வலப்புறமான; (தொ.) upper crust, மேன்மக்கள்; upper hand, தலைமை; upper house, மேலவை; upper ten, மிகு செல்வர், மிகு செல்வாக்கினர்.
**upp'er-cut**, *n.* குறுங்கைக் குத்து.
**upp'ermost**, *a.* மேன்முகட்டில் உள்ள; மிகமிக உயர்ந்த; *adv.* எண்ணத்தில் முன்னுறுவதாக.
**upp'ers**, *n.* துணிக்காலுறைகள்; (தொ.) be on one's uppers, வறுமையில் உழல்; இடர்ப்பாட்டில் உழல்வுறு.
**upp'ing**, *n.* மேலோட்டம், அன்னப்புட்கள் வகையில் உடையவர் குறியீட்டுக்காக ஆண்டிற்கொருமுறை ஆற்றெதிராக ஓட்டிச் செல்லுதல்; *a.* மேற்செல்கிற; கிளர்ந்தெழுகிற; எதிர்த்துச்செல்கிற.
**upp'ish**, *a.* வீறுப்புக் காட்டுகிற, பகட்டிக்கொள்கிற.
**upraised'**, *a.* தூக்கிப் பிடித்த; உயர்த்தப்பட்ட.
**up'right**, *n.* பாரந்தாங்கி, கட்டிடத்துக்குத் தாங்கலாய் அமையும் தூண் அல்லது கம்பு; *a.* செங்குத்தான; நிமிர் நேர்வான; வளையாது நிற்கிற; நேர்மையுடைய.
**up'rightly**, *adv.* நிமிர்நேர்வாக.
**up'rightness**, *n.* நிமிர்நேர்வு.
**upris'al**, *n.* எழுச்சி.
**up'roar**[1], *n.* கிடுமுழக்கம்; ஆரவாரம், பெருங்கூச்சல், (அரு.) வன்கிளர்ச்சி.
**uproar'**[2], *v.* பெருங்கூச்சல் எழுப்பு.
**uproar'ious**, *a.* கிடுமுழக்கமான, பெருங்கூச்சலிடுகிற.
**uproot'**, *v.* வேரோடு பிடுங்கு; கல்லி யெறி.
**uprose'**, *v.* **uprise** என்பதன் இறந்த காலம்.
**up'rush**[1], *n.* மேற்பாய்வு; மேல்நோக்கிய பாய்ச்சல்; திடீர் வரவு; கருத்து மேலெழுச்சி.
**uprush'**[2], *v.* மேற்பாய்வுறு, மேலெழுந்து பாய்; திடீர் வரவாய் எழு.
**up'set**[1], *n.* கவிழ்ப்பு; குடைமறிவிப்பு; நிலைகுலைவிப்பு.
**up'set**[2], *a.* ஏலவிலை வகையில் குறைபடி முதற் கூவலான; (தொ.) upset price, ஏலத்தில் விடப்படும் குறைவிலை.

upset′ ³, v. குடைமறிவி ; தலைகீழாக்கு ; கவிழ்த்து ; கவிழ்த்துக் கொட்டு ; நிலை குலைவி ; திட்டங் குலைவி ; மன அமைதி கெடு.

upset′ ⁴, v. upset ³ என்பதன் இறந்தகால-முற்றெச்ச வடிவம்.

upsett′er, n. கவிழ்ப்பவர் ; கவிழ்ப்பது.

upsett′ing, n. குலைவிப்பு ; கவிழ்ப்பு ; திட்டங் குலைப்பு ; a. குலைவிக்கிற ; திட்டம் கவிழ்க்கிற, மன அமைதி கெடுக்கிற.

up′shift, n. இயந்திர விசைக்கூறு மேலிடப் பெயர்ப்பு ; இயந்திரப் புற அக உருளை வீத மாற்றமைவு.

up′shoot ¹, n. மேலெய்வு ; மேல்நோக்கிய வேட்டு ; மேல் எறிவு.

upshoot′ ², v. மேல்நோக்கி எய் ; மேல்நோக்கி வேட்டெறி ; மேல் நோக்கி எறி.

up′shot ¹, n. படுவிளைவு ; இறுதி முடிவு ; செயல்முறை இறுதி விளைவு.

upshot′ ², a. மேல்நோக்கி எறியப்பட்ட.

upshot′ ³, v. upshoot ² என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

up′side, n. மேற்பக்கம் ; மேற்பரப்பு ; மேற்பகுதி ; adv. மேற்பாகத்தில் ; மேற்பரப்பில் ; மேல்நோக்கி.

up′side-down, a. தலைகீழான ; தலைகவிழ்ந்த ; முழுக் குழப்ப நிலைப்பட்ட ; adv. தலைகீழாய் ; உட்கவிழ்ந்து ; முழுக் குழப்ப நிலையில்.

upsides′, adv. (பே-வ.) தலைகீழாக ; இணையிணையாக ; சரிக்குச் சரியாக.

upsil′on, n. உகர ஒலியுடைய கிரேக்க எழுத்து.

up′sitting, n. எழுந்தமர்வு ; நிமிர்ந்து உட்கார்தல் ; நோயின் பின் மீட்டெழுகை ; பிள்ளைப்பேற்றின் பின் மீட்டெழுச்சி.

upspake′, v. upspeak என்பதன் பழமைப்பட்ட இறந்தகால வழக்கு.

upspeak′, v. பேசத்தொடங்கு.

upspear′, v. ஈட்டிபோல் மேல் முனைப்பாக நில் ; கீண்டெழுந்து தோன்று.

upspring′, v. எழு ; கீண்டெழு.

up′stage, a. (பே-வ.) எளிதில் ஊடாடிப் பழகாத ; அவைக் கூச்சமுடைய ; தனித்தொதுங்கி நடக்கிற ; தனித்து விலகி நடக்கிற.

upstairs′ ¹, n. மேல்மாடி ; மேல்மாடிப்பகுதி.

up′stairs, ² a. மேல்மாடியிலுள்ள ; மேல்மாடியைச் சார்ந்த ; மேலேயுள்ள மாடித்தளஞ் சார்ந்த.

upstairs′ ³, adv. மாடியில் ; மாடிப் பகுதியில் ; மேல்மாடித் தளத்தில் ; மாடி நோக்கி ; மாடிக்கு ; மாடிப் பகுதிக்கு ; மேல் மாடித் தளத்துக்கு.

up′standing, a. நிமிர்வான ; நிமிர்ந்தெழுந்து நிற்கிற ; நிமிர் கட்டமைவுடைய ; நல்ல கட்டமைவான ; நிமிர்நேர்மை வாய்ந்த, வாய்மை கோடாத.

upstare′, v. கூர்ந்து மேல்நோக்கு, மேல்நோக்கிக் கூர்ந்து பார் ; மயிர் வகையில் சிலிர்த்து நில்.

upstar′ing, a. கூர்ந்து மேல்நோக்குகிற ; சிலிர்த்த.

up′start, n. புதுப் பணக்காரர் ; புதுப் பவிசாளர், புதுப் பெருமையர்.

up′stream ¹, a. எதிரோட்டமான, நீரோட்டத்திற்கு எதிரான ; நீரொழுக்கெதிர்த்துச் செல்கிற ; நீரோட்டத்திற்கு எதிர்த் திசையிலுள்ள ; பொதுப்போக்கிற்கு எதிரான.

upstream′ ², v. நீரோட்டம் எதிர்த்துச் செல்.

upstream′ ³, adv. நீரோட்டத்திற்கு எதிராக ; ஒழுக்கெதிர்த்து ; எதிர்நீச்சாக.

up′stroke, n. மேற்கோடு ; மேல்நோக்கிய வரை ; எழுத்தின் மேல்நோக்கிய கோடு.

up′surge ¹, n பொங்கெழுச்சி.

upsurge′ ², v. பொங்கியெழு.

upsway′, v. மேல்நோக்கிய ஊசலாட்டு ; மேல்நோக்கி இயக்கு ; மேல்நோக்கி எழுந்தாடு.

up′sweep, n. பெண்டிர் உச்சிக் கூம்புபாணிக் கொண்டை.

upswell′, v. பொங்கியெழு, எழுந்து வீங்கு.

up′take, n. எடுப்பு ; தூக்குதல் ; கைப்பற்றீடு ; மனத்தின் பற்றுதிறன், புரிவு ; மேல்நோக்கிய காற்றோட்டமுடைய குழாய் ; புகைப்போக்கி நிமிர்குழாய்.

uptake′, v. எடு ; தூக்கு.

uptear′, v. கிழித்தெறி.

up′throw, n. மேல் எறிவு, மேல்நோக்கி எறிதல் ; (மண்.) மடிவின் அடுக்குத்தள மேலெறிவு ; (சுரங்.) தள அடுக்கு மேல் நோக்கிய சாய்வு ; (சுரங்.) தள அடுக்கு மேற்சாய்வின் செவ்வுயரம்.

upthrow′, v. மேலெறி, தூக்கி வீசு.

up′thrust, n. (மண்.) பொங்கெழுச்சி, நிமிர்வெழுச்சி, மேலெறிவு.

upthun′der, v. எழுந்து இடி முழக்கம் செய்.

uptie′, v. கட்டிடு, கட்டி வை ; வரிந்து கட்டு ; முடிவு செய், தீர்மானி.

uptilt′, v. சாய், சரியச் செய்.

uptilt′ed, a. சிறிது சாய்க்கப்பட்ட.

uptorn′, a. கிழித்தெறியப்பட்ட ; தகர்த்து மேலே எறியப் பட்ட.

uptown′, a. நகரின் உட்புறஞ் சார்ந்த ; நகரின் உட்புறம் நோக்கிய ; நகர் வாழ்விடஞ் சார்ந்த ; நகர் வாழ்விடம் நோக்கிய ; நகர் மேட்டிடஞ் சார்ந்த ; நகர் மேட்டிடம் நோக்கிய ; adv. நகர் உட்புறத்தில் ; நகர்வாழ்விடத்தில் ; நகர்மேட்டிடத்தில் ; நகர் உட்புறநோக்கி ; நகர் வாழ்விடம் நோக்கி ; நகர் மேட்டிடம் நோக்கி.

up′train ¹, a. மையக்கோடி நோக்கிச் செல்லும் இருப்பூர்தி.

up′train′ ², v. வளர்த்துருவாக்கு, பேணிவளர் ; வளர்த்தியக்கு, இயக்கி வளர்.

uptrilled′, a. உச்சக்குரலில் கிறீச்சிட்ட ; றகரமார்ந்த.

upturn′, v. கிளறி மேலிடு.

upturned′, a. மேல்நோக்கிய ; மேல்நோக்கித் திருப்பப்பட்ட.

upturn′ing, a. மேல்நோக்கி வளைகிற ; கிளறி மேலிடுகிற.

upwaft′, v. மேல்நோக்கி வீசியடித்துக்கொண்டு செல், மேல் வீசியடி.

up′ward, a. மேல் நோக்கிய ; உயரிடம் நோக்கிய ; உயரிடம் நோக்கிச் செல்கிற ; மேற்பகுதி சார்ந்த ; மிகுதியான ; உயர்|எண்ணிக்கை நோக்கிய ; adv. மேல்நோக்கி ; உயரிடம் நோக்கி ; ஆறு வகையில் தலைமூலம் நோக்கி, ஒழுக்கெதிராக ; மேற்பகுதியில்.

upwell′, v. பொங்கியெழு.

upwhirl′, v. சுழன்றெழு ; எழுந்து சுழற்றியடி ; மேனோக்கிச் சுழற்றியடித்துக்கொண்டு செல்.

upwind′, v. திருகி விடு.

upwound′, a. திருகிவிடப்பட்ட.

upwrought′, a. முறுக்கி உருவாக்கப்பட்ட ; நன்கு முறுக்கப் பட்ட ; முனைந்து முயன்று உருவாக்கப்பட்ட.

uraem′ia, n. கறுப்புக்குருதிச் சோகை, சிறுநீர் வெளியேறாமை யால் ஏற்படும் இரத்தச் சோகை.

urae′us, n. பாம்புரு அணிமுடி, எகிப்திய தெய்வங்கள்-அரசர் கட்குரிய பாம்புருவ அணிமுடி.

Ur′al-Alta′ic, a. யூரல்-ஆல்ட்டாய் மலைப் பகுதி சார்ந்த ; யூரல்-ஆல்ட்டாய் மலைப்பகுதி மக்களுக்குரிய ; (மொழி.) வட ஐரோப்பிய-ஆசிய பரப்புக்குரிய ஒட்டியல் மொழிக் குழு சார்ந்த, பின்னிக்-மங்கோலிய இன ஒட்டியல் மொழிக் குழுவினுக்குரிய.

**Uran'ia**, *n.* வானூலணங்கு, கிரேக்க புராண மரபின் எழு கலைத் தெய்வங்களுள் வானூற் கலைக்குரிய தெய்வ அணங்கு.
**uran'ian**, *a.* வானுலகஞ் சார்ந்த ; தெய்விகமான ; வானூர்ந்த; வானியல் சார்ந்த, வானூலுக்குரிய ; வானூலணங்கு சார்ந்த.
**uran'ic**, *a.* வானுலகுக்குரிய, தெய்விக ; அண்ணத்துக்குரிய; உயர் இணைதிறமுடைய விண்மத் தனிமத்துக்குரிய.
**u'ranide**, *n.* மீவிண்மம், விண்மத்தினும் உயர் அணு எடையுடைய தனிம வகை.
**u'ranin**, *n.* ஒண்சாயப்பொருளாய் உதவும் உவர உப்புப் பளிங்கு ; ஒண்சாயப் பொருளாய் உதவும் சாம்பர உப்புப் பளிங்கு.
**uran'inite**, *n.* நிலக்கீல் வகை.
**uranisc'us**, *n.* மேலண்ணம்.
**u'ranite**, *n.* ஒண்கனிமக் கல்வகை.
**uran'ium**, *n.* விண்மம், அணு ஆற்றலுக்குப் பயன்படும் தனிமம்.
**uranograph'ic, uranograph'ical**, *a.* விரிவிளக்க வானியல் சார்ந்த.
**uranog'raphist**, *n.* விரிவிளக்க வானியலார்.
**uranog'raphy**, *n.* விரி விளக்க வானியல்.
**uranol'ogy**, *n.* வானியல்.
**uranom'etry**, *n.* விண்கோள அளவாய்வியல்.
**u'ranoplasty**, *n.* குழைம அண்ண அறுவை.
**uranos'copus**, *n.* கடல்வாழ் வானோக்கி மீன்வகை.
**ur'anous**, *a.* தாழ் இணைதிற விண்மத் தனிமஞ் சார்ந்த.
**Ur'anus**, *n.* முதுவானவன், கிரேக்கபுராண மரபில் மூத்த வானவர் தந்தை ; விண்மக்கோள், 1781-இல் கண்டுபிடிக்கப் பட்ட "யூரனஸ்" கோள்.
**urb'an**, *a.* நகருக்குரிய ; நகர் சார்ந்த ; நகரில் வாழ்கிற.
**urbane**, *n.* நயநாகரிகப் பண்புமிக்க, இன்னயமார்ந்த ; பண்பு நயமிக்க ; நடைநயமிக்க ; மென்னயமார்ந்த.
**urban'ity**, *n.* நயநாகரிகப் பண்பு ; மென்னய நடை ; இணக்க நயப் பண்பு ; வணக்க வரிசைமுறை ; பண்பட்ட பழக்க வழக்க நடைமுறை.
**urbaniza'tion**, *n.* நகரப் பண்பாக்கம் ; நகரமயமாக்கல்.
**urb'anize**, *v.* நகர்ப் பண்பினதாக்கு ; நாட்டுப்புறப் பண்பு நீக்கு.
**urb'iculture**, *n.* நகர்வாழ்வுச் சூழலாய்வியல்.
**ur'ceolate**, *a.* (தாவ.) சாடி வடிவான, பெரு உடலும் சிறு வாயும் உடைய.
**urch'in**, *n.* போக்கிரிப் பையன் ; குறும்புக்காரச் சிறுவன் ; கல்லாச் சிறுவன் ; பையன் ; இளைஞன் ; (பழ.) முள்ளெலி ; முள்ளமைப்புக் காப்புடைய கடல்வாழ் சிற்றுயிர் வகை ; படைத்துறையில் தடையரண் வேலிகளாற் சூழப்பட்ட தனி நிறைவுடைய காப்பிடம் ; ஒப்புரவற்றவர் ; பழகப் பொருந்தாதவர் ; பூதம், அருவருப்பான தோற்றமுடைய குறும்புத் தெய்வம் ; *a.* முள்ளெலி போன்ற ; முள்ளெலி இயல்புடைய ; குறும்புத் தெய்வத்திற்குரிய; குறும்புப் பையன் காரணமான; குறும்புத்தனமான.
**Ur'du**, *n.* உருது மொழி.
**ur'ea**, *n.* (வேதி.) மூத்திரை, பால்உணி விலங்குகளின் சிறுநீரில் அடங்கியுள்ள சேர்மப்பொருள்.
**uret'er**, *n.* மூத்திரக் கசிவுநாளம், குண்டிக்காயிலிருந்து மூத்திரக் கசிவை மூத்திரப் பைக்குக் கொண்டுசெல்லும் நாளம்.
**ureth'ra**, *n.* மூத்திர ஒழுக்குக் குழாய், சிறுநீர்ப் பையிலிருந்து சிறுநீர் வெளித்தள்ளப் பெறும் நாளம்.
**ureth'ral**, *a.* மூத்திர ஒழுக்குக் குழாய் சார்ந்த.
**urethrit'is**, *n.* மூத்திரக் குழாயழற்சி.
**ureth'rocele**, *n.* பெண்டிர் சிறுநீர்ப் பையழற்சி.
**urethrot'omy**, *n.* சிறுநீர்ப்பை அறுவை.
**uret'ic**, *n.* சிறுநீர் ஒழுக்குத் தூண்டும் பொருள் ; *a.* சிறுநீர் ஒழுக்குத் தூண்டுகிற.
**urge**, *n.* தூண்டுதல் ; வற்புறுத்துதல் ; உந்தவா ; *v.* தூண்டு; வற்புறுத்து ; வலிந்தியக்கு ; ஊக்கி இயக்கு ; தூண்டி இயக்கு ; விரைவுபடுத்து ; வற்புறுத்தி வேண்டு ; விடாப் பிடியாகக் கொடு ; வற்புறுத்திக் கூறு ; வருந்தி வாதாடு.
**ur'gency**, *n.* விரைவு ; உடனடித் தேவை.
**ur'gent**, *a.* உடனடியாக வேண்டப்படுகிற; மிக அவசரமான; உடனடியாகச் செய்ய வேண்டிய ; உடனடியாகக் கவனிக்க வேண்டிய ; விரைவான.
**ur'gently**, *adv.* உடனடியாக ; அவசரமாக ; வற்புறுத்தலாக.
**ur'ic**, *a.* சிறுநீர் சார்ந்த ; (தொ.) uric acid, சிறுநீர்க் காடி.
**ur'im and thumm'im**, *n.* இறையருட் குறிப்புச் சின்னங்கள், யூதத் தலைமைக் குருவின் மார்புக் கச்சையோடு தொடர்புடைய இறையருட் குறிப்புக் குறியீடுகளான பொருள்கள்.
**ur'inal**, *n.* சிறுநீர்க் கலம்; சிறுநீர்க்கு ஒதுக்கிடம்; நோயாளிகள் படுக்கையடிச் சிறுநீர்ப் புட்டி ; சோதனைச் சிறுநீர்க் குடுவை.
**ur'inary**, *n.* மூத்திர எருச்சேமிப்புக் கிடங்கு.
**ur'inate**, *v.* சிறுநீர் கழி.
**urina'tion**, *n.* சிறுநீர் கழிப்பு.
**ur'ine**, *n.* சிறுநீர், மூத்திரம்.
**urinol'ogy**, *n.* சிறுநீர் ஆய்வு நூல்.
**urinom'eter**, *n.* சிறுநீர் எடைத் திறமானி.
**urinom'etry**, *n.* சிறுநீர் ஒப்பெடைமானம்.
**urinoscop'ic**, *a.* சிறுநீர்த் தேர்வாய்வு சார்ந்த.
**urinos'copy**, *n.* சிறுநீர்த் தேர்வாய்வு.
**ur'inous**, *a.* சிறுநீர் சார்ந்த ; மூத்திரம் போன்ற ; சிறுநீர் இயல்புடைய.
**urn**, *n.* தாழி ; புதைகலம், பிணஞ்சுடு சாம்பற் கொள்கலம் ; புதைகூண்டு ; கல்லறை ; அளவைக் குட்டுவம் ; கொள்கலக் குண்டிகை ; தேநீர்க் கொதிகெண்டி ; *v.* தாழியில் வை ; தாழியில் வைத்தடக்கு.
**urn'-flower**, *n.* தாழிவடிவ மலர் ; தாழிவடிவ மலர்ச்செடி.
**urn'ful**, *n.* தாழிநிரம்பளவு.
**u'rochord**, *n.* வால்திறமச்சை, கருநிலைக் கீழின உயிர்களுள் வால்மட்டிலும் காணப்படும் தண்டெலும்பின் மூல மரபுப் படிவம்.
**urochord'a**, *n. pl.* வால்திறமச்சை உயிரினக் குழுமம்.
**urosthen'ic**, *a.* இயக்கமூட்டும் ஆற்றல்வாய்ந்த வாலினை யுடைய.
*urs'a*, (ல.) *n.* கரடி ; பெண் கரடி.
*Urs'a Maj'or*, *n.* (ல.) வடதிசை விண்மீன்குழு வகை, பெருங் கலப்பை மண்டலம்.
*Urs'a Min'or*, *n.* (ல.) வடதிசை விண்மீன் குழுவகை, சிறு கலப்பை மண்டலம்.
**urs'ine**, *a.* கரடி சார்ந்த ; கரடி போன்ற ; கரடியினுடைய.
**urticar'ia**, *n.* காஞ்சொறித் தடிப்பு, காஞ்சொறி முத்துக்களால் ஏற்படும் சொறிவேதனை.
**urt'icate**, *v.* காஞ்சொறி போல நமைச்சல் கொடு ; வாதக் கால் உணர்வுபெற முட்களால் அடி.
**urtica'tion**, *n.* நமைச்சல் ; கடுகடுப்பு.
**ur'us**, *n.* ஆமா, காட்டுக் காளை வகை.
**us**, *pron. pl.* நம்மை ; எங்களை ; நமக்கு ; எங்களுக்கு ; நம்மையே, எங்களையே.
**us'able**, *a.* பயன்படுத்தத் தக்க ; வழங்கக்கூடிய ; கையாளத் தக்க.
**USAFI**, *n.* அமெரிக்க ஐக்கிய அரசின் படைத்துறைகள் நிலையம்.

**us'age**, *n.* வழக்காற்று மரபு ; (சட்.) பழக்க மரபு, மிகு பழமை யற்றதாயினும் பழக்கத்தில் வந்துவிட்ட ஒன்று.

**us'ance**, *n.* (வணிக.) சலுகை விடுப்புக்காலம், அயலகச் செலா வணிப் பணவாணை மாறத் தரப்பெறுங் காலம்.

**use**, *n.* பயன் ; பயன்பாடு, பயன்படுத்துநிலை, உபயோகம் ; பயனீடு பயன் தருநிலை ; உபகாரம் ; துணையுதவி ; பயன் வாய்ப்பு ; கையாடல் ; கையாட்சி வாய்ப்பு ; கருவி வாய்ப்பு ; தனிப் பயன்கூறு, பிரயோஜனம் ; நீடுமரபு, பழக்கம் ; செயல் மரபு, வழக்கம் ; வழக்காறு, நடைமுறை ; வழங்குதிறம், செய லாட்சித் திறம் ; (சட்.) வழங்குரிமை ; *v.* வழங்கு, பயன் படுத்து ; கருவியாகக் கையாளு ; குறித்த பயன் கொள்ளு ; நடைமுறையில் கையாளு ; மூலப்பொருளாகப் பயன்படுத்திக் கொள், செலவழித்துப் பயனீடு கொள் ; கருவியாகக் கையாடு ; செயலாட்சி செய் ; இயக்கியாளு ; பயன்படுத்தும் வாய்ப்புப் பெறு ; மேற்கொள்ளு ; வழக்கமாக நடத்து, வழக்க முறையில் நடந்துகொள்ளு ; பயின்று பழக்கப்படுத்து ; (தொ.) be used to, பழக்கப்பட்டு விடு ; use up, முழுதும் பயன்படுத்திவிடு ; வறிதாக்கு ; தீர்ந்து போகச் செய்

**use'ful**, *a.* பயன் தருவதான, பயனுடைய

**use'fully**, *adv.* பயனுடையதாக ; வீணாக்காமல்.

**use'fulness**, *n.* பயனுடைமை.

**use'less**, *a.* பயனற்ற ; பயன்படுத்தப்படாத ; வீணான ; (பேச்சு.) உடல்நல மற்ற ; (பே-வ.) உணர்வுநலமற்ற.

**use'lessness**, *n.* பயனின்மை.

**us'er** [1], *n.* பயன்படுத்துபவர்.

**us'er** [2], *n.* (சட்.) உரிமை அனுபவம் ; உரிமை அனுபவிப்பு ; அனுபவித்த உரிமை ; அனுபவ பாத்தியதை.

**ush'er**, *n.* வாயிலோர், வாயில் காப்பதுடன் வருபவரை இட்டுச் சென்று இருக்கைகாட்டும் பணியாளர் ; கட்டியர், முன் சென்று கட்டியங் கூறுபவர் ; (பே-வ.) கீழ்நிலை ஆசிரியர், துணைமையாசிரியர் ; *v.* வாயிலோராகச் செய லாற்று, வரவேற்று இட்டுச்சென்று இருக்கை காட்டு ; கட்டிய ராகச் செல், முன்செல் ; முன்சென்று வருகை தெரிவி ; முன் வந்து தெரிவி ; முன்னறிவி ; இட்டுச்செல்.

**ush'eress, usherette'**, *n.* பெண் துணைமை ஆசிரியர்.

**ush'ering**, *n.* இட்டுச் செல்லுதல் ; கட்டியராக முன் செல்லு தல்.

**ush'ership**, *n.* துணை ஆசிரியர் பதவி.

**USIS**, *n.* அமெரிக்கச் செய்தி நிலையம்.

**us'quebaugh**, *n.* சாராய வகை ; அயர்லாந்து நாட்டுத் தேறல் மது வகை.

**ustula'tion**, *n.* பொடிவு உணக்கீடு, பொடியாக்கும் பொருட்டு ஈரப்பொருளைக் காயவைத்தல்.

**u'sual**, *a.* வழக்கமான ; மரபான.

**u'sually**, *adv.* வழக்கமாய்.

**usucap'tion**, *n.* (சட்.) உடைமை வகையில் நீடித்த அனு பவப் பாத்தியதை.

**us'ufruct**, *n.* பிறர் உடைமை நுகர்வுரிமை, தின்புரிமை ; அழிக்காமலும் பாழ்படுத்தாமலும் பிறர் உரிமையைப் பயன் படுத்தும் உரிமை ; *v.* பிறர் உடைமை நுகர்வுரிமையைக் கையாளு.

**usufruc'tuary**, *n.* பிறர் உடைமை நுகர்வுரிமையாளர் ; *a.* பிறர் உடைமை நுகர்வுரிமை சார்ந்த.

**u'surer**, *n.* கடுவட்டி வாங்குபவர்.

**usur'ious**, *a.* கடுவட்டி பெறுகிற.

**usurp'**, *v.* பறித்துக்கொள் ; தகாவழி உரிமைபெறு ; தவறான வழியில் பதவியேறு ; பிறர் உடைமையை அநீதமாகக் கைப் பற்று ; (அரு.) பிறர் உரிமையில் அநீதமாகத் தலையிடு.

**usurpa'tion**, *n.* அடாவழிக் கைப்பற்றீடு ; தகாமுறை உரிமைப் பறிப்பு.

**usurp'er**, *n.* தகாமுறை அரசர் ; அடாவழி உரிமை கைப்பற்று பவர்.

**usurp'ing**, *a.* தகாவழிப் பற்றிய ; நெறிமீறி உரிமை கொள்கிற

**u'sury**, *n.* கடுவட்டி முறை, தகாவட்டி முறை.

**ut** [1], *n.* ஏழுசுரங்களுள் ஒன்றின் பழங்குறியீடு.

*ut* [2], (ல.) *adv.* மேற்கண்டவாறு ; கீழ்வருமாறு.

**uten'sil**, *n.* தட்டுமுட்டுக்கலம் ; அடுக்களைப் பாத்திரம்.

**ut'erine**, *a.* கருப்பை சார்ந்த ; ஒரு கருப்பிறந்த, ஒரே தாயும் வேறு வேறு தந்தையும் உடைய.

**uterit'is**, *n.* கருப்பை அழற்சி.

**ut'erus**, *n.* கருப்பை ; *pl.* ut'eri.

**utilitar'ian**, *n.* பயனெறிமுறைக் கோட்பாட்டாளர் ; பய னெறிமுறை பின்பற்றுபவர் ; *a.* பயனீட்டுக் கொள்கை யுடைய ; பயனெறி முறைப் பண்புடைய.

**utilitar'ianism**, *n.* பயனெறிமுறைக் கோட்பாடு, நற்பய னுடைய செயலெல்லாம் நற்செயலே என்னும் கொள்கை முறை ; பொதுப்பணியில் மிகுதியான மக்களின் மிகுந்த இன்பமே சிறந்ததென்னும் கொள்கை.

**util'ity**, *n.* பயனுடைமை ; பயனூக்கம் ; பயனூக்கப்பண்பு ; பயனுடைய செய்தி ; *a.* பயனூக்கிய ; பயனூக்கிச் செய்யப் பட்ட ; பயன்மட்டுமே கருதி ஆக்கப்பட்ட ; நடைமுறைப் பய னுடைய ; (தொ.) utility man, நாடகத்தில் சிறு பகுதி களையும் நடிப்பவன்.

**ut'ilizable**, *a.* பயன்படுத்திக்கொள்ளத் தக்க.

**utiliza'tion**, *n.* பயன்படுத்துதல்.

**ut'ilize**, *v.* பயன்படுத்திக்கொள்.

*ut'i possidet'is*, (ல.) *n.* போரில் கொண்டது கொள்ளும் நெறி முறைமை, கொள்ளையாகக் கொண்டதை உடைமையாகக் கொள்ள இசைவுதரும் கோட்பாடு.

**ut'most**, *n.* இயலும் உச்ச அளவு ; *adj.* மிகவும், பெரிய அளவினதான.

**Utop'ia**, *n.* சர் தாமஸ் மோர் (Sir Thomas More) என்பார் 1516-இல் அரசியல் சமுதாய முறைகளில் இலக்கியல் வாழ் வுடையதாகத் தீட்டிக் காட்டிய கற்பனைத் தீவு பற்றிய ஏடு ; இலக்கியல் நாடு ; இலக்கியல் அரசு ; குறிக்கோள் நிலைச் சமு தாயம் ; கற்பனை உலகு ; வாய் வேதாந்தம்

**Utop'ian**, *n.* சர் தாமஸ் மோர் ஏட்டிற்குரிய தீவின் குடிமக் களுள் ஒருவர் ; செயல்முறைக்கொவ்வா உயர் கனவு நிலை அமைப்பார்வலர் ; இலக்கியல் ஆர்வக் கனவாளர் ; *a.* நடை முறைக்கு அப்பாற்பட்ட.

**utop'ianism**, *n.* நடைமுறைக்கு ஒத்துவாராத கற்பனைக் கோட்பாடு.

**ut'ricle**, *n.* உயிர்ம அணு ; உடலின் நுண் சிறு கண்ணறை ; நுண்சிறு கட்குழிவு ; காதின் உட்புறச் சிறு கட்குழி.

**utric'ular**, *a.* விலங்கு-தாவர உயிரணு சார்ந்த ; சிறு கண் ணறை இயல்புடைய ; காதின் உள்ளறைச் சிறு கட்குழி போன்ற.

**utt'er** [1], *a.* தனிமுழுமை வாய்ந்த ; கலப்பற்ற முனைப்புடைய ; அற மோசமான ; முழுதளவான.

**utt'er** [2], *v.* கழறு, சாற்று, வாய்விட்டுரை ; உணர்ச்சி வெளி யிட்டுரை ; கள்ள நாணயம்-தாள்-பணம் ஆகியவற்றின் வகையில் செலாவணியில் பரப்பிவிடு.

**utt'erable**, *a.* சொல்லக்கூடிய ; வெளியிட்டுத் தெரிவிக்கக் கூடிய.

**utt'erance** [1], *n.* கூற்று ; வாய்விட்டுரைக்கை ; உணர்ச்சி வெளியிட்டுத் தெரிவிக்கை ; சொல்லுதல், சொற்களால் தெரி வித்தல் ; வெளியிடுகை ; பேச்சாற்றல், விட்டுரைக்குந் திறம்.

**utt'erance** [2], *n.* (செய்.) கடைமுடிவு, கடைக்கோடி.

**utt'erer**, *n.* கழறுபவர், சாற்றுபவர்.

**utt'erest**, *a.* உறுமோசமான, முழுநிறை மோசமான ; அப்பாலுக்கப்பாலான.

**utt'ering**, *n.* கூறுதல், கூற்று ; செலாவணியிற் பரப்பி விடுதல்.

**utt'erless**, *a.* வெளியிட்டுக் கூறமுடியாத.

**utt'erly**, *adv.* முற்றிலும்; முழுதுற, பிறிது கலப்பின்றி, தீர.

**utt'ermost**, *a.* கடைக்கோடியான, எல்லைக்கோடியான.

**utt'erness**, *n.* தனிநிலை ; கலப்பற்ற தனி முனைப்புநிலை.

**U'-tube**, *n.* முடக்கு வளைகுழாய்.

**uv'ula**, *n.* உள்நாக்கு ; உள்நாக்கொத்த உறுப்பு.

**uv'ular**, *a.* உள்நாக்குச் சார்ந்த.

**uxo'ricide**, *n.* மனைவிக்கொலை.

**uxor'ious**, *a.* மனையாளைப் பெரிதும் விரும்புகிற, பெண்வழிச் சேறலான.

**uxor'iousness**, *n.* மனைவழிச் சேறல்.

**Uz'beg**, *n.* நடு ஆசியாவில் உள்ள துருக்கி இனத்தவர்.

**V**, *n.* வெற்றிக் குறி.

**vac'ancy**, *n.* வெறுமை, காலியாயிருத்தல்; பாழ்மை, ஒன்றுமில்லா நிலை; வெற்றிடம்; வெற்று வெளி; பணித்துறை ஆளின்மை; பணித்துறை ஆள்தேவை நிலை; உள்ளத்தின் வெறுமை; மூளை வெறுமை; கருத்தின்மை; மடிமை; கவனக்கேடு, பராக்கான தன்மை.

**vac'ant**, *a.* வெறுமையான; உள் ஒன்றுமில்லாத; காலியான; வெற்றான; உள்ளீடற்ற; பணித்துறை வகையில் ஆளற்ற; ஆள் நிரப்பப்படாத; இருக்கை வகையில் ஆளமர்வற்ற; உள்ளத்தின் வகையில் கருத்தற்ற; சோம்பேறித்தனமான, சுறுசுறுப்பற்ற; அறிவற்ற, மந்தமான; கவனமற்ற.

**vacate'**, *v.* வெறுமையாக்கு; ஒழிவு செய்; விட்டொழியச் செய்; அரசிருக்கையினின்று வெளியேறு; தவிசினின்று வெளியேற்று; பணிவிட்டகலு; பணியினின்று அகற்று; குடியிருப்பவரைப் புறமாக்கு; குடியிருப்பிடம் ஒழித்துவிடு; இடத்திலிருந்து ஆட்களை அகற்று; இடத்திலிருந்து பொருள்களை அகற்று; சட்டந் தள்ளுபடி செய்; ஒப்பந்தம் இல்லாதாக்கு.

**vaca'tion**, *n.* பருவ விடுமுறைக் காலம், நீள் விடுமுறை; நீடோய்வு; வெறுமையாக்கல்; ஒழிப்பித்தல்; ஒழிவு செய்தல்.

**vaca'tionist**, *n.* நீடோய்வு நுகர்பவர்.

**vaca'tionless**, *a.* நீடோய்வற்ற.

**vaca'tur**, *n.* சட்டத்தில் தள்ளுபடி செய்தல்.

**vac'cinal**, *a.* அம்மைப்பால் சார்ந்த; அம்மைநோய் சார்ந்த.

**vac'cinate**, *v.* அம்மை குத்து.

**vac'cination**, *n.* அம்மை குத்துதல்.

**vac'cinator**, *n.* அம்மை குத்துபவர்.

**vac'cine**, *n.* அம்மைப்பால்; நோய்த் தடுப்புச் சத்துநீர்; *a.* ஆவினுக்குரிய; ஆவிற்கு வரும் அம்மைநோய் சார்ந்த; அம்மைகுத்த உதவுகிற.

**vaccin'ia**, *n.* (மரு.) ஆனம்மை நோய்; பசுவிற்கு வரும் அம்மைக் கொப்புளம் போன்ற நோய்.

**vaccin'ial**, *a.* ஆனம்மைநோய் சார்ந்த.

**vaccin'ic**, *a.* அம்மைப்பால் சார்ந்த; அம்மைப்பால் போன்ற; அம்மைப்பால் தன்மையுடைய; ஆவினுக்குரிய.

**vac'illant**, *a.* ஊசலாட்டமான; தடுமாறுகிற; தயங்குகிற; நிலையற்ற.

**va'cillate**, *v.* ஊசலாடு; தயங்கு; எண்ண உறுதியின்றித் தடுமாறு.

**vac'illating**, *a.* ஊசலாடுகிற; தயங்குகிற; ஒருநிலைப்படாத.

**vacilla'tion**, *n.* ஊசலாட்டம், தயக்கம்.

**vac'illatory**, *a.* ஊசலாட்டமான; தடுமாற்றமான; தயங்குகிற.

**vac'uolar**, *a.* தொய்புழை சார்ந்த, காற்றும் நீர்மமும் அடங்கிய உடலின் உட்குழிவறைகள் சார்ந்த.

**vac'uolate, vac'uolated**, *a.* தொய்புழையார்ந்த, உடல்-உடலுறுப்புக்கள் வகையில் காற்றும் நீர்மமும் அடங்கிய உட்குழிவறைகள் நிரம்பிய.

**vac'uole**, *n.* காற்றும் நீர்மமும் அடங்கிய தொய்புழை, உடலுறுப்பின் உட்குழிவறை.

**vac'uous**, *a.* வெறுமையான, உள்ளீடற்ற; கூரறிவற்ற, மந்தமான; உணர்ச்சிப்பாடற்ற, மெய்ப்பாடற்ற; கருத்தற்ற.

**vac'uum**, *n.* பாழ்வெறுமை; காற்றொழி வெற்றிடம்; வளியகற்றப்பட்டுவிட்ட கலத்தின் உள்ளிடம்; (தொ.) vacuum cleaner, காற்றுறிஞ்சுதல் மூலம் தூசகற்றுங் கருவி; vacuum flask, காற்றொழி குவளை; வெப்ப-தட்ப நிலைக் காப்புக் குடுவை.

**vac'uum-brake**, *n.* புகைவண்டி வகையில் வளியீர்ப்புமூலஞ் செயற்படும் விசைத்தடுப்பு.

**vac'uum-tube**, *n.* வறுங்குழாய்.

**vad'e-mec'um**, *n.* கைச் சிற்றேடு, கையோடு கொண்டு செல்லத்தக்க சுவடி.

**vag'abond**, *n.* நாடோடி, நாடு குடியற்றவர்; உதவாதவர்; (பே-வ.) போக்கிரி; *a.* நிலையான இருப்பிடமற்ற; அலைந்து திரிகிற; இடம்விட்டு இடம் விரட்டப்படுகிற; சிலந்தி வகையில் பெரும்பாலும் ஓரிடத்தில் அமர்ந்திராத; *v.* (பே-வ.) அலைந்து திரி, நாடோடியாக நட.

**vag'abondage**, *n.* நாடோடி நிலை, நாடோடி இயல்பு; நாடோடிக் கும்பல்.

**vag'abondish**, *a.* சுற்றித்திரிகிற.

**vag'abondism**, *n.* நாடோடிப் பண்பு; போக்கிரிச் செயல்.

**vag'abondize**, *v.* சுற்றித்திரி.

**vagar'y**, *n.* விளங்காப் போக்கு; விளையாட்டுப்போக்கு; புரியாக் கோளாறு; எண்ணக் கோளாறு; நடைக் கோளாறு; பொருந்தாக் கருத்து; பொருந்தா நிகழ்ச்சி.

**vagin'a**, *n.* யோனிக் குழாய், பெண்ணின் கருப்பை வாய்க் குழாய்; உறை; *pl.* vagin'ae, vagin'as.

**va'ginal**, *a.* யோனிக் குழாய்க்குரிய.

**vag'inant**, *a.* உறையாகப் பொதிந்திருக்கிற.

**va'ginate, va'ginated**, *a.* பசுந்தாள் தோகையிணையுடைய; உறையிணையுடைய.

**vag'rancy**, *n.* சுற்றித் திரிவு, நாடோடித் தன்மை.

**vag'rant**, *n.* சுற்றி அலைபவர், பயனற்ற நாடோடி; (சட்.) சிறைச் சாலைக்கு அனுப்பப்படக்கூடிய சோம்பேறித் தெருச் சுற்றி; *a.* அலைந்து திரிகிற; சுற்றித் திரிகிற; நாடோடியான.

**vague**, *a.* தெளிவற்ற; உருத் திட்பமற்ற; உரு வரையறையில்லாத; உறுதியற்ற; துல்லிய மல்லாத.

**vail**, *v.* (பழ., செய்.) தாழ்த்து; தலைதாழ்த்து; தொப்பியை எடு.

**vails**, *n. pl.* (பழ.) கைம்மாறு, பணிக்கொடை, சிறு கைக்கூலி.

**vain**, *n.* வீணான தன்மை; *a.* வீணான, பயனற்ற; வெறுமையான; அற்பமான; தற்பெருமை வாய்ந்த; வீணான பெருமை காட்டிக்கொள்கிற; (தொ.) in vain, வீணாக, ஒரு பயனுமின்றி.

**vainglor'ious**, *a.* வீண் தற்புகழ்ச்சி செய்கிற; வீண் தற்பகட்டுடைய.

**vainglor'y**, *n.* தற்பெருமை, தற்புகழ்ச்சி; இறுமாப்பு, செருக்கு.

**vain'ly**, *adv.* வீணாக; பயனில்லாமல்; தற்பெருமையாக.

**vair**, *n.* வெண்மையும் வெண்ணீலமும் மிடைந்த அணில் மென்மயிர்த் தோல்; (கட்.) அணில் மென்மயிர்த் தோல் குறித்த வெண்மை வெண்ணீல மணிகளின் அல்லது கேடயங்களின் மிடை வரிசை.

**Vaish'nava**, (ச.) *n.* வைணவர், திருமால் அடியார்.

**vakeel', vakil'**, (இ.) *n.* வழக்குரைஞர்.

**val'ance**, *n.* சித்திரத் துகிலுறை, இருக்கை தட்டுமுட்டுப் பொதிவுப் பட்டாடை; விதானத் தொங்கல்.

**vale**[1], *n.* பள்ளத்தாக்கு; குழாயினின்று நீரைக் கொண்டு செல்லுஞ் சிறு கால்வாய்; வரைப் பள்ளம்.

**val'e**[2], *n.* வழியனுப்பு, பிரியா விடை; *int.* போய்வருக!

**valedic'tion**, *n.* பிரிவு வாழ்த்து; பிரிவுபசாரம்.

**valedic'tory**, *n.* பிரிவு வாழ்த்துரை; பட்டமேற்பின்போது மேல்வகுப்பு மாணவர் செய்யும் பிரிவு உபசாரச் சொற்பொழிவு; *a.* பிரிவு தெரிவிக்கிற; வாழ்த்தியலான; பிரிவு உபசாரச் சொற்கள் அமைந்த.

**val'ence**, *n.* வேதியியல் இணைவு; (வேதி.) இணைதிறம், நீரக அணுவுடன் ஒப்பிட்ட அளவில் பொருளணுவின் பிற அணு நீக்கி இணைவுறும் ஆற்றல் வீத அலகு; (உள.) தூண்டு விசையின் கவர்ச்சி ஈர்ப்புப் பண்புக்கூறு.

**Valen'cias**, *n. pl.* கலவைக் கரைத் துகில், பட்டு-கம்பளி-பருத்தி-சணல் கலந்த கரையிட்ட துணி வகை; வாதுமைப் பருப்பு; உலர் கொடிமுந்திரி.

**Valenciennes'**, *n.* உயர்ந்த வேலைச் சரிகைத் தொங்கல்.

**val'ency**, *n.* வேதியியல் இணைவு; (வேதி.) இணைதிறம், இணைவாற்றல் அலகு; (தொ.) valency electrons, வேதியியல் பண்புகளுக்குப் பெரிதுங் காரணமான அணுவின் புறக்கோடி வரிசை மின்மங்கள்.

**val'entine**, *n.* தூய திரு வாலண்டைனின் நினைவு விழாநாள் (St. Valentine's Day-பிப்ரவரி 14); தூய திரு வாலண்டைன் நினைவுநாளில் முதலில் காணப்படுபவராகக் கருதப்படும் உரிமைக் காதலர்; தூய திரு வாலண்டைன் நினைவுநாளில் பெறப்படும் மறை ஆர்வ உரிமைக் காதலன் மடல்.

**valeria'n**, *n.* சடாவல்லி, சடாமாஞ்சி வகை.

**val'et**, *n.* தாதன்; பெருமக்கள் குற்றேவல் தோழர்; *v.* தோழமைக் குற்றேவலனுயிரு, தோழமைக் குற்றேவல் புரி.

**valetudinar'ian**, *n.* நோய் நலிவாளர்; நோய் நலிவச்ச வாணர், உடல்நலக் கவலையாளர்; தெம்புநல ஆர்வலர்; *a.* நோய்நலிவான, உடல்நலக் குறைவான; உடல்நல நாட்டங் கொண்ட; உடல்நலக் கவலை மிகுதியுடைய.

**val'gus**, *n.* கோணை உருவம், உறுப்பு விளிம்புப் பகுதி வளைந்த உருக்கோட்டம்; முட்டுகாலர்.

**Valhall'a**, *n.* வீரத்துறக்கம், பண்டை ஸ்காந்தினேவிய புராண மரபில் இறந்த வீரர் விருந்திற்குரிய தெய்வ மாளிகை; மாண்ட வீரர் கல்லறை மாளிகை; மாண்ட வீரர் சிலைத் தொகுதிக்கூடம்.

**val'iance, val'iancy**, *n.* வீரம்; வீரச்செயல்.

**val'iant**, *a.* வல்லமை வாய்ந்த, வல்லமையான, வீரதீரமான.

**val'iantly**, *adv.* வீரதீரத்துடன்; தளரா ஊக்கத்தோடு.

**val'id**, *a.* நேர்மை வாய்ந்த, நேர் தகவுடைய; வாய்மைத் தகுதியுடைய; போதிய வாத ஆதாரமுடைய; ஒப்புக்கொள்ளத்தக்க; முறைப்படி அமைந்த; போதிய வலியுறவுடைய; செல்லத்தக்க; (சட்.) செல்லுபடியான, சட்டப்படி செல்லக் கூடிய.

**val'idate**, *v.* சட்டப்படிச் செல்லக்கூடியதாக்கு; உறுதிப் படுத்து, ஒப்புக்கொள்.

**valid'ity**, *n.* நேர்மைத் தகவு, வாய்மை உறுதிப்பாடு; முறைமைத் தகுதி; செல்லுபடியாகும் நிலை; வாதத் தொடர்பிசைவு வழாமை.

**valise'**, *n.* பயணப்பேழை, சிறுபயணப் பெட்டி; (படை.) படைவீரரின் பயணப்பை.

**vallec'ula**, *n.* (உள்., தாவ.) வரைத்தடம், சால்வரி; வரிப் பள்ளம், வரிபோன்ற பள்ள வடு; *pl.* vallec'ulae.

**vallec'ular, vallec'ulate**, *a.* (உள்., தாவ.) வரிப்பள்ளங் கொண்ட, சால்வரியுடைய.

**vall'ey**, *n.* பள்ளத்தாக்கு; பள்ளத்தாக்குப் போன்ற பகுதி; ஆற்றுப்படுகை; (க-க.) மோட்டு உள்மடிவு, கூரையின் தளங்கள் ஊடறுத்துச் செல்வதால் ஏற்படும் உட்கோணம்; *pl.* vall'eys.

**vallon'ia**, *n.* தோல் பதனீடு-மை ஆகியவற்றில் பயன்படும் கருவாலிக் கொட்டை வகை.

**vall'um**, *n.* பண்டை ரோமப் பழம்பொருட் சின்னங்களின் வகையில் கோட்டை அலங்கம்.

**val'orization**, *n.* அரசியல் விலைக்கட்டுறுதிப்பாட்டு ஏற்பாடு; அரசியல் விலை ஏற்றக் கட்டுறுதிப்பாடு.

**val'orize**, *v.* அரசியல் விலைக்கட்டுறுதிப்பாடு செய்; அரசியல் கட்டுறுதிப்பாட்டின்மூலம் விலைமதிப்பு உயர்த்து.

**val'orous**, *a.* வீரமுள்ள, தறுகண்மை வாய்ந்த; அஞ்சாத; பேராண்மையுடைய.

**val'our**, *n.* (செய்.) வீரதீரம், வல்லமை; பேராண்மை; அடுமிடல், அஞ்சாமை.

*valse*, *n.* (பிர., செர்.) இணைவுச்சுழல் ஆடல் வகை; இணைவுச் சுழல் ஆடல் இசை.

**val'uable**, *a.* பெருமதிப்பு வாய்ந்த; விலையேறிய; மதிப்பிடக்கூடிய; விலைமதிப்பிடக்கூடிய; (தொ.) for a valuable consideration, நல்ல தொகை வாங்கிக்கொண்டு; valuable consideration, (சட்.) பண வருவாய் எண்ணம்; (சட்.) பொருள்நிலை மேம்பாட்டு நோக்கம்.

**val'uables**, *n. pl.* அருங்கலப் பொருள்கள், விலைமதிப்புப் பொருள்கள்.

**val'uate**, *v.* மதிப்புக் காண்; தரம் கணி, விலை மதிப்பிடு, சொத்து மதிப்பிடு.

**valua'tion**, *n.* விலை மதிப்பீடு; விலைமதிப்பு; விலை.

**val'uator**, *n.* சொத்து மதிப்பீட்டாளர்; தரங் கணிப்பவர்.

**val'ue**, *n.* மதிப்பு; தகுதி; உள்ளார்ந்த தகவு; உள்ளார்ந்த நலம்; அருமை, விரும்பப்படுந் தன்மை; உயர் தகவு; தகை நேர்த்தி; செயல் தகவு; பயன்; பயன் தகுதி, பயன் மதிப்பு; பயன்வள மதிப்பு; பயன்வள மதிப்புக்கூறு; பண்பு மதிப்பு; விரும்பப்படும் பண்புக்கூறு; விலை; விலைமதிப்பு; வாங்கு திறன்; பொருள் மாற்றுத்திறன்; விலைக்கள மதிப்பு; வள ஆதாயத் தகுதி; மதிப்புத் தகுதி; மதிப்புத் தரம்; தகுதித்தரம்; தகுதி ஏற்றத் தாழ்வு நிலை; மதிப்பு ஏற்றத்தாழ்வு நிலை; மதிப்பு ஒப்பமைவு; தகை ஈடு; தகை ஒப்பு; மதிப்பீடு; சொல்லின் பொருட் குறிப்புத் திறம்; ஓவியக் கூறுகளின் ஒளிநிழல் வண்ண இசைவுத் தொடர்புறவுத்திறம்; (உயி.) வகுப்பீட்டில் படித்தரம்; (இசை.) காலநீடிப்பின் அளவு ஏற்றத்தாழ்வு நிலை; (கண.) சுட்டுமதிப்பு, உருவின் குறிப்பு மதிப்பெண்; *v.* விலை மதி; விலை மதிப்பிடு; விலைமதிப்புக் குறி; கணி; குறி; மதிப்பிடு; உயர்வாகக் கருது; உயர்வு கொடு; பெருமதிப்பளி; பெருமையாகக் கொள்; அருமையாகக் கொள்; அருமையாகப் பேணு; நலம்பேணிப் பெருமைகொள்; நலம் பாராட்டு; குறித்துப் பெருமைகொள்; தர மதிப்பிடு; (தொ.) face value, முகப்பு விலை; முகப்பு மதிப்பு; for value received, (சட்.) ஏற்கெனவே எதிர் மதிப்பீட்டுப்பொருள் பெற்றுக்கொண்ட தன்பேரில்; good value, மாற்றீட்டில் தக்க ஒப்பீடான மதிப்பு; surrender value, கைவிடு மதிப்பு, காப்பீட்டுத் தொகை வகையில் உரிய காலத்திற்கு முன்னே கைவிடுவதாயினும் பெறப்படும் மதிப்புத் தொகை; value payable post, சிப்ப முதலியவற்றின் வகையில் தொகை கட்டியெடுப்பு முறை அஞ்சல்.

**val'ued**, *a.* குறித்த விலையுடைய; குறிப்பிட்ட விலைமதிக்கப் பட்ட; மதிக்கப்பட்ட; விலையேறிய; மதிப்பேறிய; உயர்வாக மதிக்கப்பட்ட; அருமையாகப் பேணப்பட்ட.

**val'ueless**, *a.* மதிப்பற்ற; பயனற்ற; ஒன்றிற்கும் உதவாத.

**val'uer**, *n.* மதிப்புக் கணிப்பாளர்; உயர்மதிப்பு வைப்பவர்.

**val'val**, *a.* (தாவ.) சிதன்முறிகளாக வெடிக்கிற; (தாவ.) சிதன்முறிகளாக அமைந்த; மடிப்பிதழ் உறையமைந்த.

**val'var**, *a.* (உயி.) அடுக்கிதழ்களின் வழியே திறக்கிற; (உயி.) ஊடிதழ் சார்ந்த.

**val'vate**, *a.* ஊடிதழ் கொண்ட; தடுக்கிதழினையுடைய; ஒரு வழித் தடுக்கினைக்கொண்ட; மடிப்பிதழ்களாயமைந்த, அடுக்கிதழ்களாலான; (தாவ.) ஓரப் பொருத்துடைய, கவியாது ஓரங்களில் பொருந்துகிற.

**valve**, *n.* ஊடிதழ், தடுக்கிதழ்; (உள்., வில.) அடைப்பிதழ்; ஒருவழி அடைப்புத் தடுக்கு; ஓடு; (தாவ.) வெடித்த பூந்துகட் பையின் சிதன்முறி; (அரு.) மடக்குக் கதவின் மடிப் பிதழ்.

**valve'let**, *n.* இதழி, சிற்றூடிதழ், நுண்ணிய ஒருவழித் தடுக்கிதழ்.

**val'viform**, *a.* ஊடிதழ் வடிவான.

**val'vular**, *a.* ஒருவழியடைப்புச் சார்ந்த; ஒருவழிக் கதவு கொண்ட.

**valvulit'is**, *n.* குலையிதழ் அழற்சி, நெஞ்சுப்பையிலுள்ள ஒரு வழி அடைப்பிதழ் அழற்சி

**vam'brace**, *n.* முன்கைக் கவசம்.

**vamp[1]**, *n.* புதைமிதி முன்முகடு; போலி ஒட்டுப் புதுக்கீடு; போலிப்பகட்டு ஒட்டுப்பொருள்; தற்பொழுதைய போலி ஒட்டு இணைவு; தற்பொழுதைய போலி ஒட்டுத் துணைக் கருவி; *v.* புதைமிதிக்குப் புது முன் முகட்டுப் பகுதி இணை; தற்பொழுதைக்கு ஒட்டிட்டுச் சமாளி, ஒட்டிட்டுத் தீட்டிப் புதுக்கு, பகட்டிப் புதுக்கு; ஒட்டியிணைப்பிட்டுப் புதுவடிவங் கொடு; தற்பொழுதைக்குப் போலி ஒட்டுத் துணைக்கருவி கொண்டு சமாளித்து நடத்து; இலக்கிய எழுத்தாண்மை வகையில் பழைய துண்டுத் துணுக்குகளை இணைத்துப் புது உருவந் தந்து போலிப் பகட்டுநடை பயிலு; (பே-வ) கடு நடை நட; கடு உழைப்புச் செய்.

**vamp[2]**, *n.* ஆண்வேட்டை அணங்கு, ஆடவரைக் காதல் வேட்டையில் ஏய்த்துப் பறித்தாட்டும் பெண்; *v.* காதல் வேட்டையாடி ஆடவரை ஏய்த்துப்பறி; பசப்பி ஏய்.

**vamp'er**, *n.* போலி ஒட்டுச் செய்பவர்.

**vam'pire**, *n.* பிணமகன், கீழை ஐரோப்பிய பழங்கதை மரபில் உயிருள்ள மனிதரை இரைகொள்ளுஞ் செத்த மனிதன்; குருதி யுறிஞ்சும் பிசாசம், இரவில் கல்லறையை விட்டுவந்து உறங்கு பவரின் குருதியுறிஞ்சும் கொடும்பாவிகளின் ஆவி; பேய் வாவல், உறங்கும் மனிதர்-குதிரை-கால்நடைகளின் குருதி உறிஞ்சுமியல்புடைய கொடிய வௌவால் வகை; பணம் பிடுங்கிப் பேயர்; கொடும் பகற்கொள்ளையர்; கொடுஞ் சுரண்டலாளர்; ஆண் வேட்டையணங்கு; திடீர்மறைவுப் புழைவாய், நாடக மேடை வழக்கில் நடிகர் திடீரென்று மறை வதற்குரிய அடித்தளப் பொறிவாயில்.

**vam'pire-bat'**, *n.* பேய் வாவல், குருதியுறிஞ்சும் வௌவால்.

**vampi'ric**, *a.* குருதி உறிஞ்சும் இயல்புள்ள; கொடுஞ் சுரண்டற் பண்புடைய.

**vam'pirism**, *n.* குருதிப்பேய்க் கோட்பாடு, குருதியுறிஞ்சும் பேய்கள் உண்டு என்பதுபற்றிய நம்பிக்கை; குருதி உறிஞ்சு பண்பு; கொடுஞ் சுரண்டற்பண்பு.

**vam'pirize**, *v.* பேய் வாவலாகச் செயலாற்று; குருதி யுறிஞ்சு; கொடுஞ் சுரண்டல் செய்.

**vam'plate**, *n.* (வர.) ஈட்டிவீரர் ஏந்து கைக்கவசம், ஈட்டி யைத் தாழ்த்தி ஏந்தலாகப் பிடிக்கும்பொழுது கையைக் காக்குங் கவசத் தகடு.

**van[1]**, *n.* முன்னணிப்படை, கொடிப்படை; முன்னணிப் படைக் கப்பல், கொடிக்கப்பல், படை முன்னணி; முன்னணி; முன்னணித் தலைவர்களின் தொகுதி.

**van[2]**, *n.* வண்டி; கூண்டுவண்டி; தொடர்வண்டியின் பெட்டி; சரக்குவண்டி; காவலர் பெட்டிவண்டி; *v.* சரக்கு களைத் தொடர்வண்டிகளில் ஏற்றி அனுப்பு.

**van[3]**, *n.* கனி உலோகச் சல்லடை; (பழ., செய்.) இறக்கை; *v.* கனி உலோகக் கலவையினைச் சல்லடையிலிட்டு அரித்துத் தரம் பிரி; அலம்பித் தரம் பிரி.

**vanad'ium**, *n.* வெண்ணுகம், எஃகு வகைக்கு உரமூட்டப் பயன்படும் கடினமான சாம்பல்நிற உலோகத் தனிமம்.

**Van'dal**, *n.* (வர.) ரோமப் பேரரசின்மீது படையெடுத்தழித்த முரட்டு செர்மானிய இனத்தவர்; அழிவுகாரர்; கலையழிப் பவர், கலைப் பண்பழிப்பவர்; *a.* ரோமப் பேரரசினை அழித்த முரட்டு செர்மானிய இனஞ் சார்ந்த; கலையழிவு செய்கிற.

**Vandyke'[1]**, *n.* பிளாண்டர்ஸ் என்ற ஐரோப்பியப்பகுதி சார்ந்த புகழ்மிக்க வண்ண ஓவியர்; வான்டைக் என்ற புகழ் ஓவியர் வரைந்த ஓவியம்; *a.* கழுத்துக்குட்டை வகையில் கூர்நுதிப் பூவேலை விளிம்புடைய; ஆடை வகையில் கூர்நுதிப் பூவேலை விளிம்புப் பாணியினையுடைய; தாடி முதலியவற்றின் வருணனை வழக்கில் கூர்நுதி வாய்ந்த; பழுப்புநிற வகையில் வண்ண முனைப்புடைய.

**vandyke'[2]**, *n.* வான்டைக் என்ற பிளாண்டர்ஸ் பகுதி சார்ந்த புகழ் ஓவியர் வரைந்த ஓவியம்; கூர்நுதிகள் வாய்ந்த பூவேலை விளிம்புடைய கழுத்துக்குட்டை வகை; கழுத்துக் குட்டைப் பூவேலை விளிம்புக் கூர்நுதி; *v.* கூர்நுதி விளிம்பு வரும்படி துணியை வெட்டு.

**vane**, *n.* காற்றுடி; காற்றுடித் திசை காட்டி; நீரோட்டத்திசை காட்டி; கப்பல்தளக் காற்றுத் திசைகாட்டுங் கூம்பு; காற்று விசை ஆலையின் விசைவிசிறி அலகு; அளவாய்வுக் கருவி களின் காட்சிமுள்; கோணமானிக் காட்சிமுள்.

**vanes'sa**, *n.* பட்டாம்பூச்சி வகை, அழகிய வண்ணத்துப் பூச்சி வகை.

**vang**, *n.* பாய்மர இருதிசைச் சமநிலைக் கயிறு.

**van'gee**, *n.* கப்பல் நீரிறைக்குஞ் சுழல்வட்டுக் கருவி.

**van'guard**, *n.* தூசிப் படை, முன்னணிப் படை.

**vanill'a**, *n.* வனிலா அவரைச்செடி, மணமிக்க மலர்ச்செடி வகை; வனிலா அவரை; வனிலா அவரைச் சத்து, இனிப்புப் பண்டங்களுக்கு மணமூட்டுகிற வனிலா அவரைச் சாற்றி லிருந்து எடுக்கப்படுஞ் சத்து.

**vanill'ism**, *n.* வனிலா அவரைச் சத்துத் தொழிலாளர்களின் அரிப்புத் தோல்நோய் வகை.

**van'ish**, *n.* திடீர் மறைவு; (ஒலி.) ஒலி ஈறிழைவுக்கூறு; *v.* கண்மறைவுறு, இருந்தாற் போலிருந்து மறைந்து போ; படிப் படியாக மறைவுறு; மங்கி மறைந்து போ; காட்சியை விட்டு அகன்று போ; அழிவுறு, நிலையற்றுப் போ; இல்லாமற் போ; (கண.) இன்மையாகு, சுழியாகு.

**van'ishing**, *a.* காட்சியிலிருந்து மறைந்து போகிற; ஆவி யாகி மறைந்து போகிற.

**van'ishing-line**, *n.* கூடுவரை, காட்சிக்கோணத்தில் ஒரு புள்ளியில் சென்று இணைந்து மறைவதாகத் தோன்றும் இணை நேர்வரைகளுள் ஒன்று.

**van'ishing-point**, *n.* கூடுமுனை, காட்சிக் கோணத்தில் எல்லா இணைவரைகளும் சென்று மறைவதாகத் தோன்றும் புள்ளி.

**van'ity**, *n.* வீண் தற்பெருமை; இடம்பம், வெற்றாரவாரம்; வெறுமை, வீணிலை; பயனின்மை, பயனில் கோலம்; போலித் தன்மை; போலித் தோற்றம்; நிலையாமை; நிலையாத் தோற்றம்; மாயை; மாயத் தோற்றம்; விவிலிய ஏட்டுப் பழைய ஏற்பாட்டு வழக்கில் புறச்சமயச் சிறு புன் தெய்வம்; (தொ.) vanity bag, vanity box, vanity case, பகட் டொப்பனைப்பொருட் சேமகலம்

**vanq'uish**, *v.* வென்றடக்கு, வென்று கீழ்ப்படுத்து; முறியடி.

**vanq'uishable**, *a.* வென்றடக்கப்படக்கூடிய.

**vanq'uisher**, *n.* வென்றடக்குபவர்.

**va'ntage**, *n.* சார்புநலக் கூறு, சாதகமான கூறு; வாய்ப்புக் கூறு.

**vantage'-ground**, *n.* நல்வாய்ப்பு நிலை, அனுகூல நிலை.

**vantage'-point**, *n.* வாய்ப்பான இடநிலை, அனுகூலத் தானம்.

**vap'id**, *a.* சுவையற்ற, சப்பென்ற; கிளர்ச்சியூட்டாத; சலிப் பைத் தருகிற; உவர்ப்பூட்டுகிற.

**vapid'ity**, *n.* உவர்ப்பு; சப்பெனவு, சலிப்பூட்டுந்தன்மை.

**vaporabil'ity**, *n.* ஆவியாகும் இயல்பு; ஆவியாக்கப்படுந் தன்மை.

**vap'orable**, *a.* ஆவியாக மாற்றக்கூடிய; ஆவியாகக் கூடிய; ஆவியாகத்தக்க.

**vaporar'ium**, *a.* ஆவிக் குளிப்புக் கருவி; ஆவி முழுக்கறை, நீராவிக் குளிப்பறை.

**vaporif'ic**, *a.* ஆவியாகிற; ஆவியாகுந் தன்மையுடைய.

**vap'oriform**, *a.* ஆவி வடிவாயிருக்கிற, ஆவிவடிவில் அமைந் துள்ள.

**vaporim'eter**, *n.* ஆவி மானி; ஆவி அழுத்தமானி.

**vap'orizable**, *a.* ஆவியாக மாற்றக்கூடிய; ஆவியாக மாறக் கூடிய; ஆவியாக மாறத்தக்க.

**vaporiza'tion**, *n.* ஆவியாக்கம், ஆவியாக்குதல், ஆவி யாகுதல்.

(மரு.) குழந்தைப்பேற்றுத் துறையில் உறுப்புத் திரும்புமுக அமைதிப்பாங்கு; (தொ.) Authorized Version, விவிலிய ஏட்டின் இங்கிலாந்து அரசியல் திருக்கோயில் உரிமை வடிவமான 1604-11-ஆம் ஆண்டுகட்குரிய ஆங்கில மொழிபெயர்ப்பு; உரிமை மொழிபெயர்ப்பு விவிலிய ஏடு; Revised Version, விவிலிய ஏட்டின் 1870-84-ஆம் ஆண்டுகட்குரிய உரிமை பெற்ற திருத்த ஆங்கில மொழிபெயர்ப்பு, ஆங்கில மொழியின் உரிமைத் திருத்த விவிலிய மொழிபெயர்ப்பு ஏடு.

**ver'sional**, *a.* பதிப்பு வடிவஞ் சார்ந்த; தனிமுறை வடிவஞ் சார்ந்த; விளக்கத் திருவுருச் சார்ந்த; திரும்புமுக அமைதி சார்ந்த.

**versli'brist**, *n.* உறழ்தொடைச் சந்தக் கவிஞர், கட்டுப்பாடில்லாக் கவிபுனைவாளர்.

**vers'o**, *n.* நூலின் இடப்பக்கம்; நாணயப் பின்புறம்;

**verst**, *n.* ருசியநாட்டுத் தொலை நீட்டளவலகு; 3,500 அடி.

***vers'us***, *prep.* (சட்., வர.) மாறாக; எதிரி நிலையில்.

**vert¹**, *n.* (சட்.) வேட்டைப் பசுந்தழைக் காப்புவளம்; (சட்.) காட்டுத் தழைவள வெட்டுரிமை; (கட்.) பசுவண்ணச் சாயல் நிறம்.

**vert²**, *n.* மதம் மாறியவர்; *v.* மதம் மாறச் செய்.

**vert'ebra**, *n.* முள்ளெலும்பு, தண்டெலும்பின் ஒரு கண்ணி; *pl.* vert'ebrae.

**vert'ebral**, *a.* முதுகெலும்பு சார்ந்த, தண்டெலும்புக்குரிய.

**Vertebrat'a**, *n.* தண்டெலும்பி, முதுகெலும்புடைய விலங்கினப் பிரிவு.

**vert'ebrate**, *n.* தண்டெலும்பு விலங்கு; *a.* முதுகெலும்புடைய.

**vert'ebrated**, *a.* முதுகெலும்பு வாய்ந்த; தண்டெலும்பு போலமைவுற்ற.

**vertebra'tion**, *n.* முள்ளெலும்பாக்கம், தண்டெலும்புபோலக் கூறுக்கம் அமைதல்.

**vert'ex**, *n.* உச்சி, உச்சிமுனை, முகடு; (உள்.) மண்டை, தலை முகடு; (வடி.) முக்கோணத்தின் கோண முனை; (வடி.) கோணத்தின் முகட்டு முனை; (வடி.) பல் கட்டத்தின் கோடி முனை; *pl.* ver'tices.

**vert'ical**, *n.* செங்கோட்டு நிலை, நிமிர்வு நிலை; கிளர்வரை, செங்குத்துக் கோடு; எழுத்தளம், நிமிர்தளம்; நிலை வட்டம், நிமிர் நிலையான வட்டம்; *a.* முகடு சார்ந்த; நிமிர்வான; முனை குத்தான; செங்குத்தான; நிலை குத்தான; வான விளிம்புக்குச் செங்கோணத்திலுள்ள.

**vert'icil**, *n.* (தாவ., வில.) சீப்பு வட்டம்.

**verti'cillate, vert'icillated**, *a.* சீப்புவட்ட முறையான.

**verti'ginous**, *a.* கிறக்கமான, தலைசுற்றுகிற, கிறுகிறுக்கிற.

**verti'ginousness**, *n.* கிறக்க நிலை.

**vert'igo**, *n.* கிறக்கம், தலைசுற்றல், கிறுகிறுப்பு; *pl.* vert'igos.

**verv'ain**, *n.* தாயத்துப் பூண்டு, முற்காலத்தில் தாயத்தாகக் கட்டப்பட்ட களைப்பூண்டு வகை.

**verve**, *n.* தனிச்சுவை யார்வம்; ஆவேசம்.

**Ve'ry¹, Very light**, *n.* குறியடையாள வண்ண வேட்டொளி; (தொ.) Very pistol, குறியடையாள வண்ண வேட்டொளித் துப்பாக்கி.

**ve'ry²**, *a.* மெய்ம்மூலமான, மெய்ப்படிவமான; சொற்பொருளின் முழு நிறைவுடைய; போலி யல்லாத; *adv.* பெரிதளவில், மிகவும்; (தொ.) in very deed, உறுதியாக.

**vesi'ca**, *n.* சவ்வுப் பை; சிறுநீர்ப் பை.

**ves'icant**, *n.* கொப்புளம் உண்டாக்குவது; *a.* கொப்புளம் உண்டாக்குகிற, பொள்ளை வைக்கிற.

**ves'icate**, *v.* கொப்புளங்கள் எழச்செய், கொப்புளங்கள் உண்டாக்கு.

**ves'icatory**, *n.* கொப்புளம் உண்டாக்குவது, கொப்புளம் எழச் செய்யும் பொருள்; *a.* கொப்புளம் உண்டாக்குகிற.

**ves'icle**, *n.* (உள்., தாவ., மண்.) சிறு சவ்வுப் பை, சிறு கொப்புளம்; சிறு குமிழி; சிறு உட்குடைவுப் பொள்ளலிடம்.

**vesic'ular**, *a.* கொப்புளமுள்ள; குமிழியான.

**Ves'per¹**, *n.* அந்தி வெள்ளி; வெள்ளிக் கோள், சுக்கிரன்.

**ves'per²**, *n.* மாலை, அந்திப்பொழுது; கோயிலின் மாலை நேர மணி.

**ves'pers**, *n.pl.* திருக்கோயில் ஆறுவது வழிபாட்டு நேரம்; மாலைநேர வழிபாடு.

**ves'pertine**, *a.* அந்தி சார்ந்த; மாலையில் நிகழ்கிற.

**ves'piary**, *n.* குளவிக் கூடு.

**ves'pidae**, *n. pl.* குளவியினம்.

**ves'pine**, *a.* குளவி போன்ற; குளவியினஞ் சார்ந்த.

**ves'poid**, *a.* குளவி போன்ற; குளவி வடிவான.

**vess'el**, *n.* கொள்கலம், பாத்திரம்; மிடா; குப்பி; பானை; நாவாய், நீர்செல் கலம்; கப்பல்; பெரிய படகு; தூம்புக் குழாய்; (தாவ.) உயிரணுக் கோவை, இடைத்தடுப்புப் பிரிவுகள் இழந்த உயிரணுக்களின் தொடர்; (தொ.) the weaker vessel, பெண்பாலர்.

**vest**, *n.* மெய்க்கச்சு, கையில்லாத அரைச்சட்டை; பின்னப்பட்ட உள்ளாடை; மகளிர் சட்டையின் முனைக்கோணுருவுடைய முன்பகுதி; (பழ.) ஆடை; *v.* அதிகாரங் கொடு; சொத்துரிமை மேலாட்சி கொடு; உடைமை வழங்கு; மரபு உரிமைக்கு இலக்காக்கு; பிற்கால உரிமைக்குத் தகுதி உடையவராக்கு; (செய்.) ஆடை அணிவி, உடையுடுத்து.

**Ves'ta¹**, *n.* இல்லம்மன், இல்லுறை தெய்வம், பண்டை ரோமரின் சமய மரபு வழக்கில் அடுக்களைப் பெண்தெய்வம்; இல்லாயி, செவ்வாய்க் கோளுக்கும் வியாழக்கோளுக்கும் இடையே செல்லும் 1546 குறுங்கோள்களுள் 1807-ஆம் ஆண்டில் கண்டுணரப்பட்ட நான்காவது பெரும்படிக் குறுங்கோள்.

**ves'ta²**, *n.* தீக்குச்சி; மெழுகுக் காம்புடைய தீக்குச்சி வகை.

**ves'tal**, *n.* கன்னிகை; *a.* கன்னிமை பொருந்திய.

**vest'ed**, *a.* உரிமை நிலவரமாக அளிக்கப்பட்ட, உரிமை அறுதியுறப்பெற்ற; (தொ.) vested estate, உரிமை வரையறை சார்ந்த உடைமை; vested interests, அதிகாரநலக் கும்பல்; உரிமைக் கும்பல்.

**ves'tibule**, *n.* முன்கூடம், வீட்டின் முன் அறை; திருக்கோயிலின் முகமண்டபம், படிவாயில்; இடைகழி, இடைகழிக் கூடம்; (உள்.) ஊடுதாய்க் குழாய், மற்ற எல்லாக் குழாய்களோடும் தொடர்புடைய பெரிய நடுக்குழாய்; (தொ.) vestibule of the ear, காது மையப் புழை; vestibule train, ஒருபெட்டியிலிருந்து அடுத்த பெட்டிக்குச் செல்ல நேர்வழியுடைய இரயில் வண்டி.

**ves'tige**, *n.* தடம், சாயல், சான்றடையாளம்; (உயி.) பயனற்றழிந்துபோன உறுப்பின் எச்சப்பகுதி.

**vesti'gial**, *a.* எச்சத் தடமான; கருத் தடமான.

**ves'titure**, *n.* பதவி ஆடையணிவிப்பு; உடுத்த ஆடைத் தொகுதி; (உயி.) மூடுமயிர்த் தொகுதி; (வில.) மூடுசெதிள் தொகுதி.

**vest'ment**, *n.* பணித்துகில்; சமய உடுப்பு.

**vest'-pocket**, *n.* உட்சட்டைப் பை; *a.* கைப்பை அளவான.

**ves'try**, *n.* திருக்கோயில் ஆடையறை; திருக்கோயில் துணைத் தொழுகையிடம்.

**ves'try-clerk**, *n.* திருக்கோயில் வாரியக் கணக்கர்.

**ves'ture**, *n.* (செய்.) அணியாடை; மேற்போர்வை; *v.* ஆடை அணிவி, உடையுடுத்து.

**ves'turer**, *n.* பணித்துகில் காப்பாளர்.

**Vesuv'ian¹**, *a.* வெசூவியஸ் என்ற எரிமலை சார்ந்த.

**vesuv'ian²**, *n.* சுருட்டுப் பற்றவைப்புக் குச்சு; *a.* எரிமலைக் குரிய.

**vesuv'ianite**, *n.* வெசூவியஸ் எரிமலையில் முதன் முதலிற் காணப்பட்ட களிமக் கலவை வகை.

**vet**, *n.* (பே-வ.) விலங்கு மருத்துவர் ; *v.* கால்நடைப் பண்டுவஞ் செய் ; தணிக்கை செய்.

**vetch**, *n.* கால்நடைத் தீவனமாகப் பயன்படும் பட்டாணி இனச் செடி வகை.

**vetch'ling**, *n.* பட்டாணியினச் செடி வகை.

**vet'eran**, *n.* முதுவர் ; துறைபோனவர் ; ஓய்வுபெற்றுள்ள படைத்துறை வீரர் ; நீடித்த அனுபவ முடையவர் ; *a.* துறை போன ; நீடித்த அனுபவமுடைய.

**vet'erinary**, *n.* விலங்கு மருத்துவர் ; *a.* விலங்கு மருத்துவஞ் சார்ந்த ; (தொ.) veterinary college, கால்நடை மருத்துவக் கல்லூரி ; veterinary science, கால்நடை மருத்துவ நூல் ; veterinary surgeon, கால்நடை மருத்துவர்.

**vet'iver**, (த.) *n.* வெட்டிவேர்.

**vet'mobile**, *n.* ஏலாதவர்க்காகத் தனிப்பட அமைக்கப்பட்ட உந்துகலம்.

**vet'o**, *n.* தடுப்புமுறை, மறுப்புமுறை ஆணை ; *v.* தடுப்பு முறை செய், மறுப்புமுறை ஆணை செலுத்து ; தடுத்து நிறுத்தும் உரிமை கையாளு, உரிமைப்படி தடுத்து நிறுத்து ; (தொ.) suspensory veto, தற்கால நிறுத்தி வைப்பு.

**vet'oist**, *n.* தடுத்து நிறுத்துபவர், மறுப்புமுறை ஆணை கையாளுபவர்.

*vettu'ra*, (இத்.) *n.* இத்தாலி நாட்டின் நான்கு சக்கர வண்டி வகை.

**vex**, *v.* எரிச்சலூட்டு ; தொல்லை கொடு ; நச்சரிப்புச் செய் ; கண்டதும் வெறுப்படையச் செய் ; (செய்.) கடல் முதலியன வகையில் கொந்தளிக்கச் செய்.

**vexa'tion**, *n.* அலைக்கழிப்பு, தொந்தரவு ; எரிச்சல்.

**vexa'tious**, *a.* தொந்தரவு தருகிற, எரிச்சலூட்டுகிற.

**vex'atory**, *a.* தொந்தரவு தருகிற, எரிச்சலூட்டுகிற.

**vexed'**, *a.* தொந்தரவான ; (தொ.) a vexed question, அடிபட்டு மிகு தொல்லை தந்துள்ள செய்தி ; நீடித்து விவாதிக்கப் பட்ட செய்தி.

**vex'edly**, *adv.* எரிச்சல் கொண்ட நிலையில்.

**vex'illar**, *a.* தானைக் கொடிக்குரிய.

**vex'illary**, *n.* தானைக் கொடியேந்தி ; கொடிக்குரிய தானை வீரர் ; *a.* தானைக் கொடிக்குரிய ; தானைக்குரிய.

**vex'illate**, *a.* இறகு வகையில் இழைத் துய்யிணையுடைய.

**vexilla'tion**, *n.* தானைக் கொடிக் கீழ் அனுப்பப்படும் படை வீரர் தொகுதி.

**vexill'um**, *n.* பண்டை ரோமர் வழக்கில் தானைக்கொடி ; தானை ; சமய மாவட்ட முதல்வர் பணிமுறைக்கோல் துகில் ; இறகின் துய்யிழை ; (தாவ.) பதாகை, அவரையின மலர் மீயிதழ் ; *pl.* vexill'a.

**vex'ing**, *a.* நச்சரிக்கிற.

**vex'ingly**, *adv.* எரிச்சல் தரும் வகையில்.

*vi'a*, (ல.) *n.* வழி ; *prep.* வழியாக.

**viabil'ity**, *n.* ஒப்பேறு வாய்ப்பு நிலை ; வாழலாந்தன்மை.

**vi'able**, *a.* வாழக்கூடிய ; ஒப்பேறக்கூடிய ; உருப்படக்கூடிய ; வளம்பெறக்கூடிய.

**vi'aduct**, *n.* பாலம் ; மேம்பாலப்பாதை.

**vi'al**, *n.* சிறு குப்பி, புட்டி.

**vi'alled**, *a.* குப்பியில் அடைக்கப்பட்டுள்ள.

*vi'a med'ia*, (ல.) *n.* இடைநிலை நெறி, பொது இடையீட்டு முறை.

**viam'eter**, *n.* சகடத் தொலைவுமானி ; மிதிவண்டித் தொலைவு மானி.

**vi'ands**, *n. pl.* உண்டி வகைகள் ; உணவுப்பண்ட வகைகள் ; துணையுணவு வகைகள்.

**viat'icum**, *n.* அரசாங்க அலுவலர் பயணப்படி ; இறுதிக் காலத் தெய்வ நற்கருணை வினைமுறை ; இயங்கு திருநிலைப் பீடம்.

**vibrac'ulum**, *n.* இழை உயிர்மக் கை, தொகையுயிரி இனத்தில் துடுப்புப்போல் இயங்கி உணவை அருகிழுக்கும் தனி உயிர்ம உறுப்பு ; *pl.* vibrac'ula.

**vib'rant**, *a.* அதிர்கிற, அதிர்வலைவுடைய ; துடிப்பதிர்வுடைய ; உடல் சிலிர்க்கச்செய்கிற ; உணர்ச்சியூட்டுகிற ; ஒலி வகையில் அதிர்முழக்கமுடைய.

**vibrate'**, *v.* அதிர்வுறு ; ஊசலாடு ; நினைவில் அதிர்ந்தியங்கு ; உடல்சிலிர்க்கச் செய் ; உணர்ச்சியால் உள்ளதிர்வுறு ; ஊசலாடத் தூண்டு ; (இய.) துடிப்பதிர்வுறு, அலைவதிர்வுறு.

**vib'ratile**, *a.* அதிரக்கூடிய ; அதிர்ச்சியுறத்தக்க ; துடிக்கக் கூடிய, ஊசலாடக்கூடிய.

**vibratil'ity**, *n.* அதிர்வுறுந்தன்மை.

**vibra'tion**, *n.* அதிர்வு ; அலைவதிர்வு ; துடிப்பதிர்வு ; விரை ஊசலாட்டம்.

**vibra'tional**, *a.* துடிப்பதிர்வுச் சார்பான.

**vibrat'iuncle**, *n.* சிற்றதிர்வு.

**vib'rative**, *a.* விரைவாக ஊசலாடுகிற ; அதிர்கிற, துடிக்கிற ; நடுங்குகிற ; துடிக்கச் செய்கிற.

**vibrat'or**, *n.* அதிர்வுறுபவர், அதிரி, அதிர்வுறுவது ; (இசை.) இசைப்பெட்டியின் இசைக்கட்டை.

**vib'ratory**, *a.* துடிப்பதிர்வு சார்ந்த ; அதிர்வுடைய.

**vibriss'ae**, *n. pl.* மீசைமயிர், பால்குடியுயிர்களின் வாயைச் சுற்றியுள்ள திண் மயிரிழை ; மூக்கிழை, மூக்குத் துளை மயிர்.

**vib'ronic**, *a.* (இய.) மின்ம அதிர்வு சார்ந்த.

**vib'roscope**, *n.* அதிர்வுக் காட்சிக் கருவி.

**vic**, *n.* கவை (V) வடிவ வானூர்தி.

**vic'ar**, *n.* ஆட்பேர் ; பகர ஆள் ; முகவர் ; ஊர் மதகுரு ; செயல் துணைவர், சட்டம்-ஆட்சி எல்லை ஆகியவற்றில் ஆலோசனை கூறும் சமய மாமுதல்வரின் உதவியாளர் ; (தொ.) Vicar of Jesus, Vicar of Christ, போப்பாண்டவர்.

**vic'arage**, *n.* ஊர்வட்டக் குருவின் மானியம் ; ஊர்வட்ட மதகுருவின் இல்லம்.

**vicar'iate**, *a.* ஒருவருக்குப் பதிலாக அதிகாரம் பெற்ற.

**vicar'ious**, *a.* ஊர்வட்டச் சமய குருவாக அமர்த்தப்பட்ட ; ஆட்பேராகச் செயலாற்றுகிற ; பதிலாளாகத் துய்க்கிற ; (தொ.) vicarious sacrifice, இயேசுபெருமானின் பொது நலத் தற்பலியீடு.

**vic'arship**, *n.* ஊர்வட்ட மதகுருப் பதவி ; பதிலாள் நிலை.

**vice**[1], *n.* குற்றம் ; தீயொழுக்கம் ; கடுங்குற்றம் ; கீழ்த்தரச் சூழ்ச்சி.

**Vice**[2], *n.* முற்கால ஒழுக்கமுறை நாடகத்திற் பாவ உறுப்பினன் ; பாவ உறுப்பினனாக நடித்த கோமாளி.

**vice**[3], *n.* நிலையிடுக்கி, நெரிகுறடு ; *v.* நிலையிடுக்கியால் பற்றி நெரி.

*vi'ce*,[4], (ல.) *prep.* இடத்தில், பதிலாக.

**vice-chair'man**, *n.* துணைத்தலைவர்.

**vice-cham'berlain**, *n.* உள்படு கருமத் துணைத் தலைவர், அரசகுடும்ப அலுவல் துணை உயர் அதிகாரி.

**vice-chan'cellor**, *n.* பல்கலைக்கழகத் துணைவேந்தர் ; (சட்.) உயர்நீதி மன்றப் பொதுநேர்மைப் பிரிவு நடுவர் ; போப்பாண்டவரின் திருக்கட்டளைப் பொறுப்பாளர்.

**vice-con'sul**, *n.* அயலிட நாட்டுத் துணைப்பேராள்.

**vice-con'sulship**, *n.* அயலிட நாட்டுத் துணைப் பேராள் நிலை.

**vice-dean'**, *n.* துணைச்சமய குரு ; பல்கலைக்கழகத் துணை முறை முதல்வர்.

**vicege'rent**, *n.* பிரதிநிதியாகச் செயலாற்றுபவர் ; பகர ஆள், ஆட்பேர்.

**vice-king'**, *n.* மன்னர் பேராளர் ; அரசப் பிரதிநிதி ; முன் முகவர்.

**vicenn'ial,** *a.* இருபது ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழ்கிற ; இருபது ஆண்டுகளுக்கு நீடிக்கிற.

**vice-pres'ident,** *n.* துணைப்பெருந்தலைவர் ; குடியரசின் துணைத்தலைவர்.

**vice-pres'identship,** *n.* துணைத்தலைவர் நிலை.

**vice-prin'cipal,** *n.* துணைமுதல்வர்.

**vicereg'al,** *a.* அரசப் பிரதிநிதி சார்ந்த ; அரசப் பிரதிநிதிக் குரிய.

**vice'reine,** *n.* அரசப் பகர ஆள் மனைவி.

**vice'roy,** *n.* பதில் ஆளுநர் ; குடியேற்ற நாடுகள் முதலிய வற்றில் ஆட்சிசெய்யும் அரசப் பிரதிநிதி.

*vi'ce vers'a,* (ல.) *adv.* எதிரெதிர் மாறாக; நிலையெதிர்மாறாக.

**Vi'chy, Vi'chy water,** *n.* கனிம நீர், கனிச்சத்துக்கள் நிறைந்த குடிநீர்.

**vi'cinage,** *n.* அயலிடம்.

**vicin'ity,** *n.* அணிமை ; சுற்றுப்புறம்; அருகாமை.

**vi'cious,** *a.* கயமையான ; ஒழுக்கச் சீர்கேடான ; நேர்மைக் கேடுடைய ; கொடிய ; கேடு விளைக்கிற ; கடுங்குற்றமான ; தீயொழுக்க ஈடுபாடுடைய ; குதிரை வகையில் குறும்புச் சூழ்ச்சியுடைய ; மொழி-ஆய்வு வகையில் சரியற்ற ; குற்ற முள்ள ; நேர்மையாயிராத, தூய்மையற்ற ; கோபமுள்ள ; வஞ்சங்கொண்ட, உட்பகையுடைய ; (தொ.) vicious circle, நச்சுச் சுழல், சுற்றிச் சுற்றி ஒரே இடத்திற் கொண்டுவந்து விடும் வழி.

**viciss'itude,** *n.* மாற்றம் ; நிலைமாற்றம்.

**vic'tim,** *n.* பலியாள் ; பலியுயிர்.

**vic'timize,** *v.* பலியிடு ; இரையாக்கு.

**vic'tor,** *n.* வெற்றி வீரர் ; வாகையாளர்.

**Victor'ia** [1], *n.* பிரிட்டனை 1837 முதல் 1901-வரை ஆண்ட அரசி ; (தொ.) Victoria Cross, வீரப் பதக்கம்.

**victor'ia** [2], *n.* நாற்சக்கர வண்டி வகை.

**Victor'ian,** *n.* விக்டோரியா அரசி காலத்தவர் ; *a.* விக்டோரியா அரசி (1837-1901) காலஞ் சார்ந்த.

**victorine',** *n.* (வர.) குறுந்தோட் குட்டை, நீண்டு ஒடுங்கிய முனைகளுள்ள மகளிர் கம்பளித் தோள்குட்டை ; குளிர் மண்டல மர வகை.

**victor'ious,** *a.* வாகைசூடிய ; வெற்றிப் புகழ்வாய்ந்த ; வெற்றி ஆரவாரத்துடன் கூடிய ; வெற்றி முழக்கெழுப்புகிற.

**vic'tory** [1], *n.* வெற்றி, போரில் வாகை சூடிய நிலை; போட்டிக் கெலிப்பு.

**Vic'tory** [2], *n.* வென்றியஞ் செல்வி, பண்டைக் கிரேக்க மரபு வழக்கில் வெற்றிக்குரிய பெண் தெய்வம் ; வென்றியஞ் செல்வியின் சிலை.

**vic'tress, vic'trix,** *n.* வெற்றி வீரமகள்.

**vict'ual,** *n.* உணவு ; *v.* உண்டி தருவித்து அளி.

**vict'uallage,** *n.* உணவுப்பொருள்கள் தொகுதி.

**vict'ualler,** *n.* உணவுப்பொருள் வழங்குவோர் ; உணவுப் பொருள் விற்பவர்.

**vict'ualling,** *n.* உணவுப்பொருள் தருவிப்பு ; உணவுப் பொருள் வழங்கீடு.

**vic'tuals,** *n. pl.* உணவுபொருட்கள்.

**vicu'gna, vicu'na,** *n.* கம்பளி வகைக்கு உரோமம் அளிக்கும் தென் அமெரிக்க ஒட்டக இன விலங்கு வகை.

*vid'e,* (ல.) *v.* காண்க ; (தொ.) quod vide, மற்றிதனைப் பிறி தோரிடத்திற் காண்க.

**vid'ebut,** *n.* தொலைக்காட்சியில் முதன்முதலாகத் தோன்று தல்.

*vid'e infra,* (ல.) (தொ.) கீழே பார்க்க.

*videl'icet,* (ல.) *adv.* (சு-வ. viz.) அதாவது, அஃது என்ன வெனில் ; அவையாவன.

**vid'eo,** *n.* அமெரிக்க வழக்கில் தொலைக்காட்சி ; *a.* தொலைக் காட்சி போன்ற மீ அதிர்வுடைய.

**videol'ogist,** *n.* தொலைக்காட்சிப் பேரார்வலர்.

*vid'e supra,* (ல.) (தொ.) மேலே பார்க்க.

**vidette',** *n.* முந்தெல்லை அரண் காவலர்.

*vid'imus,* (ல.) *n.* கணக்கு மேற்பார்வை ; ஆவணச் சுருக்கக் குறிப்பு.

**vie,** *v.* மேம்படப் போட்டியிடு, போட்டியில் வென்று மேம்பட முயற்சி செய்.

**Viennese',** *n.* வியன்னு (Vienna) நகரக் குடிவாணர் ; *pl.* Viennese' ; *a.* வியன்னு நகரஞ் சார்ந்த ; வியன்னு நகரி லுள்ள.

**view,** *n.* நோக்கு ; காட்சி ; பார்வை ; சுற்றுப்பார்வை ; காட்சியெல்லை ; பொதுக்காட்சி ; இயற்கைக்காட்சி ; உருக் காட்சி ; தோற்றரவு ; தோற்றம் ; தோன்றுதிறம் ; பார்வைக் கோணம் ; தோற்றக்கோணம் ; கருத்து ; கருத்து நோட்டம் ; கவனம் ; கருத்துச் சார்பு ; கருத்துச் சாய்வு ; கருத்துப் பாங்கு ; கருத்துச் சாயல் ; கருத்துக்கோணம் ; கொள்கை ; கோட்பாடு ; எண்ணம் ; உட்கருத்து ; உள்நோக்கம் ; கார ணம் ; நோக்கம் ; அவா நோக்கு ; எதிர்நோக்கு ; எதிர்காலம் பற்றிய கருத்து ; காரியம், செயல்நோக்கம் ; (சட்.) பார்வை யீடு, மேற்பார்வை ; கண்காணிப்பு நோக்கு ; சுருக்க வழக்கு மரபில் தொலைக்காட்சி ; *v.* காண் ; நோக்கு ; பார் ; சுற்றிக் காண் ; கவனி ; கருது ; எண்ணு ; எண்ணிப்பார் ; கருத்துக் கொள் ; கண்டு முடிவுசெய் ; கண்டு மதிப்பிடு ; உள்ளத்தில் கொண்டு ஆய்வுசெய் ; சீர்தூக்கி ஆராய் ; உள்ளத்தில் திட்ட மிட்டுக் காண் ; தொலைக்காட்சியில் காண் ; பார்வையிடு ; கண்காணிப்பு நோக்குச் செலுத்து ; (தொ.) have in view, குறிக்கோளாகக் கொள் ; செயல் முடிவு முன்னிட்டுச் சூழ் நிலையை மனத்திற் கொள் ; in view, காட்சியில் ; கருத்தில் ; குறிக்கோளாக ; வருநிலை வாய்ப்பு வளமாக, அவா நோக்க மாக ; in view of, காரணமாக, முன்னிட்டு ; பார்வையில், முன்னிலையில் காணும்படி ; காணப்படும்படி ; on view, பொது ஆய்விற்கு, யாரும் பார்க்கும்படியாக ; பொதுமக்கள் பார் வைக்குரிய இடத்தில்; point of view, நோக்குநிலை, நோக்குக் கோணம் ; கருத்துக் கோணம் ; to the view, வெளிப்படை யாக, பொதுவிடத்தில் ; view away, மறைவினின்றும் வெளிப்படுவதைப் பார் ; with a view to, கருத்திற்கொண்டு; என்ற நோக்கத்துடன்.

**view'able,** *a.* காணத்தக்க, பார்க்கக்கூடிய ; கருதி நோக்கக் கூடிய, கருதத்தக்க.

**view'er,** *n.* தொலைக்காட்சியாளர், தொலைக்காட்சிக் கருவியில் காண்பவர்.

**view'-finder,** *n.* (நி-ப.) பட எல்லைக்காட்சி வரை, படத்தின் எல்லைகளைக் காட்டும் நிழற்படக் கருவியின் பகுதி ; காட்சிக் கைப்படக் கருவி.

**viewhalloo',** *n.* புறப்பாட்டுக் கூவிளி, நரி மறைவினின்றும் வெளிப்படுவதைக் காணும் வேட்டையாளரின் கூவொலி.

**view'less,** *a.* புலப்படாத, காட்சிக்குட்படாத.

**view'ly,** *a.* (பே-வ.) காட்சிக்கு இனிய.

**view'point,** *n.* காட்சிக்கோணம் ; கருத்துக்கோணம்.

**view'y,** *a.* (பே-வ.) விசித்திரக் கருத்துப்போக்குடைய ; விசித்திரப் புனைவியல் கருத்துக்கள் கொண்ட ; வெறிப் போக்குடைய, தனிவெறிப் பாங்கான.

**vi'gil,** *n.* விழிப்பு நிலை ; இரா விழிப்பு.

**vi'gilance,** *n.* எச்சரிக்கை நிலை ; தன்விழிப்பு நிலை ; விழிப்பா யிருத்தல் ; (மரு.) உறக்கமின்மை ; உறு கவனிப்புடைமை ; தன் விழிப்பு நிலை; (தொ.) vigilance committee, விழிப்புக் குழு.

**vi'gilant,** *a.* விழிப்புள்ள, எச்சரிக்கையாயிருக்கிற.

**vigilan'te,** *n.* நிலவர அமைதிக் காப்புக்குழு உறுப்பினர்.

**vi'gils,** *n. pl.* இரவு வழிபாடுகள் ; பண்டிகை முன்னுள் பட்டினி நோன்பு.

**vignette′**, *n.* (க-க.) தளிர்க்கொடி ஒப்பனை வேலைப்பாடு; முகப்பெழுத்துச் சித்திர வேலைப்பாடு, முற்காலக் கையெழுத்துப் படிகளுக்குரிய தலைப்பெழுத்துப் பூவேலை ஒப்பனைக் கோலம்; புத்தக முதற்பக்கப் பின்னணிப் பூவேலைமானம்; பெயர்ப்பக்க முகட்டுப் பூவேலை; பெயர்ப்பக்க அடிவரிப் பூவேலை; நிழற்படப் பின்னணிக் கொடிவரிக் கோலம்; கொடிவரைப் பின்னணிப் பட முகப்போவியம்; இலக்கிய எழுத்தாண்மைக் கலைத்துறையில் பண்புரு மணி ஓவியம்; *a.* கொடிவரைப் பின்னணிப் படமுகப்போவியம் வரை; நிழற்படப் பின்னணிக் கொடிவரிக்கோலம் அமை; பட முகப்பைக் கொடிவரிக் கோலத்தில் சென்றிழைவுறச் செய்.

**vig′orous**, *a.* உள்ளுரம் வாய்ந்த; திடமான, உடல்நல உறுதி வாய்ந்த; விசையாற்றலுடைய; படு சுறுசுறுப்பான; திட்ப விறுவிறுப்புடைய; இலக்கியநடை வகையில் மணிச்செறிவு வாய்ந்த, உயிரோட்டமுடைய.

**vig′our**, *n.* விசையூக்கம்; திடம், வலிமை, உடல் உறுதி நலம்; ஆண்மை, ஊற்றம்; உயிர்த்துடிப்பு, விறுவிறுப்பு; ஆற்றல்வளம்; ஆற்றல்விசை; மணிச் செறிவு; செறி சுருக்கம்.

**vik′ing[1]**, *n.* முற்கால ஸ்காந்தினேவிய கடற்கொள்ளை வீரர்.

**Vik′ing[2]**, *n.* மீவளியாய்வு ஏவுகலம், 135 கல் முதல் 200 கல் உயரம் வரையுள்ள மீவளி மண்டல ஆராய்ச்சிக்காக 1946-ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட அமெரிக்க ஏவுகலம்

**vile**, *a.* இழிந்த; மதிப்பில்லாத; அடிமைப்புத்தியுள்ள; வெறுக்கத்தக்க; கவைக்குதவாத, பயனற்ற.

**vilifica′tion**, *n.* பழி தூற்றரவு, அவதூறு; இழிவசவு; மாசு கற்பித்தல், இழிப்பு, நிந்தனை.

**vil′ify**, *v.* நிந்தி, பழிதூற்று, மாசு கற்பி; இழிவுபடுத்து.

**vil′ipend**, *v.* (செய்.) வெறுப்பாக நடத்து; பழித்துரை; இழிவேற்று; மதிப்புக் குறைவாகப் பேசு.

**vill′a**, *n.* நாட்டுப்புற மாளிகை, தோட்டஞ் சூழ்ந்த மனை; நகர்ப்புற மனை.

**vill′age**, *n.* கிராமம்; நாட்டுப்புறப் பகுதி.

**vill′ager**, *n.* கிராமத்தார்; நாட்டகத்தார்.

**vill′ain**, *n.* போக்கிரி, பாதகன்.

**vill′ainage**, *n.* பண்ணையாள்முறை.

**vill′ainous**, *a.* போக்கிரித்தனமான; மிகக் கொடிய; (பே-வ.) பொறுக்க முடியாத அளவிற்குக் கெட்ட.

**vill′ainy**, *n.* போக்கிரித்தனம்.

**vill′ein**, *n.* (பழ.) தொன்மை வழக்கில் தனிநிலை ஊரவர்; (பழ.) தொப்பறைக் குடியாள், அடிமைத் தளைப்பு இல்லாமலே அடிமை நிலையிலுள்ள குடியானவர்; (பழ.) அகப்படியர், பண்ணைத் தலைவர் உரிமைப் பத்திரப்படியிலேயே உரிமை வழங்கப்பட்ட குடியானவர்.

**vill′einage, vill′enage**, *n.* பண்ணையாள் முறை.

**vill′iform**, *a.* துய்யிழை போன்ற, துய்யிழை வடிவான.

**vill′ose, vill′ous**, *a.* துய்யிழை போர்த்த; துய்யிழைகளாலான.

**vill′us**, *n.* குடற் சளிச் சவ்வின் மேலுள்ள சிறு மயிர்போன்ற உறுப்புக்கள்; குடற் பிசிறு; (தாவ.) கனிகளின் மேலும் மலர்களின் மேலும் மூடியுள்ள மயிர்போன்ற துய்; *pl.* vill′i.

**vim**, *n.* (பே-வ.) தெம்பு, ஊக்கம்.

**vim′inal**, *a.* சுள்ளிகள் சார்ந்த; சுள்ளியலான.

**vemin′eous**, *a.* (தாவ.) நீள்தொய்வுத் தண்டுடைய.

**vi′na**, (ச.) *n.* வீணை.

**vina′ceous**, *a.* கொடிமுந்திரி சார்ந்த; கொடிமுந்திரித் தேறல் சார்ந்த; செந்நிறமான.

**vinaigrette′**, *n.* நெடிக் குப்பி, முகர்ந்து பயன்படுத்துவதற்குரிய மருந்து நெடியுடைய புட்டி; நறுமணப் புளிக்காடிப் புட்டி.

**vin′al**, *a.* கொடிமுந்திரிப் பழத்தேறல் சார்ந்த; கொடிமுந்திரித் தேறலுக்குரிய.

**vin′cible**, *a.* (அரு.) வென்றடக்கக் கூடிய.

**vin′culum**, *n.* (கண.) தொகுதிக் கோடு, மேல்வரி அடைப்புக் கோடு; *pl.* vin′cula.

**vindicabil′ity**, *n.* நிறுவு தகைமை; மெய்ப்பிப்புத் தகவு.

**vin′dicable**, *a.* மெய்ப்பிக்கத்தக்க; வெற்றியுற நிறுவக் கூடிய; நேர்மை நிலைநாட்டத் தக்க.

**vin′dicate**, *v.* கொள்கை நிலைநாட்டு; கொள்கை நிலைநாட்டி ஆதரவளி; மெய்ப்பித்துக் காட்டு; உரிமை நிறுவு; வெற்றியுற நிறுவு.

**vindica′tion**, *n.* கொள்கை நாட்டரவு; நேர்மை நிறுவீடு.

**vin′dicative**, *a.* சரியெனக் காட்டுகிற; வெற்றியுற நிறுவுகிற.

**vin′dicator**, *n.* சரியெனக் காட்டுபவர்; வெற்றியுற நிறுவுபவர்.

**vin′dicatory**, *a.* சரியெனக் காட்ட முயலுகிற; (சட்.) தண்டனையியல்பு வாய்ந்த.

**vin′dicatress**, *n.* சரியெனக் காட்டுபவள்; வெற்றியுற நிறுவுபவள்.

**vindic′tive**, *a.* பழிக்குப் பழிவாங்கும் இயல்புடைய.

**vindic′tively**, *adv.* எதிர்ப்பழி மனப்பான்மையுடன்.

**vindic′tiveness**, *n.* பழிவாங்கும் இயல்பு.

**vine**, *n.* கொடிமுந்திரி, திராட்சை; (தொ.) dwell under one's vine and fig-tree, தன்னுடைய நிலத்திலேயே அமைதியாக வாழ்.

**vin′egar**, *n.* புளிக்காடி; கொடிமுந்திரிக் காடி; கடுப்பு; *a.* கடுப்புடையு; *v.* புளிக்காடியிலிடு; புளிக்காடியிற்கல; புளிக்காடி போலக் கடுப்பாயிரு; கடுப்பாயிரு.

**vinegarette′**, *n.* புளிக்காடிப்புட்டி; முகர்மருந்துப்புக் குப்பி.

**vin′egarish**, *a.* புளிக்காடி போன்ற; சற்றே புளிக்கடுப்பான.

**vin′egary**, *a.* புளிக்காடி போன்ற; கடுப்பான.

**vin′er**, *n.* கொடிமுந்திரிப் பயிர் வளர்ப்பவர்.

**vin′ery**, *n.* கொடிமுந்திரிப் பண்ணை; கொடிமுந்திரிக்கான செயற்கைத் தொட்டி.

**vi′new**, *n.* பூசினைபிடிப்பு, சொத்தையாதல்; *v.* பூசினை பிடிக்க வை; பூசினை பிடி, சொத்தையாகு.

**vin′ewed**, *a.* பூசினை பிடித்த, சொத்தையான.

**vine′yard**, *n.* திராட்சைக் கொடிக்கால், திராட்சைத் தோட்டம்; கொடிமுந்திரிப் பண்ணை.

**vinicul′ture**, *n.* கொடிமுந்திரி பயிர்த்தொழில்.

**vin′olent**, *a.* கொடிமுந்திரி மதுப் பழகிவிட்ட.

**vinom′eter**, *n.* தேறல் வெறியமானி.

**vinos′ity**, *n.* திராட்சை மதுப்பண்பு.

**vin′ous**, *a.* கொடிமுந்திரி மதுச்சத்துடைய.

**vint[1]**, *n.* ருசிய நாட்டுச் சீட்டாட்ட வகை.

**vint[2]**, *v.* முந்திரிப்பழச் சாராயம் வடி.

**vin′tage**, *n.* கொடிமுந்திரிப்பருவம்; கொடிமுந்திரிப் பருவ விளைவு; கொடிமுந்திரிப்பருவப் பழ விளைவுத் தெர்குதி.

**vin′tager**, *n.* கொடிமுந்திரித்தோட்ட ஆள்.

**vint′ner**, *n.* தேறல் விற்போர்.

**vint′ry**, *n.* தேறல் கடை; தேறல் சரக்கறை.

**vi′ny**, *a.* கொடிமுந்திரி சார்ந்த; திராட்சை போன்ற.

**Vin′ylite**, *n.* இயந்திரக் குழைமப் பொருள்.

**vi′ol**, *n.* நரப்பிசை வகை.

**viol′a[1]**, *n.* பெரிய நரப்பிசைக் கருவி வகை.

**vi′ola[2]**, *n.* பல்வண்ணத் தோட்ட மலர்ச் செடி வகை.

**vi′olable**, *a.* மீறத்தக்க; கெடுக்கத் தக்க.

**viola′ceous**, *a.* செந்நீல நிறமான; செந்நீல மலர் வகையின் குழுமஞ் சார்ந்த.

**vi'olate,** *a.* வன்முறைக்கு ஆளாக்கப்பட்ட; திருவழிக்கப்பட்ட; புனித நிலை கெடுக்கப்பட்ட; *v.* வரம்பு தகர், கட்டு மீறு, கட்டுப்பாடு குலை; திருவழி, புனிதத்தன்மை கெடு; வன்முறை செய், வலுக்கட்டாயப்படுத்து; அடர்த்தழி; கற்பழி; சீர்கெடு, குலை.

**viola'tion,** *n.* மீறல்; மீறுகை; கற்பழிப்பு; (தொ.) in violation of, எதிராக, மீறி.

**vi'olator,** *n.* மீறுபவர்; கற்பழிப்பவர்; சீரழிப்பவர்.

**vi'olence,** *n.* வன்முறை; வன்முறைச் செயல்; வன்னடத்தை; குலைவு; கேடு; ஊறு; (சட்.) சட்ட மீறிய வன்செயல்; (சட்.) வன்செயலால் ஏற்பட்ட ஊறுபாடு.

**vi'olent,** *a.* வலிந்து செய்யப்பட்ட; வன்முறையான; கட்டு மீறிய; இயல்பல்லாத; முனைத்த; குமுறலான; கோபாவேசமான; (சட்.) சட்டமீறிய வன் செயலான, உடல் வலிமை ஈடுபடுத்தி நேர்மைக் கேடாகச் செய்யப்பட்ட; (சட்.) மறுக்க முடியாத சான்று பூர்வ முடிவான.

**vi'olently,** *adv.* வன்மையாய்; வன் செயலாய்; சட்டம் மீறி.

**vi'olet,** *n.* செங்கருநீல மலர் வகை; செங்கருநீல மலர்ச் செடி வகை; செங் கருநீல நிறம்.

**violin'[1],** *n.* நரப்பிசைக்கருவி வகை.

**vi'olin[2], vi'oline,** *n.* மலர்ச்செடி வகையின் வாந்தி மருந்துச் சத்து.

**vi'olinist,** *n.* நரப்பிசைக் கருவி இயக்குநர்.

**vi'olist,** *n.* ஆறு நரம்பு யாழ் வகை வாசிப்பவர்.

**violoncell'ist,** *n.* நால் நரம்பு யாழ் வகை வாசிப்பவர்.

**violoncell'o,** *n.* முழந்தாள்களிடையே வைத்தியக்கும் நான்கு நரப்பிசைக் கருவி வகை; *pl.* violoncell'os.

**vip'er[1],** *n.* விரியன் வகை; நச்சுப்பாம்பு வகை; வஞ்சகர்; கயவாளி; நன்றி நலங்கெட்டவர்; பழிகேடர்.

**Vip'er[2],** *n.* இரண்டாம் உலகப் போர்க்காலத்திய (1945-ஆம் ஆண்டிற்குரிய) செர்மன் வாண விமான வகை.

**vip'eriform,** *a.* விரியன் பாம்பு வகை போன்ற; வஞ்சகமான.

**vi'perine,** *a.* விரியன் பாம்பு இயல்பான; வஞ்சகமான.

**vi'perish,** *a.* நச்சுப்பாம்பு இயல்புடைய.

**vip'eroid,** *a.* விரியன் பாம்பு வகை போன்ற.

**vip'erous,** *a.* விரியன் வகைக்குரிய; நச்சுப்பாம்பியல்பான.

**virag'o,** *n.* அடங்காப் பெண்; அடங்காப் பிடாரி; வீரி, சூரி, நீலி; *pl.* virag'os.

**vir'al,** *a.* நச்சு நுண்மச் சார்பான.

*virement,* (பிர.) *n.* கணக்கில் வகைமாற்ற அதிகாரம், ஒரு கணக்கிலிருந்து மற்றொரு கணக்குக்கு மாற்றும் உரிமை.

**virem'ia,** *n.* ஒட்டுமூல நச்சுத்திறம், ஒட்டுயிரின் ஆதார உயிரில் நுண்ம நச்சுச்சத்து உளதாயிருக்கும் நிலை.

**virem'ic,** *a.* ஒட்டுமூல நச்சுத் திறஞ் சார்ந்த.

**vires'cence,** *n.* பச்சை நிறம்; (தாவ.) மீ பசுமைநிறக் கோளாறு.

**virg'ate[1],** *n.* முற்கால நில அளவைக் கூறு.

**virg'ate[2],** *a.* ஒல்லியான; நிமிர்ந்து ஒடுங்கிய.

**Virgil'ian,** *a.* வர்ஜில் (கி.மு. 70-கி.மு. 19) என்ற பண்டை ரோம் நாட்டு லத்தீன் மொழிக் கவிஞருடைய; கவிஞர் வர்ஜில் நடை சார்ந்த.

**vir'gin,[1],** *n.* கன்னி; கன்னிமை நோன்பேற்கும் பெண்; கன்னி மரியாளின் சிலை; *a.* கன்னியான; கன்னிமையுடைய; கன்னிமை கெடாத; தூய; இன்னும் வழங்காத; புதுநிலையான; முதனிலையான; நில வகையில் உழப்படாத; நாடு வகையில் குடியேறப் பெறாத; களிமண் வகையில் சுடப் பெறாத; தேன்கூடு வகையில் இன்னும் முட்டையிடப் பயன்படுத்தப் பெறாத; தேன் வகையில் காய்ச்சப் பெறாமல் தேன் கூட்டிலிருந்து எடுத்தபடியேயான, இருல் நிலையான; பூச்சியின வகையில் பொலிவூட்டப் பெறாமலே முட்டையிடுகிற; *v.* கன்னியாயிரு; (தொ.) the Virgin Queen, இங்கிலாந்தை ஆண்ட முதலாம் எலிசபெத் அரசி; virgin birth, virgin generation, பால் இணைவற்ற இனப்பெருக்கப் பிறப்பு; virgin gold, இயல் தங்கம், மாறாமல் சுரங்கத்திலிருந்து எடுக்கப்பட்டபடியேயுள்ள தங்கம்; virgin knot, பண்டை ரோமர் வழக்கில் முதன்முதல் திருமணத்தின்போது அவிழ்க்கப்பட்ட ஒட்டியாணம்; virgin queen, கருவுயிர்க்காத அரசித்தேனீ.

**Vir'gin,[2],** *n.* கன்னி மரியாள்.

**Vir'gin[3],** *n.* கன்னி ராசி, ஆறுவது வான்மனை.

**vir'ginal,** *n.* (வர.) முற்கால யாழிசைப் பெட்டி, 16, 17-ஆம் நூற்றாண்டுகளில் பயன்படுத்தப்பெற்ற காலில்லாச் சதுர இறகு வடிவ இசைக்கருவி வகை; *a.* கன்னிக்குரிய; கன்னிக்குத் தகுதியான, கன்னியின் உடைமையான.

**vir'gin-born,** *a.* கன்னியாற் பெற்றெடுக்கப்பட்ட.

**vir'ginhood,** *n.* கன்னிமை; கன்னி நிலை.

**Virgin'ia,** *n.* அமெரிக்க ஐக்கியநாட்டுப் பகுதி, அமெரிக்க ஐக்கியநாடுகளில் ஒன்று; வெர்ஜினியா பகுதிக்குரிய புகையிலை வகை.

**Virgin'ian,** *n.* வெர்ஜினியா நாட்டுக் குடிமகன்.

*virgin'ibus pueris'que,* (ல.) *a.* சிறுவர் சிறுமிகளுக்கான; கள்ளமற்ற குழந்தையுள்ளங்களுக்குரிய.

**virgin'ity,** *n.* கன்னிமை; தூய்மை.

**Virg'o,** *n.* கன்னி ராசி, ஆறும் வான்மனை.

*virg'o intac'ta,* (ல.) *n.* (சட்.) கன்னிமைச் சவ்வு சிதைவுபடா நிலைப் பெண்.

**vir'id,** *a.* பச்சையான.

**virides'cence,** *n.* பச்சைமை; பச்சையாகுந் தன்மை.

**vi'rile,** *a.* ஆடவருக்குரிய; வீரிய மிக்க; ஆண்மை மிக்க.

**viriles'cence,** *n.* மூதாண் திரிபியல், பெண்பாலுயிர்கள் வகையில் முதுமையில் ஆண்பால் திறம் எய்துந் தன்மை.

**viriles'cent,** *a.* மூதாண் திரிபியல்புடைய.

**viril'ity,** *n.* வீரியம், ஆண்பாலின் இனப்பெருக்க ஆற்றல்; ஆண்மை.

**viroc'racy,** *n.* ஆடவர் ஆட்சி.

**virol'ogist,** *n.* நோய் நுண்ம நச்சாய்வு நூலர்.

**virol'ogy,** *n.* நோய் நுண்ம நச்சாய்வு நூல்.

**vir'ose, vir'ous,** *a.* நஞ்சார்ந்த.

**viro'sis,** *n.* நோய் நுண்ம நச்சுத்தொற்று.

**virtu',** *n.* கலைக்காதல், நுண்கலையார்வம்.

**vir'tual,** *a.* நடைமுறையில் மெய்ம்மையான; செயலளவில் மெய்யாகக் கொள்ளத்தக்க; உண்மைபோல் கொள்ளத்தக்க; தோற்ற நிலையான; கோளியல் மெய்ம்மையான, சித்தாந்த நிலையான.

**virt'uality,** *n.* நடைமுறை மெய்ம்மைப்பாடு.

**virt'ually,** *adv.* நடைமுறையில்; சித்தாந்த நிலையில்.

**virt'ue,** *n.* ஒழுக்கம்; நன்மை; நலம்; நேர்மை; தகுதி; தன்மை; சிறப்பு; சிறந்த பண்பு; கடமையுணர்வு; நற்குணம்; நற்பண்புக்கூறு; புண்ணியம்; நற்கூறு; உள்ளார்ந்த நலம்; உள்ளார்ந்த ஆற்றல்; பண்புறுதி; பயனுறுதிப்பாடு; கற்பு; (தொ.) by virtue of, என்ற தன்மையினால், என்ற தகுதி மீது, என்ற வலிமைக் கூறு காரணமாக, என்ற திறத்தின் பயனாக; in virtue of, என்ற நிலையைப் பற்றுக்கோடாகக் கொண்டு; make a virtue of necessity, கட்டாய நிலையைக் கடமை நிலைபோலக் கொண்டு ஆர்வத்துடன் ஏற்று நட; the cardinal virtues, the moral virtues, the natural virtues, நேர்மை-நுண்மதி-மட்டுறுதி-மனவுரம் ஆகிய பண்புகள்; the cardinal virtues, the seven cardinal virtues, நேர்மை-நுண்மதி-மட்டுறுதி-மனவுரம்-பத்திமை-நம்பிக்கைப் பற்றுர்வம்-அற ஆர்வம் ஆகிய ஏழு மூலப்பண்புகள்; the theological virtues, பத்திமை-நம்பிக்கைப் பற்றுர்வம்-அற ஆர்வம் ஆகிய மூவிறையார்வப் பண்புகள்; woman of virtue, கற்பொழுக்கமுடைய பெண்.

**virt'ues**, *n. pl.* கிறித்தவ சமய மரபு வழக்கில் தெய்வ தூதர் களில் ஏழாவது படித்தரத்தினர்.

**virtuos'ity**, *n.* கலைவிற்பத்தி; கலைப் பற்றார்வம்; மட்டுக் கடந்த இசைஞானம்; எல்லைகடந்த கலை நுணுக்கத் திறமை; கலைநய நுணுக்கப்பற்று; கலைநய நுணுக்க ஆர்வம்; கலைநய நுணுக்க அறிவு.

**virtuos'o**, *n.* கலைநுணுக்க அறிஞர்; கலைநுணுக்க ஆர்வலர்; பழங் கலை நய ஆர்வலர்; பழங் கலைப்பொருளார்வலர்; உச்ச உயர் இசைநுணுக்கத் திற அறிஞர்; *pl.* virtuous'i, virtuos'os.

**virt'uous**, *a.* நல்லொழுக்கமுடைய; நற்குணமுடைய.

**vi'rulence**, *n.* கடுவிசை நச்சுத் தன்மை; நச்சுப் பகைமை.

**vi'rulent**, *a.* நச்சுத்தன்மை மிக்க; நஞ்சார்ந்த; உள்ளூர நஞ்சுப்பட்ட; நச்சுக்கடுப்புடைய.

**virulif'erous**, *a.* (மரு.) நோய் வகையில் உக்கிரமான; வேகமாகத் தொற்றிப் பரவுகிற.

**vir'us**, *n.* நோய் நச்சுக்கோளாறு; தொற்று நச்சுத்தன்மை; ஒழுக்கக் கேடு; நச்சுப் பகைமை.

***vis***, (ல.) *n.* (இயங்.) ஆற்றல்.

**vis'a**, *n.* புறவரிக் குறிப்பு, அயல்நாட்டு நுழைவுரிமை தரும் கடவுச்சீட்டின்மீது அளிக்கப்படும் மேல்வரிச் சான்றுரிமைக் குறிப்பு; *v.* புறவரிக் குறிப்பளி.

**vis'a'd, vis'aed**, *v.* visa என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவங்கள்.

**vis'age**, *n.* (செய்.) முகம், முகத்தோற்றம்.

**vis'aged**, *a.* முகத்தோற்றமுடைய.

***vis'-a-vis'***, (ல.) *n.* நடன வகையில் எதிரெதிர் நிலையினர்; எதிரெதிர் இருக்கை வண்டி; எதிரெதிர் சாய்விருக்கை; *adv.* எதிரெதிராக; எதிர்முகமாக, முகத்துக்கு எதிர்முகமாக.

**vis'cera**, *n. pl.* உட்கிடப்புறுப்புக்கள்; மூளை-குடற்கொடி-இதயம்-நுரையீரல் முதலியவற்றின் தொகுதி.

**vis'ceral**, *a.* உட்கிடப்புறுப்புக்கள் சார்ந்த, மூளை-குடற் கொடி-இதயம்-நுரையீரல் ஆகியவை சார்ந்த.

**vis'cerate**, *v.* குடலைப்பிடுங்கு, குடல் பிதுங்கும்படி கிழி; உட்பிளந்து வெளிப்படுத்து.

**viscer'otonia**, *n.* (உள.) உடலின் மடிமை கொழுமைவளம் காரணமான மதமதர்ப்புணர்ச்சி.

**vis'cid**, *a.* நெய்ப்பான; ஒட்டும் இயல்புடைய.

**vis'cidity**, *n.* நெய்ப்பு; ஒட்டுந் தன்மை.

**vis'cin**, *n.* பறவை பிடிப்பவர் பயன்படுத்தும் பிசின் வகைப் பொருட்கூறு.

**viscom'eter**, *n.* பிசைவுப் பொருள் திட்பமானி.

**viscom'etry**, *n.* பிசைவுப்பொருள் திட்ப ஆற்றலளவை; பிசைவுப்பொருள் தன்னீர்ப்பாற்றலளவை ஆய்வுத் துறை; பிசைவுப்பொருள் தன்னீர்ப்பாற்றல் அளவைக் கலை.

**vis'cose**, *n.* செயற்கை இழைக்குப் பயன்படுத்தப்படும் மரச் சத்துக் குழைமம்.

**viscos'ity**, *n.* குழைம நிலை; தன்னீர்ப்பாற்றல், பிசைவுப் பொருளின் திட்ப ஆற்றல்.

**visc'ount**, *n.* இளங்கோவரையர், இளங்கோமகர்.

**visc'ountcy**, *n.* இளங்கோமகப் பட்டம்; இளங்கோமக நிலை.

**visco'untess**, *n.* இளங்கோமாட்டி, இளங்கோப் பெண்டு.

**visc'ounty**, *n.* இளங்கோமகப் பதவி; இளங்கோமகர் ஆட்சிப் பகுதி; இளங்கோமகர் ஆட்சி எல்லை.

**vis'cous**, *a.* ஒட்டுந் தன்மையான; பசையான.

**vis'cousness**, *n.* பசைத் தன்மை; உள்ளொட்டிழுப்புத் தன்மை.

**vise**, *n.* பட்டறைப்பிடிப்புக் குறடு; *v.* பிடிப்புக் குறட்டால் பிடித்து நிறுத்து.

**visibil'ity**, *a.* காண்பு நிலை; விளங்கும் நிலை; (வானிலை. கப்.) சூழ்பொருள் காண் ஒளியளவு நிலை.

**vis'ible**, *a.* கட்புலனாகிற; பார்க்கக் கூடிய; விளங்கக்கூடிய; வெளிப்படையான; மூடாக்கற்ற, மறைவற்ற; (தொ.) the visible church, கிறித்துவ அடியார் கூட்டம்; visibl horizon, காட்சி எல்லைக்கோடு; visible speech, பிறப்பொலிக் காட்சிமுறை.

**vis'ibles**, *n. pl.* காண்புறு பொருள்கள்.

**vis'ibly**, *adv.* தெள்ளத் தெளிந்த வகையில்.

**vi'sion**, *n.* காட்சி; பார்வை; காட்சியாற்றல்; கண்பார்வை யாற்றல்; காணுந் திறம்; காணுந் தோற்றம்; உருவெளித் தோற்றம்; தெய்விகக் காட்சியுரு; ஆவியுரு; போலித் தோற்றம்; கனக்காட்சி; அறிவு விளக்கம்; தொலைநோக்கு ஆற்றல்; கூர்நோக்கு; தொலையறிவு, உள்ளறிவு; அரசியல் மதிநுட்பம்; *v.* காட்சி காண், கற்பனையிற் காண்; உரு வெளித் தோற்றங் காண்; கனவு காண்; காட்சி வழங்கு.

**vi'sional**, *a.* தோற்றமான; மனக்காட்சியான; கற்பனை யான; புனைவருக் காட்சியான; காட்சிக்குரிய; காட்சியி லிருந்து தோன்றிய; போலியான; புனைவியலான.

**vi'sionariness**, *n.* கனவுக்காட்சி நிலை; கற்பனைக் காட்சி நிலை; புனையுருக்காட்சி நிலை.

**vi'sionary**, *n.* புனைவுக்காட்சியாளர்; கனவியலாளர்; இலக் கியலாளர்; நடைமுறைக்கொவ்வாக் குறிக்கோட் கற்பனை யாளர்; மாயத்தோற்றங் காண்பவர்; புற மெய்ம்மைக்கு ஒவ்வாக் கற்பனைக் காட்சியாளர்; *a.* புனைவுக் காட்சி காண்கிற; புனைவுக் கோட்பாடுகளில் உழல்கிற; கற்பனை யுலகில் திரிகிற; இலக்கியலாளரான, நடைமுறைக்கு ஒவ்வாக் குறிக்கோட் கற்பனைகளில் உலவுகிற; மாயத் தோற்றங் காண்கிற; கற்பனையான; போலித் தோற்றமான; தோற்றப் போலியான; கனவுக் காட்சியான; கனவுத் தோற்றமான; கனவியலான.

**vi'sionist**, *n.* மனக்காட்சியாளர்; காட்சித்திறலர்.

**vis'it**, *n.* பார்வையிடு, சுற்றிப் பார்வையிடுதல்; காட்சிப் பயணம், காட்சியுலா; வருகைதரவு; உழைச்செலவு; பணி முறை மேற்பார்வையீடு, கண்காணிப்பு வருகை; அயல் நாட்டுக் கப்பல் நுழைவு உசாவுரிமை; *v.* பார்வையிடு, சுற்றிக்காண்; சென்று பார்வையிடு; வருகை வழங்கு; மேற் பார்வையிடு; தீங்குகள் வகையில் மேற்சுமத்தீடு செய்; நலங்கள் வகையில் மீவழங்கீடு செய்; (தொ.) right of visit, அயல்நாட்டுக் கப்பல்களில் ஏறி அணுகிச்சென்று பார்வை யிடும் உரிமை; visit upon, மேற்சுமத்தீடு செய்; மீவழங்கீடு செய்; பழி பாவ வகையில் உரிய தண்டனையை மேற்சுமத் தீடு செய்.

**vis'itable**, *a.* பணிமுறை மேற்பார்வையீட்டிற்கு உட்படத் தக்க; பார்வையாளர்களைக் கவர்ச்சி செய்யத்தக்க.

**vis'itant**[1], *n.* புலம்பெயர் பறவை; (செய்.) வருகையாளர், வந்து காண்பவர்; *a.* (செய்.) சென்று காண்கிற, வருகை தருகிற.

**Vis'itant**[2], *n.* சிறுமியர் கல்விப்பரப்பில் ஈடுபாடுகொண்ட பெண்துறவியர் சங்க உறுப்பினர்; *a.* பெண்துறவியர் சங்க உறுப்பினர் வகையில் கல்விப்பரப்பீடு நாடி வருகை தருகிற.

**visita'tion**, *n.* பார்வையிடுதல்; பணித்துறை மேற்பார்வை யீடு; சமய மாவட்ட முதல்வரின் திருச்சுற்றுக் கண் காணிப்பீடு; மேற்பார்வைத் தேர்வாய்வு; (சட்.) மாவட்ட முதல்வரின் மரபுச்சின்ன மேற்பார்வைத்தேர்வாய்வீடு; திரு வருகை, மேல்நிலையாளர் தற்செயலான வருகைதரவு; தெய்வத் திருத்தோற்றரவு; ஆவித் தோற்றம்; அரசியல் உரிமை மரபில் அயல்நாட்டுக் கப்பல் நுழைவு உசாவீடு; தெய்வ தண்டனை-நோய்-தீமைகள் முதலியவற்றின் வகையில் மேற் சுமத்தீடு; தெய்வப் பேரருட்கொடை-நலன்கள் முதலிய வற்றின் வகையில் மீ வழங்கீடு; தெய்வ தண்டனை; தெய்வப் பழிவரவு; உள்ளத்தின் வகையில் அழுத்து பெரும் பழிச் சுமை; தெய்வப் பேரருட்கொடை; பெரும்பரிசு, பெரும்படி நலம்; (வில.) பெரும்படிப் புலப்பெயர்ச்சி யெழுச்சி.

**visita'tional**, *a.* திருவருகை சார்ந்த; தெய்வத் தோற்றத்திற் குரிய; ஆவித் தோற்றத்திற்குரிய; பெரும்பழிக்குரிய.

**vis'itative,** *a.* திருவருகை சார்ந்த ; திருவருகை இயல்பான.

**vis'itator,** *n.* பணிமுறைக் கண்காணிப்பு வருகையாளர்.

**visitato'rial,** *a.* மேற்பார்வையீடு சார்ந்த ; பணிமுறை மேற்பார்வையீட்டாளருக்குரிய.

**visitee,'** *n.* வருகையேற்பவர்.

**vis'iting,** *n.* சேறல்; மேற்பார்வையீடு; தெய்வப்பழி சுமத்தீடு செய்தல் ; திருவருட்பேறு வழங்கீடு, பெரும்பரிசு வழங்கீடு; உள்ளத்தின் வகையில் அழுத்து பெரும்பழிச்சுமை ஏற்றம் ; *a.* வருகை தருகிற ; மாணவர்-பேராசிரியர்—மருத்துவர் முதலியவர் வகையில் புறம் நின்று வருகைதருகிற ; இடைவரவான, நிலையாகத் தங்கியிராத; திருவருகை சார்ந்த; மேற்பார்வையீட்டிற்குரிய ; (தொ.) visiting professor, திருவருகைப் பேராசிரியர், மற்றொரு பல்கலைக் கழகத்திலிருந்து அல்லது கல்லூரியிலிருந்து வந்து அவ்வப்போது பணிபுரியும் பேராசிரியர்.

**vis'iting-book,** *n.* வருகையாளர் பெயர்ப்பதிவுப் பேரேடு.

**vis'iting-card,** *n.* வருகையாளர் முகவரிச்சீட்டு.

**vis'iting-day,** *n.* காட்சியாளர் நாள், பார்வையாளர்களைச் சந்திப்பதற்காக ஒதுக்கிவைக்கப்படும் நாள்.

**vis'itor,** *n.* வருகையாளர், வருநர் ; பார்வையாளர் ; கல்லூரி முதலியன வகையில் அவ்வப்போது கண்டு ஆய்ந்து அறிக்கை தரும் உரிமை-கடமை உடையவர் ; மேற்பார்வையீட்டாள் ; விருந்தினர், புறநின்று வருபவர்; புறநின்று வருவது; (தொ.) visitors' book, பார்வையாளர் குறிப்பேடு.

**vis'itress,** *n.* மேற்பார்வை மாது.

**vis'or,** *n.* கவசமுகத் தகடு ; தொப்பி உந்து விளிம்பு ; முகமூடி.

**vis'ored,** *a.* முகத்தகடிட்ட ; முகத்தகடிட்டுக் கவசம் பூண்ட ; முகமூடியிட்ட.

**vis'ta,** *n.* சாலை ; மர அணிவரிசை ; காட்சி வரிசை, நெடுநீள் நிகழ்ச்சித் தொடர் ; பின்னணிக் கருத்துக்கோவை ; வருங்காலம் பற்றிய கருத்தணிக்கோவை.

**vis'taed,** *a.* அணிவரிசைக் காட்சியுடைய ; மரம் பயில் சாலையுடைய.

**vis'ual,** *a.* காட்சி சார்ந்த, பார்வைக்குரிய ; காட்சித் தொடர்பான ; காட்சியில் பயன்படுத்தப்படுகிற; பார்வையாற்றலால் பெறப்பட்ட ; மனக்காட்சிக்குரிய ; மனக்காட்சியியல்பான ; (தொ.) visual aid, காட்சிக்கருவிக் கல்விமுறை, பட ஒளி விளக்கம்-திரைப்படம்-விளக்கப்படம் முதலிய கருவிகளாலான கல்விமுறை.

**vis'ual-aural range,** *n.* வானொலி உதவியால் இயக்கப்படும் வானூர்தி நெறிமுறை.

**visual'ity,** *n.* காட்சிப்படும் நிலை ; மனக்காட்சிப் படிவம் ; மனக் காட்சிப்பாடு.

**vis'ualize,** *v.* உருவாக்கிக்காண் ; அகக்காட்சியாக உருவாக்கிக் காண் ; கற்பனை செய்து காண்.

**vis'ually,** *adv.* கட்புலனாக.

**vis'uals,** *n. pl.* கண்ணிற்குப் புலப்படும் பொருள்கள்.

**vit'a glass,** *n.* அப்பால் ஊதாக்கண்ணாடி, கட்புலப்படாத அப்பால் ஊதாக் கதிர்களையும் ஊடுருவவிடும் கண்ணாடி வகை.

**vit'al,** *a.* உயிர்நிலையான ; உயிரின் மூலஅடிப்படையான ; உயிராதாரமான; உயிர்த்துடிப்புடைய; உயிர் ஆற்றல் ததும்புகிற ; உயிர்த்துடிப்பூட்டுகிற ; கரு நிலையான ; இன்றியமையாத ; (பே-வ.) மிக முக்கியமான ; பிறப்புச் சார்ந்த ; பிறப்பு இறப்புச் சார்ந்த ; குடிவாழ்க்கை சார்ந்த ; (தொ.) vital force, உயிராற்றல் திறம் ; vital functions, உயிராதார வினைமைகள் ; vital principle, உயிர் மெய்ம்மை, உயிர் வாழ்விற்கு இன்றியமையாக் கோட்பாடு ; (உயி.) இயற்கையின் உயிர்மூல தத்துவம் ; (மெய்.) உயிர்த் தத்துவம் ; vital statistics, குடிவாழ்க்கைப் புள்ளி விவரத் தொகுப்பு, குடிமக்கள் பிறப்பு-இறப்பு போன்ற வாழ்க்கைபற்றிய முக்கிய புள்ளி விவரத் தொகுப்பு.

**vit'alism,** *n.* (உயி.) உயிர்த் தத்துவ வாதம், தனி உயிர்த் திறவாதம்.

**vit'alist,** *n.* உயிர்த்தத்துவ வாதி, தனி உயிர்த் திறவாதி.

**vitalis'tic,** *a.* உயிர்த்தத்துவ வாதஞ் சார்ந்த, தனி உயிர்த் திற வாதத்திற்கு உரிய.

**vital'ities,** *n. pl.* உயிர்த்திறப் பண்புகள் ; உயிர்த்திறப் பண்புச் சாதனங்கள்.

**vital'ity,** *n.* உயிர்மூல உள்ளூரம் ; உயிர் வீரியம் ; உள்ளூரம் ; நீடிப்பாற்றல் ; உயிர் வாழ்வுத்திறம் ; உள்ளுயிர்த்துடிப்பு.

**vitaliza'tion,** *n.* உயிராற்றல் வழங்கீடு.

**vit'alize,** *v.* வாழ்வாற்றல் வழங்கு ; வீரியமூட்டு ; உள்ளுயிர்ப்பு உரம் ஊட்டு ; உயிர்க்களையளி.

**vit'alizer,** *n.* உயிர்த்திறமூட்டுபவர் ; உரமருந்து ; உயிர்ப்பூட்டு பொருள்.

**vit'alizing,** *a.* உள்ளூரந் தருகிற ; செயல்துடிப்பூக்குகிற ; வீரியம் அளிக்கிற.

**vit'ally,** *adv.* முக்கியமாய் ; இன்றியமையாததாய்.

**vit'als,** *n. pl.* உயிர்நிலை உள்ளுறுப்புக்கள், உயிர்ப்புறுப்புக்கள்-நெஞ்சுப்பை-மூளை ஆகியவற்றின் தொகுதி.

**vit'amin,** *n.* ஊட்டச்சத்து, வைட்டமின்.

**vit'aminize,** *v.* ஊட்டச் சத்தேற்று.

**vit'azyme,** *n.* ஊட்டச்சத்துச் செறிந்த புளிப்பு மா அப்பம்.

*vite,* (பிர.) *adv.* (இசை.) விரைவாக.

**vit'ellary,** *a.* முட்டையின் மஞ்சட் கருவினுக்குரிய.

**vitell'in,** *n.* (வேதி.) கருப்புரதம், முட்டையின் மஞ்சட் கருவின் புரதப்பகுதி.

**vitell'ine,** *n.* முட்டையின் மஞ்சட்கருவிலுள்ள ஊன்மங்களில் ஒன்று ; *a.* முட்டை மஞ்சட் கருவிலுள்ள ஊன்மஞ் சார்ந்த.

**vitell'us,** *n.* முட்டையின் மஞ்சட்கரு ; முட்டை மஞ்சட்கருவிலுள்ள ஊன்மப்பகுதி ; *pl.* vitell'i.

**vi'tiate,** *v.* பண்புகெடு ; இழிவு செய் ; தூய்மை கெடு ; மாசுபடுத்து ; திறங் கெடு.

**vitia'tion,** *n.* பண்பு கெடுத்தல் ; இழிவு செய்தல் ; கீழ்மை செய்தல் ; தூய்மை கெடுத்தல்.

**vi'tiator,** *n.* பண்பு கெடுப்பவர் ; ஊழலூட்டுபவர் ; கீழ்மை செய்பவர் ; தூய்மை கெடுப்பவர்.

**vi'ticulture,** *n.* கொடிமுந்திரிப்பயிர் வளர்ப்பு.

**vitios'ity,** *n.* கீழ்மைப்பண்பு ; புன்மைக்குணம் ; கயமை நிலை ; ஸ்காத்லாந்து சட்டவழக்கில் குறைபாடுடைமை.

**vit'is,** *n.* திராட்சைப் பேரினம்.

**vitreos'ity,** *n.* பளிங்கியல்பு, கண்ணாடித்தன்மை.

**vit'reous,** *a.* கண்ணாடி சார்ந்த ; கண்ணாடியாலான ; கண்ணாடியடங்கிய ; கண்ணாடியிலிருந்து உண்டான ; கண்ணாடி போன்ற ; பளிங்கியலான ; கண்ணாடி போன்று எளிதில் நொறுங்கக்கூடிய ; பளிங்கின் திண்மையுடைய ; கண்ணாடி போலப் படிக உருவற்ற அமைப்புடைய ; (தொ.) vitreous body, vitreous humour, கண்விழிக் குழியிலுள்ள பளிங்கியலான திண்ணீர்மம் ; vitreous electricity, பளிக்கு மின்வலி, கண்ணாடியில் பட்டிணைத் தேய்ப்பதால் ஏற்படும் மின்னாற்றல்.

**vit'reousness,** *n.* கண்ணாடித்தன்மை.

**vitres'cence,** *a.* பளிங்கியற்பாடு, கண்ணாடியாகிவருந் தன்மை ; கண்ணாடியாக மாறுந்திறம்.

**vitres'cent,** *a.* பளிங்கியற்பாடுடைய, கண்ணாடியாகி வரும் போக்குடைய.

**vitrescibil'ity,** *n.* கண்ணாடியாக மாறக்கூடிய தன்மை.

**vitresc'ible,** *a.* கண்ணாடியாகத்தக்க, பளிங்காக மாறக்கூடிய.

**vit'reum,** *n.* கண்விழித் திண்ணீர்மம்.

**vit'ric**, *a.* கண்ணுடிபோன்ற, பளிங்கு சார்ந்த.

**vit'rics**, *n. pl.* கண்ணுடிபோன்ற பொருள்கள், பளிங்குப் பொருள்களின் தொகுதி.

**vitrifac'tion**, *n.* பளிங்காக மாற்றுதல்; பளிங்காக்கம்.

**vitrifiabil'ity**, *n.* கண்ணுடியாக மாறத்தக்க தன்மை; கண்ணுடிபோன்ற பொருளாக மாறும் நிலை.

**vit'rifiable**, *a.* கண்ணுடிபோல் ஆகத்தக்க.

**vitrifica'tion**, *n.* கண்ணுடியாக மாறுதல்; பளிங்குருவாக்கம்.

**vit'rified**, *a.* பளிங்கியலாக்கப்பட்ட.

**vit'riform**, *a.* பளிங்கின் தோற்றமுடைய.

**vit'rify**, *v.* பளிங்காகு, கண்ணுடியாகு.

**vitri'na**, *n.* மென்தோட்டு நிலச்சிப்பி வகை.

**vit'riol**, *n.* கந்தகத் திராவகம், வெறித்த கந்தகக்காடி; துத்தந்துரிசு, உலோகங் கலந்த நீர்மக் கந்தகி வகைகளில் ஒன்று; கடுஞ்சொல்; கடுகடுத்த பேச்சு; கடுங் கண்டனம்; புண்படுத்தும் உரை; (தொ.) elixir of vitriol, கந்தகத் திராவகச் சத்துடைய மணமார்ந்த மருத்து நீர்மம்; oil of vitriol, கந்தகத் திராவகம், வெறித்த கந்தகக் காடி.

**vit'riolate**, *v.* வெறிக் கந்தகக் காடியாக மாற்று; கந்தகத் திராவகமூட்டிச் செயற்படுத்து.

**vitriola'tion**, *n.* வெறிக் கந்தகக் காடியாக மாற்றல்; கந்தகத் திராவகமூட்டல்.

**vitriol'ic**, *a.* கந்தகத் திராவகஞ் சார்ந்த; வெறித்த கந்தகக் காடி போன்ற; கந்தகத் திராவகம் ஊட்டப் பெற்ற.

**vit'rioline**, *a.* வெறிக் கந்தகக் காடி சார்ந்த; கந்தகத் திராவகம் போன்ற.

**vit'riolizable**, *a.* கந்தகத் திராவகம் ஆக்கத்தக்க; வெறித்த கந்தகக் காடியாகக்கூடிய.

**vitrioliza'tion**, *n.* கந்தகத் திராவகமாக மாற்றுதல்; வெறித்த கந்தகக் காடியாதல்.

**vit'riolize**, *v.* வெறித்த கந்தகக்காடியாக மாற்று; கந்தகத் திராவகத்தால் நச்சூட்டு.

**vit'rolite**, *n.* ஒளிபுகாப் பளிங்கு, அனல் முறையால் பண்பு ஊட்டப்படும் ஒளிபுகாப் பரப்புடைய கண்ணுடி வகை.

**vitt'a**, *n.* தலைப்பட்டிகை; மதகுருவின் தொப்பி நடுமடிப்பு; (தாவ.) கனி வகைகளின் நெய்க்கால் இழை; (வில.) நிறக்கோடு, நிறக்கீற்று; *pl.* vitt'ae.

**vitup'erate**, *v.* பழிதூற்று, வைதுரை.

**vitupera'tion**, *n.* கடும் பழிப்பு, வசவு.

**vitup'erative**, *a.* திட்டுகிற; ஏசுகின்ற.

**vitup'erator**, *n.* வைதுரைப்போர்; கடும்பழி தூற்றுபவர்.

***viva'ce***, (இத்.) *adv.* (இசை.) கிளர்ச்சியுடன்.

**viva'cious**, *a.* கிளர்ச்சியான; உயிர்த்துடிப்புடைய; சுறுசுறுப்பான; (தாவ.) வாழ்வூக்க உறுதியுடைய.

**viva'city**, *n.* கிளர்ச்சியுடைமை; ஊக்கமுடைமை; சுறுசுறுப்புடைமை; உயிர்த் துடிப்புடைமை.

***vivandiere***, (பிர.) *n.* (வர.) போர்த்துறை உணவு-தேறல் விறபனை நங்கை.

**vivar'ium**, *n.* விலங்கின் செயற்கை வளர்ப்பகம்; *pl.* vivar'ia.

***viv'at***, (ல.) *n.* நீடு வாழ்க என்னும் வாழ்த்தொலி; *int.* நீடு வாழ்க!

**viv'a vo'ce**, (ல.) *n.* வாய்மொழித் தேர்வு; நேர்முகத் தேர்வு; *a.* வாய்மொழித் தேர்வு சார்ந்த; *v.* வாய்மொழித் தேர்வு செய்; *adv.* வாய்மொழித் தேர்வாக.

***vive***, (ல.) *int.* பல்லாண்டு வாழ்க!

**vives**, *n.* குட்டிக் குதிரைகளின் காதுநோய்.

**viv'id**, *a.* கூரொளி வாய்ந்த; ஒள்ளிய, ஒளிமயமான; கண்ணைப் பறிக்கிற; ஒளிர்வுமிக்க; வண்ண வகையில் முனைப்பான; உயிர்க்களை வாய்ந்த.

**viv'idness**, *n.* கூரொளியுடைமை; உறு தெளிவுடைமை; முனைப்புடைமை.

**viv'ify**, *n.* உயிர்த்தோற்றங் கொடு; உயிர்த்துடிப்பூட்டு; உயிரூட்டு.

**vivip'arism**, *n.* குட்டியிடும் மரபுடைமை.

**vivipa'rity**, *n.* (தாவ.) செய்முளைப்பு, தாய்ச்செடித் தொடர்பறு நிலையிலேயே கனி விதைகள் முளைக்குஞ் செடியின மரபு.

**vivip'arous**, *a.* (வில.) குழவியீனுகிற, முட்டையிடாது குட்டிபோடுகிற; (தாவ.) செய் முளைப்புடைய, தாய்ச்செடியிலிருந்துகொண்டே இனம்பெருக்குகிற.

**vivip'ary**, *n.* தாவரச் செய்முளைப்பு மரபு, தாய்ச்செடியிலிருக்கும்போதே கனி விதை முளைக்கும் பண்பு.

**viv'isect**, *v.* உயிரறுவைக் கூருய்வு செய், உயிருள்ள விலங்கு முதலியவற்றைக் கூறிடு; கொடுவதைசெய், சித்திரவதை செய்.

**vivisec'tion**, *n.* உயிரறுவைக் கூருய்வு, உயிருள்ள விலங்குகளைக் கூறிடல்; கொடுவதை, சித்திரவதை; உறு நுணுக்க ஆய்வாராய்வு.

***vi'vo***, (இத்.) *adv.* (இசை.) எழுச்சியுடன், கிளர்ச்சியுடன்.

**vix'en**, *n.* பெண் நரி; வம்புக்காரி; வாய்ப்பட்டி.

**vix'enish**, *a.* அடங்காப் பிடாரியான.

**vizier', vizir'**, *n.* இஸ்லாமிய நாட்டு வழக்கில் அமைச்சர்; மீ உயர்பணியாளர்; (தொ.) grand vizier, தலைமையமைச்சர்.

**vizier'ate**, *n.* இஸ்லாமிய நாட்டு வழக்கில் அமைச்சர் பதவி.

**Vlach**, *n.* லத்தீனின மொழிபேசும் தென்கிழக்கு ஐரோப்பிய மக்கட் குழுவினைச் சார்ந்தவர்; வாலேஷியா-ருமேனியா நாடுகளைச் சார்ந்தவர்.

**vlei**, *n.* படுவம், தென் ஆப்பிரிக்க வழக்கில் மழைநீர்க்குட்டம்.

**voc'able**, *n.* பொருளுடன் ஒலிக்கப்படுவது, சொல்; கிளவி, சொற்படிவம்.

**vocab'ular**, *a.* சொல் சார்ந்த.

**vocabular'ian**, *n.* மிகுசொல் வழங்குபவர்; சொல் தொகுதியாளர்; *a.* சொற்றொகுதிக்குரிய; சொற்றொகுதித் தொடர்பான.

**vocab'ularied**, *a.* சொல் தொகுதியினையுடைய; சொற்பட்டியல் வாய்ந்த.

**vocab'ulary**, *n.* சொல் அட்டவணை; சொற்றொகுதி.

**vocab'ulist**, *n.* சொல் அட்டவணைத் தொகுப்பாளர்; சொற்களஞ்சியம் அமைப்போர்.

**voc'al**, *n.* உயிர், உயிரொலி; திருவாக்குரிமையர், ரோமன் கத்தோலிக்கர் திருச்சபை வழக்கில் திருச்சபை சார்ந்த தேர்தல்களில் மொழியுரிமையுடையவர்; *a.* குரல் சார்ந்த; குரல் தொடர்பான; குரலாலான, குரலொலியுருவான; (செய்.) குரலுடைய, கருத்துத் தெரிவிக்கின்ற; (ஒலி.) உயிரொலியியல்பான, நாதமெழுப்புகின்ற; குரல்நாள இதழ் அதிர்வுடைய; (தொ.) vocal cords, vocal chords, குரல்வளை அதிர்வு நாளங்கள், நாத இதழ்கள்; vocal fremitus, vocal thrill, குரல்வளைய நெஞ்சதிர்வு.

**vocal'ic**, *a.* உயிரொலி சார்ந்த; உயிரொலியுட்கொண்ட.

**voca'lion**, *n.* பெரும்படி இசைப்பெட்டி வகை.

**voc'alism**, *n.* குரல் உறுப்புப்பயிற்சி; குரற் பழக்கம்; வாய்ப்பாட்டுமுறை; குரல் ஒலி; உயிரொலித் தொகுதி.

**voc'alist**, *n.* இசை வழக்கில் வாய்ப்பாட்டாளர்.

**vocal'ity**, *n.* குரற் பண்பு, குரலீடு.

**vocaliza'tion**, *n.* ஒலிப்பு; குரல் கொடுப்பு; பேச்சுருவாக்கம்; வெளிப்படத் தெரிவிப்பு, கருத்துக்குப் பேச்சுருவங் கொடுத்து வெளியிடுதல்; பேச்சுத்திற வழங்கீடு; உயிரொலியிசைப்புப் பாட்டு; பாட்டில் உயிரெழுத்து இசைப்பு; ஹீப்ரு முதலிய மொழிகளின் வரிவடிவில் உயிர்க் குறியீடுகளிடல்; ஹீப்ரு முதலிய மொழிகளின் வரிவடிவ உயிர்க் குறியீடு; (ஒலி.) உயிர் ஒலியாக மாறுதல்; (ஒலி.) உயிர் ஒலிப் பண்பேற்றம்.

சான்றிதழ், பதிலாளாகச் செயலாற்றுவதற்குரிய உரிமைச் சீட்டு; பிணையாதாரம், பிணையுறுதி; சான்றுறுதி, சான்றாதாரம்; ஆதார நேர்மை; போதிய ஆதாரம்; *v.* அதிகாரங் கொடு; அத்தாட்சி வழங்கு; பேராண்மையளி; பற்றாணை கொடு; பிணையுறுதியளி, பிணைப்படு; உத்தரவாதமாயிரு, உத்தரவாதஞ் செய்; போதிய ஆதாரமாயிரு; சான்றுறுதியளி; உறுதியாகக் கூறு, உத்தரவாதமாகக் கூறு; (தொ.) distress warrant, கடன்பாட்டிற்கான உடைமைப் பற்றாணை; general warrant, பொதுநிலை ஆணை, ஆள் இன்னாரென்று குறியாமல் ஐயத்திற்கிடமானவர்களைக் கைது செய்வதற்கான ஆணை; Treasury warrant, கருவூலப் பணப் பற்றாணைச்சீட்டு; warrant of attachment, உடைமைப் பற்றுறுதியாணை; warrant of attorney, வழக்குரைஞரின் பகரச் செயலுரிமைப் பத்திரம்.

**warr'antable,** *a.* ஒத்துக்கொள்ளக்கூடிய; நேரிய ஆதாரமுடைய; போதிய ஆதாரமுடைய; கலைமான் வகையில் வேட்டையாடுவதற்குரிய வயதுடைய.

**warrantee',** *n.* பிணைச்சீட்டு கொடுக்கப்பெறுபவர்.

**wa'rranter,** *n.* இசைவாணை கொடுப்பவர்; உத்தரவாதஞ் செய்பவர் (சட்.) பிணைச்சீட்டு கொடுக்கும் விற்பனையாளர்.

**wa'rrant-off'icer,** *n.* பற்றாணை அலுவலர்.

**wa'rrantor,** *n.* (சட்.) பிணைச்சீட்டுகொடுக்கும் விற்பனையாளர்.

**wa'rranty,** *n.* சான்றுவலிமை, நேர்மையெனக் காட்டுதற்குரிய அடிப்படை ஆதாரம்; (சட்.) உத்தரவாதச்சீட்டு.

**wa'rren,** *n.* குழிமுயற்பண்ணை.

**warr'ing,** *a.* போட்டி பூசல்களிடுகிற; முரண்பாடான.

**wa'rrior,** *n.* (செய்.) மாவீரர், போரேறு; பொருபடைவீரர்; *a.* நாடு வகையில் போர்விருப்பமுள்ள; காட்டுமிராண்டிகள் வகையில் மனிதனோடு போரிடுகிற; (தொ.) the Unknown Warrior, சிறப்பாகப் பலரறியப் புதைப்பதற்கெனத் தெரிந்தெடுக்கப்பட்ட 1914-18 உலகப் போரில் மாண்ட பொதுநிலைப் போர்வீரனின் உடம்பு; warrior ant, மற்ற இன எறும்புகளை அடிமையாகக்கொள்ளும் எறும்பு வகை.

**war'ship,** *n.* போர்க்கப்பல்.

**war'-song,** *n.* போர்ப்பாடல், பரணி.

**wart,** *n.* பாலுண்ணி; கழலை, உடம்பில் உண்டாகும் புறச்சதை வளர்ச்சி; கரணை, செடித்தண்டில் தோன்றும் புடைப்பு; (தொ.) paint one with his warts, வழுக்களை மறைக்காமலே ஒருவரைப்பற்றி முழுச் சொல்லோவியந் தீட்டு.

**wart'y,** *a.* பாலுண்ணிபோன்ற; பாலுண்ணிபோன்ற புடைப்புகள் நிறைந்துள்ள.

**war'-whoop,** *n.* அமெரிக்க செவ்விந்தியரின் போர்க் கூக்குரல்.

**war'-worn,** *a.* போர் அனுபவமுடைய; போரால் பாழடைந்த.

**war'y,** *a.* இடையறு விழிப்புடைய, இடர்கள் வகையில் எப்போதும் முன்னெச்சரிக்கையாய் இருக்கும் இயல்புடைய; தளரா உன்னிப்புடைய; (தொ.) be wary of, குறித்து எச்சரிக்கையாயிரு.

**was,** *v.* be என்பதன் தன்மை-படர்க்கை இடங்கள் சார்ந்த ஒருமை இறந்தகால வடிவம்.

**wash,** *n.* கழுவுதல்; கழுவப்பெறுதல்; ஆடை துவைப்பு; ஆடை அலக்கீடு; வெளுப்புக்கிடும் துணிமணித் தொகுதி; வெளுக்கப்படுந் துணிமணித் தொகுதி; வெளுத்துவந்த துணிமணித்தொகுதி; நீரலம்பீடு; நீரலம்பொலி; நீர்போழ் வலைவு; கப்பல் நீர்கிழித்துக்கொண்டு செல்வதால் உண்டாகும் அலைகள்; நீரரிப்பு; நீரரிப்பு மண், நீரினால் அடித்துக் கொண்டு போகப்பட்ட மண்; அரிப்பு வண்டல்; ஆறிடுமண்; கழிவுக்கழுநீர், பன்றிகளுக்குக் கொடுக்கப்படும் காய்கறிக் கழிவுத் துண்டுகளுடன்கூடிய காய்கறி கழுவிய நீர்; பாழ்ங் கஞ்சி நீர், செறிவு குறைந்த நீராளக் கரைசல் நீர்மம்; மட்ட நீர்மம்; பிதற்றல், பயனற்ற பேச்சு; கழுவுநீர்மம்; அலம்பு நீர்மம்; நோய்த்தடை மருத்தலம்பு நீர்மம்; மருத்துவப் பூச்சுக் குழைவுநீர்மம்; மேற்பூச்சுவண்ண நீர்மம்; ஒப்பனை நீர்மம்; நீர்வண்ணச் சாயம்; *v.* கழுவு; அலம்பு; மேலோடி அலம்ப விடு; அலம்பிச்செல்; உடம்புறுப்புக்களை நீரால் அலம்பு; கழுவித் துப்புரவுப்படுத்து; கழுவிக் கறைநீக்கு; அலக்கு, சலவைத்தொழில் செய்; ஆடை வெளு; சாயப் பொருள் வகையில் துவைப்பில் நிறம் இழக்காமலிரு; ஈரமாக்கு; ஆறு-கடல் வகையில் நீர் கரையலம்ப விடு; பாயும் நீர்ம வகையில் குறிப்பிட்ட திசையில் அடித்துக் கொண்டு செல்; பாறை மேற்கவிந்தடித்து வெறுமையாக்கு; குடைந்தெடு, தோண்டு; நீர் சிதறடித்துக்கொண்டு செல்; துடைத்தழித்துக்கொண்டு செல்; உலோகக் கலவையை நீர்விட்டுச் சலித்தெடு; தூரிகைகொண்டு நீர்வண்ண மென்பூச்சுக்கொடு; மட்டமான மெல்லிய பொன்முலாம் பூசு; (தொ.) the wash, சலவை வெளுப்பு; wash down, அடித்துக்கொண்டு செல்; உணவு செரிக்க உதவும் வகையில் பருகு; washed out, ஒழுக்கங்கெட்ட வாழ்க்கையினால் நலிவுற்ற, சோர்வு வாய்ந்த, கட்டழிந்த; wash its face, செலவைச் சமாளிப்பதற்கான நடவடிக்கையிலீடுபடு; wash one's brain, நிரம்பக் குடி; wash one's dirty linen at home, வீட்டு அழுக்கு மூட்டைகளை வெளிக்குக் கொண்டுவராதிரு; wash one's dirty linen in public, வீட்டுக் குப்பைகளை வெளியே கொண்டுவந்து கிளறு; wash one's hands, கையுதறி விடு, பொறுப்பினைத் தட்டிக்கழி; wash thing out, ஒன்றன் உட்புறத்தைக் கழுவு; wash up, பயன்படுத்திய பிறகு உண்கலங்களைக் கழுவிவை; கடல் வகையில் கவிழ்த்த கலங்களைக் கரைமீது கொண்டு ஒதுக்கு; கைகால் அலம்பு; won't wash, வாத வகையில் கூராய்விற்கு ஈடுகொடுத்து நிற்கமாட்டாது.

**wash'-ba'sin,** *n.* அலம்புதட்டம்.

**wash'-board,** *n.* சலவைத் தேய்ப்புக் கட்டை; படகின் அலை காப்புப் பலகை; அறைச் சுவரடிக் கட்டை.

**wash'-boil'er,** *n.* வெள்ளாவிச் சால்.

**wa'sher,** *n.* கழுவுபவர்; அலம்பும் இயந்திரம்; அலக்குபொறி; சுரியாணி மரைக்குக் கீழிடும் பட்டை வளையம்; *v.* பட்டை வளையம் பொருத்து.

**wash'erman,** *n.* சலவையாளர்

**wash'-house,** *n.* சலவைமனை.

**wash'iness,** *n.* மிகுதியும் நீர்கலந்த நிலை, நீராளமான நிலை; நொய்ம்மை.

**wa'shing,** *n.* வெளுப்பு; அலம்பீடு; நீர்மத் தோய்வு; நனைவு; நீர்தோய்ப்பு; நீர்நனைப்பு; நீர்மத் தோய்ப்பு; சலவைக்கு அனுப்பப்படுந் துணிகள்; (தொ.) washing soda, சலவைக்காரம்.

**Wa'shington,** *n.* அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஆட்சித் தலைமை; அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஆட்சித்தலைமையிடம்.

**Washington'ia,** *n.* அமெரிக்க பனைமர வகை.

**wash'-leather,** *n.* மென்பதத்தோல்.

**wash'-out,** *n.* பெருமழை உடைப்பு; முழுத்தோல்வி, இலக்கு எய்த முடியா நிலை; முறிவு.

**wash'-pot,** *n.* கைகழுவுகலம்; வெள்ளுருக்குக்கலம், தகர வேலைப்பாடு வகையில் உருகிய வெள்ளீயங்கொண்ட கலம்.

**wa'shy,** *a.* பாழ்ந்தெளிவான, நீராளமான, மிகுநீர் கலந்த; திட்பமற்ற.

**wasp** [1], *n.* குளவி.

**WASP** [2], *n.* அமெரிக்க வழக்கில் 1944-ஆம் ஆண்டிற்கு முற்பட்ட போர்சாரா விமானப் பயிற்சிப்படை மாது.

**wa'spish,** *a.* எளிதிற் சினங்கொள்கிற, வெடுவெடுப்பான.

**wasp'-waist'ed,** *a.* நுண்ணிடை வாய்ந்த.

**wa'ssail,** *n.* விழாக்காலம்; வெறிக்குடிப்பு; விழாக்காலத்தில் குடிக்கப்படுந் தேறல்வகை; *v.* களியாட்டயர், விழாக் கொண்டாடு.

**Wass'ermann reac'tion, Wass'ermann's test,** *n.* மேகக் கிரந்திநோய்ச் சோதனை.

**wast**, *v.* be என்னும் வினையின் பழங்கால முன்னிலை ஒருமை இறந்தகால வடிவம்.

**wast'age**, *n.* அழிமானம், சேதாரம்.

**waste**, *n.* பயனின்மை, வீணான நிலை; பாழடிப்பு, வீணடிப்பு; வீண்செலவு; பயனழிவு, வீணாகிவிட்ட பொருள்; பயனற்ற பொருள், வீண்பொருள்; பயன்தீர்ந்த பொருள்; கழிவுப் பொருள்; சக்கை-சவறு; தரிசு நிலம்; வன்பாலை; மக்கள் வாழ்வற்ற இடம்; பயனில் வளர்ச்சி, காட்டு வளர்ச்சி; பயனில் மிகுதி; கவர்ச்சியற்ற பாழ்ப்பரப்பு; வெறும்பாழ்; தேய்மானம், சேதாரம்; நடைமுறைத் தேய்வுமாய்வு; (சட்.) அழிமதி, குடிவாரத்தாரின் தவறினால் ஏற்படும் உடைமை அழிவுக்கேடு; *a.* பாழான; வன்பாலையான; தரிசான; மக்கள் வாழ்வுக்கிடந்தராத; மக்கள் வாழ்வற்ற; வீணாகக் கிடக்கிற; பயன்படுத்தப்படாத; பயன்படாத; வெறும் பாழான; கவர்ச்சியற்ற; பயன்படாப் பரப்பான; கவர்ச்சியற்ற பரப்பான; இடைக்கவர்ச்சி வேறுபாடற்ற; பயனற்ற; வீணான; பயன் தீர்ந்த; கழிக்கப்பட்ட; கழித்தொதுக்கப் பட்ட, கழிவான; பயன்படா விளைவான; பயன்படா வளர்ச்சியான; பயன்படாக் கிளைவிளைவான; வேண்டா அளவான; பயனில் அளவான; பயன்படா அளவான; பயன்படுத்தாது கழிகிற; பயன்படாது கழிகிற; *v.* வீணாக்கு, பாழடி; வீணாகச் செலவுசெய்; வீண் பெருஞ்செலவு செய்; வீணழிவு செய்; பயனின்றிப் பொருளை அழிவு செய்; பயனின்றி வறி தாக்கு; பயனின்றி ஆற்றலை வீணாக்கு; பயனின்றி நேரங் கழி; வீணாகக் கழி; வீணடிப்புச செய், நன்றியற்ற செய லாக்கு; தேய்வுறுத்து, நலிவி; மெலியச் செய்; வாட்டு, வதக்கு; தேய்வுறு, நலிவுறு; மெலிவுறு; வாடு; வதங்கு; தூறையாடு; சுட்டுத் தீக்கிரையாக்கு; கீழ் வாரத்தார் வகையில் இழப்பழிவு உண்டுபண்ணு; (தொ.) go to waste, பாழாகு; lay waste, பாழாக்கு, சூறையாடு; lie waste, தரிசாகக் கிட, பயிர் செய்யப்படாமலிரு; run to waste, வீணாக ஒழுகு; பயன்படாமல் வீணாகு; நட்பு வகையில் தவறான இடத்தில் கொள்ளப்பட்டு வீணாகு; waste breath, பயனில பேசு; waste products, செய்தொழிலில் கழிபட்ட இடை விளைவுப் பொருள்கள்.

**waste'ful**, *a.* ஊதாரித்தனமான.

**waste'less**, *a.* வற்றாத; எடுக்க எடுக்கக் குறையாத.

**waste'-paper**, *n.* கழிவுதாள்; (தொ.) waste-paper basket, கழிவுதாள் கூடை.

**waste'-pipe**, *n.* கழிவுநீர்க் குழாய்.

**wast'er**, *n.* ஊதாரி, வீணாக்குபவர்; பாழாக்குவது; வீணாக்கப் பட்ட செய்பொருள்.

**wast'rel**, *n.* கெட்டுப்போன செய்பொருள், கவனிப்பாரற்ற குழந்தை.

**watch**, *n.* கைக்கடிகாரம்; காத்திருக்கை; காவல்; விழிப்பு நிலை, உன்னிப்பு, கவனிப்பு; இராக்காவல்; முற்கால நகர் சுற்றுக் காவல்; நகர்சுற்றுக் காவலர்; நகர்ச் சுற்றுக் காவற் குழு; நகர்ச்சுற்றுக் காவற் குழுவினர்; இரவுக் காவல்முறை; யாமம், இரவுநேர முறைக்கூறு, இரவுக் காவல் முறைநேர எல்லை; (அரு.) இரா விழிப்பு; *v.* கூர்ந்து நோக்கு; கூர்ந்து கவனி; ஒற்றுடு; காத்துப்பேணு, கவனித்து மேற்பார்; காத்திரு; வேணவாவுடன் காத்திரு; எதிர்நோக்கிக் காத்திரு, எதிர்பார்த்துக் காத்திரு; வாய்ப்புக்காகக் காத்திரு, காலங் கருதியிரு; குறித்து விழிப்புடனிரு, உன்னிப்பாயிரு, முன் னெச்சரிக்கையுடனிரு; (அரு.) கண்விழித்துக்கொண்டிரு, இரவு விழித்திரு; (தொ.) Black Watch, ஸ்காத்லாந்தின் படைப்பிரிவுகளுள் ஒன்று; on the watch for, எதிர்நோக்கி உன்னிப்பாக; pass as a watch in the night, விரைவில் மறக்கப்பெறு; watch after, நடமாட்டங்களைக் கூர்ந்து பார்த்துக்கொண்டிரு, அக்கறையுடன் தொடர்ந்து கவனித்துக் கொண்டிரு; watch and ward, இரவு பகல் காவல், இடைவிடாக் காவல்; watch in, புத்தாண்டினை வரவேற்ப தற்காக விழித்துக்கொண்டிரு; watching brief, வழக்கு வகையில் வழக்குரைஞரின் தொடர் கவனிப்பு ஏற்பாடு; watch one's step, கவனமாக அடியெடுத்து வை; விழிப் பாகச் செயலாற்று; watch up, இரவெல்லாம் இமைகொட்டா திரு.

**watch'dog**, *n.* காவல் நாய்; அக்கறையுடன் காத்துவருபவர்.

**watch'er**, *n.* காவல்காப்பவர்; விழிப்புணர்வோடிருப்பவர், எச்சரிக்கையாயிருப்பவர்.

**watch'-fire**, *n.* இராக்காலப் பாசறை நெருப்பு.

**watch'ful**, *a.* விழிப்பாயிருக்கும் இயல்புடைய; கூர்ந்து கவனிக்கிற.

**watch'man**, *n.* காவலாள்; *pl.* watch'men.

**watch'-night**, *n.* முழுநேர விழிப்புடன் கொண்டாடப்படும் ஆண்டின் கடைசி இரவு.

**watch'-tower**, *n.* காவல் மாடம்.

**watch'word**, *n.* கோட்பாட்டுச் சொல்.

**wa'ter**, *n.* நீர்; மழைநீர்; கண்ணீர், வியர்வை நீர்; உமிழ்நீர்; சிறுநீர்; ஊனீர்; கடல்; ஏரி; ஆறு; நீர்நிலை; வேலைநீர், கடலின் ஏற்ற இறக்க நிலை; நீர்க்கரைசல்; மருத்துக்கலவை அலம்பு நீர்மம்; மணிக்கல்லின் ஒளிநீரோட்டம்; கழுவுநீர்; கழிவுநீர்; நிதித்துறையில் புதிய பங்குவெளியீட்டினால் ஏற்படும் பேயரளவான முதலீட்டுப் பெருக்கம்; *v.* தாவரங் களுக்கு நீர் தெளி, பயிர்களுக்கு நீர் பாய்ச்சு; நீராளமாக்கு; பால்-தேறல் முதலியவற்றில் நீர்கலந்து கலப்படஞ் செய்; நீரருத்து, குதிரை-கால்நடை ஆகியவற்றிற்குத் தண்ணீர் காட்டு; கால்நடை வகையில் நீர்குடிக்க நீர்நிலைக்குச் செல்; ஊர்தி-பொறி வகையில் நீர் ஊற்றப்பெறு; கப்பல்-தொடர் ஊர்தி ஆகியவற்றின் வகையில் நீர் நிரப்பிக்கொள்; கண் வகையில் கண்ணீர் ததும்பப்பெறு; நா வகையில் உணவு உணர்வில் நீர் ஊறப்பெறு; பட்டுத்துகில் வகையில் அலையலை யான தோற்றந் தருதற்காக நனைத்து அழுத்து; வாணிகச் சங்க வகையில் புதிய பங்குகளை வெளியிடுவதன் மூலம் பெய ரளவான மூலதனப் பெருக்கம் உண்டுபண்ணு; (தொ.) above water, பணமுட்டுப்பாடு நீங்கப்பெற்று; be in hot water, ஆராயாச் செயலினால் இடர்ப்பாட்டில் சிக்கப்பெறு; between wind and water, சேதமுறத்தக்க நிலையில்; cast one's bread upon the waters, கைம்மாறு கருதாமல் உதவி செய்; cast one's water, (மரு.) நோய் காணச் சிறுநீர் ஆய்வு செய்; fish in troubled waters, குழப்பமான சூழ்நிலை யைப் பயன்படுத்திக்கொண்டு தன நலனைப் பெருக்கிக்கொள்; go through fire and water, இடர்களையெல்லாம் வீரத்துடன் தாங்கு; high water, கடலின் வேலை ஏற்றம்; hold water, வலங் கொண்டதாயிரு, கூராய் வினைத் தாங்கி நில்; in deep water, in deep waters, பேரிடர்ப்பாடுகளிற சிக்கி; in low water, சோர்வுற்ற நிலையில், பணந் தட்டுப்பாடுற்ற நிலையில்; in smooth water, எளிதான நிலையில்; இடர்ப் பாடற்ற நிலையில்; keep one's head above water, நிதிநிலை மைச் சீர்குலைவிடையே சமாளித்து நில்; low water, கடலின் வேலை இறக்கம்; make a hole in the water, நீரில் மூழ்கி விடு; make the mouth water, விருப்பத்தைத் தூண்டு, பொறாமையைக் கிளறு; make water, pass water, சிறுநீர் கழி; of the first water, உயர்வுத்தரமுடைய; pour oil on the waters, இசைவூட்டி அமைதிப் படுத்து; strong waters, சாராய வகைகள்; throw cold water on, ஏளனஞ் செய், ஊக்கங்கெடு; tread water, செங்குத்தாக மித; water bewitched, நீராளமான தேநீர்; water buffalo, (இழி படை.) நிலநீர் செல்படையிறக்கு கலம்; water down, எழுத்தாண்மை வகையில் செறிவற்றதாக்கு; அசசங் குறை வுறுத்து; water on the knee, மூட்டுநீர்க்கோவை; waters of forgetfulness, கீழுலக ஆறு; முழு மறதி நிலை; சாவு; water weasel, (படை.) சதுப்புநிலமீது செல்லும் நிலநீர் செல்கலம்.

**wa'ter-anc'hor**, *n.* காற்றோட்ட நீரோட்டந் தடுக்கும் கங் கூடக் கம்பிவடத்தின்மேலுள்ள மிதவைச்சட்டம்.

**wa'ter-bail'iff**, *n.* (வர.) துறைமுகச் சுங்கச்சாவடி அலு வலர்; நீர்நிலை காவலர், காப்பு நீர்நிலைகளில் மீன்பிடிப்புத் தடுப்பவர்.

wa'ter-bed, *n.* புண்பட்ட நோயாளிக்குரிய நீரடைத்த மெத்தை.
wa'ter-bell'ows, *n.* நீர்விசை இயக்கத் துருத்தி.
wa'ter-blister, *n.* நீர்க்கொப்புளம்.
wa'ter-boatman, *n.* நீர்வாழ் பூச்சிவகை.
wa'ter-borne, *a.* நீர்வழி ஏற்றிச்செல்லப்படுகிற.
wa'ter-brash, *n.* நீராக வாந்தியெடுக்கிற அசீரண வகை.
wa'ter-breaker, *n.* (கப்.) சிறுமிடா.
wa'ter-butt, *n.* பெரிய மழைநீர்த்தொட்டி.
wa'ter-carriage, *n.* நீர்வழிப் போக்குவரவு; நீர்வழிப் போக்குவரத்து ஏற்பாடு.
wa'ter-carrier[1], *n.* நீர் கொண்டுசெல்பவர்.
Wa'ter-carrier[2], *n.* கும்பராசி.
wa'ter-chute, *n.* சறுக்காட்டச் செயற்கைச் சாய்நீரோடை.
wa'ter-closet, *n.* சிறுநீர் கழிப்பிடம்.
wa'ter-colour, *n.*, wa'ter-colours, *n. pl.* ஓவிய வண்ண நீர்க்கரைசல்; நீர்வண்ண ஓவியம்; நீர்வண்ண ஓவியக் கலை.
wa'ter-cooler, *n.* நீர்க்குளிர்மையூட்டுங் கருவி, நீரோட்டத்தால் குளிர்மையூட்டுங் கருவி.
wa'ter-core, *n.* பழங்களில் குருநீர்த்தங்கலுள்ள நிலை; வார்ப்படசுதில் உள்நீர்கொள்ளத்தக்க நிலை.
wa'tercourse, *n.* ஆறு; நீரோடை.
wa'ter-craft, *n.* படகு, தோணி; படகுத்தொகுதி.
wa'ter-crane, *n.* ஊர்தி இயந்திரத்திற்கு நீர்தருவிக்கும் உயர்மட்ட நீர்ச்சேமக் கருவி.
wa'tercress, *n.* நீர்வளர் கீரைவகை.
wa'ter-culture, *n.* தாவர ஊட்ட ஆய்விற்கான சத்துநீர் வளர்ப்பு முறை.
wa'ter-cure, *n.* நீர்மருத்துவ முறை.
wa'ter-deck, *n.* படைவீரர் பையின் திண் துணி அணியுறை
wa'ter-diviner, *n.* உல்லியர், கூவநூலோர், அடிநிலநீர்த்தளங் காண்பவர்.
wa'ter-drinker, *n.* மதுபானந் தவிர்ப்பவர்.
wa'terfall, *n.* நீர்வீழ்ச்சி, மலையருவி.
wa'ter-gas, *n.* நீர்பிரி வளி.
wa'ter-gate, *n.* வடிமதகு.
wa'ter-glass, *n.* நீரடிக்காட்சிக் குழற்கண்ணாடி.
wa'ter-gruel, *n.* நீராளக்கஞ்சி.
wa'ter-hammer, *n.* குழாய் உள்நீரழுத்தவிசை; உள்நீரழுத்த மோதொலி; குழாய் உள்நீரோவி அழுத்தவிசை
wa'ter-hole, *n.* வறண்ட ஆற்று வண்டற்குட்டை.
wa'ter-ice, *n.* இன்பனிக்கட்டி.
wa'ter-inch, *n.* நீர்பெயர்வலகு, மிகக்குறைந்த அழுத்தத்தில் ஓர் அங்குல விட்டமுள்ள குழாய்மூலம் 24 மணிநேரத்தில் வெளியேற்றப்படும் நீரின் அளவு.
wa'tering-cart, *n.* தெருவில் நீர்தெளிக்கும் வண்டி.
wa'tering-place, *n.* கால்நடைக் குடிநீர்த்துறை.
wa'tering-pot, *n.* பூவாளி.
wa'ter-jacket, *n.* நீர் உறை, குளிர்ச்சியாக வைத்திருக்க வேண்டிய இயந்திர பாகத்தைச் சுற்றியுள்ள நீர் நிரப்பப்பட்ட உறை.
wa'ter-joint, *n.* நீர்காப்பான இணைப்பு.
wa'ter-junket, *n.* ஈரம்-மணற்புறம் நாடும் பறவைவகை.
wa'ter-laid, *a.* கம்பிவட வகையில் நீரினுள்ளாக இடும்படி மும்மைப புரியாக்கப்பட்ட.
wa'ter-lens, *n.* நீர்வில்லை உருப்பெருக்காடி.
wa'terless, *a.* நீரற்ற.
wa'ter-level, *n.* நீர்மட்டம்; நீரின் மேற்பரப்பு; அடிநீர் மட்டம். அடிநிலக்கசிவின் செறிமட்டம்.
wa'ter-lily, *n.* ஆம்பல், அல்லி.
wa'ter-line, *n.* நீர்வரை, நீரின் மேற்பரப்பு கப்பலின் பக்கங்களைத் தொடும் வரை.
wa'ter-logged, *a.* நீர்த்தோய்வுச் செறிவான; நீரூறிய; மிதக்கமுடியா அளவு நீரில் தோய்ந்த.
wa'terlogging, *n.* ஈரமட்ட எழுச்சிக்கோளாறு.
Waterloo', *n.* நெப்போலியன் 1815-இல் இறுதியாகத் தோல்வியுற்ற போர்க்களம்; கடைசிபபோர்; இறுதிப் போராட்டம்; கடைசிப்பேரடி; (தொ.) Waterloo cracker, வாணவெடி வகை.
wa'ter-main, *n.* நீர்வழங்கு திட்டத்தின் அடித்தலப் பெருங் குழாய்.
wa'terman, *n.* வாடகைப் படகோட்டி; குடிநீர் வழங்குபவர்.
wa'termark, *n.* நீர்வரிக்குறி.
wa'ter-meadow, *n.* நீர்வளப் பசும்புல் நிலம்.
wa'ter-melon, *n.* கர்ப்பூசனி, பிக்காப்பழம்.
wa'ter-me'ter, *n.* வடிகால் நீரளவி.
wa'ter-mill, *n.* நீர்விசையாலை.
wa'ter-monkey, *n.* கூசா, நீண்டு குறுகிய கழுத்துடைய தண்ணீர்ச்சாடி.
wa'ter-motor, *n.* நீர் அழுத்த விசைப்பொறி.
wa'ter-nymph, *n.* நீரமகள்.
wa'ter-pillar, *n.* நீர்வார்ப்புக் கம்பம்.
wa'ter-pipe, *n.* தண்ணீர்க்குழாய்.
wa'ter-plane, *n.* நீர்வரைத்தளம்,
wa'ter-plate, *n.* நீரடித்தட்டம்.
wa'ter-platter, *n.* குள ஆம்பல்வகை.
wa'ter-po'lo, *n.* நீர்ச்செண்டாட்டம், நீச்சுக்காரர்கள் இலக்குகள் வைதது ஆடும் கைப்பந்தாட்டம்.
wa'ter-power, *n.* நீர்விசை, இயந்திரங்களை இயக்குதற்குப் பயன்படுத்தப்படும் நீராற்றல்.
wa'terproof, *n.* நீர்க்காப்பான ஆடை, நீர்க்காப்புப்பொருள்; *a.* நீர்க்காப்பான, நீர்புக வழியளிக்காத; *v.* நீர்க்காப்பாக்கு, தொய்வகம் முதலியவற்றைக் கொண்டு நீர்க்காப்புடைய தாக்கு.
wa'terproofer, *n.* நீர்க்காப்புச்செய்பவர்; மோட்டுநீர்க்காப்பாளர்; நீக்காப்புச்செய்யும் பொருள்.
wa'ter-ram, *n.* நீர்ஏற்ற நுண்பொறி, நீரின் தீடையாற்றலால் அதன் பகுதியை உயர்த்தும் அமைவு.
wa'ter-rat, *n.* நீரெலி.
wa'ter-rate, *n.* தண்ணீர் வரி.
wa'ters, *n. pl.* கன்னிக்குடநீர்; கடல்; பெருநீர்ப்பரப்பு; அலைபுறு வெள்ளப்பரப்பு; (தொ.) the waters, கடல்; பெருநீர்ப்பரப்பு.
wa'ter-sail, *n.* தண்ணீருக்குச் சற்று மேலிருக்குஞ் சிறு கபபறபாய்.
wa'ter-seal, *n.* வடிநீர்த்தடுக்கு, பொறியில் தண்ணீர் வடிவிலுள்ள தடையமைவு.
wa'tershed, *n.* ஆற்றுப் பள்ளத்தாக்குகள் இரண்டினைப் பிரிக்கும் வரை; (பே-வ.) நீர் கீழ்நோக்கிப் பாயுஞ் சரிவு; (பே-வ.) ஆற்றுப் பள்ளத்தாக்கு.
wa'ter-shoot, *n.* கூரை நீர்த்தூம்பு.
waterside', *n.* நீர்க்கரை; கடலோரம்.
wa'ter-skiing, *n.* விசைப்படகின் பின் சறுக்குகட்டையில் இழுக்கப்பட்டுச் செல்லும் கேளிக்கை.
wa'ter-skin, *n.* தோற்பை நீர்க்கலம்.
wa'ter-soldier, *n.* நிமிர்மலர் நீர்ச்செடிவகை.

**wa'ter-souchy**, *n.* உணவுமீன் வகை.

**wa'ter-splash**, *n.* நீர்த் தேக்கத்தில் மூழ்கிவிட்ட பாட்டைப் பகுதி.

**wa'terspout**, *n.* நீர் பீறிட்டு வெளிப்படுங்குழாய்; நீர்த்தாரை; பெருமழை; சிறு சுழற்காற்றுப் போன்ற கொந்தளிப்பு; நீர்த் தம்பம், நீரும் வானும் ஒன்றாகத் தம்பம்போல் சுருண்டிறங்கி வந்து நீரை அள்ளி ஆவியாகக் கொண்டேகும் கடற் சூறாவளி மேகம்.

**wa'ter-sprite**, *n.* நீருறை தெய்வம்.

**wa'ter-supply'**, *n.* நீர்வழங்கீடு; நீர் வழங்கீட்டளவு.

**wa'ter-table**, *n.* சுவர்த் தளவரி, கட்டிடத்திலிருந்து நீரை வெளியேற்றுதற்கான சுவர்ப் பிதுக்கம்; (மண்.) அடிநில நீர்மட்டம், நீர்ச்செறிவுள்ள அடிநிலப்பகுதியின் மேல்வரைத் தளம்.

**wa'ter-tiger**, *n.* நீர்வண்டு வகையின் முட்டைப்புழு.

**wa'tertight**, *a.* நீரிறுக்கமான; (தொ.) watertight compartment, செயற்கைப் பிரிவு.

**wa'ter-tower**, *n.* நீர்ச்சிகரம், நீர்வழங்கீட்டு விசைக்குரிய உயர் முகட்டு நீர்த்தொட்டி.

**wa'ter-tube**, *n.* நீர்செல் குழாய்; (தொ.) water-tube boiler, வளைகுழல் நீர் வேம்பா.

**wa'ter-vole**, *n.* நீரெலி.

**wa'ter-waggon, wa'ter-wagon**, *n.* தண்ணீர் விற்பனை வண்டி; தண்ணீர் தெளிக்கும் வண்டி.

**wa'ter-wave**, *n.* நீரலை; ஈர்ம்பதக் கூந்தல் அலை.

**wa'ter-waving**, *n.* கூந்தல் ஈர்ம்பத அலைவாக்கம்.

**wa'ter-way**, *n.* மரக்கலஞ் செல்லத்தக்க நீர்வழி; கலவரி, கப்பல்தளத்தின் வெளிப்புற விளிம்பைச் சுற்றி நீர்வழிந் தோடுவதற்காகச் சால்வெட்டிப் பொருத்தப்பட்டுள்ள கனத்த பலகைகள்.

**wa'ter-weasel**, *n.* (படை.) சதுப்புநிலங்களிற் பயன்படும் நில-நீர் இயக்கக் கலம்.

**wa'ter-wheel**, *n.* நீர்விசை உருளை.

**wa'ter-wings**, *n. pl.* நீச்சல் மிதவைப் பொருள்கள்.

**wa'ter-witch**, *n.* உல்லியர், கூவநூலோர், அடிநில நீர்த்தளங் காண்பவர்; பறவை வகை.

**wa'ter-withe**, *n.* சாறு மிக்க கொடிமுந்திரிப்பழச் செடிவகை.

**wa'terworks**, *n.* நீர் வழங்கீட்டு நிறுவனம்; நீர்வழங்கீட்டுப் பணியாளர் குழாம்; வண்ண ஒப்பனை நீரூற்று.

**wa'tery**, *a.* நீராளமான; மிகுதியும் நீர்கொண்டுள்ள; பெரிதும் ஈரமான; கண்கள் வகையில் நீர் கசிகிற; உதடுகள் வகையில் எச்சில் வடிகிற; நீர்த்த, நீர்மங்கள் வகையில் நீர்கலத்தலால் செறிவு குறைக்கப்பட்ட; நீர்போன்ற; சொல்லமைப்பு-பேச்சு-எழுத்து நடை வகையில் சுவையற்ற, சத்தற்ற, செறிவற்ற; எழுச்சியற்ற, மந்தமான, கிளர்ச்சியற்ற; கவர்ச்சியற்ற; வலுக்குறைந்த; நிறம் வகையில் வெளிறிய, சாயம்போன; மழைவருங் குறிகாட்டுகிற.

**watt**, *n.* (மின்.) மின்னாற்றல் விசைமான அலகு, விநாடி ஒன்றுக்கு வேலை ஊக்க ஆற்றலின் ஓர் அலகு செயற்படும் வீதம்.

**wa'ttle[1]**, *n.* மிலாற்றுப்படல் வேய்வு, வேலிகள்-சுவர்கள்-கூரைகள் வகையில் பின்னி முடைதற்கான கம்பு சுழிகள், இடையீட்டுத் தடைவேலி வகை; *v.* சுழிகம்புகளை இடைமிடைந்து பின்னு; மிலாற்றுப்படல் அடை; (தொ.) wattle and daub, மண் பூசிய வேலிக் கம்புகள்.

**wa'ttle[2]**, *n.* தசைத்தொங்கல்.

**wa'ttles**, *n. pl.* இடைமிடைவுக் கம்பு கழிகள்.

**watt'meter**, *n.* மின்விசை மானி.

**waul**, *v.* அலறு, பூனைபோற் கத்து.

**wave**, *n.* அலை, நீர்த்திரை; உடைதிரை; கரைமீது சுழன்று அடிக்கும் அலை; குமுறும் அலை; அதிர்வலை, காற்றின் அலையதிர்வு; விசும்புவெளியில் ஆற்றல் அலையதிர்வு; ஒலி அதிர்வியக்க அலை; தற்காலிக எழுச்சி; திரை வரை, திரைவளைவு; அலைபாய்வுப் பரப்பு; திரைபடு நிலை, நெளிபடுமியல்பு; அசைத்துக் காட்டுஞ் சைகை; *v.* அதிர்வுறு, கிளர்வுறு, காற்றில் அலையாடு; நடுங்கு, துடி; விழுந்து விழுந்து எழு; அலையாடும் இயக்கமூட்டு; கை யசை, கையிற் பிடித்துள்ள பொருளை ஆட்டு; கையசைத்துக் கட்டளையிடு, கையிற் பிடித்துள்ள பொருளை ஆட்டி ஆணையிடு; கையசைத்துப் போகும்படி சொல்; கையசைத்து அருகே வரும்படி சொல்; கையசைத்து விடைகொடு; தலைமயிருக்கு அலையலையான தோற்றங் கொடு; உருவரைக் கோடுகளுக்கு நெளிவு நெளிவான வடிவங்கொடு; நெளிவுடைய தாக்கு, திரைவுபடச் செய்; அலையலையான தோற்றங் கொண்டிரு; திரைவுள்ளதாயிரு



**wave'-length**, *n.* (இய.) அலைநீளம்.

**wave'let**, *n.* சிற்றலை.

**wav'er**, *v.* தள்ளாடு; தடுமாற்றமுறு; தயக்கங் காட்டு; மன உறுதியற்றிரு; திடசித்தமில்லாதிரு; கொள்கையில் தளர்வு காட்டு; பின்வாங்கத்தொடங்கு; நடுங்கு.

**wav'ering**, *n.* தள்ளாட்டம்; தடுமாற்றம்; தயக்கம், ஊசலாட்டம்; *a.* தள்ளாடுகிற; ஊசலாடுகிற; உறுதியற்ற.

**wav'ey**, *n.* பனிப்பிரதேச வாத்து வகை.

**wav'iness**, *n.* அலையலையாயிருக்கும் நிலை.

**wav'y[1]**, *n.* பனிப்பிரதேச வாத்து வகை.

**wav'y[2]**, *a.* அலையலையான, விழுந்தெழுந்து செல்லுகிற; (தொ.) Wavy-Navy, (பே-வ.) கப்பற்படையின் தேசிய மதிப்பு வாய்ந்த தொண்டர் சேமப்படை.

**wax[1]**, *n.* மெழுகு; தேன்மெழுகு, தேனடையின் சக்கை; விளக்குக்குப் பயன்படும் தூய்தாக்கப்பட்ட வெண்மெழுகு; மெழுகொத்த பொருள்; சிலவகைப் பூச்சிகளின் மெழுகொத்த சுரப்பு; காதுக் குறும்பி; ஒலிப்பதிவுக்கருவி; *a.* மெழுகினால் செய்யப்பட்ட; *v.* மெழுகூட்டு; மெழுகிடு; மெழுகு மேற்பூச்சிடு; மெழுகுக் கவசமிடு; மெழுகினால் மெருகிடு; ஒலிப் பதிவுக் கருவியிற் பதிவுசெய்.

**wax[2]**, *n.* (பே-வ.) திடீர்ச் சீற்ற எழுச்சி.

**wax[3]**, *v.* பிறை வகையில் வளர்ந்துகொண்டு போ; ஒளி மிகுந்துகொண்டு செல்; பெருக்கமடைந்துகொண்டு செல்; வரவர ஆகிக்கொண்டு செல், ஆகத்தொடங்கு; (செய்.) பெருகு; பெரிதாகு; வளர்வுறு; (தொ.) wax and wane, செல்வாக்கு வகையில் மாறிமாறி வளர்ந்து தேய்வுறு.

**wax'bill**, *n.* ஒண் பளிங்கியல் அலகுடைய சிறு பறவை வகை.

**wax'-chandler**, *n.* மெழுகுத்திரிகள் செய்பவர்; மெழுகுத் திரிகள் விற்பவர்.

**wax'cloth**, *n.* மெழுகிரட்டு, மெழுகுத்துணி விரிப்பு.

**wax'en**, *a.* மெழுகினாற் செய்யப்பட்ட; மெழுகுபோன்ற.

**wax'-insect**, *n.* மெழுகுக் கசிவுடைய பூச்சி வகை.

**wax'-light**, *n.* மெழுகுத்திரி விளக்கு.

**wax'-myrtle**, *n.* ஒளிதரும் கொட்டை வகை; ஒளிக் கொட்டை மரவகை.

**wax'-painting**, *n.* சூட்டோவியம், மேற்பரப்பில் சூடிட்டு உள்வரை மூலம் வரையப்படும் வண்ண ஓவியம்.

**wax'-palm**, *n.* தென் அமெரிக்க பனை வகை.

**wax'-paper**, *n.* மெழுகுத் தாள், மெல்லிதாக மெழுகு பூசப்பட்ட நீர்க்காப்பான தாள்.

**wax'-pink**, *n.* தோட்டச்செடி வகை.

**wax'-pocket**, *n.* (வில.) தேனீயின் மெழுகு கசிவிக்கும் துளைகளுள் ஒன்று

**wax'-pod**, *n.* அமெரிக்க மொச்சை வகை.

**wax'-tree**, *n.* மெழுகு கசியவிடும் மரவகை.

**wax'wing**, *n.* அரக்கியல் இறகு நுனியுடைய பறவை வகை.

**wax'work**, *n.* மெழுகு வேலைப்பாடு.

**wax'works**, *n. pl.* மெழுகுச் சிலைப்படிவக் கண்காட்சி.

**wax'y**, *a.* மெழுகினையொத்த; எளிதில் குழைத்துருவாக்கத் தக்க; எளிதிற் சீற்றங்கொள்கிற; (மரு.) உறுப்பு மெழுகு போன்று செறிவுடையதாகுஞ் சீர்கேடமைந்துள்ள.

**way**, *n.* வழி; பாதை; போக்குவரவுப் பாட்டை; சாலை; செல்வழி; செல்தடம்; செல்லவேண்டிய நெறி; விரும்பும் நெறி; இடைத் தொடர்பு; ஊடிணைப்பு; போக்கிடம்; நீக்குப் போக்கு வகை; செல்முறை, இலக்கு எய்தும் முறை; வழித் தொலை, பயணத்தொலைவு; தொலைவு; தொலைவளவு; அளவு; பயணம்; பயண வேளை; பயண இடைவழி; இடையிட்ட நிலை; போகும் பக்கம்; போகும் திசை; போக்கு; நடை; வேகம்; விருப்பம்; தற்போக்கு; தன்முடிபு; செயலெல்லை; ஆற்றலெல்லை; வீச்செல்லை; பாங்கு; தோற்ற நிலை; இயல்பு; பொதுவியல்பு; தனிப்பண்பு, பண்பியல்பு; வழக்கம்; பழக்கம்; பழகுமுறை; செயற்பாங்கு; வினைப்பாங்கு; நடைமுறைப் பாங்கு; தனிப்பாங்கு; நிலை; ஆம்நிலை; தரம்; கொள்நிலை; துறை; தொழில்வகைத் துறை; வகை; வாயில்; வழிமுறை; செயல் வழி; செயல் வகை; வழிவகை; வரிசை, தொகுதி; வகைமுறை; வாய்ப்பு; முற்போக்கு வழிவகை; முன்னேற்றம்; (தொ.) be in the family way, கருத்தரித்த நிலையிலிரு; by the way, வழியில்; பயணத்தின்போது; இடைநிகழ்வாக; by way of, வழியாக; என்ற முறையில்; clear the way, தடை ஒழிப்புச்செய்; விலகி நில்; come one's way, உடனுக ஒரே திசையிற் செல்; அனுபவத்தாலறியப்பெறு; committee of ways and means, வழிவகைக் குழு; give way, பின் வாங்கு, இடங்கொடு; விலகிக்கொள்; go the way of all the earth, go the way of nature, மாள்வுறு; have it both ways, சந்தர்ப்பவாதம் செய்; have one's own way, have one's way, வேண்டியதைப் பெறு, தன் விருப்பம் நிறை வேறப் பெறு; have way on, (கப்.) சென்றுகொண்டிரு; in a bad way, இடரார்ந்த நிலையில்; பெரிதும் நிலைகுலைந்து; in a fair way to, வெற்றிக்குரியதென நம்பத்தகுந்த நல்ல வழியாக; in a way, ஓரளவிற்கு; in the way, வழியில்; இடையூருக; in the way of, எய்தப்பெறுவதற்கான நன் னிலையில்; lead the way, தலைவராகச் செயலாற்று; வழி காட்டியாக நடந்துசெல்; lion in the way, கற்பனை இடை யூறு, கருத்துருவான தடை; lose one's way, lose the way, வழிதவறிச் செல்; lose way, விரைவு குறையப்பெறு; make one's own way, make one's way, make way, உயர்வுறு, வளமையுறு, முன்னேற்றமடை; make the best of one's way, கூடியவரை நன்ருகச் செய்; Milky Way, வானகப் பால்வீதி மண்டலம்; once in a way, அருமையாக ஒரு வேளை; on the way, சேரிடம் நோக்கிச் சென்றுகொண்டு, முன்னேறிக்கொண்டு; out of the way, நிகழக்கூடாத; வழியிலிருந்து விலகிய; over the way, எதிர்ப்பக்கத்தி லுள்ள; put one out of the way, சிறைப்படுத்து, மறைவிற் கொன்றுவிடு; right of way, வழி நடப்புரிமை; take one's own way, பிறர் சொல்லைக் கேளாது தன்னிச்சையாகச் செய லாற்று; take one's way, எந்தத் திசையிலேனுஞ் செல்; செய்யத் தொடங்கு; the good old ways, பழங்காலப் பாணி; the way of the world, ஒப்புரவு; under way, இயங்கிக்கொண்டு, கப்பல் வகையில் பயணஞ் செய்து கொண்டு.

**way'-bill**, *n.* ஊர்திப்பாரப் பட்டி.

**way'-board**, *n.* அடுக்குகளை இடையே பிரிக்கும் மெல்லிய பாளம்.

**way'farer**, *n.* கால்நடை வழிப்போக்கர்.

**way'faring**, *n.* கால்நடை வழிப்பயணம்.

**way'faring-tree**, *n.* வழியோர வெண்மலர்ப் புதர்ச்செடி வகை.

**waylay'**, *v.* பதிவிருந்து தாக்கு, வழியில் ஒளித்திருந்து தாக்கு.

**way'-leave**, *n.* வழியுரிமை.

**ways**, *n. pl.* கப்பற் சறுக்குமரம்.

**way'-shaft**, *n.* (இயந்.) அசைவியக்கத் தண்டு.

**way'side**, *n.* பாட்டையோரம்; *a.* பாட்டையோரத்தில் வளர்கிற.

**way'ward**, *a.* சிறுபிள்ளைத்தனமான, மூர்க்கமான; ஏறு மாருன.

**way'-worn**, *a.* வழி நடந்து இளைத்த.

**wayz'goose**, *n.* அச்சகத்தாரின் ஆண்டுவிழாக் கொண் டாட்டம்.

**we**, *pron. pl.* நாம், நாங்கள்; தனிச்சிறப்புத் தன்மைப் பன்மை.

**weak**, *a.* வலிமையற்ற; வலுக்குறைந்த; பளுத்தாங்கும் ஆற்றலில்லாத; எதிர்ப்பாற்றல் குன்றிய, உறுதியற்ற; எளிதில் வளைகிற; எளிதில் உடைகிற; எளிதில் தோல்வி யுறக்கூடிய; வலிமையுடன் செயலாற்ருத; மெலிந்த; நோய் எதிர்க்கும் ஆற்றல் குன்றிய; நீராளமான; செறிவு குன்றிய; பாழ்ங்கூழான; எண்ணிக்கையில் குறைந்த; வீரமற்ற; கோழைமை வாய்ந்த; துணிபாற்றல் குன்றிய; திட்பமற்ற; எழுச்சி குன்றிய; ஊக்கங் குறைந்த; வேகங் குறைவான; மூளை வகையில் அறிவுநிலை போதாத; செயலாற்றல் குன்றிய; செல்வாக்காற்றல் போதாத; உணர்ச்சி யடக்கும் ஆற்றலில்லாத; ஒழுக்கச் சோர்வான; போதிய ஆதாரம் இல்லாத; எளிதில் சோர்வுறுகிற; சீட்டாட்டக்காரர் வகையில் போதிய உயர் சீட்டுக் கைவசமாகப் பெற்றிராத; வாணிகக் கள வகையில் தேவைப்பாடு குறைந்த; விலைக்கள வகையில் விலையிறங்கும் பாங்குடைய; எழுத்தாண்மை வகையில் கட்டமைப்பற்ற; எழுத்தாண்மை வகையில் பொருட் செறிவற்ற; எழுத்தாளர் வகையில் திறமையற்ற; எழுத்து நடை வகையில் சொற்சுருக்கமற்ற; செய்யுளடி வகையில் அழுத்தமிலா அசை மீது அழுத்தம் சுமத்துகிற; செய்யுளிறுதி வகையில் அழுத்தமில் அசையில் முடிகிற; அசை வகையில் விசையழுத்தமற்ற; (தொ.) the weaker sex, the weaker vessel, மகளிர்; weak ending, பாவின் இறுதியிலுள்ள அசையழுத்தம் பெருத சொல்; weak knees, உறுதியாக நிற்குந் திறனின்மை; நெஞ்சுரமின்மை.

**weak'en**, *v.* ஆற்றலிழக்கச் செய், வலி குன்றுவி, உரங் குறையச் செய், தளர்வுறுவி, ஊக்கமிழக்கச் செய்.

**weak'-eyed**, *a.* மழுங்கற் பார்வையுள்ள.

**weak'-headed**, *a.* புல்லறிவுடைய.

**weak'ish**, *a.* சற்றே வலிகுன்றிய.

**weak'-kneed**, *a.* வலுவற்ற முழங்கால் மூட்டுக்களையுடைய; நெஞ்சுரம் இல்லாத.

**weak'ling**, *n.* மெல்லியான்; நோஞ்சல் ஆள்.

**weak'ly**, *a.* நோய்ப்பட்ட; வீரியங் குன்றிய, மெலிந்த.

**weak'-minded**, *a.* புல்லறிவுடைய, மனவுறுதியற்ற.

**weak'ness**, *n.* வலுக்குறைவு; தளர்வு.

**weal**[1], *n.* இன்னலம், சேமம்; வாழ்வு வளம், நற்பேறு; (தொ.) weal and woe, இன்பதுன்பங்கள்.

**weal**[2], *n.* சவுக்கடி வரித்தழும்பு, பிரம்புத்தடம்; *v.* சவுக்கடி யால் வரிவரியாகத் தழும்பெழுப்பு; வரிவரியாகத் தடம் படப் பிரம்பாலடி.

**weald**, *n.* (செய்.) அகல் விரிவான நிலப்பகுதி, மரங்க ளடர்ந்த நிலப்பகுதி; (மண்.) இங்கிலாந்தின் தெற்கு-தென் கிழக்குப்பகுதி மேல்நில அடுக்கு.

**wealth**, *n.* செல்வம்; செல்வ வளம்; பொருள் வளம்; செல்வர்; இன்னலம், வாழ்வு வளம்; மிகுதி, நிறைவு; தோற்றப் பகட்டு.

**wealth'y**, *a.* செல்வச் சிறப்புடைய.

**wean**[1], *n.* ஸ்காத்லாந்து வழக்கில் குழந்தை.

**wean**[2], *v.* பால்குடி மறக்கச் செய், பால்மாறச் செய்; பழக்கத் தொடர்பு விடுவி.

**wean'ling**, *n.* பால்மறப்புப் பிள்ளை.

**wea'pon**, *n.* படைக்கலம், வெற்றியடைதற்கான செயல்.

**weaponeer'**, *n.* (படை.) அணுக்குண்டு ஆக்கும் முயற்சியில் ஈடுபடுபவர்.

**wear**[1], *n.* ஆடையணி ; உடுத்துதல் ; உடை ; உடுக்கப் பெறல் ; ஆடைகளாகப் பயன்படுத்தப்படுதல் ; அணியப் படும் பொருள் ; காலத்தில் வழங்கப்படும் உடை ; ஏற்ற ஆடை ; வழங்கீட்டுத் தேய்மானம் ; தேய்மானத்தை எதிர்த்துத் தாங்குந் திறன் ; *v.* ஆடை உடுத்துக்கொள் ; அணிமணி தரித்துக்கொள் ; பூண் அணி ; முடி முதலியன சூட்டிக்கொள் ; புதையரணம் மூக்குக்கண்ணுடி முதலியன மாட்டிக்கொள் ; நிற ஆடை மேற்கொள் ; சின்னங்கள் அணிந்துகொள் ; தலைமுடி புனைந்துகொள் ; தோற்றம் மேற் கொள் ; சின்னம் பூண்டு மதிப்புக்காட்டு ; பண்பு பூண்டு அருமைப்பாடு காட்டு, கப்பல் வகையில் கொடி பறக்கவிடு ; வழங்கிப் பழமைப்பட்டதாக்கு; பயன்படுத்தித் தேய்வுறுத்து; பயனீட்டினுல் சேதப்படுத்து ; மேற்புறத்தை அரித்துத் தேய்வி ; அரித்தழி; துடைத்தழி; மெல்லியதாக்கு ; குறை ; நிலைமாறச் செய் ; பயனீட்டால் தேய்வுறு, பட்டுத் தேய்வுறு; நாட்பட்டுச் சேதமுறு : மாறுதலடை ; பயனீட்டால் மாறுத லுறு; பயனீட்டால் மாற்றியமை; உரம் அழியச் செய், சோர் வடைவி ; களைப்படைவி; சோர்வடை ; களைப்படை ; விடாப் பிடியாயிருந்து அடக்கு ; நீடித்திரு, நீடித்துழை ; குறிப்பிட்ட காலம் வரை தாங்கு ; நெடுங்காலம் பதங்கெடாதிரு ; கால வகையில் மெதுவாகச் செல், சோர்வுண்டாக்கும் வகையில் ஊர்ந்துசெல், கால வகையில் பையப்பையக் கழித்துவிடு ; பையப்பையக் கழிவுறு ; தேய்த்துத் தடம் உண்டுபண்ணு ; கைபடப்பழக்கித் தேய்வுறுத்து; கையாடித் தடம் உண்டு பண்ணு ; தேய்த்துக் கிழி ; தேய்த்துத் துளை உண்டு பண்ணு ; உடைமையாகப் பெற்று நுகர் ; உள்ளத்தில் வைத்துப் பூசி ; (தொ.) wear and tear, தேய்மானம் ; wear away, அழி, சேதப்படுத்து, பயன்படுத்திக் கழி ; wear down, தொடர்ந்து தேய்த்துக் குறுக்கு ; பிடிவாதமாகப் பையப்பையக் கீழடக்கி வெல்லு ; wear off, உராய்ந்து தேய்த்து அழித்துவிடு ; பதனழிந்து குறுகு ; wear out, பயன்படுத்தித் தீர் ; மீண்டும் பயன்படாத அளவுக்குப் பயன் படுத்தப் பெறு ; wear the breeches, பெண்டிர் வகையில் கணவர்மீது ஆட்சி செலுத்து ; wear the gown, வழக்குரைஞ ராயிரு ; wear the sword, போர் வீரராயிரு; win and wear, வென்றாக்கிக் கொண்டு நுகர்.

**wear**[2], *v.* (கப்.) சுக்கான் பிடியைத் திருப்பிக் கப்பலை வேண்டிய இடத்திற்குக் கொண்டுசெல்.

**wear'able**, *a.* அணியத்தகுந்த ; மேற்கொள்ளத்தக்க ; தேயக் கூடிய.

**wea'riless**, *a.* சோர்வுறாத ; இடைவிடாத, ஓயாத.

**wea'riness**, *n.* களைப்பு ; சோர்வு, தளர்ச்சி.

**wear'ing-apparel**, *n.* உடுக்கை.

**wear'ing-iron, wear'ing-plate**, *n.* உராய்வு காப்புத் தகடு.

**wear'isome**, *a.* களைப்புண்டாக்குகிற ; சோர்வு தருகிற ; சலிப்பூட்டுகிற.

**wear'y**, *a.* களைப்புற்ற; சோர்வுற்ற; வலுக்குறைந்த; சலிப்புக் கொண்டு வெறுப்புற்ற; சோர்வுறச் செய்கிற; *v.* களைப்பூட்டு, சோர்வுறுவி ; சலிப்படை ; ஸ்காத்லாந்து வழக்கில் ஏங்குறு; வேணவாக்கொள் ; (தொ.) weary out, உரம் அழியச்செய், முற்றும் சோர்வுறுத்து.

**weas'and**, *n.* (பழ.) மூச்சுக்குழல் ; தொண்டை.

**weas'el**, *n.* மரநாய் வகை ; (படை.) அருந்தடக்கலம், பனி மணல் முதலிய அருந்தடங்களில் செல்லத்தக்க கலந்தாங்கு கலம்.

**wea'ther**, *n.* வானிலை, தனி இடத் தனிவேளை வளிமண்டல நிலை ; ஈர்ம்பதக் குளிர்வாடை நிலை ; காற்றின் திசை ; காற்று விசையாலையின் பாய்த்திரையின் சாய்வுக்கோண அளவு ; *a.* (கப்.) காற்றுத் திசையிலுள்ள ; *v.* திறந்த நிலையில் இயனிலை மாறுதல்களுக்கு உட்படுத்து ; இயனிலை மாறுதல்களால் கறைப்படுவி ; இயனிலை மாறுதல்களால் தேய்வுறுவி ; இய னிலைச் சூழல்களால் கறைப்படு ; இயனிலை மாறுதல்களால் தேய்வுறு ; (மண்.) திறந்த நிலை இயல்வெளி மாறுதல்களுக் குரிய தேய்வு-நிறமாறுதல் முதலிய விளைவுகள் வருவி ; (கப்.) கப்பல் அல்லது பயணிகள் வகையில் நிலக்கூம்பு கடந்து காற்றுத் திசைவாக்காகச் சென்று சேர் ; புயல் கடந்து பாதுகாப்புடன் சென்று சேர் ; இடர்ப்பாடுகள் கடந்து பாதுகாப்பாக வெளியேறு ; மோட்டு ஓடுகள் பலகை கள் வகையில் ஒன்றன்மீது ஒன்று பாதியளவு மேற்கவிவாக்கு; (தொ.) keep one's weather eye open, விழிப்பாயிரு ; King's weather, Queen's weather, வாய்ப்பான நல்ல வானிலை ; make bad weather of it, make heavy weather of it, புயலிடையே திறமையின்றி நடந்து அவதியுறு ; தீமையைத் திறமையின்மையால் பெருக்கிக்கொள் ; make good weather, (கப்.) நேர்த்தியான காலநிலை வாய்க்கப் பெறு ; under the weather, (பே-வ.) உடல்நலமின்றி ; (இழி.) குடிவெறி மயக்கத்தில் ; weather along, பாதகமான வானிலையினையுஞ் சமாளித்து முன்னேறு ; weather a point, எதிர்ப்பினைக் கடந்து அனுகூலம் பெறு, எதிர்ப்பினைச் சமாளித்து நோக்கம் நிறைவேறப்பெறு ; weather on, காற்று எழும் திசைநோக்கி முன்னேறு ; weather out, இறுதிவரை உறுதியுடன் தொடர்ந்து நீடி.

**weath'er-beaten**, *a.* இயல்வளியில் அடிபட்ட, காற்று மழை வெயில் முதலியவற்றால் தாக்குண்ட.

**weath'er-board**, *n.* கப்பலின் காற்றுவரும் பக்கம் ; மழை யைத் தடுப்பதற்காகக் கப்பலின் சாளரத்தில் வைக்கப்படும் பலகை ; கட்டிடத்திலிருந்து நீர் ஒழுகவிடுமாறு அமைக்கப் படும் பலகை ; *v.* கப்பற் சாளரத்தில் மழை தடுப்புப் பலகை பொருத்து ; கட்டிடத்திலிருந்து நீர் ஒழுகவிடும் பலகை பொருத்து.

**weath'er-bound**, *a.* வானிலை காரணமாக வெளியே போகாமல் தங்கிவிட்ட.

**weath'er-box**, *n.* வானிலைப்பெட்டி, மழை வெயில் நிலைகளை ஆண் பெண் உருச்சின்னமூலம் முன்னறிவித்துக் காட்டும் கருவி அமைவு.

**weath'er-bureau**, *n.* வானிலையாய்வு அலுவலகம்

**weath'er-chart**, *n.* வானிலை விளக்கப்படம்.

**wea'ther-cloth**, *n.* திண்ணிய எண்ணெய்த் துணி இரட்டு.

**weath'ercock**, *n.* காற்றுத்திசைகாட்டி; மனவுறுதியற்றவர்; *v.* காற்றுத் திசைகாட்டியாயிரு, சந்தர்ப்பவாதியாயிரு.

**wea'thered**, *a.* இயல்வளிப்பட்டுப் பதமான ; (க-க.) தண்ணீர் வடியும்படி சாய்வாகக் கட்டியமைக்கப்பட்ட ; (மண்.) இயல்வளி நிலைமாற்றங்களால் மேற்பரப்பில் பண்பு படிவ ஆக்க மாறுபாடுகளுற்ற.

**wea'ther-eye**, *n.* காலநிலை யறிவிப்புத் திறம்.

**weath'er-forecast**, *n.* வானிலை முன்னறிவிப்பு.

**wea'ther-gall**, *n.* மழை வில், சிதைவு வானவில்

**wea'ther-gauge**, *n.* கப்பலுக்குக் கப்பல் காற்றுத் திசை வாட்ட நிலை ; கப்பலுக்குக் கப்பல் சாதக நிற்பு நிலை.

**weath'er-glass**, *n.* காற்றழுத்தமானி ; கால வானிலைமானி.

**wea'ther-gleam**, *n.* (பே-வ.) ஒளிர் வானிலை

**wea'ther-helm**, *n.* கப்பற் பின்புற வானிலை வாட்டத் திருப்புநிலை.

**weath'ering**, *n.* காற்றுவாட்டச் செலவு ; வானிலைப்பாடு ; (மண்.) வானிலைப்பதம் ; (க-க.) கூட்டுமான முகட்டுத் தளச் சாய்வு ; (அரு.) வானிலைகள்.

**wea'therize**, *v.* துணி வகையில் வானிலைக் காப்புடையதாக்கு

**wea'therly**, *a.* கப்பல் வகையில் காற்றுவீசும் பக்கமாக விலகிச் செல்லாத, காற்று எழும் திசைநோக்கிச் செல்லக் கூடிய.

**weath'er-map**, *n.* வானிலை விளக்க நிலப்படம்.

**wea'thermaster**, *n.* உறைபனி குலைவுப்பொறி

**weath'ermost**, *a.* காற்று எழுந்திசையில் மிகு தொலைவி லுள்ள.

**weath'er-moulding**, *n.* படிமுகக்கல், மழைத்துளி முதலிய வற்றை வாசற்படிக்கு அப்பால் விழச்செய்யும் மேற்கட் டமைவு.

weath'er-proof, *n.* வானிலைக் காப்பமைவு, காற்று-மழை-வெப்பக் காப்பீடான பொருள்; *a.* காற்று மழை வெப்பக் காப்பீடான; *v.* காற்று மழை வெப்பக் காப்பீடு செய்.

weath'er-prophet, *n.* வானிலை முன்னறிவிப்பவர்.

wea'ther-report, *n.* வானிலை அறிவிப்பு.

weath'er-service, *n.* வானிலையாய்வுக் காட்சிப் பதிவீட்டமைப்பு.

weather'-ship, *n.* வானிலையாய்வுக் காட்சிப் பதிவுக்கான கப்பல்.

wea'ther-side, *n.* கப்பலின் காற்றுவாட்டப் பக்கம்.

weath'er-station, *n.* வானிலைப் பதிவு மனை.

weath'er-strip, *n.* வானிலைக் காப்புத் துண்டு.

wea'ther-symbol, *n.* வானிலைப் பதிவுமுறைக் குறியீடு.

wea'ther-tiles, *n.* கவிவோடுகள்.

weath'er-wise, *a.* காலநிலை மாறுதல்களை முன்னறிவிக்குந் திறனுடைய; முன்னறி திறனுடைய.

weath'er-worn, *a.* வானிலைத் தடங்களையுடைய; புயல் முதலியவற்றின் தடங்களையுடைய; நாட்பட்ட.

weave, *n.* நெசவுப்பாணி; *v.* நெய்; நெசவுத் தொழிலாற்று; நூலால் நெய்து துணியாக்கு; செய்திகளைப் புனைந்து கதை உருவாக்கு; விவரங்களைப் புகுத்திக் கதைகட்டு; செய்யுளியற்று; சதிசெய், சூழ்ச்சி பண்ணு; (பே-வ.) ஏய்த்துப் பசப்பு; (தொ.) wove paper, woven paper, மென்கம்பி வலையின் நெசவடையாளம் தாங்கிய தாள்.

weav'er, *n.* கோடிகர், நெசவாளர், துணி நெய்வோர்; தூக்கணங் குருவி.

weav'er-bird, *n.* தூக்கணங் குருவி.

weaz'en, *a.* திரங்கிய.

web, *n.* தோலிழைமம்; இயந்திரச் சுழல் விசிறி அலகு; இறகின் இழைத்துய்; நூலாம்படை; நெய்வீடு, நெசவில் நெய்து எடுத்த ஓர் ஈட்டுத்துணி; மெல்லாடை, மெல்லிழைவுத்துணி; இயந்திரப்பகுதி இடையிணைப்புத் தகடு; அச்சகத்தாள் நீள் சுருள்; நுண்பொறி; வலை; சூழ்ச்சி; *v.* தோலிழைமத்தால் இணை; தோலிழைமம் இணை; தோலிழைமத்தில் பொதி.

webbed, *a.* தோலிழைமப் பொதிவுடைய.

webb'ing, *n.* சேண வரிக்கச்சை, குதிரையின் வயிற்றுப் பட்டை; மென் துகில் திண்வரியிழை.

web'-eye, *n.* கண்படலநோய், கண்பூக் கோளாறு.

web'-eyed, *a.* கண்படல நோயினையுடைய.

web'-fing'ered, *a.* தோலடி உகிர்கள் வாய்ந்த.

web'-fingers, *n.* தோலடி விரல்கள்; செயற்கையாகத் தோலிணைப்புச் செய்யப் பட்ட விரல்கள்.

web'-foot, *n.* தோலடி, தோலிழைம இணைப்புடைய விரல்களுடன் கூடிய காலடி.

web'-toed, *a.* தோலடி வாய்ந்த.

web'-toes, *n. pl.* தோலடி உகிர்கள், தோலிழைமங்களால் இணைக்கப்பட்ட கால்விரல்கள்.

web'-wheel, *n.* மென்தகட்டாரச் சக்கரம்; கைக்கடிகார வகையில் முழுதும் ஒரே பாளத்தில் உருவாக்கப்பட்ட மென தகட்டுச் சக்கரம்.

web'-worm, *n.* இழைவலைப்புழு, தானே நூற்றிழைத்த வலையிலிருந்து உணவுண்டு வாழும் பூச்சியின முட்டைப்புழு.

wed[1], *v.* மணந்துகொள்; மணம்புரி; ஒருங்கிணைவி; பணிக்கடம் பூணுவி.

wed[2], *v.* wed[1] என்பதன் அருவழக்கான முற்றெச்சவடிவம்.

wedd'ed[1], *a.* மணத்திற் கொள்ளப்பட்ட; மணவாழ்க்கை சார்ந்த; ஒருங்கிணைக்கப்பட்டுள்ள; இணைபிரிக்கமுடியாப் பற்றுக்கடம்பூண்ட; (தொ.) be wedded to, இணைபிரியாது இணைக்கப் பெறு.

wedd'ed[2], *v.* wed[1] என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

wedd'ing, *n.* மணவினை; திருமணவிழா; (தொ.) diamond wedding, திருமண மணிவிழா; golden wedding, திருமணப் பொன்விழா; penny wedding, காசுத் திருமணம், உறவினர்களின் சிறு பொருளுதவியால் நிகழுந் திருமணம்; silver wedding, திருமண வெள்ளி விழா.

wedge, *n.* ஆப்பு; செருகுகட்டை; செருகுதண்டு, இரட்டைச் சாய்வு தளங்களையுடைய இயந்திர ஆற்றற் கருவி; ஆப்பு வடிவப் பொருள்; ஆப்பு வடிவ அப்பக்கீற்று; ஆப்பு வடிவப் படையணி; ஆப்புவடிவ முனையுடைய வளைபந்தாட்ட மட்டை வகை; முற்கால வரிவடிவ முறையின் ஆப்புவடிவ வரைக்கீற்று; இடைவளைவற்ற ஆப்புவடிவ மிதியடி; *v.* ஆப்பிடு; ஆப்பிட்டு இறுக்கு; இடையாப்பிட்டுப் பிள; செருகு கட்டையிடு, செருகி நுழைத்துவை; இடையிடை நுழைத்துவை; நெருக்கிப் புகுத்து; நெருக்கிக்கொண்டு நுழைவுறு; ஆப்புப்போல் இறுக்கமுறு; ஆப்புப்போன்றதாக்கு; (தொ.) the small end of the wedge, the thin end of the wedge, ஆப்பின் சிறுமுனை, வரப்போகும் பெருமாற்றங்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் வழிகோலும் சிறு மாற்றம் அல்லது செயல்; the wedge, the wooden wedge, கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக நன்மதிப்புத் தேர்வுப் பட்டியில் கடைசி மாணவர்.

wed'gie, *n.* மகளிர்க்குரிய தட்டையடிப் புதைமிதி.

wedg'ing, *n.* பலகை இணைப்பு வகையில் ஆப்பிணைப்பு முறை.

Wedg'wood, *n.* அரைகுறையாகப் பளிங்கியல் ஆக்கப்பட்ட மட்பாண்ட வகை.

wed'lock, *n.* திருமண இணைவுறவு, மண வாழ்க்கை; (தொ.) born in lawful wedlock, சட்டபூர்வமான மண உறவு கொண்ட பெற்றோரையுடைய; born out of wedlock, முறைகேடாகப் பிறந்த; break wedlock, விபசாரஞ் செய்.

Wednes'day, *n.* புதன்கிழமை.

wee, *a.* சின்னஞ் சிறிய, கடுகளவான.

weed, *n.* களைச்செடி, வேண்டாச்செடி; காட்டு வளர்ச்சிச் செடி; காட்டுப் புதர்ச்செடி; களைப்புதர் வளர்ச்சி; (பே-வ.) புகையிலை; (பே-வ.) சுருட்டு வகை; நோஞ்சல் குதிரை, ஒல்லியானவர்; கவைக்குதவாதவர்; உதவா விலங்கு; அருமைப்பாட்டு வழக்கில் நொய்தான சிறு குழந்தை; *v.* களை பறி, களைச்செடிகள் அகற்று; களையை வேரோடகற்று; வேண்டாதன விலக்கு; வேண்டாதவரை ஒழி; தொகுதியில் கீழ்த்தரங்களைப் பிரித்தழி.

weed'ed, *a.* களையகற்றப்பட்ட.

weed'er, *n.* களை அகற்றுபவர்.

weed'ery, *n.* களைப்புதர்.

weed'icide, *n.* களைகொல்லி.

weed'ing, *n.* களைபறிப்பு.

weeds, *n. pl.* விதவையின் துயராடை; (தொ.) widow's weeds, கைம்மை நோன்பு ஆடை.

weed'y, *a.* களைபோன்ற; களைமண்டிய; ஒல்லியான.

week, *n.* வாரம்; ஏழுநாட்கள்; ஞாயிற்றுக்கிழமைகளுக்கிடையேயுள்ள ஆறுநாட்கள்; *v.* வாரக்கடைசியில் பிறரைக் காணச்செல்; (தொ.) a prophetic week, ஏழு ஆண்டுகள்; week in week out, இடைவிடாது, தொடர்ச்சியாக; week of Sundays, ஏழு வாரங்கள்; நெடுங்காலம்.

week'-day, *n.* வாரநாள், ஞாயிறு அல்லாத பிற நாட்களுள் ஒன்று.

week'-end, *n.* வார இறுதி.

week'ly, *n.* வார வெளியீடு; *a.* வாரத்திற்கு ஒருமுறை நிகழ்கிற; *adv.* வாரந்தோறும்.

weeks, *n. pl.* ஏழு வாரங்கள்; நெடுங்காலம்.

ween, *v.* (செய்.) எண்ணு, கருது; புனைந்துநோக்கு.

weep, *v.* அழு; புலம்பு; கதறு; கண்ணீர்விடு; கண் வகையில் துளிகளால் மூடப்பெறு; திவலைகள் வெளிவிடு, நீர்

சொட்டவிடு; புறங்கசி, வெளிப்படு, வியர்வை வெளிவிடு; மர வகையில் சோர்ந்து தொங்குங் கிளைகளுடையதாயிரு; சோர்வுறு: வருந்து, வருத்தந் தெரிவி; (தொ.) weep away, அழுது கழி; weep oneself out, மனநிறைவு அடையும்வரை அழு; weep out, அழுது புலம்பு.

weep'er, *n.* அழுபவர்; கூலிக்கு ஒப்பாரி வைப்பவர்.

weep'ers, *n. pl.* விதவைகளின் மணிக்கட்டு வெண்ணிற வரிக்கச்சை.

weep'ie, *n.* (இழி.) சோகப்படக் காட்சி; சோக நாடகம்.

weep'ing, *n.* அழுதல்; *a.* அழுகிற.

weev'er, *n.* ஈட்டிமீன்.

weev'il, *n.* அந்துப்பூச்சி வகை.

weft[1], *n.* ஊடு இழை, நெசவுத் துணியின் குறுக்கு இழை.

weft[2], *n.* (கப்.) துயர்க்கொடி அடையாளம்.

weft'age, *n.* நெசவின் தன்மை, இழைநயம்; தரம்; அமைப்பு.

Wehr'macht, (செர்.) *n.* காவற்படை; செர்மன் ஆயுதப் படைகள்.

weigh, *n.* நிறுப்புமானம்; ஒரு தடவை நிறுத்தல்; நிறுப்பு வேளை, நிறுப்புநேரம்; *v.* நிறு; நிறுத்து எடை காண்; கையில் எடுத்து எடைமதிப்பிடு; தூக்கி மதிப்பிடு; குறிப்பிட்ட அளவு நிறுத்தெடு; குறிப்பிட்ட எடை உடையதாயிரு; சீர்தூக்கு; பளுவுடையதாயிரு, செல்வாக்குப் பெற்றிரு; அழுத்து; பளுவினால் வளையச்செய்; திறமையால் பணியச் செய்; நீரடியினின்றுந் தூக்கு; (தொ.) weigh down, weigh down upon, அமுக்கு; பாரத்தால் அழுத்து; கவலையால் அழுத்து; weigh heavy upon, அழுத்து; weigh in, குதிரைப் பந்தய முடிவில் எடைகாண்; போட்டியின்முன் எடை பார்; (இழி.) திட்ட நடவடிக்கையில் உடனுகச் சேர்ந்து கொள்; weigh in with, வாத வகையில் வீறுடன் பயன்படுத்திக்கொள்; weigh one's words, எழுத்தெண்ணிப்பேசு; weigh out, நிறுத்தெடு; பந்தய ஓட்டத்திற்குமுன் நிறுத்துப் பார்; weigh up, வலிந்து பெருக்கு; (பே-வ.) சீர்தூக்கி மதிப்பிடு; weigh with, முக்கியமாயிரு; முக்கியமானதாகக் கருதப்படு; மிகு செல்வாக்குடையவராயிரு.

weigh'able, *a.* நிறுக்கத்தக்க.

weigh'age, *n.* நிறுப்புக் கூலி.

weigh'-beam, *n.* எடைகோல்.

weigh'-board, *n.* அடர்ந்த நில அடுக்குப் படுகையைப் பிரிக்கும் மென் நில அடுக்குப் படுகை.

weigh'bridge, *n.* பார எடைப்பொறி, பாரத்தோடு கூடிய வண்டிகளை எடைபோடுஞ் சாதனம்.

weighed, *a.* நிறுக்கப்பட்ட; அனுபவம் மிக்க.

weigh'er, *n.* நிறுத்தல் அதிகாரி.

weigh'-house, *n.* நிறுவை மனை.

weigh'-lock, *n.* எடைமான அடைப்புத்தளம்.

weight, *n.* பளு; எடை; பாரம்; வான்கோள வகையில் நெறிமைய ஈர்ப்புவிசையாற்றல்; எடைமானம்; எடைவீதம், ஒப்பு எடை நிலை; படியெடை; நிறைப்படிக்கல்; பளுவுடைய பொருள்; நீரில் அமிழ்விக்க உதவும் பார எடை; சமநிலை பேணும் எடை; காற்றில் பறக்காமல் காக்கும் பளு; அழுத்தப் பளு, மேற்பளு; சுமை; தாங்கு சுமை; மேற்பாரம்; கவலைச்சுமை; கடமைப்பொறுப்பு; துயரச்சுமை; முக்கியத்துவம்; செல்வாக்கு; தனிமுறைச் சிறப்பு; மிகுதிப்பாடு; அழுத்தமிகுதி; பாரித்த அளவு; பாரப்பொருள், பெருஞ்சுமைப்பொருள்; எடைத்தரம், மிகுதிச் சம்பளப் படி; *v.* பளுவேற்று; பளுக்கட்டியிணை; கனிப்பொருள் வேதிப்பொருள் கலப்பால் இழைமங்களின் எடைமானம் பெருக்கு; பளுவால் அழுத்து; அழுத்தி அடக்கு.

weight'age, *n.* மதிப்பு.

weight'iness, *n.* பாரமுடைமை; முக்கியத்துவம்.

weight'less, *a.* எடையற்ற; முக்கியத்துவம் அற்ற.

weight'y, *a.* கனமான; அழுத்துகிற; கடுஞ்சுமையான; முக்கியமான; கவனித்துச் செய்யவேண்டிய; நன்கு கவனிக்கப்படத்தக்க; உயர்தனி முக்கியத்துவம் வாய்ந்த; செல்வாக்குமிக்க.

weir, *n.* அணை; வாரணை.

weird', *n.* விதி; போகூழ்; சூனியக்காரி; கெடுவேளை; ஊழ்த்திறக்கதை; மந்திரமாயம்; *a.* ஊழ் சார்ந்த; மாயமான; அருந்திறல் வாய்ந்த; (பே-வ.) விசித்திரமான, தனிப்புதிரான; (தொ.) the weird sisters, விதித் தெய்வதங்கள்.

Weirds, *n. pl.* ஊழணங்குகள், விதியாட்சித் தெய்வதங்கள்.

Welch, *a.* வேல்ஸ் நாட்டிற்குரிய, வேல்ஸ் நாட்டு மக்கள் சார்பான.

wel'come, *n.* வரவேற்பு; நல்வரவு; ஏற்பமைவு; *a.* நல்வரவான; மகிழ்ந்து வரவேற்றற்குரிய; *v.* வரவேற்பளி, வரவேற்று முகமன் தெரிவி; *int.* வருக! வரவு நல்வரவாகுக! (தொ.) bid a welcome, முகமன் கூறி வரவேற்பளி.

weld[1], *n.* மஞ்சள் சாயந் தருஞ் செடிவகை.

weld[2], *n.* பற்ருசுப்பொருத்து; ஒட்ட வைப்பு; *v.* பற்றவை; பற்ருசு இட்டு இணை.

weldabil'ity, *n.* பற்றவைக்கக்கூடிய தன்மை; ஒருசீராக்கப் படத்தக்க பண்பு.

weld'able, *a.* பற்றவைக்கக்கூடிய; ஒருசீராக்கத்தக்க.

weld'er, *n.* பற்றவைப்பவர்.

weld'ing, *n.* பற்றவைப்பு.

weld'ment, *n.* பற்ருசு.

wel'fare, *n.* இன்னலம், உடலுள வாழ்க்கை நல நிறைவு நிலை; (தொ.) welfare State, ஆக்க நல அரசு; welfare work, ஆக்க நல வேலை.

wel'farism, *n.* ஆக்க நல அரசுக் கோட்பாடு.

welk, *v.* (பழ.) உலர்ந்து போ, வாடிப்போ.

wel'kin, *n.* (செய்.) வானம், ஆகாயம்.

well[1], *n.* ஊற்று; கேணி, கிணறு; கனிநீரூற்று; எண்ணெய்க் கிணறு; (கப்.) குழாயடி வளைவகம்; தலையூற்று; நீர்நிலைத் தலைமூலம்; (செய்., பழ.) தலைமூலத் தோற்றுவாய்; நான்மாட நடுமுற்றவெளி; திருகு படிக்கட்டு மையவெளி; மின் ஏறுதளக் கூண்டமைவு; நீதிமன்ற வழக்கறிஞர் வட்டரங்கம்; மைக்கூட்டுப்பள்ளம்; குண்டு குழிவிடம், பள்ளம்; நீர்ச்சுழி; *v.* ஊறு; கசி; ஊற்றெடுத்தோடு; பொங்கி வழி; ஊற்று, கொட்டு; (தொ.) artesian well, பொங்கு நீர்க் கேணி; the wells, கனி நீரூற்றுக்கள் நிரம்ப உள்ள இடம்; well staircase, படிக்கட்டுக் கூண்டு.

well[2], *n.* நன்ருயிருப்பவை, மனநிறைவளிப்பவை; *a.* (அரு.) உடல் நலமுடைய; *adv.* நன்கு; நன்ருக; நன்னர்; நன்முறையில்; நலமுடன், உடல் நலமுடன்; நோயின்றி; சுகமாக, மனநிறைவோடு கூடிய நிலையில்; மனநிறைவு அளிக்கத்தக்க வகையில்; நலமாக; கேடின்றி; இடரின்றி; பாதுகாப்பாக; பாதுகாப்புடன்; மகிழ்வுதரும் முறையில்; போற்றத்தக்கதாக; நல்ல வாய்ப்பாக; நலச்சார்பாக, சாதகமாக; தவறின்றி, பிசகாது; நிறைவுற, குறைவின்றி; மேதக, மேற்குடியில்; சிறப்புற; தீர; அப்பழுக்கின்றி; முழுக்கவனிப்புடன்; உன்னிப்பாக; போதுமான அளவுக்கு; கணிசமான அளவில்; *int.* நன்று, மிகநன்று; போனல்போகிறது; இஃதிருக்கட்டும்; தரக்கேடில்லை, மோசமில்லை; (தொ.) as well as, மேலும், உடனொத்ததாகவே; குறையா அளவிலேயே; come off well, நற்பேறு வாய்க்கப்பெறு, தனிச்சிறப்படை; well and good, நன்ருயிருக்கிறது; well done, well run, நன்ருயிற்று; well enough, மட்டான அளவில், ஓரளவு நல்ல தோற்றமுடையதாக; well met, நற்சந்திப்பு, விரும்பியவரைக் கண்டதாகக் கூறும் முகமனுரைக் குறிப்பு; well up in, (பே-வ.) திறம்பட்ட அறிவுடைய.

well'-boat, *n.* உயிர்க்கூவற்படகு, உயிர் மீன் மிதவைத் தொட்டி உட்கொண்ட படகு.

கூறப்பட்ட விருப்ப ஆவணம்; with a will, ஊக்கத்துடனும் முழு மனத்துடனும்; work one's will, விரும்பியதையே செய்.

**will²**, *v.* முன்னிலை-படர்க்கையில் எதிர்கால ஐயநிலைக் குறிப்புத் துணைவினை; தன்மையில் எதிர்கால விருப்புறுதிப்பாட்டுக் குறிப்புத் துணைவினை.

**willed**, *a.* விருப்பாற்றலுடைய, தன்விருப்பார்ந்த; விருப்ப ஆவணத்தினால் வழங்கப்பட்ட.

**Willes'down paper**, *n.* ஒட்டடித்தாள், மோட்டோடுகளின் கீழ் வைக்கப்படும் நீர்-வெப்ப-ஒலிக்காப்பான தாள்வகை.

**will'et**, *n.* வட அமெரிக்க சதுப்புநிலப் பறவை வகை.

**will'ing**, *a.* தன்விருப்பார்ந்த; தானே ஆர்வந் தெரிவிக்கிற; புறக்கட்டுப்பாடற்ற, மனமகிழ்வுடன் முனைகிற; விருப்பார்வத்துடன் வழங்கப்பட்ட.

**will-o'-the-wisp'**, *n.* கொள்ளிவாய்ப்பேய்; சதுப்புநில ஒளி; உறுதியான இருப்பிடமற்றவர்.

**will'ow**, *n.* காற்றுடிவகை மரம்; செடிவகை மரவகைக் கட்டை; மரவகையாலான பந்தாட்ட மட்டை; பஞ்சு வெட்டும் பொறி; மரவகை மலர், துயர்க்குறிச் சின்னம்; மரவகைத் தழைப் பின்னலோவிய அணி; *v.* பஞ்சுவெட்டுப் பொறியால் பஞ்சு வெட்டி மென்மையாக்கு; (தொ.) wear the willow, காதல் பிரிவு கருதி வருந்து; நண்பர் மறைவு கருதிப் புலம்பு; கையாறு கொள்.

**will'ow-herb**, *n.* இளங் கருஞ்சிவப்பு மலர்களையுடைய செடிவகை.

**wil'lowing-machine, will'ow-machine**, *n.* பஞ்சு வெட்டுப்பொறி.

**will'ow-pattern**, *n.* கலங்களில் மரவகைத் தழை ஒப்பனைப் பின்னணியுடைய சீனக் கலைப்பாணி.

**will'owy**, *a.* காற்றுடியின மரவகைகள் மிகுந்துள்ள; நொசிவும் நொய்ம்மையும் வாய்ந்த.

**will'-power**, *n.* உரன், மனத்திண்மை.

**will'-worship**, *n.* மனம்போல வழிபாடு.

**will'y**, *n.* பஞ்சு கழுவும் இயந்திரம்.

**willynill'y**, *adv.* விரும்பினாலும் விரும்பாவிட்டாலும்; வலுக்கட்டாயமாக.

**wilt¹**, *v.* வதக்கு; வதங்கு; உணங்கு; உணக்கு.

**wilt²**, *v.* will என்பதன் முற்கால முன்னிலை ஒருமை வடிவம்.

**Wil'ton, Wil'ton carpet**, *n.* புரிசடைக் கம்பளம், வெட்டித் தறித்த முறுமுறுப்புச் சமுக்காள வகை.

**wil'y**, *a.* சூதுவாது நிரம்பிய, குறும்புச் சூழ்ச்சியுடைய.

**Wim'bledon**, *n.* இங்கிலாந்தின் விம்பிள்டனில் நடக்கும் வீரமுதன்மைப் பந்தயப் போட்டிக்குரிய புல்வெளி வரிப் பந்தாட்டக் களம்.

**wim'ple**, *n.* முகமூடாக்கு; திரைவு; திருகு சுருள்வு; சுற்றுத் திருப்பம்; அதிர்வலை; *v.* முகமூடாக்கிட்டுக்கொள், திரை மூடாக்கினால் போர்த்து; திரையிட்டு மறைத்துவை; திரைவு மடிப்புக்களாக அமைவி, மடிப்புக்களாக விழு; நீரோடை வகையில் வளைந்துநெளிந்து செல்; சுற்றிச்சுற்றி வளைந்துசெல்; அதிர்வலைவுறு.

**win**, *n.* (பே-வ.) கெலிப்பு, வெற்றி; *v.* கெலிப்புறு, வெற்றி பெறு; போராடிப் பெறு; போட்டியிட்டு அடை; பந்தயப் போட்டியிடையே முயன்று கைக்கொள்; பந்தயப் பொருளாகப் பெறு; பரிசாகப் பெறு; வெற்றி உடைமையாகக் கைக்கொள்ளு; ஈட்டிப்பெறு; பதவி எய்தப்பெறு; மதிக்கப் பெறு; அரிது முயன்று சென்றடையப் பெறு; செல், வழியே முன்னேறு; இணக்குவித்துத் தன்வயமாக்கு; தன்பக்கஞ் சாய்வுறுவி; தூண்டிச் செயலாற்றுவி; இணக்குவித்து ஆதரவு பெறு; வரவர மேம்பாடுறு; வெடிவைத்துச் சுரங்கப் பொருள் எடு; சுரங்கக்கால் உருவாக்கி அமைவி; வரவர மிகுதியான கவனஞ் செலுத்தப்பெறு; (தொ.) win a canter, எளிதாக வெற்றியடை; win by a head, win by a short head, மயிரிழையில் வெற்றியடை; win of, விஞ்சிய மேன்மையுடையவராயிரு; win on, win upon, கடந்துசெல், விஞ்சிய மேன்மையுடையவராயிரு, அன்பாதரவு எய்தப்பெறு; win one's blue, தன்கட்சி வெற்றியடையப்பெறு; win one's spurs, வீரத்திருத்தகைப்பட்டம் வழங்கப்பெறு; துறையில் நிபுணரென்று ஏற்றுக்கொள்ளப் பெறு; win one's way, போராடி முன்னேறு; win ore, கனியிலிருந்து இயற்கை உலோகக் கலவை எடு; win over to, தன் கருத்திற்கு இணக்குவித்து மாற்று; தன்பக்கஞ் சாய்வுறுவி.

**wince**, *n.* உதை, உதைப்பு; வேதனைத் துடிப்பதிர்வு, பதைபதைப்பதிர்வு; *v.* குலைவுற்றுப் பின்வாங்கு; கண்ணிமை வெட்டுதலுறு; தசைச்சுரிப்புறு; வெட்டிப் பின்னிடைவுறு; அஞ்சிப் பின்னிடைவுறு.

**win'cey**, *n.* உட்சட்டைக்குப் பயன்படுத்தப்படுங் கம்பளிப் பருத்திக் கலவைத் துகில்; *pl.* win'ceys.

**winceyette'**, *n.* இருபுற இழைமடி மென்துகில்வகை.

**winch**, *n.* திருகுவிட்டம், இயந்திர ஊடச்சின் செங்கிரிபுக் கோட்டம்; உருளைத் திருகுபிடிக் காம்பு; திருகு உருளை ஏற்றப் பொறி.

**Win'chester¹, Winchester quart**, *n.* அரைகாலன் புட்டி அளவு.

**Win'chester², Winchester rifle**, *n.* வேட்டை அடுக்கு வேட்டுச் சுழல் துப்பாக்கி

**wind¹**, *n.* காற்று; காற்றோட்டம்; செயற்கைக் காற்றோட்டம்; காற்றொழுக்கு; காற்றுவீச்சு; மென்காற்றலை; வன்காற்று; கடுங்காற்று; காற்றுப்போக்கு; காற்றுவாக்கு; காற்றுவாட்டம்; காற்றுத்திசை, காற்றுவரு திசை; திசை; மணம், மோப்பம்; மோப்பக்காற்றலை; தொலை அறிகுறி; இருப்பிடக் குறிப்பு; தகவல்; மூச்சு; மூச்சுத் திறம்; மூச்சுவிடுந் திறம்; கடுமுயற்சிக்கு வேண்டிய மூச்சாற்றல்; மூச்சுத்தெம்பு; குத்துச்சண்டை வகையில் மார்புக்குக் கீழுள்ள வர்மம், மூச்சுவிடும் மென்தடம்; கீழ்வளி, அபானவாயு; குடல் உள்வளி, வாயு; அசீரணவாயு, உதரவாயு; பொருமல்; ஆட்டுநோய்; பூதிப்பு, உதிப்பு, உப்புதல்; வெற்று இறுமாப்பு; வெற்றுரை; (இசை.) துளையிசைக்கருவித் தொகுதி; (இசை.) துளையிசைக்கருவியாளர் தொகுதி; (கப்.) காற்றுத் திசைத் தொடர்புநிலை; (இழி.) அடிவயிறு; *v.* ஊதல் ஒலி எழுப்பு; மணத்தாற் கண்டுபிடி; மோப்பத்தாற் கண்டறி; மூச்சுவிடு; ஓடுவித்து விரை மூச்சோடவிடு; மிகுவிரைவினால் மூச்சுத் திணறடிக்க வை; இளைப்பாறி மூச்சுவாங்கவிடு; காற்று வாங்க விடு; காற்றுப்பட வை; (தொ.) a capful of wind, சிறு காற்று; between wind and water, கப்பல் பகுதிகள் வகையில் நீரில் அமிழ்ந்தாழ்ந்தெழு நிலையில்; சேதமுறத்தக்க நிலையில்; break wind, வளி பறி, அபானவாயு வெளியேற்று; broken wind, குதிரை வகையில் குறுமூச்சு, மூச்சுத்தடை; cast to the winds, fling to the winds, கைவிடு, புறக்கணி; அசட்டைபண்ணு; down the wind, காற்றின் திசையில்; அழிவுநோக்கி; get one's wind, மீள மூச்சுவிடும் நிலையுறு; get wind, take wind, வதந்தியாகப் பரவு; have the wind of, தடம் கண்டு பின்பற்று; in the wind, வருநிலையில், வரத்தகு நிலையில்; பொதுமக்கள் கருத்தில்; நடைமுறையில்; raise the wind, வேண்டிய பணத்தைப் பெறு; sail close to the wind, ஒப்புக்கொள்ளப்பட்ட எல்லையைக் கடக்கும் ஆபத்தில் இரு; sow the wind and reap whirlwind, பிறன்கேடு சூழ்ந்து பெருங்கேடுறு; take the wind out of one's sail, ஒருவரது அனுகூலத்தைப் பறி, ஒருவர் வாதிக்க இருப்பவற்றையே முந்துறக்கூறி அவர் செயல் குலைவி.

**wind²**, *v.* குழல் ஒலி முழக்கு; குழல் ஓசைச் சமிக்கை காட்டு.

**wind³**, *n.* திருக்கீடு, முறுக்கீடு; திருக்கிய நிலை, முறுகீடு; திருப்பம், பாட்டை வளைவு; கடிகார முறுக்கீட்டில் ஒரு சுற்று; கயிற்றுச்சுருளில் ஒரு சுற்று; *v.* முறுக்கு, திருகு, திருக்கு; கடிகார வகையில் சாவி கொடு; இசைக்கருவி நரம்பு முறுக்கு; கப்பல் வகையில் நேர்மாறாகத் திருப்பு; சுற்றிச்செல்; திருகிச் செல்; வளைந்துவளைந்து செல்; திருகுமறுகாகச் செல்; வரிந்து சுற்றி வை; பொதிந்து வை; போர்த்து; பாரஞ்சாம்பி உருளை

யைச் சுற்றி இயக்கு ; குதிரையை இடப்புறமாகத் திருப்பு; குதிரைவகையில் இடப்புறமாகத் திரும்பு; சுருட்டு; மூடிவிடு; சுருள்வுறு ; சூழ்ந்து பின்னிக்கொள் ; சுற்றித்தழுவு, சூழ்ந்து பிணை; முற்றிலும் பிணைந்து தன்வயப்படுத்திக்கொள்; (தொ.) in winding, உண்மைக்கு மாறாக, ஒருச்சாய்த்து ; wind off, சுருளாக இருப்பதைப் பிரி; wind person round one's fingers, ஒருவர்மீது முழு ஆதிக்கஞ் செலுத்து ; wind up, முழுவதையும் வரிந்து வளையச் சுற்றி வை; திருகிச் செல்; திருக்கி இறுக்கு, கடிகார வகையில் சாவிகொடு; முறுக்கிவிடு; விறைப்பாக்கு; எழுச்சியூட்டு; நெருக்கடி நிலையை முனைப்பாக்கு ; முடிவுறச்செய்.

win'dage, *n.* பீரங்கியின் புழைக்குண்டு இடைவெளி வேற்றுமை ; காற்று வாட்டம், எறிபடை நெறியில் காற்று வேகக் கோட்டம்; எறிபடைக் காற்றுக்கோட்ட அளவு; காற்று வாட்டக் கழிவுத் தள்ளுபடி உரிமை; இயந்திரச் சுழல்வில் காற்று உராய்வு விசை.

wind'bag, *n.* துருத்தி; வாயாடி, பயனில்சொல் பாராட்டுபவர்.

wind'-bound, *a.* எதிர்க்காற்றினால் செலவு தடைப்பட்ட.

wind'-break, *n.* காற்றுத் தடுப்பு, காற்றின் விசையைக் குறைப்பதற்குப் பயன்படும் வேலி-புதர்ச் செடிகள் முதலியன.

wind'-chest, *n.* இசைப்பெட்டி ஒலிப்பத்தர்.

wind'ed, *v.* wind[2] என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவங்களுள் ஒன்று.

wind'-egg, *n.* பொலிவிலா முட்டை.

wind'er, *n.* திருகுபவர், சுற்றுபவர், முறுக்குபவர்; திருகுசாவி ; சுரங்கத்தில் சுழல் ஏற்ற மின்பொறி; முறுகுகொடி வகை.

wind'fall, *n.* படுபழம், காற்றடித்து விழுந்த பழம்; குருட்டடி யோகம், எதிர்பாரா நற்பேறு.

wind'-fanner, *n.* குறும்பருந்து வகை.

wind'-flower, *n.* (செய்.) கடற்பஞ்சு.

wind'-gall, *n.* குதிரைக்காலடிக் குழைச்சு வீக்கம்.

wind'-gauge, *n.* காற்றுவேகமானி.

wind'hover, *n.* குறும்பருந்து வகை.

wind'ing, *n.* திருகுதல்; பொதிதல்; *a.* திருகுகிற ; பொதிவதற்கான ; (தொ.) winding staircase, சுழல்படிக்கட்டு.

wind'ing-sheet, *n.* சாப்போர்வை, பிணத்தை மூடிவைப்பதற்கான போர்வை.

wind'-instrument, *n.* துளையிசைக்கருவி.

wind'-jammer, *n.* (இழி.) வாணிகச் சரக்குக்கப்பல்.

wind'lass, *n.* பாரஞ்சாம்பி, சுழல்சக்கரமூலம் பாரந்தூக்கும் இயந்திரம் ; *v.* பாரஞ்சாம்பியைக்கொண்டு பாரந்தூக்கு.

win'dlestraw, *n.* காம்பு; நீள்காம்புப் புல்வகை; வலிமையற்று நீண்டு ஒடுங்கிய உடலினம்; புல் செத்தை சவறு; அற்பப்பொருள்.

wind'mill, *n.* பெருங்காற்றுடி ; காற்றுவிசையாலை; (இழி.) படைத்துறை வழக்கில் நிமிர்வான்கலம்; (தொ.) fight windmills, கற்பனைப் பகைவருடன் போராடு; windmill plane, கிடைநிலைச் சுழல்விசிறி விமானம்.

win'dow, *n.* பலகணி, சன்னல்; உள் முகவரிகாட்டும் உறை இடைவெளி ; சேண் தடை உதிரி, சேணளவியின் பயன்தடை செய்வதற்குரிய விமான உதிர் உலோகத் தகடுகள்.

win'dow-box, *n.* சறுக்குச்சட்டப் பலகணியின் சறுக் கெடைக்கூடு; பலகணி மலர்ச்செடிகளுக்கான சதுரத் தொட்டி.

win'dow-dressing, *n.* வாணிகமுறைச் சரக்குப் பரப்பீட்டு ஒப்பனை ; ஒப்பனை விளக்கம்.

win'dowed, *a.* பலகணியையுடைய; சாளரங்களைக்கொண்ட.

win'dow-shopping, *n.* கடைப்பொருள் சுற்றுலாக்காட்சி.

win'dow-sill, *n.* பலகணி அடிக்கட்டை.

wind'pipe, *n.* (உள்.) மூச்சுக்குழாய்.

wind'-row, *n.* உலர்வரி, காற்றுட விடப்படும் புல்-கூலக்கதிர் நிலக்கரித் தொகுதி.

winds, *n. pl.* காற்றுத் திசைகள், நாற்றிசை ; (தொ.) come from the four winds, எல்லாத் திசைகளிலிருந்தும் வந்து சேர்.

wind'-sail, *n.* காற்றேட்டக் குழற்பாய்.

wind'-screen, *n.* வளிகாப்புத்தட்டி ; மோட்டார் காற்றுத் தடுப்பு.

wind'sleeve, wind'-sock, *n.* காற்றுத்திசைக்கூம்பு.

wind'-spout, *n.* சுழலகாற்று ; கடல்நீர்த் தம்பம்.

wind'-sucker, *n.* சண்டிக்குதிரை, தீனித்தொட்டியைக் கடித்து மூச்சினை வேகமாக உள்ளுக்குவாங்கும் கெட்ட பழக்கமுடைய குதிரை.

wind'-swept, *a.* திறந்தபடியுள்ள, காற்று-புயல் பாதுகாப்பற்ற.

wind'-tight, *a.* காற்று இறுக்கமான, காற்றுப் புகாத.

wind'tunnel, *n.* விமானக் கட்டுமானத் துறைக்குரிய செயற்கைக் காற்று விசைச் சுருங்கைநெறி.

wind'-up, *n.* முடிவு, முடிவுற்ற நிலை, இறுதிக்கட்டம்.

wind'ward, *n.* (கப்.) காலிடம், காற்றுவரு திசைப்பகுதி; *a.* காற்றுவரு திசையிலிருக்கிற; காற்று வீச்சிற்கு உட்பட்ட.

wind'y, *a.* காற்றேட்டமுள்ள ; காற்றுவீச்சு மிக்க, பெருங்காற்று வீச்சுக்குட்பட்ட ; மிகுசொல்லாடுகிற, பொருளற்ற சொற்பெருக்கமுடைய ; வயிற்றுப்பொருமல் வாய்ந்த ; (பழ.) காற்று எழும் திசையிலிருக்கிற ; (இழி.) கிலிகொண்ட.

wine, *n.* மது, கொடிமுந்திரிப் பழச்சாறு, பல்கலைக்கழக விருந்துக்குப் பின்னுள்ள மதுவருந்து குழுமம் ; பழச்சாற்றுக் காடி ; மதுமருந்துக் கலவை; திண்ணிய செந்நிறம்; *v.* மது அருந்து, விருந்தில் மது அளி, மது விருந்து அளித்து உபசரி; (தொ.) Adam's wine, தண்ணீர்; good wine needs no bush, நல்ல சரக்குக்கு விளம்பரம் தேவையில்லை ; in wine, மதுகுடித்து வெறியுண்ட, மதுவினால் ஊக்கங் கொண்ட.

wine'bag, *n.* மதுப்பை ; குடிகாரன்.

wine'bibber, *n.* களிமகன்.

wine'bottle, *n.* மதுக்கலம்.

wine'bowl, *n.* மதுக்கிண்ணம் ; குடிப்பழக்கம்.

wine'fat, *n.* (பழ.) மதுப் பிழியல் தொட்டி.

wine'glass, *n.* தேறற் கோப்பை.

wine'-palm, *n.* பனைமர வகை.

wine'press, *n.* மதுப்பிழியற் கருவி.

win'er, *n.* (பழ.) மது வடிப்பவர்.

win'ery, *n.* மது வடிக்கும் தொழிற்சாலை.

wine'sap, *n.* அமெரிக்க ஆப்பிள் வகை.

wine'-stone, *n.* தேறற்படிவு.

wine'-vault, *n.* இன்தேறல் அடிநிலக் கிடங்கு.

wing, *n.* சிறகு; வௌவாலின் சிறகு; கோழி முதலிய நிலப் பறவைகளின் சிறையுறுப்பு ; பூச்சிகளின் இறக்கை; பறக்க உதவும் உறுப்பு ; பறத்தல், பறக்கும் நிலை ; பறததற்கருவி ; விரைசெலவு ; விரை செலவாற்றல்; விசை செலவாற்றற் கருவி ; பறவைக் கூட்டம்; (பே-வ) புயம், மேற்கை; பக்கம், புடைவாரம், சிறகம், விமான இறக்கை ; கட்டடச் சிறகம் ; கோட்டையின் நீள்சிறைக் கட்டுமானம்; படையின் பக்க அணி ; கடற்படையின் புறக்கோடி ; விமானப் படைப்பிரிவு ; நாடகக் கொட்டகையின் புடைவாரம்; அரங்கின் பக்க அறை; பக்கக்காட்சித் திரை ; பக்கத்திரைக் காட்சி ; ஆட்ட முன்புறச் சிறையணி நாற்காலி முதுகுப்புறப் புடைக்கட்டை; வண்டிச் சக்கரங்களின் மட்காப்புப்பட்டை ; அரசியற் கட்சிப் புடைசாரி, ஆதரவுப் பொறுப்பாட்சி; *v.* சிறகு இணைத்து அமை; சிறைப்பகுதி யமை; பக்கக்கூறுகள் அமை ; பறக்கச்

செய் ; பறக்கவிடு ; பறந்து செல் ; பறந்து கட ; சிறகுடன் மிக உயரத்தில் பற ; பறக்க உதவு ; காற்றில் மிதந்து செல்ல உதவு ; விமானத்தில் செல் ; விரைந்து செல் ; விரைவு கொடு ; வேகம் கொடு ; விரைவூக்கமளி ; சிறகுப் பக்கமாகக் காயப்படுத்து ; மேற்கைப் பக்கமாகக் காயப் படுத்து ; (தொ.) add wings to, lend wings to, விரைவு படுத்து, முடுக்கிவிடு ; make wing, take wing, பறக்கத் தொடங்கு, புறப்படு ; on the wing, upon the wing, பறந்து கொண்டிருக்கும் நிலையில் ; இயங்கும் நிலையில் ; on the wings of the wind, மிக உச்சநிலை விரைவுடன் ; under one's wing, ஒருவர் பாதுகாப்பில்.

wing'-beat, *n.* சிறகடிப்பு.

wing'-case, *n.* பூச்சிகளின் சிறகுச் சிதலுறை.

wing'-commander, *n.* விமானச்சிறகத் தலைவர்.

wing'covert, *n.* இறகு அடிப்பாயல், பறவைகளின் சிறகடியை மூடியுள்ள மெல்லிறகுப்பாயல்.

winged, *a.* சிறகுகள் அமைந்துள்ள ; விதை வகையில் சிற கலவியினையுடைய, தண்டு வகையில் இலக்காம்படி இணை வுற்ற ; கனி வகையில் தட்டையான அடி இணைப்புடைய ; சிறகில் அடிபட்ட ; விரைவான ; விழுமிய ; (தொ.) winged words, சொல்லம்பு.

wing'-footed, *a.* (செய்.) விரைவான.

wing'less, *a.* சிறகுகள் இல்லாத.

wing'let, *n.* சிறு சிறகு, போலிச் சிறகு.

wing'man, *n.* விமான அணித் துணைக்காவல் விமானம் ; விமான அணித் துணைக்காவல் விமான வலவர்.

wings, *n. pl.* விமானப்படை வலவரின் பொறிப்புச் சின்னம் ; கப்பலின் பாய்கள்.

wing'-sheath, *n.* பூச்சியின இறக்கைச் செதிளுறை.

wing'-spread, *n.* சிறகுப் பரப்பளவு ; விமான இறக்கைகளின் பரப்பகல அளவு.

wing'-stroke, *n.* சிறகடி, பறத்தலில் இறக்கைகளின் ஒரு தடவை இயக்கம்.

wink, *n.* இமைப்பு ; கண் இமைப்பொழுது ; *v.* கண் இமை, கண்மூடித் திற ; கண்சிமிட்டி மறை செய்தியைத் தெரிவி ; ஒளி வகையில் மினுக்கு மினுக்கென்று ஒளிவிடு, விண்மீன் வகையில் விட்டுவிட்டு ஒளிர் ; (தொ.) forty winks, சிறு துயில் ; wink at, ஒன்றினைப் பார்க்காமல் கண்மூடிக்கொள், பார்ப்பதை வேண்டுமென்றே தவிர், கண்டுங் காணாதது போலிரு.

win'kle, *n.* உணவாகப் பயன்படும் கடல்நத்தை வகை ; (தொ.) winkle out, நத்தையைத் தோட்டிலிருந்து இழுத் தெடு ; வெளிப்படுத்து.

winn'ing, *a.* வெற்றியை உறுதி செய்கிற, வெற்றி பெறுகிற, வெற்றிச் செயல் சார்ந்த, வெற்றிச் செயலுக்குரிய ; கவர்ச்சி யான, இனிமையூட்டுகிற, தன் சார்பில் சாய்வூட்டத்தக்க.

winn'ing-post, *n.* குதிரைப்பந்தய வெளியின் பந்தய இலக்கு.

winn'ings, *n. pl.* கெலித்த மதிப்பு, கெலிப்பெண் தொகுதி.

winn'ow, *n.* முறம், பொலிசுளகு ; *v.* புடை ; பதர்நீக்கு ; தூசு நீக்கு ; மாசு நீக்கித் தேர்ந்தெடு ; சலித்தெடு, பிரித் தெடு ; தெள்ளு ; கொழி ; வகைப்படுத்து, ஒரினத்தைப் பொறுக்கியெடு ; பயனற்ற பொருள்களைக் களைந்தெறி ; (செய்.) சிறகுகளினால் மென்காற்றுப்பட வீசு ; (செய்.) சிறகடித்துக்கொள் ; மயிர் உளர், மயிர் கலைவுறச் செய்.

win'some, *a.* கவர்ச்சிமிக்க ; தோற்ற வனப்புடைய ; மகிழ்ச்சி யளிக்கிற ; தன் வயப்படுத்துகிற.

win'ter, *n.* பனிக்காலம் ; குளிர்பருவம் ; மகிழ்ச்சியற்ற பரு வம் ; (செய்.) வாழ்வின் ஓர் ஆண்டு ; *a.* குளிர்காலத்திற்கு உரிய ; குளிர்காலத்தில் நீடித்து நிலவுகிற ; குளிர்காலத்திற் பயன்படுத்தத்தக்க, பனிக்காலத்தில் நிகழ்கிற ; புயலான ; துயரம் நிரம்பிய ; *v.* பனிக்காலத்தைக் கழி ; செடி-கால்நடை முதலியவற்றைக் குளிர்காலத்தில் வைத்துப் பேணு ; குளிர் காலத்தைத் தாங்கிக் கழி ; (தொ.) winter sleep, விலங்குகள் வகையில் பனிக்காலச் செறி துயில் ; winter sports, பனிப் பரப்பு மீது ஆடப்படும் பனிக்கால மனைபுறக் கேளிக்கைகள், பனிச்சறுக்காட்டம், பனிச்சறுக்குக் கட்டையாட்டம்,

win'ter-green, *n.* பசுமைமாறாச் செடியினம்.

win'terize, *v.* பனிப்பருவச் சூழலுக்கு இயைவுடையதாக்கு ; குளிர்காலத்துக்கு வேண்டிய காப்புக்கலம் குளிர்காப்பு உடை முதலியன வகுத்துச் சேமி.

win'ter-lodge, *n.* (தாவ.) பனிக்காலத்தில் செடியின் கரு முளையைக் காக்கும் பொதியரும்பு.

win'terly, *a.* எழுச்சியற்ற, துயரம் நிரம்பிய.

win'ters, *n. pl.* ஆண்டுகள் ; வாழ்வின் ஆண்டுகள்.

win'ter-tide, *n.* (பழ.) பனிப்பருவம், குளிர்பருவம்.

win'tery, win'try, *a.* குளிர்காலத்துக்குரிய தட்பவெப்ப நிலையுடைய ; பனிக்காலப் பண்புக்கூறுடைய ; புயலார்ந்த, புயல் நிலையுடைய ; குளிர்மிக்க, பெருங்காற்றடிக்கிற ; எழுச்சியற்ற, துயரம் நிரம்பிய ; புன்னகை வகையில் மகிழ்ச்சி யற்ற ; வரவேற்பு வகையில் அன்பில்லாத ; அக்கறையற்ற, களியார்வமில்லாத.

win'y, *a.* இன்தேறலினைப் போன்ற ; வெறியூட்டப்பெற்ற, வெறிமயக்கங் கொண்ட.

wipe, *n.* துடைப்பு ; (இழி.) பலத்த வேகமான அடி ; (இழி.) கைக்குட்டை ; *v.* துடை ; தேய்த்துத் துப்புரவு செய், கறை துடைத்தெடு ; கண்ணீர் துடைத்தகற்று ; துடைத்தழி ; ஒழித்துவிடு, இல்லாதாக்கு ; நிலத்தளம் துடைத்துப் பெருக்கு ; கலம் தேய்த்து அலம்பு ; (இழி.) பலமாக அடிக்கக் கை யோங்கு ; (இழி.) பலமாக அடி.

wi'per, *n.* துடைப்பான்.

wire, *n.* கம்பி ; தந்திக்கம்பி ; தந்தி ; தந்திச்செய்தி ; *v.* கம்பி இணைத்தமை ; கம்பிகொண்டு கட்டு ; கம்பியில் கோத்து அமை ; பறவையைக் கம்பி வலையில் சிக்கவை ; வீடு-கட்டி டம் முதலியவற்றிற்கு மின் கம்பி இணைப்புச் செய்தமைவி ; புல்வெளி மரப்பந்தாட்ட வகையில் கம்பிக் குழைச்சினால் பந்தினைத் தடுத்து நிறுத்து ; தந்திச்செய்தியனுப்பு, தந்தியடி, தந்திகொடு ; (தொ.) barbed wire, வரிமுட்கம்பி, குத்துமுள் கம்பி ; barbed wire fence, முட்கம்பி வேலி ; live wire, வரம்பு கடந்த விசைத் துடிப்புடைய ஆள் ; pull the wires, மறை செல்வாக்கினால் இயக்கு ; wire away, ஊக்கத்துடன் செய லாற்று ; wire entanglement, வரிமுட் படைத்துறைக் கம்பிச் சுருள் தடுப்பு நடவடிக்கை ; wire in, (இழி.) ஊக்கத்துடன் செயலாற்று, முழு ஆற்றலை ஈடுபடுத்து ; wire into, விடாமல் மீதார்வத்துடன் தின்னு.

wire'-dancer, *n.* கம்பிநடன வித்தையாளர்.

wire'draw, *v.* உலோகத்தைக் கம்பியாக நீட்டு ; உறு நுட்ப மாக்கு.

wire'-edge, *n.* போலிக் கூர்முனை, மட்டுமீறிக் கூராக்கப் படுவதனால் பின் மடிவுறும் போலி விளிம்பு.

wire'-gun, *n.* கம்பித்தகடு வரிந்து சுற்றிய துப்பாக்கி.

wire'-haired, *a.* கம்பிபோன்ற மயிருடைய ; நாய் வகையில் விறைப்பான மயிருடைய.

wire'-heel, *n.* குதிரைக் கால்நோய் வகை.

wire'less, *n.* சேணொலி, கம்பியில்லாத் தந்தி ; சேணி ; கம்பியிலலாத் தந்திசசெய்தி ; கம்பியில்லாத் தொலைபேசி ; வானொலிப் பரப்பீடு ; சேணொலி அனுப்புகருவி ; சேணொலி வாங்கு கருவி ; ஒலிபரப்புச்செய்தி ; ஒலிபரப்புத்திட்டம் ; ஒலிபரப்பு ; *a.* கம்பியில்லாத ; கம்பிகளற்ற ; தந்தி-தொலை பேசி வகைகளில் கம்பியிணைப்பற்ற ; சேணொலி சார்ந்த ; கம்பியில்லாத் தந்திக்குரிய ; *v.* சேணொலித் தொடர்புகொள் ; சேணொலிச் செய்தியனுப்பு, கம்பியில்லாத் தந்திச் செய்தி கொடு ; சேணொலிமூலந் தெரிவி ; (தொ.) wireless station, சேணொலிமனை, தந்தியில்லாச் செய்தி அனுப்பீட்டு நிலையம்.

wire'-line, *n.* நிமிர்வரை, தாளின் ஒளிவரைக்கு ஒத்த கம்பிபோன்ற வெள்ளைக்கோடு.

wire'-nett'ing, *n.* கம்பிவலைப் பின்னல்; பின்னற் கம்பிவலை.
wire'puller, *n.* மறைவுச் செல்வாக்குடையவர்; மறைவுக் கிளர்ச்சியாளர்.
wire'pulling, *n.* செல்வாக்கு நாண்.
wire'-rope, *n.* கம்பிவடம்.
wire'-way, *n.* கம்பி நெறி, கம்பிவழிச் சரக்குப் போக்குவரவுப் பாதை.
wire'work, *n.* கம்பியாக்கவேலை; கம்பி வேலைப்பாடு.
wire'worker, *n.* கம்பி வினைஞர்.
wire'-worm, *n.* கம்பிப் புழு, தீங்கிழைக்கும் முட்டைப்புழு வகை.
wire'wove, *a.* நேர்த்தியான, எழுதுதாள் வகையில் நேர்த்தியும் மழமழப்பும் வாய்ந்து உயர்தரமான.
wir'ily, *adv.* கம்பிபோன்று இழைவாக; கம்பிபோன்று ஒடுங்கியதாக; கம்பிபோன்று வலிவாக.
wir'iness, *n.* கம்பியிழைவு; கம்பிபோன்ற ஒடுக்கம்; கம்பி வலிவு.
wir'y, *a.* (செய்.) கம்பியினாற் செய்யப்பட்ட; கம்பியைப் போல் வலிமையும் நெகிழ்வும் உடைய; தளர்வுறாத, சோர்வுறாத.
wis, *v.* (செய். பழ.) தன்மை நிகழ்கால வழக்கில் நன்கு அறிவேன்.
wis'dom, *n.* மெய்யறிவு, பட்டுணர் பகுத்தறிவு; முன்மதி, விவேகம்; மதி நலம்; பொது அறிவாழம்; அறிவு நுட்பம்; ஆழ்ந்தகன்ற நுண்கல்வியறிவுத்திறம்; அனுபவ மெய்ம்மைகளின் தொகுதி; அறிவார்ந்த முதுமொழிகளின் தொகுதி.
wis'dom-literature, *n.* மூதறிவு இலக்கியம், விவிலிய ஏட்டில் ஜாப்கதை-பழமொழிகள்-திருச்சபை-சாலமன் அறிவுரை முதலியன.
wis'dom-tooth, *n.* பின்கோடிக் கடைவாய்ப்பல், அரைக்கும் பற்களுள் பொதுவாக இருபது வயதுகடந்து வளரும் ஒன்று.
wise[1], *a.* மெய்யறிவார்ந்த; முன்மதியுடைய, விவேகமுடைய; அனுபவ அறிவு வாய்ந்த; புத்திசாலித்தனமான; அறிவுக்கூர்மையுடைய, மதிநுட்பமுடைய; அறிவுத்திறங்காட்டுகிற, உலகியலறிவு வாய்ந்த; நல்லறிவுடைய; அனுபவ அறிவுச் செறிவுடைய; எல்லாத் தகவல்களும் அறிந்திருக்கிற; மறைசெய்திகளை அறிந்திருக்கிற; தெய்விக ஆற்றலுடைய; தவறாச் செயல்வாய்மையுடைய; மறைவெளியிடும் தன்மையற்ற, நாவடக்கம் வாய்ந்த; (தொ.) wise man, மாயாவி, மாந்திரிகன்; wise saw, முதுமொழி; wise woman, மந்திரக் கணிச்சி; மருத்துவச்சி.
wise[2], *n.* வகை, மாதிரி, முறை, விதம்; பாணி; (தொ.) in any wise, எம்முறையிலாவது; in no wise, எவ்விதத்திலுமின்றி; on this wise, இவ்விதமாக.
wise'acre, *n.* போலி மேதை; அப்பாவி.
wise'-crack, *v.* மணியுரை தெறி, அறிவார்ந்த முதுமொழிகளைக் கையாளு.
wish, *n.* விருப்பம்; விழைவு; தெரிவித்தல்; வேண்டுகோள்; மறைமுக ஆணை; விரும்பப்படும் பொருள், இலக்கு; *v.* விரும்பு; விருப்பங் கொள்; ஆர்வங்கொள்; அவாவுறு; விருப்பந் தெரிவி; நலம் விரும்பு; வாழ்த்துக் கூறு; (தொ.) wish fulfilment, (உள.) கனவில் விருப்பத் தீர்வு.
wish'ful, *a.* ஆவலுள்ள, விருப்பமிக்க; ஆவல் வடிவான, நிறைவேறா விருப்பஞ் சார்ந்த; (தொ.) wishful thinking, (உள.) விருப்பங்களை அடிப்படையாகக்கொண்ட எண்ணம்; நிகழ்ச்சி விருப்ப நம்பிக்கை.
wish'ing, *n.* விரும்புதல்; *a.* விரும்புகிற.
wish'ing-bone, *n.* பறவையின் மார்புக்கும் கழுத்திற்கும் இடைப்பட்ட பகுதியிலுள்ள கவை எலும்பு.
wish'ing-cap, *n.* எண்ணியதை எய்துவிக்கும் மாயத் தொப்பி.
wish'-wash, *n.* மெலிவு; சாரமின்மை.
wish'y-washy, *a.* செறிவற்ற; மெலிவான; கலப்பான; சாரமற்ற.
wisp, *n.* சிறு வைக்கோற்புரி; இணைந்து உண்ணும் பறவைத் திரள்; கூட்டம், ஈட்டம்.
wist, *v.* (பழ.) wit[2] என்பதன் இறந்தகால வடிவம்.
wistar'ia, *n.* இளஞ்சிவப்பு மலருடைய கொடிவகை.
wist'ful, *a.* கருத்தூன்றிய; உள்ளார்வ மிக்க; அறியும் ஆவல்கொண்ட; நம்பிக்கையின்றியும் மிகு விருப்பங்கொண்டுள்ள; வருத்தந் தோய்ந்த, வாடிய தோற்றமுடைய.
wit[1], *n.* கூரறிவு; புதுக்கருத்து நயம்; சொல் நயம், உரை நயம்; நகைத்திறம்; நகைத்துணுக்கு; கேலித்துணுக்கு; பகடியுரை; அறிவுத்திறமுடையவர்; சொல்திறமுடையவர் பகடி, செறிசொல்லாளர்; (தொ.) at one's wit's end, கலங்கிய நிலையில்; have one's wits about one, உன்னிப்பாக இரு; live by one's wits, சாமர்த்தியத்தால் சம்பாதித்து வாழ்க்கை நடத்து; out of one's wits, பித்துப் பிடித்த, மதிமயக்கமுற்ற; the five wits, ஐம்புலன்கள்.
wit[2], *v.* (பழ., அரு.) தெரிந்திரு, உணர்ந்திரு; (தொ.) to wit, அதாவது.
witch[1], *n.* சூனியக்காரி; கவர்ச்சிவாய்ந்த பெண்; அருவருப்புத் தோற்றமுள்ள கிழவி; தட்டையான மீன்வகை; *v.* மருட்டு, சூனியம் வை; கவர்ச்சி செய்; கவர்ச்சியுட்படுத்து.
witch[2], *n.* தொய்வான கிளைகளையுடைய மரவகை.
witch'-alder, *n.* வட அமெரிக்க புதர்ச்செடியினம்.
witch'craft, *n.* சல்லியம், பில்லி சூனியம்.
witch'-doctor, *n.* பில்லி சூனிய மருத்துவர்.
witch'-elm, *n.* அரம்பப்பல் விளிம்பு இலைகளையுடைய காட்டு மரவகை.
witch'ery, *n.* சூனிய வித்தை; மாயக் கவர்ச்சி, அழகுக் கவர்ச்சி.
witch'-hazel, *n.* வட அமெரிக்க புதர்ச்செடிவகை.
witch'-hunt, *n.* சூனியவேட்டை; ஒற்றர் ஐயுறவு வேட்டை; பொதுவுடைமையர் ஐயுறவு வேட்டை; அரசியல் எதிரிகளின் ஐயுறவு வேட்டை.
witch'ing, *a.* சூனியவித்தைக்கு ஏற்ற; இயற்கை மீறின; கவர்ச்சியுட்படுத்துகிற.
witch'-meal, *n.* பாசிவகையின் தாது.
wit'enagemot', *n.* (வர.) அறிஞர் பேரவை, முற்கால ஆங்கில இனத்தவரிடையே நாட்டு-இன மாமன்றம்.
with, *prep.* ஒடு, உடனாக; உட்கொண்டதாக, உடன் சேர்வாக; அருகில், உடனிருந்து, உடனமர்வாக; நேர் எதிர் எதிராக, எதிர்த்து, முரணி; போரில் கைகலப்பாக; உடனிகழ்வாக; கூட; உடன்கூட்டாக; கொண்டு, உடன் கொண்டு; கருவியாகக்கொண்டு; அணிந்துகொண்டு; உடைமையாகக்கொண்டு; பண்பாகக்கொண்டு; இடத்தில்; சார்பாக; கைவசமாக; பொறுப்பில்; பாதுகாப்பில்; உடன் தொடர்புகொண்டு, நேராகத் தொடர்புகொண்ட நிலையில்; உடனொத்து; உடனொத்த திசையில்; உடன் சார்வாக; உடனொப்பாக; உடனிணைவாக; மூலமாக; அடுத்து, உடனடியாக; வகையில்; தொடர்பாக; பற்றி; இடத்திலிருந்து; ஆல்; பயன்படுத்தி; காரணமாக; மீதாக; ஒத்திசைய, அனுகுணமாக; (தொ.) think with, உடனொத்த கருத்துக்கொள்; to begin with, தொடக்கநிலையாக; with that, அதன்பேரில்; அதன் பின்னர்; அதனையடுத்து.
withal', *adv.* அதனுடன், மேற்கொண்டு; அல்லாமலும் கூட; அதேசமயத்தில்; உடனாக.
withdraw', *v.* திரும்பப் பெற்றுக்கொள்; பின்னிடு; பின்வாங்கு; பின்னிடை; பின்னுக்கு இழுத்துக்கொள்; சுருக்கிக்கொள்; உள்வாங்கு; போட்ட பணத்தைத் திரும்ப எடு; சொன்னசொல் மாற்று, சொன்னசொல் திரும்பப்பெறு; விலகிச்செல், பின்செல்; விலகிக்கொள்; ஒதுங்கிச் சென்றுவிடு, மறைவாகப் போ, பிரிந்து செல்.

withdraw'al, n. மீட்டுப்பேறு; திரும்பப் பெறுதல்; பின்னிடைவு; பின்வாங்கல்; உள்வாங்கல், உள்ளிழுப்பு; விலகல்.

withdraw'ing, n. பின்வாங்கல்; திரும்பப் பெறுதல்; உட்சுருங்கல்; விலகல்; பின்னிடைவு; a. பின்னிடைகிற; பின்வாங்குகிற; விலகுகிற; தனி ஓய்விற்குரிய.

withdraw'ing-room, n. ஓய்வு அறை.

with'e, n. மிலாறு, வளார்; முறுக்கின கொடி.

with'er, v. வாடு, வதங்கு; வற்றிச்சுருங்கு, சுரித்துப்போ; உலர்சருகாகு; வாட்டு; பொசுக்கு; சருகாக்கு; சுரிக்க வை; உள்ளுரமிழக்கச் செய், ஆற்றலிழக்கச் செய்; புதுமை குன்றுவி; தளர்வுறு; சோர்வுறு; பெருமையிழ; மடிவுறு; அழிவுறு.

with'ering, n. வாடல்; வதங்குதல்; தளர்வு; சோர்வு; வாட்டம்; பொசுக்குதல்; a. வாட்டுகிற; வாடுகிற; பொசுக்குகிற; பொசுங்குகிற; தளர்கிற, சோர்கிற; உலர் பதனப் படுத்தப் பயன்படுகிற.

with'ers, n. pl. முரி, குதிரைத் தோள்பட்டை எலும்புகளுக்கு இடையிலுள்ள உயர்முகடு.

with'ershins, adv. இடஞ்சுழியாக, அவமாகக் கருதப்படும் திசையாக

withhold', v. தடுத்து நிறுத்து, செயற்படுத்தாமலிரு; கொடுக்க மறு; நிறுத்தி வைத்துக்கொள்.

within', n. உள்ளிடம், உட்பக்கம், உட்புறம், உட்பரப்பு; adv. உள்ளே; உட்புறமாக, உட்பக்கத்தில், உள்ளாக; உள்ளிடம் நோக்கி, வீட்டிற்குள்; மறைவில்; அகத்தே, மனத்தினுள்; prep உட்புற நோக்கி, உட்பக்கத்தில்; சூழப்பட்டு; உட்பட்டு, எல்லைக்கு உள்ளாக, புறஞ் செல்லாமல்; மேற்படாதவாறு, உட்பட்டு; பாதிக்கும் அளவிற்கு அருகே, பாதிக்கப்படுமளவிற்கு அருகே; கால எல்லை கழிவதற்கு முன்; எல்லைக்குள்ளாக; (தொ.) within reach, பெறத்தக்க நிலையில்; கிட்டும் எல்லையில்.

without', n. வெளிப்புறம்; புறநிலை; புற ஆதாரங்கள்; adv. வெளிப்புறத்தில், வெளிப்புறம் நோக்கி; உள்ளேயிராமல், அடைக்கப்பட்டிராமல், சேர்க்கப்பட்டிராமல்; மாமன்றத்திற்கு வெளியே; திறந்த வெளியில்; வெளிப்புறமாக; புறம்பாக; prep. புறம்பாக, சேர்க்கப்பட்டிராமல், எல்லைகளுக்கப்பால், உள்ளேயிராமல், வெளிப்புறத்தில், வெளிப்புற நோக்கி; பெற்றிராமல்; இன்றி, இல்லாமல்; உடனுக இருக்கப்பெறமல், முழுதும் தவிர்த்து; குறைபட்டு; தேவைப்பட்டு; இணைவுறமல், தொடர்பற்று; இராத நிலையில்; conj. (பழ., இழி.) என்றலல்லாமல், இல்லாவிடில், ஒழிய; (தொ.) from without, வெளியிலிருந்து; without doors, மாமன்றத்திற்கு வெளியே; திறந்தவெளியில்; குடும்பத்திற்கு வெளியே; நாட்டிற்குப் புறம்பாக; without fail, தப்பாமல், உறுதியாக; without prejudice to, கெடுவழியிற் பாதிக்காமல்.

withstand', v. எதிர்த்து நில்; தாங்கி நில்; தாங்கும் ஆற்றல் பெற்றிரு; ஈடு கொடு; தடு, தடைசெய்.

with'y, n. கட்டுக்கொடி, முறுக்கிய கட்டுத்தளை; a. கட்டுக்கொடிபோன்ற; கட்டுக்கொடிகளால் ஆன; ஒசிவிழைவான, வலிவிழைவான.

wit'less, a. அறிவுத்திறமற்ற; பகுத்தறிவில்லாத; பைத்தியம் பிடித்துள்ள.

wit'ling, n. அறிவு குறைந்தவர், போலி அறிஞர்.

wit'ness, n. சான்று, ஆய்வுத்தெளிவு; சான்றுரை, சாட்சியம்; சான்றுளர், சாட்சி; நேர்காட்சியாளர்; உடனிருந்தவர்; தகவல் மெய்ப்பிப்புத் துணைவர்; காண்பவர்; சான்றுச் செய்தி, எண்பிப்பு ஆதாரம்; சான்றுப்பொருள்; ஆதாரமாகக் காட்டப்படும் பொருள்; உறுதிப்பாடு; உறுதிப்படுத்துஞ் செய்தி; (சட்.) நீதிமன்றத்தில் ஆணையிட்டுச் சான்று கூறுபவர், சாட்சிக் கையொப்பமிடுபவர்; v. சான்றுயிரு; சான்றுபகர்; சாட்சிகூறு; சாட்சியங் காட்டு; காட்சியாளராயிரு; நேரில் காண்; பார்; கண்டுணர், பட்டறி; (சட்.) ஆணையிட்டுச் சான்றுரை கூறு; (சட்.) சாட்சிக் கையொப்பமிடு; அறிகுறியாயிரு, எடுத்துக்காட்டு; எதற்கேனுஞ் சான்றாகப் பயன்படு; பார், பார்வையாளராயிரு; ஆவணத்தில் சாட்சிக் கையெழுத்திடு.

wit'ness-box, n. சாட்சிக்கூண்டு.

witt'ed, a. கூர்மதியுள்ள.

witt'icism, n சாதுரியப்பேச்சு, நொடியுரை.

witt'ing, a. தெரிந்திருக்கிற, விவரம் உணர்ந்துள்ள.

witt'ingly, adv. வேண்டுமென்றே, நெஞ்சறிந்து, திட்டமிட்டு.

witt'ol, n. (பழ.) மனைவி சோரம்போவதைக் கண்டுங் காணுதவன் போலிருப்பவன்; இணங்கிப் போகும் பெட்டைமாறி.

wive, v. (அரு.) மணஞ் செய்துகொடு, மனைவியாக அளி; மணஞ்செய்துகொள்.

wiv'ern, n. (கட்.) இருகால்களும் அம்புமுனை வாலும் கொண்ட பறவை நாகம்.

wiz'ard, n. சூனியக்காரர், மந்திரவாதி, மாயாவி; அற்புதச் செயல் செய்பவர்; a. (இழி.) வியத்தக்க.

wiz'ardry, n. பில்லி சூனிய வித்தை, வினைவைப்பு.

wiz'en, wiz'ened, a. திரங்கிய.

wizier', n. இஸ்லாமிய வழக்கில் அமைச்சர்.

wo, whoa, n. குதிரை நிறுத்தக் கூக்குரல் குறிப்பு.

wob'ble, n. அசைவாட்டம்; தள்ளாட்டம்; தயக்கம்; பிறழ்ச்சி; திசை பிறழ்வு; போக்குப் பிறழ்வு; கொள்கைத் தடுமாற்றம்; v. நிலைகொள்ளாமல் அசைந்தாடு; அருவருக்கத்தக்க முறையில் தள்ளாடிச்செல்; நடுக்காட்டம் ஆடு; நெறிபிறழ்; உறுதிப்பாடின்றிச் செயலாற்று; முரண்பாடாக நட; ஒரு நிலைப்படாதிரு; ஒலி குரல் வகையில் நடுக்குறு; தாள கதியில் விரிந்து சுருங்கித் தடுமாறிச் செல்.

wodge, n. (பே-வ.) பெருந்துண்டு, கண்டம்.

woe, n. (செய், பே-வ.) துன்பம், கடுந்துயரம், வருத்தம்; வாழ்க்கைத் துயரம், இன்னல்; (தொ.) weal and woe, அல்லற்காலத்திலும் செல்வக்காலத்திலும்; woe unto, கேடு சூழும்; கேடுறுக; woe worth the day, அந்நாள் சாபநாள்!

woe'begone, a. துயர் நிறைந்த, துன்பத்தில் ஆழ்ந்த.

woe'ful, a. வருத்தந் தோய்ந்த, துயரார்ந்த.

woes, n.pl. இன்னல்கள்; துயரங்கள்.

wog, n. (படை., இழி.) எகிப்தியர்; நடுவுலகவாணர்.

woke, v. wake என்பதன் பெருவழக்கு இறந்த கால வடிவம்; wake என்பதன் அருவழக்கு முடிவெச்ச வடிவம்.

wok'en, v. wake என்பதன் பெருவழக்கு முடிவெச்ச வடிவம்.

wold, n. கரம்பு நிலம், பயிரிடப்படாத மேட்டு நிலம்.

wolf, n. ஓநாய்; பேராசைக்காரன், கொடுங்கொள்ளைக்காரன்; நரம்பிசைக்கருவிக் கரட்டொலி; இசைப்பெட்டி முடுகு முரணொலி; pl. wolves; v. பேராசையோடு விழுங்கு, பெருந்தீனி தின்னு; (தொ.) cry wolf, கிலியூட்டு; have a wolf by the ears, இக்கட்டான நிலையிலிரு; keep a wolf in the stomach, பெரும் பசியானுயிரு; keep the wolf from the door, வறுமை வாராதுகாக்க; பட்டினியைத் தடு; wake not a sleeping wolf, துஞ்சு புலி இடறுதே; wolf in sheep's clothing, பசுத்தோல் போர்த்த புலி, பாசாங்குக்காரன்; wolf pack, (படை., இழி.) வாணிகக் காப்புக்கல் மீது நீர் மூழ்கிப்படைத் தாக்குதல்.

wolf'-cub, n. ஓநாய்க் குருளை; சாரணச் சிறுவர்.

wolf'-dog, n. ஆட்டுக்கிடை நாய்; ஓநாய்க் காப்பின நாய்.

wol'feite, n. கனிப்பொருள் வகை.

wolf'-fish. n. பயங்கரப் பேருருவப் பெருந்தீனிக் கடல் மீன்.

wolf'ish, a. ஓநாய் போன்ற; பெருந்தீனி தின்கிற.

wo'lfram, wol'framite, n. உலோக வகை தரும் தாதுக் கனிப்பொருள்.

wolf'-tooth, n. குதிரையின் உபரி முன்கடைவாய்ப் பல்.

wo'lverene, wo'lverine, *n.* பெருந்தீனி கொள்ளும் பெரிய தசையுண்ணி வகை.

wo'man, *n.* பெண்டு ; மகளிர் ; பெண்பாலினம் ; பெண்ணினம், பெண்பால் ; அரசியின் பணிப்பெண் ; பெருங்குடிப் பெண்ணின் தோழி ; பெண்ணியல்பு உள்ளவன் ; *pl.* wo'men ; *v.* பெண்போல் நடக்கச் செய், அழ வை ; 'பெண்ணே' என்று விளித்துப்பேசு ; (தொ.) kept woman, காமக்கிழத்தி; make an honest woman of, கெடுத்த பெண்ணை மணந்துகொள் ; play the woman, மெலிவுகொள், அழு ; woman of the town, வேசி ; woman of the world, நடப்பு நாகரிக மடநதை ; உலகந் தெரிந்தவள்.

wo'man-child, *n.* பெண்மகவு.

wo'manhood, *n.* பெண்மை.

wo'manish, *a.* பெண்ணியல்புடைய.

wo'manize, *v.* பெண்ணியல்படையச் செய், ஆண்மையைப் போககு.

wo'mankind, *n.* பெண்ணினம்.

wo'manlike, *a.* பெண்போன்ற; *adv.* பெண்களின் இயல்புப் படியே.

wo'manly, *a.* பெண்போன்ற ; *adv.* பெண் தன்மையோடு.

wo'man-quell'er, *n.* பெண்கொலை புரிபவர்.

woman'-vested, *a.* பெண்ணுடுப்பு அணிந்த.

womb, *n.* கருப்பை ; சூற்பை.

wo'menfolk, *n.* மகளிர் ; பெண்ணினம்.

won, *v.* win என்பதன் இறந்தகால-முற்றெச்ச வடிவம்.

wo'nder, *n.* வியப்புநிலை ; வியப்புணர்ச்சி ; அதிசயம் ; வியப்பார்வம் ; அருஞ்செய்தி ; வியப்பார்வச் செய்தி ; வியப்பார்வப் பொருள் ; *v.* வியப்படை, அதிசயப்படு, ஆச்சரியமுறு ; வியப்பார்வங்கொள் ; புத்தார்வங் கொள் ; அவா ஆர்வம் காட்டு ; (தொ.) a nine-days' wonder, சில நாள் கவர்ச்சி ; work wonders, அற்புதங்கள் நிகழ்த்து ; வியத்தகு வகையில் வெற்றிபெறு.

wo'nderful, *a.* வியத்தகு ; விந்தையான ; அதிசயமான ; அருநிகழ்வான.

wo'nderland, *n.* வியத்தகு நாடு ; விந்தை உலகம்.

wo'nderment, *n.* வியப்புணர்வு.

wo'nder-stricken, wo'nder-struck, *a.* வியப்பால் செயலற்ற,

wo'nder-work, *n.* வியப்புச் செய்தி ; அருநிகழ்ச்சி; விந்தை.

wo'nder-worker, *n.* மாயவித்தை காட்டுபவர் ; விந்தை புரிபவர்.

wo'ndrous, *a.* வியப்பிற்குரிய, விந்தையான.

wont[1], *n.* பழக்கம், நீடித்த நடை வழக்கம் ; *v.* (செய்., அரு.) பழக்கப்பட்டிரு ; *adv.* பழக்கப்பட்டு, வழக்கமாகப் படியப் பெற்று.

won't[2], *v.* will என்பதன் எதிர்மறை.

wont'ed, *a.* வழக்கமான.

woo, *v.* குறைநயப்பி, நயந்து வேண்டு.

woo'but, *n.* பெரிய கம்பளிப் பூச்சி வகை.

wood, *n.* காடு, அடர்கான் ; காட்டிடம், காட்டுப் பகுதி ; மரக்கட்டை ; காழ்மம், திண்மரக் கட்டைப் பகுதி ; வெட்டு மரத்தடி ; முருடு, விறகு ; மரமிடா ; மரச்சிலையுரு ; முடப் பந்து ; (இசை.) மர இசைக்கருவித் தொகுதி ; (அச்.) பாளக் கட்டை ; (இழி.) திருக்கோயிலகச் சொற்பொழிவு மேடை ; (தொ.) cannot see wood for tree, அட்டவணைப் பெருக்கிலால் சரியாக மதிப்பிட முடியவில்லை ; don't cry till you are out of the wood, இடர் தீரும்வரை மகிழாதே.

wood'-agate, *n.* மரக்கல், கல்லாக மாறிய மரம்.

wood'bind, wood'bine, *n.* மஞ்சள் நிற மலர்க் கொடி வகை.

wood'-block, *n.* செதுக்குச் சித்திரப் பொறிப்புக்கட்டை ; (அச்சு.) சித்திரப் பதிப்பு மரப்பாளம்.

wood'-borer, *n.* மரந்துளைக்கும் வண்டினம்.

wood'-boring, *a.* மரந்துளைக்கிற.

wood'-born, *a.* காட்டிற் பிறந்த.

wood'-carver, *n.* மரச்செதுக்கு வேலையர்.

wood'-carving, *n.* மரச்செதுக்கு வேலை.

wood'-chat, *n.* இரையை முள்ளில் குத்திச் செருகும் பறவை வகை.

wood'chuck, *n.* அணில் இன விலங்கு வகை.

wood'-coal, *n.* மஞ்சள் வரியமைவுடைய நிலக்கரி.

wood'cock, *n.* உள்ளான் இன வேட்டைப் பறவை வகை.

wood'craft, *n.* காட்டுத்துறை ; வன வாழ்க்கைத்துறை.

wood'cut, *n.* மரச் செதுக்கு ஓவியம்.

wood'cutter, *n.* விறகு வெட்டி.

wood'-cutting, *n.* மரச்செதுக்கு வேலை; விறகு வெட்டல்.

wood'ed, *a.* மரங்கள் நிறைந்த ; மரஞ் செறிந்து மூடிய.

wood'en, *a.* மரத்தால் இயன்ற ; மரம்போன்ற ; குழிப் பந்தாட்டக் கட்டை சார்ந்த ; கடினமான ; உணர்ச்சியற்ற ; உயிரோட்டமில்லாத ; தடித்த ; அறிவற்ற ; அருவருப்பான, நயமற்ற.

wood'-engraver, *n.* மரச் சித்திரஞ் செதுக்குபவர் ; மர வண்டு வகை.

wood'en-headed, *a.* மரத்தாலான தலைப்பகுதியுடைய, அறிவு மழுங்கிய.

wood'enness, *n.* மரப்பண்பு ; உணர்ச்சியற்ற தன்மை.

wood'-evil, *n.* தழையுண்ணி விலங்குகளுக்கு ஏற்படும் வயிற்றுப்போக்கு நோய்.

wood'-fibre, *n.* மர நாரிழை.

wood'-flour, *n.* இரம்பத்தூள் ; வெடிப்பஞ்சு தயாரிப்பிற் பயன்படும் மரத்தூள்.

wood'-fretter, *n.* மரந்துளைக்கும் வண்டு வகை.

wood'-gas, *n.* மரத்தினின்று கிடைக்கும் கரிய நீரக வளி.

wood'-germander, *n.* மஞ்சள் நிற மலர்ச்செடி வகை.

wood'-grouse, *n.* மிகப் பெரிய கோழி வகை.

wood'-hole, *n.* மரக்கூப்பு, மரக்கட்டைகள் சேகரித்து வைக்கப்படும் இடம்.

wood'-honey, *n.* காட்டுத் தேன்.

wood'-horse, *n.* அறுப்பணைப்புச் சட்டம்.

wood'-house, *n.* விறகுக்கிடங்கு.

wood'land, *n.* கானகம்.

wood'lander, *n.* கானுறைஞர்.

wood'lark, *n.* வானம்பாடி வகை.

wood'less, *a.* மரங்களற்ற ; காடற்ற.

wood'-louse, *n.* மரவண்டு ; *pl.* wood'lice.

wood'man, *n.* காடு வாழ்நர் ; காடு மேற்பார்வையாளர் ; விறகுவெட்டி, மரம்வெட்டி.

wood'-mite, *n.* மரப்பூச்சி வகை.

wood'-naphtha, *n.* மரத்தைலம், மரத்திலிருந்து வடித்திறக்கப்படும் நீரகக்கரிமச் சேர்மானப்பொருள்.

wood'-notes, *n. pl.* இயற்கைக் கவிதை, தானுக ஊற்றெடுக்கும் பாடற் பண்பு.

wood'-nymph, *n.* வனதேவதை.

wood'-offering, *n.* சமித்து.

wood'-opal, *n.* புதைபடிவ மர விளைவான மணிக்கல் வகை.

wood'-owl, *n.* தவிட்டுநிற ஆந்தை வகை.

wood'-paper, *n.* மரக்கூழ்த் தாள்வகை.

wood'pecker, *n.* மரங்கொத்தி.

wood'-pigeon, n. காட்டுப்புறு வகை.
wood'-pile, n. மர அடுக்கு, விறகு அடுக்கு.
wood'-pulp, n. தாள் செய்யப் பயன்படும் மரக்கூழ்.
wood'-reeve, n. காடு மேற்பார்வையாளர்.
wood'ruff, n. காட்டுச் செடி வகை.
wood'-sage, n. வயிற்றுநோய் மருந்தான காட்டு மூலிகைப் பூண்டு.
wood'-sandpiper, n. சிறு பறவை வகை.
wood'shed, n. விறகுக் கிடங்கு.
wood'-shock, n. கீரியின விலங்கு வகை.
wood'-skin, n. சிறு படகு ; மரவுரி.
woods'man, n. விறகுவெட்டி ; வேட்டுவர் ; கானக அறுவலர்.
wood'-sorrel, n. புளிப்புச் சாறுதரும் செடி வகை.
wood'-spirit, n. முரட்டுமரத் தேறல்.
wood'-spite, n. மரங்கொத்தியினப் பச்சைப் பறவை.
wood'-stamp, n. துணி அச்சுப்பொறிப்புக் கருவி.
wood'-stone, n. மரக்கல், கல்லாக மாறிய மரப்பகுதி.
wood'-sugar, n. மரவெல்லம்.
wood'-tar, n. மரக்கீல்.
wood'thrush, n. பாடும் பறவை வகை.
wood'-tick, n. மர உண்ணி.
wood'-vinegar, n. மலிவுப் புளிங்காடி.
wood'wale, n. மரங்கொத்தியினப் பச்சைப் பறவை.
wood'-warbler, n. பாடும் பறவை.
wood'ward, n. காடு காக்குநர்.
wood'-wax, wood'-waxen, n. புதர்ச் செடிவகை.
wood'-wind, n. குழல்வகை ; வளியிசைக் கருவி.
wood'-wool, n. தேவதாரு மரத்தின் மென்சீவல்.
wood'-wren, n. மஞ்சள் நிறப் பறவை வகை.
wood'y, a. காடு அடர்ந்த, மரஞ் செறிந்த.
woo'er, n. குறைநயப்போர்.
woof, n. ஊடிழை.
woof'er, n. மூவொலிப் பெருக்கி.
woo'ing, n. குறைநயப்பு.
wool, n. கம்பளியிழை ; கம்பளி ; செம்மறி ஆட்டு மயிர் ; கம்பளி மயிர் ; மென்மையான குறு மயிர்த்துய் ; நீகிரோவரின் தலைமயிர் ; தலைமுடி ; கம்பளிபோன்ற பொருள் ; கம்பளி ஆடை ; (தொ ) against the wool, கம்பளி யிழைவு நெசவு அமைப்புக்கு எதிராக ; தவறான வழியில் ; cotton wool, பதஞ் செய்யப்படாத பஞ்சு ; dyed in the wool, நூற்பதற்கும் நெய்வதற்கும் முன்பே சாயந்தோய்த்த ; great cry and little wool, பயனற்ற வீண் ஆர்ப்பாட்டம், பெருந் தோல்வி ; pull the wool over one's eyes, draw the wool over one's eyes, ஏமாற்று, வஞ்சி.
wool'-ball, n. செம்மறியாட்டு வயிற்றிற் காணப்படும் இறுகிப்போன கம்பளி உரோம உருண்டை.
wool'-bearing, a. கம்பளி தருகிற, கம்பளி விளைக்கிற.
wool'-card, n. கம்பளி இழைவெட்டிப் பொறி.
wool'-carding, n. கம்பளி இழைவெட்டுப்பணி.
wool'-clip, n. கம்பளி வெட்டு.
wool'-combing, n. கம்பளி கோதுதல்.
wool'-driver, n. கம்பளி மொத்த வாணிகச் சேமிப்பாளர்.
wool'-fat, n. கம்பளித் தைலம்.
wool'-gathering, n. கவனமின்மை, பகற்கனவு.
wooll'en, n. கம்பளித்துகில் ; கம்பளி ஆடை ; கம்பளித் துணிமணி ; a. கம்பளியாலான ; கம்பளி மேலிட்ட ; (அரு.) நாட்டுப்புறப் பாங்கான.
wooll'en-draper, n. சில்லறைக் கம்பளி வாணிகர்.
wooll'en-mill, n. கம்பளி நெசவாலை.
wooll'y, n. கம்பளி ஆடை ; பின்னல் கம்பளி உடை ; pl. wooll'ies ; a. கம்பளியாலான ; கம்பளி போன்ற.
wooll'y-bear, n. கம்பளிப் பூச்சி வகை.
wooll'y-hand crab, n. சீன நண்டுவகை.
wool'man, n. கம்பளி வாணிகர்.
wool'-pack, n. கம்பளி அளவுச் சிப்பம்.
wool'-picker, n. கம்பளித் துப்புரவுக் கருவி.
wool'sack, n. கம்பளித்திண்டு ; பிரிட்டனின் மேன்மக்கள் அவைத்தலைவர் ; (தொ.) take seat on the woolsack, மேன்மக்கள் அவை நடவடிக்கை தொடங்கு.
wool'sey, n. பருத்தி கம்பளிக் கலவைத் துணி.
wool'-shears, n. pl. கம்பளிக் கத்தரிக்கோல்.
wool'-staple, n. கம்பளித் துய் ; கம்பளி விற்பனைக்களம்.
wool'-stapler, n. கம்பளி வாணிகர், கம்பளித்துய்த் தரம் பிரித்து விற்பவர்.
Wool'wich, n. படைத்துறை-கடற்படைத்துறை ஆயுதக் களம் ; முற்காலப் படைத்துறைப் பொறியர்-பீரங்கியாளர் பயிற்சிக்கூடம்.
wool'-winder, n. கம்பளிக் கட்டுக் கட்டுபவர்.
wool'-work, n. கம்பளிப் பூப்பின்னல் வேலை.
woora'li, a. நச்சுப் பிசின் வகை.
word[1], n. சொல் ; கிளவி, சொல்லின் ஒலிவடிவம் ; பதம், பேச்சு, வாய் மொழி ; செய்தி ; தூதுரை ; கூற்று ; ஆணை ; விருப்பக் குறிப்பு ; அடையாளச் சொல் ; கடைப்பிடி மேற்கோள் ; பொன்மொழி ; வாசகம் ; அறிவிப்பு ; வாக்குறுதி ; மொழியுறுதிப்பாடு ; v. சொற்படிவமாக்கு ; சொற்கள் தேர்ந்தெடுத்து அமை ; சொல் வடிவில் கூறு, வாய்மொழியாகக் கூறு ; (தொ.) a man of his words, நாணயமுடையவர் ; at a word, குறிப்பறிந்து ; break one's word, வாக்குறுதி தவறு, நாணயம் பிசகு ; by word of mouth, வாய்மொழியாக ; eat one's word, கட்டாயத்தின்பேரில் மன்னிப்புக் கோரு, சொன்னதை மாற்றி மன்னிப்பு வேண்டு ; have a word with, அளவளாவு ; have words with, சண்டைபோடு ; in a word, in one word, சுருக்கமாக ; in so many words, விளக்கமாக ; keep one's word, வாக்குறுதி நிறைவேற்று, சொன்ன சொல்லைக் காப்பாற்று ; send word, கூப்பிட்டனுப்பு ; the last word, முடிந்த முடிபு, சித்தாந்தம் ; upon one's word, கண்ணியப்படி உறுதியாக ; word for word, எழுத்துக்கெழுத்து, சொல்லுக்குச் சொல், word of honour, கண்ணிய மீதளிக்கப்படும் உறுதியுரை.
Word[2], n. சொற்கடவுள், வாகீசர் ; இயேசுநாதர் ; கிறித்தவ இறை மூவொருமையில் இரண்டாங் கூறு ; வாய்மொழி, இறைமொழி, வேதம்.
word'-blind, a. சொற்பொருள் காணு மூளைக்கோளாறுடைய.
word'-book, n. சொல் அட்டவணை ; சொற்களஞ்சியம்.
word'-deaf, a. சொற்பொருள் கேளா மூளைக் கோளாறுடைய.
word'ed, a. சொல்வடிவிற் கூறப்பட்ட.
word'ily, adv. வெறுஞ் சொல்லாட்சியாக ; வாயாடித் தனமாக.
word'iness, n. மிகுசொல்லாட்சி ; வாயாடித்தனம்.
word'ing, n. சொல்லாட்சி ; சொற்றொடர் ஆட்சி ; (பழ.) பேச்சு, உரை.
word'ish, a. (அரு.) வெறுஞ்சொல் நிரம்பிய.
word'ishness, n. வெறுஞ் சொல்லாட்சி.
word'less, n. சொல்லற்ற ; பேசாத.
word'-lore, n. சொல் வரலாற்று விளக்கம்.
word'memory, n. சொல் நினைவாற்றல்.

**word'painter**, *n.* சொல்லோவியர்.

**word'-painting**, *n.* சொல்லோவியம்.

**word'-picture**, *n.* சொல்லோவியம்.

**word'-play**, *n.* சொற்சிலம்பம்.

**words**, *n. pl.* பேச்சு; கூற்று; பேச்சுமுறை; வாய்ச் சண்டை.

**word'-square**, *n.* சொல் அடைப்புச் சதுரம்.

**wor'dy**, *a.* சொற்களாலான; வெற்றெனத் தொடுத்த; வாயாடியான.

**wore**, *v.* wear என்பதன் இறந்த காலம்.

**work**, *n.* வேலை; பணி; அலுவல்; மேற்கொண்ட செயல் முறை; மேற்கொள்ள வேண்டிய செயல்முறை; வேலை நடை முறை; பணித்திட்டம்; உழைப்பு; தொண்டு; செயல்; இலக்கியப் படைப்பு; புத்தகம்; ஏடு; நூல்; இயற்படைப்பு; கட்டுமானம்; ஆக்கப்பணி; தொழில்; வாழ்க்கைத் தொழில்; ஊதியத் தொழில்; வாழ்க்கைப் பணி; வாழ்க்கைக் கடப் பாடு; சாதனை, வெற்றி; சித்திர வேலைப்பாடு; சித்திர வேலைப்பாடமைந்த பொருள்; பணிமுறைக் கருவித்தொகுதி; *v.* உழை; பாடுபடு; வேலை செய்; பணியாற்று; அலுவ லாற்று; உடலீடுபடுத்திச் செயலாற்று; மூளையீடுபடுத்திச் செயலாற்று; கடமையாற்று; குறிக்கொண்டு செயலாற்று; முனைந்து முயல்; வேலை வாங்கு; தொழில் புரிவி; உழைக்கச் செய்; வினையாற்றுவி; இயங்கிக்கொண்டிருக்கச் செய்; இயந்திரம் இயக்கு; இயங்கு, ஒழுங்காகச் செயற்படு; ஒழுங்காக நடைபெறு; இயந்திர வகையில் ஒழுங்குபட இயல்வுறு; நோக்கி இயல்வுறு, குறிக்கொண்டமைவுறு; உள்ளியக்கமுறு, உள்ளூரச் செயலாற்று; முகத்தோற்ற வகையில் அசைவியக்கம் காட்டு, அசைவியக்கமுறு; செல் வாக்குப் பயன்படுத்து; திறங்கொண்டு மாற்றியமை; பய னுக்கம் செய்; நிகழ்த்து, உண்டுபண்ணு; நிறைவேற்று, செய்துமுடி, விளைபயனுறு; நன்கு செயலாற்று; இயல் பாகச் செயலாற்றி நாளடைவில் பயிற்றுவி; வெற்றியுறு; பாடுபட்டு உருவாக்கு; சிறுகச் சிறுக இயக்கிச் செய லாற்றுவி; நீடுழைத்தமைவி; மெல்ல மெல்ல நீடித்தியங்கிய நிலையில் அமைவுறு; பாடுபட்ட நிலையில் அமைவுறு; வழி உண்டுபண்ணு; பின்னல் முதலிய வேலைப்பாடு செய்; தீர்வு காண், கணக்கு வகையில் செய்தமை; (தொ.) a work of art, சிறந்த கலைப்படைப்பு; make short work of, தீர்த்துக்கட்டு; குறுக்கு வழியில் வெற்றிகொள்; set to work, செய்யத் தொடங்கு; work in, விளக்கம்-பொருள் முதலியவற்றிற்கு இடங் கண்டுபிடி; work off, படிப்படியாக விலக்கு, வாடிக் கைக்காரர்கள் கண்டுபிடி; work on, தொடர்ந்து வேலைசெய்; work out, உழைத்து நிறைவேற்று; கணக்கு வகையில் திட்டமான விடை கொடு; work the oracle, கணியனைக் கையிற்போட்டுக் கொண்டு விரும்பிய குறிச்சொல் பெறு; சூழ்ச்சிசெய்து விரும்பிய விளைவை எய்து; work up, திறமையான நிலைக்குப் படிப்படியாகக் கொண்டு வா; படிப் படியாகக் கிளர்ச்சியூட்டு, தூண்டு; முடுக்கிவிடு; work with, முறையிட்டு உன்வழித் திருப்ப முயலு.

**wor'kable**, *a.* நடைமுறைப்படுத்தத்தக்க; இயங்கக்கூடிய, செய்யத்தக்க.

**work'aday**, *a.* வேலைநாளுக்குரிய; வேலை நாளுக்கேற்ற, உழைக்கிற, பாடுபடுகிற; கிளர்ச்சியற்ற; பொது நிலைப்பட்ட.

**wor'ker**, *n.* வினைஞன், தொழிலாளி; தொண்டர்; உழைப் பாளித் தேனீ; பூச்சியினங்களில் உழைப்பின உயிர்.

**work'-house**, *n.* தொழிலகம்; ஏழை விடுதி.

**wor'king**, *n.* வேலை; உழைப்பு; பணி; நடைமுறை; செயற்பாணி; சுரங்கப் பணிமுறை இயக்கம்; *a.* வேலை செய்கிற; உடலுழைப்புக்குரிய; உடலுழைப்புச் செய்கிற; தொழிலாளருக்குரிய; நடைமுறைக்குரிய; செயல்முறை சார்ந்த; தொண்டு சார்ந்த; (தொ.) working capital, நடப்பு முதல், நடை முறையில் ஈடுபடுத்தப்பட்ட மூலதனம்; working day, உழைப்பு நாளளவு; வார நாள்; working expenses, தொழில் நடைமுறைச் செலவு; working partner, பணிசெய்யும் பங்காளி; working party, தொழிற்சாலைத் திறமைக் காப்பு அமைவுக்குழு; ஆய்வறிக்கைக் குழு.

**work'ing-edge**, *n.* மரவேலைப்பாட்டு முகப்புத்தள விளிம்பு.

**work'ing-face**, *n.* மரவேலைப்பாட்டு முகப்புத்தளம்.

**work'ing-model**, *n.* இயங்குநிலை இயந்திர மாதிரி.

**wor'king-out**, *n.* விடை கண்டுபிடிப்பு; நுணுக்க விளக்க விவரம்.

**work'less**, *a.* வேலையற்ற, தொழிலற்ற.

**work'man**, *n.* வினைஞன்; கூலியாள், தொழிலாளி; *pl.* workmen,

**work'manlike**, *a.* வினைப்பண்பமைந்த.

**work'manship**, *n.* வேலைத்திறன்.

**work'-master**, *n.* தொழில் முதல்வர்; மேலாள்.

**work'-mistress**, *n.* தொழில் முதல்வி.

**work'-out**, *n.* திறம்பட்ட வேலை; குத்துச்சண்டை-விளை யாட்டு ஆகியவற்றின் வகையில் திறம்பட்ட பயிற்சி.

**work'-people**, *n.* கூலியாட்கள்.

**work'piece**, *n.* வேலைமானத் துணுக்கு.

**work'-room**, *n,* பட்டறை; தொழிற்கூடம்; அலுவலறை.

**works**, *n.* தொழிற்சாலை; கோட்டை கொத்தளங்கள்; அரண் வரிசை; கட்டுமான வேலை; பணி முறைகள், வேலைப்பாடு கள்; ஆக்கப்பணித்துறை; அரசியற் பணித்துறை யரங்கம்; இயந்திர நுண்ணியக்கக் கருவிப் பகுதி; கப்பற்பகுதி; (தொ.) clerk of the works, கட்டிட வேலை மேலாளர்; public works, பொதியியற் பணிகள்; upper works, செல்நிலை ஆயத்த மான கப்பலின் நீர்த்தளத்திற்கு மேற்பட்ட பகுதி; works of mercy, அறச் செயல்கள்.

**work'-shop**, *n.* பட்டறை, தொழில் ஆலை.

**work'-shy**, *n.* வேலைக்கழிப்பிணி, வேலைத்திருடன்; சோம் பேறி; *a.* சோம்பேறியான, வேலைசெய்ய விருப்பமற்ற.

**work'-table**, *n.* பணி இழுப்பறைப் பெட்டி.

**work'-woman**, *n.* பணி மகள்; பெண் தொழிலாளி.

**world**, *n.* உலகம்; நிலவுலகம்; உலக கோளம்; வானகோளம்; கோள உலகு; உலகு, சமயக்கருத்து மரபில் உலகம் போன்ற அமைவு; உலகங்களுள் ஒன்று; மனித உலகம்; வாழுலகு; உலக வாழ்வு; மனித வாழ்வு; வாழ்க்கைச் சூழ்வமைவு; வாழ்வுநலச்சூழல்; உலகியல் வாழ்வு; உலகியல் வாழ்வுநலம்; தன்னல வாழ்வுச் சூழல்; வாழ்க்கைப் பற்றினச்சூழல்; படைப்பு முழுமை; இயன் முழுமை, இயற்பரப்பு; புறவாய்மை உலகு, புறத்தோற்ற முழுதமைவு; கருத்துலகு; கருத்துப் பரப்புலகு; கருத்தின முழுமை; தொடர்பின முழுமை; துறை முழுமை; பண்புலகு; மொழி-மரபு-இனம்-பண்பு முதலிய வற்றின் வகையில் முழுமைப் பரப்பமைவு; இன முழுப்பரப்பு; நிலவுலகப் பரப்பு; உலகமக்கள் தொகுதி; மனித இனம்; அனைத்துநாட்டு முழுமை; நாகரிக உலகம்; பண்பாட்டினப் பரப்பு; சமுதாயம்; சராசரி வாழ்க்கைநிலை; அனுபவநிலை உலகம்; மனித வாழ்க்கைப் பரப்பு; மனித வாழ்க்கைக் கூறு களின் தொகுதி; மனித வாழ்வின் நடைமுறை; மனித வாழ்வின் பழக்கவழக்கத் தொகுதி; மனித வாழ்க்கை அனு பவம்; வாழ்க்கை நிகழ்ச்சிகளின் தொகுதி; பேரளவு; எல்லை யற்ற அளவு; முழுதளவு; (தொ.) carry the world before one, இடர்கடந்து வெற்றியுறு; citizen of the world, உலகக் குடிமகனர்; man of the world, உலக அனுபவம் உடையவர்; prince of this world, சைத்தான், பேயிறை, நரகிறை; to the world's end, கடுந்தொலைவு மூலை.

**wor'ldliness**, *n.* உலகப்பற்று, மண்ணாசை.

**wor'ldling**, *n.* உலகியல் வாழ்க்கைத் தோய்வாளர்.

**wor'ldly**, *n.* இவ்வுலக வாழ்விற்குரிய; இம்மைத் தொடர் புடைய; (தொ.) worldly wisdom, தன்னலப் பெருக்க முன் மதி.

**wor'ldly-wise**, *a.* தன்னலப்பெருக்க அறிவுடைய.

**world'-old**, *a.* மிகப்பழைய.

**world'-power**, *n.* உலக வல்லரசு.

**world'-weary**, *a.* உலகவாழ்விற் சலிப்புற்ற.

**world'-wide**, *a.* உலகளாவிய.

**worm**, *v.* புழு; புழுப்போன்ற உயிர்; காலற்று நெளிந்து நகரும் நீள் உடலுயிர்; அற்ப உயிர்; அற்பர், அற்பமானவர்; இழிபிறவி; வெறுக்கத் தகுந்தவர்; திருகுருவப் பொருள்; சுரை இழை, ஆணித்திருகின் புரியிழை; வாலைத் திருகு குழாய்; நாயின் நாவடி இணைப்புத் தசைநார்; நெளியும் பொருள்; அரிக்கும்பொருள்; தொல்லை தருவது; மதிப் பற்றது; பழிகேடு செய்வது; கழிவிரக்கம்; *v.* நெளி; வளைந்து நெளிந்து செல்; நகர்ந்து ஊர்ந்து செல்; நயம்பட வழிகண்டு புகுவி, மெல்ல நுழைவி; நெளிந்து ஊர்ந்து வழி கண்டு முன்னேறுவி; சூழ்ந்து வளைந்து பசப்பி ஆதரவு பெறு; மறைவாகச் செயலாற்று; தந்திரமாக நயந்து இரகசியங்களை வெளியிடுவி; புழு அரிக்கச்செய்; புழு அரிப்பு நீக்கு; புழு அரிப்புக் கோளாறு குணப்படுத்து; தோட்டப் பாத்திகளிலுள்ள புழுக்களை அகற்று; நாயின் நாவடியிலுள்ள தசைநாரை வெட்டு.

**worm'-cast**, *n.* நாங்கூழ்மண், மண்புழு வெளியேற்றும் சுருள்மண் தொகுதி.

**worm'eaten**, *a.* புழு அரித்த; மிகு பழமைப்பட்ட.

**worm'-fishing**, *n.* புழு இரைகொண்ட தூண்டில் மீன் பிடிப்பு.

**worm'-gear**, *n.* சக்கரப் பல்சுரை இணைப்புச் சுழல்விசை.

**worm'-hole**, *n.* புழுப்பொட்டு.

**worm'-holed**, *a.* பொட்டு விழுந்த.

**worm'-seed**, *n.* குடற்புழு நீக்குங் கொட்டை.

**worm's-eye view**, *n.* கீழிருந்து பார்க்கும் நோக்கு.

**worm'-wheel**, *n.* சுரை சுழற்றுவிசைப் பற்சக்கரம்.

**wor'mwood**, *n.* காஞ்சிரை வகைப்பூண்டு; மிகு கசப்பு.

**worn[1]**, *a.* அணியப்பட்ட; உடுத்துக் கிழிந்த; கந்தலான; நைவுற்ற; பழமைப்பட்டுப்போன; பஞ்சடைந்த; சோர்வுற்ற; நீடித்து வழங்கி அழுக்கடைந்த; நாட்பட்ட; முதுமைப் பட்ட; நில வகையில் உரமிழந்த; பழகி உவர்த்துப்போன, பழகிச் சலித்துப்போன.

**worn[2]**, *v.* wear என்பதன் முடிவெச்ச வடிவம்.

**worn'-out**, *a.* உடுத்துக் கிழிந்த; கந்தல் கீறலாய்ப்போன; நீடித்து வழங்கிப் பயனற்றுப்போன.

**wo'rried**, *a.* நச்சரிப்புக்கு ஆட்பட்ட.

**wo'rries**, *n.pl.* நச்சரிப்புக் கவலை; நச்சரிப்புச் செய்திகள்.

**wo'rry**, *n.* கவலை, நச்சரிப்புத் தொல்லை; கவலையடைந்த நிலை; அளவு கடந்த அக்கறை; மட்டில் பற்றார்வம்; அலைக் கழிப்பு, வேட்டை நாய் கடித்து அலைக்கழித்தல்; *v.* தொல்லை கொடு, அலைக்கழி; விட்டுவிட்டு அல்லது தொடர்ந்து துன் புறுத்து; அமைதியற்றிரு; மனக்கலக்கங்கொள்ளு; கவலைப் படு, சஞ்சலப்படு.

**worse[1]**, *n.* இன்னும் மோசமானவை; இன்னும் மோசமா னது; மிக மோசமான நிலை; தோல்வி; *a.* மேலும் மோச மான, மேலும் இழிந்த, மேலும் மோசமான நிலையிலுள்ள; *adv.* இன்னும் மோசமாக; for better or for worse, நன்று றாலும் தீதானாலும்.

**worse[2]** *a.* bad என்பதன் உறழ்படி.

**wor'sen**, *v.* இன்னும் மோசமாகு; மேலும் மோசமாக்கு.

**wor'ship**, *n.* வழிபாடு, வணக்கம்; பூசனை; போற்றரவு; மதிப்பார்வம்; திருமுன், முறைமன்றத் தலைமைச் சுட்டுக் குறிப்புப்பட்டம்; *v.* வழிபடு, தொழு; வணங்கு; மதித்தாதரி; பூசித்துப் போற்று.

**wor'shipful**, *a.* போற்றுதற்குரிய, பூசனைக்குரிய.

**wor'shipper**, *n.* வழிபடுபவர், போற்றுபவர்.

**worst[1]**, *n.* உறு மோசமான நிலை; கேடுகெட்ட நிலை; கழிமிகு கீழ்நிலை; மிக மோசமான பகுதி; கெட்ட கூறுகள்; *v.* நையப்புடை; நன்றாகத் தோற்கடி; அடக்கிக் கீழ்ப்படுத்து; அடக்கி மேம்படு; (தொ.) at the worst, மிகக்குறைந்த அள வில்; do one's worst, முடிந்த அளவும் செய்துபார்; get the worst of it, போட்டியில் தோல்விபெறு.

**worst[2]**, *a.* bad என்பதன் ஏற்றுயர்படி.

**wor'sted**, *n.* மணிக் கம்பளியிழை, முறுக்கிய கம்பளி நூல்; *a.* மணிக் கம்பளியிழையாலான.

**wort**, *n.* சாராயத்துக்கான மாவூறல், (பழ.) செடி, பூண்டு.

**worth**, *n.* மதிப்பு; தகைமை; விலை மதிப்புக்குரிய பொருள்; *a.* விலைமதிப்புடைய; தகுதி வகையில் ஈடாகக் கருதக்கூடிய; ஆள் வகையில் தாழாத, குறையாத; பெருமதிப்புடைய.

**wor'thiness**, *n.* தகுநிலை; மேன்மை.

**worth'less**, *a.* பயனற்ற, மதிப்பில்லாத.

**worth'-while**, *n.* தக்கது, தகுதியுடையது; பயனுடையது.

**worthwhile'**, *a.* பயனுடைய, வீணல்லாத.

**wor'thy**, *n.* பெருந்தகையர்; சிறப்புடையவர்; *a.* போற்றத் தக்க, மதிப்பார்ந்த, ஒழுக்க உயர்வுடைய, நற்குண நற்செய லுடைய.

**wot**, *v.* (செய்.) படர்க்கை நிகழ்கால வழக்கில் அறிகிறார்; தன்மை நிகழ்கால வழக்கில் அறிகிறேன்; (தொ.) God wot, ஆண்டவன் அறிவான்; அறிவுக்கு அப்பாற்பட்டது.

**would[1]**, *v.* விரும்பு, சற்றே விருப்பங்கொள்.

**would[2]**, *v.* will என்பதன் இறந்தகாலச் சார்பான வடிவம்; will என்பதன் ஐய வினைப்பாங்கு வடிவம்.

**would'be**, *a.* விருப்பச் சார்பு அடிப்படையான, என்று ஆர்வ மாக விரும்பிய; *adv.* விருப்பச் சார்பு அடிப்படையாக.

**wound[1]**, *n.* பிளப்பு; வெட்டுக்காயம்; புண்; மனப்புண்; புகழ் வடு; காதல் துயர்; *v.* ஊறுபடுத்து; காயமுண் டாக்கு; மனத்தைப் புண்படுத்து; (தொ.) mortal wound, சாக்காயம்.

**wound[2]**, *v.* wind[3] என்பதன் இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

**wound[3]**, *v.* wind[2] என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவங் களுள் ஒன்று.

**wound'less**, *a.* ஊறுபடாத, காயமுறாத.

**wound'wort**, *n.* புண் ஆற்றும் இயல்புடையதென்று கருதப் படுஞ் செடிவகை.

**wove**, *v.* weave என்பதன் இறந்தகால வடிவம்.

**wove-paper**, *n.* கம்பி வலைச் சல்லடை அடையாளங் கொண்டுள்ள தாள்.

**wo'ven**, *v.* weave என்பதன் முடிவெச்ச வடிவம்.

**wow**, *n.* பரிவு வியப்பு.

**wows'er**, *n.* சமயத்துறைக் கடுங்கண்டிப்பு வெறியர்.

**wrack**, *n.* உரமாகப் பயன்படும் கடற்பாசி; கப்பல் அழிவில் எஞ்சிய பொருள்கள்; அழிபாடு; அழிவு.

**wraith**, *n.* ஆவியிரட்டை, ஒருவர் சாவதற்குச் சிறிது முன்போ பின்போ காணப்படும் ஆவியுரு.

**wrang'le**, *n.* பூசல், சச்சரவு; உரத்து வாதாடல், நாகரிகமற்ற வாய்ச்சண்டை; *v.* பூசலிடு, உரத்து வாதாடு.

**wrang'ler**, *n.* கடும்பூசலர்; வாய்ச்சண்டையர்; ஏரான், கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் வகையில் சிறப்புத் தேர்வில் முதல் வகுப்பில் தேர்ச்சிபெற்றவர்.

**wrap**, *v.* பொதி, சுற்றிப் போர்த்து; உறையிடு; சுற்றி இழுத்து மூடு; பாதி மேற்சென்று கவிந்திரு; (தொ.) wrapped up in, முழுதும் ஆழ்ந்திருக்கும் நிலையில்; wrap up, சுற்றிப் போர்த்துக்கொள்; பொதிந்துவை.

**wrapp'age**, *n.* போர்த்தல்; போர்வை; பொதிபொருள்.

**wrapped**, *a.* போர்த்தப்பட்ட; பொதியப்பட்ட; முழுதும் ஈடுபட்டுத் தோய்ந்த.

wrapp'er, *n.* சுற்றிப் போர்த்துபவர்; சுற்றிப் போர்த்துவது; மூடு சீலை; மேலங்கி, மேலங்கி போன்ற ஆடை; சிப்பப் பொதி தாள்; சுவடியின் மேற்பொதி அட்டை; சுருட்டுக்குச் சுற்றும் உயர்தரப் புகையிலை வரித் தாள்.

wraps, *n.pl.* போர்வை; முரட்டுக் கம்பள விரிப்புகள்; தளர் மேலுடுப்புகள்; கழுத்து வரிக் குட்டைகள்; தணிக்கையாளர் சிறப்புப் பொதியுறை.

wrasse, *n.* பேரெலும்பு மீன் வகை.

wrath, *n.* வெகுளி, சீற்றம்: உளக்கொதிப்பு.

wrath'ful, *a.* சீற்றங் கொண்டுள்ள.

wreak, *v.* பழிவாங்கு; கட்டற்று வெளியிடு.

wreath, *n.* கண்ணி, மலர்வளையம்; ஒப்பனைத்தழை வளையம்; புகைச்சுருள்; முகில் வட்டம்.

wreathe, *v.* மலர்வளையம் இட்டுச் சூழ்; பூக்கட்டு; சுழன்று செல்; சுற்று.

wreck, *n.* முழுக்கேடு, பாடழிவு, சிதைவு; சீர்குலைவு, கப்பல் அழிபாடு; மிகுதளர்வுற்ற ஆள்; பாடழிவுப் பொருள்கள்; வேதனையாற் கெட்டவர்கள்; கடலினுல் ஒதுக்கப்பட்ட பண்டங்கள்; *v.* சேதப்படுத்து, பாழாக்கு; சிதைவுறுத்து, சீர்குலைவி; தகர்வுறு; சிதைவுறு.

wreck'age, *n.* பாடழிவு; அழிபாடு; சிதைவுப் பொருள்கள்.

wrecked, *a.* கப்பல் அழிபாட்டிற் சிக்குண்ட; பாடழிவுற்ற.

wreck'er, *n.* சேதப்படுத்துபவர், பாடழிவு செய்பவர்; கப்பல் அழிபாட்டுப் பொருள்களைத் திருடுபவர்; அழிபாட்டு மீட்பு உந்துகலம்; மீட்பிழுப்புக்கலம்.

wreck'ing, *n.* பாடழிவு செய்தல்; கப்பல் அழிபாடு; *a.* பாடழிவு செய்கிற.

wreck'-master, *n.* அழிபாட்டுப் பொருட் பொறுப்பு அலுவலர்.

wren [1], *n.* பாடும் சிறு பறவை வகை.

Wren [2], *n.* பரவை நங்கை, மகளிர் தேசிய கப்பற் பணியமைப்பின் உறுப்பினர்.

wrench, *n.* வன்பறிப்பு; சுளுக்கு; பிரிவு வேதனை; திருக்கு குறடு; *v.* பற்றித் திருகிப் பறி; வலிந்து பற்றித் திருகு; முறுக்கி இழு; பிடித்து இழு; சுற்றித் திருகிப் பிடுங்கு; சுளுக்கச்செய்; சொற்பொருளைப் புரட்டு; வலிந்து துன்பப் படுத்து.

wrest, *n.* இசைப்பெட்டித் திருகுகோல்; பிடித்திழுத்தல்; உருச்சிதைப்பு; *v.* திருக்கு, பற்றி முறுக்கு; ஒருபுறமாக முறுக்கித் திருப்பு; பிடியிலிருந்து வலிந்து பறி; இயல் மீறிய பொருள் கொள்; பொருளை மாற்றிக் கூறு; திரித்துக்கூறு.

wre'stle, *n.* மற்போர்; கடும்போராட்டம்; *v.* மற்போரிடு; எதிர்த்துப் போராடு; கடுமுயற்சி செய்; கடும்பிரார்த்தனை செய்.

wrest'ler, *n.* மல்லர்.

wrest'ling, *n.* மற்போர்.

wretch, *n.* ஈனன்; இழிஞன்; கடைகெட்டவன்; ஆருமிலார்.

wretch'ed, *a.* துயரமிகுந்த, மகிழ்ச்சியற்ற; அதிட்டங் கெட்ட; இரங்கத்தக்க; இழிந்த; மனக்குறையுண்டாக்குகிற; மன உலைவு தருகிற; குழப்பமடைந்த.

wrick, *n.* சிறு சுளுக்கு; கழுத்துவலி; முதுகு வலி; மூட்டு வலி; *v.* சுளுக்கு; முறுக்கிவிடு; வேதனைக்கு உட்படுத்து.

wrig'gle, *n.* நெளிவு வளைவு, திருகுநெளிவு; *v.* நெளித்து வளைத்துக் கொண்டு செல்; புழுப்போல வளைந்து நெளி; நம்பத்தகாதவராயிரு; பிடிகொடாது தப்பு.

wright, *n.* (பழ., அரு.) வேலையாள்; (பழ., அரு.) ஆக்குபவர்.

wring, *n.* பிழியல்; *v.* பிழிந்தெடு; வலிந்து முறுக்கு; முறுக்கிச் சிதைவுறுத்து; பொருளைத் திரித்துக் கூறு; சித்திரவதை செய்; வலிந்து பறி; (தொ.) wring from, அச்சுறுத்திப் பிடுங்கு.

wring'er, *n.* வலிந்து பறிப்பவர்; ஈரத் துணிகளிலிருந்து நீரைப் பிழிந்தெடுப்பதற்கான இயந்திரம்.

wring'ing, *n.* முறுக்குதல்; பிழிதல்; *a.* திருகுகிற; பிழிகிற.

wring'ing-wet, *a.* முறுக்கிப் பிழியவேண்டிய அளவுக்கு ஈரமாயிருக்கிற.

wrink'le [1], *n.* திரைவு, சுரிப்பு; *v.* திரைவுறு; சுரிப்புறு.

wrink'le [2], *n.* அருந்துணுக்கு; சூசனை, குறிப்பு.

wrink'ly, *a.* திரைவுகள் நிறைந்த.

wrist, *n.* மணிக்கட்டு; முன்கை அசைவியக்கம்; வாட்போரில் முன் கைச் சுழற்சித் திறம்; (இயந்.) இருசுக்கடையாணி.

wrist'band, *n.* மணிக்கட்டுப் பட்டை.

wrist'drop, *n.* (மரு.) ஈய நச்சூட்டின் விளைவான முன்கை முடக்கு வாதம்.

wrist'let, *n.* மணிக்கட்டுப் பட்டை, மணிக்கட்டு வளையம், காப்பு; கைக்கடிகாரம்.

wrist'pin, *n.* (இயந்.) இருசுக் கடையாணி.

wrist'-watch, *n.* கைக்கடிகாரம்.

writ [1], *n.* எழுத்து; விதிமுறை ஆவணம்; சட்ட ஆவணம்; அழைப்பாணைப் பத்திரம்; செயலாணைப் பத்திரம்; (தொ.) Holy writ, sacred writ, கிறித்தவர் திருமறை; serve a writ on, நீதிமன்ற அழைப்பாணையைக் கொண்டு சேர்ப்பி.

writ [2], *a.* (பழ.) எழுதப்பட்ட; வரையப்பட்ட; (தொ.) writ large, பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ள; பெரிய அளவிலான; நன்றாகத் தெரிகிற.

writ [3], *v.* write என்பதன் பழைய இறந்தகால-முடிவெச்ச வடிவம்.

write, *v.* எழுது; எழுதி வை, அடையாளமாகத் தீட்டு; கையெழுத்தாக எழுது; பதிவுசெய்; குறித்துக் காட்டு; பண்பாகக் குறி; பொறிபபிடு; எழுதி நிரப்பு; எழுத்தாளராயிரு; எழுத்து உருவாக்கு; வெளியிடுவதற்கான ஏடு இயற்று; இலக்கிய வடிவங்கொடுத்து எழுதி வை; கடிதமெழுதிச் செய்தி தெரிவி; எழுத்து மூலமாகக் கூறு; ஏட்டு மூலமாக அறிவி; எழுத்து மூலமாக விரித்துரை; எழுத்து மூலமாக விளக்கு; (தொ.) write down, பழித்தெழுது; பங்குப்பத் திரத்தின் பெயரளவான மதிப்பினைக் குறை; எழுத்துமூலமாகக் குறித்துவை; பாமரர்க்கும் புரியுமாறு எழுது; write off, கோடிட்டு அழி, கீறித் தள்ளுபடி செய்; திரும்பி வாராத கடன் முதலியவற்றைக் கணக்குச் சுவடியிலிருந்து எடுத்துவிடு; மதிப்புக் குறைவினால் வரும் இழப்பை எழுத்து மூலமாக ஒப்புக்கொள்; மீட்க முடியாத இழப்பு ஒப்புக்கொள்; write out, முழுதும் எழுது, எழுதிமுடி; எழுதி எழுதிக் கற்பனை அல்லது கருத்து வளம் அற்றுப் போகப்பெறு; write up, புகழ்ந்தெழுது, விரிவாக எழுது; கணக்கு வகையில் நாளிதுவரை பதிவுசெய்து முடி.

write'-off, *n.* நொறுங்கிய விமானம்.

writ'er, *n.* எழுதுபவர், வரைபவர்; எழுத்தர்; எழுத்தாளர், நூலாசிரியர்; மொழிப்பயிற்சிப் பாட நூல், எழுத்துமுறை கற்பிக்குங் கையேடு; (தொ.) writer's cramp, writer's palsy, எழுத்தாளரின் சுளுக்கு, இடைவிடாது எழுதுபவரைத் தாக்குங் கைப்பிடிப்புநோய்.

writ'ership, *n.* எழுத்தாண்மை; எழுத்தர் தொழில்.

writhe, *n.* வேதனை நெளிவு, பதைபதைப்பு; மன உளைவு; *v.* வேதனை தாங்காமல் முறுகி நெளிவுறு; பதைபதைப்புறு; வளைத்து நெளி; இணைவுறு.

writh'ing, *a.* சுருண்டு நெளியச் செய்கிற, தாங்க முடியாத.

writ'ing, *n.* எழுதுதல்; எழுத்து, எழுதப்படுவது; எழுதுபவர் செயல்; எழுத்துரு; கையெழுத்து; கையெழுத்துப் பாணி; எழுத்துத் திறன்; எழுத்துக் கலை; இலக்கியப் படைப்பு; ஏடாக்கம்; இலக்கிய ஏடு, நூல்; கட்டுரை; எழுதப்பட்ட ஆவணம்; *a.* எழுதுகிற; எழுத்துச் சார்ந்த;

எழுதுதற்குரிய ; மேல்வைத்து எழுதப்படுகிற ; (தொ.) put thing in writing, எழுதி வை, குறித்துக்கொள் ; the writing on the wall, வீழ்ச்சியையும் அழிவையும் முன் அறிவிக்கும் நிகழ்ச்சி.

writ'ing-case, *n.* எழுத்தாளர் கைப்பெட்டி.

writt'en[1], *a.* எழுதி வைக்கப்பட்டிருக்கிற ; எழுத்து மூலமாய்த் தெரிவிக்கப்பட்டுள்ள ; (தொ.) written law, எழுத்து உருவான சட்டம்.

writt'en[2], *v.* write என்பதன் முடிவெச்சம்.

writt'en-off, *a.* கொல்லப்பட்டுவிட்ட.

wrong, *n.* பொல்லாங்கு ; தீமை ; நேர்மைக்கேடு, அநீதி ; பழிச்செயல், அழிமதிச் செயல் ; தவறு ; தவறான நிலை ; தீமைக்குப் பொறுப்பு வகிக்கவேண்டிய நிலை; தப்பெண்ணம்; தவறான கருத்துக் கொள்ளுதல் ; *a.* தவறான; இயல்மாறான; நேர்நிலைக்கு மாறுபட்ட ; பிழைபாடான ; முறைபிறழ்வான ; முறைகேடான ; சட்டமீறிய, சட்டத்திற்கு மாறான ; ஒழுங்கு குலைவான ; கோளாறான ; மோசமான ; முரண்பாடான ; *v.* நேர்மைக்கேடாக நடத்து ; தீங்கு இழை ; புண்படுத்துஞ் செயல் செய் ; தவறான எண்ணங் கற்பி ; தவறாகக் கெட்ட எண்ணங் கற்பி ; *adv.* தவறாக, பிசகாக ; பிழைபட ; (தொ.) born on the wrong side of the blanket, குழந்தை வகையில் முறைகேடாகப் பிறந்த ; do wrong, பாவஞ்செய் ; தவறிழை ; get hold of the wrong end of the stick, நிலைமையைத் தலை கீழாகப் புரட்டிவிடு ; get out of bed on the wrong side, காலை யில் எழும்போதே கடுகடுப்பாயிரு ; go wrong, தவறுசெய் ; in the wrong, தவறான கருத்துக்கொண்டுள்ள ; put one in the wrong, குற்றவாளியெனத் தோன்றுமாறு செய்.

wrong'doer, *n.* பொல்லாங்கு இழைப்பவர்.

wrong'doing, *n.* பொல்லாங்கு ; தீவினை.

wrong'er, *n.* தீங்கு இழைப்பவர்.

wrong'ful, *a.* தவறான ; பிழைபாடான ; முறைகேடான ; சட்டமீறிய.

wrong'-headed, *a.* பிடிவாதமான.

wrong'ly, *adv.* தவறாக.

wrong'minded, *a.* தவறான கொள்கையுடைய.

wrong'ous, *a.* நேர்மைக்கேடான ; சட்டத்திற்கு மாறான.

wrote, *v.* write என்பதன் இறந்த காலம்.

wroth, *a.* (செய்., நகைச்.) சீறிக் குமுறுகிற.

wrought[1], *a.* உருவாக்கப்பட்ட ; ஒப்பனை செய்யப்பட்ட ; அடித்து வளைத்து உருவாக்கப் பெற்ற.

wrought[2], *v.* work என்பதன் அருவழக்கான இறந்தகால முடிவெச்ச வடிவம்.

wrought'-iron, *n.* மெல்லிரும்பு, தகடாக்கவும் அடித்து நீட்டவும் தகுதியுடைய இரும்பு ; நல்லிரும்பு, கரித்தூசன்றிப் பிற தனிமங்கள் மிகக் குறைவாகக் கலந்துள்ள எளிதில் துருவேறாத பத்திரும்பு.

wrought'-up, *a.* மிகு கிளர்ச்சி நிலையிலுள்ள, மிகு உணர்ச்சி வசப்பட்ட.

wrung, *v.* wring என்பதன் இறந்தகால முடிவெச்ச வடிவம்.

wry, *a.* கோணலான, உருக்கோடிய ; ஒரு புடைத் திரிபுக் கோட்டமுள்ள; (தொ.) make a wry face, முகஞ்சுளித்துக் காட்டு.

wry'bill, *n.* ஆள்காட்டிக் குருவியினப் பறவை வகை.

wry'mouth, *n.* மீன்வகை.

wry'mouthed, *a.* முகங்கோட்டிக் காட்டுகிற.

wry'neck, *n.* மரங்கொத்தி இனப் பறவை.

Wurz'burg, *n.* பெரிய ஜெர்மன் சேணளவி அமைவு.

wuw'a, *n.* செயற்கை மனிதருண்டுபோன்ற இரண்டாம் உலகப் போர் இறுதிக்கால ஜெர்மன் இரகசிய ஆயுதம்.

wuzz'le, *v.* குழப்பு.

wy'andotte, *n.* அமெரிக்க வளர்ப்புக்கோழி வகை.

wye, *n.* Y என்னும் எழுத்து ; Y வடிவுடைய பொருள்.

Wyke'hamist, *n.* விஞ்செஸ்டர் (Winchester) கல்லூரி மாணவர் ; *a.* விஞ்செஸ்டர் கல்லூரி சார்ந்த.

wyl'ie-coat, *n.* இரவு அங்கி.

wynd, *n.* சந்து.

**Xan'thate**, *n.* (வேதி.) மஞ்சள் உப்புச்சத்து வகை.

**xan'thein, xan'theine**, *n.* (வேதி.) மலர்களில் உள்ள மஞ்சள் வண்ணப்பொருள்.

**xan'thic**, *a.* மஞ்சளான, மலர் வகையில் மஞ்சள் நிறம் வாய்ந்த.

**Xanthipp'e**, *n.* அடங்காப் பிடாரியான மனைவி.

**xanthoch'roi**, *n. pl.* மனித இன நூல் வழக்கில் வெள்ளை இனத்தவர்.

**xanthomel'anous**, *a.* மனித இன நூல் வழக்கில் கரு மயிருடைய வெள்ளை இனஞ் சார்ந்த.

**xan'thophyll**, *n.* பொலமியம், செடிகளில் பாசியத்தோடு காணப்படும் மஞ்சள் வண்ணப்பொருள்.

**xan'thous**, *a.* மஞ்சள் நிறமான; மனித இன நூல் வழக்கில் மங்கோலிய இனஞ் சார்ந்த.

**xeb'ec**, *n.* முப்பாய் நாவாய்.

**xenelas'ia**, *n.* (வர.) கிரேக்கரிடையே ஸ்பார்ட்டா (Sparta) நகரரசில் கையாளப்பட்ட அயலார் நீக்க ஏற்பாடு.

**xen'ial**, *a.* விருந்தோம்பும் பண்பு சார்ந்த ; விருந்தினர்-விருந் தோம்புநர் நல்லுறவிற்குரிய.

**xenog'amy**, *n.* (தாவ.) அயற்பொலிவூட்டம், அயல் மலர்ப் பூந்துகட் சேர்க்கையால் ஏற்படும் கருப்பொலிவூட்டம்.

**xenogen'esis**, *n.* அயற்பிறவி, தாயினத் தொடர்பின்றிப் பிறப்பதாகக் கருதப்படும் பிறப்பு.

**xenogenet'ic**, *a.* அயற் பிறவியான.

**xenog'enous**, *a.* புறக்காரணத்தின் விளைவான.

**xenogloss'ia**, *n.* உள ஆய்வியல் வகையில் கற்கப்படா மொழி யறிவு காட்டும் நிலை.

**xen'olith**, *n.* (மண்.) பிறிது பாறை, தன்னின் வேறுய பாறையடுக்கில் இடம்பெறும் கல் அல்லது பாறை.

**xenom'ania**, *n.* பிறநாட்டுப் பொருள் மோகம்.

**xenome'nia**, *n.* மாதவிடாய்க் கோளாறு, மாதவிடாய் நின்று பிறிதிடக் குருதிக் கசிவு ஏற்படல்.

**xenomor'phic**, *a.* கரந்த மணியுருப்படிகமான, புறத்தே படிகத்தோற்றமின்றி அகத்தே படிகப்பாங்கு உடையதா யுள்ள.

**xen'on**, *n.* (வேதி.) மந்தமான எடைமிக்க வளித்தனிமம்.

**xen'ophobe**, *n.* அன்னியர் வாடை ஆகாதவர்.

**xenophob'ia**, *n.* அன்னியப் பொருள் வெறுப்பு.

**xenoph'ya**, *n.* (வில.) தோட்டில் இன உயிரால் கசிவித்து ஆக்கப் பெருக் கூறு.

**xenoplas'tic**, *a.* (வில.) செய்முறையியல் வழக்கில் மாற் றினக் கருவிணைவு சார்ந்த.

**xen'otime**, *n.* அருந்தனிமங்கள் அடங்கிய களிம வகை.

**xenu'rine**, *a.* தோட்டுயிர் வகை சார்ந்த.

**Xenu'rus**, *n.* தோட்டுயிர் வகை.

**xerans'is**, *n.* உலர்வு.

**xeran'themum**, *n.* வாடாக் கொத்துமலர்ச் செடியினம்.

**xeran'tic**, *a.* வறண்டுபோகிற.

**xe'rarch**, *n.* முதலில் வறண்ட நிலத்தில் தோன்றிய செடி.

**xera'sia**, *n.* மயிர் உலர்வு.

**xeroch'asy**, *n.* உலர்வு வதக்கம், உலரும் போது வதங்குந் தன்மை.

**xeroder'mia**, *n.* தோல் உலர்வு நோய்.

**xerog'raphy**, *n.* மின்துகள் நிழற்பட முறை, வேதிமாற்ற மின்றிமின்னூட்டப் பட்ட தூசிதுகள் மூலம் நிழற்படம் ஆக்கப்படும் முறை.

**xeroph'agy**, *n.* உலர் உணவு நோன்பு.

**xeroph'ilous**, *a.* (தாவ.) வறள் வெப்பச் சூழ்நிலைக்கு ஒத் திசைந்து வாழவல்ல.

**xerophthal'mia**, *n.* (மரு.) நீர்க்கசிவற்ற கண்ணழற்சி நோய்.

**xe'rophyte**, *n.* வறட்சி முதலிய நிலத்தடை கடந்து வளர வல்ல செடி.

**xeroradiog'raphy**, *n.* ஊடுகதிர் மூலமான மின்துகள் நிழற் பட முறை.

**xero'sis**, *n.* (மரு.) நீர்க்கசிவற்ற கண்ணழற்சி நோய்.

**xeros'toma, xerosto'mia**, *n.* வாயுலர்வுக் கோளாறு.

**xe'rotes**, *n.* உடல் உலர்வுப்பாங்கு.

**xerotrip'sis**, *n.* உலர்வுராய்வு.

**x'-flash**, *n.* மின் ஒளிவீச்சு நேரங்காட்டும் நிழற்பட மூடிக் குறிப்பு.

**xiphistern'um**, *n.* (உள்., வில.) மார்பெலும்பின் கீழ்க் கோடி.

**xiph'oid**, *n.* (உள்.) மார்பெலும்பின் கீழ்க்கோடி ; *a.* வாள் வடிவமான.

**xo'anon**, *n.* தொன் மரச்சிலையுரு, கிரேக்க பழமைச் சின்ன வகையில் விண்ணினின்றும் வீழ்ந்ததாகக் கருதப்பட்ட மரத் திருலான தெய்வ உருவச்சிலை ; *pl.* xo'ana.

**X'-ray** [1], *a.* ஊடுகதிர் சார்ந்த ; (தொ.) X-ray examination, ஊடுகதிர்க் கூராய்வு ; X-ray photograph, ஊடுகதிர் நிழற் படம்.

**X-ray'** [2], *v.* ஊடுகதிர் கொண்டு கூராய்வு செய் ; ஊடுகதிர் செலுத்திப் பண்டுவஞ் செய் ; ஊடுகதிர் நிழற்படமெடு.

**X'-rays**, *n. pl.* (இய.) ஊடுகதிர், திண்பிழம்புகளையும் ஊடுருவ வல்ல கண்காணு ஒளிக்கதிர்.

**xyl'em**, *n.* (தாவ.) கட்டை, மர உட்பிழம்பு.

**xylobal'samum**, *n.* மரவகைச் சுள்ளித் தொகுதி ; மரவகைச் சுள்ளி வடிசாறு.

**xyl'ocarp**, *n.* மரக்கட்டை போன்ற திரள் கனி ; மரக்கட்டை போன்ற திரள் கனிமரம்.

**xyl'ograph**, *n.* மரச்செதுக்கு வேலைப்பாட்டுப் பொருள், மரவரி வேலைப்பாட்டுப் பொருள், மரச் செதுக்குப் போலியான பாணியமைந்த வேலைப்பாட்டுப் பொருள்.

**xylog'rapher**, *n.* மரச்செதுக்கு வேலைப்பாட்டாளர் ; மரவரி வேலைப்பாட்டாளர், மரச்செதுக்குப்பாணி வேலைப்பாட் டாளர்.

**xylograph'ic**, *a.* மரச்செதுக்கு வேலைப்பாடு சார்ந்த; மரவரி வேலைப்பாட்டுப் பாணியான, மரச்செதுக்கு வேலைப்பாட்டுப் பாணி சார்ந்த.

**xylog'raphy**, *n.* மரச்செதுக்கு வேலைப்பாடு ; மரவரி வேலைப் பாடு, மரச்செதுக்குப் போலியான வேலைப்பாட்டுப்பாணி.

**xyl'onite**, *n.* மரச்சத்து, தந்தம் போன்ற செயற்கை ஆக்கப் பொருள்.

**xyloph'agous**, *a.* கட்டையைத் தின்கிற ; கட்டையைத் தின்னும் பூச்சிகள் சார்ந்த.

**xyl'ophone**, *n.* இசைமரம், மரத்தாலான அதிர்விசைக்கருவி.

**xys'ter**, *n.* (அறு.) என்பராவி, எலும்பு சுரண்டுங் கருவி.

**xys'tus**, *n.* களரி மண்டபம் ; பண்டைக் கிரேக்கர் வழக்கில் உடற்பயிற்சிக்குரிய மதிலகக் கூடம் ; தோட்ட உலாப் பாதை ; பூங்காமுற்றமேடை ; *pl.* xys'ti.

**Yacht**, *n.* உலாப்படகு ; பந்தயப் படகு ; *v.* படகுப் பந்தயம்விடு ; உல்லாசப்படகிற் பிரயாணஞ் செய்.

**yacht'-club**, *n.* படகுப்பந்தயக் கழகம்.

**yacht'ing**, *n.* படகுப்பந்தயம் ; படகுப்பந்தய ஓட்டம் ; படகோட்டம்.

**yachts'man**, *n.* இன்பப் படகுலாவாணர் ; படகுப் பந்தய வாணர்.

**yaff'il, yaf'fle**, *n.* பச்சைநிற மரங்கொத்தும் பறவை.

**yag'er**, *n.* செர்மன் படைப்பிரிவினர் ; செர்மன் துப்பாக்கிப் படையினர்.

**Yag'i aerial**, *n.* வாங்கியனுப்பும் மின் அலைவாங்கிகளின் தொகுதி.

**yah**, *int.* ஏளனக் குறிப்பிசைப்பு.

**yahoo'**, *n.* ஆங்கில ஆசிரியர் ஸ்விஃப்ட் (Jonathan Swift) எழுதிய கல்லிவர் பயணங்கள் (Gulliver's Travels) என்ற கனவார்வப் புனைகதையில் மனித உருவ விலங்கு ; மனித விலங்கு ; விலங்குநிலை மனிதர் ; விலங்குத்தன்மையான உணர்ச்சி நடை பாவனைகளை உடையவர்.

**Yahveh'**, *n.* யூதர் வழக்கில் கடவுள்.

**yak**, *n.* கடமா, திபேத்தியநாட்டு மாட்டு வகை ; சிரிப்பு ; நகைத்துணுக்கு ; வானொலியில் பேச்சின் சிரிப்பூட்டு திறம்.

**yakk'a, yakk'er**, *n.* ஆஸ்திரேலிய வழக்கில் கடு உழைப்பு.

**Yale lock**, *n.* உருள்வடிவப் பூட்டு.

**yam**, *n.* காச்சைக்கொடி, கொடி வள்ளி, வள்ளிக்கிழங்கு தருங் கொடி.

**Ya'ma**, (ச.) *n.* கூற்றுவன்.

***ya'men, ya'mun***, *n.* சீன ஆட்சியாளரின் பணிமனை இல்லம்.

**yank'**, *n.* வெடுக்கென்ற நெம்புகோல் இழுப்பு ; *v.* நெம்புகோலைச் சட்டென்று இழு.

**Yank'ee**, *n.* அமெரிக்க ஐக்கியநாட்டின் நியூ இங்கிலாந்துப் பகுதிவாணர் ; அமெரிக்க உள்நாட்டுப் போர்க்கால வடபுலப் போர் வீரர் ; அமெரிக்க உள்நாட்டுப் போர்க்கால வழக்கில் வடபுலத்தவர் ; அமெரிக்க ஐக்கியநாட்டவர் ; அமெரிக்கர் ; *a.* அமெரிக்கச் சார்பான.

**Yankee'dom**, *n.* (பே-வ.) அமெரிக்க நாடு ; அமெரிக்க மக்கள் தொகுதி ; அமெரிக்க பண்பு.

**yank'eeism**, *n.* அமெரிக்க பழக்கவழக்கங்கள்.

**ya'ourt**, *n.* புளிப்புவடி சாராய வகை.

**yap**, *n.* வள்ளொலி, நாயின் சிறுகுரைப்பு ; *v.* வள்ளென்று குரை, கீச்சொலியோடு குரை ; (பே-வ.) வீண்பேச்சுப் பேசு.

**yap'ock**, *n.* தென் அமெரிக்க வாத்தினப் பைம்மா வகை.

**yapp**, *n.* அட்டை கடந்து நீண்ட தொய்தோல் புத்தகக் கட்டட முறை.

**yarb'orough**, *n.* சீட்டாட்ட வகையில் சிற்றினச் சீட்டுடையவர்.

**yard** [1], *n.* கோலளவு, கெசம், இருமுழ நீள அளவு ; மூவடி நீளப் பொருள் ; கைவிட்டம், கப்பல் பாய்மரக் குறுக்குக் கைச்சட்டம் ; (பழ.) குய்யம் ; (தொ.) yard stick, ஒப்பீட்டுத் தரம்.

**yard** [2], *n.* முற்றம், சுற்றுவட்டகைவெளி ; *v.* ஆடுமாடுகளைக் கொட்டிலில் அடை ; (தொ.) the Yard, the Scotland Yard, இங்கிலாந்தில் துப்பறியும் இரகசியப் போலீஸ் படை.

**yard'age**, *n.* கெசக்கணக்கில் பரப்பளவு ; மொத்தக் கெச அளவு ; சதுரகெசப் பரப்பளவு ; கனகெசக் கன அளவு ; நீள அகலக் கெச அளவு ; நீள அகலக் கனக் கெச அளவு ; சுரங்க நிலக்கரி வெட்டளவுக் கூலிவீதம்.

**yard'-arm**, *n.* பாய்மர விட்டப்பாதி, பாய்மர விட்டக் கை.

**yard'-bird**, *n.* (படை., இழி.) ஊழிய வேலை தரப்படும் படைவீரர்.

**yard'-man**, *n.* இருப்பூர்தித் தங்குவெளியிட அலுவலர்.

**yard'-master**, *n.* இருப்பூர்தித் தங்குவெளி மேற்பார்வையாளர்.

**yard'-measure**, *n.* கெச அளவு.

**yard'-stick**, *n.* கெசக்கோல் ; அளவுகோல்.

**yard'-wand**, *n.* கெசக்கோல்.

**yarn**, *n.* சரடு, நூலிழை ; முறுக்கிழை, திரித்த நூல் ; கதைச் சரடு, புனைவுக்கதை, கட்டுக்கதை ; வளைந்துவளைந்து செல்லுங் கதை ; வளைத்துவளைத்துப் பேசும் பேச்சு ; *v.* சரடுவிடு, கதைகட்டிவிடு, பேச்சு நீட்டு ; (தொ.) spin a yarn, சரடுவிடு, கதையள.

**yarn'-beam, yarn'-roll**, *n.* சிட்டம், நூற்சுற்று கழி.

**ya'rrow**, *n.* காரப்பூடு, காரமணச்சுவையுடைய மூலிகைச் செடி வகை.

**yash'mak**, *n.* முஸ்லிம் மாதர் முகமூடாக்குத் திரை.

**yat'aghan**, *n.* இஸ்லாமியர் வழக்கில் கைப்பிடி காப்பற்ற உடைவாள்.

**yaw**, *n.* விலாத்தீடு, கப்பல் நெறிக்கோட்டம், கப்பல்நெறித் திறம்பீடு ; புடை தடுமாற்றம், விமானவழித் தடுமாற்றம், விமான வழி விலகீடு ; *v.* விலாத்து, கப்பல்-விமானம் முதலியவற்றின் வகையில் நேர்வழிவிட்டு விலகிச்செல் ; புடை தடுமாறு ; கப்பல்-விமானம் முதலியவற்றின் வகையில் தள்ளாடிச்செல், வளைந்து வளைந்து செல்.

**yawl** [1], *n.* சிறுபடகு, நொய்தான இன்ப உலாப் படகு ; மீன் பிடிக்கும் படகு.

**yawl** [2], *n.* (அரு.) கூக்குரல், ஊளையிடும் ஒலி ; *v.* கூக்குரலிடு, ஊளையிடு.

**yawn**, *n.* கொட்டாவி ; வாய்பிளப்பு ; அங்காப்பு, அகல்விரி திறப்பு ; ஆழ்விடர் ; *v.* கொட்டாவி விடு ; கொட்டாவி விட்டுக்கொண்டிரு ; கொட்டாவி விட்டுக்கொண்டே பேசு ; படுசோம்பல் உறு ; உறக்கச் சடைவுடனிரு ; முசிவுடன் சலித்துக்கொள் ; வாய் பிள ; அகலமாகத் திற ; வாய் விரித்துக் கொண்டிரு.

**yawn'ing**, *n.* கொட்டாவிவிடல் ; கொட்டாவி ; வாய்பிளப்பு ; கெவியின் பேழ்வாய், ஆழ்திற அகல் அங்காப்பு ; *a.* கொட்டாவிவிடுகிற ; அங்காந்த ; பேழ்வாய் உடைய ; ஆழ்ந்தகன்று திறந்திருக்கிற.

**yaws**, *n. pl.* தொற்றுத் தோல்நோய்வகை.

**ye**, *pron.* (செய்., பழ.) நீர், நீவிர்.

**yea**, *n.* ஆம் எனுஞ்சொல் ; இணக்கந் தெரிவிக்குங் குறிப்பு ; ஏற்பு வாக்களிப்பு ; *pl.* yeas ; *adv.* ஆம், அப்படித்தான், அப்படியே, உண்மையாகவே ; இன்னும் மேலாக, இன்னுஞ் சொல்லப்போனால் ; என்றுமட்டுமல்ல - இன்னுஞ் சொல்ல வேண்டும் ; (தொ.) yeas and nays, முறையே ஆதரவு எதிர்ப்பு வாக்களிப்பு மொழிகள்.

**yean**, *v.* ஆடு முதலியவற்றின் வகையில் ஈனு, குட்டியிடு.

**yean'ling**, *n.* ஆட்டுக்குட்டி, புனிற்றிளங் கன்று.

**year**, *n.* ஆண்டு, நிலவுலகு ஞாயிற்றினை ஒருமுறைசுற்றிப் பிடிக்குங்காலம் ; (தொ.) astronomical year, வானியல் ஆண்டு ; leap year, கிறித்தவ ஆண்டுக்கணிப்பில் மிகைநாள் ஆண்டு ; lunar year, சாந்திரமான ஆண்டு ; Perfect year, Platonic year, கற்பம், ஒரு நிலையடைவதற்கிடைப்பட்ட பேரூழிவட்டம், படைப்புப் பேரூழிவட்டம், பண்டை வானூலாரின்படி 26,000 ஆண்டுத்தொகுதி ; sabbatical year, யூதமரபின்படி அடிமை விடுதலைக்கும் கடன் கைதுறப்பிற்கும் உரிய ஏழாம் ஆண்டு ; sideral year, நாண்மீன் கணிப்பியல்முறை ஆண்டு ; solar year, சௌரமான ஆண்டு ; the fiscal year, கணக்கு ஆண்டு ; year in-year out, ஆண்டுமுழுதும், தொடர்ச்சியாக வருடமுழுதும் ; year of grace, இயேசுநாதரின் பிறப்பிலிருந்து கணிக்கப்படும் ஆண்டு, கி. பி. ஆண்டு ; year to year ஆண்டுதோறும், ஒவ்வொரு ஆண்டும்.

**year'-book**, *n.* ஆண்டுத்தகவல் வெளியீடு.

**year'ling,** *n.* ஓராட்டைக்குழவி; விலங்கின் ஓராட்டைக் கன்று; குதிரைப் பந்தயத்தில் ஒருவயது குதிரை; *a.* ஒரு வயது நிரம்பிய.

**year'long,** *a.* ஆண்டு முழுவதும் நீடித்திருக்கிற; ஆண்டளவு நீடித்திருக்கிற.

**year'ly,** *a.* ஆண்டுவாரியான; ஆண்டுதோறும் நடைபெறுகிற; ஆண்டிறுதியான; ஓராண்டுக் காலத்திற்குரிய; *adv.* ஆண்டுதோறும்; ஆண்டிற்கொருமுறை, ஆண்டாண்டாக.

**yearn,** *v.* ஏங்கு, எண்ணி எண்ணி ஏக்கங்கொள்; அவாவு, ஆவலுடன் விரும்பு; ஏக்கறு, விரும்பி ஏங்குதலுடனிரு, நீடித்த ஆர்வ விருப்பத்துடனிரு; ஆளிடம் ஆர்வக்கனிவு கொண்டிரு; ஆர்வத்துடன் நாட்டங் கொண்டிரு; கனிவிரக்கங் கொண்டிரு.

**yearn'ing,** *n.* நீடவா; ஆர்வநாட்டம்; ஆர்வக்கனிவு; *a.* நீடு அவாகொள்கிற.

**years,** *n. pl.* வயது; வாழ்வுக்காலம்; காலம்.

**yeast,** *n.* நொதி, காடிச்சத்து, சாராய முதலியவற்றைப் புளிக்கச் செய்யப் பயன்படும் பொருள்; நுரைமம், பொங்கு அப்பத்தை உப்பவைக்கப் பயன்படும் புளிப்புச் சத்து.

**yeast'iness,** *n.* நொதிப்பு, புளித்துப் புரையுந்தன்மை; காடிச் சத்துடைமை.

**yeast'y,** *a.* நுரைமமுள்ள; நுரைக்கிற; காடிச்சத்துப் போன்று செயலாற்றுகிற.

**yegg, yegg'man,** *n.* (இழி.) நாடோடித் திருடன்; இரும்புப் பெட்டி உடைத்துத் திருடுபவன்.

**yelk,** *n.* (பழ., அரு.) முட்டை மஞ்சட்கரு; கும்பளி நெய்; மஞ்சட்கருப் பொதிவாடை.

**yell,** *n.* கூக்குரல்; கூவிளி, விளையாட்டுப் பந்தய ஊக்கார வாரம்; *v.* கூக்குரலிடு, கத்து, ஊளையிடு.

**yell'ow,** *n.* மஞ்சள் நிறம்; முட்டையின் மஞ்சட்கரு; மஞ்சள் வண்ணப்பொடி; குதிரைக் காமாலைநோய்; (பே-வ.) கோழை; பட்டுப்பூச்சி வகை; *a.* மஞ்சள் நிறமுடைய; பொன்னிறமான; கந்தக நிறமான; மஞ்சள் இனஞ் சார்ந்த, மங்கோலிய இனத்தவர்க்குரிய; கறுப்பு வெள்ளையினக் கலப்புச் சார்ந்த; (பே-வ.) அழுக்காறுடைய; பொறாமைத் தன்மை வாய்ந்த; (பே-வ.) ஐயமனப்பான்மை கொண்ட; (பே-வ.) கோழைத் தனமான; (பே-வ.) உணர்ச்சி தூண்டி எழுப்புகிற, கிளர்ச்சியூட்டுகிற; (தொ.) the yellow back, மஞ்சள்தாள் அட்டையோடுகூடிய பிரஞ்சு புதினம்; கீழ்த்தர மலிவுப் புத்தகம்; yellow cartilage, மேற்பொதிவுறையான மஞ்சள் நிறச் சுருங்கி விரியும் குருத்தெலும்பு; yellow fever, yellow Jack, மஞ்சள் தொத்துக் காய்ச்சல்; மஞ்சள் காமாலையும் கருநிற வாந்தியுமுடைய மஞ்சள் காய்ச்சல் நோய்; yellow jacket, அரசர் உயர்குடிமதிப்பிற்குரிய மஞ்சள்நிறத் தேசிய ஆடை; yellow metal, செம்பித்தளை; yellow peril, மஞ்சள் இனத்தவர் ஆதிக்க அபாயம்; yellow press, மஞ்சள் பத்திரிகைத் துறை, குறுகிய நாட்டுப்பற்றுக்கொண்ட உணர்ச்சி எழுப்பும் பத்திரிகைகள்; yellow spot, கண்விழிப் புறத்திரைக் கூர்நோக்கிடப் புள்ளி; yellow streak, கீழ்த் தரப் பண்புக்கூறு, உள்ளார்ந்த கயமைக்கூறு.

**yell'ow-boy,** *n.* (இழி.) தங்க நாணயம்; வெள்ளையரல்லாப் படைவீரர்.

**yell'ow-earth,** *n.* மஞ்சட் காவிமண்.

**yell'ow-flag,** *n.* கப்பல் முதலியவற்றின் நோய்த்தடை எச்சரிப்புக் குறியான மஞ்சட்கொடி.

**yell'ow-girl,** *n.* (இழி.) தங்க நாணயம்; வெள்ளை இனஞ் சாராப் படைத்துறைப்பெண்.

**yellow'-gum,** *n.* குழந்தைக் காமாலை நோய்.

**yellow'-hammer,** *n.* மஞ்சள்தலைப் பறவை வகை.

**yell'owish,** *a.* சற்றே மஞ்சளான.

**yell'owness,** *n.* மஞ்சள் நிறமுடைமை; மஞ்சள்தன்மை; மஞ்சள் நிறமாயிருக்கும் நிலை; பழுப்பு; (பழ.) பொறாமை.

**yell'ows,** *n. pl.* மஞ்சள் காமாலை; தாவரப் பழுப்புநோய்; (பழ.) பொறாமை.

**yell'owy,** *a.* மஞ்சட் சாயலார்ந்த.

**yelp,** *n.* நாயின் வேதனை உறுமல்; நாயின் ஆர்வ அவாக் குரைப்பு; *v.* நாய்வகையில் ஆர்வ அவாக் குரைப்புக் குரல் எழுப்பு; நாய்வகையில் வேதனைக்குரல் கொடு.

**yen [1],** *n.* ஜப்பானிய மதிப்பலகு நாணயம்; *pl.* yen.

**yen [2],** *n.* (இழி.) நீடவா, ஆர்வ விருப்பம்; *v.* ஏங்குறு, நீடவாக்கொள்.

**yeo'man,** *n.* நிலக்கிழார்; குறுநிலக்கிழார்; இடைத்தர வகுப்புக் குடியானவர், விருப்பார்வத் தொண்டர்; சிறு பணியாளர்; நாவாய்ச் சேவையர்; கப்பல்துறைச் சிறு சேவையாளர்; (வர.) வேளாண் குடிமகன், ஆண்டிற்கு 40 பொன் வருமானத் தகுதியுடைய முற்கால மாவட்ட வாக்காளர்; (வர.) வேட்குடிச் சான்றோர், ஆண்டிற்கு 40 பொன் வருமானத் தகுதியுடைய முறைகாணுய உரிமையாளர்; புரவிமான், குடியானவக் குதிரைப் படைவீரன்; *pl.* yeo'men; (தொ.) yeoman of signals, (கப்.) சைகைச் சேவையர், காட்சிச் சைகைத் துறைச் சிறு அலுவலர்; yeoman of the guard, மெய்க்காவல் படையினர்; yeoman service, yeoman's service, காலத்தாற் செய்யும் உதவி, தேவையறிந்து செய்யப்படும் உதவி; ஆற்றல்மிகக தன்னுர்வ ஆதரவு; தன்விருப்பார்வப் பொதுத்தொண்டு.

**yeo'manry,** *n.* குறுநிலக்கிழார் வகுப்பு; குடியானவர்களின் குதிரைப்படை.

**yer'cum,** (த.) *n.* எருக்கஞ்செடி; எருக்க நார்.

**yes,** *n.* ஆம் எனுங் குறிப்பு; ஏற்பு; ஆம் என்பவர்; *pl.* yes'es; *adv.* ஆம், அப்படியே ஆகுக.

**yes'-man,** *n.* (பே-வ.) ஆமாஞ்சாமி போடுபவர்; தனிப்பண்பற்றவர்; கீழ்ப்படிதலுள்ளவர்.

**yes'terday,** *n.* நேற்று, நேற்றைய நாள்; *adv.* நேற்றைக்கு.

**yes'ter-night,** *n.* நேற்றிரவு; *adv.* நேற்றிரவில்.

**yes'ter-year,** *n.* சென்ற ஆண்டு; *adv.* சென்ற ஆண்டில்.

**yet,** *adv.* இன்னும்; இச்சமயத்திலும்; இதுவரையிலும்; இந்தக் கணத்திலும்; அச்சமயத்திலும்; அதுவரையிலும்; இனியும்; இப்போதுங்கூட; இச்சமயத்திலுங் கூட; இன்னுங் கூட; இதுவரை எப்போதுமே; இதுநாள்வரை என்றுமே; இதுநேரம்வரை ஒருபோதுமே; இனியும் ஒருபோதுமே; இனியுங் கூட; மேலும்; இதற்குமேலும்; இதற்கு நேர்மாறாக; இந்நிலையில் கூட; இந்த எதிரான சூழ்நிலையிலுங் கூட; இருந்த போதிலும்; என்றாலுங் கூட; ஆயினுங் கூட; *conj.* அதேசமயத்தில்; இருந்த போதிலும்; எனினும் இதற்கு நேர்மாறாக; எனினும் இதற்கும் மேற்பட; (தொ.) as yet, இதுவரை, இன்னும்.

**yet'i,** *n.* பனிமனிதர், இமயமலையில் இருப்பவராகக் கருதப் படும் மனிதர்.

**yew,** *n.* பசுமைமாறாக் கல்லறை ஊசியிலை மரவகை.

**Yg'drasil, Ygg'drasil,** *n.* மும்மை சால்மரம், ஸ்காந்திநேவிய பழங்கதைமரபு வழக்கில் மூவுலகிலும் வேர்-கிளை பாயவிட்டிணைத்த தெய்விக மரம்.

**y'-gun,** *n.* இருகுழல் துப்பாக்கி.

**Yidd'ish,** *n.* யூதர் சிதைவுமொழி, ஸ்லாவ் இன நாடுகளில் யூதர் வழங்கும் பன்மொழிக் கலப்புடைய பழஞ் செர்மானிய மொழி.

**yield,** *n.* விளைவு வளம், விளைச்சல்; ஆக்கவிளைவு; *v.* விளைவித்து அளி; ஈன்றளி; விளைவளமாக வழங்கு; பயனாக அளி; கொடு, வழங்கு; விட்டுக்கொடு; பணிந்துகொடு; வளைந்து கொடு; கீழ்ப்படி, சரணடை; இணங்கு, இசைந்துகொடு; ஒப்புக்கொடு; ஒப்படைத்துவிடு; (தொ.) yield place to, மறைந்து பிறிதொன்றற்கு இடங்கொடு; yield point, இரும்பு எஃகு வகையில் உருச் சிதைவுறும் எடைச்செவ்வி; yield precedence to, yield the palm to, மேம்பாடு கொள்ளவிடு, விஞ்சப்பெறு; yield to the point, வாதத்தின் கூறு வகையில் இணங்கு; yield up the ghost, இறந்து போ.

yl'ang-yl'ang, *n.* நறுமணச் சரக்கு; நறுமணச் சரக்குத் தரும் மலர்களையுடைய மர வகை.

y'lem, *n.* மூலப்பகுதி, எல்லா இயற்பொருள்களுக்கும் மூல மாகக் கருதப்படும் கூறு.

y'-level, *n.* நில அளவைக் கருவி வகை.

yod'el, *n.* இசையிழுப்புப் பாட்டு ஒலி; *v.* இசையிழுத்துப் பாடு.

yog'a, (ச.) *n.* யோகம்.

yogh, *n.* யகர ஒலி அல்லது திறந்த மென்ககர (g) ஒலியுடைய முற்கால ஆங்கில எழுத்துக் குறிப்பு.

yog'i, (ச.) *n.* யோகி.

yo'-heave-ho', yoho', *int.* திமிலர் படகு தூக்கும் ஒலிக் குறிப்பு.

yoick, *v.* நரிவேட்டைக் கூவிளி எழுப்பி வேட்டைநாய்களை நரிகளின் மீது தூண்டு.

yoicks, *n.* நரிவேட்டையாளர்.

yoicks, *int.* வேட்டைநாய் ஊக்கொலிக் குறிப்பு.

yoke, *n.* நுகத்தடி; எருதிணை, உழவுமாட்டின் சோடி; தூக்கு காவடிக் கட்டை; சட்டை-இரவிக்கை ஆகியவற்றின் தோள்பட்டைக் கொளுவுகட்டைத் துண்டு; இயந்திர இணைப்புக் கொண்டி; (வர.) தோற்ற எதிரிகள் கீழணி வகுத்துச் செல்லுவிக்கப்படும் படுநுக வளைவு; (வர.) படு நுகச்சின்ன மூவீட்டி வளைவு; மேலாட்சி; கட்டு, பிணைப்பு; அடிமைத்தனம்; கட்டுப்பாடு; திருமணக் கட்டுப்பாடு; *v.* நுகத்தடியைப் பூட்டு, நுகத்தடியில் பூட்டியிணை; திருமணத் தில் இணைவி; சோடி இணைவி; சோடியில் ஒருவருடன் ஒருவரை இணை; சோடியில் ஒன்றனுடன் ஒன்றை இணை; சோடியாய் இணை; சோடியாய் இணைந்து ஒன்றுபடு; ஒருவருக்கொருவர் சரியிணையாயமை; ஒன்றுக்கொன்று சரி சோடியாயமை.

yoke'-fellow, *n.* வாழ்க்கைத் துணை; கூட்டாளி; உடன் தொழிலாளி.

yok'el, *n.* பட்டிக்காட்டான், நாட்டுப்புறத்தான்; கிராம வாசி.

yoke'-lines, *n.* பயின் இயக்கு கயிறுகள்.

yoke'-ropes, *n.* பயின் இயக்கு கயிறுகள்.

yolk, *n.* மஞ்சட் கரு; கம்பளி நெய்.

yolk'-bag, yolk'-sac, *n.* முட்டை மஞ்சட்கருப் பொதிவு இழைப் பை.

yolk'y, *a.* மஞ்சட்கருப் போன்ற.

yon, *a.* ஆண்டைய, அதோ அந்த; அவ்விடத்திற் காணப் படுகிற; *adv.* (அரு. செய்.) அவ்விடத்தில்.

yon'der, *a.* ஆண்டைய, அதோ அந்த; அதோ தொலைவில் அமைந்துள்ள, அதோ தொலைவிலுள்ள; *adv.* அதோ அங்கே; அதோ கண்ணுக்கெட்டிய தொலைவில்.

yore, *n.* பண்டைக் காலம்; (தொ.) of yore, கடந்த காலத் தில், வெகுகாலத்திற்கு முன்பு.

york, *v.* பந்தடிப்பவர் முன்னே விழும்படி பந்து வீசு.

york'er, *n.* மரப்பந்தாட்டத்தில் பந்தடிப்பவர் முன் விழும்படி வீசப்பட்ட பந்து.

York'ist, *n.* 'யார்க்' குடிசார்ந்தவர்; (வர.) இங்கிலாந்தின் ரோசாமலர்ச் சண்டையில் வெள்ளை ரோசாச் சின்னம் மேற் கொண்ட யார்க் கோமகன் ரிச்சர்ட் கட்சியினர்.

York'shire pudding, *n.* மாட்டிறைச்சியோடு வேகவைத்து உண்ணப்படும் மாக்களி.

york stone, *n.* கட்டிடத்திற்குப் பயன்படும் கல் வகை.

you, *pron.* நீங்கள், நீர்; நீ; உங்களை; உம்மை; உன்னை.

young, *n.* புனிற்றிளங் கன்று; புனிற்றிளங் குஞ்சு; *a.* இளமையான; வளர்ச்சியுறாத; பிறந்த அணிமையுடைய; அண்மையில் தோன்றிய; முதிராத, முதுமையுறாத; முழு வளர்ச்சியடையாத; வாலிபமான; அனுபவ முதிர்ச்சியற்ற; வீரியங்கெடாத; (தொ.) with young, சூலுற்ற; young and old, எல்லோரும், அனைவரும்; young blood, இளைஞர்; புது உறுப்பினர்; பகட்டன்; புது ஆற்றல்; இளமை முறுக்கு; young England, இங்கிலாந்தில் எழும்பும் தலைமுறை; Young Turks, அரசியல் அமைப்பினைப் பழைய நிலைக்குக் கொண ரும்படி 1908-ஆம் ஆண்டில் துருக்கி சுல்தானைக் கட்டாயப் படுத்திய கட்சி.

young'ish, *a.* ஓரளவு இளமைவாய்ந்த; அனுபவம் போதாத.

young'ling, *n.* இளையர்; இள விலங்கு, குட்டி, குஞ்சு; *a.* இளமை வாய்ந்த.

you'ngster, *n.* இளைஞர், சிறுவர்.

young'un, *n.* (பே-வ.) இளைஞர், சிறுவர்.

your, *a.* உன்னுடைய; உங்களுடைய.

yours, *pron.* உன்னுடையது, உன்னுடையவை; உங்க ளுடையது; உங்களுடையவை.

yourself', *pron.* நீதான், நீயேதான்; உன்னையே.

youth, *n.* இளமை, இளமைப்பருவம்; இளைஞன், இளைஞர்; இளைஞர் தொகுதி; இளைஞர் வகுப்பு; இளைஞர் உலகம்; (தொ.) youth hostel, நீண்டநடைப் பயணிகள் இரவில் தங்கும் விடுதி.

youth'ful, *a.* இளமையான, இளமைப் பருவத்திலுள்ள; மனக்கிளர்ச்சியுடைய; வலுவுடைய.

yowl, *n.* கூக்குரல், நாயின் வேதனை ஊளை; *v.* கூவு, கத்து; நாய் வகையில் வேதனையால் ஊளையிடு.

ytterb'ium, *n.* (வேதி.) அணு எண் 70 உடைய அரிய உலோகத் தனிமம்.

ytt'rium, *n.* அணு எண் 39 உடைய அரிய உலோகத் தனிமம்.

yucc'a, *n.* வெண்ணிற மலர்ச்செடி வகை.

yug'awaralite, *n.* ஜப்பானில் கண்டெடுக்கப்படும் நிறமற்ற கனிம வகை.

Yu'goslav, Yugoslav'ian, *n.* யுகோஸ்லாவியர்; *a.* யுகோஸ்லாவியா நாட்டினைச் சார்ந்த.

yuk, *n.* சிரிப்பு; நகைச்சுவை; வானொலியில் நகைப்பூட்டுந் திறம்.

yule, *n.* கிறிஸ்துமஸ் பண்டிகை.

yule'-log, *n.* கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு முந்திய நாள் மாலை எரிக்கப்படும் கட்டை.

yule'-tide, *n.* கிறிஸ்துமஸ் பண்டிகைப்பருவம்.

yurt, *n.* சிறு கூடாரம்.

**Zad'kiel**, *n.* 'சட்கியல்' என்னும் புனைபெயரர் தோற்றுவித்த சோதிடப் பஞ்சாங்கம்.

**zaff'er, zaf'fre**, *n.* பீங்கானுக்குப் பயன்படுத்தும் நீலச்சாய வேதிப் பொருள்.

**zai'batsu**, *n.* இரண்டாம் உலகப் போர்க்கால ஜப்பானின் தொழிலாட்சி ஆதிக்க இனம்.

**Zam'bo**, *n.* நீகிரோ-ஐரோப்பியக் கலப்பினத்தவர்.

**zan'y**, *n.* கேலிக்கூத்தர்; கோமாளியின் துணைவர், விகடர்; அறிவிலாக் குறும்பர்; மந்த மதியினர்.

**Zanzibar'i**, *n.* கிழக்கு ஆப்பிரிக்காவைச் சேர்ந்த சான்ஸிபார் தீவினர்; *a.* சான்ஸிபார் தீவு சார்ந்த.

**zap'tieh**, *n.* துருக்கிய காவல் துறையர்.

**Zarathus'trian**, *n.* பார்சி சமயத்தைப் பின்பற்றுபவர்; *a.* பார்சி சமயஞ் சார்ந்த.

**Zareb'a, Zarib'a**, *n.* ஆப்பிரிக்க சூடான் நாட்டு வழக்கில் பாசறைச் சூழடைப்பு; சூடான் வழக்கில் கிராம வேலி வளைவு.

**zax**, *n.* கற்பலகை வெட்டுக்கத்தி.

**zeal**, *n.* பற்றார்வக் கிளர்ச்சி; ஆர்வச் சுறுசுறுப்பு; விருப்பார்வம்.

**zeal'ot**[1], *n.* உணர்ச்சி வெறியர், முனைப்பார்வலர், விடாப்பிடிக் கொள்கையர்.

**Zeal'ot**[2], *n.* ரோம ஆதிக்கத்தை இடைவிடாது எதிர்த்த யூத வெறியர் குழுவினர்.

**zeal'ous**, *a.* பற்றார்வமிக்க, ஆர்வச் சுறுசுறுப்புடைய.

**zeb'ec, zeb'eck**, *n.* நடுநிலக்கடலக முப்பாய்மரக் கப்பல்.

**zeb'ra**, *n.* வரிக்குதிரை; *a.* வரிக்குதிரையைப்போல் பட்டைக் கோடுகளையுடைய; (தொ.) zebra crossing, நடப்போர் கடப்பு, கால்நடையினர் கடந்து செல்ல முன்னுரிமையுடைய வெள்ளைக்கோட்டுப் பாதை.

**zeb'ra-wood**, *n.* பட்டைக் கோடுகளையுடைய மரக்கட்டை; பட்டைக் கோட்டுக் கட்டையினையுடைய மர வகை.

**zeb'rine**, *a.* வரிக்குதிரை சார்ந்த.

**zeb'u**, *n.* இமிலேறு.

**zed**, *n.* ஆங்கில நெடுங்கணக்கின் கடைசி எழுத்து; z வடிவப் பாளம்.

**zed'oary**, *n.* கச்சோரம், மருந்தாகவும் சாயமாகவும் பயன்படும் இஞ்சியின நறுமணப் பொருள்.

**zein**, *n.* மக்காச்சோளப் புரதம்.

**zeit'geist**, (செர்.) *n.* காலப்பண்பு; குறிப்பிட்ட காலத்தில் மக்களின் எண்ணப்பாங்கும் உணர்ச்சியும் செல்லும் போக்கு.

**zelos'o**, (இத்.) *adv.* இசைத்துறைக் கட்டளை வகையில் உணர்ச்சிவேகத்துடன்.

**zemin'dar**, (இ.) *n.* பெருநிலக்கிழார், பண்ணையாட்சியாளர், செமீந்தார்.

**zemst'vo**, *n.* ருசியாவில் மாவட்ட ஆட்சிக்கழகம். *pl.* zemst'vos.

**Zen**, *n.* புத்த சமயத்தின் ஜப்பானிய தியானமார்க்கக் கிளை நெறி.

**zena'na**, *n.* உவளகம், அந்தப்புரம்; மகளிர் உடுப்புகளுக்கான இலேசான துணி.

**Zend**, *n.* பண்டை ஈரானிய மொழி.

**Zend-aves'ta**, *n.* பார்சியர் வேதம்.

**zen'dik**, *n.* மாந்திரிகர்.

**zen'ith**, *n.* உச்சி, நேருச்சி வான்; மிகு செழிப்புப் பருவம்.

**zen'ith-dis'tance**, *n.* உச்சி நிலையிலிருந்து வானொளிக் கோளத்துக்குள்ள கோணியல் தொலைவு.

**ze'olite**, *n.* கனிம வகை.

**Zeph'yr**[1], *n.* மேல்காற்றுத் தெய்வம்.

**zeph'yr**[2], *n.* மேல்காற்று; மென்பூங்காற்று, இளங்காற்று; ஆட்டக்காரர் அணியும் இழை நெருக்கமான மென் கம்பளி வலைப் பின்னல் சட்டை; உடுப்புத்துணி வகை.

**Zepp'elin**, *n.* பறவைக்கப்பல் வகை, பூஞ்சுருட்டு வடிவான முதல் உலகப்போர்க் காலச் செர்மன் புகைக் கூண்டு வானூர்தி.

**zer'o**, *n.* சுழி, சுன்னம்; பூஜ்யம்; இன்மைக்குறி இலக்கம்; அளவு கோலின் அடிநிலை; இல்லாத ஒன்று; *pl.* zer'os; (தொ.) fly at zero, ஆயிரம் அடிக்குக் கீழ்ப் பறந்துசெல்; zero in, (படை.) தாக்குதற்குரிய இலக்காக எதிரி பீரங்கி எல்லை ஆய்ந்து வரையறு; zero marker, மொழியியலில் இலக்கணக் கூறு இல்லாமலே இலக்கண வகையை உணர்த்தும் குறியீடு.

**ze'rone**, *n.* குளிர் உறைவுத் துருத்தடை அமைவு.

**zest**, *n.* ஆர்வம்; சுவையூட்டு; உணர்ச்சியார்வம்.

**zet'a**[1], *n.* கிரேக்க நெடுங்கணக்கில் 'Z' என்னும் ஒலிக்குரிய எழுத்து.

**ze'ta**[2], *n.* அனலணுக் காப்பான தேர்வுக்கல அமைவு

**zetet'ic**, *a.* (அரு.) உசாவு நிலையில் சென்றுகொண்டிருக்கிற; விசாரணைக்கு உட்பட்டிருக்கிற.

**Zeus**, *n.* கிரேக்க பெருந்தெய்வம், கிரேக்க புராண மரபில் வானவர் வேந்தன்.

**z'-gun**, *n.* விமான எதிர்ப்பு வாணப் பீரங்கி.

**zho**, *n.* மலைவாழ் ஆமா.

**zib'et**, *n.* புனுகுப் பூனை வகை.

**zig'zag**, *n.* நெளிவரி, அலைவரி, கோணல்மாணலான வரை; வளைந்து வளைந்து செல்லும் மலைப்பாதை; அகைப்புக் கோடு; திருக்குமறுக்கான முற்றுகைத் தகர்ப்புப் பள்ளம்; *a.* குறுக்கு நெடுக்கான, வளைந்து வளைந்து செல்கிற, வலமும் இடமும் திடீர் திடீரெனத் திரும்புகிற; திசைமாறிச் செல்லுங் கப்பலைப்போல் இயங்குகிற; *v.* வளைந்து வளைந்து செல்; *adv.* வளைந்து நெளிந்து, கோணல்மாணலாக.

**zill'ah**, (இ.) *n.* மாவட்டம், ஜில்லா.

**zinc**, *n.* (வேதி.) துத்தநாகம்; *v.* துத்தநாகம் பூசு; (தொ.) flowers of zinc, துத்தநாகத் தூள்.

**Zin'calo**, *n.* ஸ்பானிய நாடோடி.

**zinc'ic**, *a.* (வேதி.) துத்தநாகஞ் சார்ந்த, துத்தநாகம் அடங்கிய, துத்தநாகம் போன்ற.

**zincif'erous**, *a.* துத்தநாகங்கொண்ட; துத்தநாகம் தருகிற.

**zincifica'tion**, *n.* துத்தநாகம் பூசும் முறை.

**zinc'ify**, *v.* துத்தநாகம் பூசு.

**zinc'ograph**, *n.* துத்தநாக அச்சுருச் செதுக்குத் தகட்டுப் பாளம்; துத்தநாகச் செதுக்குருத் தகட்டுப் பாள அச்சுப் படம்; *v.* துத்தநாகத் தகட்டிற் செதுக்கு வேலைசெய்; துத்தநாகத் தகட்டிற் செதுக்குருப் படியெடு.

**zincog'raphy**, *n.* துத்தநாகத் தகட்டுச் செதுக்கச்சுரு முறை; துத்தநாகத் தகட்டுச் செதுக்கச்சுரு வேலைமுறை.

**zinc'oid**, *a.* துத்தநாகம் போன்ற.

**zinc'otype**, *n.* துத்தநாகச் செதுக்குருத் தகட்டச்சு முறை.

**zinc'ous**, *a.* துத்தநாகஞ் சார்ந்த; துத்தநாகம் போன்ற.

**zinc'y**, *a.* துத்தநாகஞ் சார்ந்த, துத்தநாகங் கொண்ட, துத்தநாகம்போல் தோன்றுகிற.

**Zing'aro**, *n.* இத்தாலிநாட்டு வழக்கில் நாடோடி இனத்தவர்; *pl.* Zing'ari.

**zin'giber**, (த.) *n.* இஞ்சி வேர்.

**zink'enite**, *n.* எஃகு நிறக் கனிப்பொருள்.

**zinn'ia**, *n.* சூரியகாந்தி இனச் செடி.

**Zi'on**, *n.* பண்டைய ஜெருசல நகரம்; ஜெருசல நகரத்திலுள்ள திருமலை; யூதர்களின் கோட்பாடான தெய்வ ஆட்சி; கிறித்தவத் திருச்சபை; வானுலகு.

**Zi'onism,** *n.* யூத தாயக இயக்கம், பாலஸ்தீனத்தில் யூதர் தேசிய இனத்தை மீண்டும் நிறுவிய இயக்கம்.

**Zi'onist,** *n.* யூத தாயக இயக்கத்தவர், பாலஸ்தீனத்தில் யூதர் தேசிய இனத்தை மீண்டும் நிறுவுவதற்கான இயக்கத்தை ஆதரிப்பவர்.

**Zi'onwards,** *adv.* வானுலகு நோக்கி ; சேட்புலம் நோக்கி.

**ziot'y,** *n.* போலந்து நாட்டு நாணய வகை.

**zip,** *n.* வீசொலி, 'விஃசு' எனும் விரைவுச் செலவொலி ; துப்பாக்கிக் குண்டு காற்றினூடு பாயும்போது உண்டாவதைப் போன்ற மெல்லிய கூரொலி; கீறொலி, துணியைத் திடுமெனக் கிழிக்கும்போதுண்டாவதைப் போன்ற ஒலி ; இழைவரி, இருபல் வரிகளுடைய வீச்சுப் பின்னிழைவு மூடு திறப்பமைவு ; இழைவரிப்புதையரணம் ; ஊக்கவிசை, தெம்பு, கிளர்ச்சி ; *v.* வீசொலி செய் ; வீசொலியுடன் செல், வீசிச்செல் ; வீச்சளி, விசையளி ; தெம்பு கொடு ; (பே-வ.) தெம்பூட்டு ; (பே-வ.) தெம்புடனிரு ; (தொ.) zip gun, மட்ட வகை உள்நாட்டுப் படைப்பான கைத்துப்பாக்கி வகை.

**zip-fas'tener,** *n.* இழைவரிப், பல்லிணைவு.

**zirc'on,** *n.* ஒண்மணிக் கல்லாகச் செதுக்கப்படும் உலோகத் தனிம வகை அடங்கிய கனிமக்கல்.

**zircon'ic,** *a.* உலோகத்தனிம வகை சார்ந்த.

**zircon'ium,** *n.* இரும்பில் கலப்பதற்குப் பயன்படுத்தப்படும் உலோகத் தனிம வகை.

**zith'er, zith'ern,** *n.* இசைத்தட்டம், உலோகத் தந்திகளையுடைய இசைக் கருவி வகை.

**Zo'ar,** *n.* புகலிடம், சரணாலயம்.

**zod'iac,** *n.* இராசி மண்டலம், கிரகங்கள் செல்லும் வீதி ; (அரு.) முழுத்தொடர்கோவை, முழுவட்டம் ; (தொ.) signs of the zodiac, இராசி.

**zodi'acal,** *a.* இராசிமண்டலஞ் சார்ந்த, இராசிமண்டலத்திலுள்ள ; (தொ.) zodiacal light, செக்கர்வானம், உதய அத்தமனகால முக்கோணவடிவச் செவ்வானம்.

**zoet'ic,** *a.* வாழ்விற்கு உகந்த.

**zo'etrope,** *n.* இயங்குருக் காட்சிக் கருவி, தொடர்படங்களை இயங்குருவங்களாகக் காட்டும் விஞ்ஞான விளையாட்டுக் கருவி ; தொடக்கநிலை வண்ணத்திரைக்காட்சிமுறை.

**Zo'har,** (எபி.) *n.* மறைவியல் வாணரின் 14-ஆம் நூற்றாண்டிற்குரிய திரு ஏடு.

**Zo'ic,** *a.* விலங்குகள் சார்ந்த ; (மண்.) பாறைகள் வகையில் புதைபடிவங்கள் கொண்ட.

**zoi'lism,** *n.* ஆய்வுக்கடிந்துரை.

**Zol'aism,** *n.* சோலா என்ற பிரஞ்சுநாட்டுப் புனை கதையாசிரியர் பண்பு, தங்குதடையற்ற சிற்றின்ப வருணனைப் பண்பு.

**zoll'verein,** (செர்.) *n.* சுங்கக்கூட்டணி, சுங்க நோக்கங்களுக்கான நாடுகளின் கூட்டிணைவு.

**zom'bi, zom'bie,** *n.* மந்திரத்தினால் மீட்டுயிர்ப்பிக்கப் பெற்றதாகக் கருதப்படும் பிணம், பேசாது விருப்பு வெறுப்பற்று உணர்ச்சியிலாதவராக்கப்பட்ட மனிதர் ; (இழி.) அறிவுக் கட்டையான மனிதர், உணர்ச்சிக் கட்டையான மனிதர்.

**zon'al,** *a.* மண்டலமான ; மண்டலம் போன்ற ; மண்டலங்களாக வரிசைப்படுத்தப்பட்ட ; மண்டலத் தொடர்பான ; வேளாண்மை நிலநூல் வழக்கில் நில வகையில் மண்டலம் அளாவப் பரவிய நல்லாக்க வளமார்ந்த.

**zon'ary,** *a.* மண்டலச் சார்பான.

**zon'ate, zon'ated,** *a.* (தாவ., வில.) பட்டை வளையங்களையுடைய ; பட்டையாக இடப்பட்ட.

**zone,** *n.* (மண்.) மண்டலம் ; வரிமண்டலம், தென்வடலான நிலவுலக ஐம்பெரும் பிரிவுகளுள் ஒன்று ; பட்டை வளையம், ஒரே மையமுள்ள இரண்டு வட்டங்களுக்கு இடைப்பட்ட பரப்பு ; செவ்விடைப்பட்டி, கோள மேற்பரப்புப் பகுதியில் ஒருபோகு ஆகவுள்ள இரண்டு தளங்களுக்கிடைப்பட்ட பகுதி ; நீளிடைப்பட்டி, கூம்பு—நீள் உருளை ஆகியவற்றின் மேற்பரப்பு வகையில் அதன் ஊடச்சுக்குச் செங்கோணமாக அதனை வெட்டும் ஒருபோகு ஆகவுள்ள இரண்டு தளங்களுக்கிடைப்பட்ட செங்குத்தான பகுதி ; நீள் வரித்திட்டு ; வண்ணப் பரப்பில் பிறிது வண்ணப்பட்டிகை ; (பழ.) இடுப்புப் பட்டி ; *v.* வரி மண்டலமாகச் சுற்றி வளைந்துகிட ; பட்டை வளையம்போல் சூழ்ந்துகொள் ; மண்டலங்களாக வகுத்தமை; மண்டலங்களிடையே பரப்பியமை ; (தொ.) frigid zone, கடுங்குளிர்மண்டலம் ; loose the maiden zone of, கன்னிமை இழக்கச்செய் ; maiden zone, virgin zone, கன்னிமைச் சின்னம் ; temperate zone, மிதவெப்ப மண்டலம் ; torrid zone கடுவெப்ப மண்டலம ; zone time, நிரைகோடு ஒன்றற்குரிய உள்ளூர் மணிநேரம்.

**zon'ular,** *a.* மண்டலம் போன்ற ; சிறுபட்டை வளையம் போன்ற.

**Zoo,** *n.* விலங்ககம் ; விலங்குக் காட்சிச்சாலை ; லண்டன் விலங்குக் காட்சிச்சாலை.

**zoog'amy,** *n.* விலங்குகளின் பாலினப் பெருக்கம்.

**zoogeog'raphy,** *n.* விலங்கியல் நிலநூல், நிலவுருண்டையின் விலங்கினப் பரப்பீட்டாய்வு நூல்.

**zoog'rapher, zoog'raphist,** *n.* விலங்கியல் நில நூலார்.

**zoog'raphy,** *n.* விரிவிளக்கவியல் விலங்கு நூல்.

**zo'oid,** *n.* இடை உயிர்ம அமைவு ; விலங்குடனோ செடியினத்துடனோ சாராமல் இரண்டனையுமொத்துப் பிளப்பு அல்லது முகிழ்ப்பு முறையால் இனப்பெருக்கமுறும் உயிர்த் திற உரு ; கூட்டுயிரிகளின் உறுப்புயிர் ; *a.* நிறை முதிர்வு பெறு உயிரியல்புடைய, உயிரியல் சார்புடை

**zool'atry,** *n.* விலங்கு வழிபாடு.

**zo'olite,** *n.* புதைபடிவ விலங்குரு ; விலங்குப் புதைபடிவ உரு ; புதைபடிவமாக்கப்பட்ட விலங்குப்பொருள்.

**zoolo'gical,** *a.* விலங்குநூல் சார்ந்த ; விலங்குநூல் பற்றிய; விலங்கு நூலாய்வில் ஈடுபட்டிருக்கிற ; விலங்கு நூலாய்வுக்குப் பயன்படுகிற; (தொ.) zoological garden, வனவிலங்குப் பூங்கா ; மிருகக் காட்சிச்சாலை.

**zool'ogist,** *n.* விலங்குநூலர் ; விலங்கு நூலாய்வாளர்.

**zool'ogy,** *n.* விலங்கு நூல்.

**zoom,** *n.* (வான்செலவுத்துறை இழி.) விமானச் செங்குத்து ஏற்றச்செலவு ; *v.* விமானத்தைச் செங்குத்தாக மேலே செலுத்தி இயக்கு ; (தொ.) zoom lens, அணுக்க நிரலீட்டுக் கண்ணாடி, தொலைக்காட்சிப் பட எடுப்பில் படக்கருவியைப் புடை பெயர்க்காமலே தொலை அணிமையாக்கும் திறமுடைய கண்ணாடி யமைவு.

**zo'omancy,** *n.* விலங்குக் குறிநூல், விலங்குகளின் தோற்றங்களிலிருந்து அல்லது ஒழுகலாறுகளிலிருந்து குறிகூறல்.

**zoomorph'ic,** *a.* விலங்குருவம் சார்ந்த ; விலங்கு வடிவங்களைச் சின்னமாகக்கொண்ட ; விலங்குருத் தெய்வங்களையுடைய.

**zoomorph'ism,** *n.* தெய்வமாவியற்பாடு, தெய்வத்தை விலங்குருவத்தில் காட்டுதல் ; மன்மாவியற்பாடு, மனிதனை விலங்குருப்படுத்திக் காட்டல்; மாவியற் புனைவாக்கம், தெய்வத்தை அல்லது மனிதனை விலங்கு வடிவத்திற் கற்பனை செய்தல்.

**zoonos'is,** *n.* தாவுநோய், விலங்கினிடமிருந்து மனிதனிடம் தாவவல்ல நோய்.

**zo'ophyte,** *n.* மரமா, செடி வடிவமுடைய விலங்கு வகை.

**zoophyt'ic,** *a.* மரமாவியலுடைய ; மரமாப்போன்ற.

**zo'osperm,** *n.* மாவிந்து, உயிர்களின் விந்தணுமம் ; ஆண்கரு உயிர்மம், செடியினங்களின் புடைபெயர்ச்சித் திறமுடைய சிதல்.

**zo'ospore,** *n.* செடியினங்களின் புடைபெயர்ச்சித் திறமுடைய சிதல்.

**zoot,** *a.* ஏறுமாறான ஊகல்வு வெட்டுத் தையலுடைய ; (தொ.) zoot suit, பகட்டு அளவை அங்கியுடை.

zoot'er, *n.* ஏறுமாறு அங்கியுடை.

zoot'omy, *n.* விலங்குடற் கூறுய்வு; விலங்கு உள்ளுறுப்பியல்.

zoot'-suiter, *n.* நீளகல்வு ஏறுமாறு அங்கியர்.

zo'ril, *n.* ஆப்பிரிக்க கீரியின விலங்கு வகை.

Zoroas'trian, *n.* பார்சி சமயத்தவர்; *a.* பார்சி சமயஞ் சார்ந்த; சொராஸ்டிரரைப் பின்பற்றுகிற.

Zoroas'trianism, *n.* பார்சி சமயம்.

zou'ave, *n.* பிரான்சு நாட்டுச் சிறு திறக் காலாட்படை வீரர்; மகளிர் குறுங்கச்சு வகை.

zounds, *int.* கடுஞ்சினத்தைக் குறிக்கும் வியப்பிடைச் சொல்.

zucchett'a, zucchett'o *n.* ரோமன் கத்தோலிக்க மதகுருவின் மென்பட்டுத் தொப்பி.

Zul'u, *n.* தென் ஆப்பிரிக்க பண்டு (Bantu) இனத்தவர்; தென் ஆப்பிரிக்க சூலு இனத்தவர் மொழி; சிறுவர் வைக்கோல் தொப்பி.

Zwing'lian, *n.* சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த சமய சீர்திருத்தக்காரரான சுவிங்க்லி (Zwingli 1484-1531) என்பாரைப் பின்பற்றுபவர்; *a.* சுவிங்க்லி என்பவரைச் சார்ந்த; சுவிங்க்லி என்பாரின் கோட்பாடு சார்ந்த.

zyg'al, *a.* இரு கால்களையுடைய பகரவடிவான, 'எச்' என்ற ஆங்கில எழுத்து வடிவமைந்த.

zygapoph'ysis, *n.* (உள்., வில.) தண்டெலும்புப் பிணைப்புப் பகுதி.

zygodac'tyl, *n.* எதிரிணையுகிரி, எதிரெதிரிணையாகக் கால் விரல்களையுடைய பறவை வகை; *a.* எதிரெதிரிணைக் கால் விரல்களையுடைய.

zygodac'tylous, *a.* எதிரெதிரிணையான விரல்களமைந்த கால்களையுடைய.

zygom'a, *n.* (உள்., வில.) கன்னத்தின் வளைவெலும்பு; *pl.* zygom'ata.

zygomat'ic, *a.* (உள்., வில.) கன்னத்தின் வளைவெலும்பு பற்றிய.

zygomorph'ous, *a.* ஒற்றைப்பாகீடான, மலர் வகையில் ஒரேயொரு தளத்தில் மட்டும் ஒத்த பாதிகளாகப் பகுக்கப்படக் கூடிய.

zygos'is, *n.* (உயி.) இனக்கூற்றுப் பிளப்பிணைவு.

zyg'ospore, *n.* (தாவ.) இரு பாலணு இணைவுச் சிதல்.

zyg'ote, *n.* (உயி.) இரு பாலணு இணைவுப்பொருள்.

zyme, *n.* புளிமா; நோய்க்கிருமி.

zymos'is, *n.* புரைவு, புளிப்பூட்டம்; நுண்ம நுழைவுப் பெருக்கக் கோளாறு.

zymot'ic, *a.* புளிப் பூட்டஞ் சார்ந்த; நோய் வகையில் நுண்ம நுழைவுப் பெருக்கத்தால் விளைவதாகக் கருதப்படுகிற.

zy'murgy, *n.* மதுப் புளிக்காடி வேதியியல்.